## விநாயகர்

தமிழ் நாட்டின் தனிப்பட்ட சிறப்பு எங்கு பார்த்தாலும் பிள்ளையார் கோயில்கள் இருப்பதேயாகும். "கோயில்" என்று பெயர் வைத்து விமானமும் கூரையும் போட்டுக் கட்டிடம் எழுப்ப வேண்டும் என்பதுகூட இல்லாமல், அரச மரத்தடிகளிலேகூட வானம் பார்க்க அமர்ந்திருக்கும் ஸ்வாமி நமது பிள்ளையார்.

தெருவுக்குத் தெரு ஒரு பிள்ளையார் கோயில், நதிக் கரைகளிலெல்லாம் பிள்ளையார், மரத்தடிகளில் பிள்ளையார் என்றிப்படி இந்தத் தமிழ் தேசம் முழுவதும் அவர் வேறெந்த ஸ்வாமிக்கும் இல்லாத அளவுக்கு இடம் கொண்டு அருள் பாலித்து வருகிறார். அவரைப் "பிள்ளையார்" என்றே அன்போடு கூறுவது நம் தமிழ்நாட்டுக்கே உரிய வழக்கம். சர்வலோக மாதா பிதாக்களாகிய பார்வதி பரமேசுவரர்களின் ஜேஷ்ட புத்திரர் அவர். "பிள்ளை" என்றால் அவரைத்தான் முதலில் சொல்ல வேண்டும். வெறுமே "பிள்ளை" என்று சொல்லக்கூடாது என்பதால் மரியாதையாகப் "பிள்ளையார்" என்று சொல்வது தமிழ்நாட்டுச் சிறப்பு.

"குமாரன்" என்றால் "பிள்ளை" என்றே அர்த்தம். பாரததேசம் முழுவதிலும் குமாரன், குமாரஸ்வாமி என்றால் பார்வதி பரமேசுவரர்களின் இளைய பிள்ளையாகிய சுப்பிரமணியரையே குறிப்பிடும். தமிழிலும் "குமரக் கடவுள்" என்கிறோம். ஆனால், அவரைக் "குமரனார்" என்பதில்லை: "குமரன்" என்றுதான் சொல்வார்கள். மூத்த பிள்ளைக்கே மரியாதை தோன்றப் பிள்ளையார் என்று பெயர் தந்திருக்கிறோம்.

முதல் பிள்ளை இவர்: குழந்தை ஸ்வாமி. ஆனாலும் இவரே எல்லாவற்றுக்கும் ஆதியில் இருந்தவர். பிரணவம்தான் எல்லாவற்றுக்கும் முதல். பிரணவத்திலிருந்துதான் சகல பிரவஞ்சமும் ஜீவராசிகளும் தோன்றின. அந்தப் பிரணவத்தின் ஸ்வரூபமே பிள்ளையார். அவரது ஆனைமுகம், வளைந்த தும்பிக்கை இவற்றைச் சேர்த்துப் பார்த்தால் பிரணவத்தின் வடிவமாகவே தோன்றும்.

குழந்தையாக இருந்துகொண்டே ஆதிமுதலின் தோற்றமாக இருக்கிற பிள்ளையார் குழந்தைபோல் தோன்றினாலும், பக்தர்களை ஒரேயடியாகத் கைதூக்கி உயர்த்தி விடுவதிலும் முதல்வராக இருக்கிறார். ஔவைப் பாட்டி ஒருத்தியின் உதாரணமே போதும். ஔவையார் பெரிய கணபதி உபாஸகி. பிரணவ ஸ்வரூபியான விநாயகரைப் புருவமத்தியில் தியானித்துக் கொண்டு, ஔவையார் யோக சாஸ்திரம் முழுவதையும் அடக்கியதான "விநாயகர்

அகவலை"ப் பாடியிருக்கிறாள். அதைப் பாராயணம் செய்தால் பரமஞானம் உண்டாகும். இந்த ஔவையாரைப் பற்றி ஒரு கதை உண்டு. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் கைலாசத்துக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் ஔவையாரையும் உடன் அழைத்துப் போக எண்ணினார்கள். அப்போது ஔவை விக்சேசுவரருக்குப் பூஜை பண்ணிக் கொண்டிருந்தாள். சீக்கிரம் பூஜையை முடித்துத் தங்களுடன் கைலாசத்துக்கு வருமாறு சுந்தரமூர்த்தியும் சேரமானும் அவளை அவசரப்படுத்தி அழைத்தார்கள். அவளோ, "நீங்கள் போகிறபடி போங்கள். உங்களுக்காக நான் என் பூஜையை வேகப்படுத்த மாட்டேன். விநாயக பூஜையே எனக்குக் கைலாசம்" என்று சொல்லி விட்டாள். அவர்கள் அப்படியே கிளம்பி விட்டார்கள். ஔவை சாங்கோபாங்கமாகப் பூஜை செய்து முடித்தாள். முடிவில் பிள்ளையார் பிரசன்னமாகி அவளை அப்படியே தம் துதிக்கையால் தூக்கி ஒரே வீச்சில் கைலாசத்தில் கொண்டு சேர்த்துவிட்டார். அவளுக்குப் பிற்பாடுதான்

²‰îóÍ˜ˆF»‹ «êóñ£¡ ªð¼ñ£À‹ ¬èô£êˆ¬î Ü¬ì‰î£˜èœ. Üƒ«è «êóñ£¡ ªð¼ñ£œ F¼‚¬èô£ò ë£ù àô£¬õŠ ð£®ù£˜. Þ¬î Ü¼íAKï£î˜ F¼Š¹èN™,

ஆதரம் பயில் ஆரூரர் தோழமை

சேர்தல் கொண்டவரோடே முனாளினில்

ஆடல் வெம்பரி மீதேறி மா கயிலையிலேகி

ஆதி அந்த உலா ஆசு பாடிய

சேரர்....

என்பதில் சொல்லாமல் சொல்கிறார். "அப்படிப்பட்ட சேரர் ஆண்ட கொங்கு தேசத்தில் உள்ள பழனியில் இருக்கிற பெருமாளே" என்று பழனியாண்டவனைப் பாடுகிறார். சுந்தரரும், சேரமான் பெருமாள் நாயனாரும் கைலாசம் சேர்ந்ததற்கு இப்படி குமாரஸ்வாமியின் சம்பந்தத்தை உண்டாக்குகிறார். மூத்த குமாரரான பிள்ளையாருக்கோ ஏற்கனேவே அந்த சம்பவத்தில் சம்பந்தம் இருக்கிறது. அந்த இரண்டு பேருக்கும் முன்னதாக, ஒரு சொடக்குப் போடுகிற நாழிகைக்குள் அவர் ஔவைப் பாட்டியைக் கைலாசத்தில் சேர்த்துவிட்டார். பெரிய அநுக்கிரகத்தை அநாயசமாகச் செய்கிற ஸ்வாமி விக்நேசுவரர்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## தத்துவமயமான விநாயகர்

விநாயக மூர்த்தியிலுள்ள ஒவ்வொரு சின்ன சமாசாரத்தைக் கவனித்தாலும் அதில் நிறையத் தத்துவங்கள் இருக்கின்றன. பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது எதற்காக? விக்நேசுவரர், தம் அப்பாவான ஈசுவரனைப் பார்த்து' "உன் சிரசையே எனக்குப் பலி கொடு" என்று கேட்டு விட்டாராம். எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது எதுவோ அதைத் தியாகம் பண்ணினால்தான் மகா கணபதிக்குப் பிரீதி ஏற்படுகிறது. அவ்வளவு பெரிய தியாகம் பண்ணுவதற்குத் தயார் என்ற அறிகுறியாகத்தான், ஈசுவரனைப்போலவே மூன்று கண்கள் உடைய தேங்காயைச் சிருஷ்டித்து அந்தக் காயை அவருக்கு நாம் அர்ப்பணம் பண்ணும்படியாக ஈசுவரன் அநுக்கிரகித்திருக்கிறார்.

சிதறு தேங்காய் என்ற உடைக்கிற வழக்கம் தமிழ் தேசத்துக்கு மட்டுமே உரியது. இப்படிச் சிதறிய துண்டங்கள் யாருக்கு உரிமை என்றால் குழந்தைகளுக்குத்தான். இந்த உண்மை ஒரு குழந்தை மூலமாகத்தான் எனக்கே தெரிந்தது. அப்போது (1941) நான் நாகைப்பட்டினத்தில் சாதுர்மாஸ்ய விரதம் அநுஷ்டித்து வந்தேன். அங்கே கோயிலில் பிள்ளையாருக்கு நிறையச் சிதறுகாய் போடுவது வழக்கம். காயை உடைக்கவே இடம் கொடுக்காத அளவுக்குக் குழந்தைகள் ஒரே நெரிசலாகச் சேர்ந்துவிடும். திபுதிபு என்று அவை ஓடி வருவதில் என்மேல் விழுந்துவிடுப் போகின்றனவே என்று என்கூட வந்தவர்களுக்குப் பயம். அவர்கள் குழந்தைகளிடம் "இப்படிக் கூட்டம் போடாதீர்கள், விலகிப் போங்கள்" என்று கண்டித்தார்கள். அப்போது ஒரு பையன் 'டாண்' என்று, "பிள்ளையாருக்குத் தேங்காய் போட்டுவிட்டு, அப்புறம் எங்களை இங்கே வராதீர்கள் என்று சொல்ல

உங்களுக்கு என்ன பாத்தியதையும்' என்று தெரிந்தது.

அகங்கார மண்டையோட்டை உடைத்தால் உள்ளே அமிருத் ரஸமாக இளநீர் இருப்பதை இந்தச் சிதறுகாய் உணர்த்துகிறது. கணபதியைக் காட்டிலும் சரீரத்தில் பருமனான ஸ்வாமி வேறு யாரும் இல்லை. சிரசு யானையின் தலை. பெரிய வயிறு.

பெரிய உடம்பு. அவருக்கு 'ஸ்தூல காயர்' என்றே ஒரு பெயர். மலைபோல் இருக்கிறார். ஆனாலும் அவர் சின்னக் குழந்தை சரி, குழந்தைக்கு எது அழகு? குழந்தை என்றால் அந்தப் பருவத்தில் நிறையச் சாப்பிட வேண்டும். உடம்பு கொஞ்சம்கூட இளைக்கக்கூடாது. ஒரு சந்நியாசி நிறையச் சாப்பிட்டுக் கொண்டு பெரிய சரீரியாக இருந்தால் அது அவருக்கு அழகல்ல. வயசாகிவிட்டால் ராத்திரி உபவாசம் இருப்பார்கள். குழந்தை அப்படி இருப்பது அழகா? குழந்தை என்றால் தொந்தியும் தொப்பையுமாகக் கொழு கொழுவென்று இருந்தால்தான் அழகு. நிறையச் சாப்பிடுவதுதான் அழகு. குழந்தைகள் நல்ல புஷ்டியாக இருக்க வேண்டும் என்பதை இந்தக் குழந்தைச்சாமியே காட்டிக் கொண்டிருக்கிறார், கையில் மோதகத்தை வைத்துக்கொண்டு.

இவரோ யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர் விரோதமான சின்னஞ்சிறு ஆகிருதி உடையது மூஞ்சூறு. இதை அவர் தம் வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். மற்ற ஸ்வாமிகளுக்காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பட்சி, என்று வாகனம் இருக்கிறது. இவரோ தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய ஸ்வாமியாக இருக்கிறாரோ, அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக் கொண்டாலும் வாகனத்தினால் சுவாமிக்குக் கௌரவம் இல்லை. சுவாமியால்தான் வாகனத்துக்கு கௌரவம். வாகனத்துக்குக் கௌரவம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி நெட்டிப் பிள்ளை யார் மாதிரியாகக் கனம் இல்லாமல் இருக்கிறார். அதற்குச் சிரமம் இல்லாமல், ஆனால் அதற்கு மரியாதை, கௌரவம் எல்லாம் உண்டாக்கும்படியாகத் தம் உடம்பை வைத்துக் கொண்டிருக்கிறார். ஸ்தூலகாயரான போதிலும், 'பக்தர்கள் இருதயத்தில் கனக்காமல் லேசாக இருப்பேன்' என்று காட்டுகிறார்.

ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வோர் அங்கத்தில் அதிகக் கௌரவம் இருக்கும். சவுரிமான் (கவுரிமான்) என்று உண்டு. அதன் கௌரவம் வாலில். மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். தோகையை மயில் ஜாக்கிரதையாக ரட்சிக்கும். யானை எதை ரட்சிக்கும்? தன் தந்தத்தைத் தீட்டி வெள்ளை வெளேர் என்று பண்ணுகிறது என்றால், அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்து, அதனால் மகாபாரதத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக

இருக்கிற ஒன்றைக் காட்டிலும், தர்மத்தைச் சொல்கிற ஒன்று நியாயத்துக்காக, தர்மத்துக்காக, விந்தைக்காக எதையும் தியாகம் பண்ண வேண்டும் என்பதைத்தானே தந்தத்தைத் தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது. ஸ்வாமிக்குக் கருவி என்று தனியாக ஒன்றும் வேண்டியதில்லை. எதையும் கருவியாக அவர் நினைத்தால் உபயோகித்துக் கொள்வார் என்பதற்கும் இது உதாரணம். ஒரு சமயம் தந்தத்தாலேயே அசுரனைக் கொன்றார். அப்போது அது ஆயுதம். பாரதம் எழுதும் இப்போது அதுவே பேனா.

நமக்குப் பார்க்கப் பார்க்க அலுக்காத வஸ்துக்கள் சந்திரன், சமுத்திரம்,

யானை ஆகியன. இவற்றையெல்லாம் எத்தனை தடவை, எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும், அலுப்புச் சலிப்பில்லாத ஆனந்தம் பொங்கும். அதனால்தான் குழந்தைஸ்வாமி தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்கு எல்லாம், பார்க்கப் பார்க்க ஆனந்தம் எப்போதும் பொங்கிக் கொண்டிருக்கும்படியாக யானை உருவத்தோடு இருக்கிறார். அது ஆனந்த தத்துவம்: ஆராத ஆசையின் தத்துவம், அவர் பிறந்ததே ஆனந்தத்தில். பண்டாசுரன் விக்ன மந்திரங்களைப் போட்டு அம்பாளின் படை தன்னை நோக்கி வரமுடியாதபடி செய்தபோது, பரமேசுவரன் அவளை ஆனந்தமாகப் பார்த்தப்போது , அவளும் ஆனந்தமாக இந்தப் பிள்ளையைப் பெற்றாள். அவர் விக்னயந்திரங்களை உடைத்து அம்மாவுக்கு சகாயம் செய்தார்.

அவர் பார்வதி பரமேஸ்வரர்களுக்குப் பிள்ளை .இந்த உலகத்துக்கே மூலத்திலிருந்து ஆவிர்ப்பவித்ததனால், அவரை நாம் "பிள்ளையார்" , "பிள்ளையார்" என்றே விசேஷித்து அழைக்கிறோம்.

எந்த ஸ்வாமியை உபாஸிப்பதானாலும் முதலில் விநாயகருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுக் கொண்டால்தான் அந்தக் காரியம் விக்கினம் இல்லாமல் நடைபெறும். அவரையே முழுமுதற் கடவுளாக, பிரதான மூர்த்தியாக வைத்து உபாசிக்கிற மதத்துக்கு காணபத்தியம் என்று பெயர்.

பிள்ளையாருக்கு எதிரே நின்று தோப்புக்கரணம் போடுகிறோமே, அதை நமக்கு எல்லாம் சொல்லிக்

கொடுத்தவர் மஹாவிஷ்ணுதான் என்று ஒரு கதை இருக்கிறது. ஒரு சமயம் மஹாவிஷ்ணுவினுடைய சக்கரத்தை அவரது மருமகனான பிள்ளையார் விளையாட்டாகப் பிடுங்கிக் கொண்டு தம் வாயில் போட்டுக்கொண்டு விட்டாராம். பிள்ளையாரிடமிருந்து திரும்பப் பிடுங்குவது முடியாது. அவர் மிகவும் பலம் உடையவர். அதட்டி மிரட்டி வாங்கவும் முடியாது. ஆனால், அவரைச் சிரிக்க வைத்துச் சந்தோஷத்தில் அவர் வாயிலிருந்து சக்கரம் கீழே விழுந்தால் எடுத்துக்கொண்டு விடலாம் என்று மஹாவிஷ்ணுவுக்குத் தோன்றியதாம். உடனே நான்கு கைகளாலும் காதுகளைப் பிடித்துக் கொண்டு ஆடினாராம். விநாயகர் விழுந்து விழுந்து சிரித்தார். சக்கரம் கீழே விழுந்தது. விஷ்ணு எடுத்துக் கொண்டு விட்டார்.

"தோர்பி: கர்ணம்" என்பேத தோப்புக்கரணம் என்று மாறியது. "தோர்பி" என்றால் "கைகளினால்" என்று அர்த்தம். 'கர்ணம்' என்றால் காது. "தோர்பி கர்ணம்" என்றால் கைகளால் காதைப் பிடித்துக் கொள்வது.

விக்நேசுவரருடைய அநுக்கிரகம் இருந்தால்தான் லோகத்தில் எந்தக் காரியமும் தடையின்றி நடக்கும். தடைகளை நீக்கிப் பூரண அநுக்கிரகம் செய்கிற அழகான குழந்தைத் தெய்வம் பிள்ளையார். அவரைப் பிரார்த்தித்து, பூஜை செய்து, நாம் விக்கினங்கள் இன்றி நல்வாழ்வு வாழ்வோமாக.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### அத்வைதம்

#### ஸ்வாமி நாமா? இல்லை என்றால்....?

ஜீவனும் பிரம்மமும் ஒன்றுதான் என்கிறார் ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்கள்.

அதாவது நாமேதான் ஸ்வாமி என்கிறார். "நான்தான் ஸ்வாமி" என்றுதான் ஹிரண்யகசிபு சொன்னபோது தன்னைத் தவிர வேறு ஸ்வாமியே கிடையாது என்ற அகங்காரத்தில்

சொன்னான். பகவத் பாதர்களோ ஸ்வாமியைத் தவிர வேறு எதுவுமே கிடையாது என்பதால் நாமும் ஸ்வாமிதான் என்கிறார். ஜீவன் தனக்கு உள்ள அகங்காரத்தை அடியோடு விட்டு விட்டால் இவனே பிரம்மத்தில் கரைந்து பிரம்மமாகி விடுகிறான் என்கிறார். இப்போது நாம் உத்தரணி ஜலத்தைப்போல் கொஞ்சம் சக்தியுடன் இருக்கிறோம். ஸ்வாமி அகண்ட சக்தியுடன் சமுத்திரமாக இருக்கிறார். அந்தச் சமுத்திரத்திலிருந்துதான் இந்த உத்தரணி ஜலம் வந்தது. இந்த உத்தரணி ஜலம், தான் தனி என்கிற அகங்காரத்தைக் கரைத்து சமுத்திரத்தில் கலந்து சமுத்திரமே ஆகிவிட வேண்டும்.

நாம் ஸ்வாமியாக இல்லாவிட்டால், ஸ்வாமியைத் தவிர வேறான ஒன்றாக இருக்க வேண்டும். அவ்வாறெனில் பரமாத்மாவுக்கு வேறான வஸ்துக்களுக்கு உண்டு என்றாகிவிடும். அதாவது, பல வஸ்துக்களில் பரமாத்மாவும் ஒன்று என்றாகி விடும். அவருடைய சம்பந்தமில்லாமல் அந்தப் பல வஸ்துக்கள் உண்டாகி இருக்கின்றன என்றாகும். இப்படி இருப்பின் அவர் பரமாத்மா, ஸ்வாமி என்பதே பொருந்தாதே எல்லாமாக ஆன ஒரே சக்தியாக இருக்கிற மட்டும்தானே அவர் ஸ்வாமி எல்லாம் அவர் என்னும்போது நாம் மட்டும் வேறாக இருக்க முடியுமா? எனவே, 'ஸ்வாமியே நாம்' என்று வெளிப்பார்வைக்கு அகங்காரமாகப் பேசுகிற அத்வைதிகள், ஸ்வாமியின் மகிமையைக் குறைக்கவில்லை. மாறாக, 'ஜீவன் ஸ்வாமி அல்ல: இவன் அல்பன், அவர் மகா பெரிய வஸ்து: இவன் வேறு: அவர் வேறு' என்று அடக்கமாகச் சொல்கிறவர்கள்தான், தாங்கள் அறியாமலே அவரைப் பல சாமான்களில் ஒன்றாக்கி அவருடைய மகிமையைக் குறைத்து விடுகிறார்கள். அவரே சகலமும் என்றால் நாமும் அவராகத் தான் இருந்தாக வேண்டும்.

சமுத்திரமாக இருக்கிற அவரேதான் ஆற்று ஜலம், குளத்து ஜலம், கிணற்று ஜலம், அண்டா ஜலம், செம்பு ஜலம், உத்தரணி ஜலம்போல் தம் சக்தியைச் சிறுசிறு ரூபங்களாகச் செய்துகொண்டு பலவித ஜீவ ஜந்துக்களாகியிருக்கிறார். இதில் மனிதனாகும்போது பாப புண்ணியத்தை அனுபவிக்கவும், பாப புண்ணியம் கடந்த நிலையில் தாமே ஆகிவிடவும் வழி செய்திருக்கிறார். மனிதனாகும்போது மனசு என்ற ஒன்றைக் கொடுத்து அதைப் பாப

புண்ணியங்களில் ஈடுபடுத்திப் பலனை அனுபவிக்கச் செய்கிறார்.

மனசு ஆடிக் கொண்டேயிருக்கிற நிலையில் உள்ள நாம் எடுத்த எடுப்பில் பாப புண்ணியமற்ற நிலையை அடைந்து அவரே நாம் என்று உணர முடியாது. ஆகவே, அவரே நாமாக இருந்தாலும், அதை நாம் அனுபவத்தில் உணருவதற்கு அவரது அருளைப் பிரார்த்திக்க வேண்டியர்களாகவே இருக்கிறோம். அவர் மகா பெரிய ஸ்வாமி, நாம் அல்ப ஜீவன்-அவர் மகா சமுத்திரம், நாம் உத்தரணி ஜலம் என்கிற எண்ணத்தோடு ஆரம்பத்தில் பக்தியே செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். ஸ்வாமி கொடுத்துள்ள மனசுதான் இப்போது நம்மை அவரிடமிருந்த பேதப்படுத்துகிறது. இந்த மனசை எடுத்த எடுப்பில் போ என்றால் போகாது. ஆகவே, இந்த நிலையில் இதே மனசால் அவர் ஒருத்தரை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும். மனசை அவர் குரங்காகப் படைத்திருக்கிறார். அந்தக் குரங்கு இப்போது

தேகத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், ஸ்வாமி இந்தத் தேகத்தை நசிப்பதாக அல்லவா வைத்திருக்கிறார்?

இந்த அழுகல் பழத்தை மனக்குரங்கு விட்டுவிட வேண்டும். அழுகாத பழம் கிடைத்தால் அழுகல் பழத்தைக் குரங்கு போட்டுவிடும். அழுகாத மதுரமான பழம் பரமாத்மாதான். அதை மனத்தால் பிடித்துக்கொண்டு சரீரப் பிரக்ஞையை விட்டுவிட அப்பியசிக்க வேண்டும். இதற்குத்தான் பக்தி, பூஜை, க்ஷேத்திராடனம் எல்லாம் வைத்திருக்கிறது. இவற்றில் மேலும் மேலும் பக்குவமடைந்து சரீரப் பிரக்ஞை, அகங்காரம் அடியோடு போய்விட்டால், அவர் பரமாத்மா, நாம் ஜீவாத்மா என்கிற பேதமே போய், அவரே நாமாக, அத்வைதமாக ஆகிவிடுவோம். 'நீ வேறெனாதிருக்க' என்று அருணகிரிநாதர் பாடிய அனுபவத்தை அடைவோம்.

## அத்வைதம்

'அத்வைதம்' என்பதே ஆதி சங்கர பகவத் பாதர்கள் நிலைநாட்டிய சித்தாந்தம் என்று எல்லோருக்கும் தெரியும். 'அத்வைதம்' என்றால் என்ன? 'த்வி' என்றால் இரண்டு. மீஷ்ஷீ என்பது அதிலிருந்து வந்ததுதான். 'த்வி'யிலுள்ள த் (பீ) என்பதே 'டூ' வில் 'ட்' (மீ) ஆகிவிட்டது. உச்சரிப்பில் 'டூ' என்று சொன்னாலும், ஸ்பெல்லிங்கில் -க்கு அப்புறம் ஷ் வருகிறது ஷ்- வுக்கு 'வ' சப்தமே உண்டு. 'த்வி'யில் உள்ள 'வ' தான் இங்கே ஷ் - ஆகிவிட்டது. 'த்வி'தான் - இரண்டு. 'த்வைதம்' என்றால் இரண்டு உண்டு என்று நினைப்பது. 'அத்வைதம்' என்றால் 'இரண்டு இல்லை' என்று அர்த்தம்.

எந்த இரண்டு இல்லை? இப்போது ஸ்வாமி என்று ஒருத்தர் இருக்கிறார். அவருக்கு இரண்டாவதாக ஜீவர்கள் என்ற நாம் இருக்கிறோம் என்று நினைக்கிறோம் அல்லவா. இப்படி இரண்டு இல்லவே இல்லை. ஸ்வாமி (பிரம்மம்) என்கிற ஒரே சத்திய வஸ்துக்குப் புறம்பாக எதுவுமே இல்லை. அது தவிர, இரண்டாவது வஸ்து எதுவுமே இல்லை. அந்த ஒன்றேதான் மாயா சக்தியினால் இத்தனை ஜீவர்கள் மாதிரியும் தோன்றுகிறது. இதெல்லாம் வெறும் வேஷம்தான். ஒரு நடிகன் பல வேஷம் போட்டாலும் உள்ளேயிருக்கிற ஆள் ஒருத்தன்தான் என்பதுபோல் இத்தனை ஸ்வாமி ஒருத்தன்தான் என்பதுபோல் இத்தனை ஜீவராசிகள் இருந்தாலும் அவற்றுக்கு உள்ளேயிருக்கிற ஆள் ஸ்வாமி ஒருத்தன்தான். ஜீவாத்மா பரமாத்மா என்று விவகார தசையில் பிரித்துச் சொன்னாலும் வாஸ்தவத்தில் உள்ளது ஒரே ஆத்மாதான். 'நாம் மாயையைத் தாண்டி இந்த ஞானத்தை அநுபவத்தில் அடைந்துவிட்டால், அப்புறம் எத்தனையோ குறைபாடுகள் உள்ள ஜீவர்களாக இருக்கமாட்டோம்: ஒரு குறையுமில்லாத, நிறைந்த நிறைவான சத்தியமாகவே ஆகிவிடுவோம்' என்பதுதான் ஆசாரியாள் உபதேசித்த அத்வைத தத்துவம்.

இந்த அநுபவத்தை அடைந்துவிட்டால், அப்புறம் கஷ்டம், பயம், காமம், துவேஷம், எதுவும் நம்மைக் கட்டுப்படுத்தாது. நமக்குப் புறம்பாக எதுவோயிருப்பதாக நினைப்பதால்தானே அதனிடமிருந்து கஷ்டம், பயம், காமம், குரோதம், இத்யாதிகள் நம்மைக் கட்டிப் போடுகின்றன இது தானே

சம்ஸார பந்தம்? நம்மைத் தவிர இன்னொன்றே இல்லாதபோது எவன் கட்டப்படுவான், எது

கட்டுப்படுத்தும்? கட்டு என்பதுதான் ஏது? இரண்டாவது வஸ்துவேதான் கிடையாதே கட்டு என்றும் கட்டுகிற வஸ்து என்றும் நமக்கு வெளி வஸ்து எப்படியிருக்க முடியும்? கட்டிலிருந்து விடுபட்ட (மூச்-விடுபடுதல்) இந்த நிலைதான் முக்தி அல்லது மோக்ஷம்.

'இந்த நிலையை எங்கேயோ வைகுண்டத்தில், அல்லது கைலாசத்தில் என்றைக்கோ போய்ப் பெற வேண்டியதில்லை. இதை இங்கேயே இப்போதே அநுபவித்து விடலாம். வாஸ்தவத்தில் இந்த மோஷத்தை நாம் ஒன்றும் புதிதாக அடைவதும் இல்லை. பிரம்மம் என்கிற எல்லையற்ற சத்தியம் எப்போதுமே கட்டுப்படாத மோக்ஷமாக இருந்து கொண்டேதான் இருக்கிறது - பிரபஞ்சத்தில் ஆகாயம் (ஷஜ்ணீநீமீ) எங்கு பார்த்தாலும் கட்டுப்படாமல் இருக்கிற மாதிரி இந்தப் பிரபஞ்சத்திலேயே பல பானைகளை வைத்திருக்கிறோம் என்றால், அவற்றுக்குள் இருக்கிற காலியிடத்திலும் எப்போது அந்த ஆகாசம் இருந்து கொண்டேதான் இருக்கிறது. ஒன்று எங்கும் பரந்து விரிந்த மஹாகாசம், மற்றது பானைக்குள் (கடத்துக்கள்) உள்ள கடாகாசம் என்று நம் பார்வையில் வேண்டுமானால் பிரித்துச் சொல்லலாமே தவிர, இரண்டு ஆகாசமும் வாஸ்தவத்தில் ஒன்றேதான். பானை என்கிற ரூபத்தை உடைத்துப் போட்டுவிட்டால் நம் பார்வைக்குக்கூட இரண்டும் ஒன்றாகவே ஆகிவிடுகிறது. இப்படியே பிரம்மத்தில் தனித்தனி பானைகள் மாதிரி நாம் மாயாசக்தியால் தோன்றியிருக்கிறோம் ஆனாலும் நாம் பிரம்மமேதான். மாயையின் பந்தத்தால் இது நமக்குத் தெரியவில்லை. அதை உடைத்து விட்டால் நாமும் அகண்டமான பிரம்மமே என்ற அநுபவம் வந்துவிடும்.

அந்த அநுபவம் சிந்திப்பதற்குப் படிகளாக கர்மம், உபாஸனை இப்படிப் பல இருக்கின்றன. ஆசாரியாள் நாம் எல்லோரும் ஏறிப்போவதற்கு சௌகரியமாகப் படிக்கட்டும் போட்டுக் கொடுத்திருக்கிறார். இந்த உபாயங்களை அநுஷ்டிக்கிற போதே, நாம் பார்ப்பவை யாவும் ஒன்றுதான் என்ற நினைப்பும் நமக்கு உள்ளூர இருந்துகொண்டே இருக்க

வேண்டும். 'எல்லாம் ஒன்று' என்பது பிரத்தியட்ச அநுபவமாக வருகிறபோது வரட்டும். ஆனால், இதுதான் உண்மை என்ற நினைப்பை இப்போதிலிருந்தே அடிக்கடி உண்டாக்கி கொள்ள வேண்டும்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்க வேண்டும் என்று சொல்லி விட்டார். ஆனால் உலகத்தில் வேறு வேறாகத் தெரிகிற எல்லாப் பிராணிகளையும் 'நாமாக' எப்படிப் பார்ப்பது என்று குழப்பமாக இருக்கிறது.

ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று மூன்று அவஸ்தை நிலைகள் உண்டு. சாதாரணமாக விழித்துக் கொண்டிருப்பது ஜாக்ரம்: கனாக் காண்பது ஸ்வப்னம் ஒன்றும் தெரியாமல் தூங்குவது ஸுஷுப்தி. இந்த மூன்று அவஸ்தைகளிலும் ஒருவனேதான் இருக்கிறான். கனாக் கண்டவனும் விழித்துக் கொண்டவனும் ஒருவனே. ஆனால், கனாக் கண்ட பொழுது நடக்கிறவைகளுக்கும், விழித்துக் கொண்டபின் நடக்கிறவைகளுக்கும் முன்னுக்குப் பின் சம்பந்தமே இல்லை. கனவில் வேற விதமான நடவடிக்கைகள் இருக்கின்றன. விழித்துக்கொண்டபோது வேறே விதமான நடவடிக்கைகள் இருக்கின்றன. அவஸ்தை வேறுபட்ட போதிலும், மனோபாவம் வேறுபட்ட போதிலும் இரண்டிலும் ஒருவனே இருப்பதுபோல, வேற

வேற மனோபாவம் கொண்ட பல பிராணிகளிடத்திலும் இருப்பவன் ஒருவனே: அவனே நாம் என்று தெளிய வேண்டும்.

ஒரு காலத்தில் நமக்குச் சாந்த குணம் இருக்கிறது. மற்றொரு சமயத்தில் கோபம் இருக்கிறது. ஆனாலும் இரண்டு அவஸ்தையிலும் இருப்பவன் ஒருவனே என்பது அநுபவத்தில் தெரிகிறது. அவஸ்தா பேதங்களில் நம் முகம், கைகால் எல்லாவற்றின் போக்கும் மாறுகின்றன. காலபோதத்தால் குழந்தை கிழமாகிறபோது தேகங்கூட வேறாக மாறுகிறது. இது விவகார உலகத்தில், ஸ்வப்பன உலகத்திலே கேட்கவே வேண்டாம். நம் ஒருவருடைய மனஸிலிருந்தே பல பேருடைய ரூபங்கள், பல வேறு இடங்கள் பல வேறு காலங்கள் எல்லாம் கனவில் உண்டாகின்றன. நாம் செய்யக்கூடாதென்று நினைக்கிற

காரியங்களையெல்லாம் கனவில் செய்வதாகக் காண்கிறோம். இம்மாதிரி அவஸ்தா பேதங்களில் ஒன்றுக்கொன்று விரோதமான காரியங்களைச் செய்தாலும் வேறு வேறு விதமான தேகமும் மனஸும் இருந்தாலும், எல்லா அவஸ்தைகளிலும் இருப்பவன் ஒருவனே என்பது தெரிகிறது. நமக்கு ஜன்னி பிறந்தால் அதற்கு முன் நாம் செய்த காரியங்களுக்கு விரோதமாகச் செய்கிறோம். நாம் முன்ப ஒரு புஸ்தகம் எழுதியிருந்தால் இப்போது அதை நாமே கிழித்து விடுகிறோம். எழுதியவனும் கிழித்தவனும் ஒரே போர்வழி.

இந்த உலகமும் ஒரு கனவுதான். உலக வாழ்வும் மாயா ஜுரத்தில் வந்த ஜன்னி என்று தெரிந்து கொண்டால், உண்மையில் எல்லாம் ஒன்று என்று உணர்வோம். நம் கனவில், நம் ஒருத்தரின் மனமே இத்தனை பேரை சிருஷ்டித்த மாதிரி, மகா பெரிய மனசு ஒன்றின் எண்ணங்கள்தான் இத்தனை ஜீவராசிகளும் என்று தெரியும். மற்றொருவன் நாம் எழுதிய புஸ்தகத்தைக் கிழித்தால் அவனும் நாம்தான் என்று உணர்வோம். விவகார உலகத்தில் எழுதியவனும் கிழிப்பவனும் வெவ்வெறு தேகத்தில் இருப்பதனால் வாஸ்தவத்தில் உள்ளேயிருப்பவன் வேறாகி விடமாட்டான். எல்லாவற்றுக்குள்ளேயும் இருப்பது ஒன்றுதான். ஒருவன் நம்மை அடித்தால் வேறொருவன் நம்மை அடிப்பதாக நினைப்பது தப்பு. நாமே நம்மை அடித்துக்கொள்கிறோம் என்பதுதான் சத்தியம்.

இது சத்தியமில்லை என்றால், ஸ்வாமி அல்லது பிரம்மத்துக்குப் புறம்பாக இன்னொன்று இருக்கவேண்டும். அப்படியானால் அது எங்கிருந்து வந்தது, அது எதைக்கொண்டு பண்ணப்பட்டது, அப்படிப் பண்ணினவன் யார் என்ற கேள்வி வருகிறது.

இப்போது நாம் அறிவுள்ள (சைதன்யமுள்ள) ஜீவர்கள் என்றும், அறிவில்லாத ஜடப்பிரபஞ்சம் என்றும் இருக்கிறோம். ஜடப்பிரபஞ்சத்தை நாம் உண்டு பண்ணவில்லை. அதே மாதிரி ஜடப்பிரபஞ்சமும் நம்மை உண்டு பண்ணவில்லை - அறிவில்லாத அது எப்படி, தானாக ஒரு காரியத்தைப் பண்ண முடியும்? அதிலும் அறிவில்லாத ஜடம் எப்படி அறிவுள்ள ஜீவனை உண்டாக்க முடியும்?

அறிவில்லாத ஜடப் பிரபஞ்சம் அநாதி காலமாக ரொம்பவும் சிரமத்தோடு நடந்து வருகிறது என்றால், அதை ஒரு பேரறிவுதான் படைத்து நடத்தி வர வேண்டும். அப்பேரறிவு வேறு ஏதோ வஸ்துவைக் கொண்டு பிரபஞ்சத்தைப் படைத்தது என்றால், அந்த வேறொரு வஸ்து எப்படித் தானே வந்தது என்று கேள்வி வருகிறது. எனவே,

பேரறிவேதான் இப்படித் தன்னைத் தானே ஜடப் பிபஞ்சமாகக் காட்டிக் கொள்கிறது என்றாகிறது. அப்புறம், இந்த ஜீவர்கள் இருக்கிறோமே நாம் நாமாகவா உண்டானோம்? ஜீவ ராசிகளில் ஒவ்வொரு இனமும் ஒரேவிதமான சுபாவங்கள், குண விசேஷங்கள், சரீர அமைப்பு ஆகியவற்றோடு இருப்பதைப் பார்த்தால் அது எதுவும் தனித்தனியாக இப்படி உண்டாகியிருக்க முடியாது என்று நிச்சயமாகிறது. ஆனபடியால், இந்த ஜீவ சமூகம் முழுவதையும் ஒரு பேரறிவுதான் படைத்திருக்கிறது என்றாகிறது. ஜீவனுடைய அறிவு வேறெங்கிருந்தோ வரவில்லை: அந்தப் பேரறிவின் வேலைதான் என்று தெரிகிறது.

இந்த ஜீவர்களுக்கு உணவு, உடுப்பு முதலியன ஜடப் பிரபஞ்சத்திலிருந்து கிடைக்க வேண்டியிருக்கிறது. ஜடத்தில் உள்ளவற்றை - வாசனை, சுவை, சீதம் உஷ்ணம் முதலியவற்றை - அநுபவிக்க ஜீவனுக்கு இந்திரியங்கள் இருக்கின்றன. இப்படி ஜடப் பிரபஞ்சமும் ஜீவப்பிரபஞ்சமும் ஒன்றுக்கொன்று நெருங்கிச் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இது ஜீவனாக ஏற்படுத்திக் கொண்ட சம்பந்தம் அல்ல, இவன் ஜடப்பிரபஞ்சத்திலிருந்துதான் சாப்பாடு, துணி, வீடு, எல்லாம் பெற வேண்டும் என்று இவனா திட்டம் போட்டான்? இவன் போட்டால்தான் அது கட்டுப்படுமா? எனவே அந்தப் பேரறிவுதான் இப்படி சங்கற்பம் செய்து, இவனை அதோடு சம்பந்தப்படுத்தி வைத்திருக்கிறது என்று தெரிகிறது. ஜடப் பிரபஞ்சத்தை ஏதோ ஒரு சக்தி படைத்தது. ஜீவப் பிரபஞ்சத்தை வேறொரு சக்தி படைத்தது என்றால் இவை இரண்டையும் இப்படிச் சேர்த்துப் பிடித்துச் சம்பந்தப்படுத்தி வைக்க முடியாது. எனவே ஜடம், சைதண்யம், இரண்டுக்குமே மூலம் அந்தப் பேரறிவுதான் என்றாகிறது. அது 'படைத்தது' என்று சொன்னாலும் வெளி வஸ்துவைக் கொண்டு படைக்கவில்லை என்று பார்த்தோம். எனவே,

அதுவேதான் இத்தனை போலவும் தோன்றுகிறது என்பதே பரம சத்தியம். ஆக, இருப்பது ஒன்றுதான். ஒன்றே பலவிதமாகத் தோன்றுகிறது. இப்படிப் பலவகையாகத் தோன்றுவதற்குரிய சக்தி அதற்கு இருக்கிறது. அதைத்தான் மாயை என்பது. ஒரே பிரம்மம் மாயா சக்தியால் பலவற்றைப்போல் தெரிகிறது என்பதுதான் அத்வைதம்.

ஜகத் முழுவதையும் இந்த மாதிரி ஒன்றாகப் பார்க்கும் மனோபாவத்தைப் பழகிக் கொள்ள வேண்டும். எல்லாம் ஒன்றானால் தானும் பிறரும் வேறு வேறாக இருக்க முடியாது. இந்நிலையில் ஜகத்தும்கூட அறியப்படுகின்ற வஸ்துவன்று அறிபவனாகிய தானே அது என்ற அநுபவம் வந்து விடும். இப்பொழுது கை

நாமாகத் தோன்றுகிறது. கால் நாமாகத் தோன்றுகிறது. உடம்பு நாமாகத் தோன்றுகிறது. இதுபோல் உலகனைத்தும் நாமாகிவிட வேண்டும். அப்படிப்பட்ட ஞானம் ஒருவனுக்கு அநுபவத்தில் வந்தால், அவன் சண்டாளனாயிருந்தாலும் அவன்தான் பண்டிதன். ஆசார்யாள் இதை "மனீஷா பஞ்சக"த்தில் எடுத்துச் சொல்கிறால். இந்த ஞானம்தான் மாறாத ஆனந்தமான மோக்ஷம்: இந்தச் சரீரத்தில் இருக்கும்போதே அநுபவிக்கக் கூடிய மோக்ஷம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### அதுவேதான் இது!

ஒரு கோயிலுக்கு யானை வாகனம் செய்தான் ஒரு மரத்தச்சன். அதைப் பரீட்சிப்பதற்காக இன்னொரு தச்சன் போனான். அவனோடு அவனுடைய

குழந்தையும் போயிற்று. மர யானையைப் பார்த்ததும் குழந்தை பயந்தது. மர யானையைப் பரீட்சிப்பதற்காக அதன் அப்பாவான தச்சன் நெருங்கியபோது குழந்தை, "அப்பா யானை கிட்டப் போகாதே அது முட்டும்" என்று கத்தியது. தச்சன் குழந்தையிடம், "இது மரப் பொம்மைதான்: முட்டாது"

என்று சொல்லிச் சமாதானம் செய்த அதையும் யானைக்குப் பக்கத்தில் அழைத்துப் போனான்.

குழந்தைக்கு அந்த வாகனம் அசல் யானையாகவே இருந்தது. அதுமரம் என்கிற ஞானத்தைக் குழந்தையிடமிருந்து மறைத்தது. அது யானையாக்கும் என்கிற நினைப்பு, அதே சமயத்தில், அது தத்ரூபம் யானை மாதிரி இருந்தும் கூடத் தச்சன் பயப்படாததற்குக் காரணம், அதன் யானைத் தன்மை அவனைப் பொறுத்தமட்டில் மறைந்து அது மரம்தான் என்கிற அறிவு இருந்ததேயாகும்.

மரத்தை மறைத்தது மாமத யானை

மரத்தில் மறைந்தது மாமத யானை

என்று இந்த இருவர் நிலையையும் யோகீசுவரர். பெரிய தத்துவங்களை லகுவாகச் சொல்லிவிடுவார் அவர். அவரது திருமந்திரத்தில் தான் மேலே சொன்ன வாக்கு இருக்கிறது. திருமூலர் எதற்கு இந்தக் கதையைச் சொன்னார்? செய்யுளின் அடுத்த இரண்டு அடிகளைப் பார்த்தால் அது புரியும்.

பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்

பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்.

யானை வேறு, மரம் வேறு இல்லை என்பதுபோல் பரமாத்மா வேறு, உலகம் வேறு இல்லை என்று இப்படித் திருஷ்டாந்தம் காட்டி விளங்ககுகிறார் திருமூலர். பரமாத்மா என்கிற மரத்தினாலேயே ஆனதுதான் இந்தப் பார் முதலிய பிரபஞ்சம் என்கிற பொம்மை. குழந்தைக்குப் பொம்மையின் மரம் தெரியாததுபோல், நமக்கு உலகத்தில் மரம் தெரிவதில்லை. நம் பார்வையில் பார் முதலான பஞ்சபூதங்கள் பரத்தை மறைத்துவிட்டன. ஞானிகளுக்கோ எல்லாம் பிரம்ம மயமாகவே தெரிகிறது. அவர்கள் விஷயத்தில், பார்முதற் பூதங்கள் மரத்தில் மறைந்துபோய் விடுகின்றன.

அது சரி. இந்தக் கதை எல்லாம் என்னத்துக்கு என்று கேட்கலாம். நமக்கு வேண்டியது லோகத்தில் வசதியான வாழ்க்கை: அதற்குத் தேவை பணம், காசுதான்.

பரத்தைப் பற்றியும் பாரைப் பற்றியும் நமக்கென்ன கவலை என்று கேட்கலாம்.

சரி, எல்லாரும் பணக்காரராகி விடுவதாகவே வைத்துக் கொள்வோம்.

நிம்மதியாக, சாந்தமாக, நிர்ப்பயமாக இருக்க அது உதவுமா? பணக்காரர்கள் நிறைந்த தேசங்களைப் பாருங்கள். அங்கே எத்தனை சச்சரவு, நிம்மதியின்மை? எல்லோருக்கும் நிறையப் பணம் வந்துவிட்டாலும், ஒவ்வொருவனுக்கும் மற்றவனைவிட அதிகம் இருக்க வேண்டும் என்ற போட்டி மனப்பான்மையே மனித சுபாவம். எல்லோருக்கும் எல்லா சௌகரியங்களும் சமமாய்க் கிடைக்கும் என்றால்கூட, அது தனக்கே முதலில் கிடைக்க வேண்டும் என்று ஒவ்வொருத்தரும் போட்டி போடுவார்கள். உதாரணமாக ஒரு சின்ன விஷயம். இந்த மடத்திலேயே பாருங்கள் நான் அத்தனை பேருக்கும் தீர்த்தம் தந்து விட்டுத்தான் உள்ளே போவேன் என்று எல்லோருக்கும் தெரியும். இருந்தாலும், அமைதியாக, வரிசையாக நமக்குத் கிடைக்கிற போது கிடைக்கட்டும் என்று இருக்க முடிகிறாதா? கிடைத்தால் மட்டும் போதாது, முதலில் கிடைக்க வேண்டும் என்று ஒருவரையொருவர்

இடித்துக்கொண்டு, விழுந்து வாரி, சண்டை போட்டுக்கொண்டுதானே வருகிறீர்கள்? இம்மாதிரி போட்டி இருக்கிற வரையில் மனநிறைவு யாருக்கும் உண்டாகாது. பொருளாதார 'வசதி' மட்டும் உண்டாவதால் இந்தப் போட்டி குறையாது.

போட்டி போக வேண்டுமானால், போட்டி போட இன்னொரு வஸ்துவே இல்லை என்ற ஞானம் வரவேண்டும். அப்போதுதான் 'ஞானமெல்லாம் எதற்கு? 'என்காமல், எப்போதும் சாசுவதமாய்ச் செய்யவேண்டிய காரியம் ஆத்ம விசாரம்தான். உலகத் துன்பங்களை விலைக்கு வாங்கிக் கொள்ளாமலிருக்க வேண்டுமானால், 'இந்த உலகம் என்பது நாம் நினைக்கிறப்படியில்லை: இதுவே சிவ மயமானது: அது வேறு - இது வேறு அல்ல. மரமே யானை: பாரே பரம் என்ற நினைப்பு இருந்துகொண்டே இருக்கவேண்டும். இந்த ஞானம் இல்லாவிட்டால் எத்தனை பொருளாதார முன்னனேற்றம் வந்தாலும் லோகம் இருட்டில் அகப்பட்டுக் கொண்டிருப்பதாகவே அர்த்தம். இருட்டை விரட்டும் ஞானப்பிரகாசம்தை அடைகிற பிரயாசையை நாம்

ஒருபோதும் தளரவிடக்கூடாது. சூரியன் போனால்கூடப் பாதகமில்லை. இந்த ஞான ஒளி நம்மை விட்டு ஒருபோதும் போகவிடக்கூடாது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### ஸ்வாமி எதற்கு? அத்வைத அமைதிக்கே

மிகவும் கிரமமாக நடந்துவரும் இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து நடத்தி வருகிறவனாக ஒரு கடவுள் இருந்தேயாக வேண்டும் என்பது ஆஸ்திகர்களின் கட்சி. "ஒரு காரியம் செய்தால் அதற்கு ஒரு விளைவு இருந்தே தீருகிறது. இவ்வாறு நம் காரியங்களைப் பார்த்து அதற்குப் பலனைத் தருபவர் அந்த ஆண்டவனே" என்று ஆஸ்திகர் சொல்கிறார்கள். 'இருந்தால் இருக்கட்டுமே, அவனிடம் எதற்காக பக்தி செலுத்த வேண்டும்' என்று கேட்கலாம். "நம்மைக் கேட்டுக் கொண்டா அவன்

நம்மைப் படைத்தான்? அவன் நம்மைப் படைத்தால் நமக்குக் கஷ்டங்கள்தானே இருக்கிறது அவனிடம் பக்தி எதற்கு?" என்று ஆட்சேபிக்கலாம்.

"கஷ்டங்களைத் தீர்க்கவும் அவனால் முடியும். அதற்காக பக்தி செலுத்துங்கள்" என்று ஆஸ்திகர் சொன்னால் மற்றவர்கள் அதையும்

ஆட்சேபிக்கலாம். "நாம் பிரார்த்தனை செய்தால்தான் அவன் கஷ்டத்தைப் போக்குவான் என்றால், உங்கள் ஸ்வாமி நீங்கள் சொல்வதுபோல் கிருபா சமுத்திரமாக இல்லை என்றே அர்த்தம்' எனலாம். 'இன்ன காரியத்துக்கு இன்ன விளைவு என்று அவன்தான் பலனைத் தருகிறான் என்கிறீர்கள். அப்படியானால் நம் பாபத்துக்காக அவனே தண்டனையாகத் கஷ்டத்தைத் தரும்போது, அதை மாற்றும்படி நாம் பிரார்த்தனை செய்யலாமா?' என்றும் கேட்கலாம். மகானாகிய நீலகண்ட தீக்ஷிதர் தம்முடைய 'ஆனந்த ஸாகர ஸ்தவ'த்தில் இதற்குப் பதில் சொல்லுகிறார். 'அம்மா மீனாக்ஷி, உன்னிடம்

எதையும் சொல்லவே வேண்டாம். சகலமும் தெரிந்தவள் நீ. ஆனாலும் உன்னிடம் கஷ்டங்களை வாய் விட்டுச் சொல்லாவிட்டால் மனம் புண்ணாகிறது. வாய்விட்டுச் சொல்லிவிட்டாலே தற்காலிகமாக ஒரு ஆறுதலாக, தெம்பாக இருக்கிறது. அதனாலேயே உனக்கு எல்லாம் தெரிந்திருந்தாலும் நான் என் குறைகளைச் சொல்கிறேன்" என்கிறார்.

கஷ்டங்களைச் சொல்லிக் கொள்ளாமல் யாராலும் இருக்க முடியாது.

வெளிப்படச் சொன்னாலே அதில் ஒரு நிம்மதி பிறக்கிறது. கண்ட இடத்தில் போய்ச் சொல்லிக் கொள்ளாமல் - கேட்பவர்கள் எப்படி எடுத்துக் கொள்வார்களோ என்றில்லாம்ல் - பகவானிடம் கஷ்டத்தைச் சொல்லிக் கொள்ளலாம். அவன் கிருபா சமுத்திரமாக இருந்து நாம் கேட்காமலே கஷ்ட நிவருத்தி தந்தாலும் சரி, அல்லது பலனைத் தரும் பலதாதா என்கிற முறையில் நம் பாவத்துக்குத் தண்டித்தே தீருவான் என்றாலும் சரி, அல்லது கஷ்டத்தை மாற்றாமலே அதைத் தாங்கிக் கொள்ளும் பக்குவத்தை நமக்குத் தந்தாலும் சரி, அவனிடம் முறையிட்டுக் கொள்வதே நமக்கு ஓரளவு சாந்தி.

ஆனால் வாஸ்தவத்தில் நான் ஈசுவர பக்தி என்று சொல்வது நம் கஷ்ட நிவிருத்திக்காகப் பிரார்த்திப்பதை அல்ல. அல்லது நமக்கு சந்தோஷ வாழ்வைத் தந்தவனுக்கு நன்றியாகப் பக்தி செலுத்த வேண்டும் என்றும் சொல்லவில்லை. நான் அப்படிச் சொன்னால், "மரம் வைத்தவன் ஜலம் ஊற்றத்தான் வேண்டும். அது அவன் கடமை. இதற்கு என்ன நன்றி?" என்று யாராவது ஆட்சேபிக்கலாம்.

ஆகவே இதற்கெல்லாம் நான் பக்தியைச் சொல்லவில்லை. பின் எதற்குச் சொல்கிறேனென்றால், இப்போது கஷ்டம், சந்தோஷம் என்ற இரண்டு வார்த்தைகளைச் சொன்னேனே, இந்த இரண்டுமே மனஸை ஆட்டுபவைதான். மனம் ஆடாமல் இருப்பதுதான் உண்மை ஆனந்தம். மற்ற சந்தோஷங்கள் எதுவும் நிரந்தரமானவை அல்ல. தூங்கும்போதும் ஜடமாகப் பிரமை பிடித்திருந்தாலும் கஷ்டம் - சுகம் இல்லைதான். ஆனால் அப்போது ஆனந்தமா, சாந்தமாக இருக்கிறோம் என்றுமூ தெரிவதில்லை. மனஸில்

அலை எழாமல் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அமைதியாக இருக்கிறோம் என்ற பூரண ஞானத்துடன் அப்படி இருக்க வண்டும். அந்த நிலை வந்துவிட்டால் நமக்கு ஈடு இனை இல்லை. மனசு என்று ஒன்று இருந்து அதிலே எண்ணங்கள் தோன்றுகிறபடியால்தான் "பரமாத்மாவுக்கு வேறாக ஜீவாத்மா என்ற நாம் இருக்கிறோம்" என்ற எண்ணமே உண்டாக முடிகிறது. மனசு நின்று போய்விட்டால் இந்த பேதபுத்தி போய்விடும். பரமாத்மாவுக்கு வேறில்லாத அத்வைதம் என்கிற பெரி..ய்ய, நிறைந்த நிலையில் அப்படியே ஆடாமல் அசையாமல் இருந்து விடுவோம். சாந்தி, அமைதி வேண்டும என்றே நாம் மனசை நிறுத்தினாலும், அதன் பலன் அகண்டாகாரமான அத்வைத அநுபவமே ஆகிறது. அநத் நிலை வருவதற்கு அந்நிலையில் உள்ள ஒன்றைத் தியானித்துக் கொண்டே இருக்க வேண்டும். நாம் ஒன்றையே நினைத்துக் கொண்டிருந்தால், அந்த நினைவு நம்மை அதுபோலவே உருவாக்கிவிடுகிறது. இதை விஞ்ஞான ரீதியில் அமைதிக்கு, ஆனந்தத்துக்கு ஒரு லட்சிய உதாரணமாக (ideal) இருப்பது ஸ்வாமிதான்.

பிரபஞ்சத்தை நடத்தி இத்தனை காரியங்களை செய்தும், கவனித்தும் பலனளித்தும் வந்தாலும் ஸ்வாமி இதனால் எல்லாம் மனம் சலிக்காமல் சாந்தமாக இருக்கிறார். ஈச்வரனை ஸ்தாணு என்பார்கள். கட்டை மரம், பட்ட கட்டை என்று அர்த்தம். உயிரோட்டம் உள்ள மரம்தான். ஆனாலும் உணர்வில்லாத மாதிரி இருக்கிறது. இந்தக் கட்டையை சுற்றிக் கொண்டிருக்கும் கொடி, அம்பாள். அந்தக் கொடிக்கு அபர்ணா என்று ஒரு பெயர். அதாவது, இலை இல்லாதது என்று அர்த்தம். உயிரோட்டத்துடன், ஆனால் உணர்ச்சிக் கொந்தளிப்புகள் இல்லாத

பராசக்தி என்ற கொடியானது உயிரோட்டம் இருந்தாலும் உணர்ச்சி இல்லாதது போலிருக்கும் பரம்பொருளைக் சுற்றிக் கொண்டிருக்கிறாள். ஸ்வாமீ என்று நினைக்கும்போதே ஞானம் சாந்தம் என்ற இரண்டு பாவமும் நம் மனசிலும் வருகின்றன. எனவே, ஸ்வாமியைத் தியானம் செய்யச் செய்ய இந்த ஞானம், சாந்தம் இந்த இரண்டும் நமக்கு நன்றாக ஸித்திக்கின்றன. இதற்கே ஸ்வாமி வேண்டும். அவரது ஸ்மரணையான பக்தி வேண்டும் என்கிறேன்.

நாம் கஷ்ட நிவிருத்திக்காக ஸ்வாமியிடம் போனாலும் சரி, அல்லது செளக்கியமாக இருக்கிறோம் என்று நன்றி காட்டப்போனாலும் சரி, அவரை நினைக்கிற பழக்கம் வலுக்க தானாகவே இந்தக் கஷ்டம் - செளக்கியம் ஆகியவற்றைப் பற்றியே நினைப்பதிலிருந்து நம் மனம் விடுபடும். அவர் எப்படி நடத்துகிறாரோ அப்படி நடத்திவைக்கட்டும் என்று பாரத்தை அவரிடமே தள்ளிவிட்டு விச்ராந்தியாக இருக்கிற மனோபாவம் உண்டாகும். ஏதோ ஓர் ஆனந்தமும் சாந்தமும் மனசில் படரத் தொடங்கும். இதுவே நம்மை அமர நிளையில் சேர்ப்பது, ஓயாமல் குறையுள்ள நாம் மாறாத நிறைவாக நிறைவதற்கு வழி செய்வது.

ஆத்ம விசாரம், தியானம், யோகம் இதுகளால்தான் நம் மனசைப் பட்ட கட்டை மாதிரி ஆக்கிக் கொண்டு நிறைந்த நிறைவாக இருக்க முடியும் என்பது உண்மை. பின்னே நான் இந்த சாதனைகளைச் சொல்லாமல் பக்தியைச் சொல்கிறேனே என்று கேட்கலாம். ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாள் ஒரு காரியமும் ஒரு சிந்தனையும் இல்லாமல் - அப்படிப்பட்ட நிலையில் பக்தி என்கிற மனசின் காரியமிகூட இல்லைதான் - இருக்கிற நிலையைத்தான் மோக்ஷம் என்றார். நான் பக்தி பண்ணுங்கள் என்று சொல்கிறேனே எனத் தோன்றலாம். ஆசார்யாள்கூட ஓர் இடத்தில் மோக்ஷத்துக்கான உபாயங்களில் பக்தியே பெரிதானது என்கிறாரே, அது எனக்கு சாதகமா என்று பார்த்தால், அடுத்த வரியிலேயே அவர் பக்தி என்பதற்கு புது மாதிரி லக்ஷணம் (definition) கொடுத்து விடுகிறார். அதாவது, தனது ஆத்மாவின் உண்மை நிலை என்ன என்று ஆராய்ந்து அதிலேயே ஆழ்ந்து கிடப்பதுதான் பக்தி என்கிறார். அவர் சொல்கிற இந்தப் பக்தி ஆத்ம விசாரமாக, தியானமாக, யோகமாகத்தான் இருக்கிறதேயொழிய , போதுவாக நாம் சொல்கிற அர்த்தத்தில், சற்று முன்னே நான் சொன்ன அர்த்தத்தில், அதாவது நமக்குப் புறம்பாக ஒரு ஸ்வாமி இருப்பதாகவும் அவரிடம் நாம் செலுத்துகிற அன்பே பக்தி என்றும் சொல்கிற அர்த்தத்தில், பக்தியாக இல்லை.

சரி இந்த இடத்தில் ஆசாரியாள் பக்தியை இப்படி வர்ணித்து (define)இருந்தாலும், அவரே தம் மடங்களில் எல்லாம் விஸிதாரமாக சந்திரமெளலீஸ்வர பூஜையை

வைத்திருக்கிறார். அரூபமான ஆத்ம தத்துவத்தை முடிவான லக்ஷ்யமாக அவர் சொல்லியிருந்தாலும், அவரே உறுவத்தோடு இருக்கப்பட்ட தெய்வங்களின் உபாஸனைகளையும் நிலைப்படுத்தி ஷண்மத ஸ்தாபகர் என்று விருது பெற்றிருக்கிறார். க்ஷேத்திரம் க்ஷேத்திரமாகப் போய் அங்கங்கே உள்ள மூர்த்திகளில் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார். இதை எல்லாம் பார்த்தால் லோகரீதியில் நாம் சொல்கிற பக்தியும் ஆசாரியார்கள் விசேஷமாக அங்கீகரித்த விஷயமே என்று தெரிகிறது.

சாதாரணமாக ஞானம் ரொம்ப உசத்தி, ஆத்ம விசாரம், தியானம், யோகம் இதெல்லாம் உசத்தி; பக்தி பூஜை, க்ஷேத்திரம் எல்லாம் அதைவிடத் தாழ்த்தி; இந்த பக்தியை விடவும்கூடப் பல தினுசான ஆசாரங்கள், அநுஷ்டானங்கள், வைதிக கர்மங்கள் எல்லாம் மூடநம்பிக்கை (superstition), பக்தி சமாசாரமெல்லாம் வெறும் உணர்ச்சி (sentimental) தியானம் (meditation), யோகம் (Yoga), ஆத்ம விசாரம் (Self-inquity) இதுகள்தான் ஆத்ம சம்பந்தமானவை (spiritual) என்கிற பேச்சு இப்போது ஜாஸ்தி.

ஆனால், ஆத்ம ஸ்வரூபத்திலேயே கரைந்து ஒரு காரியமும், ஒரு எண்ணமும் இல்லாமல் இருக்கிற அத்வைதத்தை நிலைநாட்டிய ஆசாரியாள் ஞான மார்கத்தைச் சொன்னவர் என்றாலும்கூட, அவர் மனசை வைத்துக் கொண்டு செய்கிற பக்தி, காரிய ரூபமான வைதிக கர்மாநுஷ்டானங்கள் எல்லாவற்றையுமே அங்கீகரித்திருக்கிறார். ஏன் இப்படி செய்திருக்கிறார் என்றால் இந்தப் பிரபஞ்சத்தில் மாட்டிக் கொண்டிருக்கிற நாம் இத்தனை பேருக்கும் சித்தம் ஓயாமல் ஓடிக்கொண்டேதான் இருக்கிறது. க்ஷண காலம்கூட அது நிற்க மாட்டேன் என்கிறது. நேராக, இதோ இப்பொழுதே மனதை நிறுத்திவிட்டு, ஒரு காரியமும் இல்லை என்று பண்ணிக்கொண்டு விடலாம் என்று யத்தனம் செய்து பார்த்தாலும் நடக்க மாட்டேன் என்கிறது. எண்ணங்கள் பாட்டுக்கு நாலா திசையும் ஓடிக் கொண்டேதான் இருக்கின்றன. நம்முடைய பாசங்கள், துவேஷங்கள், துக்கங்கள், பயங்கள், ஸந்தோஷங்கள் எல்லாம் மாறிமாறி வந்து மோதி அலைக்கழித்துக் கொண்டேதான் இருக்கின்றன. இவற்றையொட்டி இந்தக் காரியத்தைப் பண்ண வேண்டும். அந்தக் காரியத்தைப் பண்ணவேண்டும் என்கிற

திட்டங்களும் ஒயாமல் போட்டப்படிதான் இருக்கிறோம். ஆகக்கூடி, அப்படியே சித்தத்தை நிறுத்திவிட்டு ஆத்மாவில் முழுகிப்போ என்று சொல்லிவிடுவதினால் மட்டும் அந்த மாதிரி ஆகிற நிலையே வாஸ்தவத்தில் சாதித்துக் கொள்ள முடியவில்லை.

இந்த மாதிரி சித்தத்தை நிறுத்த முடியாமலிருப்பதற்குக் காரணம் என்ன? நம்முடைய பூர்வ கர்மாதான். பல தினுசான தப்புத் தண்டாக்கள், பாபங்கள், ஜன்ம ஜன்மமாகப் பண்ணிவிட்டோம். அந்த பாபங்கள் தீருகிற மட்டும் நமக்கு ஆத்மாநுபாவம் என்கிற பேரானந்தம் ஸித்திக்காது. கர்மாக்களுக்கெல்லாம் பலன் தருகிற பலதாதாவான ஈசுவரன் நம் பாபத்துக்கெல்லாம் தண்டனை கொடுத்துத் தீர்த்து வைத்து பிறகுதான் நமக்கு அந்த சாசுவதமான பேரின்பம் கிடைக்க முடியும். பாபத்தை எப்படித் தீர்த்துக்கொள்வது என்றால் புண்ணியத்தால்தான் தீர்த்துக் கொள்ளமுடியும். ஒரு ஜென்மாவில் இவன் பண்ணின பாபங்களை இன்னொரு ஜன்மாவிலிருந்து தீர்த்துக் கொள்ளட்டும் என்கிற மஹா கருணையால்தான் ஈஸ்வரன் மறுபடி ஜன்மா தருகிறார். ஆனால், நாம் என்ன செய்கிறோம். இந்தப் புது ஜன்மாவில் பழைய பாபங்களுக்கு நிவிருத்தியாகப் புதிய புண்ணியங்களைப் பண்ணாமலிருப்பதோடு, இப்போதும் வேறு புதிசு புதிசாகப் பல பாபங்களைச் செய்து மூட்டையைப் பெரிசாக்கிக் கொள்கிறோம். இப்படிப் பாபங்களைப் பெருக்கிக் கொள்ளாமல், அவற்றைக் கரைத்துக் கொள்வதற்காகத்தான் ஆசாரியாள் கர்மத்தையும், பக்தியையும் ஞானத்துக்கு அங்கமாக வைத்தார்.

பாபங்கள் இரண்டு தினுசு, ஒன்று சரீரத்தால் செய்த பாப கர்மா, இன்னோன்று

மனசினால் செய்த பாப சிந்தனை. பாப கர்மாவைப் போக்கிக் கொள்ள புண்யகர்மா செய்ய வேண்டும். பாப எண்ணங்களைப் போக்கிக் கொள்ள புண்ணியமான நினைப்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

புண்ய கர்மா என்ன? அவரவருக்கும் வேதம் விசித்த கர்மம்தான். லோக வாழ்க்கை சீராக நடக்க வேண்டும். அறிவினால் நடக்கிற கார்யம், ராஜாங்க ரீதியில் நடக்கிற கார்யம், வியாபார ரீதியில் நடக்கிற கார்யம், சரீர

உழைப்பினால் நடக்கிற கார்யம் எல்லாம் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல் அநுசரணையாக நடந்தால்தான் சமூக வாழ்வு சீராக இருக்கும் என்பதால் வேததர்மம் சமுதாயத்தை இப்படி நாலு கார்யங்களுக்காகவும் பிரித்து, ஒவ்வொருத்தருடைய தொழிலையும் ஒட்டி, அவரவருக்கான நியதிகளை, ஆசார அநுஷ்டானங்களை வகுத்துத் தந்திருக்கிறது. இவற்றைதத் துள்க்கூட மீறாமல் அவரவரும் தொழில் செய்தால் அதுவே புண்ணிய கர்மாவாகிறது. கர்மா எப்படி பாபமாகிறது என்றால் நமக்காக என்ற ஆசை வாய்ப்பட்டு ஏதோ ஒரு லட்சியத்தை பிடிக்கப் போகிற போதுதான் இந்த லட்சியப் பூர்த்திக்காக எந்தத் தப்பையும் செய்யத் துணிகிறோம். அதனால் சித்தத்தில் துவேஷம், துக்கம், பயம், இம்மாதிரி அழுக்குகளை ஏற்றிக்கொண்டு விடுகிறோம். இப்படி நாமாக ஒரு லட்சியத்துக்கு ஆசைப்படாமல், வேதம் சொல்கிறபடி என்று கர்மா செய்ய ஆரம்பித்து விட்டால் பேராசையின் அரிப்பு இல்லை. போட்டா போட்டி இல்லை. அதனால் வருகிற துவ்ஷம், துக்கம், இத்யாதி இல்லை. சமுதாயம் முழுக்க ஸர்ம ஜனங்களும், அதற்கும் மேலே ஸமஸ்தப் பிரபஞ்சமே நன்றாக இருக்கத்தான் வேதம் இப்படி கர்மாக்களைப் பிரித்துக் கொடுத்திருக்கிறது என்பதை புரிந்துகொண்டு, சொந்த லாபத்தைப் பெரிதாக நினைக்காமல், அதாவது பலனைக் கருதாமல், லோக க்ஷேமத்தையே நினைத்து இப்படிக் கர்மாக்களைப் பண்ணுகிறபோது அவை எல்லாம் புண்ணிய கர்மங்களாகி நமக்கு உள்ளூர நன்மை செய்கின்றன. வெளியில் லோக வாழ்க்கையில் அவை சமூகம் முழுவதற்கும் நன்மை உண்டாக்குவதோடு, உள்ளே நம்முடைய பாப கர்மங்களையும் கழுவித் தீர்க்கின்றன. தனக்கு என்ற பெரிய அரிப்பு இல்லாமல், எனவே அசூயை வஞ்சனை எதுவும் இல்லாமல் காரியம் செய்கிற போதுதான் அந்தக் காரியத்தில் முழு ஈடுபாடு உண்டாகிறது. சித்தம் காரியத்திலேயே நன்றாக ஈடுபடுவதினால் அதற்குப் பாப எண்ணங்களை நினைக்கவே இடம் குறைந்து போகிறது. அதாவது புண்ய கர்மமே சித்தம் சுத்தமாவதற்கு படிப்படியாக உதவுகிறது.

காரியமும் எண்ணமும் நெருங்கின சம்மந்தமுள்ளவை. காரியமே இல்லாமல் உட்காருகிறேன் என ஆரம்பித்தால் அப்போது மனசில் இல்லாத கெட்ட எண்ணங்கள் எல்லாம்

படை எடுத்து வரும். இங்கிலீஷில்கூட வேலையில்லாத சித்தம் சைத்தானின் பட்டடை என்று ஒரு பழமொழி உண்டு. ஆகவேதான் - சித்தம் நின்று அத்வைத ஞானம் ஸித்திக்க வேண்டுமானால் அதற்கு முன் அந்தச் சித்தம் சுத்தப்பட் வேண்டும். ஆரம்பத்தில் கர்மாக்களினாலேயே இந்தச் சித்த சுத்திக்கு வழி பண்ணிக் கொள்ள முடியும் என்பதால்தான் ஆசாரியாள் வேத கர்மாக்களை நிலைநாட்டினார். பாப சிந்தனைகளை போக்குகிற புண்ணிய சிந்தனைதான் பரோபகாரம், சேவா, மனப்பான்மை, தியாகம் எல்லாம். போதுவாக அன்பு என்று சொல்லலாம். இந்த அன்பை சகல ஜீவ ஜடப் பிரபஞ்ஜத்துக்கும் மூலமான

பரமாத்மாவிடம் திருப்பி விடுவதுதான் பக்தி. நமக்கு அந்தப் பரமாத்மாவே ஆதாரமாகையால் அதனிடம் மனசைத் திருப்பப் பழகினால் சுலபமாக அது அங்கே ஈடுபட்டு நிற்கிறது. பாப சிந்தனையே இல்லாமல் போய், ஏற்கனவே ஜன்மாந்தரங்களாக ஏற்றிக் கொண்டிருந்த பாப வாசனைகளும் பகவத் ஸம்ரணத்தினால் கரைந்து கரைந்து மனசானது பரமாத்மா ஒன்றையே கெட்டியாகப் பிடித்துக் கொள்கிற ஐகாக்ரிய நிலை லபிக்கிறது. மனசு அடியோடு இல்லாமல் போவதற்கு முந்தியப்படி இப்படி ஒன்றே ஒன்றை மட்டும் மனசால் பிடித்துக் கொள்வதுதான். ஆயிரம் கோடி வழிகளில் பாய்ந்து கொண்டிருந்த மனசு கடைசியில் ஒன்றையே பிடித்துக் கொண்டு, அப்புறம் அதிலேயே தோய்ந்து, கரைந்து போய் விட்டதால், முடிந்த முடிவில் சாசுவதப் பேராந்தமான ஆத்மா ஒன்றுதான் நிற்கும்.

ஒன்றிலேயே மனசை நிறுத்துவது என்கிற தியான லோகத்துக்கு நம்மை ஏற்றிவிடுகிற படிக்கட்டாகத்தான் பகவத்பாதாள் கர்மம், பக்தி இவற்றை உபாயங்களாக வைத்தார்.

பாராயணம், பூஜை, க்ஷேத்ராடனம் இப்படி ஆரம்பிக்கிற பக்தி, மனசை மேலும் மேலும் பரமாத்மாவிடம் ஒன்றுபடுத்த, நாம் கொஞ்ச கொஞ்சமாக அவருடைய பரம சாந்தமான நிஜ ஸ்வரூபத்தை அநுபவிக்கத் தொடங்குவோம். தூக்கம், மயக்கம், பிரமை மாதிரி இல்லாமல் நல்ல நினைப்போடு கூடவே (சிஷீஸீஹ்நீவீஷீ(ஹ்ஸ்வ) மனசு ஆடாமல் அசையாமல் இருக்கற பேரின்ப நிலைக்கு இப்படியாக்கிக்

கிட்டே கிட்டே கொண்டு கொண்டு சேர்ப்பது பக்தி என்பதற்காகவேரும் பரமாத்மாவிடம் பக்தி செலுத்த வேண்டும் என்கிறேன். அத்வைதம் என்று சும்மா வாயால் சொல்லிக் கொண்டிருப்பதால் ஒரு பிரயோஜனமும் இல்ல. அந்த நிலையிலே இருக்கிற மகத்தான, நிறைந்த சாந்தத்துக்கு ஒரு ரூபமாகவும் (றிமீக்ஷீவஷீஸீவீயீவீநீணீமீ வீஷீஸீ), லட்சிய உதாரணமாகவும் (ideal)இருக்கிற ஈசுவரன் என்கிறவனைப் பற்றிய நினைப்புதான் நம்மை அந்த நிலையில் அவ்வப்போது க்ஷண காலமாகவாவது தோய்த்து எடுக்கும். அத்வைத நிலை என்ற நமக்குப் புரிபடாத, நம்மால் பிரியத்துடன் ஒட்டிக் கொள்ள முடியாத ஒன்றைப் பற்றிச் சொல்வதைவிட, அந்த நிற்குண நிலையையே ஈசுவரன் என்று ஸகுணமாகப் பார்க்கிறதுதான் நமக்குப் பிடிப்பைத் தந்து நம்மை உயர்த்திவிடும். இப்படி உயர்த்திவிடவே ஸ்வாமி நமக்கு அத்யாவஸ்யமாகத் தேவைப்படுகிறார். அவரிடம் நமக்கு பக்தியும் அத்தியாவசியமாகத் தேவாப்படுகிறது. ஆக, சம்ஸாரத்தில் நமக்கு ஏற்படுகிற துக்கங்களின் நிவிருத்திக்காக என்றில்லாமல், நம்மை நாமே தெரிந்து கொண்டு, ஆத்ம சரீரத்தில் நிறைந்திருப்பதற்கு வழியாகவே ஈசுவர பக்தி வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### அத்வைதமும் அணு விஞ்ஞானமும்

மனித வாழ்வு உள்ள வரையில் ஆசை உண்டு. துன்பம் உண்டு. பயம் உண்டு. இவற்றிலிருந்து விடுபடுவதே மோக்ஷம். அத்வைத அநுபவத்தால்தான் பாசமும், பனிவும், துன்பமும், பயமும், துவேஷமும் நிவிருத்தியாகி மோக்ஷ ஆனந்தத்தை இங்கேயே அநுபவிக்க முடியும். நமக்கு அந்நியமாக இன்னொரு வஸ்து உள்ள போதுதான் அதனால் துன்பம், அதனிடம் ஆசை அல்லது பயம், அதன்மீது

துவேஷம் இவை உண்டாக்க முடியும். இன்னொன்றே இல்லை. காண்பன எல்லாம் ஒரே பரமாத்மா - என்ற

அத்வைத ஞானம் அநுபவமாக வந்துவிட்டால், அப்புறம் ஆசையும், பயமும் கோபமும், துயரமும் ஏற்பட வழி ஏது? தேளும் பாம்பும் இப்போது நமக்குத் துன்பம் தருகின்றன. நாமே தேளாகவும், பாம்பாகவும் இருந்தால் இந்தத் துன்பம் இராது அல்லவா! எல்லாம் நாமே என்ற உணர்வு வந்து விட்டால், எப்போதும் ஸ்வபாவமான ஆனந்தம்தான் இருக்கும். அதுதான் மோக்ஷ நிலை. சரீரம் நசித்துப் செத்துப்போன பின்தான் மோக்ஷம் என்று எங்கேயோ ஒரிடத்துக்குப் போக வேண்டும் என்பதில்லை. அனைத்தும் ஒன்றே என்ற அத்வைத ஞானம் ஸித்தித்தால் இங்கேயே இப்பொழுதே மோக்ஷத்தில் இருப்போம்.

அனைத்தும் ஒன்று என்பது எப்படிச் சரியாகும். இத்தனை மாறுபட்டுள்ள நானாவித வஸ்துக்களைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோமே. என்று தோன்றலாம். ஒன்று, நாம் பிரத்தியக்ஷமாகப் காண்பது சத்தியமாக இருக்கவேண்டும். அல்லது வேதாந்தம் சொல்லுவதும், ஞானிகளின் அநுபவுமான அத்வைதம் சத்தியமாக இருக்க வேண்டும்.

சத்தியமாக இருப்பது எதுவோ அது மாறாத சாந்தியும் ஆனந்தமும் நிறைவும் தர வேண்டும். நம் பிரத்யக்ஷ வாழ்க்கையில் இந்தச் சாந்தியும் ஆனந்தமும் நிறைவும் இல்லையே. வேதாந்தம் சொல்கிற அத்வைதத்தில்தானே அவை இருக்கின்றன. அதை அநுபவிக்கும் ஞானிகள்தான் மற்ற ஜனங்களுக்கு உள்ள துன்பமும், சஞ்சலமும் இல்லாமல் எப்பொழுதும் சாந்தியாக, எப்பொழுதும் திருப்தியாக, எப்பொழுதும் ஆனந்தமாக நிறைந்திருக்கிறார்கள். இதிலிருந்தே எல்லாம் ஒன்று என்ற ஆத்வைதமே சத்தியம் என்றாகிறதல்லவா. சொப்பனத்தில் எத்தனையோ வஸ்துக்களைப் பார்கிறோமே. நாம் விழித்துக் கொண்டவுடன் அவை எல்லாம் என்ன ஆயின. சொப்பனம் கண்ட ஒருத்தன் மட்டும்தானே எஞ்சி நிற்கிறான். அப்படியே இந்த லோகமெல்லாமும் ஒரு சொப்பனம் தான். மாயை நீங்கி ஞான நிலையில் விழித்துக் கொண்டால், அப்போது ஒரே பரமாத்மா மட்டுமே எஞ்சி நிற்பதை அநுபவிக்க முடியும்.

காண்கிற உலகம் பலவிதமாக இருந்தாலும், ஒன்றேதான் இத்தனையும் ஆகியிருக்கிறது என்பதை நவீன ஸயன்ஸ் தெளிவாக ஒப்புக் கொண்டு நிலை நாட்டுகிறது. ஐம்பது

வருஷங்களுக்கு முன் உலக வஸ்துக்கள் எல்லாம் எழுபத்திரண்டு முலப்பொருட்களுக்குள் (Elements) அடங்குவதாக ஸயன்ஸ் சொல்லி வந்தது. இந்த மூலப்பொருட்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை என்பதே அன்றைய கருத்து. ஆனால், இப்போது அணு (Atom) பற்றி அறிவு விருத்தியான பின் இந்த மூலப்பொருட்கள் எல்லாமும்கூட வேறு வேறான பொருட்கள் அல்ல என்றும், ஒரே சக்தி (Energy)தான் இவை எல்லாமாகவும் ஆகியுள்ளது என்றும் ஸயன்ஸ் நிபுணர்கள் நிலைநாட்டியிருக்கிறார்கள். பொருள் (Matter) சக்தி (Energy) இவையும் வேறானவை அல்ல என்று நவீன ஸயன்ஸ் சொல்லுகிறது. ஆக, அத்வைதம்தான் ஸயன்ஸூம் நமக்குக் காட்டுகிற உண்மை. ஐன்ஸ்டைன், ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்ற பிரபல ஸயன்ஸ் நிபுணர்கள் உபநிஷதமும் சங்கர பகவத் பாதாளும் உபதேசித்த அத்வைத சித்தாந்தத்துக்கு மிகவும் நெருங்கி வந்து விட்டார்கள். உலகம் மாயை என்று அத்வைதம் கூறுவதற்குப் பொருள் யாதெனில்,

உலகம் இறுதி சத்தியமல்ல. இது விவகாரத்துக்கு மட்டுமே சத்தியம். இதனுடைய இருப்பும் பிரம்மம் என்ற ஒன்றைச் சார்ந்ததே. என்பதுதான். இதையே மேற்சொன்ன ஸயன்ஸ் நிபுணர்களும் சொல்கிறார்கள். பிரம்மமே பாரமார்த்திக சத்தியம். உலகம் விவகாரிக்க சத்தியமே என்று அத்வைதம் சொல்வதைத்தான் இவர்கள் உலக இயக்கமெல்லாம் இன்னொன்றைச் சார்ந்தவை (relative) தான். முழு உண்மை (absolute) அல்ல என்கிறார்கள்.

சக்தியும் பொருளும் ஒன்று என்ற பெரிய உண்மையைக் கண்ட அணு விஞ்ஞானிகள் அந்த அறிவைக் கொண்ட அணுகுண்டைக் கண்டுபிடித்தார்கள் என்பதுதான் துக்கமாக இருக்கிறது. வெளி உலக வஸ்துக்களைக் குறித்து ஸயன்ஸால் நிலைநாட்டப்படும் அத்வைதம் புத்தி மட்டத்தோடு நின்றதன் அனர்த்தம் இது. ஸயன்ஸின் அத்வைதம் வெறும் அறிவோடும், வெளி உலகத்தோடு மட்டும் நிற்காமல் வெளி உலகத்துக்கு காரணமான உள் உலக உண்மையையும் ஆராய்ந்து, புத்தியோடு நிற்காமல், மக்களின் பாவனையிலும் தோய வேண்டும். ஜீவ குலம் எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானமும் ஸயன்ஸ் வழியாக ஏற்பட்டால், அணுகுண்டைத் தயாரித்த நவீன ஸயன்லஸே ஆத்ம ஹானிக்குப் பதிலாக

மகத்தான ஆத்ம க்ஷேமம் செய்ததாகவும் ஏற்படும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### அழுக்கு நீங்க வழி

ஞானத்துடன் - அறிவுடன் பார்த்தால் - எல்லாவற்றையும் ஆனந்தமாகவே பார்ப்போம். ஆனந்தம் முடிவில்லாதது. உண்மையாக அறிந்தால் எல்லாம் ஆனந்தம் என்று காண்போம். ஆனந்தம் எல்லையில்லாதது. அது இல்லாத இடமில்லை. எல்லையில்லாத எங்கும் நிறைந்த பொருள் இரண்டு இருக்கமுடியாது. ஆகையால் ஆனந்தமும் ஞானமும் ஒன்றே. அது இல்லாத இடமில்லை என்பதால், அதுவே. இந்த ஞானத்தையும் ஆனந்தத்தையும் உடைய ஜீவனும்.

நாம் கண்ணால் மட்டுமே பார்க்கிறோம். ஒன்றை ரோஜா என்கிறோம். இன்னோன்றை ஊமத்தை என்று சொல்கிறோம். ஞானம் என்கிற அறிவால் பார்த்தால் அது ரோஜா அன்று. ஆனந்தமாகத்தான் தெரியும். ஊமத்தம் பூவும் அப்படியே தெரியும். நமக்கு ஞானம் இல்லாதபடியால் ஒன்றை ரோஜாவாகவும், மற்றோன்றை இன்னோரு பொருளாகவும் பார்க்கிறோம். உண்மையில் எல்லாம் ஆனந்தம்தான். உண்மை நமக்குப் புலப்படாததற்குப் காரணம். நமக்குச் சித்தத்தில் அழுக்கு இருப்பதும், ஒருமைப்பாடு இல்லாததும்தான். கண்ணாடி ஆடிக் கொண்டிருந்தால், அதில் தெரியும் பிரதி பிம்பம் யதார்த்தமாக அல்லாமல் விரூபமாகத் தெரியும். ஆட்டத்துடன் அந்தக் கண்ணாடியில் அழுக்கும் இருந்தால் பிரதிபிம்பத்தில் யதார்த்த பாவமே கொங்சங்கூட இராது. நம்முடைய மனக்கண்ணாடி ஆடிக் கொண்டும், அழுக்குப் படிந்தும் இருப்பதால் பொருள்களை அது உள்ளபடி ஆனந்த வஸ்துவாகப் பிரதிபலிப்பதில்லை.

பைத்தியம் பிடித்த ஒருவனிடம் இந்தத் தடியைக் கால்மணி நேரம் பிடித்துக் கொண்டே இரு என்றால், அவனால் முடியாது. நம்மால் அந்தத் தடியைத் கால்மணி நேரம்

பிடித்துக் கொண்டிருக்க முடிகிறது. ஆனால் ஒரு பொருளை மட்டும் குறிப்பிட்ட நேரம்வரை நினைத்துக் கொண்டு இரு என்றால் அப்படிச் செய்ய முடியவில்லை. சித்தம் மறுகணமே ஆயிரக்கணக்கான எண்ணங்களை சினிமாப்

பாடல்கள் ஒடுவதுபோல் ஒட்டமாக ஒடியபடி நினைக்கிறது. ஆகையால், நாம் எப்படிப் பைத்தியங்களை நினைக்கிறோமோ, அதுபோல் மகான்களுக்கு நாமும் பைத்தியமாகத்தான் படுவோம். மனம் கட்டப்படுகின்ற வரையில் எல்லோரும் பல வகைப்பட்ட பைத்தியங்களே. அழுக்குடனுள்ள கண்ணாடி ஆடுவதுபோல் நம்முடைய சித்தம் தோஷத்துடனும் ஜகாக்ரதை இல்லாமலும் (ஒரு முகமாகாமலும்) இருப்பதுதான் இதற்குக் காரணம். தோஷம் போனால் ஜகாக்ரதை வரும். ஜகாக்ரதை வந்தால் உண்மை விளங்கும்.

தோஷத்தைப் எப்படிப் போக்குவது. நமக்கு அழுக்கு என்பது தேகம். இந்தத் தேகம் எதனால் வந்தது. பாபத்தினால் வந்தது. அந்தப் பாபத்தை எதனால் செய்தோம். கர சரணாதி அவயங்கள், மனம் இவற்றினால் செய்தோம். சுற்றியுள்ள கயிற்றை அவிழ்க்க வேண்டியிருந்தால், சுற்றின பிரகாரமே திரும்பவும் அவிழ்க்க வேண்டும். அதே மாதிரி அஸத் காரியங்களை ஸத்காரியங்களினாலும், பாவங்களைப் புண்ணியங்களினாலும் தொலைக்க வேண்டும். கர சரணாதி அவயங்கள், மனம் இவற்றினால் செய்த பாவங்களை இந்த அவயங்களினாலேயே தொலைக்க வேண்டும். தானம், தருமம், கர்ம அநுஷ்டானம், ஈசுவர நாமோச்சாரணம், ஆலய தரிசனம் முதலியவையே ஸத்காரியங்கள். பாவத்தைப் போக்குவதற்கு இவையே உபாயம். இவற்றால் பாபத்தைப் போக்கிக் கொண்டு பிறகு ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு எல்லையில்லாத ஞானமாக ஆனந்தமாக ஆக வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### கண்டமும் அகண்டமும்

ஒரே ஒரு சூரியன்தான் உள்ளது. கையிலே கொஞ்சம்

ஜலத்தை எடுத்துக் கொண்டு நல்ல வழுவழுப்பான தரையில் அதைத் தெளித்தால் ஒவ்வோரு முத்து ஜலத்திலும் பிரதி ரூபமாக ஒரு சூரியன் தெரிகிறது. அவை எல்லாம் பிரிந்து பிரிந்து காணப்பட்டாலும் அநேக சூரியன்கள் இருப்பதாக ஆகாது. சூரியன் ஒன்றுதான். அவ்வாறே, உலகில் காணும் இத்தனை ஜீவராசிகளுக்குள் சிறியதாக மினு மினுக்கிற அறிவொளி அனைத்தும் ஒரே பிரம்மத்தின் பிரதிபலிப்புத்தான். இதைத்தான் ஸ்ரீ ஆதி சங்கராச்சார்யரவர்கள் ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார்.

எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கும் அகண்டமான ஒரே சக்தி எதுவோ, அறிவு எதுவோ, அந்த எல்லா கடந்த சக்திதான், அறிவுதான் நம்மிடத்தில் ஓர் எல்லைக்குள் பிரிந்து கண்டம் கண்டமாகத் தோன்றுகிறது. அந்த ஒரே வஸ்துதான் வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத் (அது) என்பது. தத் என்றால் தூரத்தில் எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிறது என்று அர்த்தம். நாம் இப்போதிருக்கும் நிலையில் அது தூரத்தில் எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிறதென்று அர்த்தம். நாம் இப்போதிருக்கும் நிலையில் அது தூரத்தில் இருப்பதாகத் தோன்றினாலும், உண்மையில் தூரத்தில் கிட்டத்தில் எல்லாமுமாய் இருப்பது அதுதான். அது நீயேதான் - தத் - த்வம் என்கிறது வேதம்.

இப்படி நான் சொல்லுகிற க்ஷண காலம் நமக்கு எல்லாம் புரிந்து விட்டதுபோல் இருக்கிறது. இந்த ஒரு க்ஷணத்தில் எப்படி இருக்கிறாமோ

அப்படியே எப்போதும் இருந்தால் துக்கம் இல்லை. ஆனால் அடுத்த க்ஷணமே நமக்கு இந்த சத்தியமான பார்வை போய்விடுகிறது. நாம் பல விதமான பொய்களாலேயே கஷ்டங்களுக்காளாகிறோம். பொய்யினால் பெறும் ஆனந்தமும் விரைவில் பொய்யாகிவிடும். உண்மையில் எப்போதும் ஆனந்தமாக இருப்பதற்கு எப்போதும் உண்மையாக இருக்கிறவனைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். உண்மையாக இருக்கிறவன் ஸ்வாமி ஒருத்தன்தான். ஆசாமிகளாகிய நாம் அந்த ஸ்வாமியைத்தான் பற்றிக் கொள்ள வேண்டும். கண்டம் கண்டமாக இருப்பது எல்லாம் முடிவில் அகண்டத்தோடு

ஒன்றுபடும்போது அகண்டமாக ஆகி, நிரந்தர ஆனந்தமாகி விடுகிறது.

அகண்டமாக இருப்பவன் ஒருவன்தான் இருப்பு. கண்டமாக இருப்பது வெறும் நினைவுதான். நினைவு, கனவு எல்லாம் சாசுவத உண்மை அல்ல.

அகண்டமாக இருக்கிற பரமாத்மாவைக் கண்டம் கண்டமாக உருவமும் குணமும் உள்ளவனாக தியானம் பண்ணிக் கடைசி நிலையாக நிர்குணத் தியானம் செய்ய ஆரம்பித்தால், சண்டை, பூசல் ஒன்றுமே வராது. துக்கம், பயம் எதுவுமே இராது. பரம சாந்திதான் இருக்கும். இதுதான் ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் உபநிஷத மரத்திலிருந்து நமக்குப் பறித்துக் கொடுத்த பழம்.

இந்தப் பழுத்த நிலையை அடைவதற்குமுன், மொட்டாக, பூவாக, பிஞ்ஜாக காயாக இருந்ததுதான் முதிர வேண்டும். பழுக்கும் நிலைவரைக்கும் பொருமையாகத்தான் இருக்க வேண்டும். காயாக இருக்கும்போதே பழமாவதற்கு அவசரம் காட்டி, வெம்பி விழுந்துவிட்டால் பயன் இல்லை. வெம்பி விழுந்திடுமோ என்று ராமலிங்கர் சொல்லுகிறார். நமக்கும் அந்தக் கவலை இருக்க வேண்டும். கனிந்த பழம் ஆகும் வரையில் பூஜை, ஜபம், தபம் எல்லாம் இருக்கவேண்டும். வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியாக தத்தத்வம் என்கிற உண்மை நிலைக்கு நாம் வரும் வரையில் அவை அப்போதுதான் வெம்பாது பழுக்கும். கடைசியில் அந்த தத்வம் - மூலம் - எங்கே இருக்கிறது. தன்னிடத்திலேயேதான் இருக்கிறது. எந்த அறிவு தத்துவத்தை ஆராய்கிறதோ, அந்த அறிவுக்குள்ளேயே இருக்கிறது என்பதை அநுபவத்தில் உணரலாம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### நிறைந்த ஆனந்தம்

கிருதா யுகத்தில் பிருகு என்பவர் தம்முடைய பிதாவான வருணனிடத்தில் போய் நிறைந்த வஸ்து எதுவோ அதை

அப்படி அறிவது என்று கேட்டாராம். நிறைந்த வஸ்து எதுவோ அது காலத்தாலும் நிறைந்து இருக்க வேண்டும். வஸ்துவிலும் நிறைந்து ஒரு குறை என்பதே இல்லாமல் இருக்க வேண்டும். அத்தகைய நிறைந்த வஸ்துவை எனக்குச் சொல்ல வேண்டும் என்று பிதாவான வருணனிடத்தில் கேட்டாராம்.

நீ போய் தபஸ் பண்ணு. அது உனக்கே தெரியும். என்று வருணன் சொல்லிவிட்டாராம்.

அப்படியே செய்கிறேன் என்று சொல்லிவிட்டு பிருகு போய்த் தபஸ்பண்ண ஆரம்பித்தார். முதலில் அதனால் அவருக்கு ஒன்று தெரிந்தது. இந்தச் சரீரத்தின்

உயர்ந்த வஸ்து. இதுதான் எல்லாவற்றையும் உணருகிறது. உணரப்படுகிற பொருளைக் காட்டியும் உணர்ந்து கொள்கிற பொருள் உயர்ந்தது. அது இந்தத் தேகந்தான் என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு, அப்பாவிடம் போய் இந்தச் சரீரம்தான் உயர்ந்த நிறைந்த வஸ்து என்று சொன்னாராம்.

அப்பா திரும்பவும், இன்னும் கொஞ்சம் தபஸ் பண்ணு என்று சொல்லிவிட்டாராம்.

இப்படியே கொஞ்சம் தபஸ் பண்ணுவது, உடனே தமக்குக் கோன்றியதைப் போய்ச் சொல்வது என்று ஐந்து தடவைகள் பிருகு செய்தாராம். முதலில் உடம்பு நிறைந்த வஸ்துவாகத் தோன்றிற்று. இந்த உடம்பு ஒருநாள் பிரேதமாகிப் போவதுதானே என்று யோசித்தபின், உடம்பு நிறைந்த வஸ்து இல்லை என்றும், பிராணன்தான் நிறைந்த வஸ்துவாகவும் தோன்றிற்று. அதன்பின் மனமே நிறைந்த வஸ்திவாகப் தோன்றியது. ஐந்தாம் முறை போனபோது ஆனந்தானுபவம்தான் நிறைவாகத் தோன்றுகிறது.

நீங்கள் சொன்னபடி நான் இத்தனை நாட்களாகத் தபஸ் பண்ணினேன். இப்போதெல்லாம் நடுநடுவே ஏதோ ஒரு விதமான ஆனந்தம் ஸ்புரிக்கிறதே. இது என்ன. என்று தந்தையைக் கேட்டாராம் பிருகு.

உனக்கு ஒவ்வொரு சமயத்தில் கொஞ்சம் ஸ்புரிக்கிறது. என்று சொல்கிறாயே என்ற ஆனந்தம்தான் வஸ்து. இது உனக்குத் துளி உண்டாகிறது. இதுவே நிறைந்து விட்டதனால்

அதைத்தான் பேரானந்தம் என்கிறோம். அந்தப் பேரானந்தம் எப்போதும் குறைவு இல்லாமல் காலத்தாலும் தேகத்தாலும் நிறைந்து இருக்கும்படியான ஒரே வஸ்து. சரீரம், பிராணன், மனசு, அறிவு எல்லாவற்றிற்கும் ஆதாரமாக, இவை எல்லாவற்றையும் கடந்த ஒன்று ஆத்மா என்று இருக்கிறது. அது தன்னைத்தானே அறிந்து அநுபவிப்பதில்தான் இந்த ஆனந்தம் உண்டாகிறது. என்று பிதா சொன்னாராம். இப்படி உபநிஷத் கதை இருக்கிறது.

அந்தப் பேரானந்த சமுத்திரத்தின் ஏதோ ஒரு திவலை தான் நமக்கு எப்போதாவது உண்டாகிறது. கிளைகள், இலைகள் எல்லாம் அடர்ந்து இருக்கும் ஒரு மரத்தடியில் உட்கார்தால் கீழே கொஞ்சம்கூட வெயில் படாமல் நிழல் இருக்கிறது. காற்று அடிக்கும்போது, இலைகள், கிளைகள் நகர்ந்து விலகுகிற சமயத்தில் சூரியனுடைய வெயில் கீழே அந்த இடைவெளி அளவுக்கு விழுகிறது. அப்புறம் மறுபடியும் கிளைகள் மூடி, அது மறைந்து போகிறது. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும்படியாக வஸ்து. ஆனால் நம்முடைய கெட்ட கர்மா, மனம், புத்தி இவற்றினால் அது நம்மிடம் படாமல் மறைந்திருக்கிறது. ஒரு க்ஷணம் நாம் பண்ணியிருக்கிற புண்ணிய கர்மாக்களினாலே அவை விலகும்போது, சூர்ய ஒளி அதன் வழியாக வருவது போல், நம்முடைய கர்மாக்கள் விலகியதால், எங்கும் பரவிய ஆனந்தத்தின் திவலை நமக்கு உண்டாகிறது. இதுவே வளர்ந்து விட்டால் பேரானந்தமாகிறது. அந்த ஆனந்த சமுத்திரத்தின் லவலேசத்தைத்தான் நாம் எப்போதாவது அடைந்தவுடன் மிகவும் ஆனந்தமாக இருக்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறோம். தபஸ் பண்ணிப் பண்ணி விசாரம் செய்தால் எப்போதும் ஆனந்த மயமாக இருக்கும் சமுத்திரத்திலேயே கலந்து அதாகவே இருக்கலாம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### கண்ணன் சொன்னான் கம்பனும் சொன்னான்

ஆத்மாதான் எல்லாவற்றுக்கும் ஆதாரம். ஆனால் அதுவே அவற்றைக் கடந்திருந்திருக்கிறது என்றால், அதெப்படி என்று

தோன்றுகிறது. குழப்பமாயிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் இம்மாதிரி பல தினுசாகக் குழப்பிக் குழப்பி, பிறகு ஒரேடியாகத் தெள்ளத் தெளிவாகப் பண்ணிவிடுவார்.

நான் எல்லாப் பொருட்களிலும் இருக்கிறேன். எல்லாப் பொருட்களும் என்னிடத்தில் இருக்கின்றன என்று கீதையில் ஓரிடத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறுகிறார். (யோமாம் பச்யதி ஸர்வத்ர, ஸர்வம் ச மயி பச்யதி) எல்லாப் பொருட்களும் இவரிடம் இருக்கின்றன என்றால் அவைதான் இவருக்கு ஆதாரம் என்று ஆகுமே. இதில் எது சரி என்ற குழப்பம் ஏற்படலாம்.

ஸ்வாமி அல்லது ஆத்மாவே எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பதுதான் சரி. அவர் எல்லாவற்றுக்குள்ளும் இருக்கிறார் என்பதால் அவை இல்லை. எனவே, அவை இவருக்கு ஆதாரமில்லை. இவர்தான் சகலத்தையும் ஆட்டிப் படைப்பவர், இதை ஸ்ரீ கிருஷ்ணனே தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

பொம்மலாட்டப் பொம்மை மாதிரித்தான் சகல பிராணிகளும். உள்ளே இருந்து ஈச்வரனே அவற்றை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான். (ஈச்வர, ஸர்வ பூதானாம் ஹ்ருத் தேசே (அ) ர்ஜுன திஷ்டதி ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ரா ரூடானி மாயயா) என்கிறார்.

இப்படிக் குழப்பத்தைத் தெளிவு செய்கிற பகவான் அதே கீதையில் மறுபடியும் குழப்பம் செய்கிறார். எல்லாப் பொருட்களிலும் நான் இருக்கிறேன். எல்லாப் பொருட்களும் என்னிடத்தில் உள்ளன என்று கூறுவபரே, என்னிடத்தில் ஒரு பொருளும் இல்லை. நானும் ஒரு பொருளும் இல்லை என்று கூறுகிறார். ( ந ச மத் ஸ்தானி பூதானி, ந சாஹம் தேஷ்வி அவஸ்தித) இங்கே ஆத்மா எல்லாலற்றையும் கடந்தது என்று தத்துவம் பேசப்படுகிறது.

இது என்ன குழப்புகிறாயே என்றால், நான் எல்லாருக்கும் விளக்குவதில்லை ( ந அஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய:) அதுதான் என் யோகமாயை (யோக மாயா ஸமாவ்ருத:) என்று ஒரு போடு போடுகிறார்.

இது என்ன உபதேசம் வேண்டிக்கிடக்கிறது. ஒன்றும் புரியவில்லையே என்று தோன்றுகிறதா.

நன்கு ஆலோசித்துப் பார்த்தால் குழப்பத்துக்குத் தெளிவு காணலாம். நான் ஒருவனுக்கும் விளக்க மாட்டேன் என்று பகவான் சொல்லியிருந்தால், ஆயிரம்பேர் இருந்தால் ஆயிரம்பேருக்கும் விளக்க மாட்டேன் என்று அர்த்தமாகும். ஆனால் அப்படியின்றி, நான் எல்லோருக்கும் விளக்க மாட்டேன் என்றால், ஆயிரம் பேரில் 999 பேருக்கும் விளங்காமல் இருந்தாலும் இருக்கலாம் ஒருவனுக்காவது விளக்குவேன் என்றுதான் பொருள். பகவான் எல்லாருக்கும் (ஸர்வஸ்ய) விளங்க மாட்டேன் என்றாரேயன்றி ஒருவனுக்கும் (கஸ்யாபி) விளங்க மாட்டேன் என்று சொல்லவில்லை. அப்படியானால் அவரும் சிலருக்கு விளங்குகிறார் என்றாகிறது.

அந்தச் சிலர் யார். இவர் சொன்ன யோக மாயையால் பாதிக்கப்படாத ஞானிகள். நான் எல்லாப் பொருளிலும் இருக்கிறேன். ஒரு பொருளும் என்னிடம்

இல்லை என்று பகவான் முரண்பாடாகப் பேசியது போலத் தோன்றுவதற்கு இத்தகைய ஞானிகளே விளக்கம் தந்து தெளிவு செய்வார்கள்.

தெருவிலே ஒரு பூமாலை கிடக்கிறது. அரை இருட்டு. எவனோ அந்தப் பக்கம் வந்தவன் அதை மிதித்துவிட்டு ஐயோ, பாம்பு பாம்பு என்று பயத்தால் கத்துகிறான். மாலையாக இருப்பதும் பாம்பாக இருப்பதும் ஒன்றுதான். இது மாலைதான் என்று தெரிந்தவுடன், அவனுக்குப் பாம்பு இல்லை என்று தெரிந்து விடுகிறது. அதனால் முதலில் பாம்புக்கு ஆதாரமாக இருந்தது என்ன. மாலைதான்.

மாலையைப் பாம்பு என எண்ணுவதுபோல், அஞ்ஞானிகள் ஒன்றேயான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகப் பார்த்து மயங்குகிறார்கள். இந்தப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம் பிரம்மம்தான்.

இந்தப் பிரபஞ்சத்துக்குள் நான் இருக்கிறேன். பிரபஞ்சம் என்னிடத்தில் இருக்கிறது என்று சொன்னால் என்ன அர்த்தம். மாலைக்குள் பாம்பு இருக்கிறது. பாம்புக்குள்தான் மாலை இருக்கிறது என்பது எப்படியோ அப்படிதான். இரண்டும் இண்மைதானே.

பாம்பு என்று அலறுபவனுக்குப் பாம்பு மாலையைத் தனக்குள் விழுங்கி விட்டது. அவன் பார்வையில் ஆதாரமாக இருப்பது பாம்பு. அஞ்ஞானம் நீங்கி இது மாலைதான் என்று உணர்ந்து கொண்டவனுக்கு மாலை பாம்பை தன்னுள் மறைத்து விடுகிறது. மாலைதான் ஆதாரமாகத் தெரிகிறது. மாயையினால் முடப்பட்டவன் பிரபஞ்சத்தை சத்தியம் என்று பார்த்தாலும், வாஸ்தவத்தில் பிரபஞ்சத்துக்கு ஆதரமாக இருந்து தாங்குபவன் ஈசுவரன்தான்.

பிரபஞ்சத் தோற்றத்தை ஞானத்தினால் விளக்கியவனுக்கு ஈசுவரனே எல்லாமாய், தானுமாய்த் தோன்றுகிறான். ஈஸ்வரனைத் தவிர வெறும் தோற்றமாகக்கூடப் பிரபஞ்சம் என்று எதுவுமே ஞானியின் நிர்விகல்ப ஸமாதியில் தெரியாது. ப்ரபஞ்சம் என்றே ஒன்று இல்லாதபோது அது ஈசுவரனிடத்தில் இருப்பதாகவோ, அல்லது ஈசுவரன் அதனுள் இருப்பதாகவோ சொல்வதும் அபத்தம்தானே. அஞ்ஞான தசையில் உடம்பு, பிராணன், மனசு, அறிவு என்றெல்லாம் தெரிகின்றன. ஞானம் வந்தால் ஆத்மானந்தம் ஸ்புரிக்கின்றபோது இது எல்லாவற்றையும் கடந்துதான் அந்த நிலை வருகிறது. இதனால்தான் ஸ்ரீ கிருஷ்ண பகவான் முடிந்த முடிவான ஞான நிலையில் நின்று, என்னிடத்திலும் பொருட்கள் இல்லை என்று கூரிவிட்டார். எவனோ அஞ்ஞானி மாலையைப் பாம்பாக நினைத்தான் எனபதால், உண்மையிலேயே ஒரு பாம்பு மாலைக்குள் இருந்ததாகவோ அல்லது பாம்புக்குள் மாலை இருந்ததாகவோ சொல்லலாமா.

கம்பர் சுந்தர காண்டத்தில் இதைத்தான் சொல்லுகிறார்.

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை

அரவுஎனப் பூதம் ஐந்தும்

விலங்கிய விகாரப் பாட்டின்

வேறு பாடுற்ற வீக்கம்

கலங்குவ தெவரைக் கண்டால்

அவர் என்பர் கைவி லேத்தி

இலங்கையில் பொருதா ரன்றே

மறைகளுக் கிறுதி யாவார்.

அலங்கல் என்றால் மாலை. அரவு என்றால் பாம்பு. அலங்கலில் தோன்றும் பெய்ம்மை அரவு - மாலையில் தோன்றும் பாம்பு என்ற பொய்யான எண்ணம். இதுபோலப் பஞ்ச பூதங்கள் ஒன்று சேர்ந்து பொய்யான பிரபஞ்சம் என்ற வீக்கமாகி மயக்குகிறதே. அது யாரைக் கண்டால் விலகிப்போய் மாலையான பரமாத்மாதான் ராமசந்திர மூர்த்தி என்றார்.

நம்மாழ்வாரைப் பற்றி சடகோபரந்தாதி பாடின பரம வைஷ்ணவரான கம்பர், பரமாத்ம ஸ்வரூபத்தை இப்படி ஸ்வச்சமான அத்வைத பாஷையில் சொல்கிறார்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### ஆனந்தம் எங்கே

நமக்கு எண்ணி முடியாத ஆசைகள் இருக்கின்றன. ஆனாலும் என்றோ ஒரு நாள் நாம் ஆசாப்படும் வஸ்துக்கள் நம்மை விட்டுப் பிரிவது நாம் அவற்றைவிட்டுப் பிரிவது சர்வ நிச்சயம். சாவின் மூலம் இந்தப் பிரிவு ஏற்படாமல், அதற்கு முந்தி நாமாக ஆசைகளை ராஜினாமா செய்து விட்டுவிட்டால், அத்தனைக் கத்தனை ஆனந்தமாக இருக்கலாம். நமக்கு எத்தனை ஆசைகள் இருக்கின்றனவோ அத்தனை முளைகளை துக்கத்துக்கு அடித்துக்கொண்டு நம்மைக் கட்டிப்போட்டுக் கொள்கிறோம். ஆசைகளை குறைக்கக் குறைக்க துக்கஹேதுவுங் குறையும். இந்தப் பிறவி முடியுமுன் நாம் சகல ஆசைகளையும் விட்டுவிட்டால் மறுபடியும் பிறந்து அவஸ்தைப்படவே வேண்டாம். அப்படியே பரமாத்மாவில் கரைந்து ஆனந்தமாகி விடலாம்.

மனிதன் மற்ற விலங்குகளைவிட விசேஷ ஞானம் உடையவன் என்று பெருமைப்படுகிறோம். ஆனால், இவன்

மட்டும் அவற்றைவிட விச்ஷமாக என்ன செய்து விடுகிறான். நாயும், நரியும், கரப்பான் பூச்சிகளும்கூடத்தான் சாப்பிடுகின்றன. சந்ததி விருத்தி செய்கின்றன. சாகிக்கின்றன. பொதுவாக மனிதனும் இதற்குமேல் ஏதும் செய்வதாகக் தெரியவில்லை. அப்பொழுது இவனது விசேஷ ஞானத்தில் பெருமைப்பட என்ன இருக்கிறது. எல்லாவற்றிலும் பெரிய ஞானம் நிலைத்த ஆனந்தத்துக்கு வழிகண்டு கொள்வதுதான். மனிதன் இப்படிப்பட்ட நிலைத்த ஆனந்தத்தைப் பெறுகிறானா. யோசித்துப் பார்த்தால் பரம தாத்பரியமானது தெரிவது, இந்த  ஞானம், ஆனந்தம் நாம் என்பதெல்லாம் ஒன்றுதான். நாம் உண்மையில் யார் என்பதை உணரும் ஞானம் வரும்போது, நாமே ஞான மயமான ஆனந்தம் என்று கண்டுகொள்வோம்.

வெளி வஸ்துக்களிலிருந்து நமக்கு ஆனந்தம் வரவில்லை. நம்மிடமிருந்தேதான் ஆனந்தம் பிறக்கிறது. நமது உண்மை ஸ்வரூபமான ஆனந்தத்தை நாம் அஞ்ஞானத்தினால் மூடி மறைத்துக் கொண்டிருக்கும் நிலையில்கூட நம்முடையது என்று ஒன்றிடம் சம்பந்தம் வைக்கும்போதுதான் அதிலிருந்து ஆனந்தத்தை அடைகிறோம். அந்த சம்பந்தம் போய் விட்டால் ஆனந்தம் போய் விடுகிறது. உதாரணம் சொல்கிறேன். ஒருவனுக்குச் சொந்தமாக குஞ்சம் நிலம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். இந்த வயல் என்னுடையது என்பதால், விளைச்சல் அதிகமாகு ம்போதெல்லாம் அவனுக்கு மனம்

குளிருகிறது. ஆனந்தம் உண்டாகிறது. அப்புறம் விளைச்சல் குறையத் தொடங்குகிறது. வயலை வேறு ஒருவனுக்கு விற்று சாஸனம் பண்ணி விடுகிறார். மறுபடி அடுத்த வருஷம் அதே வயலில் ஏகமாக விளைச்சல் கூடியிருக்கிறது. இப்போது அதைப் பார்க்கும்போது இவர் மனம் குளிரவா செய்கிறது. அடடா, போன வருஷம் நம் கையில் இருந்தபோது தரிசு மாதிரிப் பொட்டலாக இருந்தது. இப்போது எவனோ ஒருவனுக்கு அதிஷ்டம் அடிக்கிறதே என்று வயிற்றெரிச்சல்தான் உண்டாகிறது. எனது என்ற சம்பந்தம் இருந்த மட்டுந்தான் அமோக விளைச்சலில் சந்தோஷம் இருந்தது. பிறகு அதே விளைச்சலில் உணர்ச்சி அடியோடு மாறிவிட்டது.

இன்னோர் உதாரணம் சொல்கிறேன். என்னிடம் பல பெற்றோர்கள் குழந்தைகளை அழைத்து வந்து, அவற்றுக்கு சித்தப்பிரமை இருக்கிறது. அது நிவிருத்தியாக வேண்டும் என்று கேட்டுக் கொள்வதைப் பார்த்திருப்பீர்கள். இதற்கு நேர்மாறாக ஒரு தகப்பனார் நடந்து கொண்டார். அவர் இரண்டாவது கல்யாணம் செய்துகொண்டவர். இளையாளுக்கு மூத்தாள் பிள்ளையோடு ஒத்துவரவில்லை. ஏகச் சண்டை போட்டு குடும்பம் பிரிந்தது. இவர் இளையாள் தரப்பிலேயே இருந்தார். பிள்ளையைக் கைவிட்டுவிட்டார். அவர் ஒரு நாள் என்னிடம் வந்து மூத்தாள் பிள்ளை இளையாளுக்குப் பில்லி சூன்யம் வைத்தான். நல்ல வேளையாக அது அவனையே திருப்பி அடித்துவிட்டது என்றார். எல்லாத் தகப்பனார்களும் பிள்ளைக்குச் சித்தப்பிரமை ஏற்படும்போது கலலைப்படுகிறார்களென்றால், இவரோ அதிலேயே சந்தோஷப்படுகிறார். ஏன்? இவனுக்கு அவனிடம் நம்முடையவன் என்ற சம்பந்தம் போய் விட்டது. இளையாளிடம் மட்டும் நம்முடையவன் என்ற எண்ணம் இருக்கிறது. அதனால்தான் அவளுக்கு ஹானி இல்லை என்றால் இவர் ஆனந்தப்படுகிறார்.

மாயைக்கு ஆளான நான் என்பதன் சம்பந்தத்துக்கே இத்தனை ஆனந்தம் இருக்கிறது என்றால், எதிலும் சம்பந்தப்படாமல் பூரண ஞானமாக இருக்கிற அந்த வெறும் நான் எத்தனை ஆனந்தமயமாக இருக்கும். வெல்லம் போட்டால் கசப்பு பாகற்காய்க் கறியிலும் சிறிது தித்திப்பு இருப்பதை உணர்கிறோம். வெல்லத்தின் சம்பந்தத்துக்கே தித்திப்பு இருப்பதால், அசல் வெல்லம் தித்திப்பு மட்டுமே என்பதில் சந்தேகம் என்ன. கசப்பான துக்க உலகத்தின் நான் என்பதின் மாயக் கிரணங்கள் சம்மந்தப்படுகிற போதே அதில் தித்திப்பு ஆனந்தத்தைப் பெறுகிறோம். என்றால், அந்த நான் மட்டுமே ஸ்வச்சமாக நிற்கின்றபோது எத்தனை தித்திப்பாக ஆனந்த மயமாக இருக்கவேண்டும். சிறிய பொத்தல்கள் கொண்ட ஒரு சட்டியால் ஒரு தீபத்தை மூடிவைத்தால் துவாரங்கள் வழியாக மெல்லிய ஒளிக்கிரணங்கள் வெளிவரும். மாயையால் மூடப்பட்ட ஆத்ம தீபத்திலும் இந்திரிய துவாரங்கள் வழியாகக் கொஞ்சம் கொஞ்சம் ஆனந்த ஒளியைப் பார்க்கிறோம். மாயச்சட்டியை உடைத்து விட்டால் ஆனந்த ஜோதிர் மயமாகவே ஆகிவிடலாம்.

துவாரங்களின் அளவைப் பொறுத்துப் பல வேறு அளவுகளில் ஒளி வெளி வந்தாலும் உள்ளேயிருப்பது ஏகஜோதிதான். நாம் மாயச்சட்டியை உடைத்து விட்டால் உலகத்தில் பார்க்கும் வித்தியாசங்கள் எல்லாம் மறைந்து எல்லாம் ஒன்றான ஆனந்தரூபமாகவே தெரியும்.

மாயையை எப்படி உடைப்பது என்றால் ஆசைகளை அடக்குவதுதான் வழி. மனம் இருக்கும் வரை ஆசைகளும் இருக்கும். அதனால் மனத்தை அடக்கிவிட வேண்டும். மனம் அடங்கி விட்டால் மரண நிலையில் இருப்பதுபோல் ஒரு சக்தியுமின்றி ஜடம் மாதிரி ஆவோம் என்று எண்ணக்கூடாது. மாறாக, இதுதான் சகல சக்திகளுக்கும் ஆதாரமான நிலை. சாதாரணமாக ஏதாவது ஒரு அங்கத்தில் ஊனம் உள்ளவர்களுக்கு இன்னோர் அங்கத்தில் அதிக தீக்ஷண்யம் இருக்கும். பல வாய்க்கால்களில் ஒன்றில் ஜலத்தை அடைத்துத் திருப்பினால் இன்னொன்றில் அதிகம் நீர் பெருகுவது போல், ஓர் அங்கத்தில் ஊனம் இருப்பதே இன்னொன்றில் தீக்ஷண்யத்தைக் கொடுக்கிறது. ஆத்ம சக்தியைப் பலவாறாகச் சிதறச் செய்யும் எல்லாம் இந்திரியங்களையும் அடைத்துக் கொண்டு விட்டால், அப்போது சகல சக்திகளும் ஒரே இடத்தில் அமைதியாக, ஆனந்தமாகக் கூடி நிற்கும். மிகுந்த சக்தியுடன் உலகுக்கு நல்லது செய்யலாம்.

ஆத்ம ஞானம் பெற்ற ரிஷிகள் சக்தியே இதற்கு திருஷ்டாந்தம். சகல லோகங்களுக்கும், சகல காலங்களுக்கும் சென்று அவர்கள் விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். நம் காதுகளுக்குக் கேட்காத சப்தங்களை ஆகாயத்தில் கேட்டு வேத மந்திரங்களைக் கொடுத்தார்கள். எப்படி ஆசையை அடக்குவது. எப்படி மனத்தை நிறுத்துவது. எப்படி நிலைத்த ஆனந்தத்தை அடைவது என்று கேட்கிறவர்கள் அந்த வேதங்கள் சொன்னபடி நயந்தாலே போதும். முடிவில் பேரானந்தம் அடையலாம். இதற்குப் பரமேசுவரன் அநுக்கிரகம் செய்வாராக.

## அத்வைதம்

### எதிர்கொண்டு அழைப்பான்

சமுத்திரம் ஆடாமல் அசையாமல் இருக்கிறபோது ஒரு காற்று அடித்தால் உடனே அதில் ஜலத்துளிகள் குமிழ்களாகத் தோன்றுகின்றன. இன்னோரு காற்று அடிக்கிறபோது அந்தக் குமிழ்கள் உடைந்து போகின்றன. இன்னோரு காற்று அடிக்கிற போது அந்தக் குமிழ்கள் உடைந்து போகின்றன. பரமாத்மா ஆடாத அடங்காத சமுத்திரம் மாதிரி. மாயை என்ற காற்றினால் அதிலே ஜீவாத்மாக்கள் என்கிற நாமெல்லாம் குமிழ் மாதிரி தோன்றியிருக்கிறோம். ஆசாரியாருடைய கடாக்ஷம் என்கிற நல்ல நம்மேல் பட்டால் குமிழ் உடைந்து ஜலத்துளி சமுத்திரத்தோடு ஐக்கியமாகி விடுவதுபோல், நாமும் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுவோம்.

சமுத்திர ஜலம் என்றென்றும் அளவு குறையாமலேதான் இருக்கிறது. அதிலிருந்து ஆவி பிரிந்து சென்று மழையாகி, உலகத்தில் பலவிதங்களில் நதி, ஒடை வாய்க்கால், ஏரி, குளம், கிணறு என்று ஜலாசயங்களாக ஆகின்றன. சமுத்திரம் வற்றுவதில்லை. அதில் புதிதாக வெள்ளம் வருவதுமில்லை. அதிலிருந்து வந்த ஆறு குளங்கள் வற்றலாம். அல்லது இவற்றில் வெள்ளம் வரலாம். வெயில் நாள்களில் வீட்டுக் குழாய்களில் ஜலம் இல்லை. ரெட்ஹில்சில் ஜலம் இல்லை என்கிறோம். மழைக்காலத்தில் கோதாவரியில் வெள்ளம், காவேரியில் உடைப்பு என்று பேசுகிறோம். ஆனால் சிருஷ்ட காலத்தில் இந்த

உலகத்தில் எத்தனை ஜலம் இருந்ததோ அதில் ஓர் இம்மிகூட - க்ரெயின் கூட - இன்றுவரை குறைய வில்லை. கூடவும் இல்லை. பணக்காரர்கள் சிலர் நிலத்தை விற்று வீடு வாங்குவார்கள். வீடுகளை விற்று பாங்கில் போடுவார்கள். பங்குப் பணத்தை ஷேர்களாக மாற்றுவார்கள். மொத்தச் சொத்து மாறாது. அவற்றின் ரூபம் தான் பல விதங்களில் மாறும். எல்லாவற்றையும் கூட்டினால் கணக்கு சரியாக இருக்கும். அப்படியேதான் லோகத்தில் உள்ள மொத்த ஜலம் சமுத்திரத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மேகத்தில் இருக்க வேண்டும். அல்லது நதியாக, ஏரி, குளங்களாக

இருக்க வேண்டும்.

பரமாத்மா பலவாகத் தோன்றியிருக்கிறார்.தோன்றிய பின்னும் சமுத்திரம் மாதிரி கூடாமல், குறையாமல் இருக்கிறார். நமக்குக் கூடுதல், குறைவு எல்லாம் உண்டாகிறதாகத் தோன்றுகிறது. ஆனால் உள்ளது ஒன்றேதான் என்ற ஞானம் வந்தால், எங்குமே கூடுதலும் இல்லை. குறைவும் இல்லை.

ஜலத்தை திருஷ்டாந்தமாக வைத்துப் பரமாத்ம ஜீவாத்ம ஸம்பந்தத்தைச் சொல்லும்போது நதிகளைப் பற்றி விசேஷமாகச் சொல்ல வேண்டும். சமுத்திர ஜலம் மழையாகி அதிலிருந்து ஏரியும், அதிலிருந்து குளமும், குட்டையும், கிணறும் உண்டாகின்றன. இவை மறுபடியும் சமுத்திரத்தில் கலப்பதில்லை. ஆனால், எல்லா நதிகளும் சமுத்திரத்தையே தேடி வந்து கலந்து விடுகின்றன. வடக்கே ஒரு நதிக்கு ஸோன் என்று பெயர். சோணம் என்றால் சிவப்பு. இந்த நதி சிவப்பான மண் வழியே ஒடுகிறது. ஆந்திராவில் கிருஷ்ணா நதி இருக்கிறது. கிருஷ்ண என்றால் கருப்பு இந்த நதி கருப்பு மண் மீது ஒடுகிறது. கங்கை என்றால் வெளுப்பு. இதுவும் அது ஒடுகிற பிரதேசத்தைப் பொருத்து அமைந்த பெயர்தான. மூன்றும் ஒரே கடலில்தான் கலக்கின்றன. சிகப்பு ரஜோ குணம், கருப்பு தமோ குணம். வெள்ளை ஸத்வ குணம். மனசானது முக்குணங்களில் எதில் பாய்கிறதோ, அதை ஒட்டி ஜீவாத்மாவின் சுபாவம் அமைகிறது. எப்படியானாலும், கடைசியில் பரமாத்ம சமுத்திரத்தில்தான் கலந்தாக வேண்டும்.

water finds its level - தொடர்புடைய நீர்ப்போக்கு ஒரே மட்டத்தில் இருக்க முயலும் என்பார்கள். மலை உச்சியில் மழை பொழிந்து நதி உண்டாகிறது. அங்கிருந்து கீழே கனவேகமாக, ஒரே இரைச்சலோடு நதி விழுகிறது. பூமியில் ஒடும்போது அத்தனை சத்தம் இல்லை. முடிவில் சமுத்திரத்தில் கலந்தபின் சத்தமே இல்லை. அப்போதுதான் நதி தன் லெவலுக்கு வருகிறது. அதாவது லெவலுக்கு வந்தவுடன் பரம சாந்தமாகிறது. எதிலுமே சரி, லெவல் - அதாவது அளவு அறிந்து, அந்த மட்டத்தோடு நிற்கிற மனோபாவம் வந்தால்தான் சாந்தம் உண்டாகும். லெவலுக்கு மீறிச் செய்கிற தாட்பூட் காரியங்கள் பிறருக்குப் பிரமிப்பூட்டலாம். ஆனால் இதனால் நாமே நம் சாந்தியைக் குலைத்துக் கொள்வதுதான்

பலன். உருட்டல், புருட்டல், மிரட்டல், இரைச்சல் எல்லாவற்றையும் குறைத்து அடக்கமாக வருகிற நதியை சமுத்திரம் எதிர் கொண்டு சென்று பின்வாங்கிச் செல்கிறது. இதனால்தான் நதியின் சங்கம ஸ்தானங்களுக்குச் சிறிது தூரம் முன்னாலிருந்தே உப்புக் கரிக்கிறது. நாம் லெவலை மீறாமல், அடக்கமாகச் சென்றால், பரமாத்ம சமுத்திரமும் நம்மை எதிர் கொண்டு அழைத்துப்போய் தனக்குள் அடக்கம் செய்து கொண்டு விடும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### மாயை

எல்லாம் மாயை, சத்தியமாக எதுவும் இல்லை. என்று பௌத்தம் சொல்கிற மாதிரி அத்வைதம் சொல்லவில்லை. பிரபஞ்சமேல்லாம் மாயைதான். ஆனால் இதற்கு, ஆதாரமாக பிரம்மம் என்பது பரம சத்தியமாயிருக்கிறது என்கிறது அத்வைதம்.

உலகத்தை மாயை என்று சொல்கிறீர்களே, இந்த உலகத்தில் இத்தனை காரியங்கள் கண்கூடாக நடந்து கொண்டிருக்கும்போது இதை எப்படி மாயை என்று சொல்லலாம் என்று கேட்கிறீர்கள்.

மாயை என்றால் அடியோடு இல்லாத வஸ்து என்று நினைத்துக் கொண்டு இப்படிக் கேட்கிறார்கள். ஆனால் மாயை என்பது அடியோடு இல்லாத வஸ்து (அத்யந்த அஸத்) அல்ல. முயல் கொம்பு அல்லது மலடி மகன் என்று சொன்னால் உடனே அது அட்யோடு இல்லத வஸ்து என்று தள்ளி விடுகிறோம். மாயை அப்படி இல்லை. அது இருப்பதாக நினைக்கிற மட்டில் இருப்பதாகவே தோன்றும். அது முயல் கொம்பு மாதிரி இல்லை. கானல் நீர் மாதிரி கண்ணுக்குத் தெரிகிறது. ஆனால் அதில் ஜலம் இல்லை. அதைக் குடித்து நாம் தாக சாந்தி செய்து கொள்ள முடியாது. கானல் நீர் தெரியத்தான் செய்கிறது. அவ்விதமே உலகை மாயம் என உணர்த்த ஞானிகளுக்குக் கூட லோகம்

தெரியத்தான் செய்கிறது என்று சொல்வதுண்டு. ஆனால் அது நிரந்தர சத்தியமல்ல என்று அவர்கள் அறிவார்கள்.

ஒரு பழுதையைப் பாம்பென்று தவறாக எண்ணுகிறோம். பழுதையில் பாம்பு இல்லை என்பது உண்மை. இருந்தாலும்கூட அதைப் பாம்பாக எண்ணியமட்டும், வாஸ்தவத்தில் இல்லாத பாம்பே நிஜமான பாம்பு உண்டாக்குகிற அத்தனை பயத்தையும், பதற்றத்தையும் நம்மிடம் உண்டாக்கி விடுகிறது. பாம்பு மெய்யாக இல்லாத போதிலும் நமக்கு வேர்த்து விறுவிறுத்தும், நாம் பயப்பிராந்தி அடைந்ததும் உண்மையே. உலகம் உண்மையில் நிரந்தர சத்தியமாக இல்லாதபோதிலும் அதையே நாம் சத்தியமாக எண்ணுகிற மட்டில் இவ்விதமே சகல காரியங்களும் நடக்கின்றன. பழுதையைப் பழுதை என்று தெரிந்து கொண்டவுடன் பயம் ஒடிப்போவதுபோல், உலகமும் பிரம்மத்தைச் சார்ந்த ஒரு தோற்றமே. அதற்கும் ஆதார பிரம்மம் ஒன்றே நிரந்தர உண்மை என்று அறிகிறபோது, காரியங்கள் எல்லாம் நின்றுபோகின்றன.

அடியோடு இல்லாத வஸ்துவல்ல உலகம். ஞானம் வருகிற வரையில் உள்ள தோற்றம் அது. கனவு காண்கிற வரையில் கனவு மெய்யாக இருந்து, நாம் விழித்துக் கொண்டபின் கனவு நசிங்கிப்போவது போல், அஞ்ஞானத்தில் தூங்கிக் கொண்டிருந்த வரையில் உலகம் மெய்யாக இருந்து, நாம் ஞான நிலையில் விழித்துக் கொண்டபின் மறைந்து போகிறது. இவ்வாறு, அப்பட்டப் பொய்யாக இல்லாமல், தோன்றி மறைகிற தாற்காலிக உண்மையாக உள்ள உலகத்தை அத்யந்த அஸ்த் என்று சொல்லாமல், பிராதி பாஸிக ஸத்தியம் என்பார்கள். கிளிஞ்சலில் வெயில் வெள்ளி மாதிரி மினுமினுப்பதுபோல் பிரம்மத்தில் மாயையால் உலகம் தாற்காலிகமாக மினுமினுக்குகிறது.

மாயை என்பது ஞானிக்குப் பூஜியம் (Zoro) தான் ஆனால் ஞானம் வராத நிலையில் உள்ள ஜீவன் தன்னை ஒரு தனி எண்ணாக வைத்துக்கொண்டு பக்கத்தில் இந்தப் பூஜ்ஜியத்தைச் சேர்த்துக் கொள்கிறான். ஓர் இலக்கத்துக்குப் பக்கத்தில் வருகிற பூஜ்யம் அதாப் பாத்து, இருபது, நூறு, ஆயிரம் என்று ஆக்குவதுபோல் இந்த அஞ்ஞானிகளுக்கு மாயையே பலவாக விரித்து சத்திய வஸ்துக்களாக உலகமாக

தோன்றுகிறது.

ஞானியே உள்ளது உள்ள படி பார்க்கிறான்.ஒரே சர்க்கரையினால் பல பொம்மைகள் செய்திருக்கிறதுபோல் ஒரே பிரம்மம் இத்தனையையும் ஆகியிருக்கிறது. சர்க்கரையினால் பாகற்காய் பொம்மை செய்து வைத்திருந்தால், விஷயம் தெரியாத குழந்தை அது கசக்கும் என்று ஒடிப்போயிருக்கும். கசப்பு வஸ்துவாகத் தோன்றுகின்ற அதுவும் உண்மையில் மதுரமான சர்க்கரைதான். உலகம் எல்லாம் ஆனந்த மயமான பிரம்மம் ஒன்றே என்று ஞானி அறிவான். நமக்குக் கசப்பு அவனுக்கு இனிப்பு நமக்குக் கருப்பு அவனுக்கு வெளுப்பு. நமக்குப் பகல் அவனுக்கு இருட்டு என்று கிருஷ்ண பகவான் சொல்கிறார். பிரம்மம் என்கிற வெளிச்சமே நமக்கு இருட்டாக இருக்கிறது. இருட்டான மாயைத்தான் நமக்கு வெளிச்சமாக தெரிகிறது. இதெப்படி முடியும் என்று கேட்கலாம். மாயையும் பிரம்மையைச் சார்ந்து அதனிடமிருந்து சிறிது பிரதிபலிப்பான ஒளி பெறுகிறது. இந்தக் குறைந்த ஒளிதான் நம் குறைந்த அறிவுக்கு எட்டுகிறது. சுமாரான வெளிச்சத்தில்தான் புஸ்தகத்தின் கறுப்பு எழுத்துக்கள் தெரியும். ஜொலிக்கிற சூரிய வெளிச்சத்தில் நேரே புஸ்தகத்தைப் பிரித்தால் எழுத்தே தெரியாது. நமக்கு மாயையின் அற்பப் பிரகாசத்தில் உலக காரியங்கள் தெரிகின்றன. ஞானியின் ஆத்ம பிரகாசத்தில் அவை மறைந்து போகின்றன. ஞானியின் பகல் நமக்கு இரவு என்பதன் அர்த்தம் இதுவே.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### அகமும் புறமும்

மநுஷ்யனாகப் பிறந்த ஒவ்வொருத்தனும் ஓயாமல் அலைச்சலான அலைச்சல் அலைந்து கொண்டிருக்கிறானே எதற்காக. ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்குத்தான். வெளியிலிருக்கிற வஸ்துக்களிடம் இவனுக்கு ஆசை. அவற்றைப் பெறவே அலைகிறான். ஒன்று கிடைத்து

விட்டாலும் போதவில்லை. அதனால் வருகிற சுகம் தீர்ந்து போகிறது. இன்னொன்றுக்கு ஆசைப்படுகிறான். அதைத் தேடி ஒடுகிறான். இவனுக்கு சாந்தி என்பதே ஒரு நாளும் இல்லாமலிருக்கிறது.

வெளியில் இருக்கிற வஸ்து வந்தால்தான் சந்தோஷம். ஆனந்தம் என்று துரத்திக்கொண்டே இருப்பவனுக்கு சாந்தி எப்படி வரும். வெளியில் இருப்பது நம் வசத்தில் இருப்பதல்ல. அது வந்தாலும் வரும், போனாலும் போகும். அதை நம் வசப்படுத்திக் கொண்டதாக நினைக்கும்போதே கைவிட்டுப் போகக்கூடும். நமக்கு அன்னியாயமான வெளி விஷயங்களிலிருந்து ஆனந்தத்தைச் சாசுவதமாகச் சம்பாதித்துக் கொள்வது நடக்காத காரியம். அது சாந்தியைக் கொடுக்கிற பிரயத்தனம் தான்.

மநுஷ்யன் புறத்தில் ஆனந்தத்தைத் தேடிக் கொண்டு போவதற்குக் காரணம், அவன் உள்ளுக்குள்ளேதான் ஆனந்த ஸ்வரூபமாக இருப்பதுதான். இவன் உள்ளூற ஆனந்த ஸ்வரூபமாய் இருப்பதாலேயே ஆனந்தத்தை எப்போது பார்த்தாலும் தேடிக்கொண்டு இருக்கிறான். மாயையால், தானே ஆனந்த ஸ்வரூபம் என்பதை மறந்து விட்டிருக்கிறான். மாயையால், தானே ஆனந்த ஸ்வரூபம் என்பதை மறந்துவிட்டிருக்கிறான். இருந்தாலும் இவனுடைய ஸ்வபாவமே ஆனந்தமான படியால் இவனுக்கு ஆனந்தம் அடைய வேண்டும் என்ற எண்ணம் மட்டும் இருக்கிறது. மநுஷ்யர்களில் எவராவது ஆனந்தத்தைத் தேடாமல் துக்கத்தைத் தேடிப் போகிறவர்கள் உண்டா. ஆனாலும் அந்த ஆனந்தம் உள்ளே இருப்பதை அறிந்து சாந்தத்தில் அதை அநுபவிக்காமல், வெளியே ஆனந்தத்தைத் தேடித் துரத்திக் கொண்டே போய் சாந்தியயை ஒயாமல் கொடுத்துக் கொள்கிறார்கள். தன் நிஜ ஸ்வரூபம் என்ன என்று ஒருவன் அம்பாளின் கிருபையால் பிரார்த்தித்து ஆத்ம விசாரம், தியானம் செய்து பார்த்தால், தானே பூரண ஆனந்த வஸ்து என்று தெரிந்து கொள்வான்.

இவனுடைய இயல்பான உள் ஆனந்தம் மகா சமுத்திரம் மாதிரி இருக்கிறதென்றால், இவன் இப்போது புறத்தில் தேடி ஓடுகிற வஸ்துக்களிடமிருந்து கிடைக்கிற வஸ்துக்களிலிருந்து கிடைக்கிற ஆனந்தமெல்லாம் ஒரு திவலை

மாதிரிதான். இதை ஒருத்தன் உணர்ந்து விட்டால், அப்புறம் வெளி இன்பத்தைக் தேடவே மாட்டான். தன்னைத்தானே அநுபவித்துக்கொண்டு ஆனந்த சமுத்திரமாக இருப்பான். சமுத்திரம் இருக்கிற இடத்திலேயே கரையைவிட்டு வராமல் இருந்தாலும் அதனிடம் நதிகள் போய் விழுகின்றன அல்லவா. அப்படியே ஆசைகள் இவனிடம் வந்து விழுந்து சமுத்திரத்தில் நதிகள் விழுந்து மறைவதுபோல் மறைந்தே போய்விடும். ஆபூர்வ மாணம் அசலப்ரதிஷ்டம் சமுத்ரம் என்று கீதை சொன்ன மாதிரி, பேரின்பக் கடலாக நிறைந்து, அசைவதற்கு இடமே இல்லாத அளவுக்கு எங்கும் நிறைந்து, அசையாமல் பரம சாந்தமாக நிற்பான். தேவேந்திர பதவியின் ஆனந்தம்கூட இந்த ஆத்மானத்தைக் கடலில் ஒரு துளிதான் என்கிறார் ஸ்ரீ பகவத் பாதாள்கள். யத்ஸௌக்யாம்புதி லேச லேசதஇமே சக்ராதயோ நிர்விருதா(மனீஷா பஞ்சகம்)

பதவி, பணம், ஸ்திரீ புருஷாள், கௌரவம், பப்ளிஸிட்டி - என்றிப்படி வெளியிலிருந்து நமக்கு ஆனந்தம் கிடைப்பதாக எண்ணிக்கொண்டு ஒயாமல் யத்தனம் செய்வது அத்தனையும் சமுத்திரமாக இருக்கிற நாம் அதையறியாமல் ஒரு சொட்டு ஜலத்துக்காக தவிக்கிற மாதிரிதான் வெளிப்பொருள் எதுவோ கிடைக்காததால் நமக்குக் குறை வந்து விட்டதாகக் துக்கப்படுவது சுத்தத் தப்பு. நமக்குக் குறையே இல்லை. வெளியிலே இருக்கிற அத்தனை ஆனந்தமும் நமக்குள்ளேயே அடக்கம். வெளி மாதிரி இருப்பதிலிருந்து தானாக எது வந்தாலும் வரட்டும். சமுத்திரம் நதிகளை அடக்கிக் கொள்வதுபோல் அவற்றையும் உள்ளே இருப்பதோடு சேர்த்துக் கொள்வோம். எதுவும் வரயில்லையா. அதனால் பாதகமில்லை. எதும் வராததால் நமக்கு என்ன குறை. நமக்கு உள்ளேயே இருக்கிற பரமாத்ம வஸ்துவின் லேசந்தானே வெளியில் இருப்பதெல்லாம் என்கிற தெளிவோடு எப்போதும் இருக்க முயலும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### துக்கச் சுமை குறைய வழி

நாம் எல்லோரும் பரம்பொருளை பற்றிய உண்மையான ஞானத்தைப் பெற முயல வேண்டும். இந்த ஞானம் என்பது என்ன?பரம்பொருளைத் தவிர, வேறெதுவுமே இல்லை என்பதுதான். அந்த ஒன்று இத்தனை யாகவும் தோன்றுகிறது. இத்தனையான தோற்றங்களிலேயே மனஸைச் செலுத்திக் கொண்டிருந்தால் சஞ்ஜலம், ஏற்றத்தாழ்வு, இவற்றால் உண்டாகும் கஷ்டங்கள் எல்லாம் ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். இத்தனை தோற்றத்திலிருந்தும் மனஸைத் திருப்பி, இவற்றுக்குக் காரணமான ஒன்றையே அறியத் தொடங்கினால் எண்ணமும் பலவாக ஒடி அவதிப் படாமல் சஞ்சலங்கள் ஒழியும். ஒரே வஸ்து என்றபின் சஞ்சலிக்கவோ ஏற்றத்தாழ்வுக்கோ இடம் ஏது. அந்த நிலையிலேயே நித்திய சுகத்தைப் பெறலாம். இந்த நிலையைத்தான் ஞானம் என்கிறோம்.

உலக வாழ்வில்கூட சுகம் வருவது போலிருக்கிறது. ஆனால் அது நித்தியமாக நிலைத்து இருப்பதில்லை. வெளியிலிருந்து வருகிற சுகத்தை நாம் எப்படி சாசுவதமாக்கிக் கொள்ள முடியும். வெளியிலிருந்து வருவது நமக்கு ஸ்வாதீனப்படாமல் நம் கையைவிட்டு ஒடியும் விடும். அப்போது அதனால்

கிடைக்கிற சுகமும் போகத்தான் செய்யும். இப்படித்தான் இந்த நிமிஷம் சுகமாக இருப்பது அடுத்த நிமிஷமே மறைகிறது. அடர்ந்த மரத்தின் கிளைகள் ஆடுகிறபோது இடுக்கு வழியாகக் கொஞ்சம் வெளிச்சம் வந்து பாய்ந்துவிட்டு, அடுத்த நிமிஷமே நிழல் வந்து மூடிக்கொள்வது போலத்தான், உலகத்தின் துன்பத்துக்கு நடுவில் கொஞ்சம் கொஞ்சம் சுகம் தலையை எட்டிப் பார்த்துவிட்டு ஒடிவிடுகிறது. நிரந்தர சுகம் என்பது உலகத்துக்குக் காரணமான ஒன்றை அறிவது தான்.

உலக வாழ்வில் சகல மனிதர்களுக்கும் அளவில்லாத கஷ்டங்கள் உண்டாகத்தான் செய்யும். பணக்காரன், பெரிய பதவியில் இருப்பவன் கஷ்டமில்லாமல் இருப்பதாக மற்றவர்கள் நினைக்கலாம். அப்படி நினைத்துத் தாங்களும் அவர்களைப் போலப் பணமும் பதவியும் பெறப் பாடுபடலாம். ஆனால், பணக்காரனை பதவியில் உள்ளவனைக் கேட்டால் தெரியும். அவனுக்கு எத்தனை

கஷ்டங்களென்று, நாம் திண்ணையில் இருக்கிறோம். விழுந்தால் சிராய்த்துக் கொள்வதோடோ, சுளுக்காவதோடோ போய்விடும். பணக்காரனும், பதவிக்காரனும் மாடிமேல் இருக்கிறார்கள். எனவே அவன் விழுந்தால் எலும்பெல்லாம் முறிந்து விடும். பிராணாபத்து உண்டாகும். ஒருவனுக்கு பணமும் பதவியும் உள்ளபோதே அதனால் உண்டாகிற சிறிது சுகத்தோடு, தன் பணம், பதவி போகக்கூடாது என்ற கவலை, சுகத்தைவிட அதிகமாக இருக்கிறது. இதனால்தான் உலகத்தில் எவனுமே, தான் சந்தோஷமாக இருப்பதாகச் சொல்லக் காணோம். ஒவ்வொருவனும் தானே புத்திசாலி, தானே மிகவும் யோக்கியமானவன் தானே ரொம்பவும் அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பதுபோல், அதிக துக்கமுள்ளவனும் தானே என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

துக்கம் நம் உடன் பிறப்பு. நம் பூர்வ கர்மாவின் பயனாக இந்தத் துக்கங்களுக்கு நாம் முன்னமேயே விதை போட்டிருக்கிறோம். இதிலிருந்து தப்ப வழி இல்லை.

ஆனால் கர்மத்தினால் ஏற்படும் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு சாந்தமாக இருக்க வழி உண்டு. புதிதாக கர்ம மூட்டையைப் பெருக்கிக் கொண்டு எதிர் காலத்தில் கஷ்டத்தை அதிகமாக்கிக் கொள்ளமலிருக்க வழி உண்டு. முதலில் சொன்ன ஞானம்தான் அந்த வழி.

சித்தப் பிரமை பிடித்து, ஜடமாகி விட்டால் கஷ்டம் தெரிவதில்லை. பைத்தியத்தின் கஷ்டம் வேரூன்றி நிற்பதில்லை. ஆனால், சித்தப் பிரம்மையில் நித்திய ஆனந்தமும் இல்லை. தூக்கத்தில் துக்கமில்லை. ஆனால் தூக்கதித்தில் சுகமாக இருக்கிறோம் என்கிற அறிவு இல்லை. ஞானிதான் எப்போதும் விழிப்பிலேயே இருந்து கொண்டும் சாசுவத ஸுகியாக இருக்கின்றன. அவனது தேகத்தில் சிரமங்கள் இரா என்பதில்லை. ஆனால் அவனுடைய மனத்தில் கிலேசமே இராது. வெளியிலிருக்கிற சிரமம் அவன் உள்ளே பாதிப்பதே இல்லை.

கிணற்று ஜலத்துக்குள் நீர் நிரம்பிய குடத்தை இழுக்கும் போது கனம் தெரிவதில்லை. ஆனால் தண்ணீர் மட்டத்துக்கு மேலே குடம் வந்தவுடன் கனக்க ஆரம்பித்து விடுகிறது. எளிதில் புரட்ட முடியாத பெரிய மரங்களை வெள்ளத்துக்கு

அடியாகத்தான் புரட்டி எடுப்பது வழக்கம். அதே மாதிரி நம்

துக்கங்களையெல்லாம் ஞானமாகிற தண்ணீரில் அழுக்கி விடவேண்டும். அப்போதும் துக்க ஹேதுவான விஷயங்கள் இருக்கத்தான் செய்யும். ஆனால் ஜலத்துக்குள் இழுக்கிற குடம் மாதிரி அப்போது துக்கம் பரம லேசாகிவிடும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### யோகி

துக்கம் என்பது தன்னைத் தொடாமல் எவன் ஒருத்தன் இருக்கிறானோ அவனே யோகி, பாவம், அதாவது மனஸில் அசுத்தம்தான், துக்கத்துக்குக் காரணம் மனசில் உள்ள அசுத்தங்கள் எல்லாம் நீக்கினால், அதுதானாகவே பரமாத்மாவின் பக்கம் திரும்பிவிடும். ஒழுங்கினாலும் கட்டுப்பாடிட்டினாலும் தான் மனஸில் அசுத்தங்களை அகற்ற முடியும். இந்தச் சரீரக் கூட்டிலிருந்து ஆத்மா பிரிந்து போவதற்கு முன்பு சரியான கல்வியின் மூலமும். அப்பியாசத்தின் முலமும், கட்டுப்பட்டு ஒழுங்காக வாழ்ந்து, அசுத்தங்களைப் போக்கிக்கொண்டு விட வேண்டும். அப்படிச் செய்து ஜயித்தால், கடைசீயில் தேக வியோகமே பரமாத்மாவுடன் பிரியாமல் சேர்ந்து விடுகிற யோகமாகிவிடும்.

யோகிக்கு அடையாளமென்ன. பரமாத்மாவைச் சேர்ந்துவிட்ட அவனது மனசு, வேறு எதையுமே சேர்த்துக் கொள்ள நினைக்காது.

மனசு அதற்கப்புறம் ஒடவே முடியக் கூடாது. அப்படி ஒடாமல் ஆகிவிட்டதால்தான், அதற்கப்புறம் இந்த மனசினால் நமக்கு உண்டாகியிருக்கிற இத்தனை தொந்தரவுகளும் தொலைந்தபோதும். அந்த நிலையைப் பெறுவதற்கு எதைச் சேர வேண்டும். மனசு எதிலிருந்து உற்பத்தியாயிற்றோ அதைத்தான் சேரவேண்டும். மனசு அதன் மூலத்தில் சேர்த்துவிட்டால், அங்கே அப்படியே கரைந்து போய்விடும். அப்புறம் ஒடாது. அதுவே சகல

தொந்தரவுகளிலிருந்து விடுபட்ட நிலை.

ïF Þ¼,Aø¶. Üî¡ Íô‹ - à‡ì£ù Þì‹ - â¡ù?. சமுத்திரம். சமுத்திர ஜலம் தான். ஜலம் ஆவியாகிப்போய் வேறொரு இடத்திலிருந்து நதியாக ரூபம் எடுக்கிறது. அந்த ஆறு ஓடாத இடமில்லை. இப்படி ஓடி ஓடித்தான் கடைசீயில் தன் மூலமான சமுத்திரத்தில் வந்து விழுகிறது. அப்புறம் அதற்குத் தனி ரூபம் உண்டா. ஓட்டம் உண்டா. ஒன்றும் இல்லை. இப்படி நதிகளுக்கெல்லாம் மூலமாக இருந்து, முடிவில் இவற்றைத் தன்னிலேயே சேர்த்துக் கொள்கிற மாதிரி, நம் மனசுகளை எல்லாம் முடிவான சேர்க்கையில், யோகத்தில் தன்னோடு கரைத்துக் கொள்கிற ஒன்று இருக்கிறதா என்றால் இருக்கிறது. சமாத நிலையில் ஞானிகள், யோகிகள் தங்கள் தனி மனசைக் கரைத்துவிட்டு வெளிப் பிரக்ஞையே இல்லாமல் இருக்கும்போதே, இந்த வஸ்துவிடம்தான் சேர்ந்திருக்கிறார்கள். சமாதி நிலைக்கு அப்புறம் ஒரு யோகி அந்த நிலையை விட்டு விட்ட மாதிரி நமக்குத் தோன்றினால்கூட உண்மையில் இது நீங்காத சேர்க்கைதான். உள்ளூர அவருக்கு அந்தச் சேர்க்கையின் அநுபவமேத்தான் இருந்து கொண்டிருக்கும். அதனால்தான் அவர் வெளிப் பிரக்ஞையோடு இருக்கிற மாதிரி நமக்குக் தோன்றுகிற போதுகூட, அதை அடாய வேண்டும். இது அடைய வேண்டும் என்ற ஆசை எதுவுமே அவருக்கு இல்லை. ஏதாவது ஒன்று தனக்கு வேண்டுமென்று கொஞ்சம் கொஞ்சம்

ஒருத்தனுக்குத் தோன்றிவிட்டாலும்கூட அவர் யோகி இல்லை. அவன் ஸ்வாமியைச் சேரவில்லை என்றுதான் அர்த்தம்.

யோகியின் அடையாளத்தை வேறுவிதமாகவும் சொல்லலாம். அதாவது அவனுடைய சித்தம் பரமாத்மாவிடமே நிலைத்துவிட்டது என்றால், அதற்கப்புறம் எந்தப் பெரிய துக்கம் வந்தாலும் அது துளிக்கூட ஆகக் கூடாது. அசையக் கூடாது, அழக்கூடாது, இப்படி இல்லைமல், சித்தம் துளித்துளி சலித்து விட்டால்கூட அவன் பரமாத்மாவை அடையவில்லை என்ற அர்த்தம்.

யோகிக்கு அநேக துக்கம் வரும். அதாவது ஊர் உலகத்துக்கெல்லாம் அது துக்கமாகத் தோன்றும். ஆனால் அவனுக்குத் தூக்கம் லவேசமும் தெரியாது. பட்ட கட்டை

மாதிரி இருப்பன். பட்ட கட்டை என்பதுக்கூடச் சரியில்லை. அது உணர்ச்சியே இல்லாத நிலை அல்லவா. யோகி ஒருத்தன் தான் பூரணப் பிரக்ஞையோடு இருக்கிறவன். அவன் ஸதானந்தமாக இருக்கிறவன். அது வேண்டும். இது வேண்டும் என்பதேயில்லாமல் சதா ஆனந்தமாக உட்கார்ந்து கொண்டிருந்து விட்டால் அதுதான் யோகம்.

அவனுக்கு ஸ்வபாவமாகவே கருணை மாத்திரம் சுரந்து கொண்டிருக்கும். யாரிடத்திலும் கோபம், வெறுப்பு வராது. இன்னொரு பிராணிக்கு தன்னால் இம்மியும் ஹிம்ஸை வரக்கூடாது என்கிற எண்ணம் மட்டும் இருக்கும். வெளி உலகத்தின் பார்வைக்கு அவன் என்னென்ன காரியம் செய்தாலும், அதெல்லாம் அவனுக்குத் தான் செய்கிறோம் என்ற அகங்கார எண்ணமே இராது. சொந்தப் பற்றே இல்லாமல், பரம காருண்யம் மட்டுமே அவனுடைய காரியங்களில் இருக்கும். சில சமயங்களில் வெளியிலே பார்க்கிற காரியம் நமக்குக் கடுமையாக இருந்தாலும்கூட, உள்ளுக்குள்ளேயே அதுவும் பரம காருண்யம் தவிர வேறாக இராது. மஹா யோகியான பரமேசுவரன் இப்படித்தான் சம்ஹாரம் செய்கிறார். நமக்கு அது கொடுமையாகத் தெரியலாம். ஆனால் ஒவ்வொரு ஜீவனும் எத்தனை பாப ஜீவனாக இருந்தாலும் சிறிய காலமாவது கர்ம கதியிலிருந்து விடுதலை அடைந்து தன்னிடம் லயித்திருப்பதற்காகவே அவர் சம்ஹாரம் செய்கிறார். தினமும் நமக்குத் தூக்கத்தைக் கொடுத்து அந்த வேளையில் சுக துக்கங்களிலிருந்து நமக்கு விடுதலை தருகிற மாதிரி. இந்தச் சரீரம் விழுந்த பின்னும் கொஞ்ச காலம் சிரம பரிகாரம் தருகிறார். தினம் தூங்கிவிட்டு மறுநாள் விழித்துக் கொண்டு பழையபடி நல்லது கெட்டதுகளில் விழுகிற மாதிரி, இச்சரீரம் போய்ச் சிரம பரிகாரம் ஆனபின், இன்னொரு சரீரத்தில் விழித்துக் கொள்கிறோம். இந்த அலைச்சல் - புனரபி ஜனனம், புனரபி மரணம் - கூடாது. இந்தச் சரீரம் போனால் இன்னொரு முறை சரீரம் வரக்கூடாது. அப்படிச் செய்து கொள்ள வேண்டும். கட்டுப்பாடு, ஒழுங்கு, பரம கருணை தபஸ், பூஜை, யக்ஞம், தானம் எல்லாம் அதற்குத்தான். குழந்தையாக இருக்கிற காலத்திலிருந்தே இவற்றில் எல்லாம் பழகினால்தான், கோடாது கோடி ஜனங்களை இந்தமாதிரி, படிப்படியாக உயர்த்துவதற்கு முயன்றால்தான், எங்கேயானாலும் ஒரு யோகி, ஒரு ஞானியாவது பூரணமாக உண்டாவார். அப்படி

ஒருத்தர் உண்டாவதுதான் இத்தனை மநுஷ்ய சிருஷ்டிக்கும் பலன்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### அத்வைதம்

#### துக்க பரிகாரம்

ஒருவனுக்கு வியாதி வந்தால், அதற்குப் பலர் பல்வேறு காரணங்களைக் கூறுகின்றனர். தாது வித்தியாசத்தால் நோய் வந்தது என்பார் ஆயுர்வேத வைத்தியர். இங்கிலீஷ் டாக்டர் வேறு காரணம் சொல்வார். இதற்கும் மாறாக இன்னொறு ஸைகலாஜிகல் காரணத்தை இந்நாட்களில் பிரபலமாக்கி வரும் மனோதத்வ நிபுணர் கூறுவார். மந்திர சாஸ்திரக்காரர், குறிப்பிட்ட தெய்வக் கோளாற்றில் இந்த வியாதி உண்டாயிற்று என்பார். ஜோதிஷர் இன்ன கிரகம் இன்ன இடத்தில் இருப்பதே நோய்க்குக் காரணம் என்பர். தர்ம சாஸ்திரம் அறிந்தவர்களோ பூர்வ கராம பலனாகத்தான் வியாதி ஏற்பட்டிருக்கிறது என்பார்கள்.

Mò£F,° ñ†´I¡P ï‹ õ£›M¡ â™ô£ Mîñ£ù ²è ¶,èƒèÀ,°‹ Þšõ£Á ðôMî, è£óíƒèœ ªê£™ôŠð´A¡øù. å«ó Mûò˜¶,° ÞŠð®Š ðô è£óíƒèœ ªê£¡ù£™ ïñ,°, °öŠðñ£J¼,Aø¶. ï‹ ²è ¶,èƒèÀ,° Aóèƒèœî£¡ è£óíñ£?«ü£Fû˜ ªê£™Aøð® Aóèš HgF ªêŒõî£ Ü™ô¶ «õÁ ªîŒõ˜¶,«è£ Aó£ñ «îõ¬î,«è£ ªêŒî Üð„ê£ó‹ è£óíñ£?. Ü‰î˜ ªîŒõ˜¶,° ê£‰F ðKè£ó‹ ªêŒõî£. «ï£ŒªïŸ£® â¡ø£™ è˜ñ ðô¡ â¡ø£™, Ü¶ b¼Aø«ð£¶î£¡ b¼‹ â¡Á ªõÁ«ñ, Þ¼‰¶Mì «õ‡®ò¶î£ù£. ÞŠð®, °öŠð‹ ãŸð´Aø¶. ðô è£óíƒèO™ â¶ ê˜Fò‹ â¡Á «ò£C˜î£™ â™ô£«ñ ê˜Fòñ£è Þ¼,°‹. ÝF è£óí‹ ï‹ è˜ñ‹î£¡ â¡ð¶ G„êò‹. Ü‰î, è˜ñ‹ å¡«ø ðôMîñ£ù M¬÷¾è¬÷ à‡ì£,°Aø¶. ñ¬ö å¡Áî£¡. Ýù£™ ÜFL¼‰«î â˜î¬ù M¬÷¾èœ à‡ì£A¡øù. ÌI º¿õ¶‹ ßó‹ à‡ì£Aø¶. ßê™ à‡ì£Aø¶. îõ¬÷ è˜¶Aø¶. Cô ªê®èœ ð„ªê¡Á î¬ö,A¡øù. «õÁ Cô Ü¿°A¡øù. Þ˜î¬ù»‹ å«ó ñ¬ö,° Ü¬ìò£÷ƒèœ. Ü«î ñ£FK ñ£‰Fgèñ£è¾‹ x«ò£Fû gFJ½‹ ¬õ˜Fò ê£vFóŠð®»‹ ï£‹ °í‹ ªðø «õ‡®ò Mò£F,°‹ å¼ è˜ñ£«õ è£óí‹. Þ¡Â‹ õ£›,¬èJ™ Mò£F¬ò˜ îMó, ðôMîñ£ù Hó„ê¬ùèœ. ðí˜î£™, à˜F«ò£è˜î£™, «îè ðô˜î£™, ÜP¾ê,Fò£™ èõQ,è «õ‡®ò Hó„ê¬ùèœ (Problems) â™¬ôJ™ô£ñ™ Þ¼,A¡øù. Þ‰îŠ Hó„ê¬ùèœ, èwìƒèœ â™ô£õŸÁ,°‹ è£óí‹ è˜ñ‹î£¡. úò¡vð® M¬÷¾ (Effect) Þ¼‰î£™ è£óí‹ (Cause) இருந்தேயாக வேண்டும்.

üè˜ º¿¶‹ è£óí‹ - M¬÷¾, ªêò™ - HóF„ ªêò™ (Action and Reaction) â¡ø ¶õ‰î˜¶,°œî£¡ è£†´‡®J¼,Aø¶. ªð÷Fè ê£vFó‹ (Physics) முழுதும் இந்த உண்மைதான் விளங்குகுகிறது. ஜடப் பிரபஞ்சம் இரண்டும் ஒரே மூலத்திலிருந்தே வந்ததால் ஜகத்துக்கு உள்ள இந்த விதி மனித மனித வாழ்விலும் உண்டு. நாம்

செயலுக்கெல்லாம் நிச்சயமாகப் பிரதி உண்டு. இன்று நாம் அநுபவிக்கின்ற சுகங்களுக்கும் கஷ்டங்களுக்கும் காரணம் நாம் முன்பே இந்த ஜன்மாவிலோ, பூர்வ ஜன்மாவிலோ செய்த நல்லது கெட்டதுகள்தான். சில சமயங்களில் நாம் சொந்த பாப புண்ணிய விளைவோடு,

குறிப்பிட்ட வேறு சிலரது பாப புண்ணிய பலனும் நம்மைச் சேருவதற்கச் சொல்வதுண்டு. உதாரணமாக, குழந்தைக்கு வியாதி வந்தால், மாதா பிதாவின் பாப பலன் என்பார்கள். அவர்கள் குழந்தைக்கு ஸதா சிசுருஷை செய்வதையும், மனத்தால் அந்தக் குழந்தைக்காக அவர்கள் வேதனைப்படுவதையும் பார்க்கும்போது இதுவும் நியாயம் என்றே தெரியும். எனக்கு இன்னொன்றுகூடத் தோன்றுகிறது. அதாவது, நமக்கு ஒரு கெடுதல் வந்தால் அது நம் சத்துருவின் புண்ணிய பலன் என்றும் சொல்லலாம்.

பிரபஞ்சத்தின் சகல ஆட்டத்துக்குள்ளும் காரணம் ஒரே ஒரு பராசக்திதான். அந்த ஒரே ஈசுவரனுடைய ஆக்ஞைப்படிதான் உலக இயக்கம் முழுதும் நடக்கிறது. அவன் பல விஷயங்களைச் சம்மந்தப்படுத்தி விடுகிறான். இந்த உலகத்தில் எதுவுமே தொடர்பில்லாமல் நடக்கவில்லை. நமக்குச் சம்மந்தமில்லாதவையாகத் தோன்றுவதை எல்லாம் உள்ளூறச் சம்பந்தப்படுத்தி வேடிக்கை பார்க்கிறான் ஸர்வேஷ்வரன்.

ஒருவர் செய்கிற கர்மம். அதன் பலன் இவையே மனித வாழ்வின் சுக துக்கங்களுக்கு முதற் காரணம். இதற்கே துணைக்காரணமாக - அல்லது அடையாளமாக - கிரகசாரம். தெய்வ குற்றம். ஆரோக்கியக்குறைவு முதலியன அமைகின்றன.

ஜாதக ரீதியில், வைத்திய ரீதியில், மாந்திரீக ரீதியில் எப்படி வேண்டுமானாலும் பரிகாரம் தேடிக் கொள்ளலாம். நம் கர்மா தீருகிறபோது அவை பலன் தரும். பகவான் விட்டவழி என்று பக்தியோடு நம் வாழ்க்கையை ஈஸ்வராப்பணம் செய்துவிட்டுப் பேசாமல் கிடைக்கிற பக்குவம் இருந்தால், எல்லாவற்றையும்விட அது சிலாக்கியம். அதுவே பெரிய பரிகாரம், உண்மையான பரிகாரம்.

பூர்வ கர்ம சமாச்சாரம் எப்படிப் போனாலும் இனிமேலாவது

கர்ம பாரம் ஏறாமல் பார்த்துக்கொள்வதே முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதைவிட, புதிய சுமை சேராமல், பாபம் பண்ணாமல் வாழ்வதற்கு ஈசுவரத் துணைகொள்வதே முக்கியம்.

பூர்வ கர்மத்தால் இப்போது ஏற்பட்டுள்ள துக்கத்துக்கும் உண்மைப் பரிகாரம் ஈசுவர தியானம்தான். இனிமேல் துக்கத்துக்கு விதை போட்டுக் கொள்ளாமல் இருக்கிற உபாயமும் ஈசுவர தியானம்தான். துக்கம் தருவதாக இன்னொரு வஸ்துவே இல்லை என்ற அத்வைத அநுபவம் சித்திப்பதே இதன் முடிந்த முடிவாக துக்க பரிகார நிலை. அங்கே துக்கமும் இல்லை. சுகமும் இல்லை. இரண்டுக்கும் ஆதாரமான சத்தியம் மட்டும் ஸ்வயம் பிரகாசமாக இருக்கும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### த்வைதம் ./. பௌத்தம் = அத்வைதம்

பிரம்மம் பூரணமானது. உலகமும் பூரணமானது. பிரம்மம் என்ற பூரண வஸ்துவில் உலகம் என்ற பூரணம் உதயமாயிற்று. இந்த உலகம் என்ற பூரணத்தைப் பிரம்மம் பூரணத்திலிருந்து எடுத்துவிட்ட போதிலும் பிரம்மம் பூரணமாகவே இருக்கிறது என்று ஓர் உபநிஷத மந்திரம் சொல்லுகிறது. பூரணம் என்றால் எல்லாம்

என்று அர்த்தம். எப்படி இரண்டு வஸ்து எல்லாமாக முடியும். பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்த பின்னும் எப்படிப் பூரணம் மிஞ்ச முடியும் என்ற கேள்வி எழுகிறது.

இந்த மந்திரத்தின் வாஸ்தவமான தாத்பரியம் என்ன?. உலகம் உண்மையில் பிரம்மத்திலிருந்து வேறாகப் பிரிந்து வெளியே வந்துவிட்ட வஸ்து அல்ல. பிரம்மமேதான் உலகமாகத் தோன்றுகிறது. பிரம்மம் வேறேதோ பொருள்களைக் கொண்டு உலகை சிருஷ்டிக்க (Create) வில்லை. பிரம்மம் உலகமாக மாறிவிடவும் (Transform) இல்லை. பிரம்மம் உலகமாகத் தோன்றுகிறது. (Appearance).

அவ்வளவுதான். இருட்டிலே ஒரு மாலையைப் பார்த்துவிட்டு பாம்பு என்று நினைக்கிறோம். இப்போது மாலையே பாம்பாகத் தோன்றுகிறது. மாலை பாம்பாக மாறவில்லை. மாலை என்று தெரிந்து கொண்டால் பூரணமாக மாலையாகவே இருக்கிறது. மாலை என்ற பூரணத்தில் பாம்பு என்ற பூரணம் உதயமானாற்போல், பிரம்ம பூரணத்தில் உலக பூரணம் தோன்றுகிறது. அதாவது ஒரு நிலையில் மாலையே பூரணம். இன்னோரு நிலையில் பாம்பே பூரணம். ஆக, இரண்டு பூரணமில்லை. ஒரே பூரணம் இரண்டு சமயங்களில் இரு விதங்களில் பூரணமாகத் தெரிகிறது. மாலையில் பாம்பு என்ற தோற்றம் ஏற்பட்டதால் அப்போது அதன் எடை கூடிற்றா என்ன.? இல்லை. பாம்பு என்ற தோற்றம் அழிந்து, இது மாலைதான் என்ற தெளிவு ஏற்பட்டபோது மாலையின் எடை குறைந்ததா?. அதுவும் இல்லை. அப்படியே பிரம்மத்தில் உலகத்தைக் கூட்டினாலும் குறைத்தாலும் அது மறாமல் பூரணமாகவே இருக்கிறது. மாலையில் தோன்றும் மாயப்பாம்பாக, அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவாக இருப்பதே உலகம் என்றார் கம்பர். அரவை (பாம்பை) அலங்கலிலிருந்து (மாலையிலிருந்து) கழித்த பின்னும் அது பூரண அலங்கலாகவே இருக்கிறது. இதுதான் உபநிஷத் சொன்னபடி பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்த பின்னும் பூரணம் மீதி இருப்பது.

மாலை ஏன் பாம்பாகத் தெரிந்தது?. இருட்டினால் அப்படித் தெரிந்தது. மாயை என்கிற இருட்டில்தான் பிரம்மம் உலகமாகத் தெரிகிறது. மாயா என்றால் எது இல்லையோ அது என்று அர்த்தம். இல்லாத வஸ்துவான மாயைதான் இருக்கிற ஒரே வஸ்துவான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகப் பெருக்கிக் காட்டுகிறது. இல்லாத வஸ்துவால் இப்படிச் செய்ய முடியுமா என்று கேட்பீர்கள். கணித சாஸ்திரப்படி பதில் சொல்கிறேன்.

பிரம்மத்தின் விஷயத்தில் கூட்டல், கழித்தல், கணித நியதி மேலே பார்த்தோம். கூட்டினாலும் ஜாஸ்தி ஆகாது. கழித்தாலும் பூரணமாகவே இருக்கும் என்ற விசித்திரத்தைப் பார்த்தோம். இப்போது பெருக்கல், வகுத்தல் கணக்கு ஒன்றும் சொல்கிறேன்.

ஓர் எண்ணை இன்னோர் எண்ணால் வகுக்கிறோம். வகுத்திற

எண் சிறியதாக சிறியதாக ஈவு அதிகமாகிக் கொண்டே போதும். பதினாறைப் பதினாறால் வகுத்தால் ஈவு ஒன்று. எட்டால் வகுத்தால் ஈவு இரண்டு. நாலால் வகுத்தால் நான்கு. ஒன்றால் வகுத்தால் ஈவு பதினாறு. வகுக்கிற எண் சிறியதானால் ஈவு அதிகமாகிறது. வகுக்கிற எண் மிக மிகச் சிறியதாகி பூஜ்யமே (0) ஆகிவிட்டால் அப்போது ஈவு மிகப் பெரியதான, எண்ணிக்கையிலேயே அடங்காத அனந்தமாகிறது. (மிஸீயீவீஸீவீமீ ஹ்)

பூஜ்யத்தால் எந்த எண்ணை வகுத்தாலும் கிடைக்கிற ஈவு அனந்தம்.

1/0 =அனந்தம்; 2/0 =அனந்தம்; 3/0 =அனந்தம்; கோடியைப் பூஜ்யத்தால் வகுத்தாலும் இதே அனந்தம்தான் ஈவு.

வகுக்கிற எண்ணால் ஈவைப் பெருக்கினால் வகுக்கப்படும் எண் கிடைக்கவேண்டும் என்பது நியதி. 16/2 = 8;அதாவது8ஜ்2 = 16 இந்த நியதிப்படி.

அனந்தம் x 0 = 1

அனந்தம் x 0 = 2

அனந்தம் x 0 = 3

இப்படி முடிவே இல்லாமல் போய்க் கொண்டே இருக்கிறது. ஒரே அனந்தமானது பூஜ்யத்தால் தன்னை ஒன்று, இரண்டு, மூன்று, கோடி, பத்துகோடி, என்று முடிவில்லாமல் பெருக்கிக் கொண்டே போகிறது.

இந்த ஒரே அனந்தம்தான் பிரம்மம். இல்லாத வஸ்துவான மாயைதான் பூஜ்யம். எது இல்லையோ அதுதானே ஸைஃபர். மாயை என்றாலே அந்தச் சொல்லுக்கு எது இல்லையோ அது என்றுதான் அர்த்தம். அனந்தம் பூஜ்யத்தால் தன்னைப் பெருக்கிக் கொண்டு பலவாகக் காட்டிக் கொள்வதுபோல், பிரம்மம் மாயை சக்தியால் தன்னை எல்லையில்லாத பல வஸ்துக்களாகத் தோன்றுகிற இந்தப் பிரபஞ்சமாகக் காட்டிக் கொள்கிறது. வகுக்கப்படும் பிரபஞ்சத்துக்கு என்ன எண்ணிக்கை வேண்டுமானாலும் தரலாம். எந்த எண்ணிக்கை தந்தாலும் அதை வகுப்பது பூஜ்யமான மாயையாகையால் மாறாது. அனந்தப் பிரம்மமே ஈவு ஆகிறது. பிரபஞ்சம்

என்பது இவ்விதம் எந்த எண்ணிக்கை வேண்டுமானாலும் பெறலாம் என்கிற முறையில் எல்லையற்றிருப்பதால் அதுவும் அனந்தமாகிறது. சிருஷ்டியில் எத்தனை தினுசு. நம் மனசும் எத்தனை தினுசுகளில் ஒடுகிறது. இவற்றுக்கு முடிவே இல்லை. அனந்தம் தான். முதலில் சொன்ன உபநிஷத் மந்த்ரங்களில் பிரம்மத்தைப் பூரணம் என்று சொன்னபோது, அது மாறாத அனந்தம் என்றும், பிரபஞ்சத்தைப் பூரணம் என்கிறபோது அது மாறிக் கொண்டிருப்பதில் அனந்தம் என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

மாறிக் கொண்டேயிருக்கிற வஸ்து சத்தியமாக இருக்கமுடியாதது. ஒன்று, இரண்டு, மூன்று, கோடி, பத்துகோடி என்று அதற்கு நாம் மதிப்புத் தந்தாலும், உண்மையில் அது அசத்தியம்தான் - இல்லாத வஸ்துதான் - அதாவது பூஜ்யம்தான். எந்த எண்ணைப் பூஜ்யத்தால் பெருக்கினாலும் வருகிற விடை பூஜ்யம்தான் என்ற கணிய நியதியை இங்கே எடுத்துக் கொள்ள வேண்டும்.

அனந்தம்(பிரம்மம்) x மாயை(0) = 1.2.3 என்றேல்லாம் மேலே உபச்சாரமாகச் சொன்னாலும், உண்மையில் அனந்தத்தை மாயையால் பெருக்கிக் கிடைக்கிற பிரபஞ்சமும் மாயா மயமான பூஜ்யம்தான் எனலாம்.

அனந்தமாக இருக்கிற பிரம்மம் ஒன்றே சத்தியம் என்கிறகு அத்வைதம். அனந்தமாகத் தெரிகிற பிரபஞ்சமும் சத்தியம் என்கிறது துவைதம். பிரம்மம், பிரபஞ்சம் என்ற பேதமில்லாமல் எல்லாமே சூனியம், பூஜ்யம், மாயை என்கிறது பௌத்தம். அதாவது, பிரம்மம் என்பது சத்தியம் என்று சொல்வது அத்வைதம். எல்லாம் மாயை என்பதோடு நிற்கிறது பௌத்தம். பிரபஞ்சத்தை சத்தியமாகச் சொல்கிறது த்வைதம்.

பிரம்மம் xமாயை= பிரபஞ்சம் என்று நாம் மேலேகண்ட equation சூத்திரத்தை,

அத்வைதம்xபௌத்தம் = துவைதம் என்று சொல்லலாம். அல்லது, துவைதம்/பௌத்தம் = அத்வைதம் எனலாம்.

# அத்வைதம்

## ஆசார்யர்களின் ஆக்ஞை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்காதர்களின் பெயரில் வந்துள்ள பீடங்களில் இருக்கிற எங்களுக்கு, அவர் இட்டுள்ள முக்கியமான ஆக்ஞை என்னவெனில், நாங்கள் எப்பொழுதும் ஈசுவர தியானம் செய்ய வேண்டும். மற்றவர்களையும் தியானம் செய்யுமாறு பண்ண வேண்டும் என்பதே. ஈசுவர தியானம் என்பது எதற்கு. அந்த ஈசுவரன்தான் நாமாக ஆகியிருக்கிறார். அதாவது நம்முடைய நிஜ ஸ்வரூபம் அவரேதானென்று கண்டுபிடித்துக் கொள்வது. தெரியவில்லை என்றால், ஈசுவரன் என்று சகல கல்யாண குணநிலையனாக ஒருத்தனைச் சொல்கிறோமே அவனைத் தியானித்துக் கொண்டிருந்தாலே போதும். அவனும் நாமும் ஒன்று என்பதால், அவனே, நமக்கு நம்முடைய - அவனுடைய - நிஜ ஸ்வரூபத்தை அநுக்கிரகித்து விடுவான். அப்படி நாமும் அவனும் ஒன்றாகிறபோது ஸகல குணங்களும் போய் நிற்குணமாகிவிடும்.

குழந்தைகளை பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிறோம். அவர்கள் சரியாக நடக்காவிட்டால் உபாத்தியாயர் உபயோகமில்லை என்கிறோம். அப்படியே நீங்கள் சரியாக நடக்காவிட்டால் உங்களுக்கு குரு என்று சொல்லப்படும் நான் உபயோகமில்லை என்று அர்த்தம்.

ஒருவனைக் கவனித்து நல்வழிப்படுத்துகிற பொறுப்பு இன்னொருத்தனுக்கு இருக்கும்போது, அந்த ஒருவன் தப்புச் செய்தால், அந்தத் தப்பு அவனை நல்வழுப்படுத்தாதவரையே சேறும். குடிகள் செய்யும் பாபம் அரசனைச் சேரும். மனைவியின் பாபம் கணவனைச் சேரும் என்று நீதி சாஸ்திரம் சொல்கிறது. சாதாரணமாக குரு என்றால் ஒரு சில சிஷ்யர்கள் இருப்பார்கள். அவர்கள் செய்கிற சிறிதளவு பாபம் குருவிடம் சேரும். ஒருவர் ஜகத்குரு என்றால் அவரிடம் எத்தனை பாபம் வந்து சேரும். உலகின் அத்தனை பாபமும் வந்து சேரும்.

பாபம் நீங்க ஒரே வழி பகவத் தியானம்தான். இதனால்தான் பகவத்பாதாள் ஜனங்களைத் தியானத்தில் ஈடுபடுத்துங்கள். அவர்கள் தியானம் செய்யாவிட்டால் அவர்களுக்காகவும்

நீங்கள் சேர்த்து தியானம் பண்ணுங்கள் என்று ஆக்ஞை செய்திருக்கிறார். அந்தக் கடமையை செய்ய என்னால் முடிந்த மட்டும் பிரயத்தனம் செய்து வருகிறேன். உங்கள் எல்லோருக்காகவும் தியானம் செய்ய முயலுகிறேன். ஆனால் நீங்களும், அவரவர்களே எவ்வளவுக்கெவ்வளவு தியானம் செய்கிறீர்களோ அவ்வளவுக் கவ்வளவு என் பாரம் குறையும்.

மனசு சுத்தமாவதற்காக, பழைய பாப கர்மப் பலனைத் தாங்கிக் கொள்வதற்காக, புதிய பாபம் செய்யாமலிருப்பதற்காக, எல்லோரும் முடிந்த மட்டும் தியானம் செய்ய வேண்டும். உறுதியாக சங்கற்பம் இருந்தால் காலம் கிடைக்காமல் போகாது. அநாவஸ்ய வம்பிலும், நியூஸ் பேப்பர் விமர்ஸனத்திலும்

செலவாகிற காலத்தை மட்டுப் படுத்தினால் நித்திய சிரேசினைத் தருகிற தியானத்திற்கு வேண்டிய அவகாசம் நிச்சயம் கிடைக்கும். தியானம் செய்வதே வாழ்க்கையின் முதலான காரியம் என்று கருத வேண்டும். ஐசுவரியம் இருந்தாலும், தாரித்திரம் வந்தாலும் கஷ்டம் வந்தாலும், சுகம் ஏற்பட்டாலும், ஆரோக்யம் ஏற்பட்டாலும், வியாதி வந்தாலும் - எப்போதும் எத்தனை நாழிகை முடியுமோ அவ்வளவுக்கு தியானம் செய்ய வேண்டும்.

நாம் செய்வதோடு நம் பழக்கத்துக்கு உட்பட்டவர்களையும் தியானம் செய்யும்படி சொல்ல வேண்டும். செய்யவில்லை என்று கோபித்துக் கொள்ளக்கூடாது. அன்போடு அவர்களுக்குப் படும்படி சொல்ல வேண்டும். அன்போடு சொன்னால் எப்படிப்பட்ட மனமும் கரையும்.

தியானம் செய்யுங்கள் மற்றவர்களைச் செய்யச் சொல்லுங்கள் என்று பகவத்பாதாள் எங்களுக்கு இட்ட ஆக்ஞையைத் தெரிவித்தேன். உங்களை தியானம் பண்ணுமாறு செய்கிறேனோ இல்லையோ, தியானம் செய்யுங்கள் என்ற ஆதி ஆச்சாரியாளின் ஆக்ஞையைத் தெரிவித்த அளவுக்காவது என் கடமையைச் செய்தவனாகிறேன். அதைச் சொல்லும் பாக்கியம் எனக்கு உங்களால் கிடைத்தது. ஸ்ரீ ஆச்சாரியாள் எதைச் சொல்ல ஆக்ஞைச் செய்தாரோ அதைக் கேட்கும் பாக்கியம் உங்களுக்குக் கிடைக்கிறது. உங்களால் என் கடமையில் ஒரு பங்கேனும் செய்த லாபத்தை அடைந்தேன். நீங்களும் ஆத்ம

லாபத்துக்காக உபாயத்தைக் கேட்டுக் கொண்டீர்கள்.நமக்குள் பரஸ்பர லாபம் உண்டாயிற்று.

இதை நன்றாக மனஸில் வாங்கிக் கொண்டு பூரண லாபத்தைப் பெறுங்கள். இந்த ஜன்மா முடிகிறபோது, அப்பாடா, பிறவி எடுத்ததின் பலனை அடைந்து விட்டோம். இனி பயமில்லாமல் போய்ச் சேரலாம் என்று உறுதியும் திருப்தியும் பெறுகிற அழவுக்கு நல்ல மார்க்கத்தில் நாம் செல்லப் பரமேசுவரனின் எல்லோருக்கும் பூரண அனுக்கிரஹம் புரிவானாக.

மனம் கெட்டுப்போய் எவ்வளவோ பாபம் செய்திருக்கிறோம். குழந்தையாக இருந்ததிலிருந்து ஈசுவர தியானம் செய்திருந்தால் இவ்வளவு நாள் எவ்வளவோ பாபம் போயிருக்கும். இப்பொழுதோ மேலேயும் பாபத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோம். எத்தனை நாட்கள் ஈசுவர சரணாரவிந்த தியானம் செய்கிறோமோ அவ்வளவு நாட்களும் நம்முடைய பிறவிப் பயனை நாம் அனுபவித்தவர்களாகின்றோம். இந்த ஜன்மத்தை எடுத்ததற்குப் பலன் அதுதான். நாம் எவ்வளவு நாழிகை தியானம் பண்ணுகிறோம் என்று அவரவரும் தங்களைத் தாங்களே கேட்டுக் கொள்ள வேண்டும். தினந்தோறும் பல காரியங்களைச் செய்து வருகிறோம். ஆனாலும் ஈசுவரத் தியானம் மிகவும் கொஞ்சந்தான் செய்திருப்போம். வம்பு, வீணில் செலவான காலமெல்லாம் ஈசுவரத் தியானத்தில் செலவழித்திருப்போமானால் இப்பொழுது மூட்டை வரவர ஏறிக்கொண்டே இருக்கிறது. நாம் பூலோகத்தில் வந்துவிட்டோம். இனி யாராக இருந்தாலும் போயாக வேண்டும். இதுவரை இந்த லோகமானது அழுக்கை ஏற்றிக் கொள்வதற்கே இடமாக இந்த லோகமானது அழுக்கை ஏற்றிக் கொள்வதற்கே இடமாக இருந்துவிட்டது. இப்படியிருந்தது போதும். இனிமேல் இது அழுக்கை அலம்புகிற இடம் என்று ஆக்கிக் கொள்வோம். தேஹம், மனசு, சாஸ்திரம்,

க்ஷேத்திரம், தீர்த்தம் முதலிய பல சௌகரியங்கள் இந்த உலகில்தான் இருக்கின்றன. நாம் வாக்கினாலும் மனத்தினாலும் கைகால் முதலியவற்றாலும் பாபம் செய்து இருக்கிறோம். அந்தப் பாபங்களையெல்லாம் வாக்கையும்,

மனசையும், அவயங்களையும் கொண்டே புண்ணியம் செய்து கரைத்துவிட்ட வேண்டும். நாம் இந்த உலகை விட்டுப் போவதற்குப் பாப மூட்டை இல்லை என்று சொல்லும்படி செய்து கொண்டால், அப்புறம் பஞ்சைப்போல் ஆனந்தமாகப் பறந்து போகலாம். எங்கிருந்து புறப்பட்டோமா அங்கேயே போய்ச் சேர்த்துவிடலாம். அப்புறம் மாறாத ஆனந்தமாகவே இருக்கலாம். பாபிகளையும் பரமாத்மாவாக்குகிறவர் என்று கன்னட பாஷையில் நம் ஆசார்யார்களைப் பற்றி ஒரு வசனம் இருக்கிறது. துராத்மா என்று நாம் சொல்கிறவனும் அந்தப் பரமாத்மாவைப் தவிர வேறில்லை என்று சொல்லி அந்த நிலையை இவன் அடைவதற்கு ஆசார்யாள் படிகட்டுப் போட்டுக் கொடுத்திருக்கிறார். இது கர்மத்தில் ஆரம்பித்து பக்தி வழியாகச் சென்று ஞானத்தில் முடிகிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

### தர்மமே தலைக்காக்கும்

புத்தாண்டு பிறக்கப் போவதற்கு அறிகுறியாக இயற்கை அன்னை தனது மர வர்கங்களின் அரசிளங் குழந்தைகளான அரசையும் வேம்பையும் முதலில் அடியோடு இலையுதிரச் செய்கிறாள்.

அரசுக்கும் வேம்புக்கும் கல்யாணம் செய்து அதனடியே விநாயகரையும், நாகராஜரையும் பிரதிஷ்டை செய்வது தொன்று தொட்ட வழக்கு. பனிக் காலத்துக்குப்பின் இலை உதிரும்போது இந்த மரங்களைப் பார்த்தால் இலையே இருக்காது. பிள்ளையாரும் நாகராஜனும் மரத்தின் நிழற்குடையில்லாமல் வெளிச்சம் தங்கள்மேல் படுகிற மாதிரி இருப்பார்கள். இது, இம்மாதிரி ஆகாசம் பார்க்க சுக உஷ்ணமான சூர்ய வெளிச்சத்தை ஆனந்தமாக அனுபவிக்கிற பருவ காலமாகவே இருக்கிறது. மழையிலே குடை வேண்டும். கொளுத்துகிற வெயிலில் குடை வேண்டும். கடும்பனிக் காலத்திலும் இராவேளையில் சூரியன் இல்லாதபோது ஆகாசம் பார்க்க உட்கார்ந்து இருக்கமுடியாது. ஆனால் அத்தனை பனியில்லாத இந்த இலையுதிர் காலத்தில் - சிவராத்திரியோடு குளிர் சிவ சிவா

எனறு போய்விடும் என்பார்கள். அப்படிப்பட்ட காலத்தில் ஸுக உஷ்ணமாக சூரியன் இருக்கும் காலத்தில், பகல் இராப்பொழுது இரண்டிலும் ஆகாசம் பார்க்க உட்கார்ந்து இருக்கலாம். இதை உணர்த்துகிறது போலவே இயற்கையன்னை இந்தப் பருவத்தில் விக்நேசுவரருக்கும் நாகராஜருக்கும் சூரிய பூஜை செய்கிற மாதிரி மேலே இருக்கிற அரசு, வேம்பு மரங்களின் இலைகளை உதிர்த்து விடுகிறாள். நாகராஜனை ஸுப்ரமண்ய ஸ்வாமி என்றே சொல்லலாம். தெலுங்கர்கள் ஸுப்ரமண்யர், பாம்பு இரண்டையும் சுப்பராயடு என்றே சொல்லுகிறார்கள். ஷஷ்டியில் நாகராஜ பூஜை செய்கிற வழக்கம் நம் தமிழ் தேசத்திலும் பிராசீனமாக இருந்து வருகிறது. ஆதி தம்பதிகளின் முதல் குழந்தையாக பிள்ளையார், குமாரஸ்வாமி இரண்டு பேருக்கும் இயற்கையன்னை காட்டுகிற பரிவு, பார்வதீ பரமேசுவரர்களின் குழந்தைகளான நம் அத்தனை பேரிடமும் காட்டுகிற அன்புக்கு அடையாளமாக இருக்கிறது.

அது நிறைந்த பரிவாக இருக்கிறது. இப்போது சுகோஷ்ணமாக மித வெப்பமாக இருந்தால் இவர்களை இப்படிச் சூரிய ஒளியில் உட்கார்த்தி வைத்திருந்தாலும், வஸந்த காலம் வந்தவுடன், சூரியன் கொஞ்சம் உக்ரமானவுடன், அது அவர்களை உபத்திரவப் படுத்தக்கூடாது என்கிற கரிசனம் இயற்கை அன்னைக்கு வந்து விடுகிறது. சூரியன் கடுமையாகும் காலத்தில் துளிர்கள் தழைத்துப் பசுங்குடை பிடிக்கிறாள். இலையுதிர்ப்பது, துளிப்பது எல்லாம் இயற்கை.

லோக நியதி. அவை யுகாந்தரங்களாக மாறாமல் இருப்பவை.

பிரபஞ்சத்தில் ஒவ்வொன்றுக்கும் இப்படித்தான் நடக்க வேண்டும் என்று நியதி இருக்கிறது. அப்படி அவை நியதிப்படி நடப்பதால் உலக வாழ்க்கை நடக்க முடிகிறது. இல்லாவிட்டால் எல்லாம் நெறிகெட்டுப் போய்விடும். அதாவது உலகத்திலுள்ள சமஸ்த ஜீவராசிகளும் சௌக்கியமாக வாழவேண்டும் என்கிற அன்பான எண்ணத்திலேயே அவை ஒன்றோடொன்று ஒத்துப் போவதற்காக இப்படி ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தர்மம், நியதி, ஈச்வரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தன்

குழந்தைகளை வெயில் படாமல் மழை படாமல் காப்பாற்ற வேண்டும். அவர்களுக்கு இள வெயிலின் வெப்பம் தேவையானபோது அதைத் தந்து அரவணைக்க வேண்டும் என்கிற அன்பு ஈசுவரனுக்கு இருப்பதால் அதற்கு, அனுசரணையாக இயற்கையை நடத்தி வைத்து மரங்களுக்கு ஒரு நியதியை, தர்மத்தைத் தந்திருக்கிறார்.

இந்த அன்பைபப் பெற நமக்கு யோக்யதாம்ஸம் வேண்டாமா. வேண்டும். மரத்துக்கும் மட்டைக்கும் இருக்கிற நியதி நமக்கும் உண்டு. லேக க்ஷேமத்துக்காக அதை நாம் நடத்திக் காட்டுகிற போதுதான் ஈசுவரனின் அன்பைப் பெற பாத்தியதைக் கேட்கலாம். மனிதனுக்காக உள்ள இந்த நியதிக்கே தர்மம் என்று பெயர். இந்த நியதியை மீறவும் மனிதனுக்கு மூளையைத் தந்து ஸ்வாமி விளையாட்டுப் பார்க்கிறார். அந்த மூளையை வைத்துக் கொண்டு இவனும் எதை எதையோ செளக்கியமாக நினைத்துக் கொண்டு, அவற்றுக்காக அலைகிறான். இதில் தனக்கான தர்மத்தையும் மீறுகிறான். ஆனால் இருதியில் ஸௌக்கியத்தைத் தருவது தர்மமே.

ஏதோ ஒன்று உலக மக்கள் அனைவரையும் ஏதோ ஒறு விதத்தில் இந்த தர்மத்தின் திசையில் திருப்பிக் கொண்டுதான் வந்திருக்கிறது. இதனால் சகல தேசங்களிலும் மனிதன் தன்னுடைய பௌதிக தேவைகளை பூர்த்தி செய்வதோடு மட்டும் நிற்காமல் வேறு சில விசித்திரமான காரியங்களைச் செய்து வருகிறான். ஒருவன் சிலுவை என்று வைத்துக் கொண்டு பைபிள் படிக்கிறான். இன்னொருவன் நமாஸ் செய்கிறான். வேறொருவன் விபூதியைக் குழைத்துக் கொண்டு பூசிக்கொள்கிறான். இன்னொருவன் நாமக்கட்டியை குழைத்துப் போட்டுக்கொள்கிறான். இவற்றால் நேருக்கு நேர் எந்த பௌதீகப் பலன் தெரியாவிட்டாலும் தலைமுறை தத்துவமாக இவற்றை மனித சமுதாயம் பின்பற்றி வந்திருக்கிறது. ஏன் இப்படி செய்திருக்கிறது.

உலக வாழ்வுக்கு மனிதன் பணமும் பொருளும் சேர்த்தான். அன்றைய தேவையோடு போதாது என்று எதிர் காலத்துக்காகவும் பொருளீட்டினான். எதிர்காலம் என்கிறபோது அது எத்தனை வருஷம் என்ற கேள்வி வந்தது. எப்படியிருந்தாலும் ஒருவன் ஆயிரம் பதினாராயிரம்

வருஷம் இருக்கப் போவதில்லை என்று தெரிந்தது. ஒரு மநுஷ்யனின் ஆயுள் உள்ளவரைக்கும், அந்த மனுஷ்யனின் சந்ததிக்கும் தேவைப்படுகிற சொத்தைத் தேடினான்.

இந்த மனுஷ்ய ஆயுள் முடிந்தபின் அவன் என்ன ஆகிறான் என்ற கேள்வி வந்தது. இந்த உடம்பு போனதோடு மனுஷ்யம் போய்விடுவதில்லை என்று அந்தந்த தேசத்திலும் தோன்றிய மஹான்கள் கண்டார்கள். ஆனால் இந்த

உடம்புக்காகத் தேடிய பணமும் பொருளும் உடம்பு போனபின் அந்த மனுஷ்யனுக்கு சிறிதும் பிரயோஜனமில்லை என்று கண்டார்கள். உடம்பு போனபின் உயிர் நல்ல கதி அடைவதற்காகச் செய்ய வேண்டியது எதுவோ அதை அந்த மஹான்கள் கண்டார்கள். பல தேசங்களில் பலவிதத்தில் வழி கண்டார்கள். சிலுவை, நமாஸ், விபூதி, திருமணி எல்லாம் இப்படி வந்தவையே.

லோகம் முழுவதையும் பகவானுடையதாகப் பார்த்து, அதற்கேற்ப எப்படி நடக்கவேண்டுமோ அதற்கேற்ப நடப்பதே மனுஷ்யர்களின் தர்மம். தனக்கென்று மட்டும் இவன் செய்து கொள்கிற காரியங்கள் இவனை அதர்மத்தில்தான் தள்ளும். எனவே, இவனுக்கு இப்போது இருக்கிற சுயநலத்தைக் குறைக்க வேண்டும். இவனுக்கு ஈசுவரனின் நினைப்பை உண்டாக்கி, அவனுடைய உடைமையை உலகமெல்லாம் என்ற அறிவை உண்டாக்கவேண்டும் என்ற அடிப்படையில்தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன. உன் ஆசைப்படி நடந்து கொண்டு உனக்கேற்ற சொத்து சேர்த்துக் கொள் என்று சொல்கிற மதம் எதுவுமே இல்லை. தன்னை முக்கியமாக நினைத்துக் கொள்கிற வரையில் இவன் சுயநலத்துக்குத்தான் காரியம் செய்து கொள்வான் என்பதால் அத்தனை மதங்களும் கடவுள் என்கிற ஒன்றை இவனுக்குச் சொல்லி, அப்பா பிரபஞ்சம் முழுவதையும் செய்த அந்த மஹா சக்தியின் முன் ஸ்ரீ ஒன்றுமே இல்லை என்று காட்டி இவனுடைய அகங்காரத்தைக் குறைக்கின்றன. அந்த மஹாசக்திமானைப் பிடித்துவிட்டால் நம் முளையைச் செய்த அவனே அதை எப்படித் திருத்தவேண்டுமோ அப்படித் திருத்தி நம்மை நம் தர்மத்தில் ஈடுபடுத்தி விடுவான் என்பதால் பக்தியையே பெருமாபாலான மதங்கள்

முக்கியமாக வைத்திருக்கின்றன.

ஆனாலும் கடவுள் என்று ஒரு தத்துவம், அதனிடம் பக்தியில் மனசைத் தோய்க்க வேண்டும் என்று மட்டும் சொல்லிவிட்டால் சாமான்ய ரீதியில் அதைப் பிடித்துக் கொண்டு ஸ்திரமாக நிற்கமுடியவில்லை. பக்தியையும் காரிய ரூபத்தில் காட்டுவது என்றாலே சாதாரண ஜனங்களால் முடிகிறது. இதற்காகத்தான் ஒவ்வொரு மதத்திலும் சடங்குகள், சந்தியாவந்தனம், ப்ரேயர், நமாஸ் என்றெல்லாம் வைத்திருக்கின்றன. லோக வாழ்க்கையில் இப்படி இருந்துகொண்டே இப்படி பக்தி செய்கிறபோது உலகில் எப்படி நடப்பது இவனுக்கும் தர்மம் என்பதை மதங்கள் சொல்கின்றன. எல்லோரிடமும் அன்பாக இரு. தியாகம் பண்ணு. சேவை பண்ணு. என்று இப்படி எல்லாம் இத்தனை மதங்களும் சொல்லுகின்றன. இப்படி இவன் வாழ்க்கை நடத்தி விட்டால் அப்புறம் உடம்பு போனபின் உயிரானது அந்தக் கடவுளிடமே போய்ச் சேர்ந்து விடும். இதை ஒரு ஸித்தாந்தம், அத்வைதமாகக் கடவுளுக்கு வேறில்லை என்று அதுவாகவே ஆகிவிடுகிறது என்று சொல்லும். இன்னொன்று அவரிடம் போய் ஸேவை செய்து கொண்டே அவரது கிருபையைப் பெற்று ஆனந்தமாக இருப்பது என்று சொல்லும். முடிவான அந்த நிலையைப் பற்றி இப்போது நாம் சண்டைபோட்டு மண்டை உடைத்துக் கொள்ள வேண்டாம். ஏதோ ஒரு வழியில் கடவுளை அடைந்து விடுகிறோம். அதற்கப்புறம் இந்த லோக வாழ்க்கையில் நமக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்கள், ஏமாற்றங்கள், தோல்விகள் எதுவும் அடியோடு இல்லை. நீங்காத, நிறைவான ஆனந்தம் மட்டுமே இருக்கும் என்று தெரிந்து கொண்டால் இப்போதைக்குப் போதும்.

அப்படி பரமாத்மா நம்மைத் தம்மிடம் அவைத்துக் கொள்ள வேண்டுமானால் நாம் லோகத்துக்கும், அவருக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளை வழுவில்லாமல் செய்யவேண்டும். இந்தக் கடமைகள்தாம் நமக்கான தர்மம். அதாவது உடம்பு உள்ளபோதும், உடம்பு போன பிற்பாடும் நம்மைப் பார்ப்பதே தர்மம். உடம்பு போனபின் கைகால் முதலிய அவயங்கள் இல்லை. எனவே, உடம்பு இருக்கும்போதே அது போன பிற்பாடு நற்கதி பெற வேண்டியதற்கான தர்ம காரியங்களைச் செய்ய வேண்டும். நாம் போனபின் பிறர் நலனுக்காக ஆயுள்

இன்ஷூரன்ஸ் செய்து கொள்வதைவிட இது முக்கியம். ஆயுள் போன பிற்பாடு நமது நலனுக்கே நிரந்தர இன்ஷூரன்ஸாக இருப்பது தர்மமே. இப்போது ஆயுள் இன்ஷூரன்ஸ் (life insurance) என்று ஒன்றைச் சொல்கிறார்கள். தர்மமே ஆயுள் போனபிறகும் நம்மை பயங்கர after life insurance. ஆயுள் உள்ள போதும் அதே தர்மம் சாந்தியும் சௌக்கியமும் தருகிறது.

எந்த தர்மத்தை நாம் அநுஷ்டிப்பது என்ற குழப்பமே வேண்டாம். பல காலமாகப் பெரியவர்கள் பரம்பரையாக அநுஷ்டித்து வந்த தர்மத்தில் நாம் ஊறியிருக்கிறோம். அநுபவத்தில் அவர்கள் நித்திய ஸௌக்கியத்தை அடைந்திருக்கிறார்கள். இந்தத் தலைமுறையில் நாம் ஓயாத அதிர்ப்தியோடு கிளர்ச்சி, (Demonstration) என்று சொல்கிற மாதிரி இல்லாமல், அவர்கள் நிம்மதியாக நிச்சிந்தையாக இருந்தார்கள் என்று நிச்சயமாகத் தெரிகிறது. எனவே, அந்த தர்மத்தை நாம் கடைப்பிடித்தால் போதும். நாமாக ஒன்றைப் புதிதாகப் பண்ணிக் பிடித்துக்கொண்டால் வீண் சிரமம்தான். அது நல்லதாயிருக்குமா கெடுதலாயிருக்குமா என்று நமக்கே ஓயாத சந்தேகமாக இருக்கும். ஆதலினால் முன்பே பெரியவர்கள் அநுஷ்டித்து, நமக்கென்று ஏற்பட்டுள்ள தர்மத்தைக் கைக்கொள்வதே நல்லது.

மநுஷ்யராகப் பிறந்து விட்டால் கஷ்டம், ஆபத்து எல்லாம் வரத்தான் செய்யும். அதை உணர்த்தத்தான் புத்தாண்டில், முதலில் பூக்கும் வேப்பம்பூவை உண்கின்றோம். வருஷத் தொடக்கத்திலேயே கசப்பை ஏற்கிறோம். ஏறக்குறைய வருஷ முடிவில் வரும் பொங்கல் பண்டிகையில் கரும்பை ருசிக்கிறோம். ஆரம்பத்திலேயே இனித்து விட்டால் முடிவில் கசந்து போகும். கசப்பென்று வெறுப்படைய வேண்டாம். கசப்பையே இயற்கை அன்னையின் அல்லது தர்மநியதியின் - மருந்தாக எதிர்கொண்டு வரவேற்போம். அதனால் போகப்போக முடிவில் எந்த அநுபவத்தையும் தித்திப்பாக எண்ணுகிற மனப்பான்மை உண்டாகும்.

ஸ்ரீ ராமனுக்கு வனவாசத்தில் ஏற்பட்ட கஷ்டம், ஆபத்து எல்லாம் பெரியவை. ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாயார் கட்டுச்சாதம் கொடுப்பதுபோல், ராமன் வனவாஸம் செல்லும்போது கௌஸல்யையும் செய்தாள். பதினான்கு

வருஷம் கெடாமலிருக்கும் பக்ஷணம் எது. குழந்தைக்கு எதைத் தரலாம் என்று நிரம்ப ஆலோசித்தாள் கௌஸல்யை. பிறகு நிரந்தர பக்ஷணமான தர்மத்தைத்தான் கட்டிக் கொடுத்தாள்.

ராகவா. தைரியத்துடனும் நியமத்துடனும் நீ பாதுகாக்கும் என்று சொல்லித் தர்மத்தை ராகவனுக்குத் துணை அனுப்பினாள்.

யம் பாலயஸி தர்ம த்வம் த்ருத்யா ச நியமேன ச

ஸ வை ராகவ சார்தூல தர்மஸ்தவம் அபிரக்ஷது

தர்மமே இறுதியில் ராமனுக்கு ஜயத்தைப் பெற்றுத் தந்தது. தர்ம மார்க்கத்தில் ஒருவன் இருந்தால் பிராணிகள் கூட, அவனை ஆதரிக்கும். அதர்மத்தில் விழுந்தால் உடன் பிறந்தவனும் எதிரியாகிவிடுவான் என்பதை ராமாயணம் நிரூபிக்கிறது. ஸ்ரீ ராமனை வானரங்களும் ஆதரித்தன. ராவணனையோ சகோதரன் விபீஷ்ணனும் விட்டு விலகினான்.

தர்மமே தலை காக்கும். பத்துத் தலை ராவணன் விழுந்து நாசமாக, ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி விஜயராகவனாகத் தலை நிமிர்ந்து நின்றதற்குக் காரணம் தர்மம் ஒவ்வொரு மதமாயிருக்கிறது, இந்த தர்மத்தை அவரவரும் தைரியமாக - நியாயமாக பின்பற்றி சாசுவத சௌக்கியத்தைப் பெறுவீர்களாக.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

### பாப புண்ணியங்கள்

இந்த உலகில் நாம் எவருமே பாபியாக இருக்க விரும்பவில்லை. ஆனால் பாப காரியமே அதிகம் செய்கிறோம். நாம் எல்லோருமே புண்ணிய பயன்

பெறத்தான் விரும்புகிறோம். ஆனால் புண்ணிய காரியங்களைச் செய்வதில்லை.

பாபம் செய்ய யாருமே விரும்பவில்லை. ஆனாலும், கிருஷ்ணா அவனை எதுவோ பாபத்திலேயே பலாத்காரமாகத் தூண்டிக் கொண்டிருக்கிறதே. அது என்ன என்று அர்ஜூனன் பகவானைக் கேட்டான்.

அதுதாண்டா அப்பா, ஆசை ஆசை என்பது என்று பகவான் பதில் சொன்னார். ஆசையினால் ஒன்றை அடைய முயல்கின்றோம். எப்படியாவது அதை அடைந்துவிட வேண்டும் என்பதால் தர்ம அதர்மங்களைப் புறக்கணித்து விடுகிறோம். அந்த ஆசை நிறைவேற்றிவிட்டால் அதோடு திருப்தி உண்டாகிறதா. இல்லை. அக்னியில் நெய்யை விட்டால் அது அணைந்தாபோகிறது. மேலும் பெரிதாக வளர்கிறது. அப்படியே ஓர் ஆசை பூர்த்தியான மனஸில் இன்னோர் ஆசை பெரிதாக மூளுகிறது.

சரி, அப்படியானால் ஆசை நிறைவேறாவிட்டாலே நல்லது என்று சொல்லவா. அப்படியும் இல்லை. ஆசை நிறைவேறாவிட்டால் நமக்கு ஆத்திரம் உண்டாகிறது. சுவரில் ஆத்திரம் உண்டாகிறது. சுவரில் எறிந்த ரப்பர் பந்து திரும்புவதுபோல் நிறைவேறாத ஆசையானது கோபமாகத் திருப்பி வந்து நம்மைப் பாபத்தில் மேலும் தள்ளுகிறது. ஆசைக்கு அடுத்தபடி இந்தக் குரோதத்தைத்தான் பகவான் கீதையில் சொன்னார். இதுவும் ஆசையின் விளைவுதான்.

அப்படியானால் பாபம் செய்யாதிருப்பதற்கு ஒரே வழி ஆசைகளை அழிப்பதுதான். இதை எப்படிச் செய்வது. நாம் காரியம் செய்யாமல் இருக்கமுடியாது. உடம்பு காரியம் பண்ணாதபோதுகூட நம் மனசு காரியம் பண்ணிக்கொண்டேதான் இருக்கிறது. எதையாவது எண்ணிக் கொண்டேயிருப்பதுதான் மனஸின் காரியம். உடம்பு, மனசு ஆகியவற்றால் இந்த இரு வகையிலும் நாம் செய்கிற அத்தனை காரியங்களும் இப்போது நம்முடைய சொந்த ஆசை அபிலாஷைகளையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றன.

இதனாலேயே அவை நம்மை மேலும் மேலும் பாபத்திலே கொண்டு போய்த் தள்ளிக் கொண்டிருக்கின்றன.

அப்படியானால் இனி காரியமே இல்லாமல் சும்மாயிருந்து விடலாமா என்று பார்த்தால், மநுஷ்ய ஸ்வாபாவம் நம்மை அப்படியிருக்க விடமாட்டேன் என்கிறது.

சிந்தையே அடக்கேயே சும்மாயிருக்கின்ற திறம் அரிது என்று தாயுமாந ஸ்வாமிகள் சொன்னார். உடம்பின் காரியத்தைக் கொஞ்சம் நிறுத்தினால் கூட சித்தத்தின் காரியம் நிற்கமாட்டேன் என்கிறது. அது தன் காரியம் செய்வதோடு உடம்பையும் காரியத்தில் ஏவவிடுகிறது.

Ý¬ê¬ò «ïó£è GÁˆî º®òM™¬ô. è£Kòˆ¬î»‹ GÁˆî º®òM™¬ô â¡ø£™ ïñ,° èF«ñþ«ñ Þ™¬ôò£. Þ‰îŠ Hó„ê¬ù,° (Problem) b˜«õ (Solution) இல்லையா.
இருக்கிறது. அதாவது இப்போது நாம் இருக்கிற நிலைமையில் காரியத்தை அடியோடு நிறுத்திவிட வேண்டுமென்பதில்லை. ஆனால் நாம் சொந்த ஆக்ஞைக்காகவே காரியம் செய்து கொள்கிறோம் என்ற நிலைமையை மாற்றி, நமக்கு லௌகிகமாக லாபம் தராத காரியங்களில் ஈடுபட வேண்டும். லோகோபகாரமாகவும், நமக்கே ஆத்மார்த்தமாகப் பலன் தருவதாகவும் இருக்கப்பட்ட காரியங்களில் இறங்க வேண்டும். இப்பட்டிப்பட்ட காரியங்களில் ருசியை உண்டாக்கிக் கொண்டு மேலும் மேலும் ஈடுபடிகிறபோது, ஆசைகளும் குறைந்து கொண்டே வருகின்றன. பாபம் குறைகிறது. புண்ணியம் ஏறுகிறது. அதாவது இப்போது நாம் செய்ய வேண்டியது என்னவென்னால் காரியம் செய்யப் பழக வேண்டும். ஆசையில்லாமல் செய்வதுதான் புண்ணிய காரியம்.

நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியம். வாயால் புரளிப்பேசும் அசத்தியமும், மனத்தினால் கெட்ட நினைவுகள், பணத்தினால் செய்கிற பாபத்தைப் சொல்லவே வேண்டாம்.

எந்த நான்கால் பாபம் செய்தோமோ, அந்த நான்காலுமே புண்ணியம் செய்யப் பழகிக் கொள்ள வேண்டும்.

உடம்பைப் பரோபகாரம், பகவானைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிப்பது இவற்றில் ஈடுபடுத்திப் புண்ணியம் செய்ய வேண்டும்.

வாயால் பகவத் நாமாவைத் சொல்லிப் புண்ணியம் செய்ய

வேண்டும். சம்பாதிப்பதாலேயே பொழுதெல்லாம் போய்விடுகிறது. இதற்கு அவகாசம் இல்லையே என்பீர்கள். சம்பாதித்து கிருஹஸ்தர்களுக்கு அவசியம்தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழூது முழூதும் போய் விடவில்லை என்று தெரியும். வீண் பேச்சு, பரிகாசம் வேடிக்கைப் பார்ப்பது, நியூஸ் பேப்பர் விமர்சனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது. அதையெல்லாம் பகவத்நாமஸ்மரணையில் செலவிடலாமே. இதற்கென்று தனியே பொழுது ஏற்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் பரவாயில்லை. காரியாலயத்திற்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவத் நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே. ஒடி ஒடி சம்பாதிப்பதில் ஒரு பைசாகூட பிற்பாடு உடன்வராதே. மறு உலகத்தில் செலாவணி பகவத் நாமா ஒன்றுதானே.

மனசு பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கி இருக்கிறோம்.

அதைச் சுத்தப்படுத்தி மெழுகி, பகவானை அமரவைத்து, நாமும் அமைதியாக அமைந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிடங்களாவது இப்படி தியானம் செய்ய வேண்டும். லோகமே மூழ்கிப்போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் இது. ஏனெனில் லோகம் மூழ்கும்போது நமக்குக் கைக்கொடுப்பது இதுதான்.

பணத்தைக் கொண்டு பகவானுக்காகவும் ஏழைகளுக்காகவும் பலவிதங்களில் தர்மம் செய்து புண்ணியம் சேர்க்க வேண்டும். பாபத்துக்கு இரண்டு சக்திகள். ஒன்று இன்று இப்போது நம்மைத் தவறில் ஈடுபடுத்துவது. இரண்டாவது, நாளைக்கும் நாம் இந்த தவற்றைச் செய்ய தூண்டுவது. உதாரணமாக, பொடி போடுவது அன்றைக்குக் கெடுதல் செய்கிறது. அதோடு நில்லாமல் நாளைக்கும் பொடிபோடுமாறு தூண்டுவது, இதுதான் பழக்க வாசனை என்பது. இந்த வாசனையை மங்கவைத்து, புண்ணியங்களைச் செய்து செய்து புண்ணியவாசனையை ஏற்ற வேண்டும். வாசனைதான் மீண்டும் மீண்டும் பாவத்தில் நம்மை இழுக்கிறது. அதற்காகப் பயம் வேண்டாம். நம்மைப் போல் இருந்தவர்கல் நம்மைப் போல் பாபிகளானவர்கள்கூட பக்தர்களாகவும், ஞானிகளாகவும் ஆகியிருக்கிறார்கள்.

பாபிகளை ரட்சிக்காவிட்டால் ஈஸ்வரனுக்குத் தான் என்ன பெருமை. நாம் பாவியாக இருப்பதாலேதான் அவனுக்குப் பதிதபாவனன் என்ற விருது கிடைக்கிறது. அவனுக்கு அந்த பெருமையை நாம்தான் கொடுக்கிறோம்.

என்னை மட்டும் சரணடைந்துவிடு. நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச. பயப்படாதே என்று தீர்மானமாக அபய வாக்குத் தருகிறார் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா.

நாம் தைரியமாக இருப்போம். எத்தனை சுற்றுச் சுற்றினாலும் அத்தனையையும் திருப்பிச் சுற்றினால் தான் கட்டு கழலும். பாப வாசனை அவ்வளவும் தீர அத்தனை புண்ணிய வாசனை உண்டாக வேண்டும். அப்படிச் செய்தால் சுற்று சிக்கலாகி முடிச்சு விழுந்துவிடும். பொறுமையாக பகவானை நம்பி நம் தர்மத்தைச் செய்தால் நிச்சயம் கைகொடுப்பான்.

மனோ வாக்குக் காயங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக இந்திரிய வியாபாரத்திலிருந்து திருப்பி, பகவானிடம் வைத்துப் பழகுவதற்காகத்தான் இத்தனை மதங்களும் தோன்றியிருக்கின்றன. ஜீவனாகப்பட்டவன் இந்திரிய சுகங்களுக்காகச் செய்கிற பாபங்களிலிருந்து அவனை மீட்பதற்காகத்தான் ஒவ்வொரு பெரியவரும் தோன்றி ஒரு மதத்தைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார். பாபத்தால், இந்திரிய சுகத்தினால் கிடைக்கிற ஆனந்தம் ரொம்பவும் தற்காலிகமானதுதான். பரமாத்மாத்தான் சேர்த்திருப்பதுதானப்பா நிரந்தரமான ஆனந்தம் என்று சொல்லி, சம்ஸாரத்திலிருந்து அதனை விடுவித்து பகவானிடத்தில் சேர்ப்பதுதான் ஒவ்வொரு மதத்துக்கும் லட்சியமாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

## மதத்தின் பயன்

தர்ம - அர்த்த - காம மோக்ஷங்களுக்கு ஸாதனமான இருப்பது மதம். இந்த நான்கையும் புருஷார்த்தர்கள் என்பார்கள்.

தர்மம் என்பதைப் தமிழில் அறம் என்பார்கள். அர்த்தம் என்பதைப் பொருள் என்று சொல்லுவார்கள். கர்மம் மோக்ஷம் என்பவைகளை முறையே இன்பம், வீடு என்பார்கள். புருஷார்த்தம் என்பதில் அர்த்தம் என்னும் வார்த்தை இருக்கிறது. முன்பு சொன்ன நான்கிலும் தர்மத்துக்கு அடுத்ததாக ஓர் அர்த்தம் இருக்கிறது. அர்த்தத்தில் என்றால், வேண்டுமென்று நினைத்தால் புருஷம் அதாவது மனிதர்களாகப் பிறந்தவர்கள், தமக்கு வேண்டுமென்று எவைகளை நினைக்கிறார்களோ அவைகள்தாம் புரஷார்த்தங்கள். எதை மனிதன் வேண்டுமென்று நினைக்கிறான். பொதுவாக, நாம் உள்ள பக்குவக் குறைவான நிலையில் பணமும் பொருளும்தான் வேண்டுமென்று நினைப்பதால், இதற்கே அர்த்தம் என்ற பெயர் வந்துவிட்டது. பொருளாதார நூலை அர்த்தசாஸ்திரம் என்கிறோம். ஆனால் நம் ஆச்சார்யாளோ இந்த அர்த்தம்தான் பெரிய அனர்த்தம் என்று பஜகோவிந்தத்தில் சொல்லிவிட்டார் ஏனென்றால், ரொம்பவும் தற்காலிகமான நிலை நிறைவை அல்பாயுஸான ஸந்தோஷத்தை மட்டுமே இந்தப் பொருளானது நமக்குக் கொடுத்து, சாசுவத நிறைவான மோக்ஷத்தைப் பறித்து விடுகிறது. சாசுவத நிறைவான மோக்ஷத்தைப் பறித்து விடுகிறது என்பதால் அப்படிச் சொன்னார்.

உண்மையில், எப்போதும் குறைவில்லாமல் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்றுதான் மனிதன் நினைக்கிறான். சந்தோஷம் என்பது இரண்டுவிதம். கொஞ்ச நாழிகை இருப்பது ஒரு விதம். எப்பொழுதும் குறையாமல் இருப்பது மற்றொரு வகை. கொஞ்ச நாழிகை சந்தோஷம் உண்டாக்குவதுதான் இன்பம் அல்லகு காமம் என்பது எல்லா வித உலக ஆசைகளையும் குறிக்கும். இப்படி கொஞ்ச காலம் இருந்துவிட்டுப் போய்விடாமல், ஒருமுறை வந்துவிட்டால் எந்தக் காலத்திலும் போகாமல் நிலைத்திருக்கிற பேரின்பமே மோக்ஷம் - வீடு. அந்தப் பேரின்பத்தின் பெருமை

தெரியாததால்தான் காமம் என்ற சிற்றின்பம் வேண்டுமென்று மனிதர்கள் நினைக்கிறார்கள்.

ஆகவே நாம் உண்மையில் வேண்டுமென்று நினைக்க வேண்டியது நான்காவதாகிய வீடு. இப்பொழுது நடைமுறையில் வேண்டுமென்பதா மூன்றாவதாகிய இன்பம். நாம் விருந்து சாப்பிடுவதனால் ஆனந்தம் உண்டாகிறது. அது ஓர் இன்பம். ஹைகோர்ட் ஜட்ஜ் ஆக இருந்தால் அதுவும் ஒரு வகை இன்பம். நமக்கு நல்வரவு பத்திரம் (Welcome address) வாசித்துக் கொடுத்தால் ஓர் ஆனந்தம். அதுவும் இன்பந்தான். இந்த இன்பங்கள் சாசுவதமல்ல. இந்தச் சில்லறை இன்பத்தை எதனால் சம்பாதிக்கிறோமோ அது பொருள். அது தானியமாக இருக்கலாம். பணமாக இருக்கலாம். வீடாக இருக்கலாம். மனிதர்களாக இருக்கலாம். பொருளே இன்பத்துக்குச் சாதனம். இந்த இந்பத்தைச் சிறிது பொழுதில் அநுபவித்துத் தீர்த்து விடுகிறோம். மறுபடி இன்பம் வரவேண்டும் என்ற தவிப்புத் தொடங்குகிறது.

இதற்கு மேல் ஒன்று வேண்டும் என்று தோன்றச் செய்யாத நிலைத்த பேரின்பமே மோக்ஷம். அதுதான் வீடு. நாம் ஊரையெல்லாம் சுற்றுகிறோம்.

அலைந்து கஷ்டப்படுகிறோம். நாம் வந்து அடைய வேண்டியது சொந்தவீடு. ஜெயிலில் ஒருவன் இருக்கிறான். அதிலிருந்து அவன் வந்தால் வீட்டுக்குப் போகிறான். வீடு என்பதற்கே விடுதலை என்று அர்த்தம். இப்பொழுது மாம்ஸமாகிய ஜெயிலுக்குள் இருக்கிறோம். இந்த உடம்பேதான் நாம் என்று எண்ணி இருக்கிறோம். அது சரியல்ல. உடம்பு நமக்கு ஜெயில். நம் நிஜமான வீடு ஆனந்தமான மோக்ஷம்தான். நாம் ஜயிலை விட்டுச் சொந்த இடத்தில் இருக்க வேண்டும். பாபகர்மா என்ற குற்றத்துக்கு தண்டனையாக நம்மை உடம்பு ஜெயிலில் போட்டுவிட்டார் ஸ்வாமி. புண்ணியகர்மா செய்தால் அவர் சிக்ஷைக் காலத்தைக் குறைத்து வெளியே அனுப்பிவிடுவார். ஜெயிலிலிருந்து புது பாபத்தைப் பண்ணித் தண்டனைக் காலத்தை நாம் ஜாஸ்தியாக்கிக் கொள்ளக்கூடாது. விடுதலையாகி ஸ்வாமிக்குள் போய் இருக்கிற நம் நிஜ வீட்டை அடைய முயல வேண்டும். அந்த வீடுதான் எல்லையற்ற இன்பம். உலகிலே காலம், தேசம், வஸ்து - இந்த

மூன்றிலும் குறையாமல் நிறைந்து இருக்கும் பேரின்பம்.

புருஷார்த்தங்களில் முதலாவதாக தர்மம் என்பதைப் பற்றிக் கடைசியில் சொல்கிறேன். எந்தக் காரியம் செய்தால் நல்லதோ அது தர்மம். தமிழில் அறம் செய விரும்பு என்று முதலில் சொன்னார்கள். நல்லதாகசச் செய்வதெல்லாமே தர்மம் என்றாலும், பொதுவிலே தர்மம் என்பது ஈகைக்கே வார்த்தையாக இருக்கிறது. தர்மம் போடப்பா. தர்மத்தாயே என்றுதான் பிச்சைக்காரர்கள் யாசிக்கிறார்கள். தான தர்மம் என்று சேர்த்தே சொல்கிறோம். தமிழிலும் தான சாஸனங்களை அறக்கட்டளை என்றே சொல்லுகிறார்ள். இப்படிப் பார்த்தால் நம் பொருளை அர்த்தத்தை இன்னொருத்தனுக்குக் கொடுப்பது தர்மம். ஆனால் இப்படிக் கொடுப்பதற்கு வேண்டிய பொருள் நமக்கு எப்படிக் கிடைக்கும். முன் ஜென்மத்தில் குட்டி போட்டுக் கொண்டு நமக்குக் கிடைக்கும். தர்மத்தினுடைய பிரயோஜனமே பொருள். இன்பத்துக்குப் பொருள் ஸாதனமாக இருப்பதுபோல் பொருளுக்குத் தர்மம் ஸாதகமாக இருக்கிறது. ஈகை மட்டுமல்ல. எவ்விதமான தர்மம் செய்தாலும், அதாவது பிறருக்கு என்ன நல்லது செய்தாலும் பலனாகப் பொருள் கிடைக்கும்.

நாம் செய்யும் தர்மத்தை இதனால் எனக்குப் பொருள் வேண்டாம். ஈசுவரன் நினைத்ததைக் கொடுக்கட்டும் என்று பலனை எதிர்பாராமல் அர்ப்பணம் பண்ணிவிட்டால், அப்போது நம்மிடத்தில் உள்ள அழுக்கு போய் பேரின்பம் கிடைக்கும். பொருளைத் தரும் தர்மமே அப்பொழுது பரம்பொருளைத் தரும் வீட்டுக்கு ஸாதனமாகிவிடும். இப்படி தர்மமானது பொருளுக்கு ஸாதனமாகவும், அதன் மூலம் இந்பத்துக்கு ஸாதனமாகவும், பற்றின்றி நிஷ்காம்யமாகச் செய்யப்பட்டால் வீட்டுக்கு ஸாதனமாகவும் ஆகிறது. தர்மம் செய்தால் பிரதியாகப் பொருள் கிடைக்கிறது. அந்தப் பொருளைக் கொண்டே மறுபடியும் தருமம் செய்யலாம். இப்போது அதர்மமே தர்மம் செய்ய ஸாதகமாக உள்ளது. இன்பம் ஒன்று தான் தன்னாலும் நிறைவுபடுவதில்லை. பின்வற்றுக்கும் ஸாதனமாக இல்லை. கொதிக்கிற மணலில் விட்ட ஜலம் உடனே சுவறிப்போவதுபோல் இன்பம் என்பது, தன்னாலும் நிறைவின்றி, வேறெதற்கும் ஸாதனமாகவும் நாசம் பண்ணிவிட்டுத்

தானும் நசித்துப் போகிறது. ஆனாலும், இந்த இன்பத்தை இப்போதே விட்டு விடுவேம் என்றால் முடிய மாட்டேன் என்கிறது. அதை அடியோடு விடாமல் குஞ்சம்குஞ்சமாகக் கட்டுப்பபடுத்தித் தரவும். பிறகு படிப்படியாக இந்தச் சிற்றின்பத்திலிருந்து பேரின்பத்துக்கு அழைத்துச் செய்லவுமே மதம் என்பது ஏற்பட்டிருக்கிறது. முதலில் இதுதான் அறம் என்று சொல்லி, அதைத் செய்வதற்காகவே எப்படிப் பொருள் ஈட்ட வேண்டுமோ அந்த நியாயமான, அதனால் இன்னின்ன இன்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று பக்குவம் வருகிற வரையில் கிரமப்படுத்திக் கொடுத்து, அப்புறம் இந்தச் சின்ன இன்பங்களை எல்லாம் தொலைத்து, நிரந்தர இன்பமான வீடு என்கிற மோக்ஷத்தைக் காட்டுவதே மதம்.

பந்தத்திலிருந்து விடுதலை பெற்று, ஆத்மா புரண சுதந்திரத்துடன் எந்நாளும் ஆனந்தமாக இருக்கிற நிலையே மோக்ஷம். இதை நமக்குக் கிட்டச் செய்வதற்கே மதம் என்பது ஏற்பட்டிருக்கிறது.

மநுஷ்யர்கள் இப்போது சாசுவதமான சுகத்தைப் பெறவில்லை என்று நிச்சயமாகத் தெரிகிறது. இவர்களை அப்படிப்பட்ட சுகத்தில் சேர்க்கவே எல்லா மதங்களும் தோன்றியிருக்கின்றன. இந்த சாசுவத சௌக்கிய நிலைக்குத் தான் மோக்ஷம் என்று பெயர். இந்திரியங்களால் தொலைத்தால்தான் சாசுவத சௌக்கியம் கிடைக்கிற வரைக்கும் அதற்கு அநுகூலமாக சமூக வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கும் தர்ம நியதிகள் எல்லாம் வேண்டியிருக்கின்றன. மோக்ஷத்தை லட்சியமாக கொண்ட மதமே இந்த தர்மங்களையும் ஏற்படுத்தித் தர வேண்டியிருக்கிறது. இதனால்தான் தர்மம் என்றாலே அதற்கு மதம் என்றுதான் பெரியோர்கள் பொருள் கொண்டார்கள்.

ஏதோ ஒரு மாயா சக்தியால் இப்படி மநுஷ்யங்களாயிருக்கிற நாம் பொருளையும், சிற்றன்பங்களையுமே வேண்டுமென்று நினைக்கிறோம். எதை வேண்டுமென்று நினைக்கிறோமோ அதிதான் அர்த்தம். வாஸ்தவத்தில் நம் நிறைவான நல்லதற்குப் பொருளும் காமமும் வேண்டாதவை என்றாலும் மநுஷ்ய ஸ்வபாவத்துக்கு (Human - nature- க்கு) விட்டுக் கொடுத்து இவற்றையும் நம் பெரியோர்கள்

புருஷார்த்தங்களில் சேர்த்தார்கள். ஆரம்பத்திலேயே, எல்லாக் காரியங்களுக்கும் அடிப்படையாக தர்ம உணர்ச்சியை உண்டாக்கிக் கொண்டு விட்டால், அப்புறம் பொருளும் காமமும்கூட நம்மை ஒரேயிடாகப் கெடுத்துவிடாதபடி, இவற்றைக் கட்டுப்பாட்டில் அளவறிந்து வைத்திருக்கும் என்பதால் தர்மத்தை முதல் புருஷார்த்தமாகச் சொன்னார்கள். பொருளையும் காமத்தைடும் நாம் அர்த்திப்பது (வேண்டுமென்று நினைப்பது) போலவே தர்மத்தையும் அர்த்திக்க வேண்டும். அப்போது அது பொருள், இன்பம் இவற்றின் விஷப் பல்லைப் பிடுங்கி விடும். முடிந்த முடிவாக நாம் அர்த்திக்க வேண்டிய வீட்டில் நம்மைச் சேர்த்துவிடும்.

---

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

### மனிதனும் மிருகமும்

மிருகங்கள் குறுக்குவாட்டில் (horizontal) வளர்கின்றன. இதனாலேயே அவற்றுக்குத் திர்யக் என்று பெயர். இதற்கு மாறாக உயர்ந்து மேல்நோக்கி (vertical) வளருகின்ற மனிதன் மற்றப் பிராணிகளைக் காட்டிலும் மேலான நோக்கத்தைப் பெறவேண்டும். இப்படிச் செய்தால் இவன்தான் சகல ஜீவ இனங்களையும்விட அதிகமான சுகத்தை அநுபவிக்கலாம். ஆனால் நடைமுறையிலோ அவற்றைவிட அதிகமாக துக்கத்தைத்தான் நாம் அநுபவிக்கின்றோம். மிருகங்களுக்கு நம்மைப் போல் இத்தனை காமம், இத்தனைக் கவலை, இத்தனை துக்கம், இத்தனை அவமானம் இல்லை. எல்லாவற்றுக்கும் மோலாக அவற்றுக்குப் பாபமே இல்லை. பாவங்களைச் செய்து துக்கங்களை நாம்தான் அநுபவிக்கின்றோம்.

ஒரு வழியில் பார்த்தால் மிருகங்களுக்குக் கொடுத்திருக்கும் சௌக்கரியங்களை ஸ்வாமி நமக்குக் கொடுக்கவில்லை

என்று தோன்றும். நம்மை யாராவது அடித்தால் திருப்பி அடிக்க ஓர் ஆயுதமும் இல்லை. மாட்டை அடித்தால் அதற்குக் கொம்பு கொடுத்திருக்கிறார். அதனால் திருப்பி முட்ட வருகிறது. புலிக்கு நகம் கொடுத்திருக்கிறார். நமக்குக் கொம்பு இல்லை. நகம் இல்லை. குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஆட்டுக்கு உடம்பில் போர்வை வைத்திருக்கிறார். வேறு மிருகங்களுக்கும் போர்வை வைத்திருக்கிறார். மனிதன் ஒருவனைத்தான் வழித்து விட்டு இருக்கிறார். யாராவது அடிக்க வந்தால் எதிர்க்க முடியவில்லை. குதிரைக்குக் கொம்பு இல்லா விட்டாலும் ஒடுவதற்கு வேகம் கொடுத்திருக்கிறார். அதுவும் நமக்கில்லை.

இருந்தாலும் ஸ்வாமி மனிதனுக்குத்தான் புத்தியை அதிகமாக வைத்திருக்கிறார்.

குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால். மற்றப் பிராணிகளின் போர்வையை இவன் பறித்துக் கொண்டுவிடுகிறான். கம்பளியாக நெய்து கொள்கிறான். வேகமாகப் போக வேண்டுமா. வண்டியிலே குதிரையைக் கட்டி, அதன் வேகத்தை உபயோகப் படுத்திக் கொள்கிற சாமர்த்தியத்தை இவனிடத்தில் ஸ்வாமி வைத்திருக்கிறார். தன் சரீரத்திலேயே தற்காப்பு இல்லாவிட்டாலும், வெளியிலிருந்து தினுசு தினுசான ஆயுதங்களைப் படைத்துக் கொள்கிறான். இவ்வாறாக புத்தி பலம் ஒன்றை மட்டும் கொண்டு, மற்ற ஜீவராசிகள், ஜடப்பிரபஞ்சம் எல்லாவற்றையும் மனிதனே ஆளுகிறான்.

மிருகம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிராந்தியத்தில்தான் இருக்கும். குளிர்ப் பிரதேசத்துக் கரடி நம் ஊரில் வாழாது. இங்குள்ள யானை அங்கே வாழாது. ஆனால் மனிதன் உலகம் முழுதும் வாழ்கிறான். அங்கங்கே அவன் தன் புத்தியை

உபயோகப்படுத்தித் தனக்குச் சூழ்நிலையைச் செய்து கொள்வான் என்று இப்படி விட்டிருக்கிறார்.

இந்த உயர்ந்த புத்தியை வைத்துக் கொண்டு மனிதன் கஷ்டப்படுகிறான். துக்கப்படுகிறான். பிறந்து விட்டதனாலே இவ்வளவு கஷ்டம். இனி பிறக்காமலிருக்க வேண்டுமானால் என்ன பண்ணுவது. பிறப்புக்குக் காரணம் என்ன. நாம் ஏதோ

தப்புப் பண்ணியிருக்கிறோம். அதற்குக் தண்டனையாக இத்தனை கசையடி வாங்க வேண்டும் என்று விதித்திருப்பதால் இந்த உடம்பை எடுத்து அவற்றை வாங்குகிறோம். பத்து ஆன பிறகு இந்த உடம்பு போய்விட்டாலல், இன்னோர் உடம்பு வருகிறது. பாக்கி அடியை இந்த உடம்பு வாங்குகிறது. காமத்தினால், பாபத்தைச் செய்வதினாலே ஜனனம் உண்டாகிறது. காரியம் எதுவும் பண்ணாமல் இருந்துவிட்டால் ஜனனம் இல்லை. கோபத்தினாலேயே பல பாபங்களைச் செய்கிறோம். கோபத்துக்குக் காரணம் ஆசை, காமம். முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை நிறைய வளர்த்துக் கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்றால் முடியாது. பற்றை ஒழித்து விட்டால் பாபம் செய்யாமல் இருக்கலாம்.

ஆசைக்குக் காரணம் என்ன. நம்மைத் தவிர இன்னோன்று இருப்பதாக எண்ணுவதால் அதனிடம் ஆசை வருகிறது.

உண்மையில் சாந்தமாகிய ஒரே சிவமே எல்லாமாக இருக்கிறது. ஒரு மாடு தன்னைக் கண்ணாடியில் பார்த்துவிட்டு, இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதை முட்டப்போகிறது. ஒரு மனிதன் தன் பிரதி பிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா. இரண்டும் ஒரே பொருள் என்று நினைத்து அவன் சாந்தமாக இருக்கிறான். இப்படியாக நாம் பார்க்கிற அனைத்துமே ஒன்றுதான். இரண்டாவது என்று எண்ணினால் ஆசை வரும். ஆசை வருவதினால் கோபம் வருகிறது. கோபம் வருவதினால் பாபங்களைச் செய்கிறோம். அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால், வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை. பாபம் இல்லை. காரியம் இல்லை. ஜனனம் இல்லை. துன்பமும் இல்லை.

இந்த ஞானத்தை எப்படிப் பெறுவது. நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால்கொடுப்பாள். அறிவுக்கு ஞானப்பால் கொடுப்பவள் அம்பாள்தான். ஞான ஸ்வரூபமே அவள்தான். அவளுடைய சரணாவிந்தங்களைப் பற்றிக் கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைத்தாலே ஞானம் வரும். மனிதன் அப்போது தெய்வமாவான்.

முதலில் மனிதனை மிருகமாக இல்லாமல் மனிதனாகவே

ஆக்க வேண்டும். அப்புறம் அவனைத் தெய்வமாகவே உயர்த்திவிட வேண்டும். இந்தக் குறிக்கோளுடன்தான் சகல மதங்களும் உண்டாயிருக்கின்றன. சித்தாந்தம், தத்துவங்களில் அவற்றுக்குள் எத்தனை பேத மிருந்தாலும், இப்போதிருக்கிற மாதிரி மனுஷ்யனை ஒரே காமக் குரோதிகளுடன் இருக்க விடக்கூடாது. இவனை நல்லவனாக ஆக்கி அன்பு, அடக்கம், சாந்தம், தியாகம் முதலிய குணங்கள் உள்ளவனாகப் பண்ண வேண்டும் என்பதில் எல்லா மதங்களும் ஒரே குரலில்தான் பேசுகின்றன.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

*சகல மதங்களுக்கும் பொதுவான பக்தி.*

மனிதனை விசாரங்களிலிருந்து விடுவித்து உயர்த்துவதற்காகத்தான் எல்லா மத சம்பிரதாயங்களும் தோன்றியிருக்கின்றன. மற்றப் பிராணிகளுக்கு இல்லாத விசாரம் இவனுக்கு இருப்பது மட்டுமில்லை. இவன் முயற்சி செய்தால் விசாரத்திலிருந்து விடுபடுவது மட்டும் இல்லாமல், மற்ற பிராணி வர்கம் எதுவும் பெற முடியாத ஞானத்தைப் பெற முடியும் என்று மத சித்தாந்தங்கள் யாவும் கூறுகின்றன. உலக விவகாரங்களை எல்லாம் இயக்கி வைக்கிற ஒரு மஹா சக்தியைப் தஞ்சம் புகுந்தாலே விசாரங்களிலிருந்து விடுபடலாம் என்று பொதுவாக இந்த எல்லா சித்தாந்தங்களும் ஒரே குரலில், ஏகமனஸாகச் சொல்கின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம், இன்னும் கிருஸ்துவம், இஸ்லாம் முதலிய எந்த சம்பிரதாயங்களும் சரி, பக்தி எல்லாவற்றுக்கும் பொது.

புத்தர் பக்தியைச் சொல்லாவிட்டாலும், பௌத்தர்களால் பக்தியில்லாமல் முடியவில்லை. அதனால்தான் புத்தரையே ஸ்வாமியாக்கி, வேறு எந்த ஸ்வாமிக்கும் இல்லாத

அளவுக்குப் பெரிய பெரிய மூர்த்திகளை அவருக்குப் பூஜை செய்கிறார்கள். ரொம்ப சமீப காலத்திலும் கூடப் பல ஞானிகள் ஆத்மவிசாரம் ஒன்றை மட்டும் வலியுறுத்துகிறார்கள். ஆனால் இவர்களுடைய உபதேசங்களை ஏற்றுக்கொண்டவர்கள் இந்த மஹான்களையே தெய்வமாக வழிபடத்தான் செய்கிறார்கள். பக்தி என்பது அப்படி இயல்பாக உடம்போடு பிறந்த ஒன்று.

அத்வைதத்தின்படி பக்தி செலுத்துகிறபோது, ஈசுவரன் வேறு, நாம் வேறு என்ற எண்ணம் இல்லாமல், அதுவே நாம் என்ற அபேத பாவத்தைக் கைக் கொள்ள வேண்டும். பகவான் என்று மகாசக்தியாக, சர்வக்ஞான (எல்லாம் அறிந்தவன்) ஒன்றை வைத்துப் பக்தன் என்ற அல்ப சக்தன், கிஞ்சித்ஞன் (சிறிதே அறிந்தவன்) பக்தி பண்ணுகிறான். இரண்டும் எப்படி ஒன்றாகும். என்று கேட்கலாம். அப்படியானால் பகவானுக்கு நாம் வேறா. பகவானுக்கு வேறாக மற்ற வஸ்துக்கள் இருக்கின்றனவெனில் அதெல்லாம் எங்கிருந்கது வந்தன. வேறாக எங்கிருந்தோ வந்த வஸ்துக்களை அவன் எப்படி ஆட்டிப் படைக்க முடியும். இப்படி யோசித்துப் பார்த்தால் ஒரே பரமாத்மாதான் ஈசுவரன் என்கிற சமுத்திரமாகவும், பலவிதமான ஜீவராசிகளான குளம், குட்டை, கிணருகளாகவும் ஆகிக் கடைசியில் உத்தரணி ஜலத்தில் வந்து நிற்கிறது என்று தெரியும். சக்தியில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். ஆனால் அடிப்படையில் எல்லாம் ஒரே வஸ்துதான். அந்த அடிப்படைக்குப் போனால் நாம் அதுவாகவே ஆகிவிடுவோம். இதுதான் அத்வைத முக்தி.

வெறும் புத்திபூர்வமாக (intellectual) இப்படி சொல்லிக் கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. இது அநுபவ சித்தியாக வேண்டும். இதற்கு ஈசுவரக் கிருபை இருந்தால்தான் முடியும். நம்மை எல்லாம் ஆட்டிப்படைக்கிற சக்தியின் அநுக்கிரகம் இருந்தால்தான், இந்த ஆட்டம் ஒய்ந்து அடிப்படைக்குப் போக வேண்டும் என்ற அத்வைத நாட்டமே நமக்கு வரும் என்று பெரியவர்கள்

சொல்லியிருக்கிறார்கள்.

ஈச்வராநுக்ரஹாத் ஏவ பும்ஸாம் அத்வைத வாஸனா.

பகவான், பக்தன் என்று பிரிந்தே தோன்றுகிற ஆரம்ப

ஸ்திதியிலுங்கூட, பகவானாக எந்தப் பரமாத்மா வந்திருக்கிறதோ அதுவேதான் பக்தனாகிய நாமாகவும் ஆகியிருக்கிறது. என்ற நினைவைக் கொஞ்சம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இதனால் பகவானிடம் நம் அன்பும் அதிக மாகும். ஏனென்றால், நம்மைவிட, நமக்குப் பிடித்தமான, அன்பான வஸ்து இல்லை அல்லவா.

நம் காரியங்கள் அனைத்திற்கும் பலன் தருகிற ஈசுவரன், நாம் பக்தி பண்ணப் பண்ண அதற்குப் பலனாக மேலும் மேலும் அவனை நெருங்க அநுக்கிரகம் செய்வான். தான்யார், எப்படிப்பட்டவன் என்பதையெல்லாம் அவனே தெரியப்படுத்துவான். நாம் அவனை ஆராய்ந்து பார்க்க வேண்டாம். அவனே நம் பக்திக்கு இறங்கித் தன் இயல்பைத் தெரியப்படுத்துவான். கீதையில் பகவான் இப்படியே சொல்லியிருக்கிறார். "பக்த்யா மாம் ஆபிஜானாதி யாவான்யச்சாமி".

இவ்வாறு ஈசுவரனின் அனந்த கல்யாண குணங்களை அறிந்தபின் அதையே பக்தர்கள் ரசித்தார்கள். ஞானியோ இந்தக் குணங்களுக்கு ஆதாரமான நிர்குண சத்திய நிலையை பகவதநுக்கிரஹத்துடன் அடைந்து அதில் இரண்டறக் கலந்து விடுகிறான். இதற்கும் ஸகுண உபாஸனைத்தான் ஆரம்பமாயிருக்கிறது.

இந்த ஸகுண உபாஸனை - அல்லது மூர்த்தி வழிபாட்டுக்காகத்தான் இஷ்டதேவதை என்ற கருத்து நம் மதத்தில் இருக்கிறது.

மற்ற மதங்கள் கடவுள் என்கிற ஒன்றைச் சொல்வதோடு நின்றுவிடுகின்றன. ஹிந்து மதம் என்று சொல்லப்படுகிற நம்முடைய ஸநாதன தர்மம் அந்த ஒரே கடவுளை அவரவர் மனோபாவப்படி அன்போடு நெருங்கி வழிபடுவதற்காகப் பல ரூபங்களில், பல தெய்வ வடிவங்களில் நமத்துக் காட்டுகிறது. இந்த ரூபங்கள் வெறும் கற்பனையில் உண்டாக்கப்பட்டவை அல்ல. ஒன்றாக இருக்கிற பரமாத்மாவேதான் இப்படிப் பல மகான்களுக்குத் தரிசனம் தந்திருக்கிறார். அவரவர்கள் அந்தந்த மூர்த்திகளிடம் பிரத்தியட்சமாகப் பழகி உறவாடி பக்தி செய்திருக்கிறார்கள். அதே மாதிரி நாமும் தரிசிப்பதற்காக இன்ன மந்திரம், இன்ன விதமான உபாஸனையைப் பின்பற்றினால் இன்ன தேவதா

ரூபத்தின் தரிசனத்தைப் பெறலாம் என்று வழிகளை வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள்.

வழிபாட்டுமுறை எதுவானாலும் பக்தி என்கிற பாவம் பொதுவானது. நம் மதத்திலுள்ள பல தெய்வங்களின் உபாஸனைக்கு மட்டுமின்றி, எந்த மதமானாலும் பக்தி என்பது மத்திய ஸ்தானத்தில் உள்ளது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## மதம்

### மதங்களின் ஒற்றுமை

எல்லா சமயங்களும் கடவுளை வழிபட ஏற்பட்டனவே ஆகும். எல்லா சமயங்களும் கடவுள் ஒன்றே என்றே சொல்கின்றனர். ஒருவரேயான அந்தக் கடவுள் எந்த சமயத்தின் மூலம் வழிபட்டாலும் அதை ஏற்றுக் கொள்ளத்தான் செய்வார். எனவே, எவருமே தாங்கள் பிறந்த மதத்தைவிட்டு இன்னோரு

மதத்தைத் தழுவ வேண்டியதில்லை.

கோயில், சர்ச், மசூதி, விஹாரம் முதலிய கட்டடங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படலாம். உள்ளே இருக்கிற மூர்த்தி அல்லது சின்னம் மாறுபடலாம். ஒவ்வொன்றிலும் சடங்குகளும் வேறு வேறாக இருக்கலாம். ஆனால் அநுக்ரஹம் செய்கிற பரமாத்மா மாறவில்லை. ஒவ்வொரு தேச ஆச்சாரத்தையும், ஒவ்வொரு ஜனக்கூட்டத்தின் மனப்பான்மையும் பொறுத்துப் பல்வேறு சமயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் ஒரே பரமாத்மாவை அவரவர் மனோபாவப்படி பக்தி செய்து, அவரோடு சேருவதற்கு வழி செய்பவையே. எனவே எவரும், தங்கள் மதத்தை விட்டுவிட்டு இன்னொன்றுக்கு மாறவேண்டியதில்லை. இப்படி மதம் மாறுகிறவர்கள் தாங்கள் பிறந்த மதத்தைக் குறைவு படுத்துவது மட்டுமின்றி, தாங்கள்

சேருகிற மதத்தையும் குறைவு படுத்துகிறார்கள். கடவுளையும் குறைவு படுத்துகிறார்கள்.

தங்களது பிறந்த மதத்தில் குறை தோன்றியதால்தான் ஒருவர் அதை விடுகிறார். ஆனால் புதிதாக சேருகிற மதத்தையும் அவர் குறைவுபடுத்துகிறார் என்று ஏன் ஸ்வாமிகள் சொல்கிறார். என்று உங்களுக்குத் தோன்றலாம். சொல்கிறேன். கடவுள் எல்லா மதங்களுக்கும் பொதுவானவர் என்ற எண்ணம் இல்லாமல் அவரைக் குறுக்குவதால்தானே ஒரு மதத்தைவிட்டு இன்னொன்றில் சேருகிறார்கள். தங்கள் மத்துக் கடவுள் பிரயோஜனமில்லாதவர் என்று நினைத்து இன்னோரு மதத்துக்குத் தாவுகிறார்கள். மாறுகிற புதுமதக் கடவுளானது எல்லோரையும் தழுவுவதாக நினைக்கிறார்களா. இல்லை. அப்படி நினைத்தால் மாறவே வேண்டாம். இவர்கள் தாங்கள் பிறந்த மதத்திலேயே இருந்து வழிபட்டாலும், இப்போது இவர்கள் மாறுகிற மதத்தின் கடவுள் இவர்களுக்கு அநுக்கிரகம் செய்வார் என்ற நம்பிக்கை இவர்களுக்கு இல்லாததால்தானே மதமாற்றத்துக்கே அவசியம் ஏற்பட்டது. அதாவது தாங்கள் மாறுகிற புது மதத்துக்கும், அதன் கடவுளும்கூட இவர்கள் குறுகலான எல்லை காட்டி விடுகின்றனர். ஒரு மதத்திடம் கௌரவ புத்தி இருப்பதாக நினைத்து அதற்கு மாறுகிறபோதே அதை வாஸ்தவத்தில் அகௌரவப்படுத்தி விடுகிறார்கள்.

ñŸø ñîƒèÀ‹ U‰¶ ñîˆ¶,°‹ àœ÷ å¼ ªðKò MˆFò£ê‹, ï‹º¬ìò U‰¶ ñî‹ å¡Á î£¡. Þ¶ å¡«ø «ñ£†ê ñ£˜,è‹ â¡Á ªê£™ô£ñL¼,Aø¶. ï‹º¬ìò ¬õbè ñî‹î£¡ Hø¬óˆ î¡ ñîˆ¶,° ñ£ŸÁõ¶ â¡ð¶ A¬ìò£¶. ãªù¡ø£™ å¼ ðóñ£ˆñ£¬õ Ü¬ìõîŸè£ù ðô ñ£˜èƒè«÷ ðô ñîƒèÀ‹ â¡Á ï‹º¬ìò ¬õbè ñî‹î£¡ ‹ º¡«ù£˜èœ àí˜‰F¼,A¡øù˜. U‰¶õ£èŠ Hø‰î åšªõ£¼õÂ‹ Þ‰î Mê£ô ñùŠð£¡¬ñ¬ò, °Pˆ¶ ªð¼¬ñŠðì «õ‡´‹. «õî‹ å«ó úˆFòˆ¬îˆî£¡ ë£Qèœ ðô ªðò˜èO™ ªê£™Aø£˜èœ â¡Aø¶. W¬îJ™ ðèõ£¡, âõ¡ â‰î MîˆF™ â‰î ÏðˆF™ õNð†ì£½‹ ÜõÂ¬ìò Có ˆ¬î¬ò ï£«ù M¼ˆFò£,A Üõ¬ù Ü«î õNð£†®™ G¬ôŠð´ˆ¶A«ø¡ â¡Aø£˜. Ý›õ£˜ Üõóõ˜ îñîñ îPîP õ¬èõ¬è Üõóõ˜ Þ¬øòõ˜ â¡Aø£˜. Þîù£™î£¡ ñŸø ñîƒèO™ ªêŒõ¶«ð£™ ñîñ£Ÿø‹ ªêŒõ¶ (proselytisation), ÜîŸè£èˆ î‡®Šð¶ (Persecution, Cruside, jehad) முதலான போர்களில் படையெடுத்துச்

ªê¡Á GŸð‰îñ£èˆ îƒèœ ñîˆ¶,° ñŸøõ¬óˆ F¼Š¹õ¶ ºîô£ù è£KòƒèO™ U‰¶,èœ ñ†´«ñ ÞøƒAòF™¬ô. ï‹º¬ìò c‡ì è£ô êKˆFó«ñ ÞîŸ°„ ê£¡Á. êèô êKˆFó Ýó£Œ„Cò£÷˜èÀ‹ åŠ¹, ªè£œAø Mûò‹ Þ¶. Éó,AöƒA° (Far East) ºîô£ù «îêƒèO™ ÿ Müò ê£‹ó£xò‹ ºîô£ù «îêƒèO™ ºîLò U‰¶ ó£xòƒèœ ãŸð†ì «ð£¶Ãì G˜ð‰î ñî ñ£Ÿø«ñ Þ™¬ô (Forced Conversion) என்றும் நம் கலாச்சாரத்தைப் பார்த்து சந்தோஷப்பட்டு அந்நியர்களே நம் மதத்தைத் ததாங்களாக எடுத்துக் கொண்டார்கள் என்றும் சரித்திரக்காரர்கள்

சொல்கிறார்கள். அநேக சமயங்களில் வியாபாரம் முலமே நம் மத அம்சங்கள் பிற தேசங்களில் புகுந்தது என்றும், வாள் மூலம் அல்ல என்றும் சொல்கிறார்கள்.

â¡ ÜHŠó£òŠð® ªó£‹ð¾‹ ÝF è£ô^F™ «ô£è‹ º¿õF½‹ «õî ñî‹î£¡ Þ¼‰î¶. HŸð£´ Ýƒè£ƒ«è ªõš«õÁ ñîƒèœ à‡ì£ù£½‹ ï‹ ñî^F¡ Ü‹ê‹ º¬ø‰îð†ê‹ Þ®ð£´è÷£è (Ruins) ð¬öò ë£ðè„ C¡ùƒè÷£è (Relics) வாவது அங்கெல்லாம் இன்னும் காணப்படுகின்றன. இப்படி நான் சொல்வதை ஒப்புக் கொள்ளாத ஆராய்ச்சியாளர்கள்கூட நம் பரத நாகரீகத்தை மற்ற நாடுகளில் தாங்களாகவே விரும்பி ஏற்றும் கொண்டார்களேயன்றி பலவந்தத்தின் மீதல்ல என்று ஒப்புக் கொள்கிறார்கள்.

å¼ˆî¬ùŠ ¹¶ ñî˜¶‚° ñ£ŸÁõ¶ â¡ø£™ ÜîŸªèù å¼ êƒ° (Ritual) Þ¼‚è «õ‡´‹. ÞŠ«ð£¶ è¡ªõ˜† ªêŒAø ñîƒèO™ â™ô£‹ ÜŠð® å¡Á ë£ùvî£ù‹ (Babtism) என்கிற மாதிரி ஏதாவது ஒன்று - இருக்கிறது. மற்ற எந்த மதத்தையும்விட மிக அதிகமான சடங்குகளை சொல்கிற ஹிந்து சாஸ்திரங்களைப் பார்த்தால், இப்படி நம் மதத்துக்கு மற்ற மதஸ்தன் ஒருத்தனை மாற்ற ஒரு சடங்குக்கும் இருக்கக் காணோம். இதுவே நாம் மதமாற்றத்தை விரும்புகிறவர்கள் அல்ல என்பதற்கு அத்தாட்சி.

ரயிலடியில் பிரயாணிகள் வந்திறங்கியதும் ஜட்காக்காரன், ரிக்ஷாக்காரன், டாக்ஸிக்காரன் என்று பல பேர் வந்து சூழ்ந்து கொள்கிறார்கள். எவனுடைய வண்டியில் ஏறிக் கொண்டாலும் போகவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரலாம். வண்டிக்காரர்கள் கிராக்கி பிடிப்பதற்காகப் போட்டி போடுவதைப் தவறு என்று சொல்லவில்லை. அது அவர்கள் பிழைப்பு. ஆனால் கடவுள் என்கிற ஒரே லக்ஷியத்துக்கு அழைத்துச் செல்வதற்காக வெவ்வொறு மதஸ்தர்கள் போட்டி போட்டுக் கொண்டு மதமாற்றத்தில் முனைவது அர்த்தமற்ற காரியம்.

நதியின் மேல் பாலம் போட்டிருக்கிறது. அதில் பல வளைவுகள் இருக்கின்றன. எல்லா வளைவுகளும் ஒரே அளவாகக் கட்டப்பட்டவைதாம். ஆனால் ஒவ்வொரு வளைவிற்கும் கிட்டத்தில் இருப்பவனுக்கு அந்தந்த வளைவே பெரிதாகவும், மற்றவை சின்னதாகவும் இருக்கும். இப்படியே அந்தந்த மதஸ்தர்களுக்கும் தங்கள் மதமே பெரிதாகத் தெரிவதால், பிறரை அதற்கு அழைக்கிறார்கள். ஆனால் எல்லா வளைவுகளும் ஒரே அளவுதான். யாரும்

தாங்கள் பிறந்த மதத்தைவிட்டு விலகவேண்டியதில்லை.

மதங்களுக்கிடையே கோட்பாடுகளிலும்,
அநுஷ்டானங்களிலும் சில

வித்தியாசங்கள் இருப்பதில் தவறில்லை. எல்லா
மதங்களையும் ஒரே போல் ஆக்க வேண்டிய
அவசியமில்லை. ஒரே மாதிரி ஆக்காமலே, எல்லா
மதஸ்தர்களும் மனத்தில் ஒற்றுமையோடு இருப்பதுதான்
அவசியம். யூனஃபார்மிடி அவசியமில்லை. யூனிடி
இருப்பதே அவசியம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### மதம்

### மதபோதகரின் யோக்கியதாம்சங்கள்.

இப்போது உலக நாடுகள் எல்லாவற்றிலும் உள்ள ஏராளமான
தத்துவ ஆராய்ச்சியாளர்களும் ஆத்ம சாதகர்களும்
அத்வைதத்தையே பரம தத்துவமாக அங்கீகரிக்கிறார்கள்.
என்னை அத்வைத மதகுரு என்று சொல்கிறார்கள்.
ஆனபடியால் அத்வைத சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள்
இவ்வளவு போர் இருப்பதற்குக் காரணம் அதன்
சித்தார்த்தத்தில் உள்ள சிறப்புதான் என்று நான் சொல்வேன்
என்று எதிர்பார்ப்பீர்கள்.

ஆனால், எனக்கு நானே யோசித்துப் பார்க்கிறேன். அத்வைத
சித்தாந்தம்

ஒன்றை மட்டும் சகல ஜனங்களும் பின்பற்றுகிறார்களா.
உலகில் எத்தனையோ சித்தாந்தங்களை, எத்தனையோ
மதங்களை மக்கள் அநுசரிக்கிறார்கள். ஒரு தேசத்து மக்களே
ஒரு மதத்திலிருந்து மற்றோரு மதத்திற்கு மாறிகிறார்கள்.
புத்தரின் காலத்தில் வைதிக மதஸ்தர்கள் பௌத்தத்தில்
சேர்ந்தார்கள். பிற்காலத்தில் எத்தனையோ ஹிந்துக்கள்
கிறிஸ்துவ மதத்திலும் முகம்மதிய மதத்திலும்

சேர்ந்திருக்கிறார்கள். ஜைனர்கள் வைஷ்ணவர்களாக மாறி புஷ்டி மார்க்கிகள் என்று பெயர் பெற்றிருக்கிறார்கள். ஸ்ரீராமானுஜர் காலத்தில் பலர் மத்வ சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஸ்ரீ ஆதி சங்கரரின் காலத்தில் அவைதிக மதங்களான பௌத்தம். ஜைனம் முதலியவற்றுக்கு நலிவு ஏற்பட்டது. வைதிக மதத்தில் ஒரு பாகமாகிய கர்ம மார்க்கத்தை மட்டும் அநுசரித்து வந்தவர்கள் அவரது காலத்தில் பூரண வைதிகமான அத்வைதத்துக்குத் திருப்பினார்கள். ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்த மதங்கள் பிற்பாடு ஏன் தவிடு பொடியாக வேண்டும். இப்படியாக ஒரு சமயத்தை, சித்தாந்தத்தை ஏற்கிற சகல ஜனங்களும் அதன் தத்துவங்களை ஆராய்ந்து பார்த்து அதனால்தான் அதில் சேருகிறார்களா. அறிவாளிகள் வேண்டுமானால் சித்தாந்தங்களை எடை போட்டு அதில் சேரலாம். ஆனால், ஒரு மதத்திலுள்ள ஏராளமான பொது ஜனங்களைப்பற்றி இப்படிச் சொல்லலாமா. நான் அப்படிச் சொல்ல மாட்டேன்.

பொது ஜனங்கள் தத்துவத்துக்காகவே ஒரு மதத்தை ஏற்கிறார்கள் என்றால், அவர்களிடம் உங்கள் மத சித்தாந்தங்களைச் சொல்லுங்கள் என்று கேட்கும்போது அவர்களுக்குச் சொல்லத் தெரியவேண்டும். மற்ற சித்தாந்தங்களை விட இவை சிரேஷ்டமானவை என்பதற்கு அவர்களுக்குக் காரணம் சொல்லத் தெரிய வேண்டும். ஆனால், வாஸ்தவத்தில் எந்த மதத்திலும் இருக்கிற ஏராளமான பொது ஜனங்களுக்கு அந்தந்த மதத்தைப் பற்றிய கொள்கைகள் இப்படி விவாதிக்கிற அளவுக்கு நுணுக்கமாகத் தெரியாது. நம்முடைய ஹிந்து மதத்தில் உள்ளவர்களுக்கோ அடியோடு தெரியவே தெரியாது.

எனவே, மதமும் அதில் உள்ள தத்துவத்தினால் மட்டும் வளருவதில்லை

என்பதுதான் என் அபிப்ராயம். சாமான்ய ஜனங்களுக்குத் தத்துவத்தைப் பற்றிக் கவலை இல்லை. நல்ல குணம், நல்ல பழக்கம் உள்ளவராக, கருணையும் சாந்தமும் உள்ளவராக ஒரு மகான் வந்தால் அவரைப் பார்த்த மாத்திரத்தில் ஜனங்களுக்கு நம்பிக்கை உண்டாகிறது. அவர் எந்த தத்துவத்தைச் சொன்னாலும் அது நல்லதாகத்தான் இருக்கும்

என்ற திடமான நம்பிக்கையுடன் அவரது மதத்தில் ஜனங்கள் சேருகிறார்கள். மாறாக, ஒரு மதக்கோட்பாடுகள் எத்தனைத்தான் பரம தத்துவங்களை விளக்கினாலும், அந்த மதப் பிரதிநிதியாக இருக்கிறவர்களிடத்தில் ஒழுங்கு தப்பிவிட்டால் உடனே அந்த மதம் அழியத் தொடங்கி விடுகிறது. ஒன்றுக் கொண்று நேர் விரோதமான தத்துவங்களைக் கொண்ட மதங்களுக்கு ஏன் மக்கள் கூட்டம் கூட்டமாகப் போகிறார்கள் என்றால், இதற்கு நேராக (Direct) காரணம் சொல்லத் தெரியவில்லை. ஆனால் இதுவே விசேஷமானது. என்று ஜனங்கள் தலைக்கு மேலே தூக்கி வைத்துக் கூத்தாடிக் கொண்டிருந்த மதங்கள் எப்படி மங்கி அழிந்தன என்று பார்த்தால், அதற்குக் காரணம் தெரிகிறது. இதிலிருந்தே அவை எப்படி ஜனங்களை முதலில் கவர்ந்தன என்பதற்கும் பதில் கிடைக்கிறது. அதாவது, ஒரு மதம் எப்படி அழிகிறது என்று பார்த்தாலே அது எப்படி வாழ்கிறது, வளர்கிறது என்பதும் புரிந்து விடுகிறது.

எந்த தேசத்திலும் எந்த ஒரு மதமும் எப்படி அழிந்தது என்று பார்த்தால், அந்த மதத்தை வளர்க்கின்ற ஸ்தாபனங்களிலும், அதன் முக்கியஸ்தர்களிடமும் ஒழுங்கீனம் உண்டானபோதே இந்த அழிவு ஏற்பட்டிருக்கின்றது.

புத்தர் வந்தார். அவரது சரித்திரத்தைக் கேட்கக் கேட்க பால் வடிகிற அவரது விக்கிரகங்களைப் பார்க்க நமக்கே சாந்தமும், கருணையும், ஆனந்தமும், அவரிடம் ஒரு மரியாதையும் உண்டாகின்றன.

அந்த காலத்துத் ஜனங்களுக்கும் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் பௌத்த விஹாரங்களில் எத்தனை ஒழுக்கக் கேடு ஏற்பட்டது என்பதை மகேந்திர பல்லவன் எழுதிய மத்தவிலாஸப் பிரஹஸனம் என்கிற ஹாஸ்ய நாடகத்திலிருந்து தெரிந்து கொள்கிறோம். இதே காலத்தில்தான் புத்த மதம் மங்கிப் போகத் தொடங்கியது. அதாவது சமயப் பிரதிநிதிகள் தன்மையைப் பொறுத்தே சமய வளர்ச்சியும் நலிவும் ஏற்படுகின்றன.

புத்தருக்குப் பிறகு ஆதிசங்கரர் பரம உத்தமமான மனிதராக வந்தார் என்றால் ஜனங்கள் அவரிடம் திரும்புகிறார்கள்.

அப்புறம் ராமானுஜர், மத்வர் என்று இப்படித் தாங்கள் சொந்த

வாழ்க்கையில் உயர்ந்தவர்களாக விளங்கியவர்கள் வந்தபோது, அந்தத் தனி மனிதரிடம் ஜனங்களுக்கு உண்டான பிடிப்புக் காரணமாக, அவரது சித்தாந்தம் பரவியது. சமீபத்தில் சாந்தத்தோடும் தன்னலமில்லாத தியாகத்தோடும் ஒரு காந்தி வந்தார். உடனே அவர் சொன்னதையே காந்தீயம் காந்தீயம் என்று ஒரு மதமாக கோடான கோடி ஜனங்கள் ஏற்றுக் கொண்டார்கள். தத்துவச் சிறப்பால்தான் ஒரு சித்தாந்தம் வளருகிறது என்றால் இன்றைக்கும் அந்த காந்தீயம் உச்சத்தில் இருக்க வேண்டும். ஆனால், நடைமுறை எப்படி இருக்கிறது என்பது உங்களுக்கே தெரியும்.

பலாத்காரத்தினாலோ, பணத்தைக் காட்டியோ பொது ஜனங்களை இழுக்கிற மதங்களைப் பற்றி இங்கே கேள்வியில்லை. பலவிதமான சமூக சேவைகளை,

ஒத்தாசைகளை செய்துவிட்டு, உடனே ஞானஸ்நானம் பண்ணி வைக்கிறேன் என்று ஒரு மதம் இழுத்தால், பாமர ஜனங்கள் அதில் வசியப் பட்டுத்தான் போவார்கள். முக்கியமாகப் பஞ்ச காலத்தில் கிறித்துவ மதம் வளர்ந்தது என்று இதனால்தான் சொல்வதுண்டு. இப்படியே அடி பிடிக் கட்டாயமாக இஸ்லாத்தைப் பரப்பியபோது தன்னிச்சை இல்லாமலும் கூட்டம் கூட்டமாகப் பலர் அதில் சேர்ந்ததாகச் சொல்வதுண்டு. இங்கேயும்கூட தத்துவத்திற்காகப் பொது மக்கள் ஒரு மதத்தில் சேர்ந்து விடவில்லை என்று விட வில்லை என்ற மட்டில் நிரூபணமாகிறது. இன்னொன்றைக் கவனிக்க வேண்டும். முக்கியமாகச் சேரி மக்களைத்தான் பாதிரிமார்கள் மதம் மாற்ற முற்பட்டார்கள். உங்களை எல்லாம் மதத்தில் தாழ்த்தி வைத்திருக்கிறார்கள். எங்களிடம் வந்தால் உயர்த்தி விடுகிறோம். படிப்பு, வைத்தியம் எல்லாம் இலவசமாகத் தருகிறோம். என்று செல்வாக்கோடு ராஜாங்கத்தின் ஆதரவோடு பிரகடனம் செய்தார்கள். அப்படியும் சேரி ஜனங்கள் எல்லோரும் அதில் போய்ச் சேரக் காணோமே. ஏராளமான அந்த மக்கள் தங்கள் பிறந்த மதத்தில் எத்தனை தாழ்த்தி வைக்கப்பட்டதாகத் தோன்றினாலும் பரவாயில்லை என்று நினைத்து, தங்களுக்கு இன்னோரு மதத்தால் கிடைக்கிற வசதிகளையெல்லாம் துச்சமாக நினைத்து, அதற்குப் போகாமல்தானே இருந்திருக்கிறார்கள். இப்படி இருந்ததற்கு அவர்களுடைய

நல்ல பண்பு ஒரு காரணம் என்பது இருக்கட்டும். இன்னொரு காரணம். நம் மதத்தில் ஒவ்வொரு தலைமுறையிலும் பரம உத்தமமான மகான்கள் தோன்றிக்கொண்டு வந்திருப்பதுதான். இந்த மகான் இருக்கிற மதத்திலேயே நாமும் இருப்போம் என்று அதிலேயே சேரி ஜனங்கள் உள்பட எல்லோரும் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

மதமாற்றம் செய்கிறவர்களை நாம் கரிக்க வேண்டியதில்லை. துவேஷிக்க வேண்டியதில்லை. அவர்கள் கட்டாயப்படுத்தியாவது அல்லது ஆசை காட்டி வசியப்படுத்தியாவது மற்றவர்களைத் தங்கள் மதத்தில் சேர்க்க நினைப்பதற்குக் காரணம் அவர்களுக்குத் தங்கள் மதமே பரம சத்தியம் என்கிறதில் இருக்கிற நம்பிக்கைதானே. இதை ஏற்றால்தான் மற்றவர்களுக்கும் கதி மோக்ஷம் உண்டு. இப்படி அவர்களுக்கு ஒரு பெரிய க்ஷேமத்தை செய்வதற்கான பலவந்தம், வசியம் இவற்றைக் காட்டினால்கூடத் தப்பில்லை என்ற நல்லெண்ணத்திலேயே அவர்கள் மதமாற்றம் செய்கிறார்கள் என்றே வைத்துக் கொள்ளலாம்.

பலாத்காரம் அல்லது பணபலம் இவற்றைக் கைக்கொள்ளாத எல்லா மதங்களும் அவற்றின் குருமார்கள், போதகர்கள், பிரசாரகர்கள் ஆகியோரது குணத்தைக் கொண்டுதான் வளர்ந்திருக்கின்றன. ஒரு மதத்தின் பிரதிநிதியிடத்தில் வெளி வேஷம் மட்டும் இருந்தால் போதாது. துவேஷம் கூடாது. நல்லொழுக்கம் இருக்க வேண்டும். நல்ல தபஸ் இருக்க வேண்டும். சாந்தமும் கருணையும் நிரம்பியிருக்க வேண்டும். இப்படிப்பட்டவர்களுடைய குண விசேஷத்தாலேயே அவர்களைத் தேடி வருகிறவர்களின் தேஷங்களும் போய்விட வேண்டும்.

இப்படிப் பட்டவர்களை உண்டு பண்ணுவதே இப்போதும் நம் மதம் தழைக்க வழி. எதிர்பிரச்சாரம் எதுவும் வேண்டாம். மதநெறிகளை உயிரோடு வாழ்ந்து காட்டிக் கொண்டிருக்கிற பிரதிநிதிகள்தான் வேண்டும். இவர்களால்தான் இதுவரை யுகயுகாந்தரமாக நம் மதம் உயிரோடிருந்து வந்திருக்கிறது. இனிமேலும்

இப்படிப்பட்டவர்களால்தான் அது உயிர் வாழ முடியும்.

ஒருவன் சண்டை போட்டு மதம் மாறுகிறேன் என்றால் எதிர்த்துப் படை திரட்டிச் சண்டைபோட என்னால் ஆகாது. அல்லது கோடி கோடியாய் செலவழித்து ஆஸ்பத்திரி, ஸ்கூல் வைத்து ஒருவன் மதமாற்றம் செய்கிறான் என்றால், அதைப் போலப் கோடிக் கணக்கில் செலவழிக்க எனக்கு ஐவேஜி இல்லை. இது இரண்டும் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும்கூட, இதனால் செய்யும் மாறுதல் உண்மையானதும்(genuine)இல்லை. அது நிலைத்தும் நிற்காது. ஏனென்றால், நம்மை விடவும் பலிஷ்டர்களாகவோ, நம்மைவிடவும் பணவசதி உள்ளவர்களாகவோ இன்னொரு கூட்டம் வந்தால், அது நம் பலத்தாலும் பணத்தாலும் செய்ததை எல்லாம் அழித்துவிட்டு, தானே ஜயித்துவிடும். ஆனபடியால் இந்த வெளிச் சக்திகளை நம்பிக் கொண்டிராமல், நம் ஆத்ம சக்தியை நம்பி உள்ளுக்குள்ளே நம்மை உயர்த்திக் கொள்வதே நாம் செய்ய வேண்டியது. அப்போது அந்தப் பிரசாரமும், சண்டையும், வசியமும் இல்லாமலே நம் மதம் தழைத்து வாழும். இப்போது இதர தேசங்களில் புத்திமான்கள் ஏராளமாக, அத்வைதம், அத்வைதம் என்று அதைத் தலைக்குமேல் வைத்துக் கொண்டிருப்பதற்கு அதன் சித்தாந்தச் சிறப்பு காரணமாக இருக்கலாம். அவர்கள் ஆராய்ச்சி பண்ணி, ஆத்ம விசாரம் பண்ணி நம் வேதாந்தத்துக்கு வந்திருக்கிறார்கள். ஆனால், இது பொது ஜனங்கள் எல்லாருக்கும் பொருந்தாத விஷயம். அவர்கள் பிடித்துக் கொள்ள ஒர் உத்தம ஜீவன்தான் வேண்டும்.

இப்படி ஒருத்தன் சாந்தமும், கருணையும், ஞானமும், தியாகமும் நிரம்பியவனாக நம்மிடையில் வரவேண்டும் என்பதற்காகவே இத்தனை உபன்யாசங்களும் பண்ணுகிறேன். உங்களிலேயே ஒருவர் அப்படித் தோன்றிவிட்டால் அதைவிடப் பெரிய பயன் எதுவும் இல்லை.

---

## வைதிக மதம்

### பெயரில்லாத மதம்

இப்போது ஹிந்து மதம் என்று ஒன்றைச் சொல்கிறோமே, இதற்கு உண்மையில் இந்தப் பெயர் கிடையாது. ஹிந்து என்றால் அன்பு என்று அர்த்தம். ஹிம்சையை தூஷிப்பவன் ஹிந்தூ என்று சிலர் சொல்கிறார்கள். இது சமத்காரமாகச் சொல்வதேயாகும். நம்முடைய பழைய சாஸ்திரம் எதிலும், ஹிந்து மதம் என்கிற வார்த்தையே கிடையாது.

ஹிந்துக்கள் என்பது அந்நிய நாட்டினர் நமக்கு வைத்த பெயர்தான். மேல்நாட்டுக்காரர்கள் ஸிந்து நதியாக கடந்தே நம் பாரத நாட்டுக்கு வரவேண்டியிருக்கிறதல்லவா. ஆனபடியால் ஸிந்துவை இந்து என்றும், அதை அடுத்த நாட்டை இந்தியா என்றும், அதன் மதத்தை இந்து என்றும் குறிப்பிட்டார்கள். ஒரு தேசத்துக்குப் பக்கத்திலுள்ள சீமையின் பெயராலேயே அதை அடுத்துள்ள சீமைகளையும் சேர்த்துக் குறிப்பிடுவதுண்டு. வேடிக்கையாக ஒன்று சொல்கிறேன்.

வடதேசத்தில் பைராகி என்று யார் வந்து யாசகம் கேட்டாலும், உடனே பிச்சை போட்டு விடுவார்கள். நம் தென்னாட்டு ஜனங்கள் அப்படிச் செய்வதில்லை என்று பைராகிகளுக்குக் குறை. அவர்கள் ஒரு பாட்டுப் பாடுகிறார்கள். அதில்,

இல்லா போப கஹே தெலுங்கி

என்று ஒரு வரி வருகிறது.

தெலுங்கர்கள் (பிச்சை) இல்லை போ போ என்று விரட்டுவதாகச் சொல்கிற பாட்டு, தெலுங்கர்கள் வெள்ளு வெள்ளு என்றுதான் சொல்வார்களேயன்றி, போ போ என்று சொல்லமாட்டார்கள். போ என்பது தமிழ் வார்த்தை. தமிழர்கள்தான் அப்படிச் சொல்வார்கள். பின் பைராகிப் பாட்டு இப்படி சொல்வதற்குக் காரணம் என்ன?வடதேசத்தைவிட்டு பைராகிகள் கீழே வரும்போது முதலில் தெலுங்கு தேசம் வருகிறது. ஆனபடியால், அதற்குப் பிறகு வரும் தமிழ்நாட்டையும் தெலுங்கு தேசமாகவே கருதி

விட்டார்கள் பைராகிகள்.

தமிழ்நாட்டைத் தெலுங்கர்கள் அரவநாடு என்பதுங்கூட இதே மாதிரிதான். ஆந்திர தேசத்தின்கீழே உள்ள சிறிய பகுதிக்கு அர்வா தேசம் என்று பெயர். அப்புறம் வரும் பகுதிகளுக்கும் அதே பெயரை வைத்துவிட்டார்கள்.

இந்த ரீதியில்தான் ஸிந்துப் பிரதேசத்தைக் கண்ட அந்நியர்களும் அதையடுத்து வந்த பாரத தேசம் முழுவதையும் ஹிந்து தேசமாக்கிவிட்டனர்.

ஆனால் ஹிந்து என்பது நமது பூர்வீகப் பெயர் அல்ல. வைதீக மதம்.

ஸநாதன தர்மம் என்றெல்லாம் சொல்கிறோமே, அவைதான் பெயரா என்றால் அதுவும் இல்லை. நம்முடைய ஆதார நூல்களைப் பார்க்கும்போது இந்த மதத்துக்கு எந்தப் பெயருமே குறிப்பிடவில்லை.

இதைப் பற்றி நினைத்தபோது எனக்கு ரொம்பவும் குறையாக இருந்தது. இது இப்படி இருக்கட்டும்.

ஒருநாள் யாரோ ராமு வந்திருக்கிறான் என்று என்னிடம் சொன்னார்கள். உடனே நான் ஏதோ நினைவில் எந்த ராமு என்று கேட்டேன். எந்த ராமுவா. அப்படியானால் ராமுக்களில் பல ராமுக்கள் இருக்கிறார்களா. எனறு எதிர்க் கேள்வி கேட்டார்கள். அப்போதுதான் எனக்குப் பழைய ஞாபகத்தில் இப்படிக் கேட்டுவிட்டோம் என்று தெரிந்தது. எங்கள் ஊரில் ராமு என்ற பெயரில் நாலு பேர் இருந்தார்கள். எனவே, அவர்களுக்குள் வித்தியாசம் தெரிந்து கொள்வதற்காகக் கறுப்பு ராமு, சிவப்பு ராமு, நெட்டை ராமு, குட்டை ராமு என்று சொல்வது பழக்கம். அதே நினைவில்தான் ஒரே ஒரு ராமு இருந்த ஊரிலும் எந்த ராமு என்று கேட்டுவிட்டேன். ஒரே ராமு இருக்கிற இடத்தில் எந்த அடைமொழியும் போட வேண்டியதில்லை.

நம் மதத்திற்கு ஏன் பெயரில்லை என்பது. உடனே புரிந்து விட்டது. பல்வேறு மதங்கள் இருக்கிறபோதுதான் ஒன்றிருந்து இன்னொன்றுக்கு வித்தியாசம் தெரிவதற்காகப் பெயர் கொடுக்கவேண்டும். ஒரே மதம்தான் இருந்தது என்றால் அதற்குப் பெயர் எதற்கு?

நமது மதத்தைத் தவிர மற்ற மதங்கள் ஒரு மஹா புருஷரின் பெயரில் ஏற்பட்டவை. அந்தப் பெரியவருக்கு முன் அந்த மதம் இல்லை. புத்த மதம் என்றால் அது கௌதம புத்தரால் ஸ்தாபிக்கப்பட்டது. எனவே அவருக்கு முன் அது இல்லை என்கிறது. ஜைன மதம் என்றால் அது மஹாவீரர் எனப்படும் ஜீனரால் ஸ்தாபிக்கப்பட்டது. கிருஸ்து மதம் என்றால் கிறிஸ்டினால் (இயேசு கிறிஸ்து) ஸ்தாபிக்கப்பட்டது. என்றிப்படி ஒவ்வொரு மதமும் ஒரு பெரியவரால் உண்டாக்கப்பட்டது என்று தெரிகிறது. அந்தப் பெரியவர் இதை ஏற்படுத்தினார் என்னும்போதே அவருக்கு முன்னால் இது இல்லை என்று தெரிகிறது. இவ்வளவு மதங்களும் உண்டாவதற்கு முன்பே நம் மதம் இருந்திருக்கிறது. இந்த ஒரு மதமே உலகமெல்லாம் பரவி இருந்தது. இதைத் தவிர வேறு மதம் இல்லாததால் இதற்குப் பெயர் குறிப்பிட வேண்டிய அவசியமே இருக்கவில்லை. இதை அறிந்தவுடன் முன்பு எனக்கு இருந்த குறை மறைந்தது. அதோடு இந்த மதத்தை பற்றிக் கௌரவ புத்தியும் உண்டாயிற்று.

சரி, இந்த மதம்தான் ஆதி மதம் என்றே இருக்கட்டும். அந்த ஆதி காலத்தில் இதை ஸ்தாபித்தவர் யார் என்ற கேள்வி வரும். பெயர் இல்லாத நம் மதத்தை யார் ஸ்தாபித்தார் என்று பார்த்தால், எத்தனை ஆராய்ச்சி செய்து பார்த்தாலும், அப்படி ஒரு ஸ்தாபகரைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை. பிரம்ம சூத்திரம் செய்த வியாசரைச் சொல்லலாமா, கீதை சொன்ன கிருஷ்ண பரமாத்மாவைச் சொல்லலாமா என்றால், அவர்களும் தங்களுக்கு முன்னரே இருக்கிற வேதங்களைப் பற்றிச் சொல்கிறார்கள். சரி, இந்த வேத மந்திரங்களைப் செய்த ரிஷிகளை ஸ்தாபகர்கள் என்று சொல்லலாமா என்று பார்த்தால், அவர்களே நாங்கள் இந்த வேதங்களைச்

செய்யவில்லை என்கிறார்கள். பின்னே உங்கள் பேரில்தானே மந்திரங்கள் எங்களுக்குக் கிடைத்திருக்கின்றன. ஒவ்வொரு மந்திரத்தையும் உபாசிக்கிறபோது அவற்றுக்கு உங்களில் ஒரு ரிஷியின் பெயரைச் சொல்லித்தானே தலையைத் தொட்டுக் கொள்கிறோம். என்று கேட்டால், அந்த ரிஷிகள் எங்கள் மூலம்தான் இந்த மந்திரங்கள் லோகத்துக்கு வந்தன என்பது மூலம்தான் இந்த மந்திரங்கள் லோகத்துக்கு வந்தன என்பது வாஸ்தவம். அதனால் எங்களை மந்திர

ரிஷிகளாகச் சொல்லியிருக்கிறது. எங்கள் மூலம் வந்ததே ஒழிய, நாங்களே அவற்றைச் செய்யவில்லை (Compose பண்ண வில்லை). நாங்கள் அப்படியே மனம் அடங்கித் தியான நிஷ்டையில் இருக்கிறபோது இந்த மந்திரங்கள் ஆகாயத்தில் எங்கள் முன்னே தெரிந்தன. நாங்கள் அவற்றைக் கண்டவர்கள்தான் (மந்த்ரத் ரஷ்டா) செய்தவர்கள் (மந்த்ர கர்த்தா) அல்ல என்கிறார்கள்.

சகல சப்தங்களும் ஆகாசத்திலேயே பிறக்கின்றன. அவற்றிலிருந்தே த்ருஷ்டி உண்டாயிற்று. இதைத்தான் Space -ல் ஏற்பட்ட Vibration - களால் பிரபஞ்சம் உண்டானதாக ஸயன்ஸில் சொல்லியிருக்கிறார்கள். ரிஷிகள் தங்களது தபோ மகிமையால் இந்த சிருஷ்டியிலிருந்து ஜீவர்களைக் கடைத்தேற்றுகிற சப்தங்களை ஆகாசத்தில் மந்திரங்களாக் கண்டார்கள். ஆனால் அவர்கள் செய்ததல்ல இம் மந்திரங்கள். புருஷர் எவரும் செய்யாத அபௌருஷேயமாக இந்த வேதங்கள் ஆகாச ரூபமாக பரமாத்மாவிலேயே அவரது மூச்சுக் காற்றாக இருந்தவை. அவற்றையே ரிஷிச்ரேஷ்டர்கள் கண்டு உலகுதக்குத் தந்தார்கள்.

இப்படித் தெரிந்து கொண்டால் நம் மதத்தின் ஸ்தாபகர் யார் என்பது தெரியவில்லையே என்பதும் ஒரு குறையாக இல்லாமல் அதுவே பெருமைப் படுகிற விஷயமாக இருக்கும். பரமாத்மாவின் சுவாசமாகவே இருக்கப்பட்ட வேதங்களை அனுஷ்டிக்கிற அநாதி மதத்தின் வாரிசுகளாக வந்திருக்கும் மஹா பாக்கியம் நமக்குக் கிட்டியிருப்பது என்று பூரிப்பு அடைவோம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### உலகம் பரவிய மதம்

இப்போது ஹிந்து மதம் என்று சொல்லப்படுகிற நமது மதம் ஒன்றே ஆதியில் லோகம் முழுதும் பரவியிருந்தது. அந்த

ஒரே மதம் இருந்தால்தான் அதற்குத் தனியாகப் பெயர் வைக்க வேண்டிய அவசியமிருக்கவில்லை. இதனால்தான் நம் ஆதார நூல்களில் ஹிந்து மதத்துக்குப் பெயரே இல்லை என்பது என் அபிப்பிராயம்.

மிக மிகப் பழங்காலப் புதைப்பொருள் ஆராய்ச்சிகளைப் பார்த்தால் எல்லா அந்நிய தேசங்களிலுமே நமது வேத சமய சம்பந்தமான அம்சங்களை நிறையப் பார்க்கிறோம். உதாரணமாக, கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் 1300 வருஷங்களுக்கு முன்னால் எகிப்து தேசத்தில் இரண்டு மன்னர்கள் செய்து கொண்ட உடன்படிக்கை சாஸனம் பூமிக்கடியிலிருந்து கிடைத்திருக்கிறது. அதில் மித்ரா வருண சாட்சியாக இந்த உடன்படிக்கை செய்யப்படுவதாகச் சொல்லியிருக்கிறது. மித்ரா - வருணங்கள் நமது வேதத்தில் சொல்லப்பட்ட தேவதைகள். மடகாஸ்கரில் உள்ள ஊர்களில் எழுபத்தைந்து சதவிகிதம் ஸம்ஸ்கிருத மூலத்திலிருந்து வந்ததாகத் தெரிகிறது.

ராமேஸஸ் என்ற மூலத்திலிருந்து வந்ததாகத் தெரிகிறது. ராமேஸஸ் என்ற ராஜப் பெயருக்கும் நம் ராமனுக்கும் சம்பந்தம் இருக்கிறது.

பூகோளத்தின் கீழ்ப் பாதியிலும் இத்தகைய அடையாளங்களே உள்ளன. மெக்ஸிகோவில் நமது நவராத்திரிப் பண்டிகையின்போது ஓர் உற்சவம் நடக்கிறது. அதற்கு ராம ஸீதா என்று பெயர். அங்கே பூமியே வெட்டும் இடங்களிலெல்லாம் பிள்ளையார் விக்கிரம் அகப்படுகிறது. ஸ்பெயின் தேசத்தார் புகுந்து அந்த நாட்டை வசப்படுத்துமுன் அங்கிருந்த பழங்குடிகள் ஆஸ்டெக்ஸ் (Aztecs) இது ஆஸ்திக என்பதன் திரிபே. பெருவில் சரியாக விஷு புண்ணிய காலத்தில் சூரியாலயத்தில் பூஜை செய்கிறார்கள். இவர்களுக்குப் பெயரே இன்காஸ். இனன் என்பது சூரியனுடைய பெயர். இனகுல திலகன் என்று ராமரைச் சொல்கிறோமே.

ஆஸ்திரேலியப் பழங்குடிகள் நிர்வாணமாக ஆடுகிற படங்களை ஒரு புஸ்தகத்தில் பார்த்தேன். (ஸ்பென்ஸர், கில்லன் என்பவர்கள் எழுதிய Native Tribes of Central Australia என்கிற புத்தகத்தில் 128, 129 என்ற எண்ணுள்ள படங்கள்) அதன்கீழ் சிவா டான்ஸ் என்று போட்டிருந்தது. நன்றாகக்

கவனித்துப் பார்த்தேன். ஆடுகிற ஒவ்வொர் நெற்றியிலும் மூன்றாவது கண் வரைந்திருக்கிறது.

போர்னியோ தீவில் பிரம்ம சிருஷ்டி முதல் யாருமே உள்ளே நுழையாத காடு(Virgin Forest) என்று பெரிய காட்டைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதில் உள்ளே புகுந்து ஆராய்ச்சி செய்தபோது, நம் கிரந்த லிபியில் எழுதியதுபோல் ஒரு சாசனம் அசப்பட்டது. அதில் இன்ன மஹாராஜா, இன்ன யக்ஞம் செய்தான். இன்னவிடத்தில் யூபஸ்தம்பம் நட்டான். பிராமணர்களுக்கு கற்பக விருட்ச தானம் செய்தான் என்று கண்டிருக்கிறது. இதை Yupa inscription of Mulavarman of Koeti என்கிறார்கள். நம் மதத்தை ரொம்பப் பரிகாசம் செய்த இங்கிலீஸ்காரர்கள்தான் இத்தனை விஷயங்களையும் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறார்கள்.

இவையெல்லாவற்றையும்விட, எனக்குத் தோன்றுகிற ஒன்று சொல்கிறேன். வேடிக்கையாக இருக்கும். ஸகரர்கள்யாகக் குதிரைகள் தேடிப் பாதாளத்துக்குப் வெட்டிக் கொண்டே போனார்கள். அப்போது உண்டான கடலே ஸகரர் பெயரில் ஸாகர மாயிற்று. கடைசீயில் கபில மகரிஷியின் ஆசிரமத்துக்குப் பக்கத்தில் குதிரையைக் கண்டார்கள். அவரே குதிரையை அபகரித்ததாக எண்ணி அவரை ஹிம்சித்தார்கள். அவர் திருஷ்டியினாலே அவர்களைப் பொசுக்கிச் சாம்பலாக்கிவிட்டார். இகு ராமாயணக் கதை. நம் தேசத்துக்குக் நேர் கீழே உள்ள அமெரிக்காவைப் பாதாளம் என்று வைத்துக் கொண்டால் அங்கேயிருக்கும் கபிலாரண்யம் (மதுரை என்பது மருதை என்கிற மாதிரி) கலிபாரண்யமாக கலிபோர்னியாவாக இருக்கலாம். அதற்குப் பக்கத்தில் குதிரைத் தீவு (Horse island), சாம்பல் தீவு (Ash island) இவை உள்ளன.

ஸகரர், ஸாகரம் பற்றி இன்னொன்றும் தோன்றுகிறது. ஸஹாரா பாலைவனமும் ஒரு காலத்தில் கடலாக இருந்தது என்கிறார்கள். ஸாகரம்தான் ஸஹாராவாயிற்றோ என்று தோன்றுகிறது.

இப்படி உலகம் முழுக்க நம் மதச் சின்னங்கள் இருப்பதைப் பார்த்துவிட்டு, நம்மவர்களில் சிலர் இங்கிருந்து அங்கே போனார்கள். அந்தத் தேசத்தவர்கள் இங்கே வந்தார்கள்,

பலவித பரிவர்தனை ஏற்பட்டது. என்று ஆராய்ச்சியாளர்கள்

சொல்கின்றனர். எனக்கோ எல்லாவிடத்திலும் ஒரே தர்மம்தான் இருந்தது. இந்தச் சின்னங்கள் அங்கங்கேயே ஆதியில் இருந்தவர்களால் ஏற்பட்டவை என்றுதான் தோன்றுகிறது.

சரித்திர காலம் என்று சொல்லப்படுகிற ஒரு இரண்டாயிர மூவாயிர வருஷத்துக்கு உட்பட்ட சான்றுகள் மற்ற தேசங்களில் கிடைப்பதைப் பார்த்து, இந்தியர்கள் அங்கெல்லாம் சென்று அங்குள்ள பழைய நாகரிகத்தை அகற்றிவிட்டு அல்லது அதற்குள்ளேயே ஊரிப் போகிற மாதிரி, ஹிந்து நாகரீகத்தைப் புகுத்தியிருக்கிறார்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். ஆனால் நாலாயிரம் வருஷம், அதற்கும் முற்பட்ட காலங்களில்கூட வைதிக சின்னங்கள் பல தேசங்களில் இருக்கின்றன. அதாவது அந்த தேசங்களில் நாகரீக வாழ்வு (Civilization) தோன்றின பழங்குடிகளுக்கென்று ஒரு மதமே தோன்றுகிறது. கிரீஸில் இப்படி ஒரு பூர்விக மதம், பல தெய்வங்களுக்குப் பிறகு பெரிய பெரிய கோயில் கட்டி வழிபடுகிற மதம் உண்டாயிற்று. அதிலும் வைதிக சம்பந்தமான அம்சங்கள் இருக்கின்றன. கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தில் அவர் வாழ் ந்த பகுதிகளில் அவர் வாழ்ந்த பகுதிகளில் இருந்த ஸெமிடிக், ஹீப்ரு மதங்களிலும் வேத மதத்தில் இருக்கிற அம்சங்கள் ஒரு மாதிரி வர்ணாசிரமப்பிரிவினை உள்பட இருந்திருக்கின்றன. மெக்ஸிகோ போன்ற தேசங்களின் பழங்குடிகளுக்கு (aborgines) ஒவ்வொரு மதம் உண்டு. அவர்களும் வேதத்தில் சொல்லியிருக்கிற மாதிரி இயற்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் தெய்வத்தன்மையைப் பார்த்து அவற்றை ஒவ்வொரு தேவதையாக வழிபட்டிருக்கிறார்கள். இந்த மதங்களில் எல்லாம் ஏகப் பட்ட சடங்கு (ritual)களும் உண்டு.

இப்போது நாகரீகத்தின் உச்ச ஸ்தானத்தில் இருந்து கிரீஸின் (ஹெலலெனிக்) மதம் உள்பட இவை எதுவுமே இல்லை. இங்கெல்லாம் அநேகமாக கிறிஸ்துவ மதமே இருந்திருக்கிறது. ஜப்பான் வரை மத்திய ஆசிய, கிழக்காசிய நாடுகளில் பௌத்தம் பரவியிருந்தது. சில இடங்களில் இஸ்லாம் இருந்தது. இப்படிப்பட்ட மிகப் பூர்வீக

மதங்களிலேயே வைதிக அம்சங்கள் நிறைய இருக்கின்றன. இதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன்.

அதற்கு முன்னால் ஒரு விஷயம். தத்துவங்களை விளக்குகிற போது கதாரூபம் (கதை உருவம்) கொடுப்பதுண்டு. அப்போதுதான் அவை சுலபமாகப் பாமர ஜனங்களுக்குப் புரியும். தத்வம் அப்படியே பொது ஜனங்களிடம் ஏறாது. ஒன்று, கதாரூபம் தர வேண்டும். அல்லது, ஒரு சடங்காக அதை ஆக்கிக் காரியத்தில் செய்யும்படியாகப் பண்ண வேண்டும். இம்மாதிரி சமய கர்மானுஷ்டானங்களைச் செய்யும் போதே அவற்றின் உள்ளே ஸிம்பாலிக்காக இருக்கிற தத்வங்கள் புரியும். சடங்குகள் எல்லாமே ரூபகம் (ஸிம்பல்) தான். உள்பொருளைப் புரிந்து கொண்டாலே போதும். சடங்கே வேண்டாம் என்று சொல்லுகிறவர்களோடு நானும் சேர்ந்து கொண்டு இதைச் சொல்லவில்லை. தனிப்படச் சடங்கு என்று வைத்துக் கொண்டாலே அதற்குச் சக்தி உண்டுதான். இம்மாதிரியே புராணக் கதைகள் தத்வ விளக்கம் மட்டுமேதான். அவற்றையே நிஜம் என்று நம்பக்கூடாது. என்றும் நான் சொல்ல வரவில்லை. வாஸ்தவத்திலேயே நடந்த உத்தமமான சரித்திரங்கள் தான் இவை. அதே சமயத்தில் தானாகவே

தத்வங்களையும் நமக்குக் காட்டிக் கொடுக்கின்றன. அதேபோல் காரரியமாகச் செய்கிறபோதே நமக்கு ஒரு பலனைத் தந்து, பிறகு எந்தப் பலனும் கோராத சித்த சக்தியைத் தந்து, சிரேயஸைத் தருகிற சடங்குகளுக்குள் தத்வார்த்தங்களும் இருக்கின்றன.

ஆனால் நாள்பட்ட வழக்கத்தில் இப்படிப்பட்ட கதைகள் அல்லது சடங்குகள் அவற்றின் உள்ளுறை பொருளாக (inner meaning) இருக்கப்பட்ட தத்வங்களிலிருந்து விலகி விடக்கூடும். அல்லது அதை மறந்தே போகக் கூடும்.

வெளி தேசங்களில் எத்தனையோ ஆயிரம் வருஷங்கள் மூலமான வேத மதத்தோடு சம்பந்தமே இல்லாமல் புதிய மதங்கள் வளர்ந்தபோது இப்படித்தான் வைதிக தத்துவங்கள் உருமாறியிருக்கின்றன.

நான் சொல்ல வந்த உதாரணத்திற்கு வருகிறேன். ஹீப்ரு மதங்களில் ஆதம்-ஈவாள் கதை (Adam and Eve) என்று

கேட்டிருப்பீர்கள். அறிவு மரம் (Tree of Knowledge) என்று ஒன்று இருந்தது. அதன் பழக்கத்தைப் புசிக்கக்கூடாது என்பது ஈஸ்வரனாக்ஞை. ஆதம் அப்படியே சாப்பிடாமல் இருந்தான். ஆனால் ஈவ் அதைச் சாப்பிட்டான். அதன் பிறகு, வாழ்வோ தாழ்வோ அவளுக்கு என்ன சம்பவிக்கிறதோ அதுவே தனக்கும் சம்பவிக்கக்கூடும் என்று ஆதமும் அந்தப் பழக்கத்தைச் சாப்பிட்டான் என்பது பைபில் பழைய ஏற்பாட்டின் (Old Testament) முதல் கதை(Genesis).

நம் உபநிஷத் தத்துவங்களில் ஒன்றுதான் இப்படி கதா ரூபமாயிருக்கிறது. அப்படி ஆகும்போது காலம். தேசம் இவற்றின் மாறுபட்டால் குளறுபடியும் உண்டாகியிருக்கிறது. மூல தத்வமே மறைந்து போகிறாற்போல.

உபநிஷத்தில் என்ன சொல்லியிருக்கிறது. பிப்பல மரத்தில் இரண்டு பட்சிகள் இருக்கின்றன. சாப்பிடாமல் மற்றதைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறது. என்று உபநிஷத்து சொல்கிறது. சரீரம்தான் அந்த விருட்சம். அதில் ஜீவாத்மாவாக ஒருத்தனா தன்னை நினைத்துக் கொண்டு விஷயாநுபவங்கள் என்ற பழக்கத்தைத் தின்று கொண்டிருக்கிறான். இவன் ஒரு பட்சி. இந்த சரீரத்திலேயே பரமாத்மா இன்னொரு பட்சியாக இருக்கிறான். அவன்தான் ஜீவனை ஆட வைக்கிறவன். ஆனாலும் அவன் ஆடுவதில்லை. சர்வ சாக்ஷியாக அவன் ஜீவனின் காரியங்களைப் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருக்கிறான். இந்த ஜீவனுக்கு அவனே ஆதாரமானாலும் அவன் விஷயங்கலை அனுபவிப்பதோ பழத்தைச் சாப்பிடுவதோ அதற்கான கர்ம பலனை அனுபவிப்பதோ இல்லை. இதை உபநிஷதம், பழம் அதைச் சாப்பிட்ட பட்சி சாப்பிடாத பட்சி என்று கவித்தத்தோடு சொல்கிறது. சாப்பிடுபவன் ஜீவன், சாப்பிடாதவன் பரம்பொருள் தன்னை ஆத்மாவாக உணர்ந்திருப்பவன்.

இந்த ஜீவன்தான் ஹீப்ரு மதங்களில் ஈவ் ஆகியிருக்கிறான். ஜீ என்பது ஈ யாவது ஒரு வியாகரண விதி ஜ வரிசை சப்தங்கள் ய வரிசையாக மாறிவிடுவது சகஜம். இப்படித்தான் யமுனா ஜமுனாவாயிற்று. யோகீந்திர் என்பது ஜோகீந்தா என்றாயிற்று. ஜீவ என்பது ஈவ் என்றாயிற்று. ஆத்மா என்பது ஆதம் மாக மாறிவிட்டது. பிப்பலம் என்பது ஆப்பிள் (apple)

என்றாயிற்று. அறிவு விருட்சம் என்பதும் நம் போதி விருட்சம்தான். போதம் என்றால் ஞானம் புத்தருக்குப் போதி

விருக்ஷத்தின் கீழ்தான் ஞானம் உண்டாயிற்று என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே. ஆனால், அவருக்கும் முந்தியே அரச மரத்துக்குப் போதி விருட்சம் என்று பெயர் வந்தது.

உபநிஷதமானது துர தேசம் ஒன்றில் எத்தனையோ காலத்துக்குப் பிற்பாடு மாறி மாறிப் புது ரூபம் எடுக்கிறபோது மூல தாத்பர்யம் மாறிப்போயிற்று. ஒரு போதும் விஷயானுபோகத்துக்கு ஆளாக முடியாத ஆத்மாவும் பழத்தைச் சாப்பிட்டதாக பைபிள் கதை திசை திருப்பி விடுகிறது. விஷய சுகம் எல்லாம் அடிபட்டுப் போகிற அறிவை நம்முடைய போதி விருட்சம் குறிப்பிடுகிறது. என்றால், அவர்களோ விஷய சுகத்தைப் பழுக்கிற லௌகீக அறிவையே Tree of Knowledge என்று சொல்லி விட்டார்கள். ஆனாலும், நம் வேத மதம் ஆதியில் அங்கேயிரு ந்திருக்கிறது என்பதற்கு இதிலிருந்து அத்தாட்சி கிடைக்கின்றதோ இல்லையோ. இன்னொரு உதாரணம் சொன்னால்தான் மூலத்தில் இருப்பது வெளி வெளிச்சத்தில் வேறு காலத்தில் ரொம்பவும் மாறிப்போகும் மாறினாலும்கூட மூலத்தைக் காட்டிக் கொடுக்கும் என்பதில் உங்களுக்கு நம்பிக்கை வரும். நம்முடைய திருப்பாவை - துருவெம்பாவைப் பாடல்கள் வேதம் மாதிரி அத்தனை பிராசீனமானவை அல்ல. ஒரு ஆயிரத்தைநுறு ஆண்டுகளுக்குள் அவற்றை ஆராய்ச்சியாளர்கள் கொண்டு வந்து விடுகிறார்கள். எப்படியானாலும் வேத இதிஹாச காலங்களுக்கு மிகவும் பின்பட்டுத் தோன்றியவர்கள்தான் இந்த இரு பாவைகளைச் செய்த மாணிக்கவாசகரும் ஆண்டாளும். இழர்கள் காலத்துக்கு அப்புறம் கடல் கடந்து ஹிந்து சாம்ராஜ்யங்கள் உண்டாயின. தமிழ்நாட்டின் சோழ ராஜாக்கள்கூட அம்மாதிரி தேசாந்தரங்களில் சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கிறார்கள். ஆனால் இந்திய படையெடுப்பைவிட முக்கியமாக நம் கடல் வாணிபம் பெருகினதையே சொல்ல வேண்டும். வியாபார ரீதியில் நம் அந்நியத் தொடர்பு (திஷீக்ஷீமீவீரீஸீ நீஷீஸீமீ ணீநீமீ) மிகவும் விருத்தியாயிற்று. இந்த வியாபாரிகளைப் பார்த்தே பல தேசங்களில் ஹிந்து நாகரீகத்தில் ஆகர்ஷிக்கப்பட்டு நம் மத அம்சங்களைத்

தாங்களும் எடுத்துக் கொண்டார்கள். தூரக் கிழக்கு (Far - East) என்று சொல்கிற நாடுகளை இவற்றில் முக்கியமாகச் சொல்ல வேண்டும். பாலி மாதிரி தேசங்கள் முழுக்க ஹிந்துவாயின. கம்போடியா, இப்போது தாய்லாந்து என்கிற ஸயாம், இந்தோ சைனா முழுவதும் பரவி, மணிலா இருக்கிற ஃபிலிப்பைன்ஸ் எல்லாம்கூட ஹிந்து கலாச்சாரத்துக்குள் வந்தன. அதை ஸ்ரீ விஜய சாம்ராஜ்யம் என்பார்கள். ஆக, ரொம்பவும் ஆதியில் எங்கேயும் வேத மதமே இருந்தது ஒரு நிலை. அப்புறம் அங்கங்கே புது மதங்கள் ஏற்பட்டது ஒரு நிலை. பிறகு இந்த மதங்கள் எல்லாம் மங்கிப் போகிற மாதிரி கிறிஸ்துவம், இஸ்லாம், பௌத்தம் இவை மட்டுமே அங்கெல்லாம் பரவிய நிலை. இதற்கப்புறம், சரித்திரத்தில் நன்றாக உறுதிப்பட்டுவிட்ட காலத்தில் மறுபடி இப்போது நான் சொன்னமாதிரி, ஹிந்து நாகரீகச் செல்வாக்கானது பல தேசங்களில் குறிப்பாக கீழ்த்திசை நாடுகளில் ஜீவ களையுடன் ஏற்பட்டது ஒரு நிலை. இந்தக் கட்டத்தில்தான் அங்கோர்வாட், பேராபுதூர், ப்ரம்பானன் மாதிரி பெரிய பெரிய தமிழ்நாட்டுக் கோயில்கள் அங்கே எழும்பின. இந்தக் கட்டத்தில்தான் நம்முடைய திருப்பாவையும் திருவெம்பாவையும் ஸயாமுக்கு - இப்போது தாய்லாந்து என்கிறார்கள். - சென்றிருக்கின்றன.

இதற்குச் சான்றாக இப்போதும் அங்கே வருஷா வருஷம் இங்கே நாம் இந்தப் பாவைகளைப் பாராயணம் பண்ணுகிற அதே மார்கழி மாதத்தில் ஒரு பெரிய உத்ஸவம் நடக்கிறது. இரண்டு பாவைகளும், சைவத்தையும் வை ணவத்தையும் சேர்த்து வைக்கிற மாதிரி இந்த உத்ஸவத்தில் பெருமானுக்குறிய டோலோத்ஸவத்தை (ஊஞ்சல் வைத்து ஆட்டுவதை) சிவபெருமான் வேஷத்தைப் போட்டுக் கொள்கிற ஒருத்தனுக்கு ஸயாம் தேசத்தில் செய்கிறார்கள். சரி அவர்களுக்குப் பாவை நூல்களைப் பற்றி ஏதாவது தெரியுமா என்று கேட்டால், அடியோடு ஒன்றும் தெரியாது. அப்படியானால் இந்த உத்ஸவம் மார்கழியில் நடக்கிறது என்பது ஒன்றுக்காக அந்தப் பாவைகளோடு சேர்த்துப் பேசுவதற்கு ஆதாரம் இல்லை என்று தோன்றலாம். பின் நான் ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், அவர்கள் இந்த உத்ஸவத்திற்குப் பெயரே ட்ரியம்பாவை, ட்ரிபாவை (Triyambavai, Tripavai) என்கிறார்கள். இப்போது பைபில் படிப்பவர்களுக்கு உபநிஷத சமாச்சாரமே

தெரியாவிட்டாலும், அதிலிருந்து வந்த கதை மாத்திரம் அவர்களிடம் இருக்கிற மாதிரி, தாய்லாந்துக் காரர்களுக்கு இப்போது திருப்பாவை - திருவெம்பாவை பாராயணம் அடியோடு விட்டுப் போய்விட்டது என்றாலும், அவர்கள் இதே தநுர் மாசத்தில் சிவ வேஷம் போட்டுக் கொண்டவனுக்காக நடத்துகிற டோலோஸ்தவத்திற்கு ட்ரியம்பாவை, ட்ரிபாவை என்ற பெயர் மட்டும் இருக்கிறது. சரித்திர காலத்துக்குள் இப்படிப்பட்ட மாறுபாடுகள் உண்டானால், மூவாயிரம் நாலாயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட சமாச்சாரங்கள் வெளிநாடுகளில் எத்தனையோ திரிந்தும் மாறியும் தானே இருக்கும். இத்தனை மாறினாலும் எல்லாவற்றிலும் வேத சம்பிரதாயத்தின் அடையாளங்கள் இதோ இருக்கிறோம் என்று தலை நீட்டுகின்றன.

சரித்திர காலத்துக்கு முற்பட்டவர்கள் என்று வைக்கப்பட்ட பழங்குடிகளின் மதங்களில்கூட நம் சமய சின்னங்கள் இருக்கின்றன என்றால் என்ன அர்த்தம். அத்தனை காலத்துக்கு முந்தி, நாகரீக வாழ்க்கையே உருவாகாத தூர தூர தேசங்களுக்கு இந்தியாவிலிருந்து படையெடுத்தோ வியாபாரத்துக்காகவோ போய் நம் நாகரீகத்தைப் பரப்பினார்கள் என்றால், அது பொருமித்தமாகவே இல்லையே, அதனால்தான் இங்கிருந்து கொண்டுபோய் அங்கே புகுத்தவில்லை. ஆதியில் லோகம் முழுக்கவே வேத மதம்தான் இருந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அப்புறம் அவை திரிந்து திரிந்து இப்போது அந்தந்த தேசத்து ஒரிஜினல் மதங்களாக நினைக்கப்படுபவையாக ஆகி, பிற்பாடு அங்கும் சரித்திர காலத்துக்கு உட்பட்ட கிறிஸ்துவம், பௌத்தம், இஸ்லாம் ஆகியன பரவியிருக்க வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### நம் மதத்தின் தனி அம்சங்கள்

மற்ற மதங்களில் இல்லாத பல அம்சங்கள் நம் மதத்தில் இருக்கின்றன. அதில் ஒன்று. கர்மக் கொள்கை, Karma theory என்று சொல்கிறார்கள். நம் மதத்திலிருந்து வந்த பௌத்தம், சமணம் போன்ற மதங்கள் இதை ஒப்புக் கொண்டாலும் ஏனைய மதங்களில் இந்தக் கொள்கை இல்லை.

கர்மா தியரி என்றால் என்ன?எந்தச் செயலுக்கும் பிரதியாக ஒரு விளைவு உண்டு. Cause of effect என்பதாகவும், action and reaction என்பதாகவும், இவை தவிர்க்க முடியாத விதிகளாக இருக்கின்றன என்று ஃபிஸிக்ஸில் சொல்கிறார்கள். பௌதிகத்தில் சொல்வதையே மநுஷ்ய வாழ்க்கைக்கும் பொருத்தி கர்மக் கொள்கையை நம் ஆன்றோர்கள் கூறுகிறார்கள். பிரபஞ்சத்தில் ஜடமான பூதங்கள் போலவே சைதன்யம் என்ற அறிவுள்ள ஜீவன்களும் அடக்கம். இவை ஒன்று சேர்ந்துதான் லோக வாழ்வு. எனவே, ஒன்றுக்கும் இருக்கிற நியதி, தர்மம் இன்னொன்றுக்கும் இருக்கத்தான் வேண்டும். மனிதனின் ஒவ்வொரு கர்மாவிற்கும் விளைவாக ஒரு பலன் உண்டாகித்தான் தீர வேண்டும் என்பதே Karma theory. பாப கர்மம் செய்தால் அதற்காக தண்டனையை மனுஷ்யன் அநுபவிக்க வேண்டும். புண்ணிய கர்மம் செய்தால் அதற்கான நற்பலனை இவனை வந்தடையும் என்கிறது நம் மதம்.

இம்மாதிரி பாப, புண்ணிய கர்மங்களை மனிதன் அநுபவிக்க வேண்டும் என்பதனாலேயே அவனுக்குப் பல பிறவிகள் உண்டாகின்றன என்கிறது நம் மதம். நல்லது செய்ய வேண்டும், கெட்டது செய்யக் கூடாது என்பதைச் சகல மதங்களும் சொன்னாலும், அவை நம் மாதிரி இத்தனை அழுத்தம் கொடுத்து காரணம் - விளைவு (cause of effect) தொடர்பைச் சொல்லவில்லை. மறுபிறப்புக் கொள்கையை (reincarnation theory) மற்ற மதங்கள் - பாரத தேசத்தில் தோன்றாத மற்ற மதங்களில் எதுவுமே - சொல்லவில்லை. அது மட்டுமில்லை. இதற்கு மாறாகப் பல தினுசான கருத்துக்களைச் சொல்கின்றன. ஆனபடியால் அந்த மதஸ்தர்கள் மனிதனுக்குக் கர்மா தீருகிற வரை பல ஜன்மங்கள் உண்டு என்ற நம் கொள்கையை பலமாக ஆட்சேபிப்பார்கள். பொதுவாக அந்நிய மதஸ்தர் கருத்து என்னவென்றால், இந்த ஒரே ஜன்மாவோடு மநுஷ்யனுக்குப்

பிறவி தீர்ந்து விடுகிறது. இந்த ஜன்மா முடிந்தபின் அவன் உயிர் என்றைக்கோ ஒரு நாள் ஸ்வாமி கூறுகிற தீர்ப்பைக் கேட்பதற்காக ஒரிடத்தில் போய் இருக்கும். அந்த நாளில் (ழ்ஹுபீரீமீனீமீஸீமீ ஞிணீஹ்) ஸ்வாமி இவன் இந்தப் பிறவியில் செய்த பாப, புண்ணியங்களைக் கணக்குப் பார்த்து இவனை நித்திய ஸ்வர்க்க வாசத்துக்கோ அல்லது நிரந்தர நரக வாசத்துக்கோ (eternal domination) அனுப்பி விடுவார் என்பதேயாகும்.

என்னிடம் வந்த ஒரு வெள்ளைக்காரர் இப்போதெல்லாம் என்னிடம் நிறைய வெள்ளைக்காரர்கள் வந்தபடி இருக்கிறார்களே - அவர்களில் ஒருத்தர். இவர் புஸ்தகம் கிஸ்தகம் எழுதிப் பிரசித்தி பெற்றவர் - வேடிக்கையாகச் சொன்னார். அவருக்கு பைபிளில் எங்கு பார்த்தாலும் கடவுள் அன்பே உருவானவர் (God is love) என்று சொல்லிவிட்டு, இப்படிப்பட்டவர் ஒரு தப்புப் பண்ணினவனைத் துளிகூடக் கருணையில்லாமல் மீளவே வழி இல்லாத நித்திய நரகத்திற்கு அனுப்புகிறார் என்று சொல்லுவது பொருத்தமில்லாமல் தோன்றியதாம். எனவே ஒரு பாதிரியாரிடம் சமாதானம் கேட்டாராம். அதற்குப் பாதிரியார், நிரந்தர நரகம் இருப்பது வாஸ்தவம். ஆனால், நிரந்தரமாகக் காலியாகவே இருக்கிறது என்றாராம். ஆனால் யோசித்துப் பார்த்தால் இதை நாம் ஏற்றுக் கொள்வது சிரமமாக இருக்கும். ஸ்வாமி கருனை காரணமாகப் பாவியைக்கூட நரகத்துக்கு அனுப்பவில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்படியானால், அவர்கள் சித்தாந்தப்படி அவர் பாவியிந்

உயிரை எங்கே அனுப்பமுடியும். அவர்கள் கொள்கைப்படி மறு ஜென்மா இல்லையாதலால் பூலோகத்துக்கு மறுபடி அனுப்ப முடியாது. ஆனதால், பாபியையும் ஸ்வர்கத்துக்குத்தான் அனுப்ப வேண்டியதாகும். அப்படியானால் நாம் லோகத்தில் எந்த பாபபத்தை வேண்டுமானாலும் கூசாமல் செய்து கொண்டே போகலாம். முடிவில் எப்படியும் ஸ்வாமி நம்மை ஸ்வர்கத்துக்கு அனுப்பி விடுவார் என்று ஆகும். அதற்கப்புறம் லோகத்தில் சகலரும் ஒழுக்கு தப்பித்தான் நடப்பார்கள்.

நம் மதப்படியும் கர்ம பலனைத் தந்து தீர்புத் தருகிற பலதாதாவான ஈசுவரன் பரம கருணாமூர்த்திதான். ஆனால்

அதற்காக லோகம் அதர்மத்தில் மனமறிந்து விழட்டும் என்று விடுகிறவன் அல்ல அவன். அதனால் என்ன பண்ணுகிறான். நம் பாப பலனை (புண்ய பலனையும்தான்) அனுபவிப்பதற்காக நம்மை இன்னொரு ஜன்மா கொடுத்து கொடுத்து மறுபடி இந்த உலகுக்கே அனுப்பி வைக்கிறான். ஸ்வர்க்க ஆனந்தம், நரகக் கஷ்டம் இரண்டும் போன ஜன்மாவில் பண்ணியிருப்பதால் இப்போது நல்லது கெட்டது இரண்டையும் சேர்த்து அனுபவிக்கிறோம். ரொம்பப் பாவம் செய்தவர்கள் ரொம்பக் கஷ்டப் படுகிறோம். ரொம்பப் பண்ணியம் செய்தவர்கள் நிறைய சந்தோஷப் படுகிறோம். பொதுவிலே பார்த்தால் ரொம்பக் கஷ்டப் படுகிறவர்கள் அல்லது சமமாக கஷ்ட - சுகம் உள்ளவர்கள்தான் இருக்கிறோம் தவிர, தாங்கள் பரம சுகமாக இருப்பதாக நினைக்கிறவர்கள் ரொம்பவும் துர்லபமாகவே இருக்கிறார்கள். இதிலிருந்தே நாம் அனைவரும் பொதுவில் பாபமே அதிகம் பண்ணியிருக்கிறோம் என்பது புரிகிறது.

பகவான் கருனை காரணமாக, இன்னொரு ஜன்மாவிலாவது இவன் பாபத்தைக் கழுவிக் கொள்வானா என்று பார்ப்பதற்காக, ஒரு பெரிய வாய்ப்பாக (opportunity) பிறவியைக் கொடுக்கிறார். அதிலே குரு, சாஸ்திரம், க்ஷேத்திரங்கள் இத்யாதி வசதிகளை எல்லாம் கொடுத்து, இவனுடைய அழுக்கைத் துடைக்க முன்வருகிறார். இவன் கையாலாகாதவன். ஒரு நாளும் தானாக முன்னேர மாட்டான் என்று அட்யோடு உதவாக் கரையாக நினைத்து இவனுக்குப் பாவியானாலும்கூட ஸ்வர்கத்தைக் கொடுத்து விடுகிறார் என்பதைவிட இப்படி இவனைக் கூட நம்பி, இவன் தன்னைத்தானே நம்பி கடைத்தேற்றிக் கொள்வான் என்று நம்பிக்கை வைத்து, புனர் ஜன்மா தந்து, இதில் இவனுடைய நன்முயற்சிகளுக்குப் பலவிதத்தில் கைகொடுக்க ஸ்வாமி முன் வருவதாகச் சொல்வதுதான் நன்றாக இருக்கிறது. எல்லாம் உன் செயல் என்று ஜீவன் சரணாகதி செய்கிறபோது ஸ்வாமியே இவனை ஒரே தூக்காகத் தூக்கிவிடுகிறார் என்பது வாஸ்தவம். ஆனால் இவனாக முயற்ச்சியை விடுகிற சரணாகதியில் அநுக்கிரகம் செய்வது வேறு. இவனுக்கு முயற்ச்சி செய்யவே லாயக்கில்லை என்று நினைத்து அநுக்கிரகம் செய்வது வேறுதான். புருஷ யத்தனம் என்று ஒன்று இருப்பதாக நினைக்கிற வரையில் அதில் ஜீவனை நம்பிவிட்டு வைப்பதுதான் பரம கருணை. அதுதான்

நிஜமான அநுக்கிரகம்.

நிரந்தர நகரத்துக்கு ஸ்வாமி எவரையும் அனுப்புவதில்லை என்பது ஒரு தனிப்பட்ட பாதிரியாரின் அபிப்ராயம்தான். அதுவேதான் கிறிஸ்துவம் முதலான ஒரே பிறவி மதங்களின் கோட்பாடு என்று சொல்லுவதற்கில்லை. ஒரே ஜன்மத்தில்

ஒருத்தன் பண்ணுகிற புண்ணியத்துக்காக அல்லது பாபத்துக்காக அவனை ஸ்வாமி ஸ்வர்க்கம் அல்லது நரகத்துக்கு நிரந்தரமாக அனுப்பிவிடுகிறார் என்பதுதான் அம்மதங்களின் பொதுக் கருத்து, அதிலும் நாம் பொதுவாக பாபமே பண்ணுவதால் நரக தண்டனை பெறுகிறவர்கள்தான் ஜாஸ்தியாக இருப்பார்கள் என்பதால், தீர்ப்பு நாளைக்கே ரொம்பவும் பயங்கரமான பெயர் - Doomsday என்றே வைத்திருக்கிறார்கள். இது பகவானின் கருணைக்குக் குறைவாகத்தான் எனக்குத் தோன்றுகிறது.

நம் மதத்தின் புனர்ஜன்மக் கொள்கைக்கு ஆதரவாக ஒன்றை அழுத்தமாகக் காட்டலாம். வெள்ளைக்காரி ஒருத்தி என்னிடம் வந்து இந்த Reincarnation விஷயத்திற்கு நிரூபணம் (proof) கேட்டாள். நான் அவளிடம் வாதம் ஒன்றும் செய்யவில்லை. அப்போது மடத்து முகாமில் ஒரு பண்டிதர் இருந்தார். அவருக்கு இங்கிலீஸ் வரும். அவரிடம் அவளை அங்கே உள்ள பிரசவ ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டுபோய், அங்கே பிறந்திருக்கிற குழந்தைகளைப் பற்றிய விவரங்களைக் குறிப்பு எடுத்துக் கொண்டு வரும்படி சொன்னேன். அவளும் அப்படியே பிரஸவ ஆஸ்பத்திரிக்கு அவரோடு போய்விட்டு வந்து குழந்தைகளைப் பற்றிய விவரங்களைச் சொன்னாள். அதன்படி ஒரு குழந்தை கொழு கொழுவென்று இருந்தது. இன்னொன்று நோஞ்சானாக இருந்தது. ஒன்று அழகாக இருந்தது. இன்னொன்று அவலட்சணமாக இருந்தது. ஒன்று உசத்தியான வார்டில் சௌகரியமாகப் பிறந்தது. இன்னொன்று சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு நடுவே ஒரு பரம ஏழைக்குப் பிறந்தது. ஜன்மாவின் கடைசியில் பகவான் ஒருத்தரை நிரந்தர நரகத்துக்கு அனுப்புவது ஒரு பக்கம் இருக்கட்டும். அது நமக்குக் கண்ணுக்குத் தெரியாத விஷயம். இப்போது பல ஜன்மங்களின் ஆரம்பத்தைப் பிரத்யக்ஷமாகப் பார்த்தாயே. இதில் ஏன் இத்தனை ஏற்றத் தாழ்வுகள். ஏன் ஒன்று

தாரித்திரியத்திலும் இன்னொன்று சமீபத்திலும் பிறக்க வேண்டும். ஏன் ஒன்று ஆரோக்கியமாகவும் இன்னொன்று துர்பலமாகவும், ஒன்று லக்ஷணமாகவும் இன்னொன்று அவலக்ஷணமாகவும் இருக்க வேண்டும். ஜீவனுக்கு ஒரே ஜன்மாதான் உண்டு என்ற உங்கள் மதக் கொள்கையை ஒப்புக் கொண்டால், அவை ஜனிக்கிற போதே இத்தனை பாரபட்சங்கள் இருப்பதைப் பார்க்கிற போது ஸ்வாமி கொஞ்சங்கூடக் கருணை அல்லது புத்திசாலித்தனம் இல்லாமல் மனம் போனபடி கன்னாபின்னா என்று காரியம் செய்து கொண்டிருக்கிறார் என்றுதானே ஆகிறது. அப்படிப்பட்ட ஸ்வாமி கருணை செய்வார் என்று நம்பி எப்படி பக்தி செலுத்துவது. பூர்வ ஜன்ம பாப புண்ணியங்களை ஒட்டிப் புனர் ஜன்மா அமைகிறது என்ற கொள்கையைத் தவிர, நீ பார்த்த ஏற்றத் தாழ்வுக்கு என்ன காரணம் சொல்ல முடியும் என்ரு கேட்டேன். அவன் ரொம்ப சந்தோஷத்தோடு நான் சொன்னதை ஏற்றுக் கொண்டு போனான்.

ஆனால், நவீன காலத்தவர்களுக்கு இந்த விளக்கங்கள் (explanations) போதாது. ஸயன்ஸ்படி ப்ரூஃப் கேட்பார்கள். அப்படிப் பார்த்தாவலும் இப்போது பாராஸைகாலஜி க்காரர்கள் இந்த விஷயத்தில் நிறைய ஆராய்ச்சி பண்ணி ஜன்மாந்தரங்கள் உண்டு என்பதற்கு ஆதரவாக அநேக விஷயங்களைச் சொல்கிறார்கள். உலகம் முழுக்க இவர்கள் சுற்றி வந்ததில் எத்தனையோ

இடங்களில் பூர்வ ஜன்மாவை நன்றாக ஞாபகம் வைத்துக் கொண்டு சொன்ன பல பேர்களைப் பார்த்திருக்கிறார்கள். பூர்வ ஜன்மத்தில் இப்போதய இடத்துக்குத் துள்கூட சம்பந்தமே இல்லாமல் வேறு எங்கேயோ இருக்கப்பட்ட தூர தேசங்களில் தாங்கள் பார்த்தவற்றை நினைவாகச் சொல்கிற பல பேர் இருக்கிறார்கள். இந்த ஜன்மாவில் கொஞ்சங்கூடச் சம்பந்தமில்லாத பலரிடம் அப்போது இவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். அந்த விவரங்களை எல்லாம் மறக்காமல் சொல்கிறார்கள். இவர்கள் சொல்வது உண்மை தானா என்று பரிசோதித்துப் பார்ப்பதற்காக பாராஸைகால ஜிக்காரர்கள் அந்தந்த ஊர்களுக்குப் போயிருக்கிறார்கள். போனால் அங்கே ஆச்சரியப்படுகிற மாதிரி இவர்கள் சொன்ன அடையாளங்களை, இவர்கள் பூர்வத்தில்

சம்மந்தப்பட்டிருந்த மநுஷ்யர்களைப் பார்க்கிறார்கள். இது மாதிரி ஒன்று, இரண்டு அல்ல. ஏகப்பட்ட கேஸ்கள் இருக்கின்றன. நமக்கெல்லாம் முற்பிறவி சமாச்சாரங்கள் அடியோடு மறந்து போய்விட்டன. ஆனால், வெகு சிலருக்கு நினைவு இருக்கிறது. அநேகமாக இப்படிப்பட்டவர்கள் பூர்வ ஜன்மத்தில் இயற்கையாகச் செத்துப் போகாமல் (natural death) அதாவது, நோய் நொடி வந்து செத்துப் போகாமல், கொலை செய்யப்பட்டவர்களாகவோ அல்லது திடீரென்று ஒரு விபத்திலே சிக்கிக் கொண்டு அப்போது மரணமடை ந்தவர்களாகவோ இருக்கிறார்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

* * *

மனிதன் விஷயத்தில் புனர் ஜன்மாவை (reincarnation),, சொல்லுவதுப்போல், ஸ்வாமியின் விஷயத்தில் அவதாரங்களை (incernation)ச் சொல்வது ஹிந்து மதம் ஒன்றுக்கே உரிய, இன்னொரு தானியாம்சமாகும். ஸத்வஸ்து ஒன்றுதான். அதுதான் இத்தனை ஜீவராசிகளையும் ஆயிருக்கிறது என்பதே நம் மதத்தின் பரம தாத்பரியம். அப்படியானால் அந்த ஒரு பரம்பொருளே மாறி மாறி ஜனன மரணங்களுக்கு ஆளாகிற அத்தனை ஜீவராசிகளுக்கும் ஆகும். அது தவிர, இந்த ஜீவ - ஜட லோகத்தை எல்லாம் ரக்ஷிக்கிற ஈசுவரனாகவும் அது இருக்கிறது அல்லவா. இந்த ஈசுவரனுக்கு மநுஷ்யர்கள் போல் கர்ம பந்தம் இல்லை. மனிதன் கர்மத்தை அநுபவிக்கத்தான் பல ஜன்மா எடுக்கிறான். ஈசுவரன் இப்படி எடுக்க வேண்டியதில்லை. ஆனால், புதுப் பிறவிகளில் இந்த ஜீவன் பழைய கர்மத்தைக் கழுவிக் கொள்ளாமல் மேலே மேலே சேற்றை வாறிப் பூசிக் கொள்கிறானே என்பதைப் பார்த்து, அவனுக்கு வழிகாட்டி, கைதூக்கி விடுவதற்காகப் பரம கருணையுடன் ஈசுவரனுக்கும் பூலோகத்தில் பலமுறை அவதரிக்கிறான். அதர்மம் ஓங்கி, தர்மம் நலிக்கிற போக்கு உச்சமாகிற போது, அதர்மத்தை ஒட்டி, தர்மத்தை நிலை நாட்டுவதற்காகவும், ஸாதுக்களை ரக்ஷித்து, துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காகவும் பகவான் பல அவதாரங்கலைச் செய்கிறான் - கிருஷ்ண பரமாத்மா கீதையில் இப்படிச் சொல்லியிருக்கிறார்.

எல்லாமே ஸ்வாமி என்பது ஒரு நிலை. அது நம்மால் கிரகிக்க

முடியாத நிலை. அப்புறம் உயர்வானதியெல்லாம் ஸ்வாமி விசேஷமாகப்

குடிகொண்டிருப்பதாகக் கீதையின் விபூதி யோகத்தில் சொன்ன நிலை. மனித வாழ்வில் இந்த உயர்வை ஏற்படுத்துவதற்காகத் தூதர்களாக அவர் ஆச்சர்ய புருஷர்கள், மகான்கள், ஞானிகள், யோகிகள், பக்திமான்களை அனுப்பி வைப்பதது ஒரு நிலை. இதெல்லாமும் போதவில்லை என்று, தானே ஓர் அவதாரமாக இந்த லோகத்துக்கு இறங்கி வருகிறது ஒரு நிலை. அவதரணம் என்றால் இறங்கி வருவது என்றே அர்த்தம். பாரத்துக்குப் பாரமாக, பராத்பரமாக - அப்பாலுக்கு அப்பால் என்பார்கள். அப்படி இருக்கப்பட்ட ஈசுவரன் இறங்கி வந்து, நமக்கு நடுவில் பிறந்து தர்ம ஸ்தாபனம் பண்ணுவது அவதாரம் எனப்படுகிறது.

சித்தாந்த சைவர்கள் சிவபெருமான் அவதரித்ததாக ஒப்புக் கொள்வதில்லை. ஆதி சங்கர பகவத்பாதாள் ஈசுவராவதாரம், ஞானசம்பந்தர் முருகனின் அவதாரம் என்றெல்லாம் சொல்வதை அவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். கர்ப்பவாசம் செய்வது, மாம்ஸ மயமான நரகதேசத்தில் இருப்பது எல்லாம் ஸ்வாமிக்கு இழுக்கு என்பது அவர்களுடைய அபிப்பிராயம். அத்வைதிகளுக்கோ கர்ப்பவாஸம் செய்த மாம்ஸ சரீரத்தில் இருக்கிற இத்தனை பேருமே ஸாரத்தில் பிரம்மம்தான். ஆகையால், ஈசுவராவதாரத்தில் அவர்களுக்கு நிஷித்தமாக எதுவும் தெரியவில்லை. ஸித்தாந்த ரீதியில் வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் பல ஒற்றுமையிருந்த போதிலும், பிரம்மமேதான் ஜீவனாயிருக்கிறது என்ற அத்வைதத்தை வைஷ்ணவர்கள் அப்படியே ஒப்புக் கொள்ளாத போதிலும், வைஷ்ணவர்கள் யாவரும் அவதார கொள்கையை ஒப்புக் கொள்கிறார்கள். பொதுவாக லோக வழக்கிலும் அவதாரம் என்றாலே மகாவிஷ்ணுவின் தசாவதாரங்கள்தான் நினைக்கப்படுகின்றன. வைஷ்ணவங்கள் அவதாரங்களை ஒப்புக் கொள்வதற்குக் காரணம், பகவான் பரம கருணையன் ஆனபடியால் ஜனங்கள் உஜ்ஜீவிக்கச் செய்வதற்காகத் தன்னை எவ்வளவு வேண்டமானாலும் குறைவுபடுத்திக் கொள்வான் என்று அவர்கள் நம்புவதுதான்.

உள்ளுக்குள்ளே தான் ஸ்வாமியே என்று நன்றாகத் தெரிந்து கொண்டு, வெளியில் ஏதோ, மநுஷ்யன் போல் வேஷம் போடுவதால், அவருக்க்குக் கொஞ்சங்கூட தோஷமோ, குறைவோ வந்துவிடவில்லை..

மொத்தத்தில் ஹிந்து மதம் எனப்படும் வைதிக நெறி அவதாரக் கொள்கையை ஏற்கிறது என்றே சொல்லி விடலாம். ஏனென்றால், சைவர்களும் தங்களது முழுமுதற் கடவுளான சிவ பெருமான் அவதரிப்பதில்லை என்று சொன்ன போதிலும், மகாவிஷ்ணு தசாவதாரம் செய்ததாக ஒப்புக் கொள்கிறார்கள்.

* * *

அரூபமான ஒரே பரமாத்மா பல ரூபங்களில் பல தேவதைகளாக வருகிறதென்று சொல்லி, அவற்றுக்காக விக்கிரக ஆராதனைகளை ஏற்படுத்தியிருப்பது நம் மதத்தின் இன்னொரு பிரத்தியோக அம்சம். இதனால் அந்நியர்கள் நம்மைப் பல தெய்வக் கொள்கையினர் (poly-thesis) என்கிறார்கள். இப்படிச் சொல்வது சுத்தத் தப்பு. ஒரே தெய்வத்தைப் பல ரூபங்களில் வழிபடுவது பல தெய்வங்கள் இருப்பதாக எண்ணுவதாகாது. அவ்வாறே ஹிந்துக்கள் விக்கிரகம்தான் ஸ்வாமி என்று நினைத்து, விக்ரஹ ஆராதனை (ldolatry) செய்கிறார்கள் என்பதும் முழுப்

பிசகு. விக்ரஹம் மட்டும்தான் ஸ்வாமி என்று விஷயமறிந்த ஹிந்து எவனும் நினைக்க மாட்டான். எங்குமுள்ள ஸ்வாமி இவன் மனஸை ஒருமுகப்படுத்தி ஆராதிக்க வசதியாக இந்த விக்ரஹத்தில் இருப்பதாகத்தான் நினைத்து ஆராதிக்கிறான். எந்த மதமானாலும் சின்னங்கள் (symbol) வைத்துப் பூஜிப்பதையோ, தியானிப்பதையோ பார்க்கிறோம். அப்படி இருக்க, ஹிந்துக்களின் மூர்த்தியை மட்டும் உருவ வழிபாடு என்பதையோ, அதற்காகப் பரிகசிப்பதோ துளிக்கூட நியாயமற்றதாகும்.

ஹிந்து மதஸ்தர்கள் ரொம்பவும் பெருமைப்பட வேண்டிய அம்சம். இந்த மதம் ஒன்றுதான் தன்னை அநுசரிப்பதுதான் மூலமே ஒரு ஜீவன் உய்வு பெற முடியும் என்று ஒரு தனி உரிமை (exclusive right) கொண்டாடிக் கொள்ளாமலிருப்பதேயாகும். யார் யார் எந்தெந்த

சமயமார்கத்தில் போனாலும் கடைசியில் ஒரே பரமாத்மாவிடம் வந்து சேருவார்கள் என்பதை ஒப்புகி கொள்கிற விசால மனப்பான்மை (CATHOLIC OUTLOOK) நம் சாஸ்திரங்களிலேயே காணப்படுகிறது. இதனால்தான் பிறரை ஹிந்துவாக மத மாற்றம் (CONVERSATION) செய்ய நம் சாஸ்திரங்கள் இடம் கொடுக்கவில்லை.

இயேசு கிறிஸ்வின் உபதேசங்களைப் பின்பற்றாதவர்கள ாகளெல்லாம் நரகத்துக்குத்தான் போவார்கள். முகமதுநபி (PROPHET)யின் உபதேசத்தை அநுசரிக்காதவர்களுக்கு கதி மோக்ஷம் கிடையாது என்றெல்லாம்தான் அந்தந்த மதஸ்தர்கள் சொல்கிறார்கள். அவர்களிடம் நாம் கோபப்படக்கூடாது. அவர்கள் வாஸ்தவமாகவே அப்படி நினைக்கலாம். அந்தந்த மதத்தில் இருப்பதால் தங்களுக்கு கிடைத்திருக்கிற நிறைவைப் பார்த்து, மற்றவர்களுக்கு இத்தனை நிறைவு இருக்கமுடியாது என்று நினைத்து, நல்லெண்ணத்தின் பேரிலேயே மற்றவர்களையும் தங்கள் வழிக்கு மாற்ற ஆசைப்படுகிறார்கள் என்றே வைத்துக் கொள்ளலாம். வெளிப் பார்வைக்குக் கெடுதலாக தோன்றுகிற வழிகளைக் கடைபிடித்தாவது ஒரு நல்ல லக்ஷியத்தைச் சாதிக்கலாம் என்று நினைத்தே அவர்கள் பலவிதமான முறைகளைக் கையாண்டு மற்றவர்கலைத் தங்கள் மதத்துக்கு இழுக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளலாம். அவர்கள் படை எடுத்து, சண்டை போட்டு, வாள் மூலம்கூட மதமாற்றத்தைச் செய்தது இப்படித்தான் என்று வைத்துக் கொள்ளலாம். இஸ்லாம் பெரும்பாலும் ஆயுத பலத்தாலேயே விஸ்தரிக்கப்பட்டது. கிறிஸ்துவ மதம் பணபலத்தால் விஸ்தரிக்கப்பட்டது என்று சொல்லுவது முண்டு. கிறிஸ்தவர்களும் படை எடுப்புக்கள் செய்தார்கள். ஆனால் மிஷனரிகளின் பரோபகாரப் பணியும் சேர்ந்து கொண்டது. பாலைவனமான அராபிய தேசத்தைச் சேர்ந்த முஸ்லீம்களுக்கு இல்லாக பணவசதி வெள்ளைக்காரர்களிடம் இருந்தது. மிஷனரிகள் பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி என்றெல்லாம் வைத்து, ஏழை எளியவர்களை அழைத்து அப்படியே அவர்களை தங்கள் மதத்தில் தள்ளிக் கொண்டார்கள்.

பலவந்தத்தையோ அல்லது உதவிக்காட்டி வசீயப்படுத்துவதையோ நாம் ஏற்காமலிருக்கலாம். ஆனால்

தங்கள் மதத்தைப் பரப்பினால் எல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகும் என்று அவர்கள் நிஜமாகவே நம்பியிருப்பார்கள் என்பதை நாம் சந்தேகிக்க வேண்டாம்.

ஆனால், அவர்கள் நம்பிக்கை சர்தானா. கிறிஸ்துவ, நபியைப் பின்பற்றா விட்டால் நகரந்தானா. கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் இந்தத் தனி பாத்தியதை (exclusive right) செல்லுபடியாகாது என்று தெரிகிறது. ஏனென்றால் கிறிஸ்து வந்து இரண்டாயிரம் வருஷங்கள்தான் ஆகிறது. நபி பிறந்து 1400 வருஷங்கள்தான் ஆகிறது. அதற்குமுன் ஆயிரம், பதினாராயிரம், லக்ஷம் வருடங்களாகப் பிறந்து செத்துப் போனவர்கள் எல்லோரும் என்ன ஆனார்கள். இவர்களுடைய சித்தாந்தப்படி அவர்கள் கிறிஸ்து அல்லது நபியை தங்கள் ரக்ஷகராகக் (Saviour) கொள்ளாததால், சிருஷ்டி தோன்றிய நாளிலிருந்து அன்றுவரை வந்தவர்களெல்லாம் நரகத்துக்குத்தான் போயிருக்க வேண்டும். இப்போது இந்த மதங்களில் இருக்கிறவர்களின் முன்னோடிகள் இந்த மத ஸ்தாபகர்களின் முன்னோர்கூடத்தான் ஸ்வர்கம் போயிருக்க முடியாது.

இவர்கள் ஹிந்துக்களைப் போல்ப் பல ஜன்மங்கள் உண்டு என்பதையும் ஒப்புக் கொள்ளவில்லை. அப்படி ஒப்புக் கொண்டாலாவது கிறிஸ்துவுக்கும், நபிக்கும் முற்பட்டவர்கள் மறுபடி மறுபடி பிறக்கிறபோது இந்த இரண்டு பேருக்குப் பிற்பாடும் ஜன்மா எடுத்து, இவர்களை அநுசரிக்கிற வாய்ப்பு (chance) பெற்று, கதிமோக்ஷம் அடைய வழியிருக்கிறது என்று சமாதானம் சொல்லலாம். ஆனால் இந்த மதங்களிலோ ஜீவனுக்கு ஒரே ஜன்மாதான் என்று சொல்லியிருக்கிறது. ஆதலினால், எத்தனையோ ஆயிரம், பல்லாயிரம் ஆண்டுகளாகத் தோன்றிய இத்தனை ஜன்மங்களும் கூண்டோடு நகரத்துக்குத்தான் நிரந்தர வாசமாகப் போயிருக்க வேண்டும் என்றாகிறது. தான் சிருஷ்டித்த ஜனங்களுக்கு லக்ஷோபலக்ஷம் வருஷங்கள் வழிகாட்டுகிற ஆச்சார்யர்களையே அனுப்பி வைக்காமல், அவர்களை மீளா நரரத்தில் போடுபவனாக ஒரு கடவுள் இருக்கிறான் என்றால், அப்படிப்பட்ட இரக்கமே இல்லாத கடவுளை எதற்காக ஆராதிக்க வேண்டும். அதாவது கடவுளை அடைவதற்காக ஏற்பட்ட மதமே வேண்டாம் என்று சொல்லி விடலாம்.

பலவிதமான தேசங்கள், அவற்றில் பலவிதமான சீதோஷ்ண ஸ்திதிகள், அதற்கேற்ற பயிர் பச்சைகள், இவை எல்லாவற்றுக்கும் அநுகுணமாக பிற்பாடு ஒரு பண்பாடு என்று லோகத்தில் இருக்கிறது. இதில் எல்லாவற்றுக்கும் இடம் கொடுப்பதான வேதம்தான் ஆதியில் எல்லாவிடத்திலும் இருந்திருக்கிறது. பிற்பாடு அங்கங்கே ஜனங்களின் ஆசை அபிலாஷைகள் மாறி மாறி, அதிலிருந்தே அந்தந்தச் சூழலுக்கு ஏற்ற அநுஷ்டானங்களை உடைய வேறு மதங்கள் வந்திருக்கின்றன. அதனால்தான் எந்த மதத்தைப் பார்த்தாலும் இப்போது அநுஷ்டானத்தில் இருக்கப்பட்ட மதங்கள், இந்த மதங்களுக்கு முன்னால் அந்த தேசங்களில் இருந்த பூர்வீக மதங்கள் இவற்றில் எதைப் பார்த்தாலும் அதிலெல்லாம் வைதிக மதத்தின் அம்சங்கள், சின்னங்கள் இருக்கின்றன. பாரத தேசத்தில் மட்டும் அந்த ஆதி மதமே தங்கி விட்டது. அதற்கப்புறமும் அது காலத்தால் தனக்கு பிற்பட்ட மதங்களை கௌரவ புத்தியுடனேயே பார்த்திருக்கிறது. அந்த அன்னிய ஜனங்களின் பக்குவத்தை ஒட்டியே இந்த அன்னிய மதங்கள் தோன்றியிருக்கின்றன. இவையே அவர்களுக்கு சிரேயஸைத் தரும் என்று கருதியிருக்கிறது. தான் வாழ்ந்து மற்றவர்களையும் வாழ விடுவது. (live and let live)

என்று சொல்கிறார்களே அந்த உத்திஷ்டமான கருத்தே ஹிந்து மதத்தின் லட்சியமாக இருந்திருக்கிறது. அதோடுகூட மற்ற தேசத்தினருக்கு ஆத்மசிரேயஸ் அளிக்கக் கூடிய பௌத்தம், ஜைனம் முதலிய மதங்களையும் தானே பெற்றெடுத்து வெளி நாடுகளுக்கு அனுப்பி வைத்திருக்கிறது.

இது வரையில் தத்வ ரீதியில் (philosophical), வழிபாட்டு ரீதியில் (theological) ஹிந்து மதத்தில் இருக்கிற விசேஷ அம்சங்கள் சிலதைச் சொன்னேன்.

இவற்றோடு சமூக ரீதியில் (sociological) நம் மதத்துக் கென்று ஒரு பெரிய தன் அம்சம் இருக்கிறது.

எந்த மதத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, அதில் ஃபிலாஸஃபி (தத்வம்), தியாலஜி (தெய்வ வழிபாடு) இரண்டும் வரும். அதோடு தன் மனிதர் ஒழுக்கம் பற்றியும் ஏதோ கொஞ்சம் வரும். அண்டை வீட்டுக்காரனைச் சகோதரனாக எண்ணு விரோதியையும் நண்பனாக நினை.

உன்னிடம் மற்றவர் எப்படியிருக்க வேண்டும் என்று நினைக்கிறாயோ அப்படியே நீ மற்றவர்களிடம் இரு. ஜீவ குலத்திடம் எல்லாம் அன்பாக இரு. சத்தியமே பேசு. அஹிம்சையை கடைபிடி. என்று உபதேசிக்கிற நெறிகள் - ethics- ஒவ்வொரு மதத்திலும் இருக்கும். தர்மம் morality எல்லாம் இதில் சேரும். ஒரளவுக்கு இத்லேயே சமூக அம்சம் (ஸோஷாலாஜிகல் என்று சொன்னேனே அந்த அம்சம்) இருக்கிறது எனலாம். ஆனால் ஒரளவுக்குத்தான். மற்ற மதங்களில் சமூக வாழ்க்கையியல் அமைப்பைப் பற்றிய விஸ்தாரமான பிரஸ்தாபம் கிடையாது.

ஆனால் ஹிந்து மதத்தில் மட்டும் சமூக வாழ்வுக்கான அடிப்படை (sociological foundation) ரொம்பவும் கெட்டியாக, வர்ணாச்ரம தர்மம் என்ற விசேஷமான அம்சம் உண்டாயிருக்கிறது.

வர்ண தர்மம் என்பது ஒன்று. ஆசாரம தர்மம் என்பது இன்னொன்று, தனி மநுஷ்யன் இன்னின்ன பிராயத்தில் இப்படியிப்படி இருக்க வேண்டும் என்பது ஆசிரம தர்மம். முதலில், சின்ன வயசில் பிரம்மச்சாரியாக இருந்து குருகுலத்தில் வித்தியாப்பியாசம் பண்ண வேண்டும். இரண்டாவது யௌவனத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடித்தனம் நடத்திப் பிரஜாவிருத்தி செய்ய வேண்டும். மூன்றாவதாக வயசான பின் வீட்டு வாசலை விட்டு, லௌகீக சம்பந்தங்களை அடியோடு கத்தரித்துவிட்டு, சன்யாசியாகிப் பரமாத்மாவிடமே மனஸைச் செலுத்த வேண்டும் என்று விதிப்பது ஆசிரம தர்மம். இந்த ஆசிரமங்களுக்கு பிரம்மச்சர்யம், கார்ஹஸ்தானம் (க்ருஹஸ்த தர்மம்) வானப்ரஸாதம், ஸந்நியாசம் என்று பெயர். இது தனி மனிதனுக்கான தர்மம்.

சமூகம் society முழுவதற்குமான ஏற்பாடுதான் வர்ண தர்மம் என்பது. இப்போது ரொம்பவும் கண்டனத்துக்கு (criticism) ஆளாகியிருப்பது இந்த வர்ண தர்மம்தான். வர்ண தர்மத்தை ஜாதிப் பிரிவினை என்று பொதுவில் சொல்கிறார்கள். ஆனால் உண்மையில் வர்ணம் வேறு. ஜாதி வேறு. வர்ணங்கள் நாலுதான். ஜாதிகளோ ஏகப்பட்டவை, பிராம்மணர் என்ற ஒரே வர்கத்தில் அய்யர், அய்யங்கார், ராவ் என்று பல ஜாதிகள் இருக்கிறது. நாலாவது வர்ணம்

ஒன்றிலேயே பிள்ளா, ரெட்டியார், நாயகர் என்று பல ஜாதிகள் வருகின்றன. வேதத்திலும் (யஜுர் வேதம் - முன்றாவது அஷ்டகம் - நாலாவது ப்ரச்னம்) தர்ம சாஸ்திரத்திலும் பல

ஜாதிகள் பேசப்படுகின்றன. அந்தப பெயருள்ள ஜாதிகள் இப்போது இல்லை. அதெப்படியானாலும் ஜாதிகள் பல. வர்ணங்கள் நாலே நாலுதான். நம் மதத்துக்கே பெரிய களங்கம். மநுஷ்யர்களிடையே உசத்தி - தாழ்த்தி என்று பேதம் கற்பிக்கிற பொல்லாத ஏற்பாடு என்று இப்போது நினைக்கப்படுகிற வர்ண தர்மம் என்ன என்று, நன்றாக பக்ஷபாதமில்லாமல் ஆராயாந்து பார்த்தால், சமுதாய வாழ்வின் ஒழுங்குக் காகவே ஏற்பட்ட ஒப்பற்ற சாதனம் அது என்று தெளிவாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### தர்மங்களின் பாகுபாடு

சமுதாய வாழ்வுக்குப் பல காரியங்கள் நடந்தாக வேண்டியிருக்கிறது. புத்தியினால் செய்கிற காரியங்கள், சரீரத்தால் செய்கிற காரியங்கள் இவற்றில் பல பல தினுசுகள் இத்தனையும் ஜன சமூகம் சுபிட்சமாக இருப்பதற்கு அவசியமாக இருக்கின்றன. இதில் ஒரு தொழில் உயர்வு, ஒரு தொழில் தாழ்வு என்று நினைத்தால் அது சுத்தத் தப்பு.

நம் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் அரிசி வேண்டும். உப்பு வேண்டும். துணி வேண்டும். புஸ்தகம் வேண்டும். இன்னும் எத்தனையோ வேண்டும். அதற்காக நாம் ஒவ்வொருவரும் தானியங்கள் பயிரிட்டுக் கொண்டும், உப்புக் காய்ச்சிக் கொண்டும், துணி நெய்கு கொண்டும், புஸ்தகம் அச்சுப் போட்டுக் கொண்டும் இருக்க முடியுமா. உழுகிறவன் தனக்காக மட்டுமில்லாமல் எல்லோருக்காகவும் விளைவிக்கிறான். துணி நெய்கிறவன் எல்லோருக்காகவும் நெய்கிறான். இப்படியே சமுதாயம் முழுவதற்குமாகச் சிலர்

வியாபாரம் செய்கிறார்கள். சிலர் யுத்தம் செய்கிறார்கள். இப்படியே லோகம் முழுவதற்கும் ஆத்ம க்ஷேமம் ஏற்படச் சிலர் தியானமும் யாகமும் பூஜையும் செய்து கொண்டு லோகோபகாரமான சாஸ்திரங்களை ரக்ஷித்து வரவேண்டும். இப்படிப் பரஸ்பரப் பிரயோஜனத்துடன் ஜனங்கள் பல தொழில்களைப் பங்கீடு செய்து கொண்டு சௌஜன்யமாக வாழவே நம் தர்ம சாஸ்திரகங்கள் அழகாக வழி வகுக்கின்றன.

எப்படிப் பங்கீடு செய்வது. அவரவர் தகுதியை வைத்து என்றால், எல்லோருமே தங்கள் தகுதியை அதிகமாகத்தான் நினைத்துக் கொண்டிருப்பார்கள். அவரவர் மனோபாவத்தை வைத்து என்றால் எல்லாரும் அந்தஸ்தான வேலைக்குத்தான் ஆசைப்படுவார்கள். அப்படியானால், மற்ற காரியங்கள் என்ன ஆவது. எல்லாக் காரியங்களிலும் ஜனங்களைச் சமூக வாழ்விற்கு இசைவாக நிரவி வைப்பது எப்படி. இப்போது நிரவி விட்டால் மட்டும் போதாது. தலைமுறைக்கு எப்படி நிரவுவது. தகுதி, மனோபாவம் இவற்றை வெளியிலிருந்து பரீக்ஷித்து முடிவு பண்ணுவது எப்படி முழுக்க சரியாக இருக்க முடியும். எல்லோரும் எல்லாவற்றுக்கும் போட்டி போடலாம் என்றால் இதெப்படி சாத்தியமாயிருக்கும். யார் நிரவுவது எப்படி நிரவுவது இதனால்தான் தொழில்களைப் பாரம்பரியமாக நிரவி வைத்து வர்ண தர்மம் என்று ஏற்படுத்தினார்கள்.

எந்தத் தொழிலானாலும் சரி. பாரம்பரியமாக வாய்ந்த அதைப் பரமேசுவரன் விதித்த ஆக்ஞையாக, லோக க்ஷேமார்த்தம் செய்கிறேன் என்று உணர்ந்து செய்தால், அதுவே ஒருத்தனுக்கு ஆத்ம க்ஷேமார்த்தமாகவும் ஆகிறது. ஒவ்வொரு

காரியத்தில் உள்ள ஜீவனும் கடைந்தேறுவதற்கு அநுகூலமாக வெவ்வேறு அநுஷ்டானங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. உடல் வருத்த உழைக்கிறவனை உபவாசம் இரு என்றால் அவனால் முடியுமா. புத்தியினால் காரியவங்களைச் செய்கிறவனுக்குச் சரீர போக்ஷணம் அவசியமில்லை. அவர்கள் சரீராபிமானம் நீங்கவே அதிக அநுஷ்டானங்கள் இருக்கின்றன என்று புரிந்து கொண்டால் சண்டைக்கு இடமே இல்லை.

நமக்கு அர்த்தம் தெரியவில்லை என்பதால் இந்த ஆச்சாரங்களை விட்டுவிடாமல், பின்பற்றப் பிரயத்தனம் பண்ணி வந்தால், பிற்காலத்தில் நமக்கு அர்த்தம் தெரிகிறபோது உதவும். அவரவரும் தங்களுடைய தர்மத்தை ரக்ஷித்துக் கொள்வதோடு, மற்றவர்களும் அவர்களது தர்மத்தை ரக்ஷித்துக் கொள்ள உதவி செய்வது சிலாக்கியமாகும். உனக்கேன் அந்த தர்மம். நீங்க என்னோடு வா அல்லது நானும் உன் தர்மத்தை எடுத்துக் கொள்வேன் என்று போட்டி போடாமல், மற்றவன் தன் தர்மத்தை விட நினைத்தாலும் அப்பா நீ அதிலேயே இரு. அதுதான் உனக்கும் க்ஷேமம். எனக்கும் க்ஷேமம் என்று சொல்ல வேண்டும்.

காரியங்கள் செய்வதில் ஒருத்தன் உயர்ந்தவன், ஒருத்தன் தாழ்ந்தவன் என்பது இல்லை. சமூகம் ஒழுங்காக நடக்க வேண்டும் என்பதால் பலவாகப் பிரித்து பல காரியங்களைச் செய்ய சாஸ்திரம் வழி சொல்கிறது. அனைவரும் மனசு போனபடி காரியம் செய்ய ஆரம்பித்தால் பொதுக் காரியம் செய்ய ஆரம்பித்தால் பொதுக் காரியம் ஒழுங்காக நடக்காது. ஏனென்றால், இன்றைக்கு ஒவ்வொருத்தனும் பிறன் பணம் எல்லாம் தன் பர்ஸுக்குள் வரவேண்டும் என்ற ஒரே ஆசைதான் இருக்கிறது. நிறையப் பணம் கிடைக்கிற வழிகளில்தான் எல்லாரும் இறங்குவார்கள். இதில் லோக க்ஷேமத்துக்கு அநுகூலமாக தொழில் பாகுபாடு இருக்காது. எனவே அவரவரும் பரம்பரைக் கிரமமாக வந்த காரியங்களையும் அநுஷ்டானங்களையுமே பின்பற்றிவந்தால் ஜன சமூகத்தில் போட்டி, பொறாமை இல்லாமல் பொதுக்காரியம் நடப்பபதோடு, அவரவருக்கும் ஆத்ம பரிசுத்தியும் உண்டாகும். சீர்திருத்தம் (reform) என்று சொல்லிக்கொண்டு சீர்குலைக்காமல் (deform) இருக்க வேண்டுமானால் இதையெல்லாம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

யார் எந்தத் தொழில் செய்தாலும் எல்லோருக்கும் சாப்பாடு, துணி, வீடு ஆகிய அத்தியாவசியமான வசதிகளைத் செய்துதரச் சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறது. இதற்கு மேல் தேவைகளை அதிகரித்துக் கொண்டு போனால்தான் போட்டி, பொறாமை எல்லாம் உண்டாகிறது. இப்போது எல்லா

நிறைவும் பணநிறைவு என்ற ஒன்றாக இருப்பதால்தான் இத்தனைக் குழப்பங்கள். இது மாறி, தன் காரியத்தை ஒழுங்காகச் செய்தால் ஏற்படுகிற நிறைவே அவரவருக்கும் ஸ்வாமி என்ற மனோபாவம் வர வேண்டும். அப்போது எங்கும் சாந்தமாக இருக்கும்.பலவித தின்பண்டங்கள் உள்ளன. பல ராகங்கள் உள்ளன. அதுபோல சமூகத்தில் பல காரியங்கள் நடக்க வேண்டும். ரசத்தில் உப்பு போட்டிருக்கிறதே என்று பானகத்தில் உப்பு போட்டால் அது ரஸாபாஸம். ஒரு ராகத்தில் இன்னொரு ராகத்தின்ஸ்வரத்தைச் சேர்த்தால் அது ரஸாபாஸம். இப்போது ஜனங்களுக்கு ரஸனைகளைப் பற்றிய ருசியே போய்விட்டது. உருக்கமான புராணக்கதை நடுவே பாகவதர்கள் கேலிப் பேச்சுக்கு வருகிறார்கள். இதை

ஜனங்களும் ரஸிக்கிறார்கள். எத்தனையோ நல்ல போஜந வகைகள் இருக்கும் போது ருசியும் இல்லாமல், ஆரோக்கியத்துக்கும் உதவாமல் இருக்கிற புகையிலையைப் புகைக்கிறார்கள். இவை சின்ன ரஸாபாஸங்கள். பெரிய ரஸாபாஸம், பொது தர்மத்துக்கு அநுகூலமாக பல விசேஷ தர்மங்களை வகுத்துத் தரும் வர்ணங்களைப் போட்டுக் குழப்புவதே!

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### வர்ண தர்மம்

பழைய காலத்தில் செத்தை எரிமுட்டை எல்லாவற்றையும் கொளுத்திப் போட்டே அடுப்பு மூட்டுவார்கள். மழை நாளில் அடுப்பு பிடித்துக்கொள்ள ரொம்ப சிரமமாயிருக்கும். நாலு நெருப்புப் பொறி கிளம்பினால்கூட போதும். உடனே விசிறு, விசிறு என்று விசிறி அதைப் பற்ற வைத்து விடுவார்கள். அதுமாதிரி, இன்னமும் முழுக்க அணைந்து போகாமல், ஒரு சில பெரியவர்களிடமாவது இருக்கிற நாலு பொறி ஸநாதன

தர்மத்தை ஊதி ஊதி எல்லாரிடமும் பரவச் செய்யலாம் என்பது என்னுடைய பேராசை. அதனால்தான் இதை எல்லாம் சொல்கிறேன்.

நம்முடைய ஸநாதன மதத்தில் மற்ற மதங்கள் எதிலுமே இல்லாத வர்ணம் தம்மம் இருப்பதால், இது அவசியமில்லை என்று எடுத்துப் போட்டுவிட்டு நம் மதத்தையும் மற்றவை மாதிரி ஆக்கிவிடவேண்டும் என்று சீர்திருத்தக்காரர்கள் சொல்கிறார்கள்.

சரி, மதம் என்பது என்ன?. ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதற்கு வைத்தியம் சொல்வதுதான் மதம். ஒரு நோயாளிக்கு என்ன வியாதி வந்திருக்கிறது. அது இன்ன மருந்தைத் தந்தால் சொஸ்தமாகும் என்பது வைத்தியனுக்குத் தான் தெரியும். தங்களுக் கென்று ஒரு பொருளையும் தேடிக் கொள்ளாமல், பரமத் தியாகத்துடன் வாழ்ந்து லோக க்ஷேமத்தையே நினைத்த ரிஷிகள், தர்ம சாஸ்திரக்காரர்கள், இப்படித் தந்திருக்கிற மருந்துதான் நமது ஸநாதன தர்மம். மற்ற தேசங்களில் வேறு வைத்தியர்கள் வேறு மதங்களை மருந்தாகத் தந்திருக்கிறார்கள். நம் உடம்புக்கு மருந்து தருகிற டாக்டரிடம், அந்த டாக்டர் அப்படி ட்ரீட்மென்ட் செய்கிறார். நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களே. என்றால் அவர் கேட்டுக் கொண்டிருப்பாரா. வைத்திய சாஸ்திரத்தில் பல தினுசுகள் உண்டு. ஒன்றில் கடும் பத்தியம் இருக்கும். ஒன்று லகுவாக இருக்கும். ஒன்றில் மருந்து கசக்கும். இன்னொன்றில் மருந்து தித்திக்கும். இதையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று சொல்லாமல், அவரவரும் எந்த வைத்திய முறையை மேற்கொள்கிறார்களோ அதையே விடாமல் பின்பற்றினால் எந்த முறையிலும் சொஸ்தம் அடையலாம்.

மற்ற மதங்களில் சகல பிராணிகளுக்கும் அவசியமான பொது தர்மங்களை மட்டும் சொல்லியிருக்கிறது. அவற்றை நம் வைதிக மதமே ஸாமானிய தர்மங்கள் என்ற பெயரில் சர்வ ஜனங்களுக்கும் வித்தித்திருக்கிறது. அஹிம்ஸை, சத்தியம், தூய்மை, புலனடக்கம் தேவைக்கு அதிகமாக ஒரு துரும்பைக்கூடத் தனக்கென்

வைத்துக் கொள்ளாமலிருப்பது, தெய்வ பக்தி, மாதா பிதா விடம் விசுவாஸம், சகல ஜீவராசிகளிடத்துலும் சமமான அன்பு, இவை எல்லாம் எல்லாருக்கும் நம் மதத்தில்

விதிக்கப்பட்ட ஸாமான்ய தர்மங்கள். அது தவிர வர்ணம் என்ற பெயரில் சமூகத்தைப் பரம்பரை ரீதியில் வெவ்வேறு தொழில்களாகப் பல பிரிவாகப் பிரித்து சில விசேஷ தர்மங்கள் அவரவருக்கும் விதிக்கப்படிருக்கின்றன.

இந்த விசேஷ தர்மங்களையும் சாமானியமாக்கியிருந்தால் அவற்றை எவருமே அநுஷ்டிக்காத நிலையில்தான் உண்டாக்கியிருக்கும். இதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன். புத்த மதத்தில் மாமிசம் உண்ணக்கூடாது என்பதைப் பொது தர்மமாக வைத்தார்கள். ஆனால் இன்று பௌத்த தேசங்களில் என்ன பார்க்கிறோம். எல்லோருமே மாமிசம் உண்பவர்களாக இருக்கிறார்கள். நம் ரிஷிகளும், தர்ம சாஸ்திரக்காரர்களும் மநுஷ்ய சுபாவம் நன்றாகத் தெரியும். அதனால் புலால் உண்ணாமையைச் சிலருக்கு மட்டுமே விசேஷ தர்மமாக வைத்தார்கள். இதைப் பார்த்து மற்றவர்கலும் விரதங்கள், நோம்பு நாட்கள், மூதாதையார் திதி ஆகிய தினங்களில் மாமிச உணவை நீக்கி விடுகிறார்கள்.

எல்லா தர்மங்களையும் பொதுவாக வைத்த ஒவ்வொரு தேசத்தின் பழைய மதமும் அடியோடு விழுந்து விட்டிருக்கின்றன. மேற்கே கிரீஸில் இருந்த ஹெல்லெனிக் மதம் மத்திய ஆசியாவில் இருந்த ஹீப்ரு மதங்கள் எல்லாம் போன இடம் தெரியவில்லை. கிழக்கே கன்ஃபூஷியஸ் மதம், ஷீன்டோ மதம் எல்லாம் ஏதோ குஞ்சம்தான் இருக்கின்றன. இவற்றிடத்தில் வந்துள்ள கிறிஸ்தும், இஸ்லாம், பௌத்தம் முதலியவற்றிலும் பொதுவாக ஒரே தர்மம்தான் உள்ளதே தவிர, அதோடுகூட தனித்தனி வர்ணங்களுக்கான விசேஷ தர்மம் என்ற பாகுபாடு இல்லைதான். ஆனால் இந்த மதங்களில்கூட இப்போது அந்தந்த தேசத்து மக்களுக்கு நிறைவு போய்க்கொண்டுதான் இருக்கிறது. மத நம்பிக்கையற்றவர்கள் இந்த எல்லா தேசங்களிலும் அதிகமாகிக்க கொண்டுதான் இருக்கிறார்கள். ஒன்று , இவர்கள் நாஸ்திகராகிறார்கள், இல்லாவிட்டால், தங்கள் மதத்தில் திருப்திக்கொள்ளாத பலர் நம்முடைய யோகம், பக்தி மார்கம், ஞான விசாரம் ஆகியவற்றிற்கு வந்து கொண்டிருக்கிறார்கள். இந்தத் தேசங்களில் தற்போதுள்ள சரித்திரக்கால மதங்களை உள்ளபடி பின்பற்றிப் போகிறவர்கள் இன்னும் எத்தனை காலம் இருப்பார்கள் என்று சொல்லமுடியாமலிருக்கிறது. நான் ஹிந்து மதப்

பிரதிநிதி, மற்ற மதங்களைக் குறைவுபடுத்தி பேச வேண்டும் என்று நினைத்து இப்படிச் சொல்லவில்லை. தற்போதுள்ள வெவ்வேறு மதஸ்தர்களும் தங்கள் மதத்திலேயே இருந்து கொண்டு ஆத்மாபிவிருத்தி அடைய வேண்டும் என்று தான் எனக்கு ஆஸ்தை. எங்கள் மதத்துக்கு வாருங்கள் என்று எவரையும் நான் கூப்பிடவில்லை. அப்படிக் கூப்பிடுவது நம் மதத்தின் அடிப்படைக் கொள்கைக்கே (TENET) விரோதம் என்பது என் அபிப்பிராயம். லோகத்தில் எதுவும் காரணமில்லாமல் (accidential) நடந்து விடவில்லை.

பலவிதமான ஜீவர்களின் பலவிதமான பக்குவ நிலைமையைப் பொறுத்துதான் பகவான் அவர்களை வெவ்வேறு மதங்களில் பிறக்கும்படி செய்கிறான். அந்தந்த மதத்தைப் பற்றி ஒழுகியே அவரவரும் ஆத்ம க்ஷேமம் அடைய முடியும் என்பதே என் நம்பிக்கை. மற்ற மதங்களில் இல்லாத

விசேஷங்கள் ஹிந்து மதத்தில் இருப்பதாக நான் சொல்கிறேனே என்றால், அது அவற்றை நிந்திப்பதாக இல்லை. அவர்களை இங்கே கூப்பிடுவதற்காகவும் அல்ல. மற்ற மதஸ்தர்கள் இந்த விசேஷ அம்சங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் நிந்திப்பதையும், அவர்களுடைய வார்த்தையையே நம்மவர்களில் சிலரும் எடுத்துக் கொள்வதையும் பார்க்கும்போது, இந்த அமசங்களில் உள்ள நல்லதைச் சொல்லி தெளிவுபடுத்த வேண்டும் என்று நினைத்தே இதை எல்லாம் சொல்கிறேன். இந்தக் கொள்கையை - கர்மக் கொள்கை, அவதாரக் கொள்கை மாதிரி இருக்கப்பட்டவைகளை மற்றவர்கள் ஏற்றுக் கொள்வதாலும் அவர்களுடைய சொந்த மதத்தின் அடிப்படையான அம்சம், உயிர்நிலையான அம்சம் என்ன?. பகவான் என்ற ஒருத்தனை நம்பி பக்தி உண்டாக்காது. பக்திதான் அம்மதங்களின் முக்கியமான அம்சம்.

இதை எல்லாம் எதற்குக் சொல்கிறேன் என்றால், தற்போதுள்ள மதங்களுக்கெல்லாம் அந்தந்த தேசங்களில் தத்தளிக்கின்றன என்பது என் அபிப்ராயமும் இல்லை. இதில் எனக்கு சந்தோஷமும் இல்லை என்பதக்குத்தான் டோயீன்பீ, பால் பரன்டன், கோஸ்ட்லர் மாதிரி பிரபலமானவர்களுடைய அபிப்ராயத்தைக் சொன்னேன். லோகம் பூராவிலும் மத

நமபிக்கையின்மை (disbelief), நாஸ்திகம் (atheism) எல்லாம் நாளுக்கு நாள் அதிகமாக, இப்போது எல்லா மதங்களும் தத்தளிக்கும்படியான நிலைமை வந்திருக்கிறது என்று அவர்கள் சொல்வதையே திருப்பிச் சொன்னேன்.

நம் தேசத்தில்கூட இந்தப் போக்கு அதிகமாகிக் கொண்டுதான் போகிறது. ஆனாலும், மற்ற தேசங்களோடு பார்த்தால் உங்கள் தேசம் எத்தனையோ தேவலை. இங்கே மத உணர்ச்சி இன்னும் அத்தனை மோசமான நிலைக்குப் போய்விடவில்லை என்ற சகல தேசங்களையும் ஆராய்ந்து பார்க்கிற வெளிதேசத்தார் ஒருமுகமாகச் சொல்கிறார்கள். அவர்களில் சாதகர்கள் கூட்டங்கூட்டமாக இன்னமும் நம் தேசத்துக்குத்தான் வந்து கொண்டிருக்கிறார்கள்.

யோசித்துப் பார்த்தால், நம் தேசத்திலும்கூட பழைய வர்ண தர்மங்களில் பிடிப்புக் குறைந்துபோய், எல்லாம் ஒன்றாகிவிட வேண்டும் என்ற அபிப்ராயம் வந்தபிற்பாடுதான், மத உணர்ச்சி குன்றி, நாஸ்திகம் அதிகமாகியிருக்கிறது என்று தெரிகிறது. சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெரிகிறது.

இது வேடிக்கையான விஷயமாக இருக்கிறது. அதாவது ஒரு மதம் ஜனங்களைப் பலவிதமாகப் பிரித்து வைக்கிறது என்றால், அதில்தான் பரஸ்பரக் கட்டுக்கோப்பும் ஐக்கியமும் இல்லாமலேயிருக்கும் என்று நினைக்கிறோம். இப்படிப்பட்ட மதம்தான் சண்டையால் தனக்குள்ளேயே உளுத்துப்போய் விழுந்துவிடும் என்று தோன்றுகிறது. அதோடுகூட நம் தேச சரித்திரத்தில் பார்க்கிறமாதிரி, அலெக்சான்டர் காலத்திலிருந்து பல அந்நிய மதஸ்தர்கள் அலையாகப் படை எடுத்து வந்தார்கள் என்றால், இப்படிப் பட்ட மதம் இருந்த இடம் தெரியாமல் புதைந்துதான் போயிருக்க வேண்டும். ஆனால், வாஸ்தவத்தில் நாம் பார்ப்பது என்னவென்றால் இதற்கு நேர் மாறாக இருக்கிறது. எல்லாருக்கும் அநுஷ்டானம் ஒன்று என்று சமமாக வைத்துக் கொண்டிருந்த பெரிய பெரிய மதங்களை எல்லாம் காலப் பிரவாகம் எங்கேயோ அடித்துக்

கொண்டுபோயிருக்கிறது. இன்றைக்கு உயிரோடிருக்கிற அப்படிப்பட்ட மதங்களுக்கும் பெரிய ஆபத்து இருப்பதாக அந்த மதத்து அறிவாளிகளே சொல்கிறார்கள். ஆனால் பல வகுப்பாக சமுதாயத்தை வர்ண தர்மத்தில் பிரித்து வைத்திருக்கிற நம் மதமோ இன்றளவும் என்னை யார் என்ன

செய்துவிடமுடியும் என்று மூச்சைக் கெட்டியாக பிடித்துக் கொண்டு உயிர்வாழ்கிறது. இதன் சூக்ஷ்மத்தை நாம் உணர்ச்சிவசப்படாமல் அறிவைத் தெளிவாக வைத்துக் கொண்டு ஆலோசித்துப் பார்க்க வேண்டும்.

ஆயிரம் பதினாராயிரம் வருஷமாக வர்ண தர்மத்தைப் பின்பற்றியும் நம் மதம் இத்தனை ஜீவ களையுடன் இருந்து வந்ததன் மர்மம் என்ன. அப்படியாவது, நம் சாஸ்திரங்களை ரக்ஷித்துக் கொண்ப்பதே ஸ்வதர்மம் என்று கொண்டிருந்த பிராம்மணர்கள் பெருமாபான்மையினராக (மெஜாரிட்டியாக) இருந்தார்களா இல்லை. அவர்கள் ஆயுத பலத்தையாவது வைத்துக் கொண்டிருந்தாரா. அதுவும் இல்லை. பிராமமணமன் பணம் சேர்தவைப்பது ரொம்பப் பிற்காலத்தில், சமீபத்தில் ஏற்பட்ட விபரீதம்தான். சாஸ்திரப்படி பிராமமணன் ஏழையாகத்தான் இருக்க வேண்டும். இப்படிப் பணம் இல்லாமல், பலமும் இல்லாமல், எண்ணிக்கையிலும் பெருமாபான்மையாக இல்லாமல் இருக்கிறவர்களின் விதித்தி சாஸ்திரப் பிரிவினைகளை மற்றவர்கள் ஏன் பின்பற்ற வேண்டும். மற்ற அத்தனைப் பேரும் அத்தனை காலமும் ஏமாந்தவர்களாகவா இருந்தார்கள். அப்படி இவர்கள் ஏமாந்து போயிருந்தால்கூட, அவ்வப்போது ஒரு புத்தர், ஒரு ஜீனர் மாதிரி ரொம்பப் பெரியவராக ரொம்பச் செல்வாக்கோடு ஒருத்தர் வந்து இந்த வேதம், யாகம் இதெல்லாம் வேண்டாம். எல்லா ஜனங்களுக்கும் பொதுவான சாமான்ய தர்மங்களை மட்டும் வைத்துக் கொள்வோம். ஸமஸ்கிருதம் வேண்டாம். பொது ஜனங்களின் பிராகிருத பாஷைகளான பாலி முதலியவைகளிலேயே நம்முடையது புது சாஸ்திரங்களை வைத்துக் கொள்வோம் என்று புதிய வழியைக் காட்டினால்கூட ஜனங்கள் அப்போதைக்கு ஏதோ ஒரு வசீகரத்தால் அந்தப் புது மதங்களில் சேர்ந்து இருக்கிறார்களேயொழிய, அப்புறம் அவற்றின் மவுசு கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து, கடைசீயில் அவை ரொம்பவும் தேய்ந்து போயே போய் விடுகின்றன. பார்த்தால், பழைய வைதிக மதமே செத்தேனாபார் என்று தலையைத் தூக்கிக் கொண்டு கிளம்புகிறது.

நவத்வாரம் உள்ள உடம்பில் உயிர் தங்கியிருப்பதுதான் ஆச்சரியம். வெளியே போவது ஆச்சரியமே இல்லை என்று ஒரு பெரியவர் பாடினார். அம்மாதிரி உள்ளே பிரிந்து

வெளியிலிருந்தும் ஓயாமல் தாக்கப்பட்ட ஹிந்து மதம் செத்திருந்தால் ஆச்சரியமே இல்லை. சாகாததுதான் ஆச்சரியம்.

நிஷ்பக்ஷபாதமாக இதை ஆராய்ந்து பார்த்தால் என்ன தெரிகிறது. மற்ற தேசங்களிலும் சரி, நம் தேசத்திலும் சரி. மற்ற மதங்கள் போய்விட்ட போதிலும் இதுமட்டும் பதினாராயிரம் வருஷமாகப் போகாமலிருக்கிறதென்றால், அவைகளில் இல்லாத ஒன்று இவற்றில் இருக்கிறது என்று தானே அர்த்தம். அது என்ன என்று பார்த்தால், வர்ண தர்மம்தான் நமக்கு மட்டும் பிரத்தியோகமாக இருக்கிறது. ஆகையால் வர்ண தர்மம் சமூகச் சீர்குலைவுக்கே காரணம் என்று புது நாகரீகக்காரர்கள் சொன்னாலும், இது இருக்கிற சமூகம்தான் சீர்குலையாமல்

இருந்து வருகிறது. நவீன யுகத்தில் சமத்துவம் என்று சொல்லப்படுவதைவிட சிலாக்கியமாக, சமூகத்திறிகு ரொம்பவும் க்ஷேமம் விளைவிப்பதாகப் பழைய தர்மத்தில் எதுவோ இருந்திருக்க வேண்டும் என்று தானே ஏற்படுகிறது. அதனால்தான் சமூகத்தைப் பலவாகப் பாகுபாடு செய்திருக்கிற நம் மதம் ஒன்று மட்டுமே, இத்தனை எதிர்ப்புகள் இருந்தும் விழமாட்டேன் என்று இன்று வரைக்கும் கையில் பிடித்துக் கொண்டு இருந்து வருகிறது.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### வேற்றுமையில் ஒற்றுமை

வர்ண தர்மத்தைப் பார்க்கும்போது எனக்கு ஒன்று ஞாபகம் வருகிறது. முதலில் ஆகாயக் கப்பலில் காற்றுப் பையை (gas bag)ஒன்றாக அமைத்தார்கள். பிறகு அதில் ஒரு சிறிய ஓட்டை விழுந்தால்கூடக் கப்பலே கெட்டு விழுந்து விடுகிறது என்று கண்டார்கள். அதனால் சிறிது சிறிதாகப் பல காற்றுப் பையை வைக்கலானார்கள். தனித்தனியாக

இருந்தாலும் எல்லாம் ஒரே இடத்தில் நெருங்கியிருந்து ஒன்றையே தாங்கிக் கொண்டன. கப்பல் பழுதடையாமல் இருந்தது. இதுவேதான் நம் மதத்தில் தனித்தனி தர்மம் என்று பிரித்து வைத்திருக்கிற ஏற்பாடு. வேற்றுமையில் ஒற்றுமை (unity in diversity) என்பது இதுதான்.

ஏகப்பட்ட சுல்லிக் கட்டைகளை சேர்த்துப் பிடித்து ஒரு கட்டாகக் கட்டுவது என்றால் அது சிரம சாத்தியமான காரியம். அப்படியே சிரமப்பட்டு ஒரு கட்டாகக் கட்டினாலும்கூட அது சுலபத்தில நெகிழ்ந்து கொடுத்துத் தளர்ந்து விடும். முதலில் ஒரு சுள்ளியை ஆட்டி எடுக்கிற மாதிரி நெகிழ்ச்சி ஏற்பட்டுவிட்டாலே கூட போதும். அந்த ஒன்றை எடுத்தால் தளர்ச்சி ஜாஸ்தியாகி இன்னொரு சுல்லியை சுலபமாக உருவி விடலாம். இப்படி இரண்டு மூன்று எடுத்து விட்டால் அப்புறம் கட்டு ஒரேயடியாக தொள தொளவென்று தளர்ந்துபோய் அத்தனை சுள்ளிகளும் தன்யாக விழுந்துவிடும்.

மாறாக முதலிலேயே அத்தனை சுள்ளிகளையும் ஒரே கட்டாகக் கட்டாமல் கைக்கு அடக்கமாகப் பத்து பதினைந்து என்று சேர்த்து சின்னக் சின்னக் கட்டுகளாகப் போடுவதாக வைத்துக் கொள்ளுங்கள். இது ஒவ்வொன்றும் கையடக்கமாக இருப்பதால் தளராதபடி பிகுவாகக் கட்டிவிட முடியும். அப்புறம் இந்தச் சின்ன சின்னக் கட்டுகளையெல்லாம் சுலபத்தில் அடுக்கி எல்லாவற்றையும் சேர்த்து பெரிய கட்டாகப் போடலாம். ஒட்டு மொத்தமாக அத்தனை சுள்ளிகளையும் வைத்துப் போடுகிற கட்டைவிட இப்போது நாம் போடுகிற பெரிய கட்டு இன்னும் விறைப்பாக, உறுதியாக இருக்கும். அது மட்டுமில்லை. இந்தப் பெரிய கட்டு குஞ்சம் தளர்ந்தால்கூட ஒரு தனிச் சுள்ளி விழுகிற மாதிரிச் சின்னச் சுள்ளிக்கட்டு விழாது. அதாவது பெரிய கட்டு பந்தோபஸ்தாகவே இருக்கும். என்றைக்கும் அது கட்டு விட்டுப்போகாது.

சின்னக் கட்டுகளில் எதுவோ ஒன்று தளர்ந்து கொடுக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போதுகூட அதிலுள்ள சுள்ளிகள் மட்டும் விலகுமே தவிர, மற்ற கட்டுகள் எல்லாம் அப்படி அப்படியே பத்திரமாக இருக்கும். அவற்றிலுள்ள சுள்ளிகள் கொஞ்சங்கூடக் கலகலத்துப்போய் விடாது.

ஒரு பெரிய ஜனசமூகத்தை ஒரே அமைப்பிலே போட்டு கட்டுகிறேன் என்றால் அது முடியாத காரியம். ஆண்டளிக்க முடியாத சமுதாயத்தை யார், எப்படிக் கட்டுப் பாட்டில் வைத்து நிர்வகிப்பது. இதற்காகத்தான் ஒவ்வொரு தொழிலைச் செய்யப் பரம்பரையாக ஒரு ஜாதி என்று பிரித்து தனித் தனிக் கட்டுகளாக வைத்தார்கள். இதிலிருக்கிற கட்டுக் கோப்பை யாறும் புரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு வர்ணத்தினரும் சிறு கட்டுகளாக ஜாதிகளாக பிரித்தார்கள். அவரவருக்கும் ஜாதி நாட்டாண்மை என்று ஒன்று இருந்தது. அந்தந்த நாட்டான் மைக்காரக்கள் தங்கள் தங்கள் சமூகத்தினர் ஒழுங்கு தரப்பினால் அவர்களைத் தண்டித்தார்கள். இப்போது சர்க்கார்கூடத்தான் ஜெயிலில் போட்டு சிக்ஷிக்கிறது. ஆனால் இது ஒன்றும் குற்றவாளிகள் நெஞ்சில் உறைப்பதில்லை. அதனால் குற்றங்கள் பாட்டுக்கு வளர்ந்துகொண்டேத்தான் இருக்கின்றன. நாட்டாண்மையில் கொடுத்த தண்டனையோ சுரீலென்று உறைத்ததால் ஜனங்கள் தப்புத் தண்டாவில் இறங்காமல், இந்த நூற்றாண்டின் ஆரம்பம் வரையில் கூடிய மட்டும் யோக்கியர்களாகவே இருந்து வந்தார்கள். அதுவரை போலீசுக்கும், மாஜிஸ்டிரேட் கோர்ட்டுகளுக்கும் வேலை ரொம்பக் குறைச்சலாகவே இருந்தது.

அதென்ன அப்படிப்பட்ட தண்டனையை நாட்டாண்மைக்காரர்கள் கொடுத்தார்கல் என்றால், ஜாதி ப்ரஷ்டம் என்பதுதான் அது. ஒரு சக்கிலியாக இருக்கட்டும், பரியாரி (நாவிதன்)யாக இருக்கட்டும். எவராகத்தான் இருக்கட்டும். இப்போது பிறபட்ட(Backward) தாழ்த்தப்பட்ட (depressed) என்றெல்லாம் சொல்கிற எந்த ஜாதியினராக இருந்தாலும்கூடத்தான் - அவரவருக்கும் தன் ஜாதியை விட்டுத் தள்ளிவிடுவார்கள் என்றால், அதுவே சுரீரென்று மனதில் தைத்தது. அது தாங்க முடியாத பெரிய தண்டனை, மகத்தான அவமானம் என்று தோன்றியது. இதிலிருந்து என்ன தெரிகிறது. எந்த ஜாதியாரும் எந்த ஜாதியினரையும் மட்டம் தட்டி வைக்கவில்லை. அந்தந்த ஜாதியாரும் தங்கள் விவகாரங்களைப் பொருத்த மட்டில் தாங்களே ராஜா என்ற பூரண திருப்தியோடு இருந்திருக்கிறார்கள் என்றுதானே தெரிகிறது. உசத்தி தாழ்த்தி அபிப்ராயங்கள் இருந்திருந்தால், தானாகவே பலவிதமான தாழ்வு மனப்பான்மைகள் (inferiority complex) உண்டாகித்தான் இருக்கும்.

பிராமணனையும் க்ஷத்திரியனையும் தவிர ஜாதியார் எவருக்கும் தங்கள் ஜாதியிடம் மதிப்பு, கௌரவ புத்தி, விசேஷமான பிடிப்பு இருந்திருக்க முடியாது. இதெல்லாம் இல்லாவிட்டால் ஜாதிப்ரஷ்டத்தைப் பொருட்படுத்தியே இருக்க மாட்டார்கள். ஆனால் நடைமுறையில் ஜாதி என்ன பெயரில் ஜாதி என்ற பெயரில் சின்னச் சின்னச் சமுதாயங்களாக ஜனங்கள் இருந்தபோது, தங்களுக்கு பரஸ்பரமான அன்பும் விசுவாசமும் ஏற்பட்டு, அதிலே ஒரு பந்துத்துவமே உண்டாயிற்று. அதனால்தான் ஜாதியிலிருந்து தள்ளி விடுவோம் என்றால் அது பெரிய தண்டனையாகத் தோன்றியது. இப்போது பிற்பட்டவர்களாக இருப்பதால் பலவித சலுகைகள் கிடைக்கின்றன என்பதற்காக வேண்டுமானால் பலர் தங்கள் ஜாதியனைப் பிடித்துக் கொண்டிருக்கிறாக்ளே தவிர, மனப்பூர்வமாக அதில் கௌரவ புத்திவைத்து அபிமானிக்கவில்லை. அந்தக் காலத்தில் இப்படிப்பட்ட சலுகைகளில் எதுவும் கிடையாது. ஆனாலும், மூன்று நான்கு

தலைமுறைகளுக்கு முன்வரை நாம் பார்த்தது என்னவென்றால் அவர்களுக்கும் தங்கள் ஜாதியில் ஆழமான அபிமானம் இருந்திருக்கிறது. இப்போதுபோல் இன்னொருத்தரிடம் போட்டியும் எதிர்ப்பும் இருப்பதால் தங்களுக்குள் அபிமானம் பாராட்டிக் கொள்ளவில்லை. அப்போது இந்த ஜாதிச் சண்டை, போட்டா போட்டி எல்லாம் இல்லவே இல்லை. மெய்யாகவே அவரவருக்கும் தங்கள் ஜாதியில் இருந்து கொண்டு, அதற்கான தொழிலைச் செய்து கொண்டு, அதற்கென்று ஏற்பட்டுள்ள தனிச் சடங்குகள், விதிகள், ஆச்சாரங்கள், தர்மங்களைப் பின்பற்றிக் கொண்டிருப்பதில் சந்துஷ்டியும் பெருமிதமும் (pride) இருந்தன.

இப்போது கலகம் செய்கிறவர்களிடம் போலீஸ் வந்தால் போலீசிடமே கலகக்காரர்கள் அடிதடியில் இறங்குகிறார்கள். ஆனால் முன்னமே ஜாதி நாட்டாண்மையில் எதிர்த்து இப்படி யாறும் சண்டை போட்டதில்லை. காரணம் இப்போதிருக்கிற போலீஸ் வெளியிலிருந்து செய்கிற கட்டுப்பாடாயிருக்கிறது. ஜாதி நாட்டாண்மையிலோ, நம்மவர்கள் என்ற பாந்தவ்யம், அபிமானம் இருந்தது. இதனால் ஆயுத பலமும் படை பலமும் இல்லாமலே அன்றைய நாட்டாணமை இன்றைவிட

வெகு சிறப்பாக குற்றங்களைக் குறைத்து வந்தது. எல்லோரும் ஜாதி, அதற்கான தொழில், அதற்கென்று ஏற்பட்ட ஆச்சாரங்கள் என்று பிரிந்திருந்தும் ஒற்றுமையாக இருந்தார்கள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### காரியத்தில் பேதமும் மனோபேதமும்

ஜாதி, அதற்கான தொழில், அதற்கென்று ஏற்பட்ட ஆசாரங்கள் என்று சொன்னேன். அது தப்பு, ஜாதிக்காகத் தொழில் இல்லை. தொழிலுக்காகத்தான் ஜாதி, சுள்ளிகளை எந்த அடிப்படையில் வேதமதம் சின்னக் சின்னக் கட்டுகளாகக் கட்டிப் போட்டது. ஒவ்வோரு வர்ணம் என்று பிரித்தது.

மேல் நாட்டுகளில் தொழில் பிரிவினை (Division of Labour) என்று பொருளாதாரத்தில் (Economics) சொல்லிக் கொண்டு இன்னமும் அதை நடைமுறைக்குக் கொண்டுவர முடியாமல் இருப்பதைப் பார்க்கிறீர்கள். ஒரு சமுதாயம் நடக்க வேண்டும் என்றால் பல தினுசான தொழில்கள் நடக்கத்தான் வேண்டும். எனவே, தொழில் பங்கீடு (Division of Labour) செய்து கொள்ள வேண்டும் என்கிறார்கள். ஆனால், இத்தனை பேர்தான் இன்ன தொழிலைச் செய்யலாம். இப்படியொரு விகிதாச்சாரத்தில் (proportion) ஒவ்வொரு தொழிலுக்கும் ஜனங்கள் வந்தால்தான் சமுதாயம் சீராக (balanced-ஆக) இருக்கும் என்பதற்கு யார், எப்படிக் கட்டுத்திட்டம் பண்ண முடியும். முடியவில்லை. எல்லோரும் சௌகரியமான தொழில்களுக்கே போட்டி போடுகிறார்கள். எங்கே பார்த்தாலும் துராசை, போட்டா டோட்டியினால் மனக்கசப்பு. அதைத் தொடர்ந்து பலவிதமான ஒழுக்குத்

தப்பிதங்கள் என்று பிரத்தியக்ஷமாகப் பார்த்து வருகிறோம்.

இதே தொழில் பங்கீட்டைப் பாரம்பரியமாக வைத்து நடத்தி வந்த நம் தேசத்தில் அந்த ஒழுங்கு குலைகிற வரையில் சாந்தியும், சந்தோஷமும், சௌஜன்யமும், திருப்தியுமே இருந்து வந்தன. இப்போது கோட்டீஸ்வரனுக்குக்கூட திருப்தி இல்லாமல் இருக்கிறது. அப்போதோ ஒரு செருப்புத் தைக்கிறவன்கூட அக்காடா என்று நிறைந்து இருக்கிறான். எல்லோருக்கும் துராசைகளைக்

கிளப்பிவிட்டு அத்தனை பேரையும் அதிருப்தியில் கொண்டு தள்ளியிருக்கிற புது ஏற்பாடுகள்தான் முன்னேற்றம். இதுவரை செய்ததும் போதாது. இன்னும் வேகமாக இப்படியே முன்னேர வேண்டும் என்று எங்கும் பேச்சாயிருக்கிறது.

அந்தக் காலத்தில் துராசையில்லை. மநுஷ்யர்கள் ஒருத்தருக்கொருத்தர் பாந்தவ்யமாக ஒட்டிக் கொள்கிற சின்னச் சின்ன சமூகங்களாக இருந்துவிட்டதால், இப்படிச் சேர்ந்திருப்பதே பெரிய இன்பம் என்று அவர்கள் கண்டு கொள்கிறார்கள். அதோடு மதத்தில் நம்பிக்கை, தெய்வத்திடம் பயபக்தி, தங்களுக்கென்று குலதெய்வங்கள், அதற்கான வழிபாடுகள் இருக்கின்றன என்ற பெருமை, இதிலெல்லாம் நிறைந்து இருந்துவிட்டதால் அவர்களுக்கு வெளி வஸ்துக்களைத் தேடி மேலே மேலே இன்று தவிக்கிற தவிப்பு இல்லவே இல்லை. சமுதாயம் முழுவதும் நன்றாக இருந்தது.

பலவாகப் பிரிந்தாலும் ஸ்வாமியின் பெயரால் எல்லாரும் ஒன்று சேர்ந்திருந்தார்கள். அவரவருக்கும் குலதெய்வம் இருந்தபோதிலும், ஊருக்குப் பொதுவாக பெரிய கோயில் இருந்தது. அந்தக் கோயிலும், அதன் உத்ஸவாதிக்களுக்குமே ஊர் வாழ்க்கையின் மைய ஸ்தானமாக இருந்தது. இதைச் சுற்றியே, அதாவது பகவானின் பேரில், அத்தனை சமூகத்தாரும் அவன் குழந்தைகளாக ஒன்று சேர்ந்திரு ந்தார்கள். ஒரு தேர்த் திருவிழா என்றால் அக்ரஹாரத்துக்காரனும் சேரிக்காரனும் தோளோடு தோள் இடித்துக் கொண்டு வடம் பிடித்து இழுத்தார்கள். அந்த சௌஜன்யமான காலத்தை நினைத்தாலே மறுபடி வருமா என்று இருக்கிறது. ஒரு வயிற்றெரிச்சல் இல்லை. வசைமாரி

இல்லை. அவரவர் தன் காரியத்தை எளிமையாகச் செய்து கொண்டு மனஸில் ரொம்பியிருந்த காலம்.

இதை எல்லாம் ஆலோசனைப் பண்ணிப் பார்த்தால், சமூகம் பலவாகப் பிரிந்திருந்தாலும்கூட ஹிந்து மதம் எத்தனையோ தாக்குதலைச் சமாளித்தது என்று சொல்வது சுத்தப் பிசுகு. சமூகம் பலவாகப் பிரிந்திருந்ததாலேயே அது இப்படி யுகாந்தரமாக ஜீவனோடு இருந்திருக்கிறது என்றே தோன்றுகிறது. எல்லோருக்குமான பொது தர்மங்களை மட்டும் சொல்லி, ஒரே சமூகமாக இருந்த மஹா பெரிய மதங்கள் எல்லாம் அழிந்து போனதையும், இபபோது இருக்கப்பட்ட அம்மாதிரி மதங்களின் எதிர்காலமும் என்னவாகுமே என்பதைப்பற்றி பார்க்கும்போது, இதுதான் அத்தனை சுள்ளியையும் ஒரே கட்டாகப் போடாமல் பல சின்னச் சின்ன கட்டுகளாகப் போட்டு, அந்தக் கட்டுகளை எல்லாம் தெய்வ பக்தியினால் ஒன்றாக முடிந்திருக்கிற வர்ண தர்மம்தான் - ஹிந்து மதத்தைச் சிரஞ்ஜீவியாக காப்பாற்றியிருக்கிறது என்று தெரிகிறது.

எல்லோருக்கும் ஒரே தர்மம் என்று வைத்துக் கொண்டதோடு நின்றுவிட்ட மதங்களில் எல்லாம், உள்ளிருந்தோ அல்லது வெளியிலிருந்தோ வேறு தினுசான தர்மங்கள் வந்து தாக்கியபோது, அவை அடியோடு இற்று விழும்படியாயிற்று. இந்தியாவில் பல தினுசான தர்மங்களும் பொதுவான தர்மத்துக்குள் இருந்தால், வேறு தர்மங்கள் உள்ளேயே எழுந்தால் அல்லது வெளியிலிருந்து வந்து தாக்கினால், அவற்றையும் தள்ள வேண்டியதைத் தள்ளி கொள்ள வேண்டியதை கொள்வதற்காக இடம் கொடுக்க முடியாது. நம் நாட்டுக்குள்ளேயே புத்த, ஜீன

மதங்கள் வேதத்தின் ஒவ்வொரு அம்சத்தில் (aspect) எழுந்தன. அதனால் ஹிந்து மதமே இவற்றையும் தனக்குள் ஜெரித்துக் கொண்டுவிட்டது. பல பலவாக தர்மங்கள் விரித்து இருந்தால், இன்னும் புதிசான பலவற்றுக்கும் இடம் தந்து தனதாக்கிக் கொளள முடிந்தது.

அவற்றை எதிரியாக நினைத்துச் சண்டை போட்டுத் தோற்றுப் போக வேண்டியதில்லை. முஸ்லீம்கள் வந்தபின் அவர்களுடைய சில பழக்கங்கள் மட்டும் நம்மவருக்கு

வந்தன. தத்துவம் என்று எதையும் அவர்களிடமிருந்து எடுத்து கொண்டதாகச் சொல்வதற்கில்லையானாலும், உடுப்பு போன்ற சில விஷயங்களில், சங்கீதம், சிற்பம், சித்திரம் போன்றவற்றில் அவர்களுடைய வழிகளை (Moghul culture) கொஞ்சம் எடுத்துக் கொண்டோம். அதுவும் நம்முடைய வைதிக கலாசார(Vedic culture)ப் பிரவாகத்தில் தனியாக நிற்காமல் கரைந்து போயிற்று. இதுகூட வடக்கேதான் ஜாஸ்தி நடந்தது. தென்னிந்தியா துருக்க இன்ஃப்ளூயென்ஸுக்கு ரொம்பவும் ஆளாகாமல் கூடியமட்டும் தன் பழைய வழியிலேயே இருந்தது.

அப்புறம் வெள்ளைக்காரர்கள் வந்தபின் எல்லோருக்குமே - வடக்கு, தெற்கு என்ற பேதமில்லாமல் தேசம் முழுவதிலுமே - வைதிக நம்பிக்கை குறைந்து வந்திருக்கிறது. ஏன் நிலைமை இப்படிக் கொஞ்சம் கொஞ்சமா மாறிற்று. ஏன் இப்போது அரசியல் தலைவர்களாக இருக்கப்பட்ட எல்லோரும் வர்ண தர்மத்தை காஸ்டிஸம் காஸ்டிஸம் என்று கரித்துக் கொட்டும்படியாயிருக்கிறது தேசத்தின் முன்னேற்றத்துக்காக ஜாதிதான் பெரிய தீமை செய்கிறது என்ற அபிப்பிராயம் பரவலக உண்டாக்கியிருப்பது ஏன். ஜாதி என்று சொன்னாலே ஜெயிலில் பிடித்துப்போட்டிவிட வேண்டும் என்ற நினைக்கிற அளவுக்கு ஆகியிருப்பது எதனால்.

இதற்கு எனக்கு தெரிந்த மட்டும் காரணங்களை, யார் பொறுப்பாளி என்பதை பின்னால் சொல்கிறேன். தற்போது வர்ண தர்மத்தை ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்பவர்கள். எதனால் இப்படிச் சொல்கிறார்கள் என்பதை முதலில் பார்க்கலாம். அவர்களுக்கு வர்ண தர்மத்தில் ரொம்பவும் ஏற்றத்தாழ்வு இருப்பதுபோலத் தெரிகிறது. இப்படி இருக்கக்கூடாது. எல்லாரையும் ஒருமாதிரி ஆக்கி உயர்த்த வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள்.

ஆனால், இகு காரிய சாத்தியம்தானா. இதைத் தெரிந்து கொள்வதற்கு ஜாதி முறை இல்லாத மற்ற தோசங்களைப் பார்த்தாலே போதும். எல்லாம் சமமாகி விடுவது ஒரு நாளும் நடக்காத காரியம் என்பதற்கு அந்தத் தேசங்கள் எல்லாம் பிரத்தியக்ஷ உதாரணங்கள் இருக்கின்றன. அங்கெல்லாம் உயர்த்தி தாழ்த்தியில்லை என்றால் வர்க்கப் பூசல்கள் (clause

conflicts) இருக்கக்கூடாதுதானே. ஆனால் யதார்த்தத்தில் இப்படியா இருக்கிறது. எங்கே பார்த்தாலும் சௌகர்யப்படாதவர்கள் என்ற பிரிவும், இவர்களுக்குள் சண்டையும் இருந்து கொண்டுதான் இருக்கின்றன. நம் தர்மத்தை உள்ளபடி புரிந்து கொண்டால் ஜாதியால் பெரியவன் சின்னவன் என்று வாஸ்தவத்தில் இல்லவே இல்லை. ஆனால் எதனாலேயோ அப்படி ஒரு அபிப்ராயம் வந்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம். இந்த எண்ணத்தைப் போக்கடிக்க வேண்டியதுதான் நம் கடமையே ஒழிய, அதற்காக அந்த

முறையையே தொலைக்கக் கூடாது. இப்போதைக்கு ஜாதியில் உயர்த்தி - தாழ்த்தி எண்ணத்தையும், அதனால் உண்டான மனக் கசப்பையும் ஒத்துக் கொண்டாலும்கூட, மற்ற தேசங்களிலும் இந்த மனக்கசப்பு சமூகப் பிரிவுகளிடையே இருக்கத்தான் செய்கிறது. அங்கெல்லாம் ஜாதியால் உயர்ந்தவன் என்று உரிமை கொண்டாடுகிறான் என்று ஒருவனிடம் துவேஷம் இல்லாவிட்டாலும் பணத்தால் நம்மைவிட உயர்ந்தவன், பதவியால் உயர்ந்தவன் என்று இன்னொருத்தனிடம் வெருப்பு இருக்கத்தான் செய்கிறது. அமெரிக்காவில் ஒருத்தனுக்குமே சாப்பாட்டுக்கோ, துணிக்கோ, ஜாகைக்கோ குறைச்சல் இல்லை. வேலைக்காரனிடம்கூட கார் இருக்கிறது என்கிறார்கள். எனவே, அவரவரும் திருப்தியாக இருக்க வேண்டியதுதானே. ஆனால் நாம் பார்ப்பதென்ன. அங்கேயும் ஒரு கார் வைத்திருப்பவன் இரண்டு கார் வைத்திருப்வனைப் பார்த்து வயிற்றெரிச்சல் பட்டுக் கொண்டுதான் இருக்கிறான். பாங்கில் கோடி டாலர் வைத்திருப்பவன் இரண்டு கோடி டாலர் வைத்திருப்பவனைப் பார்த்து அசூயைப் படுகிறான். தனக்கு ஜீவிக்க எல்லா சௌகரியமும் இருந்துங்கூட, தன்னைவிடப் பணம் ஜாஸ்தியாக இருப்பவனைப் பார்த்து உரிமைச் சண்டை, சலுகைச் சண்டையெல்லாம் கிளப்புகிறான் என்றால் என்ன?. அர்த்தம். அவன் தன்னைவிட உயர்ந்த ஸ்திதியில் இருக்கிறான் என்று இவன் நினைக்கிறான் என்றுதானே அர்த்தம். இப்படியாக அங்கெல்லாம் உள்ளூர ஒரு தினுசில் உயர்த்தி - தாழ்த்தி எண்ணங்கள் இருக்கத்தான் செய்கிறது.

கம்யூனிஸ்டு தேசம் மாதிரி எல்லாருக்குமே சம்பளத்தை சமமாக அளந்து தருவதாக வைத்துக் கொண்டாலும், அங்கேயும்கூட ஒருத்தன் ஆபீஸராகவும், இன்னொருத்தன் கிளர்க்காகவும் இருக்கத்தான் வேண்டியிருக்கிறது. வெளியிலே சண்டைபோட முடியாதபடி ராஜாங்க நிர்பந்தம் வேண்டுமானால் இருக்கலாமேயொழிய, இந்த மாதிரி பதவியிலும் ஸ்தானத்திலும் வித்தியாசம் இருக்கிற வரையில் உள்ளூரப் போட்டி, அசூயை இருக்கத்தான் செய்யும். கம்யூனிஸ்ட் தேசங்களில்தான் ரொம்ப உயர்ந்த செலவிலேயே இந்தப் போட்டி ஏற்பட்டு, இன்றைக்கு சர்வாதிகாரி மாதிரி இருக்கிற ஒருத்தன் நாளைக்குப் போன இடமே தெரியாமல்போய், இன்னொருத்தன் அந்த ஸ்தானத்தில் வந்து உட்காருகிறான். பதவியால் ஆக்குவதும் சாத்தியமில்லை. அதாவது உயர்த்தி - தாழ்த்தி என்பது ஏதோ ஒரு தினுசில் இருந்து கொண்டுதான் இருக்கும்.

சமூக சௌஜன்யத்துக்குக் குந்தமாகப் போட்டியிலும் அசூயையிலும் கொண்டுவிடுகிற இப்படிப்பட்ட உயர்த்தி - தாழ்த்தி ஏற்பாடுகளைவிடப் பாரம்பரியத்தால் உண்டானதாகத் தப்பாக நினைக்கப்படுகிற ஏற்றத் தாழ்வுதான் இருந்து விட்டுப் போகட்டுமே என்றுகூடத் தோன்றுகிறது. இதனால் தேசத்தில் பொதுவாக சாந்தியும், அவரவருக்குத் திருப்தியும்,இசதுதான் நமக்காக ஏற்பட்டது என்பதில் பொதுமேற்ற மனசும் இருந்தன அல்லவா.

வாஸ்தவத்தில் அத்தனை தொழிலும் சமூக க்ஷேமத்திற்காக உண்டானவைதான். ஒன்று உயர்வு, இன்னொன்று தாழ்வு என்றில்லை. எந்தத் தொழிலைச் செய்தாலும் ஆசை வாய்ப்படாமல் அதைச் சுத்தமாக (perfect)ப் பண்ணி ஈசுவரார்பணம் செய்தால் அதைவிடச் சித்த சுத்திக்கு வேறு மருந்தில்லை.

ஒன்று, உயர்ந்தது இன்னொன்று தாழ்ந்தது என்பது அட்யோடு பிசகு. ஆனால் இப்படி பிசகாக நினைத்தால்கூடப் பரவாயில்லை. மற்ற தேசங்களிலும் இதைவிடப் பிசகான மற்ற தேசங்களிலும் இதைவிடப் பிசகான ஏற்றத் தாழ்வுகழ் இருக்கதாதன் செய்கின்றன. அதனால் இங்கேயில்லாத போட்டி, சண்டைதான்

அங்கெல்லாம் உண்டாகின்றன என்று சொல்ல வந்தேன்.

நாம் பிரிந்து பிரிந்தே ஒற்றுமையாக இருந்து நம் நாகரீகத்தை பெரியதாக வளர்த்திருக்கிறோம். மற்றவர்கள் பிரியாமல் இருப்பதாக நினைத்துக் கொண்டே, ஒற்றுமையில்லாமலிருந்துதான் அந்த நாகரிகங்கள் விழுந்து விட்டிருக்கின்றன. இங்கே காரியத்தில் மட்டும் பேதமிருந்து உள்ளூர ஐக்கியம் இருந்ததால் நாகரீகம்

வளர்ந்நது. அங்கெல்லாம் காரியத்தில் பேதமில்லாமல், அதனால் வந்த போட்டியாலேயே மனோபேதங்கள் உண்டானதென்றால் வெளி நாகரீகங்கள் படை எடுத்து வந்தபோது அவற்றிடம் உள்ளூர் நாகரீகங்கள் தோற்றுப்போக நேர்ந்தது.

எல்லாவற்றையும் ஒன்றாகவும் பண்ணி உயர்வாகவும் வைத்திருப்பது என்பது நடைமுறையில் சாத்தியமில்லை. எல்லாம் ஒரேடியாகப் பிரித்து பேதப்பட்டுக் கிடப்பதும் உதவாது. இரண்டுக்கும் மத்தியமாக சமரசமாக ஒரு வழியை தர்ம சாஸ்திரம் தந்திருக்கிறது. நான் அதற்குப் பிரதிநிதியாக வருகிறேன். அதனால்தான் அநுஷ்டானத்தில் வேற்றுமையும் வேண்டும். இருதயத்தில் ஒற்றுமையும் வேண்டும் என்கிறேன். இரண்டையும் குழப்ப வேண்டாம் என்கிறேன்.

வெளிக் காரியங்களில் எத்தனை வேற்றுமை இருந்தாலும், இதயத்தில் அன்று இருந்தால் தேசத்தில் பரம சாந்தமே இருக்கும். யுக யுகாந்திரமாக நம் தேசத்தில் அப்படித்தான் சமூகம் சாந்தமாக இருந்து வந்தது. அவரவரும் சுயநலனை மட்டும் எண்ணாமல், சகல ஜனங்களுக்காகவும் நாம் இந்தக் கர்மத்தைச் செய்கிறோம் என்ற மனோபாவத்துடன் தங்கள் பரம்பரைக் கர்மத்தைச் செய்தால் ஏற்றத் தாழ்வு இல்லை. என்ன விபரீதம் ஏற்பட்டாலும் சாமானிய தர்மங்களை அனைவரும், விசேஷ தர்மங்களை அவரவரும், விசேஷ தர்மங்களை கூடிய வரையில் ரக்ஷித்து வந்தால் எந்த நாளும் நமக்குக் குறை வராது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### *இங்கு மட்டும் இருப்பானேன்*

உலகத்தில் மற்ற தேசங்கள் இல்லையா?. அங்கேயும் மதங்கள் இல்லையா?. அந்த மதங்கள் அந்த தேச ஜனங்களுக்கு இப்படிப் பாரம்பரியமாகத் தொழில்களை வருத்துக் கொடுத்து ஜாதி, ஜாதி என்று வைக்கவில்லையே!. நமக்கு மட்டும் எதற்கு?. என்ற கேள்வி பிறக்கிறது.

ஜாதிகள் என்று பிரித்து வைக்காத தேசங்களிலும், சாஸ்திரங்களையும் அறிவு நூல்களையும் வளர்க்கிறவர்கள், ராஜ்யபாரம் நமத்தி யுத்தம் செய்கிறவர்கள், வியாபாரிகள், விவசாயிகள், தொழிலாளிகள் எல்லோரும் இருக்கத்தான் செய்தார்கள்!. இன்னைக்கும் இருக்கிறார்கள்.

ஆனாலும் 'இது நம் தேசம்'என்கிற சுய அபிமானம் இல்லாமல், நிஷ்பக்ஷிபாதமாகவே பார்த்தாலும், நம் தேசத்தின் மகோன்னதமான நாகரீகம்

மாதிரி அங்கெல்லாம் எங்குமே காணோமே. மற்ற தேசங்களில் நடுநடுவில் ஒரு பெரிய நாகரீகம் தோன்றினாலும்கூட, அது இங்கே இருக்கிற மாதிரி இத்தனை ஆயிரம் வருஷங்கள் நீடித்து நிலைத்து நிற்கக் காணோமே. நாமே நம் பெருமையை சொல்லிக் கொள்வது என்றில்லை. அலெக்ஸாந்தர் காலத்திலிருந்து நாம் இத்தனை அகல பாதாளத்திற்கு போயிருக்கிற இன்றைக்கு வரையில்கூட, வெளிதேசத்தவர்கள் சகலருமே, ஹிந்து நாகரிமா(Hindu Civilisation) ஆ! அப்பாடா, அது எத்தனை மகோன்னதமாக இருக்கிறது! என்று ஆச்சரியப்பட்டு வருகிறார்களே! இதற்கு விசை என்ன?

அங்கெல்லாமும் மகாபுருஷர்கள், ஞானிகள், பக்தர்கள், பரோபகாரியங்கள், தியாகிகள், பிறந்துதான் இருக்கிறார்கள்.

ஆனாலும் கணக்குப் போட்டுப் பார்த்தால் நம் ஒரு தேசத்தில், அவிச்சின்னமாக (அறுபடாத தொடரிழையாக) எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக தலைமுறைக்குத் தலைமுறை கூட்டம் கூட்டமாக உத்தம புருஷர்கள், சாதுக்கள், ஞானிகள், தத்துவ சிந்தாந்திகள், பக்தர்கள் பரோபகாரிகள் தோன்றின மாதிரி வேறெங்குமே காணோம். அத்தனை வெளி தேசங்களிலும் இருக்கிற மகான்களைக் கூட்டினாலும் அதைவிட இங்கே மகாபுருஷர்கள் தோன்றியிருக்கிறார்கள். இதை land of saints, land of sages â¡ªø™ô£‹ ï£‹ ªê£™ôM™¬ô. ªê£™ô «õ‡®ò¶‹ Þ™¬ô. ñŸø «îê˜¶,è£ó˜è«÷ î¬ô,°«ñ™ É,A¬õˆ¶, ªè£‡´ Ãˆî£´Aø£˜èœ. ÞŠð® å¼ «õî£‰îñ£? ÞŠð® å¼ îˆ¶õƒè÷£?â¡Á ï£‹ Aó‰îƒè¬÷, ªè£‡ì£® ïñvè£ó‹ ªêŒAø£˜èœ.

கலை, சிற்பம், சங்கீதம், காவியம், ஜோதிஷம், கணிதம் மாதிரி அறிவு சாஸ்திரங்கள், வைத்திய சாஸ்திரம் என்று எதை எடுத்தாலும் இந்தியாவுக்கு நிகர் எதுவுமே இல்லை என்று லோகமே வானளாவிப் புகழ்கிறது. உபநிஷத்து, கீதை, ராமாயணம், சாகுந்தலம் இந்த மாதிரி உலகத்திலேயே இல்லை என்கிறார்கள். தமிழ் நூல்களிலேயே இருக்கப்பட்ட தேவாரம், திவ்யப் பிரபந்தங்கள் போன்ற பக்தி நூல்கள் லோகத்திலேயே வேறெங்கும் இல்லை என்கிறார்கள். குறளைப் பார்த்து இப்படியும் ஒரு சின்ன நூல் அத்தனை நீதிகளையும் இவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்வதற்கு உண்டா என்று ஆச்சரியப் படுகிறார்கள். என்ன கோபுரம், என்ன சிற்பங்கள், திவ்விய விக்கிரகங்கள், எப்படிப்பட்ட சங்கீதம், பரத நாட்டியம் என்று அந்நிய தேசத்தவர்கள் எல்லாம் பிரமித்து, தாங்களாகவே இவற்றைப் பற்றித் தெரிந்துகொள்வதற்காக வீடு வாசலை எல்லாம் விட்டுவிட்டு இங்கே ஒடி வருகிறார்கள். வெள்ளைக்காரர்கள் நம்மை அடிமைப்படுத்தி, ஒரு பக்கத்தில் நம்மிடம் இல்லாத தோஷங்களை எல்லாம் சுமத்தி, நம்மைப் பிரித்துப் பிரித்து வைத்து ஆட்சி பண்ணினாலும் (பீவீஸ்வீபீமீ ணீஸீபீ கூஷீ(ஞூறீமீ) இன்னொரு பக்கத்தில் நம் நாகரீகத்தைப் பார்த்து அதிசயப்பட்டு நம்முடைய சாஸ்திரங்களை எல்லாம் தேடித் தேடி எடுத்து ஆராய்ச்சி செய்து தங்கள் பாஷையில் தர்ஜுமா பண்ணி (மொழி பெயர்த்து) வைத்துக்

கொண்டிருக்கிறார்கள்.

இப்படி ஓர் உன்னதமான நாகரீகம் இங்கு மட்டும் இருக்கும்படியாக அப்படி இங்கே பிரத்யோகமாக என்ன விசேஷம் இருந்தது?மற்ற தேசங்களில் இல்லாமல் நம் சமூக வாழ்வில் மட்டும் என்ன பிரத்யோக அமைப்பு இருந்தது என்று

பார்த்தால், இந்த வர்ணாசிரம தர்மம் ஒன்றுதானே அகப்படுகிறது.

சீர்திருத்தக்காரர்களால் நம் குறைகளுக்கெல்லாம் இருப்பிடமானது என்று நினைக்கிற வர்ண தர்மம் என்ற தனியம்சம் இருக்கிற நம் தேசம்தான் மற்ற எல்லா தேசங்களையும்விட தத்துவத்தில், குணசீலத்தில், கலைகளில், அறிவில் எல்லாவற்றிலுமே நிறைந்து தலைசிறந்து நிற்கிறது.

சமுதாயத்தில் ஒரு ஸ்திரத் தன்மை (ஷிமீணீதீவீறீவீமீ�்ஹ்) இருந்தாலொழிய, அதனால் ஏற்படுகிற, தத்துவம், கலை அறிவு நூல்கள் எதுவுமே இப்படித் தலைமுறை தலைமுறையாக வளர்த்து வந்திருக்க முடியாது. தத்துவ ஞானிகளும், கலாமேதைகளும் இப்படிக் கூட்டம் கூட்டமாகப் பிறந்திருக்க முடியாது.

மற்ற தேசங்களில் அந்தந்த மதங்கள் போட்டுத் தந்த சமூக வாழ்க்கை முறையில் இப்படி ஸ்திரத் தன்மையை உண்டாக்கிக்கூடியதாக எந்த அமைப்பும் இல்லை. சமூக வாழ்வு அடிப்படை (ஷிஷீநீவீஷீறீஷீரீவீநீணீறீ யீஷீஸ்ஸீபீணீமீவீஷீஸீ) என்பதையேகூட அவை பெரும்பாலும் கவனிக்கவில்லை என்று சொல்லி விடலாம். ஏதோ பொதுவாக திருடாதே, பொய் சொல்லாதே, விபசாரம் பண்ணாதே, சத்தியமாய் இரு, தியாகமாயிரு, அஹிம்சையாய் இரு என்கிற மாதிரி சொல்வதற்கு அதிகமாக, அவை சமூக வாழ்வை ஒழுங்குபட்டுத்தி அமைத்துக் கொடுப்பதில் ரூல்கள் செய்யவில்லை. மதத்தையே வாழ்வாக்கிக் கொண்ட பிக்ஷுக்கள், பாதிரிமார்கள் மாதிரி இருக்கப்பட்டவர்கலுக்கு விதிகள் வகுத்துக் கொடுத்து சங்கமாக ஸ்தாபன ரீதியில் ஒழுங்கு செய்தனவே தவிர, சமுதாயம் முழுவதும் இணைந்து அதில் உள்ள எல்லோரும் ஒருத்தனையொருத்தர் தாங்கி நிற்கிற மாதிரி எந்த ஏற்பாட்டையும் செய்வதில் அவை

விசேஷமாக கவனம் செலுத்தவில்லை என்றே தோன்றுகிறது.

இதனால் என்ன ஆயிற்று. சாஸ்திர வளர்ச்சி, தேச ரக்ஷணம், வியாபாரம், விவசாயம், சரீர உழைப்பு எல்லா அம்சங்களும் மற்ற தேசங்களிலும் இருந்தாலும்கூட, எல்லாவற்றிலுமே எப்போது பார்த்தாலும் போட்டியும்கூடவே இருந்திருக்கிறது. நமக்கென்றே இந்தத் தொழிலும் ஏற்பட்டது என்றில்லாமல், எல்லோருக்கும் எல்லாவற்றிலும் போய் விழுந்திருக்கிறார்கள். முதலில் நம் தேசத்தில் இருந்த மாதிரி நம்முடைய ஜீவனோபாயத்துக்குக் கவலையில்லை. நிச்சயமாக இதோ இந்தத் தொழில் நமக்கு இருக்கிறது. வழி வழியாகச் செய்துவந்தால் நமக்கு ஸ்வபாவமாக, சுலபமாகக் கைவருகிற தொழிலாக ஒன்று இருக்கிறது. எந்த ஸ்திரத் தன்மை, நிச்சிந்தயான நிலைமை இல்லை. இது இருந்து விட்டால் அப்புறம் சமூக ஸௌஜன்யத்துக்கும் சாந்தத்துக்கும் கேட்கவே வேண்டாம். அப்படியிருந்தால்தான் நம் தேசத்தில் இப்படி உத்தமப் பண்புகள் தோன்றியிருக்கின்றன. அவற்றை வாழ்க்கையில் நடத்திக் காட்டிய உத்தம புருஷர்கள் கணக்கு வழக்கில்லாமல் தோன்றியிருக்கிறார்கள். மற்ற தேசங்களில் இந்த நிச்சயத்தன்மை இல்லாததால் ஒருத்தருக்கொருத்தர் போட்டியும் பூசலுமாக இருந்திருக்கின்றனர்.

சீர்திருத்தக்காரர்கள் சொல்கிறப்படி பார்த்தால், பெரும்பான்மையான ஜனங்கள் அடக்கி வைக்கப்பட்டதாக அவர்கள் நினைக்கிற வர்ண தர்மத்தைக் கொண்ட நம் தேசத்தில்தான் சமூகப் புரட்சிகள் (ஷிஷீநீவீணீறீ ஸிமீஸ்ஷீறீஙுமீ வீஷீஸீவ) நிறையத்

தோன்றியிருக்க வேண்டும். ஆனால், இந்த வார்த்தையே நமக்குப் புதிசானது, பிரெஞ்சுப் புரட்சி, அமெரிக்கப் புரட்சி, ருஷ்யப் புரட்சி என்றெல்லாம் சரித்திர புஸ்தகத்தில் படித்த பிறகுதான் நமக்கு பெரிய ஜனசமூகமே புரட்சி என்று ஒன்றில் குதிக்கக்கூட அவசியம் ஏற்படலாம் போலிருக்கிறது என்று தெரிய வந்திருக்கிறது. மற்ற தேசத்துச் சரித்திரங்களைப் பார்த்தால் புரட்சிக்குமேல் புரட்சி என்று பொது ஜனங்களே செய்வதைப் பார்க்கிறோம். அதைவிட முக்கியமாக ஒரு புரட்சியும் சாசுவதமாக எதையும் சாதித்துப் புரட்டிவிடவில்லை என்று பார்க்கிறோம். ஒரு புரட்சி வந்து

ஒரு ஐம்பதி நூறு வருஷமானால் இன்னொரு புரட்சி வந்துதான் இருக்கிறது. அதைவது ஜனங்களுக்கு அதிருப்திதான் இருந்திருக்கிறது. இன்றைய நிலைமையோ கேட்கவே வேண்டாம். அத்தனை தேசங்களிலும் ஒழுங்கீனம், மிருகப் பிராயமான வெறிக் கூத்துகள், கிளர்ச்சிகள், ஸ்டிரைக்குகள், தினமும் ஒரு ராஜாங்கம் முழுகுவதும் இன்னொன்று வருவதுமாக லோகம் முழுக்கத் தத்தளிப்பில் இருக்கிறது. ராஜாங்கத்தாரே சர்வாதிகாரம் நடத்தி, தலையைத் தூக்கினால் மண்டையில் போட்டுவிடுவேன் என்று சொல்கிற ருஷியா மாதிரி தேசங்களில்தான் புரட்சியில்லாமலிருக்கிறது.

அங்கேயும் எரிமலை மாதிரி எப்போது வெடித்துவிடுமோ என்கிற நிலையில் உள்ள குமுறல் இருப்பதாகத்தான் சொல்கிறார்கள். அவ்வப்போது ஒரு அறிஞர் அல்லது எழுத்தாளர் உயிர் போனாலும் போகட்டும் என்று அங்கிருந்து தப்பி ஒடிவந்து அங்கே நடக்கிற கொடுங்கோன்மையைச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அங்கேயும் ஜனங்கள் உள்ளூர நிறைந்து இருக்கவில்லை என்கிறார்கள். இந்தியாவில் இப்படி ராஜாங்க சர்வாதிகாரம் ஒரு நாளிலும் இருந்ததில்லை. அடிமை ஜனங்களிடமிருந்து இத்தனை கலைகள், சாஸ்திரங்கள் ஒருக்காலும் தோன்றியிருக்க முடியாது. எங்களை அடக்கி வைத்திருப்பதைப் பாருங்கள் என்று வெளி ஜனங்களிடம் நாம் அழுததும் இல்லை. சுதந்திரமான சூழ்நிலையில் மனசு மலர்ந்திருந்தாலொழிய இத்தனை அறிவு நூல்களும் கலைகளும், கோயில்களும் தோன்றியிருக்கவே முடியாது. பொது ஜனங்களும் எண்ணிக்கையில் ஜாஸ்தி இருந்தால்கூட மூடநம்பிக்கையால் (ஷிஸ்ஜீமீக்ஷீவமீ வீமீ வீஷீஸீ) புரோஹித ஜாதிக்கு (ரிக்ஷீவீமீவமீ - நீக்ஷீணீயீமீ - என்று சொல்கிறார்கள்.) பயந்து ஏமாந்து கிடந்தார்கள் என்று சொல்வது கொஞ்சம்கூடப் பொருந்தாது. ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கக் காடுகள் மாதிரிக் கலாச்சாரம் வளராத தேச ஜனங்களைப்பற்றி அப்படிச் சொன்னால்தான் புரியும். அங்கேயெல்லாம் பூசாரி என்கிறவன்தான் ராஜா மாதிரி. பார்த்தாலே பயப்படுகிற மாதிரி இருப்பான். மந்திர வித்தை போட்டு ஜனங்களை என்ன வேண்டுமானாலும் செய்யமுடியும்போல் தர்பார் பண்ணுவான். அவனுக்கே நேராக சிக்ஷிக்கிற அதிகாரம் உண்டு. நம் தேசத்தில்

அப்படியில்லை. எல்லா ஜாதியினரும் நல்ல அறிவும், பக்தியும், அத்யாத்ம விஷயங்களில் முன்னேற்றமும் பெற்றவர்கள். புராணங்கள், பெரிய புராணம் இவற்றில் பார்த்தால் எல்லா ஜாதியிலும் மகா பெரியவர்கள் வந்தது தெரியும். சந்திரகுப்தன், சிவாஜி மாதிரி இருக்கப்பட்ட சக்கரவர்த்திகளும், சேக்கீழார் மாதிரி மதி மந்திரிகளும் நாலாம் வர்ணத்திலிருந்தே வந்திருக்கிறார்கள். இங்கே ப்ரீஸ்ட்- க்ராஃப்ட்டுக்கு சிக்ஷிக்கிற சக்தியும் கிடையாது. அவன்தான் பரம சாதுவாக இருக்க வேண்டியவன்.

தப்பு நடந்தால்கூடத் தன்னையே சிக்ஷித்துக் கொள்ள வேண்டியவன். தப்பு நடந்தால்கூடத் தன்னையே சிஷித்துக் கொள்ள வேண்டியவன் என்று சாஸ்திரம் வைத்திருக்கிறது. வெள்ளைக்காரர்கள் நீக்ரோ மேலே பட்டால் நீக்ரோவை சிக்ஷிக்கிறார்கள். நம் தேசத்திலோ தீண்டக்கூடாகவர் என்பவர் ப்ரீஸ்ட் - க்ராஃபட் மேலே பட்டால் இந்த ப்ரீஸ்ட் - ஜாதிக்காரன்தான் ஸ்நானம், பிராயச்சித்தாதிகள் செய்ய வேண்டும் என்று வைத்திருக்கிறது. தீண்டாமைக் கொள்கையைப் பற்றிய அபிப்பிராயம் ஒரு பக்கம் இருக்கட்டும். பயமுறுத்தியோ, தண்டித்தோ, அடக்கி வைத்தோ இம்மாதிரி கொள்கைகளைக் காரியத்தில் நடத்தவில்லை என்று சொல்ல வந்தேன். லெகமெல்லாம் கொண்டாடுகிற பெரிய நாகரிக சமுதாயத்தை அடக்கியும் ஏமாற்றியும் வளர்ந்திருக்க முடியாது. வாஸ்தவமாகவே தர்ம சாஸ்திர ஏற்பாடுகளில் சகலருக்கும் அநுபவ பூர்வமாக அநுகூலம் இருந்தால்தான் அவர்கள் புரட்சி செய்யாமல் இருந்தார்கள்.

பழைய வர்ண தர்மம் நடைமுறையில் இருந்தபோது, இப்படிப் புரட்சியில்லாமல், அதாவது ஜனங்களுக்கு அதிருப்தியில்லாமல், நாகரீகம் உயர்ந்து உயர்ந்து வளர்ந்து வந்தது ஒரு பக்கம் இருக்கட்டும். பழைய தொழில் பங்கீட்டைத் தகர்த்துக் கொண்டு (தீக்ஷீமீணீளீ) புதிதாக மற்ற தேசங்களின் வழியில் நாமும் முன்னேற்றம் சமத்துவம் என்று எதையோ நினைத்துக் கொண்டு, இப்போது புது முறையில் போக ஆரம்பித்தபின் எப்படியாகி இருக்கிறோம் என்பதையும் பார்த்தால், நம் தேசம் இப்போது எப்படி இருக்கிறது. பிரத்யக்ஷமாகவே பார்க்கிறோம். ஒழுங்கீனம், பொய், புரட்டு, லஞ்சம், விபச்சாரம் எல்லாம் தலை துளிர்ந்து

விட்டன. தேசத்தில் எங்கு பார்த்தாலும் கிளர்ச்சி, ஸ்டிரைக், டெமான்ஸ்ட்ரேஷன் ஹர்த்தால், போலீஸ் தடியடி, கர்ஃப்யூ(ஊரடங்கு) இவைகளைத்தான் பார்க்கிறோம். மற்ற தேசங்களில் இருக்கிற அளவுக்குக்கூட வெளிநாட்டு வியாபாரம் முதலியவற்றில் நமக்கு நாணயம் இல்லாமல் அவை நம்மைப் பரிகசிக்கிற ஸ்திதிக்கு வந்திருக்கிறோம். இந்தியாவா ஆகா என்று சர்வ தேசத்திலும் கொண்டாடிய காலம் போய்விட்டது. பாகிஸ்தான் மாதிரி ஒரு சின்ன தேசம் நம்மை சண்டைக்கு இழுக்கிறது என்றால் என்ன அர்த்தம். தேசத்தின் ஆத்மபலம் அத்தனை குறைந்து விட்டது என்றுதான் அர்த்தம்.

எதனால் இப்படிக் குறைந்தது. எதை விட்டதால் நமக்கு இந்த பலஹீனம் வந்தது. எது நமக்கு இத்தனை ஆயிரம் வருஷங்கள் புஷ்டியைத் தந்து நம் நாகரீகத்தைத் தழைத்து வளர வைத்தது?. எதை விட்டபின் நாம் அந்த நாகரீகத்தின் வாரிசுகள் என்று சொல்லிக் கொள்வதற்கே வெட்கப்படும் படியான ஸ்திதி வந்திருக்கிறது. இதை ஆலோசித்துப் பார்த்தால் மற்ற தேசங்களில் இல்லாத வர்ண தர்மம் இங்கே மட்டும் இருந்தவரையில் நம் நாகரீகம் மாத்திரம் பாறாங்கல் மாதிரியான இத்தனை நூற்றாண்டுகள் உலகமே போற்றுகிற விதத்தில் வளர்ந்து வந்திருக்கிறதென்றும் இந்த தர்மத்துக்கு நலிவு உண்டாக ஆரம்பித்ததிலிருந்து நாமும் தினம் தினம் கீழே போய்க் கொண்டிருக்கிறோம் என்றும் தெரிகிறது.

வர்ண தர்மம் இங்கு மட்டும் இருப்பானேன்?என்றால் இந்த தேசத்தில் மட்டுமாவது ஆத்ம சிந்தனைக்கும், தெய்வ அநுபவத்துக்கும், கலைகளுக்கும், உத்தமமான பண்புகளுக்கும் அநுகூலமான ஒரு நாகரீகம் இருக்க வேண்டும்

என்று நமக்கு ஆசையிருந்தால், இவற்றுக்கான வர்ண தர்மமும் இருக்க வேண்டும். இங்கு மட்டும் இருப்பானேன்?. என்றால் இங்கு மட்டுமாவது இருந்தால்தான் உலகத்துக்கே ஒரு நல்ல உதாரணம் கிடைக்கும் என்பதற்காகவே இருக்க வேண்டும்.

இல்லாவிட்டால் போட்டிதான் உடனே பொறாமைதான், அதிருப்திதான், சமூகச் சச்சரவுதான், சௌகரியமான படிப்பு, தொழில் இவற்றுக்குத்தான் எல்லாரும் வரப்பார்ப்பார்கள்.

ஆனால், அது எல்லாருக்கும் இடம்தர முடியாது. உடனே துவேஷம், பேதம், அசூயை தோன்ற வேண்டியதுதான். இப்போதே பாருங்கள். படித்தவர்களுக்கிடையிலேயும், வேலை இல்லாத் திண்டாட்டம் வந்தது என்றவுடன், காலேஜ் அட்மிஷனுக்குக் கட்டுப்பாடு போட வேண்டும் என்கிறார்கள். எஞ்ஜினியர்கள் ஜாஸ்தியாகி விட்டார்கள். என்ஜினியர் காலேஜ் சிலவற்றை மூடப்போகிறோம் என்கிறார்கள். அதாவது எல்லோருக்கும் எல்லாம் என்று வைக்க முடியாமல், இவர்களும் ஏதோ ஒரு கட்டுப்பாட்டைக் கொண்டு வரத்தான் வேண்டியிருக்கிறது. இதையே பாரம்பரியம் என்கிற கட்டுப்பாடாக ஆதியில் வைத்தார்கள். அப்போது தொழிலே ரத்தத்தில் ஊறி, அது எப்படிப்பட்டதாக இருந்தாலும் அதிலே ஒரு பெருமையுடன் இது நம் அப்பன் பாட்டன் காலச்சொத்து. நம் குலத்தனம் என்கிற நிறைவு இருந்தது. அந்தந்தத் தொழிலைச் செய்வதிலும் அந்தரங்க விசுவாசம் இருந்தது. அதனால் நல்ல திறமையும் (ணியீயீவீநீவீமீஸீநீ்) இருந்தது. இன்றைக்கு ஒவ்வொருத்தனும் பணத்துக்காகவே என்று வந்துவிட்டால் தொழிலை ஒழுங்கில்லாமல் செய்கிறான். முன் காலத்தில் பணம் இரண்டாம்பட்சம். விசுவாசத்தோடு தன் தொழில் என்று திருப்தியோடு செய்தால், எல்லாக் காரியங்களும் ஒழுங்காய் நடந்தன. சமூகமே நன்றாக இருந்தது.

நிறைவு இல்லாமல் ஒரு நாகரீகமும் இல்லை. சமூகத்தில் அத்தனை பேருக்கும் இப்படிப்பட்ட நிறைவை ஏற்படுத்தித்தந்த வர்ண தர்மம் என்ற உத்தமமான ஏற்பாட்டைக் குற்றம் சொல்லவே கூடாது.

அந்த மாதிரியே மறுபடி செய்ய முடிகிறதோ, இல்லையோ?அப்படி முடியச் செய்கிறதுக்கு நம்மாலானதைச் செய்து தோற்றுப் போனாலும் சரி, அல்லது இந்தச் சாத்தியமில்லாத காரியத்தில் இறங்குவானேன்?என்று விட்டுவிட்டாலும் சரி - கடைசிப் பட்சமாக, அந்த ஏற்பாடுகள்தான் நம் மதத்தின் சகல ஜன சமூகங்களுக்கும், நம் தேசத்துக்கும், அதன் வழியே லோகம் முழுவதற்கும் ஆயிரம் பதினாராயிரம் வருஷங்களாகப் பரம சிரேயஸைத் தந்திருக்கிறது. அதைத் தோஷம் சொல்வது ரொம்பத் தப்பு,

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## வைதிக மதம்

### *பொறுப்பாளி யார் ? பரிகாரம் என்ன*

ஜாதி என்றாலே மகா அநாகரிகமான ஏற்பாடு என்று இப்போது அரசியல் கட்சிக்காரர்கள், படித்தவர்கள் எல்லோரும் கரித்துக் கொட்டும்படியாயிருப்பதற்கு யார் காரணம்?ஒரு நல்ல அமைப்பு சீர்குலைந்து விழுவதற்கு யார் பொறுப்பாளி?

என்று ஒரு கேள்வியை எழுப்பினேன் அல்லவா?.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்கிறேன். வர்ண தர்மத்தைப் பற்றி தப்பான அபிப்ராயம் உண்டாக்கியிருப்பதற்குப் பிராமணன்தான் காரணம். யுகாந்தரமாக ஆத்ம சிரேயஸும், தேச க்ஷேமமும், லோக க்ஷேமமும் தந்து வந்த தர்மம் குலைத்து போனதற்கு பிராம்மணன்தான் பொருப்பாளி.

பிராம்மணன் தன் கடமையாகிய வேத அத்யயனத்தையும், கர்மாநுஷ்டானத்தையும் கைவிட்டான். கடமையை விட்டான். அப்புறம் ஊரை விட்டான். கிராமங்களை விட்டுப் பட்டணத்துக்கு வந்தான். தனக்குறிய ஆசாரங்களை, அதன் வெளி அடையாளங்களை விட்டான். கிராப் வைத்துக் கொண்டான். ஃபுல்ஸூட் போட்டுக் கொண்டான். தனக்கு ஏற்பட்ட வேதப்படிப்பை விட்டு வெள்ளைக்காரர்களின் லௌகிகப் படிப்பில்போய் விழுந்தான். அவன் அவன் தருகிற உத்தியோகங்களில் போய் விழுந்தான். அதோடு, அவனுடைய நடை உடை பாவனை எல்லாவற்றையும் காபி அடித்தான். வழிவழியாக வேத ரிஷிகளிலிருந்து பாட்டன், அப்பன்வரை ரக்ஷித்து வந்த மகோந்நதமான தர்மத்தைக் காற்றிலே விட்டுவிட்டு, வெறும் பணத்தாசைக்காகவும் இந்திரிய சௌக்கியத்துக்காகவும், புதிய மேல் படிப்பு, மேல்

நாட்டுப் படிப்பு, ஸயன்ஸ், உத்தியோகம், வாழ்க்கை முறை, கேளிக்கை இவற்றில் போய் விழுந்து விட்டான்.

சாஸ்திரங்கள் இவனுக்குப் பணத்தாசையே கூடாது. இவன் சொத்தே சேர்க்கக்கூடாது என்கின்றன. அதன் பிரகாரமே இவன் வாழ்க்கை நடத்தி, வேத சகாப்தத்தாலும் யக்ஞங்களாலும் லோக க்ஷேமத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த வரையில், இவனிடம் மற்ற எல்லா ஜாதியாரும் குறைவில்லாத அன்பும் மரியாதையும் காட்டிவந்தனர். இவனையே உதாரணமாக, வழிகாட்டியாக, முன்மாதிரியாக (example, guide, model) வைத்துக் கொண்டார்கள்.

இப்போது தொழிலை விட்டுவிட்டு, கிராமத்தைவிட்டு, பட்டணத்துக்கு இவன் வந்து, இங்கிலீஷ்காரன் தந்த படிப்பு, அவன் கொடுக்கிற உத்தியோகம், அவனுடைய வாழ்க்கை முறை இதை எல்லாம் எடுத்துக் கொண்டு, இதனால்தானே ஏதோ ரொம்பவும் நாகரீகத்தில் உயர்ந்து விட்டதுபோல் தாட் பூட் என்று பண்ணியதை, மற்ற ஜாதியினர் பார்த்தார்கள். இதுவரை நல்லதெற்கெல்லாம் இவனை முன்னுதாரணமாக வைத்துக் கொண்டிருந்த அவர்கள் இப்போது ஒழுங்கு தப்பிப் போவதிலும் இவனையே பின்பற்ற ஆரம்பித்தார்கள். தாங்கள் பாட்டுக்கு திருப்தியோடு செய்துவந்த தொழிலை விட்டுவிட்டு, கிராமத்தையும்விட்டு, நகர வாசம் (Town life) இங்கிலீஷ் படிப்பு, வெள்ளைக்கார அரசாங்க உத்தியோகம் இவற்றுக்கு மற்றவர்களும் ஆசைப்பட ஆரம்பித்தார்கள்.

பிராமணனே புத்தியால் ஆகிற காரியங்களை ஆயிரம் பதினாராயிரம் வருஷங்களாகச் செய்து வந்திருக்கிறான் அல்லவா. ஆதியிலெல்லாம் இவனுடைய புத்தி கொஞ்சம்கூடத் தன்னலனுக்குப் பிரயோஜனமில்லாமல் சமூக க்ஷேமத்துக்காகவே அர்ப்பணிக்கப்பட்டு வந்தது. இந்தத் தியாக விசேஷத்தாலேயே அது பிரகாசமான சாணை தீட்டிய கத்தி மாதிரிக் கூர்மையாக இருந்தது. இப்போது, இவனுக்கு சமூக க்ஷேம நோக்கம் போய், தன்னலமான லௌகிக ஆசைகள் எல்லாம் வந்தபின் அந்த புத்திப் பிரகாசம் மழுங்க

வேண்டியதுதான். இவனுக்கென்று ஏற்பட்ட கடமைகளைச் செய்யவே முன்பு இவனுக்கு புத்தி வன்மையும் பகவத்

பிரசாதமாகக் கிடத்திருந்தது. கடமையை விட்டபின் அந்த புத்திக்கூர்மை மழுங்க வேண்டியதுதான்.

ஆனாலும் - சைக்களில் காலால் பெடல் பண்ணுவதை நிறுத்திய பிற்பாடுகூட, ஏற்கெனவே உந்தின வேகத்தின் விசேஷத்தால், கொஞ்சம் தூரம் அது பெடல் பண்ணாமலே ஓடியதல்லவா?. அந்த மாதிரி, பிராமணன் ஆத்மீக விந்தைகளை விட்டு லௌகிக விந்தைகளில் போய் விழுந்த பின்னும், ஏற்கெனவே தலைமுறை தலைமுறையாக இவனுடைய பூர்விகர்கள் பெயல் பண்ணியிருந்த பலம் இவனுக்கும் கொஞ்சம் மிஞ்சியிருக்கிறது. இவனாகப் பெடல் பண்ணாவிட்டாலும் அவர்கள் சேமித்து வைத்த புத்திப் பிரகாசம் இவனுக்கும் இன்னமும் பாரம்பரியமாக கொஞ்சம் வந்தது. இந்த மூளை பலத்தினால்தான் இங்கிலீஷ்காரனின் படிப்பு முறையில் ஆச்சரியப்படும்படியாகத் தேர்ச்சி பெற்றான். அவர்களுடைய உத்தியோகம், சட்டம், தொழில் முறைகள் ஆகியவற்றை நுணுக்கமாகத் தெரிந்து கொண்டு, இவற்றில் அவர்களுக்கே தெரியாத தந்திரங்களை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கிற அளவுக்குச் சாதுரனாகி விட்டான்.

முஸ்லீம்கள் ஆட்சிக் காலத்தில்கூட கெடாத வேதரக்ஷணம் வெள்ளைக்காரர்கள் வந்தவுடன் ஏன் கெட்டது என்று ஒரு கேள்வி. இதற்குக் காரணம், வெள்ளைக்காரர்களோடு புது ஸயன்ஸ்களும், இயந்திர (மெஷின்) சகாப்தமும் கூடவே வந்ததுதான் - இதுவரைக்கும் தெரிந்திராத பல புது விஷயங்கள் இப்போது தெரிந்தன. விஷயம் மட்டும் என்று எடுத்துக் கொண்டால் இந்த ஸயன்ஸினால் பல உண்மைகள் தெரிய வந்தன. இது நல்லதுதான். ஆனால், இந்த விஷய ஞானத்தினால் காரியம் என்று செய்கிறபோது, ஒழுங்கு தப்பிப் போகிறதற்கான சபலங்கள் ஏகப்பட்டதாக உண்டாகிவிட்டன. ஸயன்ஸினால் காரியம் செய்ய மெஷின்கள் உண்டாயின. எலெக்ட்ரிசிட்டி, ஸ்டீம் பவர் எல்லாம் வந்தபின் வெகு விரைவில் பல காரியங்களைச் செய்து கொள்ள முடிந்தது. இவற்றால் பல காரியங்கள் செய்து கொள்ளலாம் என்றாயிற்று. ஆனால் இந்த ஸௌகரியங்கள் எல்லாம் இந்திரியங்களுக்குத்தான். இந்திரியங்களுக்கு சுகத்தைக் காட்டிவிட்டால் போதும். அது மேலே மேலே கொழுந்துவிட்டுக் கொண்டு, ஆசைகளை

விஸ்தரித்துக்கொண்டே போகும். இப்படியாக அவசியமில்லாத - ஆத்மாவையே கெடுக்கிற சுக சாதனங்கள் பெருகின. முன்பின் கண்டிராத இந்த சுகங்களின் ஆசை எல்லா தேச ஜனங்களையும் இழுத்த மாதிரி பிராமணனையும் இழுத்தது. வெள்ளைக்காரனோடு வந்த ஸயன்ஸினால் ஏற்பட்ட இன்னொரு பெரிய அனர்த்தம் அது. ரொம்பவும் பகுத்தறிவு பகுத்தறிவு என்று சொல்லிக்கொண்டு, நம்பிக்கைகளின் ஏற்பட வேண்டிய சமய விஷயங்களைப் பொய், புரளி என்று நினைக்க வைத்தது. முஸ்லீம் ஆட்சியில்கூட தன் ஸ்வதர்மத்தை விடாதவன். இப்போது அதைவிட்டு சௌக்கியங்களைத்தேடி வந்து விட்டான். இங்கிலீஷ்காரர்களைவிட டிப் டிப்டாப்பாக டிரஸ் செய்துகொண்டு, சிகரெட் குடிக்கவும், டான்ஸ் ஆடவும் சாமர்த்தியம் பெற்றுவிட்டான். தங்கள் வித்தைகளில் இப்படிக் கைதேர்ந்து விட்டவனுக்கு அவர்களும் நிறைய உத்தியோக கொடுத்தனர்.

இப்போதுதான் பெரிய அனர்த்தம் உம்டாயிற்று. இதுவரை தலைமுறை தத்வமாக அவரவருக்கும் ஒரு தொழில் என்று ஏற்பட்டு, ஜீவனோபாயத்துக்கு என்னடா செய்வோம்?என்கிற கவலையில்லாமல் நிம்மதியிருந்து வந்தது. இப்போது பிராமணனைப் பார்த்து, மற்றவர்ளுக்கும் இப்படிப் பரம்பரையாக வந்த தொழிலை விட்டுவிட்டு, பிரிட்டிஷ்காரன் தருகிற உத்தியோகம், அவனோடு வந்த தொழில்கள், பாங்கு, ரயில்வே இவற்றாலேயே போய் விழுந்தார்கள். அதோடு மெஷின்கள் ஜாஸ்தியாக ஆக, கைவேலையும் குறைந்ததால், சில தொழில்காரர்கள் கஷ்டத்துக்கு ஆளாகி, வேறு உத்தியோகத்துக்கு வர வேண்டியதாயிற்று. இன்னாருக்கு இன்ன தொழில் என்ற வரையறை இல்லாமல், புதிதாக நம் தேசத்தில் தொழிலுக்காகப் போட்டி என்று வவந்துவிட்டால் சாதாரணமாகவே அப்புறம் பொறாமை, வயிற்றெரிச்சல், அசூயை, துவேஷம், சண்டை அத்தனை பட்டாளமும் அதன்கூட வந்துதானே ஆக வேண்டும். அதோடுகூட, இங்கே, விசேஷமான, முன்னே நான் சொன்னபடி, பூர்விகர்கள் பெடல் செய்து தந்திருந்த புத்தி பலம் பிராமணனுக்கு அதிகமாக இருந்து படிப்பு, உத்தியோகம் இவற்றிலே இவன் முதன்மைக்கு வந்ததால் - சமூகத்தில் ரொம்பக் குறைச்சல் சதவிகமே இவனுடைய ஜனத்தொகையாக இருந்தும்கூட சர்க்கார் காலேஜ்,

வைத்தியம், சட்டம் (law) எல்லாவற்றிலும் இவனே ரொம்ப ஸ்தானங்களைக் கைப்பற்றியிருந்ததால், மற்றவர்களுக்கு இவனிடம் துவேஷம் வரத்தானே செய்யும். துவேஷத்தைக் கூடுதலாக்கினால் தன் ஆட்சியைத் ஸ்திரப்படுத்திக்கொள்ளலாம் என்று வெள்ளைக்காரன் கண்டு கொண்டான். ஆரியன் - திராவிடன் Race theory ஐக் கட்டிவிட்டான். ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருந்தவர்களிடையில் பேதத்தின் விதைகளை நன்றாக போட்டு விட்டான். போட்டிச் சூழ்நிலையில் ஏற்பட்டிருந்த கசப்பில் இந்த யுக்தி நன்றாகப் பலித்துவிட்டது.

துவேஷம் இரட்டிப்பாகிற மாதிரி பிராமணனே இன்னொன்றும் செய்தான். ஒரு பக்கத்தில் ஜாதி தர்மத்தை விட்டுவிட்டு, இவனும் வெள்ளைக்காரனோடு சேர்ந்து பழைய ஏற்பாடு காட்டுமிராணிடித்தனமானது. ஒருத்தரை இன்னொருத்தர் சுரண்டுவது என்றெல்லாம் சமத்துவம் பேசினாலும், இன்னொரு பக்கம் இவன் மற்றவர்களோடு ஒட்டிப்போகாமல், தான் ஏதோ உசத்தி என்று பெருமை கொண்டாடிக் கொண்டான். முன்பும் இவன் மற்றவர்களோடு ஸ்தூலமாக (physical) ஒட்டிப் பழகத்தான் இல்லை. ஆனால், அதற்கு நியாயம் இருந்தது. பலவிதமான காரியங்களை உத்தேசித்து, அவரவருக்கும் ஆகாரம் முதலியவற்றிலும் மற்ற விஷயங்களிலும் வித்தியாசங்கள் இருந்தாக வேண்டியிருக்கிறது. அவர்கல் வேறு வேறு விதமான சூழ்நிலைகளில் இருந்தாக வேண்டியிருக்கிறது. ஃபிலிமைக் கழுவுகிற இடம் இருட்டாகத்தான் இருக்க வேண்டும். ஸினிமா ஷூட்டிங் செய்கிற இடத்திலோ நிறைய வெளிச்சம் வேண்டும். ஒரே காரியாலயத்தில் கான்டீனில் இருக்கிறவர்கள் பரம சுத்தமாகக் கைகாலில் அழுக்கில்லாமல் இருக்க வேண்டும். அங்கேயே மெஷினைத் துடைக்கிறவன் எண்ணைப் பிசுக்கோடு அழுக்குச் சட்டை போட்டுக் கொண்டுதான் இருக்க வேண்டும். இதனால் அந்த ஸர்வர் அந்த மெஷின் மேனைவிட உசத்தவன் என்று அர்த்தமாகிவிடுமா? இதே மாதிரி,

தன்னலமில்லாமல் புத்தி பலத்தைப் பேணுகிறவன் பட்டினி கிடக்க வேண்டும். சைனியத்திலிருக்கிறவனோ மாம்சாதிகளுக்குக்கூட விலகில்லாமல் புஷ்டியாகச்

சாப்பிட்டாலும் தோஷமில்லை. ஆகாரம் வேறாக இருப்பதால் பிராமணனுக்கும் க்ஷத்திரியனுக்கும் துவேஷம் என்று அர்த்தமாகுமா?. அதற்காக துவேஷமில்லையே என்று இவன் ஸ்தூலமாக அவனோடு ஒட்டி வாழ்ந்தால், அவனுடனேயே இவனும் உட்கார்ந்து சாப்பிட்டால், அவனுடைய ஆகராதிகளை நாமும்தான் ருசித்துப் பார்ப்போமே என்ற சபலம் உண்டாகத்தான் செய்யும். அந்தச் சபலம் இவனை இழுத்துக் கொண்டுபோய்க் கடைசியில் இவன் தர்மத்துக்கே ஹானி விளைவிக்கிற அளவுக்கு ஆகிவிடும். அந்தந்த சமுதாயத்திற்கு அந்தந்த குல தர்மம், பழக்க வழக்கம், ஆகார முறைகள்தான் உகந்தவை. ஆனால் சமத்துவம் என்ற எண்ணத்தில் ஸ்தூலமாக (Physical) எல்லோரும் பழகி, அந்த தனித்தனி ஏற்பாடுகளையெல்லாம் பல பட்டறையாகக் குழப்ப ஆரம்பித்தால், அத்தனை காரியமும் கெட்டு, மொத்தத்தில் பொதுக்காரியமே சீர்குலைகிறது. இதனால்தான் அக்ரஹாரம், வேளாளர் தெரு, சேரி என்று கிராமங்களில் பிரித்து வைத்தார்கள். கிராம வாசத்தில் இது முடிந்தது. புதிதாக உண்டான பட்டணவாசத்தில் இது சாத்தியமாக இருக்கவில்லை. எல்லோரும் ஒரே மாதிரி ஷிஃப்டில் வேலைக்குப் போய், ஒரே மாதிரி காண்டீனில் உட்கார்ந்து, ஒரே ஆகாரத்தைச் சாப்பிட வேண்டும். இப்படிப் பல தினுசுகளில் கலந்து கலந்துதான் இருக்க வேண்டும் என்றாகி விட்டது. உபவாஸாதி நியமங்களைக் கண்டிப்பாக அநுஷ்டிக்க வேண்டிய பிராமணன் எல்லாவற்றிலும் மற்றவர்கள் போலவே ஆகிவிட்டான். ஆபீஸ் நேரம், காலேஜ் நேரம் எல்லாம் இவனுடைய கர்மாநுஷ்டானங்களுக்கு இடைஞ்சலாக இருந்தால் அவற்றை எல்லாம் காற்றிலேவிட்டுவிட்டு, மற்றவர்களைப் போலவே ஆகிவிட்டான். இதுவரை இவன் அநுஷ்டித்தது மற்றவர்களுடைய க்ஷேமத்துக்காகத்தான். முக்கியமாகவே அதற்காகவேதான். தர்மகத்தா (trustee) மாதிரி, சமூகத்தின் பொருட்டு, இவன் இந்த தர்மங்களை ரக்ஷித்துப் பிரயோஜனங்களை எல்லோருக்கும் தந்துவந்தான். இப்போது அவர்களோடு நானும் ஒன்று, எல்லோரும் சமம் என்று சொல்லிக் கொண்டே அவர்களுடைய வயிற்றெரிச்சலுக்குக் காரணமாக எல்லா ஸ்தானங்களுக்கும் போட்டியாக வந்துவிட்டான். இது போதாது என்று நியமங்களில்

அவர்களைவிடத் துளிக்கூட கட்டுப்பாடு இல்லாமல் வாழ்ந்தாலும், உள்ளூர அவர்களை விடத் தான் உயர்ந்தவன் என்று நினைத்துக் கொண்டிருந்தால் மற்றவர்களின் துவேஷம் ஜாஸ்தியாகத்தானே தெரியும்.

தானும் கெட்டு, சந்திர புஷ்கரணியையும் கெடுத்தானாம் என்கிற கதையாகப் பிராமணன் தானும் தர்மத்தை விட்டு, மற்றவர்களுக்கும் அவரவர் தர்மங்களைவிடுகிற மாதிரி செய்துவிட்டான். தன் தர்மத்தை விட்டபின் இவனுக்கு உயர்வு எதுவுமே இல்லை. தன் தர்மத்தைச் செய்தபோதும்கூட, இவனாக உயர்வு பாராட்ட நியாயமில்லை. ஒவ்வொருவனும் ஒன்றைச் செய்கிறார்கள். நான் இதைச் செய்கிறேன் என்றுதான் அடக்கமாக இருக்கவேண்டும். ஆனாலும் தன்னலமில்லாமல், கடும் விரத நியதிகளோடு இவன் தூய்மையாக வாழ்ந்ததைப் பார்த்து மற்றவர்களே இவனுக்கு ஒரு ஏற்றம் கொடுத்து கௌரவித்து வந்தார்கள். இப்போது அதற்கெல்லாம் வட்டியும் முதலுமாக எல்லாரும் தன்னைத் தூற்றும்படி, கரித்துக் கொட்டும்படி இவனே ஆக்கிக் கொண்டு விட்டான்.

ஹிந்து சமூகம் பாழானதற்குப் பிராமணன்தான் காரணம் என்பது என் தீர்மானமான அபிப்பிராயம். சிலபேர் இதற்கு சமாதானம் சொல்கிறார்கள். வேதாத்யயனம், யக்ஞாதி கர்ம்க்களுக்கே பிராமணனுக்கு ஸதாஸர்வ காலமும் தேவையாயிருந்து. ஆயுசுக் காலம் முழுவதும் அதற்கே செய்விடுவதாக இருந்தது. இப்படி இவன் வேதம் ஒதுவது, வேள்வி செய்வது, சாஸ்திரங்களை ரக்ஷித்துத் தருவது என்றே பொழுது முழுவதையும் செலவழித்ததால், இவனுடைய ஜீவனோபாயத்துக்கு என்ன செய்வது. இவன் பொருள்தேடிப் போக ஆரம்பித்தால், ஆயுட்கால பிறவிப் பணி(life time mission) நடக்காது. இந்தப் பிறவிப் பணிக்கோ part time போதாது. அப்படியே இவன் வயிற்றுக்காக வேறு வேலை என்று வைத்துக்கொண்டால் ஆசாரங்களுமம் கெட்டுப்போகும். அதன்பின் பத்தியமில்லாத மருந்துபோல் இவனுடைய அத்யயனவீரியம் குறைந்துபோய், அதனால் லோகத்துக் கிடைக்கிற க்ஷேமம் நஷ்டமாகிவிடும். இதனால்தான் பிராமண்ன் மந்த்ரம் யாசகம் செய்யலாம் என்று சாஸ்திரம் அனுமதித்தது. யாசகம் என்றில்லாமல், ராஜாக்களே இவனுடைய அத்யயனம்,

யக்ஞும் சாஸ்திர ரக்ஷணம் இவற்றில் ஏற்படுகிற சமூக சிரேயஸை முன்னிட்டு இவனுடைய அத்யாவசியத் தேவைகளுக்கு குறை வைக்கக்கூடாது என்று மானியங்கள் விட்டார்கள். பூதானம், கிருஹதானம், கோதானம், ஸ்வர்ணதானம் எல்லாம் செய்தார்கள். ஆனாலும் அவர்கள்தான் கொடுக்கிறார்களே என்று இவர்கள் வரம்பில்லாமல் வாங்கிக்கொள்ளக்கூடாது. அப்படிச் செய்தால் அது ரொம்பவும் இவர்களை இந்திரிய சுகத்தில் இழுத்துவிட்டு ஆத்மா அபிவிருத்தியைக் கொடுக்கும். அதோடு ரொம்பவும் கைநீட்டி வாங்கிவிட்டால் இவர்கல் கொடுக்கிறவனுக்கு பவ்யப்பட்டு சாஸ்திரங்களை இவர்கள் இஷ்டப்படி வளைத்து அர்த்தம் பண்ண வேண்டியிருக்கும். நடுநிலைமை தப்பிப்போகும்படி நேரிடும் - இந்தக் காரணங்களை உத்தேசித்து தர்ம சாஸ்திரங்கள் பிராமணன் உயிர் வாழ்வதற்கு அதம பட்சமாக எது தேவையோ அதற்கு மேல் ஒரு திருணமாத்திரம்கூட வைத்துக் கொள்ளக்கூடாது என்று விதித்தன. இந்த முறைப்படியே இவர்களும் ராஜாக்களின் போஷனையில் தங்கள் தர்மத்தைச் செய்துகொண்டு வந்தார்கள்.

இங்கிலீஷ்காரார் ராஜ்யம் வந்தபின், இவர்களுக்கு ராஜ மான்யங்கள் இல்லையே. இவர்கள் எப்படி எவ்விதமான வருவாயும் இல்லாமல் உயிர்வாழ முடியும். அதனால்தான் இஹ்கிலீஷ் படிப்பு, சர்க்கார் உத்தியோகம் என்று இவர்கள் இறங்கும்படி ஆயிற்று. சந்தர்பசி சூழ்நிலை (Force of circumstances) இவர்களை அப்படி நெரித்தது. அதற்காக இவர்களைக் கண்டிக்கக் கூடாது என்று ஒரு சமாதானம் சில பேர் சொல்கிறார்கள்.

இதில் கொஞ்சம் நியாயமும் இருக்கலாம். ஆனால் முழு நியாயமும் இல்லை என்றுதான் என் மனசுக்குப் படுகிறது. இங்கிலீஷ்காரனுக்கு முன்னால் மொகலாய சாம்ராஜ்யம் (Moghul Empire) மற்ற பல சுல்தான் ஆட்சி எல்லாம் இருந்ததே. அப்போதெல்லாம் ஏதோ குஞ்சம் பண்டிதர்கள் தர்பார் உத்தியோகத்துக்குப்

போனார்கள் என்றாலும், மற்றவர்கள் ராஜ மானியம் இல்லாமல்தானே தங்கள் தர்மத்தைத் தொடர்ந்து செய்து வந்தார்கள். அக்ரஹாரம் காலியானது. கிராமம் பாழானது.

வேதபாடசாலைகள் சூனியமானது. நிலங்கள் எல்லாம் ஸர்டிஃபிகேடேகளாக மாறினது - இந்த அனர்த்தங்கள் எல்லாம் சுமார் நூறு வருஷத்துக்கு உட்பட்ட விஷயங்கள்தானே. அதற்கு முந்தின தலைமுறை வரை வைதிக தர்மம் உருக்குலையாமல்தானே இருந்திருக்கிறது.

இதற்குக் காரணம் ஹிந்து ராஜாக்கள் மட்டும்தான் என்றில்லை. ஹிந்து சமூகத்தில் மற்ற எல்லா வர்ணத்தினருமே வேத தர்மம் நசித்துப் போகக்கூடாது. பிராமண ஜாதி அழிந்து போகக் கூடாது என்று மனசார நினைத்து அதற்காக அள்ளிக் கொடுத்துக் காப்பாற்றி வருகிறார்கள். இன்றைக்கும் படிப்பதற்கு பிராமணப் பசங்கள் இல்லாததால் வெறிச்சோடியிருக்கிற நூற்றுக் கணக்காணபாடசாலைகள் இருக்கின்றனவே. இவற்றுக்கெல்லாம் முதல் போட்டு மூலதனம் வைத்திருப்பது யார். பெரும்பாலும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களும், கோமுட்டிச் செட்டிமார்களும், பண்ணையார்களைன வேளாளர்களும்தான். நகரத்தார் செய்த கோயில் திருபணிக்குக் கணக்கில்லை. அதே மாதிரி, இந்தக் கோயிலுக்கும் வேர் வேதம். அது இருந்தால்தான் இந்தக் கோயிலில் பூஜையும் சாந்நித்தியமும் உண்டு என்ற நம்பிக்கையில், ஒரு ஆலையத் திருப்பணி செய்தால் ஒரு வேத பாட சாலையும் வைக்க வேண்டும் என்று அவர்கள் தமிழ்நாடு முழுவதிலும் வைத்திருக்கிறார்கள். வேளாளர்களில் பெரிய நிலச்சுவான்தார்களாக இருந்தவர்களும் இப்படியே வேத பாடசாலைகளுக்கான அள்ளிக் கொடுத்திருக்கிறார்கள். இங்கிலீஷ்காரன் ஆட்சி வந்த பிறகும் அவன் காட்டிய சுகபோக்ய ஜீவனத்தில் மயங்காமல், சாஸ்திரம் விதிக்கிற அளவுக்கு அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதோடு மட்டும் பிராமணன் வாழ முற்பட்டிருந்தால், அவனுக்கு நிச்சயம் மற்ற சமூகத்தார் அதற்கான வசதிகளைச் செய்துகொடுத்திருப்பார்கள். அவர்கள் இவனைக் கைவிடாதபோதே இவனாகத்தான் அக்ரஹாரத்தை, வேதபாடசாலைகளை விட்டுவிட்டு ஓடி வந்துவிட்டான். மேல் நாட்டு நாகரீகத்தில் புதிதாக வந்த ஸயன்ஸினால் பெருகி விட்ட போக்கிய வாழ்வில் இவனுக்கு ருசி வந்துவிட்டது. ஆத்மாபிவிருத்திக்கு எந்த அளவு அவசியமோ அநுகூலமோ, அந்த அளவிற்கு மட்டுமே சரீர

போஷணம் செய்து கொண்டால் போதும் என்ற உயர்ந்த லட்சியம் போய்விட்டது. சாப்பாட்டுக்கே இல்லையே என்ற நிர்பந்தத்தின் மேல்தான் இவன் தர்மத்தை விட்டான் என்ற சமாதானத்தை ஒப்புக் கொள்ளவில்லை. அவசியத்துக்கு அதிகமான வஸ்துக்களில் இநனுக்குத் துராசை வந்துவிட்டது என்று ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

கிராமத்தில் சாப்பிட வசதியே இல்லை என்றால், மெட்ராஸ் மாதிரி டவுன்களுக்கு வந்து, ஏதோ வயிற்றுக் கஞ்சிக்குக் கிடைத்தவுடன் இவன் திருப்த்திப்பட்டிருக்க வேண்டியதுதானே?. அப்படி திருப்தி அடைந்திருந்தால் மேலே சொன்னது சரி. நடைமுறையில் நாம் பார்ப்பது என்ன? மெட்ராஸில் ஆயிரம் ரூபாய் சம்பளம் வந்தால்கூட, டில்லியில் இரண்டாயிரம் தருகிறான் இவன் அங்கே ஓடுகிறான். இங்கே ஏதோ குஞ்சம் அனுஷ்டிக்க முடிந்த தர்மங்களையும்

அங்கே போய் விட்டுவிடுகிறானே. அதற்கப்புறம் நியூயார்க்கில் 4000 டாலர் சம்பளம் கிடைக்கிற என்றால், கண்டத்தைவிட்டு கண்டம் போய் கண்டபடி வாழ ஆரம்பித்துவிடுகிறானே - கொஞ்சம் மிஞ்சியிருந்த ஆசாரங்களைக்கூட உதறி தள்ளிவிடுகிறானே. மிலிடரியில் அதிகப் பணம் வருகிறதா?அதிலும் சேருகிறேன். அங்கே மதுபானம், மாம்ஸ போஜனம் எல்லாம் பழகவேண்டியிருந்தாலும் பரவாயில்லை என்று பணத்துக்காக எதையும் செய்வதைத்தானே பார்க்கிறோம். ஆகையால் பிராமணன் ஸ்வதர்மத்தை விட்டதற்குச் சொல்கிற சமாதானம் கொஞ்சங்கூட எடுபடவில்லை.

நான் இதற்கு மேலே ஒருபடி போகிறேன். இங்கிலீஷ்காரார்களுடன் புது ஸயன்ஸூகள், இயந்திர யுகம் எல்லாம் வந்ததால், நம்மவர்களில் மற்ற ஜாதிக்காரார்களுக்குத் தானாகப் பழைய தர்மங்களில் பிடிப்புப் போய் விட்டதாகவே வைத்துக் கொள்வோம். இங்கிலீஷ்காரார்கள் கிளப்பிவிட்ட ஆரிய திராவிட பேத உணர்ச்சியால் மற்ற சமூகத்தார் பிராமணர்களை ரக்ஷிக்கக்கூடாது என்ற முடிவுகட்டியதாகவே வைத்துக் கொள்வோம். (இதெல்லாம் யதார்த்தம் - fact இல்லை. ஒரு பேச்சுக்காகத்தான் assume பண்ணிக் கொள்ளச்சொல்கிறேன்.) வீட்டைவிட்டு ஓடி எங்காவது

படித்து உத்தியோகம் பார்த்தால்தான் ஒரு பிடி சோற்றுக்கு வழி உண்டு என்ற நிலை பிராமணர்களுக்கு வந்ததாகவே வைத்துக் கொள்வோம். இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டிருந்தால்கூட அவர்களை, செத்தாலும் நம் தர்மத்தை விடாமல் செய்து கொண்டே சாக வேண்டும் என்று உறுதியோடு வேதாத்யயனத்தையும் கர்மாநுஷ்டானத்தையும் விடாமலிருந்திருக்க வேண்டும்.

ஆனால் முன் தலைமுறைக்காரர்கள் என்ன செய்திருக்க வேண்டும் என்பதைப் பற்றி இப்போது சொல்லிப் பிரயோஜனமில்லை. அவர்கள் லோகத்தைவிட்டே போய் விட்டார்கள். அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும் என்கிறேனோ அதையேதான் இன்றைக்கு உள்ளவர்களுக்கும் சொல்கிறேன்.

அதாவது. செத்தாலும் ஸ்வதர்மத்தை விடக்கூடாது. இப்போது மட்டும் சாகாமல் இருக்கப் போகிறோமோ என்ன?. பணத்தை நிறையச் சேர்த்துக் கொண்டு, ஆனால் அதைவிட நிறைய அவமானத்தைச் சேர்த்துக் கொண்டு, மற்றவர்களின் அசூயைக்குக் காரணமாக இருந்துகொண்டு, நமக்கான தர்மத்தை விட்டுவிட்ட பிரஷ்டர்களாகச் சாகப்போகிறோம். இதைவிட சாப்பாட்டுக் கு இல்லாவிட்டாலும், நம் கடமையைய் செய்தோம் என்று மூச்சு இருக்கிற மட்டும் பட்டினி கிடந்தாவது வேத ரக்ஷணத்தைச் செய்து சாவது பெருமைதானே. இப்படிச் செய்வதால் மற்றவர்கள் நம்மை கண்டு நிச்சயம் யாரும் அசூயை, பொறாமை வயிற்றெரிச்சல் படமாட்டார்கள் அல்லவா. காலத்துக்கு ஒவ்வாத அசட்டுப் பிச்சுக்கள் என்று கேலி வேண்டுமானால் செய்வார்கள். அதாவது பரிகசிப்பார்கள். பண்ணிவிட்டுப் போகட்டுமே. இப்போது மட்டும் குறைச்சலாகவா பரிகாசத்துக்கு ஆளாகி வருகிறோம். நம் தர்மத்தை விட்டு ஊர் சிறிக்கிற நிலையில் வயிறு வளர்ப்பதைவிட தர்மத்தைச் செய்து கொண்டு ஊர் சிரித்தாலும் சிரிக்கட்டும் என்றுதான் இருக்கலாமே. அல்லது சாகலாமே. ஒவ்வொருத்தன் என் தேசம் என்கிறான். என் பாஷை என்கிறான். அதற்காகச் சண்டை போட்டு உயிரை வேண்டுமானாலும் விடுகிறான். அதற்காகச் சண்டை போட்டு உயிரை வேண்டுமானாலும் விடுகிறேன்.

சுதந்திரப் போராட்டம் மாதிரி பெரிய விஷயங்கள்தான்

என்றில்லை. ஏதோ ஒரு ஜில்லாவின் பகுதி இன்னொரு ஜில்லாவுக்கு போய் விடக்கூடாது என்பதற்காகப் பிராணனை விடுவதற்கு சித்தமாக தானே தன் மேல் மண்ணெண்ணையைக் கொட்டிக் கொண்டு தீக்குளிக்கிறவர்கள் இருக்கிறார்கள். கொள்கைக்காக இதை இவர்கள் செய்கிற மாதிரி இங்கிலீஷ்காரர்கள் புது மேஸ்தார் வாழ்க்கை வந்தபோது பிராமணர்கள் பிராணனும் துச்சம் என்று பரமத் தியாகமாகத் தங்கள் தர்மத்தை ஏன் ரக்ஷித்திருக்கக்கூடாது. பிறத்தியானுடைய தர்மத்தை எடுத்துக் கொண்டு, அதனால் பெரிய வசதி, கிசதி பெறுவதைவிட, தன் தரமத்திலேயே இருந்து கொண்டு சாகிறது மேல் (நிதனம்ச்ரேய:- சாவே சிலாக்கியம்) என்றுதான் பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார். முஸ்லீம் ஆட்சியில் பிராமணர்கள் மாறாததற்கும் வெள்ளைக்காரன் ஆட்சியில் மாறி விட்டதற்கும் என்ன காரணம் சொல்கிறீர்கள். வெள்ளைக்காரன்களோடுதான் புது ஸயன்ஸ், யந்திர சாதனங்கள் வந்தன. மோட்டார்கார், எலெக்ரிசிட்டி மாதிரி வெகு சுருக்கக் காரியத்தைச் செய்து கொள்வதற்கான சாதனங்கள் வந்தன. அதுவரை நினைத்தும் பார்த்திராத இத்தனை சௌகரியங்கள், சுக சாதனங்கள் வெள்ளைக்காரனோடு வந்தால்தான் அவற்றின் கவர்ச்சியால் இவன் இழுக்கப்பட்டு அவர்களுக்குரிய வழிகளிலேயே மோகித்து விட்டான் என்கிறார்கள். இது ஒரு காரணமாக இருக்கலாமே ஒழிய சமாதானமாகவவோ நியாயமாகவோ ஆகாது.

பிராமணன் தேகம் இந்திரிய சுகதத்துக்காக ஏற்பட்டிருக்கிறதே அல்ல. அது லோக க்ஷேமார்த்தமாக வேதத்தை ரக்ஷிப்பதற்கு என்ன நியமங்களை அவற்றைச் செய்யவே ஏற்பட்டது. அதில் அதிகப்படியான எந்த போக்ய வஸ்துவும் சேர்க்கக் கூடாது என்பதுதான் அடிப்படை தர்மம். அந்த தர்மத்தை, அதில் உள்ள தியாகப் பண்பை விட்டுவிட்டு, நவீன உபகரணங்களால் சுலபத்தில் கிடைக்கிற சுகங்களுக்கு இவன் ஆசைப்பட்டது அடியோடு தவறுதான். பாதகமான சூழ்நிலையிலும் ஸ்வதர்மத்தை ரட்சிப்பதுதான் பெருமை. அப்படி அவர்கள் செய்யாதது பெரிய தப்பு. அதன் பலனைத்தான் இப்போது ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருந்த நமமிடையில் வந்துவிட்ட துவேஷ உணர்ச்சியில் அநுபவிக்கிறோம். மற்றவர்களுக்கும் பெரிய

கிலேசத்தை உண்டாக்கி விட்டோம். முதலில் பிராமணனுக்கு காலேஜிலே இடமில்லை. வேலையில்லை என்று ஆனதே, பிறகு படிப்படியாக மற்றவர்களுக்கும் அந்தக் கதிதான் என்கிற நிலைக்கு முற்றி இருக்கிறது. மனித சக்தியினாலேயே கிராம வாழ்க்கையை எளிதாக நடத்தியமட்டும் எல்லாம் சரியாயிருந்தது. யந்திர சக்தி, ஆலைத்தொழில் எல்லாம் வந்து, தேவைகளும் ரொம்ப அதிகமாகி, வாழ்க்கையே சிக்கலாகிவிட்ட (Compilcated) இன்றைய நிலையில் காலேஜ் அட்மிஷன், வேலை இவற்றுக்கு எல்லோருமே திண்டாடும்படியாகத்தான் ஆகியிருக்கிறது.

இப்போது என்ன பரிகாரம் (ermedy)?பிராமணர்கள் எல்லோரும் இப்போதிருக்கிற வாழ்க்கை முறைகளை விட்டு, அத்யயனத்துக்குத் திரும்புவார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா?. என்று என்னைக் கேட்டால், அப்படி நான் எதிர் பார்க்கிறார்களோ இல்லையோ. அவர்கள் இப்படித்தான் செய்தாக வேண்டும் என்றுதான் நான் சொல்ல வேண்டும். நம் மூலதர்மமே பறிபோய்விட்டது என்று

வாயை மூடிக் கொண்டு பார்த்துக் கொண்டிருப்பதற்கு குரு பீடம், ஆசாரிய ஸ்தானம் எதுவும் இருக்க வேண்டிய அவசியமே இல்லை. முடியாததாகத் தோன்றினாலும்கூட, அப்படிப்பட்ட நல்ல லக்ஷியங்களுக்குத்தான் அவை தங்கள் பூரண சக்தியையும் செலவழித்துப் பாடுபட வேண்டும். சத்தியாக்கிரஹத்தால் வெள்ளைக்காரனைப் போகப் பண்ணுவதாவது, இதெல்லாம் நடக்காத காரியம் என்று சொன்னவர்கள் இருக்கத்தான் செய்தார்கள். நடக்க முடியாது என்று நினைத்த எத்தனையோ இந்த உலகத்தில் நடந்துதான் இருக்கிறது. இது நடக்க முடியாத விஷயம் என்று நினைத்து, தர்மத்தையும் சத்தியத்தையும் விட்டுக் கொடுத்துப் பேசுவது எனக்கான காரியமில்லை. நடத்துவதும் நடக்காததும் உங்கள் கையில் இருக்கிற விஷயம். நான் செய்யக்கூடியது எல்லாம் நம்முடைய தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறவைகளை அலுக்காமல் சலிக்காமல் உங்கள் காதில் போடுவதுதான். சாஸ்திரங்கள் எவற்றை உங்கள் கடமை என்ரு விதித்திருக்கின்றனவோ அவற்றை உங்களுக்கு எடுத்துச் சொல்லி, எத்தனை பிரதிகூலங்கள் இருந்தாலும் நீங்கள் அதன்படிதான் நடக்கவேண்டும் என்று வலியுறுத்துவதுதான்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### அதம பட்சப் பரிகாரம்

இப்போதிருக்கிற சமூக அமைப்பு முழுதும் மாறுகிறதோ, மாறவில்லையோ - அதை மாற்ற முடியுமோ, முடியாதோ - வேத ரக்ஷணத்தையே ஜீவனமாக வைத்துக் கொண்டிருக்கிற ஒரு கூட்டம் என்றைக்கும் இருந்து கொண்டிருக்கும் படியாக நாம் பண்ண வேண்டும். பிராம்மண ஜாதி என்று ஒன்று இருக்க வேண்டும் என்பதற்காக இதை நான் சொல்லவில்லை. தனியாக இப்படி ஒரு ஜாதி சுயநலத்துக்காக இருந்து ஒன்றும் ஆகவேண்டாம். லோக க்ஷேமத்துக்காகத்தான் வேத சப்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன. வேத சப்தங்கள் இருந்தால்தான் லோகம் முழுக்க க்ஷேமமாக இருக்கும் என்று நான் சொல்லுகிறேன். அதனால் இனிமேலாவது ஒரு பிராமணன்கூட வேதம் தெரியவில்லை என்று இருகக்கூடாது என்கிறேன். பிராம்மணர்கள் மறுபடி வைதிகத்துக்கு திரும்புவது ஒன்றுதான் இப்போது ஏற்பட்டிருக்கிற இத்தனை கோளாறுகளும் தீரிவதற்கு ஒரே பரிகாரம் என்கிறேன்.

குறைந்தபட்சமாகச் சொல்கிறேன். இப்போதுள்ள பிராமணர்களுக்கு இதற்கான தைரியமோ, தியாக புத்தியோ இல்லாவிட்டாலும், போனால் போகிறது. உங்களால் வேத அத்யயனத்துக்குத் திரும்ப முடியாவிட்டாலும், உங்கள் குழந்தைகளையாவது அதில் திரும்பியாக வேண்டும் என்கிறேன். அடுத்த தலைமுறையில் வேதம் தெரியாத பிராமணன் ஒருத்தன்கூட இருக்கவேகூடாது. அதற்கு ஏற்பாடு செய்யுங்கள் என்கிறேன்.

லௌகிகத்தில் இத்தனை அசௌகரியப்பட்ட பின்னும், ஐயையோ, நம் குழந்தைகளை வெறும் வைதிகமாக்குவதா? என்ரு நீங்கள் நினைத்து, இப்போது நீங்கள் அநுபவிக்குற

சௌக்கியம் என்று நினைக்கப்படுகிற வாழ்க்கை முறையிலேயே உங்கள் சந்ததிகளும் இருக்க வேண்டும் என்று நினைத்தால், இன்னும் ஒரு படி இறங்கி வருகிறேன். உத்தியோகத்துக்காக தற்போதய படிப்பில் உங்கள் குழந்தைகளை விட்டு, அவர்களைப் பிற்பாடு வேதரக்ஷணமே ஜீவன் கர்மம் என்றில்லாமல், வேறு தொழிலில் விட்டால்கூடத் தொலைகிறது. இப்படிப் புதுமுறைப் படிப்புப் படிக்கிற காலத்திலேயே, எட்டு வயசுக்குள் உபநயனத்தைச் செய்து, அப்புறம் சுமார், பத்து வருஷம் தினமும் சாயங்காலம் ஒரு மணி வேத அத்யயனம் செய்வதற்கு ஏற்பாடு பண்ணுங்கள். இதையாவது பண்ணுங்கள் என்கிறேன். ஒவ்வொரு பிராமண வீட்டுக் குழந்தைக்கும் இந்த ஏற்பாடு செய்தாக வேண்டும். இப்படி வீட்டுக்கு ஒரு சிக்ஷை சொல்லி வைக்க இப்போது வாத்தியாரே கிடைக்க மாட்டார். அந்த லக்ஷணத்தில் நாம் இருக்கிறோம். இதனாலும் மற்ற பொருளாதார சௌக்கியங்களை உத்தேசித்தும் பேட்டைக்குப் பேட்டை ஒரு பொது இடத்தில் எல்லாக் குழந்தைகளுக்கும் வேத வகுப்பு நடத்துங்கள். கூட்டுறவு அடிப்படையில் (co - operate basis) இப்படிச் செய்வதால் வசதியில்லாத ஏழை குழந்தைகளுக்கும்கூட வேத சிக்ஷை பெற சௌகரியம் ஏற்படும். பத்து வருஷங்களில் சிறுகச் சிறுக இப்படிக் கற்பதால் மந்திர பாகம் நிறைய மனப்பாடமாவதோடு மட்டுமின்றி, பிரயோகத்திலும்கூட, அதாவது உபாகர்மா முதலிய வைதிக கர்மாக்களைத் தாங்களே செய்து கொண்டு

மற்றவர்களுக்கும் செய்விக்கிறதற்கும்கூடத் தேர்ச்சி உண்டாக்கிவிடும். இவ்வாறு பிரயோகத்தை ஏன் சேர்த்துச் சொல்கிறேன் என்றால் வைதிகச் சடங்குகளை அவரவர்களே செய்து கொள்ள முடியும் என்றால்தான் எதிர் காலத்தில் புரோஹிதர்கள் என்றே ஒரு தொழிற்காரர்கள் இல்லாவிட்டாலும்கூட சமாளித்துக் கொள்ள முடியும். புரோஹிதம் செய்வதே ஜீவனோபாயம் என்று வருங்காலத்தில் யாராவது பிள்ளைகளை விட்டுவைப்பார்களா என்று கேட்கிற நிலை வந்துவிட்டால், இந்த ஏற்பாடு அவசியமாகிறது. இப்படியாக வேத சப்தங்கள் லோகத்தில் என்றும் நிலைத்திருக்கும்படியாக செய்வதில் எல்லோரும் இதயப்பூர்வமாக முனைந்து நின்று காரியத்தில்

இறங்க வேண்டும். இது இப்போதுள்ள ஜன சமூகம் முழுவதற்கும், பிராம்மண ஜாதிக்கு மட்டுமல்ல . சமஸ்த லோகத்திலும் உள்ள அத்தனை கோடி ஜீவராசிகளுக்கும் க்ஷேமம் உண்டாவதற்கான நீங்கள் செய்ய வேண்டிய கடமை. தெய்வத்தால் விதிக்கப்பட்ட கடமை. அது தெய்வீகமான கடமையும் (divine unity) ஆகும்.

இப்போதிருப்பவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்பது மட்டுமின்றி, வருங்காலத்தில் வருபவர்களுக்கு நாம் மகா துரோகத்தைச் செய்து பாபத்தைச் சேர்த்துக் கொள்ளாமலிருக்கவும் இந்தக் காரியத்தை அவசியம் செய்தாக வேண்டும். இந்தக் காலத்திலேயே வேதத்தை எவனும் லக்ஷியம் செய்யவேண்டியதில்லை. வருங்காலத்தில் யார் சீந்தப் போகிறார்கள். இப்போது இதற்காகப் பெறும் பாடுபட்டு என்ன பிரயோஜனம். என்று சிலருக்குத் தோன்றலாம். அப்படி எனக்குத் தோன்றவில்லை. சக்கரம் சுற்றிக் கொண்டேயிருக்கும்போது, கீழே போனது மேலே வரத்தான் செய்யும். இப்போது இத்தனை நவநாகரீகம் தலைவிரித்தாடுவதாலேயே இதன் உச்சத்துக்குப் போனபின் கீழே இறங்கித்தான் ஆக வேண்டும். நவீனத்தில் ஏதோ சௌக்கியம் இருப்பதாக நினைத்து இப்போது அதில் போய் விழுந்திருக்கிறோம். போகப் போக இதைப் பூர்ணமாக அநுபவித்துவிட்ட பிறகு இதில் வாழ்க்கை நிறைவே இல்லை. உண்மையில் அசௌகரியத்தைத்தான் உண்டாக்கிக் கொண்டோம் என்று தெரிந்து தானாக வேண்டும். அமெரிக்காவின் உதாரணம் ஒன்று போதும். ஜனங்களுக்குத் தாங்கள் நிறைவோடு இல்லை என்று ஒரே சூன்ய உணர்ச்சிதான் வந்திருக்கிறது. நவீன சுகாநுபவத்தால் வருகிற நிம்மதியின்மையைத் தொலைத்துவிட்டு, மறந்து விட்டு இருக்க வேண்டும் என்று தவிக்கிறார்கள். புத்திசாலிகளாக இருக்கிறவர்கள் நம்முடைய வேதாந்தம், யோகம், பஜனை இவைகளுக்கு வருகிறார்கள். மற்றவர்களும் எப்படியாவது இந்த இந்திரிய சுகத்தை மறந்திருக்கிற மட்டும் விசேஷம் என்றே ஏகப்பட்ட மாத்திரைகளை (tranquiliser) வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, அப்படியே தூங்கிக் கொண்டேயிருக்கிறார்கள்.

இந்த ஸ்திதி நம் தேசத்திலும் வரக்கூடியதுதான். லௌகிக சுகத்தில் இன்னும் ஏதோ பாக்கியிருக்கிறது என்கிற

வரைக்கும் அதையும்தான் பார்த்து விடுவோமே என்று ஓடிக் கொண்டிருந்தாலும், அப்புறம் கடைசியில் அநுபவித்து, அடடா, இதுவும் சாசுவதமாக பிடித்து வைத்துக் கொள்ள முடியாமல் மறைந்துபோகிற செனக்கியம்தான் என்று பிரத்தியக்ஷமாக தெரிந்துவிட்டபின், நித்திய சுகத்தைத் தருகிற அத்யாத்ம விஷயங்களுக்கு ஜனங்கள் திரும்பத்தான் நினைப்பார்கள்.

அப்போது அவர்கள், இதுவரை சமூகத்துக்கு நிம்மதியைத் தந்த பழைய வைதிக மார்கத்தையே மறுபடி பூரணமாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிற போது, அவர்களுக்கு வேத அத்யயனம் செய்வதற்கே இடமில்லை என்கிற நிலையில்,

இந்தத் தலைமுறையைச் சேர்த்த நாம் சங்கிலியைக் கத்தரித்துப் போட்டிருந்தால் அது எத்தனை பெரிய துரோகம்.

அதற்கென்ன, அதுதான் இத்தனை புத்தகங்கள் இருக்கின்றனவையே?. வேதமந்திரங்கள், யாகங்கள் முழுவதையும் நம்மவர்களும், மற்ற தேசத்துக் காரர்களும் ஆதியோடந்தம் ஆராய்ச்சி பண்ணி வால்யூம் வால்யூமாக எழுதி வைத்திருக்கிற புத்தகங்கள் இருக்கின்றனவையே? அவற்றைப் பார்த்து வருங்காலத் தலைமுறைகள் வேதத்தைத் தெரிந்து கொள்ளட்டுமே என்று கேட்கலாம். இதற்கு நான் பதில் சொல்லியாக வேண்டும். அது தவிர அஸ்திவாரத்தையே இன்னொரு பெரிய கேள்வி இருக்கிறது. அதற்கு நான் இதுவரை பதில் சொல்லவில்லை. அதையும் சொல்லியாக வேண்டும். அது என்ன கேள்வி என்று கேட்டால் வேத சப்தம் லோகத்தை ரக்ஷிக்கும் என்றால் என்ன அர்த்தம். ஏதோ மந்திரங்கள் என்றால் அவையெல்லாம் சில ஒலிகள். அவை வார்த்தை வார்த்தையாக இருக்கின்றன. அந்த வார்த்தைகளுக்கு அர்த்தம் இருக்க வேண்டும். அவை ரொம்பவும் உயர்ந்த அர்த்தமாக இருக்கலாம். அப்படியே இருந்தாலும் அந்த அர்த்தத்தைப் படித்தும் தெரிந்து கொண்டு விடலாமே. வேதத்தை எதற்காக ஒரு கூட்டம் வாழ்நாள் முழுவதும் வாயால் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். இப்படிச் சொல்லுவதற்காகவே ஒரு கூட்டம் எப்போதும் இருக்க வேண்டும் என்றால் எதற்காக, வேதத்தின் அர்த்தம் மங்காமல்

இருக்க வேண்டும் என்றால், அதற்குப் புஸ்தகங்கள் இருக்கின்றன. புஸ்தகத்திலிருப்பதைக் காப்பாற்றுவதற்கென்றே பாரம்பரியமாக ஒரு ஜாதி இருக்க வேண்டிய அவசியமில்லையே. அவரவரும் புஸ்தகத்தைப் பார்த்துத் தத்துவங்களைத் தெரிந்து கொள்ளலாமே. ஆனால் அர்த்தத்தை மட்டும் சொல்லாமல் வேத சப்தம் இதுவரைக்கும் இதுவரைக்கும் வந்திருக்கிற கிரமத்தில் மாறாமல் இருக்க வேண்டும். சப்தத்தை வாயால் சொல்லி ரட்சிக்க ஒரு கூட்டம் இருக்க வேண்டும் என்று சொல்வது ஏன். என்பதுதான். இதற்குப் பதில் சொல்லி வேண்டும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### வேத ரக்ஷணம் ஏன் ஆயுட்காலத் தொழிலலாக வேண்டும்.

பாரம்பரியமாகத் தொழிலைப்பிரித்துக் கொண்டு செய்வதில் சமுதாயம் முழுவதற்கும் ரொம்பவும் அநுகூலம் இருப்பதாகவே தெரிகிறது. ஆனால். பிராமணன் என்று இருக்கிறவன் செய்ய வேண்டிய தொழில் வேத ரக்ஷணமென்றால் இதனால் சமூகத்துக்கு என்ன க்ஷேமம். என்ற கேள்வி எழுகிறது.

குயவன் பானை செய்கிறான். வண்ணான் துணி தோய்க்கிறான். நெசவாளன் துணி நெய்கிறான். இடயன் பால் கொடுக்கிறான். குடியானவன் உழுகிறான். இப்படி ஒவ்வொருத்தர் ஒவ்வொன்ரு செய்கின்றனர். இந்தக் காரியங்கள் எல்லாம் ஜனங்களின் அன்றான காரியத்துக்கு அவசியமாகின்றன. இவற்றின் பலனை அவர்கள் பிரத்தியக்ஷமாக அனுபவிக்கிறார்கள். உழுத நெல்லைச்

சாப்பிடுகிறார்கள். பசி தீருவதற்கு அது அவசியமாக இருக்கிறது. நெய்த துணியை உடுத்திக் கொள்கிறார்கள். மானத்தைக் காப்பாற்ற, குளிர், வெயிலிருந்து சரீரத்தைக்

காப்பாற்ற அது தேவையாக இருக்கிறது. பால் குடிக்கிறார்கள். மோராக்கிச் சேர்த்துக் கொள்கிறார்கள். பானையை அடுப்பில் ஏற்றிச் சமைக்கிறார்கள். இப்படியெல்லாம் நடைமுறைக்குப் பிரயோஜனமாகிற வஸ்துக்களை மற்ற ஜாதிக்காரார்கள் தருகிறார்கள்.

பிராம்மணன் என்ன தருகிறான். வர்ண தர்மத்தை நிலைப்படுத்தியிருக்கிற சாஸ்திரங்கள் அவனுக்கு எந்தத் தொழிலைத் தந்திருக்கிறது.

பிராமண்ன் வேதத்தைக் காதால் கேட்டுப் பாடம் பண்ண வேண்டும். அதாவது அத்யயனம் பண்ண வேண்டும். அதே மாதிரி இன்னொருத்தனுக்கு அதை வாயால் சொல்லிக் கொடுக்க வேண்டும். அதாவது அத்யாபனம் செய்ய வேண்டும். அத்யயனம். தான் வேதம் ஒதுவது. அத்யாபனம். இன்னொருத்தனுக்கு வேதத்தை ஒதுவது. அத்யாபனம். இன்னொருவனுக்கு வேதத்தை ஒதுவிப்பது. இதோடு பிராமணன் வேதத்தில் சொல்லியிருக்கிற நித்ய கர்மாநுஷ்டானங்களையும் யாக யக்ஞாதிகளையும் செய்ய வேண்டும் என்று சாஸ்திரத்தில் இவனுக்குரிய தொழிலை வகுத்துக் கொடுத்திருக்கிறது.

வேதத்தின் அர்த்தம் ரொம்ப உயர்வானது. அதைக் காப்பாற்ற வேண்டும் என்று சொன்னாலாவது நவீன காலத்தவர்களுக்கு ஒப்புக் கொள்ளலாம் என்று தோன்றும். ஜன சமூகத்துக்கு அறிவு, கலை எல்லாம் வேண்டும். வேதம் நிறைய அறிவைத் தருகிற வஸ்து என்பதால், அதன் அர்த்தத்தைச் சிலர் சமூகம் முழுவதற்கும் பிரசாரம் பண்ணிக் கொண்டிருந்துவிட்டுப் போகட்டும் என்று சொல்லத் தோன்றும். ஆனால், சாஸ்திரம் இப்படிச் சொல்லாமல் பிராமணனாககப்பட்டவன், வேதத்தின் சப்தத்தைப் காப்பாற்றிக் கொண்டிருக்க வேண்டும். ஜன சமூகம் முழுவதற்கும் அதைக் கொடுத்து ரக்ஷிக்க வேண்டும் என்கிறது. அர்த்தத்தை எல்லோரும் அறியப் பண்ண வேண்டும் என்றால் அதில் சிலர் மட்டும் வைத்துக் கொள்வதால் லோகக்ஷேமம் என்றால் நம்பிக்கை வரமாட்டேன் என்கிறது.

மற்ற தொழில்கள் நின்று போனால் சமூகம் பாதிக்கப் படுவதுபோல், வேத அத்யயனம் நின்றால் எப்படிப் பாதிக்கப்படும் என்று தெரியவில்லை.

இது புரிய வேண்டுமென்றால் வேதம் என்பது என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும். இவிவிஷயத்தை முழுக்க அறிவினால் ஆராய்ந்து மட்டும் பிரயோஜனம் இல்லை. அநுபவஸ்தர்கள் சொல்வதை நம்பினால்தான் உண்டு.

இப்படிச் சொன்னவுடனேயே ஆக்ஷேபனை வந்துவிடக் கூடும். அதெப்படி சார், நாங்கள் பகுத்தறிவாளிகள் (RATIONALISTS) முழுக்க எங்கள் அறிவுக்குள் அகப்படுகிறது என்றால் தான் ஏற்றுக் கொள்வோம் என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது. எல்லா விஷயங்களுமே மனுஷ்ய அறிவுக்குள் அகப்பட்டுத்தான் ஆக வேண்டும் என்று எப்படி உரிமை கொண்டாடலாம். எத்தனையோ ஜீவராசிகளில் இவன் ஒருத்தன். இவனுடைய லாபரட்டரியில் நடக்கிற காரியங்கள் ஒரு மாட்டின் அறிவுக்குப் புரியுமா என் புத்திக்குப் புரியாததால் இந்த பௌதிக விதிகள் (LAWS) Þ¼,è«õ º®ò£¶ â¡Á ñ£´

சொல்லலாமா. மாடு வரைக்கும் போக வேண்டாம். மநுஷ்யர்களிலேயே ஃபிஸிக்ஸ் படிக்காதவர்களுக்கு அவை எப்படிப் புரியும். ஆனால், அதை நன்றாகப் படிப்பவர்கள் சொல்வதால், படிக்காதவர்களும் நம்புகிறார்கள். அவர்கள் செய்கிற உபகாரணங்களால் பிரத்யக்ஷமாக நடக்கிற காரியங்களைப் பார்த்து விதிகளை எல்லோருமே ஒப்புக் கொள்கிறார்கள். அப்படியே சாஸ்திரத்தை அநுஷ்த்தவர்கள் வேதத்தைப் பற்றிச் சொல்வதை நம்ப வேண்டும். இதுவரைக்கும் அது பிரத்யக்ஷமாகத் தந்திருக்கிற பலன்களிலிருந்து அதை ஏற்றுக் கொள்ள வேண்டும். பெரிய பிரத்யக்ஷ பலன் இதுவரை ஹிந்து சமூகம் எத்தனையோ எதிர்ப்புகளுக்கும் தாக்குப்பிடித்து விழாமலே இருக்கிற ஒரே பழைய மதம் என்பதும், இந்த மதத்தில்தான் லோகத்துக்குள்ளேயே, மிக

அதிகமான மகாபுருஷர்கள் தோன்றியிருக்கிறார்கள் என்பதுமே ஆகும். எங்கள் அறிவுக்கு வரவேண்டும் என்று ஜனங்கள் சொல்லாமல் நம்பி ஏற்றதாலேயே, இதுவரை சிரேயஸை அடைந்து வந்திருக்கிறார்கள்.

மனுஷ்ய அறிவின் எல்லையை மீறி அகண்டமாக ஆனவர்களே ரிஷிகள். அவர்களின் மூலமே வேத

மந்திரங்கள் லோகத்துக்கு வந்திருக்கின்றன என்பது அடிப்படைக் கொள்கை. அம்மாதிரி மனுஷ்யர்கள் ஆத்ம சக்தி பெறவே முடியாது என்று சொல்லிவிட்டால், அப்புறம் பேச்சே இல்லை. பிரத்தியக்ஷமாக இருக்கிற மகான்களையும், ஸித்திமான்களையும் வேண்டுமானால் சுட்டிக்காட்டி, இவர்களுக்கு மற்றவர்களுக்கு இல்லாத சக்திகள் இருக்கிறதே, இதைப் பார்த்தாவது நம்புங்கள் என்று சொல்லலாம். அவர்கள் செய்வதெல்லாம் மோசம். ஏமாற்று வித்தை என்று பதில் சொல்லிவிட்டால் பிறகு பேச்சில்லை. இப்போது நாம் இருக்கிற நிலையில் நம் புத்திக்கு என்ன எட்டுகிறதோ அதற்கு மேற்பட்டதாக எதுவும் இருக்க முடியாது என்பதேதான் ரொம்பவும் பகுத்தறிவற்ற வாதமாயிருக்கிறது. இதை அப்படிச் சொல்பவர்களே புரிந்து கொண்டால்தான் உண்டு.

ஏதோ சுவாரியஸ்யமாகப் பேச்சு கச்சேரி கேட்கலாம் என்ற அளவிலாவது, எத்தனையோ தினுசான அரசியல் (றிளிலிமிஜிமிசிகிலி) மீட்டிங்குகள் இருக்கிறபோதுகூட, இங்கே என்னிடம் நீங்கள் வந்திருப்பதால் உங்களில் யாறும் இப்படித் தங்களை முழு க்ஷீணீமீ'வீஷீஸீணீறீவீமீ ஆகச் (பகுத்தறிவாளர்) சொல்லிக் கொள்ள மாட்டீர்கள் என்று நினைத்து, வேதம் ஏன் சம்பிரதாயப்படி இனியும் இருக்க வேண்டும் என்பதற்குக்கூட காரணம் சொல்கிறேன். ஒரு வேளை அப்படியில்லாதவர்களாகளுக்குச் சாமியார் சொல்வதும் கொஞ்சம் சரியாக இருக்கும் போலிருக்கிறதே என்று தோன்றினாலும் தோன்றலாம்.

வேத சப்தம், வேத சப்தம் என்ற சப்தத்துக்கு முக்கியத்துவம் தருவதுதானே புரிபடாமல் இருக்கிறது. சரி, சப்தம் என்பது எப்படி உண்டாகிறது. எங்கே ஒரு அதிர்வு (ஸ்ணீதீக்ஷீணீமீ'வீஷீஸீ) சலனம் (னீஷீஸ்மீனீமீஸீமீ, னீஷீமீ'வீஷீஸீ) இருந்தாலும் அங்கே சப்தம் உண்டாகி விடுகிறது. இது பகுத்தறிவு சாஸ்திரமான ஸயன்ஸே சொல்கிற விஷயம். தொனியில் சில விதமான சலனங்களை உண்டாக்கிப் பல தினுசான பேச்சுச் சப்தங்களை ஏற்படுத்தியிருக்கிறோம்.

சப்தங்கள் காதுக்குக் கேட்கிறவையாகவே தோன்றுகின்றன. ஆனால்

சிலவற்றைக் காதுக்குக் கேட்க முடியாத மின்சார அலைகளாக மாற்ற முடியும் என்று ரேடியோ, டெலிபோன் முதலியவற்றைப் பார்த்தால் தெரிகிறது. நாம் பார்ப்பது, கேட்பது எல்லாமே இந்த மின்சார அலைகள்தான். பார்க்கிறவனும் கேட்கிறவனும், அவனுடைய மூளையும்கூடத்தான் என்று சொல்கிற அளவுக்கு ஸயன்ஸ் கொண்டுவந்துவிட்டது. இது இருக்கட்டும்.

லோகத்தில் இத்தனை கோடி ஜட வஸ்துகள் மலையும், பூமியும், ஆறும், சமுத்திரமும் உண்டாயிருக்கின்றன. ஜீவராசிகள் விதவிதமாக உண்டாயிருக்கின்றன. இத்தனையும் எதிலிருந்தோதான் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஏதோ ஒன்று இப்படி சிருஷ்டிக்கிறபோது பல தினுசாக அசைந்து கொடுத்து, எத்தனையோ சலனங்களின் மீதுதான் இத்தனையும் தோன்றியிருக்க வேண்டும். சலனத்துக்கெல்லாம் சப்தம் உண்டு என்றால், சிருஷ்டி முழுவதற்கும் முந்திப் பலவித சப்தங்கள் உண்டாயிருக்க வேண்டும். இந்த சிருஷ்டியில் ஒன்றுக்கொன்று வாழ்வளித்துக் கொள்கிறது. இப்படிப் பரஸ்பரம் போஷித்துக் கொள்கிறபோது பலவிதமான சலனங்கள் அல்லது சப்தங்கள் உண்டாக்கத்தான் வேண்டும். ஸ்தூலமாக காரியங்களில்தான் சலனம்

இருக்கிறதென்று இல்லை. நாம் நினைத்தும்கூட ஒருவிதமான மின்சார கரெண்டின் ஓட்டம்தான் என்று ஸயன்ஸில் கண்டு பிடித்திருக்கிறார்கள். இதனால் நம்முடைய எண்ணம் ஒவ்வொன்றுக்கும்கூட ஒரு சலனமும் ஆனபடியால் சப்தமும் இருந்தாக வேண்டும். இந்த சப்தங்கள் ரொம்ப ரொம்ப சூக்ஷ்மமாக இருப்பதால் நம் காதுகளுக்குக் கேட்கவில்லை. பாக்டீரியா கிருமி நம் கண்ணுக்குத் தெரியவில்லை. மைக்ராஸ்கோப்பினால் பார்த்தால் அது தெரிகிறது. அப்படியே நம் காதுகளுக்குக் கேட்காத சூக்ஷ்ம சப்தங்கள் நிறைய இருக்கின்றன.

பௌதிகமாகவோ (ஜீலீஹ்உவீநீணீறீ), மானஸிகமாகவோ (னீமீஸீமீணீறீ) ஒரு அசைவு என்ரு வந்துவிட்டால் அங்கே ஸயன்ஸ்படி சப்தமும் உண்டாகித்தான் ஆகவேண்டும்.

ஒவ்வொரு அசைவுக்கும் தனியாக ஒவ்வொரு சப்தம்

இருக்கிறது. இதையே மாற்றிச் சொல்வதினால், ஒவ்வொரு விதமான சப்தத்தை உண்டாக்க வேண்டுமானால், அதற்கு ஒரு விதமான அசைவை உண்டாக்கித்தான் ஆக வேண்டும். ஒரு வித்வான் பாடுகிறார். அவர் பாடுகிற மாதிரியே நாம் பாட வேண்டும். அதே மாதிரியே புரட்ட வேண்டும் என்றால், அவர் தொண்டையில் என்னென்ன சலனங்களை உண்டாக்குகின்றாரோ அவற்றையே நாமும் பண்ணித்தான் வேண்டும்.

சப்தமும் அசைவும் சேர்ந்து சேர்ந்தே, ஒன்றாகவே உண்டாக்கியிருக்கின்றன. இப்படி உண்டான அப்புறம் அந்த அசைவுகளிலிருந்து ஒரு ஸ்தூலமான வஸ்து அல்லது மனோபாவம் உண்டாகிறது. ஆகக்கூடி சப்தத்திலிருந்தே சிருஷ்டி ஏற்படுகிறது. இந்தப் பிராசீனமான தத்துவம் ஸயன்ஸ் பகுத்தரிவுப்படியும் கூட சரியானதுதான் என்று தெரிகிறது.

சிருஷ்டி, அதிலே நடக்கிற பல காரியங்கள் எண்ணங்கள் இவற்றின் மூலமாக சப்தங்கள் ஆகாசத்தில் (ஒஜீணீநீமீ) அப்படியே நிறைந்துதான் இருக்கின்றன. நாம் கையைத் தட்டினவுடன் ஒரு சப்தம் உண்டாகிறது என்றால் அது என்ன ஆகிறது. அது அப்படியே ஆகாசத்தில் தங்கி விடுகிறது. நல்ல காரியங்கள்

எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு சலனம், சப்தம் இருக்கிறது. இந்த சப்தத்தை உண்டாக்கி விட்டால் அந்த நல்லது அல்லது கெட்டதும் வந்துதான் ஆக வேண்டும். நல்லெண்ணங்கள் ஜநங்களுக்கு உண்டாகிறது என்றால் அப்படி உண்டாக்குகிற சலனங்கள் இருக்க வேண்டும். அவற்றிற்கான சப்தங்கள் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட சப்தங்களை நாம் உண்டாக்க முடியுமானால் லோகத்தில் ஜனங்களுக்கு நல்ல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். ஜனங்களுக்கு உயர்ந்த எண்ணங்கள் இருப்பதைவிட லோகத்துக்குப் பெரிய க்ஷேமம் என்ன இருக்கிறது. அப்படி எண்ணுகிறவதற்கு அவர்களைத் தூண்டுகிற சக்தியைப் பெற்ற சப்தங்கள் வேத மந்த்ரங்கள். அது மட்டுமில்லை. ஜனங்கள் ஜீவிப்பதற்கு ஆகாரம் அவசியம். லோகத்தில் ஒரு மேகம் உண்டாகிறது. அது மழையாகப் பொழிகிறது என்றால், இந்தக் காரியங்கள் அநேக விதமான சலனங்களின் மீதே நடந்திருக்கிறது.

எனவே, சில சப்தங்களினை உண்டாக்கி அதன் மூலம் இப்படிப்பட்ட சலனங்களை ஏற்படுத்தி விட்டால் மழை பெய்யத்தான் வேண்டும். இப்படியே வாழ்க்கைக்கு அவசியமானதையெல்லாம், நல்லவற்றையெல்லாம் சப்தங்கள் மூலம் உண்டாக்கிக் கொள்ளலாம். அநாவசியமானவை, கெட்டவை இவைகளையும் சிற்சில சப்தங்களால் பண்ணிக் கொள்ளலாம்தான். ஆனால் வேதத்தில் இருக்கப்பட்ட சப்தங்கள் லோக க்ஷேமார்த்தம் ஒன்றையே குறிக்கோளாக உடையவை.

கடைசீயில் பார்க்கும்போது, இப்படி சலனம், சப்தம் உண்டாகிறது என்றால்

அதுவும் என்னவோ தானாக ஏற்பட்டதா இல்லை. தானாகப் பலவித சலனங்கள் ஏற்பட்டால் எல்லாம் ஒன்னுக்கொன்று சம்பந்தமில்லாமல் கோணாமாணா என்றுதானே இருக்கும். ஆனால் பிரபஞ்சத்தில் எத்தனை கிரமமும், ஒழுங்கும், பரஸ்பர சம்பந்தமும் இருக்கிறது. இதைப் பார்த்ததில் ஒரு பேரறிவுதான் திட்டம் போட்டு இப்படி எல்லாம் அசைந்து கொடுத்து சிருஷ்டியை உண்டாக்கியிருக்கிறது என்ரு தெரிகிறது. அந்த அறிவின் அசைவில் ஏற்பட்ட சப்தங்களைத்தான் சப்தம் என்பது. வேத மந்த்ரங்கள் சாட்சாத் பரமாத்மாவிடம் உண்டானவை என்பது இதனால்தான். அப்படிப்பட்ட சப்தங்களை இப்போதும் நாம் ரக்ஷித்து லோகத்துக்கு நல்லது செய்ய வேண்டும். இப்படிப்பட்ட லோகக்ஷேமாந்தமான சப்தக் கோவைகள்தான் வேத மந்த்ரங்கள்.

அதெப்படி. வேத மந்த்ரங்கள் நம் காதுக்கே நன்றாகக் கேட்டிருக்கின்றன. சிருஷ்டியில், பிரபஞ்சம் வெளி (வஜீணீநீமீ)யில் உண்டாகிற சப்தங்கள் காதுகளுக்குக் கேட்கவில்லையே. அதுவும் இதுவும் ஒன்று என்றால் எப்படி. என்ற கேள்வி தோன்றுகிறது.

பிரபஞ்சத்தில் இருக்கிறதெல்லாம் ஜீவனிடமும் இருக்கிறது. அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் இதனால் மந்திர சப்தங்களை ஸ்வரம் தப்பாமல் எழுப்புவதால் ஒரு ஜீவ சரீரத்தில் ஏற்படும் நாடி சலனங்களைக் கொண்டே ஆகாச வெளியில் லோக க்ஷேமாந்தமான சலனங்களைப் பிடித்துக் கொண்டு விடலாம், இது அறிவுக்கு ஒத்துக் கொள்ள

முடியாததாக தோன்றலாம். ஆனால், அகண்டத்தில் உள்ள பல சமாசாரங்களைக் கிரகித்துக் கொள்வதற்கு இந்த மனித பிண்டத்தில் கருவிகள் (இந்திரியங்கள்) இருக்கின்றன என்பது நாஸ்திகர் உள்பட

எல்லோரும் ஒத்துக் கொள்ளும் விஷயம். அண்டத்திலே ஒரு சூரியன் இருந்தால், அதனுடைய உஷ்ணத்தை நம் தேகம் தெரிந்து கொள்கிறது. வெளியிலே ஒரு பூ இருந்தால், அதனுடைய வாசனை இங்கே நம் மூக்குக்குத் தெரிகிறது. வெளியில் கரும்பு என்று ஒன்று இருந்தால் அதன் ருசியைத் தெரிந்து கொள்ள இங்கே வாய் என்று ஒன்று இருக்கிறது. ஒன்று சிகப்பாய் இருக்கிறது. மற்றொன்று மஞ்சளாய் இருக்கிறது என்று நம் கண் தெரிந்து கொள்கிறது. ஒரே சரக்கு அண்டத்தையும் பிண்டத்தையும் பண்ணியிருந்தாலொழிய இதில் ஒன்று இன்னொன்றைப் பற்றித் தெரிந்து கொள்ளவோ, அதிலிருந்தே வாழ்க்கையை நடத்திக் கொள்ளவோ முடியாது. இன்னும் ஒரு படி மேலே போனால் ஒரே சரக்குதான் அண்டத்தைப் பண்ணிற்று. பிண்டத்தைப் பண்ணிற்று என்று மட்டுமின்றி, அதுவேதான்

அண்டமும் ஆகிறது பிண்டமும் ஆகிறது என்று தெரியும். யோகிகள் இதைப் பிரத்யக்ஷமாக அறிந்திருக்கிறார்கள். அகண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்று அப்போது நிர்சனமாகத் தெரியும்.

அகண்ட ஆகாசத்தில் என்னென்ன இருக்கின்றனவோ அதெல்லாம் ஜீவனிடமும் இருக்கின்றன. மனுஷ்ய சரீரத்தில் அவையெல்லாம் இந்த ஜீவனுடைய இந்திரியங்களுக்கு எட்டுகிற மாதிரி வேறுவிதமாக இருந்து கொண்டிருக்கின்றன. இவன் தொண்டையிலே ஒரு விதமான சப்தங்களை உண்டாக்குகின்றான் என்றால், ஆகாசத்திலும் அதற்கு மூலமாக நம் காதுகளுக்குக் கேட்க முடியாததாக சில வித சப்தங்கள் இருக்கின்றன. ரேடியோ மின்சார அலையை கிரகித்து அவற்றை ஜீவனுடைய இந்திரிடங்களுக்கு, காதுக்கு, கேட்கக்கூடிய சப்தங்களாக மாற்றித்தர முடியுமானால் லோகக்ஷேமத்திற்கு என்ன வேண்டும் அதை சப்தத்தாலேயே சாதித்துக் கொண்டுவிடலாம். இதைப் பண்ணிக் கொடுக்கிற ஸயன்ஸ்தான் யோகம். நாடி

சலனங்களால் தன்னொருத்தனுக்குத் சித்த சுத்தியை

உண்டாக்கித் தருகிற அதே யோகம், ரேடியோவில் இன்ன இடத்தில் முள்ளைத் திருப்பினால் இன்ன ஸ்டேஷனில் பாட்டைப் பிடிப்பதைப் போல், இன்னின்ன விதமான சப்தங்களின் நாடி சலனத்தால் இன்னின்ன லோக க்ஷேமாந்திரமான விச்வ சக்திகளை ஆகர்ஷிப்பதற்கும் வழி செய்கிறது. யோக சாதனை மூலமாக அகண்டத்திலிருப்பதை எல்லாம் பிண்டத்தில் தெரிந்து கொண்டு, பிண்டத்துக்குக் கொண்டு வரவும் முடிகிறது.

இப்படி நான் சொல்வதற்கு அறிவுக்கு ஏற்றுக் கொள்கிற மாதிரி, யுத்திக்குப் பொருந்துகிற மாதிரி நிரூபணம் (றிக்ஷீஷீஷீயீ) தரவேண்டுமென்று கேட்டால் முடியாத காரியம். நாம் இருக்கிற ஸ்திதியில் இந்த மனுஷ்ய யுத்திக்கு மேற்பட்ட நிலையில் இருக்கிறது தான் யோகம். நம்முடாய அறிப மனசின் யுத்திக்கு அப்பாற்பட்டவற்றைச் சொல்வதற்காக இருப்பதே வேதம். இப்படியிருக்க, யுத்திக்கு அதீதமானத்தை ஏற்றுக் கொள்வதற்கு யுத்தி மூலமே ப்ரூஃப் காட்டுங்கள் என்றால் அது அசம்பாவிதம். பெரியவர்கள் சொல்வதை நம்பினால்தான் உண்டு. யோக சாஸ்திர விதிகளைகத் தவறாமல் அவரவரும் கடைப்பிடித்தால்தானே உண்மையைத் தெரிந்து கொள்ளலாம். கேள்வி கேட்கிற எல்லோரும் இப்படி யோக சாதனை செய்வார்கள் என்பது நிச்சயமாக நடககிற காரியம் இல்லை. அல்லது ஒரு உண்மை யோகியின் சக்தியைப் பார்த்து ஏற்றுக் கொள்ளலாம்

என்றாலும். அவர் உண்மை யோகிதான் என்று முதலில் எப்படி நம்ப வைப்பது. அவர் செய்கிற காரியம் ஏமாற்று வித்தை இல்லை என்று எப்படி நம்ப வைப்பது. ஆகக்கூடி எங்கேயோ ஒரிடத்தில் நம்பிக்கை என்று ஒன்று வந்துதான் ஆகவேண்டும். அப்புறம் அநுமானங்கள், சொந்த சாதனை, அதிலிருந்து வரும் அநுபவம் எல்லாம் நம்பிக்கையைக் கெட்டிப்படுத்தி இது சத்தியம்தான் என்று உறுதி தருகின்றன. நம்பவும் மாட்டேன். நானும் செய்து பார்க்க மாட்டேன் என்பவனிடம் ஒன்றும் செய்து கொள்வதற்கில்லை.

அண்டத்தையும் பிண்டத்தையும் ஒன்றாக இணைத்துக் காணக்கூடிய நிலை உண்டு. அதை அடைந்தவர்கள் உண்டு. அவர்களால் இதில் ஒன்றில் சூக்ஷ்மமாக இருப்பதை இன்னொன்றில் ஸ்தூலமாக மாற்றிக் கொடுக்க முடியும் என்று

நம்பக்கூடியவர்களுக்குத்தான் சொல்கிறேன்.

எத்தனையோ கிரமத்துடன் இயங்கிவரும் இந்தப் பிரபஞ்சத்தைப் பார்க்கும் போது இதையெல்லாம் செய்கிற பேறறிவு ஒன்ரு இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அந்தப பரமாத்மாவிடம்தான் நாம் பார்க்கிற சகல வஸ்துக்களும் நாம் கேட்கிற இத்தனை சப்தங்களும் உண்டாயிருக்கின்றன. முதலில் சப்தப் பிரபஞ்சம் ஆகாயத்தில் உம்டான பின்தான் நாம் கண்களால் பார்க்கிற பிரபஞ்சம் உம்டாயிற்று. ஆகாயத்தில் இந்த சப்தங்கள் அனைத்தும் இருக்கின்றன. வெளிப் பிரபஞ்சத்திலெல்லாம் மனிதனின் உடல் இருக்கின்றன. வெளியிலிருக்கிற ஆகாயம் ஜீவனின் இதயத்திலும் இருக்கிறது. யோகிகள் சமாதி நிலையில் இந்த ஹிருதயாகாசத்தை அநுபவிக்கிறார்கள். அப்போது உள், வெளி என்ற பேதம் நீங்கி, சகலமும் ஒன்றாகி விடுகின்றன. இந்த நிலையில் யோகிகளுக்கு ஆகாசத்திலுள்ள சப்தங்களைக் கிரகித்து லோகத்துக்குத் தர முடிகிறது. லோக க்ஷேமாந்தமான இந்த சப்த கோவைகளே வேத மந்திரங்களாகும். இவற்றை யாறும் உண்டாக்கவில்லை. ஒவ்வொரு வேத மந்திரமும் ஒரு ரிஷியன் பேரில் இருந்தாலும், உண்மையில் அந்த ரிஷி அந்த மந்திரத்தை இயற்றவில்லை. ஒரு மந்திரத்துக்கு இன்னார் ரிஷி என்கிறபோது ஆகாசத்தில் அநாதியாக உள்ள அந்த

ரிஷியே முதலில் கண்டு கொண்டு உலகுக்கு வெளியிட்டார் என்றே அர்த்தம். ரிஷி என்றால் மந்த்ர த்ரஷ்டா (மந்திரத்தைக் கண்டுபிடித்தவர்) என்றுதாந் அர்த்தம் சொல்லியிருக்கிறது. மந்த்ரகர்தா (மந்த்ரத்தைச் செய்தவர்) என்றல்ல. நம் உடம்புக்குள் சுவாஸம் பலவிதமாக அசைந்து கொடுத்தே நம் வாழ்க்கை நடப்பதுபோல், இந்த சப்த அசைவுகளாலேயே பிரபஞ்ச வாழ்க்கை நடப்பதால் பரமாத்மாவின் மூச்சே வேத மந்திரங்கள். எனவே, இவையன்றி பரமாத்மா இல்லை. அதாவது, பரமாத்மாவைப் போலவே இவையும் அநாதியானவை.

இந்த வேத மந்திரங்களில் விச்ஷம் என்ன வென்றால், அர்த்தம் இல்லாமல் வெறும் சப்த ரூபத்திலேயே அவை லோக க்ஷேமத்தைச் செய்கின்றன. ஆனால் இதுமட்டுமில்லை. அவற்றுக்கு உயர்ந்த அர்த்தமும்

இருக்கிறது. சகல வேதங்களும் பரம தாத்பரியமாக, ஒரே சத்தியம்தான் இத்தனையாகவும் தோன்றியிருக்கிறது என்று சொல்கின்றன. இது தவிர அவை சப்தங்களாக இருக்கிறபோதே அந்தந்த சப்தத்துக்குறிய தேவதா ரூபங்களாகவும் இருந்து அந்த தேவதையின் சாக்ஷாத்காரத்தையும் அநுக்கிரகத்தையும் நமக்கு ஏற்படுத்தி

வைக்கின்றன.

சப்தம் தானாகப் பலனைத் தரவில்லை.சகல பலனையும் தருகிற பலதாதா ஈசுவரன். அப்படியிருந்தும், அவனே நேராக ஒவ்வொரு பலனையும் தராமல், ராஜா (ராஷ்டிரபதி) பல அதிகாரிகளை வைத்துக் கொண்டு ராஜாங்கம் நடத்துவதுபோல், ஒவ்வொரு பலனைத் தரும் அதிகாரிகளாக ஒவ்வொரு தேவதையே வைத்திருக்கிறான். அந்த தேவதையின் சப்த ரூபமே அதற்கான மந்திரம். சப்த ரூபமான மந்திரத்தை உருவேற்றி ஸித்தியடைந்தால் தேவதையின் அவயங்கள் கொண்ட ரூபத்தையும் கண்ணால் காணலாம். இப்படி உள்ள தேவதா சரீரத்துக்கு, குறிப்பிட்ட மந்திரங்களைச் சொல்லி அக்கினியில் ஆஹுதி செய்தால் அதுவே ஆகாரமும் ஆகிறது.

இவ்விதம் யக்ஞம் செய்தால் அந்த தேவதைகள் விச்ஷமாகப் பலனைத் தருகின்றன. நாம் வரியை நேரே ராஜாவுக்கு (ராஷ்ட்ரபதிக்கா) செலுத்துகிறோம். அதிகாரிகளுக்குத் தானே செலுத்துகிறோம். அது மாதிரி, பரமாத்மாவின் சிப்பந்திகளாக லோக க்ஷேமமான பயன்களைத் தருகிற தேவதைகளைத் தருகிற தேவதைகளுக்கு வேத அத்யயனத்தாலும், யக்ஞத்தாலும் வகி செலுத்துகிறோம். வேத சப்தங்கள் அவர்களுடைய ஸ்வரூபமாகவே இருப்பதுதான் அவற்றின் பெருமை. வேத அத்யயனமானது நம் நாட்டுக்கு மட்டுமின்றி லோகம் முழுவதற்கும் சுபிக்ஷம். சாந்தி ம்முதலியவற்றைத் தரும் பிரபஞ்ச சக்திகளின் அநுக்கிரகத்தை வாங்கிக் கொடுக்கிறது.

காவிய திருஷ்டியில் ( றீவீமீ மீக்ஷீணீக்ஷீஹ் ஜீஷீவீஸீமீ ஷீயீ ஸ்வீமீஷ்) பார்த்தாலே, வேதம் நாகரீகம் தெரியாத பழங்குடிகளின் வார்த்தையாக இல்லை. அதில் அத்தனை ரஸங்களும் இருக்கின்றன என்று பல மேல் நாட்டுக் காரர்களே கொண்டாடுகிறார்கள். இதற்கு மேலே அது பல

தேவதைகளின் தரிசனத்தையும் அநுக்கிரகத்தையும் செய்து வைக்கிறது. அதற்குமேல், முக்கியமாக உபநிஷதங்களில், பரம ஞானமான ஆத்ம தத்துவத்தை உபதேசிக்கிறது. இப்படிப்பட்ட அர்த்த கௌரவம் வேதத்துக்கு இருந்தாலும் அதைவிடக் குறைந்ததில்லை அதன் சப்த கௌரவம். இன்னும் சொல்லப்போனால், சப்தமே தனிப்பட்ட சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. வேத மந்திரங்களிதான் என்றில்லை, எந்த மந்திரத்துக்குமே பொதுவான உண்மை இது.

பல மந்திரங்களில் அர்த்தத்தைவிடக்கூட சப்தத்துக்கு முக்கியத்துவம் அதிகம். அவற்றின் அக்ஷரத்திற்கும் அவற்றைச் சொல்ல வேண்டிய ஸ்வரத்திற்குமே விசேஷ

சக்தி உண்டு. அர்த்தத்துக்கு அந்த ...........................

அளவுக்கு விசேஷமில்லை. உதாரணமாக, தேள் கொட்டு மந்திரத்தை எடுத்துக் கொண்டால், அதற்கு அர்த்தம் என்று ஒன்றும் விசேஷமாக இராது. அர்த்தத்தைச் சொல்லக் கூடாது என்றும் சொல்வார்கள். ஆனாலும் அந்த சப்தக் கோவையை ஜபித்தால், அதனால் ஆகாசத்தில் ஏற்படுகிற ஒலி அதிர்வுகளாலேயே (ஸ்வீதீக்ஷீணீமீவீஷீஸீ) அதாவது, அக்ஷரங்களின் சக்தியினாலேயே விஷம் இறங்கி விடுகிறது. ஒவ்வொரு விதமான சப்தத்துக்கு ஒவ்வொரு விதமான சக்தி உண்டு. ஆபிசாரம் என்று பிறருக்குக் கெடுதல் செய்யக் கூடிய மந்திரமும் இருக்கிறது. அந்த சப்தங்களுக்குக் கெடுதல் செய்யக் கூடிய சக்தி இருக்கிறது. இவற்றில் எல்லாமே அக்ஷர சுத்தம். ஸ்வர சுத்தத்தில்தான் சக்தி, பில்லி, சூனியம் வைக்கிறவர்களின்

பல்லைத் தட்டிவிடுவதுண்டு. ஏனென்றால் பல் போனால் சொல்லும் மாறுபடும். அவர்கள் ஜபிக்கிற மந்திரங்களில் சப்த தோஷம் உண்டாகும். அதனால் அவை பலன் தராமல் போகும். உச்சாரணம் சுத்தமாக இருந்தால்தான் அக்ஷரங்கள் பலன் தரும். சப்தங்களுக்கே இப்படி சக்தி இருப்பதை புரிந்து கொண்டோமானால், அப்புறம் எந்த மந்திரம் எந்த பாஷையில் இருக்கிறது. பாஷையை மாற்றலாமா என்ற எண்ணம் எழும்பாது. திவஸ மந்திரத்தை இங்கிலீஷில் மொழி பெயர்க்கலாம். தமிழில் சொன்னால்தானே நம் அப்பாவுக்கு புரியும் என்றெல்லாம் கேட்காமலிருப்போம்.

எந்த சப்தங்கள் சகல பிராணிகளுக்கும் இகபர நலன்களைத் தருமோ, அவையே வேதங்களில் உள்ள மந்திரங்கள். இதை நம்பினால்தான் உண்டு. நம் காதுகளுக்கும் கேட்காதது ரிஷிகளுக்கும் கேட்குமோ என்ரு கேட்கலாகாது. நமக்குத் தெரியாததைக் காண்கிற திவ்விய திருஷ்டி, நமக்குக் கேளாததைக் கேட்கும் திவ்விய சுரோத்திரம் எல்லாமே உண்டு. இப்போது நம் பார்வை, நம் கண்ணிலுள்ள லென்ஸைக் கொண்டு நடைபெறுகிறது. இந்த ஸென்ஸ் வேறுவிதமாக இருந்தால், நாம் பார்ப்பதெல்லாம் வேறு விதமாகத் தெரியும். யோக சாதனையினால் இந்த திவ்விய சக்திகளைப் பெற முடியும்.

வேதத்தில் இருப்பவற்றை நம் கண்ணாலும், காதாலும், யுக்தியாலும், புத்தியாலும் பரீட்சரிப்பது சரி இல்லை. வாஸ்தவத்தில் நம் கண்ணுக்கும் காதுக்கும் புத்திக்கும் யுக்திக்கும் எட்டாததைச் சொல்லவே வேதம் இருக்கிறது. நமக்கு நேரில் தெரிவதை நாமே தெரிந்து கொள்கிறோம். அதற்கு வேதம் என்று ஒன்று இல்லவே இல்லை. எதை ருசுவினால் நிரூபிக்க முடியாதோ, எங்கே புத்தி எட்டாதோ, அப்படிப்பட்ட பரம சத்தியங்களை திவ்விய சிருஷ்டி உள்ள முனிவர்கள் அறிந்து வேதமாகத் தந்திருக்கிறார்கள். அந்நிய தேச விவகாரங்கள் நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. அங்கிருந்து வருகிற பத்திரிக்கைகளிலிருந்து தெரிந்து கொள்கிறோம், உடனே நம்பி விடுகிறோம். லோகத்திலுள்ள கருவி எதனாலுமே தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்காக வேத மந்திரங்கள் என்ற பத்திரிக்கையை ரிஷிகள் தந்திருக்கிறார்கள்.

அவற்றை நம்பிக்கையின் மேல்தான் ஏற்க வேண்டும். கொஞ்சம் நம்பி ஏற்றுக் கொண்டால், தானே அதன் பலன் தெரிந்து, போகப்போக இதுவே சத்தியம் என்று நிச்சயமாக அறிந்து கொள்வோம்.

பிரத்யக்ஷமாக மந்திர சக்தியால் அங்கங்கே கொஞ்சம் இப்போதும் நடந்து வருகிறது. இதில் நல்லதைவிட கெட்டதுதான் அதிகமாக இருக்கிறது. ஏவல், பில்லி, சூனியம் இது மாதிரி மாந்த்ரிகம் என்றாலே பயப்படுகிற மாதிரி இருக்கிறது. ஆனால் இதிலிருந்தேகூட, கெட்டதைச் செய்ய ஒரு சில சப்தக் கூட்டங்களுக்கு சக்தி

இருக்குமேயானால், நல்லதைச் செய்யவும் ஏன் இப்படிச் சில சப்தக் கூட்டங்களான மந்திரங்கள் இருக்கக்கூடாது என்று யோசித்துத் தெரிந்து கொள்ளலாம். நல்லதாகவும் அவ்வப்போது எங்கேயோ கேள்விப்படுகிறோம். வருண ஜபம் செய்தார்கள். மழை பெய்தது என்று படிக்கிறோம். நம் ஊரிலேயே எப்போதாவது இந்த மாதிரி நேரில் பார்க்கிறோம்.

இன்னோரிடத்தில் வருண ஜபம் பண்ணியும் மழை பெய்யாமலிருக்கலாம். அதனால், மந்திரத்தையே சக்தியில்லாததென்று தள்ளிவிடக்கூடாது. மருந்துகளைச் சாப்பிட்டு உடம்பு சரியாகிறவர்களும் இருக்கிறார்கள். குணமாகாமல் சரியாகிறவர்களும் இருக்கிறார்கள். அதனால் மருந்தே தப்பு என்போமா. மருந்து பலிக்காவிட்டால் வியாதி முற்றியிருக்க வேண்டும் என்கிறோம். அதுபோல் கர்மா ரொம்பப் பலமாக இருந்தால், எந்த மந்திரமும் பலன் தராமல் போகலாம். இன்னொரு காரணமும் உண்டு. பத்தியம் தப்பினால் மருந்து பலிக்காது. அந்த மாதிரி மந்திர சக்தி ஸித்திப்பதற்குச் சில நியமங்களைப் பத்தியம் போல் வைத்திருக்கிறது. இந்த நியமங்களில் தப்பு வந்தால் மந்திரங்களிலிருந்து உத்தேச பலன் கிடைக்காது. யோக சாஸ்திரம் ஒரு ஸயன்ஸ். ஸயன்ஸ் பரிசோதனை செய்கிற லாபரட்டரியில் இப்படி இப்படி இருக்க வேண்டும் என்ற ரூலை மீறினால் நிஷ்பலனாகும் அல்லது விபரீதமாகும். மின்சாரத்தில் வேலை செய்யும் போது, மரத்தில் நிற்கமாட்டேன். ரப்பர் உறை (ரீறீஷீஸ்மீவ) போட்டுக் கொள்ள மாட்டேன் என்றால் என்ன ஆவது, அப்படித்தான் யோக சாஸ்திரம் ஒரு ஸயன்ஸ் என்றால் அதன் விதிகளின்படி கேட்டுதாதான் ஆக வேண்டும். வருண ஜபம் பலிக்காத பல இடங்களில் நான் விசாரித்ததில் அலவண நியமம் அதாவது ஜபம் செய்கிறவர்கள் உப்பே சேர்த்துக் கொள்ளக்கூடாது என்கிற விதி - சரியாக அநுஷ்டிக்கப்படவில்லை என்று தெரிந்து கொண்டிருக்கிறேன்.

மந்திர மகிமையில் பட்ட மரம்கூடத் துளிர்க்கும் என்பதைத் ததிருவானைக்காவில் பிரத்தியட்சமாகப் பார்த்தவர்கள் இருக்கிறார்கள். ஜம்பு என்கிற வெண் நாவல் மரம்தான் அங்கே ஸ்தல

விருட்சம். அதனாலேயே அந்த ஊருக்கு ஜம்புகேஸ்வரம் என்று பெயர் இருக்கிறது. அங்கிருந்தே ஸ்தல விருட்சம் பட்டுப்போய் ஒரே....................................

ஒரு பட்டையாகத்தான் ஏதோ குஞ்சம் உயிரை வைத்துக்கொண்டிருந்த சமயத்தில், கானாடுகாத்தான் செட்டியார்கள் திருப்பணி செய்தார்கள். அப்போது இந்தப பட்ட மரத்துக்கு ஏகாதச ருத்ராபிஷேகம் பண்ணினார்கள். மந்திர சக்தியால் அப்போழுதே அது தளிர்த்தது.

ஒவ்வொரு சப்தத்தால் ஒவ்வொரு விளைவு வெளி உலகில் உண்டாகிறது. ஆராய்ச்சியாளர்கள் சிவவிதமான சப்தங்களை ஸ்வரஸ்தானங்களில் அமைந்து ஒரு ஏரிக்குப் பக்கத்தில் திரும்பத் திரும்ப வாசித்தபோது, அதிலிருந்து உண்டான அதிர்வுகளால் (ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீ) ஜலத்தின் மேலே ஒளியானது தூள் தூளாகப் பிரசாசித்துக் கொண்டு, அப்புறம் அந்த ஒளித் துகள்கள் எல்லாம் (ரீவீரீலீமீ ஜீணீக்ஷீமீ வீநீறீமீ) ஒழுங்கான வடிவத்தில் (ஒஜீமீநீவீயீவீநீ ஒலீணீஜீமீ) அமைந்தன. ஒவ்வொரு விதமான ஸ்வர வரிசைக்கும் இப்படி ஒரு ஒளி உருவம் உண்டாயிற்று. இந்த ஒநீவீமீஸீமீ வீயீவீநீ ஜீக்ஷீஷீஷ்யீ லிருந்து வேத மந்திர சப்தங்களால் தேவதா ரூபங்களின் தரிசனம் கிடைக்க முடியும் என்பதை நம்ப முடிகிறது.

ஒலியானது ஒளியாக மட்டும்தான் வெளி உலகில் மாறுகிறது என்றில்லை. அது வேறு பல விதங்களில் வெளியே வியாபித்துப் பலவிதமான விளைவுகளை ஏற்படுத்துகிறது. வேத சப்தங்கள் வெளிச் சூழலில் (ணீமீ ீனீஷீஒஜீலீமீக்ஷீமீ) பரவிக்

கொண்டிருப்பதாலேயே லோகத்தில் பரம மங்களம் உம்ண்கும். அப்படிப்பட்ட

சக்திஅந்த மந்திரங்களுக்கு இருக்கிறது. சப்தம் மட்டுமில்லாமல், அதன் ஸ்வத்திற்கும் சக்தி உண்டு. ஒரு ஒள்யை எப்படிச் சொன்னாலும் பலன் தந்துவிடாது. சிலவற்றை உயர்த்த வேண்டும். சிலவற்றைத் தாழ்த்த வேண்டும். சிலவற்றைச் சமமாக சொல்ல வேண்டும். அப்போதுதான் பலன் கிடைக்கும். வேதத்தைப் இப்படி மூன்று வித ஸ்வரங்களில் சொன்னாலே பலிதமாகும்.

இவற்றை உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்று சொல்வார்கள். சப்தம் ஸ்வரம் இரண்டுமாகச் சேர்ந்து பிரபஞ்ச சக்திகளை நமக்கு அநுகூலமாக்கித் தருகின்றன.

சரி, வேதமந்திரங்களின் சக்தியை நம்புகிறோம். ஆனால் இதற்கு ஏன் தனி ஜாதி வேண்டும். என்றால் பல காரணம் உண்டு.

முதலில் வேதத்தை எழுதிப் படிக்கக்கூடாது. காதால் கேட்டுக் கேட்டு வாயால் உருப்போட்டுத்தான் மனப்பாடம் பண்ண வேண்டும். அப்புறம், இம்மாதிரி தான் கற்றுக் கொண்டதை அடுத்த சந்ததிக்கு வாயால் சொல்லிக் தரவேண்டும். வேரு காரியம், வேறு தொழில் என்று வைத்துக் கொண்டால் இது முடியாது. இது அத்தனை காலம், அத்தநை பொழுது தேவையில்லாதிருக்கிற பெரிய சமாச்சாரம்.

வேதம் மட்டுமில்லை. மற்ற சாஸ்திரங்கள், கலைகள் எல்லாவற்றையுமே ரக்ஷித்து அந்தந்தத் தொழிலாகக் கொண்ட பிற ஜாதியாறுக்கு போதிக்க வேண்டியது பிராம்மணின் தொழில். சமுதாயத்தின் அறிவை, பண்பாட்டைக் வளர்க்கிற இந்தப் பொறுப்பும் அவனுக்கு இருக்கிறது. யுத்த சாஸ்திரமாகிய தனுர்வேதம் உள்பட எல்லாவற்றையும் அவன் கற்று, அந்தந்தத் தொழ்லைப் பாரம்பரியமாகப் பெற்றிருப்பவர்களுக்கு போதிக்க வேண்டும். இப்படி சகல தொழில்களும் இவனுக்குத் தெரிந்திருந்தும்கூட இவன் அவற்றில் எதையும் தானே செய்து அதனால் ஜீவனோபாயத்துக்கு வழி பண்ணிக் கொள்ளக்கூடாது என்பதே சாஸ்திரம். இவன் அவற்றைப் பிறருக்குத்தான் உபதேசிக்க வேண்டும். தானே செய்யக்கூடாது என்பது விதி. எத்தனை லாபம் தருகிற தொழிலானாலும், செனகரியமான தொழிலானாலும் இவன் அவற்றைச் செய்யக்கூடாது. வேத அத்யயனமும் (தான் படிப்பது ஒதுவது) அத்யாபனமும் (பிறருக்கு படிப்பிப்பது, ஒதுவிப்பது) தான் இவனுடைய தொழில். மந்திர சித்திக்கு வேண்டிய மகா கடுமையான விதிகளை, விரதங்களை உபவாசங்களை அநுசரித்துக் கொண்டு இவன் ஜீவனை ரக்ஷித்துக்கொள்கிற அளவுக்கு மட்டுமே ஆஹார விஹாரங்களைச் சுருக்கிக்கொண்டு குடிசையில்தான் வாழ வேண்டும் என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. இவன்

வேறு தொழில் செய்யு பணம் சம்பாதித்து, இந்திரிய சுகங்களில் விழக்கூடாது. பணம் சம்பாதிக்கிற லட்சியம் இவனுக்கு இருக்கக்கூடாது. பரம தியாகியாக லோக க்ஷேமாந்தமாக, வேத ரக்ஷணம், கர்மானுஷ்டானங்கள் செய்து கொண்டே காலம் கழிக்க வேண்டும்.

இவன் பட்டினி கிடந்து சாகாமல் மற்றவர்கள் இவனை ரக்ஷிக்க வேண்டும். அத்யாவசியமாக உயிர் வாழ்வதற்கு என்ன அவசியமோ, அவற்றை இவனுக்குத் தந்து காப்பாற்ற வேண்டும். யக்ஞாதிகளுக்கு வேண்டிய திரவியங்கள் இவனுக்குத் தட்டில்லாமல் கிடைப்பதற்கு வசதி செய்து தர வேண்டும். மற்ற தொழில்களில் சம்பளம் கொடுக்கிறோம். ஒரு பண்டத்தை வாங்கினால் அதற்கு விலை கொடுக்கிறோம். அந்தந்தத் தொழில்களால், பண்டங்களால், நமக்கு ஒரு

சௌகரியம் கிடைப்பதால் இப்படிச் செய்கிறோம். அதேபோல் சமூகம் முழுவதற்கும் மந்திர சப்தங்களாலும் யக்ஞ கர்மானுஷ்டானங்களாலும் க்ஷேமம்

ஏற்படுத்துகிறவர்களுக்கும் பிரதியாக, அவர்கலுடைய, ஜீவனோபாயத்துக்கானதைச் செய்யத்தானே வேண்டும். இதிலே சாஸ்திரங்கள், பிராம்மணனுக்கு அரண்மனைக் கட்டிக்கொடு பவுன் பவுனாக வாரிக்கொடு என்று சொல்லவில்லை. யக்ஞங்களில் திரவிய லோபம் இல்லாமலிருக்க அவனுக்கு வேண்டிய செல்வத்தையும் தர வேண்டியதாயிருக்கும். ஆனால் அவனுடைய தனி வாழ்க்கையில் துளிக்கூட ஆடம்பரமே இருக்கக்கூடாது. அவன் இந்திரியங்களை வாட வாட வைத்து, அதனால் கிடைக்கிற மந்திர ஸித்தியால்தான் லோக க்ஷேமத்தை உண்டு பண்ண வேண்டும்.

நடுநடுவே வேதத்தை எழுதிப் படிக்காமல், கேட்டுத்தான் பாடம் பண்ண வேண்டும் என்றேனல்லவா. இதற்க்குக் காரணம் சொல்கிறேன். வேதங்களின் சப்தம் லோகத்தில் இருக்க வேண்டியது முக்கியமாதலால் அது எழுத்தில் புஸ்தகமாக இருக்க வேண்டியதில்லை. இருக்கக்கூடாது. அது புஸ்தகமாக வந்துவிட்டதோ, அப்புறம் அதை மனப்பாடம் பண்ணி தினமும் ஓதுகிற காரியம் போயே போய்விடும். இதில் கொஞ்சம்கூட சந்தேகம் இல்லை. விஷயம்தான்

புஸ்தகத்தில் இருக்கிறதே. அவசியமேற்படுகிறபோது அதைப் பார்த்துக் கொண்டால் போச்சு. பொழுதைச் செலவழித்து மனப்பாடம் பண்ணுவானேன் என்கிற அசிரத்தை வந்து விடும். இதற்கு சமீப காலத்தில் கிடைத்திருக்கிற ஓர் உதாரணத்தைச் சொல்கிறேன். இப்போது பஞ்சாங்கக்காரன் என்று சிலரைச் சொல்கிறோம். நாம் காம் வர்ணத்தவர்களுக்கு அநுஷ்டானங்களைப் பண்ணி வைப்பதுதான் இவன் தொழில் என்று நடைமுறையைப் பார்த்து நினைக்கிறோம். ஆனால், பஞ்சாங்கக்காரன் என்ற பெயரைப் பார்த்தால், இது அவனுடைய ம்முக்கியமான தொழில் இல்லை என்று தெரிகிறது. பஞ்சாங்கம் கணிக்கிறவன் எவனோ, அவனே உண்மையில் பஞ்சாங்கக்காரன். பஞ்சாங்கம் என்றால் என்ன. ஒரு நாளுக்குப் பஞ்ச (ஐந்து) அங்கங்கள் இருக்கின்றன. திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்று. ஒரு நாள் நல்ல நாளா இல்லையா. அன்றைக்கு என்னன்ன காரியம் செய்யலாம். செய்யக்கூடாது என்று தீர்மானிப்பதற்கு இந்த ஐந்தும் தெரிந்திருக்க வேண்டும். இந்த நாளில் கிரீன்விச் லாபரட்டரியில் பெரிய அஸ்ட்ரானமர்கள் உட்கார்ந்து கொண்டு, சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள்களின் உதய அஸ்தமனக்கணக்குகளைப் போடுகிறார்கள் என்றால், மூன்று நாலு தலைமுறைக்கு முன்வரையில் ஒவ்வொரு கிராமத்திலும் இருந்த பஞ்சாங்கக்காரனுக்கு இந்தக் கணக்கெல்லாம் அத்துப்படியாகியிருந்தது. கிரகணம் எப்போது பிடிக்கிறது. விடுகிறது. என்பதை அஸ்ட்ரானமர்களுக்குக் கொஞ்சம்கூடச் சளைக்காமல் கணனம் செய்கிற சாமர்த்தியம் இந்தப் பஞ்சாங்கக்காரனுக்கு இருந்தது. ஜோதிஷ சாஸ்திரத்தின் மூலம் இவன் இந்தக் காரியத்தைச் செய்தான். இவன் அன்றாடம் ஒரு சிறிய ஓலையில் - பஞ்சாங்கக்காரனுக்கு குட்டைச் சுவடி என்றே இன்னொரு பெயர் இருந்திருக்கிறது. அன்றைய தினத்தின் பஞ்ச அங்கங்களையும் எழுதிக் கொண்டு வீடு வீடாகப்போய் அதைப் படிக்க வேண்டும். அதிலிருந்து ஜனங்கள் லெனகிக

காரியம். மதாநுஷ்டானம் இரண்டுக்குமே அவசியமாக இருக்கிற திதி, வார, நக்ஷத்திர யோக காரணங்களைத் தெரிந்து கொண்டு பயனடைவார்கள். பஞ்ச அங்கங்களைக் கணித்து, வீடு வீடாகச் சொன்னதாலேயே பஞ்சாங்கக்காரன் என்ற பெயரும் ஏற்பட்டது.

இப்போது பஞ்சாங்கக்காரர்கள் இந்தப் பெரிய சாஸ்திரத்தை அட்யோடு மறந்து விட்டிருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் என்ன. அச்சுக் குடம் (ஜீக்ஷீவீஸீமீவீஸீர ஜீக்ஷீமீவெ)வந்தது. பஞ்சாங்கம் என்று என்று ஒரு நாளைக்கு மட்டுமில்லாமல் வருஷம் முழுவதற்குமாகச் சேர்த்து புஸ்தகமாகவே அச்சுப் போட ஆரம்பித்தார்கள்.

புஸ்தகத்தில் வந்து விட்டது என்றவுடன், அதற்கு மூலமான சாஸ்திரத்தை மனப்பாடம் பண்ணி அப்பியாசம் செய்ய வேண்டும் என்ற எண்ணமே போய்விட்டது. ஆகக்கூடி இன்று பெயரளவில் மட்டும் பஞ்சாங்கக்காரர்கள் இருந்துகொண்டு, அவர்கள் தங்களுக்கு இந்தப் பெயர் ஏன் ஏற்பட்டது என்றுகூடத் தெரிந்துகொள்ளாத நிலையில் இருக்கிறதைப் பார்க்கிறோம். ஜோதிஷத்தில் ஒரு பாகமான பஞ்சாங்கம் என்ற பெரிய புராதன சாஸ்திரமே உதாசீனம் செய்யப்பட்டு, மறைந்து போகிற ஸ்திதி ஏற்பட்டிருக்கிறது.

வேதங்களை மட்டும் புஸ்தகத்தில் எழுதி வைத்துக் கற்றுக் கொடுக்கலாம் என்று வைத்திருந்தார்களோ, அதற்கும் இதே கதிதான் உண்டாகியிருக்கும். வேத சப்தங்கள் லோகத்தில் இருந்துகொண்டு, சமஸ்த ஜீவராசிகளுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பதற்கு இடமே இல்லாமல் போயிருக்கும்.

எழுதி வைத்துவிட்டால் அசிரத்தை வந்துவிடும் என்று நம் முன்னோர்கள் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். வேதத்தை எழுதிப் படிப்பவன் (லிகித பாடகன்) அதமன் என்று வைத்தார்கள்.தமுழிலோ வேதத்துக்கு எழுதாக் கிளவி என்றே பெயர். ஸம்ஸ்கிருதத்தில் வேதத்துக்கு ஸ்ருதி என்று ஒரு பெயர். ஸ்ருதி என்றாலும் காதால் கேட்கப்பட்ட வேண்டியது, அதாவது எழுத்தில் படிக்கக்கூடாதது என்றே அர்த்தம். வாயால் சொல்லி, காதால் கேட்டு மனப்பாடம் பண்ணுவது என்பதால்தான் இது பகுதி நேர (ஜீணீக்ஷீமீ-மீவீனீமீ) வேலையில்லாமல் முழு நேர (ஷ்லீஷீறீமீ மீவீனீமீ) வேலையாயிற்று. ஒருத்தர் பாதம் பாதமாக சொல்லிக் கொடுப்பதும், சிஷ்யர்கள் ஒவ்வொரு பாதத்தையும் இரண்டு முறை ஸந்தை சொல்லுவதுமாக, வேத சப்தமானது சூழல் முழுதும் நிரம்பப் பரவிவந்தது. இப்படி எத்தனையோ ஆயிரம் தலைமுறைகள் பெரிய சமுத்திரமாக விரிந்து கிடக்கிற வேத சாகைகளை வாய்மொழியாகவே

வாழ வைத்து இந்த நூற்றாண்டு ஆரம்பம் வரை கொண்டு வந்துவிட்டார்கள். இந்த லக்ஷம் காலப் பயிரை நமக்கு பகவதாக்ஞையாக வந்த கடமையை நாம் நாசம் செய்துவிட்டால் அதைவிடப் பாபம் வேறில்லை.

வேதம் போய்விட்டால், அதற்கப்புறம் பிராம்மணன் என்று தனி ஜாதியிருக்க வேண்டிய அவசியமே இல்லை. இப்போது, பார்ப்பானே வெளியே போ என்று சொல்கிற மாதிரி எங்கேயாவது, குயவனே வெளியே போ. வண்ணானே வெளியே போ என்கிற வார்த்தைகளைக் கேட்டிருக்கிறோமா. மாறாகக் குயவர்களோ வண்ணார்களோ திடீரென்று ஓர் ஊரைவிட்டுப் போகிறார்கள் என்றால், மற்றவர்கள் அவர்களைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தாவது

இருத்தி வைத்துக் கொள்வார்கள். காரணம் என்ன.

குயவனால், வண்ணானால் சமூகத்திற்குப் பிரயோஜனம் இருக்கிறது.

வேத ரக்ஷணத்தைச் செய்துகொண்டு, ஸத்வ குணத்தோடு படாடோபமில்லாமல் பிராம்மணன் இருந்து கொண்டிருந்த வரையில், மற்றவர்கள் இவனால் சமூகத்துக்குப் பெரிய பிரயோஜனம் இருக்கிறது என்று கண்டார்கள். இவனிடம் நிறைந்த அன்பும், மரியாதையும், விசுவாசத்தையும் காட்டி வந்தார்கள். இன்று உள்ள மாதிரி துர்பிக்ஷமும் வியாதிகளும் இல்லாமல் அப்போதெல்லாம் சமூகம் செனக்கியமாகவே இருந்தது என்றால், அதற்குக் காரணம் வேத சப்தமும் யக்ஞாதி கர்மாக்களும்தான் என்பதை மற்ற ஜனங்கள் உணர்த்திருந்தார்கள்.

இப்படி ஒரு சமூகப் பிரயோஜனம் இவனுடைய கர்மாவிலிருந்து கிடைத்ததோடு மட்டுமில்லாமல், இன்னொரு பெரிய பிரயோஜனம் இவனுடைய வாழ்க்கையின்

உதாரணத்திலேயே (ஜீமீக்ஷீஷஷீஸீணீறீ மீஜ்ணீனீஜீறீமீ) அவர்களுக்கு உண்டாயிற்று. ஆசாகளைக் குறைத்து, சாந்தர்களாக, சகல ஜீவராசிகளிடமும் தயையோடு, ஸதா பகவத் ஸ்மரனையோடு, தங்களுக்கு ஒரு லாபமும் தராமலிருந்தும், கர்மாக்களை ஏகப்பட்ட நியமங்களோடு அநுஷ்டிக்கிற தியாக சீலர்களாக, இப்படி ஒரு ஜாதி இருக்கிறதைப் பார்த்துப் பார்த்தே மற்றவர்களுக்கு

இப்படிப்பட்ட பண்புகளிலும், ஆத்ம குணங்களுக்கும் ஸ்வபாவமாக இருந்த ஈடுபாடு அதிக மாயிற்று. தங்களால் முடிந்த அளவில், தங்கள் தொழில் இடம் கொடுக்கிற அளவில், அவர்களும் பல நியமங்களை, விரத உபவாஸங்களை மேற்கொண்டார்கள். பிராம்மணன் மற்ற ஜாதிக்காரர்களை எழும்பவொட்டாமல் அமுக்கி வைத்தான் என்றால் அது முழுத் தப்பு. தன் ஜீமீக்ஷீஜ்ஷீஸீணீறீ மீஜ்ணீனீஜ்றீமீ ஆல் இவன் மற்றவர்களும் தாங்களாகவே எழும்பி உயர்வை அடையச் செய்ய வேண்டும் என்பதுதான் சாஸ்திரம் இவனுக்கு அமைத்துக் தந்திருக்கிற வாழ்க்கை முறை.

வேதத்தை மற்றவர்கள் அத்யயனம் செய்யக்கூடாது என்று வைத்தால், அவர்களை இவன் அழுத்தி வைத்து விட்டான் என்று நினைப்பது சுத்தப் பிசுகு. வேத ரக்ஷணம் ஒரு (றீவீயீமீ - மீவீனீமீ) ஆயுட்கால தொழிலானதைச் சொன்னேன். எந்தத் தொழிலையுமே அந்தப் பரம்பரையில் வந்தவன் மட்டுமே அநுஷ்டிக்க வேண்டும். இல்லாவிட்டால், போட்டி பொறாமை வரும் என்பதுதானே விதி. வேத ரக்ஷணம் ஒரு தொழில் ஆனபின் இதில் இன்னொருவரை விட்டால் தொழிலாக பங்கீட்டில் குளறுபடியும் கோளாறுகளும் தானே உண்டாகும். இதனால் சமூகப் சீரமைப்பு குலையத்தானே செய்யும். அந்தந்தத் தொழிலுக்கும் உயர்த்திதான். தன் தொழிலைவிட வேத ரக்ஷணம் உயர்ந்தது என்று ஏன் இன்னொருவன் நினைத்து இதற்கு வரவேண்டும்.

மற்றவர்கள் வேதத்தை அத்யயனம்தான் செய்யக்கூடாதே தவிர, அதிலுள்ள தத்துவங்களைத் தவிர, அதிலுள்ள தத்துவங்களைத் தெரிந்து கொள்வதில் ஒரு தடையுமில்லை. ஆத்மாபிவிருத்திக்கு வேண்டியது இதுதான். லோகக்ஷேமத்துக்கு வேண்டிய வேத சப்த ரக்ஷணத்தை ஒரு தொழிலாக வைத்துக் கொண்டு, சிலர் மட்டுமே இருந்தால் போதும். ஆத்மாபிவிருக்கிக்கான அதிலுள்ள அபிப்பிராயங்களை சகலரும் தெரிந்து கொள்ளலாம். அப்பர் ஸ்வாமிகள்,

நம்மாழிவார் போன்ற பிராம்மணரல்லாதாரின் பாடல்களில் வேத வேதாந்த தத்துவங்கள் நிறைய இருப்பதைப்

பார்க்கவில்லையா.

பிராம்மணர்கள் ஞானம், பக்தி இவற்றை ஏகபோக்கியம் (னீஷீஸீஷீஜீஷீறீவீமீ) பண்ணிக் கொண்டு மற்றவர்களை கீழே அமுக்கி வைத்திருந்தால் ஒரு அப்பர் ஒரு நம்மாழ்வார் மட்டுமில்லை. இன்னும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் முக்கால்வாசிப் பேரும், ஆழ்வார்களில் பலரும் தோன்றியிருக்க முடியுமா. பறக்குலத்திலிருந்து, குயவரிலிருந்து இப்படியே சகல ஜாதியிலிருந்தும் நாயன்மார்கள் தோன்றியிருக்கிறார்கள். தாயுமானவர், பட்டினத்தார் மாதிரி ஞானிகளை எங்கே பார்க்க முடியும். ஸமீபத்திலேயே ராமலிங்க ஸ்வாமிகள் இருந்திருக்கிறார்கள். பக்தியிலும் ஞானத்திலும் இப்படி பிராம்மணர்களும் ஸ்தோத்திரம் செய்கிற மாதிரி மற்ற வர்கத்தார் உயர்வாக மட்டுமில்லை. சிவாஜி போன்று பெரிய சாம்ராஜ்யத்தையே ஸ்தாபித்து வேத தர்மத்துக்குப் புத்துயிர் ஊட்டிய ராஜாதி ராஜர்கள் நாலாம் வர்ணத்திலிருந்தே தோன்றியிருக்கிறார்கள். எனவே அமுக்கி வைப்பது. சுரண்டுவது (மீஜ்ஜீறீஷீவீமீ'ணீமீ'வீஷீஸீ) என்பதெல்லாம் புதிதாகக் கட்டிவிட்ட கதைதான்.

பிசகே இருந்திருக்காது என்று நான் சொல்லவில்லை. ஆனால் தப்பிதங்கல் நடப்பது எதிலுமே சகஜம்தான். பொதுவாக பிராம்மணன் சமூகநலனுக்காக நல்ல காரியங்களைச்

செய்து கொண்டு, நல்லவனாக வாழ்ந்து, மற்றவர்களுக்கெல்லாம் வழிகாட்டியாக (ரீ�ூவீபீமீ) இருந்தால்தான் இத்தனை மதிப்புடன் வாழ வைத்திருக்கிறார்கள்.

அந்தப் பிரயோஜனம் இவனால் இல்லை என்றவுடன் பார்ப்பானே, வெளியேறு என்கிறார்கள்.

ஒரு நோக்கம் இல்லாமல், வெறுமே மற்றவர்களுக்குப் போட்டியாக இவனும் பணத்தைத் தேடிப் பறத்து கொண்டிருக்கிறான் என்றால், அப்புறம் இவன் பிராம்மணன் என்று தனியாக இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. இப்படி பர்பஸ் இல்லாமல் பிராம்மண ஜாதி இருந்தால், அதை மற்றவர்கள் அழிப்பதற்கு முன்னால் நானே அழித்துவிட

வேண்டும் போலிருக்கிறது. பிரயோஜனம் (�஁யமீ஁வீறீவீமீ஁ஹ்) இல்லாமல் ஒரு வஸ்துவும் இருப்பதற்கு உரிமையில்லை. லோகத்துக்குப் பயன் இல்லாவிடில் பிராம்மண ஜாதி வேண்டியதை இல்லைதான்.

இப்போது டோல்-கேட் என்று பல இடங்களில் சொல்கிறார்களே. இங்கே அநேகமாக கேட் இருப்பதில்லை. பின் இந்தப் பெயர் ஏன் வந்தது என்றால், முன்பெல்லாம் அந்த எல்லாயைத் தாண்டிப் போகிறபோது சுங்கம் வசூலித்து வந்தார்கள். அதற்காக கேட் போட்டு வசூலிக்க வேண்டியவர்களை நிறுத்தி வைத்தார்கள். அப்புறம் இந்தச் சுங்க வசூல் நின்று விட்டது. அது நின்ற பிற்பாடு கேட் எதற்கு. கேட்டும் போய்விட்டது. பயன் (ஜீ஁஁யகூஷீஜீஷீவமீ) இல்லாமல் எதுவும் இருக்காது. இருக்கவும் கூடாது. இப்போது வேதம் இல்லாத பிராம்மணன் சுங்கம் இல்லாத டோல்கேட்டாகி விட்டான் என்றால், அப்புறம் இவனைத் தூக்கி எறியக்கூடாது என்று எப்படி நியாயம் கேட்கமுடியும்.

இப்போதிருக்கிற பிராம்மணன், தனக்கு ஏதோ தன் மரியாதை எதிர்பார்த்தானானால், இவனைத் தூஷிக்கத்தான் வேண்டும். ஆனால், துவேஷமும்

தூஷணையும் நியாயமானதாக இருக்கவேண்டும். இவன் தன் தர்மத்தை விட்டதற்காகத் தூஷிக்க வேண்டுமே ஒழிய வேத தர்மமே தப்பு என்று அந்த பெரிய மூலதனத்தையே தூஷிக்கக்கூடாது. அந்த தர்மத்தை பிராம்மணன் மேற்கொண்டு நடத்துவதற்குத்தான், மற்றவர்கல் சகாயம் செய்ய வேண்டும். லோகம் நன்றாக இருக்க வேண்டுமானால், வேத ரக்ஷணம் நடக்கத்தான் வேண்டும். இதையே பாரம்பரியத் தொழிலாகக் கொண்டவர்களும் இருக்கத்தான் வேண்டும் என்ற மனப்பான்மையை மற்றவர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். பிராம்மணன் வேதத்தை விட்டதுபோல் மற்றவர்களும் வைதிக மதத்தில் நம்பிக்கையை விட்டுவிட்டால், அப்புறம் இவனை அவர்கள் துவேஷிப்பது நியாயமே இல்லை. வேதம் வேண்டாம் என்றால் அப்போது இவன் தன் தர்மத்தை குலத் தொழிலை விட்டதுதான் சரி என்றாகி விடுகிறது. அந்தத் தொழில் போனபின் இவன் ஜீவனோபாயத்துக்கு வேறு தொழில் செய்துதான ஆக வேண்டும். எனவே, இவன் மற்றவர்களுக்குப் போட்டியாக

வந்துதானே ஆக வேண்டும். ஆகையால் வேத தர்மமும் கூடாது. ஆனால் பிராம்மணன் வேறு தொழிலுக்கும் வரக்கூடாது இரண்டையும் எதிர்ப்போம் என்றால் அது பகுத்தரிவு கிடையாது. வேதம் தப்பானது வேதத்தைவிட வேண்டும் என்று சொன்னால் அதை விட்டுவிட்டு வேறு தொழிலுக்கு வருகிறவனை வெறுப்பது நியாயமே இல்லை. ஒரு நாய் நரிகூட பட்டினி கிடந்து பார்க்கக் கூடாது என்பதுதான் மனுஷ்ய தர்மம். எல்லா மதங்களும் சொல்கிற தர்மம் இது. ஒரு மதமும் வேண்டாம் என்பவனும்கூட இப்படிப்பட்ட அன்பையும் தியாகத்தையும் சொல்லாமலிருக்கமாட்டார்கள். எனவே ஒருத்தனுக்குப் பாரம்பரியத் தொழிலும் கூடாது. அவன் வேறு தொழிலுக்கும் வர்க்கூடாது. அவன் பட்டினி கிடந்து சாக வேண்டும் என்று நினைப்பது நியாயமில்லை.

பிராம்மணனை உண்மையான பிராம்மணனாக வேதத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கப் பண்ணுவதே மற்றவர்கள் செய்ய வேண்டிய பெரிய உபகாரம். முன்பெல்லாம் நானே கேள்விப்பட்டிருக்கிறேன். சில பிராம்மணர்கள் நானும் நீயும் ஒன்றாகி விடலாம் என்று சொல்லிக் கொண்டு சேரிக்குப் போவீர்கள். சேரி ஜனங்களோ வேண்டாம். வேண்டாம் நீ உன் காரியத்தையே செய்து கொண்டிரு. அதுதான் உனக்கும் எனக்கும் நல்லது. இங்கே வராதே என்று சொல்லித் தங்கள் ஆஸ்தியான பானைகளைப் போட்டு உடைத்து அவர்களை வரமுடியாதபடி பண்ணுவார்களாம். காரியத்தில் பிரிந்திருந்தாலும், சமூகத்தில் கலந்து பழகாவிட்டாலும், மனசில் அன்புடன் அவரவரும் தங்கள் தொழிலைச் செய்து கொண்டு, பொது நலனைப் பேணவேண்டும் என்ற உணர்வு இந்த அளவுக்கு அதி சாமானியமான ஜனங்களுக்குக்கூட இருந்திருக்கிறது.

இப்போதும்கூட பொது ஜனங்கள் எல்லோருக்கும் உள்ளூர வைதிர சிரத்தையும் ஆஸ்திக்ய புத்தியும் போகவே இல்லை. அது போகவே முடியாது என்பதுதான் என் அபிப்பிராயம். துவேஷப் பிரச்சாரம் இருக்கிறதே என்றால் அது ஏதோ அரசியல் காரணத்துக்காக நடக்கிறது. உள்ளுக்குள் பார்த்தால், வேதம், அதன் சடங்குகள் வைதிக ஆச்சாரங்கள் எல்லாவற்றிலும் மக்களுக்குப் பயபக்தியும் விசுவாசமும் இருக்கவே செய்கின்றன. பிராம்மணன் மட்டும் கொஞ்சம்

நேராகிவிட்டால் போதும். எல்லாத் துவேஷமும் போயேப்போய்விடும். மற்றவர்கள் தன்னை ஆதரிக்கவேண்டும் என்று எதிர்பார்க்காமல் இவன் ஸ்வதர்ம உணர்ச்சியுடன் சாகவும் துணிய வேண்டும் என்று சொன்னேன். ஆனால் வாஸ்தவத்தில் இவன் எதிர்பார்க்காவிட்டாலும் அப்படிப்பட்ட துர்த்தத்திற்கு இவனை நம் சமூகம் ஒரு நாளும் விடாது என்பதுதான் என் நம்பிக்கை. விட்டாலும் பரவாயில்லை என்று இவன் நம் தர்மத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதே என் கட்சி. மற்றவர்கள் எப்படி நினைத்தாலும் சரி. உபச்சரித்தாலும் சரி, கரித்துக் கொட்டினாலும் சரி, அவர்கள் நலனுக்காக இவன் வேதத்தைக் காப்பாற்றத்தான் வேண்டும்.

இத்தனை நாள் பிராம்மண சமூகத்திற்குச் சொல்கிறேனே இது மற்ற சமுதாயத்தாரையும் உத்தேசித்துத்தான். அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய தர்மங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவர்களும் தெரிந்து கொள்ள ஆசையோடு இருக்கிறார்கள். விளக்கிச் சொன்னால் நம்பிக்கையோடு எடுத்துச் கொண்டு நன்றாக அநுஷ்டிப்பார்கள். ஆனால், அவர்களுக்கு உபதேசிப்பதற்கு முன் எனக்கு நானே அதற்கான யோக்கிதையை நிச்சயப்படுத்திக் கொள்ள நினைக்கிறேன். பிராமண சமூகம் எனக்கு விசேஷமாக கட்டுப்பட்டிருக்கிறது என்று பொதுவாக ஒரு அபிப்பிராயம் இருக்கிறது. மடத்தில் வைதிக அநுஷ்டானங்கள் நிறைய இருப்பதால் வேதத்துக்காக என்றே ஏற்பட்ட ஜாதியிடம் எனக்கு நிறைய பாத்தியதை இருப்பதாக - தப்பாகவோ, சரியாகவோ ஒரு அபிப்பிராயம் பொதுவாக உண்டாக்கியிருக்கிறது. இப்படிப்பட்ட நிலையில் மற்றவர்களுக்கு தர்மோபதேசம் செய்ய ஆரம்பித்தால், அவர்கள் அன்போடு பணிவோடு சிரத்தையோடு அதை எடுத்துக் கொள்வார்கள் என்றே வைத்துக் கொண்டாலும்கூட, இன்னொரு கேள்வியும் அவர்களுடைய மனசுக்குள் தோன்றலாம். இவரை ரொம்பவும் ஆசிரயிக்கப்பட்ட பிராம்மணர்கள் ஒருவிதத்திலும் திருத்தக்காணோமே. இதே நிலையில் நமக்கு உபதேசம் பண்ண வந்துவிட்டாரே என்று தோன்றலாம். வாஸ்தவத்தில் எனக்கு எல்லோரும் ஒன்றுதான். பார்க்கப்போனால், பரம ஸ்ரேயஸ்கரமான வேதத்தை விட்டுவிட்ட பிராம்மணனிடம்தான் எனக்கு அதிர்ப்தி

ஜாஸ்தி. இருந்தாலும், லோக அபிப்பிராயப்படி பிராம்மணர்கள் ஏதோ எனக்கு

விசேஷமாக கட்டுப்பட்டிருப்பதாக ஏற்பட்டிருப்பதால், அவர்களிடம் வேத ரக்ஷணத்தை மறுபடி முழு மூச்சோடு ஆரம்பியுங்கள் என்று ஓயாமல் ஒழியாமல் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இதில் கொஞ்சத்தில் கொஞ்சமாவது பிராம்மணர்களான நீங்கள் நடைமுறைக்குக் கொண்டு வந்தால்தான், மற்றவர்களிடம் அவரவருக்கான தர்மங்களைச் சொல்வதற்கு எனக்கு வாய் இருக்கும். நல்லவைகளைத் தெரிந்து கொண்டு செய்வதற்கு ஆசையாக இருக்கிற மற்ற சமுதாயத்திற்கு நான் எனக்குத் தெரிந்த தர்மங்களைச் சொல்வதற்கு பிராம்மணர்கள்தான் சகாயம் செய்ய வேண்டும் - கூடிய மட்டும் நான் சொல்கிற வேத ரக்ஷணம் கர்மானுஷ்டானம் இவற்றை அநுசரிப்பதால்.

சகல ஜனங்களும் ஜீவ ஜந்துக்கள் அத்தனையும் க்ஷேமமாக இருக்க வேண்டும். பரஸ்பர சகாயத்துக்காகவே ஜனங்கள் அவரவருக்கு ஏற்பட்ட தர்மங்களை உயர்வு

தாழ்வு எண்ணமேயில்லாமல் பின்பற்ற வேண்டும். எல்லோருக்கும் தனதான்ய ஸம்ருத்தி, ஆத்ம க்ஷேமம் கிடைப்பதற்காகச் சிலரிடம் வேத சப்தம் இருந்தே ஆக வேண்டும். மற்ற தொழில்கள் பாரம்பரியமாக வருவதில் நன்மையிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். ஆனால் இந்த வேர ரக்ஷணம் என்று தனி ஜீவிய காலத் தொழில் ஒன்று எதற்காக இருக்க வேண்டும். என்ற கேள்வியை ஆரம்பத்தில் எழுப்பினேன். இப்போது முடிக்கிறபோது, மற்ற எந்தத் தொழில் இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவை ஒன்றுக்கொன்று கலந்தாலும் கலக்காவிட்டாலும் வேதரக்ஷணம் என்பதுதான் நிச்சயமாக ஒரு தனித் தொழிலாக இருக்க வேண்டும் என்று ஏற்பட்டிருக்கிறது.

---

# பொதுவான தர்மங்கள்

## என் காரியம்

நான் பாட்டில் எங்கேயாவது கிராமத்தில் ஏகாந்தமாக இருந்து கொண்டு, பூஜையைப் பண்ணிக் கொண்டு, தியானம் செய்துகொண்டு நிம்மதியாக இருக்கலாம். மடம் நடப்பதற்கு இப்போது நீங்கள் பட்டணத்தில் தருகிற மாதிரி இவ்வளவு பணம் வேண்டுமென்பதேயில்லை. மடங்களுக்குப் பணபலம், ஆள்பலம் எல்லாமே ரொம்பக் குறைச்சலாக இருக்க வேண்டும் என்று தான் என் அபிப்ராயம். பரிவாரம், சிப்பந்திப் பட்டாளங்கள் நிறைய வேண்டியதில்லை. மடத்தில் அதிபதியாக இருக்கப்பட்டவரின் யோக்கியதைதான் அதற்குப் பணம், பலம் எல்லாம்.

ஆதலால், நீங்கள் நிறையப் பணம் தருகிறீர்கள் என்பதற்காக நான் ஏகாந்தத்தைவிட்டு இங்கே டவுன்களுக்கு வரவில்லை. என்னிடத்தில் உங்களுக்கு நிரம்ப அன்பு, பக்தி இருக்கிறது. நீங்கள் கூப்பிட்டு நான் சம்மதித்து வந்திருப்பதில் உங்களுக்கு ரொம்பவும் சந்தோஷமாயிருக்கிறது. ஆனாலும், நான் வரவேண்டும் என்று நீங்கள் ஆசைப்பட்டது. அந்த ஆசை நிறைவேறியதில் சந்தோஷப்படுவது இரண்டும் உங்கள் காரியம். பட்டணங்களுக்கு நான் வந்திருப்பதில் என் காரியம் ஒன்றிருக்கிறது. அது என்ன?

என்னவென்றால் பிராம்மணர்கள் வேதத்தை விடக்கூடாது என்று சொல்லி, தொடர்ந்து வேதரக்ஷணத்திற்கு ஏதாவது ஏற்பாடு செய்யுமாறு பண்ணவேண்டும் என்றுதான் வந்திருக்கிறேன். நம்முடைய மதத்தின் சகல சித்தாந்தங்களுக்கும், வாழ்க்கை முறைக்கும் மூலமாக, வேராக இருக்கிற வேதம் இந்தத் தலைமுறையோடு நசித்துவிடாமல் இருப்பதற்கான ஏற்பாடுகளை நீங்கள் செய்ய வேண்டும் என்று அழுத்தங்கொடுத்துச் சொல்லத்தான் வந்தேன்.

அநாதியான வேத தத்துவம் அதன் மூல ரூபத்திலேயே என்றென்றும் பிரகாசித்துக் கொண்டிருக்க வேண்டும். இந்த ஜோதியை, தீவர்த்தியை, தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிற மசால்ஜி (சேவகன்) யாகப் பிராம்மணன் இருக்க வேண்டும்.

இப்போதுள்ள சமஸ்தப் பிரஜைகளுக்கும் எதிர்கால வாரிசுகளுக்கும் (posterity) இவன் செய்தே தீரவேண்டிய கடமை இது.

மற்றவர்களை அதட்டிக் கொண்டு, தனக்கு உயர்த்தி கொண்டாடுவதற்காக ஏற்பட்டதல்ல பிராம்மண்யம். சமூகத்தின் மசால்ஜி (peon) வேத விளக்கைப் பிடித்துக் கொண்டு வழிகாட்டுவதற்காகத்தான் அது இருக்கிறது. விளக்கை அனைத்து லோகம் முழுவதையும், நம்மோடு மட்டுமில்லாமல் எதிர்காலம் முழுவதற்கும்

இருட்டாகிவிடாதீர்கள் என்று பிராம்மண சமூகத்தைக் கேட்டுக் கொள்வதற்காகத் தான் நான் நகரங்களுக்கு வந்து கொண்டிருக்கிறேன்.

பட்டனங்களில்தான் இப்படி ஆயிரக்கணக்கில் ஜனங்கள் வருகிறார்கள். அதனால், நான் எங்கேயோ உட்கார்ந் துகொண்டு, யாரோ ஒரு சிலரிடம் சொல்லி, அவர்கள் மற்றவர்களிடம் சொல்லுவது என்று சுற்றி வளைக்காமல், நேராக நானே நிறைய ஜனங்களுக்குத் தெரிவித்துவிட முடிகிறது. இதை உத்தேசித்தே, மடத்து ஆசாரங்களுக்குத் பட்டனங்களில் எத்தனையோ பங்கம் ஏற்பட்ட போதிலும் பட்டணங்களுக்கு வருகிறேன். நான் நினைத்ததை விடவும் ரொம்ப ஜாஸ்தி கூட்டமாக இருக்கிறது. சிரமப்படுகிறேன். உங்களையும் சிரமப்படுத்துகிறேன்.

நீங்கள் எத்தனையோ செலவழித்து பேட்டைக்குப் பேட்டை பெரிதாகக் கொட்டகை, பந்தல் போட்டு என் பேச்சுக் கச்சேரியை கேட்க வேண்டும் என்றே எத்தனையோ கஷ்டங்களுக்கு நடுவே வருகிறார்கள். உங்கள் தப்பைச் சொல்லி மனஸைக் கஷ்டப்படுத்தாமல் கச்சேரி செய்துவிட்டுப் போய்விடலாம் என்றால் அதற்கு மனசு இடம் தரமாட்டேன் என்கிறது. உங்கள் பணத்தை எல்லாம் வாங்கிக் கொண்டு உங்களுக்கும் ஊருக்கும் உலகத்துக்கும் எது நல்லது என்று தோன்றுகிறதோ அதைச் சொல்லாமல் போய்விட்டால் பிரயோஜனமே இல்லை என்று படுகிறது. அதனால்தான் வேதத்தை ரக்ஷியுங்கள், பிராசீன தர்மங்களை அநுஷ்டியுங்கள் என்று திரும்பத் திரும்பச் சொல்கிறேன். உங்களை அப்படி செய்யும்படி பண்ணுகிற சக்தி எனக்கு

இருக்கிறதோ இல்லையோ. செய்யுங்கள் செய்யுங்கள் என்று உங்கள் காதில் போடவாவது என்னால் முடிகிற மட்டும், இப்படிக் காதில் போட்டுக் கொண்டிருக்கலாமே என்றுதான் வந்திருக்கிறேன்.

எனக்குக் கனகாபிஷேகம், பீடாரோஹண உத்ஸவம் எல்லாம் ரொம்பவும் விமரிசையாகப் பண்ணுகிறார்கள். மிகுந்த அன்பினால் பண்ணிப் பார்க்கிறார்கள். இதற்காகக் கமிட்டி போடுகிறார்கள். வசூலிக்கிறார்கள். ராப்பகல் உழைக்கிறார்கள். ஆனால் இந்தக் கனகாபிஷேகம் மடத்துக்கு இனிமேல் வருகிற ஆச்சாரியர்களுக்கு சாசுவதமாக நடப்பது எப்படி. வேதம் இல்லாவிட்டால் மடம் எதற்கு மடாதிபதி எதற்கு. ஆகவே இப்போது என் கனகாபிஷேகத்துக்கும், பீடாரோகனத்துக்கும் காட்டுகிற உற்சாகத்தை வேத ரக்ஷணத்தில் காட்டி, அதற்காகக் கமிட்டி, திட்டம் எல்லாம் வசூல் செய்யுங்கள் என்கிறேன்.

வேத ரக்ஷணத்தை அடுத்த சந்ததிக்கு ஜீவிய கர்மமாக, ஆயுட்காலப் பணியாக வைக்க முடியாவிட்டால் கூடப்போகிறது. எட்டு வயசிலிருந்து ஆரம்பித்து அப்புறம் பத்து வருஷங்களுக்கொரு தினம் ஒரு மணி இளம்பிள்ளைகளுக்கு வேத மந்திரங்களிலும் பிரயோகங்களிலும் வருப்பு நடத்தப் பேட்டைக்கு பேட்டை கூட்டுறவு அடிப்படையில் ஏற்பாடு பண்ணுங்கள் என்கிறேன். இதுதான் எனக்கு வாஸ்தவமான கனகாபிஷேகம், உத்ஸவம் எல்லாம்.

சிரமம் இல்லாமல் எந்தக் காரியமும் இல்லை. நாமாக ஒரு காரியத்தை இழுத்துப் போட்டுக் கொண்டால் அதற்காக எத்தனை கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் சகித்துக் கொண்டிருக்கிறோம். ஏதோ ஒரு கண்டத்தில் உள்ள ஏதோ ஒரு யூனிவர்ஸிடியில் ஏதோ

ஒரு படிப்பு பார்த்தால் பெரிய உத்தியோகம். பணம் கிடைக்கிற என்கிறபோது உடனே ஸிலபஸ் வரவழைத்து விடுகிறோம். அங்கே போய் பரிட்சை எழுத ஏற்பாடெல்லாம் செய்கிறோம். நமக்கென்றே ஏற்பட்ட தர்மத்தை கஷ்டம் இருக்கிறது என்று விட்டுவிடலாமா. கஷ்டம் இருந்தும் செய்தால்தான் ஜாஸ்தி பலன், ஜாஸ்தி

பெருமை.

இப்படி உங்களை கஷ்டப்படுத்தத்தான் வந்திருக்கிறேன். நான் சொன்ன பிரகாரம் செய்வதற்கான நீங்கள் சொல்லி, அதற்கான ஏற்பாடுகளை முடிக்கிற வரையில், இங்கேயே உட்கார்ந்து கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தால் என்ன என்று நினைக்கிறேன். எங்கேயாவது உட்கார்ந்து கொண்டு யாரையாவது உபத்திரவப்படுத்தத்தானே வேண்டும். இங்கேதான் உட்கார்ந்து உபத்திரவம் பண்ணுவோமே என்று தோன்றுகிறது.

பட்டனங்களில் பஜனை, கோயில் திருப்பணி, புராணப்பிரவசனங்கள் எல்லாம் ரொம்பவும் விருத்தியாகியிருப்பதைப் பார்க்க, சந்தோஷமாகத்தான் இருக்கிறது. ஆனாலும், இவற்றுக்கொல்லாம் வேர்-மூலமாக வேதம்-மடக்கிப் போகவிட்டால், இவை அப்புறம் எத்தனை நாளைக்கு ஜீவிக்க முடியும். வேதத்தை அப்பனிடமிருந்து பெற்று பிள்ளைக்குத் தரவேண்டும் என்கிற பெரிய தர்மந்தான் அஸ்திவாரம். அதை மறந்ததாலேயே இப்படி மதம் ஆட்டம் கண்டிருக்கிறது. பிராம்மணன் வேதத்தை விட்டதால் இன்று லோகத்தில் உள்ள அத்தனை கோளாறுகளும், கஷ்டங்களும் விபரீதங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

ஜாதி அழிவதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. லோக க்ஷேமம் போகிறதே என்றுதான் கவலைப் படுகிறேன். வேத ரக்ஷணம் விட்டுப்போனால் இந்தப் பரம்பரையை மறுபடியும் உண்டுபண்ண முடியாதே என்றுதான் கவலைப்படுகிறேன்.

லோக க்ஷேமம் என்று சொன்னது வேத சப்தத்தாலும், யகாஞாதி கர்மாக்களாலும் ஏற்படுகிற நன்மையை மட்டுமல்ல. வேதாந்தத்தைப் பார்த்தால்தான் சகல தேசங்களில் உள்ளவர்களுக்குமே பொதுப்படையான மகோன்னத் தத்துவங்கள் கிடைக்கின்றன. இந்தத் தத்வத்தால் எல்லா தேசத்தார்களும் ஆத்மாபிவிருத்தி அடைகிறார்கள். வேதாந்தத்தைப் பார்க்க வேண்டும் என்று இதர தேசத்தவர்களுக்கு எப்படி நாட்டம் வந்தது. அவர்கள் இங்கே வந்தபோது வேத ரக்ஷணமே ஜீவியப் பணி என்று ஒரு கூட்டம் இருந்ததால்தான். இதென்ன. இப்படி வாழ்க்கை

முழுவதும் அர்ப்பணிக்கும்படியான புஸ்தகம் என்று அவர்களுக்கு ஒரு ஆர்வம் பிறந்தது. அதை ஆராய்ச்சி செய்தார்கள். பல விஷயங்களைத் தெரிந்து கொண்டார்கள். குறிப்பாக உலகம் முழுவதிலும் உள்ள பண்பாடுகளில் (culture) இருக்கிற ஒற்றுமைகளை இந்த ஆராய்ச்சியால் தெரிந்து கொண்டார்கள். லோகத்துக்கெல்லாம் உபயோகம் என்பது மட்டுமில்லாமல், லோகம் முழுக்கவே வேத கல்ச்சர்தான் ஆதியில் இருந்தது என்பது என் அபிப்ராயம். நன்றாக ஆராய்ந்து பார்த்தால் மற்றவர்களும் இந்த அபிப்ராயத்துக்கு வரலாம். எல்லோரும் பொதுவாக ஒன்று இருப்பதாக அறிவதிலேயே சர்வதேச செனஜன்யம் ஸர்வ மத சமரஸ பாவனை எல்லாம் வந்துவிடுகிறது. அது தவிர, இந்த தத்வங்களால் எந்த மதஸ்தர்களும் தங்களை உயர்த்திக் கொள்ளவும் முடிகிறது. வேதத்துக்காக என்றே சகலத்தையும் தியாகம் செய்கிற ஒரு கூட்டம் நம் தேசத்தில் இல்லா விட்டால், மற்றவர்களுக்கு அதன் தாத்பரியங்களை அறிவதில் எப்படி ஈடுபாடு உண்டாகும். அதாவது, நம் அசிரத்தையால் வேதத்திலிருந்து பிறர் பெறக்கூடிய பிரயோஜனத்தை அவர்களும் பெற முடியாமல் தடுத்தவர்கள ாகிறோம். நம் தேசத்தின் சகல ஜாதியாரை உத்தேசித்து வேத பரம்பரையைத் தொடர்ந்து இருக்கப் பண்ண

வேண்டியது இப்போதைய தலைமுறையின் பெரிய பொறுப்பு. இதைச் செய்யாமல் எனக்குக் கனகாபிஷேகம் செய்து பிரயோஜனம் இல்லை.

பின் ஏன, கனகாபிஷேகத்துக்கு ஒப்புக் கொண்டேன் என்றால், அப்படி ஒப்புக் கொண்டால்தான் இப்படி உத்ஸவக் கூட்டமாக நீங்கள் கூடுகிறீர்கள். நான் சொல்ல

வேண்டியதைக் கேட்பதற்கு நிறைய ஆள் கிடக்கிறீர்கள். கூட்டம் சேர்த்து என் காரியத்தை நடத்திக் கொள்வதற்குத்தான் உங்கள் ஆசையைப் பூர்த்தி பண்ணினேன்.

இப்போதிருக்கிற தூவேஷம், மனக்கசப்பு, கோபதாபங்கள் போக வேண்டுமானால், வேத ரக்ஷணம் என்கிற கடமையைப் பெற்றவர்கள் அதைச் செய்து, ஸாதுக்களாக, சாந்தர்களாக வாழ்ந்து காட்ட வேண்டும். இதன் பலன் மற்றவர்களுக்கு உடனே புரியாமல் போகலாம். ஹர்த்தால் வந்து கட்டைகளை

மூடினால் உடனே சிரமம் தெரிகிற மாதிரி, வேத ரக்ஷணம் நிற்பதால் ஏற்படும் சிரமம் சமூகத்திற்குப் தெரியாமல் போகலாம். ஆனால் உண்மையில் இது நின்று போவதால் ஏற்படுகிற நஷ்டமே பெரிசு. இது நாளாவட்டத்தில் புரிந்து விடும். வேத ரக்ஷணத்துக்காக என்றே சிலர் ஆயுசை அர்ப்பணித்து வாழ்வதில் பெரிய சமூகப் பிரயோஜனம் இருக்கிறது என்று எல்லோரும் காலப்போக்கில் உணர்வார்கள். கடமையில் பின்வாங்காமலே நின்றால், ஒரு நாள் இப்போது எத்தனைக்கெத்தனை துவேஷம் இருக்கிறதோ, அத்தனைக்கத்தனை பிரீதி உண்டாகத்தான் செய்யும்.

ஆதியில், மநு இருந்ததே தமிழ் நாட்டில்தான். இங்கேதான் வேத வித்யை, ஞானம் பக்தி எல்லாமே ரொம்பச் செழிப்பாக இருந்திருக்கிறது. 'த்ரவிடேஷு பூரிச'என்பார்கள். தமிழ்நாட்டில் தாயுமானவர், பட்டினத்தார் போன்றவர்தான் என்றில்லை. மதாந்தரங்களைச் (அன்னிய மதங்களை) சேர்ந்த வேதநாயகம்பிள்ளை, மஸ்தான் சாகிப் போன்றவர்கள்கூட தமிழ்நாட்டு மண்ணின் விசேஷத்தால் பரம வேதாந்திகளாக இருந்திருக்கிறார்கள். வேத தர்மத்துக்கு ஆதி வீடே இதுதான். அந்தத்திலும் கலி முடிவில் வேத ரக்ஷணத்துக்காக அவதரிக்கப் போகிற கல்கி திராவிட தேசத்தில் திருநெல்வேலிச் சீமையில் தோன்றப்போகிறார் என்றுதான் சொல்லியிருக்கிறது. அங்கேதான் வேத தர்மத்தில் தவறாத பிராம்மணர் இருக்கப் போகிறார் என்று புராணத்தில் சொல்லியிருக்கிறது. அப்படிப்பட்ட தேசத்தில் வைதிகத்துக்கு விரோதமே இருக்கக்கூடாது. இதைச் செய்வதற்கு விசை பிராம்மணர்களிடமேதான் இருக்கிறது என்று சொல்லத்தான் பட்டணத்துக்கு வந்திருக்கிறேன்.

மநுஷ்யனைத் தன் நிஜமான நிலைக்கு உயர்த்த எத்தனை கட்டுப்பாடுகள் வேண்டுமா அனைத்தையும் சொன்னது நம் மதம்தான். தன் மனிதனுக்குக் பலவிதக் கட்டுப்பாடுகள். சமூகத்துக்கும் பலவிதக் கட்டுப்பாடுகள், கட்டுப்பாடு என்றால் கரை போடுவது என்று அர்த்தம். கரையில்லாமல் ஒரு ஏரி இருக்கமுடியுமா. கட்டுப்படுத்தக் கூடாது என்று அப்படியே கரையை உடைத்துவிட்டால் ஜலம் முழுதும் பாழாகி ஊரும் பாழாக வேண்டியதுதான். ரொம்பவும் விசித்திரமாக இருப்பது என்னவென்றால், மிக அதிகமான

கட்டுப்பாடுகள் உள்ள நம் மதத்தால்தான் இப்போது அடியோடு ஒரு கட்டுப்பாடும் இல்லாமல் ஆகிவிட்டிருக்கிறது.

இதில் சமூகத்துக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டிய பிராம்மணர்களாகக் கொஞ்சம் கட்டிப் போடலாம் என்றுதான் ஊர் ஊராகச் சுற்றி, ஒயாமல் உபந்நியாசம் பண்ணுகிறேன். பிராம்மணர்கள் அப்படி நினைக்கிறார்களோ இல்லையோ, நான்தான் அப்படி நினைக்கிறார்களோ இல்லையோ - அவர்கள் எனக்கு மற்றவர்களைவிடக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவர்கள் என்று பொதுவில் பரவலாக அபிப்ராயம்

இருக்கிறது. எனவே முதலில் இவர்களை இவர்களுடைய தர்மத்தில் கொஞ்சம் கட்டுபட்டிருக்கச் செய்தாலே, அப்புறம் மற்ற ஜனங்கள் எல்லோருக்கும் அவரவர்களுக்குச் சொல்லவேண்டியதை நான் உபதேசிப்பதற்கு எனக்கு ஒரு சக்தி உண்டாகும். ஆகவே என் வார்த்தைகளுக்குப் பிராம்மணர்கள் கொஞ்சம் கொஞ்சம்

கட்டுப்பட்டு, இதர சமூகத்துக்கெல்லாம் நான் செய்யக்கூடியதை செய்வதற்கு சகாயம் பண்ண வேண்டும்.

சுருக்கமாக என்னச் செய்யச் சொல்கிறேன்?. ஆசாரியாள் சரீரத்தை விடுவதற்குமுன் சாரமாக உபதேசம் செய்த ஐந்து சுலோகங்களில், எடுத்த எடுப்பில் என்ன சொன்னாரோ அதையேதான் சொல்கிறேன். வேதோ நித்யம் அதீயதாம். இதையே மொழி பெயர்த்த மாதிரி அவ்வையாரும் உபதேசத்தை ஆரம்பிக்கும்போதே ஒதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம் என்கிறாள். தினமும் வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும் என்று ஆச்சாரியாள் பாஸிடிவ்வில் சொன்னதையே அவ்வை நெகடிவ் - ஆக ஒரு தினம்கூட அத்யயனம் பண்ணாமல் இருக்க வேண்டாம் என்றாள். ஒதுதல் என்று வெறுமனே சொன்னால் வேதம் ஒதுதல் அதாவது அத்யயனம் என்றுதான் அர்த்தம். எழுதாமல் படிக்காமல் வாயாலேயே ஒதவேண்டியது வேதம் என்பதால் இப்படிப் பெயர் வந்தது. வேதத்துக்கு ஒத்து என்றே பெயர். திருக்குறளிலும் இப்படி வருகிறது. வேதங்கள் ஈசுவரனை பூஜை செய்த வேதபுரி என்கிற ஸ்தலத்துக்கு திருவோத்தூர் திரு ஒத்து ஊர் என்றே பெயர் இருக்கிறது. பிரம்ம சிருஷ்டியிலிருந்து நம் வரைக்கும் வந்துள்ள இந்த

ஓதும் பணி சாசுவதமாக நடக்க வேண்டும் என்று உங்கள் எல்லோருடைய காதிலும் போடத்தான், இப்படிப் பட்டணம் பட்டணமாகத் திரிந்து கொண்டு, உங்களுக்கெல்லாம் செலவு வைத்து, சிரமத்தைத் தந்து கொண்டிருக்கிறேன்.

இத்தனை ஆயிரம் பேர் கூடுகிற இடத்தில் சொன்னால் ஒரு பத்து இருபது மனசுக்குள்ளாவது அது இறங்கிக் காரியத்தில் பலிக்காதா என்று எனக்கு ஆசை.

பட்டண வாழ்க்கைக்கு வந்தபின்தான் தர்மவிருத்தமாக (முரணாக) போகவண்டிய நிற்பந்தம் வந்தது. இங்கேதான் நவநாகரீகத்தின் ஆட்டம் அதிகம். ஆகாயால் இனிமே பட்டணங்களுக்குப் போவதில்லை என்று நடுவாந்திரத்தில் நான் ஒரு தீர்மாணம் பண்ணிக் கொண்டு கிராமங்களிலேயே இருந்து வந்தேன். ஆனால் பட்டணத்துக்காரர்கள் வரவேண்டும் வரவேண்டும் என்று ரொம்பவும் பிரீதியோடு வற்புறுத்தினார்கள். அப்போது அவர்களிடம், நம்முடைய பழைய வழிக்கு நீங்கள் கொஞ்சமாவது திரும்பினால்தான் வருவேன். உடனே, அத்யயனத்துக்குத் திரும்பாவிட்டாலும் பரவாயில்லை. அதற்காக் ஏற்பட்ட வெளி அடையாளங்களாவது வைத்துக் கொள்ளுங்கள். வேதத்தைத் தூக்கிப் பிடிக்க வேண்டிய தீவட்டிக்காரன் என்றால் அதற்குச் சில அடையாளங்கள் சொல்லியிருக்கிறது. பியூன் என்றால் ஒரு டவாலி, யூனிஃபாரம் இருக்கிறதோ இல்லையோ அப்படித்தான் இவனுக்கும் சிகை (குடுமி), பஞ்சகச்சம் இவைகளை அடையாளமாகச் சொல்லியிருக்கிறது. இவையெல்லாம் நான் உசத்தி என்று காட்டுகிற (superiority-க்கு) அடையாளம் (symbol) இல்லை. நான் சமஸ்த ஜனசமூகத்துக்கும் சேவகன், வேதத்தின் சேவகன் என்று தெரிவிக்கவே அவை இருக்கின்றன. இந்த அடையாளங்களை நீங்கள் போட்டுக் கொண்டால்தான் நான் பட்டணத்துக்கு வருவேன் என்று நான் கிராக்கி செய்து வந்தேன்.

நான் கிராக்கி செய்தது பலிக்கவில்லை. நடை உடை பாவனைகளை மாற்றிக் கொள்ள இஷ்டம் இல்லையோ?. அல்லது துணிச்சல் இல்லையோ. ஆனால் என்னை

வருத்தி வருத்திக் கூப்பிடுவதும் நிற்கவில்லை. கடைசீயில், நாம் சொன்னதை செய்யாவிட்டாலும்கூட நம்மை இவர்கள்

கூப்பிடுவது நிற்கவில்லை. கடைசியில் நாம் சொன்னதைச் செய்யாவிட்டாலும்கூட நம்மை இவர்கள் நம்மிடம் ஒரு பிரியம்,

அபிமானம், மரியாதை இருக்கிறது என்றுதான் அர்த்தம். சரி இவர்கள் ஆசைக்குத்தான் விட்டுக் கொடுத்து, பட்டணத்துக்குப் போகலாமே. அங்கேபோய் இவர்களுக்கு நடுவிலேயே உட்கார்ந்து கொண்டு நம் ஆசையைத் திரும்பத் திரும்பச் சொல்லி ஏதாவது துளி பலிக்கிறதா என்று பார்ப்போமே. மடம் என்று ஒரு ஸ்தாபனம் (institution) இருப்பதே ஜனங்களின் தோஷங்களுக்கு நிவிருத்தி சொல்லி, அவர்களை நல்வழிப்படுத்துவதற்குத்தானே. நமக்குக் குறையாகத் தோன்றுவதை, அவர்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டியதுதானே நம் கடமை. என்று முடிவு பண்ணினேன். கிராக்கி பண்ணிக் கொண்டதை விட்டுக் கொண்டு மறுபடி பட்டணத்துக்குப் போக ஆரம்பித்தேன்.

ஜனங்கள் ரொம்ப சந்தோஷத்துடன் எனக்கு உபச்சாரம் பண்ணி, பேட்டைக்குப் பேட்டை கொட்டகை, வீதி பவனி எல்லாம் செய்கிறபோது, அவர்கள் மனசைப் புண்படுத்துகிற மாதிரி தோஷங்களைச் சொல்லலாமா?. அவரவருக்கும் வாழ்க்கையில் எத்தனையோ சிரமங்கள், இப்போது லோகம் முழுதும் இருக்கிற தத்தளிப்பில் ஒவ்வொருவனுக்கும் உள்ள கஷ்டங்களுக்கு எல்லையே இல்லை. இதன் நடுவே கொஞ்சம் கஷ்டத்தை மறந்திருக்கலாம் என்று இங்கே வருகிறார்கள். அவர்களிடம் இது தப்பு, அது தப்பு என்று சொல்லி மனஸைப் புன்படுத்தலாமா?. அல்லது ஏதோ வந்தவர்களெல்லாம் சந்தோஷப்படுகிறமாதிரியே (பேச்சுக்) கச்சேரி செய்துவிட்டுப் போய்விடலாமா.?

அவர்கள் வாழ்க்கைக்கு, சமூக க்ஷேமத்துக்கு நல்லதாக எதையும் சொல்லாமல், தாற்காலிக சந்தோஷமாகக் கச்சேரி செய்வதென்றால் அதற்கெற்ற சங்கீதக்காரர்கள் இருக்கிறார்கள். ஆகையால் என்னைக் கச்சேரிக்கு கூப்பிட வேண்டாம். நான் பணத்துக்குக் கச்சேரி செய்கிறேன் என்றால், அப்போதைக்கு சந்தோஷப்படுத்திவிட்டுத்தான் போக வேண்டும். ஆனால் பணம் வாங்க நான் வரவில்லை. மடத்துக்கு இவ்வளவு பணம் தேவையில்லை. அதிகமாகப்

பணம் வந்தால் இன்னும் அதிகமாக ஸந்தர்பணை, ஸதஸ் என்று நடத்தி உடனே செலவாகித்தான் போகிறது. எனவே இவ்வளவு பணம் இல்லாமலே கிராமங்களில் சுற்றிக் கொண்டு மடத்தை நடத்திவிடலாம். ஆனால் ஜனசமூகம் முழுவதற்கும் நல்லதை எடுத்துச் சொல்லப் பிரயத்தனம் செய்ய வேண்டும். மடத்தின் குறிக்கோள் (purpose) இதுதானே.

இப்படியெல்லாம் யோசித்துக் கடைசீயில் கேட்பவர்கள் காரியத்தில் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி, அது அவர்கள் விஷயம். அவர்களுக்குப் பிடித்தாலும் சரி, பிடிக்காவிட்டாலும் சரி, நம் கடமை, அப்பா இது இதுகள் ஆத்ம சிரோயசுக்கும் லோக க்ஷேமத்துககுமம் நல்லது. நீ இவற்றைச் செய்ய உன்னாலான பிரயத்தனங்களைப் பண்ணிப் பாரப்பா என்று சொல்வதுதான், இவ்விஷயத்தைத் திரும்பத் திரும்பக் காதில் போடுவதுதான் நம் டியூட்டி (கடமை) என்ற முடிவிற்கு வந்தேன். இப்படி வெறும் வாய் வார்த்தையாக சொல்லுவதற்குமேல் நான் ஒன்றும் தண்டித்து, சிக்ஷை பண்ண முடியாது. எல்லாம் ஒன்ராகிவிட வேண்டும் என்கிற காட்சிகளில்கூட ஒழுக்கக் குறைவுக்கு நடவடிக்கை (disciplinary action) என்று எடுத்து, சிலரைத் தீண்டாதார் மாதிரி வெளியே தள்ளி விடுகிறார்களே (expel) அம்மாதிரி பிரஷ்டம் (excommunicate) பண்ண எனக்கு அதிகாரமில்லை. அத்தனை அதிகாரம் ரைட் நான் கேட்கவும் இல்லை.

காதில் போடுவதுதான் என்னால் முடிந்ததைச் செய்யாமலிருக்ககூடாது என்றே வந்திருந்தேன்.

எங்கேயோ யாரோ ஒருத்தர் நான் சொல்வதை எடுத்துக் கொண்டு ஆரம்பித்துவிட்டால் போதும். அதுவே துளித்துளியாக வளர்ந்துவிடும். கொஞ்சம்கூட நியாயமில்லாத இயக்கங்களையெல்லாம் பத்துபேர் கட்டுப்பாட்டில் ஆரம்பித்து மகாபெரிசாக வளர்த்துவிடவில்லையா. நல்லதற்கு இப்படிப் பத்துப் பத்துப்பேர் சேர்ந்தால் போதும்.

அப்படிப்பட்டவர்கள் கிடைப்பார்கள் என்று நம்பிக் கொண்டுதான் நானும் விடாமல் சொல்கிறேன். உங்களைவிடமெல்லாம் நான் ரொம்பவும்

அதிருப்திப்படுத்துவதாக நினைத்துத் துக்கப்பட வேண்டாம். நவீன வாழ்க்கை முறையின் சிக்கல், கோளாறு எனக்குத் தெரியாமலில்லை. அதிலே மாட்டிக் கொண்டால், விடுபடுவதில் உள்ள சிரமம் தெரிகிறது. இத்தனைக்கும் நடுவில் அங்கங்கே கும்பாபிஷேகம், பஜனை, பிரவசனம் என்று நீங்கள் நிறைய ஏற்பாடு செய்வதைப் பார்த்தால் இவை நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் சந்தோஷமாகவே இருக்கிறது. இவற்றைப் பார்த்தே, இவை எல்லாவற்றுக்கும் எது ஜீவாதாரமோ, உயிர் நிலையோ அந்த வேதரக்ஷண தர்மத்தை எடுத்துச் சொல்லலாம் என்று எனக்கே ஒரு நம்பிக்கை, தெம்பு வந்திருப்பதால்தான் இதையெல்லாம் சொல்கிறேன். சாஸ்திர விரோதமான தப்புகளுக்கு இப்போது நிறைய இடமிருந்தாலும், க்ஷேமத்துக்கான அறிகுறிகளையும் அங்கங்கே பார்க்கிறேன். எல்லாம் போய்விட்டது. பாக்கியிருப்பதும் போய்விடும் என்று அழாமல் வளர்த்து வருகிற இந்த நல்ல அம்சங்களை மேலும் விருத்தி செய்து, வளர்க்க வேண்டியதையும் எடுத்துச் சொல்லி வருவதுதான் முறை. அப்படிச் செய்தால் தப்பு வழியில் போகிறவர்களுக்கும் நாளடைவில் க்ஷேம வழியில் புத்தி வரும்.

இந்த நம்பிக்கையோடு பழைய வழிமுறைகளைக் காதில் போடுகிறேன். பழையது என்பதற்காகவே அது உதவாது என்று ஒதுக்கிவிடவும் கூடாது. புதிசு, பழசு என்பதால் ஒன்று வேண்டும். வேண்டாம் என்பதில்லை. அதன் பிரயோஜனம் என்ன என்பதைப் பரீசித்துப் பார்த்தே எடுத்துக் கொள்ள வேண்டும். அல்லது தள்ள வேண்டும். அல்லது இருக்கிற புதிசையும் எடுத்துக் கொள்வோம். அப்படியே புதிசில் இருக்கிற கெட்டதுகளைத் தள்ளுவோம். பழசில் இருக்கும் நல்லதுகளை எடுத்துக் கொள்வோம். காளிதாசன்கூட இப்படித்தான் சொல்கிறான்.

ஆசையாகக் கூப்பிட்டு எனக்கு உபசாரம் செய்கிற உங்களிடம், முதலில் உங்களுடைய புது வழிகளில் இத்தனை கெடுதல் இருக்கிறது என்று சொல்ல எனக்கே மனசு வரவில்லைதான். மற்ற விஷயங்களைப் பற்றி உபந்நியாசம் செய்தேன். பக்தி ஞானம், கலாச்சாரம், ஊர்க்கதை எல்லாம் சொன்னேன். அதெல்லாம் நல்ல விஷயங்கள்தான். ஆனாலும் அவை எல்லாம் கிளை, பூ, பழம், மாதிரி என்றால்,

அவற்றுக்கெல்லாம் ஆதாரமாக ஒரு வேர் இருக்கிறது. அது வேதம்தான். வேராத வேத ரக்ஷணம் இல்லாமல் வேறு எதுவுமே இல்லை. இதை விட்டுவிட்டு மற்றதைச் சொல்லிப் பயனில்லை. இந்த மூல கைங்கரியத்தைச் சொல்வதென்றால், குறைகளைச் சொல்லத்தான் வேண்டும். மற்ற விஷயங்களைப் பேசிக் கொஞ்ச நாளைக் கழித்தபின், இத்தனை நாள் உங்களில் பழகிவிட்டதால், எனக்கே உங்களிடம் சிநேகிதம், ஸ்வாதீனம் வந்துவிட்டது. குறையைச் சொல்ல முன்போலத் தயங்கவேண்டாம் என்று வேத விஷயத்துக்கு வருகிறேன்.

இதற்காக, இத்தனை நாள் உங்களை இத்தனை சிரமப்படுத்தி, இத்தனை பணச்செலவு வைத்தது போதாது என்று நிநோரா மாதிரி நானும் ஒரு ஸம்பந்தி தானம்

கேட்கிறேன். அவரவரும் அத்யயனம் செய்து, தங்கள் பிள்ளைக்கும் செய்விக்க வேண்டும் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும் இது அவசியம் செய்ய வேண்டியதுதான். அதைவிட அவசியமாக முதலில் செய்ய வேண்டிய காரியம் ஒன்று உண்டு. அதாவது, இப்போது மூச்சைப் பிடித்துக் கொண்டு நடந்து வருகிற வேத பாடசாலைகள் மூடிப்போகாமல் அவற்றைத் தொடர்ந்து நடைபெறப் பண்ண வேண்டும். இதற்காக வித்யார்த்திகள், (மாணவர்கள்) அத்யாபகர்கள் (ஆசிரியர்கள்) இருவருக்கும் நிதி உதவி செய்ய வேண்டும். இன்னும் பல பாடசாலைகள் வைத்து வேத மூலத்தை சொல்லிக் கொடுப்பது, அப்புறம் அதன் காரியத்தை வேத பாஷ்யத்தை சொல்லிக் கொடுப்பது, இவற்றில் பரீட்சை வைப்பது ஆகிய காரீயங்களைச் செய்ய வேண்டும். படிக்கிற காலத்தில் வித்தியார்த்திகளுக்கு ஸ்டைஃபண்ட் (உபகாரச் சம்பளம்) கொடுக்க வேண்டும். பரீட்சையில் பாஸ் பண்ணியவுடன் மார்க்கைப் பொறுத்துக் கணிசமான சம்பாவனை செய்ய வேண்டும். இப்படியெல்லாம் செய்தால்தான் வேதம் இருக்கும். இதற்கெல்லாம் மூலதனம் வேண்டும்.

இதற்கான சில டிரஸ்ட்கள் இருக்கின்றன. பலர் தனித்தனியாக பூதானம் செய்திருக்கிறார்கள். விநோபா மாதிரி பூதானம் வாங்கினேன். இப்போது உச்ச வரம்புகள் சட்டங்கள் வந்துவிட்டன. இனி நில உரிமைகள் எப்படியிருக்கும் என்று

சொல்வதற்கில்லை.. அதனால்தான் ஸம்பத்திதான் கேட்கிறேன்.

அதாவது ஒவ்வொருவரும் மாஸா மாஸம் தங்கள் ஜன்ம நட்க்ஷத்திரத்தன்று என்னை நினைத்துக் கொண்டு (நான் தானே கொடுக்கச் சொல்லிக் கேட்கிறேன்) ஒரு ரூபாயை ஒரு உண்டியில் போட்டுவிட வேண்டும். ஒரு வருஷம் ஆனதும் இந்த 12 ரூபாயை வேத ரக்ஷண நிதிக்கு அநுப்பிவிட வேண்டும். இப்படி அனுப்புகிறவர்களுக்கு இங்கே மடத்தில் நடக்கிற பூஜைப் பிரசாதம் விபூதி, குங்குமம், மந்திராக்ஷதை மாஸா மாஸம் அவர்கள் ஜன்ம நக்ஷத்திரத்தன்று அனுப்பி வைக்கப்படும். வருஷந்தோரும் இந்த தர்மத்தைப் புதுப்பித்துக் கொண்டிருந்தால், சந்திரமௌலீசுவரப் பிரசாதமும் நிற்காமல் அகத்தைத் தேடி வந்துகொண்டிருக்கும். எத்தனையோ செலவு செய்கிறீர்கள். வரிகள் (tax) கொடுக்கிறீர்கள். இது நான் போட்டிருக்கிற டாக்ஸ். மாஸம் ஒரு ரூபாய் எனக்காகக் கொடுக்க வேண்டும். எல்லோரும் அப்படிச் செய்தால் பல துளி பெறு வெள்ளம் என்று வேத ரக்ஷணத்துக்கும் பெரிய பலம் கிடைக்கும்.

வேதம் ஏன் இருக்க வேண்டும் என்றால், முதலில் அந்த மந்திர சப்தம் அதிலுள்ள யக்ஞாதி கர்மாக்கள் லோகத்தில் இருந்து கொண்டிருந்தாலே சகலருக்கும் பெரிய க்ஷேமம். இதனால் மழை, தன தானிய சுபிக்ஷம் உண்டாவதோடு ஜனங்களின் எண்ணங்களும் உத்தமமானதாக இருக்கும். இரண்டாவதாக உலகம் முழுவதற்குமான ஒரு மதமாக வைதிகமே இருந்திருக்கிறது என்பது சகல தேசத்தவருக்கும் தெரிந்து, இதனாலேயே ஒரு ஒற்றுமை, சாந்தி ஏற்பட வேண்டுமானால், நம் தேசத்தில் வேதத்துக்கென்றே வாழ்க்கையை அர்ப்பணித்த (dedicate) ஒரு கூட்டம் இருந்து கொண்டே இருக்க வேண்டும். இப்படியாக இன்றைக்கும் என்றைக்கும் நம் தேசத்துக்கு மட்டுமின்றி லோகம் முழுவதற்கும் சுபிக்ஷத்தையும் ஆத்ம சாந்தியையும் உண்டாக்குவதற்காகத்தான், வேத ரக்ஷணத்தை அதி முக்கியமாகச் சொல்லி வருகிறேன்.

வேதம் படிக்காமல் அடுத்த தலைமுறையில் ஒரு பிராம்மணன்கூட

இருக்கக்கூடாது. அதட்டி மற்றவர்களை அதிகாரம் செய்வதற்கான பிராம்மணன்

இருக்க வேண்டும் என்று சொல்லவேயில்லை. நம் தேசம் மட்டுமில்லாமல் உலகம் முழுவதும் ஒன்றாகியிருப்பதாக, இவனிடம் வந்திருக்கிற ஆதிமூலமாக தர்மத்தை இவன் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும் என்றே சொல்கிறேன்.

இங்கே நம் தேசத்தில் இப்படி ஒரு சின்னம் கூட்டம் இருந்தால் லோகம் முழுவதும் எப்படி க்ஷேமமடையும் என்றால் பவர் ஹவுஸ் இருக்கிறது. அங்கே நாலுபேர்தான் வேலை செய்கிறார்கள். ஆனால் ஊர் முழுக்கப் பிரகாசமாய் விடுகிறது. அந்த நாலுபேர் வேலை செய்யாவிட்டால் ஊரே இருட்டாகி விடுகிறது. இப்படியே லோக மங்கள தீபமான வேதத்தைத் தூக்கிப் பிடிக்க இங்கே குஞ்சம்பேர் இருந்தால் போதுமானது. இதற்கான விதை முதலை எப்படியாவது காப்பாற்றித்தந்துவிட வேண்டும் என்கிற காரியத்துக்கே வந்திருக்கிறேன். இதற்காகவே எனக்குச் செய்கிற உத்ஸவங்களுக்கு ஒப்புக் கொண்டேன். இந்த உத்ஸவங்களில் போட்ட ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர கோஷம்தான் இத்தனை பேரை இங்கே என் பேச்சை கேட்க இழுத்து வந்திருக்கிறது. இப்படி ஒரு கோஷம், கீஷம் இருந்தால்தான் ஆள் சேர்ந்து அதன்மூலம் நாம் காரியத்தைப் சாதித்துக் கொள்ளப் பார்க்கலாம் என்றே ஒப்புக்கொண்டேன். எனக்கு உத்ஸவம் நடத்தியவர்கள் நான் சொல்வதைக் கேட்க வேண்டும். கேட்பதற்கு பிரயாசையாவது படவேண்டும்.

சிரமத்தோடு சிரமமாக எனக்காகவும் கொஞ்சம்படுங்கள். உங்களுக்காக எத்தனையோ காரியம் செய்து கொள்கிறீர்கள். ஆபீஸ், பொழுதுபோக்கு இப்படி பலவிதமான பிஸினஸ் பண்ணுகிறீர்கள். எனக்காக இந்த வேத ரக்ஷணத்தைப் பண்ணுங்கள்.

எனக்காக, உங்களுக்காக என்று வித்தியாசம் என்ன?. நான் நீங்கள் எல்லாம் ஒன்றுதான். என் காரியம் உங்கள் காரியம்தான். வேதத்தை ரக்ஷித்துவிட்டால் அதுதான் எல்லோருக்கும் பரம சிரேயஸைத் தருகிற ஒரே காரியம். இதைத் செய்வதால் க்ஷேமம் உங்களுக்கு, பெயர் எனக்கு.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### நாகரீக வியாதிக்கு மருந்து

இரண்டு கட்சிக்காரர்கள் இழுப்புக்கு நடுவே ஜனங்கள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சாஸ்திரங்களிந் வழியிலேயே போக வேண்டும் என்று சொல்கிற நாங்கள் ஒரு பக்கம் இழுக்கிறோம். சாஸ்திரங்களை மாற்ற வேண்டும் என்கிற சீர்திருத்தக்காரர்கள் இன்னொரு பக்கம் இழுக்கிறார்கள். நவீனப் படிப்புமுறை காரணமாகச் சிறு பிராயத்திலிருந்தே சீர்திருத்தக்காரர்கள் எனப்படும் மாறுதல்களை சிலாகித்துத்தான் ஜனங்கள் படித்திருக்கிறார்கள். படிப்பு இப்படி இருந்தாலும், பழக்கம் அடியோடு போக வில்லை. யுகாந்திரமாக வந்துள்ள நமது சாஸ்திர தர்மங்கள் துளித்துளி எல்லார்வீட்டிலும் சமூகத்தில் பழக்கத்தில் இருக்கத்தான் செய்கிறது. அந்தப் பழக்க வாசனை ஒரு பக்கமும் ஜனங்களை இழுக்கின்றன. இப்போது ஏற்படுத்திக் கொண்ட நாகரீக வாழ்க்கையில் திருப்தி இல்லை என்று எல்லோருக்கும் தெரிகிறது. இப்போது முன்னைவிட அதிகப் பணம் இருப்பதாக பாவனை இருந்தாலும், தரித்திரம் போகவில்லை என்று நன்றாகத் தெரிகிறது. எல்லாம் சுபிக்ஷமாபிருக்கிறது. நம் தேவைக்கு அதிகமாகவே தானியம் விளைந்திருக்கிறது என்றெல்லாம் சொல்லப்பட்டாலும், எங்கே பார்த்தாலும் திகில் போகவில்லை. முன்னே இருந்த கூரை அல்லது ஓட்டுவீடு இப்போது மாடிக் கட்டிடமாகி விட்டது. அப்போதெல்லாம் ஏதோ நான்கைந்து பாத்திரங்கள், பனைமட்டைப் பெட்டி, சுரைக்குடுக்கைகள் இவை மட்டுமே வீட்டுக்குவீடு இருந்ததெனவென்றால், இப்போது ஏராளமாக பண்டங்கள் வந்து நிறம்பி

விட்டன. இவையெல்லாம் நாகரீக வாழ்க்கையில்

வந்தவைதான். ஆனாலும் அன்று

இருந்த நிம்மதி இன்று இல்லவே இல்லை என்று தெரிகிறது.

பழைய ஆச்சாரப்படி நிம்மதியாக வாழ வேண்டும் என்று உள்ளுக்குள்ளேயே நினைக்கிறார்கள். ஆனால் வெளியிலே நாகரீகத்தையும், சீர்திருத்தப் பெருமையையும் விடுவதற்குத் துணிச்சல் இல்லை. இரண்டு வழியிலும் சேராமல் சங்கடப்படுகிறார்கள். இந்த இரண்டுங்கெட்டான் நிலைக்கு ஒரு உதாரணம் சொல்கிறேன். அநேகமாக எல்லாவீடுகளிலும் காந்தியின் படமும் இருக்கிறது. என் படமும் இருக்கிறது. ஆனால் காந்தி சொன்னாரே என்பதற்காக விதவா விவாஹம் பண்ணிக் கொள்கிற துணிச்சலும் முக்காலே மூனு வீசம் பேருக்கு வரவில்லை. நான் சொல்கிறேன் என்று குடுமி வைத்துக் கொள்கிற துணிச்சலும் இல்லை. பாவம். ஜனங்கள் நிலை தெரியாமல் இரண்டுக்குமாக ஆடிக் கொண்டிருக்கிறார்கள். உறுதி வேண்டும். சாஸ்திரத்தில் தளராத பிடிப்பு, தைரியம் அவசியம் வேண்டும்.

சாஸ்திர விஷயங்களில் கொஞ்சம் கொஞ்சம் விட்டுக் கொடுப்பது என்று வந்தால்கூடத் கடைசீயில் வெறும் லெளகிக செளகரியத்தை மட்டும் அநுசரிக்கும்படித்தான் ஏற்பட்டுவிடும். சிலர் நல்லெண்ணத்துடனேயே என்னிடம் வந்து, தர்ம சாஸ்திரங்களை ரிஷிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். நீங்களும் ரிஷி மாதிரி இருக்கிறீர்கள். அதனால் காலத்துக்குத் தகுந்தபடி சாஸ்திரங்களை மாற்றிக் கொள்ளுங்கள் என்று கேட்கிறார்கள். வயலில் களை எடுப்பதுபோல இப்போது கால நிலையை அநுசரித்துச் சில ஆசார தர்மங்களை எடுத்துவிட வேண்டும் என்பது இவர்கள் அபிப்ராயம். இப்போது சிலவற்றைகளை என்று நினைத்து நான் எடுத்தால், இன்னும் கொஞ்ச காலத்துக்குப் பின் இன்னொருத்தர் வேறு சில ஆச்சாரங்களைக் களை எடுக்கலாம். இப்படியே போய்க்கொண்டிருந்தால், எது பயிர், எது களை என்கிற வியவஸ்தை இல்லாமல் வயல் முழுவதுமே போய்விடும்.

ரிஷிகள் ஏதோ சொந்த அபிப்ராயத்தில் சொன்னார்கள் என்பதற்காக தர்ம சாஸ்திரங்களை நாம் அநுசரிக்கவில்லை என்பதை எல்லோரும் புரிந்துகொள்ள வேண்டும்.

என்றாக்கும் மாறாமல் சாசுவதமாக இருக்கும் ஈசுவர ஆக்ஞையான வேதத்தை அநுசரித்தே ரிஷிகள் இந்த விதிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்பதால்தான் இவற்றைப் பின்பற்றுகிறோம். அதை உள்ளபடி ரக்ஷிக்கத்தான் பிரயத்தனப்பட வேண்டுமேயன்றி, மாறுதல் செய்வதற்கு என்று அதிகாரம் இல்லை.

சாஸ்திரப் பிரகாரம் நடப்பது இந்தக் காலத்தில் சாத்தியமே இல்லை என்று நினைத்துவிடக்கூடாது. வியாபார வேகத்தில் வளர்ந்துவிட்ட லௌகிக நாகரீகத்தை விட்டுவிட்டு, தேவைகளைக் குறைத்துக் கொண்டால் யாருமே இப்படி ஆச்சாரங்களை விட்டுப் பணத்துக்காகப் பறக்காதபோது பகவத் ஸ்மரணத்துக்கு நிறைய அவகாசம் கிடைக்கும். வாழ்க்கையில் நிம்மதியும், திருப்தியும், சௌக்கியமும் தன்னால் உண்டாகும்.

கர்ம அநுஷ்டானங்களைப் செய்யப் பணவசதி வேண்டியதேயில்லை. ஆடம்பரமாக செலவு செய்து பூஜை செய்யவேண்டும் என்பதில்லை. காய்ந்த துளசி தளமும், வில்வ பாத்திரமும் பூஜைக்கும்போதும். நாம் சாப்பிடுகிற அன்னத்தையே நைவேத்தியம் என்று காட்டினால் போதும். விவாகமும் சாஸ்திர அநுஷ்டானம்தானே. அதற்கு ஏகமாகச் செலவாகிறதே என்று கேட்கலாம். ஆனால் இப்போது நடக்கிற ஆடம்பரம் எதுவுமே சாஸ்திர சம்பந்தமாக விவாகத்துக்குத் தேவையில்லை. குறிப்பாக, இப்போது விவகாரங்களில் மிகப் பெரிய செலவாக உள்ள வரதக்ஷிணைக்குச் சாஸ்திர

சம்பந்தமே இல்லை. சாஸ்திர சம்பந்தமான கர்மங்களுக்குப் பணம் முக்கியமாக

இருந்தால், பணக்காரர்களுக்கு மட்டும்தான் நம் மதம் உரிதானது என்றாகி விடும். உண்மையில் அப்படி இல்லவேயில்லை.

அறம், பொருள், இன்பம், வீடு என்கிற நாலு வாழ்க்கைப் பயன்களில் இன்பத்தை மட்டும் தேடி அதற்காகப் பொருளுக்கு அலைந்து கொண்டிருக்கிறோம். இதை மாற்றி வீட்டுக்காக (மோக்ஷத்துக்காக) அறத்தின் (தர்மம்) மூலம் பாடுபட வேண்டும். வாழ்க்கையை எளியதாக்கிக்

கொண்டால், பொருளுக்காக அலைய வேண்டாம். அறங்களை அப்போது பின்பற்ற முடியும். அறத்தின் பயனாக்கிக் கிடைக்கிற பேரானந்த வீட்டையும் பெற முடியும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சமயமும் சமூகமும்

சமய விதிகளில் சில லௌகிகத்தில் அசௌகரியமும் உண்டாக்குகின்றன. தர்ம சாஸ்திர விதிகளில் சில சமூக வாழ்வில் (SOCIAL LIFE) கஷ்டம் உண்டாக்குகின்றன. என்பதைக் காரணம் காட்டிக் சீர்திருத்தக்காரர்கள் சாஸ்திரங்களை மாற்றுகின்றார்கள்.

நமது தர்ம சாஸ்திரங்களின் அடிப்படையையும் லக்ஷியத்தையுமே இந்த சீர்திருத்தக்காரர்கள் அறிந்திருக்கவில்லை. இவர்கள் சமூக வாழ்வு (Social life) என்கிறபோது, ஆத்மார்த்த மானதைக் குறிப்பிடவில்லை. புதுப்புது அரசியல் முறைகள், ஸயன்ஸ்கள், வியாபார மாறுதல்கள், பொருளாதாரம், ஃபாஷன்கள் இவற்றையே சமூக வாழ்வு என்கிறார்கள். இவை யாவும் பலவிதமான மாறுபாடுகளுக்கு ஆளாகிக்கொண்டிருப்பவை. வெறுமே லௌகிகத்தை மட்டும் சமூகம் குறிக்கோளாகக் கொண்டிருந்தால், சமூக வாழ்வுக்காக உள்ள விதிகளும் அதற்கேற்ப மாறலாம். ஆனால், நம் சாஸ்திரங்கள் சமூக வாழ்வின் இப்படி லௌகிகமாக மட்டும் கருத்தில் கொண்டவை அல்ல. அவை ஆத்மார்த்தமானவை, மனிதனானவன் சம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு வழி சொல்வதே சாஸ்திரத்தின் லக்ஷியம். லௌகிகமாக மட்டுமே அரசியல், அறிவு நூல்கள், பொருளாதாரம் ஆகியன உள்ளபோது தான் அவை மாறும். நம் பண்பாட்டிலோ வெறும் லௌகிகம் என்று எதுவுமே இல்லாமல் ராஜாங்கம்,

சமூக வாழ்வு, அறிவு சாஸ்திரம், பொருளாதாரம், கலைகள் ஆகிய எல்லாமும் ஆத்ம அபிவிருத்திக்கு உபாயங்களாகவே உன்னன. ஆத்மார்த்தமான சத்தியங்கள் எந்நாளும் மாறுவதில்லை.

மாறுகிற சமூகத்தை அந்த மாறாத சத்தியத்தில் நிலைப்படுத்துவதற்காக சாஸ்திரங்கள் விதித்த நியதிகளும் மாறாதவையே.

லட்சியம் லௌகிகமாக மட்டும் இருந்தால், அவ்வப்போது சமூக வாழ்வுக்கான விஷயங்களை மாற்றிக் கொள்ளலாம். ஆனால், ஆத்மக்ஷேமத்தையே லட்சியமாக வைத்து, அதற்கு அனுசரணையாக லௌகிக வாழ்வுக்கு விதிகள் செய்து தருகிற போது, இவ்விதிகளை மாற்ற முடியாது. தர்ம சாஸ்திர விதிகள் லௌகிகத்தில் அசௌகரியமாயிருக்கிறது என்று குறைபடுத்துவதே பொருந்தாது. ஏனென்றால், தர்ம சாஸ்திரம் இகலோக சௌக்கியத்தை முக்கியமாக கருதவில்லை. இகலோகத்தில் பலவித அசௌகரியங்களை அனுபவித்தாவது பரலோக சுகம் பெறுவதற்கே அது உபயம் சொல்கிறது. ஆனபடியால், அதை உலக ரீதியில் நமது சௌகரியப்படி மாற்ற வேண்டும் என்பது நியாயமில்லை.

சீர்திருத்தக்காரர்களை குற்றம் சொல்லிப் பயனில்லை. அவர்கள் இப்படிக் கருதுவதற்குக் காரணம். நம்முடைய கல்வி முறையே ஆகும். மற்ற தேசங்களில் அவரவருடைய மதத்துக்கும் படிப்பு முறைக்கும் இடையே முரண் இல்லை.

துரதிஷ்டவசமாக, நம் தேசத்திலோ வெள்ளைக்காரர்கள் காலத்தில் ஏற்பட்ட

பள்ளிக்கூடங்கள் நம் மதத்தொடர்பே இல்லாமல் உருவாயின. ஜீவனுத்துக்காக எல்லோரும் இத்தப் படிப்பிலேயே போய் விழும்படி ஆயிற்று. குழந்தைப் பருவத்திலேயே இவ்வாறு சொந்த சாஸ்திரங்களில் தொடர்பில்லாமல் அந்நிய முறையில் ஊறியதால், நம் புராதன சாஸ்திரங்களில் உத்தேசம் இன்னது என்றே தெரியாததால், அவற்றின் விதிகளையும் மனம் போனபடி மாற்றலாம் என்று எண்ண ஆரம்பித்து விட்டார்கள்.

புராணங்கள் புளுகு மூட்டை, சாஸ்திரங்கள் குருட்டு நம்பிக்கையை வளர்ப்பவை என்பதைத்தான்

ஆரம்பத்திலிருந்தே நம் குழந்தைகள் கேட்டு வாங்குகிறார்கள். இவர்களுக்கு எப்படி நம் மத அநுஷ்டானங்களிலும் ஆசாரங்களிலும் பிடிப்பு ஏற்பட முடியும்.

சிறு பிராயத்திலிருந்தே ஆஸ்திக புத்தியை வளர்க்க வேண்டும். நமது மத அநுஷ்டானங்களை விடாமல் பற்றி ஒழுகி உத்தமமாக வாழ்கிற சிஷ்டர்களின் சங்கத்தில் குழந்தைகளைப் பழக்க வேண்டும். இந்திரிய அதீதமான அநுபவம் பெற்ற ரிஷிகள் பிரத்யக்ஷ அநுபவத்தின்மீது தந்தகிரந்தங்களை ஆத்ம க்ஷேமத்துக்கு வழிகாட்டுபவை என்ற நம்பிக்கையை உண்டாக்க வேண்டும். இகலோக சௌக்கியம், சமூக வாழ்வு இவற்றையும் ஆத்ம க்ஷேமத்துக்கு உகந்த முறையில் ஒழுங்குபடுத்தித் தரவே ரிஷிகள் சாஸ்திரங்களைத் தந்தார்கள் என்ற விசுவாசத்தை ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் லௌகிக சௌக்கியத்துக்கும் மேலாக சமய விதிகளைக் கருதி அநுசரிக்கிற அறிவு நாட்டில் வளரும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### தலைவலிக்குப் பரிகாரம் சிரச்சேதமா ?

இப்போது பெரிய பெரிய தலைவர்களிடமிருந்து ஆரம்பித்து தெருவில் போகின்றவன் வரை அத்தனை பேரும் ஜாதி எதற்கு என்கிறார்கள். நாமும்தான் இதைப் பற்றி பேசலாமே என்றேன். நன்றாக ஆலோசனைப் பண்ணிப் பார்த்தால், இப்படிப்பட்ட ஒரு பாகுபாடு இருப்பதுதான் எல்லாருக்கும் க்ஷேமம் என்று தெரிகிறது. சமூகம் முழுவதும் முன்னேறுவதற்கும் சரி, அவரவருக்கும் சித்த சுத்தியடைந்து ஆத்மாவைக் கடைத்தேற்றிக் கொள்வதற்கும் சரி, இந்த ஏற்பாடே நிரம்ப சகாயம் செய்கிறது என்று தெரிகிறது.

இதை நான் சொல்கிறேன் என்பதற்காக ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. சாஸ்திரங்கள் சொல்கின்றன என்பதற்காக ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. முன்னேற்றத்துக்கு விரோதிகளென பிற்போக்குக்காரர்கள் என்றே எங்களை வைத்துவிட்டாலும் சரி, ஆனால் இந்தத் தேசம் எப்படியும் முன்னேர வேண்டும் என்பதுதான் ஒருத்தருக்கு லட்சியமாக இருந்தது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். தேசத்தில் இருந்த பேதங்களை, மூட நம்பிக்கைகளை எல்லாம் நீக்கி, பிற்பட்டவர்களை மற்றவர்களுக்குச் சமமாக ஆக்குவதற்காகவே அவர் கங்கணம் கட்டிக் கொண்டிருந்தார் என்று எல்லோரும் நம்புகிறார்கள். அப்படிப்பட்ட அந்த ஒருத்தரான காந்தி இந்த வர்ணாசிரம தர்மத்தை மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டு ரொம்பவும் சிலாகித்திருக்கிறார்கள். இதைத் சொன்னாலாவது எல்லோரும் இந்த ஏற்பாட்டில் இருக்கிற நல்லதை எடுத்துக் கொள்வார்களோ என்பதால் சொல்கிறேன். My varnashrama Dharma (என் வர்ணாசிரம தர்மம்) என்றே காந்தி ஒரு வியாஸம் எழுதியிருக்கிறார். அதிலே, இந்த வர்ணாசிரமம் என்பது மநுஷ்யனுக்குத் தானாக

ஏற்பட்டது. ஸ்வாபாவிகமானது. இயல்பானது. ஒருத்தனுக்குப் பிறப்பாலேயே

அமைந்துவிட்ட விஷயம் அது. இந்த இயற்கை வித்யை ஹிந்து மதம் ஒரு ஸயன்ஸாக, சாஸ்திரமாக ஒழுங்குபடுத்தித் தந்திருக்கிறது என்றார். இந்த ஏற்பாடு, தொழிலை நாலாகப் பிரித்துக் கடமைகளைத்தான் தருகிறதே தவிரச் சலுகைகளைத் தரவில்லை. ஒருத்தன் தனக்கு உசத்தி கொண்டாடிக் கொள்வதோ, இன்னொருத்தனை மட்டம் தட்டி வைப்பதோ ஹிந்து மதத்தின் உயிர்ப் பண்புக்கே விரோதமானது. அவரவரும் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொண்டு வாழவும், சமுதாயத்தின் சக்தியை விரயமாக்காமல் சிக்கனமாக காக்கவும் வராணாசிரமம் இருக்கிறது என்றெல்லாம் ரொம்பவும் சிலாகித்துக் சொல்லியிருக்கிறார். தீண்டாமையைத்தான் நான் தீமை என்று சண்டை போடுகிறேனேயொழிய, வர்ணாசிரமம் என்பது சயன்ஸ் மாதிரி ஒரு சத்தியத்தையே சொல்கிறது என்றால் அதை ஆதரிக்கவே செய்கிறேன். ஒருத்தனுடைய

பிறப்பை அடிப்படையாக வைத்துத் தொழில்களைப் பிரித்துக் கொடுக்கிற வர்ணாசிரம தர்மம் சமூதாய வாழ்வுக்கு ரொம்பவும் ஆரோக்கியமூட்டுவது என்பதே என் அபிப்பிராயம். இது ஏதோ குறுகிய புத்தியால் செய்த ஏற்பாடில்லை. இந்த ஏற்பாடு ஒரு தொழிலாளிக்குக்கூட பெரிய அறிவாளிக்குள்ள அந்தஸ்தைத் தருகிற அமைப்பு என்பதே என் அபிப்பிராயம். என்றெல்லாம் சநாதனிகளைவிடப் பெரிதாக ஆதரித்துப் பேசுகிறார்.

ஆனாலும் அவர் செய்த பல காரியங்கள் ஆசார அநுஷ்டானங்களில் உள்ள வித்தியாசங்களைப் புறக்கணிப்பதாகவே இருந்தனவே. கலப்பு மணத்தைக்கூட அவர் ஆதரித்தாரே என்றால் அதற்குக் காரணம் வர்ண தர்மம் ரொம்ப நல்லதுதான் என்றாலும் தற்போது அது சீர் குலைந்து போயாகிவிட்டது. இனிமேல் அதை மறுபடி புத்துயிர் கொடுத்துப் பழையபடி எழுப்ப முடியாது. சாரம் போனபின் சக்கையைப் பிடித்துக் கொண்டிருக்கிற மாதிரி, வர்ண தர்மப் படியான தொழில் பங்கீட்டு சிதறிப் போய்விட்ட இன்றைக்கு, வெளி வித்தியாசங்களை மட்டும் பிடித்து வைத்துக் கொள்வது மகா தப்பு என்று அவர் நினைத்துவிட்டார்.

நான் அப்படி நினைக்கவில்லை. நம்முடைய மதத்துக்கு முதுகெலும்பு மாதிரி இருக்கும் ஒரு ஏற்பாடு சொஸ்தப்படுத்த முடியாதபடி பாழாகிவிட்டது என்று விட்டுவிடுவதானால் மடமும் வேண்டியதில்லை. மடாதிபதியும் இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆணி வேரான தர்மம் போகவிட்டு, மதாசாரியன் என்று சொல்லிக் கொண்டு ஒரு ஸ்தாபத்தை நடத்துவது சமூகத்தைப் பிடுங்கித்தின்கிற காரியம்தான். வாஸ்தவமாகவே பழைய ஏற்பாடு போயே போய்விட்டது என்றால் மடம் வேண்டியதில்லை. கலைந்துவிட வேண்டியதுதான். ஆனால் இன்னமும் அப்படி ஆகிவிடவில்லை என்றே நம்பிக்கொண்டிருக்கிறேன். அல்லது இன்னும் கொஞ்சம் நாளில் அது அடியோடு அழிந்துபோகிறதைத் தவிர வேறு வழி இல்லை என்று நான் நினைத்துவிடவில்லை. இப்போதாவது நாம் விழித்துக்கொண்டு செய்ய வேண்டிய முழு முச்சோடு செய்தால் அதை புது தெம்போடு எழுந்திருக்கப் பண்ணலாம் என்றே நம்புகிறேன். மற்றத் தொழில் பிரிவினைகள் எப்படிக்

கலந்து போனாலும் போகட்டும். எல்லாவற்றுக்கும் உயிர் நாடியாக வேதாத்யயனம் இன்னமும் அங்கங்கே ஓரிரு பாடசாலைகளில் பழைய வழி தப்பாமலே இருந்து கொண்டுதான் இருக்கிறது. இப்போது கணிசமான வசதிகளை செய்து கொடுத்து வேத வித்தையைப் பரப்புவதற்காக எடுத்திருக்கிற பிரயத்தனங்களும் உற்சாகமான வரவேற்பு இருக்கிறது. நிறைய வித்யார்த்திகள் சேருகிறார்கள். அடுத்த தலைமுறையில் வேதம் என்று ஒன்று இருக்கப்

பண்ணுவதற்கு ஒரு சின்னக் கூட்டமாவது நிச்சயமாக இருக்கிறது. இதை

இருக்கப் பண்ணுவதும் மேலும் விருத்திப் பண்ணப் பாடுபடுவதும்தான் என் கடமை. இது ஒன்று இருந்துவிட்டால் மற்ற வர்ணங்களில் ஏற்படுகிற குழறுபடியால் உண்டாகும் தோஷங்களுக்கும் நிவிருத்தியாக வழி பிறக்கும். ஓர் உதாரணமாக (example) வழிகாட்டிகளாக (guide) பிராம்மணம் அத்தனை பிராம்மணர்களும் இப்படி செய்யாவிட்டாலும், ஒரு சிலராவது தன் பிராசீன வழியிலேயே உறுதியாக இருந்து கொண்டிருந்தால், இதுவே மற்றவர்களையும் அவரவர்களுக்கான தர்மத்தில் திருப்பி விடுகிற சக்திக்காக (influence) இருக்கும்.

காந்தியும் என்னைப் போலவே வர்ணாசிரம தர்மத்தை ஆதரித்தவர்தான். ஆனால் அது, யதார்த்தத்தில் கெட்டுப்போய் விட்டது. அதை சீர்திருத்த முடியாது என்று நினைத்து அவர் நினைத்துக் கொண்டிருந்தார். நானோ இந்தத் தர்மம் மங்கிததான் போய்க் கொண்டிருக்கிறது என்றாலும், அடியோடு அனைந்துவிட வில்லை, இருக்கிற பொறிகளை ஊதி ஊதி நன்றாக மூட்டிவிட முடியும், என்று நினைக்கிறேன். ஏனென்றால் என்னை விட்டால் சமூதாயத்திற்கு மகத்தான கஷ்டம்தான் வருகிறது என்பது நம் தேசத்தின் கடைசீ ஐம்பது வருஷ சரித்திரத்தைப் பார்த்தாலே தெரிகிறது. வர்ண தர்மம் இல்லாத மற்றத் தேசங்களின் பெரிய நாகரீகங்களுக்கு ஏற்பட்ட கதியைப் பார்த்தாலும் தெரிகிறது.

மெஷின்கள், பெரிய ஆலைகள் வந்ததுதான் பழைய பாரம்பரியத் தொழில்கள் நலிவதற்கு முக்கியமான காரணம்.

எளிய வாழ்க்கையில் மெஷினுக்கு அதிக இடமில்லை. கைத்தொழில்களே செய்து எல்லோரும் எளிமையாக வாழ்ந்தால் பழைய ஏற்பாடுகளைக் காப்பாற்றி விடலாம். மநுஷ சக்தியைக் கொண்டுதான் காரியங்கள் நடக்க வேண்டும். ராக்ஷஷ மெஷின்கள் கூடாது. வாழ்க்கையே ரொம்ப எளிமையாக இருக்க வேண்டும். அத்யாவசியத் தேவைக்கு அதிகமாகத் துளிக்கூட டாம்பிகமே உதவாது என்றெல்லாம் காந்தியும்தான் ஓயாமல் சொல்லி வந்தார். இப்படி அவர் சொன்னதெல்லாம் வர்ண தர்மத்தை நிலைப்படுத்துவதற்கு அநுகூலம்தான்.

ஆனால் இப்போது சர்க்கார் திட்டங்கள், ஜனங்களின் மனப்பான்மை எல்லாமே இந்த எளிய வாழ்க்கை, கைத் தொழில்கள் இவற்றுக்கு வித்தியாசமாக ஆகியிருக்கின்றன. ஆனால் இன்னமும் வாயால் காந்தி காந்தி என்று ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டிருப்பதை மட்டும் விடக்கானோம். ஏனென்றால் அவர் நிச்சயமாகவே சமுதாயத்துக்கு நல்லதை நினைத்து, சமத்துவத்துக்காகப் பாடுபட்ட சீர்திருத்தவாதிதானே தவிர, பழசு என்பதற்காகவே சாஸ்திருத்தங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிற முரட்டு ஸநாதனி அல்ல என்பதில் எல்லோருக்கும் நம்பிக்கையிருக்கிறது. அதனால்தான் இப்படி நடுநிலையிலிருந்து பார்க்கப்பட்டவர் வர்ணாசிரமத்தைப் பற்றி என்ன சொல்கிறார் என்று எடுத்துச்சொன்னால், அது உங்களுக்கு மனஸில் கொஞ்சம் அழுத்தமாகவே பதியக்கூடும் என்று நினைத்தேன்.

இப்போது பொதுவாக ஜாதி வேண்டாம் என்று ஏன் சொல்கிறார்கள் என்றால் இதனால் உசத்தி - தாழ்த்தி உண்டாகி, சண்டை ஏற்பட்டு விடுகிறது எனறு நினைப்பதால்தான். வாஸ்தவத்தில் உயர்த்தி - தாழ்த்தியே இல்லை என்பதாகச் சொல்கிறேன்.

வாஸ்தவத்தில் இருக்கிறதோ இல்லையோ, இப்படி ஒரு அபிப்ராயம் வந்துவிட்டால் சண்டைகள் ஏற்பட்டிருப்பது நன்றாகத் தெரிகிறதோ, இல்லையோ. இந்தச் சண்டைகள் வேண்டாம் என்கிறோம் என்கிறார்கள்.

ஆனால் இப்படிச் சொல்வது, தலையை வலிக்கிறது என்பதாகச் சிரச்சேதம்

பண்ணிக் கொள்கிற மாதிரிதான். பழைய தர்மத்துக்கு ஒரு தலைவலி மாதிரி சண்டை வருகிறது என்றால், உண்மையை எடுத்துச் சொல்லி, பக்குவமாக, ஹிதமாக, சாந்தமாக, விடாமல் விளக்கிச் சொல்லி - அதைப் போக்கடித்து, பழைய தர்மத்தை ஆரோக்கியமாக வைப்பது தான் சிகித்ஸை முறை, சண்டை வந்திருக்கிறதே, அதனால் மூலதர்மத்தையே கொன்றுவிடலாம் என்றால், அது அஸம்பாவிதம்.

ஒருவிஷயம் சண்டைக்கு ஆஸ்பதமாக இருக்கிறது என்ற ஒரு காரணத்துக்காக, அந்த விஷயத்தையே அழித்துவிட வேண்டும் என்றால் லோகமே நடக்க முடியாது. லோகத்தில் எதையெடுத்தாலும் கட்சி - பிரதி கட்சி இருக்கத்தான் செய்யும். அபிப்பிராய பேதம் வரத்தான் செய்யும். அப்படியானால் ஒவ்வொரு விஷயமாக அழித்துக் கொண்டு போவதா.

இப்போது குறிப்பாக இரண்டு சமாச்சாரங்களால் ஏகப்பட்ட சண்டை உண்டாகி வருகிறது. ஒன்று, பாஷை. இன்னொன்று, கொள்கை (ideology) இதற்காக பாஷையே வேண்டாம். கொள்கையே வேண்டும் என்று ஆக்கிவிடுவதா.

இப்போது இந்தத் தேசத்தில் வந்திருக்கிற பாஷைச் சண்டை மாதிரி எங்கேயும் பார்த்ததில்லை. ஜாதிச் சண்டையெல்லாம் இதனிடம் உறைபோடக் காணாது என்கிறமாதிரி அங்கங்கேயும் வெறிக் கூத்தாகப் பார்த்துவிட்டோம். தமிழனுக்கும் தெலுங்கனுக்கும் சண்டை, ஹிந்திக்காரனோடு உரிமைப்போர். பெங்காலிக்கும் பீகாரிக்கும் சண்டை, கன்னடியனுக்கும் தெலுங்கனுக்கும் சண்டை, ஹிந்திக்கும் இங்கிலீஷுக்கும் சண்டை என்று தேசம் முழுவதும் கசாமுசா என்று ஆனதைப் பார்க்கிறோம். பாஷை விஷயம் வாய்ச்சண்டையாக இல்லாமல் கையும் ஒங்கி அசல் சண்டையாகவே ஆகியிருக்கிறது. பல பாஷைகள் இருப்பதால்தான் இப்படிச் சண்டைகள் வருகின்றன. பாஷைகளையே அழித்து விடலாம். ஊமையாகி விடலாம் என்றால் இதற்குப் பரிகாரமாகுமா.

இன்னோன்று. எந்தக் கொள்கை (ஐடியாலஜி)யின் பேரில் ஆட்சி இருக்க வேண்டும். ராஜாங்கம் அமைக்க வேண்டும் என்பதற்காக நடக்கிற சண்டைகள் கொஞ்சமல்ல. இதிலே

கம்யூனிசம், காபிடலிஸம் என்பது பெரிய பிரிவு - பெரிய சண்டைக்கு இடமாகி, லோகம் முழுக்க கண்டத்துக்குக் கண்டம் பரவியிருக்கிறது. தினம் பேப்பரைப் பார்த்தால் சின்னச் சின்ன தேசங்களையும் இந்தச் சண்டை விட்டு வைக்கவில்லை என்று தெரிகிறது. உலக யுத்தம் என்று மூளாமலே, எத்தனையோ தேசங்களில் அன்றன்றும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் அநியாயமாகச் செத்துக் கொண்டிருக்கிறார்கள். கம்யூனிஸ - காபிலிடசச் சண்டை தவிர அங்கங்கே மானார்கி (முடியரசு) விழுந்து குடியரசு வருவதும், அவைகளுக்காகப் பலபேர் பலியாவதும், இந்த ஐடியாலஜியால்தான். எல்லோரும் பொதுவாகத் தங்கள் கொள்கையை ஜனநாயகப் பண்பு (டெமாக்ரஸி) என்று மட்டும் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் உள்ளூர இருக்கிற வித்தியாசங்களோ பெரிதாக இருப்பதால்தான் இத்தனை சண்டை ஏற்படுகிறது. சண்டையிருக்கிறதே என்பதற்காக ஒரு ஐடியாலஜியும் வேண்டாம் என்றால், ராஜாங்கம் என்பதே ஒவ்வொரு கொள்கையை உடையவர்களால் ஏற்படுத்துவதுதான. அரசியல் கொள்கை ஒன்றுமே வேண்டாம் என்றால், சர்க்காரே வேண்டாம். என்றல்லவா ஆகும். அப்படியானால் சர்க்கார் என்ற அமைப்பையே அடித்துவிட்டு மிருகங்கள் மாதிரி ஆகிவிடுவதா. பாஷைச் சண்டையிட்டுயிருப்பதால் பாஷையே வேண்டாம். கொள்கைச் சண்டையிருப்பதால் கவர் மென்டே வேண்டாம் என்று ஒப்புக் கொண்டால்,

ஜாதிச் சண்டை மதச் சண்டைகள் இருப்பதால் ஜாதி மதமும்

வேண்டாம்தான். ஆனால் அப்போது இன்னொரு படி மேலே போய்ப் பார்த்தால், நாம் எல்லோரும் இருப்பதால்தானே சண்டை போட்டுக் கொள்ள முடிகிறது. அதனால் நாமே... (பேசவேண்டாம் என்று ஸ்ரீ பெரியவர்கள் சிரித்து விடுகிறார்கள்.

ஆக, பரிகாரம் என்னவென்றால் சண்டைகளைத் தீர்ப்பதுதானே தவிர, மூல தத்துவத்தையே தீர்த்துக் கட்டி விடுவதல்ல.

இப்போது ஜாதியே கூடாது என்று பெரியதாகச் சொல்கிறார்களே தவிர எலெக்ஷன் என்று வந்துவிட்டால் அங்கே ஜாதிதான் முக்கியமாகி விடுகிறது. சகல கட்சிகளும்

ஜாதியை வைத்துதான் வோட் வாங்கக் காரியம் நடந்துகின்றன. ஜாதியே வேண்டாம் என்பது உண்மையில் ஒரு ஜாதி மட்டும் வேண்டாம் என்பதற்காகத்தான் இருக்கிறது.

வாஸ்தவத்தில் தனக்கென ஒரு சமூகப் பொறுப்பு இல்லாமல் பெயரளவில் மட்டும் இருக்கிற ஜாதிகளை வெறும் சுயாபிமானத்துக்காக வளர்ப்பது நியாயமே இல்லை. சமூக க்ஷேமத்துக்காகவே ஒவ்வொரு கூட்டத்தாரிடம் பாரம்பரியமாக ஒவ்வொரு காரியத்தைக் கொடுத்து வளர்ப்பதுதான் எல்லோருக்கும் நல்லது. முக்கியமாக சப்த விசேஷம், தத்வார்த்தம் இரண்டாலும் உயிர்க்குலம் முழுவதற்கும் நன்மை செய்கிற வேதத்தை ஓதிக்கொண்டு, அதிலிருக்கும் கர்மாநுஷ்டானங்களைச் செய்வதையே, வாழ்க்கைப் பணியாக (Life work) கொண்ட ஒரு கூட்டம் இந்தத் தேசத்தில் இருந்து கொண்டேயிருக்க வேண்டும். ஜாதியிருப்பதால்தான் உயர்த்தி - தாழ்த்திச் சண்டை என்று புது நாகரீகக்காரர்கள் நினைத்தாலும், இந்த உயர்த்தி தாழ்த்தி அபிப்ராயம் அடியோடு போக வேண்டும் என்பதற்காகவே நான் இந்தத் தர்மம் இருந்தாக வேண்டும் என்கிறேன். நாம் இப்படிப் பிறந்தோமா. சரி இது ஈசுவரச் சித்தம். ஈஸ்வராக்ஞையால் நமக்கு இந்தக் காரியம் லபித்திருக்கிறது. இதைச் செய்து நம்மாலான சமூக க்ஷேமத்தைச் செய்வோம். இன்னொருத்தனுக்கு இன்னொரு காரியம் பாரம்பரியமாக வந்திருக்கிறது என்றால், அது அவனுக்கு ஏற்பட்ட ஈசுவர ஆக்ஞை. அவரவரும் அதைச் செய்து ஈச்வரார்ப்பணம் பண்ணுவோம் என்ற மனோபாவம் ஏற்பட்டுவிட்டால், அப்புறம் ஒரு காரியம் உசத்தி, இன்னொன்று தாழ்த்தி என்று நினைப்பதற்கு இடமேயில்லை அல்லவா. இந்த மனோபாவம் உம்டாகத்தான் நாம் பிரயத்தனம் செய்ய வேண்டும். பிரச்சாரம் செய்ய வேண்டும்.

பெரிய பிரயத்தனம் முதலான பிரச்சாரம் என்னவென்றால் நாமே அப்படி வாழ்ந்து காட்டுவதுதான். அப்போது வாய்ப்பிரச்சாரமே தேவைக்கூட இல்லை. ஏற்கெனவே ஜாதி முறையால் உயர்வு - தாழ்வு வந்திருந்தால் அது மூல தத்துவத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாததன் கோளாறுதான். இந்தக் கோளாறுகூடப் போகிற மாதிரி இப்போது நாம் இந்த தர்மத்தைக் குற்றமில்லாமல் அநுஷ்டித்து வளர்க்கச்

சங்கற்பம் செய்து கொள்ள வேண்டும்.

ஜீவனம், ஜீவனம் என்று இப்போது பார்த்தாலும் பணத்தின் ஞாபகமாகவே இருப்பதுதான் இப்போது ஜாதி தர்மம் போனபின் நாம் பார்க்கிற நிலை. 70, 75 வருஷம் முந்தி வரைக்கும் எவனுக்குமே இப்படி ஜீவனத்தின் ஞாபகம் இருக்கவில்லை. கடமையின் ஞாபகம்தான் இருந்தது. ஜீவனமே குறி என்றால் யார் யாரிடம் அத்கப் பணமோ, பெரிய பதவியோ அவர்களைப் பார்த்து மற்றவர்கள் அசூடைப் படவேண்டியதுதான். சண்டை போட வேண்டியதுதான். அவனவனுக்கும் அதது கடமை என்கிறபோது, அதில் உயர்வு - தாழ்வு இல்லவே இல்லை. ஆனால் பணம்

குறிக்கோள் என்றால் அதிகப் பணம் சேர்ககிறவன் உசத்தி, மற்றவன் தாழ்த்தி, என்ற

பேத அபிப்ராயங்கள் வந்து கோண்டுதான் இருக்கும். அதாவது வர்ண தர்மத்தில் வாஸ்தவத்தில் இல்லாத ஏற்றத் தாழ்வு, அது எடுபட்டு போனால்தான் உண்டாகிறது. அதனால் ஜாதிகள் எல்லாமே போய் ஜாதிச் சண்டை போய்விட்டாலும் வேறுவிதத்தில் வகுப்புப் பூசல் (Class conflict) ஏற்படத்தான் செய்யும். இதைத்தான் பிரத்யக்ஷமாகவே நன்றாக அனுபவித்து வருகிறோம்.

உயர்த்தி - தாழ்த்தியே இல்லாமல், சண்டையே இல்லாமல் எல்லோரும் அரன்குடி மக்களாக அன்போடு, ஐக்கியத்தோடு, சௌஜன்யத்தோடு, பரஸ்பர விசுவாசத்தோடு, பரஸ்பர சகாயம் செய்துகொண்டு எங்கேயும் சாந்தியும் சந்தோஷத்தையும் உண்டாக்க வேண்டும் என்பதற்காகவே பழைய தர்மங்களை நலியாமல் காப்பாற்றும்படி சொல்கிறேன். இந்த லட்சியத்தில் நாம் கொஞ்சம் அடி எடுத்து வைத்தால் ஸ்வாமி கை கொடுப்பார். அவரைத்தான் பிரார்த்தனை பண்ணுகிறேன்.

# பொதுவான தர்மங்கள்

## மூலமாகிய வேதம்

நம்முடைய மதம் என்பது சைவம், வைஷ்ணவம் எனறு இரண்டு பெரிய பிரிவுகளாக இருக்கிறது. இதை இரண்டு மதம் என்று சொல்வதோ, ஒரே மதம்தான் என்று சொல்வதா. என்று சந்தேகம் வரும்.

கிறிஸ்துவ மதத்திலும் காத்தோலிக், ப்ராடெஸ்டன்ட் என்று பிரிவுகள் இருக்கின்றன. இருந்தாலும் ஒரே மதம் என்று சொல்கிறார்கள். காரணம் என்ன?. இரண்டு பேரும் பொதுவாகப் பூஜை செய்ய ஒரே கர்த்தரின் பெயரைச் சொல்லி வணங்குகிறார்கள். புத்த மதத்தில் ஹீனயானம், மஹாயானம் என்று இரண்டு மதமாகச் சொல்வதில்லை. காரணம் அவர்கள் இரண்டு பேருக்கும் புத்தரே தலைவர்.

இப்படி, சைவர்களும் வைஷ்ணவர்களும் ஒரே ஸ்வாமி இருக்கிறாரா?. இல்லை. இப்போது சாதாரண வைஷ்ணவர்கள் எப்படி இருந்தாலும் அவர்களுக்கு ஆசார்ய புருஷர்களாக இருப்பவர்கள் சிவன் கோயில் பக்கமே வரமாட்டார்கள். விஷ்ணுதான் அவர்களுக்கு ஸ்வாமி, அவர்களுக்கு சிவன் ஸ்வாமியே அல்ல விஷ்ணுவினுடைய பக்தர்களுக்கு, சிவனும் ஒரு பக்தன்தான் என்பது அபிப்ராயம். சைவர்களிலும் தீவிரவாதிகள், விஷ்ணுஸ்வாமியே அல்ல. சிவன்தான் ஸ்வாமி. விஷ்ணு பக்தன் என்று சொல்கிறார்கள். இவர்கள் இரண்டு பேரையும் எப்படி ஒரு மதம் என்று சொல்வது.

அது போகட்டும். இவர்கள் இரண்டு பேரையும் ஒரு மதம் என்று சொல்ல இரண்டு பேருக்கும் பொதுவாக ஏதாவது ஒரு மதப்புஸ்தகமாக இருக்கிறதா?. என்று பார்க்கலாம். கிறிஸ்துவம் இஸ்லாம் முதலியவற்றில் பல பிரிவுகள் இருந்தாலும், எல்லோர்கும் பொதுவாக பைபிளும் குர்ரானும் இருப்பதுபோல், சைன வைஷ்ணவருக்குப் பொதுவான பிராமண கிரந்தம் இருக்கிறதா என்று பார்க்கலாம். சைவர்கள் தேவாரம் முதலிய திருமுறைகளைத் தங்கள் மத நூல்களாக

வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வைஷ்ணவர்களோ நாலாயிர திவ்வியப் பிரந்தம் தமது ஆதார நூல் என்கிறார்கள். புஸ்தகங்களும் வேறாகப் போய்விட்டன. ஸ்வாமியும் வேறாகப் போய்விட்டார். அப்படி இருக்க இரண்டு பேரையும் ஒரு மதம் என்று எப்படிச் சொல்லுவது.

நமக்குள் சைவர்கள், வைஷ்ணவர்கள் என்று வேறாகச் சொல்லிக் கொண்டிருந்தாலும் வெள்ளைக்காரன் நமக்கு ஹிந்துக்கள் என்று பொதுப் பெயர் வைத்தானே நாம் பிழைத்தோம். அவன் வைத்த பெயர் நம்மைக் காப்பாற்றியது. அவன்

மட்டும் ஹிந்து எனப் பெயர் வைக்காவிட்டால், ஒவ்வொரு ஊரிலும் சைவர், வைஷ்ணவர், சாக்தர், முருக பக்தர், பிள்ளையார் உபாசகர், ஐயப்பன் பக்தர், எல்லையம்மனைக் கும்பிடுபவர் என்று நம்மைப் பிரித்துக் கொண்டு தனித்தனி மதமாக நினைத்துக் கொண்டிருப்போம். இப்போது ஹிந்து சமூகம் என்று பொதுப் பெயரில் சொல்லப்படும் சமுதாயத்தை இப்படி ஏழெட்டாகத் தனித்தனி மதமாக பிரித்துவிட்டால், அதற்கப்புறம் ஒவ்வொர் ஊரிலும் முஸ்லீம், கிறிஸ்துவர்கள் போன்ற மதஸ்தர்கள்தான் அதிகத் தொகை இருப்பார்கள். அதாவது இப்போது தேசத்தின் இரண்டு பக்கங்களில் மட்டும் பாக்கிஸ்தான் முளைத்திருப்பதுபோல் இல்லாமல், நம் தேசம் முழுவதுமே பாக்கிஸ்தானாயிருக்கும். எத்தனையோ கிருத்திருமங்கள் செய்து பாக்கிஸ்தானைப் பிரித்த அதே வெள்ளைக்காரன்தான், எத்தனையோ யுக்திகள் செய்து நம்மை ஆரியர், திராவிடர் என்றெல்லாம் பேதப்படுத்திய அதே வெள்ளைக்காரன் தன்னையும் அறியாமல் நமக்கு ஹிந்து என்று பொதுப் பெயரைத் தந்து, இன்று இந்தியா தேசம் என்று ஒன்று இருக்கும் படியான மகா பெரிய நன்மையைச் செய்திருக்கிறார்கள் .அப்படியானால், நமக்கு ஒரு மதமா. இரண்டு மதமா. வைஷ்ணவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே என்று சொன்னாலும் உண்மை அப்படி அன்று. இப்போது இருக்கிறவர்களுடைய மனோபாவத்தைக் கவனித்தால் அது வேறு மதம் என்று சொல்லக்கூடிய ஹேது வளர்ந்திருக்கிறதே தவிர, அவர்களுடைய முதல் நூலைப் பார்த்தோமானால் உண்மை தெரியவரும். சைவத் திருமுறைகள், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்கிற இரண்டையும் பாடினவர்கள் தங்களது

நூலே முதல் நூல் என்று சொல்லவே இல்லை. நினைக்கவே இல்லை. அவர்கள் தங்களை மதஸ்தாபகர்களாகவும் நினைத்துக் கொண்டதே இல்லை. அவர்கள் தங்களை மதஸ்தாபகர்களாகவும் நினைத்துக் கொண்டதேயில்லை. அவர்கள் காலத்துக்கு முந்தியே ஒரு மதம் இருந்திருக்கிறது. ஆழ்வார்கள் பாடுவதற்கு முந்தி வைஷ்ணவம் இருந்திருக்கிறது. நாயன் மார்களுக்கு முந்தியும் சைவம் இருந்திருக்கிறது. இவற்றுக்கு முதல்நூல் எது என்று பார்த்தால் மறாகள்தாம். அதாவது வேதங்களே. சைவர்கள் ஈசுவரனையே.

வேதமோ டாறங்க மாயி னானை

வேதநாதன், வேத கீதன், ஆரணன்காண்

என அநேக இடத்தில் சொல்கிறார்கள். வைஷ்ணவ நூல்களிலும் இப்படித்தான். வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன் என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லியிருப்பதை நாம் சரியாகக் கவனித்தால், இவ்விருவர்களும் மூலப் புஸ்தகம் ஒன்றே என்பது தெளிவாகும். இப்போது சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் முக்கியமாக இருக்கிற தேவாரமும், பிரபந்தமும் ஒரே பொது மூலமான வேதத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டானவையே. தேவாரத்தையும் பிரபந்தத்தையும் பாடிய மகான்கள் எங்கு பார்த்தாலும் வேதத்தின் பெருமையையே பேசுகிறார்கள். எந்த க்ஷேத்திரத்தை வர்ணித்தாலும் அங்கே வேத ஒலி மிகுந்திருந்தது. ஹோமப் புகை மிகுந்திருந்தது. வேதம், அதன் அங்கங்கள் எல்லாம் தழைத்திருந்தன என்று பரவசமாகச் சொல்கிறார்கள். ஸ்வாமியைப் பற்றிச் சொல்கிற அளவுக்கு வேதத்தைப் பற்றியும் சொல்கிறார்கள்.

வேதம் ஒரே தத்துவத்தைப் பல மூர்த்திகளாக்கித் தந்திருக்கிறது. வேதம் என்ற நதியில் இந்த ஒவ்வொரு மூர்த்தி வழிபாடும் ஒரு துறை மாதிரி, வேத நெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க, என்று இதையே சேக்கீழார் சுவாமிகள் சொல்கிறார்கள்.

இப்படியே சாக்தம், காணபதம் (பிள்ளையார் உபாஸனை), கௌமாரம் (முருகன் வழிபாடு), ஸௌரம் (சூரியனையே

பரமாத்மாவாக உபாஸிப்பது) முதலான எதை எடுத்துக் கொண்டாலும் அதன் ஆதார நூல்களில், இந்த வழிபாட்டுக்கு ஆதாரம் வேதத்திலேயே இருக்கிறது. எங்கள் ஸ்வாமி வேதத்தையே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவர் என்றே சொல்லியிருக்கும்.

ஆக ஹிந்து மதம் என்ற பெயருக்குள் உள்ள அத்தனை பிரிவுக்கும் ஆதாரமான நூல் ஒன்றே என்றாகிவிட்டது.

அந்த ஆதாரமான வேதத்தில், சைவ வைஷ்ணவ ஸ்மார்த்த சம்பிரதாய ஆசாரியர்கள் எல்லோரும் தசோப நிஷத்துக்கள் என்கிற பத்து உபநிஷதங்களுக்குப் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். இந்த உபநிஷத்துக்களுள் பிரம்மம் ஒன்றே ஸ்வாமி என்றுதான் சொல்லியிருக்கிறது. அதற்கே ஓரிடத்தில், கடோபநிஷத்தில் விஷ்ணு என்றும், இன்னோரிடத்தில் மாண்டூக்ய உபநிஷத்தில் சிவம் என்றும் பெயர் சொல்லியிருக்கிறது. வேத சம்ஹிதைகளில் வருகிற மித்ரன், வருணன், அக்னி, இந்திரன் முதலான அத்தனை தெய்வங்களும்கூட இந்த சத்தியத்தின் பல பேர்கள்தான் என்றும் அதை வேதத்தில் சொல்லியிருக்கிறது. (ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி)

ஆனபடியால், நம் மதத்தின் அத்தனை பிரிவுகளும் பொதுப் புஸ்தகம், பொதுஸ்வாமி இரண்டும் இருப்பதாக ஆகிவிட்டது. பொதுப் புஸ்தகம் வேதம், பொதுஸ்வாமி பிரம்மம். எனவே, சந்தேகமில்லாமல் நாம் எல்லோரும் ஒரே மதம்தான் என்று தீர்மானமாகச் சொல்லிக்கொள்ளலாம்.

அந்தப் பொது ஸ்வாமியையும் நமக்குக் காட்டிக் கொடுத்திருப்பது பொதுப் புஸ்தகமான வேதம்தான். ஸ்வாமியைக் காட்டிக் கொடுத்திருப்பதோடு, ஆசாமியான நாம் எப்படி வாழ்க்கை நடத்தி முதலில் அந்த ஸ்வாமியாகவே ஆகவேண்டும் என்பதற்கும், நமக்கு வழிகாட்டிப் பரோபகாரம் செய்வது இந்த வேதம்தான். இகம்-பரம் இரண்டுக்கும் அதுதான் நமக்குக் கதி, அதுதான் இத்தனை சம்பிரதாயங்களுக்கும், சித்தாந்தங்களுக்கும் மூலம், வேர், நம்முடைய மதப்பிரிவுகள் எல்லாம் வேதத்திலிருந்தே வந்தவை. வேர் ஒன்று கிளைகள் பல.

ஆராய்ந்து பார்த்தால், ஹிந்து மதப் பிரிவுகளுக்கு

மட்டுமின்றி உலகில் உள்ள எல்லா மதங்களுக்குமே மூலம் வேதம்தான் என்று தெரியும். அந்த மூலத்தை மங்காமல் ரக்ஷிக்க வேண்டும் என்பதே நம்முடைய தலையாய கடமை.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### வைதிகமும் தமிழும்

கரிகால சோழனின் சாஸனம் ஒன்று இருக்கிறது. அது நல்ல சமஸ்கிருத பாஷையில் அமைந்திருக்கிறது.

பாத்ராகலித வேதானாம் சாஸ்த்ர மார்க்கா நுஸாரிணாம்

ததேது அரிகாலஸ்ய கரிகாலஸ்ய சாஸனம்.

கரிகாலன் இதில் தன்னை 'அரிகாலனாகிய கரிகாலன்' என்கிறான். 'அரி' என்றால் விரோதி என்று அர்த்தம். விரோதிகளுக்கு யமனாக இருக்கிற வீராதி வீரன்தான் என்று அரிகாலன் சரி, கரிகாலனுடைய அந்த விரோதிகள் யார்?. வேத சாஸ்திர மார்கத்தை அநுசரிக்காதவர்கள் அனைவரும்தான் அவனுடைய விரோதிகள். வேத சாஸ்திர வழியில் செல்கிறவர்களை ரக்ஷிக்க வேண்டும் என்பதே கரிகாலனின் சாஸனம்.

பிரசித்தி பெற்ற நம்முடைய தமிழ் மன்னர்கள் வைதிக மதத்தை மனமார

வளர்த்தவர்கள் என்பதற்கு இது ஒர் எடுத்துக்காட்டு. "பல்யாகசாலை முதுகுடுமிப்

பெருவழுதி" என்றே ஒரு சங்ககால அரசனுக்குப் பெயர் இருக்கிறது. வழுதி என்றால் பாண்டியராஜா. பிற்காலத்திலும் கல்வெட்டுகளில் எங்கு பார்த்தாலும் தமிழரசர்கள் வேத வித்துக்களுக்கு வரியில்லாத இறையிலி' யாக நிலத்தை

சாஸனம் செய்தது தெரிகிறது. நான்மறைகளின் வளர்ச்சிக்காகவே தானமாக வழங்கப்பட்ட பல கிராமங்கள் சதுர் வேதி மங்கலம் என்ற பெயரில் உள்ளன.

வெளிதேசத்து விஷயம் ஒன்று புதிதாக நம் ஊருக்கு வந்தால், அதற்கு உள்ளூர் பாஷையில் வார்த்தையிருப்பதில்லை. நம் தேசத்துக்கு வந்த ரேடியோ, டெலிபோன், பஸ் முதலியவற்றுக்கெல்லாம் நம் பாஷையில் வார்த்தையில்லை. பிற்பாடு இப்போது இவற்றுக்கும் ஏதேதோ புரியாத தமிழில் வார்த்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். ஆனாலும் அது பழக்கத்தில் சரளமாக வரமாட்டேன் என்கிறது.

வேதம், யாகம் முதலியன சிலர் சொல்கிறமாதிரி தமிழ் நாட்டின் ஆதி நாகரீகத்துக்குப் புறம்பாகப் பிற்பாடு வந்தவை என்றால், யாகம், வேதம் முதலிய பதங்களுக்குப் சரியான தமிழ் வார்த்தை இருக்க முடியாது. ஆனால், மிக மிகப் பழைய தமிழ் இலக்கியங்களிலேயே வேதம் என்பது மறை என்றும், யாகம் என்பது வேள்வி என்றும் புகழ்ந்து பேசப்படுகின்றன. இவை மிகவும் அர்த்தபுஷ்டி நிறைந்த பதங்கள் என்பதை சமஸ்கிருத பண்டிதர்கள் - தமிழ் புலவர்கள் இருவருமே ஒப்புக் கொள்வார்கள். வேட்டலிலிருந்து வேள்வி வந்திருக்கிறது. எல்லா தர்மத்துக்கும் வேரான வேதம், வேரைப் போலவே வெளியில் தெரியாமல், அதாவது எல்லாரிடமும், புழக்கத்துக்கு வராமல், அதை ரக்ஷிப்பதற்கான கடும் நியதிகளைப் பின்பற்றும் சிலரிடமே மறைந்து இருக்க

வேண்டும் என்ற உயர்ந்த கருத்தைச் சொல்லும் வார்த்தைகள்தான் மறை. வைதிகப் பண்பாடும், யக்ஞ அநுஷ்டானமும் தமிழ்நாட்டில் ஊறிப் போயிருந்தாலொழிய, அந்த நாகரீகத்தைக் காட்ட இத்தனை அழகான சொந்த மொழி வார்த்தைகள் உண்டாக்கியிருக்க முடியாது. வேதத்தை எழுதி வைத்துப் படிக்காமல், தலைமுறைத் தத்துவமாக வாயால் சொல்லிக் காதால் கேட்டே கற்க வேண்டும் என்பதால் தமிழில் எழுதாக் கிழவி என்ற பெயரும் வேதத்துக்கு உள்ளது. கேள்வியிலேயே பாடம் பண்ணுவதால்தான், வேதத்துக்கு சமஸ்கிருதத்திலும் "ச்ருதி" என்று பேர். மறை என்பதைப் போல் வேத ரக்ஷணத்தைப்

பளிச்சென்று சொல்கிற நேர் வார்த்தை ஸமஸ்கிருதத்திலேயே இல்லை.

வேதத்தின் ஆறு அங்கங்களுக்கு ஷடங்கங்கள் என்று பெயர். அதிலிருந்துதான் மத சம்மந்தமான எந்தக் காரியத்தையும் சடங்கு என்று சொல்கிற வழக்கம் இருந்து வந்திருக்கிறது. வைதிக அநுசரணையை தமிழ்நாட்டின் தொன்று தொட்ட பழக்கம் என்பதற்கு இதெல்லாம் உதாரணங்கள்.

தமிழ் மறை என்று சொல்கிற குறள் முழுக்க முழுக்க வைதிகமானதே என்பது என் அபிப்ராயம். வைதிக சமயத்தில் பித்ருக்களுக்குத்தான் முதலிடம். அப்புறம்தான் வேத யக்ஞம். பித்ருக்களைக் குறித்த தர்ப்பணமும் திவஸமும் செய்தபின்தான் வேத பூஜை செய்ய வேண்டும். இதே வரிசையில் திருவள்ளுவரும் சொல்கிறார்.

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல்தான் என்றாங்கு ஐம்புலத்தாறு ஒம்பல் தலை.

பித்ருக்கள், தெய்வம், அதிதி, சுற்றத்தார்கள், தான் என்று ஐந்து பேரையும் போஷிக்க வேண்டும் என்கிறார். முதலில் பித்ருக்களான தென்புலத்தாரைச் சொல்லி,

அப்புறம் தெய்வத்தைச் சொல்கிறார். யமனுடைய திக்கான தெற்கில் பித்ருக்கள்

இருப்பதாக வைதிக நம்பிக்கையைலேயே, மூதாதைகளைத் தென்புலத்தார் என்கிறார்.

இந்த ஐந்து பேருக்கும் பாகம் பிரித்துத் தருவது நாமாகச் செய்வது. இது தவிர ராஜ ஆக்ஞைக்காக விளைச்சளில் ஆறில் ஒரு பங்கு வரியாக எடுத்துக் கொள்ளப்பட்டது. வரி போக மீதமுள்ளதை மேலே சொன்னபடி ஐந்தாகப் பிரிக்க வேண்டும். தனக்கு என்று அதில் ஒரு பங்குதான் வைத்துக் கொள்ளப்படுகிறது. பித்ருக்களை உத்தேசித்துக் சிலருக்கு அன்னமாக ஒரு பங்கு போகும். கோயில்களுக்கு ஒரு பங்கு போதும். விருந்தாளிகளுக்கு ஒரு பங்கு போகும். வசதியற்ற விருந்தாளிகளுக்கு ஒரு பங்கு போதும். வசதியற்ற உறவுக்காரர்களுக்கு ஒரு பங்கு போகும். பாக்கி ஒரு பங்குதான் ஒருத்தனின் சொந்தக் குடும்பத்துக்கு. வைதிகமும்,

வள்ளுவரும் விதிக்கிற இந்தத் தர்மத்தைவிடப் பெரிய சோசலிஸம் எதுவும் இல்லை. தனக்கென்று மட்டும் வாழாமல் லோகோ பகாரமாக வாழ்க்கை நடத்த வேண்டும் என்கிற தியாகம்தான் வைதிக மதத்தின் அஸ்திவாரம். திருவள்ளுவரும் அதைத்தான் சொல்கிறார். தமிழ் மறையான குறளும் சரி, மற்ற தமிழ் நீதி நூல்களும் சரி, மறையின் மறையின் மரபில் வந்தவைதான்.

திருவள்ளுவர் வைதிகத்தைத்தான் சொன்னார். ஔவையார் ஓதாமல்

ஒருநாளும் இருக்க வேண்டாம் என்பதாக உபதேசத்தை ஆரம்பிக்கும்போதே, வேதாத்யயனம் ஒரு நாள்கூட நடைபெறாமல் இருக்கக்கூடாது என்கிறாள். ஆழ்வாராதிகளும் சைவத் திருமுறைக்காரர்களும் எங்கே பார்த்தாலும், வேதியா! வேதகீதா! சந்தோகன் காண், பௌழியன் காண் என்றெல்லாம் வேதங்களையும் அவற்றின் சாகைகளையும் சொல்லியே பகவானைத் துதிக்கிறார்கள். க்ஷேத்திர வர்ணனைகளிலெல்லாம், ஊர் முழுக்க ஹோமப் புகை சூழ்ந்திருக்கிறது. வேத சப்தம் ஒரே கோஷமாகப் பரவியிருந்தது என்று அவர்கள் சொல்லாமலிருப்பதில்லை.

இந்தத் தமிழ் நாட்டில் வேத பாடசாலைகளை வைத்து நடத்துவதில் பிராம்மணரல்லாதார் செய்திருக்கிற கைங்கரியம் கொஞ்ஜ நஞ்சமில்லை. நிலமாகவும் பணமாகவும் வாரிக்கொடுத்து இந்தப் பெரிய தர்மத்துக்குப் பரமோபகாரம் செய்திருக்கிறார்கள்.

இப்போதும்கூட ஏதோ அரசியல் காரணங்களுக்காக அவைதிகமான, நாஸ்திகமான அபிப்ராயங்கள் கொஞ்சம் தலைதூக்கியிருந்தாலும், மொத்தத்தில் தமிழ் ஜனங்களுக்கு உள்ளூர வைதிக சிரத்தையும், பழைய சாஸ்திர ஏற்பாடுகளில் பக்தி விசுவாசமும் போகவில்லை என்பதுதான் என் அபிப்பிராயம். அவர்களுடைய அன்புக்குப் பாத்திரராகிற மாதிரி பிராம்மணர்கள் மட்டும் இன்னும் கொஞ்சம் ஆசார அநுஷ்டான சீலர்களாக ஆகிவிட்டால், இங்கே வேத ரக்ஷணம் நிரம்பவும் நன்றாக நடந்திவிடும் என்பதே என் நம்பிக்கை.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### வேதத்தின் மூல வடிவம்

பாஷையை வைத்துக் கொண்டு, இது என் பாஷை, அது உன் பாஷை, இந்த பாஷை தான் உயர்ந்தது. அந்த பாஷை தான் உயர்ந்தது. என்று இப்போது பலர் சண்டை போடுவதைப் பார்த்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நாம் எல்லோரும் ஊமையாகப் போனால் தேவலை என்றுகூடத் தோன்றுகிறது. நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க இருக்கும் கருவி பாஷை. அது எல்லா ஊரிலும் ஒன்றாக இருக்க முடியாது. ஒவ்வொரு கூட்டம் ஒவ்வொரு பாஷையைப் பேசும்.

ஒவ்வொரு சீமையிலும் ஒரு பாஷை இருக்கும். எனவே, இது என் பாஷை அது உன்

பாஷை என்பதும் இது உசத்தி, அது தாழ்த்தி என்று சண்டை பிடிப்பதும் அர்த்தமில்லாத காரியம். தெரிந்த பாஷை தெரியாத பாஷை என்று சொல்லலாமே ஒழிய, என் பாஷை, உன் பாஷை என்பதே தப்பு. மதத்தைக் காட்டிலும், ஸ்வாமியைக் காட்டிலும் பாஷைதான் உயர்வென்று நினைப்பது மிகவும் பெரிய தப்பு. பாஷை என்று ஒரு காரணத்துக்காக மட்டும் ஸமஸ்கிருதம் வேண்டுமா என்றால் நான்கூட வேண்டாம் என்றே சொல்வேன். ஆனால் நம்முடைய மதத்துக்கு மூலமான வேதம், சாஸ்திரம் எல்லாம் அந்தப் பாஷையில் இருப்பதினால் வேதத்தையும் சாஸ்திரங்களையும் ரக்ஷிப்பதற்காக சமஸ்கிருத பாஷையையும் ரக்ஷிக்கத்தான் வேண்டும் என்கிறேன்.

திருவள்ளுவர் குறளை எழுதி அதை அரங்கேற்ற மதுரைக்கு வந்தார். பொற்றாமரைக் குலத்தில் சங்கப்பலகை இருந்தது. திருவள்ளுவர் தம் புத்தகத்தைக்

கொண்டுபோய் சங்கப் பலகையில் வைத்தாராம். குட்டைப்

புத்தகம் அது. அதுமாத்திரம் பலகையில் இருக்கப் புலவர்கள் எல்லோரும் குளத்தில் விழுந்து விட்டார்களாம். குரள் அங்கே அரங்கேற்றப்பட்டது. இந்தப் புத்தகத்தைப் இன்னார் பண்ணினார், இதில் என்ன உயர்ந்த விஷயங்கள் இருக்கின்றன என்று அதைப் பற்றிப் பல புலவர்கள் பாடியிருக்கிறார்கள். திருவள்ளுவ மாலை என்று அதற்குப் பெயர். அதில் ஒருவர் பாடுகிறார்.

ஆரியமும் செந்தமிழும் ஆராயத் திதனிது

சீரிய தென்றொன்றைச் செப்பரிதாம்-ஆரியம்

வேதம் உடைத்து தமிழ்திருவள்ளுவனார்

ஒது குறட்பா உடைத்து

ஸம்ஸ்கிருதம் உயர்வா. தமிழ் உயர்வா என்று யோசனைப் பண்ணிப் பார்த்தேன். ஸம்ஸ்கிருதமும் தமிழும் சமம்தான். ஒன்று உயர்வு, ஒன்று மட்டம் என்று சொல்ல முடியாது. எதனாலே என்றால், ஸமஸ்கிருதத்தில் வேதம் இருக்கிறது. தமிழில் இப்போது திருக்குறள் வந்துவிட்டது. இது தமிழ் மறை. வேதத்துக்குச் சமமான ஒன்று தமிழில் இல்லை என்றால் ஸமஸ்கிருதம் உயர்வாக இருக்கலாம் திருக்குறள் வேதத்துக்குச் சமானமாக வந்திருக்கிறது. அதனாலே இப்போது இரு பாஷைகளும் சமமாயின என்று இச்செய்யுளில் கவி சொல்லியிருக்கிறார்.

ஸமஸ்கிருதத்துக்கு எதனால் கௌரவம். வேதம் அதில் இருபதனால்தான் என்பதை அந்தப் புலவர் சொல்லியிருக்கிறார்.

வேதம் ஸமஸ்கிருதத்தில் இருந்தால் என்ன மொழி பெயர்த்துவிடலாமே என்று நினைக்கலாம். பல நூல்கள் அப்படி இந்தக் காலத்தில் மூல பாஷையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன. அவற்றின் மூலமே உருமாறிப் போவதுமுண்டு. ஒரு விஷயத்தை ஒரு மனிதன் சொன்னால், அது அவனிடமிருந்து எந்த வாக்கில் வருகிறதோ அதே வாக்கில் வருகிறதா, அதே வாக்கில் இருந்தால், ஒரு காலத்தில் இல்லாவிட்டாலும் மற்றொரு காலத்தில் அதன் உண்மைப் பொருளை முழுவதும் தெரிந்து கொள்ள முடியும். ஒரு பொருளைச் சொல்வதற்கு ஒரு பாஷையில் அழகான

சொல் ஒன்று இருக்கும்.. அதை மொழி பெயர்க்கும்போது, அதற்கு ஏற்ற சொல் இதர பாஷையில் இருக்காது. சில சமயங்களில் நான்கைந்து வார்த்தைகளைப் போட்டுச் சுற்றிவளைத்துச் சொல்ல வேண்டியிருக்கும். அந்த வார்த்தை அந்த இடத்தில் எந்த அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறதோ, அதே அபிப்பிராயத்தை மொழி பெயர்ப்பில்

காணமுடியாமல் போகலாம். இரண்டாவது, மொழி பெயர்க்கிறவன் தன்னுடைய

ஞானத்துக்கு ஏற்றார்போலத்தான் பொருள் பண்ணிக் கொண்டு சொல்ல முடியும். ஒருவன் பண்ணிய மொழி பெயர்ப்புச் சரி அல்ல என்று இன்னொருவன் எண்ணுவான். பண்ணுகிறவனுடைய அபிப்ராயத்துக்கும் பாஷை ஞானத்துக்கும் ஏற்றபடி அந்த மொழி பெயர்ப்பு இருக்கும். இப்படியாக பல மொழி பெயர்புகள் ஏற்பட்டு, அவற்றில் எதை எடுத்துக் கொள்வது என்ற சந்தேகம் வரும்போது, மூலம் எப்படி இருக்கிறது என்று பார்க்க வேண்டிவரும்.

ஆகவே தான் மூலமாகிய வேதத்தை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும். மூலமாக இருக்கும் ஒரே வேதத்தைத் தங்கள் கருத்தின்படி பொருள் கொண்டு ஒவ்வோர் ஆசாரியரும் ஒவ்வொரு சித்தாந்தத்தை வெளியிட்டுள்ளனர். அந்த ஆசாரியார்கள் தத்தம் சித்தாந்தங்களையே ஆதாரமாகக் கொண்டு மூலவேதத்தை மாற்றி வெவ்வேறு மதங்களைச் செய்துவிடவில்லை. மூலம் ஒன்றாக இருக்கிறது. மூலம் மொழிபெயர்க்கப்படாமல் அப்படியே இருந்து கொண்டிருப்பதால்தான், அந்த அந்த ஆசாரிய புருஷருக்கு ஏற்றபடி காலத்துக் காலம் புது அபிப்பிராயம் சேர்த்து வந்திருக்கிறது. ஆதாரமான வேதத்தை மாற்றாமல் அப்படியே வைத்துக் கொண்டு, அதை ரக்ஷித்து வந்தால்தான் அந்தந்த ஆச்சாரியாளின் புது அபிப்பிராயமானது இன்னொரு தனி மதமாகப் போகவேண்டிய அவசியம் ஏற்படாமல் இருந்து வந்திருக்கிறது. வைதிக மதம் என்ற பொதுப் பெயர் இருந்து கொண்டிருக்கிறது.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சாஸ்திரமா? மனசாட்சியா?

தர்மம் என்பது உலக க்ஷேமத்துக்காகச் செய்யப்பட வேண்டியது. துளிகூட சொந்த விருப்பு வெறுப்பு இல்லாமல், சமஸ்த பிராணிகளும் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்ற ஒரே சிந்தனையோடு மகான்கள் தர்ம நூல்களைத் தந்திருக்கிறார்கள். தர்ம சாஸ்திரங்கள், இன்னது தர்மம் என்று தீர்மானம் பண்ணுபவை. ரூபத்தை அறிவதற்குப் பிரமாணம் கண். சப்தத்தை அறிவதற்குப் பிரமாணம் காது, தர்மப் பிரமாணம் என்ன எனில் தர்ம சாஸ்திரப் பிரகாரம் செய்வதேயாகும்.

சகல தர்மத்துக்கும் மூலம் வேதம். அதை ச்ருதி என்பார்கள். (எழுதிப் படிக்காமல் காதால் கேட்டுப் பாடம் பண்ணுவதால் இப்படிப் பேர்). ச்ருதிக்கு அப்புறம் ஸ்மிருதி. ஸ்மிருதி என்பது வேதத்தின் விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு விரிவாகக் குறித்த குறிப்பு (Notes) தர்ம சாஸ்திரம் என்பது இதுவே.

அந்த ஸ்மிருத்திக்கு அப்புறம் பிரமாணமாக இருப்பது பெரியவர்களுடைய நடத்தை. பெரியவர்கள் எப்படி நடந்தார்கள் என்பது புராணங்களால் நமக்குத் தெரிய வருகிறது. அதற்கப்புறம் நமக்குத் தெரிந்து சிஷ்டராக இருப்பவர்களின் நடத்தை. சிஷ்டாசாரம் என்று அதைச் சொல்லுவார்கள். எல்லோருடைய நடத்தையும் பிராமணமாகாது. நம்மிடையே வாழ்பவரில் எவரது நடத்தை தார்மிக விஷயங்களில் பிரமாணமெனில், அவருக்கு சாஸ்திர நம்பிக்கை இருக்க வேண்டும். சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஆசாரங்களை அவரே வாழ்வில் அநுசரிக்க வேண்டும். காமக் குரோதம் இல்லாதவராக இருக்க வேண்டும். இப்படிப்பட்ட சிஷ்டர்களுடைய ஆசாரம் ஒரு பிரமாணம். அதற்கப்புறம் நம்முடைய மனசாட்சி (conscience). நம்முடைய மனசு நிஷ்கல்கமாக எப்படி ஆலோசிக்கிறதோ அது ஒரு பிராம்மணம்.

ஆகவே, ஆத்மிக, தார்மிக மத விஷயங்களில் பிராம்மணங்களைக் கொள்ளும் முறையில் முதலில் வேதம் இடம்பெற வேண்டும். அப்புறம் தர்ம சாஸ்திரங்களைக்

கொள்ள வேண்டும். அப்புறம் தர்ம சாஸ்திரத்தைக் கொள்ள

வேண்டும். அப்புறம் பூர்வகால ரிஷிகள் முதலியவர்களின் நடத்தை. பின்பு இப்போதுள்ள சிஷ்டர்களில் ஆசாரத்தைப் பிரமாணமாகக் கொள்ள வேண்டும். இவைகளுக்கெல்லாம் அப்புறம் கடைசிப் பக்ஷமாகத்தான் சாஸ்திர விஷயங்களில் மனசாட்சியைப் பிரமாணமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

இப்பொழுது எல்லாம் தலைகீழாக மாறிவிட்டன. முதலில் மனசாட்சியைத்தான் பார்க்கிறார்கள். கடைசியில்தான் வேதத்தைக் கவனிக்கிறார்கள். நியாயப்படி வேறு ஒரு மார்கமும் இல்லாதபோதுதான் மனசாட்சியை அநுசரிக்க வேண்டும். மனசாட்சி என்று ஏன் அதற்குப் பெயர் வந்தது. சாட்சி சொல்லத்தான் யோகிதை உடையது.
நியாயாதிபதியாக(Judge) இருக்க அதற்கு யோக்கியதை இல்லை. சாட்சியாக வந்தவன் வாயால் பொய்யைச் சொல்வான். அதனால் வாய்சாட்சியை நம்புவதற்கில்லை. ஆனால், மனம் பொய் சொல்லாது. மனசுக்கு எல்லாம் நிஜமாகத் தெரியும். நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை என்று அவ்வைப் பாட்டி சொன்னாள். ஆகவே அதைச் சாட்சியாக மட்டும் வைக்கலாம். இப்பொழுது மனசாட்சியை ஜட்ஜாகவே வைத்து விடுகிறார்கள். இன்னது நடந்தது என்பதை அது நிஜமாகவே சொல்லும். இதுதான் நியாயம் என்று அதனால் தீர்த்துச் சொல்ல முடியாது. தான் நினைப்பதை சரி என்று எப்ப்டியாவது சமாதானம் சொல்லி நிலைநாட்டிக் கொள்வதே அவரவர் மனசும் செய்கிறபடியாக இருக்கும். இது எப்படி தர்ம நியாயமாகும். எனவே மனசாட்சிக்கு எப்படி தோன்றுகிறதோ அப்படிச் செய்கிறேன் என்று சொல்வது தப்பு. எடுத்தவுடன் அதற்கு ஜட்ஜ் ஸ்தானம் கொடுத்து விடக்கூடாது. ஒருவித வழியும் இல்லாமல் போனால், நீ தான் சாட்சியாக இருந்து எல்லாவற்றையும் பார்த்திருக்கிறாயே, இப்போது உன் அபிப்பிராயத்தைச் சொல் என்று மனசிடம் கோட்கலாம். மனசு ஒரு தனி மனிதனைச் சேர்ந்தது. எனவே அது எவ்வளவு தூரம் தன் சுயநலத்தை விட்டு விலகிப் பேசும் என்று சொல்ல முடியாது. சொந்த

விஷயங்களில் அதற்குத் தருகிற இடத்தைக்கூட சமய விஷயங்களில் தருவதற்கில்லை. தனி மனசு என்கிற நிலைக்கு மேலே போய் முழுக்க முழுக்க லோக க்ஷேமத்தையே சொன்ன ரிஷிகளின் அபிப்ராயம்தான் தர்ம விஷயங்களில் பிரமாணமாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சநாதன தர்மமே சங்கரர் தரும் நெறி.

நாய்க்குக் கெட்ட பெயர் சூட்டித் தூக்கில் போடு (Give the dog a bad name and hang it) என்று ஆங்கிலத்தில் ஒரு வசனம் சொல்வார்கள். நாய் நன்றியறிதலும் விசுவாசமும் உள்ள பிராணி. அதைத் தூக்கில் போடுவதை யாறும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அதனால் அதற்கு ஒரு கெட்ட பெயரைக் கொடுத்துவிட்டு, எவனோ தூக்கில் போட்டான் போலிருக்கிறது.

நவீன நாகரீக சீர்திருத்தக்காரர்கள் நமது தர்ம சாஸ்திரங்களின் விஷயத்தில் இதையேதான் செய்கிறான். யுகாந்திரமாக, இந்தத் தேசத்துக்குப் பரம க்ஷேமத்தைச் செய்துவந்த அந்த தர்மங்களால் ஏதேதோ கொடுமைகள் நேர்ந்ததாகச் சொல்லி, கெட்ட பெயரை உண்டாக்கி, அவற்றை துக்கில் போடப் பார்க்கிறார்கள். நம்

சனாதன சாஸ்திரங்கள் வரையறை செய்து தந்த சமூகப் பண்பாடு (வர்ண தர்மம்) கூடாது என்று சிலருக்குத் தோன்றுகிறது. எனவே, தர்ம சாஸ்திரங்களால் வாஸ்தவத்தில் ஏற்படாத கொடுமைகளை இவர்களாகக் கற்பித்துச் சொல்கிறார்கள். நம் தேசத்தில் இன்னின்னார்தான் இன்னின்ன காரியம் செய்யலாம் என்ற அதிகார பேதத்தால்

ஜனங்கள் பிரிந்து பிரிந்து போனார்கள். இதனால் ஹிந்து சமூகத்தில் ஒற்றுமை இல்லை.

இதனால்தான் நம்மை அன்னிய தேசத்தார் பல முறை ஜயிக்க முடிந்தது என்று சொல்கிறார்கள். இது துளிக்கூடச் சரியில்லை.

பொது எதிரி வந்தபோது நம் தேசத்து ராஜாக்களுக்குள் ஒற்றுமையில்லாமல் இருந்திருக்கலாம். ஆனால் ஜனங்களிடையே பரஸ்பரம் பேதம் இருந்து, அவர்கள் எதிரிக்கு உதவி செய்ததாகச் சொல்வதற்கு கொஞ்சம்கூட சாட்சியம் இல்லை. பேதங்கள் போகவேண்டும் என்று சொல்கிற இப்போதுதான் உண்மையில் பேதமும் துவேஷமும் உக்கிரமாக இருக்கின்றன. இதற்கு மாறாக, சௌஜன்யத்தையே சமீப காலம்வரை கண்கூடாகப் பார்த்தோம். இரண்டு கிராமங்களுக்கிடையில் ஏதோ ஒரு வயல், வரப்பு, வாய்க்கால் அல்லது கோயில் பற்றிப் பாத்தியதை சண்டை வந்தால், அந்தந்த கிராமத்திலுள்ள அக்கிரகார ஜனங்களிலிருந்து சேரி மக்கள் வரையிலும் எல்லோரும் ஒரே கட்சியாகத்தான் நிற்பார்கள். இந்தக் கிராமத்தில் உள்ள ஒருவன் தன் ஜாதியைச் சேர்ந்த எதிரொளிக் கிராமத்தானோடு சேரவே மாட்டான். கிராமத்து விஷயமே இப்படி என்றால் தேசத்தின் விஷயத்தில் சொல்லவே வேண்டாம்.

சின்னச் சின்ன சமூகங்கள் தங்களுக்குள் கட்டுப்பட்டு ஒழுங்காக இருக்க முடிந்தது. அவரவருக்கும் தங்கள் சமூகத்தைப் பற்றிப் பெருமையே இருந்தது. அவரவரும் தங்கள் விவகாரங்களைக் கவனித்துக்கொள்ள தனித்தனி நாட்டாண்மைகளை வைத்திருந்தார்கள். ஒருத்தன் தப்புத்தண்டா பண்ணிவிட்டால் நாட்டாண்மைக்காரர்கள் அவனைத் தங்கள் சமூகத்திலிருந்து பிரஷ்டமம் செய்து விடுவார்கள். அவரவருக்கும் தங்கள் சமூகத்தில் கௌரவ புத்தியும், மனமார்ந்த பிடிமானமும் இருந்ததால் பிரஷ்டம் செய்யப்படுவதைப் பெரிய அவமானமாக எண்ணினார்கள். இதுவே அவர்களைத் தப்புத் தண்டாவிலிருந்து தடுக்கும் பெரிய சக்தியாக இருந்தது. இப்போது எல்லா சமூகங்களையும் மனமார்ந்த பிடிமானத்தோடு சேர்த்துப் பிடித்து வைக்க எந்த ஸ்தாபனமும் இல்லை. கட்டுக்கடங்காத ஒரே பெரிய அமைப்பில் இது சாத்தியமும் இல்லை. விளைவு. குற்றங்கள் கூச்சமில்லாமல் நடக்கின்றன.

போலீசின் வேலை அதிகமாகிக் கொண்டே இருக்கிறது. சாஸ்திரங்களை எதிர்க்கிறவர்கள் இதை எல்லாம் யோசிக்க வேண்டும்.

எதற்கும் எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும். அதுவே நல்லதும்கூட. எதிர்ப்பு இருந்தால்தான் நம் நிறை குறை வெளியாகும். நம்மை ரக்ஷித்துக் கொள்வதில் விழிப்பும் இருக்கும். ஆனால் எதிர்ப்பு என்ற பெயரில் இல்லாத கெடுதல்களைச் சொல்லி நல்லதைத் தூக்கில் போடக்கூடாது.

இல்லாததைச் சொல்வதற்கு இன்னோர் உதாரணம். நெற்றிக்கு இட்டுக் கொள்வது சிலருக்கு நாகரீகமாக இல்லை. நெற்றிக்கு இடுவதை ஜாதி அடையாளம் என்று கெட்ட பெயர் தந்து தூக்கில் போடப் பார்க்கிறார்கள்.

வாஸ்தவத்திலோ, விபூதி பூசுகிறவர்களில் பிராம்மணரிலிருந்து தீண்டாதவர்வரை சகல ஜாதியாரும் உள்ளனர். இப்படியே நாமம் போடுவதிலும் எல்லா ஜாதியாரும் இருக்கிறார்கள். எல்லாம் விஷ்ணு வடிவமான மண்ணில் தோன்றி மண்ணில் முடியவற்கு என்பதே திருமண். சரீரம் பஸ்மமான பின்னும் சாசுவதமாக இருக்கிற சிவமயமான பரமாத்மாவிற்கு அடையாளம் திருநீறு. இப்படிப்பட்ட தத்துவச் சின்னங்களை கெட்ட பெயர் சூட்டித் தூக்குபோடலாமா.

பழைய தர்மங்களை எல்லாம் முறிவுபடாமல் காப்பாற்றப் பிரயத்தனப்பட வேண்டும் என்று எங்களுக்கு ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் ஆக்ஞை இட்டிருக்கிறார்கள்.

அவர் பெயரை நான் வைத்துக் கொண்டிருப்பதால்தான் நீங்கள் இங்கு வருகிறீர்கள்.

அவருடைய ஆக்ஞையை உங்களுக்கும் தெரிவிக்க வேண்டியது என் கடமை. ஆக்ஞையைக் காரியத்தில் நிறைவேற்றுவதற்கும், நிறைவேற்றாததும் ஒரு பக்கம் இருக்கட்டும். சாஸ்திர வழக்கங்கள், லோக க்ஷேமம், ஆத்ம க்ஷேமம் இவற்றைக் கருதியே வருக்கப்பட்டவை என்பதையாவது உங்களுக்குப் புரிய வைக்கப் பார்க்கிறேன்.

# பொதுவான தர்மங்கள்

## சாமானிய தர்மங்கள் அனைவருக்கும் பொதுவானவை

தியானத்தில் ஒரு முகப்படுத்துவதற்கு பெரிய இடைஞ்சல் என்ன?இந்த மனசு ஓயாமல் ஆடிக் கொண்டிருப்பதுதான். மனத்தினால்தான் எல்லா விதமான கஷ்டங்களும் உண்டாகின்றன. மனத்தில் ஏற்படும் ஆசையே அத்தனை கஷ்டங்களுக்கும் காரணம். ஆசைப்படாதே என்று இந்த மனசை இழுத்துப் பிடித்து நிற்க வைக்க முடியவில்லை.

நாம் ஒரு வஸ்துவை நினை என்று இந்த மனசிடம் சொன்னால், அது ஏதோ சொற்ப காலம் அதை நினைப்பது போல இருந்து, வேறு எங்கோ பாய்ந்து விடுகிறது. தியானம், சாந்தி என்றெல்லாம் நான் உபந்நியாசத்தில் சொல்லுகிறபோது ஒரு க்ஷணம் உங்கள் மனம் அடங்கினாற்போல் தோன்றும், ஆனந்தமாய் இருக்கும். ஆனால் அடுத்த க்ஷணமே மனம் எங்கோ ஓடி, சாந்தி குலைந்து போகிறது.

பேசாமல் இரு என்று கட்டளை போட்டு வாயை மூடிக் கொண்டுவிட்டால், அது ஓரளவுக்காவது பேசாதிருக்கிறது. பார்க்காதே என்று உத்தரவு போட்டுக் கண்ணை மூடிக்கொண்டுவிட்டால், கண் ஓரளவாவது பார்க்காமல் இருக்கிறது. ஆனால் இந்த மனத்திடம் மட்டும் நினைக்காமல் இரு என்று எவ்வளவுதான் மூடிக்கொண்டாலும் அது கேட்பதில்லை. நாம் நினை என்றால் மனம் நினைக்க வேண்டும். நினைக்காதே என்றால் நினைக்காமலிருக்க வேண்டும். அப்போதுதான் நமக்கு மனம் ஸ்வாதீனமாயிற்று. நமக்குச் சித்த ய்வாதீனம் இருக்கிறது என்று அர்த்தம்.

இப்போது பைத்தியங்கள் என்று சிலரைக் குறிப்பிட்டு அவர்கள் சித்த ஸ்வாதீனம் இல்லாதவர்கள் என்கிறோமே. உண்மையில் நமக்கு எவருக்குமே சித்த ஸ்வாதீனம் இல்லைதான். பைத்தியம் வாயை அடைக்காமல் பிதற்றிக் கொண்டே இருக்கிறது என்றால், நாமும் மனத்தை அடைக்காமல் அது பிதற்றல் வழியில் போகத்தான்

விட்டிருக்கின்றோம்.

நமக்குச் சித்த ஸ்வாதீனம் வந்துவிட்டால் எப்படி இருக்கும் தெரியுமா. எத்தனை வலி ஏற்பட்டாலும், வலி என்று நினைக்காதே என்றால் மனம் வலியைப் பொருட்படுத்தாமல் இருந்துவிடும். எதிரிலே புலி வந்து உறுமினால்கூட மனத்திட்டம் பயப்படாதே என்றால் அது பயப்படாமலே இருக்கும். இப்போது நாம் காரணமில்லாமல் அழுது கொண்டிருக்கிறோம். மனசு வசப்பட்டுவிட்டாலோ அழுகைக்குக் காரணமாக எத்தனை துக்கம் வந்தாலும்கூட அது சிரித்துக் கொண்டிருக்கும். ஆத்திரமூட்டும்படி என்ன

நடந்தாலும் அது கோபமே இல்லாமல் சாந்தமாயிருக்கும்.

முதலில் மனசை இப்படி அப்படிப் போகாமல், நல்ல விஷயத்தில் நினைவைச் செலுத்தும்படி செய்ய வேண்டும். எண்ணெயை விட்டால் அது எப்படிப் பிசிர் இல்லாமல் ஒரே இழையாக விழுகிறதோ (இதைத் தைலதரை என்பார்கள்) அது மாதிரி மனம் நல்ல நிலையில் ஒரு முகப்பட்டுச் சொல்ல வேண்டும். ஸ்வாமி, ஸ்வாமி என்ற நல்ல வஸ்துவை அப்படியே நினைத்துக் கொண்டிருக்கும்படி மனத்தை அப்பியாசப்படுத்த வேண்டும். அதன்பிறகு நினைக்கிறோம் என்பதும்போய், ஸ்வாமியிலேயே கலந்து ஸ்வாமியாகவே ஆகிவிடுவோம்.

இப்படி மனசை அடக்குவதுதான் யோகம் என்பது. சாவதற்குள் இந்த மனசை அடக்க ஒருவழி தேடியே ஆகவேண்டும். இல்லாவிட்டால் மறுபடி பிறப்புதான். மறுபடி மனசின் ஒயாத ஒட்டம்தான். எனவே, இந்த ஜன்மாவிலேயே காமமும் குரோதமும் ஏற்படுவதற்கு எவ்வளவோ ஹேதுக்கள் இருக்கும்போதே இவற்றின் நடுவே மனசை அடக்க முழுப் பிரயத்தனம் பண்ண வேண்டும். அப்படிப் பண்ணி ஜெயித்தவன்தான் யுக்தன் என்கிற யோகி. அவன்தான் ஹுகி உண்மையான ஆனந்த ஆத்மா என்கிறார்.

யோகமெல்லாம் ரிஷிகள் சமாச்சாரம், நமக்கு வருமா. என்று விட்டு விடலாகாது. மருந்து யாருக்கு வேண்டும். வியாதி உள்ளவனுக்குத்தானே. நமக்குத்தான் மனோவியாதி. அதாவது, மனம் என்ற வியாதி - இருக்கிறது. எனவே

நாம்தான் அதை அடக்குகிற மருந்தைச் சாப்பிட வேண்டும்.

மனசை அடக்க இரண்டு சாதனங்கள் உண்டு. ஒன்று பகிரங்க சாதனம். மற்றது அந்தரங்க சாதனம். வெளிமுகமாகச் செய்வது பகிரங்க சாதனம். உள்ளுக்குள்ளேயே செய்து கொள்வது அந்தரங்க சாதனம். இரண்டும் வேண்டும். இந்த மட்டடத்தில் வண்டிக்காரண், சமையல்காரன் இவர்கள் வெளியிலும், தீபத்தில் திரிபோட்டுத் தருகிறவன், புஷ்பம் எடுத்துக் கொடுப்பவன் இவர்கள் பூஜைக்குப் பக்கத்திலேயே அந்தரங்கமாக இருப்பவர்கள். இரண்டு வகையினரும் இருந்தால்தான் மடம் நடக்கும். அப்படியே பகிரங்க சாதனம் அந்தரங்க சாதனம் இரண்டையும் கொண்டு மனத்தை முதலில் நல்லதில் ஒருமுகப்படுத்தி, பிறகு ஒன்றையுமே நினைக்காத நிலைக்கு வரவேண்டும்.

தான தருமம் செய்து, சந்தியாவந்தனம், யாகம், பூஜை பரோபகாரம் எல்லாம் நல்லதில் மனசைச் செலுத்தும் பகிரங்க சாதனங்கள். தியானம் என்பதே மிகச் சிறந்த அந்தரங்க நிலை. அதற்கு அநுகூலமாக இருக்கிற மற்ற அந்தரங்க சாதனங்கள் ஐந்து. அவை. அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், செளசம், இந்திரிய நிக்ரஹம் என்பவை. எவருக்கும், எவற்றுக்கும் கெடுதலே எண்ணாதபடி மனசை அன்புமயமாகச் செய்து கொள்வது அஹிம்சை. மனம் வாக்கு, காயம் மூன்றையும் உண்மையிலே ஈடுபடுத்துவது சத்தியம். அஸ்தேயம் என்றால் திருடாமல் இருப்பது என்று அர்த்தம். அதாவது பிறர் பொருட்களில் ஆசையே எழாதபடி

வைராக்கியமாக இருப்பது. செளசம் என்றால் தூய்மைப்படுத்திக் கொள்வது. ஸ்நானம், மடி, ஆச்சாரம், ஆகாராதிகளின் சுத்தி எல்லாம் செளசத்தில் அடங்கும். இந்திரிய நிக்ரஹம் என்பது புலன்களை அவற்றின் போக்கில் விடாமல் ஒவ்வொர் இந்திரியத்துக்கும் இவ்வளவுதான் ஆகாரம் கொடுப்பது என்றுநிர்ணயமாக வைத்துக் கொள்வது. கண் இதைப் பார்க்கக்கூடாது. வாய் இதைத் தின்னக்கூடாது. இதைப் பேசக்கூடாது. வாய் தின்னக்கூடாது. இதைப் பேசக்கூடாது. உடம்பு இந்தப் பாவத்தை செய்யக்கூடாது என்று தடுத்து நிறுத்துவதே இந்திரிய நிக்ரஹம். சாதனை செய்வதற்காக மட்டுமே சரீரம் வேண்டும். சரீரம் உயிர் வாழ்வதற்காக இந்திரியங்களுக்கு எவ்வளவு அதம பட்சம்

தீனி கொடுக்க வேண்டுமோ அவ்வளவே கொடுக்க வேண்டும். அந்த ஐந்தும் சாமானிய தர்மங்கள் எனப்படும் அதாவது நமது மத்த்தைச் சேர்ந்த சகல பிரிவினரும் இவற்றை அநுஷ்டிக்க வேண்டும் என்பது மநுஷ்யதர்மம்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### அஹிம்சை

எல்லா மக்களுக்கும் பொதுவான சாமானிய தர்மங்களில் அஹிம்சையே முதலானது என மனு தர்ம சாஸ்திரம் விதிக்கிறது. மனஸை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளும் யோகத்துக்கு ஓர் அங்கமாக அஹிம்சை கருதப்படுகிறது.

சரீரத்தால் ஹிம்சை செய்யக்கூடாது என்பது மட்டும் அஹிம்சையல்ல. யாருக்கும் எவ்விதக் கஷ்டமும் ஏற்படவேண்டுமென்று மனஸாலும் நாம் எண்ணக்கூடாது. வாயால் பிறருக்குக் கஷ்டம் தருகிற பேச்சைப் பேசக்கூடாது.

சுபாவத்தில் நம்மில் யாருக்கும் பிறரை ஹிம்சித்துப் பார்க்க வேண்டும் என்று ஆசையில்லை. ஆனாலும் பிறர் ஏதாவது குற்றம் செய்வதாக நமக்குக் தோன்றினால், அவர்களுக்குப் பலவிதத்தில் ஹிம்சை தர எண்ணுகிறோம். நம்முடைய சின்னஞ்சிறு குழந்தை தெரியாத்தனத்தால் நம் வீட்டில் செறுப்பை வைத்து விட்டால் குழந்தையை ஹிம்சிக்கிறோமா. அப்படிச் செய்யமாட்டோம். நெறுப்பை அணுக்கவே முற்படுவோம். மறுநாள் முதல் அந்தக் குழந்தை நெருப்பண்டை போகாமல் ரக்ஷிப்போம். நமக்குத் துன்பம் தருவதாகத் தோன்றுகிற எவரையும், அந்தக் குழந்தையாகவே பாவிக்க வேண்டும். மறுபடியும் தவறு செய்யாமல் அவரை அன்புடன் தடுத்து ரக்ஷிக்க வேண்டும். அவர்மீது துவேஷம் பாராட்டி, பதிலுக்கு ஹிம்சை தரக்கூடாது. இதுதான் உண்மையான அஹிம்சை.

இது நம் மனத்தை வசப்படுத்திக்கொள்ளும் யோகத்துக்காகவும் பிரயோஜனமாகிறது. மனம் பூதம் போன்றது. ஆனால், பூதத்தை - வேதாளத்தை - விக்கிரமாதித்தன் வசப்படுத்தியபின், அது அவனுக்காக எவ்வளவு காரியம் செய்தது. அப்படியே வசப்பட்ட மனம் எவ்வளவோ நல்லதைச் செய்யும்.

யானை கட்டுப்படாவிட்டால் உலகுக்கு உபத்திரவம்தான். ஆனால்

கட்டுப்படாவிட்டால் எத்தனை நல்ல காரியங்களை அதன் மூலம் சாதிக்க முடிகிறது. யானை பலம் கொண்ட மனசினைக் கட்டுப்படுத்தினால் எத்தனையோ நல்லதைச் செய்யலாம். ஆஞ்சநேய ஸ்வாமி மனோஜயம் செய்ததால்தான் அவ்வளவு சக்தி பெற்றிருந்து அத்தனை ஸத்காரியங்களையும் செய்தார். மனத்தின் சக்தி அபரிதமானது. இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் பராசக்தியின் ஒரு மனம்தான் சிருஷ்டித்திருக்கிறது. இந்த சிருஷ்டியில் இருக்கிற ஒரு சிறிய எறும்பின் சின்ன மனமோ, இந்தப் பிரபஞ்சமும் முழுவதிலும் பாய்ந்தோடுகிறது.

அஹிம்சையை அநுசரித்தேன். மனம் வசப்பட்டது. என்று எத்தனையோ மகான்களும் யோகிகளும் சொல்லியிருக்கிறார்கள். அஹிம்சையினால் கோபம்போய் மனசானது அன்பில் தெளிந்து விடுவதால், அப்புறம் அதை வசப்படுத்துவது சுலபமாகி விடுகிறது.

அஹிம்சையின் முக்கிய பிரயோஜனம் சித்தம் அடக்குவதே. ஆனால், அஹிம்சையை அப்பியசிப்பதால், நாம் உத்தேசிக்காமலே வேறொரு பலனும் ஏற்படும். இதற்கு அவாந்தரப் பிரயோஜனம் என்று பெயர். நீங்கள் எல்லோரும் இந்த மடத்துக்குப் பூஜை பார்க்கத்தான் வந்திருக்கிறீர்கள். அதுதான் உங்கள் உத்தேசம். அதோடுகூட மேளம் கேட்டீர்கள். ரொம்ப நாளாக பார்க்காத பலரை இங்கு பார்த்தீர்கள். இப்போது உபந்யாஸம் கேட்டீர்கள். இதெல்லாம் உத்தேசிக்காமலே கிடைக்கும் அவாந்தரப் பிரயோஜனம்.

இவ்வாறே ஒருவன் மனம், வாக்கு, காயம், என்ற திரிகரணங்களாலும் அஹிம்ஸையைப் பூரணமாகச் சாதித்து விட்டால், அவனுடைய சங்கற்பமின்றியே சந்நிதானத்துக்கு

வருகிற எல்லாப் பிராணிகளும் தாமாகவே தங்கள் பகைகளை மறந்து அஹிம்ஸா மயமாகிவிடும்.

**அஹிம்ஸா ப்ரதிஷ்டாயாம்**

**தத்ஸந்நிதென வைரத்யாக.**

**யோக சூத்திரம்.**

அஹிம்ஸையைப் பூரணமாக அநுஷ்டித்தவன் இருக்குமிடத்தில் குரூரமானவர் மனத்திலும் சாந்தம் உண்டாகும். எனவே, தான் அன்போடு இருப்பதே இவனது சங்கற்பமானாலும், மற்றவர்களையும் அன்பாக ஆக்கும் அவாந்தரப் பிரயோஜனமும் கிடைக்கிறது.

சந்நியாசி பூரண அஹிம்சையை அநுஷ்டிக்க வேண்டும். அவன் இலையைக் கிள்ளக்கூடாது. தாவரங்களைச் சமைத்து ஹிம்சிக்கக்கூடாது. அஹிம்ஸை காரணமாகத்தான் அவனுக்கு அக்னிகாரியமே விதிக்கப்படவில்லை. அக்னி என்று இருந்துவிட்டால், அதில் ஏதாவது தவறிப்போய் பூச்சி பொட்டு விழுந்து சாகக்கூடும். நெருப்பிலே விழுந்ததை எடுத்துக் காப்பாற்றுவது கஷ்டமல்லவா. இதனால்தான் துறவிக்கு ஹோமம், யாகம் எதுவும் இல்லை. அவன் அக்னி காரியமே செய்யாததால் அவனுக்கும் கடைசீயில் தகனம் என்ற அக்னி காரியம் இல்லை.

அவனுடைய சரீரத்தை பூமியில் அடக்கம் செய்கிறார்கள். சகல பிராணிகளுக்கும் என்னால் பயம் இல்லாமல் போகட்டும் என்று சந்நியாஸம் வாங்கிக் கொள்ளும்போது அவன் பிரதிக்ஞை செய்கிறான். அதன்படி, எந்தப் பிராணிகளுக்கும் என்னால் பயம் இல்லாமல் போகட்டும் என்று சந்நியாஸம் வாங்கிக் கொள்ளும்போது அவன் பிரதிக்ஞை செய்கிறான். அதன்படி, எந்தப் பிராணிக்கும் தாவரத்துக்கும் ஹிம்ஸை இல்லாமல் வாழவேண்டியது அவனுக்கே பூரணமாக விதிக்கப்பட்ட தர்மம். அஹிம்ஸா பரமோ தர்ம. என்று ஜைன, பௌத்த மதங்கள் எல்லோருக்கும் பூரண அஹிம்ஸையை விதித்ததுபோல் நம் மதம் செய்யவில்லை. சன்னியாசிகளுக்கே இதை அதி தீவிரமாக விதித்திருக்கிறது. மற்றவர்களுக்கு இத்தனை கட்டுப்பாடு இல்லை. தர்மயுத்தத்திலும், இத்தனை கட்டுப்பாடு இல்லை. தர்மயுத்தத்திலும், யக்ஞத்தில் பலி தருவதிலும் நம்

மதம் அஹிம்ஸையை விலக்கியிருக்கிறது. லோக க்ஷேமத்துக்காகவே சில தேவ சக்திகளை திருப்திப்படுத்துவதற்காக யாகத்தில் பசு (பிராணி) பலி தரப்படுகிறது. யக்ஞத்தில் பலியாகிற பிராணி, இதனால் தானாக சம்பாதித்துக்கொள்ள முடியாத பரமோத்தமமான கதியை அடைகிறது எந்பது எந் நம்பிக்கை. ஆக அந்தப் பிராணிகளுக்கும் சிரேயஸ், அது செய்த தியாகத்தால் லோகத்துக்கும் நல்லது என்றாகி விடுகிறது.

இப்படியே யுத்தத்தில் தேசத்துக்குத் தியாகமாக ஸேனா வீரர்கள் பலி ஆகிறார்கள். வெறுமே தின்று தின்று தன்னையே போஷித்துக் கொண்டு உயிர் வாழ்வதைவிட, பர நலனுக்காக பிராணத் தியாகம் செய்வது சிரேஷ்டமானது என்பதால் இப்படி அஹிம்ஸைக்கு விலக்கு வைத்திருக்கிறார்கள்.

பூரண அஹிம்ஸா லட்சியத்தை வாயளவில் பிரமாதமாகப் பேசிவிடலாமே தவிர, காரியத்தில் நடக்காது. குற்றம், குறைகள், அடிதடி, சண்டைகள் எல்லாம் நடைமுறையில் இருக்கத்தான் செய்யும். அப்போது அவற்றைக் குறைப்பதற்காக எடுக்கிற நடவடிக்கையில் ஹிம்ஸை இருந்பதாகத் தோன்றினாலும் உம்மையில் அது ஹிம்ஸையாகாது. ஏனென்றால், செய்கையைவிட எண்ணம், நோக்கம்தான் முக்கியம். ஹிம்ஸிப்பதிலேயே சந்தோஷப்படுகிற நோக்கமில்லாமல், ஒரு பொது நலத்தை உத்தேசித்து, ஒரு பிராணியை யக்ஞத்தில் பலி தருகிறபோதோ அல்லது ஒரு கொலைக் குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கிற போதோ அல்லது யுத்தத்தில் விரோதிகளை வதைக்கிற போதோ, காரியத்தில் தெரிந்தாலும் அது பாபமாகாது. தோஷமாகாது. இதுதான் நம் சாஸ்திரம்.

காரிய சத்தியமில்லாத பூரண அஹிம்ஸையை பூரண நடைமுறையில் எல்லோருக்கும் விதித்தால், இந்த விதியை மீறிய பாபம், தோஷம்தான் ஜனங்களுக்கும் உண்டாகும். யதார்த்த நிலையை மறக்காத நம் மதம் நமது ஜனங்களுக்கு இந்தப் பாபத்தை உண்டாக்கவில்லை.

மாறாக பௌத்த மதம் எல்லோருக்கும் பூரண அஹிம்ஸை என்று விதி செய்த போதிலும் இன்று நாம் பார்ப்பது என்ன?. பௌத்தத்தைத் தழுவிய

அத்தனை நாடுகளிலும் சைன்னியம், சண்டை எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன. அது மட்டுமில்லை. அந்தத் தேசங்களில் மிச்சம் மீதியில்லாமல் சகல ஜனங்களுக்கும் மாமிஸம் உண்பவர்களாகவே இருக்கிறார்கள்.

பெரிய தர்மம் ஒன்றை அத்தனை பேருக்கும் பொதுவாக வைத்தால், முடிவில் எவருமே அதை அநுஷ்டிக்காத நிலைமையைத்தான் பார்க்கிறோம். நம் தேசத்தில் இப்படிச் செய்யாமல் சன்னியாசிகளுக்கு மட்டும் பூரண அஹிம்ஸையை விதித்தார்கள். அதைப் பார்த்து பிராம்மணர்கள், வட தேசத்தில் குஜராத் முதலான பகுதிகளில் உள்ள வைஷ்ணவர்கள், தென்னாட்டில் சைவ வேளார்கள், கோமுட்டிச் செட்டிமார்கள் போன்றவர்களும் இதைப் பின்பற்றி வந்திருக்கிறார்கள். எனவே விதி என்று போட்டுக் கட்டுப்படுத்தாததாலேயே தாங்களாகப் பிரியப்பட்டு, அதிலே நிஜமான ஈடுபாட்டோடு தலைமுறை தத்வமாக இப்படிச் செய்து வந்திருக்கிறார்கள். சந்நியாஸிகளின் ஸத்வ குணத்தைப் பார்த்து, அதன் பொருட்டுத் தாங்களும் இந்த சாகபட்சணத்தையே (Vegetarianism) விரும்பி ஏற்று அநுஷ்டித்து வந்திருக்கிறார்கள். அவர்களைப் பார்த்து, வெளியிலிருந்து யாறும் கட்டுப்படுத்தாமலே மற்ற வருப்பாறும், ஒரு அம்மாவாஸை. ஒரு திதி, திவஸம், ஷஷ்டி இம்மாதிரி தினங்களில் மாமிஸ போஜனத்தை விலக்கி விடுகிறார்கள். நடைமுறையில் (Practical) எல்லோருக்கும் இயலாத ஒன்றை சகலர் மீது கட்டாயமாகதி திணிக்காமல், பக்குவிகளான சிலருக்கு மட்டுமே விதிப்பதால், அதுவே மற்றவர்களுக்கும் ஒரு உத்தம லட்சியமாகி (Ideal) அதை ஓரளவுக்காவது அவர்களும் பின்பற்றுகிறார்கள். மாறாக எல்லோருக்கும் இதை விதியாக்கிய இடங்களிலோ, எவருமே அதை அநுசரிக்காமல் ஹிம்ஸை அதிகரிப்பதோடு, அவர்கள் விதியை மீறிய தோஷத்துக்கு ஆளாகும்படி வேறு நேர்ந்திருக்கிறது. அஹிம்ஸை என்கிற தத்வம் ஒரு லட்சியமாகமாவாவது எல்லோருக்கும் இருக்க வேண்டும் என்பதால் அது சாமானிய தர்மங்களில் சேர்க்கப்பட்டிருக்கிறது. காரியம் எப்படி இருந்தாலும் மனசிலே துவேஷம் கூடாது என்பதுதான் நம் வைதிக

தர்மப்படி அஹிம்ஸையின் லட்சணம் (difinition).

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சத்தியம்

சகல மக்களுக்கும் அநுசரிக்க வேண்டிய சாமானிய தர்மங்களில் முதலாவது அன்பு (அஹிம்ஸை) அடுத்தது உண்மை (சத்தியம்)

சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றாக இருப்பதுதான். மனசில் ஒன்றும் வாக்கில் வேறொன்றுமாக இருந்தால் அதுவே அசத்தியம் என்று பெரியவர்கள் லட்சணம் சொல்லியிருக்கிறார்கள்.

**வாங்மனஸயோ. ஐக ரூப்யம் ஸத்யம்**

மனத்தில் உள்ளதை வெளியிட்டுச் சொல்வதற்கென்றே பகவான் மனிதனுக்குப் பேசும் சக்தியைத் தந்திருக்கிறார். மனத்தில் ஒன்றும் வாக்கில்

வேறொன்றுமாக நாம் நடந்து கொண்டோமானால் அடுத்த ஜன்மத்தில் நமக்குக் கொடுத்த பேச்சுத் சக்தியைப் பறித்துக் கொண்டு விடுவார். அதாவது மிருக ஜன்மத்தையே நமக்குத் தருவார்.

பூரண அஹிம்சைக்கு நமது சாஸ்திரத்திலேயே சில விலங்குகள் இருக்கின்றன. தர்மத்துக்காக யுத்தம் செய்யும் போதும், யாகயக்ஞங்களில் பலி தருகிற போதும் அஹிம்ஸைக்கு விலக்குத் தரப்பட்டிருக்கிறது. சத்தியத்துக்கு இவ்விதமாக விலக்கே இருக்க முடியாது என்று நினைப்பீர்கள். ஆனால் சத்தியத்துக்கும் வேறொரு விதத்தில் விலக்கு இருக்கிறது. அதைக் கொஞ்சம் விளக்குகிறேன்.

ஊரிலே பலவிதமான அயோக்கியர்கள் இருக்கிறார்கள்.

அதைப் பார்த்து வாஸ்தவமாகவே ஒருவருடைய மனது கொதிக்கிறது. அவன் இந்தத் தப்பையெல்லாம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறான். அவன் அந்த அயோக்கியத்தைச் செய்தான். இவன் இந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான் என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். ஆனால் இவன் அப்படிச் செய்வதான் இவனுக்கும் பிரயோஜனமில்லை. ஜனங்களுக்கும் பிரயோஜனமில்லை. இப்படி வியர்த்தமாக வாக்கும் மனசும் ஒன்றுபட்டிருப்பதை சத்தியம் என்று சொல்வதற்கில்லை.

ஒருவன் மனசில் கெட்ட எண்ணங்கள் எழுகின்றன. அதை அவன் அப்படியே வாக்கிலே வெளியிடுகிறான். அது சாத்தியமாகிவிடுமா. ஆகாது.

ஆகவே சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவது மட்டுமில்ல. நல்ல மனசிலே தோன்றுகின்ற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம் என்பதாக சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்.

ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்

பேச்சினாலும் காரியத்தினாலும் எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மையை உண்டாக்குவதே சத்தியம். கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கடுமையாகச் சொன்னால் அதை யாறும் ஏற்கமாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப்போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகாவும் இருக்க வேண்டும். அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.

சத்தியத்தைச் சொல், பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாக சொல்ல முடியவில்லை என்றால், அப்போது

அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமானாலும், அசத்தியத்தைச் சொல்லாதே. என்பது பெரியவாளின் வாக்கு.

ஸ்த்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத்

ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்

ப்ரியம் ச ந அந்ருதம் ப்ரூயாத்

காமமும் குரோதமும் உள்ள மனசிலிருந்து இப்படிப்பட்ட பிரியமான, நன்மையான வாக்கு வராது. க்ஷேமத்தையே உண்டாக்கும் சத்திய வாக்கு வரவேண்டுமானால், அதற்கு அடிப்படையாக காம, குரோதங்களற்ற நல்ல மனம் வேண்டும்.

ஆக சத்தியத்தின் லட்சணம், மனமும் வாக்கும் ஒன்று பட்டிருப்பது. மனம் சுத்தமாக இருப்பது. வாக்கு சாந்தமாக, ஹிதமாக இருப்பது. மொத்தத்தில் தனக்குச் சித்த சுத்தியையும் பிறருக்கு க்ஷேமத்தையும் உண்டு பண்ணுவது.

சத்தியத்திலேயே ஒருவன் நிலைத்து நின்று விட்டால் அதற்கு ஓர் அவாந்தரப் பிரயோஜனமும் உண்டு. அதாவது அந்த சத்தியசந்தன் உத்தேசிக்காமலே ஒரு பிரயோசனம் சித்திக்கும். அது என்னவெனில், ஒருவன் சத்தியமே பேசிப் பேசி பழகிவிட்டால் கடைசியில் அவன் எது சொன்னாலும் அது சத்தியமாகிவிடும். இப்படிப்பட்டவன் மனமறிந்து பொய் சொல்லவே மாட்டான். ஆனால், அறியாமையினாலோ தவறிப்போயோ அவன் ஒரு விஷடத்தைத் தப்பாகச் சொல்லி விட்டாலும், அந்தத் தப்பே கார்த்தத்தில் சத்தியமாக நடந்துவிடும். இதற்குத் திருஷ்டாந்தாரமாக ஒரு கதை சொல்கிறேன்.

திருக்கடவூரில் அபிராமி பட்டர் என்று அம்பாளின் பரம பக்தர் இருந்தார். அவர் அம்பாளையே நினைத்து பரவசமாகும்போது உன்மத்தரைப் போன்று பிதற்றுவார். இதைப் பற்றி சரபோஜி ராஜாவிடம் யாரோ துஷ்பிரயோகம் செய்தார்கள். அபிராமிபட்டர் ஒரு குடிகாரர், பக்தர் என்று வேஷம் போடுகிறார் என்று ராஜாவிடம் கோள் சொல்லிவிட்டனர். சரபோஜிக்கு இதைப் பரிசோதித்துப் பார்க்கத் தோன்றியது. ஒரு நாள் சரபோஜி திருக்கடவூரில்

அம்பாளை தரிசிக்க வரும்போது, அங்கே தன்வசமிழந்திருந்த பட்டரிடம், இன்றைக்கு என்ன திதி, என்று கேட்டான். அன்றைக்கு அம்மாவாஸை. பட்டரோ அம்பாளின் பூரண சந்திர முகத்தையே தியானம் செய்து பரவசமாக இருந்தார். எனவே அரசரிடம் இன்று பௌர்ணமி என்று சொல்லிவிட்டார். அரசன் தன்னிடம் மற்றவர்கள் பட்டரைப் பற்றிச் சொன்னது உண்மை என்றே நினைத்தான். பட்டரிடம் கேலியாக, அப்படியா சந்திரன் உதயமாகிவிட்டானா என்று ஆகாயத்தைப் பார்ப்போம் என்று தலையைத் தூக்கினான்.

அப்போது வாஸ்தவமாகவே ஆகாயத்தில் பூரண சந்திரன் வந்து நின்றது, அபிராமி பட்டர் சத்தியத்திலேயே ஊறியிருந்ததால், தவறிப்போய் அவர் அசத்தியத்தைச் சொன்னபோது, அம்பாளே தன் தடாங்கத்தைக் கழற்றி ஆகாயத்தில் வீசி, பூரண சந்திரனாக ஜொலிக்கச் செய்தாள்.

மகான்கள் செய்கிற ஆசீர்வாதம் அவர்கள் கொடுக்கிற சாபம் எல்லாம் அப்படியே பலித்து விடுவதற்குக் காரணம் அவர்களுடைய சத்தியத்தின் சக்திதான். அவர்கள் எது சொன்னாலும் நடந்துவிடும். இது சத்தியமாக

இருப்பதின் அவாந்தரப் பிரயோஜனம். ஆனால், தான் சொல்வதெல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசை கொண்டு அதன் பொருட்டாக ஒருவரும் சத்தியத்தை அநுஷ்டிக்கக்கூடாது. உத்தேசமில்லாவிட்டால்தான் இந்தச் சக்தி தானாக வருமே ஒழிய உத்தேசித்துவிட்டால் அப்புறம் அது அவாந்தரமே இல்லை.

கர்ப்பமாக நாம் தாயாரிடம் வைக்கப்படுவதிலிருந்து, கடைசீயில் தகனமாகிற வரையில் நம்மை சுத்தப்படுத்த சாஸ்திரங்களில் நாற்பது ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றது. அவற்றோடு, அஹிம்ஸை, சத்தியம், அஸ்தேயம், சௌசம், இந்திரிய நிக்ரஹம் இவையும் நம்மால் அநுஷ்டிக்கப்பட்டால், நம் அழுக்குகள் எல்லாம்போய் நாம் உண்மையில் யார்?, ஸ்வாமி என்பவர் யார்?, பரம சத்தியம் என்பது என்ன?என்பதை எல்லாம் அறிகிற பக்குவம் உண்டாகும். பிறர் பொருள் மீது ஆசைப்படாமலிருப்பதே அஸ்தேயம். சௌசம் என்பது சுசி

என்பதிலிருந்து வந்தது. சுசி என்றால் சுத்தம். வெளியே சுத்தமாக தூய்மையாக, ஆச்சாரமாக இருந்தால் அதுவே உள்தூய்மைக்கு உபகாரம் செய்யும். நீராடுவது மற்றபடி ஆச்சாரங்கள் சௌசத்தின் கீழ் வரும். இந்திரிய நிக்ரஹம் என்பது ரொம்பவும் முக்கியம். சரீர சந்தோஷத்துக்காக எதையும் செய்வது, எதை வேண்டுமானாலும் பார்ப்பது, எதை வேண்டுமானாலும் கேட்பது, எதை வேண்டுமானாலும் தின்னுவது, எதை வேண்டுமானாலும் பேசுவது என்றில்லாமல், இவற்றையெல்லாம் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவது இந்திரிய நிக்ரஹம் - புலனடக்கம் அதாவது யாராக இருந்தாலும் ஆசையைக் குறைத்துக் கொள்ள வேண்டும். ஆசை போகாமல் எந்த ஆத்ம சம்பத்தும் உண்டாகாது. இங்கே சொன்னதெல்லாம் சகல ஜனங்களுக்குமான சாமானிய தர்மங்கள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### எள்ளும் தண்ணீரும் எங்கே போயின

மநுஷ்யராகப் பிறந்தவர்கள் தங்களுடைய முன்னோர்கள், தெய்வம் இவர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். இதுவ் பித்ருக்கடன், தேவ காரியம் என்பவை. நம்முடைய சக ஜீவர்களுக்கு நம்மாலானதைச் செய்ய வேண்டும். ஆதித்யம் (ஒர் அதிதிக்காவது உணவு படைப்பது) அல்லது திருக்குறளிலே விருந்து என்பது இதுதான். இது மனுஷ யக்ஞம். பிரம்ம யக்ஞம் என்று இன்னொன்று. பிரம்மம் என்றால் பல அர்த்தம். இந்த இடத்தில் வேதம் என்று அர்த்தம். வேதம் ஓதுவதும், ஓதுவிப்பதுமே பிரம்ம யக்ஞம். இது ரிஷிகளின் திருப்திக்காக ஏற்பட்டது. இது எல்லோரும் செய்வதல்ல. எல்லோருக்காகவும் பிரமண ஜாதியினர் மட்டும் செய்வது. எல்லோரும் செய்வதற்காக ஏற்பட்ட இன்னொரு கர்மம் பூத யக்ஞம் அதாவது மனுஷ்ய ஜீவனாக இல்லாத

ஜீவராசிகளுக்குக்கூட நம் அன்பைத் தெரிவித்து உணவூட்டுகின்ற காரியம். பித்ரு யக்ஞும், தேவ யக்ஞும், மநுஷ்ய யக்ஞும், பூத யக்ஞும் இவற்றை எல்லோரும் ஏதோ ஒரு ரூபத்தில் செய்யக் கடமைப் பட்டிருக்கின்றோம். வைதிகத் தர்மப்படி அவரவரும் தங்களுக்கான

தொழிலைச் செய்து ஈசுவரார்ப்பணம் பண்ணுவதே அவரவருக்கும் பிரம்ம யக்ஞும் என்று சொல்லலாம்.

வேத நெறியில் சொல்லப்பட்டதையே ஏறக்குறைய திருவள்ளுவரும்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

தென்புலத்தார் என்பது பித்ருக்கள். பித்ருக்களான தாய் தந்தையார்களுக்கும் மூதாதையார்களுக்கும் நமது கடைமைகளை எல்லோரும் அவசியம் செய்தாக வேண்டும். மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ என்று வேத மாதாவும், இங்கே நம் எல்லோருக்கும் வேத ஸாரத்தையே லகுவாகப் பிழிந்து கொடுத்தவை அவ்வை. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்றும் சொல்லுகிறார்கள். தாய் தந்தையர் ஜீவிய வந்தர்களாக இருக்கையில், அவர்களிடம் பணிவுடன் நடந்து கொண்டு, அவர்களுக்கு நம்மால் இயன்ற செனக்கியமெல்லாம் செய்து தரவேண்டும். தாய் தந்தையார் நமக்காக ஆதியில் செய்துள்ள தியாகங்களுக்கு நாம் பிரதியே செய்ய முடியாது. அவர்களது மனம் கோணாமல் அவர்களை வைத்துக் காக்க வேண்டும்.

அவர்கள் இந்த உலகத்தை விட்டுப்போன பிற்பாடும், அவர்களுக்காக சாஸ்திரப் பிரகாரம் தர்ப்பணம், சிரார்த்தம் (திதி) இவற்றை அனைவரும் தவறாமல் செய்ய வேண்டும். பெற்றோர் உயிரோடு இருக்கும் வரையில் அவர்களை வைத்துப் பராமரிக்க வேண்டும் எந்பதை சீர்திருத்தக்காரர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால், அவர்கள் மரண மடைந்த பின் பித்ரு காரியம் செய்வது அவர்களுக்குப் பரிகாசமாக இருக்கிறது.

எள், தர்ப்பண ஜலம், பிண்டம், அரிசி, வாழைக்காய், சாப்பாடு எல்லாம் இங்கேயே இருக்கின்றன. அல்லது கண்

முன்னாலேயே ஒருத்தன் எடுத்துப் போனான். அல்லது சாப்பிட்டுவிட்டான். அல்லது சாப்பிட்டு விட்டான். பிதிரர்கள் எங்கேயோ மறு ஜன்மா எடுத்து விட்டார்கள் என்று நீரே சொல்கிறீர். அப்படியிருக்க இங்கே உள்ள வாஸ்து அங்கே போய் அவர்களை சேருகிறது என்பது பைத்தியக்காரத்தனம் அல்லவா. எங்கு சீர்த்திருத்தக்காரர் கேட்கிறார். அவர் வாய்விட்டுக் கேட்கிறார். உங்களில் பலருக்கும் மனசுகள் இப்படிச் சந்தேகம் இருக்கலாம். உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன்.

ஒருவர் பட்டணத்தில் படிக்க வைத்திருந்தார். அவர் பரிட்சைக்குப் பின் பணம் கட்டவேண்டியிருக்கிறது. அதுவும் மறுநாள் கட்ட வேண்டியிருக்கிறது. உடனே அப்பாவுக்கு தந்தி மணியாடரில் பணம் அனுப்பு என்று எழுதினான். அப்பாவுக்குத் தந்தியும் மணியார்டரும் தனித்தனியாகத் தெரியும். பிள்ளையோ தந்தி மணியார்டர் அனுப்பும்படி எழுதியிருக்கிறான். அப்பா தபாலாபீயுக்குப் போனார். ரூபாயைக் கொடுத்துவிட்டுத் தந்தி மணியார்டர் பண்ண வேண்டும் என்றார். அவர், தபாலாபீஸ் குமாஸ்தா ரூபாயில் ஒட்டை பண்ணித் தந்திக் கம்பியில் கட்டி அனுப்புவார் என்று எண்ணினார். ஆனால் பணம் வாங்கிக் கொண்ட குமாஸ்தா ரசீது கொடுத்துவிட்டு, சரி, உம்முடைய பணம் வந்து சேர்ந்துவிடும். அனுப்பியாகிவிட்டது என்றார். குமாஸ்தா

பணத்தை பெட்டியில் போட்டதையும், ஒட்டை பண்ணிக் கம்பியில் கோர்க்காமலிருப்பதையும் பார்த்த அப்பாக்காரர், என் பணம் இங்கேதானே இருக்கிறது. அதில் ஒட்டை ஒன்றும் போட்டு அனுப்பவில்லையே. அது எப்படிப் போய்ச் சேரும் என்று கேட்டார். அது போய்ச் சேர்ந் துவிடும் என்று மறுபடியும் குமாஸ்தா சொன்னார். கட்டுக் கடகடஎன்று தந்தியும் அடித்தார். ஏதோ லொட்டு லொட்டென்று சப்தம் பண்ணுகிறான். சேர்ந்துவிடும் என்று சொல்கிறான். ருபாய் இங்கே இருக்கிறது. லோட் லோட்டென்று கட்டையை இங்கே அடித்தால் அங்கே எப்படிப் போய்சே சேரும். என்று அப்பாவுக்குச் சந்தேகம் வந்து விட்டது.

ஆனால் பணம் பணம் சேர்ந்து விட்டது. தர்ப்பணம் முதலிய பண்ணுவதும் அந்த மாதிரியே ஆகும். நாம் எதைக் கொடுத்தாலும் அதற்கென சட்டப்படி கொடுக்க வேண்டும்.

சாஸ்திரம் என்கிற சட்டம் விதித்தபடி நாம் கொடுப்பதைத் தெரிந்து கொள்கிற பிதுர் தேவதைகள் அது யாறுக்குப் போய்ச் சேர வேண்டுமோ அவர்களுக்குச் சேர்த்து விடுவார்கள். பிதிருக்கள் மாடாகப் பிறந்திருந்தால் வைக்கோலாக்கிப் போட்டுவிடுவார்கள். குதிரையாகப் பிறந்திருந்தால் புல்லாக்கிப் போட்டிருப்பார்கள். பிதுர் தேவதைகளுக்கு பரமேஷ்வரன் இப்படி உத்தரவு பண்ணி, இதற்கான சக்தியும் தந்திருக்கிறார். ஆகையால் சிரார்த்தத்தன்று கொடுப்பதைப் பெற்றுக் கொள்ள அப்பா நேரில் வர வேண்டியதில்லை.

தந்தி மணியார்டர் ச்தவனுடைய பணமோ வாங்கிக் கொள்ளுகிறவனிடம் நேராகப் போவதில்லையலாலவா. மணியார்டர் பெறுகிறவன் வேறு தேசத்தில் இருந்தால் அங்கே நம் ரூபாய் நோட்டு செல்லவே செல்லாது. இங்கே ரூபாயைக் காட்டிலும் வெளி தேசத்தில் டாலராகவோ, பவுனாகவோ மாற்றித்தரவும் ஏற்பாடு இருக்கிறது. ஆனால், நம் ஊரில் டாலரையோ பவுனையோ மாற்ற முடியாது. இங்கே செல்லுபடியாகிற ரூபாயைத்தான் ஏற்றுக்கொள்ளுவார்கள். அப்படியே சாஸ்திரப் பிரகாரம் விதிக்கப்பட்ட எள், தண்ணீர், வாழைக்காய் இதுகளை ஏற்ற உணவாக மாற்றித் தரப்படும்.

பிதிருக்களிடம் நமக்குள்ள நன்றி மனோபாவமும், சாஸ்திரத்தில் நமக்குள்ள சிரத்தையுமே முக்கியம். இன்னொருவனுடைய ஆரோக்கியத்துக்காக நான் டோஸ்ட் சாப்பிடுகிறேன். என்று பார்ட்டியில் வெள்ளைக்காரர்களும் வெறொருவன் போரைச் சொல்லிக் கொண்டு தாங்களே போஜனம் செய்கிறார்கள். தங்களுடைய மனோபாவத்தின் சக்தியால் இன்னொருவனுக்கு ஆரோக்கியம் உண்டாகும் என்று நம்பி அப்படிச் செய்கிறார்கள். சிராத்தம் என்பதற்கே சிரத்தையோடு பண்ணுவது என்பது அர்த்தம். சிரத்தை நமக்கு முக்கியம். ஒரு காரியம் என்று பண்ண ஆரம்பித்தால் அதற்குரிய சட்டப்படியாகத்தான் பண்ண வேண்டும். லெட்டர் எழுதினால், இப்படித்தான் அட்ரஸ் எழுதுவேன். அந்தத் தபால் பெட்டியில் போடுவானேன். எங்கள்களத்தில் அதைவிட நல்ல பெட்டி செய்து அதில் போடுவேன் என்று சொல்லலாமா. காரியமில்லாத மனோபாவமாக இருக்கிற வரையில் அன்பு, பக்தி, ஞானம் இலற்றைக் கட்டுப்பான்றிச்

செலுத்தலாம்.

காரியம் என்று செய்கையில் அதற்காக ஏற்பட்ட விதியை விடவே கூடாது.

## பூஜை

தென்புலத்தார், தெய்வம் என்று குறள் சொல்வதில் இரண்டாவதான தேவ காரியத்துக்கு வருகிறேன்.

ஒவ்வொரு குடும்பத்திலும் ஈசுவர பூஜை நடக்க வேண்டும். செளகரியப்பட்டவர்கள் விஸ்தாரமான பூஜைகளை எடுத்துக் கொண்டு செய்யலாம். செளகரியமில்லாவிடில் சுருக்கமாக செய்தாலும் போதும். பத்தே நிமிஷம் போதும்.ஆபீடுக்குப் போகிறவர்களும் இப்படிச் சுருக்கமாகவாவது பூஜை என்ற ஒன்றை செய்ய வேண்டும். எல்லாக் குடும்பத்திலும் ஒரு மணிச் சத்தம் கேட்க வேண்டும்.

ஈசுவரன், அம்பாள், விஷ்ணு, நிநாயகர், சூரியன் இந்த ஐந்து பேருக்கும் மூர்த்தி வைத்துப் பூஜை செய்ய வேண்டும். இதற்குப் பஞ்சாயதான பூஜை என்று பெயர். அங்கங்களோடு விக்கிரகங்களாக இல்லாமல் இந்த ஐந்தையும் இயற்கையாகவே கிடைக்கும் ஐந்து வஸ்துக்களில் ஆவாஹனம் செய்து பூஜை செய்வது சம்பிரதாயம்.

இவற்றில் ஈசுவரனுக்குரிய பாண லிங்கம் நர்மதை நதியில் ஓங்கார குண்டத்தில் கிடைக்கிறது. அம்பிகையின் ஸ்வரூபமான ஸ்வர்ணமுகி சிலா என்ற கல் ஆந்திராவில் ஸ்வர்ணமுகி ஆற்றில் கிடைக்கிறது. அது தங்க ரேக் ஓடிய கல். விஷ்ணுவின் வடிவமான ஸாலக்கிராமம் நேபாளத்தில் கண்டகி நதியில் அகப்படுகிறது. சூரியனுக்கிறிய ஸ்படிகம் தஞ்சாவூரில் வல்லத்துக்குப் பக்கத்தில் கிடைக்கிறது. விநாயகருக்கு உருவான சோணபத்ரக் கல், கங்கையிலே கலக்கிற சோணா (ஸோன் என்பார்கள்) நதியில் அகப்படுகிறது. ஆக, இந்த ஐந்தையும் ஒரிடத்தில் வைத்தால் இந்தத் தேசம் முழுவதையுமே ஒன்று சேர்த்து வைத்தது போல் ஆகும்.

இந்த ஐந்தில் ஒன்றுக்காவது கண், மூக்கு, காது இல்லை. எனவே, இடுக்குகளில் அழுக்கேறுவது கிடையாது. அபிஷேகம் செய்து துடைக்க நாழியே ஆகாது. எல்லாம்

சின்னச் சின்ன கற்கள்.எல்லாமாகச் சேர்ந்தாலும் கொஞ்சம் இடத்தைத்தான் அடைத்துக் கொள்ளும். பெரிய பூஜா மண்டபம் கூடத் தேவையில்லை. ஒரு சின்ன சம்புடத்தில் போட்டு வைத்து விடலாம். ஆவாஹனம் பண்ணி, சந்தனம், குங்குமம் அக்ஷதை வைத்து, அர்ச்சனை செய்து நைவேத்தியம் காட்டலாம்.

வெளியூருக்குப் போதும்போதுகூடப் பத்து நிமிஷம் இப்படிப் பூஜை செய்வதில் சிரமமில்லை. வெளியூரில் அர்சனைக்குப் பூ கிடைக்குமா என்று கவலைப்பட வேண்டாம். வில்வதிதையும் துளசியையும் உலர்த்தி வைத்துக் கையில் எடுத்துப் போனால் ஈசுவரனையும் விஷ்ணுவையும் அதனாலேயே அர்ச்சிக்கலாம். மற்றவர்களுக்கு அக்ஷதையால் அர்ச்சனை செய்யலாம். நைவேத்தியத்துக்கு சுத்தமான அன்னம் வெளியூர்களில் கிடைக்குமா என அலட்டிக்கொள்ள வேண்டாம். காய்ந்த திராக்ஷைப் பழத்தைக் கையோடு

வைத்திருந்து நிவேதித்து விடலாம்.

ஐந்து மூர்த்திகள், துளஸி - வில்வ பத்திரங்கள், திராக்ஷை, அக்ஷதை இந்த எல்லாவற்றையுமே கையடக்கமாக ஒரே சம்புடத்தில் போட்டு வைத்துக் கொண்டு விடலாம்.

இந்த ஐந்து மூர்த்திகளுக்குச் செய்வது பஞ்சாயதன பூஜை எனப்படும். பிராசீனமாக நம் தேசத்தில் இருந்து வந்த இந்தப் பத்ததியை சங்கர பகவதி பாதாள் புது ஜீவனோடு பிரகாசிக்கும் படியாகச் செய்தார். ஷண்மத ஸ்தாபனம் என்று வருகிறபோது இவற்றோடு சுப்பிரமணிய உபாஸனையையும் நிலை நாட்டினார். எனவே, மேலே சொன்ன ஐந்தோடு நாமும் ஒரு வேளை வைத்து வேலாயுதனை பூஜிக்கலாம்.

பூஜை என்பதற்காக பெரிய சிரமம் எதுவும் தேவையில்லை. மனசு இருந்தால் வெகு சுலபத்தில் எல்லோரும் எங்கேயிருந்தாலும் பூஜை செய்யலாம் என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

வீட்டிலே இருந்தால் மகா நைவேத்தியம் எனப்படும் அன்னத்தை ஸ்வாமிக்குக் காட்ட வேண்டியது அவசியம். நாம் அநுபவிப்பதற்காகப் பிரபஞ்சம் முழுவதையும் ஈசுவரன் நமக்கென விட்டிருக்கிறார். பலவிதமான போக்கிய

வஸ்துக்களை வெளியிலே உம்டாக்கி, அவற்றை அநுபவிக்கிற இந்திரியங்களை நம்மிடம் வைத்திருக்கிறார். எனவே, நாம் அநுபவிப்பதையெல்லாம் அவருக்குச் சமர்ப்பித்துவிட்டே உபயோகித்துக் கொள்ள வேண்டும். உண்மையில் அவருக்கே என்றா அன்னத்தைக் கொடுத்து விடுகின்றோம். வெறுமே அவரிடம் காட்டுகிறோம். பிறகு நாம்தான் புசிக்கிறோம்.

நைவேத்தியம் செய்தால் ஸ்வாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் ஸ்வாமியைச் சாப்பிடவிடுவது என்று அர்த்தமேயில்லை. அவருக்கு சாப்பிட்டு ஒன்றும் ஆக வேண்டாம். நம் நினைவினை சுத்தமாக்கிக் கொள்ளத்தான் பூஜை முழுவதுமே தவிர, அவருக்கு இதனால் ஆவது ஒன்றுமில்லை. நிவேதயாமி என்றால் அரிவிக்கிறேன் என்று அர்த்தமே தவிர, உண்பிக்கிறேன் என்று அர்த்தமில்லை. அப்பனே, இந்த வேளைக்கு உந் கருணையில் நீ இந்த அன்னத்தைக் கொடுத்திருக்கிறாய் என்று அவனுக்குத் தெரிவித்துவிட்டு அவனுடைய நினைவோடு உண்ண வேண்டும். அவன் அருள் இல்லாவிட்டால் இந்த அரிசி எப்படி விளையும். ஸயன்ஸ் நிபுணர் அரிசி வகைகளை ஆராய்ந்து பெரிய பெரிய புஸ்தகங்கள் எழுதலாம். ஆனால் அவரால் ஒரு மணி அரிசியைச் செய்யமுடியுமா. செய்ற்கை அரிசி (Synthetic rice) என்று ஒன்றைச் செய்ய முடிந்தால்கூட இதற்கு மூலமாக கெமிகல்ஸ் ஏற்கனவே பகவத் சிருஷ்டியில் இருந்துதானே வந்தாக வேண்டும். எனவே மனிதன் செய்ததாகத் தோன்றும் எல்லாமும்கூட முடிவிலே ஈஸ்வரன் சிருஷ்டித்ததுதான். பரமேஷ்வரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக் காட்டாமலே நாம் அநுபவித்தால் திருடர்களாகின்றோம்.

எங்கும் இருக்கும் அவன், நாம் இருக்கச் சொல்லும் இடத்தில், நாம்

கிரகிக்கும்படி நிற்பான். கல், மண், செம்பு முதலிய எந்த பிம்பத்தில் வைத்துக் கூப்பிட்டாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்கியதையும், கருணையும் அவனுக்கு நிச்சமாக இருக்கிறது. இல்லை என்றால் அப்படிப்பட்ட ஸ்வாமி நமக்கு வேண்டவே வேண்டாம்.

அவனைப் பூஜை என்று வைத்து ஒவ்வொரு குடும்பத்திலும் கூப்பிட்டு, அவனால் கொடுக்கப்பட்டதை உபயோகிக்கிறோம் என்று அன்றாடம் அறிவிக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் ஈஸ்வரனுக்கு நிவேதனமாக அர்ப்பிக்கத்தக்கதைத்தவிர வேறெதையுமே நாம் உபயோகிக்கக்கூடாது என்ற பக்குவம் நாளடைவில் உண்டாகும். நல்லவர்களாவோம்.

## பரோபகாரம்

பிதிர்கடன், பரமேசுவர பூஜையான வேத யக்யம் எல்லா ஜீவராசிகளுக்கும் உணவு படைப்பது ஆகியவற்றை வைதிக மதம் விதிக்கிறது. திருவள்ளுவரும் இதே தர்மத்தைத்தான் விதித்திருக்கிறார்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

வள்ளுவர் வேதப் பிராமணத்தை மதித்தே குரள் எழுதினார் மிகவும் ஆதரவாக இருக்கப்பட்ட குரள்களில் இதுவும் ஒன்று. திருவள்ளுவர் வைதிக மதஸ்தரே அல்ல. அவர் ஜைனர் அல்லது பௌத்தர் அல்லது எல்லா மதங்களையும் கடந்தவர். வேதம் கூறும் தர்மங்களுள் ஹிமைஸையுள்ள யாகத்தைத் திருவள்ளுவர் வெளிப்படையாகவே கண்டிக்கிறார் என்று சிலருக்கு அபிப்பிராயம். கீழ்கண்ட குரளை மேற்கோள் காட்டுகிறார்கள்.

அவிசொரித்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்

உயிர்செகுத்து உண்ணாமை நன்று

ஹவிஸை அக்னியில் ஆஹுதி செய்து ஆயிரம் யாகம் செய்வதைவிட, ஒரு பிராணியையும் வதைத்து உண்ணாமலிருப்பது சிரேஷ்டம் என்று இதன் அர்த்தம். இதைப் படித்த பின்னும்கூட என் அபிப்பிராயமோ திருவள்ளுவர் வைதிக அநுஷ்டானங்கள் அனைத்திலும் பூரண நம்பிக்கை கொண்டவர் என்பதே. காவிரியின் பெருமையைச் சொல்ல வந்த ஒருவர். ஆயிரம் கங்கையைவிட ஒரு காவிரி உயர்ந்தது என்று சொன்னால் கங்கையும் உயர்ந்தது என்று சொல்னால், கங்கையும்

உயர்ந்ததும் என்றே அர்த்தமாகும். காவிரியைச் சிலாகித்துப் பேச விரும்புகிற ஒருவர், ஆயிரம் சாக்கடையைவிட ஒரு காவிரி உயர்ந்தது என்று சொல்வாரா. அப்படியே திருவள்ளுவர் அஹிம்ஸையைச் சிலாகித்துப் பேசும்போது, ஆயிரம் யாகத்தைவிட அஹிம்ஸை உயர்ந்தது என்றால் யாகமும் உயர்ந்தது என்றே அர்த்தமாகும். ரொம்ப உயர்ந்த ஒன்றைச் சொல்லி அதைவிட இது ரொம்ப ரொம்ப உசத்தி என்றுதானே சொல்வது வழக்கம்.

இந்தக் குறள் இல்லர இயலில் சொல்லப்படவில்லை. துறவற

இயலிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. துறவிக்கு யாகத்தில் அதிகாரம் இல்லை. அவனுக்கு மட்டுமே வைதிக மதம் பூரண அஹிம்ஸையை விதித்திருக்கிறது. அதையே வள்ளுவரும் வலியுறுத்துகிறார்.

உலகத்துக்கெல்லாம் உபயேகமான ஒரு கிரந்தத்தை தந்திருக்கும் திருவள்ளுவர் வைதிகத்தை ஆட்சேபிக்கும் நாஸ்திகர் இல்லை. திருவள்ளுவர் விருந்து என்று சொல்கிற விருந்தோம்பல் வைதிக மதத்தில் மனுஷ யக்யம் எனப்படும் விருந்தோம்பல் என்பதே. இன்னும் குஞ்சம் விரித்தால் அன்னதானம் எனக் கொள்ளலாம்.

ஒவ்வொரு குடும்பத்திலும் சமைப்பதற்காகப் பானையில் அரிசி போடும்போது பகவானை நினைத்துக் கொண்டு, ஏழைகளுக்கு என்று ஒரு பிடி அரிசியை ஒரு கலயத்தில் போட்டுவிட வேண்டும். இப்படிப் பல குடும்பங்களில் தினமும் போட்டு வைப்பதைப் பேட்டைக்குப் பேட்டை சேகரித்து, சமைத்து ஆங்காங்குள்ள ஆலயத்தில் நிவேதனம் செய்து, ஏழைகளுக்கு அளிக்க வேண்டும். ஒருபிடி அரிசியோடு ஒரு பைசாவும் தினந்தோறும் போட வேண்டும். சேகரித்த அரிசியைச் சமைப்பதற்காக விறகுக்கு, சாதத்தில் சேர்த்துக் கொள்ள மிளகுப் பொடியோ அல்லது வேறு ஏதாகிலும் வியஞ்சனமோ தயாரிப்பதற்கு, சமையல் பாத்திர வாயகைக்கு இப்படி மேல் செலவுகளுக்குத்தான் அந்த ஒரு பைசா. இந்த திட்டத்தை நடத்திக் காட்டுவது பெரிய பரோபகாரம். பசித்து வந்த ஏழைகளுக்கு ஈஸ்வரனின் கோயிலில் இப்படி பிரசாதம் கிடைக்கிறது என்றால் வயிறும் மனசும் குளிரும். இதனாலாவது கோயிலுக்கு வருகிற வழக்கம் ஏற்பட்டு பக்தியும் வளரும். வெறுமே சாப்பாடு

என்றில்லாமல், ஈசுவரனுக்கு நிவேதனமாக பிரசாதம் என்று இருப்பால் அந்த அன்னம் சித்தசுத்தியும் அளிக்கும்.

அன்னதானம் பரோபகாரத்தில் ஓர் அம்சமே. பரோபகாரம், சமூகசேவை, ஸோஷல் சர்வீஸ் என்று இந்த நாட்களில் ஆர்ப்பாட்டமாக பிரகடனம் பண்ணுவதை, முற்காலங்களில் எந்தப் பகட்டுமில்லாமல் சுபாவமாக்கவே பொதுமக்கள் செய்து வந்தனர். இதற்குப் பூர்த்த தர்மம் என்று ஒரு பெயர் இருக்கிறது. ஜனங்களுக்காகக் கிணறு, குளம் வெட்டுவது, அன்ன தானம், அவர்களின் ஆத்ம க்ஷேமத்துக்காகக் கோவில் கட்டுவது. அதன் அமைப்பாக நந்தவனம் அமைப்பது எல்லாம் பூர்த்த தர்மத்தில் சேர்ந்தவை. இதில் கிணறு, குளம் வெட்டுவது முதலில் சேர்க்கப்பட்டுள்ளது. அதனால் பேச்சு வழக்கில்கூட, அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான். வெட்டிக் கொண்டு இருக்கிறானா என்கிறோம். வெட்டுவது அவ்வளவு பெரிய தர்மம். தாகமெடுத்த பசுக்களும் மற்ற பிராணிகளும் நீர் அருந்துவதற்காகத் கிராமத்துக்கு வெளியே மேய்ச்சல் பூமியில் ஒரு குளம் வெட்டினால் எவ்வளவோ புண்ணியம். ஒரு கிராமத்தில் அல்லது பேட்டையில் இருக்கிற சகலரும் - பணக்காரர், ஏழை என்கிற வித்தியாசமில்லாமல் ஒன்று சேர்ந்து மண்வெட்டியை கையில் எடுத்துக் கொண்டு இப்படிப்பட்ட சரீரப் பிரயாசையுள்ள பரோபகார சேவையில்

ஈடுபட வேண்டும். இதனால் சமூக ஒற்றுமையும் அதிகமாகும். புத்தியை சுத்தப்படுத்திக் கொள்வதற்காக கல்வி, மனசு சுத்தமாக தியானம்ஸ வாக்கு சுத்தமாக சுலோகம் இப்படியெல்லாம் இருக்கின்றன அல்லவா. சரீரம் சுத்தமாவதற்கு அந்த சரீரத்தால் சேவை செய்ய வேண்டும். உழைக்க உழைக்க சித்த சுத்தியும் வரும். உயர்ந்தவன் தாழ் ந்தவன் என்றில்லாமல் எல்லோருடனும் சேர்ந்து மண்ணை வெட்டும்போது அகங்காரத்தையும் வெட்டி எடுத்ததாகும். குளத்தில் தண்ணீர் ஊற்றுவதைவிட நம் இருதயத்தில் ஊறுகிற அன்பே முக்கியம். வெளிவேஷம், டெமான்ஸ்ட்ரேஷனே வேண்டாம். அவரவரும் பிறருக்குத் தெரியாமல் ஏதாவது ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கேயிருக்கிற கண்ணாடித் துண்டிகளை அப்புறப்படுதிதனால்கூடப் போதும் - அதுவே பரோபகாரம். சித்த சுத்தி என்கிற ஆத்ம லாபமும் ஆகும்.

பகவத் ஸ்வரூபமாக எல்லோரையும் நினைத்து, நமக்குக் கர சரணாகதிகள்க் கொண்டு பரோபகாரம் செய்வோம்.

## சேவையே மேலான பாக்கியம்

மனிதனாகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. எல்லா பாக்கியங்களுக்கும் மேலாக பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.

சேவை என்று தெரியாமலே அவரவரும் குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவை செய்யவேண்டும் என்கிறேன். நமக்கு எத்தனையோ கஷ்டங்கள், உத்தியோகத்தில் தொந்திரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை இத்யாதி இருக்கின்றன. நாம் சொந்தக் கஷ்டங்களுக்கு நடுவில், சமூக சேவை வேறா என்று எண்ணக்கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதனாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடுகூட அசலார் குழந்தைக்குப் பாலூட்டினால், தன் குழந்தை தானே வளரும் என்றபடி, நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மை சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால் இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமல், பிறர் கஷ்டத்தைத் தீர்க்க நம்மாலானதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும். அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும். நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

மனிதர்களுக்கு மட்டுமின்றி, மாடு போன்ற ஜீவன்களுக்கும் சேவை செய்ய வேண்டும். பழைய நாளில் கால்நடைகளுக்காக என்றே குளம் வெட்டுவது. அவை தினைவு தீர்த்துக் கொள்வதற்காக உராந்து கொள்வதற்கு அங்கங்கே கல் போடுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தினமும் ஒவ்வொருவரும் ஒரு மாட்டுக்கேனும் ஒரு பிடி புல்லோ, அகத்திக் கீரையோ கொடுக்க வேண்டும். மாட்டுக் ஒரு பிடி

புல் கொடுப்பதை "கோ க்ராஸம் என்றால் ஒரு வாயளவு (Mouthful) இங்கிலீஷில் புல்லை grass என்பதுகூட இதிலிருந்தே வந்திருக்கலாம்.

யாகம், யக்ஞும், தர்ப்பணம், திவஸம் முதலிய இந்த உலகத்தில் இருப்பவர்களுக்கு மட்டுமின்றி, மற்ற உலகங்களிலிருப்பவர்களுக்கும் நம் சேவையை விஸ்தரிக்கின்றன என்ற உணர்வோடு அவற்றைச் செய்ய வேண்டும். இவையெல்லாம் மந்திரத்தோடு சேர்த்துச் செய்யப்படும் சேவை.

நம்மைப் போலவே செய்ய விருப்பம் உள்ளவர்களை எல்லாம் சேர்த்துக் கொண்டு எல்லோரும் ஒரே சங்கமாக ஒரே அபிப்ராயமாக இருந்து கொண்டு சேவை செய்வது சிலாக்கியம். அப்படிப் பலர் கூடிச் செய்யும்போது நிறையப் பண் செய்ய முடியும். சத்தியத்தாலும் நியமத்தாலும் இப்படிப்பட்ட சங்கடங்கள் உடையாமல் காக்க வேண்டும். பரோபகாரம் செய்பவர்களுக்கு ஊக்கமும், தைரியமும் அத்தியாவசியம். மான அவமானத்தைப் பொருட்படுத்தாத குணம் வேண்டும்.

பொழுதுபோக்கு என்று ருசியாகத் தின்கிற இடத்திலும், கண்களைக் கவர்கிற காட்சிசாலைகளிலும் பொழுதை வீணாக்குவது தவறு. இந்தப் பொழுதை பிறருக்குச் சேவை செய்வதில் செலவழிக்க வேண்டும்.

வாழ்க்கைத் தொல்லைகளிலேயே கொஞ்சம் உல்லாசமாகப் போக்குவது ஒரு தப்பா என்று கேட்பீர்கள். உங்களுக்குச் சொல்கிறேன். பரோபகாரமாகச் சேவை செய்தால் அதுவே பெரிய உல்லாசம் என்று தெரியும். அதுவே விளையாட்டு. அதுவே இன்பம்.

கிருஷ்ண பரமாத்மா இப்படித்தான் வெளியிலே விளையாடுவதாகத் தெரிந்தாலும், உள்ளே அத்தனையும் பரோபகார சேவைதான் செய்தான். எத்தனை பேருடைய, எத்தனை எத்தனை கஷ்டங்களை விளையாட்டாகவே போக்கடித்தான். குன்றைத் தூக்கிப் பிடித்தது விளையாட்டு மாதிரி இருக்கும். ஆனால் கோபர்களைக் காப்தற்கே அவ்வளவு பெரிய மலையை பாலகிருஷ்ணன் தூக்கினான்.

சின்னக் குழந்தை விஷம் கக்கும் காளிங்கனின் படத்திலே நர்த்தனம் செய்தது வெளியிலே பார்த்தால் விளையாட்டு. உண்மையில் அதுவும் ஜனங்களைக் காத்து அவர்களுக்கு நீர் நிலையை மீட்டுத் தருவதற்காக செய்த சேவைதான். இப்படித்தான் எத்தனையோ சேவைகள் செய்தான். இப்படித்தான் எத்தனையோ விளையாட்டுகள் செய்தான். அத்தனையும் சேவை. எவனைப்போல் விளையாடினவன் இல்லையோ அவனைப்போல் சேவை செய்தவனும்மில்லை என்று கிருஷ்ண பரமாத்மாவின் உதாரணத்தில் பார்க்கிறோம். லௌகிக சேவை மட்டுமில்லை. ஞான சேவையும் நிறைய செய்தான். அர்ஜுனன், உத்தவர் போன்றவர்களுக்கு மகா உபதேசங்கள் செய்தான். சேவை, ஞானம், விளையாட்டு எல்லாம் அவனிடம் ஒன்றாக இருந்தன. துளிக்கூடப் பற்றுதல் இன்றியே இத்தனையும் செய்தான். அதனாலேயே அநாயசமாகச் செய்ய முடிந்தது. நம்மிலும் சேவை செய்கிறவர்களுகெல்லாம் இந்தச் சிரிப்பும் சாந்தமும் எப்போதும் இருக்க வேண்டும். தைரியம், ஊக்கம் இவற்றோடு.

பகவான் எடுத்த பல அவதாரங்களில்
கிருஷ்ணவதாரத்திலிதான்

சேவை அதிகம். ராமாவதாரத்தில் சேவைக்கென்றே ஆஞ்சநேயஸ்வாமி வந்தார். இவர்கள் இருவரையும் ஸ்மரித்து நாமும் சுத்தமான உள்ளத்துடன், எந்த சுய நலமும் கருதாமல் எவ்வித விளம்பரத்துக்கும் ஆசைப்படாமல் சேவை செய்ய வேண்டும். நமக்குத் தீட்டு ஏற்பட்டால் அச்சமயத்தில் உலகோடு சேர முடியாமல் ஒதுங்கியிருக்கிறோமல்லவா. அவ்விதமே உலகுக்கு உபயோகமாக சேவை செய்யாத ஒவ்வொரு நாளும் நமக்கு தீட்டுநாள் என்று கருதி, அவரவரும் தம்மாலான சேவையில் ஈடுபடவேண்டும்.

ஜீவராசிகளுக்கு செய்கிற உபகாரத்தால் சகல பிராணிகளுக்கும் மாதா பிதாவாக இருக்கப்பட்ட பரமேஷ்வரனுக்கே பூஜை பண்ணியதாக ஆகிறது. இதைத்தான் திருமூலர் திருமந்திரத்திலும் சொல்லியிருக்கிறது.

நடமாடக் கோயில் நம்பர்க் கொன் றீயின்

படமாடக் கோயில்பகவற்கீ தாமே.

இதற்கு அர்த்தம், மக்களுக்குச் செய்கிற உதவி சாட்சாத் ஈசுவர ப்ரீதியாகச் செய்கிற பூஜையே ஆகும் என்பது.

---

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### பூஜை

தென்புலத்தார், தெய்வம் என்று குறள் சொல்வதில் இரண்டாவதான தேவ காரியத்துக்கு வருகிறேன்.

ஒவ்வொரு குடும்பத்திலும் ஈசுவர பூஜை நடக்க வேண்டும். சௌகரியப்பட்டவர்கள் விஸ்தாரமான பூஜைகளை எடுத்துக் கொண்டு செய்யலாம். சௌகரியமில்லாவிடில் சுருக்கமாக செய்தாலும் போதும். பத்தே நிமிஷம் போதும்.ஆபீடுக்குப் போகிறவர்களும் இப்படிச் சுருக்கமாகவாவது பூஜை என்ற ஒன்றை செய்ய வேண்டும். எல்லாக் குடும்பத்திலும் ஒரு மணிச் சத்தம் கேட்க வேண்டும்.

ஈசுவரன், அம்பாள், விஷ்ணு, நிநாயகர், சூரியன் இந்த ஐந்து பேருக்கும் மூர்த்தி வைத்துப் பூஜை செய்ய வேண்டும். இதற்குப் பஞ்சாயதான பூஜை என்று பெயர். அங்கங்களோடு விக்கிரகங்களாக இல்லாமல் இந்த ஐந்தையும் இயற்கையாகவே கிடைக்கும் ஐந்து வஸ்துக்களில் ஆவாஹனம் செய்து பூஜை செய்வது சம்பிரதாயம்.

இவற்றில் ஈசுவரனுக்குரிய பாண லிங்கம் நர்மதை நதியில் ஓங்கார குண்டத்தில் கிடைக்கிறது. அம்பிகையின் ஸ்வரூபமான ஸ்வர்ணமுகி சிலா என்ற கல் ஆந்திராவில் ஸ்வர்ணமுகி ஆற்றில் கிடைக்கிறது. அது தங்க ரேக் ஒடிய கல். விஷ்ணுவின் வடிவமான ஸாலக்கிராமம் நேபாளத்தில் கண்டகி நதியில் அகப்படுகிறது. சூரியனுக்கிறிய ஸ்படிகம்

தஞ்சாவூரில் வல்லத்துக்குப் பக்கத்தில் கிடைக்கிறது. விநாயகருக்கு உருவான சோணபத்ரக் கல், கங்கையிலே கலக்கிற சோணா (ஸோன் என்பார்கள்) நதியில் அகப்படுகிறது. ஆக, இந்த ஐந்தையும் ஒரிடத்தில் வைத்தால் இந்தத் தேசம் முழுவதையுமே ஒன்று சேர்த்து வைத்தது போல் ஆகும்.

இந்த ஐந்தில் ஒன்றுக்காவது கண், மூக்கு, காது இல்லை. எனவே, இடுக்குகளில் அழுக்கேறுவது கிடையாது. அபிஷேகம் செய்து துடைக்க நாழியே ஆகாது. எல்லாம் சின்னச் சின்ன கற்கள்.எல்லாமாகச் சேர்ந்தாலும் கொஞ்சம் இடத்தைத்தான் அடைத்துக் கொள்ளும். பெரிய பூஜா மண்டபம் கூடத் தேவையில்லை. ஒரு சின்ன சம்புடத்தில் போட்டு வைத்து விடலாம். ஆவாஹனம் பண்ணி, சந்தனம், குங்குமம் அக்ஷதை வைத்து, அர்ச்சனை செய்து நைவேத்தியம் காட்டலாம்.

வெளியூருக்குப் போதும்போதுகூடப் பத்து நிமிஷம் இப்படிப் பூஜை செய்வதில் சிரமமில்லை. வெளியூரில் அர்சனைக்குப் பூ கிடைக்குமா என்று கவலைப்பட வேண்டாம். வில்வதிதையும் துளசியையும் உலர்த்தி வைத்துக் கையில் எடுத்துப் போனால் ஈசுவரனையும் விஷ்ணுவையும் அதனாலேயே அர்ச்சிக்கலாம். மற்றவர்களுக்கு அக்ஷதையால் அர்ச்சனை செய்யலாம். நைவேத்தியத்துக்கு சுத்தமான அன்னம் வெளியூர்களில் கிடைக்குமா என அலட்டிக்கொள்ள வேண்டாம். காய்ந்த திராக்ஷைப் பழத்தைக் கையோடு

வைத்திருந்து நிவேதித்து விடலாம்.

ஐந்து மூர்த்திகள், துளஸி - வில்வ பத்திரங்கள், திராக்ஷை, அக்ஷதை இந்த எல்லாவற்றையுமே கையடக்கமாக ஒரே சம்புடத்தில் போட்டு வைத்துக் கொண்டு விடலாம்.

இந்த ஐந்து மூர்த்திகளுக்குச் செய்வது பஞ்சாயதன பூஜை எனப்படும். பிராசீனமாக நம் தேசத்தில் இருந்து வந்த இந்தப் பத்ததியை சங்கர பகவதி பாதாள் புது ஜீவனோடு பிரகாசிக்கும் படியாகச் செய்தார். ஷண்மத ஸ்தாபனம் என்று வருகிறபோது இவற்றோடு சுப்பிரமணிய உபாஸனையையும் நிலை நாட்டினார். எனவே, மேலே சொன்ன ஐந்தோடு

நாமும் ஒரு வேளை வைத்து வேலாயுதனை பூஜிக்கலாம்.

பூஜை என்பதற்காக பெரிய சிரமம் எதுவும் தேவையில்லை. மனசு இருந்தால் வெகு சுலபத்தில் எல்லோரும் எங்கேயிருந்தாலும் பூஜை செய்யலாம் என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

வீட்டிலே இருந்தால் மகா நைவேத்தியம் எனப்படும் அன்னத்தை ஸ்வாமிக்குக் காட்ட வேண்டியது அவசியம். நாம் அநுபவிப்பதற்காகப் பிரபஞ்சம் முழுவதையும் ஈசுவரன் நமக்கென விட்டிருக்கிறார். பலவிதமான போக்கிய வஸ்துக்களை வெளியிலே உம்டாக்கி, அவற்றை அநுபவிக்கிற இந்திரியங்களை நம்மிடம் வைத்திருக்கிறார். எனவே, நாம் அநுபவிப்பதையெல்லாம் அவருக்குச் சமர்ப்பித்துவிட்டே உபயோகித்துக் கொள்ள வேண்டும். உண்மையில் அவருக்கே என்றா அன்னத்தைக் கொடுத்து விடுகின்றோம். வெறுமே அவரிடம் காட்டுகிறோம். பிறகு நாம்தான் புசிக்கிறோம்.

நைவேத்தியம் செய்தால் ஸ்வாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் ஸ்வாமியைச் சாப்பிடவிடுவது என்று அர்த்தமேயில்லை. அவருக்கு சாப்பிட்டு ஒன்றும் ஆக வேண்டாம். நம் நினைவினை சுத்தமாக்கிக் கொள்ளத்தான் பூஜை முழுவதுமே தவிர, அவருக்கு இதனால் ஆவது ஒன்றுமில்லை. நிவேதயாமி என்றால் அரிவிக்கிறேன் என்று அர்த்தமே தவிர, உண்பிக்கிறேன் என்று அர்த்தமில்லை. அப்பனே, இந்த வேளைக்கு உந் கருணையில் நீ இந்த அன்னத்தைக் கொடுத்திருக்கிறாய் என்று அவனுக்குத் தெரிவித்துவிட்டு அவனுடைய நினைவோடு உண்ண வேண்டும். அவன் அருள் இல்லாவிட்டால் இந்த அரிசி எப்படி விளையும். ஸயன்ஸ் நிபுணர் அரிசி வகைகளை ஆராய்ந்து பெரிய பெரிய புஸ்தகங்கள் எழுதலாம். ஆனால் அவரால் ஒரு மணி அரிசியைச் செய்யமுடியுமா. செய்ற்கை அரிசி (Synthetic rice) என்று ஒன்றைச் செய்ய முடிந்தால்கூட இதற்கு மூலமாக கெமிகல்ஸ் ஏற்கனவே பகவத் சிருஷ்டியில் இருந்துதானே வந்தாக வேண்டும். எனவே மனிதன் செய்ததாகத் தோன்றும் எல்லாமும்கூட முடிவிலே ஈஸ்வரன் சிருஷ்டித்ததுதான். பரமேஷ்வரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக்

காட்டாமலே நாம் அநுபவித்தால் திருடர்களாகின்றோம்.

எங்கும் இருக்கும் அவன், நாம் இருக்கச் சொல்லும் இடத்தில், நாம்

கிரகிக்கும்படி நிற்பான். கல், மண், செம்பு முதலிய எந்த பிம்பத்தில் வைத்துக் கூப்பிட்டாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்கியதையும், கருணையும் அவனுக்கு நிச்சமாக இருக்கிறது. இல்லை என்றால் அப்படிப்பட்ட ஸ்வாமி நமக்கு வேண்டவே வேண்டாம்.

அவனைப் பூஜை என்று வைத்து ஒவ்வொரு குடும்பத்திலும் கூப்பிட்டு, அவனால் கொடுக்கப்பட்டதை உபயோகிக்கிறோம் என்று அன்றாடம் அறிவிக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் ஈஸ்வரனுக்கு நிவேதனமாக அர்ப்பிக்கத்தக்கதைத்தவிர வேறெதையுமே நாம் உபயோகிக்கக்கூடாது என்ற பக்குவம் நாளடைவில் உண்டாகும். நல்லவர்களாவோம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### பரோபகாரம்

பிதிர்கடன், பரமேசுவர பூஜையான வேத யக்யம் எல்லா ஜீவராசிகளுக்கும் உணவு படைப்பது ஆகியவற்றை வைதிக மதம் விதிக்கிறது. திருவள்ளுவரும் இதே தர்மத்தைத்தான் விதித்திருக்கிறார்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

வள்ளுவர் வேதப் பிராமணத்தை மதித்தே குறள் எழுதினார் மிகவும் ஆதரவாக இருக்கப்பட்ட குரள்களில் இதுவும் ஒன்று. திருவள்ளுவர் வைதிக மதஸ்தரே அல்ல. அவர்

ஜைனர் அல்லது பௌத்தர் அல்லது எல்லா மதங்களையும் கடந்தவர். வேதம் கூறும் தர்மங்களுள் ஹிமைஸையுள்ள யாகத்தைத் திருவள்ளுவர் வெளிப்படையாகவே கண்டிக்கிறார் என்று சிலருக்கு அபிப்பிராயம். கீழ்கண்ட குரளை மேற்கோள் காட்டுகிறார்கள்.

அவிசெரித்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்

உயிர்செகுத்து உண்ணாமை நன்று

ஹவிஸை அக்னியில் ஆஹுதி செய்து ஆயிரம் யாகம் செய்வதைவிட, ஒரு பிராணியையும் வதைத்து உண்ணாமலிருப்பது சிரேஷ்டம் என்று இதன் அர்த்தம். இதைப் படித்த பின்னும்கூட என் அபிப்பிராயமோ திருவள்ளுவர் வைதிக அநுஷ்டானங்கள் அனைத்திலும் பூரண நம்பிக்கை கொண்டவர் என்பதே. காவிரியின் பெருமையைச் சொல்ல வந்த ஒருவர். ஆயிரம் கங்கையைவிட ஒரு காவிரி உயர்ந்தது என்று சொன்னால் கங்கையும் உயர்ந்தது என்று சொல்னால், கங்கையும் உயர்ந்ததும் என்றே அர்த்தமாகும். காவிரியைச் சிலாகித்துப் பேச விரும்புகிற ஒருவர், ஆயிரம் சாக்கடையைவிட ஒரு காவிரி உயர்ந்தது என்று சொல்வாரா. அப்படியே திருவள்ளுவர் அஹிம்ஸையைச் சிலாகித்துப் பேசும்போது, ஆயிரம் யாகத்தைவிட அஹிம்ஸை உயர்ந்தது என்றால் யாகமும் உயர்ந்தது என்றே அர்த்தமாகும். ரொம்ப உயர்ந்த ஒன்றைச் சொல்லி அதைவிட இது ரொம்ப ரொம்ப உசத்தி என்றுதானே சொல்வது வழக்கம்.

இந்தக் குறள் இல்லர இயலில் சொல்லப்படவில்லை. துறவற

இயலிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. துறவிக்கு யாகத்தில் அதிகாரம் இல்லை. அவனுக்கு மட்டுமே வைதிக மதம் பூரண அஹிம்ஸையை விதித்திருக்கிறது. அதையே வள்ளுவரும் வலியுறுத்துகிறார்.

உலகத்துக்கெல்லாம் உபயேகமான ஒரு கிரந்தத்தை தந்திருக்கும் திருவள்ளுவர் வைதிகத்தை ஆட்சேபிக்கும் நாஸ்திகர் இல்லை. திருவள்ளுவர் விருந்து என்று சொல்கிற விருந்தோம்பல் வைதிக மதத்தில் மனுஷ யக்யம் எனப்படும் விருந்தோம்பல் என்பதே. இன்னும் குஞ்சம் விரித்தால் அன்னதானம் எனக் கொள்ளலாம்.

ஒவ்வொரு குடும்பத்திலும் சமைப்பதற்காகப் பானையில் அரிசி போடும்போது பகவானை நினைத்துக் கொண்டு, ஏழைகளுக்கு என்று ஒரு பிடி அரிசியை ஒரு கலயத்தில் போட்டுவிட வேண்டும். இப்படிப் பல குடும்பங்களில் தினமும் போட்டு வைப்பதைப் பேட்டைக்குப் பேட்டை சேகரித்து, சமைத்து ஆங்காங்குள்ள ஆலயத்தில் நிவேதனம் செய்து, ஏழைகளுக்கு அளிக்க வேண்டும். ஒருபிடி அரிசியோடு ஒரு பைசாவும் தினந்தோறும் போட வேண்டும். சேகரித்த அரிசியைச் சமைப்பதற்காக விறகுக்கு, சாதத்தில் சேர்த்துக் கொள்ள மிளகுப் பொடியோ அல்லது வேறு ஏதாகிலும் வியஞ்சனமோ தயாரிப்பதற்கு, சமையல் பாத்திர வாயகைக்கு இப்படி மேல் செலவுகளுக்குத்தான் அந்த ஒரு பைசா. இந்த திட்டத்தை நடத்திக் காட்டுவது பெரிய பரோபகாரம். பசித்து வந்த ஏழைகளுக்கு ஈஸ்வரனின் கோயிலில் இப்படி பிரசாதம் கிடைக்கிறது என்றால் வயிறும் மனசும் குளிரும். இதனாலாவது கோயிலுக்கு வருகிற வழக்கம் ஏற்பட்டு பக்தியும் வளரும். வெறுமே சாப்பாடு என்றில்லாமல், ஈசுவரனுக்கு நிவேதனமாக பிரசாதம் என்று இருப்பால் அந்த அன்னம் சித்தசுத்தியும் அளிக்கும்.

அன்னதானம் பரோபகாரத்தில் ஓர் அம்சமே. பரோபகாரம், சமூகசேவை, ஸோஷல் சர்வீஸ் என்று இந்த நாட்களில் ஆர்ப்பாட்டமாக பிரகடனம் பண்ணுவதை, முற்காலங்களில் எந்தப் பகட்டுமில்லாமல் சுபாவமாக்கவே பொதுமக்கள் செய்து வந்தனர். இதற்குப் பூர்த்த தர்மம் என்று ஒரு பெயர் இருக்கிறது. ஜனங்களுக்காகக் கிணறு, குளம் வெட்டுவது, அன்ன தானம், அவர்களின் ஆத்ம க்ஷேமத்துக்காகக் கோவில் கட்டுவது. அதன் அமைப்பாக நந்தவனம் அமைப்பது எல்லாம் பூர்த்த தர்மத்தில் சேர்ந்தவை. இதில் கிணறு, குளம் வெட்டுவது முதலில் சேர்க்கப்பட்டுள்ளது. அதனால் பேச்சு வழக்கில்கூட, அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான். வெட்டிக் கொண்டு இருக்கிறானா என்கிறோம். வெட்டுவது அவ்வளவு பெரிய தர்மம். தாகமெடுத்த பசுக்களும் மற்ற பிராணிகளும் நீர் அருந்துவதற்காகத் கிராமத்துக்கு வெளியே மேய்ச்சல் பூமியில் ஒரு குளம் வெட்டினால் எவ்வளவோ புண்ணியம். ஒரு கிராமத்தில் அல்லது பேட்டையில் இருக்கிற சகலரும் - பணக்காரார், ஏழை என்கிற வித்தியாசமில்லாமல் ஒன்று

சேர்ந்து மண்வெட்டியை கையில் எடுத்துக் கொண்டு இப்படிப்பட்ட சரீரப் பிரயாசையுள்ள பரோபகார சேவையில்

ஈடுபட வேண்டும். இதனால் சமூக ஒற்றுமையும் அதிகமாகும். புத்தியை சுத்தப்படுத்திக் கொள்வதற்காக கல்வி, மனசு சுத்தமாக தியானம்ஸ வாக்கு சுத்தமாக சுலோகம் இப்படியெல்லாம் இருக்கின்றன அல்லவா. சரீரம் சுத்தமாவதற்கு அந்த சரீரத்தால் சேவை செய்ய வேண்டும். உழைக்க உழைக்க சித்த சுத்தியும் வரும். உயர்ந்தவன் தாழ் ந்தவன் என்றில்லாமல் எல்லோருடனும் சேர்ந்து மண்ணை வெட்டும்போது அகங்காரத்தையும் வெட்டி எடுத்ததாகும். குளத்தில் தண்ணீர் ஊற்றுவதைவிட நம் இருதயத்தில் ஊறுகிற அன்பே முக்கியம். வெளிவேஷம், டெமான்ஸ்ட்ரேஷனே வேண்டாம். அவரவரும் பிறருக்குத் தெரியாமல் ஏதாவது ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கேயிருக்கிற கண்ணாடித் துண்டிகளை அப்புறப்படுதிதனால்கூடப் போதும் - அதுவே பரோபகாரம். சித்த சுத்தி என்கிற ஆத்ம லாபமும் ஆகும்.

பகவத் ஸ்வரூபமாக எல்லோரையும் நினைத்து, நமக்குக் கர சரணாகதிகள்க் கொண்டு பரோபகாரம் செய்வோம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சேவையே மேலான பாக்கியம்

மனிதனாகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. எல்லா பாக்கியங்களுக்கும் மேலாக பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.

சேவை என்று தெரியாமலே அவரவரும் குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவை செய்யவேண்டும் என்கிறேன்.

நமக்கு எத்தனையோ கஷ்டங்கள், உத்தியோகத்தில் தொந்திரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை இத்யாதி இருக்கின்றன. நாம் சொந்தக் கஷ்டங்களுக்கு நடுவில், சமூக சேவை வேறா என்று எண்ணக்கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதனாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடுகூட அசலார் குழந்தைக்குப் பாலூட்டினால், தன் குழந்தை தானே வளரும் என்றபடி, நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மை சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால் இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமல், பிறர் கஷ்டத்தைத் தீர்க்க நம்மாலானதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும். அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும். நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

மனிதர்களுக்கு மட்டுமின்றி, மாடு போன்ற ஜீவன்களுக்கும் சேவை செய்ய வேண்டும். பழைய நாளில் கால்நடைகளுக்காக என்றே குளம் வெட்டுவது. அவை தினைவு தீர்த்துக் கொள்வதற்காக உராந்து கொள்வதற்கு அங்கங்கே கல் போடுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தினமும் ஒவ்வொருவரும் ஒரு மாட்டுக்கேனும் ஒரு பிடி புல்லோ, அகத்திக் கீரையோ கொடுக்க வேண்டும். மாட்டுக் ஒரு பிடி

புல் கொடுப்பதை "கோ க்ராஸம் என்றால் ஒரு வாயளவு (Mouthful) இங்கிலீஷில் புல்லை grass என்பதுகூட இதிலிருந்தே வந்திருக்கலாம்.

யாகம், யக்ஞம், தர்ப்பணம், திவஸம் முதலிய இந்த உலகத்தில் இருப்பவர்களுக்கு மட்டுமின்றி, மற்ற உலகங்களிலிருப்பவர்களுக்கும் நம் சேவையை விஸ்தரிக்கின்றன என்ற உணர்வோடு அவற்றைச் செய்ய வேண்டும். இவையெல்லாம் மந்திரத்தோடு சேர்த்துச் செய்யப்படும் சேவை.

நம்மைப் போலவே செய்ய விருப்பம் உள்ளவர்களை எல்லாம் சேர்த்துக் கொண்டு எல்லோரும் ஒரே சங்கமாக

ஒரே அபிப்ராயமாக இருந்து கொண்டு சேவை செய்வது சிலாக்கியம். அப்படிப் பலர் கூடிச் செய்யும்போது நிறையப் பண் செய்ய முடியும். சத்தியத்தாலும் நியமத்தாலும் இப்படிப்பட்ட சங்கடங்கள் உடையாமல் காக்க வேண்டும். பரோபகாரம் செய்பவர்களுக்கு ஊக்கமும், தைரியமும் அத்தியாவசியம். மான அவமானத்தைப் பொருட்படுத்தாத குணம் வேண்டும்.

பொழுதுபோக்கு என்று ருசியாகத் தின்கிற இடத்திலும், கண்களைக் கவர்கிற காட்சிசாலைகளிலும் பொழுதை வீணாக்குவது தவறு. இந்தப் பொழுதை பிறருக்குச் சேவை செய்வதில் செலவழிக்க வேண்டும்.

வாழ்க்கைத் தொல்லைகளிலேயே கொஞ்சம் உல்லாசமாகப் போக்குவது ஒரு தப்பா என்று கேட்பீர்கள். உங்களுக்குச் சொல்கிறேன். பரோபகாரமாகச் சேவை செய்தால் அதுவே பெரிய உல்லாசம் என்று தெரியும். அதுவே விளையாட்டு. அதுவே இன்பம்.

கிருஷ்ண பரமாத்மா இப்படித்தான் வெளியிலே விளையாடுவதாகத் தெரிந்தாலும், உள்ளே அத்தனையும் பரோபகார சேவைதான் செய்தான். எத்தனை பேருடைய, எத்தநை எத்தநை கஷ்டங்களை விளையாட்டாகவே போக்கடித்தான். குன்றைத் தூக்கிப் பிடித்தது விளையாட்டு மாதிரி இருக்கும். ஆனால் கோபர்களைக் காப்தற்கே அவ்வளவு பெரிய மலையை பாலகிருஷ்ணன் தூக்கினான். சின்னக் குழந்தை விஷம் கக்கும் காளிங்கனின் படத்திலே நர்த்தனம் செய்தது வெளியிலே பார்த்தால் விளையாட்டு. உண்மையில் அதுவும் ஜனங்களைக் காத்து அவர்களுக்கு நீர் நிலையை மீட்டுத் தருவதற்காக செய்த சேவைதான். இப்படித்தான் எத்தனையோ சேவைகள் செய்தான். இப்படித்தான் எத்தனையோ விளையாட்டுகள் செய்தான். அத்தனையும் சேவை. எவனைப்போல் விளையாடினவன் இல்லையோ அவனைப்போல் சேவை செய்தவனும்மில்லை என்று கிருஷ்ண பரமாத்மாவின் உதாரணத்தில் பார்க்கிறோம். லௌகிக சேவை மட்டுமில்லை. ஞான சேவையும் நிறைய செய்தான். அர்ஜுனன், உத்தவர் போன்றவர்களுக்கு மகா உபதேசங்கள் செய்தான். சேவை, ஞானம், விளையாட்டு எல்லாம் அவனிடம் ஒன்றாக இருந்தன. துளிக்கூடப் பற்றுதல்

இன்றியே இத்தனையும் செய்தான். அதனாலேயே அநாயசமாகச் செய்ய முடிந்தது. நம்மிலும் சேவை செய்கிறவர்களுகெல்லாம் இந்தச் சிரிப்பும் சாந்தமும் எப்போதும் இருக்க வேண்டும். தைரியம், ஊக்கம் இவற்றோடு.

பகவான் எடுத்த பல அவதாரங்களில் கிருஷ்ணவதாரத்திலிதான்

சேவை அதிகம். ராமாவதாரத்தில் சேவைக்கென்றே ஆஞ்சநேயஸ்வாமி வந்தார். இவர்கள் இருவரையும் ஸ்மரித்து நாமும் சுத்தமான உள்ளத்துடன், எந்த சுய நலமும் கருதாமல் எவ்வித விளம்பரத்துக்கும் ஆசைப்படாமல் சேவை செய்ய வேண்டும். நமக்குத் தீட்டு ஏற்பட்டால் அச்சமயத்தில் உலகோடு சேர முடியாமல் ஒதுங்கியிருக்கிறோமல்லவா. அவ்விதமே உலகுக்கு உபயோகமாக சேவை செய்யாத ஒவ்வொரு நாளும் நமக்கு தீட்டுநாள் என்று கருதி, அவரவரும் தம்மாலான சேவையில் ஈடுபடவேண்டும்.

ஜீவராசிகளுக்கு செய்கிற உபகாரத்தால் சகல பிராணிகளுக்கும் மாதா பிதாவாக இருக்கப்பட்ட பரமேஷ்வரனுக்கே பூஜை பண்ணியதாக ஆகிறது. இதைத்தான் திருமூலர் திருமந்திரத்திலும் சொல்லியிருக்கிறது.

நடமாடக் கோயில் நம்பர்க் கொன் றீயின்

படமாடக் கோயில்பகவற்கீ தாமே.

இதற்கு அர்த்தம், மக்களுக்குச் செய்கிற உதவி சாட்சாத் ஈசுவர ப்ரீதியாகச் செய்கிற பூஜையே ஆகும் என்பது.

---

தேவதைகளை உத்தேசித்த யாகங்கள், பிதிருக்களை உத்தேசித்த தர்ப்பணம், இவற்றை விடாமல் செய்ய வேண்டும். இவற்றோடு தெய்வத்தை உத்தேசித்த பூஜை, அதிதிகளை உத்தேசித்து அன்னமிடுதல், சகல ஜீவராசிகளையும் உத்தேசித்து வைச்வ தேயம் இவற்றையும் நம் முன்னோர்கள் செய்து வந்தனர். நீங்கள் இவற்றைச் செய்கிறீர்களோ இல்லையோ காதினாலாவது இவற்றைப் பற்றிக் கேட்டால் நல்லது. எத்தனையோ படித்திருக்கிறீர்கள். படிக்கின்றீர்கள். எந்தெந்த தேசத்து சரித்திரங்களையோ தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். நம் தேசத்தில் யுகாந்தரமாக இருந்து வந்த தர்மங்களையும், அவற்றின் பெயர்களையுமாவது, நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்றே இதைச் சொல்கிறேன். வைச்வதேவம் என்பது இவற்றில் ஒன்று. அது என்ன என்று சொல்கிறேன்.

நமக்கு இந்த உடம்பு இருப்பதால் எத்தனை ஜீவராசிகளுக்கு எத்தனை உபத்திரவம் விளைவிக்கின்றோம்?. நாம் வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதாக பெறுமையாக எண்ணுகிறோம். ஆனால் யோசித்துப் பார்த்தால் ஒவ்வொரு வீடும் ஒரு கசாப்புக் கடையாகத்தான் இருக்க வேண்டியிருக்கிறது. ஒரு கசாப்புக் கடை அல்ல. ஐந்து கசாப்புக் கடைகள் என்கிறது தர்ம சாஸ்திரம். அந்த ஐந்து என்ன?.

பஞ்சஸூனாக்ரு ஹஸ்தஸ்ய வர்தந்தே (அ ஹரஹ: ஸதா-

கண்டினீ பேஷணீ கல்லீ ஜலகும்ப உபஸ்கர;)

அரிவாள்மனை(கண்டினீ) ஒரு கசாப்புக் கடை. அதில்தானே காய்கறிகளை நறுக்குகிறோம். காய்கறிகளும் உயிருள்ளனவைதான். அவற்றை வதைக்குமிடம் ஒரு கசாப்புக் கடை. இரண்டாவது, அம்மி, உரல், எந்திரம், நெல் மிஷன் - இத்யாதி (பேஷணீ). இவற்றில்தான் கருணையே இல்லாமல் தானியங்களை அரைக்கிறோம்.

இங்கே மாமிச போஜனக்காரர்கள் எழுப்புகிற ஒரு ஆட்சேபணைக்குப் பதில் சொல்ல வேண்டும். நாங்கள் சாப்பிடுகிற ஆடு மாடு, கோழிகள் மாதிரி நீங்கள் சாப்பிடுகிற

காய்கறி, தான்யாதிகளும் உயிர் இருக்கத்தானே செய்கிறது என்று இவர்கள் சைவ போஜனக்காரர்களைக் கேட்கிறார்கள். வாஸ்தவம். ஆனால் இந்த இரு உணவு முறைகளிடையே அடியோடு வித்தியாசமில்லாவிட்டாலும் (Difference of Kind) ஹிம்ஸை அம்ஸத்தில் வித்தியாசம் (Difference in Digree) இருக்கத்தான் செய்கிறது. தாவரங்களுக்கு உயிரும் உணர்ச்சியும் இருப்பது வாஸ்தவம்தான் என்றாலும், மனுஷ்யர்களுக்கும் மிருக பட்சிகளுக்கும் உள்ள அசைவுக்கு (Digree) அவற்றுக்கு வலி (Pain) என்ற உணர்ச்சி கிடையாது. இதை ஸயன்ஸ் படி அளவு எடுத்துக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அதுவும் தவிர, அநேகமாக, கீரை மாதிரி சிலவற்றைத்தான் வேரோடு எடுத்துச் சாப்பிடுகிறோமே தவிர, மற்றச் செடிகளின் உயிரை வதைக்காமல்தான் அதிலிருந்து காய்கறிகளை மட்டும் எடுத்துக் கொள்கிறோம். இப்படிப் பறிப்பது நமக்கு தலைமயிரை அல்லது நகத்தை கத்தரிக்கிற மாதிரி. அந்தச் செடிகளுக்கு ரொம்பக் குறைச்சலாகத்தான் வலியுண்டாகும். இற்றுப் போயிருக்கிற பழத்தை மட்டும் புசிப்பதாலோ, இந்த அளவுக்குக்கூட தாவர வர்கத்திற்கு துன்பம் இல்லை. பயிர்கள் நன்றாக முற்றிச் சாய்த்த பிற்பாடுதான் அவற்றை அடித்துத் தான்யங்களை எடுத்துக் கொள்கிறோம். நாம் அறுவடை செய்யாவிட்டாலுங்கூட, அந்தப் பயிர்களே கொஞ்ச நாளில் தாங்களே தலை சாய்த்துப் போகிறவைதான்.

தாவர உணவு மாமிஸ போஜனத்தைவிட உயர்ந்தது என்று இன்னார் விதத்திலும் மாம்ஸ போஜனக்கார்களுக்குப் புரிய வைத்துவிடலாம். இப்போது சில தினுஸான மாம்ஸாதிகளைத்தான் இவர்கள் சாப்பிடுகிறார்கள். மாட்டு மாம்ஸம் சாப்பிடலாமே தவிர, குதிரை மாம்ஸம் சாப்பிட்டால் நிஷித்தம் (இழுக்கு) என்கிறார்கள். உலக யுத்தத்தின்போது ஒரு சந்தர்ப்பத்தில் சேனா வீரர்களுக்கு குதிரை மாமிஸம் தரலாமா என்ற கேள்வி வந்தபோது, அதை நான்வெஜிடேரியக்காரர்களே ரொம்பக் கேவலம் என்றார்கள். இதே மாதிரி இவர்கள் மிருக, பட்சிகள், மத்ஸ்யம் முதலானதுகளை சாப்பிடுவது நாகரீகம்தான் என்று சொல்கிறபோதே ஆப்பிரிக்காவில் ஏதோ காட்டு ஜனங்கள் நர மாமிஸம்

சாப்பிடுகிறார்கள் என்றால், இவர்கள் அதை அநாகரீகம், காட்டுமிராண்டித்தனம் என்று சொல்லி நரமாம்ஸ பக்ஷிணிகள் (Cannibals) என்று திட்டுகிறார்கள். நாங்கள் சாப்பிடும் வஸ்துக்களைப் போல நீங்கள் சாப்பிடும் தான்யங்களுக்கு உயிர் இருக்கத்தானே செய்கிறது. என்று இவர்கள் நம்மிடம் (சைவ போஜனக்காரர்களிடம்) கேட்கிறபோது, நாம் பதிலுக்கு ஆமாம். ஆனால் அதே மாதிரி ஜீவனாம்ஸை என்று வருகிறபோது எல்லா உயிர்களும் ஒன்றுதானே. நீங்கள் ஏன் மநுஷ்யர்களைப் பிடித்துத் தின்னாமல், மனித வர்கத்துக்கும் மிருக வர்கத்துக்கும் வித்தியாசம் பாராட்டுகிறீர்கள். அதே மாதிரி தான். நாங்கள் மிருக வர்கத்துக்கும் தாவரங்களுக்கும் வித்தியாசம் பாராட்டுகின்றோம். மாம்ஸாதிகளைச் சாப்பிடாமல், சாக போஜனமே பண்ணுவது ஸத்வ குண அபிவிருத்திக்கும் அநுகூலமாக இருக்கிறது. என்று சொல்ல வேண்டும். தவிர்க்க முடியாமல் நாம் உயிர் வாழ்வதற்காக இப்படி கண்டிணீ பேஷணீ என்ற கசப்பு யந்திரங்களை வீட்டில் வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. மூன்றாவது கசாப்புக்கடை அடுப்பு (சுல்லி). நெருப்பில் பல பூச்சிகள் விழுந்து சாகின்றன. ஒரு இடத்தில் நெருப்பைப் போடுகிறோம். அங்கே ஒர் எறும்பு ஊர்ந்து கொண்டிருக்கும். நெருப்புப் பட்டவுடன் அது பொசுங்கிப் போகிறது. இப்படியே ருடத்தை ஒரிடத்தில் வைக்கிறோம். கீழே எறும்போ வேறு ஏதாவது பூச்சியோ இருந்தால் நசுங்கிப் போகிறது. குடம் முதலிய பாத்திரங்களில் ஈரம் இருப்பதால் வெயில் காலங்களில் எறும்பு முதலிய அதை மொய்த்துக் கொள்கின்றன. அவற்றை நாம் கொல்ல நேருகிறது. இதனால் ஜல கும்பத்தையும் ஒரு கசாப்புக் கடையாக வைத்தார்கள். கடைசீயில் உபஸ்காரம் என்பது ஒரு கசாப்புக் கடை. உபஸ்காரம் என்றால் துடைப்பக்கட்டை. பெருக்கும்போது எத்தனை ஜீவராசிகளை வதைக்கிறோம். இப்படி ஐந்து கசாப்பு மெஷின்கள் நம் வீடுகளில் இருக்கின்றன.

நமக்குத் தீங்கு செய்கிற பிராணிகளுக்குக்கூட நாம் பதிலுக்கு தீங்கு செய்யக்கூடாது. இங்கேயோ தீங்கு செய்பவற்றோடு ஒரு தீங்கும் இழைக்காத பிராணிகளையும் நாம் இத்தனை ஹிம்ஸைக்கு ஆளாக்க நேருகிறது. யோசித்துப் பார்த்தால் இத்தனை ஜீவராசிகளுக்கு இத்தனை உபத்திரவத்தை உண்டாக்குக் கொண்டு வயிற்றை வளர்க்கிறோமே என்று

துக்கம் உண்டாகிறது. ஆனால் இதெல்லாம் நம்மால் தவிர்க்க முடியாத விஷயங்கள். நாம் வேண்டுமென்று இவற்றைக் கொல்லவில்லை. எனவே நம்மை மீறிச் செய்கிற இந்தத் தோஷங்களுக்குப் பிராயச்சித்தம் உண்டு. அப்படிச் செய்கிற பிராயச்சித்தமே வைசுவதேயம் என்பது.

நம்மால் ஹிம்சைக்கு ஆளான ஜீவராசிகளுக்கெல்லாம் நல்ல கதி கிடைக்க வேண்டும். நம்மை பகவான் மன்னிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் எல்லா உயிர்களின் திருப்த்திக்காகவும் பலி கொடுக்கப்படுகிறது. இந்த விசுவத்தில் எவ்வளவு பிராணிகள் உண்டோ, நாய், காக்கை, சமூகப்பிரஷ்டன் உள்பட எல்லார்க்கும் எல்லாவற்றுக்கும் வைசுவதேவத்தில் பலி உண்டு. வைசுவதேயம் செய்தால் நாம் செய்கிற பல தேஷங்கள் போகும். பல உயிர்களுக்கு ஆகாரம் கிடைக்கும்.

பூதயக்ஞமான இந்த வைசுவதேயம், பூஜை, ஹோமம் முதலிய தேவயக்ஞம்,

மனுஷ்ய யக்ஞம் (விருந்தோம்பல்) பிதுரு யக்ஞம் (தர்ப்பணம்) முதலியவற்றோடு, தான் கற்றுப் பயன் பெற்ற வேதத்தை நிச்சயமாக இன்னொருத்தனுக்குக் கற்பிக்கிறதாகிய பிரம்ம யக்ஞம் என்கிற ஞான வேள்வியும் செய்யவேண்டும் என்று விதி. இந்தப் பஞ்ச மகாயக்ஞங்கள் அனைத்தையும் பிரம்ம புத்திரர்களான ரிஷிகள் முகற்கொண்டு யாவரும் யுகம் யுகமாகப் பண்ணிக்கொண்டு வந்தார்கள். ஆதி காலத்திலிருந்து நம் தாத்தா காலம் வரையில் சாஸ்திரப் பிரகாரம் எல்லோரும் இவற்றை ஒழுங்காகச் செய்து வந்தார்கள். பிரளய காலம் வரையில் இவை அவிச் சின்னமாக (முறிவுபடாமல்) நடந்து வர வேண்டும். ஆனால் நம் நாளில் இந்த இழையைக் கத்தரித்து விட்ட பாக்கியதை அடைந்திருக்கிறோம். அநாதி காலமாக வந்துள்ள அநுஷ்டானங்களை கபளீகரம் செய்துவிட்டு நம்மோடு மட்டுமில்லாமல், நம்முடைய பின் சந்ததியாருக்கும் இவற்றைப் பின்பற்றுவதால் உண்டாகும் நன்மை விளையாமல் தடுத்து விட்டிருக்கிறோம்.

நான் எத்தனையோ அநுஷ்டானங்களைச் சொல்கிறேனே, அவற்றில் எவ்வளவு நாம் பண்ணுகிறோம். எவ்வளவு பண்ணவில்லை. எவ்வளவு பண்ண முடியும் என்று

யோசித்துப் பாருங்கள். எல்லாவற்றையும் பண்ண முடியாவிட்டாலும் ஜீவனோபாயத்தை அநுசரித்து முடிந்தவைகளையாவது தவறாமல் பண்ண வேண்டும். மற்றவற்றைப் பண்ணவில்லையே என்று பச்சாதாபமாவது படவேண்டும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### சித்த சுத்திக்கு சில சின்ன விஷயங்கள்

சித்த சுத்திக்கு பயன்படுகிற சின்னச் சின்ன விஷயங்கள் பல உண்டு. இந்தச் சின்னச் சின்ன தர்மங்களை நம்முடைய பெரியவர்கள் தலைமுறை தத்துவமாக அநுசரித்து வந்தார்கள். அவர்கள் வாழ்க்கையில் திருப்தியும் சந்தோஷமும் நிறைந்திருந்தன. அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதைப் பார்த்து, அதை நாம் பின்பற்றினாலே போதும். புதிதாக ஒரு கொள்கையும் வேண்டாம். நாமும், சந்தோஷமாக இருக்கலாம்.

பெரிய அத்யாத்ம விஷயங்களில் மட்டுமில்லாமல், ஒரு சமுதாயத்தில், ஒரு குடும்பத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறைகளில்கூட நமக்கு முன் வாழ்ந்த பெரியவர்கள் அற்புதமாக வழிகாட்டியிருக்கிறார்கள். உதாரணமாக உறவு, சிநேகிதம் எல்லாம் அந்த நாளில் வெகு முறைந்த முறையில் காப்பாற்றப்பட்டன. ஒரு கல்யாணம், அல்லது அபரகாரியம் (இறுதிச் சடங்கு) என்றால் பலர் ஒன்று சேர்த்து செலவு செய்து நடத்திக் கொடுப்பது என்று வைத்துக் கொண்டிரு ந்தார்களே, அது எவ்வளவு உயர்ந்த பண்பு.

இந்தக் காலத்தில் நடப்பதுபோல் டெமான்ஸ்ட்ரேஷனும் வெளிவேஷமும் அப்போது இல்லை. ஆனால் அந்த நாளில்தான் ஏழைகளுக்கு உண்மையாக உதவிசெய்கிற மனப்பான்மை சுபாவமாகக் காரியத்தில் அநுசரிக்கப்பட்டது.

ஒரு கல்யாணத்துக்குப் போகிறவர்கள் தங்களால் முடிந்ததை, ஐந்தோ, பத்தோ உதவி செய்வது என்பதால் கல்யாணம் செய்பவர்களுக்கு எத்தனையோ பாரம் குறைந்தது.

ஒரு கூட்டத்திலே பலர் கொஞ்சம் கொஞ்சம் கொடுத்தாலும் போதும். கொடுக்கிறவர்களுக்குப் பெரிய சிரமம் ஏதும் இல்லை. ஆனால் வாங்குகிறவனுக்கு மொத்ததில் கணிசமாகக் கிடைக்கும் இப்படித்தான் ஓர் ஏழைக்குக் கஷ்டம், அவன் ஒரு கல்யாணம் செய்யவேண்டும் அல்லது அபாரகாரியம் செய்ய வேண்டும் என்றால் மற்றவர்கள் எல்லோரும் கொஞ்சம் கொஞ்சம் உதவி செய்து அந்தக் காரியத்தை நடத்திக் கொடுத்து வந்தார்கள். முன்னாட்களில் பந்துகளுக்குள் ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் அதிகம் இல்லை. பணக்காரராக இருப்பவன் ஏழையான பந்துவுக்கே அதிக உதவி செய்வான். இதெல்லாம் தர்மத்தைச் சேர்ந்தது. சிரமத்தில் உள்ளவர்களுக்கு உதவி செய்வது, உதவியைப் பெறுகிறவனைவிட உதவி செய்கிறவனின் சித்த சுத்திக்கே அதிகம் உதவும்.

ஆனால் இன்று எல்லாம் மாறிவிட்டது. பழைய கால பந்துத்துவம் பணக்காரர்களுக்கு இல்லை. ஏழையான உறவினர்களுக்கு உதவுகிற மனப்பான்மை குறைந்து விட்டது. பழைய காலத்தில் நடந்தது உண்மையான அன்னதானம். இப்போது மனிதர்கள் தங்களைப் போன்ற பணக்காரர்களு ம்க்காகவே பார்ட்டி - ஃபீஸ்ட் வைக்கிறார்கள். தேசத்தில் ஏராளமாக இப்படிப் பணமும் பண்டமும் செலவாகின்றன. இதில் தர்மத்துக்கோ, சித்த சுத்திக்கோ எதுவும் இல்லை. இவன் காரியத்தமாகத்தான் ஒருத்தனைக் கூப்பிட்டு பார்ட்டியும் ஃபீஸ்டும் வைக்கிறான். பார்ட்டி கொடுத்து, அதில் சாப்பிட்டவர்களை ஏமாற்றி விட்டதாக நினைக்கிறான். பார்ட்டி சைப்பிட்டவனுக்குத் தெரியும். இவன் பிரியத்தின் பேரில் தனக்கு சாப்பாடுபோடவில்லை. காரியத்துக்காகத்தான் சாப்பாடு போட்டான் என்று. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் சந்தோஷமாகச் சாப்பிட்டுவிட்டுப் போகிறான். ஆகையால், இவன் அவனை ஏமாற்றுகிறான் என்றால் அவனோ, இவன் போட்டதைச் சாப்பிட்டு விட்டு இவனையே ஏமாற்றிப் போகிறான். ஆக ஃபீஸ்டும் டோஸ்டும் ஏமாற்று வித்தையாகவே ஆகின்றனவேயன்றி சித்த சுத்திக்கு பயன்படவில்லை.

ஏழைக்கு அன்னதானமோ பொருள் உதவியோ செய்யும் போது இரண்டு பக்கத்திலும் உண்மையான சந்தோஷமும் பிரியமுமே நிரம்பியிருந்தன. இப்போது பார்ட்டி நடத்தும்போது அங்கே உண்மையான பிரியம் இல்லாததோடு, துவேஷம் வேறு உண்டாகிறது. வசதியிருப்பவர்கள் பார்ட்டி நடத்துவதைப் பார்த்து, வசதியில்லாதவர்களுக்கு வெறுப்பும் துவேஷமும் உண்டாகின்றன. உறவு முறைகளில் ஏழை பணக்காரர் என்று வித்தியாசம் பாராட்டக்கூடாது என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

வசதியுள்ளவர்கள் பண உதவி செய்து புண்ணியம் சம்பாதிக்க முடியும். நாம் என்ன செய்யலாம் என்று மற்றவர்கள் எண்ணக்கூடாது. சரீரத்தால் மற்றவர்களுக்குக் கைங்கரியம் செய்வது பெரிய புண்ணியம். அது சித்த சுத்திக்கு ரொம்ப ரொம்ப உதவும். வசதியே இல்லாதவர்களும் இவ்விதத்தில் பிறருக்கு சரீர சகாயம் செய்ய முடியும்.

ஒவ்வொருத்தரும் பிறருக்குக்கூடத் தெரிய வேண்டாம். ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்த சுத்திக்கு பெரிய உதவி. இது மாதிரி

சின்ன தர்மங்களை எவரும் செய்யலாம். பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒரு பேட்டையில் உள்ள அனைவரும் சேர்ந்து குளம் வெட்டலாம்.

ஈசுவர அநுக்கிரகம் வேண்டும், வேண்டும் என்றால் அது எப்படி வரும். பரோபகாரமான, ஜீவகாருண்யமுள்ள நல்ல காரியங்களைச் செய்து மனசு பக்குவப்பட்டால்தான். சித்த சுத்தி உண்டாக்கி, அந்த சுத்தமான சித்தத்தில் ஈசுவரனின் உருவத்தைப் பார்க்க முடியும். கலக்கின ஜலத்தில் பிம்பம் தெரியாததுபோல் , நாம் மனசைக் கலக்கிக் கொண்டு ஈஸ்வரஸ்வரூபம் தெரியாதபடி செய்துகொண்டிருக்கிறோம். பகவத் பக்தியோடு பரோபகாரமும் செய்து, மனசு தெளிவாகும்போது ஈஸ்வர ஸ்வரூபத்தை நாம் கிரகித்துக் கொண்டு, அவனுடைய அநுக்கிரஹத்தைப் பெறமுடியும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### *குற்றமும் குணமும்*

மனிதர்களாகப் பிறந்தவர்கள் தர்மப்படி வாழ்வு நடந்த வேண்டுமானால், சகல காரியங்களிலும் விதிப்படி நடக்க வேண்டியிருக்கிறது. இந்த விதிமுறைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியது ரொம்பவும் அவசியம். ஆனால் அவற்றை அவர்களாக ஏற்று, சுயேச்சையாகப் பின்பற்றுவதே அழகு. ஒருவரை நிற்பந்தப்படுத்தி விதிகளை அநுசரிக்கச் செய்வதில் பெருமை இல்லை. சம்பிரதாயம் என்பது தானாக வழிவழியைக வந்திருக்கிறது. மக்கள் அதைத் தாமாக ஏற்கும் பின்பற்றி வந்திருக்கிறார்கள். சம்பிரதாயத்தில் வந்துள்ள அத்தனை விதிமுறைகளையும் சாஸ்திரத்தில் சட்டம் போல் எழுதி வைக்கவில்லை. சட்டம் என்று எழுதி விட்டால் அது நிர்பந்தமாகிவிடுகிறது என்பதே காரணம். ஸஹஸ்ரம் வத. ஏகம் மா லிக (ஆயிரம் விஷயங்களை வாயால் எடுத்துச் சொல்லு. ஆனால் ஒன்றைக்கூட எழுத்திலே எழுதி வைத்துக் கட்டாயப்படுத்துவதே) என்பது ஆன்றோர் வாக்கு. ஆனால் இப்போது இதைச் செய், அதைச் செய் என்று எதற்கெடுத்தாலும், எங்கே பார்த்தாலும் நோட்டீஸ் போடுவதும், எழுதி வைப்பதுமாக இருக்கிறது. நான் பூஜை செய்கிற இடத்திலேயே பேசாதே, சட்டை போட்டுக் கொள்ளாதே என்றெல்லாம் எழுதி வைக்கிறீர்கள். இனிமேலே இப்படிச் செய்ய வேண்டாம்.

நான் இப்படி விதி மாதிரி உங்களைக் கண்டித்து, நிர்பந்தப்படுத்திச் சொல்லும்போது, நானே இதுவரை சொன்ன நல்ல விதியை மீறுகிறேன்.

செய்ய வேண்டாம் என்கிற போதே நிற்பந்தமாகச் சட்டமாகி விடுகிறேன். அது தப்புதான். இப்படியெல்லாம் எழுதலாமா என்று நீங்களே யோசித்துப் பாருங்கள் என்று தான்

சொல்லியிருந்தால் அதுதான் முறை.

ஒருவரிடம் எத்தனை தோஷம் இருந்தாலும் அதைப் பெரிது படுத்தாதே. சிறிது குண விசேஷம் இருந்தாலும் அதையே கொண்டாட வேண்டும் என்பது பெரியோர் உபதேசம். நானே உங்கள் தவற்றை இப்போது அம்பலப்படுத்துகிறேன். பிறரது குறைகளை வெளிப்படுத்தக் கூடாது. அவர்களிடம் உள்ள நல்ல

அம்சங்களையே வெளிப்படுத்த வேண்டும். தேய்ந்துபோன சந்திர கலைக்கும்கூடக் குளுமையும் பிரகாசமும் இருப்பதால் அதைப் பரமசிவன் தம் தலையில் தரித்து உலகமெல்லாம் பார்த்துப் புகழும்படி செய்கிறார். அதே ஈஸ்வரன் மகா கொடிய ஆலகால விஷயத்தை யார் கண்ணிலும் தெரியாமல் தம் கண்டத்தில் ஒளிந்து வைத்திருக்கிறார். இவ்வாறு தண்டி என்ற கவி கூறுகிறார்.

ஆனால் தோஷம் பார்க்கிலும், அதைப் பெரிதுபடுத்திப் பேசுவதும் எழுதுவதும் பொதுவில் தற்காலத்தில் மிக அதிகமாகியிருக்கிறது. அதிலும் நிறையப் படித்தவர்கள் நிறையக் குற்றம் காண்பார்கள். குற்றம் கண்டுபிடிப்பதுதான் அறிவாளியின் காரியம். வித்வான் என்றாலே தோஷக்ஞன் என்று லட்சணம் சொல்லியிருக்கிறது. என்று இவர்கள் வாதம் செய்யலாம். தோஷக்ஞன் என்றால் குற்றம் அறிந்தவன் என்றே அர்த்தம். குற்றத்தைப் பெரிதுபடுத்திப் பிரச்சாரம் செய்பவன் என்றல்ல. குற்றம் குறைகளை உணர வேண்டும். உணர்ந்து அவற்றை நாம் தவிர்க்க வேண்டும். குற்றம் உள்ளவர்களுக்கும் இதை இதமாக எடுத்துச் சொல்லலாம். ஆனால் ஒயாமல் தேஷம் பாராட்டிக் கொண்டும் அதைப் பிரச்சாரம் பண்ணிக் கொண்டும் இருக்கக்கூடாது.

தோஷமுள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்குப் பூரண யோக்கியதை இருக்கவேண்டும். நம்மிடமே ஏறாளமான தோஷங்களை வைத்துக் கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால், அது பிரயோஜனப்படாது. சில சமயங்களில் நாம் சொல்வதாலேயே அவர்கள் முன்னைவிட வீம்பாகத் தங்கள் தவற்றை வெளிப்படச் செய்யவும் தொடங்கலாம். நமக்கு யோக்கியதை இருக்கிறது. நம் வார்த்தை எடுபடும் என்று நிச்சயமானாலே பிறருக்கு உபதேசிக்கலாம்.

ஒருவரது நல்ல அம்சத்தைக் கொண்டாடுவதால் அவருக்கு மேலும் உற்சாகம் உண்டாகிறது. இந்தக் குணங்களை விருத்தி செய்து கொள்கிறார். ஆனாலும் ஒருவரைப் புகழுவதிலும் நமக்குக் கட்டுப்பாடு இருக்க வேண்டும். ஒரேடியாக ஸ்தோத்திரம் செய்து, ஒருவரை அகங்காரத்திற்கு ஆளாக்கி விடக்கூடாது. புகழ்ச்சி ஒரு நுட்பமான விஷயம். இதனால்தான் பெரியோர்கள், ஈஸ்வரனையும் குருவையும் மட்டுமே நேரில் துதிக்கலாம். பத்து மித்திரர்களை நேரில் புகழாமல் மற்றவர்களிடமே போற்றிப் பேச வேண்டும். (சவாரி முடிந்த பின் குதிரையைத் தட்டிக் கொடுப்பது போல்) வேலையை முடிந்த பின்னரே உழியரைப் பாராட்டலாம். பிள்ளையை ஒரு போதும் புகழக்கூடாது என்கிறார்கள்.

ப்ரத்யக்ஷே குரவ: ஸதுத்யா:

பரோக்ஷே மித்ர பாந்தவா: I

கார்யாந்தே தாஸ ப்ருத்யாச்ச

ந ஸ்வபுத்ரா: கதாசன II

இப்போது நான் உங்கள் மேல் குற்றப் பத்திரிகை படித்ததற்கும் சமாதானம் சொன்ன மாதிரி ஆகிவிட்டது. தன் சொந்தக் குழந்தைகளை ஒரு போதும் ஸ்தோத்திரம் பண்ணக்கூடாது. அவர்களை இடித்தும் காட்டலாம் என்று சாஸ்திரமே

சொன்னதால், நான் உங்களைத் தோஷம் சொன்னதிலும் தோஷமில்லைதான்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### *கோபம்*

காமம் குரோதம் என்று சேர்த்துச் சொல்வது வழக்கம். காமம் என்பது ஆசை. குரோதம் என்பதுதான் கோபம். ஆத்திரம், துவேஷம் இவை எல்லாமாகும். மனிதனை பாபத்தில் தள்ளுபவை காமமும் குரோதமுமே என்று கிருஷ்ண பரமாத்மா கீதையில் சொல்லியிருக்கிறார்.

ஒரு வஸ்துவிடன் ஆசை உண்டாகி விட்டால், அதைத் தவறான வழியிலாவது அடைய முயல்கிறோம். இப்படியாகக் காமம் என்பது நம்மைப் பாவத்தில் தள்ளுகிறது. அது நமக்குப் பெரிய சத்ரு. அதே போன்ற இன்னொரு சத்ருவே கோபம். நாம் ஆசைப்படுகிற வஸ்து கிடைக்காத பொழுது இதற்குத் தடையாக இருந்தவர்கள் மீது, அல்லது தடை என்று நாம் நினைத்தவர்கள் மீது கோபம் வருகிறது. அதாவது நிறைவேறாத காமமே கோபம் என்று பெயர் கொள்கிறது.

ரப்பர் பந்தைச் சுவற்றில் ஏறிகிறோம். அது எதிர்த்துக் கொண்டு நம்மிடமே திரும்பி வருகிறது. எறியப்படும் பந்து காமம். அதே பந்து திரும்பி வருகிறபோது கோபமாகிறது. திரும்பி வருகிற பந்து நம்மையே தாக்குகிறது. அப்படியேதான், நம்முடைய கோபத்தால் பிறரைத் தாக்குவதாக நினைத்தாலும், அது நம்மையேதான் அதிகம் தாக்குகிறது. கோபத்தில் நம் உடம்பெல்லாம் ஆடிப்போகிறது. நம் தேகம், மனசு இரண்டுக்கும் கோபத்தினால் பெரிய கிலேசம் உண்டாக்கிக் கொள்கிறோம். நாம் ரௌத்ரகாரமாகச் சத்தம் போடும்போது நம்மை யாரேனும் போட்டோ பிடித்து, அப்புறம் நம்மிடம் காட்டினால் போதும். கோபாவேசத்தில் நம்மை நாமே எத்தனை கோரமாக்கிக் கொள்கிறோம் என்று புரிந்து கொண்டு என்று புரிந்து கொண்டு வெட்கப்படுகிறோம்.

சாதாரணமாக மனிதர்களுக்கும் பிராணிகளுக்கும் வயிற்றுக்கு ஆகாரம் கொடுத்தால் அப்போதைக்கு பசி அடங்குகிறது. அடுத்த வேளை பசி ஏற்படுகிறது. நெருப்புக்கு மட்டும் நாம் ஓர் ஆகாரத்தைப் போட்டால் அது அடங்குவதேயில்லை. இன்னும் அதிகமாகக் கொழுந்து விட்டு எரிகிறது. மேலும் பல பெருட்களைத் தரித்து கரளீகரம் செய்கிறது. நெருப்பு பிரகாச மயமாக இருந்தாலும், தான் ஸ்பரிசித்துவிட்டுச் செல்கிற பண்டங்களை எல்லாம் கன்னங்கரேல் என்று கருப்பாக்கிக் கொண்டு போகிறது. இதனால் நெருப்புக்கு

கிருஷ்ண வர்தமா என்று ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. காமமும் இப்படிப்பட்ட கிருஷ்ண வர்த்மா தான். அது தீயாக எரிகிறது. அதற்கு பிரியமான வஸ்துவைக் கொடுப்பதால் பசி அங்காமல் அதிகரித்துக் கொண்டே போகிறது. அது நம் மனசையே கறுப்பாக்கிக் விடுகிறது. ஓர் இச்சை பூர்த்தியாகிற போது தற்காலிகமாக ஒரு மகிழ்ச்சி உண்டானாலும், பிற்பாடு அதையே மீண்டும் தேடி அலைந்து அமைதியையும் சந்தோஷத்தையும் குலைத்துக் கொண்டு அழுக்கையும் கோபத்தையும் உண்டாக்கிக் கொள்கிறோம். அழுகை தூக்கத்தில் உண்டாவது.

நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள் தான் துக்கமும் கோபமும்.

நம் ஆசையின் நிறைவேற்றத்துக்குத் தடையாக இருந்தவர்கள் நம்மைவிடக் கீழ்பட்டவர்களாக இருந்தால் அவர்களிடம் கோபத்தைக் காட்டுகிறோம். அவர்கள் நமக்கு மேலே இருந்து விட்டால் கோபித்துக் கொள்ள முடியாமல் நமக்குள்ளேயே துக்கப்பட்டுக் கொண்டு அழுகிறோம். கோபத்தின் கெட்ட சக்தி காமத்தின் சக்தியைவிடப் பெரியது. இதை நள சரித்திரமான நைஷதம் வெகு அழகாகச் சொல்கிறது. கலி அரசன் வருகிறான். அவனது சேனாதிபதிகளாகக் காமனும் குரோதனும் வருகிறார்கள். கட்டியக்காரன் இவர்களுடைய பெருமைகளைப் பாடுகிறான். குரோதத்தைப் பற்றி அவன் என்ன பாடுகிறான். காமன் புகாத இடமில்லை என்பார்கள். ஆனால் காமனும் புகாத ஒரு கோட்டை உண்டு. அந்தக் கோட்டைக் குள்ளும் இந்தக் குரோதன் குடி கொண்டிருக்கிறானாக்கும். அது எந்தக் கோட்டைத் தெரியுமா. துர்வாஸருடைய இதயம்தான் என்று குரோதனின் புகழைப் பாடுகிறான். காமமே அறியாத துர்வாஸ மகரிஷியும் கோபத்துக்கு ஆளானவர் என்று தாத்பரியம்.

நாம் இந்த மகாபாவியான குரோதனிடம் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலும் நமக்கே தெரியும். யாரையும் கோபித்துக் கொண்டு சத்தம் போட நமக்கு சிறிதும் யோக்கியதை இல்லை என்றும், யாரை நாம் கோபித்துக் கொள்கிறோமோ அவர்கல் செய்கிற தவறுகளை, அதைவிடப் பெரிய தவறுகளைக்கூட

செய்தவர் நாம் என்பதும் நம் அந்தராத்மாவுக்குத் தெரியும். அப்படியே நாம் தவறு செய்யாவிட்டாலும்கூட, அந்த மனிதன் அந்தச் சூழ்நிலையில் இருந்தால் செய்திருக்கக்கூடும் என்று எண்ணிப்பார்க்க வேண்டும்.

குரோதன் நம்முடைய பெரிய சத்ரு. அவனை அண்டவிடாமல் எப்போதும் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### *கோபம் கொள்ளத் தகுதி ஏது ?*

நமக்கு அநேக சந்தர்பங்களில் கோபம் வருகிறது. முக்கியமாக இரண்டு விதங்களில் கோபம் வருகிறது. ஒருவன் தப்புக் காரியம் செய்தால், அவனிடம் கோபம் ஏற்படுகிறது. அல்லது ஒருவன் நம்மைத் தூஷித்தால் அவனிடம் கோபம் வருகிறது. யோசித்துப் பார்த்தால் இந்த இரண்டு விதங்களிலும் கோபப்படுவதற்கு நமக்கு யோக்கியதை இல்லை என்று தெரியும்.

ஒருவன் தப்புப் பண்ணுகிறான் என்றால் கோபம் கொள்கிறோமே, அப்படியானால் நாம் தப்புப் பண்ணாதவர்களா?. ஒருவனை பாபி என்று துவேஷிக்கு ம்போது, நாம் அந்தப் பாபத்தைப் பண்ணாதவன்தானா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். காரியத்தில் பண்ணாவிட்டாலும் மனஸால் பண்ணியிருப்போம். நாம் அநேக தப்புகளை, பாபங்களைப் பண்ணிக் கொண்டேதான் இருக்கிறோம். நம்மைவிடப் தப்பும் பாபமும் பண்ணுகிறவர்களும் இருக்கலாம். நம் மனசு ஏதோ ஓர் அளவுக்குப் பக்குவம் அடைந்திருப்பதால் நாம் இந்த அளவு பாபத்தோடு நிற்கிறோம். அவனுடைய மனசு இந்தப்

பக்குவம்கூட வராததால் இன்னும் பெரிய பாபம் பண்ணுகிறான். நாம் செய்கிற தவறுகளை

திருத்திக் கொள்வதற்கு எத்தனை பாடுபட வேண்டியிருக்கிறது. நம்மையும்விட மோசமான நிலைக்கு இறங்கிப் பாபங்களைச் செய்யப் பழகிவிட்ட இன்னொருத்தனின் மனசுக்கும் அதிலிருந்து மீளுவது சிரமமான காரியம்தான். அப்படிப்பட்டவனோடு நாம் சேர்ந்திருக்க வேண்டும் என்பதில்லை. அஸத் ஸங்கத்தைவிட்டு ஸத் ஸங்கத்தில் சேர்வதுதான் ஆத்மாபிவிருத்திக்கு முதல் படி என்று சகல சாஸ்திரங்களும் சொல்கின்றன. ஆனால் பாபிகளை நாம் வெறுப்பதிலும் அவர்களைக் கோபிப்பதிலும் பயனில்லை. அவர்களுடைய மனசும் நல்ல வழியில் திரும்ப வேண்டும் என்று பிரார்த்திப்பதே நாம் செய்ய வேண்டியது. ஈசுவரானுக்கிரகத்தில் நம்மில் யாறுக்காவது அநுக்கிரக சக்தி கிடைத்திருந்தால், அதை இந்தப் பாவிகள் கடைத்தேறுவதற்கே உபயோகிக்க வேண்டும்.

நம் கோபம் எதிராளியை மாற்றாது. அவனுக்கும் நம்மிடம் கோபத்தை வளர்ப்பதுதான் அதனி பலன். இரண்டு பக்கங்களிலும் துவேஷம் வளர்ந்து கொண்டே போகும். ஒருத்தன் தன் தப்பைத் தானே உணர்ந்து திருந்தச் செய்யாமல், நம் கோபத்துக்குப் பயந்து சரியாக செய்வதில் நமக்குப் பெருமையில்லை. இது நிலைத்தும் நிற்காது. அன்பினாலேயே பிறரை மாற்றுவதுதான் நமக்குப் பெருமை. அதுதான் நிலைத்து நிற்கும்.

ஒருத்தன் பாபம் செய்ய அவனுக்காக மனசு, சந்தர்ப்பம் இரண்டும் காரணமாகின்றன. நாம் பல பாபங்களைச் செய்ய முடியாமல் சந்தர்ப்பமே நம்மைக் கட்டிப் போட்டிருக்கலாம். எனவே, ஒரு பாபியைப் பார்க்கும்போது, அம்பிகே. இந்தப் பாபத்தை நானும்கூடச் செய்திருக்கலாம். ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் தராமல் நீ கிருபை செய்தாய். அந்தக் கிருபையை இவனுக்குச் செய்யம்மா என்று பிரார்த்திக்க வேண்டும்.

இரண்டாவதாக, நம்மை ஒருத்தர் துவேஷிக்கிறார் என்று கோபம் கொள்ள வேண்டியதில்லை. நாம் எத்தனை தூஷணைக்குத்தக்கவர் என்பது நம் உள்மனசுக்குத் தெரியும். ஒருகால் நம்மை தூஷிக்கிறவர் நாம் செய்யாத தவற்றுக்காக

நம்மைத் திட்டிக் கொண்டிருக்கலாம். ஆனால் நாம் செய்த தவறுகள் அதைவிடப் பெரியவை என்றும் நம் அந்தரங்கத்துக்குத் தெரியும். நம் தவறுகளைக் கழுவிக்கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் அம்பாளிடம் பச்சாபத்துடன் அவ வேண்டிய நிலையில்தான் இருக்கிறோம். இந்த நிலையில் உள்ள நாம், பிறரைத் தப்புத் கண்டுபிடித்து கோபிக்க நியையம் ஏது?.

நாம் தப்பே செய்யவில்லை என்றால், அப்போது பிறரைக் கோபிக்கலாமா?. என்றால் இப்படித் தப்போ பண்ணாத நிலையில் நாம் அன்பு மயமாகிவிடுவோம். அப்போது நமக்குப் பாவியிடமும் கருணை தவிர, எந்தப் பாவனையும் இராது. கோபமே உண்டாகாது. நாம் தப்புச் செய்தவர்கள் என்றாலோ, நமக்குப் பிறரைக் கோபிக்க யோக்கியதை இல்லை. தப்பே பண்ணாத நிலையிலே எல்லாம் அம்பாளின் லீலைதான் என்று தெரிகிறது. லீலையில் யாரை பூஷிப்பது, யாரைத் தூஷிப்பது?. எப்படிப் பார்த்தாலும் கோபம் கூடாதுதான்.

மநுஷ்யரைப் பாபத்தில் அமுத்துகிற இரண்டு பெரும் சக்திகள் காமமும் குரோதமும் என்றார் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. அதாவது நம் கோபத்தினால் நமக்கேதான் தீங்கு செய்து கொள்கிறோம். போரும்பாலும் நம்முடைய கோபத்தை

எதிராளி பொருட்படுத்துவதே கிடையாது. ஆத்திரப்படுவதால் நாமே நம் சரீரம், மனசு இரண்டையும் கெடுத்துக் கொள்வதோடு சரி. அன்பாக இருப்பதுதான் மனிதன் ஸ்வபாவமாக தர்மம். அதுதான் ஆனந்தமும். அன்பு நமக்கும் ஆனந்தம், எதிராளிக்கும் ஆனந்தம். அன்பே சிவம் என்பார்கள். நாம் எல்லோரும் அன்பே சிவம் என்பார்கள். நாம் எல்லோரும் அன்பே சிவமாக அமர்ந்திருக்கப் பிரயாசைப்பட வேண்டும்.

## பொதுவான தர்மங்கள்

### *அன்பும் துன்பமும்*

மனிதப் பிறவி எடுத்ததின் பயனே அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. தனக்கென்று பொருள் சேர்ப்பதில், புகழ் சேர்ப்பதில், அலங்காரம் செய்து கொள்வதில், தற்காலிகமாக இன்பம் கிட்டலாம். ஆனாலும் இவற்றில் உள்ளம் நிறைவு பெறுவதில்லை. உள்ளத்துக்கு நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தும் போது நமக்கு எத்தனை கஷ்டம் வந்தாலும், தேக சிரமம் வந்தாலும் பணச்செலவானாலும் இதெல்லாம் தெரிவதேயில்லை. அன்பின் ஆனந்தமும் நிறைவுமே இந்தத் துன்பத்துக்கெல்லாம் மேலாகத் தெரிகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வியர்த்தமே.

அன்பு செலுத்தும்போது துன்பமே தெரிவதில்லை என்கிறேன். ஆனால் கடைசியில் ஒரு நாள் அன்பு செலுத்தப்பட்ட வஸ்துவே நமக்குப் பெரிய துன்பத்தைக் கொடுத்து விடுகிறது. நாம் ஒருவரிடம் அன்பு வைக்கிறோம். கடைசியில் ஒருநாள் அவர் நம்மைவிட்டுப் போயே போய் விடுகிறார். அல்லது நாமாவது அவரை விட்டு ஒருநாள் போகத்தான் போகிறோம். அப்போது, ஐயோ, நாம் இவரை விட்டுப் போகிறோமே என்ற பெரிய துக்கம் உண்டாகிறது. இத்தனை காலமாக அன்பு தந்த ஆனந்தமும் நிறைவும் கடைசியில் பொய்யாகி, இந்தத் துன்பத்திலேயே முடிந்தது என்று மனசு கலங்குகிறோம். அன்பின் முடிவான பலன் துன்பம்தானா என்று பெரிய சலிப்பு உண்டாகி விடுகிறது. எத்தனைக்கெத்தனை அன்பு வைக்கிறோமோ, அத்தனைக்கத்தனை துன்பம் பிரிவின் போது உண்டாவதைப் பார்க்கிறோம். அன்பே செலுத்தாமல் சுய காரியத்திறாகாகவோ, அல்லது ஜடமாகவோ இருக்கிற ஜன்மவாகவே சிலாக்கியமானதோ என்று கூடத் தோன்றிவிடும். அப்படிப் பட்டவனுக்கு இந்தப் பிரிவுத் துன்பமே இல்லையல்லவா?.

ஆனால் உண்மையில் சுய காரியவாதி பாபத்தைத்தான்

மூட்டைக் கட்டுகிறான். மனிதப் பிறவி எடுத்துவிட்டு, ஆனந்தம், நிறைவு முதலியன இல்லாமல் மரம், மட்டை, கல் மாதிரி ஜடமாக இருப்பதும் பிரயோஜனம் இல்லை.

அன்பு செய்தாலும் முடிவில் துன்பம், அன்பு இல்லாமல் இருந்தாலோ வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால் என்ன செய்வது?. மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்பிக்குறிய வஸ்து நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாதிருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து, அதனிடம் அந்பை வைத்து விட்டால் நாமும் அதுவும் ஒருநாளும் பிரியப்

போவதில்லை எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவான அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மைவிட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்து விடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

அழியாத பரமாத்மாவிடம் அன்பாக இருக்க வேண்டும் என்றால் வேறு யாரிடமும் அன்பாக இருக்கக்கூடாதா, மற்ற எல்லோரும் என்றோ ஒருநாள் நசிப்பவர்கள்தானே என்ற கேள்வி எழலாம். பரமாத்மாவிடம் அன்பை நாம் மேலும் மேலும் வளர்த்துக்கொண்டால் அவருக்கு வேறாக யாருமே இல்லை என்று தெரியும். மரணமடைகிற மனிதர்களாக எண்ணி, அதுவரை யாரிடமெல்லாம் துக்க ஹேதுவான அன்பை வைத்திருக்கிறோமோ அவர்களும்கூட இப்போது அழியாத பரமாத்மா ஸ்வரூபமாகவே பார்த்து அன்பு செலுத்த வேண்டும். அப்போது நம் அன்பு ஒரு நாளும் துக்கத்துக்கு மூலமாக ஆகாமலே இருக்கும்.

எல்லோரையும் பரமாத்ம ஸ்வரூபமாகப் பார்த்து அன்பு செலுத்த முடியாவிட்டாலும், ஆத்ம குணம் நிறைந்த பெரியவர்கள், நல்ல ஞானமும் அருளும் நிறைந்த ஸத்குரு ஆகியோரைப் பரமாத்மாவாகக் கருதி, அந்பு செலுத்துவது சுலபமாக முடிகிறது. அப்படிப்பட்டவர்களிடம் அன்பு

வைத்து ஆத்மார்ப்பணம் செய்துவிட்டால் போதும். அவர்கள் மூலமாக பரமாத்மா நமக்கு அநுக்கிரகம் பண்ணி விடுவார். நம் அந்புக்கும் பாத்திரமானவர் மரணமடைந்தாலும்கூட, பரமாத்மா வேஷமாகப் போட்டுக் கொண்ட ஒரு சரீரத்துக்குத் தான் அழிவு உண்டாயிற்று. இப்போது சரீரி பரமாத்மாவோடு ஒன்றாகிவிட்டார் என்ற ஞானத்தோடு பிரிவுத் துன்பத்துக்கு ஆளாகமலே இருப்போம். நம் அன்பு குஞ்சம்கூடக் குறையாமல் அப்படியே எந்நாளும் நிற்கும். ஈச்வரனிடம், ஸாதுகளிடம் இந்த அந்பை அப்யசிக்க ஆரம்பித்து, கொஞ்சம் கொஞ்சமாக சமஸ்த ஜீவராசிகளுக்கும் விஸ்தரிக்க வேண்டும். அதுவே ஜன்மா எடுத்தன் பயன்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பொதுவான தர்மங்கள்

### *அன்பு*

உலகத்தில் நாம் காண்கிற அன்பை மூன்று வகையாகப் பிரிக்கலாம். மகான்கள், யோக்கியர்கள், சத்தியசந்தர்கள், பரோபகாரிகள், ஞானிகள் அநுக்கிரக சக்திவாய்ந்த உத்தமர்கள் ஆகியோரிடம் அவர்களது குணத்துக்காக அன்பு ஏற்படுகிறது. பந்துக்களுக்கும் சிநேகிதர்களுக்கும் சேர்ந்து பழகுவதால் அவர்களிடம் ஒருவித அன்பு உண்டாகிறது. மூன்றாவது, ஒரு காரியத்துக்காக, லாபத்துக்காக சிலரிடம் அன்பு வைக்கிறோம். உதாரணமாக வியாபாரத்தில் சகாயம் செய்வார் என்பதற்காக ஒரு தனிகரிடம் அன்பு பாராட்டுகிறோம். சம்பளம் கொடுக்கிறார் என்பதற்காக யஜமானியிடம் அன்பாக இருக்கிறோம்.

இந்த மூவரை அன்பும் உண்மையானதல்ல. சாசுவதமானதல்ல. யஜமானர், நீ போய்விடு என்றால் உடனேயே நம் அன்பும் போய்விடும். பழகினவர்கள் தூர

தேசம் போனாலோ, காலாகதி அடைந்தாலோ, வேறு விதத்தில் அவர்களுடன் பழக்கம் போய்விட்டதாலோ நாளடைவில் அன்பும் போய்விடுகிறது. முதலில் பிரிவின்போது அழுத அழுகை என்றாக்கும் அப்படியேதானே இருக்க வேண்டும்? உத்தம புருஷர்களான மகான்களிடம் வைக்கும் அன்புகூட நிரந்தரமில்லைதான். மகான்களிடம் உத்தம குணம் குறைந்தால் - அல்லது குறைந்ததாக நமக்குத் தோன்றினாலே போதும் - அவரிடம் வைத்த அன்பும் குறைந்து விடுகிறது.

மூவகை அன்பும் காரணத்தால் ஏற்பட்டது. எனவே தான் அவை நிரந்தரமாக இருக்கவில்லை. உத்தம புருஷர்களிடம் இன்ன குணம் இருக்கிறது என்பதால், அந்தக் குணத்தைக் காரணமாகக் கொண்டே அன்பு வைக்கிறோம். அதோடு அவர்கல் நம்மை உத்தாரணம் செய்வார்கள் (உய்விப்பார்கள்) என்ற சுய காரியமும் உள்ளூர இருக்கவே செய்யும்.

இப்படியெல்லாம் எக்காரியமும் வியாஜமும் இன்றி பிரியமாக இருப்பதுதான் உண்மை அன்பு. ஒருவர் நம்மிடம் நெருங்கிப் பழகாவிட்டாலும் சரி, அவருக்கு ஆத்ம குணங்களும் அநுக்கிரக சக்தியும் இல்லாவிட்டாலும் சரி - அப்போதும் நாம் அவரிடம் மாறாத அன்பு வைத்தால் அதுவே உண்மையான அன்பு.

அப்படிப்பட்ட அன்பு யாறுக்காவது இருக்கா?. ஒரே ஒருவருக்கு இருக்கிறது. ஸ்வாமிதான் அந்த ஒரே ஒருவர்.

ஸ்வாமிக்கு நம்மிடம் இருக்கும் அன்புக்கு ஒரு காரணமும் இல்லை. காரணத்தை அவர் பாராட்டுவதாக இருந்தால் நமக்கு ஒருவேளை சோறுகூடப் போடமாட்டார். நம் பிழைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு, நம்மை இந்த மட்டும் காப்பாற்றுபவர் அன்பு மயமான பரமேசுவரனே. இந்தப் பரமசிவ அன்பின் திரிபே உலகில் காணும் மூன்றுவகை அன்புகளும்.

அந்தக் காரணமற்ற பரமசிவ அன்பை நானும் அப்பியசிக்க வேண்டும். தப்புச் செய்பவன் என்று காரணம் பார்த்து நாம் ஏன் ஒருவனை வெறுக்க வேண்டும்?. நாமே தப்புச் செய்கிறோமே, அப்போதும் நம்மை நாமே உதறித்

தள்ளுகிறோமா. அப்படியே மற்றவர்களிடத்திலும் இருக்க வேண்டும். மகா பெரியவர்களிடத்தில் அன்பு இருக்கவேண்டும். இன்னும் சொல்லப்போனால் அவனிடமே அதிக அன்பு இருக்க வேண்டும். நாம் தப்புச் செய்வது பேலவே இவனும் செய்கிறான். இவன் மனம் இவனை இப்படித் தூண்டுகிறது. அந்த மனத்தை நல்லதாக்க முயற்சி பண்ணுவோம் என்ரு நினைக்க வேண்டும். ஈஸ்வர கிருபையால் அநுக்கிரக சக்தி பெற்றிருப்பவர்கள், அதைக் கொண்டு பாபியிடம் உள்ள பாபங்களை நிவிருத்தி பண்ணுவதையே முக்கியமாகக் கொள்ள வேண்டும்.

ஆரம்பத்தில் ஒரே ஒரு மனிதனிடம் காரணமில்லாத தூய அன்பை வைக்கப் பழகிவிட்டால், பின்னால் அதுவே நம்மை அன்பு மயமாக்கி, அந்த அன்பை எல்லோரிடமும் பரப்ப உதவி புரியும். குருவிடம் இவ்விதம் பயன் எதிர்பாராமல், வியாஜம் இல்லாமல் அன்பு செலுத்த ஆரம்பிக்க வேண்டும். பின்பு அந்த அன்பு தருகிற ஆனந்தத்தில் பழகி பழகி லோகம் முழுவதும் குருவாக நினைத்து, சமஸ்தப் பிராணிகளிடமும் காரணமில்லாத சமமான அன்பு செலுத்த வேண்டும். லோகம் முழுவதும் அன்பை நிரப்பினால் அதுவே ஆனந்த நிலை. அதுவே பரம சாந்தி.

>

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

சமூக விஷயங்கள்

### *எது சுயராஜ்யம்*

சுதேசி, சுயராஜ்யம் என்று இப்போழுது எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால், உடை, நடை, பாவனை எல்லாவற்றிலும் வெள்ளைக்காரன் மாதிரி இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறார்கள். உவைகளெல்லாம் உள்ள மட்டும் நாம் பரதேசிகள். நம் நாடு பராதீனத்திலுள்ள ராஜ்யம்தான். வாஸ்தவமான சுயராஜ்யம் வரவேண்டுமென்றால் நம்முடையை தேசத்தின் ஆசார

அநுஷ்டானங்கள் எப்படி இருந்தன என்பதைக் கவனித்து, இப்பொழுது இருப்பதை அப்படி மாற்றினால் நல்லது என்று உணர்ந்து, அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்வதுதான். நம்முடைய தேசத்துப் பழைய வழக்கங்கள், தர்மங்கள், ஆத்ம சம்பத்துக்கள் மறாமல் இருக்க வேண்டும். பிற தேசத்தர்கள் மாதிரி நாம் இருக்க வேண்டும் என்று நினைப்பது தப்பு. வெளிநாட்டார் சொல்லாமலே, நாமே அவர்களுடைய பழக்கங்களுக்கு அடிமையாகிவிட்டபின், அரசியல் மட்டும் அடிமைத்தனம் இருந்ததென்ன, போடென்ன.

உண்மையான சுயராஜ்யமானால், நம்முடைய சுதந்திரப்படி நடத்தும் சட்டசபை எனில், நம்முடைய தர்மராஜ்யம் ஆதியில் எப்படி இருந்தது. அதை மீண்டும் கொண்டுவர என்ன செய்ய வேண்டுமென்பதை ஆலோசிக்க வேண்டும். நமக்கென்று ஒரு பண்பாடும், நாகரீகமும் உண்டு. இருக்கட்டுமே!. அதையே ஏன் கட்டிக் கொண்டு அழ வேண்டுமென்றால் நமது என்கிற வெறும் பாசத்துக்காக இப்படிச் சொல்லவில்லை. எத்தனையோ புராதன நாகரீகங்கள் காலப் பிரவாகத்தில் அடித்துக் கொண்டு போனபோதிலும், நம் பண்பாடும், நாகரீகமும் பாறாங்கல் போல எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக நிலைத்திருப்பதாலேயே இதற்கு ஒரு விசேஷம் இருக்கத்தான் செய்கிறதென்று உணர்ந்து, அதையே நாமும் அநுசரித்து வாழவேண்டும். நாம் நாமாக இருக்க வேண்டும். எவ்வளவு பலம் நமக்கு உண்டோ அவ்வளவையும் நன்மை நிஜமான நம்மவர்களாக்குவதில் உபயோகப்படுத்த வேண்டும்.

வெள்ளைக்கார வேஷத்திலே உள்ள நம்மவர்கள் சட்டம் செய்கிறார்கள். அதற்கு அடிமையாக நாம் இருக்கிறோம் என்றால் அதில் சுதந்திரத்தின் சாரமே இல்லை. நம்முடைய சம்பிரதாயங்களை அநுசரிக்காதவர்களுக்கு வோட்டுக் கொடுத்து வரும் ராஜ்யம் அடிமை ராஜ்யம்தான். லௌகிக விஷயங்கள்கூட ஆத்ம சம்பந்தமாகவும் தெய்வ சம்பந்தமாகவும் இருந்த முறைதான் நம்முடையது. அதன்படி இருந்தால் உத்கர்ஷத்தை (உயர்வை) அடையலாம் என்பதை அறிந்து, நமக்கு எந்த மாதிரி ஸ்வதந்திரம் உண்டோ அதை, அந்த முறையை நிலை நிறுத்துவதிலேயே பயன்படுத்த

வேண்டும். தர்மம், தொழில்முறை முதலியவைகளை அறிந்தவைகளையும், அநுஷ்டானம், ஒழுக்கம் உடையவர்களையுமே ராஜ்ய நிர்வாகத்தில் வைத்துக் பார்க்கவேண்டும். அவர்கள் நம்முடைய சாஸ்திரப்படி தர்ம ராஜ்யத்தை ஸ்தாபித்து, இது நன்றாக நடக்கிறது என்று காட்டி, மற்ற தேசத்தவர்களும் இதை அநுசரிக்கச் செய்ய வேண்டும்.

அப்படி நடத்துக்காட்டுவதற்கு நம்முடைய சாஸ்திரங்களையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும். வழிகாட்டும் புஸ்தகங்கள் பல இருக்கின்றன. இவை

இருப்பதால்தான் நானும் இதையெல்லாம் சொல்லவாவது முடிகிறது. இல்லாவிட்டால் எல்லாம் மறந்து போயிருக்கும். அவைகளைப் பார்த்து அந்தப்படி ஏன் நடத்தக்கூடாது. அந்தப்படி பண்ணுகிறவர்களை ஏன் சட்ட சபைக்கு அனுப்பக்கூடாது என்று எல்லா ஜனங்களும் ஆலோசித்துப் பார்க்க வேண்டும். நமக்குக் கொடுக்கப்படும் சுதந்திரத்தை இவ்விதம் பிரயோஜனப்படுத்தி, லோகத்தில் தர்மத்தை நடத்திக் காட்டி, மற்ற தேசத்தவர்களுக்கும் வழிகாட்டிப் பரமேசுவரனுடைய அநுக்ரஹத்தைப் பெற வேண்டும்.

## அறமும் அன்பும் அரசாங்கமும்

அரசனே தர்மத்துக்குக் காரண புருஷன் - ராஜா தர்மஸ்ய காரணம் - என்று ஒரு முதுமொழி இருக்கிறது. இதன் அர்த்தம் என்ன என்று பார்க்கலாம்.

முதலில் தர்மம் என்ன

மனிதராகப் பிறந்த எல்லோருக்கும் பசி, தாகம் இருக்கிறது. அவர்கள் வசிக்க ஓரிடம் வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் மனிதன் வசதி செய்துகொள்ள வேண்டும். ஏதோ ஒரு தொழிலைச் செய்தே இதற்கு வசதி செய்து கொள்கிறான். அத்தியாவசியமான சுய தேவையைப்பூர்த்தி செய்துகொள்வதோடு ஒவ்வொரு மனிதனும் பிறர் விஷயமாகச் சில கடமைகளையும் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. தன்னுடைய சமுதாயம், தேசம் இவற்றுக்கெல்லாம் மனிதன் கடமை ஆற்றவேண்டியிருக்கிறது. பல விதத்தில் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பலவிதத்தில் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பலவிதத்தில்

வீடு, நாடு இவற்றுக்கான கடமைகளைச் செய்யலாம். ஆனால் மனத்துக்குத் தோன்றியபடியெல்லாம் இவற்றைச் செய்யாமல், எவருக்கும் தீங்கு விளைவிக்காத விதத்தில், அதீதமான காமமும் குரோதமும் கலங்காமல் செய்ய வேண்டும். தன்னையும் மேம்படுத்திக்கொண்டு அனைவரையும் உயர்த்துகிற விதத்தில் தொழிலையும் கடமையையும் செய்ய முடியும். இவ்வாறு சம்பந்தப்பட்ட அனைவரது ஆத்ம அபிவிருத்திக்கும் அநுசரணையாக இக உலகைக் காரியங்களைச் செய்வதற்குத்தான் தர்மம் என்று பெயர்.

பலர் கூடி வாழ்கிற சமூகத்தை, அவர்களது பலவிதமான காரியங்களில் உரசலில்லாமல், சமூகம் முழுவதும் ஆத்மாபிவிருத்தி அடையும் முறையில் சீராக வைத்திருக்க வேண்டும். இப்படிச் செய்வதே ராஜாங்கத்தின் கடமை. பிரஜைகளின் லௌகிக வாழ்க்கையை ஒழுங்கு செய்வது, அவர்கள் ஆத்மாபிவிருத்தி அடைகிற வாய்ப்புகளையெல்லாம் பூர்த்தி செய்து தரவேண்டியது ராஜாங்கத்தின் பொறுப்பு. இதனாலேயே ராஜா தர்மஸ்ய காரணம் என்றனர்.

ராஜாங்கம், தனிமனிதர்கள் இவர்களுக்குப் பலவிதமான காரியங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எத்தனை காரியம் இருந்தாலும் அதற்கெல்லாம் மூலமும், நோக்கமும் அன்பு என்ற ஒன்றாகவே இருக்க வேண்டும். காரியம் என்று

ஏற்பட்டால் அதன் விளைவுக்கு ஆளாகிற ஒன்றும் இருக்கத்தான் செய்யும். காரியம் செய்பவன் இருப்பதுபோல் காரியத்தின் விளைவுக்கு ஆளாகிற ஒருவனும்

இருந்தே தீருவான். விளைவை அநுபவிக்கப் போகிறவர்களிடம் பூரண அன்பு வைத்தே எந்தக் காரியமும் செய்ய வேண்டும். அன்பிலேயே எந்தக் காரியமும் பிறக்க வேண்டும்.

உலக விகாரங்களில் யுத்தம் முதலியனவும் அத்தியாவசியமாகிவிடுகிற நிர்ப்பந்தம் ஏற்படுவதுண்டு. சிலருக்கு தண்டனை தர வேண்டியுள்ளது. ஆனால், யுத்தம் செய்யும் போதும், தண்டனை தருகிற போதும்கூட எதிராளிடியம் துவேஷம் கொள்ளாமல் அன்புடனேயே செய்ய வேண்டும்.

காரியம் எப்படிப்பட்டதாக இருந்தாலும் காரியம் செய்கிற மனசில் அன்பு தவிர வேறெதுவும் இருக்கக்கூடாது. அன்பு வேறு. புத்தரும் காந்தியும் சொன்ன அஹிம்சை வேறு. அன்பினால் லோக க்ஷேமத்தைச் செய்யும்போது, தப்புச் செய்பவர்களுக்கு ஹிம்சை செய்வதைத் தவிர்க்க முடியாமற் போகலாம். அப்போது ஹிம்சையினால் தோஷமும் இல்லை. ஆனால், தண்டனை பெறுகிறவர்களிடமும் நம் மனசில் அன்பே இருக்க வேண்டும். லோகக்ஷேமத்தை மட்டுமின்றி அவனுடைய க்ஷேமத்தைடும் - அதாவது இனிமேலும் இந்த கெடுதல்களைச் செய்து அவன் பாபத்தைத் பெருக்கிக் கொள்ளக்கூடாது என்பதையும் உத்தேசித்தே அவனுக்கு ஹிம்சை தரவேண்டியிருக்கிறது என்ற உணர்வோடு சிட்சிக்கவேண்டும். காமம், குரோதம், துவேஷம், வஞ்சனை இவற்றைப் பூரண மாக நீக்கிவிட்டு, லோகக்ஷேமத்திற்காக எந்தக் காரியமும் செய்யலாம். அன்பு ஒன்றே சகல காரியங்களுக்கும் வழித்துணை (guide) யாகிவிட்டால் உலகில் பல தீமைகள் தானாகச் சிறுகச் சிறுகச் மறைந்து போகும். இது என்னுடைய உபதேசம்(Message) அல்ல. இதுவே பாரத தேசத்தின் சகல ரிஷிகளும் முனிவர்களும் தந்திருக்கிற உபதேச சாரம்.

### குற்றத்தைக் குறைக்கும் வழி

ராஜாங்கம் எதற்காக இருக்கிறது. ஒரு தேசத்தில் அதிக பலம் உள்ளவர்கள், குறைந்த பலம் உள்ளவரை ஹிம்ஸிக்கலாம். பெரிய கூட்டத்தார் சிறிய கூட்டத்தாரை கஷ்டப்படுத்தலாம். பலர் சேர்ந்து ஒருவனை நிர்பந்தப்படுத்தி அவனது சொத்து, வீடு முதலியவற்றை ஆக்கிரமித்துக் கொள்ளலாம். இப்படி எல்லாம் நேராமல் தேசத்தில் ஒழுங்கு இருக்கச் செய்வதற்கு ஏற்பட்டதே ராஜாங்கம்.

தப்புச் செய்பவர்களை அவ்விதம் செய்யாமல் தடுப்பதற்காக ராஜாங்கம் என்ன செய்கிறது. தண்டனை தருகிறது. தண்டனை உண்டு என்ற பயம் இருப்பதாலேயே பலர் தப்புச் செய்யாமல் தடுக்கப்படுகிறார்கள்.

ஹிம்ஸை செய்த ஒருவனுக்கு அவன் செய்ததைக்காட்டிலும் ராஜாங்கம் அதிக ஹிம்ஸை தருகிறது. பத்து ரூபாயை அவன் திருடுவதால், திருட்டுக் கொடுத்தவனுக்கு சிறிது கஷ்டம்

உண்டாகிறது. திருடியவனுக்கோ அதைவிடப்

பெரிய கஷ்டமாகப் பல நாட்கள் சிறைவாசம் விதிக்கப்படுகிறது. இப்படிச் செய்தால்தான் அவன் மீண்டும் அந்தத் தப்பு பண்ணமாட்டான். மற்றவர்களும்

அந்தத் தப்பைப் பண்ணப் பயப்படுவார்கள் என்கிற அடிப்படையில் தண்ட நீதி அமைந்திருக்கிறது. மனித இயல்புப்படி (Phychology) பார்க்கும் போது இதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது.

ஆனால் இதனிலும் சிலாக்கியமான ஓர் உபாயத்தையும் அரசாங்கம் அதே சமயத்தில் விருத்தி செய்யவேண்டும். குற்றம் இழைத்த பின் ஒருவனைத் தண்டிப்பதும், ஒருவர் சுபாவமான தர்ம உணர்ச்சி இல்லாமல் தண்டனைக்காகப் பயந்தே குற்றம் செய்யாமல் இருக்கச் செய்வதுதான் சிலாக்கியமானது.

முதலில் ஒருவன் ஹிம்ஸை தருவது, பிறகு அரசாங்கம் அவனுக்கு அதைவிட அதிக ஹிம்ஸை தருவது என்கிற அர்த்த சாஸ்திர நீதியையே நடைமுறையில் கடைபிடிக்க வேண்டியிருந்தாலும், இந்த அர்த்த சாஸ்திரமும், தர்ம சாஸ்திரத்தின் காலில் விழுந்து கிடக்க வேண்டியதுதான் என்பதை ராஜாங்கம் ஒரு லட்சிய நிலைக்காவது (Ideal) புரிந்து கொள்ள வேண்டும்.

தர்ம சாஸ்திரப்படி நடக்கும் ஸத்துக்கள் உருவத்திற்கு உரிய சூழ்நிலையை அரசாங்கம் காப்பாற்றிக் கொடுத்தால், ஜனங்களுக்கு குற்றம் செய்கிற உணர்வே கொஞ்சம் கொஞ்சமாக குறைந்துவிடும். தர்மம் அறிந்தவர்கள், தர்மத்தை அநுஷ்டிப்பவர்கள் விருந்தியாவதற்கு வசதியிருந்தால் அவர்கள் மற்றவர்களிடமும் தங்கள் வாழ்க்கை உதாரணத்தாலேயே சாந்தத்தையும் ஒழுக்கத்தையும் பரப்புவார்கள். சண்டை, பூசல், குற்றம் எல்லாம் குறையும்.

முதலில் ராஜாங்கப் பதவியில் உள்ளவர்கள் தர்ம சீலர்களாய் இருக்க வேண்டும். இவர்கள் செய்வதும் சொல்வதும் சொந்த நன்மைக்காக அல்ல. நம் நன்மைக்காகத்தான் என்று ஜனங்கள் நம்பிக்கை வரக்கூடிய தர்மிஷ்டிகள் தர்மப்படியே

ராஜாங்கம் நடத்த வேண்டும். தர்மிஷ்டிகள் தர்மங்களை சாந்தமாக எடுத்துச் சொன்னால் ஜனங்கள் அதன்படியே நடப்பார்கள்.

இப்படிக் குற்றமே இல்லாமல் ஆக்குகிற காரியத்தை ராஜாங்கத்தார் மட்டும் செய்ய முடியாது. தர்ம சீலர்களான மற்றவர்களும் சேர்ந்து இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். இவ்வாறு தர்மிஷ்டிகள் கைங்கரியம் செய்வதற்கு அநுகூலமான சூன்நிலையை ராஜாங்கம் ஏற்படுத்தித் தரவேண்டும்.

போலீசையும் கோர்ட்டையும் விருத்தி செய்வதைவிட தர்மக்ஞனர்களை விருத்தி பண்ணுவதில் ராஜாங்கம் அதிக கவன்ம் செலுத்த வேண்டும். சொந்த நலனைக் கருதாமல், உபதேசத்தைப் பலம் பண்ணும் தொழிலாக்காமல், பரோபகாரமே லக்ஷிமமாகக் கொண்டு சாந்தமாகத் தர்மங்களை எடுத்துச் சொல்கிறவர்களுக்கு ராஜாங்கம் உற்சாகம் தரவேண்டும். இந்த உற்சாகத்தாலேயே மேலும் பலர் அவ்விதம் உருவாவார்கள். எடுத்துச் சொல்வதைவிட எடுத்துக்காட்டாகத் தாங்களே இருப்பதுதான் அதிக சக்தி வாய்ந்தது.

கோர்ட்டுகள் அதிகமாகின்றன என்றால் குற்றங்கள் அதிகமாகின்றன என்றே அர்த்தம். இதற்குப் பதில் கோயில்கள் அதிகமானால் எங்கும் சாந்தம் பரவும். பழைய கால ராஜாக்கள் கோர்ட்டுகளுக்குப் பதிலாகக் கோயில்களைக் கட்டி வந்தார்கள். பழைய கோயில்களைப் புதுப்பித்தார்கள். அந்தக் கோயில்களிலேயே

பொழுது போக்குக்கான சகல கலைகளும் கூடத் தெய்வீகமாக்கப்பட்டு அர்ப்பணமாயின. ஜனங்களும் ஆலய வழிபாடு செய்து சாந்தர்களாக

இருந்தார்கள். இப்போதுள்ளது போலச் சமூகச் சச்சரவு, பூசல் எல்லாம் அப்போது இல்லை.

சட்டம் போட்டுக் குற்றம் செய்யாமல் தடுப்பதைவிட, ஒரு நல்ல மார்க்கத்தைக் காட்டி, அதில் ஜனங்களைத் திருப்பித் தப்பைப் எண்ணவும் செய்யவும் அவகாசத்தைக் குறைக்க வேண்டும். இப்படி தண்டத்தைக் காட்டாமல் நல்லதைக் காட்டித் தேசத்தில் சாந்தியை உண்டாக்குவதுதான்

சிலாக்கியம். இந்த சாந்திதான் நிலைத்து நிற்கும். சாந்தர்களுக்கும், ஸத்துக்களுக்கும், தார்மிஷ்டிகளுக்கும் ராஜாங்கம் மதிப்புத் தந்தாலே தேசத்திலும் ஜனங்களிடையே இந்த நல்ல பண்புகள் விருத்தியாகும்.

**உண்மைக் கல்வி**

உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அமைதி நிலவுக்றதோ அவ்வளவுக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறதென்பது பிரத்தியக்ஷ அநுபவம். மன அமைதியின் உயர்நிலையே மேலான புருஷார்த்தமாகும். அமைதி குறையக் குறையத் துன்பமும் வளரும். மனிதர்கள் தங்கள் துன்பங்கள் நீங்குவதற்கு முயற்சி செய்யும்போது, பிறரைத் துன்புறுத்தவும் நேருகிறது. இவ்விதம் ஒவ்வொருவரும் சந்தர்ப்பங்களையொட்டி மற்றவர்களைத் துன்புறுத்த முயலும்போது சமுதாயத்தில் குழப்பம் நேரும் போதெல்லாம் அதை அடக்கி அமைதியையும், சமாதானத்தையும் நிலை நிறுத்த அரசாங்க அதிகாரிகள் சட்டத்தின் மூலம் நடவடிக்கைகள் எடுக்கிறார்கள். ஆயினும், உண்மையான பரிகாரம் யாதெனில், மக்கல் எல்லோரும் புலன்களைப் பறிக்கும் வெளி விஷயங்களிலிருந்து தங்கள் மனஸைத் திருப்பி அதைத் தங்கள் மனஸைத் திருப்பி அதைத் தங்கள் வசமாக்கி அமைதியாக இருக்க எப்பொழுது முற்படுகிறார்களோ, அப்போதுதான் துன்பம் அவர்களை அணுகாமல் இருக்கும். அதோடு அவர்களால் பிறருக்குத் துன்பம் விளையாமலும் இருக்கும். நல்ல கல்வியைப் பயிலும் பயனாகத்தான் இத்தகைய வெளி அமைதியும் நம் நாட்டிலே தொன்று தொட்டு சித்தித்து வந்திருகின்றன.

நம் பாரத நாட்டின் முற்காலக் கல்வியின் முதல் நோக்கம் மன அமைதியை அடைவதேயாகும். புதிது புதிதாகத் தோன்றும் பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் மேன்மேலும் கல்வியைப் பெருக்குவதில் தவறில்லை. ஆனால், அதன் பயனை தர்ம மார்க்கத்தில் மட்டுமே உதவுமாறு செய்தால்தான் நாடும் மக்களும் உயர்வான அமைதி நிலையை அடைய முடியும். இவ்வாறில்லாமல் புலன்கள் போன வழியே அவைகளை பிரயோஜனப்படுத்திக் கொண்டிருந்தால், எத்தனை படிப்பும் விஞ்ஞான அறிவும் இருந்தாலும் கெட்ட எண்ணங்களும் துராசைகளுந்தான்

வளரும். இன்னல்களும் துன்பங்களும் பெருகும்.

உண்மையான கல்வி என்பது ஆத்மஞானம் அடைய உதவுவதேயாகும். ஆத்ம ஞானத்தாலேயே மக்கள் அமரத்துவம் அடைகிறார்கள். எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ அந்தப் பயனை உண்மைக் கல்வி அளிக்கிறது.

மற்ற விதமான கல்விப் பயிற்ச்சிகளெல்லாம் உலகப் பயன்ரளைத்தான் அளிக்கின்றன. ஆனாலும் அவையும் படிப்படியாகப் பரமாத்மாவைத்தான் சேர

உபயோகப்படலாம். உலகப் பயன் என்பது பொதுவாகப் பொருள் திரட்டுவதையே குறிக்கின்றது. பொருள்கூட பலவிதமான தருமங்களை செய்யப் பயன்படுகிறது. லௌகிக தருமங்களும் பிரம்ம ஞானத்துக்குத் சாதகமாகின்றன. தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களைச் சரிவர நடத்துவதாலும், தவத்தினாலும், இறைவணை வணங்கி வழிபடுவதாலும் ஒருவன் ஆத்ம ஞானத்தை அடைகிறான் என ஆதி ஆசாரியார்கள் கூறியுள்ளார்கள்.

ஆத்ம ஞானத்தை அளிக்கும் கல்வியைப் பரவித்யை எனவும், மற்றவற்றை அபரவித்யை எனவும் கூறுவர். பரவித்யை எனும் பிரம்ம ஞானம், இப்போது நமக்குக் கொஞ்சங்கூடப் புலனாகாத பரம ஸத்தியத்தை நாம் அறிவதில் நேரான பலனை அளிக்கிறது. அஞ்ஞான இருளைப் போக்குகிறது. கண்களுக்குப் புலனாகாத தர்மத்தின் லட்சணத்தை வேதம், ஸ்மிருதி இவைகளின் மூலமாகத்தான் அறிய முடியும். ஞானத்துக்குப் பிரத்தயக்ஷம், அநுமானம், யுக்தி இவை மட்டுமின்றி வேதம், அநுபவம் இவ்வகையான பிரமாணங்களே ஆதாரமாக இருக்கின்றன. இது ஆதிசங்கர பகவத் பாதாசாரியார்களின் தீர்மானம். ஆனாலும், மனிதனது புத்தி நுட்பத்தால் கண்களுக்குப் புலனாகும் பயனை மட்டும் விளக்கூடிய வான சாஸ்திரம், அரசியல் பொருளாதாரம், சரித்திரம், ஸயன்ஸ்கள் இவைகளும், வெளிநாட்டாரது ஆராய்ச்சி முறைகளும் கற்பிக்கப்படுவதும் நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவியாகத்தான் இருக்கிறது.

ஆஸ்திக மயமான கல்வி போதனையுடன் அந்நிய

நாட்டாரின் முறைகளைக் கலந்து போதிப்பதில் நாம் மிகவும் ஜாக்கிரதையுடன் நிதானத்துடன் நடந்து கொள்ள வேண்டும். நமது ஆத்ம சுத்தி, அந்தரங்க சுத்தி, ஒழுக்கம் - இவற்றைக் கல்வியின் உறுபலனாக கருத வேண்டும். நம் புலன்களுக்கு மட்டுமே சுக உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் எளிதில் தரக்கூடிய வகையில் உள்ள எல்லா அம்சங்களையும் போதனா முறையிலிருந்து விலக்கவேண்டும். மேலை நாட்டவரின் நடை, உடை, பாவனை, உணவு உரையாடல் முதலியவைகளில் ஈடுபட்டு அவைகளைக் கையாளுவோமேயானால் படிப்படையாக நமது பண்பாடு அறல் இவைகளிலிருந்து நாம் நழுவி, நமது ஆன்ம நலனுக்கு இடையூறு செய்துகொள்வதோடு, புண்ணிய பூமியாகிய இந்தப் பாரத நாட்டுக்கே கெடுதல் ஏற்படுத்தி விடுவோம்.

பாரத நாட்டில் தற்காலம் நமது மக்கள் பெரும்பாலும் சிறு பிராயம் முதலே தம் தேசத்துக்குரிய ஒழுக்கம், பண்பாடு, இறைவணக்கம், ஆத்ம தியானம், இவ்விதமான பழக்க வழக்கமே இல்லாமலிருந்து வருகின்றனர். விஞ்ஞானத்தைப் பயில்வதில் மட்டுமின்றி வாழ்முறையிலும்கூட வெளிநாட்டாரது முறைகளையே பின்பற்றி வருகின்றனர். இதனால் மக்களுக்கு இந்த உலகத்தின் சாமானிய இன்பத்தையும் மறு உலக்த்தின் பேரின்ப வழியையும் அடையத் தடை ஏற்படுகின்றதென்பது தெளிவு. ஆஸ்திகப் பிரம்பரையில் தோன்றிய நமது குழந்தைகளுக்குச் சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தர்மம், ஒழுக்கம், பக்தி, ஞானம் முதலியவற்றைக் கடைபிடித்து ஒழுகுவதற்கு அநுகூலமான கல்வியைப்

போதிக்க வேண்டியதே நம் முதற் கடமை.

---

# அறமும் அன்பும் அரசாங்கமும்

அரசனே தர்மத்துக்குக் காரண புருஷன் - ராஜா தர்மஸ்ய காரணம் - என்று ஒரு முதுமொழி இருக்கிறது. இதன் அர்த்தம் என்ன என்று பார்க்கலாம்.

முதலில் தர்மம் என்ன?

மனிதராகப் பிறந்த எல்லோருக்கும் பசி, தாகம் இருக்கிறது. அவர்கள் வசிக்க ஒரிடம் வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் மனிதன் வசதி செய்துகொள்ள வேண்டும். ஏதோ ஒரு தொழிலைச் செய்தே இதற்கு வசதி செய்து கொள்கிறான். அத்தியாவசியமான சுய தேவையைப்பூர்த்தி செய்துகொள்வதோடு ஒவ்வொரு மனிதனும் பிறர் விஷயமாகச் சில கடமைகளையும் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. தன்னுடைய சமுதாயம், தேசம் இவற்றுக்கெல்லாம் மனிதன் கடமை ஆற்றவேண்டியிருக்கிறது. பல விதத்தில் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பலவிதத்தில் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பலவிதத்தில் வீடு, நாடு இவற்றுக்கான கடமைகளைச் செய்யலாம். ஆனால் மனத்துக்குத் தோன்றியபடியெல்லாம் இவற்றைச் செய்யாமல், எவருக்கும் தீங்கு விளைவிக்காத விதத்தில், அதீதமான காமமும் குரோதமும் கலங்காமல் செய்ய வேண்டும். தன்னையும் மேம்படுத்திக்கொண்டு அனைவரையும் உயர்த்துகிற விதத்தில் தொழிலையும் கடமையையும் செய்ய முடியும். இவ்வாறு சம்பந்தப்பட்ட அனைவரது ஆத்ம அபிவிருத்திக்கும் அநுசரணையாக இக உலகைக் காரியங்களைச் செய்வதற்குத்தான் தர்மம் என்று பெயர்.

பலர் கூடி வாழ்கிற சமூகத்தை, அவர்களது பலவிதமான காரியங்களில் உரசலில்லாமல், சமூகம் முழுவதும் ஆத்மாபிவிருத்தி அடையும் முறையில் சீராக வைத்திருக்க வேண்டும். இப்படிச் செய்வதே ராஜாங்கத்தின் கடமை. பிரஜைகளின் லௌகிக வாழ்க்கையை ஒழுங்கு செய்வது, அவர்கள் ஆத்மாபிவிருத்தி அடைகிற வாய்ப்புகளையெல்லாம் பூர்த்தி செய்து தரவேண்டியது ராஜாங்கத்தின் பொறுப்பு. இதனாலேயே ராஜா தர்மஸ்ய

காரணம் என்றனர்.

ராஜாங்கம், தனிமனிதர்கள் இவர்களுக்குப் பலவிதமான காரியங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எத்தனை காரியம் இருந்தாலும் அதற்கெல்லாம் மூலமும், நோக்கமும் அன்பு என்ற ஒன்றாகவே இருக்க வேண்டும். காரியம் என்று

ஏற்பட்டால் அதன் விளைவுக்கு ஆளாகிற ஒன்றும் இருக்கத்தான் செய்யும். காரியம் செய்பவன் இருப்பதுபோல் காரியத்தின் விளைவுக்கு ஆளாகிற ஒருவனும்

இருந்தே தீருவான். விளைவை அநுபவிக்கப் போகிறவர்களிடம் பூரண அன்பு வைத்தே எந்தக் காரியமும் செய்ய வேண்டும். அன்பிலேயே எந்தக் காரியமும் பிறக்க வேண்டும்.

உலக விகாரங்களில் யுத்தம் முதலியனவும் அத்தியாவசியமாகிவிடுகிற நிர்ப்பந்தம் ஏற்படுவதுண்டு. சிலருக்கு தண்டனை தர வேண்டியுள்ளது. ஆனால், யுத்தம் செய்யும் போதும், தண்டனை தருகிற போதும்கூட எதிராளிடியம் துவேஷம் கொள்ளாமல் அன்புடனேயே செய்ய வேண்டும்.

காரியம் எப்படிப்பட்டதாக இருந்தாலும் காரியம் செய்கிற மனசில் அன்பு தவிர வேறெதுவும் இருக்கக்கூடாது. அன்பு வேறு. புத்தரும் காந்தியும் சொன்ன அஹிம்சை வேறு. அன்பினால் லோக க்ஷேமத்தைச் செய்யும்போது, தப்புச் செய்பவர்களுக்கு ஹிம்சை செய்வதைத் தவிர்க்க முடியாமற் போகலாம். அப்போது ஹிம்சையினால் தோஷமும் இல்லை. ஆனால், தண்டனை பெறுகிறவர்களிடமும் நம் மனசில் அன்பே இருக்க வேண்டும். லோகக்ஷேமத்தை மட்டுமின்றி அவனுடைய க்ஷேமத்தைடும் - அதாவது இனிமேலும் இந்த கெடுதல்களைச் செய்து அவன் பாபத்தைத் பெருக்கிக் கொள்ளக்கூடாது என்பதையும் உத்தேசித்தே அவனுக்கு ஹிம்சை தரவேண்டியிருக்கிறது என்ற உணர்வோடு சிட்சிக்கவேண்டும். காமம், குரோதம், துவேஷம், வஞ்சனை இவற்றைப் பூரண மாக நீக்கிவிட்டு, லோகக்ஷேமத்திற்காக எந்தக் காரியமும் செய்யலாம். அன்பு ஒன்றே சகல காரியங்களுக்கும் வழித்துணை (guide) யாகிவிட்டால் உலகில் பல தீமைகள் தானாகச் சிறுகச் சிறுகச் மறைந்து

போகும். இது என்னுடைய உபதேசம்(Message) அல்ல. இதுவே பாரத தேசத்தின் சகல ரிஷிகளும் முனிவர்களும் தந்திருக்கிற உபதேச சாரம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### சமூக விஷயங்கள்

### *குற்றத்தைக் குறைக்கும் வழி*

ராஜாங்கம் எதற்காக இருக்கிறது. ஒரு தேசத்தில் அதிக பலம் உள்ளவர்கள், குறைந்த பலம் உள்ளவரை ஹிம்ஸிக்கலாம். பெரிய கூட்டத்தார் சிறிய கூட்டத்தாரை கஷ்டப்படுத்தலாம். பலர் சேர்ந்து ஒருவனை நிர்பந்தப்படுத்தி அவனது சொத்து, வீடு முதலியவற்றை ஆக்கிரமித்துக் கொள்ளலாம். இப்படி எல்லாம் நேராமல் தேசத்தில் ஒழுங்கு இருக்கச் செய்வதற்கு ஏற்பட்டதே ராஜாங்கம்.

தப்புச் செய்பவர்களை அவ்விதம் செய்யாமல் தடுப்பதற்காக ராஜாங்கம் என்ன செய்கிறது. தண்டனை தருகிறது. தண்டனை உண்டு என்ற பயம் இருப்பதாலேயே பலர் தப்புச் செய்யாமல் தடுக்கப்படுகிறார்கள்.

ஹிம்ஸை செய்த ஒருவனுக்கு அவன் செய்ததைக்காட்டிலும் ராஜாங்கம் அதிக ஹிம்ஸை தருகிறது. பத்து ரூபாயை அவன் திருடுவதால், திருட்டுக் கொடுத்தவனுக்கு சிறிது கஷ்டம் உண்டாகிறது. திருடியவனுக்கோ அதைவிடப்

பெரிய கஷ்டமாகப் பல நாட்கள் சிறைவாசம் விதிக்கப்படுகிறது. இப்படிச் செய்தால்தான் அவன் மீண்டும் அந்தத் தப்பு பண்ணமாட்டான். மற்றவர்களும்

அந்தத் தப்பைப் பண்ணப் பயப்படுவார்கள் என்கிற அடிப்படையில் தண்ட நீதி அமைந்திருக்கிறது. மனித இயல்புப்படி (Phychology) பார்க்கும் போது இதை ஒப்புக்

கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது.

ஆனால் இதனிலும் சிலாக்கியமான ஓர் உபாயத்தையும் அரசாங்கம் அதே சமயத்தில் விருத்தி செய்யவேண்டும். குற்றம் இழைத்த பின் ஒருவனைத் தண்டிப்பதும், ஒருவர் சுபாவமான தர்ம உணர்ச்சி இல்லாமல் தண்டனைக்காகப் பயந்தே குற்றம் செய்யாமல் இருக்கச் செய்வதுதான் சிலாக்கியமானது.

முதலில் ஒருவன் ஹிம்ஸை தருவது, பிறகு அரசாங்கம் அவனுக்கு அதைவிட அதிக ஹிம்ஸை தருவது என்கிற அர்த்த சாஸ்திர நீதியையே நடைமுறையில் கடைபிடிக்க வேண்டியிருந்தாலும், இந்த அர்த்த சாஸ்திரமும், தர்ம சாஸ்திரத்தின் காலில் விழுந்து கிடக்க வேண்டியதுதான் என்பதை ராஜாங்கம் ஒரு லட்சிய நிலைக்காவது (Ideal) புரிந்து கொள்ள வேண்டும்.

தர்ம சாஸ்திரப்படி நடக்கும் ஸத்துக்கள் உருவத்திற்கு உரிய சூழ்நிலையை அரசாங்கம் காப்பாற்றிக் கொடுத்தால், ஜனங்களுக்கு குற்றம் செய்கிற உணர்வே கொஞ்சம் கொஞ்சமாக குறைந்துவிடும். தர்மம் அறிந்தவர்கள், தர்மத்தை அநுஷ்டிப்பவர்கள் விருந்தியாவதற்கு வசதியிருந்தால் அவர்கள் மற்றவர்களிடமும் தங்கள் வாழ்க்கை உதாரணத்தாலேயே சாந்தத்தையும் ஒழுக்கத்தையும் பரப்புவார்கள். சண்டை, பூசல், குற்றம் எல்லாம் குறையும்.

முதலில் ராஜாங்கப் பதவியில் உள்ளவர்கள் தர்ம சீலர்களாய் இருக்க வேண்டும். இவர்கள் செய்வதும் சொல்வதும் சொந்த நன்மைக்காக அல்ல. நம் நன்மைக்காகத்தான் என்று ஜனங்கள் நம்பிக்கை வரக்கூடிய தர்மிஷ்டிகள் தர்மப்படியே ராஜாங்கம் நடத்த வேண்டும். தர்மிஷ்டிகள் தர்மங்களை சாந்தமாக எடுத்துச் சொன்னால் ஜனங்கள் அதன்படியே நடப்பார்கள்.

இப்படிக் குற்றமே இல்லாமல் ஆக்குகிற காரியத்தை ராஜாங்கத்தார் மட்டும் செய்ய முடியாது. தர்ம சீலர்களான மற்றவர்களும் சேர்ந்து இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். இவ்வாறு தர்மிஷ்டிகள் கைங்கரியம் செய்வதற்கு அநுகூலமான சூன்நிலையை ராஜாங்கம் ஏற்படுத்தித்

தரவேண்டும்.

போலீசையும் கோர்ட்டையும் விருத்தி செய்வதைவிட தர்மக்ஞுனர்களை விருத்தி பண்ணுவதில் ராஜாங்கம் அதிக கவன்ம் செலுத்த வேண்டும். சொந்த நலனைக் கருதாமல், உபதேசத்தைப் பலம் பண்ணும் தொழிலாக்காமல், பரோபகாரமே லக்ஷிமமாகக் கொண்டு சாந்தமாகத் தர்மங்களை எடுத்துச் சொல்கிறவர்களுக்கு ராஜாங்கம் உற்சாகம் தரவேண்டும். இந்த உற்சாகத்தாலேயே மேலும் பலர் அவ்விதம் உருவாவார்கள். எடுத்துச் சொல்வதைவிட எடுத்துக்காட்டாகத் தாங்களே இருப்பதுதான் அதிக சக்தி வாய்ந்தது.

கோர்ட்டுகள் அதிகமாகின்றன என்றால் குற்றங்கள் அதிகமாகின்றன என்றே அர்த்தம். இதற்குப் பதில் கோயில்கள் அதிகமானால் எங்கும் சாந்தம் பரவும். பழைய கால ராஜாக்கள் கோர்ட்டுகளுக்குப் பதிலாகக் கோயில்களைக் கட்டி வந்தார்கள். பழைய கோயில்களைப் புதுப்பித்தார்கள். அந்தக் கோயில்களிலேயே

பொழுது போக்குக்கான சகல கலைகளும் கூடத் தெய்வீகமாக்கப்பட்டு அர்ப்பணமாயின. ஜனங்களும் ஆலய வழிபாடு செய்து சாந்தர்களாக

இருந்தார்கள். இப்போதுள்ளது போலச் சமூகச் சச்சரவு, பூசல் எல்லாம் அப்போது இல்லை.

சட்டம் போட்டுக் குற்றம் செய்யாமல் தடுப்பதைவிட, ஒரு நல்ல மார்க்கத்தைக் காட்டி, அதில் ஜனங்களைத் திருப்பித் தப்பைப் எண்ணவும் செய்யவும் அவகாசத்தைக் குறைக்க வேண்டும். இப்படி தண்டத்தைக் காட்டாமல் நல்லதைக் காட்டித் தேசத்தில் சாந்தியை உண்டாக்குவதுதான் சிலாக்கியம். இந்த சாந்திதான் நிலைத்து நிற்கும். சாந்தர்களுக்கும், ஸத்துக்களுக்கும், தார்மிஷ்டிகளுக்கும் ராஜாங்கம் மதிப்புத் தந்தாலே தேசத்திலும் ஜனங்களிடையே இந்த நல்ல பண்புகள் விருத்தியாகும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## சமூக விஷயங்கள்

### ***உண்மைக் கல்வி***

உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அமைதி நிலவுக்றதோ அவ்வளவுக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறதென்பது பிரத்தியக்ஷ அநுபவம். மன அமைதியின் உயர்நிலையே மேலான புருஷார்த்தமாகும். அமைதி குறையக் குறையத் துன்பமும் வளரும். மனிதர்கள் தங்கள் துன்பங்கள் நீங்குவதற்கு முயற்சி செய்யும்போது, பிறரைத் துன்புறுத்தவும் நேருகிறது. இவ்விதம் ஒவ்வொருவரும் சந்தர்ப்பங்களையொட்டி மற்றவர்களைத் துன்புறுத்த முயலும்போது சமுதாயத்தில் குழப்பம் நேரும் போதெல்லாம் அதை அடக்கி அமைதியையும், சமாதானத்தையும் நிலை நிறுத்த அரசாங்க அதிகாரிகள் சட்டத்தின் மூலம் நடவடிக்கைகள் எடுக்கிறார்கள். ஆயினும், உண்மையான பரிகாரம் யாதெனில், மக்கல் எல்லோரும் புலன்களைப் பறிக்கும் வெளி விஷயங்களிலிருந்து தங்கள் மனஸைத் திருப்பி அதைத் தங்கள் மனஸைத் திருப்பி அதைத் தங்கள் வசமாக்கி அமைதியாக இருக்க எப்பொழுது முற்படுகிறார்களோ, அப்போதுதான் துன்பம் அவர்களை அணுகாமல் இருக்கும். அதோடு அவர்களால் பிறருக்குத் துன்பம் விளையாமலும் இருக்கும். நல்ல கல்வியைப் பயிலும் பயனாகத்தான் இத்தகைய வெளி அமைதியும் நம் நாட்டிலே தொன்று தொட்டு சித்தித்து வந்திருகின்றன.

நம் பாரத நாட்டின் முற்காலக் கல்வியின் முதல் நோக்கம் மன அமைதியை அடைவதேயாகும். புதிது புதிதாகத் தோன்றும் பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் மேன்மேலும் கல்வியைப் பெருக்குவதில் தவறில்லை. ஆனால், அதன் பயனை தர்ம மார்க்கத்தில் மட்டுமே உதவுமாறு செய்தால்தான் நாடும் மக்களும் உயர்வான அமைதி நிலையை அடைய முடியும். இவ்வாறில்லாமல் புலன்கள் போன வழியே அவைகளை பிரயோஜனப்படுத்திக் கொண்டிருந்தால், எத்தனை படிப்பும் விஞ்ஞான அறிவும் இருந்தாலும் கெட்ட எண்ணங்களும் துராசைகளுந்தான்

வளரும். இன்னல்களும் துன்பங்களும் பெருகும்.

உண்மையான கல்வி என்பது ஆத்மஞானம் அடைய உதவுவதேயாகும். ஆத்ம ஞானத்தாலேயே மக்கள் அமரத்துவம் அடைகிறார்கள். எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ அந்தப் பயனை உண்மைக் கல்வி அளிக்கிறது.

மற்ற விதமான கல்விப் பயிற்ச்சிகளெல்லாம் உலகப் பயன்ரளைத்தான் அளிக்கின்றன. ஆனாலும் அவையும் படிப்படியாகப் பரமாத்மாவைத்தான் சேர

உபயோகப்படலாம். உலகப் பயன் என்பது பொதுவாகப் பொருள் திரட்டுவதையே குறிக்கின்றது. பொருள்கூட பலவிதமான தருமங்களை செய்யப் பயன்படுகிறது. லௌகிக தருமங்களும் பிரம்ம ஞானத்துக்குத் சாதகமாகின்றன. தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களைச் சரிவர நடத்துவதாலும், தவத்தினாலும், இறைவணை வணங்கி வழிபடுவதாலும் ஒருவன் ஆத்ம ஞானத்தை அடைகிறான் என ஆதி ஆசாரியார்கள் கூறியுள்ளார்கள்.

ஆத்ம ஞானத்தை அளிக்கும் கல்வியைப் பரவித்யை எனவும், மற்றவற்றை அபரவித்யை எனவும் கூறுவர். பரவித்யை எனும் பிரம்ம ஞானம், இப்போது நமக்குக் கொஞ்சங்கூடப் புலனாகாத பரம ஸத்தியத்தை நாம் அறிவதில் நேரான பலனை அளிக்கிறது. அஞ்ஞான இருளைப் போக்குகிறது. கண்களுக்குப் புலனாகாத தர்மத்தின் லட்சணத்தை வேதம், ஸ்மிருதி இவைகளின் மூலமாகத்தான் அறிய முடியும். ஞானத்துக்குப் பிரத்தயக்ஷம், அநுமானம், யுக்தி இவை மட்டுமின்றி வேதம், அநுபவம் இவ்வகையான பிரமாணங்களே ஆதாரமாக இருக்கின்றன. இது ஆதிசங்கர பகவத் பாதாசாரியார்களின் தீர்மானம். ஆனாலும், மனிதனது புத்தி நுட்பத்தால் கண்களுக்குப் புலனாகும் பயனை மட்டும் விளக்கூடிய வான சாஸ்திரம், அரசியல் பொருளாதாரம், சரித்திரம், ஸயன்ஸ்கள் இவைகளும், வெளிநாட்டாரது ஆராய்ச்சி முறைகளும் கற்பிக்கப்படுவதும் நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவியாகத்தான் இருக்கிறது.

ஆஸ்திக மயமான கல்வி போதனையுடன் அந்நிய

நாட்டாரின் முறைகளைக் கலந்து போதிப்பதில் நாம் மிகவும் ஜாக்கிரதையுடன் நிதானத்துடன் நடந்து கொள்ள வேண்டும். நமது ஆத்ம சுத்தி, அந்தரங்க சுத்தி, ஒழுக்கம் - இவற்றைக் கல்வியின் உறுபலனாக கருத வேண்டும். நம் புலன்களுக்கு மட்டுமே சுக உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் எளிதில் தரக்கூடிய வகையில் உள்ள எல்லா அம்சங்களையும் போதனா முறையிலிருந்து விலக்கவேண்டும். மேலை நாட்டவரின் நடை, உடை, பாவனை, உணவு உரையாடல் முதலியவைகளில் ஈடுபட்டு அவைகளைக் கையாளுவோமேயானால் படிப்படையாக நமது பண்பாடு அறல் இவைகளிலிருந்து நாம் நழுவி, நமது ஆன்ம நலனுக்கு இடையூறு செய்துகொள்வதோடு, புண்ணிய பூமியாகிய இந்தப் பாரத நாட்டுக்கே கெடுதல் ஏற்படுத்தி விடுவோம்.

பாரத நாட்டில் தற்காலம் நமது மக்கள் பெரும்பாலும் சிறு பிராயம் முதலே தம் தேசத்துக்குரிய ஒழுக்கம், பண்பாடு, இறைவணக்கம், ஆத்ம தியானம், இவ்விதமான பழக்க வழக்கமே இல்லாமலிருந்து வருகின்றனர். விஞ்ஞானத்தைப் பயில்வதில் மட்டுமின்றி வாழ்முறையிலும்கூட வெளிநாட்டாரது முறைகளையே பின்பற்றி வருகின்றனர். இதனால் மக்களுக்கு இந்த உலகத்தின் சாமானிய இன்பத்தையும் மறு உலக்த்தின் பேரின்ப வழியையும் அடையத் தடை எற்படுகின்றதென்பது தெளிவு. ஆஸ்திகப் பிரம்பரையில் தோன்றிய நமது குழந்தைகளுக்குச் சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தர்மம், ஒழுக்கம், பக்தி, ஞானம் முதலியவற்றைக் கடைபிடித்து ஒழுகுவதற்கு அநுகூலமான கல்வியைப் போதிக்க வேண்டியதே நம் முதற் கடமை.

---

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

சமூக விஷயங்கள்

### *கல்வி முறையின் கோளாறு*

கல்வியில் முதல் பிரயோஜனமாக விநயம் ஏற்பட வேண்டும். பழைய நாளில் மாணவனுக்கு விநேயன் என்றே பெயர் இருந்தது. அடக்கம் இல்லாத படிப்பு படிப்பே ஆகாது. தன்னைத்தானே அடக்கிக் கொள்ளும்படியான நல்ல குணம் முதலில் வரவேண்டும். ஆனால், நடைமுறையிலோ படிப்பு இல்லாத மலைச்சாதி மக்களிடையே, நாகரீகம் இல்லாத ஜனங்களிடத்திலேதான் கெட்ட குணங்கள் அதிகம் இருப்பதாகக் காணவில்லை. அங்கே மாஜிஸ்டிரேட் கோர்ட்டு, ஹை கோர்ட்டு முதலியவை இல்லை. குற்றங்கள் இல்லை. நிறைய ஹைஸ்கூல், காலேஜ், யூனிவர்சிட்டி முதலியன எல்லாம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போகிற இடங்களில்தான் கோர்ட்டு வழக்குகள் கிரிமினல் குற்றங்கள் ஏமாற்றுவித்தை ஜேப்படித் திருட்டு முதலியன அதிகமாகிக்கொண்டே இருக்கின்றன.

கல்வியின் பயன் மெய்யான பொருளாகிய ஆண்டவனைத் தெரிந்து கொள்வதுதான். ஆனால் இந்தக் காலத்தில் படிக்கிறவர்களில் அநேகருக்குத் தெய்வ பக்தியே இருப்பதில்லை.

இது வேடிக்கையாக இருக்கிறதல்லவா. படித்ததின் பிரயோஜனம் நல்ல குணம். அடக்கம். இப்போது நாட்டில் முன்னைவிட நிறையப் படிப்பு இருக்கிறது. ஹைஸ்கூலில் இடமில்லாமல், ஷிப்டு வைத்து வகுப்பு நடத்துகிறார்கள். இவ்வளவு இருந்தும் படிப்பின் பிரயோஜனமான விநயம் ஏற்படவில்லை. அதற்கு நேர் விரோதமான குணம் அல்லவா வளர்கிறது. படிக்கிற பையன்கள் இருக்கிற இடத்துக்குத்தான் போலீஸ், மிலிடெரி எல்லாம் அடிக்கடி வரவேண்டியிருக்கிறது.

நம் தேசப் பெண்களின் இயற்கையான குணம் அடக்கம். படிக்கிற பெண்களுக்கு ஸ்வபாவமான அடக்க குணத்தோடு, கல்வியின் பிரயோஜனமாகப் பின்னும் அதிக அடக்கம் வளரவேண்டும். ஆனால், ஸ்வபாவமாக அடங்கி நல்லவர்களாக உள்ள பெண்களின் குணத்தையுமல்லவா இந்தக் கல்வி போக்கிவிட்டது. குணத்தைக் கொடுக்கும் படியான படிப்பு, குணத்தைக் கொடுக்கும் படியாக இருக்கிறதே ஏன்?.

இதற்கெல்லாம் காரணம் என்ன என்பதே நாம் கொஞ்சம் ஆலோசித்துப் பார்ப்போம்.

படிப்பு என்றால் எப்படி இருக்க வேண்டும்?. எப்படிப் படிக்க வேண்டும்?. சிஷ்யர்கள் எப்படி இருக்க வேண்டும்?. ஆசிரியர்கள் எப்படி இருக்க வேண்டும்?. என்பனவற்றை எல்லாம் விளக்கிச் சொல்கிற நீதி நூல்கள் இருக்கின்றன. அவற்றில் இளமையிற் கல், என்று சொல்லியிருக்கிறது. அதுவே பிரம்மச்சரிய ஆசிரமம். ஒருவனுக்கு விவாகம் ஆவதற்கு முந்தி, விநாத் தெரிந்த பிறகு இருக்கக்கூடிய காலம். அதற்குள் படிக்க வேண்டும். ஒரு குருவினிடத்தில் போய்ப்படிக்க வேண்டும் என்பது சாஸ்திரம். சிஷியன் பிச்சை எடுத்து வந்து குருவிற்கு தருவான். பிச்சை எடுப்பதால் அவனுக்கு அகங்காரம் கரைந்து விநயம் ஏற்பட்டது.

ஆசிரியருடனேயே வசித்தால் அவரிடம் உண்மையான பிரியம் ஏற்பட்டது. அவருக்கும் இவனிடத்தில் பிரியம் ஏற்பட்டது.

சிஷ்யர்களைக் கூடவே வைத்துக் கொண்டிருந்த குரு அவர்களுடைய மரியாதையைப் பெறுகிற விதத்தில், நல்ல ஒழுக்கங்களுடனேயே வாழ வேண்டியதாயிற்று. அவரிடம் இயல்பாகவே மாணவனுக்குப் பக்தி உண்டாயிற்று.

முன்பு நம் மாணவர்களுக்கு இருந்த குருபக்தி என்பதே இப்போது அடியோடு போய்விட்டது. பையந் வாத்தியாரைப் பார்த்து, கேள்வித் தாளையே கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அடிக்கிறேன் என்று சொல்லக்கூடிய நிலமை வந்துவிட்டது.

முன்பு இருந்த பாடங்கள் இப்போதும் இருக்கின்றன. ஆனால் முறை மாறிவிட்டது. மருந்து ஒன்றாகவே இருந்தாலும், பத்தியம் மாறிவிட்டால் மருந்தே விஷமாகிவிடும் என்பது போல ஆகிவிட்டது இது. குருபக்தி போனதும் மத்தியம் போய்விட்டது.

சர்க்காவில் நூற்க வேண்டும். கைகுத்தல் அரிசியைத்தான் சாப்பிட வேண்டும் என்றால் எல்லோராலும் அதைப் பின்பற்ற முடியவில்லை. ஆனாலும் இரண்டொருவர் இப்படி

இருக்கத்தான் இருக்கிறார்கள். நான் கதர்தான் உடுத்திக் கொள்வது. நான் கைக்குத்தல் அரிசியைத்தான் சாப்பிடுவது என்று சொல்கிறவர்களைப் பார்க்கிறோம். இதெல்லாம் பெருமைகளுக்கு அடையாளங்களாக உள்ளன. அதுபோலவே குருகுலப் படிப்புதான் வேண்டும் என்று சொன்னால் அது இந்தக் காலத்தில் கஷ்டம்தான். இம்முறையைப் பூரணமாகக் கொண்டு வர முடியும் என்ற நம்பிக்கையில் நான் சொல்ல முடியவில்லை. அப்படி வந்துவிட்டால் நல்லதுதான். ஆனாலும் அது சாத்தியம் என்று தோன்றவில்லை. இருந்தாலும்கூட, இது மாதிரியான ஒரு முறை இந்த நாட்டில் இருக்கிறது என்பதே தெரியாமல் அடியோடு அழிந்துபோக வேண்டாமே என்கிறேன். மியூஸியத்தில் வைக்கிற மாதிரியாவது நான் குருகுல வாசம் செய்து படித்தேன் என்று வருங்காலத்தில் சொல்லிக் கொள்வதற்காவது சில பேர்கள் பழைய முறையில் படிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். விதை முதலையாவது ரக்ஷிக்க வேண்டும். ஏனென்றால் குருபக்திதான் இன்றைய மாணவர்களின் கோளாற்றைத் தீர்க்கிற பெரிய மருந்து.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

சமூக விஷயங்கள்

### *வாழ்க்கைத் தரம்*

மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்பதற்காக அரசாங்கத்தார் அநேக திட்டங்களைப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாட்டிலும் தரித்திரம் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டிருக்கிறது. போதும் என்ற எண்ணம் திருப்தி இன்றைய ஜனங்களுக்கு அடியோடு இல்லாமல் இருப்பது தரித்திரம்தான்.

ஒருவன் இரண்டு வேளை காப்பி நான்கு வேளையாக உயர வேண்டும். இரண்டு வேஷ்டி வைத்துக் கொண்டிருப்பவன் இருபது வேஷ்டி வைத்துக் கொள்ள வேண்டும். இதுவே வாழ்க்கைத் தர உயர்வு என்கிற அபிப்பிராயம்

வளர்ந்தால் அது பெரிய தப்பு. வாழ்க்கைத் தரம் உயர்வது என்று சொல்லிக் கொண்டு போவதால், துராசைதான்

அதிகமாகும். எத்தனை சம்பாதியத்தாலும்

போதாமல் நாட்டில் தரித்திரம்தான் மிஞ்சும்.

மநுஷ்யர்களுக்கு மானம், உயிர் இரண்டையும் காப்பாற்றிக்கொள்ள அத்தியாவசியமானவை எவையோ அவை நாட்டில் உள்ள அத்தனை ஜனங்களுக்கும் கிடைக்க வேண்டும். இவற்றை சர்க்காரே சகலருக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும். அதற்குத்தான் திட்டம், ஒழுங்கு எல்லாம் வேண்டும்.

அப்படிப்பட்ட நிலை ஏற்பட வேண்டுமானால், வசதி உள்ளவர்கள்கூட நாட்டில் இருக்கும்படியாக பரம ஏழை எப்படி வசிக்கின்றானோ அப்படி வசிக்கப் பிரயத்தனம் பண்ணவேண்டும். அவன் குடிசையில் இருந்தால் இவனும் குடிசையில் இருப்பது. அவன் கஞ்சி குடித்தால் இவனும் கஞ்சி குடிப்பது என்று செளகரியம் இருப்பவர்களும் கூடத் தங்களிடம் பணம் இருக்கிறது என்பதால் தேவைகளுக்குமேல் அதிகமான வசதிகளையெல்லாம் பெருக்கிக் கொள்ளாமல் வாழ வேண்டும்.

வசதி இருக்கிறது என்று இவர்கள் பண்ணுகிற சுக ஜீவன காரியங்களெல்லாம் (Luxuries) அபரிக்கிரஹம் என்ற பெரிய தர்மத்துக்குப் விரோதம்தான். இந்த தோஷம் வந்து விட்டால் ஈசுவரானுக்கிரஹம் கிடைக்காது. மனுஷ்ய ஜன்மா பிரயோஜனம் உள்ளதாக ஆக வேண்டுமானால், நமக்கு ஜீவிப்பதற்கு அத்தியாவசியமாக எவ்வளவு தேவையோ அதற்குமேல் ஓர் இம்மிகூட விரும்பக்கூடாது. இதுவே அபரிக்கிரஹம். வசதி இருக்கிறது என்றால் அதைக் கொண்டு, கஷ்டப்படுகின்ற இதர குடும்பங்களுக்கு - அத்தியாவசிய வசதியைக்கூடப் பெற முடியாதவர்களுக்கு - உதவி செய்வதுதான் நியாயம், தர்மம், புண்ணியம். அதுதான் ஒருவனுக்கு மோக்ஷத்தை அளிக்கும்.

இது தெரியாமல் வசதி இருக்கிறவர்கள் தேவைக்குமேல் பட்டுப்படவை, ஸில்க் ஷர்ட் என்று தோஷத்தை அதிகமாக இப்போது வளர்த்துக் கொண்டிருப்பது ஒரு பக்கம், அதே சமயம் இவர்களைப் பார்த்து வசதியில்லாதவர்களுக்கும் சபலம் பிட்டித்து ஆடுகிறது. அவர்களும் கூடக் கடன் வாங்கிக் இந்த வேண்டாத தேவைகளைப் பூர்த்தி பண்ணிக்

கொள்ள நினைத்து, கடனாளியாகி அநேக உபத்திரவங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள். ஐம்பது நூறு வருஷங்களுக்கு முன்னால் யாரும் காப்பி சாப்பிட்டது இல்லை. குடிசையில்தான் இருந்தார்கள். ஸ்ரீகள் காதில் பனை ஓலைதான் போட்டுக் கொண்டிருந்தார்கள். கேழ்வரகுக் கூழோ, கஞ்சியோதானா சாப்பிட்டார்கள். ஏழைகளோ, பணக்காரர்களோ எல்லோரும் ஏறக்குறைய ஒரோமாதிரியான வீட்டில்தான் இருந்தார்கள். நம் ஜனங்கள் யாவரும் பட்டுத்துணி உடுப்பது இல்லை. காப்பி குடிப்பது இல்லை என்று சங்கல்பம் செய்து கொண்டுவிட்டால் இப்போது ஒரு குடும்பத்துக்குச் செலவாகிற பணத்தைக் கொண்டு ஐந்து குடும்பங்கள் வாழ முடியும்.

தேவை என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு விட்டோமானால் அப்புறம் அதைப் பூர்த்தி செய்து கொள்ளும் ஒயாத பிரயாசைதான் ஏற்படத்தான் செய்கிறது. இது திருப்திக்கும் சாந்திக்கும் பக்கம்தான். போதுமென்ற மனமே பொன்னானதிருப்தியைத் தருவது. சமீப காலம்வரை படாடோப (Luxury)

வஸ்துக்களாக இருந்த ரேட்யோ, ஃபான் மாதிரியானவற்றைக்கூட இப்போதே அவசியமாக்கிக் கொண்டு (necessaries) இவை கிடைக்கவில்லையே என்று

தாபப்படுவதும், அதிருப்திப்படுவதுமாக இருக்கிறார்கள். தேவையை எவ்வளவுக்கவ்வளவு அதிகப்படுத்திக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு சாந்தி குறையும். சௌக்கியம் குறையும். நிம்மதியும் திருப்தியும் குறையும். தரித்திரம், துக்கம் உண்டாகும். Standard of living என்பதை வாழ்க்கைத் தரம் என்று மொழி பெயர்ப்பதே சரியல்ல. வாழ்க்கைத் தரம் என்பது மிகவும் உயர்ந்த விஷயம். நல்ல குணங்களுடன், ஈஸ்வர பக்தியுடன் வாழ்கிற வாழ்வே தரமான வாழ்வு. வாழ்க்கைக் தரத்தை Quality of life என்று சொல்ல வேண்டும். தற்போது பொருளாதார தோவைகளை அதிகமாக்கிக் கொண்டே போவதைத்தான் வாழ்க்கைத் தரம் என்கிறார்கள். இதை விட்டு, மனஸால் உயர்ந்த, வாஸ்தவமாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதைத்தான் பெரியதாக எண்ண வேண்டும்.

நான் சொல்லி ராஜாங்கத்தார் கேட்கப் போவதில்லை. ஆனாலும் எனக்குத் தோன்றுவதைச் சொல்லத்தான் வேண்டும். நம் ஜனங்களுக்கு நிஜமாக நல்லது செய்ய வேண்டும் என்றால் இப்போது பொருளாதாரக்காரர்கள் வாழ்க்கைத் தரம் என்று எதைச் சொல்கிறார்களோ அதைக்குறைப்பதற்கு, இறக்குவதற்குத்தான் திட்டம் போட வேண்டும். உயர்த்துவதற்கல்ல.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### சமூக விஷயங்கள்

### *எளிய வாழ்வு*

வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது, என்ற வார்த்தை இப்போது ரொம்பவும் அடிபடுகிறது. சர்க்கார் திட்டங்கள் இதற்குத்தான் என்கிறார்கள். எல்லோருக்கும் வயிறு நிரம்பச் சாப்பாடு, மானத்தையும், குளிர் வெயிலையும் காப்பாற்றப் போதுமான வஸ்திரம், வசிப்பதற்கு ஒரு சின்ன ஜாகை இருக்க வேண்டியதுதான். இதற்கே சர்க்கார் திட்டம் போட வேண்டும். இதற்கு அதிகமாகப் பொருளைத் தேடிப் போவதால் வாழ்க்கைத் தரம் உயர்ந்துவிடாது. உண்மையில் வாழ்க்கைத் தரம் என்பது வெளி வஸ்துக்களின் பெருக்கத்தில் இல்லை. தரமான வாழ்க்கை மனநிறைவோடு இருப்பதுதான். தேவைகளை அதிகமாக்கிக்கொண்டு அவற்றுக்காக ஆலாப் பறப்பதால் நிறைவு ஒருவருக்கும் கிடைக்காது. இதைப் பிரத்தியக்ஷத்தில் பார்க்கிறோம். நாம் மேலைநாட்டுக் காரர்கள் மாதிரி, போக போக்கியங்களுக்கு பறக்கிறோம். போகத்தின் உச்சிக்குப்போன மேல் நாட்டுக்காரர்களோ அதில் நிறைவே இல்லை என்பதால் நம்முடைய யோகத்துக்கு, வேதாந்தத்துக்கு, பக்திக்குக் கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருக்கிறார்கள். இதைப் பார்த்துக்கூட நாம் புத்தி பெறவில்லை என்றால், அதுதான் துரதிருஷ்டம்.

ஒருத்தன் பீரோ நிறைய துணி வைத்திருந்தாலோ, கண்ட நேரத்தில் ஹோட்டலுக்குப் போய் கண்டதைத் தின்பதால, வீட்டை ஏர் கன்டிஷன் செய்து கொண்டு விட்டதாலோ அவனுடைய வாழ்க்கை தரமாகி விடாது. மனம் நிறைந்திருந்தால் அதுவே வாழ்க்கைத் தர உயர்வாகும். மன நிறைவு வெளி வஸ்துக்களால் ஒருநாளும் கிடைக்காது. வெளி வஸ்துக்களைச் சேர்க்க சேர்க்க

மேலும் மேலும் சௌகரியத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டு புதுப்புது வஸ்துக்களைக் கண்டுபிடித்து வாங்கிக் கொண்டேதான் இருப்போம். நாம் இப்படி

இருப்பதைப் பார்த்து வசதியில்லாதவர்களுக்கும் இதே ஆசை வெறியை உண்டாக்கி விடுகிறோம். இதனால் போட்டி, சண்டை எல்லாம் உண்டாகின்றன. வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாக ஏக முஸ்தீபுடன் இறங்கிய பின்தான் சகலருக்கும் எப்போது பார்த்தாலும், எதையாவது வாங்கிக்கொண்டே இருக்கிறது. நமக்கு அது வேண்டும் இது வேண்டும் என்று சதா அரிப்பு இருக்கிற வரையில் நாம் தரித்திரர்கள்தான். இபோபது கோடீஸ்வரனிலிருந்து எல்லோருக்கும் இந்தக் குறை இருப்பதால் எல்லோருமே தரித்திரர்களாகத்தான் ஆகிறோம். பணம் இல்லாவிட்டால்தான் தரித்திரம் என்பதில்லை. பணம் அதிகமாகிவிட்டதாலேயே, எல்லோரும் தரித்திரர்களாகி இருக்கிறோம்.

இப்போது யாருக்குமே நிறைவு இல்லை. பழைய நிம்மதி இல்லை. சமூக வாழ்விலும் பரஸ்பர சௌஜன்யம் போய், போட்டியும், பொறாமையும் வலுத்து விட்டன. ஒருத்தன் ஆடம்பரமாக இருந்தால் மற்றவர்களுக்கும் அதில் ஆசை எற்படத்தானே செய்யும். எல்லோர்க்கும் எல்லா ஆசையும் நிறைவேறுவது எங்கேனும் சாத்தியமா. ஏமாற்றம் உண்டாகிறது. ஆசாபங்கத்தில் துவேஷம் பிறக்கிறது.

எனவே, வசதி உள்ளவர்கள் எளிய வாழ்க்கை நடத்துவது அவர்களுக்கும் நல்லது. மற்ற ஜனசமூகத்திற்கும் நல்லது. பழைய காலத்தில் இப்படித்தான் இருந்தது. வேத சாஸ்திரத்தை ரக்ஷித்தவர்களுக்கு எத்தனை ராஜமானியம் வேண்டுமானாலும் தருவதற்கு ராஜாக்கள் சித்தமாயிரு

ந்தார்கள். ஆனாலும், அவர்கள் பொருளில் ஆசை வைக்கக்கூடாது என்று சாஸ்திரம் விதித்தது. இதை இன்றைக்கும் சில் வார்த்தைகளிலிருந்தே ஊகிக்கலாம். வெண்கலப் பானை வைர ஓலை போன்ற வார்த்தைகளைக் கேட்கிறீர்கள். பானை, மண்ணால் செய்தது. முற்காலத்தில் வசதி உள்ளவர்களும் பானை வைத்துத்தான் சமைத்தார்கள். அப்புறம் வெண்கலப் பாத்திரம் வந்தது. அதுவே வெண்கலப் பானை ஆகிவிட்டது. ஓலை என்பது காதிலே வெறும் பனை ஓலையைச் சுருட்டிப் போட்டுக் கொள்வதைக் குறிக்கும். அப்பிகைக்கூட பனை ஓலைத்தோடுதான் போட்டுக் கொண்டிருந்தாள். (தாலீ தலா பத்த தாடங்க) என்று சியாமளா தண்டகம் சொல்கிறது. பிறகு வைரத்தில் தோடு செய்தார்கள். இருந்தாலும் வைர ஓலை என்று பழைய பெயரும் ஒட்டிக் கொண்டது. அந்தக் காலத்தில் வசதியுள்ளவர்கள் எட்டு அடுக்கு வீடு கட்டிக் கொள்வதில்லை. எல்லோருடைய வீடும் ஒரே மாதிரித்தான் இருக்கும். நம்முடைய சிற்பம் மற்றும் சாஸ்திரங்களின் பெருமை தெரிவதற்காக ராஜாக்கள், மந்திரிகள், பெரிய மாளிகை கட்டிக் கொண்டிருந்தார்கள். வைசியர்களும் பெரிய வீடுகள் வைத்துக் கொண்டிரு ந்தார்கள். ஆனால், பொது ஜனங்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருந்த பிராம்மணர்கள் சிறுகக் கட்டிப் பெருக வாழ்ந்தவர்கள்தான். எல்லா விஷயத்திலும் அவர்கள் எளிமையாக இருக்க வேண்டும் என்பதுதான் சாஸ்திர விதி. அரண்மனைக்கும் மேலாகக் கோயில்தான் ஊருக்கே பெரிய வீடு. கோயில் ஸ்வாமிக்குத்தான் ரொம்பவும் உயர்ந்த நகை நட்டு, ஆபரணம் எல்லாம். உத்ஸவம்தான் ஊருக்கெல்லாம் கல்யாணமா மாதிரி.

தனு மனிதர்கல் டின்னர், டீ பார்ட்டி, ஆடம்பரம் எதுவும் அப்போது கிடையாது. வசதியுள்ளவர்கள் எளிமையாக வாழ் ந்த வரையில் மற்றவர்களுக்கும் இவர்களிடம்

துவேஷமில்லை. பிற்பாடு வேதரக்ஷணத்தையும், கிரமத்தையும்விட்டு அவர்கள் பட்டணத்துக்கு வந்து பண வேட்டையில் விழுந்ததும்தான் சமூகத்தின் சௌஜன்யமே சீர்குலைந்து விட்டது. பழைய எளிய வாழ்க்கை முறைக்குத் திரும்ப எல்லோரும் பிரயாசைப்பட வேண்டும்.

காந்தி இருந்த வரைக்கும் எளிய வாழ்க்கை, எளிய வாழ்க்கை

(Simple living) என்ற பேச்சாவது இருந்தது. இப்போது அந்த அபிப்பிராயமே போய்விட்டது. மறுபடி அந்த முறைக்கு மக்களைக் கொஞ்சத்தில் கொஞ்சமாவது திருப்ப வேண்டும். நிறைவு மனசில்தான் இருக்கிறது. என்று உணர்ந்து, அவரவரும் கடமையைச் செய்து கொண்டு எளிமையாக இருக்க வேண்டும். அவரவரும் இப்படித் தேவைகளைக் குறைத்துக் கொண்டு மனசினால் நிறைந்து சுபிட்சமாக இருக்க சந்திர மௌளீசுவரர் அநுக்கிரகம் செய்வாராக.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### சமூக விஷயங்கள்

### *"கணக்காயிருக்கணும்"*

கணக்காயிருக்கணும் என்ற வார்த்தைகளைத் தமிழ் நாட்டில், பண்டிதர், பாமரர் எல்லோரும் உபயோகிக்கின்றார்கள். எனக்கு முன்னால் இங்கே அக்கவுன்டண்ட்ஜெனரல் ஆபீசிலிருந்து பலர் வந்து உட்கார்ந்து இருப்பதைப் பார்த்தவுடன் அவர்கல் பணக் கணக்குகளை சரிபார்க்கிறவர்கல் அல்லவா. எனக்கு இந்த வாசகம் நினைவுக்கு வருகிறது.

பண விஷயத்தில் பெரும்பாலும் நாம் கணக்காகவே இருக்கிறோம். இதை நமக்கு யாறும் சொல்லித் தர வேண்டியதில்லை. ஒரு வஸ்துவுக்கு அதன் விலையைவிட ஒரு பைசா அதிகம் கொடுப்போமா. மட்டோம். பணத்தில் கணக்காக இருப்பது உண்மை. ஆனாலும் பணத்தைக் கொடுத்து பல வஸ்துக்களை வாங்குகின்றோம். அவற்றில்தான் இத்தனை வஸ்துக்கள் போதும் என்று கணக்காயிருக்க மாட்டேன் என்கிறோம். நாம் நிம்மதியாக உயிர் வாழ்வதற்குச் சொற்ப வஸ்துக்கள் போதும். இந்த வஸ்துக்களுக்கும் தேவைப்படும் பணத்தை மட்டுமே நாம் சம்பாதனம் செய்வதென்றால், இப்போதுபோல் ஆலாப் பறக்கவே வேண்டாம். தேசம் விட்டு, கண்டம் விட்டு

எங்கேயோ போய் ஆசாரங்களை விட வேண்டாம். சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. அதற்காக ஆத்ம விசாரத்திற்கும் ஈஸ்வர தியானத்துக்கும் பரோபகாரத்துக்கும் செலவிட வேண்டிய காலத்தை எல்லாம் கணக்கில்லாமல் விரயம் செய்யவேண்டியிருக்கிறது. அதற்காக ஆத்ம விசாரத்திற்கும் ஈஸ்வர தியானத்திற்கும் பரோபகாரத்திற்கும் செலவிட வேண்டிய காலத்தை எல்லாம் கணக்கில்லாமல் விரயம் செய்யவேண்டியிருக்கிறது. இரண்டு தினுசில் கால விரயம். முதலில் சம்பாதிப்பதால் கால விரயம். அப்புறம் வேண்டாத வஸ்துக்களைத் தேடித் தேடித் போவதில் கால விரயம். நிகர விளைவாகவோ ஆத்ம சாந்தியைக் குலைத்துக் கொள்கிறோம். திருப்தியே இல்லாமல் ஆசை வேகத்திலும், பல சந்தர்பங்களில் ஆசை நிறைவேறாத ஏமாற்றத்திலும் மொத்துப்பட்டு அவஸ்தைப்படுகிறோம்.

நாம் உயிர் வாழ இந்த வஸ்து அவசியம்தானா என்று பார்த்துக் கணக்காகச் செலவு செய்வதே உண்மையில் கணக்காயிருப்பதாகும். வேண்டாத

வஸ்துக்களுக்குப் பேரம் பண்ணி, சாமர்த்தியமாக விலைபேசி, அதற்கு ஒரு பைசாகூட அதிகம் கொடுக்கவில்லை என்பதால் கணக்காயிருந்ததாகாது.

பணம் மட்டுமில்லை. இப்படியே வார்த்தைகளை உபயோகிக்கும்போது ஒரு சொல்கூட அதிகமாகக் கூடாது. அளவாக, கணக்காகப் பேச வேண்டும். அதனால் நமக்கும் சரி, நம் பேச்சைக் கேட்கிறவர்களுக்கும் சரி, பொழுது மிச்சமாகும். வளவளவென்றும் பேசாமல் சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்று பழகிக் கொண்டாலே புத்தியில் ஒரு தீட்சண்யமும், வாக்கில் ஒரு பிரகாசமும் உண்டாகும். சக்தியும் (enargy) வீண் (waste) ஆகாமல் இருக்கும். எத்தனையோ சண்டை சாடிகளும் மிச்சமாகும். கொட்டிவிடலாம், வாரிவிட முடியுமா. என்று பாமர ஜனங்கள்கூடக் கேட்கிறார்கள். திருவள்ளுவரும் எதைக் காக்காவிட்டாலும் நாக்கைக் கட்டுப் படுத்திக் காப்பாற்ற வேண்டும் என்கிறார். ஆனால், இப்போது லோகம் முழுக்க ஒரே பேச்சு யுகமாகத்தான் ஆகியிருக்கிறது. நியூஸ் பேப்பர்கள் எல்லாம், அவர் பிரசங்கம், என்றுதான் போட்டு நிரப்புகின்றன. காரியத்தில் ஏ ாவது நடக்கின்றதா என்றால்

ஸைபர்தான். அநேகமாக, காரியத்தில் நடக்கிவில்லை என்பது தெரியாமலிருப்பதற்கே சண்டைப் பிரசங்கமாகப் பேசி ஏதோ பெரிதாகச் சாதித்துவிட்ட மாதிரி பிரமையை உண்டு பண்ணி வருகிறார்கள்.

பணம், பேச்சு, அப்புறம் நாம் செய்கிற காரியம் காரியத்திலும் அளவுடன், கணக்குடன் இருக்க வேண்டும். ஆசையாய் இருக்கிறது என்பதற்காக, அவசியமில்லாத, அல்லது கெட்டதான காரியங்களைச் செய்யவே கூடாது. ஆத்ம சிரேயசுக்கோ, லோகக்ஷுமத்துக்கோ பிரயோஜனமில்லாத காரியங்களில் ஈடுபடவே கூடாது.

எல்லாவற்றையும்விட முக்கியம், எண்ணத்தில் கணக்காயிருப்பது. இப்போது நம் சித்தம், ஒரு க்ஷணத்தில் கோடி எண்ணங்களை எண்ணிவிடுகிறது. எண்ணத்துக்கு ஒரு கணக்கு வழக்கில்லாமல் இருக்கிறது. இப்படி அதைத் தறிகெட்டுப் போக விட்க்கூடாது. எத்தனை கஷ்டப்பட்டாகிலும், கொஞ்சம் கொஞ்சமாக பிரயத்தனம் பண்ணி, இந்த எண்ண ஓட்டத்துக்கு அமைபோட்டேயாக வேண்டும். ஒரே வஸ்துவை நினைப்பது நினைப்பதுகூட இல்லாமல் அதுவேகூட ஆவது. இதெல்லாம் இப்போது முடியாத காரியமானாலும். ஆனாலும், இப்போதிலிருந்து கூடிய வரையில் ஸத்விஷயங்களை மட்டுமே எண்ண ஆரம்பிக்க வேண்டும். சித்தம் சிதறச்சிதற அத்தனைக்கத்தனை அதற்கு பலக்குறைவுதான். அணை போட்டு ஒருசில நல்ல விஷயங்களில் மட்டும் அதைத் திருப்பிவிட்டால், அது சக்தியுடன் செய்லாற்றி உத்தமமான பிரயோஜனங்களை உண்டாக்கும். அவசியமில்லாத எண்ணங்களில் மனஸை ஒடவிட்டுக் கொண்டேயிராமல் இது இதைத்தான் நினைப்பது என்று கணக்காயிருக்கனும்.

பண விஷயமே நமக்கு முக்கியமாக இருப்பதால், அதில் ஆரம்பித்து ஒவ்வொன்றாக எல்லா விஷயங்களிலும் பேச்சு, காரியம், நினைப்பு எல்லாவற்றிலும் கணக்காயிருக்கணும்.

இந்த நடைமுறை உலகில் மனுஷ்யர்கள் எல்லோரும் பணமே வேண்டாம்

என்று இருப்பது சாத்தியமே இல்லை. பொருள் இல்லார்கு இவ்வுலகம் இல்லை என்று திருவள்ளுவரே சொல்லிவிட்டார்.

ஆனாலும் அவசிய மில்லாமல்

ஏராளமாகச் சம்பாதிப்பதிலும், அவசியமில்லாமல் விரயமாகச் செலவழிப்பதும், அல்லது பூதம் காத்த மாதிரி பாங்கில் மூட்டை மூட்டையாகப் போட்டு வைப்பதும் ரொம்பப் பிசுகு. போதும் என்கிற மனஸோடு சம்பாதனம் செய்து, அதைக் கவனத்துடன் செலவழிக்க வேண்டும். செலவுகளுக்குள் நமக்கு என்று இல்லாமல், தானமாகச் செலவழிப்பது தான் உண்மையில் நமக்கு என்று இல்லாமல், தானமாகச் செலவழிப்பதுதான் உண்மையில் நமக்கு வரவு, இதனால் புண்ணிய வரவு கிடைக்கிறது. தனக்கென்று செலவழிப்பதால் பெறமுடியாத ஆத்ம சிரேயஸை இதனாலேயே பெறுகிறோம். சொந்த விஷயங்களில் கணக்காயிருந்தால் ஏழை எளியவர்களாலும்கூட ஒரு பைசாவாவது தர்மம் பண்ண முடியும். அப்படி அவர்கள் கொடுக்கிற பைசாவை ஈஸ்வரன் கோடியாக மதித்து அநுக்கிரகம் செய்வான். பரம ஏழைகளாக இருந்து கொண்டு தங்களால் முடிந்த ஸத்காரியங்களுக்கு உதவுகிற எத்தனையோபேர் இருந்திருக்கிறார்கள். இப்போதும் இருப்பார்கள்.

ஓரொரு பணக்காரனுக்கும் தன்னைவிடப் பணம் படைத்த ஒருத்தனைப்போல் தான் இருக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஆடம்பரத்துக்கும் டாம்பீகத்துக்கும் ஊதாரித்தனமாகச் செலவழித்துக் கடன்படுகிறான். உலகத்தில் பணக்காரனுக்குத்தான் ஜாஸ்திக் கடன் இருக்கிறது. இது விசித்திரமாக, வேடிக்கையாகத் தோன்றினாலும், வாஸ்தவ நிலை இதுதான். ஏழைகள் எத்தனையோ பேர் கடனில்லாமல் இருக்கிறார்கள். பணக்காரர்களில் கடனில்லாமல் இருப்பவர்கள் துர்லபமாகத்தான் இருப்பார்கள். போலி அவஸ்தை விட்டால், அவனுக்கு இத்தநை செலவு, கடன் இருக்கவே இருக்காது. லோகத்தில் எத்தனையோ பேர் கஷ்டப்படுமாபோது நாம் இத்தனை டாம்பீகங்கள் செய்வது நியாயமா என்று அவரவரும் கேட்டுக்கொண்டு, செலவை தர்ம நியாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டால் எத்தனையோ தான, தர்மம், பரோபகாரம் செய்யலாம். லோகத்தில் ஒருத்தருக்கும் சாப்பாடு இல்லை. துணி இல்லை என்ற குறையில்லாமல் செய்து விடலாம். இப்போது செய்கிற டாம்பீகத்தால் ஒரு நாளும் பெறமுடியாத ஈஸ்வரானுக்கிரகத்தையும் இந்த பரோபகாரத்தினால் பெற

முடியும். ஏழைதான் என்றில்லை, பணக்காரனும்கூட, இந்த வஸ்து நமக்குத் தேவைதானா? இது இல்லாமல் பிராணன் போய்விடுமா? இது இல்லாமல் ஜீவிக்க முடியாதா? நம் அப்பாவும் ˙தாத்தாவும் இது இல்லாமல் சௌக்கியமாக இல்லையா? என்று அவ்வப்போதும் கேட்டுக் கொண்டு செலவழிப்பதில் கணக்காயிருக்கனும். இப்படிச் செய்தால் கொடுப்பதில் கணக்காயிருக்க முடியும். எடுக்க எடுக்க ஜலம் வருகிற மாதிரி கொடுக்கக் கொடுக்க மகாலக்ஷ்மியின் அநுக்கிரகம் மேலும் வளரும்.

நம் தேசத்தில் ஜலத்தைதக்கூட அதிகமாகக் கொட்டிச் செலவழிக்ககூடாது என்பார்கள். ஏதாவது ஒரு விஷயத்தில் சிக்கனம் இல்லாவிட்டால், இதே மனோபாவம் மற்ற எல்லாவற்றிலும் வந்துவிடும் என்பதால் இப்படிச் சொன்னார்கள். சிக்கனமாயிருப்பது கருமித்தனம் அல்ல. சொந்த விஷயத்தில் படாடோபம் இல்லாமல் கணக்காயிருப்பது தான் சிக்கனம். இதுவே கருமித்தனம்

இல்லாமல் கணக்காயிருப்பதுதான் சிக்கனம். இதுவே கருமித்தனம் இல்லாமல் தானமும் தர்மமும் செய்வதற்கு உதவும்.

இதோடு பேச்சில் கணக்காயிருப்பதைக் குறிப்பாக இக்காலத்தில் முக்கியமாக எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு சமயத்தில் எந்தத் தொத்து வியாதி ரொம்பவும் உக்கிரமாக பரவியிருக்கிறதோ அதற்குத்தானே முக்கியமாக சிகித்ஸை செய்ய வேண்டும். இன்று பேச்சுதான் ரொம்ப உக்கிரமாகப் பரவியிருக்கிறது. நம் நீதி நூல்களில் மௌனம் கலகம் நாஸ்தி என்றார்கள். பேச்சுக் குறைந்தால் சண்டையும் குறையும் - மேல்நாட்டில்கூட, பேச்சு வெள்ளி என்றால், மௌனம் தான் தங்கம் (Speech is silver silence is golden) என்கிறார்கள். ஆத்ம சிரேயஸுக்கு ரொம்பவும் வற்புருத்தப்பட்ட விஷயம் இது. மோனம் என்பது ஞான வரம்பு என்கிறார்கள். அந்த வரம்புக்குப் போய், ஒரே மௌனமாயிருக்க நம்மால் முடியாவிட்டாலும், நாம் பேச்சை ரொம்பவும் குறைத்துக்கொள்ள பாடுபடவேண்டும். பத்திக்கைகளில் பத்தி பத்தியாக வருகிற இத்தனை பேச்சால், வாதங்களும் பிரதி வாதங்களும் உண்டாகி மண்டை உருளுவதைத்தவிர, ஏதாவது உருப்படி இருக்கிறதா. அதில் வருவது போதாது

என்று இதைப்பற்றி நாம் வேறு தொண்டைத் தண்ணீர் வற்ற விமர்சிப்பதால் தான் ஏதாவது பிரயோஜனம் இருக்கிறதா.? இப்படி சக்தி எல்லாம் விருதாவாகலாமா? என்று யோசித்துப் பார்க்க வேண்டும். வாக்குக் கட்டுப்பாட்டை அநுஷ்டானத்தில் கொண்டுவர வேண்டும். கணக்காகப் பேச வேண்டும். பிரருடைய மனஸைப் புன்புருத்தாத பேச்சையே பேச வேண்டும். தன் ஆத்மாவை உயர்த்திக் கொள்ள உதவுகிற விஷயங்களையே பேச வேண்டும். எண்ணத்தைக் கட்டுப்படுத்துவது கஷ்டம். அது இப்போது நம்மால் முடியாமல் போனாலும் பாதகமில்லை. ஆனால், எண்ணியதை எல்லாம் பேசிப்பேசி இப்போது செய்து வருகிற உற்பாதத்தை நாம் நிச்சயம் குறைக்க வேண்டும். பேச்சில் கணக்காயிருக்கனும் என்று நான் இப்போது பேசுகிறேனே, இதில்கூட நானே கணக்காயிருக்கனும். இல்லாவிட்டால் பேச்சு சுவாரஸ்யம் இழுத்துக்கொண்டு போய், இதிலிருந்தே வியர்த்தமான சர்ச்சைகள் கிளம்பக்கூடும். அதோடுகூட வளவளவென்று சொல்வதால், இது மனஸிலும் சுருக்கென்று தைக்காமல் பிசுபிசுத்துப் போய்விடும்.

படிப்படியாக நம் சொற்கள், செயல்கள், சிந்தனைகள் - word, deed and thought - எல்லாவற்றிலும் ஒரு வரையறை, கணக்கு வேண்டும். முடிவில், மனோ, வாக்கு, காயங்களில் கட்டுப்பாடு வேண்டும். மனசு சிந்திப்பது, வாக்கு பேசுவது, காயம்தான் காரியம் செய்வது. இவை எல்லாம் கட்டுப்பாட்டிந் கீழ் வந்தாலே ஆத்ம க்ஷேமகரமாகும். இவற்றோடு பணத்தைச் செலவு செய்வதை முதலில் சொன்னன்.

கட்டுப்பாடுதான் யோகம், யோகம் என்பது. சிறரிப் போகாமல் ஒன்றிக் கட்டுப்பட்டிருப்பதுதான் யோகம்.

கிருஷ்ண பரமாத்மாகூட இப்படித்தான் கீதையில் சொல்லியிருக்கிறார் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அதிலே சாங்கியமும் யோகமும் ஒன்றுதான் என்கிறார். அவர் சாங்கியம் என்ற சித்தாந்தத்தைப் பற்றி பண்டிதர்கள் பல தினுசாக தருகிற விளக்கங்கள் ஒரு பக்கம் இருக்கட்டும். நேராக அந்தச் செயலின்

பொருளைப் பார்த்தால் சாங்கியம் என்பது சங்கியை

என்பதிலிருந்தே வந்திருக்கிறது. சங்கியை என்றால் கணக்கெடுப்பது என்று அர்த்தம். ஜனசங்கியை

என்று சொல்கிறோமல்லவா அது மாதிரி. எதிலும் சரியாக கணக்கெடுக்கிற புத்தி வந்துவிட்டால் புத்தி இப்படி ஒரு கணக்கிலே கட்டுப்பட்டு நின்று விட்டால், அதுவே சலனமில்லாத சமநிலையில் நிற்பதற்குப் பழகி விட்டுவிடும். இப்படி சம நிலையில் நிற்பதன் முற்றிய ஸ்தானம்தான் யோகம்.

பரம லௌகிகமான, பணவிஷயத்தில் ஆரம்பித்து கணக்காயிருக்கனும் என்றேன். அதுவே பரம வேதாந்தத்தில் கொண்டு சேர்த்து விட்டது. திருமூலரும் திருமந்திரத்தில் இப்படித்தான் சொல்கிறார். உண்மையான கல்வி ஈஸ்வர தத்வத்தை அறிவதுதான் என்று சொல்ல வந்த திருமூலர்.

'கணக்கறிந்தார் கல்வி கற்றறிந்தாரே'

என்கிறார். இது அவசியம். இது அநாவசியம். இது நல்லது இது கெட்டது. இது மெய். இது பொய் என்று கணக்குப் பண்ணி, தள்ளுவதைத் தள்ளி, எடுத்துக் கொள்ள வேண்டியதை கொண்டலன்றி, ஈஸ்வர தத்வத்தைக் காண முடியாது. அதாவது அநுபவ பூர்வமாக உணர முடியாது என்கிறார்.

கணக்கறிந் தார்க்கன்றி காணவொண் ணாதது

கணக்கறிந் தார்க்கன்றி கைகூடாக் காட்சி.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### சமூக விஷயங்கள்

### *பணத்தை விட்டுக் குணத்தைக் கொள்க*

நான் பலவிதமான இடங்களில் தங்க வேண்டியிரு ந்திருக்கிறது. சில இடங்களில் சமையல் கட்டு கீக்கிடமாக

இருக்கும். அங்கே இருந்து ஒரேடியாகப் புகை கிளம்பி நான் பூஜை செய்கிற மண்டபம் வரை வந்து கப்பி விடும். மடத்து முகாமுக்குள் எங்கே போனாலும் புகையாயிருக்கும். இருப்பதற்குள் புகா எங்கே குறைச்சலாய் இருக்கிறது என்றே போய், கடைசியில் அடுப்படியிலேதாந் புகை குறைவாக இருக்கும். அதனால் சமையல் கட்டு பக்கத்திலேயே பூஜைக்கட்டை வைத்துக் கொள்வேன்.

அடுப்பிலிருந்துதான் புகை உண்டாகி நாலா பக்கமும் பரவுகிறது. அதனால் அடுப்படியில் புகை குறைவாக இருக்கிறது. நான் பொதுவாகப் பட்டணங்களுக்குள் போகாமல் கிராமங்களிலேயே சஞ்சாரம் செய்வது என்று வைத்துக் கொண்டிருந்தேன். காரணம் பட்டணங்களில் நவ நாகரீகம் என்கிற பெயரில் அநாசாரம் ரொம்பவும் அதிகம். கிராமங்களில் அவ்வளவு இராது என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அப்புறம் பட்டணத்து ஜனங்களும் என்னை வற்புருத்தி அழைத்ததால் பட்டணங்களுக்கும் போக ஆரம்பித்தேன். நான் நினைத்ததற்குப் பெருமளவு மாறுபட்ட சூழ்நிலையைப் பட்டணத்தில் பார்த்தேன். இதில் எனக்குக் குஞ்சம் திருப்திகூட ஏற்பட்டது. வைதிக சிரத்தை, ஆசாரம், பூஜை புனஸ்காரம் எல்லாம் கிராமங்களில் இருப்பதைவிடவும் கூடப் பட்டணங்களில் அதிகமாக இருப்பதைத் தெரிந்து கொண்டேன். புகையை உற்பத்தி செய்கிற அடுப்பு, அதை வெளியே அனுப்பிவிட்டு, தன் இடத்தைக் கூடிய மட்டும் சுத்தமாக வைத்துக்

கொண்டிருப்பதைப் போல், பட்டணங்கள் கூடியவரை ஆசாரங்களில் பயபக்தி ` தோன்றுவதாகக் தோன்றியது.

கிராம ஜனங்களுக்குப் பட்டணத்தில் இருப்பதுபோல் வேலை வெட்டிகள் அதிகம் கிடையாது. அவர்கள் சகல அநுஷ்டானங்களையும் குறைவில்லாமல் செய்ய வசதி உண்டு. ஆனால், பொதுவாக அவர்கள் அநுஷ்டானங்கள் எதுவுமே செய்யாமல், சாஸ்திர விஷயங்கள் எதுவுமே தெரிந்து கொள்ளாமல் விருதாவாகக் காலத்தைப் போக்குகிறார்கள். பட்டணவாசத்து ஜனங்களுக்கு தலை தெரிக்க காரியங்கள் இருக்கின்றன. ஆபீஸ் காரியம், சோஷியல் சர்வீஸ், விளையாட்டு கிளப் எல்லாம் இங்கு அதிகம். இவற்றில் பலவற்றில் நமது ஆச்சார

அநுஷ்டானங்களை விட்டுவிடும்படியாக இருக்கிறது. என்றாலும் இப்படிச் செய்கிறோமே இது தப்பில்லையா. என்ர பச்சாபதானமும் பட்டணத்து ஜனங்களிடம் ஒட்டிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அதனால்தான் எத்தனையோ வேலை நெரிசல்கள் இருந்தாலும் ஏதோ ஒரு சின்ன பூஜை, கொஞ்சம் கொஞ்சம் அநுஷ்டானங்கள், பஜனை, புராணப் பிரவசனம், ஆலய வழிபாடு ஆகியவற்றைத் தனித்தனியாகவும், சங்கமாகக் கூடியும் காப்பாற்றி வருகிறார்கள். இது ஒரளவுக்கு சந்தோஷம் தருகிறது.

பூரண சந்தோஷம் பழைய தர்மங்களை நாம் பூரணமாக அநுஷ்டிக்குமாறு நம்மைச் செய்து கொள்ளும் போதுதான் உண்டாகும். இப்போதைய பட்டணவாச வாழ்க்கை முறையும், நவநாகரீகமும் வெறும் பணத்தையும் லௌகிக சௌக்கியங்களையும் தேடிப்போனதால் உண்டானவைதான். பணத்துக்காக இந்த வேட்கை போக வேண்டும். குணவானாக வேண்டும் என்பதற்கே அவரவரும் பிரயர்த்தனப்பட வேண்டும்.

மேலும் மேலும் பணம் தருகிற தொழில், மேலும் மேலும் வியாதி தருகிற காரியங்கள் இவற்றை விட்டுவிட்டு, நிம்மத்யோடு நிறைவோடு அடங்கி வாழ்வதற்கு மனஸார முயற்சி செய்ய வேண்டும். பக்தியும் பூஜையும்கூடப் பணத்துக்காக, மற்ற சௌகரியங்களுக்காகச் செய்யப்படலாம். நம் பூஜையை மற்றவர்கள் எப்படி சிலாகிக்கிறார்கள். தமது சாஸ்திரப் பாண்டித்தியதைப் பிறர் எப்படி மெச்சுகிறார்கள் என்பதிலெல்லாம் ஆசை உண்டாகக்கூடும். இவ்விஷயங்களில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மூலம் அகம்பாவத்தைத் விட்டுத் தொலைப்பதுதான். அது தொலைந்தால் அடக்கத்தோடு, ஆனந்தத்தோடு, எந்தக் காரியத்தையும் ஈசுவரார்ப்பண புத்தியோடு செய்து நாமும் க்ஷேமம் அடையலாம். லோகத்தையும் க்ஷேமமாக வைத்திருக்கலாம்.

நாகரீக வாழ்க்கை என்கிற பெயரில் ஏதோ ஒன்றுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு இப்போது பல நல்ல வழிகளை விட்டுவிட்டோமே என்பதை நினைத்தால்தான் பரிதாபமாக இருக்கிறது. நாகரிக மார்க்கத்தில் போய்க் கொண்டிருந்த மேலை நாட்டில் பலர் வாழ்க்கையின் நிறைவு இதில்

இல்லவே இல்லை என்று சலிப்படைந்து, நம்முடைய வேதாந்தம், பக்தி முறை இவற்றுக்குத் திரும்ப ஆசைப்படுகிறார்கள். நாமோ அநாதி காலமாக நமக்கு வந்துள்ள அற்புதமான பிதுரார்ஜிதத்தை அலட்சியம் செய்து, மேல்நாட்டுக்காரர்கள்

வேண்டாம் என்று கழித்துக்கட்டியதை எடுத்துக் கொள்கிறோம்.

இத்தனை கோளாறுகளுக்கும் மூலம் பணமே பெரிதாகிவிட்டதுதான்.

இனியாவது பணத்தில் பற்றுதலை விடவேண்டும். ஸத்குணங்களைச் சம்பாதிக்க பாடுபடவேண்டும். அப்போதுதான் ஜன்மா எடுத்த பலனை நாம் அடைந்து லோகத்துக்கு உபகாரம் செய்தவராவோம்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## சமூக விஷயங்கள்

### *வரதக்ஷிணைப் பிரச்சனை*

ஒவ்வொருவருக்கும் எத்தனையோ விதமான கஷ்டங்கள், தொல்லைகள் இருக்கின்றன. அதையெல்லாம் சிறிது காலமாவது மறந்திருப்பதற்கே இங்கே பூஜை பார்க்கவும். உபந்நியாசம் கேட்கவும் வருகிறார்கள். ஆனால் இந்த உபந்நியாசம் வெறும் பொழுதுபோக்காக மட்டும் இருந்தால் பிரயோஜனமில்லை. உபந்நியாசம் உபயோகமாக இருக்க வேண்டுமானால் அதில் உங்கள் வாழ்க்கையில் அநுசரிப்பதற்கு ஏதாவது ஒரு அம்சமாவது இருக்க வேண்டும். உங்களுக்கும் பிடிக்காத விஷயங்களாக இருந்தாலும்கூட, உங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து நான் சில விஷயங்கள் உத்தேசிக்கத்தான் வேண்டும். நாங்கள் அதைச் செய்வதும், செய்யாததும் உங்கள் காரியம். சொல்லத்தான் என்னால் முடிந்தது. ஜகத்குரு என்று பெயர் வைத்துக் கொண்டு எனக்கு நல்லதாகத் தோன்றுவதை நான் சொல்லவில்லை என்றால் அது பெரிய தோஷம். அதற்காகவே சொல்கிறேன்.

சென்னை நகரத்தில் வந்து தங்கியதில் என் மனஸில் மிகுந்த கிலேசம் உண்டாகியுள்ள ஓர் அம்சத்தைச் சொல்வதற்காகத்தான் இந்த பீடிகை போடுகிறேன். இங்கே என்னிடம் வயசு வந்த எத்தனையோ பெண்கள் தங்களுக்குக் கல்யாணமாகவில்லை, என்ற குறையுடன் கண்ணும் கண்ணீருமாக வந்து முறையிடுகிறார்கள். அவர்கள் மனஸில் எத்தனை கஷ்டமும் கோபமும்

இருக்கின்றன என்று எனக்குத் தெரிகிறது. இந்தப் பரிதாபகரமான காட்சி என்னை ரொம்பவும் வேதனைப்படுத்துகிறது.

இந்தக் குழந்தைகள் வயசு முற்றிய பின்னும் கல்யாணமாகாமல் நிற்பதற்குக் காரணம் என்ன? சாரதாச் சட்டத்தின் தலையில் பழியைப் போடுவதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. சாரதாச் சட்டம் பதினாறு வயதுக்குக் கீழ் கல்யாணம் செய்யக்கூடாது என்று தான் கட்டுப்படுத்துகிறது. இருபத்தைந்து முப்பது வயசுவரை பெண்களைக் கல்யாணம் செய்து கொள்ளாமலிருப்பதற்கு அந்தச் சட்டம் எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாமலிருந்தாலும்கூட நாம் அவற்றையும் உரிய காலத்தில் செய்யாமல்தானே இருக்கிறோம்? எனவே பெண்கள் கல்யாணமாகாமல் மாளாத மனக்குறைவுடன் நிற்கிறதுகள்.

இதோடு விஷயம் நிற்கவில்லை. இதைத் தொடர்ந்து பாரத தேசத்தின் ஸ்திரீ தர்மத்துக்கே விரோதமான போக்குகள் உண்டாகின்றன. கல்யாணமாகாத பெண்களைப் படிக்க வைத்து, வேலைக்கு விட்டு, அவளே சம்பாதிக்கும்படியாகப் பெற்றோர்கள் விடுகிறார்கள். முதலில் அது அவமானமாக இருந்தது. ஆனால் முதலில் தயக்கத்தோடு ஆரம்பிக்கிற ஓர் ஏற்பாடு வழக்கத்தில் வந்துவிட்டால் பிறகு அதில் கூச்சம் போய்விடுகிறது. முதலில் அவமானமாக நினைத்த விஷயமே

பிறகு பழகிப் போய் விடுகிறது. அதுவே நாகரீகத்தின் அடையாளம் என்ற அளவிற்கு மாறி வந்துவிடுகிறது. பெண்கள் உத்தியோகம் பார்ப்பது இப்படித்தான்

ஆகி விட்டிருக்கிறது. வயசு வந்த பெண்கள் சர்வசகஜமாக ஆண்களுடன் சேர்ந்து உத்தியோகம் பார்ப்பது நம் தேச ஆச்சாரத்துக்கே விரோதமானது. இதனால் எத்தனையோ தப்பிதங்கள் நேருகின்றன. இதை எல்லோரும் கண்டும் காணாமல்

இருப்பதுபோல் நானும் இருந்தால் பிரயோஜனமில்லை. என் மனஸில் பட்டதை, நீங்கள் கேட்டாலும், கேட்காவிட்டாலும், வெளியிட்டுச் சொல்வது கடமை என்றுதான் சொல்கிறேன்.

பிள்ளைகளைப் பெற்றவர்கள் ஒரு காலும் வரதட்க்ஷிணை வாங்குவதில்லை என்று தீர்மானம் செய்ய வேண்டும். மற்ற விஷயங்கள் திருப்தியாக இருந்தால் கல்யாணத்தை முடிக்க முன்வர வேண்டும். வரதக்ஷிணை கேட்டால்தான் தங்களுக்கு மதிப்பு, வரதக்ஷிணை கேட்காவிட்டால் தங்கள் பிள்ளைக்கு ஏதோ குறை என்று நினைப்பார்கள் என்பது போன்ற எண்ணங்களை விட்டு, எல்லோருக்கும் சந்தோஷம் தரும் வகையில் கல்யாணத்தை முடிக்க வேண்டும். தேசத்துக்காக, பாஷைக்காக, அரசியல் கொள்கைக்காக ஏதேதோ தியாகங்கள் செய்கிறார்கள். நம் தர்மத்துக்காக இந்த வரதக்ஷிணையை தியாகம் செய்யக்கூடாதா?

வரதக்ஷிணைப் பழக்கமும், கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற வழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டுத் தான தர்மங்கள் செய்வதைவிட, பணக்காரர்கள் தங்கள் ஏழை பந்துக்களின் விவாகரத்துக்குத் தாராளமான திரவிய உதவி தரவேண்டும். உரியகாலத்தில் தம் பெண் குழந்தைகளுக்கு கல்யாணமாகி ஸ்திரீ தர்மமும் சமூக தர்மமும் கெடாமலிருக்க வேண்டும் என்பது என் ஆசை.

ஸ்ரீகள்தான் தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறவர்கள். அவர்களின் பண்பு கொடுக்கிறதற்கு இடம் தரக்கூடாது. அப்புறம் தேசம் பிழைக்காது. குலஸ்திரீகளின் சித்தம் கெட்டுப் போய்விட்டதனால் அப்புறம் தருமமே போய் விடும் என்றுதான் அர்ஜுனன் கூட பகவானிடம் அழுதான். நம் ஸ்திரீ தர்மத்தைக் காப்பாற்றுகிற

பெரிய கடமைகளில் நாம் தவறிவிடக் கூடாது. பெண்கள் உரிய காலத்தில் கல்யாணமாகி கிருஹலக்ஷ்மிகளைக இருக்க வேண்டியது சமூக க்ஷேமத்துக்கு ரொம்பவும் அவசியம். இதற்கு ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிற வரதக்ஷிணை நாம் கைவிட்டேயாக வேண்டும்.

உங்களை இப்படிச் செய்யப் பண்ணுவதற்கு எனக்கு எந்த அதிகார சக்தியும் இல்லை. என்னால் முடிந்தது. ஒரு ஆயுதப் பிரயோகம் பண்ணுகிறேன். இப்போது ரொம்பப் பேர் கல்யாணப் பத்திரிக்கைகளில், ஆச்சார்ய ஸ்வாமிகள் அநுக்கிரகத்தோடு நிச்சயிக்கப்பட்டிருப்பதாகப் போடுகிறீர்கள் அல்லவா? இனிமேல் வரதக்ஷிணை வாங்குகிறவர்களும் கொடுக்கிறவர்களும் அப்படிப்பட்ட கல்யாணப் பத்திரிக்கைகளில் என் அநுக்கிரகத்தோடு நிச்சயித்ததாகப் போட வேண்டாம்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## சமூக விஷயங்கள்

### *இளைஞர் கடமை*

பிறருக்கு உபகாரம் செய்வதற்கே நமது சரீரம் ஏற்பட்டிருக்கிறது என்பது

ஆன்றோர் மொழி. பரோபகாரார்த்த இதம் சாரீரம் என்பார்கள். தேகத்தில் நல்ல தெம்பு இருக்கிறபோதே, யுவர்கள் சேவை நெறியில் ஈடுபட வேண்டும். பிறருக்கு சேவை செய்வதற்காகவே தேக பலத்தைவிட ஒழுக்க பலம் முக்கியம். நமது மதம்

கூறுகிற சாஸ்திர தர்ம நெறியின்படி சுத்தமான வாழ்வு வாழ வேண்டும். இப்படி நாம் தூய்மையாக இருந்தால்தான் பிறருக்கு நல்ல முறையில் சேவை செய்ய முடியும். காமக் குரோதத்தின் இருந்தால் எப்படி நல்ல முறையில் சேவை செய்வது?

சமூகசேவை உண்மையாக இருக்க வேண்டுமாகில் சேவை செய்கிறவர்களுக்கு தர்மத்திலும், சத்தியத்திலும் தளராத பிடிப்பு இருக்க வேண்டும். அவர்களுக்கு பயம் என்பதே கிடையாது. பயமற்ற நிலை வேறு. ஹிம்ஸை வழியில் நடப்பது வேறு. இரண்டையும் குழப்பிக் கொள்ளக்கூடாது. யுவர்களுக்கெல்லாம் உதாரணமாக இருப்பவர் ஆஞ்சநேய ஸ்வாமி. அவருக்கு இந்த பலம் மிகப் பெரியது. சுபாவத்திலோ சாந்தராக இருந்தார். கோபித்து எழ வேண்டிய சமயத்தில் மஹாவீரராக எழும்பி ஹதாஹதம் செய்தார். அவருடைய புத்தி பலம் பெரிது. ஆயினும் பக்தியில் தோய்ந்து அடக்கத்துடன், விநயமே ஸ்வரூபமாகச் சேவை செய்து கொண்டிருந்தார். பயமென்பதே அவருக்கு இல்லை. ஆனாலும், தாமாக ஹிம்ஸை வழியில் அவர் சென்றதில்லை.

பிறருடைய ஹிம்ஸைக்கு எதிர் மருந்தாகவே தாமும் எதிர்த்தார். அவர் சொந்த நலனுக்காக பலத்தைப் பிரயோஜனப் படுத்தவில்லை. துர்பலருக்குக் கொட்டியவரால் கஷ்டம் ஏற்பட்டால், தம் நலனையும் பொருட்படுத்தாமல் பலவீனரை ரட்சிப்பதில் அஞ்சா நெஞ்சராகச் சேவை செய்தார். சிவாஜியும் இப்படிப்பட்ட குணசம்பத்து இருந்தது.

தேக பலம், அஹிம்ஸை, பயமற்ற நிலை இவற்றோடு சொந்தக் கஷ்டங்களை பாராட்டாமல் பிறரைக் காக்கும் பான்மையும் சேர்ந்தால் அது மிகப் பெரிய சீலமாகும். இதற்கே க்ஷத்ர தர்மம் என்று முன்னாளில் பெயர் சொல்லப்பட்டது. க்ஷதாத் கில த்ராயதே. இதி க்ஷத்ரம் - பிறரைத் தீமையிலிருந்து காப்பதே க்ஷத்ரம் என்பது இதன் பொருள். இப்போது நம் நாட்டு யுவர்கள் இந்த க்ஷத்ர தர்மத்தை மேற்கொள்ள நிரம்ப அவசியமாயிருக்கிறது. பலிஷ்டர்களைக் கண்டு பயப்படக்கூடாது. பலவீனர்களை வெறும் மிருக பலம் படைத்தவர்கள் கொடுமைப்படுத்தாதபடி சர்வத் தியாகம் செய்து காப்பாற்ற வேண்டும். மெஜாரிடி, மைனாரிடி என்ற பயம் இல்லாமல், தர்மத்துக்கு ஆபத்து வந்தால் உயிரைத் திருமணமாக மதித்துப் போராடுகிற நெறி இளைஞர்களுக்கு இருக்க வேண்டும். இதுவே சேவையில் ஈடுபட்ட யுவர்களின் தர்மம்.

துரதிஷ்டவசமாக இதற்கு நேர்மாறான போக்கைக் காணும்போது வருத்தமாக இருக்கிறது. பலவீனர்களைப் பயமுருத்தி ஹிம்ஸை முறையால் பணியவைக்கிற போக்கு நல்லதல்ல. இந்தமாதிரி செய்கிற ஸ்டிரைக், உண்ணாவிரதம், கொடும்பாவி கொளுத்தல், கிளர்ச்சி இவையெல்லாம் உண்மையில் இவற்றைச் செய்கிறவர்களின்

பலவீனத்தைத்தான் காட்டுகிறது. தங்களுடைய லட்சியத்திலுள்ள சத்தியத்தின் சக்தியில் நம்பிக்கை இல்லாததால்தான் இத்தகைய நடவடிக்கைகளை எடுக்கிறார்கள். பெரும்பான்மை (மெஜாரிட்டி) பலம் படைத்தவர்கள் பலத்தை

துஷ்பிரயோகம் செய்யும்போது அதைக்கண்டு பயப்படுவதும், அதேப்போல் தங்கள் பலத்தை துஷ்பிரயோகம் செய்து பலவீனர்களைப் பயமுருத்துவதும் தேசத்துக்கு நல்லதல்ல. மக்களின் இந்தப் பலவீனம் சர்க்காரிலும்தானே

பிரதிபலிக்கிறது. மறுபடி நாம் இந்த தேசத்தில் பயமில்லாத பிரஜைகளைகத் தலையை நிர்மித்தி நடக்க வேண்டுமானால் க்ஷத்ர தர்மத்தை விருத்தி செய்ய வேண்டும். தனிமனிதர்களின் உறுதியும் ஆத்ம பலமும் கொண்டிருப்பது, அவர்கள் கட்டுப்பாட்டுடன் ஒன்றுகூடி ஐக்கியமாக உழைப்பது, தீமையையும் அடக்கு முறையையும் கண்டு அஞ்சாத நெஞ்சுருதியுடன் போராடுவது - இவையெல்லாம் இந்த தர்மத்தில் அடக்கம். லோக க்ஷேமம் ஒன்றே லக்ஷியமாகக் கொண்டு இந்த தர்மத்தை நடத்திக் காட்டினால் நாட்டின் ஒழுக்கம் மிக உயர்ந்த நிலை அடையும். அரசாங்கத்தின் தரமும் தானாகவே உயரும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## சமூக விஷயங்கள்

### *அஹிம்ஸா ஸோல்ஜர்கள் தேவை*

நவீன ஸயன்ஸின் அபிவிருத்தியினால் எல்லா சௌகரியங்களையும் செய்து கொண்டு ஆனந்தமாக வாழலாம். மதமும். அநுஷ்யானமும் எதற்கு வேண்டும். என்று சிலர் கேட்கிறார்கள். ஸயன்ஸினால் பல சாதனங்களை உண்டாக்க முடிவது

உண்மையே. ஆனால் இதனால் ஆனந்தம் என்பது மனத்திருப்தியை, உள்ள நிறைவைக் குறித்த விஷயம். சௌகரிய வாழ்வுக்கு இதெல்லாம் தேவை. இன்னமும் தேவைகள் இருக்கின்றன என்ற அடிப்படையில் ஓயாமல் திரவியங்களைச் சேகரித்துக் கொண்டிருப்பதில் மக்கள் திருப்தியா அடைந்து வருகிறார்கள். ஏற்கெனவே இருந்த திருப்தியும் போய்விட்டதைப் பார்ப்போம். அதோடு இதில் போட்டாபோட்டி, வர்க்க பேதம், துவேஷம் எல்லாமும் வளர்ந்து விட்டன. மநுஷ்யனின் ஆசையைப் பூர்த்தி செய்வது முடியாத காரியம். ஆசைகளைக் குறைத்துக் கொண்டாலே உண்மையான ஆனந்தம் காணமுடியும். இதற்கு வழி காட்டுவது மதம்தான். ஆனபடியால், ஸயன்ஸ் அபிவிருத்தி ஆகியிருப்பதாலேயே மதத்தின் தேவையும் அதிகமாயிருக்கிறது எனலாம்.

லௌகிக விஞ்ஞான அபிவிருத்தியால் ஆத்ம சாந்தி காண முடியவில்லை என்று அமெரிக்கா, ருஷியா ஆகிய இரு தேசங்களும் நிதரிசசனமாகக் காட்டுகின்றன. முதலில் ஸ்புட்னிக் செய்து உலகைக் சுற்றவிட்ட நாடு ருஷ்யா. அது கம்யூனிஸ நாடு. அங்கு மத போதனை கிடையாது. இருந்தாலும் டெக்னாலஜி அபிவிருத்தி மட்டும் அந்த நாட்டுக்கு உள்ள நிறைவை அளிக்கவில்லை. அதனால்தான் நமது மகாபாரதத்தை ருஷிய மொழியில் மொழி பெயர்த்துத் தங்கள் பள்ளிகளில் போதிக்க அவர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அமெரிக்க மக்களுக்கு ஆத்ம சந்துஷ்டி இல்லாததாலேயே அவர்கள் யோகம், வேதாந்ததம், சங்கீர்த்தனம் இவற்றில் திரும்பியிருக்கிறார்கள். ஸயன்ஸில் மிக முன்னேறிய தேசங்கள் நம் பாரத தேசத்தின் பக்கம் திரும்பிப் பயனடைய முயலும்போது,

நாமே நமது புராதன தர்மத்தை மறந்து வெறும் இந்திரிய சௌக்கியத்தில் இறங்கினால் அது ரொம்பவும் பரிதாபமாகும்.

நம் தேசத்தில் லௌகிக ஆசையும், நாஸ்தீகமும், தெய்வ நிந்தனையும்

தலைதூக்கினாலுகூட, ஜீவசக்தி வாய்ந்த நம்முடைய ஸநாதன தர்மத்துக்கு எந்நாளும் அழிவு வராது என்று நம்பலாம். அப்படி அழிவு வராமல் காப்பது நம்முடைய பொறுப்பு.

காப்பது என்றால் என்ன செய்யவேண்டும்?. நாஸ்திகர்களோடு, மத நம்பிக்கை இல்லாதவர்களோடு சண்டை போடுவதா. இல்லை. ஹிந்து மதம் சண்டையின் மூலம் தன்னை வளர்த்துக் கொண்டதாகச் சரித்திரமே கிடையாது. அல்லது சமூகப் பணிகளைக் காட்டி நம் சமயத்துக்கு மற்றவரை இழுத்துக்கொண்டாகவும் சரித்திரம் இல்லை. ஆக, ஹிந்து மதம் சண்டையும் போடவில்லை. மதமாற்ற நோக்கத்தோடு சமூக ரீதியில் சேவையும் செய்யவில்லை. ஆனாலும், இத்தனை யுகாந்தரமாக, எத்தனை எத்தனையோ எதிர்ப்பு வந்தும் அது அழியாமல் இருப்பதை மட்டும் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறோம்.இது எதனால். நம் மதத்திலுள்ள தத்துவங்களின் சத்தியத்தினால் என்று சொல்லலாமா. நம் மதத் தத்துவங்கள் பரம உத்தமமானவை என்பது உண்மைதான். ஆனால் கூட, பாமர மக்கள் உள்பட ஏராளமானவர்கள் நம் மதத்தில் ஒட்டிக் கொண்டிருப்பதற்கு இந்தத் தத்துவ மகிமைதான் காரணம் என்று நான் சொல்லமாட்டேன். நம் ஜனங்களில் ஏராளமானவர்களுக்கு இந்தத் தத்துவங்கள் சாமாச்சாரம் தெரியாது.

பின் என்னதான் காரணம்?. ஒரு விதமான பிரச்சாரமும் இல்லாமலே, பழங்கால போப் மாதிரி, லாமா மாதிரி, காலிஃப் மாதிரி, பலம் வாய்ந்த குருபீடங்களும் இல்லாமலே இத்தனை கோடி மக்கள் இத்தனை ஆயிரம் வருடங்களாக நம் மதத்தில் நிலைத்து இருப்பதற்கு காரணம் என்ன? முன்பு பிற மதத்தினர் ஆட்சியில் பலவிதக் கொடுமைகளுக்கு ஆளாகியும், அவர்கள் நயமாகவும் பயமாகவும் எத்தனையோ பிரச்சாரங்கள் செய்தும்கூடக் கோடிக்கணக்காண மக்கள் நம் சநாதன தர்மத்திலேயே இருப்பதற்குக் காரணம் என்ன? எனக்குத்

தெரிகிற காரணம் இதுதான். மதத்தைப் பற்றிப் பேசுவதைவிட, தத்வார்த்தங்களை வாயால் விளக்குவதைவிட நம் மத்ம் விதிக்கிறபடியே பூரணமாக வாழ்ந்து காட்டிய உத்தம புருஷர்கள் ஆதியிலிருந்து தோன்றிக் கொண்டே இருந்திருக்கிறார்கள். கர்மாநுஷ்டானங்களைச் செய்து கொண்டு, நல்ல தெய்வபக்தியுடனும், எல்லோரிடமும் பிரேமையுடனும், தெளிந்த ஞானத்துடனும், நேர்மையான வாழ்க்கை நடத்திய பெரியவர்கள் நம் மதத்தில் ஒவ்வொரு தலைமுறையிலேயும் தோன்றிக் கொண்டே இருந்திருக்கிறார்கள். இவர்கள் பெரிதாகத் தத்துவப் பிரச்சாரம் என்று செய்ய வேண்டும் என்பதில்லை. ஆனால் இப்படிப்பட்டவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே இவர்களிடம் பொது ஜனங்களுக்கு மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. அதனாலேயே இவர்கள் அனுஷ்டிக்கிற மதத்திடம் பற்றுதல் ஏற்பட்டிருக்கிறது. அந்த மதத்தைவிட்டு நீங்காமல் அதிலேயே மேலும் சிரத்தையுடன் ஈடுபட்டு இருக்கிறார்கள்.

நாஸ்திகமும் ஸயன்ஸும் லௌகிகமும் தலைதூக்கியுள்ள, இப்போதும் இப்படிப்பட்டவர்கள் நம்மிடை தோன்றிவிட்டால் போதும், நம் மதத்துக்கு எந்த

ஹானியும் உண்டாகாது. மதத்துக்கு விரோதமான சக்திகளுடன் பௌதிகமாகவோ, வாத, விவாதத்தாலோ யுத்தம் செய்கிற சைன்யம் ஏதும் நமக்குத் தேவையில்லை. எவரிடமும் யுத்தம் செய்யாமல், எது நடந்தாலும் நடக்கட்டும் என்ற துணிவோடு,

தம்பாட்டில் கர்மாநுஷ்டானங்களைச் செய்து கொண்டு, சீலர்களாக வாழ்கிற அஹிம்ஸா ஸோல்ஜர்களே இன்று நமக்குத் தேவை. ஸோல்ஜர் என்று ஏன் சொன்னேன் என்றால், அவர்தான் சாகத் துணிந்தவர். அப்படியே இவர்கள்

பிராணத் தியாகத்தையும் பொருட்படுத்தாமல், ஸ்வதர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். சண்டை போடுவதில் ஸோல்ஜர் இல்லை. சாதத் துணிந்ததிலேயே ஸோல்ஜர். தங்களது வாழ்க்கையின் தூய்மையால் தெய்வீகம் பெற்று, பிறர் அனைவரிடமும் காட்டும் அன்பினால் அவர்களின் மதிப்பைப் பெற்று, பிறர் அனைவரிடமும் காட்டும் அன்பினால் அவர்களின் மதிப்பைப் பெற்று விளங்கும் இப்படிப்பட்ட சிஷ்டர்கள் நம் மதத்தில் தோன்றிக் கொண்டிருக்கும் வரையில் இருள் தானாக விலகி ஒளிவீசிக் கொண்டேயிருக்கும். சுய ஆசைகள் இல்லாமல், சாஸ்திரம் விதித்த பிரகாரம் கர்மாநுஷ்டானம் செய்யத் தொடங்கினால், தன்னால் கட்டுப்பட்டு, சித்த சுத்தி முதலிய குணங்கள் உண்டாகி, ஒவ்வொருவரும் உத்கிருஷ்டமான நிலையை அடையலாம். அனைவரும் அடைய முடியவிட்டாலும் தோஷமில்லை. அனைவருமே இப்படி ஒரு முயற்சி செய்தால்தான் லட்சத்தில் ஒருவராவது உண்மை மகானாக உருவாக முடியும். அப்படி ஒரு சிலர் வந்துவிட்டாலும் போதும். அவர்களைப் பார்த்தே ஜனங்கள் நமது வேத தர்மத்தில் பிடிப்புக் கொண்டு விடுவார்கள்.

பூரணத்துவம் அடைந்த புருஷர்களின் வாழ்க்கை உதாரணத்தாலேயே வளர்ந்து வந்த நமது மதம் இனியும் அப்படியே வளர வேண்டும். நாம் மனப்பூர்வமாக இந்த முயற்ச்சி எடுத்தால், பரமேஷ்வரன் நிச்சயம் கைக்கொடுப்பார். நாஸ்திகம் வந்துவிட்டதே என்று பயப்பட வேண்டும். நம்மை நாமே சோதித்துக் கொண்டு திருந்துவதற்கே ஈஸ்வரன் இந்த எதிர்ப்புகளை உம்டைக்குகிறான் என்று உணருவோம். இன்றிருப்பதைவிட மகா பெரிய எதிர்ப்புக்கெல்லாம் ஈடுகொடுத்து நம் ஸநாதன தர்மம். எதிர்ப்புக் காரணமாகவே, ஆஸ்திகர்களிடத்தில் உண்மையான எழுச்சி உண்டாகி, சமயப் பற்று அதிகமாகியிருக்கிறது. புராண காலங்களில் ராக்ஷஸர் எதிர்த்த கதைகள் ஒருபுறமிருக்கட்டும். சரித்திர காலத்தில்கூட அவைதிக மதங்கள் வலுப்பெற்றபோது எங்கிருந்தோ ஒரு சங்கர பகவத்பாதர் வந்தார். திருஞான சம்பந்தர் வந்தார். ஔரங்கசீப் தோன்றி ஹிந்து மதத்தை ஒடுக்கப் பார்த்தார். உடனே ஒரு சிவாஜியும் அஹல்யாபாயும் வந்து நம் சமய உணர்வை முன்னைவிட வலுவாக்குகிறார்கள். எனவே மதம் என்ன ஆகும்

என்ற பயம் வேண்டாம். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் பகவானுக்கு 'பயக்ருத்' ஆகிறார். நாம் திருத்த முயன்றோமானால் உடனே பயநாசனன் ஆவார்.

இந்த முயற்சியில் இறங்குவோம். மதத்தைப் பற்றிக் கவலைப்படாமல், பயப்படாமல், மத விரோதிகளைப் பற்றிக் கோபப்படாமல், சண்டையோ வாதமோ செய்யாமல் அவரவரும் நம் மத விதிகளை நாம் அநுசரித்து நடக்கச் சங்கல்பம் செய்து கொள்வோம். எங்கள் மதத்தில் இன்னின்ன கர்மங்களையும்

தர்மங்களையும் சொல்லியிருக்கிறது என்று வாதப் பிரதிவாதம் செய்வதோடு திருப்தி அடையாமல் எங்கள் மதத்தில் சொன்ன கர்மங்களையும் சொல்லியிருக்கிறது என்று காட்டிக்கூடியவாறு உத்தமப் பிறவிகள் தோன்ற முயற்சி

செய்வோம். இவ்வாறு ஒவ்வொருவரும் வேத மதத்தின் அஹிம்ஸா ஸோல்ஜராவதற்கு முயல்வோம். ஸோல்ஜர் தன் தேசத்தின் நிலத்தில் ஒரு அங்குலம்கூட எதிராளிக்கு விடமாட்டான் அல்லவா? அப்படியே நம் சாஸ்திர

வழக்கங்களைக் கொஞ்சம்கூட விடாமல் தைரியத்தோடு நம் தர்மத்தை ரக்ஷிக்கப் பிரயாசை எடுப்போம். நாம் அந்தரங்க சுத்தமாக முயற்சி எடுத்தால் ஈசுவரன் நமக்கும் நம் ஸநாதன தர்மத்துக்கும் குறைவு வராமல் அநுக்கிரகிப்பார்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## சமூக விஷயங்கள்

### *வையகம் துயர் தீர வழி*

சென்ற ஐம்பது வருஷங்களுக்குள் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. விஞ்ஞான, பொருளாதார, அரசியல், சமூக விஷயங்கள் எல்லாவற்றிலும் பெரிய மாறுதல்கள் உண்டாகிவிட்டன. அதற்குமுன் ஐயாயிரம் வருஷங்களில் ஏற்பட்ட மாறுதல்களைவிட இந்த ஐம்பது வருஷ மாறுதல்கள் அதிகம் என்றே சொல்லலாம். இந்த ஐம்பது வருஷ மாறுதல்களிலிருந்து நமக்கு ஏற்பட்ட அநுபவம் மிகப் பெரியது. இவ்வளவு அநுபவங்களிலிருந்தும் ஒரு விஷயம் மாத்திரம் தீர்மானமாகத் தெரிகிறது. மனிதர்கள் எவ்வளவுக்கெவ்வளவு பகவானிடத்திலும் தர்ம நூல்களினின்றும் விலகுகிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு துன்பங்களுக்கு உள்ளாகிறார்கள் என்றே கண்கூடாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம். ஸயன்ஸின் அபரிமித அபிவிருத்திப் பிற்பாடு இன்று சர்வ தேசத்திலும் ஒரு தத்தளிப்பு, நிம்மதியினைத்தானே அதிகரித்திருக்கிறது. ஐம்பது வருஷத்துக்குமுன் சமுதாயத்தில் இருந்த நிச்சிந்தையான, நிம்மதியான, சௌஜன்யமான வாழ்க்கை இப்போது இல்லவே இல்லை என்கிறது தானே மிஞ்சி நிற்கிறது. அறிவுச் சக்தியோ பௌதிக ஆற்றலோ அதிகப்பட அதிகப்பட உலகத்துக்கு ஆபத்தும் அதிகரிக்கிறது என்று நன்றாகத் தெரிகிறது.

சரி, வியாதியைத் தெரிந்து கொண்டோம். இனி மருந்து என்ன? பக்தியும் சாந்தமுமே இவைகளுக்கெல்லாம் உற்ற மருந்து. உண்மை பக்தியும் சாந்தமும் உலகில் பரவப்பரவப் போலீசுக்கும், நீதிமன்றங்களுக்கும், சைன்யங்களுக்கும்

வேலை குறையும். இதுதான் முந்தய ஐயாயிரம் வருஷம் காட்டுகிற உண்மை. ஆதலால், ஆட்சி மன்றத்தின் முதற்கடமை பக்தியையும் சாந்தத்தையும் பரவச் செய்வதே. ஆனால் நடப்பது என்ன? ஆட்சி மன்றத்தினரோ தாம் மதச் சார்பற்றவர்கள் என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிற படியால் பக்திப் பிரச்சாரம் அத்தீர்மானத்திற்கு மாறுபட்டதாகி விடுமோ என்று சந்தேகித்து, இவ்வழி திருப்பாமலிருக்கிறார்கள். மதச்சார்பின்மை என்றால் ஒரு மதத்தை மட்டும் சாராமல் எல்லா மதங்களையும் வளர்ப்பது என்று வைத்துக் கொள்ளாமல், எந்த மதத்தையுமே வளர்ப்பதில்லை என்று அர்த்தம் பண்ணிக் கொண்டிருப்பதால் ஏற்பட்ட விளைவு இது. அவ்வப்போது நெறிபோதனை (moral instruction), மத போதனை (religious instruction) என்றெல்லாம் அரசியல்வாதிகள் பெரிதாகப் பேசி, ஒவ்வொன்றுக்கும் கமிட்டி, கிமிட்டி போட்டு, அதுவும் ஊரெல்லாம் சுற்றி, ஆயிரம் பத்தாயிரம் பக்கம் ரிப்போர்ட் சமர்ப்பிக்கிறது. ஆனாலும் கடைசியில் காரியத்தில் ஏதாவது அமல் ஆயிற்றா என்று பார்த்தால் ஸைபர்தான். கலாச்சாரம்,

பண்பாட்டு வளர்ச்சி என்று செய்கிற காரியங்களும் வெறும் கூத்தும், பாட்டுமாக, வெறும் 'ஷோ' வாக முடிந்து போகின்றன.

சர்க்கார் எப்படியிருந்தாலும் மக்களில் அறிந்தோருடைய கடமை மக்களுக்கு

உண்மையாக நலனக் கோருவதே. அவர்களை உயர்த்தப் பாடுபடுவதே. மக்களுக்கு உண்மையான நலன், நன்மை விட்டுப் பிரிய முடியாத பேர் உறவினனான ஆண்டவனிடம் அன்பு செலுத்துவதனாலேயே வளரும். பக்தி போனதிலிருந்து க்ஷேமமும் போய்விட்டதென்பதே ஐம்பதாண்டுகளில் நமக்கு ஏற்பட்ட அநுபவத்தின் ஸாரம்.

ஒவ்வொரு ஊரிலும் அநேக சங்கங்கள், மன்றங்கள், கழகங்கள், குழுக்கள் நிறுவப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குறிக்கோள் உண்டு. இவை ஒவ்வொன்றும் பற்பல சமயங்களில் மற்றவர்களும் முரண்பாடு ஊரிலும் நாட்டிலும் வெறுப்பு, கசப்பு, புரட்சி முதலியவைகளுக்குக் காரணமாக முசிகிற நிலைக்குக் கொண்டு விடுவதையும் நிறையப் பார்க்கிறோம். ஆதலால் எல்லாப் புரட்சிகளையும் அன்பாக மாற்றக்கூடியதும், எல்லாப் புரட்சிகளையும் அன்பாக மாற்றக்கூடியதுமான, ஒரு கழகம் நமக்குத் தேவையாகிறது. பக்தி மார்க்கம் என்னும் வழிபாட்டைக் கழகங்களே இப்போதும், எப்போதும் தேவை. மற்ற எல்லா வாழ்க்கை அம்சங்களையும், மற்ற எல்லாக் கழகங்களையும் சாந்தமுறையில் சீர்படுத்தும் சாதனம் வழிபாட்டுக் கழகங்களே.

எனவே நம் தேசத்திலுள்ள அத்தனை லக்ஷம் கிராமத்துக்கும் ஒரு வழிபாட்டுக் கழகம் நிறுவ வேண்டும். நாம் எல்லோரும் முனைந்து முயற்சி செய்து ஈசன் அருளைத் துணை கொண்டு, இப்பணியை முடித்தாக வேண்டும். இதனால் நாமும் சீர்ப்பட்டு நாடே அன்பு மயமாகும். நம் ஒரு நாட்டின் உதாரணத்தின் மூலம் உலகமும் சாந்தியாகி, லோகா ஸமஸ்தாஸ் ஸுகினோ பவந்து, வையகம் துயர் தீர்க்கவே என்ற நமது வேத நெறியின் சிறப்புக் கொள்கை புத்துயிற்பெற்று நிலவும். நாம்தான் அப்படி நிலவ வைக்கவேண்டும். இப்பணிக்கே நம் ஆயுளை அர்ப்பணிக்க வேண்டும்.

நவீன விஞ்ஞான வளர்ச்சிகளாலோ, பணவீக்கம் முதலியவைகளாலோ, பரஸ்பர அவநம்பிக்கைகளாலோ ஏற்படக்கூடிய எந்தப் புரட்சியையும் வெரு சாந்தமான முறையில் சமாளிக்கக்கூடிய வழிபாட்டுக் கழகங்களை நிறுவும் பணியில் நாம் எல்லோரும் ஒன்றுபட்டு, எஞ்சியிருக்கும் நமது வாழ்நாட்களை இதிலே பயன்படுத்தித் தொண்டு புரிவோமாக! நம் கடன் பணி செய்து கிடப்பதே!

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## அத்வைதம்

### பண்பாட்டின் இதயஸ்தானம்

கலா என்கிற சமஸ்கிருத வார்த்தை, கல்வி என்கிற தமிழ்ச்சொல், கல்ச்சர் என்ற ஆங்கிலப் பதம், கொலே என்கிற பிரெஞ்சு வார்த்தை எல்லாவற்றுக்கும் மூலம் ஒன்றே. கலை சர்வ தேசத்தையும் தழுவுகிற விஷயமாதலால், வார்த்தை ஒன்றாகவே இருக்கிறது. கலா என்றால் எப்போதும் வளருவது என்று பொருள். சந்திரக் கலை என்கிறோமே, அதுபோல், பிறை தினந்தோறும் வளர்வதுபோல் மன வளர்ச்சியைத் தருவது கலை. முடிவே இல்லாமல் வளர்வது இது. கற்றது கைம்மண்ணளவு என்று ஸரஸ்வதியே கற்றபடிதான் இருக்கிறார்களாம். கலைச்சிறப்பே கல்ச்சர் கலாச்சாரம் என்று இதைத் சமீப காலமாகச் சொல்கிறோம். பண்பு பண்பாடு என்பது பழைய வார்த்தை.

உயர்ந்த எண்ணம் வளர்ந்து வளர்ந்து பல கலைகளாக உருவெடுத்திருக்கிறது. உயர்ந்த எண்ணங்கள் ஒவ்வொரிடத்தில் ஒவ்வொரு விதமாக உருவெடுக்கப்பட்டுள்ளன. சில்ப ரூபமாக, சித்திர ரூபமாக, நாட்டிய ரூபமாக, சங்கீத ரூபமாக, காவிய ரூபமாக, தியாக ரூபமாக, சேவை ரூபமாக, தான ரூபமாக இப்படிப் பல உருவங்களாக உயர்ந்த எண்ணம் வெளிப்படுகிறது. இந்த உயர்ந்த எண்ணம் மிகவும் உயர்ந்து விரிந்து எடுத்துக் கொள்கிற உருவமே, எல்லா உயிர்களிடமும் அன்பு. உலகம் முழுக்க ஒன்றாகிவிட வேண்டும் என்று எண்ணுகிற அன்பில் பிறந்ததே மிகப் பெரிய பண்பாடு. இதுவே நமக்கெல்லாம் தலையாய கலை.

ஒரு தேசத்தின் பண்புக்கு அளவுகோல் எது? ஒரு நாடு என்று இருந்தால், அதில் எல்லோரும் பண்பாளர்களாக (culture) இருக்க முடியாது. திருடன், பொய்யன்,

மோசக்காரன் எல்லோரும் இருக்கத்தான் செய்வார்கள். இப்படிப் பட்டவர்கள் இருந்தாலும், இந்தத் தேசத்தில் பண்பு இருக்கிறது. கெடுதலானவர்கள் இருந்தாலும்கூட இந் நாடு பிழைத்துப் போகும் என்று தெரிந்து கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒரு நோயாளிக்குப் பல கோளாறுகள் இருந்தாலும் டாக்டர் இருதயத்தை சேதனை செய்து பார்த்துவிட்டு, இருதயம் நன்றாக இருக்கிறது. ஆகவே பயமில்லை என்கிறார் அல்லவா. அதுபோல் ஒரு தேசத்தில் கோளாறுகள் இருந்தாலும், அதன் பண்பாட்டை உரைத்துப் பார்க்க ஒரு இருதய ஸ்தானம் இருக்கிறதா?

இருக்கிறது. ஒரு தேசத்தின் பண்பு உயர்ந்திருக்கிறது. மனோபாவங்கள் உயர்ந்திருக்கின்றன. அங்கங்கே அழுக்குகள் இருந்தாலும் மொத்தத்தில் அது சுத்தமாக இருக்கிறது என்பதை உரைத்துப் பார்ப்பதற்கு அதைத் தேசத்து மஹாகவிகளின் (இலக்கிய கர்த்தர்களின்) வாக்கே ஆதாரமாகும். ஒரு தேசத்தின் பண்புக்கு இதயமாக அல்லது உரைகல்லாக இருப்பது, அந்த நாட்டு மகாகவியின் வாக்குதான்.

இலக்கிய கர்தர்களில் உயர்ந்தவர்கள், மட்டமானவர்கள் எல்லோரும் இருப்பார்கள். இவர்களில் அசுத்தமே இல்லாதவனின் வார்த்தைதான், அழுக்கின் கனம் இல்லாததால் காலப் பிரவாகத்தில் அமுங்காமல், என்றென்றும் மேலேயே விளங்கிக் கொண்டிருக்கு ம்.அப்படிப்பட்டவனின் வாக்கே நமக்குக் கலாச்சார விஷயங்களில் பிரமாணமாகும்.

மதஸ்தாபகர்களின் கருத்துக்கு நிரம்ப முக்கியத்துவம் உண்டு என்பது வாஸ்தவம். ஆனாலும், ஒரு மதத்தை ஸ்தாபிப்பது என்று வரும்போது பிற மதங்களுடைய கொள்கைகளைக் கண்டனம் செய்து, தங்கள் சித்தாந்தத்தையே உறுதிப்படுத்த வேண்டும் என்று ஏற்பட்டுவிடுகிறது. தையல்காரர் மாதிரி, தங்கள் கொள்கையை மட்டும் இறுக்கிப் படித்து வைத்துக்கொண்டு, மற்றதை எல்லாம் வெட்டி, தங்கள் கருத்தில் கொஞ்சம் பலவீனமானதற்குக்கூட ஒட்டுக் கொடுத்து தைத்துக்கொண்டு பேசவேண்டியிருக்கிறது. வெறுமே இலக்கிய சிருஷ்டியில் ஈடுபட்டிருப்பவனுக்கு இந்தப் பட்ச பதமான வேலை கிடையாது. மனத்தில்

தோன்றியது, கண்ணில் பட்டது. அழகான காட்சி, அழகிய பண்பு இவற்றை விருப்பு வெறுப்பில்லாமல் அவன் சொல்லிக் கொண்டே போவான். தனது என்று எதையும் பிடித்துக் கொள்ளாமல் விஷயத்தை உள்ளபடி பார்த்து (objective-ஆக) பேதமில்லாமல், நடுநிலை கருத்தோடு (impartial-ஆக) சர்வ சுதந்திரமாக திறந்த மனசோடு உள்ளதை உள்ளபடி சொல்வான். உலகம் முழுவதையும் இப்படியே படம் பிடித்துக் காட்டி விடுவான். அதை உலகம் எடுத்துக் கொண்டாலும் சரி, தள்ளிவிட்டாலும் சரி, அதைப் பற்றியும் இலக்கிய கர்த்தாவுக்குக் கவலையில்லை. பயனை எதிர்ப்பார்க்காதவன் அவன். முதலில் சொன்னதுபோல் இவன் அழுக்கே இல்லாமல் சுத்தமானவனாக இருந்தால் இவன் மனத்தில் தோன்றுவதே சுத்தமான பண்பு. அதை யாறுக்கும் பயப்படாமல் சொல்லிவிடுவான். தன் மனத்தில் உத்தமமாக தோன்றாததை இன்னொருத்தனுக்கு பயப்பட்டோ பவ்யப்பட்டோ ஒரு கவி சொல்லமாட்டான்.

ஒரு விஷயம் ஒரு நாட்டின் பண்புக்கு உகந்ததுதான் என்றுஅறிய வேண்டுமானால் அந்தப் பிரமாண வாக்கு (authority) அந்தத் தேசத்தின் இப்படிப்பட்ட மகாகவியின் வாக்குதான்.

இன்று உள்ள இலக்கியம் நாளை நிற்குமா என்று நமக்குத் தெரியாது. எனவே, பலகாலமாக உரைத்து உரைத்து மக்களுடைய ஜீவனைப்போலவே உறைந்து சாசுவதமாக விளக்கி வந்திருக்கிற காவியங்களை இயற்றியவர்களின் வாழ்க்கை பிரமாணமாக எடுத்துக் கொள்ள வேண்டும். குமரிலபட்டர், வேதாந்த தேசிகன் போன்ற மத ஸ்தாபகர்களுக்குக்கூடக் காளிதாசர் மாதிரியான இப்படிப்பட்ட மகாகவிகளின் வாக்கை அதிகார பூர்வமானதாக எடுத்துக்காட்டுகிறார்கள். அதிலிருந்தே அதன் அதாரிடி தெரிகிறது.

*பண்பாடு*

## ஸங்கீத லக்ஷியம் சாந்தமே

லோகத்தில் மனசுக்கு ரொம்பவும் ஆனந்தமாகவும் சாந்தமாகவும் இருக்கப்பட்ட பல விஷயங்களுக்கு, அப்பர் ஸ்வாமிகள் ஒரு லிஸ்ட் கொடுக்கிறார். இந்திரியங்களுக்கு அகப்படுகிற சுகங்கல்போல இருந்தாலும், நிரந்தனமான, தெய்வீகமான ஆனந்தத்தைத் தருகிற வஸ்துக்களைத் சொல்கிறார். அந்த வஸ்துக்கள் என்ன. முதலில், துளிக்கூட தோஷமே இல்லாத வீணா கானம், அப்புறம், பூரண சந்திரனின் பால் போன்ற நிலை. தென்றல் காற்று, வஸந்த

காலத்தின் மலர்ச்சி. வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிற தாமரைத் தடாகம்.

**மாசில் வீணையும் மாலை மதியமும்**

**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**

**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**

**ஈசன் எந்தை இணையடி நீழலே.**

இந்திரியங்களால் பெறுகிற இன்பங்களை ஈசுவர சரணாரவிந்த இன்பத்துக்கு உபமானமாக அடுக்கும்போது, மாசில் வீணை என்று சங்கீதத்துக்கே முதலிடம் தருகிறார்.

நல்ல ஸங்கீதம் அதுவும் குறிப்பாக நம்முடைய ஸங்கீதத்துக்கே எடுத்த வீணையோடு கானம் என்றால் அது ஈசுவரனின் பாதத்துக்குத் கொண்டு சேர்ப்பதர்காகவே இருக்கும். நம் பூர்விகர்கள் இசையை ஈஸ்வரனின் சரணங்களிலேயே ஸமர்ப்பணம் பண்ணினார்கள். அந்த இசை அவர்களையும், அதைக் கேட்கிறவர்களையும் சேர்த்து, ஈசுவர சரணாரவிந்தங்களில் லயிக்கச் செய்தது. தர்ம சாஸ்திரம் தந்த மஹறிஷி யாக்ஞவல்கியரும் சுஸ்வரமாக வீணையை மீட்டிக் கொண்டு, சுருதி சுத்தத்தோடு, லயம் தவறாமல் நாதோபாஸனை செய்துவிட்டால் போதும் - தியானம் வேண்டாம். யோகம் வேண்டாம். தபஸ் வேண்டாம். பூஜை வேண்டாம். கஷ்டமான சாதனைகளே வேண்டாம். இதுவே மோஷத்துக்கு வழிகாட்டும் என்கிறார்.

**வீணா வாதன தத்வக்ஞ : ச்ருதி ஜாதி விசாரத : I**

**தாளகஞ்ச்ச அப்ரயதனேன மோக்ஷமார்க்கஸ ஸ கச்சதி II**

இதிலே ஒரு விஷயம் சங்கீத வித்வான் மட்டுமில்லாமல், அவன் கானம் செய்வதே கேட்டுக் கொண்டிருக்கிற அத்தனை பேருக்கும், அவன் ஒருத்தன் செய்கிற சாதனையின் பூரண பலனான நிறைந்த திவ்விய சுகம் கிட்டிவிடுகிறது.

வித்யா தேவதையான சரஸ்வதி எப்போதும் வீணாகாணம் செய்கிறாள். லௌகிகமான (secular) பாட்டே கூடாது. பகவானைப் பற்றித்தான் பாட வேண்டும். சரஸ்வதியும் பரமேஷ்வரனின் பலவித லீலைகளைப் பற்றித்தான் பாடுகிறாள் என்று ஸௌந்தர்ய லஹரி சுலோகம் சொல்கிறது.

ஆசாரியாள் ஸௌந்தர்ய லஹரியில் அம்பாள் கழுத்தழகைச் சொல்லும்போது, அவளிடமிருந்து, சங்கீதம் முழுதும் பிறக்கிறது என்பதை வெகு அழகாகச் சொல்லுகிறார் (கலே ரேகா. திஸ்ரோ என்று ஆரம்பிக்கும்) கழுத்திலே மூன்று ரேகைகள் இருப்பது உத்தம ஸ்திரீ லட்சணம். புருஷ லட்சணம் Adam's apple என்று இங்கிலீஷில் சொல்கிற நெஞ்சிலே இருக்கப்பட்ட உண்மையான படைப்பு. ஈஸ்வரர் ஆலகாலத்தை தொண்டையில் கோலிக்குண்டு மாதிரி எடக்கிக்கொண்டார் அல்லவா. ஆண்கள் எல்லோரும் அவனது ஸ்வரூபம் என்பதற்கு அடையாளமாகவே உத்தம புருஷர்களின் தொண்டையில் இப்படி உருண்டை இருக்கிறது. அதே மாதிரி ஸ்திரீகள் யாவரும் தேவீ ஸ்வரூபம் என்பதால் அவர்களுடைய பரம மங்கள சின்னமான கழுத்து ரேகைகள் மூன்றும் உத்தமப் பெண்களிடம் இருக்கிறது. இதை ஆச்சாரியாள் வர்ணிக்கும்போது,

ஸங்கீதத்தில் ஷட்ஜகிராமம், மத்தியம கிராமம், காந்தார கிராமம் என்று மூன்று வரிசைகள் (Scale, Gamut) உண்டு. இந்த மூன்று தொகுப்புகளிலிருந்துதான் மதுரமான நானாவித ராகங்களும் எழுந்திருக்கின்றன. அம்மா, நீயோ ஸங்கீதத்தின் கதிகளிலும், கமகங்களிலும் மகா நிபுணை. அந்த மூன்று சங்கீத ஸங்கீத கிரமங்களும் உன் கண்டத்திலிருந்தான் பிறந்தன. அதற்கு அடையாளமாகவே அதற்கு

ஒவ்வொன்றுக்கும் உரிய ஸ்வரங்கள் தொண்டைக்குள் எந்தெந்த இடங்களில் பிறந்து, எந்தெந்த இடத்தில் முடிகின்றன என்று எல்லை வகுத்துக் காட்டுவதுபோல், வெளிப்பட்ட இந்த மூன்று ரேகைகளும் உன் கழுத்தில் காணப்படுகின்றன என்கிறார்.

அத்வைத பரமாச்சாரியார்களுக்குச் சங்கீதத்தில் எத்தனை பாண்டித்தியம் இருக்கிறது என்பதும் இங்கே தெரிய வருகிறது. ஸங்கீதமே அத்வைதமாக நம்மை மூலத்தோடு கரைப்பதுதான். சாக்ஷாத் அம்பிகை வீணாதாரிணியாக சியாமளாம்பிகையாக விளங்குவதாகக் காளிதாஸர் நவரத்தின மாளிகையில் ஸரிகமபதநிரதாம் என்று பாடுகிறார். அவள் பாடுகிற சங்கீதத்தால் அவனுடைய மிருதுவான இருதயமும் அதற்கும் உள்ளே இருக்கிற அத்வைதமான சாந்தமும் (சாந்தாம், மிருதுள ஸ்வாந்தாம்) வெளிப்படுகின்றன என்கிறார். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், எத்தனை உணர்ச்சிவசப் பரவசங்களைத் தூண்டிவிட்டாலும் சாந்தம்தான் சங்கீதத்தின் முடிந்த முடிவாக இருக்க வேண்டும். சங்கீதத்தினாலேயே அன்பு என்கிற மிருதுவான இருதயம் ஏற்படுவதாகவும் தொனிக்கிறது. தசவித கமகங்களைச் செய்கிற சியாமளாம்பிகையான மீனாக்ஷியை வீணை மீட்டிப் பாடிக்கொண்டே, இந்த அன்போடு அன்பாக, சாந்தத்தோடு சாந்தமாகத்தான் முத்துஸ்வாமி தீக்ஷிதர் கரைந்து போனார். தியாகராஜ ஸ்வாமிகளும், பாஷை தெரியாதவர்களுக்கும் கேட்டமாத்திரத்தில் எல்லாயில்லாத விச்ராந்தி தருகிறமாதிரி சாம ராகத்தில் சாந்தமுலேக சவுக்கியமு லேது என்று பாடியிருக்கிறார். ஈசன் எந்தை இணையடி நீழலில் அப்படியே லயித்துப் போகிற இந்த சாந்தத்தைத்தான் அப்பரும் மாசில் வீணை என்பதாக உவமிக்கிறார்.

கல்வித் தெய்வமான சரஸ்வதி கையிலே வீணை வைத்திருப்பது எல்லோருக்கும் தெரியும். பரமேஸ்வரனின் பத்தினியான சாக்ஷாத் பராசக்தியும் கையிலே வீணை வைத்திருப்பதாக காளிதாஸர் நவரத்தினமாலா ஸ்தோத்திரத்தில் பாடுகிறார். அம்பாள் விரல் நுனியால் வீணையை மீட்டிக் கொண்டிருப்பதாகவும், ஸரிகமபதநி என்ற சப்த ஸ்வரங்களின் ஸாதூரியத்தில் திளைத்து ஆனந்திருப்பதாகவும் பாடுகிறார்.

**ஸரிகமமபதநி ரதாம் தாம்**

**வீணா ஸங்க்காந்த காந்த ஹஸ்தாந்தம்** I

இப்படி சங்கீதத்தில் முழுகியுள்ள சிவாகாந்தா (சிவனின் பத்தினி)

சாந்தமாகவும் (அமைதி மயமாகவும்) ம்ருதுள ஸ்வார்த்தாவாகவும் (மென்மையான திரு உள்ளம் படைத்தவனாகவும்) இருக்கிறாள் என்கிறார் காளிதாஸர். அவளை நமஸ்கரிக்கிறேன் என்கிறார்.

**சாந்தாம் ம்ருதுள ஸ்வார்த்தம்**

**குசபரதாந்தாம் நமாமி சிவகாந்ததம்** II

அவர் ஸ்லோகத்தைச் செய்துகொண்டு போயிருக்கிற ரீதியைக் கவனித்தால், அம்பிகை ஸங்கீதத்தில் அமழ் ந்திருப்பதாலேயே சாந்தஸ் ஸ்வரூபிணியாக ஆயிருக்கிறாள் என்று தோன்றுகிறது. அதேபோல ஸங்கீத அநுபவத்தினால்தான் அவனுடைய உள்ளம் மிருதுளமாக, புஷ்பத்தைப்போல் மென்மையாக கருணாமயமாக ஆகியிருக்கிறது என்று தொனிக்கிறது.

சாக்ஷாத் பராசக்தியை இப்படி ஸங்கீத மூர்த்தியாகப் பாவிக்கும்போது அவளுக்கு சியாமளா என்று பெயர். ஸங்கீதத்தில் தோய்ந்து ஆனந்த மயமாகவும், சாந்த மயமாகவும், குழந்தை உள்ளத்தோடும் உள்ள சியாமளாதேவியைத் தியானித்தால், அவள் பக்தர்களுக்குக் கருணையைப் பொழிவாள். அவளது மிருதுவான

இதயத்திலிருந்து கருணை பொங்கிக் கொண்டேயிருக்கும். தெய்வீகமான ஸங்கீதம் ததும்பும் சந்நிதியில், சாந்தமும் ஆனந்தமும் தாமாகவே பொங்கும். சிவகாந்தாவிடம் சரண் புகுந்தால் நமக்கு இந்தச் சாந்தமும் ஆனந்தமும் கைகூடும்.

இந்த சுலோகத்திலிருந்து ஸங்கீதமானது ஆனந்தம், சாந்தம், மிருதுவான உள்ளம், கருணை ஆகிய எல்லாவற்றையும் அளிக்கும் என்று தெரிகிறது.

வேத அத்யயனம், யோகம், தியானம், பூஜை இவற்றைக் கஷ்டப்பட்டு அப்பியசிப்பதால் கிடைக்கிற ஈஸ்வரானுபவத்தை தெய்வீகமான ஸங்கீதத்தின் மூலம், நல்ல ராக தாளத்தின் மூலம் சுலபமாகவும் சௌக்கியமாகவும் பெற்றுவிடலாம். இப்படி தர்ம சாஸ்திரம் எனப்படும் ஸ்மிருதியைத் தந்திருக்கும் யாக்ஞவல்கிய மகரிஷியே சொல்லியிருக்கிறார். வீணா கானத்தை அவர் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார்.

அப்ரயத்னேன - கடுமையான பிரயாசை இல்லாமலே ஸங்கீதத்தால் மோக்ஷ மார்கத்தில் போய்விடலாம் என்கிறார். நம் மனஸைத் தெய்வீகமான ஸங்கீதத்தில் ஊறவைத்து அதிலேயே கரைந்து போகச் செய்தால் கடமில்லாமல் ஈசுவரனை அநுபவிக்கலாம். நாம் பாடி அநுபவிக்கும் போதே, இந்த ஸங்கீதத்தைக் கேட்கிறவர்களுக்கும் இதே அநுபவத்தைத் தந்துவிடலாம். வேறு எந்த சாதனையிலும் பிறந்து யாறுக்கும் இப்படி ஸமமான அநுபவ ஆனந்தம் தர முடியாது. சங்கீதம் என்ற மார்க்கத்தின் மூலம் தங்கள் இருதயங்களைப் பரமேசுவரனிடம் சமர்ப்பணம் செய்த தியாகராஜர் போன்ற பக்தர்கள், சங்கீதமே சாக்ஷாத்காரகத்தைத் தரும் என்பதற்குச் சாட்சியாக இருக்கிறார்கள்.

அம்பாள்தான் பிரம்மத்தின் சக்தி. நாதம் ஈசுவரன் அல்லது பிரம்மம். அம்பாள் சங்கீதத்தில் சொக்கி ஆனந்தமாயிருக்கிறாள் என்றால், பிரம்மமும் சக்தியும் வேறு வேறாக இல்லாமல் ஒன்றிய அத்வைத ஆனந்தத்தையே குறிக்கும்.

அம்பாள் தன் இயற்கையான கருணையைப் பொழிந்து, ஸங்கீதத்தின் மூலம் அவளை உபாஸிப்பவர்களது ஆத்மா

பரமாத்மாவிலேயே கரைந்திருக்குமாறு அருளுகிறாள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *காந்தர்வ வேதம்*

அவன் என்ன புரட்டிவிட்டானா? என்று சாதாரணமாக ஒரு வழக்கு இருக்கிறது. புரட்டுவதற்கு என்ன இவ்வளவு முக்கியத்துவம்? யோசித்துப் பார்த்தால், முறைப்படி புரட்டுவது ரொம்பவும் பெரிய, அர்த்தமுள்ள விஷயம் என்று தெரிகிறது. அநேக கலைகள் புரட்டுவதினாலேதான் பிறந்திருக்கின்றன.

இத்தனை புஸ்தகங்கள் நம்மிடம் இருக்கின்றன. ஒரு சில எழுத்துக்களைப் புரட்டி வைத்து வார்த்தைகள ாக்கியதால்தானே இத்தனை புஸ்தகங்களும் வந்திருக்கின்றன. நம்மைவிட இங்கிலீஷ்காரர்களுக்கு எழுத்து இன்னும் குறைவு. இருபத்தாறே எழுத்துககளைப் புரட்டிவிட்டு ஏராளமாக எழுதிவிட்டார்கள். அந்தப் புரட்டலில் ஒரு முறை, ஓர் அழகு இருந்துவிட்டால் கலையாகிறது. நமக்கும் வார்த்தைகள் தெரிகின்றன. கவியும் அதே வார்த்தைகள்தான் புரட்டி வைக்கிறான். உடனே அதில் ரஸம் பிறக்கிறது. கவியைக் கொண்டாடுகிறார்கள். நாம் வார்த்தையைப் புரட்டி எழுதினால் அதை யார் மதிக்கிறார்? தாகூர் மாதிரி ஒருவர் புரட்டுகிற புரட்டினால் ஏக மதிப்பு உண்டாகிறது. அக்ஷர லக்ஷம் என்கிறார்கள்.

சித்திரக் கலையும் இப்படியேதான். வர்ண பாட்டிலையும் பிரஷ்ஷையும் வைத்துக்கொண்டு நாம் புரட்டுவது ரஞ்சகமாக இல்லை. ஆனால் சத்திரிகன் அதே வர்ணங்களைப் புரட்டினால் அது ஆனந்தம் தருகிறது.

சங்கீதமும் புரட்டல்தான். நாம் எல்லோரும் சத்தம் போடுகிறோம். அந்தச் சப்தத்தை ஸ்வரங்களைகப்

பாகுபடுத்தி, இதற்கப்புறம் இது என்று அழகாகப் புரட்டி வைத்தால் இன்பம் உண்டாகிறது. நன்றாகப் புரட்டினால் நிறைய இன்பம். புரட்டலில் நிபுணனாக இருப்பவனுக்கு ஒரு மணிக்கு இருநூறு முந்நூறு ரூபாய் தருகிறோம். நாம் சத்தம் செய்தால் ஒய வைப்பதற்கு பணம் கொடுக்கலாம். புரட்டல் இன்பம் இப்படிப்பட்டது.

நமது தொண்டை என்கிற மாமிச வாத்தியத்தில் காற்றைப் புரட்டுகிறோம். தவிர சங்கீத வாத்தியங்கள் பல இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் இந்த புரட்டல் மாத்திரம் பொது. தவில், மிருதங்கம், கஞ்சிரா போன்ற சர்ம வாத்தியங்கள் தோலில் புரட்டுகிறார்கள். வீணை, தம்பூர், பிடில் போன்ற தந்தி வாத்தியங்களில் தந்தியில் புரட்டுகிறார்கள். இந்த வாத்தியங்களில் புரட்டுவதற்கு நடுவே இழைந்து வரும் அநுரணனம் என்ற இழைப்பு ஒலி நயமான இன்பம் தருகிறது. ஒருதரம் மீட்டினால் உண்டான ஒலி நீடித்து, இரண்டாவது மீட்டில் எழுப்பும் ஒலியோடு கவ்வி நிற்கிறது. இதுவே, அநுரணனம், புல்லாங்குழல், நானயம் போன்ற துவாரமுள்ள ரந்திர வாத்தியந்தான். அதில் வாய்க்குப் பதில் துருத்தி இருக்கிறது. புல்லாங்குழலிலும் நானயத்திலும் துவாரங்களை விரலாம் மாற்றி மாற்றி அடைத்துத் திறக்கிறார்கள் என்றால், ஹார்மோனியத்தில் பில்லைகளை மாற்றி மாற்றி அழுத்தி எடுக்கிறார்கள். தத்துவம் ஒன்றுதான்.

சப்தத்தைப் புரட்டுவதோடு, அங்கங்களைப் புரட்டி விட்டால் நாட்டியக் கலை உண்டாகிறது. சங்கீதத்தால் காதால் கேட்டு அர்த்த ஆனந்தமும், ஸ்வர ஆனந்தமும், பெறுகிறோம். நாட்டியத்தில் இவற்றோடு கண்களால் பார்த்து, அங்கசர்ய ஆனந்தமும் (அங்கங்களைப் முறைப்படி அசைப்பதால், புரட்டுவதால் ஏற்படுகிற இன்பமும்) பெறுகிறோம்.

நவரஸ உணர்ச்சிகளை விளக்குகிற அங்க அசைவான அபிநயம் மட்டும் இல்லாமல், நவரஸமில்லாத வெறும் அங்கசரியை (அங்கப் புரட்டு) மட்டுமே ஆனந்தம் தருவது உண்டு என்பதால்தான் நிருத்தம் என்ற கலை ஏற்பட்டிருக்கிறது. ஈஸ்வரனுக்குச் செய்கிற அறுபத்துநாலு உபச்சாரங்களில் சங்கீதத்தோடுகூட, நிருத்தமும் உபச்சாரமாக சொல்லப்படுகிறது. கீர்த்தனத்தில் சப்தமம், அர்த்தம், லயம் யாவும் சேர்த்து இன்பம் தருகின்றன. ராக ஆலாபனத்தில்

வெறும் சப்தம் மாத்திரம் ஆனந்தம் தருகிறது அல்லவா? நிறுத்தத்தில் வெறும் அங்கசரியை மட்டும் லயத்தோடு சேர்த்து ஆனந்தம் தருகிறது.

இந்தக் கலைகள் யாவும் கந்தர்வ வேதம் எனப்படும். கந்தர்வர்கள் உற்சாகப் பிறவிகள், அவர்கள் எப்பொழுதும் பாடிக்கொண்டிருக்கும் ஆடிக்கொண்டிருக்கும் இருப்பார்கள். மனதுக்கு உற்சாகம் தரும் கலைகளுக்கு இதனாலேயே காந்தர்வ வேதம் எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

**வாக்கின் பயன்**

எத்தனையோ விதமான ஜீவராசிகள் இருந்தாலும் மனிதனுக்கு மட்டுமே பரமேஸ்வரன் பேசும் சக்தியைத் தந்திருக்கிறான். உலகத்தில் அநேக பாஷைகள் இருக்கின்றன. பேச்சிலிருந்து எழுத்துப் பிறந்து, உலகம் முழுவதும் பல லிபிகளும் இருக்கின்றன. வாக்கை மூலதனமாக வைத்தே எங்கு பார்த்தாலும் பள்ளிக்கூடம், காலேஜ், லைப்ரரி பத்திரிகைகள் எல்லாம் பரவியிருக்கின்றன.

மிருகங்களின் உலகில் காலேஜ் இல்லை. லைப்ரரி இல்லை. பிரிண்டிங் இல்லை. அவற்றுக்கு வாக்குக் கிடையாது. ஆனால் இவையெல்லாம் இல்லாததால் அவை மனிதனைவிட கஷ்ட நிலையில் இருக்கின்றனவா?. அப்படித் தோன்றவில்லை. நமக்கு இருக்குமளவுக்கு அவற்றுக்கு வியாதியில்லை. அவை சொத்துக்களைச் சேர்த்துக்கொண்டு தவிக்கிறதில்லை. நேற்று என்ன செய்தோம். நாளைக்கு என்ன செய்வோம் என்ற விசாரம் அவற்றுக்கு இல்லை. அதற்கும் எப்படியோ ஆகாரம் கிடைக்கிறது. ஏதோ விதத்தில் வாழ்ந்து பிழைத்துப் போகிறது. ஒன்றையொன்று அடித்துச் சாப்பிட்டாலும் எல்லா விலங்கு இனங்களும் விருத்தியாகிக்கொண்டே தானிருக்கின்றன.

மனிதப் பிரபஞ்சத்துக்கே வந்தாலும்கூட காலேஜூம் லைப்ரரியும், பிரிண்டிங் பிரஸூம் இல்லாத ஆதிவாசிகளைப் பார்த்தால் அவர்கள் நம்மைவிட நிம்மதியாகவும் நல்லவர்களாகவும் இருப்பதாகவே தெரிகிறது. ஆப்பிரிக்கக் காடுகளிலும், அமெரிக்காவில் செவ்விந்தியக் காடுகளிலும் காலேஜூம், லைப்ரரியும் இல்லாதது போலவே கோர்ட்டுகளையும் காணோம். அதாவது எழுத்தறிவற்ற காட்டுக்குடிகள், நாகரீகமடைந்த நம் போல் இவ்வளவு குற்றம் செய்வதில்லை.

நாகரீகமும், அதிக புத்தியும் படைத்த நாம் செய்யத் தகாத செயல்களில் அகாரியங்களில் நூதன கற்பனையுடன் விருத்தியடைந்து கொண்டேயிருக்கிறோம். படிப்பு எத்தனைக்கெத்தனை அவசியமோ அத்தனைக்கத்தனை பாபமும் அதிகமாகயிருக்கிறது. நாகரீகத்தால் எத்தனக்கெத்தனை செல்வத்தைப் பெருக்கிக் கொண்டோமோ, அத்தனைக்கத்தனை அநவரதமும் அதிருப்திப்படும் மனோபாவமும் பெருகியிருக்கிறது. எத்தனை வந்தும் போதவில்லை. தேவை அதிகமாகவே இருக்கிறது. வாக்கும் எழுத்தும் எல்லாவித அகாரியங்களையும் பரப்புவதிலேயே தடபுடலாகப் பிரயோஜனமாகிவருகின்றன. படிப்பு முறை, பத்திரிக்கைகள், புஸ்தகங்கள் எல்லாம் மனிதனுக்கு நிம்மதியும், நிறைவும் தருவதற்குப் பதில் அவனை அதிருப்தியிலும் அகாரியத்திலும் கொண்டு விடுவதாகவே உள்ளன. மனிதனுகக்கு மட்டும் ஸ்பெஷலாக ஸ்வாமி தந்திருக்கும் வாக்குச் சக்தி அநுக்கிரகமா, சாபமா என்றே புரியவில்லை.

இதை யோசித்துப் பார்க்கும்போது ஏன் வாயில்லாத மிருக ஜன்மா தாழ்வானது, மனித ஜன்மா உயர்வானது என்று சொல்லிவந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. ஒரு மிருகம் பிறந்ததிலிருந்து இறக்கிற வரையில் உள்ளுணர்ச்சி (மிழிஷிஜிமிழிசிஜி) மீதே நடப்பதால் அதற்குப் புத்தி பூர்வமாகச் செய்கிற பாபம் எதுவும் இல்லை. மனிதன்தான் அவனை ஒயாமல் கணக்கெழுத வைக்கிறான். எவ்வளவுக்கவ்வளவு படிப்பும் நாகரீகமும் அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு வஞ்சனை, மோசம், பொய் வேஷம் எல்லாவற்றிலும் நிபுணர்களாகி, சித்ரகுப்தனுக்கு நிறைய

வேலை வைக்கிறோம்.

'நர ஜன்மம் துர்லபம்'. அதுவே உயர்ந்தது. என்பது ஏன் என்று யோசித்தேன். யோசனை செய்ததில் மிருக ஜன்மத்தில் உள்ள பெரிய ஒரு குறை தெரிய வந்தது. மிருகங்களுக்குப் பாபம் இல்லாவிட்டாலும் பயம் இருக்கிறது. எப்போது யார் தன்னைக் கொள்வார்களோ என்ற பிராணபயம் கொடிய மிருகத்துக்கூட நிறைய உண்டு. ஆனால் பயமில்லாமல் செய்து கொள்ள மனிதனுக்கு மட்டுமே வழி இருக்கிறது. மிருகத்துக்கு இந்த வழி இல்லை. பயமில்லாமல் செய்து கொள்வது எப்படி? பிறவி இல்லாமல் செய்து கொண்டால்தான் பயம் இல்லாமல் இருக்கலாம். எல்லாம் நாம்தான் என்கிற ஞானம் வந்துவிட்டால் எதனிடமும் பயம் இராது. அந்த ஞானத்துக்குப் பின் சரீரம் விழுந்தால் இன்னொரு சரீரம் எடுக்க மாட்டோம். இந்த ஞானத்தை, அபய நிலையை ஜன்ம நிவிருத்தியை அடையவே மகான்கள் வாக்கைப் பயன்பற்றினார்கள். வேத, வேதாந்த, இதிஹாஸ, புராண, தர்ம சாஸ்திரங்கள் எல்லாம் வாக்கு இருப்பதால்தானே உண்டாயின.

பாஷை, லிபி, புத்தி இவற்றுக்கு இப்பேர்ப்பட்ட உயர்ந்த பிரயோஜனம் இருப்பதைப் புரிந்து கொண்டபின் ஆறுதலாக இருந்தது.

பகவான் தந்திருக்கும் புத்தியால், வாக்கால், பிறருக்கோ தனக்கோ கெடுதல் உண்டாகாமல் எவ்வளவோ நல்லது செய்யலாம். பாபமும், துக்கமும், பயமும் நீங்க வாக்கைப்பயன்படுத்தலாம். நாம் அப்படியே செய்ய வேண்டும்.

இதற்கெல்லாம் அடிப்படை பக்தி வாக்கு தெய்வ சம்பந்தமாகப் பயனாக வேண்டும். இதனால்தான் அக்ஷராப்யாச காலத்தில், ஆரம்பிக்கும்போதே நமோ நமோநாராயணாய என்று விரலைப் பிடித்து எழுத வைக்கிறார்கள். பகவான் தான்

கொடுத்திருக்கும் வாக்கை இவன் எப்படிப் பிரயோஜனம் செய்கிறான் என்று பார்த்துக் கொண்டே இருக்கிறான். லோக க்ஷேமத்துக்கும் ஆத்ம க்ஷேமத்துக்கும் அதைப் பயன் செய்யாவிட்டால், அடுத்த ஜன்மாவில் வாக்கைப் பிடுங்கிக்

கொண்டுவிடுவார். அதாவது மிருகமாய்ப் படைப்பார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *சொல்லுக்கும் பொருளுக்கும் மூலம் இறைவனே*

நம்முடைய கண்ணுக்குத் தெரிவதும் காதுக்குக் கேட்பதும் உண்மை. இதைத் தவிர வேறு எதுவும் உண்மை கிடையாது. வேத புராணங்களில் சொல்லியிருப்பதெல்லாம் பொய் என்று நினைப்பது மிகவும் தப்பு. இப்போது நம் கண்ணுக்குத் தெரிகிற வஸ்துக்களின் அளவை நம் கண்ணிலுள்ள லென்ஸினால் நிர்ணயித்துக் கொள்கிறோம். இந்த லென்ஸ் பெரியதாகவோ சிறியதாகவோ இருந்தால் நாம் பார்ப்பனவற்றின் அளவும் அதைப் பொருத்து மாறித்தான் தெரியும். நம்முடைய லென்சுக்குள் பிடிபடாத ஒளி அலைகளும் (waves) இருக்கக்கூடும். நம்முடைய காதில் உள்ள டமாரத்துக்குப் (drum) பிடிபடாத ஒலிகளும் இருக்கக்கூடும். நமக்குத் தெரிவதையும் கேட்பதையும் தவிர பிரபஞ்சத்தில் ஏதுவுமே இருப்பதற்கில்லை என்று நாம் எப்படிச் சொல்ல முடியும். தெய்வீக சக்திகளைப் பெற்ற மகாபுருஷர்கள் ஞானக் கண் கொண்டு, நமக்குத் தெரியாத திவ்விய காட்சிகளைப் பார்த்து அந்த தெய்வ மூர்த்திகளை வர்ணிக்கிறார்கள். நமக்குக் கேளாத திவ்ய சப்தங்களைக் கேட்டு மந்திரங்களாக்கித் தந்திருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மகான்கள் இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கம் முழுவதையும் பரமேஷ்வரனின் நாட்டியமாக்கவே பார்க்கிறார்கள். அதுதான் நடராஜனின் நடனம். ஆடிக்கொண்டிருக்கிற நடராஜனிடமிருந்துதான் சகல சப்தங்களும் பிறக்கின்றன. நடராஜா வெகு வேகமாக நர்த்தம் பண்ணுகிறார். ஆடி நிறுத்துகிற சமயத்துக்கு ஜடை விழுதுகள் பாக்கவாட்டில் இருபுறமும் நீட்டி இருக்கின்றன.

சலனத்தில் உள்ள வஸ்துவை இந்தக் காலத்தில் ஸ்நாப் ஷாட் என்று பேட்டோ பிடிக்கிறார்கள் அல்லவா. அதுபோல் இந்த ஜடை இரு புறமும் நீட்டிக் கொண்டிருக்கும் அவசரத்தைத் தெய்வச் சிற்பி அப்படியே நடராஜ விக்கிரமாகப் பண்ணி விட்டார். இது நம் கண்ணுக்குத் தெரிகிற நடராஜ மூர்த்தியின் ஸ்வரூபம்.

நம் காதுக்குபப் புலனாகிற சப்தப் பிரபஞ்சமும் அவரிடமிருந்தே தோன்றியது. நடராஜா கையில் உடுக்கை இருக்கிறது. அது குடுகுடுப்பாட்டியின் உடுக்கையைவிடப் பெரியது. மாரியம்மன் பூஜாரி வைத்திருப்பதைவிடச் சிரியது. இந்த உடுக்கைக்கு டக்கா மற்றும் டமருகம் என்றும் பெயர். நாட்டியம் முழுவதிலும் பலவிதமாக ஆடி முடிக்கிற சமயத்தில் ஜடை விரித்து நின்றதுபோல், இந்த உடுக்கானது நாட்டியம் முழுவதும் பாத தாளத்தை அநுசரித்து சப்த்திதுவிட்டு, ஆடலை நிறுத்தின வேதத்தில் படபடவென ஒரு சாப்புத் தொனியை ஒலித்தது. ஸ்வரூபத்தை விஸ்வகர்மா விக்கிரமாக வடித்ததுபோல் இந்தச் சாப்புத் தொனியை அப்படியே கிரகித்து நந்திகேஷ்வரர் 'மகேஷ்வர சூத்திரம்'என்று பெயரிட்டார். அந்தச் சாப்புத் தொனியில் பதினாலு சப்தத் தொகைகள் இருந்தன. அவை 'அ இ உண்'என்று தொடங்கி 'ஹல்'எனறு முடியும்.

இந்த ஒலிகளையே வியாகரணத்துக்கு அதாவது மொழி இலக்கணத்துக்கு மூலமாக வைத்துப் பணினி மகரிஷி அஷ்டாத்தியாயி என்ற நூலை எழுதினார்.

வேதங்கள் நான்கு. அதன் அங்கங்கள் ஆறு. மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம், என்று நாலு - மொத்தம். இந்தப் பதினான்குமே நமது ஸநாதன மதத்தின் ஆதார நூல்கள். இவற்றை (பதினான்கு) வித்யா ஸ்தானம் என்பர். இதற்கு ஏற்றாற்போல் சர்வ வித்தைகளுக்கு ஈஸ்வரனான நடராஜாவின் டமருகத்திலிருந்தும் பதினாலு சப்தக்கோவைகளே வந்தன. இவை 'அ'வில் ஆரம்பித்து 'ல்'லோடு முடிவதாகச் சொன்னேன். இதனால் 'அல்'என்றாலே இலக்கணச் சாஸ்திரப்படி எல்லா எழுத்துக்களையும் குறிக்கும். இதில் குறிப்பிட வேண்டிய அம்சம், இந்த அல் எல்லா பாஷைகளிலும் இருக்கிறது. உருதுவில் அல்ஃப் என்பது முதல் எழுத்து. கிரீக்கில் அல்ஃபா என்பது முதல்

எழுத்து. ஆல் ஃபபெட் என்று ஆங்கிலத்தில் சொல்வதும் இந்த 'அல்''லை'வைத்துத்தான். இப்படியாக சகல பாஷைகளும் சகல சப்தங்களும் ஈஸ்வரனிடமிருந்தே பிறந்திருக்கின்றன.

இதைப்பற்றி யக்ஞ நாராயண தீக்ஷிதர் சமயத்காரமாக ஒரு சுலோகம் செய்திருக்கிறார். பாணி நிநானம் என்றால் (நடராஜர்) கையால் செய்த ஒளி என்று அர்த்தம். அதுவே பாணினி மகரிஷி செய்த (நாத பாஷை) சாஸ்திரமாயிற்று. வியாகரணங்களுக்கு பாஷ்யம் செய்தவர் பதஞ்சலி. இவர் ஆதி சேஷ அவதாரம். ஆதி சேஷன் நடராஜரின் காலைப் பாதசாரமாகச் சுற்றியிருக்கிறார். நடராஜாவின் கையிலுள்ள உடுக்கிலிருந்து சப்தம் வந்தது. அவரது காலில் உள்ள பதஞ்சலி அதற்கு விளக்கம் தந்திருக்கிறார். அதனால், நடராஜா கையயும் காலையும் ஆட்டினாலே ஸகல பாஷா சாஸ்திரமும் உண்டாகிவிடுகிறதென்று கவி சொல்கிறார்.

இதன் உட்பொருள் சப்தம், அதன் அர்த்தம் இரண்டுக்கும் ஈசுவரனே மூலம் என்பதேயாகும். இதை உணர்ந்து விட்டால் நாம் வாக்கை வீணாக்கமாட்டோம். நாம் எழுதுவது பேசுவது எல்லாம் நம்மையும் பிறரையும், ஈசுவர பரமாக நினைக்கச் செய்து உயர்த்தவே பயனாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *எழுத்தாளர் கடமை*

சூட்சமமான தத்துவங்களையும், சிரமசாத்தியமான சடங்குகளையும் சொல்கிற வேதங்களை நான்காகப் பிரித்து, நான்கு சிஷ்யர்களுக்குப் போதித்தார் வியாஸர். அந்தச் சூட்சமங்களைப் புகுந்து கொண்டு வேதம் விதிக்கிற யக்ஞ அநுஷ்டானங்களை ஏராளமாக கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுச் செய்யக்கூடிய ஒரு சிலருக்கு, இந்த நாலு

சிஷ்யர்கள் வேதங்களைப் போதித்தார்கள். வேதங்களை இவ்வாறு வகுத்துப் பரப்பிய அதே வியாசர். அதே வேதங்களின் பரம தாத்பர்யத்தைச் சிலருக்கு மட்டுமின்றி அனைவருக்கும் ரஞ்சகமான புராணங்களாக இயற்றினார். இவற்றப் பொது ஜனங்களுக்கெல்லாம் பிரசாரம் செய்கிற பணியை, ஸுதர் என்பவரிடம் ஒப்புவித்தார். புராணங்களைப் பிரச்சாரம் செய்து கொண்டேயிருந்தால், அவர் ஸுத பௌராணிகர் என்றே பெயர் பெற்றார். இவர் அப்பிராமணராக இருந்தும், பெரிய பிரம்ம ரிஷிகளெல்லாம் இவரை உயர்ந்த ஸ்தானத்தில் அமர்த்தி, நிரம்ப மரியாதை செய்து, இந்தப் புராணங்களைக் கேட்டார்கள்.

வேதத்தில் 'ஸதயம் வத'என்று ஒரு விதி இருக்கும். அந்த விதியைக் கதாரூபமாகி ஜனங்கள் யாவரும் ஏற்குமாறு செய்கிறது ஹரிச்சந்திரன் வரலாறு. தர்மம் சர என்கிற வேதத்தின் சட்டத்துக்கு மகாபாரதம் முழுவதும் விளக்கமாகிறது. மாத்ரு தேவோபவ பித்ரு தேவோ பவ என்கிற வேத வாக்கியங்களுக்கு ஸ்ரீ ராமனின் சரித்திரம் அற்புதமாக பாஷ்யமாக இருக்கிறது. ஆத்ம அபிவிருத்திக்காக வேதத்தில் சொல்லியிருக்கிற சூஷ்மமான தத்வங்கள் எல்லாம் இப்படிப் பொது ஜனங்கள் எல்லோருக்கும் பௌராணிகளால் கதைகளைகப் பிரசாரம் செய்யப்பட்டன.

தொன்றுதொட்டு பௌராணிகர்களின் பிரவசனங்கள் நம் தேசத்தில் எங்கு பார்த்தாலும் நடந்து வந்திருக்கின்றன. கல்வெட்டுகளைப் பார்த்தால் கோயில்களிலெல்லாம் புராணப் பிரவசனம், குறிப்பாக பாரதப் பிரசங்கம் நடந்து வந்திருப்பது தெரியும். நித்திய பூஜை போலவே புராணப் பிரவசனமும் கோயில்களில் அன்றாடம் நடக்க வேண்டும் என்று மானியங்கள் விட்டிருக்கின்றார்கள். ஆலயத்தில் வழிபட்டும், புராணங்களை சிரவணம் செய்துமே சமூக காலம் வரையில் நம்முடைய பொது ஜனங்கள் சூதுவாதில்லாமல் யோக்கியர்களாக இருந்து வந்திருக்கிறார்கள். இக்கால நோக்கின்படி, அவர்களுக்கு எழுத்தறிவு இல்லாமல் இருக்கலாம். ஆனால், அவர்கள் நல்ல பண்பு படைத்திருக்கிறார்கள் என்பதைப் பார்த்தால், அவர்களே வாஸ்தவமாகக் கல்வி பெற்றவர்கள் என்று சொல்ல வேண்டும்.

அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கும் வரையில் எல்லா கல்வியுமே வாய்மொழியாகச் சொல்லி காது வழியாகக் கேட்டே, வழிவழியாக வளர்ந்து வந்திருக்கிறது. அந்தக் காலத்தில் பனை ஒலையில் எழுதுகிற தேர்ச்சி பெற்றவர்கள் சிலரே இருந்தார்கள். மற்றபடி, பெரிய வேத வேதாந்தம் தெரிந்தவர்கள்கூட எல்லாம் செவிவழியேதான் கேட்டறிந் தார்கள். அச்சு இயந்திரம் வந்தது. அப்புறம் நிறையப் புஸ்தகங்கள், நியூஸ் பேப்பர்கள் ஏற்பட்டுவிட்டன. பௌராணிகர்களின் இடத்தை இவை பிடித்துக்கொண்டன.

எனவே, பத்திரிகையாளர்களும் எழுத்தாளர்களும்தான் இன்றைய பௌராணிகர்கள். ஸூதரும் மற்ற பௌராணிகர்களும் எப்படி தர்மங்களை ரஸமான கதைகள் மூலம், பொது ஜனங்களிடையே பிரச்சாரம் செய்தார்களோ, அவ்விதமே செய்யவேண்டியது இன்றைய பத்திரிக்கையாளர்கள், எழுத்தாளர்களின் கடமை. ஜனங்களுக்குப் பிடித்ததை மட்டுமே சொல்வது என்று வைத்துக் கொள்ளக்கூடாது. அவர்களின் அறிவை, மனத்தை உயர்த்துகிற விஷயங்களையே எழுத வேண்டும். இதைச் சுவாரஸ்யமாகச் செய்யவேண்டும். உத்தமமான விஷயங்களைப் புதுப்பித்து விதங்களில் உணர்த்த வேண்டும். பத்திரிக்கையாளர்கள் வாழ்நாள் முழுதும் மாணாக்கர்களாகவே இருந்தால்தான், தாங்களும் இப்படிப் புதுப்புது விஷயங்களை அறிந்து, மற்றவர்களுக்குப் பிரச்சாரம் செய்ய முடியும்.

சத்தியத்தை சர்க்கரைப் பூச்சிட்ட மாத்திரைகளாக்கித் தரவேண்டும். சர்க்கரை பூச்சுத்தானே ஒழிய, முழுக்கவும் சர்க்கரையாகி விடக்கூடாது. வெறும் சர்க்கரை உடம்புக்கு நல்லதல்ல. வெறும் இந்திரிய ரஞ்சகமான சமாச்சாரங்களில்தான்

ஜனங்களுக்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு, இவ்விதமே எழுதுவது சரியல்ல. ஜனங்களுக்கு ஆத்மாபிவிருத்தி தருகிற முறையில் எழுதுவதற்கு இதயபூர்வமாக எழுத்தாளர்கள், பத்திரிக்கையாளர்கள் முனைந்தால், தானாகவே ஜனங்களுக்கு அதில் ருசி பிறக்கும். நம்மையும் உயர்த்திக் கொண்டு, நம் வாசகர்களையும் நாம் உயர்த்த வேண்டும்

என்கிற கடமை உணர்ச்சியைப் பத்திரிக்கையாளர்களும் எழுத்தாளர்களும் பெற வேண்டும். இவ்விதம் ஆத்மக்ஷேமம், லோகக்ஷேமம், சாந்தி, சுபிட்சம் எல்லாவற்றுக்கும் மெய்யான சேவை செய்கிற பாக்கியத்தைப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் பெறவேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *மஹா பாரதம்*

தற்போதுள்ள அத்தனை இந்திய மொழிகளில் லிபிகளும் ஆதாரமாக இருக்கப்பட்ட பிராம்மி என்ற லிபியில் தான், ரொம்பவும் பழைய சாஸனங்கள் இருக்கின்றன. இந்தப் மிகப் பழமையான சாஸனங்களின் எழுத்தும் அழகாக, பாஷையும் காவிய அழகோடு, (flowery- ஆக) இருக்கின்றன. அப்புறம் பல்லவர் காலக் கல்வெட்டுகளும் எழுத்து அச்சடித்தாற்போல் இருக்கிறது. வாசகமும் இலக்கிய நயத்தோடு இருக்கிறது.

அதன்பின் சோழர் காலத்துச் செப்பேடுகளில், எழுத்தும் வாசகமும் பெருமளவு நன்றாக இருக்கிறது. ஆனால் இரண்டுமே ஆதியில் இருந்ததைவிடக் கொஞ்சம் மட்டம்தான். ரொம்பப் பழையது. அச்சடித்த மாதிரி, கண்களில் ஒத்திக் கொள்ளலாம் போல் இருக்கிறது. சமீபத்தில் இருநூறு முன்னூறு வருஷங்களுக்கு முன்பு முந்திய செப்போடுகளைப் பார்த்தாலோ, ஒரு சீரும் இல்லை. முறையும் இல்லை. தப்பும் அதிகமாக இருக்கிறது. மண்டை மண்டையான எழுத்து. ஏகப்பட்ட இலக்கணப் பிழை.

இப்படியே ஆதிகாலத்திலிருந்து சமீபகாலம் வரையிலான விக்கிரகங்களைப் பார்த்தேன். இவற்றிலும், காலம் சொல்லித் தெரியாதவை ரொம்ப ரொம்ப லட்சணமாயிருக்கின்றன. பல்லவ விக்கிரகங்கள் நிரம்ப நன்றாக இருக்கின்றன. சோழ விக்கிரங்கள் ஒருமாதிரி நியதியிலே நன்றாக இருக்கின்றன. அதன்பின் வரவர மேலும் தரக்குறைவுதான். இப்போது

யாரிடமாவது புதிதாக ஒரு விக்கிரகம் அடிக்கக் கொடுத்தால் எப்படி இருக்கிறது.? அழகோ, சாந்நித்தியமோ, தெய்வங்களையோ பழையவற்றில் இருப்பதுபோல் புதிதில் இருப்பதில்லை.

பழைய காலத்து ஜனங்களுடைய குணம் எப்படி? அதுவும் அதேமாதிரி உயர்ந்துதான் இருந்ததாகத் தெரிகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்நாட்டுக்கு வந்த மெகஸ்தனிஸ், இந்தியாவில் யாராவது ஏதாவது கொண்டுவந்தாலும்கூடக் கைநீட்டி வாங்கிக் கொள்பவர் இல்லை. எந்தப் பண்டம் எங்கு கிடைத்தாலும் அந்த நாட்டவருக்குத் திருடவே தெரியாது. பொய் சொல்லவே தெரியாது. என்றெல்லாம் சொல்கிறான்.

சாந்தமும், நல்ல குணமும், தப்பு வழியே இல்லாமல் சரியானபடி போகும் போக்கும் அந்தக் காலத்தில் இருந்தது. இப்போது அந்த நிலை மாறி விட்டது.

அந்தக் காலத்தில் ஜனங்கள் எப்படி இருந்தார்கள்? அவர்களுடைய மனசு எப்படி இருந்தது? அந்த மாதிரியே இப்போதும் இருக்கக்கூடாதா? என்று தோன்றுகிறது.

பொதுவாக வாழ்க்கையில் ஒழுக்கம் ஏற்பட்டுவிட்டால் அப்புறம் அதன் ஒவ்வொரு துறையிலுமே ஒழுக்கத்தினால் உண்டாகிற அழகும் ஏற்பட்டு விடுகிறது. இதனால்தான் பழங்கால சிற்ப சித்திரங்கள், எழுத்து (calligraphy) உட்பட எல்லாம் ஒழுங்காக, அழகாக இருக்கின்றன.

அந்தக் காலத்தில் நல்ல நிலைமையில் இருந்து, இப்போது அதே வம்சத்தில் தோன்றிய ஜனங்களின் நிலை இப்படி எல்லாவற்றிலும் மிகவும் தாழ்வாகப் போனதற்கு, ஏதாவது காரணம் இருக்க வேண்டும் என்று யோசித்தேன்.

அந்தக் காலத்தில் கோயில்களிலெல்லாம் பாரதம் வாசிக்க வேண்டுமென்று கட்டளை இருந்திருக்கிறது. பாரதம் வாசிப்பதற்கென்றே மானியம் தருகிற சைஸனங்கள் இருக்கின்றன. இப்போது, பெரிய கோவில்களில் எதிலுமே பாரதம் வாசிக்கிரதைக் கானோம். கிராமாந்தரங்களில் கிராம தேவதைகளின் கோயில்களில் மட்டும் எங்கோ பாரதம் வாசிக்கிரதைப் பார்க்கிறோம். கிராம ரக்ஷக்காக உள்ள, அந்த

ஒரு சில கோயில்களுக்கு இன்னும் கிராம மக்கள் போகிறார்கள். ஸினிமா வந்து இவ்வளவு ஜனங்களை ஆகர்ஷிக்கிறபோதுகூட பாரதம் கேட்க ஜனங்கள் இருக்கிறார்கள் என்றால், பழைய காலத்தில் எப்படி இருந்திருக்கும்? அப்போது மக்களுக்கு வேற பொழுது போக்கே இல்லையே.

அந்த பாரதத்தில் என்ன இருக்கிறது. பொறுமை என்பதற்கு வடிவமாக தர்ம புத்திரர் இருக்கிறார். சத்தியமமான பிரத்க்ஞை என்பதற்கு பீஷ்மர் இருக்கிறார். தானத்துக்குக் கர்ணன். கண்ணியத்திற்கு அர்ஜுனன். இப்படியே ராமாயணத்தை எடுத்துக்கொண்டால், சகல மனிதர்களின் மூர்த்தியாக ஸ்ரீ ராமன் இருக்கிறார். பெண்களுடைய உத்தமமான தர்மத்துக்கு சீதை இருக்கிறாள். ஸ்ரீ ராமனுக்கு நேர் விரோதியாக ராவணனுக்கு மனைவியாக இருக்கும் மண்டோதரியும் சீதைக்குக் குறைவில்லாத மகாபதிவிரதையாக இருக்கிறாள்.

ராமாயண, பாரதக் கதைகளைக் கேட்டும்போது, இப்படிப்பட்ட உத்தமமான ஆத்மாக்களின் ஞாபகம் வருகிறது. படித்தவர், படிக்காதவர் எல்லோருக்கும் அடிக்கடி அந்தக் கதைகள் காதில் விழுந்து கொண்டிருந்தால், நம்மால் அந்த உத்தம பாத்திரங்களைப் போலவே நடக்கமுடியாமற் போனாலும், இதுதான் நாம் இருக்கவேண்டிய உண்மையான முறை என்ற நினைவு அடிக்கடி வரும். இதற்கே பலனுண்டு. இதனால்தான் இந்தக் கதைகளைக் கேட்டு வந்த அந்தக் காலங்களில், உயர்ந்த தர்மமும், நீதியும் நாட்டில் இருந்தன.

தர்மம், நீதி இரண்டும் சேர்ந்துதான் பண்பு உண்டாகிறது. அந்தப் பண்பாட்டை மாற்றுவதற்கும், குலைப்பதற்கும் இப்போது எத்தனையோ ஏற்பாடுகள் வந்திருக்கின்றன. முன்பு இருந்த பழக்கத்தை மறுபடியும் உண்டாக்குவது கஷ்டம்தான். ஆனாலும் சிறிதளவாவது செய்யத்தான் வேண்டும். நாமம் நல்லது பண்ணிக்கொண்டு போனால் ஈசுவரன் நமக்குக் கை கொடுப்பார். அவர்தான் நமக்குக் கை கொடுத்திருக்கிறார். கண் கொடுத்திருக்கிறார். கொஞ்சம் ஆலோசிப்பதற்கு புத்தியும் கொடுத்திருக்கிறார். இந்தச் சக்தியும் புத்தியும் இருப்பதற்குள்ளே திருத்துவதற்கான ஸத்காரியம் செய்ய வேண்டும்.

இப்போது என்ன என்னவோ விதமான ஆபத்துக்கள் நமக்கு வந்து கொண்டிருக்கின்றன. ஜனங்கள் இன்ன வழியில் போவது என்று தெரியாமல் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும்போது, அநேக காட்சிகள் வந்து அவர்களுடைய புத்தியைப் பலவிதமாகக் குழப்பி மாற்றிக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் நம்முடைய சத்தியமும் நீதியும் தர்மமும் ஜனங்களுடைய மனசில் கலையாமல் நின்று காப்பாற்ற வேண்டும். அப்படிக் காப்பாற்றுவதற்கு மஹாபாரதமே உபகாரமாக இருக்கும் என்று அன்றிலிருந்து இன்றுவரை ஜனங்களுடைய அநுபவத்தினாலே தெரிகிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *விஞ்ஞானமுமம் ஆன்ம நிறைவும்*

வேதாந்தம் உலகமே மாயை என்கிறது. அதனால் உலக வாழ்க்கைக்கு உதவுகிற விஷயங்களில் இந்தியர்களுக்கு அக்கறையே கிடையாது. ஸயன்ஸ், டெக்னாலஜி, வைத்தியம், என்ஜினியரிங் எல்லாம் மேல் நாட்டிலிருந்துதான் இந்தியாவுக்கு வந்திருக்கிறது என்று சில வெள்ளைக்காரர்கள் சொல்வதுண்டு. இதுவே உண்மை என்று நம்மவர்களும் நம்பி, ஏதோ கண்ணுக்குத் தெரியாத ஸ்வாமியையும், ஆத்மாவையும் பற்றித்தான் ஹிந்து சாஸ்திரங்கள் இருக்கின்றன. லோக வாழ்க்கைக்கு உபயோகமாக அவற்றில் ஒன்றும் இல்லை என்று கண்டனம் செய்வதுண்டு.

உண்மையில் நம்முடைய சாஸ்திரங்களில் இல்லாத ஸயன்ஸ் எதுவுமே இல்லை. நமது புராதன சாஸ்திரங்களை எல்லாம் ஆராய்ந்து பார்த்தால், இந்த உண்மை தெரியும். ஆயுர்வேதத்தை - சரகர். சுச்ருதர் முதலானவர்களின் கிரந்தங்களைப் பார்த்தால், இப்போதய பெரிய டாக்டர்களும் அதிசயிக்கும்படியான மருத்துவ முறைகளும், ஸர்ஜர் விஷயங்களையும் தெரிந்து கொள்கிறோம். மிகவும்

புராதனமான அதர்வண வேதத்திலேயே யுத்தத்தில் உண்டாகும் பல விதமான காயங்களைக் குணமாக்கும் மூலிகைகள், சிகிச்சை முறை முதலியவற்றைப் பற்றிச் சொல்லியிருப்பது இப்போது ரொம்பவும் உபயோகமாக இருப்பதாகச் சமீபத்தில் காசி சர்வகலாசாலையில் ஒருத்தர் ஆராய்ச்சி செய்து கண்டு பிடித்திருக்கிறார். என்ஜினியரிங் டெக்னாலஜியிலும் ஆதியிலேயே அபாரமான திறமையை நம்மவர்கள் காட்டியிருக்கிறார்கள். போஜராஜன் செய்த ஸமராங்கண சூத்திரத்தில் ஆகாய விமானம் உள்படப் பலவிதமான மிஷின்களைச் செய்வதற்கான அடிப்படைத் தத்வங்களை விவரித்திருக்கிறது. சுமார் இரண்டாயிரம் வருஷங்களான ஒரு இரும்பு ஸ்தம்பம் இன்றைக்கும் தில்லி குதுப்மினாருக்குப் பக்கத்தில் துருப்பிடிக்காமல் இருக்கிறது. டாடா தொழிற்சாலை இல்லாமலே இப்பட்டிப்பட்ட பெரிய தூணை எந்த உலையில் (திஹிஸிழிகிசிணி) அடித்து உருவாக்கினார்கள் என்று ஆச்சரியப்படும்படி இருக்கிறது. தமிழ் நாட்டிலேயே இப்படிப் பல இஞ்சினியரிங் அற்புதங்கள் இருக்கின்றன. பல நூற்றாண்டுகளான கல்லணை எந்தவிதமான கலவையால் கட்டப்பட்டது என்று இன்றும் புரியவில்லை. ஆவுடையார் கோவில் கொடுங்கையில் பாறாங்கல்லை ஒரு காகிதத்தின் அளவுக்கு மெல்லியதாக இழைத்திருக்கிறார்கள். திருவீழிமிழலை வெளவால் ஒட்டி

மண்டபத்தின் பிரம்மாண்டமான வளைவை (ARCH) எந்த ஆதாரத்தில் கட்டியிருக்கிறார்கள் என்று இஞ்சினியர் நிபுணர்களும் வியக்கிறார்கள்.

தமிழில் பதினெண் சித்தர்கள் பாடலில் இருக்கிற வைத்திய நுணுக்கங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

வான நூலில் (astronomy) நமக்கு இருந்த பாண்டித்தியத்தால்தான் எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக, இன்று அம்மாவாஸை, இன்று கிரகணம் என்று கொஞ்சம்கூடத் தப்பாமல் பஞ்சாங்கம் கணிக்க முடிந்திருக்கிறது.

எல்லா கலைகளும் சாஸ்திரங்களும், ஸயன்ஸுகளும், பாரத தேசத்தில் நன்றாக வளர்ந்தே வந்திருக்கின்றன. ஆனாலும், இப்போது, விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளால் அணுகுண்டு

போன்ற எத்தனையோ அனர்த்தங்கள் உண்டாகியிருப்பதைப் பார்க்கிறோமல்லவா? இப்படி நேரக்கூடாது என்பதாலேயே, பக்குவமானவர்களுக்கு மட்டும் நம் தேசத்தில் விஞ்ஞான நுணுக்கங்களைச் சொல்லிக் கொடுத்தார்கள். சாதாரண ஜனங்களுக்குப் புரியாத பரிபாஷையில் இந்த சாஸ்திரங்கள் அமைப்பதற்கு இதுவே காரணம். சித்தர்களின் தமிழ் பாடல்களும்கூட இப்படித்தான் நமக்குப் புரியாத பரி பாஷையில் இருக்கும்.

இப்போது நிபுணர்கள் ஆராய்ச்சி செய்தால், நம் சாஸ்திரங்களிலிருந்து பல விஷயங்கள் தெரிந்து கொள்ள முடியும். சில சமாச்சாரங்கள் நமக்குப் புரியாமல் இருக்கும். அதற்காக அவற்றை நாம் ஒதுக்கிவிடக்கூடாது. நமக்குப் பின்னால் வருபவர்களுக்காவது அது புரியக்கூடும் என்பதால், நமக்குப் புரிகிற சாஸ்திரங்கள், புரியாத சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் நாம் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும்.

மற்ற தேசங்களில் சமீப காலமாகவே இந்த விஞ்ஞான வித்தைகள் வளர்ந்து வந்திருக்கின்றன. நாம் ஆதியில் நமக்கென்றே இருந்த இந்த வித்யா சம்பவத்தை மறந்துவிட்டு, மற்றவர்களிடமிருந்து இப்போது கற்றுக் கொள்கிறோம். இதில் ஒரு முக்கியமான வித்தியாசம், இந்த வித்தைகள் யாவும் பிரம்மவித்தை என்கிற ஆத்ம சிரேயஸூக்கு அநுச்சரணையாகவே நம் தேசத்தில் வைக்கப்பட்டுள்ளன. வெறும் லௌகிக சௌகரியத்துக்காகவே அவற்றை உபயோகப்படுத்தி மேல்நாடுகள் உண்டாகியிருக்கிற 'நாகரிக'த்தில் ஆத்மசாந்தி அடியோடு போய்விட்டது. இதை மேல் நாட்டுக்காரர்கள் நான்றாக உணர்ந்திருக்கிறார்கள். விஞ்ஞானத்தின் மூலம் படிப்படியாக நாகரீகத்தில் ஏறி, இப்போது அதில் அவர்கள் உச்ச நிலைக்கு வந்திருக்கிறார்கள். ஆனாலும் இதில் ஆத்ம திருப்தி இல்லை என்று கண்டுகொண்டு நம்முடைய பக்தி மார்க்கத்தின் பக்கமும் வர ஆரம்பித்திருக்கிறார்கள். நாமோ நம்முடைய லௌகிக வித்தை, ஆத்ம வித்தை இரண்டையும் அலட்சியம் செய்து விட்டு, மற்ற நாட்டவர்கள் அடைந்திருக்கிற இரண்டுங்கெட்டான் நாகரீகத்தைத் தேடி ஓடுகிறோம். அவர்கள் இரும்பு உலகத்திலிருந்து (iron Age) தங்க யுகத்துக்கு (Golden Age) அதாவது, இருட்டு

யுகத்திலிருந்து பிரகாச யுகத்திற்கு வந்து கொண்டிருக்கிறார்கள். நாமோ பிரகாச யுகத்திலிருந்து இருட்டு யுகத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறோம் என்றால், நாமோ நிறைவிலிருந்து குறைவுக்குப் போய்க் கொண்டிருக்கிறோம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *வருங்காலத்தவருக்கு வஞ்சனை செய்யலாமா ?*

நமது பழைய சாஸ்திரங்களில் இல்லாத கலைகளையோ ஸயன்ஸ்களோ மற்ற விஷயங்களோ இல்லவே இல்லை. போஜராஜன் செய்துள்ள ஸமராங்கண சூத்திரம் என்ற நூலில் பலவிதமான மிஷின்கள் செய்யும் முறைகள்கூட உள்ளன. அதில் ஆகாய விமானத்தைப் பற்றிக் கூட வருகிறது என்றால் ஆச்சரியமாக இருக்கும். போஜன் இந்த விமானத்தைப் பற்றிய சித்தாந்த முறையை (ஜிலீமீஷீக்ஷீஹ்) மட்டுமே சொல்லிவிட்டு, நடைமுறையில் (Practical) இதைப் பண்ணும் வழியை நான் சொல்லாததால் எனக்கு அது தெரியாது என்று நினைக்க வேண்டாம். நடைமுறையைப் பற்றி இந்த விமானம் செய்யப்பட்டால், ஜனங்களுக்கு சௌகரியத்தைவிட அசௌகரியமே அதிகமாகும் என்றே சொல்லவில்லை என்கிறார்.

ஆகாய விமானம், அணுசக்திக்குண்டு இவற்றை எல்லாம் நடைமுறைக்குக் கொண்டு வந்ததன் அனர்த்தத்தை நாம் உலக யுத்தத்தில் கண்கூடாகப் பார்த்து விட்டோம். அது ஒரு புறம் இருக்கட்டும். போஜன் சொல்லியிருக்கிற ஆகாய விமான தியரியைச் சில என்ஜினீயர்களுடன் சேர்த்து படித்துப் பார்த்ததில் பலூன், ஜோர்டான் என்ஜின் போன்ற ஒரு முறையை போஜன் சொல்கிறார் என்று தெரிய வந்தது.

பழைய காலத்தில் ஒவ்வொரு கலைக்கும் ஸயன்ஸுக்கும் தனித்தனி நூல்கள் இருந்தன. இந்த நூல்கள்

ஒவ்வொன்றையும் டைஜன்ட் மாதிரி ஒரு அத்தியாயமாகச் சுருக்கி பிருஹத் ஸம்ஹிதை என்ற புஸ்தகத்தை வராஹமிஹிரர் எழுதியிருக்கிறார். கிட்டத்தட்ட 1500 வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட இந்தப் புஸ்தகத்தில் தாவர சாஸ்திரம், மிருக சாஸ்திரம், பட்சி சாஸ்திரம், தாது சாஸ்திரம் இப்படி பல விஷயங்களும் அடங்கியிருந்தன. பழைய காலத்தவரின் என்ஜினீயரிங் ஞானம் இன்றுள்ள நிபுணர்களையும் ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது.

இவற்றுக்கெல்லாம் ஆதார நூல்கள், சாஸ்திரங்கள் உள்ளன. ஆயிரம், பதினாராயிரம் வருஷங்களாக - தலைமுறை தலைமுறையாக ரக்ஷிக்கப்பட்டு நம் கைக்கு வந்துள்ளன. இந்த நாள்போல் அச்சுப் புஸ்தகங்கள் போடத் தெரியாத காலங்களிலும் இவற்றை நம் முன்னோர்கள் எப்படியோ காத்து நம் வரைக்கும் தந்துவிட்டார்கள். இப்படி யுகாந்திரமாக வந்த சாஸ்திரங்களை எல்லாம் நமக்குச் சகல வசதி இருந்தும், அடுத்த தலைமுறைக்குக் காத்துத் தராமல் இருக்கிறோம். ஆயிரம், பதினாராயிரம் வருஷங்களாகத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த இழையை அறுத்து விடுகிற பாக்கியம் நமக்கே ஏற்பட்டிருக்கிறது.

குருடன் ஒருவன் கையில் லாந்தருடன் போய்க்கொண்டிரு ந்தானாம். எதிரில் வந்த ஒருவன் உனக்குத்தான் கண் தெரியவில்லையே, லாந்தர் ஏன் எடுத்து வருகிறாய் என்று கேட்டான். அதற்குக் குருடன், எனக்கு கண் இல்லாவிட்டாலும் உனக்குக் கண் இருக்கிறதல்லவா. அதற்காகத்தான் இதை எடுத்து வருகிறேன். இல்லாவிட்டால் இந்த இருட்டில் நீய் என்மேல் தடுக்கி விழுந்திருப்பாயே என்றானாம். அதுபோலவே பழைய சாஸ்திரகங்கள் நமக்குப் புரியாவிட்டாலும், எதிர்காலத்தில் யாருக்காவது புரியலாம். பயனாகலாம் என்பதனாலாவது அவற்றை

நாம் ரக்ஷித்தாக வேண்டும். வசதியே இல்லாத காலங்களில் யுகாந்தரமாக ரக்ஷிக்கப்பட்ட சாஸ்திரங்களை நமக்கு முதல் தலைமுறையினர் எல்லா வசதியிருந்தும் காப்பாற்றாமல் அழித்து, நம்மை வஞ்சித்து விட்டார்கள் என்று, வருங்காலத் தலைமுறையினர் நம்மைக் குற்றம் சொல்ல இடம் வைக்கலாமா.?

பழைய காலங்களில் சாஸ்திர ரக்ஷணம் அரசர்களின்

பொறுப்பிலிருந்தது. இப்பொழுது ராஜாக்கள் இல்லை. ராஜ்ய, மத்ய சர்க்கார்கள்தாம் உள்ளன. அவற்றுக்கு நிம்மதியே இல்லை. ஒரு பக்கம் பாஷை சண்டை. ஒரு பக்கம் எல்லைச் சண்டை. ஏகப்பட்ட பாலிடிக்ஸ். ஊழல் இப்படிப் பல கஷ்டங்கள். அந்தக் காலத்தில் ஒரு ராஜாவுக்கும் இன்னொரு ராஜாவுக்கும் சண்டை நடந்தது என்றால், இப்பொழுது இன்னொரு ராஜ்ஜியத்துக்கும் இன்னொரு ராஜ்ஜியத்துக்கும் சண்டை. ஒரு வர்க்கத்துக்கும் இன்னொரு வர்கத்துக்கும் சண்டை. ஒரு கட்சிக்கும் இன்னொன்றுக்கும் மண்டை உடைகிறது. எனவே, சாஸ்திர ரக்ஷணத்திற்கு அரசாங்கத்தை எதிர்ப்பார்த்துப் பிரயோஜனமில்லை. சுற்றுப்புறத்திலெல்லாம் ஒரே பூசல், குடும்பத்திலும் தொல்லை என்று நாம் தட்டிக் கழிக்கக்கூடாது. வனவிலங்களுகளை பாருங்கள். சிங்கமம் புலியை அடிக்கிறது. புலி மானை அடிக்கிறது. இருந்தாலும், காட்டிலே சிங்கக்குட்டியும், புலிக்குட்டியும், மான் குட்டியும் வளர்ந்து கொண்டேதான் இருக்கின்றன. அப்படி இருக்க நாமும் பழக வேண்டும். எத்தனை இடையூறு இருப்பினும், நமக்கு எதிர்காலத்தினரிடம் உள்ள கடமையையுமம் பொறுப்பையும் உணர்ந்து பழைய சாஸ்திரங்களை ரக்ஷித்துக் தரவேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *பண்பாடு*

### *தமிழ்நாட்டுப் பண்பின் பெருமை*.

உலகத்தில் இருக்கிற கோயில்களில் பாதிக்குமேல் இந்தியாவில்தான் இருக்கின்றன. இதிலும் பாதிக்கு மேற்பட்ட ஆலயங்கள் தமிழ்நாட்டில்தான் இருக்கின்றன.

உலகத்தில் இருக்கிற சாஸ்திரங்களில், பக்தி நூல்களில் பாதிக்குமேல் இந்தியாவில்தான் இருக்கின்றன. இதில் பாதிக்கு மேற்பட்ட நூல்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவையே. கும்பகோணத்தைச் சுற்றியுள்ள காவிரிப் பிரதேசத்தில் கிடைத்த ஏட்டுச் சுவடிகள், உலகத்திலுள்ள சாஸ்திரங்களில்

பாதிக்கு மேற்பட்டவை என்று அறியும்போது, நமக்கு ரொம்பவும் பெருமையாக இருக்கிறது.

இதோடுகூடத் தமிழ்நாட்டுக்கு இன்னொரு தனிப் பெருமை உண்டு. சாதாரணமாக ஒரு குறிப்பிட்ட மொழியும், ஒரு விசேஷமான கலாச்சாரமும் உள்ள ஒரு பிரதேசத்தில் பிற மொழியினரும், பிற கலாச்சாரத்தினரும் குடியேறினால், நாளடைவில் அவர்கள் தங்கள் தனி வழக்கங்களையும் பாஷைகளையும் இழந்து அந்தப் பிரதேசத்தின் மொழியையே பேச ஆரம்பித்துவிடுவார்கள். உலக நாடுகளின் சரித்திரத்தைப் பார்க்கும்போது இந்த உண்மை நிதரிசனமாகிறது. இப்போது உத்யோக நிமித்தம் வடக்கே நம்மவர் போகிறது மட்டுமின்றி, பூர்வத்திலேயே தமிழ்நாட்டு பிராம்மணர் பலர் வடக்கே போயிருக்கிறார்கள். ஆந்திரர்களுக்கும் சோழர்களுக்கும் கல்யாணக் கொள்வினை, கொடுப்பினை

இருந்த சமயத்தில், இப்படி பலர் போயிருக்கிறார்கள். வேறு சந்தர்ப்பங்களிலும் போயிருக்கிறார்கள். இப்போது வட நாட்டுக்காரர்கள் பலர் த்ரவிட் (Dravid) என்று பலர் குலப்பெயர் போட்டுக் கொள்வதைப் பார்த்திருப்பீர்களே. அவர்களில் பலர், இம்மாதிரி குடியேறியவர்களின் வம்சத்தில் வந்தவர்கள்தான். ஆனால், வெளி மாகாணங்களில் உள்ள இந்தத் திராவிடர்களுக்குத் தமிழ் மொழியே அடியோடு தெரியவில்லை. நீண்ட காலமாக ஒரு பகுதியில் வசிக்கும் பிற சீமையைச் சேர்ந்த மைனாரிட்டிக்காரர்கள் தங்கள் மூல பாஷையைக்கூட மறந்து விடுகிறார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

இப்படி நான் சொன்னதால் ஆரியர்கள் வடக்கே, திராவிடர்கள் தெற்கே என்று பாகம் பிரிப்பதாக அர்த்தமில்லை. நம் பழைய சாஸ்திரங்களைப் பார்த்தால், இப்போது வெள்ளைக்காரர்கள் ஆரியர், திராவிடர் என்று இரண்டு வேறு இனமாக (race) பேதப்படுத்தி சொல்லியிருப்பதற்கே ஆதாரமில்லை. தேசம் பூராவிலும் இருந்தவர்களை - ஒரே இனத்தவர்களைத்தான் - பஞ்ச கௌடர்கள், பஞ்ச திராவிடர்கள் என்பதாக பாரத தேசத்திலிருக்கிற பத்துப் பிராந்தியங்களில் இப்படி ஐந்து அப்படி ஐந்து என்று பிரித்திருந்ததாகவே நம்

சாஸ்திரங்களிலிருந்து தெரிகிறது. இது பிரதேச ரீதியில் (ragional) செய்த பிரிவே தவிர, இன ரீதியில் (raciel) செய்தது அல்ல. பிற்பாடு திராவியம் என்பது தமிழரை மட்டும், கௌடர் என்பது வங்காளியரை மட்டும் குறிப்பதாக ஆகியிருக்கிறது. ஆதியில் எல்லாம் ஒரே இனம், ஒரே மதம் என்றுதான் இருந்திருக்கிறது. பிற்காலத்தில் தமிழ்நாடே திராவியம் ஆன பிறகும், இங்கிருந்து சில கூட்டமாக வடக்கே போகக்கூடிய வடக்கே போய்க் குடியேறிய பிராம்மணர்களைப் பற்றித்தான் நான் மேலே சொன்னேன். அவர்களுக்கெல்லாம் இப்போது பேரில் 'திராவிட்'என்பது ஒட்டிக் கொண்டிருந்தும் கூட, தமிழ் பாஷை அடியோடு தெரியாமல், அந்தந்தப் பிராந்திய பாஷை பழக்கம் இவற்றிலேயே பூரணமாகக் கரைந்துவிட்டிருக்கிறார்கள். இதுதான் லோகம் முழுக்கவே பொது வழக்கு. ஒரு பிரதேசத்துக்கு இன்னொரு பிரதேசத்தவர்கள் வந்து குடியேரினார்கள். தங்கள் கலாச்சாரத்தை நாளாவட்டத்தில் இழந்து அந்தப் பிரதேசக் கலாச்சாரத்தையே தழுவவிடுகிறார்கள்.

பிறருடைய பாஷையை, பழக்கங்களை வெகு சுலபமாகப் எடுத்துக் கொள்வதில் தமிழ் ஜனங்களுக்கே ரொம்பவும் திறமை இருக்கிறது. தமிழன் என்றால் இங்கிலீஷ்காரனை விட நன்றாக இங்கிலீஷ் பேசுகிறான். ஹிந்திக்கார்களைவிட நன்றாக இங்கிலீஷ் பேசுகிறான். பால்ரூம் டான்ஸிலிருந்து, ஹிந்துஸ்தானி சங்கீதம் வரை எல்லாம் இவனுக்கு அநாயாசமாக வந்துவிடுகிறது. இதிலே பாராட்டுவதற்கும் விஷயம் இருக்கிறது. கண்டிப்பதற்கும் விஷயம் இருக்கிறது. இது அந்நியம், பிறந்தியாருடையது என்று இல்லாமல் எதையும் இவனால் எடுத்துக் கொள்ளமுடிகிறதே என்று பாராட்டலாம். ஆத்ம சிரேயஸுக்காக இல்லாமல் எதையும் இவனால் எடுத்துக்கொள்ள முடிகிறதே என்று பாராட்டலாம். ஆத்ம சிரேயஸுக்காக இல்லாமல் வெறும் இந்திரிய சுகத்துக்காகவோ, புத்திப் பெருமைக்காகவோ மட்டும் இவன் மற்றவர்களின் தப்பான சமாசாரங்களில் மோகித்து விழுந்து, அவற்றையும் தனதாக ஸ்வீகரித்து விடுகிறானே என்கிறபோது கண்டிக்க வேண்டியதாகியுள்ளது.

தமிழ் மொழியும் இந்தப் பிரதேசத்துக்கென்றே விசேஷமாக உள்ள சில பண்பாடுகளும் ரொம்பவும் புராதனமானவை -

ஜீவ சக்தி வாய்ந்தவை. அப்படியானால், இத்தனை தொன்மையும் சக்தியும் இல்லாத கலாச்சாரங்களே புதிதாத வந்தவர்களைத் தங்களில் கரைத்துக்கொள்கின்றன என் றால், அவற்றைவிட வலுவாகத் தமிழ் நாடானது இங்கே வந்து குடியேறியவர்களின் விஷயத்தில் இதைத் செய்திருக்கத்தானே வேண்டும்? இப்படி நினைக்கத் தோன்றுகிறது. ஆனால், நடைமுறையில் பார்த்தால் நேர்மாறாக இருக்கிறது. மற்றப் பிரதேசங்கள் தங்கள் பாஷை, பழக்கங்கள் இவற்றிலேயே புதிதாக வந்தவர்களைக் கரைத்து விடுகின்றனர். ஆனால், தமிழ்நாடு ஒன்று மட்டும் இதற்கு விதி விலக்காக இருக்கிறது. தமிழ்நாட்டில் மஹாராஷ்டிரக்காரர்கள், ஆந்திரர்கள், கன்னடியர்கள், குஜராத்திகள், சௌராஷ்டியர்கள் முதலிய பல சமுதாயத்தினர் எத்தனையோ பரம்பரையர்களாக வாழ்ந்து வருகின்றார்கள். தங்களது பழக்க வழக்கங்களையே பின் பற்றி வருகிறார்கள். ஆதிகாலத்திலிருந்து திராவிட தேசமானது இவ்வாறு அந்நிய தேசங்களிலிருந்தும் பாரதத்தின் பிற பகுதிகளிலிருந்தும் வந்தவர்களுக்கெல்லாம் இடம் தந்து அவரவரையும் அவரவரது பாஷை, சம்பிரதாயம் இவைகளிலேயே நிலைப்படுத்தியிருக்கிறது. தமிழ்நாடு ஒரு ரிஃப்ரிஜிரேடர் (குளிர்சாதனப் பெட்டி) போல் எல்லா பாஷைகளையும் எல்லா நாகரீகங்களையும் கெடாமல் குளிர்ச்சியுடன் காத்துத் தந்து வந்திருக்கிறது. குளிர் சாதனப் பெட்டியில் வைத்த பழம்போல் மற்றப் பிரதேச பாஷைக்காரர்களான மகான்களின் இலக்கிய சிருஷ்டிகளும் இங்கே உண்டாகி கெடாமல் ரக்ஷிக்கப்பட்டு வந்திருக்கின்றன. உதாரணமாக தியாகராஜரின் தெலுங்குக் கிருதிகள் இந்த மண்ணில் பிறந்தவையை. தெலுங்கு தேசத்திலேயே இப்படிப் பட்ட சிருஷ்டி உண்டாகவில்லை. இப்படியே பல பாஷைக் கிரந்தங்கள், பல சித்தாந்தங்கள் இங்கு உருவாயின. மற்றவை அனைத்தோடும் தன்னை இழையவிட்டுக் கொண்டு, தன்னை மற்றவர் மீது திணித்து நிர்ப்பந்திக்காமமல் இருக்கிற ஒரு தனிப் பண்பு திராவிட தேசத்துக்கே சிறப்பாக இருந்து வந்திருக்கிறது.

தொன்றுதொட்டு வேத நெறியின் வீடாக இருந்திருப்பது தமிழகமே. மனித குலத்தின் முதல்வராக மநு, வைகை அருகேயுள்ள கிருதமாலைக் கரையில் வசித்ததாகவே பாகவதம் கூறுகிறது. வேத தர்மம் இங்கேதான் பிறந்தது.

உலகத்திலேயே ஈடு இணையில்லாத பக்திச் செல்வத்தையுமம் நீதி நூல்களையும் தந்த ஆழ்வார்களும், நாயன்மார்களும், பட்டினத்தார், தாயுமானவர், திருவள்ளுவர், சங்கப்புலவர் போன்றவர்களும் எங்கு பார்த்தாலும் திராவிட நாட்டின் வேதத்தின் பெருமையைப் பற்றித் தங்கள் நூல்களில் பேசுகிறார்கள். சோழ, பாண்டிய, பல்லவ மன்னர்கள் வேத பாடசாலைகளுக்கும் வேத வித்துக்களுக்கும் தாங்கள் செய்த சாஸனங்களைக் கல்வெட்டுகளில் பொறித்துப் பூரிப்படைந்திருக்கிறார்கள். சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த கிருஷ்துவப் புலவரான ஸ்ரீவேதநாயகம் பிள்ளைகூடத் தமிழ்நாட்டில் தேவாலயங்களோடு பிரம்மாலயங்கள் (வேத பாடசாலைகள்) நிறைந்திருப்பதையே பெருமையோடு கூறியிருக்கிறார்கள். வேதம் நிறைந்த தமிழ்நாடு என்று பாரதியார் பாடியது உங்களுக்குத் தெரியும்.

இப்படி வேத தர்மமும் சகல கலைகளும் பரமார்த்திகமும் தோய்ந்து கிடக்கும்

தமிழ்நாட்டில் பண்டைக் காலத்திலிருந்து அவ்வப்போது அவைதிகமும் நாஸ்திகமும் தலை காட்டி வந்ததும் உண்டு. ஆனால், இத்தகைய நாஸ்திக ஆட்டங்கள் ஏற்பட்ட ஒவ்வொரு சமயத்திலும் மக்கள் விழித்துக் கொண்டு, தங்களது தெய்வ பக்திக்கும், வைதிக நம்பிக்கைக்கும் கூர் தீட்டிக் கொண்டதை சரித்திரம் சொல்கிறது. அதற்கப்புறம் வேத இரு மடங்காகக் கொழுந்துவிட்டு ஜொலித்திருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### கர்ம மார்க்கம்

### *வெளியே கர்மம் உள்ளே தியானம்*

பலவிதமான கர்மாநுஷ்டானங்களை நான் சொல்கிறேன். இந்தக் கர்மங்கள், பரமேஷ்வர பூஜை, பரோபகாரம், எல்லாம் பிறருக்காகச் செய்யப்படுவதாகத் தோன்றினாலும்

உண்மையில் தங்களுக்கே செய்து கொள்வதுதான். பிறருக்கு உபகாரம் செய்வதினால், சேவை செய்வதனால், அல்லது ஸ்வாமிக்குப் பூஜை செய்வதால், அல்லது ஸ்வாமிக்குப் பூஜை செய்வதால் அவனவனுக்குப் உள்ளுக்குள்ளே ஒரு நிறைவு ஏற்படுகிறது. நாம் செய்கிற சேவையில் மற்றவர்களுக்கு உண்மையான லாபம் இருந்தாலும் இருக்கலாம். நம் சேவை அவர்களுக்குத் தேவைப்படாமலும் இருக்கலாம். ஆனால் அதைச் செய்யும் போது நமக்கே திருப்தியும், சந்துஷ்டியும், அமைதியும் உண்டாகின்றன. பரோபகாரம் என்று சொன்னாலும்கூட, அது பர (பிறருக்கு) உபகாரமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், தனக்கே உபகாரமாக இருக்கிறது.

பிறருக்குச் சேவை செய்வதற்காக நாம் எத்தனையோ கஷ்டங்கள், தியாகங்கள், சரீர சிரமம் எல்லாம் அடைவதாலும் இதற்கெல்லாம் மேலாக அதியேயே ஒரு நிறைவை, சந்துஷ்டியை நமக்குள் ஏதோ ஒன்று அநுபவித்துக் கொண்டிருக்கிறது.

இப்படியேதான் நாம் பூஜை பண்ணுவதால் ஸ்வாமிக்கு எந்த லாபமும் இல்லை. ஆனாலும் பூஜை, பாராயணம், க்ஷேத்திராடனம் என்று பல காரியங்களை பலவித கஷ்டங்களைப் பட்டு நாம் செய்வதிலே, நமக்கு ஒரு நிறைவு உண்டாகிறது. நம்மிடம் நமக்குள்ள பிரியத்தினால்தான், நமது நிறைவை வேண்டியவை சேவை செய்கிறோம். பத்தினியிடமும், பிள்ளையிடமும், மற்றவற்றிடமும் நாம் வைக்கிற பிரியத்துக்கெல்லாம் உண்மையில் நம்மிடமே உள்ள பிரியம்தான் காரணம். நம் உள்ள நிறைவுக்காகத்தான் மற்றவரிடம் பிரியம் காட்டுகிறோம் என்பது யாக்ஞவல்கியரின் உபநிஷத உபதேசம். பகவானிடம் பிரியம் வைத்து நாம் பூஜை செய்தாலும் சரி. உலகத்தினரிடம் பிரியம் வைத்து சமூக சேவை செய்தாலும் சரி. அதெல்லாம்கூடத் தனக்கு ஒரு நிறைவை உண்டாக்கிக் கொள்வதற்காக, நம்மிடமே நமக்குள்ள பிரியத்தால் செய்வதுதான். இந்த நிறைவை அடைவதற்காக, வெளியிலே எத்தனை கஷ்டம் வந்தாலும், துக்கம் ஏற்பட்டாலும், தியாகங்கள் செய்ய வேண்டியிருந்தாலும் நாம் பொருட்படுத்துவதில்லை.

நேரடியாக நமக்கே நல்லது செய்துகொள்ள வேண்டும் என்று

பணத்தையும், இந்திரிய சுகங்களையும் தேடிப்போனால், இந்த உள் நிறைவு உண்டாக மாட்டேன் என்கிறது. மாறாக சுய காரியங்கள் நிம்மதியின்மையினாலும் துக்கத்திலே கொண்டு விடுகின்றன. கண்ணாடியில் நமது முகத்தைப் பார்க்கிறோம். அதன் நெற்றியில் பொட்டில்லை என்று தெரிகிறது. உடனே கண்ணாடிக்கு சாந்து இல்லாவிட்டால் என்ன ஆகும். கண்ணாடி கறுப்பாகும். பிம்பத்துக்குப் பொட்டு வைப்பது என்றால் பிம்பத்தின் மூலமான மனிதனுக்குத்தான் பொட்டு வைத்துக் கொள்ள வேண்டும். எனக்கு என்று நினைத்துச் செய்யும் காரியங்கள் உண்மையில் நம் மனசுக்குக் கரிப்பொட்டு வைப்பதாகவே - நமக்கு நாமமே கரியைப் பூசிக்கொள்வதாகவே முடிகிறது. மனசு என்கிற மாயக் கண்ணாடியில் பிரதிபலிக்கிற பரமாத்ம பின்பத்தையே நான் என்று நினைக்கிறோம். அந்தப் பிம்பத்துக்கு அழகு செய்வது என்றால் உண்மையில் பரமாத்மாவுக்கு அழகு செய்ய வேண்டும். பரமாத்ம ஸ்வரூபமான லோகத்துக்கெல்லாம் செய்கிற சேவை இதனால்தான் நிறைவைத் தருகிறது. இதேமாதிரிதான் அந்தப் பரமாத்மாவையே பூஜிப்பதும், தனக்கு என்று வைத்துக் கொள்கிற கரிப்பொட்டு, இப்போதுதான் அலங்காரத் திலகமாகிறது. அம்பாளுக்குச் செய்கிற அலங்காரம்தான் நமக்கு அழகு. நமக்கே செய்துகொள்கிற அலங்காரம் அலங்காரத்துக்குத்தான் வழிகாட்டும். இதை மற்றவர்கள் ரஸிப்பதில்லை. அம்பாளை அலங்கரித்தால் அதைப் பார்த்து எல்லோரும் சந்தோஷிக்கிறார்கள். பிரமாதமாகச் சலவை செய்த துப்பட்டாவை நாமே போட்டுக் கொண்டு பெருமைப் படுகிறோம். மற்றவர்கள் அதைப் பார்த்து சந்தோஷமாபடுகிறார்கள். இஸ்திரி எப்படி ஏறியிருக்கிறது. பார்த்தாயா. என்று அவர்கள் கேலியாகத்தான் கேட்டுக்கொள்வார்கள்.

நீங்கள் எல்லோரும் எனக்குப் புஷ்ப ஹாரங்களை ஏராளமாகக் கொண்டுவந்து கொடுக்கிறீர்கள். உங்களைவிட நான் பெரியவன் என்று நினைத்துக் கொண்டு, பக்தியால் இப்படிச் செய்கிறீர்கள். நீங்களே இந்த மாலைகளைப் போட்டுக் கொள்ளாமல் இங்கே கொண்டுவந்து கொடுத்தால்தான் அலங்காரமாகிறது என்று நினைத்துச் செய்கிறீர்கள். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் நானும், நாம் ரொம்பப் பெரியவர்தான் என்று நினைத்துக் கொண்டு, இந்த

மலைகளால் என்னை அலங்கரித்துக்கொண்டால் அது அலங்காரம்தான். ஆனால், நீங்களோ எனக்குச் செய்தால் விசேஷம் என்று பக்தியோடு கொண்டு வந்து கொடுக்கிறீர்கள். இவற்றை நான் திரஸ்கரிக்கலாமா. அதனால்தான் நீங்கள் என்னை அலங்கரித்துப் பார்க்க ஆசைப்படுகிற மாதிரி, நானும் இந்த மாலைகளை அம்பாளுக்கு ஸமர்ப்பணம் பண்ணி அலங்காரம் பண்ணுகிறேன்.

நமக்கு நல்லது செய்வதாக நினைத்துப் பணமும், புகழும் இந்திரிய சுகங்களும் தேடிப்போவது மனசில் கரியை ஏற்றுகிற காரியம்தான். பரமாத்ம ஸ்வரூபமான உலகுக்குச் செய்கிற நல்லதேதான். உண்மையில் நமக்கும் நல்லது. ஆத்ம க்ஷேமம் அதுவே. இதை நம்முடைய உள் மனமே சொல்கிறது. அதனால்தான் தனக்கென்று செய்து கொள்கிற சௌகரியங்களில் கூட ஏற்படாத நிறைவு, பிறருக்காக அசௌகரியப் படும்போது ஏற்படுகிறது.

உலகம் பரமாத்ம ஸ்வரூபம் என்றால் நாமும் அதே பரமாத் மஸ்வரூபம்தான். மனசு என்கிற கண்ணாடியை எடுத்துவிட்டு, அந்த பரமாத்மம ஸ்வரூபமே நாம் என்பதை அநுபவித்துப் பார்க்க வேண்டும். இதுதான் தியானம் என்பது. நாம் செய்கிற இத்தனை காரியங்களும் கடைசியில் ஒரு காரியமுமில்லாத அந்த ஆத்ம தியானத்தில்தான் நம்மைச் சேர்க்க வேண்டும். நான் எத்தனை எத்தனை அநுஷ்டானங்களைச் சொல்கிறேனே, அவற்றின் முடிவு இதுவே.

காரியங்களில் நமக்குப் பலவிதமான சந்தோஷங்கள் உண்டானாலும் காரியமில்லாத தூக்கத்திலிருக்கிற பெரிய சாந்தி இவற்றில் இல்லை. ஒரு நாள் தூங்காவிட்டால் எவ்வளவு கஷ்டப்படுகிறோம்? தூக்கத்தில் அப்படிப்பட்ட சௌக்கியம் என்று தெரிகிறது. அப்படிக் காரியமே இல்லாமல் தன் உண்மை நிலையான பரமாத்ம ஸ்வரூபத்தில் அமிழ்ந்திருப்பதுதான் தியானம்.

தூக்கத்திலே நாம் சௌக்கியமாயிருக்கிறோம் என்றும் தெரியவில்லை. தூக்கம் கலைந்த பின்புதான் தூக்கத்திலே சுகமாயிருப்பதாகத் தெரிகிறது. இப்படியின்றி, பேரானந்தமாக இருக்கிறோம் என்ற பிரக்ஞையுடன் சாந்தமாக இருப்பதுதான் தியான யோகத்தின் முடிவான சமாதிநிலை. உள்ளுக்குள்ளே

அப்படிக் காரியமே இல்லாமல் இருக்கப் பழகிக் கொண்டு விட்டால், பிறகு வெளியில் எத்தனை காரியம் செய்தாலும் கூட ஆத்மமசாந்த அநுபவம் குலையாது.

தக்ஷிணாமூர்த்தியின் சாந்தம், பூரண பிரக்ஞை கொண்ட ஆனந்த நிலை. அது தூங்கும்போது மனம் அடக்குவது போன்றதல்ல. தூக்கத்தில் மனத்தை நாம் ஸ்வாதீனமாக அடக்கவில்லை. அதுவே களைத்துப்போய் அடங்குகிறது. அப்படிப்பட்ட அடக்கத்தை நாம் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு காக்க முடியாது. தூங்கும்போது நம் ஸ்வாதீனத்தில் இல்லாமலே அடங்குபவை எல்லாம் கனவிலும் மறுபடியும் நாம் விழிக்கும் பொழுதும், நம் ஸ்வாதீனமில்லாமலே திருப்பி வந்திவிடுகின்றன.

சாவு என்பது ஒருவகைத் தூக்கம்தான். அப்போதும் மனசு அடங்குகிறது. ஆனால், மறு பிறவியில் தேகம் வந்தவுடன் இந்த மனசும் மீண்டும் அதற்குள்ளிருந்து வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. எனவே, ஸ்வாதீனமாக மனஸை அடக்கினாலே அதை அடக்கிய நிலையில் நாம் சாசுவதமாக வைத்திருக்க முடியும். தக்ஷிணாமூர்த்தி காரியம் இல்லாமல் இருந்தாலும், முழு பிரஞையுடன் அப்படி இருக்கிறார். உள்ளுக்குள் காரியம் இருந்தாலேயே வெளியிலே அவரால் எத்தனையோ காரியம் செய்ய முடிகிறது. வெறுமே உட்கார்ந்திருகிற தக்ஷிணாமூர்த்திதான் ஆனந்தத் தாண்டவக் கூத்தும் ஆடுகிறார். திரிபுர தடாகம் செய்கிறார். பிக்ஷாடனம் பண்ணுகிறார். பக்தர்களுக்கு வரம் கொடுத்துவிட்டு ஊர் ஊராகத் திண்டாடுகிறார். உள்ளே அடக்கமாக இருக்கிறார். வெளியிலே கூத்தடிக்கிறார். நமக்கும் உள்ளே அடக்கம் வந்துவிட்டால் வெளியிலே எத்தனை காரியமும் செய்யலாம்.

தக்ஷிணாமூர்த்திக்கு நேர் எதிராக நாமம் இருக்கிறோம். நம்மை எல்லோரும் பற்றே இல்லாமல் சாந்தியுடன் இருப்பதாக நினைக்க வேண்டும் என்று வெளியிலே வேஷம் போடுகிறோம். உள்ளுக்குள்ளே ஒயாமல் சஞ்சலித்து

ஆட்டம் போட்டுக் கொண்டேயிருக்கிறோம்.

முதலில் வெளி அடக்கம் உண்டால்தான் கொஞ்சம் கொஞ்சமாக உள்ளடக்கம் சித்திக்கும். இதனால்தான், இந்திரிய வியாபாரங்களைக் குறைத்துக் கொள். கூட்டத்தில்

சேராதே. உலகுக்கு நல்ல செய்வது என்பது உள்பட சகல காரியங்களையும் விலக்கப் பிராசைப்படு. பணத்தைப் பக்கத்தில் சேர்க்காதே. காட்டுக்குப் போ என்றெல்லாம் சொன்னார்கள். இப்படி இதை விடு, அதைவிடு என்று நமக்கு இஷ்டமானதை எல்லாம் துறக்கச் சொன்னால் நாம் கேட்போமா? மாட்டோம். சித்தம் சுத்தமானால்தான் இதைச் செய்யப் பக்குவம் வரும்.

இதனால்தான் முதலில் சித்தம் சுத்தமாவதற்காக இதை விடு, அதைவிடு என்று சொல்வதாவிட முக்கியமாக இதைச் செய், அதைச் செய் என்று பலவிதமான கர்மாக்களை விதித்திருக்கிறது. ஒரு காரியத்தில் ஈடுபடுவதே நமக்கு இயல்பாக, சுபாவமாகக் கைவருகிறது. எனவே இந்த மாதிரி, நமக்குச் சொந்த விருப்பு வெறுப்பு இல்லாமல் சாஸ்திரம் சொல்கிற காரியங்களை ஆரம்பிக்கிறோம். இதிலும் ஆரம்பத்தில் விருப்பு வெறுப்பு தலைத்தூக்கத்தான் செய்யும். இருந்தாலும் எடுத்த எடுப்பில் சிந்தையை அடக்கித் தியானம் செய்வதாவிட, ஏதோ கொஞ்சத்தில் கொஞ்சமாவது விருப்பு வெறுப்புகளை, சௌகர்ய அசௌகரியங்களைப் பாராமல் கர்மாக்களை அநுஷ்டானம் செய்ய முடிகிறது. ஆசையும் துவேஷமும் குறைவதால் சித்தம் சுத்தமாகிறது. இப்படிச் சுத்தமான பிறகுதான் அது ஒருமுகப்பட்டு தியானத்தில் அமிழ முடியும். இந்த நிலையில்தான் எல்லாக் காரியங்களையும் செய்துவிட்டு, காட்டுக்குபோய் மூக்கைப் பிடித்துக் கொள்ள முடியும். இதன் முடிவில் நல்ல தியானம் சித்தித்து விட்டால் அப்புறம் எல்லாமே பரமாத்ம ஸ்வரூபம் என்றாகிவிடும். இந்த நிலையில் எதைவிட்டும் ஓடிப்போய் காட்டில் உட்காரப் வேண்டியதில்லை. நிஷ்டை என்று தனியாக ஒன்றைச் சொல்லி மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார வேண்டியதுமில்லை. நிஷ்டை என்று தனியாக ஒன்றைச் சொல்லி மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார வேண்டியதுமில்லை. காடு, நாடு, ஏகாந்தம், கூட்டம் எல்லாம் பரமாத்மாதான். காரியம், தியானம் இரண்டும் பரமாத்மாதான். தக்ஷிணாமூர்த்தி போல உள்ள மாறாத சாந்தத்தோடு, வெளியே எத்தனை கொட்டமும் அடிக்கலாம்.

கீதையில் பகவான் அர்ஜுனனிடம் ஸ்வதர்மத்தைப் பண்ணு, அதாவது, யுத்த காரியம் பண்ணு என்றார். அவரே எந்தக் காரியத்தையும் பண்ணாத தியான யோகத்தையும் சொன்னார்.

தியானத்தின் எல்லை நிலத்தில் பிரம்ம நிஷ்டையில் சதாகாலமும் இருந்த ஜனகர் முதலானவர்கள் லோக க்ஷேமத்துக்காக எப்போது பார்த்தாலும் காரியம் செய்ததாகவும் சொன்னார். இதென்ன, ஒன்றுக்கொன்று முரணா என்றால், இல்லவே இல்லை. ஒன்றிலிருந்து இன்னொன்று என்று இவை வருகின்றன. நேராக மனஸை அடக்கி ஆத்மாவை அநுஸந்தானம் செய்யடியாத ஆரம்ப நிலையில் கர்மாநுஷ்டானம். அதனால் சித்த சுத்தி வந்தபின் கர்மம் தொலைந்த தியானம், யோகம், இத்யாதி, இதில் ஸித்தியானபின் எதுவுமே தன்னை பாதிக்காது என்ற நிலையில் லோக க்ஷேமத்திற்காக கர்மா - உள்ளே அடக்கி வெளியே கூத்தடிக்கிற நிலை.

முடிவிலே லோகமெல்லாம் மாயை, இருக்கிற ஒரே வஸ்து பிரம்மம்தான்.

நாம் அதற்கு இரண்டாவதாக இல்லாமல் பிரம்மமாகவே இருக்க வேண்டும் என்பதுதான் ஸ்ரீபகவத் பாதரரின் சித்தாந்தம். அவர் பெயரை வைத்துக் கொண்டிருக்கிற நானோ எப்போது பார்த்தாலும் பல தினுசான காரியங்கள் - வேத கர்மங்கள், பூஜை, ஜபம், பரோபகாரமம் இதுகளையே - சொல்லி வருகிறேனே என்றால், நாம் இருக்கிற ஸ்திதியில் இங்கேயிருந்துதான் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. இப்படி ஆரம்பித்தால் இதுவே படிப்படியாக அத்வைத மோக்ஷத்தில் கொண்டுவிடும். ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவும், சாக்ஷாத் நம் பகவத்பாத ஆச்சாரியாளும் வகுத்துத் தந்த கிரமமும் இதுதான். முதலில் கர்மா, அப்புறம் உபாஸனை (பக்தி), முடிவில் ஞானம்.

இப்படி கிரமப்படி கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கையோடு பக்தியோடு முன்னேறினால், அதற்குறிய பக்குவம் வருகிறபோது ஆத்ம தியானத்தில் ஈடுபட்டு உள்ளடக்கம் சித்திக்கும். அதன்பின் லோக சங்கிரஹம் (உலகுக்கு நன்மை செய்வது) என்பதற்காக எத்தனை வெளிக் காரியத்திலும் ஈடுபடலாம்.

பராசக்தியாகிய சாந்தியை உள்ளத்தில் வைத்துக் கொண்டு, உள்ளே நிறைந்திருக்கும் சாந்தத்தை வெளியிலும் தன்னுடைய மோன ஸ்வரூபத்தில் காட்டிக்கொண்டு விளங்கும் தக்ஷிணாமூர்த்தியை, நாம் தினந்தோறும் சிறிது

ஸ்மரிப்பதே ஆத்ம தியானத்திற்கு அழைத்துச் செல்லும் பெரிய உபாயம்.

கர்மாவை எல்லாம் விட்டுவிட்டு தியானம் செய்கிறது ஒரு பக்கம் இருக்கட்டும். கர்மாவும்கூட தியானமாக இருக்கிற உச்ச நிலையும் ஒரு பக்கம் இருக்கட்டும். இவை பிற்பாடு நமக்கு வரவேண்டிய நிலைகள். ஆனால் இப்போது, நாம் உடனடியாக கர்மா செய்கிறபோதுகூட இந்த ஆரம்ப திசையிலேயே பிரதி தினமும் கொஞ்ச காலம் காரியமில்லாமல், விச்ராந்தியாக, சாந்தமாக இருப்பதாகச் சிறிது தியானம் செய்யப் பழகவேண்டும்.

கர்மா, பக்தி (உபாஸனை), தியானம் (ஞானம்) எல்லாம் முதலில் சேர்ந்து சேர்ந்து வரவேண்டும். இதெல்லாமே ஒன்றுக் கொன்று விரேதமில்லை. ஒன்றையென்று இட்டு நிரப்புவதுதான் (complementary)தான். கடைசீயில் ஒன்றொன்றாக மற்றதெல்லாம் உதிர்ந்து தியான சமாதியில் மட்டும் நிற்கும். அந்த சமாதியின் நினைப்பாவது நமக்கு இப்போது, ஆரம்ப கட்டத்தில் இருக்க வேண்டும். அதுதானே நம் லக்ஷியம். அதனால் அன்றன்றும் சில க்ஷணமாவது சாந்தமாக, வேலைகளையெல்லாம் விட்டு தியானம் அப்பியசிக்க வேண்டும். ஆனால், இதற்காக, 'கர்மாநுஷ்டானமாவது'?. அதிலென்ன ஸார் இருக்கிறது?. வெறும் ஸுபர்ஸ்டிஷன் என்று சொல்லாமல் - ரிச்சுவல் (சடங்கு) எல்லாம் மீனிங்லெஸ் (அர்த்தமில்லாதது) என்று சொல்லாமல் - நிறைய அநுஷ்டானங்களைச் செய்து கொண்டேயிருப்போம். இதனால் நம் சித்தமலம் போகப் போகத்தான் உள்ளேயிருக்கிற ஸ்வயஞ்சோதி அநுபவத்தில் தெரிய ஆரம்பிக்கும்.

## *சீலம் உண்டாக வழி*

நல்ல குணம், குணங்கள் வரவேண்டுமென்றால் நம் வேத சாஸ்திரங்களில்

சொல்லியுள்ள காரியங்களைச் செய்ய வேண்டும். நல்ல அநுஷ்டானம் இருக்க வேண்டும். மனசு நன்றாக இருந்தால்தான் சீலம் வரும். எல்லோருக்கும் நல்ல மனசில் புகாதபடி நல்லதே உள்ளம் முழுவதும் நிரம்பியிருந்தால்தான் சீலம் வந்ததாக அர்த்தம்.

எல்லோருக்கும் மனசு மிகவும் நன்றாக இருக்க முடியாது. இருக்கவேண்டும் என்று ஆசைப்பட்டாலும் முடியவில்லை. வீட்டிலே இருக்கிற குழந்தை சதா ஏதோ விஷமம் பண்ணிக் கொண்டிருக்கிறது. கத்தரிக்கோலை எடுத்து நல்ல துணிகளை, முக்கியமான காகிதங்களை நறுக்கிவிடுகிறது. செடிகளை வெட்டி விடுகிறது. இப்படித் துஷ்டத்தனம் பண்ணுகிறது. அதையே பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவிட்டால், இத்தனை மணிக்குள் போக வேண்டும். இன்ன இன்ன பாடங்களை அதற்குள் எழுதிவிட வேண்டும், திரும்ப இத்தனை மணிக்குத்தான் வரமுடியும். வந்தால் இதைசி செய்ய வேண்டும் என்று அதற்கு ஒரு கட்டுப்பாடு வந்து விடுகிறது. முன்பு காணப்பட்ட விஷம குணங்கள் எங்கோ போய் விடுகின்றன. பள்ளிக்கூடம் இல்லை. லீவுநாள் என்றால் மறுபடியும் விஷம குணங்கள் தலைகாட்டுகின்றன. அதேபோல் நாம் கெட்ட எண்ணத்திலும் காரியத்திலும் ஈடுபட அவகாசம் இன்றி, நல்ல காரியங்களை ஒரு விதிப்பிரகாரம், ஒழுங்கு தப்பாமல் செய்வதுதான் முக்கியம். இதற்குத்தான் சாஸ்திரங்கள் நமக்கு விதிகள் போட்டிருக்கின்றன.

நல்ல சீலங்கள் உண்டாக வேண்டுமானால் துர்குணங்கள் நிவிருத்தியாக வேண்டும். துர்குணங்கள் நிவிருத்தியாக நல்ல கர்மாநுஷ்டானங்களைச் செய், பூஜை பண்ணு, (சகல ஜீவராசிகளுக்கும் ஆகாரம் கொடுப்பதான) வைச்வதேவம் பண்ணு, அதிதிகள் வந்தால் ஸத்காரம் (விருந்தோம்பல்) பண்ணு என்று பல விஷயங்களைச் செய்யச் சொல்கிறது சாஸ்திரம். இதன்படி செய்துவந்தால் கெட்ட காரியங்களுக்கு நேரமே இல்லாமல் போய்விடும். கர்மநுஷ்டானங்களைப்

பண்ணுகிற போதும் நாமம் பண்ணுகிறோம் என்ற அகம்பாவத்தோடு பண்ணக்கூடாது. பண்ணக்கூடிய சக்தியை நமக்கு ஈஸ்வரன் கொடுத்தான், பண்ண வேண்டும் என்ற புத்தியைக் கொடுத்தான். அதற்கு வசதியும் கொடுத்தான் என்று நினைத்து, ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணு என்று நமது வைதிக, மதச்சாரியர்கள் விதித்து வழிகாட்டினார்கள். துளி அகம்பாவம் வந்துவிட்டால் போச்சு. அது எத்தனையோ வேஷங்களைப் போட்டுக் கொண்டு, நாமம் கொஞ்சமம் அசந்து மறந்து இருந்தாலும் வந்து பிடித்துக் கொண்டு விடும்.

கண்ணாடியில் பார்க்கிறோம். அழுக்காக இருந்தால் பார்க்க முடிகிறதா. சுத்தமாகத் துடைத்துவிட்டுப் பார்த்தால் நன்றாகத் தெரியும். சுத்தமாகத் துடைத்த கண்ணாடிதான் என்றாலும்கூட, அது ஆடிக் கொண்டிருந்தால் பிம்பம் விளங்காது. கண்ணாடி சுத்தமாகவும் இருக்க வேண்டும். சுத்தமான ஆடாத கண்ணாடியாக இருந்தால்தான் உண்மை பிரகாசிக்கும். சித்தம் என்பது கண்ணாடி போன்றது. பரம்பொருள் ஒன்றே உண்மை. கெட்ட எண்ணம் தோன்றாவிட்டால் சித்தக்கண்ணாடி சுத்தமாகும். ஒன்றிலேயே அதை ஈடுபடுத்தினால் அது ஆடாமல் நிலைத்த கண்ணாடியாகும். அப்போதுதான் பரமாத்மா அதில் பிரதிபலிப்பார்.

இந்த உலகத்தை எல்லாம் படைக்கிறவன் யார்? நமக்கெல்லாம் இவ்வளவு

அன்ன, வஸ்திர, சௌக்கியங்களைக் கொடுக்கிறவன் யார்? அருட்கடலாக இருப்பவற் யார்? அவனைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நாம் விரும்பினால் நம்முடைய சித்தத்தை அழுக்கு இல்லாமல் ஆடாமல் வைத்துக் கொள்ள வேண்டும்.

தாமிரச் செம்பு கிணற்றில் பத்து வருஷங்கள் கிடந்து விட்டது என்றால் அதை எத்தனை தேய்த்தாக வேண்டும்? எவ்வளவுக்கு எவ்வளவு தேய்க்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு அது வெளுக்கிறது. சுத்தமாகிறது. இவ்வளவு வருஷ காலம் எத்தனை கெட்ட காரியங்களைச் செய்து நம்முடைய சித்தத்தில் அழுக்கை ஏற்றிக் கொண்டு விட்டோமோ, அந்த அழுக்கைப் போக்க அத்தனை நல்ல காரியங்களைச் செய்து தேய்க்க வேண்டும். நல்ல

கர்மானுஷ்டானங்களைச் செய்ய வேண்டும். அதனால் சித்த சுத்தி வரும். நல்ல சீலங்கள் உண்டாகும்.

சரி, இன்றைக்குச் செம்பைத் தேய்த்து வெள்ளை வெளேர் என்று ஆக்கிவிட்டோம் என்றால் சரியாகிவிட்டதா? நாளைக்கு அதற்கு மறுநாள் என்று மறுபடியும் அழுக்காகிறது. இதேபோல் நம் சித்தத்தையும் விடாமல் அநுஷ்டானத்தால் சுத்தம் செய்து கொண்டே இருக்க வேண்டும். அப்புறம் ஒரு நிலை வந்து விட்ட பின்தான் இந்தச் சித்தம் என்பதே ஒடிப்போய்விடும். ஆத்மா மட்டும் நிற்கும். சித்தமே இல்லாத அப்போதுதான் அதை சுத்தம் செய்கிற காரியமும் இல்லாமல் ஆகும். அதுவரை இந்தச் சுத்தப் படுத்துகிற காரியத்தைச் செய்து சீலங்களை வளர்த்துக் கொள்ள வேண்டியதே.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### கர்ம மார்க்கம்

### *ஸம்ஸாரே கிம் ஸாரம் ?*

இந்த ஸம்ஸார வாழ்வில் என்ன சாரம் இருக்கிறது? என்று நம் ஆசாரியாள், பிரச்சோத்தர ரத்ன மாலிகா - வில் ஒரு கேள்வி போடுகிறார். கிம் ஸம்ஸாரே ஸாரம்? என்று கேட்கிறார். (ஸம்ஸாரே - ஸம்ஸாரத்தில். கிம் - என்ன. ஸாரம் - சாரம் இருக்கிறது.) அதற்குப் பதிலும் சொல்கிறார். அப்பா, இப்போது இப்படிக் கேள்வி கேட்டாய் அல்லவா? இதை எப்போதும் கேட்டுக் கொண்டே இரு. அதுவே ஸம்ஸாரத்தின் ஸாரம் என்கிறார். **பஹுச, அபி விசிந்த்யமானம் இதம் ஏவ.**

அதாவது, நாமம் பிறந்ததற்கு என்ன பிரயோஜனம்? எதற்காகப் பிறந்தோம்? என்று அடிக்கடி நினைக்க வேண்டும். அந்தப் பிரயோஜனத்தை அடைவோமா என்று நினைக்க வேண்டும். நமக்கு ஏன் பாபம் வருகிறது. இவையெல்லாம் ஏன் வர வேண்டும். எப்போதும்

ஆனந்தமாக, சந்தோஷமாக இருக்கக்கூடாதா - என்று தோன்றுகிறது. இதற்குப் பதில் நமக்கு ஒன்றும் நமக்குப் புரியவில்லை.

எல்லாம் நல்லசதற்குத்தான். ஒரு மரத்திலே புஷ்பத்திலிருந்துதான் காயும் பழமும் உண்டாகின்றன. புஷ்பமாக இருக்கும்போது மூக்குக்கும் பழமாக இருக்கும்போது நாக்குக்கும் ரஸமாக இருக்கின்றன. பழம் நல்ல மதுரமாக இருக்கிறது. இந்த மதுரம் வருவதற்கு முன்பு எப்படி இருந்தது? பூவில் கசப்பாகவும், பிஞ்சில் துவர்ப்பாகவும், காயில் புளிப்பாகவும், பிறகு மதுரமாகவும் ஆகிறது. மதுரம் என்பதுதான் சாந்தம். சாந்தம் வந்தால் எல்லாப் பற்றும் போய் விடுகிறது. பழத்தில் மதுரம் பூராவாக நிரம்பிய உடனே கீழே விழுந்து விடுகிறது. அதுபோல் இதயத்தின் எல்லா இடத்திலும் மதுரம் வந்துவிட்டால் தானாகவே எல்லாப் பற்றும் போய்விடும். பழம்தானே இற்று விழுந்துவிடும். மரமும் பலத்தை விடுகிறது. இரண்டும் ஜலம் விழாமல் - அதாவது அழாமல் - ஆனந்தமாய் பிரியும். படிப் படியாக வளர்ந்து மனம் முழுவதும் மமதுரமயமான ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக சம்ஸார விருட்சத்திலிருந்து விடுபட்டு விடுவான். பழமாக ஆவதற்கு முன் ஆரம்ப தசையில் எப்படிப் புளிப்பும், துவர்ப்பும் வேண்டியிருக்கின்றனவோ அதுபோலக் காமம், வேகம், துடிப்பு எல்லாமும் வேண்டியவைதாம் போலிருக்கிறது.

இவற்றுக்கு நாம் ஆரம்ப தசையில் ஆட்படும்போதே, இவற்றிலிருந்து பூரணமாக விடுபட முடியாது. ஆனாலும், இவையெல்லாம் ஏன் வருகின்றன என்று அடிக்கடி நினைத்தாவது பார்க்க வேண்டும். இப்போது இன்ன உணர்ச்சி வந்ததே. பொய் வந்ததே. இதனால் ஏதாவது பிரயோஜனம் உண்டா? இந்த உணர்ச்சி அவசியமாக வருகிறதா? அநாவசியமாக வருகிறதா? என்று நினைத்துப் பார்க்க வேண்டும். அப்படி நினைக்கவில்லையென்றால் அவை நம்மை ஏமாற்றி விடும். ஏமாந்து விடுவோம்.

புளிப்பு இருக்கவேண்டிய சமயத்தில் புளிக்க வேண்டும். துவர்ப்பு இருக்கவேண்டிய சமயத்தில் துவர்க்க வேண்டும்.

ஆனாலும், அந்தந்த நிலையோடு நிற்காமல் பிஞ்சு அனவரதமும் பழமாகிக்கொண்டே இருப்பதுபோல் நாமும்

மேலும் மேலும் மாதுர்யமான அன்பையும் சாந்தத்தையும் நினைத்துக் கொண்டேயிருக்க வேண்டும். இப்படி செய்து வந்தால் நாமாகப் போய் மோக்ஷத்தைத் தேடவேண்டும். எந்தக் காலத்தில் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்தால், தானாக மோக்ஷம் என்கிற மதுர நிலை வந்துவிடும். அப்படியில்லாமல் தகாத பருவத்தில் முயற்சி செய்தால் பஞ்சிலே பழுத்த மாதிரிதான். அது வெம்பல்தான். அதில் மதுரம் இருக்காது. வெம்பி விழுந்திடுமோ? என்று இராமலிங்கர் பாடின மாதிரி நாம் வெம்பிப் போவதில் ஒரு பிரயோஜனமும் இல்லை.

இப்போது நாம் இருக்கிற மாதிரி, கண்டதே காட்சி என்று இருக்கிறதும் தப்பு, அதற்காக, நாம் தீர்க்க வேண்டிய கர்மா மூட்டை ஏகமாக இருக்கிற இப்போதே, நமக்கும் பரம ஞானம் உடனே வந்துவிட வேண்டும் என்று தவியாகத் தவித்து ஆத்திரப்படுவதும் தப்பு.

நாம் இப்போதே பரம ஞானம் வேண்டுமென்று அதைத் தேடிப்போக வேண்டாம். இந்த ஜன்மத்திலே வரவில்லை என்றால் எத்தனை ஜன்மம் கழித்தாவது வரட்டும் என்று கருதி, நம் கடமைகளைச் செய்து கொண்டிருப்போம். நம்முடைய வேதம் விதிக்கிறபடி தர்மத்தை அநுஷ்டானம் பண்ணுவோம். அப்படிச் செய்தால் படிப்படியாகப் பரம ஞானமும் தானே வந்துதான் ஆக வேண்டும். இப்போது நமக்கு வெளிக்காரியங்கள், வெளி வேஷங்கள்தானே தெரிகின்றன. அதனால் மத சம்பந்தமாகவும் வெளிக் காரியங்களான இருக்கிற சடங்குகள், வெளியே போட்டுக் கொள்கிற சமயச்சின்னங்கள் இவற்றிலேயே ஆரம்பிப்போம். படிப்படியாக பக்குவமாகி, பிஞ்சாகி, காயாகி, கனியாகிய உள்ளேயிருக்கிற தத்துவக்குப் போவோம்.

## உள்ளும் புறமும்

எல்லோரும் அவரவருக்கு உரிய கார்ம அநுஷ்டானங்களைச் செய்ய வேண்டும். ஆசாரங்களை அநுசரிக்க வேண்டும். விபூதி, திருமண், ருத்ராக்ஷம் போன்ற சின்னங்களைச் தரிக்க வேண்டும் என்றெல்லாம் நான் திரும்பத் திரும்ப சொல்லி வருகிறேன். சிலர் இதெல்லாம் எதற்கு என்று நினைக்கிறார்கள். நல்ல சீலர்களுடன் இருக்க வேண்டியதே முக்கியம். சீலம் மனசைப் பொறுத்த விஷயம். சமய ஆசாரங்களெல்லாம் வெளி விஷயம்தானே?" என்று எண்ணுகிறார்கள்.

உண்மையில் வெளியில் செய்கிற காரியமும், வெளியில் அணிகிற சின்னங்களும்கூட உள்ளுக்கு நன்மை செய்கின்றன. உடலின் காரியமும் உள்ளத்தின் பாவமும் பரஸ்பரம் சம்பந்தமுடையவை. ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன். லாட்டரியில் தனக்கு லட்சம் ரூபாய் விழிந்திருக்கிறது என்று ஒருவர் சற்றும் எதிர்பாராமல் கேள்விப்படுகிறார். உடனே எல்லையில்லாத சந்தோஷம் உண்டாகிறது. இது ஒரு மனோபாவம்தான். ஆனால் இந்த மனோபாவம் காரணமாக அவரது உடம்பில் ஒரே பரபரப்பு உண்டாகிறது. மூச்சு அப்படியே சிறிது காலத்திற்கு அடக்கி மூர்ச்சையாகி விடுகிறார். குறிப்பிட்ட உணர்வு உண்டானால் இன்னவிதமான சுவாசம் மாறுகிறது என்ற நடைமுறை உண்மையைத் திருப்பிவைத்துக் குறிப்பிட்டபடி சுவாசப்பயிற்சி (பிராணாயாமாதிகள்) செய்தால், இன்ன விதமான உத்தமமான மனோபாவங்களை அடையலாம் என்று யோக சாஸ்திரம் விவரிக்கிறது. வெளித்தோற்றமே உள் உணர்வைச் சொல்கிறது. கோபம் வந்தால் கண் சிவக்கிறது. உதடு துடிக்கிறது. துக்கம் வந்கால் எதற்காகவோ கண்ணிலிருந்து ஜலம் ஜலமாகக் கொண்டுகிறது. சந்தோஷம் வந்தால் பல்லெல்லாம் தெரிகிறது. இப்படியெல்லாம் உடம்புக்கும் உணர்வுக்கும் சம்பந்தம் இருப்பதால்தான் இன்னபடி ஆசனம் போட்டால் இந்தந்த ஆத்ம குணங்களுக்கு அநுகூலமாகும் என்று மகான்கள் வழி கண்டிருக்கிறார்கள்.

மிலிடரிக்காரன் யூனிஃபாரம் போடாவிட்டால் அவனுக்கு வீரம் வராதா என்று கேட்பவர்கள் கேட்கலாம். ஆனால்

மிலிடரிக்காரன் என்றால் லோகம் முழுக்க அவனுக்கென்று யூனிஃபாரம் இருக்கத்தான் இருக்கிறது. அதுவே வீரத்தைத் தூண்டுகிறது என்றும் சொல்கிறார்கள்.

வெளியில் தரிக்கும் சின்னம், வெளியில் செய்கிற சமஸ்காரம் இவை உள்ளுக்கும் நன்மை தருவனவே ஆகும். வெறும் வேஷம் என்று நினைத்தால் வேஷமாகவே போகும். ஆத்மார்த்தமாக, ஜீவனைப் பரிசுத்தம் செய்துகொள்வதற்காக இந்த சம்ஸ்காரத்தைச் செய்கிறேன். சின்னத்தை அணிகிறேன் என்று உணர்ந்து செய்தால் சத்தியமாகவே அது உள்ளே புகுந்து சுத்தி செய்கிறது. புறத்தில் செய்வது உள்ளுக்கு உதவுகிறது.

நான் சம்ஸ்காரங்களை முக்கியமாக சொல்வதோ ஆசாரங்களை விடாமலிருக்கப் பிரயத்தனம் செய்வதோ விபூதி, ருத்ராஷம் முதலிய

சின்னங்களைத் தரிப்பதோ, பெரிதில்லை. நான் மடாதிபதி. ஆதலால் இதெல்லாம் என்னிடம் இருந்தால்தான் என்னிடம் வருவீர்கள். என் மடம் நடக்கப் பணம் கொடுப்பீர்கள். எனவே இவையெல்லாம் எனக்குக் காரியார்த்தமாக, வேண்டியிருக்கின்றன. ஆனால், உங்கள் விஷயம் அப்படியில்லை. உங்களுக்கு ஜீவனோபாயம் வேறு விதத்தில்
அப்படியில்லை. உங்களுக்கு ஜீவனோபாயம் வேறு விதத்தில்
கிடைத்து விடுகிறது. ஆதலால் என்னைவிட சிரேஷ்டமாக, முழுக்க முழுக்க ஆத்மார்த்தமாகவே நீங்கள் சமஸ்காரங்களைச் செய்து, சின்னங்களைத் தரித்துக் கொண்டு பரிசுத்தம் பெற முடியும். பெற வேண்டும்.

பரம சத்தியத்தை நினைவூட்டும் சின்னங்களைத் தரித்துக் கொள்வோம். கெட்ட வழியில் போகாமல் தடுக்கும் நல்ல கர்மாக்களை அநுஷ்டிப்போம். அதனால் சீலம் பெறுவோம். சித்த சுத்தி பெறுவோம். இந்தத் தெளிவின் பயனாக அனைத்துமான ஏக பரம்பொருளைத் தியானித்து, தியானித்து, அதை அநுபவத்தில் உணர்ந்து, ஆனந்தமாக இருப்போம்!

## கர்ம மார்க்கம்

### *சடங்குகள்*

நான் சொல்கிற கர்மாநுஷ்டானங்கள், பூஜை முதலியன வெல்லாம் வெறும் சடங்குதானே என்று கேட்டவர்கள் இருக்கிறார்கள். ஆத்மாநுபவம் என்பது உள்விஷயம். சடங்குகளோ வெளிக்காரியங்கள். இவை எப்படி ஆத்மாநுபவத்திற்கு உதவும் என்பது அவர்களுடைய சந்தேகம்.

உண்மையில் ஆத்மாநுபவம் பெற்றுவிட்டால் சடங்கே தேவையில்லைதான். ஆனால் உண்மையான ஆத்மாநுபவம் நமக்கு வந்துவிட்டதா, அதற்கு நாம் பக்குவப்பட்டு விட்டோமோ என்று அந்தரங்க சுத்தமாகப் பார்த்துக் கொண்டால், நாம் அதற்கு எவ்வளவோ தூரத்தில் நிற்கிறோம் என்று தெரியும். எத்தனையோ ஜன்மங்கள் எடுத்து, எத்தனையோ கர்மாக்களைச் செய்து, அத்தனை பூர்வ வாசனைகளாலும் நாம் உண்மை ஸ்வரூபமாக ஆத்மானந்தத்தை மூடிக்கொண்டிருக்கிறோம். ஸத்கருமம் செய்தும் ஸத் வாசனைகளைப் பெருக்கிக் கொண்டுமாதான் பழைய துஷ்கர்மங்களையும் துர்வாஸனைகளையும் போக்கிக் கொள்ள வேண்டும். பிறகு கர்மா தானே நின்றுபோகும். ஆத்ம விசாரத்தில் இறங்கலாம். அதுவரையில் வெறும் சடங்கு என்று சொல்கிற கர்மங்கள், பூஜை எல்லாம் நமக்கு ரொம்பவும் அவசியமானவையே. எனவே, சாமானிய மக்கள் சாஸ்திரப் பிரகாரம் விதிக்கப்பட்ட எல்லாச் சடங்குகளையும் வழுவற அநுஷ்டிப்பதே முறை. இவற்றால் என்ன பயன் என்பவர்களுக்கு நிதரிசனமாகச் சில பலன்களைக் காட்டலாம். இன்னின்ன கர்மங்களை இப்படியிப்படித் தவறின்றிச் செய்ய வேண்டும் என்று ஒருவன் கூர்ந்த கவனத்துடன் செய்கிறபோது, அவன் மனஸில் ஐகாக்கிரியம் (ஒருமுகப்படுதல்) ஏற்படுகிறது. பிறகு ஆத்ம தியானம் செய்வதற்கு இவ்வாறு மனம் ஒருமைப்படுவது அத்தியாவசியமாகும். அதோடு சாஸ்திரம் கூறுவதுபோலத்தான் இருக்க வேண்டும் என்று அவன்

உறுதியாக இருப்பதால், ஓர் ஒழுங்குக் கட்டுப்பாட்டுக்கு (DISCIPLINE) உட்படுகிறான். இதை சாப்பிடக்கூடாது. இதை போக்கிய வஸ்துக்களைப் அநுபவிக்கக்கூடாது என்றெல்லாம் சாஸ்திரப் பிரகாரம் நடப்பது வைராக்கியத்துக்குப் பெருத்த சகாயம் செய்கிறது. எத்தனை சிரமங்கள் இருந்தாலும், குற்றம் குறை இன்றி சாஸ்திரப்படி சடங்குகளைச் செய்யும் போது, சங்கல்ப பலமும் (WILL - POWER) உண்டாகிறது. சொந்த அபிப்பிராயமில்லாமல் சாஸ்திரம் சொல்வதே வழி என்று இருப்பதால், அடக்கம், எளிமை எல்லாம் உண்டாகின்றன.

ஆக, வெறும் சடங்கு என்று சொல்லப்படுவதைத் தவறாமல் அநுஷ்டிப்பதால் சித்த ஐகாக்கிரியம் (மன ஒருமைப்பாடு), கட்டுப்பாடு, வைராக்கியம், சங்கல்ப பலம், அடக்கம் இத்தனை நல்ல விஷயங்கள் உண்டாகின்றன. மொத்தத்தில் ஒழுக்கத்துக்கு (MORALITY) வழி உண்டாகிறது. நன்னடத்தையும் ஒழுக்கமும் இல்லாமல் ஆத்ம விசாரமும், ஆத்மாநுபவமும் உண்டாகவே முடியாது.

புத்தர் வைதிகச் சடங்குகளை விதிக்கவில்லை. ஆனால் அவரும் ஒழுக்கத்தை - சீலத்தை - மிகவும் வற்புறுத்தினார். நேரு பஞ்சசீலம் பஞ்சசீலம் என்று சொல்லி வந்தாரே, அந்த சீலம் பௌத்தர்களுக்கு மிகவும் முக்கியம். வைதிகச் சடங்குகள் இல்லாமலே புத்தர் சீலத்தை மட்டும் வற்புருத்தினார். பூர்வ மீமாம்சகர்களோ, வைதிக கர்மாக்களே போதும், ஈஸ்வரனைப் பற்றிக்கூடக் கவலைப்பட வேண்டாம் என்றார்கள். ஆனால் நம்முடைய ஸநாதன தர்மத்தில் சடங்குகள் (கர்மங்கள் அவற்றின் மூலம், சீலம், அதோடு ஈசுவர பக்தி, பிற்பாடு ஆத்மஞானம் என்கிற ரீதியில் எல்லாம் அணைத்துத் தரப்படுகிறது. வெறுமே சீலம் வராது. பால் வேண்டும் என்றால் பசுவை வைத்துப் போஷிக்க வேண்டும். பசுவை வைத்துப் போஷித்தால் பால் கிடைப்பது மட்டுமின்றிச் சாணமும்தான் கிடைக்கும். வைக்கோல் கூளமும்தான் சேரும். அப்படியே கர்மப் பசுவை வளர்த்தால்தான் சீலம் என்கிற பால் வரும். அதோடு, சாணம் கூளம்போல், விரும்பத்தகாதவை என்று சிலருக்குத் தோன்றுகிற சில விளைவுகளும் உண்டாகலாம். சாணத்தையும் கூளத்தையும் சுத்தப்படுத்திவிட்டு பசுவைப்

போஷித்து வருவதே புத்திசாலித்தனம். சடங்குகளின் உண்மைப் பயனை இவ்விதமே பெறவேண்டும்.

உண்மையான ஆத்ம தியானத்துக்குச் சடங்கு வேண்டாம் என்பதுபோல், ஈஸ்வரன் என்ற மூர்த்தியும் வேண்டாம்தான். ஆனால் அது உயர் நிலையில்தான். ஆரம்பத்திலேயே வேண்டாம் என்று இருக்க முடியாது. முதலில் ஈஸ்வரன் மிகவும் தேவை. அதற்கு எத்தனையோ காரணங்கள். குறிப்பாக ஒன்றைச் சொல்கிறேன். நம்மை எல்லாம் நிறைந்த மூர்த்தியாக நமக்கு ஓர் உத்தம உதாரணம் தேவைப்படுகிறது. தொன்றுதொட்டு ஈஸ்வரனை இப்படிப்பட்ட அனந்த கல்யாண குருமூர்த்தியாகத்தானே பாவித்து வந்திருக்கிறோம். ஈஸ்வரன் என்றவுடன் அவரிடம் கெட்ட குணம் ஏதுமே இருக்காது என்று தானே நமக்குத் நிச்சயமாகத் தோன்றுகிறது? அழகு, கருணை, சக்தி, ஞானம் எல்லாவற்றிலும் பூரணமாக ஒன்று உண்டு என்றால் அது ஈஸ்வரன் என்ற கருத்துதான். மனோதத்துவத்தின்படி நாம் எதை நினைத்துக் கொண்டேயிருக்கிறோமோ, அதுவே ஆகிறோம். ஈஸ்வரனின் கல்யாண குணங்களையே எண்ணுவதால் நம்மிடமுள்ள தோஷங்கள் நீங்கி நாமும் நல்லவர்களாகிறோம். எனவே சடங்கு, பூஜை இவற்றால் உண்டாகிற மற்ற பலன்களோடு, அவை நம்மை நல்லவர்களாக மிகுந்த உதவி புரிகின்றன. காரியமற்ற தியான யோகத்தில், ஞான விசாரத்தில் நம்மைச் சேர்க்க நிரம்ப உபகாரம் செய்கின்றன.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### கர்ம மார்க்கம்

### *யோகத்தின் தொடக்கம் கர்மமே*

யோகம் என்றால் சுவாசத்தை அடக்கி அடககியே சிலை மாதிரி உட்கார்ந்திருப்பதுதான் என்று பொதுவாக நினைக்கிறார்கள். யோகம் என்பதற்கு நேர் அர்த்தம் சேர்க்கை என்பது. பல வஸ்துக்களோடு நாம் வாழ்க்கையில்

சேர வேண்டியதாகிறது. ஆனால் இந்தச் சேர்க்கை எதுவும் நிரந்தமாக இருக்கவில்லை. அதனால்தான் மனசு கிடந்து ஆடிக்கொண்டிருக்கிறது. இப்படியில்லாமல் முடிந்த முடிவான ஒரே வஸ்துவும் எந்தநாளும் சேர்ந்துவிட்டோம். அதற்கப்புறம் நாம் என்று ஒன்று, அதிலிருந்து ஒன்று பிரிந்து வரவே முடியாது என்று ஆக்கிக்  கொண்டுவிட்டால், அதுதான் நிஜமான யோகம். நம் மனசுகளுக்கெல்லாம் மூலமாக இருக்கிற பரமாத்மாதான் அந்த ஒன்று. மனசை மூலத்தில் திருப்புவதற்காகவே யோகிகள் சுவாசத்தை அடக்குகிறார்கள். ஏனென்றால் எண்ணம் உதிக்கிற வேர் எதுவோ, அதுவேதான் சுவாசத்தின் வேறும் ஆகும். எனவே சுவாசம் மூலத்தில் நின்றால் மனமும் அதன் மூலத்துக்குப் போய் அடக்கிவிடுகிறது.

யோகம் என்பதற்கு எதிர்ப்பதம் 'வியோகம்' விட்டுப் போவதை 'வியோகம்' என்கிறோம். உடம்பைவிட்டு ஒருவர் செத்துப் போய் விட்டால் தேக வியோகம் ஆகிவிட்டார் என்று சொல்கிறோம்அல்லவா?

ஒரு தினுசான வியோகம் வந்துவிட்டால் அதுவே யகம் ஆகிவிடும் என்று பகவான் கீதையில் சொல்கிறார். ஏதோ ஒன்றில் வியோகம் வந்தால் - அதாவது, எதுவோ ஒன்றை விட்டுவிட்டால் அதுவே யோகம் என்கிறார். அந்த ஒன்று என்ன? துக்கம் என்பதே. துக்கம் உன்னிடம் ஒட்டாமல் பிரித்துத் தள்ளிவிட்டால் அதுவே யோகம் என்கிறார். ( **தம் வித்யாத்து : க ஸம்யோக வியோகம் யோக ஸமஜ்ஞிதம்** .)

லோக ரீதியில் நாம் சொல்கிற இன்பங்களும் கூட இந்தத் துக்கத்தைச் சேர்ந்தனவையே. பரமாத்மாவைப் பிரித்திருக்கிற எல்லா அநுபவமுமே துக்கம்தான்.

சித்தம் ஓடிக்கொண்டே இருப்பதால்தான் இன்ப துன்ப அநுபவங்கள் ஏற்படுகின்றன. சித்தம் சஞ்ஜலிக்காமல் நிறுத்திவிட்டால் இவை இல்லை. ஒரு முனையைவிட்டு அகலாமல் - ஏகாக்ரம் என்று சொல்வார்கள் - இருக்கச் சித்தத்தைப் பழக்குவதே சித்தசுத்தி. யோக ஸித்திக்கு இதுவே உபாயம். பொதுவாக நாம் யோகிகள் என்று சொல்கிறவர்களைப் போல் எல்லோரும் ஆரம்பத்திலேயே சுவாச பந்தம் செய்துகொண்டு உட்காருவதில்லை. ஏதாவது ஒரு நல்ல விஷயத்திலே நாம் பூரணமாக ஈடுபடப்

பழகினால், அப்போது சித்தம் கூடிய மட்டும் ஆழுக்குப் படாமல் இருக்கும். சித்தத்தை நேராக அடைக்க முயன்றால் அது திமிறிக் கொண்டு நாலாதிசையும் பாயத்தான் செய்யும். எனவே சித்தத்தில் கவனம் வைக்காமல் ஏதாவது ஒரு நல்ல காரியத்தில் ஈடுபட்டுவிட்டால் அப்போது சித்தத்துக்கு சஞ்சலிக்க இடம் குறைந்து போகும்.

பழைய நாளில் அரிகண்டம் என்று போட்டுக்கொள்வார்கள். படுக்காமலே நியமமாக இருக்க வேண்டும் என்பதற்காக கழுத்திலே பெரிய கம்பி வளையம் போட்டுக் கொள்வார்கள். அதற்கு அரிகண்டம் என்று பெயர். ஒருத்தர் இதைப் போட்டுக் கொண்டபின் இஷ்டப்பட்டால்கூட படுக்க முடியாது. அந்த மாதிரி, நம் சித்தத்தை அந்தப் பக்கம், இந்தப் பக்கம் போகாதபடி செய்வதற்கு அரிகண்டம் மாதிரி, ஸத் காரியங்களில் பூரணமாக தலையைக் கொடுக்க வேண்டும்.

அநேக நியமங்களோடு பெரிய யக்ஞம் செய்வது, விரதம் இருப்பது, பிரம்மாண்டமாக கோயில் கோபுரங்களைப் பார்த்துப் பார்த்துக் கட்டுவது, குளம் வெட்டுவது என்றிப்படியெல்லாம் முன்னே பல காரியங்களைச் செய்து வந்தார்களே, இவையெல்லாம் அந்தந்த லட்சியத்தோடு நின்றுவிடவில்லை. இவற்றின் முக்கியமான லட்சியம் சித்தத்தை ஒருமுகப்படுத்தி சுத்தமாகப் பழகுவதேயாகும். இந்த ஸத்காரியங்களின் நடுவிலும் அநேக கஷ்டம், அநேக அவமானம் எல்லாம் வரத்தான் செய்யும். ஆனாலும் காரியத்தை முடித்தாக வேண்டும் என்பதால், அவற்றையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு மேலே மேலே எடுத்துக் கொண்ட வேளையில் போய்க் கொண்டிருப்பார்கள். இதுவே சித்த சுத்திக்கு நல்ல உபாயமாகும். அப்புறம் சுவாசபந்தம், தியானம் எல்லாம் வைத்துக் கொள்ளலாம். முடிவிலே, ஒரு கழக்கோடி எப்படி எந்த அழுக்கிலும் பட்டுக் கொள்ளாமல் கிறுகிறு என்று உருளுகிறதோ - அந்தக் கழக்கோடி மேலே நாம் கொஞ்சம் விபூதியைப் பூசினால் அதைக்கூட உதிர்த்துவிட்டு ஓடும் - அப்படி எந்த துன்பத்திலும் ஒட்டாமல் பரமாத்மாவை நோக்கி ஓடி அவரைச் சேர்ந்து விடுவோம். இந்த சேர்க்கை தான் யோகம் என்பது. அதுதான் நம் மூலமான நிலை. அதுவேதான் முடிவான நிலையும். நடுவாந்திரத்தில் நாம் எப்படியோ

மாறிபோயிருக்கிறோம். அதனால் அந்த நிலை இப்போது நமக்குப் புரியவில்லை. நமக்குப் புரிகிற இடத்திலிருந்து அந்த நிலைக்குப் போக வேண்டுமானால் கர்மத்திலேயே ஆரம்பிக்க வேண்டும்

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### கர்ம மார்க்கம்

### *கர்ம யோகம்*

யுத்தம் செய்து பந்துக்களையும் மித்திரர்களையும் கொல்வது பாபமல்லவா என்பது அர்ஜஜுனனின் கேள்வி. நமக்கும் அர்ஜுனன் கேட்பது நியாயம் போலத்தான் தோன்றுகிறது. ஆனால் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பகவத்கீதையிலே இதற்கு வேறு விதமாக விடை தந்திருக்கிறார். உலகத்தின் பார்வைக்கு ஒரு காரியம் கெட்டதாக, கொடுமையாகத் தோன்றலாம். ஆனால், அதனால் மட்டும் அது பாபமாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. உலகத்தின் க்ஷேமத்துக்காகவே கொடுமைகளைக்கூடச் செய்ய வேண்டி நேரலாம். அப்போது அதில் பாவமில்லை. இதுதான் பகவான் தருகிற பதில். அப்படியானால் எது பாப

காரியம். எது புண்ணிய காரியம்? இதற்கும் பகவான் பதில் சொல்கிறார். ஆசையினாலோ, துவேஷத்தினாலோ செய்கிற காரியங்கள்தான் ஒருத்தனைப் பாபத்தில் தள்ளுகின்றன. ஆசையும் துவேஷமும் இல்லாமல் லோக க்ஷேமமாக செய்கிற காரியங்கள் எத்தனை கொடுமையாகத் தோன்றினாலும் அதெல்லாம் புண்ணியமானவைதான். இதுதான் கீதை தருகிற பதில்.

ஆசையும், துவேஷமும் இல்லாமல்கூடக் கொடிய காரியம் செய்யப்படுமா என்று சந்தேகமம் வரலாம். திருஷ்டாந்தம் சொல்கிறேன். ஒரு ஜட்ஜ் குற்றவாளியைச் சிக்ஷிக்கிறபோது அவருக்கு சொந்த ஆசையோ துவேஷமோ இருக்காதா?

சிக்ஷை தருவது கொடுமையாகத் தோன்றலாம். ஆனால்? அதுவே லோக க்ஷேமத்துக்காக, அந்த குற்றவாளியின் ஆத்ம க்ஷேமத்துக்காகவும் விதிக்கப்படுகிறது. நம் பிள்ளைக்கே பைத்தியம் முற்றிப் போனால் சங்கிலி போட்டுக் கட்டிப்போடுகிறோமே. இது பாபமாகுமா? அவனுடைய நன்மைக்காகவும், அவனால் ஊராருக்குக் கஷ்டம் வரக்கூடாது என்ற பரோபகார எண்ணத்திலும் இப்படிக் கட்டிப்போடுகிறோம்.

சாஸ்திரங்கள் நம்மையெல்லாம் இப்படித்தான், இது இதைச் செய், என்கிற விதிகளாலும் இது இதைச் செய்யாதே என்ற நிஷேதங்களாலும் கட்டிப் போட்டிருக்கின்றன. அவற்றால் நமக்கும் நன்மையே, லோகத்துக்கும் நன்மையே, அந்த சாஸ்திரப் பிரகாரம் நாம் காரியம் செய்ய வேண்டும் என்று கிருஷ்ண பரமாத்மா கீதையில் அடித்துச் சொல்கிறார். தஸமாத் சாஸ்திரம் ப்ரமாணம் ஸ்ரீ கார்யா கார்ய வ்யவஸ்தி தௌ என்கிறார். எது செய்யத் தக்கது. எது செய்யத் தகாது என்கு நிச்சயப்பதில் சாஸ்திரமே உனக்கு பிரமாணம் என்று அழுத்தமாகச் சொல்கிறார். அவனவன் தன் மனம் போனபடி முடிவு பண்ணாமல், சாஸ்திரப்படியே கருமம் செய்ய வேண்டும் என்கிறார்.

இப்போது கீதைக்கு லோகம் முழுவதும் மவுசாக இருக்கிறது. நம் சாஸ்திரங்கள் சொல்கிற ஆச்சார அநுஷ்டானங்களில் நம்பிக்கை இல்லாதவர்கள், ஆராய்ச்சிக்காரர்கள், வெள்ளைக்காரர்கள் எல்லோரும் கீதையைப் பிரமாதமாக சொல்கிறார்கள். கீதையில் ஸ்வதர்மப்படி அவனவனும் நடக்க வேண்டும் என்று சொல்லியிருப்பதற்கு இவர்கள் பல விதத்தில் அர்த்தம் சொல்கிறார்கள். ஆனால் அந்த கீதையிலேயே மேலே நான் காட்டிய வாக்கியத்தில் அவனவனும் சாஸ்திரப் பிரகாரம் தனக்கு விதிக்கப்பட்ட கருமத்தையே செய்ய வேண்டும் என்று சந்தேகத்துக்கு இடமில்லாமல் சொல்லியிருக்கிறது.

சொந்த ஆசை, துவேஷம் இல்லாதபோது எவனுக்குமம் எந்தக் காரியம் செய்வதிலும் வெறுப்பு இராது. ஆசையும் துவேஷமும் போய்விட்டால், எந்தக் காரியத்தையும் அன்போடு செய்து கொண்டு ஆனந்தமாக இருக்க முடியும்.

ஆசைக்கும் துவேஷத்துக்கும் காரணம் அகங்காரம்.

அகங்காரம் தொலைந்தால் எந்தக் காரியங்களுக்கிடையிலும் உயர்வு தாழ்வு தெரியாது. நாம் பாட்டுக்கு நம் கடமை இது என்ற உணர்ச்சியோடு ஆனந்தமாகச் செய்து கொண்டிருப்போம். லோகம் க்ஷேமமாக இருக்கும். நான் செய்கிறேன். எனக்காகச் செய்து கொள்கிறேன் என்கிற அகம்பாவம் இல்லாமல் கடமையைச் செய்து, பலனை ஈஸ்வரனுடைய பாதத்தில் அர்ப்பணம் பண்ணுவதுதான் கீதை சொல்கிற கர்மயோகம். சொந்த விருப்பு வெறுப்பில்லாமல், லோக க்ஷேமாந்திரமாகக் காரியம் செய்து ஆத்ம பரிசுத்தி பெறுகிற இந்தப் பண்பாடு, வேத காலம் தொட்டு நம் தேசத்தில் தழைத்து வந்திருக்கிறது. அந்த பண்பாட்டை ஒரு கையடக்கமான பேழையில் போட்டுக் கொடுத்த மாதிரி கீதையில் அநுக்கிரகம் செய்திருக்கிறார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா.

இந்த உபதேசத்தை நம் வாழ்க்கையில் ஒவ்வொரு காரியத்திலும் உரைத்து உரைத்து அலசிப் பார்க்க வேண்டும். இந்தக் காரியத்தில் சொந்த லாபம், பேர், புகழ் இருக்கிறதா? ஆசையிருக்கிறதா? இவை இருந்தால் வெளிப்பார்வை க்கு நாம் செய்வது எத்தனை உயர்வாக இருந்தாலும் அது பாபம்தான்? என்று நாம் செய்கிற ஒவ்வொரு செயலையும் அலசி அலசிப் பார்க்க வேண்டும். நமக்கு என்று நாமாக ஆசைப்பட்டு ஒரு காரியத்தை உண்டாக்கிக் கொண்டால் அதைச் சாதித்துக் கொள்வதில் அநேக தப்பிதங்கள் வந்து கொண்டேதான் இருக்கும். அதனால் அவரவருக்கும் சாஸ்திரம் வைத்திருப்பதே காரியம் என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா சொன்னாற்போல் பிரமாணமாக வைத்துக் கொள்ள வேண்டும். சமமான அன்புடன் இருந்து கொண்டு, சுத்தமான எண்ணத்தோடு அவரவரும் அப்படித் தன் கருமத்தைச் செய்தால், சமூகத்தில் போட்டி, பொறாமை, சண்டை, சச்சரவு எதுவுமே இருக்காது. லோகமே இன்பமயமாக இருக்கும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

ஒரு வீட்டைப் பார்த்தால் அதைக் கட்டியவன் ஒருவன் இருக்க வேண்டும் என்று ஊகிக்கிறோம். இன்ன இஞ்சினியர் கட்டினார் என அறிகிறோம். ஒரு வண்டியைப் பார்த்தால் அதைச் செய்த ஒருவன் இருக்க வேண்டும் என்று ஊகிக்கிறோம். விசாரித்துப் பார்த்தால் இன்ன தச்சன் செய்தான் என்று அறிகிறோம். ஒரு வீடு அல்லது ஒரு வண்டி என்றால் அதில் பல விஷயங்கள் ஒன்றுக்கொன்று இசைவாக சேர்ந்து அமைந்துள்ளன. ஒரு குறிப்பிட்ட பிரயோஜனத்தை உத்தேசித்து அவை இவ்வாறு உருவாக்கியிருப்பது தெரிகிறது. எனவே, இந்த வீடு, இந்த வண்டி ஏதோ தானாகவே அகஸ்மாத்தாக (accidental) உண்டாகிவிடவில்லை. இதை உச்சத்தோடு ஓர் அறிவே செய்திருக்கிறது. என்று ஊகிக்கிறோம். ஒரு ஒழுங்குக்குக் கட்டுப்பட்டுப் பல வஸ்துக்களைப் சேர்த்து உண்டாக்கியிருக்கிற எதைப் பார்த்தாலும் அதைச் செய்தவன் ஒருவன் இருக்க வேண்டும் என்று ஊகிக்கிறோம்.

அப்படியானால் எத்தனையோ ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டிருக்கும் இந்தப் பிரபஞ்சத்தைச் செய்தவனாக ஒருவன் இருக்கதானே வேண்டும்? எத்தனையோ வேறு விதமான வஸ்துக்களைப் பலவிதங்களில் சேர்த்து வைத்து, பலவிதமான பிரயோஜனங்களை உண்டாக்கிக் கொண்டிருக்கிற இயற்கையை, லோக வாழ்க்கையைப் பார்க்கிறபோது, இவைகளை எல்லாம் இந்த உத்தேசத்திற்காகவே உண்டாக்கி, இவற்றை நடத்தி வருகிற ஒரு மகா பெரிய சக்தி இருக்கத்தான் வேண்டும் என்று தெரிகிறது.

நாம் உட்கார்ந்திருக்கும் இந்தக் கொட்டகையை யார் போட்டார்கள் என்றால் சொல்லத் தெரிகிறது. இந்த வாழை மரத்தை யார் செய்தார்கள்? கண்ணில் காட்டும் படியாக அதைச் செய்தவனைச் சொல்லத் தெரியவில்லை . ஆனாலும் ஒருவன் அதைச் செய்திருக்கிறான். அதனால் இப்படி பட்டை பட்டையாகக் கணக்குப் பிசகாமல் உள்ளுக்குள்ளே அடுக்கிக்கொண்டே இந்த வாழை உண்டாகியிருக்கிறது. எந்த ஆயுதத்தை வைத்துக் கொண்டு அந்த ஒருவன் இத்தனை அழகாகப் பட்டைகளை

அடுக்கினான் என்றால் தெரியவில்லை. இப்படியே அந்த மலையை, இதோ மேல் உள்ள நக்ஷத்திரங்களை, சந்திரனைச் செய்தவனை நம்மால் காட்ட முடியவில்லை. இவையெல்லாம் எத்தனையோ காலம் முன்னால் உண்டானவை. செய்தவனை எப்படிக் காட்டுவது என்று கேட்கலாம். சரி, இந்த ரோஜாப் புஷ்பம் இருக்கிறதே, இது அந்த வாழையைவிட சற்று சமீபத்தில் உண்டானதுதான். முந்தநாள் சிறு மொட்டாக இருந்தது. இப்போது அழகிய பூவாகியிருக்கிறது. இதில் நூற்றுக்கணக்கான இதழ்கள், ஒவ்வொன்றிலும் நுண்ணிய நரம்புகள், வாசனை எல்லாம் வந்திருக்கின்றன. நம் கண்முன்னமே இது மலர்ந்தது. ஆனாலும் மலர்த்தினவனை நமக்குத் தெரியவில்லை.

மனிதன் எல்லாம் தெரிந்த கெட்டிக்காரன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஒரு காட்டுமிருகம் சென்னைப் பட்டனத்தைச் சுற்றி வந்தால் எதுவுமே தனக்குத் தெரியவில்லை என்று எப்படி ஆச்சரியப்பட்டுப் பார்க்குமோ, அப்படித்தான் இந்தப் பிரபஞ்சத்தில் நாம் இருந்து கொண்டிருக்கிறோம். மனிதனைவிடக் கெட்டிக்காரனாக ஒருவன் அவனை இப்படி வைத்திருக்கிறான்.

அத்தனை ரோஜாப் பூக்களும் ஒரே தர்மத்தில் மலர்வதால், அத்தனை மலைகளும் ஒர் தர்மத்தில் நிலைத்து இருப்பதால், அத்தனை நக்ஷத்திரங்களும் ஒரே தர்மத்தில் சுற்றுவதால், இந்தச் சகலத்தையும் செய்தவன் ஒரே இஞ்சினியர் என்று தெரிகிறது. ஒரே ரீதியில், காரண காரிய விதியில், பிரபஞ்சம் முழுதும் கட்டுப்பட்டிருந்தால், இதைச் செய்தது ஒர் அறிவு எனத் தெரிகிறது.

கெட்டிக்காரன் என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் மனிதன், இத்தனையையும் இவனையும் செய்த அந்த மகா கெட்டிக்காரனைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில், அவன் மகா கெட்டிக்காரன் மட்டுமல்ல, மகா நல்லவனுங்கூட, இத்தனையை திட்டமிட்டுப் படைத்த பேறறிவு என்பதோடு, இத்தனையையும் ரக்ஷிக்கும் பெரும் கருணையும் அவன். நமது கெட்டிக்காரத்தனமும் அவன் தந்ததே என்று தெரிந்து கொண்டு அவனிடம் பிரார்த்தித்து கொண்டால் நமக்கு அவன் நல்லது செய்வான்.

அவன்தான் ஸ்வாமி. ஸ்வாமி என்பவன்.

இந்த நமது கெட்டிக்காரத்தனமே அவனுக்கு ஓர் அடையாளம்தான். கள்ளனைக் கண்டுபிடிக்க மண்ணில் பதித்த காலடிச் சுவடு இருக்கிறதுபோல், உள்ளம் கவர் 'கள்வ'னான ஸ்வாமியின் காலடி, பிரபஞ்சத்தின் எல்லா இடத்திலும் பதித்து கிடைக்கிறது. நம் கெட்டிக்காரத்தனமும் அவனது காலடி அடையாளம்தான். இந்தக் கெட்டிக்காரத்தனத்துக்கெல்லாம் ஓர் ஆதாரம் இருக்க வேண்டும் என்று அது காட்டிக் கொடுப்பதால் அதுவே காலடியாகிறது. சிருஷ்டிகார்த்தனாக ஒரு ஸ்வாமி இருப்பதற்கு நாமே அடையாளம். நாம் ஒவ்ஒருவர் உள்ளங்கையிலும் அவன் தினுசு தினுசாகப் போட்டுள்ள ரேகை மாதிரி நம்மால் போட முடியுமா? இந்தப் பட்டணம் முழுவதிலும் அநேகம் மனிதர்களின் கெட்டிக்காரத்தனத்தால் செய்துள்ள காரியங்களைவிட அதிகமாக ஒரு சிறு இலையில் போட்டிருக்கிற ரேகைகளில் விசித்திரம் செய்திருக்கிறான் அவன். பிரபஞ்ச வஸ்து எல்லாமே அந்த மகா திருடனின் ரேகை அடையாளம்தான், திருடன் பதுங்கியிருப்பதுபோல் இவனும் பதுங்கியிருப்பவன்தான். அவன் குகைக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறான் என்றே வேதம் திரும்பித் திரும்பித் சொல்லும்.

நம் இதயம்தான் அந்தக் குகை. நமக்குள்ளேயே ஒளிந்து கொண்டு நமக்கு வெளியே இத்தனை அற்புதங்களைச் செய்து, நம்மை ஆச்சரியப்படுத்தித் தன்னை தேட வைக்கிறான் ஸ்வாமி. அப்படி அவனைத் தேடுகிறதுதான் பக்தி .



## *ஸ்வாமி என்றால் என்ன ?*

ஸ்வாமி என்றால் என்ன? ஸ்வம் என்கிற வார்த்தைக்கு

உடைமை சொத்து என்று அர்த்தம். ஸ்வம் என்பதே தெலுங்கில் ஸொம்மு என்றாகியிருக்கிறது. ஸொம்மு என்றால் சொத்து. ஸ்வந்தம் - நமக்குச் சொந்தமானது - அதுவே நம் சொத்து. கோயிலைச் சேர்ந்த சொத்தைக் கேரளத்தில் தேவஸ்வம் என்கிறார்கள் அல்லவா? உடைமைக்கு சொந்தக்காரர் யாரோ அந்த உடையவர்தான் ஸ்வாமி. ஸ்வாமி என்பதற்கு நேர் தமிழ் வார்த்தை உடையார் என்பது. முன் காலத்தில் கோயில் சுவர்களில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்களிலெல்லாம் திருச்சிற்றம்பலமுடையார், திருவேங்கடமுடையார், திருநாகேஷ்வரமுடையார், கபாலீஷ்வரமுடையார் என்பது போலவே உடையார் என்ற பெயரில்தான் தெய்வங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

குருவும் ஸ்வாமியும் ஒன்று என்பதால்தான் வைஷ்ணவர்கள் ஸ்ரீ ராமாநுஜரை உடையவர் என்றே சொல்கிறார்கள்.

ஸ்வாமி என்றால் சொத்துக்கு உரிமைக்காரர் என்றேன். எந்தச் சொத்து. சகலப் பிரபஞ்ஜமும்தான். அதிலுள்ள நாமும் அவன் சொத்துத்தான். உள்ளதனைத்தும் அவன் ஒருவனுக்கே சொந்தமாகும். எல்லாம் என் உடமையே என்று தாயுமானவரும் பாடினார். நம் சொத்து, பிறர் சொத்து என்றெல்லாம் பாத்தியதை கொண்டாடுகிறோமே, உண்மையில் இந்தச் சொத்தெல்லாம்- அவற்றுக்கும் பாத்தியதை கோரும் நாம், பிறர் எல்லோருமே - அவனுடைய சொத்துதான். அவன் இல்லாவிட்டால் இந்தப் பிரபஞ்சமும் இல்லை. நாமும் இல்லை. நாம் பாத்தியதை கோருகிற சொத்துக்களும் இல்லை.

நாம் வீடு, வண்டி போன்ற சில சொத்துக்களைப் புதிதாக உண்டாக்கினதாக நினைக்கிறோம். விஞ்ஞானிகள் புதிது புதிதாக இயந்திரங்கள் செய்கிறார்கள். ஆனால் இதற்கெல்லாம் அடிப்படையில் எந்த மூலப் பொருட்களை வைத்துக் கொண்டு செய்கிறோமோ, அவை ஸ்வாமி செய்ததுதான். நாம் அவரது சொத்தை எடுத்து வேறு ஒரு ரூபத்தில் மாற்றுகிறோமே தவிர புதிதாக எதுவும் செய்யவில்லை. மூலப் பொருட்களை (element) செய். அணுவை (atom) உண்டாக்கு என்றால் எந்த விஞ்ஞான நிபுணராலும் அது முடியாத காரியம். இத்தனை மெஷின்கள், குண்டுகள் செய்கிற விஞ்ஞானியால் ஒரு சின்னஞ் சிறிய

இலையைச் செய்ய முடியுமா?

எல்லாவற்றையும் செய்கிற ஒரே ஒருத்தருக்குத்தான் அவையெல்லாம் சொந்தம். அதனால்தான் அவர் உடையவர். என்று ஸ்வாமி என்று அழைக்கப்படுகிறார். நாமும் அவரது உடமைகள்தான். நம் சொத்து என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பதை நம் இஷ்டப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிறோம் அல்லவா? அப்படியே ஸ்வாமியின் சொத்தாகிய நாமும், நம்மை அவன் இஷ்டப்படி நடத்தப்படும் என்று விட்டுவிட்டால் நமக்கு எந்த பாரமும் இல்லை. ஒர் ஆனந்தம்தான்.

இப்போது, நான் நான் என்று எதையோ சொல்லிக்கொண்டு அலைகிறோமே, உண்மையில் இது அவனுக்குதான் சொந்தம் என்று புரிந்து கொண்டுவிட்டால் அப்புறம் நாமாகக் கிடந்து அலையமாட்டோம். நமக்கென்று சொந்தமாக ஒரு ஆசையும் ஒரு துவேஷமும் பாராட்டுவதற்கு உரிமையில்லை என்று தெரிந்து கொண்டுவிட்டால், அப்புறம் ஒரு அலைச்சலும் இல்லை. ஒரே நிம்மதிதான். ஸ்வாமி என்கிற வார்த்தையே, நமக்கு நம்மிடம் எந்த சொந்தமும் இல்லை. நாமம் அவன் தன்னிஷ்டப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிற அவனுடைய சொத்துத்தான் என்பதை உணர்துவதாக அமைந்திருக்கிறது. இப்படி உணர்த்துவது பக்தியின் பரம லக்ஷியமான சரணாகதி என்பது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

### *இயற்கை காட்டும் ஈஸ்வர தத்*துவம்.

சிருஷ்டியில் பலவகையான சக்திகள் பல்வேறு வஸ்துக்களிடம் வியாபித்திருக்கின்றன. இயற்கையைப் பார்த்தால் ஒன்றின் சக்தியைவிட இன்னொன்றுக்குச் சக்தி அதிகம். அதையும்விட இன்னொன்றுக்கு அதிகம் சக்தி. என்கிர ரீதியில் போய்க் கொண்டே இருக்கிறது.

பௌதிகமான நமக்குக் கொஞ்சம் சக்தி இருக்கிறது. அதனால்தான் நாம் கொஞ்சம் கனம் தூக்குகிறோம். மாடு நம்மைவிட அதிக கனம் தூக்குகிறது. ஒட்டகம் அதையும்விட அதிக பளு தூக்கும். யானையால் அதற்கும் அதிக கனத்தைத் தூக்க முடிகிறது.

புத்தி பலத்தைப் பார்ப்போம். தாவரங்களைவிடப் புழுவுக்கு அதிக புத்தி இருக்கிறது. புழுவை விட எரும்புக்கு அதிக புத்தி இருக்கிறது. எறும்பைவிட

ஆடு மாடுகளுக்கு அதிக அறிவு. அவற்றைவிட மனிதனுக்கு அதிக அறிவு.

இந்த ரீதியில் யோசித்து ஆராய்ந்து பார்த்தால் இந்த பௌதிக பலம், புத்தி பலம் எல்லாம் பூரணமாக இருக்கிற ஓர் ஆதார வஸ்துவும் இருந்தாக வேண்டும் என்று தெரிகிறது. அதைத்தான் ஸ்வாமி என்கிறோம்.

நாம் நம் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தை எல்லாம் நிர்மாணிக்கிற புத்தியும், சக்தியும் கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் ஸ்வாமி.

ஒன்றிலிருந்து ஒன்றாக சக்தி அதிகமாகிக் கொண்டே போகிற இயற்கையிலிருந்து இப்படி ஈசுவர தத்துவத்திற்குப் போகிறோம்.

ஒன்றுக்கு ஒன்று மாறாக PAIR OF OPPOSITESஎன்கிற எதிரெதிர்ச் சக்தி ஜோடிகளையும் நாம் இயற்கையில் பார்க்கிறோம். கடும் பனிக்காலம் என்று ஒன்று இருந்தால் கடும் வெயில் காலம் ஒன்று இருக்கிறது. இரவு என்று ஒன்று இருந்தால் பகல் என்பதாக ஒன்று இருக்கிறது. மிருதுவான புஷ்பங்கள் இருப்பதுபோல் கூரான முட்கள் இருக்கின்றன. தித்திப்புக்கு மாறாக கசப்பு இருக்கிறது. அன்புக்கு மாறாக துவேஷம் இருக்கிறது. எதற்கும் எதிர்வெட்டாக ஒரு மாற்று இயற்கையில் இருக்கிறது. இந்த ரீதியில் ஆலோசனை செய்தால் மனித மனசுக்கு மாற்றாகவும் ஒன்று இருக்கத்தானே வேண்டும்?மனித மனஸின் சுபாவம் என்ன?

ஆபாசங்களில் முழுகிச் சஞ்சலித்துக்கொண்டே இருப்பது. திருப்தியே இல்லாமல் தவிப்பது, இதற்கு மாறாக ஆசாபாசமின்றி, சஞ்சலமே இன்றி, சாசுவத சாந்தமாகவும் சௌக்கியமாகவும் திருப்தியாகவும் இருக்கிற வஸ்துவும் இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட வஸ்துதான் ஸ்வாமி.

இயற்கையில் சகலமும் மாறிக்கொண்டிருக்கிறது. சில மாறுதல்கள் மட்டும் நம் கண்ணுக்குத் தெரிகின்றன. ஆனால் நாம் மாறாததாக நினைக்கிற மலையும், சமுத்திரமும்கூட காலக்கிரமத்தில் மாறிக் கொண்டேதான் இருக்கின்றன. இயற்கையில் எதுவுமே சாசுவதம் இல்லை. இதற்கு எதிராக மாறாமலே ஒன்று இருக்கத்தான் வேண்டும். அதுதான் ஸ்வாமி.

இயற்கையில் படிப்படியாக ஒன்றிலிருந்து மற்றொன்று என்றும், அதே இயற்கையில் எந்த ஒன்றுக்கும் மாறுதல் உண்டு என்றும் அம்பாள் காட்டி, இந்த இரண்டாலும் கடைசியில் பரமாத்ம தத்துவம் ஒன்று இருந்தாக வேண்டும் என்று உணர்த்துகிறாள்.

அது இருந்து விட்டுப்போகட்டுமே. அதை எதற்கு உபாஸிக்க வேண்டும் என்று கேட்கலாம். நாம் எப்படி இருக்கிறோம்? எப்போதும் எல்லையில்லாத தேவைகளோடு (WANTS) இருக்கிறோம். பரமாத்மா ஒரு தேவையும் இல்லாமல் இருக்கிறார். இத்தனை தேவையுள்ள நாம் அற்ப சக்தியோடு இருக்கிறோம். ஒரு தேவையும் இல்லாத பரமாத்மாவோ ஸர்வசக்தராக இருக்கிறார். நாம் ஒரே பள்ளமாக இருக்கிறோம். அவர் பரம உன்னதமாக இருக்கிறார். அவர் சக்தியிலும் ஞானத்திலும் மட்டும் உயர்ந்தவர் என்பதில்லை. தயையிலும் உயர்ந்தவராக இருக்கிறார். அதனால்தான் அவரைத் தியானித்தால் பள்ளமாக இருக்கிற நம்மையும் தூர்த்து நிரம்பச் செய்கிறார். நாம் குறைந்தவர்கள். அவர் நிறைந்தவர்.

நம் குறையைத் தீர்த்து நிறைவாகச் செய்ய அந்த நிறைவால்தானே முடியும்? அப்படிச் செய்கிற கருணா மூர்த்தி அவர். நாம் உபாஸித்தால் நம் குறைகளைப் போக்குகிறார்.

குறை இருக்கிறது என்றால் எதுவோ தேவைப்படுகிறது என்று

அர்த்தம். அடியோடு தேவையே இல்லாவிட்டால் அப்படியே நிறைந்து விடலாம். நம் குறைகளை நிவற்த்தி செய்கிற பரமாத்மா கடைசியில் நமக்கு எதுவுமே தேவையில்லை என்ற நிறைவையும் தந்துவிடுவார். அப்போது அந்த உயர்ந்த மேடு நம்மைத் தூர்த்துத் தூர்த்து, பள்ளமாயிருந்த நாமும் அதோடு சமமாக, அதாகவே ஆகியிருப்போம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

### *கர்மமும் பக்தியும்*

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் விதேக முக்தி அடையப் போகிறார் என்று தெரிந்த போது சாமானிய சிஷ்யர்களெல்லாம் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். வேதாந்த பரமான உபதேசங்கள் அளித்தீரிகள். அதில் பல விஷயங்கள் எங்களுக்குப் புரியவே இல்லை. கடைத்தேறுவதற்கு சுலபமான வழி ஒன்று சொல்ல வேண்டும் என்று ஆசாரியாள் ஸோபான பஞ்சகம் என்று ஐந்து சுலோகங்களை உபதேசித்தார்கள்.

வேதம் வகுத்த வழியைத் தினந்தோறும் பின்பற்ற வேண்டும். வேதம் கூறுகிறபடி கர்மங்களைத் தவறாமல் அநுஷ்டானம் பண்ணுங்கள். ஆசை வாய்ப்பட்டு நம் மனசுக்குப் பிடிக்கிற காரியங்களைச் செய்வது என்பதில்லாமல், லோக உபகாரமாக அவரவர்களுக்கும் விதிக்கப்பட்டுள்ள கர்மாவைச் செய்யுங்கள் என்ற கருத்துடன் என்ற கருத்துடன் தொடங்குகிறது ஸோபான பஞ்சகம்.

வேதம் விதித்தபடி கர்மத்தை ஒழுங்காக அநுஷ்டிப்பவர்கள் சிலர் இன்னமும் இருக்கிறார்கள். பூஜை, உத்ஸவம், பஜனை இவற்றை நன்றாகச் செய்கிறவர்களும் இருக்கிறார்கள் இவர்கள் கர்ம அநுஷ்டானம் செய்வோரைப் பார்த்து, இத்தனை கர்மா செய்தும் என்ன பிரயோஜனம்?

கொஞ்சமாவது மனசு உருகி பக்தி செய்யாவிட்டால் என்ன பயன்? என்று தாழ்வாக எண்ணுகிறார்கள். கர்ம மார்க்கக்காரர்களோ இவர்களைப் பார்த்து செய்ய வேண்டிய கர்மத்தில் சிரத்தையில்லை. ஆடம்பரமாக மணி அடித்துக் கொண்டும், தாளம் போட்டுக் கொண்டும் இருந்தால் போதுமா, என்று நினைக்கிறார்கள்.

ஆசாரியாள் ஸோபான பஞ்சகத்தில் சொல்லியிருப்பதைப் பார்த்தால் கர்மத்தையே ஈஸ்வர பூஜையாக செய்ய வேண்டும் என்று தெரிகிறது.கர்மத்தையும் செய்ய வேண்டும். ஈஸ்வரனையும் மறக்காமலிருக்க வேண்டும். கர்மங்களை ஈஸ்வரார்ப்பணமாக செய்ய வேண்டும். இது மிகவும் உயர்ந்த நிலை. கர்மங்களைச் செய்யும்போதே, அதில் பற்றில்லாமல் செய்து, சித்தத்தை ஈஸ்வரனிடம் வைத்து அவனுக்குக் கர்ம பலனை அர்ப்பணம் செய்வது சாதாரண ஜனங்களால் லேசில் முடிகிற காரியமில்லை. சாமானிய ஜீவர்கள் ஒரு கர்மம் என்று இறங்கி விட்டால், அப்போது பகவத் ஸ்மரணம் குறைந்துதான் போகும். ஆகவே தனித்தனியாகக் கர்மாவும் வேண்டும். பக்தியும் வேண்டும். நாளடைவில் கர்மத்தையே பூஜையாகச்

செய்கிற உத்தம நிலை சித்திக்கும். அல்லது பூஜையே ஒருத்தனுடைய கர்மம் முழுவதுமாக ஆனாலும் ஆகலாம். அல்லது பூஜை, கர்மம் எல்லாம் நின்றுபோய் பிரம்மானந்தம்.

இது ஒரு பக்கம் இருக்கட்டும். ஆரம்ப நிலையைப் பார்த்தால், கர்மம் செய்கிறவனிடம் பகவான் பிரீதி அடைவானா? ஒரு பிரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார்க்ள். ஒருவன் வேலை எதுவும் செய்யாமல் அந்தப் பிரபுவை ஸ்தோத்திரம் செய்துகொண்டே இருக்கிறான் இன்னொருவன் வெகு நேர்த்தியாக வேலை செய்கிறான். என்றாலும் அந்தப் பிரபுவிடம் துளிக்கூட அன்போ பாசமோ காட்டாமல் வேலையை மட்டும் கவனிக்கிறான். சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு அருகில் நின்று ஸ்தோத்திரம் பண்ணுகிறவன்தான் பிரபுவின் பிரீதிக்குப் பாத்திரமாக முடியும் என்று தோன்றும். பிரபு அசடாக இருந்தால் இப்படியே நடப்பான். ஆனால் அவன் புத்திசாலியாக இருந்தால் கண்ணில் படாமல் வேலை செய்கிறவனிடமே அதிகப் பிரியத்துடன் இருப்பான்.

ஈஸ்வரன் அசட்டுப் பிரபு இல்லை. தன்னை ஸ்தோத்திரம் பூஜை செய்கிறான் என்பதால் மட்டும் ஒருவனுக்கு அவன் அநுக்கிரகம் செய்துவிடமாட்டான். தான் விதித்த கர்மங்களைச் செய்கிறவர்களிடமே அதிகப் பிரீதி கொள்வான். ஆனாலும் அந்தக் கர்ம மார்க்கக்காரனின் மனஸில் அன்பே இல்லாமல், வெட்டு வெட்டு என்று வேலை மட்டும் செய்தால் அவன் பகவதி பிரீதியின் ஆனந்தத்தைப் பூரணமாக அநுபவிக்க முடியாது. இது பகவான் செய்த லோகம். சர்வ லோக ராஜாவான பகவானின் குடிமக்களே ஜனங்கள் அத்தனை பேரும். நாமும் அவனுடைய பிரஜை. எனவே இவர்களெல்லாம் நம்மைச் சேர்ந்தவர்கள். நம் சகோதரர்கள். ராஜாவாக இருக்கிறதோடு அவனே நம் அம்மையும் அப்பனும். நாம் அத்தனை போரும் அவனுடைய குழந்தைகள். ஆதலினால் ஒருத்தருக்கொருத்தர் சகோதரர்கள். இத்தனை குழந்தைகளும் இருக்கிற ஜனசமூகக் குடும்பம் ஒற்றுமையாக, சௌஜன்யமாக வாழவேண்டுமென்றே நமக்கு வேததர்மம் வெவ்வேறு காரியங்களைப் பிரித்துக் கொடுத்திருக்கிறது. அவற்றை நம்முடைய சொந்த ஆசைகள், லாபங்களை நினைக்காமல் செய்து பகவானின் குடும்பம் ஒழுங்காக நடக்கச் செய்வதே நம் கடமை என்ற உணர்ச்சி வருகிறபோது அதிலேயே ஈஸ்வர பக்தியும் உட்புகுந்து நிற்கும். இப்படி பக்தி உணர்வோடு கர்மம் செய்தாலே பகவத் கிருபையைப் பூரணமாக கிரகிக்க முடியும். கர்மத்தையே பகவானின் பூஜையாகச் செய்கிற நிலை வருவதற்கு ஆரம்பமாகத் தனியாகப் பூஜை, பஜனை எல்லாம் செய்து பகவானை ஸ்மரிக்க வேண்டியதும் அவசியம்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

### *உருவமும் அருவமும்*

புஷ்பத்தின் வாசனை கண்ணுக்குப் புலப்படாது.

மூக்குக்குத்தான் அது தெரியும். கற்கண்டின் தித்திப்பு மூக்குக்குத் தெரியாது. அது நாவுக்குத்தான் புலனாகும். சங்கீதம் நாவுக்குப் புலப்படாது. செவிக்குத்தான் புலப்படும். சூடும், குளிரும் தொடு உணர்ச்சி கொண்ட தோலுக்குத்தான் புலனாகும். இவற்றைக் காதால் உணர முடியாது. மேலே சொன்ன நாலும் கண்ணுக்குத் தெரியாது. மாறாகப் பச்சை சிகப்பு முதலிய வர்ணங்கள் காது, மூக்கு, வாய், தோல் இவற்றுக்குப் புலப்படாது. கண்ணுக்கே புலனாகும். நாஸ்திகர் உள்பட அனைவரும் நிச்சயமாக உண்டு என்று கூறுகிற உலக வஸ்துக்கள், இவ்விதம் ஒவ்வொர் இந்திரியத்துக்குப் புலனானாலும் போதும். எல்லா இந்திரியங்களுக்குப் புலனாக வேண்டியதில்லை என்று தெரிகிறது. நாலு இந்திரியங்களுக்குப் புலனாகாமல் ஒரே ஓர் இந்திரியங்களுக்குப் புலனானாலும் ஒரு வஸ்து இருப்பதாகவே சொல்கிறோம். உதாரணமாக சங்கீதம் காது ஒன்றுக்கே புலனாகிறது. அதை ருசிக்கவோ, பார்க்கவோ, முகரவவோ, தொடவோ முடியாது. இருந்தாலும் சங்கீதம் என்று ஒன்று கிடையாது என்று சொல்வதில்லை அல்லவா?

ஐந்து இந்திரியங்களுக்கும் புலனாகாமலும் உண்மையில் ஒரு வஸ்து இருக்க முடியுமா என்று யோசித்துப் பார்ப்போம். பிரபஞ்சம் முழுவதிலும் மின்சார அலைகளே வியாபித்திருக்க விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஆனால் நமக்கு எந்த இந்திரியத்தாலும் அதை அறிந்து கொள்ள முடியவில்லை என்றாலும், சில பரிசோதனைகளின் மூலம் மின்சாரத்தின் வியாபகத்தையும், அது சரீரம் மூளை எல்லாவற்றிலும்கூட வியாபித்திருப்பதையும் நிரூபித்துக்கா காட்டினால் நம்புகிறோம். இத்தனை இந்திரியங்களையும் அவை கிரகிக்கிற வஸ்துக்களையும் படைத்து ஒழுங்கு செய்து வைத்த ஒரு பெரிய அறிவு இருக்கவே செய்கிறது. அதைத்தான் கடவுள் என்கிறோம். மின்சாரத்தைப்போல அதுவும் எங்கும் வியாபித்திருக்கிறது. நமக்குள்ளும் வியாபித்திருக்கிறது. இந்திரியங்கள் அதிலிருந்து தோன்றி அது இயக்கி வைக்கிற முறையில் கட்டுப்பட்டே வேலை செய்கின்றன. கண்ணால் பார்க்கத்தான் முடிகிறது. கேட்க முடிவதில்லை. காதால் கேட்கத்தான் முடிகிறது. பார்க்க முடியவில்லை. இவை இப்படி இருக்கத்தான் வேண்டும் என்பது அந்தப் பராசக்தி வகுத்து வைத்த கட்டுப்பாடுதான். இப்படியாக எந்தப் பெரிய சக்திக்கு இந்த இந்திரியங்கள்

கட்டுப்பட்டிருக்கின்றனவோ, அந்த மகா சக்தி இந்த இந்திரியங்களுக்குக் கட்டுப்படுமா? இதனால்தான் கடவுளை எந்த இந்திரியத்தாலும் புரிந்து கொள்ள முடியவில்லை. இதைக் கொண்டு கடவுளே இல்லை என்று சிலர் சொல்கிறார்கள்.

கடவுள் மகா சக்தி படைத்தவர் மட்டுமில்லை. பரம காருண்டமும் பொருந்தியவர். எனவேதான் அவர் அனைத்திற்கும் அப்பாற்பட்ட அருவமாயினும், பக்தர்கள் தங்கள் இந்திரியங்களால் கிரகித்து, கண்ணாரக் கண்டு, வாயாரப் பேசி, கையார ஸ்பரிசித்து மகிழும் வண்ணம் பல உருவங்களும் தருகிறார். கடவுள் இல்லை என்று வாதம் செய்கிறவர் வாதம் செய்கிறவர்களிடம் கருணை கொண்டு அவர்களுக்கே உருவத்துடன் காட்சி தருவார். அருவமாயினும் உருவம் கொள்வார். மின்சாரம் ஒயரில் வருகிறபோது அருவமாயிருந்தாலும், காற்றடக்கமான ஒரு கண்ணாடிச் சிமிழும் (BULB) அதனுள் சிறு கம்பியும் (filament) சேர்த்து ஸ்விட்சைப் போட்டால் அருவ மின்சாரமே ஜோதி ரூபமாகிறதல்லவா? தங்கள் இதயச் சிமிழில் பக்தி என்ற கம்பியைப் பூட்டிக்கொண்டு சிரத்தை என்கிற ஸ்விட்சைத் தட்டிவிட்டுக் கொண்டால், அருவமான கடவுள் திவ்ய மங்கள ஜோதியாகத் தரிசனம் தருவார். சூரிய வெப்பத்தில் கடல் நீர் ஆவியாகப் போகும்போது அருவமாகி விடுகிறது. அதுவே மேகமாகக் குளிர்ந்தால் நம் கண்ணுக்குத் தெரிகிற மழையாகிறது. இன்னமும் குளிர்ந்தால் கெட்டியான பனிக்கட்டியே ஆகிவிடுகிறது. நம் இதயம் எத்தனைக்கெத்தனை குளிர்ந்து ஈஸ்வரனை ஸ்மரிக்கிறதோ, அத்தனைக்கத்தனை ஸ்தூலமாக அருவ தத்துவம் உருவம் கொள்கிறது.

அல்லும் பகலும் இறைவனையே நாடி, வேறு ஆசைகளை அறவே மறந்து பக்தி செய்தால் அருவப் பரம் பொருளை நன்றாக உணரலாம். இப்படி ஒருவன் ஞானம் பெறுவதினால், பக்தி செய்வதினால் ஏனைய உலக மக்களுக்கு என்ன லாபம் என்று கேட்கிறவர்களும் இருக்கிறார்கள். ஈசுவர தரிசனம் பெற்ற ஒருவனை, பரமாத்மாவை அநுபவித்த ஒருவனைப் பார்த்த மாத்திரத்தில் மக்களின் தாபமெல்லாம் சமனமாகி அவர்களுக்கும் ஓர் ஆறுதலும் சாந்தியும் உண்டாகின்றனவே. அந்த சாந்திக்கு ஈடாக எந்த உலகப்

பொருளைச் சொல்ல முடியும்? இதுவே ஞானியால், பக்தனால் உலகுக்கு ஏற்படுகிற மிகப் பெரிய நன்மை

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

#### *ஈஸ்வரன்*

ஞானிக்கு ஆத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறெதுவுமே தெரிவதில்லை. ஒரே பரமாத்மாத்தான் இத்தனையாகவும் தெரிகிறது என்று கண்டுகொண்டவன் அவன். வெளியிலே தெரிகிற தோற்றத்தை மாயை என்று தள்ளிவிட்டு, எல்லாவற்றுக்கும் உள்ளேயிருக்கிற பரமாத்ம ஸ்வரூபத்தை மட்டுமே அநுபவிக்கிறவன் அவன். வெளிப் பார்வைக்குத் தெரிகிற உலகம் மாயை என்று ஆகிவிட்டதால், இந்த மாயா லோகத்தில் ஞானிக்குத் காரியம் எதுவுமே இல்லை. பார்க்கிறவன், பார்க்கப்படுகிற வஸ்து, பார்வை எல்லாம் ஒன்றாக அடங்கிப் போனவனுக்குக் காரியம் எப்படி இருக்க முடியும்? அவன் பிரம்மமாகவே இருக்கிறான் என்று உபநிஷத்து சொல்கிறது.

பிரம்மத்துக்குக் காரியம் இல்லை. ஆனால், இந்த மாய உலகத்தில் அகப்பட்டுக்கொண்டு காரியங்களைச் செய்து வருகிறவர்கள் ஈசுவரன் என்று ஒருவனைப் பூஜை செய்து தங்கள் காரியங்களை நடத்தித் தர வேண்டும் என்று பிரார்த்திக்கிறார்கள். நல்ல காரியங்களுக்காக நல்ல மனஸோடு பிரார்த்தித்தால் ஈஸ்வரனும் அவற்றை நடத்தித் தருகிறார். இதிலிருந்து ஈஸ்வரன் காரியமே இல்லாமல் இருப்பவரல்ல என்று தெரிகிறது. நாம் பிரார்த்தித்தாலும் பிரார்த்திக்காவிட்டாலும் சகல பிரபஞ்சங்களையும் இத்தனை ஒழுங்கான கதியில் நடத்திக் கொண்டு, சகல ஜீவராதிகளுக்கும் சோறு போடுகிற பெரிய காரியத்தைச் செய்கிறார்.

காரியம் இல்லத பிரம்மம் வேறு. காரியம் செய்கிற ஈஸ்வரன் வேறு என்பதா? இல்லை. ஞானியின் பிரம்மமே தான் லோக காரியங்களை நிர்வாகிக்கிற ஈஸ்வரனாகவும் இருக்கிறது.

சிவனின் தக்ஷிணாமூர்த்திக் கோலம் பிரம்ம நிலையைக் காட்டுகிறது. அங்கே காரியமே இல்லை. ஒரே மௌனம்தான். அதே பரமசிவன் எத்தனை காரியங்களை செய்திருக்கிறார்? சிதம்பரத்தில் ஒரேடியாகக் கூத்தடிக்கிறார். தாருகாவனத்தில் பிக்ஷாடனனாக அலைந்து மோகிக்கச் செய்திருக்கிறார். தக்ஷயக்ஞத்தில் சூரியனைப் பளீரென்று அடித்துப் பல்லை உதிர்த்திருக்கிறார்.

ஸ்வாமி எப்போதும் உள்ளே அடக்கி பிரம்மமாக இருக்கிறார். வெளியிலே சகல ககாரியமும் செய்யும் ஈஸ்வரனாக இருக்கிறார். சாதாரண ஜனங்கள் ஏரியில், சம்ஸார அலைகளில் நீந்திக் கொண்டிருக்கிறார்கள். ஞானிகள் மறுபக்கம் வயலிலே நிற்கிறார்கள். நடுவில் ஏரிக்கரை. அது குறுக்கிடுவதால் ஞானிக்கு ஏரி தெரியாது. ஸ்வாமியோ இரண்டுக்கும் மத்தியில் இருக்கிற கரைமேல் இருக்கிறார். ஏரித் தடத்தில் நிற்கிற தடஸ்தன் அவர். அவருக்கு லோகமும் தெரியும். லோக சிருஷ்டி நசித்துப்போன ஞானியின் நிலையும் தெரியும். ஏரியில் முழுகுகிறவனைத் தூக்கிப்போடு என்று வயலில் இருக்கிறவனைக் கூப்பிட்டு அவர் சொல்ல முடியும்.

எல்லாம் தாமே என்பதை ஸ்வாமி அறிந்திருக்கிறார். ஆனாலும் அவரை வேறாக நினைத்திருக்கிற ஜீவர்களை அவரும் வேறுபோலப் பார்த்து வேடிக்கையும் செய்வார். இதைப் பற்றி ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரின் சிலலீலார்ணவ"த்தில் ஓர் அழகான சுலோகம் உண்டு. அதன் தாத்பரியத்தைச் சொல்கிறேன். பரமேஷ்வரனின் கூலியாளாக வந்து பிட்டுக்குமண் சுமந்த கதை எல்லோருக்கும் தெரியும். அவர் உடைப்பு அடைத்து ஒழுங்காக வேலை செய்யாததைக் கண்டு பாண்டிய ராஜா அவரைப் பிரம்பால் அடித்தான். உடனே அந்த பிரம்படி பாண்டியன் உட்பட சகல ஜீவராசிகள் மீதும் விழுந்தது. இங்கே தாமே எல்லாமும் என்பதை அவர் காட்டிவிட்டார். இதைப் பார்த்துக் கவி கேட்கிறார். அது சரி உன்னைத்தவிர வேறில்லை என்ற சிவாத்வைதம் பிரம்படி படுவதற்கு மட்டும்தானா? நீ மதுரமான பிட்டை வாங்கி

வாங்கித்தின்றாயே, அப்போது மட்டும் ஏன் எல்லா ஜீவராசிகளுக்கும் அதை உண்ட ஆனந்தம் இல்லை? அடிபடும்போது ஒன்று: ஆனந்தத்தின்போது வேறு வேறா?

ஸ்வாமி உள்ளே அடங்கிய பிரம்மமாகவும், வெளியே காரியம் செய்கிற ஈசுவரனாகவும் இருப்பதை இந்த ரஸமான கேள்வி மூலம் தெரிந்து கொள்கிறோம். அவர் செய்கிற காரியங்களை ஐந்தாகச் சொல்வார்கள். பஞ்ச கிருதயம் என்பார்கள். சிருஷ்டி, ஸித்தி, ஸம்ஸாரம் என்ற மூன்று உங்களுக்கே தெரியும். இந்த மூன்றும் மாயாலோக விஷயம்தான். இப்படி மாயையால் மறைக்கிற காரியம் திரோதானம் எனப்படும். இந்த மாயையிலிருந்து விடுவிப்பதே அவன் செய்கிற மகா பெரிய காரியம். அநுக்கிரகம் என்று அதற்கே பேர். அத்வைத ஸித்தி நமக்கு ஏற்படவேண்டும் என்றால், அதற்கு இந்த அநுக்கிரகமின்றி வேறு வழியில்லை. இந்த அநுக்கிரத்தை வேண்டி வேண்டிச் செய்கிற உபாஸனைக்கே, நம்மை அநுக்கிரகிக்கக்கூடிய கருணை படைத்தவர் அவர் என்று நம்பி அவரிடம் நெஞ்சுருகி அன்பு செலுத்திவதற்கே பக்தி என்று பெயர்.



## *மூர்த்தி வழிபாடும் முற்றிய ஞானமும்*

இதோ எனக்கு முன்னால் வாழைப்பழச் சீப்பு வைத்திருக்கிறது. இதைப்பார், இது மஞ்சளாக இருக்கிறது என்று நான் சொன்னால் இது மஞ்சளாகத்தான் இருக்கிறது என்று காண்கிறீர்கள். அதற்குமேல் மனஸில் அதைப்பற்றி எந்தப் பிரதி சிந்தனையும் (reaction) எழுவதில்லை. மாறாக, இதே வாழைப்பழத்தைக் கட்டி, இதோ பார். இது சிவப்பாக் இருக்கிறது என்று நான் சொல்லியிருந்தால், உடனே நீங்கள் மனஸில் ஒர் ஆட்சேப உணர்ச்சி எழுந்திருக்கும். இது

மஞ்சள் என்றோ நான் சொல்லாமல், இந்த வாழைப்பழம் சிவப்பாக இருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னால் அப்போது உங்கள் மனஸில் ஒருவிதமான பிரதி உணர்ச்சி உண்டாகிறது. மஞ்சள் பழத்தையே சிவப்பாக இருப்பதுபோல் உங்கள் மனஸில் கற்பனை செய்து பார்க்கிறீர்கள். மனஸை ஒருமுகப்படுத்தினால் அப்படி பாவிக்கவும் முடிகிறது.

உபாஸனை என்பதை இப்படிப்பட்டதுதான். பரம்பொருள் இப்படி இப்படி இருப்பதாக பாவியுங்கள் என்று பலவிதமான குணங்களைக் கொண்ட பல மூர்த்திகளைக் காட்டிக் கொடுக்கிறது உபாஸனா மார்க்கம். வாழைப்பழம் உண்மையில் மஞ்சள் நிறம் என்பதுபோல் பரமாத்மாவின் உண்மையான குணம் என்ன? அது குணம் கடந்தது என்பதே பரமாத்மா எல்லா குணமும் கடந்த வஸ்து என்று சொல்லி விட்டால், அப்புறம் ஜனங்களின் மனசு அதில் மேற்கொண்டு நிற்பதற்கு இடமே இல்லை. இது நமக்குப் புரிபடாத வஸ்து என்று விட்டு விடுவார்கள். வாழைப்பழத்தைச் சிவப்பு என்று சொன்னதை மனசு ஆட்சேபித்ததுபோல் ஒரு சிலையைக் காட்டி இதுதான் பரமாத்மா என்றாலும், அதை எவராலும் ஏற்க முடியாது. இது ஒரு கல் சிலையைக் காட்டி இதுதான் பரமாத்மா என்றாலும், அதை எவராலும் ஏற்க முடியாது. இது ஒரு கல் பொம்மை அல்லவா? இது எப்படி உலகத்தை நடத்துகிற பரமாத்ம சக்தி ஆகும்? என்று தோன்றும். ஆனால், ஒரு சிலையைக் காட்டி, இதைப் பரமாத்மா என்று பாவியுங்கள் என்றால் அப்படி பாவிக்க முடிவதாகத் தோன்றும்- வாழைப்பழத்தைச் சிவப்பாகக் கற்பனை செய்வதுபோல். ஆனால் சிவப்பு என்றால் அப்படி பாவிக்க முடிவதாகத் தோன்றும் - வாழைப்பழத்தைச் சிவபப்பாகக் கற்பனை செய்வதுபோல். ஆனால் சிவப்பு என்றால் என்னவென்று மனசுக்குத் தெரிவதுபோல் பரமாத்ம லக்ஷிணம் தெரியாத, அதனால் விக்கிரகத்தை ஏதோ பெரிய வஸ்து என்று சிறிது எண்ணிப் பார்க்கலாமே தவிர, அத்லேயே ஆழ ஊன்றி நிற்க முடியாது. தெரிந்த விஷயங்களில்தான் மனசு பிடிமானத்தோடு நிற்கும். எனவே ஓர் காருண்யமும் சௌந்தரியமும் வழிகிற மாதிரி ஸ்திரீ ரூபத்தில் விக்கிரகம் செய்து, இதில் பரமாத்மா தாயாராக வந்திருக்கிறார் என்று பண்ணு என்றால், மனசு அதை நன்றாகக் கிரகித்துக் கொண்டு அப்படியே ஆழ்ந்து ஈடுபட

முடிகிறது.

குணமற்ற பரமாத்ம வஸ்துவிலிருந்துதான் அனந்த கல்யாண குணங்களும் வந்திருக்கின்றன. ரூபமற்ற பரமாத்மாவிடமிருந்துதான் சகல உருவங்களும் தோன்றியிருக்கின்றன. அந்தந்த குணத்துக்கு அநுகூலமான ரூபம், முத்திரை, ஆயுதம் முதலியவற்றோடு திவ்விய மூர்த்திகளைக் காட்டினால் அவற்றில் மனசு ஈடுபடுகிறது. புரியாத பரமாத்ம தத்துவத்தை நமக்குப் புரிகிற விதத்தில் உபாஸிக்க முடிகிறது.

சகலமும் ஆன பரமாத்மா, நாம் அவரை எந்த ரூபத்தில் உபாஸித்தாலும் அந்த ரூபத்தின் மூலம் அருள் புரிகிறார். படிப்படியாக நம் மனநிலையை உயர்த்துகிறார். கடைசியில் மனஸே இல்லாத, மனஸைக் கடந்த அந்த நிலையிலேயே குணமும் ரூபமும் கடந்த பரமாத்மாவை உள்ளபடி அநுபவிக்க முடிகிறது. ஆரம்பத்தில் நமக்குப் பலவித மனோ விவகாரங்கள் இருக்கும்போது, பரமாத்மா எல்லாம் கடந்தவர் என்றால் அதில் பிடிப்புக் கொள்ள முடியவில்லை. ரூபத்தில், குணத்தில் அவரை உபாஸித்தால், அது முற்றிய நிலையில், எல்லாவற்றுக்கும் அதீதமான பரமாத்மாவை உள்ளபடியே அநுபவிக்க முடிகிறது. மஞ்சள் பழத்தை மஞ்சளாகவே பார்க்கிறபோது மனஸுக்கு வேலை இல்லாமல் போகிறது. உபாஸனையின்போது, பரமாத்மாவாகவே இப்படி இப்படி பாவனை செய்தால் அதற்கு இன்னின்ன மந்திரம் ஜபிக்க வேண்டும். இன்னின்ன ஆசாரம் வேண்டும். இன்னின்ன பூஜா பத்ததி வேண்டும் என்று விதிகள் இருக்கின்றன. பாவனை போய், அவரை உள்ளவாறு அறிகிறபோது எந்த விதியும் இல்லை. செயலும் இல்லை. சரீரம் மனசு இவற்றின் காரியமாகிற உபாஸனை இப்போதுதான் அநுபவமாகிற ஞானம் என்பதாகப் பழுத்து விடுகிறது.

இந்த ஞானம் நமக்கு ஆரம்பத்திலேயே வந்து விட்டதாக பாவனை செய்துவிடக்கூடாது. உபாஸனையே பெரும் பாலான ஜனங்களுக்கு ஞானம் பெற உபயமாகும், திவ்விய மூர்த்திகள் நாமாகச் செய்கிற கல்பிதமான பாவனை மட்டுமல்ல. பரமாத்மாவே மகான்களுக்கும் ரிஷிகளுக்கும் இந்த ரூபங்கள், மந்திரங்கள், விதிகள் எல்லாவற்றையும் அநுக்கிரகித்திருக்கிறார். பரமாத்மா வாஸ்தவமாகவே

இப்படிப்பட்ட மூர்த்திகளாகி, அவற்றை அடைகிற மந்திர, யந்திர, தந்திரங்களாகவும் ஆகியிருக்கிறார். எனவே, உபாஸனை முறையை நம்பிக்கையுடன் சிரத்தையுடன் பின்பற்றினால் நிச்சயம் ஞானத்துக்கு வழி உண்டாகும்.

ஞானம் வருவதும் வராததும் இருக்கட்டும். இப்போது உபாஸிக்கிறபோது அன்போடு அதைச் செய்ய வேண்டும். இந்த அன்பே, பக்தியே நமக்கு பெரிய நிறைவைத் தரும். அதனால் பகவானின் எல்லையில்லாத அன்பையும் அனுபவிப்போம். அதுவே பெரிய ஆனந்தம். இதற்கப்புறம் அவர் இஷ்டப்பட்டு அத்வைத ஞானம் தரட்டும். தராமல்தான் இருக்கட்டும். அதைப்பற்றி இப்போது கவலைப்பட வேண்டாம். நாம் செய்யக்கூடியது பக்திதான். இதற்குப் பிரதியாகப் பெறக்கூடிய பகவதநுக்கிரக ஆனந்தமே நமக்குப் போதும்.

தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

பக்தி

## ஆலய வழிபாடு

உதவி பெற்றதற்கு நன்றி சொல்வதற்கு ஒரு சிறந்த கடமை. ஒரு சிறு புல்லைக்கூட சிருஷ்டிக்கத் திறனற்ற மனிதனுக்கு இத்தனை உணவும், உடையும், மற்ற உபகரணங்களும் வழங்கும் ஆண்டவனுக்கு நன்றி காட்டுவது நமது கடமை. இவ்வாறு நன்றி கூறும் அடையாளமாகவே நாம் உண்பதை அவனுக்கு முன் காட்டி விவேதனம் செய்ய வேண்டும். அவனுக்குக் காட்டிவிட்டுப் பிறகு நாம்தான் உண்ணப்போகிறோம். நாம் பலவிதமான ஆடை ஆபரணங்கள் அணிவதற்கு அருள் செய்யும் ஆண்டவனுக்குத் திரு ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் சமர்ப்பிக்க வேண்டும். எல்லோருமே இவ்விதம் வீட்டில் பூஜை செய்து, திரவியங்களை

ஈஸ்வரார்ப்பணம் செய்ய இயலாது. எனவே, சமுதாயம் முழுவதும் சேர்ந்து இப்படி சமர்ப்பணம் பண்ணும்படியான பொது வழிபாட்டு நிலையங்களாக ஆலயங்கள் எழுந்துள்ளன.

ஆதியில் மகரிஷிகள் மந்திர சக்தியால், எங்கும் நிறைந்த பரம்பொருளைச் சில விக்கிரங்களில் விசேஷ சாந்நித்தியம் கொள்ளச் செய்தனர். அப்படிப்பட்ட மூர்த்திகளைச் சுற்றிக் கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. வீட்டில் பூஜை செய்கிறவர் உள்பட அனைவரும் கோய்லுக்குப் போவது என்று கட்டுப்பாடாகப் பழக்கம் வைத்துக் கொண்டால்தான் அங்கு பூஜைகள் குறைவற நடக்கும். நான் கோயிலுக்குப் போகிறேன் என்றால், எனக்காகவாவது கோயிலைச் சுத்தமாக வைக்கிறார்கள். விளக்குகள் போடுகிறார்கள். நைவேத்தியம் சுத்தமாகச் செய்கிறார்கள். வஸ்திரம் அழுக்கில்லாமல் கட்டுகிறார்கள்.

சின்னஞ்சிறிய சூக்ஷ்மமான தர்மங்களை எல்லாம் மறந்து விட்டோம். நமக்கு உணவு தருபவனுக்கு நல்'லபடி நிவேதனம் நடக்க வேண்டும். நமக்கு உடை தருபவனுக்கு நல்ல வஸ்திரம் இருக்க வேண்டும் என்பதையெல்லாம் கவனிக்கத் தவறுகிறோம். இப்போது ஒரு ஊரில் யார் ரொம்ப அழுக்குத் துணி கட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்று பார்த்தால் ஸ்வாமிதான் என்று தெரிகிறது. நம் ஊர் கேயிலில் ஸ்வாமியின் வஸ்திரம் சுத்தமாயிருக்கிறதா என்பதில் கவனம் செலுத்திவிட்டோமானால், நம் மனஸின் அழுக்கும் போய்விடும். ஆலயம் தொழுவது சாலவும் நன்று. அரனை மறவேல், திருமாலுக்கு அடிமை செய் என்றெல்லாம் புண்ணிய மொழிகள் வழங்கும் இந்த நாட்டில், ஒவ்வோர் ஊரிலும் உள்ள ஈஸ்வரன் கோயிலையும் பெருமாள் கோயிலையும் நல்ல நிலையில் வைத்திருந்து வழிபாடு நடக்கச் செய்ய வேண்டும். இது நம் முதல் கடமை.

தற்போது ஆலய வழிபாட்டுக் கிரமங்களில் என்ன வேண்டுமானாலும் மாறுதல் செய்யலாம் என்று எண்ணப்படுகிறது. எங்கேயும் உள்ள மின்சாரத்தை வெளிப்படுத்த ஆங்காங்கே மின்சக்தி ஸ்தாபனம் (Power House) இருப்பது போல், எங்கும் உள்ள ஈஸ்வர சக்தியை வெளிப்படுத்த ஆங்காங்கே மந்திர பூர்வமாக

ஆகமபூர்வமாக ஆலயங்கள் எழுப்பப்பட்டு, அவற்றின் பூஜாக்கிரமங்கள் உருவாகி உள்ளன. மின்சக்தி இயந்திரத்தில் நாம் தாறுமாறாகக் குறுக்கிட்டால் தேகம் போய்விடும். அதுபோலவே ஆத்ம க்ஷேமத்துக்கான ஆலய யந்திரத்தில் குறுக்கிட்டால் ஆத்மா போய்விடும்.

குருக்கள் அனுஷ்டானம் இல்லாதவராக இருக்கிறாரே அதனால் சாந்நித்தியம் போகவில்லை என்றால், நாமும் எதைச் செய்தால் என்ன என்கிறார்கள். அதாவது பாக்கி இருக்கிற ஸ்வாமியையும் வெளியே அனுப்பிவிடலாம் என்கிறார்கள்.

ஓரளவு அநாசாரத்துக்குத் தாக்கு பிடிக்கிற சக்தி கோயில்களில் இருக்கிறது. அதற்காக முழுக்க அநாசரமாக்குவோம் என்று கிளம்பினால் நமக்குத்தான் பயன் நஷ்டமாகும். ஸ்வாமிக்கு ஒரு நஷ்டமும் இல்லை. கோயிலில் இப்போதுள்ள ஆசாரக் குறையை நிவர்த்தி செய்ய வேண்டுமேயன்றி, ஆகமத்தில் இல்லாத புது விஷயங்களைப் புகுத்தக்கூடாது. நாம் கட்டுப்பாடாக இந்த ஆசாரங்களைப் பின்பற்றி அத்தனை பேரும் கோவிலுக்குப் போவது என்று ஏற்பட்டால் குருக்களும்தானே சரியாகி விடுவார்.

ராஜீய விவகாரங்களின் பொருட்டு மத விஷயங்களை மாற்றக்கூடாது. புதிது ஸ்திரமாக இராது. ஆடி மாதம் வெள்ளம் வரும்போது கரையைச் சில இடங்களில் இடிக்கும். அதுபற்றிக் கவலை வேண்டாம். புது ஆவேசத்தைப பற்றிக் கோபம் கொள்ள வேண்டாம். ஜனங்களிடம் நாம் நியாயத்தை விளக்கினால் அவர்கள் ஒப்புக் கொள்வார்கள். புது ஆவேசம் தானாகப் போய்விடும். சீர்திருத்தக்காரர்கள் நம் சாஸ்திரங்களைப் படிக்கவில்லை. அதனால் கோபம் அடைகிறார்கள். அதற்காக நாமும் கோபம் கொள்ளலாகாது. எதிர்க்கட்சியிடத்திலும் நமக்குப் பிரியம் வேண்டும். ஆகமத்தின் கருத்தை நாம் அவர்களுக்குப் பிரியமாக எடுத்துச் சொல்லி விளக்க வேண்டும்.

இந்தக் கோவில்களைக் கட்டிய காலத்திலிருந்து இன்றுவரை அவற்றில் பின்பற்றப்படும் நியதிகளை அப்படியே காட்டவேண்டும். நாம் சரியாக இருந்து, உண்மையான பக்தியுடன் வழிபாடு செய்து, உண்மையான அன்புடன் எடுத்துச் சொன்னால் எல்லோரும் கேட்பார்கள். இன்று

கோயில்கள் விஷயம் இப்படியானதற்கு நாமே காரணம் என்று உணர்ந்து, முதலில் நம்மைத் திருத்திக் கொள்வோமாக!

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

### *ஆலயங்களின் தூய்மை*

பேட்டைக்குப் பேட்டை, காலனிக்குக் காலனி புதுக் கோயில்கள் கட்டு கிறார்கள். எங்கே பார்த்தாலும் பழைய கோயில்களையும் புனருத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்கிறார்கள். புதுக்கோயில், பழைய கோயில் கும்பாபிஷேகங்களுக்காக என்னிடம் பலர் வந்து யோசனையும், பிரஸாதமும் கேட்டபடி இருக்கிறார்கள். இது எனக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறது.

அதே சமயத்தில் என் மனசுக்கு நிரம்ப வருத்தம் தருகிற விஷயங்களையும் பல பக்தர்கள் வந்து தெரிவித்துக் கொள்கிறார்கள். வேறு யாரிடமும் சொல்லிக்கொள்ள முடியாமல் ஸ்வாமிகளிடம் சொல்லலாம் என்று என்னிடம் வந்து முறையிடுகிறார்கள். இவற்றுக்கு நான் பரிகாரம் தேட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார்கள். மற்றவர்கள் வெளியே சொல்லத் தயங்குகிற இந்த விஷயங்களை நானும் கூடச் சொல்லாமல் இருக்கக்கூடாது. எனக்கு எல்லோரும் சொந்தம். ஸ்வாதீனப்பட்ட மநுஷ்யர்கள் என்றால், நான் அவர்களிடம் ஒளிவு மறைவில்லாமல் எனக்கு நல்லது கெட்டது என்று தோன்றுவதைச் சொல்லத்தான் வேண்டும். எனவே மனசு விட்டு இப்போது சொல்கிறேன்.

கோயில்களில் சூழ்நிலை அமைதியாக, தூய்மையாக இருக்க வேண்டும். பகவத் ஸ்மரணை தவிர மற்ற நினைவுகள் மறந்துவிடும்படியாக இருக்க வேண்டும். ஆனால் இப்போது என்ன பார்க்கிறோம்? பெரும்பாலான க்ஷேத்திரங்களில் கோயிலைச் சுற்றி ஏகப்பட்ட கடைகள் வந்துவிட்டன.

டீக்கடை, சிகரெட் கடை எதுவுமே பாக்கியில்லை. கோயில் அதிகாரிகளே கோயிலுக்கு வருமானம் கிடைக்கிறது என்பதால் இந்த இடங்களை வாடகைக்குக் கொடுக் கிறார்கள். அதாவது அநேகமாக ஸ்வாமமியைத் தவிர கோவிலைன யே வாடகைக்குக் கொடுத்திருப்பதாகச் சொல்லலாம். இம்மாதிரியான சூழ்நிலையில் தெய்வ சாந்நித்தியத்தை நாம் கிரகித்துக்கொள்ள சக்தி குறைகிறது. நம் பக் தி சுற்றுச்சூழலால் குறைகிறது.

ஆபீஸ் கட்டிடங்கள், காட்டேஜ்'கள் எல் லாம் இப்போது பல க்ஷேத் திரங்களில் ஏராளமாக முளைத்துவிட்டன. அங்கெல்லாம் தெய்வ சம்பந்தமற்ற காரியங்கள் நிறைய நடக்கின்றன. இது சாந்நியத்தை பாதிக்கிறது. ஏதோ எட்டாக் கையில் இருக்கிற கோயில்களில்தான் விச்ராந்தியான சூழல் இருக்கிறது. அபிவிருத்தி என்ற பெயரில் இவற்றில் அதிகாரிகள் அநாசாரத்தைை ப் புகுத்திவிடப் போகிறார்களோ என்று பயமாக இருக்கிறது.

இப்போது கோயில்களுக்குத் தனித்தனி நிர்வாகம் இல்லாமல் ஒரே சர்க்கார் நிப்வாகத்தில் இருப்பதால் அவர்களுக்குப் பொது ஜனங்கள் எடுத்துச் சொல்ல வேண்டும். துரதிஷ்டவசமாக, ஆலய ஆபீஸர்கள் ஏதாவதொரு நல்ல காரியத்தை ஆரம்பித்து முடிக்கு முன்பே வேறு ஊருக்கு மாற்றப்பட்டு விடுகிறார்கள். செய்கிற காரியத்தைப் பூர்த்தி செய்து பலனைப் பார்க்கலாம் என்கிற உற்சாகம் இருந்தால்தான் அதிகாரிகளிடமிருந்து சிறப்பான பணியை எதிர்பார்க்க முடியும்.

ஆலயங்களில் உட்புறமும், சூழ்நிலையும் சுத்தமாக இல் லாத வரையில், ஆஸ்திக காரியம் எத்தனைத்தான் நடந்தாலும் எத்தனை கும்பாபிஷேகங்கள் நடந்தாலும் எத்தனை கும்பாபிஷேகங்கள் நடந்தாலும் நாம் திருப்திபடுவதற்கில்லை. கும்பாபிஷேகத்துக்கு அப்புறம் சாந்நித்தியம் நிலைத்திருக்க வழி பண்ணிவிட்டால் என்ன பிரயோஜனம்? பிரஜைகள் இவ்விஷயத்தில் தீவிரமான கவனம் செலுத்தினால், அதிகாரிகளுக்கும் சர்க்காருக்கும் பொறுப்புணர்ச்சி அதிகரித்து ஆவன செய்வார்கள். பொது மக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு (Public opinion) அந்த சக்தி உண்டு.

ஆலயங்களுக்கு உள்ளேயே நடக்கிற அநாசாரங்களை என்னைத் தவிர யாரும் எடுத்துச் சொல்லமாட்டார்கள் போலிருக்கிறது. அதையும் நானே சொல்கிறேன். இப்போதெல்லாம் டூரிஷ்டுகள், 45, 50 நாள் யாத்திரை கோஷ்டிகள், காலேஜ் பெண்கள், ட்ரெயினிங் ஸ்கூல் பெண்கள் என்று பலர் கூட்டம் கூட்டமாகக் கோயில்களுக்கு பஸ்கள் அமர்த்திக் கொண்டு வருகிறார்கள். அவர்களில் எத்தனையோ பேர் விலகியிருக்க வேண்டிய காலத்திலும் தரிசனத்திற் கு வந்து விடுகிறார்கள். இப் படி செய் வது தோஷம் என்று தெரியாததாலேயே பெரும்பாலும் கோயிலுக்கு வந்து விடுகிறார்கள். முன்பெல்லாம வீட்டு விலக்கு என்று எவர்களை வீடுகளிலேயே தனித்து வைத்தார்களோ அவர்கள் இப்போது கோயிலிலும்கூட விலக்கு இல்லாமல் பிரவேசித்து விடுகிறார்கள். ஸ்வாமிக்கு ஏது தீட்டு? சீர்திருத்தக்காரர்கள் நான் சொல்வதை ஆக்ஷேபிக்கலாம். தீட்டு இல்லாத சுவாமி எங்கேயும் இருக்கிறார். அவரைக் கோயிலில்தான் வந்து தரிசிக்கவேண்டுமெல்பதில்லையே? சாஸ்திரப் பிரகாரம் ஸ்வாமியின் சாந்நித்தியத்தைக் கிரகித்துத் தரும் கோயில்களில், அந்த சாஸ்திரகங்கள் சொன்ன விதிப்படிதான் ஸ்வாமியைத் தரிசிக்க வேண்டும். இந்த விபத்து, விபரீதம் எல்லாம் ஏற்படுகின்றன என்பது என் அபிப்பிராயம்.

அந்த மகா க்ஷேத்திரத்தில் ஏன் இப்படிப்பட்ட விபத் து உண்டாச்சு? ஸ்வாமி சாந்நித்தியம் இருப்பதாலேயேதான் நாம் செய்கிற அநாச்சாரத்தைப் பொறுக்க முடியாமல், தம் கருணையும் மீறி, இப்படி அவ்வப்போது ஒரு விபரீதத்தை நமக்குத் தண்டனையாகத் தருகிறார். விபத்து என்ற பேரில் சில புண்யசாலிகளைத் தம்மிடம் சேர்த்துக்கொண்டு, உயிரோடிருக்கிற நம்மைத்தான் தண்டிக்கிறார். நாம் திருந் த வேண்டும், நல்ல ஆசார ஸம்பன்னர்களாக இருக்க வேண்டும் என்று கருணையினாலேதான் தண்டனை கொடுக்கிறார்.

காட்டேஜ், எக்ஸ்கர்ஷன் எல்லாமே அநேக க்ஷேத்திரங்களில் பக்தியைவிட, உல்லாசகக் கேளிக்கைகளைத்தான் அதிகப் படுத்தியிருக்கின்றன. மொத்தத்தில், நம் வீட்டில் நம்மால் சகிக் க முடியாத அபச்சாரங்களை சாக்ஷாத் வேங்கடரமண

ஸ்வாமி சந்நிதியிலும், மற்றும் பல தெய்வ சந்நிதிகளிலும் இழைக்கிறோம்.

இது எனக்கு நன்றாகத் தெரிந்தும், சொல்லாமல் வெறுமனே இருந்தேனானால், அதுவே எல்லாவற்றிலும் பெரிய அபசாரம் என்பதால் என் மனஸிலிருந்ததைச் சொன்னேன். உங்களிடம் சொல்வதாக மட்டும் நினைக்காமல் , சாக்ஷாத் வேங்கடராமண ஸ்வாமியிடமே பிரார்த்தனையோடு சொல்கிறேன். அந்த அபச்சாரங்களைத் தடுத்து நிறுத்துவதில் ஆஸ்திக மகா ஜனங்கள் கண்ணும் கருத்துமாக இருக்க அவர்தான் அருள் செய்ய வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

Ýôò°‹ ªîŒiè, è¬ôèÀ‹

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இந்தியாவுக்கு வந்த மெகஸ்தனிஸ் அப்போது நம் ஜனங்கள் எவ்வளவு ஸத்துக்களாக வாழ்ந்தார்கள் என்பதைத் கூறியிருக்கிறான். இந்திய மக்களுக்குப் பொய்யே சொல்லத் தெரியாது. தெருவில் போட்டுக் கிடக்கிற பணத்தைக்கூட எடுத்துச் செல்ல மாட்டார்கள் என்றெல்லாம் மெகஸ்தனிஸ் சொல்லியிருக்கிறான். அந்தக் காலத்து ஜனங்களின் மனசு மாதிரியே இப்போதும் இருக்கக்கூடாதா என்று ஆசையாக இருக்கிறது.

அன்றைக்கு அவர்கள் அவ்வளவு உயர்வாக இருந்ததற்குக் காரணம் என்ன? இன்று நாம் இவ்வளவு தாழ்ந்து போய்விட்டதற்கு காரணம் என்ன? அந்தந்தக் காலத்தின் சூழ்நிலையே அந்தந்த மனப்பான்மைக்கும் காரணமாக இருக்கிறது. பழங்காலத்தில் பொது ஜனங்கள் எல்லோரும் கோயிலுக்குப் போனார்கள். அங்கே அவர்களுக்கு நல்வழி கூறுவதற்காக மகாபாரதம் முதலியஸத் கதைகள் நடைபெற்றன. இதற்காகவே ராஜாங்கத்தில் மானியம்

தரப்படடு வந்தது. நாடகம், கூத்து எல்லாமும்கூடத் தெய்வ சம்பந்தமாகவே இருந்தன. தங்கள் தொழிலைச் செய்வது, ஆலய தரிசனம், ஸத் கதை சிரவணம் இவற்றுக்கே மக்களின் பொழுது சரியாக இருந்தது. இதனால் யோக்கியர்களாகவே இருந்தார்கள். இப்போது ஜனங்களைக் கவர்ந்திருப்பதற்கு என்ன என்னவோ ஆபத்துக்கள் எல்லாம் வந்து விட்டன.

தர்மத்துக்கு விரோதமான படக்காட்சிகள், கதைப் புஸ்தகங்கள் எல்லாம் அதிகமாகி விட்டன. ஜனங்கள் இதற்கிடையில் தத்தளித்துக் கொண்டிருக்கும் போது பலவிதமான அரசியல் கட்சிகள் வேறு அவர்கள் புத்தியைக் கலக்கிக் கொண்டிருக்கின்றன. எங்கேயும் சஞ்ஜலம், அதிருப்தி யோக்கியதைக் குறைவு. லஞ்சம் இவை அதிகரித்துவிட்டன.

பழைய காலத்தில் ராஜாவின் மானியத்துடன், பாரதம் முதலான ஸத் கதை நடந்தபோது, தலைமுறை தத்துவமாக அது செழித்து வளர்ந்தது. இப்போது ஹரிகதை, உபந்நியாசம் செய்கிறவர்கள் தங்கள் தலைமுறையோடு அது போகட்டும் என்று நினைக்கிறார்கள். அதோப்போல் அர்ச்சகர்கள் தங்கள் தலைமுறையோடு அர்ச்சனைத் தொழில் போகட்டும் என்று நினைக்கிறார்க்ள். முன்பு அரசர்கள் தெய்வ பக்தியை வளர்த்து எங்கு பார்த்தாலும் சாஸ்திரோக்தமாக ஆலயங்கள் கட்டியசால் ஆகம சாஸ்திர வித்வான்கள், சிற்பிகள், ஸ்பதிகள் ஆகியோர் வம்சாவளியாக சுபிட்சமாக வாழ் ந்தார்கள். இன்றய சூழ்நிலையிலோ இவர்கள் யாவரும் தங்களோடு இந்தத் தொழில் தொலையட்டும் என்று நினைக்கும் படியாகி விட்டது. ஈஸ்வர சம்பந்தத்துடனேயே ஆயிரம் காலப் பயிராக வளர்ந்த நாட்டுக் கலைகளும் இப்போது மங்குகின்றன. துரௌபதி அம்மன் கோயிலில் உடுக்கடித்து பாரதம் சொல்கிறவன், கரகம் ஆடுகிறவன், அரிச்சந்திரன் கூத்துப் போடுபவன் எல்லோரும் அடுத்த தலைமுறையை இந்தத் தொழிலில் பழக்கவில்லை. நாட்டுக் கலைஞர்களுக்கு, முன்பு ராஜாங்க மானியம் கிடைத்து வந்தது. இப்போது பழைய கிராமப் பண்பாடு (folk culture) என்று பெரிதாகப் பேசினாலும், ஏதோ அவ்வப்போது மந்திரிமார்களே அந்த மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு கிராமிய நடனக்காரர்களோடு ஃபோட்டோ எடுத்துக்கொண்டு பத்திரிக்கையில் பிரசுரமாகிறது தவிர, இந்தக்

கலைஞர்களுக்கு மானியம் மாதிரி எதுவும் இல்லாமல் இந்தக் கலைகளும் நசிகின்றன.

கோயில்களும் அவற்றைச் சேர்ந்த இந்தக் கலைகளும் ஓங்கு வளர்ந்த நாளில் தேசம் எப்படி இருந்தது என்று மெகஸ்தனிஸ் சர்டிஃபிகேட் கொடுத்திருக்கிறான். இவை எல்லாம் ம்மங்கிப்போயிருக்கிற இன்றைக்குத் தேசம் எப்படி இருக்கிறது என்பதையோ பிரத்யக்ஷமாகவே பார்க்கிறோம். எங்கே பார்த்தாலும் பொய்யும், சஞ்சலமும், கலப்படமும், அதர்மமும் மிகுந்துவிட்டன.இவை நிவிருத்தியாக வழி ஒன்றுதான். பழைய காலத்தைப்போலக் கோயில்களைச் சமூக வாழ்வின் மத்திய ஸ்தான மாக்கிவிட வேண்டும். அன்றுபோல் இப்போதும் தெய்வ சம்பந்தமான பழங் கலைகளை வளர்க்க வேண்டும்.

க்ஷேத்திரங்களில் மகா புருஷர்கள் உண்டாக்கிய சாந்நித்தியத்தை மந்திரங்களாலும் ஆகம சாஸ்திர விதிகளாலும் ரட்சித்து வரவேண்டும். ஆலயங்களில் சாந்நித்தியம், அங்கு ஆகம சாஸ்திரமறிந்த ஸ்தபதிகள் மூலம் திருப்பணி, கோயிலில் பூசாரியின் பாரதக் கதை இவற்றை ஏற்படுத்தி விட்டால் அர்ச்சகர்களுக்கும் சிற்பிகளுக்கும் மற்றக் கலைஞர்களுக்கும் வாழ்வு தருவதோடு, தேசத்துக்கே நல்ல வாழ்வு தந்ததாகும். நம் தேசம் ஒன்று நன்றாய் இருந்து விட்டால் போதும். லோகம் முழுதும் அதனிடமிருந்து சகல க்ஷேமங்களையும் பெற்றுக் கொண்டு விடும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

### *ஆலயமும் ஆஸ்பத்திரியும்*

மனிதர்களுக்குச் சேவை செய்வதே பகவானுக்குச் செய்கிற பூஜை. தனியாக பகவத் தியானம், பூஜை எதுவும் வேண்டாம். என்று சொல்பவர்கள் இருக்கிறார்கள். இவர்களில் சிலர்

கோயில்கள் முதலிய வழிபாட்டினங்கள் வேண்டியதில்லை என்றும், அவற்றை வைத்தியசாலைகளாகவும் பள்ளிக்கூடங்களாகவும் மாற்றிவிட வேண்டும் என்றும் சொல்கிறார்கள். மனிதர்களுக்கு ஆறுதல் தருவது, நோய்ப்பிணி போக்குவது, கல்வியறிவு தருவது எல்லாம் பரம உத்தமமான பணிதான். அதில் பகவான் நிச்சயமாக பிரீதி அடைகிறான் என்பதும் ரொம்ப உண்மைதான். ஆனால் யோசித்துப் பார்க்கும் போது மனித சேவையே பகவத் சேவை என்பதையே திருப்பி வைத்துச் சொல்வதும் ரொம்ப உண்மை தெரிகிறது. அதாவது பகவத் சேவை செய்வதும் மனிதர்களின் நன்மைக்காகத்தான் என்று தெரிகிறது. அதுவே மற்ற சமூக சேவைகளைவிட மனிதனுக்கு நிரந்தர நலனைத் தருவதுமாகும்.

ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளை சொஸ்தம் செய்து அனுப்புகிறோம். அப்புறம் அவர்கள் நல்லவர்களாக வாழ வேண்டாமா? லோகத்துக்குக் கெடுதல் செய்கிறவர்களாகவும், தங்களுக்கே அநர்த்தம் செய்து கொள்பவர்களாகவும், அவர்கள் இருந்தால் அவர்களை சொஸ்தப்படுத்தியதன் பயனை நாம் அடைய முடியுமா? புத்திக் கோளாறு உள்ளதாகச் சொல்லப்படும் பலரை என்னிடம் அழைத்து வந்து சொஸ்தப்படுத்த வேண்டும் என்று கேட்கிறபோது நான் இந்த ரீதியில்தான் உள்ளுக்குள் நினைத்துக் கொள்கிறேன்.

அதை அப்போது அவர்களிடம் சொன்னால், என்னிடம் ஆறுதல் தேடி வருகிறவர்களுக்கு மனசு கஷ்டப்படும், அதனால் சொல்வதில்லை. இப்போது பொதுவாகச் சொல்கிறேன். புத்தி பூர்வமாக ஒரு தவற்றை செய்தால்தான் அது பாபமாகிறது. ஆனபடியால் புத்தி தங்கள் வசத்தியே இல்லாமல் சித்தப் பிரம்மம் பிடித்தவர்கள் செய்கிற எந்தச் செயலிலும் பாபம் இல்லை. ஏதோ பூர்வ பாபத்துக்காக அவர்கள் இப்படியிருக்கிறார்கள். ஆனால் இப்போது அவர்களுக்குப் பாபமில்லை. நாம் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவதுபோல் சித்தப் பிரம்மை பிடித்தவர்கள் பேசுவதில்லை. மனிசில் எது வருகிறதோ அதையே சொல்கிறார்கள். ஏன் இவர்களையும் சொஸ்தப் படுத்துவது என்கிற பெயரில் மற்றவர்களைப்போல் ஆக்கி, இவர்களுக்கு பாபம் சேரும்படியாகப் பண்ண வேண்டும் என்று எனக்குத் தோன்றுவதுண்டு.

ஆஸ்பத்திரி வைத்து உடல் வியாதியைத் தீர்ப்பது போதாது. நோயாளிகளது மனஸில் கெட்ட எண்ணங்கள் என்ற வியாதி இல்லாமல் செய்வதே அதைவிட முக்கியம். இவ்வாறேதான் பள்ளிக்கூடம் வைத்துப் படிப்பை விருத்தி செய்கிறோம். படித்து வெளிவந்தவர்கள் யோக்கியர்களாக இல்லாவிட்டால் பள்ளிக்கூடம் வைத்த பயன் நமக்கு ஏது! பக்தி, கட்டுப்பாடு, தியாகம் முதலானதுக்கள் இல்லாமல் படிப்பால் வெறும் புத்தியை மட்டும் வளர்த்துக் கொண்டால், சாதூர்யமாக அயோக்கியத்தனங்கள் செய்தும் தப்பித்துக் கொள்வதற்குத்தான் வழியாகிறது. வித்யாசாலையோடும் வைத்தியசாலையோடும்

மநுஷ்யனின் வாழ்வு முடிந்து விடுகிறதில்லை. அவன் நல்லவனாக இருக்க வேண்டும் என்பதுதான் லட்சியம். இப்படி நல்லவவனாக்குகிற நிலையங்களாக ஆலயங்களும், ஆஸ்பத்திரி, ஸ்கூல் போலவே - ஆஸ்பத்திரியை, ஸ்கூலை விடவும் - அவசியம் இருக்கத்தான் வேண்டும். நாம் நல்லவர் ஆவதற்காக பகவத் தியானம், பூஜை இவைதான் அவசியம் இருக்கத்தான் வேண்டும். நாம் நல்லவர் ஆவதற்காக பகவத் தியானம், பூஜை இவைதான் அவசியம் இருக்க வேண்டியவை.

மனிதனின் உடம்புக்கு ஆரோக்கியம் தருவது, புத்திக்குப் படிப்புத் தருவது அவருடைய தரித்திரத்தை நீக்கிச் செல்வச் சுபிட்சம் தருவது எல்லாவற்றையும்விட அவனை பகவானிடம் சேர்ப்பதே பேருபகாரம். நாமும் பகவானிடம் மனஸைச் செலுத்தி, தியானம், பூஜை இவைகளை அநுஷ்டித்தால்தான் மற்றவர்களை இவற்றில் ஈடுபடுத்த நமக்கு யோக்கியதை உண்டாகும். அப்போதுதான் நாம் செய்கிற பரோபகாரம் சக்தியோடு பலன் தரும்.

மனிதனையே தெய்வமாக நினைத்து அவனுக்குச் சேவை செய்வது சிலாக்கியம்தான். ஆனால் நாம் அப்படி நினைப்பதோடு நிற்காமல் அவனே உண்மையாகத் தன் தெய்வீகத்தைக் கொஞ்சமாவது தெரிந்து கொள்ள நாம் ஆலயங்களை அவசியம் பேண வேண்டும்.

நல்லவனாவதற்குப் பக்தி தேவையில்லை என்று ஒரு வாதம். ஆனாலும் நடைமுறையில் பலவிதமான சுயநல

ஆசைகளால் ஆட்டி வைக்கப் படுகிற ஜீவனைப் பரிசுத்தப்படுத்துவதற்கு பக்தியைப் போன்ற சாதனம் வேறு இல்லவே இல்லை. பகவான் என்று ஒருவன் சர்வ சாட்சியாகவும் சர்வசக்தனாகவும் இருந்துகொண்டு நம் கர்மங்களுக்குப் பலன் தருகிறான் என்கிற பயபக்தி உணர்ச்சிதான் யுக யுகாந்திரமாக மனிதனைத் தர்ம மார்க்கத்தில் நிறுத்துவதற்குப் பெரிய கோலாக இருந்து வந்திருக்கிறது.

பக்தியின் லட்சியம் நல்லவனாக ஆக்குவது மட்டுமல்ல. நமக்குக் காரணமான சக்தியைத் தெரிந்துகொண்டு, அதற்கும் நமக்கும் பேதமில்லை என்ற பரம ஞானத்தை அடைந்து, சம்ஸாரச் சூழலிலிருந்தே தப்புவதே பக்தியின் லட்சியம். அதோடு, வெளி உலகத்துக்கு நல்லவனாக நடக்கவும்கூட அதுவே வேறெந்த உபாயத்தையும்விட மிகுந்த சக்தியுடன் உதவி புரிகிறது. கோபுரம் கட்டி எல்லார் கண்களிலும் படவைத்து பகவானை ஞாபகமூட்டுவதைவிட பெரிய சமூக சேவை எதுவுமில்லை.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

### *ஐம்புலன்கள் ஐந்து உபச்சாரங்கள்*

பிரபஞ்சத்தில் உள்ள சகல வஸ்துக்களையும் அநுபவிப்பதற்காக மனிதனுக்குக் கண், காது, மூக்கு, நாக்கு, சருமம் ஆகிய ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. பஞ்ச இந்திரியங்கள் என்று இவற்றைச் சொல்வார்கள். ரூபத்தைக் கிரகிப்பது கண். சப்தத்தைக் கிரகிப்பது காது. கந்தத்தை(மணம்) கிரகிப்பது மூக்கு. ரஸத்தை (சுவை) கிரகிப்பது நாக்கு. ஸ்பரிசத்தைக் கிரகிப்பது சருமம். இந்த ஐம்புலன்களும் புதிதாக ஒன்றை உண்டாக்கவில்லை. வெளியே உண்டாக்கி

இருக்கிற சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களை இவை உணர்கின்றன. ரேடியோ ஸெட் மின்ஸார சப்த அவைகளைப் பிடிப்பது போல் இவை எப்படியோ வெளியில் இருப்பவற்றை அறிந்து பிடித்துக் கொண்டு மூளைக்கு அனுப்பி வைக்கின்றன. காரியம் செய்து புதிதாக ஒன்றைப் படைக்காமல், வெறுமே கிரகித்து நமக்கு அறியவைப்பதால், இந்தப் புலன்களுக்கு ஞானேந்திரியங்கள் என்று பெயர். நாக்கு ஞானேந்திரியமாக இருந்து ரஸத்தை உணர்வதோடு, பேச்சு என்று காரியத்தால் புத்தாக சப்தத்தைப் படைக்கவும் செய்வதால் கர்மநேதிரியமாகவும் இருக்கிறது.

ஞானேந்திரியங்களான ஐம்புலன்களுக்கும் ஆசிரயமான இருப்பனவே பஞ்ச பூதங்கள் என்கிற ஆகாயம், காற்று, தீ, நீர், மண் ஆகிய பிரபஞ்ச சக்திகள். சப்தம் மட்டுமே ஆகாசத்தில் உண்டு. ஒம்கார நாதமாகிய பிரவணம் ஆகாயத்தில் நிறம்பியிருக்கிறது. பலர் கூடியிருக்கிர இடத்தில் பல தினுசான பேச்சுச் சப்தம் உண்டானாலும் 'ஒ'என்ற ஒசை ஒன்றே கேட்கிறது. சமுத்திரம் 'ஒ'வென்கிறது. ஒரு சங்கைக் காதில் வைத்துக் கொண்டால் 'ஒ'சப்தம்தான் கேட்கும். ஏன் ஒ என்ரு கத்துகிறாய். என்றுதான் கேட்கிறோம். ஒ வுக்கு ஒரு புள்ளி வைஎ த்து முடித்தால் ஒம் இதுதான் எங்கும் இருப்பது. வாயுவில் சத்தத்தோடு ஸ்பரிசமும் இருக்கிறது. நம்மீது காற்றுப்பட்டால் நமக்குக் காற்றுதான் படுகிறது என்று புரிகிறதல்லவா. நெருப்புக்கு ஸ்பரிசத்தோடு ரூபமும் இருக்கிறது. தீயைக் கண்ணால் பார்க்க முடிகிறது. ஜலத்துக்கு இவற்றோடு ரஸம் (சுவை) என்பதும் உள்ளது. அதை நாம் நாக்கில் விட்டுக்கொண்டு குடிக்கிறோம். மண்ணுக்கு மணமும் உள்ளது. மண் என்றால் மண்ணில் விளைகிற எல்லாம் அதில் அடங்கும். நாம் கண்டும் கேட்டும், ருசித்தும், தொட்டும், முகர்ந்து பார்த்தும் இவற்றையெல்லாம் அநுபவிக்கிறோம்.

ஐம்புலன்களே நமக்கு வாழ்வின் சகல ஆனந்தத்தையும் சாத்தியமாக்குகின்றன. நல்ல சாப்பாடு, ரம்மியமான சங்கீதம், சுகந்தம், குளிர்ந்த தென்றல், பூரண சந்திரனின் காட்சி இவை நமக்கு ஐம்புலன்களாலே அநுபவத்துக்கு வருகின்றன. மனிதனுக்கு இந்த ஐம்புலன்களைத் தந்து, இவற்றுக்கு ஆகாரமாக வெளியே ஐம்பூதங்களிலிருந்து தோன்றும் சுவை.

மணம் முதலிய அழகுகளையும் வைத்திருப்பவர் ஸ்வாமி. அவரது கிருபையால்தான் சகல இன்பங்களும் கிடைக்கின்றன. நம்மால் ஒரு மணி அரிசி சிருஷ்டிக்க முடியாது. ஸ்வாமியே இந்தப் பிரபஞ்சத்தை சிருஷ்டித்து, அதன் அழகுகளை நாம் அநுபவிக்கதற்காக நமக்கு பஞ்ச இந்திரியங்களையும் சிருஷ்டித்துத் தந்திருக்கிறார். ஆனபடியால் நமது புலன்களால் அநுபவிக்கும் இன்பங்களை ஸ்வாமியின் நினைவோடு அநுபவிப்பதே நமது கடமையும் தர்மமுமாகும்.

அவருக்கு இந்த இன்பங்களை முதலில் அர்ப்பித்து அவரது பிரஸாதமாகவே இவற்றை நாம் ஏற்க வேண்டும். இந்த வழக்கம் நிலைப்பட்டால் ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்யத்தகாத எந்தப் பொருள்களையும் நமது புலன்களால் அநுபவிக்கக் கூடாது என்ற பக்குவம் உண்டாகும்.

பஞ்சேந்திரியங்களால் அநுபவிக்கும் பிரபஞ்ச வஸ்துக்களைப் பரமேஷ்வரனுக்கு அர்ப்பணம் பண்ணும் மனோபாவனையில் பிறந்ததுதான். பஞ்சோபசாரம் என்கிற ஐந்து உபாசாரங்கள். கோயிலிலும் வீட்டுப் பூஜையிலும் ஸ்வாமிக்குக் குறைந்தது ஐந்து உபச்சாரம் செய்ய வேண்டும். ஸ்வாமியின் விக்கிரகத்துக்கு சந்தனமிடுவது, புஷ்பம் போட்டு அர்ச்சிப்பது, தூபம் காட்டுவது, தீபாராதனை செய்வது, நைவேத்தியம் பண்ணுவது ஆகியனவே பஞ்சோபச்சாரங்கள். இவற்றில் சந்தனமிடுவது கந்தம் - பிருதிவி தத்துவம் என்ற மண்ணைக் குறிப்பது. தூபம் அக்னியைக் குறிப்பது. நைவேத்தியம் அமிருதமாகிய நீரைக்குறிப்பது, எனவே பஞ்ச பூதங்களும் பஞ்சோபச்சாரத்தில் அடக்கம். பஞ்ச பூதங்களிலிருந்துதான் பஞ்சேந்திரியங்களின் அத்தனை நுகர்ச்சி வஸ்துக்களும் உண்டாகின்றன. ஆகவே, பஞ்சோபச்சாரத்தில் ஈஸ்வரன், Hóð…ê‹, põ¡ â™ô£‹ å¡Áð´ˆîŠ ªðÁA¡øù.

பக்தி

## *நாக மகிமை*

தியானம், ஜபம், பூஜை, யக்ஞம் க்ஷேத்திராடனம் ஆகியவற்றைப் போலவே நம் தேசத்தில் நீண்ட காலமாக பகவந்நாமாக்களைக் கோஷ்டியாகப் பாடி பஜனை செய்கிற பழக்கமும் இருந்து வந்திருக்கிறது. இந்த ஜீவாத்மானது பரமாத்மாவுடன் தொடர்பு கொள்வதற்கு ஒரு பெரிய உபாயமாக நாம பஜனை தொன்று தொட்டு தேசத்தில் அநுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது. அநேகமாக கிராமம், நகரம் எல்லாவற்றிலும் பஜனை மடம், அல்லது பஜனைக்கூடம் என்றே ஒன்று கணக்கிடப்படுவதிலிருந்து, பஜனை பந்ததி நம் நாட்டில் எவ்வளவு செழிப்பாக இருந்திருக்கிறது என்று ஊகிக்கலாம். இந்த பஜனை மடங்களில் சனிக்கிழமை தோறும், ஏகாதசி தோறும் ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து பஜனை செய்வார்கள்.

கோயில்களில் பூஜையைப் பார்க்கிறோம். தெய்வத்தைத் தியானிக்கிறோம். பஜனையிலோ நாமே வாய்விட்டுத் தெய்வத்தின் நாமங்களையும், குணங்களையும், லீலைகளையும், பாடி ஈஸ்வரபரமாக மனஸை ஈடுபடுத்துகிறோம். பலர் சேர்ந்து கொண்டு சமூதாய வாழ்க்கை அடிப்படையில் பக்தி செய்கிற சிறப்பு பஜனைக்கு உண்டு. அவரவரும் ஆத்ம க்ஷேமத்தை அடைந்து, அதனாலேயே ஜீவ கோடிகளுக்கு க்ஷேமத்தைத் தரவேண்டும் என்று, தன் மனிதர் அடிப்படையிலேயே (Individual basis) ஹிந்து மதம் முக்கியமாக அமைந்திருந்தாலும், கோயில், உத்ஸவம், பஜனை இவற்றில் கூட்டு வழிபாட்டு முறை (Congregational worship) யும் இருக்கிறது.

இன்னிசையுடனும், வாத்திய கோஷத்துடனும் செய்கிற பஜனை எல்லா உள்ளங்களையும் சுலபமாக இழுத்து பகவத் ஸ்மரணத்தில் செலுத்துகிறது. ரகுபதி ராகவ ராஜாராம் ஹரே ராம ஹரே ராம ராம ஹரே ஹரே என்பது போல் சுலபமான வார்த்தைகளை மதுரமான சங்கீதத்தோடு கலந்து செய்கிற பஜனையால் எளிதாகத் தெய்வத்தை நினைவு கொள்ள முடிகிறது.

பஜனைக்கூடம் என்ற ஓர் இடத்தில் அமர்ந்து பஜனை செய்வதோடு, நகர சங்கீர்த்தனம் செய்கிற பழக்கமும் உண்டு. வைகுண்ட ஏகாதசி போன்ற புண்ணிய காலங்களில் ஜனங்கள் எல்லோரும் பகவந்நாமாக்களை பஜனை செய்தபடி வீதி வீதியாதகச் செல்வதுதான் நகர சங்கீர்த்தனம் எனப்படுவது. விசேஷமாக மார்கழி

மாதத்தில் தினந்தோறும் அதிகாலையில் இப்படி வீதி வீதியாக பஜனை செய்து ஊர் முழுவதும் திவ்விய நாமங்களைப் பரப்புவதுண்டு.

இந்த நல்ல பழக்கம் மறுபடியும் நன்றாக உயிர் பெற்று வளரவேண்டும். கிராமங்களில் உள்ள பஜனை மடங்களில் பகவந்நாமம் இல்லாமல் வெறுமையாகப் போகவிடக்கூடாது. சமீப காலத்தில் பஜனை முறை நன்றாக விருத்தியடைந்து வருவதைப் பார்க்க சந்தோஷமாக இருக்கிறது. நம் வேதம், ஆகமம், ஆசாரம் எல்லாம் ரொம்பவும் க்ஷீணமாகப் போயிருக்கிற இந்த நாளிலும் நம் மத அம்சமாக ஏதாவது ஒன்றாவது க்ஷீணிக்காமல், தினந்தினம் விருத்தியாகி வருகிறது என்றால் அது ராம பஜனைதான். இன்று நம் மதத்துக்காக ஒவ்வொர் ஊரிலும் இருக்கிற ஸத்சங்கமே பஜனைக் கோஷ்டிதான். அந்த மட்டும் சந்தோஷம்.

பகவானிடம் பக்தியை விருத்தி செய்வதினால் பகவானின் நாம் சங்கீர்த்தனமும், பகவத் குணங்களைப் பாடுவதும் முக்கியமான ஸ்தானம் பெற்றுள்ளது. ஸ்ரீபகவத்நாம போதேந் திரர்கள், ஸனாதந்த ஸ்வரூபியான பரமாத்மா ஜகத்தின் க்ஷேமத்தைக் கருதித் தனிப்பெரும் கருணை கூர்ந்து ஸ்ரீ விஷ்ணு, ஸ்ரீ பரமேஷ்வரன் முதலிய ரூபங்களை எடுத்துக் கொண்டான். உலகை உய்விக்க அந்த மூர்த்திகள் மட்டும் போதாது என்று கருதி, ஹரி சிவ, முதலிய நாமங்களாகவும் ஆகி, அவற்றில் எப்போதும் விழித்துக் கொண்டிருக்கிறான் என்கிறார். அதாவது, நாமங்கள் வெறும் பெயர் மட்டுமில்லை. மூர்த்தியைப் போல அவையும் ஸாக்ஷாத் பகவானே. பகவானுக்கு உள்ள அத்தனை சக்தியும் நாமத்துக்கு உண்டு.

இவ்வாறு நாம சங்கீர்த்தத்தின் மூலம் பகவத் ஸ்வரூபத்தை சாக்ஷாத்காரம் செய்த புண்ணிய புருஷர்களின் முகாரவிந் தத்திலிருந்து உற்பத்தியான புனித கானங்களைப் பாடுவதால்,

பாபம் விலகி, புண்ணியம் கை கூடுகிறது. ஜயதேவர், தீர்த்த நாராயணர், ராமதாஸர், புரந்தர தாஸர், தியாகப்பிரம்மம், ஸதாசிவப் பிரம்மேந்திராள் ஆகியோரின் கீதங்கள், தமிழ்ப் பாடல்கள், ஹிந்தி, மகாராஷ்டிர பக்தி கீர்த்தனம் எல்லாம் மருதாநல்லூர் ஸத்குரு ஸ்வாமிகள் வகுத்துத் தந்த பத்ததியான சம்பிரதாய பஜனையில் பாடப்படுகின்றன. டோலோத்ஸவம், கொட்டனோத்ஸவம், வஸந்த கேளி என்றெல்லாம் பஜனையைப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடுவார்கள். கஷ்டமான சாதனையாக இல்லாமல், ஆனந்தமக ஆடிப்பாடிக்கொண்டு பகவதநுபவத்தில் இருப்பது இதெல்லாம் வழிகள். பாகவதாதி சாஸ்திரங்களிலேயே, எந்தச் சிரமமான சாதனையும் செய்யச் சக்தியும் சௌகரியமும் இல்லாத கலிகாலத்தில், நாம ஸங்கீர்தனம்தான் மோக்ஷ உபாயம் என்று சொல்லியிருக்கிறது. கலௌ ஸங்கீர்த்ய கேசவம்.

பலர் சேர்ந்து பண்ணுகிற பஜனை ஒருபுறம் இருக்கட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள அனைவரும் மாலை வேளைகளில் வீட்டிலேயே ஒரு பத்து நிமிஷமாவது பகவத் நாமங்களைப் பாடி பஜனை செய்ய வேண்டும். இதில் காரிய சாத்தியமில்லாத சிரமம் எதுவும் இல்லை. குடும்பத்தினர் எல்லோரும் பூஜை அறையில் - அல்லது பூஜைக்கென்று அறை இல்லாவிட்டால், ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்து அதன் முன் உட்கார்ந்து கீர்த்தனங்களைப் பாட வேண்டும். நாமாவளிகளை கானம் செய்ய வேண்டும். அவரவர்களும்

தங்களுக்குறிய நித்ய கர்மாநுஷ்டானங்களை விடாமல் செய்துவிட்டு, அதோடு பஜனையும் செய்ய வேண்டும். பகவானைப் பாடுவதற்கு வெட்கமே வேண்டாம். கருணையே உருவான கடவுளின் நாமத்தைச் சொல்வதில் வெட்கத்துக்கு ஏது இடம் ஏது?பெரிய சங்கீத ஞானம், ராக பாவம், சரீர வசதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. பக்தி பாவனைத்தான் முக்கியம். ஏதேதோ விளையாட்டுகளில் திரிந்து கொண்டிருக்கிற குழந்தை அம்மாவின் நினைப்பு வந்ததும், அவளிடம் வந்து, அம்மா அம்மா என்று கத்துகிறதல்லவா? அதில் வெட்கமோ, சங்கீத அழகோ இல்லை. லோக மாதாவான பரமாத்மாவை லௌகிக வியாபாரங்களிடையே சிறிது நேரமாவது நினைத்து இப்படியே ராமா, கிருஷ்ணா, சிவா, அம்பா என்று கத்த வேண்டும். இந்தப் பழக்கம்

ரொம்பவும் நல்லது. நம் நித்திய க்ஷேமத்தையும், ஆனந்தத்தையும் பெருக்கவல்ல பெரிய நிதி இது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

*நமஸ்காரம்*

பரமேஷ்வரன் மீது ஒரு ஸ்லோகம் இருக்கிறது. அதில் பக்தர் இப்படிச் சொல்கிறார். திரிபுர சம்ஹாரம் செய்த பிரபுவே. நீ என்னுடைய இரண்டு அபராதங்களை க்ஷமிக்க வேண்டும். அந்த இரண்டு அபராதங்கள் என்ன? போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்காதது ஒர் அபராதம். வரப்போகிற ஜன்மத்தில் உன்னை நான் நமஸ்கரிக்காமல் இருக்கப்போவது இரண்டாவது அபராதம். போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்கவில்லை என்று எப்படித் தெரிகிறது என்கிறாயா? எனக்கு இப்போது ஒரு ஜன்மம் ஏற்பட்டிருப்பதிலிருந்தே அது தெரிகிறது. போன பிறவியில் உன்னை நமஸ்கரித்து இருந்தால் அப்போதே எனக்கு மோஷம் கிடைத்திருக்கும். இந்த மறு பிறவியே ஏற்பட்டிராது. அது சரி, அடுத்த ஜன்மாவில் நமஸ்கரிக்க மாட்டேன் என்றது ஏன் தெரியுமா. இந்த ஜன்மாவில் உன்னை நமஸ்கரித்து விட்டேன் அல்லவா. அதனால் நீ எனக்குப் பிறவியே தர மாட்டாய். மறு ஜனமாவே இல்லாதபோது அப்போது உனக்குச் செய்ய வேண்டிய நமஸ்காரம் மட்டும் எப்படி இருக்கும். இப்படியாக போன ஜன்மா, வருகிற ஜன்மா இரண்டிலும் உன்னை வணங்காத குற்றத்தை மன்னித்துவிடு.

இந்த ஸ்லோகத்திலிருந்து என்ன ஏற்படுகிறது. மனப் பூர்வமாக ஈஸ்வரனை நமஸ்காரம் செய்து விட்டால் போதும். அவர் நம்மை ஜனன மரண சக்கரத்திலிருந்து விடுவித்து விடுவார். நம் பாவங்களையெல்லாம் போக்கி முக்தி தந்து விடுவார். இந்த ஸ்லோகத்தைச் சொன்னவர் கவித்வ சமத்காரத்தில் பாடியவரில்லை. அவர் பழுத்த அநுபவசாலி, எனவே அவரது வார்த்தையை பரிபூர்ணமாக நம்பி நாமும்

ஈஸ்வரனிடத்தில் சரணாகதி என்று விழுந்து நமஸ்காரம் பண்ணுவோம். நமஸ்கரித்தால் மோஷம் நிச்சயம் என்ற நம்பிக்கையுடன் பண்ணினால் அப்படியே கிடைக்கும். சந்தேகமில்லை.

நமஸ்காரம் செய்வதாத் தண்டம் சமர்ப்பித்தல் என்பார்கள். தண்டம் என்றால் கழி அல்லது கோல் என்று அர்த்தம். கையில் பிடித்திருக்கிற ஒரு கோலை விட்டுவிட்டால் அது அப்படியே தடாலென்று கீழே விழுந்து விடும். அப்படியே இந்த சரீரத்தை நமதல்ல, இது ஈஸ்வரனுடையது என்கிற எண்ணத்துடன் கீழே போடுவதுதான் நமஸ்காரம். நம் சரீரம் வெறும் மரக்கோல்தான். உதவாத பொருளை அது தண்டமாகி விட்டது என்கிறோம். அப்படி தண்டமான வஸ்துதான் நம் சரீரம். இதைத் தூக்கிப் பிடித்து நிறுத்தி வைத்து ஆட்டுகிற சக்தி ஈஸ்வரன் கொடுத்ததே ஆகும். இந்த உடம்பை ஏதோ நாமே தூக்கி நடத்துகிறோம் என்ற எண்ணத்தை ஒழித்துவிட்டு, அதற்கு அடையாளமாக ஈஸ்வரன் முன் இந்தச் சரீரத்தைக் கீழே போடவேண்டும். அதுதான் தண்டம் சமர்ப்பிப்பது. ஜுரம் வந்திருக்கிறது. இதிலிருந்து நம்மைக் கடைத்தேற்றுவதற்காக, நமக்கு வந்திருக்கிற சம்ஸார ஜுரத்திற்கு புரிந்துகொண்டு, அதற்கு அடையாளமாக ஸ்வாமியின் முன் தண்டாகாரமாக விழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

நாம் செய்கிறோம் என்கிற எண்ணம் போய்விட்டால் அதுவே ஸதாகால நமஸ்காரமம். அந்த அநுபவம் நமக்கு ஸித்திக்காத போதிலும் ஈஸ்வர சந்நிதியிலிருந்து அப்படி பாவித்து வணங்கித் தரையோடு, தரையாக எளிமையாகக் கிடக்க வேண்டும். இங்கே வணங்கிவிட்டால், அப்புறம் வெளியே எங்கேயும் வணங்காமல் இருக்கலாம். பெறுப்பை உன்னிடமே பூரணமாகக் போட்டேன் என்பதற்கு அடையாளம் சரீரத்தைத் தரையில் போடுவது, கொஞ்சம் பொறுப்பை நமக்கு வைத்துக் கொண்டால்கூட ஸ்வாமி தம் பங்கைக் குறைத்துக் கொண்டு விடுவார். இதில் அரைகுறைக்கு இடமே இல்லை. நம்முடைய நல்லது பொல்லாதது அவ்வளவும் அவர் விட்டபடி என்று சகல பொறுப்பையும் அவரிடம் தள்ளுவதற்கு வெளி அடையாளமாக உடம்பைத் தரையில் தள்ளி நமஸ்காரம் பண்ணவேண்டும். அப்படிச் செய்தால் நம் பாரம்

அனைத்தயும் கிருபா சமுத்திரமமான ஸ்வாமியே ஏற்று அநுக்கிரகிப்பார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

### *பக்தி*

ஒரே பேரரிவுதான் இத்தனை பிரபஞ்சங்களாகவும், ஜீவராசிகளாகவும் தோன்றுகிறது. இந்தத் தோற்றத்தைப் போக்கடித்துவிட்டால், அந்த பேரறிவுதான் எஞ்சி நிற்கும். அந்த நிலையில் காரியம் எதுவுமே இல்லை. பிரபஞ்சம், ஜீவ ராசிகள் என்கிற தோற்றங்கள் இருக்கிற வரையில்தான் பல விதமான காரியங்கள் ஏற்படுகின்றன. இவற்றைக் கடந்து, இவற்றுக்கு மூலமான பேரறிவை அடைந்துவிட்டால், முடிவில் அறிகிறவன், அறிவு, அறியப்படுகிற வஸ்து என்கிற பேதங்கள்கூட இல்லாமல் எல்லாம் ஒன்றாகிவிடுகிறது. அதைத்தான் பிரம்ம ஸாக்ஷாத்காரம் என்பது, இதுதான் ஜீவாத்மாவின் மாறுபடாத, சத்தியமான நிலை.

ஆனால் இந்த சத்தியமான நிலையை நாம் தெரிந்து கொள்ளாமல், வெறும் தோற்றமான பிரபஞ்சத்தையும், ஜீவராசிகளையுமே மெய்யென நம்பி வாழ்கிறோம். இதற்குக் காரணம் மாயை. மாயாசக்தியால்தான் ஒரே பிரம்மம் இத்தனை வெவ்வேறு வஸ்துக்களைப்போல் தெரிகிறது. மாயப் பிரபஞ்சம் ஓர் அற்புதமான நிலையில் நடக்கிறது. பலவிதமான இயற்கை விதிகள் ஒழுங்காக வகுக்கப்பட்டு, அதன் பிரகாரமே பிரபஞ்சம் நடக்கிறது. காரியமே இல்லாத பிரம்மம் மாயையால் பிரபஞ்சமாக தோன்றுகிறபோது, சிருஷ்டி, பரிபாலனம்,

சம்ஹாரம் முதலிய காரியங்கள் எல்லாம் நடக்கின்றன. காரியம் இல்லாத நிலையில் எதைப் பிரம்மம் என்கிறோமோ அதையே இந்தக் காரியங்களைச் செய்கிறபோது ஈஸ்வரன் என்கிறோம். காரியம் இல்லாத பரம் பொருளை நிர்குணப்

பிரம்மம் என்றும், அதுவே காரியத்தில் இருக்கிறபோது ஸகுணப் பிரம்மம் அல்லது ஈஸ்வரன் என்றும் அத்வைத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும். ஈஸ்வரன், பகவான், கடவுள், தெய்வம், ஸ்வாமி என்று சொல்வதெல்லாம் இந்த ஸகுணப் பிரம்மையையே.

எப்போது பார்த்தாலும் காரியம் செய்து கொண்டிருப்பதே நமக்கு இயல்பாகிவிட்டது. உடம்பால் காரியம் செய்யாத போதும், வாக்கால் பேசி காரியம் செய்யாத போதும்கூட, நம் மனசு சதா எதையாவது நினைத்துக் கொண்டே இருக்கிறது. இதுவும் காரியம்தான். இந்தக் காரியம் நின்றால்தான், அதாவது மனஸில் எண்ணமே தோன்றாமல் இருந்தால்தான். எந்தக் காரியமும் இல்லாத பிரம்ம நிலையை அடைய முடியும். ஆனால் இந்த மனஸில் ஒரு க்ஷணம்கூட அதையும் நினைக்காமல் இருக்கமுடியவில்லையே. இதை எப்படி நிறுத்தப் பழகுவது?

இந்தப் பழக்கத்துக்கு வழிதான் பக்தி. காரியமில்லாத பிரம்மத்தை நாமும் காரியமில்லாமலிருக்கிற நிலையில்தான் அநுபவிக்க முடியும். அது முடியவில்லையா? அதே பிரம்மம் சகல பிரபஞ்சங்களையும் நடத்தி வைக்கிற - அதாவது காரியத்தைச் செய்கிற - ஈஸ்வரனாக இருக்கிறதல்லவா. இந்த ஈஸ்வரனையே ஸதா சிந்தனை பண்ணு. காரியத்தை எல்லாம் அதற்கே திருப்பு. உடம்பால் நமஸ்காரம் பூஜை, வாக்கால் ஸ்தோத்திரம், மனஸால் தியானம் என்று சகல காரியங்களையும் ஈஸ்வரனிடம் செலுத்து. அவற்றை ஈஸ்வரன் அங்கீகரித்து, உன்னை பிரம்ம ஞானத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பான். இப்படிப்பட்ட இடையறாத ஈஸ்வர சிந்தனைக்குத்தான் பக்தி என்று பெயர். இதில் அன்பு ரொம்பவும் முக்கியம். அன்போடு அவனை நினைப்பதே பக்தி.

உலகத்திலுள்ள நல்லது - கெட்டது, அழகு - அவலக்ஷணம், இன்பம் - துன்பம் எல்லாமே பிரம்மத்திலிருந்து வந்தவைதாம். ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாகி பிரம்மநிலை, அடையும்போது நல்லது கெட்டது, அழகு, அவலக்ஷணம், சந்தோஷம் துக்கம் என்கிற பேதமில்லை.

ஆனால் இப்போது நாம் இருக்கிற நிலையில் இவை எல்லாம் ஒன்றாகத் தோன்றவில்லை. இந்த நிலையில்

ஈஸ்வரனை எல்லா அழகுகளுக்கும், எல்லா நன்மைகளுக்கும், எல்லா இன்பங்களுக்கும் உருவமாகப் பாவித்து அன்பு செலுத்த வேண்டும். குணமே இல்லாத பிரம்மத்தை நம்மால் நினைத்து பார்க்க முடியாது. அந்த நிற்குணத்திலிரும்தே சகல குணங்களும் தேன்றியிருக்கின்றன. ஒரு நிறமும் இல்லாத சூரிய வெளிச்சம் கண்ணாடிப் பிரிஸத்தில் பட்டு ஒளிச்சிதறலில் (Refraction) சகல வர்ணங்களையும் வாரிக் கொட்டுகிறதல்லவா. அப்படிய் நிற்குணப் பிரம்மம் மாயை என்கிற கண்ணாடியில் பட்டு ஈஸ்வரனாகி சகல குணங்களையும் வாரிக் கொட்டுகிறது. நிற்குணத்தை நம்மால் நினைக்க முடியாது. ஆனால் குணங்களை நினைக்க முடியும். ஆனால் கெட்ட குணங்களை நினைத்தால் அது நம்மை மேலும் கஷ்டத்தில், சம்ஸார சாகரத்தில்தான் இழுத்துக் கொண்டு போகும். அதனால் நல்ல குணங்களை கல்யாண குணங்களையே நினைக்க வேண்டும். வெறுமே குணத்தை நினைப்பதென்னால் முடியாது. அதனால் உயிரோடு, உருவத்தோடு, அந்த நல்ல குணங்கள் எல்லாவற்றையு ம்கொண்ட ஒருத்தனை நினைக்க வேண்டும். எல்லாக் குணங்களும் உயிர்களும் உருவங்களும் எதனிடமிருந்து வந்ததோ, எது இதையெல்லாம் ஆட்டிப்படைத்து வைத்துக்கொண்டிருக்கிறதோ, அதையே அனந்த கல்யாண குணங்களும் கொண்ட தெய்வ ரூபமாக அப்போது நினைக்க நினைக்க அந்தக் கல்யாண குணங்கள் நமக்கும் வரும்.

மனசு எதைத் தீவிரமாக இடைவிடாமல் நினைத்தாலும் அதுவாகவே மாறுகிறது. இதை மனோதத்துவக்காரர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். தோஷங்கள் அற்ற கிருபா சமுத்திரனான பகவானைத் தியானம் செய்து கொண்டே இருப்பதால் நம்முடைய தோஷங்கள் விலகி, நாம் அன்பு மயமாகிறோம். உண்மையான பக்தி வைத்துவிட்டால் அப்புறம் மனசு அன்புமயமாகிவிட, அதன்பின் அது பாபத்தில் பிரவேசிக்கவே செய்யாது. உலகத்தில் பாப எண்ணங்கள் விலகுவதற்கு பக்தியைவிட வேறு வழி இல்லை. ஆனால் பக்தி செய்வதற்கு இது மட்டும் காரணம் இல்லை. நாம் சத்தியமான நிலையை அடைவதற்கு பக்தி வழி பண்ணுகிறது என்பதுதான் முக்கியமான காரணம். மனசு என்பதே நின்றுப்போய் ஆத்ம ஜ்யோதிஸ் அப்படியே பளீரென்று அடிப்பதற்கு முன்னதாக அந்த மனதிலிருந்து

பாப அழுக்கு போக வேண்டும். இப்படிப் பாபத்தைப் போக்குவதே பக்தி.

தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

பக்தி

*பக்தி செய்வது எதற்காக ?*

ஒவ்வொரு காரணத்திற்கும் ஒரு விளைவு இருக்கிறது. பௌதிக விஞ்ஞானம் முழுவதும் இந்தக் காரணம் - விளைவு (Cause & Effect) பற்றிய விதிகளைக் குறிப்பதேயாகும். மாற்ற முடியாத இந்த விதிகளாலேயே உலகம் ஒழுங்குடன் இயங்குகிறது. ஏதோ ஒரு பேரறிவு இருப்பதால்தான் இப்படிப்பட்ட விதிகள் உண்டாகி, அவை எல்லாம் ஒன்றாக இணைந்து, உலக வாழ்வு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. பௌதிக உலகில் காரணம் - விளைவு என்கிற தவிர்க்க முடியாத சங்கிலி இருந்ததால் மனித வாழ்க்கையிலும் அது இருந்துதானே ஆக வேண்டும். நாம் செய்கிற சகல காரியங்களுக்கும் விளைவு இருந்துதான் ஆக வேண்டும். நல்ல காரியங்கள் செய்தால் அதற்குச் சமமான கெட்ட பலன்களைப் பார்க்கிறோம். கெட்ட பலன்களைத் தருகிற பலதாதா தான் பிரபஞ்சத்தை நடத்தி வைக்கிற மகா சக்தி, ஈஸ்வரன், பகவான், ஸ்வாமி, கடவுள், பரமாத்மா எனப்பட்டவன்.

மனசு இருக்கிற வரையில் அது சஞ்சலித்துக் கொண்டேதான் இருக்கும். நல்லதோடு கெட்டதையும் நினைக்கத்தான் செய்யும். புண்ணியத்தோடு பாபத்தையும் செய்து கொண்டே இருக்கும். இந்தப் பாபத்துக்கு விளைவாக கஷ்டங்ளைப் போக்கடிப்பதற்காகவே பொதுவில் எல்லோரும் பிரார்த்தனை செய்கிறார்கள். இதைத்தான் பக்தி என்று நினைக்கிறார்கள். ஈசுவரன் மனசு வைத்தால் நம் பாபத்துக்குப் பிரதியான கஷ்டத்தை தராமலும் இருக்கலாம்.

ஆனால் அவன் கஷ்டத்தைப் போக்கத்தான் வேண்டும்

என்று நிர்பந்தம் செய்ய நமக்கு யோக்கியதை இல்லை. ஏனென்றால் நம் கர்மத்துக்குப் பலனாக இந்தக் கஷ்டத்தைக் கொடுத்திருப்பவனே அவன்தான். ஆகையினால் கஷ்டம் வந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் இருக்கிற மனோபாவத்தைப் பிரார்த்திப்பதே இதைவிட உத்தமமாகும். ஆனால் இந்தப் பிரார்த்தனைகூட நிஜமான பக்தி அல்ல.

நம் கஷ்டத்தை ஈசுவரனிடம் சொல்கிறபோதே அவனுக்கு அது தெரியாது என்று நாம் நினைப்பதாக ஆகிறது. அதாவது ஈஸ்வரனுடைய எல்லாம் அறிந்த ஸர்வஞானத்துக்குக் குறை உண்டாக்குகிறோம். இந்தக் கஷ்டத்தைப் போக்கு. அல்லது கஷ்டத்தைப் பொருட்படுத்துகிற மனப்பான்மையை மாற்று என்கிறபோது நாம் கேட்டுத்தான் அவன் ஒன்றைச் செய்கிறான் என்று ஆகிறது. அதாவது தானாகப் பெருகும் அவனது காருண்யத்துக்குக் குறை உண்டாக்கிவிடுகிறோம். இப்படி ஞான சமுத்திரமாக, கிருபா சமுத்திரமாக இருக்கிற ஈஸ்வரனுடைய ஞானம், கிருபை இரண்டுக்கும் தோஷம் கற்பிக்கிற பிரார்த்தனை உண்மையான பக்தி இல்லை. ஆனால் இப்படிப்பட்ட பிரார்த்தனையால் மனச்சுமை தற்காலிகமாகவாவது லேசாகி, கொஞ்சம் சாந்தி பிறக்கிறது. நாமாகவே எல்லாம் சாதித்துவிட முடியும் என்ற அகங்காரத்தைவிட்டு ஈஸ்வரனிடம் யாசிக்கிற அளவுக்கு எளிமை பெறுகிறோமே, அதுவும் நல்லதுதான். அவனும், நாம் அவனுடைய ஞானத்துக்கும் கருணைக்கும் குறை உண்டாக்கியதைக்கூட பொருட்படுத்தாமல், நம் கர்மாவையும் மீறிப் பிரார்த்தனையை நிறைவேற்றினாலும் நிறைவேற்றலாம். ஆனாலும் ஒரு கஷ்டம் போனாலும் இன்னொரு கஷ்டம் என்று லோக வாழ்க்கையில் வந்துகொண்டேதான் இருக்கும். ஆகையால் லௌகிகமான கஷ்ட நிவிருத்திக்காக பிரார்த்தனை பண்ணுவதற்கு முடிவே இராது.

நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும் என்று சரணாகதி செய்வதுதான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனஸின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும். அப்போது நிறைந்த ஆனந்தமாக இருக்கலாம். எனக்கு வேறு ஒன்றுமில்லை என்று யாரிடம் சரணாகதி செய்துவிட்டாலும் ஒரு பதியிடம் பத்தினி சரணாகதி செய்தாலும் (அவன் தூர்த்தனான பதியாகக்கூட இருக்கலாம்). ஒரு குருவிடம் சிஷ்யன்

சரணாகதி செய்தாலும் (அந்த குரு போலியாக இருந்தாலும்கூடச் சரி) அப்புறம் நிச்சிந்தைதான். அதன் முடிவான பலனாக மோஷம்தான். ஆனால் ஏதோ புராணங்களில் இப்படிப் பதியிடம், ஆசாரியனிடம் சரணாகதி பண்ண லாயக்குள்ளவன் என்று தோன்றுகிற குரு கிடைத்து, அவனிடம் சரணாகதி செய்துவிட்டால் அப்புறம் ஸ்வாமிகூட வேண்டாம்தான். ஆனால் வாஸ்தவத்தில், நிஜமாகவே திரிபுவனங்களும் யஜமானனாக, எல்லாம் தன் சொத்தாக கொண்டுள்ள ஸ்வாமியிடம்தான், நம்மால் கொஞ்சத்தில் கொஞ்சமாவது எல்லாம் உன் உடைமையே, எனக்கென்று ஒன்றுமில்லை என்று சரணாகதி செய்து, அதனால் நிம்மதி பெற முடிகிறது.

பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கியமான காரணம் அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறேதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும், என்றோ ஒருநாள் ஒன்று நாம் அவரைவிட்டுப் பிரிகிறோம். இல்லாவிட்டால் அவர் நம்மைவிட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அனைத்தையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மை விட்டுப் பிரியாத ஒரே சாசுவதமான வஸ்து ஈஸ்வரன்தான். அவனிடம் அன்பு வைத்துவிட்டால், இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்து கொண்டே இருக்கும். இந்த அன்பு முற்றுகிறபோது யாவுமே அவனாகத் தெரியும். ஒன்றிடம் அது காரணமாகவே இன்னொன்றிடம் துவேஷம் என்றில்லாமல், எல்லாம் அவனாததால் எல்லாவற்றிடமும் ஏற்றத் தாழ்வில்லாமல் அன்பாக இருப்போம். அன்பற்ற வாழ்வு வாழ்ந்து மனுஷ்ய ஜன்மாவை விருதாவாக்கிக் கொள்ளாமல் இருக்க பக்தியே உதவுகிறது.

பக்தியால் படிப்படியாக லௌகிக கஷ்டங்களைப் போக்கிக் கொள்ளலாம். அல்லது கஷ்டத்தை பொருட்படுத்தாத நிலைக்கு மனோபாவத்தை உயர்த்திக் கொள்ளலாம். மனத்தின் அழுக்கை போக்கிக் கொள்ளலாம். அலைகிற மனஸை ஒருமுகப்படுத்தலாம். ஈஸ்வரனின் கல்யாண குணங்களை நாமும் பெறலாம். என்றும் அழிவில்லாத சாசுவதமான அன்பைப் பெற்று ஆனந்திக்கலாம். இவை எல்லாவற்றுக்கும் மேலாகக் கர்ம பலனைத் தருகிறவனைத்

தஞ்சம் புகுந்தால்தான் அவன் கர்மகதிக்குக் கட்டுப்பட்ட ஸம்ஸாரத்திலிருந்து நம்மை விடுவித்து முடிவில் முக்தி தருவான். அதாவது அவனேதான் நாமாகியிருப்பது, எல்லாமுமாகி இருப்பது என்று அநுபவத்தில் அறிந்துகொண்டு, அப்படியே இருக்கச் செய்வான். இந்த அத்வைத ஞானத்தையும் முக்தியையும் அவன் கிருபையாலேயே பெறலாம். பக்தி செலுத்துவதற்கு இத்தனை காரணம் இருக்கிறது.

இனி காரணமே இல்லாத பக்தி ஒன்றும் இருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### பக்தி

è£óíI™ô£î ð‚F

பல காரணங்களுக்காகப் பக்தி புரிந்தாலும், முக்தியை வேண்டிப் பக்தி செய்வதே இவற்றில் சிரேஷ்டமாகும். ஞானத்தினால்தான் நேரடியாக முக்தி கிடைக்கும். ஈல்வர உபாஸனையாகிய பக்தியால் அல்ல என்பதே ஸ்ரீ சங்கரர் முதலிய அத்வைத ஆசாரியார்களின் கருத்து. முக்தி என்றால் என்ன? விடுபடுவது என்று அர்த்தம். விடுபடுவதைத்தான் தமிழிலும் வீடு என்று சுருக்கிச் சொல்கிறார்கள். எதிலிருந்து விடுபடுவது. சம்சாரத்திலிருந்து விடுபடுவதைத்தான் முக்தி. மறுபடி மறுபடி பிறந்து கொண்டும் செத்துக்கொண்டும் இல்லாமல், நித்தியமான சத்ய நிலையை அடைவதுதான் முக்தி. மனசு என்று ஒன்று இருப்பதால்தான் சம்ஸாரபந்தம் தெரிகிறது. மனசு மறைந்தால்தான் பந்தத்திலிருந்து விடுதலை. ரூபம், குணம், இவை இருக்கிற வரையில் இவற்றை அநுபவிக்கிற மனசும் இருக்கத்தான் செய்யும். பக்தி செலுத்துகிறபோது ஈசுவரனுடைய ரூபம் குணம் எல்லாவற்றையும் மனஸினால் அநுபவிக்கிறோம். பக்தி நிலையிலும் பலவிதமான உணர்ச்சிகள், பரவசம், ஆனந்தம்,

அழுகை எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன. மனசு அதற்கு ஆதாரமான வஸ்துவில் கரைந்துபோய் அந்த ஆதார

வஸ்து மட்டும் நிற்கும்போதுதான் எந்த மாறுதலும் இல்லாத சாந்த நிலை - முக்தி அல்லது மோக்ஷநிலை சித்திக்கிறது. இந்த மனசுக்கு ஆதாரமாக இருக்கிற ஆத்மா என்பது என்ன என்று அனவரதமும் விசாரம் செய்துகொண்டே இருப்பதுதான் ஞான மார்க்கம் என்பது. இதே விசாரத்தில் மனஸை முழுக்கினால், கடைசியில் ஈசுவரானுக்கிரகத்தினால் மனசு மறைந்து ஆத்மா இன்னதென்று தெரிந்துவிடுகிறது. ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்கிற அந்த நிலயே விடுதலை அல்லது முக்தி என்று தெரிகிறது.

ஆனால் கோபாலகிருஷ்ண பாரதியார், பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே என்று பாடுகிறார். வைகுண்டத்துக்குப் போவதுதான் முக்தி. கைலாசத்துக்குப் போவதுதான் முக்தி என்பவர்களைப்போல் இவர் சொல்ல வில்லை. அந்தந்த தேவதைகளிடம் பக்தி செலுத்தினால், அதற்கு உரிய லோகத்துக்கு - வைகுண்டம், கைலாசம் போன்றவற்றுக்கு - செல்லலாம். த்வைதிகளும் விசிஷ்டாத் வைதிகளும் இதையே முக்தி என்பார்கள். ஆனால் இங்கேயும் ஈஸ்வரன் - பக்தன் என்கிற பேதமும் அதை அநுபவிக்கிற மனஸின் ஆட்டமும் இருக்கத்தான் செய்யும். எல்லாம் ஒன்று பட்டுப்போகிற அத்வைத முக்தி வேறானது. கோபால கிருஷ்ண பாரதியார் அத்வைதியாக இருந்தும் இப்படிப் பாடுகறார்.

அவர் மட்டுமமில்லை. ஞானமம்தான் முக்திக்கு நேர் சாதனம் என்று சொன்ன அத்வைத பரமாச்சாரியான சங்கரரே நிறைய பக்தி ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். க்ஷேத்திராடனமும் தீர்த்தாடனமும் செய்திருக்கிறார். ஷண்மத ஸ்தாபனம் என்று ஆறுவித மூர்த்திகளின் வழிபாட்டை நிலை நாட்டியிருக்கிறார். அவருடைய மடத்தில் வந்துள்ள நாங்களும் மணிக்கணக்காக மூர்த்தி பூஜை பண்ணுகிறோம். இது ஏன்?

ஆத்மா எப்படி இருக்கும் என்று மனசுக்குத் தெரியாது. மனஸே ஆத்மாவிலிருந்துதான் முளைத்திருக்கிறது. எனவே, இந்த மனஸால் ஆத்மாவை எப்படி அளக்க முடியும். மனசு மறைந்தால்தான் ஆத்ம ஸ்வரூபம் பளீரென்று பிரகாசிக்கிறது.

ஆனால் நம் மனஸோ அலைபாய்ந்த படிதான் இருக்கிறது. எனவே முதலில் பல திசைகளில் போகிற சிந்தனையை ஒருமுகப்படுத்த வேண்டும். இதற்குத்தான் பக்தியை வழியாக வைத்திருக்கிறார்கள். உலக விஷயங்கள் மனஸை நானாதிசையிலும் சிதற அடிப்பவை. ஆனால் ஈஸ்வரனையே சிந்திக்கச் சிந்திக்க மனசு அவன் ஒருவனிடமே குவிந்து, தைல தரையாக - அதாவது எண்ணெய் பிசிர் இல்லாமல் கம்பியாய் ஒழுகுவதுபோல, அவனிடமே ஒருமுகப்படுகிறது. மனசு ஒருமுகப்படுகிற இந்த நிலை முற்ற முற்ற மனஸே மறைந்து போகத் தொடங்கும். இவ்விதமாக ஞானத்துக்கு பக்தியே துணைபுரியும். இதனால்தான் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் பக்தியை ஞானத்துக்குப் படியாக வைத்தார்கள்.

ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்கிற முக்தி, செத்துப்போனபின் எங்கேயோ போய் அடைகிற நிலை இல்லை. எப்போதும் ஆத்மா இருந்துகொண்டேதான் இருக்கிறது. அது இல்லாவிட்டால் நம் சரீர யாத்திரை ஏது? ஆகையால் இந்த சரீரம் இருக்கிறபோதே ஆத்மாவை அநுபவிப்பதற்கான முக்தி அடைந்த பின்னும்

நம்முடன் உயிர் வாழ்கிற பிரம்ம ஞானியைத்தான் ஜீவன் முக்தன் என்கிறோம்.

இப்படிப்பட்ட பிரம்ம ஞானிகளும் சிலர் பக்தர்களாக இருந்திருக்கிறார்கள். அதாவது பிரம்மத்தின் ஏதாவது ஒரு தேவதா ரூபத்தில் எல்லை இல்லாத அன்பை வைத்துருக்கிறார்கள். இவர்களுடைய பக்திதான் காரணமில்லாத பக்தி. பக்தி செய்வதால் இவர்கள் பெறக்கூடிய பயன் ஏதும் இல்லை. ஏனெனில் வாழ்க்கைப் பயன்களில் எதற்கு மேலாக ஏதுமில்லையோ அந்த முக்தி நிலையை இவர்களுக்கு ஸித்தித்து விட்டது. அதற்கு மேலாக அடைய வேண்டியது என்ன இருக்கிறது. இருந்தாலும் ஈசுவரனாகத் தோன்றுகிற பிரம்மத்தின் லீலா சக்தியை இவர்கள் ரஸித்துக்கொண்டு, அற்புத லீலை செய் கிற அந்த ஈஸ்வரனை ஓர் இஷ்ட மூர்த்தியாகக் கண்டு, அதனிடம் காரணம் இல்லாத - பிரதிப் பிரயோஜனமே எதிர்பாராத உத்தமமான அன்பைப் பொழிகிறார்கள். மோக்ஷம் வேண்டும் என்ற பிரயோஜனத்தைக்கூட ஜீவன் முக்தன் எதிர்ப் பார்க்க

அவசியமில்லையே. இந்த பக்தியைத்தான், பிறவியிலிருந்தே பிரம்ம நிஷ்டரான சுகர், அஹிதுகீ பக்தி என்கிறார். ஹேது என்றால் காரணம், காரணமே இல்லாதது அ- ஹைதுகீ. இது முக்தி வந்ததற்குப் பிந்தைய நிலையிலுள்ள பக்தி.



## º,F,° º‰¬îò G¬ôJ™ ð,F

ஒரு தகப்பனார் இருக்கிறார். தம் பெண்ணுக்கு நல்ல வரனாகப் பார்த்து கல்யாணம் செய்ய வேண்டும் என்று அலைகிறார். வரன் கிடைக்கிறான். கல்யாணம் நிச்சயமாகிறது. கல்யாணமானவுடன் பெண்ணை மாப்பிள்ளை அழைத்துக் கொண்டு போய்விடப்போகிறான். கன்னிகாதானம் செய்கிறபோது தகப்பனாரின் மனசு எப்படி இருக்கும். பெண்ணுக்கு நல்ல வரன் கிடைத்ததே என்ற சந்தோஷம் ஒரு பக்கம் இருக்கத்தான் செய்யும். ஆனால் அதை அமுக்கிவிடுகிறமாதிரி, இத்தனை காலம் வளர்த்த பெண் நம்மை விட்டுப் போகிறாளே என்ற துக்கம்தான் அதிகமாக இருக்கும். இவரேதான் வரன் பார்த்தான். தேடித்தேடிப் பார்த்தார். கடன் கிடன் வாங்கிப் மனஸாரச் செலவழுத்துக் கல்யாணமும் செய்கிறார். ஆனாலும் கன்னிகாதான சமயத்தில் அவருடைய மனஸை முறுக்கிபப் பிழிகிற மாதிரி இருக்கிறது. கண்ணில் ஜலம்கூட வந்துவிடும்போல் இருக்கிறது.

முக்தி நிலையை அடைய அருகதை பெற்ற சாதனைகளை முமுக்ஷு என்பார்கள். இடையறாத பக்தி செலுத்திச் செலுத்தி ஒருவன் இந்த அருகதையைப் பெற்றுவிடுகிறான். அவனுக்கு முக்தி கிடைக்கிற சமயம் கைக்கு எட்டினாற்போல் வந்துவிடுகிறது. அப்போது அவன் ஒரு தர்ம சங்கடமான நிலையில் இருக்கிறான். கன்னிகாதானம் செய்து தருகிற தரப்பனாரின் மனநிலை மாதிரிதான் இவனுக்கும் இருக்கிறது. தகப்பனாரே வரன் தேடி அலைகிற மாதிரி இவனேதான்

முக்தியாகப் பெரிய பிரயாசை செய்து பக்தி மார்க்கத்தில் எல்லா அநுஷ்டானமும் செய்தான். அதனால் மனசு பூரணமாகச் சுத்தமாகிப் பரமாத்மாவில் இரண்டறக் கரைகிற நிலை வந்துவிட்டது. கரைந்தபின் பகவானும் இல்லை. பக்தியும் இல்லை. மணப்பெண்ணை வரனுக்குக் கொடுக்கிற தகப்பனாருக்கு அழுகை வருகிற மாதிரி

மணப்பெண்ணை பரமாத்மாவுக்குத் தத்தம் செய்கிற முமுக்ஷுவுக்கும் பெரிய துக்கம் உண்டாகிறது.

இந்தத் துக்கத்தை சுலோகத்தில் வெளியிடுகிறார் ஒருகவி. பஸ்மோத்தூளன பத்ரமஸ்து பவதே என்று ஆரம்பமாகும் சுலோகம் அது.

பரமேஷ்வரன் என் பக்தியில் மகிழ்ந்து என்னை மோக்ஷத்தில் சேர்க்க இருக்கிறான். இனிமேல் நான் விபூதி பூசிக் கொண்டும் ருத்ராக்ஷம் போட்டுக் கொண்டும், பூஜை ஜபம் முதலிய படிகளில் ஏறிப்போக வேண்டியதில்லை. ஏ விபூதியே. போய் வா. உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும் சுபமான ருத்ரா மாலையை, உனக்கும் பிரியா விடை கொடுக்கிறேன். ஹா, பக்தி மார்க்கப் படிகட்டுகளே, உங்களையும் விட்டுப் பிரிகிறேன். எனக்குப் பக்தி, பகவத் குணாநுபவம் என்கிற ஆனந்த பிரபஞ்சத்தையே தந்த உங்களை எல்லாம் சிதைத்துப் போடுகிற மோக்ஷம் என்கிற மகாமோகத்தில் தோய்ந்து போகிறேன் என்கிறார்.

மோகத்தைப் போக்குவதுதான் மோக்ஷம். ஆனால் பக்தி இன்பத்தையும், அதற்கான சாமக்கிரியைகளையும் கைவிட்டுவிட்டு மோக்ஷம் பெற வேண்டும் என்கிறபோது, இந்தப் பரம பக்தருக்கு மோக்ஷமே மோகமாகத் தோன்றுகிறது.

இதேபோல் கிருஷ்ண கர்ணாமிருத த்திலும் ஒரு சுலேகம் இருக்கிறது. பக்தி முற்ற கருமம் நசிக்கிறதைப் பற்றியது இந்த சுலோகம். (ஸந்த்யாவந்தன பத்ரமஸ்து பவதே, என்று ஆரம்பிக்கும் போது அது) கிருஷ்ண பக்தி அதிகமான ஆக லீலாசுகரால் ஸந்தியா வந்தனம், பித்ரு தர்ப்பணம் ஆகிய கர்மாநுஷ்டானங்களைக்கூடச் செய்ய முடியவில்லை. அவற்றிலிருந்து பிரியா விடை பெறுகிறார்.

முதல் நிலையில் அவரவருக்கான கர்மத்தை சாஸ்திரப்

பிரகாரம், இது வேண்டுமா, வேண்டாமா? என்று எதிர்க்கேள்வி கேட்காமல் அநுஷ்டிக்க வேண்டும். இதனால் மனத்தில் வெறுப்பு குறைகிறது. சித்தசுத்தி ஏற்படுகிறது. அழுக்கு நீங்க மனசு ஈசுவரனிடம் அதிகமாக ஈடுபட்டு ஒருமுகமாகத் தொடங்குகிறது. இதுதான் பக்தி. இரண்டாம் நிலை. பக்தி முற்றும்போது ஞானம் சித்திக்கிறது. இது இறுதி நிலை.

கர்மத்தையோ, பக்தியையோ நாமாக விடவேண்டியதில்லை. பழுத்த பழம் தானாகக் காம்பிலிருந்து விடுபடுகிற மாதிரி கர்மம். பக்தி எல்லாம் அதுவும் பூரணமடைந்தவுடன் தாமாகவே நழுவிப்போகும்.

பக்தியை விட்டு நேராக முக்திக்கு நாம் முயற்சி பண்ண வேண்டுமென்பதே இல்லை. பக்தி பண்ணிக்கொண்டிருந்தாலே போதும். தானே அதுவாக முக்திக்கு அழைத்துப் போகும். எனவே முக்தி வேண்டும் என்று பிரார்த்திக்காமல் பக்தி வேண்டும் என்று வேண்டிக்கொண்டேயிருந்தால் போதும். கோபால கிருஷ்ண பாரதியார் சொன்னபடி பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## பக்தி

### *"என்னையே எனக்குக் கொடு"*

உண்மையான பக்தன் ஒருவன், பரமேஷ்வரனுக்குப் பூஜை செய்ய

விரும்புகிறான். உடனேயே அவனுக்கு ஒரு பெரிய சந்தேகம் வந்துவிடுகிறது. ஈஸ்வரனிடமே கேட்கிறான். ஈச்வரா. நான் உனக்கு உபச்சாரம் செய்வதாக நினைத்துப் பூஜை செய்தாலும் உண்மையில் அபசாரம் செய்வதாகத் தோன்றுகிறது. திரிலோகமும் வியாபித்த உன் திருவடியை

நான் ஓர் உத்தரணி தீர்த்தத்தால் அலம்ப முடியுமா. விசுவாகரமான உன் சரீரத்திற்கு இந்த சிறிய வஸ்திரத்தைக் கட்டி மூட முடியுமா. உனக்கு நமஸ்காரம் பண்ணினால், என் காலை எந்தப் பக்கம் நீட்டினாலும் நீ தான் இருக்கிறாய். ஆனபடியால் உனக்கு நேரே காலை நீட்டிய தோஷம் அல்லவா எனக்கு ஏற்படுகிறது. சரி பூஜையே வேண்டாம் என்று பிரார்த்தனை செய்யப் பார்த்தால், எல்லாம் அறிந்த ஸர்வக்ஞான உன்னிடம் பிரார்த்திப்படும் அபசச்சாரமாக அல்லவா இருக்கிறது. பிரார்த்தனை என்றால் உனக்குத் தெரியாதவற்றை நான் கேட்பதாகத்தானே ஆகும். நீ ஸர்வக்ஞன் என்பதற்கு என் பிரார்த்தனையே குறைவு உண்டாக்குகிறது. இருந்தாலும் பிரார்த்தனை செய்யவேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிற அளவுக்கு நான் குறை உள்ளவனாகவே இருக்கத்தானே செய்கிறேன். அதனால் அந்தக் குறை நீங்குவதற்காக உன்னிடம் எதைப் பிரார்த்திப்பது எல்லாமான நீயேதான் நானாகவும் ஆகியிருக்கிறாய் என்று தெரியாமல் என்னைக் குறைவு படுத்திக் கொண்டிருக்கிறேனே. இந்தக் குறையை நீக்கு என்றே பிரார்த்திக்கிறேன். நீ அகண்ட ஆனந்த ஸ்வரூபம். உன்னைத் தவிர வேறில்லை என்று வேதம் சொல்கிறது. இருந்தாலும் பூரண ஆனந்தமாக உனக்கு வேறாக இப்படிக் கோணலும் மாணலுமாகக் குறையோடு நான் ஒருத்தன் இருப்பதுபோல் தோன்றுகிறதே. இல்லாவிட்டால் அழுதுகொண்டு இப்படி நான் பிரார்த்தனை பண்ண வரவேண்டியதே இல்லையே. இப்படி நான் உனக்கு வேறாக இருப்பதாகத் தோன்றுவதைப் போக்கடி. போக்கினால் நீதான் எல்லாமும், நீதான் நானும். அதாவது நான்தான் எல்லாமும் என்றாகும் அதாவது உன்னிடம் நான் இதைத்கொடு அதைக்கொடு என்று வெளி வஸ்துக்களைக் கேட்கவில்லை. என்னையே எனக்குக் கொடு என்றே பிரார்த்திக்கிறேன். இப்படிச் சொல்கிறார் அந்த பக்தர். இந்த ரீதியிலேயே சிவ மானஸிக பூஜா என்ற ஸ்தோத்திரத்தில் பிரார்த்தித்திருக்கிறார் ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திராள்.

மஹ்யம் தேஹி ச பகவான்

மதீயமேவ ஸ்வரூபம் ஆனந்தம்

என் ஆனந்த ஸ்வரூபத்தையே எனக்குக் கொடு என்கிறார்.

இப்போது நாம் எல்லோரும் நம் நிஜ ஸ்வரூபத்தை விட்டுவிட்டு வேஷத்தில் இருக்கிறோம். நமக்கு வேண்டியவர்களை விட்டுவைத்தால் தவிக்கிறோமே, நம்மையே விட்டுவிட்டதற்கு எவ்வளவு தவிக்க வேண்டும். நம் ஆனந்த ஆத்ம ஸ்வரூபத்தோடு அதுவே நாமாக எப்போது கலக்கப்போகிறோம் என்ற தவிப்பும், அதைப்பற்றிய நினைப்பும் நமக்கு ஸதா இருக்க வேண்டும். பரமாத்மாவுடன் கலப்பதற்காக இப்படிச் சகிக்கமுடியாமல் தவிப்பதுதான் உண்மையான பிரேமை. அந்தப் பிரேமைக்குத்தான் பக்தி என்று பெயர். இதற்கு முதல்படியாக வெளிப்பூஜை, கோயில்வழிபாடு எல்லாம் வேண்டியிருக்கிறது. உலக நினைப்பே ஓயாத காரியமாக இருப்பவர்களுக்கு ஆரம்பத்தில் இவைதான் பரமாத்மாவை

நினைக்கச் சாதனங்களாகும். இந்தக் கட்டத்தில் ஸ்வாமி கோவிலில் மட்டுமின்றி எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறார். நாமும்கூட அவரேதான் என்று நாம் உணராவிட்டாலும் பரவாயில்லை. மூல விக்கிரகத்தில்தான் ஸ்வாமி இருக்கிறார் என்று நினைத்து, கோவில் தூணிலேயே நாம் பிரசாதக் கையை துடைத்துவிட்டு வந்தாலும் பாதகமில்லை. மூல விக்கிரகத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயப்பட்டு அங்கே துடைக்காத அளவிற்கு வந்திருக்கிறோமல்லவா. ஸ்வாமி இல்லவே இல்லை என்று நினைக்காமல் எங்கேயோ ஓரிடத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயபக்தியுடன் ஆரம்பித்தாலே போதும். சிரத்தை தளராமல், நம்பிக்கை மாறாமல், அப்பியாசம் செய்துகொண்டே இருந்தால், நாளாவட்டத்தில் ஸ்வாமி எங்கும் இருக்கிறார், எல்லாமாக இருக்கிறார் என்பது புத்திக்குப் புரியும். புத்திக்குப் புரிவது அநுபவமாக ஆவதற்கு, என்னையே எனக்குக் கொடு என்று பிரார்த்திக்கொண்டிருக்க வேண்டும். ஞானாம்பிகை கிருபை செய்வாள்.

## ðèõˆð£î˜ î¼‹ ð‚F ô†êí‹

பக்தனாகி இருப்பவனும் பகவன்தான் என்ற உணர்வோடு, ஸாராம்ஸத்தில் அவன் வேறு, தான் வேறு அல்ல என்ற அநுபவ ஞானத்தோடு, ஈஸ்வரனை பக்தியோடு அநுபவித்த அத்வைத ஞானிகள் பலர் இருந்திருக்கிறார்கள். மது ஸூதன ஸரஸ்வதி, அப்பைய்ய தீக்ஷிதர், ஸதாசிவ பிரம்மேந்திராள், பகவந்நாம பேதேந்திராள் ஆகிய பரம ஞானிகள் இவ்விதத்திலேயே பக்தி செய்திருக்கிறார்கள். நிற்குணமாக இருக்கிற பிரம்மத்துக்கும் அனந்த கல்யாண குணம் கொண்ட ஈஸ்வரனுக்கும் இடையே இவர்கள் எந்த பேதமும் காணவில்லை. நிர்குணமாக, நிஷ்களமாக எந்த வஸ்துவை யோகிகள் தியானத்தில் அநுபவிக்கிறார்களோ, அதையே யமுனா தீரத்தின் மணல் வெளியில் நீலஜோதி வெள்ளமாக ஒடி விளையாடும் கண்ணனாக நான் கண்டு மகிழ்கிறேன் என்கிறார் மதுஸூதன ஸரஸ்வதி. ஞானிகள் எல்லாத் தெய்வ வடிவங்களும் ஒன்றேயான பிரம்மம்தான் என்று கண்டு கொண்டவர்கள். என்றாலும் அவற்றில் பூர்வ காலத்தில் தங்கள் மனத்தைக் கவர்ந்த ஒரு ரூபத்தில் ஞானம் வந்த பின்னும் விசேஷ பக்தி செலுத்தினார்கள்.

அத்வைத ஞான சமுத்திரமான சங்கர பகவத்பாதர்கள் அத்தனை தெய்வங்களையும் பிரம்ம ஸ்வரூபங்களாகவே வைத்து ஸ்தோத்திரம் செய்திருக்கிறார்.

அத்வைத ஞான சமுத்திரமான பகவத் பாதர்கள் சிவாநந்த லஹரியில் வெகு அழகாக வர்ணித்திருக்கிறார். ஐந்து உதாரணங்களைக் கொடுத்து வர்ணித்திருக்கிறார். அழிஞ்சில் விதை எப்படித் தாய் மரத்துடனேயே ஒட்டிக் கொள்கிறதோ, ஊசி எப்படி காந்தத்தால் கவரப்படுகிறதோ, பதிவிரதை எப்படித் தன் பதியின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ, கொடி எப்படி மரத்தைத் தழுவி வளர்க்கிறதோ, நதி எப்படி சமுத்திரத்தில் கலக்கிறதோ அப்படியே பசுபதியின் பாதார விந்தங்களில் ஸதா சர்வ காலமும் மனத்தை அமிழ் ந்திருப்பது தான் பக்தி என்பது என்கிறார் ஸ்ரீ ஆச்சாரியாள். (அங்கோளம் நிஜ பீஜ என்கிற ஸ்லோகம்)

ஏறு அழிஞ்சல் என்று மரம் உண்டாம். அதன் காய் முற்றியவுடன் பூமியில் விழுந்து உடையும். உடன் உள் இருக்கிற விதைகள் ஏதோ ஓர் ஆகர்ஷண சக்தியால் நகர்ந் து நகர்ந்து வந்து மீண்டும் தாய் மரத்தோடேயே ஒட்டிக் கொள்ளும். ஒட்டிக் கொண்டபின் மூலமான மரத்துக்குள்ளேயே மறைந்துவிடும் என்கிறார்கள். பகவானிடமிருந்து பிரிந்து வந்திருக்கிற நாம் இப்படியே எப்போதும் அவன் பக்கமாக நகர்ந்து நகர்ந்துபோய் முடிவில் அவனிடம் ஒட்டிக் கொண்டு ஒன்றாகிவிட வேண்டும். ஊசி காந்தத்தை நோக்கிப் பாய்த்து ஒட்டிக் கொள்வது அடுத்த உதாரணம். காந்தத்தில் சேர்ந்த ஊசிக்கும் காந்த சக்தி உண்டாகி அது மற்ற இரும்புப் பொருட்களை இழுப்பதுபோல், பக்தனுக்கும் பகவானின் குணங்களும் சக்திகளும் உண்டாகும் என்று இந்த உதாரணத்தில் காட்டுகிறார். அடுத்தது பதிவிரதையின் உதாரணம். பதிவிரதையின் நினைவு, பேச்சு, காரியம் அனைத்தும் பதியைச் சுற்றிச் சுற்றியே இருப்பதுபோல நம் மனோ, வாக்கு, காரியங்கள் பகவானையே பற்றி இருக்க வேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது. பதியை மூல சுலோகத்தில் விபு என்கிறார். சர்வ வியாபகன் என்பது இதன் பொருள். இதனால் பகவானை ஏதோ ஓர் இடத்தில் மட்டும் இல்லாமல், எங்குமாக எல்லாமாக இருப்பதாக பாவிக்க வேண்டும் என்று உணர்த்துகிறார். அடுத்தபடியாக கொடியின் உதாரணம். கொழு கொம்பைச் சுற்றிக் கொள்கிற கொடியை நாம் சிறிது விலக்கிப் பிரித்துவிட்டால்கூட அது படாத பாடு பட்டுக் கொஞ்ச நேரத்திலேயே மறுபடியும் கொம்பை வளைத்துச் சுற்றிக் கொண்டு விடும். நம் மனஸை ஈசுவர ஸ்மரணையிலிருந்து அலைகழிக்கிற இடைஞ்சல்கள் எத்தனை வந்தாலும் நம் லக்ஷியத்தைப் பிடிவாதமாகப் பிடித்திருக்க வேண்டும் என்பதை இந்த திருஷ்டாந்தம் உணர்த்துகிறது. கடைசியில் நதி - சமுத்திர உபமானம். இதுவே பரம அத்வைதம். கடல்தான் மழையாக விழுந்து பிறகு ஆறாகியிருக்கிறது. இரண்டும் வேறு வேறு அல்ல. ஒரு நதியானது எந்த மலை உச்சியில் பிறந்தாலும், அலுக்காமல் சளைக்காமல் ஒடி ஒடி வந்து கடைசியில் கடலில் கலந்து தன்னுடைய தனிப் பெயரையும் உருவத்தையும் இழந்து கடலாகவே ஆகிவிடுகிறது. கடல் அதை எதிர்கொண்டு அழைத்துக் கொள்கிறது. இதனால்தான்

நதி சங்கமங்களுக்கு சிறிது தூரம் இப்பாலே அந்த ஆற்றின் ஜலம் உப்புக் கரிக்கிறது. இப்படியே நாமும் நிஜமான பக்தி செலுத்தினால் கருணாசமுத்திரமான பகவான் முன்னே வந்து நம்மை ஆட்கொண்டு தானாக்கிக் கொள்வான்.

முதலில் பொருள் வேண்டும். பவிஷு வேண்டும் என்று வியாபார ரீதியில் பக்தி செய்ய ஆரம்பித்தாலும், பகவானின் குணவிசேஷம் காரணமாக அவனுக்காகவே அவனிடம் அன்பு செலுத்துகிற பக்குவத்தைக் கொஞ்சமாகப் பெறுவோம். கடைசீயில் குண விசேஷம் எதுவும் இல்லாத பரமாத்மா ஸ்வரூபமாகவே நாமும் அவனில் கரைந்து அவனாகவே ஆவோம்.

லோக ரீதியில் நன்றாக வாழ்க்கை நடத்துவதற்கும் சரி, த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் முதலிய ஸித்தார்தங்களின் அநுபவத்திற்கும் சரி, பக்தி என்பது இன்றியமையாததாகிறது. மோக்ஷம் அடையப் பின்பற்றும் உபாயங்களில் தலைசிறந்தது பக்தியே என்கிறார் ஸ்ரீ பகவத்பாதர். ஆத்ம ஸ்வரூபத்தை உணர்த்துவதுதான் பக்தி என்றும் அதையடுத்துச் சொல்கிறார்.

மோக்ஷஸா தன ஸாமகர்யாம் பக்திரேவ கரீசயஸீI

ஸ்வஸ்வரூபா நுஸந்தானம் பக்திரித்யபிதீயதே II



Þwì «îõ¬î

மநுஷ்யர்கள் மனப்பான்மைகள் பல தினுசாக இருக்கின்றன. ஒவ்வொரு விதமான மனப்பான்மை உள்ளவர்களையும் ஆகர்ஷித்து, அவர்களைப் பக்தி செலுத்த வைத்து, அவர்கலுடைய மனத்தைச் சுத்தம் செய்து, சித்தத்தை ஏகாக்ர (ஒருமை)ப்படுத்தவே பரமாத்மா பல பல தேவதா

ரூபங்களாக வந்திருக்கிறது.

இந்த ஹிந்துக்களுக்கு எத்தனை கோடி சாமிகள். என்று அந்நிய மதஸ்தர்கள் நம்மை கேலி செய்வதுண்டு. உண்மையில் ஒன்றுக்கு மேற்பட்ட ஸ்வாமி இருப்பதாக விஷயம் தெரிந்த எந்த ஹிந்துவும் எண்ணவில்லை. வைதிக மதம் ஸ்வாமி ஒருவரே என்று கண்டது மட்டுமில்லை. இந்த ஜீவனும்கூட அதே ஸ்வாமிதான் என்று வேறெந்த மதமும் கண்டுபிடிக்காததையும் கண்டுபிடித்திருக்கிறது. எனவே, பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துகிற மகா சக்தியாக ஒரு ஸ்வாமிதான் இருக்கிறது என்பதில் எந்த விஷயமறிந்த ஹிந்துவுக்கும் சந்தேகமில்லை. ஆனால் அந்த ஸ்வாமி பல ரூபத்தில் வரமுடியும். அப்படிப்பட்ட யோக்கியதையும் கருணையும் அதற்கு உண்டு என்று இவன் நம்புகிறான்.

ஒரே ஸ்வாமி நம் தேசத்தின் மகாபுருஷனாகளுக்குப் பல ரூபங்களில் தரிசனம் தந்திருக்கிறார். அந்தந்த ரூபங்களுக்குறிய மந்திரம், உபாஸனா மார்க்கம் எல்லாவற்றையும் அந்த மகாபுருஷர்கள் நமக்குத் தந்திருக்கிறார்கள். இவற்றை முறைப்படி அநுஷ்டித்தால் நாமும் அந்தந்த தேவதையின் அநுக்கிரகத்தைப் பெற முடியும். எந்த தேவதையாக இருந்தாலும் சரி. அது முடிவில் பரமாத்மாவே. ஆகையால், நாம் சந்தேகம் கொள்ளாமல் பூரண சிரத்தையோடு பக்தி வைத்தால் அது நமக்குச் சம்சார பந்தத்திலிருந்து விடுதலை தரும். இந்த விடுதலைக்கு நாம் பக்குவப்படுவதற்கு முன் லௌகிக வேண்டுதல்களைக்கூட நிறைவேற்றி அநுக்கிரகிக்கும்.

அவரவர் மனத்தைப் பொறுத்து ஒன்றில் பிடிமானம் கொள்வதற்கே இத்தனை தேவதைகள் இருக்கின்றன. தாயாரிடம் குழந்தைப்போல் பரமாத்மாவை அநுபவிக்க வேண்டும் என்கிற மனப்பான்மை உடையவனுக்கு தக்ஷிணாமூர்த்தி இருக்கிறார். ஆனந்தமாக ஆடிப்பாடி பக்தி செலுத்துவதற்குக் கிருஷ்ண பரமாத்மா இருக்கிறார்.

இஷ்டம் இருந்தாலும், இஷ்டம் இல்லாவிட்டாலும் ஏதோ ஒரு மகா சக்தியிடம் பக்தி செலுகத்துவது என்று ஏதோ ஒரு தத்வத்தை மட்டும் காட்டாமல், நம் மனசுக்கு எப்படி இஷ்டமோ, அதற்கு அநுசரணையாகவே அந்த மகாசக்தியை ஒரு மூர்த்தியில் பாவித்து, வெறும் தத்வத்தை ஜீவனுள்ள

ஒரு அன்பு உருவகமாக பாவித்து, வெறும் பக்தி செய்வதற்கு நம் மதத்தில் உள்ள இஷ்ட தேவதை வழிபாடே வழி வகுக்கிறது. அன்போடு உபாஸிக்க வேண்டுமானால், உபாஸனைக்குறிய மூர்த்தி நம் மனோபாவத்துக்குப் பிடித்தமானதாக இருந்தால்தானே முடியும். இதனாலேயே இஷ்ட தேவதை என்று தனக்குப் பிடித்த மூர்த்தியை உபாஸிக்க நமது மதம் சுதந்திரம் தருகிறது. நம் மனப்போக்குப் பிடித்தது என்கிற நிலையில் ஆரம்பத்தில் ஏதோ ஒரு மூர்த்தியை இஷ்ட தேவதையாக்கிக் கொண்டாலும், போகப் போக அதனிடம் உண்மையான பக்தி உண்டாக உண்டாக, நமக்கென்று என்ன ஒரு தனி மனப்போக்கு? என்று அதையும் விட்டுவிட அந்த தேவதையே அநுக்கிரகம் செய்யும். அப்புறம் எல்லாமே ஓர் பரமாத்ம வஸ்துவாகத் தெரியச் செய்யும்.

அவரவரும் தமக்கு இஷ்டமான தேவதையே உபாஸிக்கு ம்போதே மற்றவர்களுடைய இஷ்ட தேவதைகளைப் தாழ்வாக எண்ணக்கூடாது. நமக்கு எப்படி இந்த ரூபத்தில் பரமாத்மா அநுக்கிரகம் பண்ணுகிறாரோ அப்படியே மற்றவர்கலுக்கு மற்ற ரூபங்களின் மூலம் அநுக்கிரகம் பண்ணுகிறார் என்று தெளிவு பெற வேண்டும். அந்தந்த தேவதைக்குறிய புராணத்தைப் பார்த்தால் அது ஒன்றே முழுமுதற் கடவுள். மற்ற தேவதை எல்லாம் அதற்குக் கீழானவை. இந்த அவை பூஜை செய்தன. இதனிடம் அவை தோற்றுப் போயின என்றெல்லாம் இருக்கிறதே என்று கேட்கலாம். இதற்கு நஹி நிந்தா நியாயம் என்று பெயர். அதாவது இதர தேவதைகளை நிந்திப்பது பௌராணிகரின் நோக்கமல்ல. இந்த ஒரு தேவதையை ஆராதிப்பவருக்கு மனம் சிதறாமல் இது ஒன்றிடமே தீவிரமாகப் பற்றுதல் ஏற்படுத்த வேண்டும் என்பதே புராணத்தின் நோக்கம். இதற்காகவே இந்த தேவதைக்கு மட்டும் மற்றத் தேவதைகளுக்கு இல்லாத உத்கர்ஷம் (உயர்வு) சொல்லப்படுகிறது.

மகானுபாவர்களாக இருந்தவர்கள் எல்லாத் தேவதைகளையும் சமமாகவே பார்த்தார்கள். மகா கவிகளான காளிதாசன், பாணன் முதலியவர்கலும் ஒரே வஸ்துவைத்தான் பல மூர்த்திகளாகவும் வருகிறது என்று சந்தேகமில்லாமல் கூறுகிறார்கள்.

பக்தர்களின் மனோபாவத்தைப் பொறுத்துப் பரமாத்மா பல ரூபம் கொள்கிறபோதே, பிரபஞ்சத்தில் தன்னுடைய வெவ்வேறு காரியங்களைப் பொறுத்தும் வெவ்வேறு ரூபங்களை எடுத்துக் கொள்கிறது. ரஜோ குணத்தால் சிருஷ்டி செய்யும் போது அதற்கேற்ப பிரம்மாவாகிறது. ஸத்வ குணத்தால் பரிபாலிக்கும்போது அதற்கேற்ப மகா விஷ்ணுவாகிறது. தமோ குணத்தால் சம்ஹரிக்கும்போது அதற்குறிய முறையில் ருத்ரரூபம் கொள்கிறது. இந்த மூன்றைப் பாணனும் காளிதாசரும் ஒரே சக்தியின் மூன்று வடிவங்களாகக் குறிப்பிடுகிறார்கள். இந்த மூன்றுக்கும் பொருந்துவது முப்பத்து முக்கோடி தேவதைகளுக்கும் பொருந்தும்.

எனவே, என் தெய்வம் உசந்தது, உன் தெய்வம் தாழ்ந்தது என்று சண்டை பிடிப்பதில் அர்த்தமே இல்லை. ஆனாலும், நம் தேசத்தில் பல இஷ்ட தெய்வங்கள் இருந்தாலும் கூட, பிரதானமாக இருந்து வரும் சைவத்துக்கும் வைஷ்ணவத்துக்கும் இடையே ரொம்பவும் சண்டைதான் நடந்து வந்திருக்கிறது. நன்றாக ஆலோசித்துப் பார்த்தால் இந்த இரண்டு பிரிவுகளுக்கும் தெய்வங்களான

பரமேச்வரனும் மகா விஷ்ணுவும் ஒரே வஸ்துதான் என்ற ஞானம் பெறுவோம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சம்பு சங்கரனார்*

யோகம் என்றால் சேர்க்கை என்று அர்த்தம். ஜீவனானவன் பேதமற்று பிரம்மமான பரமாத்மாவுடன் சேர்ந்து விடுவதுதான் யோகம். பலனில் பற்றில்லாமல் நிஷ்காம்ய கர்மம் செய்து, அதன் மூலம் மனசு ஒருமுகப்பட்டு ஈஸ்வரானுக்கிரகமும் பெற்றால், இறுதியில், இந்த அபேதமான

யோக நிலையை அடையலாம். வேதத்தின் பரம தாத்பரியம் இதுவே. ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு உபதேசித்த யோகம் இதுவே.

பரம்பரையாக வந்த இந்த யோகமானது, பின்னால் சிதிலமாயிற்று. அதைப் புனருத்தாரணம் பண்ணவே வந்திருக்கிறேன் என்றார் ஸ்ரீகிருஷ்ண பகவான்.

பரமேஷ்வரன் வேறு. கிருஷ்ணன் வேறு அல்ல. இருவரும் ஒருவரே. கீதையிலே கிருஷ்ண பகவான், விசுவரூபம் காட்டும்போது, என்னுடைய ஈஸ்வர ஸ்வரூபத்தைப் பார் என்கிறார்.

பச்ய மே யோகம் ஐச்வரம்.

விசுவரூப தரிசனத்தில் லோகத்தை சம்ஹாரம் செய்யும் ருத்ர ஸ்வரூபத்தையே கிருஷ்ணன் காட்டினார்.

இவ்வாறு ஈஸ்வர அபேதமாயிக்கிற கிருஷ்ண பரமாத்மாவுக்கு ஆதியில் ஜகத்குரு என்று விருது உண்டு. க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் என்று சுலோகம்கூட ஊண்டு. ஜகத்குருவான ஸ்ரீ கிருஷ்ணன், பூர்வத்தில் இந்த யோகத்தை சூரியனுக்கு உபதேசித்தேன். மீண்டும் இப்போது கிருஷ்ணனாக உனக்கு உபதேசிக்க வந்தேன். எந்தெந்தக் காலத்தில் தர்மம் மிகவும் க்ஷீணிக்கிறதோ அப்போதெல்லாம் வந்து உபதேசிப்பேன் என்றார்.

ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் துவாபர யுக இறுதியில் நடந்தது. பிறகு கலியுகம் வந்தது. மறுபடியும் ஜீவபிரம்ம அபேத யோகத்துக்கு நலிவு உண்டாயிற்று. எழுபத்தி இரண்டு துர்மதங்கள் தோன்றின. அவை மிக பயங்கரமாகக் கிளம்பின. அசந்தர்ப்ப மானவை எல்லாமே இப்படித்தான் ஆரம்பத்தில் தடபுடலாக இருக்கும். பிறகு, இருந்த இடம் தெரிமாமற் போகும்.

கலிகாலத்தில் இப்படி எழுபத்திரண்டு துர்மதங்கள் தோன்றி, வைதிக மதத்தை நலிவுறச் செய்ததைச் பரமேஷ்வரன் பார்த்தார் துவாபர யுகத்தில் ஏற்பட்ட நலிவு சமானியமானதுதான். எனவே, ஏதோ சில சந்தர்ப்பங்களில் மட்டும் கிருஷ்ண பகவான் ஞானோபதேசம் செய்தால் போதுமானதாக இருக்கிறது. மற்ற சமயங்களில் அவர்

ஆயர்பாடியில் லீலை செய்தார். துவாரகையில் ராஜ்யபாரம் செய்தார். பஞ்ச பாண்டவர்களுக்காகத் தூது போனார். கலிகாலத்தில் இப்படிச் செய்தால் போதாது. அதிக இருட்டு இருப்பதால் நிறைய விளக்கு வேண்டும். ஒரு வாழ்நாள் முழுவதும் ஞானோபதேசம் ஒன்றுக்காகவே அவதாரம் செய்ய வேண்டும் என்று பரமேஷ்வரன் எண்ணினார். சர்வ வித்தைகளுக்கும் நாயகனான அந்த சதாசிவனே ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களும் அவதரித்தார். ஸ்ரீ சங்கராசாரியர்கள் நாயகனான அந்த சதாசிவனே ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களாக அவதரித்தார். ஸ்ரீ சங்கராசாரியர்கள் சிவாவதாரமே என்பதற்கு வேதத்திலேயே ஆதாரம் இருக்கிறது. யஜுர் வேதத்தில் உள்ள ஸ்ரீ ருத்திரத்தில், கபர்த்திக்கு நமஸ்காரம். வ்யுப்த கேசனுக்கு நமஸ்காரம் என்று அடுத்தடுத்து வருகிறது. கபர்த்தி என்றால் ஜடாதாரி என்று அர்த்தம். சிவபெருமானை ஜடாதாரியாகவே பொதுவும் காண்கிறோம். வ்யுப்த என்றால், வபனம் செய்து கொண்ட என்று அர்த்தம். வ்யுப்த கேசன் என்றால் தலையை முண்டனம் செய்து கொண்டவன் என்று பொருள். ஜடாதாரியான சிவன், வ்யுப்த கேசனாக இருந்தது எப்போது. ஸ்ரீ ஆதிசங்கரராக இருந்தபோதே. திரிகாலமும் உணர்ந்த வேதம் இதை முன்பே சொல்லிவிட்டது.

பரமேசுவர மூர்த்தி ஆலமரத்தின் அடியில் தக்ஷிணாமூர்த்தியாக அசையாமல் இருந்தது. அதற்கு சம்பு என்று பெயர். சம் என்றால் நித்ய சுகம் என்று அர்த்தம். நித்ய சுகம் உற்பத்தியாகுமிடமே சம்பு. ஆனந்த ஊற்றே சம்பு. இந்த ஆனந்த ஊற்று இருந்த இடத்திலேயே இருக்கும். கண் பார்ப்பதில்லை. வாய் பேசுவதில்லை. உடம்பு அசைவதில்லை. ஒரே நிஷ்டை, ஸமாதி, மௌனம். ஆனால் அந்த மௌனத்திலிருந்தே ஸனகாதி யோகிகள் மகா உபதேசம் பெற்றுத் தாங்களும் பிரம்ம நிஷ்டை பெற்றனர். ஆனந்த ஊற்றைத் தேடிப்போய் இவர்கள் அதை மொண்டு குடித்தார்கள். மௌனம்தான் இவர்கள் பெற்ற மகா உபதேசம்.

அப்படித் தேடிப் போகாத நமக்காக அந்த உத்கிருஷ்டமான மௌன நிலையை விட்டு ஜகத்குரு ஆதிசங்கரபகவத் பாதராக வந்தார் பரமேஷ்வரன்.பதிவிரதா ரத்தினமாக ஒருத்தியிருக்கிறாள். அவள் குரலைக்கூட யாரும் கேட்டதில்லை. அவள் வெளியில் வந்து யாரும்

பார்த்ததில்லை. அவர்களுடைய குழந்தை கிணற்றில் விழுந்து விடுகிறது. அப்போது அவள் வீட்டை விட்டு வெளியேவந்து கூப்பாடு போடுகிறாள். அதுபோலவே தக்ஷிணாமூர்த்தியாக இருந்த பரமேசுவரன் கலியில் தமது குழந்தைகளான ஜனங்கள் பாபப்படுகுழியில் விழுவதைப் பார்த்தார். தான் மவுன உபதேச சம்புவாக - ஆனந்த ஊற்றாக இருந்தால், இந்த யுகத்தில் பிரயோஜனம் இல்லை. ஊற்றைத் தேடி யாரும் வரமாட்டார்கள். எனவே, அந்த ஆனந்தமே ஜனங்களைத் தேடிப்போக வேண்டும். ஆனந்தமாக இருக்கும் சம்பு ஆனந்தத்தைச் செய்கிற சம்கரராக (சங்கரராக) ஜனங்களிடையே போய் நித்தியசுகத்தை அவர்கள் கையில் எடுத்துத் தரவேண்டும் என்று தீர்மானித்தார். சங்கராசாரியராக அவதரித்தார். இந்த வரிசைக் கிரமத்திலேயே ஸ்ரீ ருத்ரம் முதலில் சம்புவையும், பிறகு குருவான சங்கரரையும், அதன்பிறகு குரு உபதேசத்தால் பெறக்கூடிய பஞ்சாக்ஷரத்தையும் சொல்லி நமஸ்கரிக்கிறது.

பூர்வ காலங்களில் அசுரர்கள் என்று தனியாக ஒர் இனத்தவர் வருவார்கள். அவர்களை சம்ஹரிக்க விஷ்ணு ஆயுதபாணியாக வருவார். இந்தக் கலியில் ராக்ஷஸர்கள் தனியாக இல்லை. விசுவாமித்திரரின் யாகத்தைக் கெடுக்க ஸுபாஹு, மாரீசன் என்ற ராக்ஷஸர் வந்ததாகவும், ஸ்ரீ ராமர் அவர்களை வதைத்ததாகவும் ராமாயணத்தில் படிக்கிறோம். இந்தக் கலியில் விசுவாமித்திரர் இருந்திருந்தால் அவருடைய யாகத்தைக் கெடுக்க ஸுபாஹு, மாரீசரே வேண்டியிராது. அவர் மூளை கெட்டுப்போய் அதனுள்ளேயே அசுரப் பிரவவிருத்தி குடிகொண்டிருக்கும். அவர் யாகம் செய்யவே எண்ணியிருக்க மாட்டார். ஜனங்களின் மூலையிலேயே அசுரன் புகுந்து விட்ட இந்தக் கலியில் யாரை சம்ஹாரம் பண்ணுவது. யாரை விட்டு வைப்பது. எனவே, அசுர சம்ஹாரத்துக்கான வைஷ்ணவ அவதாரங்கள் இப்போது வேண்டாம் என்று பரமேஷ்வரன் கருதி, ஞானோபதேசத்துக்காகத் தாமே ஒரு பிராமணக் குடும்பத்தில் அவதரித்தார்.

சம்புவாக உட்கார்திருந்த மூர்த்தி சங்கரராகச் சுற்றும் மூர்த்தியாயிற்று. எவ்வளவுக்கெவ்வளவு உட்கார்ந் திருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு சஞ்சாரம் செய்தார். எவ்வளவுக்கெவ்வளவு மௌனமாக இருந்தாரோ,

அவ்வளவுக்கவ்வளவு பேசினார். உபதேசித்தார். வாதம் செய்தார். பாஷ்யம் செய்தார்.

ஸ்ரீ ஆதிசங்கரரின் மகிமை, அவருக்கு முன்னிருந்த எழுபத்திரண்டு மதங்களில் எதுவுமே அவருக்குப் பின்பு பாரத் தேசத்தில் இல்லாமற் போனதுதான். அவர் கண்டனம் செய்த சாங்கியம், வைசேஷிகம் போன்ற சில மதங்களைப் பற்றிப் புஸ்தகங்களிலிருந்துதான் தெரிந்து கொள்ள முடிகிறது. இவற்றை நடைமுறையில் பின்பற்றுகிற எவரையுமே காணோம். காபாலிகம், வாமாசார சாக்தம் போன்ற கோரமதங்களைப் பற்றி பழைய இடிபாடு (ruins) புதைப் பொருள் இவற்றிலிருந்தே தெரிந்து கொள்கிறோம். வேத கர்மானுஷ்டானத்தைச் சொல்லாமல் ஆத்ம குணங்களை மட்டும் சொல்லும் புத்த மதம் முதலிய சில மதங்களை மற்ற நாடுகளுக்காக விட்டு வைத்திருக்கிறார், ஸ்ரீ சங்கர பகவத்பாதர். அவையும் நம் நாட்டில் அவர் காலத்துகுப் பின் இல்லாமற் போயின. சொற்ப காலத்துக்குள், தத்வம் ஒன்றையே அடிப்படையாகக் வைத்து, மற்ற மதங்களை எல்லாம் ஜயித்து, அத்வைதத்தை ஆசாரியர்கள் நிலை நாட்டியதைப் போன்ற மகத்தான காரியதைச் செய்தவர் உலகில் எவருமே இல்லை.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களுக்குப் பிற்பாடு, நம் நாட்டில் வேறு சம்பிரதாயங்கள் ஏற்பட்டாலும், ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்த அத்வைத மதம் போய்விடவில்லை. இன்னும் அத்வைதிகள் இருக்கிறோம்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் வேதம் முழுமையையும் ஒப்புக் கொண்டார். வேதம் கூறும் சகல தெய்வங்களையும் வேதம் விதிக்கும் சகல கர்மாக்களையும் ஒப்புக்கொண்டார். அவற்றின் லக்ஷியமாக, வேத சிராஸன உபநிஷத்தின் முக்கிய தாத்பரியமான, ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்ற அத்வைதத்தை ஸ்தாபித்தார். ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பிறகு வைதிக தர்மத்தை நிலைநாட்டிய. ஸ்ரீ ஆதி சங்கரரும் ஜகத்குரு என்ற விருதைப் பெற்றார்.

வைசாக சுக்கிலபக்ஷ பஞ்சமி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் அவதார தினம். ஆப்பொழுது நக்ஷத்திரம் சிவபெருமானுக்குறிய திருவாதிரையாகவோ, அல்லது ஸ்ரீ ராமனுக்குறிய புனர்வஸூவாகவோ அமையும்.

ஸ்ரீ ஆதிசங்கர ஜயந்தியானது மற்ற ஜயந்திகளைவிடப் பெரிய புண்ணியகாலம் என்று நான் நினைப்பது வழக்கம். இப்படி நான் சொல்லுவதற்கு உங்களுக்கு இரண்டு காரணங்கள் தோன்றலாம். நம்முடையது என்ற அபிமானத்தால் சொல்கிறானோ என்பது இரண்டாவது. இந்த இரண்டும் இல்லாமல், வேறு ஒரு முக்கியமான காரணத்திலேயே ஸ்ரீ சங்கர ஜயந்தியை ஸர்வ

உத்கிருஷ்டமான புண்ய காலம் என்கிறேன்.

அது என்ன காரணம்? ஸ்ரீ சங்கர அவதாரத்துக்கு முன் வைதிக மதம் ஆட்டம் கண்டபோது, அதுவரை வேத புராணங்களால் விதிக்கப்பட்ட புண்ணிய காலங்கள் எல்லாம் தத்தளித்தன. ஒரு மதத்தில் நம்பிக்கை போனால், அந்த மதப்பண்டிதர்களை யார் கொண்டாடுவார்கள்? வேத தர்மத்துக்கு ஆபத்து வந்த போது, அம்மதப் பண்டிகைகள் எல்லாவற்றுக்கும் ஆபத்து வந்துவிட்டது. ஆப்போது ஸ்ரீ சங்கர ஜயந்தி நிகழ்ந்தால்தான் அந்தப் புண்ணிய காலங்கள் எல்லாம் மீண்டும் நிலை நிறுத்தப்பட்டன. ஸ்ரீ சங்கர ஜயந்தி நிகழ்ந்திராவிடில், இன்று ஸ்ரீராம நவமியும், கோகுலாஷ்டமியும், சிவராத்திரியும், நவராத்திரியும் மற்ற புண்ணிய தினங்களும் கொண்டாடுவோமா என்பதே சந்தேகம். மற்ற ஜயந்திகளையெல்லாம் நிலைநாட்டிய ஜயந்தியாக இதுவே இருக்கிறது. ஆகையினால்தான் ஸ்ரீ சங்கர ஜயந்தியை மிக மிகப் புண்ணிய காலமாகச் சொல்கிறேன்.

தனி மனிதராக இருந்துகொண்டு அந்தச் சாமானிய பிராம்மண சந்நியாசி தேசம் முழுவதும் ஒரு இடம் பாக்கி வைக்காமல் திக்விஜயம் செய்து இந்த மகத்தான அநுக்கிரகத்தைச் செய்தார். திக்விஜயம் என்றால் அவர் செய்ததுதான் 'திக்விஜயம்'

ஸ்ரீ ஆச்சார்யாளுடைய திக்விஜய மகிமையைக் கேட்டதற்குப் பிரயோஜனமாக நாம் அனைவரும் நம் மதத்தில் உள்ள அசட்டுத்தனங்களைப் போக்கி, நமக்குள் நாமே திக்விஜயம் செய்ய வேண்டும். பஜகோவிந்தத்தில் ஆரம்பித்துத் பரமாத்ம தத்துவத்தில் முடிவது ஸ்ரீ ஆச்யார்யாளின் உபதேசம். ஒன்றும் தெரியாவிட்டாலும்

பரவாயில்லை. கோவிந்த கோவிந்த என்று சொல் என்று பஜகோவிந்தத்தில் சொல்கிறார் ஆச்சார்யாள். யமன் ஒரு க்ஷணம்கூட வீண் கழிப்பதில்லை. ப்ரதி க்ஷணமும் நெருங்கி வருகிறான். எப்போது பிடித்துக் கொள்வானோ தெரியாது. கோவிந்தன் காலைக் கட்டிக்கொண்டால்தான் நமக்கு பயம் இல்லை என்கிறார். எப்போதும் கோவிந்தா கோவிந்தா என்று சொல்லிப் பழக வேண்டும். எப்படியும் போஜனம் செய்கிறோம். அதோடு, சாப்பிடுகையில் கோவிந்த கோவிந்த என்று சொல்லிக் கொண்டே உண்டால், அந்த மனோபாவத்துடன் உள்ளே போகும் அன்னம், ஆத்ம தியானத்துக்கு அநுகூலம் செய்யும். அந்த அன்னஸாரம் உடம்பில் சேரச் சேர ஈஸ்வர ஸ்மரனம் அதிகமாகும். நாம் என்றைக்கும் போஜனத்தை நிறுத்தப்போவதில்லை. ஆகையால் இந்த சின்ன அப்பியாசத்தால் கோவிந்த உச்சரணம் என்றைக்கும் நடந்துவரும். கோவிந்த உச்சாரணத்துடன் சாப்பிடுகையில்` மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவதே நாம் நிறுத்திவிடுவோம். கண்ட வஸ்துக்களை கோவிந்த நாமத்துடன் சாப்பிடக்கூடாது என்ற கட்டுப்பாடும் வரும். சித்தம் சுத்தமாவதற்கு என்ற கட்டுப்பாடும் வரும். சித்தம் சுத்தமாவதற்கு ஆகாரம் சுத்தமாயிருப்பது மிகவும் அவசியம். பல இடங்களில் பலவிதமான வஸ்துக்களைத் தின்னுவதே இன்றைய மனக்கோளாறுகளுக்கும் ஒழுக்ககக் குறைவுக்கும் ஒரு முக்கியமன காரணம்.

ஆசார்யாள் மகிமை கேட்டதற்கு அடையாளமாக இப்படிச் சின்ன

விஷயங்களையாவது அநுஷ்டானத்தில் கொண்டு வர வேண்டும். எல்லோரும் காலையில் சிறிது விஷ்ணுஸ்மரணம். மாலையில் சிறிது சிவஸ்மரணம் செய்ய வேண்டும். இரவில் தூங்கும் முன்பு அம்பாளைப் பிரார்த்திக்க வேண்டும். அன்றைய தினம் ஆத்ம க்ஷேமமாகவோ, பரோபகாரமாக ஜீவகாருணண்ய சேவையோ ஏதேனும் செய்து பார்த்தோமா என்று ஆராய்து பார்க்க வேண்டும். அம்மா இதுவரை நான் செய்த தப்புகளை மன்னித்து, நாளையிலிருந்து நான் தப்புகளைச் செய்யாமல் இருக்க ரக்ஷிப்பாய் என்று காமாக்ஷியை மனமுருகி வேண்டிக்கொண்டு தூங்க வேண்டும்.

இன்று நம்மிடையே இப்படிப்பட்ட சிறிய, பெரிய அநுஷ்டானங்கள் பலவும் ஞாபகம் காட்டுகிற அளவுக்காவது வந்திருப்பதற்குக் காரணமான ஸ்ரீ ஆதி ஆசார்யாளை என்றைக்கும் மறக்கக்கூடாது. நவராத்திரி, கோகுலாஷ்டமி போல் ஸ்ரீ ஆசாரிய ஜயந்தியைக் கொண்டாட வேண்டும். ஆசாரிய பாதுகையை தினமும் பூஜிக்க வேண்டும். ஸ்ரீ ஆசாரியாள் அநுக்கிரகத்தில் சகல மங்களமும் உண்டாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*மனிதப் பிறவியும் வேண்டுவதே*

ஆசாரிய: சங்கராசாரிய:

ஸந்து மே ஜன்ம ஜன்மனி

எல்லாபப் பிறவிகளும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களே என் ஆசிரியராக இருக்க வேண்டும் - என்று இதற்கு அர்த்தம்.

சுலோகம் முழுவதையும் சொல்கிறேன்.

சாஸ்த்ரம் சாரீர மீமாம்ஸா
தேவஸ்து பரமேச்வர:I
ஸந்து மே ஜன்ம ஜன்மனிII

சாரீர மீமாம்ஸா என்றால் சரீரத்துக்குள் இருக்கப்பட்ட உயிரைப்பற்றிச் சொல்கிற வேதாந்த சாஸ்திரம் என்று அர்த்தம். இந்த வேதாந்தமே என்றும் எனக்கு சமய சாஸ்திரமாக இருக்கட்டும். அதாவது, நான் வேத மந்திரத்திலேயே பிறக்க வேண்டும் என்று சுலோகத்தின் முதல் வரி சொல்லுகிறது. அடுத்த வரி, பரமேஷ்வரனை எனக்கு எந்நாளும் தெய்வமாக இருக்கட்டும் என்கிறது. பிறகு ஜன்ம ஜன்மத்திலும் எனக்கு சங்கரரே ஆசாரியராக

இருக்கட்டும் என்று சுலேகம் முடிகிறது.

புனர் ஜன்மம் இல்லாமல் பரமாத்மாவில் கலந்துவிட வேண்டும் என்பதே பொதுவாகப் பிரார்த்திக்கப்படுவது. ஆனால் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் ஒவ்வொரு ஜன்மாவிலும் ஆசாரியராக அமைவார் என்றால், எத்தனை பிறவியும் எடுக்கலாம் என்று இந்த சுலோகம் சொல்வது போலிருக்கிறது. நடராஜாவைப் பார்த்துக் கொண்டேயிருப்பதற்காக மனதப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்னது போலிருக்கிறது.

ஸ்ரீசங்கரரும் இதே ரீதியில் சிவானந்த லஹரியில் ஒரு சுலோகத்தில் பிரார்த்திக்கிறார்.

நரத்வம் தேவவத்வம் நகவன ம்ருகத்வம் மசகதா

பசுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி ஜனனம் I

ஸதா த்வத் பாதாப்ஜ ஸ்மரண பரமாநந்த லஹரீ

விஹாராஸக்தம் சேத் ஹ்ருதயமிஹ கிம்தேன வபுஷா II

பரமேஷ்வரனின் பாதாரவிந்தத்தை ஸ்மரித்து, அந்த ஆனந்த வெள்ளத்தில் முழுகியிருப்பதற்குத் தடை இல்லை எனில், நான் எந்தப் பிறவியும் எடுக்கத்தயார். மனிதனாகவோ, தேவனாகவோ, கல்லாகவோ, மரமாகவோ, விளங்காகவோ, கிருமியாகவோ, கொசுவாகவோ, மாடாகவோ, பட்சியாகவோ எந்தப் பிறவி வாய்த்தாலும் சரி. இருதயத்தில் ஈசுவர ஸ்மரணாநந்தம் வெள்ளமாய்ப் பார்த்தால் சரீரம் எதுவாக இருந்தால் என்ன? என்கிறார் இந்த சுலோகத்தில் ஸ்ரீ ஆசாரியாள்.

ஆசாரியாள் என்று சொன்னாலே இந்தக் கேசத்தில் ஸ்ரீ சங்கராச்சாரியாளைத்தான் குறிப்பிடுகின்றது. இதிலிருந்தே அவரது மகிமை தெரிகிறது. பீஷ்மாச்சாரியார், துரோணாசாரியார், வியாஸாசாரியார், ஸாயணாசாரியார் இன்னும் எத்தனையோ ஆசாரியார்கள் இருந்தாலும், ஒரு பெயரையும் சேர்க்காமல் ஆசாரியாள் என்று மட்டும் சொன்னால் அது நம் பகவத் பாதாள் என்றே அனைவரும் புரிந்துகொள்கிறார்கள். சாஸ்திர அர்த்தங்களை எடுத்துச்

சொல்லி, பிறரை ஆசாரத்தில் நிலை நிறுத்துவதோடு ஏவனொருவன் தானே அந்த ஆசாரங்களை அநுஷ்டித்துக் காட்டுகின்றானோ அவனே ஆசாரியன் என்பதுதான் ஆசாரிய பதத்துக்கு லக்ஷணம் (definition)

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் அத்வைதத்தைப் பரம தத்துவமாக ஸ்தாபித்தார்கள். நாமும் எல்லாம் ஒன்று, பேதமேயில்லை. என்று பிரமாதமாக வேதாந்தம் பேசுகிறோம். ஆனால் யதார்த்தத்தில் இந்த ஏகமான ஸத்வஸ்துவின் ஞானம் நமக்கு கொஞ்சம்கூட வரவில்லை. ஆசாரியாளோ அதுவாகவே இருந்தார். எத்தனை காரியங்கள் செய்தாலும் காரிய மற்ற பரப் பிரமத்திலேயே இருந்து கொண்டிருந்தவர். அதன் நிறைந்த ஆனந்தத்திலேதான் வெற்றி தோல்விகளால் துளிக்கூடப் பாதிக்கப்படாமல், ஓயாமல் காரியம் பண்ணி லோக க்ஷேமத்தைப் பண்ணிவிட்டார். ஞானத்தை நிலை நாட்டினார். பக்தி மார்கத்தையும் நிலைநிறுத்தினார். க்ஷேத்திரம் க்ஷேத்திரமாகச் சென்று ஸ்தோத்திரம் செய்தார். நாமும் பக்தி பண்ணகிறோம். ஆனால் எப்படி? கஷ்டம் வந்தால் மட்டும் அது நிவிருத்தியாகப் பெரிய பூஜை, சாந்தி எல்லாம் செய்கிறோம். நிவிருத்தியானால் அநேகமாகப் பூஜையும் அதோடு விட்டு விடுவோம். ஆகாவிட்டாலோ ஸ்வாமியையே திட்டுவோம். நமக்கு உண்மையான ஞானமும் பக்தியும் வருவதற்கு வழி என்ன?

இதற்கெல்லாம் அடிப்படையாக ஆசாரியாள் கர்மாநுஷ்டானத்தையே விதித்தார். அதை விட்டுவிட்டு நாம் செய்கிற பக்தி ஞானம் எதுவுமே நிலைத்து நிற்கக் காணோம். அவரவரும் மனஸில் ஒழுக்கம், கட்டுப்பாடு, சித்த சுத்தி எல்லாம் உண்டாகி, அப்புறம்தான் உண்மையான பக்தியும் ஞானமும் சித்திக்கும். பகவத்பாதர்கள் அத்வைத ஞானம், ஸகுண உபாஸனை இவற்றைச் சொன்னதோடு, வைதிக கர்மாநுஷ்டானத்தை விதித்து, தமும் யதி தர்மங்களைப்

பூரணமாகப் பின்பற்றிக் காட்டியதால்தான் ஆசாரியாள் என்பதின் பூரண லக்ஷணத்தையும் பெற்றிருக்கிறார்.

ஆசாரியாள் என்ற மாத்திரத்தில் ஸ்ரீ சங்கராசாரியர்கள் என்று நாம் அர்த்தம் செய்துகொள்வதுபோலவே, வெளிநாடுகளிலெல்லாம் வேதாந்தம் என்ற மாத்திரத்திலேயே ஆசாரியாளின் அத்வேவத மார்க்கம் என்றே அர்த்தம்

செய்து கொள்கிறார்கள். வேதாந்தமாகிய உபநிஷதங்களை அடிப்படையாகக் கொண்டு த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் ஆகிய பல சித்தாத்தங்கள் இருந்த போதிலும் ஆசாரியர்கள் அவலம்பித்த அதைவாதத்துக்கே இந்தப் பெருமை ஏற்பட்டிருக்கிறது. வேதாந்த சிம்மம் கர்ஜனை செய்யட்டும் (let the lion of Vedanta roar) என்று சொல்லிக் கொண்டு விவேகானந்தர் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் அத்வைதத்தை பிரச்சாரம் செய்ததிலிருந்து நம் ஆசாரியர்களின் மதம் சர்வ மதமாகிவிட்டது. ஆனால் இதுநாம் புதிதாகச் செய்த மதமல்ல. உபநிஷத தாத்பரியமே என்று ஆசாரியயாள் விளக்கியிருக்கிறார்.

அத்வைத மதத்தோடு, ஷண்மதங்களையும் ஸ்தாபித்து ஆசாரியாளின் இன்னொரு பெருமை. தெய்வ பேதம் என்பதே இல்லாமல் ஈசுவரன், அம்பாள், மகாவிஷ்ணு, விக்னேஷ்வரர், சுப்ரமணியர், சூரியன் ஆகிய ஆறு தெய்வங்களின் உபாஸனையையும் ஒழுங்குபடுத்தித் தந்து ஷண்மதாசாரியார் ஆனார்.

ஆசாரியாளின் தனிப்பெருமை இன்னொன்றும் உண்டு. இன்று நம் தேசத்தில் இருக்கிற விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம் முதலிய சித்தாந்தங்களை ஸ்திரப்படுத்திய ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீமத்வர், ஸ்ரீ மெய்கண்டார் முதலியவர்கள் நம் ஆசாரியார்களுக்குப் பிற்பாடு தோன்றியவர்களே. ஆனால் நம் ஆசாரியார்களுக்கு முன்னால் தோன்றிய கபிலர், ஜைமினி, கணாதர், கௌதமர் ஆகியோர் ஸ்தாபித்த சாங்கியம். மீமாம்ஸை, வைசேஷிகம், நியாயம் முதலிய மதங்கள் ஸ்ரீ சங்கர பகவத் பாதாளுக்குப் பின் இருந்த இடம் தெரியாமலே போய்விட்டன. ஆசாரியாள் அவற்றை அடியோடு நிராகரணம் செய்துவிட்டார். அவருக்கு முன் தோன்றியிருந்த புத்த, ஜைன மதங்களையும் வென்று வைதிக தர்மத்தை நிலைநாட்டினார். முப்பத்திரண்டு வயதுக்குள் இத்தனை காரியங்களைச் செய்த ஆச்சாரியாள் பரமேசுவர அவதாரமே என்பதில் சந்தேகமில்லை.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## *தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### *நம் தருமதத்தில் மூல புருஷர்*

கிராமாந்தரங்களில் முன்னிட்டு நாட்களில் திருட்டு இருக்கும். இதற்காக ஒரு நாலு பேராவது முன்கூட்டியே ஏற்பாடு செய்துகொண்டு ரோந்து சுற்றுவார்கள். கொஞ்சத்தில் கொஞ்சம் திருட்டுக் குறையும்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா லோகத்தைவிட்டுப் போனவுடன் லோகம் முழுவதிலும் கலியின் இருட்டு வீரியத்துடன் பரவக்கூடிய நிலை ஏற்பட்டது. வரப்போகிற அதர்ம இருட்டில் வேதம் என்கிற தீபம் சில இடங்களிலாவது அணையாமல் இருக்கச் செய்ய வேண்டுமே என்று ஒரு மகா பெரியவர் விசாரப்பட்டு அதற்கான காரியங்களில் இறங்கினர். கலிகால மநுஷ்யர்களுக்கு

வேதம் முழுவதையும் அத்யயனம் செய்கிற சக்தி இருக்காது என்று அவருக்குத் தெரியும். ஆனாலும் வேத மந்திர சப்தம் லோகத்தில் கொஞ்சமாவது இருந்தால்தான் சமஸ்தப் பிராணிகளுக்கும் க்ஷேமம் உண்டாகும். கலிகாலத்திலும்கூட தர்ம மார்க்கப்படி இப்படிச் சிறிது க்ஷேமம் எல்லா ஜீவராசிகளுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று அவர் தனது அபார கருணையினால் நினைத்தார். இதற்காகக் கலிகாலத்தில் வரப்போகிற அற்ப சக்தர்களுக்கு ஏற்றபடி, அதுவரை கங்குகரை இல்லாமல் இருந்த வேதங்களை நாலாகப் பிரித்தார். தம் சிஷ்யர்களில் பைலர் என்கிறவருக்கு, ஜைமினிக்கு ஸாம வேதத்தையும், ஸுமந்துவுக்கு அதர்வண வேதத்தையும் உபதேசித்தார்.

உங்களிடம் இந்த பெரிய சொத்தை ஒப்படைத்தேன். வேதத்தின் இந்த ஒவ்வொரு சாகை (கிளை) யையும் சிஷ்ய பரம்பரை மூலம் ரக்ஷித்து வர ஏற்பாடு பண்ணுங்கள் என்று அந்த நாலு சிஷ்யர்களை ரோந்து சுற்றுகிற மாதிரி அனுப்பி வைத்தார். அனந்தமாக இருந்த வேதங்கள் இப்படிக் கலிகால அற்ப சக்தர்களும் ஒரு ஆயுளில் கற்று அத்யயனம் செய்கிற அளவுக்கு நாலாக வகுத்துத் தரப்பட்டன.

அந்த நாலு சிஷ்யர்கள், அப்புறம் அவர்களுடைய சிஷ்யர்களின் சிஷ்யர்கள் என்று எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக இந்த நாலு வேதங்களும், காதால் கேட்டுக் கேட்டே - எழுதாக் கிழவி என்றே தமிழில் சொல்வார்கள். நம் காலம்வரை வந்துவிட்டது. அதனால், கலியின் கோலாஹலமும் அடங்கியே இருந்தது. வேத அத்யயனம் குறைந்த இந்த ஒரு நூற்றாண்டில் கலி எப்படி முற்றிவிட்டது என்று நன்றாகப் பார்க்கிறோம்.

கலியுக ஆரம்பத்தில் லோகர க்ஷணத்துக்காக வேதத்தை இப்படிக் காத்துத் தந்த அந்த மகா பெரியவரைத்தான் வேத வியாஸர் என்கிறோம். வியாஸ என்றால் பகுத்து வைப்பது என்று அர்த்தம். வேதத்தை நாலாகப் பகுத்தவர் வேத வியாசர்.

அவருடைய இன்னொரு பெயர் பாதராயணர். தீவில் (த்வீபம்) பிறந்ததால் அவருக்கு த்வைபாயனர் என்றும் ஒரு காரணப் பெயர் உண்டு. அவர் சியாமள வர்ணமாதலால் கிருஷ்ணர் என்றும் ஒரு பெயர் உண்டு. கிருஷ்ணத்வைபாயனர் என்று சேர்த்தே சொல்வார்கள். கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்து வித்தியாசம் தெரிவதற்காக.

வாஸ்தவத்தில் அவரும் கிருஷ்ண பரமாத்மாவும் வேறல்ல. வேத வியாஸர் மகாவிஷ்ணுவின் அம்சாவதாரம்தான். பிற்காலத்தில் நம் ஆதி சங்கர பகவத்பாதாளுடைய மகிமையை வெளிப்படுத்துவதற்காக விளையாட்டாக அவரிடம் கோபித்து அவரோடு விவாதச் சண்டை போடுவதற்காகக் கிழப்பிராமணராக வியாஸர் வந்தார். இருவரும் உக்கிரமாக வாதப் பிரதிவாதம் செய்தபோது, ஆசாரியாளின் சிஷ்யர் பத்மபாதருக்கு இரண்டு பேரும் உண்மையில் யார் என்று ஞான திருஷ்டியில் தெரிந்து. சங்கர சங்கர ஸாஷாத், வ்யாஸோ நாராயண ஸ்வயம் என்று அவர் சொன்னதாக சுலோகம் இருக்கிறது. ஆசாரியாள் சாக்ஷாத் பரமேஷ்வரன் வியாஸர் நாராயணனே என்று அர்த்தம். முனிவர்களில் நான் வியாஸர் என்று கிருஷ்ணரே கீதையில் சொல்லியிருக்கிறார். வ்யாஸாய விஷ்ணு ரூபாய, வ்யாஸ ரூபாய விஷ்ணுவே என்றும் சுலோகம் இருக்கிறது.

தக்ஷிணா மூர்த்தி ஆதி குரு என்றாலும் அவர் பேசாத குரு.

பேசி உபதேசிக்கிற குரு என்று வருகிறபோது, நம் அத்வைத வேதாந்த ஸ்மார்த்த ஸம்பிரதாயத்தில் முதல் குரு, சாக்ஷாத் நாராயணன்தான். அப்புறம் அவரது பிள்ளையான பிரம்மா. அப்புறம் பிரம்மாவின் பிள்ளையான வஸிஷ்டர். வஸிஷ்டருக்குப் பின் அவருடைய புத்திரரான சக்தி. சக்திக்குப் பிறகு, அவரது புத்திரரான பராசுரர். பராசரர்தான் விஷ்ணு புரானம் எழுதி உபகரித்தவர். இவருடைய புத்திரர்தான் வியாஸர். வியாஸருக்குப் பின் அவருடைய புத்திரரான சுகர். மகா பிரம்ம நிஷ்டர் இவர். பிறந்ததிலிருந்தே பரப்பிரம்மமாக இருந்ததால் கல்யாணமே பண்ணிக் கொள்ளாதவர். அதனால் இவருக்குப் பிள்ளையும் இல்லை. அப்படியானால் இதுவரை தகப்பனார் - பிள்ளை என்று தொடர்ந்து வந்த குரு பரம்பரை இவரோடு நின்றுவிட்டதா. இல்லை. இவருக்கப்புறம் அது குரு - சிஷ்யர் என்கிற புதுக்கிரமத்தில் விருத்தியாயிற்று. சுகருடைய சிஷ்யர் கௌடபாதர். கௌடபாதர் சந்நியாச ஆஸ்ரமம் ஸ்வீகரித்தவர். இனிமேல் சந்நியாச பரம்பரையிலேயே வேதாந்த சம்பிரதாய ஆசாரியர்கள் வருகிறார்கள். கௌடபாதருடைய சிஷ்யர் கோவிந்த பகவத் பாதர். கோவிந்தரின் சிஷ்யர்தான், நம் சங்கரபகவத் பாதர்கள். சங்கரருடைய நாலு முக்கியமான சிஷ்யர்கள் பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், ஸுரேச்வரர் ஆகியவர்கள். இதற்கப்புறம் ஒவ்வொரு சங்கர பீடத்திலும் இன்றுவரை வரிசையாக வந்திருக்கிற ஆசாரியர்களெல்லாரும் நம் குருமார்கள் ஆவார்கள். இந்த குரு பரம்பரையைச் சொல்கிற சுலோகத்தை எல்லோரும் தினமும் சொல்லி நமஸ்கரிக்க வேண்டும். அதைச் சொல்கிறேன..

நநாராயணம் பத்மபுவம் வஸிஷ்டம்

சக்திம் ச தத்புத்ர பராசரம் ச

வ்யாஸம் சுகம் கௌடபதம் மஹாந்தம்

கோவிந்த யோகீந்த்ரம் அதாஸ்ய சிஷ்யம்

ஸ்ரீ சங்கரா சார்யம் அதாஸ்ய பத்மபாதம்

ச ஹஸ்தாமலகம் ச சிஷ்யம்

தம் தோடகம் வார்த்திககாரம் அன்யான்

ஆஸ்மத் குருன் ஸந்ததம் ஆனதோஸ்மி

இதில் பத்மபுவன்' என்பது பிரம்மா வார்த்ததிக்காரர் என்பது ஸூரேச்வரர். மற்ற பெயர்கள் உங்களுக்கே புரியும்.

இப்படி வியாஸர் குரு பரம்பரையில் முக்கியமாக இருக்கிறார். அவரை விஷ்ணு என்று சொல்லிவிட்டால் மட்டும் போதுமா. குருர் பிரம்மா, குரூர் விஷ்ணு . குரூர் தேவோ மஹேச்வர. என்று திரிமூர்த்தியாகவும் அல்லவா குருவைச் சொல்கிறோம். இப்படியே வியாசரை மும்மூர்த்தியாகவும் வர்ணிக்கிற ஒரு சுலோகம் இருக்கிறது. அது நெற்றியில் கண்ணில்லாவிட்டாலும் இவர் சிவன்தான். நாலு முகமில்லாவிட்டாலும் இவர் பிரம்மாதான். நாலு கையில்லாமல் இரண்டே கையுடன் இருந்தாலும் இவர் மஹாவிஷ்ணுதான் என்று சொல்கிறது.

வியாஸரைவிட நமக்குப் பரம உபகாரம் செய்த இன்னொருவர் இல்லை.

அவர் வேதங்களை விபாகம் செய்ததோடு நிற்கவில்லை. வேதங்களைச் சில பேர்தான் ரொம்பவும் நியம ஆசாரங்களோடு ரக்ஷிக்க முடியும். ஆனால் வேதத்தின் தாத்பரியமான அஹிம்ஸை, சத்யம், தர்மம் முதலிய சகல ஜனங்களுக்கும் தெரிந்து, அவர்கள் அவற்றைக் கடைபிடிக்க வேண்டும் என்று மிகுந்த கருணை கொண்டார் வியாஸர். இதற்காகவே வேதத்தில் ஒவ்வொர் இடத்தில் நுணுக்கமாகச் சொல்லியிருக்கிற விஷயங்களை சகல ஜனங்களும் ரஸிக்கிற கதா ரூபத்தில் விளங்கிக் காட்டுவதற்கு - நுண்ணிய வஸ்துவை பூதக்கண்ணாடியால் காட்டுகிறது போல் - பதினெட்டுப் புராணங்களையும், ஐந்தாவது வேதம் எனப்படும் மகாபாரதத்தையும் எழுதி அநுக்கிரகம் செய்தார் ஸ்ரீவியாஸ பகவான். அவரவர்கள் இஷ்ட தேவதையை முழு முதல் தெய்வமாக ஆராதிருப்பதற்குச் செளகரியமாக விசால மனசு வாய்ந்த வியாஸர் பதினெட்டுப் புராணங்களையும் தந்திருக்கிறார். ஈஸ்வரன், விஷ்ணு, அம்பாள், சுப்பிரமணியர் என்று ஒவ்வொரு புராணமாகக் கொடுத்தார். சமீப காலம் வரையில் நம் தேசத்தில் எழுதப் படிக்கத் தெரியாத கிராம ஜனங்கள்கூடப் பொய், புனைசுருட்டு, திருட்டு, லஞ்சம், நாஸ்திகம் இவற்றுக்குப் பயந்து, திருப்தியோடு இருந்து

வந்தார்கள் என்றால், அதற்கு முக்கியமான காரணம் வியாஸ பகவானின் பிரசாதமாக பாரதமும் புராணங்களும்தான்.

இவ்வளவு செய்ததோடு பரம சத்தியமான பிரம்ம தத்வத்தை ரத்தினச் சுருக்கமாகச் சொல்கிற பிரம்ம ஸூத்திரத்தையும் அனுக்கிரகித்தார் ஸ்ரீ வியாஸர். இதனாலேயே முக்கியமாக பிரம்ம வித்யா ஆசார்களில் ஒருவராகி வியாஸாரியாள் எனப்படுகிறார். பிரம்ம வித்தையில் அவருக்கு சிஷ்யர அவரது புத்திரரான சுகப் பிரம்மம்.

நாலு வேதங்களைப் பரப்பின சிஷ்யர்கள் பேரை முன்பே சொன்னேன். புராணங்களையும் மகாபாரதத்தையும் அவரிடமிருந்து உபதேசம் பெற்று லோகத்தில் பிரச்சாரம் பண்ணினவன் ஸூதர் - தேரோட்டி வகுப்பில் பிறந்தவர். மகா பக்திமான். புத்திமான்.

பிரம்மஸூத்திரத்திற்குச் சங்கரர் (அத்வைதம்), ராமானுஜர் (விசிஷ்டாத்வைதம்), மத்வரர் (த்வைதம்), ஸ்ரீ கண்டாசாரியர் (சைவ சித்தாந்தம்) வல்லபாசாரியார் (கிருஷ்ண பக்தி மார்க்கம்). எல்லோரும் தத்தம் சித்தாந்தப்படி பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். பிரம்ம ஸூத்திரம் என்றால் பண்டித லோகத்தில் அதற்கு ஒரு தனியான செளரவம்.

ஹிந்துக்கள் என்று சொல்லிக் கொள்கிற நாம் அனைவரும் மேலே சொன்ன சித்தாந்தப் பிறிவுகளில் ஏதாவது ஒன்றைச் சேதர்ந்தவராக இருக்கிறோம். இதனால் நாம் பிரிந்தே இருக்கிறோம் என்று அர்த்தமில்லை. மரத்தின் கிளைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு திசையில்தான் வளர்ந்து கொண்டிருக்கும். அதனால் அவை ஒன்றில்லை என்றாகிவிடுமா. அடி மரமும் வேரும் ஒன்றுதானே. அப்படித்தான் நாம் இத்தனை பேருக்கும், இத்தனை பிரிவுகளுக்கும் அடிமரமாக, வேராக இருக்கிற மகாபுருஷர் வேத வியாஸ மகரிஷி. மூலம் என்றால் வேர். நம் தர்மத்துக்கு மூல புருஷர் வியாஸ பகவான்தான்.

இன்று நாம் இந்த மட்டுமாவது ஆஸ்திக புத்தியோடு க்ஷேமமாக இருப்பதற்குக் காரணம் அன்று வியாஸர் போட்ட விதைதான்.

ஹிந்துவாகப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் தத்துவத்தில் (ஃபிலாஸஃபியில்) பிரிந்திருப்பால் தேமில்லை. ஃபிலாஸஃபி

என்று வருகிறபோது, நான் அத்வைதி - எனக்குச் சங்கரர். நீ த்வைதி - உனக்கு மத்வர். அவர் விசிஷ்டாத்வைதி - அவருக்கு ராமாநுஜர் என்று இருந்துவிட்டுப்போவோம். பல அபிப்பிராயங்கள் இருப்பதால் அவற்றை ஆராய்து பார்த்தால் தப்பில்லை. ஆனாலும், எந்தப் பிரிவாயிருந்தாலும் சரி, ஹிந்துவாகப் பிறந்த சகலரும் ஒன்று சேர்ந்த வேத வியாஸ பகவானின் படத்தைத் தோளில் ஏற்றிக் கொண்டு வீதி பவனி எடுத்துவரக் கடமைப்பட்டிருக்கிறோம். பல பேருக்குச் சிலை வைக்கிறோம். படத்திறப்பு விழாக்கள் செய்கிறோம். எனக்கு ஆசை வருஷத்திற்கு ஒருநாளாவது ஒவ்வொரு பேட்டையிலும் இருப்பவர்கள் வியாஸாரியாரின் படத்தை ஐக்கியமாகக் கூடி ஊர்வலமாக எடுத்து வந்து, ஒரிடத்தில் எழுந்தருளப் பண்ணி, அங்கே சகலருக்கும் பொதுவான வேத தர்மங்களைப் பற்றி சம்மேளனம் நடத்த வேண்டும் என்பது. இதுவரை இப்படி செய்யாத அபராதத்துக்குப் பிராயச்சித்தமாக சேர்த்து வைத்து இனிமேலாவது இப்படி வியாஸாச்சாரியார்களுக்கு உத்ஸவம் செய்ய வேண்டும். ஹிந்து என்ற பேரில் உள்ள நம் எல்லோரின் நமஸ்காரங்களுக்கும் பாத்திரராக இருக்கிறவர் அவர்.

அவர் இன்றைக்கும் சிரஞ்சீவியாக இருக்கிறவர். ஆஞ்சநேயர், அசுவத்தாமா, மகாபலி இவர்கள் மாதிரி இப்போதும் சிரஞ்ஜீவியாக அநுக்கிரகம் பண்ணி வருகிறார்.

வைதிக தர்மத்துக்குப் பல விதங்களில் உறுதி தந்து ஆதாரஸ்தம்பம் போல் நிற்கிற ஸ்ரீ வேத வியாஸ மஹரிஷி ஒருத்தர் இல்லாவிட்டால் நம் மதமே இல்லை. அந்த மகா புருஷரை ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஸ்மரிக்க வேண்டும். நமக்கு சாசுவத ஸௌக்கியத்துக்கான வழியைக் காட்டித் கொடுத்திருக்கிற வேத வியாஸருகக்கு நம் நன்றியைக் காட்டக் கடமைப்ப்டிருக்கிறோம்.

பிரம்மச்சாரிகளும் கிருஹஸ்தர்களும் ஆவணி அவிட்டத்தின் போது புதுப் பூணூல் போட்டுக் கொள்வதற்குமுன், வேத வியாஸரைக் கும்பத்தில் ஆவாஹனம் செய்து பூஜை செய்கிறார்கள். சந்நியாசிகளில் பூணூல் போட்டுக் கொள்கிற பிரிவினர் இருந்தாலும், பெரும்பாலும் பூணூலை அறுத்துப் போட்ட சந்நியாசிகளே

இருக்கிறார்கள். மற்ற ஆசிரமக்காரர்கள் உபாகர்மத்தின்போது வியாஸருக்குப் பூஜை, தர்ப்பணம், ஹோமம் செய்து நன்றி செலுத்தி விடுகிறார்கள் என்றால் சந்நியாசிகள் மட்டுமே அப்படிச் செய்யாமலிருக்கலாமா?. பிரம்ம ஸூத்திரம் என்ற வேதாந்தப் பிரமாண நூலே இவர் செய்ததுதானே?இப்படி நன்றி தெரிவித்து செய்வதுதான் சாதுர்மாஸ்ய விரத ஆரம்பத்தில் சந்நியாசி செய்யும் வியாஸ பூஜை.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*கண்ணன் பிறந்த தினம்*

ஸ்ரீகிருஷ்ண பகவான் கீதையில், அஞ்ஞான உலகத்தினருக்குத் தெரியாத ஞானப் பிரகாசத்திலேயே ஞானியானவன் எப்போதும் இருக்கிறான் என்கிற அர்த்தத்தில், உலகம் முழுவதும் தூங்கும் காலத்தில் ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான் என்கிறார். எங்கும் ஒரே இருட்டாக இருக்கும் காலத்தில் ஒரு வெளிச்சம் தோன்றினால் அதை வரவேற்கிறோம். ஒரு பாலைவனத்தின் நடுவில் குஞ்சம் நீரும் நிழலும் தென்பட்டால் அளவிலா ஆனந்தத்தைத் தருகிறது. இருண்ட மேகங்களின் மத்தியில் தோன்றும் மின்னல் அதிகப் பிரகாசத்தோடு விளங்குகிறது. ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தக்ஷிணாயத்தில் ஆவணி மாதத்தில் ஸ்ரீகிருஷ்ண பக்ஷ அஷ்டமியன்று நடுநிசியில் பிறந்தான். நமக்கு ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள். நம் உத்தராயணம் அவர்களுக்குப் பகல். தக்ஷிணாயனம் அவர்களுக்கு ஓர் இரவு. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணன் அவதரித்த காலம் தேவர்களுக்கு இரவு ஆகிறது. இம்மாதிரியே நமக்கு ஒரு மாதம் பித்ருக்களுக்கு ஒரு நாளாகும். நமது சுக்லபக்ஷம் அவர்களுக்குப் பகல். கிருஷ்ண பக்ஷம் இரவு. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்த கிருஷ்ண பக்ஷம் பித்ருக்களுக்கு இரவாகிறது. அஷ்டமி பக்ஷத்தின் நடுவில் வருவதால் அன்று பித்ருக்களுக்கு நடுநிசியாகும்.

ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்தது அஷ்டமியன்று நடுநிசி. இதனால் என்ன ஏற்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணன் அவதரித்த காலம் தேவர்கள், பித்ருக்கள், மனிதர்கள் எல்லோருக்கும் நிசி. எல்லா தினுசிலும் இருட்டு அதிகமாக இருக்கும் சமயம். ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்ததும் இருள் நிறைந்த சிறைச்சாலை. இப்படி ஸ்ரீ கிருஷ்ணாவதார காலத்தில் எல்லாம் இருள் மயமான சூழ்நிலை.

அவனுடைய பெயரும் கிருஷ்ணன். 'கிருஷ்ண' என்றால் கருப்பு என்று பொருள். அவனது மேனியும் கறுப்பு.

இப்படி ஒரே கறுப்பான சமயத்தில் தானும் கறுப்பாக ஆவிர்ப்பவித்தாலும் அவனே ஞான ஒளி. நல்ல காளமேகங்களாகளிடையே மின்னல் மாதிரி இத்தனை இருட்டுக்கு நடுவே தோன்றிய ஞான ஒளி. ஞான ஒளியால்தான் மங்காத பிரகாசமுடையதாய் இன்னும் என்றும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. அஞ்ஞானத்தால் இருண்டிருக்கும் உலகத்தில்தான் ஞானத்தின் மகிமை அதிகமாக விளங்கும். அப்படியே கிருஷ்ணனின் பெருமை பிரகாசிக்கிறது. அவனுடைய கீதை உலகெங்கும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவனுடைய லீலா விநோதங்கள் நிறைந்திருக்கும் ஸ்ரீமத் பாகவதம் புராண சிரேஷ்டமாக விளங்குகிறது.

உடலுக்கு ஒளியளிப்பது கண். உயிருக்கு ஒளி தருவது ஞானம். உலக உயிர்களுகெல்லாம் ஞான ஒளி தருகிற கண்ணாக இருப்பவனே கண்ணன். நம் தென்னாட்டில் அவன் கிருஷ்ணன் மாத்திரம் அல்லாமல் கண்ணனும் ஆகிவிட்டான். அக்கண்ணையும் புறக்கண்ணையும் அம்ருதத்தில் மூழ்கடிக்கும் வடிவம் அவனுடையது. நம் காதின் வழியாக வேணுவினால் கீத அம்ருதத்தையும், உபதேச சாரமான கீதாம்ருதத்தையும் உட்செலுத்தி குளிர வைக்கும் அந்தக் கண்ணனே நம் உலகுக்குக் கண். கறுப்பினிடையே விளங்கும் ஒளி காட்டும் கண். அந்த ஒளியும் அவன்தான்.

ஸ்ரீ கிருஷ்ணன் ஒரே அவதாரத்தில் அநேக விதமான லீலைகளைச் செய்து நடித்திருக்கிறான். மிகவும் சேஷ்டை செய்யும் குழந்தை, பிறகு மாடு மேய்க்கும் பையன், குழலூதிக் கூத்தாடும் கலைஞன், இவற்றை அநுபவிக்கும்

ரஸிகன், (சாணூரன், முஷ்டிகன் என்ற கம்ஸனைச் சேர்ந்த மகாமல்லர்கள் ஜயித்தபோது) மல்யுத்தத்தில் தேர்ந்தவன், (நக்னஜித் என்ற ராஜாவின் பெண்ணான ஸத்யை

என்பவளைக் கலியாணம் செய்து கொள்வதற்கு நிரந்தனையாக ஏழு காளைகளை அடக்க வேண்டும் என்ற போது) காளை மாடுகளை அடக்கிக் காட்டுபவன், ராஜதந்திர நிபுணன், தூது செல்பவன், சாரதி, துரௌபதி போல் தீர்க்க முடியாத கஷ்டத்தில் சிக்கிக் கொண்டவர்களைக் காக்கும் ஆபத்பாந்தவன். குசேலர் போன்ற அநாதர்களை ரக்ஷிக்கும் பக்த வத்ஸலன், பீஷ்மருக்கு முக்தியே அளித்தவன். பீஷ்மருக்கு மாத்திரமல்ல - தன்னையே கொல்லும்படியான அம்பைப் பிரயோகித்த வேடனுக்கும் முக்தி கொடுப்பவன் - இப்படியெல்லாம் லீலை செய்திருக்கிறான்.

உலகத்தில் நல்லதும் பொல்லாததுமாகிய அநேக விதமான மனப்போக்கை உடையவர்களாக ஜீவர்கள் அமைந்திருக்கிறார்கள். வீரனும் சூரனும், திருடனும் ஸ்திரீலோலனும், பேதையும் உழைப்பாளியும், கிழவனும் குழந்தையும், இறுமாப்புடையவனும் போரபகாரியும், மனமுருகியவனும் கல்நெஞ்சக்காரனும் கஞ்சனும் ஊதாரியும், மூடனும் கல்விமானும், யோகியும் ஞானியுமாகப் பலவிதமான மன நிலையை உடையவர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். இவர்களில் தீய அம்சம் உள்ளவர்களை முற்றிலும் நல்ல அம்சங்களாகக் கொண்ட ஒரு மகாத்மா அல்லது தெய்வ அவதாரத்தால் ஆகர்ஷிக்க முடியாமலே போகலாம். ஒரு திருடனுக்கு இன்னொரு திருடனைப் பற்றிய கதையே ரஸமாயிருக்கும். ஓர் உல்லாஸ புருஷனுக்கு இன்னோர் உல்லாஸ புருஷனின் கேளிக்கைகளை சுவாரஸ்யமாக இருக்கும். ஸ்ரீ கிருஷ்ணன் நல்லவர்களை மட்டுமின்றி மற்றோரையும் கவரவேண்டுமென்றே ஜாரசோர சிகாமணியாக, கபடனாக, மாயனாக, தந்திரசாலியாக எல்லா வேஷமும் பபோட்டான். பற்பல போக்குக்கொண்ட மக்கள் எல்லோரையும் தனது வகை வகைகளான லீலைகளால் தனித்தனியே ஆகர்ஷித்துத் தன்னுடைய கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும் பாத்திரமாக்கிக் கடைத்தேற வைத்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரமே பரிபூரணவதாரம்.

சிவராத்திரிக்கும் கிருஷ்ணாஷ்டமிக்கும் இடையே சரியாக

108 நாள் இடைவெளி இருக்கும். ஒன்றிலே ஞான ஜோதியான லிங்கங்கள் உதித்தது. அதுவேதான் இன்னொன்றில் வெளியிலே எல்லாம் கருமையாக வைத்துக்கொண்டாலும், உள்ள ஞானத்திலும் கருணையிலும் ஜோதியான கண்ணனாக வந்தது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஸ்ரீ ராமன்*

ராமன் என்றாலே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம். மற்றவர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறவன் என்ற அர்த்தம். எத்தனை விதமான துக்கங்கள் வந்தாலும் அதனால் மனம் சலனம் அடையாமல், ஆனந்தமாக தர்மத்தையே அநுசரித்துக்கொண்டு ஒருத்தன் இருந்தான் என்றால், அது ஸ்ரீ ராமன்தான். வெளிப்பார்வைக்கு அவன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலும், உள்ளுக்குள்ளேயே ஆன்ந்தமாகவே இருந்தான்.

சுக துக்கங்களில் சலனமில்லாமல், தான் ஆனந்தமாக இருந்துகொண்டு,

மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுவதுதான் யோகம். அப்படியிருப்பவனே யோகி. இவ்வாறு மனசு அலையாமல் கட்டிப்போடுவதற்குச் சாமானிய மனிதர்களுக்கான வழி வேத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தர்மங்களை ஒழுக்கத்தோடு, கட்டுப்பாட்டோடு, பின்பற்றி வாழ்வதுதான். சொந்த விருப்பு வெறுப்புக்கு இலக்காகாமல் வேதம் விதிக்கிற தர்மப்படி வாழ ஆரம்பித்துவிட்டால், தானாகவே மனஸின் சஞ்சலம் குறைந்து, அது தெளிய ஆரம்பிக்கும். இந்தத் தெளிவால் மனசு எப்போதும் ஆனந்தமாக, லேசாக இருக்கும். இந்த சித்த சுத்தி மோக்ஷத்திலேயே கொண்டு சேர்த்துவிடும்.

ஜனங்களுக்கெல்லாம் ஒரு பெரிய உதாரணமாக வேத தர்மங்களை அப்படியே அநுசரித்து ஆனந்தமாக வாழ்ந்து காட்டுவதற்கான ஸ்ரீமத் நாராயணனே ராமனாக வந்தார். ராம வாக்கியத்தை எங்கு பார்த்தாலும், இது என் அபிப்பிராயம் என்று சொல்லவே மாட்டார். ரிஷிகள் இப்படிச் சொல்கிறார்கள். சாஸ்திரம் இப்படிச் சொல்லுகிறது என்றே அடக்கமாகச் சொல்வார். சகல வேதங்களின் பயனாக அறியப்படவேண்டிய பரம புருஷன் எவனோ, அவனே அந்த வேத தர்மத்துக்கு முழுக்க முழுக்க கட்டுப்பட்டு, அப்படிக் கட்டுப்பட்டு இருப்பதிலேயே ஆனந்தம் இருக்கிறது என்று காட்டிக் கொண்டு, ராமனாக வேஷம் போட்டுக் கொண்டு வாழ்ந்தான்.

ராவணன் ஸீதையைத் துரத்திக் கொண்டு போனபோது, ஒரே மயில் தூரத்திலிருந்தே ராமனுக்கு ஸீதை போட்ட கூச்சல் காதில் விழவில்லையாம். அப்படிப்பட்டவனை இப்போது பக்தர்கள் கூப்பிட்டால் என்ன பிரயோஜனம். என்று கேலி செய்து கேட்டவர்கள். எழுதியவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் ராமனாக இந்த லோகத்தில் வாழ்ந்தபோது மனுஷ்ய வேஷத்தில் இருந்தான். மநுஷ்ய ரூபத்திலேயே இருந்தான் என்பதை மறந்து பேசுகிறார்கள்.

ஒரு நாடகம் நடக்கிறது. ராமாயண நாடகம்தான். அதில் லவ குசர்களை வால்மீகி ராமனிடம் அழைத்து வருகிறார். ராஜபார்ட் ராமஸ்வாமி அய்யங்கார் ராமராக வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறார். அவருடைய சொந்தப் பிள்ளைகளே நாடகத்தில் லவ குசர்களாக நடிக்கிறார்கள். நாடக ராமன் வால்மீகியைப் பார்த்து இந்தக் குழந்தைகள் யார். என்று கேட்கிறார். ராமஸ்வாமி அய்யங்காருக்குத் தம்முடைய பிள்ளைகளையே அடையாளம் தெரியவில்லை என்று கேலி செய்யலாமா. நாடக வால்மீகி, இவர்கள் ராஜபார்ட் ராமஸ்வாமி அய்யங்காரின் பிள்ளைகள். நீங்கள் தானே அந்த ராமஸ்வாமி அய்யங்கார். என்று பதில் சொன்னால் எத்தனை ரஸாபாஸமாக இருக்கும். வாஸ்தவத்தில் இருப்பதை, வாஸ்தவத்தில் தெரிந்ததை, நாடகத்தில் இல்லாதாக, தெரியாததாகத்தான் நடிக்க வேண்டும். ஸ்ரீ ராமன் பூலோகத்தில் வாழ்ந்தபோது, இப்படித்தான் மநுஷ்ய வேஷம் போட்டுக் கொண்டு தம்

வாஸ்தவமான சக்தியையும் ஞானத்தையும் மறைத்துக் கொண்டு வாழ்ந்தார்.

வேதப் பொருளான பரமாத்மா தசரதனின் குழந்தையாக வேஷம் போட்டுக் கொண்டவுடன், வேதமும் வால்மீகியின் குழந்தையாக, ராமாயணமாக வந்துவிட்டது. அந்த ராமாயணம் முழுக்க எங்கே பார்த்தாலும் தர்மத்தைத்தான் சொல்லி இருக்கிறது. ஊருக்குப் போகிற குழந்தைக்குத் தாயார் பட்சணம் செய்து

தருகிற வழக்கப்படி கௌசல்யா தேவி காட்டுக்குப் போகிற ராமனுக்குப் பதினாலு வருஷங்களும் கெட்டுப்போகாத பட்சணமாக இந்தத் தர்மத்தைதான் கட்டிக் கொடுத்தாள். ராகவா, நீ எந்த தர்மத்தை த்ருதியோடு, அதாவது தைரியத்தோடு, நியமத்தோடு அநுசரிக்கிறாயோ, அந்தத் தர்மம் உன்னை ரக்ஷிக்கும் என் ஆசீர்வாத பட்சணம் கொடுத்தாள்.

நியமம், அதாவது தனது என்ற வெறுப்பு விருப்பு இல்லாமல் சாஸ்திரத்துக்குக் கட்டுப்படுவது முக்கியம். அதே போல் தைரியமும் முக்கியம். ஒருத்தர் பரிகாசம் பண்ணுகிறார் என்று தர்மத்தை விட்டுவிடக்கூடாது. ராமனை சாக்ஷாத் லக்ஷ்மணனே பரிகசித்தான். அண்ணா. நீ தர்மம் தர்மம் எதையோ கட்டிக் கொண்டு அழுவதால்தான் இத்தனை கஷ்டங்களும் வந்திருக்கின்றன. அதை விட்டுத் தள்ளு. தசரதன் மேல் யுத்தம் செய்து ராஜ்ஜியத்தை நான் ஸ்வீகரித்துத் தர ஆனுமதி தா என்று அன்பு மிகுதியால் சொன்னான். ஆனால் ராமன், யார் எது சொன்னாலும் பொருட்படுத்தாமல் தர்மத்தையே காத்தான். கடைசியில் அது அவனைக் காத்தது. தர்மம் தலை காத்தது. ராவணனுக்குப் பத்து தலை இருந்தும் அதர்மத்தால் கடைசியில் அத்தனை தலைகளும் உருண்டு விழுந்தன. ஸ்ரீராமன் இன்றும், "ராமோ விக்ரஹவான் தர்ம". என்றபடி தர்மத்தில் தலைசிறந்து தர்ம ஸ்வரூபமாக அநுக்கிரகம் செய்து வருகிறான். சாக்ஷாத் ஸ்ரீ ராமனை லட்சியமாகக் கொண்டு ராம என்று மனஸாரச் சொல்லிக்கொண்டே இருக்கிறவர்களுக்குச் சித்த மலங்கள் எல்லாம் விலகும். தர்மத்தை விட்டு எந்நாளும் விலகாமல் அவர்கள் ஆனந்தமாக வாழ்வார்கள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஸ்ரீராம நவமி*

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே

தின்மையும் பாவமும் சிதைத்து தேயுமே

சென்மமும் மரணமும் இன்றித் தீருமே

இம்மையே இராமவென் றிரண்டெழுத்தினால்

(கம்பராமாயணம் - சிறப்புப் பாயிரம் 14)

ஸ்ரீ ராமநவமியன்று குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை ஒவ்வொருவரும் கம்பராமாயணத்தில் ஸ்ரீ ராமாவதார கட்டத்தில் உள்ள கீழ்காணும் பாகங்களைப் பாராயணம் செய்ய வேண்டும்.

வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்களும்

தூயகற் கடகமும் எழுந்து துள்ளவே.

சித்தரும் இயக்கரும் தெரிவைமார்களும்

வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்

நித்தரும் முறைமுறை நெருங்கி யார்ப்புறத்

தத்துறல் ஒழிந்துநீள் தருமம் ஓங்கவே.

ஒருபகல் உலகெல்லாம் உதரத்துட் பொதிந்

தருமறைக் குணர்வரும் அவனை யஞ்சனக்

கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்

திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை.

(கம்ப ராமாயணம் : பாலகாண்டம் - திரு அவதாரப் படலம்)

இருபது வயதுக்கு மேற்பட்டவர்கள் ஸ்ரீ ராமநவமியன்று முழுவதும் பட்டினி (சித்த உபாவாஸ) விரதம் இருக்க வேண்டும்.

ஒவ்வொரு கிரமத்திலும் பள்ளிச் சிறுவர்கள் முதல் முதியவர்கள் வரை எல்லோரும் ஏதாவது சிறிது கோயில் சந்நிதியிலோ, அல்லது பஜனை மடத்தின் முன்போ கூடி ஸ்ரீராம நாம மந்திரத்தை ஐந்து நிமிஷம் ஜபம் செய்து, பிறகு, ஸ்ரீராம் ஜயராம் ஜய ஜய ராம் என்னும் பதின்மூன்று அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்தை, ஒருவர் முதலில் சொல்ல, எல்லோரும் அதைச் சொல்லிக்கொண்டு, ஊரைச் சுற்றிக் கொண்டு, முதலில் ஆரம்பித்த இடத்தை அடைந்து, அங்கு பத்து நிமிஷம் பஜனை செய்து, பூர்த்தி செய்ய வேண்டும்.

மறுநாள் காலை அதே இடத்தில்கூடி, ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை வர்ணிப்பதாக உள்ள கீழ்காணும் பாக்களைப் பாராயணம் செய்து, அல்லது ஸம்ஸ்கிருதம் படித்தவர்கள் எவரேனும் இருந்தால், அவரைக் கொண்டு வால்மீகி ராமாயணத்தில் உள்ள ஸ்ரீராம பட்டாபிஷேக ஸர்க்கத்தைப் பாராயணம் பண்ணும்படி செய்து, பத்து நிமிஷம் பஜனை செய்து, ஊர்ப் பொதுச் செலவில் ஏழை மக்களுக்கு அன்னம் பாலிக்க வேண்டும்.

மங்கள கீதம் பாட

மறையோலி முழங்க வல்வாய்ச்

சங்கினம் குமுறப் பாண்டில்

தண்ணுமை யொப்பத் தாவில்

பொங்குபல் லியங்கள் ஆர்ப்பப்

பூமழை பொழிய விண்ணோர்

எங்கள் நாயகனை வெவ்வேறு

எதிர் அபிடேகஞ் செய்தார்.

மாதவர் மறைவ வாளர்

மந்திரக் கிழவர் முற்று

மூதறி வாளர் உள்ளஞ்

சான்றவர் முதனீ ராட்டச்

சோதியான மகனு மற்றைத்

துணைவரும் அனுமன் தானும்

தீதிலா இலங்கை வேந்தும் - பின்

அபிடேகஞ் செய்தார்.

சித்தமொத் தனன்என் றோதுந்

திருநகர்ச் செல்வ மென்ன

உத்தமத் தொருவன் சென்னி

விளங்கிய உயர்பொன் மௌலி

ஒத்துமெய்க் குவமை கூர

ஒங்குமூ வுலகத் தோர்க்குந்

தத்தம் உச்சியின்மேல் வைத்தது

ஒத்தெனத் தளர்வு தீர்த்தார்

(கம்ப ராமாயணம் : யுத்த காண்டம் திரு அபிடேகப் படலம்)

ராம பிரானின் சிரத்தின் மேல் பொன்கிரீடம் விளங்கியது கண்டு, மூவுலகிலும் உள்ள மக்களும் தத்தம் சிரமேல் பொர்கிரீடம் வைக்கப்பட்டது போலவே எண்ணி மமகிழ் ந்தவர்கள் என்பது கடைசீச் செய்யுளின் கருத்து.

நாட்டில் உள்ள எல்லா மக்களிடையேயும் தெய்வ பக்தியும், நன்னடத்தையும் வேரூன்றி வளரவேண்டும் என்று எல்லோரும் ஸ்ரீ ராமநவமியன்றும், மறுநாள் புனர் பூஜையிலும், ஸ்ரீராம சந்திர மூர்த்தியைப் பிரார்த்தித்து கொள்ள வேண்டும்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## *தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### *ஐயப்பன்*

பரமாத்மா ஒன்றே சிவனாகவும் நாராயணனாகவும் ரூபமம் தரிக்கிறது. சிவனாக இருக்கும்போது ஞான மூர்த்தியாக இருக்கிறது. நாராயணனாக இருக்கும்போது லோக ஸம்ரக்ஷணம் செய்கிறது. இப்படிச் செய்வதால் சிவனும் விஷ்ணுவும் முற்றிலும் வேறு வேறு என்றோ, அல்லது தொழிலை ஒட்டிச் கொஞ்சம் வேற்பட்டாற் போலிருக்கிற நிலையில் சிவனுக்குப் பரிபாலன் சக்தி இல்லை என்றோ, விஷ்ணுவுக்கு ஞான சக்தி இல்லையென்றோ அர்த்தமில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் முக்கியமாகச் செய்கிற அநுக்கிரகத்தையே குறிப்பிட்டேன்.

ஆல விருஷத்தின்கீழோ, பனிமலை உச்சி மீதோ சிவபெருமான் வீற்றிருக்கிறார். உடலெல்லாம் விபூதிப் பூச்சு. புலித்தோலை இடுப்பில் கட்டி, யானைத்தோலைப் போர்த்தியிருக்கிறார். தலையிலே ஜடாமுடி, அவரது ஸ்வரூபம், அலங்காரம், வாசஸ்தானம் எதைப் பார்த்தாலும் ஞானிகளுக்கு உரியதாக இருக்கிறது. அவர் கரத்திலேயே ஞான முத்திரை தாங்கியிருக்கிறார். ஆத்ம தியானத்தில் ஆழ் ந்திருக்கிற அவரது சந்நிதி ஒரே சாந்தமாக இருக்கிறது. பரம சத்தியத்தைப் போதிக்கிற பரமகுரு அவரே. அந்தப் பிரம சத்தியமும் அவரேயன்றி வேறில்லை. இந்த உபதேசம் ஞானியின் தொழில்.

லோக ரக்ஷணம் என்பது ராஜாவின் கடமை. அதனால்தான் நாராயணனை ஸ்ரீ வைகுண்டத்தில் சக்கரவர்த்திபோல் தியானிக்கிறோம். பீதாம்பரம், கௌஸ்துபம், வனமாலை, கிரீட குண்டலங்கள் தரித்து, சாக்ஷாத் மகாலக்ஷ்மியை மார்பிலே வைத்துக்கொண்டு, ராஜாதிராஜனாக இருக்கிறார் ஸ்ரீ மகா விஷ்ணு.

ஆசார சீலராக ரிஷிகளைப் போல் ஈஸ்வரனுக்கு எப்போது பார்த்தாலும் ஸ்நானம் செய்வதில் பிரியம். அதனால்தான் வடதேசத்தில் ஈஸ்வரன் கோயில்களில் எல்லாம் சிவலிங்கத்தின் மேல் எப்போது பார்த்தாலும் ஜலம் கொட்டிக் கொண்டிருக்கும்படி தாரா பாத்திரத்தைக் கட்டி வைத்திருக்கிறார்கள். சக்கரவர்த்தி போன்ற மகாவிஷ்ணுவுக்கோ அலங்காரத்தில் பிரியம் அதிகம்.

அவருக்குப் பட்டும் பொன்னும் புனைந்து மகிழ்கிறோம்.

அலங்காரப் ப்ரியோ விஷ்ணு :

அபிஷேகப்ரியோ சிவ :

என்றே சொல்வார்கள்.

ஈஸ்வரனின் அழகு மனத்தை அடங்கச் செய்கிற சாந்த ஸ்வபாவம் வாய்ந்தது. ஸ்ரீ மந் நாராயணின் சௌந்தரியமோ மனத்தை மோகிக்கச் செய்து ஆனந்தக் கூத்தாடச் செய்வது. விஷ்ணுவின் திவ்விய ரூபத்திலிருந்து வைத்த கண்ணை வாங்க முடியாமல் எவரும் சொக்கிக் கிடக்க வேண்டியதாயிற்று. ஸ்ரீ ராமனாகவும், கிருஷ்ண பரமாத்மாகவும் அவதரித்த போதும், இந்த ஜகன்மோகன சௌந்தரியம் அவரை விட்டு நீங்காமலே இருந்திருக்கிறது. இப்படிப்பட்டவர் மோஹினி என்றே ஓர் உருவம் கொள்ளும்போது எத்தனை அழகாக இருந்து, எல்லோர் உள்ளங்களையும் மோஹிக்க வைத்துக் கொள்ளைக் கொண்டிருப்பார். பரம ஞானியாக, தபோமயமாக ஜ்வலித்துக் கொண்டிருந்த பரமேசுவரனின் மனத்தைக்கூட மகாவிஷ்ணுவின் மோகினி ரூபம் மயக்கி விட்டது என்று புராணங்கள் சொல்கின்றன. மோகினியாக வந்த நாராயணின் கருண்ய லாவண்யமும் பரமேசுவரனின் சாந்த ஞானமும் ஒன்று சேர்ந்தவுடன் ஒரு மகா தேஜஸ் - ஒரு பெரும் ஜோதி பிறந்தது. இந்தத் தேஜஸே ஐயப்பனாக உருக் கொண்டது.

ஹரிஹர புத்திரன் என்றும், ஐயனார் என்றும் சொல்வது இந்த ஐயப்பனைத்தான்.

ஐயன் என்பது ஆர்ய என்பதின் திரிபு. ஆர்ய என்றால் மதிப்புக்குறிய என்று பொருள். சாக்ஷாத் பரமேசுவரனுக்கும்

நாராயணமூர்த்திக்கும் ஜனித்த குழந்தையைவிட மதிப்புக் குறைந்தவர் எவருண்டு. ஞானமும் தபசும் கலந்த விஷ்ணுவின் க்ஷத்ர அம்சம் இரண்டுமே நாம் உய்வு பெற அவசியமாகும். ஹரிஹர புத்ரனாகிய ஐயப்பனிடம் இவையெல்லாமே ஒன்று சேர்ந்திருப்பதாகக் கொள்வோம். இதனால்தான் போலிக்கிறது. சிவபெருமானின் மற்ற இருபாலர்களைப் பிள்ளையார் என்றும் குமரன் என்றும் குழந்தைகளைக் குறிக்கிற சொல்லால் குறிப்பிட்டாலும், அவரது மூன்றாவது புத்திரான சாஸ்தாவை மட்டும் மதிப்புக்குறியவராக - ஆர்யராக - ஐயனாராகக் குறிப்பிடுகின்றோம். ஆர்ய எந்பதுதான் அய்யர் என்ராயிற்று. முதலி - முதலியார், செட்டி - செட்டியார் மாதிரி அய்யனுக்கு மரியாதைப் பதம் அய்யனார். இதிலே ஒரு வேடிக்கை. பொதுவாகத் தமிழ் நாட்டில் அய்யர் (குருக்கள்) பூஜிக்காத கிராமக் கோயில்களில் உள்ள ஸ்வாமிநாதன் அய்யராக - அய்யனாராக இருக்கிறார். கொஞ்சம்கூட இப்போது பேசப்படுகிற இன வித்தியாசங்கள் முன்னே இல்லை என்பதற்கு இதுவே ஓர் அடையாளம்.

சபரிமலையில் ஒரிடத்தை ஆரியங்காவு என்று ஆரியனுடைய காடாகவே சொல்கிறார்கள். தேசத்தில் எத்தனையோ ஸ்வாமிகளுக்குக் கோயில் இருந்தாலும் சாஸ்தாவைத் தவிர எவருக்குமே அய்யர், ஆரியன் என்ற பெயர்கள் இல்லை.

சாஸ்தா என்பதே தமிழில் சாத்தன். தமிழ் நாட்டில் இருக்கப்பட்ட அநேக சாத்தனூர்களில் முக்கியமான தெய்வம் ஐயப்பன்தான்.

தமிழ்நாட்டில் கிராமத்துக்குக் கிராமம் ஐயனார் கோயில் உண்டு. கேரளத்தில் கிராம தேவதையாக இல்லாமல் வேறு விதத்தில் ஐயப்பன் வழிபாடு வெகுவாகப் பரவி வளர்ந்திருக்கிறது.

அவர் நம்மைக் காவல் புரிகிற தெய்வம். காற்று கருப்பு முதலான பலவித தீயசக்திகளிலிருந்து நம்மைக் காப்பாற்றுபவர். இதெல்லாவற்றுக்கும் மேலாக நாராயணனிடமிருந்து நம் வாழ்க்கையையே பரிபாலிக்கும் சக்தியைப் பெற்றிருக்கிறார். ஈஸ்வரனிடமிருந்து நமக்கு விமோசனம் தருகிற ஞானத்தை அளிக்கும் சக்தியும்

பெற்றிருக்கிறார்.

சுதந்திர இந்தியாவில் ஐயப்பன் ரொம்ப ரொம்பக் கியாதி பெற்று வருகிறார். சுதந்திர சாஸனம் (Constitution) அளித்திருக்கிற பேச்சுத் சுதந்திரத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு பக்கத்தில் நாஸ்திகப் பிரச்சாரம் தடபுடலாக நடக்கிறபோதே, மறுபக்கத்தில் அது எடுபடாத அளவிற்கு ஐயப்ப பக்தி நாளுக்கு நாள் அமோகமாக விருத்தியாக்கிக் கொண்டிருக்கிறது.

கோரளத்தில் எட்டாக் கையில் சபரிமலையில் இருக்கிற ஐயப்பன் கொஞ்சம் கொஞ்சமாகத் தமிழ்நாடு, மற்ற ராஜ்யங்கள் மீதெல்லாம் கூடத் தம் ராஜதானியை விஸ்தரித்துக் கொண்டே வருகிறார்.

இது மிகவும் உற்சாகமளிக்கிற விஷயம். நாஸ்திகப் பிரச்சார விஷயத்தைத் தடுக்கிற அருமருந்தாக வந்திருக்கிறது ஐயப்ப பக்தி.

அவரது கிருபையை நாடி, அதற்குப் பாத்திரர்களாக வாழ்தோமானால் நாமும், உலகமும் சிறப்புற்று விளங்குவது நிச்சயம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஸ்வாமி என்றால் குமாரஸ்வாமியே*

ஸ்வாமி என்பது கடவுளுக்குப் பொதுப் பெயர் என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். பரமேசுவரனுக்கும் ஸ்வாமி. மகாவிஷ்ணுவுக்கும் ஸ்வாமி. விக்கினேஷ்வரருக்கும் ஸ்வாமி எல்லா தெய்வங்களையும் ஸ்வாமி என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். இப்படி எந்த மூர்த்தியாகவும்

இல்லாமல், இந்த எல்லாமாகவும் ஆகியிருக்கிற பரமாத்மாவை, பராசக்தியை கடவுள் என்று எந்த மதஸ்தராலும் சொல்லப்படுகிறவரையும் ஸ்வாமி என்றே சொல்கிறோம்.

ஆனால் இந்த ஸ்வாமி என்கிற பெயர் வாஸ்தவத்தில் ஒருவருக்குத் தான் உண்டு. இப்போது நாம் சொல்கிற சாமிகள் எல்லாம் அந்த ஒருவரிடமிருந்தான் அவர் பெயரையே கடனாகக் கேட்டு வாங்கித் தங்களுக்கும் வைதேதுக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த நிஜமான ஸ்வாமி யாரென்றால் ஸுப்ரமண்யர்தான். முருகன், முருகப் பெருமான் என்று இந்தத் தமிழ் தேசத்தில் தனியன்போடு சொல்லப் படுகிறவர்கள்தான். அவர் குழந்தையாக இருக்கிற கடவுள், குமாரஸ்வாமி.

இவர்தான் ஸ்வாமி என்று எதனால் சொல்கிறீர்கள். என்று கேட்பீர்கள். அமரகோசத்தின் ஆதாரத்திலேயே இப்படிச் சொல்கிறேன்.

அகராதி, நிகண்டு என்றெல்லாம் சொல்கிறார்களல்லவா. ஸம்ஸ்கிருதத்தில் இருக்கிற பிரசித்தமான அகராதிக்கு அமரகோசம் என்று பெயர். அமரம் என்று

சுருக்கிச் சொல்வார்கள். அதைப்பற்றியும், அதை எழுதினவனைப் பற்றியும் கொஞ்சம் சொல்ல வேண்டும். சுப்ரமணியர் விஷயத்துக்கு இது நேராக சம்பந்தமில்லைத்தான். இருந்தாலும் இதில் பல ரஸமான விஷயங்கள் இருப்பதால்தான் சொல்கிறேன். இதில் நம் பகவத்பாதாளின் பெருமை, மதங்களில் ஒன்றுக் கொண்று இருக்கப்பட்ட உறவுகளின் போக்கு எல்லாம் வெளியாவதால் சொல்கிறேன்.

இதில் அகராதிக்குப் பேர் அமரகோசம் என்றேன். கோசம் என்றால் பொக்கிஷம் என்று அர்த்தம். சப்தக் கூட்டங்கள், சொற்களின் சமூகம் பொக்கிஷமாக இருக்கிற புஸ்தகத்துக்குக் கோஷம் என்று பெயர் வந்தது. இம்மாதிரி ஸம்ஸ்கிருதத்தில் பல கோசங்கள் (அகராதிகள்) இருந்தாலும் ரொம்பவும் பிரசித்தமானது அமரகோஷம்தான்.

அமர என்கிற பேர் எப்படி வந்தது. ஸம்ஸ்கிருதத்தை

தேவபாஷை என்பார்கள். தேவர்கள் அமமிருத்தம் உண்பதால் அமரர் எனப்பதுவர். எனவே தேவ பாஷை அமரபாஷை என்று சொல்லப்படும்.

அதற்கேற்றாற்போல் ஸம்ஸ்கிருதம் செத்த மொழி (dead language) என்று சொல்லிக்கொண்டு, அதைச் சாக அடிக்க எத்தனையோ யத்தனம் செய்தாலும், எப்படியோ அதுவும் அமரமாக இருந்துகொண்டேதான் இருக்கிறது. அமர பாஷையில் உள்ள கோசம்தான் அமர கோசமா? என்று தோன்றலாம்.

ஆனால் இந்தக் கோசத்துக்கு அமரம் என்கிர பெயர் இப்படி வரவில்லை. அதை இயற்றியவனின் பெயரை வைத்தே அதற்கு அமரம் என்று பெயர் வந்தது. அமர சிம்மன் என்பவர்களால் அதற்கு அமர கோசம் என்று பெயர்.

அமரசிம்மன் மகாபுத்திமான். இந்த நிகண்டுவைப் பார்த்தால் அறிவில் அவனுக்கு ஈடு உண்டா என்று பிரம்மிப்பு உண்டாகும். ஒவ்வொரு விஷயத்தையும் அவ்வளவு நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டு அர்த்தம் சொல்கிறான். இவன் ஹிந்து அல்ல. அமரசிம்மன் ஒரு ஜைனன். ஜைனர்களில் படிப்பாளிகள் அதிகம். இலக்கியத்தில் அவர்களுக்கு விசேமான இடம் உண்டு. தமிழில் ஐம் பெரும் காப்பியங்களிலே ஜைன சம்பந்தம் அதிகம். காவிய ரஸம் நிரம்பி மிக உயர்ந்த நூல்களாக உள்ள சிந்தாமணி, வளையாபதி எல்லாம் ஜைன நூல்கள்தாம். ஸம்ஸ்கிருதத்தில், பஞ்ச காவியங்கள் என்று பொதுவாக இருப்பதைத் தவிர ஜைனர்களே தனியாக தங்கள் மத சம்பந்தமாக ஒரு பஞ்ச காவியம் வைத்திருக்கிறார்கள். இந்த அமரசிம்மனும் அநேக ஜைனமத புஸ்தகங்கள் எழுதினான். ஆனால் இன்று மிஞ்சியதற்குக் காரணம் ஜைனர்கள் பரம விரோதியாக நினைத்த நம் ஆதிசங்கரர்தான்.

ஆதிசங்கரர் பாரததேசம் முழுவதும் பண்ணி பல மதங்களைக் கண்டனம் செய்து, வைதிக மதத்தை ஸ்தாபித்தார் அல்லவா? இந்த திக்விஜயத்தில் அவர் அமர சிம்மனையும் சந்தித்தார். பகவத்பாதரின் கொள்கை, ஒரே ஒரு சத்தியம்தான் இருக்கிறது. அதுவே பலவிதமாகத் தெரிகிறது. அந்த ஒன்றிலேயே கரைந்து அதுவாகவே

ஆகிவிட வேண்டும் மென்பது பௌத்தர்கள் எல்லாமே சூனியம், மாயை என்பார்கள். ஆதி சங்கராச்சாரியாளும் மாயையால்தான் ஒரே பரம்பொருள் பலவாகத் தெரிகிறது. இந்தப் பார்வை போனால் இது அத்தனையும் போய்விடும். என்று சூனிய நிலையையே சொல்கிற மாதிரி தோன்றினாலும், அவர் முக்கியமாகச் சொன்னது இல்லாத (சூனிய) மாயை அல்ல. இது போனபின் எப்போதும் நிலைத்து இருக்கிற, அழிவே இல்லாத பூரணமாக ஒரே சத்தியம் இருக்கிறது. என்பதைத்தான் நம் ஆசாரியாள் முடிந்த நிலையாக அவலம்பித்தார் (நிலை நாட்டினார்). பௌத்தம் சூன்யத்தோடு நிற்கிறது. பூரணமாக ஒன்று இருக்கிறது என்பது ஆசாரியாளுக்கு முக்கியம். ஒன்றும் இல்லை என்பது புத்தருக்கு முக்கியம். ஒன்று இருக்கவும் இருக்கலாம் (அஸ்தி). இல்லாமலும் இருக்கலாம் (நாஸ்தி). இருந்தும் இல்லாமவும்கூட இருக்கலாம். (அஸ்தி நாஸ்தி) என்பது ஜைன மத ஸ்தாபகரான ஜினருக்கு (மகாவீரர்க்கு) முக்கியம். இப்படிப்பட்ட கொள்கையை உடைய ஜைனனான அமரசிம்மன் ஆசாரியாளிடம் வாதப் போருக்கு வரும்போது, நான் ஒரு திரைக்குப் பின்னாலிருந்துதான் உம் கேள்விக்குப் பதில் சொல்வேன் என்றான்.ஆசாரியாளும் இதில் உள்ள ரகசியத்தை ஆராய்ச்சி செய்து பார்க்காமல் ஒப்புக் கொண்டார்.

ஸ்ரீசங்கர பகவத் பாதர்களும் அமரசிம்மனுக்கும் வாதப் போர் ஆரம்பித்தது.

அமரசிம்மன் ஒரு திரையைக் கட்டிக் கொண்டு அதற்கு உள்ளே இருக்கிறான். ஆச்சாரியாள் வெளியே இருந்து கேள்விகள் கேட்கத்தொடங்கினார்.

அமரசிம்மன் பளிச் பளிச்சென்று பதில் சொன்னான். அவன் என்னதான் மகாபுத்திமானாக இருந்தாலும்கூட, இத்தனை சாமர்த்தியமாக எப்படிப் பிரதிவசனம் கொடுக்கிறான் என்பது ஆசார்யாளுக்கு ஆச்சரியமாக இருந்தது. க்ஷணகாலம் யோசித்தார். உடனே பரமேசுவர அவதாரமும் ஸ்ர்வக்ஞருமான அவருக்கு ரகசியம் புரிந்துவிட்டது.

அவருடைய கேள்விகளுக்குப் பதில் சொன்னது அமர சிம்மனே இல்லை. ஸாக்ஷாத் சரஸ்வதி தேவியே அவன் மாதிரி பேசியிருக்கிறாள் என்று தெரிந்தது. இவன் அவளை

ரொம்ப நாளாக உபாஸித்திருக்கிறான். நியாயமாகப் பார்த்தால் இவன் அப்படிச் செய்திருக்கவே கூடாது. ஏனென்றால் இவனுடைய ஜனமதம் ஒரு கடவுளைப் பற்றியே சொல்லவில்லை. அதை பல ரூபத்தில், ஸரஸ்வதி மாதிரி பல தெய்வ வடிவங்களில் ஆராதிப்பதை ஜைன தத்வம் ஒப்புக் கொள்ளக்கூடாது. அப்படி இருக்கும் இவன் ஜைன மதத்துக்கு ஆதரவாகப் புஸ்தகம் எழுதுவதற்கே ஸரஸ்வதியின் அநுக்கிரகம் வேண்டுமேன்று கருதி அவளை உபாஸனை பண்ணியிருக்கிறான். உள்ளொன்று வைத்துப் புறமொன்றாக இருந்திருக்கிறான்.

இப்போதுகூட நாஸ்திகர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்கிறவர்களில் ரொம்பப்பேர் வியாதி வெக்கை வந்து ரொம்பவும் கஷ்டம் ஏற்பட்டால் வெங்கடரமண ஸ்வாமிக்கு வேண்டிக் கொள்கிறார்கள். மாரியம்மனுக்கும் பிரார்த்தனை செலுத்துகிறார்கள். கேட்டால், வீட்டில் இப்படி அபிப்பிராயம், சம்ஸாரத்துக்கு இதிலே நம்பிக்கை. அவர்களுக்காக விட்டுக்கொடுத்தேன். அவர்கள் உணர்ச்சி (feeling) க்கு மதிப்பு (respect) கொடுத்தேன் என்று ஜம்பமாகச் சொல்லிக் கொள்வார்கள்.

இந்த ரீதியில்தான் ரொம்பக் காலம் முந்தியே ஹிந்து மதத்தைக் கண்டனம் பண்ணும் கிரந்தங்களை எழுதிய அமரசிம்மன், அவை நன்றாக அமைய

வேண்டும் என்று, ஹிந்து மதத்தின் வாக்குத் தேவதையையே உபாஸனை செய்தான். ஒருவன் எந்தக் கார்யத்தை எடுத்துக் கொண்டாலும், அது நல்லதாகத்தான் இருக்கட்டும், கெட்டதாகத்தான் இருக்கட்டும், அதிலே பூரண சிரத்தையுடன் இறங்கி விட்டான் என்றால், அதற்குண்டான ஒரு பலனை பகவான் தரத்தான் செய்கிறான். அப்படியே இவனுடைய உபாஸனையின் சிரத்தையை மதித்து, இவனுக்கும் ஸரஸ்வதி அநுக்கிரகம் செய்து விட்டாள்.

இப்போது இவன் திரைக்கு இந்தப்புறம் ஸரஸ்வதி தேவியை ஆவாஹனம் பண்ணிவிட்டு உட்கார்ந்திருக்கிறான். தான் எத்தனை புத்திசாலியானாலும் ஆசாரியாள் எதிரில் சூரியனுக்கு முன் பிடித்த மெழுகுவர்த்திபோல் ஆகிவிடுவோம் என்பது இவனுக்குத் தெரியும். அதனால்

வாக்குத் தேவியை தஞ்சம் புகுந்தான். இவனுடைய உபாஸனைக்கு இன்னும் குஞ்ச காலம் பலன் தந்துதான் ஆகவேண்டும் என்று அவளும் கட்டுப்பட்டிருந்தாள். எனவே, என்னை ஒரு கட்டத்தில் ஆவாஹனம் பண்ணிவைத்துச் சுற்றிலும் திரை போட்டுக் கொண்டு, நீ அதற்குள் இரு, சங்கரர் வெளியிலிருந்து கேள்வி கேட்கட்டும். உனக்காக நானே பதில் சொல்கிறேன் என்று வாக்குத் தந்தாள் வாக்தேவி.

உடன் அவர், உன் காரியம்தானா இது?. நீ இப்படிச் செய்யலாமா?உன்னையும் மற்ற அத்தனை தெய்வங்களையும் ஆராதிக்கிற பழகக்த்தையே தொலைத்து விடவேண்டும் என்று கிரந்தம் செய்கிறவனுக்கே இப்படி அநுக்கிரகம் செய்யலாமா?அவனுடைய உபாஸனா பலத்துக்காக செய்தாய் என்றாலும், இத்தனை புஸ்தகங்கள் அவன் எழுதியுமா இன்னும் தீரவில்லை. அதோடு, இத்தனை நேரம் என்னோடு தாக்குப் பிடித்து வாக்குவாதம் செய்ததிலும் எத்தனையோ அநுக்கிரகத்தைச் செய்துவிட்டாயே. அவனுக்குச் செய்ய வேண்டியதற்கு அதிகமாகச் செய்வது நியாயமா?என்று ஸரஸ்வதியைக் கேட்டார்.

அவருடைய கணக்கு சரியாகத்தான் இருக்கிறது. அமர சிம்மனுடைய உபாஸனைக்குப் பிரதிபலன் தந்து தீர்த்தாயிற்று என்று ஸரஸ்வதி தெரிந்து கொண்டாள்.

உடனே கட்டத்திலிருந்து அந்தர்தமானமாகி விட்டாள். திரை அறுந்து விழுந்தது. அப்புறம் அமரசிம்மனால் ஆசாரியாளுக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. தோல்வியை ஒப்புக் கொண்டான்.

ஸரஸ் - அதாவது நீர் நிலையில் - இருக்கிறவள் ஸரஸ்வதி. அறிவுதான் அந்த நீர் நிலை. அது கொஞ்சம்கூடக் கலங்காமல் தெளிந்திருந்தால்தான் அதற்குள் அவல் இருக்க முடியும். ஆனால், ஆசாரியாள் அவதரித்த காலத்தில் எப்படி இருந்தது. ஏகப்பட்ட மதங்கள் - எழுபத்திரண்டு என்று சொல்வார்கள் - விதண்டாவாதங்களைச் சொல்லிக் கொண்டு அறிவையே கலக்கினாதால், ஞான ஸரஸானது ஒரே சேற்றுக் குட்டை மாதிரி ஆகிவிட்டது. அப்போது அத்வைத உபதேசத்தால், ஆசாரியாள்தான் அந்தச் சேற்றை எல்லாம் அடியோடு வாரி அப்புறப்படுத்தி, ஸரஸ்வதியாக்கினார்.

இப்படி ஒரு சுலோகம் உண்டு. (வக்தாரம் ஆஸாத்ய என்று ஆரம்பிக்கும்).

இம்மாதிரி ஸரஸ்வதியை ஸரஸ்வதியாக்குவதற்கே இப்போது அவர் ஸரஸ்வதியை அப்புறப்படுத்தும் படியாயிற்று. பிறகு அவர், ஸரஸ்வதியின் அநுக்கிரகத்தைப் பெற்ற அமரசிம்மனுக்கு தாமும் அநுக்கிரகத்தைப் பெற்ற அமரசிம்மனுக்கு தாமும் அநுக்கிரகத்தைச் செய்தார். அதைச் சொன்னால் அதுவே அமரகோசத்தின் கதையும் ஆகும்.

ஆசாரியாளிடம் தன் தோல்வியை ஒப்புக் கொண்டுவிட்டான் அமரசிம்மன். அதறகப்புறம் எவனுக்குத் தான் எழுதிய புஸ்தகங்கள் எல்லாம் ஏன் இனிமேலும் லோகத்தில் இருக்கவேண்டும் என்ற எண்ணம் வந்தது. அத்வைத பரமாக ஆசாரியாள் எவ்வளவு எழுதியிருந்தாரோ, அவ்வளவு இவனும் ஜைன சம்பந்தமாக எழுதியிருக்கிறான். இப்போது என் சித்தாந்தம் தோற்றுப் போனதாக ஒப்புக் கொண்டபின், இந்தப் புஸ்தகங்களை மற்றவர்களுக்காக விட்டுவைப்பது சரியாகாது என்று நினைத்தான்.

எந்த மதஸ்தரானாலும் நேர்மை, சத்தியம் உள்ளவர்கள் எதிலும் இருப்பார்கள். ஜைனர்களுக்கு சத்தியம், நேர்மை மிகவும் அதிகம். அவர்கள் ஞானசம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளுடன் வாதத்துக்கு வந்தபோது, தாங்களாகவே நாங்கள் தோற்றுப்போனால் கழுவேறிச் செத்துப்போவோம் என்றார்கள். அப்புறம் கனல் வாதம், புனல் வாதம் இவற்றில் அவரிடம் தோற்றுப் போனார்கள். ஆனால், கருணை மிகுந்த சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் அவர்களைக் கழுவேற்ற நினைக்கவில்லை. ஆனாலும் அவர்களாகவே பிடிவாதமாக நாங்கள் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லிக் கொண்டு கழுவேறினார்கள். ஞானசம்பந்தர் கருணை இல்லாமல் சிலரை தண்டிப்பதாக நினைப்பது தப்பு. இவர் வாதத்தில் ஜயித்து, அதனால் பாண்டியராஜா இவர் பக்கம் சேர்ந்து, எதிராளிகளுக்கு எந்த சிக்ஷை தரவும் இவருக்கு அதிகாரம் தந்தும்கூட, அவர் ஜைனர்களை மன்னித்ததே அவருடைய பெருமை. அப்படியும் வாக்குக்காகப் பிராணத்தியாகம் செய்தது ஜைனர்களுடைய பெருமை.

எதற்குச் சொல்ல வந்தேன் என்றால், அடிப்படையான

சீவர்களில் எந்த மதஸ்தருக்கும் நிரம்பப் பற்று இருக்கலாம். இப்போது அமரசிம்மனுக்குத் தப்பென நிரூபணமாகிவிட்ட தன் சித்தாந்தங்கள் லோகத்தில் இருக்க வேண்டியதில்லை என்ற எண்ணம் வந்து விட்டது. எனவே, பெரிதாக நெருப்பை மூட்டி, தான் எழுதியிருந்த சுவடிகளை ஒவ்வொன்றாக அதிலே போட்டுப் பஸ்பமாக்கினான். சரஸ்வதியின் அநுக்கிரகம் பெற்று, எத்தனையோ காலம் பரிசிரமப்பட்டு எழுதியதையெல்லாம், இப்போது ஒரு கொள்கைக்காகத் தன் கைகளாலேயே அக்னியில் போட்டு எரித்தான்.

இதை ஆசாரியாள் கேள்விப்பட்டார். ஆனால் துளிக்கூட சந்தோஷப்படவில்லை. மாறாக மிகுந்த துக்கமே கொண்டார்.அவர் அமரசிம்மரிடம் ஒடோடி வந்தார். அடடா, என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறாய். லோகம் என்று இருந்தால் நானா தினுசான அப்பிராயங்கள் இருக்கத்தான் செய்யும். பல அபிப்பிராயங்கள் இருந்து ஒன்றுக்கொன்று ஒப்பிட்டுப் பார்த்து சர்ச்சை பண்ணுவதுதான் பல நிலைகளில் இருக்கிற ஜனங்களுக்கு அறிவைத் தெளிவுபடுத்தும். எதிர்க்கட்சி இருந்தால்தான் நம் கட்சியில் உள்ள நல்லது பொல்லாதுகளை நாமே அலசிப் பார்த்துக் கொள்ள முடியும். நீ இந்த சித்தாந்தங்களுக்கு எப்படி ஆதரவு காட்டியிருக்கிறாயோ

அதிலேயே ஒரு அழகு. புத்தியின் பிரகாசம் இருந்தது. இதை எல்லாம் லோகத்துக்கு இல்லாமல் செய்யலாமா. என்று ஆச்சாரியாள் அவனிடம் சொல்லி, அவன் கையைப் பிடித்து, அவன் கடைசீயாக அக்னியில் போட இருந்த புஸ்தகத்தைப் போடவிடாமல் தடுத்தார். அப்போது அவன் கையில் இருந்ததுதான் அமர கோசம். ஆசாரியாள் தடுத்திருக்காவிட்டால் அதுவும் ஸ்வாஹா வாகியிருக்கும். ஆனாலும் துரதிருஷ்டவசமாக, சமய சம்பந்தமான அவனுடைய புஸ்தகங்கள் எல்லாம் போயே போய்விட்டன. அகராதி, நிகண்டு மட்டுமே நம் ஆச்சாரியாளின் கருணையால் பிழைத்தது. அமரம் என்ற பெயருக்கேற்றபடி அதை மட்டும், அவர் அழியாமல் அமரமாக்கிவிட்டார்.

அகராதியில் அதை எழுதியவன் தன்னுடைய சித்தாந்தம் முதலான எந்த சொந்தக் கொள்கைக்கும் பட்சபாதம்

காட்டக்கூடாது. பிற மதங்களைச் சேர்ந்த வார்த்தைகள ானாலும், இங்கே அகராதியில் அவற்றை விட்டுவிடாமல், ஆட்சேபிக்காமல், அவற்றுக்கு அந்தந்த மதஸ்தர்கள் என்ன அர்த்தம், என்ன பெருமை எனறு நினைக்கிறீர்களோ அதைத்தான் கொடுக்க வேண்டும். வேண்டுமானால், இப்படி இன்னொருடைய நம்பிக்கை (belief) என்று பட்டும் படாமலும் சேர்க்கலாமே தவிர, கண்டனம் ஒன்றும் பண்ணக்கூடாது. எல்லா வார்த்தைகளும் அர்த்தம் கொடுக்கத்தான் வேண்டும் - அது எந்தக் கட்சியாளரின் வேலை எனறு பார்ப்பது அகராதிக்காரரின் வேலை இல்லை.

இந்த நியாயத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் அமரசிம்மன் ஜைனனாக இருந்தபோதே இந்த அமர கோசத்தை எழுதி இருக்கிறான். இன்றைக்கும் சகல ஸம்ஸ்கிருத மாணவர்களும் நெட்டுருப் போடுகிற மாதிரி, பொது நேர்க்கோடு எழுதியிருக்கிறான்.

அகராதியையா, நெட்டுருவா. எது என்ன காவியமா. ஸ்தோத்திரமா. அதை எப்படி நெட்ருப்போடுவது என்று தோன்றும். ஆனால், அமர கோசம் எழகான் சுலபமான ஸ்லோகங்களாக, காவியம், மாதிரி, ஸ்தோத்திரம் மாதிரி, அப்படியே நெட்டுருப்போட வசதியாகத்தான் இருக்கிறது. அதை மனப்பாடம் செய்வது வழக்கமாக விட்டிருக்கிறது.

அந்தக் காலத்தில் எல்லா சாஸ்திரங்களும் - வேதாந்தம், வைத்தியம், சங்கீதம், டிக்ஷனரிகூடத்தான் - சுலோகங்கள ாகத்தான் செய்யப்பட்டன. காரணம் என்ன?.அப்போது அச்சு போட்டுப் புஸ்தகம் தயாரிக்கத் தெரியாது. எனவே கடைக்குப் போய்க் விலை கொடுத்து எத்தனை பிரதி வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம் என்றால் முடியாது. அத்தனை வித்தியார்த்திகளும் ஏட்டுச் சுவடியில் எழுதிக் கொடுப்பது என்றால் அதற்கே ஆயுசு காலம் போதாது. எனவே எதையும் மனப்பாடம் (memorise) பண்ணுகிற மாதிரி கொடுப்பதே யுக்தம் என்று கண்டார்கள். பேச்சு நடையில் (prose) இருப்பது மறந்து போதும். எப்போதும் நாம் பேசிக்கொண்டே இருப்பதால், அதே நடையில் இருக்கிற பாடம் தனியாக மனஸில், நிற்காமல் உதிர்ந்து போய்விடும். ஆனால், அதுவே ஒரு சத்தம், எதுகை, மோனை முதலானவைகளோடு சேர்த்து செய்யுளாக (poetry) வந்து விட்டால் மனப்பாடம் செய்து

மனஸில் மறக்காமல் பதித்துக் கொள்ளலாம். இதனால்தான், எந்த சாஸ்திரங்களையும் சுலோகங்களாகச் செய்து உருப்போட

வைத்தார்கள். அச்சுப் புஸ்தகங்கள் வருகிற வரையில் மகா பண்டிதர்களாக இருந்த பலர், ஒரு ஏட்டுச் சுவடிகூட இல்லாமல், ஞாபக சக்தியிலிருந்தே சகல சாஸ்திரங்களையும் கற்றுக் கொண்டு சொல்லி வந்தார்கள். இப்போது புஸ்தகம் என்று ஒன்று இருப்பதால், பார்த்துக் கொள்வதற்குத்தான் (for ready reference) புஸ்தகம் இருக்கிறதே என்று எவரும் எதையும், இப்படி மனசுக்குள் ஆழமாக வாங்கிக் கொள்ளாத நிலைமையையே பார்க்கிறோம். இன்று வெளியே லைப்ரரிகள் அதிகம். அக்காலத்திலோ எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் ரொம்பப் பேர் தாங்களே வாக்கிங் லைப்ரரிகளாக (நடமாடும் வாசக சாலைகளாக) இருந்து வந்தார்கள். காரணம் நெட்டுருப் பழக்கம்தான். இப்படி நெட்டுப் பணுவதாலேயே புத்திக்கு ஒரு பலம் ஐகாக்ரியம் (concentration) ஒழுக்கம் (mental decipline) இவையும் மாணாக்கருக்கு உண்டாயிற்று. நிறைய நேரம் இதே காரியமாக உட்கார்ந்தால்தானே, ஒரு விஷயம் மனப்பாடம் ஆகும்? ஆதலால் மாணாக்கரின் புத்தியை கன்னாபின்னா என்று பல விஷயங்களில் போகாமல் கட்டிப்போட்டுப படிப்பிலேயே வைத்திருப்பதற்கு, இப்படி மனப்பாடம் பண்ணுவது ரொம்ப சகாயம் செய்தது. இதற்கு வசதியாக சகல சாஸ்திரங்களையும் பத்யமாக (poetry) எழுதி வைத்தார்கள். கத்யம், பத்யம் என்று இரண்டு - தகத்யம் ப்ரோஸ். பத்யம் - பொயட்ரி.

சுலோக ரூபத்தில் வெகு அழகாக அமர கோசத்தைத் எழுதினான் அமரசிம்மன். அதிலே ஹிந்துமத தெயவங்களின் பெயர்கள் வருகிறபோது, ஒவ்வொரு தெய்வத்துக்கும் வேறு என்னென்ன முக்கியமான பெயர்கள் உண்டோ அத்தனையையும், கொஞ்சம்கூட மதபேத புத்தியில்லாமல், அடுக்கிக் கொண்டு போவான். அதைக் கேட்டாலே, அகராதியாகத் தோன்றாது. அர்ச்சனை போல - நாமாவளி போல - தோன்றும். உதாரணத்திற்கு இதோ, சம்பு என்ற வார்த்தைக்கு பிரதிபதங்களாக, அமரம் சொல்வதைக் கேளுங்கள்.

சம்பு ; ஈசு : பசுபதி ; சிவ : சூலீ மஹேஸ்வர : I

ஈசுவர : சர்வ ஈசான : சந்த்ரசேகர : II

பூதேச : கண்டபரசு : கிரீசோ கிரீசோ ம்ருட : I

ம்ருயுஞ்ஜய : க்ருதிவாஸா : பினாகீ ப்ரமாததிப் : II

அமரசிம்மன் பகவன் நாமாக்களை ரொம்பவும் ஆசையோடு சொல்லிக்கொண்டு போகிற மாதிரி இருக்கிறது. ஆரம்ப மாணவர்களும் நினைவு வைத்துக் கொள்கிற மாதிரி சுலபமாக லலிதமாகப் பதங்களைப் போட்டிருக்கிறான்.

இந்திரா என்ற வார்த்தை வந்தவுடன் இப்படியே மகாலக்ஷ்மியைப் பற்றிப் பொழிகிறான். கேட்கவே லக்ஷ்மிகரமாக இருக்கும்.

இந்திரா லோகமாதா மா க்ஷீரோததனயா ரமா

பார்கவீ லோகஜனனீ க்ஷீரஸாகரகன்யா ாகா

லக்ஷிமீ : பத்மாலயா பத்மா கமலா ஸ்ரீ : ஹரிப்ரியா

இப்படிப் போகிறது. டிக்ஷனரி மாதிரி இல்லை. ஸ்தோத்திரமாக இருக்கிறது. இப்படிப் பக்ஷபாதமில்லாமல் அர்த்தம் சொன்ன அமர சிம்மனுக்கும், ஒரே ஒரு இடத்தில் மட்டும் பக்ஷமாதம் வந்ததுதான் வேடிக்கை. பௌத்த மதம் என்று வந்தால் மட்டும் கொஞ்சம் மட்டம் தட்ட வேண்டும் என்ற எண்ணம் அவனுக்குப் போகவில்லை. நியாயமாகப் பார்த்தால் பௌத்தத்தை விட ஹிந்து மதத்தில்தான் அவனுக்கு விரோதம் அதிகமாக இருக்க வேண்டும். ஏனென்றால், கடவுளைப்பற்றிச் சொல்லாமலிருப்பது, ஹிம்ஸை இருப்பதால் யக்ஞம்கூடச் செய்யக்கூடாது என்பது ஆகிய கொள்கைகளில் ஜைனம், பௌத்தம் இரண்டுமே வைதிகத்துக்கு விரோதமானவை. அவற்றுக்குள் இம்மாதிரி ஒற்றுமை அம்சங்கள் நிறைய இருக்கின்றன.

பொதுவாக அடுத்த ஊரில் அல்லது அடுத்த தெருவில் நம்

பரம விரதியிருக்கிறான் என்றால்கூட அவனிடம் அதிகப் போட்டியிராது. அதிக வயிற்றெரிச்சல் இராது. ஆனால் பக்கத்து வீட்டில் அல்லது எதிர் வீட்டில் நமக்குக் கிட்டத்தில் இருக்கிறானே, இவனுக்கு நமமிடத்தில் அத்தனை விரோதம் இல்லாவிட்டால்கூட, இவனைப் பார்த்துத்தான் நமக்கு அசூயை, ஆத்திரம் ஜாஸ்தியாக இருக்கும். இவனை எப்படி மட்டம் தட்டலாம் என்று காத்துக் கொண்டிருப்போம். இதே மாதிரி தன் மதத்துக்கு ரொம்ப வித்தியாசமாக இருக்கிற வைதிக மதத்தைவிட, அதற்கு ரொம்ப ஒற்றுமை உள்ள பௌத்தத்தை மட்டம் தட்டுவதிலேயே அமரசிம்மனுக்கு ஒரு சந்தோஷம் இருந்தாற்போலிருக்கிறது. அமரசிம்மன் தன் நிகண்டுவில் ஹிந்து மத வார்த்தைகளுக்கு நியாயமாக அர்த்தம் பண்ணிவிட்டு, புத்த மத வார்த்தைகள் என்று வருகிறபோது என்ன பண்ணினான்?

புத்தரைக் குறிப்பிடும் வார்த்தை வரிசையாகச் சொல்ல நேர்ந்தபோது, அவருக்கென்றே பிரசித்தமாக இருக்கிற பெயர்களை ததாகதர் (லக்ஷியத்திலேயே செய்கிறவர்) போன்ற பெயர்களை அமரசிம்மன் சொல்லவே இல்லை. பொதுவான பெயர்கள் சிலவற்றை மட்டும், இதைப் படிக்கிற எந்த மதஸ்தர்களும் தன் ஸ்வாமி என்று நினைக்கும் படியிருக்கட்டும் என்கிற மாதிரி சொல்லிவிட்டான். அதோடு நிற்கவில்லை. ததாகதர் சாக்யமுனி முதலான பெயர்களை எல்லாம் ஜீனருடையதாக (மகாவீரருடையதாக) ஆக்குகிறான். புத்தருடைய பாடி - கார்ட் ஆக (மெய்க்காவலனாக) ஸுகர் என்று இருந்தார். அவர் பெயரைக்கூடத் தன் மதாசாரியரான ஜினருடைய பெயர்களில் ஒன்றாகவே கொடுக்கிறான்.

ஆனால், ஹிந்து மதத்திடம் இப்படியெல்லாம் மனக்கோணல் (prejudice) எதுவும் காட்டவில்லை. ஹிந்துக்களுக் குள்ளேயே வைஷ்ணவர்கள், சைவர்களுக்கிடையில் இருக்கக் கூடிய பரஸ்பர ப்ரெஜுடிஸ் கூட இவனுக்கு இல்லை. ஈஸ்வரன் பெயர்களைச் சொல்கிறமாதிரியே மகாவிஷ்ணுவின் நாமாக்களைக் கொடுக்கிறான். அதனால்தான் சைவ, வைஷ்ணவ பேதமில்லாமல் எல்லா மாணவர்களும் அமரத்தை நெட்டுருப்போடும் பழக்கம் நீண்ட காலமாக இருந்து வந்திருக்கிறது.

இப்படி எந்த ஸ்வாமிக்கும் ஏற்றத்தாழ்வு சொல்லாத பரமதஸ்தனான அமரசிம்மன், தன்னுடைய கோசத்தில் வேறெந்த தெய்வத்துக்கும் ஸ்வாமி என்கிறான் என்றால், அதை நாமெல்லாம் ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும்.

தேவஸேனாபதி;ஸ்வாமீ கஜமுகாநுஜ - என்கிறது அமரகோசம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அருள் மின்னல்*

'ஸ்வாமி' என்ற பெயர் ஸுப்ரமண்யத்துக்கே உரியது என்பதற்கு ஆதரவாக இன்னொரு விஷயமும் தோன்றுகிறது.

திருப்பதியை சும்ரமணியத்தோடு சம்பந்தப்படுத்திப் பேசுவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வேங்கடரமணஸ்வாமியே சுப்பிரமணியர்தான் என்ற நினைப்பவர்களும் உண்டு. வேங்கடரமணஸ்வாமி சகல தெய்வங்களாகவும் இருக்கிற பரமாத்மாவாக இருக்கிறார். அவரே பெருமாள், அவரே பரமேஷ்வரன் - அதனால்தான், அங்கே பில்வ அர்ச்சனை நடக்கிறது. அவரே அம்பாள் - இன்றைக்கும் சுக்ரவாரத்தில்தான் அவருக்கு அபிஷேகம். புடவையைத்தான் உடுத்துகிறார்கள். எல்லாத் தெய்வமும் அவரே. அவரை சும்பரமணியமாகச் சொல்பவர்கள் கூறும் காரணம் - அவர் மலைமேல் இருக்கிறதுதான். மலைமேல் பொதுவாக சுப்ரம்மணியர்தான் கோயில் கொள்கிற வனக்கம் இருக்கிறது என்கிறார்கள். வேங்கட ரமணா என்று சொல்வதில்லை. ஹிந்திக்காரர்கள் அவரை என்னவென்று சொல்கிறார்கள். பாலாஜி பாலாஜி என்றே சொல்வார்கள். பாலன், குமரன் என்றால் சிவசக்திகளின் செல்லக் குழந்தையான சுப்பிரமணிய ஸ்வாமியைத்தான் குறிக்கும். குமாரதாரை என்றே திருப்பதியில் ஒரு தீர்த்தம் இருக்கிறது.

இதோடு சேர்ந்து திருப்பதியிலுள்ள திருக்குளத்தின்பேர் ஸ்வாமி புஷ்கரிணி என்றிருப்பதாப் பார்த்தால் ஸ்வாமியே குமாரன் தான் என்பதற்கு இன்னொரு சான்று கிடைக்கிற மாதிரி இருக்கிறது திருப்பதி திருக்குளத்துக்கு ஸ்வாமி புஷ்கரிணி என்றே பெயர்.

சகல லோகத்தையும் - ஜீவர்களையும் ஜடத்தையும்தன் சகல சொத்தாக (ஸ்வம்)க் கொண்டிருக்கிறாவர்தான் ஸ்வாமி. அந்தப் பெயர் ஏன் சும்ரமணியருக்கு விசேஷமாக வந்தது. அத்தனை பெருமை அவருக்கு ஏன் என்று பார்ப்போம்.

மேகத்தில் மின்னல் பளிச்சிடுகிறது. க்ஷணகாலம்தான் - அதற்குள் அது மகாஜோதியை, மகாசக்தியைக் கொட்டி விடுகிறது. எத்தனையோ பவர் ஹவுஸ்களில் ஜெனரேட் செய்ய முடியாத அளவுக்கு மின்சாரத்தைப் பாய்ச்சி விடுகிறது. இத்தனை சக்தி இப்போதுதான் மின்னலாகத் தோன்றினாலும், இதற்குமுன் அது இல்லாமல் இல்லை. இல்லாதது எப்படித் தோன்ற முடியும். ஸயன்ட்டிஸ்டுகள் மின்சாரம் எப்போதும்` எங்கேயும் நிறைந்து இருக்கிறது என்கிறார்கள். ஆனால், சாதாரணமாக அது தெரிவதில்லை. பின் எப்போது தெரிகிறது. நீராவி மேகமாக மாறித் திரிகிறபோது, ஒன்றாக இருக்கிற மின்சாரம் சில பகுதிகளில் வல அம்சமாகவும் (பாசிடீவ்) சிலவற்றில் இட அம்சமாகவும் (நெடடீவ்) பிரிந்து நிற்கிறது. பிற்பாடு மழைச் சமயத்தில் மேகங்களில் ஒருவிதமான நெரிசல், குமுறல் உம்டாகிறபோது, வல அம்ச (positively charged) பகுதிகளும் இட அம்சப் பகுதிகளும் (negatively Charged) நெருங்குகிறபோது, இந்த அம்தங்கள் ஒன்றைஒன்று சரேலென்று ஆகர்ஷித்துக் கொள்கின்றன. இப்படி அவை தாவிக் கலக்குகிற போதுதான், எங்கும் நிறைந்திருக்கிற மின்சாரம்,

நமக்குத் தெரிகிறமாதிரி, இத்தனை சக்தியுடன் மின்னலாக வெளிப்பட்டுத் தெரிகிறது. எங்கும் ஒன்றாக உள்ளபோது இருப்பதே தெரியாமல் இருந்த மின்சாரம் இரண்டாகப் பிரித்து, பிறகு மறுபடி ஒன்றாகச் சேருகிற போது பெரிதாக ஜொலிக்கிறது. ஒலிக்கிறது இடியாக, மின்சக்தியை வாரிக் கொட்டுகிறது.

இது ஜடசக்தியான மின்சாரம். இந்த ஜடசக்திக்கு ஆதாரம் இதைப் பிறப்பித்த சித்சக்தி, அறிவுச் சக்தி.

தன் சக்தியை அறிந்து கொள்ளாமலேயே எங்கேயும் பரம்பொருளாக அது முதல் இயங்குகிறது. அப்புறம் பாஸிடிவ் நெகடிவ் ஆகப் பிரிகிறது. அதைத்தான் சிவன், சக்தி என்கிறோம். தமிழில் வலது, இடது என்று மின்சாரத்துக்குச் சொல்கிறோமே இதுதான் ரொம்பப் பொருத்தம். ஏனென்றால், ஈசுவரன் வலப்பக்கமும், அம்பாள் இடப்பக்கமும் இருப்பதுதான் அர்த்தநாரீசுவரக் கோலம். (அம்பாளுக்குப் பதில் இதே இடத்தில் - அதாவது இடப்புறத்தில் விஷ்ணு இருந்துவிட்டால் அதுவே சங்கர நாராயணர்). இரண்டாகப் பிரித்தால் போதாது. மின்னலாக வாழ்விக்கிற சக்தி ஏற்பட வேண்டும். ஒன்றாக இருந்த பிரம்மம் தன்னை அறிந்து, சிவசக்திகளாகப் பிரித்து, பிரபஞ்சத்தை உண்டுபண்ணி விட்டால் போதாது. பிரபஞ்சத்துக்கு எந்நாளும் அநுக்கிரகம் பண்ணிக்கொண்டிருப்பதாக ஒரு மின்னல் சக்தி பிறக்க வேண்டும். இதற்காகத்தான் பிரித்த வல அம்ச சிவனும், இட அம்ச சக்தியும் மறுபடி ஒன்றாகச் சேர்த்து, மின்னல்போல சக்தி வேலாயுதத்தை பிடித்திருக்கிற சுப்ரமண்ய ஜோதியை ஆவிர்பக்கச் செய்தார்கள். பிரமத் தன்மையானது லோகாநுக்கிரகத்துக்கெனவே ஒரு மூர்த்தியாகிறபோது, ஸுப்ரமணியம் ஆகச் சிறப்புப் பெறுகிறது. ஸு என்றால் நல்லது. சிரேஷ்டமானது என்று அர்த்தம். வெறும் பிரம்மம், அநுக்கிரக ஸுப்ரமண்யமாவதால் ஸ்வாமி என்ற டைட்டில் கிடைக்கும்படியான பெருமையைப் பெருகிறது.

இந்த ஜோதி உண்டாவதற்கே மூலமான சிற்சக்தி பிரிந்து, சேர்ந்தது, பிரிந்தது, அப்புறம் பெரிய ஆகர்ஷண வேகத்தோடு சேருவதற்குத்தான். சேர்ந்தது. இப்படி லோகங்களுக்கெல்லாம் கிருபை செய்கிற மகாசக்திமானாக ஒரு ஜோதிக் குமரன் உண்டாவதற்குத்தான்.

மேகத்தில் நாம் பார்க்கிற மின்னல் ஜோதி வெளி இருட்டை மாத்திரம் வெகு சிறிது காலத்துக்கு நீக்குகிறது. சுப்ரம்மணியமோ, அருள் ஒளி - அருட்பெரும்ஜோதி. அது வெளியிருட்டு, உள்ளிருட்டு இரண்டையும் சாசுவதமாக நீக்குவது. மின்சாரம் ஒருத்தரை இழுத்துக்கொண்டால்

எவராலும் இழுத்துத் தாக்குப் பிடிக்க முடியாது. எலெக்ட்ரோக்யூட்டானால் மரணம்தான். இந்த அருள் மின்சாரம் இழுத்துக் கொண்டாலும் எதிர்த்து நிற்க முடியாது. ஆனால், இது அந்த ஜோதி ரூபமாகவே நம்மையும் ஆக்கி, அமரமாகச் செய்துவிடும். அருணகிரிநாதர் கந்தர் அநுபூதி யில் இந்தப் பெரிய அநுபவத்தையே சொல்கிறார். ஒன்று இரண்டாகப் பிரித்து மறுபடி ஒன்றாய்ச் சேர்ந்தபின், பலவாக நினைக்ககிற நம்மையும் இழுத்துக் கடைசியில் அந்த ஒன்றாகவே ஆக்குகிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*குமாரன்*

அருணகிரிநாதர் ஸுப்ரமணிய ஸ்வாமியிடமிருந்து தமக்குக் கிடைத்த அத்வைத அநுக்கிரகத்தையே கந்தர் அநுபூதியில் விசேஷமாகச் சொல்கிறார்.

அவர் தம்முடைய திருப்புகழ் பாட்டுக்கள் ஒவ்வொன்றையும் பெருமாளே என்கிற வார்த்தையுடனேயே முடிக்கிறார். பொதுவாக பெருமாள் என்றால் மகாவிஷ்ணுதான். ஒரு ஊரில் ஈஸ்வரன் கோயில் பெருமாள் கோயில் என்ற போது பெருமாள் கோயில் என்றால் விஷ்ணு ஆலயம்தான். சிவசக்தியின் பூர்ணதேஜஸாக இருக்கப்பட்ட சுப்ரம்மண்யத்தை இப்படி பெருமாளாகச் சொல்லிச் சொல்லி அவர் முடிப்பதும் அழகாகத்தான் இருக்கிறது.

தமிழ்நாட்டிலேயே பொதுவில் இவரை மகாவிஷ்ணுவுடன் சம்மந்தப்படுத்திப் பேசுவது அதிகம். மருகன் என்றும் முருகனைச் சொல்கிறோமே, இது எதனால். அவர் அம்பாளுக்கு சகோதரராக இருக்கிற மகாவிஷ்ணுவின் மருமகன் என்பதால்தான். மால் மருகன் என்கிறோம். மருமகன் என்றால் மாப்பிள்ளை என்று அர்த்தம்.

மருமகப்பிள்ளை என்பார்கள். பூர்வத்தில் வள்ளி தேவசேனைகள் மகாவிஷ்ணுவின் புத்திரிகள்தான். அதனால் மாமாவான விஷ்ணு முருகனுக்கு மாமனாராகவும் இருக்கிறார். சிவனுக்கு மகன், மகாவிஷ்ணுவுக்கு மருமகன் என்ற பெருமை இவருக்கே இருக்கிறது. மருகோனே என்று அருணகிரிநாதரும் சொல்வார். ஆனால், வடதேசத்தில் இந்த மாமனார் சமாசாரமே சுப்ரமணியருக்குக் கிட்டே வரக்கூடாது. அவர் இங்கே எந்நாளும் பிரம்மச்சாரித் தெய்வம்தான். சில இடங்களில் சுப்ரம்மணியர் கோயிலுக்குள் ஸ்திரீகளை அநுமதிப்பதுகூட இல்லாயாம். அத்தனை கடுமை. சுப்ரம்மணியர் என்ற பெயரும் வடதேசத்தில் பிரசித்தியில்லை. அங்கே அவரைக் கார்த்திகேய என்றே சொல்வார்கள்.

பரமேஷ்வரனின் கண்களிலிருந்து ஆறு பொறிகள் வெளிவந்து, அவை சரவணப் பொய்கையில் தங்கி ஆறுமுகனாக உருக்கொண்டன. அப்போது கார்த்தைப் பெண்கள் - கிருத்திகா தேவதைகள் - என்கிற ஆறுபேர் அவரை எடுத்துப் பாலூட்டினார்கள். ஆகாசத்தில் கிருத்திகா நக்ஷத்திரங்கள் என்று ஆறு கூட்டமாக (Constellation) இருக்கின்றனவே, இவற்றின் அதிதேவதை அவர்களே. கார்த்திகைப் பெண்கள் பாலூட்டி வளர்த்ததால் அவருக்குக் கார்த்திகேயர் என்று பெயர் வந்தது. தனக்குத் தாயார் மாதிரி இருந்தவர்களின் பெயரை வைத்தே இப்படிப் அவர்களுக்குப் பெருமையாகப் பெயர் கொண்டார். வடக்கே இந்தப் பெயரை வழங்குகிறது. இல்லாவிட்டால் குழந்தை என்பதை வைத்து குமாரன் என்பார்கள். குமார ஸ்வாமி என்று நாம்கூடச் சொல்கிறோம். குமரன் என்று குறுக்கிச் சொல்வது தமிழ் மொழிப் பண்பு. வடக்கே குமரன் என்றால் சுப்பிரமணியர்தான். சிவசக்திகளில் பிள்ளை - சர்வலோக மாதா பிதாக்களின (விசேஷமான) புத்திரன் - இவர்தான். நாம் பிள்ளை (பிள்ளையார்) என்றால் விக்கினேச்வரரைத்தான் நினைக்கிறோம். ஆனால், வடக்கே கணேசருக்கு ஏனோ குமார சப்தத்தைக் காணோம். ஷண்முகரே அங்கே குமாரராக இருக்கிறார். காளிதாசன் செய்திருக்கிற காவியத்தைப் பார்த்தாலும்

அதற்கு குமார ஸம்பவம் என்றே பெயர் இருக்கிறது.

குமார சம்பவம் என்ற சொற்றொடர் சாக்ஷாத் வால்மீகி ராமாயணத்தில் வருகிறது. பாலகாண்டத்தில் விசுவாமித்திரர் ராம லக்ஷ்மணர்களுக்கு ஸ்கந்த உற்பத்தி கதையை விரிவாகச் சொல்கிறார். இதன் முடிவில், வால்மீகி சாதாரணமாக இந்தக் கதை கேட்டதற்கு இந்தப் பலன் என்று பலச்ருதி சொல்வதில்லைதான் என்றாலும், விதிவிலக்காக-சொல்கிறார். குமார ஸம்பவக் கதையைச் சொன்னேன். இது தனத்தையும் கொடுக்கும். புண்ணியத்தையும் கொடுக்கும். அப்பா, காகுத்ஸா, இந்த லோகத்தில் ஒரு மனுஷ்யனின் கார்த்திகேயனிடம் பக்தி வைத்துவிட்டால் போதும். தீர்க்காயுழ், புத்திர பௌத்திர ஸௌபாக்கியம் எல்லாம் அவனுக்குக் கிடைத்துவிடும். முடிவிலோ ஸ்கந்த லோகத்துக்கே போய் அவனுடைய நித்தியவாசம் செய்யலாம் என்கிறார். (பாலகாண்டம் - 37வது ஸ்ர்க்கம். சுலோ 31-32).

இங்கே குமார ஸம்பவம் என்று ஆதிகவி சொன்னதைத்தான் மங்கள வாக்காகக் கொண்டு காளிதாஸன் தன் காவியத்துக்கு அதே பெயரைத்தான் கொடுத்தான்.

குமாரன் என்ற பெயரை வைத்துத்தான் கௌமார மதம் என்ற ஸுப்ரமண்ய உபாஸனை ஏற்பட்டிருக்கிறது. ஷண்மதங்கள் என்று ஆறைச் சொல்வார்கள். கணபதியை முழுமுதற் கடவுளாக வழிபடுவது காணபத்தியம். சூரியனை முழு முதலாகக் கொள்வது ஸௌரம். அம்பாளையே (சக்தி) பரமதாத்பரியமாகச் சொல்வது சாக்தம். சிவனைச் சொல்வது சைவம். விஷ்ணுவைச் சொல்வது வைஷ்ணவம். இன்னொன்று சுப்பிரமணியரையே பரமாத்மாவாக உபாஸிப்பது. இங்கே குமார வழிபாடு என்ற பொருளில் கௌமாரம் என்றே பெயர் உண்டாக்கியிருக்கிறது.

மேலே ஸ்கந்த லோகம் என்று வால்மீகி ராமாயணத்திலிருந்து ஒரு வார்த்தை சொன்னேன். ஸ்கந்தன் என்பதும் சுப்பிரமணியரின் பிரக்யாதி வாய்ந்த பெயர். ஸ்கந்த என்கிற தாது (Root) வுக்கு, வெளிப்படுவதுபோல், சிவ ஜோதியிலிருந்து ஆறு பொறிகளாக வெளிப்பட்டுத் தெறித்ததால், ஸ்கந்த என்ற பெயர் உண்டாயிற்று. ஸ்கந்த என்ற நாமாவை விசேஷமாக வைத்தே புராணத்திற்கு ஸ்காந்தம் என்ற பெயர் வந்திருக்கிறது. தமிழில் இதைக் காஞ்சிபுரத்தில் இருந்த கச்சியப்ப சிவாச்சாரியார் கந்த

புராணம் என்று செய்திருக்கிறார். ஸ்கந்தன் தமிழில் கந்தனாகிறான்.

இருந்தாலும், தமிழ்நாட்டில் மருமகனாகக் சிறப்புப் பெற்றிருப்பவன் வடதேசத்தில் மகனாகவே - குமாரனாகவே - விசேஷிக்கப்படுகிறான். சகல ஜீவராசிகளும் ஆதி தம்பதியின் குழந்தைகளாயிருக்க, பிள்ளை என்றால் இவன்தான் என்று சொல்லும்படியாக, முருகனுக்கு இருக்கிற மகிமை என்னவென்று பார்ப்போம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிவ சக்தியின் ஐக்கிய ஸ்தானம்*

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று ஔவைப்பாட்டி சொல்கிறார் என்றால், அந்தத் தெய்வமே அன்னையும் பிதாவுமாகி - ஒரு பாதி அன்னை, ஒருபாதி பிதா என்று - அர்த்த நாரீசுவரராக உட்கார்ந்திருக்கிறது. இது நமக்குப் பரம லாபம் என்று கிட்டே போகிறோம். போனால் அப்புறம் இதனாலேயே சில குழறுபடிகள், சண்டைகள்கூட, உண்டாகிவிட்டிருக்கின்றன. காலில் போய் விழாலாம் என்றால், ஒரு கால் ஈஸ்வரனுடையது, மற்றது அம்பாளுடையது என்று இருக்கிறது. இப்படிக்கு ஒன்றுக்குமேலே ஆசாமி இருந்தால், உடனே நம்மையறியாமல் இது உசத்தியா அல்லது அது உசத்தியா, என்று ஒப்புப் பார்க்கிற எண்ணம் (Comparison) உண்டாகிவிடும். இது உண்டானால் அனர்த்தம்தான். எந்தக் காலில் விழுவதென்றே தெரியாது. அர்ச்சனை செய்யப்போனால். இவனுக்கு ஒரு தினுசு புஷ்பத்தால் அர்ச்சனை பண்ண வேண்டும். அவளுக்கு இன்னொன்றால் பண்ணவேண்டும் என்கிறார்களே. இந்தப் பக்கத்துப்பூ அந்தப் பக்கத்தில் விழுந்தால் அபச்சாரமாகிவிடுமோ? என்று கலக்கமாயிருக்கிறது. கடாக்ஷம் வேண்டும் என்று கேட்கிறபோதே வலது கண்ணா, இடது கண்ணா என்று

குழப்பம்.

குழப்பம் போதாதென்று சண்டையே முட்டிவிடுகிறார் ஒருகவி. அப்பைய தீக்ஷிதரின் வம்சத்தில் பிறந்து மதுரையில் மந்திரியாகப் பரிபாலனம் செய்த நீலகண்ட தீக்ஷிதர்தான் அவர். ஆனந்த ஸாகர ஸ்தவம் என்று மீனாக்ஷியைத் துதிக்க ஆரம்பித்தவர், பார்வதீ பரமேசுவரர்களான தம்பதியருக்குள் கலகம் மூட்டி சந்தோஷப்படுகிறார். அம்மா. இதென்ன உன் பதி அக்கிரமக்காரகாக இருக்கிறார். உன் புகழையெல்லாம் அவர் அல்லவா திருடிக்கொண்டிருக்கிறார். காமதகனர், மன்மதனை எரித்தவர் என்று பெயர் வாங்கியிருக்கிறாரே, எரிந்தது நெற்றியின் நடுவில் இருக்கிற கண் அல்லவா. அது வலது இடது இரண்டுக்கும் பொது. எனவே உனக்கும் அந்த நெற்றிக் கண்ணில் பாதி உண்டு. வெற்றியிலும் பாதி உன்னுடையதாக இருக்க, அவர் மட்டுமே பேரை அடித்துக் கொண்டு போய்விட்டாரே. போனால் போகிறது. இதிலாவது பாதி உரிமை அவருக்கு இருக்கிறது. இதைவிட, அநியாயம் அவரைக் காலகாலன் என்பதுதான். காலனை உதைத்தது எந்தக் கால். இடது கால் அல்லவா. அது முழுவதும், நூறு பெர்ஸெண்டும் உன்னுடையதல்லவா. நீ செய்த கால சம்ஹாரத்தை, அவர் தாமதாகத் தஸ்கரம் பண்ணியிருக்கிறாரே என்கிறார். ஜனனம், மரணம் இரண்டையும் கடக்க முறையே காமஜயம், காலஜயம் பண்ண வேண்டுமானால், அம்பாள் அருள் இன்றி முடியாது என்கிற பெரிய தத்துவத்தைக் காவித்வ ஸ்வாதந்திரியத்தோடு இப்படிச் சொல்கிறார்.

ஆனால், அவர் ரொம்பப் பெரியவர். சண்டை மூட்டி விட்டதோடு அவர் நின்றுவிடவில்லை. எல்லாச் சண்டைகளும் (வாழ்க்கைப் போராட்டமே) தீர்த்து போதும்படியான பரமப்பிரேமை, இந்த அர்த்தநாரீசுவரருக்குள் எங்கே ஊற்றெடுக்கிறது என்பதையும், சிவலீலார்ணவ த்தில் சொல்கிறார். (அசக்யமங்காந்தர என்று தொடங்கும் சுலோகம்) பரமாத்மாவின் அன்பு ஊற்றெடுக்கும் அந்த இடத்தை நினைத்து விட்டால் நமக்கு ஒரு குழப்பம். குறைவும் உண்டாகாது. அப்படியே அதில் ஊறிப்போகவே தோன்றும். அவர் இரத்தினச் சுருக்கமாகச் சொல்வதை விவரித்துச் சொன்னால்தான் நமக்குப் புரியும்.

அர்த்தநாரீசுவ ரூபத்திலிருந்து பார்வதீ - பரமேசுவரர்களின் எல்லா அங்கங்களையும் பிர்த்துப் பிரித்து பாகம் பண்ணுகிறோம். மாதொரு பாகன் உமையொரு பாகன் என்றெல்லாம் அவருக்கும் பாகம் பிரியா என்றே அவளுக்கும் பெயர்கள் இருந்தாலும்கூட இது இவர் கண்-அது அவள் கண். இது இவர் காது - இது அவள் காது என்று இப்படிப் பாகம் பிர்த்துப் பார்க்க முடிகிறது. இந்தக் கூறு இவருடையது. அந்தக் கூறு இவளுடையது என்று மொத்தத்தையும் பாப்பாதியாக பிரிக்க முடிகிறது. இப்படி இரண்டு ஆசாமிகளைப் கொண்டுவந்தவுடனேயே கம்பேர் பண்ணுகிற அனர்த்தம். அடாடா, அப்படியானால் பிரித்துச் சொல்ல முடியாமல் ஒரிடமும் இவர்களிடம் இல்லாயா என்று தேடுகிறோம்.

பிரிக்க முடியாமல் இருப்பது எது. அணு (Atom) தான். அதற்கு மேலே பிரித்துக் காட்ட முடியாது என்று நம்மை நிறுத்தி வைப்பது அணுதான். (பிரிக்க முடியாத) அதைப் பிளந்துதான் இப்போது எத்தனையோ உற்பாதங்களைப் பண்ணியிருக்கிறான். இப்படி உபாதம் பண்ணுவதால் எதிர்த்தரப்பு, சுயத்தரப்பு என்ற பேதமில்லாமல் எல்லாம் சர்வ நாசமாகிவிடும் என்று இரண்டு கட்சிக்காரர்களுக்கும் தெரிந்தும்கூட, அப்படியும் உண்டாக்கிவிடுமா. என்று பீதியையாவது உண்டாக்கலாமே என்று உண்டாக்கி வருகிறார்கள். (இவ்விஷயம் இருக்கட்டும்) இப்படி அணு மாத்திரமாக ஒன்று அர்த்த நாரீசுவர ரூபத்தில் இருந்து விட்டால் போதும். பிரச்சனை தீர்ந்தது. அதை ஸ்மரித்து விடலாம். ஏனென்றால் இவளுகக்கு அவருக்கு என்று இதை பாகம் போட முடியாது. அது இரண்டு பேருக்கும் சொந்தமாயிருக்கும். ஒப்புவமை, ஒருத்தரை விட்டோம். ஒருத்தருக்கு அபச்சாரம் செய்தோம் என்கிற தோஷங்கள் உண்டாவதில்லை. அப்படி அணுப்பிரமாணமாக ஒன்று இருந்துவிட்டால் போதும். எவ்வித மனக்கலக்கமும் இல்லாமல் அதைப் பிடித்துக் கொண்டு அம்மை அப்பனின் கூட்டு அநுக்கிரகத்தைப் பெற்றுவிடலாமே என்று தேடுகிறோம்.

இங்கேதான் கவி நமக்கு சகாயம் பண்ண வருகிறார். ஒரு சரீரத்துக்கு மத்தியில் இருக்கிற இருதயத்துக்கும் மத்தியில்

ஒரு அணு இருக்கத்தான் செய்கிறது. அணு என்றுகூட அதைச் சொல்ல முடியாது. அணுவையாவது ரொம்பவும் நுண்ணிய மெக்ராஸ்கோப் வைத்துப் பார்த்துவிடலாம். உடனே மானஸிகமாவது அதில் இரு பக்கங்களைப் பங்கு போடலாம். இருதய மத்தியில் இருக்கிற இந்த அணு வையோ எந்த சூக்ஷ்மதரிசினியாலும் காண்பிக்க முடியாது. ஆனால், இது இல்லாவிட்டால் மநுஷ்யனுக்கு எண்ணமே இல்லை. உணர்ச்சியே இல்லை.

இது என்ன?மனசு மனசு என்கிறோமே அதுதான். எந்த எக்ஸ் - ரேயிலாவது அதைக் காட்ட முடியுமா?

அர்த்தநாரீசுவரர் மட்டும் என்றில்லை. எந்த மூர்த்தியானாலும் அதன் மனசு என்று இருக்கிறதே அதைத் தியானிப்பதுதான் விசேஷம். உருவத் தியானம் ரொம்ப ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது. ஆரம்ப தசையில் அத்தியாவசியமாகத்தான் இருக்கிறது என்றாலும்கூட, இதிலும் நம் மனசு அந்தண்டை அந்தண்டை அசையாமல் ஒருமுகப்படுவதில்லை.
ஆடத்தான்

செய்கிறது. பரமேசுவர ஸ்வரூபம் என்றால் ஜாடை, அதை விட்டு கங்கை, அதை விட்டு சந்திரன், நெற்றிக்கண், நீலகண்டம் இப்படி எண்ணமானது எதில் நிலைத்து நிற்பது என்று தெரியாமல் சலித்துக் கொண்டே இருக்கிறது. பரமாத்மாவின் மனசு என்று எடுத்துக் கொண்டாலோ அது ஒன்றாகவே இருக்கிறது. நம் மனசிலே நூறு கோடி எண்ணங்கள். அதில் முக்கால்வாசி தேஷமயமாகவே இருக்கும். தாயும் தந்தையுமாக இருக்கப்பட்ட அர்த்தநாரீசுவர மனசு இப்படியா இருக்கும். அதில் பிரேமப்பிரேமை என்கிற ஒரு எண்ணம் தவிர வேறென்ன இருக்கும். கருணை ஒன்றை நிறைந்த அணுமாத்திரமான மனசு அது. அதைப் பிடித்துக் கொள்ளுங்கள் என்கிறார் கவி. அதிலே நம்மைக் கொண்டுபேய் நிறுத்துகிறவர்கள்தான் குமாரஸ்வாமிய சிவ சக்திகளின் ஐக்கியத்தில் தோன்றிய அன்புக் குழந்தை.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*தந்தையை மிஞ்சிய தனயன்*

இமயமலை மகா பெரியதாக இருக்கலாம். கடுகு சின்னஞ் சிறியதாக இருக்கலாம். ஆனால், இயமலைக்குள் இருக்கிற அத்தனை அவயங்கள் கடுகுக்குள்ளும் இருக்கும். கடுகைக்கூட அப்படியே பிரித்துக் கொண்டே போகலாம். கடைசியில் ஓர் அணு வந்து நிற்கும். அப்புறம் பிரிக்க முடியாது. சர்வ வியாபகமாக, இத்தனை அண்ட சராசங்களாகப் பிரித்திருக்கிற சிவ - சக்திகளை பிரிக்க முடியாமல் ஓரிடத்தில் பார்க்க வேண்டும் என்றால், அது அவர்களது அன்பு ஊற்றெடுக்கிற இருதய மத்தியில்தான். பலவாக அவர்களிடமிருந்து விரிந்திருப்பதெல்லாம் ஒன்றாகக் குவிகிறது. இந்த அன்பு என்கிற அணுவில்தான்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்

அன்பே சிவமாவ(து) ஆரும் அறிகிலார்

அன்பே சிவமாவ(து) ஆரும் அறிந்தபின்

அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே

என்கிறார் திருமூலர். அன்பு ஒன்றே உள்ள அந்த மனஸைத் தெரிந்து கொண்டு விட்டால், அப்புறம் நம் மனஸும் நூறாயிரம் திசைகளில் ஓடாது. அன்பிலேயே முழுகிக் கரைந்து அன்பாகவே ஆகிவிடும். அருணகிரிநாதன் பெற்ற அநுபூதி இதுதான்.

பரமேசுவரனின் வஸ்து (Matter) அம்பாள் அதன் சக்தி (Energy) என்ற ஸயன்ஸ் சூத்திரமெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். வஸ்துவின் ஸத்தை (சிவமயமான வெறும் இருப்பு), அதன் மகாசக்தி (அம்பாளின் ஆற்றல்) இதுகளை மட்டும் சொல்லிக் கொண்டு நமக்கு என்ன பிரயோஜனம்? நம்மைக் கடைத்தேற்றப் போவது அவர்களுடைய அன்புதான், அருள்தான். இருவருடைய அன்பும் பொங்கிப்

பெருகக் கலந்து இடம்தான் அவர்களுடைய செல்லப் பிள்ளையான ஸுப்பிரமணியர். கடைக்குட்டி யாறுக்கும் செல்லம்தானே? செல்வ முத்துக் குமரன் என்றே வைத்தீசுவரன் கோவிலில் அவருக்குப் பெயர். உள்ளே ஒன்றாக இருந்த அன்பு, இரண்டாகப் பிரித்து மறுபடி ஒன்றாகக் கலந்து இப்படி நாம் உபாஸிப்பதற்கு சுலபமாக சுப்பிரமணியமாக மூர்த்திகரித்திருக்கிறது.

சிவ - சக்தி ஜோதியில் ஜனித்த அவர் மகா தேஜஸ்வி; பரம பாக்கியசாலி; எவராலும் சம்ஹரிக்க முடியாத சூரன். தாரகன் முதலான அசுரர்களை வெல்லவே தோன்றிய மகா சக்திமான். சக்தி வேல் என்றே சொல்கிறோம். ஆனால், இந்தப் பராக்கிரம சக்தியோடு, அருட்சக்தியாக இருப்பதே அவருடைய விசேஷம்.

அறிவுக்குச் சக்தியாக இருக்கிறவர்களும் அவர்தான். ஞான பண்டிதன் ஞானஸ்கந்தன் என்பார்கள். ஆதிகுருவான தகப்பனாருக்கே உபதேசம் பண்ணினவன். ஸ்வாமி என்று அமரத்தில் சொல்லப்படுகிற ஸுப்பிரமணியர் இந்த அவசரத்தில் (கோலத்தில்) தகப்பன்சாமி எனப்படுகிறார். ஸ்வாமி மலை என்றே அவர் சிவனுக்குப் பெயர் இருக்கிறது. அங்கே அவரை ஸ்வாமிநாதன் என்பார்கள்.

செல்லப்பிள்ளை. அதனால் தன்னைக் காட்டிலும் இந்தப் பிள்ளையை எல்லா அம்சங்களிலும் பெரியவனாகக் காட்டி பூரித்துப் போகிறார் பரமேசுவரன். என்னைவிட இவன் ஞானி என்று பிள்ளையிடமே தாழ்ந்து உபதேசம் வாங்கிக் கொள்கிறார். வர பலம் பெற்றுள்ள தாரகன். சூரன் இவர்களை நான் வதைக்க முடியாது. என்னாலும் முடியாததைச் செய்ய - அதாவது என்னைவிடப் பெரியவனாக ஒருத்தன் வரவேண்டும். என்றே இந்தப் பிள்ளையைப் படைத்தார். அப்புறம் ஞானபலமும் அவனுக்கே அதிகம் என்று காட்ட அவனிடமே உபதேசம் பெற்றுக் கொண்டார். எங்கேயும் தனக்கு வெற்றியைத்தான் விரும்ப வேண்டும். ஆனால் பிள்ளையிடத்தில் மட்டும் தோல்வியை விரும்ப வேண்டும். (புத்ராத் இத்தேச் பராஜயம்) என்பார்கள். அதாவது, ஒவ்வொரு பிதாவுக்கும் தன்னைவிடத் தன் பிள்ளை நன்றாக் இருக்க வேண்டும், புத்திசாலியாக இருக்க வேண்டும் என்றுதான் இருக்கும். பரமேசுவரனுக்கே இப்படித்தான்

இருந்திருக்கிறது. தானே அம்பாளோடு சேர்ந்து பிள்ளையாக வந்தான் என்றாலும் இப்போது வீரம், ஞானம், லாவண்யம் எல்லாவற்றிலும் முன்னைவிட அதிகமாக பிரகாசத்தை எடுத்துக்கொண்டான்.

இங்கே லாவண்யத்தைச் சொன்னேன். ஈஸ்வரன் மன்மதனைத் தகனம் பண்ணியபின், மன்மதன் திமிரோடு பிரயோகம் செய்த அதே கரும்பு வில்லையும் புஷ்ய பாணத்தையும் அம்பாள் எடுத்துக் கொண்டு காமாக்ஷியானாள். ஈஸ்வரனைத் திமிரோடு நெருங்காமல் அன்போடு பார்த்து, அவனிடம் அடங்கி, இவற்றைப் பாதத்தில் அர்ப்பணம் செய்தாள். சண்டை போட்ட மன்மதனால் உண்டாக்க முடியாத அன்பு, இப்போது இவளது பணிவினாலேயே ஈசுவரனுக்கு உண்டாகி விட்டது. அதன் விளைவாகவே ஜனித்த குமாரன் இவன். இப்போது பார்த்தால், இவனே ஈசுவரன் பொசுக்கென மன்மதனுக்கு மன்மதமாக இருக்கிறான். தமிழில் காமவேள் செவ்வேள் என்று மன்மதன், முருகன் இவருக்கு மட்டுமே வேள் என்கிற பதத்தைப் பொருத்துகிறார்கள். அது அவனுடைய லாவண்யப் பெருமை.

முருகன் முருகன் என்பது தமிழ்நாட்டில் வழங்குகிற வெகு சிறப்பானப் பெயர். முருகன் என்றாலும் அழகானவன், என்றும் இளமை நலம் மாறாத சௌந்தர்யம் வாய்ந்தவன் என்பதே அர்த்தம்.

அழகு என்றால் அது வெறும் சரீர அழகு. அருளின் அழகுதான் இப்படி

தேக காந்தியாக வந்திருக்கிறது. பரமேசுவரன் அம்பாள் சம்பந்தத்தோடு இப்படி குமாரனாக ஆவிர்பவித்தபோது வீரம், ஞானம், சௌந்தர்யம் இவற்றோடு அருளிலும் அதிகப் பிரகாசத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஸத் - சித் ஆனந்தம் என்று சொல்கிறார்கள். அதுதான் பரம்பொருள். இதிலே ஸத் (இருப்பு) பரமேசுவரன். இருக்கிறோம் என்பதை உணர்ந்து சக்தியைக் காட்டுகிற சித் அம்பாள். இப்படி உணர்ந்தால் பேரானந்தம் பிறக்கிறது. இந்த ஆனந்தமே சுப்பிரமணியர். சிவம் என்கிற மங்களமும் அம்பாள் என்கிற காருண்யமும் கலந்த பரம

உத்கிருஷ்டமான ஸ்தானம் அவர். ஸச்சிதானந்தத்தையே சோமாஸ் கந்தர் என்று தமிழ் நாட்டுச் சிவாலயங்களில் எல்லாம் வைத்து உற்சவம் நடத்துகிறோம். ஈஸ்வரனுக்கும் அம்பாளுக்கும் நடுவே, இருவருக்கும் பொதுவான மத்ய ஸ்தானமாக, சுப்பிரமணியர் குழந்தை ரூபத்தில் இருப்பார். உமையோடும், ஸ்கந்தனோடும் கூடியவர் (ஸஹ உமா ஸ்கந்தர்) தான் ஸோமாஸ்கந்தராக பரமேசுவரன். பிள்ளையார் என்று விக்கிநேசுவரரையே சொல்கிற தமிழ்நாட்டிலும் இங்கே மட்டும் குமரன் என்று சிறப்பிக்கப்படுகிற இளைய பிள்ளை மட்டும், தாய் தந்தையோடு வைத்து மூன்று மூர்த்தியாகச் செய்திருக்கிறார்கள். பிள்ளை என்றால் இவன்தான் என்று எல்லோரும் பெருமைப்படுகிற மாதிரி, பிதாவே பெருமைப்பட்டு தோல்வியை ஒப்புக் கொள்கிற மாதிரி இப்படி உத்தம அம்சங்கள் எல்லாவற்றிலும் உச்சமாக இருக்கிறார் ஸுப்பிரமணியஸ்வாமி.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*வேத நெறியை வாழ்விப்பவன்*

ஸ்கந்த மகாபுராணம்தான் புராணங்களுக்குள்ளயே மிகப் பெரியது. ஏறக்குறைய ஒன்றரை லட்சம் சுலோகம் கொண்டது. உலகத்திலேயே இருப்பதற்குள் மிகப் பெரிய கிரந்தம் அதுதான் எனலாம். இப்படிப்பட்ட ஸ்காந்தம், இன்னம் வால்மீகி ராமாயணம், காள்தாசரின் குமார ஸம்பவம் எல்லாம் ஸுப்பிரம்மணியர் பெருமையைச் சொல்கின்றன. குமார குப்தன் என்கிற மாதிரி, பழைய ஆரியாவர்த்த ராஜாக்களின் பேர் சுப்பிரமணிய பரமாக இருக்கிறது. ரொம்பப் பழங்கால நாணயங்களில்கூட - வட இந்தியாவின் மூலைக் கோடிகளில் கண்டெடுக்கப்பட்டவற்றில் - மயூர வாகனராகக் குமாரஸ்வாமி இருக்கிறார். இப்போது பாகிஸ்தானுக்குப் போய்விட்ட எல்லை மாகாணத்தில் (North

- West Frontier) கண்டெடுத்த குஷானர் நாணயங்களில் குமாரஸ்வாமி உருவம் பொறித்திருந்தது. வடபுலத்தின் பல ராஜ வம்ஸங்கள் அவரை ப்ரம்மணிய குமாரர் என்று குலதெய்வமாகக் கொண்டிருக்கின்றன. அந்த ராஜாக்கள் தங்களையும் ப்ரம்மணியர்கள் என்றே சொல்லிக் கொள்வார்கள். ஸுப்ரம் மண்யத்தின் முதல் எழுத்தைத் தள்ளினால் ப்ரம்மண்யம் தானே நிற்கிறது. இங்கே நம் தமிழ்நாட்டில் வேதத்துக்கும் சமஸ்கிருதத்துக்கும் ரொம்பத் தொண்டு செய்திருக்கிற காஞ்சிப் பல்லவ ராஜாக்களும், தங்களை சிவ பக்தியில் சிறந்த பரம பாகவதர்களாகவும் சொல்லிக் கொள்வதோடு, ஸ்கந்த உபாஸனையே விசேஷமாகச் செய்த பரம ப்ராம்மண்யர்களாகவும் வர்ணித்துக் கொண்டிருக்கிறார்கள். சாஸனங்களில் இவற்றைப் பார்க்கிறோம்.

எல்லாவற்றுக்கும் முற்பட்ட வேதத்தில் போற்றப்பட்ட ஸ்வாமியாக அவர் இருக்கிறார். ரிக்வேத பஞ்ச சூத்திரத்தில் தகப்பன் சாமி யைப் பற்றிய பிரஸ்தாவம் வருகிறது. பரமேசுவரனைப் போற்ற வந்த இந்த வேத ஸூக்தத்தில் ஒரு மந்திரம் குமாரனை வணங்குகிற பிதா என்று அவரைக் கொண்டாடுவது அதிவிஷயம். சாந்தோக்ய உபநிஷத்தில் ஸனத்குமார - ஸ்கந்தரைப் பற்றி வருகிறது. பாணினியின் வியாகரணம், அதற்குப் பதஞ்சலி செய்த மஹா பாஷ்யம் எல்லாவற்றிலும் ஸ்கந்தன், விசாகன் என்ற பெயர்களில் முருகனைப் பற்றிப் பிரஸ்தாவம் உண்டு.

போதாயன தர்ம சூத்திரத்தில் தினமும் செய்ய வேண்டிய வேத தர்பணங்களில் ஸ்கந்தனும், அவனது பார்ஷதரும் (பரிவாரங்களும்) இடம் பெறுகிறார்கள்.

தமிழ்பிமானம் உள்ளவர்களுக்கு இதை எல்லாம் சொல்ல வேண்டும். ஏனென்றால், தமிழ் மொழிக்கே முருகன்தான் அதிஷ்டான தெய்வம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். முருகன் என்று அலாதி அன்பு சொட்டச் சொல்வது தமிழர்களுக்கே உரிய பெருமை. ஆதிகாலம் தொட்டு இங்கு குறிஞ்சி நிலக்கடவுளாக அவரை வழிபட்டு வருகிறோம். தொன்மையிலும் தொன்மையான தொல்காப்பியம் இதை சேயோன் மேய மைவரை உலகமும் என்கிறது. ஆறுபடை வீடுகள் என்று பிரசித்தமான சுப்பிரமணிய க்ஷேத்திரங்கள்

தமிழ் தேசத்தில்தான் இருக்கின்றன. அவர் தமிழை உண்டாக்கியவர், வளர்த்தவர், சங்கப்புலவர்களிளில் ஒருவராக இருந்திருக்கிறார். அகஸ்தியருக்குத் தமிழிலக்கணம் உபதேசிக்கிறார். மிகப் பழய சங்க காலத்திலேயே நக்கீரர் இவர் மீது திருமுருகாற்றுப் படையைப் பாடியிருக்கிறார். பலர் அதைப் பாராயணம் செய்தே கைகண்ட மருந்தாகப் பலன் அடைந்திருக்கிறார்கள். முன்னொரு முறை நம் மடத்துத் துவாரா மூலமாக ஒரு வைகாசி விசாகத்தின்போது இந்தத் திருமுருகாற்றுப்படையும், விநாயகர் அகவலையும் நிறைய அச்சுப் போட்டு எல்லோருக்கும் அன்பளிப்பாக வழங்கினோம் - விநாயக சதுர்த்திக்குள் இவற்றை மனப்பாடம் செய்ய ஒப்புக் கொண்டவர்களுக்கு, காவடி எடுப்பது, கிருத்திகா, விரதம், சஷ்டி உபவாஸம் இருப்பதெல்லாம் தமிழ் நாட்டுக்கே விசேஷமானவை.

இதனாலெல்லாம் முருகனைத் தமிழ்த் தெய்வம் என்று குறிப்பாகச் சொல்லிக் கொள்கிறோம். ஆனால் இந்தக் காலத்தில் தமிழ் மதம் வேறு, வேதநெறி வேறு என்று பேதம் செய்வதில் சிலருக்கு ருசி இருந்து வருகிறது. இது ஆராய்ச்சி என்று சொல்லிக் கொண்டு நம் ஜனங்களை பேதப்படுத்துவதற்காக வெள்ளைக்காரர்கள் செய்த விஷமத்தின் அனர்த்தமான விளைவு. வேத மதம்தான் என்றைக்கும் தமிழ் மதமாக இருந்திருக்கிறது என்பதுதான் என் அபிப்பிராயம். அந்த விவாதம் இப்போது வேண்டாம். குமாரஸ்வாமி ஒருத்தரை எடுத்துக் கொண்டால், இவர் தமிழ் தெய்வம் என்கிற போது, வேதத்திலும் தமிழ்நாட்டுக்கு வெளியிலும் இவர் ஆதியில் கிடையாது என்ற தப்பபிப்ராயம் ஏற்படக்கூடாது என்பதற்கே, ரிக்வேத காலத்திலிருந்து ராமாயணம், அப்புறம் புராண காலம், காளிதாஸன் காலம், குப்தர்கள் முதலிய ராஜாக்களின் காலம் எல்லாவற்றிலுமே பாரத தேசம் முழுக்க அவர் பெருமை பரவியிருந்திருக்கிறது என்று காட்ட வந்தேன்.

வைதிக நெறியை வளர்க்கவே ஏற்பட்ட ஸ்வாமி அவர் என்பதற்கு ஸுப்பிரமணியர் என்ற பெயரே போதும் என் று சமநிலையிலிருந்து (Un - biassed) பார்த்தால் தெரியும். பிரம்மண்யத்தை - அந்தணர்கள் பற்றி ஒழுகுகிற வேத நெறியை - வளர்க்கிறவர் சுப்பிரமணியர் என்பது

வெளிப்படை.

வேதத்துக்கு முக்கியம் வேள்வி, யாகம், வேள்விக்கு முக்கியம் அக்னி. தெய்வங்களுக்குள் சுப்பிரமணியம்தான் அக்னி ஸ்வரூபமானவர். அவருக்குப் பஞ்சபூத சம்பந்தமும் உண்டு. ஆகாச ஸ்வரூபமான ஈசுவரனின் கண்களிலிருந்து நெருப்புப் பொறியாகத் தோன்றி, வாயுவும், அகினியும் அவரைச் சுமந்து கங்கையில் சரவணப் பொய்கை என்ற நீர் நிலையில் விட, அவர் அங்கே ஷண்முகராகி, பிறகு பூமி உச்சமாக எழுப்புகிற மலைச்சிகரங்களிலெல்லாம் கோயில் கொண்டிருக்கிறார். இப்படிப் பஞ்சபூத சம்பந்தமிருந்தாலும் அவர் அக்னிச் சுடராகவே பிறந்தவர். அக்னியில் பிறந்தவர் - அக்னி பூ - என்றும் அவருடைய பெயர் வவரிசையில் அமரகேசம் சொல்லிக் கொண்டு போகிறது.

ஸேநானீ. அக்னி. பூ குஹ

குஹையில், நம் இருதய குகையில் ஆத்ம ஸ்வரூபமாக அரூபமாக இருக்கிற குகன், இப்படி வெளிப்பட்ட பஞ்சபூதங்களில் இருந்தாலும், முக்கியமான அக்னி ஸ்வரூபினியாக இருப்பதால் அவர் அக்னியாராதனையாக வையமாகக் கொண்ட வேதப் பிரதிபாத்யமான தேவதையே ஆவார்.

வேதநெறி க்ஷீணித்தால் அதைப் புணருத்தாரணம் பண்ணுவதே சுப்பிரமண்ய ஸ்வாமிக்கு முக்கியமான காரியமாக இருக்கிறது. தமிழ்நாட்டில் ஒரு முறையும், வட தேசத்தில் ஒரு முறையும் இப்படிப் புறச் சமயங்களை வென்று வைதிகத்தை ஸ்தாபிக்கவே அவர் இரு அவதாரங்கள் செய்திருக்கிறார்.

தமிழ்நாட்டில் ஏற்பட்ட அவதாரம் ஞானசம்பந்தர். பரமேசுவரனோ, முருகனோ அவதாரம் செய்ததாகச் சொன்னால் இழுக்கு என்று நினைக்கிற சித்தாந்திகள் இருக்கிறார்கள். கராப்பவாஸம் செய்தால் நிஷித்தம் என்பது அவர்கள் கருத்து. விஷ்ணுதான் அவதரிப்பவர். எங்கள் ஸ்வாமியான சிவபெருமான் பிறவாயாக்கை என்பார்கள். ஆனால், அத்வைதிகளுக்கு எல்லா ஸ்வாமியும் ஒன்றுதான். ஜீவாத்மாவும் பரமாத்மாவும்கூட ஒன்றுதான். இத்தனை ஜீவர்களாக அந்தப் பிரமாத்மா கர்ப்பவாஸம் பண்ணி வெளி

வந்திருப்பதையே இழுக்காக நினைக்காமல் இவனிடம்கூட நீயும் பிரம்மம் தானப்பா என்று சொல்வது நம் கொள்கை. தப்புப் பண்ணுகிற ஜீவர்களை ரக்ஷிப்பதற்காக, ஒரு பாபமும் தொடமுடியாத ஸ்வாமி அவர்களில் ஒருத்தகராகப் பரம கருணையுடன் அவதரிப்பதாகச் சொல்வது அவருக்குப் பெருமை தருவதாகவே நமக்குத் தெரிகிறது. அருணகிரிநாதரைப் பெரிய மமுருகடியார் இருக்க முடியாது. அவரே திருப்புகழில் முருகனை உறை புகலியூரில் அன்று வருவானே என்கிறார். புகலியூர் என்பது சீர்காழி. ஞான சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் சீர்காழியில்தான் அவதாரம் செய்தார்.

ஞானசம்பந்தர் எதற்கு அவதரித்தார் என்பதைச் சேக்கீழார் வேதநெறி தழைத்தோங்க என்று சொல்கிறார். சமணர்களை வாதில் வென்று

பிராம்மணியத்தை நிலைநாட்டினவர் ஞானசம்பந்தர். தமிழ் வேதமான தேவாரம் பாடிய அவரும் தம்மை நான்மறை ஞானசம்பந்தன் என்றே சொல்லிக் கொள்கிறார். இந்த மறைகளை, மறை கூறும் யாகாதி கர்மாக்களை வாழ்த்தி வளர்ப்பது முருகனுக்கே ஏற்பட்ட ஒரு விசேஷமான காரியம் என்று, திருமுருகாற்றுப்படையும் சொல்கிறது.

தொன்மை வாய்ந்த பத்துப்பாட்டில் முதலாவதாக இருக்கிற நூல் அது. தமிழ்நாட்டில் குறவரினத்திலிருந்து சகல சமுதாயத்தினரும் சுப்பிரமண்யரை எப்படி எப்படி வழிபட்டார்கள் என்பதை அது சொல்கிறது. நக்கீரர் அதில் ஷண்முக நாதனின் ஆறுமுகங்களில், ஒவ்வொரு முகத்துக்கும் ஒரு விசேஷமான காரியத்தைச் சொல்கிறபோது,

ஒரு முகமம்

மந்திர விதியின் மரபுளி வழா அது

அந்தணர் வேள்வி ஓர்க்கும் மே

(மந்திர விதி தப்பாமல், வைதிக சம்பிரதாயப்படி பிராம்மணர்கள் செய்கிற யாகங்களைக் கண்டு இன்புற்று அவற்றை வளர்க்கவே முருகனுக்கு ஒரு முகம் இருக்கிறது என்றார்)

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*முருகனின் தமிழ்நாட்டு அவதாரம்*.

இந்தக் காலத்தவர்கலுக்குச் சில புதுக் கொள்கைகளில் ரொம்பவும் அபிமானம் இருக்கிறது. அதற்காக, பழங்காலத்தில் இருந்தவர்களையும் தங்கள் கொள்கைப்படி நடந்தவர்களாகக் காட்ட வேண்டும் என்று நினைத்து, அவர்கள் அபிப்பிராயங்களை மாற்றிச் சொல்லக்கூடாது. பிடிக்கிறவர்கள் புதுக் கொள்கைகளை வைத்துக் கொள்ளட்டும். ஆனால், நம் பூவிகர்கள்மீது இவற்றைச் திணிக்கக்கூடாது. முருகன் வேத மதத்தில் இல்லாதவன்,தமிழ் நாட்டுக்கு மட்டும்தான் உரியவன், இங்குதான் ஆதி (ஒரிஜினல்)யில் இருந்தவன் என்பது ஒரு புதுக் கொள்கை.

யாகம் செய்கிற வேதியர்கள் தொழுகிற தெய்வம் என்று திருப்பரங்குன்றத்தில் இருக்கிற முருகனை சங்க நூலான திருமுருகாற்றுப்படை சொல்கிறது. முருகன் அவதாரமான ஞானசம்பந்தர் தாம் வேதத்தை வளர்க்கவே வந்ததாகச் சொல்லிக் கொள்கிறார். வேத வேள்வியை நிந்தனை செய்துழல் ஆதமில்லி யமண் என்றும் சம்பந்தரே சொல்லியிருக்கிற சமணர்களை வென்று மறுபடி வைதிக தர்மத்தை நிலைநாட்டத்தான் அவர் அவதாரம் பண்ணினார். ஸாக்ஷாத் அம்பாளுடைய க்ஷீரத்தை சம்பந்தர் பானம் பண்ணினார் என்பதே அவர் அவளுடைய நேர்ப்பிள்ளையயான ஸுப்ரமணியம் என்பதற்கு அத்தாட்சி. பிரம்மண்யத்தை - வைதிக தர்மத்தை - வாழ வைப்பதே தம் லட்சியம் என்பதாலேயே வாழ்க அந்தணர் என்ற தேவாரப் பாடலால் முடிந்த முடிவாகச் சமணரை ஜயித்தார். அந்தத் கதையைச் சொல்கிறேன்.

சமணர்களுக்கு அவர் அறிவு ரீதியில் வாதம் செய்து

ஜயித்தது போதமில்லை. பாண்டிய ராஜாவுக்குத் திருநீற்று மகிமையால் வெப்பு நோய் தணித்ததும் போதமில்லை. தானாகவே உடம்பு குணமாயிருக்கும் என்று நினைத்தார்களோ என்னவோ. மறுக்க முடியாத அற்புதத்தால் மதத்தை நிலைநாட்டப் பரீட்சை வைத்தார்கள். அதாவது அனல்வாதம், புனல்வாதம் செய்யவேண்டும் என்றார்கள். இரு கட்சிக்காரர்களும் தங்கள் தங்கள் கொள்கைகளைச் சுவடியில் எழுதி நெருப்பில் போடவேண்டும். எந்தச் சுவடி எரியாமல் இருக்கிறதோ, அதில் இருக்கிற தத்வமே சத்தியம் என்பது அனல் வாதம். ஆற்று ஒட்டத்தில் இரு தரப்பினரும் தங்கள் சுவடிகளை விட வேண்டும். எது பிரவாகத்தின் கதியை எதிர்த்து மறு திசையில் செல்கிறதோ அதுவே உண்மை என்பது புனல் வாதம். முதலில் அனல் வாதத்தில் சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளே ஜயித்தார். அப்புறம் புனல் வாதம். ஜைனர்கள் விப்ர க்ஷயம் என்று சுவடியில் எழுதி ஆற்றில் போட்டதாகச் சொல்கிறார்கள். விப்ர க்ஷயம் என்றால் பார்ப்பானே ஒழிக என்று அர்த்தம். வேத வேள்விகள் பரம அஹிம்ஸாவாதிகளாக சமணர்களுக்கு விரோதமானதால் இப்படி எழுதி வெள்ளத்தில் போட்டதாகச் சொல்கிறார்கள். அது முழுகிப் போயிற்று. அப்புறம் சம்பந்தர் ஒரு தேவாரப் பாடலை எழுதிப் பிரவாகத்தில் போட்டார். அந்தச் சுவடியோ அலையோட்டத்தை எதிர்த்துக் கொண்டு கன ஜோராகச் சென்றது. குலச்சிறையார் என்கிற பாண்டிய மந்திரி குதிரையில் ஏறி, கரையோடு அந்த ஏடு போகிற திசையில் வேகமாகச் சென்றார். அப்புறம் சம்பந்தர் ஒரு பதிகம் பாடி அதை நட்டாற்றில் நிற்கச் செய்தார். குலச்சிறையார் அந்த ஏட்டை ஒரே சந்தோஷத்துடன் எடுத்துக் கொண்டு கரை சேர்ந்த இடம் இப்போது திருவேங்கடம் (திரு ஏடு அகம்) என்று வழங்குகிறது. இதுவே, சம்பந்தரின் முடிவான வெற்றி. புனலை எதிர்த்துப் போன அந்த ஏட்டில் சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் என்ன எழுதியிருந்தார்?

வாழ்க அந்தணர் என்றே ஆரம்பிக்கிறது அந்தத் தேவாரப் பாடல். வேதம் இருந்தால்தான், பிராம்மணீயம் இருந்தால்தான் லோகத்துக்கு, க்ஷேமம் என்பதில் சம்பந்தருக்குக் கொஞ்சம்கூட சந்தேகம் இல்லை. அதற்கு உபகரிப்பதே தம் ஜன்மாவிரதம் - அவதார காரியம் - என்று தயங்காமல் வெளியிட்டார் என்பது இதிலிருந்து தெரிகிறது. நவீன

காலத்தில் சிலருக்கு இந்தக் கொள்கை பிடிக்காமலிருக்கலாம். ஆனால், சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளுக்கு அதில் நிச்சயமாக உறுதி இருந்தது என்பதோ ஆட்சேபிக்க முடியாது.

அது சரி, ஆனால், வேதத்தை ஓதிக் கொண்டு, யாகம் செய்து கொண்டிருக்கிற ஒரு கூட்டம் மட்டும் நன்றாக இருக்க வேண்டும் என்று ஒரு மகான் நினைப்பாரா? சர்வ ஜனங்களும் சமஸ்தப் பிராணிகளும் நன்றாக இருக்க வேண்டும் என்பதுதான் மகானின் ஸதா கால நினைப்பாக இருக்கும். ஞான சம்பந்தர் மேலே சொன்ன பாடலை இப்படித்தான் ஆசீர்வாதம் செய்து முடிக்கிறார்.

வையகமும் துயர் தீர்கவே

லோகா ஸமஸ்தா. ஸுகினோ பவந்து என்பது தமிழ்க் குழந்தையின் அருகில் இப்படி அருள் சொட்ட வெளிவந்திருக்கிறது. சரி, வையகம் என்றால் அதில்

எல்லா ஜீவராசிகளும் ஜாதிகளும் அடக்கம்தானே? அப்படியானால் வையகம் முழுவதும் துயர் தீருகிறபோது, தானாகவே அதிலிருக்கிற அந்தணர்களும் வாழ்ந்து விட்டுப் போகிறார்கள். அவர்களை எதற்கு, வையகத்தைச் சேராதவர் மாதிரி தனியாகப் பிரித்து, முதல் ஸ்தானம் கொடுத்து, வாழ்க அந்தணர் என்று சொல்ல வேண்டும். பிராம்மண ஜாதியில் பிறந்தால் சம்பந்த மூர்த்தி ஸ்வாமிக்குத் தனி அபிமானங்கள் இருப்பதாகச் சொல்வது நன்றாகவேயில்லையே.

லோக க்ஷேமம்தான் அவருக்கு லக்ஷ்யம். ஆனால், அதற்கு சாதனம் வேத யக்ஞங்கள்தான். இதனால்தான் வேத கர்மாக்களைச் செய்கிறவர்களைத் தனியாகப் பிரித்து முதலில் சொன்னார். - பட்சதாபம் இல்லை.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்

வீழ்க தண்புனல் வேந்தனும் ஒங்குக

வானவர்களான தேவர்களுக்கு யக்ஞத்தில் ஆஹுத் கொடுத்தால்தான் மழை பெய்யும் - தண்புனல் வீழும். மழை பெய்து தானிய சுபிக்ஷம் உண்டாவதினால்தான் ராஜாங்கம் செழிக்கும் - வேந்தன் ஒங்குவான். நடுவே ஆனினம் என்று ஏன் தனியாகச் சொல்லியிருக்கிறது. முடிகிறபோது வையகம்

என்று சொன்னதில் இதுவும் அடக்கம்தானே?அந்தணரைத் தனியாக சொன்னதற்குக் காரணம், அவர்கள் செய்கிற யாக கர்மா என்று சொன்னீர்கள். சரி, பசுக்களை - ஆனினத்தை - தன்யாகச் சொன்னது ஏன்?என்று கேட்பீர்கள். லோகோபகாரம் செய்ய வேண்டும் என்கிற பரம நியமங்களுடன் வாழ்ந்து வேதங்களைச் சொல்லி ஆஹுதி செலுத்தி யாகத்தைச் செய்பவர்கள் என்பாதால் அந்தணர்களைச் சொன்னது போலவேத்தான், யாகத்தில் ஆஹுதியாகிற நெய்யையும் பாலையும், எரிப்பதற்கு உதவுகிற சாணத்தையும் தருகிறது, என்பதாலேயே ஆனினத்தைத் தனியாக குறிப்பிட்டார். ஆக தனியாக இவை மட்டும் நன்றாக இருக்க வேண்டும் என்ற ஒரவஞ்சனையில்லை. வையகம் துயர்தீர உதவியாக நடைபெற வேண்டிய வேள்விக்கு உதவி செய்வதாலேயே தனியாக வாழ்த்தினார். லோகோபகாரமாக வேத கர்மத்தைச் செய்வதற்காகத்தான் அந்தணரை வாழ்த்தினார். அந்தக் கர்மாவை விட்டுவிட்டவர்களுக்கு இந்த வாழ்த்து இல்லை. அப்படிப்பட்டவர்களுக்கு நானும் வக்காலத்து வாங்க வரவில்லை.

எங்கு பார்த்தாலும் வெள்விகள் நடந்து வேத நெறி விருத்தியானால், தீயதெல்லாம் தீய்ந்துபோகும் என்பது சம்பந்தர் சித்தாந்தம் என்று தெரிகிறது.

ஆழ்க தீயதெல்லாம் ! அரன் நாமமே

சூழ்க ! வையகமும் துயர் தீர்கவே !

என்று பின் இரண்டு வரிகளில் பாடுகிறார்.

வேதநெறி என்பது ஒரு பெரிய ஆறு. ஒரு ஆற்றிலேயே பல படித்துறைகள் இருப்பதுபோல், வேத நெறியில் சைவம், வைஷ்ணவம், சாக்தம் என்று பல இருக்கின்றன. இவற்றுள் மிகு சைவத்துறை விளங்க வந்தவர் ஞானசம்பந்தர் என்கிறார் சேக்கீழார். அதனால், வேத தர்மம் தழைத்தோங்குகிறபோது, எங்கு பார்த்தாலும் சிவபெருமானின் நாமமே - ஒலிக்க வேண்டும் என்கிறார்.

இப்படியிருந்தால் வையககத்தில் - ஒரு ஜாதிக்கு மட்டும் இல்லை என்பதோடு நம்

பாரத தேசத்துக்கு, ஹிந்து சமூகத்திற்கு மட்டும் இல்லை. உலக முழுவதிலுமே - ஒரு கஷ்டம் இல்லாமல் எல்லோரும் ஆனந்தமாயிருப்பார்கள் என்கிறார்.

இந்த லோக க்ஷேம லக்ஷியத்துக்காகவே சிலர் யக்ஞாதிகளைச் செய்ய வேண்டும் என்று அவர்களை விசேஷமாக வாழ்த்தினார். அவர்களுடைய தர்மத்தை நிலைநாட்டித் தருவதே அவரது அவதார காரியமாக இருந்தது.

வேத தெய்வமாகக் இருந்துகொண்டு, பர மதங்களை நிராகரித்து, மறைவழக்கை நிலைநாட்டுவது சுப்ரமண்யரின் அவதார காரியம் என்பது இதிலிருந்து தெரிகிறது.

வடக்கே ஏற்பட்ட ஸுப்ரமண்ய அவதாரத்தைப் பற்றிச் சொல்கிறேன்

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

முருகனின் வடநாட்டு அவதாரம்

தென் தேசத்தில் சீர்காழியில் பிறந்து ஜைனர்களை ஜயித்த அதே குமாரஸ்வாமி வடதேசத்தில் பௌத்தர்களின் ஆதிக்கம் இருந்தபோது பிரயாகையில் அவதாரம் செய்தார். அவருக்குக் குமரில பட்டர் என்று பெயர். பெயரிலேயே குமார சம்பந்தம்.

பக்தி, ஞானம் இவற்றையெல்லாம்கூட ஒதுக்கிவிட்டு நமக்கு வேதம் சொன்ன கர்மா இருக்கிறது. அதை அநுஷ்டித்தாலே பரம சிரேயஸ் என்று அநுஷ்டானம் செய்பவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குக் கர்ம மீமாம்ஸகர்கள் என்று பெயர். பூர்வ மீமாம்ஸகர்கள் என்றும் சொல்வதுண்டு. வேதம் சொன்னபடி கர்மா செய்த இவர்கள் அதனாலேயே லோக க்ஷேமம், ஆத்ம திருப்தி இரண்டும் உண்டாவதைப்

பார்த்தார்கள். எனவே, கர்மாவுக்குப் பலன் தருபவன் என்று ஓர் ஈஸ்வரனைக்கொண்டு வருவானேன் என்பது இவர்கள் கட்சி. அதனால் பக்தி வேண்டியதில்லை என்பார்கள். கர்மாவிலேயே நிறைவு இருக்கிறபோது கர்மமே இல்லாத ஆத்மாவைப்பற்றி எனக்கு ஞான விசாரம். ஞானத்துக்காகவே கர்மாவை விடுவது பாபம் என்பார்கள். அதாவது ஞான மார்கமும் இவர்களுக்கு ஆகாது. குமரிலபட்டர் இப்படிப்பட்டவர்தான். மீமாம்ஸ மதத்தில் மூன்று விதம் உண்டு. அவற்றில் பாட்ட மதம் என்பது (குமாரில) பட்டராலேயே ஏற்படுத்தப்பட்டது. அவர் மதம் ஸ்தாபித்ததுக்கு முன் கதைக்குப் போகலாம். வேத கர்மம், தானே பலனைக் கொடுக்கிறது என்ற நம்பிக்கையுடன் சகல கர்மாநுஷ்டானங்களும் செய்து வந்தார்.

அப்போது வேத அத்தியயனம், யாகயக்ஞங்கள் முதலானவற்றைக் கண்டனம் செய்யும் பௌத்தர்களின் செய்வாக்கு அதிகமாகி வந்தது. அவர்கள் ஏன் அப்படிச் சொல்கிறார்கள். அவர்களுடைய கொள்கைகள் என்ன என்று பூரணமாகத் தெரிந்துகொள்ளத் குமரிலபட்டர் விரும்பினார். வைதிக கர்மாநுஷ்டானத்தின் உயர்ந்த பலனில் அவருக்குச் சந்தேகமில்லை. அதை அவர் விடுவதாகவும் இல்லை.ஆனாலும்கூட உடனே பௌத்தர்களிடம் சண்டையிட்டுக் கிளம்பிவிடவில்லை. அவர்களுடைய கொள்கை எந்தப் பிரயோஜனத்திற்கு ஏற்பட்டது என்று பூரணமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்புறம் நம் கொள்கையின் பிரயோஜனம் பெரிதா. நிராகரிக்கத் தொடங்கலாம். என்று திறந்த மனஸோடு எண்ணியிருப்பார் போலிருக்கிறது. அல்லது அந்த மதத்தைப் பூரணமாகத் தெரிந்து கொண்டால், பிற்பாடு வாதத்துக்கு இடமில்லாமல் நாமே பூரணமாக எதிர்வாதம் செய்து நிராகரித்து விடலாம் என்று எண்ணியிருக்கலாம்.

சும்ரமண்யர் என்கிற நிலையிலேயே இருந்தால் எல்லா மத சித்தாந்தமும் கற்றுக்கொள்ளாமலே தெரிந்துவிடும்தான். ஆனால், சுப்பிரமண்யராயிருந்து ஜயிப்பது உதவாது. ஏனென்றால், எப்போது பார்த்தாலும் அபிப்பிராய பேதம் இருக்கத்தான் செய்யும். அவற்றை மநுஷ்யர்கள் தங்கள் புத்தி சக்தியை விருத்தி செய்துகொண்டு தாங்களே தீர்த்துக் கொள்ள விடாமல் சுப்பிரமண்யரை மறுபடி மறுபடி

எதிர்பாத்துக் கொண்டிருக்க விடுவதில் சாரமில்லை. எடுத்ததற்கெல்லாம் தெய்வ சக்தியை காட்டி ஜனங்களை உபயோகமில்லாமல் வைப்பதனால் சிருஷ்டியை வேண்டாமே. தெய்வ சக்தியை ஒரே தடவை பிரயோகித்து எல்லாவற்றையும் சம்ஹரித்துவிட்டு, அப்புறம் பேசாமலிருப்பது விடலாம்.

ரொம்பவும் அதர்மம் மிஞ்சிப் போனால், கிருஷ்ண பரமாத்மா மாதிரி பகவத் சக்தியைக் காட்டத்தான் வேண்டும். மற்ற சமயங்களில் மநுஷ்யராக இருக்கிற மாதிரியே காட்டிக்கொண்டு, மநுஷ்யர்களுக்கு தக்கபடிதான் நடக்க வேண்டும். இதனால் மநுஷ்ய சக்தியை வைத்துக்கொண்டு, அதையே பெரிதாக்குகிற தன்னம்பிக்கையை தைரியத்தை, உத்ஸாகத்தை ஜனங்களுக்கு ஊட்ட வேண்டும். பௌத்தத்தை சம்பூரணமாக அறிந்த பிறகே அதைக் கண்டிக்க எண்ணிய குமரிலபட்டர் இப்படி நினைத்தார் போலிருக்கிறது. அதனால் மநுஷ்ய ரீதியில் பௌத்த சித்தாந்தத்தை வித்தியாப்பியாசம் செய்ய முடிவு செய்தார்.

பௌத்தர்களோ தங்களது ரகசிய தத்வங்கலைச் சிஷ்யர்களுக்குத்தான் சொல்லிக் கொடுப்பார்கள். அதோடுகூட அவர்கள் கர்மீநுஷ்டானம் செய்கிற பிராமிமணர்களைத் தங்கள் விஹாரத்தில் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். இதற்காக ஒரு பெரிய தியாகம் செய்தார் குமரிலபட்டர். எதிராளிக் கொள்கைகளை சத்தியமாக உள்ளபடி தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே தம்முடைய சத்தியத்தைத் தியாகம் செய்தார் - பொய் வேஷம் போட்டார். தம்மை பௌத்தர் என்றே சொல்லிக்கொண்டு விஹாரத்தில் சேர்த்துவிட்டார். அந்தரங்கமாக அவசியமான கர்மாக்களை மட்டும் அநுஷ்டித்து வந்தார். மற்ற சமயங்களில் அவர்களில் ஒருத்தராகவே காட்டிக் கொண்டார். இப்படியே அங்கிருந்து சம்பூரணமாக பௌத்த சித்தாந்தத்தைக் கற்றுக் கொண்டு விட்டார். அதற்கப்புறம் அவர் பிக்ஷுவாக இருந்து புத்த தர்மத்தைப் பரப்பப் போவதில்லை. எப்படியாவது கத்தரித்துக் கொண்டு நழுவப் பார்க்கிறார் என்று விஹாரத்தைச் சேர்ந்தவர்களுக்கு சந்தேகம் வந்துவிட்டது. அவருக்குத் தெரியாமல் விசாரணைகள் செய்து அவரைப் பற்றிய உம்மையைத் தெரிந்து கொண்டார்கள். சரி. நம்மை வஞ்சனை

பண்ணியவனை நாமும் வஞ்சிக்க வேண்டும். இவன் கொஞ்சமாக நம் ரகசிய தத்வங்களை தெரிந்து கொண்டிருந்தால் விஹாரத்திலிருந்து விரட்டினாலே போதும். இவனோ முழுக்கத் தெரிந்து கொண்டுவிட்டான். ஆதலால் லோகத்திலிருந்தே இவனை விரட்ட வேண்டும் என்று அவர்கள் தீர்மானம் பண்ணினார்கள்.

அஹிம்ஸைத் தத்வம் போன இடம்தெரியவில்லை. ஹிதவஞ்சனையாக அவரை ஏதோ பேச்சுக் காட்டி விஹாரத்தின் ஏழாவது மாடிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அங்கேயிருந்து அவர் எதிர் பாராத சமயத்தில் அங்கிருந்து அவரை அப்படியே கீழே தள்ளிவிட்டார்கள்.

அந்த ஆபத்து சமயத்தில்கூட அவருக்கு வேதத்தில்தான் ஸ்மரணை. எனவே, வேதம் பிரமாணமாக இருந்தால் நான் ஏழாம் மாடியிலிருந்து விழுந்தும் எனக்குக் கெடுதல் ஏற்படாமலிருக்கட்டும் என்று ஆணை வைத்துக் கொண்டே விழுந்தார்.

அதேபோல் அத்தனை உச்சத்திலிருந்து விழுந்தும் அவருக்கு மண்டை நொறுங்கவில்லை. கைகால்கூட முறியவில்லை. கண்ணில் மட்டும் ஒரு கல் பொத்துக் கொண்டு கொஞ்சம் புண்ணாகி விட்டது. நமக்கு அவர் எப்படிப் பிழைத்தார் என்று ஆச்சரியமாக இருக்கிறது. அவருக்கோ, வேதப் பிரமாணத்தின்மேல் நான் ஆணை வைத்திருக்க எனக்கு ஏன் இந்தச் சின்ன உபாதைக்கூட ஏற்பட வேண்டும் என்று வேதத்தின் மேல் ஸ்வாதீனமாகக் கோபமே வந்தது.

அப்போது அசரீரி கேட்டது. அது நீ என்ன சொன்னாய். வேதம் பிரமாணத்தால் எனக்குக் கெடுதல் ஏற்படாது, என்று சொல்லவில்லையே. இப்படிச் சொன்னாலல்லவா பூர்ண நமபிக்கை என்றாகும். நீ வேதப் பிராமணனாக இருந்தால் என்று சொன்னதில் கொஞ்சம் சந்தேகம் தொங்கி நிற்கத்தானே செய்கிறது. அதன் பலன்தான் கண்ணுக்கு வந்த கஷ்டம் என்றது.

குமரிலபட்டர் முன்னைவிடத் தீவிரமாக வேத கர்மங்களில் விசுவாசம் வைத்து, பாட்ட மதத்தை ஸ்தாபித்து, பௌத்தத்தை நிராகரணம் செய்யத் தொடங்கினார். தன் மத்ம்

(சித்தாந்தம்) எதிரொளி மதம் (பூர்வபக்ஷம்) இரண்டையும் கரைத்துக் குடித்த மகா மேதையாதலால், சுலபத்தில் பௌத்தர்களை வாதத்தில் வென்றார்.

சங்கர பகவத் பாதர் புத்த மதத்தை விரட்டினார் என்று நீங்கள் சரித்திர புத்தகத்தில் படித்திருக்கிறீர்கள். இது தப்பு, ரொம்பவும் மிகை (Exaggeration) என்று அவர் பெயரை வைத்துக் கொண்டிருக்கிற நானே சொல்கிறேன். ஆசாரிய பாஷ்யங்களைப் படித்தவர்கள் ஒப்புக் கொள்வார்கள். அதிலோ பௌத்த மத கண்டனம் ரொம்பவும் குறைச்சல்தான். பௌத்தர்களை ஏற்கெனவே குமரிலபட்டர் அடக்கி விட்டார். ஆசாரியாள் அதிகம் கண்டனம் செய்தது, வைதிகத்தையே சேர்ந்த இந்தக் கர்ம மீமாம்ஸைகளையும், இன்னொரு வைதிக மததமான சாங்கிதையையும்தான். அவருடைய பாஷ்யங்களில் பார்த்தால், இவ்ற்றில் நூற்றிலொரு பங்குதான் பௌத்தமத கண்டனம் இருக்கும்.

இதென்ன ஸ்வாமிகள் இப்படிச் சொல்கிறார் என்று உங்களுக்குத் தோன்றலாம். ஸுப்பிரமணியரின் அவதாரம் என்று குமரிலப்பட்டரைச் சொல்லி, அவரே நம் ஆசாரியாருக்கு விரோதமான பௌத்தத்தைக் கண்டனம் பண்ணிவிட்டார் என்றும் சொல்லிவிட்டு, இப்போது ஆசார்யாள் பட்டரின் கர்ம மீமாம்ஸ மதத்தையே கண்டித்ததாகச் சொல்கிறேனே என்று குழப்பமாயிருக்கலாம். அப்படியானால், ஆசார்யாளின் மதத்துக்கு வேத கர்மநுஷ்யானமே இல்லாத பௌத்தம் விரோதமா, கர்மாநுஷ்டானம் மட்டுமே உள்ள மீமாம்ஸை விரோதமா என்று கேட்பீர்கள்.

இவை இரண்டுமே ஆசார்யாளுக்கு விரோதம் இல்லை. அத்வைதத்துக்கு எதுவுமே விரோதம் இல்லை. அதற்குள்ளே சகல சித்தாந்தங்களும் அடக்கம். படிப்படியாக கர்மம், பக்தி, ஞானம் என்று அது போகும். ஆரம்பத்தில் ஞான மில்லாமல் கர்மா செய்தாலும் போதும். முடிவிலே கர்மாவே இலலாக ஞானம் வந்துவிடும். முதலில் சித்த சுத்திக்கு கர்மாதான் முக்கியம். முடிவில் ஞானம்தான் முக்கியம். அங்கே கர்மா எல்லாம் நின்றுவிடலாம். இவற்றின் ஒருபடி லக்ஷியம் மட்டும் என்று நிற்கிறபோதுதான் அவற்றிடம் சண்டைக்குப் போக வேண்டும் என்று நம் ஆசாரியாள் நினைத்து வாதம்,

கண்டனம் செய்தார். அல்லது எந்தப் படி எந்த நிலையில் வருவது என்ற நிலை இல்லாமல், அதை எல்லோருக்கும் பொது வாக்கினால், அப்போது அதை வேத நிராகரணம் செய்தார். பக்திக்கும் ஞானத்துக்கும் வராமல் வெறும் கர்மாவோடு நிற்கிறார்களே என்றுதான் மீமாம்ஸகர்களைக் கண்டித்தார். பரம ஞானத்தைத் துளிக்கூட அநுபவத்தில் கொண்டுவர முடியாத சாமானிய ஜனங்களுக்கெல்லாம் மாயை, சூனியம், நிர்வாணம் என்று உபதேசம் பண்ணிக் கொண்டு லோக க்ஷேமத்துக்காக அவர்கள் அநுசரிக்க வேண்டிய வேத கர்மங்களைப் புறக்கணிக்க வைக்கிறதே என்பதால், பௌத்தத்தோடு சண்டைக்குப் போனார். பௌத்தம் எப்போதும் - ஆரம்ப நிலையில்கூட கர்மா வேண்டாம் என்றதாலேயே, அதை ஆசாரியாள் நிராகரணம் செய்தார். எப்போதும் கர்மாதான். முடிகிற நிலையில்கூட ஞானம் வேண்டாம் என்றதால் பூர்வ மீமாம்ஸையை நிறாகரித்தார். அவை இரண்டும் தங்கள் மட்டத்தை - லெவலை - அறியாதபோது சண்டை போட்டார். ஆனால், அவற்றை ஒவ்வொரு மட்டத்தில் தன்னிலேயே கொண்டதுதான் அத்வைதம். இதில் பௌத்தர்களுடன் இவர் போட வேண்டிய வாதப் போரைப் பெரும்பாலும் குமரிலப்பட்டரே போட்டு அவைகளை நிராகணம் செய்விட்டார். ஸ்வாமியும் இல்லை. கர்மமும் இல்லை என்ற பௌத்தர்களை ஸ்வாமி இல்லை. கர்மம் உண்டு என்ற மீமாம்ஸைகர்கள் பெருமளவுக்கு ஜயித்த சமயத்தில், ஸ்வாமியும் உண்டு. கர்மமும் உண்டு. கடைசியில் ஆத்ம சாந்தத்தில் கர்மமும் இல்லை. ஸ்வாமியும் தனியே இல்லை என்று சொன்ன ஆசாரியாள் அவதரித்தார்.

பரமேசுவரன் நம் ஆசார்யாராக அவதரிப்பதற்கு முந்தியே, குமாரஸ்வாமி பட்டராக அவதாரம் செயது பௌத்தத்தை நிராகரித்து, இவர் காரியத்தில் பாதியைச் செய்துவிட்டார்.

ஆசாரியாள் காசியிலிருந்து திக்விஜயம் புறப்பட்டார். அவருக்கு குமரிலரைக் கண்டு தம் வழிக்குத் திருப்ப வேண்டும் என்பதிலேயே முனைப்பு. குமரிலர் ஒருத்தர் அத்வைத வேதத்துக்குத் திரும்பி விட்டால், அத்தனை கர்ம மார்கங்களும் இதே வழிக்கு வந்துவிடுவார்கள் என்பதால்தான் இந்த முனைப்பு.

இச்சமயத்தில் குமரிலபட்டர் தம்மைச் சுற்றி உமியைக் கொட்டி அதை அக்னியில் கருக்கிக்கொண்டு, கொஞ்சம் கொஞ்சமாகத் தாமும் அதில் கருகிக் கருகிப் பிராணத்தியாகம் செய்துகொள்கிறார் என்கிற சமாச்சாரம் தெரிந்தது. இதைக் கேட்ட ஆசாரியாள் பதறிப்போய் பிரயாகைக்கு விரைந்தார். குமார ஸ்வாமியின் அவதாரமான பட்டர் ஏன் இப்படி கோரமான முறையில் ஜீவனைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்றால், மநுஷ்யர் மாதிரி செய்கிற காரியங்களில் தர்ம சங்கடமான ஒன்றைச் செய்து விட்டால், அதற்காகத் தண்டனையும் பெற்றேயாக வேண்டும் என்று அவதாரங்கள் தாமாகத் தீர்மானிப்பதேயாகும். பௌத்த குருமார் என்னை அவர்களில் ஒருவராக நம்புமாறு ஏமாற்றி அவர்களிடமிருந்து வித்தையை ஸ்வகரித்தேனே. குரு த்ரோகம் செய்துவிட்டேனே. ஈஸ்வரன் என்று ஒருத்தனை எதிர்ப்பார்க்காமல் புண்ணிய, பாப கர்மங்கள் தாமே பலன் தரும் என்று ஸ்தாபித்த நான், இப்போது குருத்ரோக பாபத்துக்குப் பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ளத்தான் வேண்டும் என்று ரொம்பவும் மனசு நொந்து தர்ம சாஸ்கிரங்களைபப் பார்த்தார். அதில் மனமறிந்து செய்த குரு த்ரோகம் உடம்பைச் சித்திரவதை செய்துகொண்டாலொழியப் போகாது என்று இருந்தது. சரி அப்படியே செய்வோம் என்று அஞ்சாநெஞ்சராக முடிவு செய்தார் குமரிலப்பட்டர். துஷாக்னிக் பிரவேசம் என்று உமிக்காந்தல் நெருப்பில் வறுபட்டுச் சாவதுதான் மிகப் பெரிய சித்திரவதை என்பதால் அப்படியே சங்கற்பம் செய்தார். நம்க்கு இப்படி ஒரு பிராயச்சித்தம் போட்டிருக்கிற புஸ்தகம் அகப்பட்டால், அந்தப் புஸ்தகத்தை நெருப்பில் போடுவோம். குமரிலரோ, பிராயச்சித்தம் கிடைத்ததே என்று சந்தோஷப்பட்டு, தாம் தீயில் இறங்கினார்.

வேத கர்மாக்களை எல்லாம் மறுபடி நிலைநாட்டிய மகா பெரியவர், கொஞ்சம்கூட மனம் கலங்காமல் இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாக உமிக்காந்தலில் வெந்து கொண்டிருக்கும்போது, பகவத்பாதாள் அவரிடம் ஒடி வந்தார்.

குரு த்ரோகத்துக்குத் தண்டனையாக (நிஜமான குருகூட இல்லை. போலி குருத் துரோகத்துக்காக) உமிக்காந்தல்

அக்கினியில் வெந்துகொண்டிருந்த குமரிலப்பட்டருக்குமுன் நம் ஆசாரியாள் வந்து நின்றார்.

ஆசாரிய தரிசனத்தால் குமரிலப்பட்டருக்குத் துஷாக்கினியின் தகிப்புத் தெரியவே இல்லை.தரிசன அமிருதத்தோடு ஆசாரியாள் அவருக்குத் தத்வ உபதேச அமிருதத்தையும் கொடுத்தார்.

இது வரை கதை சொன்னேன். இப்போது கொஞ்சம் கொஞ்சம் தத்வம் சொல்கிறேன். எல்லாக் கதையும் தத்வத்தில் நிறைந்து போவதற்குத்தான்.

வேதம் விதித்துள்ள கர்மாக்களை நாம் செய்தால், அதுவே நிறைவு, ஸ்வாமியிடம் பக்தி வேண்டாம். அவரோடு ஒன்றாகப் போய் விடுகிற ஞானம் வேண்டாம் என்பது கர்ம மீமாம்ஸை இவர்கள் ஒப்புக் கொண்ட அதே வேதங்களில் உள்ள உபநிஷத்தில்தானே கர்மம் எல்லாம் நின்றுபோன ஜீவபிரம்ம அபேத ஞானத்தைச் சொல்லியிருக்கிறது என்றால், இவர்கள் வேதத்தை விதி என்றும் அர்த்த வாதம் என்றும் இரண்டாகப் பிரித்தார்கள். விதி என்பது நீ இன்னின்ன கர்மாக்களை இப்படிச் செய் என்று சொல்லி, அந்தக் கர்மாக்களில் பிரயோகமாகிற மந்திரங்களைத் தரும் பகுதி. அதாவது காரியத்தைச் சொல்கிற பாகம். ஜீவபிரம்ம அபேத வாசகங்களில் காரியம் இல்லை. வெறுமே இருந்து கொண்டிருக்கிற நிலையை அது சொல்கிறது. இருப்பது எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும். நமக்கு, லோகத்துக்குப் பிரயோஜனம் தருவது கர்மம்தான்.

இந்த விதிகளைக் கொண்ட வேத பாகம்தான் நமக்குப் பிரமாணம் என்று மீமாம்ஸகர்கள் சொன்னார்கள். விதியாக இல்லாத உபநிஷத்தை அர்த்தவாதம் என்பார்கள். ஒரு விதியை அநுஷ்டிப்பதால் உண்டாகும் பலனை உயர்த்திச் சொல்லி, அதனால் விதிகளில் ஜனங்கள் ஊக்குவதற்காக கதைப்பதுதான் அர்த்தவாதம்.

பேப்பரில் தாதுபுஷ்டி லேகியம் விளம்பரம் கண்ணில் பட்டது. அதிலே சிங்கத்தோடு ஒரு ஸாண்டோ (பயில்வான்) குஸ்தி செய்கிற மாதிரி படம் போட்டிருந்தது. அந்தப் படம், அதைப் பார்த்து நம் ரஸிப்பதற்காகவா போட்டிருக்கிறது. இல்லை. இந்த லோக்கியத்தைச் சாப்பிட்டால் நீங்களும்

இப்படி பலசாலிகளாக ஆவீர்கள் என்று நமக்கு ஆசை காட்டுவதற்கு அர்த்தவாதமாக வே போட்டிருக்கிறது. இப்படியேதான் சகல கர்மங்களையும் அநுஷ்டிக்கிறவன் ரொம்பவும் உயர்ந்துவிடுவான் என்று ஜீவனை ஸ்தோத்திரம் பண்ணுவதற்காகவே உபநிஷத்துக்களில் சகலமாகவும் ஆன பிரம்மம் ஒன்று இருக்கிறது. இந்த ஜீவன் அந்த பிரம்மமே ஆகிவிடுவான். அப்போது இவனுக்குக் கர்மாவே நின்றுபோய் ஞான மயமாகுகிறான் என்றெல்லாம் சொல்லி இருக்கிறது இந்தக் கதை எல்லாம் ஜீவனை நிறையக் கர்மாப் பண்ண வைக்கிற உத்தேசத்தில் ஏற்பட்டவைதான் என்று கர்ம மீமாம்ஸகர்கள் சொல்வார்கள். லேகியம் சாப்பிட்டு ஒருநாளும் சிங்கத்தோடு சண்டைக்குப் போக முடியாது என்பதுபோல, அந்த பிரம்ம நிலையும் ஏதோ அசாத்தியத்தைச் சொல்லும் கதை என்றே கருதினார்கள்.

இவர்களுக்கு ஆசாரியாள் என்ன எதிர்வாதம் செய்து உபதேசித்தார். வேதத்தில் காரியத்தைச் சொல்கிற விதிகளைப்போலவே, இன்னின்ன காரியம் செய்யக்கூடாது என்று சொல்லும் நிஷேதங்களையும் நீங்கள் அர்த்தவாதம் என்று தள்ளிவிடாமல் ஒப்புக் கொள்கிறார்கள். வேதம் கள் குடிக்காதே என்கிறது. இங்கே செய்ய வேண்டிய காரியம் எதுவும் இல்லை. ஆனாலும், ஒன்றைச் செய்யததாலேயே பிரயோஜனம் இருக்கிறது - கள் குடிக்காததால் புத்தி கலங்காமல் இருக்கிறது என்பதால் இதை நீங்களும் ஏற்கிறீர்கள். சில காரியங்களைச் செய்யாததிலேயே பிரயோஜனம் இருக்கிறது என்று ஒப்புக் கொள்கிறீர்கள். அதாவது காரியத்துக்கு இல்லாமல் (வேத) சப்தப் பிரமாணத்தைப் பிரயோஜனத்திற்காகவே ஒப்புக் கொள்கிறீர்கள். சிலவற்றைச் செய்யாமலிருப்பதே பிரயோஜனம் என்று நீங்கள் சொன்னால் நானோ உபநிஷத்தில் சொன்னபடி பரம ஞான நிலையில் ஒன்றையுமே செய்யாததுதான் பரமப் பிரயோஜனம். அது வெறும் அர்த்தவாதம் அல்ல என்கிறேன். ஒரு நிலைவரைக்கும் வேத விதிப்படி லோக க்ஷேமார்த்தமாக கர்மா செய்து செய்துதான் மனஸைக் கண்டபடி திரியாமல் தர்மத்தில் கட்ட முடியும். ஆனால், கர்மாவே உள்ள வரை அதன் பலனை அநுபவிக்க ஜன்மா எடுத்துக் துக்கமே இல்லாமல் நிறைந்திருக்க எவராலாவது முடியுமா. கர்மா தரும் நிறைவும் ஆனந்தமும் தாற்காலிகம்தான். நிறைந்த நிறைவு,

நித்யானந்தம் எப்போது ஏற்படுகிறது. கர்மானுஷ்யானத்தால் சித்த சுத்தி உண்டானபின், கர்மாவை விட்டு, ஆத்ம விசாரம் பண்ணி, தியான யோகத்தில் இறங்கி அதன் முடிவில், தான் எங்குமாக நிறைந்து ஆனந்த ஸ்வரூபமாக இருக்கிற ஆத்மாவே என்று அநுபவிக்கிறபோதுதான் நிறைந்த நிறைவு,

பூரணத்துவம், சாசுவத சௌக்கியம் உண்டாகும். இத்தனை கர்மாவும் அந்தக்காரியமற்ற நிலைக்குக் கொண்டுவிடவே ஏற்பட்டவை என்று உபதேசித்தார்.

சரி, ஒரு காரியமும் இல்லாமல் ஒருத்தன் ஆத்மானந்தத்தில் இருக்கிறான் என்றால் அவனுக்கு வேண்டுமானால் அது பரமப்பிரயோஜனம். ஆனால், லோகத்துக்கு அவனால் என்ன பிரயோஜனம். வேதம் சொல்கிறபடி அவரவரும் கர்மாவை, கடமையைச் செய்தால்தானே லோக க்ஷேமம் உண்டாகிறது.

இதற்கு ஆசாரியாள் என்ன பதில் சொன்னார். ஜனங்களுக்குப் பெரிய பிரயோஜனம் அன்பாக, ஆனந்தமாக இருப்பதுதானே. கர்மாவை விட்டுவிட்டு ஒருத்தன் சந்நியாசம் வாங்கிக் கொள்ளும்போது, ப்ரஷ மந்திரம் என்று ஒன்று சொல்கிறான் அது, என்னைக் கண்டால் ஒரு ஜீவராசிக்குக்கூட பயம் உண்டாக்கக்கூடாது. சகல ஜீவராசிகளிடமும் நான் அன்பாக இருக்கக் கடவேன் என்கிறது. கர்மா இருக்கிற வரையில் அதற்கு ஏதாவது இடையூறு வந்துதான் சேரும். உடனே கோபம், துவேஷம் வரத்தான் செய்யும். சந்நியாசிக்கோ கர்மமே இல்லை. அதனால் எல்லோரிடமும், எல்லாவற்றிடமும் அவனே எப்போதும் அன்பு மயமாக இருக்க முடியும். அன்பாக இருப்பதே இவனுக்கும் கர்மாவாகி விடுகிறது என்று வேடிக்கையாகச் சொல்லலாம். இவனுடைய தரிசனமே மற்றவர்களுக்கு அன்பை, ஆனந்தத்தைத் தருகிறது. இதைவிட லோகப் பிரயோஜனம் என்ன பண்ண வேண்டும். ஸ்தூலமாகக்கூட இவன் காரியம் செய்யாமலா இருக்கிறான். காரியத்தால் தனக்கு ஆக வேண்டியது எதுவும் இல்லாவிட்டாலும், தன் தரிசனத்தால் தத்வோபதேசத்தால் லோகத்துக்கு நன்மை செய்வதற்காக ஊர் ஊராகச் சுற்றுகிறான். தான் கொஞ்சம்கூடப் பட்டுக்கொள்ளாமலே, பட்டுக் கொள்ளாததாலேயே, லௌகிகர்களைவிட ஜாஸ்திக்

காரியம் செய்கிறான். மற்றவர்கள் அழுதுகொண்டும், ஆத்திரப்பட்டுக் கொண்டும், லாப நஷ்டக் கணக்கு பார்த்துக் கொண்டும் செய்வதால் பூரண சக்தியோடு காரியம் பண்ண முடிவதில்லை. அதில் குறைகள் உண்டாகின்றன. இவனோ, சிரித்துக்கொண்டே செய்வதால் அசாத்தியமானதையும் அநாயசயமாகச் செய்துவிடுகிறான். இவனுக்கு எல்லாம் தானானதால், தன்னிடமே ஒரு தோஷம் இருப்பதாகத் தன்னைத் தள்ளிவிடாததுபோல், பிறரிடம் இருக்கிற தோஷத்துக்காக அவர்களை துவேஷிக்காமல், அதைப் பரம பரிவோடு நிவிருத்தி பண்ணுகிறான். அவன் இருக்கிற நிறைந்த நிறைவான, பரிபூரண ஆனந்த நிலையில் ஜனங்களைச் சேர்க்கத்தான் முதல்படியாக வேத கர்மா இருக்கிறது. ஜனங்கள் சொந்த லாபத்தையே நினைத்து ஆசைவயப்பட்டு எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்று விடாமல், வோதம் லோகோபகாரமாகக் கர்மாவைக் கொடுத்திருக்கிறது. இவற்றை நிஷ்காமயமாக (பற்றில்லாமல்) செய்து செய்து சித்தசுத்தி உண்டான பின் இவை நின்றுவிடலாம் என்று ஆசாரியாள் விளக்கினார்.

ஞானியின் அன்பு, ஆனந்தம், நிஷ்காம்ய கர்மம் முதலியவற்றுக்கெல்லாம் தாமே ஒரு விக்கிரகமாக ஆசாரியாள் குமரிலப்பட்டரின் முன் நின்றார்.

ஈசுவர பக்தியில்லாமல் வறட்டுக் கர்மம் செய்வது பிசகு என்றும் விளக்கினார். கர்மம் என்பது ஜடம். அது தனக்குத்தானே பலன் தந்து கொள்ள முடியாது. லோக க்ஷேமத்துக்காக ஸ்வாமிதான் வேதத்திழஅ மூலம் கடமைகளை விதித்து, பலன் தருகிறார். கர்மாவில் குறை ஏற்பட்டால் க்ஷமித்துக் கைதூக்கி விடவும், குறை வராமல் கர்மா செய்யும் சக்தியையும் சிரத்தையையும் பெறவும் அவரையே பிரார்த்திக்க வேண்டும். அவர் பிரீர்த்திக்காக செய்கிறோம் என்கிற பாவம் வந்தால்தான், சொந்த ஆசைக்காகக் காரியம் செய்வது போகும்.

இப்படி ஆசாரியாள் உபதேசிக்க உத்தேசிக்கக் குமாரிலபட்டருக்குக் கர்மமெல்லாம் ஈஸ்வரார்ப்பணம் செய்யப்பட்டு பக்தியிலும், அந்த பக்தி ஈசுவரனோடு இரண்டறக் கலந்து விடும் ஞானத்திலும் கொண்டு விடுவதற்குத்தான் என்று நன்றாகத் தெளிவாயிற்று.

ஆனந்த பஷ்பத்துடன் ஆசார்யாளைப் பார்த்து, கர்மமே பலன் தரவில்லை, ஈஸ்வரன்தான் பலதாதா என்று நன்றாகத் தெரிகிறது. நான் பிராயச்சித்தமாகச் செய்கிற இந்தத் துஷாக்னிப் பிரவேச கர்மாவுக்குப் பலனாக எனக்கு ஞானாமிருந்ததைத் தருவதற்கு ஈஸ்வரனான தாங்களே பலவிதாதாவாக வந்திருக்கிறீர்கள். கர்மாவினால் ஒருநாளும் கிடைக்காத ஜனன நிவிருத்தியை எனக்கு அருளிவிட்டீர்கள். அந்திம சமயத்தில் பக்தர்களுக்குக்கூடப் பகவத் ஸ்மரணை வராது என்பார்கள். ஆனால், ஸ்வாமியே தேவையில்லை என்ற எனக்கோ, தாங்களே நேரில் பிரத்தியக்ஷமாகி விட்டீர்கள். தங்கள் சித்தாந்தம் முழுவதும் எனக்குச் சம்மதம். ஆனால், இன்னும் சில க்ஷணங்களில் சரீரத்தை விட்டுவிடப்போகிற நான், மற்ற கர்ம மார்க்கக்காரர்களுக்கெல்லாம் இதை எடுத்துச் சொல்ல முடியாமல் அசக்தனாக இருக்கிறேன். ஆகையால் தாங்கள் மாஹிஷ்மதி நகரத்துக்குச் சென்று, அங்கே என்னைவிட, மீமாம்ஸகராக இருக்கிற மண்டன மிச்ரருக்கு இந்த உபதேசத்தை அநுக்கிரகத்துத் தங்கள் சித்தாந்தங்களுக்குத் திருப்பிக் கொள்ளுங்கள். பிறகு மீமாம்ஸகர்கள் எல்லோரும் அதே வழிக்கு வந்துவிடுவார்கள் என்றார்.

சரீரத்தை வறுத்து எடுக்கின்ற அக்கினியின் தாபமே தெரியாமல் குமரிலபட்டரின் ஆசாரியாளின் சந்நிதான விசேஷத்தால் அமிருதத்தில் நனைந்த மாதிரி இருந்தார். இந்தக் கட்டத்தை நினைக்கிறபோது மூக பஞ்சசதீ சுலோகம் ஒன்றும், அப்பர் ஸ்வாமிகளின் பாடல் ஒன்றும் ஞாபகம் வருகின்றன.

மூகபஞ்சசதீ சுலோகம் ஜனோயம் ஸந்தப்தோ என்று ஆரம்பிக்கிறது. நான் நெருப்பில் நன்றாக வெந்துகொண்டிருக்கிறேன் என்கிறார் மூகர். என்ன நெருப்பு, சம்ஸாரம் என்பதுதான் நல்ல கோடைகால சூரியன் மாதிரி கொளுத்தி எடுக்கிறதாம். எனக்குப் பரமஞான தீர்த்தம் ஒரு துளிக்கூடக் கிடைக்காமல் வேகிறேன் என்கிறார். பரஞானபயஸ் என்கிறது ஸ்லோகம். பயம் என்றால் தீர்த்தம். பால் என்று அர்த்தம்.

பரம ஞானப்பாலைத்தான் அம்பாள் ஞானசம்பந்தருக்குக் குழந்தை பிராயத்திலேயே அநுக்கிரகித்தாள். அதனால் அவர்

ஆரம்பத்திலிருந்தே கர்மம், பக்தி, ஞானம் மூன்றைப் பற்றியும் சரியானபடி தெரிந்துகொண்டு உபதேசித்தார். அவர் பெயரிலேயே ஞானம் இருக்கிறது. பக்தியை அவர் யதேஷ்டமாக வளர்த்தது எல்லோருக்கும் தெரிந்தது. வேத கர்மங்களையும் அவர் எங்கு பார்த்தாலும் உயர்த்திப் பாடியிருக்கிறார். உதாரணமாக, கற்று ஆங்கு எரி ஓம்பிக்

கலியை வாராமே செற்றார் வாழ் தில்லை. என்கிறார். கற்று வேத அத்யயனம்

செய்து, ஆங்கு - அதில் சொல்லியிருக்கிறபடி, எரி ஓம்பி அக்கினி வளர்த்து யாகம் செய்து, கலியை வாராமே செற்றார் வாழ் தில்லை - கலியை விரட்டிவிட்ட வேதியர்கள் வாழ்கிற சிதம்பரம் என்கிறார். கர்மா அதுவாகவே கலியை விரட்டிவிடவில்லை. கர்ம பலனாக ஈச்வரப் பிரசாதத்திலேயே கலி ஒடிற்று என்பதை இதை பாட்டில் முற்றா வெண் திங்கள் முதல்வன் பாதமே பற்றா நினாறாரை பற்றா பாவமே என்றார். பாவம்தான் கலி புருஷன்.

குமரிலப்பட்டருக்கு ஆயுள் முடிகிற சமயத்தில்தான் ஞானம் ஜலமாக, பாலாக இல்லாமல், அமிருதமாகவே, ஆசாரியாள் தந்த அத்வைத அமிருத்தமாகவே கிடைத்தது.

தாக சாந்திக்கு மூகர் எதைத் தேடிக்கொண்டார். அம்மா காமாக்ஷி பரமசிவ ஜாயே - மகா மங்களமான பேரன்பு வடிவான ஈஸ்வரனுடன் இரண்டறக் கலந்திருக்கும் தாயே. சம்ஸார தாபத்தில் கொதித்திருக்கிற நான் உன் மகா குளுர்ச்சியான திருவடி நிழலைத்தான் தேடுகிறேன் அம்மா என்கிறார். பதாம்போஜச் சாயாம் - இணையடிக் கமஸலங்ககளின் நிழலை என்று நேர் அர்த்தம்.

ஈசன் எந்தை இணையடி நீழலே என்று இதையே அச்சடித்தாற்போல் அப்பர் ஸ்வாமிகள் சொல்கிறார். எந்தச் சந்தர்ப்பத்தில் இதைச் சொன்னார். மூகர் ரூபமாக (Symbolic) சம்ஸாரத்தைக் கொளுத்தும் சூரியன் என்றார். அப்பர் வாஸ்தவமாகவே (Factual) சுண்ணாம்புக் காளவாய்க்குள் இருந்து இப்படி பாடினார்.

ஜைனமதத் தலைவராக இருந்த அப்பர் சைவத்துக்கு மாறி விட்டார் என்றதும் ஜெனனாக இருந்து பல்லவ ராஜா

அவரைச் சுண்ணாம்புக் காளவாய்க்குள் போடும்படி ஆக்ஞையிட்டான். அப்படியே செய்த ராஜ சேவகர்கள், சிவன் சிவன் என்றீரே, இப்போது எப்படி இருக்கிறது சொல்லும் என்று பரிஹாரம் செய்தார்கள்.

ஹிரண்யகசிபு செய்த குரூர தண்டனைகள் பிரஹலாதனைத் தொடராத மாதிரி, அப்பரும் ஈஸ்வரநுக்கிரகத்தால் சித்திரஹிம்சை எதுவுமே தெரியவில்லை. தன்னிடம் கேலியாகக் கேட்டவர்களிடம் கோபமே இல்லாமல், எப்படி இருக்கிறதா. ஈசன் எந்தை இணையடி நிழல் எப்படிக் குளிர்ச்சியாக இருக்குமோ அப்படி இருக்கிறது. அது குளிர்ச்சியாக இருக்குமோ அப்படி இருக்கிறது. அது இந்திரிய ஆதீதமானது. உங்களுக்குப் புரியாது. உங்களுக்குப் புரிகிற மாதிரி சில இந்திரிய சுகங்களை வரிசையாக சொல்கிறேன். எண்ணிக் கொள்ளுங்கள். முதலில் பரம ஸூஸ்வரமான வீணா கானம் - மாசில் வீணை - அப்புறம் பூரண சந்திரன் - மாலை மதியம். அப்புறம் ஜிலு ஜிலு என்று அடிக்கும் தென்றல் - வீசு தென்றல். இன்னும் வஸந்த காலத்தில் எங்கு பார்த்தாலும் கம்மென்று பூரித்து நிற்கிற புஷ்பங்களின் சுகந்தம். வீங்கு இளவேனில். கடைசியாக, தேனின் ரஸமும், அதற்காகக் கூட்டம் கூட்டமாக வரும் வண்டுகளின் ரீங்காரமும் சேர்ந்த தாமரைப் பொய்கை. இத்தனை இனிமைகளையும் ஒன்று கூட்டினால் கிடைக்கிற ஈசன் இணையடி நிழலின்பத்தை இதோ இந்தக் கொதிக்கிற காளவாய்க்குள்

அநுபவித்துக் கொண்டு ஆனந்தமாய் இருக்கிறேன் என்றார். அப்பர் ஸ்வாமிகள்.

அந்த ஈசனின் அவதாரமான ஆசாரியாளின் இணையடிகளைத் தரிசனம் செய்துகொண்டே, தேக சிரமம் கொஞ்சங்கூடத் தெரியாமல் குமரிலபட்டர் நெருப்பில், கருகிப் பிராணத் தியாகம் செய்தார்.

ஞானபண்டிய முருகனின் அவதாரமானவர்களுக்கு பக்தியும் ஞானமும் தெரியாதா!ஆனாலும் பௌத்தர்கள் வெறும் அறிவு மார்க்கத்தை மட்டும் சொன்னபோது, தாம் அதில் கொஞ்சத்ததை எடுத்துக்கொண்டால்கூட, அவர்களுக்கு இடம் கொடுத்துப் போகும். இதனால் ஜனங்களை வைதிகத்துக்குத் திருப்பச் சிரமப்படும் என்பதால் ஞானமும்

வேண்டாம். பக்தியும் வேண்டம். கர்மாவே போதும் என்று மட்டும் அடித்துச் சொன்னார். நடுவிலே இப்படி அவர் ஒரு வழி போட்டால்தான் அப்புறம் ஆசாரியாள் கர்மம், பக்தி, ஞானம் மூன்றையும் சொல்ல முடிந்தது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

அக்கினியில் அடங்கிய அவதார புருஷர்கள்

குமரிலப்பட்டர் நெருப்பில் அப்படியே அடங்கிக் குமார ஸ்வாமியாகிவிட்டார். தர்ம சாஸ்திரத்துக்காக சரீரத்தையே பரித்தியாகம் செய்தார். இப்படிப்பட்ட மகான்கள் போட்ட தியாக அஸ்திவாரம் நம் வைதிக மதத்துக்கு இருப்பதால், நடுவாந்திரத்தில் எத்தனை நாஸ்திகமும், அவைதிகமும், சீர்திருத்தமும் வந்தாலும் பயப்பட வேண்டியதில்லை.

இங்கே நம் ஞானசம்பந்தரும் ஒரு பெரிய அக்னி ஜோதிக்குள் சென்றுதான் மறைந்தார். அப்போது அவருக்கு வயசு பதினாறுதான். அந்த சின்ன வயசுக்குள் தமிழ்த் தேசம் முழுவதும் பர மத கண்டனம் செய்து வைதிக தர்மத்தை ஸ்தாபித்துவிட்டார்.

ஆசார்யாளும் பதினாறாவது வயசிலேயே பாஷ்யங்களை எழுதி பூர்த்தி செய்து விட்டார். சரீரத்தையும் முடிக்க நினைத்தார். ஆனால் வியாஸர், அவசரப்படாதீர்கள். நீங்கள் எழுதின பாஷ்யங்களை நீங்களே உபதேசிக்க வேண்டும். தேசம் முழுக்க உள்ள மற்ற மதஸ்தரை நீங்களேதான் சந்தித்து வாதில் ஜயிக்க வேண்டும். உங்களுடைய தரிசன பாக்கியத்தை ஜனங்களுக்கெல்லாம், அவர்களைத் தேடிப்போய், அநுக்கிரக வேண்டும். எனறு கேட்டுக் கொண்டார். அதனால் ஆசாரியாள் இன்னொரு பதினாறு வருஷம் மனுஷ்ய சரீரத்தை வைத்துக் கொண்டார். ஆசாரியாள் பாரத கண்டம் முழுவதிலும் வைதிக

புனருத்தாரணம் பண்ண வேண்டியிருந்ததால், (இவருடைடைய வேலையில் பாதியான பௌத்த மத கண்டனத்தை ஏற்கெனவே குமரிலப்பட்டரும், உதயனாச்சாரியார் என்ற நியாய சாஸ்திர நிபுணரும் செய்திருந்தும்கூட) முப்பத்திரண்டு வயசு மனுஷ்ய சரீரத்தில் இருக்க வேண்டியிருந்தது. தமிழ் தேசத்தில் மட்டும் இந்த காரியத்தைச் செய்த சம்பந்தருக்குப் பதினாறே வயசு போதுமாயிருந்தது. அப்பா அப்படி, பிள்ளை இப்படி.அப்பாக்காரர் பிரம்மச்சரியத்திலிருந்து நேரே சன்னியாசத்துக்குத் தாவி அவதார காரியத்தைச் செய்தார். பிள்ளையோ - அவரை ஆளுடை பிள்ளை என்றே சொல்வார்கள் பிரம்மச்சரிய ஆசிரமத்திலேயே மகத்தான வேத தர்ம ஸ்தாபனத்தைச் செய்து விட்டார்.

சம்பந்தருக்குப் பதினாறு வயதானபோது கல்யாணம் செய்து கொண்டு கிருகஸ்தாச்ரமம் ஏற்க வேண்டுமென்று பந்துக்கள் கேட்டுக் கொண்டார்கள். அம்பாளின் க்ஷீரத்தைப் பானம் பண்ணினவருக்கு எந்த ஸ்திரீயும் சாக்ஷாத் பரதேவதையாகத்தான் தெரிவாள். அம்மா!உன் க்ஷீர விசேஷம், உன் பிள்ளைகள் இரண்டுபேரும் காமமே இல்லாத குமாரர்களாகவே எந்நாளும் இருக்கிறார்கள் என்று (வடக்கே கார்த்திகேயர் கடும் பிரம்மச்சாரி. அங்கே வள்ளி தேவசேனா சமாசாரமே தெரியாது.) இப்படிப்பட்டவர்களுக்குத்தான் ஞான சம்பந்தர். இருந்தாலும் அப்போது ஈசுவர சங்கல்பத்தை அறிந்து, அம்மாவுக்காகச் சரி என்று ஒப்புக் கொண்டார்.

திருநல்லூர் பெருமணத்தில் கல்யாணம் நடந்தது. பாணிக்கிரணம் ஆயிற்றோ இல்லையோ, புதிசாகக் கல்யாணம் செய்துகொண்ட இளம் பத்தினியையும், இன்னும் வந்திருந்த அத்தனை பந்து மித்திரர்களையும் அழைத்துக் கொண்டு அந்த ஊர்க் கோயிலுக்குப் போனார் சம்பந்தர். கோயில் முழுவதும் ஒரே ஜோதி மயமாயிற்று. ஞானசம்பந்தர்,

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி

ஓதுவார் தமை நன்னெறிக்(கு) உய்ப்பது

வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது

நாதன் நாமம் நமச்சி வாயவே !

என்ற பஞ்சாக்ஷரப் பதிகத்தைக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிக்கொண்டே அவர்கள் எல்லோரையும் ஜோதிக்குள் அனுப்பிவிட்டுத் தாமும் பரமானந்தமாக அதற்குள் புகுந்து இரண்டறக் கலந்து விட்டார்.

அவர்கள் இவருக்குக் கல்யாணம் செய்து பந்தத்தில் மாட்ட நினைத்தால், ஞ்னசம்பந்தரான இவரோ அத்தனை பேருக்கும், பந்தத்தைப் போக்கி, கூண்டோடு கைலாசம் அனுப்பிவிட்டார். இதுதான் பெரிய கல்யாணம், திருநல்லூர் பெருமணம்.

பரமேசுவரனின் நேத்ர அக்னியிருந்து வந்த சுடரே குமாரஸ்வாமி. திருப்புகழ் சொன்னபடி நெருப்பையும் எரிக்கும் ஞானாக்னி அவர். அதனால் இரண்டு அவதாரங்களிலும் அக்னிக்குள்ளேயே சொஸ்தமாக சென்று ஸ்கந்தலோகத்துக்குத் திரும்பினார்.

பரமேசுவரனின் நேத்ர அக்னியிலிருந்து வந்த சுடரே குமாரஸ்வாமி. திருப்புகழ் சொன்னபடி நெருப்பையும் எரிக்கும் ஞானாக்னி அவர். அதனால் இரண்டு அவதாரங்களிலும் அக்னிக்குள்ளே சொஸ்தமாகசச் சென்று ஸ்கந்த லோகத்துக்குத் திரும்பினார்.

அவர் ஞானாக்னியானாலும் இருதயத்தில் குளிர்ந்தவர். எனென்றால் ரொம்ப ஜல சம்பந்தமும் உள்ளவர். சரவணம் என்ற பொய்கையில்தான் சிவ தேஜஸ் முருகனாக ரூபம் கொண்டது. சரவணப் பொய்கை அம்பாளே. அப்பா நெருப்பாக இருக்க, அம்மா நீராக இருந்தாள். ஜலரூபமாக கங்கையும் அவருக்கு இன்னொரு மாதா. அதனால் காங்கேயன் என்று பெயர்.

எல்லாப் பெண்களும் அவருக்கு மாதா. ஷஷ்டிபப் பெண்களுக்கும் பாலனாகினார். கார்த்திகைப் பெண்டிருக்குப் பிள்ளையாகிக் கார்த்திகேயர் ஆனார். நட்சத்திரத்தில் ஆறாக இருப்பது கிருத்திகை. திதியில் ஆறாவது ஷஷ்டி. இவருக்கு ஆறு முகம். ஆறு அக்ஷரம் கொண்ட ஷடக்ஷரி இவருடைய மந்திரம். காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்ஸரியம் என்று ஆறு பகைவர்களைகக் கொன்று ஞானம் அருளும் ஆறு படை வீரர் அவரே.

சுப்பிரமணியரின் ஓர் அவதாரமான குமரிலப்பட்டரை ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் நேரில் சந்தித்து வாதத்தில் ஜயித்தார். இன்னோர் அவதாரமான ஞானசம்பந்தராப் பற்றி ஸௌந்தரிய லஹரியில் சொல்லிப் புகழ்திருக்கிறார். காளக் கணக்கு பார்க்கிறவர்கள், இது சம்பந்தரைப் பற்றியது இல்லை. ஆசாரியாள் தம்மையே சொல்லிக் கொண்டார் என்றும் சொல்கிறார்கள். அது எப்படியானாலும் அந்த சுலோகத்தின் தாத்பரியத்தைதத் சொல்கிறேன் (தவ ஸ்தன்யம் மன்யே)

ஹிமகிரி குமாரியான அம்மா. உன்னுடைய க்ஷீரம் என்பது உன் இருதயத்திலிருந்தே வருகிற அமிருத்தம். அது பானம் பண்ணின குழந்தைக்கு அருளைப் பொழிந்தது மட்டிமில்லை. இந்த அருளை அந்தக் குழந்தை லோகத்துக்கெல்லாம் தருவதாக, அந்தக் குழந்தைக்கு மேலான வாக்குசக்தியையும் உன் க்ஷீரம் தந்துவிட்டது. இந்த க்ஷீரம் ஸாஸ்வதமானது - ஸரஸ்வதீ மயமானது. பிரவாகமாக வருகிற உன் க்ஷீராம்ருதத்தைப் பானம் பண்ணிய குழந்தை, பிரவாகமாககக் கவிதை செய்துவிட்டது. பரம கிருபையோடு நீ அதைத் தமிழ்க் குழந்தைக்கு (த்ரவிட சிசு) அளித்தாய். அதன் சிறப்பால் அந்தக் குழந்தை மகா பெரிய கவிகளுகெல்லாம் பெரியவராகி, எல்லோர் மனஸையும் வசீகரித்து விட்டது என்று ஆசாரியாள் சொல்கிறார்.

ஆதியில் முருகக் கடவுள் சங்கப் புலவராக இருந்தார். பிறகு புலமையோடு சக்தி, ஞானம், வைதிகம், சைவம் எல்லோவற்றையும் சேர்த்து திராவிட தேசத்தை ரக்ஷிப்பதற்காக ஞானசம்பந்தராக வந்தார். குமரிலப்பட்டர் செய்த அதே வைதிக தர்ம ஸ்தாபத்தைத்தான் இவரும் செய்தார். நான் மறை ஞானசம்பந்தன் என்றே தம்மைச் சொல்லிக் கொள்கிறார்.

முருகனின் பூர்வ அவதாரம்

சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளைப் பற்றி ஏதோ குஞ்சம் உங்கள் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். குமரிலப்பட்டர் பேரைச் சிலராவது கேட்டிருப்பீர்கள். இப்போது யாருக்குமே தெரியாத இன்னொரு ஸுப்பிரமணிய அவதாரத்தைப் பற்றிச் சொல்லப் போகிறேன். ரொம்ப சமீக காலம் வரை எனக்கே இது தெரியாது.

சரியாகச் சொன்னால், இது சுப்பிமணிய அவதாரம் இல்லை. சுப்பிரமணியராக வருவதற்கு முன்னால் அவர் யாராக இருந்தார் என்று இந்தக் கதை சொல்கிறது. இது எப்படி எனக்குத் தெரிய வந்தது என்பதே ஒரு கதை மாதிரித்தான்.

வியாஸர் பிரம்ம ஸூத்திரம் என்று பபரமாத்மா தத்வத்தைப் பற்றி விசாரணை செய்து எழுதியிருக்கிறார். அதில் மூன்றாவது அத்தியாயம். மூன்றாவது பாதத்தில், முப்பத்திரண்டாவது சூத்திரம். ஓர் அதிகாரத்துடன் அவதரித்தவர்களுக்கு அதிகாரம் உள்ள வரையில் சரீரத்தில் இருப்பு உண்டு என்று சொல்கிறது. இதற்கு பாஷ்யம் பண்ணும்போது நம் ஆசார்யாள், பிரம்மாவின் மானஸ புத்திரரான ஸனத்குமாரர்கூட, தானே ருத்திரனுக்கு வரம் கொடுத்துவிட்டு அதற்காக, ஸ்கந்தனாகப் பிறப்பெடுத்தார் என்று திருஷ்டாந்தமாகச் சொல்லியிருக்கிறார்.

ஸனத்குமாரராவது, பரமேசுவரனுக்கு வரம் தருவதாவது, அதற்காக மறுபடி பிறப்பதாவது, அதுவும் சாக்ஷாத் ஸ்கந்தனாக - இது எந்தப் புராணத்திலிருக்கிறது எனக்குத் தெரியாமலல் இருந்தது. பல பண்டிதர்களை விசாரித்துப் பார்த்தும் தெரியவில்லை. ஆஞ்ஞாசநேய ஸ்வாமிகளும் ரொம்ப விசாரித்துவிட்டு, பதினெட்டுப் புராணங்களையும் பார்த்துப் தமிழில் சுருக்கிப் போட்டிருக்கிற (ஸ்ரீவத்ஸ) ஸோமதேவ சர்மாவிடம் இந்தக் காரியத்தைக் கொடுத்தார். சர்மா எனக்கு பிக்ஷை பண்ண வந்தபோது, பெரிய பிக்ஷையாக இந்த டிஸ்கவரியைச் சொன்னார். திரிபுரா ரஹஸ்யம் என்ற கிரந்தத்தில் மஹாத்மிய காண்டம் முப்பத்தேழாம் அத்தியாயத்தில் இது நீள நெடுகப் பெரிய கதையாகச் சொல்லியிருக்கிறது.

கதைக்கு வருகிறேன்.

பிரம்மாவின் மனஸிலிருந்து உதித்தவர் ஸனத்குமாரர். அவர் பிரம்ம ஞானி. சுகாசாரியார் மாதிரி, உள்ளும் புறமும் எல்லாம் ஒன்று என்று ஸதாகாலமும் உணர்ந்திருந்தவர்.

இப்படிப்பட்டவருக்கு விசித்திரமாக ஒரு நாள் ஸ்வபப்னம் வந்தது. ஸ்வப்பனத்தில் தேவர்களும் அசுரர்களும் சண்டை நடந்தது. அதில் ஸனத்குமார் தேவ சேனாபதியாக யுத்தம் செய்து, அசுரர்களை எல்லாம் சம்ஹரிக்கிறார்.

விழித்தெழுந்ததும் அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. தகப்பனான பிரம்மாவிடம், போய் ஸ்வப்பனத்தைச் சொல்லி, அதற்கென அர்த்தம் என்று கேட்டார்.

குழந்தை!நீ பூர்வ ஜன்மத்தில் வேத அத்யயனம் செய்தாய். அதில் தேவாசுர யுத்தம் என்று வருவது உன் மனஸில் ஆழப் பதிந்துவிட்டது. வேத யக்ஞங்களால் ஆராதிக்கப்பட்டு அநுக்கிரகம் செய்கிறவர்கள் தேவர்கள். இவற்றை அழிக்க நினைக்கிறவர்கள் அசுரர்கள். உனக்கு வேதத்தில் இருந்து ஆழ்ந்த பிடிமானத்தால், அசுரர்களையெல்லாம் நாமே சம்ஹாரம் செய்துவிட மாட்டேமா?என்று பபூர்வ ஜென்மத்தில் ஆத்திரப்பட்டாய். அந்த நினைப்புத்தான் இந்த ஜன்மாவிலும் தொடர்ந்து வந்து ஸ்வப்னமாக வெளியாகி இருக்கிறது என்றார் பிரம்மா. ஸனத்குமாரரிடம் பிரம்மா, உனக்கு எந்த எண்ணம் உண்டானாலும் அது வாஸ்தவத்திலேயே நடந்துவிடும். அதனால் நீ யதார்த்தமாகவே ஒருநாள் தேவ சேனாதிபதியாக அசுர சம்ஹாரம் செய்யத்தான் போகிறாய். இந்த ஜன்மாவில் நீ, தேவராவது, அசுரராவது, எல்லாம் ஒரே பிரம்மம் என்'று இருப்பதால், இன்னொரு ஜன்மா எடுத்து இதைச் செய்யப் போகிறாய் என்றார்.

வாக்கு, மனம், சரீரம் மூன்றும் ஒருத்தருக்கு சத்தியத்திலேயே

பிரதிஷ்டையாகிவிட்டால், அப்படிப்பவர் உத்தேசிக்காமல் அவருக்கு ஒரு பெரிய சக்தி வந்துவிடும். அதாவது, அவர் சத்தியத்தைத்தான் சொல்ல வேண்டும் என்றில்லாமல், அவர் எது சொன்னாலும் அதுவே சத்தியமாகிவிடும். தவறுதலாகவோ, தெரியாயதாலோ அவர் உண்மைக்கு

விரோதமாக ஒன்றைச் சொல்லால்கூடத் வாஸ்தவத்தில் அப்படியே நடந்துவிடும்.

பரம சத்தியத்திலேயே ஸ்திரமாக நின்ற ஸனத்குமாரர் ஆத்மாராமமராக, பரப்பிரம்மத்தைத் தன்னில் தானாக அநுபவித்துக் கொண்டு, பழையபடியே உட்கார்ந்து விட்டார். லோகமெல்லாமே அவருக்கு ஸ்வப்பனமாகி விட்டதால் தம் ஸ்வப்பனத்தைப் பற்றி நினைக்கவே இல்லை.

ஆனால் இவர் ஸ்வப்பனத்தில் நினைத்த நினைப்பு அசத்தியமாகப் போய்விடக்கூடாதே என்று பரமேசுவரனுகக்கு விசாரம் வந்துவிட்டது. அதனால், இவர் தரிசனத்துக்காகத் தபஸ் பணணாதபோதே, அவராகப் பார்வதீ ஸமேதராக இவருடைய ஆசிரமத்துக்கு வந்துவிட்டார்.

ஸனத்குமாரருக்கோ மரம், மட்டையிலிருந்து சகலமும் ஒரே பிரம்மமாகத்தான் தெரிந்தது. பிரம்மத்தில் உசந்த பிரம்மம் தாழ்ந்த பிரம்மம் என்ற மாதிரியே பரமேசுவரனும் பிரம்மமாகத் தெரிந்தார். அவரை உபசரிக்க வேண்டும். பூஜை பண்ண வேண்டும் என்ற எண்ணமே ஸனத்குமாரருக்குக் குஞ்சம் கூட உண்டாகவில்லை. அவர் தம் பாட்டுக்கு உட்கார்ந்தது உட்கார்ந்த படி இருந்தார்.

பார்வதீ - பரமேசுவராள் ரொம் நேரம் நின்று பார்த்தார்கள். ஒரு பலனும் இல்லை. இப்படி மகா ஞானியாக ஒரு பிள்ளை இருப்பதாப் பார்த்து அவர்களுக்குப் பரம பிரீர்த்திதான். இருந்தாலும் ஈசுவரன் பொய்க் கோபத்துடன் ஞானி என்ற அகங்காரம் தானே உனக்கு?நாங்கள் லோகத்தின் மாதா பிதாக்கள் வவந்திருக்கும்போது அவமதித்துவிட்டாயே. நான் சாபம் கொடுத்தால் என்ன செய்வாய் என்று கேட்டார்?

ஸனத்குமாரர் பயந்துவிடவில்லை. அலட்சியமாக, நீர் சாக்ஷாத் மகா கோபிஷ்டரரான ருத்திரராக இருந்து சாபம்தான் கொடும். அது ஆத்மாவைப் பாதிக்காது என்று சொல்லிவிட்டு நிச்சிந்தையாக இருந்தார்.

அடடா, எப்பேர்பட்ட உண்மையான ஆத்ம ஞானி!என்று ஈஸ்வரனுக்கு ரொம்ப சந்தோஷமாகிவிட்டது.

இன்னும் கொஞ்சம் பரீட்சை பார்த்து, பூராவும் ஞானி தானா என்று தெரிந்துகொள்வோம் என்று நினைத்து, அப்பா

உன்னுடைய ஞானத்தை நான் ரொம்பவும் மெச்சுகிறேன். என்ன வேண்டுமானாலும் வரம் கேள். தருகிறேன் என்றார்.

ஸனக்குமாரர் சிரித்தார். உம் வரத்தை நீரரே வைத்துக் கொள்ளும். எதை அடைந்த பின் இன்னொன்று வேண்டும் என்ற ஆசை லவலேசமும் இருப்பதில்லையோ, அப்படிப்பட்ட நிறைந்த நிறைவாக இருக்கிற எனக்கு வரத்தினால் ஆக வேண்டியது கடுகத்தனைக்கூட இல்லை என்று தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

அதற்கும் ஒரு படி மேலே போனார். பரமேசுவரா. நீ பேசுவதிலிருந்து பார்த்தால் நீதான் வரம், சாபம் இது களிலெல்லாம் ஏதோ அர்த்தம் இருக்கிறதென்று நினைப்பாகத் தெரிகிறது. அப்படியானால் சரி, உனக்கு ஏதாவது வரம் வேண்டுமானால் கேள் தருகிறேன் என்றார். ஸனத்குமாரர் சொன்னதைக் கேட்டு ஈஸ்வரனுக்குப் பெருமையாக இருந்தது. நம் குழந்தை நம்மிடம் தாட்பூட் செய்தால், நமக்கு சந்தோஷமாகத்தானே இருக்கும்?சர்வ லோக மகேசுவரனான அவர் ரொம்பவும் தழைத்து தம்மைச் சிறியவராக்கிக் கொண்டு ஸனத்குமாரரிடம் வரம் கேட்டார். இவருடைய ஸ்வப்பனத்தை நிஜமாக்க இதுவே வழி என்று நினைத்துக் கேட்டார்.

அப்பா!இப்பேர்ப்பட்ட மமகா ஞானியான நீ பிரம்மாவுக்குப் பிள்ளையாகப் பிறந் திருக்கிறாய் . பிரம்மா செய்த பாக்கியம் எனக்கும் கிடைக்கும் படியாக வரம் கொடுப்பாய். இன்னொரு ஜன்மாவில் நீ எனக்குப் புத்திரனாகப் பிறக்கும் படி கேட்டுக் கொள்கிறேன் என்றார்.

ஆஹா, உனக்குப் பிள்ளையாகப் பிறக்கிறேன் என்று ஒப்புக் கொண்டார் ஸனத்குமாரர்.ஞானம் வருகிறவரையில்தான் இனிப் பிறவி வேண்டாம் என்று அழுவோம். ஞானம் வந்துவிட்டால் எப்போதும் ஆனந்த ஸாகரம்தான். ஜன்மா கின்மா எல்லாம் அதில் ஒரு சின்னக் குமிழி மாதிரிதான். அது வேண்டும் வேண்டாம் என்பதெல்லாம் ஒரு பொருட்டாகவே தெரியாது.

ஸனத்ககுமாரர் சொல்வதெல்லாம் சத்தியமாகிவிடும் அல்லவா?இப்போது ஈஸ்வரனை மட்டும் பார்த்ததுதான் உனக்குப் பிள்ளையாகப் பிறப்பேன் என்றார். அம்பாளையும்

சேர்த்து, உங்களுக்குப் பிள்ளையாப் பிறப்பேன் என்று சொல்லவில்லை.

இதையும் ஸனத்குமாரர் யோசித்துப் பார்த்தார். ஸனத்குமாரருக்கும் தாம் பரமேசுவரனுக்கு மட்டும் பிள்ளையாகப் பிறப்பதாகச் சொன்னதிலும் ஒரு நியாயம் தெரிந்தது. அதனால் அந்தத நியாயத்தை வெளிப்படையாகவேச் சொன்னார்.

கேட்காதவருக்கு ஒன்றைத் தரக்கூடாது என்று சாஸ்திரம். அந்த நியாயப்படி நீதான் என்னிடம் வரம் கேட்டாதே தவிர, பார்வதி கேட்கவில்லை. ஆகவே, உனக்கு மட்டுமே பிள்ளையாகபப் பிறப்பேன். நீ மட்டுமாக என்னை எப்படி உற்பபவிக்கச் செய்வாயோ, அப்படியே செய்துகொள் என்று ஸ்வாமியிடம் சொன்னார்.

இதைக் கேட்டதும் அம்பாளுக்கு ரொம்ப ஏமாற்றமாக, பரம துக்கமாக ஆகிவிட்டது. லோகத்திலுள்ள சமஸ்த ஜீவராசிகளும் அவள் குழந்தைகள்தாம் என்றாலும், இது அந்த ஞானாம்பாளுக்கே தெரியும் என்றாலும், இப்படிப்பட்ட ஒரு பிரம்மஞானி மறுபடியும் பிறக்கிறபோது, அவன் நேராகத் தனக்குப் பிள்ளாயாகப் பிறக்க வேண்டும் என்று அவளுக்கும் ஆசை இருந்தது.

இவர் சாஸ்திரத்திலிருந்து நியாயம் காட்டினமாதிரி, அவளும் காட்டித் தர்க்கம் பண்ணினான். சாஸ்திரங்களில் பதியையும் பத்தினியையும் ஒன்றாகத்தான் சொல்லியிருக்கிறது.பதி பிரார்த்திப்பதெல்லாம் பத்தினியையும் உத்தேசித்துத்தான். ஆனதால் நான் தனியாக வரம் கேட்க வேண்டும் என்றில்லை. அவர் கேட்டதாலேயே நீ எனக்கும் புத்திரரான வரத்தான் வேண்டும். என்று ரைட் கேட்டாள்.

ஸனத்குமார் யோசித்தார். அம்மா, நீ சொல்வது நியாயம்தான். இருந்தாலும் நான் ஈஸ்வரனிடமிருந்து மட்டும் உற்விப்பது இன்னொரு தினுசில் எனக்குத் திருப்தி தருவதாகத் இருக்கிறது. எல்லாம் பிரம்மம் என்று எனக்குத் தெரிந்தாலும், அதற்கே நீங்கள் இரண்டு பேரும் எனக்கு இத்தனை டைட்டில் கொடுத்தாலும், ஒரு விஷயத்தில் எனக்குப் பக்குவம் வரவில்லை. அதாவது, ஸ்திரீ புருஷ சம்பந்தத்தில் நாம் பிறப்பதாவது, கர்ப்பவாசம் செய்து கீழ்முகமாக

ஜனிப்பதாவது என்று இன்னமும் எனக்கு அருவருப்பாபத்தான் இருக்கிறது. பிரம்ம ஞானிக்கு இப்படி இருக்கக் கூடாததுதான். ஆனால் ஏனோ இருக்கிறதே. அதனால் இதைச் சொல்கிறேன். ஆகையால் நீ பெரிய மனசு பண்ணி, உன் பதி மட்டுமே என்னைச் ஜனிக்கச் செய்வதற்கு அநுமதி தர வேண்டும் என்றார்.

ஆனால் அம்பாளுக்கு மனசு வரவில்லை. யோசித்துப் பார்த்துக் கடைசியில் ஒரு ராஜி க்கு - காம்பிரமைசுக்கு வந்தார்கள்.

ஆதியில் பரமேசுவரன் பஸ்மாசுரனுக்கு வரம் தந்திருந்தார். இந்த வர பலத்தால், அவன் யார் தலையில் கைவைத்தாலும் அவர் பஸ்பமாகிவிடுவார். வரம் பலிக்கிறதா என்று பரமேசுவரனிடமே பரீட்சை பார்க்க வந்தான் அசுரன். உடனே அவர் அந்தர்த்தானமாகி விட்டார்.

அந்தச் சமயத்தில் அம்பாள் ஏதோ லீலா நிமித்தம் தன்னுடைய ஸர்வஞத்வத்தை மறைத்துக்கொண்டு சாதாரண ஸ்திரீ மாதிரி இருந்தாள். எனவே, திடீரென்று பரமேசுவரனின் சரீரம் மறைந்ததைப் பார்த்ததும் அவனுக்குப் பகீர் எனறது. பதிவிரதா ரத்தினமான அவளால் ஈஸ்வரனின் பிரிவைத் தாங்க முடியவில்லை. அப்போதே அப்படியே உருகிவிட்டாள். யதார்த்தத்திலேயே அவளுடைய சரீரம் உருகி ஒரு ஜலாசயமாக (நீர் நிலையாக) ஆகி விட்டது. அதுதான் சரவணப் பொய்கை.

பிறகு பஸ்மாசுரன் மறைந்து ஸ்வாமி சரீரத்துடன் வந்ததும், அம்பாளும் தன் திவ்விய தேகத்தை எடுத்துக் கொண்டாள். இருந்தாலும் அவளுடைய பதிவிரதா தர்மத்துக்கும் பிரேமைக்கும் அடையாளமாக சரவணப் பொய்கையும் அழியாமலிருக்கும்படியாக அநுக்கிரகத்தாள். சரவணம் சாட்க்ஷாத் இவள் சரீரம்தான். அது இப்போது நினைவுக்கு வந்தது.

அதனால், ஸனத்குமார் அடுத்த ஜெனமாவில் பரமேசுவர தேஜஸாக ஜனித்து விடுவதென்றும், பிறகு அதை அம்பாள் சரவணம் என்ற தன் சரீரத்தில் தாங்கி ஸுப்பிரமணிய ஸ்வரூபமாக்கித் தருவதென்றும் முடிவு செய்து கொண்டார்கள்.

இதன்படியே பிற்பாடு ஈசுவரன் தன் நெற்றிக் கண்களிலிருந்து பொறிகளை வெளியிட்டார். ஸனத்குமாரர்தான் இப்படி ஆவிர்பவித்தார். அந்த தேஜசின் உக்கிரகத்தை எவராலும் தாங்க முடியவில்லை. முதலில் கங்கை தாங்கப் பார்த்தாள். முடியவில்லை. அப்போது பிரம்மா அவளிடம், இதைக் கொண்டுபோய் சரவணத்தில் சேர்த்துவிடு என்றார். ஆனானப்பட்ட என்னாலேயே தாங்க முடியாத உக்ர ஜ்வாலையை அந்தச் சின்னப் பொய்கை எப்படித் தாங்கும். என்று கங்கை அவரைக் கேட்டாள். அவர், சரவணம் என்பது சாக்ஷாத்

பராசக்தியின் சரீரமாகும். அது ஒன்றாலேயே ஈசுவர தேஜஸை தாங்க முடியும் என்றார்.

இதன்படியே கங்கை செய்ய, சரவணபவனாக முருகன் அவதரித்தான். பிறகு ஸனத்குமார் கண்ட ஸ்வப்னப்படி தேவர்களுக்கெல்லாம் சேனாதிபதியாகி, அசுரர்களை ஸமூலம் இடம் இடம் தெரியாமல் சம்ஹாரம் செய்து சர்வ லோகங்களையும் ரக்ஷித்தான் இந்த சரவணபவன். அவருக்கு எத்தனை பெயர்கள் இருந்தாலும் இதுவே ஷடக்ஷரி, ஆறெழுத்து என்று மகாமந்திரமாக இருக்கிறது. சரவணமாக இருக்கும் அம்பாளின் மகிமை.

ஸனத்குமாரர்தான் ஸ்கந்தர் என்று சந்தோக்ய உபநிஷத்திலும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. அதில் அவரே ஞான பண்டிதர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. ஆனாகப்பட்ட நாரத மகரிஷி ஸனத்குமாரரிடம்தான் ஞானோபதேசத்துக்காக வருகிறார். சகல வேதங்களையும், இதிஹாச புராணங்கள், சகல சாஸ்திரங்கள், தேவ வித்யை, பிரம்ம வித்யை பூத வித்யை, நக்ஷத்திர வித்யை என்று ஒன்று பாக்கி இல்லாமல் எல்லா விஷயங்களையும் கரைத்துக் குடித்துவிட்டேன். ஆனால், இதனாலெல்லாம் வெளி சமாச்சாரங்கள், மந்திரங்களைத்தான் தெரிந்து கொண்டேனே யொழியத் தன்னைத் தெரிந்து கொள்ளவே இல்லை. ஆத்மாவை அறியாததால் துக்கத்தில் தான் இருக்கிறேன். நீங்கள்தான் என்னைத் தூக்கி அக்கரையில் சேர்க்க வேண்டும் என்றார் நாரதர். ஸனத்குமாரர், ஆத்மா எங்கேயோ இருக்கிறது என்று தேடிப்போக வேண்டியதில்லை. கீழும் மேலும், முன்னும் பின்னும், வலது பக்கமும் இடது பக்கமும் எல்லாம் ஒரே

ஆத்மாதான். அதைப் பற்றியே ஒருத்தன் தியானித்து தியானித்து, அதுவாகவே ஆகி விட்டால், அப்புறம் அதிலேயே அவன் எப்போதும் விளையாடிக் கொண்டிருக்கிறான். உண்மையான ஸ்வராஜ்ஜியம் தன்னைத்தானே ஆண்டு கொள்கிற இந்த நிலைதான். இவன்தான் ஸ்வராட் - உண்மையான சக்ரவர்த்தி. இந்த உத்தம நிலையை அடைய முதலில் ஆகார சுத்தியில் ஆரம்பிக்க வேண்டும். பிறகு படிப்படியாக சித்த சுத்தி உண்டாகி, மனசு நன்றாக தியானத்தில் நிலைத்து நின்று, எல்லாக் கட்டுக்குள் தெரித்து விழுந்து, ஆத்ம ஸ்வரூபமாகவே இருப்பான். என்று வழிகாட்டினார். இப்படியாக பகவான் ஸனத்குரமாரன், இருள் கடந்த நிலையைக் காட்டினார். அவருக்குத்தான் ஸ்கந்தன் என்று பேர். அவருக்குத்தான் ஸ்கந்தன் என்ற பேர் என்று உபநிஷத்து இரண்டு தடவை முத்தாய்ப்பு வைக்கிறது.

இருள் கடந்த ஒளி, ஞானாக்னி முகன்தான். அதைத்தான் சாந்த்தேக்கியம் சொல்கிறது.

சாந்தேக்கிய அவஸ்தா (அவஸ்தா என்றால் நிலை) தான் ஜெண்டவஸ்தா (ஞீமீஸீபீ கிஸ்மீஷமீணீ) என்ற பார்ஸி மதக்கிரந்தத் தொகுப்பாயிருக்கிறது. பார்ஸி மதம், முழுக்க அக்னி வழிபாடுதான். ஸெளராஷ்டிர தேசக்காரார் ஒருத்தர் அதை ஸ்தாபித்தவர். ஸெளராஷ்டிர தேசக்காரார் என்பதே ஜொரொதஸ்த்ரர் (Zorothustra) என்றாகியிருக்கிறது. ஸெளரம் என்றால் சூரிய சமம்பந்தமானது. சூரியன், அக்னி, காயத்ரி மூன்றும் சம்புவின் விசேஷ ரூபங்கள் என்று ஆசாரியாள் பிரசனோத்தர ரத்ன மாலிகையில் சொல்கிறார். திருவண்ணாமலையில் அக்னி ஸ்வரூபமாகவே

ஈசுவரன் இருக்கிறார். சிவாக்னிதான் முருகன்.

மலையாளத்தில் தீபத்தில் அம்பாளை ஆராதித்து, பகவதி சேவை என்கிறார்கள். ஜொலிக்கிற ஞானாக்கினியான வேலாயுதத்தை சக்தி சக்தி என்றே சொல்கிறோம்.

வேதமே உபஸனையான அக்னி காரியத்துக்கு சும்பிரமணியர் அதிதேவதையாக இருப்பதால்தான், அவரை விட்டுவிட்டுப் பஞ்சாயதன பூஜை என்பதில் பிள்ளையார், சூரியன், மகாவிஷ்ணு, அம்பாள், ஈசுவரன் தோன்றுகிறது.

முருகன் நம் மதஸ்தரால் நிச்சயம் ஆராதிக்கப்பட வேண்டியவர் என்பது, பஞ்சாயதனத்தை மறுபடியும் உயிர்ப்பித்த அதே பகவத் பாதாள் ஸ்தாபித்த 'ஷண்மத'ங்களில் முருக வழிபாடான கௌமார மும் ஒன்று என்பதிலிருந்து உறுதியாகிறது.

தற்காலத்தில் அக்னி காரியம் குறைந்து, மூர்த்தி பூஜை அதிகமாகியிருக்கிறது. சுப்பிரமணிய சம்பந்தமான புராணங்கள், ஸ்தோத்திரங்கள், திருப்புகழ், ஆகியன நிறையப் பிரசாரமாகி, பழனி, திருச்செந்தூர், திருத்தணி முதலான க்ஷேத்திரங்களின் உத்ஸவாதிகள், ஜனங்களை ரொம்பவும் வசீகரித்து வருகின்றன. ஆதலால், பஞ்சாயதன பூஜையிலும் சுப்பிரமணியரைச் சேர்த்துக் கொள்வது உத்தமமாகும்.

ஆதாரியாள் ஸுப்பிரமண்ய புஜங்கம் என்று ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். அதில் மயூராதிரூடம் என்று ஆரம்பிக்கிற ஸ்லோகத்தில் மஹீ தேவ தேவம் என்கிறார். மஹீதேவர் என்றால் பிராம்மணர். இவர்களால் பூஜா செய்யப்பட வேண்டியவர் சுப்பிரமணியர் என்கிறார்.

சுப்பிரமண்யர் தமிழ்க் கடவுள்தான். வேதத்தில் இல்லாதவர் என்று சிலர் சொல்வதைக் கேட்டு, வைதிகமானவர்கள் அவரை உபாஸிக்காமல் இருக்கக் கூடாது என்றே இதைச் சொல்கிறேன்.

இதே புஜங்கத்தில், திருச்செந்தூரில் கடலோரத்தில் விளங்கும் ஹண்முகநாதரைப் பார்த்து, பராசக்தி புத்திரனே. சமுத்திரக் கரையில் நிற்கிற நான் சம்சார சமுத்திரத்தின் அக்கரக்குப் பக்தர்களைக் கடந்துவிடுகிறேன். அலைகளெல்லாம் சமுத்திரத்தில் மடங்கி விழுந்து, ஒங்கிவிடுவதைப் போல், என் சந்நிதிக்கு வருகிறவர்களின் ஆபத்துக்கள் கஷ்டங்கள் எல்லாம் ஒடுங்கியே போகும் என்பதைக் காட்டுகிறாய் என்று மனசு உருகும்படி பாடியிருக்கிறார். குகனைத் தவிர இன்னொரு தெய்வம் எனக்குத் தெரியவில்லை. தெரியவே இல்லை. (ந ஜானே ந ஜானே) என்கிறார்.

கடலிலே அலைகள் எழும்பி, அதிலேயே லயிக்கிற மாதிரி, சகல ஜீவ ஜகத்தும் பரம சத்தியமாக என்னிடந்தான் தோன்றி, என்னிடமே முடிகின்றன' என்ற ஞானோபதேசத்தைத்

திருச்செந்தூர் முருகன் சொல்லாமல் சொல்கிறார். நாரதருக்கு ஞானோபதேசம் செய்த ஸனத்குமாரரிடம் ஈசுவரனே தழைத்து வரம் கேட்டு, ஞான ஸ்கந்தனாக அவரைப் பெற்று, மறுபடியும் அவரிடம் தழைத்து ஞானோபதேசம் (பிரணவ உபதேசம்) வாங்கிக் கொண்டார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

சகல மார்க்க நிறைவான சரவணபவன்

பரமாத்மாவை அடைய நாலு மார்க்கங்கள் ஞானம், பக்தி, கர்மம், யோகம் இருக்கின்றன. சரீரம், மனசு, இதற்கெல்லாம் ஆதாரமாக இருக்கிற, ஆத்மா என்ன என்கிற விவகாரத்திலேயே, எப்போதும் இருந்து கொண்டிருந்தால், கடைசீயில் அது தானே பளிச்சிடுகிறது. Flashமாதிரி, இதுதான் ஞானம். அங்கே, அறிகிற ஜீவாத்மாவுக்கும் அறியப்படுகிற பரமாத்மாவுக்கும் பேதமே இல்லை. எல்லாம் ஒரே சாந்த சமுத்திரமாக அடங்கி விடுகிறது.

சிலருக்கு இந்த சாந்தியைவிட, பரமாத்மாவோடு ஒன்றாகச் சேர்ந்து கரைந்து விடுவதை விட, கொஞ்சம் பிரிந்து அவரிடம் அன்பாக இருந்து கொண்டிருப்பதால்தான் ருசி இருக்கிறது. இவர்கள் பக்தி செய்கிறார்கள். அதனால், பரமாத்மாவின் கருணையைப் பெறுகிறார்கள். இவர்கள் செய்யும் பக்தி, ஸ்வாமி திருப்பிச் செய்யும் கருணை, இதண்டும் அன்பு என்பதன் இரண்டு ரூபங்கள் தான். ஞானம் அறிவு வழி, பக்தி அன்பு வழி.

மனஸையும் கடந்து விட்டால் ஞானம், மனஸை வைத்துக் கொண்டே பக்தி செய்ய வேண்டும். இதே மாதிரி சரீரத்தை வைத்துக் கொண்டு கர்மாக்களைச் செய்கிறோம். அப்போதும்கூட, நமக்கென்று பண்ணிக் கொள்ளாமல் லோக உபகாரமாகப் பண்ணி, அதன் பலனை ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்தால் அதிலேயே ஒரு ஆனந்தம், நினைவு

இருக்கிறது. இவ்வாறு பற்றில்லாமல் கடமையைச் செய்வது கர்ம மார்க்கம்.

மனஸை நிறுத்த முடியாததாலேயே, ஆத்மாவைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. மனசு கட்டுப்படாமல் ஒடுகிறது. ஆனால், மூச்சைக் கட்டுப்படுத்தி நிறுத்தி விட்டால், மனசும் நின்றுவிடும். நமக்குப் பிராணன் என்று ஒன்று இருக்கிறது. பேருயிர் ஒன்றிலிருந்துதான் இந்தப் பிராணன் புறப்பட்டிருக்கிறது. அதனால், இந்தப் பிராணனை சில தினுசுகளில் கட்டுப்படுத்தி, சமநிலைக்குக் கொண்டுவந்து விட்டால் பிராண மூலமான பேருயிரை, பரமாத்ம சக்தியை அடைய முடிகிறது. இதற்கு யோகமார்க்கம் என்று பெயர்.

ஸுப்ரமண்ய சுவாமியைப் பற்றி நிறையக் கதை சொன்னேன். இன்னும் எத்தனையோ கதைகள் இருக்கின்றன. அவருடைய மகிமைக்கும் லீலைக்கும் முடிவேயில்லை. இத்தனை கதைகள், தத்வங்களிலிருந்தும் தெரிவது அவர் ஞானம், பக்தி, கர்மம், யோகம் எல்லாவற்றுக்கும் முடிவான பரம சத்தியமாக இருக்கிறார் என்பதுதான்.

முருகன் என்றால் ஞான பண்டிதன், ஞானோபதேசம் என்பது நினைவுக்கு வந்துவிடுகிறது. அத்வைத ஞான ஸ்வரூபமாகவே, அவரைத் திருப்புகழிலும் கந்தரபூதியிலும் அருணகிரிநாதர் சொல்லிருக்கிறார்.

நான் வேறு எனாதிருக்க, நீ வேறு எனாதிருக்க

ஏகபோகமாய் நீயு நானுமாய்

இறுகு வகை பரம் சுகமருள்

யானாகிய என்னை விழுங்கி வெறும்

தானாய் நிலை நின்றது தற்பரமே

பக்தி மார்க்கத்தில் முருகன் முடிவாக இருப்பதைச் சொல்லவே வேண்டாம். அடியார்களின் பக்தியையும் அவர்களிடம் கருணையையும்தான் புராணக்கதைகள்

ஸம்ஸ்கிருத ஸ்தோத்திரங்கள், தமிழ்த் துதி நூல்கள் எல்லாம் விஸ்தாரமாகச் சொல்கின்றன. இவற்றில் எல்லோருக்கும் ஒரு சில திருப்புகழ்கள், திருமுருகாற்றுப்படை, ஸுப்ரஹ்மணிய

புஜங்கம் ஆகியனவாவது மனப்பாடமாகத் தெரிந்துருக்க வேண்டும்.

கர்மா என்று எடுத்துக் கொண்டாலும், குமரிலப்பட்டராகவும் ஞானசம்பந்தராகவும் அவதரித்து அவரே, இந்த மார்க்கத்தை ஸ்தாபித்திருக்கிறார். அப்பர் ஸ்வாமிகள் தாஸமார்க்கம் என்ற வழியில் எப்போதும் லோக க்ஷேமத்துக்காக ஊழியம் செய்துகொண்டே இருந்தவர். அவர் என் கடன் பணி செய்து கிடப்பதே என்று சொன்னவர். இந்த வரி வருகிற செய்யுளின் ஆரம்பம் நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன் என்பது. கடம்ப மாலையை விரும்பி அணிகின்ற முருகன்தான் கடம்பன். முருகனைப் பெற்ற அம்பாளைத் தன் பாகத்தில் கொண்ட பரமேசுவரன் என்ற ஸோமாஸ்கந்த மூர்த்தமாக இங்கே அப்பர் சொல்கிறார். நிஷ்காம்யமாகப் பணி செய்து கிடக்கிற பான்மையை முருகன் விசேஷமாக அருள்வாள் என்கிறமாதிரி நம் கடம்பன் என்று ஆரம்பத்திலிருக்கிறது.

கடைசியில் யோகம் எனறு சொன்னேன். இது பிராண மூலத்தைக் கண்டுபிடித்து, அதோடு சேர்கிற வழி, பிராண சக்தி என்பது சரீரத்தில் மூலாதாரம் என்கிற இடத்தில், குண்டலினீ என்கிற ஸர்ப்ப ரூபத்திலேயே இருக்கிறது. நமக்கெல்லாம் அதன் மகாசக்தி தெரியவேயில்லை. அது குண்டலாகாரமாகச் சுருட்டிக் கொண்டு தூங்குகிற பாம்பாகவே இருக்கிறது. தூங்கும் பாம்பைத் தட்டி எழுப்புவதற்குத்தான் யோக சாதனைகள் இருக்கின்றன. சுப்ரம்மணியர் யோக விஸ்வரூபம். அதனால்தான் அவரை எப்போதும் பாம்போடேயே சேர்த்துச் சேர்த்துச் பேசுகிறோம். வீஸுகி தக்ஷகாதி ஸர்ப்ப ஸ்வரூப தரணாய என்று முத்துஸ்வாமி தீக்ஷிதர்கூட ஸ்ரீ ஸுப்ரஹ்யமண்யாய நமஸ்தே கிருதியில் சொல்கிறார். ஆசார்யாளும் புஜங்கம் (புஜங்கம் என்றாலே பாம்பு) என்ற விருத்தத்தில்தான் ஸ்தோத்திரம் செய்கிறார். நாகர் பிரதிஷ்டை, ஷஷ்டியில் நாகராஜா பூஜை எல்லாம் சும்ரம்மணியரை உத்தேசித்தே செய்கிறோம்.

தெலுங்கு தேசத்தில் சுப்பிரமணியரையே ஸர்ப்பமாகப் பாவிப்பதால்தான், பாம்பை, சுப்பராயடு என்கிறார்கள். அவரே யோகத்தில் நிறைவு.

ஞானமும் யோகமும் முடிகிற இடத்தில் ஓர் ஆட்டம், அசைவு இல்லை. லோகமே இல்லை. உணர்ச்சிகளே இல்லை.

இதெல்லாம் பட்டுப்போன இடம் அது. இப்படிப் பட்டுப்போன நிலையில் ஈசுவரனை ஸ்தாணு என்று சொல்வது வழக்கம். பட்ட கட்டை என்று அர்த்தம். சுசீந்திரத்தில் ஸ்தாணுமாலயன் என்று கேட்டிருப்பீர்கள். மும்மூர்த்தியும் சேர்ந்த ஸ்வரூபம். அதில் ஸ்தாணு என்பது பரம வைராக்கியமான பரமேச்வரண்தான். உணர்ச்சியில்லாவிட்டால், மரத்துப் போகிறது என்கிறோமல்லவா. அப்படிக் காய்ந்து மரமாக இருக்கிறவர் ஸ்தாணு. பக்தி அநுக்கிரகத்துக்காக கருணையில் நனைந்திரு ந்தபோது ஆர்த்ரராக (ஆதிரையனாக) இருப்பவரே இப்படி ஞானத்தில் பட்ட கட்டையாயிருப்பார்.

அதே மாதிரி தான் அம்பாளும், கருணாமயமான அவரும் பரம விரக்தியாக இருக்கிற ஓர் அவஸ்தை (நிலை) உண்டு. அவள் எப்போதும் ஈசுவரனையே பற்றிப் படர்ந்திருப்பவள். அவர் மரமாக இருந்தால், இவள் கொடியாகச் சுற்றிக் கொண்டிருப்பாள். ஸ்ரீசைலத்தில் அவர் அர்ஜுன (மருத) மரமாக இருக்கிறார். இவள் மல்லிகைக் கொடியாகச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். அதனால்தான் அவருக்கு மல்லிகார்ஜுனர் என்று பெயர். அது நல்ல பசுமையோடு இருக்கப்பட்ட மரம். பட்ட மரமாக அவர் இருக்கும்போது அம்பாள் என்ன செய்கிறாள்?

பரமேசுவரன் பச்சைப் பசேலென்று கப்பும் கிளையுமாக ஒரு மரம் மாதிரி இருந்தால், அம்பாள் ஒரு பசுங்கொடியாக அவரைச் சுற்றிக் கொண்டிருப்பாள். அவர் பட்ட மரமாக, காய்ந்த கட்டையாக இருக்கும்போது, அவள் என்ன செய்கிறாள்?அப்போதும் அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். ஆனால், பச்சைக் கொடியாக இல்லை. இலையே இல்லாமல் நார் மாதிரியான கொடியாக, அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். அபர்ணா, அபர்ணா என்று அவளுக்கு ஒரு பெயர். பர்ணம் என்றால் இலையே இல்லாத கொடியாக இருக்கும்போது அம்பாள் அபர்ணாவாகிறாள். பர்வத ராஜ குமரியாகப் பிறந்து ஈஸ்வரனைப் பதியாக அடைவதற்காக அம்பாள் தபஸ் பண்ணினபோது இலையைக் கூடச் சாப்பிடாமல், கடும் நியமத்தோடு இருந்தாலேயே இந்தப் பெயர் உண்டாயிற்று என்று ஓர் அர்த்தம் சொல்வதுண்டு. எனக்கெனவோ ஸ்தாணு வாக பற்றிக் கொண்டிருக்கிற அம்பாள் கொடிதான் அபர்ணா என்று

தோன்றுகிறது.

ஈசுவரனும் அம்பாளும் இருந்தால் ஸோமாஸ்கந்தமாக அங்கே ஸுப்பிரம்மணியரும் இருக்க வேண்டும் அல்லவா?ஈசுவரன் ஸ்தாணுவாகவும், அம்பாள் அபர்ணாவாகவும் இருக்கும்போது முருகன் எப்படியிருக்கிறார்?விசாக ராக இருக்கிறார் என்று சொல்லலாம். சாகை என்றால் கிளை என்று அர்த்தம். வேதத்தில் பல கிளைகள் உண்டு. அது ஒவ்வொன்றுக்கும் இன்ன வேத சாகை என்றே பெயர் சொல்வார்கள். 'வி'என்பது பல அர்த்தங்களில் வரும். சில சமயங்களில் ஒன்றை உயர்த்திக் காட்ட 'வி'சேர்ப்பதுண்டு. உதாரணமாக, ஐயம் - விஜயம். ஆனால் 'வி'க்கு எதிர்மறை (Negative) பொருளும் உண்டு. தவா என்றால் புருஷனை உடையவள். விதவா என்றால் புருஷனை இல்லாதவள். இந்த ரீதியில் 'வி'-சாக என்றால் கிளை இல்லாத என்று அர்த்தம். அப்பா பட்ட கட்டையாகவும், அம்மா இலை இல்லாத கொடியாகவும் இருக்கும்போது, குழந்தை முருகனும் கிளையே இல்லாத கீழ்க்கன்றாக, குழந்தை முருகனும் கிளையே இல்லாத கீழ்க்கன்றாக இருக்கிறார். அது பரம வைராக்கிய ஸ்வரூபம்.

சுப்ரமணியர் பரம வைராக்கியமாக, ஞானியாக, ஆண்டியாக, தண்டாயுதபாணியாக இருக்கிறார். அவைரே வல்லீதேவசேனா சமேதராகக் கல்யாண சுப்பிரமணியராகவும், இருக்கிறார். இம்மை மறுமை இரண்டுக்கும் உதவுபபராகவும், வழிகாட்டுபவராகவும், அவர் இருப்பதையே இந்த இரண்டு கோலங்களுக்கும் காட்டுபவராகவும், அவர் இருப்பதையே இந்த இரண்டு சுலோகங்களும் சொல்கின்றன.

பாமர ஜனங்களிலிருந்து தேவர் வரையில் எல்லோரையும் ஒரேபோல் அநுக்கிரகிக்கிரவர் அவர். வேட ஸ்திரீயான வள்ளியை ஒரு பத்தினியாகவும், தேவ ராஜகுமாரியான தேவசேனை இன்னொரு பத்தினியாகவும் கொண்டவர்.

பார்வதீ பரமேசுவரர்களின் கடைக்குட்டியான அவர்தான் தோவர்களில் ரொம்பவும் குழந்தை. அவரே தேவ நாயகியாக இருக்கிறார். தேனாம்பேட்டையில் சுப்பிரமணிய ஸ்வாமி கும்பாபிஷேகம் நடந்தபோது, தேவநாயக்கன் பேட்டைதான் தேனாம்பேட்டை ஆயிற்றோ என்று தோன்றிற்று.

தேவாதிதேவப் பெருமாளே என்று அருணகிரி சொல்வார்.

அவரை நாம் எல்லோரும் பக்தி செய்து, இகபர க்ஷேமத்தைப் பெற வேண்டும். இவ்விதம் பக்தி செய்வதற்காக நம்மை நக்கீரர் ஆற்றுப்படுத்திய நூல்தான் திருமுருகாற்றுப்படை. ஆற்றுப் படை உடைய முருகன் கங்கை ஆற்றில் பிறந்தவர். ஆறு தாங்கிய ஜோதியான அவர், ஆறெழுத்து மந்திர மூர்த்தி, ஆறுதலைக் கொடுக்கும் ஆறுமுகர். ஆறுபடை வீரர். அவரது வெற்றி நாளான மகாஷஷ்டி துலா மாதத்தின் வளர்பிறை ஆறாம் நாள். துலா என்பது அவரது சமநிலையாம். தராசு முளையைக் காட்டுவது. ஞானத்தில் எங்கும் சமமாக இருந்து கொண்டே லோகாநுக்கிரகுத்துக்காக அசுரர்களை வென்று பக்தர்களை ரக்ஷிப்பார். வெளிப்பகையோடு உட்பகைவர் அறுவரையும் அழித்து நம்மை ஜோதி ஸ்வரூபமாக்குகிற சிகரஜோதி அவர். மலைகளில் எல்லாம் மணிவிளக்காக மேலே நிற்பவர் அவர். கைலாஸ மலையில் ஜோதிப் பொழிவாய் உதித்தார். திருப்பரங்குன்ற மலையிலும் திருத்தணிகை மலையிலும் தேவயானை வள்ளியரை மணந்தார். பல சேனையை வருத்தார். கந்தமாதன மலையில் சூரனை வதைத்தவர். பழனி மலையில் ஆண்டியாய் நின்றார். ஸ்வாமி மலையில் ஞானமொழி பேசினார்.

தேவாதி தேவப் பெருமாளான அவர் பெரியரில் பெரியவர். நாம் சின்னஞ் சிறியர். சின்னஞ் சிறிய நாம், தானியங்களுள் சின்னஞ் சிறிய தினையைக் காட்டி அழைத்தால், அந்தப் பெரியோன் வருவான். சின்னச் சின்ன தேனீக்கள் சின்ன மலர்களிலிருந்து எடுத்த தேனை விட்டு, தினை மாப்பிசைத்து அவருக்கு நிவேதனம் செய்தால், நமக்கு ம்மன மலர்ச்சி என்ற தேனின் இனிமையைத் தருவார். தூய பசு மேய்ந்த தாவர லோகம் - இயற்கை - அழகு - முழுவதற்கும் சாரமாகத் திரண்டு வந்த பசு நெய்யை மாவில் வார்த்து, ஜோதி விளக்கேற்றினால் நம் மனத்திலும் அவர் ஞானச் சுடரை ஏற்றி வைப்பார். மாவிளக்கு என்று நாம் மா விளக்கை அவருக்கு அர்ப்பணம் செய்தால், மா விளக்கான - அதாவது மகா தீபமான - அவர் நமக்கு ஞான தோதியைத் தருவார்.

பரமேசுவர ஸ்வரூபமான அவருக்கு, "அரன் நாமம் சூழ்க"என்று அவரே ஞானசம்பந்தராக வந்து

சொன்னதற்கேற்ப, அரஹரோ ஹரா சொல்லி நம் பாபத்தையெல்லாம் அரித்துப் பரமானந்த ஜோதியாக இருப்போமாக.

அரஹரோ ஹரா!

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### உம்மாச்சி

எல்லோரும் காலையில் எழுந்ததும் நாராயண ஸ்மரணம் செய்யவேண்டும். மாலையில் பரமேசுவரனை தியானிக்க வேண்டும். மஹாவிஷ்ணு. உலகைப் பரிபாலிப்பவர். காலையில் உலக காரியங்களைத் தொடங்கும்முன் அவரை ஸ்மரிக்க வேண்டும். பரமேசுவரனிடம் உலகமெல்லாம் லயித்து ஒங்குகின்றன. மாலையில் நம் வேலைகள் ஒய்கின்றன. நாம் பார்த்துக் கொண்டிருக்கும் உலகம் இருளுக்குள் ஒடுங்குகிறது. பட்சிகள் கூட்டில் ஒடுங்குகின்றன. ஊரெல்லாம் மேய்ந்த பசுக்கள் கொட்டிலிக்குத் திரும்பி வந்து ஒடுங்குகின்றன. வெளியில் திரியும் எண்ணெய் களையெல்லாம் அப்போது இதயத்துக்குள் திருப்பி பரமேசுவரனை ஸ்மரிக்க வேண்டும். தோஷம் என்றால் இரவு. இரவு வருவதற்கு முற்பட்ட மாலை வேளை ப்ரதோஷம். பிரதோஷத்தில் பரமேசுவரனை நினைக்க வேண்டும்.

ஈஸ்வரனை எப்போதும் அம்பாளோடு சேர்த்தே தியானிக்க வேண்டும். ஈசுவரன் சிவன் எனப்படுகிறார். அம்பாளுக்கு சிவா என்று பெயர்.

வேதத்தில் ஸ்ரீ ருத்ரம் சொல்கிறது. பயங்கர ரூபம் கொண்ட ருத்திரனுக்கு பரம மங்களமான ஒரு ல்வரூபம் உண்டு. அதற்கு சிவா என்று பெயர். அந்த சிவாதான் உலக

தாபத்துக்கெல்லாம் ஔஷதமாக இருக்கிறது. ருத்திரனுக்கும் ஔஷதம் அந்த சிவாவே.

ருத்ரன் அலஹாலத்தை உண்டு பிழைத்திருப்பதற்குக் காரணம் இந்த சிவா என்கிற அம்பாளான மிருதஸஞ்சீவினிதான். அம்மா, உன் தாடங்க மகிமையால் அல்லவா பரமேசுவரன் விஷத்தை உண்டும்கூட அழியாமல் இருக்கிறார்?என்று ஆச்சாரியாள் ஸௌந்தரிய லஹரி யில் கேட்கிறார்.

அப்படிப்பட்ட சிவானோடு சிவாவையும் சேர்த்துச் சொன்னது மட்டுமல்ல. நம் தேசக்குழந்தைகளும் அநாதி காலமாக நமக்கு அப்படியே உத்தரவு போட்டிருக்கின்றன. நம்மைப் போலக் கல்மிஷங்கள் இல்லாமல், நம்மைப் போலப் பாபங்கள் இல்லாமல் இருக்கிற குழந்தைகளின் வாக்கியமும் நமக்கு ஆக்ஞைதான்.

குழந்தைகள் நமக்குக் கட்டளை இடுவது என்ன?குழந்தைகள் ஸ்வாமியை உம்மாச்சி என்றே சொல்லும். குழந்தைகளின் பரம்பரையில் சில தன் வார்த்தைகள் உண்டு. இவை ஆயிரக்கணக்கான வருஷங்களாக வந்துகொண்டிருக்கின்றன. பெரியவர்களின் வார்த்தைகளும், அவற்றின் அர்த்தங்களும் மாறும். குழந்தைமொழி மாறுவதில்லை. உம்மாச்சி என்ற குழந்தை மொழிக்கு ஸ்வாமி என் று அர்த்தம். என்னிடம் குழந்தைகளை அழைத்து வருகிறவர்கள்கூட, உம்மாச்சித் தாத்தாவும் நமஸ்காரம் செய் என்று அவற்றிடம் சொல்லிக் கேட்டிருப்பீர்கள். இதென்ன உம்மாச்சி?இதன் சரியான மூலம் என்ன?என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

திருச்சி மலைக்கோட்டைக்குப் போயிருந்தேன். அங்கே உள்ள கோயில் ஸ்ரீ பாதந்தாங்கிகளில் திருநல்லத்திலிருந்து (கோனேரி ராஜபுரம்) வந்திருக்கிறவர்களும் இருந்தார்கள். அவர்களில் ஒருவரை ஒருவர் உம்மாச்சி என்று கூப்பிடுவதைக் கேட்டேன். திருநல்லத்தில் ஸ்வாமியின் பெயர் உமாமகேஸ்வரன் என்பது. எனக்கு உடனே விஷயம் பளிச்சென்று புரிந்தது. உம்மாச்சு, உம்மாச்சி எல்லாம் உமாமகேசனைக் குறிப்பனவே என்று தெரிந்துகொண்டேன். ஆக, குழந்தைகளின் பாஷையிலிருந்தே அவர்கள் மிகப் பிழமா காலத்திலிருந்து உமாதேவியுடன் சேர்ந்த

மகேசுவரனைத்தான் ஸ்வாமியாக நினைக்கிறார்கள் என்பது தெரிய வந்தது.

குழந்தைகளால் சொல்லப்படுகிற ஒரு விஷயத்துக்குப் பெருமை அதிகம். குழந்தைகளிடம் காமமும் குரோதமும் நிலைத்திருப்பதில்லை. இந்த விநாடி ஆசைப்பட்டு வாங்கிய பொருளை அடுத்த வினாடி கீழே போட்டுவிட்டுப் போய்விடும். இந்த விநாடி கோபித்துக்கொண்ட ஒருவரிடம் அடுத்த விநாடியே ஆசையோடு ஒடி ஒட்டிக் கொள்ளும். குழந்தைக்கு மோச எண்ணம் இல்லை. கபடம் இல்லை. இதனால்தான் உபநிஷத்துக்களும் நம்மைக் குழந்தையாக இரு என்று உபதேசிக்கின்றன. குழந்தையே தெய்வம் என்றால் உமாமகேசுவரன் என்று சொல்கிறதென்றால், அந்தக் கட்டளையை நாம் ஏற்கவேண்டும். வேத்ததின் பாஷையும் குழந்தையின் பாஷையும் ஒன்றாகச் சொல்வதுபோல், எல்லோரும் சாங்காலத்தில் அம்பிகை ஸஹிதனான ஈசுவரனை தியானிப்போமாக!

நம:பார்வதீ பதயே:ஹர ஹர மஹாதேவா!

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

பசுபதி

பரமேசுவரனுக்குப் பசுபதி என்று பெயர். இங்கு பசு என்று சொல்வது அவருடைய வாகனமாக ரிஷபத்தையோ காவலாளான நந்தியையோ பசுக்கள். அவர்களுக்கு யஜமானனாக இருக்கும் ஈசுவரனே பசுபதி.

தழையைக் கண்ட இடமெல்லாம் ஒடுகிற பசுவைப் போல், இந்திரிய சௌக்கியத்தைத் தேடி ஒடிக்கொண்டேயிருக்கிறோம் நாம். பசுவின் சொந்தக்காரன் அதைக் கட்டிப் போடுவதைப்போல் பசுபதியான ஈசுவரன் நம்மைக் கட்டிப் போட்டிருக்கிறான்.

எங்கே கட்டியிருக்கிறான். கண்ணுக்குக் கட்டு எதுவும் தெரியவில்லையே என்று தோன்றும். ஆனாலும் நம்மை அறியாமலேயே இந்தக் கட்டைப் பற்றி நாம் அவ்வப்போது பேசுகிறோம். ஒரு காரியத்துக்காக நாம் எத்தனையோ முயற்சி செய்கிறோம். அப்படியும் அது பலிதமாகவில்லை. இச்சமயத்தில், முடிந்ததெல்லாம் செய்தேன். ஆனால், கர்ம பந்தம் யாரை விட்டது?காரியம் ஜயிக்கவில்லை என்று சமாதானம் சொல்லிக் கொள்கிறோம். பந்தம் என்பதுதான் கட்டு. நம்முடைய பூர்வ கர்மாவினால் நம்மைக் கட்டியிருகிகிறார் பசுபதி.

கயிற்றால் கட்டப்பட்ட பசுவுக்கு, அந்தக் கட்டின்மீது கோபம்தான் வரும். ஆனால் கட்டை அவிழ்ந்துவிட்டால் என்ன ஆகிறது?அது அசலான் தோட்டத்தில் மேய்கிறது.

அவன் அதை வெளு வெளு என்று வெளுத்துக் கட்டுகிறான். பட்டியில் கொண்டுபோய் அடைகிறான். அப்போதுதான் தன்னைக் கட்டிப்போட்டிருந்தது எவ்வளவு நல்லது என்று தெரிகிறது.

இப்படியேதான் கர்மக் கட்டைப்பற்றி நமக்குக் கோபம் வருகிறது. ஈசுவரன் இப்படி ஒரு கட்டைப் போட்டுவிட்டால் நமக்குத் தோல்வி, துக்கம் இதெல்லாம் ஏற்படாது. தோல்வியும் துக்கமும் வருவதால்தான் நாம் இப்போது நமக்கு இவ்வளவுதான் பொசிப்பு என்கிற புத்தியைப் பெற்று, இருக்கிற மட்டும் திருப்தியுடன் நிம்மதியுடன் வாழக் கொஞ்சமாவது முயல்கிறோம். இவை இல்லாவிட்டால் நம்முடைய ஆசைக்கும், நாம் போடுகிற பிளானுக்கும் முடிவே இராது. இத்தனை பலமான கட்டும் இருக்கும்போதே, நம்மில் ஒவ்வொரு தனி மநுஷ்ஷ்யனின் ஆசைக்கும் இந்த சிருஷ்டி முழுவதையும் ஆஹுதி பண்ணினாலும் போதாமலிருக்கிறது. பூலோகம் போதாதென்று, இப்போதே சந்திர மண்டலம், மார்ஸ் என்று போகிறோம். கட்டு இல்லாவிட்டால் கேட்கவே வேண்டாம். இப்போதே இத்தனை போட்டி, பொறாமை, சண்டே என்றால் அப்போது எப்படி இருக்கும் என்று கற்பனைக்கூடச் செய்ய முடியாது. நம் ஆசை அவ்வளவையும் காரியத்தில் கொண்டு வருவதற்கு முயற்சி செய்யாதபடி கர்மம் நம்மைக் கட்டிப் போட்டிருக்கிறதோ, நாம் பிழைத்தோமா.

பசுவைக் கட்டிப் போட்டால் அது பயிரையும் பாழாக்குகிறது. தானும் அடிபடுகிறது. அதுபோல் கர்மாவால் ஈஸ்வரன் நம்மைக் கட்டிப் போடாவிட்டால் நம்மையும் கெடுத்துக் கொண்டு லோகத்தையும் கெடுத்து விடுவோம் - இப்போதே கொடுக்கிறோம். துர்பலத்திலேயே இவ்வளவு கெடுததால், சுயேச்சை பலம் பூரணமாக இருக்கும்போது எவ்வளவு கெடுப்போம். கயிறு போட்டுக் கட்டுவதால்தான், ஏதோ ஒரு சமயத்திலாவது பசுவுக்குக் கட்டுத் கறியிடம் வந்து படுக்க முடிகிறது. கர்மம் கட்டுவதால்தான், நாமும் எப்போதாவது அதற்கு முளையான ஈசுவரனிடம் சித்தத்தைப் படுக்க வைக்கிறோம். இல்லாவிட்டால், பகவானை அடியோடு மறந்து, இப்படியே சம்ஸாரத்தில் உழன்றுகொண்டு தானிப்போம்.

நம்முடைய க்ஷேமத்துக்காக, நமே நமக்கு அதிக உபத்திரவத்தை உண்டாக்கிக் கொள்ளாமல் இருப்பதற்காக, பகவான் நம்மைக் கட்டிப் போட்டிருக்கிறார். எப்போது அவிழ்த்து விடுவீர். என்று அவரைக் கேட்டால், ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்யாமல், அதனால் உனக்கும் பாபம் உண்டாக்கிக் கொள்ளாமல் இருக்கிற பக்குவம் வந்தால், அவிழ்து விடுவேன் என்கிறார்.

குழந்தை விஷயம் செய்தால், கட்டிப் போடுகிறோம். நம்மிடம் ஆசை என்ற விஷயம் இருப்பதால், நம்மைப் பசுபதி கட்டிப் போட்டிருக்கிறார். குழந்தைக்கு விஷம் புத்தி போய் விட்டால் அப்புறம் கட்ட மாட்டோம். நமக்கு ஆசை போய்விட்டால் ஈசுவரனும் நம்மை அவிழ்த்து விடுவார். ஆசையினால் பலருக்கு பலவித கஷ்டங்களை உண்டாக்கி, நாமும் கஷ்டப்படுகிறோம். ஆசை போயிவிட்டால், யாருக்கும் நம்மால் கஷ்டம் இல்லை. அப்போது கட்டும் இல்லை. அவிழ்த்து விடுவார்.

கட்டு போயிவிட்டது என்பதால் அசலான் தோட்டத்தில் மேயமாட்டோம். ஏனென்றால், அசலான் தோட்டத்தில் மேயாத புத்தி நமக்கு வந்த பிறகுதான் பசுபதி கட்டையே எடுக்கிறார். கட்டு போனபின் நாம் கட்டுப்பட்ட நிலையிலிருந்து உயர்ந்து கட்டியவனின் நிலைக்கே போய்விடுவோம். கட்டு இருக்கிற வரையில் நாம் வேறு, ஸ்வாமி வேறு என்று பூஜிக்கிறோம். கட்டு போய் விட்டால்

நாமே அவன் என்று தெரிந்து கொள்வோம். அப்புறம் பூஜைகூட வேண்டாம். ஒரு நிலை வரையில் ஜீவன் பசு என்று சுருதியும் சொல்கிறது. அது எந்த நிலை?

'தேவதாம் அன்யாம் உபாஸதே'

என்று சொல்லியிருக்கிறது. இதற்குப் பொதுவாக, இஷ்ட தேவதையை விட்டுவிட்டு அதற்கு அந்நியமான தேவதையை உபாஸிக்கிறவன். பசு என்று பொருள் சொல்வார்கள். அது தவறு. தான் பூஜிக்கிற தேவதை தனகக்கு அந்நியமானது எனறு நினைத்து எவன் பூஜை செய்கிறானோ அவன் பசு என்பதே சரியான அர்த்தம். இப்படி பகவான் வேறு, பக்தன் வேறு என்ற பேத புத்தி இருக்கிற வரையில் கர்மா உண்டு. கர்மா உள்ள வரையில் கட்டும் உண்டு.

அதற்காக, இப்போதே நமக்கு பேத புத்தி போய்விட்டதாக நாம் பிரமை கொள்ளக் கூடாது. பாசாங்கு பண்ணக்கூடாது. உண்மையாகவே பேத புத்தியைப் போக்கிக் கொள்ள வேண்டும். அப்படிப் போகாத வரையில் சாஸ்திரோக்கதமான கர்மங்களைச் செய்யத்தான் வேண்டும்.

ஸ்வாமிகள் என்ன இப்படிச் சொல்கிறார்? இத்தனா நாழி கர்மா இருந்தால் கட்டும் உண்டு என்று சொன்னார். இப்போது இவரே அநுபவத்தில் அபேத ஞானம் வருகிற சாஸ்திரம் விதிக்கிற தர்ம காரியங்களின் கட்டு உதவி செய்கிறது. அதெப்படி ஒரு கட்டு இன்னொரு கட்டை அவிழ்க உதவும் என்று கேட்கலாம். ஒரு திருஷ்டாந்தமம் சொல்கிறேன். ஒருத்தன் விறகுகளைக் கட்டிக் கொண்டு வருகிறான். மணி முடிச்சாகக் கட்டிவிட்டான். கயிற்றை அவிழ்க்க முடியவில்லை. இப்போது என்ன செய்வாள் தெரியுமா. அந்தப் பழைய கட்டுக்குப் பக்கத்திலேயே அதைவிட இறுக்கமாக மற்றொரு கயிற்றைச் சுற்றி நெருக்குவார்கள். இந்த இரண்டாவது கயிற்றை முடிச்சுப் போடமாட்டார்கள். அப்படியே கெட்டியாக விறகுகளைச் சுற்றி இறுக்கிப் பிடித்துக் கொள்வார்கள். இந்த இறுக்கலில் பழைய மணி முடிச்சுக் கட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகத் தொள தொள என்று நெகிழ்ந்து கொடுக்கும். அதை அப்படியே அலக்காக விறகுச் சுமையிலிருந்து கழற்றி விடுவார்கள். பிறகு புதிதாக இறுக்கிப் பிடித்துக் கொண்ட கயிற்றையும்

விட்டுவிடுவார்கள். ஆக, புதிய கட்டு பழைய கட்டை அவிழ்க்க உதவி விட்டது. அப்புறம் இதையும் சுலபமாக எடுத்துப் போட்டு விட முடிந்தது.

சாஸ்திரம் சொல்கிற தர்ம காரியங்களின் கட்டு, இரண்டாவது கயிறு போன்றது. அது முடிச்சுப் போட்டுக் கட்டுவது அல்ல. கட்டுகிற மாதிரி இருக்கும். சாஸ்திர விதிகள் ரொம்பவும் கறாராக, கண்டிப்பாக கட்டுப்படுத்துகிற மாதிரிதான் இருக்கும். ஆனால் இந்திரியங்கள் போடுகிற மணி முடிச்சான ஆசைக்கட்டிலிருந்து விடுபட்டு, கடைசியில் பூரண நிம்மதி, சௌக்கியம், விடுதலை பெற வேண்டுமானால், இந்தக் கட்டு இருந்தேயாக வேண்டும். ஆசைக் கட்டுப் போட்டபின் சாஸ்திரக் கட்டும் போய்விடும். ஆனால் முதலில் அது போவதற்காக இந்த இரண்டாவது கட்டை நாமாகப் போட்டுக் கொள்ள வேண்டும். தார்மிகமாக, மநுஷ்ய காரியம், தேவ காரியம், பூஜை, யக்ஞம், பரோபகாரம், ஜீவாத்ம கைங்கரியம் எல்லாம் பண்ண வேண்டும். ஆசை போனபின் இந்தத் தெய்வ காரியங்கள், வைதிக காரியங்கள், சமூகக் காரியங்கள் எல்லாம் கூட நின்று விடலாம்.

இந்த நிலையை ஒருவன் அடைகிறபோது இப்படிப்பட்ட சாதகனிடம் கோபம் வருமாம். (தேவதைகள் வேறு. தெய்வம் எனறு பொதுவில் சொல்லப்படும் ஸ்வாமி வேறு) மனிதன் வைதிக காரியம் செய்தால்தான் தேவதைகளுக்கு ஆஹுதி கிடைக்கும். இல்லாவிட்டால் அவர்கள் பட்டினிதான். எனவே இவன் கர்மாவை விட்டு, யக்ஞம், தர்ப்பணம், பூஜை இவற்றை நிறுத்தி விட்டால் தேவர்களுக்குச் சாப்பாடு கிடைக்காது. எனவேத்தான் கோபம் வரும். மாடு கறவை நின்றுவிட்டால்அப்புறம் அது பிரயோஜம் இல்லை என்று தீனி போடுவதை நிறுத்தி விடுகிறோம் அல்லவா. மனிதனின் ஆசை எல்லாம் நினறு விட்டால், எந்த தேவதையில் அநுக்கிரகம் இவனுக்கு வேண்டாம் என்றாகி, அவற்றுக்கு இவன் ஆஹுதி தருவதும் நின்றுவிடும். மனிதனின் கர்மம் நின்றுவிட்டால் அப்புறம் தேவதைகளுக்கு அவனால் பிரயோஜனம் இல்லை. இது காரணமாகத்தான், புராணங்களில் பல ரிஷிகள் பிரம்ம ஞானத்தை அடையத் தபஸ் செய்த போது தேவதைகள் பிரதிபந்தகம் (இடையூறு) விளைவித்த தாகப் பார்க்கிறோம்.

இதனால்தான் ஸம்ஸ்கிருதத்தில் அசட்டுக்கும் அஞ்ஞானிக்கும், தேவனாம் ப்ரியன் என்றே ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. தேவனாம் ப்ரியன் என்றால் தேவதைகளுக்கு இஷ்டமானவன் என்று அர்த்தம். அது ஏதோ புகழ்ச்சொல் போலத் தோன்றும். தேவனாம் பெரிய அசோக் என்று அசோகச் சக்கரவர்த்திக்கூடக் கல்வெட்டுகளில், ஸ்தூபிகளில் எல்லாம் தம்மை வர்ணித்துக் கொண்டிருக்கிறார். ஆனால், உண்மையில் எவன் தேவதைகளுக்கு திருப்தி செய்கிற நிலைக்கு மேற்பட்ட ஞானத்தை ஒரு நாளும் தேடிப் போகாமல், கர்மத்திலேயே உழலுகிற அசடே, அவனே தேவனாம் ப்ரியன்.பழைய காலத்தில் ஞானம் வந்தவர்களும்கூட சாஸ்திரக் கர்மாவை விடத் தயங்கினார்கள். மற்றவர்களுக்கு வழி காட்டுவதற்காக, இவற்றை தங்களுக்கு அவசியமில்லாமலும்கூடத் தொடர்ந்து செய்து வந்தார்கள். நாமோ, சிறிது கூடத் தயக்கமில்லாமல், ஹாய்யாக சகல சாஸ்திர தர்மங்களையும் விட்டுவிட்டோம். ஆனால் ஞானியாகத்தான் ஆகவில்லை.

ஞானியில்லை என்றால், தேவனாம் ப்ரியர் களாகவாவது இருந்தால், அவர்களுடைய பிரீதியால், நாம் செத்துப்போன பின் தேவலோகத்துக்குப் போகலாம். தேவலோகம் என்பது ஒரு கேளிக்கை லோகம். அது மோக்ஷமல்ல. மோக்ஷம் என்பது இந்திரியங்களுக்கு எட்டாத அத்மானந்தத்தை சாசுவதமாகத் தருவது. தேவலோகம் என்பது நம் வைதிக கர்மாவினால் கிடைத்த புண்ணியம் தீர்ந்தபின் பூலோகத்துக்குத் திரும்பத்தான் வேண்டும். மோக்ஷ சுகத்துக்கும், தேவ லோகம் என்கிற ஸ்வர்கத்தின் இன்பத்துக்கும், அஜகஜாந்தரம். இருந்தாலும் துக்கமும் கஷ்டமும் நிறைந்த மநுஷ்ய லோகத்திலிருந்து நாம் தேவ லோகத்திற்காகவது போனால் விசேஷம்தான். நாம் இதற்காகவே வழி பண்ணிக் கொண்டிருக்கிறோமா? அதுவும் இல்லை. தேவதைகளுகக்குத் திருப்தி தருகிற வைதிக கர்மங்களை விட்டுவிட்டபின் அவர்களுக்கு எப்படிப் பிரியமானவர்கள் ஆவோம். நாம் நரகவாஸீனாம் ப்ரியர் களாகவே இருக்கிறோம் - நரகத்திலிருப்பவர்கள், நமக்குத் துணையாக இவர்களும் வரப் போகிறார்கள் என்று நம்மைப் பற்றிப் பிரியமான எண்ணுகிற ஸ்திதியில்தான் இருக்கிறோம்.

துஷ்டர்களாக இருப்பதைவிட, அசடுகளாக ஆவது சிலாக்கியம். முதலில் நாம் அசடுகளான தேவனாம்பிரியர்களாக ஆக வேண்டும். அப்புறம் பசுபதி கொஞ்சம் கொஞ்சமாக் கட்டை அவிழ்த்து விடுவார். (தேவ லோகத்தை விரும்பாமல், பற்றின்றி கர்மா செய்தால், இக்கர்மாவே சித்த சுத்திதந்து பிரியத்துக்கும் ஞானத்திற்கு வழிகோலும்) அப்புறம் தேவதைகளின் பிரியத்தையும், அப்பிரியத்தையும் பொருட்படுத்தாத ஞானி ஆகலாம். அப்போது பசு (ஜீவன்) - பாசம் (கயிறு) - பதி (ஈஸ்வரன்) என்கிற மூன்றில் பசுவும் பாசமும் போய், பசி மட்டுமே இருக்கும். பசுவான நாமே பதியாகி இருப்போம்.

சைவ சித்தாந்தத்தில் பசு - பதி - பாசம் என்று எதைச் சொல்கிறார்களோ, அதுதான் ஆதிசங்கரரின் அத்வைத வேதாந்தத்தில் ஜீவன் - பிரம்மம் - மாயை என்று சொல்லப்படுகிறது. சங்கரரும் பசு - பாசம் என்ற பதங்களையே ஸௌந்தரிய லஹரி சுலோகம் ஒன்றில் பிரயோகித்திருக்கிறார்.

சிரம் ஜீவந்நேவ பசு பாச வ்யதிகர:

பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம த்வத் பஜனவான்

(அம்பிகே உன்னை எவன் பூஜிக்கிறானோ அவன் பசு, பாசம் என்றவற்றின் சேர்க்கையால் உண்டாகிற விபரீதத்தைப் போத்திக் கொண்டு ஸதா காலமும் பரமானந்தம் என்ற ரஸத்தையே ருசிக்கிறான்.)

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### தேவர்கள்

ஸ்வாமி ஒருவர்தானே. உங்களுக்கு மட்டும் என்ன முப்பத்து முக்கோடி தேவதைகள்? என்று மற்ற மதஸ்தர்கள் நம்மைப்

பரிஹாரம் செய்கிறார்கள்.

ஸ்வாமி ஒருவர்தான். அவரைத்தான் நாம் பேச்சு வழக்கில் தெய்வம், தெய்வம் என்கிறோம். விதி என்பது ஸ்வாமி நமக்குத் தருகிற கர்ம பலன்தான். ஆநால் நாம் ஸ்வாமி என்ற அர்த்தத்திலேயே தெய்வம் எனற பதத்தை உபயோகிக்கிறோம். அதோடு, அந்த தெய்வமும் தேவர்களும் ஒன்று என்று நினைத்துக் கொண்டு, முப்பத்து முன்று கோடி தெய்வமானது என்று நாமும் மற்ற மதஸ்தர்களோடு சேர்த்துக் கொண்டு கேலியாக எண்ணுகிறோம்.

தெய்வம் (ஸ்வாமி) வேறு. தேவர்கள் வேறு. ஸ்வாமி ஒருவர்தான் என்பதே நமது மதம். அவரே மூன்று ரூபங்களை எடுத்துக் கொண்டு பிரம்மாவாக சிருஷ்டிக்கிறார். விஷ்ணுவாகப் பரிபாலிக்கிறார். ருத்திரனாக சம்ஹாரம் செய்கிறார்.

உண்மையில் இவர்களும் வேறு வேறு இல்லை. கோர்ட்டுக்குப் போகும்போது தாசில்தார் ஸூட் போட்டுக் கொண்டிருக்கிறார். பூஜை செய்யும்போது அவரே பஞ்சகச்சம் கட்டிக் கொள்கிறார். பத்தினி அகத்தில் இல்லாமல் அவரே சமைக்க நேர்ந்தால் அப்போது துண்டை மட்டும் இடுப்பில் சுற்றிக் கொள்கிறார். நாம் சாமானிய ஜீவர்கள். வேலைக்குத் தக்கபடி உடுப்பை மட்டும் மாற்றிக் கொள்கிறோம். சர்வ சக்தனான ஸ்வாமி வேலைக்கு ஏற்ப ரூபத்தையும் மாற்றிக் கொள்வார். பார்க்கப் போனால் சரீரம் என்பதே ஆத்மாவுக்கு ஒரு உடுப்பு மாதிரிதான். கீதையில் பகவான் இப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

அல்ப சக்தர்களான நமக்கு வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு வேஷங்கள் ஏற்படுகின்றன. சர்வ சக்தரான ஸ்வாமி ஒரே சமயத்தில் பல காரியங்களில் ஈடுபட்டுப் பல வேஷங்களையும் போடுவார். நாம் ஒரு சமயத்தில் ஒரு வேலைதான் செய்கிறோம். ல்வாமி ஒரே சமயத்தில் சகல வேலைகளையும் செய்வதால் எல்லோ வேஷமும் போட்டுக் கொண்டிருக்கிறார். இவற்றை வெவ்வேறு தெய்வ வடிவங்களாகச் சொல்கிறோம். இந்த தெய்வ ரூபங்களில் மகா விஷ்ணு, ஈசுவரன், அம்பாள், விக்நேசுவரர், ஸூப்பிரமணியர் போன்றவர்கள் ஒரு சமயத்தில் ஏதோ ஒரு

மாதிரி காரியம் மட்டும் செய்தாலும்கூட அவர்களுக்கு உள்ளுக்குள் தாங்கள் முழுமுதல் ஸ்வாமிதான் என்று தெரியும். அதனால் அவர்கள் பக்தர்களுக்கு மோக்ஷபரியந்தம் எல்லா ஆநுக்கிரகத்துக்கும் செய்வார்கள்.

ஆனால், தேவர்கள் யாவரும் இப்படி முழு ஸ்வாமியாகத் தங்களைத் தெரிந்து கொண்டிருக்கிற தெய்வ வரிசையைச் சேர்ந்தவரல்ல. அவர்கள் யார் என்று சொல்கிறேன்.

ஸ்வாமி சிருஷ்டித்துள்ள எண்ணி முடியாத அண்டங்களில் இருக்கும் பிராணிகளுக்கெல்லாம் இருக்க இடம், உண்ண உணவு முதலியன வேண்டியிருக்கின்றன. ஆகாயம், காற்று, தீ, நீர், மண் இந்த பஞ்ச பூதங்களைப் பலவிதங்களில் கலந்தே அவர் இத்தனை பிராணிகளுக்கும் வாழ்வுக்கான உபகரணங்களைத் தந்திருக்கிறார். ஆறே சுவைக்குள் அடங்கும் சரக்குகளை வைதத்துக் கொண்டு நாம் ஆயிரக்கணக்கான பட்சண தினுசுகளைச் செய்வது மாதிரி, ஐந்தே பூதங்களைப் பலவிதங்களில் கலந்து எல்லா உயிர்களும் ஜீவனோபாயம் தருகிறார் ஸ்வாமி.

பஞ்சபூதங்களும், அவற்றின் தினுசான கலவை (Mixture) களும் பிராணிகளுக்கு ஹிதமாக அமைந்து அவர்களை ரக்ஷிக்க வேண்டும். இவ்விதம் அவற்றை நமது வாழ்வுக்கு அநுகூலமாக்கித் தரும் பொறுப்பை தேவர்கள் என்ற இனத்துக்கு ஸ்வாமி அளித்திருக்கிறார். இப்போது மநுஷ்ய இனம், பக்ஷி இனம், விலங்கினம், தாவர இனம் என் று சொல்கிறோமல்லவா? அது மாதிரி ஒரு ஜீவ ராசிதான் தேவர்கள். லௌகிகமாகப் பிராணிகளை ரக்ஷிக்கும் ராஜா அல்லது ராஜாங்கம், பல அதிகாரிகளை வைத்துக் கொண்டு ரக்ஷணம் தருவது போல், தேவர்கள் என்ற அதிகாரிகளைக் கொண்டு சர்வ லோகங்களையும் ஆண்டு ரக்ஷணம் செய்கிறார் ஸ்வாமி. ஒரு ராஜா அல்லது ராஜாங்கம் பஞ்ச பூதங்களில் தனக்குரிய பூமி. கடல் பிரதேசம், வானவெளி இவற்றைக் காப்பாற்றத் தரைப்படை, கப்பற்படை, விமானப்படை இவற்றை வைத்திருப்பது போல், ஈஸ்வரனும் பஞ்ச பூதங்களைக் காப்பாற்ற தேவர்களின் சைன்னியத்தை வைத்திருக்கிறார். நமது ராஜாங்கத்தில் சைன்னியத்தைத் தவிர, நீர்ப்பாசனம், மராமத்து, போக்குவரத்து இவற்றுக்கெல்லாம் அதிகாரிகள் இருப்பதுபோல், ஈசுவர

சாம்ராஜ்ஜியத்துக்கும் ஜனங்களுக்குத் அநுகூலமாக்கித் தருவதற்காகப், பலவிதமான தேவர்கள் அதிகாரம் வகிக்கிறார்கள். நம் உலகில் ஜல சப்ளை விஷயத்தைக் கவனித்து, வெள்ளம் வந்தால் வெட்டி விடவும், வறட்சி பாதிக்காமல் அணை கட்டவும் என்ஜினீயர்கள் இருக்கிறார்களல்லவா. ஆனால், ஜலத்தை இவர்களே சிருஷ்டிக்க முடியாது. ஸ்வாமி தான் சிருஷ்டிக்கிற ஜலத்தை லோகங்களில் பங்கீடு செய்ய எஞ்சினீயர்களெக்கெல்லாம் என்ஜினீயராக வருணனை வைத்திருக்கிறார். இதே மாதிரி நெருப்பைக் கவனித்து அதை மக்களுக்கு அநுகூலமாக்குபவன் அக்னி. காற்றைப் பிராணிகளுக்கு அநுகூலமாக்கித் தருபவன் வாயு. இப்படிப் பல தேவர்கள். அவர்களுக்கெல்லாம் அதிபதி இந்திரன். உயிரினங்களில் பல வகைகளை நாம் நேருக்கு நேர் கண்ணால் பார்கிறோம். நாம் மனித இனம். இன்னும் விலங்கினம், புள்ளினம், தாவர இனம் என்று பலவற்றைப் பார்க்கிறோம். சிருஷ்டியில் கீழே போகப் போகப் கிரியா சக்தி அதிகம். யானை, சிங்கம் போன்ற பலம் மனிதனுக்கு இல்லை. ஒரு குருவியைப் போலவோ, தேனியைப்போலவோ கூடுகட்ட இவனுக்குத் தெரியவில்லை. ஆயினும் அவற்றைவிட மனிதனுக்கு ஞான சக்தி அதிகம். கிரியா சக்தி, ஞான சக்தி இரண்டுமே மிக அதிகமாகப் படைத்த உயிரனத்துக்குத் தேவர்கள் என்று பெயர். மனிதர்களுக்குள்ளேயே நீக்ரோ இனம். மங்கோல் இனம்(race) என்றெல்லாம் இருப்பதுபோல் தேவர்களுக்குள்ளும் கின்னரர், கிம்புருஷர், யக்ஷர், ஸித்தர், சாரணர், ஸாத்யர், கந்தவர் என்று பலவகைகள் உண்டு. தேவர்களை ஊனக் கண்ணால் பார்க்க முடியவில்லை. அதனால், இல்லை என்று சொல்லிவிடக்கூடாது. காற்று கண்ணுக்குத் தெரியாததுபோல், அவர்கள் தெரியாமல் இருக்கிறார்கள். ஆனால், விசிறிக் கொண்டால் காற்றை நாம் அநுபவிப்பதுபோல், கர்மாநுஷ்டானங்களைச் செய்தால் தேவர்களின் அநுக்கிரகத்தை அநுபவத்தில் நிச்சயமாகப் பெறலாம்.

நாம் கர்மாநுஷ்டானம் செய்வதற்கும், தேவர்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று கேட்பீர்கள். சொல்கிறேன். ராஜாங்கம் நியமித்துள்ள அதிகாரிகளுக்கு ராஜாங்கம் சம்பளம் தருகிறது. ஆனால், சம்பளம் தருவதற்கு ராஜாங்கம் எங்கிருந்து பணம் பெற்றது. பிரஜைகளிடமிருந்துதான்

வரியாகப் பெருகிறது. அப்படியே ஸ்வவாமி நம்முடைய கர்மானுஷ்டானங்களிலிருந்தே தேவர்களுக்கு வேண்டிய ஆகாரத்தைப் பிரித்துத் தருகிறார். நமக்கு பஞ்ச பூதங்களை அநுகூலமாக்கித் தரும் தேவர்களுக்குப் பிரதியாக நாம் யாகம், யக்ஞும் செய்து ஆகாரம் தருகிறோம். கர்மானுஷ்டான வரி செலுத்தினாலே தேவ அதிகாரிகளின் சகாயத்தைப் பேற முடியும். பலவிதமான உயிரனங்களில் புழுவுக்கும் மனிதனுக்கும் எத்தனை வித்தியாசம் இருக்கிறது. மனிதனுடைய பழக்கங்களைப் புழு புரிந்து கொள்ள முடியுமா. அப்படியே தேவர்களின் வழிமுறைகளை நாம் புரிந்து கொள்ள முடியாது. தேவ சக்தியைச் சேர்ந்தவர்களுக்கு நம்மைப் போல் மூப்பு, மரணம் இவை இல்லை. அவர்களுக்கு நம்மைவிட சக்தி மிகவும் அதிகம். இருந்தாலும் அவர்கள் நம்மிடமிருந்தே ஆஹுபெறுமாறு பகவான் வைத்திருக்கிறார்.

உயிரனத்தின் உச்சி நிலையில் உள்ள இந்தத் தேவர்களுக்கு மூன்று ரூபங்கள் உண்டு. தேவலோகத்தில் ஒவ்வொரு தேவதையும் திவ்ய சரீரத்துடன் இருப்பதை ஆதி தைவிக ரூபம் என்பார்கள். மனிதர்கள் தபஸினால் பெரிய சக்தி பெற்றுவிட்டால், இந்த தேவ ரூபங்களைப் பார்த்துப் பேச முடியும். தேவர்கள் தேவ லோகத்தில் ரூபத்துடன் இருப்பது மட்டுமில்லை. நம் பூலோகத்தில் பஞ்ச பூதங்களில் கரைந்தும் அரூபமாக இருப்பார்கள். இதற்கு ஆதி பௌதிக ரூபம் என்பார்கள். எல்லா ஜலத்திலும் வருணனின் ஆதி பௌதிக ரூபம் கரைந்திருக்கிறது. எனவே எங்கே நாம் ஜலத்தை அசுத்தம் செய்தாலும் எவனுக்குத் தெரிந்து விடும். நம் ராஜாங்க அதிகாரிகளுக்கும், ஈஸ்வரனின் அதிகாரிகளான தேவர்களுக்கும் இது பெரிய வித்தியாசம். நாம் பெட்டிஷன் கொடுத்தால்தான் ராஜாங்க அதிகாரிகளுக்குக் குற்றம் தெரியும். ஆனால் , எந்த இடத்தில் எந்தப் பாபம் செய்யப்பட்டாலும், அது ஆங்காங்கு கரைந்திருக்கிற குறிப்பிட்ட தேவதைகளுக்கு உடனே தெரிந்துவிடும். நம் உடம்பிலேயே ஒருவர் கிள்ளினால், இன்னொருவன் பெட்டிஷன் கொடுத்தா அது நமக்குத் தெரிய வேண்டும். அதுபோல! நிலம் முழுவதற்கும் ஒரு தேவதை. நீர் நிலம் முழுவதற்கும் ஒரு தேவதை. இப்படியே நெருப்பு, காற்று ஒவ்வொன்றுக்கும் ஒன்று. இவற்றில் எதற்கு எங்கே நாம் அபச்சாரம் இழைத்தாலும் அந்தந்த தேவதைக்கு அது

தெரிந்து விடும் என்று சொன்னால், இதெல்லாம் ஜடவஸ்துக்களாகத்தானே தெரிகின்றன. இவற்றுக்கு எங்கே உயிர் இருக்கிறது. சாஸ்திரம் வெறும் புரளிதான் பண்ணுகிறது. என் று தோன்றலாம். கொஞ்சம் யோசித்துப் பார்க்கலாம். நம் சரீரம் இருக்கிறது. இதற்குள்ளேயே பாக்டீரியாக்கள், நாக்குப் பூச்சி மாதிரி சில கிருமிகள், புழுக்கள் உண்டாகி நம் மாமிஸத்தைத் தின்றே ஜீவிக்கின்றன. இவை எங்கே ஹிம்ஸை செய்தாலும் நமக்குத் தெரிந்துவிடுகிறது. ஆனால் இப்படி நமக்குத் தெரியும் என்பது அந்தப் கிருமிக்குத் தெரியும் என்று எப்படிச் சொல்ல முடியும்? நாம் நிலத்தையும் நீரையும் பற்றி நினைக்கிற மாதிரி, அது அதனளவில், ஒரு உலகம் மாதிரி பெரிசாக இருக்கிற நம் சரீரத்தையும் சமுத்திரம் மாதிரி இருக்கிற நம் ரத்தத்தையும் வெறும் ஜட வஸ்துக்கள் என்றும், இவற்றுக்குள் ஒரு உயிர் இருக்கிறதென்றும் தெரிந்து கொள்ளாமலே இருக்கலாம். இப்படித்தான் நாம் பூதேவி உண்டா? வருணன் என்கிற சமுத்திர ராஜா உண்டா? என்று கேட்பதும். நம் சரீரத்தில் எங்கே ஒரு கிருமி கெடுதல் செய்தாலும் நாம் மருந்து சாப்பிடு அதை ஒழித்து விடுகிறோம். நாம் பஞ்ச பூதம், விருக்ஷம், பர்வதம் என்று எதற்குக் கெடுதல் பண்ணினாலும், அதற்குறிய தேவதைகள் நம்மைத் தங்களுடைய சொந்த சக்தியாலேயே தண்டிப்பார்கள். ஸர்வேச்வரன் அவர்களுக்கு அப்படிப்பட்ட சக்தி தந்திருக்கிறான். உடனே ஸ்தூலமாக வந்து தண்டிக்காமல், பிற்பாடு எப்போதோ தண்டிப்பானால் நமக்கு இது தெரியவில்லை.

ஆத்யாத்மிகம் என்றும் தேவர்களுக்கு மூன்றாவதாக ஒரு ரூபம் உண்டு. அதாவது அண்டத்திலுள்ளதெல்லாம் பிண்டத்தில் உள்ளது என்றபடி, பிராணிகளின் ஒவ்வொர் அங்கங்களிலும் ஒவ்வொரு தேவதை தங்களுக்கு வாஸஸ்தானம் வைத்திருக்கிறார்கள். சூரியன் நம் கண்ணில் இருக்கிறான். அக்னி நம் வாக்கில் இருக்கிறான். இந்திரன் நம் கையில் இருக்கிறான். இப்படியே எல்லா தேவதைகளுக்கும், நம் சரீரத்திலிருந்தே இருப்பிடம் இருக்கிறது. மனிதன் இழைக்கிற குற்றங்களுக்கு ஆளாகும் பஞ்ச பூதங்களில் இருப்பதோடு, குற்றம் செய்கிற மனிதனின் அங்கங்களுக்குள்ளும் தேவர்கள் இருப்பதால், அவர்களை ஏமாற்றவே முடியாது. தர்மங்களை மீறாமலும், கர்மங்களை அநுஷ்டானம் பண்ணிக் கொண்டும் நாம்

இருக்கிறவரையில்தான் அவர்கள் நம்மை ரக்ஷிப்பார்கள். இல்லாவிட்டால் சிக்ஷிக்கவே செய்வார்கள்.

தேவதை என்பவனும் ஒர் உயிர்தான். நமக்கு ஆகாரம் இல்லாவிட்டால் எப்படிக் கஷ்டமோ, அப்படித்தான் தேவர்களுக்கும் நாம் ஆகாரம் தராவிட்டால் கஷ்டம்தான். அதனால்தான் வைதிக கர்மாநுஷ்டானங்கள் குறைந்போதெல்லாம், அவர்கள் ஸ்வாமியிடம் முறையிட்டதாகவும், ஸ்வாமி அவதரித்ததாகவும் புராணங்கள் பார்க்கிறோம்.

தேவர்களைப் பற்றி இன்னுமே சில நூதன் விஷயங்கள் சொல்கிறோன். தேவதைகளுக்கு வேத அத்யயனம், யக்ஞம் முதலிய கர்மாநுஷ்டானங்கள் கிடையாது. ஏன் தெரியுமா? நாமம் தேவதைகளைக் குறித்து வேத ஸூக்தங்களை ஒதுகின்றோம். யாகங்கள் செய்கின்றோம். தேவர்கள் யாரைக் குறித்து இவற்றைச் செய்வார்கள்? நாம் இந்திரனையும், சூரியனையும் உபாஸிப்பதுபோல், இந்திரனும், சூரியனும் தங்களையே உபாஸித்துக் கொள்ள முடியாதல்லவா? அதனால்தான் அவர்களுக்கு வைதிக கர்மாவில் அதிகாரமில்லை.

வேதத்தை நம் போல் அத்யயனம் செய்யாவிட்டாலும், அவர்களுக்கு வேதம் தானாகவே தெரியும். அதனால்தான், நம் வேத மந்திரத்தைச் சொன்னால் அநுக்கிரகம் செய்ய வந்துவிடுகிறார்கள். மீன் குஞ்சுக்குப் பிறவியிலேயே நீந்தும் சக்தி இருப்பதுபோல், தேவர்களுக்குப் பிறவியிலேயே வேத ஞானம் உண்டு. இதனால் அவர்களுக்கு 'ஸ்வயம் பிரதி பாதித வேத' ர்கள் என்று ஒரு பெயர் உண்டு.

தேவர்களும் ஆத்ம விசாரம் செய்து அத்வைத ஞானத்தை அடைந்து பிரம்மத்துடன் ஐக்கியமாகலாம். கர்மமும் உபாஸனையும் இல்லாவிட்டாலும், அவர்களுக்கும் ஞான மார்க்கத்தில் ஈடுபடுவதற்கு அதிகாரம் உண்டு என்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர்.

ஸ்வாமி என்ற பரமேசுவரன் இல்லாத இடமில்லை. நமக்குள் இருக்கும் பரமேசுவரன் தேவர்களுக்குள்ளும் இருக்கிறான். ஆனால் நமக்குள் ஈஸ்வரன் இருப்பதை நாம் உணராதது போலத்தான் தேவர்களில் பெரும்பாலோர் இருக்கிறார்கள்.

நம்முடைய அதிகாரிகளில் பெரும்பாலோருக்கு ராஜாவை (அல்லது ராஷ்டபதியை) நேரில் தெரியாதல்லவா? இப்படியேத்தான் தேவர்களில் பலருக்கும் பரமேசுவரனைப் பற்றித் தெரியவே தெரியாது. ஆத்ம விசாரம் செய்தால் நமக்கு ஈஸ்வரனே நம்மில் நாமாக இருப்பது தெரியும். அதற்குப் பிறகு தேவர்களால் நமக்கு ஆக வேண்டியது எதுவும் இல்லை. எப்போது எல்லாக் காரியமும் நம்மை விட்டுவிடும். ஆனால், அதுவரை தேவர்களை உத்தேசித்த கர்மங்களை நாம் செய்யத்தான் வேண்டும். நம் பூர்வ கர்மா தீர்ந்து, சித்த சுத்தி உண்டாவதற்கே, தேவதைகளை உத்தேசித்த வேத கர்மாக்களை நாம் செய்தாக வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிவராத்ரி*

அநேகமாக எல்லா சிவாலயங்களில் கர்ப்பக் கிரஹத்தின் சுவரில் மேற்குப்

பாகத்தில் லிங்கோத்பவ மூர்த்தியின் பிம்பம் இருக்கும். (சில கோயில்களில் மட்டும் இந்த இடத்தில் மஹா விஷ்ணு இருக்கிறார்) லிங்கோத்பவ மூர்த்தி என்பது பரமேசுவரனுடைய அறுபத்தி நான்கு மூர்த்திகளுக்குள் ஒன்று. விருஷபாரூடர், அர்த்தநாரீசுவரர், ஹரிஹரர், நடராஜர், காமாரி, பைரவர், தக்ஷிணாமூர்த்தி, ஸோமாஸ்கந்தர், கால ஸம்ஹாரர், இப்படி அறுபத்து நான்கு மூர்த்திகள் பரமசிவனுக்கு உண்டு. அவைகளுக்குள் ஒன்று லிங்கோத்பவ மூர்த்தி.

அந்த மூர்த்திதான் சிவாலயத்திலுள்ள லிங்கத்துக்குப் பின்புறம் காணப்படுகிறது. அதில், லிங்கத்துக்குள் ஒரு திவ்விய மூர்த்தி இருக்கும். அதன் ஜடா மகுடம் லிங்க வட்டத்துக்குள் முடியாமலே இருக்கும். அதன் பாதமும்

லிங்கத்தின் அடியில் முடிகிற வரைக்கும் தெரியாது. இந்த மூர்த்திக்குக் கீழே ஒரு வராக மூர்த்தி இருக்கும். மேலே ஹம்ஸ ரூபத்தில் ஒரு மூர்த்தி இருக்கும்.

இந்த லிங்கோத்பவர் யார்?

ஸ்ரீ ருத்ராபிஷகம் பண்ணுவதற்கு முன்பு ஒரு சுலோகம் சொல்லிவிட்டு, அப்புறம்தான் அபிஷகம் பண்ணுவது வழக்கம். அந்த சுலோகம்.

ஆபாதால நப: ஸ்தலாந்த புவன

ப்ரஹ்மாண்டமா விஸ்புரத்

ஜ்யோதி: ஸ்பாடிக லிங்க மௌலி விலஸத்

பூர்ணேந்து வாந்தாம்ருதை:

அஸ்தோகாப்லுதம் ஏகம் அசம் அநிசம்

ருத்ராநுவாகான் ஜபன்

த்யாயேத் ஈப்ஸித ஸித்தயே (அ) த்ருதபதம்

விப்ரோ மிஷிஞ்சேத் சிவம் II

இந்த ஸ்லோகத்தில் என்ன தெரியுமா சொல்லியிருக்கிறது?. பாதாள முதல் ஆகாச பரியந்தம் எல்லையில்லாத ஜோதி ஸ்வரூபமாகப் பிரகாசிக்கிற ஸ்படிக லிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணவேண்டும் என்று சொல்லியிருக்கிறது.

ஸ்படிக லிங்கத்துக்கு ஒரு வர்ணமும் சொல்ல முட்யாது. எந்த வஸ்துவை அதில் வைக்கிறோமோ அதனுடைய வர்ணத்தை அது பிரதிபலிக்கும். குண-தோஷம் இல்லாதது அது. ஞானம் எப்படிப் பரிசுத்தமாக இருக்கிறதோ, அப்படி அந்த ஸ்படிகலிங்கம் இருக்கிறது. அதன் பின் பச்சை வில்வத்தை வைத்தால், லிங்கமே, பச்சையாகத் தோன்றும். சிவப் பான அரளியை வைத்தால் சிவப்பாகத் தோன்றும். அது நிர்விகாரமானது. பரப் பிரம்ம ஸ்வரூபம் நிர்விகாரமாக இருந்தாலும், நம்முடைய மனோபாவத்தை எப்படி வைக்கிறோமோ அப்படித் தோன்றும் என்பதற்குத் திருஷ்டாந்தமாக, இந்த ஸ்படிக லிங்கம் இருக்கிறது. அது

எதையும் மறக்காது. அதற்குப் பின்னால் உள்ள வஸ்துக்களையும் அதன் பின்னால் உள்ள வஸ்துக்களையும் அதன் வழியாகப் பார்க்கலாம். பரம சுத்தமாக நிஷ்களங்க திருஷ்டாந்தம். நினைக்கிற ரூபமாக இது தெரியும்.

மேலே சொன்ன சுலோகப்படி, அதன் சிரஸில் பூரண சந்திரன் இருக்கிறது. பூர்ணேந்து என்று சுலோகத்தில் வருவது. 'பூரண இந்து!': இந்து என்றாலும் சந்திரன் என்றாலும் ஒன்றுதான். ஈஸ்வரன் ஜடையும், கங்கையும், கண்ˆ காது,மூக்கு, கை, கால் முதலிய அவயங்களும் கொண்ட "ஸகள" ரூபத்தில் வருகிறபோது, அவர் மூன்றாம் பிறையை வைத்துக் கொண்டு சந்திர மௌளியாக இருக்கிறார். ரூபமே இல்லாத பரமாத்மா நிஷ்கள் தத்வமாயிறுக்கிறபோது, அங்கே சந்திரன் கங்கை எதுவும் இல்லை. அரூபமாயும் இல்லாமல், ஸ்வரூபமாயும் அவயங்களோடு இல்லாமல், லிங்கமாக சகள - நிஷ்களமாக இருக்கிறபோது அவர் பூரண சந்திரனை உச்சியில் வைத்திருக்கிறார். அதிலிருந்து அமிர்கமே கங்கை மாதிரி கொட்டுகிறது.

யோகிகள் தமது சிரசுக்குள் ஸஹஸ்ரார கமலத்தில் உள்ள சந்திர மண்டலத்தில், ஜ்யோதி ஸ்வரூபத்தைத் தியானம் பண்ணுவார்கள். அந்தச் சந்திர பிம்பத்திலிருந்து அமிருத்தம் ஒழுகும். அதனால் அவர்களுக்குப் பரமானந்தம் உண்டாகிறது. ஸமஸ்த ஸ்வரூபமான ஜ்யோதிர் லிங்கம் குளிர்ந்தால், லோகமெல்லாம் குளிரும். இதனால்தான் சிவ லிங்கத்துக்கு ஓயாமல் அபிஷேகம் செய்வது. ருத்திர அபிஷேகம் செய்வது. ருத்திர அபிஷேகத்துக்கு முன்பு சொல்லும் ஸ்லோகம், இதை எல்லாம் அறிவுருத்துவது.

லிங்கம் ஏன் வட்டவடிவமாயிருக்கிறது? வட்டமான ஸ்வரூபத்துக்குத்தான் அடி முடியில்லை. ஆத்யில்லை. அந்முமில்லை. மற்றவர்களுக்கு உண்டு. முக்கோணத்துக்கு சதுரத்திற்கு உண்டு. ஆதியந்தம் இல்லாத வஸ்து சிவம் என்பதை லிங்காகாரம் காட்டுகிறது.

சரியான வட்டமான (circle) இல்லாமல், லிங்கம் நீள வட்டமாக (ellipse) இருக்கிறது. பிரபஞ்சமே எல்லிப்டிக்காகத்தான் இருக்கிறது. நம் சூரிய மணிடலத்தை (Solar System) எடுத்துக் கொண்டாலும் கிரஹங்களின்ˆ

அயனம் நீள்வட்டமாகத்தான் இருக்கிறது. என்று நவீன விஞ்ஞானத்தில் சொல்வதும், பிரம்மாண்டமும் ஆவிஸ்புரத் என்று சாஸ்திரம் சொல்வதும் லிங்க ரூபத்துக்கு மிகவும் ஒற்றுமையாக இருக்கிறது.

யாராவது பந்துவை நினைக்கிறோம். சந்தோஷமாயிருக்கிறது. அவருடைய உறுவத்தையும் பார்த்தால்தான் சந்தோஷம் பூரணமாகிறது. அவ்வாறே உறுவமற்ற சிவமும் ஒரு உருவத்தோடு வந்து அநுக்கிரகம் பண்ணினால்தான் ரொம்ப சந்தோஷமாக இருக்கும். ஞானிகளுக்கு மட்டுமே பரமாத்ம ஸ்வரூபத்தின் நிராகார (அருவ) உண்மை புரியும். உருவத்தைப் பார்த்து ஆனந்தம் அநுபவிக்கிற நமக்கு உருவத்தோடு கண்டால்தான் ஆனந்தம் உண்டாகும். அதற்காகத்தான் உறுவமற்ற பரமேசுவரன், அருவுருவான லிங்கமானதோடு நில்லாமல், அந்த லிங்கத்துக்குளேயே திவ்விய ரூபம் காட்டும்லிங்கோத் பவ மூர்த்தியாக இருக்கிறார். இப்படி ரூபத்தைக் காட்டினாலும், வாஸ்தவத்தில் தமக்கு அடியும் இல்லை. அதாவது ஆதியும் அந்தமும் அற்ற ஆனந்த வஸ்துவே தாம் என்று உணர்த்துவதற்காக, மேலே லிங்க வட்டத்துக்குள் ஜடாமுடி முடியாமலும், கீழே அந்த மாதிரித் தம் பாதம் அதற்குள் அடங்காமலும் இருப்பதாகக் காட்டுகிறார்.

அடிமுடி எல்லை இல்லாமல், அவர் ஜ்யோதி ஸ்வரூபமாக நின் றார். ஜ்யோதிர்லிங்கமாக, ஆகாயத்துக்கும் பூமிக்குமாக பரமசிவன் உத்பவித் த இரவே சிவராத்திரியாகும்.

அப்படி ஜ்யோதிஸ்வரூபமாகப் பரமேசுவரன் நின்ற பொழுது, விஷ்ணு அவரது பாதத்தைப் பார்க்க பாதாளத்துக்குப் போனார். பூமியைக் கல்லும் ஸ்வபாவம் வராஹத்திற்கு உண்டு. எனவே, அந்த ரூபத்தை எடுத்துக் கொண்டார். பிரம்மா ஹம்ஸ ஸ்வரூபமானவர். பட்சிக்குப் பறப்பது ஸ்வபாவம். பட்சியாகப் பறந்து ஜோதிர்லிங்கத்தின் முடி தேடிப்போனார். இரண்டு பேருக்கும் தேடிப் போனவை அகப்படவில்லை. ஹம்ஸம் வந்தது. நான் கண்டு விட்டேன் எனப் பொய் சொல்லியது. அதனால்தான் பிரம்மாவுக்குப் பிரத்தியோகமாகப் பூஜை இல்லாமல் போய் விட்டது. பரிவாரமாக மட்டும் வைத்துப் பூஜை செய்வதுண்டு. புராண ஐதிஹ்யத்தில் இப்படி இருக்கிறது.

பிரம்மா ஹம்ஸரூபமாகப் போய்ப் பார்த்ததும் சிவ பெருமானின் சிரஸ் அகப்படவில்லை என்றும் சொல்வதின் தாத்பரியம் என்னவென்றால், பரமாத்மா ஆதி அந்த ஹீனமான வஸ்து என்பதுதான். சிருஷ்டி, பரிபாலனம் எல்லாவற்றையும் கடந்த வஸ்து அது எந்பதுதான். இப்படி அடி முடி தேடி பிரம்மாவும் விஷ்ணுவும் பெற முடியாக வரையே, என் சாமர்த்தியத்தால் அறிய முடியும் என்கிற அகங்காரமில்லாமல் அன்போடு பக்தி செய்து உருகினால், வெகு சுலபத்தில் அவர் நமக்கு அகப்பட்டுவிடுவார். அன்பினாலே மிகமிக திருப்தி பெற்று அநுக்கிரகிப்பவர் சிவபெருமான் என்பதாலேயே, அவருக்கு ஆசுதோஷி என்று ஒரு பெயர் இருக்கிறது. ஆஷுடோஷ் முகர்ஜி என்று ஒரு சீர்திருத்த (Reformist) முக்கியஸ்தரைச் சொல்வார்கள். ஆசுதோஷிதான் ஆஷுடோஷ் என்றாயிற்று. ஆசுகவி என்றால் கேட்டவுனேயே கவி பாடுகிறவர் அல்லவா? இப்படியே ஸ்மரித்த மாத்திரத்தில் சந்தோஷித்து அநுக்கிரகம் பண்ணுகிற வள்ளள்தான் ஆசுதோஷி.

சகல பிரபஞ்சமும் அடங்கியிருக்கிற லிங்க ரூபமானது ஆவிர்பவித்த சிவராத்திரி மகா சதுர்த்தசி இரவில், அவரை அப்படியே ஸ்மரித்து ஸ்மரித்து அவருக்குள் நாம் அடங்கியிருக்க வேண்டும். அதைவிட ஆனந்தம் இல்லை.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிவ, விஷ்ணு அபேதம்*

குணங்கள் மூன்று விதம், ஸத்வம், ரஜஸ், தம்ஸ் என்பன அவை. ஸத்வம் என்பது ஸமநிலை. சாந்தம், அன்பு, அதன் நிறம் வெண்மை. வெள்ளை வெளேரென்று வஸ்துவைப் பார்த்தாலே மனஸில் ஏற்படுகிற பரிசுத்த மலர்ச்சிதான் ஸத்வம். ரஜஸ் என்பது வேகம். இதில் நல்லது கெட்டது என்ற இரண்டும் கலந்திருக்கும். இதன் நிறம் சிகப்பு அல்லது

செம்மஞ்சள். செக்கச் செவேல் என்று இருப்பதில் அழகும் உண்டு. கண்ணைக் குத்துகிற மாதிரி பயப்படுகிற தினுசும் உண்டு. உதய சூரியனையும் செய்பருத்தியையும் பார்த்தால் சிகப்பே இழகாயிருக்கிறது. ரத்தத்தைப் பார்த்தால் பயமாயிருக்கிறது. தமஸ் என்பது முழுக்கவும் கெட்ட குணம். சோம்பல், தூக்கம் எல்லாம் இவற்றைச் சேர்ந்தவை. இதன் நிறமம் கருப்பு. அதாவது அஞ்ஞான இருள் மயமானது.

ஸத்வ - ரஜோ - தமோ குணங்களில்தான் எல்லா மனிதர்களும் கட்டுண்டு இருக்கிறோம். எல்லாம் ஒரே பரமாத்மாவிடம் இருந்து வந்ததால், ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றுக்கும் ரூபகமாக பரமாத்மாவின் மூன்று மூர்த்தி பேதங்களைச் சொல்கிறார்கள்.

ஜனனம் எந்பதில் நல்லதும் கெட்டதும் கலந்து இருக்கிறது. காம வேகத்தினால்தான் பிறப்பு உண்டாகிறது. எனவே, சிருஷ்டிக்கெல்லாம் காரணமாயிருக்கிற பிரம்மாவை பரமாத்மாவின் ரஜோ குணமூர்த்தி என் று வைத்தார்கள்.

அதில் யாறுக்கும் அபிப்பிராய பேதமில்லை. பிரம்மா மஞ்சள் சிவப்பாக இருக்கிறவர். பரிபாலனம் செய்து ஸத்வ குணத்தால் நடப்பது, மகா பாவம் செய்கிற நமக்கு, ஒருவேளை சோறு பெறக்கூட லாயக்கில்லை. அப்படியிருந்தும் ஈ எறும்பிலிருந்து சகல ஜீவராசிகளுக்கும் உணவு கிடைக்கும்படி செய்து ரக்ஷிப்பவர் மஹாவிஷ்ணு. இவரை சத்வ மூர்த்தி என்று வைத்தார்கள்.

ஸம்ஹாரம் என் பது அழிப்பது. அழிக்கிற குணம் தமஸைச் சேர்ந்தது. இதனால்தான் ஸம்ஹாரமூர்த்தியாகிய சிவனைத் தமோ மூர்த்தி என்றார்கள்.

இதிலிருந்துதான் சைவ - வைஷ்ணவப் பிணக்குயாவும் வந்தது போலிருக்கிறது. மஹாவிஷ்ணுவின் பரிபாலனத்தை ஸத்வம் என்று சைவர்கள் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். இந்த நிலையற்ற இகலோக வாழ்க்கையைப் பரிபாலிப்பது என்பது மனிதனை மேலும் மேலும் அஞ்ஞானத்தில் தள்ளுகிற காரியம்தான். இதில் ஸத்வம் இல்லை. சிவன்தான் அஞ்ஞானம் நீங்க ஞானோபதேசம் செய்பவர். இந்த ஞானபதேசத்துக்குப் பக்குவமாக இல்லாதவற்களைக்கூட, அவர் பரமக்கிருபையோடு அவ்வப்போது கர்மக்

கட்டிலிருந்து விடுவித்து, ஒய்வு தருவதற்கே சம்ஹாரம் செய்கிறார். பிறவிகளுக்கு நடுவே சம்ஹாரத்தின் மூலம் விச்ராந்தி தருகிற கருணா மூர்த்தியே சிவபெருமான். இத்தொழில் தமஸ் அல்ல. ஸத்வமே. பரதெய்வமான பபரமேசுவரன் ஆக்ஞைப்படிதான் விஷ்ணு பரிபாலனம் செய்கிறார் என்று சிவ பக்திர்கள் சொல்கிறார்ள். வைஷ்ணவர்களோ, மஹா விஷ்ணு இவ்வுலகத்தைப் பரிபாலனம் பண்ணுவார். ஆனால் அது மட்டுமில்லை. அவரே பரமபதமான மோக்ஷமும் தருவார். அவரே முழுமுதற் கடவுள். பரமசிவன் அவருக்குக் கீழ்ப்பட்டுத்தான் சம்ஹாரம் செய்கிறார் என்கிறார்கள்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களின் சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கிற நாம் எல்லோரும் சைவரும் அல்ல. வைஷ்ணவரும் அல்ல. நமக்கு ஸ்மார்த்தார் என்று பெயர். ஸ்மிருதிகள் என்கிற தர்ம சாஸ்திரங்கள் சொல்வதை அநுசரிக்கிறவர்களே ஸ்மார்த்தர்கள். நமக்கு சிவன் விஷ்ணு இன்னும் மீதமுள்ள எல்லாத் தெய்வமுமே ஒரே பரமாத்மாவின் வெவ்வேறு ரூபங்கள்தான். இதில் ஏற்றத் தாழ்வே இல்லை.

இப்படி நாம் சொன்னால் மற்றவர்கள் விடுவார்களா? தங்கள் தங்கள் தெய்வத்தின் தொழிலைச் சொல்லி இதுதானே ஸர்வ மூர்த்தி என்று கேட்கிறார்கள். ஸத்வ மூர்த்தியைத்தான் வழிபட வேண்டும்? இதனால்தான் என்று வைத்துவிட்ட பிரம்மாவுக்குக் கோவிலோ வழிபாட்டோ இல்லை.

நாம் நடு நிலையில் நின்று யோசித்துப் பார்ப்போம். பிரம்மாவின் தொழில் ரஜஸ். நிறமும் ரஜஸ்!. அவர் வசிக்கிற தாமரையும் சிவப்பாக ரஜோ சம்பந்தமாகவே இருக்கிறது. ஆனால் சிவனையும், விஷ்ணுவையும் பாருங்கள்.

பரிபாலனம் என்கிற ஸத்வத் தொழிலைச் செய்கிற விஷ்ணு வெளுப்பாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் இவரோ கரியவராக இருக்கிறார். இது தமஸின் நிறம். அதோடுகூட இவர் ஆதிசேஷன் மேல் நீள நெடுகப் பார்த்துக் கொண்டு, எப்போது பார்த்தாலும் தூங்கிக் கொண்டிருக்கிறார். தூக்கமும் தமஸைச் சேர்ந்தது தான்.

சிவனைப் பார்ப்போம். அழிவு என்கிற தமோ

துணைத்தொழிலைச் செய்கிற இவர் கருப்பாக இல்லை! சுத்த ஸ்படிக ஸங்ககாசம் என்றபடி சுத்த ஸத்வ வெள்ளையாயிருக்கிறார். இவர் இருக்கிற பனிமலையான கைலாஸமும் அப்படியே இருக்கிறது. விபூதிப்பூச்சு, ரிஷப வாகனம் எல்லாம் ஒரே வெளுப்பு. இவர் தூங்கவில்லை. ஒன் று சாந்த தக்ஷிணா மூர்த்தியாக இருக்கிறார். அல்லது நடராஜனான ஆனந்தக் கூத்தாடுகிறார். இதெல்லாம் ஸத்வமாகவே இருக்கிறது.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? சிவனும் விஷ்ணுவும் தனித்தனியாக ஸத்வமூர்த்தி, தமோ மூர்த்தி என்று பிரிந்திருக்கவில்லை. இருவரிடமும் ஸத்வம், தமஸ் காரியத்தில் ஸத்வம், இன்னொருத்தர் ரூபத்தில் ஸத்வம், காரியத்தில் தமஸ், காரிய ஸத்வத்தை வைத்து வைஷ்ணவர் விஷ்ணுவை வணங்குகிறார்கள். ஸ்வரூப ஸத்வத்தால் சைவர் சிவனையே தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். பட்சபாதமில்லாமல் யோசித்தால், இரு குணங்களும் இரு மூர்த்திகளிடமும் கலந்திருப்பதால் ஸாராம்சத்தில் இரண்டும் ஒன்றே எனறு தெரியலாம். இரண்டையும் அன்போடு பக்தி செலுத்தி வழிபடலாம்.

" அரியும் சிவனும் ஒண்ணு! "

புராணங்களைப் பார்த்தால் சிவனிடம் விஷ்ணு தோற்றுப் போனதாகச் சில இடங்களில் இருக்கிறது. சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப்போனதாகவும் வரலாறுகள் இருக்கின்றன. சிவன் விஷ்ணுவைப் பூஜித்தார் என்று ஓர் இடத்தில் பார்க்கிறோம். சிவனை விஷ்ணு பூஜித்தார் என்று இன்னோர் இடத்தில் காண்கிறோம். சிவனின் அடியைக் காண முடியாமல் விஷ்ணு தோற்றுப் போனார் என்பது திருவண்ணாமலை, ஐதிஹ்யம். "விஷ்ணு சிவன் இவர்களில் யார் பலசாலி, என்பதற்காக தேவர்கள் வைத்த போட்டியில், சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனார். அப்போது ஸ்தம்பித்துப் போன சிவதனுசுதான் ஜனகரிடம் வந்து, பிறகு அதை ராமர் முறித்துப் போட்டார்" என்று ராமாயணத்திலிருந்து தெரிகிறது. சிவனுக்கு விஷ்ணு பூஜை பண்ணும்போது ஒரு பூ குறைய, உடனே தம் கண்ணையே ஒரு கமலமாகக் கருதிப்பறித்தெடுத்து அர்ச்சித்தார் என்று

திருவீழிமிழலைப் புராணம் சொல்கிறது. இங்கே சிவனுக்கு நேத்ரார்ப்பணேசுவரர் என்றே பெயர். சிவனுக்கு ப்ரம்மாவின் தலையைக் கிள்ளியதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட, அதைப் போக்கிக் கொள்ள விஷ்ணுவை அவர் பூஜை செய்து, விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் தோஷத்தைப் போக்கிக் கொண்டார் என்று திருக்கண்டியூரில் ஐதிஹ்யம் இருக்கிறது. இங்கே பெருமாளுக்கு ஹரசாப விமோசனர் என்றே பெயர். இப்படி ஏகப்பட்ட கதைகள் சிவ உத்கர்ஷத்தையும், விஷ்ணு உத்கத்ஷத்தையும் காட்டச் சொல்லலாம்.

சிவனும் விஷ்ணுவும் ஒன்றுதான் என்கிறீர்களே! ஒரே ஸ்வாமி தன்னுடனேயே சண்டை போட்டுக் கொள்ளமுடியுமா? தன்னையே பூஜித்துக் கொள்ள முடியுமா?என்று கேட்பீர்கள். உங்களுக்கு சமாதானம் சொல்கிறோன்.

மேலே ராமன் முறித்த சிவதநுசைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இந்தக் கதயை ராமனுக்கே சொன்னவர் பரசுராமர்தான். ஸீதா கல்யாணம் முடிந்து எல்லோரும் அயோத்திக்குத் திரும்பும்போது, ராமரைப் பரசுராமர் வழி மறிக்கிறார். சிவ விஷ்ணு யுத்தத்தில் மக்கார் செய்த ருத்ரதநுஸை உடைத்துப் பெரிய பேர் வாங்கி விட்டாயடா! அப்போது அதை ஜயித்த விஷ்ணுவின் வில் இதோ என்னிடம் இருக்கிறது. இதை நாணேற்றிப் பார் என்று ராமனிடம் சண்டைக்கு வருகிறார் பரசுராமர்.

இந்தப் பரசுராமர் யார்? விஷ்ணுவின் அவதாரம்தான். ஒரே விஷ்ணுவின் அவதாரங்கள் இங்கே சண்டை போட்டுக் கொள்ளவில்லையா? இதில் ஓர் அவதாரம் (பரசுராமர்) இன்னோர் அவதாரத்திடம் (ராமர்) தோற்றுப் போகிறது. சிவனை ஜயித்த விஷ் ணுவின் வில்லை நாணேற்றி, அதை விஷ்ணுவின் அவதாரமான பரசுராமரை ஒட்டிய இன்னோர் அவதாரமான ராமசந்திர மூர்த்தி, பிறகு இதே சிவனுக்கு லிங்கம் வைத்துப் பூஜை செய்து, ராமேசுவரத்தை உண்டாக்கியிருக்கிறார்.

ஜனங்களுக்கு பக்தி உண்டாக்க வேண்டுமானால், அதற்கும் பகவானே வழிகாட்டுகிறார். எப்படி? தாமே பக்தனாக இருந்து வழிகாட்டுகிறார். இதற்காகத்தான் சில இடங்களில்

சிவன், பக்தராக இருந்து விஷ்ணுவைப் பூஜிக்கிறார். சில இடங்களில் விஷ்ணு, பக்தனாக இருந்து சிவனைப் பூஜிக்கிறார்.

இரண்டும் ஒன் றுதான். ஹரன் ஹரி என்ற பெயர்களே ஒன்றாகத்தான் இருக்கின்றன. இரண்டுக்கும் சேர்த்தே ஹரி ஹரன், சங்கர நாராயணன் என்றெல்லாம் ஸமரஸ பாவத்தை வளர்க்கிற மூர்த்திகளாக இருக்கின்றன. ஆழ்வார்கள் பெருமானையே ஹரிஹரனாகத்தான் கண்டார்கள்.

தாழ்சடையும் - நீண்முடியும்; ஒண்மழுவும் - சக்கரமும்

சூழ்அரவும் - பொன் நாணும் தோன்றுமானால் - சூழும்

திருண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு

இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

என்று இரண்டிரண்டாக, அதிலும் முதலில் சிவ அம்சங்களையும், இரண்டாவதாக விஷ்ணு அம்சங்களையும் சொல்லி வேங்கடரமண ஸ்வாமியைப் பாடுகிறார் பேயாழ்வார். வெவ்வேறு உருவம் இருந்தாலும் ஒருவன் இன்னொருத்தனில் இருக்கிறான் என்று சொல்லி, இங்கும் முதலில் சிவனையே பாடுகிறார் பொய்கை ஆழ்வார்.

பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்

நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும்

இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்

ஒருவன் அங்கத்தெனறும் உளன்.

பெரிய கவி கம்பனோ, அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன்

என்றுரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவது அரிய பரிசு என் று சொல்லிவிட்டார்.

மகா பெரியவர்கள் சொன்னது இருக்கட்டும். சின்னக் குழந்தைகள்கூட, அரியும் சிவனும் ஒண்ணு. அறியாதவன் வாயில் மண்ணு என்கிறது. இந்தக் குழந்தை வாக்கு ஆயிரம் பதினாராயிரம் வருஷமாக இருந்து வந்திருக்கிறது. குடிசை

போட்டால் ஒரிடண்டு வருஷத்தில் பாழாகிறது. செங்கல் வீடானால் நூறு வருஷம் இருக்கிறது. பாறாங்கல்லில் கட்டினால் ஆயிரம் வருஷம் இருக்கிறது. அப்படியே உள்பலம் இல்லாத வார்த்தைகளும் கால வெள்ளத்தில் அடிபட்டுப் போகின்றன. ஆனால் இந்தக் குழந்தைச் சொல் காலத்தைக் கடந்து நிற்கிறது. இதில் இருக்கிற ஸாரத்தினால்தான் தத்துவத்தினால்தான் நிற்கிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிவ மயம் ; ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்*

எல்லா தேவதைகளும் ஒரே பரமாத்மாதான். சிவனும் விஷ்ணுவும் குஞ்சம்கூட வேறில்லை. ஆனாலும் இரண்டையும் வழிபடுகிறபோது, கொஞ்சம் பிரித்து பக்தி செய்தால் அதிலும் ஒரு ரஸம் இருக்கத்தான் செய்கிறது. பலவாகப் பிரித்தும் ஒற்றுமையுடன் இருப்பதுதான் (Unity in diversity) நம் மதத்தின் ஸாரம். இப்படியே சிவன், விஷ்ணு என்கிற இரண்டு மூர்த்திகளை வழிபடும்போது சாராம்ஸத்தில் அவை ஒன்றே என்ற உணர்ச்சி இருந்தாலும், ஒவ்வொரு மூர்த்தியை ஒவ்வொரு தத்துவத்துக்கும் ரூபகமாக வைத்துக் கொண்டு பக்தி செய்வதில் ஒரு ருசி இருக்கத்தான் செய்கிறது.

இப்படிச் செய்யும்போது, சிவனை எல்லாவற்றுக்கும் அடிப்படையான, ஏகவஸ்துவான ஞானமாக பாவிக்கலாம்;அந்த ஐக வஸ்துவை நானாவிதமாகக் காட்டி ஜகத்தை நடத்தும் சக்தியாக விஷ்ணுவை பாவிக்கலாம். அதாவது சிவத்தைப் பரப்பிரம்மமாகவும் விஷ்ணுவைப் பராசக்தியாகவும் வைத்துக் கொள்ளலாம். அம்பிகையும் விஷ்ணுவும் சகோதரர்கள் என்று சொன்னாலும், அவர்கள் ஒன்றேதான் என்பது பரம ஞானிகளின் அநுபவம். 'அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்க்கே'என்று

அப்பர் ஸ்வாமிகள் பாடியிருக்கிறார். சங்கர நாராயண வடிவத்தையும் அர்த்த நாரீசுவர வடிவத்தையும் பார்த்தால் இந்த உண்மை தெரியும்.

இரண்டிலும் வலப்பக்கம் பரமேசுவரனுடையது. ஒன்றிலே இடப் பக்கம் விஷ்ணு;இன்னொன்றில் அதே இடது புறம் அம்பாளுடையது. இருக்கிற ஒன்றே ஒன்றை, இல்லாத பலவாகக் காட்டுகிற சக்தியே அம்பாள் அல்லது விஷ்ணு. அதாவது ஜகத் முழுதும் விஷ்ணு ஸ்வரூபம். விச்வம் விஷ்ணு: என்றுதான் ஸஹஸ்ரநாமம் ஆரம்பிக்கிறது. ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத் என்கிற வாக்கும் இருக்கிறது. உலக பரிபாலனம் விஷ்ணுக்குறியது என்று சொல்கிறோம். உலகத்திலே இருக்கிற ஆனந்தங்களை, உணர்ச்சிகளை எல்லாம் தெய்விகமாக்குகிற பக்தி மார்க்கமும் விஷ்ணு சம்பந்தமாகவே அதிகம் தோன்றுகிறது. ஹரிகதை, ஹரிநாம சங்கீர்த்தனம் என்றெல்லாம் சொல்வது போல ஹர கதை, ஹர கீர்த்தனம் என்று சொல்வதில்லை. கதை பாட்டு இந்த ஆனந்தமெல்லாம் விஷ்ணுவிடமே அதிகம். பாகவதர் என்றால் பகவானைச் சேர்ந்தவர் என்றே அர்த்தமாயினும் பொதுவாக, பாகவதர் பாகவதம் என்றெல்லாம் சொன்னால் விஷ்ணு பக்தர், விஷ்ணுவின் கதை என்றே எடுத்துக் கொள்கிறோம். பிரபஞ்ச சௌந்தரியங்களையெல்லாம் வைத்துப் பூஜை, பக்தி, பஜனை, கதை செய்வதெல்லாம் விஷ்ணு சம்பந்தமாயிருக்கிறது.

ஆனால் இந்தப் பிரபஞ்சத்தை விட்டு, இதற்கு ஆதாரமான சாந்தத்தில் திளைக்கும்போது சிவசம்பந்தம் அதிகம் தோன்றுகிறது. சிவஞானம், சிவயோகம் என்று சொல்கிற மாதிரி விஷ்ணு ஞானம், விஷ்ணு யோகம் என்பன காணப்படவில்லை. பலவாக இருக்கிற உலகனைத்தும் விஷ்ணு என்பதால் 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்'என்ற வாக்கு தோன்றியிருக்கிறது. பலவாகக் காண்கிறது போனால் ஸர்வம் போய் விடும். ஏகம்தான் இருக்கும். ஏகம் இருக்கும்போது ஸர்வம் என்ற வார்த்தைக்கு இடம் ஏது?அநேக அந்த ஏகத்தை அநுபவிக்கிறவனைத் தவிர ஜகம் என்கிற ஒன்றும் தனியாக இல்லை. ஜகத்தும் அடிபட்டுப்போச்சு. இதனால்தான் சிவமயம் என்றே சொல்கிறார்கள்.

VIBGYOR- என்ற ஏழு நிறங்களில் வெளுப்பும் சேரவில்லை. கறுப்பும் சேரவில்லை. உண்மையில் வெள்ளைச் சிவன், கரிய திருமால் இருவருமே பிரபஞ்ச வர்ணங்களில் (லௌகிகத்தில்) சேராதவர்கள்தான்.

எதை எரித்தாலும் முதலில் அது கறுப்பு ஆகிறது. ஆனால் அப்போதும் எரிபட்ட வஸ்துவுக்கு நிறம் மாறினாலும் ரூபம் அப்படியே இருக்கும். நியூஸ் பேப்பரைக்கூடக் கொளுத்திவிட்டு உடனே அணைத்துவிட்டால் அது முழுக்கக் கறுப்பானாலும், அந்தக் கறுப்புக்குள்ளேயே அதைவிடக் கறுப்பாக எழுத்துக்களும் தெரியும். துணியும் இப்படியே மடிப்புகூடக் கலையாமல் நெருப்பில் கருகுவதுண்டு. முழுக்க நீற்றுப்போய் உருவம் இழைப்பதற்கு முற்பட்ட நிலை இது. இதுதான் ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்'. இந்த நிலையில் ஜகத் இருப்பதுபோல் இருக்கிறது. ஆனாலும் இந்திரிய சேஷ்டைகள் எரிந்து போய்விட்டன. உணர்ச்சிகள் ஆனந்தம் எல்லாம் இருப்பதுபோல் தோன்றினாலும் லௌகிகமாக இல்லாமல் தெய்விகமாக பக்தி ரூபத்தில் இருக்கின்றன. யோகத்திலும் ஞானத்திலும் மேலும் ஆன்மாவைப் புடம் போட்டால் அதுவும் நீற்றுப் போய் பஸ்பமாகிவிடும். எரிகிற வஸ்துக்கள் முதலில் கறுப்பானாலும், கடைசீ வரையில் எரித்தால் எல்லாமே வெள்ளை வெளேரென்று நீறாகின்றன. இதுதான் சிவமயம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அரனை மறவேல் ; திருமாலுக்கு அடிமை செய்*

எரிந்த மரம் கரியாகிறது. அந்தக் கரியும் முதிர்ந்தால் பளிங்கமாக, வைரமாக ஆகிறது. உலகம் இருந்தபோதிலும் அதன் மாயை தெரிகிறபோது, நம் அஞ்ஞானம் எரிந்து

கரியாகப்போன நிலையில் இருக்கிறோம். திருமாலும் இதனாலேயே கருமாலாக இருக்கிறார். கரி வைரமாகிறது போன்ற நிலைக்கு - ஸ்படிகமாகிற நிலைக்கு - சுத்த ஸ்படிக ஸங்காசமான பரமேசுவரன் தெய்வமாக இருக்கிறார். கரியும் வைரமும் வேறு வேறு அல்ல. இதுவேதான் அதுவாயிருக்கிறது. மஹா விஷ்ணுவும் பரமேசுவரனும் ஒருத்தரேதான். உலகத்தின் ஆபாசங்கள். இவற்றுக்குக் காரணமான மாயை ஆகியவற்றின் நானாவிதமான வர்ண ஆட்டங்கள் இருவரிடத்திலும் இல்லை. மஹாவிஷ்ணுவின் கறுப்பு, சிவனின் வெளுப்பு இரண்டுமே ஸயன்ஸ்படி ஏழு வர்ணங்களில் சேரவில்லை. சத்தியமான தத்துவம் மாயையால் வேறு விதமான மாறித் தெரிகிறபோதுதான் வர்ணங்கள் உண்டாகின்றன. இருப்பதைப் பொய்யாக மாற்றிச் சொல்வதை இங்கிலீஷில் Coloured Versionஎன்றே சொல்கிறார்கள் அல்லவா?கலர் வந்துவிட்டால் பொய்க்கு வந்துவிட்டோம் என்று அர்த்தம். கலர்களில் சேராத கறுப்பு விஷ்ணுவிடம் வெள்ளை சிவனிடமும் மனத்தை வைக்கிற வரையில் சத்தியத்தோடேயே ஒட்டிக் கொண்டிக்கொண்டிருக்கிறோம்.

இறுதியான வெண்மைக்கு அடையாளமாகவே கரியையும் எரித்த பின் கிடைக்கிற விபூதிச் சாம்பலைத் சைவர்கள் தரிக்கிறார்கள். என்றும் நிற்பது எதுவோ அதுவே நீறு;திருநீறு. விஷ்ணு மயமான உலகத்துக்கு அடையாளம் மண், மரம், செடி, கொடி எல்லாமே மண்ணிலே பிறந்து மண்ணிலே வளர்ந்து முடிவில் மட்கி மடிகிறபோது மண்ணே ஆகின்றன. எனவே மண்ணும் முடிவான நிலைக்கு அடையாளமாக இருக்கிறது. இதனால்தான் வைஷ்ணவர்கள் திருமண் இட்டுக் கொள்கிறார்கள். திருநீறும் திருமண்ணும் ஒரே தத்துவத்தைத்தான் காட்டுகின்றன. ஹரி-ஹர பேதம் இல்லாதது போல், அவர்களுடைய சின்னங்களிலும் பேதமில்லை. ஜகத்தில் இருந்துகொண்டே மேல் நோக்கிப் போட்டுக் கொள்கிறார்கள். எல்லாம் சமமாகி விட்ட சிவயோக நிலையில், விபூதியை உயரவாட்டில் போடாமல் நெற்றியில் குறுக்கே தரித்துக் கொள்கிறார்கள்.

சிவனுக்கும் திருமாலுக்குமிடையே பேதம் கற்பிப்பது கொஞ்சம்கூடச் சரியில்லை. வைஷ்ணவ ஆழ்வார்களும், நாயன்மார்களும் உகந்த பக்தி நிலையில் இரண்டையும் ஒரே

ஸ்வரூபமாகக் கொண்டு பாடியிருக்கிறார்கள். "பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து"என்று ஆழ்வார் பாடினால், அதை அப்படியே எதிரொளிக்கிற மாதிரி, "குடமாட்டியை இடத்தே கொண்டு"என்று சைவத் திருமுறை பாடுகிறது. (கோபிகைகளோடு குடத்தை வைத்துக்கொண்டு நர்த்தனம் செய்த கிருஷ்ண பரமாத்மாத்தான் குடமாடி.)

தமிழ்நாட்டில் ஆதிகாலம் முதற்கொண்டு இந்த ஸமரஸ பாவம் இருந்து வந்திருக்கிறது. அதனால்தான் இருபத்திஏழு நக்ஷத்திரங்களுக்குள் சிவனுக்குறிய ஆதிரை, விஷ்ணுவுக்குறிய ஒணம் ஆகிய இரண்டுக்கு மட்டும் 'திரு'என்ற கௌரவ அடைமொழி சேர்த்துத் திருவாதிரை, திருவோணம் என்று சொல்கிறோம். குழந்தையாக இருந்தபோதே இந்த ஸமரச உணர்ச்சி ஏற்படவேண்டும் என்பதால்தான் அவ்வைப்பாட்டி ஆத்திச்சுடியில் 'அரனை மறவேல்'என்றும், 'திருமாலுக்கு அடிமை செய்'என்றும் உபதேசம் செய்கிறாள்.

ஒரே தெய்வத்தை இஷ்ட மூர்த்தியாகக் கொண்டு வழிபடுவதே சித்த ஒருமைப்பாட்டுக்கு உதவுவதாகத் தோன்றலாம். இதில் நியாயம் உண்டு. இதனால் ஒவ்வொரு மூர்த்தியைத் தாழ்வாக எண்ணக்கூடாது. தங்கள் இஷ்ட தெய்வத்தையே, பரம்பரையாக வந்து குல தெய்வத்தையே உபாஸிக்கலாம். ஆனால் அப்போதும், ரூபமற்ற பரமாத்மாவையே நாம் இந்த ரூபத்தில் வழிபடுகிறோம். எனவே இந்த மூர்த்தி பரமாத்மாதான். அந்த பரமாத்மா மற்ற ரூபங்களும் எடுத்துக் கொள்ள முடியும். அதாவது நம் தெய்வமேதான் மற்ற தெய்வங்களாகவும் உருவம் கொண்டிருக்கிறது என்ற அறிவும் ஏற்படவேண்டும். நம் தெய்வமே தான் மற்ற தெய்வங்களாகவும் உள்ளது என்று நினைத்துவிட்டால், நமக்கு அந்த ரூபங்களில் பிடிப்பு உண்டாகாவிட்டாலும்கூட, அவை நம் தெய்வத்தை விடத் தாழ்ந்தது என்ற எண்ணம் வரவே வராது. சமயச் சண்டைகளும் உண்டாகாது. எல்லோரும் ஒரே பரமாத்மாவின் குழந்தைகளாக அன்போடு ஐக்கியப்படுவதற்காக ஏற்பட்ட மதத்தில், தெய்வங்களின் பெயராலேயே சண்டையும், துவேஷமும் உண்டாகிற நிலை மறைந்து, ஸௌஜன்யமும், சாந்தியும் நிலவும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காலையில் திருமால், மாலையில் மஹாதேவன்*

சிவபெருமான், திருமால் இரண்டு பேரையும் உபாஸிப்பதற்கு நீண்டகாலமாக ஒரு விதி இருக்கிறது. லோக விவகாரங்களை நாம் அழகாக, தர்மமாக நடத்துவதற்கு ஜகத் பரிபாலகரான மஹாவிஷ்ணுவையும், இந்த வியாபாரங்களிலிருந்து மனஸைத் திருப்பி ஆதார வஸ்துவில் ஒடுங்குவதற்கு ஸம்ஹார மூர்த்தியான பரமேசுவரனையும் தியானிக்கச் சொல்லியிருக்கிறார்கள்.

இதற்கேற்ப வெளியிலே பார்த்தாலும் மஹாவிஷ்ணுவான திருபுவன சக்கரவர்த்தியாக இருக்கிறார். பரமேசுவரனோ ஆண்டியாக பிச்சாண்டியாக இருக்கிறார். இருவரிடமும் இருக்கிற சொத்துக்களைக் கொஞ்சம் கணக்கெடுத்துப் பார்ப்போம். சிவனிடம் சாம்பல், எருக்கம்பூ, தும்பைப்போ, ஊமத்தை, மண்டைஒடு, யானைத்தோல், பாம்பு - இவைதான் இருக்கின்றன. இதற்கெல்லாம் யாரும் விலை கொடுக்கமாட்டார்கள். விலைபோகாத வஸ்துக்கள்தான் சிவனிடம் உள்ளன. மஹாவிஷ்ணுவிடமோ கிரீட குண்டலங்கள், முக்தா ஹாரங்கள், பீதாம்பரம், கௌஸ்துப்ப மணி எல்லாம் இருக்கின்றன. இவற்றுக்கும் எவரும் விலை நிர்ணயிக்க முடியாது. சிவனிடம் உள்ளதற்கு விலை மதிப்பு இல்லை. (valueless) விஷ்ணுவிடம் உள்ளதோ விலைமதிக்க முடியாதது(invaluable) எல்லாவற்றுக்கும் மேலாக மஹா லக்ஷ்மியே இருக்கிறாள். பரமசிவனிடம் இருக்கும் அம்பாளுக்கோ அபர்ணா என்று பெயர். ஒர் இலை (பரணம்) கூட இல்லாதவள் என்று அர்த்தம். இலையைக்கூட உண்ணாமல் பரம தியாகியாகத் தபஸ் செய்தவள் அபர்ணா.

இதிலிருந்து லோகமெல்லாம் தர்மமெல்லாம் சந்தோஷமாக இருப்பதற்கு மஹாவிஷ்ணுவையும், வைராக்கியம்

வருவதற்குப் பரமேசுவரனையும் ஆராதிப்பதில், பொருத்தம் இருப்பது தெரியும். மகாவிஷ்ணுவால் ஞானம் தரமுடியாது என்றோ, பரமேசுவரனால் லோக வியாபாரம் நன்றாக நடக்க அநுக்கிரக இயலாது என்றே அர்த்தமில்லை. இரண்டு மூர்த்திகளை வழிபடுகிறபோது, இப்படி இரண்டு விதங்களில் ஆராதிப்பது ஒவ்வொரு விதத்தில் ஒவ்வொருவரிடம் சித்த ஒருமைப்பாடு (ஐகாக்ரியம்) கொள்வதற்கு உதவும்.

இந்த அடிப்படையில்தான் விடியற்காலையில் ஒவ்வொரு வரும் எழுந்தவுடன் ஹரிநாராயண ஹரிநாராயண என்று கொஞ்ச காலமேனும் ஸ்மரணம் செய்ய வேண்டும் என்றும், சாயங்காலத்தில் சிவ சிவ என்று சிறிது பொழுதேனும் ஸ்மரிக்க வேண்டும் என்றும் பெரியவர்கள் விதித்திருக்கிறார்கள். வெகு சுலபமான சாதனம். எல்லோரும் இதை அவசியம் செய்ய வேண்டும்.

காலையில் லோகம் முழுக்கத் தூக்கத்திலிருந்து விடுபட்டு மலர்ச்சி அடைகிறது. சூரியன் பலபல என உதிக்கிறான். உலக காரியங்கள் எல்லாம் தொடங்குகின்றன. எனவே குளிர்ந்த வைகறைப் போதில் நீருண்ட மேகம்போல் குளிர்ந்த ஜகத் பரிபாலகரான விஷ்ணுவின் நாமங்களை உச்சரிக்க வேண்டும். மாலையில் அவரவரும் வேலை முடித்து வீடு திரும்புகிறார்கள். மாடுகள் கொட்டிலுக்கு திரும்புகின்றன. பட்சிகள் கூட்டிக்குத் திரும்பிவிடுகின்றன. சூரியனும் மலைவாயில் இறங்குகிறான். இப்படி லோக வியாபாரங்கள் ஒடுங்கத் தொடங்குகிற அந்தப்போழுதில், நம் ஆட்டங்களையெல்லாம் ஒடுக்கி அமைதி தருகிற ஞானமூர்த்தியான பரமேசுவரனின் நாமாவை உச்சரிக்க வேண்டும்.

அண்டம் பிண்டம் இரண்டும் அடிப்படையில் ஒரே சரக்கானதால், வெளி உலக நடப்புக்கும் நம் அக உணர்வுகளுக்கும் சம்பந்தம் இருக்கிறது. உலகில் அருணோதயத்துக்கு முன்பு பட்சி ஜாலங்கள் விழித்துக் கொண்டு கூவத் தொடங்குகிற வேளையில், லோகமெல்லாம் நன்றாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மனஸில் நன்றாக பதிய வைத்துக் கொண்டு, ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனை தியானிப்பது எளிதில் கைவரும். இதேப்போல் வெளிவுலகம் ஒடுங்கித் தன்மயமாகி, இருள் கவிந்து வருகிற

அந்த வேளையில், இந்திரியங்களை ஒடுக்கி, சாந்தமாக சிவபெருமானின் தியானத்தில் அமிழ்வது சகஜமாகவும் சுலபமாகவும் இருக்கும்.

நம்முடைய மனோபாவத்தைப் பொறுத்து, இப்படி இரண்டு விதத்தில் உபாஸித்தாலும் இரண்டு மூர்த்திகளும் ஒன்றேதான் என்ற நினைப்பு போகக்கூடாது. காலையில் பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு சந்தியாவந்தனம் செய்த அதே மனிதர், பகலில் ஸூட் போட்டுக்கொண்டு ஆபீஸுக்குப் போகிறார். வெவ்வேறு காரியங்களுக்காக வெவ்வேறு வேஷங்களைப் போட்டுக் கொண்டாலும் ஆசாமி ஒருத்தர்தான். ஸ்வாமியும் ஒருத்தர்தான்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஒற்றும் உணர்த்தும் உத்தமத் தலங்கள்*

சிவ - விஷ்ணு அபேதத்தைக் காட்டும் ஸ்தலங்கள் பல உள்ளன. திருநெல்வேலிச் சீமையில் சங்கர நாராயணன் கோவிலும், (சங்கர நயினார் கோயில் என்று தப்பாகச் சொல்கிறார்கள்.) மேற்கே ஹரிஹர க்ஷேத்திரத்திலும் இவ்விரண்டு மூர்த்திகளும் ஒன்றாக இணைந்த பிம்பங்கள் உள்ளன. குற்றாலத்தில் விஷ்ணு மூர்த்தியே அகஸ்திய மஹரிஷி சிவலிங்கமாக மாறியிருக்கிறார். இவை பிரபலமான ஸ்தலங்கள். இவ்வளவு பிரபலமில்லாத ஒரு க்ஷேத்திரத்தைப் பற்றி சொல்கிறேன்.

திருப்பாற்கடல் என்று ஒரு ஊர் இருக்கிறது. காஞ்சிபுரத்திலிருந்து வேலூருக்குப் போகிற வழியில் இருபது மைலில் இருக்கிறது. முதலில் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு பெருமாள் கேயில்கூடக் கிடையாதாம். ஈஸ்வரன் கோயில்தான் இருந்ததாம். ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அநேக க்ஷேத்திரங்களுக்குச் சென்று விஷ்ணு தரிசனம் பண்ணிக்

கொண்டு வருகிற காலத்தில் அந்த ஊருக்கு வந்தாராம். ஒவ்வொரு நாளும் ஊருக்குப் போகும் போது விஷ்ணு தரிசனம் பண்ணாமல், அவர் ஆகாரம் பண்ணுவதில்லை என்ற நியமத்தை வைத்துக் கொண்டிருந்தார்.

அவர் திருப்பாற்கடலுக்கு வந்து எங்கே விஷ்ணு ஆலயம் இருக்கிறது?என்று ஒவ்வொரு கோயிலாகப் போனார். எல்லாம் சிவன் கோயிலாகவே இருந்தன. கடைசியில் விஷ்ணு ஆலயமாகத்தான் இருக்கும் என்று நினைத்து ஒரு கோவிலுக்குள் நுழைந்தார். உடனே வெளியே ஒடி வந்துவிட்டார். ஆகாரம் பண்ணவில்லை. வயிறு பசியில் துடித்தது. அதைவிட மனஸிலே இன்றைக்கு விஷ்ணு தரிசனம் பண்ணவில்லையே என்று துடிதுடித்துக் கொண்டிருந்தார்.

அப்போது ஒரு கிழவர் அவருக்கு முன்னால் வந்து என்ன ஸ்வாமி!விஷ்ணு தரிசனம் பண்ண வருகிறீர்களா?என்று கேட்டார். இந்தப் பிரயோஜனமில்லாத ஊரில் எங்கேய்யா விஷ்ணு கோயில் இருக்கிறது என்று கேட்டாராம். அதோ தெரிகிறதே அது சாக்ஷாத் விஷ்ணு கோயில்தான் என்றாராம் கிழவர்.

அந்த கோயிலுக்குள்தான் அந்த வைஷ்ணவர் நுழைந்த பிறகு ஈஸ்வரன் இருப்பதைப் பார்த்துவிட்டு ஒடி வந்திருக்கிறார். அதனால், ஏன் அய்யா பொய் சொல்கிறீர்?அது ஈஸ்வரன் கோயில் என்றாராம். இல்லவே இல்லை. நீர்தான் பொய் சொல்கிறீர். அது பெருமாள் கோயில்தான். வேண்டுமானால் உள்ள வந்து பாரும் என்று அவர் சொல்ல, இப்போதுதான் நான் பார்த்தேன் என்று இவர் சொல்ல, கடைசீயில் கிழவர் பந்தயம் கட்டும்;எதற்காகப் பொய் சொல்கிறீர்?என்று ஸ்ரீவைஷ்ணவரிடம் அடிதடிச் சண்டைக்குப் போய் விட்டாராம்.

இதற்குள் ஊரில் இருந்தவர்களுக்கு இது தெரிந்தது. அவர்களுக்குள் மத்தியஸ்தம் செய்துவைக்க வந்தார்கள்.

எதற்காக இப்படி சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டும். எல்லோரும்தான் போய் எது மெய்யென்று பார்க்கலாமே?என்று ஊர் ஜனங்கள் சொன்னார்கள்.

நான் அந்த கோயிலுக்குள் நுழைய மாட்டேன் என்று

விஷ்ணு பக்தன் சொன்னானாம். வராவிட்டால் விட முடியாது. எப்படி நான் சொல்வது இவர் பொய் என்று இவர் பார்க்காமல் சொல்லலாம்?யார் பொய் என்று பார்த்துவிட வேண்டும். என்று அந்தக் கிழவர் வீம்பு பண்ணிக் கொண்டு, விடமாட்டேன் என்று மல்லுக்கு நின்றார்.

கடைசியில், ஊர் மத்தியஸ்தத்தின் பேரில் இவர்கள் எல்லோரும் கோவிலுக்குள் சென்றார்கள்.

வாஸ்தவத்தில் அங்கே போய்ப் பார்த்தால் சிவலிங்கம் மாதிரி இருந்தது. கீழ் பிரமம்ம பீடமாகிய ஆவுடையார் இருந்தது. ஆவுடையாருக்கு நடுவிலிருந்து ஒரு மூர்த்தி எழும்பியதால் அசப்பில் சிவலிங்கமாதிரியே தோன்றியது. ஆனால் வாஸ்தவத்திலோ ஆவுடையாருக்கு மேலே தெரிந்தது லிங்கமல்ல. லிங்கத்தின் ஸ்தானத்தில் பெருமாள் நின்று கொண்டிருந்தார்.

அதைப் பார்த்தவுடன், அடடா!நாம் ஏமாந்து போய்விட்டோமே- மஹாவிஷ்ணு அல்லவா இங்கே இருக்கிறார்?என்று அந்த விஷ்ணு பக்தர் மிகவும் மனம் உருகி, அநேக ஸ்தோத்திரங்கள் பாடினாராம்.

கிழவரிடம் மன்னிப்புக் கேட்டுத் திரும்பினால், அந்தக் கிழவரே விஷ்ணு மூர்த்திக்குள் கலந்து விட்டார். பெருமாளே கிழவராய் வந்திருக்கிறார்.

திருப்பாற்கடல் என்னும் ஊருக்குப் போனால் இப்போதும் பார்க்கலாம். ஆவுடையார் இருக்கும். அதற்குமேல் லிங்கம் இருக்கிற இடத்தில் பெருமாள் நின்று கொண்டிருக்கிறார். இந்த க்ஷேத்திரமும் நமக்கு ஈஸ்வரன் வேறு மஹா விஷ்ணு வேறு இல்லை என்ற தத்துவத்தை விளக்குகிறது.

இரண்டு ராஜாக்கள்

மஹாவிஷ்ணு மீனாக்ஷியை ஸுந்தரேசுவரருக்கு தாரை வாத்துக் கொடுத்தார். மதுரையில் இந்த ஐதிஹ்யம் சிற்பத்தில் வெகு அழகாக இருக்கிறது. அம்பாள் பத்மநாப சகோதரியாகவும், பரமேசுவர சக்தியாகவும் இருப்பதை அப்படியே கண்ணுக்கு முன்னால் கொண்டுவந்து காட்டுகிறது இந்தச் சிற்பம். இதைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் நம் மனஸில் சைவ வைஷ்ணவ பேத பாவம் போயே போய் விடும்.

பிரம்மத்தினால்தான் ஸர்வ சக்தியும் இருக்கிறது. அந்த சக்தியால்தான் சகல பிரபஞ்ச காரியங்களும் நடக்கின்றன. பிரம்மமே பரமேசுவரன். சக்தியே அம்பாள். அந்தச் சக்தியால் ஜகத்தை எல்லாம் பரிபாலிக்கிறவரே மஹா விஷ்ணு என்று பிரித்துச் சொன்னாலும், இவர்களும் கடைசீயில் ஒருவருக்கொருவர், வித்தியாசமே இல்லாதவர்கள்தான் என்று தெரிகிறது. பிரம்மம், அதன் சக்தி, அந்தச் சக்தி செய்கிற காரியம் எல்லாம் வேறு இல்லை அல்லவா?அநேக தெய்வங்களுக்குள் தங்களுடைய பரமாத்ம ஸ்வரூபத்திலேயே எப்போதும் இருக்கிற மும்மூர்த்திகள் - ரத்ன த்ரயம் - இம்மூவரே என்று அப்பைய தீக்ஷிதர் நிலைநாட்டியிருக்கிறார்.

சாந்தமாக இருக்கிற பிரம்மம் சிவன், காரியங்கள் செய்து பரிபாலிக்கிறவர் மகாவிஷ்ணு என்று சொன்னாலும், இப்படிப்பட்ட வித்தியாசம் கற்பித்துகூட முழுக்கச் சரியில்லை என்று உணர்த்துகிற வகையில் இரண்டு ராஜாக்களைப் பார்க்கிறோம். ஒருத்தர் ரங்கராஜா, மற்றவர் நடராஜா. ரங்கராஜா இருக்கும் ஸ்ரீரங்கத்தைத்தான் வைஷ்ணவர்கள்கோயில் என்று சொல்கிறார்கள். அதே மாதிரி சைவர்களின் கோயில் என்றால் அது நடராஜா இருக்கிற சிதம்பரம்தான். இந்த இரண்டு மஹா க்ஷேத்திரங்களில் உள்ள ரங்கராஜா, நடராஜா இரண்டு பேரும் தென்திசையையே பார்த்துக் கொண்டிருப்பது விசேஷம். தெற்கு யமனின் திக்கு. நமக்கு மரண பயமில்லாமல் நம்மை அமரமாக்குகிற மூர்த்திகளாதலால் யமனுக்கு எதிர் முகம் காட்டுகிறார்கள்.

ரங்கம் அல்லது அரங்கம் என்றால் சபை. சிதம்பரத்தில்

நடராஜா இருக்கிற சந்நிதியை சபை என்றுதான் சொல்கிறோம்.

சபையில் நர்த்தனம் செய்வதுதான் பொருத்தம். ஆனால் இந்த இரண்டு சபைகளில் ஒருத்தர்தான் நர்த்தனம் செய்கிறார். சாந்த நிலையில் பிரம்மமாக இருக்கப்பட்டவர் என்று நாம் சொல்கிற சிவன்தான் நடராஜாவாக ஆனந்தக் கூத்தாடுகிறார். ஜகத் பரிபாலகரான மஹாவிஷ்ணுவையோ திருவரங்கத்தில் பரம சாந்தமாக உறங்குகிறார். சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் நாம் பங்கீடு செய்கிற தொழில்களின்படி பார்த்தால் இது தலைகீழாக அல்லவா இருக்க வேண்டும்?இதிலிருந்து என்ன தெரிகிறது?முத்தொழில், ஐந்தொழில் என்றெல்லாம் பிரித்து, நாம் ஒவ்வொன்றுக்கும் ஒரு மூர்த்தியைச் சொன்னாலும்கூட, இதுவும் நம் சிற்றறிவுக்கு எட்டுவதாகப் பராசக்தி எடுத்துக் கொண்ட பல தோற்றங்கள்தான். அந்த மூர்த்திகள் அடியோடு பிரிந்து பிரிந்து இருப்பதாக நினைக்கக்கூடாது. இதைத்தான் இரண்டு ராஜாக்களும் நமக்கு உணர்த்துகிறார்கள். இவருடைய

காரியத்தை இவரும் செய்கிற மாதிரி இரண்டு சபைகளில் நடிக்கிறார்கள். எல்லாவற்றையும் ஒடுக்கிக் கொள்பவர் ஆட்டமாக ஆடுகிறார். ஆட்டி வைத்துப் பரிபாலிக்க வேண்டியவரோ தூங்குகிறார். தெற்கே பார்த்துக்கொண்டிருக்கிற இன்னொருத்தர் தக்ஷிணாமூர்த்தி. இவர் பரமஞான மூர்த்தி. காரியமில்லாத ஏகவஸ்துவான சாக்ஷாத் பிரம்ம ஸ்வரூபம். அவருடைய சித்(ஞான) சக்திதான் அம்பாள். அந்த சைதன்யம்தான் சிவ விஷ்ணுவாக மும்மூர்த்தியாகளாக, முக்கோடி தேவதைகளாக, புல், பூண்டு, பசு, பட்சி, மநுஷ்யர்கள் உட்பட சகலமாகவும் ஆகியிருக்கிறது. இவற்றிலே குறிப்பாக பாரத தேசம் சிவபெருமான், திருமால் இவர்களை முழுமுதல் கடவுளாக வழிபடுவதால், நாம் பேத புத்தி இல்லாமல் இவ்விருவரையும் வழிபட வேண்டும். நாம் மனஸில் எந்நாளும் மறவாமல் பொறித்து வைத்துக் கொள்ள வேண்டியது என்னவென்றால்,

பராசக்தியின் மற்றொரு உருவமே திருமால்;பராசக்தியை விட்டுப் பிரிக்க முடியாத ஆதாரப் பொருளே சிவன்.

எல்லாவற்றுக்கும் உள்நின்று இயக்குகிற அந்தச் சக்தியை

நாம் பக்தி செய்தால், தாயாக வந்து ஞானப்பால் கொடுத்து நம்மை ரக்ஷிக்கிற அம்பாளாகிறாள்.

அவளது அநுக்கிரகம் இல்லாவிட்டால், நாம் சவத்துக்குச் சமம்தான். நாம் செய்கிறதாக நினைக்கிற சகல காரியங்களுக்கும், எண்ணங்களுக்கும் அவள் தருகிற சக்திதான் காரணம். எவருக்குமே நம் சக்தியினாலேயே காரியங்களைச் செய்துகொள்கிறோம் என்று அகம்பாவம்படக் கொஞ்சம்கூட நியாயம் இல்லை. நம்மை நடத்தி வைத்தும் அந்தப் பராசக்தியை நினைத்து, நாள்தோறும் ஒரு நிமிஷமாவது, என் சிறு சக்தி உன்னிடமிருந்து தெரித்த ஒரு திவலைதான். இதை உன் சித்தப்படியே நடத்திவையம்மா என்று அர்ப்பணம் பண்ணுவோம். இதுவே மநுஷ்ய குணங்களில் முதலாவதாகச் சொல்லப் படுகிற நன்றி.

இதே பூஜை;

இதே ஸ்நானம் - அகம்பாவ அழுக்கைத் துடைத்து நம் உயிரைச் சுத்தமாக்குகிற ஸ்நானம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*" பகவான் யார் ?" பகவத் பாதர் பதில்*

பரமேசுவரனும் ஸ்ரீமந் நாராயணனும் ஒரே வஸ்து;இரண்டல்ல. பெயர் வேறு. உருவம் வேறு, வேலை வேறு. ஆனால் உள்ளயிருக்கப்பட்ட வஸ்து ஒன்றேதான். ஸ்ரீசங்கர பகவத் பாதர்களின் அபிப்பிராயம் இதுதான். கேள்வியும் பதிலுமாக ப்ரச்னோத்தர ரத்னமாலிகா என்று அவர் ஒரு கிரந்தம் செய்திருக்கிறார். ப்ரச்னம் - கேள்வி. (இப்போது அந்தப் பிரச்சனை இந்தப் பிரச்சனை என்கிறோமே. பிரச்சனை என்பது ப்ரச்னம்தான்) உத்தரம் -பதில். ப்ரச்னம் உத்தரம் மாதிரி கேள்வியையும் பதிலையும்

தொடுத்துக் கொடுக்கிறார் ஆசார்யார். பண்டிதர்களுக்கு இது ரத்னமாலை என்று பிரச்னோத்தர ரத்னமாலிகாவை அநுக்கிரகித்திருக்கிறார்.

அதில் ஒரு கேள்வி:பகவான் யார்?

அதற்குப் பதில்:சங்கரனாகவும் நாராயணனாகவும் இருக்கிற ஒருவன். சங்கர நாராயணாத்மா ஏக:

இதிலிருந்து ஆசார்யாள் மனஸில் சிவன், விஷ்ணு என்ற பேதபாவம் கொஞ்சம்கூட இல்லை என்றாகிறது. இதே மனோபாவத்தில்தான் அவரது சம்பிரதாயத்தைப் பின்பற்றும் ஸ்மார்த்தர்கள் எல்லோரும், ஒவ்வொரு காரியதையும் பரமேசுவரப் பிரீத்திக்காக என்ற சங்கல்பத்துடன் ஆரம்பித்து, முடிவில் கிருஷ்ணார்ப்பணம் என்று பிரீத்யர்த்தம் என்று தொடங்கி, ஜனார்த்தன:ப்ரீயாதாம் என்று முடிக்கிறோம். ஒருத்தன் பிரீர்த்திக்கு என்று ஆரம்பித்தை இன்னொருத்தன் பிரீர்த்திக்கு என்று எப்படி இருக்க முடியும்?இரண்டும் ஒன்றாகவே இருப்பதால்தான் முடிகிறது. பேர்தான் வேறு வேறு.

தீவிர வைஷ்ணவர்களைக் கேட்டால், விஷ்ணுதான் கடவுள். சிவன் மற்ற ஜீவராசிகளைப் போல் என்பார்கள். இதே மாதிரி வீர சைவர்களைக் கேட்டால், சிவன் முழு முதல் தெய்வம். விஷ்ணு ஜீவ கோடியைச் சேர்ந்தவர்தான் என்பார்கள். இவர்கள் ஒவ்வொருவரது சித்தாந்தப்படியும் சிவன் அல்லது விஷ்ணுதான் எல்லா ஜீவராசிகளின் இருதயத்துக்குள்ளும் அந்தர்யாமியாக இருக்கிறார். இப்படி வைத்துக் கொண்டாலும் ஒன்று சிவன் விஷ்ணுவின் இருதயத்தில் இருக்கிறார். அல்லது விஷ்ணு சிவனின் இருதயத்தில் இருக்கிறார். எப்படிப் பார்த்தாலும் தங்கள் ஸ்வாமியை இருதயத்தில் வைத்துக் கொண்டிருக்கிற அந்த இன்னொரு வரையும் பூஜிக்கத்தானே வேண்டும்.?

சித்தாந்தம் எனறு கட்சி பேசாமல் நடுநிலையிலிருந்து பேசக்கூடிய மகாகவியான காளிதாஸர், பாணன் முதலியவர்களுடைய வாக்கைப் பார்த்தால், ஒரே வஸ்துதான் பல தேவதைகளாக வந்திருக்கிறது என்று ஸ்வஸ்டமாகத் தெரியும்.

ஒரு மூர்த்திதான் உள்ளது. அதுவே மூன்றாகப் பிரிந்தது.

இவை ஒன்றுக்கொன்று சமம். ஒன்று உயர்ந்தது - மற்றது தாழ் ந்தது என்றில்லை என்கிறார் காளிதாஸர்.

ஏகைவ மூர்த்தி:பிபிதே த்ரிதா ஸா

ஸாமான்யமேஷாம் ப்ரதமா வரத்வம்

பாணரும் இப்படியே சொல்கிறார். எந்த ஒன்றே ரஜோ குணத்தால் சிருஷ்டி செய்கிற பிரம்மாவாகவும், ஸத்வ குணத்தால் சிருஷ்டி செய்கிற பிரம்மாவாகவும், ஸத்வ குணத்தால் பிரளயத்தை உண்டாக்கும் ருத்திரனாகவும் இருக்கிறதோ, அந்தப் பிறப்பற்ற ஒன்றை - முத்தொழிலுக்கும் காரணமாக, மூன்று வேத ரூபமாக இருக்கிற முக்குண மூலத்தை நமஸ்கரிக்கிறேன் என்கிறார்.

ரஜோஜுஷி ஜன்மானி ஸத்வவ்ருத்தயே

ஸ்திதௌ ப்ரஜானாம் ப்ரளயே தம:ஸ்ப்ருசே I

ஆஜாய ஸர்க்க ஸ்திதி நாச ஹேதவே

த்ரயீமயாய த்ரிகுணாத்மனே நம: II

ஒரு சித்தாந்தத்தை நிலைநாட்ட வேண்டும் என்ற வீம்பு இல்லாமல், உள்ளதை உள்ளபடி திறந்த மனஸோடு பார்க்கிற மகாகவிகள் இருவர் இப்படிச் சொல்கிறார்கள். பிரம்மா, விஷ்ணு, சிவன் விஷயத்தில் இவர்கள் சொல்கிற ஐக்கியம் அத்தனை தேவதைகளுக்கும் பொருந்தும்.

அநுபவ சிகரத்திலிருந்து பேசிய மகான்கள் தங்களுக்கென்று ஓர் இஷ்ட தெய்வம் இருந்தாலும்கூட, மற்ற தேவதைகளும் அதுவேதான் என்று தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். மகேசுவரனுக்கும் ஜனார்த்தனுக்குமிடையே வஸ்து பேதம் துளிக்கூட இல்லாவிட்டாலும் என் மனசு என்னவோ சந்திரனைச் சிரஸில் சூடிய சிவபெருமானிடம்தான் விசேஷமாக ஈடுபடுகிறது. என்று அப்பைய தீக்ஷிதர் கூறுகிறார். நான் சைவன்தான். சிவபஞ்சாக்ஷர ஜபம் செய்கிறவன்தான். இருந்தாலும் காயாம்பூ நிறத்து கோபிகாரமணனிடமே என் சித்தம் லயிக்கிறது என்கிறார் கிருஷ்ண கர்ணாம்ருத'த்தில் லீலாசுகர்.

இஷ்ட தெய்வம் என்று ஒன்று இருக்கலாம். ஆனால்

அதுதான் எல்லாமாயிருக்கிறது என்பதால், அதுவேதான் மற்ற தெய்வங்களுமாயிருக்கிறது என்ற எண்ணம் இருக்க வேண்டும். ஒன்றைப் பிடித்துக் கொண்டதற்காக இன்னொன்றை நிந்திக்கக்கூடாது. விஷ்ணுதான் கடவுள், சிவன் ஒரு ஜீவன் - அல்லது சிவன்தான் கடவுள். விஷ்ணு ஒரு ஜீவன் - என்றால்கூட, ஒரு மூர்த்தியிடம் துவேஷம் பாராட்ட இடமில்லை. ஒருத்தர் ஸ்வாமி, இன்னொருத்தர் பக்தர் என்றாலும் பக்தருடைய மரியாதையைச் செய்யத்தானே வேண்டும்?சிவன் விஷ்ணுவுக்குப் பக்தன். அல்லது சிவனுக்கு விஷ்ணு பக்தன் என்றே சொல்கிறார்களே தவிர, இருவருமே பரஸ்பரம் துவேஷித்துக் கொள்ளும் விரோதிகள் என்று யாரும் சொல்லவில்லையே. அப்படியிருக்க அவர்களில் ஒருவரை நாம் ஏன் துவேஷிக்க வேண்டும்?

ஒரு புராணத்தில் சிவன் விஷ்ணுவை நமஸ்கரிக்கிறார். இன்னொரு புராணத்தில் விஷ்ணு சிவனை நமஸ்கரிக்கிறார் என்பதால் இவர்கள் சின்னவர்களாகிவிடவில்லை. சிவனை நமஸ்காரம் பண்ணு என்று சிவனே சொல்லாமல், விஷ்ணு அதை நமக்குக் காரியத்தில் உபதேசிக்கிறார். இப்படியே நமக்கு விஷ்ணு பக்தி உண்டாக்கவே, சிவன் விஷ்ணுவைப் பூஜிக்கிறார். ஜனங்களின் விதவிதமான ருசிக்குத் தகுந்த மாதிரி ஒரே பரமாத்மா வேறு வேறு ரூபத்தில் வருகிறார். அவரவருக்கும் தங்கள் இஷ்ட மூர்த்தியால் இந்த மூர்த்தியை நமஸ்காரம் பண்ணுகிறார். பகவானைப் பூஜிக்கிற மாதிரியே பாகவதற்களையும் பூஜிக்க வேண்டும் என்று வைஷ்ணவர்கள் சொல்கிறார்கள். சிவனைப்போலவே சிவனடியாரையும் வழிபட வேண்டும் என்று சைவர்களும் சொல்கிறார்கள். எனவே, இவர்களில் ஒருத்தர் இன்னொருத்தரைப் பூஜை செய்வபரையும் நாம் நமஸ்கரிக்கத்தான் வேண்டும்.

முன்னே சொன்ன ப்ரச்னோத்ர ரத்ன மாலிகாவில் இன்னொரிடத்தில் மேலான தெய்வம், பரதேவதை எது?என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு, அதற்கும் சித்சக்தி என்று பதில் சொல்கிறார் ஸ்ரீ ஆச்சாரியாள். சித்சக்தி என்பது தான் பரப்பிரம்மத்தின் பேர் அறிவு. அதுதான் அத்தனை தேவதைகளுமாயிற்று. அதுவே நமக்கு நல்லறிவு தரும் ஞானம்பிகை. அந்த ஞானாம்பிகைதான் நமக்கு நல்லறிவு

தரும் ஞானம்பிகை. அந்த ஞானாம்பிகைதான் நமக்கு எல்லா விதமான பேத புத்தியும் போவதற்கு அநுக்கிரகிக்க வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*விபூதி, திருமண்ணின் மகிமை*

விறகுக் கட்டையை அக்னியானது பஸ்பமாக்குவது போல், ஞானம் என்கிற அக்னி எல்லாக் கருமங்களையும் பஸ்பமாக்குகிறது என்று பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார். பஸ்பமாகிய விபூதி, இவ்விதம் கர்மாக்களை எரிந்தபின் நிற்கும் ஞானத்துக்கே அடையாளமாகும்.

"விபூதி பூதிரைச்வர்யம் எனறு அமர கோச"த்தில் உள்ளது. அதாவது, விபூதி என்பதும், ஐச்வரியம் என்பதும் ஓர் பொருள் தரும்.

எந்தப் பொருளையும் தீயிலிட்டால் முதலில் அது கறுப்பாக ஆகும். பிறகு இன்னும் அக்னிபுடம் போட்டால் நீற்றுப் போகும். சுத்த வெளுப்பாக ஆகிவிடும். அப்புறம் தீயில் போட்டால் அது மாறாது. அதுவே முடிவான நிலை. இப்படி நீற்றுப் போனதே திருநீறு. நீறு பஸ்மம் எனப்படும். ஈசுவரன் மஹா பஸ்பம். எல்லாம் அழிந்த பின்னும் இவற்றை அழித்து விட்டு எஞ்சி நிற்கிற, அழியாத சத்யமான மஹா பஸ்மம் அவன். பஸ்மமாக நீற்று வெளுத்துப் போனதற்கு முந்திய மாறுதல் கறுப்பு. அதுதான் கரி. நிலக்கரிதான் இவ்வுலக ஐச்வரியத்தில் இக்காலத்தில் முதலிடம் பெற்றுள்ளது.

ரொம்பவும் விலைமதிப்பான வைரமும் அதுதான். இந்தக் கரியாக மாறிய பொருளைவிட, மிகவும் உயர்ந்தது நீற்றுப்போன திருநீறு. திருநீற்றுக்கு பொருளே கிடையாது.

பல வர்ணங்களைக்கொண்ட பொருட்களைக் காண்கிறோம். ஆனால், இந்த வர்ணங்களெல்லாம் வஸ்துவை எரித்தபின் மாறிவிடுகின்றன. எல்லாம் கடைசியில் வெளுத்துப் போய்விடும். நாம் சாயம் வெளுத்துப் போய்விட்டது என்கிறோம். சாயம் என்பது வேஷம். வேஷம் போனபின் இருப்பதே மெய். மெய்யான ஆத்மாவின் தூய்மைக்குப் பெரிய அடையாளமாக இருப்பது விபூதியான். இதை இந்தப் பொய்யான மெய் (தேகம்) முழுவதிலும் பூசிக்கொள்ள வேண்டும். எல்லாம் எரிந்தபின் எஞ்சி நிற்பது விபூதியின் வெண்மை ஒன்றுதான். மற்ற சாயமெல்லாம் பொய். வெண்மையை உண்மை.

ஞானம் என்னும் தீ மூண்டபின், காரியங்கள் எல்லாம் பஸ்பமாகி விடும் என்று ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா உபதேசித்ததில், பஸ்பமாகிவிடும் என்றால் அழிந்து, புத்தர் சொன்னமாதிரி, சூன்யமாகிவிடும் என்று அர்த்தமில்லை. விறகுக் கட்டைகள் தீயில் எரிந்து போனபின் எல்லாமே சூன்யமாகிவிடவில்லை. அப்போது எஞ்சி நிற்பது நீறு. அவ்வாறே ஞானம் என்றும் தீயில் கர்மாக்கள் யாவும் எஞ்சி நிற்கும். மிகுந்து நிற்பதே 'மகா பஸ்ம'மான பரமாத்மா.

திருத்தொண்டத் தொகையில் சுந்தரமூர்த்தி நாயனார் முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன் என்று பாடினார்.

விபூதியைத் தேகம் முழுவதும் பூசிக் கொள்ள வேண்டும். விபூதியைத் தரித்துக் கொள்வதினால் ஸகல ஐஸ்வரியங்களையும் அடையலாம். பெரும்பாலான மக்கள் விபூதியை அணிகிறார்கள். திருநீறு என்பதே சாதாரண மக்களால் துன்னூறு, துன்னூறு எனப்படுகிறது. கோயிலுக்குப் போனாலும் ஏதாவது பீடாபரிகாரமாக வேண்டுமானாலும், துன்னூறு கொடுங்கள் என்று மக்கள்

கேட்பதை நாம் சகஜமாகப் பார்க்கிறோம். பூத, பிரேத, பைசாச சேஷ்டைகளிலிருந்து காப்பாற்றும் பெரிய ரக்ஷையாக இருப்பது விபூதியே.

வைஷ்ணவர்கள் திருமண் இடுவார்கள். துளசிச் செடியின் அடியில் உள்ள மண்ணை இட்டுக் கொள்வது வழக்கம்.

மண்ணை இட்டுக் கொள்வதும், திருநீற்றை இட்டுக்

கொள்வதும் நமக்கு உயர்ந்த தத்துவத்தையே விளக்குகின்றன. மன்னனும் மாசறக் கற்றோனும் பிடி சாம்பலாகி விடுகிறார்கள். நாம் கடைசியில் சாம்பலாகத்தான் போகிறோம். இந்த வாழ்க்கை மயமானது என்பதை விபூதி உணர்த்துகிறது. மண்ணிலே பிறந்த நாம் மண்ணிலேதான் மடியப் போகிறோம். மண்ணிலே பிறந்த மரம் கடைசியில் மட்கி அதே மண்ணோடு மண்ணாகத்தானே ஆகிறது. நம்மை முடிவில் அடக்கிக் கொள்ளப்போகிற தத்துவம் அதுதான், இதை ஞாபகப் படுத்திக் கொள்ளவே நம்மில் சிலர் திருமண் அணிகிறோம். ஸ்ரீரங்கத்தில் 'ம்ருத் ஸங்க்ரஹண ம்'செய்யும்போது வில்வ விருக்ஷ மண்ணை எடுக்கிறார்கள்.

வில்வம் லக்ஷ்மி வசிக்குமிடம். பசுவும் லக்ஷ்மியின் வாஸஸ்தானம். விபூதி, பசுவின் சாணத்தை அக்னியிலிட்டு பஸ்பமாக்குவதிலிருந்து உண்டாகிறது. பசுவின் ஸானம் எல்லாத் துர்நாற்றங்களையும் போக்க உதவுகிறது. மண்ணெண்ணையைக் காட்டிலும் அதிகத் துற்நாற்றம் உள்ள வஸ்து இல்லை எனலாம். அந்த துர்க்கத்தைப் போக்கக்கூட பசுவின் சாணத்தை உபயோகிக்கிறோம். நமது உடல் பல துர்க்கந்தங்களை உடையது. இந்த உடலைச் சுத்தப்படுத்தி, இதனுள் உள்ள ஆத்மாவையும் பரிசுத்தப்படுத்த வல்லது பஸ்பமாகிய திருநீறு. மஹா பஸ்பமான பரமாத்மாவும் விபூதி என்னும் பஸ்பமும் ஒன்றானபடியால் விபூதியை அணிவதனால் ஈச்வர சாக்ஷாத்காரம் ஏற்படும்.

நாம் ஒவ்வொருவரும் குலாதாரத்தை அனுசரித்து திருநீற்றையோ திருமண்ணையோ இடவேண்டும். திருமண் இடுவதற்கு, நாமம் போடுவது என்று பெயர். மகாவிஷ்ணுவுக்கு கேசவ, மாதவ, நாராயண, கோவிந்த, விஷ்ணு, மதுசூதன, திவிக்கிரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷீகேச, பத்மநாப, தாமோதர என்று பன்னிரண்டு நாமங்கள் முக்கியம். இந்த துவாதஸ நாமங்களைச் சொல்லிப் பன்னிரண்டு இடங்களில் திருநாமங்களை இட்டுக் கொள்வார்கள். இப்படி பகவந் நாமத்தைச் சொல்லி போட்டுக் கொள்வதாலேயே நாமம் போடுவது என்று பெயர் வந்துவிட்டது.

திருநீறு, திருமண் இவற்றைத் தவிர்ப்பது பரமாத்ம ஸ்வரூபத்தின் உண்மையையும், உலகில் உள்ள பொருள்களின் அநித்தியமான நிலையையும்

நினைவூட்டுகிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிறுவர் இருவரின் சிறப்பு வாக்கு*

பரமேசுவரனுக்கு எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. மஹாவிஷ்ணுக்கு எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. இருந்தாலும் ஒரு ஸத்ஸங்கத்தின் காரியங்களை முடிக்கும்போது நம:பார்வதீ பதையே என்று ஒருவர் சொன்னவுடன், எல்லோரும் ஹரஹர மஹாதேவ என்ற நாமத்தையே கோஷம்

செய்கிறோம். அல்லது, முடிவாக ஒருத்தர் ஸர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம் என்கிறார். உடனே எல்லோரும் கோவிந்தா கோவிந்தா என்கிறோம். அல்லது கோபிகா ஜீவன ஸ்மரணம் என்று ஒருவர் சொன்னால், அனைவரும் கோவிந்தா கோவிந்தா என்கிறோம். பார்வதீ பதிக்கு சிவன், ருத்திரன், நடராஜன் என்று எத்தனையோ பெயர்கள் இருந்தாலும், கூட்டமாக கோஷம் செய்யும்போது ஹர நாமமே முன்னால் நிற்கிறது. அப்படியே திருமாலுக்கு நாராயணன், மஹாவிஷ்ணு, ஸ்ரீநிவாசன் என்றெல்லாம் பல நாமங்கள் இருந்த போதிலும், பக்தகோடிகள் சேர்ந்து முழங்குவது கோவிந்த என்ற பெயராகவே இருக்கிறது. இந்த இரண்டு நாமங்களுக்கு மட்டும் என்ன விசேஷம், முக்கியமாக ஏராளமான ஜனங்கள் ஒன்று சேர்ந்து இந்த இரு பெயர்களை முழங்குமாறு இவற்றுக்கு என்ன சிறப்பு என்று யோசனை செய்து பார்த்தேன்.

குழந்தையின் வாக்குக்கு விசேஷம் உண்டு. கள்ளம் கபடமில்லாத ஒரு குழந்தை சொல்வது வாக்குக்குச் சமதையானது. எல்லாக் குழந்தைகளின் வாக்குக்கும் விசேஷம் உண்டு என்றால், தெய்வக் குழந்தைகளாக உள்ளவற்றின் வாக்கு அதிவிசேஷமானதல்லவா?ஹர நாமமும் கோவிந்த நாமமும் இரண்டு அவதாரக் குழந்தைகளின் வாக்கில் விசேஷமாக வந்த பெயர்கள். இந்தப் பெயர்கள் எல்லோரிடமும் தழைத்தோங்க வேண்டும்

என்று அந்தக் குழந்தைகள் ஆக்ஞை போட்டன. அதனால்தான் பரமேசுவரனின் பல நாமங்களில் ஹரநாமமும், ஸ்ரீ மகா விஷ்ணுவின் பல நாமங்களில் கோவிந்த நாமமுமே ஜனசமூகத்தின் கோஷ்டி கோஷத்துக்கு உரியனவாயின என்று கண்டுபிடித்தேன்.

அந்த இரு தெய்வக் குழந்தைகள் யார்?

ஒருவர் திருஞானசம்பந்தர். அம்பாளின் க்ஷீரத்தை அருந்தியதால் முருகனாகவே போற்றப்படுபவர். மதுரையில் அவரோடு வாதிட்ட சமணர்கள் புனல் வாதமும், கனல் வாதமும் செய்யவேண்டும் என்றார். அதாவது இரு கட்சிக்காரார்களும் தங்கள் கொள்கையில் ஒலையில் எழுதி வெள்ளத்தில் விடவேண்டும். பிரவாகத்தை எதிர்த்துக்கொண்டு எவரது ஏடு வருகிறதோ, அதாவது கொள்கைக்கே வெற்றி என்பது புனல் வாதம். இதேபோல் அவரது சித்தாந்தத்தை எழுதிய ஒலையை நெருப்பிலே போட்டால் எது எரியாமலிருக்கிறதோ அதற்கே வெற்றி என்று கொள்வது எதிர் வாதம் - கனல் வாதம் செய்ததில் சமணரின் ஏடுகள் ஆற்றோடு போயின. நெருப்பில் எரிந்தன. திருஞ்ஞானசம்பந்தரின் ஒலை, பிரவாகத்தை எதிர்த்து வந்தது. தீயிலும் எரியாமல் இருந்தது. பிரவாகத்திலே போட்ட ஒலையில் சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் என்ன எழுதினார்?முடிவாக சைவத்தை நிலைநாட்ட நடந்த இறுதிப்பரீட்சை புனல்வாசம்தான். இந்த ஐயத்தை வாங்கித் தந்த ஒலையில் சம்பந்தர் என்ன எழுதினார்:

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்

வீழ்க தண்புனல் வேந்ததும் ஒங்குக

ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே

சூழ்க வையகமும் துயுர் தார்க்கவே!

இதில் வையகம் துயர் தீர்க்கவே என்று உலகமெல்லாம் க்ஷேமமாக இருக்க

வேண்டும். ஸர்வேஜனா:ஸுகினோ பவந்து என்ற தத்துவத்தைச் சொல்கிறார். உலகில் உள்ள ஜீவராசிகள் யாவரும் சௌக்கியமாக இருக்க வேண்டுமென்று சொல்பவர்,

வாழ்க அந்தணர், ஆனினம் என்று தனியாக பிராம்மணர்களையும் பசுக்களையும் சொல்கிறாரே. அவை வையகத்தில் சேரவில்லையா, அது ஸ்வாமிகளுக்கு பக்ஷபாதமா என்று கேட்கலாம். இந்த இரு உயிரனங்களுக்கும் நடுவில் அவர் வைணவர் என்கிறார். வானவர்களுக்கான காரியம் யாகம். வானவர்களை யாகத்தினால் திருப்திப்படுத்தினால், மேற்படி பாட்டின் இரண்டாம் வரியில் சொன்ன தண்புனல் வீழ்கிறது. லோகமனைத்தின் க்ஷேமத்துக்காக மழை பெய்ய வேண்டுமென்றால், இதற்கு தேவர்களைப் பிரீதி செய்ய வேண்டும். இப்படி லோக க்ஷேமத்திற்காக தேவதைகளை பிரீர்த்தி செய்யவே யாகங்கள், யக்ஞங்கள் இருக்கின்றன. யாகம் செய்கிற கடமையைப் பெற்றவன் பிராம்மணன். யாகத்தில் ஆஹுதி செய்ய அத்தியாவசியமான நெய், பால் மற்றும் அதில் பிரயோஜனமாகும் எரிமுட்டை முதலியன ஆவினத்திடமிருந்தே வருகின்றன. வைதிய யாகங்களில் நம்பிக்கையற்ற சமணர்களை ஆட்சேபித்த சம்பந்தர், யாகத்தையே முக்கியமாக் கருதி, அதில் சம்பந்தப்பட்டிருப்பதால்தான் அந்தணரையும், ஆவினத்தையும் தனிப்பட வாழ்த்துகிறார். யாகம் செய்து, மழை பெய்து, சுபிக்ஷமாயுள்ள பூமியில் தர்மத்தை வளர்த்து அதர்மக்காரர்களை அடக்குவதற்காக வேந்தனை வழ்த்துகிறார். இப்படிப்பட்ட தர்ம ராஜ்ஜியத்தில் எங்கு பார்த்தாலும் ' அரன் நாமமே சூழ்க ' என்றார். ஹரன் என்பதுதான் தமிழில் அரன் என்றாகிறது. ஹர ஹர என்று எங்கு பார்த்தாலும் ஜனங்கள் கோஷிக்க வேண்டும் என்று அந்த தெய்வக் குழந்தை போட்ட ஆக்ஞாவிசேஷத்தால்தான் இன்றளவும், 'நம:பார்வதீ பதயே'என்று ஒருவர் சொன்னால், நாம் அத்தனை பெரும் ஹர ஹர மஹாதேவா என்கிறோம். அரோ ஹரா அண்ணாமலைக்கு அரோஹரா என்றெல்லாம் அத்தனை பெரும் சேர்ந்து சொல்கிறோம். முருகனுக்கு காவடி எடுத்து கோஷம் போட்டாலும் இந்த அரோஹராதான். தண்டாயுத பாணிக்கு அரோ ஹரா என்கிறோம்.

கோவிந்த நாமத்தை சொன்ன தெய்வக் குழந்தை யார்?நம் பகவத் பாதர்களாகிய ஸ்ரீஆதி சங்கராச்சாரியர்களே. எட்டு வயதுக் குழந்தையாக இருக்கும் போதே கோவிந்த பகவத் பாதர் என்ற மகானிடம் சன்னியாசம் வாங்கிக் கொண்ட ஸ்ரீ

ஆசாரியாளுக்கு, கோவிந்த நாமத்திலே விசேஷமான பற்று. தம் குரு, கீதாசாரியரான ஜகத்குரு கிருஷ்ணன் இருவருக்கும் கோவிந்த என்று பெயர் பொதுவாக இருந்ததால் நம் ஆசாரியர்களுக்கு இந்த நாமத்தில் அலாதி அபிமானம் ஏற்பட்டாற்போலிருக்கிறது. அவர் காசியில் சஞ்சாரம் செய்து கொண்டு வரும்போது, வயோதிக தசை வந்ததும் பகவானைத் தேடாமல் இலக்கணத்தை உறுவேற்றிக் கொண்டிருந்த ஒரு பண்டிதரைப் பார்த்ததும், பாலசங்கரருக்கு மனம் உருகியது. இந்த விஞ்ஞான சூத்திரம் மரணம் வந்த சமயத்தில் காப்பாற்றுமா?அப்போது வாக்கிலும் மனசிலும் கோவிந்த நாமம் இருந்தாலே அல்லவா சம்ஸாரத்திலிருந்து விடுபடலாம். என்று பண்டிதருக்கு உபதேசித்தார். அந்த ஒரு பண்டிதரை முன்னிலைப்படுத்தி, உலகத்தை எல்லாம் பார்த்து, பஜ கோவிந்தம், பஜகோவிந்தம் என்று பாடினார் ஸ்ரீ சங்கர பகவத்

பாதாள். பரமேசுவர அவதாரமான அந்தக் குழந்தையின் கட்டளைப்படிதான். இப்போது நாம் கோவிந்தா, கோவிந்தா என்று கூட்டத்திலே கோஷிக்கிறோம். தனியாக நாம் பல நாமங்களையும், மந்திரங்களையும், சொல்லி சிரேயஸ் பெற்றாலும், வையகம் துயர் தீர வேண்டுமென்றால், நாம் கோஷ்டியாக இந்த இரு நாமங்களையே கோஷம் செய்ய வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஸரஸ்வதி*

ஸரஸ்வதி பூஜையானது சரத்காலத்தில் வருகிறது. சரத் காலத்தில் நிகழ்வதால்தான் இந்த நவராத்திரிக்கே சாரத நவராத்திரி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. சாரதா என்ற பெயர் ஸரஸ்வதி தேவிக்கும் ஏற்பட்டிருக்கிறது. (சாரதா என்ற

பேருக்கு மந்திர சாஸ்திரத்தில் தத்வார்த்தமாக வேறு பொருள்களும் சொல்லியிருக்கிறது.)

காச்மீரத்தில் பண்டிதர்கள் அதிகம். பண்டிட் என்றே ஒரு ஜாதியைச் சொல்வார்கள். மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு எல்லாம்கூட இப்படிப்பட்ட பண்டிட்கள்தாம். அங்கே இப்படி வித்வத் கோஷ்டி நிறைய இருப்பதற்குக் காரணம், வாக்தேவியான (வாக்குத்தேவதையான) ஸரஸ்வதி ஆராதனை காஸ்மீர மண்டலத்தில் மிக அதிகமாக இருந்ததுதான். அங்கே சாரதாபீடம் எனறே ஒன்று இருந்தது. பாரத தேசத்தின் மகா பண்டிதர்களும் அந்த சாரதா பீடத்தில் ஏறினாலே தங்கள் வித்வாத்துக்குப் பட்டாபிஷேகம் செய்ததுபோல் எனறு கருதினார்கள்.

நம் தமிழ்நாட்டில், தொண்டை மண்டலத்தில் இருக்கிற காஞ்சிப் பகுதிக்கும் காச்மீர மண்டலம் என்று ஒரு பெயர் இருந்திருக்கிறது. வடக்கே கிருஷ்ணன் அவதரித்த மதுரை இருந்தால், தெற்கே மீனாக்ஷி அவதரித்த மதுரை இருக்கிறது. அங்கே ஒரு பாடலிபுத்திரம் இருப்பது போலவே, இங்கேயும் தமிழ்நாட்டில் ஒரு பாடலிபுத்திரம் இருக்கிறது. அதுதான் திருப்பாதிரிப்புலியூர். வடக்கே காசி இருப்பதுபோல், இங்கும் திருநெல்வேலியில் தென்காசி இருக்கிறது. இம்மாதிரி காஞ்சி மண்டலமே தக்ஷிணகாச்மீரமம். இங்கே ஸரஸ்வதியின் அருள் விசேஷமாக சாந்நித்தியம் பெற்றிருக்கிறது என்பதை மூகரும் ஸாரஸ்வத புருஷகார ஸாம்ராஜ்யே என்கிறார். ஊமையாக இருந்த மூகருக்கு சாக்ஷாத் காமாக்ஷியே வாக்தேவியாக வந்து அநுக்கிரகித்த விசேஷத்தினால்தான் அவர் மகா கவியானார். காமாக்ஷி ஆலயத்தில் எட்டுக் கைகளோடு கூடிய பரம செளந்தர்யமான ஒரு ஸரஸ்வதி பிம்பத்திற்கு சந்நிதி இருக்கிறது. ஆதி ஆச்சாரியாள் காஞ்சீபுரத்தில் சகல கலைகளிலும் தம் ஞானத்தைக் காட்டி ஸர்வக்ஞ பீடம் ஏறினார். இங்கே ஸ்தாபித்த (காமகோடி பீட) மடத்திற்கு சாரதா மடம் என்ற பெயரிட்டார். இதெல்லாம் காஞ்சிபுரத்திற்கும் ஸரஸ்வதிக்கும் இருக்கப்பட்ட விசேஷமான சம்பந்தத்தைக் காட்டுகின்றன.

ஆதியிலிருந்தே காஞ்சியில் கடிகாஸ்தானம் என்கிற வித்யாசாலைகள் நிறைய இருந்திருக்கின்றன. வடக்கே இருந்த நாலந்தா, தக்ஷசீலம் இவைபோல், இந்த

கடிகாஸ்தானங்களும் யூனிவர்ஸிட்டிப்போலப் பெரிதாக இருந்திருக்கின்றன. திருவல்லத்துக்கு அருகே உள்ள ஒரு கல்வெட்டில் 'கடிகை ஏழாயிரவர்'என்று

காண்பதிலிருந்து ஏழாயிரம் வித்தியார்த்திகள் இங்கு கல்வி பயின்றதைத் தெரிந்து கொள்ளலாம். மைசூரில், ஷிமோகா ஜில்லாவில், ஷிகார்பூர் என்று ஒரு ஊர் இருக்கிறது. அங்கே பிரணவேச்ரஸ்வாமி ஆலயத்தில் ஒரு மிகப் பழைய கல்வெட்டு இருக்கிறது. அதில் கி.பி. நாலாம் நூற்றாண்டில் கர்நாடகத்தை ஆண்ட மயூரவர்மன் தன் குருவான வீரசர்மனுடன் பல்லவேந்திரபுரி'யான காஞ்சி கடிகையில் படிக்க வந்த விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அரக்கோணத்தருகே வேலூர் பாளையத்தில் உள்ள ஒரு ஸம்ஸ்கிருதக் கல்வெட்டு, இன்று லோகப் பிரசித்தமாயிருக்கிற கைலாஸநாதர் கோயிலை நரசிம்மவர்மா என்கிற ராஜ சிம்ம பல்லவன் காட்டினான் என்று சொல்வதற்கு முன்பாக, அவன் காஞ்சிபுரத்திலிருந்த பழைய கடிகையை மீண்டும் நிறுவியதை முக்கிய விஷயமாகச் சொல்கிறது. அப்பர் சுவாமிகளும் கல்வியில் கரையில்லாத காஞ்சி என்கிறார்.

மூக பஞ்சதீயின் ஆர்யா சதக சுலோகமென்று காமாக்ஷியை சரஸ்வதியாகவே பாவிக்கிறது. விமலபட என்று அது ஆரம்பமாகிறது. அதாவது, மாசு மறுவே இல்லாத தூய வெள்ளக்கலை உடுத்தியிருக்கிறாள் என்கிறார். காச்மீரம் முழுதுமே இப்படித்தான் வெண்பனி மலைகளால் மூடப்பட்டு ஸரஸ்வதி மயமாக இருக்கிறது. சரத் காலத்தின் விசேஷமும் இது தான். சரத் சந்திரன் என்று கவிகள் விசேஷித்துச் சொல்கிற நிலவு இந்தக் காலத்தில்தான். மிகவும் தாவள்யமாக லோகம் முழுவதற்கும் தூய சந்திரிகையை ஆடை மாதிரிப் போர்த்துள்ளது. இந்த சரத் காலத்தில்தான் ஆகாசத்துக்கு வெள்ளாடை போர்த்தினது போல் எங்கே பார்த்தாலும் வெண்முகில்கள் சஞ்சரிக்கின்றன. ஸரஸ்வதி அநுக்ரஹிக்கிர உண்மையான வித்யை சரத்கால சந்திரனைப் போலவும், சரத்கால மேகத்தைப் போலவும், தாப சாந்தியாக, தூய்மையாக இருக்கும். வெறும் படிப்பு பலவிதமான தாபங்களையே உண்டாக்குகிறது. மெய்யறிவே தாபசாந்தியைத் தரும்.

ஸரஸ்வதி பூஜை காலத்தை நினைக்கிறபோது, இந்த தாப சாந்தியைச் சொல்லும்போது, இதற்கு அநுகூலமாக இன்னொன்றுகூடத் தோன்றுகிறது. வெளி உலகம் எப்படியிருக்கிறதோ அது நம் மனஸையும் அப்படி ஆக்குகிறது. பல பலவென்று விடிவதைப் பார்த்தால் நமக்கும் ஒரு உற்சாகம் தோன்றுகிறது. மப்பும், மந்தாரமும், அழுகைத் தூற்றலாகவும் இருந்தால், நமக்கும் களையே இல்லாமல் என்னவோபோல் துக்கமாயிருக்கிறது. விடிவதற்கு முந்தின ப்ராம்ம முகூர்த்தத்திலும், ஸாயங்கால ஸந்தியிலும் வெளி உலகில் ஒரு சாந்தி பரவியிருப்பதால் அப்போது நமக்கும் மனசு அடங்கி தியானத்தில் உட்காரத் தோன்றுகிறது. வெளியுலகம் இப்படித் தன்மயமாக்கும்போது, உள்ளத்தையும் தன் மயமாக்கப் பிரயாசை செய்தால், சாதாரணமாக மற்ற சமயங்களில் இருப்பதைவிட சுலபமாக மனசை நிறுத்தி, உள்ளும் புறமும் ஒன்றாகி, சாந்தத்தில் தோய்ந்திருக்க அநுகூலமாயிருக்கிறது. தினந்தோறும் வைகறை சந்தியையில் இப்படி இருப்பதைப் போல், ஒரு வருஷம் எடுத்துக்கொண்டால் ஒரு குறிப்பிட்ட பக்ஷம் முழுவதுமே இப்படி மனோலயத்திற்கு வசதியாக இருக்கிற பருவம் எதுவென்றால், அது ஸரஸ்வதி பூஜையை ஒட்டிய காலம்தான். சீதோஷ்ணம் பரம சுகமாக, ஹிதமாக,

வெயிலும் இல்லாமல், குளிரும் இல்லாமல் இருக்கிற காலம் இது. சாந்தமான சூரியன், தாவள்யமான சந்திரிகை, வெள்ளை வெளேர் என்ற மேகக் கூட்டங்கள் எல்லாம் இருக்கிற காலம்.

இதோலே விசேஷம் என்னவென்றால் பாரத பூமி முழுவதற்கும் இதே மாதிரியான சீதோஷ்ண நிலை இந்த சரத் கால ஆரம்பத்தில் மட்டும் இருப்பதுதான். மற்றப் பருவங்களில் பாரத தேசத்தின் ஒரு கோடியிலிருக்கிற பகுதியின் சூதோஷ்ணத்திற்கும் இன்னொரு கோடியிலுள்ள பகுதியின் சீதோஷ்ணத்திற்கும் ஏற்றத்தாழ்வு இருக்கும். பங்குனி, சித்திரை மாதங்களில் தமிழ் தேசத்தில் இருப்பதைவிட தெலுங்கு தேசத்தில் ஒரளவுக்கு ஜாஸ்தி உஷ்ணம். மத்யப்பிரதேசம், டில்லி இப்படிப்போனால் அங்கே நம் ஊரைவிட பத்து, பன்னிரண்டு டிகிரிக்குமேல் உஷ்ணமாயிருக்கும். இதேபோல் நம் நாட்டில் மார்கழி மாதத்தில் குளுருகிறது என்றால், இந்தக் குளிர் ஒன்றுமில்லை

என்கிற மாதிரி, வடக்கே ஜலம் ஜாஸ்தியாகப் போய்விடுகிறது. நம் சீமையில் ஓயாமல் மழை கொட்டுகிற ஐப்பசி, கார்த்திகையில் வடக்கே மழையில்லை. பக்கத்திலேயே கேரளாவில் வைகாசி கொஞ்சம் பேய்ந்தாலும், ஒரே வெயிலாக வறட்சியாகவே இருக்கிறது. இதே சமயத்தில் விந்திய பர்வத்தைச் சுற்றி மத்தியப்பிரதேசத்திலும் மான்ஸூன் மழை கொட்டுகிறது. இப்படி ஒவ்வொரு பிராந்தியத்தில் ஒவ்வொரு தினுஸாக இருக்கிற சீதோஷ்ணம் சரத்ருதுவின் ஆரம்பமான ஸரஸ்வதி பூஜா காலத்தில் தேசம் முழுவதற்கும் ஒரே மாதிரியாக 95 டிகிரிக்கு மேலே போய்ப் புழுங்காமலும் 75 டிகிரிக்குக் கீழே போய்க் குளிரில் நடுங்க வைக்காமலும், ரொம்பவும் ஹிதமாக, சுக சீதோஷ்ணமாக இருக்கிறது. இந்த சமயத்தில் காச்மீரத்திலிருந்து டில்லி, காசி, கல்கத்தா, பம்பாய், காஞ்சீபுரம், குடகு, கன்யாகுமாரி என்று எல்லா ஊர் Weather report-ஐயும் பார்த்தால் அதிகபட்ச, குறைந்த பட்ச டிகிரிகள் எல்லா இடத்திலும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாக இருக்கிறது. மற்ற சமயங்களில் ஒரே சீமைக்கும் இன்னொன்றுக்குமிடையே எட்டிலிருந்து பன்னிரண்டு டிகிரிவரை வித்தியாசம் இருந்தது போல் இப்போது இல்லை. சீதோஷ்ண ரீதியில் இந்த ஒரு சமயத்தில் நாம் வேறு வேறு என்று பிரிந்திராமல், அதாவது துவந்தம் போய் எல்லோரும் ஒரே மாதிரி நிலையில் சேர்ந்திருக்கிறோம். ஞானத்தினால் எல்லாம் ஒன்று என்று துவந்தத்தைப் போக்கி வைக்கிற வித்யா அதிதேவதையின் தெளிவான ஸ்வரூபம் போலவே இந்த சீதோஷ்ணம் இருக்கிறது. நம் தேசம் முழுவதும் இப்படி சமசீதோஷ்ண நிலையும், வெண்ணிறமும் சாந்தமும் அமையும்போது, வெளியுலகின் ஹிதத்தால் உள்ளுக்கும் சுலபத்தில் அந்த சமநிலையை உண்டாக்கிக்கொள்ள வசதியாக இருக்கிறது. இக்காலத்தில் இப்படிப்பட்ட குண விசேஷமே உருவெடுத்து வந்த ஸ்ரீ ஸரஸ்வதி தேவியின் ஆராதனமும் வருவதால். சகல ஜனங்களும் இதை எல்லாம் உணர்ந்து பூஜித்தால் ஞானமும் தெளிவும் பெற முடியும்.

ஜபமாலையும் ஏட்டுச்சுவடியும் ஞானத்தைத் தெரிவிக்கிற அடையாளங்கள் என்று எல்லோருக்கும் தெரியும். பரம ஞானமூர்த்திகளான தக்ஷிணாமூர்த்தி, ஸரஸ்வதி தேவி இருவர் கைகளிலும் இவற்றைக் காணலாம்.

ஏட்டுச் சுவடி வித்யையைக் குறிப்பது. 'வித்யை'என்றால் படிப்பு என்று

மட்டும் அர்த்தம் பண்ணிக்கொண்டு, இப்போது இருக்கிற படிப்பு முறையைப் பார்த்தால், வித்யை வேறு, ஞானம் வேறு என்றே தோன்றுகிறது. வித்யைதான் ஞானம் என்கிற பழைய முறை போய்விட்டது. முன்பெல்லாம் சகல வித்யைகளும் பரமாத்மாவைக் காட்டிக் கொடுக்கவே ஏற்பட்டிருந்தன. திருவள்ளுவரும், பரமேசுவரனைப் பாத பூஜை பண்ணி வைக்காத ஒரு படிப்பினால் என்ன பயன் என்று கேட்கிறார்.

கற்றதனால் ஆயபயன் என்கொல் வால்அறிவன்

நற்றால் தொழாஅர் எனின்?

அகங்காரம் எல்லாம் அடிபட்டுப்போய்ப் பரமாத்ம வஸ்துவுடன் சேருகிற ஞானத்தைத் தரவே சகல வித்யைகளும் ஆதியில் ஏற்பட்டிருந்தன. மற்ற அகங்காரங்கள் ஒரு பக்கம் இருக்க, நாம் வித்வான் என்பதாக படிப்பினாலேயே ஒரு பெரிய அகம்பாவம் வந்துவிடும். இதனால்தான், நம் பூர்விகர்கள் வித்தையோடு, விநயத்தையும் சேர்த்துச் சேர்த்துச் சொன்னார்:வித்யா விநய ஸம்பன்னே,

இப்போது படிப்பு எல்லாம் லௌக்கியத்துக்காகத்தான் என்று ஆகிவிட்டது. பலவிதமான வித்யைகள், ஸயன்ஸுகளைத் தெரிந்து கொண்டு வெகுசாமர்த்தியமாக பாபங்களைப் பண்ணிப் பிறரிடமிருந்து தப்பித்துக்கொண்டு பெருமைப்படுகிறோம். இப்போதய படிப்பினால் வருகிற விஷய அறிவை ஞானம் என்று சொல்வதனால், அஞ்ஞானம்தான் மோக்ஷ சாதனம் என்று சொல்ல வந்த அத்வைதத்துக்கு நான் பிரதிநிதி என்று பேர். ஆனால், இப்போது படித்தவர்களின் நாகரீக தேசங்களில் நடக்கிற அரியகீரியங்களைப் பார்க்கிறபோது, எதுவுமே தெரியாமல், எழுத்தரிவே இல்லாமல், பரம அஞ்ஞானிகளாக இருந்துகொண்டு, பகவான் என்கிற ஒருத்தனை நம்பிப் பாவத்துக்குப் பயந்து, கள்ளங் கபடமில்லாமல் இருக்கிற ஆதிவாசிகளும் காட்டுக் குடிகளும்தான் ஈஸ்வரப் பிரசாதம் பெறுபவர்கள் என்றே தோன்றுகிறது. நாம்கூட அப்படி ஆகிவிட்டால் தேவலை போலிருக்கிறது. ஆனால்,

இப்போதுள்ள வித்யைகளும் போதனை முறைகளும் வெற்று லௌகிகத்துக்கும் அகங்காரத்துக்குமே ஆஸ்பதமாக இருக்கின்றன என்பதால், ஆத்மார்த்தமான சாஸ்திரங்களை, கலைகளை, வித்யைகளைக் குறைவாகப் பேசக் கூடாதுதான். இவை எல்லாம் அகங்காரத்தைக் கரைத்து, லோக க்ஷேமத்தையும் தரவே நம் தேசத்தில் ஏற்பட்டிருந்தன. இப்போதும்கூடப் புதிது புதிதாக விருத்தியாகியிருக்கிற வித்யைகள், டெக்னாலஜி ஆகியவற்றால் எத்தனையோ லோக க்ஷேமத்தை உண்டாக்கலாம். நல்லறிவை வளர்த்துக் கொள்ளலாம். எல்லா எலிமென்டுகளுக்கும் மூலமான எனர்ஜி ஒன்றேதான் எனறு கண்டுபிடித்து விட்ட அடாமிக் (அணு) ஸயன்ஸிலேயே நன்றாக ஊறினால், அதுவேகூட ஆத்மிக அத்வைதத்துக்குக் கொண்டுபோய் விட்டுவிடும். ஓயாமல் ஆசை வாய்ப்பட்டுப் பறப்பாகப் பறந்து கொண்டிராமல் ஆன்றோர்கள் போட்டுத் தந்த வாழ்க்கை முறையே நாம் மேற்கொண்டு, வித்யைகளை அப்பியசித்து வந்தால், இன்றும் அவை புறத்துக்கு நல்லது செய்யும். உள்ளுக்கு ஞானமும் தரும். மருந்தோடு பத்தியமும் முக்கியம். வித்யை என்கிற மருந்துக்கு அடக்கம், விநயம் என்கிற பத்தியம் அவசியம். இப்போது அது இல்லாததால் மருந்தே விஷயமாகியிருக்கிறது. ஆனால், அடக்கத்தோடு பயின்றால் வித்யையே உண்மையில் ஞானம் தரும் அமிருத்தமாகும். அதனால்தான் ஞானமூர்த்திகளான தக்ஷிணாமூர்த்தி, ஸரஸ்வதி இரண்டு பேரையுமே வித்யா தேவதைகளாகவும் வைத்திருக்கிறார்கள். ஸரஸ்வதி, சகல கலைவாணி, வித்யா ஸ்வரூபிணி என்று எல்லோருமே அறிவீர்கள். சர்வ வித்யைகளுக்கும் பிரபு (ஈசானன்) என்றே வேதம் ஸதாசிவனான தக்ஷிணாமூர்த்தியைச் சொல்லுகிறது. பேச்சு, காரியம் அறிவது எல்லாம் அடங்கிப் போன நிலையிலிருக்கிற தக்ஷிணாமூர்த்தியே மேதா தக்ஷிணாமூர்த்தியாகிப் பெரிய புத்திப் பிரகாசம், வாக்குவன்மை, வித்வ சக்தி எல்லாம் தருகிறார். ஸரஸ்வதி தக்ஷிணாமூர்த்தி இருவரும் அக்ஷமாலை, சுவடி இவற்றோடு சந்திர கலையைத் தலையில் தரித்திருக்கிறார்கள். அதற்குப் பேரே கலை. கலை என்றால் எது வளருகிறதோ அது. வித்யைக்கு முடிவே இல்லை. கற்றது கை மண் அளவு கல்லாதது உலக அளவு என்று ஸரஸ்வதியே விநயத்தோடு நினைக்கிறார்களாம். இவள் தலையில் வைத்திருப்பது

மூன்றாம் பிறை. அது பூரண சந்திரனாக வளர வேண்டும்.

ஸரஸ்வதிக்கும் தக்ஷிணாமூர்த்தியைப் போலவே நெற்றிக் கண் உண்டு. ஆசை பஸ்மமானாலொழிய ஞானமில்லை. அதற்காகத்தான் காமனை எரித்த நெற்றிக்கண் இவளிடமும் இருக்கிறது. இவ்விரண்டு தெய்வங்களுக்கும் ஜடா மகுடம் இருக்கிறது. அதுவும் ஞானிகள் அடையாளம்.

இருவருமே வெள்ளை வெளேரென்று இருக்கிறார்கள். ஏழு வர்ணங்களில் சேராத வெள்ளை, பரம நிர்மலமான சுத்த ஸத்வ நிலையைக் குறிப்பது. இந்த வெள்ளையும்கூட இன்னும் நிர்மலமாக, தன் வழியாக ஒளி ஊடுருவிச் செல்கிற அளவுக்கு, (transparent) தெளிந்துவிடுகிறபோது ஸ்படிகமாகிறது. தக்ஷிணா மூர்த்தி, ஸரஸ்வதி இருவருமே இப்படிப்பட்ட ஸ்படிகத்தினாலான அக்ஷமாலையைத்தான் வைத்திருக்கிறார்கள். வெள்ளை நிறம், சந்திர கலை, ஸ்படிகமாலை ஆகிய இவற்றை நினைத்தாலே நமக்கு ஒரு தூய்மை, தாப சாந்தி, அமைதி எல்லாம் உண்டாகின்றன.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

### *தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### *மஹாலக்ஷ்மி*

பொருளில்லாருக்கு இவ்வுலகம் இல்லை என்றார் திருவள்ளுவர். எல்லோரும் வீடு வாசலை விட்டுவிட்டு ஆத்ம விசாரத்தில் ஈடுபட முடியாது. உலக வாழ்க்கையை நடத்துவதனால் பணம் வேண்டித்தான் இருக்கிறது. இப்படிச் சம்பாதித்து குடும்பம் நடத்துபவர்கள் இருப்பதனால்தான் வேறு சிலர் ஆத்ம விசாரம் செய்ய முடிகிறது. பொருள் தேடி வாழ்க்கை நடத்தும் கிருஹஸ்தர்கள் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்ட சந்நியாசிகளுக்கு பிக்ஷை அளித்து அவர்களை ரக்ஷிக்கிறார்கள். கிருஹஸ்தர்கள் இல்லாவிட்டால், பொருளைப் பற்றி நிர்விசாரமாக சந்நியாசிகள் என்று சிலர் ஞானம், பக்தி இவற்றிலேயே ஈடுபட்டிருக்க முடியாது.

பொருள் பணம் என்பது பொருள் இல்லாதது. அர்த்தம் அனர்த்தம் என்று சொன்ன அதே ஆதி சங்கராச்சாரியர்கள், அதே பஜகோவிந்தத்தில் பணப் பேராசை பிடித்து அலையாதே. ஆனால் உனக்கு உரிய கர்மத்தினால் நீ சம்பாதிக்கிற பொருள்களைக் கொண்டு நியாயமாக வாழ்ந்து உன்னையே உயர்த்துக் கொள் என்றார்.

யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்

வித்தம் தேன நிநோதய சித்தம்.

செல்வத்துக்கு அதி தேவதையாக இருக்கப்பட்டவள் மஹாலக்ஷ்மி. அவளைப் பிரார்த்தித்தால் நமக்கு தர்ம நியாயமாக வேண்டிய சம்பத்தைத் தந்து அநுக்கிரகம் செய்வாள். ஞான, வைராக்கியக் கிரந்தங்களை நிறையச் செய்த ஸ்ரீ ஆச்சாரியாள் தம்முடைய பரம காருண்யத்தால் விவகார தசையிலுள்ள லோக ஜனங்களை உத்தேசித்து அவர்கள் மஹாலக்ஷ்மியை எப்படிப் பிரார்த்திக்க வேண்டும் என்று சொல்லிக்கொடுக்கிற மாதிரி, கனகதாரா ஸ்தவம் என்ற லக்ஷ்மீ பரமான ஸ்தோத்திரத்தை, நமக்கு அநுக்கிரகித்திருக்கிறார்.

இந்தக் கனகதாரா ஸ்தவம் உண்டானதற்கு ஒரு கதை உண்டு. ஆசாரியார் சன்னியாசம் வாங்கிக் கொள்வதற்கு முற்பட்ட கதை அது. அவர் பால தசையில் காலடியில் பிரம்மச்சாரியாக குருகுலவாசம் செய்துவிட்டு வீடு வீடாகத் பிக்ஷை வாங்கிக் தந்த சமயம். ஒரு துவாதசியன்று பரம தரித்திரன் ஒருவன் வீட்டுக்கு பிக்ஷைக்காகப் போனார். அவருக்கு அநுக்கிரகம் பண்ணவவே போனார். அவனுக்கு அநுக்கிரகம் பண்ணவே போனார் போலிருக்கிறது. இவர் போன போது உஞ்சவிருத்திப் பிராமணனாகிய வீட்டுக்காரன் வீட்டில் இல்லை. பத்தினி மட்டும் தான் இருந்தாள். இவரைப் பார்த்த மாத்திரத்தில், அடடா!எப்படிப்பட்ட தேஜஸ்வியான பிரம்மச்சாரி!இவருக்குப் பிஷை போட்டால் சகல புண்ணியமும் உண்டாகும் என்று நினைத்தாள். ஆனால், பிக்ஷை போடத்தான் வீட்டில் ஒரு மணி அரிசிகூட இல்லை. தேடித்தேடி பார்த்ததில் ஒரு புரையில் அழுகல் நெல்லிக்காய் கிடைத்தது. துவாதசிப்பாரணைக்காக அவள் புருஷன் சேமித்து வைத்திருந்த நெல்லி. போயும் போயும் இதையா அந்தத் தெய்வக் குழந்தைக்கு போடுவது எனறு மனசு குமுறி

வேதனைப்பட்டாள். ஆனால் பவதி பிக்ஷாம் தேஹி என்று கேட்டுவிட்ட பிரம்மச்சாரியை வெறுமே திருப்பி அநுப்பக்கூடாது என்பதால் வாசலுக்குப் போனாள். அங்கே மகா தேஜஸ்வியாக நிற்கிற பாலசங்கரரைப் பார்த்துத் சொல்லி முடியாத வெட்கத்தோடும், அழுகையோடும் திரும்ப உள்ளே வந்தாள், வந்த பிறகு, ஐயோ இருக்கப்பட்ட தெய்வக் குழந்தைக்கு ஒன்றும் போடாமலிருப்பதா?என்று நினைத்து வாசலுக்குப் போனாள். இப்படி வாசலுக்கும் உள்ளுக்குமாகத் தவித்து தவித்து நடமாடிவிட்டு கடைசியில் அழுகலோ மட்டமோ?நம்மிடம் இருப்பதைத்தானே கொடுக்க முடியும்!என்று ஒரு மாதிரி மனஸைத் தேற்றிக்கொண்டு அந்த அழுகல் நெல்லிக்கனியை ஆசாரியாளுக்குப் போட்டாள்.

பொருளில் தரித்திரமாக இருந்தாலும், அவளுடைய மனசு எத்தனை பெரியது என்பதையும், அவளுக்கு தன்னிடம் எத்தனை அன்பு பொங்குகிறது என்பதையும் ஆசாரியாள் கண்டுகொண்டார். அவர் மனசு அவளுக்காக உருகிறது. உடனேதான் அவளுக்காக மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தித்து, கனகதாரா ஸ்தவம் பாடினார்.

(இவ்விஷயம் அடுத்த உரையிலும் தொடரும்)

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

பராசக்தியே மஹாலக்ஷ்மி

ஆசாரியாள் மஹாலக்ஷ்மியை துதிக்கிறபோது ஆகாசத்திலிருந்து அசிரீரீ கேட்டது. இந்த ஏழைப் பிராமண தம்பதி எத்தனையோ ஜன்மங்களாகப் பாவம் செய்தவர்கள். அதற்கு தண்டனையாகத்தான் தாரித்திரியம். பாவம் தொலைகிற காலம் வருகிற வரையில் இவர்களுக்குச் சம்பத்தைத் தருவதில்லை என்றது அசிரீரீ.

உடனே ஆசாரியாள், இவர்கள் ஜன்மாந்தரக்காரர்களாகச் செய்த பாவம் இப்போது இருப்பதைவிடக்கூட அதிகமாக வேண்டுமானாலும் இருக்கட்டும், இத்தனை அன்போடு அகத்தில் இருந்த ஒரே பக்ஷ்யமான நெல்லிக் கனியையும் எனக்கு இவள் போட்டிருக்கிறாளே. இந்த அன்பும் தியாகமும் எத்தனை புன்னியமானவை. சாப்பாட்டுக் இல்லாத இவள் எனக்குப் பிக்ஷை போட்ட பலன் எத்தனை பாவத்தையும் சாப்பிட்டு விடுமே என்றார். அம்மா, மஹாலக்ஷ்மி, இவளுக்கு இருக்கிற மாதிரி உனக்கும் நிறைய அன்பு இருக்கிறதே!அதனால் ரொம்பக் கண்டிப்போடு நியாயம் மட்டும் வழங்காமல், அன்பைக் காட்டி அநுக்கிரகம் பண்ணம்மா என்று லக்ஷ்மியைப் பிரார்த்தித்தார்.

லக்ஷ்மியிடம் அவர் ஏழைப் பிராமண ஸ்திரீக்காக முறையிட்டதற்கு கனகதாரா ஸ்தவ"த்திலேயே உட்சான்று (Internal evidence) இருக்கிறது. தத்யாத் தயாநுபவனோ என்கிற சுலோகத்தில் இது வெளியாகிறது. சாதக பட்சி மழைத் துளிக்கு ஏங்குகிற மாதிரி இவர்கள் சம்பத்துக்காக ஏங்குகிறார்கள். இவர்களுடைய பூர்வபாவம் மழையே இல்லாத கோடை மாதிரி, இவர்களைத் தகிக்கிறது என்பது வாஸ்தவம்தான். ஆனாலும் உன்னிடம் தயை என்கிற காற்று இருக்கிறதல்லவா?அந்தக் காற்றினால் உன் கடாக்ஷ மேகத்தைத் தள்ளிக் கொண்டு வந்து இவர்களுக்குச் செல்வ மழையைப் பொழியம்மா!என்கிறார், இந்தச் சுலோகத்தில்.

இப்படி அவர் ஸ்தோத்திரத்தைப் பாடி முடித்ததும், மஹாலக்ஷ்மிக்கு மனம் குளிர்ந்தது. அந்த ஏழைப் பெண் அன்போடு போட்ட ஒரு அழுகல் நெல்லிப் பழத்துக்குப் பிரதியாக அந்த வீட்டு வேலி எல்லை வரையில் தங்க நெல்லிக் கனிகளை மழையாகப் பொழிந்து விட்டாள்.

இதனால்தான் அந்த ஸ்தோத்திரத்திற்கு கனகதாரா ஸ்தவம் என்கிற பேரே உண்டாயிற்று. கனகதாரா என்றால் பொன்மழை என்று அர்த்தம். ஸ்தவம் என்றாலும் ஸ்துதி என்றாலும் ஒன்றேதான்.

ஆசாரியாள் முதல் முதலாகச் செய்த ஸ்துதி இதுதான் என்பது இதற்கு ஒரு விசேஷமான பெருமை. ஆசார்யாளுடைய அன்பு, பிராம்மண பத்தினியின் அன்பு.

மஹாலக்ஷ்மியின் அன்பு, எல்லாம் இதில் சேர்ந்திருக்கின்றன. அதனால் இதைப் பாராயணம் செய்கிறவர்களுக்கும் துர்பிக்ஷங்கள் நீங்கி, தர்ம நியாயமாக் காலக்ஷேபம் நடத்துவதற்குக் குறைவில்லாதபடி சம்பத்து கிடைக்கும்.

ஆசாரியாள் எல்லாம் ஒன்றே என்று சொன்னவர் முடிவில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்குமே பேதமில்லை என்றவர். அதனால் அவருக்குத் தெய்வங்களிடையே பேதபுத்தியே கிடையாது. எல்லாத் தெய்வங்களும் ஒரே பராசக்தியின் ரூபங்கள் தாம் என்று அவர் எப்போதும் வலியுறுத்துவார். அம்மாதிரி ஒரு சுலோகம் இந்த ஸ்தோத்திரத்திலும் இருக்கிறது. கீர்தேவதேதி என்று ஆரம்பிக்கும். கருடக் கொடியோனான மஹா விஷ்ணுவின் பத்தினி என்று சொல்லப்படுகிற நீயேதான் வாக்தேவியான ஸரஸ்வதியாகவும், தாவர வளத்தைத் தருகிற சாகம்பரியாகவும், சந்திர மௌலீசுவரரின் பத்தினியான பார்வதியாகவும், இருக்கிறாய். மூன்று லோகங்களும் குருவான ஒரு பரமாத்மா இருக்கிறது. அதன் சக்தியே நீ. இருவருக்குமாகச் சேர்ந்து உலக சிருஷ்டி பரிபாலனம், சம்ஹாரம் என்கிற விளையாட்டை விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள் என்கிறார்.

பராசக்தியான காமாக்ஷிக்கும் காஞ்சி மண்டலத்தில் இதே மாதிரியாகப் பொன் மழை பொழிந்து மஹாலக்ஷ்மிக்கும் தனக்கும் அபேதத்தைக் காட்டியிருக்கிறாள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*மஹான்களுக்கு அருளிய மஹாலக்ஷ்மி*

காஞ்சியில் காமாக்ஷி பொன்மழை பொழ்ந்தது பற்றி மூகர் பஞ்ச சதீயில் பாடியிருக்கிறார். (கண்டீக்ருத்ய - ஸ்துதிசதகம்) துண்டீர தேசத்தில் ஸ்வர்ண வர்ஷத்தைப் பொழிந்தவள் என்கிறார். துண்டீரம் என்பதே தமிழில் தொண்டை மண்டலம்

என்பது. பல்லவர்களின் தலைநகரான காஞ்சியைச் சுற்றிய சீமைக்குத் தொண்டை மண்டலம் என்று பெயர். இப்போதும் இந்தச் சீமையில் பொன் விளைந்த களத்தூர் என்றே ஓர் ஊர் இருப்பது உங்களில் சிலருக்குத் தெரிந்திருக்கலாம்.

அத்வைத ஸ்தாபகாசாரியரான ஸ்ரீ சங்கரருக்காகக் காலடியில் பொன்மழை பெய்த மஹாலக்ஷ்மி, காஞ்சிபுரத்தில் விசிஷ்டாத்வைத ஆசாரியரான ஸ்ரீ வேதாந்த தேசிகனுக்காகவும் பொன்மழை பெய்திருக்கிறாள். வேதங்களின் முடிவான உபநிஷதங்களில் கரை கடந்தவர் என்பதாக, அவரை, நிகமாந்த மஹா தேசிகன் என்றே சொல்வார்கள். நிகமாந்த என்றாலும் வேதாந்த என்றாலும் ஒன்றுதான். ஸர்வ தந்திர ஸ்வதந்திரர் என்றும் அவருக்கு சிறப்பு உண்டு. குதிரை முகம் கொண்ட மஹா விஷ்ணுவான ஹயக்ரீவர் அவருக்குப் பிரத்யட்சம். வடகலை சம்பிரதாயத்திற்கு மூலபுருஷர் அவர். தமக்கென்று திரவியமே வைத்துக் கொள்ளமல், பிக்ஷை எடுத்துதான் ஜீவித்து வந்தார். பெரியவர்களாக யார் இருந்தாலும் அவர்களுக்கு விரோதிகள் இருப்பார்கள். அந்தப் பெரியவரை அவமானப்படுத்திப் பார்க்க வேண்டும் என்று சூழ்ச்சி செய்கிறவர்கள் இருப்பார்கள். ஸ்ரீ வேதாந்த தேசிகருக்கும் இப்படிப்பட்ட விரோதிகள் இருந்தார்கள். 'ஸர்வதந்திர ஸ்வதந்திரர்'என்றால் வெளி சகாயம் எதுவும் இல்லாமலே தாமே எதையும் சாதிக்கக்கூடியவராக இருக்க வேண்டும். இந்த தேசிகன் அப்படி எதையும் சாதித்துவிட முடியாது என்று நிரூபித்துவிட வேண்டும். ஸர்வதந்திரஸ்வ தந்திரப்பட்டம் அவருக்குப் பொருந்தாது என்று லோகத்துக்குக்காட்டி மானபங்கப்படுத்த வேண்டும் என்று அவருடைய விரோதிகள் நினைத்து, ஒரு சூழ்ச்சி செய்தார்கள்.

பரம ஏழையான ஒரு அசட்டுப் பிராம்மணப் பையன் கல்யாணம் ஆகாமல் ரொம்பவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். பணம், புத்தி இரண்டும் இல்லாதவனுக்கு, யார் பெண் கொடுப்பார்கள்?தேசிகரின் விரோதிகள் இந்தத் தடிமாட்டு பிரம்மச்சாரியைக் கொண்டு, அவரை அவமானப்படுத்தி விடலாம் என்று நினைத்தார்கள். இந்தப் பையன் போய் அவரிடம் பணமுடிப்பு வேண்டும் என்று பிரார்த்தனைப் பண்ண வேண்டும். அவரிடமே திரவியம்

இல்லை. இவனுக்காக அவர் பிறத்தியாரையும் யாசிக்கக்கூடாது. 'ஸர்வதந்திர ஸ்வதத்திர' என்றால், அவராகவவே எப்படியோ இவருக்கு வேண்டிய தனத்தை உண்டாக்கித் தந்துவிட வேண்டும். அவரால் இப்படிச் செய்யமுடியாது. உடனே, எப்படி அய்யா பெரிய பட்டத்தை வைத்துக் கொள்ளலாம்?என்று கேட்டு, அவருடைய மானத்தை வாங்கிவிட வேண்டும் என்று திட்டம் போட்டார்கள். அந்தப் பிரகாரமே ஏழைப் பிரம்மச்சாரி போய்த் தன் கல்யாணத்துக்குப் பணம் வேண்டும் என்று யாசித்தான்.

(இதிலிருந்து நான் சொல்ல வந்த விஷயத்துக்கு சம்பந்தமில்லாவிட்டாலும், என் மனஸில் ரொம்பவும் முக்கியமாக உள்ள இன்னொரு விஷயத்துக்கும் ஆதரவு கிடைக்கிறது. அதாவது அவர் காலத்தில் - அதாவது எழுநூறு வருஷங்களுக்கு முந்தி - பிள்ளை வீட்டுக்காரன்தான் பெண் வீட்டுக்குப் பணம் கொடுத்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டான். வரதக்ஷிணை வாங்குகிற பழக்கம் இல்லை என்று நிரூபணமாகிறது.)

வேதாந்த தேசிகருக்கு இது விரோதிகள் சூழ்ச்சி என்று தெரிந்துவிட்டது. இருந்தாலும், அவர் தன்னை அவமானப்படுத்த வந்தவனிடமும் கருணை கொண்டார். ஷ்ருஸ்துதி என்ற உத்தமமான ஸ்தோத்திரத்தால் மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தித்தார். உடனே பொன் மழை பொழிந்தது. அதை பிரம்மச்சாரிக்குக் கொடுத்தார். விரோதிகளால் பெரியவர்களுக்குக் கடைசியில் மேலும் பெருமை உண்டாகும். சங்கரர், தேசிகர் இவர்களின் கருணையிலிருந்து வாக்கு மழையாகப் பொழ்ந்தது. பொன்னும் மழையாகப் பொழிந்தது. அத்வைத ஆச்சாரியாள், பக்தி அநுக்கிரகமாக லக்ஷ்மியை ஸ்தோத்திரம் செய்தார் என்றால், விசிஷ்டாத்வைத ஆச்சாரியரோ, விரோதிகளின் ஆளாக வந்தவனுக்கும் அநுக்கிரகத்தோடு அதே லக்ஷ்மியை வேண்டினார்.

மஹாலக்ஷ்மியின் பரமாநுக்கிரகத்தைப் பெற்ற இன்னொரு மஹான் ஸ்ரீ வித்யாரண்யர். அத்வைத ஆசாரியர்களில் மிகவும் சிரேஷ்டமான ஸ்தானம் அவருக்கு உண்டு. ஆனால், அவருடைய முழுப் பெருமை இது மட்டுமில்லை. நாலு

வேதங்களுக்கும் சேர்த்து பாஷ்யம் பண்ணின மஹாபுருஷர் அவர். ஜோதிஷம், வைத்திய சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், (ராஜ்ய பரிபாலனம் பண்ண உதவும்) அர்த்த சாஸ்திரம், இலக்கியத்துறை என்றிப்படி எல்லாவற்றுக்கும் கிரந்தங்கள் உபகரித்தவர் அவர். அவருடைய பெயரே காரணப் பெயராக இருக்கிறது. வித்யா - அரண்யர். அரண்யம் என்றால் காடு. ஒரு பெரிய காட்டில் பல தினுசான மரம், செடி, கொடுகளும் மண்டியிருக்கிற மாதிரி வித்யையின் பல துறைகளுக்கும் அவரிடம் செழித்திருக்கின்றன.

இவறைப்பற்றி நான் சொல்லப்போகிற கதையை சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொள்வார்களோ, மாட்டார்களே ா?ஹிஸ்டரிக்காரர் மிஸ்டெரி (அற்புத நிகழ்ச்சி) வந்தால் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். ஆனால், இன்றைக்கும் ஸயன்ஸுக்குப் பிடிபடாத அற்புதங்களைபப் பற்றிக் கொண்டு கேள்விப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறோம்.

கதை இதுதான். பூர்வாசிரமத்தில் வித்யாரண்யர் ஏழைப் பிரம்மச்சாரியாக இருந்தபோது, மஹாலக்ஷ்மியைக் குறித்துகக் கடும் தபஸ் இருந்தார். இவருடைய சிரத்தையை மெச்சி மஹாலக்ஷ்மி பிரச்சன்னமானாள். ஆனால், ஒரு குண்டைத் தூக்கிப்போட்டாள். இந்த ஜன்மாவில் உனக்குத் திராவியம் பெறுகிற யோக்கியதை இல்லை. அது விதியின் நிர்ணயம். அடுத்த ஜன்மாவில் அநுக்கிரக்கிறேன் என்றுகூறி அந்தர்த்தனமாகி விட்டாள்.

பிற்காலத்தில் இரண்டாவது சங்கரர் என்கிற அளவுக்குப் பெறப் போகிறவர் இவர். அதற்கேற்றாற்போல், இப்போதே ஆதி சங்கரர் செய்த ஒரு சாமர்த்தியத்தை இவரும் செய்து காட்டிவிட்டார். அது என்ன சாமர்த்தியம்?

தாம் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு அம்மாவின் அநுமதியைப் பெறுவதற்காக ஆதிசங்கரர் செய்த சாமர்த்தியம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அம்மாவோடு குளிக்கப்போன பிரம்மச்சாரி சங்கரர் ஆற்றில் முதலையின் பிடிப்புக்கு வேண்டுமென்றே ஆளானார். தாயார்க்காரி பதறினாள். அம்மா, நீ பதற வேண்டாம். நான் சந்நியாசம் வாங்கிக் கொள்ள நீ அநுமதி தந்தால் முதலை என்னை விட்டுவிட்டும். ஏனென்றால், துறவு பெற்றுவிட்டால் அது மறு ஜன்மாபோலாகும். இந்த ஜன்மாவில் முதலையின் பிடிப்புக்கு

ஆளாக வேண்டும் என்று எனக்கு விதி இருக்கிறது. அடுத்த ஜன்மாவில் எது என்னைப் பாதிக்காது என்றார் சங்கரர். அந்தத் தர்மசங்டமான நிலையில், பெற்ற தாயார் ஒருத்தி அனுமதி தராமலிருக்க முடியுமா?இவ்விதமாக ஆசாரியாள் சாமர்த்தியம் பண்ணி - தாயாரின் அங்கீககாரம் பெற்று - சந்நியாசியாவதாக அப்போதே சங்கற்பம் செய்து கொண்டார். உடனே முதலையும் அவரை விட்டுவிட்டது.

இந்த ஜன்மாவில் உனக்கு அருள் பண்ணுவதற்கில்லை. என்று மஹாலக்ஷ்மி வித்யாரண்யரிடம் சொன்னவுடன், இவரும் அதே தந்திரத்தை (Tacties) மேற்கொண்டார். அதாவது, உடனே சந்நியாச ஆசிரமம் மேற்கொண்டு விட்டார். அம்மா!மறு ஜன்மா வந்துவிட்டது. இப்போது ஐஸ்வரியத்தைக் கொடு என்று லக்ஷ்மியிடம் சொன்னார்.

அவளும் தன் வாக்குப் பிரகாரம் ஸ்வர்ணத்தை வர்ஷித்துவிட்டாள். சுற்றிலும் எங்கு பார்த்தாலும் தங்கமும் நவநிதியும் கொட்டிக் கிடக்கிறது. சந்நியாசியான வித்யாரண்யருக்கு அதைப் பார்த்தாலும், தாங்க முடியாத ஏமாற்றமும், துக்கமுமாக விட்டது. அடடா, தந்திரம் செய்வதாக நினைத்தேன். கடைசியில் ஏமாந்தல்லவோ போய்விட்டேன். வீட்டின் ஏழ்மை போவதற்காக தனம் யாசித்தேன். இப்போதோ துறவியாகி விட்டேன். இனிமேல் எனக்கு ஏது வீடு?சந்நியாசி பணத்தைத் தீண்டவே கூடாதே. சுயம்கிருத அனர்த்த வாங்கிக் கொண்டிருக்கிறேனே!விதிப்பிரகாரம் ஏழையாகவே வாழ்ந்து ஆயுளை விட்டிருந்தாலும், அடுத்த ஜன்மாவிலாவது இத்தனை ஐச்வரியமும் பெற்று ராஜபோகமாக இருந்திருக்கலாமே என்று அழ ஆரம்பித்து விட்டார்.

வித்யாரண்யர் மட்டுமில்லை. நம்மில் ரொம்பப் பேர் இப்படித்தான் வேண்டாததற்கெல்லாம் ஸ்வாமியை வேண்டிக்கொண்டு, அவர் நம்மிஷ்டப்படி கிருபை செய்தபின் அடாடா, நம்மிஷ்டம் என்று ஏன் ஒன்று இருக்கவேண்டும். அவர் இஷ்டம் என்று விட்டிருக்கக்கூடாதா. இப்போது அறியாமையால் அனர்த்த பரம்பரையை அல்லவா வலிய வாங்கிக் கட்டிக்கொண்டிருக்கிறோம். என்று விசனிக்க வேண்டியதாயிற்று. நமக்கு எது வேண்டும் என்று அவருக்கே

தெரியும் என்று விடுவதுதான் புத்திசாலித்தனம்.

வித்யாரண்யர் மகா புத்திமானாதலால் விசனம் உடனே தெளிந்தது. ஒரு காரமார்த்தமாகத்தான் அம்பாள் இப்படி விளையாடியிருக்கிறாள் என்று புரிந்து கொண்டார்.

அது மாலிக்காபூரின் தட்சிண தேசப் படை எடுப்பை ஒட்டிய காலம். துருக்கனான மாலிக்காபூர் ராமேசுவரம் வரையில் போய் ஹதாஹதம் செய்திருந்தான். முக்கியமாக நம் பிரசித்தி பெற்ற ஆலயங்களையெல்லாம் முக்கியமாக பண்ணினான். நம் தர்மங்களை அழித்தான். அந்த சமயத்தில் அதை எதிர்த்து நிற்க, நல்ல திரவிய வசதியுள்ள ஹிந்து சாம்ராஜ்ஜியத்தை மேலோங்கி வருமாறு ஸ்தாபனம் பண்ணுவோம் என்று தீர்மானித்தார்.

அவருடைய சொந்த நஷ்டம் ஸநாதன ஹிந்து தர்மத்துக்கே பெரிய லாபமாகப் பரிணமித்தது.

வித்யாரண்யர் சகல சாஸ்திரமும் அறிந்தவர். அவற்றில் சகுன சாஸ்திரம் ஒன்று. அதனால் பெரிய ஸநாதன தர்ம சாம்ராஜ்ஜியம் அமைக்க அப்போதே உரிய சமயம் வந்துவிட்டது என்று தெரிந்து கொண்டார். இன்ன இடத்தில் இன்னாரைக் கொண்டு அதை ஸ்தாபிகக்க வவேண்டும் என்றும் அவருக்குப் புரிந்தது. அதன்படி அங்கே ஆடு மேய்க்கிற இரு குறும்பர்களைப் பார்த்து இவர்களே புதிய ராஜ்ஜியத்தில் அரசாள வேண்டியவர்கள் என்று தீர்மாணித்துக் கொண்டார். அண்ணன் தம்பிகளான அந்த இரண்டு பேருக்கு ஹரிஹரன், புக்கன் என்று பெயர். அந்த துங்கபத்திரைப் பிரதேசத்திலேயே ஓரிடத்தில் ராஜதானியை ஸ்தாபித்து, அந்த இரண்டு பேரையும் அங்கே ராஜாக்களாக பட்டாபிஷேகம் செய்து வைத்தார்.

அந்த இடம்தான் ஹம்பி. ஹம்பி ரூயின்ஸ் என்று அதன் இடிபாடுகளை இப்போதும் வெளி தேசங்களிலிருந்து வருகிறவர்கள் கூடப் பார்த்து வியக்கிறார்கள். பம்பா ஸரஸ் என்று ராமாயணத்தில் வரும். அது கிஷ்கிந்தையைச் சேர்ந்த இடம். மற்ற மொழிகளில் 'ப'வாக இருப்பது கன்னடத்தில் 'ஹ்' ஆகும். தமிழில் பால் என்பது கன்னடத்தில் ஹாலு நம்முடைய பவளம் அவர்களுக்கு ஹவளம் இப்படியே பம்பா தான் ஹம்பா - இன்றைய ஹம்பி.

மஹாலக்ஷ்மியின் அநுக்கிரகத்தால் கிடைத்த ஐசுவரியத்தைக்கொண்டு ராஜ்ய பரிபாலனம் பண்ணவும், பெரிய சைனியம் திரட்டிக் துருக்கரை எதிர்த்துப் போரிடவும் வசதி கிடைத்தது. ராஜ்ய ஸ்தாபணத்தின் போதே வித்யாரண்யர் அது பெரிய வெற்றி அடைந்து ஜயக்கொடி நாட்டும் என்று அதன் ஜாதகத்தை கணித்து விட்டார். அதற்கேற்றாற்போல் அது விஜய நகர சாம்ராஜ்ஜியம் என்றே பெயர் பெற்று ஓங்கி வளர்ந்தது. ஆனால், அது அதற்குப் ஆதிகால பெயரில்லை. வித்யாரண்யரை குருவாகக் கொண்ட ஹரிஹர, புக்கர்கள் அந்த ராஜ்ஜியம்

அவர்களுக்கே சொந்தமென்று கருதி, அதற்கு வித்யாநகர சாம்ராஜ்ஜியம் என்று அவர் பெயரையே வைத்தார்கள். பிற்பாடு அது விஜய நகரமாயிற்று.

தற்போது விசாகபட்டினத்துக்குப் பக்கத்தில் ஒரு விஜய நகரம் இருக்கிறது. பலர் விஜயநகர சாம்ராஜ்ஜியத்தோடு குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். இது வேறு. அது வேறு. நான் சொல்லும் சாம்ராஜ்யம் பெல்லாரி ஜில்லாவை மையமாகக் கொண்டு அமைந்தது.

வித்யாரண்யரின் ஆலோசனைப்படியே நடந்து, ஹரிஹர, புக்கர்கள் ராஜ்ஜியத்தை விஸ்தரித்தார்கள்.

இந்த இருவரின் ஒன்றுவிட்ட சகோதரனான கம்பன்னனை வித்யாரண்யர் சேநாதிபதியாக நியமித்தார். அவனைத் தென்னாட்டுக்கு அனுப்பி வைத்துத் துருக்கப் படைகளை வெற்றி கொள்ளச் செய்தார். அப்படியே இவன் சிதருன்டு போன ராஜ்ஜியங்களை எல்லாம் ஒன்று சேர்த்தான். கம்பன்ன உடையார் என்று அவனைச் சொல்வார்கள். இந்த உடையார் பட்டம் மைசூர் ராஜாக்களுக்கும் உண்டாயிற்று.

வித்யாரண்யரின் ஆசீர்வாத பலத்தால், கம்பன்ன உடையார் ராமேசுவரம் வரைக்கும் திக்விஜயம் செய்திருக்கிறார். வழியில் தில்லி சுலிதானின் பிரதிநிதிகளோடு ஐந்தாறு யுத்தங்கள் செய்து ஜயசாலியாக ஆனார். மதுரையில்தான் பெரிய யுத்தம் நடந்தது. மதுரை நகர தேவதையே கம்பன்னனுக்குப் பிரத்யட்சமாகி, ஒரு வாளை அநுக்கிரகித்தது. அவருக்கு அத்தனை உபாஸனா பலம். அதன் விசேஷத்தால்தான் மாலிக்காபூர் முதலானோர்

செய்திருந்த நாசத்தையெல்லாம் அவர் தவிடு பொடியாக்கி, நம்முடைய கோவில்களை மறுபடி புதுப்பித்தார். ஹிந்து சமூகத்துக்குப் புதிய உற்சாகத்தைத் தந்து, வைதிக சம்பிரதாயத்துக்குப் புனர் ஜீவனம் செய்தார்.

திருச்சியில் சமயபுரத்துக்குப் பக்கத்தில் ஒரு கண்ணனூர் இருக்கிறது. அங்கே பொச்சலெசுவரர் என்று ஜனங்கள் சொல்லுகிற கோவிலுக்குப் போயிருந்தேன். உண்மையில் ஹொய்சலேசுவரர் என்பதே அது. கன்னடத்தைச் சேர்ந்த ஹொய்சல வம்சத்தவரால் ஆராதிக்கப்படுபவர். கன்னட 'ஹ'தமிழில் 'ப'என்று முதலில் சொன்னேனே, அதன்படி ஹொய்சலேசுவரர்தான் பெச்சலேசுவரராகிவிட்டார்.

பொச்சலேசுவரர் என்று ஜனங்கள் சொல்வது தப்பு என்று நினைத்து, போஜேச்வரர் என்று வேறு சரி பண்ணியிருக்கிறார்கள். வேடிக்கைதான். அந்தக் கோவில் கோபுர மதிலில் இந்தக் கோவிலைத் துலுக்கர்கள் நாசம் பண்ணுகிற காலத்தில் கம்பன்ன உடையார் ரட்சித்தார் என்று பொறித்திருப்பதைப் பார்த்தேன். அந்த மதிலைப் பார்த்தாலே துருக்கர் செய்த கொடுமை தெரிகிறது. மதிலின் இரு பக்கங்களில் கல்லடுக்கி நடுவே ஜல்லி கொட்டுவது வழக்கம். இங்கே பக்கக் கல் வரிசையும் ஜல்லியும் போய், சதையும் தசையும் போனபின் எலும்பு மட்டும் நிற்கிறது. அதுவும் இடிபடாமலிருப்பதற்குக் காரணம் கம்பன்ன உடையார்தான். அருகிலேயே உள்ள கம்பரசன்பேட்டைக்கூடக் கம்பன்ன உடையார் பேரில்தான் ஏற்பட்டிருக்கவேண்டும். பக்கத்திலேயே வாளாடி நல்லூர். அது கம்பன்னன் வேதப் பிராம்மணர்களுக்கு இறையிலியாகத் தந்த ஊராதலால், இன்றும், கம்பராய

சதுர்வேதி மங்கலம் என்றே பத்திரங்கள் எழுதும்போது குறிக்கிறார்கள்.

கம்பன்ன உடையாரின் பத்தினி ஒருத்தி கங்காதேவி என்று. அவளும் அவர் படையெடுத்த இடங்களுக்கெல்லாம் பின்னோடு போயிருக்கிறாள். போனது மட்டுமில்லை. ஸம்ஸ்கிருதத்தில் மகாபண்டிதையான அவள் திரும்பி ஊர் வந்து சேருகிற வரையில், ஆங்காங்கே நடந்த நிகழ்சிகளையெல்லாம் வெகு ஸ்வாரஸ்யமாக, காவிய நயத்தோடுகூட எழுதியிருக்கிறாள். காளிதாஸன்கூடத்

தோற்றுபோய்விடுவான் என்கிற மாதிரி நுணுக்கமான திருஷ்டி (close observation) யோடு, கவி ஸமத்காரத்தோடு, கங்காதேவி மதுரா விஜயம் என்று எழுதியிருக்கிறாள். எபிக்ராஃபிகல் டிபார்ட்மென்டில் அதை அச்சுப் போட்டிருக்கிறார்கள். அறுநூறு வருஷங்களுக்கு முன், ஒரு ஸ்திரீ இப்படிப்பட்ட பிரயாண இலக்கியம் எழுதினது நமக்கெல்லாம் பெருமை.

மஹாலக்ஷ்மியின் அநுக்கிரகத்தால் விஜய நகர சாம்ராஜ்ஜியம் பிறந்தது. பராசக்தியின் அநுக்கிரகத்தால் கம்பன்ன உடையார் யுத்தங்களில் வெற்றி பெற்று, அதை விஸ்தரித்து நிலைப்படுத்தினார். ஸரஸ்வதியின் அநுக்கிரகத்தால் இந்த திக்விஜய நூல் வந்தது.

நடுவில் ஒரு நாற்பது ஐம்பது வருஷ காலம் பிற மதத்தினால் வீணாகப்போன தேசத்தில், மறுபடியும் வேதம், கோவில், தருமம் எல்லாம் நிலைகக்கும்படி செய்து, ஜனங்களுக்குப் பரமோபகாரம் செய்தார் கம்பன்ன உடையார். இந்த விஜய நகர வம்சத்தில்தான் பிற்பாடு உலகமே கொண்டாடுகிற கிருஷ்ணதேவராயர் வந்தார். இவர்களின் அத்தனை பேரும் செய்த காரியத்துக்கெல்லாம் வித்து வித்யாரண்யர் போட்டதுதான். ராஜ்ஜியத்தை ஸ்தாபித்து, விஸிதரித்து, அதைப் பல பகுதிகளாப் பிரித்துப் பல பிரதிநிதிகளைக் கொண்டு ஆட்சி நடத்தியது எல்லாவற்றிற்கும் வித்யாரண்யரே மூல புருஷர்.

வேத தர்மங்களை மறுபடியும் உச்ச நிலைக்குக் கொண்டு வருவதற்கு வழியாகவே துருக்கரை அகற்றி, ஹிந்து ராஜ்ஜியம் அமைக்க அவர் வழிகோலினார். ராஜ்யம் ஸ்திரப்பட்டபின், இந்த தர்ம ரக்ஷணத்தைத் தாமே மேற்கொண்டார். ஆதி சங்கர பகவத் பாதர்களின் அத்வைத சம்பிரதாயத்தை மறுபடியும் ஜொலிக்கச் செய்துவிட்டால் வேத தர்மங்கள் எல்லாம் புனர்ஜீவனம் பெற்றுவிடும் என்று தீர்மானித்தார். அதனால் கர்நாடக, ஆதி கங்கர தேசங்களிலிருந்த பழைய சங்கரமடங்களைப் புதுக்களையோடு பிரகாசிக்கிற மாதிரி உத்தாரணம் செய்தார். சில புதிய மடங்களையும் ஸ்தாபித்தார். கன்னட தேசத்தில் அப்போது அத்வைதத்தை ஆட்சேபிக்கும் ஸ்ரீ மத்வரின் த்வைத சித்தாந்தமும் நிறையப் பரவியிருந்தது. அதைச்

சமாளிப்பதற்காகவும் இந்த அத்வைத மடங்களை ஸ்தாபித்தார்.

ஜனங்களின் நல்வாழ்விற்கு சஸ்திரம், சாஸ்திரம் என்கிற இரண்டும், தேவையாயிருக்கின்றன. சஸ்திரம் என்றால் ஆயுதம். விரோத ராஜ்ஜியங்களால் தீமை ஏற்பட்டால் காப்பாற்றிக் கொள்ள சஸ்திரம் வேண்டியிருக்கிறது. நம்மை நாமே கெடுத்துக் கொள்ளாமல் ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்வதற்கு சாஸ்திரம் வேண்டியிருக்கிறது. வித்யாரண்யா ராஜ்யஸ்தாபனத்தில் மறைமுகமாக சாஸ்திரப் பிரயோகம் செய்தும், ஸ்ரீசங்கர மடத்தின் புணருத்தாரணத்தால் தாமே நேராக

சாஸ்திரப் பிரயோகம் செய்தும், ஹிந்து சமூகம் முழுவதையும் துருக்கர்களிடமிருந்து காப்பாற்றி விட்டார். அவர் கர்மம், பக்தி, ஞானம் என்ற மூன்று மார்க்கங்களுக்கு உபகாரம் செய்த மஹான். அவருடைய பஞ்சதசீ ப்ரகரணம் ஜீவன் முக்தி விவேகம் முதலான கிரந்தங்கள் பரம ஞானத்தைக் கொடுக்கக்கூடியவை. மடத்தில் ஸ்தாபித்தல், ஆலய புனருத்தாரணம் செய்தல், ஆகியவற்றால் பக்தியை வளர்த்தார். வேத பாஷ்யத்தால் கர்மத்தை நிலைநாட்டினார். அவர் செய்த இத்தனை பரமோபகாரத்துக்கும் முதலில் ஊக்கச் சக்தி தந்தது, லக்ஷ்மி கடாக்ஷத்தால் அவர் பெற்ற நவநிதிதான்.

பணம் சம்பாதித்துக் கொள்வதைவிட பணத்தைக் கொடுக்கிற மனப்பான்மைதான் பெரிய லக்ஷமி. இந்த மனோபாவத்தையும் மஹாலக்ஷ்மி அநுக்கிரகம் செய்வாள். ஏழைப் பிராம்மணப் பெண்ணின் பொருட்டு அவளைச் செல்வத்துக்கு அதிதேவதையாக வைத்துக் கனக மழை பொழியும்படி வேண்டிக்கொண்ட சங்கரர், இதே ஸ்திதியில் தம் பொருட்டு அவளைப் பிரார்த்திக்கிறபோது, அவளைப் பணத்தின் அதிதேவதையாக மட்டும் நினைக்கவில்லை. மனமாசுகளையெல்லாம் நீக்குகிற ஞானாம்பிகையாக வைத்துப் பிரார்த்திக்கிறார். (ஸம்பத்கராணி என்கிற ஸ்லோகம்)

வைஷ்ணவர்கள் விஷ்ணுவைத் தகப்பனார் என்று சொல்லாமல் பெருமாள் என்றே சொன்னாலும், மஹாலக்ஷ்மியைத் தாயார், தாயார் என்றே சொல்வார்கள்.

அவள்தான் ஸ்ரீ மாதாவான பராசக்தி. ஆசார்யாளும் இங்கு மாதா என்று அழைத்து, (மாமேவ மாதர் அனிசம்) உன்னை நமஸ்காரம் பண்ணிவிட்டால் போதும். அந்த நமஸ்காரங்கள் சம்பத்து, சகல இந்திரிய சந்தோஷங்கள், சாம்ராஜ்ஜியம் எல்லாம் தந்து விடும். ஆனால் இதெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு உன்னிடமிருந்து ஒரே ஒரு செல்வம்தான் வேண்டும். என் துரிதங்கள் - பாபங்கள் எல்லாவற்றையும் கில்லி எறிவதற்கும் உன்னை நமஸ்கரிப்பதற்கே சைதனமாகிறது. செல்வ தேவதையான நீ எனக்குத் தருகிற செல்வம் இந்த நமஸ்காரம்தான். இது என்னை விட்டு நீங்காமல் இருக்கட்டும்.

எல்லோரும் துராசைகளில்லாமல் ஜீவனோபாயம் நடத்துவதற்கு மஹாலக்ஷ்மியை உபாஸிக்க வேண்டும். ஆசாரியாள், வித்யாரண்யாள், ஸ்ரீ தேசிகன் மாதிரி சொந்த நலனுக்காக இன்றி, பரோபகாரமாக அவளைத் துதிக்க வேண்டும். எந்த செல்வம் வந்தாலும், வராவிட்டாலும், நம்மிடம் பாபமே சேராமல் நிர்மலமாக இருக்கிற செல்வத்தை விரும்பி அவளை நமஸ்கரிப்போம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*பக்தியே பெரிய லக்ஷ்மி*

இதைத்தா, அதைத்தா, என்று நாம் பிரார்த்திக்க வேண்டியதே இல்லைதான். நம் யோக்கியதைக்கு என்ன தரவேண்டும் என்று அம்பாளுக்கே தெரியும். இருந்தாலும் நடைமுறையில் இப்படி விவேகத்தோடு இருக்க முடிய மாட்டேன் என்கிறது. இது வேண்டும். அதுவேண்டும் என்பதற்காகத்தான் பிரார்த்தனை செய்கிறோம்.

யோசித்துப் பார்த்தால் இதை அடியோடு தப்பு என்று சொல்ல முடியவில்லை. கீதையில் பகவான் பக்தர்களை

நாலுதினுசாகப் பிரித்துச் சொல்கிறார். அத்லே மோக்ஷத்தை விரும்பி உபாஸிக்கிற சாதகன், அந்த மோக்ஷ லட்சியத்தையே பிடித்துவிட்ட ஞானி ஆகிய இரு சாராரைச் சொன்னதோடு பகவான் நின்றுவிடவில்லை. நோய் நொடி முதலான துன்பங்கள் நீங்குவதற்காகப் பிரார்த்திக்கிறவன், பொருளை வேண்டிப் பிரார்த்தனை பண்ணுகிறவன் ஆகிய இரு சாராரைக்கூடச் சேர்த்துக் கொள்கிறார். இம்மாதிரி லௌகிக சௌக்கியத்துக்காக வழிபடுகிறவர்கூடத் தன்னை பூஜிப்பதாக பகவான் ஒப்புக் கொள்கிறார். பகவானே ஒப்புக் கொள்கிற விஷயத்தை நாம் ஆட்சேபிப்பதற்கில்லை.

ஆனால், கீதா சாஸ்திரம் முதலிய என்த ஞான நூலாகட்டும், சமய கிரந்தமாகட்டும், இகலோக சௌக்கியங்களைத் தள்ளிவிட்டு, சாசுவதமான பேரின்பத்தைத்தான் நாடவேண்டும் என்பதை லட்சியமாக வலியுறுத்துகின்றன. அப்படியானால் பகவானே முரண்படப் பேசுகிறாரா?அப்படி அர்த்தமில்லை. லௌகிக காரியங்களை எடுத்த எடுப்பில் யாராலும் விட்டுவிட முடிவதற்கில்லை. ஆனாலும் இந்த நிலையில் இருக்கிற போதுகூட, எல்லாம் நம்மாலேயே முடியும் என்று நினைத்துவிடாமல், நமக்கு மேலே ஒரு மகா சக்தி இருக்கிறது. அதற்குச் சக்தி இருப்பதோடு கருணையும் இருக்கிறது. நாம் தழைத்து வேண்டினால் அநுக்கிரகம் பண்ணும் என்கிற நம்பிக்கை இருந்தால், அது விசேஷம்தானே?பணம் வேண்டும், வீடு வேண்டும், பதவி வேண்டும் என்றெல்லாம் பிரார்த்தனை செய்கிறபோதுகூட, இப்படி ஒரு மகா சக்தியிடம் நம்பிக்கை வைத்து, அதனிடம் நம் அகங்காரத்தையெல்லாம் தாழ்த்திக் கொண்டு நிற்கிறோம் அல்லவா?அந்த மட்டில் இது நாஸ்திரகத்தைவிட எத்தனையோ சிலாக்கியம்தானே. முதலில் ஏதேதோ வஸ்துகளுக்காகப் பகவானிடம் பேசுகிறோம். பூஜை, ஆலய தரிசனம், ஸ்தோத்திரம், ஜபம் என்று செய்கிறோம். கொஞ்சம் கொஞ்சமாக இதுகளில் பிடிப்பு உண்டாக உண்டாக, மற்ற வஸ்துக்களில் பிடிப்பு குறைகிறது. கடைசியில் பகவானுக்காகவே பகவானைப் பக்தி பண்ண வேண்டும் என்ற ருசி பிறக்கிறது.

அதனால்தான் லக்ஷ்மீ கடாக்ஷத்தை விரும்பியே பக்தி செலுத்துகிறவர்களைக்கூட, அர்த்தார்த்தி என்று தனியாகச் சொல்லி, தன்னை பூஜிப்பவனாக பகவான் ஒப்புக்

கொள்கிறார்.

ஆசைக்கோர் அளவில்லை என்றார்கள். முக்கியமாக செல்வம் வேண்டும் என்கிற ஆசைக்கு எல்லையே இல்லாமல் போய்விடுகிறது. இதனால்தான் அனர்த்தம் எல்லாம் வந்து விடுகிறது. ஞானம் வேண்டும். குணம் வேண்டும் என்றெல்லாம் பிரார்த்திக்கிறவர்கள் எங்கேயாவது துர்லாபமாக இருப்பார்களோ என்னவோ?லக்ஷ்மீகடாக்ஷத்திற்கு மட்டும் பிரார்த்திக்காதவர் இல்லை. இதிலே எந்தக் கோடீஸ்வரனுக்காகவது திருப்தி வந்திருக்குமா என்றால் அதையும் காணோம்.

சௌக்கிய அநுபோகம் அதிகமாக ஆக, ஞானம் வேண்டும் என்ற எண்ணம் குறைந்து கொண்டே போகிறது. இதனால்தான் லக்ஷ்மி இருக்கிற இடத்தில் ஸரஸ்வதி இருப்பதில்லை என்று பொதுவில் வசனம் வந்துவிட்டது. இதற்கு வேடிக்கையாக ஒரு காரணம் தோன்றுகிறது. சாதாரணமாக மாமியாரும்

மாட்டுப் பொன்னும் ஒரே இடத்தில் ஒத்து இருக்க மாட்டார்கள். மஹாவிஷ்ணுவும், பிரம்மாவும் தகப்பனாரும் பிள்ளையும் ஆகிறார்கள் என்றால், அப்போது மஹா லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் மாமியார் - மாட்டுப் பெண் ஆகிறார்கள். இவர்கள் சேர்ந்து சௌஜன்யமாக இருக்க மாட்டார்களே. அதனால்தான் பொதுவில் லக்ஷ்மீ கடாக்ஷம் இருக்கிற இடத்தில், ஸரஸ்வதீ கடாக்ஷம் இருப்பதில்லை. அல்லது இதையே நல்லபடியாகச் சொல்லலாம். மாமியாரிடம் உள்ள மகா மரியாதை காரணமாகவே அவள் இருக்கிற இடத்தில் தான் முந்திரிக்கொட்டை மாதிரி தெரியக்கூடாது எனறு ஸரஸ்வதி ஒதுங்கிப் போவதாகவும் சொல்லலாம்.

இதெல்லாம் வேடிக்கையாகச் சொல்கிற பேச்சு. வாஸ்தவத்தில் இருக்கிறது ஒரு பராசக்திதான். அவள்தான் எந்தெந்த சமயத்தில் எந்தெந்த விதமாக அநுக்கிரகம் செய்து பக்குவத்தைத் தரவேண்டுமோ அப்படிச் செய்வதற்காக மகாலக்ஷ்மியாக, ஸரஸ்வதியாக, ஞானாம்பிகையாக வருகிறாள். ஏதோ ஒரு ரூபத்தில் பக்தி என்று வைத்துவிட்டால் போதும். அப்புறம் நடக்க வேண்டியதை அவளே பார்த்துக் கொள்வாள். இந்தப் பக்திதான் நமக்குப் பெரிய செல்வம். அதுவே பெரிய லக்ஷ்மி.

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

## நவராத்திரி நாயகியர்

நவராத்திரியில் பராசக்தியான துர்கா பரமேசுவரியையும் மகாலக்ஷ்மியையும், ஸரஸ்வதி தேவியையும் பூஜிக்கிறோம். மூன்று மூர்த்திகளாகச் சொன்னாலும், முப்பத்து முக்கோடி மூர்த்திகளாகச் சொன்னாலும், அத்தனையாகவும் இருப்பது பராசக்திதான். இந்த உண்மையைத்தான் லலிதா ஸஹஸ்ரநாமம் பரதேவதையை வர்ணிக்கும்போது அவளே சிருஷ்டி செய்பவள் (ஸ்ருஷ்டிகர்த்ரீ - ப்ரஹ்ம ரூபா) அவளே பரிபாலனம் செய்பவள் (கோப்திரீ - கோவிந்த ரூபிணீ), அவளே சம்ஹாரம் செய்பவள் (ஸம்ஹாரிணீ - ருத்ரரூபா) என்று சொல்கிறது. லலிதையாக, துர்க்கையாக இருக்கிற பராசக்திதான் மஹாலக்ஷ்மியாகவும், ஸரஸ்வதியாகவும் இருக்கிறது. லக்ஷ்மி அஷ்டோத்திரத்தில் பிரம்ம விஷ்ணு சிவாத்மிகாயை நம:என்று குறிக்கிறது. படைப்பு, அழிப்பு, காப்பு எல்லாம் செய்வது செய்வது ஒரே சக்திதான் என்று இந்த நாமங்கள் நமக்கு நன்றாக உணர்த்துகின்றன. ஒரே பராசக்திதான் வெவ்வேறு வேஷங்களைப் போட்டுக்கொண்டு வெவ்வேறு காரியங்களைச் செய்கிறது. துர்க்கையாக இருக்கிறபோது, வீரம், சக்தி எல்லாம் தருகிறது. மஹாலக்ஷ்மியாகி சம்பத்துக்களைத் தருகிறது. ஸரஸ்வதியாக ஞானம் தருகிறது.

ஆதிபராசக்தியான துர்க்கையைப் பொதுவாக பார்வதியோடு ஐக்கியப்படுத்திச் சொல்லலாம். அவள் ஹிமவானின் புத்திரியானதால் மலைமகள். மஹாலக்ஷ்மி பாற்கடலில் தோன்றியதால் அலைமகள். ஸரஸ்வதி சகலகலா ஞானமும் தருவதால் கலைமகள்.

பர்வதராஜ புத்திரியாக வந்த அம்பாளும்,

க்ஷீரசாகரத்திலிருந்து பிறந்த மஹாலக்ஷ்மியும், இரண்டு மஹரிஷிகளுக்குப் பெண்களாகவும் அவதரித்திருக்கிறார்கள்.

மஹாலக்ஷ்மியை மகளாகப் பெற்று, சீராட்டி வளர்க்க வேண்டும் என்று பிருகு மஹரிஷி தபஸ் செய்தார். அதற்கிணங்கவே லக்ஷ்மிதேவி அவருக்குப் புத்திரியாக உத்பவித்தாள். பிருகுவுக்குப் புத்திரியானதால் அவளுக்கு பார்கவி என்று பெயர் ஏற்பட்டது.

பார்கவி லோக ஜனனி க்ஷீரஸாகர கன்யகா எனறு ஸம்ஸ்கிருத அகராதியான அமர கோசம் சொல்லும். இப்படியே காத்யாயன மகரிஷி சாக்ஷாத் பரமேசுவரியைப் பெண்ணாக அடைய வேண்டும் என்று விரும்பித் தபஸ் செய்தார். அம்பிகையும் அவளுக்குக் காத்யாயனி அவளைக் காத்யாயனியாக தியானிக்கிறோம் என்று சொல்லியிருக்கிறது.

லோக மாதர்களாக இருக்கப்பட்ட தெய்வங்களைக் குழந்தையாக வரச் சொன்னதில் நிறம்ப விஷயம் இருக்கிறது. குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே என்கிறோம். தெய்வமே குழந்தையாக வந்தால், ரொம்பக் கொண்டாட்டமாகும். குழந்தைக்கு நம்மைப் போல் காமமுமம் குரோதமும் துக்கமும் வேருன்றறி இருப்பதில்லை. இந்த க்ஷணத்தில் ரொம்பவும் ஆசைப்பட்ட ஒரு வஸ்துவை அடுத்த க்ஷணத்தில் தூக்கிப் போட்டுவிட்டுப் போகிறது. கோபமும் இப்படியே சுவடு தெரியாமல் நிமிஷத்தில் மறைந்து போகிறது. அழுகையும் இவ்வாறேதான். நாம்தான் உணர்ச்சிகளை ஆழ உள்ளுக்கு வாங்கிக்கொண்டு மனத்தைக் கெடுத்துக் கொள்கிறோம். உணர்ச்சிகள் வேரூன்றாமல் குழந்தைகள் போல் நாமும் ஆனந்தமாக இருக்க வேண்டும். இதனால்தான் உபநிஷதமும் குழந்தையாய் இரு என்கிறது.

சாக்ஷாத் பராசக்தியைக் காத்யாயனியாகவும், மஹாலக்ஷ்மியை பார்கவியாகவும் குழந்தைகளாக்கி வழிபட்டால், நமக்கும் குழந்தைத் தன்மை சாக்ஷாத்கரித்துவிடும். இந்த நாளில் வாட்டர்ஃப்ரூப் என்று சொல்வதுபோல், நாம் காம ப்ரூஃப், சோக ப்ரூஃப் எல்லாமாக, சாந்தமாக ஆவோம். குழந்தை ரூபத்தில் இருந்தாலும் ஞானப் பாலூட்டும் ஸ்ரீமாதாவாக இருக்கிற தேவி, நமக்கு இந்த அநுக்கிரகத்தைச் செய்வாள்.

குழந்தையாக வந்த காத்யாயனியைத் தமிழ் நாட்டுக் கிராம ஜனங்கள்கூட நீண்ட காலமாக வழிபட்டு வந்திருக்கிறார்கள் என்பது என் ஊகம். காத்தாயி என்று சொல்கிற கிராம தேவதை காத்யையனிதான் என்று நினைக்கிறேன்.

பட்டாரிகை என்று பெரிய ஸ்ரீவித்யோபாஸகர்கள் குறிப்பிடும் அம்பாளைத்தான், நம் கிராம மக்கள் பிடாரி எனறு சொல்லிப் பூஜிக்கிறார்கள். பழைய செப்பேடுகளில் பட்டாரிகா மான்யம் என்பதைப் பிடாரிமானியம் என்று திரித்துக் குறிப்பிடுவதிலிருந்து இதை உணரலாம்.

இவ்வாறே கிராம ஜனங்கள்கூட ஸரஸ்வதியை நீண்ட காலமாக வழிபட்டிருக்கிறார்கள். பேச்சாயி, பேச்சாயி என்று சொல்கிற கிராம பேச்சுக்கு ஆயியான வாக்தேவி ஸரஸ்வதியைத்தான் குறிப்பிடுகிறது.

அம்பாளையும், மஹாலக்ஷ்மியையும், ஸரஸ்வதிதேவியையும் பூஜித்து எல்லாச் சக்தியும், சம்பத்தும், நல்ல புத்தியும் பெறுவோமாக!

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*"எனக்கு முக்கியம் அம்பாள் "*

வீடு என்றால் இல்லாமல் இருந்தால் போதாது. துணி அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. நம் மனம் அழுக்கு இல்லாமல் ஆகவேண்டும்.

இதற்கு சாக்ஷாத் பராசக்தியும், பரமேசுவர பத்தினியுமான அம்பாளுடைய சரணாரவிந்தத் தியானம்தான் வழி. அம்பாளின் சரணத்தைத் தியானித்துக் கொண்டே இருந்தால் அழுக்கெல்லாம் போய், குறை எல்லாம் தீர்ந்து பூரணமாக

அப்படியே நிரம்பிப் போய்விடுவோம். அழுக்கும் குறையும் உள்ள ஜீவர்களாக நாம் உண்டாகியிருப்பது அவள் விளையாட்டுத்தான். எனவே இதிலிருந்து நம்மை மீட்டு நிர்மலமாக, பூரணமாகப் பண்ணுவதும் அவள் காரியம்தான்.

ஆடு மாடு மாதிரி சாகாமல், சாந்தியும் ஆனந்தமும் நிரம்பி நம் உயிர் உடம்பிலிருந்து பிரிந்து மறுபடியும் உடம்பு எடுக்காமல் இருப்பதற்காகத்தான் இத்தனை மதங்களும் உள்ளன. அம்பாளின் தியானத்தைவிட, வேறு மதம் வேண்டியதே இல்லை. சாந்தியும், ஆனந்தமும் தந்து நம்மை பூரணத்துவம் அடையச் செய்வது அதுவே.

அம்பாளைத் தியானித்து தியானித்து நம்மில் யாராவது நிரம்பிப் போய்விட்டால் நம் மதம் தானே வளரும். மதத்துக்காகப் பிரச்சாரம், வாதம் எதுவுமே வேண்டாம். நான் ஏன் இதையெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கிறேன். உபந்நியாசம் செய்கிற இந்த நேரத்தில் அம்பாளைத் தியானித்துக் கொண்டிருந்தால், அது இந்த உபந்நியாசத்தை விட மிகவும் ஆத்ம க்ஷேமமும் லோக க்ஷேமமும் ஆகும். இந்தப் பேச்சு வார்த்தைகளைவிட நிறைவுக்கு உதவுவது அதுவே. ஆனாலும் எனக்கு இந்த உண்மை இப்படிப் பேச உட்கார்ந்ததால் தெரிகிறது. ஆகவே, பேசப்பேச அதுவும் என் நினைவாக சுத்தப்படுத்தப்படுகிறது என்று தெரிகிறது. நம்மில் ஒரு ஆத்மாவானது பூரணமாக உயருவதற்காகத்தான் மத விஷயங்களைப் பேசுகிறேன்.

இந்த மத விஷயங்களுக்கெல்லாம் முடிவு நம் குறைகளைக் களைத்து நிறைவு பெறுவதுதான். அவரவரும் அநுஷ்டானங்களைச் செய்து தன் நிறைவை உண்டாக்கிக் கொள்ள வேண்டும் என்பதே நம் மதம். அதற்கான புத்தியும் சக்தியும் அம்பாளிடமே வேண்டிப் பெற வேண்டும்.

அம்பாளைத் தியானிக்க முயன்று அதில் ஒரு முகமாக ஈடுபட முடியாதபோது நம் குறையெல்லாம் தெரிகிறது. அதுவும் ஒரு விதத்தில் நல்லதுதான். இந்தக் குறைகளைப் போக்கம்மா என்று அவளிடம் பிரார்த்திக்குக் கொள்ள முடிகிறது. என்னிடம் எப்போதெல்லாம் தோஷம் தோன்றிகிறதோ அப்போதெல்லாம் அம்பாளிடம் முறையிட்டு அந்த தோஷம் இனியாவது இல்லாமலிருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

என்னிடம் தோஷம் இருந்தால் நான் பிறருக்கு உபதேசிப்பது வேஷம்தான். உங்களை ஏமாற்றுவதுதான். எனக்கு அம்பாள் அநுக்கிரகம் பூரணமாக வந்து நான் நிறைந்து போய்விட்டால், அப்புறம் உபதேசம் என்ற வாய்ப்பேச்சே தேவையில்லை. பேசாமலே அநுக்கிரஹ சக்தியானது மற்றவர்களுக்கு ஞானத்தைத் தந்துவிடும். ஆக, இரண்டு நிலையிலும் உபந்நியாசம் கூடாதுதான். இப்படி எல்லாம் நான் உபதேசம் பண்ணுகிற நேரத்தை அவளுடைய தியானத்திலேயே செலவு செய்தால் இன்னும் எத்தனையோ மடங்கு ஆத்ம சாந்தி கிடைக்கும். உபந்நியாசம் செய்கிற பொழுதை அவள் தியானத்தில் செலவிட்டால், என் தோஷங்கள் எத்தனையோ நீங்கும். இதைக் கேட்கிற பொழுதை அவளுடைய தியானத்தில் செலவிட்டால் உங்கள் தேஷங்களும் எவ்வளவோ விலகும். ஆனாலும் இப்படியெல்லாம் நான் பேசிக் கொண்டிருப்பதற்குக் காரணம், உங்களில் யாராவது தம்மைத்தாமே இவ்வாறெல்லாம் சோதித்துப் பார்த்துக்கொண்டு, அம்பாளைத் தியானித்து பூரணத்துவம் அடைய இந்தப் பேச்சு தூண்டாதா என்ற ஆசைதான். பிரச்சாரத்தால் மதமும் ஆத்மாநுபவமும் வளராது. பிரச்சாரமும் பிரசங்கமும் தற்கால சாந்திதான்.

சாந்தியே இல்லாத லோக வாழ்க்கையில் ஏதோ தற்காலிகமாக ஒரு சாந்தி உண்டானாலும் ஓரளவுக்கு விசேஷம்தான். நான் பேச்சினால் தற்கால சாந்தியாகத் திருப்தி உண்டாகிறது என்பதால் பேசுகிறேன். நான் பேசாவிட்டால் உங்களுக்கு துக்கமாகவும், ஏமாற்றமாகவும் இருக்குமே என்பதற்காகப் பேசுகிறேன்.

ஆனால் இதைவிட அவசியம் தற்காலிகமானதைச் சாசுவதமாகப்பண்ணிக் கொள்வதுதான். அதற்கு ஒரே வழி அம்பாளின் சரணாரவிந்தத் தியானமே. எனக்கு முக்கியம் அம்பாள். லோக க்ஷேமார்த்தம் அம்பாளுடைய சரணாரவி ந்தத்தைத்தான் தியானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எல்லோரும் அம்பாளைத் தியானம் பண்ண வேண்டும்.

மற்ற மதங்களாலோ, நாஸ்திகத்தாலோ நம் மதத்துக்கு ஹானி வராது. நம்முடைய அநுஷ்டானக் குறைவினாலேயேதான் ஹானி வரும். நம் உடம்பில் சக்தி குறைந்தால்தான் நோய்

வருகிறது. அதுபோல் நம் அநுஷ்டானம் குறைந்தால் மதமாற்றம், நாஸ்திகம் முதலிய நோய்கள் வந்து விடுகின்றன.

அநுஷ்டானங்களை விடாமல் செய்துகொண்டு அம்பாளுடைய சரணாரவிந்தங்களைத் தியானம் செய்து கொண்டிருந்தால் போதும். ஒருத்தருக்கும் ஒரு கஷ்டமும் வராது. இதற்கெல்லாம் விசை நம்மிடமே இருக்கிறது. நாம் பெரிய பெரிய நல்ல காரியமாக ஏதோ செய்ய வேண்டும் என்பதே இல்லை. முதலில் நாம் தப்புப் பண்ணாமல் இருக்க முயன்றாலே போதும். தப்புப்பணுகிறபோதெல்லாம் அம்பாளிடம் பிரார்த்தித்துக்கொண்டு, அவள் கிருபையால் ஆத்ம சுத்தி செய்து கொண்டு, படிப்படியாக நமக்கு நிறைவைப் பெற்று, நம் மதத்துக்கும் நிறைவை உண்டு பண்ணுவோம். நம் மதம் என்பது லோகம் முழுவதற்கும் பொதுவானதால், இதன் மூலம் சகல தேச ஜனங்களுக்கும் க்ஷேமத்தைத் செய்வோம்.

எல்லா மதங்களும் முடிவில் மோக்ஷம் அடைவதைத்தான் லக்ஷியமாகச் சொல்கின்றன. பரம சத்தியத்தை அநுபவத்தினால் அறிகிற ஞானம்தான் அந்த மோக்ஷம். அந்தப் பரம ஸத்யத்தைத்தான் வேதாந்தத்தில் பிரம்மம் என்பது.

பிரம்மத்தின் சித்சக்தி என்கிற ஞான ஸ்வரூபமாக இருக்கிற அம்பாளை உபாஸித்தாலே, அவளுடைய அநுக்கிரகத்தால் நாமும் அந்த ஸத்தியம்தான் என்கிற ஞானத்தை அடைய முடியும்.

இகலோகத்தில் பலவிதமான சௌக்கியங்களை அநுக்கிரகம் செய்கிற அம்பாள், முடிந்த முடிவாக இந்த ஞானத்தை, மோக்ஷத்தை அருளுகிறாள். அவள் அநுக்கிரஹத்தால்தான் சம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையாகி மோக்ஷம் அடையலாம். அம்பாளை ஆராதிப்பதால், ஞானம் ஆவிர்பவமாகி, அஞ்ஞானம் விலக, மோக்ஷம் கிடைக்கிறது என்பது சாஸ்திரங்கள், ஸ்தோத்திரங்கள் எல்லாவற்றிலுமே சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளிடம் பக்தி பண்ணிப் பண்ணி இப்படிப் பரம ஞானிகளான பல மஹான்களையும் அறிந்திருக்கிறோம்.

நாம் ஆரம்பிக்க வேண்டியது அம்பாளுடைய சரணாரவிந்த

தியானம்தான். கொஞ்சம் கொஞ்சம் தியானம் செய்தாலே அதன் ருசி தெரியும் - அம்பாளுடைய சரண கமலத்தைக் காட்டிலும் சாந்தி அளிக்கக்கூடியது வேறு எதுவும் இல்லை என்று புரிய ஆரம்பிக்கும். விடாமல் இப்படித் தியானம் செய்தால் முடிவில் இந்த உடம்பு போனபின் செத்தும் சாகாதவராகலாம் - அமிருத்தமாகலாம். என்றும் நிலையாக இருக்கிற ஞானத்தில் இரண்டறக் கலந்து அமிருத்தமாயிருக்கலாம்.

பிறத்தியாருக்கு உபதேசித்துத் திருத்துவதற்கு யத்தனம் செய்வதற்கு முன்னால், அவரவரும், தான் தப்புப்பண்ணாமல் இருந்தாலே போதும். இதற்கு அவளுடைய சரண கமலம்தான் கதி. எளிதில் நம் குறையைப் போக்கிக் கொள்ள தியானம் என்கிற விசையை நமக்குள்ளேயே வைத்திருக்கிறார்கள். நீங்கள் எல்லோரும் உங்கள் ஆத்ம க்ஷேமத்திற்காகவும், லோக க்ஷேமத்திற்காகவும் அவளைத் தியானம் செய்ய வேண்டும். இதை எல்லோரும் விடாமல் செய்து கொண்டிருந்தாலே போதும். ஒருத்தருக்கும் ஒரு கஷ்டம் வராது. சமஸ்தப் பிரபஞ்சமும் பரம க்ஷேமமாக இருந்து வரும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### *அன்னைத் தெய்வம்*

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று ஔவைப் பாட்டி சொல்லியிருக்கிறாள். இரண்டு முன்னறி தெய்வங்களிலும் முன்னதாக அன்னையைச் சொல்லியிருக்கிறாள். தைத்திரியோபநிஷதமும், மாதாவைத் தெய்வமாகக் கொள்வாயாக. பிதாவைத் தெய்வமாகக் கொள்வாயாக என்கிறது. இங்கேயும் முதலில் அம்மாவைத்தான் சொல்லியிருக்கிறது.

தாயாரைத் தெய்வமாக நினைக்க முடியுமானால் இதையே திருப்பி வைத்துப் பார்க்கும்போது தெய்வத்தைத் தாயாராக நினைக்க முடியும். சர்வ லோகங்களையும் படைத்துக் காத்துக் கொண்டிருக்கிற மகாசக்தியைத் தாயாராக நினைக்கும்போது அம்பாள் என்கிறோம்.

எல்லாமாக ஆகியிருக்கிற பரமாத்மா, நாம் எப்படி நினைத்தாலும் அப்படி வந்து அருள் செய்கிறது. எந்த ரூபமாகத் தியானித்தாலும், அப்படியே வந்து அநுக்கிரகம் செய்கிற கருணை பரமாத்மாவுக்கு உண்டு. அப்படி சாக்ஷாத் பரப் பிரம்மமே தாயாகி, அம்பிகையாய் இருந்துகொண்டு, நமக்கு அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று நாம் பிரார்த்தித்தால் அவ்விதமே வருகிறது.

பரமாத்மாவை அன்னைத் தெய்வமாக பாவிப்பதில் தனியாக விசேஷம் உண்டு. அம்மாவுக்கு நம்மிடம் உள்ள அன்பும் அலாதியானவை அல்லவா?எனவே, அம்மா என்று நினைத்து பக்தி செய்தால் ஒரே அன்பு மயமாக இருக்கிறது. ஆனந்த மயமாக இருக்கிறது. நாம் குழந்தையாகி விடுவதால், தானாகவே காமக் குரோதிகள் நம்மை விட்டு விலகுகின்றன. வயசேறிப் போவதால் ஏற்படும் விகாரங்களை, அவளுடைய குழந்தை என்ற உணர்வினால் போக்கிக் கொள்கிறோம்.

பரமாத்மாவை அம்மா என்பது நாமாக உபச்சாரத்துக்கு செய்கிற பாவனை அல்ல. வாஸ்தவத்திலேயே பரம்த்மா ஒரு தாயாரின் அன்போடு கூடவே சமஸ்தப் பிராணிகளுக்கும் அநுக்கிரகம் செய்து கொண்டிருக்கிறது.

இந்த ஜன்மத்துக்கு ஏற்பட்ட தாயையே தெய்வமாக வழிபட வேண்டுமானால், எந்தெந்த ஜென்மத்துக்கும் துணையாக இருக்கிற பரமாத்மாவையும் தாயாக வைத்து வணங்கத்தான் வேண்டும். நம்வீட்டு, அம்மா, இந்த ஒரு ஜன்மாவில், நாலைந்து குழந்தைகளுக்கு மட்டும் தாய் ஆவாள். அம்பிகையோ எல்லா ஜன்மங்களுக்கும் எல்லா ஜந்துக்களுக்கும் தாயாக இருக்கிறவள். அவள் ஜகன் மாதா, அணு முதல் மனிதன் வரை, பசு, பட்சி, புழு, பூச்சி, புல், செடி, கொடி, மரம் எல்லாம் ஒரே சக்தியிலிருந்துதானே பிறந்திருக்கின்றன. ஒரே ஜகன்மாதாவிடமிருந்துதான் நாம் இத்தனை பேரும், இத்தனை வஸ்துக்களும் வந்திருக்கிறோம்.

பரமாத்மாவை அம்பிகையாகப் பூஜிப்பதால், அவள் ஒருத்திதான் அம்மா, நாமம் அனைவரும் அவனுக்குப் பிறந்த சகோதரர்கள் என்ற அநுபவம் உண்டாகும். எல்லோரையும் தழுவும் பரம மதுரமான அன்பு நமக்கு வரும்.

தெய்வங்களும், அவதார புருஷர்களும், மகான்களும்கூட அம்பாளை உபாஸித்து அநுக்கிரகம் பெற்றிருக்கிறார்கள். ஆதிசங்கர பகவத்பாதர்களும், காளிதாஸனும் அவளுடைய அநுக்கிரகத்தாலேயே விசேஷ வாக்குச் சக்தி பெற்றார்கள். திருஞானசம்பந்தருக்கு, அவளது க்ஷீரமே திவ்வியப் புலமை தந்தது.

எல்லாவித இகபர நலன்களும் தருகிற அம்பிகை, விசேஷமாக வாக்குவன்மையை அருளுகிறாள். ஏனெனில், அவளே அக்ஷர ஸ்வரூபமானவள். நம் உடலின் மேல் சதையைச் சிறது கீறிவிட்டால் - உள்ளே அருவருப்புத் தருகிற வஸ்துக்களையே பார்க்கிறோம். பரமாத்மா அம்பாளாக வருகிறபோது, தரித்த சரீரமே கருணா மயமானது. அம்பிகையாக வரும்போது, பரமாத்மா ஐம்பத்தொரு அக்ஷரங்களையே சரீரமாகத் தரித்துக் கொண்டு வருகிறது. அதனால்தான் தேவீ உபாஸகர்கள் விசேஷ வாக்கு வன்மை பெறுகிறார்கள்.

லோகம் முழுவதற்கும், காலம் முழுவதற்கும் தாயாக இருந்து அநுக்கிரகம் செய்கிற பராசக்தியின் கடாக்ஷம் எப்படிப்பட்டவனையும் கைதூக்கி ரக்ஷிக்கும். அந்த அம்பிகையை நாம் அன்போது தியானம் செய்ய வேண்டும். அக்ஷர மயமானவளை வாக்கால் துதிக்க வேண்டும். அம்மாவின் சரீரவாகு, மனப்பான்மை எல்லாம் குழந்தைகளுக்கும் வருவதுபோல், அம்பாளே நம் சரீரம், மனஸ் எல்லாமாயிருக்கிறாள் என்ற உணர்ச்சியோடு - அவள் வேறு நாம் வேறு அல்ல என்ற அன்னய பாவத்தோடு - அபேதமாக அம்பாளஐ உபாஸிக்க வேண்டும். அப்படி உபாஸித்துக்கொண்டேயிருந்தால், அவளைப்போலவே நாமும் அன்பே உருவமாகி லோகம் முழுவதற்கும் ஆனந்தத்தைக் கொடுக்கலாம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*தேவியின் திருவடித் தியானம்*

படைப்பு, காத்தல், அழித்தல் என்ற மூன்று கிருத்தியங்களைச் செய்வதற்காக ஒரே பரமாத்மாதான் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று மூன்று ரூபம் கொள்கிறது. கிருத்யங்களுக்கு ஏற்றபடி அந்தந்த மூர்த்திக்கு குணம், வர்ணம், ரூபம் எல்லாம் இருக்கின்றன. இந்த மூன்று என்ற வட்டத்தைத் தாண்டும்போது இம்முன்றுக்கும் காரணமான ஒரே பராசக்தி எஞ்சி இருக்கிறது. அந்த பராசக்தியான துரீய (நான்காம்) நிலையில் நம் மனத்தை முழுகினால் சம்ஸாரத் துயரிலிருந்து விடுபடுவோம்.

இப்போது இருக்கும்படியான லோக வழியில் இதைப் பற்றி யோசிக்கச் சாவகாசம் இல்லை. மந்திரத் தியானமோ, ரூபத் தியானமோ பண்ணுவதற்கான பக்குவம் இல்லை. ஏதாவது மந்திரத்தை ஜபிப்பது, ஒரு உருவத்தைத் தியானிப்பது என்ற பழக்கம் மனசுக்கு வருவது கொஞ்சம் சிரமம்தான். ஆனாலும் முதலடி எடுத்து வைக்கத்தான் வேண்டும். நம் மனசுக்கு ஹிதமாக, ரஞ்சகமாக இருந்தால்தான் முதலடியே வைப்போம். அப்படி அத்யாத்ம மார்க்கத்தில் ஹிதமான ஒரு முதலடி இருக்கிறது. அதுவே அம்பிகையின் திருவடி. எவ்வித சிரமுமின்றி எவரும் தேவியினுடைய சரண கமலத்தைத் தியானிக்கத் தொடங்கலாம். அந்தச் சரணார விந்தத்தின் அழகையும் குளிர்ச்சியையும் நினைத்து விட்டால் அதில் தானாக மனசு நிலைத்து நிற்கப் பழகும். இப்படி எப்போதும் உபாஸித்தால் அவளுடைய கடாக்ஷத்தால் ஜனன நிவிருத்தி ஏற்படும். அல்லது முதலில் அவளது மகிமையைச் சொல்லும் துதிகளைப் படிக்கலாம். முதல்படி பாராயணம். அதற்கப்புறம் ஜபம். பின்பு தியானம் பண்ணுவது. பராசக்தி. இந்த உடம்பிலிருந்து உயிர் போகும் தருணத்தில் நான் உன்னையே தியானம் பண்ணிக்கொண்டு உன்னிடமே

மீண்டும் சேர்ந்து விடும்படியாக அநுக்கிரகம் செய்ய வேண்டும். இப்படி ஒவ்வொரு நாளும் அவளுடைய சரணாரவிந்தத்தைப் பிரார்த்தித்து வேண்டிக்கொண்டால், உயிர் போகும் தருணத்திலும் அவனுடைய கடாக்ஷத்தினால் அவளுடைய தியானம் வரும். இந்த உடல் போனபின் இன்னோர் உடல் வராமல் அவளிடம் இரண்டறக் கலந்து சம்ஸாரத்திலிருந்து விடுபட்டுப் பேரானந்த மயமாகி விடலாம்.

சூரியன் சுயமான பிரகாசத்தை உடையவனாக இருக்கலாம். நமக்கு அவன் ஒளி கொடுக்கிறான். என்றாலும், அவனால் தாபம் உண்டாகிறது. வேர்க்கிறது. தாகம் எடுக்கிறது. அம்பாளுடைய பிரகாசம் நமக்கு ஒளியும் கொடுக்கிறது. தாபத்தையும் நீக்குகிறது. எனவே அது சந்திரிக்கையின் ஒளி போல் இருக்கிறது. தாபசக்தி பண்ணுவது அமிருதம். அமிருதமாக நமக்குத் தாபத்தை நீக்கி சாந்தியைக் கொடுத்துக் கொண்டு பிரகாசிக்கிறது அம்பிகையின் கடாக்ஷமும் சரணார விந்தமும். உஷ்ணப் பிராந்தியத்தில் (Tropics) உள்ள நமது தேசத்தில் இருக்கிறவர்களுக்கு குளிர்ச்சியில் ஒரு பிரீதி. அவன் குளுமையாக இருக்கிறான். குளுமையாகப் பேசுகிறான். இப்போதுதான் வயிறு குளிர்ந்தது என்று சந்தோஷ விஷயங்களுக்குச் சொல்வோம். மேல் நாட்டவர்களுக்கு இது நேர் மாறாக இருக்கிறது. அவர்களுடைய பிரதேசம் ஒரே குளிர்ச்சியானதால் அவர்களுக்கு உஷ்ணம்தான் (Warmth) இன்பம் அளிக்கும். அவர்களோடு கோல்டு (Cold) எனறால் நம்முடைய எண்ணத்திற்கு நேர் விபரீதமான அர்த்தம். சரியாக

வரவேற்காவிட்டால் cold receptionஎன்பார்கள். நிர்த்தாக்ஷண்யமானவனை cold-heartedஎன்பார்கள்.

நமக்குச் சந்திர கிரணம் மாதிரி தாபத்தை நீக்கிக் குளுமையைக் கொடுத்து ஆனந்தத்தை அளிப்பவள் அம்பிகை. அம்பிகை சந்திர மண்டலத்தில் வாஸம் செய்வதாகப் பல இடங்களில் சொல்லியிருக்கிறது. நமக்கு இன்பம் கொடுக்கிற பெருநிதி அவள்தான். அந்த சாக்ஷாத் பரதேவதையின் சரணத்தைத் தியானம் பண்ணிப் பண்ணி சுத்தமாகி நித்திய க்ஷேமத்தை, ஆனந்தத்தை அடைவோமாக.

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

## *இயற்கை ஏமாற்றுகிறது ! அம்பாள் ஏமாற்றுகிறாள்*

மனிதனுக்கு பலவிதமான இச்சைகள், பாசங்கள், ஆசைகள். தன் இச்சையைப் பூர்த்தி செய்து கொள்கிறான். அதில் பூரித்துப் போகிறான். ஆனால் இது சாசுவதமான பூர்த்தியா, பூரிப்பா என்றால் இல்லவே இல்லை. இன்னோர் இச்சை அப்புறமும் இன்னொன்று என்று பிரவாகமாக வந்து கொண்டே இருக்கிறது. இருந்தாலும் இந்த ஒயாத அலைச்சலுக்கு நடுவில் அவ்வப்போது இப்படி ஒரு பூரிப்பும் பெறுகிறான். இது ஒரு விதத்தில் அம்பாள் செய்கிற கிருபை. இன்னொரு விதத்தில் அவளே செய்கிற ஏமாற்று வித்தை.

தான் ஆசையும் பாசமும் வைப்பவர்கள், திருப்பித் தன்னிடம் ஆசையும் பாசமும் வைத்தால் ஒரேடியாகச் சந்தோஷப்படுகிறான். கல்யாணம் பண்ணிக்கொண்டு குழந்தை குட்டிகள் பெற்று இவ்வாறு தன் இச்சை பூர்த்தியானதாக சந்தோஷப்படுகிறான். குழந்தையை இவன் ஆசையோடு தூக்கிக் கொஞ்சும்போது அது களுக் என்று சிரித்தால், அடடா என்னிடம் குழந்தை எத்தனை ஆசையாக இருக்கிறது, என்று ஒரே ஆனந்தம் அடைகிறான். அதே மேலும் அன்போடு கவனத்தோடு வளர்க்கிறான்.

மனிதன், இந்த காம இச்சை, வாத்ஸல்யம் எல்லாம் தன் சுகத்துக்காக என்று எண்ணிக் கொண்டிருக்கிறான். அதுதான் இல்லை. பல ஜீவர்கள் மறுபடி பிறவி எடுத்துத் தங்கள் கர்மத்தை அநுபவித்தாக வேண்டும். முடிவாகக் கர்மத்தைக் கழித்துக்கொண்டு மோக்ஷநிலையைப் பெற வேண்டும். அதற்காகத்தான் இவனுக்குக் காமமும் கலியாணமும் சந்ததியும், ஆனால், இவன் தன் இன்பத்துக்கென்று நினைத்து ஆனந்தப் படுகிறான். இப்படியாக மனுஷ்யனை இயற்கை

ஏமாற்றுகிறது.

இப்படி மநுஷ்யனை பலவிதத்தில் ஏமாற்றியாகிறது. பலவித வியஞ்சனங்களை ருசித்துச் சாப்பிட்டுவிட்டு இவன் சந்தோஷப்படுகிறானே. உணவு இவனது நாவின் சந்தோஷத்துக்காகவா ஏற்பட்டது. இல்லை. இவன் தன் கர்மாவை அநுபவிப்பதற்கு உடம்பை வளர்த்துக்கொள்ள வேண்டும். உடம்பு வளருவதற்கு ஆகாரம் வேண்டும். ஒரே ருசியுல் ஆகாரம் இருந்தால் சாப்பிட அலுத்துப் போகும். அதனால் - இயற்கை - அம்பாள் - பலவித ருசிகளைக் காட்டி இவனைச் சாப்பிட வைத்து, இவனை, ருசியாகச் சாப்பிட்டோம் என்று சந்தோஷப்படவும் செய்து, இவன் கர்மாவவை அநுபவிக்க வசதியாக உடம்பை வளர்க்கிறாள்.

தன் குழந்தையிடம் உள்ள அபிமானம் பக்கத்து வீட்டுக் குழந்தையிடம் இவனுக்கு இல்லை. எனது எனது என்று இந்தக் குழந்தையிடமே அலாதி வஞ்சை காட்டிப் பூரித்துப் போகிறான். எல்லாக் குழந்தைகளிடம் இவனுக்கு ஒரே மாதிரியான அபிப்பிராயம் இருந்தால், இந்தக் குழந்தையைப் பார்த்துப் பார்த்து குளிப்பாட்டி, உணவூட்டி தூங்க வைத்து, அதற்காகவவே உடல், பொருள், ஆவியைச் வளர வேண்டும் என்பதற்காகவே அதனிடத்தில் இவனுக்கு விசேஷ அபிமானம் உண்டாகச் செய்திருக்கிறாள் அம்பாள்.

ஒரு சரீரம் பிறந்து வளருவதற்காக இவனிடம் கர்மத்தை வைத்து, பிறகு வாத்ஸல்யத்தைத் தந்திருக்கிறாள் அம்பாள். இவனுடைய சரீரம் வளருவதற்காகவே இவனுக்கு ருசி, பசி முதலியனவற்றை அம்பாள் வைத்திருக்கிறாள் என்று சொன்னேன். சரி, இப்படி இவன் வாழ்வதாலோ, இவனால் இன்னொரு ஜீவன் பிறந்து வளர்வதாலோ என்ன பிரயோஜனம். பழைய கர்மத்தை அநுபவிப்பது தவிர இதில் என்ன பயன்?இவனும் ஆத்ம க்ஷேமம் அடையக்கானோம்.பொதுவாக நாம் பார்க்கிற எல்லா ஜன்மாவும் வீணாகத்தானே போகிறது. ஒவ்வொரு ஜன்மாவும் காம, குரோத, லோப, மோக, மத, மாத்சாரியங்களை அதிகப்படுத்தி பாபத்தைப் பெருக்கிக் கொள்வதாகத்தானே ஆகிறது. கர்மத்தைக் கழித்துக்கொண்டு மோக்ஷத்துக்கும் போகிறவர்களாகக் கோடியில் ஒருத்தர் கூடத் தோன்றக் காணோமே எனறு சந்தேகம் வரலாம்.

இப்படிச் சந்தேகப்பட வேண்டாம். ஒரு மாமரத்தில் நிறையப் பழங்கள் உண்டாகின்றன. பழம் உண்டாவதன் பயன் அதன் கொட்டையிலிருந்து மீண்டும் ஒரு மரம் தோன்றுவதற்குத்தான். ஆனால் ஒவ்வொரு மாமரத்திலும் உண்டாகிற அத்தனை பழங்களில் உள்ள வித்துக்களும் மரமானால் உலகிலே வேறெங்குமே இடம் இராதே. ஒரு மரத்தில் உள்ள நூற்றுக்கணக்கான பழங்களில் ஒரே ஒரு வித்து மரமானால் நாம் திருப்திப்படவில்லையா!பாக்கியெல்லாம் வியர்த்தமாயிற்றே என்றா வருத்தப்படுகிறோம்.

அப்படித்தான் லக்ஷக்கணக்கில், கோடிக்கணக்கில் நாம் இத்தனை பேரும், ஆத்ம க்ஷேமம் பெறாமல் வீணாகப் போனாலும் பரவாயில்லை. நம்மில் யாராவது ஒரு ஆத்மா பூரணத்துவம் பெற்றுவிட்டால் போதும். சிருஷ்டியின் பயன் அதுவே. அந்த ஒரு பூரண ஆத்மா நம் அனைவருக்கும் சக்தி தரும். அப்படிக் கோடானு கோடி ஜீவர்களில் ஒன்று தோன்றவே, இத்தனை காமமும், சஞ்ஜலமும் இன்ப துன்பமும் வைத்திருக்கிறது. நாம் இத்தனை பேரும் வாழ்வதன் பயனும் அந்த ஒருத்தன் தோன்றுவதுதான்.

உறியடி உத்ஸவத்தில் வழுக்கு மரத்தில் பலர் ஏறி ஏறிச் சறுக்கி விழுவார்கள். கடைசியில் ஒரே ஒருவன் ஏறி விடுகிறான். அவன் ஒருவன் ஏறுவதற்காகத்தான், அத்தனை பேரையும் அத்தனை பிரயாசைப்படுத்தி விளையாட்டு நடக்கிறது. உலக விளையாட்டும் அப்படியே. நம்மில் பலர் சறுக்கி விழுந்தாலும் ஒருவன் பூரணத்தைப் பிடித்து விட்டால் போதும். எத்தனை முறை சறுக்கினாலும் உறியடியில் திரும்ப திரும்ப முயற்சி செய்வதனைப்போல், நாமும் பூரணத்துவத்தை அடைய முயன்று கொண்டேயிருப்போம். அம்பாள் நம்மில் யாறுக்குக் கை கொடுத்து ஏற்ற வேண்டுமா, அவனை ஏற்றி வைப்பாள். அவன் ஒருத்தர் அதற்குப் பிற்பாடு இந்த ஏமாற்று வித்தையிலிருந்து தப்புவதே நம் இத்தனை பேருக்கும் போதும்.

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காமாக்ஷி*

ஒரு காரியமும் இல்லாமல், தன்னைத்தானே அநுபவித்துக் கொண்டிருக்கிற பிரம்மத்தையே சிவன், சிவம் என்று சொல்கிறோம். காரியமில்லாமல், ரூபமில்லாமல், வருணமில்லாமல், குணமில்லாமல் இருக்கிற அந்த சாந்த மயமான பிரம்மத்திலிருந்தான் இத்தனை காரியங்கள், ரூபங்கள் வர்ணங்கள், குணங்கள் எல்லாம் உண்டாகியிருக்கின்றன. மாயா சக்தியினால் ஒரே பிரம்மம் இத்தனை உருவங்களும் குணங்களும் உள்ள பிரபஞ்சங்களாகவும், ஜீவராசிகளாகவும் தோன்றியிருக்கிறது. ஒ

ன்றான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகக் காட்டுகிற அந்த மாயாசக்திதான் அம்பாள். அம்பாள் என்று சொல்லுகிறோம். இந்தச் சக்தியால்தான், நாம் எல்லாம் தோன்றியிருக்கிறோம். உண்மையில் நாமும் பிரம்மத்தைத் தவிர வேறு இல்லை. ஆனால், வேறாக நினைக்கிறோம். இதற்குக் காரணம், பிரம்ம சக்தியான அம்பாளின் மாயைதான். இப்படி நம்மை மாயையில் போட்டு எடுப்பது அவளுடைய லீலை.

அவள் மாயையில் நம்மைக் கட்டிப்போடுகிறவள் மட்டும் அல்ல. மனமுருகி அவளை எந்நாளும் பிரார்த்தித்துக் கொண்டே இருந்தால், அவளே இந்த மாயை முழுவதையும் நீக்கி நமக்கு பிரம்ம ஞானத்தை அநுக்கிரகம் செய்வாள்.

ஞானம் பெறுவதற்கு சாக்ஷாத் அம்பாளைத் தவிர வேறுகதி இல்லை. அவள்தான் மாயையால் ஒரே பிரம்மத்தை மறைத்துப் பல வேறான பிரபஞ்சமாகக் காட்டுகிறாள். இந்தபப் பிரபஞ்ச ஆட்டத்திலிருந்து விடுதலை பெற்று, ஸம்ஸாரத்திலிருந்து - ஜனன மரணச் சூழலிலிருந்து - விமோசனம் அடைந்து பிரம்மமாகவே நாம் ஆக வேண்டும் என்றால், எவள் இந்த மாயையைச் செய்தாளோ,

அவனுடைய அநுக்கிரகம் ஒன்றில்தான் முடியும். மாயா சக்தியாக இருக்கிற அமம்பாளேதான் ஞானாம்பிகையாக வந்து நமக்கு மோக்ஷத்தையே அநுக்கிரகம் செய்கிறவளும் ஆவாள்.

மாயா என்றால் எது இல்லையோ அது என்று அர்த்தம். இல்லாத வஸ்து எப்படி இத்தனை ஆட்டம் ஆட்டி வைக்கிறது. அது எப்போதும் இல்லாதது அல்ல. எப்போதுமே இருக்கிறதும் அல்ல. ஞானம் வருகிற வரையில் மாயை இருக்கிறது. அதுவரையில் நானாவிதமான வஸ்துக்களைப் பார்த்து, எல்லாம் தனித்தானியாக உண்மையாக இருப்பதை நினைக்கிறோம். அவற்றிடம் ஆசை, துவேஷம் முதலியவற்றை உண்டாக்கிக்கொண்டு பல விதங்களில் கர்மம் செய்கிறோம். இந்தக் கர்மத்தை அநுபவிக்க மறுபடியும் மறுபடியும் செத்து செத்துப் பிறக்கிறோம். அம்பாளை உபாஸித்து ஞானம் வந்துவிட்டாலும் நானாவிதமான இத்தனையையும் ஒரே பேரறிவான அவளுடைய வேறு வேறு தோற்றங்கள்தான் என்று அபூர்வமாகத் தெரியும். நாமும் அப்படி ஒன்றே. தோற்றங்கள் (appearances) இத்தனை இருந்தாலும், இவ்வளவும் உள்ளே

ஒன்றுதான் என்று தெரியும். உள்ளே ஒன்றாக இருப்பதைத் தெரிந்து கொண்டபின், வெளியே மாற்றிக் கொண்டும், அழித்துக் கொண்டும் இருக்கும் இந்தத் தோற்றங்களில் ஆசை, துவேஷம் எதுவும் ஏற்படாது. இதற்கெல்லாம் ஆதாரமாக எப்போதும் மாறாமலே இருக்கிற பேரறிவோடு அறிவாக நம் மனத்தைக் கரைத்து விடுவோம். அப்போது பிரபஞ்சமே நம் பார்வைக்கு இல்லாமல் போகும். அந்த ஞான தசையில் எது இல்லாமல் போகிறதோ அது - அதாவது மாயைதான். அதுவரை நம்மை ஆட்டி வைத்தது.

மாயைக்குக் காரணமாக பிரம்ம சக்தியான அம்பாள்தான் ஞானமும் தருகிறாள். அவளுடைய கருணையே இதற்குக் காரணம். இத்தனை மாயையைச் செய்தாலும், அதிலிருந்து விடுவிக்கிற கருணையும், அவளுக்கே பூரணமாக இருக்கிறது. மாயா லோகத்தில் நாம் உண்டாக்கிக் கொள்ளும் கஷ்டங்களுக்கும், துக்கங்கங்களும் காரணம் நம்முடைய இந்திரியங்களும், மனசும்தான். இந்திரிய சுகங்களின்

வழியிலேயே மனத்தை செலுத்தி நம்முடைய ஸ்வபாவமான ஆத்ம சுகத்தை மறந்திருக்கிறோம். ஐம்புலன்களும் மனசும் நம்மை ஆட்டிப் படைக்கின்றன. இவற்றைச் செய்தவள் மாயை. அவளே இவற்றைச் சுத்தப்படுத்தி, இந்திரிய விவகாரங்களிலிருந்தும், மனஸின் ஒயாத சஞ்ஜலங்களிலிருந்தும் ஜீவனை விடுவிப்பதற்காக சாக்ஷாத் காமாக்ஷியாகவே வருகிறாள்.

காமாக்ஷியின் நாலு கைகளில் ஒன்றில் ஒரு வில்லும், இன்னொன்றில் ஐந்து அம்புகளும் இருக்கும். அந்த வில் கரும்பினால் ஆனது. அம்புகள் புஷ்பங்களால் ஆனவை. சாதாரணமாக கெட்டியான இரும்பினால் வில் அமைந்திருக்கும். இங்கோ மதுரமான கரும்பு அம்பாளுக்கு வில்லாக இருக்கிறது. கூரான அம்புகளுக்குப் பதில் மிகவும் மிருதுவான மலர்களைப் பாணங்களாக வைத்திருக்கிறார்கள். அந்தக் கரும்பு வில் மனஸ் என்ற தத்துவத்தைக் குறிக்கும். மதுரமான மனம் படைத்த அம்பாள் நம் மனங்களையெல்லாம் இந்த வில்லைக் காட்டி வஸப்படுத்திக்கொண்டு வருகிறாள். அவளுடைய ஐந்து புஷ்ப பாணங்களும் நம் ஐம்புலன்களை ஆகர்ஷித்துச் செயலாற்றுப் போகும்படி செய்வதற்காக ஏற்பட்டவை. மனோ ரூபேக்ஷு கோதண்டா - பஞ்ச தன்மாத்ர ஸாயகா என்று, இதையே லலிதா ஸஹஸ்ர நாமம் கூறுகிறது. நம்முடைய மனோவிருத்தியும், இந்திரிய விவகாரங்களும் அடங்குவதற்கே பராசக்தியானவள் காமாக்ஷியாகி கரும்பு வில்லும் மலர்ப் பாணமும் தாங்கிவந்திருக்கிறாள்.

மீதி இரண்டு கைகளில் பாசமும் அஹ்குசமும் வைத்திருக்கிறாள். பாசமானது நம் பாசங்களை, ஆசையை நீக்கி அவளோடு நம்மைக் கட்டிப்போடுகிற கயிறு. அங்குசம், நாம் துவேஷத்தில் கோபிக்கிறபோது, நம்மைக் குத்தி அடக்குவத்றகாக, ஃபிஸிக்ஸில் பிரபஞ்ச இயக்கங்களின் அடிப்படைத் தத்துவங்களைச் சொல்கிற கவர்ச்சி, (attraction), விலக்கல் (repulsion) என்பனதான், மநுஷ்ய வாழ்வில் முறையே ஆசையும் துவேஷமும் ஆகின்றன. அவற்றை அடக்கி ஸம்ஸாரத்திலிருந்து மீட்கவே, அம்பாள் காமாக்ஷியாக பாசாங்குசங்களைத் தரித்திருக்கிறாள். ராக ஸ்வரூப பாசட்யா க்ரோதாகாராங்குசோஜ்வலா என்பதாக லலிதா

ஸகஸ்ரநாமத்தில், பாசத்தை ஆசையாகவும், (ராகம்) அங்குசத்தை துவேஷமாகவும் (க்ரோதம்) சொன்னபோது

இவ்றைறை அவை அடக்கி அழிக்கின்றன என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். இப்படியாக, நாலு கைகளில் கரும்பு வில், புஷ்ப பாணம், பாசம், அங்குசம், இவற்றை தரித்துக்கொண்டு, நிறமே இல்லாத பிரம்மத்திலிருந்து செக்கச் செவேல் என்ற பரம கருணையின் நிறத்தோடு, உதய சூரியன் மாதிரி, மாதுளம்பூ மாதிரி, குங்கும்ப்பூ மாதிரி, செம்பருத்தி மாதிரி, காமேசுவரியான காமாக்ஷி அநுக்கிரக நிமித்தம் தோன்றியிருக்கிறாள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காமாக்ஷியின் சிவப்பு*

கரும்பு வில்லும் புஷ்ப தரித்து, ஸமஸ்த லோகத்துக்கும் அநுக்கிரகம் செய்கிற திவ்ய மாதாதான் காமாக்ஷி. சகல ஜீவராசிகளையும் இந்திரிய சேஷ்டையிலிருந்து விடுவிப்பதற்காக மலர் அம்பும், மனஸின் ஆட்டங்களிலிருந்து விடுவிப்பதற்காக கரும்பாலான தனுஸையும் தாங்கியிருக்கிறாள். இதில் வேடிக்கை என்னவென்றால், மன்மதனும் இதேபோல் கரும்பு வில்லையும், புஷ்பத்தாலான ஐந்து பாணங்களையும்தான் வைத்திருக்கிறான். அவனுடைய காரியமோ அம்பாளுடைய காரியத்துக்கு நேர் விரோதமானது. அவன் இந்த வில்லையும் அம்பையும் வைத்துக்கொண்டுதான் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் இந்திரிய விகாரத்தை - அடங்காத காம வேகத்தை - உண்டாக்கி வருகிறான்.

அதுவும் பராசக்தியான அம்பாளுடைய லீலைதான். அவள்தான் மன்மதனுக்கு இப்படிப்பட்ட சக்தியை அநுக்கிரஹம் செய்திருக்கிறாள். பிஞ்சு கசப்பாக இருந்து,

பிறகு துவர்ப்பாகி, அப்புறம் புளிப்பாகி, கடைசியில் பரம மதுரமாக பழுக்கிற மாதிரி, ஜீவர்களும் பலவிதமாக படிப்படியாக பலவித அநுபவங்களில் முன்னேறி முன்னேறி கடைசியில் பழமாகப் பக்குவம் பெற வேண்டும் என்ற அம்பாள் பிரகிரிதி நியதிகளை - இயற்கை வேகங்களை உண்டாக்கியிருக்கிறாள். ஒரேடியாக இவை நம்மை அடித்துச் செல்வதற்கு, நாம் இடம் தந்துவிடக்கூடாது. ஒரேடியாக எடுத்த எடுப்பில் இந்த வேகங்களிலிருந்து தப்ப முடியாவிட்டால், அதற்காக வருத்தப்பட்டு மனமுடைந்து விடவும் கூடாது. அம்பாளைத் தஞ்சம் புகுந்தால், படிப்படியாக அவள் வழிகாட்டி விடுதலை தருவாள் என்ற நம்பிக்கையோடு, வேகங்களைக் குறைத்துக் கொள்ள அவளைப் பிராத்திக்க வேண்டும். சம்ஸாரம் என்பதில் ஈடுபட்டிருக்கும்போதே இதில் ஏதாவது ஸாரம் இருக்கிறதா என்றும் அடிக்கடி சிந்தித்து வரவேண்டும். இப்படிச் சிந்திப்பதே ஒரு ஸாரம்தான். அதனால்தான் சம்ஸாரத்திலிருந்து விடுபடுகிற விரக்தி உண்டாகிறது. அந்தந்தக் காலத்தில் அந்தந்தப் பிரகிருதி வேகங்கள் - இயற்கை உந்தல்கள் - ஏற்பட்டாலும், அதனால், மனம் கலங்காமல், பராசக்தியைப் பிரார்த்திக் கொண்டேயிருந்தால் பிஞ்சுகாயாகி, காய் கனியாகி, கனி தானே முற்றி மரத்திலிருந்து இற்று விழுந்துவிடுவதுபோல், கடைசியில் சம்ஸார விருக்ஷத்திலிருந்து விடுபட்டு அம்பாளின் தரணார விந்தத்தில் விழுந்து அதோடேயே சேர்ந்து விடுவோம்.

நம்மைப்போல் எத்தனையோ பிராணிகள் ஏகப்பட்ட பூர்வ கர்மாவைச் செய்து குவித்திருக்கின்றன. இந்த கர்மாவைக் கழித்துக்கொள்ள அவையெல்லாம் ஜன்மா எடுத்துத்தானாக வேண்டும். எடுக்கிற ஜன்மாவில் கர்ம மூட்டையைத் ஜாஸ்தியாக்கிக் கொள்ளலாம். அல்லது குறைத்துக் கொள்ளலாம். அது எப்படியானாலும் கழித்துக்கொள்ள வேண்டுமானால் ஜன்மா எடுத்து அதைத் தர்ம வழியில் பிரயோஜனப்படுத்திக் கொள்வது தவிர, வேறு வழியில்லை. கடைசியில் கர்மம் முழுவதும் அழுந்தால் பிறப்பே இல்லாத நிலை அடைவோம். ஜீவர்களுக்கு ஜனன நிவுருத்தி உண்டாவதற்கே ஒரு பயிற்ச்சிக் கூடமாக அவர்கள் ஜன்மம் எடுத்தாக வேண்டியிருக்கிறது. இவ்வாறு ஜீவர்களுக்கு ஜன்மம் ஏற்படுவதற்காகத்தான் அம்பாள் காமத்தை வைத்திருக்கிறான். அதற்கு அதிகாரியாக மன்மதனை

நியமித்திருக்கிறாள்.

ஆனால், எதுவும் தன் எல்லையறிந்து அடக்கி நிற்க வேண்டும். மன்மதன் பக்தர்களிடமும் ஞானிகளிடமும் தன் கைவரிசையைக் காட்ட அம்பாள் விடமாட்டாள். இவள் தான் மகா பரமேசுவரனை மட்டும் தன்னிடம் பிரேமை கொள்ளுமாறும் செய்தவள். மன்மதன் அவளிடம் தன் கை வரிசையைக் காட்டப் பார்த்தான். அவர் நெற்றிக்கண்ணைத் திறந்து அவனை பஸ்மீகரமாக்கி விட்டார். அப்புறம் ஆடாமல், அசங்காமல் பிரம்மமாக அமர்ந்துவிட்டார். அவர் அப்படியிருந்தால் அம்பாளுடைய பிரபஞ்ச லீலை எப்படி நடக்கும்?எனவே, அவள் மன்மதனுடைய கரும்புவில்லையும், புஷ்ப தனுஸையும் தானே தன் கைகளில் எடுத்துக் கொண்டு பரமேசுவரன் முன் வந்தாள். மன்மதனைப் போல், அவரை ஜயிப்பேன் என்று அகங்காரத்தோடு வரவில்லை. அன்போடு அடக்கத்தோடு வந்தாள். உடனே, பரம ஞானியான பரமேசுவரனும் காமேசுவரனாக மாறிவிட்டாள். இவள் அன்பு பொங்குகிற கண்களால் காமாக்ஷியாகி, காமேசுவரியாகி, அவரைப் பார்க்க அவரும் அன்பு மயமாகிக் காமேசுவரனாகிவிட்டார்.

பிரம்மமாகச் செயலற்று இருந்த வஸ்துவுக்கு லோகானுக்கிரகம் என்ற பரம கருணை உதிப்பதைத்தான் காமாக்ஷி என்று சொல்கிறோம். சுத்த ஸ்படிக ஸங்காசமாக நிறமில்லாதிருந்த பிரம்மம், அப்போது சிவப்பு நிறத்தை அடைகிறது.

அன்பு, கருணை இவற்றைச் சிறப்பாகவே சொல்வது வழக்கம். ராகம் (அன்பு), அநுராகம் என்பதிலிருந்தே ரக்தம் (ரக்தம்) என்ற பதம் வந்தது. தமிழிலும் மனச்செம்மை, செவ்விய உள்ளம் என்றெல்லாம் சொல்கிறோம். இதுவே காமாக்ஷியின் சிவப்பு:கருணையின் வர்ணம்.

# தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

## *தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

### *கறுப்பும் சிவப்புமான காமாக்ஷி*

அம்பாளைப் பற்றிய பல ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. இவற்றில், ஆதி சங்கர பகவத் பாதர்கள் செய்த சௌந்தரிய லஹரியும் மூக கவி செய்த பஞ்ச சதீயும் ஈடு இணை இல்லாமல் இருக்கின்றன. தேர்ந்த சைத்திரிகன் ஒருவன் அம்பாளின் ஸ்வரூபத்தை எழுதிக்காட்டுகிற மாதிரி, இவை அம்பிகையின் திவ்விய வடிவத்தை அப்படியே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்திவிடும். அவளுடைய மகிமையினால் நம் மனசு மூழ்கிக் கிடக்கும்படி செய்யும்.

கண்ணுக்கும் மனசுக்கும் எட்டாத பராசக்தியைக் கண்ணால் காணவும், மனஸால் அநுபவிக்கவும் செய்கிற வாக்சக்தி லௌந்தரிய லஹரியில் அடங்கியிருக்கிறது. மார்த்தவம் (மிருதுத் தன்மை) முழுவதும் மூக பஞ்சசதீயில் உள்ளது.

மூகன் என்றால் ஊமை என்று அர்த்தம். ஊமையாக இருந்த ஒரு பரம பக்தர், காஞ்சீபுரத்தில் குடிகொண்டுள்ள ஜகன்மாதா காமாக்ஷியின் கிருபா கடாக்ஷதத்தையும், அவனுடைய தாம்பூல உச்சிஷ்டத்தையும் பெற்று, உடனே அமிருத்த சாகரம் மாதிரி ஐந்நூறு சுலோகங்களைப் பொழிந்து தள்ளி விட்டார். அதைத்தான் மூக பஞ்ச சதீ என்கிறோம். பஞ்ச என்றால் ஐந்து சத என்பது நூறு.

அதிலே காமாக்ஷியின் நிறத்தைச் சொல்லுகிறபோது செக்கச் சிவந்தவள் என்றும் பல இடங்களில் கூறியிருக்கிறார். கருநிறம் படைத்தவள் என்றும் சில ஸ்லோகங்களில் சொல்கிறார். 'காச்மீர ஸ்தபக கோமாளாங்க லதா'(குங்குமப் பூங்கொத்து போன்ற கோமளகக் கொடி) பத்து ஜீவகாந்தி மூஷா (செம்பருத்தியின் ஒளி படைத்தவள்) என்று சொல்கிறார். 'தாபிஞ்ச ஸதபகத்விஷா'(கருநீலக் காயாம்பூப்போல் ஒளிருகிறவள்) என்று கூறிகிறார்.

ஏன் இப்படி இரண்டு நிறங்களாகச் சொல்கிறார்?நமக்கு இப்படி ஒருத்தியை இரண்டு நிறத்தில் சொல்வது

புரியவில்லை. சரி, சங்கர பகவத் பாதர்கள் ஸௌந்தரிய லஹரியில் இதைப் பற்றி என்ன சொல்கிறார்.

'ஜயதி கருணா காசித் அருணா'என்கிறது ஸௌந்தரிய லஹரி. நல்லதெற்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாக சம்பு என்று ஒன்று இருக்கிறது. அது பரப்பிரம்ம வஸ்து. பரப்பிரம்மமாகச் செயலின்றி இருந்தால் போதாது என்று அது லோகத்துக்கு நல்லது செய்வதற்காக ஒரு ஸ்வரூபம் எடுக்கிறது. அதற்குத்தான் அம்பாள் என்று பெயர். நிறமில்லாத சம்பு உலகைக் காக்கும் கருணையினால் அருண வர்ணம் கொண்டு வெற்றியோடு பிரகாசிக்கிறது. 'ஜகத் த்ராதும் சம்போ:ஜயதி கருணா காசித் அருணா'என்கிறார் ஸ்ரீ ஆச்சாரியாள். சூரியோதயத்துக்கு முன்னால் கிழக்கில் பரவுகிற பிரகாசச் சிவப்புத்தான் அருணநிறம். அருண நிறம்தான் கருணை நிறம். அதுவே அம்பிகையின் நிறம் என்கிறார் ஆசாரியாள்.

கறுப்போ அழிவின் நிறம். தமோ குணத்துக்குக் கறுப்பை அடையாளமாகச் சொல்வார்கள். தூக்கம், மரணம், சம்ஹாரம் எல்லாம் கறுப்பு.

காருண்ய மூர்த்தியாக காமாக்ஷியைச் சிவப்பானவர்களாக மூகர் சொல்வதுதான் நியாயமாக்கப்படுகிறது. ராஜ ராஜேசுவரி, லலிதா மஹா திரிபுரசுந்தரி, ஸ்ரீவித்யா என்றெல்லாம் சொல்லப்படுகிற அம்பாளை மந்திர சாஸ்திரங்களும் செக்கச் செவந்த ஜோதிப்பிரவாகமாகவே சொல்கின்றன. அந்த ஸ்ரீ வித்யா அதிஷ்டான தேவதையின் ஸ்வரூப லக்ஷணங்களையே பூரணமாகக் கொண்டவள் காமாக்ஷி. எனவே, பரம்பொருளின் கருணை வடிவான அவளைச் சிவப்பாகச் சொல்வதுதான் பொருத்தம்.

ஸயன்ஸ் படிகூட இதுவே பொருத்தமாக இருக்கிறது. VIBGYOR- ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு சிவப்பு என்று ஏழு வர்ணங்களை ஸ்பெக்ட்ராஸ்கோப்பில் பிரித்திருக்கிறார்கள். நிறமில்லாத வெறும் சூரிய ஒளிதான் இப்படி ஏழு நிறங்களாகச் சிதறுகிறது. இதில் வெள்ளை, கறுப்பு - இரண்டும் இல்லை. ஒரு கோடியில் ஊதாவைக் கடந்தால் கறுப்பு. மறுகோடியில் சிவப்பைத் தாண்டினால் வெள்ளை. அதாவது வெளுப்புக்கு ரொம்ப ரொம்ப கிட்டே இருப்பது சிவப்புதான். நம்

கண்ணுக்குப் பரம ஹிதமானது வெள்ளைதான். கொஞ்சம்கூட உறுத்தாது. ஆனால் அது நிறமே இல்லை. நிறம் என்று ஏற்பட்டபின் ரொம்பவும் ஹிதமாக, மிகக் குறைவாக உறுத்துவது (least disturbing colour)சிவப்புதான். இதனால்தான் போட்டோ எடுத்த ஃபிலிமைக் கழுவும்போது, அதில் வெறெந்த நிறத்தின் கிரணம் பட்டாலும் படம் அழிந்து விடும் என்று சிவப்பு கண்ணைக் குத்துவதாக நினைத்தாலும் அதிலிருந்தே intra redஎன்கிற மிருதுவான நிறத்துக்குப் போகிறார்கள். இந்த infra red(ஆழ்ந்த ஊதா) இருக்கிறது. அதற்கப்புறம் கறுப்பு. அம்பாளைக் கறுப்பு என்றும் கருநீலம் என்றும் மூகர் சொல்கிறார். சிவப்பு என்றும் சொல்கிறார். வெள்ளையான சுத்தப் பிரம்மத்துக்கு மிகமிக நெருங்கியுள்ள சக்தி என்பதாலும், கருணாமூர்த்தி என்பதாலும் சிவப்பு என்பதே பொருத்தமாயிருக்கிறது.

அம்பாள் கிருபையால் அவளைப் பிரத்தியக்ஷமாக செய்த மூகர் ஏன் கறுப்பு என்றும் சொல்கிறார்?





## *காமாக்ஷியின் கருமை*

எந்த நிறமும் இல்லாத சூரிய ஒளியிலிருந்து ஒளிச்சிதறல் (Refraction) மூலம் ஒரு நிறத்தைப் பிரித்தால், உடனே மற்ற ஆறு நிறங்களும் பிரிந்து நானும் போகிறேன் நானும் போகிறேன் என்று வெளிப்படத் தொடங்குகின்றன இது ஒரு வேடிக்கை. எல்லா வர்ணங்களும் தேர்ந்தால் வர்ணமே இல்லாமற் போகிறது. அந்த வர்ணமில்லாத ஒளியிலிருந்து ஒன்று குறைந்து பிரிந்தாலும், மற்ற வர்ணங்களும் நானும் போகிறேன் நானும் போகிறேன் என்று பிரிந்து வெளிப்படுகின்றன.

பிரம்மம் என்பது நிறமே இல்லாத சுத்த சூரிய ஒளி மாதிரி. அதில் காரியமே இல்லை. ஆனாலும் சகல காரியங்களுக்கும் ஆதாரமான சகல சக்திகளும் அதில்தான் இருக்கின்றன. எல்லா நிறங்களும் சுத்த ஒளிக்குள் இருக்கிற மாதிரி. காரியம் இல்லாத பிரம்மம் தன்னைத்தானே உணர்ந்து கொண்டதுதான் அதன் முதல் காரியம். இதுவே சாந்தமான பிரம்மத்தில் ஒரு தலனம்தான் ஒளிச்சிதறல் மாதிரி. இந்த ஒளிச் சிதறலில் முதலில் சிவப்பு பிரிகிறது. உதய காலத்தில் சுத்த சூரிய ஒளி முதலில் சிவப்பாகத்தானே வருகிறது?அருணோதயம் என்கிறோமே, அருண என்றால் சிவப்புதான். இப்படிச் சுத்தப் பிரம்மம் சிவப்பாக்கி காரியத்துக்கு வரும்போது பிரம்மம் அம்பாளாகிறது. காரியமற்ற பிரம்மம் காரியமயமான சக்தியாகிறது. காமேசுவரி தோன்றுகிறாள். பிரம்மத்துக்குத் தன்னை அறிகிற ஆசை தோன்றியதல்லவா?இந்த ஆசையின் காமத்தின் - வடிவமே காமேசுவரி. அவளே உலகத்தின் சிருஷ்டி, பரிபாலனம், சம்ஹாரம் எல்லாவற்றுக்கும் மூலம். உண்மையில் இந்த மூன்று தொழில்களும் மாயையில் உண்டானவைதான். மாயாசக்தியால் பிரம்மத்தை மறைத்து, அதனிடத்தில் உலகம் என்ற கற்பனையைக் காட்டுகிறாள். இம்மாதிரி மாயாசக்தியினால் பிரம்மத்தை மறைத்துப் பிரபஞ்சத்தை காட்டுவதை நாலாவது தொழிலாக, திரோதானம் அல்லது திரோபவம் என்று சொல்லுவார்கள். படைத்தல் - காத்தல் - அழித்தல் - மறைத்தல் இவறுக்கு மேலாக அநுக்கிரகம் (அருள்) என்கிற ஐந்தாவது தொழிலும் இருக்கிறது. பக்தர்களை மாயையிலிருந்து விடுவித்துத் தன்மயமாக்கிக் கொள்ளுகிறாளே அதுதான் அநுக்கிரகம். இப்படி ஐந்தொழிலைச் செய்வதால் அம்பாள் பஞ்ச க்ருத்ய பாராயணா எனப்படுகிறாள்.

சிருஷ்டி செய்கிற பிரம்மா, பரிபாலிக்கிற விஷ்ணு, சமம்ஹார ருத்ரன், மாயையின் அதிபதியான ஈஸ்வரன் இவர்களை நாலு கால்களாக் கொண்ட மஞ்சத்தில், சாக்ஷாத் பரப்பிரம்ம சக்தியான காமேசுவரி வீற்றிருக்கிறாள். பரப் பிரம்மமான காமேசுவரியின் இடப்புறத்தில் அநுக்கிரஹ மூர்த்தியாக அமர்ந்திருக்கிறாள். காமேசுவரன் பிரம்மம், காமேசுவரி பிரம்மசக்தி. இவர்கள் ஸதிபதிகள்.

காமேசுவர - காமேசுவரி என்கிற சிவப்பு பிரிந்தவுடன் மற்ற வர்ணங்களும் வெளியே ஓடிவர வேண்டுமல்லவா?இந்த நியாயப்படி செம்மஞ்சளான பிரம்மாவும் லக்ஷ்மியும் வெளிப்பட்டார்கள். நீலமான மகாவிஷ்ணுவும் பார்வதியும் ஆவிர்பவித்தார்கள். வெள்ளையான ருத்திரனும் ஸரஸ்வதியும் தோன்றிவிட்டார்கள். பிரம்ம சக்தியிலிருந்து இரட்டையாகத் தோன்றிய இந்த மூன்று ஜோடியில் ஒவ்வொரு ஜோடியும் சகோதர சகோதரர்கள். அதாவது பிரம்மாவும் லக்ஷ்மியும் உடன் பிறப்புகள். ருத்திரனும் ஸரஸ்வதியும் உடன் பிறப்புகள். பிரம்மாவுக்கும் லக்ஷ்மிக்கும் தங்க நிறம். தாமரை ஆசனம். பிரம்மம் ஜீவராசிகளைபப் பெருக்கினார். லக்ஷ்மி, அவர்களின் அநுபோகத்துக்கான ஐசுவரியத்தைப் பெருக்கினாள். நீலமேக சியாமள வர்ணம் கொண்ட விஷ்ணுவும் பார்வதியும் இப்படியே உடன் பிறந்தவர்கள். பரிபாலனமும் மாயா விலாஸமும் முக்கியமாக இருக்கிற நிலை அது. சிவன் கோவில் வடக்குப் பிரகாரத்தில் உள்ள துர்க்கையைப் பாருங்கள். அவள் பதியோடு இல்லாமல் தனித்து இருக்கிற அம்பாள். அவள் விஷ்ணு மாதிரியே சங்கு சக்கரம் வைத்துக் கொண்டிருப்பாள். நாராயணி, சியாம கிருஷ்ண சகோதரி என்றெல்லாம் இதனால்தான் பார்வதியைச் சொல்வது. சிவனும் ஸரஸ்வதியும் சகோதர சகோதரிகள். சிவன் கோயில் தெற்குப் பிரகாரத்தில் துர்க்கைக்கு எதிர்வெட்டாக, பத்தினி சம்பந்தம் இன்றி, அதாவது பார்வதியின் கலப்பில்லாமல் தனித்து ஸ்வச்சமாக இருக்கிற தக்ஷிணாமூர்த்தியைப் பார்த்தால், அவர் ஸரஸ்வதியின் உடன் பிறப்பு என்று தெரியும். ஸரஸ்வதி மாதிரியே அவர் புஸ்தகமும் ஜப மாலையும் வைத்திருப்பார். இருவரும் ஞான மூர்த்திகள். இருவரும் வெளுப்பு.

பிரம்ம சக்தியிலிருந்த மூன்று ஜோடிகள் தோன்றியதற்குக் காரணம் உண்டு. இவர்களுக்குள் ஒவ்வோர் ஆணும் ஒரு பெண்ணை மணந்தாக வேண்டும். இரண்டே ஜோடி இருந்தால் பெண்ணைக் கொடுத்து பெண் வாங்கினதாகும். அது யுக்தமில்லை. அதனால்தான் மூன்று சகோதர ஜோடிகள் பராசக்தியில் தோன்றின. பிரம்மமா சிவனின் சககோதரியான பார்வதியை மணந்தார். வெள்ளை என்பது சத்வ குணம். செம்மஞ்சள் ரஜோ குணம். நீலம் அல்லது கறுப்பு தமோ

குணம், பிரம்மவிஷ்ணு, ருத்திரர்களை அப்படி அடியோடு தனித்தனியாக்கி முக்குணங்களாகப் பிரித்ததோடு நின்று விடாமல், சமரசத்தைக் காட்டவே

அவர்களுடைய சக்திகளான ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோர் அவர்களது நிறங்களுக்கு மாறுபட்ட நிறமாக இருக்கிறார்கள்.

பராசக்தியேதான் இத்தனையும் ஆகி, முத்தொழிலும் செய்கிறாள். இருந்தாலும் அவளை மாயை மாயை என்று நாலாம் தொழிலான திரோதானத்தோடுதான் ரொம்பவும் இணைத்துப் பேசுகிறோம்.

மூக கவி சம்ஹார ருத்ரனின் சக்தியான பார்வதியின் கருநீல நிறத்தைச் சிவப்புப் பராசக்தியின் வர்ணமாககச் சொல்கிறார். மாயையாக இருப்பவளும், மாயையைப் போக்கி ஐந்தாம் தொழிலான (மோக்ஷஅநுக்கிரகத்தைச் செய்பவளுமான பராசக்தியே காமாக்ஷி என்று சொல்லி, அந்தச் சிவப்புக் காமாக்ஷியை ஒரொரு இடங்களில் கறுப்பானவளாகவும் (சியாமாவாகவும்) வர்ணிக்கிறார். சியாமள வண்ணம் கொண்ட பார்வதியைச் சக்தியாகப் பெற்றே வெள்ளைச் சிவன் சம்ஹாரத்தில் இறங்குகிறார். அம்பாளையே சம்ஹார மூர்த்தியாகச் சொல்கிற போதும், அவளைக் காளி என்கிறோம். காளி என்றாலே கருத்தவள் என்று அர்த்தம். அநுக்கிரஹ மூர்த்தியான காமாக்ஷியை ஏன் கருப்பானவளாகவும் அதாவது அழிக்கும் தொழில் செய்கிறவர்களாகவும் மூகர் சொன்னார்?

வேலை எல்லாம் செய்கிறோம். பிறகு அலுத்துப் போய்த் தூங்குகிறோம். தூக்கம் தமஸின் செயல். அங்கே ஒரே இருட்டு - கறுப்புதான் இருக்கிறது. ஆனாலும் இந்தத் தூக்கத்தில்தான் மநுஷ்யனுக்குக் கொஞ்ச மேனும் சாந்தி இருக்கிறது. நாளெல்லாம் அலைந்து திரிந்து கஷ்டப்படுகிற ஜீவராசிகளுக்கு ஆறுதலாகப் பராசக்தி அன்றன்றும் தூக்கத்தை வைத்து கொஞ்சம் நிம்மதி தருகிறாள். எனவே தமஸிலேயே ரொம்பவும் அநுக்கிரகம் இருப்பதாகத் தெரிகிறது.

சம்ஹாரம் என்பது பெரிய தூக்கம். தூக்கத்தில் எப்படித் துக்கக் கலப்பே இல்லாத அமைதி நிலையில்

இருக்கிறோமோ, அப்படியே சம்ஹரிக்கப்பட்ட ஜீவன் மறுபடியும் ஜன்மா எடுக்கிற வரையில் நானாவித கர்ம அநுபவங்களின் சிக்கலிலிருந்து தப்பி அமைதியில் அமிழ் ந்திருக்கிறது. நமக்குக் கர்மக் கட்டிலிருந்து தற்காலிகமாக விடுதலைதந்து விச்ராந்தி தரவே சம்ஹாரத் தொழிலைப் புரிகிறார் சிவபெருமான். நான் கர்மா செய்கிறேன் என்ற அகங்காரத்தை இழந்துவிட்ட ஞானிகளே கர்மச் சூழலிலிருந்து நிரந்தரமாகத் தப்ப முடியும். ஆனால் பாபியும்கூடத் தற்காலிகமாகவேனும் இந்தக் கர்மாநுபவத் தொந்தரவிலிருந்து விடுபட்டு விச்ராந்தி பெறுவதற்குப் பராசக்தி மகாகருணையுடன் சம்ஹாரத்தை அமைத்திருக்கிறாள். விஷ்ணுவின் பரம பக்தரான நம்மாழ்வார், முனியே நான்முகனே, முக்கண்ணப்பா என்று மும்மூர்த்திகளையும் அழைக்கும்போது, சம்ஹார மூர்த்தியான ருத்திரனைத்தான் அப்பா போட்டு அருமையுடன் கூப்பிடுகிறார். பரம தயாளுவான ஒரு தகப்பனார், தப்புச் செய்கிற குழந்தையையும், அடக் குழந்தே, ரொம்ப அலைந்து திரிந்து களைத்துவிட்டாயப்பா, கொஞ்சம் ஒய்வு எடுத்துக் கொள் என்று சொல்கிற மாதிரி, பரமேசுவரன் சம்ஹார காலத்தில் நமக்கெல்லாம் ஒய்வு தந்து ஆறுதல் அருளுகிறான். இதையே, முக்கண்ணப்பா என்று வாய்விட்டுக் கூப்பிட்டுக்

காட்டுகிறார் ஆழ்வார். இப்படி ஸம்ஹரிக்கிற ருத்திரனின் சக்தியான பார்வதியின் நிறம்தான் கறுப்பு.

லோகத்தை விட்டால்தான் சஞ்ஜலங்களிலிருந்து விடுபட்டு மோக்ஷம் என்கிற நிரந்தர சாந்தியைப் பெற முடியும். சாந்தியோடு இருக்கிறோம் என்று உணர்ந்து அமைதியில் இருப்பதே ஸமாதி நிலை. என்றும் கலையாத சாசுவத நிலை அது. இதுவே பராசக்தியின் அநுக்கிரகம் என்கிற தொழிலால் அருளப்படும் நிலை. இதற்கடுத்த நிலை சாந்தியோடு இருக்கிறோம் என்ற பிரக்ஞையில்லாமலே அப்படியிருக்கிற தூக்க நிலை, சம்ஹார நிலை. எனவே அநுக்கிரஹத்துக்கு அடுத்தபடியாக ஜீவராசிகளுக்கு மிகவும் ஹிதமான நிலை சம்ஹாரம்தான்.

பொது வழக்கிலும் நம்மை ஏன் பிரம்மா சிருஷ்டித்தார் என்ற வருத்தத்தாலோ என்னவோ பிரம்மாவை விசேஷமாக

வழிபடுவதே இல்லை. மஹாவிஷ்ணுவுக்கு நிறைய வழிபாடு இருந்தாலும் ஜகத் பரிபாலகரான அவரை மனுஷ்ய லோகத்தோடு ரொம்பவும் சந்தோஷப்படுத்தியிருக்கிறது. ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆசாமிகளை, ஸ்வாமி ஸ்வாமி என்று பரஸ்பரம் கூப்பிட்டுக்கொண்டாலும், தங்கள் ஸ்வாமியைப் பெரும் ஆள் (பெருமாள்) என்றே சொல்கிறார்கள். வேதத்தைப் பார்த்தாலும் விஷ்ணுபரமான மந்திரங்களுக்குப் புருஷ ஸூக்தம் என்றே பெயர் இருக்கிறது. புருஷ என்றால் மநுஷ்யன், ஆசாமி என்றே பொருள் கொள்கிறோம். பராசக்தியிடமிருந்து இந்த லோகமெல்லாம் எப்படி வந்தது என்பதைத்தான் புருஷ ஸூக்கதம் சொல்கிறது. லோகத்தோடு, மநுஷ்யனோடு இப்படி விஷ்ணுவுக்கு நெருக்கமான தொடர்பு காணப்படுகிறது. சம்ஹார மூர்த்தியான சிவனே லோகத்தை விட்டபின் இருக்கிற வைராக்கியத்திற்கு முக்கியமாகச் சொல்லப்படுகிறார். விஷ்ணு ஆலயத்தைப் பெருமாள் கோவில் என்றும் சிவாலயத்தையே ஈஸ்வரன் கோவில் என்றும் சொல்கிற வழக்கமும் இருக்கிறது. விஷ்ணு தாழ்த்தி - சிவன் உயர்த்தி என்பதற்காக இதை நான் சொல்லவில்லை. அப்படி சொன்னால் அது அடியோடு தப்பு. இரண்டும் முழுக்க முழுக்க ஒரே வஸ்துதான். ஆனால் அவரவர் செய்கிற கிருதயத்தைப் பொறுத்து, லோக ரீதியில் அவர்கள் எப்படி நினைக்கப்படுகிறார்கள் என்று காட்டுவதற்காகச் சொல்கிறேன்.

சிவப்புக் காமாக்ஷியைக் கறுப்பானவள் என்று மூகர் ஏன் சொன்னார் என்று யோசிக்கும்போது, இத்தனை அபிப்பிராயமும் வந்தது. சாசுவத சாந்தி என்கிற மோக்ஷநிலைக்குத் தற்காலிக சாந்த நிலையான ஸம்ஹாரமே மிகவும் கிட்டத்தில் இருக்கிறது. அதனால்தான், சம்ஹார சக்தியான பார்வதியின் கறுப்பு வர்ணத்தையே மோக்ஷம் அநுக்கிரகிக்கும் காமேசுவரியின் வர்ணமாகவும், மூகர் கூறியிருக்கிறார் என்று சொல்ல வந்தேன். பரம ஞானிக்கு அவர் சாசுவத சாந்தம் தருவது பெரிய கருணையில்லை. பாபாத்மாவுக்கு சம்ஹாரத்திலே தற்காலிக அனுமதி தருவதுதான் மகா கருணை என்று நினைத்து, சம்ஹார சக்தியின் கறுப்பு நிறத்தையே சிவப்புக் காமாக்ஷியின் இன்னொரு நிறமாக ஸ்துதி செய்தார் போலிருக்கிறது.

பராசக்தியின் ஸத்வகுணம் மகாவிஷ்ணுவாக உலகைப்

பரிபாலிக்கிறது. அவனுடைய ரஜோ குணம் பிரம்மாவாக உலகைப் படைக்கிறது. அவளுடைய

தமோ குணம். ருத்திரனாக லோகத்தை சம்ஹரிக்கிறது. இந்த ஸம்ஹாரத்தில் எந்த யோக்கியதையும் இல்லாத ஜீவர்களும் சாந்தி அநுபவிக்க அருள் செய்கிறாள். இதனால்தான், அவளது வர்ணத்தைச் சொல்லும்போது ஸம்ஸார சக்தியின் கறுப்பை விசேஷித்துக் சொல்கிறார் மூககவி. ஸத்வம், ரஜஸ் என்ற இரண்டைவிடத் தமஸ் தாழ்ந்தது என்று ஒரு கோணத்தில் (angle) தோன்றினாலும், இன்னொரு கோணத்தில் பார்த்தால் தமஸே அநுக்கிரகம் என்ற பரம உச்சமான ஐந்தாம் தொழிலுக்குக் கிட்டத்தில் இருப்பதால்தான், நிறமாலையில், கறுப்பும் சிவப்பும் இரு வேறு கோடிகளில் இருந்தாலும், அம்பாள் விஷயத்தில் இந்த இரண்டு வர்ணமுமே ரொம்பக் கிட்டத்தட்ட இருப்பதாக மூகர் பாடியிருக்கிறார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காமாக்ஷியின் கருணை*

பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் முறையே பராசக்தியின் ரஜோ குணம், ஸத்வ குணம், தமோ குணம் இவற்றில் தோன்றிப் படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய முத்தொழில்களைச் செய்கின்றனர் என்றேன். ஜீவர்களான நமக்கும் இந்த மூன்று குணங்களும் இருக்கின்றன. நாமும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் மூன்று அவஸ்தை (நிலை)களில் செய்கிறோம்.

தூங்குகிறபோது ஸ்வப்னம் உண்டாகிறதே, அப்போது நாம் சிருஷ்டித் தொழிலைச் செய்கிறோம். கனவில் எத்தனை

எத்தனையோ இடங்களையும், ஜனங்களையும் படைத்து விடுகிறோம். அம்பாள் அவனுடைய லீலைக்கு ஒரு பெரிய திருஷ்டாந்தமாகவே ஸ்வப்னத்தை உண்டாக்கியிருக்கிறாள் என்று தோன்றுகிறது. மனிதன் வேலை செய்வதற்காக விழித்துக் கொண்டிருக்கிறான். வேலை முடிந்தபின் களைத்து தூங்கவேண்டியதுதான். ஆகையால் ஜாகக்ரத் (விழிப்பு) ஸுஷுப்தி (தூக்கம்) என்ற இந்த இரண்டு அவஸ்தைகள் (நிலைகள்) போதாதா?ஸ்வப்னம் (கனவு) என்கிற மூன்றாவது அவஸ்தை எதற்காக இருக்க வேண்டும். யோசித்துப் பார்த்தால் பராசக்தி பரம கருணையினாலேயே ஸ்வப்னாவஸ்தையை ஒரு பெரிய உதாரணமாக நமக்குத் தந்திருக்கிறாள் என்று தெரிகிறது. லோகத்தில் வேறு வேறாகக் காண்கிற சமஸ்த ஜீவராசிகளும் ஒரே பராசக்தியின் கற்பனைதான். வாஸ்தவத்தில் அவளைத் தவிர வேறொன்றும் இல்லை என்று ஞானிகள் சொல்கிறார்கள். இதை எப்படி நம்புவது?இத்தனை ஜீவராசிகளும் பிரத்யக்ஷமாகக் காணப்படுகிறீர்களே, காரியங்களைச் செய்கிறீர்களே, இவர்களை எப்படிக் கற்பனை என்று சொல்வது?என்று தோன்றுகிறது. இந்தச் சந்தேகத்தைப் போக்கவே விழிப்பு, தூக்கம் இரண்டு மட்டுமே போதாது என்று ஸ்வப்னா அவஸ்தையை ஒவ்வொரு ஜீவனுக்கும் அம்பாள் தந்திருக்கிறாள். பராசக்தி ஒருத்தியின் கற்பனையில் நாம் அனைவரும் உண்டானதுபோல், நம் ஒருத்தரின் கற்பனையிலேயே கனவில் பல ஊர்களை ஜனங்களை, நிகழ்ச்சிகளை ஒவ்வொருவரும் உண்டாக்கி விடுகிறோம். கனவு காண்கிறபோது, இதெல்லாம் கற்பனை என்று தெரிகிறதோ?இல்லை. சத்தியமாகவே தோன்றுகிறது. கனவில் அழுகிறோம். சிரிக்கிறோம். என்னன்னவோ செய்கிறோம். ஆனால் ஜாக்ரத் (விழிப்பு) நிலைக்கு வந்தவுடன் என்ன ஆகிறது?அத்தனை காட்சியும், ஊர்களும், ஜனங்களும், சம்பவங்களும் வெறும் கற்பிதமே என்று தெரிகிறது. ஆனால் இந்தக் கற்பனைக்கு ஆதாரமாக ஒருத்தன் இருந்தானே, அந்த ஜீவன் மட்டும் ஸ்வப்னாவஸ்தையிலும் இருந்தான். இப்போது விழித்த பின்பும் இருக்கிறான். இப்படியே உலகமும் பராசக்தியின் கற்பனையின்றி வேறில்லை. அவள் ஒருத்தியே எக்காலமும் சத்தியமாக இருப்பவள் என்று தெரிகிறது. கனவு காண்கிறபோது, அது கனவு என்று தெரியாததுபோல், இந்த உலக வாழ்க்கையில் நாம் மாட்டிக்

கொண்டிருக்கிற வரையில் இந்த வாழ்வு மயம் என்பதும் தெரியாமலே இருக்கிறது.

ஸ்வப்னத்தை ஆத்ம சிந்தனை செய்து கொள்வதற்கு ஒரு பரிட்சையாகவும் அம்பாள் வைத்திருக்கிறாள். உள்மனத்தில் அமுக்கி வைத்த எண்ணங்களும், நம்முடைய பூர்வ ஸமஸ்காரங்களால் உள்ளுக்குள்ளே தடிப்பேறிப் போயிருக்கிற வாஸனைகளுமே ஸ்வப்னத்தில் ஒரளவுக்கு வெளியாகின்றன. உள்ளுக்குள்ளே நாம் எப்படி இருக்கிறோம். எத்தனை தூரம் பரிசுத்தமாயிருக்கிறோம் என்பது நமக்கே தெரியவில்லை. ஸாது ஜனங்களோடு கோவிலுக்குப் போனால், அப்போது மனசுக்கு ரொம்பவும் சாந்தமாக இருக்கிறது. நாம் மிகவும் சுத்தமாகியிட்டோம் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டு விட்டோம். உடனேயே இந்திரியங்களைத் தூண்டுகிற சினிமா, இல்லாவிட்டால் நாவலைப் படிக்க நேரிட்டால், அதிலும் சந்தோஷம் ஏற்படுகிறது. இதைப் பற்றி யோசிக்கிறபோது, அடடா கடைசியில் நாம் இவ்வளவுதானா?என்று துக்கம் உண்டாகிறது. வாஸ்தவமாகவே நம் பக்குவத்தின் நிலை என்ன என்று உரைத்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளவே அம்பாள் ஸ்வப்னத்தை ஓர் உரைக்கல்லாகத் தந்திருக்கிறாள். கனவில் நாம் காமாதி அநுபவங்களில் மகிழ்கிறோமோ, அல்லது காமாக்ஷியின் தரிசனம் கிடைத்தாற்போல் ஸ்வப்னம் வருகிறதோ என்று பார்த்தால் நம் அந்தரங்கம் நமக்கே தெரியும். பூஜை, தியானம், ஜபம் என்று வெளிப்பட நாம் அமர்க்களம் பண்ணலாம். ஆனாலும் ஸ்வப்னத்தில் காமாக்ஷியைத் தரிசிப்பதாக வந்தால்தான் உண்மையாகவே பக்குவமானதாக அர்த்தம். நம் குறை நினைகளை அறியப் பரீட்சையாகக் கனவை வைத்திருக்கிறாள். குறையிருக்கிறதே என்று புலம்ப வேண்டியதில்லை. நமக்கு உள்ள குறையை உணர்ந்தால்தானே நிறைவை நோக்கிப் போகலாம். அம்மா!நான் இன்னமும் இப்படித்தான் இருக்கிறேனா?என்னை மேலும் கை தூக்கி விடு. உன்னை நிஜமாக பக்தி செய்ய அநுக்கிரஹம் பண்ணு என்று அவளை நம்பிக்கையோடு வேண்டிக் கொள்ள வேண்டும். நம் பக்குவக் குறையை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்ளவே, அல்லது நிறைவை அறிந்து நிம்மதி பெறவே, கருணையோடு ஸ்வப்னாவஸ்தையை வைத்திருக்கிறாள்.

ஸ்வப்னம் என்பது படைப்புத் தொழிலைக் காட்டுகிறது. அப்போது நாம் பிரம்மா மாதிரி சிருஷ்டி செய்கிறோம். ஜாக்ரத் என்கிற விழிப்பு நிலையில், நம்மையும் நம்மைச் சேர்ந்தவர்களும் ரக்ஷித்துக் கொள்வதற்காக காரியங்களைச் செய்கிறோம். இது விஷ்ணுவின் பரிபாலனம் மாதிரி, ஸுஷுப்தி எனப்படும் தூக்கத்தில் நம் இந்திரியங்கள், மனசு எல்லாம் அழிந்து போனதுபோல், எந்த வேலையும் செய்யாமல் ஒய்ந்து போய்விடுகின்றன. இது ருத்திரன் கிருத்தியமான சம்ஹாரம் போன்ற நிலை. அண்டத்தில் உள்ளதெல்லாம் பிண்டத்தில் உண்டு என்பார்கள். அம்பாளுடைய சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகியன ஒவ்வொரு ஜீவனிடத்திலும் இருக்கின்றன. ஆனால், அவள் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்பவள் மட்டுமல்ல. இவை எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டிருக்கிற நாலாவதான துரீய வஸ்துவே அவள். அந்த நிலை எப்படி இருக்கும். ஒரு கற்கண்டு கட்டியை உடைத்து எந்தப் பொடியை வாயில் போட்டுக் கொண்டாலும் எப்படித் தித்திக்குமோ, அதுபோல் ஆனந்தத்தைத் தவிர வேறெதுவுமே இல்லாத நிலைதான் அந்தத் துரீயம். ஆனந்தானுபவம் என்கிற ரஸமொன்றே இறுகி இருக்கிற அந்த நிலையை ரஸனம் என்று சொல்வார்கள்.

சிருஷ்டியிலும் ஸ்திதியிலும் நிறைவான, நிரந்தரமான ஆனந்தம் இல்லை. சம்ஹாரத்தில் எந்த அலைச்சலும் இல்லாத ஆனந்தம் இருந்தாலும், ஆனந்தமாக இருக்கிறோம் என்ற பிரக்ஞை இல்லை. இதுவும் பிரயோஜனமில்லை. துரீயத்தில்தான் இந்த மூன்றுமே அடிபட்டுப்போய் இவற்றுக்கு ஆதாரமான ஒரே சத்தியம் மட்டும் ஆனந்த ஸ்வரூபமாகப் பூரணப் பிரக்ஞையுடன் பிரகாசிக்கிறது. அந்த ஒன்றுதான் மாயையால் இந்த மூன்றாகவும் தெரிந்தது. மாயை போனால், மூன்றும் போய்விடும். துரீயமான ஒன்று மட்டுமே நிற்கும். ஜீவனை இந்த மூன்றின் கட்டிலிருந்து, மாயா பந்தத்திலிருந்து அம்பாள் விடுவித்தால் அந்த ஆனந்தத்தை அநுபவிக்கலாம். இந்த உலக மாயையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும்போதே பரீட்சையில் பாஸ் பண்ணுவது, உத்தியோகத்தில் பிரமோஷன் பெறுவது, வியாதி வந்தால் குணமாவது இதற்கெல்லாம் பிரார்த்தனை செய்கிறோம். நம் பிரார்த்தனை செய்கிறோம். நம் பிரார்த்தனை நிறைவேறி

விட்டால் ஸ்வாமி அநுக்கிரஹம் செய்து விட்டார் என்று சொல்கிறோம். ஆனால், பராசக்தியின் பஞ்ச கிருத்தியங்களை (ஐந்தொழில்கள்) எடுத்துக் கொள்ளும்போது அநுக்கிரம் என்றால், அது மாயா லோகத்திலிருந்து நம்மை விடுவித்து நம்முடைய ஆத்ம ஸ்வரூபமான மோக்ஷ நிலையில் சேர்ப்பிக்கிறதைத்தான் குறிக்கும். லலிதா ஸஹஸ்ரநாமமும் பிரம்மாவாக உலகைப் படைக்கிறாய், விஷ்ணுவாகக் காக்கிறாய். ருத்திரனாக ஸம்ஹரிக்கிறாய். மஹேஷ்வர சக்தியாக மாயை ஆகிறாய், ஸதாசிவ ஸ்வரூபமாக அநுக்கிரஹத்தை செய்கிறாய் என்று ஐந்தொழில்களைச் சொல்கிறது.

ஸ்ருஷ்டிகர்திரீ - ப்ரம்மரூபா ; கோப்த்ரீ - கோவிந்த ரூபிணீ ; ஸம்ஹாரிணி - ருத்ரரூபா ; திரோதானகரி - ஈச்வரி ; ஸதாசிவா - அநுக்ரஹதா ; க்ருத்ய பராயணா.

ஜீவன் விஷயத்தில் கனவு, விழிப்பு, உறக்கம் இவையே சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்றேன். இங்கேயும் தூரியம் இருக்கிறது. குடை ராட்டினத்தில் யானை மேல் இருக்கிறோம். ஆனால் எதுவானாலும் இந்தக் குடை ராட்டின வட்டதத்தை நவிட்டு அப்பால் சவாரி செய்ய முடியாது. அதாவது, மாயைக்குள்ளேயேதான் நம் பெருமை, சிறுமை எல்லாம் சுழன்று சுழன்று வருகின்றன. அதைக் கடந்து போக முடியவில்லை. குடைராட்டினத்துக்கு அப்பால் அதில் உள்ள மிருக மொம்மைகள் போக முடியாதே;இருக்கிற இடத்திலேயே சுற்ற வேண்டியதுதான். சுற்றி வரும்போது எத்தனை சந்தோஷமாக இருந்தாலும், பிறகு அலித்துத்தான்

போகிறகிறது. இந்தச் சலிப்புத் தீரத் தூக்கத்தை ஒரு மருந்தாகத் தந்து ஒய்வு கொடுக்கிறாள் அம்பிகை. இதுவும் மாயை வட்டத்துக்குட்பட்டதுதான். குடை ராட்டினப் பொம்பை மீறே தலை சுற்றி மயங்கிச் சாய்கிற மாதிரிதான் தூக்கம். ராட்டினத்தை விட்டு இப்போதும் இறங்கினபாடாக இல்லை. இந்தத் தூக்கத்துக்கு அப்பால்தான் மூன்று நிலைகளுக்கும் ஆதாரமான துவீரியம் இருக்கிறது. நாம் தூங்குகிறபோதும், எதுவோ ஒன்று நமக்குள் தூங்காமல் விழித்துக் கொண்டு உயிரை இயக்குகிறது

அல்லவா?அதுதான் துரீயம். குடை ராட்டின வட்டத்துக்கு அப்பாற்பட்ட சத்தியம் அதுவே. அதுவே அம்பாள்.

அம்பிகையே மாயை, மாயை என்றே பொதுவாகச் சொல்வார்கள். மூகரும், காமாக்ஷியிடம், ஹே மகா மாயையே!உன் துளிர்போல் சிவந்த பாதங்களில் லயித்துப் போகிறேன் என்கிறார்.

லீயே புரஹரஜாயே மாயே தவ தருண பல்லவச் சாயே சரணே

மாயையில் லயிப்பதாகச் சொன்னாலும், மாயைக்கு அதீதமான துரீயானந்தத்தில் இரண்டறக் கலப்பதால்தான் இங்கே அர்த்தம். மாயையாகிற காமாக்ஷிதான் அதை நீக்குகிற அநுக்கிரஹ மூர்த்தியும் ஆவாள். எவள் மறைக்கிறார்களோ அவள்தானே மறைப்பை எடுக்கவும் முடியும்?

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

காமாக்ஷியின் பெருமை

படைப்பு, காப்பு, அழிப்பு மூன்றுக்கும் ஆதாரமாக இருப்பது ஒரு பராசக்தி. இம் மூன்றைக் கடந்தபின் நாலாவதாக உள்ள துரீயத்தையே சதுர்த்தம் என்றும், சிவம் என்றும் அத்வைதம் என்றும் மாண்டூக்ய உபநிஷத் சொல்கிறது. அதையே பிரம்மம் என்கிறோம்.

அதைத் தவிர இரண்டாவதாக வேறெதுவும் இல்லாததால் அது அத்வைதம். அப்போது அதற்கு நிறமும் இல்லை. சுத்த ஸ்படிகமாக இருக்கிறது. ஸ்படிகமான இந்தச் சிவ ஸ்வரூபம்தான் செக்கச் சிவந்த காமேசுவரியாக, காமாக்ஷியாக இருக்கிறது. ஏகமாக இருந்த ஒன்று பலவாகத் தோன்றுகிற சக்தியாகும்போது காமேசுவரியாகிறது. பலவாகத்

தோன்றுவதோடு, அவற்றை எல்லாம் ரக்ஷிக்கிற பரமகாருண்யமுள்ள மாதாவாகவும் அது இருக்கிறது. பலவாகத் தோன்றுகிற ஜகத்தையே ஜீவர்கள் சத்தியமாக நினைத்து மயங்க வைக்கிற மாயையும் அதுதான். இந்த மாயையிலிருந்து ஜீவர்களை விடுவித்து ஏகமாக அத்வைத ஸ்வரூபத்தில் கரைக்கிற ஞானாம்பிகையாகவும் அதுவே இருக்கிறது. அதன் மகிமை இப்படி நம்மால் புரிந்து கொள்ள முடியாதபடி பல தினுசாக இருக்கிறது.

பிரம்மம் தூரீயம் என்றால், சாக்ஷாத் அந்த பிரம்மத்தின் சக்தியாக காமாக்ஷியும் தூரிய வஸ்துவாகத்தான் இருக்கிறாள். "தூரீயா காபித்வம்"என்று ஆதி சங்கராச்சாரியாள் அவளையே ஸௌந்தரிய லஹரியில் சொல்கிறார். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றுக்கு அப்பாற்பட்டு செயலற்று இருப்பது பிரம்மமான சிவஸ்வரூபம். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவை மூன்றையுமே செய்வித்துக் கொண்டும், அவற்றால் பாதிக்கப்படாமல், அவற்றைக் கடந்து அதீதமாக நிற்பது பராசக்தியான காமேசுவரி. இந்த மூன்று தொழிலும் அவளுடைய மாயை. இந்த மாயையால்தான் அகில சராசரங்களையும் ஆட்டி வைக்கிறாள். "மஹா மயா விச்வம் ப்ரமயஸி" என்கிறார் ஸௌந்தரிய லஹரியில், மஹா மாயையானாலும் உண்மையில் அவளே பரப்ரம்ம மஹிஷி சாக்ஷாத் பிரம்மத்தின் பட்டமகிஷி என்கிறார்.

தன்னைத் தவிர, வேறில்லாத பிரம்மத்துக்கு எப்படிப் பத்தினி இருக்க முடியும் என்று தோன்றுகிறது. பிரம்மத்திலிரு ந்துதானே இத்தனை தோற்றங்களும் வந்திருக்கின்றன. ஏதோ ஒரு சக்தியால்தானே அசலமான பிரம்மம் அசைந்து கொடுத்தது மாதிரி இத்தனையும் தோன்றிவிட்டன? அந்தச் சக்திதான் பிரம்மத்தின் பத்தினியான காமேசுவரி எனப்படுகிறது. அன்பே உருவான, ஒரு பெற்ற தாயாருக்கு மோலாக அந்தப் பராசக்தி அநுக்கிரஹம் செய்வதைப் பிரத்தியக்ஷமாக அநுபவித்த மகான்கள் அதைக் காமேசுவரியாக வர்ணிக்கிறார்கள்.

பிரம்மாவின் பத்தினி என்று வாக்தேவியைச் சொல்கிறார்கள். பிரம்மா உலகைச் சிருஷ்டிப்பதுபோல், கவிகளுக்குக் கற்பனா சிருஷ்டி சக்தியைத் தருகிறவள் ஸரஸ்வதி. செய்வதைத் தருகிற மஹாலக்ஷ்மியை லோகபாலகனான

மஹாவிஷ்ணுவின் சக்தியாகச் சொல்வதும் சரி. சம்ஹார மூர்த்தியான ருத்திரனின் சக்தியாக இருக்கிறாள் பார்வதி. இந்த மூன்று காரியங்களுக்கும் மேலே இருக்கிறாளே, பராசக்தியான காமாக்ஷி. இவளை யாருடைய பத்தினி என்று சொல்வது. பரப்பிரம்ம பத்தினி என்றே சொல்ல வேண்டும். குணமும் கிரியையும் இல்லாத சாந்த மயமான பிரம்ம பத்தினியாகவும் இருக்கிறாள். லோகத்தை எல்லாக் குணங்களிலும், பல கிரியைகளிலும் புரட்டி எடுத்துக் கொண்டிருக்கிற மஹா மாயையாகவும் இருக்கிறாள்.. இந்த மஹிமைக்கு எல்லை காட்ட முடியாது (நிஸ்ஸீமம்) அது இன்னதென்று புரிந்து கொள்ளவும் முடியாது (துரதிகம்) என்று ஆசாரியாள் ஸௌந்தரிய லஹரியயில் அம்பாளுடைய பெருமையைச் சொல்கிறார்.

எல்லாவற்றையும் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிற அந்தச் சக்தியில் கரைந்தால் எப்படி ஆட்டமே இல்லாத ஆனந்தமும், சாந்தமும் உண்டாக முடியும் என்று தோன்றுகிறது. யோசித்துப் பார்த்தால் அது எப்போதும் சாந்தமாகவும், ஆனந்த ஸ்வரூபமாகவும் இருப்பதால்தான் எல்லாவற்றையும் ஆட்டிப் படைத்திருக்கிறது என்று தெரியும். ஜீவனும் கனவு, விழிப்பு, தூக்கம் இவற்றில் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் இவற்றைச் செய்கிறான் என்று முன்னே சொன்னேன் அல்லவா? இவன் தூங்குகிற போதும் தூங்காமல் இவனுக்குள்ளேயே ஒரு சக்தி இருக்கிறதல்லவா? அது இருப்பதால்தானே மறுநாள் காலை விழித்துக் கொள்கிறான்? இந்த நான்காவதான துரீய வஸ்து ஒரே அமைதி மயமாகத்தானே இருக்கிறது? ஆனால் இத்தனை சாந்தமான அந்த வஸ்து உடம்பை விட்டுப் போய் விட்டால் இவனுடைய ஆர்ப்பாட்டம் எல்லாம் ஒய்ந்து போகின்றனவே! எந்த ஆர்ப்பாட்டங்களுக்கெல்லாம் ஆதாரமாக எந்த ஒன்று இருக்கிறதோ, அது ஆடாமலே சாந்தமாகத்தான் இருக்கிறது என்று தெரிகிறதல்லவா? இப்படியே பிராணாதாரமாகவும், லோகங்களுக்கெல்லாம் ஆதாரமாகவும் இருக்கிற பராசக்தி பரம சாந்திமாகவே இருக்கிறாள். அவளிடம் பக்திவைத்து நம்மை அவளுக்குள் கரைத்துக் கொண்டால் பரம சக்தியைப் பெறுவோம்.

காலத்தின் போக்கில் மனிதன் மாறுகிறான். ஜீவராசிகள் மாறுகின்றன. மரம் செடி, கொடி எல்லாம் மாறுகின்றன.

லோகங்கள், நட்சத்திரங்கள், கிரகங்கள் எல்லாம் மாறுகின்றன. இத்தனைக்கும், ஆதாரமான பிரம்மம்தான் மாறாமலே இருக்கிறது. எக்காலமும் ஒரேபோல் இருக்கிற பிரம்மமாகிற சத்தியத்தையே 'ஸத்'என்கிறோம்.

ஒன்று இருந்தால் மட்டும் பிரயோஜனம் இல்லை. தான் இருக்கிறோம் என்று அறிந்தால் பிரயோஜனம் உண்டு. தான் உள்ளதாகவே உணராத ஒன்று இருந்தும் இல்லாதது மாதிரிதான். ஸத் தாகிய பிரம்மத்துக்கு, தான் இருப்பதாக அறிவு இருப்பதால்தான் தன் சக்தியை இத்தனை தோற்றங்களாகக் காட்ட முடிகிறது. இப்படியாக 'ஸத்' தன்னைத்தானே அறிந்துகொள்வதைத்தான் 'சித்' என்கிறோம். ஞானம் என்றும் அறிவு என்றும் சொல்வது அதைத்தான். 'ஸத்'என்பது ஈஸ்வரன். 'சித்'என்பதே அம்பிகை. தன்னையே அறிந்து கொள்ளும்போதுதான் ஆனந்தம் என்கிற உணர்வு உண்டாகிறது. ஈசுவரனும் அம்பாளும் - காமேசுவரனும் காமாக்ஷியும் சேர்ந்து - 'ஸத்சித்'ஆனந்த பிரம்மமாக இருக்கிறார்கள்.

பிரம்மத்தையும் பிரம்ம சக்தியையும் பிரிக்க முடியாது. பாலும் வெண்மையும், புஷ்பமும் அதன் சுகந்தமும், தேனும் மாதுரியமும், அக்னியும் பிரகாசமும் போல் ஈஸ்வரனும் அம்பாளும் பிர்க்கவெண்ணாமல் அபின்னமாக இருப்பவர்கள். இதனால்தான், அர்த்தநாரீசுவரராகச் சொல்கிறோம். ஒரே ஸ்வரூபத்தில் ஈசுவரன் ஒரு பாதி, அம்பாள் மறு பாதி.

ஆனால் இதுவும்கூட முழுக்கச் சரியில்லை போலிருக்கிறதே! என்கிற மாதிரி ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்கள் ஸௌந்தரிய லஹரியில் (த்வயா ஹ்ருத்வா வாமம்) என்று சொல்கிறார்.

அம்பிகே! நிர்குணப் பிரம்மம் தனக்கென்று எந்த வர்ணமும் இல்லாத ஸ்படிக ஈஸ்வரனாக இருக்கிறது. அதில் இடப்பக்கத்தை நீ திருடிக் கொண்டாயாம். அப்படிப் பார்த்தாலும் உனக்கு ஒரு பாதி உடம்புதானே இருக்க வேண்டும். ஆனால் பதியின் பாதி சரீரத்தைதத் திருடிக் கொண்டதிலும் உனக்குத் திருப்தி உண்டாவில்லை. பாக்கி பாதி தேகத்தையும் நீயே ஆக்கிரமித்துக் கொண்டு விட்டதாகக் காண்கிறது. அதனால்தான் பூரணமாகச் செக்கச் செவேலென்று காமேசுவரியாக இருக்கிறாய்.

பரமேசுவரனுக்கு உரிய நெற்றிக்கண், சந்திர கலை கொண்டு விட்டாய் என்கிறார்.

செயலற்ற பிரம்மம் அநுக்கிரஹம் செய்வதற்கெனறே பூரண ரூபமும் கொண்டுவிட்டது என்பதை இப்படிச் சொல்கிறார் போலிருக்கிறது.

'கதாஸ்தே மஞ்சத்வம்' என்று ஆரம்பமாகும் சுலோகத்தில், அம்பாள் ஐந்தொழிலும் செய்வதாகச் சொல்லும்போது, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் (மாயைக்கு அதிபதியான) ஈஸ்வரன் இவர்களைக் கட்டில் கால்களாகக் கொண்ட மஞ்சத்தின் மீது நீ பிரம்ம ஸ்வரூபமான காமேசுவரனோடு அநுக்கிரஹ ரூபிணியாக, காமேசுவரியாக விளங்குகிறாய். ஆனாலும் அந்த காமேசுவரிதான் விளங்குகிறாய். ஆனாலும் அந்தக் காமேசுவரன் ஒருத்தன் தனியாக இருப்பதே தெரியவில்லை. உன்னுடைய ஜோதிச் சிவப்பு அவனுடைய ஸ்படிக நிறத்திலும் பளீரென்று வீசி, அவரையும் ஒரே சிவப்பாக்கி சிருங்கார ரஸத்தின் வடிவமாக்கிவிட்டது என்கிறார். காமாக்ஷியின் அநுக்கிரஹ சக்தி அத்தனை வலுவானது.

முதலில் சொன்ன சுலோகப்படி அம்பாளுக்கும் முக்கண் உண்டு. சிரஸில் சந்திரக்கலை உண்டு. நெற்றிக் கண் அக்னி வடிவானது. வலக்கண் சூரிய வடிவம். இடக்கண் சந்திர வடிவம். உலகத்தை வாழ்விக்கிற மூன்று ஜோதிகளும் பராசக்தியிடமிருந்து வந்தவை. இதைக் கவித்வ அழகோடு ஸௌந்தரிய லஹரியின் இன்னோரு சுலோகம் சொல்கிறது. அது, உன் வலது கண் பகலைப் படைக்கிறது. இடது கண் இரவைப் படைக்கிறது. இரண்டுக்கும் நடுவே உள்ள நெற்றிக் கண் சந்தியா காலத்தைப் படைக்கிறது. அதனால்தான் அது சிவந்து விளங்குகிறது என்கிறது. காலஸ்வரூபிணி அவளே என்பது இதன் தாத்பரியம்.

காமாக்ஷி தன் சிரஸில் சந்திரக்கலை வைத்துக்கொண்டிருப்பதை மூகரும் பஞ்ச சதீயில் சொல்கிறார். மூகபஞ்சதீயில் முதலில், ஆர்யா சதகம் என்று நூறு சுலோகங்கள் இருக்கின்றன. இந்த சுலோகங்களின் விருத்தத்துக்கு ஆர்யா என்று பேர். ஸ்தோத்திரிக்கப்படும் அம்பாளும் ஆர்யா. அதாவது, பரம உத்தமமானவள். இரண்டு விதத்திலும் இதற்கு ஆர்யா சதகம் என்ற பெயர்

பொருந்தியிருக்கிறது. இதில் ஐசுவரியம் இந்துமௌளி எனப்படும் சந்திரசேகரின் ஐசுவரியின் நீதான் அம்மா என்கிறார். ஈசுவரனின் தன்மை எதுவோ அதுவே ஐச்வரியம்.

ஈஸ்வரனுக்கே ஈசுவரத் தன்மை பராசக்தியால்தான் வந்தது என்கிறார். ஸௌந்தரிய லஹரியில் முதல் சுலோகமும் இதையேதான், அம்பிகையின் சக்தி இல்லாவிட்டால் சிவன் அசைந்து கொடுக்கக்கூட முடியாது என்கிறது. பரமேசுவரன் தன்னைத் தானே அறிந்து கொள்கிற அறிவாகிய அசைவு அவள்தான். எங்கும் நிறைந்திருக்கிற அந்தப் பரமேசுவர தத்துவம் அவள் கிருபை இருந்தால்தான் நமக்குப் தெரியும்.

இவளால்தான் அவனை அவனே அறிய முடியும். அதே சமயத்தில் அவன்தான் அவளுக்கு ஆதாரமாக இருக்கிறான். பிரகிருதி என்கிற இவள் இயற்கையாக இருக்கிறான். அது ஜடம்போலத் தோன்றுகிறது. அதற்கு உயிராக அவனே புருஷனாக இருக்கிறான். பிரகிருதியை மாயை என்றும், ஈசுவரனை மாயி என்றும் சொல்வார்கள். ஈசுவரனின் செல்வமான காமாக்ஷி, பிரகிருதியோடு ஒன்றாகக் கரைந்து காஞ்சிபுரத்தின் மத்தியில் சந்திரப் பிஞ்சைச் சிரஸில் சூட்டிக்கொண்டு, வேதங்களின் பரம தாத்பரியமாகப் பிரகாசிக்கிறது என்கிறார் ஸ்ரீ மூகர். "ஐந்தாவ சிகோர சேகரம்" - குழந்தையான பிறமதியைச் சிரஸில் உடையது - என்று வெகு லலிதமான வாக்கினால் சொல்கிறார். முற்றா வெண்திங்கள் என்று ஞானசம்பந்தக் குழந்தை சொன்னது போலவே! அம்பாளைப் பிரகிருதி, மாயை என்று சொன்னதோடு நிற்கவில்லை. புருஷன் அல்லது மாயையின் சக்தியும் இதே காமாக்ஷிதான். அவனோடு அபேதமாக, அபின்னமாக இருக்கப்பட்ட வஸ்து இவள். இருவரும் ஒன்றே. அத்வைதமாக இருக்கிறார்கள். வேதங்களின் பரம தாத்பரியம் அத்வைதம். அந்த அத்வைதத்தின் ரூபமாகவே காஞ்சிபுரத்தில் காமாக்ஷி பிரகாசிக்கிறாளாம். 'ஐதம்பரியம் சகாஸ்தி நிகமானாம்'என்கிறார் மூகர்.

மாதா ஸ்வரூபம் என்று அருகில் போகிறோம். பார்த்தால் பிதாவுக்கு உண்டான நெற்றிக்கண், சந்திரக்கலை எல்லாமும் இங்கே இருக்கின்றன. சிறந்த பதிவிரத்தையாக இருந்து, அந்தப் பதிவிரத்தியத்தாலேயே ஈஸ்வரனின் பாதி சரீரத்தை இவள் பெற்றதாகச் சொன்னாலும், இப்போது பார்க்கும்

போது, இவள் சிவஸ்ரூபத்தை கொஞ்சம் கொஞ்சமாகத் திருடி, முழுவதும் தானே ஆகிவிட்டாள் என்று, ஸௌந்தரிய லஹரி சொல்கிறது.

பக்தியின் ஸ்வாதீனமும், கவித்த கல்பனா சுதந்திரமும் கொண்டு இப்படியெல்லாம் ஆசார்யாள், மூகர் போன்றவர்கள் துதிக்கிறார்கள். மொத்தத்தில் தாத்பரியம் அவள் பூரண பிரம்மசக்தி, அவளுக்கும் பரமாத்மாவான பரமேசுவரனுக்கும் லவலேசம்கூட பேதம் இல்லை என்பதே.

பரமேசுவரனின் சரீரத்தை இவள் திருடியதாக ஆசார்யார் சொல்கிறார் என்றால், அப்பைய தீக்ஷிதர் வம்சத்தில் வந்த மகனான நீலகண்டதீக்ஷிதரோ அம்பாளுடைய கீர்த்தியைத்தான் ஈஸ்வரன் தஸ்கரம் செய்து கொண்டுவிட்டான் (திருடிவிட்டான்) என்று குற்றப் பத்திரிக்கை படிக்கிறார். பரமேசுவரன், காமனைக் கண்ணால் எரித்தவராம். காலனைக் காலால் உதைத்தவராம் என்று லோகம் முழுக்கப் பிரக்யாதி பெற்றுவிட்டார். ஆனால் அம்மா, காமனை எரித்த நெற்றிக் கண்ணில் பாதி உன்னுடையதல்லவா? அதுவாவத் தொலையட்டும். இந்த வெற்றியில் பாதி சிவனுக்குச் சேரும். ஆனால் காலனைக் காலால் உதைத்து வதைத்த புகழ் அவரை அடியோடு சேரவேக் கூடாது. எனென்றால் இடது காலல்லவா அவனை உதைத்தது. அது முழுக்க உன்னுடையதுதானே? என்கிறார். காமாக்ஷியின் கடாக்ஷம் துளி விழுந்துவிட்டால் நாம் காமத்தை வென்று விடலாம். காலத்தையும் வென்று அமர நிலையை அடைந்து விடலாம் என்று அர்த்தம்.

அவளுடைய பெருமை நம் புத்திக்கும் வாக்குக்கும் எட்டாதது. அசலமான சிவத்தையே சலனம் செய்விக்கிற சக்தி அது. அவளுடைய க்ஷணநேரப் புருவ அசைப்பை அக்ஞையாகக்கொண்டு பிரம்மாவும் விஷ்ணுவும் ருத்தினும், ஈசுவரனும் ஸதாசிவனும் பஞ்சகிருத்தியங்களைச் செய்கிறார்கள் என்கிறது ஸௌந்தரிய லஹரி (ஜகத் ஸூதேதாதா). பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்கள்தான் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்பவர்கள் என்று உங்களுக்குத் தெரியும். இந்த முத்தொழிலோடு மாயை என்கிற மறைப்பு மாயையைப் போக்குகிற ஞானம் என்ற அநுக்கிரகம் இவற்றைச் சேர்த்துக் கொண்டு பஞ்சகிருத்யம்

என்னும்போது, மறைப்பான திரோதாரனத்தைச் செய்கிறவன் ஈசுவரன். அநுக்கிரகம் செய்பவன் ஸதாசிவன். இந்த தொழில்கள் எல்லாமே பராசக்தியின் ஏவலின்படி நடக்கிறவைதான். இந்த ஐந்து மூர்த்திகளை ஐந்து ஆபீஸர்களாக வைத்துக் காரியம் நடத்தும் எஜமானி அம்பாள்தான். அவர்கள் தங்கள் இஷ்டப்படி தொழிலாற்ற முடியாது. அவர்களுடைய சக்தி எல்லாமும் பராசக்தியான இவளிடமிருந்து பெற்றவைதான். உன் பாதத்தில் அர்ச்சித்து விட்டால்போதும். அதுவே மும்மூர்த்திகளின் சிரேயசிலும் அர்ச்சனை செய்ததாகும். ஏனென்றால் திரிமூர்த்திகளின் சிரங்களும் எப்போதும் உன் பாதத்திலேயே வணங்கிக் கிடக்கின்றன என்கிறது ஸௌந்தரிய லஹரியில் இன்னொரு ஸ்லோகம் (த்ரயாணாம் தேவானாம்). மும்மூர்த்திகளும் அந்த சரணார விந்தங்களில் தங்கள் தலையை வைத்து, தலை மீது கைகளை மொட்டுக்கள் மாதிரி குவித்து அஞ்சலி செய்கிறார்கள். நாம் புஷ்பம் போடுவது அம்பாளின் பாதமலர்களிலிருந்து மட்டுமல்லாமல் திரிமூர்த்திகளின் கரங்களான மொட்டுகளுக்கும் அர்ச்சனை ஆகிறது. சகல தேவ சக்திகளையும் பிறப்பித்த பராசக்தி ஒருத்திருக்குச் செய்கிற ஆராதனையே, எல்லாத் தெய்வங்களுக்கும் செய்ததாகிறது என்கிறது உட்பொருள்.

அம்பாளின் மகிமையை ஸௌந்தரிய லஹரியில் ஆசாரியாள் சொல்கிறார். அம்மா, ஒன்பது சுற்றுப் பிரகாரங்களை உடைய வாஸஸ்தானத்தில் உள்ளுக்குள்ளே அந்தப்புரத்தில் பரப்பிரம்ம ஸ்வரூபமான பரமேசுவரனுடன் நீ சேர்ந்திருக்கிறாய். அந்தப்புரத்துக்கு அருகில் வரவே எவருக்கும் யோக்யதை இல்லை. வெளியிலே ஒன்பது சுற்றுகளையும் தாண்டியிருக்கிற வாசல்தான் மகா பெரிய இந்திராதி தேவர்களும் காத்துக்கிடக்கிறார்கள். அந்த வெளி வாசலில் காவல் செய்கிற அணிமா முதலிய ஸித்திகளே இந்த இந்திராதி தேவர்களுக்கு அஷ்டமகா ஸித்திகளைக் கொடுத்து விடுகிறார்கள் என்கிறார் (புராராதே : அந்த: புரமஸி)

இந்த ஒன்பது கட்டு அரண்மனைதான் அம்பாளின் ஸ்ரீ சக்கரம் என்கிற அம்பாள் இயந்திரம். ரூபமே இல்லாத பராசக்தி திவிவிய மங்கள் ஸ்வரூபத்துடன் அவயங்களோடு காமேசுவரியாக வந்த மாதிரி இந்த எந்திர ரூபத்திலும்

இருக்கிறாள். பார்த்தால் ஏதோ கோடுகளும், கோணங்களுமாகத் தெரியும். ஆனால்

அது அம்பாள் உருவமே. சில சப்தங்களுக்குத் தெய்வீக சக்தி இருப்பதால் அவற்றை மந்திரம் என்கிறோம். இப்படியே சிலவிதமான கோடுகள் கோணங்களைக் கொண்ட சித்திரங்களுக்கு(DIAGRAM) தெய்வீகமான சக்தி உண்டு. காமேசுவரி அல்லது காமாக்ஷி என்கிற லலிதையாக உள்ளபோது, அவளுடைய மந்திரம் ஸ்ரீ வித்யா. யந்திரம் ஸ்ரீ சக்கரம். ஸ்ரீ சக்கரத்தில் ஆவணங்கள் என்கிற ஒன்பது சுற்றுகள் இருக்கின்றன. அவற்றின் நடு மையத்தில், திரிகோணத்தில் மத்ய ஸ்தானமாக உள்ள பிந்து என்கிற புள்ளி ஸாக்ஷாத் பராசக்தி. மற்ற ஆவணங்கள் இதைச் சுற்றி சுற்றி உள்ள கோட்டைகள் மாதிரி. சிருஷ்டி முழுவதும் பிறந்த மூல முக்கோணமான அந்தப்புரத்தில் பரப்பிரம்மமாகிற காமேசுவரனோடு சேர்ந்து காமோசுவரியாக இருக்கிறாள் பராசக்தியான காமாக்ஷி. அவளே பூரண சக்தி. வெளியில் ஒன்பது ஆவணங்களிலும் அவளே பூரண சக்தி. வெளியில் ஒன்பது ஆவணங்களிலும் சுற்றிப் பல்வேறு தேவதைகள் இருக்கிறார்கள். இவர்களெல்லாம் பராசக்தியின் அம்சங்கள். இவர்களுக்கும் ஒவ்வொருவித சக்தி உண்டு. எல்லாவற்றுக்கும் வெளியே உள்ள ஆவணத்தில் அணிமா முதலிய எட்டு தேவதைகள் காவல் இருக்கிறார்கள்.

ஸித்தர்கள் என்று சிலரைச் சொல்கிறோம். அவர்கள் இயற்கைக்கு அதீதமான அற்புதங்களைச் செய்கிறார்கள். இப்படி அற்புதம் செய்கிற ஸித்திகளை அணிமா முதலிய எட்டு தேவதைகள் அநுக்கிரகம் செய்கிறார்கள். இவற்றை 'அணிமாதி ஸித்தி' என்பார்கள். தன் சரீரத்தை அணு மாதிரி சின்னதாக்கிக் கொள்கிற ஸித்தி 'அணிமா': எத்தனை மகா பெரிய ரூபமும் எடுப்பது 'மஹிமா ஸித்தி' பஞ்சைவிட லேசாகி லகுவாகப் பறப்பதற்கு 'லகிமா' என்று பெயர். ப்ராப்தி என்கிற ஸித்தி ஒருத்தருக்கு ப்ராப்தியானால் அவர்தான் நினைத்த எதையும் சென்றடைய முடியும். 'ப்ராகாம்ய ம்'என்பது எவருக்கும் வெல்லமுடியாத இச்சா சக்தியைத் தருகிற ஸித்தி. ஈசித்வம் வெல்லமுடியாத ஈசுவரத்வம் - அதாவது அடக்கி ஆளுகிற ஆற்றலைக் கொடுக்கும் ஸித்தி. வஸித்வம் என்பது எவரையும் வசப்படுத்துகிற சக்தியைத் தரும் ஸித்தி. இந்த ஏழு ஸித்திகளுக்கும் மேலே உள்ளது,

தன் மனத்தையே வசப்படுத்தி அடக்குவது. மற்ற ஸித்திகளால் நல்லதும் செய்யலாம். கெட்டதும் செய்யலாம். ஆனால், நல்லது கெட்டது எல்லாவற்றிற்கும் மேலே போய் பரம சாந்தமாக இருப்பதே மற்ற எந்த ஸித்தியாலும் சாதிக்க முடியாத பேரானந்தத்தைத் தருவது. மனசு அடக்கினால்தான் இதைப் பெற முடியும். இதற்கு ஆசைகள் அடங்க வேண்டும். இப்படி ஆசைகளை அடக்குவது காமாவஸாயனம் என்ற கடைசி ஸித்தியாகச் சொல்லப்படுகிறது. தாயுமானவர்கூட, மற்ற இந்திர ஜால வித்தை எல்லாம் செய்துவிடலாம். ஆனால் சிந்தையை அடக்கிச் சும்மா இருக்கும் திறம் அரிது என்று இதைத்தான் மிகவும் பிரமிப்பான ஸித்தியாகச் சொல்கிறார். இப்படித் தங்களுக்கென்று ஆசையில்லாமல் வைராக்கியத்தைப் பெற்றுவிட்ட மகான்களும்கூட, லோகோபகாரமாக மற்ற ஸித்திகளை உபயோகப் படுத்தலாம். இப்படிப் பல ஸித்தர்கள் என்றுகூட ஒரு கணக்குச் சொல்வதுண்டு - இருந்திருக்கிறார்கள். அவர்கள் செய்த அநேக காரியங்கள் பைத்தியம் மாதிரி இருக்கும். ஆனால் வாஸ்தவத்தில் ஸர்வ ஜனங்களிடமும் பிரியத்தோடு லோக க்ஷேமத்துக்காகவே சித்து விளையாட்டுச் செய்துகொண்டிரு ந்தார்கள்.

இப்படிப்பட்ட பிரம்மிப்பூட்டுகின்ற ஸித்திகளைத் தருகிற தேவதைகள்கூட, சாக்ஷாத் பரைசக்தியின் அந்தப்புரத்துக்கு வெகு தூரத்திற்கு வெளியே நிற்கிற காவளாளிகள்தாம் என்று சொல்வதிலிருந்து அவளுடைய மகிமையை ஊகிக்கலாம்.

இப்படிப்பட்ட அம்பாளின் சக்தி, சில சமயங்களில் சில இடங்களில் ஜனங்கள் தாங்க முடியாதபடி பொங்கிக் கொண்டு வெளிப்படுகிறது. ஆதியில் திருவாணைக்காவலில் அகிலாண்டேஷ்வரியின் சக்தி இப்படித்தான் உக்கிரகமாக இருந்தது. அப்போது சாக்ஷாத் பரமேசுவரரின் அவதாரமான ஆசாரியார் ஸ்ரீ சக்கரமாகவும் இரண்டு தாடங்களைச் செய்து, அவற்றிலேயே அம்பாளின் அதீதமான சக்தியை இழுத்து வைத்து சமாதானப்படுத்தி அவற்றை அம்பாளுக்கே அணிவித்தார். காஞ்சிபுரத்தில் ராஜராஜேசுவரியான காமாக்ஷியின் சக்தி உக்கிரகமாக இருந்தபோது அதே ஆசாரியாள் அந்த உக்ர கலையை அவளுடைய எதிரிலேயே ஒரு ஸ்ரீ சக்கரம் ஸ்தாபித்து, அதில் ஆகர்ஷித்து வைத்து அடக்கினார். அன்றிலிருந்து அம்பிகையும் பரம

ஸௌம்ய மூர்த்தியாகிவிட்டாள். எல்லோருக்கும் கருணா கடாக்ஷம் செய்து வருகிறாள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காமாக்ஷியின் சரிதை*

காஞ்சிபுரத்தில் பரம கருணாமூர்த்தியான அம்பாள் எப்படியிருக்கிறாள்? கரும்பு வில்லும் (இக்ஷுசாபம்) மலரம்பும் (புஷ்பபாணம்) வைத்திருக்கிறாள். இந்த இரண்டும் இன்னொருத்தரும் உண்டு. மன்மதன் என்கிற காமன்தான் அது. காமன் காமாக்ஷி இருவருக்கும் கரும்பு வில், புஷ்ப பாணம் ஆகியன காமன் (Common) பொது. மன்மதன் கரும்புவில்லை வைத்துக்கொண்டிருக்கிறான். அதற்கு நாண் தேன் வண்டுகள். வளைத்த கரும்பு வில்லின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரையில் குறுக்காக வண்டுகள் நாண் மாதிரி வரிசையாகச் சேர்ந்திருக்கின்றன. இந்தக் கரும்பு வில்லில் ஐந்து மலர் அம்புகளைத் தொடுத்துதான் சமஸ்த ஜீவப் பிரபஞ்சத்தையும் மன்மதன் ஆட்டிவைக்கிறான். உலகத்தில் உள்ள தித்திப்பு பக்ஷணங்கள் அத்தனையும் வெல்லம், சர்க்கரையில் செய்ததுதான். வெல்லம், சர்க்கரைக்கு ஆதாரம். கரும்பு தித்திப்புச்சுவை மன்மதனுக்கு வில். சுகந்தத்துக்கும் மென்மைக்கும் ரூப ஸௌந்தரியத்துக்கும் புஷ்பங்கள் ஐந்து அவனுக்குப் பாணங்களாக இருக்கின்றன. காதுக்கு சுகமான ரீங்காரம் வண்டிடமிருந்து வருகிறது. இப்படியாக தன் வில், அம்பு, நாண் இவற்றால் நம் பஞ்சேந்திரியங்களுக்கான அத்தனை விதமான அழகுகளையும் காட்டி, லோகத்தில் காமத்தில் கட்டிப் போடுகிறான் என்று அர்த்தம். அம்பாள்தான் அவனுக்கு இப்படி இரும்பு வில்லுக்கும் பாணத்துக்கும் பதிலாகக் கரும்புவில்லையும் புஷ்ப பாணங்களையும் தந்து, எல்லா உயிரனங்களையும் கவர்ந்து இழுத்து ஆட்டி வைக்கிற

சக்தியை அநுக்கிரகிக்கிறாள். சிருஷ்டி லீலை நடக்க வேண்டும் என்பதற்காகக் காமனுக்கு இந்த அதிகாரம் தந்திருக்கிறாள்.

ஆனால் ஜீவப் பிரபஞ்சம் முழுவதும் எப்போதும் இந்திரிய சுகங்கள் என்கிற

துக்கத்திலேயே சிக்கிக்கொண்டு கிடப்பதையும் அம்பாள் விரும்பவில்லை. லோக

ரீதியாக வாழ்க்கை நடத்துகிறவர்களும் காமத்தினால் தர்மத்தை விட்டுவிடக்கூடாது. அர்த்த காமங்களையும் (பொருள் ஈட்டுதலையும்) ஆசைகளை அநுபவிப்பதையும்) கூட தர்மத்துடனேயே இணைத்து ஒழுங்கோடு வாழ வேண்டும். மனசும் இந்திரியமும் போன போக்கில் விட்டுவிடாமல் அவற்றை தர்மத்தில் ஈடுபடுத்த வேண்டும். லோக விவகாரத்தை முழுதும் விடாமலே இப்படி கொஞ்சம் கட்டுப்பாட்டுடன் இருப்பது முதல் நிலை. அப்புறம் மனசு, இந்திரியம் இவை குஞ்சம்கூடச் சலனமே இல்லாமல் இருக்கிற ஞான நிலை சித்திக்கும். அந்த நிலை வந்துவிட்டால் அப்புறம் ஜன்மமே இல்லை. சிருஷ்டி லீலைக்கு சகாயம் செய்கிற மன்மதனுக்கு இங்கு வேலையே இல்லை. மன்மதனுக்கு காமத்தை உண்டாக்குகிற சக்தியைத் தந்த அம்பாளேதான், காம விகாரத்தைக் கட்டுப்படுத்த தர்மத்தையும் முடிவாக அவளுடைய சிருஷ்டி லீலையிலிருந்து விடுபடுகிற ஞானநிலையான மோக்ஷத்தையும் ஏ ற்படுத்தியிருக்கிறாள்.

காமத்துக்காகவே ஏற்பட்ட மன்மதனுக்கு அவள் தந்த கரும்பு வில்லையும், மலர் அம்பபையும் ஒரு சமயம் அவளே அவனிடமிருந்து எடுத்துக் கொள்ளும்படியாகி விட்டது. பரம காருண்யத்தால் அவள் அப்படிச் செய்தாள். வெளி நினைப்பே இல்லாத பிரம்ம ஸ்வரூபம் லோகத்திடம் கருணை கொண்டு கடாக்ஷிக்க வேண்டும். லோகத்துக்குத் தர்மத்தையும் ஞானத்தையும் அநுக்கிரகிக்க வேண்டும் என்றே, அம்பாள் காமனுக்குத் தந்த தனுஸையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு காமாக்ஷியானாள்.

அது பரமேசுவரன் தக்ஷிணாமூர்த்தியாக அமர்ந்துவிட்ட சந்தர்ப்பம். ஒரே ஞானமயமான மூர்த்தியாக, பரம சாந்த

ஸ்வரூபமாக, நிச்சலனமாக உட்கார்ந்துவிட்டார் தக்ஷிணாமூர்த்தி. எல்லாம் ஒன்றாயிருக்கிற அத்வைத வடிவமாக அவர் இருக்கிறார். ஆனால் அவர் இப்படி ஞான ஸ்வரூபமாய் பரதத்துவமாய் இருந்ததால் ஜீவராசிகள் என்ன ஆவது? ஜீவராசிகளைக் கை தூக்கி விடுவது யார்? இந்த ஞான ஸ்வரூபி கருணைக் கடலாகி, எல்லோரையும் கடாக்ஷிக்க வேண்டும் என்று ஜகன்மாதா திருவுள்ளம் கொண்டாள். இவள் தன் கடாக்ஷத்தாலேயே ஸர்வ லோகத்தையும் ரக்ஷித்து விடலாம்தான். ஆனாலும் ஜனங்களுக்கு உத்தம ஸதியின் லக்ஷணத்தைத் தானே நடத்திக் காட்ட நினைத்து, ஈசுவரனுக்கும் பெருமை கொடுக்க உத்தேசித்தாள். அவள் வேறு, அவர் வேறு அல்ல, ஒன்றேதான். அதாவது தன்னுடைய ஞானத்திலேயே காருண்யமும் பொங்கியிருக்க வேண்டும் என்று எண்ணினாள். அப்போது சந்தர்ப்பமும், அவள் கரும்புவில், மலர்ப்பாணம் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு காமேசுவரியாவதற்கு அநுகூலமாக ஆயிற்று.

தாரகாசுரன், சூரபத்மன் போன்ற அசுரர்கள் மூன்று லோகங்களையும் ஹிம்ஸித்து வந்த சந்தர்ப்பம் அது. இவர்கள் நிரம்பத் தபஸ் பண்ணி எல்லையில்லாத பலம் பெற்றிருந்தார்கள். ஸாக்ஷாத் பரமேசுவர தேஜஸிலிருந்து உண்டாகும் குமாரர்தான் தங்களை வதம் செய்ய முடியுமென்று இவர்கள் வரம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பரமேசுவரனோ இப்போது பரம ஞான மூர்த்தியாக, எந்தக் காரியமும் இல்லாமல், ஆத்மானந்தத்தில் முழுகி, தக்ஷிணாமூர்த்தியாக உட்கார்ந்துவிட்டார்.

இவரை எப்படிப் புதத்திரோபதி செய்ய வைப்பது? அசுரர்களால் ஹிம்ஸிக்கப்பட்ட தேவர்களுக்கு ஒரே வழிதான் தெரிந்தது. அப்போது ஹிமயபார்வத ராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்திருந்த பார்வதி தேவி, இந்த தக்ஷிணா மூர்த்திக்குக் கைங்கரியம் செய்து வந்தாள். காமத்துக்கு அதிதேவதையான மன்மதன், பார்வதியிடம் பரமேசுவரனின் மனஸைத் திருப்பிவிட்டால், பிறகு சிவகுமார ஜனனம் ஏற்பட்டுவிடும் என்று தேவர்கள் எண்ணினார்கள். மன்மதனிடம், உன் சக்தியைப் பரமேசுவரனிடம் காட்டு என்று ஏவி விட்டார்கள். லோகம் முழுக்க ஸ்வாதீனம் பண்ணிக் கொள்கிற ஆற்றலை மனமதனுக்குத் தந்ததே

பரமேசுவர சக்திதான். இவன் அந்தப் பரமேசுவரனிடம் பக்தியோடு போய்த் தன் சக்தியை அவரிடம் அர்ப்பணம் பண்ணியிருந்தாலே போதும். கருணா மூர்த்தியான அவர் காரியத்தை முடித்துத் தந்திருப்பார். ஆனால் இவனே அப்படிப்பட்ட சாமர்த்திய புத்தி இல்லாமல், அகங்காரத்தோடு போனான். பரமேசுவரனையே தன்னால் வசப்படுத்தி பார்வதியிடம் மோகிக்கச்செய்ய முடியும் என்ற அகம்பாவப்பட்டுக்கொண்டு போனான். பெற்ற தாயிடமே கற்ற வித்யையைக் காட்டுவதுபோல் பரமேசுவரன் மேல் மலர் அம்புகளை விட்டான்.

சட்டென்று ஸ்வாமிக்கு ஒரு சலனம் உண்டாகிறாற்போலிருந்தது. கண்களைத் திறந்தார். அவருக்கு மூன்று கண்கள். ஆனால் இப்போது மூன்றுக்கும் வேலை வைக்கவில்லை. அக்கினி மயமான நெற்றிக் கண்ணை மட்டும் துளித் துளி திறந்தார். அவ்வளவுதான். மன்மதன் அக்னி ஜ்வாலையான அந்தத் திருஷ்டியில் அப்படியே எரிந்து பஸ்பமாகிவிட்டான். தான் மகா அழகன் என்ற கர்வம் அவனுக்கு உண்டு. சரீர ஸௌந்தரியம் ஞானாக்னியின் முன்னால் நிற்க முடியாது என்று காட்டுகிற மாதிரி, இப்போது பரமேசுவரன் முன்னால் சாம்பல் குவியலாகி விட்டான். எவன் சர்வாங்கசுந்தரன் என்று பேர் பெற்றிருந்தானோ, அவனுக்கு இப்போது அங்கமே இல்லாததால் அனங்கன் என்ற பேர் ஏற்பட்டது.

மன்மதனின் பத்தினியான ரதி புலம்பினாள். பார்வதி தேவி அவனுக்கு அபயம் தந்து, அவள் கண்ணுக்கு மாத்திரம் மன்மதன் தெரியும்படியாக அநுக்கிரகித்தார்கள். மன்மதனைப் பார்த்து, நான்தான் உனக்கு இந்த வில்லையும் அம்பையும் தந்து சகல ஜீவராசிகளையும் காம வசப்படுத்தும்படி அநுக்கிரஹம் செய்கிறேன். இப்போது இருக்கிற ஜனங்கள் எல்லோரும் ஸநகாதி முனிவர்களைப்போல் ஞானிகளாக இருந்துவிட்டால், ஏராளமான கர்மா பாக்கியோடு மரணம் அடைந்து இன்னமும் ஜனனம் எடுக்காமல் இருக்கிற ஜீவாத்மாக்கள் மறுபடி பிறக்க முடியாமல் ஆகி, பெரிய கஷ்டம் உண்டாகும். அவர்கள் மறுபடியும் ஜன்மா எடுத்தால்தான் சித்தசுத்தி செய்துகொண்டு, கர்மாவை தீர்த்துவிட்டு ஜனன நிவிருத்தி பெறமுடியும். இதற்காகத்தான் லோகத்தில் பிரஜா உற்பத்தி நடக்க வேண்டுமென்று உனக்குச்

சக்தி தந்து உன்னை ஓர் அதிகாரியாக வைத்தேன். ஆனால் நீ இப்போது மேலதிகாரியிடமே உன் கை வரிசையைக் காட்டிவிட்டாய். சக்தியைக் காட்டிப் பிரயோஜனம் இல்லை. பக்திக்குத்தான் அவர் வசப்படுவார். அவரிடம் எப்படிக் காரியம் நடத்திக் கொள்வது என்று இப்போது பார் என்று அம்பாள் சொல்லிவிட்டு, அவனுக்குத் தந்திருந்த கரும்பு வில்லையும், புஷ்ப பாணங்களையும் தானே கையில் எடுத்துக் கொண்டாள். ஈஸ்வரனிடத்தில்

போய் நின்றாள். அன்புமயமாக அவளைப் பார்த்தாள். கரும்பு வில்லும், மலரம்பும் தரித்து, இப்படி அன்பு பொங்கப் பார்த்தபோதுதான் அவளுக்கு காமாக்ஷி என்று பெயர் வந்தது. காம - அன்பு; அக்ஷி - கண்; அன்பு பொங்கும். கண்ணை உடையவள் காமாக்ஷி. காமாக்ஷி என்பதற்கு வேறு தத்வார்த்தங்களும் சொல்வதுண்டு. அது இருக்கட்டும். நேர் அர்த்தம் காமக்கண்ணி.

காமக்கண்ணி என்ற இந்த காமாக்ஷி நாமம் தமிழில் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கிறது. சங்க காலப் பெண் புலவர் ஒருத்தருக்குத் காமக் கண்ணியர் நப்பசலையார் என்று பெயர். காமாக்ஷி வழிபாடு தமிழ்நாட்டில் ஆதிகாலத்திலேயே இருந்ததினால்தான், அந்தப் பெண்மணிக்கு இப்படி பெயர் இருந்திருக்கிறது. இது இருக்கட்டும். கதைக்குப் போகலாம்.

முதலில் மன்மதன் பரமேசுவரன் மேல் பாணப்பிரயோகம் செய்தான். எதிரியாகப் போர் செய்தான். எதிர்த்து போனான். அம்பாளோ வில் கரும்பையும் அம்பு புஷ்பங்களையும் ஈஸ்வரனுடைய பாதத்தில் அர்ப்பணம் செய்து, நமஸ்கரித்தாள். அவர் தன்னையே அவளுக்கு ஸ்வாதீனப் படுத்திவிட்டார். அன்புக்கு அடக்கத்துக்கு உள்ள சக்தி இது!

இவளுடைய அன்பு ததும்புகிற கண்களை, கண்டவுடனேயே அவருக்கும் அன்பு சுரந்தது. பஞ்ச இந்திரியங்களாலும், மனஸாலும் ஜீவ சமூகத்தை ஆட்டிப் படைத்து விளையாடும் மகாசக்தி படைத்த இவள், அந்தச் சக்திக்கு அடையாளமாக ஐந்து பூக்களையும் கரும்பையும் அவர் முன் போட்டு சமர்ப்பணம் பண்ணி நமஸ்காரம் செய்தவுடன் ஈசுவரனுக்குப் பிரேமை பொங்கியது.

பிறகு பார்வதி கல்யாணம் - அதன்பின் குமார ஸம்பவம்

அதாவது முருகக் கடவுளின் உற்பத்தி, அப்புறம் சுப்பிரமணியரால் தாரகன், சூரபத்மா ஆகியோரின் சம்ஹாரம் எல்லாம் நடந்தன.

யாருமே இன்னொருவரிடம் தோற்றுப்போனால் அவமானம்தான் கொள்வார். ஆனால் இதற்கு ஒரு விதி விலக்கு உண்டு. சொந்தப் பிள்ளையிடம் தோற்றுப்போனால் மட்டும் அவமானத்துக்குப் பதில் பெருமையாகவே இருக்கும். 'புத்காத் இச்சேத்பராஜயம்'என்று இதையே சொல்வார்கள். இதற்கு அநுசரணையாக, பரமேசுவரனும் கூடத் தன்னாலேயே வதைக்க முடியாத தாரகாதி அசுரர்களை, தன் குமாரனான சுப்பிரமணியன் சம்ஹாரம் செய்ததில் பெருமையே கொண்டார். இதற்கு முன்னால் தக்ஷிணாமூர்த்தியாக, மூல குருமூர்த்தியாக இருந்த அவரே சுப்பிரமணியஸ்வாமியிடம் பிரணவ உபதேசம் வாங்கிக்கொண்டு, தன்னைவிட ஒருபடி பிள்ளையை உயர்த்திக்காட்டிப் பெருமை அடைந்தார். இப்படியாக ஈஸ்வரன் ஞானம், வீரம் இரண்டிலும் தன்னைவிடத் தானே அதிகப் பிரகாசமான ரூபமெடுத்துக்கொண்டு சுப்பிரமணியராக வந்ததற்குக் காரணம் அம்பாளின் சேர்க்கைதான். காமன் எரிந்தபின் அவள் கரும்பு வில்லும், மலர் அம்பும் தரித்துக் காமேசுவரியாகி, இவரைத் தன்னிடம் அன்பு கொள்ள வைத்ததுதான் இத்தனைக்கும் காரணம்.

இந்தப் புராணக் காதைக்கு திருஷ்டாந்மாகவே, இன்றைக்கும் காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் ஆலயத்துக்கும், காமாக்ஷியம்மன் ஆலயத்துக்கும் நடு மத்தியில் குமரக்கோட்டம் என்கிற சுப்பிரமணியர் ஆலயம் இருக்கிறது. ஸோமாஸ்கந்த மூர்த்தத்தில் எப்படி ஈஸ்வரனுக்கும் உமாதேவிக்கும் நடுவில், ஸ்கந்தர் இருக்கிறாரோ, அப்படியே காஞ்சியில் காமாக்ஷியின் காமக்கோட்டம் அல்லது காமகோடிக்கும் ஏகாம்பரேசுவரரின் ஆலயமான ருத்ரகோடிக்கும் மத்தியில் குமரக்கோட்டம் இருக்கிறது.

தக்ஷிணாமூர்த்தியைக் கல்யாணசுந்தரராகக் காமாக்ஷி மாற்றினாளே, அது எதற்காக? தாரகாதிகளின் வதத்துக்காக மட்டுமல்ல. ஜனன மரணங்களிலிருந்து விடுபடுவதற்காகவே பல ஜீவர்கள் ஜனனம் எடுக்க வேண்டும். அவர்களின் கஷ்டங்களையும், அஞ்ஞானத்தையும் போக்குவதற்காகக்

கருணாமூர்த்தியான ஒரு கடவுள் வேண்டும். தக்ஷிணா மூர்த்திக்கு மாயா பிரபஞ்சத்தையோ அவர்களுடைய கஷ்டங்களையோ பற்றிச் சிந்தையே இல்லை. ஞான சாகரமாக இருந்த அவரைத் கிருபா சமுத்திரமாக்கி ஜீவராசிகளின் துயர் தீர்க்கவைக்கவே, அம்பிகை காமேசுவரியாகி அவரைக் கல்யாண சுந்தரராக்கினாள். இவளே இந்த லோக அநுக்கிரகத்தைச் செய்கிற யோக்கியதை வாய்ந்தவள்தான். அவரை இவள் அநுக்கிரகம் செய்ய வைப்பதாகச் சொன்னாலும், வாஸ்தவத்தில் செய்பவள் இவளேதான். சும்மா இருப்பதுதான் அவர் சுபாவம். செயல் என்று வந்துவிட்டாலே அது இவளுக்கு உரியதுதான். இருந்தாலும் ஒரு லீலையாக அவர் செய்வதுபோல் காட்டினாள். அவ்வளவுதான். லோகத்தில் ஸ்ரீ தர்மம் எப்படி இருக்க வேண்டும் என்று காட்டுவதற்காகத் தனக்குப் பதில் ஒருத்தனை ஏற்படுத்திக்கொண்டு, அவனுக்கே பெருமையை எல்லாம் சேர்த்தாள்.

பரமேசுவரனிடம் தம்மீது மோகத்தை உண்டாக்கினாள் காமாக்ஷி. எதற்காக? மநுஷ்யர்களின் மோகத்தை அவர் அடக்கி, அவர்களுக்கு ஜனன நிவிருத்தி தரவேண்டும் என்பதற்காகவே. கலப்பில்லாத ஞான மயமாக இருக்கிற ஈஸ்வரனை லோக க்ஷேமத்துக்காக மோகிக்க வைத்த சிவகாம சுந்தரி அவள். இப்படிப்பட்ட நீயே மோகத்தில் மூழ்கிக் கிடக்கிறவர்களைக் கைதூக்கி மோக்ஷம் தருகிறாயே, என்ன ஆச்சரியம், என்று பாடுகிறார் மூகர்.

பரமேசுவரனுக்குக் காமத்தை உண்டாக்கியவாறே நமக்கு காமத்தைக் கண்டிக்கிறாள். காமன் பஞ்ச புஷ்ப பாணங்களையும் கரும்பு வில்லைகளையும் பிரயோகித்து நம்முடைய பஞ்ச இந்திரியங்களையும் மனசையும் தடுமாறிப் போகச் செய்கிறான். பரதேவதை இந்தப் பஞ்ச பாணங்களைத் தன் திருக்கரங்களில் பிடித்துக் கொண்டிருப்பதாலே, நம்முடைய இந்திரியங்கள் வெறித்து ஓடாமல் தன் பிடிப்பில் வைத்துக் கொண்டு ரக்ஷிக்கிறாள். அவளுடைய கையில் மனோரூமான இக்ஷு (கரும்பு) இருப்பதால் நம் சித்த விவகாரங்கள் எல்லாம் நசிக்கின்றன. சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்று ஐம்புலன்கள் அநுபவிக்கிற அழகுகள் எல்லாம் அவளுடைய அழகுதான். இவற்றை அநுபவிக்கிற நம் மனசும் அவள் கையில் வசப்பட்ட வஸ்துதான் என்று

உணர்த்துவதற்காகக் கரும்பு வில்லும், மலரம்புகளும் வைத்துக்கொண்டு, காமாக்ஷியாக திவ்ய ரூபம் கொண்டிருக்கிறாள். கரும்பின் மாதுரியமும், புஷ்பங்களின் மிருதுத்தன்மையும் கொண்டவளாக இருக்கிறாள்.

எந்த அக்ஷரங்களால் (கண்களால்) ஈசுவரனுக்குக் காமத்தை உண்டாக்கி காமாக்ஷியானாளோ, அதே கண்களின் கடாக்ஷம் நம்மேல் துளி விழுந்தால்போதும். நமக்கு எந்த விதமான காமமும் பறந்துவிடும். நாம் பார்ப்பதை எல்லாம் அவளுடைய பல வேஷங்களாகவே பார்க்கின்றோம். எல்லாம் ஒன்றாகி விடும். அத்வைதமாகிவிடும். ஒன்று உசத்தி, ஒன்று தாழ்த்தி என்று இராது. காடும் வீடும், சத்துருவும், மித்திரரும், ஒடும் யுவதியின் உதடும் சமமாகவே தெரியும். ஸ்ரீ காமாக்ஷியின் கடாக்ஷம் பெற்றவர்களுக்கு என்று மூகர் இதையே சொல்கிறார். எல்லாம் சமமாகும் அந்த நிலைதான் பிரம்ம ஞானம் என்பது.

பார்வதீ கல்யாண வைபவத்தின்போது சகல லோகங்களும் ஆனந்தமாக இருந்தன. அப்போது மன்மதனுக்கு மட்டும் தேகமில்லாத குறை இருக்க வேண்டாம் என்று அம்பாளும் ஈஸ்வரனும் கிருபை கொண்டு அவனுக்கு எரிந்துபோன சரீரத்தை மறுபடியும் தந்தனர்.

தபஸ்வியாக இருந்த பரமேசுவரன் பார்வதியைத் திருக்கல்யாணம் செய்துகொண்டார். பிறகு குமரோத்பத்தியும் செய்துவிட்டார். ஒருவிதத்தில் இது தன்னுடைய வெற்றிதான் என்று மன்மதன் சந்தோஷப்பட்டான். இதைத் தன் வெற்றியாக அகில் லோகமும் மதிக்கச் செய்ய வேண்டும் ஆசைப்பட்டான். தாம்பத்யம் செய்துவைப்பது இவன் டிப்பார்ட்மென்ட்தானே? அம்பாளே இந்த இலாகாவுக்கு அவனை ஆபீஸராகப் போட்டிருந்தாளே! தன் இலாகாவுக்குளஅ வருகிற காரியம் நடந்தபோது, அதற்குரிய பெருமை தனக்கே சேரவேண்டும் என்று நினைத்தான். பரமாநுக்கிர அம்பாளைப் பிரார்த்தித்தாளே தன் ஆசை நிறைவேறும் என்று கண்டுகொண்டான்.

ஸர்வ வியாபினியாக இருக்கிற பரப்பிரம்ம சக்தியான அம்பாள், காஞ்சீ மகா க்ஷேத்திரத்தில் விசேஷ சாந்நித்தியத்தோடு காமாக்ஷியாக எழுந்தருளியிருப்பதை அறிந்து கொண்டான். பூலோகத்தை ஒரு ஸ்திரீயாகப்

பாவித்தால் அவனுக்குப் பூட்டிய ஒட்டியானம் என்றே அர்த்தம். அதில் நாபி ஸ்தானத்தில் காமாக்ஷியின் வாஸஸ்தனமான கர்ப்பகிருஹம் இருக்கிறது. அதற்குப் பேர் பிலகாசம். பபிலம் என்றால் குகை. நாபிக்கொடியிலிருந்து கர்ப்பத்திலிருக்கிற குழந்தை ஆகாரம் பெறுகிற மாதிரி, சகல ஜீவராசிகளும் இந்த பிலாகாசத்திலிருந்துதான் அம்பாளின் அநுக்கிரஹத்தால் சகல சக்திகளையும் பெறுகிறார்கள்.

ஆகாசம் என்பதே ஆத்ம ஸ்வரூபம். எங்கும் பரவியிருக்கும் வெளியை மாஹாகாசம் என்பார்கள். அந்த வெளியே நமக்குள்ளே ஆத்மாவாக, ஞான மயமாக இருக்கிறபோது, பேரம்பலம் சிற்றம்பலமாகிறது. மஹாகாசம் தஹராகாசமாகிறது. சிதம்பரம் என்பதும் அதுதான். சித் என்றால், ஞானம், அம்பரம் என்றால் ஆகாசம். நம்மை நாமே அறிந்து கொள்ளும் ஞானம் உண்டாகும்போது, நம்முடைய சகல எண்ணங்களும் மூலமான வஸ்து, நம்முடைய சுவாசத்துக்கும் மூலமாக இருதய ஆகாசமாக இருப்பதை அநுபவிக்க முட்யும்.

லோகத்தையே ஒரு புருஷ வடிவமாகக் கொண்டால் அந்த விராட் புருஷனின் இருதய ஸ்தானம்தான் சிதம்பர க்ஷேத்திரத்தில் ரகசியமாக உள்ள ஆகாசம். சிதம்பர ரஹஸ்யம் என்றே அதைச் சொல்வார்கள். அதுவேதான்

காஞ்சிபுரத்தில் பிலாகாசமாகவும் இருக்கிறது. காம் கோஷ்டம் என்று சமஸ்கிருதத்திலும், காமகோட்டம் என்று தமிழிலும் சொல்லப்படுகிற காமாக்ஷி ஆலயத்தின் கர்ப்பகிருஹத்தில் பிலாகாசம் இருந்தாலும், அதன் சக்தி காஞ்சி மண்டலம் முழுவதுமே பரவியுள்ளது. சிதம்பரத்தில் சித்சபையில் மட்டுமே ஞானாகாசம். இங்கோ கொஞ்சீ மண்டலம் முழுக்க அது வியாபித்திருக்கிறது. புராணம் இப்படித்தான் சொல்கிறது.

பிலகாச ரூபிணியான அம்பிகை காமனின் கரும்பு வில்லையும், மலர் பாணங்களையும் தானே தாங்கிக் காமாக்ஷியாக அமர்ந்திருக்கிறாள். ராஜராஜேஜ்வரியான அவளை வேண்டினால் தன் காரியம் நடக்கும் என்று தெரிந்து கொண்ட மன்மதன் காஞ்சிபுரத்திற்கு வந்து தரஸ் செய்தான்.

கருணாமூர்த்தியான அம்பாள் அவனுக்குப் பிரஸன்ன

மானாள்.

அம்மா. என்னை பஸ்மம் செய்த அதே பரமேசுவரன் பிற்பாடு உன்னிடம் பிரேமை கொண்டான். காமத்துக்கு அதிகாரியாக என்னை நீதான் நியமித்தாய். அதனால் எவர் பிரேமை கொண்டாலும் அது என் அதிகார எல்லையைச் சார்ந்தது என்று Jurisdiction பேசினான் மன்மதன்.

அம்மா, பரமேசுவரன் உன்னை விவாகம் செய்து கொண்டது என் வெற்றிதான். ஆனால் அவர் என்னைச் சாம்பலாகச் சுட்டெரித்ததுதான் லோகப் பிரசித்தமாயிருக்கிறதே, ஒழிய, நான் அவரை ஜயித்தது எங்குமே பிரகடனமாகவில்லை. எல்லோருக்கும் மாதாவாக இருக்கிற நீதானம்மா, இந்தக் குழந்தையிடமும் கருணை கொண்டு, என்னை ஜயசாலி என்று பிரகடனப்படுத்த வேண்டும் என்று நினைத்து காமாக்ஷியைப் பிரார்த்தித்தான் மன்மதன்.

கருணை நிறைந்த அம்பிகை அக்குழந்தைக்கு மனமிரங்கினாள்.

உடனே கைலாஸத்திலும், மற்றும் ஸகல க்ஷேத்திர சிவாலயங்களில் உள்ள அம்பாள் சந்நிதிகளிலும் இருக்கிற தன்னுடைய சக்தியையெல்லாம் ஆகர்ஷித்து, இந்த பிலாகாசத்துக்குள் அடைத்துக் கொண்டு விட்டாள். கைலாஸத்தில் பாரவதியின் ஜீவசக்தியைக் காணவில்லை. அஇப்படியே பூலோகத்தில் எல்லா சிவன் கோயில்களிலும் உள்ள அம்பாள் மூர்த்திகளும் ஜீவகளை இழந்துவிட்டன. கைலாஸத்திலும், மற்ற க்ஷேத்திரங்களிலும் எழிந்தருளியிருக்கிற பரமேசுவரன் தம்முடைய பிரிய பத்தினியை இழந்து தவிக்க ஆரம்பித்து விட்டார். அவருக்கு மன்மதனின் ஆசையும் அம்பாளின் லீயையும் தெரியாதா? அவன் ஆசைப்பட்டபடிதான் இருக்கட்டுமே என்று அவரும் தவித்ததுபோல் நடித்தார். முன்பு தாம் எரித்த மன்மதனுக்கு விட்டுக்கொடுத்து விளையாடினார். க்ஷேத்திரந்தோறும் இப்படி சிவன் தவிப்பதையும் கைலாஸத்திலும் அவர் பரிதவிப்பதையும் பார்த்த பிரம்மா காமாக்ஷியிடம் ஈஸ்வரனுக்காகப் பரிந்து தூது பேசினார்.

பரமேசுவரன் மன்மதாவஸ்தைக்கு ஆளாகித் தவிப்பது இப்போது ஜகப் பிரசித்தியாகிவிட்டது. மன்மதன்

வேண்டியதும் இதுதான். அதற்காகத்தான் இப்படி என்னுடைய சகல கலைகளையும் இங்கேயே ஆரக்ஷித்துக் கொண்டேன் என்று அம்பாள் பிரம்மாவுக்குகூறி, மறுபடியும் அம்பிகையின் சாந்நித்தியம் உண்டாயிற்று. பரமேசுவரனும் தாபசமனமாகி திருப்தி அடைந்தார்.

இது காமாக்ஷி விலாஸ த்தில் காணப்படும் விருத்தாந்தம். இந்தப் புராண வரலாற்றுக்குச் சரித்திர ரீதியிலும் கல்வெட்டுகளில் நிருபணம் (proof) இருக்கிறது.

அநேக சிவஸ்தலங்களில் உள்ள அம்பாள் சந்நிதிகளுக்குக் காமகோட்டம் என்ற பெயர் இருப்பதாக அந்தந்த சந்நிதிகளில் உள்ள கல்வெட்டுகளிலிருந்து தெரிகிறது. சோழர் காலத்திலிருந்து பல அரசர்கள் இந்த சந்நிதிகளுக்குத் திருப்பணி செய்ததை சிலர் சாஸனமாகப் பொறித்து வைத்திருக்கிறார்கள். அவிநாசி, விஜயமங்கலம், திருவொற்றியூர், திருக்காட்டுப்பள்ளி, வல்லம், திருப்பழனம், கோயிலாடி மாதிரி பல க்ஷேத்திரங்களில் உள்ள அம்பாள் சந்நிதிக் கல்வெட்டுகளில், அந்தந்த அம்பாளைப் பற்றிச் சொல்லும்போது, திருக்காமக் கொட்டத்து நாச்சியார், திருக்காமக் கொட்டமுடைய அழகமர் மங்கையார், திருக்காமக் கொட்டமுடைய அகிலநாயகியார் என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கிறது. அந்தக் காலத்தில் குறிலைக் குறிக்கும் ஒற்றைக் கொம்பு ( ெ ) நெடியைக் குறிக்கும் இரட்டைக் கொம்பு (ே ) என்ற வித்தியாசமே கிடையாது. இதனால்தான் காம கோட்டம் காம கொட்டம் என்று இருக்கிறது. சிதம்பரத்திலும் இப்படி ஒரு தமிழ் கல்வெட்டு இருக்கிறது. அதோடு ஸமஸ்கிருதத்திலும், காமகோஷ்ட ஸ்திதாயா என்று அங்குள்ள சிவ காமேசுவரியைச் சொல்லும் சாஸனம் இருக்கிறது.

எல்லா சக்தி கோட்டங்களிலும் இருந்த ஜீவர்களை காஞ்சிபுரத்திற்கு இழுக்கப்பட்டு மறுபடியும் அங்கிருந்து அந்தந்த க்ஷேத்திரத்திற்கு அனுப்பப்பட்டதாகப் புராணம் சொல்லுகிறதல்லவா? அதாவது இப்போது நாம் எந்த ஒரு க்ஷேத்திரத்திலும் அனுப்பப்பட்டதாகப் புராணம் சொல்லுகிறதல்லவா? அதாவது நாம் எந்த ஒரு க்ஷேத்திரத்து அம்பாள் சந்நிதியிலும் அநுபவிக்கிற சாந்நித்தியமானது ஒரு காலத்தில் காஞ்சி காமாக்ஷியின் சந்நிதிக்கு இழுக்கப்பட்டு,

பிறகு அங்கிருந்தே இந்த க்ஷேத்திரத்திற்குத் திருப்பி அநுப்பப்பட்டதாகும். இப்படிக் காமக்கோட்டத்திலிருந்தே எல்லா ஸ்தலங்களுக்கும் ஜீவகளை வந்ததால்தான், இதர ஸ்தலங்களிலுள்ள அம்பாள் சந்நிதிகளையும் காமகோட்டம் என்றே குறிப்பிடுகிற வழக்கம் வந்திருக்க வேண்டும்.

இன்று ஆலங்குடி என்கிற, பழங்காலத் திருஇரும்பூளையில் ஞானசம்பந்தர் பாடியுள்ள தேவாரத்தில், கச்சிப் பொலி காமக் கொடியுடன் கூடி என்கிறார். முன்பே சொன்னதுபோல் குறில் - நெடில் கொம்பு வித்தியாசத்தை நினைத்தால், இங்கே காமகோடி என்பது காமக்கோடி அல்லது கமகோடி என்றேயிருக்கலாம். ஆலங்குடி அம்பாளை காமகோடி என்று சொன்னதோடு மட்டுமின்றி, அது ஏதோ அந்த க்ஷேத்திரத்துக்கே சுபாவமாக ஏற்பட்ட பேர் அல்ல என்று தெளிவு படுத்துகிற மாதிரி, கச்சிப்பொதி என்று காஞ்சீபுரத்தைப் பிரஸ்தாபிக்கிறார் ஞானசம்பந்தர். அப்பர் ஸ்வாமிகள் திருவதிகைத் திருத்தாண்டகத்தில் கொழும் பவளச்செங்கனி வாய்க்காமக் கோட்டி என்கிறார். இதிலிருந்தும், மற்ற க்ஷேத்திரங்களிலும் கூட காமாக்ஷியின் சக்தியே அருள்பாலித்தது என்று ஆகிறது. காம வெட்ட வாஸினி என்பதால் அப்பர், காமக்கோட்டி என்றார் போலிருக்கிறது.

காமகோடி வேறு. காமக்கொட்டி வேறு. காமாக்ஷியின் இருப்பிடமான கோட்டம் காமகோட்டம். கர்மங்கள் எல்லாம் முடிந்து போகிற கோடியாக, அதாவது ஞான ஸ்வரூபமாக இருப்பது காமகோடி. காமாக்ஷியேதான் காமகோடி. மூர்த்தியாகச் சொல்லுகிறபோது காமாக்ஷி. பீடமாகச் சொல்லும்போது காமகோடி. காமாக்ஷி சந்நிதியில் காமகோடி பீடம் இருக்கிறது. பாகவதத்தில் பரசுராமனின்

தீர்த்த யாத்தரையின்போது, அவர் காஞ்சிபுரத்திற்கு வந்ததைக் கூறுகையில், காமகோடி புரியான காஞ்சிக்கு என்றே சொல்லியிருக்கிறது. (காமகோடி புரீம் காஞ்சீம்) காஞ்சிபுரத்தில் ஏராளமான சிவ, விஷ்ணு ஆலயங்கள் இருந்தாலும், அம்பாளின் காமகோடி புரியாகவே அது ஆதி காலத்திலிருந்து விசேஷிக்கப்பட்டிருக்கிறது என்று இதிலிருந்து தெரிகிறது.

இதர க்ஷேத்திரங்களில் அம்பாள் சாந்நித்தியத்தை மறுபடியும்

ஏற்படுத்திய காமாக்ஷி மன்மதன் வெற்றிக்குக் காஞ்சியில் மட்டும் சாசுவதமான அடையாளம் இருக்க வேண்டும் என்று கருணை கொண்டாள். அதனால் காஞ்சீபுரத்தில் மட்டும் எந்தச் சிவாலயத்திலும் அம்பாள் சந்நிதி இருக்கலாகாது என்றும், மன்மதன் சிவனை ஜயித்ததற்கு அடையாளமாகக் காஞ்சிக்கு சிவஜித் க்ஷேத்திரம் என்று பெயர் வழங்க வேண்டும் என்று உத்திரவிட்டான். இப்படிச் செய்தால், ஏன் இந்தக் காஞ்சி மண்டலத்தில் ஒரு சிவன் கோவிலில்கூட அம்பாள் சந்நிதி இல்லை. இதற்கு ஏன் சிவஜித் க்ஷேத்திரம் என்று பெயர் இருக்கிறது? என்று எல்லோரும் யோசிப்பார்கள் அல்லவா? அப்போது புராணத்தை, அல்லது புராணம் பார்த்தவர்களைக் கேட்பார்கள். உடனே இது மன்மதனுக்கு அம்பாள் தந்த வரப்பிரசாதம் என்று பதில் தெரியும். அதாவது மன்மதன் பிரார்த்தனைப்படி அவனுடைய வெற்றி என்றென்றும் லோகத்தில் விளங்கும். இப்படித் தீர்மானம் பண்ணி, அபச்சாரம் பண்ணின மன்மதனுக்கும் அநுக்கிரஹம் செய்தாள் அம்பாள். இன்றைக்குக்கூட எத்தனையோ சிவாலயங்கள் இருந்தும், காமாக்ஷீ கோவிலைத் தவிர வேறு அம்பாள் சந்நிதியே கிடையாது.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் காஞ்சீபுரத்தில் உள்ள ஓணகாந்தன்தளியில் பாடும்போது

வாரிருங்குழல் வாள்நெடுங்கண் மலைமகள்,

மதுவிம்மு கொன்றைத்

தாரிரும் தடமார்பு நீங்காத் தையலாள்,

உலகுய்யவந்த

காரிரும்பொழில் கச்சிமூதூர்க் காமகோட்டம்

உண்டாக நீர்போய்

ஊரிடும் பிச்சை கொள்வ தென்னே,

ஓணகாந்தன் தளியுளீரே.

என்கிறார்.

இந்தத் தளி அல்லது கோயிலுக்குத் தனியாக அம்பாள் இல்லாததால்தான், உலகுக்கெல்லாம் சோறு போடுகிற காம கோட்டத்துக் காமாக்ஷி இருக்க, நீ ஏன் பிக்ஷாடனனாகக் கப்பரையோடு திரிகிறாய், என்று பரமேசுவரனைக் கேட்கிறார். காமாக்ஷி ஞானப் பிரதமான தெய்வம் மட்டுமில்லை. ஞானப்பால் தருவதோடு அன்ன பூரணேஸ்வரியாக உலகுக்கெல்லாம் சோறும் போடுகிறாள். இரு நாழி நெல்லைக் கொண்டு அவள் முப்பத்திரெண்டு அறங்களையும் ஆற்றினாள் என்று தமிழ் நூல்கள் சொல்லும். அவள் நமக்குச் சோறு போடுவாள். நம் காமன்களை எல்லாம் கடாக்ஷித்தால் நிறைவேற்றித் தருவாள். காமாக்ஷி என்றாலே நம் ஆசைகளைத் தன் கடாக்ஷத்தால் நிறைவேற்றுபவள் என் றும் ஓர் அர்த்தமாகும்.

காமனுக்கு அநுக்கிரஹம் செய்து, பரமேசுவரனைக் காமேசுவரனாக்கிய அந்த சிவகாம சுந்தரியைத் தியானித்தால், நம்முடைய ஆசாகள், காமங்கள் எல்லாமே கடைசியில் அழிந்து போகும். அவளுடைய கடாக்ஷம் கிடைத்துவிட்டால் அதன்பின் எவ்வளவு ஆசையை உண்டு பண்ணக்கூடிய வஸ்துவும், நமக்கு ஆசை உண்டாகாது. காமம், குரோதம், லோபம் (பணத்தாசை), மோகம், மதம், மாத்சரியம் (பொறாமை) ஆகிய பரிசுத்தம் ஆவதற்கு அவளையே பிரார்த்திக்க வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*காமாக்ஷியின் கண்கள்*

நம் அவயங்களில் கண் மமிகவும் முக்கியம். என் கண்ணே என் று பிரியமானவர்களைச் சொல்கிற மாதிரி காதே, மூக்கே என்பதில்லை அல்லவா? அம்பாள் என்பதாகப் பரமாத்மா மூர்த்திகரிக்கிறபோது அவளுடைய கண் எத்தனை

முக்கியமாகும். காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி என்கிறபோது அக்ஷி என்பது கண் விசேஷத்தையே சொல்கிறது.

காமாக்ஷியின் கைகளில் மன்மதன் வில்லும் அம்பும் இருப்பதாகச் சொல்கிறோம். அவளுடைய கைகளில் மட்டுமில்லை, கண்களிலும்கூட இவையே இருக்கின்றன என்று ஆச்சாரியாள் ஸௌந்தரிய லஹரியில் கவித்வ நயத்தோடு சொல்கிறார். (ப்ருவௌபுக்நே கிஞ்சித் என்கிற ஸ்லோகம்) என்ன சொல்கிறார்? அம்பாளுடைய புருவம் கொஞ்சம் நெரிந்திருக்கிறதாம். கவலை இருந்தால்ததான் புருவம் தெரியும். லோக மாதாவுக்கு ஜனங்கள் எல்லோரும் கெட்டுப்போகிறார்களே, அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்கிற கவலை. அதனால் புருவம் வளைந்திருக்கிறது. அம்பாளுடைய பரம லக்ஷணமான புருவங்கள் வில் மாதிரி இருக்கின்றன. இரண்டு வளைந்த பாகங்களைக் கொண்ட தனுஸைப் போல் அவை உள்ளன. ஆனால் புருவ மத்தியில், அதாவது நாசி தொடங்கும் இடத்துக்கு மேலே ரோமம் இல்லை. ரோமம் இருந்தால் அது உத்தமமல்ல. சாமுத்திரிகா லக்ஷணம் ஆகாது. கூடின புருவம் கெடுதல் உண்டாகும் என்பார்கள். அம்பாளுடைய புருவங்களின் மத்தியில் ரோமமில்லாதது உத்தம ஸ்திரீ லக்ஷணம்தான். இது புருவங்களை வில்லுக்கு உவமிக்கும்போது அவ்வில்லுக்கு நடுவே ஊனம் செய்தாற்போல் தோன்றலாம். அப்படி ஊனம் தோன்றாமல் ஆசார்யார் ஒரு காரணம் சொல்கிறார். வில் என்று ஒன்று இருந்தால், அதை எய்கிறவன், அதன் மத்தியில் தன் முஷ்டியால் அதைப் பிடித்துக் கொண்டுதானே நாணில் அம்பு பூட்டி இழுப்பான். முஷ்டி பிடித்திருக்கிற இடம் வில்லின் இரண்டு பாகங்களுக்கு மத்தியில் அந்த வில்லை மறைக்கத்தானே செய்யும். இப்படித்தான் அம்பாளின் புருவ வில்லையும் எவனோ மத்தியில் பிடித்துக்கொண்டு அம்பைப் பூட்டுகிறான். அவனுடைய முஷ்டி உள்ள அந்த மத்ய பாகம்தான் ரோமம் இல்லாத இடைவெளி என்கிறார்.

இப்படி அம்பாளின் புருவத்தை வில்லாக வளைப்பவன் யார்? மன்மதன்தான். அவனுடைய கரும்பு வில் போலத்தான் கருணையால் வளைந்த லோக மாதாவின் புருவம் இருக்கிறது. மன்மதனுடைய வில்லுக்கு வண்டுகள் தானே நாண் கயிறு. அதற்கேற்றாற்போல் இந்த புருவத்துக்குக் கீழே

அம்பாளுடைய வண்டு விழிகள் இப்படியும் அப்படியும் ஓடிக்கொண்டே இருக்கின்றன. ஒருத்தரும் விட்டுப் போகாமல் ஸமஸ்த பக்தர்களுக்கும் அநுக்கிரஹம் செய்ய வேண்டுமென்பதால் அவை இப்படிச் சஞ்சரித்துக்கொண்டே இருக்கின்றன. இந்த நாணிலும், வில்லிலும் மன்மதன் தன்னுடைய சக்தியை வைத்து எய்கிறான். அதனால்தான் ஞான மூர்த்தியாயிருந்த பரமேசுவரன் அம்பாளிடம் பிரேமை கொண்டான். அதனால் ஜீவப் பிரபஞ்சமும் முழுதிடமும் அன்புகொண்டான். ஆசையில்லாத பிரம்மம் அசைந்துகொடுத்து, சகல ஜனங்களையும் ரக்ஷித்து, அம்பாளுடைய கவலையும் தீர்ந்தது.

வில்லைப் பிடித்த மன்மதன் முஷ்டி அம்பிகையின் புருவங்களுக்கு மத்தியில் உள்ள இடைவெளியாகவும், அவனுடைய மணிகட்டு நாண் கயிறான வண்டு விழிகளுக்கு நடுவில் நாசியின் அடிப்பாகமாகவும் ஆகிவிட்டது. இப்படி ஆசாரியாள் துதிக்கிறார்.

ஈசுவரனின் மீது காம பாணத்தை போடும் அந்தக் கண்களேதான் பக்தர்களைக் கடாக்ஷிக்கும்போது காமத்தைத் துவம்ஸம் செய்து ஞானத்தைப் பொழிகின்றன. மன்மத பாணங்கள் என்பவை என்ன? தாமரை, மல்லிகை, கருங்குவளை, மாம்பூ, அசோக புஷ்பம் ஆகியவைதான் அவனுடைய அம்புகள். ரூபம், ரஸம், கந்தம், ஸ்பரிசம் ஆகிய நான்கால் நம்முடைய நாண்கு இந்திரியங்களை ஆகர்ஷிப்பது புஷ்பம். அதன் அழகு கண்ணுக்கும், அதில் சுரக்கிற தேனின் ரஸம் நாக்குக்கும், வாசனை மூக்கிற்கும், மென்மை தொடு உணர்ச்சிக்கும், இன்பம் தருகின்றன. பாக்கி இருக்கிற இந்திரியம் காது. அதற்குதான் வண்டு நாண், அது எப்போதும் ரீங்காரம் செய்வது, இந்த ஐந்துக்கும் மேலே கரும்பு வில் அதுதான் எல்லா இந்திரிய சேஷ்டைக்கும் காரணமான மனம்.

வெறும் பூவையும், கரும்பையும், வண்டையும் வைத்துக் கொண்டு மன்மதன் ஸமஸ்த ஜீவராசிகளையும் இந்திரிய வியாபாரத்தால் இழுத்துத் தள்ளுகிறான் என்றால் என்ன அர்த்தம்.? ஸாக்ஷாத் பராசக்தியின் அநுக்கிரஹம் இருந்துவிட்டால், வல்லவனுக்குப் புல்லும் ஆயதமாகிவிடும் என்று அர்த்தம். உலக லீலை நடப்பதற்கு அவனுக்கு இந்தச்

சக்தியை அநுக்கிரஹித்தாள். ஆகவே கவித்வ அம்புக்காக அவன் அவள் புருவத்தை வளைத்து அம்பு எய்வதாகச் சொன்னாலும் அவள்தான் அவனுக்கும் சக்தி தந்தவள். அவளுடைய சக்தியால்தான் அவன் நம் இந்திரியங்களை வசமாக்கி, ஓடாமல் நிறுத்த முடியும் என்றும் ஏற்படுகிறது.

தண்டிப்பது, காப்பாற்றுவது (சிக்ஷணை, ரக்ஷணை) இரண்டும் செய்கிறவன்தான் பிரபு. நம் கர்மத்துக்காக நம்மை ஆட்டிவைத்து சிக்ஷிக்கிறான். காமனை அதிகாரியாகக் கொண்டு அவனுக்கும் ஜயம் வாங்கித் தருகிறாள். அந்தக் காமன் நம்மிடம் வாலாட்ட முடியாதபடி நம் காம ஜயம் செய்யவும் அவளே கதி. அந்த ரக்ஷணையாச் செய்ய வேண்டுமென்றே லோகமாதாவான அவள் எப்போதும் கவலையோடு புருவ வில்லை வளைத்துக்கொண்டு அம்பு எய்கிற பாணத்தை வீசிப் பரமேசுவரனைக் கருணையில் திருப்பிக் கொண்டிருந்தாள்.

அம்பாளுடைய கண்களிலிருந்து பொங்குகிற கடாக்ஷம் ஸ்ரீ ஆச்சார்யாளிடம் பூரணமாகப் பொலிந்துகொண்டிருந்த போது, அவரது வாக்கியிருந்து ஒரு சுலோகம் வந்தது. இதுவும் 'ஸௌந்தரிய லஹரி'யில் இருக்கிறது. 'த்ருசா த்ராகீயஸ் யாதரதளித நீலோத்பல ருசா'என்ற சுலோகம். அவளுடைய கடாக்ஷம் இல்லாமல் இப்படிப்பட்ட அமிருதம் போன்ற சுலோகம் பிறக்க முடியாது. ஆனால் இந்த சுலோகத்திலோ ஆசாரியாள் அம்பாளின் கடாக்ஷம் தமக்குக்கிட்ட வேண்டுமென்றே பிரார்த்திக்கிறார். தமக்குக்கிட்ட வேண்டும் என்கிறார் - பக்தியிலும் ஞானத்திலும் சிகரமாக இருந்தும் துளிகூட அகம்பாவமே இல்லாத நம் ஆசாரியாள்.

காமாக்ஷியின் கடாக்ஷ வீக்ஷண்யத்தின் பெருமையை இந்த சுலோகத்தில் சொல்லுகிறார். அவளுடைய கண் பார்வை எத்தனை தூரமும் தாண்டி விழுமாம் - 'த்ருசா த்ரா கீயஸ்வா'என்கிறார். ஒரு தாயார்க்காரி பச்சைக் குழந்தைகளைத் தன்பார்வைக்குள்ளேதான் வைத்துக் கொள்வாள். பெரிய பெரிய காரியம் சாதித்தவர்கள், அகடவிகடம் செய்கிறவர்கள், எல்லோரும்கூட அவளுக்குப் பச்சைக் குழந்தைகள்தான். மிருகங்கள், பட்சிகள், புல்பூண்டு எல்லாவற்றுக்கும் தாயார்க்காரி அவள். எல்லையில்லாத

பிரபஞ்சத்துக்கு அம்மா அவளே. இத்தனையும் அவர் பார்வைக்குத்தான் இருக்கின்றன. எனவே அவளுடைய கடாக்ஷத்திற்கும் எல்லையில்லை. அது நீண்டு நீண்டுபோய், தகுதியே இல்லை என்று எட்டாத் தொலைவில் நிற்கிறவர்கள் மீதும் விழுகிறது. அந்தக் கண்கள் பாதி மூடி, பாதி விரிந்திருக்கிற "நீலோத்பல புஷ்பம்"மாதிரி பரம சீதளமாக இருக்கிறது. அவளுடைய திருஷ்டி, நீண்ட நேத்திரங்கள், குளிர்ந்த நேத்திரங்கள் - இதனால் நீலோத்பலத்தை உவமிக்கிறார். இப்படி நீள நெடுக எங்குப் பார்த்தாலும் போய்க் கொண்டிருக்கும் உன் கடாக்ஷப்பிரவாகத்தில் என்னையும் முழுகும்படியாக செய்தருளேன் என்கிறார். 'மாம் அபி' என்னைக்கூட என்கிறார். எனக்கு உன் கடாக்ஷம் கிடைக்க நியாயமே இல்லை என்றாலும் தீனனான என்னையும் உன் பார்வையால் ஸ்நானம் பண்ணி வையம்மா என்கிறார். தீனம், மாமபி என்று மிகமிக விநயத்துடன் சொல்லுகிறார் பரமேசுவதாரமான ஆச்சாரியாள். எனக்கு யோக்கியதை இல்லாவிட்டாலும் ஏன் கேட்கிறேன் என்றால், இப்படிக் கடாக்ஷிப்பதால் உனக்கு ஒன்றும் நஷ்டம் வந்துவிடவில்லை என்பதாலேயே கேட்கிறேன் என்கிறார். தோஷமுள்ளவர்களைப் பார்த்தாலும்கூட அவளுடைய பார்வைக்குத் தோஷம் வராது. எந்த ஹானியும் வராது. ந ச தே ஹாநிரியதா, உனக்கு நஷ்டமில்லை என்பது மட்டுமில்லை. எனக்கோ இதனால் பரம லாபம் சித்திக்கிறது. நான் தன்யனாகிறேன் என்கிறார். அனேனாயம் தன்யோ பவதி தனத்தை உடையவன் தன்யன். அம்பாளின் கடாக்ஷத்தால் அருட்செல்வம் என்ற தானம் கிடைக்கிறது, அதற்குமேல் பெரிய செல்வம் எதுவுமில்லை.

தகுதியைப் பார்க்காமல் கடாக்ஷிப்பாய் என்றதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறார். பூரண சந்திர ஒளிபிரகாசிக்கிறது. அது வித்தியாசம் பாராட்டாமல் எல்லா இடங்களிலும் ஒரே போல் அமிருதமான நிலாவைக் கொட்டுகிறது. சக்கரவர்த்தியின் மாட மாளிகை நிலா முற்றத்தில் சந்திரிகையைப் பொழிகிறது. அதே போல் ஒரே முள்ளுப்புதர் மண்டிய காட்டிலும் நிலவைப் பொழிகிறது. உப்பரிகையில் விழுந்ததால் அரண்மனையின் சௌகரியங்கள் நிலாவைச் சேரவில்லை. காட்டில் விழுந்ததால் அதற்கு குத்தவும் இல்லை. இப்படித்தான் அம்பாளின் கடாக்ஷம் எங்கு விழுந்தாலும் அதற்குக் கூடுதல்

குறைவு இவை இல்லை. என் மேல் அது விழுந்தால் ஒன்றும் குறைந்துவிடாது. நானோ அதன் ஸ்பரிஸத்தால் நிறைந்தவனாகிவிடுவேன். உனக்கு ஒரு நஷ்டமும் இல்லாமலே எனக்குப் பரம லாபம் கிடைக்கிறது. அதனால் என்னையும் உன் கடாக்ஷத்தில் முழுக்கடிப்பாய் அம்மா என்கிறார்.

என்னையும் என்று உம் போட்டுச் சொன்னது நம்மையெல்லாம் உத்தேசித்துச் சொன்னதுதான்,. அம்பாளும் ஈஸ்வரனும் ஆச்சாரியாளும் ஒன்றேதான். அப்படிப்பட்ட ஆசாரியாள் பரம கருணையினால் நம்மோடு சேர்ந்து நின்று கொண்டு நமக்காக இந்த சுலோகத்தை அநுக்கிரகித்திருக்கிறார். மனமாரப் பிரார்த்தித்து விட்டால், எத்தனை யோக்கியதை இல்லாதவர்களையும் அம்பாள் கடாக்ஷிக்கிறாள். நிலாப்போலவும் நீலோத்பலம் போலவும் குளிர்ந்து அவளது கடாக்ஷம். அது எவரையும் கைதூக்கிவிடும் என்று நமக்குக் காட்டிக் கொடுக்கிறார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அம்பாளின் ஸ்வரூபம்*

நீதான் பரமேசுவரன் சரீரம் என்று ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் அம்பிகையைப் பார்த்துச் சொல்கிறார். சரீரத்திற்குள் உயிர் இருக்கிறது. பல சரீரத்துக்குள் பல சரீரங்கள் இருக்கின்றன. இத்தனை உயிர்களுக்கெல்லாமும் உயிராக ஒரே மூல வஸ்துதான் இருக்கிறது. அந்த மூல வஸ்துவான பிரம்மம்தான் பரமேசுவரன் என்றால், அதன் இத்தனை தோற்றங்களுமே பராசக்தி. இது அவ்வளவும் அதற்குச் சரீரமாகவும், அது இவற்றுக்குப் பிராண வாயுவாகவும் இருக்கிறது. பிரபஞ்சம், அதிலுள்ள ஜீவராசிகள் அவற்றின் மனசு, புத்தி, சித்தம், அகங்காரம் எல்லாம் பரமேசுவரன்

என்ற உயிருக்குச் சரீரம் மாதிரி. இது அத்தனைம் சாக்ஷாத் அம்பாள்தான். உடலும் உயிரும் மாதிரி பிரம்மமும் பிரம்ம சக்தியும் பிரியாமல் இருக்கின்றன. உடலில் எல்லா இடங்களிலும் உயிர் ஒடுகிற மாதிரி பராசக்திக்குள் முழுக்க பிரம்ம தத்வமேதான் நிறைந்திருக்கிறது. அந்த பிரம்மத்துக்கே ஓர் உடம்பு கொடுத்துப் பரமேசுவரன் என்று வைத்தால், அந்த உடம்புக்குச் சாத்திய கவசமாக இருக்கிறவள் அம்பாள். கர்ணகவசம் மாதிரி, பிரிக்கவே முடியாத கவசம்.

அம்பாள் பரமேசுவரனோடு பிரிக்க முடியாமல் கலந்திருப்பதைத்தான் ஒரு மாதிரியாக, இவள் பாதி - அவர் பாதியாக ஒன்று சேர்ந்ததுபோல் அர்த்தநாரீசுவர ஸ்வரூபத்தில் பார்க்கிறோம். சொல்லும் பொருளும் போல் ஈசுவரனும் அம்பிகையும் பிரிக்க முடியாமல் ஐக்கியமாயிருக்கிறார்கள் வாக் அர்த்தாவிவ என்று மகாகவி காளிதாஸர் சொல்கிறார். நான் பசு என்று சொன்னால் அது 'ப' என்கிற ஒரு சப்தமும் 'சு' என்கிற ஒரு சத்தமும்தான். சொல்லின் சத்தத்திலோ எழுத்திலோ அந்த மிருகம் எங்கே இருக்கிறது என்று கேட்டால் எப்படிச் சொல்வது? எப்படியிருக்கிறது, என்று கேட்டால் எப்படிச் சொல்வது? எப்படியிருக்கிறது எங்கே இருக்கிறது என்று தெரியவில்லை. ஆனாலும் இந்த வார்த்தையைச் சொன்னவுடன் பசுவின் நினைப்பு உண்டாகிறது. வாக்கும், அர்த்தமும் பிரிக்க முடியாதபடி இருக்கின்றன. இப்படித்தான் பிரபஞ்சத்தில் ஜீவராசிகளில் அவற்றின் எண்ணங்கள் காரியங்கள் ஆகியவற்றில் பிரம்மம் எங்கே எப்படி இருக்கிறது என்று தெரியாவிட்டாலும் இவை எல்லாம் சொல் என்றால் பொருளாக அந்த மூலப்பொருள் இருக்கிறது.

அம்பாளுடைய ஸ்வரூபம் என்ன என்றால் நாம் பார்க்கிற அத்தனை உருவங்களும்தான். உருவங்கள் மட்டுமில்லை. எண்ணங்கள், காரியங்கள் எல்லாமும் அவள்தான். அவளின்றி நம் சரீரம், மனசு, உயிர் எதுவுமில்லை. சரீரம் த்வம் சம்போ. நீ பரமேசுவரனின் சரீரமாயிருக்கிறாய் என்று செளந்தரிய லஹரியில் சொல்கிற ஆசாரியாள் அடுத்த ஸ்லோகத்தில் நீதான் சூக்ஷ்மமான மனதாய் இருக்கிறாய் என்கிறார். அந்த மூலமான மனஸிலிருந்து, சூக்ஷ்மமான ஆகாசம் உண்டாகிறது. அது மேலும் மேலும் ஸ்தூலமாகி,

காற்று, அக்னி, ஜலம், மண் எல்லாம் வந்தன. இதெல்லாமும் நீதான் என்கிறார். நீ இல்லாமல் வேறு வஸ்து எதுவுமே இல்லை என்கிறார். த்வயி பரிணதாயாம் நஹி பரம்.

சம்பு என்ற உயிருக்கு நீ சரீரம் என்று சொன்னாலும், உயிர், உடல் என்ற பேதமில்லாமல் ஒன்றாக இருந்ததும் நீதான். நீயேதான் விசுவம் என்கிற சரீரமாகப் பரிணமித்தாய் என்கிறார். த்வம் ஏவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வ வபுஷா.

இங்கே நம் சங்கராச்சாரியார் சொல்வது, உலகம் எல்லாம் பரமாத்மாவுக்கு சரீரம். உள்ளேயிருக்கிற உயிர், அந்தர்யாமி அவரே என்கிற ராமாநுஜ சித்தாந்தம் மாதிரி இருக்கிறது. ஆனால் அப்போதுகூட உடம்பு, உயிர் என்ற வித்தியாசம் துவைதம் மாதிரி சொன்னவர் தொடர்ந்து அத்வைதத்தையே சொல்கிறார். எங்களிடம் இருக்கிற துளித் துளி ஞானத்துக்கும் ஆனந்தத்துக்கும் மூலமான பரம ஞானமும், பரமானந்தமும் நீதான். இந்த ஞானத்தையும் ஆனந்தத்தையும் அநுபவிப்பதற்கே ஒன்றாக இருந்தவள், இரண்டு மாதிரி ஆகி சிவயுக்தி என்ற பாவத்தைத் தாங்கியிருக்கிறாய் என்கிறார். இது பாவம்தான். வாஸ்தவத்தில் விச்வ சரீரமும் அதன் உயிரான அம்பாளும் ஒன்றுதான். அந்த அம்பாளும் யாருக்கு சரீரம் மாதிரி இருக்கிறாளோ அந்த சம்புவும் அவளும்கூட ஒனறுதான். அத்வைதம்தான்.

ஒனறு எங்கேயும் இருக்கிறது என்றால், அதற்குத் தனி உருவம் எப்படி இருக்க முடியும்? காற்று அநேகமாக எங்கேயும் செல்ல முடிகிறது. அதற்கு ரூபம் இருக்கிறதோ? அம்பாளோ அதைவிட சூக்ஷமம். காற்று இல்லாத சூனியத்தை (vaccum) கூட உண்டாக்குகிறார்கள். ஆனால் அவள் இல்லாத இடம் இல்லை. மனசு, எண்ணம் இதற்குள்ளும் இருக்கிறாள். அப்படியானால் அவளுக்கு எப்படி உருவம் இருக்க முடியும்? ஆனால் இது நம் சாமானிய நிலையில் மனசுக்கு ஹிதமாக இல்லை. அவளிடமிருந்து நாம் வந்தோம் என்பதால் அவள் அம்மாவும் நாம் குழந்தைகளும் மாதிரி. அம்மா ஒருத்தி இருக்கிறாள் என்று குழந்தைக்குத் தெரிந்து விட்டால் மட்டும் சந்தோஷப்படுமா? அவள் இருந்தால் மட்டும் போதாது. அவளைப் பார்க்க வேண்டும், பேசவேண்டும் என்று

ஆசைப்படும்.

எவள் எல்லா ரூபமாகவும் இருக்கிறாள் என்று நம்மால் உணர் முடியவில்லை. அருவமாகவே நாம் அவளைத் தியானிக்க நமக்குப் பக்குவம் இல்லை. இப்படிப்பட்ட நமக்காகவே, நாம் அன்பு செய்வதற்காகவே, அவள் இப்போது காருண்யமும் லாவண்யமும் ஒரு ரூபமாகித் திவ்விய மங்கள விக்கிரகமாக வருகிறாள். ரூபமில்லாத நெய்யை நன்றாகக் குளிர வைத்தால் பாளம் பாளமாகப் பெயர்த்து எடுக்கிற மாதிரி கெட்டிப்பட்டுப் போகிறது அல்லவா? இப்படித்தான் க்ருத காடின்யவத் என்கிற நியாயப்படி, பக்தர்களுடைய நெஞ்சின் குளிர்ச்சியில் பரம சூக்ஷ்மமான அம்பிகை உறைந்து போய், ஸ்தூலமான பல திவ்விய ரூபங்களை எடுத்துக் கொள்கிறாள்.

அம்பாளுடைய அப்படிப்பட்ட ரூபம் எப்படி இருக்கும். சாதாரணமாக, பத்துப் பேருக்கு, நூறு பேருக்கு அன்னதானம் செய்கிற ஒரு நல்ல ஜீவனின் முகத்தைப் பார்த்தால், அதில் எத்தனை அன்பு சொட்டுகிறது? அன்னதானம் செய்து, பலர் வயிறாரச் சாப்பிட்டு சந்தோஷப்படுகிறபோது, அந்த அன்னதாதாவின் சந்தோஷத்தைப் பாருங்கள். அந்த சந்தோஷத்தில் அவன் முகத்தில் எவ்வளவு அன்பு சொட்டுகிறது. சாப்பிடுகிறவனைவிட சாப்பாடு போட்டவனுக்குத்தான் ஆனந்தம் அதிகம் இருக்கிறது. ஒரு பத்து பேர் அல்லது நூறு பேருக்கு மட்டும் ஒரே ஒரு வேளை சோறு போடுகிறவனுடமே இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கின்றன. மகா பாபங்களைச் செய்து, காரியத்தில் செய்யாவிட்டாலும், மனஸினால் மகா பாபங்களை நினைத்து, ஒரு வேளை சோறு கிடைக்கக்கூட யோக்கியதை இல்லாத நம் இத்தனை பேருக்கும் கோடானு கோடி ஜீவன்களுக்கும், கல்பகோடி காலமாக சோறு போட்டுக் கொண்டிருக்கிற ஒருத்தி அன்ன பூரணேசுவரியான அம்பாள்தான். அவளுடைய அன்பையும், அதனால் உண்டான ஆனந்த ஸ்வரூபத்தையும் நம்மால் கற்பனை செய்கூடப் பார்க்க முடியாது. அம்பாள் ஸெளந்தரியஸ்வரூபம் என்கிறார்கள். அவளைப் பற்றி ஸெளந்தரிய லஹரி என்றே ஆச்சாரியாள் ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இத்தனை ஸெளந்தரியம், லாவண்யம் அவளுக்கு எப்படி வந்தது என்றால் அன்புதான் அழகாகிறது. காருண்யம்தான் லாவண்யம். பாக்கி சரீர அழகு

ஓர் அழகல்ல. கொஞ்சம் கோபம் வந்தால், துளி ஜுரம் வந்தால், சரீர அழகு போய்விடுகிறது. அம்பாளோ நிரந்தரமான கருணாமூர்த்தியாக எப்போதும் லாவண்டமாக இருக்கிறாள். எந்த பக்தருக்கு அந்த ரூபத்தில் மனசு ஈடுபடுமோ, அந்த ரூபத்தில் வந்து அருள் செய்வதற்காகப் பல ரூபங்கள் எடுத்துக்கொண்டிருக்கிறாள். ராஜராஜேசுவரி, புவனேசுவரி, துர்க்கை, காளி என்று இப்படி ஸௌம்யமாகவும் உக்ரமாகவும் பல தினுசில் அவளை ஆராதிக்க வேறு வேறு ரூபம் கொள்கிறாள்.

ஒவ்வொரு ரூபத்தையும் பிரத்யக்ஷமாகத் தரிசனம் செய்ய வேண்டுமானால், அதற்கு உபயமாக ஒவ்வொரு மந்திரம் இருக்கிறது. மந்திரம் என்பது ஒரு சப்தக் கோவை அக்ஷரங்களின் கூட்டம். பல வடிவங்களில் இருக்கிற அம்பாளே பல சப்தங்களாகவும், அக்ஷரங்களாகவும் இருக்கிறாள். அவளுடைய அநுக்கிரகத்தால் மகா கவியாகப் பரிணமித்த காளிதாஸர் அவளை ஸர்வ வாணாத்மிகே, ஸர்வ மந்த்ராத்மிகே என்று 'சியாமளா தண்டகத்தில்'ஸ்துதி செய்கிறார். வர்ணம் என்றால் நிறம் என்று நினைப்பீர்கள். வர்ணம் என்றால் அக்ஷரம் என்று அர்த்தம். ஒலி வடிவான அக்ஷரங்களும், ஒளி வடிவமான ரூபங்களும் ஒரே மூலத்திலிருந்து வந்தவைதான். அவை ஒன்றுக்கொன்று நிரம்ப நெருக்கமான சம்பந்தம் உடையவை. ஸயன்ஸ் நிபுணர்கள்கூட இந்த ஒற்றுமையைச் சொல்கிறார்கள். ஜலக்கரையில் பலவிதமான சப்தங்களை எழுப்பிப் பார்த்தார்கள். அப்போது அவற்றின் அதிர்வுகளைப் (vibration) பொறுத்து ஜலத்தின் மேலே மிதக்கிற லேசான துகள்கள் வெவ்வேறு உருவங்களாக அமைந்தன. நாதத்துக்கே ரூபம் கொடுக்கற சக்தி இருக்கிறது என்று இதனால் தெரிகிறது.

ஒரு பெரிய அலை மடிந்து மடிந்து சிறு சிறு அலைகளாகி அடங்குகிற மாதிரிச் சில சப்தங்கள் இருக்கின்றன. இதை வீசிதரங்கம் என்பார்கள். ஒரே கொப்புளிப்பில் பலவாகத் தெறிப்பதுபோல் விழுகிற சப்தங்களை முகுளம் என்பார்கள். இப்படிப் பலவகைப்பட்ட சப்தங்களையெல்லாம் ஐம்பத்தொரு அக்ஷரங்களாகப் பிரித்திருக்கிறார்கள். இவற்றுக்குப் பெயர் மாத்ருகா என்பது .மாத்ரு என்றால் தாயார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். சப்தமாகவும்,

எழுத்தாகவும் அம்பாள் இருக்கிறாள். இவற்றில் சில சப்தக் கோவைகளை விடாமல் ஜபிக்கும்போது, அவற்றுக்குறிய ரூபங்களும் பிரத்யக்ஷமாகின்றன. இப்படிப்பட்ட சப்தக் கோவைகளைத்தான் மந்திரம் என்கிறோம். மந்திரமே அம்பாளின் ஸ்வரூபம்தான். கை கால் முதலான அவயங்களோடு ஆயுதங்களைத் தரித்த வடிவங்களைப் போலவே எல்லா மந்திரங்களும் அவள் வடிவம்தான். அதோடுகூட, இந்த மந்திரங்களை ஒருமுகப்பட்ட சித்தத்தோடு தீவிரமாக ஜபம் செய்தால், அவளே அந்தந்த மந்திரத்துக்குரிய ரூபத்தில், சரணாகதி அவயவங்களுடனும் ஆயுதங்களுடனும் முத்திரைகள் முதலியவற்றுடனும் தரிசனம் தருவாள். இந்த மந்திரங்கள் எல்லாவற்றுக்கும் மூலமாக இருப்பது பிரணவம். அதிலிருந்து இந்த நாம, ரூபப் பிரபஞ்ஜம் முழுக்க வந்தது. நாத ஸ்வரூபிணியான அம்பாளே ஒங்காரமாகிய அந்தப் பிரணவமும் ஆவாள். அ,உ,ம மூன்றும் சேர்ந்து ஒம் என்று ஆகிறது. அ - சிருஷ்டி; உ - பரிபாலனம்; ம - சம்ஹாரம் என்பார்கள். அதனால் முத்தொழிலும் செய்யும் மூல சக்தியே பிரணவம். இதையே அம்பாளின் தொழில்களில் விசேஷமான கருணையைக்காட்டும் பரிபாலனத்தில் தொடங்கினால், உ - ம - அ - என்றாகும். அதுதான் உமா என்பது. உபநிஷதமும் அவளை உமாஹைமவதி என்றே சொல்கிறது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அம்பாளின் இருப்பிடம்*

பராசக்தி இல்லாத இடம் ஏதுமில்லை. ஆனால் மனசுக்குப் பிடிப்பு உண்டாவதற்காக அவளுக்குப் பல வாஸஸ்தானங்களைச் சொல்லியிருக்கிறது. முக்கியமாக ஸ்ரீ வித்யா என்கிற தேவி உபாஸனா மார்க்கத்தில்

சொல்கிறபோது, அவள் அமிருத சாகரத்தின் மத்தியில், மணித்வீபம் என்கிற மணியமான தீவில் இருப்பதாகச் சொல்கிறோம். மணித்தீவில் பல கோட்டைகள் உத்தியான வனங்களுக்குள், சிந்தாமணிகளயை இழைத்துச் செய்த கிருகத்துக்குள் இருக்கிறாள். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், ஸதாசிவன் இவர்கள் நாலு கால்களாகவும், உட்காருமிடமாகவும் அமைந்து உருவான மச்சத்தின்மேல், பிரம்ம ஸ்வரூபமான காமேசுவரனின் இடது பக்கத்தில் அமர்ந்திருக்கிறாள் என்று சொல்லியிருக்கிறது. அவள் இருக்கும் இடத்தை ஸ்ரீபுரம் என்று கூறியிருக்கிறது. அமிருத ஸாகரத்தில் இருப்பதாகச் சொல்கிற மாதிரியே ஸ்வர்ணமயமான மேருசிகரத்தில் இந்த ஸ்ரீபுரம் இருப்பதாகவும் சொல்வதுண்டு.

தியானம் செய்வதற்குப் பரம செளக்கியமாக இன்னொரு வாஸஸ்தலமும் சொல்லியிருக்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்தின் பலச்ருதியில் சொல்லியிருக்கிற இந்த முறையில் பல மகான்கள் அவளுடைய இருப்பிடத்தைத் தியானம் செய்து பரமானந்தத்தை அநுபவிக்கிறார்கள். அது என்ன என்றால், பூரண சந்திர மண்டலத்திற்குள் அம்பாள் அமர்ந்திருப்பதாகத் தியானம் செய்வதாகும். ஸஹஸ்ர நாமத்திலேயே 'சந்திர மண்டல மத்யகா'என்று ஒரு நாமம் வருகிறது. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகுள்ளது சந்திரன். நிலாச் சாப்பாடு, நிலாவில் பாட்டுக் கச்சேரி எல்லாம் வைத்துக் கொண்டு சந்தோஷப்படுகிறோம். இருந்தாலும் எலெக்ட்ரிக் ஜோடனை அதிகமாகிவிட்ட இக்காலத்தவர்களுக்குச் சந்திரன் அருமை தெரிந்திருக்க நியாயமில்லை. சீதளமான அதன் பிரகாசம் அலாதியானது. கண்ணை உறுத்தாத ஒளி வாய்ந்தது சந்திரன். அதிலும் பௌர்ணமி சந்திரனின் அழகு விசேஷம். இந்த அழகு விசசேஷமாகத் தெரிய வேண்டும் என்பதற்கே ஈசுவரநியதியில் முப்பது நாட்களுக்கு ஒரு முறைதான் பூர்ணிமை வருகிறது. தினமும் பூர்ணமி இருந்தால் பூரண சந்திரனில் நாம் இத்தனை சந்தோஷம் அடைய முடியாது. இந்தப் பூரண சந்திரமண்டலத்தை முதலில் தியானித்து, அதில் அம்பாளைத் தியானிக்க வேண்டும்.

பூரண சந்திரனைத் தியானிக்கிற போதே மனசும் அது போல் குளிர்ந்து போகிறது. அங்கே துக்கத்துக்கும் துவேஷத்துக்கும்

இடமில்லாமல் சாந்தமாகிறது. வெளிப் பிரபஞ்சமெல்லாம் ஜீவனுக்குள்ளேயே இருக்கிறது. அண்டத்திலுள்ளதெல்லாம் பிண்டத்திலும் உண்டு என்பார்கள். சகல ஜீவராசிகளுக்கும் அந்தரங்கமாக இருக்கிற பராசக்தியின் மனஸே சந்திரனாக ஆகியிருக்கிறது. புருஷ ஸூக்தத்தில் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. இதனால் ஜீவராசிகளின் மனத்துக்கும் சந்திரனுக்கும் சம்பந்தம் இருக்கிறது. இங்கிலீஷில் சித்தப் பிரமே பிடித்தவர்களை lunatic என்கிறார்கள். Lunar என்றாலே சந்திரனைப் பற்றியது என்றுதான் அர்த்தம். இது சித்தத்தின் விபரீத நிலையைச் சந்திரனோடு சேர்த்துச் சொல்கிறது. சித்த சுத்திக்கு அதே சந்திர மண்டலத்தில் அம்பாள் தியானத்தை நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

சந்திரனில் அம்பாள் அமர்ந்திருப்பதாகச் தியானிக்க வேண்டும். தியானம் செய்கிறவனுக்கோ புலித்தோலை ஆசனமாக விதித்திருக்கிறது. சந்திரனுக்கு நேர் எதிராக புலி என்றால் உக்கிரமாக இருக்கிறது. புலி எப்படி தன் லக்ஷியமாக இரையை ஒரே பாய்ச்சலில் பிடித்து விடுகிறதோ அப்படி நம் தியான லக்ஷியத்தை மனசு விடாப் பிடியாகப் பிடித்துக்கொள்வதற்கே வியாக்ராஸனம் விதித்திருக்கிறது. அதில் அமர்ந்து அம்பாளை சந்திர மண்டல வாஸினியாக தியானித்தால், நம் மனமும் அவள் மனத்திலிருந்து வந்த சந்திரனைப்போல் குளிர்ச்சி அடையும். சந்திரன் தாபத்தைப் போக்குவதுபோல் நம் தாபமும் சமனமாகும். சந்திரிகையில் இருட்டு விலகுகிற மாதிரி அஞ்ஞானம் விலகும்.

சூரியனை ஞான ஸ்வரூபமாகச் சொல்லியிருக்கிறது. ஆனால் சூரியப்

பிரகாசம் தாபம் உண்டாக்குகிறது. அதுவே சந்திரனில் பிரதிபலித்து பரம

சீதளமாகிறது. சந்திரனுக்கு ஸ்வாபமாக ஒளி கிடையாது. அம்பாள் சூரியனைப்போல் ஸ்வயம் பிரகாசமாகவும், சந்திரனைப்போல் சீதளமாகவும் இருக்கிறாள். தாபத்தைப் போக்கும்போதே ஞானப் பிரகாசமும் தருகிறாள். ஞானம் தருகிற குருமூர்த்தி அவளேதான். காளிதாஸர் தேசிக ரூபணே தர்சிதாப்புதயாம், குரு வடிவத்தில் வந்து தன் மகிமையைக் காட்டுகிறவள் என்று அம்பிகையை வர்ணிக்கிறார். எனவே சந்திரமண்டலத்தில் குரு பாதத்தையும்

தியானிக்கலாம். நம் தாபங்கள் விலகவும், ஞானப்பிரகாசம் உண்டாகவும், நாம் எல்லோரிடம் குளிர்ந்து இருக்கவும் இம்மாதிரி சந்திர மண்டலத்தில் அம்பாளையோ, குரு பாதுகையையோ தியானிக்க வேண்டும். அம்பாளையோ குருவாகத் தியானிக்க வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*ஞானாம்பிகை*

ஸ்ரீ வித்யா எனறு தேவி உபாஸனையைச் சொல்கிறோம். வித்யா என்றாலே ஞானம்தான். அவித்யை என்றால் அஞ்ஞானம், ஞானப்பால் தருகிற குருவான அம்மாவாக அம்பிகை இருக்கிறாள். இந்திராதி தேவர்களுக்கும் ஞானம் தந்தவள் அவளே என்று ஸாம வேதத்தைச் சேர்ந்த கேன உபநிஷதம் ஒரு கதை சொல்கிறது.

கதை இதுதான்.

ஒரு காலத்தில் தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் ஜயம் பெற்றார்கள். பரமாத்மா தந்த சக்தியைக் கொண்டே யுத்தம் செய்தோம். அவரது அநுக்கிரகத்தாலேயே வெற்றி பெற்றோம் என்பதை மறந்து, தேவர்கள் தங்களைத் தாமே மெச்சிக் கொண்டார்கள்.

தங்கள் சக்தியால் தாங்களே வெற்றியைச் சாதித்துவிட்டதாகச் கர்வப்பட்டார்கள். இது ஏதடா, அசுரர்களை ஜயித்த இந்த தேவர்களுக்கே அசுர குணம் வந்துவிடும் போலிருக்கிறதோ என்று பார்த்தார் பரமாத்மா.

அவர்கள் அப்படிக் கெட்டுப் போகாமல் ரக்ஷிப்பதற்காக அவர்களுடைய கண்ணுக் கெட்டுகிற தூரத்தில் அடிமுடி தெரியாத ஒரு ஜோதிஸ்வரூபமமாய் நின்றார்.

இதென்ன யக்ஷவடிவம்? என்று தேவர்கள் அதிசயித்தார்கள். நமக்குப் புரியாததை யக்ஷிணி என்று இப்போதும் சொல்கிறோம் அல்லவா? அம்மாதிரி தேவர்கள் அதை யக்ஷம் என்றார்கள்.அதனிடம் அக்னியை அனுப்பினார்கள்.

அது என்ன என்று தெரிந்துகொண்டு வருவதற்காக அக்னியை அனுப்பினார்கள். அவன் அதை நெருங்கி நீ யார்? என்று கேட்பதற்கு முன்பே, அது இவனைப் பார்த்து நீ யார் என்றது?.

நான் அக்னியாக்கும். ஜாத வேதஸ் என்கிற பெயரும் எனக்கு உண்டு என்றான். சரி. உனக்குள்ள சக்தி என்ன? எனறு யக்ஷவடிவம் கேட்டது. நான் எதையும் எரித்து பஸ்மீகரம் பண்ணிவிடுவேன் என்றான் அக்னி.

ஒஹோ! அப்படியானால் இதை எரி பார்க்கலாம் எனறு சொல்லி ஒரு துரும்பை எடுத்துப்போட்டது யக்ஷம்.

அக்னி தன் பூரண சக்தியையும் அந்தத் துரும்பின் மேல் பிரயோகித்தான். ஆனால் துரும்பு எரியவே இல்லை. அக்னி வெட்கமடைந்து தேவர்களிடம் திரும்பி வந்து நடந்ததைச் சொன்னான்.

இதென்னடா! நாம் வெற்றி கொண்டாடும்போது இப்படி நம்மில் ரொம்ப சக்திமானான ஒருத்தருக்கு - அக்னிக்கு - அபஜயம் வந்ததே என்று தேவர்கள் நினைத்தார்கள். யக்ஷம் இன்னதென்று தெரியாததே ஒரு தோல்விதான். அப்புறம் இந்த அபஜனம் வேறு. அதன்பின் அவர்கள் வாயுவை யக்ஷத்திடம் அனுப்பினார்கள்.

முன்போலவே, நீ யார் என்று கேட்டது யக்ஷம்?. நான் வாயு. மாதரிச்வன் என்றும் பெயர் பெற்றவன். எதையும் புரட்டித் தூகக்கிக்கொண்டு போகும் சக்தி வாய்ந்தவனாக்கும்.

சரி. இந்த சின்னச் துரும்பை தூக்கிப்பார் என்றது யக்ஷம். வாயு பிரம்மப் பிரயத்தனம் செய்தும் அவனால் தூக்க முடியவில்லை.

வாயுவும் திரும்பி வந்தான்... நீ யார்? என்று யக்ஷத்தைக் கேட்பதற்கே வாயில்லாதவனாக.

நாம் அசுரரிடம் அடைந்த ஜயத்தைக் கொண்டாடும் வெற்றி விழாவை இப்படி இது அபஜயமாக்கிவிட்டதே என்று தேவர்கள் யோசித்தார்கள்.

இப்போது தேவராஜனுக்கே ஒருவித அடக்கம் உண்டாகிவிட்டது. தங்களைவிடப் பெரியதொரு சக்தி இருக்கிறது என்கிற அறிவு உண்டாயிற்று. அகம்பாவம் போய், ஒரு க்ஷணம் ஈசுவர பக்திகூட உண்டாகிவிட்டது.

நாம் ஏதோ சாதித்துவிட்டதாக அவ்வப்போது வெற்றிவிழாக் கொண்டாடுகிறோம். இப்போது இது நம் தேசத்தில் ரொம்ப ஜாஸ்தி. கொஞ்ச நாள் கழித்துப் பார்த்தால் அந்த வெற்றி எங்கே போச்சு என்று தெரியவேயில்லை. அப்புறம் அவர்கள் கதையும் மாறிப்போகிறது. மாறாத ஜயம் ஆத்ம ஜயம்தான். அந்த ஜயமும் சரி. மற்ற லௌகிக வெற்றிகளும் சரி, பரதேவதையின் கிருபையாலேயே கிடைப்பவை.

இதைப் புரிந்துகொண்டு, தேவதைக்கெல்லாம் சக்கரவர்த்தியாக இருக்கப்பட்ட இந்திரன் யக்ஷத்தை விநயத்துடன் நெருங்கினவுடன், மகாகாருண்யம் பொருந்திய அது இவனுக்கு ஞான அநுக்கிரஹம் செய்வதற்காக திவ்விய ஸ்திரீ ரூபத்தில் நின்றது.

(யக்ஷம் நின்ற) அந்த ஆகாசத்திலேயே மகத்தான சோபை பொருந்திய ஹைமவதியான உமாதேவி பிரகாசித்தாள் என்கிறது உபநிஷத்து.

உருக்கிய பொன்னைப் போன்ற பிரகாசத்தோடு, அதாவது ஞான ஒளியாக ஒளித்துக்கொண்டு நின்ற அம்பாளை இந்திரன் நமஸ்ககரித்தான். சற்று முன் இங்கு தோன்றிய யக்ஷ வடிவம் என்ன? என்று கேட்டான்.

சாக்ஷாத் அம்பிகை அவனுக்கு ஆசாரிய ஸ்தானம் வகித்து ஞானோபதேசம் செய்தாள். அப்பா, பிரம்மம்தான் அந்த யக்ஷ வடிவம். இவ்வளவு பிரபஞ்சத்துக்கும், உனக்கும். சகல தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் காரணமாக, ஆதாரமாக இருப்பது அது ஒன்றுதான். அதன் அகண்டமான சக்திதான்

எல்லா ஜீவராசிகளிடமும் கண்டம் கண்டமாக, துளித் துளி இருக்கிறது என்று உபதேசித்தாள்.

முதலில் யக்ஷ வடிவமாக நின்று, தேவர்களை அவமானப்படுத்தினாள்.

அவமானப்படுத்தியது அகம்பாவத்தை அடக்குவதற்கே! அகம்பாவம் அடங்கினவுடன் பரமானுக்கிரஹமாக ஞானோபதேசம் தந்தாள்.

தேவராஜன் உண்மையை இதுவென (இதம்) முதலில் கண்டுகொண்டதாலேயே (த்ர) அவனுக்கு இந்திரன் என்று பெயர் உண்டாயிற்று. மற்ற தேவர்கள் பிரம்ம ஸ்வரூபத்தை பார்த்ததோடு சரி. இவன்தான் அதன் கருணாமூர்த்தமான அம்பாளைத் தரிசனம் செய்து, அவளிடமிருந்து பிரம்ம ஸ்வரூப ரஹசியத்தை உபதேசமாகப் பெற்றுக்கொண்டு வந்தவன்.

இந்த உபநிஷத்தில், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களின் பாஷ்யத்தில் பஹுசோபமானா - மிகவும் சோபை பொருந்தியவள் என்பதற்கு அர்த்தம் செய்கிறபோது, சோபை உள்ளவற்றுக்கெல்லாம் மேலான உத்கிருஷ்டமான சோபை ஞானம்தான் - வித்யைதான். அந்த வித்யா ரூபிணியே உமா. ஹைமவதியாகி ஹேம (பொன்) ஆபரணங்களை அணிந்தும், இந்தச் சோபையை வெளிப்படையாகக் காட்டுகிறாள். எல்லாவற்றையும் அறிகிற அறிவான ஸர்வக்ஞ தத்துவமே பரமேசுவரன். அந்த அறிவோடு இரண்டறச் சேர்ந்திருக்கிற ஞான ஸ்வரூபிணியே அவள் என்கிறார்.

அறிகிறவன், அறியப்படுகிற பொருள், அறிவு எல்லாமே தானாக ஆகிய ஏக வஸ்துவான பிரம்மத்தின் சக்தி அவள். சித்தமிசை குடிகொண்ட அறிவான செய்வமே என்று இந்த ஞான ஸ்வரூபத்தைத்தான் தாயுமான ஸ்வாமிகள் சொல்கிறார்கள்.

அடி முடி தெரியாத யக்ஷ வடிவம் என்று சொன்னவுடன், இந்தக் கதைக்கும் அருணாசலத்திற்கும் சம்பந்தமாகத் தோன்றும். இந்த உபநிஷக் கதை ஸ்ரீ காளஹஸ்தியுடனும் சம்பந்தப்பட்டிருக்கிறது.

நான் காளஹஸ்திக்கும் போயிருந்தபோது, கிரிப்பிரதக்ஷிணம்

செய்தேன். வழியில் ஒரு மலைமேல் ஏறி, அங்கு வனத்திலுள்ள சிவலிங்கத்தைத் தரிசனம் செய்துகொண்டேன். அந்த லிங்கம், ஸஹஸ்ர லிங்கம் - அதாவது லிங்காகாரமான ஒரே சிலைக்குள் சின்னச் சின்னதாக ஆயிரம் லிங்கங்கள் வடித்திருக்கும். அந்த ஸஹஸ்ர லிங்க ஆலயத்தில் யஷ லிங்கம் என்று ஒன்றைச் சொல்கிறார்கள். இந்திர லிங்கம் என்று ஒன்று இருக்கிறது. காஹஸ்திப் பெரிய கோயிலில் இருக்கிற அம்பாளின் பெயரே ஞானாம்பிகை.அல்லது ஞானப்பிரஸூனாம்பிகை. ப்ரஸூரம் என்றால் பூ, ஞானப்பிரஸூனாம்பிகையை ஞானப் பூங்கோதை என்பார்கள். இதையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், கேன உபநிஷத்தில் சொல்லியிருக்கிற சம்பவம் - யக்ஷம் தோன்றனதும், பிறகு அம்பாள் ஆவிர்பவித்து இந்திரனுக்கு ஞானோபதேசம் செய்ததும் - இந்தக் காளஹஸ்தியில்தான் நடந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. அம்பாளை ஆராதிக்க நாமாகப் புது மார்க்கம் கண்டு பிடிக்க வேண்டியத்தில்லை. ஸ்ரீகாளஹஸ்தியைப்போல் தேவர்களும் பெரிய ரிஷிகளும் மகாத்மாக்களும் அவளை ஆராதித்த இடங்கள் இன்று மஹா க்ஷேத்திரங்களாக விளங்குகின்றன. அங்கே போய் நமஸ்கரித்துத் தியானம் செய்தால் போதும். அவளுடைய கடாக்ஷம் கிடைத்துவிடும்.

புஷ்பமும் சுகந்தமும்போல், பாலும் சுவையும்போல், அக்னியும் பிரகாசமும்போல், அவள் பரமேசுவரனோடு பிரிக்க முடியாத ஞான சக்தி.

இதேமாதிரி ஸ்ரீமந் நாராயணனோடும் பிரிக்க முடியாமல் சகோதர் பாவத்தில் இருக்கிறாள். அவள் துர்க்கையாக வந்து அசுரர்களை வதைத்தபோது வைஷ்ணவியாக இருக்கிறாள். ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தியின் போதே யசோதையின் கர்ப்பத்திலிருந்து விஷ்ணு மாயையாக இந்த துர்க்கை அவதரித்தாள். துர்க்கையை சரத்கால நவராத்திரியில் பூஜிக்கிறோம். கெட்டதை வதைத்தவள் அவள். இந்த சம்ஹாரத்துக்கு பிறகு நல்லதை வளர்க்க வேண்டும். ஞானத்தை வளர்க்க வேண்டும். ஞானோபதேசம் செய்ய அம்பாள் ஆவிர்ப்பதையே வஸந்த காலத்தில் ஒரு நவராத்திரியாகக் கொண்டாடுகிறோம். கிருஷ்ணனோடு துர்க்கை தோன்றின மாதிரி, ஸ்ரீராம நவமியின்போது ஞானாம்பிகை தோன்றினாள். இந்த நவமி முடிய ஒன்பது

நாட்கள் வஸந்த நவராத்திரி எனப்படும். சண்டிகையாக உக்கிர ரூபத்தில் எந்தப் பராசக்தியை சரத்கால நவராத்திரியில் பூஜித்தோமோ, அவளையே இப்போது ஸௌம்ய ரூபத்தில் ஞானாம்பாளாக பூஜிக்க வேண்டும். சண்டிகையாகிக் கெட்டதை சிக்ஷித்தவளே ஞானாம்பிகையாகி நல்லதை உபதேசித்து ரக்ஷிக்கிறாள்.

உமா என்பது பிரணவ ஸ்வரூபம் முன்பே சொன்னேன். நாதமே அவளுக்கு சரீரம் மாதிரி. நம் சரீரம் எத்தனை அழகாக இருக்கிறது என்று நாம் அகம்பாவப் பட்டுக் கொண்டாலும், துளி மேலே கீறிவிட்டால்கூட உள்ளே பார்க்கச் சகிக்காமல் இருக்கிறது. எத்தனையோ கழிவடைகளை உள்ளே அடைத்து வைத்திருக்கிறோம். இதற்குள் எங்கே என்று சொல்லத் தெரியாமல் அறிவு என்கிற ஒரு மணி இருக்கிறது. அவளுடைய சரீரமோ நாதமயம், சப்த மயம், வாக்கு மயம் - ஐம்பத்தோர் அக்ஷரங்களுமே அவளுக்குச் சரீரமாக இருக்கிறது. அதில் முழுக்க முழுக்க அறிவே வியாபித்திருக்கிறது. அந்த அறிவைத்தான் ஞானாம்பிகை என்பது.

மாறிக்கொண்டும் அழிந்துகொண்டும் இருப்பவைகளைச் சத்தியமென்று நினைக்காமல், மாறாமல் சாசுவதமாக உள்ள ஒரே வஸ்துவை, அதற்கு வேறாக நான் என்று தனியாக ஒன்று இல்லை என்று அநுபவத்தில் தெரிந்து கொள்வதுதான் உண்மையான அறிவு. இந்த அறிவைத் தருகிற பராசக்தி ஞானாம்பிகையாகி திவ்விய மங்கள ஸ்வரூபிணியாக விளக்குகிறாள். அவளை எந்நாளும் தியானம் செய்து அநுக்கிரஹம் பெறுவோம்.அம்பாளை உபாஸிப்பதன் பலன்.

அம்பாளை உபாஸிப்பதே ஜன்மா எடுத்ததின் பெரிய பலன். அன்பு மயமான அம்பிகையைத் தியானிப்பதைவிடப் பேரானந்தம் எதுவும் இல்லை. பெரிய சித்தாந்தங்கள் மதங்கள் எல்லாம் எத்தனையோ இருக்கின்றன. இவை எல்லாவற்றுக்கும் முடிவாகக் கிடைக்கிற பெரிய பலன் அம்பாளைத் தியானிப்பதால் லகுவாகக் கிட்டிவிடுகிறது. அம்மா!நான் எத்தனையோ தோஷம் உள்ளவன். என்றாலும் உன்னை நம்பி விட்டேன். நீ கடாக்ஷித்துவிட்டால் எத்தனை தோஷமானாலும் தூர ஓடிவிடும். நான் எப்படி இருக்க வேண்டுமோ அந்த மாதிரியாக இருக்கும் படியாக நீயே

பண்ணம்மா என்று ஓயாமல் அவளிடம் ஒப்புக்கொடுத்துக் கொண்டிருந்தாலே போதும் - அதைவிடப் பெரிய மதமோ, சித்தாந்தமோ, அநுஷ்டானமோ இல்லை.

அம்பாளை உபாஸிப்பதற்கு வேறு பலன் எதுவும் வேண்டாம். அதுவே அதற்குப் பலன். ஆனாலும், இந்த லோகத்தின் மாயையில் நாம் எல்லோரும் ஒன்றாகச் சிக்கிக் கொண்டிருப்பதால், நான் என்பதைவிட்டு, அவளை அவளுக்காகவே உபாஸிக்கிற ஆனந்தம் நமக்கு ஆரம்பத்தில் புரியமாட்டேன் என்கிறது. நமக்கு என்று எதையோ எதிர்பார்த்து, அதை எல்லாம் அவள் பூர்த்தி செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டு, அதற்காக அவளை உபாஸிக்கத் தொடங்குகிறோம். இந்த நிலையில் அவளும்கூட நம்மை விட்டுப்பிடிக்கிற மாதிரி, நம் பிரார்த்தனைகளை நிறை வேற்றி வைக்கிறாள். தர்மத்துக்கு விரோதமாக இல்லாத வரையில் நாம் செய்கிற பிரார்த்தனைக்குச் செவிசாய்க்கிறாள்.

மநுஷ்ய ஸ்வபாவம் ஆசார்யாளுக்கு நன்றாகத் தெரியும். அம்பாள் உபாஸனையால் ஜனன நிவிருத்தி கிடைக்கும். மோக்ஷம் கிடைக்கும், மோக்ஷம் கிடைக்கும் என்று சொன்னால் எடுத்த எடுப்பில் அதில் யாறும் ஈடுபடமாட்டார்கள் என்பது ஆச்சார்யாளுக்குத் தெரியும். அதனால் அம்பாளை உபாஸிப்பதன் பலன் இன்னின்ன என்று ஸௌந்தரிய லஹரியில் சொல்கிறபோது, முதலில் படிப்பு, செல்வம், அழகு முதலியன கிடைக்கும் என்கிறார்.

"ஸரஸ்வதியா லக்ஷ்ம்யா"என்று ஆரம்பிக்கிற சுலோகத்தில் அம்பிகையே ஆராதிப்பதால் கிடைக்கிற பலன்களை வரிசையாகச் சொல்கிறார்.

இந்த விசேஷம் என்னவென்றால், சாதாரணமாக ஒவ்வொரு ஸ்துதியின் முடிவிலும் கவி, இந்த ஸ்தோத்திரத்தைச் சொல்வதால் இப்படிப்பட்ட பலன்கள் கிடைக்கும் என்று சொல்வது ஒரு மரபு - இதை பலச்ருதி என்பார்கள். அதாவது அந்த ஸ்தோத்திரத்தின் சக்தியாலேயே அந்தப் பலன்கள் கிடைக்கும் என்று தொனிக்கிற மாதிரி இருக்கும். இதைப் பாராயணம் செய்வதால் இதையே படிப்பதால் என்று திருப்பத் திருப்ப ஸ்தோத்திர கர்த்தா நூலைச் சிலாகித்துச் சொல்வர். ஆனால் துளிக்கூட அகம்பாவமில்லாத

ஆச்சாரியாளோ, ஸௌந்தரிய லஹரி பாராயணத்துக்கு இது பலன் என்று சொல்லாமல், அம்மா உன்னைப் பூஜிப்பவனுக்கு நீ இப்படியாகப்பட்ட அநுக்கிரஹங்களைச் செய்கிறாய் என்றே சொல்கிறார்.

முதல் பலனாக ஸரஸ்வதீ கடாக்ஷம் கிடைக்கும் என்கிறார். அதாவது நல்ல கல்வி, உண்மையான கல்வியின் பயனாக நல்ல குணம் கிடைக்கும் என்கிறார். அதாவது நிறைய சம்பத்து கிடைக்கும் என்கிறார்.

பொதுவாக யாரும் பணத்தை விரும்புகிற மாதிரி குணத்தை விரும்பி ப்ரார்த்திருப்பதில்லை. ஆனால் குணம் இல்லாத இடத்தில் பணம் இருந்து என்ன பிரயோஜனம். நாம் பணத்தை விரும்பியே உபாஸித்தாலும்கூட, அம்பாளும், இந்தப் பிள்ளை அசட்டுத் தனமாக பிரார்த்தனை பண்ணுகிறது. விவேகம் ஏற்படுவதற்கு முன்பு அர்த்தத்தைக் (பொருளை, பணத்தாக்) கொடுத்தால் அது அனர்த்தமே ஆகும். எவ்வளவுக்கெவ்வளவு பணம் தருகிறோமோ அத்தனைக்கத்தனை பாபத்தையே விலைகொடுத்து வாங்கிக் கொள்வான். எனவே பணத்தை எப்படி தர்ம மார்க்கத்தில் பிரயோஜனப்படுத்துவது என்கிற விவேகத்தை முதலில் தந்து, பிறகு தனத்தைத் தரலாம் என்று எண்ணுகிறாள். குழந்தை பக்ஷணம் கேட்டால் அதைச் செய்துகொடுக்கிற தாயார் பிற்பாடு அதனால் கெடுதல் ஏற்படாமல் விளக்கெண்ணெய் தருகிறாள். ஸரஸ்வதீ கடாக்ஷத்தைத் தந்து பிறகு லக்ஷ்மீ கடாக்ஷத்தாத் தருகிறாள். தைத்திரியோபநிஷத்திலும் இப்படியேதான். முதலில் மேதை (நல்ல புத்தி)யைக் கொடு என்று சொல்லி, அப்புறம் ஸ்ரீயை (செல்வதை)க் கொடு என்று சொல்லியிருக்கிறது. இதற்கு ஸ்ரீ ஆச்சாரியாள் பாஷ்யம் செய்யும்போது, மோதை இல்லாதவனுக்கு ஸ்ரீயைத் தந்தால் அனர்த்தம்தான் உண்டாகும் என்கிறார். பஜகோவிந்தத்திலும் அர்த்தம் அனர்த்தம் என்கிறார்.

அம்பாளை உபாஸிப்பவர்கள் தனியாக லக்ஷ்மி, ஸரஸ்வதி இருவரையும் உபாஸிக்க வேண்டும் என்பதில்லை. அவர்கள் இரண்டு பேரும் இவளுக்கு இரண்டு பக்கத்திலும் சாமரம் வீசிக்கொண்டிருக்கிறார்கள். இப்படியே லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. (ஸ சாமர ரமாவாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா). சகல சக்திக்கும் ஆதாரமான

பராசக்தியை உபாஸித்தால் இவளே ஸரஸ்வதியையும், லக்ஷ்மியையும் கடாக்ஷிக்கச் செய்கிறாள். காமாக்ஷிக்கு ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் இரண்டு கண்கள். 'க'என்று பிரம்மாவுக்குப் பெயர். சில பத்தினி சிவா என்பதுபோல் 'க'வின் பத்தினியான ஸரஸ்வதிதான் 'கா'. 'மா'என்றால் மஹாலக்ஷ்மி. 'மா'- தவன் என்றால் லக்ஷ்மிபதி. 'கா'வையும் 'மா'வையும் தன் அங்கங்களாக (கண்களாகக்) கொண்டவள் எவளோ அவளே காமாக்ஷி.

ஸரஸ்வதி கடாக்ஷம், லக்ஷ்மி கடாக்ஷம் இரண்டும் அம்பாள் அநுக்கிரஹத்தால் கிடைக்கும் என்றேன். இந்த இரண்டையும் பற்றி மநுஷ்ய சுபாவம் ரொம்பவும் விசித்திரமாக இருக்கிறது. எல்லோருக்கும் தங்களுக்கு ரொம்பவும் ஸரஸ்வதி கடாக்ஷம், அதாவது புத்திசாலித்தனம் இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களை மஹா புத்திசாலிகளாகலவே வெளியில் காட்டிக் கொள்ளப் பிரியப்படுகிறார்கள். ஆனால் நல்ல புத்தி வேண்டும் என்று அதற்காகத் தாபத்தோடு யாரும் பிரார்த்திப்பதாகத் தெரியவில்லை. பொதுவாகப் புத்திசாலித்தனம் என்பது சாமர்த்தியம் என்றுதான் நினைக்கப்படுகிறது. ஞானமும்் விவேகமும்தான் உண்மையான புத்திமானின் லக்ஷணங்கள். இவற்றுக்கு யாரும் ஆசைப்படுவதில்லை. நமக்கு மிகவும் சாமர்த்தியமும் சாதூர்யமும் இருக்கின்றன. அதாவது யாரையும் ஏமாற்றிவிடலாம் என்று அவரவரும் சந்தோஷப்பட்டுக்கொண்டு, இந்த புத்திசாலித்தனத்தோடு நின்றுவிடுகிறோம். ஆனால் லக்ஷ்மி கடாக்ஷம் மட்டும் எவ்வளவு இருந்தாலும் நமக்குப் போதமாட்டேன் என்கிறது. மண்டுவாக இருந்தாலும்கூட தன்னைப் புத்திசாலியாகக் காட்டிக்கொள்வதற்கு நேர் மாறாக, நமக்கு எத்தனை சம்பத்து இருந்தாலும் அது வெளியில் தெரியக்கூடாது என்று ஏழை வேஷம்தான் போடுகிறோம். ஒருவனைப்பற்றி யாராவது எத்தனை புத்திசாலி என்று பேசினால் எத்தனை சந்தோஷப்படுகிறோம். ஆனால் ஒருத்தன் பாங்கில் லட்ட லட்சமாகப் பணம் போட்டிருக்கிறான் என்றால், அவனுக்குக் கோபம்தான் வருகிறது. தங்களுக்கு இருக்கிற செல்வம் போதாது என்று நினைப்பதால்தான் இவர்களுக்கு அதைப்பற்றிச் சொன்னாலே கோபம் வருகிறது. அதிருப்திதான் தரித்திரம். திருப்திதான் சம்பத்து. ஆகையால், நாம் நிஜமான புத்திசாலிகளா தரித்திரர்களாக

இருந்தாலும்கூட, அப்படிச் சொல்லிக் கொள்ளாமல், மனஸால் நிறைந்து, திருப்தியால் பணக்காரர்களாக இருந்துகொண்டிருக்கலாம். தரித்திரம் என்று சொல்லிக் கொண்டால்தான் நமக்கு யார் பணம் கொடுக்கிறார்கள். சொல்லிக்கொள்ளாமலேதான் பணக்காரரை விடத் திருப்தியாக இருப்போமே.

புத்தி, செல்வம் - இவற்றோடு ஒவ்வொருத்தருக்கும் அழகாக இருக்கவேண்டும் என்கிற ஆசை இருக்கிறது. தான் புத்திசாலி என்பதைப்போல, எல்லோரையும்விடத் தானே அழகு என்கிற எண்ணம் நம் ஒவ்வொருத்தருக்கும் இருக்கிறது. இதற்குத்தான் அலங்காரம் எல்லாம் பிரமாதமாகச் செய்துகொள்கிறோம். தினத்துக்குத் தினம் ஃபாஷன்கள் மாறிக்கொண்டே இருப்பதெல்லாம் நம் அழகைப் பிரகடணம் பண்ணிக் கொள்ளத்தான். பரம கருணாமூர்த்தியான அம்பாள், கேவலம் ரக்த - மாம்ஸ சம்பந்தமான இந்தச் சரீர அழகை விரும்புகிறவளுக்கு அதைக்கூடப் பூரணமாகத் கொடுத்து அநுக்கிரஹிக்கிறாள். ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா என்கிற செளந்தரிய லஹரி சுலோகத்தில் ஆசாரியாள் இதையும் சொல்கிறார். அம்பாளை உபாஸிக்கிறவனுக்கு பிரம்மாவவே அசூயைப்படுகிற அளவுக்கு ஸரஸ்வதியின் அநுக்கிரஹம் கிடைத்துவிடும். இவனைப் பார்த்து மன்மதன்தானோ?என்று ரதியே சந்தேகப்படுகிற மாதிரி லாவண்யம் உண்டாகிவிடும் என்கிறார்.

இத்தனையும் இருந்து தீர்காயுசு இல்லை என்றால் என்ன பிரயோஜனம்?அம்பாள் சிரஞ்ஜீவித்துவமும் தருவாள் என்கிறார்.

இதற்குமேல் வேறென்ன வேண்டும்?என்று தோன்றலாம். ஆனால், இதற்குமேல்தான் அம்பாளின் பரமாநுக்கிரஹத்தை தேடச் செய்யும் கேள்வியே பிறக்கும். இத்தனை பணம், அழகு, புத்தி எல்லாவற்றையும் வைத்துக்கொண்டு இத்தனை காலம் ஒட்டியாச்சு. இதிலெல்லாம் வாஸ்தவத்தில் என்ன மனநிறைவைக் கண்டோம்?இதையெல்லாம் வைத்துக்கொண்டு எப்போது பார்த்தாலும் சஞ்சலப்பட்டுக்கொண்டே, ஒன்றை விட்டால் இன்னொன்று என்று தாவிக்கொண்டே இருந்துவிட்டோம். நிரந்தர செளக்கியத்தை, சாந்தத்தை இவை எதையும் பெற்றதாகத்

தெரியவில்லையே. இதை எப்படிப் பெற்றுக்கொள்வது?என்கிற கோள்வி பிறக்கும். நடுநடுவே நமக்கு இந்தக் கேள்வி தோன்றினாலும், அடுத்த க்ஷணமே மாயை நம்மை இழுத்துக் கொண்டு போகிறது. ஆனால் நாமாக இப்படி நினைக்காமல் அம்பாளை உபாஸிப்பதன் பலனாக, அவள் இப்படி நினைக்காமல் அம்பாளை உபாஸிப்பதன் பலனாக, அவள் நம்மை இப்படி நினைக்கப் பண்ணுகிறபோது, அந்த நினைப்பு நாளுக்குநாள் மேலும் மேலும் தீவிரமாக ஆகும். பணம் வேணும், படிப்பு வேணும், அழகு வேண்டும், ஆயுசு வேண்டும் என்பதெல்லாம் நம்மை மேலும் மேலும் நம்மைப் பாசத்தில் கட்டிப் பிரம்மையில்தான் தள்ளிக் கொண்டிருந்தது என்கிற அறிவு உண்டாகும். பாசம் என்றால் கயிறு. பாசத்தில் கட்டப்படுவது பசு. கயிற்றைப் போட்டுத் தறியில் கட்டின பசு மாதிரி, ஒரு குறிப்பிட்ட தூரத்துக்கு மேல் போக முடியாமல், அதற்குள் கிடக்கிற தாற்காலிக இன்பங்களையே மேய்த்துக்கொண்டு, அசட்டுத் தனமாக இதுவே எல்லாம் என்று திருப்திப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்தக் கட்டை அறுத்துக் கொள்ள வேண்டும். அப்புறம் பரம சுதந்திரம். இந்த இந்திரியங்களின்

சின்ன சௌகரியங்களுக்கு அப்புறம் அகண்டமான, சாசுவதமான ஆத்ம ஆனந்தம். பாசம் போய், நாம் பசுவாகக் கட்டுப்பட்டுக் கொண்டிருந்த நிலையும் போய்விட்டால், அப்புறம் பரம்பிரம்மம்தான். பணம், புத்தி, ஆயுள், அழகு ஆகிய சிற்றின்பங்களுக்குத் தவித்த மனஸில் இவற்றின் கட்டுக்களே வேண்டாம் என்கிற வைராக்கியம் உண்டானால், அப்புறம் பேரின்ப மயமாவதற்கான ஸாதனைகளில் இறங்கி, முடிவில் அம்பாள் அருளாள் பேரின்பமாகவே ஆகலாம். அதைவிடப் பெரிய பலன் வேறில்லை. முடிந்த முடிவாக அம்பாள், பக்தனை இந்தப் பரமானந்த ரஸத்தில் கிளைத்துக் கொண்டிருக்குமாறு அநுக்கிரஹம் செய்கிறாள் என்று ஆசார்யாள் முடிக்கிறார்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*பவானித்வம்*

அம்பாளிடம் நாம் இன்னின்ன வேண்டும் என்று சொல்லிப் பிரார்த்திக்க வேண்டிய அவசியமே இல்லை. உனக்கு நான் சொல்லித்தான் தெரிய வேண்டுமா?ஆனாலும் மலயத்வஜ பாண்டியனின் புத்திரியான ஹே மீனாக்ஷி. மனஸில் உள்ள குறையை வாய்விட்டுச் சொல்லாவிட்டால், அது உள்ளுக்குள்ளே உறுத்திக் கொண்டேயிருக்கிறது. அதனால்தான் இப்படிப் பிரார்த்தனைப் பண்ணுகிறேன். உனக்குத் தெரியாததைத் தெரியப்படுத்துவதற்காக அல்ல. எனக்கு உள்ளே கருணைக்கிழங்கு மாதிரி அரிப்பதைக் குஞ்சம், சமனப்படுத்திக் கொள்ளவே பிரார்த்தனை பண்ணுகிறேன் என்று நீலகண்ட தீக்ஷிதர் ஆனந்த ஸாகர ஸ்தவம் என்கிற ஸ்தோத்திரத்தில் சொல்கிறார்.

நாம் கேட்காவிட்டாலும், அம்பாளை உபாஸித்து விட்டால் அவளே அநேக அநுக்கிரஹங்களைப் பண்ணுகிறாள். முதலாவதாக நல்ல புத்தி உண்டாகிறது. மனஸில் நல்ல எண்ணங்களை உண்டாகின்றன. நல்லதைச் செய்வதற்கான புத்தியிலே பளீரென்று பிரகாசிக்கிறது. லோக க்ஷேமத்தைச் செய்வதற்கான திரவிய பலமும் தானே கிடைக்கிறது. எல்லோரிடத்திலும் சமமான அன்பு உண்டாகிறது. மனஸில் இந்த அன்பு ஊறாமலே வாய்ப்பேச்சில் இன்று சகோதர சகோதரிகளே என்று பிரசங்கம் பண்ணி சமத்துவத்தைப் பற்றி நிறையப் பேசுகிறோம். அம்பாளிடம் பக்தி பண்ணாத வரையில் இது அநுபவத்தில் வராத வாய்ச் சவடால்தான். புரளிதான். சாக்ஷத் ஜகன்மாதாவைத் தெரிந்துகொண்டாலே, உண்மையாக அவள் ஒருத்திதான் இத்தனை பேருக்கும்

அம்மா. லோகத்தில் உள்ள பசு, பட்சி உட்பட நாம் இத்தனை பேரும் அவள் குழந்தைகள்தான். அதனால் நாம் எல்லோரும் வாஸ்தவமாகவே சகோதர சகோதரிகள் என்ற உண்மையான அன்பு உணர்ச்சி உண்டாகிறது. அவளைத் தெரிந்துகொண்டால் அதன்பின் நமக்குள் வெறுப்பு, துவேஷம் வரவே வராது. தப்புக் கண்டுபிடிக்க வராது. தப்பு நடக்கிறபோதுகூட அதைப் பரிவோடு திருத்துகிற மனப்பான்மை வருமே தவிர, தப்பைத் பிரகடனம் பண்ணிச் சண்டையில் இயங்கத் தோன்றாது. அம்பாளை உபதேசிப்பதால் லோகம் முழுக்க ஒரே குடும்பம் என்ற அன்பு உணர்ச்சி உண்டாகிறது. சந்துரு, சிநேகிதன் என்கிற வித்தியாசமே காமாக்ஷியின் கடாக்ஷம் பெற்றவர்களுக்கு இராது என்கிறார் மூகர்.

எல்லாம் சமமாகத் தெரிகிற ஞானநிலையின் உச்சிக்கே அம்பாளின் அநுக்கிரஹம் நம்மைக் கொண்டு சேர்க்கிறது. அவள் அம்மா. அவளுடைய குழந்தைகளே நாம் எல்லோரும் என்பதற்கு மேலே ஒரு படி போய் - அம்மா, குழந்தை என்கிற வித்தியாசம்கூடப் போய் - எல்லாமே அவள்தான் என்று தெரிகிறது. ஒரு சக்திதான் இத்தனை ஆகியிருக்கிறது. ரூபங்களில்தான் பேதம், உள்ளே இருக்கிறது ஒன்றுதான் என்கிற பரம அத்வைத ஞானம் சித்திக்கிறது. இதைத்தான் மூகர் சொல்கிறார் - சிவ சிவ பச்யந்து ஸமம் என்கிற சுலோகத்தில், காமாக்ஷியின் கருணா கடா வீக்ஷண்யம் பெற்றவனுக்குக் காடும் வீடும் சமமாகத் தெரிகின்றன. சத்துருவும் மித்ரரும் சமமாகத் தெரிகின்றனர் என்கிறார்.

அம்பாளைத் தாயாராகவும் நம்மைக் குழந்தையாகவும் வைத்துக்கொண்டு உபாஸிக்க ஆரம்பித்தாலும் அவளே காலக்கிரமத்தில் இந்த இரண்டும்கூட ஒன்றேதான் என்கிற பரம ஞானத்தை அநுக்கிரஹம் செய்கிறாள். இதை ஆச்சாரியாள் ஒரு ச்லேஷை (சிலேடை) மூலம் ஸௌந்தரிய லஹரியில் சொல்கிறார்.

பவானி உன்னுடைய அடிமை நான் என்று பக்தன் துதிக்க ஆரம்பிக்கிறானாம். பவாநி த்வம், பவானி உன்னுடைய, (த்வம் என்றால் உன்) என்று இவன் சொல்லுகிறபோதே, அம்பாள் இவனுக்கு பாவானித்வம் என்கிற நிலையை

அநுக்கிரஹித்து விடுகிறாள் என்று சிலேடை பண்ணுகிறார். முதலில் இவன் பிரார்த்திக்கிறபோது பவானி என்றால் அம்பாள். பரமசிவனுக்கு முக்கியமான எட்டுப் பெயர்களில் ஒன்று பவன் என்பது. பவனின் பத்தினி பவானி. மறுபடி, பவானித்துவம் என்ற இந்த இரண்டு வார்த்தைகளை இவன் சொன்ன மாத்திரத்தில், அம்பாள் பவானித்துவம் என்ற நிலையை அநுக்கிரஹம் செய்வாள் என்னும்போது, பவானி என்றால் ஆகிவிடுகிறேன் என்று அர்த்தம். தீர்க்க சுமங்கலி பவ என்கிறோமே, இங்கே பவ என்றால் ஆவாய் என்று அர்த்தம். பவானி என்றால் ஆகிறேன். பவானித்வம் என்றால் நீயாவே நான் ஆகிவிடுகிறேன். எல்லாம் பிரம்மம் என்ற அத்வைத ஞானம் உண்டாகி இப்படிச் சொல்கிறான் பக்தன். தாஸனாக இருக்கப் பிராத்தித்தவனைத் தானாகவே ஆக்கிக்கொண்டு விடுகிறாள் அம்பிகை. பவானி, உன் தாஸனாக என்னைத் துளி கடாக்ஷியம்மா என்று பிரார்த்திக்க ஆரம்பித்த பக்தன் மூன்றாவது வார்த்தையைச் சொல்லக்கூட அவகாசம் தராமல், பவானி உன் (பவானித்வம்) என்று அவன் சொல்லும்போதே அம்பாள் இடைமறித்து, ஆமாமப்பா பவானித்வம்தான். அதாவது நானும் நீயும் ஒன்றேதானப்பா என்கிற பரம ஞானத்தை வழங்கி விடுகிறாள். பவானித்வம் என்றால் பவானியின் தன்மை என்றும் அர்த்தம். பக்தனே பவானித்வம் பெற்று பராசக்தியோடு தன்மயமாகி விடுகிறான்.

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

## *வாக்குவன்மை வருக்ஷிப்பாள்*

ஜகன்மாதாவாக இருக்கிற அம்பாளைப்பற்றி அநேக மகான்கள், கவிகள், ஸ்தோத்திரங்கள் செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஸ்தோத்திர கிரந்தங்களுக்குள் மூன்று மிகவும் சிரோஷ்டமானவை. முதலாவது ஸௌந்தரிய லஹரி சுவடிக்கட்டை நம் ஆச்சாரியாளுக்குக் கொடுத்து அநுக்கிரஹித்தார். அதில் மொத்தம் நூறு சுலோகங்கள் இருந்தன. ஆசாரியாள் கைலாஸத்திலிருந்து திரும்பி வரும்போது, வாசலில் காவலிருந்த நந்திகேசுவரர். மகா பெரிய சொத்து கைலாஸத்திலிருந்து போகிறதே என்று நினைத்து, ஆசாரியாள் கொண்டு வந்த சுவடியிலிருந்து தம் கைக்குக் கிடைத்ததை அப்படியே உருவிக் கொண்டுவிட்டார். முதல் 41 ஸ்லோகங்கள் மட்டுமே ஆசாரியாள் கையில் நின்றன. பாக்கி 59 சுலோகங்கள் நந்திகோசுவரர் கைக்குப் போய்விட்டன. அப்புறம் ஆசாரியாள் தாமே அந்த 59 சுலோகங்களையும் கடல் மடை திறந்த மாதிரிப் பாடிப் பூர்த்தி செய்துவிட்டார். இவ்விதத்தில்தான் இப்போது நூறு சுலோகங்களோடு உள்ள ஸௌந்தரிய லஹரி உருவாயிற்று.

அதில் முதல் நாற்பத்தியோரு சுலோகங்கள் மந்திர சாஸ்திர சூக்ஷ்மங்கள், குண்டலினி யோக தத்வங்கள், ஸ்ரீ வித்யா ரகசியங்கள் முதலியவற்றைச் சொல்கின்றன. அதில் உபாஸகர்களுக்கு ரொம்பவும் உபயோகமான விஷயங்கள் இருக்கின்றன. ஆனாலும் பின்னாலுள்ள, ஆசாரியாள் வாக்கிலிருந்து வந்த 59 சுலோகங்கள் அழகே அழகு. இந்த சுலோகங்களில் அம்பாளின் சிரஸிலிருந்து பாதம் வரையில் அங்கம் அங்கமாக வர்ணித்திருக்கிறார். கம்பீரத்துக்கும் சரி, மாதுர்யத்துக்கும் சரி, இந்த வாக்குதான் சிகரம் என்று சொல்கிறமாதிரி அப்படிப்பட்ட அற்புதமான சுலோகங்கள் இவை. பழங்காலத்தில் செய்த அதி சுதந்திரமான விக்கிரங்களிலும் சிற்பங்களிலும் நகத்தளவு பங்கமானாலும்கூட, பிற்காலத்தவர்களால் அதே மாதிரி வேலைப்பாட்டோடு செய்து ஒட்டுப் போட முடியவில்லை.

இந்த மாதிரிதான், ஆசாரியாளின் ஸௌந்தரிய லஹரி சுலோகத்தில் ஒரு வார்த்தையை எடுத்துவிட்டு அதற்குப் பதில் இன்னொரு வார்த்தையை யாறும் போடமுடியாது. ஆது ஸௌந்தரிய லஹரியில் 59 சுலோகம் நஷ்டமானதே நம் பாக்கியம்தான். நந்திகோசுவரர் அதை உறுவிக்கொண்டிரா விட்டால் ஆச்சாரியாளின் இந்த அற்புத வாக்கு லோகத்துக்குக் கிடைத்திருக்காதல்லவா என்று தோன்றுகிறது. இப்படிப்பட்ட கவித்துவ பொக்கிஷமாக ஒரு கிரந்தத்தைச் செய்து முடிக்கிறபோது, ஆசாரியாள் இதில் நான் செய்தது என்ன அம்மா இருக்கிறது?எல்லாம் நீ கொடுத்த வாக்கு. நீ தந்த வாக்கால் உன்னையே துதித்தேன் என்று விநய சம்பத்துடன் சொல்கிறார். அவளைத் துதிக்கிற கவித்துவமும் அவளது உபாஸனையாளேயே அவளருளால் ஸித்திக்கிறது என்று தெரிவிக்கிறார்.

அம்பாளைப் பற்றிய முக்கியமான மூன்று கிரந்தங்களில் இன்னொன்று மூக பஞ்ச சதீ. காமாக்ஷி அம்பாளின் பொதுவான மகிமை பற்றி ஆர்யா என்ற விருத்தத்தில் நூறு சுலோகங்கள். அவளுடைய பாதார விந்தங்களைப் அழகைப் பற்றி நூறு சுலோகங்கள். ஸ்திக்கு உகந்த அவளது குணங்களைப் பற்றி நூறு சுலோகங்கள். அம்பாளின் கடா வீக்ஷண்யத்தைப் பற்றி நூறு மாத்திரம் நூறு சுலோகங்கள், அவளுடைய புன்சிரிப்பின் ஸௌந்தர்யத்தைப் பற்றி நூறு சுலோகங்கள் என்றிப்படி மொத்தம் ஐந்நூறு சுலோகங்களைப் பொழிந்து விட்டார் மூகர். நூறு சுலோகங்கள் கொண்ட தொகுப்புக்கு சகதம் என்று பெயர். தமிழில்கூட, தொண்டை மண்டல சதகம், அறப்பளீசுவர சதகம் என்றெல்லாம் கேள்விப்பட்டிருப்பீர்கள். நான் மேலே சொன்ன ஐநூறு சுலோகங்களுக்கு முறையே ஆர்யா சதகம், பாதாரவிந்த சதகம், ஸ்துதி சதகம், கடாக்ஷமந்த ஸ்மித சதகம் என்று பெயர். ஐந்து நூறு'ம் சேர்ந்த நூலுக்கு மூக பஞ்ச சதீ என்று பெயர். ஆர்யா சதக முடிவில் அம்பாளை ஆராதிக்கிறவனுக்கு அமிருத்தம் போன்ற வாக்கு சித்திக்கிறது என்று சொல்லியிருக்கிறது.

அம்பாளைப் பற்றிய முக்கியமான ஸ்தோத்திரங்களில் மூன்றாவது ஆர்யா த்விசதி என்ற இந்த ஸ்துதி ஆர்யா என்ற விருத்தத்தில் இருநூறு சுலோகங்கள் கொண்டது. லலிதா ரத்னம் என்றும் அதற்கும் இன்னொரு பெயர் உண்டு.

அம்பாளுடைய பிரஸாதத்தைப் பரிபூரணமாகப் பெற்ற துர்வாஸ மஹரிஷி செய்த நூல் இது. இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் பண்ணினாலே நல்ல வாக்கு உண்டாகும் என்பது கண்கூடு. ஸ்ரீ காமாக்ஷி ஆராதனை கிரமத்தைச் செய்தவரே துர்வாஸர்தான். பட்டாரிகை எனப்படும் பராசக்தியின் மூன்று முக்கிய உபாஸகர்களுக்கு மட்டுமே பட்டாரகர் என்ற பட்டம் உண்டு. இந்தப் பட்டம் பெற்றவர்களில் ஒருத்தர் சாக்ஷாத் ஈசுவரன். இன்னொருத்தர் காளிதாஸர். மூன்றாமவர் துர்வாஸர்தான். காமாக்ஷி ஆலயத்தில் இவருக்கு பிம்பம் இருக்கிறது.

அம்பாளைப் பற்றிய இந்த மூன்று பிரதான ஸ்தோத்திரங்களும் அவள் அருளால் நல்ல வாக்கு சித்திக்கிறது என்கின்றன.

ஆனால் முடிந்த முடிவாக இந்தத் துதிகள் எல்லாம் அம்பாள் உபாஸனையின் முக்கிய பலனாக ஞானம் ஸித்திக்கிறது என்பதையே சொல்கின்றன. அஞ்ஞானம் நீங்கி, ஞானம் வருவதுதான் மோக்ஷம். இதை அம்பாள் அநுக்கிரஹிக்கிறாள்.

அம்பாளின் பாதத்தில் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய திரி மூர்த்திகளும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் இவள் பாதத்தில் நாம் பண்ணுகிற அர்ச்சனை அவர்களுடைய சிரஸுக்கும் பண்ணிய அர்ச்சனையாகிறது என்று ஆச்சாரியாள் சொல்கிறார். பவானி உன் தாஸன் நான் என்று துதிக்க ஆரம்பிக்கிறவனுக்கு அம்பாளாகவே ஆகியிருகிற அத்வைத மோக்ஷத்தை அவள் அநுக்கிரஹித்து விடுகிறாள் என்று சொல்கிற போதும், அவளுடைய பாதத்தில் விஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலானவர்களின் கிரீடத்தில் உள்ள ரத்தின மணிகளிலிருந்து எழுகிற ஒளி கற்பூர ஹாரத்தி செய்வதுபோல் பிரகாசிக்கிறது என்கிறார். இப்படி எல்லா தேவர்களும் அவள் பாதத்தில் கிடப்பதாகச் சொல்வதற்கு தாத்பரியம் ஒரு தேவதை உசத்தி, இன்னொன்று தாழ்த்தி என்பதல்ல. எல்லா சக்திகளும் - மநுஷ்யர்களின் சக்தி, மிருகங்களின் சக்தி, தேவர்களின் சக்தி, இயற்கையில் காண்கின்ற பல சக்தி, இவை எல்லாமும் மூலமான ஒரு சக்தியின் திவளைகளே என்பதுதான் அதன் தாத்பரியம்.

இதைத்தான் ஸயன்ஸிலும் ஒரே எனர்ஜி (Energy) பலவிதமான அணுக்களாக (Particle) அலைகளாக (Wave) ஆகியிருக்கிறது என்கிறார்கள். அந்த மூல சக்தியை அன்போடு ஆராதித்தால் அதுவும் அன்போடு அநுக்கிரஹம் பண்ணுகிறது. மற்ற தனித் தனித் தேவதைகளுக்கு இருக்கிற சக்தி எல்லாமும் இதனிடமிருந்து வந்ததுதான். எனவே அந்த சக்தியை அம்பாளாக ஆராத்திக்கிறபோது எல்லா தேவதைகளின் அநுக்கிரஹத்தையும் பெற்றுவிடலாம்.

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் எல்லாம் அந்த ஒரே சக்தியிடமிருந்து உண்டானவைதாம். அதனால், அவர்களைப் பூஜிப்பதால் பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்களையும் பூஜித்ததாகிறது. இவள் ஆராதனையே ஸரஸ்வதி, லக்ஷ்மி ஆகியவர்களுக்கும் வழிபாடாகிறது. வித்யை, செல்வம் எல்லாம் பக்தினுக்குச் சித்திக்கின்றன. அம்பாளை உபாஸித்தால் கிடைக்காததில்லை. சாஸ்திரங்கள் இதிலே பல பலன்களைக் குறிப்பிட்டுச் சொல்கின்றன. அம்பாளை உபாஸிப்பதால் மிகவும் உத்தமமான வாக்கு சித்திக்கிறது. கவித்வத்தை விசேஷமாக அநுக்ரஹிக்கிறாள். காளிதாஸர் பூர்வத்தில் மிகவும் மந்தமாக இருந்தார் என்றும், உஜ்ஜயினியில் காளி அநுக்கிரஹம் கிடைத்தே அவர் கவி சிரேஷ்டரானார் என்றும் கதை கேட்டிருப்பீர்கள். ஊமையாக இருந்த மூகரும் அவளருளாலே க்ஷணத்தில் மகா கவியானார்.

தான் பெற்ற இன்பத்தை உலகமும் பெறும்படி செய்வது வாக்கு வழியாகத்தானே?இதனால்தான் மகா பெரியவர்களுக்கு அம்பாள் அருள் செய்தது மட்டுமின்றி, அந்தப் பேரருள் அசடுகளான நமக்கும் பாயவேண்டும் என்ற கருணையிலேயே அந்த மகான்கள் தம் அநுபவத்தைப் பாடுவதற்கான வாக்கு வண்மையையும் வருஷித்தாள்.

கவித்வம், சங்கீதம் முதலிய கலைகள் எல்லாம் அம்பிகையின் அநுக்கிரஹத்தால் உண்டாகின்றன. பொதுவாக இதற்கெல்லாம் ஸரஸ்வதியை அதி தேவதையாகச் சொல்கிறோம். இப்படிப்பட்ட ஸரஸ்வதி, அம்பாளின் சந்நிதானத்தில் எப்போதும் வீணையோடு கானம் பண்ணிக்கொண்டிருக்கிறாளாம். என்ன பாட்டுக்கள் பாடுகிறாள்?அம்பாளின் பெருமையைப் பற்றியா?இல்லை.

மகாபதிவிரத்தையான அம்பாளுக்கு ஈச்வரனைப் பாடினாலே சந்தோஷம். அதன்படி வாணி ஈசுவரப் பிரபாவத்தைப் பாடிக்கொண்டிருக்கிறாள். அம்பாள் அதை ரொம்பவும் ரஸித்து ஆனந்தப்படுகிறாள். கேட்கிறவர்கள் ஆனந்திப்பதே பாடுகிறவனுக்கும் ஆனந்தத்தைத் தந்து மேலும் உற்சாகப்படுத்தும். அப்போதுதான் வித்வானுக்கு மேலே மேலே கற்பனை விருத்தியாகும். கேட்கிறவன் தப்புக் கண்டுபிடிக்கிற மாதிரியே உட்கார்ந்திருந்தால், வித்வானுக்கு சுபாவத்தில் இருக்கிற பிரதிபா சக்தியும் போய்விடும். அம்பிகை ஆனந்தத்தோடு உத்ஸாககப் படுத்தப் படுத்த ஸரஸ்வதி பரமாற்புதமாக கானம் பண்ணிக்கொண்டே போகிறாள். அம்பாள் ரொம்பவும் சந்தோஷப்பட்டுத் தலையை ஆட்டிக்கொண்டு பேஷ் பேஷ் என்று வாய் விட்டுச் சொல்லி விடுகிறாள். அவ்வளவுதான். அம்பாளுடைய அந்த வாக்கின் மாதூர்யத்தில் ஸரஸ்வதியின் வீணா நாதம் அத்தனையும் ஒன்றுமில்லை என்றாகிவிடுகிறதாம். இப்படிப்பட்ட மதுரவாக்குக் கொண்டவளுக்கு முன்பா என் வித்யையைக் காட்டினேன்?என்று வெட்கப்பட்டுக்கொண்டு ஸரஸ்வதி தன் வீணையை உறையில் வைத்து மூடி விடுகிறாளாம். விபஞ்ச்யயா காயந்தீ எனறு ஆரம்பிக்கிற ஸௌந்தரிய லஹரி ஸ்லோகம் இந்த சம்பத்தை நாடகம் போட்டுக் காண்பிக்கிற மாதிரி வர்ணிக்கிறது. அம்பாளை உபாஸிப்பதால் நம் ஆனந்தத்தைப் பிறர்க்கும் தர வைக்கிற ஸங்கீதம் முதலான சகல கலைகளிலும் எளிதில் ஸித்தி பெறலாம் என்பது அர்த்தம்.

அம்பாளை வழிபடுவதால் குருபக்தி, பதிபக்தி இவையும் விசேஷமாக விருத்தியாகும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*பதிபக்தியும் குருபக்தியும் வழங்கும் தேவி*

அம்பாளை உபாஸிப்பதால் பதிபக்தி உண்டாவது ரொம்பவும் நியாயம்தான். ஏனென்றால் அவளே மகா பதிவிரதையாக இருக்கிறாள். பிரியம் வைக்க முடியாதவரிடம் மகாப் பிரியமும், விசுவாசமாக இருப்பதுதான் விசேஷம். சகல ஐசுவரியமும் உள்ள வைகுண்டத்தில் அலங்காரப் பிரியராக ரூபலாவண்டத்தோடு இருக்கிற மகா விஷ்ணுவிடத்தில் மஹாலக்ஷ்மி பிரியமாக இருப்பதில் சுவாரஸ்யம் இல்லை. மயானவாசியாக, புலித்தோலை கட்டிக்கொண்டு கபால மாலை போட்டுக் கொண்டு, ஊரெல்லாம் பிச்சை எடுக்கிற பரமேசுவரனிடத்தில் அம்பாள் மாறாத அன்போடு இருப்பதே விசேஷம். தாக்ஷாயணியாக அம்பாள் பிறந்தபோது அவளது பிதாவான தக்ஷன் ஈஸ்வரனை மதிக்கவில்லை. இதைக் கண்டு மதிக்க முடியாக தாக்ஷாயணி தகப்பனுடைய யாகசாலையில், என் பர்த்தாவை மதிக்காத தக்ஷனுக்குப் பெண்ணாக பிறந்து, தாக்ஷாயணி என்று வைத்துக் கொண்டிருக்கிற இந்தச் சரீரமே எனக்கு வேண்டாம் என்று பிராணனை விட்டாள். யாக குண்டலத்திலேயே உயிரைத் தியாகம் செய்தாள் என்பது கதை. தாக்ஷாயணிக்கு ஸதி என்றே இயற்பெயர். தக்ஷனின் புத்ரி என்கிற அர்த்தத்தில் தாக்ஷாயணி என்ற காரணப் பெயரும் ஏற்பட்டது. இதனால்தான் வெள்ளைக்காரர்கள் பதிவிரத்தத்தின் உச்சியாக உடன்கட்டை ஏறுகிறதை Suttee(ஸதி) - என்றே சொன்னார்கள். ஸதி என்றாலே கற்புக்கரசி என்று அர்த்தமாகிவிட்டது.

அதற்கப்புறம் தாக்ஷாயணியே பர்வத ராஜபுத்திரியாக ஜனித்து பார்வதி என்று பேர் பெற்றாள். சம்ஹார மூர்த்தியும், கோர மசானவாசியுமான பரமேசுவரனிடம் இப்போதும்

அவளுடைய அன்பு மாறவே இல்லை. அவரையே மறுபடியும் பதியாக அடைய வேண்டும் என்று சின்னஞ்சிறு வயதிலேயே உக்கிர தபஸ் செய்தாள் பார்வதி. கடைசியில் ஈஸ்வரனைக் கல்யாணம் செய்து கொண்டாள். இவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட விசேஷத்தால், கோர கோர தரேப்ய என்று வேதம் சொல்கிற கோரருத்திரனும், பரம மங்கள ஸ்வரூபியாக, சிவமாக ஆனார். அவளுக்கு சிவா என்ற பேர் உண்டாயிற்று.

அம்பாளைவிட மங்கள வஸ்து இல்லை. ஸர்வ மங்கள மாங்கல்யே என்பார்கள். அவளுடன் சேர்ந்திருப்பதாலே பரமேசுவரனும் மங்கள ஸ்வரூபியாகிறார். மங்களமே வடிவான அம்பிகை மகா சுமங்கலி. அவளுடைய ஸௌமங்கலியத்துக்கு எப்படி பங்கம் உண்டாக முடியும்?இதனால்தான் ஆலஹால விஷம் சாப்பிட்டுக்கூடப் பரமேசுவரன் ஸௌக்கியமாகவே இருக்கிறார் என்று ஆச்சாரியாள் ஸௌந்தரிய லஹரியில் கூறுகிறார். காதில் தோடு, நெற்றியில் குங்குமம், கழுத்தில் கருகுமணி இத்யாதி மங்கள சின்னங்களெல்லாம் சுமங்கலி லக்ஷணம். அம்பாளும் காதில் தாடங்கம் அணிந்திருக்கிறாள். சாதாரண பனை ஓலையைத்தான் தாடங்கமாகப் போட்டுக் கொண்டிருக்கிறாள். தாலீபலாச தாடங்கம் என்று இதை ஸ்தோத்திரங்கள் சொல்கின்றன. பழைய காலத்தில் எல்லோருமே படாடோபம் இல்லாமல் எளிமையிலேயே சுபிக்ஷமாக இருந்தார்கள் என்பதற்கு இது ஒரு திருஷ்டாந்தமாகத் தோன்றுகிறது. அம்பாளைப் போலவே எல்லா ஸ்திரீகளும் பனை ஓலையைத்தான் போட்டுக் கொண்டிருக்கவேண்டும். இதனால்தான் பிற்காலத்தில் வைரத்தோடு போட்டுக் கொள்கிற டாம்பீகம் வந்தபின்கூட, அதை வைர ஓலை என்றே சொல்கிற வழக்கம் உண்டாகியிருக்கிறது.

அம்பாளுடைய தாடங்கத்துக்கு வருவோம். மங்களச் சின்னமான தாடங்கம் அவள் காதிலிருந்து இறங்கக்கூடாது. அப்படியானால் பரமேசுவரன் எக்காலத்திலும் ஜீவிக்கத்தான் வேண்டும். இதனால்தான் அவள் ஆலஹால விஷம் உண்டும்கூட அது அவரைப் பாதிக்கவில்லை. இது உன் தாடங்க மகிமையம்மா!என்கிறார் ஆசாரியாள். திருவானைக்காவில் அகிலாண்டேசுவரியின் தாடங்கத்திலேயே ஸ்ரீ சக்ர, சிவ சக்ரப் பிரதிஷ்டை செய்து,

அவளை ஸௌம்ய மூர்த்தியாக்கின ஆசாரியாள், இப்படி இங்கே தவ ஜனனி தாடங்க மஹிமா என்கிறார்.

விஷத்தைச் சாப்பிட்டும் பரமேசுவரன் சொஸ்தமாக இருப்பதற்குக் காரணம், எந்த விஷத்தையும் முறிக்கிற மருந்தாக, அமிருத்தமாக, அம்பிகை அவரோடு சேர்ந்து இருப்பதுதான். வேத வாக்கியமான ஸ்ரீ ருத்திரத்தில் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. ருத்திரனாக கோரமாக இருக்கிற உனக்கு சிவா என்று ஒரு மங்கள சரீரம் இருக்கிறது. இந்த சிவாதான் லோகம் முழுவதற்கும் மருந்து. (சிவா விச்வா ஹபேஷஜீ) லோகத்துக்கு மட்டும்தான் அது மருந்தா?இல்லை. ருத்திரனாக உனக்கும்கூட சிவாதான் மருந்து. (சிவா ருத்ரஸ்ய பேஷஜீ) என்று வேதம் சொல்கிறது. கோர ஸ்வரூபியையும் தன் பதிவிரத்யத்தால் மங்களமாக்கி, அவரை என்றென்றும் ஜீவிக்கும்படி செய்கிறவளை ஸ்திரீகள் ஆராதித்தால் பதிபக்தியும், தீர்க்க ஸௌமங்கல்யமும் ஸித்திக்கும்.

பெண்களுக்குப் பதியேதான் குரு. பழைய காலத்தில் காமம் உள்ளே புகுமுன் காயத்ரீ புகுந்துவிடவேண்டும் என்று கருதி எட்டு வயசுக்குள் புருஷப் பிள்ளைகளுக்கு உபநயனம் செய்து குருவிடம் சேர்த்தார்கள். அதே வயசில் பெண்களுக்குக் கல்யாணம் செய்து புருஷனிடம் சேர்த்தார்கள். அவனேயே குருவாகவும் தெய்வமாகவும் இவளுக்கு வைத்தார்கள். பிற்பாடுதான் காமம் ஏற்பட்டு, அவனை அவள் பதியாகப் பார்ப்பதே. எனவே குருபக்தியும், பதிபக்தியும் பெண்களுக்கு ஒன்றேதான். பதிவிரதா சிரோமணியான அம்பாளை ஆராதிக்கிற பெண்களுக்கு அவள் தீர்க்க ஸௌமாங்கலியத்தைத் தருகிறாள். ஸ்ரீமத் பாகவதத்தில் கோபிகா ஸ்திரீகள் மார்கழி மாதம் முழுவதும் தினம் அதிகாலையில் ஆற்றங்கரையில் அம்பாளை பூஜத்து, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை அடைந்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. பிற்பாடு ருக்மணியும் அம்பாளை ஆராதனை செய்தே பகவானை பார்த்தாவாக அடைந்தாள் என்று வருகிறது. தமிழ்நாட்டிலும் சங்க காலத்திலேயே அம்பாவாடல் என்கிற பேரில் கன்னிப் பெண்கள் கல்யாணமாவதற்கு அம்பாளை வழிபட்டார்கள் என்று தெரிகிறது. இதற்குப் பாவை நோன்பு என்ற பேர் இருக்கிறது. இன்னமும் கன்னிப் பெண்கள் கல்யாணமாவதற்காக கௌரீ

பூஜை பண்ணுகிறார்கள். ஆந்திர தேசத்தில் அவ்வழக்கம் அதிகம் இருக்கிறது.

எப்பேர்ப்பட்ட பர்த்தா வந்தாலும், அவனையே தெய்வமாகப் பாவித்துத் தன்னை சரணாகதி செய்துவிட வேண்டும் என்பதுதான் உத்தம பதிவிரதா லக்ஷணம். ஏதோ ஓரிடத்தில் மனஸை பரிபூரணமாக அர்ப்பணம் பண்ணிவிட வேண்டும். பிறகு அதை மாற்றக்கூடாது என்பதுதான் முக்கியம். அந்த ஓரிடம் முக்கிய வஸ்துவாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. அது எப்படி வேணுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். அதனிடத்தில் மனஸைப் பூரணமாகச் சமர்ப்பித்துவிட்டால், அப்புறம் நமக்கென்று தனியாக எதுவுமே செய்து கொள்ள வேண்டும் என்பதில்லாமல் போய்விடுகிறது. இது தன்னலனை அடியோடு இழந்து கொள்கிற நிலை. இப்படி அகங்காரம் அடியோடு போய்விட்டதனால் மோக்ஷமார்க்கத்துக்கு வாசலைத் திறந்து விட்டாற் போலிருக்கிறது. நாம் சரணாகதி பண்ணுவதுதான் இதில் முக்கியம். அது எந்தப் பாத்திரத்தைக் குறித்து என்பது அவ்வளவு முக்கியமல்ல. ஒரு ஸ்திரீ எப்படிப்பட்ட புருஷன் கிடைத்தாலும் அவனிடம் சரணாகத் செய்து, பதிவிரத்தையாக இருந்து, அவனையே பரமேசுவரனாக நினைத்து விட்டாலானால், நிச்சயமாக அந்தப் பரமேசுவரன் இந்தப் புருஷன் மூலமாகவே அவளுக்கு அநுக்கிரஹம் பண்ணிவிடுவார். மகாகுரூபமும், விபரீத குணமும் படைத்த பதியிடம் அதி விசுவாசத்தோடு இருந்த நலாயினிக்கு சூரியனையே உதிக்காமல் நிறுத்தி வைக்கிற சக்தி உண்டாயிற்று. பதிவிரதை பூஜிக்கிற அந்தப் பதிக்கு ஒரு சக்தியும் இராது. நளாயினியின் பதியால் சூரியனை உதிக்காமல் நிறுத்தி வைக்க முடியுமா?முடியாது. பரமேசுவராம்சம் லவலேசம்கூடத் தனக்கு இருப்பதாக ஒரு பதிக்குத் தெரியாதபோதுகூட அவனை ஈஸ்வரனாக மதிக்கிற இவளுக்கு சகல சக்தியும் வந்து விடுகிறது. குரூபியிடமும், குணஹீனனிடமும்கூடப் பதிபக்தி பாராட்டுவதுதான் விசேஷம். அவர் இயற்கையையிலேயே நல்லவராக இருந்ததால் நம் தியாகத்தைக் காட்ட வழி ஏதுமில்லை. அதற்காகவே பகவான் இப்படிக் குணஹீனனிடமும்கூடப் பதிபக்தி பாராட்டுவதுதான் விசேஷம். அவர் இயற்கையாகவே நல்லவராக இருந்தால் நம் தியாகத்தைக் காட்ட வழியேதுமில்லை. அதற்காகவே பகவான் இப்படிக்

குணஹீனனான புருஷனாக நமக்குக் கொடுத்திருக்கிறார் என்று நினைக்க வேண்டும். இப்படிப்பட்ட பதியை அநுசரிப்பதால் ஏற்படுகிற அவமானமும் கொஞ்ச காலம்தான் இருக்கும். தனியாக நமக்கென்று மான அவமானம் என்ன இருக்கிறது?என்று இவள் இருக்க வேண்டும். மொத்தத்தில் விஷயம், தனக்காக ஒன்றாப் பண்ணிக் கொள்வது என்பது அடிபட்டுப்போனால், அப்புறம் மோக்ஷம் சமீபம்தான்.

குருவிஷயமும் இப்படித்தான். நல்லவர் என்று நினைத்துதான் ஒருவரை குருவாக வரிக்கிறோம். பிற்பாடு அப்படியில்லை என்று தெரிந்தாலும்கூட, விடாமல் சிசுரூஷை செய்தால் நம் மனசு சுத்தமாகிவிடும் எனறு எனக்குத் தோன்றுகிறது. எல்லாமாக ஆகியுள்ள பரமேசுவரன்தான் இங்கே இப்படி ஆகியிருக்கிறார் என்கிற பாவத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். தகாத இடம் என்று தோன்றுகிறபோதும் சிசுரூஷையை குறைக்காமலிருந்தால் ஜாஸ்தி பலன் என்றுகூடத் தோன்றுகிறது. நன்றாக இருக்கிற ஒன்றிடம் பிரியம் வைப்பதில் விசேஷம் என்ன இருக்கிறது. கெட்டதிடமும் அதே பிரியத்தை வைத்துவிட்டால்,, நம் பிரியத்தாலேயே கெட்டதும் நல்லதாகலாம் - கோரமான ருத்திரன்கூட

அம்பாளால் மங்கள ஸ்வரூபியான மாதிரி.

குரு ஸ்வரூபமாக வருகிறவளும் அவள்தான். இந்த மாயா லோகம் அவளால்தான் நடக்கிறது. அதிலிருந்து கைதூக்கி விடுவதற்காக அவளே குருவாக வருகிறாள். குண்டலினி யோக சாதகர்கள் தங்கள் சிரேசின் உச்சியில் பிராண சக்தியைக் கொண்டுவந்து அங்கே பூரண சந்திரனில் அம்பாள் பாதத்தைத் தரிசிக்கிறார்கள். இதையே குருபாதுகை எனறும் சொல்கிறார்கள். காளிதாஸரும், தேசிக ரூபணே தர்சிதாப்யுதயாம் - ஆசாரிய வடிவில் தன் மகிமையைக் காட்டுகிறவள் என்று அம்பாளை ஸ்துதிக்கிறார்.

ஈசுவரன் மயானத்தில் வசிக்கிறாரா, வசிக்கட்டும். பேய் பிசாசுகளோடு கூத்தடிக்கிறாரா, அடிக்கட்டும். சம்ஹார தாண்டவம் பண்ணுகிறாரா. பண்ணட்டும். ஊர் ஊராகப் பிச்சை எடுக்கிறாரா, எடுக்கட்டும் - அவர் எப்படியிருந்தாலும் அவருக்கே இருதயத்தை அர்ப்பணம் செய்வேன் என்று அவரிடமே தீவிரமாக அன்பு வைத்து, த.. யக்ஞத்தின் தன்

பிராணனையே தியாகம் செய்த அம்பாள்தான், இப்படிப்பட்ட பதிபக்தியை, குருபக்தியை அநுக்கிரஹம் செய்கிறாள்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அம்பாள் இருக்க அஹம்பாவம் ஏன் ?*

நாம் இதைச் சாதித்தோம், அதைச் சாதித்தோம் என்று அகம்பாவப்பட கொஞ்சம்கூட நியாயம் இல்லை. நாம் எதையும் சாதிப்பதற்கான புத்தியோ, தேக பலமோ எங்கிருந்து வந்தது?இந்த பிரபஞ்ச காரியங்கள் அனைத்தையும் செய்கிற ஒரு மஹா சக்தியிடமிருந்தே நம்முடைய, சக்தி எல்லாம் வந்திருக்கிறது. அது இல்லாவிட்டால் நம்மிடம் ஒரு சுவாசம்கூட இருக்கமுடியுமா. ஒருநாள், இதனை சாதித்ததாக எண்ணிக் கர்வப்படுகிற நம்மைவிட்டுச் சுவாசம் போய் விடுகிறது. அதைப் பிடித்து வைத்துக் கொள்கிற சாமர்த்தியம் நமக்குக் கொஞ்சம்கூட இல்லை. அப்போது நம் சக்தி எல்லாமும் சொப்பனம் மாதிரிப் போய்விடுகிறது. கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலும்கூட, சக்தி சமுத்திரமாக இருக்கப்பட்ட அம்பாளின் ஒரு சிறு துளி அநுக்கிரகத்திலேயே நடக்கிற

காரியங்களை, நம்முடையதாக நினைத்து அகம்பாவப்படுவது அசட்டுத் தனம்தான் என்று தெரியும். எத்தனைக்கெத்தனை இந்த அநுபவத்தில் தெரிந்துகொண்டு அம்பாளுக்கு முன் ஒரு துரும்பு மாதிரி அடங்கிக் கிடக்கிறோமோ அத்தனைக்கத்தனை அவள் அநுக்கிரஹமும் நமக்குக் கிடைக்கும்.

அவதார புருஷர்களாக வந்தவர்களும் இந்த அட்டகாசத்தை நமக்கெல்லாம் போதிப்பதற்காக ரொம்பவும் விநய சம்பந்தத்தோடு வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள். ராமசந்திரமூர்த்தி இப்படித்தான் தர்மத்திற்கும், சத்தியத்துக்கும், சாஸ்திரத்துக்கும் அடங்கி மநுஷ்யன் மாதிரியே நடந்து காட்டினார். அவருடைய விநயத்தை நினைக்கிறபோது எனக்குத் தோன்றுகிற ஒரு விநயத்தைச் சொன்னால் உங்களுக்கு விசித்திரமாக இருக்கும். எல்லோரும் ராமர் பிறந்த காலத்தில் நாம் பிறக்கவில்லையே என்று வருத்தப்படுவார்கள் அல்லவா?எனக்கோ நான் அப்படிப் பிறக்காமல் போனதே நல்லதுதான் என்று தோன்றுகிறது. ஏன் தெரியுமா?
ராமர் தாம் ஒரு க்ஷத்திரியர் என்பதால் அடக்கத்தோடு வேத வித்துக்களையும், ரிஷிகளையும் ஆசாரியர்களையும் விழுந்து விழுந்து நமஸ்கரித்தார். அவர் காலத்தில் ஒரு மடாதியதியாக இருந்தால், அவர் வந்து நமஸ்கரிக்கும் படியாக ஆகிவிடும். அது எத்தனை தர்மசங்கடமாயிருக்கும். இப்போதோ அவரை நான் நமஸ்காரம் செய்து சந்தோஷப்பட முடிகிறது.

எதற்குச் சொல்கிறேன் என்றால், சாக்ஷாத் நாராயணனான ராமசந்திரமூர்த்தி விநயமே வடிவமாக இருந்தார். அவதாரம் என்றில்லாமல் மநுஷ்யராகவே நடித்தார். பொது ஜனங்களுக்கு இருக்கிற துக்கம் கஷ்டம் எல்லாம் கூடத் தமக்கு இருக்கிற மாதிரி நடித்தார். சீதையைப் பிரிந்ததற்காக அழுதார். லக்ஷ்மணன் மூர்ச்சித்த போது புலம்பினார். சமுத்திர ராஜனிடம் ரௌத்ராகாரமாகக் கோபம் கொண்டார். ஜனங்களுக்கு, இவரும் தங்கள் மாதிரி ஒருத்தர் என்று பிடிமானம் உண்டாவதற்கே அவதார புருஷர்களுக்கு கோபம், பயம், துக்கம் எல்லாம் வந்த மாதிரி ஒரிரு சந்தர்பங்களில் காட்டிக் கொள்வார்கள். கைகால் ஆடுகிற மாதிரி, மனசும் அதன் சாதாரண சுவாவப்படி கொஞ்சம்

ஆடிவிட்டுப் போகட்டுமே என்று விட்டுவிடுவார்கள். ஆனால் உள்ளூர இவர்கள் இந்த உணர்ச்சி பேதங்களால் பாதிக்கப்படாமல் இருப்பார்கள். உள்ளூரத் தங்கள் ஈசுவரத்தை உணர்ந்த போதிலும் வெளியே மநுஷ்யர் போல இருப்பார்கள். மற்றவர்களுக்கு வழிகாட்டுவதற்காக அடக்கமாக இருப்பார்கள். ராமரே அடக்கமானவர் என்றால், புத்தி, தேகபலம் எல்லாவற்றிலுமாக சக்திமானாக இருந்த ஆஞ்சநேயரே அடங்கி அடங்கி இந்த ராமனுக்கும் தாஸனாக இருந்து கொண்டே அசாத்தியத்தை எல்லாம் லகுவாக சாதித்தார்.

இவர்களைப் போலவேதான் நம் ஆதிசங்கர பகவத் பாதர்களும். அவர்களைக் காட்டிலும் ஒரு பெரிய அவதாரம் இருவரைக்கும் ஆவிர்பவித்து உண்டா என்று தோன்றுகிறது. பரமேசுவராவதாரமான ஆசாரியாள், சொற்ப காலமே இந்த பூமியில் வாழ்ந்த போதிலும், லோகம் முழுக்கச் சேர்ந்தாலும், செய்ய முடியாத காரியங்களைச் சாதித்துவிட்டார். அசேது ஹிமாசலம் சஞ்சாரம் பண்ணித் தனியொரு மநுஷ்யராக இருந்துகொண்டு வைதிக மதத்தைத் புனர் உத்தாரணம் பண்ணினார். அத்வைத ஸ்தாபனம், ஷண்மத ஸ்தாபனம் பண்ணினார். ஞானியாக, பக்தராக, கவியாக, மகாபுத்திமானாக, ஏகப்பட்ட காரியம் சாதிக்கிற சக்திமானாக, பரம கருணாமூர்த்தியாக - இப்படி எல்லாமாகவும் இருந்திருகிகறார். அவருடைய பாதபங்கஜத்தில் சகல ஞானிகளின் சிரசுகளும் வண்டுகள் மாதிரி மொய்த்துக்கொண்டு கிடந்தன என்று கம்போடியா தேசத்தில் உள்ள எண்ணூறு வருஷங்களுக்கு முற்பட்ட ஒரு கல்வெட்டு அழகான ஸம்ஸ்கிருதத்தில் சொல்கிறது.

நிச்சேஷ மூர்த்தாலி மாலா லீடாங்க்ரி பங்கஜாத்

பகவான் என்றே அவரை அக்கல்வெட்டு சொல்கிறது. அப்படிப்பட்டவர் அம்பாளிடம் எத்தனை அடக்கத்துடன் பக்தி செலுத்தினார் என்பது ஸௌந்தரிய லஹரியின் கடைசீ ஸ்லோகத்திலிருந்து தெரிகிறது.

ஸௌந்தரிய லஹரி போல் ஒரு கிரந்தத்தைச் செய்கிறவருக்கு எத்தனை அஹம்பாவம் வேண்டுமானாலும் ஏற்படுவதற்கு நியாயமுண்டு. பூலோகம் ஏற்பட்ட நாளாக இதற்கு முந்தியோ, பிந்தியோ இவ்வளவு பூரணமான ஸௌந்தரியம் உள்ள

வாக்கு வேறேதும் இல்லை. இனி தோன்றப்போவதுமில்லை என்று சொல்லும்படி, எத்தனை முறை கேட்டாலும் அலுக்காத அழகு வாய்ந்ததாக இருப்பது ஸௌந்தரிய லஹரி. இப்படிப்பட்ட கிரந்தத்தைச் செய்த நம் ஆச்சாரியாளுக்கோ தாம் அதை பண்ணினோம் என்ற அகங்காரம் எள்ளளவும் இல்லை. ஸ்தோத்திரத்தைப் பூர்த்தி செய்து அம்பாளின் சரண கமலத்தில் அர்ப்பணம் பண்ணுகிற நூறாவது சுலோகத்தில் மிகவும் விநயமாகச் சொல்கிறார். (ப்ரதீப ஜ்வாலாபி:என்று தொடங்கும் ஸ்லோகம்)

அம்மா, வாக்கு ஸ்வரூபிணியான உன்னை வாக்கினால் துதிக்கிறேன். இது எப்படி இருக்கிறது. சூரியனுக்கு கர்பூர ஹாரத்தி காட்டுகிற மாதிரித்தான் இருக்கிறது என்று ஆரம்பிக்கிறார். சூரிய தேஜஸ் எங்கே?கர்ப்பூரத்தின் அற்ப ஒளி எங்கே!சூரியனால்தான் கர்ப்பூரத்திற்கு எரிகிற சக்தியே உண்டாகிறது. நாலு நாள் வெயில் அடிக்காவிட்டால் கர்ப்பூரம் லோசில் பிடித்துக் கொள்வதில்லை. ஸங்க்ராந்தியன்று சூரிய பூஜை செய்து, அந்த தேஜாமயத்துக்குக் கர்ப்பூரம் காட்டிகிறோமே. அதனால் விளக்கிக் காட்டுகிறோம்?சூரிய ஒளியில் கர்ப்பூரத்தின் ஸ்வாபமான பிரகாசம்கூடத் தெரியாமல் அது மங்கிப்போவதைத்தான் பார்க்கிறோம். அம்பாளைத் தாம் வாக்கால் வர்ணிக்கப் பார்த்தது அப்படிப்பட்ட காரியம்தான் என்கிறார் ஸ்ரீ ஆச்சாரியாள்.

இன்னோர் உதாரணம் சொல்கிறார். சந்திர காந்தக்கல்லானது சந்திரனுக்கு அர்க்கிய ஜலம் விடுகிற மாதிரி உன்னை இந்த வாக்கால் துதிக்கிறோன் என்கிறார். சந்திர காந்தக்கல் என்பது பூர்ணிமை சந்திரன் உதிக்கிற சமயத்தில் அந்த நிலவை உள்ளே வாங்கிக்கொண்டு ஜலமாகக் கக்கும் என்பார்கள். வாஸ்தவத்தில் இப்படி ஒன்று உண்டே இல்லையே கவிகள் சம்பிரதாயமாக (poetic tradition) இதைப் பற்றிச் சொல்லி வருகிறார்கள். இப்படிப்பட்ட சந்திரகாந்தக் கல் சந்திரனைப் பூஜை செய்கிறேன் என்று ஆரம்பித்து, பதினாறு உபச்சாரங்களில் ஒன்றாக அர்க்கியம் சமர்ப்பயாமி என்று நீர் வார்க்கிறபோது, நிலவின் சக்தியிலேயே பிறந்த ஜலத்தை அர்க்கியமாவ வடித்தால் எப்படி இருக்கும்?அம்பாளின் அநுக்கிரஹமே தமக்குள் பிரவேசித்து இந்த வாக்கை வடித்திருக்கிறது என்று ஆச்சாரியாள் இங்கே சொல்லாமல்

சொல்கிறார்.

முன்றாவதாக இன்னொரு திருஷ்டாந்தம்.

சமுத்திரத்துக்கு அதன் தீர்த்தத்தையே எடுத்து ஸ்நானம் செய்விக்கிற மாதிரி, உன்னை இந்த ஸ்துதியால் புகழ்கிறேன் என்கிறார். ராமேசுவரத்திற்குப் போனால் சேதுவில் சமுத்திர பூஜை செய்வார்கள். அப்போது பூஜா அங்கமாக சமுத்திரத்திற்கு அபிஷேகம் பண்ணுவார்கள். அந்தப் பெரிய சமுத்திரத்திலிருந்தே துள்போல எடுத்து, அதற்கே ஸ்நானம் செய்வார்கள். வாக் சமுத்திரமாக இருக்கிற அம்பிகைக்கு அதிலிருந்தே கொஞ்சத்தை எடுத்து, துதி செய்வதாக ஆச்சாரியாள் சொல்கிறார். அந்த ஜலம் பூஜை செய்கிறவருக்கா சொந்தம். சமுத்திரத்துக்கே சொந்தமானதை எடுத்து அதற்கே மீண்டும் தருகிறாராம்.

அவள் கொடுத்த வாக்காலேயே அவளைத் துதிக்கிறோமே ஒழிய, இதில் தாமாகச் செய்தது எதுவுமே இல்லை எனறு அடக்கத்துடன் சாக்ஷாத் ஈசுவராவதாரமான ஆசாரியாள் சொல்கிறார்.

சந்திரன் இல்லாவிடில் எப்படி சந்திர காந்தக் கல் ஜலம் வடிக்காதோ அப்படி அவளருளின்றி இந்த வாக்கில்லை. பெரிய சமுத்திரத்திலிருந்து கையளவு ஜலம் எடுக்கிற மாதிரி வாக்கு சாகரத்திலிருந்தே இந்த வாக்கை எடுத்திருக்கிறோம். இதனால் அவள் மகிமையை விளக்கியமாத நினைப்பது, கர்ப்பூரத்தால் சூரியனைக் காட்டிக் கொடுப்பதாக எண்ணுகிற பரிஹாஸத்துக்குறிய செயல்தான் என்பதெல்லாம் சுலோகத்தின் தாத்பரியம்.

அவதார புருஷர்களும் அம்பாளிடம் இப்படி அடங்கிப் பேசுகிறார்கள். அப்படி இருக்க நமக்கு எதைப் பற்றியும் அகங்காரம் கொள்ள ஏது நியாயம்?நாம் நன்றாக எழுதுகிறோம், பேசுகிறோம், பாடுகிறோம், வேறு ஏதோ காரியம் செய்கிறோம் என்று உலகம் புகழ் மாலை போடுகிறது. அதே சமயத்தில் நமக்குத் தலைகனம் ஏறத்தான் தொடங்கும். அப்போது நமக்குச் சக்தி உண்டா என்று யோசிக்க வேண்டும். எந்த இடத்திலிருந்து நம் சக்தி வந்ததோ, அந்த அம்பாள் இருக்க, புகழுக்குப் பாத்திரராகி அகம்பாவப்பட நமக்குக் கொஞ்சம்கூட உரிமையில்லை

என்று உணர வேண்டும். வருகிற பெருமையை எல்லாம் அவற்றுக் குறிய பராசக்தியின் பாதாரவிந்தங்களிலேயே அர்ப்பணம் செய்துவிட வேண்டும். பெருமைப் பூரிப்பில் இருப்பதைவிட, இப்படி அர்ப்பணம் பண்ணிப் பாரம் இல்லாமல் லேசாக ஆவதுதான் நமக்கே பரம சௌக்கியமாக இருக்கும். நமக்கு அகம்பாவமே இல்லை என்கிற எண்ணம் வந்து அதில் ஒரு பூரிப்பு உண்டாகிவிட்டால், அதுவும்கூட அகம்பாவம்தான். எனவே அகம்பாவம் தலை தூக்க இடமே தராமல் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எத்தனை கண்குத்திப் பாம்பாக இருந்தாலும், துளி இடுக்குக் கிடைத்தால்கூட ஏதோ ஒரு ரூபத்தில் நமக்கே தெரியாமல் அஹம்பாவம் உள்ளே புகுந்து விடும். இது போகவும் அவள் அருள்தான் வழி. அவளேயே வேண்டி நம் புகழையெல்லாம் அவளுக்கு அர்ப்பணம் பண்ணிவிட்டால், நமக்கு ஒரு குறைவுமில்லாமல் மேலும் மேலும் அவள் அநுக்கிரஹம் கிடைக்கும்.

நம்முடைய ஆசாரியர்களான ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் அம்பிகையை ஸ்தோத்திரம் செய்யும் அநேக கிரந்தங்களை அநுக்கிரஹம் பண்ணியிருக்கிறார்கள். ஸௌந்தரிய லஹரியைத் தவிர, ஆனந்த லஹரி, தேவி புஜங்கம், த்ரிபுர ஸுந்தரி மானஸ பூஜா ஸ்தோத்திரம், த்ரிபுர ஸுந்தரி வேத பாத ஸ்தவம் - இந்த மாதிரி பெரிய ஸ்தோத்திரங்களும் அன்ன பூர்ணாஷ்டகம், அம்பாஷ்டகம் மாதிரிச் சின்னச் சின்னச் ஸ்தோத்திரங்களும் தேவீ பரமாகச் செய்திருக்கிறார். இவைகளை நாம் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்தாலே போதும். அம்பாளின் அநுக்கிரஹ வெள்ளத்தில் ஆனந்தமாக மிதந்து கொண்டிருக்கலாம். பரம அற்புதமான வாக்கிலே இவை அமைந்திருக்கின்றன. ஆனாலும், இவற்றைச் செய்த ஆசார்யாளோ துளிக்கூடக் கர்வப்படாமல், எல்லா சக்திகளுக்கும் ஆதாரமாக, சக்தி சமுத்திரமாக இருக்கப்பட்ட அம்பாளை நிரம்பவும் விநயத்தோடு துதிக்கிறார்கள். தமக்கு அவளுடைய அநுக்கிரஹத்தை கோருகிற யோக்கியதை கொஞ்சம்கூட இல்லை என்கிற நைச்சியமான எண்ணம் தொனிக்க அநேக இடங்களில் பேசுகிறார். ஸௌந்தரிய லஹரியில் குறிப்பாக இரண்டு இடங்களில் இந்த அதிவிநயமான மனோபாவம் நம் மனஸைத் தொடுகிற மாதிரி வெளியாயிருக்கிறது. இவற்றில் ஓரிடத்தில் (த்ருசா த்ராகீ யஸ்யா) அம்பாளின் கடாக்ஷத்தைப் பிரார்த்திக்கிறார். மற்றதில் (த்ருதீனாம் மூர்த்தானோ) அவளுடைய சரணாரவிந்த ஸ்பரிசத்தை வேண்டுகிறார். அம்பாளுடைய கடைக்கண் வீச்சைத் தம்மீது திருப்புமாறு கேட்கிறபோது, என்னையும்கூட (மாமபி) கடாக்ஷித்து அருள்வாயம்மா என்று கேட்டுக்கொண்ட மாதிரியே, மற்றைய இடத்திலும் என் சிரசிலும்கூட (மமாபி சிரஸி) உன் திருவடிகளை வைத்து அநுக்கிரஹம் பண்ணுதாயே என்கிறார். இரண்டு இடங்களிலும் இந்த அபி என்ற சொல்லையே பிரயோகம் செய்திருக்கிறார். தமக்கும்கூட அவளது அநுக்கிரஹம் வேணும் என்று சொல்வதிலிருந்தே, நியாயப்படி பார்த்தால் நமக்கு அதைப் பெற தகுதி இல்லை என்று நினைப்பது ஸ்பஸ்டமாகத் தெரிகிறது. எந்த யோக்கியதையும் இல்லாமலே உன் அருளைக் கேட்கிறேனம்மா என்று சொல்லாமல் சொல்கிறார்.

ஞானத்திலாகட்டும், பக்தியிலாகட்டும், புத்தியிலாகட்டும்,

வாக்கு வன்மையிலாகட்டும், காரிய சக்தியிலாகட்டும், கருணையிலாகட்டும், நம் ஆச்சாரியாளைப்போல பூரண யோக்கியதை உள்ளவர்கள் அவருக்கு முந்தியும் இல்லை, பிந்தியும் இல்லை. அப்படியிருந்தாலும் நமக்கெல்லாம் வழிகாட்டியாக, நாம் அடக்கத்துடன் எப்படி அம்பாளைப் பிரார்த்திக்க வேண்டும் என்று, நமக்குச் சொல்லிக் கொடுக்கிறமாதிரி மாமபி, மமாபி (என்னையும்கூட கடாக்ஷி எனக்கும்கூட திருவடியைத் தா) என்கிறார்.

யோக்கியதை இல்லாமல் கேட்கலாமா என்றால் நியாயப்படி அது சரியில்லைதான். ஆனால், நிறைய அநியாயங்களைப் பார்க்காமல், நல்லதையே செய்துகொண்டிருக்கிற அன்பு மயமான வஸ்துக்களும் இருக்கின்றனவே என்று எடுத்துக் காட்டுகிறார். நல்ல பூர்ணிமை நிலை ராஜாவின் நிலை முற்றத்தில் மட்டுமா விழுகிறது?காட்டிலே இருக்கிற கள்ளிப் புதர்மேலேகக்கூடத்தான் அமிருதமாகப் பொழிகிறது. சந்திரிகை எப்படி யோக்கியதை பார்க்காமல், சகல இடங்களிலும் சமமாக விழுந்து குளிர்ச்சியும் பிரகாசமும் தருகிறதோ, அப்படியே உன் கடாக்ஷ வெள்ளமானது தகுதி வாய்ந்த உத்தம அதிகாரிகளின்மேல் மட்டுமில்லாமல் என் மேலும்கூட விழுந்து என்னையும் ஸ்நானம் பண்ணி வைக்கலாகாதா?ஞானத்தின் பிரகாசத்திலும் காருண்யத்தின் குளிர்ச்சியிலும் என்னை முழுக்கக்கூடாதா?என்கிறார். த்ருசா த்ராகீயஸ்யா என்ற சுலோகத்தில்.

இப்படியே அம்பாளுடைய சரண கமலங்களைத் துதிக்கிறபோது வேதங்கள் தங்கள் சிரசுக்கு ஆபரணமாக எந்த உன் பாதங்களைத் தாங்குகின்றனவோ, அந்தப் பாதங்களைத் என்சிரசிலும்கூட வைப்பாய் அம்மா என்கிறார்.

இப்படி கேட்பது நியாயமில்லையே என்றால், நியாயம் - அநியாயம் என்பவை காரிய அகாரியங்களை எடை போடுகிறபோதுதான். தயை என்பதோ இப்படி குணங்களை எடைபோட்டுப் பார்ப்பதில்லை. நீயோ தயையே வடிவமானவள். எனவே, அந்த தயையால் என் தலைமீதும்கூட உன் திருவடிகளை வைப்பாய் என்கிறார் (தயயா தேஹி சரணௌ)

வேதத்தின் சிரஸில் அம்பாளின் பாதம் இருக்கிறது என்பதில் ஒர் உள்ளர்த்தம் உண்டு. உபநிஷத்துகளுக்கே சுருதி சிரஸ்,

வேதங்களின் முடி என்கிற பெயர் இருக்கிறது. முன்பே நான் ஞானாம்பிகையைப் பற்றிச் சொல்கிறபோது கேநோபநிஷத்தில் அவளுடைய ஆவிர்பாவத்தைப் பற்றி வருகிறது என்று சொல்லியிருக்கிறேன். தேவர்கள் அகம்பாவம் அடைந்தபோது, அதைப் போக்கி அவர்களுக்கு ஞானம் தருவதாக அம்பிகை தோன்றியதைக் கேநோபநிஷத் சொல்கிறது. இங்கே ஆசார்யாள் அதை மனதில் கொண்டே சொல்வதாகத் தெரிகிறது. அகம்பாவ நிவிருத்தி தானே ஞானத்துக்கு வழி என்று அந்த உபநிஷத்திலிருந்து தெரிகிறது. அதற்கு ஏற்றாற்போல் இங்கேயும் அகம்பாவமே இல்லாமல் ரொம்பவும் அடங்கி மமாபி எனக்கும்கூட திருவடி ஸ்பரிசத்தை அநுக்கிரகிப்பாயம்மா என்கிறார்.

ஒவ்வொரு காரியத்துக்கும் நேராக, முக்கியமான ஒரு பலன் இருப்பதோடு, வேறு சில பலன்களும் ஏற்படுகின்றன. இந்தப் பலன்களை உத்தேசிக்காவிட்டாலும்கூட, அவை பாட்டுக்கு உண்டாகி விடுகின்றன. கேநோபநிஷத்தில் அம்பாளைப் பற்றிச் சொல்லியிருப்பதில் இப்படியே ஞானோபதேசம் என்கிற நேர் உத்தேசத்தோடு, வேறு ஒரு பிரயோஜனமும் நமக்குக் கிடைக்கிறது. இது ஆத்ம ஞானத்துக்கோ அம்பாள் தத்துவத்திற்கோ சம்பந்தமில்லாதது என்றால்கூட, இதிலும் ஒரு முக்கியத்துவம் நவீன காலத்தவருக்கு இருப்பதால் இவ்விஷயத்தைச் சொல்கிறேன்.

இக்கால ஆராய்ச்சியாளர்களில் ரொம்பப்பேர், புராண காலத்தில்தான் பரமேசுவரன், பார்வதி, விஷ்ணு, பிள்ளையார் முதலிய தேவதா ரூபங்கள் ஏற்பட்டன. புராணங்களுக்கு முற்பட்ட உபநிஷத்துகளில் இவர்களைப் பற்றிப் பேச்சே இல்லை. அரூபமான ரூப தத்துவத்தை மட்டும்தான் உபநிஷத்துக்கள் சொல்கின்றன, என்கிறார்கள். ஆனால் இங்கே கேநோபநிஷத்திலோ, ஹைமவதியான உமா என்கிற ஸ்திரீ வந்து தோன்றினாள் என்று பரம ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. ஸ்திரீ, ஹைமவதி உமா என்பதெல்லாம் உபநிஷத்து மூலத்திலேயே வருகிற வார்த்தைகள். பிரம்மம் யக்ஷமாக நின்ற அதே ஆகாசத்தில், மகா சோபையோடு இவள் நின்றாள் என்கிறது. இரண்டும் ஒன்றே என்பது உட்பொருள். ஸ்திரீ என்று சொன்னதால் ஆண், பெண் கடந்த அரூப தத்துவத்தை மட்டும் உபநிஷத்துக்குள் தெய்வமாகக்

கொண்டிருந்தன என்று சொல்வதை நிராகரித்ததாக ஆகிறது. அவளை உமா என்று சொன்னதோடு நில்லாமல் ஹைமவதி என்றும் சொன்னதால் ஹிமவானின் புத்திரியாக அவள் அவதரித்த விருத்தாந்தமும் உபநிஷத் காலத்திலேயே வழக்கிலிருந்ததாக ஏற்படுகிறது. (ஹமவானின் புத்திரி ஹைமவதி:பர்வத ராஜனின் புத்திரி பார்வதி). இன்றைய இந்த மதத்தின் மூர்த்தி வழிபாடு புராண காலத்திற்கு முற்பட்டது. அது உபநிஷத் காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதற்கு அழுத்தமான உட்சான்று (internal evidence) கேநோபநிஷத்தில் கிடைக்கிறது.

உபநிஷத்தில் ஞானம் தந்தவளாகச் சொல்லப்பட்ட அம்பாளின் பாதத்தைத் தம் தலையில் வைக்குமாறு, ஆசாரியாள் பிரார்த்திக்கிறார். இங்கே அம்பாளே குரு ஸ்வரூபிணி என்பது உறுதியாகிறது. குரு பாதுகை எப்போதும் சிரேஸில் இருந்து கொண்டிருப்பதாக மந்திர சாஸ்திரங்கள் சொல்கின்றன. இவ்விடத்தில் எப்போதும் குருவின் திருவடி தீக்ஷை கிடைத்துக் கொண்டேயிருக்கிறது.

ஞான குருவாக கேநோபநிஷத்தில் தோன்றி, வேத முடிவுக்கு அணிகலனாகத் தன் பாதங்களை வைத்திருக்கிறாள் அம்பிகை. அந்தப் பாதங்களுக்கு உள்ள மற்ற மகிமைகளையும் இந்த சுலோகத்தில் ஆசாரியாள் கூறுகிறார். பெரியவர்கள், மகான்கள், ஆசாரியாள்கள் ஆகியோரின் பாதங்களுக்கு ஜலம் வார்த்து உபச்சாரம் செய்ய வேண்டும். ஷோடசோபசாரம் என்கிற பதினாறு உபச்சாரங்களில், பாதங்களில் ஜலம் விடுவதைப் பாத்யம் என்பார்கள். அம்பாளுக்குப் பதியமாகப் பசுபதியின் ஜடையிலிருந்து கங்கா தீர்த்தம் எப்போதும் பெருகிக்கொண்டேயிருக்கிறதாம். சாக்ஷாத் பரப்பிரம்ம சக்தியாக இருக்கப்பட்ட அவளுடைய சரண கமலங்களில், பூத லோகங்களுக்கெல்லாம் பிரபுவானதால் பசுபதி என்று பேர் படைத்த ஈசுவரனும் நமஸ்கரிக்கிறான் என்பது தாத்பரியம். ஈசுவரன் அப்படி இவன் பாதத்தில் தலையை வைத்து நமஸ்கரிக்கும்போது அவனுடைய ஜடையிலிருந்து கங்கா ஜலம் பாதத்தில் விழுமல்லவா?இதைத்தான் பாத்யம் தருவதாகச் சொல்கிறார். ஈசுவரனுக்கு அந்த பிரபுத்துவ சக்தியும் மூலமான பிரம்ம சக்தியிடமிருந்துதானே உண்டாயிற்று?அதனால் அவருங்கூட அகம்பாவமில்லாமல் இங்கே வந்து நமஸ்கரிக்கிறார்.

உத்தம ஸ்திரீகள் பாதங்களில் லாக்ஷாரஸம் என்கிற செவ்வரக்குக் குழம்பைப் பூசியிருக்கிறார்கள். அம்பாள் பாதத்தை அலங்கரிக்கவோ வேறு சிறப்பு ஜோதி ஒன்று இருக்கிறது என்கிறார். ஹரி எனப்படும் சாக்ஷாத் நாராயணனின் சிரஸில் குடியிருக்கிற சூடாமணியின் பிரகாசமே, அம்பாளின் பாதத்துக்கு லக்ஷாரஸமாக இருக்கிறது என்கிறார் ஆசார்யாள். ஜகத் பரிபாலன கர்த்தாவான மகாவிஷ்ணு அவரது பரிபாலன சக்தியும் பராசக்தியிடமிருந்தே வந்தது என்பதால் அடக்கத்தோடு அவளுடைய சரண கமலங்களில் நமஸ்கரிக்கிறார். அப்போது அவருடைய சிரோ பூஷணம் அம்பாளுக்கு பாத பூஷணமாகிறது. மஹாவிஷ்ணுவின் கிரீடத்திலே டால் அடிக்கிற சிவப்பு மணி அம்பாளின் பாதத்தில் செங்குழம்பு பூசின மாதிரி இருக்கிறது.

தேவர்கள், மஹாவிஷ்ணு, பரமேசுவரன் எல்லோரும் அகம்பாவமே இல்லாமல் ஆராதனை செய்த அம்பாள், நம் அகம்பாவத்தைப் போக்கி ஞான அநுக்கிரஹம் செய்ய வேண்டும். அதற்கு வழியாக, அவளுடைய சரணார விந்தங்களை நம் ஆச்சாரியாள் போல நாமும் தியானம் செய்ய வேண்டும்.

அம்பாளுடைய பதிவ்ரத்தியப் பணிவைப் பல இடங்களில் சொன்ன ஆசாரியாள். இங்கே அவனே ஈஸ்வரனே நமஸ்கரித்ததாகச் சொல்கிறாரே என்றால், இது எல்லாமே லீலைதான். இருவரும் ஒன்றேதான். ஒரு பாவத்தில் இவள் நமஸ்கரிக்கிறாள். இன்னொன்றில் அவர் நமஸ்கரிக்கிறார். இரண்டும் ஒன்றுதான் என்றாலும், அவரே சாந்தமான ஸத்வஸ்துவாகவும், இவளை சக்திமயமான சித்தாகவும் விசேஷிப்பது வழக்கம்.

'ஸௌந்தரிய லஹரி'யின் முதல் சுலோகத்திலேயே அம்பாளுடைய இந்த அபாரமான சக்தியை ஆசாரியாள் சொல்கிறார். (சிவ:சக்த்யா யுக்தோ) சக்தியாகிற அம்பா. பரமேசுவரனான சிவனும் உன்னுடன் சேர்ந்திருந்தால்தான் காரியம் செய்வதற்குத் திறமை உள்ளவராவார். உன்னோடு சேர்ந்திராவிட்டால் அவரால் துளி அசைவதற்குக்கூட முடியாது. அதற்கான சாமர்த்தியம், சக்தி அவருக்குக் கிடையாது என்கிறார். தன்னைத் தவிர வேறு ஏதுமே

இல்லாததால், எதையும் அறிந்து கொள்ள முடியாமல் இருப்பது பிரம்மம். இருந்தாலும் லோகத்தில் இத்தனை தினுசான அறிவுகள் வந்துவிட்டன. பிரம்மம் எங்குமாக எல்லாமாக இருப்பதால் அது அசைவதற்கு இடம் ஏது?ஆனாலும், பிரம்மாண்டம் முழுக்க சூரியன், நக்ஷத்திரங்களிலிருந்து தொடங்கி அணுவுக்குள் இருக்கிற எலெக்ட்ரான் வரையில் எல்லாம், எப்போது பார்த்தாலும் அசைந்து கொண்டே இருக்கின்றன. நம் மனஸு கேட்கவே வேண்டாம். எப்போது பார்த்தாலும் அசைவுதான். அத்தனை அசைவுகளும் அறிவுகளும் எப்படியோ பிரம்மத்தில் வந்துவிட்ட மாதிரி இருக்கின்றன. அதுதான் மாயா காரியம். அல்லது பிரம்ம சக்தியின் பிரபாவம். பிரம்மத்தை சிவன் என்றும் அதன் சக்தியை அம்பாள் என்றும் சொல்கிறபோது, இதையே ஆச்சாரியாள், அம்மா நீதான் சிவனையும் ஆட்டி வைக்கிறாய், அசைய வைக்கிறாய் என்கிறார். இறுதியில் இல்லாமல் போகிற லோகம் அவளால்தான் வந்தது. மாயா - ஏது இல்லையோ அதுவே - மாயா. நமக்கு மாயையைப் போக்குகிறவளும் அவள்தான்.

நாம் பார்க்கிற ரூபமெல்லாம் அவள் செய்ததுதான். அவளேதான். இருந்தாலும் விசேஷமாகச் சில ரூபங்களில் தியானித்தால் நம் மனசு லயிக்கிறது. எல்லா ரூபத்துக்கும் இடம் தருகிற அகண்ட அரூப ஆகாசமாக இருக்கிறவளே பிராண சக்தியாக, மூச்சுக்காற்றாக இருக்கிறாள். அக்னி, ஜலம், பூமி எல்லாம் அவள் வடிவம்தான். மனஸ்தவம் என்கிற சுலோகத்தில் ஆசார்யாள் இதையெல்லாம் சொல்கிறார்.

இதற்கு முன் சுலோகத்தில் (சரீரம் த்வம்) இரவும் பகலும் அம்பாளின் ரூபங்கள்தான் என்பதை ஆசாரியாள் சொல்கிறார். தாயார் குழந்தாக்குப் பால் கொடுக்கிற மாதிரி சூரியன் சந்திரன் என்கிற இரண்டால் லோகத்துக்கு உணவு அளிக்கிறாள் என்கிறார். சூரியனிடமிருந்துதான் தாவரப் பிரபஞ்சம் க்ளோரோஃபில் உண்டாக்குகிறது. தாவரத்தைச் சாப்பிட்டோ, அல்லது தாவரத்தைச் சாப்பிடுகிற பிராணிகளைச் சாப்பிட்டோதான் எல்லோரும் உயிர் வாழ்கிறோம். (அசைவ உணவு உண்கிறவர்களும் தாவரத்தைச் சாப்பிடும் ஆடு, மாடு, பன்றி போன்றவைகளின் ஊனைத்தான் உண்பார்கள். மாம்ஸ பக்ஷிணிகளான நாய்,

பூனை, புலி, சிங்கம் இவற்றின் ஊனை உண்பதில்லை). சூரியன் தாவரங்களை வளர்க்கிற மாதிரி, சந்திரன்தான் மூலிகைகளை விசேஷமாக வளர்க்கிறான். அம்பாள் சூரிய வெப்பத்தாலும், சந்திரனின் நிலவாலும் உலகம் முழுவதற்கும் தன் பாலைப் பொழிகிறாள் என்று இதையே ஆசார்யாள் சொல்கிறார். இதெல்லாம் அவளுடைய ரூபங்கள்.

நம் முதுகெலும்புக்குக் கீழிருந்து சிரசு உச்சிக்கு யோக சாஸ்திரப்படி குண்டலினி சக்தியை எழுப்பிக் கொண்டு போகிற போது அம்பாள் தாமரைத் தண்டை உண்டதால் வருகிற நூழிலை மாதிரி அத்தனை மெல்லியதாக மேலெழுப்பிப் போகிறாள் என்று மந்திர சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது.

பிஸதந்து தநீயஸீ என்று இதையே ஸஹஸ்ர நாமமும் சொல்கிறது. இத்தனை சூக்ஷ்மமாக இருந்தாலும் அதுவே கோடி சூரியப் பிரகாசமாக இருக்கும். அதே சமயத்தில் உஷ்ணம் துளிக்கூட இல்லாமல் கோடி சந்திரன் மாதிரி குளிர்ச்சியாக இருக்கும்.

இந்த ரூபங்களைத் தவிர சகல சப்தமாகவும், வாக்காகவும் இருக்கிறாள். விசேஷமாக மந்திர சப்தங்களாக இருக்கிறாள். இதெல்லாமுமே சூக்ஷ்ம ரூபங்கள்.

நம் போன்ற சாதாரண ஜனங்களுக்காக ஸ்தூலமாகவே லலிதா, துர்க்கா, புவனேஷ்வரி என்று பல ரூபங்களில் இருக்கிறாள். இந்த ரூபங்கள் நம் கண்ணுக்குத் தெரிகிற மாதிரி புண்ணிய க்ஷேத்திரங்களில் பரமானுக்கிரஹம் தெரிகிற மாதிரி புண்ணிய க்ஷேத்திரங்களில் பரமானுக்கிரஹம் பண்ணி வரும் விக்கிரஹங்களாக உள்ளன.

வடக்கே ஹிமாசலத்தில் பர்வத ராஜகுமாரியாகப் பிறந்தவள் தென்கோடியில் கன்யாகுமாரியாக நிற்கிறாள். மலையாளத்தில் பகவதியாகவும், கர்நாடகத்தில் சாமுண்டேசுவரியாகவும், தமிழ்நாட்டில் தொண்டை மண்டலத்தில் காமாக்ஷியாகவும், சோழ தேசத்தில் ஞானாம்பாளாகவும், மகாராஷ்டிரத்தில் துளஜாபாவானியாகவும், குஜராத்தில் அம்பாஜியாகவும், பஞ்சாபில் ஜ்வாலாமுகியாகவும் காஷ்மிரத்தில் க்ஷீர பவானியாகவும், உத்திரப்பிரதேசத்தில் விந்த்ய வாஸினிமாகவும், வங்காளத்தில் காளியாகவும், அஸ்ஸாமில்

காமாக்யாவாகவும் - இப்படி தேசம் முழுவதிலும் பல ரூபங்களில் கோயில் கொண்டு, முழுவதிலும் பல ரூபங்களில் கோயில் கொண்டு, எப்போதும் அநுக்கிரஹம் பண்ணி வருபவள் அவளே!

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*இன்னல் தருவதும் அவள் இன்னருளே !*

அம்பாள் கருணாயமமானவள், அவளே உருவானவள் என்கிறோம். லலிதா ஸஹஸ்ரநாமத்தின் முடிவில் அவளை ஒரு காரணமும் இல்லாமல் கருணை செய்கிறவள் (அவ்யாஜ கருணாமூர்த்தி) என்று சொல்லியிருக்கிறது.

ஆனால் லோகத்தில் கணக்கு வழக்கே இல்லாமல் கஷ்டங்களும் இருக்கின்றன. எனக்குத்தான் தெரியும். ஜனங்களுக்கு எத்தனை தினுசான கஷ்டங்கள் இருக்கின்றன என்று. என்னிடம் வருகிறவர்களெல்லாம் ஏதாவது கஷ்டத்தைச் சொல்கிறார்கள். பூஜை, புனஸ்காரம், க்ஷேத்திராடனம், தீர்த்தாடனம் செய்கிறவர்களுக்கும் சொல்லி

முடியாத கஷ்டங்கள் வருகின்றன. இந்தச் சமயத்தில் சில பேர் ரொம்பவும் மனசு வெதும்பி ஐயோ!நான் இத்தனை பூஜை பண்ணினேனே, பக்தி வைத்தேனே, அம்பாள் எனக்குக் கஷ்டத்தையேதானே கொடுத்துக் கொண்டிருக்கிறாள். கருணாமூர்த்தி, கருணாமூர்த்தி என்று அவளைச் சொல்கிறீர்களே, என் விஷயத்தில் அவளுக்குக் கண் இல்லையே என்று துக்கப்படுகிறார்கள். அம்பாளிடம் கோபம்பட அடைந்து விடுகிறார்கள். ஆனால் என்னைக் கேட்டால் கஷ்டம் தருவதே அம்பாளின் கருணைதான். பார்க்கப்போனால் இதுதான் பெரிய கருணை என்று தோன்றுகிறது.

நாம் இப்போது செய்கிற நல்லதை மட்டும் நினைத்துப் பார்த்து நமக்குக் கஷ்டம் வருவது நியாயமா என்று பிரலாபிக்கிறோம். தெய்வத்தை நொந்து கொள்கிறோம். ஆனால் எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும் நாம் ஒவ்வொருத்தரும் நல்லது மட்டும்தானா செய்திரிக்கிறோம்?நம்மை நாமே அலசிப் பார்த்துக் கொண்டால் நாம் எத்தனை தப்புகள் பண்ணியிருக்கிறோம். காரியத்தில் செய்யாவிட்டால்கூட மனஸினால் எத்தனை மகாபாவங்களைப் பண்ணியிருக்கிறோம் என்பது தெரியும். இதெல்லாம் இப்போதய - அதாவது இந்த ஜென்மத்து - விஷயம். இதற்கு முன் ஜன்மங்களில் நாம் என்ன செய்தோம் என்பது தெரியாது. இந்த விதையைப் போட்டால் இந்தப் பயிர் வரும் என்கிறது அம்பாள் போட்ட சட்டம். பூர்வ ஜென்மங்களில் விதையை விதைக்கிறோம். அதற்கு அவள் தருகிற பலனை, கஷ்டத்தை இப்போது அறுவடை செய்கிறோம். வாஸ்தவத்தில் நம் தோஷங்கள், பாவம் நமக்குப் பூரணமாகத் தெரிந்துவிட்டால் அம்பாள் நமக்குத் தருகிற இத்தனை கஷ்டமும்கூடப் போதாது என்றுதான் ஆகும். அப்போது நாமே பச்சாபதாபப் படுவோம். இத்தனை கஷ்டத்துக்கிடையில் அவளை நினைத்துக் கதிமோக்ஷம் தோடிக் கொள்கிற வழி கொடுத்திருக்கிறாளே. இது அதிகப்படி (Extra) கருணை அல்லவா. நமக்கு லாயக்கு இல்லாவிட்டாலும் அவளாகப் பொழியும் கருணையல்லவா. இதைப் புரிந்து கொண்டு சந்தோஷப்படாமல், அவளையே குறை சொல்வது எத்தனை அநியாயம்?ஏற்கெனவே பண்ணின தப்பெல்லாம் போதாது என்று, அவளைய் குறை சொல்கிற இந்தப் பெரிய தப்பையும் பண்ணுகிறோம். என்று

உணருவோம்.

குழந்தை மண்ணைத் தின்கிறது. அம்மாக்காரி அதன் கைக்ளைத் துணி போட்டுக் கட்டுகிறாள். அதற்கு மகா கோபம் வருகிறது. அம்மாவாம், அம்மா. கொஞ்சம்கூட இரக்கம் இல்லாதவள். இவள்தான் நமக்குப் பரம துரோகி என்று நினைக்கிறது. காரணம் இல்லாமலா அம்மா கட்டிப் போட்டாள்?குழந்தையைப்பற்றி அவளுக்கு இல்லாத அக்கறையா?குழந்தை தனக்குத் தானே சத்ருவாக இருந்துகொண்டு, அம்மாவை சத்துரு என்று நினைக்கிறது.

நாம் எத்தனை பெரியவர்களாக இருந்தாலும் என்னென்ன புரட்டினாலும், வாஸ்தவத்தில் இந்தக் குழந்தை மாதிரிதான் இருக்கிறோம். நம்முடைய பழைய தப்புக்கு அவள் பழைய தண்டனை தருவது நமக்குக் கஷ்டமாக இருக்கிறது. அதிலிருந்து விடுபட முடியவில்லை. நமக்கு அந்த சக்தி இல்லை. கட்டிப் போட்டுவிட்டாள் என்று குற்றம் சாற்றுகிறோம். குழந்தை மண்ணைத் தின்னப் போகிற மாதிரி நம் அதே பழைய தப்புகளைப் பண்ணாமலிருப்பதற்காகத்தான் கஷ்டம் வந்தால், நாம் பூர்வத்தில் பண்ணின பாவத்தாலேயே இது வந்தது. ஆனபடியால் இந்த ஜன்மத்தில் தப்பு பண்ணினாலும் இதுமாதிரியே கஷ்டங்கள் இனியும் வந்து கொண்டேயிருக்கும். அப்படி தப்புப் பண்ணாமலிருக்க புத்தி தர வேண்டும் என்று அம்பாளைப் பிரார்த்தித்துக் கொண்டேயிருப்பதுதான் நமக்கு விமோசனம் என்று தெளிய வேண்டும்.

நாம் நல்லது என்று நினைக்கிற செளக்கியங்களை அம்பாள் தருகிறபோது மட்டும் கருணை என்று நினைக்கிறோம். அவற்றைப் பெற நமக்கு யோக்கியதை இல்லாதபோதுகூட அவள் அநுக்கிரஹிப்பதால் இதை காரணமில்லாத கருணை என்கிறார்கள். கஷ்டமோ ஒரு காரணத்துக்காக உண்டான கருணை. நாம்

பூர்வத்தில் செய்த தப்பு அதற்குக் காரணம். இந்த மாதிரி இனிமேல் செய்யக்கூடாது என்று உணர்த்துவதற்காக, நம்மை நாமே நல்லவர்களாக்கிக் கொள்வதற்காக கஷ்டத்தைத் தருகிறாள். நல்லது என்று நாம் நினைக்கிற செளக்கியங்களால் பலவிதமான அனர்த்தங்களும் நமக்கே நல்லதைச் செய்கிற

கருணையைவிட, நம்மையே நல்லவர்களாக்கிக் கொள்ளச் செய்வதைக் காரணமாகக் கொண்டு கஷ்டத்தைத் தரும் கருணைதான் விசேஷமானது என்று எனக்குத் தோன்றுகிறது. காரமில்லாமல் நல்லதைத் கொடுப்பது அவளுடைய ஸ்வபாவமான கருணை என்றால், நம்மை சோதித்துத் திருத்த வேண்டும் என்ற காரணத்தோடு அவள் கஷ்டத்தைக் கொடுக்கிறாளே, இந்தக் காரணக் கருணை அதைவிட உயர்ந்தது என்று தோன்றுகிறது. நாம் கொஞ்சம் கொஞ்சம்தான் பார்க்கிறோம். இதற்கு நமக்கு முந்தியோ பிந்தியோ நமக்குத் தெரியவில்லை. இதனால் இந்த சின்ன இடைவெளிக்குள் ஏற்படுகிற கஷ்டத்தைப் பார்த்து நமக்குக் கெடுதல் என்று நினைத்து விடுகிறோம். முக்காலமும் தெரிந்து பார்த்தோமானால், அவள் நமக்குக் கொஞ்சம்கூடக் கெடுதலே செய்வதில்லை என்று புரியும்.

கழுதை மேலே உப்புப் பொதி போட்டுக்கொண்டு ஒருத்தன் வேற்று ஊர் சந்தைக்குப் போனான். அந்தக் காலத்தில் உப்பு மூட்டையை மாட்டு மேலே, கழுதை மேலேதான் போட்டுக்கொண்டு போவார்கள். அப்படி போனான் இந்த வியாபாரி. போகிறபோது வழியில் திடீரென்று மழை பிழித்துக்கொண்டு வெளுத்துக் கட்டி விட்டது. உப்புப் பொதி என்ன ஆகிறது?எல்லாம் கரைந்து போயிற்று. வியாபாரிக்கு ஸ்வாமி மேலே மகா கோபம் வந்துவிட்டது ஏழை என் வயிற்றில் இந்தத் தெய்வம் அடித்துவிட்டதே. கருணையில்லாத சாமியை இனிமேல் கும்பிடுவதில்லை என்று முடிவு பண்ணிவிட்டான். வீட்டுக்குத் திரும்ப நடையைக் கட்டினான், வருகிற வழி காட்டு வழி. இருந்தாலும் இவன் மாதிரி பல வியாபாரிகள் கூட வந்த தைரியதத்தில் காட்டு வழியாக வந்தான். காட்டிலே திருடர்கள் இவர்களை எதிர்ப்பார்த்துக் கொண்டு மறைந்திரு ந்தார்கள்.

சந்தையிலே விற்பனை நடத்தி வியாபாரிகள் நிறையப் பணம் கொஞ்டு வருவார்கள். துப்பாக்கியால் சுட்டு அவர்களிடம் இருக்கிற பணத்தை எல்லாம் பிடுங்கிக்கொள்ளலாம் என்று திருடர்கள் ஆசையாகக் காத்துக் கொண்டிருந்தார்கள். துப்பாக்கி வைத்துக் கொண்டிருக்கிறவர்களிடம் வியாபார்கள் எத்தனை பேர் இருந்தாலும் என்ன செய்ய முடியும்?எல்லோரும் நடுங்கிப் போனார்கள். அந்தக்

காலத்திலே தோட்டா துப்பாக்கி கிடையாது. வெடிமருந்து கொட்டித்தான் அதை வைத்து சுடுவார்கள். துப்பாக்கி சூட்டுக்கு ஆளே அகப்பட்டாலும் சரி. இல்லாவிட்டாலும் அவரவரும் உடைமைகளைப் போட்டுவிட்டுத் திக்குக்கு ஒருத்தராக ஓடி விடுவார்கள். எப்படியானாலும் திருடர்களுக்கு வேட்டைதான். இன்றைக்கும் இப்படி மருந்து போட்டுச் சுட்டார்கள். ஆனால் மருந்து வெடிக்கவேயில்லை. பெரிதாக மழை பெய்திருக்கிறது அல்லவா?தோட்டாவாக இருந்தால் எந்த மழைக்கும் ஈரம் தாக்காது. மருந்து அப்படியில்லை. ஈரம் ஜாஸ்தியானால் வெடிக்காது. துப்பாக்கியால் சுட்டதெல்லாம் வெறும் புஸ்வாணமாயிற்று. இப்போது ஆயுத பலம் இல்லாத திருடர்களுக்குப் பயம் எடுத்தது. வியாபார்கள் பணத்தை போட்டுவிட்டு ஒடுவதற்குப் பதில், திருடர்களே

துப்பாக்கியை போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தார்கள். முதலில் சொன்னேனே, அந்த வியாபாரிக்கு இப்போதுதான் தெய்வத்தை நிந்தித்தது எவ்வளவு தப்பு என்று புரிந்தது. மழை வந்ததால் உப்புதான் போச்சு. மழை வராவிட்டால் உயிரே போயிருக்கும். இந்த மழையினால் சின்ன கஷ்டத்தைத் தந்து, அதே காரணத்தினால் பெரிய கஷ்டத்திலிருந்து தப்புவித்தாய். உன் கருணையை என்னவென்று சொல்வது?என்று ரொம்பவும் மனசு உருகி வேண்டிக் கொண்டான். இப்படிக் கதை.

முந்தி என்ன, பிந்தி என்ன என்று தெரியாமல் கஷ்டம் வருகிற சமயத்தை மட்டும் பார்க்கிறோம். அம்பாளுக்குக் கருணை இருந்தால் ஏன் கஷ்டம் வருகிறது என்று கேள்வி போடுகிறோம்?முந்தி நாம் செய்த கர்மம், பிந்தி நமக்குக் இந்த கஷ்டத்தாலேயே வரப்போகிற நன்மை இவை மட்டும் தெரிந்துவிட்டால் நாம் இப்படிச் செய்ய மாட்டோம். அது தெரியாதபடி மனிதனை வைத்திருக்கிறாள். அதுவும் அவள் விளையாட்டுத்தான்.

இதெல்லாம் தெரியாதபோதே மநுஷ்யனுக்கு இத்தனை, ஆணவம், அகங்காரம் இருக்கிறதென்றால் திரிகாலமும் தெரிந்தால் இவனுடைய அதிக்ரமத்துக்கு எல்லையே இல்லாமல் போய்விடும். இவன் அடங்கிக் கிடக்கவேண்டும் என்றே இப்படி வைத்திருக்கிறாள். ஆனால் இந்த

ஸ்திதியிலும் கூட நமக்கு முந்தியும் தெரியவில்லை. பிந்தியும் தெரியவில்லை என்பதையாவது நாமே தெரிந்து கொள்ளலாம். முக்காலமும் தெரிந்த மகான்கள் சொல்வதை நம்பலாம். சகல ஜகத் வியாபாரமும் காரண கரிய ரீதியில் சட்டம் போட்ட மாதிரி நடக்கிறதைப் பார்த்தே, நம் மநுஷ்ய வாழ்க்கையும் இப்படித்தான் இருக்க வேண்டும். நாம் கஷ்டப்படுகிறோம் என்றால் அதற்குக் காரணம் இருக்க வேண்டும். இனிமேல் இந்தக் கஷ்டம் வரக்கூடாது என்றால் அவள்தான் கதி என்று புத்தி பெறலாம்.

அம்பாள் நம்மைக் கஷ்டப்படுத்தி ஸந்தோஷப்படுபவள் அல்ல. இப்படி நாம் நினைக்கவே கூடாது. எல்லாக் காலத்திலும் நமக்குப் பந்துவாக, சகாயமாக இருப்பது தாயும் தந்தையுமாய், அம்மையப்பனாக இருக்கிற அவள்தான்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*சிவத்தின் சக்தி ; நாராயண ஸஹோதரி*

பரப்பிரம்மத்தின் சக்திதான் அம்பாள். வஸ்துவின் சக்தி அந்த வஸ்துவோடு இரண்டறக் கலந்த விஷயம். வஸ்து இல்லாமல் அந்த சக்தி இல்லை. சக்தி இல்லா விட்டால் அந்த வஸ்துவும் இல்லை. ஆனபடியால் பிரம்ம தேவன் சக்தி. பிரம்மத்தை ஈஸ்வரன் என்றால் அந்த ஈசுவரனோடு இரண்டறக் கலந்திருப்பவள் அம்பாள். பூவும் வாசனையும் தனித்தனியாய் இருக்க முடியுமா?பால் வேறு, அதன் தித்திப்பு வேறு பிரிக்க முடியுமா?இப்படியே ஈசுவரனில் பிரிவறத் தோய்ந்திருக்கிறாள் அம்பாள். பரமேசுவரனும் பராசக்தியும் பிரிக்க முடியாமல் ஒன்றாயிருக்கிற ஆதி தம்பதி;சகல சிருஷ்டிக்கும் தந்தையும் தாயும் அவர்கள் தாம்.

தாய் வேறு, தந்தை வேறு என்று ஒரேடியாகப் பிரித்துச் சொல்லமுடியாமல், அம்மையப்பனாக, தாயுமானவராக இருக்கிற ஸ்வரூபம் அது. இரண்டும் இரு ரூபமாக இல்லாமல் ஒன்றாகக் கலந்த சிவ - சக்திகளே அர்த்த நாரீசுவரத் திருக்கோலம். நமக்கு அம்மா, அப்பா என்று இரண்டு ரூபங்கள் அநுக்கிரஹத்துக்கு வேண்டியிருக்கின்றன. நம்மைக் கண்டித்து உபதேசித்து ஞானத்தைக் கொடுக்கிற தகப்பனார் வேண்டும். நம்மிடம் எப்போதும் அன்பு கொண்டு ரக்ஷிக்கிற தாயாரும் வேண்டும். ஆனால் அவர்கள் வேறுவேறாகப் பிரிந்திருந்தாலோ தத்வ ரீதியில் சரியாக இல்லை. இதனால்தான் ஈசுவரனும் அம்பாளும் ஒரே ரூபத்தில் ஒரே சரீரத்தில் ஒரு பாதி அவர் மறுபாதி இவள் என்று அர்த்தநாரீசுவரராக ஆவிர்பவித்திருக்கிறார்கள்.

சம்பு என்கிற சத்தியமம் அருவமானது. அதன் உருவமே நீதான் (சரீரம் த்வம் சம்போ) என்று நம் ஆசாரியாள் அம்பாளைப் பார்த்துச் சொல்கிறார். அரூபம் ரூபமானதே அவள் சக்தியால்தான். ஆனாலும் சுத்த ஞான மயமாக இருக்கப்பட்ட அம்பாளின் பிரம்மம், அதன் அநுக்கிரஹ ரூபமான அம்பாள் இரண்டையும், தந்தையாகவும், தாயாகவும் பார்க்க வேண்டும்போல் நமக்கு ஆசையாக இருக்கிறது. இதற்காகத்தான் பரமேசுவரனுக்கும் ஒரு சகல ரூபம் இருக்கிறது. அப்புறம் தாயார், தகப்பனார் என்று முழுதும் பிரிந்து விடாமல் ஒரு பொது ரூபமும் நமக்கு வேண்டியிருக்கிறது. இதற்காகவே இவரும் சேர்ந்து வலப்பாதி பரமேசுவரனாகவும் இடப்பாதி அம்பாளாகவும்

அர்த்தநாரீசுவர ரூபம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பாஸிடீவ், நெகடீவ் என்கிற இரண்டாக ஒரே எலெக்ரிஸிட்டி இருப்பதுபோல் ஒரே பரம சத்தியம் அர்த்தநாரீசுவர ரூபம் கொண்டிருக்கிறது.

அர்த்தநாரீசுவரர் கோலத்தைப் பார்க்கிறபோது, பிறப்புக் காரணமான காமனைத் தகனம் செய்த நெற்றிக் கண்ணில் பாதி சம்பந்தம் அம்பாளுக்கு இருக்கிறது. இறப்புக்குக் காரணமான காலனை உதைத்து ஸம்ஹாரம் பண்ணின இடது காலோ முழுக்கவும் அவளுடையதாக இருக்கிறது. இதிலிருந்து, ஜனன மரணச் சூழலிலிருந்து ஜீவனை விடுவிக்கிறவள் அவள்தான் என்று தெரிகிறது.

சிவனும் சக்தியும் பிரிக்க முடியாதவை என்பதையறிந்து, ஸ்வாமி அம்பாள் இருவரிடத்திலும் ஒரே போன்ற பக்தி வைக்க வேண்டும். ஒருத்தரை ஒதுக்கி மற்றவரிடம் மட்டும் பக்தி வைத்தால் போதாது என்பார்கள். இரண்டு பேரிடமும் சேர்ந்து அன்பு வைக்கிற போதுதான், அவர் அவளுக்கு ஆதாரமாக இருக்கப்பட்ட அவளுடைய பாதி, அவள் அவரை விட்டு நீங்க முடியாத அவளுடைய சக்தி என்கிற ஞானம் நீங்காமல் இருக்கும். இருவரில் ஒருவரை ஒதுக்கிவிட்டால் இந்த ஸதி - பதி உறவு மறந்துபோய், பக்தி விபரீதமாகிறது. சூர்ப்பனகை சீதையைத் துவேஷித்து ராமரிடம் மட்டும் வைத்த அன்பும், ராவணன் ராமரைத் துவேஷித்து ஸீதா தேவியிடம் மட்டும் வைத்த அன்பும் விபரீதமாகி காமமாக ஆயின என்று உங்களுக்குத் தெரியும். பலனும் விபரீதமாகவே ஆயிற்று. இப்படி விபரீத பலன்கள் இல்லாமல், பூரண அநுக்கிரஹம் வேண்டுமானால், அம்பாளும் ஈஸ்வரனும் அர்த்தநாரீசுவரராக இருப்பதை எந்நாளும் மறக்காமல் பக்தி செலுத்த வேண்டும். அவர் மாதொரு பாகன், அவள் பாகம் பிரியாள் என்பதை நினைவு கொண்டு இருவரிடமும் அன்பு வைக்க வேண்டும்.

அர்த்த நாரீசுவர ரூபத்தில் எந்த இடது பக்கம் அம்பாளுடையதாக இருக்கிறதோ, அதுவே சங்கர நாராயண மூர்த்தத்தில் மஹாவிஷ்ணுவுடையதாக இருக்கிறது. இதிலிருந்து அம்பாளேதான் மஹாவிஷ்ணு என்றாகிறது. திருவையாற்றில் உள்ள ஈஸ்வரனைப் பற்றித் துதிக்கிறபோது, அவருக்கு ஹரியைத்தவிர வேறு பத்தினி இல்லையென்று

அப்பர் ஸ்வாமிகள் சொல்கிறார்.

அரியலால் தேவியில்லை

ஐயன் ஐயாறனார்க்கே

அம்பாளும் மஹாவிஷ்ணுவும் ஒன்றேதான் என்கிற தத்துவத்தையே புராண ரீதியில் சொல்கிறபோது அவளை நாராயண ஸஹோதரி என்கிறோம்.

அர்த்தநாரீசுவரர் ஆகட்டும், சங்கர நாராயணர் ஆகட்டும், இரண்டிலும் வலது பக்கம் பரப்பிரம்ம ஸ்வரூபமான பரமேசுவரனே இருக்கிறார். வலது என்பதை எலெக்ரிஸிட்டியில் பாஸிடிவ் என்று வைத்துக்கொண்டால் இடப்பக்கம் நெகடிவ் ஆகிறது. பாஸிடீவ் சக்தி ஒரு மையக்கருவாக இருக்க, நெகடீவ் சக்தி அதைச் சுற்றி அதிவேகமாகச் சுழன்றுகொண்டிருப்பதாக அணு விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். உலகம் எல்லாவற்றுக்கும் ஆதாரமாக, ஆனால் காரியமேயில்லாமல் இருக்கிற நிற்குணமான பிரம்மத்தை மையமாக, ஆதாரமாகக் கொண்டு உலகத்தை எல்லாம் சிருஷ்டித்து நடத்திக் காரியத்தைச் செய்து வருகிற சர்குணமான சக்தி இயங்குவது பாஸிடீவைச்சுற்றி நெகடீவ் சுழலுகிறதுதான். இதுவே ஆராதனைக்காக ஒரு மூர்த்தியாக வருகிறபோது, மத்திய நியூக்ளிகஸ் - சுற்றி வருகிற சக்தி என்றில்லாமல் வலது பக்கம், இடது பக்கம் என்று இரண்டு கூறுகளாக திவ்ய ஆகாரம் (வடிவம்) எடுத்துக் கொள்கிறது. இதில் வலது பாஸிடிவ், செயலில்லாத ஆதார பிரம்மம். இடது நெகடிவ், சகல காரியங்களுக்கும் மூலமான பிரம்மத்தின் சக்தி. இடது கூறு அர்த்தநாரீசுவர ரூபத்தில், ஸ்திரீ ரூபமாகி அம்பாளாயிருக்கிறது. சங்கர நாராயண வடிவத்தில் புருஷ ஆகாரம் கொண்டு ஸ்ரீமகா விஷ்ணுவாக இருக்கிறது.

திருமங்கையாழ்வார் பெருமானைப் பற்றிப் பாடுகிற போது,

'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து'

என்கிறார். பெருமாள் தமக்கு வலப் பாதியில் ஈசுவரனை வைத்துக் கொண்டிருக்கிறார் என்றால், ஈசுவரனின் இடப்பாகத்தில் பெருமாள் இருக்கிறார் என்றுதான் அர்த்தம்.

காரியமில்லாமல், கேவல ஞான மயமாக இருக்கிற பிரம்மத்தைப் பரமேசுவரன் என்றால், சகல ஜகத் காரணமாகிற மாயா தத்வத்தையும், இதிலிருந்து விடுவிக்கிற காருண்யத்தையும் அம்பாள் என்றோ மகாவிஷ்ணு என்றோ சொல்கிறோம். பரமேசுவரனுடைய சக்தி அவள். ஸாக்ஷாத் நாராயணனே அவள்.

இதைப் பௌராணிகமாகச் சொல்கிறபோது, அவளை ஈஸ்வரனுக்குப் பத்தினி என்றும், மஹாவிஷ்ணுவுக்குத் தங்கை என்றும் பார்க்கிறோம். அம்பாளை சிவ சக்தி ஐக்ய ரூபிணி என்று சொல்லி முடிக்கிற லலிதா ஸஹஸ்ரநாமத்தில் இன்னோர் இடத்தில் பத்மநாப ஸகோதரி என்று கூறியிருக்கிறது. அம்பாளைத் தவிர வேறெந்த தேவதா பேதத்தையும் பாடாத ஸ்ரீ சியாமா சாஸ்திரிகள், தம் கீர்த்தனங்களிலெல்லாம் அவளை சியாம கிருஷ்ண சகோதரி என்றே அழைத்து,

இதையே தம் முத்திரையாக வைத்திருக்கிறார்.

கிருஷ்ணாஷ்டமியின் போதே யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்த விஷ்ணப மாயை அவள்தான். ஸ்ரீராம நவமியின் போதோ அவள் ஞானாம்பிகையாக அவதரித்த வஸந்த நவராத்திரி நிகழ்கிறது. விஷ்ணு அவதரித்த போதே இவளும் அவதரித்தாள் என்றால் இரண்டும் ஒன்று அல்லது உடன்பிறப்புகள் தானே.

ஆண்டாள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைக் கல்யாணம் செய்து கொள்வதாக சொப்பனம் கண்டு, அதைப் பாசுரமாகப் பாடியிருக்கிறாள். அதிலே வைதிகப் பிராம்மண சம்பிரதாயப்படி, தனக்கு நாத்தனார் கூறைப் புடவை கட்டி மாலை போட்டு முகூர்த்தப் பந்தலுக்கு அழைத்து வந்ததாகச் சொல்கிறபோது, கிருஷ்ணனின் சகோதரியான அம்பாளே இப்படி நாத்தனார் ஸ்தானம் வகித்ததாக ஆணாடள் பாடியிருக்கிறாள்.

மந்திரக் கோடி உடுத்தி மணமாலை

அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழிநான்

(அந்தரி என்றால் அம்பாள்)

இப்படி அம்பாளை ஒரு பக்கம் ஈசுவரனோடு அபேதமாகவும், இன்னொரு பக்கம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவோடு அபேதமாகவும், ஒருத்தருக்குப் பத்தினி, இன்னொருத்தருக்கு சகோதரி என்று பாவித்துப் பழகிவிட்டால், அப்புறம் ஈஸ்வரனுக்கும் பெருமாளுக்குமிடையே உசத்தி - தாழ்த்தி செலுத்தவே மாட்டோம். சைவ, வைஷ்ணவம் பிணக்கு அறுந்தே போகும்.

காரியமில்லாத நிலையில் இருக்கிற ஒரே வஸ்து காரியமாகிறபோது பல ரூபங்களாகிறது. இந்த ரூபங்களிடையே ஒன்றுக்கொன்று உசத்தி - தாழ்த்தி இல்லை. அதே மாதிரி இந்த ரூபங்களுக்கும் இவை எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கப்பட்ட ஒரே ஸத்யத்துக்கும் இடையிலும் வேறுபாடே இல்லை. இந்த ஞானம் நமக்கு வந்துவிட்டால், நம் மதத்தில் சண்டை, சச்சரவு, அபிப்பிராய பேதம், பிணக்கேயில்லாமல் ஆகும். ஈசுவர பத்தினியாகவும், பத்மநாப ஸஹோதரியாகவும் இருக்கிற அம்பாள்தான் இந்த சமரஸ பாவனையை நமக்கு அநுக்கிரஹிக்க வேண்டும்.

அம்பிகையின் ரூபங்கள் பலதினுஸாக கோயில்களில் இருக்கின்றன. அதிலே ஒன்று சிவாலயங்களில் கோஷ்ட தேவதையாக இருக்கிற துர்க்கை. சிவன் கோயில்களில் கர்ப்பக்கிருஹத்தைச் சுற்றி விநாயகர். தக்ஷிணா மூர்த்தி, மஹாவிஷ்ணு (அல்லது லிங்கோத்பவர்), பிரம்மா, துர்க்கை ஆகிய மூர்த்திகள் இருக்கின்றன. இவர்களில் தக்ஷிணாமூர்த்திக்குப் பத்தினி கிடையாது. இது அம்பாளின் சம்பந்தமில்லாமல் ஸ்வச்சமாகத் தான் மட்டுமே ஸ்வாமி இருக்கிற கோலம். இப்படியே துர்க்கைக்கும் பதி ஸ்தானத்தில் எவரையும் சொல்லத் தெரியவில்லை. தனி அம்பாளாக அவள் இருக்கிறாள். தக்ஷிணாமூர்த்தியின் கைகளில் ஜபமாலையும், சுவடியும் வைத்துக் கொண்டிருக்கும் ஸ்திரீ தேவதை ஸரஸ்வதி சகோதரர்கள் ஒரேமாதிரி இருக்கிறார்கள். அதனால் ஸரஸ்வதி சிவனின் சகோதரி. இருவரும் ஞான மூர்த்திகள். பிரம்மா தாமரரைப் பூவில் அமர்ந்திருக்கிறார். அவரது வர்ணம் உருக்கிவிட்ட தங்கத்தின் நிறம். இதேமாதிரி

ஸ்வர்ண வர்ணத்தோடு தாமரைப் பூவில் அமர்ந்திருக்கிறாள் மஹாலக்ஷ்மி. பிரம்மா பிரஜைகளை சிருஷ்டித்துக் கொண்டேயிருக்கிறார் என்றால், லக்ஷ்மியோ ஐசுவரியத்தைப்

பெருக்கிக்கொண்டேயிருகக்கிறாள். இவர்கள் இருவரும் உடன் பிறந்தவர்கள்.

இப்போது புருஷ சம்பந்தமில்லாமல் தனியாக இருக்கிற அம்பாளான துர்க்கை அம்மன் எப்படியிருக்கிறாள்.?நீலமேக சியாமலமாக இருக்கிறாள். கையிலே சங்கும் சக்கரமும் வைத்திருக்கிறாள். மகிஷாசுரன் போன்ற பல ராக்ஷதர்களை சம்ஹரித்திருப்பவள் இவள்தான். இதையெல்லாம் பார்த்தால் ஸ்ரீமஹாவிஷ்ணுவே இவளுடைய சகோதரர் என்று சொல்லாமலே புரியும். இதே வர்ணம், இதேமாதிரி சங்கு சக்கரம், அசுரர்களை சம்ஹரிப்பதற்காக என்ற திரும்பத் திரும்ப அவதாரங்களை எல்லாம் மகாவிஷ்ணுவிடமே காணப்படுகின்றன. பரம கருணையினால் இருவரும் இப்படி துஷ்ட நிக்ரகம் செய்கிறார்கள். இந்த மாயப் பிரபஞ்சத்தை லீலா விநேதமாக நடத்துவது இந்த இருவரும்தான். மாயோன், மாயோன் என்றே அவரைச் சொல்வார்கள். இது சங்க காலத்திலிருந்து தமிழ்நாட்டில் உள்ள பெயர். மாயாவி, மாயா நாடக சூத்திரதாரி என்று புராணங்கள் சொல்லும். அவளையோ மஹாமாயை என்றே சொல்கிறோம். மற்ற சகோதர ஜோடிகளைவிட இந்த இரண்டு பேரும் ரொம்பவும் நெருக்கமாக இருக்கிறார்கள் - ஒன்று என்றே சொல்லிவிடலாம்போல்!மேலே நான் சொன்ன துர்க்கைக்கு விஷ்ணு துர்க்கை என்றே பேர் இருக்கிறது. லோகத்திலும் அம்பாள் விஷ்ணுவின் சகோதரி என்பது சகலருக்கும் தெரிந்திருக்கிற அளவுக்கு ஸரஸ்வதி சிவசகோதரி என்பதோ, லக்ஷ்மி பிரம்மாவின் சகோதரி என்பதோ பிரச்சாரமாயிருக்கவில்லை.

மாயம் செய்வதை முக்கியமாக பெண்பாலாகவே கருதுவது மரபு. மஹாவிஷ்ணுவிடத்தில் இந்த அம்சம் தூக்கலாக இருக்கிறது. அதனால்தான் அவர் அமிருதத்தைப் பங்கீடு பண்ணினபோது மோஹினியைப் பரமேசுவரனே கல்யாணம் செய்துகொண்டிருக்கிறார். விஷ்ணு க்ஷேத்திரங்களில் ஜகத் பிரசித்தமாக இருக்கிறது திருப்பதி. வேங்கடரமண ஸ்வாமியைப் பார்த்தாலும் ரொம்ப அம்பாள் சம்பந்தமாக இருக்கும். அங்கே பெருமாளுக்குப் புடவைதான் உடுத்துகிறார்கள். சுக்ரவாரத்தில் அபிஷேகம் பண்ணுகிறார்கள். மற்றப் பெருமாள் கோயில்களில் கருடன் இருக்கிறது பல இடங்களில். இங்கு மட்டும் சிம்மங்கள்

இருக்கின்றன. சிம்மம் அம்பிகையின் வாகனம்.

அம்பாளும், மகாவிஷ்ணுவும், பரமேசுவரனும் மூன்று ரத்தினங்கள். "ரத்ன த்ரய பரீக்ஷா"என்றே ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் ஒரு கிரந்தம் செய்திருக்கிறார். இந்த மூன்றும் ஒரே பரம சக்தியத்தின் மூன்று ரூப பேதங்கள்தான். அம்பாள் மற்ற இரண்டு பேரோடும் பிரிக்க முடியாமல் சம்பந்தப்பட்டிருக்கிறாள். ஒருத்தருக்குப் பத்தினியாகவும் இன்னொருத்தனுக்கு ஸகோதரியாகவும் இருக்கிறாள். இந்த மூன்று மூர்த்திகளிடமும் உயர்வு தாழ்வு கற்பிக்காத பக்தி வேண்டும். எல்லாவற்றுக்கும் அடிப்படையாக இருக்கிற சத்தியம் (Truth) சிவம் என்றும், அம்பாள் அல்லது விஷ்ணு என்றும் புரிந்து கொண்டு பக்தி செலுத்த வேண்டும்.

அம்பாளுக்கும் மஹாவிஷ்ணுவுக்கும் பேதமில்லை என்பதைத் தத்துவ

ரீதியில் சொன்னேன். இப்போது உங்களுக்குத் தெரியாத ஒரு கதை சொல்கிறேன். ராமாயணம் உங்கள் எல்லோருக்கும் தெரிந்த கதைதான். ஆனால் அந்தத் தெரிந்த கதையையே உங்களுக்குத் தெரியாத மாதிரி சொல்கிறோன். வால்மிகி, கம்பர், துளசீதாஸர் எழுதியவை தவிர, ஆனந்த ராமாயணம், அற்புத ராமாயணம், துர்வாஸ ராமாயணம் என்றெல்லாம் பல இருக்கின்றன. அதில் ஏதோ ஒன்றில் இந்த விஷயம் இருக்கிறது.

அம்பாள்தான் ஸ்ரீமானாக அவதரித்தாள் என்பது கதை. ஈசுவரனே ஸீதையாக உடன் வந்தார். ஸ்ரீராமன் நல்ல பச்சை நிறம். மரகதமணி வர்ணன் என்பார்கள். அம்பிகையை மாதா மரகத சியாமா என்கிறார் காளிதாஸர். முத்துஸ்வாமி தீக்ஷிதரும் மரகதச்சாயே என்று மீனாக்ஷியைப் பற்றிப் பாடுகிறார்.

சிருஷ்டி, ஸ்திதி சம்ஹாரத்தைத் தாண்டி மூல காரணமாக இருக்கிறபோது பராசக்தி செக்கச் செவேல் என்று இருந்த போதிலும், மும்மூர்த்திகளில் ஒருத்தருக்குப் பத்தினியாகிப் பார்வதியாக இருக்கிறபோது பச்சையாகத்தான் இருக்கிறாள். இவள்தான் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியாக வந்தாள். பரமேசுவரன் ஸீதா தேவியானார்.

பழைய காலத்தில் சின்ன வயசிலேயே குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்வார்கள். அப்போது ஹோமம் முதலிய கர்மங்களால் குழந்தைகளுக்கு அலுப்புத் தட்டிவிடப் போகிறதே என்று குஷிப்படுத்துவதற்காக விளையாடல், ஊஞ்சல், நலங்கு, ஊர்வலம் என்றெல்லாம் வைத்திருந் தார்கள். ஊர்வலத்தின் போது கல்யாணப் பெண்ணுக்கு ஆண் வேஷமும், மாப்பிள்ளைக்குப் பெண் வேஷமும் போடுவார்கள். இந்த மாதிரி, லோகத்தில் ராக்ஷஸ பயத்தைப் போக்கி விளையாட்டாக ஊர்வலம் வருவதற்கு அம்பாள் ராமனாகவும், ஈசுவரன் ஸீதையாகவும் வேஷம் போட்டுக் கொண்டார்கள். இது ஒருத்தருக்கும் தெரியாது. ஸ்ரீராமனும் ஸீதையும்கூட இதை மறந்தே போனதுபோல் இருந்தார்கள். ஆனால் ரொம்பவும் உணர்ச்சி வேகம் ஏற்பட்டால் மனஸின் அடியிலே எங்கோ மறைந்திருப்பதுகூட வெளியிலே வெடித்துவிடுகிறது அல்லவா?இப்படி ஒரு கட்டம் ராமாயணத்தில் வருகிறது.

ஸ்ரீராமன் ஸீதையை விட்டுவிட்டுக் காட்டுக்குப் போவது என்று தீர்மானம் பண்ணிவிடுகிறார். அப்போது தேவிக்கு உணர்சி பீறிக்கொண்டு வந்துவிடுகிறது. காட்டிலே துஷ்டர் பயம், மிருக பயம் இருக்கிறது என்பதால் பெண்டாட்டியை அவைத்துப் போக மறுக்கிறாரே, இவரும் ஒர் ஆண் பிள்ளையா என்று ஸ்வாதினத்தில் அவளுக்கு மகா கோபம் வர, அந்த வேகத்தில் ஓர் உண்மையைச் சொல்லி விடுகிறாள்.

உம்மை மாப்பிளையாக வரித்த என் பிதா ஜனகர் நீர் புருஷ வேஷத்தில் வந்திருக்கிற ஒரு ஸ்திரீ (ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்) என்பதைத் தெரிந்து கொள்ளாமல் போனாரே!, என்று ராமனைப் பார்த்து சண்டை போடுகிறாள் ஸீதா தேவி. இது சாக்ஷாத் வால்மிகி ராமாயணம்.

ஸ்ரீராமனுக்கு அவர் அம்பாள்தான் என்பதை இப்படி சூக்ஷ்மமாக ஞாபகப்படுத்திவிட்டாள் ஸீதை. உடனே அவருக்கு அவதாரக் காரியம் நினைவிற்கு வந்தது. ராக்ஷஸ சம்ஹாரம் செய்ய வேண்டும் என்ற நினைப்பு வந்ததும், அதற்கு அநுகூலமாகவே விளையாட்டு நடப்பதற்காக ஸீதையை அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போனார்.

இவரால் சம்ஹரிக்கப்பட்ட வேண்டிய ராவணனோ பெரிய

சிவ பக்தன். ஆதியில் அவனுக்கு சிவனையே கைலாஸத்திலிருந்து இலங்கைக்கு இழுத்துக் கொண்டு வந்து அசோக வனத்தில் வைத்து பூஜை செய்ய வேண்டும் என்று ஆசை. அதற்காகத்தான் கைலாஸத்தைப் பெயர்த்துப் பார்த்தான். அப்போது அம்பிகை பயந்து ஈஸ்வரனைக் கட்டிக் கொள்ள அவர் விரல் நுனியால் மலையை அழுத்தி விட்டார். தப்பினோம் பிழைத்தோம் என்று இராவணன் இலங்கைக்கு ஒடி வந்தான். மகா சிவ பக்தனாதலால் அவனுக்குக் தன்னுடைய ஈசுவரன்தான் ஸீதையாக வந்திருக்கிறார் என்று தெரிந்து விட்டதாம். முன்பு அம்பாளால்தான் தன் காரியம் கெட்டுப்போச்சு என்கிற கோபத்தில், இப்போது அவன் தலையீடு இருக்கக்கூடாது என்றே ராமரை அப்புறப்படுத்திவிட்டு ஸீதையை தூக்கி வந்து அசோக வனத்தில் வைத்தானாம். ஆனாலும் ராக்ஷஸ அறிவானதாலும் அம்மையப்பனான ஜோடியில் ஒன்றை விட்டு ஒன்றை மட்டும் பிடித்துக் கொண்டதாலும் ராவணனுடைய அன்பு விகாரப்பட்டுக் காமமாயிற்று. இருந்தாலும் சிவபக்தியினால் இவனுக்கு அவதார ரகசியம் அவ்வப்போது துளி தெரிந்தது. ஆஞ்சநேயரைப் பார்த்தவுடனே ராவணன், இவன் யார்?நந்தியம் பெருமானா?என்று நினைக்கிறான். கிமேஷ பகவான் நந்தீ?என்பது வால்மீகி ராமாயண வசனம். ஸீதா ராமர்களின் பரமதாஸனாக இருக்கப்பட்ட ஹநுமாரைப் பார்த்ததும் கைலாஸத்தில் ஸ்வாமிக்கும் அம்பாளுக்கும் தாஸனாக இருக்கிற நந்திதான் அவர் என்பது புரிந்ததுபோல ராவணன் பேசுகிறான்.

அம்பாளே நாராயணன் என்பதற்காக இந்தக் கதை எல்லாம் சொல்கிறேன். இரண்டும் ஒன்றாக இருக்கட்டும்!ஆனால் நாராயணன் என்கிற புருஷ ரூபம் அம்பாளின் ஸ்திரீ ரூபம் இரண்டும் நன்றாக இருக்கின்றனவே. இரண்டையும் வைத்துக் கொள்ளலாமே என்று தோன்றுகிறது. அப்போது அவர்களை சகோதரர்களாக வைத்துக் கொள்ளலாம். அம்பாளை நாராயண சகோதரி என்று சொல்வதற்குப் புராணக் கதைகள் எல்லாம் பக்கபலமாக இருக்கின்றன.

ஆசைகள் அத்தனை அனர்த்தத்துக்குக் காரணம். ஆசைதான் காமம் என்பது. ஆசைப்பட்டது கிடைக்காவிட்டால் குரோதம், சோகம் எல்லாம்

உண்டாகின்றன. காமத்தில் பிறப்பு உண்டாகிறது. குரோதத்தால் நம்மை நாமே கொன்று கொள்கிறோம். எனவே ஜனன மரணத்திலிருந்து விடுபட வேண்டுமானால் நம்மைக் காமமும் குரோதமும் அண்ட விடக்கூடாது. மழை ஜலம் உள்ளே புகவொட்டாமல் நல்ல டஃபேடோ குடைத்துணி காப்பாற்றுகிறது. அதை வாட்டர் ப்ரூஃப் என்கிறோம். இதே மாதிரி நமக்குக் காம ப்ரூஃபாக, க்ரோத ப்ரூஃபாக ஒரு கவசம் இருக்கிறதா என்றால், இருக்கிறது.

அம்பாளின் கிருபைதான் அந்தக் கவசம். நமக்கு ரொம்பப் பணம் இருக்கலாம். செல்வாக்கு இருக்கலாம். பவிஷு கியாதி இருக்கலாம். அழகு ஆரோக்கியங்கள் இருக்கலாம். இவையெல்லாம் அம்பாள் அநுக்கிரஹத்தால் கிடைத்ததாக நாம் சொல்லிக் கொள்ளலாம். ஓரளவுக்கு அப்படி சொல்வது வாஸ்தவம்தான். ஆனாலும் ஆசையும், வெறுப்பும், பயமும், துக்கமும்

மனஸிலிருக்கிற வரையில் இதுகள் எல்லாம் கிடைத்துதான் என்ன?ஆனபடியால் உண்மையில் அம்பாள் அநுக்கிரஹம் இருப்பதற்கு அடையாளம் நம்மை, ஆசையும், துவேஷமும், பயமும் அழுகையும் தொடாமல் இருப்பதுதான்.

துவேஷம், பயம், அழுகை அவைகளுக்கும் மூலக்காரணம் நான், நான் என்று ஒன்றிடம் ஆசைதான். காமம்தான். எனவே காமம் ஒன்று தொலைந்தால் போதும். அத்தனை அனர்த்த பட்டாளமும் தொலைந்து போனதாக ஆகிறது. அதன்பின், இந்த உலகத்தில், இந்தச் சரீரத்தில் நாம் இருக்கிற போதே மோக்ஷ ஆனந்தம்தான்.

காமேசுவரி என்றும் காமாக்ஷி என்றும் பெயர் படைத்த பராசக்தியை மனமுருகிப் பிரார்த்தித்தால் அவள் நம் காமத்தை அடியோடு துவம்ஸம் செய்துவிடுகிறாள். காமேசுவரி தான் பஸ்பமாகிவிட்ட காமனை மறுபடி உண்டாக்கியவள். அதன்பின் காமதகனம் செய்த பரமேசுவரனுக்குக் காமம் பொங்குகிற மாதிரி தன் கண்களில் பிரமை பொங்கப் பார்த்தவள்தான் காமாக்ஷி. இவளுடைய அநுக்கிரஹத்தால் நமக்குக் காம ஐயம் ஏற்படுமென்றால் ஒன்றுக்கொண்று முரணாகத் தோன்றுகிறது. ஆனால் முரண் இல்லை. பரப்பிரம்ம லோகப் பிரக்ஞையே இல்லாமல் இருந்துவிட்டால், மாயா லோகத்தில் மாட்டிக்கொண்டிருக்கிற

நாம் எப்படி விடுபடுவது?நம்மை விடுவிக்கவே அததற்குக் காருண்யம் உண்டாகிறது. இந்தக் காருணையைத்தான் பரமேசுவரனுக்கு உண்டான காமம் என்று சொல்கிறோம். இந்தக் கருணை உணர்வு அவருக்குப் பிறப்பதற்குக் காரணமாக இருந்த சக்தியை காமாக்ஷி என்கிறோம். ஸமஸ்த ஜீவராசிகளும் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்ற காமம் தவிர, வேறு ஒரு ஆசையும் இல்லாத பரம அன்பு லீலை அது.

காமனை எரித்த பரமேசுவரனின் பாதியாக அவள் இருப்பதால், நெற்றிக் கண்ணில் பேர்பாதி அவளுடையது - அவள் ஜீவப்பிரபஞ்சத்தின் காமத்தை பஸ்பமாக்குகிறாள். சிவனுக்குக் காமமூட்டிய நீயே பக்தர்களின் காமத்தை நாசம் செய்கிறாய் என்று மூகர் அடிக்கடி சொல்வார்.

காம தகனம் செய்த சிவத்தின் சக்தி என்பதால் காமத்தை அவள் எரிக்கிறாள். நாராயண சகோதரியாகவும் இருக்கிறவள் அவள். நாராயணனோ சாக்ஷாத் மன்மதனின் பிதாவாக இருக்கிறார். பலபேருக்குப் பிரம்மா மகாவிஷ்ணுவின் பிள்ளை என்பது மட்டுமே தெரியும். ஆனால் மன்மதனுக்கும் அவள் பிள்ளைதான். மோஹினியாக வந்தபோது அவர் பரமேசுவரனிடமே ஐயப்ப சாஸ்தாவை ஒரு புத்திரனாகப் பெற்றார். சிவ - சக்தி சேர்த்து பிறந்த சுப்ரமணியர் போன்றவர் சிவ - விஷ்ணு சேர்ந்து ஜனித்த ஐயப்பன். எனவே பரம ஞானமூர்த்தியாக இருக்கிறார். ஆனால் பிரம்மாவோ ஜன்மாவுக்குக் காரணமாக இருக்கிறார். ஒரு ஜந்து ஜனிக்கக் காரணமாக இருக்கிற காமத்தைத் தூண்டுகிறவனே மஹாவிஷ்ணுவின் இன்னொரு பிள்ளையான மன்மதன். சகல ஜீவராசிகளையும் காமத்தில் தள்ளி ஆட்டிப்படைக்கிற வல்லமை அவனுக்கு இருக்கிறது.

எரித்த காமனை மறுபடியும் உயிர்ப்பித்த காமாக்ஷி காமத்தைப் போக்குகிறாள் என்றேன். இதே மாதிரி காமனைப் படைத்தவர் மஹாவிஷ்ணு

என்றால், நம் காமங்கள் போக அவர் அநுக்கிரஹிப்பாரா?நிச்சயம் அநுகிரஹிப்பார். ஸ்ரீராமன் யார்?மஹாவிஷ்ணுவின் அவதாரம். ராமன் என்று சொன்னால் அங்கே காமன் வரமாட்டான், என்கிறோம். ராம ராம ராம என்று சொல்லிச் சொல்லியே காமாதி

அறுபகைகளை ஒழித்த மகான்கள் பலர் உண்டு. அவரும் காமனும் அப்பா - பிள்ளையாயிற்றே, ஏன் இப்படி என்று கேட்கலாம். அப்பாவிடம் பிள்ளைக்கு உள்ள அபரிமித மரியாதையாலேயே, அவர் இருக்கிற இடத்துக்கு வரமாட்டான். அங்கேதான் வாலைச் சுருட்டிக் கொண்டுவிடுவான். துளஸீதாஸர் இப்படித்தான் வேடிக்கையாகப் பெரிய தவத்தைச் சொல்கிறார். சிவபெருமானிடம் பயத்தினால் அவரது அடியார்களைக் காமன் நெருங்க மாட்டான். மஹாவிஷ்ணுவிடம் மரியாதையினாலேயே அவரது பக்தர்களிடம் தன் கைவரிசையைக் காட்ட மாட்டான்.

நர நாராயணர்கள் என்பதாக மஹாவிஷ்ணு இரட்டை அவதாரம் செய்தார். இவர்கள் பத்ரிகாச்ரமத்தில் தபஸ் செய்தபோது, நரனுக்கு மகா கோபம் வந்தது. பகவானின் அம்சமாயினும் நரன் என்ற பேருக்கு ஏற்றபடி, இவருக்கு மநுஷ்ய சுபாவத்தினால் கோபம் வந்துவிட்டது. ஹூம் என்று ஓர் உறுமல் போட்டார். அந்த ஹூங்தாரத்தினால் எங்கே பஸ்பமாகிவிடுவோமா என்று பயந்து, அப்ஸரஸ்கள் அவரைவிட்டு, நாராயணர் தபஸ் செய்கிற இடத்துக்கு ஒடி வந்தார்கள். இங்கே வந்து தங்கள் சாமர்த்தியத்தைக் காட்ட ஆரம்பித்தார்கள். நாராயணருக்கோ கொஞ்சம்கூடக் காமம் கிடையாது. அது மட்டுமில்லை. நரர் மாதிரி இவருக்குக் கோபமும் கிடையாது. எனவே சிரித்துக் கொண்டு விளையாட்டாகத் தமது தொடையைத் தட்டினார். நாராயணின் தொடையிலிருந்தே ஊர்வசி (ஊருதொடை) தோன்றினாள். அவளுடைய ஒப்பில்லாத ரூப லாவண்யத்தைக் கண்டு, தேவலோக நாட்டிய ஸ்திரீகள் வெட்கி, இவரிடம் நம் சக்தி பலிக்கவே பலிக்காது என்று உணர்ந்தார்கள். அப்ஸரர்களும் வெட்கும்படியான அத்தனை பெண்ணழகைக் தமக்குள் வைத்துக்கொண்டே அவர் பரம பரிசுத்தமான தபஸ்வியாக இருந்திருக்கிறார்!அவரையே ஆதாரமாகக் கொண்டு, இவரிடமிருந்த பிறக்கிற அழகு தன் கைவரிசையை அவரிடமே காட்ட முடியுமா?இதுதான் தாத்பரியம்.

அதே மாதிரி, பிரம்மாவும், மன்மதனும் விஷ்ணுவிடமிருந்து வந்ததாலேயே அவர் ஜன்மத்தை, காமத்தைப் போக்குகிற சக்தி படைத்தவராக இருக்கிறார்.

நாராயண சகோதரியான அம்பாள் சிவனின் சக்தியாகக் காமனைப் போசுக்கினாள். அவளே எரிந்துபோன காமனுக்குப் புனர்ஜன்மா கொடுத்து அவனைப் படைத்தாள். அவனை ஆக்க, அழிக்க இரண்டுக்கும் அவள் சக்தி பெற்றவள் என்பதிலிருந்து அவன் அவள் ஆக்கத்திலிருக்கிறவன்தான் என்றாயிற்று. எனவே, அவனுடைய அடியார்களை அண்டமாட்டான். இதனால்தான் காமாக்ஷியை உபாஸிப்பவர்கள் காம ஜயம் செய்கிறார்கள்.

நாம் ஏதாவது கெடுதல் வந்தால் சிவா சிவா என்கிறோம். கேட்கக்கூடாததைக் கேட்டால் சிவா சிவா என்று காதைப் பொத்திக் கொள்கிறோம். மூகரோ ரொம்பவும் நல்லதாக இருக்கிற ஓர் அதிசயத்தைப் பார்த்து, ஆஹா ஆஹா என்று சொல்வதற்குப் பதில் சிவ சிவ என்கிறார்.

சிவசிவ பசயந்தி ஸமம்

ஸ்ரீகாமாக்ஷி கடாக்ஷிதா:புருஷா:

ஸ்ரீகாமாக்ஷியம்மாளின் கடாக்ஷத்தைப் பெற்றவர்கள் விஷயத்தில் எத்தனை அதிசயங்கள் நடந்துவிடுகின்றன. சிவ சிவ என்கிறார். என்ன அதிசயம் என்றால், நமக்கு எல்லாம் வேறு வேறாகத் தெரிகிறபோது அவர்களுக்கு எல்லாம் சமமாகத் தெரிகிறதே!என்று வியக்கிறார்.

சமத்துவம் சமத்துவம் என்று இந்தக் காலத்தில் வாய்ப்பேச்சில் நிறையச் சொல்கிறோம். ஆனால் ஞானமில்லாமல், வெறும் பால்டிக்ஸாகச் சொல்கிறோம். காரியத்தில் இது முக்கால்வாசி பொய்யாகவே இருக்கிறது.

காமாக்ஷியின் கடாக்ஷம் பெற்றவனுக்கோ அத்வைத ஞானமே சித்தித்து விடுகிறது. அவனுக்குப் பார்ப்பதெல்லாம் ஒரே பரம்பொருள்தான். சத்தியமான சம தரிசனம் அவனுக்குத்தான் இருக்கிறது.

அவனுக்குக் காடும் வீடும் ஒன்றாகிவிட்டது என்கிறார் மூகர். அவனுக்குக் குரோதம் என்பது கொஞ்சம்கூட இல்லை. எனவே மித்திரனும் சத்துருவும் சமமாகி விட்டார்களாம்!

காமமும் அவனை விட்டு அடியோடு அகன்றுவிட்டது. யுவதியின் சிவந்த உதடும், மண்ணாங்கட்டியும் அவனுக்கு

சமமாகிவிட்டன என்கிறார் மூகர். லோஷ்டம் ச யுவதி பிம்போஷ்டம்

என்று பிராஸம் போட்டு அழகோடு சொல்கிறார்.

லோஷ்டம் மண்ணாங்கட்டி;ஓஷ்டம் - உதடு (உதடு பெரிதாகித் தொங்கிக்கொண்டிருக்கிற) பிராணிதான் ஓஷ்ட்ரம்;இதுவே தமிழில் ஓட்டை, ஒட்டகம்);பிம்பம் என்றால் கோவைப் பழம்;பிம்போஷ்டம் - கோவைப்பழம் மாதிரிச் சிவந்த உதடு.

கீதையில் பகவான் யோகீ ஸம லோஷ்டாச்ம காஞ்சன என்று சொன்னதை நினைப்பூட்டுகிற மாதிரியே, மூகரும் சொல்கிறார். பொன்னாசையை வைத்து, பொன்னும் மண்ணும் யோகிக்குச் சமம் என்றான் பகவான். மூகர் பொண்ணாசையை வைத்து, பொன்னும் மண்ணும் யோகிக்குச் சமம் என்றார் பகவான். மூகர் பொண்ணாசையை வைத்துப் பேசுகிறார்.

எத்தனை காமம், குரோதம், சோகம்,, பயம் இவற்றை உண்டு பண்ணுகிற வஸ்துவும் அம்பாளை உபாஸிகக்கிறவனைக் கொஞ்சம்கூட அசைக்காது.

காமக்குரோதாதிகள் இல்லாமல் எப்போது பார்த்தாலும் அவளையே தியானித்துக் கொண்டிருந்தால் அதுவேதான் மோக்ஷம். அவள் வேறு. நாம் வேறு என்கிற பாவனையும் போய், அவளே நாமாக முடிகிற அந்த நிலையே மோக்ஷம்.

ஆரம்ப நிலையில் அவள் வேறு என்றே பாவிக்கலாம். அப்போது அவளுடைய சரணாரவிந்தங்களையே கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அவளைப் பிரார்த்தித்தபடி இருக்க வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக நம்மை அவளிலேயே கரைக்க வேண்டும்.

நாம் கொஞ்சம் பிரயாசைப்பட்டாலும் போதும். அவளே நம்மைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி ரக்ஷிப்பாள். நமக்கும் அவளுக்கும் இருக்கிற வேறுபாட்டையும் தகர்த்துக் தானாகவே ஆக்கிக் கொள்வாள்.

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

## *அன்னபூர்ணி*

நம் தேசத்தில் மட்டும் என்றில்லை. லோகம் முழுக்க துர்ப்பிக்ஷம் அதிகமாகி வருகிறது. மெஷின்கள் நிறையச் செய்து விடலாம். ஃபாக்டரிகள் நிறைய வைத்து விடலாம். ஆனால் பயிர் பச்சைகள் வளர்வது நம் கையில் இல்லாமல் இருக்கிறது. தானிய ஸம்ருத்தி (செழிப்பு) இருந்தாலொழிய, வயிறு நிரம்பினால் அன்றி, பாக்கி என்ன சுபிக்ஷம் செய்து கொண்டாலும், மொத்தத்தில் துர்பிக்ஷமாகத்தான் இருக்கிறது. பயிர் பச்சை விளைச்சலுக்கு நம்முடைய அகட விகட சாமர்த்தியங்களால் பிரமோஜனமில்லை. என்ஜினியர் அணை கட்டலாம். ஆனால், மழையை பொழிவிக்க அவரால் முடியாது. ஜகன்மாதாவாக அன்னபூரணேசுவரியை எல்லோரும் மனஸாரப் பிரார்த்திக்குக் கொண்டால்தான் விமோசனம் உண்டு. அவளே நாம் செய்கிற மகாபாபங்களை

க்ஷமித்துத் தானிய ஸ்ம்ருத்தியை அநுக்கிரஹிப்பாள். துர்பிக்ஷம் போக அவளே பிச்சை போடுவாள்.

நம்முடைய ஆசார்யாள் ஸ்ரீசங்கர பகவத் பாதாள் காசியில் இருந்தபோது, அன்னபூரணி மீது ஒரு ஸ்தோதத்திரம் பாடியருளினார்.

அதில் சுலோகத்துக்குச் சுலோகம் முடிவிலே, கருணையின் பற்றுக்கொம்பாக இருக்கிற அம்மாவே, அன்னபூர்ணேசுவரியை பிச்சை போடு என்று உருக்கமாக வேட்டிக் கொள்கிறார்.

பிக்ஷாம் தேஹி க்ருபாவலம்பனகரீ

மாதா அன்னபூர்ணேச்வரீ

தேஹி - போடு என்றால் அவருக்கில்லை. அவருக்குப் பிக்ஷை ஜாம் ஜாம் என்று நடந்துகொண்டிருந்திருக்கும். தவிரவும் நம் ஆச்சாரியாளுக்குச் சரீராபிமானம், உதரபோஷணம், தான் என்கிற எண்ணம் லவலேசம்கூடக் கிடையாது. கிரகசன் என்ற காபாலிகன் அவரிடம், ஒரு சக்கரவர்த்தி அல்லது சந்நியாசியின் தலையைப் பலிக் கொடுத்தால் தனக்குக் கபாலியின் தரிசனம் கிடைக்கும் என்றான். உடனே ஆச்சாரியாள், சக்கரவர்த்தியின் தலைக்கு ஆசைப்பட்டால் உன் தலைப் போய்விடும். சந்நியாசியின் தலை வேண்டுமானால் இதோ இந்தத் தலையை எடுத்துக் கொள் என்று தனது சிரோயஸை தொட்டுக் காட்டினார். அப்புறம் ஈஸ்வர சங்கல்பத்தால் கதை மாறிப்போயிற்று. அது வேறு விஷயம். இப்போது நான் அந்தத் கதையைச் சொல்ல வரவில்லை. ஆச்சாரியாளுக்குக் கொஞ்சம்கூட அஹங்கார மகாரமே கிடையாது என்பதற்காக இதைச் சொன்னேன். அப்படிப்பட்டவர் பிக்ஷாம் தேஹி - பிச்சை போடு என்றால் என்ன அர்த்தம்?

இந்த ஸ்தோத்திரத்தின் கடைசீ சுலோகத்தைப் பார்த்தால் அர்த்தம் புரியும். அதில், எனக்குப் பார்வதியே அம்மா;பரமேசுவரனே அப்பா!சிவ பாதர்கள் எல்லாம் பந்துக்கள்;மூவுலகமும் வீடு என்கிறார். எனவே தேஹி - பிச்சை போடு என்று இவர் கேட்கிறபோது, திரிலோகங்களுக்கும் பிச்சை போடு என்று பிரார்த்திக்கவே அர்த்தமாகிறது.

அதோடு, தனக்கு என்றே வேண்டிக்கொள்கிற நம் மாதிரி இருக்கப்பட்டவர்கள், பாராயணம் செய்வதற்குப் பொருத்தமாக இப்படிப்

பிரார்த்தனை செய்திருக்கிறார்.

அன்ன பிக்ஷை மட்டும் பிரயோஜனமில்லை. முடிவில் ஞானமில்லாமல் வெறுமே தின்று தின்று ஊனை வளர்த்துப் பிரயோஜனமில்லை. கையில் க்ஷீரான்ன (பால் சோற்று)ப் பாத்திரமும், கரண்டியும் வைத்துக்கொண்டு அன்புருவாக உணவுபோடும் அன்னபூரணி இந்த ஞானத்தையும் விசேஷமாக அநுக்கிரஹிக்கிறாள். ஞான வைராக்கியப் பிச்சையைத்தான் ஆதிசங்கரரும் முடிவாகக் கேட்கிறார்.

காஞ்சி காமாக்ஷியில் அன்னபூர்ணேசுவரியும் அடக்கம். காமாக்ஷி இருநாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்களை வளர்த்தாள். அதில் அன்னதானம் ஒன்று. காமக்கோட்டத்தில் அன்னபூரணி சந்நிதி இருக்கிறது. காஞ்சியில் ஓண காந்தன் தளியில் இருக்கும் ஸ்வாமியைப் பாடும் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள், காமக்கோட்டத்தில் அன்னபூரணியே இருக்கும்போது நீர் ஏன் பிக்ஷாண்டியாக அலைகிறீர்?என்று கேட்கிறார்.

வாரிரும் குழல்வாள் நெடுங்கண்

மலைமகள் மதுவிம்மு கொன்றைத்

தாரிருந் தடமார்பு நீங்காத்

தையலாள் உலகுய்ய வைத்த

காரிரும் பொழில்கச்சி மூதூர்க்

காமகோட்டம் உண்டாக நீர்போய்

ஊரிடும் பிச்சைகொள் வதென்னே

ஓண்காந்தன் றளியுளீரே!

சரீரம், ஆத்மா இரண்டுக்கும் உணவூட்டி வளர்க்கிற அன்னபூரணேசுவரியைத் துதித்து சமஸ்த ஜீவர்களுக்கும் துர்பிஷம் நீங்கப் பிரார்த்திப்போம்.

பாபம் செய்ததற்குத் தண்டனையாக துர்பிக்ஷத்தில் கஷ்டப்படுபவர்களுக்கு காமாக்ஷியேயான அன்னபூரணி கருணை பாலிக்கிறாள். பசி என்பது பாபிக்கும் வரக்கூடாது. கேரளத்தில் செருக்குன்னம் என்று அன்னபூரணா க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கே சேவார்த்திகளுக்கெல்லாம் சாப்பாடு போடுகிறார்கள். அதுமட்டுமில்லை. ராத்திரி வேளையில் கோயிலுக்குப் பக்கத்தில் ஒரு மரத்தில் ஒரு சோற்று முட்டையைக்கட்டி வைக்கிறார்கள். இராக்காலதத்தில் அந்தப் பக்கமாகப் பசியோடு போகிற திருடர்களும்கூடப் பசியாற வேண்டும் என்று இந்த ஏற்பாடு.

இத்தனை கருணையோடு ஓர் அம்மா இருக்கிறபோது, இன்னைக்கு லோகத்தில் இவ்வளவு துர்பிக்ஷ இருக்கிறது என்றால், அதிலிருந்து நாம் எத்தனை பாபம் செய்திருக்கிறோம் என்பதைத்தான் தெரிந்து கொள்ள வேண்டும். "சரக ஸம்ஹிதை"யில் ஆத்ரேயர் சொல்வதாக வருகிறது. ஒரு தேசத்திலோ, நகரத்திலோ, கிராமத்திலோ ஆட்சியில் இருக்கப்பட்டவர்கள் தர்மம் தவறி நடந்தால் அவர்களைச் சேர்ந்த ஜனங்களும் இதே போக்கை அநுசரிக்க வேண்டியதாயிற்று. இப்படி அதர்மம் ரொம்பவும் பரவுகிறபோது தேவர்கள் இவர்களைக் கைவிட எண்ணுகிறார்கள். (தேவர்கள் என்றால் இயற்கைச் சக்திகளை

நடத்துகிற ஈசுவரனின் அதிகாரிகள்). உடனே ருதுக்கள் மாறுகின்றன. மழை சரியாகப் பொழிவதில்லை. பெய்தாலும் காலம் தவறி, இடம் தவறி, அளவு தவறிப் பெய்யும். பருவக் காற்று முறைப்படி வீசுவதில்லை. வியாதிக் கிறுமிகள் அதிகமாகின்றன. பயிர் பச்சைகளின் செழிப்புப் போகிறது. உணவுப் பதார்த்தங்களில் துர்பிக்ஷம், கிடைக்கிற கொஞ்சத்திலும் தோஷங்கள், கெட்ட காற்று, வியாதி இவற்றால் தேசம் பாழாகிறது.

இம்மாதிரி உலகத்துக்கு ஏற்படும் துர்பிக்ஷத்திலிருந்து நம்முடைய தப்பையே புரிந்துகொண்டு திருத்தப் பிரயாசை எடுத்தோமாயின், அன்னபூரணியே அன்னபிக்ஷை, ஞான பிக்ஷை எல்லாம் போடுவாள். அவள் சரீரமே ஞான மயமானது. 'அ'விலிருந்து 'க்ஷ'வரையிலான எல்லா அட்சரங்களுமே உருவான மந்திர மாத்ருகா ரூபிணி அவள் என்கிறார் ஆசாரியாள்.

'ஆதி க்ஷாந்த ஸமஸ்' த வர்ணனகரீ.'

இப்படிப்பட்ட சரீரம் படைத்தவர்களாதலால் நம் சரீரத்தை மட்டுமின்றி அறிவையும் வளர்க்கிற பிக்ஷையைப் போட்டு ஞானம் தருவாள்.

அது எப்படிப்பட்ட ஞானம் என்பதைத்தான் ஆச்சாரியாள், அன்னபூரணி ஸ்துதியின் கடைசீயில் சொல்கிறார். அந்த நிலையில் பரமேசுவரனே தகப்பனாகவும், அம்பாளே தாயாராகவும் தெரிவார்கள். உடனே சகல ஜீவராசிகளுக்கும் சகோதரர்களாகி விடுவார்கள். மூவுலகமும் சொந்த வீடாகிவிடும். இது இப்போது நிறையப் பேசப்படுகிற தேச ஐக்கியப்பாட்டைவிட எத்தனையோ படி மேலே!மூன்றுலக ஐக்கியப்பாடு. பக்தி இருந்தால், பராசக்தி இருக்கிறாள் என்ற பயமும் பக்தியும் இருந்துவிட்டால், எல்லோரும் அவள் குழந்தைகள்தான் என்கிற சகோதர பாவம் தானாகவே வந்துவிடும். இதற்க்குப் பிரசங்கம் வேண்டாம். திட்டம் வேண்டாம். பிரச்சாரம் வேண்டாம்.

அநாதி காலமாக இருப்படித்தான் பிரத்தியக்ஷத்தில் ஐக்கியம் இருந்திருக்கிறது. ஸ்வாமிக்காகத் வடக்கத்திக்காரன் காசிக்குப் போனான். ஸ்வாமிக்காக வடக்கத்திக்காரன் ராமேசுவரத்திற்கு வந்தான். ஐக்கியப்பாடு (Integration) என்கிற பேச்சு இல்லாமலே, மத உணர்ச்சியால் ஐக்கியமாக, ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருந்து வந்தோம். இதோடுகூட அறிவாளிகளின் மட்டத்திலோ சகல சாஸ்திரங்களுக்கும் பொது பாஷையாக இருந்த ஸமஸ்கிருதம் தேசத்தின் நாலு கோடிகளையும் ஒன்றாகச் சேர்த்து வைத்திருக்கிறது. இப்போது 'ஸெக்யுலர்'நாகரிகத்தில் மதத்தை விட்டாயிற்று. ஸமஸ்கிருதத்தையும் ஒரு மாதிரி தீர்த்துக் கட்டிவிட சகல யத்தனங்களும் நடகக்கின்றன. நான் இங்கேயுள்ள நம்மவர்களை மட்டும் சொல்லவில்லை. ஹிந்திக்காரர்களும் இந்த கைங்கரியத்தில் நன்றாகவே கீரிய ரீதியில் செய்து வருகிறார்கள். இடைக்காலத்தில் ஒரு பொது இணைப்பாக (Link) வந்த இங்கிலீஷையும் விரட்டிவிடப் பார்க்கிறார்கள்.

பாஷை விஷயம்கூட இரண்டாம் பட்சம்தான். பக்தியை வளர்த்துவிட்டால் போதும். அப்புறம் என் மாகாணம், என் ஜாதி, என் பாஷை என்று நமக்குள்ளேயே சண்டைகள் ஒரு

காலும் வராது. ஐக்கியப் பிரசங்கம் அதிகமான இப்போதுதான் நமக்குள்ளேயே ஒரு சீமைக்காரன் இன்னொரு சீமைக்காரனுக்கு தண்ணீர் தர மாட்டேன், தானியம் தரமாட்டேன் என்று பிரித்து பிரித்து நிற்கிறான்.

மாகாணத்துக்கு மாகாணம் எல்லைச் சண்டை வந்திருக்கிறது. பாஷையின் பேரால், ஜாதியின் பேரால் ஏற்கெனவே கொடுமை நடந்ததாக இப்போது கிளப்பி விட்டிருக்கிற பிற்பாடுதான் வாஸ்தவத்தில் பாஷைச்சண்டை, ஜாதிச்சண்டை எல்லாம் வந்திருக்கின்றன. இத்தனைக்கும் மூலக்காரணம், மத உணர்ச்சி, பக்தி போனதுதான். ஜனங்கள் எல்லோரையும் ஒன்றாகக் கட்டிப் போட்ட மதமும் பக்தியும் போனதும் சமூகத்திலேயே கட்டுவிட்டுப் போய்விட்டது. எனவே இப்போது சர்வரோக நிவாரணியும் பக்திதான். உண்மையான ஈசுவர பக்தியானது, அவன் குழந்தைகளான சகலரிடமும் அன்பாகத்தான் பரணமிக்கும். அப்புறம் பரஸ்பர சகாயத்தைத்தவிர வேறெதற்கும் இடமே இராது. அன்பே சிவம் என்கிறார் திருமூலர். அதுவே அறிவு. அறிவான தெய்வமே என்றார் தாயுமானவர். இந்த அன்பையும் அறிவையும் - அன்பேயான அறிவை - அன்னபூரணி நமக்கெல்லாம் பிக்ஷை போடப் பிரார்த்திப்போம். ஆதி ஆசார்யாளும் செய்த பிரார்த்தனையும் இதுதான்.

அன்னபூரணே ஸதாபூரணே, சங்கர ப்ராண வல்லபே I

ஞானவைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷாம் தேஹி ச பார்வதி II

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*தேவதாமூர்த்திகள் அவதார புருஷர்கள்*

*அம்மா*

தாயன்பைப்போலக் கலப்படமே இல்லாத பூரணமான அன்பை இந்த லோகத்தில் வேறெங்குமே காண முடியவில்லை. பிள்ளை எப்படி இருந்தாலும், தன் அன்பை பிரதிபலிக்காவிட்டாலும்கூட, தாயாராகப்பட்டவர்கள் அதைப் பொருட்படுத்தாமல் பூரணமான அன்பைச் செலுத்துக் கொண்டேயிருக்கிறாள். பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு என்று இதைத்தான் சொல்லுகிறோம். தேவி அபராத க்ஷமாபன ஸ்தோத்திரம் என்று அம்பாளிடமே நம் குறைகளைச் சொல்லி மன்னிப்புக் கேட்டுக் கொள்கிற துதி ஒன்று இருக்கிறது. அதில் துஷ்டப்பிள்ளை இருப்பதுண்டு. ஆனால் துஷ்ட அம்மா என்று ஒருத்தி கிடையவே கிடையாது என்று வருகிறது. பரிபூரணமாக அன்பையும், தன்னலமே இல்லாத உழைப்பையும், அம்மா ஒருத்தியிடம்தான் பார்க்க முடிகிறது.

குழந்தையாகப் பிறக்கிறபோதே அம்மாவிடம்தான் ஒட்டிக் கொள்கிறோம். ஆகாரம் தருவதிலிருந்து சகலத்துக்கும் அவள்தான் குழந்தைக்குக் கதியாக இருக்கிறாள். வயது ஏறுகிற சமயத்தைவிட பால்யத்தில்தான் தாயார், குழந்தை இருவருக்கும் பரஸ்பர அன்பு மிக அதிகமாக இருக்கிறது. அதிலும் மனித இனக்கத்தைவிடப் பசுக்குலத்திட்தான் இந்த அன்பு நிரம்பித் ததும்புகிறது. கன்று அம்மா. என்று கத்துவதில் உள்ள ஆவல் மாதிரி வேறெங்கும் அன்பைப்

பார்க்க முடியவில்லை. இதைப் பார்த்துதான் மநுஷ்ய ஜாதியே, அம்மா என்று கூப்பிட ஆரம்பித்ததோ என்று தோன்றுகிறது. தமிழில் மட்டுமில்லாமல், தெலுங்கு, மஹாராஷ்டிரம், கன்னடம் முதலிய பாஷைகளிலும் அம்மா என்றே தாயாரைச் சொல்கிறார்கள். மலையாளத்தில் "அம்மை"என்பார்கள். ஸம்ஸ்கிருதத்தில் "மா"என்றும் "அம்பா"என்றும் சொல்லுவதும் இதேதான். ஹிந்தியில் "மா", "மாயி"என்கிறார்கள். இங்கிலீஷ் மம்மி, மம்மா எல்லாமும் கன்று குட்டியின்

அம்மாவிலிருந்து வந்தவைதான் போலிருக்கிறது.

இந்த அம்மாவின் அன்பு ஒரு பக்கம் இருக்கட்டும். இவள் இந்த சரீரத்திற்கு மட்டும்தான் அம்மா. அவளுடைய அல்லது நம்முடைய சரீரம் போன பிற்பாடு இந்த அம்மாவுக்கும் நமக்கும் சம்பந்தமே இல்லை. அப்புறம் வேறு கர்ப்பவாஸம். வேறே அம்மாள் வருவாள். இப்படிச் சரீரத்திற்கு மட்டும் அம்மாவாக இல்லாமல், உயிருக்கு அம்மாவாக இருக்கிற ஒருத்தி இருக்கிறாள். சரீரம் அழிகிற மாதிரி உயிர் அழிவதில்லை. இந்தச் சரீரம் போன பிற்பாடு அந்த உயிர் இன்னொரு சரீரத்திற்குப் போகிறது. இந்த உயிரின் அம்மாதான் நமக்கு சாசுவதமாக, நிரந்தரமாக, எந்நாளும் தாயாராக இருந்து கொண்டிருக்கிறாள். கன்றுக்குப் பசுவைப் போல எந்த ஜன்மத்திலும் எந்தக் காலத்திலும் எல்லாப் பிராணிகளுக்கும் தாயாராக இருக்கும் பரதேவதையின் பாதார விந்தத்தில் நிறைந்த அன்பு வைப்பதே ஜன்மா எடுத்ததன் பிரயோஜனம். ஜன்ம நிவிருத்திக்கும் அதுவே வழி. அதாவது, உயிர் சரீரத்தை விட்டபின் இன்னொரு சரீரத்தில் புகாமல் பேரானந்தத்தில் கரைவதற்கும் அந்த அம்மாதான்.

நமக்கு இருக்கிற சக்தி எல்லாம் அவளுடையதுதான். ஒரே அகண்ட பராசக்திதான், கண்டம் கண்டமாக, துண்டு துண்டாக ஆகி இத்தனை ஜீவராசிகளிடமும் துளித்துளி சக்தியை வெளிப்படுத்துகிறது. நாம் சொந்த முறையில் எதையும் சாதித்ததாகப் பெருமைப் பட்டுக் கொள்ளவும், அகம்பாவம் கொள்ளவும் நியாயமே இல்லை. நாம் எதைச் செய்திருந்தாலும் எல்லாம் அவள் கொடுத்த சக்தியால்தான் நடக்கிறது. இதை உணர்ந்து அகம்பாவம் சிறிதும் இல்லாமல்

அவளிடம் சரணாகதி செய்தால் ஒரே அம்மாவான இவள் இகத்திலும் பரத்திலும் பரமாநுக்கிரஹம் செய்வாள். எப்படி எதுவும் கேட்கத் தெரியாத குழந்தைக்கு வேண்டியதைத் தாய் தானே கவனித்துக் கொள்கிறாளோ, அப்படியே ஜகன்மாதாவாகவும் கருணாமூர்த்தியாகவும் உள்ள அம்மா, உண்மையான பக்தி வைத்தவர்கள் தன்னை எதுவும் கேட்காவிட்டாலும்கூட, தானாகவே அவர்களுக்கு இகலோகத்தில் வித்தை, செல்வம், தேககாந்தி முதலிய தந்து, பின்பு ஞானத்தில் பழுத்துப் பராமானந்தத்தைபப் பெறும்படி அருள் புரிவாள். பரம ஞான அத்வைத ஆனந்தம் நமக்குக் கிடைத்து, நாம் அந்த ஆனந்தமாகவே ஆகிவிடுவது ஒரு பக்கம் இருக்கட்டும். அது அவள் நம் கர்மாவைத் தீர்த்து, என்றைக்கோ ஒருநாள் தரப்போகிற நிலை. அது கிடைக்கிறபோது கிடைக்கட்டும். அதுவே கிடைக்கவில்லையே என்கிற குறை இப்போது நமக்கு வேண்டாம். இப்போது நமக்குப் பரம அன்பு அம்மாவான அம்பாள் இருக்கிறாள். அவளுடைய அன்பை நினைத்து அவளிடமும் நாமும் அன்பைச் செலுத்துவதற்கு இப்போதே நமக்குச் சாத்தியமாகிறது. இதிலுள்ள ஆனந்தத்துக்கு மேல் நமக்கு எதுவும் வேண்டாம். அம்பாள் தியானத்தைவிட நமக்கும் நம் மாதிரியே அவளை அம்மாவாக்கிக் கொண்ட சகல லோகத்துக்கும் நிறைவான இன்பம் வேறில்லை. சகல லோகமும் சமஸ்த ஜீவராசிகளும் க்ஷேமமாக இருக்க அன்பே உருவான சாக்ஷாத் அம்பிகையை எப்போதும் ஆனந்தமாக நினைத்துக் கொண்டிருப்போம்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*மங்களாரத்தி*

*அநுமார் அநுக்கிரஹிப்பார்*

ஆஞ்சநேய ஸ்வாமியின் விசேஷமே அலாதியானது. அவர் பக்தர்களுக்கு என்னென்ன அநுக்கிரஹம் செய்கிறார் என்பதைப் பார்த்தால், அவருக்கு என்ன விசேஷம் என்று தெரியும்.

புத்திர் பலம் யசோ தைர்யம் நிர்பயத்வம் அரோகதா I

அஜாட்யம் வாக்படுத்வம் ச ஹநுமாத் ஸ்மரணாபவேத் II

ஆஞ்சநேயரை ஸ்மரிப்பவர்களுக்கு அவர் என்னென்ன அநுக்கிரஹிக்கிறார் என்று இந்த ஸ்லோகம் சொல்கிறது. புத்தி, பலம், புகழ், உறுதிப்பாடு, அஞ்சாநெஞ்சம், ஆரோக்கியம் விழிப்பு, வாக்குவன்மை இத்தனையும் தருகிறார் அவர்.

சாதாரணமாக இவையெல்லாம் ஒரே இடத்தில் அமையவே அமையாது. நல்ல புத்திமான் ஆரோக்கியம் இல்லாமல் சோனியாக இருப்பான். பெரிய பலசாலி மண்டுவாக இருப்பான். இரண்டும் இருந்தாலும் கோழையாக, பயந்தாங்கொல்லியாக இருப்பான். எத்தனை திறமை இருந்தாலும், அவற்றைப் பிரயோகிக்கிற சுறுசுறுப்பு, விழிப்பு இல்லாமல் சோம்பேறியாக இருப்பான். பெரிய அறிவாளியாக இருந்தாலும் தனக்குத் தெரிந்ததை எடுத்துச் சொல்கிற வாக்கு வன்மையில்லாமல் இருப்பான். இந்த மாதிரி ஏறுமாறான

குணங்கள் இல்லாமல் எல்லா சிரேயஸ்களையும் ஒரே இடத்தில் பொழிகிறார், ஆஞ்சநேயர்.

இதற்குக் காரணம், சாதாரணமாக நாம் ஒரே இடத்தில் சேர்ந்து பார்க்காத குணங்கள், சக்திகள் அத்தனையும் அவரிடமே பூரணமாக ஒன்று சேர்ந்திருக்கின்றன. நாம் எதிரெதிர் குணங்கள் என்று நினைப்பவைக்கூட, அவரிடம் ஸ்வபாவமாகச் சேர்ந்திருக்கின்றன. உதாரணமாகப் பெரிய பலசாலிக்கு விநயம் இருக்காது. பெரிய புத்திசாலிக்கு அகங்காரமில்லாத பக்தி இராது. ஆஞ்ஜநேயரோ தேக பலம், புத்தி பலம் இவற்றைப் போலவே விநயம், பக்தி இவற்றிலும் முதலாக நிற்கிறார். மகா சக்திமானாக இருந்தும், அத்தனை சக்தியும் ராமன் போட்ட பிச்சை எனற அடக்கத்தோடு தனக்கு ஒரு பதவியும் கேளாமல் ராமதாஸனாகவே இருந்தார். அப்படி அடிமையாக இருந்ததாலேயே நிறைந்து இருந்தார். பக்தி இருக்கிறவர்களுக்கேகூட அதில் ஞானத்தில் தெளிவு இல்லாமல் மூடபக்தியாகவோ, முரட்டுபக்தியாகவோ இருப்பதுண்டு. ஞானமும் பக்தியும் வேறு வேறு என்றே அவர்கள் சண்டைகூடப் போட்டுக் கொள்வார்கள். ஆஞ்சநேயரோ ராமச்சந்திர மூர்த்தியின் பரமபக்தராக இருக்கும்போதே, பரமஞானியாகவும் இருந்தார். எப்படி தக்ஷிணாமூர்த்தி ஸநாகதி முனிவர்களை முன்னிட்டு உபதேசம் செய்கிறாரோ, அப்படியே ஸ்ரீ ராமன் ஆஞ்சநேய ஸ்வாமியை முன்னால் வைத்துக் கொண்டு ஞானோபதேசம் செய்கிறார் என்று வேதேங்ஹீ ஸஹிதம் சுலோகம் சொல்கிறது. அர்ஜுனனின் தேர்க்கொடியில் இருந்துகொண்டு கீதோபதேசத்தை நேரிலேயே கேட்டவர் அவர். பைசாச பாஷையில் கீதைக்குத் தத்துவமயமான ஒரு பாஷ்யம் இருப்பதாகவும், அது ஆஞ்சநேயர் செய்தது என்றும் சொல்வார்கள். ஒன்பது வியாகரணமும் தெரிந்த நவ வ்யாகரண வேத்தா என்று ராமரே அவரைப் புகழ்கிற அளவுக்குப் பெரிய கல்விமான். ஆனாலும் புத்திப் பிரகாசம், சக்திப் பிரபாவம் எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு பக்தியிலேயே பரமானந்தம் அநுபவிக்கிறார்.

பக்தி என்பதால் லோக காரியத்தைக் கவனிக்காதவர் அல்ல. மகாபௌருஷத்தோடு போராடி அபலைகளை ரக்ஷித்தவர்களில் அவருக்கு இணை இல்லை. லோக சேவைக்கு அவரே உதாரணம். (ideal)

ஞானத்தில் உச்சநிலை, பலத்தில் உச்சநிலை, பக்தியில் உச்சநிலை, வீரத்தில் உச்சநிலை, கீர்த்தியில் உச்சநிலை, சேவையில் உச்சநிலை, விநயத்தில் உச்ச நிலை இப்படியெல்லாம் ஒன்று சேர்ந்திருக்கிற ஸ்வரூபம் ஒன்று உண்டு என்றால் அது ஆஞ்சநேய ஸ்வாமிதான்.

இதெல்லாவற்றுக்கும் மேலாக அவருடைய பிரம்மச்சரியத்தைச் சொல்ல வேண்டும். ஒரு க்ஷணம்கூடக் காமம் என்கிற நினைப்பே வராத மகா பரிசுத்த மூர்த்தி அவர். தனக்கென்று எதுவுமே நினைக்காதவர். ஒரு காமனையும் இல்லாமல் ராமனுக்கு சேவை செய்தே நிறைந்துவிட்டார்.

அவரை நம் சீமையில் பொதுவாக ஹநுமார் என்போம். கன்னடச் சீமையில் அவரே ஹநுமந்தையா. சித்தூருக்கு வடக்கே போய்விட்டாலல் ஆந்திரா முழுவதும் ஆஞ்சநேயலு என்பார்கள். மகாராஷ்டிரம் முழுக்க மாருதி, மாருதி என்று கொண்டாடுவார்கள் அதற்கும் வடக்கில் மஹாவீரர் என்றே சொல்வார்கள்.

ஆஞ்சநேயருக்கு ஈடு கிடையாது. அவரை ஸ்மரித்த மாத்திரத்தில் தைரியம் வரும். ஞானம் வரும். காமம் நசிந்துவிடும். பரம விநயத்தோடு பகவத் தைங்கரியம் செய்துகொண்டு எல்லோருக்கும் நல்லது செய்வோம்.

ராம், ராம் எனறு எங்கெங்கே சொல்லிக் கொண்டிருந்தாலும், ரகுநாத கீர்த்தனம் எங்கே நடந்தாலும், அங்கெல்லாம் நம் கண்ணுக்குத் தெரியாமல் ஆஞ்சநேயர் தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் கொட்டிக்கொண்டு நின்று கேட்கிறார்.

இந்தக் காலத்தில் நமக்கு மற்ற எல்லா அநுக்கிரஹங்களோடு, முக்கியமாக அடக்கமாக இருக்கற பண்பு ரொம்பவும் அவசியப்படுகிறது. எத்தனை வந்தாலும் போதாமல் இப்போது, நாம் உயர உயரத் துள்ளிக்கொண்டேயிருக்கிறோம். இதனால் புதுப்புது அதிருப்திகளை, குறைகளைத்தான் உண்டாக்கிக் கொள்கிறோம். துள்ளாமல் அடங்கிக் கிடந்தால்தான் ஈசுவரப் பிரஸாதம் கிடைக்கும். அதுதான் நிறைந்த நிறைவு. நமக்கு ஆச்சநேயர் அநுக்கிரகம் பண்ண வேண்டும்.

அவரைப் பிரார்த்திப்பவர்களுக்கு ஒரு குறையும் இல்லை.

லோகம் முழுவதும் தர்மம் பரவியிருக்க அவரையே பிரார்த்தனை பண்ணுவோம். அவருடைய சகாயத்திலேயே ராவணாதிகள் தோற்று ராமராஜ்யம் ஏற்பட்டது. அர்ஜுனனின் தேர்க்கொடியில் அவர் இருந்த விசேஷத்தால் பிறகு தர்மராஜ்யம் ஏற்பட்டது. பிற்காலத்தில் நம் தர்மம், பக்தி எல்லாம் நசிந்தபோது ஆஞ்சநேய அவதாரமாக ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமி தோன்றியதன் சிவாஜி மூலம் மறுபடி தர்ம ஸம்ஸ்தாபனம் செய்தார். இன்னும் சகல தேசங்களிலும் தர்மமும் பக்தியும் ஏற்பட அவர் அநுக்கிரஹம் வேணும். நாம் மனமுருகிப் பிரார்த்தித்தால் இந்த அநுக்கிரஹத்தைச் செய்வார்.

ஆஞ்ஜநேய ஸ்வாமின:ஜேய் II

## புராண லக்ஷயத்துக்கு நடைமுறை வழி

புராண புருஷர்கள்தான் நமக்கு ideal(ஆதரிசமானவர்கள், வழிகாட்டிகள்) என்று தெரிகிறது. அவர்களுடைய கதைகளைப் படித்தால் அவர்களுடையது மாதிரியான உயர்ந்த குணங்களைப் பெற வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது. ஆனாலும் ஆசை உண்டாகிறதே தவிர, அந்த உத்தம குணங்களை சம்பாதித்துக் கொண்டு எந்த சந்தர்ப்பத்திலும் அவற்றிலிருந்து நழுவாமல் இருப்பதென்றால், இது அஸாத்தியமானதாக இருக்கிறது.

காரியம் ஏதாவது பண்ணிக்கொண்டேயிருப்பதுதான் மநுஷ்யனின் இயற்கையாக இருக்கிறது. க்ஷண காலம்கூட மனஸை நிறுத்திவிட்டு இருக்க முடியமாட்டேன் என்கிறது. பகவானும் கீதையில், "மநுஷ்யனானவன் ஒரு நொடியும் சும்மா இல்லாமல் காரியம் பண்ணிக் கொண்டேயிருக்கும் படியாகத்தான் பிரகிருதி (இயற்கை) அவனை ஏவிக் கொண்டிருக்கிறது. அதனால் அவன் இந்தக் காரியங்களைப் பண்ணுகிற சரியான வழியைத் தெரிந்துகொண்டு அப்படியே பண்ணி அதனால்தான் சித்தத்தை சுத்தி செய்து கொண்டு உத்தம குணங்களை ஸம்பாதித்துக் கொண்டு, அப்புறம் காரியங்களை விட்டு, குணங்களைக்கடந்து குணாதீதனாக, ஞானியாக, பிரம்ம வித்தாக ஆக வேண்டும்"என்று சொல்லியிருக்கிறார்.

நம் மதத்தின்படி நடந்து கொண்டு, பாபங்களைப் போக்கிக் கொண்டு ஆத்மாவை சுத்தப்படுத்திக் கொண்டு சாச்வத ஸௌக்கியமான மோட்சத்தை அடைய வேண்டுமானால் நாம் என்னென்ன காரியங்கள் பண்ண வேண்டும்?பாபம் பண்ணியதால்தானே இந்த ஜன்மா வருகிறது?அதை அலம்பிக்கொள்ள வேண்டும். புதிதாகப் பாபம் பண்ணாமலிருக்கவேண்டும். நம் மனஸை, குணத்தைப் பாபத்தில் போகாதபடி உசத்திக் கொள்ள வேண்டும். இதற்குத்தான் மதம் இருக்கிறது. இப்படி நம் மதப்படி நாம் செய்ய வேண்டியதெல்லாம் என்னென்ன?இது நமக்குத் தெரியவில்லை.

பொதுவாக நாம் இப்போதிருக்கிற நிலைமையில் ஏதோ ராமாயணம், பாகவதம், புராணம் கொஞ்சம் தெரிகிறது. இதில் கதாபாத்திரங்கள் இன்னின்ன மத அநுஷ்டானங்களைச் செய்ததாக அங்கங்கே வருகிறது. ஆனால் அங்கங்கே வருகிறதேயொழியே, ஒரே இடத்தில் ஒரே சீராகக் கர்மாக்களை அமைத்துக் கொடுக்கவில்லை (codify பண்ணவில்லை). ஒவ்வொரு அநுஷ்டானத்தையும் எப்படிப் பண்ணுவது என்று procedure-ம்(செய்முறையும்)இந்தப் புராண இதிஹாஸங்களில் சொல்லப்படவில்லை. அதனால் நமக்கு அதைப் பார்த்து

அதன்படிப் பண்ணுவது என்பது சரியாக வரவில்லை.

புராண இதிஹாஸங்கள் பக்தியைப் பிரதானமாகச் சொல்கின்றன. ஆனால்

நாம் தினமும் அறுபது நாழியும் பக்தி பண்ணிக்கொண்டு, பூஜையும் தியானமும் பண்ணிக்கொண்டு, பூஜையும் தியானமும் பண்ணிக் கொண்டு ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டு இருக்க முடியுமா?முடியாதே!குடும்பத்துக்காக நாம் அநேக காரியங்கள் செய்ய வேண்டும். குளிப்பது, சாப்பிடுவது போன்றதைச் செய்யவேண்டும். இது போகவும் மிச்ச நாழி முழுதும் பூஜையிலேயே இருப்பது என்றால் முடியாது. அலுப்புத் தட்டிப் போகும். வேறு ஸத்கர்மாக்கள் நமக்கு வேண்டும். அவற்றை எங்கேயிருந்து தெரிந்து கொள்வது?தர்ம சாஸ்திரங்களிலிரு ந்துதான்.

பதினாலு வித்யைகளில் புராணத்துக்கப்புறம் கடைசியாக வருவது இந்த தர்ம சாஸ்திரமே.

புராண புருஷர்கள் நமக்கு லட்சியத்தைக் காட்டுகிறார்கள். அந்த லட்சியத்தை அடைவதற்கு வழி என்ன என்றால் கர்மாநுஷ்டானத்தில் தான் ஆரம்பிக்க வேண்டும். இப்படி நாம் நடைமுறையில், practical-ஆகச் செய்ய வேண்டியதையெல்லாம் சொல்வது தர்ம சாஸ்திரம். நாம் என்னென்ன செய்ய வேண்டும் என்று வேதத்தில் அங்கங்கே உதிரியாகச் சொல்லியிருக்கிற வற்றையெல்லாம் நன்றாக வகைப் படுத்தி விவரமாகச் சொல்கிற வேத உபாங்கம் இது.

குடும்பக் காரியம், சொந்தக் காரியம், குளிப்பது, சாப்பிடுவது முதற்கொண்டு எல்லாவற்றையும் ஒரு நிர்ணயப்படி, நியதிப்படி செய்யவேண்டும். வேத தர்மத்தில் மநுஷ்ய வாழ்வின் ஸகல அம்சங்களையும் ஆத்மாபிவிருத்திக்கு அநுகூலமாக ஆக்கி விதிகள் விதிகள் போட்டிருக்கிறது. இப்படிப் படுத்துக் கொண்டால் அது ஆத்மாவுக்கு நல்லது, இப்படி வீடு கட்டினால்தான் அநுஷ்டானத்துக்கு ஸாதகமாக இருக்கும் என்பதாக வாழ்க்கையில் எல்லா விஷயங்களையும் மதத்தோடு அது சம்பந்தப்படுத்தி விடுகிறது. லௌகிக வாழ்க்கை (secular life)மதவாழ்க்கை (religiouslife) என்று அது இரண்டாகப் பிரிக்கவில்லை. லௌகிகம் கூட மதத்தில்

கொண்டு சேர்க்கும்படியாகவே வேத தர்மம் அமைந்திருக்கிறது. எந்தக் கர்மாவைப் பண்ணினாலும் அதை மந்திர பூர்வமாகச் செய்யும்படி பண்ணி ஆத்மாபிவிருத்திக்கு அங்கமாக ஆக்கிவிடுகிறது. லௌகிகத்தையும் ஆத்மிகத்தையும் சேர்த்துக் கொடுப்பது போலவே, தனி மநுஷ்யன் தன் சிரேயஸுக்காக (individual salvation) பண்ண வேண்டியதிலேயே ஸமூக

வாழ்க்கையின் ஒழுங்கும், லோக க்ஷேமமும் (general welfare-ம்) சேரும்படியாக இணைத்துக் கொடுத்திருக்கிறது.

இப்போது நாம் தெரிந்து கொண்டிருக்கிற புராணங்களிலுள்ள பக்தி வேதத்திலே இருக்கிறது. ஆனால் அதோடுகூட ஏகப்பட்ட கர்மாவும் இருக்கிறது. பக்தியையே பூஜை என்ற கர்மாவாகப் பண்ணும்போது அதற்கும் நிறைய விதிகள் இருக்கின்றன. பூஜையோடு கூட அநேக யாகங்கள், சிராத்தம், தர்ப்பணம் எல்லாம்

வேத தர்மத்துக்கு வெகு முக்யமாக இருக்கின்றன.

வேதத்தில் இத்தனையும் இருக்கின்றன. ஆனால் ஒரே இடத்தில் எல்லாவற்றையும் முறைப்படுத்தி (Codify-பண்ணி) கொடுத்திருக்கவில்லை. ஒவ்வொரு கர்மாவுக்கும் procedure விரித்துச் சொல்லி இருக்கவில்லை.

"வேதோ (அ)கிலோ தர்ம மூலம்"என்ற மநு சொல்கிற படி வேதந்தான் நாம் என்னென்ன செய்யவேண்டும் என்ற நெறிகளுக்கும் காரியங்களுக்கும் மூலமாக, வேராக, ஊற்றாக இருக்கிறது.

ஆத்ம க்ஷேமத்துக்காக நாம் என்ன செய்ய வேண்டுமோ அதிலேயே லோக க்ஷேமத்தையும் பயனாக ஏற்படுத்தித் தருவது வேதம். இந்த இரண்டும் ஏற்பட எது உதவுகிறதோ அதுதான் தர்மம் என்பது. அந்த தர்ம மூலமாக வேதம் இருப்பது வாஸ்தவம்தான். வேதோ(அ)கிலோ தர்ம மூலம்.

ஆனால் வேதங்களைப் பார்த்தால் ஒரு கிரமமாக, திட்டவட்டமாக நாம் செய்ய வேண்டியவற்றுக்கு 'லிஸ்ட்' இல்லையே!இப்படி இப்படி செய்ய வேண்டுமென்ற விரிவான விளக்கமும் இல்லையே!அனந்தமான வேதத்தில் நமக்குக் கிடைத்திருப்பதே கொஞ்சம்தான். நமக்குக் கிடைத்திருக்கிற வேத வாக்கியங்களைப் பார்த்தாலும் அவற்றில் அநேகத்துக்கு அர்த்தங்கூட முழுக்கத் தெரிய மாட்டேன் என்கிறதே!

இப்படி இருக்கிற வேதங்களிலிருந்துதான் கல்பம் என்கிற ஆறாவது வேதாங்கத்தில் உள்ள தர்ம ஸூத்திரங்களும் க்ருஹ்ய ஸூத்ரங்களும் ஒருத்தன் பண்ண வேண்டிய கர்மாக்களைத் திரட்டி ஒழுங்குப்படுத்திக் கொடுத்திருக்கின்றன. ஆனால் இதுவும் சுருக்கமாகத்தான் இருக்கும். எல்லா அம்சங்களையும் ஒரே இடத்தில் சொல்வதாகவும் இராது. இவையும் விரிவான-guideஆக இல்லை. இவற்றை சந்தேகத்துக்கு இடமில்லாமல் விரித்துச் சொல்கிறவைதான் தர்ம சாஸ்திரங்கள்.

தர்ம ஸூத்ரங்கள் (ஆபஸ்தம்பர், கௌதமர் முதலானவர்கள் செய்தவை)

சின்னச்சின்ன வாசகங்களாக ஸூத்ர லக்ஷணப்படி இருக்கும். ஸூத்ரம் என்றால் ரத்ன சுருக்கமாகத்தான் இருக்க வேண்டும். தர்ம சாஸ்திரங்கள் என்கிற ஸ்மிருதிகள் (மநு, யாக்ஞவல்கியர், பராசரர் முதலானவர்கள் செய்தவை) ச்லோக ரூபத்தில் விரிவாக இருக்கும்.

ஆனால் எல்லாவற்றிற்கும் பொதுவான ஆதாரம் வேதந்தான். நாம் என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்பதற்கு வேதத்தின் ஆக்ஞைகளைத்தான் மேற்கொண்டு, அதன்படி நடக்க வேண்டும். வேதக் கட்டளைகளை ஒரளவுக்கு முறைப்படுத்திச் சொல்கிற கல்பத்தை நன்றாக அலசி

விஸ்தாரம் பண்ணுவதே தர்ம சாஸ்திரம். யக்ஞ பூமி நிர்மாணம், க்ருஹ நிர்மாணம் போன்றவற்றையே கல்பம் அதிகம் சொல்கிறதென்றால் மநுஷ்யனுக்கு ஸகல விதத்திலுமான நடத்தைமுறையையும் (code of conduct) விவரமாகச் சொல்வது தர்ம சாஸ்திரம்.

"நான் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனால் இந்தக் காரியத்தைச் செய்வது சரியா, தப்பா என்று வேதத்தில் எங்கே இருக்கிறது என்று தெரியவில்லையே!'அநந்தா வை வேதா:'என்றபடி வேதம் அளவு கடந்ததாக அல்லவா இருக்கிறது? இவற்றில் பெரும்பாலானவை இப்போது

மறைந்தே போய் விட்டன. அதனால் எங்கே இந்தக் காரியத்தை இப்படித்தான் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லையே!இவை எல்லாவற்றையும் படித்தவர்கள் யாரும் இருப்பதாகவும் தெரியவில்லையே?என்ன செய்வது என்று கேள்வி.

ஸமுத்திரம் மாதிரி விரிந்து கிடக்கிற வேதங்களிலிருந்து நமக்கு வேண்டிய காரியங்களைப் பொறுக்கி எடுப்பது அஸாத்யம்தான்.

"இப்படி செய் என்று வேதத்தில் இதைப்பற்றிச் சொல்லியிருப்பது தெரிந்தால் வேத வாக்கியப்படியே செய்து விடுவேன். அது தெரியாதபோது என்ன செய்வது?"

இதற்கு மநு பதில் சொல்கிறார்:"சரி, அப்படியானால் ஒன்று சொல்கிறேன். அந்த வேதங்களை எல்லாம் நன்கு அறிந்திருந்த மஹரிஷிகள் ஸ்ம்ருதிகள் என்று செய்திருக்கிறார்கள். அதில் என்ன சொல்லியிருக்கிறது என்று பார் என்கிறார். ஸ்ம்ருதி என்பதே தர்ம சாஸ்திரம்.

வேதோகிலோ தர்மமூலம்। தத்விதாம் ச ஸ்ம்ருதிசீலே।

"ஸ்ம்ருதி"என்றால் நினைவுக் குறிப்பு;விஸ்ம்ருதி என்றால் மைத்தியம்.

"வேதத்துக்கு ஸ்ம்ருதி இருக்கிறதே!அதாவது, நினைவுக் குறிப்பு (ஸீஷீமீ மீவ) இருக்கிறதே!வேதங்களையெல்லாம் நன்றாக உணர்ந்த மஹரிஷிகள் அவற்றிலுள்ள தர்மங்களையும், கர்மங்களையும் ஒரே இடத்தில் தொகுத்து முறைப்படுத்திக் குறிப்பாக எழுதி வைத்தவையே இவை. இந்த ஸ்மிருதிகளில் நமக்கு நன்றாக அர்த்தம் புரிகிற பாஷைகளில் எழுதப்பட்டவை. அவற்றைப் பார். நீ என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக் கூடாது, எப்படிச் செய்யக் கூடாது, எப்படிச் செய்ய வேண்டும் என்பவையெல்லாம் அவற்றில் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறது"என்கிறார் மநு. "தர்ம சாஸ்திரம்" என்று சொல்வது இந்த ஸ்ம்ருதிகளைத்தான்.

வேதம் சொல்லும் காரியங்களை, அநுஷ்டானங்களை எப்படிப் பண்ண வேண்டும் என்று வேதாங்கங்களில் ஆறாவதாக உள்ள 'கல்பம் சொல்கிறது.

கல்பத்தில் அடங்கும் க்ருஹ்ய ஸூத்ரங்களும், ச்ரௌத ஸூத்ரங்களும், தர்ம ஸூத்ரங்களும் வேள்வி முதலானவற்றின் செய்முறையைச் சொல்கின்றன. இதையே ஒரு ஜீவன் கருவாக மாதாவின் கர்ப்பத்தில் உருவாவதிலிருந்து, அது பிறந்து வளர்ந்து, கல்யாணம் பண்ணிக்கொண்டு, குடும்பம் நடத்தி, கடைசியில் சிதையில் வைத்து தகனம் செய்யப்படும் வரையில் இப்படியிப்படிச் செய்ய வேண்டும் என்று அடியிலிருந்து நுனி வரையில் நுணுக்கமாகச் சொல்பவையே ஸ்ம்ருதிகள். தினந்தினமும் எழுந்ததிலிருந்து தூங்குகிற வரையில் ஒருத்தன் என்னென்ன செய்ய வேண்டும், எப்படி யெப்படிச் செய்ய வேண்டும் என்று அது கூஷீஷீஞுமீ வீஸீமீ போட்டுக் கொடுத்து விடுகிறது.

ஸ்மிருதியைப் பார்த்து விட்டால் போதும். நம் மதப்படி நாம் செய்ய வேண்டியதெல்லாம் என்ன என்பது பூர்ணமாக தெரிந்துவிடும்.

## ஸ்மிருதிகளும், துணை நூல்களும்

மநு, பராசரர், யாக்ஞவல்கியர், கௌதமர், ஹாரீதர், யமன், விஷ்ணு, சங்கர், லிகிதர், பிருஹஸ்பதி, தக்ஷன், அங்கிரஸ், பிரசேதர்,ஸம்வர்த்தர், அசனஸ், அத்ரி, ஆபஸ்தம்பர், சாதாதபர் என்றிப்படிப் பதினெட்டு மஹரிஷிகள் தங்களுடைய அமாநுஷ்ய சக்தியால் வேதங்களை முழுக்கத் தெரிந்து கொண்டு அதிலிருந்து தொகுத்து தர்ம சாஸ்திரங்களைத் தந்திருக்கிறார்கள். இவை மநு ஸ்மிருதி, பராசர ஸ்மிருதி, யாக்ஞவல்கிய ஸ்மிருதி என்று அவரவர் பெயரால் வழங்குகின்றன. இவற்றைப் பார்த்தால் போதும், வாழ்க்கையில் செய்யவேண்டிய ஸகல அநுஷ்டானங்களையும் தர்மங்களையும் தெரிந்து கொண்டு விடலாம்.

18 ஸ்மிருதிகளைத் தவிர, உப ஸ்மிருதிகள் என்று 18 துணைநூல்கள் இருக்கின்றன.

ஸ்ரீமத் பகவத் கீதையையும் ஸ்மிருதிகளோடு சேர்த்துச் சொல்கிற வழக்கம் உண்டு. நேராக வேத மந்திரங்களாக உள்ள 'ச்ருதி'யாக இல்லாமலும் நம் மதத்துக்கு ஆதாரமாயிருப்பதால் அதை ஸ்மிருதிப் பிரமாணமாகச் சொல்கிறார்கள்.

இப்படி அநேகம் ஸ்மிருதிகள் இருப்பதால் இவற்றிலும் ஒன்றிலிருப்பது இன்னொன்றில் இல்லாமல் இருக்கலாம். சில சில காரியங்கள் ஒன்றுக்கொன்று வித்யாஸப்படலாம். அதனால் என்னென்ன செய்ய வேண்டும் என்பதில் இன்னமும் கொஞ்சம் ஸந்தேஹம் ஏற்படுகிறது. இந்த ஸந்தேஹத்தையும் போக்குவதாக 'தர்ம சாஸ்திர நிபந்தன'ங்கள் என்று சில புஸ்தகங்கள் இருக்கின்றன.

சில ஸ்மிருதிகள் ஒரு சில விஷயங்களோடு நின்று விடுகிறது;பூர்ண உபதேசம் செய்யவில்லை. வழக்கத்தில் தலைமுறை தலைமுறையாக வந்துவிட்ட விஷயங்கள் எல்லோருக்கும் தெரிந்தேயிருக்கும் என்று நினைத்துவிட்ட மாதிரி, சில ஸ்மிருதிகளில் ஸந்தியாவந்தனப் பிரயோகமே இல்லை; சிலவற்றில் சிராத்த

விஷயமில்லை;தீட்டு-துடக்கு ஸமாசாரங்களைச் சொல்லும் ஆசௌசாதிகள் சிலதில் இல்லை. "இப்படி மூச்சுவிடு!இப்படி சாப்பிடு" என்று புஸ்தகத்தில் எழுதி வைத்தா சொல்லிக் கொடுக்க வேண்டும்?அந்த மாதிரிதான் இவையும் என்று அந்த ஸ்மிருதி கர்த்தாக்கள் நினைத்திருப்பார்களோ என்னவோ?

இம்மாதிரி எந்த விஷயத்தையுமே 'தன்னால் தெரிந்திருக்கும்'என்று நினைத்து விட்டுவிடாமல், ஸகலத்தையும் எழுதி வைத்திருப்பது நிபந்தன கிரந்தங்களில்தான். ஸ்மிருதிகளில் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பவைகளையும் இவையே வியவஸ்தை செய்து, இதிது இப்படியிப்படித்தான் என்று நிர்ணயம் செய்கின்றன. சில பெரியவர்கள் எல்லா ஸ்மிருதிகளையும் பார்த்து, ஒன்றோடென்று பொருத்தி ஆராய்ச்சி செய்து, முடிவாக இன்னின்ன செய்யவேண்டும் என்று தீர்மானித்து, ஐயம் திரிபற இந்த நிபந்தனைகளை எழுதி வைத்திருக்கிறார்கள்.

இப்படி நம் தேசத்தில் ஒவ்வொரு பிரதேசத்தில் ஒவ்வொரு நிபந்தனை கிரந்தத்தை அநுஸரிக்கிறார்கள். வடக்கே இருப்பவர்கள் காசிநாத உபாத்யாயர் எழுதிய நிபந்தனத்தைப் பின்பற்றுகிறார்கள். மேற்கே மஹாராஷ்டிரத்தில் 'மிதாக்ஷரி'என்ற நிபந்தனம் அநுஸரிக்கப்படுகிறது. அதற்குச் சட்டத்துக்கு ஸமதையான ஸ்தானம் இருப்பதாகக் கோர்ட்டுகளே அங்கீகரித்திருக்கின்றன. கமலாகர பட்டர் எழுதிய 'நிர்ணய ஸிந்து'என்ற நிபந்தனமும் அங்கு வழங்குகிறது. மஹாராஷ்ட்ரத்திலுள்ள பைதானில் மந்த்ரியாக இருந்த ஹேமாத்ரி என்பவர் எல்லா தர்ம சாஸ்திரங்களையும் சேர்த்து ஒரு பெரிய "டைஜஸ்'டாக 'சதுர்வர்க்க சிந்தாமணி'என்று எழுதியிருக்கிறார். இங்கே தக்ஷிணத்தில் நாம் வைத்யநாத

தீக்ஷிதர் எழுதிய "வைத்யநாத தீக்ஷிதீயம்"என்ற புஸ்தகத்தைப் பின்பற்றிச் செய்கிறோம். கிருஹஸ்தர்களுக்கு இவை முக்யமாக இருக்கின்றன. ஸந்நியாஸிகள் தாங்கள் செய்ய வேண்டியது என்ன, செய்யக்கூடாதது என்ன என்பதை 'விச்வேச்வர ஸம்ஹிதை'என்ற நூலைப் பார்த்து தெரிந்து கொள்கிறார்கள்.

வைத்யநாத தீக்ஷிதீயம்

தமிழ்நாட்டில் தர்ம சாஸ்திரம் என்றால் வைத்யநாத தீக்ஷிதீயம்தான். கொஞ்சம் பாஷாஞானம் இருந்தாலும் இதுபோன்ற தர்ம சாஸ்திரத்தைப் படித்துப் புரிந்துகொண்டு விடலாம். வேத அத்யயனம் பண்ணினால்கூட மந்திரத்துக்கு அர்த்தம் தெரியாத மாதிரி, இது கஷ்டம் இல்லை. வைத்யநாத தீக்ஷிதீயத்தைப் பெரியவர்கள் நன்றாகத் தமிழிலேயே மொழி பெயர்த்து அச்சுப் போட்டிருக்கிறார்கள்.

வைத்யநாத தீஷிதர் எழுதிய புஸ்தகமாதலால் இதற்கு இப்படிப் பெயர் சொல்கிறோம். அவர் இந்நூலுக்கு, வைத்த பெயர் "ஸ்ம்ருதி முக்தாபல நிபந்தன க்ரந்தம்"என்பது.

இந்தப் பரம உபகாரமான நூலை எழுதிய வைத்யநாத தீக்ஷிதரைப் பற்றி நமக்குக் கொஞ்சமே தெரிய வந்திருக்கிறது. இருநூறு வருஷங்களுக்கு முன்பு அவர் இருந்திருக்க வேண்டும். நாச்சியார் கோவிலுக்கு ஸமீபத்திலுள்ள கண்டிரமாணிக்கத்தைச் சேர்ந்தவர் என்று தெரிகிறது. எழுதியதோடு மட்டுமில்லாமல் அவரே ஸகல கர்மங்களையும், தர்மங்களையும் அநுஷ்டித்துக் காட்டினார்;பெரிய யாகங்கள் செய்தார் என்று அறிகிறோம்.

மேதாதிதி, விக்ஞானேச்வரர், ஹேமாத்ரி முதலியவர்களின் உயர்ந்த நிபந்தன கிரந்தங்களையும்விட வைத்யநாத தீக்ஷிதீயமே சிரேஷ்டமானதாகக் கருதப்படுகிறது. ஒரு விஷயங்கூட விட்டுப் போகாமல் இதில் வர்ண (ஜாதி) தர்மம்,

(பிரம்மசர்யம் முதலான) ஆச்ரம தர்மம், ஆசௌசம், சிராத்தம், பிராயச்சித்தம், ஸ்திரீ தர்மம், தாயபாகம், திரவிய சுத்தி முதலான ஸகலத்தையும் பூர்ணமாகச் சொல்லியிருக்கிறது.

தர்ம சாஸ்திரம் பூர்விகமான பிதுரார்ஜித சொத்தை எப்படி யாருக்கு விநியோகிக்க வேண்டும் என்பதைக்கூட வரையறுக்கிறது. பிவீஸீபீ஢ூ சிஷீபீமீ ஙிவீறீறீ முதலானவை சுதந்திர இந்தியாவில் கொண்டுவரப்பட்டபோது சில பேர் சாஸ்திரப்படிதான் சொத்துரிமை தரவேண்டும் என்று வாதம் செய்தார்கள். இந்த விஷயந்தான் தாயபாகம் என்பது. (மருமக்கத்தாயம் என்றே மலையாளத்தில்

மாமன்- மருமான் வழியாகச் சொத்து விநியோகமாவதைச் சொல்கிறார்களல்லவா?'தாயாதி'என்ற பெயரும் 'தாய'த்திலிருந்து வந்ததே.)

நிபந்தன கிரந்தங்களில் தீக்ஷிதீயமே கடைசியில் வந்த தாகையால் முந்தைய எல்லா தர்ம சாஸ்திர நூல்களையும் அலசி, ஆராய்ந்து, எல்லா விஷயங்களை கொடுக்கிறது. இதற்கு முந்தி தோழப்பர் செய்த நிபந்தனந்தான் தக்ஷிணத்தில் ஒரளவுக்கு நல்ல பிரசாரத்திலிருந்தது.

தீக்ஷிதீயம் தோன்றியதிலிருந்தே ஸ்மார்த்த வைஷ்ணவ பேதமில்லாமல் இருவரும் அதை ஆதாரமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ச்ருதியான வேதத்தையும், அதன் விளக்கமாய் பூர்வத்திலேயே தோன்றிய கல்ப ஸூத்ர, தர்ம ஸூத்ர, ச்ரெளத-க்ருஹ்ய ஸூத்ரங்களையும், ஸ்மிருதிகளையும்

போல, பிற்பாடு தோன்றிய நிபந்தன கிரந்தங்களை எல்லாரும் ஏற்கும்படியான முறையில் எழுதுவது ஸுலபமல்ல. தீக்ஷிதர் பக்ஷபாதமேயில்லாமல் விசால மனஸோடு, நடுநிலைமையிலிருந்து கொண்டு மீமாம்ஸா சாஸ்திரத்தின் அர்த்த நிர்ணய முறையையே பின்பற்றிப் பூர்வ சாஸ்திரங்களைத் தொகுத்து, அவற்றில் பரஸ்பர விரோதமுள்ள பாகங்களில் முடிவாக ஒரு தீர்மானத்துக்கு வந்திருப்பதால்தான் தீக்ஷிதீயம் தென்தேசத்தில் பிரமாண நூலின் ஸ்தானத்தைப் பெற்றது. ஒன்றுக்கொன்று ஸ்மிருதிகள் முரணாயிருக்கும் சில இடங்களில், அவரவர் இவற்றை தேசாசாரப்படி செய்து கொள்ளட்டும்;தங்கள் குல பூர்விகர்கள்

எப்படிப் பண்ணினார்களோ அப்படிப் பண்ணட்டும்"என்று பெருந்தன்மையோடு சொல்லி விட்டு விடுவார்.

## சுயேச்சையும் கட்டுப்பாடும்

இங்கே ஒரு பொதுவான விஷயம் சொல்லவேண்டும். எவ்வளவுதான் அலசி அலசி விரிவாக எழுதினாலும் நூறாயிரம் சமாசாரங்கள் வந்து சேர்கிற மநுஷ்ய வாழ்க்கையில் ஒவ்வொரு அம்சமும் இப்படித்தான் என்று எழுதிவைத்து நிர்ணயம் பண்ண முடியாது. எழுத்திலே நிர்த்தாரணம் செய்வது சட்டம் மாதிரி நிர்ப்பந்தமாகத்தான் தோன்றும். நன்றாகக் கட்டுப்பாடு செய்கிற சட்ட விதிகள் வேண்டும்தான். நம் சாஸ்திரங்களில் இப்படி நிறைய இருக்கத்தான் செய்கின்றன. சுதந்திரம், ஜனநாயகம் என்று பெரிசாகச் சொல்வதெல்லாம் யதார்த்தத்தில் மனம் போனபடி நடப்பதாகவும், அசுத்தமான நல்லவர்களை பலிஷ்டரான முரடர்கள் ஸ்வயேச்சையாக அடக்கி ஒடுக்கிக் கஷ்டப்படுத்துவதாகவுமே இருப்பதைப் பார்க்கிறோம். ஆகையால், விதிகளைப் போட்டு ஜனங்களைக் கட்டுப்படுத்தத்தான் வேண்டும். ஆனாலும் இதிலும் ஒரு லிமிட் வேண்டும். கட்டுப்பாடு பண்ணுவதற்கும் ஒரு கட்டுப்பாடு வேண்டும். இல்லாவிட்டால்

மநுஷ்ய ஸ்வபாவப்படி, ஒரேயடியாகச் சட்டம் போட்டு நெரித்தால் உத்ஸாகமே போய்விடும். ரொம்பவும் கட்டுப்படுத்தினாலே ரொம்பவும் அறுத்துக் கொண்டு ஒடத் தோன்றும்.

இதனால் நம் சாஸ்திரங்களில் எல்லாவற்றையும் எழுதி வைத்து சட்டமாகத் திணிக்காமல், பல விஷயங்களில் பெரியவர்கள் பண்ணுகிறதைப் பார்த்தே மற்றவர்கள் மனமொப்பி, தாங்களாக, ஸ்வயேச்சையாக அதே மாதிரி செய்யும்படி விட்டுகிறார்கள். என்னை நீங்கள் பெரியவன் என்று வைத்துக் கொண்டு விட்டால், என்னைப் பார்த்து நான் பண்ணுகிற மாதிரி நீங்களும் நெற்றிக்கு இட்டுக் கொள்ள வேண்டும், பூஜை பண்ண வேண்டும், பட்டினி கிடக்க வேண்டும் என்று ஸ்வயேச்சையாக ஆரம்பிக்கிறீர்கள் இல்லையா?இந்த மாதிரி சில விஷயங்களை ஜீமீக்ஷீவஷீஸீணீறீ மீணீனீஜீறீமீ (இன்னொருத்தரின் வாழ்க்கை உதாரணம்), மீக்ஷீணீபீவீமீவீஷீஸீ (மரபு), தேச வழக்கம் (றீஷீநீணீறீ நீ஖ுஒமீஷீனீ), குடும்ப வழக்கம் இவற்றைப் பார்த்தே பண்ணும்படியாக விட்டால்தான் பாக்கிக்குச் சட்டம் போட்டு விதிகளாக எழுத்தில் எழுதி வைக்கிறபோது அவற்றை ஜனங்கள் சிரத்தையுடன் அநுஸரிக்க விரும்புவார்கள்.

வாழ்ந்து காட்டி பிறத்தியாரையும் அப்படிச் செய்ய வைப்பது ரொம்ப உசத்தி. அப்புறம் வாய் வார்த்தையாகப் பேசி, நீஷீனீஜீ஖ுறீஒவீஷீஸீ(நிர்பந்தம்) இல்லாமல் ஸ்வயேச்சையாக ஏற்கிற மாதிரி ஜீமீக்ஷீஒ஖ுணீஒவீஷீஸீமூலம் பண்ண வைப்பது இரண்டாம் பட்சம். கடைசி பட்சம்தான் விதியாக எழுதி வைத்துக் கட்டாயப்படுத்துவது. ஸஹஸ்ரம் வத ; ஏகம் மா லிக என்று வசனம் கூட உண்டு. 'ஆயிரம் விஷயத்தை வாய் வார்த்தையாகச் சொல்;ஆனால் அதில் ஒன்றைக் கூட எழுதி வைத்து நிர்ப்பந்தம் பண்ணாதே'என்பது இதற்குத் தாத்பரியம். இப்போது எடுத்ததற்கெல்லாம் ஷக்ஷீவீமீமீஸீ றீணீஷ (எழுத்து மூலம் சட்டம்)!கையில் பேனா

கிடைத்தவனெல்லாம் தன் அபிப்ராயத்தை எழுதி பப்ளிஷ் பண்ணிவிடுகிறான்!

மநுஷ்யனுக்கு சுதந்திரமே தராமல் ஹிந்து தர்மசாஸ்திரங்கள் ஆயிரம் சட்டம் போடுகின்றன என்று இக்காலத்தவர் கண்டித்தாலும், அதிலே இந்த சுதந்திரத்தை மதித்துப் பல விஷயங்களை விட்டுத்தான் வைத்திருக்கிறது. ஜீவன் இஷ்டப்படி போய், தானும் கெட்டு லோகத்தையும் கெடுக்காமலிருக்க வேண்டுமானால் எல்லா விஷயத்திலுமே ஒரு நிர்ணயம் இருக்கத்தான் வேண்டும் என்று நம் சாஸ்திர கர்த்தாக்கள் கருதியிருக்கிறார்கள். ஆனால் இப்படிப்பட்ட நிர்ணயங்கள் எல்லாவற்றையும் ஜனங்கள் எழுத்து மூலம் சட்டமாக எடுத்துக் கொள்வதானால் ரொம்பவும் கட்டி வைக்கிற மாதிரி நினைப்பார்கள். ஆகையால், சிலவற்றை மட்டுமே எழுதுவோம்;பாக்கியை அவர்களே சுதந்திரமாக சிஷ்டர்களைப் பார்த்தும், மரபைப் பார்த்தும், தேச குல ஆசாரத்தைப் பார்த்தும் அநுஷ்டிக்கட்டும்'என்று விட்டிருக்கிறார்கள்.

'சாஸ்திர விதி'என்னும்போது தோன்றும் நிர்பந்த எண்ணம் பெரியோர் வழி, மரபு என்னும்போது தோன்றுவதில்லை. குல வழக்கம், ஊர் வழக்கம் முதலியவற்றை ஒரு சுய அபிமானத்தோடு ஏற்றுக்கொள்கிறோம்.

இவற்றைக் கடைசி தர்மசாஸ்திர நூலான வைத்யநாத தீக்ஷிதீயந்தான் பெரிய மனஸோடு ஒப்புக் கொண்டது என்றில்லை. பூர்வ கிரந்தங்களும் இதே அபிப்ராயத்தைக் கொண்டவைதான். பெரும்பாலாரால் பின்பற்றப்படுகிற - 'அதாரிடி'ஸ்தானம் பெற்ற - ஆபஸ்தம்ப ஸூத்திரத்திலேயே மஹரிஷி ஆபஸ்தம்பர் முடிவில், "நான் இந்த சாஸ்திரத்தில் எல்லா தர்மங்களையும் சொல்லிவிடவில்லை. மீதி எவ்வளவோ இருக்கினறன. ஸ்திரீகளிடமிருந்தும், நாலாம் வர்ணத்தவரிடமிருந்துங்கூடக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவை அநேகம் இருக்கின்றன. அவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்கிறார்.

இதிலிருந்து 'ஸ்திரீகளைப் புருஷர்கள் அடக்கி வைத்தார்கள்;பிராமணரல்லாதாரை பிராமணர்கள் கீழே தள்ளியிருந்தார்கள்'என்று குற்றம் சொல்வதெல்லாம் எவ்வளவு தப்பு எனத் தெரிகிறது. பெரிய தர்ம சாஸ்திர ஆதார நூலிலேயே ஸ்திரி-சூத்ரர்களின் தார்மிக ஞானத்தை மதித்து, அதற்கு அதிகாரபூர்வமான ஸ்தானம் கொடுத்திருக்கிறது.

கல்யாணங்களில் ஆரத்தி எடுப்பது, பச்சை பூசுவது என்று அநேக விஷயங்கள் பெண்டுகள் சொன்னபடி செய்ய வேண்டும் என்றே ஆச்வலாயனர் முதலான பெரிய 'ஒரிஜினல்'ஸூத்ரகர்த்தாக்கள் சொல்லியிருக்கிறார்கள். பந்தற்கால் நடுவதற்கு மந்திரம் இருந்தாலும்கூட, அது விஷயமாகப் பந்தல் போடுகிற வேலைக்காரன் ஒரு ஐதிகம் சொன்னால் அதையும் கேட்கத்தான் வேண்டும்.

இப்படியெல்லாம் சாஸ்திரங்களில் ஒரே கெடுபிடிக் கட்டாயம் பண்ணாமல் எல்லாருக்கும் கொஞ்சம் ஜனநாயக சுதந்திரம் கொடுத்துத்தான் இருக்கிறது. நாலாம் வர்ணமான சூத்திரர்களுக்கு உள்ள ஸம்ஸ்காரங்களையும் அநுஷ்டானங்களையும் தர்ம சாஸ்திரங்கள் சொல்லியிருக்கின்றன. அந்த ஜாதியை அலட்சியம் பண்ணவே இல்லை. தீஷிதீயத்தில் வர்ணாச்ரம காண்டத்திலும், ஆன்ஹிக காண்டத்திலும், சிராத்த காண்டத்திலும் இவை உள்ளன.

பொதுவாக, தர்ம சாஸ்திரங்களில் ஆசார காண்டம், வியவஹார காண்டம் என்று இரண்டு உண்டு. ஒழுக்கங்களை ஆசாரம் என்பார்கள். அவற்றை நடைமுறையிலான வெளிக்காரியங்களில் பின்பற்றுவதே வியவஹாரம்.

சின்னங்கள்

நாம் இந்த மதத்தைச் சேர்ந்தவன் என்றால் அதற்கு சில வெளி அடையாளங்கள், சின்னங்கள் உண்டு.

'ஸ்கௌட்'(சாரணர்)களுக்குத் தனி உடுப்பு இல்லையா?ஆர்மி (தரைப்படை), நேவி (கப்பற்படை) ஒவ்வொன்றில் இருப்பவருக்கும் வேறு வேறு வெளி அடையாளங்கள் இருக்கின்றன. போலீஸிலேயே பல பிரிவுக்ளுக்குப் பல தினுஸாக இருக்கின்றன. இவர்கள் டிரெஸ்ஸையும், பாட்ஜ் முதலானவற்றையும் மாற்றிக் கொள்வதால் இவர்கள் செய்கிற காரியம் ஒன்றும் மாறிவிடாது. இருந்தாலும்

அப்படி மாற்றிக் கொள்ளக் கூடாது என்று கட்டாயமாக விதி இருக்கிறது. போலீஸ்காரன் தொப்பியை நேவிக்காரன் வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படியே இவன் தொப்பியை அவன் வைத்துக் கொள்ளக்கூடாது. எதிலும் கட்டுப்பாடு, ஒழுங்கு (discipline, orderliness) இருக்க வேண்டும்.

இந்த டிஸிப்ளின், ஆர்டர் மதத்துக்கும் வேண்டுமல்லவா?அதனால்தான் பல வேறு ஜாதிக் காரர்கள், வெவ்வேறு ஆசிரமக்காரர்கள் ஆகிய ஒவ்வொருத்தருக்கும் வித்தியாஸமான சின்னங்களை, காரியங்களைக் கொடுத்திருக்கிறது. 'இப்படி வேஷ்டி கட்டிக் கொள்ளு, இப்படி புடவை கட்டிக் கொள்ளு, இந்த மாதிரி நெற்றிக்கு இட்டுக் கொள்ளு என்றெல்லாம் ரூல்களை தர்ம சாஸ்திரம் சொல்கிறது.

இது வெறும் சமூகக் கட்டுப்பாட்டுக்காக மட்டும் சொன்னதல்ல. இவை ஒவ்வொன்றிலும் ஜீவனைப் பரிசுத்தி பண்ணுகிற சூட்சுமமான அம்சமும் உண்டு.

கச்சேரியில் ஸேவகனாயிருப்பவனுக்கு டவாலி உண்டு. அதிகாரிக்கு அது கிடையாது. ஏன் இப்படி என்று நாம் கேட்பதில்லை. ஆனால் சாஸ்திரத்தில் அவரவர் தொழிலுக்கும் குலாசாரத்துக்கும் ஏற்றதாக வேறு வேறு அடையாளங்களைச் சொன்னால் மட்டும் ஆட்சேபிக்கிறோம். ஸமத்வம் (equality) என்று சத்தம் போடுகிறோம். ஸமஸ்த ஜந ஸமூகத்தின் க்ஷேமத்துக்காகவும்

காரியத்தில் பலவாகப் பிரிந்திருந்த போதிலும், ஹ்ருதயத்தில் ஒன்றாக சேர்ந்திருந்த நம்முடைய சமுதாய அமைப்பில் ஆசார அநுஷ்டானங்களையும், அடையாளங்களையும் பிரித்துக் கொடுத்தது அவரவரது குண-கர்மாக்களுக்கு அநுகூலம் பண்ணுவதற்குத்தான் என்பதை மறந்து, இதிலே வாஸ்தவத்தில் இல்லாத உயர்வு தாழ்வுகளைக் கல்பித்துக் கொண்டு சண்டை போடுகிறோம்.

இப்போது கடைசியில் ஒருத்தருக்கும் ஒரு மதச் சின்னமும் இல்லை என்று ஆக்கிக் கொண்டிருக்கிறோம். ''எல்லாம் ஸூபர்ஸ்டிஷன்''என்கிறோம். சீர்திருத்தம் என்று ஆரம்பிக்கிறோம். இப்படிச் சொல்லிக் கொண்டே, சீர்திருத்தக்காரர்கள் என்று அடையாளம் தெரிவதற்காக ஒரு குல்லா போட்டுக்கொள்கிறோம்;அல்லது ஏதாவது ஒரு கலரில் தட்டை, துண்டு போட்டுக்கொள்கிறோம். இவற்றுக்கு தெய்வத்துக்கும் மேலான முக்யத்தைத் தருகிறோம்.

## ஸ்மிருதிகள் சுதந்திர நூல்கள் அல்ல

ஸ்மிருதிகள் என்கிற தர்மசாஸ்திரங்களை மரியாதை உணர்ச்சியுடன் பார்க்கிற பலரிடத்தில்கூட அவற்றைப் பற்றி ஒரு தப்பான அபிப்ராயம் இருக்கிறது. அதாவது ஸ்மிருதிகளைபப் பண்ணினவர்களே சுதந்திரமாக இந்த தர்மங்களை, விதிகளை வகுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறார்கள். ஸ்மிருதிகாரர்களை (ஸ்மிருதிகளை எழுதியவர்களை) ரீணீஷ்-ரீவீஸ்மீக்ஷீஷ என்று சொல்கிறார்கள். அதாவது அவர்களாகவே தங்கள் அபிப்ராயப்படி இவற்றை சட்டம் (ரீணீஷ்) என்று போட்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறார்கள். சட்ட நிபுணர்கள் பலர் ஒன்று சேர்ந்து நம் தேசத்தில் இப்படியிப்படி இருக்க வேண்டும் என்று 'கான்ஸ்டிட்யூஷன்'(அரசியல் நிரணய சாஸனம்) செய்திருக்கிறார்களே, அது போலத்தான் தர்ம சாஸ்திரங்களையும் எழுதியிருக்கிறார்கள் என்று நினைக்கிறார்கள். ஸ்மிருதிகள் சுதந்திரமாகவே அபிப்ராயம் சொல்பவை என்று நினைக்கிறார்கள்.

இப்படி நினைப்பதால் இன்னொன்றும் இதைத் தொடர்ந்து தோன்றுகிறது. இப்போது கான்ய்டிட்யூஷன் நாம் நடைமுறையில் செய்ய விரும்புகிற சில காரியங்களுக்கு இடம் கொடுக்காமலிருக்கிற போது, நமக்கு ஸாதகமாக அதைத் திருத்திவிடுவது (ணீனீமீஸீபீ பண்ணுவது) என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா? இதே மாதிரி, பழைய சட்டங்களான தர்ம சாஸ்திரங்களையும் நம்முடைய இக்காலக் கொள்கைக்கு ஏற்றபடி மாற்றி விட்டால் என்ன என்று கேட்கிறார்கள்.

என்னிடமே பல பேர் கேட்டிருக்கிறார்கள், "காலத்தை அநுஸரித்து சாஸ்திரத்தை ஏன் மாற்றக் கூடாது?"என்று. "ஸர்க்கார் சட்டங்களை மாற்றவில்லையா?"என்று ஆதாரம் காட்டுகிறார்கள். என்னையே ரொம்ப ஸ்தோத்திரம் பண்ணின ரிஷிகள் மாதிரிதான் இந்தக் காலத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். அதனால் நீங்கள் மனசு வைத்தால் சாஸ்திரங்களை இந்தக்

காலத்துக்குத் தகுந்தாற் போல் மாற்றி விடலாம்"என்கிறார்கள். "நாங்கள் ஆசைப் போல் மாற்றி விடலாம்"என்கிறார்கள். "நாங்கள் ஆசைப் படுகிற மாதிரி நீங்கள் சாஸ்திரத்தை மாற்றித் தாருங்கள்"என்பதையே இப்படி கௌரவமாகச் சொல்கிறார்கள்!

ஸ்மிருதிகள் அந்தந்த ஸ்மிருதிகர்த்தாவின் சொந்த அபிப்ராயம்தான் என்றால் இவர்கள் நினைப்பதிலும் கேட்பதிலும் தப்பு இல்லை.

ஆனால் ரொம்பப் பேருக்கு - தர்ம சாஸ்திரங்களிடம் மதிப்புணர்ச்சி உள்ளவர்களுக்குக்கூட- என்ன தெரியவில்லையென்றால், இந்த ஸ்மிருதிகள் அவற்றைச் செய்தவர்களின் சொந்த அபிப்ராயமே இல்லை. ஏற்கெனவே வேதங்களில் சொல்லியிருந்தவற்றையேதான் அவர்கள் தொகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். வேத வாக்கை ஒருகாலும் எந்த சந்தர்பத்திலும் மாற்றக் கூடாதாகையால், இந்த தர்ம சாஸ்திர விதிகளையும் மாற்றுவதற்கே இல்லைதான்.

சாஸ்திரப்படியே நீங்கள் நடக்கும்படிப் பண்ண எனக்கு சக்தியோ, யோக்யதையோ இல்லாமல் இருக்கலாம். ஆனாலும் அதை மாற்றுவது நிச்சயமாக என் காரியமில்லை. என்னை இங்கே (மடத்தில்) உட்கார்த்தி வைத்திருப்பது வேத தர்மங்களை ஜனங்கள் பரிபாலனம் பண்ணும்படியாகச் செய்வதற்குத்தான். ஆசார்யாள் ஆக்ஞை அது தான். அதனால் இந்தக் காலத்தின் ஸௌகரியத்துக்கு, புதுக் கொள்கைக்கும் போக்குகளுக்கும் ஸாதகமாக சாஸ்திரத்தை மாற்றிக் கொடுப்பதற்கு எனக்கு ணீ�ூஸமீலிஷீகூஷீவீமீஹ்(அதிகாரம்) இல்லை.

ரிஷிகளாக இந்த ஸ்மிருதிகளை எழுதி வைத்திருக்கிறார்கள் என்றால் அதை நாம் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதே இல்லை. வேண்டாம் என்றால் தூக்கி எறிந்து நமக்குச் சொல்லியிருக்கிறார்கள், ஏதோ தாங்களாகவே உத்தேசித்து இப்படி இப்படி இருந்தால்தான் நல்லது என்று வரையறுத்து வைத்திருக்கிறார்கள் என்று வரையறுத்து வைத்திருக்கிறார்கள் என்றால் அவை நமக்கு வேண்டியதில்லை. அப்படிப் பார்த்தால் அநேகம் பேர் தங்களுக்குத் தோன்றியதை எழுதி வைத்திருக்கிறார்கள்;நமக்குத் தோன்றுவதையும் நாமே எழுதி வைத்துக் கொண்டு விடலாமே!

உண்மையில் ஸ்மிருதிகள் வேத வாக்கியங்களையே அநுஸரித்துச் சொல்லியிருப்பதனால்தான் இந்த ஸ்மிருதிகளை நாம் இன்றைக்கும் என்றைக்கும் ஆதாரமாக வைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

"சரி, அப்படியென்றால் வேதத்தில் இருப்பதையேதான் இவர்கள் பிரமாணமாகச் சொல்லியிருக்கிறார்கள் என்பதற்கு என்ன ஆதாரம்?"

பெரிய ஆதாரம் மஹாகவியின் வாக்குக்குத்தான். நம்முடைய மத ஸ்தாபகர்கள் யாவரும் - சங்கரர், ராமாநுஜர், மத்வர் எல்லாரும் - தர்ம சாஸ்திரங்கள் வேதத்தை அநுஸரிப்பவையே என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இது நமக்குப் பெரிய ஆதாரம் என்று சொல்லமுடியாது. இந்த மதாசாரியர்களுக்கெல்லாம் கொள்கைப் பிடிமானம் உண்டு. ஸம்பிரதாயத்தை ரக்ஷிக்க வேண்டும் என்ற லக்ஷ்யம் உண்டு. அதனால் இவர்கள் மரபை மீறிப் பேசமாட்டார்கள். ஆனால் கவி விஷயம் இப்படியில்லை. அவனுக்கு ஒரு கொள்கையையும் நிலை நாட்டுகிற பிடமானம், பிடிவாதம் இராது. கொள்கைச் சார்பில்லாமலே தனக்கு ஸத்யமாகப் படுவதையெல்லாம் சொல்லிக்கொண்டு போகிறவன் அவன்.

இப்படிப்பட்ட மஹாகவிகளில் முக்கியமான காளிதாஸன் 'ரகுவம்ஸ'த்தில் ஒரிடத்தில் ஸ்மிருதிகளைப் பற்றிச் சொல்கிறான்.

ராமனுக்குத் தகப்பனார் தசரதர். தசரதருடைய தகப்பனார் அஜன். அஜனுடைய தகப்பனார் ரகு. அதனால்தான் ரகுராமன் என்ற பெயரே - கொள்ளுத்தாத்தாவின் பெயரே- ராமனுக்கு வந்தது. 'தாசரதி'என்று தகப்பனாரின் பெயரை இரண்டோர் இடங்களில்தான் சொல்லியிருக்கும். பொதுவாகத் தாத்தாவின் பெயரைத்தான் பேரனுக்கு வைப்பது. ஆனால் தாத்தா பேரான அஜன் என்பது ராமனுக்குக் கிடையாது. கொள்ளுத்தாத்தாவின் பேரேதான் இவருக்கு அதிகம். அவ்வளவு கீர்த்தியாக, பேரும் புகழுமாக ரகு வாழ்ந்து கொண்டிருந்தார். ராகவன் என்றாலும் ரகு குலத்தோன்றல் என்றே அர்த்தம்.

ரகுவின் தகப்பனாருக்கு திலீபன் என்று பெயர். திலீபனுக்கு வெகுநாள் பிள்ளையே இல்லாமல் இருந்தது. திலீபனுடைய குலகுரு வஸிஷ்டர். வஸிஷ்டரிடத்தில் திலீபன் போய், "ஸ்வாமி, எனக்குக் குழந்தையே இல்லை. என் வம்சம் விளங்க நீங்கள்தான் அநுக்கிரகம் செய்ய வேண்டும்"என்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

வஸிஷ்டர் வீட்டில் ஒரு பசு மாடு இருந்தது. அது காமதேனுவின் பெண். நந்தினி என்று பெயர். அந்த நந்தினியை திலீபனிடத்தில் கொடுத்து, நீ இதைக் குளிப்பாட்டி, மேய்த்து, மிகவும் சிரத்தையுடன் பூஜித்து வளர்த்துக் கொண்டிரு. உனக்குப் பிள்ளை பிறக்கும்" என்று வஸிஷ்டர் அநுக்கிரஹம் செய்தாராம்.

ராஜாவைப் பார்த்து இப்படி மாடு மேய்க்கச் சொன்னார் என்றால் அவன் எத்தனை விநயமாக இருந்திருக்கவேண்டும்?

அன்றைய தினத்திலிருந்து திலீப மஹாராஜாவும் ஒரு மாட்டுக்காரனைப் போலவே தினமும் அந்த நந்தினியைக் காட்டுக்கு ஓட்டிக்கொண்டு போவது,

மேய்ப்பது, குளிப்பாட்டுவது, இப்படி மிகவும் பக்தி சிரத்தையுடன் ரக்ஷித்துக் கொண்டிருந்தாராம். காட்டுக்கு மாட்டை ஒட்டிக் கொண்டு மேய்க்கப் போகிறபோது, துஷ்ட ஜந்துக்களால் மாட்டுக்கு ஆபத்து வராமல் இருக்க ஒரு தனுசு, ஒரு பாணம் மாத்திரம் எடுத்துக் கொண்டு மாட்டின் பின்னாலேயே போவாராம். அதைச் சொரிந்து கொடுக்கிறது, அதை மேய்க்கிறது, அது நின்றால் இவரும் படுத்துக்கொள்வது, அது நடந்தால் இவரும் நடக்கிறது - இப்படி அதன் பின்னாலேயே இவர் போய்க் கொண்டிருந்தார். ஒரு நிழல் எப்படி இருக்குமோ - நாம் உட்கார்ந்தால் நிழலும் உட்காருகிறது, நின்றால் நிற்கிறது, ஒடினால் ஒடுகிறது - அப்படி, சாயேவ தாம் பூபதிரந்வகச்சத்|

நிழல்போல் அந்த அரசர் நந்தினி என்ற பசுமாட்டை ரக்ஷித்து வந்தார் என்று காளிதாஸன் சொல்கிறான்.

இப்படி தினமும் வீட்டிலிருந்து திலீபன் மாட்டை மேய்க்க ஒட்டிக் கொண்டு போகிற காலத்தில் திலீபனுடைய மனைவி ஸுதக்ஷிணையும் கொஞ்ச தூரம் பின்னாடியே நடந்து போய் வழியனுப்பிவிட்டு அப்புறம் திரும்பி வருவது வழக்கம். வெகு நியாயமாக வீட்டில் இருந்துகொண்டு பர்த்தாவை அனுப்பி வைப்பது, சாயந்திரம் காட்டிலிருந்து அவர் பசுமாட்டோடு எப்போது திரும்பி வருவார் என்று பார்த்துக் கொண்டிருப்பது - இப்படி ஸுதக்ஷிணையும் பதிக்கு சுசுரூஷை செய்து கொண்டிருந்தாள். இவர் நந்தினியை நிழல் போல் பின்பற்றினார் என்றால் இவரை ஸுதக்ஷிணை நிழல் மாதிரி அநுஸரித்தாள்.

பதிவ்ரதா தர்மத்தை ஜனகரே ஸீதா கல்யாணத்தின் போது இப்படித்தான் சொனனார். ராமனைப் பார்த்து "என் குழந்தை ஸீதா உன்னை நிழல் போலத் தொடர்ந்து வருவாளப்பா!சாயேவ அநுகதா"என்றார். இப்படி வால்மீகி ராமாயணத்தில் இருக்கிறது. வால்மீகி சொன்ன ராமனுடைய சரித்திரத்தைக் காளிதாஸனும் சொல்ல வந்தான். ராமனுக்கு பின்னாடி வந்த லவ குசர்களைப் பற்றியும் சொல்கிறான். ராமனுக்கு முந்தி ரகுவம்சம் இருக்கிறதே- ராமனுடைய முன்னோர்கள்- அவர்களைப் பற்றியும் எழுதியிருக்கிறான். இப்படி ராமாயணம் சொல்ல வந்தவன், அந்த உத்தமமான வம்சத்தில் முன்னும் பின்னும் உள்ள சந்ததிகளைப் பற்றியும் சொல்லி, ராமனுக்கு யாருடைய பெயர் வந்ததோ அந்த மகா கீர்த்தி வாய்ந்த ராமனுடைய கொள்ளுத் தாத்தா பெயரையே "ரகுவம்சம்"என்று அந்த மஹாகாவியத்துக்கு வைத்தான். உத்தமமான வம்சத்தைப் பற்றி சொன்னாலே நாக்கு பவித்திரமாகும் என்பது போல் சொல்லியிருக்கிறான்.

இதிலே, ஸுதக்ஷிணை மாடு மேய்க்கப் போகும் திலீபனைத் தொடர்ந்து போகிறதைச் சொல்கிறபோதுதான் ரிஷிகள் எல்லாரும் ஸ்மிருதிகளை எப்படி பண்ணினார்கள் என்பதைச் சொல்கிறான். இதைச் சொல்ல வேண்டும் என்று

கொள்கை கட்டிக் கொண்டு சொல்லவில்லை. இதற்காகச் சொல்கிற மாதிரியும்

வலிந்து சொல்லவில்லை. என்னவோ அவனுடைய திறந்த மனஸில் பளிச்சென்று பட்டு, அதை அப்படியே சொல்லிவிட்டான் என்று தோன்றுகிற ரீதியிலே ஸ்மிருதிகளைப்பற்றிச் சொல்கிறான். என்ன சொல்கிறான்?

ú§îV¬í ñ£†®¡ H¡ù£™ ªè£…ê Éó‹ âŠð®Š «ð£ù£œ â¡Á õ¼E,Aø£¡. ï‰FQ º¡ù£® «ð£Aø¶. Þõœ «õÁ âƒ°‹ ð£˜,è£¶, Ü‰î Ü®„ ²õ†®¡ õNJ«ô«ò ïì‰î£œ â¡Á ªê£™ô õ¼Aø£¡. ï‰FQ ïì‚°‹««ð£¶ Üî¡ °÷‹¹èœ ð´Aø Þìˆ F™ ªè£…ê‹ ÉC A÷‹¹Aø¶. ÞŠð® A÷‹¹‹ð®òù£ù ðMˆóñ£ù ÉC Þ¼,Aø«î, Ü‰îˆ ÉC¬òŠ ð£˜ˆ¶, ªè£‡´, Ü‰î„ ²õ†¬ì Ü¸úKˆ¶ ú§îV¬í ªè£…ê‹ Éó‹ ïì‰î£œ â¡Á è£Oî£ú¡ ªê£™Aø£¡.

மற்ற கவிகளைக் காட்டிலும் காளிதாஸன் வெகு அழகாக உபமானம் சொல்வான். அதுதான் அவனிடத்திலுள்ள விசேஷம். ஒவ்வோர் கவிக்கு ஒவ்வோர் அம்சத்தில் விசேஷம். "உபமா காளிதாஸஸ்ய"- உவமைக்குக் காளிதாஸன். அப்படி உபமானத்தோடு ஸுதக்ஷிணை நந்தினிக்குப் பின் நடந்து போகிறதைச் சொல்கிற போதுதான் வேதத்தை ஸ்மிருதி பின் தொடர்வது உவமையாக வருகிறது:

தஸ்யா:குரந்யாஸ பவித்ர பாம்ஸூம்

அபாம்ஸூலாநாம் துரி கீர்த்தநீயா।

மார்கம் மநுஷ்யேச்வர தர்மபத்நீ

ச்ருதேரிவார்த்தம் ஸ்மருதிரந்வகச்சத்।।

'பாம்ஸூ'என்றால் தூசி. நந்தினி குளம்பு வைக்கிற இடத்தில் தூசி கிளம்புகிறது. 'குர'என்று குளம்புக்குப் பெயர். 'குரந்யாஸ'- குளம்பு வைத்ததினாலே; 'பவித்ர பாம்ஸூம்'-கிளம்புகிற பவித்திரமான தூசியைப் பார்த்துக் கொண்டு போனாள்.

பசுவின் பாத தூசி மிக விசேஷமானது. அது எந்த இடத்தையும் பரிசுத்தம்செய்து விடும். ஸாதாரணப் பசுவின் தூசியே பவித்ரம் செய்து விடும். ஸாதாரணப் பசுவின் தூசியே பவித்ரம் என்றால், காமதேனு புத்திரியான நந்தினியின் பாத தூசி எத்தனை உயர்ந்ததாயிருக்கும்?அதற்குப் பாத்திரமான ஸுதக்ஷிணையோ இயல்பாகவே பரம பவித்ரமான தூசிபடியாத சரித்திரத்தை உடையவள்.

அபாம்ஸூலாநாம் துரி கீர்த்தநீயா

'அபாம்ஸூ'ஒரு தூசி இல்லாதவள்! யாதொரு பழியோ களங்கமோ இல்லாத ஜன்மம். அப்பேர்ப்பட்ட உத்தமமான ஸுதக்ஷிணை, நந்தினியின் குளம்பு படுவதனாலே எழும்புகிற பவித்திரமான தூசியை அநுஸரித்து, சுத்தமான

மார்க்கத்தை அநுஸரித்து காலடி எடுத்து வைத்து நடந்தாள். அது எப்படியிருந்தது

என்றால் வேதத்தினுடைய (ச்ருதிகளுடைய) அர்த்தத்தை அநுஸரித்து மஹரிஷிகள் செய்திருக்கும்படியான ஸ்மிருதிகள் எப்படிச் சென்றிருக்கின்றனவோ அப்படியிருந்தது என்கிறான் காளிதாஸன்.

ச்ருதி- ஸ்மிருதி ; ச்ரௌதம்-ஸ்மார்த்தம்

ச்ருதி-ஸ்ம்ருதிகளுக்கிடையே பேதம் கற்பிப்பது தப்பு. ச்ருதி -ஸ்மருதி புராணம் மூன்றும் ஒரே மீ்க்ஷீணீபீவீமீ்வீஷீஸீ (மரபு) தான். 'ச்ருதி-ஸ்ம்ருதி-புராணானாம் ஆலயம்'என்று பகவத் பாதாளைச் சொல்கிறோம். இவை ஒன்றுக்கொன்று வித்யாஸமானவையாக இருந்தால் எப்படி ஒருத்தரிடமே மூன்றும் சேர்ந்திருக்கும்?

Ýê£˜ò£O¡ õN¬ò Ü¸úKŠðõ˜èÀ‚° vñ£˜ˆî˜èœ â¡ð¶ ªðò˜. 'vñ£˜ˆî˜'â¡ø£™ 'vI¼Fè¬÷Š H¡ðŸÁõAøõ˜'â¡ð«î Ü˜ˆî‹. «õîˆ¬î G¬ï ïﮆì«õ Ýê£˜ò£œ ÜõîK˜î£˜ â¡Á ªê£™LM†´, Üõó¶ õNJ™ «ð£Aøõ˜è¬÷ vñ£˜ˆî˜ â¡ø£™ «õîº‹ vI¼F»‹ å¡Á â¡Á î£«ù ÝAø¶?

இப்போது, வேதத்திலே வ்யக்தமாக (வெளிப்படையாக)ச் சொல்லாமல் ஸ்மிருதிகளில் சொல்லியுள்ள அநுஷ்டானங்களை ஸ்மார்த்த கர்மா என்றும், வேதமான ச்ருதியிலேயே வ்யக்தமாகச் சொன்ன அநுஷ்டானங்களை ச்ரௌத கர்மா என்றும் சொல்கிறோம். இதனால் ச்ரௌதத்தைவிட ஸ்மார்த்தம் கீழானது என்று நினைத்து விடவே கூடாது. கிருஹஸ்தனுக்கு மிகவும் முக்யமான ஔபாஸனம், வீட்டிலே இவன் செய்ய வேண்டிய அதி முக்யமான (பீஷீனீமீவமீ்வீநீ) க்ருஹ்ய கர்மாக்கள், வைதிக கர்மாக்களில் ரொம்பவும் அவசியமானதான பித்ரு சிராத்தம் இவையும், பாக யக்ஞங்கள் என்ற ஏழு வேள்விகளும் ஸ்மார்த்த கர்மாக்கள்தான். இவற்றிலெல்லாம் வேத மந்திரங்களேதான் பிரயோஜனமாகின்றன. ஆகையால் ச்ருதியின் உள்பாவத்தை நன்றாகப் புரிந்து கொண்டேதான் இவற்றை ஸ்மிருதிகாரர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

ஆகையால் ச்ருதியை விட ஸ்மிருதி கீழானது, ஸ்மிருதியை விடப் புராணம் கீழானது என்றெல்லாம் நினைக்காமல் எல்லாவற்றையும் ஒன்றாக சேர்த்து, வீஸீமீ்மீரீக்ஷீணீமீ்மீபீ -ஆக நினைக்க வேண்டும்.

வேத தர்மங்களைப் புராணம் கதையாகச் சொல்கிறது. வேத தர்மங்களையும் கர்மங்களையும் ஸ்ம்ருதியானவை கதையில்லாத உபதேசங்களாக, விதிகளாகத் தருகின்றன. கர்மாக்களின் வழிமுறைகளையும் தருகின்றன.

வேதம் முனிவர்களுக்கு வீஸீமீ ஷுஷுவீமீ வீஷீஸீ-ல் (உள்ளுணர்வில்) பளீரென்று தெரிந்தது. அதை அவர்கள் செய்யவில்லை. வெறுமே கண்டு கொண்டார்கள். இங்கே அவர்களுடைய மூளைக்கு வேலையே இல்லை.

ச்ருதிம் பச்யந்தி முனய:

"«õîˆ¬î ºQõ˜èœ ªõÁ«ñ è‡´ ªè£‡ì£˜èœ"â¡Á ªê£™ôŠð†®¼‚Aø¶. ÜŠð®, è‡ªì´˜îF™ îƒèœ Í¬÷¬ò„ ªê½ˆF, üùƒèÀ‚° î˜ñƒè¬÷»‹ è˜ñƒè¬÷»‹ ð£°ð´ˆF, õ¬è ªî£¬èò£è îó«õ‡´‹ â¡ø â‡íˆF™ G¬ù¾ ð´ˆF, ªè£‡´ «è£ˆ¶, ªè£´ˆî«î vI¼F. vI¼F â¡ø£™ G¬ù¾ â¡Á º¡«ð ªê£¡«ùù™ôõ£?

வேதம் தோன்றியது தானாக உண்டான அநுபவம். அதிலிருந்து ரிஷிகள்

நினைவால் உண்டாக்கியது தர்ம சாஸ்திரம் எனப்படும் ஸ்மிருதிகள்.

"ஸம்ஸ்கார ஜன்யம் ஞானம் ஸ்ம்ருதி:"என்று, நியாய சாஸ்திரத்தில் ஸ்மிருதிக்கு லக்ஷணம் சொல்லியிருக்கிறது. ஸம்ஸ்காரத்திலிருந்து பிறக்கும் அறிவே ஸ்ம்ருதி என்று அர்த்தம்.

இந்த இடத்தில் 'ஸம்ஸ்காரம்'என்பதற்கு 'அதீந்திரியம்'என்றும் இன்னொரு பேர் சொல்லியிருக்கிறது. இது என்ன?

காசிக்குப் போய் நேரிலே அந்த க்ஷேத்ரத்தைப் பார்த்தோம். நேரிலே பார்த்தது அநுபவம். ஊருக்குத் திரும்பி வந்து ரொம்ப நாள் கழித்துக் கோயிலுக்குப் போகிற போது, இந்த உள்ளூர்க் கோயிலிலும் 'காசி விஸ்வநாதர் ஸந்நிதி'என்று இருப்பதற்குப் போகிறோம். உடனே காசியிலே நாம் அநுபவித்த விச்வநாத தரிசனம் ஞாபகம் வருகிறது. நடுவே பல நாள் இந்த நினைவு இல்லை. அநேகம் பேரைப் பார்க்கிறோம். பிறகு நினைப்பதில்லை. மறுபடி பார்த்தால் மட்டும், 'ஒஹோ, முன்னே பார்த்திருக்கிறோமே!என்று பழைய ஞாபகம் வருகிறது. இடையிலே நினைவு இல்லை. அப்படி இடையில் இருக்கிற நிலைதான் ஸம்ஸ்காரம் அல்லது அதீந்திரியம் என்பது. அதிலே அநுபவித்தன் வீனீஜீக்ஷீமீமீ வீஷீஸீ (பதிவு) உள்ளூர இருக்கிறது. இந்த 'இம்ப்ரெஷன்'அப்புறம் 'எக்ஸ்ப்ரெஷ'னாக வெளிப்படுவதுதான் ஸ்மிருதி (நினைவு). ஆக அநுபவம், அந்த அநுபவித்தில் ஏற்பட்ட உள் இம்ப்ரெஷனான ஸம்ஸ்காரம் என்ற இரண்டையும் கொண்டே ஸ்மிருதி என்ற நினைவு உண்டாகிறது.

அநுபவமான வேதம் நினைவான ஸ்மிருதியாக, தர்ம சாஸ்திரமாக வந்திருக்கிறது. வேத மூலம் இல்லை என்றால் ஸ்மிருதி என்ற பேரே தப்பு. . இந்த ஸ்மிருதிக்கு எது ஆதாரமான அநுபவம் என்றால் வேதம்தானே?அப்படியொரு ஆதாரமில்லாவிட்டால் "நினைவுக் குறிப்பு"என்று பொருள்படும்படிப் பேர் வைத்திருப்பார்களோ? ஏற்கெனவே ஆதாரமில்லாமல் புதிதாகத் தோன்றுவதை

ஞாபகக் குறிப்பு என்று யாராவது சொல்வார்களா?

நேராக ச்ருதியிலேயே சொன்ன ச்ரௌதம் ஸந்தேஹத்துக்கு இடமில்லாமல் நமக்கு 100%பிரமாணம் என்பதில் யாருக்கும் இரண்டாவது அபிப்ராயமில்லாமில்லை. அதற்காக அப்படி நேராக ச்ருதியில் இல்லாமல் ஸ்மிருதியிலேயே உள்ள ஸ்மார்த்தம் இரண்டாம் பட்ச பிரமாணம் என்று அர்த்தமில்லை. ச்ரௌதத்துக்கு ஆக்ஷேபமாக, மாறாக ஸ்மார்த்தம் பேசாது. ச்ரௌதத்துக்கு அதிகமாகவே சிலதை அது சொல்கிறது. இவையும் நமக்குப் பூர்ணப் பிரமாணமே. ஏனென்றால் ச்ருதியின் வீஸீஸீமீகூஷீ உஜீவீகூஷீவீமீ-ஐ (உள் பாவத்தை)ப் புரிந்து கொண்டே இவற்றை ஸ்மிருதி சொல்கிறது. மஹாபுராணங்களிலும், இதிஹாஸங்களிலும் விட்டுப் போனதையும் ஸ்தல புராணங்கள் எடுத்துச் சொல்லி இட்டு நிரப்புகிற மாதிரி, ச்ரௌதத்தில் விட்டுப் போனதையே ஸ்மார்த்தத்தில்

சொல்லியிருக்கிறது. ஆகையால் 'ச்ருதி பிரமாணம்', 'ஸ்மிருதி பிரமாணம்' என்ற இரண்டு வார்த்தைகள் அடிபடுவதைப் பார்த்து, இவற்றுக்கிடையில் வித்யாஸமோ, ஏற்றத்தாழ்வோ கற்பிக்கக் கூடாது.

ஸம்ஸ்காரம்

மேலே ஸம்ஸ்காரம் என்ற வார்த்தையைச் சொன்னேன். ஆனால் அதற்குச் சொன்ன அர்த்தம் தர்க்க சாஸ்திரப்படியானது. மினீஜீகூஷீமீஉஷீவீஷீஸீ ஷீஸீ னீமீனீஷீகூஷீஹ் (ஒரு விஷயம் மூளைக்குள் பதிந்திருப்பது) என்பது இந்த இடத்தில் அர்த்தம் என்று சொன்னேன்.

பொதுவாக ஸம்ஸ்காரம் என்றால் இப்படி அர்த்தம் செய்ய மாட்டார்கள். 'ஸம்-நன்றாக;காரம் ஆக்குவது:' "ஒன்றை நன்றாக ஆக்குவதே ஸம்ஸ்கார ம்"என்பதுதான் பொதுவான அர்த்தம்.

இம்மாதிரி ஒரு ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கிற அளவுக்கு நன்றாக சுத்தப்படுகிற ஸம்ஸ்காரங்களையே தர்ம சாஸ்திரங்கள் நமக்கு விசேஷமாகச் சொல்கின்றன.

கல்ப ஸூத்ரங்களில் சொன்னதை அநுஸரித்து ஒரு ஜீவன் இந்த ஜீவ யாத்திரையில் (ஒரு ஜன்மாவில்) செய்ய வேண்டிய நாற்பது ஸம்ஸ்காரங்களை விரிவாக தர்ம சாஸ்திரங்களிலிருந்தே அறிகிறோம்.

நாற்பது ஸம்ஸ்காரங்கள் என்னென்ன என்று கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம்.

---

## தேவ லோகம் அல்லது ஆத்ம ஞானத்துக்கு வழி

இந்த லோக வாழ்க்கையில் ஸந்தோஷம், துக்கம் இரண்டும் கலந்து கலந்து வருகின்றன. சிலருக்கு ஸந்தோஷம் அதிகமாக இருக்கிறது. சிலருக்கு துக்கம் அதிகமாக இருக்கிறது. மனஸைக் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து, எத்தனை துக்கத்திலும் சிரித்துக் கொண்டு ஸந்தோஷமாயிருப்பவர்கள் எங்கேயாவது அபூர்வமாக இருக்கிறார்கள். ஸந்தோஷப்பட எத்தனையோ இருந்தும் திருப்தியில்லாமல் அழுபவர்களோ நிறைய இருக்கிறோம். குறையிருக்கிறது என்றால் துக்கம் என்றுதான் அர்த்தம்.

எப்போதும் ஸந்தோஷமாயிருக்க வேண்டும் தான் அத்தனை ஜீவராசிகளும் விரும்புவது. எப்போதும் ஸந்தோஷமாயிருக்கிற இடங்கள் இரண்டு உண்டு. தேவலோகம் அல்லது ஸ்வர்க்கம் என்பது ஒன்று. இன்னொன்று ஆத்ம ஞானம். ஆத்மா ஸந்தோஷமே வடிவானது. ஆனந்தமே பிரம்மம் என்று உபநிஷத் சொல்கிறது. அந்தப் பிரம்மம் தான் ஆத்மா. இப்படி தெரிந்து கொண்டு விட்டால் சாச்வத ஸந்தோஷந்தான். ஆனால் இது இந்திரியங்களாலும் மனஸாலும் அநுபவிக்கிற ஸந்தோஷம் அல்ல. இந்திரியம், மனஸ் எல்லாவற்றையும் கடந்து, 'சரீரம் நானில்லை, புத்தி நானில்லை, சித்தம் நானில்லை'என்று பண்ணிக் கொண்ட உச்சாணி நிலை அது.

இந்திரியங்களாலும் மனஸாலும் ஸந்தோஷத்தை ஸதாவும் அநுபவித்துக் கொண்டிருக்கிற இடமே தேவலோகம். பாட்டு, கூத்து, கந்தர்வ கானம், ரம்பை-மேனகை நர்த்தனம், கல்பக விருக்ஷம், காமதேனு, நந்தனவம் எல்லாம் இருக்கிற உல்லாஸ பூமி அது. அங்கே ஸதா ஆனந்தம், ஆனால் ஆத்ம ஞானியின் ஸந்தோஷத்துக்கும் இதற்கும் வித்தியாஸங்கள் உண்டு. தேவ லோகத்தில் ஸகா ஸந்தோஷமே தவிர, அங்கே போகிறவனுக்கு இல்லை. ஏனென்றால் தேவலோகத்தில் இவனுக்கு சாச்வத வாஸம் கிடைக்காது. ரொம்பப் புண்ணியம் பண்ணினால், அதற்கு பலனாக நல்லதான அடுத்த ஜன்மா தருவதற்குமுன்பு கொஞ்ச காலம் இவனுக்கு தேவலோக வாஸம் கிடைக்குமே தவிர, தேவலோகத்திலேயே இவனுக்கு நிரந்தர வாஸம் கிடைக்காது. புண்ய பலனை இவன் அநுபவித்து விட்டான் என்று கணக்கு பார்த்தவுடன் இவனை ஸ்வாமி பூலோகத்துக்கே உருட்டி விட்டுவிடுவார். மநுஷ்யர்களாக இருந்து ரொம்பவும் நிறையப் புண்ணியம் செய்ததால் தேவர்களாகவே ஆகி தேவலோக வாஸம் பெற்ற சிலரைப் பற்றியும் புராணங்களில் இருப்பது வாஸ்தவந்தான். ஆனால் தேவர்களுக்குமேகூட தேவலோகத்தில் நிரந்திர வாஸமில்லை என்றும் அந்தப் புராணங்களே சொல்கின்றன. தேவர்களை சூரபத்மன் அடித்துத் துரத்தினான், மஹிஷாஸுரன் அடித்துத் துரத்தினான், இந்திரன் உள்பட தேவர்கள்

பூலோகத்திலே வந்து திண்டாடினார்கள் என்றெல்லாமும் புராணத்தில் இருக்கிறது.

அதனால் தேவலோகத்தில் எப்பொழுதும் இருக்க முடிந்தால் சாச்வத ஸந்தோஷமாக இருக்கும் என்று hypothetical -ஆக வேண்டுமானால் சொல்லலாமே தவிர அப்படி யாரும் இருந்ததில்லை;இருக்கவும் முடியாது என்றுதான் தெரிகிறது.

இந்திரியத்தால் ஸந்தோஷம் என்கிறபோது வெளியிலே உள்ளவற்றை அநுபோகம் பண்ணுவதால்தான் அது கிடைக்கிறது. வெளியிலே இருப்பதை எப்படி எப்போதும் நம்மிடம் தக்க வைத்துக்கொள்ள முடியும்?அது கையை விட்டுப் போனாலும் போகும்தான். காமதேனுவும், கல்பக விருக்ஷமும், ஐராவதமும், இந்திராணியுமே கூட இந்திரன் கையை விட்டுப்போய், அவன் தனியாகத் தவித்த ஸந்தர்ப்பங்கள் இருந்திருக்கின்றன. ஆகையால் வெளியிலிருப்பதை depend பண்ணுகிற (சார்ந்திருக்கின்ற) தேவலோக இந்திரிய ஸௌக்கியம் நிஜத்தில் சாச்வதமேயில்லை. வெளி-உள் என்று எதுவுமே இல்லாமல் ஆத்மாவிலேயே, ஸ்தித பிரக்ஞன் என்று பகவான் (கீதையில்) சொன்னது போல் ஆணி அடித்த மாதிரி ஊன்றிவிடுகிறவனுக்குத்தான் ஸதானந்தம். இந்திரனின் ஆனந்தமும் இந்த ஆத்மானந்த மஹாஸமுத்திரத்தில் துளியிலும் துளிதான் என்கிறார் ஆசார்யாள்.

யத் ஸௌக்யாம்புதி லேச லேசத இதமே

சக்ராதயோ நிர்வ்ருதா

(மநீஷா பஞ்சகம்)

இந்திரியங்களையும் மனஸையும் பயிர்த்தண்டிலிருந்து ஈர்க்கை உருவுகிற மாதிரி உருவிப் போட்டுவிட்டு ஆத்மாவாகவே இருந்து விட்டால் இந்த ஸதானந்தம் கிடைப்பதாக உபநிஷத் சொல்கிறது. அதற்கு ரொம்பவும் தைரியம் வேண்டும். 'சரீரம் நானில்லை, அதன் ஸுகதுக்கம் எனக்கில்லை'என்று அதை உயிரோடு இருந்து கொண்டிருக்கும்போதே கிள்ளி விடுவதற்கு ரொம்பவும் தைரியம் வேண்டும். சித்த சுத்தி ஏற்பட்டாலொழிய இது வராது. சித்தம் சுத்தியாவதற்குத்தான் கர்ம அநுஷ்டானம். ஒரு ஜீவனை வேத மந்திரங்களால் இப்படி பரிசுத்தி பண்ணி, அந்த மந்திரங்களோடு சேர்ந்த காரியங்களில் ஈடுபடுத்துவதற்காகவே நாற்பது ஸம்ஸ்காரங்கள் இருக்கின்றன. அதாவது அத்வைத முக்திக்கு முதல்படியாக இவை உள்ளன.

இந்த கர்ம அநுஷ்டானத்தால் சித்த சுத்தியை ஸம்பாதித்துக் கொள்வதே லக்ஷ்யமாக இருக்க வேண்டும். அப்புறம் சுத்தமான அந்தஃகரணத்தைப் பெற்றுவிட்ட ஜீவன் ஆத்ம விசாரம் செய்து ஸதானந்தமான ஆத்ம

ஸாக்ஷாத்காரத்தை அடையவேண்டும் என்பது ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் கொள்கை. இந்த லக்ஷ்யம் இருந்தும், கர்மாவைக் கடைசி மட்டும் விடாமலே, ஸந்நியாஸியாகி ஞான விசாரம் செய்யாமலே இறந்து போனால் அவன் பிரம்ம

லோகத்துக்குப் போகிறான் என்றும், மஹாப் பிரளயத்தில் பிரம்மா பிரம்மத்தோடு ஐக்யமாகிறபோது இவனும் அத்வைத முக்தி அடைந்துவிடுகிறான் என்றும் சொல்கிறார். இப்படிப்பட்ட லட்சியம் இல்லாமல் கர்மாவுக்காகவே கர்மா பண்ணினால் தேவலோகம் கிடைக்கும். ஆனால் அது நிரந்தரம் இல்லை. இருந்தாலும் பூலோக அவஸ்தையைவிட, கொஞ்ச காலமானாலும் தேவலோக வாஸம் சிலாக்யம்தானே?அங்கே அனுப்புவதும் ஸம்ஸ்காரங்கள்தான்.

## மூன்று விதமான லோகங்கள்

தேவலோகம், மநுஷ்ய லோகம் என்ற இரண்டோடு நரக லோகம் என்ற ஒன்றைச் சொல்கிறோம். வஸிக்குமளவும் இன்பமே உள்ளது தேவலோகம்:இன்பமும் துன்பமும் கலந்திருப்பது மநுஷ்ய லோகம். துன்பம் மட்டுமே உள்ள லோகமும் இருந்தாக வேண்டும் அல்லவா?அதுவே நரகம். மஹா பாபம் பண்ணினவன் அடுத்த ஜன்மா நீசமாக எடுப்பதற்கு முன்பு, தன் பாபகர்மாவுக்கு அதிகப்படி தண்டனையாக இந்த நரகத்துக்குப் போகிறான் என்று சாஸ்திரம் சொல்கிறது. அங்கே ரொம்பவும் கஷ்டப்பட்டு அநுபவித்து, அதிகப்படி பாவத்தைக் கழித்தபின் மறுபடி பூலோகத்துக்கு வருகிறான்;மறு ஜன்மா எடுக்கிறான்.

ஸுகதுக்கங்கள் சீதோஷ்ணத்தைப் போல இருக்கின்றன. லோகங்களெல்லாம் தெர்மாமீட்டர் போல இருக்கின்றன. அந்தத் தெர்மாமீட்டரில் கொதிக்கும் இடம் (boiling point) தான் நரக லோகம். ஜில்லென்று உறையும் இடம் (freezing point) ஸ்வர்க்க லோகம். நடுவில் டிகிரிகள் இருக்குமிடம் பூலோகம். இந்த நடு பாகத்திலே உறைகிற டிகிரிக்குக் கிட்டேயிருந்து ஆவியாய் போகிற டிகிரிக்குக் கிட்டே வரை பல டிகிரிகள் இருக்கின்றன. கொதிக்கும் இடத்தில்(boiling point) குளிர்ச்சி இல்லை. உறையும் இடத்தில் (freezing point) உஷ்ணமே இல்லை. இந்த இரண்டுக்கும் நடுவில் பல விதமான டிகிரிகளும் இருக்கின்றன. இந்த மூன்றையும் மூன்று லோகங்களுக்கு உபமானமாகச் சொல்லலாம். மேல் லோகம் ஒரு வகை. அவை இந்திரனிருக்கிற தேவ லோகம், பிரம்மாவின் ஸத்யலோகம், விஷ்ணுவின் வைகுண்டம், பரமேச்வரனின் கைலாஸம் முதலியவைகள். உபநிஷத் இவைகளை ஒன்றாகச் சொல்லும்;பிரம்மலோகம் என்றே சொல்லும். புராணங்கள் பிரித்துச் சொல்லும். கீழே இருப்பது நரகலோகம். மத்தியில் இருப்பது ஸுகம், துக்கம் இரண்டும் கலந்தாங்கட்டியான மிச்ரலோகம் எனப்பட்ட நம்முடைய மண்ணுலகம். இங்கே ஸுகதுக்கங்கள் பலவிதமான விகிதத்தில் கலந்திருக்கின்றன. ஜாஸ்தி

ஸுகம் ஸ்வல்ப ஸுகம் வரை பல தினுஸான விகிதங்கள்;பல டிகிரிகளைப் போல!

ஆனாலும் நம்முடைய சாஸ்திரப்படி மற்ற லோகங்களைவிட இந்த பூலோகந்தான் உயர்ந்தது!ஏன்?இதிலிருந்து எந்த லோகத்துக்கு வேண்டுமானாலும் போகலாம். மற்ற லோகங்களுக்குப் போனால் இஷ்டப்படி அவ்விடத்தை விட்டு ஒடிப்போக முடியாது. நரகத்தின் கஷ்டம் தாங்காமல் ஒடி வந்துவிடலாமா என்றால் முடியாது. பாப கர்மா தீருகிற வரை அங்கே இருந்துதான் தீரவேண்டும். தர்மராஜா

இவ்வளவு காலம் இருக்க வேண்டுமென்று எழுதி வைத்திருப்பான். அங்கெல்லாம் நாமாக ஒன்றும் செய்ய முடியாது. "ஸ்வர்க்கம் நன்றாயிருக்கிறதே, இன்னம் கொஞ்சம் காலம் அங்கேயே இருக்கலாமே"என்று ஆசைப்பட்டாலும், புண்ய கர்மா தீர்ந்தபின் அங்கே நீடிக்க முடியாது. 'தொபுகடீர்'என்று பூலோகத்தில் வந்து விழவேண்டியதுதான். பூமியில் மட்டுமே நமக்கு தனி ஸ்வாதந்திரியம் கொஞ்சம் இருக்கிறது. புண்ணியம் பண்ணலாம். பாபமும் பண்ணலாம். கையினால் பூஜையும் பண்ணலாம், அடிக்கவும் செய்யலாம். நாக்கினால் நாம ஸங்கீர்த்தனம் பண்ணலாம், அல்லது யாரையாவது வையலாம். இரண்டுக்கும் நமக்குச் சக்தி இருக்கிறது. இப்படி

ஒவ்வொரு இந்திரியத்துக்கும் இரண்டுவித சக்தியை பகவான் கொடுத்திருக்கிறார்.

இந்த ஸ்வாதந்திரியம் மற்ற லோகங்களில்லை. அவைகளெல்லாம் போக பூமிகள். மாடாகப் பிறந்தால் புண்ணியம் பண்ணமுடியுமா?தேவர்களும் அந்த மாட்டைப் போன்றவர்கள்தான்!மாட்டுக்குப் பாபமும் இல்லை;புண்ணியமும் இல்லை. இந்த பூலோகத்தில் மநுஷ்யராகப் பிறந்த நாம் மட்டுமே கர்மாநுஷ்டானம் பண்ணி நல்ல கதியடையலாம். தேவ லோகத்தில் அது முடியாது. கிருஷி (உழவு) பண்ணுகிற பண்ணை ஸ்தானம் நம் உலகம்தான். பாக்கியெல்லாம் இங்கே நாம் உற்பத்தி பண்ணுவதன் பலனை சாப்பிடுகிற ஹோட்டல் ஸ்தானம்!உற்பத்தி ஸ்தானம் அல்ல!அங்கே பலன்களை அநுபவிக்கலாம். எவ்வளவு புண்ணிய பாபம் பண்ணியிருக்கின்றோமோ அவ்வளவு பலன்களை அநுபவிக்கலாம். அதனால் அவைகளுக்கு போக பூமியென்ற பெயர் ஏற்பட்டது. நம் லோகமே கர்ம பூமி பண்ணுகிற சக்தி இங்கேதான் உண்டு. இங்கும் சுதந்திர மனஸால் யோசித்துப் பண்ணுவது மநுஷ்ய ஜன்மத்திற்குத்தான் உண்டு. மற்றவைகளெல்லாம் 'இன்ஸ்சிங்க்ட்'(உள்ளுணர்ச்சி) படிச் செய்கிற ஜீவராசிகளே. கர்மாவைப் பண்ண மற்ற லோகங்களிருப்பவர்க்கு அதிகாரம் இல்லை.

மநுஷ்யன் செய்கிற கர்மா, அவனுடைய குணம் ஆக இரண்டும் சேர்ந்து ஜீவனை மற்ற லோகங்களுக்கு அழைத்துக் கொண்டு போகின்றன. வேலை செய்து

குணத்தை நல்லதாக ஆக்கிக் கொண்டு பரலோகத்திற்கப் போவதற்கு இந்தக் கர்ம பூமியைத் தவிர இதர பூமிகளில் ஸாத்தியமில்லை.

ஒரு கர்மாவைச் செய்ய வேண்டுமென்றால் அதற்குக் கால, தேசக் கட்டுப்பாடு உண்டு. சிராத்தம் அர்த்த ராத்திரியில் பண்ணலாமா?கூடாது. அதற்கு ஏற்பட்ட காலம் உண்டு. அப்படியே அந்தக் கர்மா செயய்வேண்டிய தேசம் ஒன்று இருக்கிறது. அந்தக் கர்மாவைப் புண்ணிய பூமியில்தான் பண்ண வேண்டும். முக்கியமாக பாரத வர்ஷத்தில் வைதிக கர்மாக்கள் பண்ணப்பட வேண்டும். இந்த தேசத்திலும் காலங்கள் நிஷித்தமானவை; சில இடங்கள் நிஷித்தமானவை. பரிசுத்த காலத்தில் கர்மாக்களைப் பண்ணவேண்டும்.

## ஸம்ஸ்காரம் என்பதன் பொருள்

கர்மா என்றால் என்ன?கர்மா என்பது காரியம். ஒரு வேஷ்டியை

உண்டாக்குவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன!பஞ்செடுத்து, கொட்டை பிரித்து, நூல் நூற்று, தறியில் நெய்து, சாயம் தோய்த்து - என்றிப்படி எத்தனை செய்ய வேண்டியிருக்கிறது?அதைப் போல அநேக காரியங்கள் பண்ணி ஒருவனை ஆத்மவித்தாக்க வேண்டும். குணத்தினாலும் சரீரத்தினாலும் சேர்ந்து, ஒன்றையொன்று பரிசுத்தி பண்ணிக் கொள்ளும் முறையில் கர்மா செய்யவேண்டும். இப்படிப்பட்ட கர்மாவுக்கே ஸம்ஸ்காரம் என்று பெயர்.

ஒரு பதார்த்தத்துக்கு உள்ள தோஷத்தைப் போக்குவது எதுவோ, குணத்தை புகட்டுவது எதுவோ அதுதான் ஸம்ஸ்காரம். உதாரணமாக கேச ஸம்ஸ்காரம் என்பது க்ஷெளரம் (க்ஷவரம்) செய்து கொள்வது, அழுக்கு, பேன் முதலியவைகளை எடுப்பது, தைலம் தேய்ப்பது முதலியவை. ஜீவாத்மாவுக்கு தோஷங்கள் இருக்கின்றன. தோஷத்தை நிவர்த்தி பண்ணி குணத்தை நிரப்ப வேண்டும். சீப்பினால் வாரித் தைலம் தேய்ப்பது போன்றது ஸம்ஸ்காரம். வயலில் சில ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுகின்றன. முதலில் காயப்போட வேண்டும்;பின்பு உழ வேண்டும்;ஜலம் விட்டுப் பரம்படிக்க வேண்டும். பிறகு விதைக்க வேண்டும்;நாற்றுப்பிடுங்க வேண்டும்;களை பிடுங்க வேண்டும்;ஜலம் பாய்ச்ச வேண்டும்;அதிக ஜலமிருந்தால் மடை திறந்துவிட வேண்டும்;விளைந்த பின் அறுவடை செய்யவேண்டும்;களத்தில் அடிக்க வேண்டும்;பதர் தூற்றவேண்டும், நெல்லைக் கோட்டை கட்ட வேண்டும்;பின்பு அந்த நெல் பழகவேண்டும். அப்புறம்தான் அதை உபயோகிக்க வேண்டும். இவ்வளவு காரியங்கள் இருக்கின்றன. பஞ்சு நூலாகி வேஷ்டியாக வேண்டுமென்றால் பல காரியங்கள் செய்ய வேண்டியிருக்கிறது. பஞ்சு யந்திர சாலையில் எவ்வளவு காரியங்கள்

செய்யப்படுகின்றன?நூல் சிக்கலாகாமல் நெய்ய எத்தனை ஜாக்கிரதையுடன் எவ்வளவு செய்ய வேண்டியிருக்கிறது?நம்முடைய ஆத்மாவானது இந்திரிய சலனங்களால் சிக்கலாக இருக்கிறது. சிக்கலை எடுத்து எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கச் செய்யவேண்டும். அப்படிச் செய்வதற்கு பல தடைகள் இருக்கின்றன. ஏதோ சில ஸமயங்களில் மட்டும் இப்போது ஆனந்தம் உண்டாகிறது. பல விதமான துக்கம், வலி இருந்தும் இவ்வளவையும் மீறிக் கொண்டு கொஞ்சம் ஆனந்தம் உண்டாகிறதே, இந்த ஆனந்தம் எப்பொழுதும் இருக்குமாறு பணிக்கவேண்டும். அதற்காக ஜீவனை ப்ரம்ம லோகத்தில் கொண்டு போய் சேர்க்க வேண்டும். அந்த ஈச்வர ஸந்நிதானத்தில் சேர்த்துவிட்டால் அப்புறம் துன்பமே இராது. பிரளயத்துக்கு அப்புறம் ஐக்கியம் உண்டாகும். ஆகையால் அங்கே சேர்க்கத் தயார் பண்ண வேண்டும்.

இதற்குத்தான் நாற்பது ஸம்ஸ்காரங்களையும் எட்டு ஆத்ம குணங்களையும் ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள்.

ஆத்ம குணம், ஆத்மாவை ஸம்ஸ்காரங்களால் சுத்தி பண்ணிக் கொள்வது என்றெல்லாம் சொல்கிறபோது ஆத்மா என்பது த்வைதிகள் சொல்கிற, அதாவது பரமாத்மாவுக்கு வேறாக இருக்கிறாற்போலத் தெரிகிற, ஜீவாத்மாவைத்தான்.

வாஸ்தவத்தில் இருப்பது ஒரே ஆத்மாதான்;ஜீவ ஆத்மா, பரம ஆத்மா என்ற பேதமே இல்லை. இந்த ஆத்மா நித்ய சுத்தமானது. ஆகையால் அதை ஸம்ஸ்காரத்தால் சுத்தி பண்ணுவது என்பதே தப்பு. அது நிர்குணமான வஸ்து. அதனால் ஆத்ம குணம் என்பதும் தப்பு. ஆனாலும் அந்த நிர்குண வஸ்து மாயையோ, கீயையோ எதையோ ஒன்றை வைத்துக் கொண்டு நம் எல்லார் மாதிரியும் ஆகி, நமக்கு 'அதுவே தாந் நாம்'என்பது துளிக்கூடத் தெரியாமல்தானே நடைமுறையில் பண்ணி இருக்கிறது?இப்படி த்வைதமாக பேத லெவலில் இருக்கிற ஜீவனைத்தான் இங்கே ஆத்மா என்று சொல்லியிருக்கிறது. இது அழுக்குப் பிடித்ததுதான். அதனால் ஸம்ஸ்காரம் பண்ணி இதை சுத்தமாக்க வேண்டும். இது துர்க்குணம் பிடித்தது. அதனால் எட்டு ஆத்ம குணங்களை அப்பியஸித்து இதை நல்ல குணமுள்ளதாக்க வேண்டும். அப்புறம் ஸம்ஸ்காரம் முதலான காரியங்களும் போய்விடும் குணங்களும் - உயர்ந்த ஸத்வ குணமும் கூட - போய்விடும். ஜீவாத்ம பரமாத்ம பேதமில்லாத அகண்ட ஏக ஆத்ம அநுபவம் அப்போதுதான் ஸித்திக்கும். அதை அடைவதற்காகவே இப்போது காரியமும் (ஸம்ஸ்காரமும்), குணமும் வேண்டும். இப்படி அஷ்ட குணங்கள்.

நமக்கு லட்சியமாக உள்ள புராண புருஷர்களின் உத்தம குணங்களை நேரே அப்படியே எடுத்துக் கொண்டு அநுஸரிக்கலாம் என்றால், அதற்கு முடியாமல் ஆசாபாசங்கள், துவேஷங்கள், பயம் மனஸின் மற்ற கிருத்ரிமங்கள் எல்லாம் இடைஞ்சல் செய்கின்றன. நமக்கு நிறைய கர்மாக்களைக் கொடுத்து, அதோடு, 'இப்படித்தான் உட்கார வேண்டும். இப்படித்தான் டிரெஸ் பண்ணிக் கொள்ள

வேண்டும்'என்றெல்லாம் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்கும்படி பண்ணினால்தான் மனஸ் தடித்தனமாகக் கண்டபடி போகாமல் இருக்கிறது. தடித்தனம், அஹங்காரம் குறைய குறையத்தான் ஆசை, துவேஷம் பயம், துக்கம் முதலானவைகளை அடக்கிக் கொண்டு உத்தம குணங்களிலிருந்து நழுவாமல் இருக்க முடிகிறது. ஸம்ஸ்காரங்களும் ஸத்குணங்களும் ஒன்றோடொன்று சேர்த்து வருகின்றன.

ஐடியலாக இருக்கிற புராண புருஷர்களின் குணங்களை - கதையாகக் கேட்டு, நாமும் அப்படி இருக்கவேண்டும் என்று ஆசைப்பட்ட குணங்களை - நாம் யதார்த்தத்தில் பெறுவதற்கு ஸம்ஸ்காரங்கள் ஸஹாயம் செய்கின்றன.

## அஷ்ட குணங்கள்

இப்படி எட்டு குணங்கள். தயை, க்ஷாந்தி, அநஸூயை, சௌசம், அநாயசம், மங்களம், அகார்ப்பண்யம், ஸ்ப்ருஹா என்பவை அஷ்ட குணங்கள்.

'தயை'என்பது ஸர்வபூதங்களிடமும் அன்பு, அருளுடைமை. மநுஷ்ய வாழ்க்கையின் நிறைந்த பலன், பெரிய ஆனந்தம் அந்பு செய்வதுதான். அதுதான் அஸ்திவாரம், back-bone (முதுகெலும்பு).

'க்ஷாந்தி' என்றால் பொறுத்துக் கொள்வது. நமக்கு வியாதி, விபத்து,

தாரித்ரியம் முதலானவற்றால் உண்டாகிற கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்வது ஒன்று. நமக்கு ஒருத்தர் கஷ்டத்தைக் கொடுக்கிறபோது அவரையும் மன்னித்து அன்பைக் காட்டுவது இன்னொரு விதப் பொறுமை.

'அநஸூயை'என்பது அத்ரி மஹரிஷியின் பத்னியான மஹாபதிவிரதையின் பேர் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். அஸூயை இல்லாதவள் அநஸூயை. (அநுஸூயை என்று 'நு'போட்டுச் சொல்வது தப்பு.) நம்மைவிட ஒருத்தன் நல்ல நிலையில் இருந்தால் வயிற்றெரிச்சல் படக்கூடாது. பொறைமையின்மைதான் அநஸூயை.

முதலில் சொன்ன அன்பு எல்லாரிடமும்;இரண்டாவதாகச் சொன்ன பொறுமை தப்புப் பண்கிறவனிடம்;பொறாமையின்மை நம்மைவிட மேல் ஸ்தானத்திலிருக்கிறவனிடம். அவன் நம்மைக் காட்டிலும் யோக்யதையில் குறைந்தவனாக இருந்தாலும்கூட, நமக்குமேல் ஸ்தானத்துக்குப் போய்விட்டான் என்றால் அஸூயைப்படக் கூடாது. 'பூர்வ ஜன்மாவில் நம்மைவிடப் புண்ணியம் பண்ணியிருப்பான். அதனால்தான் பகவான் அவனை உயர்த்தி வைத்திருக்கிறான். என்று மனஸைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.

சௌசம் என்பது 'சுசி' என்பதை வைத்து வைத்து ஏற்பட்டது. 'சுசி'என்றால் சுத்தம். ஸ்நானம், மடி வஸ்திரம், ஆஹார நிர்ணயம் முதலான ஆசாரங்கள் எல்லாம் 'சௌசம்' என்பதில் வரும். 'சுத்தம் சுகம் தரும். சுத்தம் சோறு போடும்' என்று பாமர ஜனங்களும் சொல்வார்கள். வெளியிலே நன்றாக சுத்தமாக இருக்கிறவனைப் பார்த்தாலே நம் மனஸுக்கும் சுத்தமாயிருக்கிறது.

ஸகல ஜனங்களுக்குமான ஐந்து தர்மங்களை மநு சொல்கிறபோதும் முதலில் அஹிம்ஸை, அப்புறம் ஸத்யம், அப்புறம் பிறர் பொருளில் ஆசையின்மை (அஸ்தேயம் - திருடாமலிருப்பது என்பது நேர் அர்த்தம்) என்ற மூன்றைச் சொல்லி, நாலாவதாக இந்த 'சௌசம்'என்பதையே சொல்கிறார். கடைசியாக இந்திரிய நிக்ரஹம் (புலனடக்கம்) என்பதைச் சொல்கிறார்.

'அநாயாஸம்' என்பது ஆத்ம குணங்களில் அடுத்தது. ஆயாஸத்துக்கு எதிர்ப்பதம் அநாயாஸம். 'லைட்'டாக இருப்பது என்கிறார்களே அதுதான் அநாயாஸம். ஆயாஸம் இல்லாமல், அதாவது எதையுமே ஒரு சுமையாக எடுத்துக் கொண்டு கஷ்டப்படாமல், லைட்டாக லேசாக இருப்பது அநாயாஸம். எப்போது பார்த்தாலும் 'உர்'ரென்று இருந்துகொண்டு, வாழ்க்கையில் தனக்கு எல்லாம் கஷ்டம் என்று புலம்பிக் கொண்டு, நொந்து கொண்டு இல்லாமல், எதிலும் கடுமையாகச் செய்யாமல், நிம்மதியோடு லேசாகச் செய்யவேண்டும். இப்படிச் செய்வதாலேயே ஆயாஸப் பட்டுக்கொண்டு செய்வதைவிடப் பலமடங்கு வேலைசெய்து விடலாம். பதட்டமில்லாமல் பண்ணுவது அநாயாஸம். பட பட என்று செய்தால் நம்மையும் நெரித்துக் கொண்டு மற்றவர்களையும் நெரிப்பதுதான் மிஞ்சுமே தவிரக் காரியம்

ஸரியாக ஆகாது. அநாயாஸம் ஒரு பெரிய Virtue (குணசீலம்). அலட்டிக் கொள்ளாமல் இருக்கிற குணம் அநாயாஸம். தானும் சிரமப்படாமல், மற்றவர்களையும் சிரமப்படுத்திக் கொண்டிராமல் இருப்பது அநாயாஸம். அநேக கர்மாநுஷ்டானங்களில் உடம்பால் சிரமப்படத்தான் வேண்டியிருக்கும். சிராத்தம் செய்வதென்றால் மத்யான்னம் இரண்டு மணி, மூன்று மணி வரை பட்டினி கிடக்கத்தான் வேண்டும். ஒரு யாகம் என்றால் அதில் இருக்கிற சரீர சிரமம் கொஞ்ச நஞ்சமில்லை;ஆகையால், இங்கே சிரமப்படக்கூடாது என்பது மனஸினால் சிரமப்படாமலிருப்பதைத்தான் குறிக்கும். எந்தக் காரியமானாலும் விக்கினங்கள் ஏதாவது வரத்தான் செய்யும். இதைப் பார்த்து மனஸை strain பண்ணிக் கொள்ளக்கூடாது. எல்லாம் பகவான் திட்டப்படி நடக்கிறது என்று, மனஸிலே பாரமில்லாமல் இருக்கவேண்டும். ஸங்கீத வித்வான் அநாயஸாமாக தாரஸ்தாயி பிடித்தார் என்றால் என்ன அர்த்தம்?சிரம ஸாத்யமானதையே ஸுலபமாக்கிக் கொண்டு விட்டார் என்றுதானே அர்த்தம்?சிரமமான

வாழ்க்கையை அப்படிப் பண்ணிக்கொள்வதுதான் 'அநாயாஸம்'.

'மங்களம்'என்றால் மங்களந்தான்! ஆனந்தமாக - அதிலேயே ஒரு கம்பீரத்தோடு தூய்மையோடு ஆனந்தமாக இருந்து கொண்டிருப்பதுதான் மங்களம். எதற்கெடுத்தாலும் எரிந்து விழுந்து கொண்டோ, மூக்கைச் சிந்திப் போட்டுக்கொண்டே இல்லாமல், 'ஆஹா'என்று எப்போதும் ஸந்தோஷமாக இருக்கவேண்டும். இதுதான் லோகத்துக்கு நாம் செய்கிற பெரிய ஒத்தாசை, பெரிய தொண்டு. பணத்தை வாரிக் கொடுப்பதை விட, வேறு ஸர்வீஸ்கள் பண்ணுவதை விட, நாம் போகிற இடமெல்லாம் நம் மங்களத்தாலேயே ஆனந்தத்தை உண்டாக்கிக் கொண்டிருப்பதுதான் மற்ற ஜீவர்களுக்குப் பெரிய தொண்டு. 'லைட்'டாக, லேசாக எதையும் ஸாதிப்பது அநாயாஸம். போகிற இடமெல்லாம் நாமே ஒரு 'லைட்'(தீபம்) மாதிரி ஒளியை, ஆனந்தத்தைக் கொடுப்பது 'மங்களம்'. நாம் ஒரு இடத்துக்குப் போனால் அங்கேயிருப்பவர்கள் 'குற்றம் கண்டு பிடிக்க வந்துவிட்டான்'என்று முகத்தைச் சுளிக்கும்படியாக இருக்கக் கூடாது. எங்கே நாம் போனாலும் அங்கே நல்ல தினுஸான ஸந்தோஷத்தை விருத்தி பண்ண வேண்டும். நாமும் மங்களமாக இருந்து கொண்டு, பொங்கும் மங்களம் எங்கும் தங்குமாறும் செய்ய வேண்டும்.

'அகார்ப்பண்யம்'என்று அடுத்தது சொன்னேன். கிருபனின் குணம் கார்ப்பண்யம். அப்படி இல்லாமலிருப்பது அகார்ப்பண்யம். கிருபணன் என்றால் லோபி. லோபித்தனம், கருமித்தனம் இல்லாமல் தான தர்ம சிந்தையோடு இருப்பது அகார்ப்பண்யம். மனஸார வாரிக் கொடுக்கிற குணம் வேண்டும்.

அர்ஜுனன் ரொம்பவும் dejected-ஆக, depressed-ஆகமனம் தளர்ந்து தேர்த்தட்டிலே உட்கார்ந்து, 'யுத்தம் பண்ண மாட்டேன்'என்று அழுதபோது அவனுக்கு 'கார்ப்பண்ய தோஷம்'ஏற்பட்டதாக கீதையில் சொல்லியிருக்கிறது. அந்த இடத்தில் 'தன்னையே ரொம்பவும் தாழ்த்திக் கொண்டு தீனமாகப் போய்

விட்டவன்'என்று அர்த்தம். தன் விஷயத்திலேயே தான் லோபியாகி விட்டான் என்று அர்த்தம். அகார்ப்பண்யம் என்றால் இப்படி தீனனாக, நோஞ்சானாக, கையாலாகாதவனுக்கு இல்லாமல் தீரனாக, நல்ல உத்ஸாஹ புருஷனாக, மனஸ்வியாக இருப்பது என்றாகும்.

'அஸ்ப்ருஹா' என்பது அஷ்டகுணத்தில் கடைசி. 'ஸ்ப்ருஹா' என்றால் பற்றின்மை, ஆசையின்மை. அத்தனை அனர்த்த பரம்பரைக்கும் ஆணி வேராக இருப்பது ஆசைதான். ஆனால் அதை அடியோடு வெட்டுவதுதான் ரொம்பவும் அஸாத்தியமாயிருக்கிறது. ஸம்ஸ்காரங்களைப் பண்ணி பண்ணி, அவற்றோடு அஷ்ட குணங்களையும் சேர்த்துச் சேர்த்து அப்பியாஸம் பண்ணிக் கொண்டு

போகும்போது கடைசியில் இந்த ஆசையின்மை, பற்றின்மை, 'அஸ்ப்ருஹா'என்பது பூர்த்தியாக அநுபவத்தில் வருகிறது.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு

என்று வள்ளுவர் சொன்னார்.

'இப்படி ஈச்வரன் என்ற பற்றற்றானைப் பற்றிக் கொண்டு மற்றப் பற்றுகளை விட்டுவிட்டால் மட்டும் போதாது. அப்புறம் அந்த ஈச்வரனுடனும் பற்றைக் கத்தரித்து விடவேண்டும்'என்று இன்னும் ஒருபடி மேலே போய்விட்டார் திருமூலர்:

**ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள்**

**ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்**

ஆசையைத்தான் தாகம் (வேட்கை) என்று புத்தர் சொன்னார். ''ஜலம் வேணும் வேணும்''என்று தாகத்தில் பறக்கிற மாதிரி ஆசை வாய்ப்பட்டுப் பறப்பதை 'திருஷ்ணா' என்பார்கள். பிராகிருதத்தில் இதையே 'தன்ஹா'என்று புத்தர் சொன்னார். ஆசையைப் போக்கடித்துக் கொள்வதுதான் புத்தருடைய முக்கியமான உபதேசம். இது அஷ்ட குணங்களில் கடைசி. முதலில் சொன்ன தயை

(love) தான் கிறிஸ்து மதத்துக்கு ஜீவநாடி.

இப்படி ஒவ்வொன்றை ஒவ்வொரு மதத்தில் ரொம்பவும் அழுத்தம் கொடுத்துச் சொன்னாலும் இந்த அஷ்ட குணங்களையுமேதான் கிறிஸ்து, புத்தர், நபி நபி, நானக், ஜொராஸ்த்ரர், கன்ஃபூஷியஸ், இன்னும் என்னென்ன மதங்கள் இருக்குமோ அவை எல்லாவற்றின் ஸ்தாபகர்களும் சொல்லியிருக்கறார்கள். நேராக அவர்கள் இந்த எட்டைச் சொல்லாமலிருந்தாலுங்கூட மநுஷ்யனானவன் இந்த குணங்கள் இல்லாமலிருப்பதை எந்த மதஸ்தாபகரும் ஆதரித்திருக்க மாட்டார் என்பது நிச்சயம்.

குணமும் காரியமும்

ஆனால் இப்படி குணங்களை மட்டும் சொல்லி, "குணவானாயிரு, குணவானாயிரு"என்று மற்ற மதங்கள் சொல்லும்போது, நம் மதம்தான் இப்படிச்

சொன்னதோடு நிற்காமல், ப்ராக்டிகலாக (நடைமுறையில்) அவனை அப்படி ஆக்குவதற்காக ஏகப்பட்ட ஸம்ஸ்காரங்களையும் சேர்த்துக் கொடுத்திருக்கிறது. வெறுமனே உபதேசிப்பதில் பிரயோஜனம் இல்லை. மநுஷ்யனைக் காரியத்திலே கட்டிப் போட்டால்தான் பிரயோஜனம் உண்டு. இதை நம் மதம்தான் பண்ணுகிறது.

மற்ற மதங்களில் அன்பு, ஆசையின்மை முதலான குணங்களை முக்யமாகச் சொல்லியிருக்க, ஹிந்து மதத்தில் நல்ல குணங்களுக்கு முக்யத்வம் தராமல், ஓயாமல் கர்மாநுஷ்டானம்தான் சொல்லியிருக்கிறது, ஒரே கூஷீவீமீ ஞூணீறீ-கூஷீவீபீமீஸீ (சடங்கு மயமானது) என்று சிலபேர் தப்பாக நினைக்கிறார்கள். அஷ்ட குணங்கள், அப்புறம் குணம் கடந்த குணாதீத ஸ்திதி முதலானவைகளை நம் மதத்தில் விசேஷமாகச் சொல்லியிருக்கறது. குணங்களைப் பற்றி வெறுமே பிரஸங்கம் பண்ணி விட்டால் போதாது. நல்லவனாக இருக்க வேண்டும், ஸத்யமாய் இருக்கவேண்டும். பிரேமையோடு இருக்கவேண்டும், தியாகமாய் இருக்கவேண்டும் என்பதெல்லாம் நமக்கே தெரிந்ததுதானே?தெரிந்துதானே வாழ்க்கையில் கொண்டுவர முடியாமல் கஷ்டப்படுகிறோம்!இதையே திருப்பித் திருப்பி சாஸ்திரத்திலும் உபதேசம் பண்ணினால் மட்டும் என்ன பிரயோஜனம் வந்துவிடும்?அதனால்தான் மற்ற மதங்களில் நல்ல குணங்கள், நன்னெறிகள் (மீமீலீவீநீவ, னீஷீகூஷீணீறீவீமீ ஹ்) இவை பற்றியே நிறைய உபதேசமிருக்கிற மாதிரி இல்லாமல், இந்த உபதேசத்தையும் பண்ண வேண்டிய அளவுக்குப் பண்ணிவிட்டு, அதோடு நின்ற விடாமல், அதிலே நாம் வாஸ்தவமாகவே ஈடுபட்டு, அப்பியஸிப்பதற்கு உத்ஸாஹ மூட்டும் விதத்தில் நல்ல குணசாலிகள் அடைந்த அபகீர்த்தியையும் சொல்கிற ஏராளமான புராண புருஷர்களின் கதைகளை நம் மதத்தில் கொடுத்திருக்கிறது. இந்த உத்ஸாஹமும் நம்மைப் பிரத்யக்ஷத்தில் அப்படிப்பட்ட குணசாலிகளாக்குவதற்குப் போதாது. அதனால்தான் நிறைய கர்மாக்களை, ஸம்ஸ்காரங்களைக் கொடுத்து அவற்றால் சித்தத்தை சுத்தி பண்ணிக் கொள்ளச் செய்கிறது. குணசாலிகளாவதற்கே கர்மாநுஷ்டானம் என்ற ஜீகூஷீணீநீமீ வீநீணீறீ மீகூஷீணீவீஸீவீஸீரீ (நடைமுறைப் பயிற்சி)யைத் தருகிற மதம் நம்முடையதே என்று புரிந்து கொண்டு பெருமைப் படுவதற்குப் பதில், இதை மற்ற மதங்கள் போல இல்லை என்று குறை சொல்வது சரியில்லை. அஷ்ட குணங்கள் இயேசு சொன்ன அன்பில் ஆரம்பித்து, புத்தர் சொன்ன ஆசையின்மையில் முடிந்திருக்கிறது.

குணங்களைப் பற்றி உபதேசம் பண்ணிவிட்டால் போதுமா?காரியம் பண்ணுவதுதானே மநுஷ்ய ஸ்வபாவம்?அதை வைத்துக் கொண்டு, அதன் மூலந்தானே எதையும் ஸாதித்துத் தரவேண்டியதாக இருக்கிறது?காந்தி அஹிம்ஸை, ஸத்யம் என்று நிறையச் சொல்லிக் கொண்டிருந்தார் என்றாலும் அவருடைய ஆச்ரமத்தில் போய்ப் பார்த்தால் அவர் எப்போது பார்த்தாலும்

சுருசுருவென்று ஏதாவது காரியம் பண்ணிக் கொண்டிருந்தார். மற்றவர்களையும்

உட்கார விடாமல் வேலை வாங்கிக் கொண்டேதான் இருந்தார். ரொம்பவும் கடுமையான மீஹஉளீ-னீஹீஉமீமீக்ஷீஎன்று அவரைச் சேர்ந்தவர்கள் சொல்கிறார்கள். ராட்டையை சுற்றிக்கொண்டு நூற்கவேண்டும், கக்கூஸை அலம்ப வேண்டும்- இப்படி ஏதாவது காரியம் பண்ணிக் கொண்டேயிருக்கும்படி செய்தார்.

இப்படிப்பட்ட கர்மானுஷ்டானங்களை முக்யமாகச் சொல்லி அவற்றோடு கூடவும், அவற்றைச் செய்வதால் ஏற்படுகிற சித்தத் தெளிவின் மூலமும் கடைபிடிக்க வேண்டிய அஷ்ட குணங்களையும் தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது.

இவற்றில் கௌதமரும் எல்லாருக்கும் பொதுவானவைகளை எழுதியிருக்கிறார்கள். ஆபஸ்தம்பர் தனியாகவும் ஒவ்வொரு பிரிவினருக்குள் தனித்தனி தர்மங்களையும், ஸம்ஸ்காரங்களையும் எழுதியிருக்கிறார். கௌதமர் நாற்பது ஸம்ஸ்காரங்களையும் எட்டு ஆத்ம குணங்களையும் சொல்லியிருக்கிறார். ஜீவன் உடம்பை விட்டுப் பிரிந்தவுடன் நேரே பிரம்மலோகத்திற்குப் போய்ச் சேர இந்த நாற்பத்தெட்டும் காரணங்களாக இருக்கின்றன. இவைகளால் ஈச்வர ஸந்நிதானத்தில் போய் இருக்கலாம். அது பரமஞானியின் ஸந்நிதானத்தில் இருப்பதுபோல் இருக்கும். அசையாமல் ஆனந்தமாக இருக்கலாம். லோகத்தை நடத்தும் ஈச்வரன், லோகாதீதமாக அரூபமாகிற பொழுது நாமும் அதோடு அதாகக் கலந்துவிடலாம். அத்வைதமாகி விடலாம். அதுவரை அவனுடைய லோகத்தில் (ஸாலோக்யமாக) வாழலாம். "யஸ்யைதே சத்வாரிம்சத் ஸம்ஸ்காரா:அஷ்டாவாத்மகுணா:ஸ ப்ரம்மண:ஸாயுஜ்யம் ஸாலோகதாம் ஜயதி"என்று சொல்லியிருக்கிறது.

இந்த நாற்பது ஸம்ஸ்காரங்கள் கை கால் முதலியவைகளை ஆட்டிச் செய்யவேண்டும். ஒர் உத்தியோகம் செய்ய வேண்டுமானால், கையைக் காலை ஆட்டியும் வாயை அசைத்துப் பேசியும் செய்கிறோமல்லவா?அப்படித்தான் இதுவும். யார் இந்த நாற்பத்தெட்டையும் அநுஷ்டிக்கிறானோ அவன் நேராக பிரம்மலோகத்துக்குப் போகிறான்; கஷ்டம் ஸுகம் என்பவை இல்லாத ஊருக்குப் போகிறான். கஷ்டமும் ஸுகமும் இல்லாமல் எப்பொழுது இருக்கும்?இந்த இரண்டையும் ஏற்படுத்தினவனிடம் போனால்தான் அப்படியிருக்கலாம்.

ஆத்மகுணங்களை ஆத்மசக்தி என்று சொல்லுகிறார்கள். இது ஸமீபகாலப் பத்திரிகை வார்த்தை. பழைய தமிழ், ஸம்ஸ்கிருத புஸ்தகங்களில் ஆத்மசக்தி என்ற வார்த்தை இல்லை. ஆத்மகுணங்கள்தான் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை எட்டு,

இவற்றை முன்பே சொன்னேன்

அக்கினியின் முக்கியத்வம்

'நிஷேகாதி ச்மசானாந்தம்'நாற்பது ஸம்ஸ்காரங்கள் சொல்லப்படுகின்றன. அதாவது, தாயார் வயிற்றில் எந்தத் தினத்தில் தேஹகாரணமான கரு இருக்க ஆரம்பித்ததோ, அந்த நிஷேகம் முதல் தேஹம் அக்கினிக்கு ச்மசானத்தில் (மயானம்) ஆஹுதியாகிற வரைக்கும் நாற்பது கர்மாக்கள் செய்யப்பட வேண்டும். நிஷேகம் அக்கினி ஸாக்ஷியாகச் செய்யப்படுகிறது. கடைசியில் ச்மசான கர்மாவும் அக்னியிலேயே செய்யப்படுகிறது.

வாழ்நாள் பூராவும் அக்னியை அணையாமல் காத்து வரவேண்டும். பிரம்மச்சாரி தினந்தோறும் ஸமிதாதானம் பண்ணி அக்னி காரியம் செய்யவேண்டும். அக்னி ஸாக்ஷியாக விவாஹமான பின் கிருஹஸ்தர்கள் ஒளபாஸனம் என்பதை அக்னியில் செய்யவேண்டும். வானப்பிரஸ்தனுக்கு கக்ஷாக்னி என்று ஒரு அக்னி சொல்லப்பட்டிருக்கிறது. அது காட்டில் செய்வது. ஸந்நியாஸாசிரமத்தில் மட்டும் அக்னியில்லை. ஸந்நியாசியிடம் ஞானாக்கினி இருக்கிறது. அவனுடைய பிரேதத்துக்கும் அக்னி ஸம்ஸ்காரம் கிடையாது. புதைப்பது மரியாதைக்காகச் செய்வது. நியாயமாக அவனுடைய சரீரத்தை நாலாக வெட்டிக் காட்டில் நாலு திக்கிலும் போட்டு விட வேண்டும். ஜனங்களுக்கு உபத்திரவம் இல்லாமல் இருப்பதற்காகக் காட்டில் போடவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்யாவிட்டால் புதைத்து அதன்மேல் மரம் செடிகளை வைக்க வேண்டும். காட்டில் போட்டால் பிராணிகளுக்கு ஆஹாரம் ஆகிறது. புதைத்தால் மரங்களுக்கு எருவாக ஆகிறது. இப்பொழுது பிருந்தாவனம் கட்டுவது முதலியவை மரியாதையால் செய்பவை. பில்வம், அச்வத்தம் முதலிய பெரிய மரங்களை ஸந்நியாஸியைப் புதைத்த இடத்தில் வைக்க வேண்டும் என்று தான் சொல்லப் பட்டிருக்கிறது.

எல்லா ஜாதியாருக்கும் அக்னி காரியம் உண்டு. விவாஹ காலத்தில் எல்லா வர்ணத்தாரும் ஒளபாஸனம் பண்ண வேண்டும். பிறகு எல்லாரும் அந்த அக்கினியைக் காப்பாற்ற வேண்டும். இப்பொழுது பார்ஸி என்கிற பாரசீகர்கள்தாம் அக்னியைக் காப்பாற்றி வருகிறார்கள். அவர்களுடைய மத கிரந்தத்திற்கு 'ஜெண்டவஸ்தா'என்று பெயர். 'சந்தோவஸ்தை'என்ற வேத பாகம் அப்படி வந்திருக்கிறது. ஜொராஸ்த்ரர் என்பவர் அவர்களுடைய ஆசார்யர். அந்தப் பெயர் ஸௌராஷ்டரர் என்பதன் சிதைவுதான். இரான் தேசம் அவர்களுடையது. ஆர்யன் என்பது இரான் என்று மாறிவிட்டது. அவர்கள் அக்னி அணைந்துபோனால் அதிகச்

செலவு செய்து பெரிய பிராயசித்தம் பண்ணிக் கொள்ளுகிறார்கள். நம்மிடத்தில் அக்னி காரியம் இந்த நூற்றாண்டு தொடக்கத்திலிருந்து குறைந்து விட்டது. வாழ்க்கை மாறிவிட்டது. சிரத்தை இருந்தால் இந்த உத்தம ஸம்பத்தைக் காத்து வைத்துக் கொண்டிருக்கலாம். சிரத்தை இல்லாததற்கு இந்தக் காலப் படிப்பு ஒரு முக்கியமான காரணம்.

இந்த தேஹத்தையும் கடைசியில் ஆஹுதியாக தேவதைகளுக்கு ஹோமம் செய்துவிட வேண்டும். அதற்காகத்தான் பிரேதத்துக்கு நெய்யைத் தடவி அதையும் ஒரு திரவ்யமாக ஹோமம் பண்ணுகிறார்கள். அதுதான் கஹன ஸம்ஸ்காரம்.

ஸம்ஸ்காரங்களின் பெயர்கள்

ஜீவாத்மாவுக்குப் பரிசுத்தி ஏற்படுவதற்காக நாற்பது ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்று சொன்னேன். அவை கர்ப்பாதானம், பும்ஸுவனம், ஸீமந்தம், ஜாதகர்மா, நாமகரணம், அன்னப்ரச்னம், சௌளம், உபநயனம், குருகுலவாஸத்தில் செய்ய வேண்டிய பிராஜாப்ததியம் முதலிய நாலு வேத விரதங்கள், அது முடிந்ததும் செய்கிற 'ஸ்நானம்', பிறகு விவாஹம், அதன்பின் கிருஹஸ்தன் செய்யவேண்டிய ஐந்து நித்ய கர்மாக்களாகிய பஞ்ச மஹா யக்ஞங்கள் ஆக, இதுவரை மொத்தம் பத்தொன்பது;இதோ கிருஹஸ்தன் செய்ய வேண்டிய பாக யக்ஞங்கள் ஏழும், ஹவிர் யக்ஞங்கள் ஏழும், ஸோம யக்ஞங்கள் ஏழும் ஆக யக்ஞங்கள் இருபத்தொன்றும் ஸம்ஸ்காரங்களே ஆகும். 19+21=40 ஸம்ஸ்காரம்.

அஷ்டகை (அன்வஷ்டகை), ஸ்தாலீபாகம், பார்வணம், ச்ராவணி, ஆக்ரஹாயணி, சைத்ரி ஆச்வயுஜி என்ற ஏழும் பாக யக்ஞங்கள். அக்னியாதானம், அக்னிஹோத்ரம், தர்சபூர்ண மாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்ராமணி என்ற ஏழும் ஹவிர் யக்ஞங்கள். அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்னும் ஏழும் ஸோம யக்ஞங்கள்.

நாற்பது ஸம்ஸ்காரங்களில் தினந்தோறும் பண்ண வேண்டியவை சில இருக்கின்றன. சில சில காலங்களில் பண்ணவேண்டியவை சில. ஆயுளில் ஒரு தரம் பண்ண வேண்டியவை சில. இவைகளுக்குள் ஒவ்வொரு கிருஹஸ்தரனும் நன்றாகத் தெரிந்துகொண்டு தினுமும் செய்யவேண்டிய முக்கியமான ஸம்ஸ்காரங்கள் பஞ்ச மஹா யக்ஞங்கள் என்று ஐந்து.

மந்திரமில்லாமல் வெறுமே செய்யும் காரியத்தைவிட மந்திரத்தைச் சொல்லிச் செய்வதே அதிக நன்மைதர வல்லது. இப்படி மந்திரபூர்வமாகக் காரியம் பண்ணுவதே ஸம்ஸ்காரமாகிறது. கிருஹஸ்தன் தினந்தோறும் செய்யவேண்டிய பஞ்சமஹா யக்ஞத்தில் ஸோஷல் சர்வீஸ்(சமூக ஸேவை) என்பது மந்திர பூர்வ ஸம்ஸ்காரமாகிறது.

பஞ்ச மஹா யக்ஞங்கள் - பிரம்ம யக்ஞம், தேவ யக்ஞம், பித்ரு யக்ஞம், மநுஷ்ய

யக்ஞம், பூத யக்ஞம் என்பவை. வேதம் ஓதுவது என்ற அத்யயனமே பிரம்ம யக்ஞம், யாகமும் பூஜையும் தேவ யக்ஞம். தர்ப்பணம் பித்ரு யக்ஞம்.

விருந்தோம்பல் மநுஷ்ய யக்ஞம். ஜீவ ஜந்துக்களுக்கெல்லாம் பலி போடுவது பூத யக்ஞம்.

இவை போலவே ஔபாஸனம், அக்னி ஹோத்ரம் இரண்டும் தினசரி செய்வது. ஔபாஸனம் என்பது நாற்பது ஸம்ஸ்காரத்திலுள்ள ஏழு பாக யக்ஞங்களில் சேராத ஒரு பாகயக்ஞம். அக்னிஹோத்ரம் என்பது ஏழு ஹவிர் யக்ஞங்களில் ஒன்று. தர்ச பூர்ண மாஸம் என்ற இன்னோர் ஹவிர் யக்ஞம் பதினைந்து நாளுக்கு ஒருமுறை செய்வது. மற்ற ஹவிர் யக்ஞங்களையும் ஏழு ஸோம யக்ஞங்களையும் வருஷத்துக்கொரு முறையோ, அல்லது ஆயுஸில் ஒரே ஒரு தடவையாவது செய்யவேண்டும். கஷ்டமான ஸோம யாகங்களை ஜன்மாவில் ஒருமுறை பண்ணினால் போதும் என்று கருணையோடு வைத்திருக்கிறார்கள்.

மாஸம்தோறும் பண்ணவேண்டிய பார்வணீ சிராத்தமும், பிரதமைகளில் செய்யும் ஸ்தாலீபாகமும் தவிர மற்ற ஐந்து பாக யக்ஞங்களும் வருஷத்துக்கு ஒரு முறைதான்.

இதையே வேறு விதமாக வகுத்துச் சொன்னால்:பஞ்ச மஹா யக்ஞம் என்ற ஐந்தும், அக்னி ஹோத்ரமும், ஔபாஸனமும் ஆக ஏழு தினஸரி செய்வது. தர்ச பூர்ண மாஸம் பக்ஷமொருமுறை;ஸ்தாலீபாகமும் பக்ஷமொரு முறை;பார்வணீ மாஸாந்தரம்; நாற்பதில் உள்ள மற்ற யக்ஞங்கள் ஸம்வத்ஸரத்துக்கும் (ஆண்டுக்கு) ஒரு தரமோ, ஜன்மத்தில் ஒரு முறையோ பண்ண வேண்டியவை.

ஒரு போகம் விளையும் நிலங்களில் அறுப்பறுக்கிறது வருஷத்துக்கு ஒரு தரம். முப்போகம் விளைந்தால் நாலு மாதத்திற்கொரு அறுப்பு. சில பயிருக்கு ஜலம் தினந்தோறும் பாய்ச்சவேண்டும். சிலவற்றுக்கு ஒன்றுவிட்டு ஒரு நாள் பாய்ச்ச வேண்டும். இவைகளெல்லாமே ஸம்ஸ்காரங்கள் தான். ஆனாலும் இவைகளுக்குள் வித்தியாஸம் இருக்கிறது. அவைகளைப் போன்றவைதான் மநுஷ்யனுக்கான ஸம்ஸ்காரங்களும்.

## பெற்றோர் செய்யும் ஸம்ஸ்காரங்கள்

கர்ப்பாதானம் முதற்கொண்டு ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. தாயார் வயிற்றில் தேஹம் ஏற்படுகிற க்ஷணம் முதல் ஸம்ஸ்காரங்கள் ஆரம்பமாகின்றன. சரீர பிண்டமானது மந்திர பூர்வமாக உற்பத்தியாக வேண்டும். கர்ப்பாதானம், பும்ஸ்வனம், ஸீமந்தம் என்பவை தாயார் தேஹத்துக்கு ஏற்பட்ட ஸம்ஸ்காரமென்று நினைக்கிறார்கள். அது தப்பு. அவை உள்ளே உண்டாகிற ஜீவனைக் குறித்தவை.

அந்த ஜீவனுடைய பரிசுத்திக்காக ஏற்பட்டவை. கர்ப்பத்திலுள்ள வேறொ ரு ஜீவனை உத்தேசித்துப் பண்ணப்படுபவைகளாதலினால் அந்த ஸம்ஸ்காரங்களின் விஷயத்தில் பெரியவர்களுக்குப் பொறுப்பு அதிகம். தங்களுக்காக என்றால் வேண்டாம் என்று எண்ணலாம். வேறொரு ஜீவனுக்காக

இருப்பதால் இவர்கள் அதை அநாதரவு பண்ணித் தடுப்பது பெரிய பாபமாகிறது. இக்காலத்தில் சாந்தி கல்யாணம் (கர்ப்பாதானம்), ஸீமந்தம் முதலியவை ஃபாஷனாக இல்லை என்று அநேகர் விட்டு வருவது பெரிய பாபமாகும். ஸ்திரீ-புருஷ உறவிலே நிஜமாக வெட்கப்பட வேண்டிய விஷயங்களில் லஜ்ஜை இல்லாமல் வெள்ளைக்கார ஃபாஷனில் விவஸ்தை கெட்டு நடந்துகொண்டே, இதைப் பரிசுத்தி பண்ணி நல்லதாக ஒரு புது ஜீவனை உண்டாக்குவதற்காக ஏற்பட்ட வைதிக கர்மாக்களை லஜ்ஜைக்குரியவை என்று விட்டுவிடுவது கிரமமே இல்லை.

தேஹம் வெளியில் வருவதற்கு முன்பு பண்ணப் படுபவை கர்ப்பாதானம், பும்ஸுவனம், ஸீமந்தம் என்னும் மூன்று ஸம்ஸ்காரங்களும். மந்திர பூர்வமாக ஸ்திரீ-புருஷ ஸங்கம் ஏற்பட வேண்டும். மிருகப் பிராயமான வேகமாக இல்லாமல் இதையும் ஒரு ஸம்ஸ்காரமாக மந்திரத்தின் மூலம் உயர்த்தி கருவாக உண்டாகக் கூடிய ஜீவனுக்கும் அதனால் க்ஷேமத்தை ஏற்படுத்த வேண்டும். இந்த உயர்ந்த தத்துவத்தை விட்டு விட்டு, இதனால் நாம் ஏதோ ஒரு அநாகரிகமான சடங்கை விட்டுவிட்டோம் என்று பெருமைப்பட்டுக் கொள்வது பைத்தியக்காரத்தனம்தான். லஜ்ஜை இருந்தால், சாந்தி கல்யாணத்துக்கு ஊர் கூட்ட வேண்டாம். ஆனால் அகத்து மட்டோடாவது அவசியம் இந்த கர்மா பண்ணத்தான் வேண்டும். நித்ய ஔபாஸனம், நாலு நாள் கலியாணம் என்பவையெல்லாம் போய், கல்யாணத்துக்கு மறுநாள் சேஷஹோமம் கூட இல்லாமல், (கல்யாணம் நடக்கும்) அன்றே ஒரு விதமான மந்திர பூர்வ ஸம்ஸ்காரமும் இல்லாமல் இப்போது இதை (ஸ்திரீ-புருஷ ஸங்கத்தை) செய்து வருவது ரொம்பவும் துராசாரம்; ரொம்பவும் பாபமும் ஆகும். மிருகப் பிராயமாகப் பண்ணுவதால் ஸந்ததியும் அப்படியே (மிருகம் மாதிரியே) அமைகிறது. பும்ஸுவனம் கர்ப்பத்தின் மூன்றாவது மாதம் செய்ய வேண்டும். ஆறு அல்லது எட்டாவது மாதத்தில் ஸீமந்தம் பண்ணவேண்டும். இப்போது இரண்டையும் சேர்த்து ஏதோ பண்ணுகிறார்கள்.

குழந்தை பிறந்தவுடன் ஜாதகர்மா என்ற ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். தானங்கள் கொடுக்கவேண்டும். பதினோராவது நாள் நாமகரணம். பெயர் வைப்பதுகூட ஜீவனைப் பரிசுத்தி பண்ணுகிற ஸம்ஸ்காரமாகத்தான் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்ன நக்ஷத்திரத்தில் பிறந்தால் இன்ன மாதிரிப் பெயர் வைக்க வேண்டும் என்று இருக்கிறது. பகவந் நாமாக்களாகப் பேர் வைக்க வேண்டும் என்று இருக்கிறது. பகவந் நாமாக்களாகப் பேர் வைக்க வேண்டும். அந்தப் பேரைச் சொல்லிக் கூப்பிடுவதே நம்மையும் சுத்தப்படுத்தும்

ஸம்ஸ்காரமாகிறது!லாங்ஃபெல்லோ (நீள ஆள்), ஸ்டோன் (கல்) என்றெல்லாம் கண்ட பெயர்களை வைத்துக் கொள்கிற மாதிரி நம் மதத்தில் இல்லை. இப்போது இப்படிப்பட்ட அசட்டுப் பெயர்கள் இங்கேயும் வந்து விட்டன. ஸ்வாமி பெயராகவே வைத்தாலும் அதைக் கன்னாபின்னா என்று சிதைத்துக் கூப்பிடும் வழக்கமும் நீண்டகாலமாக இருந்திருக்கிறது. இதெல்லாம் ரொம்பத் தப்பு. வைதிக ஸம்ஸ்காரமாக வைத்த பெயர் என்பதற்கான கௌரவத்தை அதற்குக் கொடுக்கவேண்டும்.

குழந்தையின் ஆறாம் மாஸம் உணவூட்டுவதான 'அன்னப்ராசன'ஸம்ஸ்காரம்.

கர்ப்பாதானம் முதல் நாமகரணம் வரை குழந்தையை முன்னிட்டு (ஷீஸீ தீமீலீணீறீயீ) பெற்றோரே பண்ணுவது. அன்ன ப்ராசனத்தில் தகப்பன் மந்திரம் சொன்னாலும் குழந்தையே சாப்பிடுகிறது.

தாயார் மருந்து சாப்பிட்டால் பால் குடிக்கிற குழந்தைக்கு தேஹபுஷ்டி ஏற்படுகிறதோ இல்லையோ?அதைப்போலவே மாதா பிதாக்களுடைய சித்தவிருத்தி எப்படி இருக்கிறதோ அப்படியே உள்ளே இருக்கும் ஜீவனும் ஸாத்விக ஸ்வபாவமோ, பாப பிரவிருத்தியோ உண்டாகும். மனது சாந்தமாக இருந்து ஒரு ஸமாசாரம் எழுதி அதைப் படித்துப் பார்த்தால் நன்றாயிருக்கும். கோபமாக இருக்கும் பொழுது எழுதி அப்புறம் பார்த்தால் நன்றாக இருப்பதில்லை. சரீரத்திலும் அப்படியே குணதோஷங்கள் ஏற்படுகின்றன. ஒரு தம்பதி உத்தம குணங்களோடு ஸங்கமித்தால் தான் நல்ல பிண்டம் ஏற்பட்டு உள்ளே இருக்கும் ஜீவனுக்கும் நல்ல சுபாவம் உண்டாகும். மந்திர பூர்வமாகப் பண்ணுவது இதற்காகத்தான்.

இத்தகைய கர்மாக்களை அடியோடு தள்ளாதவர்களும் உரிய காலத்தில் பண்ணாமல் சேர்த்துப் பண்ணி விடுகிறார்கள். இப்படியன்றி, அந்த அந்தக் காலத்தில் அந்த அந்த மந்திரத்தைச் சொல்லி அந்த அந்த மந்திரத்தைச் சொல்லி அந்த அந்த திரவியங்களைக் கொண்டு அந்த அந்த ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும்.

அன்னப் பிராசனத்துக்கப்புறம் 'சௌளம்' செய்ய வேண்டும். அதாவது சிகை (குடுமி) வைக்கிறது. ஸத் கர்மாவுக்கு உபயோகமாக இருக்க அது பண்ணவேண்டும். ஸந்நியாஸிக்கு சிகை இல்லை. மொட்டைத் தலையாக இருக்க வேண்டும். ஸந்நியாஸிகள் மந்திரபூர்வமாகத்தான் சிகையை எடுத்துக் கொள்ளவேண்டும். மந்திரபூர்வமாக வைத்துக் கொண்ட சிகையைப் பரமேச்வரனுக்கு முன்பு பண்ணின பிரதிக்ஞைக்கு விரோதமாக இஷ்டப்படி எடுத்து விடுவது தப்பு. சிகையை எடுப்பது ஒரு பெரிதா என்று கேட்கலாம். பொய் சொல்லுகிறது தப்பு அல்லவா?அது எவ்வளவு தப்போ அவ்வளவு தப்பு இதுவும். 'பரமேசவர ப்ரீதியாக'என்று ஸங்கல்பம் பண்ணியே, சௌள ஸம்ஸ்காரத்தில்

சிகை வைக்கப்படுகிறது. அப்படி வைத்துக் கொண்டதைக் கிள்ளுக்கீரையாக எண்ணி மனம் போனபடி எடுத்தால் அந்தப் பரமேச்வரனிடமே பொய் சொன்னதாக ஆகவில்லையா? சிவலிங்கப் பிரதிஷ்டை செய்கிறார்கள். வேல், ஸாளக்கிராமம் வைத்து பூஜை செய்கிறார்கள். பின்பு, கோபித்துக் கொண்டு எடுத்து எறிந்து விடலாமா?அகஸ்மாத்தாகப் போனால் - திருடன் கொண்டு போனால் பாதகம் இல்லை. நாமாக வைத்ததை நாமாக வேண்டுமென்று மாற்றுவது பெரிய தப்பு.

சௌளத்தை மட்டும் ஸங்கல்பத்தோடு பண்ணிக் கொண்டு அப்புறம் இஷ்டப்படி அதை எடுத்து விட்டு 'க்ராப்'பண்ணிக் கொள்வது தப்பு.

'.......ஏ போச்சு'என்று பேச்சு வழக்கிலே ரொம்ப அலக்ஷ்யமான ஸமாசாரமாகச் சொன்னாலும், வாஸ்தவத்தில் இது பெரிய ஸமாச்சாரம்தான். வேத அத்யயனம், வைதிக கர்மானுஷ்டானம், தர்மப்படி இல்லறத்திலிருந்து கொண்டு பண்ணும் தாம்பத்தியம் இவற்றிலே சரீரத்துக்கும், சரீரத்தின் நாடி சலனங்கள் மூலம் சித்தத்துக்கும் ஏற்படவேண்டிய பலத்துக்குத் தலையில் பிரம்மரந்திரத்தில் சிகை என்ற ரக்ஷை இருப்பது பெரிய காப்பாகும். கூரைக்கு ஒடு போடுகிற மாதிரி அது!வேத கர்மாவும், தாம்பத்தியமும் நின்றுபோன ஸந்நியாஸ ஆச்ரமத்தில் தான் இந்த ரக்ஷை தேவையில்லாமல் போகிறது. ஆகையால் கிருஹஸ்தன் ஸந்நியாஸியாக ஆனாலன்றிக் குடுமியை எடுக்கக் கூடாது. தற்காலத்தில் பிரம்மச்சரிய, கிருஹஸ்தாச்ரம காலங்களிலும் வேத ஸம்பந்தத்துக்கு முழுக்குப் போட்டு விட்டதால், சிகையும் இல்லாமலிருக்கிறோம்!

பாபம் பண்ணி நரகவாஸம் பண்ணுகிற ஜீவர்களின் பிரீதிக்காக, ஒரு கிருஹஸ்தன் ஸ்நானம் செய்யும்போது மந்திர பூர்வாக சிகோதகம் தரவேண்டும்( குடுமியிலிருந்து ஜலத்தைப் பிழிந்து கொடுக்க வேண்டும்) என்று இருக்கிறது. சிகை இல்லாவிட்டால் இதை எப்படிப் பண்ணுவது?

சௌளத்துக்கு அப்புறம் வருவது உபநயனம். பிரம்மோபதேசம், பூணூல் கல்யாணம் என்பதெல்லாம் இதுவே.

உபநயனம் முதல் பண்ணப்படும் ஸம்ஸ்காரங்கள் ஒரு ஜீவனுக்கு அறிவு வந்த பின்பு ஏற்படுபவை. குழந்தையாக இருந்த ஜீவன் அறிவுடன் மந்திரம் சொல்லிப் பண்ணத் தொடங்கும் முதல் ஸம்ஸ்காரம் உபநயனமே.

மாதா பிதாக்களிடத்தில் ஏதாவது பாப தோஷங்களிருந்தால் அவை அவர்களிடத்திலுண்டாகிற ஜீவன் எந்த மாதாவுடைய கர்ப்பத்தில் வாஸம் பண்ணுகிறதோ, எந்தப் பிதாவால் உண்டாகிறதோ அவர்களுடைய தோஷங்கள் அந்த ஜீவனுக்கு ஏற்படாமலிருப்பதற்காக ஸம்ஸ்காரங்கள் செய்யவேண்டும். மாதா பிதாக்களிடம் துர்க்குணங்கள் உண்டு. அவை அவர்களால் ஏற்படும் ஜீவன்களுக்கு உண்டாகாமலிருக்க ஸம்ஸ்காரங்கள் செய்ய வேண்டும். அந்த

தோஷங்கள் (கர்ப்ப சம்பந்தமான) கார்ப்பிகம் என்றும் (பீஜ சம்பந்தமான) பைஜிகம் என்றும் இரண்டு தந்தையால் உண்டாவது. இந்த தோஷங்களின் நிவாரணத்திற்காக உபநயனம் வரையில் உள்ள சம்ஸ்காரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைச் செய்ய வேண்டியவர்கள் மாதா பிதாக்கள். உபநயனம் வரையில் உள்ள ஸம்ஸ்காரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைச் செய்ய வேண்டியவர்கள் மாதா பிதாக்கள். உபநயனம் வரைக்கும் ஸம்ஸ்காரங்களைத் தானே செய்து கொள்ளப் புத்திரனுக்கு அர்ஹமான (தகுதியான) வயது வரவில்லை.

எந்த ஸம்ஸ்காரத்தையும் உரிய காலத்தில் பண்ண வேண்டும். அதனால் பாப பரிகாரம் ஏற்படுகிறது. பூர்வத்தில் வேறொரு காரியம் பண்ணிப் பாபம் ஸம்பாதித்திருக்கிறோம். அதை நீக்க மனம்-வாக்கு-காயங்களால் ஸம்ஸ்காரம் பண்ணவேண்டும்.

நாம், பாபம் அந்த மூன்று கரணங்களாலேயும் பண்ணியிருக்கிறோம். மனதால் கெட்ட எண்ணம் நினைத்திருக்கிறோம். வாக்கால் பொய் பேசியிருக்கிறோம்.தேஹத்தால் பொய் பண்ணியிருக்கிறோம். அதாவது பல தினுசாகப் பொய் பண்ணியிருக்கிறோம். அதாவது பல தினுஸாகப் பாசாங்கு பண்ணியிருக்கிறோம். மனோ-வாக்-காயங்களால் பண்ணிய பாபங்களை அவைகளாலேயே ஸத் காரியங்களைப் பண்ணிப் போக்கிக் கொள்ள வேண்டும். மனத்தினால் பரமேச்வரத் தியானம் பண்ணவேண்டும்;வாக்கினால் மந்திரம் சொல்ல வேண்டும்;காயத்தால் ஸத்காரியம் பண்ண வேண்டும். மனோ -வாக் - காயங்களால் தானாக ஒரு ஸம்ஸ்காரத்தைப் பண்ணும் பக்குவம் ஜீவனுக்கு உபநயனத்திலிருந்து ஏற்படுகிறது. இதுவரை தகப்பனார்தான் இவனுக்காக மந்திரம் சொல்லிப் பண்ணினார்.

இங்கே இன்னொரு விஷயமும் சொல்லவேண்டும். ஒரு ஜீவனை பீவீக்ஷீமீநீமீ-ஆக (நேராக) உத்தேசித்தே அதன் பிதா பண்ணும் (கர்ப்பாதானம் முதற்கொண்டு சௌளம் வரையிலான) கர்மாக்கள் மட்டுமின்றி, அந்தப் பிதாவாகப்பட்டவன் மற்ற எல்லா ஸம்ஸ்காரங்களையும் பண்ணி நல்ல அநுஷ்டாதாவாக இருப்பதும் வீஸீபீவீக்ஷீமீநீமீ-ஆக (மறைமுகமாக) அவனுடைய புத்திரர்களுக்கு நல்லதை செய்கிறது. 'மாதா பிதா பண்ணுவது மக்களைக் காக்கும்'என்ற வார்த்தைப்படி இது மாதிரி நடக்கிறது. வைதிக பிராமண ஸந்ததிக்குஸமீப காலம் வரையில் புத்திப் பிரகாசம் அதிகம் இருந்து வந்ததற்கு ஒரு முக்ய காரணம், முன்னோர்கள் பண்ணிய ஸம்ஸ்காரங்களின் சக்திதான். முன்பு இருந்தவர்கள் செய்தது இரண்டு அல்லது மூன்று தலைமுறைக்கு அஸ்திவாரமாக இருக்கிறது. அந்த எல்லை தாண்டிப் போனால் அப்புறம் கஷ்டந்தான். இந்த ஸந்ததியில் பிறந்த

குழந்தைகளே லௌகிகத்தில் பிரவேசித்தபின் அதிகமாகக் கீழே போய்

விட்டார்கள். ரொம்பவும் கெட்டுப் போனார்கள். மடை அடைத்து வைத்ததைத் திறந்துவிட்டால் வெகு வேகமாக ஜலம் போகிற மாதிரி இவர்கள்தாம் கடுமையாக லௌகிகத்தில் இறங்கி விட்டார்கள்.

நம்முடைய பெற்றோர்கள் ஸம்ஸ்காரம் பண்ணவில்லை;அதனால் நமக்கு நன்மை உண்டாகவில்லை என்ற குறை நமக்கு இருக்கலாம். அதைப்போல நம்முடைய குழந்தைகள் குறை கூறாமல் நாம் நல்ல ஸம்ஸ்காரங்களைப் பண்ணவேண்டும். அவர்களுக்கும் பண்ணி வைக்க வேண்டும்.

சிலருக்கு ஏன் இல்லை ?

ஜாதகர்மா, நாமகர்மா, அன்னப் பிராசனம், சௌளம் முதலியன எல்லா ஜாதியாருக்கும் பொதுவானவை. உபநயனம் என்பது பிராம்மணர், க்ஷத்ரியர், வைசியருக்கே உரியது. மற்றவர்களுக்கு அது வேண்டியதில்லை என்று வைத்திருக்கிறது.

இப்படிச் சொன்னவுடன் பாரபட்சம், வித்யாஸம் (ஜீணீக்ஷீமீ வீணீறீவீமீ ஹ்) என்று சண்டைக்குக் கிளம்பக்கூடாது. லோகத்துக்கு உபகாரமாக சரீரத்தால் தொண்டு செய்வதை வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட நான்காம் வர்ணத்தவர்களுக்கு அந்தத் தொழிலாலேயே சித்த சுத்தி ஏற்படுகிறது. அவர்கள் வித்யாப்பியாஸ காலத்திலிருந்து தங்களுக்கேற்பட்ட தொழிலை அப்பன் பாட்டனிடமிருந்து கற்றுக் கொண்டால்தான் அதில் செய்நேர்த்தி உண்டாகும். அவர்களுக்குப் பன்னிரண்டு வருஷ வேதாத்யயனமும் குருகுலவாஸமும் வேண்டியதில்லை. இதைச் செய்யப் போனால் அவர்கள் செய்ய வேண்டிய தொழில் அல்லவா கெட்டுப் போகும்?

உபநயனம் என்பது குருகுவாஸத்துக்கு முதல் படிதான். 'உபநயனம்'என்றாலே குருவுக்கு கிட்டே கொண்டு போய்விடுவது என்றுதான் அர்த்தம். புத்தி சம்பந்தமான வேத வித்யையை அப்பியஸிக்கும்போது அஹங்காரம் வந்து விடாமல் இருக்கவேண்டும் என்பதாலேயே ஸ்வாதீனமாகப் பழகுகிற தகப்பனாரை விட்டுக் கண்டிப்பிலே ஒழுங்குக்குக் கொண்டு வருகிற குருவிடம் கொண்டுபோய்விடச் சொல்லியிருக்கிறது. சரீர உழைப்பாக ஒரு தொழிலைக் கற்றுக் கொள்கிறபோது அதிலே புத்தித் திமிர், அஹங்காரம் வராது. தகப்பனாரிடமிருந்தே கற்றுக் கொள்ளலாம். சரீர சேவை செய்கிறவர்களுக்கு உபநயனமும், குருகுலவாஸமும் அவசியமில்லை.

வம்சாவளியாக வீட்டிலேயே கற்றுக்கொள்வதை விட அதிகமாக சில நுணுக்கங்கள் தெரிய வேண்டுமானால் அதை பிராம்மணனிடம் கேட்டுத் தெரிந்து

கொள்ளவேண்டும். வீட்டில் கற்றுக் கொள்வதற்கு முடியாமற் போகிறவர்களும் இப்படிச் செய்யலாம். பிராம்மணன் 'களவும் கற்றுமற'என்பதுபோல எல்லாத் தொழிலையும் தெரிந்து கொண்டு, பிறருக்கு மட்டுமே அவற்றைச் சொல்லிக் கொடுத்துவிட்டு - அதாவது அவற்றை ஜீவனோபாயமாகக் கொள்ளாமல் மற்றவர்களுக்கு சிக்ஷை பண்ணுவித்து - தன்னளவில் அத்யயனம், யக்ஞம் முதவான வைதிக காரியங்களை மட்டுமே பண்ணிவர வேண்டும்.

தொழில், மனோபாவம் இவற்றுக்கு அநுகூலமாகவே ஸம்ஸ்காரங்கள் இருக்கின்றன. அதனால் சிலருக்குச் சில ஸம்ஸ்காரம் இல்லாததால் மட்டம், மட்டம் தட்டுகிறார்கள் என்றெல்லாம் நினைப்பது தப்பு. என்னைக் கேட்டால் , வேடிக்கையாக, எவனுக்கு ஜாஸ்தி ஸம்ஸ்காரம் சொல்லியிருக்கிறதோ அவனைத்தான் மட்டமாக நினைத்திருக்கிறார்கள் என்றுகூடச் சொல்வேன்.

இத்தனை நிறைய ஸம்ஸ்காரம் பண்ணினால்தான் இவன் சுத்தமாவான்;மற்றவனுக்கு இவ்வளவு இல்லாமலே சுத்தமாவான் என்று நினைத்து அதிகப்படி ஸம்ஸ்காரங்களை வைத்ததாகச் சொல்லலாம் அல்லவா?ஜாஸ்தி மருந்து சாப்பிட வேண்டியவனுக்குத்தானே அதிக வியாதி இருப்பதாக அர்த்தம்?

ரிஷிகளைவிடப் பாரபட்சமில்லாதவர்கள் எவருமில்லை. அவர்கள் நம் மாதிரி வாய்ச் சவடாலுக்காக ஸமத்வம் பேசுகிறவர்களல்ல. வாஸ்தவமாகவே எல்லாரையும் ஈச்வரனாகப் பார்த்த நிமான ஸமத்வக்காரர்கள்அவர்கள் தான். லோகத்தில் பல தினுஸான காரியங்கள் நடக்க வேண்டியிருப்பதால் அதற்கேற்றபடியும், இந்தக் காரியங்களுக்கு ஏற்றவாறு மனோபாவங்கள் இருப்பதால் அவற்றை அநுஸரித்தும் வெவ்வேறு விதமான ஸம்ஸ்காரங்களை அவர்கள் வைத்தார்கள். இதிலே உசத்தி- தாழ்த்தி அபிப்ராயங்களுக்கு இடமேயில்லை.

சாஸ்திரங்களில் இப்படி முதல் மூன்று வர்ணத்தாருக்கு உபநயனமும் அது தொடர்பான சில ஸம்ஸ்காரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பார்ப்போம்.

---

## பிரம்மச்சரியம்

சௌளத்துக்குப் பின் வருவது உபநயனம்.

குழந்தையாயிருந்தவனுக்கு அறிவு வந்து, தானே மந்திரங்களைச் சொல்கிற சமயத்தில் உபநயனம் நடக்கிறது. "பிக்ஷாசர்யம் சர"(பிக்ஷை எடு) என்று இந்தச் சடங்கில் சொன்னால் பூனூல்காரப் பையன் "பாடம்" ( **baad** `ham) (அப்படியே

செய்கிறேன்) என்கிறான். அதனால் இவனுக்கு உபநயனத்துக்கு முன்பே ''பிக்ஷாசர்யம் சர''என்று சொன்னால் அதைப் புரிந்துகொள்வதற்கான ஸம்ஸ்கிருத ஞானம் இருக்க வேண்டும். ஐந்து வயதில் படிக்க ஆரம்பித்தால் இரண்டு அல்லது மூன்று வருஷத்தில் இப்படிப்பட்ட பாஷா ஞானம் வந்துவிடும். ஆதலால் எட்டு வயதில் பூணூல் போடவேண்டும் என்றாகிறது.

எட்டு வயசுக் குழந்தைகள் அர்த்தம் தெரிந்து பூணூல் போட்டுக் கொண்டு ஜபம் பண்ணிவிட்டால் லோகமெல்லாம் நன்றாக ஆகிவிடும். இப்போதோ இளம் மனசுகளில் நாஸ்திகத்தைத் தான் ஏற்றியிருக்கிறோம்!

## *பிரம்மச்சரிய ஆசிரமம்.*

உப-சமீபத்தில், நயனம் - அழைத்துக் கொண்டு போகிறது. யாருக்கு ஸமீபத்தில் அழைத்துக் கொண்டு போகிறது?ஒருவனை குருவுக்கு ஸமீபத்தில் அழைத்துக் கொண்டு போகிறதுதான் உபநயனம். குரு யார்?வேதவித்துக்கள். முதல் ஆசிரமமான பிரம்மச்சரியத்துக்கு ஒரு குரு;கடைசி ஆசிரமமான ஸந்நியாசத்துக்கு ஒரு குரு. வேத வேதாங்கம் அறிந்தவர்கள் முதல் ஆசிரமத்துக்கு குரு. வேதம் உள்பட எல்லாவற்றையும் விட்டு பிரம்ம ஞானம் அடைந்தவர்கள் கடைசி ஆசிரமத்துக்கு குரு. வித்தையைத் தெரிந்து கொள்வது முதல் ஆசிரமம். ஞானத்தைத் தெரிந்து கொள்வது கடைசி ஆசிரமம்.

உபநயனம் பிரம்மச்சரியத்துக்கு ஆரம்பம். அதன் முடிவு 'ஸமாவர்த்தனம்', உபநயனம் முதல் ஸமாவர்த்தனம் வரையில் இருப்பது ப்ரஹ்மச்சரியம். ஸமாவர்த்தனம் என்றால் திரும்பி வருகிறது என்று அர்த்தம். ஒரு இடத்துக்குப் போனால்தான் போன இடத்திலிருந்து திரும்பி வருவது என்பது முடியும். அகத்திலிருந்து குருகுலத்துக்குப் போய் வேத அத்யயனத்தைப் பூர்த்தி பண்ணிவிட்டு அகத்திற்குத் திரும்பி வருவதுதான் ஸமாவர்த்தனம்.

உபநயனம் பூர்வாங்கம். அங்கம் என்றால் பிரதானம் ஒன்று வேண்டும். பிரதானத்திற்கு அங்கி என்று ஒரு பெயருண்டு. உபநயனம் என்ற அங்கத்துக்கு அங்கியாக இருப்பது பிரஹ்மச்சர்யம். ப்ரஹ்மச்சர்யம் என்ற இடத்தில் ப்ரஹ்ம என்பதற்கு வேதம் என்பது அர்த்தம். வேதத்தை மனப்பாடமாகக் கற்று ஸ்வாதீனப்படுத்தவே ஒரு ஆசிரமம் ஏற்பட்டிருக்கிறது. அதுதான் ப்ரஹ்மச்சர்யம். அதற்கு பூர்வாங்கம் உபநயனம். அந்த ஆசிரமத்துக்கு கடைசி பக்ஷமாக ஏற்பட்ட காலம் பன்னிரண்டு வருஷங்கள். ஒரு வேதத்தை ஸாங்கோபாங்கமாக

அத்தியயனம் பண்ணுவதற்குப் பன்னிரண்டு வருஷங்கள் வேண்டும்.

பிரம்ம என்பதற்கு ஆறு அர்த்தங்கள் உண்டென்று சொன்னேன். பிரம்ம என்பது விஷ்ணுவுக்கு ஒரு பெயர். பரமசிவனுக்கும் ஒரு பெயர். பிராம்மண ஜாதி, தபஸ்,

பரமாத்ம ஸ்வரூபம் என்பவைகளுக்கும் அந்தப் பெயருண்டு. பிரம்மா என்று நீட்டினால் சதுர்முகனுக்குப் பெயராகிறது.

பிரம்மச்சரியம் என்பது வேதாத்தியயனம் பண்ணுவதற்காக ஏற்பட்ட ஒரு தீக்ஷை. அதற்குப் பூர்வாங்கமாக ஏற்பட்ட ஒரு காரியம் உபநயனம். பரிஷேசனம் என்று ஜலத்தால் சாதத்தைத் தெளிப்பது எதற்கு?அது போஜனத்திற்கு அங்கம். சாதத்தை அப்படியே சாப்பிட்டு விடக்கூடாது. ஈச்வரப் பிரஸாதமாக்கிச் சாப்பிட வேண்டும் என்றே முதலில் அதன் மேல் ஜலம் தெளிக்கிறோம். இப்படிச் செய்துவிட்டு சாப்பிடாமல் இருந்தால் எத்தனை அசட்டுத்தனம்?உபநயனம் பண்ணிவிட்டு வேதாத்தியயனம் பண்ணாமலிருப்பது பரிசேஷனம் பண்ணிவிட்டு சாப்பிடாமலிருப்பதைப் போன்றது. இப்போது அத்தனை பேரும் இப்படி அசடுகளாக இருந்து வருகிறோம்.

உபநயனம் என்ற பூர்வாங்கத்திற்கும் ஸமாவர்த்தனம் என்கிற உத்தராங்கத்திற்கும் நடுவில் நான்கு வ்ரதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. நம்முடைய தக்ஷிண தேசத்தில் பெரும்பாலும் அநுஷ்டானத்திலுள்ள க்ருஷ்ண யஜுர் வேதத்தை எடுத்துக் கொண்டால், அவை பிராஜபத்யம், ஸௌம்யம், ஆக்னேயம், வைச்வதேவம் என்பவை.

எந்த மந்திர ஸித்திக்கும் நியமம் அவசியம் வேண்டும். ஆத்மா கடைத்தேறுவதற்கு மந்திரமயமான வேதம் இருக்கிறது. அதைப் பாடம் பண்ணுவதற்கு ஒரு நியமம் வேண்டும். வேத ஸமூஹம் முழுவதற்கும் ஏற்பட்ட இந்த நியமமே பிரம்மச்சரியமாகும். இது தவிர, வேத பாகம் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி நியமங்கள் இருக்கின்றன. அவ்வளவுக்கும் சேர்த்து மொத்த விரதம் பிரம்மச்சரியமாகும். தனித்தனி விரதங்கள் இருக்கின்றன. வேதத்தை நான்கு காண்டமாக பிரித்திருக்கிறார்கள். அவைகளை நாலு மஹரிஷிகள் பிரவர்த்திப்பித்திருக்கிறார்கள். அந்த மஹரிரிஷிகளை உத்தேசித்து பிரம்ம யக்ஞம் பண்ணப்படுகிறது. (பிரம்மயக்ஞம் என்பதற்கு வேத யக்ஞம் என்பதுதான் அர்த்தம்). ஒவ்வொரு காண்டத்திற்கும் தனித்தனியாக ஒரு விரதம் உண்டு. பிரம்மச்சரிய ஆசிரமத்தின்போது ஒவ்வொரு காண்டத்தை அத்தியயனம் பண்ணுகிறபோது அதற்கு ஏற்பட்ட விரதத்தையும பண்ணவேண்டும். பிரஜாபத்ய காண்டத்திற்கு ஒரு விரதம் ஏற்பட்டிருக்கிறது. அது பிரஜாபத்யம். அப்புறம் ஸௌம்ய விரதம், பின்பு ஆக்நேய விரதம், அப்புறம் வைச்வதேவ விரதம் செய்ய வேண்டும். நான்கு காண்டங்களும் முடிந்தபின்பு குருவினுடைய அனுஜ்ஞை (அனுமதி)யின் மேல் ஸமாவர்த்தனம் பண்ணிக் கொள்ள வேண்டும். (வீட்டுக்குத் திரும்பிச் செல்லும் ஸம்ஸ்காரத்தை பண்ணிக் கொள்ள வேண்டும்.).

முன்பு சொன்ன நான்கு காண்ட விரதங்களும் கிருஷ்ண யஜுர் வேதத்துக்கு ஏற்பட்டவை.

ரிக்வேதத்துக்கு மஹா நாம்னி விரதம், உபநிஷத் விரதம், கோதான விரதம் ஆகிய நான்கு விரதங்கள் உண்டு. இப்படி ஒவ்வொரு வேதத்துக்கும் தனித்தனி விரதங்கள் இருக்கின்றன. கிருஷ்ண யஜுர் வேதமே அதிகம் பிரசாரத்திருப்பதால் அதை முதலில் சொன்னேன். குருகுல வாஸத்தை முடிக்கும்போது செய்யும் ஸமாவர்த்தனத்திற்கு ஸ்நானம் என்றும் ஒரு பெயர் உண்டு. அதைச் செய்து கொண்டவனுக்கு ஸ்நாதகன் என்று பெயர்.

எல்லாரும் தம் தம் வேதத்தையும் வித்தைகளையும் அத்தியயனம் பண்ண வேண்டும். ஆவணி அவிட்டம் வருகிறது. அன்று உபாகர்மா பண்ணுகிறோம். அன்று வேதத்தில் புது பாகம் ஆரம்பித்துக் கொள்ள வேண்டும். தை மாஸம் பூர்ணிமையில் உத்ஸர்ஜனம் (முடித்தல்) பண்ண வேண்டும். ஆவணி மாதத்தில் ஆரம்பித்துத் தை மாதத்தில் விட்டுவிட வேண்டும். அதாவது ஏறக்குறைய தக்ஷிணாயன ஆறு மாதத்தில் வேதாத்தியயனம் பண்ணவேண்டும். மற்ற ஆறு மாதங்களில் வேதத்தின் ஆறு அங்கங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

வேதாத்யயனம் செய்யும்பொழுது அந்த அந்தக் காண்டத்துக்கு ஏற்பட்ட தனி நியமத்தோடும் பிரம்மச்சரியத்துக்கு ஏற்பட்ட தனி நியமாத்தோடும் பண்ணினால் தான் மந்திர ஸித்தி உண்டாகும். நாம் ஒன்றும் பண்ணுவதில்லை. "உபயோகம் இல்லை"என்று மட்டும் சொல்லுகிறோம். கல்யாணத்துக்கு முன்பு 'வ்ரதம்' என்று ஒரு பெயர் வைத்து ஒரு மணி நேரத்துக்குள் எல்லா ஸம்ஸ்காரங்களையும் சுருக்கி அர்த்தமே தெரியாமல் கிடுகிடு என்று பண்ணுகிறோம். அதுவாவது இருப்பதனால் இந்த உபந்நியாஸம் பண்ண நேரிட்டது.

வேதத்தை ஸ்வீகரிப்பதற்கு ஒருத்தனை அர்ஹனாக்கி (அருகதை உள்ளவனாக்கி) அதன் மூலம் லோகம் முழுவதற்கும் நல்ல திவ்ய சக்திகளைப் பரப்புகிற பரம ச்ரேஷ்டமான கர்மாவான உபநயனத்தின் பெருமையை அறிந்து அதை உரிய காலத்தில் பண்ண வேண்டும்.

த்வி-ஜன்-இருபிறப்பாளன்-எனப்படும் பிராம்மண, க்ஷத்ரிய, வைச்யர்கள் லோகோபகாரமான இரண்டாவது பிறப்பை அடைவது அவர்கள் எப்போது வேதத்தைக் கற்கத் தகுதி பெறுகிறார்களோ அப்போதுதான். இந்தத் தகுதியை அவர்கள் பெறுவது உபநயன ஸம்ஸ்காரத்தில்தான். இதைக் காலத்தில் செய்ய வேண்டியது பெற்றோர் கடமை.

இப்போது இம்மாதிரி விஷயங்களில் சாஸ்திரங்கள் ரொம்பவும் அநாதரவு செய்யப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் சாஸ்திரத்தைப் பார்த்துச் செய்து வந்த நம் தேசத்தில் இப்போது நிலைமை அடியோடு மாறிவிட்டது. சாஸ்திர விதியும் பொது

வழக்கும்

இதிலே ஒரு வேடிக்கை, அல்லது பெரிய கஷ்டம், தர்ம சாஸ்திரங்களில்,

ஸூத்ரங்களில் சொல்லியுள்ள ரூல்களை மனம் போனபடி மீறுகிறபோதே, அங்கங்கே எப்படியோ பழக்கத்தில் வந்துவிட்ட சில விஷயங்களைப் பெரிய சாஸ்திர ரூல் மாதிரி நினைத்துக் கொண்டு அநுஸரித்து வருகிறார்கள். உதாரணமாக அக்காள் கல்யாணத்துக்கு இருக்கும் போது தம்பிக்குப் பூணூல் போடக்கூடாது;ஒரே ஸமயத்தில் மூன்று பிரம்மச்சாரிகள் ஒரு வீட்டில் இருக்கக் கூடாது என்கிறது. போன்ற காரணங்களைச் சொல்லிக் கொண்டு, பிள்ளைகளுக்கு உரிய காலத்தில் உபநயன ஸம்ஸ்காரம் செய்விக்காமல் இருக்கிறார்கள். ஆதாரமான தர்ம சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற வயசு வரம்பை இம்மாதிரி லௌகிகமான வழக்கங்களை முன்னிட்டு மீறுவது ஸரியல்ல. இம்மாதிரி வழக்கங்கள் லௌகிகமான ஸௌகரியத்தை முன்னிட்டோ, ஸென்டிமென்ட் என்கிறார்களே, அந்த மன உணர்ச்சியை முன்னிட்டோ தான் ஏற்பட்டிருக்கக் கூடும். தர்ம சாஸ்திரத்தை மீறாமல் இவற்றையும் கடைப்பிடிப்பதில் தவறில்லை. ஆனால் ஆதாரமான ரூலை மீறி இவற்றையே பெரிய சாஸ்திரமாக நினைத்து அனுஸரிப்பது அயுக்தமானது.

ஆபஸ்தம்ப ரிஷி தம்முடைய தர்ம சாஸ்திரத்தின் முடிவில் நான் இதில் சொன்னதோடு எல்லா விதிகளும் முடிந்துவிட்டன என்று அர்த்தம் இல்லை. இன்னம் அநேகம் உள்ளன. அவை குலப் பழக்கத்தாலும், பிரதேசப் பழக்கத்தாலும் (தேசாதாரத்தாலும்) ஏற்பட்டிருப்பவை. இவற்றை ஸ்திரீகளிடமிருந்தும், நாலாம் வர்ணப் பொது ஜனங்களிடமிருந்தும் கேட்டுத் தெரிந்து கொண்டு அநுஷ்டியுங்கள் என்று சொல்லியிருப்பது வாஸ்தவம்தான், ஆனால் இப்படி சொன்னவை, அவர் தர்ம சாஸ்திரத்தில் சொன்னதற்கு அதிகப்படியாக (additional-ஆக) ஜனங்களின் பழக்கத்தில் வந்தவற்றைத்தான் குறிப்பிடுமே ஒழிய, அவர் சொன்னதற்கு முரணாக (contrary-ஆக) உள்ள பழக்கங்களையல்ல. அதாவது சாஸ்திரத்தில் இருப்பனவற்றோடுகூட, அவற்றுக்கு முரணில்லாத குலாசார, தேசாசாரங்களையும் பின்பற்ற வேண்டுமே ஒழிய, சாஸ்திரப் பிரமாணத்தை விட்டுவிட்டு, அதற்கு மாறுதலாக ஏற்பட்டு விட்ட பழக்கங்களைக் கடைபிடிப்பது என்று வைத்துக் கொள்ளக் கூடாது.

உபநயன ஸம்ஸ்காரத்தை எந்தக் காரணத்தை முன்னிட்டும் தள்ளிப் போடவே கூடாது. கல்யாணத்திலே பண ஸம்பந்தத்தைக் கொண்டு விட்டு அதற்காக கால தாமஸம் பண்ணுவது தப்பு, சாஸ்திர விரோதமானது என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அதைப்பற்றி பின்னால் விவாஹ ஸம்ஸ்காரத்தில் சொல்லுகிறேன். கல்யாணத்திலாவது தவிர்க்க முடியாமல் 'ஷோ'அம்சங்கள் சேர்ந்துவிட்டன என்கலாம். நாம் வேண்டாமென்றாலும் பிள்ளையகத்தார் வேண்டும் என்றால் இந்த ஆடம்பரங்களைப் பண்ணித்தான் ஆகவேண்டும். இதற்குப் பணம் சேர்க்க வேண்டும். இதற்காகக் கால தாமஸம் பண்ண வேண்டியிருக்கிறது. அதோடு கூடக்

கல்யாணம் என்பதில் வரன் என்று ஒருத்தனைத் தேடிப் பிடித்து, நமக்கு அவனைப் பிடித்து, அவன் வீட்டாருக்கும் நம் ஸம்பந்தம் பிடிக்க வேண்டியதாக இருக்கிறது. வரன் வேட்டையில் காலம் செலவிட வேண்டியதாகிறது.

பூணூல் விஷயம் இப்படியில்லை. இதை ஏன் ஆடம்பரமாகப் பண்ணவில்லை என்று எந்த ஸம்பந்தியும் நம்மை நிர்பந்திக்கப் போவதில்லை. மாப்பிள்ளை தேடுகிறதுபோல் இதில் வெளியே யாரையோ தேடிப்போய் பரஸ்பர ஸம்மதத்தைப் பெறவேண்டியும் இருக்கவில்லை. ஆதலால் உரிய காலத்தில் ஒரு பிள்ளைக்குப் பூணூல் போடாமலிருப்பதற்கு எந்த ஸமானதானமும் சொல்வதற்கில்லை. அதை எந்த விதத்திலும் மன்னிப்பதற்கேயில்லை.

## மூலாதாரம் வீணாகக்கூடாது

குழந்தைக்கு உடம்புக்கு நோய் வந்தால் மருந்து வாங்கித் தராமலிருந்தால் எத்தனை தப்போ, அதைவிடத் தப்பு உரிய வயசில் உபநயனம் பண்ணி அவனுக்கு ஆத்ம க்ஷேமமாகவும் அவன் மூலமாக லோகத்துக்கு க்ஷேமமாக இருக்கிற காயத்ரீ உபதேசத்தைக் கொடுக்காமலிருப்பது, வெறும் vanity, ஜம்பத்துக்காக இப்போது பூணூல் என்றால் அதை ஒரு குட்டிக் கல்யாணம் போலப் பண்ணுவது என்று வைத்துக் கொண்டு இந்தச் செலவை எவ்வளவு தள்ளிப்போடலாமோ அப்படிச் செய்வதற்காக காலம் கடத்துவதை எவ்வளவு கண்டித்தாலும் போதாது.

இதற்காக மடத்தில் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராயிருக்கிறோம். மாஸ் உபநயனம் என்று இப்போது பலருக்குச் சேர்த்துப் பூணூல் போட்டு வைக்கிறோம். இன்னம் அநேக தர்ம ஸ்தாபனத்தினர் அநேக ஊர்களில் இப்படிக் கோஷ்டிப் பூணூல் நடத்தி வருகிறார்கள். எல்லோருக்கும் காயத்ரீ பொதுவானதுதான், ஸ்மார்த்த-வைஷ்ணவ-மாத்வ மதபேதமில்லாமல் எல்லா ஜாதிப் பிள்ளைகளுக்காகவும் மாஸ் உபநயனம் செய்து வைக்கப்படுகிறது. ஓரளவு திருப்திப்படும்படி இது நடந்து வருகிறது. இன்னும் நன்றாக பலத்து விருத்தி அடையவேண்டும்.

வசதியில்லாதவர்களுக்குத்தான் மாஸ்-உபநயனம் என்று நினைத்து, வசதியுள்ளவர்கள் அதில் சேராமல், தாங்களாகத் தனியாகவும் உபநயனம் பண்ணாமலிருந்து வருகிறார்கள். இந்த உத்தமமான ஸம்ஸ்காரத்தில் 'வசதி' என்ற வார்த்தைக்கு இடமேயில்லை. திரவிய ஸம்பந்தமில்லாத இந்தக் கர்மாவை இப்படியாக்கி வேதாப்பியாஸத்துக்கு மூலாதாரமான காரியத்தை வீணாக்கியிருக்கிறது!

உபநயனத்தோடு காயத்ரீ தீர்ந்தது, மறுநாளிலிருந்தே கிரிக்கெட்டும், ஸினிமாவும், கட்சி மீட்டிங்குந்தான் என்று ஆகிவிடாமல் உபநயனப்பிள்ளை தொடர்ந்து ஸந்தியாவந்தனம் செய்யும்படியாக மாதாபிதாக்கள் கண்டிப்புடன் பார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களே கிளப், ஸினிமா, மீட்டிங், ரேஸ் என்று போகிறபோது நான் சொல்வது என்ன பலன் தரும் என்று எனக்கே தெரியவில்லை. தாங்கள்தான் வீணாகப் போயாயிற்று, குழந்தைகளாவது உருப்படட்டும் என்றுதான் இதைச் செய்யவேண்டும். ஆனால், "எனக்குச் சொல்ல வருகிறாயே!நீ என்ன பண்ணுகிறாய்?"என்று பிள்ளையே மாதாபிதாக்களிடம் திருப்பிக் கொண்டு விட்டாலும் கஷ்டந்தான்!இப்படிப்பட்ட ஒரு துர்த்தசையில் நான் உங்கள் 'டய' த்தை 'வேஸ்டா'க்கி கொண்டு, "சொல்ல வேண்டியது என் கடமை" என்பதற்காகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்!

நீங்கள் எப்படிச் செய்வீர்களோ, அல்லது செய்யாமலே தான் போவீர்களோ, எனக்குத் தெரியாது -நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியது என்று இந்த மடம் எனக்கு போட்டிருக்கிற ஆக்ஞையை நான் நிறைவேற்றியாக வேண்டும். அந்த ஆக்ஞை, '«õî Ü^òòù^¶,° ÜFè£óºœ÷ â™ô£Š ðêƒèÀ‚°‹ àKò è£ô^F™ àðïòù‹ ªêŒM‚èŠðì «õ‡´‹;ÜîŸèŠ¹ø‹ Üõ˜èœ Mì£ñ™ ú‰Fò£õ‰îùº‹, Fùº‹ å¼ ñEò£õ¶ «õî M^ò£Šò£úº‹ ð‡í «õ‡´‹ â¡Á îèŠðù£˜èÀ‚°„ ªê£™õ¶î£¡.

## Hó‹ñ„ê£KJ¡ ôþí‹.

ஒவ்வொரு நாளும் பிரம்மச்சாரிகள் அக்னி காரியம், அதாவது ஸமிதாதனம் (சுள்ளிகளை மந்திரபூர்வமாக ஹோமம்) பண்ண வேண்டும். பிக்ஷாசர்யம் (பிக்ஷை எடுத்தல்) செய்ய வேண்டும். அலவணமாக ( உப்பில்லாமல்) சாப்பிட வேண்டும். பிரம்மசாரிகளில் பிராம்மணன் பலாச (புரச) தண்டமும், க்ஷத்ரியன அச்வத்த (அரசு) தண்டமும், வைசியன் அத்தி தண்டமும் வைத்துக் கொள்ள வேண்டும். ச்ருத தாரணத்துக்காகத் தண்டம் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது எதை அத்தியயனம் பண்ணுகிறானோ அதைக் கெட்டியாக இருத்திக் கொள்வதற்கு அப்படிச் செய்ய வேண்டும். இடிதாங்கி, ஏரியல் என்றெல்லாம் இல்லையா?அப்படி மநுஷ்யனுக்கானது இந்த தண்டம். இடிதாங்கி ஷிநீவீமீஸீமீ`வீயீவீநீதான். வேதத்திலுள்ள எல்லா மந்திரங்களும் மறவாமல் மனதில் இருக்கும்படி பாதுகாக்க தண்டம் வேண்டும். வேத மந்திர சக்தியை தாரணம் பண்ணுவதற்கு அந்த தண்டத்திற்கு ஒரு சக்தி இருக்கிறது. வேதநிதி அகலாமல் இருக்க அதை வைத்துக் கொள்ள வேண்டும். பிரம்மச்சாரி மேலே கிருஷ்ணாஜினம் (மான்தோல்) போட்டுக் கொள்ள வேண்டும். மேல் வேஷ்டி போட்டுக்கொள்ளக் கூடாது. எலெக்ட்ரீஷியன் மரத்தின் மேல் நிற்கவேண்டு ம்;ரப்பர் நிறீஷீஸ்மீவ போட்டுக் கொள்ள வேண்டும் என்கிற மாதிரி ஆத்மிக

மின்ஸாரத்துக்கு பெரியவர்கள் இந்த விதிகளைக் கொடுத்திருக்கிறார்கள்.

இப்பொழுது நாம் ஒரு நாள் உபாகர்மாவைத் தான் பண்ணுகிறோம். அப்புறம்

தொடர்ந்து வேதம் படிப்பதில்லை. உத்ஸர்ஜனமும் (ஒரு வேதப்பகுதியைப் படித்து முடிப்பது) பண்ணுவதில்லை. அது பண்ணாததற்குப் பிராயச்சித்தமாக 'காமோகார்ஷீத்'ஜபம் பண்ணுகிறோம்;"நான் பாபம் பண்ணவில்லை;காமம் பண்ணியது, கோபம் பண்ணியது;என்னிடம் வராதே;நமஸ்காரம் பண்ணுகிறேன்!" என்று சொல்லுகிறோம். அந்த மந்திரத்துக்கு அதுதான் அர்த்தம். உத்ஸர்ஜனம் பண்ணினால் இந்த ஜபம் அவசியம் இல்லை.

கால நியமம், விரத நியமம், ஆஹார நியமம் முதலியவைகளை அநுஷ்டிப்பது பிரம்மச்சரியம். அத்யயனத்தில் ஸ்வர லோபம், வர்ண லோபம் முதலான உச்சாரணத் தப்புக்கள் ஏற்படக்கூடும். இதற்குப் பிராயச்சித்தமாக ஆவணியவிட்டத்தன்று எள்ளு மாத்திரம் சாப்பிட்டு அன்று முழுவதும் பட்டினி இருந்து மறுநாள் 1008 ஸமித்தால் காயத்ரி ஹோமம் பண்ண வேண்டும். இப்பொழுது ஹோமமாக பிரதம சிராவணக்காரர்கள் (தலைப்பூணூல் பையன்கள்) மட்டும் பண்ணுகிறார்கள் மற்றவர்கள் ஹோமமின்றி ஜபம் மாத்திரம் செய்கிறார்கள். இப்படியின்றி எல்லாருமே ஹோமம் செய்ய வேண்டும். வெறும் ஜபம் பண்ணினால் தூக்கம் வருகிறது. அதனால் லோபம் வருகிறது. ஒரு காரியம் இருந்தால் தூக்கம் வராது. அதற்காகவாவது ஸமித்தினால் ஹோமம் பண்ணலாம். பலாஸ ஸமித்தால் பண்ண வேண்டும். இல்லாவிட்டால் அச்வத்த ஸமித்தால் பண்ணவேண்டும். கடைசி பக்ஷம் தர்ப்பையினாலாவது பண்ண வேண்டும்.

பிரம்மச்சாரி சாப்பிடுவதற்கு கணக்கு இல்லை. வயிறு நிறைய சாப்பிடலாம். ஆனாலும் நாக்கு ருசியைக் குறைக்க வேண்டும். இவன் இஷ்டப்படியான சமையலாக இருக்கக்கூடாது, பிக்ஷையில் எது கிடைக்கிறதோ அதையே சாப்பிட வேண்டும் என்பதும் இவனை பிக்ஷ எடுக்க வைத்ததற்கு ஒரு காரணம். மூல காரணம், பிச்சை எடுப்பதால் இவனுக்கு விநயம் ஏற்படும் என்பதே.ருசி பார்க்கக் கூடாது என்றாலும் ஆஹாரத்தின் அளவுக்கு கட்டுப்பாடு இல்லை. பிரம்மச்சாரி வயிறாரச் சாப்பிட வேண்டும். பட்டினி முதலிய உபவாஸங்களை பிரம்மச்சாரிக்கு சாஸ்திரங்கள் விதிக்கவில்லை. வளர்கிற பருவத்தில் அவன் புஷ்டியாக இருக்க வேண்டும். அதே ஸமயம் ஸத்வ குணத்தோடு, முரடாக இல்லாமல் இருக்க வேண்டும். குரு சுச்ருஷை இப்படிப்பட்ட ஸத்வ குணத்தை ஊட்டவே ஏற்பட்டது. தனது வேத சாகையையும், சதுர்தச வித்யைகளில் மற்றவற்றையும் பன்னிரண்டு வருஷ குருகுல வாஸத்தில் கற்றுத் தேற வேண்டும். பிறகு ஸமாவர்த்தனம் பண்ணிக் கொண்டு அகத்துக்குத் திரும்பிப் போய் விவாஹம் செய்து கொள்ள வேண்டும்.

ஸமாவர்த்தனம் பண்ணிக் கொள்ளாமல் குருவிடத்திலேயே இருந்து வாழ்க்கை முழுதையும் அவருக்கே அர்ப்பணம் பண்ணி அவர் போன பிறகும் பிரம்மச்சாரியாகவே வாழ்நாள் முழுதும் இருப்பதும் உண்டு. இதற்கு நைஷ்டிக

பிரம்மச்சரியம் என்று பெயர். பீஷ்மர், ஆஞ்ஜநேயர் முதலியவர்களை நைஷ்டிக பிரம்மச்சாரிகள் என்று சொல்லியிருக்கிறது. ஆனால் இது கலியில் விசேஷமாக சொல்லப்படவில்லை.

இயற்கை தருமத்தை அநுஸரித்து பிரம்மச்சாரியானவன் ஸமாவர்த்தனம் பண்ணிக்கொண்டு அப்புறம் விவாஹம் செய்துகொண்டு இல்லறம் நடத்த வேண்டும் என்பதுதான் பொதுதர்மம். பிரகருதிக்கு எதிர் நீச்சல் போடுவது கஷ்டம். அதன் போக்கிலேயே போய், ஆனாலும் அதிலேயே முழுகிப்போய்விடாமல் கரையைப்பிடிக்க வேண்டும். அதனால்தான் தர்மமாக கார்ஹஸ்தியம் (இல்லறம்) வகித்து அப்புறமே கொஞ்சம் விடுபட்டு வானப்ரஸ்தம், அதற்கும் அப்புறம் பூர்ண சந்நியாஸம் என்று விதித்திருக்கிறது. ழிணீமீ ஞ்ஸ்கூஷீமீ-ஐ கூஷிவீஷீரீமீஸீமீ-ஆக எதிர்த்துப் போனால் ஹானிதான் உண்டாகும் என்பதால் இப்படி வைத்திருக்கிறது. நைஷ்டிக பிரம்ம்ச்சாரியாக இருப்பேன், ஸந்நியாஸியாக இருப்பேன் என்று நல்ல வாலிபத்திலேயே நினைத்துக் கொண்டிருந்துவிட்டு அப்புறம் பிரகிருதி வேகத்திலே இழுக்கப்பட்டு அந்த ஆசிரமத்துக்கு விரோதமாக நடந்து கொண்டுவிட்டால் மஹத்தான பாபமாகிறது. இதுவே கிருஹஸ்தனுக்குப் பாபமாக இல்லாமல் பிரகிருதி தர்மமாக அநுமதிக்கப்பட்டிருக்கிறது.

எந்த ரூல் இருந்தாலும் எக்ஸெப்ஷன் (விலக்கு) உண்டு. நல்ல திட சித்தமும் பக்குவமும் பூர்வ ஜன்ம ஸம்ஸ்கார பலமும் இருப்பவர்கள் நைஷ்டிக பிரம்மச்சாரிகளாக இருக்கலாம். ஒரு முந்நூறு வருஷத்துக்குள் ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் அப்படித்தான் இருந்துகொண்டு முகம்மதிய பிரவாகத்தையே சிவாஜி மூலம் முறியடித்து, நம் தர்மத்தை ஆழமாக நிலைநாட்டினார். நைஷ்டிக பிரம்மச்சாரியான ஆஞ்சநேயரின் அம்சம் அவர்.

வேத தர்மத்தை மறுபடி ஸ்தாபிப்பதற்காகப் பரமேச்வர அவதாரமாக வந்த ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் தம் சொந்த வாழ்க்கையிலே பிரம்மச்சரியத்திலிருந்து நேரே ஸந்நியாஸத்துக்குப் போனது மட்டுமின்றி ஸுரேச்வரர் தவிர அவரது மற்ற மூன்று பிரதான சிஷ்யர்களான பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர் என்ற மூன்று பேருக்கும் பிரம்மச்சரியத்திலிருந்தே நேராக ஸந்நியாஸ ஆச்ரமம் கொடுத்திருக்கிறார். (சங்கர மடத்திலும் பிரம்மச்சாரிகளே நேரே ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு பீடாதிபதிகளாக இருக்க வேண்டும் என்ற விதி

அநுஸரிக்கப்படுகிறது. அதனால் எல்லாரும் கிருஹஸ்தாச்ரமம் வகித்துத்தான் ஆகவேண்டும் என்றில்லை என்று தெரிகிறது. ஆனால் இப்படிப்பட்ட பக்குவம் ரொம்ப அபூர்வமானவர்களுக்கே இருக்கும். விவாஹமும், பஞ்ச மஹா யக்ஞங்களும், தலைக்கு ஏழேழாக உள்ள பாக-ஹவிர்-ஸோம யக்ஞங்கள் இருபத்தியொன்றும் நைஷ்டிக பிரம்மசாரிகளுக்கும் நேரே பிரம்மச்சரியத்திலிருந்து துரீயாச்ரமத்துக்கு (நாலாவது ஆசிரமமான துறவறத்துக்கு)ப் போனவர்களுக்கும் இல்லாமல் போகிறது. அதாவது நாற்பது ஸம்ஸ்காரத்தில் பேர் பாதிக்கு மேல் அவர்களுக்கு இல்லாமல் போகிறது. இவை இல்லாமலே அந்தஃகரணம்

சுத்தியடைகிற அளவுக்கு அவர்கள் பக்குவமாகியிருக்கவேண்டும். அதனால் இதை 'எக்ஸெப்ஷனல் கேஸ்'கள் (விதிவிலக்கானவை, அசாதாரணமானவை) என்றே சொல்லவேண்டும்.

தஹனம் என்று எப்போது ஒரு கிரியை சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ, அப்போது நம் மதப்படி எல்லோரும் கடைசியில், நல்ல விருத்தாப்பியத்தில் கூட , ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று விதிக்கவில்லை என்றே அர்த்தம் என்று ஒரு கட்சி சொல்வதுண்டு. பிரம்மச்சர்யம், கிருஹஸ்தாச்ரமம், வானப்ரஸ்தம், ஸந்நியாஸம் என்ற நாலு ஆசிரமங்களை ஒவ்வொருவரும் வரிசையாக அநுஷ்டித்தேயாக வேண்டும் என்றால் வாஸ்தவமாகவே தகனக்ரியை இருக்கமுடியாதுதான். ஸந்நியாஸியை தகனம் செய்யாமல் புதைக்கத்தானே சொல்லியிருக்கிறது?அதனால் பக்குவிகளுக்கே ஸந்நியாஸம்;மற்றவர்களுக்கு இல்லை - கிழ வயஸில் கூட இல்லை - என்று சொன்னால் இந்த வாதத்தைத் தப்பு என்று சொல்ல முடியவில்லை.

ஸந்நியாஸம் வாங்கிக் கொள்கிற அளவுக்கு வயசு ஆகாமல், சின்ன வயசிலேயே செத்துப் போனவர்களை உத்தேசித்துத்தான் தஹனக் கிரியையைச் சொல்லியிருக்கிறது என்று நினைப்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை. அகால மரணமாகவோ அல்பாயுஸாகவோ இல்லாமல் கால ம்ருத்யுவாக, நன்றாக வயஸாகிச் செத்துப் போகிறவர்களையும் உத்தேசித்ததாகத்தான் தகனக்கிரியை, அப்புறம் செய்யும் பித்ரு காரியங்கள் ஆகியன இருக்கிறது. ஆகையால், அத்தனை வயசிலும் அவர்கள் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளாமலிருப்பதை சாஸ்திரம் அங்கீகரிப்பதாகத்தானே ஏற்படுகிறது?

நல்ல ஞான வைராக்கியத்தில் பிடிப்பு ஏற்பட்டவர்கள் கிருஹஸ்தாச்ரமம் ஆனபின் குடும்பப் பொறுப்புகளை விட்டுக் காட்டிலே போய் வைதிக காரியங்களை மட்டும் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும். பிள்ளைகுட்டிகளையும் சொத்து சுதந்திரங்களைவிட்டுவிட்டுப் பத்தினியை மட்டும் அழைத்துக் கொண்டு காட்டுக்கு போய்விடவேண்டும். பத்தினி எதற்கு என்றால் இந்திரிய ஸுகத்துக்காக அல்ல. பின்னே எதற்கு என்றால் இந்திரிய

ஸுகத்துக்காக அல்ல. பின்னே எதற்கு என்றால் அக்னி காரியங்களைப் பத்தினி கூட இருந்தால்தான் பண்ண முடியும் என்பதற்காகவே. யாகாதிகளையும் ஔபாஸனையையும் பண்ணும் பொருட்டே அவளை அழைத்துக் கொண்டு போக வேண்டும். இதுதான் வானப்ரஸ்தம் - வனத்தில் போயிருப்பது என்று அர்த்தம். வீடு வாசலையும், உறவுக்காரர்கள், அவர்களுடைய காரியங்கள் ஆகியவற்றையும் விடுகிற பக்குவம் முதலில் வரவேண்டுமாதலால் வானப்ரஸ்தம் ஏற்படுகிறது. அப்புறம் வைதிக காரியத்தையும் விட்டுவிட்டு ஆத்மா என்ன, பரமாத்ம ஸத்யம் என்ன என்று தெரிந்து கொள்வது ஒன்றிலேயே நாட்டம் வலுத்த பின் குருமுகமாக ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள வேண்டும். பத்தினியையும் வேதகர்மாக்களையும் விட்டுவிட்டு குருமுகமாக ஸந்நியாஸ ஆச்ரமம் பெற்று பரமாத்ம ஸத்யத்தையே ஸதாவும் சிந்தித்து

தியானித்து, அதை அநுபவத்தில் தெரிந்துகொண்டுவிட வேண்டும். "அந்த ஸத்யம்தான் தானும்;லோகமெல்லாம் அதன் பொய் விளையாட்டு தான்"என்ற அநுபவம் ஏற்பட்டு, சரீரத்துக்கும் மனஸுக்கும் அதீதமான பரம ஸத்யமாக இருந்து கொண்டிருப்பதுதான் மோக்ஷம். பிராரப்தப்படி (முன்வினைப் பயன்படி) சரீரம் இருக்கிற மட்டும் இருந்து விட்டு அப்புறம் மரணம் அடைந்துவிடும். ஆனால் அதைப் பற்றி அநுபவ ஞானியான ஸந்நியாஸிக்கு ஒரு பொருட்டும் இல்லை. வெளி உலகத்தின் பார்வையில், இது வரைக்கும் தேகத்தில் வாழ்ந்த போதே முக்தி நிலையில் இருந்த ஜீவன் முக்தன், தேகம் போய் விதேஹ முக்தனாகிறான் என்று சொல்வது வழக்கம். அவன் நேரே குணம் குறியற்ற பரமாத்ம தத்வமாகி விடுகிறான்.

கல்யாணம் பண்ணிக் கொள்ளாமலே ஸந்நியாஸி ஆகிறவன்;கல்யாணம் பண்ணிக் கொண்டு நாற்பது ஸம்ஸ்காரங்களையும் முறைப்படி ஒன்றும் விட்டுப்போகாமல் பண்ணி, அதோடு அஷ்ட குணங்களையும் கைக் கொண்டு கடைசியில் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்கிறவன் - ஆகிய இருவரும் இப்படித் தானே பரமாத்ம தத்வமாக ஆகிவிடுகிறார்கள்.

ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளாமலே கடைசி வரை எல்லா ஸம்ஸ்காரங்களையும் அஷ்ட குணங்களையும் அநுஷ்டித்தவனின் கதை என்ன?செத்துப் போன பின் அவன் கதி என்ன?இவனுக்குத்தானே தஹனம் சொல்லியிருக்கிறது?லோகத்தில் பொதுவாக ரொம்ப ஜாஸ்தி இருக்கிறவனும் இவன்தானே?இவன் செத்தபின் என்ன ஆகிறான்?

ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் இவன் பரமாத்ம தத்வத்தோடு அத்வைதமாகக் கரைந்து விடுகிறான் என்று சொல்ல வில்லை. கடைசி வரையில் எல்லாவற்றையும் விட்டு, பரமாத்மா ஒன்றையே பிடித்துக் கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் பெரிய தாபமாக இவனுக்கு வரத்தானே இல்லை?அது வந்துவிட்டால் யாரும் பிடித்து வைக்க முடியாது. அது வராததால் தான் இவன் ஸந்நியாஸியாக ஓடவில்லை.

ஆகையால் இவன் அத்வைத முக்தி அடைவதில்லை. ஆனாலும் சாஸ்திரத்தை நம்பி அதன்படியே கர்மாக்களைப் பண்ணி சித்தத்தை நன்றாக சுத்தம் பண்ணி, லோக க்ஷேமத்தையும் உண்டாக்கியிருக்கிறானல்லவா?அதனால் இவன் குணமும் குறியுமில்லாத பரமாத்மாவுடன் ஒன்றாகாவிட்டாலும், அதே பரமாத்மா குணம் குறிகளோடுகூட லோகங்களை நிர்வகிக்கிற ஈச்வரனாக இருக்கிற குணம் குறிகளோடுகூட லோகங்களை நிர்வகிக்கிற ஈச்வரனாக இருக்கிற பரம உத்தமமான ஸந்நிதானத்தை அடைகிறான். ஹிரண்யகர்ப்ப ஸ்தானம் என்று அது சொல்லப்படுகிறது. பிரம்ம லோகம் என்பது அதுதான். பரமாத்மாவிலேயே கரைந்து ஒன்றாகிவிடாமல், வெளியே இருந்து கொண்டிருந்தாலும்கூட, அவரை ஸதாவும் அநுபவித்துக் கொண்டிருப்பதால் அந்த ஸ்தானத்தில்கூட எப்போதும் ஆனந்தமாகவே இருக்கும். ஒரு குறையும் இருக்காது. அப்படியானால் இதையும் மோட்சம் என்று சொல்ல வேண்டியதுதான். ஒரு குறையில்லை, ஒரு துக்கம்

இல்லை, எப்போதும் ஈச்வர ஸாந்நித்யம். இதற்கு மேல் என்ன வேண்டும்? இப்படிப்பட்ட நிலையைத்தான் எல்லா ஸம்ஸ்காரங்களையும் செய்துவிட்டு ஸந்நியாஸியாகாமலே இறந்தவன் அடைகிறான்.

அவன் இதற்கு மேல் ஒன்றும் கேட்க மாட்டான். ஆனாலும் அந்த ஈச்வரன் தானும் ஒரு காலத்தில் இந்த லோக வியாபாரங்களையெல்லாம் நிறுத்திவிட்டு, லோகங்களையெல்லாம் மஹாப் பிரளயத்தில் கரைத்துவிட்டு, குணம் குறியில்லாத பரமாத்ம ஸத்யமாக மட்டுமே ஆகிவிடுவான். அப்போது அதுவரை அவனுடைய ஸந்நிதானத்திலிருந்த ஜீவர்களும் அவனோடுகூடப் பரமாத்மாவோடு பரமாத்மாவாக

அத்வைத முக்தி அடைந்து விடுவார்கள்.

மஹாப் பிரளயத்தில் ஸகல ஜீவராசிகளும்தான் - அநுஷ்டானமே செய்யாதவர்களும், புழு பூச்சியும் கூடத்தான் - பரமாத்மாவோடு சேர்ந்து விடுவார்கள். அப்படியிருக்க இத்தனை அநுஷ்டானங்களைச் செய்த இவனுக்கும் அந்த நிலை கிடைத்ததில் விசேஷம் என்னவென்றால், ஒரு விசேஷம் இருக்கிறது. மறுபடியும் அகண்ட வெளியிலிருந்து பரமாத்ம ஸகுண ஆச்வரனாகி லோகங்களை ஸ்ருஷ்டித்து, ஜகத் வியாபாரங்களை ஆரம்பித்து விடுவார். அப்போது அநுஷ்டானம் பண்ணாத மற்ற ஜீவர்களும், இதர உயிரினங்களும் பூர்வ கர்மாப்படி மறுபடி பிறந்துதான் ஆகவேண்டும். அதுவரை பரமாத்மாவில் அவை இரண்டற கரையாமல் லயித்துத்தான் இருந்திருக்கும். இப்போது லயம் விலகி மறுபடி ஜன்மா உண்டாகிவிடும். ஸம்ஸ்காரங்களைச் செவ்வேனே செய்து சுத்தியானவனோ இப்படி புனரபி ஜனனம் என்று மறு ஸ்ருஷ்டியின்போது பூமியில் வந்து விழாமல், பரமாத்மாவோடு பரமாத்மாவாக இரண்டறக் கரைந்தது கரைந்தபடியே இருப்பான்.

பிரம்மசரியம் என்பதிலிருந்து ரொம்பவும் தாண்டி முடிவான நிலைக்கு வந்துவிட்டேன். ஒருத்தன் பிரம்மசாரியாக வாழ்நாள் பூரா இருக்கலாமா?கிருஹஸ்தாச்ரமம் வகிக்காமலே ஒரு பிரம்மச்சாரி ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளலாமா? என்ற கேள்விகள் எழுந்ததால் அதற்குப் பதில் சொல்ல ஆரம்பித்தேன்.

## àðïòù è£ô‹

உபநயனம், குருகுலவாஸம் இவற்றைப் பற்றிச் சொன்னேன். உபநயனம் செய்யவேண்டிய காலம் பிராம்மணனுக்கு கர்ப்பத்தைக் கூட்டி எட்டாவது வயசாகும்;அதாவது பிறந்து ஏழு வயஸூ இரண்டு மாஸம் ஆனவுடன் பண்ண வேண்டும். க்ஷத்ரியர்கள் பண்ணிரண்டு வயது வரை உபநயனம் செய்யலாம். யது வம்சத்தில் பிறந்த கிருஷ்ண பரமாத்மாவுக்கு அப்படித்தான் செய்திருக்கிறது. வைச்யர்கள் பதினாறு வயசு வரை உபநயனம் பண்ணலாம்.

பிராம்மணர்களுக்கும்கூட எட்டு வயசு றீஷீஷ்மீக்ஷீ றீவீனீவீமீ (கீழ் வரம்பு), பதினாறு வயசு �்ஸஜீஜீமீக்ஷீ றீவீனீவீமீ (உச்ச வரம்பு) என்று சாஸ்திரங்கள், போனால் போகிறதென்று

அவகாசம் கொடுத்திருக்கின்றன. பதினாறு வயசுக்கு அப்புறம் பூணூல் போடாமல் ஒரு பிராம்மணப் பிள்ளையை வைத்திருப்பது மஹத்தான தோஷமாகும்.

ஒருவனுக்கு இப்படி வயசுக் காலம் சொல்லியிருப்பதோடு, உபநயன ஸம்ஸ்காரம் என்பதைச் செய்வதற்கே உத்தராயணம்தான் உரிய காலம் என்றும் ஸூரியன் பூமியின் வடக்குப் பாதியில் ஸஞ்சரிக்கிற ஆறுமாஸத்திலேயே உபநயனம் செய்யவேண்டும். உபநயனம் மட்டுமின்றி விவாஹமும் இந்த ஆறுமாஸத்தில்தான் செய்யலாம். இதிலும் வஸந்த காலம் (சித்திரை, வைகாசி) தான் விவாஹத்துக்கு ரொம்பவும் எடுத்தது. அதே மாதிரி 'மாசிப் பூணூல் பாசி படரும்'என்பதாக மாசி மாதத்தில் பூணூல் போடுவதை விசேஷமானதாகச் சொல்லியிருக்கிறது. தக்ஷிணாயனத்தில் (ஆடியிலிருந்து மார்கழி முடிய) இவற்றைச்

செய்வது செய்வது சாஸ்திர ஸம்மதமல்ல. இப்போது இவற்றுக்கு எவ்வளவு காலம் கடத்தலாமோ அவ்வளவு டிலே செய்துவிட்டு கடைசியிலே மார்கழி மாஸம் ஒன்று தவிர வேறு எப்போது வேண்டுமானாலும் பண்ணலாம் என்று பண்ணுகிறார்கள். பலனும் அதற்கேற்ற மாதிரிதான் இருக்கிறது. கலியாணம் என்று ஏதோ ஒன்று பண்ணியிருக்கிறார்களே என்று திருப்திப்பட்டு அதை வேண்டுமானாலும் தக்ஷிணாயனத்தில் அநுமதிக்கலாம். (கூடாதுதான். ஆனால்

தொலைகிறது என்று விடலாம்.) உபநயனத்தை ஒருகாலம் தக்ஷிணாயனத்தில் அநுமதிப்பதற்கில்லை. ஏற்கெனவே தக்ஷிணாயனத்தில் உபநயனம் பண்ணியிருந்தால்கூட மறுபடி உத்தராயணத்தில் ஒரு தரும் பண்ணுங்கள் என்றுதான் சொல்வேன். கலியாணம், பூணூல் இரண்டையுமே பணம் சம்பந்தப்பட்ட காரியங்களாக்கி விட்டு இரண்டு செலவும் ஒன்றாகப் போகட்டுமே என்பதால் தங்கள் பெண்களின் கல்யாணத்துக்காகப் பிள்ளையின் பூணூலை தள்ளிப் போடுகிற வழக்கம் அதிகமிருப்பதால் இதைச் சொல்ல நேர்ந்தது.

ஐந்து வயஸிலேயே உபநயனம் செய்யும் ஒரு வழக்கமும் உண்டு. 'அது காம்யோபநயனம்'எனப்படும். 'காம்யம்'என்றால் ஒரு இஷ்டத்தை உத்தேசித்தது என்று அர்த்தம். குழந்தை விசேஷ அபிவிருத்தி அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டால் இப்படி செய்யாததால் தோஷமில்லை. ஏனென்றால் மந்திரங்கள் நன்றாக ஸ்பஷ்டமாக உச்சரிக்க வருகிற காலத்தில், ஸம்ஸ்க்ருத ஞானம் இரண்டு வருஷமாவது ஏற்பட்டானதற்கு ஏற்பட்டானதற்குப் பிறகு உபநயனம் பண்ணுவதே போதும். (இப்போது முப்பது, முப்பத்தைந்து வயசுக்குக் கல்யாணமாகிறபோது பூணூலும் போடுவது என்று வந்திருக்கும் தசையில் நான் 'ஐந்து வயசில் பண்ண வேண்டுமென்றில்லை, எட்டில் பண்ணினாலே போதும் என்று சொல்வது எனக்கே ஹாஸ்யமாகத்தான் இருக்கிறது!ஹாஸ்யம் என்று சொன்னாலும் வைதிகப் பிரக்ஞை இருந்தால் வயிறு எரியவேண்டும்!)

பகவத்பாதாளுக்கு ஐந்தாவது வயதிலேயே உபநயனமாகச் சொல்லியிருக்கிறது. பால்யத்திலே அலாதி புத்திசாலித்தனமும், தெய்வ பக்தியும் தெரிந்து, வாக்கு ஸ்பஷ்டமிருந்தால் இப்படிச் செய்யலாம்.

## àðïòù è£ô‹

உபநயனம், குருகுலவாஸம் இவற்றைப் பற்றிச் சொன்னேன். உபநயனம் செய்யவேண்டிய காலம் பிராம்மணனுக்கு கர்ப்பத்தைக் கூட்டி எட்டாவது வயசாகும்;அதாவது பிறந்து ஏழு வயஸு இரண்டு மாஸம் ஆனவுடன் பண்ண வேண்டும். க்ஷத்ரியர்கள் பண்ணிரண்டு வயது வரை உபநயனம் செய்யலாம். யது வம்சத்தில் பிறந்த கிருஷ்ண பரமாத்மாவுக்கு அப்படித்தான் செய்திருக்கிறது. வைச்யர்கள் பதினாறு வயசு வரை உபநயனம் பண்ணலாம்.

பிராம்மணர்களுக்கும்கூட எட்டு வயசு ஷ்ஷ்மீக்ஷீ வீஸீவீமீ (கீழ் வரம்பு), பதினாறு வயசு ஷ்ஜீஜீமீக்ஷீ வீஸீவீமீ (உச்ச வரம்பு) என்று சாஸ்திரங்கள், போனால் போகிறதென்று

அவகாசம் கொடுத்திருக்கின்றன. பதினாறு வயசுக்கு அப்புறம் பூணூல் போடாமல்

ஒரு பிராம்மணப் பிள்ளையை வைத்திருப்பது மஹத்தான தோஷமாகும்.

ஒருவனுக்கு இப்படி வயசுக் காலம் சொல்லியிருப்பதோடு, உபநயன ஸம்ஸ்காரம் என்பதைச் செய்வதற்கே உத்தராயணம்தான் உரிய காலம் என்றும் ஸூரியன் பூமியின் வடக்குப் பாதியில் ஸஞ்சரிக்கிற ஆறுமாஸத்திலேயே உபநயனம் செய்யவேண்டும். உபநயனம் மட்டுமின்றி விவாஹமும் இந்த ஆறுமாஸத்தில்தான் செய்யலாம். இதிலும் வஸந்த காலம் (சித்திரை, வைகாசி) தான் விவாஹத்துக்கு ரொம்பவும் எடுத்தது. அதே மாதிரி 'மாசிப் பூணூல் பாசி படரும்'என்பதாக மாசி மாதத்தில் பூணூல் போடுவதை விசேஷமானதாகச் சொல்லியிருக்கிறது. தக்ஷிணாயனத்தில் (ஆடியிலிருந்து மார்கழி முடிய) இவற்றைச்

செய்வது செய்வது சாஸ்திர ஸம்மதமல்ல. இப்போது இவற்றுக்கு எவ்வளவு காலம் கடத்தலாமோ அவ்வளவு டிலே செய்துவிட்டு கடைசியிலே மார்கழி மாஸம் ஒன்று தவிர வேறு எப்போது வேண்டுமானாலும் பண்ணலாம் என்று பண்ணுகிறார்கள். பலனும் அதற்கேற்ற மாதிரிதான் இருக்கிறது. கலியாணம் என்று ஏதோ ஒன்று பண்ணியிருக்கிறார்களே என்று திருப்திப்பட்டு அதை வேண்டுமானாலும் தக்ஷிணாயனத்தில் அநுமதிக்கலாம். (கூடாதுதான். ஆனால் தொலைகிறது என்று விடலாம்.) உபநயனத்தை ஒருகாலம் தக்ஷிணாயனத்தில் அநுமதிப்பதற்கில்லை. ஏற்கெனவே தக்ஷிணாயனத்தில் உபநயனம் பண்ணியிருந்தால்கூட மறுபடி உத்தராயணத்தில் ஒரு தரும் பண்ணுங்கள் என்றுதான் சொல்வேன். கலியாணம், பூணூல் இரண்டையுமே பணம் சம்பந்தப்பட்ட காரியங்களாக்கி விட்டு இரண்டு செலவும் ஒன்றாகப் போகட்டுமே என்பதால் தங்கள் பெண்களின் கல்யாணத்துக்காகப் பிள்ளையின் பூணூலை தள்ளிப் போடுகிற வழக்கம் அதிகமிருப்பதால் இதைச் சொல்ல நேர்ந்தது.

ஐந்து வயஸிலேயே உபநயனம் செய்யும் ஒரு வழக்கமும் உண்டு. 'அது காம்யோபநயனம்'எனப்படும். 'காம்யம்'என்றால் ஒரு இஷ்டத்தை உத்தேசித்தது என்று அர்த்தம். குழந்தை விசேஷ அபிவிருத்தி அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டால் இப்படி செய்யாததால் தோஷமில்லை. ஏனென்றால் மந்திரங்கள் நன்றாக ஸ்பஷ்டமாக உச்சரிக்க வருகிற காலத்தில், ஸம்ஸ்க்ருத ஞானம் இரண்டு வருஷமாவது ஏற்பட்டானதற்கு ஏற்பட்டானதற்குப் பிறகு உபநயனம் பண்ணுவதே போதும். (இப்போது முப்பது, முப்பத்தைந்து வயசுக்குக் கல்யாணமாகிறபோது பூணூலும் போடுவது என்று வந்திருக்கும் தசையில் நான் 'ஐந்து வயசில் பண்ண வேண்டுமென்றில்லை, எட்டில் பண்ணினாலே போதும் என்று சொல்வது எனக்கே ஹாஸ்யமாகத்தான் இருக்கிறது!ஹாஸ்யம் என்று சொன்னாலும் வைதிகப் பிரக்ஞை இருந்தால் வயிறு எரியவேண்டும்!)

பகவத்பாதாளுக்கு ஐந்தாவது வயதிலேயே உபநயனமாகச் சொல்லியிருக்கிறது. பால்யத்திலே அலாதி புத்திசாலித்தனமும், தெய்வ பக்தியும் தெரிந்து, வாக்கு

ஸ்பஷ்டமிருந்தால் இப்படிச் செய்யலாம்.

## àðïòù àî£óí ¹¼û˜èœ

இரண்டு தெய்வக்குழந்தைகள் மநுஷ்ய ரூபத்தில் அவதாரம் பண்ணினபோது உபநயன ஸம்ஸ்கார விசேஷத்தாலேயே தங்கள் அவதார காரியத்தைப் பண்ணிக் காட்டின என்று நான் நினைப்பது வழக்கம். வேத மதம் நலிவடைந்தபோது அதை புத்துயிர் கொடுத்து ஸ்தாபித்த சங்கரரும் ஞானஸம்பந்தரும்தான் அந்த குழந்தைகள்.ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளுக்கு பால்யத்திலேயே உபநயனமானதைப் பெரிய புராணத்தில் சொல்லியிருக்கிறது. "நான்மறை ஞஆன ஸம்பந்தன்"என்று அவரே வர்ணித்துக் கொண்டிருப்பதிலிருந்து நாலு வேதங்களையும் அவர் அத்யயனம் பண்ணினார் என்று தெரிகிறது. ஆசாரியாளுக்கும், ஞானஸம்பந்தருக்கும் ஒரு தரம் கேட்டாலே பாடமாய் விடும். 'ஏக ஸந்தக்ராஹி'கள். அதனால் ஒரிரு வருஷங்களுக்குள் அத்யயனம் பூர்த்தி பண்ணிவிட்டார்கள். கற்றுக்கொள்ளாமலே, தாங்களாக ஸகல வித்தைகளையும் தெரிந்து கொள்ளக் கூடியவர். அந்த இருவருள் ஒருவர் (சங்கரர்) பரமேச்வர அவதாரம்;மற்றவர் ((ஸம்பந்தர்) ஸுப்ரமண்யரின் அவதாரம். அப்படியிருந்தும் அவர்கள் உபநயன ஸம்ஸ்காரமாகி, காயத்ரீ மந்திர உபதேசம் பெற்ற பின்பே அவதார காரியத்தை விசேஷமாகச் செய்து காட்டினார்கள் என்றால், இது அந்த ஸம்ஸ்காரத்தின் அவசியத்தை ஸாதாரண மநுஷ்யர்களான நமக்கு அழுத்தமாகத் தெரிவிப்பதற்குத்தான்.

ராஜசூடாமணி தீக்ஷிதரென்று ஒரு கவி இருந்தார். அவர், "காயத்ரீ என்னை அடையுமுன்னே ஸரஸ்வதி என்னிடம் வந்து விட்டாள்"என்று ஒரு ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார். காயத்ரீ உபதேசம் பெறுகிற எட்டாவது வயசுக்கு முன்பே அவர் கவிபாட ஆரம்பித்து விட்டார். அதைத்தான் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்!ஞான ஸம்பந்தரும் மூன்றாம் வயசிலேயே 'தோடுடைய செவியன்'என்று பாடினவர்தான். அப்போதே அற்புதங்களைச் செய்ய ஆரம்பித்து விட்டார். ஆனாலும் பூணூல் போட்டுக் கொண்டு காயத்ரீ உபதேசம் வாங்கிக் கொண்டார்;அந்த பலத்தினாலேயே மேற்கொண்டு பெரிய பெரிய காரியங்களைப் பண்ணி வைதிக தர்மத்தை நிலைநாட்டினதாகக் காண்பித்தார் - என்பதிலிருந்து நமக்கெல்லாம் உபநயன ஸம்ஸ்காரத்திலும், அதற்கப்புறம் காயத்ரீ ஜபம் செய்வதிலும் கண்ணைத் திறந்து விட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

## õò² G˜íò˜¶,°, è£óí‹

ஸரஸ்வதி உள்ளே புகுந்தபின் காயத்ரீ புகுவது இருக்கட்டும்; இது எங்கேயோ

அபூர்வமாக நடக்கிற சமாசாரம். காமன் உள்ளே புகுவதற்கு முன் காயத்ரீ உள்ளே புகுந்துவிட வேண்டுமென்பதுதான் முக்கியம். அதனால்தான் எட்டு வயசு என்று வைத்தார்கள். காமத்தின் ஆவேசம் ஏற்பட்டுவிட்டால் அது மந்திர சக்தி பெற முடியாமல் இழுத்துக் கொண்டு போகும். ஏற்கெனவே பெற்ற சக்தியைக்கூட

ஜீர்ணிக்கிற சக்தி அதற்கு உண்டு. அதனால்தான் பதினாறு வயசுக்கு மேல், சாண் ஏறினால் முழம் சறுக்குகிற நிலை ஏற்படுவதற்கு ரொம்பவும் முந்தியே, காயத்ரீயை நன்றாக ஜபித்து அதில் ஸித்தி அடைந்து விடும்படியாக வயசு நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

இதொன்றையும் நாம் ஸீரியஸாக எடுத்துக் கொள்வதேயில்லை. தண்டத்துக்குச் செய்கிறோம். அடியோடு விட்டு விடுவதற்குத் துணிச்சல் இல்லாததாலேயே காலம் தப்பி, முறை கெட்டு, ஏதோ செய்தோம் என்கிற பொய்த் திருப்திக்காகப் பண்ணுகிறோம். இதைவிட தைரியமாக நாஸ்திகமாக இருந்துவிட்டால்கூடத் தேவலை;அவனுக்கு ஒரு 'கன்விக்ஷ'னாவது (கொள்கையுறுதியாவது) இருக்கிறதல்லவா என்றுகூடத் தோன்றுகிறது.

பாலப் பிராயத்திலேயே காயத்ரீயை ஜபிக்க ஆரம்பித்து விட்டால் பசுமரத்தாணியாக அது பதியும். காயத்ரீயானது முக்கியமாக னீமீஸிமீ ணீறீ ஜீஷ்ஷ்மீக்ஷீ (மனோசக்தி), தேஜஸ், ஆரோக்யம் எல்லாவற்றையும் அபரிமிதமாகத் தரவல்லது. இந்த ஜபத்தாலேயே குழந்தைகளுக்கு நல்ல நீஷ்ஸிநீமீஸிமீ க்ஷீணீமீ வீஷ்ஸீ (சித்த ஒருமைப்பாடு), புத்தி தீக்ஷண்யம், சரீர புஷ்டி எல்லாமும் உண்டாகும். பிற்பாடு காமம் தெரிந்தாலும் அது ஒரேடியடியாக இழுத்துக் கொண்டு போய், புத்தி குறைவிலும் சரீர அசுத்தியிலும் விடாதபடி பெரிய கட்டுப்பாடாக இருக்கும். பிரம்மசர்ய ஆச்ரமத்தில் இவன் வீர்யத்தை விரயம் பண்ணாமல், நல்ல பிரம்ம தேஜஸோடு, அறிவாளியாகவும், குணசாலியாகவும், அடக்கம் முதலான நன்னடத்தைகளோடும், தெய்வ பக்தியோடும், ஆத்ம ஸம்பந்தமான விஷயங்களில் பிடிமானத்தோடும் இருப்பதற்கு பால்யத்திலேயே காயத்ரீ அநுஸந்தானம் பண்ணுவது பெரிய ஸஹாயம் செய்யும். தங்கள் குழந்தைகளுக்கு இத்தனை நன்மைகளையும் ஒரு காரணமுமில்லாமல் இக்காலத்துப் பெற்றோர்கள் தடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

காயத்ரீ ஜபம், வேத அத்யயனம், இதர வேதாங்கங்களைப் படிப்பது, பிக்ஷை எடுப்பது, குரு சுசுருஷை, நடுவே பிரம்மசரிய ஆச்ரமத்தில் செய்யவேண்டிய விரதங்கள் இவற்றை முடித்து நல்ல யௌவனத்தை அடைந்தவன் ஸமாவர்த்தனத்தோடு குருகுர வாஸத்தைப் பூர்த்தி பண்ண வேண்டும். பிறகு காசிக்கு யாத்திரை சென்று வரவேண்டும். காசி யாத்திரை முடிந்து திரும்பியவுடன் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும். ஸமாவர்த்தனத்துக்குப் பிறகு விவாஹம் வரையில் அதாவது ஒருவன் காசி யாத்திரை போய் வரும் கட்டத்தின்

போது - அவனுக்கு 'ஸ்நாதகன்'என்று பெயர். இக்காலத்தில் 'கான்வகேஷன்'தான் ஸமாவர்த்தனம்!கல்யாணத்தில் காசி யாத்திரை என்று ஒரு கூத்து நடக்கிறது!

இதற்கப்புறம் விவாஹம் என்பது. அதுவும் நாற்பது ஸம்ஸ்காரங்களில் ஒன்று.

## ÞòŸ¬è¬ò ñF,°‹ Þ™ôø‹

தூய்மைக் குறைவுக்கெல்லாம் காரணமானது சிற்றின்பம் என்று மஹான்களெல்லாம் பாடி வைத்திருந்தாலும், அதிலும் கூட ஒரு நெறியை ஏற்படுத்திக் கொடுத்து, அதையே ஆத்மாவை தூய்மைப்படுத்துகிற ஒரு ஸம்ஸ்காரமாக்கி நமக்கு வேத தர்ம சாஸ்திரங்கள் கொடுத்திருக்கின்றன. சாதாரணமாக ஒரு ஜீவனை, 'காட்டுக்குப் போ;ஸந்நியாஸியாய் இரு'என்று சொன்னால் அவனால் முடியாது. லோக வாழ்க்கையில் அடிபட்டுத்தான் அவனுக்குப் பக்குவம் உண்டாக வேண்டும். பிஞ்சாகக் கசக்கிற காலத்தில் கசந்து, வடுவாக துவர்க்கிற கால்த்தில் துவர்த்து, காயாகப் புளிக்கிற காலத்தில் புளித்து, அப்புறம்தான் பழமாகப் பழுத்து மதுர பூர்ணிமாவதற்கு ஸாமானிய ஜீவர்களால் முடியும். தானாக பழுக்காததைத் தடி கொண்டு அடித்துப் பழுக்கப் பண்ண முடியாது!அப்படி இயற்கை வேகத்தை மீறிப் பண்ணினால் ராமலிங்க ஸ்வாமிகள் சொன்னபடி "வெம்பி விழ"வேண்டியதுதான் என்பது ரிஷிகளுக்குத் தெரியும். அதனால்தான் விவாஹத்தையும் கிருஹஸ்த (இல்லற) தர்மங்களையும் வைத்திருக்கிறார்கள். அது மட்டுமில்லாமல், பூர்வ கர்மாவுக்காக அநேக ஜீவர்கள் பிறந்தாக வேண்டுமே?தாம்பத்தியம் இல்லாமல் இது எப்படி முடியும்?

கிருஹஸ்தாச்ரமத்தில் இவன் முன்பு கற்றுக்கொண்ட வேதத்தைத் தொடர்ந்து ஒதியும் பிறர்களுக்கு ஒதுவித்தும் (கற்றுக் கொடுத்தும்) வரவேண்டும். அநேக யக்ஞங்களையும், ஔபாஸனையையும் அக்னிமுகமாகப் பண்ண வேண்டும். பிரம்மசர்யத்தில் ஒருத்தனைச் சேர்த்த ஸந்தியா வந்தனமும் கிருஹஸ்தாச்ரமத்தில் தொடர்கிறது.

தற்போது மற்ற யக்ஞாநுஷ்டானம், வேதாத்யயனம் இரண்டுமே ரொம்ப ரொம்பக் குறைந்து விட்டாலும் ஸந்தியாவந்தனமும், அதில் முக்யமான காயத்ரீ ஜபமும் துளி இருப்பதால் அதைப்பற்றிச் சொல்கிறேன்.

## è£òˆg

காயத்ரீ என்றால், "எவர்கள் தன்னை கானம் பண்ணுகிறார்களோ அவர்களை

ரக்ஷிப்பது"என்பது அர்த்தம்.

காயந்தம் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ (இ) த்யபிதீயதே !

கானம் பண்ணவதென்றன்றால் இங்கே பாடுவதில்லை;பிரேமயுடனும் பக்தியிடனும் உச்சரிப்பது என்று அர்த்தம். யார் தன்னை பயபக்தியுடனும் பிரேமையுடனும் ஜபம் பண்ணுகிறார்களோ அவர்களை காயத்ரீ மந்திரம் ரக்ஷிக்கும். அதனால் அந்தப்பெயர் அதற்கு வந்தது. வேதத்தில் காயத்ரீயைப் பற்றிச் சொல்லும் பொழுது,

காயத்ரீம் சந்தஸாம் மாதா

என்று இருக்கிறது. சந்தஸ் என்பது வேதம். வேத மந்திரங்களுக்கெல்லாம் தாயார் ஸ்தானம் காயத்ரீ என்று இங்கே வேதமே சொல்கிறது. 24 அக்ஷரம் கொண்ட காயத்ரீ மந்திரத்தில் ஒவ்வொன்றும் எட்டெழுத்துக் கொண்ட மூன்று பாதங்கள் இருக்கின்றன. அதனால் அதற்கு 'த்ரிபதா' காயத்ரீ என்றே ஒரு பெயர் இருக்கிறது. இந்த ஒவ்வொரு பாதமும் ஒவ்வொரு வேதத்தின் ஸாரம். அதாவது, ரிக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களையும் இறுக்கிப் பிழிந்து கொடுத்த மீஉஷமீஸீநீமீ (ஸாரம்) காயத்ரீ மஹாமந்திரம். அதர்வத்துக்குத் தனி காயத்ரீ இருக்கிறது. இரண்டாவது உபநயனம் செய்து கொண்டே அதை உபதேசம் பெற வேண்டும்.

த்ரிபம் ஏவது வேதேப்ய:பாதம் பாதமதூதுஹம்

(மநுஸ்மிருதி)

காயத்ரீ மூன்று வேதத்திலிருந்து ஒவ்வொரு பாதமாக எடுத்தது என்று மநுவே சொல்கிறார். வேதத்தின் மற்றதையெல்லாம் விட்டுவிட்ட நாம் இதையும் விட்டால் கதி ஏது?

சாஸ்திரப் பிரகாரம் செய்ய வேண்டிய கார்யங்களுக்குள் எல்லாம் முக்கியமான காரியம் காயத்ரீ ஜபம்.

## «õFòK¡ «îè^ ÉŒ¬ñ

மந்திரசக்தி குறையாமல் இருக்க தேஹத்தை சுத்தியாக வைத்துக் கொள்ள வேண்டும்.

தேஹோ தேவாலய:ப்ரக்தோ ஜீவ:ப்ரோக்தோ ஸநாதன:।

«îý‹ å¼ «îõ£ôò‹. Ü‰î Ýôò¶,°œ Þ¼,Aø àJó£ù põ¡ ß„õóvõÏð‹. Ýôò^F™

Ü²ˆF«ò£´ «ð£è‚Ãì£¶. Üƒ«è Ü²ˆîñ£ù ðî£˜ˆîƒè¬÷ «ê˜‚è‚ Ãì£¶. ñ£‹ú‹, ²¼†´
ºîLò¬õè¬÷ ªè£‡´ «ð£ù£™ Ü²ˆî‹ à‡ì£°‹. Ýèñ ê£vFóƒèO™ b†«ì£´‹ «îý
Ü²ˆî˜«î£´‹ Ýôò˜¶‚ºŠ «ð£è‚Ãì£¶ â¡Á ªê£™ôŠð†®¼‚Aø¶.

அப்படியே மனித தேஹம் ஒரு தேவாலயமானால் அதிலும் அசுத்தமான பதார்த்தங்களைச் சேர்க்கக்கூடாது. குறிப்பாக, மந்திரசக்தி இருக்க வேண்டிய தேஹத்தில் அசுத்தமானவைகளைச் சேர்த்தால் அது கெட்டுப் போய்விடும். வீட்டுக்கும் தேவாலயத்திற்கும் வித்தியாஸம்இருக்கிறது. ஆனாலும் தேவாலயத்தைப் போல அவ்வளவு கடுமையாக அசுத்தம் வராமல் வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஒரு மூலையிலாவது வாய் கொப்புளிக்கவும்,ஜல மல விஸர்ஜனத்துக்கும், பஹிஷ்டா (மாதவிடாய்) ஸ்திரீக்கும் இடம் வைக்கிறோம். திறீணீமீ ஷ்ஹ்ஷமீமீனீ-ல் கடைசியில் சொன்னது போய், அநாசார மயமாகி விட்டிருக்கிறது. இதற்கெல்லாம் ஆலயத்தில் கொஞ்சங்கூட இடமில்லையல்லவா?

ஒரு தேசத்தில் வீடும் வேண்டும், ஆலயமும் வேண்டும். அதே மாதிரி ஜனசமூகத்தில் லோக காரியங்களைச் செய்யும் வீடு மாதிரியான தேகங்கள், ஆத்ம காரியத்தைச் செய்யும் ஆலயம் மாதிரியான தேகங்கள் இரண்டும் வேண்டும். தேஹங்களுக்கு ஆத்மாவை ரக்ஷிப்பவை தேவாலயத்தைப் போல பாதுகாக்கப்பட வேண்டிய பிராம்மண தேஹங்கள். வேத மந்திர சக்தியை ரக்ஷிக்க

வேண்டியவைகளாதலால் ஆலயம்போல் அதிக பரிசுத்தமாக அந்த தேகங்கள் இருக்க வேண்டும். அசுத்தியான பதார்த்தங்களை உள்ளே சேர்க்கக் கூடாது. மந்திர சக்தியை ரக்ஷித்து அதனால் லோகத்துக்கு நன்மையை உண்டாக்க வேண்டுவது பிராம்மணன் கடமை. அதனால்தான் அவனுக்கு அதிகமான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. "மற்றவர்கள் அது பண்ணுகிறார்களே, நாமும் ஏன் பண்ணக்கூடாது?"என்று அசுத்தியைத் தரும் காரியங்களை பிராம்மணன் பண்ணக்கூடாது. அவர்களெல்லாம் சரீரத்தை வைத்துக் கொண்டு ஸந்தோஷமான அநுபவங்களை அடைகிறார்களே என்று இவன் தனக்குத் தகாதவற்றைச் செய்யக்கூடாது. "பிராம்மணனுக்கு தேஹம் ஸந்தோஷத்தை அநுபவிப்பதற்காக ஏற்பட்டதல்ல. லோக உபகாரமாக வேதத்தை ரக்ஷிக்க வேண்டிய தேஹம் அது. அது மஹா கஷ்டப்படவே ஏற்பட்டது"என்று (வாஸிஷ்ட ஸ்ம்ருதி'யில்) சொல்லியிருக்கிறது:"ப்ராஹ்மணஸ்ய சரீரம் து நோபபோகாய கல்பதே!இஹ க்லேசாய மஹதே".

லோக க்ஷேமத்திற்காக மந்த்ரங்களை அப்யஸிக்க வேண்டும் என்பதற்காகவேதான் செலவு பண்ணி உபநயனம் முதலியவைகளைச் செலவு பண்ணி உபநயனம் முதலியவைகளைச் செய்து கொள்வது. வேத மந்திரங்களை ரக்ஷிப்பதற்காகவே- அதன் மூலம் ஸகல ஜீவ ஜந்துக்களையும் ரக்ஷிப்பதற்காகவே
-

தேஹத்தை வைத்துக் கொள்ள வேண்டும். 'எல்லோரும் ஸௌகரியமான தொழில் பண்ணுகிறார்களே!ஏன் நாம் செய்யக் கூடாது?என்று பிராம்மணன் நினைக்கக் கூடாது. தன்னுடைய கடமையை நன்றாகச் செய்துவிட்டுப் பிறகுதான் ஜீவனோபாயத்தை நினைக்க வேண்டும். முன்பு இவன் பிராம்மண தர்மங்களைச் செய்தாலே போதுமென்று ராஜாவும் ஸமூஹமும் இவனுக்கு மானியம், ஸம்பாவனை செய்து வாழ வசதி தந்தார்கள். இப்போது நிலைமை மாறிவிட்டதால், பணத்துக்கும் கொஞ்சம் பிரயத்தனப்பட வேண்டியதுதான். ஆனால் நிரம்பப் பணத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று ஆசைப்படக்கூடாது. இதற்காக அநாசார வழிகளில் பிரவேசிக்கக் கூடாது. பிராம்மணர்களுக்கு தரித்திர நிலை வேண்டியதுதான். இன்பங்களைத் தேடாமல் காயக் காயக் கிடந்தால்தான் இவனுக்கு ஞானப் பிரகாசம் உண்டாகும். அதனால் லோகம் வாழும். கண்ட தேசங்களுக்குச் சென்று ஆசார அநுஷ்டானங்களை விட்டுவிட்டு ஸம்பாதிக்கிற ஐச்வர்யம் இவனுக்கு வேண்டாம். அதுபடி ஸம்பாதிக்காவிட்டால் ஒன்றும் முடியாது என்பது இல்லை. லோகத்தில் மந்திர சக்தியைக் காப்பாற்றிக் கொண்டு தன்னுடைய தர்மத்தை அநுஷ்டிப்பது முதல் கடமை. ஸம்பாதிப்பது உமீநீஷீஸீபீணீக்ஷீஹ்(இரண்டாவது) தான்.

மந்திர சக்தி என்ற அக்கினியை இவன் காப்பாற்றிக் கொண்டு வந்தால் அது எல்லோருக்கும் க்ஷேமத்தை உண்டாக்கும். லோகத்தில் எவருக்குக் கஷ்டம் வந்தாலும் அதை நிவர்த்திக்கும் சக்தி பிராம்மணனுக்கு மந்திர சக்தியின் மூலம் இருக்க வேண்டும். யாராவது கஷ்ட காலத்தில் வந்து பிரார்த்தித்தால், "நீ பண்ணுவதைத்தான் நானும் பண்ணுகிறேன், உனக்கு இருக்கிற சக்திதான் எனக்கும் இருக்கிறது"என்று ஒரு பிராம்மணன் சொன்னால் அவனுடைய ஜன்மா வீண்.

மந்திர சக்தியாகிய அக்கினி இப்பொழுது பெரும்பாலும் அணைந்திருக்கிறது. பிராம்மண தேஹம் விகாரம் ஆகிவிட்டது. அதில் அசுத்தமான பதார்த்தங்கள் சேர்க்கப் படுகின்றன. ஆனால், ஒரு பொறி மட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி பண்ணவேண்டும். அப்படிச் செய்தால் எப்பொழுதாவது பற்றிக்கொள்ளும். அந்த நெருப்புப் பொறிதான் காயத்ரீ. அது பரம்பரையாக வந்திருக்கிறது.

### காயத்ரீ மந்திர மகிமை

மூன்று தலைமுறையாக காயத்ரீயை விட்டு விட்டவன் பிராம்மணனாக மாட்டான். அப்பேர்ப்பட்டவர்கள் இருக்கிற தெரு அக்ரஹாரம் ஆகாது. அது குடியானவர் தெருதான். ஆனால் இன்னும் மூன்று தலைமுறை ஆகவில்லையாகையால்

இன்னும் ப்ராம்மணர்கள் என்று பெயரளவாது சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

மூன்று தலைமுறை யக்ஞும் இல்லாவிட்டால் அவன் துர்ப்ப்ராம்மணன்;ªè†´Š«ð£ù Šó£‹ñí¡. ªè†ì£½‹ 'Šó£‹ñí¡'â¡ø «ðó£õ¶ Þ¼‚Aø¶!ñÁð®»‹ Hó£‹ñíù£õîŸ°Š Hó£ò„C˜î‹ ªê£™ôŠ ð†®¼‚Aø¶. Ýù£™ è£ò˜g¬ò Í¡Áî¬ôº¬øò£è M†´M†ì£™ Hó£‹ñí˜õ‹ Ü®«òì£´ «ð£Œ M´Aø¶. Üõ¡ ñÁð®»‹ Hó£‹ñíù£è ñ£†ì£¡. Üõ¡ Hó‹ñð‰¶î£¡;Üî£õ¶, Hó£ñí˜è¬÷ àø¾‚è£ó˜è÷£è à¬ìòõ¡î£¡!ÜŠð®«ò þˆKò¡ è£ò˜g¬ò M†´M†ì£™ þˆKò ð‰¶õ£Aøù£¡;¬õCò¡ ¬õCò ð‰¶õ£Aø£¡.

ஆகையால் அந்த நெருப்புப் பொறியை ஊதிப் பெரிசு பண்ண வேண்டும். சின்ன நெருப்புப்பொறி எதற்கும் உபயோகப்படாது. ஆனால் உபயோகப்படுமாறு பெரிசாக்கப் படுவதற்கு அதில் ஆதாரம் இருக்கிறது.

ஆகையால் ஞாயிற்றுக்கிழமையாவது பூணூல் உள்ளவர்கள் ஆயிரம் காயத்ரீ பண்ண வேண்டும். கண்ட இடத்தில் கண்ட ஆஹாரத்தை உண்ணலாகாது. இது வரைக்கும் அநாசாரம் செய்ததற்குப் பிராயசித்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். இனியாவது கண்ட ஆஹாரத்தை உண்ணாமல், மந்திரசக்தி இருப்பதற்கு தேஹத்தைப் பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

'ஸஹஸ்ர பரமா தேவீ சத மத்யா தசாவரா' என்றை (தைத்திரீய அரண்யக வாக்குப்) படி ஆயிரம் ஆவிருத்தி ஜபிப்பது உத்தமம்;நூறு ஜபிப்பது மத்யமும்;அதம பக்ஷம் பத்து.

காலை ஸந்தி, மத்தியான வேளை, மாலை ஸந்தி என்ற ஒவ்வொரு காலத்திலும் பத்து காயத்ரீயாவது எத்தனை ஆபத்து காலத்திலும் ஜபம் பண்ணவேண்டும். இந்த மூன்று காலங்களும் சாந்தம் உண்டாகிற காலம். காலையில் பக்ஷி முதலிய பிராணிகளும் மனிதர்களும் எழுந்திருக்கும் காலம். அப்பொழுது மனது ஸாந்தியாக இருக்கும். ஸாயங்காலம் எல்லோரும் வேலையை முடிந்து ஒய்ந்திருக்கும் காலம். அதுவும் சாந்தமான காலம். மத்தியான காலத்தில் ஸூரியன் உச்சியில் இருக்கிறான். அப்பொழுது எல்லோரும் அயர்ந்திருக்கும் காலம். அப்பொழுது எல்லோரும் அயர்ந்திருக்கும் காலம். அப்பொழுதும் மனதுக்கு சாந்தமான காலம். இந்த மூன்று காலங்களிலும் காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்தீ என்று மூன்று பிரகாரமாக தியானம் செய்ய வேண்டும். காலையில் பிரம்மா ரூபிணியாகவும், மத்தியான்னம் சிவ ரூபிணியாகவும், ஸாயங்காலம் விஷ்ணு ரூபிணியாகவும் தியானம் செய்யவேண்டும்.

காயத்ரீயில் ஸகல வேத மந்திர சக்தியும் அடங்கியிருக்கிறது. மற்ற எல்லா மந்திரங்களுக்கும் சக்தியைக் கொடுப்பது அதுதான். அதை ஜபிக்காவிட்டால்

வேறு மந்திர ஜபத்திற்குச் சக்தி இல்லை. ஹிப்நாடிஸம் என்பதனால் பல காரியங்களைச் செய்கிறார்கள். மோக்ஷத்துக்குப் போக உதவும் ஹிப்நாடிஸம் என்பதனால் பல காரியங்களைச் செய்கிறார்கள். மோக்ஷத்துக்குப் போக உதவும் ஹிப்நாடிஸம் காயத்ரீ மந்திரம்!ஆசையை அடக்கி ஜன்மம் எடுத்ததன் பலனை அடையச் செய்கிற ஹிப்நாடிஸம் காயத்ரீ!லோக காரியங்களைக் குறைத்துக் கொண்டு இந்தப் பொறியை ஊதுவதை அதிகமாகச் செய்யவேண்டும். இதை ஒரு விரதமாக வைத்துக் கொள்ளவேண்டும். அநாசாரத்தில் போகாமல் தேகத்தை சுத்தமாக வைத்துக் கொண்டால்தான் இந்த ஒரு பொறியாவது அணையாமலிருக்கும்.

ஸந்தியாவந்தனத்தில் அர்க்கியமும் காயத்ரீயும் முக்கியமானவை. மற்றவைகளெல்லாம் அதற்கு அங்கமானவை. அசக்தர்களாயிருப்பவர்கள் அர்க்கியத்தைக் கொடுத்துவிட்டுப் பத்து காயத்ரீயாவது ஜபிக்க வேண்டும். 'அந்த இரண்டு தானே முக்கியம்?அவைகளை மட்டும் செய்துவிடலாம்' என்றால் வரவர அவைகளுக்கும் லோபம் வந்துவிடும். ஆபத்திலும் அசக்தியிலும் பத்து காயத்ரீ போதும் என்பதால் எப்போதும் இப்படிப் பத்தே பண்ணினால், அப்படிப் பண்ணுகிறவர்களுக்கு எப்போதும் ஆபத்தும் அசக்தியுமாகத் தான் இருக்கும் என்று ஒரு பண்டிதர் வேடிக்கையாகச் சொன்னார். ஆகையால் அங்கபுஷ்களத்தோடு எதுவும் குறைவின்றி செய்து வந்தால்தான் முக்கியமானது நன்றாக நிற்கும். ஆபத்துக் காலத்திலுங்கூட அவைகளைச் செய்து வரவேண்டும். காலம் தப்பாமல் செய்யவேண்டும். பாரத யுத்தத்தின் போது ஜலம்

அகப்படாதபோதுகூட தூளியை (புழுதியை) வைத்துக்கொண்டு காலம் தவறாமல் ஸேனாவீரர்கள் அர்க்கியம் கொடுத்தார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்தமன காலத்திலும், உதயகாலத்துக்கு முன்பும், உச்சிக்காலத்திலும் அர்க்கியம் கொடுக்க வேண்டும். இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். ஸித்தர்கள் விநோதமான காரியங்கள் பண்ணுவார்கள்;புதிராகப் பேசுவார்கள். இடைக்காட்டுச் சித்தர் ஆடு மேய்த்தார்!அவர், 'காணாமல் கோணாமற் கண்டு கொடு!ஆடுகாண் போகுது பார் போகுது பார்!என்று சொல்லி இருக்கிறார். "காணாமல்"என்றால் ஸூரியனைக் காண்பதற்கு முன்பு என்பது அர்த்தம். அதாவது ஸூரியோதையத்திற்கு முன் காலை அர்க்கியம்கொடுக்க வேண்டும். "கோணாமல்"என்பதற்கு ஸூரியன் தலைக்கு நேரே இருக்கும் பொழுது என்பது அர்த்தம். அதாவது ஸூரியன் மேற்காக சாய்வதற்கு முன் உச்சிக்காலத்தில் மாத்யான்னிக அர்க்கியம் கொடுக்க வேண்டும். "கண்டு"என்பதற்கு ஸூரியன் இருக்கும் போது என்று அர்த்தம். ஸூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பு மலை வாயிலில் இருக்கும்பொழுதே ஸாயங்கால அர்க்கியம் கொடுக்க வேண்டும். இந்த விஷயங்களைத்தான் அந்த ஸித்தர் லேசாகச் சொல்லியிருக்கிறார். "ஆடு" என்றால் "நீராடு!" அதாவது "கங்கையில் ஸ்நானம் பண்ணு" என்பது அர்த்தம்.

"காண்" என்றால் "ஸேது தரிசனம் பண்ணு" என்பது அர்த்தம். "போகுது பார்" என்றால் த்ரிகால ஸந்தியாவந்தனத்தாலும் கங்கா ஸ்நானத்தாலும் ஸேது தரிசனத்தாலும் நம் பாபம் தொலைந்து போகிறதைப் பார்!" என்று அர்த்தம். காசிக்குப் போய் கங்கையை எடுத்துக் கொண்டு, ஸேதுவான ராமேச்வரத்துக்குப் போய் ராமநாத ஸ்வாமிக்கு கங்காபிஷேகம் பண்ணும் ஸம்பிரதாயத்தைத்தான் சொல்லியிருக்கிறார்.

காயத்ரீயை ஸரியாகப் பண்ணினால்தான் மற்ற வேத மந்திரங்களிலும் ஸித்தி உண்டாகும். அர்க்கயத்தையும் காயத்ரீயையும் தவறாமல் செய்து கொண்டு வரவேண்டும். ஜன்மத்தில் ஒரு தரமாவது கங்காஸ்நானமும் ஸேது தரிசனமும் பண்ணவேண்டும்.

ஒருவனுக்கு ரொம்பவும் ஜ்வரம் வந்தால், கூட இருக்கிறவர்கள் அவனுக்காக ஸந்தியா வந்தனம் பண்ணித் தீர்த்தத்தை ஜ்வரம் வந்தவன் வாயில் விடவேண்டும். இப்பொழுது நமக்கு நித்தியப்படி ஜ்வரம் வந்தது போலத்தான் இருக்கிறது !

ஜ்வரம் வந்தால் அதற்கு மருந்து அவசியம்; அதுபோல ஆத்மாவுக்கு வந்திருக்கிற பந்தம் என்ற ஜ்வரம் போக காயத்ரீ மருந்து அவசியமானது. அதை எந்த காலத்திலும் விடக் கூடாது. மருந்தைவிட இதுதான் முக்கியமானது. ஒரு நாளாவது ஸந்தியாவந்தனத்தை விட்டு விட்டோமென்று இருக்கக் கூடாது.

காயத்ரீ ஜபம் பண்ணுவது எல்லாராலும் ஆகிற காரியந்தான். இதிலே ஜலத்தைத் தவிர வேறு திரவியம் வேண்டாம். சரீர பிரயாசையும் இல்லை. லகுவாகப் பரம சிரேயஸைத் தரும் ஸாதனம். ஆயுள் இருக்கிறவரைக்கும்

ஸந்தியாவந்தனத்துக்கு லோபம் வராமல் பண்ணவேண்டும்.

காயத்ரீயை மாத்ரு ரூபமாக (தாய்வடிவமாக) உபாஸிக்க வேண்டும்.

பகவான் எல்லா ரூபமாக இருந்தாலும் மாதா ரூபமாக வந்தால் ரொம்பவும் ஹிதமாக இருக்கிறது. காயத்ரீயை அப்படிப்பட்ட மாதாவென்று வேதம் சொல்லுகிறது.

புருஷனுக்குத்தான் காயத்ரீ இருக்கிறது. ஸ்திரீக்கு எந்த காயத்ரீ இருக்கிறதென்றால் புருஷன் காயத்ரீயை அநுஷ்டித்தாலே ஸ்திரீக்கு க்ஷேமம் உண்டாகும். இதேபால் காயத்ரீ ஜபத்துக்கு அதிகாரம் பெற்ற மூன்று வர்ணத்தாரும் அதை விடாமல் செய்வதாலேயே காயத்ரீயில் உரிமையில்லாத மற்ற ஜாதிகளுக்கும் க்ஷேமமுண்டாகும். தான் ஒன்றைச் செய்யாமலிருப்பதால் தனக்கு மட்டுமே நஷ்டம் என்றால் விட்டுவிடலாம்.

அதனால் பிறத்தியானுக்கு நஷ்டம் என்றால் அப்படி விட்டுவிட முடியாது. காயத்ரீக்கு அதிகாரமில்லாத ஸ்திரீ, சூத்ரர்களுக்கும் மீ க்ஷீஷூலஉமீ மீமீ

(தர்மகர்த்தா) மாதிரி இந்த மந்திர சக்தியைப் பெற்றுத்தர வேண்டியவர்கள் இந்தக் கடமையைப் பண்ணாவிட்டால் அது பரிஹாரமே இல்லாத தோஷமாகும்.

பலவித மந்திரங்கள் இருக்கின்றன. அவைகளை ஜபம் பண்ணுவதற்கு முன்பு இன்ன இன்ன பலனை உத்தேசித்து பண்ணுகிறேன் என்று சொல்லுகிறோம். காயத்ரீ மந்திரத்தினுடைய பலன் சித்த சுத்திதான்; மன மாசு அகலுவது தான். மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்களெல்லாம் கடைசியில் சித்த சுத்தி உண்டாக்கத்தான் இருக்கின்றன. அதுவே காயத்ரிக்கு நேரான பலன்; ஒரே பலன்.

இந்தக் காலத்தில் காலையிலும் ஸாயங்காலத்திலும் எல்லாரும் காலந்தவறாமல் ஸந்தியாவந்தனம் செய்யலாம். சீக்கிரம் ஆபீஸுக்குப் போகவேண்டியவர்கள் மத்யான்ன வேளையில் வீட்டிலிருக்க முடியாததால், பிராஃதக் காலம் ஆனபின், அதாவது ஸூர்ய உதயத்திலிருந்து ஆறு நாழிகை (2மணி 24 நிமுஷம்) கழித்து வரும் ஸாங்க்ய காலத்தில், அதாவது 8.30 மணி சுமாருக்கு மாத்தியான்ஹிக அர்க்கியத்தை கொடுத்து ஜபிக்க வேண்டும்.

அதாவது நம்மால் அடியோடு முடியாமற் போனாலன்றி திரிகால ஸந்தியோபாஸனை இல்லாமல் இருக்கவே கூடாது.அடியோடு முடியாமல் ஜ்வரம் வந்தால் மற்றவர்களிடம் "கஞ்சி கொடு, தீர்த்தம்

கொடு" என்று சொல்லுவதைப் போல், "எனக்காக ஸந்தியாவந்தனம் பண்ணு" என்று சொல்ல வேண்டும்.

மந்திர சக்தியானது அணையாமல் விருத்தியாகக் கிருபை செய்ய வேண்டுமென்று பகவனை எல்லாரும் பிரார்திப்போமாக!

## ú‰Fò£õ‰îù^F¡ Þîó Ü‹êƒèœ

தநுர்வேதத்தில் அஸ்திரம், சஸ்திரம் என்று இரண்டு வகை ஆயதங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. சஸ்திரம் என்பதுதான் கம்பு, அம்பு, ஈட்டி, கதை முதலான அசல் ஆயுதங்கள். அஸ்திரம் என்பது இப்படி அசல் ஆயுதமாக இல்லாமல் எந்த ஒரு வஸ்துவையும் மந்திர சக்தியால் ஆயுதமாக ஆக்கி எய்வது. மந்திரத்தைச் சொல்லி ஒரு தர்ப்பையையோ, புல்லையோ ஏவி விட்டால் கூட அது ஆயுதமாகிவிடும். சஸ்திரங்களையும் இப்படி மந்திர பூர்வமாகப் பிரயோகிப்பதுண்டு. மந்திரபூர்வமாக ஒரு பதார்த்தத்தை அஸ்திரமாக்கி ஏவி விட்டால், எதன்மேல் விடுகிறோமோ அது நாசமடையும்.

இரு பிறப்பாளர் என்னும் பிரம்ம - க்ஷத்ரிய- வைசியர்கள் பிரதிதினமும் மூன்று வேளையும் பண்ண வேண்டிய அஸ்திரப் பிரயோகம் ஒன்று இருக்கிறது. அஸுரர்களை, அதாவது லோகத்தைச் சூழ்ந்துள்ள கெட்ட சக்திகளை, நாசம்

பண்ணுவதற்காக இந்த அஸ்திரப் பிரயோகம் ஒன்று இருக்கிறது. அஸுரர்களை, அதாவது லோகத்தைச் சூழ்ந்துள்ள கெட்ட சக்திகளை, நாசம் பண்ணுவதற்காக இந்த அஸ்திரப் பிரயோகம் பண்ண வேண்டும். அஸ்திரம் என்றால் ஒன்றை மந்திர பூர்வமாக விட்டு எறிகிறதல்லவா? அந்த அஸ்திரம் எது? எதை விட்டெறிகிறது? ஜனங்களுடைய புத்தியை ஆசிரயித்திருக்கிற அஸுரர்கள் தொலைய வேண்டுமென்று ஜலத்தை விட்டு எறிகிறதுதான் அஸ்திரமாகிறது. இதுதான் ஸந்தியா வந்தன அர்க்கயம். 'பாபம், பொய் முதலியவை தொலைய வேண்டும். ஞான ஸூரியன் பிரகாசிக்க வேண்டும். அது பிரகாசிக்காமல் பண்ணிக் கொண்டு உள்ளே இருக்கிற பிரதிபந்தகங்கள் (இடையூறுகள்) நிவர்த்தியாக வேண்டும்' என்று அந்த அஸ்திரப் பிரயோகம் பண்ண வேண்டும். ஒவ்வொரு நாளும் மூன்று வேளை பண்ண வேண்டும். எந்தக் காரியம் பண்ணினாலும் பண்ணாவிட்டாலும் மூச்சைப் பிடித்துக் கொண்டு இதைப் பண்ண வேண்டும்.

ஒரு காரியத்தை சிரத்தையாக ஒருவன் பண்ணினால் 'மூச்சைப் பிடித்துக் கொண்டு பண்ணுகிறான்' என்று சொல்லுகிறோம். வாஸ்தவத்தில் இந்த அர்க்ய காரியத்தையே மூச்சைப் பிடித்துக் கொண்டு பண்ண வேண்டும்! தினந்தோறும் இதைப்பண்ணி வந்தால் அந்த சத்ருக்கள் நாசமாய்ப் போய் விடுவார்கள். இது பண்ணுவதற்கு முதலில் மூச்சைப் பிடித்துக் கொள்ள வேண்டும். அதாவது ச்வாஸத்தை அடக்க வேண்டும். இப்பொழுது நாம் மூக்கை மட்டும் தான் பிடிக்கிறோம். சாஸ்திரம் 'நாஸிகாம் (மூக்கை) ஆயம்ய' என்று சொல்லவில்லை. 'ப்ராணான் (மூச்சை) ஆயம்ய' என்றுதான் சொல்லியிருக்கிறது. அதாவது வெறுமே மூக்கைப் பிடிக்காமல் பிராணனையே கட்டுப்பாட்டில் கொண்டுவர வேண்டும். 'ப்ராணாயாமம்' என்பது 'ப்ராண ஆயாமம்', அதாவது 'ச்வாஸக் கட்டுப்பாடு', 'ஆயம்ய' என்றால் 'கட்டுப்படுத்தி'.

எந்தக் காரியம் பண்ணினாலும் மனது ஒருமைப்பட வேண்டும். ஜலத்தைக்

கொண்டு அஸ்திரப் பிரயோகம் செய்வதற்கும் மனது ஒருமைப்பட வேண்டும். அதற்காகத் தான் மூச்சைப் பிடிக்க வேண்டும். 'மூச்சைப் பிடித்தால் மனது எப்படி நிற்கும்?' என்று கேட்கலாம். மனது நிற்கிற பொழுது மூச்சு நிற்பதைப் பார்க்கிறோமே! பெரிய ஆச்சரியம் உண்டாகிறது, பெரிய துன்பம் வருகிறது, பெரிய சந்தோஷம் ஏற்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது மனசுலயித்துப் போய் ஏகாந்தமாக நிற்கிறது; 'ஹா!' என்று கொஞ்ச நேரம் மூச்சும் நின்றுபோய் விடுகிறது. அப்புறம் வேகமாக ஒடுகிறது. நாமாக அதை நிறுத்தவில்லை; தானாக நிற்கிறது. மனசு ஒன்றிலே நன்றாக ஈடுபட்டவுடன் மூச்சு நின்றுவிடுகிறது. பின்பு பெருமூச்சு விடுகிறோம். எதற்காக? முன்பு விடாத மூச்சையும் சேர்த்து விடுகிறோம். இப்படி மனது ஒருமைப்படுகிற போது மூச்சு நிற்கிறதென்றால் மூச்சை நாமாக நிறுத்தினாலும் மனது ஒருமைப்படும் என்று

ஆகிறதல்லவா? இதற்காகத்தான் பிராணாயாமத்தால் மூச்சை இறுக்கி, அப்புறம்அர்க்கயம் தருவது.

நாம் அர்க்கியம் விடும்போது சித்த ஐகாரியத்தோடு (மன ஒருமைப்பாட்டோடு) விடவேண்டும். பிராணாயாமம் பண்ணினால் சித்தைக்காக்கிரியம் உண்டாகும். அதை நிறையப்பண்ணுவது யோகத்திற்கு அவசியம். அப்படி நிறையப் பண்ணுவது கஷ்டமானது; உபதேசத்தின்படி செய்ய வேண்டியது. நாம் ஸந்தியாவ ந்தனத்தில் அதிக

பட்சமாக ஒரு இடத்தில் பத்துத் தடவை பண்ணுகிறோம். மூன்று பண்ணு என்னும் சில இடத்தில் இருக்கிறது. சிறு வயதில் உபநயனமான காலம் முதற்கொண்டு கிரமமாக நாம் வேளைக்குப் பத்துப் பிராணாயாமம் பண்ணிக்கொண்டு வந்திருந்தாலே, இத்தனை நாளில் யோகீச்வரராக ஆகியிருப்போம். பண்ணுகிறதைச் சரியாகப் பண்ண வேண்டுமல்லவா? அரை நிமிஷம் ச்வாஸத்தை நிற்கப் பண்ண வேண்டும். அதிகமாக வேண்டாம். பிராணன் நின்றால் மனது நிற்கும். அந்த நிலையில் அர்க்யம்

கொடுத்தால் வாஸ்தவமாகக் கெட்ட அஸுர சக்திகள் ஓடிப்போகும். மனஸ் நின்றால் நாம் விடுகிற ஜலம் அஸ்திரமாகும்.

அர்க்கியமாகிய அஸ்திரப் பிரயோகத்தைப் பண்ண வேண்டும். பின்பு காயத்ரீ பண்ணவேண்டும். பிராணாயாமத்தைக் கூடிய வரையில் பண்ணவேண்டும். மூச்சைக் கொஞ்சம் நிறுத்துகிறது, பின்பு விடுகிறது என்ற அளவில் இருந்தாலே போதும். அதிகம் அடக்கவேண்டாம். ஸங்கல்பம், மார்ஜனம், பிராசனம், அர்க்யப்ரதானம், ஜபம், ஸ்தோத்திரம், அபிவாதனம் இவ்வளவும் பரமேச்வரனுடைய அநுக்கிரஹம் பெறுவதற்காகப் பண்ணகிறேனென்று நினைத்துச் செய்யவேண்டும். முதலில் பண்ணும் ஸங்கல்பம் என்பது அதுதான். ஆரம்ப முதல் கடைசி வரையில் பரமேச்வரார்ப்பணம் பண்ணவேண்டும். இவ்வளவுக்கும் பிராணாயாமம் முக்கிய அங்கம். திரிகாலங்களிலும் இதை ஸ்வல்பமாவது பண்ணவேண்டும்.

தினந்தோறும் மூன்று வேளையும் ரோகிஷ்டன் (நோயாளி) கூடப்

பிராணாயாமம் பண்ணவேண்டும் என்று சாஸ்திரத்தில் இருப்பதால் உபத்திரவம் கொடுக்கிற அளவுக்கு இதில் ச்வாஸக் கட்டுப்பாடு இல்லை என்று புரியும். இப்படிப் பண்ணினாலே ரோகமும் போய் தீர்க்காயுஸ் உண்டாகும்.

ரிஷயோ தீர்க்க ஸந்த்யத்வாத் தீர்க்கமாயுரவாப்நுயு:।

ப்ரஜ்ஞாம் யசச்ச கீர்த்திம் ச ப்ரஹ்ம வர்சஸமேவ ச।।

(மநுஸ்மிருதி, 4-94)

அபிவாதனத்தில் எந்த மஹரிஷியுனுடைய ஸந்ததியில் பிறந்திருக்கிறோம் என்று சொல்கிறோமோ அந்த மஹரிஷி முதல் காயத்ரீ ஜபிக்கப்பட்டு வருகிறது. அந்த கோத்திரத்தில் பிறந்ததற்காவது கர்மாநுஷ்டானங்களைச் செய்ய வேண்டியது நமது கடமை. அந்த கோத்திரத்தில் பிறந்ததற்காவது கர்மாநுஷ்டானங்களைச் செய்ய

வேண்டியது நமது கடமை. அந்த முதல் ரிஷிக்கு அப்புறம் எவ்வளவோ பேர் ரிஷிகளாக இருந்திருக்கிறார்கள். த்ரயார்ஷேயம், பஞ்சார்ஷேயம், ஏகார்ஷேயம் என்று சொல்கிறோம். அதாவது அந்த அந்த கோத்திரத்தில்

ரிஷிகளோ, ஐந்து ரிஷிகளோ, ஒரு ரிஷியோ இருந்திருக்கிறார்கள் என்று இதனால் தெரியவருகிறது. அவர்கள் அப்படி தீர்க்காயுஸ், ஞானம், புகழ், பிரம்மதேஜஸ் முதலியவையுள்ள ரிஷிகளாக ஆனதற்குக் காரணம் அவர்கள் செய்த ஸந்தியாவ ந்தனம்தான் என்பது நான் சொன்ன (மநு ஸ்மிருதி) ச்லோகத்தின் அர்த்தம்.

தொடர்ச்சியாக வந்த இந்த தாரையை நாம் அறுத்து விடக்கூடாது. பிராணாயாத்தோடு சித்தைக்காக்கிரியத்தோடு மந்திர லோப மில்லாமல் பரமேச்வரார்ப்பணமாக ஸந்தியாவந்தனத்தை நிறுத்தி நிதானமாகப் பண்ணவேண்டும். அர்த்தத்தைத் தெரிந்து கொண்டு பண்ணவேண்டும்.

மனோ-வாக்-காயங்களால் பாபம் பண்ணியிருக்கிறோம். அந்த மூன்றாலும் செய்யும் கர்மாக்களால் அந்தப் பாபத்தைப் போக்கிக் கொள்ளவேண்டுமென்று முன்பு சொல்லியிருக்கிறேன். ஸந்தியாவந்தனத்தில், வாக்கினால் மந்திரம் சொல்லுகிறோம்; காயத்ரீ ஜபத்தை மனதினால் தியானித்துப் பண்ணுகிறோம்; மார்ஜனம் (புரோக்ஷித்துக் கொள்வது) முதலியவைகளால் காயசுத்தி உண்டாகிறது.

அது மட்டுமில்லாமல் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் மூன்றும் சேர்ந்ததாகவும் ஸந்தியாவந்தனம் இருக்கிறது.

ஸந்தியாவந்தனம் பண்ண அவரவர்கள் தங்கள் தங்களுக்கென்று பாத்திரம் வைத்துக்கொள்ளவேண்டும். ஸந்தியா வந்தனத்தை அவஸரமாகப் பண்ணக்கூடாது என்பது முக்கியம்.

## ªð‡èœ Mûò‹ â¡ù?

நடுவிலே இதர ஜாதியாரின் நலனையும் உத்தேசித்து த்விஜன் - இருபிறப்பாளன் -ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும்; ஸ்திரீகளின் க்ஷேமத்தை உத்தேசித்தும் புருஷரே பண்ண வேண்டும் என்றேன்.

இதர ஜாதியாருக்கு - நாலாம் வர்ணத்தாருக்கு - ஏன் இந்த ஸம்ஸ்காரங்கள் இல்லை என்பதையும் முன்பே சொன்னேன். இப்போது

ஸ்திரீகள் விஷயத்தையும் கவனிக்க வேண்டும். அவர்களுக்கு ஏன் இந்த அநுஷ்டானங்களும், ஸம்ஸ்காரங்களும் இல்லாமல் வைத்திருக்கிறது?

குழந்தை பிறந்தவுடன் புண்யாஹவாசனம், நாமகரணம், பிறகு ஆண்டு நிறைவில் அப்தபூர்த்தி, அன்னப் பிராசனம் முதலானதுகளை நாம் பெண் குழந்தைகளுக்கும் பண்ணினாலும், சௌளம் (குடுமி வைத்தல்), உபநயனம், பிறகு பிரம்மசரிய ஆச்ரமத்தில் உள்ள விரதங்கள் முதலிய எதுவும் பெண்களுக்கு இல்லை. அப்புறம் கல்யாணம் என்கிற விவாஹ ஸம்ஸ்காரம் மட்டும் அவளுக்கும் இருக்கிறது. அதற்கப்புறம் உள்ள ஸம்ஸ்காரங்கள், யக்ஞம் முதலானவற்றில் கர்த்தாவாக முக்கியமாய் காரியம் பண்ணுவது புருஷன்தான். இவள் பத்தினி ஸ்தானத்தில் கூட நிற்கிறாள். ஔபாஸனத்தில் மாத்திரம் இவளும் ஹோமம் பண்ணுகிறாள்.

ஏன் இவளை இப்படி வைத்திருக்கிறது?

பிறப்பதற்கு முன்பே செய்யப்படும் நிஷேகம், பும்ஸுவனம், ஸீமந்தம் முதலியவைகூட புருஷப் பிரஜையை உத்தேசித்தேதான் செய்யப்படுகின்றன.

அப்படியானால் இக்காலச் சீர்திருத்தக்காரர்கள், 'பெண் விடுதலைக்காரர்கள்' சொல்வது போல் ஹிந்து மதத்தில் பெண்களை இழிவு படுத்தி இருட்டில் அடைத்துத்தான் வைத்திருக்கிறதா?

நாலாம் வர்ணத்தாருக்கு ஸம்ஸ்காரங்களில் பல இல்லாததற்கு என்ன காரணம் சொன்னேன்? அவர்களால் நடக்க வேண்டிய லௌகிக காரியங்களுக்கு இவை அவசியமில்லை என்றேன். இந்த ஸம்ஸ்காரங்களால் எப்படிப்பட்ட தேஹ, மன ஸ்திதிகள் ஏற்படுமோ அவை இல்லாமலே அவர்கள் லோக உபகாரமாக ஆற்றப்பட வேண்டிய தங்களது தொழில்களைச் செய்துவிட முடியும். அத்யயனம், யக்ஞம் என்பவற்றில் மற்ற ஜாதியாரும் பொழுதைச் செலவிட்டால் அவர்களால் நடத்தியாக வேண்டிய காரியங்கள் என்ன ஆவது? இதனால்தான் அவர்களுக்கு இவை வேண்டாமென்று வைத்தது? இவை இல்லாமலே, தங்கள் கடமையைச் செய்வதனால் அவர்கள் ஸித்தி பெறுகிறார்கள். "ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ:" என்று பகவான்

(கீதையில்) சொல்லியிருக்கிறார். இந்த விஷயங்களை முன்பே சொன்னேன்.

பொதுவான சமூகத்தில் இப்படிக் காரியங்கள் பிரித்திருப்பதை முன்னிட்டே ஸம்ஸ்கார வித்யாஸம் ஏற்பட்டிருக்கிற மாதிரித்தான், ஒவ்வொரு வீட்டிலும் புருஷர்களுக்கும் பெண்களுக்கும் இடையே வித்யாஸம் வைத்திருக்கிறது. ஒரு

வீடு என்றிருந்தால் சமையல், வீட்டைச் சுத்தம் பண்ணுவது, குழந்தைகளை வளர்ப்பது என்றிப்படி பல காரியங்கள் இருக்கின்றன. ஸ்வாபாவிகமான (இயற்கையான) குணங்களால் பெண்களே இவற்றுக்கு ஏற்றவர்களாக இருக்கின்றனர். இவர்களும் புருஷர்களின் அநுஷ்டானங்களில் இறங்கிவிட்டால் இவர்கள் செய்ய வேண்டிய காரியம் என்ன ஆவது? இவர்களுடைய சித்தசுத்திக்குப் பதி சுசுரூஷை, கிருஹ ரக்ஷணை இதுகளே போதும் என்னும் போது புருஷனின் அநுஷ்டானங்களை இவர்களுக்கும் வைத்து வீட்டுக் காரியங்களை ஏன் கெடுக்க வேண்டும்.

ஆகவே பீவீஉஜ்ணீக்ஷீவீமீ ஹ், பீவீஉநீக்ஷீவீனீவீஸிணீமீ வீஷீஸீ (ஏற்றத்தாழ்வு, வித்யாஸப் படுத்துதல்) என்று இக்காலத்துச் சீர்த்திருத்தக்காரர்கள் வைகிறதெல்லாம் வாஸ்தவத்தில் ஒருத்தர் செய்கிறதையே இன்னொருத்தரும் அநாவசியமாக பீஞூஜ்ரீவீநீணீமீ மீ பண்ணாமல், ஒழுங்காக வீட்டுக் காரியமும், நாட்டுக் காரியமும் நடக்கும்படி பீவீஸ்வீஉவீஷீஸீ ஷீயீ ரீணீதீஷீஞூக்ஷீ (தொழிற் பங்கீடு) பண்ணிக் கொண்டது தான்; எவரையும் மட்டம்தட்ட அல்ல.

மந்திரங்களை ரக்ஷிக்க வேண்டிய சரீரங்களை அதற்குரிய யோக்கியதை பெறும்படியாகப் பண்ணுவதற்காகவே ஏற்பட்ட ஸம்ஸ்காரங்கள் பல இருக்கின்றன. இவற்றை இந்த மந்திர ரக்ஷணை என்ற காரியமில்லாத மற்ற சரீரிகளுக்கு எதற்கு வைக்கவேண்டும்? உடைந்து போகிற க்ளாஸ் ஸாமான்களைப் பார்ஸலில் அனுப்ப வேண்டுமானால் அதற்கு சில விசேஷ பாதுகாப்புப் பண்ணுகிறார்கள். கூட்ஸில் மண்ணெண்ணைய், பெட்ரோல் முதலியவற்றை அனுப்பும்போது அதற்குத் தனி ஜாக்கிரதைகள் பண்ணுகிறார்கள். மற்ற ஸாமான்களுக்கு இப்படிப் பண்ணவில்லை என்பதால் அவற்றை மட்டம் தட்டுகிறார்கள் என்று ஆகுமா? இந்நாளில் ரேடியேஷனை (கதிரியகத்தை) உத்தேசித்து, ஸ்பேஸுக்கு (வானவெளிக்கு)ப் போகிறவனை முன்னும் பின்னும் ஐஸொலேட் செய்து (பிரித்து வைத்து)

ரொம்பவும் ஜாக்கிரதை பண்ணவில்லையா? இதே மாதிரி, இதைவிடவும் மந்திரங்களுக்கு ரேடியேஷன் உண்டு என்று புரிந்து கொண்டால் பிராம்மணனைப்பிரித்து ஸம்ஸ்காரங்களை வைத்ததன் நியாயம் புரியும்.

லோக க்ஷேமார்த்தம் மந்திரத்தை ரக்ஷிக்க வேண்டிய ஒரு பிராம்மண புருஷ சரீரம் உருவாக வேண்டுமானால் அது கர்ப்பத்தில் வைக்கப் படுவதிலிருந்துசில பரிசுத்திகளைப் பண்ண வேண்டியிருக்கிறது. பும்ஸுவனம், ஸீமந்தம் முதலியன இதற்குத்தான். பிறந்த பிறகும் இப்படியே.

அவரவரும் ரைட், ரைட் (உரிமை, உரிமை) என்று பறக்காமல், நல்ல தியாக புத்தியோடு, அடக்கத்தோடு லோக க்ஷேமத்துக்கான காரியங்களெல்லாம் வகையாக

வகுத்துத் தரப்பட வேண்டும் என்பதையே கவனித்தால், சாஸ்திரங்கள் சில ஜாதியாருக்கோ, ஸ்திரீகளுக்கோ பக்ஷபாதம் பண்ணவேயில்லை என்பது புரியும்.

## ªð‡èO¡ àò˜‰î vî£ù‹

ஸ்திரீகளுக்குத் தாமாக யக்ஞம் பண்ண அதிகாரமில்லை என்பதை மட்டும் பார்த்து ஆக்ஷேபணை பண்ணுகிறவர்கள், பத்தினி இல்லாத புருஷனுக்கு யக்ஞம் செய்கிற அதிகாரமில்லை என்கிற விஷயத்தையும் கவனித்தால், ஹிந்து சாஸ்திரம் பெண்களை மட்டம் தட்டுகிறது என்று சொல்ல மாட்டார்கள். பத்தினி உள்ளவன்தான் யக்ஞம் செய்யவேண்டும்; அப்படிப்பட்ட யக்ஞ கர்மாநுஷ்டானத்தை இவன் லோக க்ஷேமத்துக்காகவும் தன் சித்த சுத்திக்காகவும் ஆரம்பிக்க வேண்டும் என்றேதான் பிரம்மசரிய ஆசிரமம் முடிந்து ஸமாவர்த்தனம் ஆனபின் விவாஹம் என்கிற ஸம்ஸ்காரத்தை வைத்திருக்கிறது.

விவாஹத்துக்கு "ஸஹ தர்ம சாரிணீ ஸம்ப்ரயோகம்" என்று பேர். அதாவது "தன்னோடுகூட தர்மத்தை நடத்திக் காட்டுகிறவளோடு பெறுகிற உத்தமமான சேர்க்கை" என்று அர்த்தம். அதாவது, இந்திரிய ஸுகம் இதில் முக்கிய லக்ஷ்யமல்ல. லோகத்தில் தர்மங்களை அநுஷ்டிப்பதுதான் லக்ஷ்யம். அதைத் தனியாக அநுஷ்டிக்கச் சொல்லவில்லை. அதற்குத் துணையாக ஒரு ஸ்திரீயைச் சேர்த்துக் கொள்ளும்படி சாஸ்திரம் சொல்கிறது. 'தர்ம பத்தினி', 'ஸஹ தர்ம சாரிணி'

என்பதாகப் பொண்டாட்டியை தர்மத்தோடு ஸம்பந்தப் படுத்தித்தான் சொல்லியிருக்கிறதே தவிர, காமத்தோடு அல்ல. இதிலிருந்து சாஸ்திரங்களில் ஸ்திரீகளுக்குக் கொடுத்துள்ள உயர்ந்த மதிப்பைப் புரிந்து கொள்ளலாம்.

பிரம்மசாரி, தான் மட்டில் தன் ஆசிரம தர்மத்தைப் பண்ணுகிறான்; ஸந்நியாஸியும் அப்படியே. இல்லறம் நடத்துகிற கிருஹஸ்தாச்ரமி மட்டும் தனியாக இல்லாமல் பத்தினியுடன் சேர்ந்தே தன் தர்மத்தை, கர்மங்களைப் பண்ண வேண்டும் என்று சாஸ்திரம் வைத்திருக்கிறது. புருஷன்-மனைவி இருவருக்கும் இது பொது சொத்து. பத்தினி இருக்கிற கிருஹஸ்தனுக்கு மட்டுமே யாக யக்ஞாதிகளை சாஸ்திரத்தில் வைத்திருக்கிறதே தவிர, பிரம்மசாரிக்கும் ஸந்நியாஸிக்கும் இவை இல்லை. இந்திரிய ஸௌக்யத்துக்காக மட்டுமே பத்தினி என்றால், பத்தினி இல்லாவிட்டால் ஒருவன் யக்ஞம் பண்ணக்கூடாது என்று வைத்திருக்குமா? அவள் பக்கத்தில் நின்றால்தான் இவன் யக்ஞம் பண்ணலாம். கர்த்தாவாக அவளே நேரே யக்ஞம் பண்ண 'ரைட்' இல்லை என்பதை மட்டும் கவனிக்கும் பெண் விடுதலைக்காரர்கள், அவள் இல்லாவிட்டால் இவனுக்கும் 'ரைட்' போய் விடுகிறது என்பதையும் கவனிக்க வேண்டும். வேதத்திலேயே இப்படி விதித்திருக்கிறது: 'பத்நீவதஸ்ய

அக்னி ஹோத்ரம் பவதி". ஒரு பெரியவர் தன் பத்தினி செத்துப் போன போது, 'என் யக்ஞ கர்மாநுஷ்டானங்களையெல்லாம் கொண்டுபோய் விட்டாளே" என்று அழுதாராம்!

தர்மத்துக்கும், கர்மத்துக்கும் கைகொடுப்பவளாக அப்படிப்பட்ட ஒரு உயர்ந்த ஸ்தானம் நம்முடைய சாஸ்திரங்களில் ஸ்திரீகளுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது.

---

**விவாஹம்**

**தர்மத்துக்காகவே ஏற்பட்டது.**

தர்ம அர்த்த காம மோக்ஷம் என்று நான்கு புருஷார்த்தங்களைச் சொல்கிறோம். இதிலே முதலாவதான தர்மம் எப்போதுமே விட்டுப் போகக்கூடாது. அர்த்தம் (பணம்) சம்பாதிப்பதும் காம அநுபவமும் ஒரு காலத்தில் விட்டு விடுபவை. ஆனால் இவற்றை அநுபவிக்கும் காலத்திலும் தர்மத்திலிருந்து விலகக்கூடாது. சாஸ்திர தர்மங்களையும் விட்டு ஸந்நியாஸியாகிறபோதுகூட, ஒருத்தன் தர்மத்துக்கு அப்பாற்பட்டவனாகி விடுகிறானே தவிர, அதை ஆக்ஷேபிக்கிறவனாகவோ, அதர்மத்தைச் செய்கிறவனாகவோ ஆகிவிடவில்லை. 'ஸந்நியாஸ தர்மம்' என்றுதானே அவன் பின்பற்ற வேண்டியவைகளையே சொல்கிறோம்?

பூர்வ மீமாம்ஸை என்ற கர்ம காண்டம், உத்தர மீமாம்ஸை என்ற ஞான காண்டம் முதலியவைகளைப் பற்றி முன்பே சொன்னேன். இவற்றில் பூர்வ மீமாம்ஸை ஸூத்ரம் ''அதாதோ தர்ம ஜிக்ஞாஸா'' என்று ஆரம்பிக்கும். ''தர்மத்தைப் பற்றிய விசாரணை இனி ஆரம்பிக்கிறது''என்று அர்த்தம். உத்தர மீமாம்ஸா ஸூத்ரம் (பிரம்ம ஸூத்ரம்) 'அதாதோ ப்ரஹ்ம ஜிக்ஞாஸா'- அதாவது 'பிரம்மத்தைப் பற்றிய விசாரணை இனி ஆரம்பிக்கிறது'என்று முதல் ஸூத்ரத்தில் சொல்கிறது. பிரம்மத்தையே விசாரித்து தியானிக்கிற போது தர்மத்தைப் பற்றிய நினைவும் போய்விடுகிறது. கர்மம் உள்ள த்வைதமான லோகத்துக்குத்தான் தர்மம். அத்வைதமான ஞானத்தில் லோகமில்லாததால் தர்மத்தைப் பற்றிய விசாரணையில்லை. அதனால் அது தர்ம விருத்தமானது (தர்மத்துக்கு முரணானது) என்று அர்த்தமில்லை.

அதற்கு மேலே போனது, அதற்கு அதீதமானது என்றே அர்த்தம். கீதையில் பகவான் 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய(எல்லா தர்மத்தையும் விட்டுவிட்டு) என்னையே சரணடை'என்று சொல்கிறாரென்றால், 'அதர்மக்காரனாக ஆகி

என்னிடம் புகலடை'என்பதாகவா அர்த்தம் பண்ணுவது?'தர்ம அதர்மங்களை பற்றின விசாரணையை விட்டுவிட்டு, அவற்றுக்கு மேலே எழும்பி, இரண்டுக்கும் மூலமான வஸ்துவிலேயே பிடிப்பை வைத்துக் கொள்'என்றுதான் அர்த்தம். இது உள் அநுபவம். இந்த அநுபவத்தைப் பெற்ற ஞானிகள் வெளியிலே செய்கிற காரியங்கள், தானாகவே தர்ம மயமாகத்தான் இருக்கும். அதானால்தான் மஹாத்மாக்களாக உள்ள ஸந்நியாஸிகள் conscious- ஆக (புத்தி பூர்வமாக) தர்மத்தைப் பண்ண வேண்டும் என்று உத்தேசிக்கா விட்டாலும் அவர்கள் செய்வதெல்லாம் தர்மமாகவே இருப்பது.

மொத்தத்தில் தர்மம் என்பது ஒருவனை எப்போதுமே விடுகிறதில்லை. உயர்ந்த நிலையை அடைகிறபோது இவன் அதைப் பற்றிய எண்ணத்தை விட்டுவிட்டாலும், அது இவனை விடாமல் இவன் காரிய ரூபத்தில் செய்கிறதில்

பிரகாசித்துக் கொண்டேதான் இருக்கும்.

தர்ம- அர்த்த-காம-மோக்ஷத்தில் அர்த்தம் (பொருள்) சம்பாதிப்பது தர்மப்படிதான் இருக்க வேண்டும். அப்படியே காமமும் தர்மத்தோடு சேர்ந்தே இருக்க வேண்டும். இதைத்தான் காளிதாஸன் 'ரகுவம்ச'த்தில் திலீபனைக் கொண்டாடிச் சொல்கிறபோது, "அப்யர்த்த காமௌ தஸ்யாஸ்தாம் தர்ம ஏவ மநீஷிண:"என்கிறான். "நல்லறிவு பெற்ற அவனுடைய (திலீபனுடைய) அர்த்தம், காமம் இரண்டும்கூட தர்மமாகவே இருந்தன"என்று அர்த்தம்.

அர்த்த-காமங்களை இப்படி தர்மப்படி ஆண்டு அநுபவிக்கிறதே கிருஹஸ்தாச்ரமம் (இல்லறம்). அதற்கு ஆரம்பம் தான் விவாஹம். பிரம்மசாரிக்கும்

ஸந்நியாஸிக்கும் அர்த்த (பொருள்) ஸம்பாதனம், காம அநுபோகம் இரண்டும் இல்லை. அந்த இரண்டு ஆசிரமங்களுக்கு நடுவே பாலம் போடுகிற மாதிரி அமைந்துள்ள கிருஹஸ்தாச்ரமத்தில் இந்த இரண்டும் அநுமதிக்கப்பட்டிருக்கின்றன.

உயிர் வாழ்வதற்குப் பொருள் வேணத்தான் வேண்டும். கர்மாப்படி பல உயிர்கள் பிறப்பதற்குக் காமமும் வேணத்தான் வேண்டும். கர்மாவைத் தீர்த்துக் கொள்வதற்காகவே நாமும் அது தீருகிறவரை லோகத்தில் வாழத்தான் வேண்டும். இதே மாதிரி மற்றவர்களுக்கு 'சான்ஸ்'கொடுப்பதற்காக அவர்களுக்கு ஜன்மாவைத் தரவேண்டும் என்றால் பொருள் சேர்க்கவும் காமத்தை அநுபவிக்கும் வேண்டும்தானே?கர்மாவை விட்டு ஸந்நியாஸியானவர்களுக்கும் ஆஹாரம் வேண்டியிருப்பதால் அதைப் போடுவதற்கு கிருஹஸ்தன் இருந்துதானே ஆகவேண்டும்?ஆகவே எப்படிப் பார்த்தாலும் கிருஹஸ்தாச்ரமம்

இருக்கத்தான் வேண்டும். லோகத்தில் எல்லாரும் ஸந்நியாஸியாவது நடக்காத காரியம். ஆகையால் இதிலே தர்மத்தோடு வாழ்ந்து, பிரம்மச்சாரிக்கும் ஸந்நியாஸிக்கும்கூட வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்து தருகிற கிருஹஸ்தாச்ரமியைத்தான் சாஸ்திரங்கள் ரொம்பவும் சிறப்பித்து, ஸமூஹத்தின் back-boneஎன்று கொண்டாடுகின்றன.

பிரம்மச்சரிய ஆசிரமத்தில் படித்து முடித்து, விஷயங்களைத் தெரிந்து கொண்டு, நல்லறிவையும் நற்குணங்களையும் பெற்றபின் தர்மப்படி கர்மாநுஷ்டானம் பண்ணுவதற்காக விவாஹம் செய்து கொள்ள வேண்டும்.

விவாஹத்தை நாற்பது ஸம்ஸ்காரங்களில் ஒன்றாக வைத்திருக்கிறது - அதாவது ஜீவனைப் பரிசுத்தி பண்ணுகிற புண்ணிய கர்மாவாக வைத்திருக்கிறது.

இந்திரியத்தை நெறிப்படுத்தி ஒரே ஒருத்தர் விஷயமாகப் போகும்படி சீராக்கித் தருவது என்பதோடு, ஸகல தர்மங்களையும் நடத்துவதற்கும் ஒரு ஆச்ரமமாக அமைந்த கிருஹஸ்தாச்ரமத்துக்குப் பூர்வாங்கமே விவாஹம் - பிரம்மச்சர்யாச்ரமத்துக்கு உபநயனம் போல.

காம அநுபோகத்தோடு கூட மற்ற லோகக்ஷேமமான தர்மங்களை

அநுஷ்டிப்பது என்பது மட்டுமல்லை. காமத்திலேயே தர்மத்தை அநுஷ்டிக்கு ம்படியாகவும் கிருஹஸ்தாச்ரமத்தை சாஸ்திரம் அமைத்திருக்கிறது. 'தர்மம்'என்பது எதையும் வரையறை மீறாமல் ஒழுங்குபடுத்துவதுதானே?இப்படி இந்திரிய வேகத்தைக் கட்டுப்படுத்தி தாம்பத்தியம் பண்ணுவதுதான் காமத்திலேயே தர்மத்தை அநுஷ்டிப்பதென்பது. இதனாலேயே படிப்படியாக இந்த வேகம் குறைந்த பக்குவம் உண்டாகிறது. அது பிற்பாடு. அதற்கு முதலில், பலாத்காரமில்லாமல், காமத்தை கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டுப்படுத்துவது கிருஹஸ்தாச்ரமத்தில். இதற்கு முன்னால் பின்பற்றிய பிரம்மசரிய ஆசிரமத்தின் கடும் நியமங்கள் (strict disciplines) ஒருவனை இப்படிக் கட்டுப்பாட்டில் கொண்டு வருகின்றன. எப்போதும், வேளை போது கவனிக்காமல், பசு வேகத்தில் இவனை அடித்துக் கொண்டு போகாமல் அது காப்பாற்றுகிறது.

பசு வேகம் என்று சொன்னாலும் வாஸ்தவத்தில் பசுக்கள்-மிருகங்கள் - அதற்கான ஒரு பருவத்தில் மட்டும் தான் ஸங்கமம் பண்ணுகின்றன. கர்ப்பம் தரிக்கக்கூடிய ஒரு காலத்தில் மட்டுமே அவற்றுக்கு இந்த வேகம் உண்டாகிறது. 'பசு வேகம்''பசு தர்மம்' என்றெல்லாம் அவற்றை வைத்துப் பெயர் சொல்கிற மநுஷ்யன்தான் அவற்றைவிட மட்டமாக இருக்கிறான். இந்த உணர்ச்சி வேகம் ஏற்படுகிற ஆரம்ப காலத்திலேயே இதை மட்டுப்படுத்த பிரம்மச்சரியம் இருக்கிறது. அப்புறம் இவனுக்கு காமத்திலேயே தர்மத்தோடு ஒழுங்காக, வியவஸ்தைக்கு உட்பட்டு

இருப்பதற்கு கிருஹஸ்தாச்ரமமும், அதற்கு ஆரம்பமாக விவாஹம் என்ற ஸம்ஸ்காரமும் ஏற்படுகின்றன.

அந்த வேகம் பல பேரிடம் போக விடாமல் ஒருத்தரிடமே போகப் பண்ணுகிற வியவஸ்தையை எல்லா மதங்களுமே விவாஹச் சடங்கினால் செய்திருக்கின்றன.

அதோடு, கூடுதலாக நம்முடைய மத சாஸ்திரம் செய்திருக்கிற வியவஸ்தை என்ன என்றால்:ஸ்திரீ ரிதுவான தினம் முதல் நாலு நாட்களில் ஸங்கமம் செய்யக்கூடாது. அப்புறம் பன்னிரண்டு தினங்கள் மட்டுமே செய்யலாம். அப்புறமும் அடுத்த முறை ரிதுவாகும் வரையில் கூடாது. நடுவே சொன்ன பன்னிரண்டு நாட்களிலும் அமாவாஸ்யை மாதிரியான சில திதிகள், சில நக்ஷத்ரம் முதலியவற்றில் கூடாது. இதையெல்லாம் தள்ளி மிச்ச நாட்களில்தான் கர்ப்பாதானம்

செய்யலாம் என்று விதி. இதை அநுஸரித்தால் தம்பதிகளின் தேக-மனோ புஷ்டிகள் என்றைக்கும் குறையாது.

## குடும்பக் கட்டுப்பாடும் பெண் தொகைப் பெருக்கமும்

எல்லாவற்றுக்கும் மேலாக, இப்போது குடும்பக் கட்டுப்பாடு என்று அஸங்கியமாகப் பல காரியங்களை தண்டோரா போட்டுக் கொண்டு பண்ணுகிறார்களே, இதற்கு அவசியமே இல்லாமல், தன்னால் இயற்கையாகவே

குழந்தைகள் பிறப்பது ரொம்பவும் மட்டுப்படும். முடிந்த மட்டில் சமைத்த ஆஹாரங்களுக்குப் பதில் பழங்களைச் சாப்பிடுவது, சாஸ்திரப்படி நிஷேதனமான (விலக்கப்பட்ட) நாட்களில் பிரம்மச்சரியத்தோடு இருப்பது என்பதாக தம்பதிகள் இருக்க ஆரம்பித்து விட்டால் ஆர்டிஃபீஷியலாக (செயற்கை முறைகளில்) குடும்பக் கட்டுப்பாடு செய்ய வேண்டிய அவசியமே ஏற்படாது.

இங்கே இன்னொரு விஷயம் சொல்கிறேன். பொதுவாக பாபுலேஷனை குறைக்க வேண்டும் என்கிற அபிப்ராயத்தோடு இது ஸம்பந்தமில்லஎன்று தோன்றினாலும் உண்மையில் ஸம்பந்தம் உள்ளதுதான். வரதட்சிணைப் பிரச்சனைக்கு 'ஸொல்யூஷன்'(தீர்வு)தான் நான் சொல்ல வந்த விஷயம். வரதட்சிணைக்கும் பாபுலேஷனுக்கும் என்ன ஸம்பந்தம்? பாபுலேஷனில் பெண் பிரஜைகளின் விகிதாசாரம் ஜாஸ்தியானதால்தான் வரதட்சிணைப் பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. பொருளாதார சாஸ்திரப்படி, குறைச்சலாக உள்ள சரக்குக்குத்தான் கிராக்கி ஜாஸ்தி. இதன்படி, பாபுலேஷனில் புருஷப் பிரஜைகள் குறைவாகி, பெண்கள் அதிகமாக ஆரம்பித்தபோதுதான், பெண்களுக்கு ஸம எண்ணிக்கையில் பிள்ளைகள் இல்லாததால் பெண்ணைப் பெற்றவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வரதக்ஷிணை கொடுக்கிற பழக்கம் ஏற்பட்டது. இது ஸமீபகால வழக்கந்தான். இது

ஏற்பட்ட சந்தர்பத்தை நான் ஆராய்ச்சி பண்ணிப் பார்த்ததில், வெள்ளைக்கார ஆட்சி ஏற்பட்டு பிராம்மணர்கள் குமாஸ்தாக்களாக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு வெறும் பேனாவால் உழுகிற வமீபீணீஸீமீ கூஷ்ஹ் வேலைகளை ஆரம்பித்த பின்தான் இந்த நிலை உண்டானதாகத் தெரிந்தது. அதாவது உடல் வருந்த இவன் யக்ஞ கர்மாநுஷ்டானம் பண்ணின காலம் போய் உட்காரந்து உத்தியோகம் பண்ண ஆரம்பித்த பின்தான் இவனுக்குப் புருஷ பிரஜைகளைவிட அதிகமாகப் பெண் குழந்தைகள் பிறக்க ஆரம்பித்தன. கடைசியில் அதன் விளைவாகப் பிள்ளைகளுக்கு கிராக்கி ஏற்பட்டு வரதட்சிணை என்கிற பெரிய களங்கம் உண்டாகி விட்டது. யக்ஞம் மட்டுமில்லாமல், 'பூர்த்த தர்மம்'என்ற பெயரில் முன் காலங்களில் பிராம்மணன் ஸோஷல் ஸர்வீஸ் செய்த போது வெட்டுவது, கொத்துவது, உழுவது முதலான காரியங்களிலும் மற்றவர்களோடு ஒரளவு பங்கு எடுத்துக் கொண்டு சரீர சிரமம் நிறையப்பட்ட வரையில் அவனுக்கு ஆண் பிரஜையே அதிகமாகப் பிறந்தது.

இப்படி நான் சொல்வதற்கு பலன் தருவதாக இன்னொன்றும் சொல்கிறேன். முன்பு பிராம்மணர்களிடம் மட்டுமிருந்த வரதட்சிணை வழக்கம் மெதுவாக இப்போது மற்ற சில ஜாதியார்களிடமும் ஏற்பட்டு வருகிறதல்லவா?இவர்கள் யார் என்று பார்த்தால், அநேகமாக இவர்களும் சரீர உழைப்பை விட்டுவிட்டு, உட்கார்ந்து வேலை பார்க்கிற முறைக்குத் திரும்பினவர்களாகவே இருக்கிறார்கள்.

ஆனபடியால் இப்போது ஆபீஸ்களில் வேலை செய்கிறவர்களும், லீவ் நாட்களிலாவது குளம் வெட்டுவது, ரோடு போடுவது, கோவிலுக்கு மதில் கட்டுவது முதலான ஸோஷல் சர்வீஸ்களை உடல் வருந்தப் பண்ணினால் ஆண் பிரஜைகள்

அதிகம் பிறந்து, முடிவில் வரதட்சிணைப் பழக்கம் தொலையும் என்று நினைக்கிறேன். ஆனால் அது வேறு ஸப்ஜெக்ட்.

இந்திரிய ஸுகத்திலும் வியவஸ்தை வேண்டும் என்பதில் ஆரம்பித்தேன்.

## விவாஹமே பெண்டிருக்கு உபநயனம்

இதற்குப் பிரம்மச்சரியம் ஒருத்தனைத் தயார் பண்ணுகிறது என்றால் பெண்ணின் கதி என்ன?அவளுக்கு உபநயனமோ, பிரம்மச்சரிய ஆச்ரமமோ இல்லையே!புருஷன் மனசு கட்டுப்பட்டிருக்கிற மாதிரி அவளையும் கட்டுப்பாட்டில் கொண்டு வராமல் இருக்கலாமா?சீர்திருக்காரர்கள் சொல்கிற மாதிரி ஸ்திரீகளுக்கு உபநயனமும் பிரம்மச்சரிய ஆச்ரமமும் இல்லாமல் அநீதிதான் இழைத்திருக்கிறது என்றால் - இல்லை.

புருஷனுக்கு உபநயன-பிரம்மச்சரியங்களுக்கு அப்புறம் ஏற்படுகிற விவாஹ ஸம்ஸ்காரமேதான் ஒரு பெண்ணுக்கு உபநயன ஸ்தானத்தில் அமைகிறது. அந்தக் குழந்தை பிராயத்திலிருந்து இவளுக்கு வயது வந்து தாம்பத்தியம் ஆரம்பிக்கிற வரையில், குருவிடம் பிரம்மச்சாரி மனஸை அர்ப்பணம் பண்ணின மாதிரி இவள் பதியிடம் பண்ண வேண்டும்.

"ஸ்த்ரீணாம் உபநயன ஸ்தானே விவாஹம் மநுரப்ரவீத்"என்பது மநுஸ்மிருதி. இதற்கு ஒரு வெளி அடையாளம் காட்டு என்றால் சட்டென்று, 'உபநயனத்திலே ஒரு பையனுக்குப் பூணூல் போடுகிற மாதிரி விவாஹத்திலே பெண்ணுக்கு மங்கள ஸூத்திரம் கட்டப்படுகிறது என்று சொல்லிவிடலாம்.

உப-நயனம் என்றால் 'கிட்டே அழைத்துப் போவது', அதாவது 'குருவினடம் அழைத்துப் போய் குருகுல வாஸத்தில் பிரம்மசரியம் அநுஷ்டிக்கும்படிப் பண்ணுவது'என்று அர்த்தம் சொன்னேன். ஸ்திரீகளுக்குப் பதியே குரு. அவனிடம்

கொண்டு சேர்க்கிற விவாஹம்தான் அவளுக்கு உபநயனம்.

அதாவது சாஸ்திரப் பிரகாரம், ஒரு பிள்ளைக்கு உபநயனம் செய்கிற ஏழாவது வயசில் பெண்ணுக்கு விவாஹம் செய்துவிட வேண்டும். காமம் தெரிகிற முன்பே இவள் பதியை குருவாக வரித்துவிடும்படி செய்ய வேண்டும். காமம் தெரியாவிட்டால்தான் இப்படி குருவாக வரிக்கவும் முடியும்!குருவை ஒருத்தன் தெய்வமாகவே மதிக்க வேண்டும் என்பதும் சாஸ்திரம் அல்லவா? அப்படியே இந்தப் பெண் குழந்தை சின்ன வயசில் பதியை குரு-தெய்வமாக பாவித்து ஹ்ருதயத்தை அவனுக்கு ஸமர்ப்பணம் பண்ணிவிட வேண்டும். அந்த இள வயசில்தான் இது ஸாத்தியமும் ஆகும். பிற்பாடு புத்தியால் எதிர்க்கேள்வி கேட்பது, அஹம்பாவத் தடிப்பு எல்லாம் உண்டாகிவிடும்.

ஹ்ருதய-ஸமர்ப்பணம் - சரணாகதி - தான் ஜன்மாவைக் கடைத்தேற்றுகிற

பெரிய ஸாதனம். கீதையின் சரம ச்லோகத்தில் சொன்ன இந்த சரணாகதியை தெய்வமோ, குருவோ, பதியோ, யாரிடமோ பண்ணிவிட்டால் போதும். அப்புறம் தனக்கென்று ஒன்றும் இல்லை. நாம் யாரிடம் சரணாகதி பண்ணினோமோ அவர்கள் மூலம் ஈச்வரன் அநுக்ரஹம் பண்ணிவிடுவான்.

இம்மாதிரியாகப் பிள்ளையாகப் பிறந்த ஒருத்தனை குருவிடம் சரணாகதி பண்ணும்படியாக உபநயனத்தையும், அவன் கல்யாணம் செய்துகொள்ளும் போது அந்தக் கல்யாணத்தையே பெண்ணாய்ப் பிறந்தவள் பதியிடம் சரணாகதி பண்ணும்படியாக விவாஹ ஸம்ஸ்காரத்தையும் ரிஷிகள் ஏற்பாடு செய்து தந்திருக்கிறார்கள்.

அதாவது, பெண்ணை மட்டும் மட்டம் தட்டி அவளைப் புருஷனுக்கு சரணாகதி பண்ணச் சொல்லவில்லை. அந்தப் புருஷனையும் விவாஹத்துக்கு முந்தியே குருவுக்கு சரணாகதி பண்ணச் சொல்லியிருக்கிறது. அவன் எந்த வயசில் இந்த சரணாகதியைச் செய்கிறானோ அநத வயசில் இவள் அவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு சரணாகதி பண்ணவேண்டும் என்பது சாஸ்திரத்தின் அபிப்ராயம்.

உசத்தி-தாழ்த்தி, உரிமை (கூஷீவீரீலீமீ), ஸ்தானம் (ஜீஷீஉவீமீ வீஷீஸ) முதலான விஷயங்களைவிட சித்த சுத்தியைப் பெரிதாக நினைத்தால் அப்போது சரணாகதிதான் முக்கியமாகிறது. அதற்கு வழியாகத்தான் புருஷனுக்கு உபநயனமும் பெண்ணுக்கு விவாஹமும் விதிக்கப்பட்டிருக்கின்றன என்று புரிந்து கொள்ள வேண்டும்.

விவாஹ வயதும் சட்டமும்

உபநயனம் மாதிரிப் பெண்ணின் ஏழாவது வயசில் கல்யாணம் பண்ண வேண்டும்;அப்போதுதான் சரணாகதி புத்தி வரும் - என்று சொன்னால், 'இது இந்த காலத்தில் ஸாத்தியமா?சட்ட விரோதமல்லவா?என்று கேட்பீர்கள்.

'ராஜாங்கத்தின் சட்டத்தை மீறு'என்று சொல்லக் கூடாதுதான். அப்படிச் சொல்லவில்லை. சட்ட மறுப்பு (நீவீஸ்வீறீ பீவீஉஷீதீமீபீவீமீஸீநீமீ) என்று இப்போது ஆட்சி நடத்துகிறவர்களே ஒரு காலத்தில் பண்ணிக் காட்டித்தான் இருக்கிறார்கள். 'சட்டம் என்று யாரோ எழுதினதற்காக எங்கள் ஸ்வாதந்தரியத்தை விட மாட்டோம்'என்று அப்போது சொன்னார்கள். அதே மாதிரி, "ஜெயிலில் போட்டாலும் பரவாயில்லை;பிராணன் போனாலும் பரவாயில்லை;ஆத்ம க்ஷேமத்துக்காக ஏற்பட்ட விவாஹ ஸம்ஸ்காரத்தை வெறும் லௌகிக விஷயமாக்கிச் சட்டம் பண்ணினால் ஏற்கமுடியாது"என்று கிளம்புகிற வேகம் நம் ஜனங்களுக்கு இல்லை. அப்படி இல்லையே என்பது மட்டும் நான் 'சட்டத்தை மீற வேண்டாம்'என்று சொல்வதற்குக் காரணமில்லை. ஒரு விஷயத்தில் மீறினால், மற்றவற்றிலும் மீறுகிற எண்ணம் உண்டாகி, கட்டுப்பாடே போய்விடும். அதனால்தான் (சட்டத்தை மீறும்படிச்) சொல்லவில்லை. ஆனாலும் சட்டத்தை மீறாமலே ராஜாங்கத்துக்கு சாஸ்திர

அபிப்ராயத்தை விடாமல் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். ராஜாங்கத்துக்கு மட்டுமில்லை;ஜனங்களிலும் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்கு மேல் சாஸ்திர அபிப்ராயத்தை விட்டு விட்டார்களே!அவர்களுக்கும் பாக்கியிருக்கிற ஸ்வல்ப சாஸ்திரக்ஞர்கள் எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும். சட்டத்தை மீறாமலே, முன்னேற்றம் எத்தனை நிதானமாக ஏற்பட்டாலும் அதனால் மனம்

தளராமல் நூறு வருஷம் ஆனாலும் ஆகட்டும்!இன்னம் அதிகமானாலும் ஆகட்டும்!உன்னதமான இந்த தேசாதாரம் மறுபடி பழக்கத்தில் வரப் பண்ணுவதற்கு

நம்மாலானதை சாந்தமான வழியிலேயே செய்வோம் என்று செய்ய வேண்டும். பலனை பார்க்க நாம் (உயிரோடு) இருக்க வேண்டும் என்பதில்லை. ஆயிரம் வருஷத்துக்கு அப்புறம்தான் பலன் உண்டாகும் என்றாலும், அதற்கு இப்போதே நம்மாலான விதையைப் போட்டுவிட வேண்டும். யத்தனத்தை இப்போது ஆரம்பித்தால்தான், என்றைக்கோ ஒரு நாளாவது பலன் கிடைக்கும். பிரயத்தனமே இல்லாவிட்டால் என்றைக்கும் பலன் ஏற்பட முடியாதல்லவா?விதையே போடாவிட்டால் எப்படி மரம் உண்டாகும்?

தர்மசாஸ்திரமே பெரிய சட்டம் என்று ராஜாங்கத்தாருக்கும், பொதுஜனங்களுக்கும் புரியும்படியாக, ஹிதமான முறையில் (தீஹ் ஜீமீக்ஷீஉஷூ஌ணீஉவீஷீஸீ) வற்புறுத்திக் கொண்டேயிருக்க வேண்டும்.

விவாஹ வயது குறித்த விவாதம்

'பால்ய விவாஹம் கூடாது;பெண்கள் ரிதுவான பின்தான் கல்யாணம் பண்ணவேண்டும்'என்று இந்த நூற்றாண்டு ஆரம்பத்திலேயே நம் மதஸ்தர்களில் ரொம்பவும் செல்வாக்காக இருந்தவர்கள் வாதம் செய்து மகாநாடுகள் நடத்தி க்ஷீமீஉஷீறீஷூ஌மீ வீஷீஸீஉ (தீர்மானங்கள்) போட்டிருக்கிறார்கள். இவர்கள் வேதத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் அல்ல. மாறாக தாங்கள் சொல்வதுதான் வேத ஸம்மதமான விவாஹம், பால்ய விவாஹம் என்பது வேத ஸம்மதமானதில்லை என்று இவர்கள் சொன்னார்கள்.

எம். ரங்காச்சாரியார், சிவஸ்வாமி அய்யர், ஸுந்தரமய்யர், கிருஷ்ணஸ்வாமி அய்யர் மாதிரியான பெரிய புள்ளிகள் இவர்களில் இருந்தார்கள். அப்புறம் ரைட் ஆனரபிள் (வி.எஸ். ஸ்ரீநிவாஸ) சாஸ்திரி இந்த விஷயத்தில் விசேஷமாக வாதம் பண்ணினார்.

நல்ல சாஸ்திர பாண்டித்தியம் பெற்றிருந்தவர்களிலேயே வைஷ்ணவர்கள் காஞ்சிபுரத்திலும், ஸ்மார்த்தர்கள் திருவையாற்றிலும் இரண்டு ஸபைகள் நடத்தி, வேதப் பிரகாரம் பூர்வத்தில் விவாஹ வயசு உயர்வாகத்தான் இருந்தது, ரிதுமதி விவாஹந்தான் நடந்திருக்கிறது என்று அபிப்ராயம் சொன்னார்கள்.

அப்புறம் ஏன் இப்படி பால்ய விவாஹம் வந்தது என்பதற்கும் ஒரு காரணம் சொன்னார்கள். அதாவது:துருக்கர்கள் இந்த தேசத்துக்கு வந்த புதிதில் ஹிந்து

மதத்தைச் சேர்ந்த கன்யாப் பெண்களைத் தூக்கிக் கொண்டு போய் பலாத்காரம் பண்ணுவது அதிகமாயிருந்ததாம். ஆனால் ஒருத்தன் 'தொட்ட'தை (பொட்டுக் கட்டினதை) அவர்கள் பலாத்காரம் பண்ணமாட்டார்களாம். அதனாலேயே பெண்கள் குழந்தைகளாக இருக்கும்போதே கல்யாணம் பண்ணிவிடுகிற புது வழக்கத்தை ஆரம்பித்தார்களாம். இப்படி இந்தக் கல்யாணச் சீர்திருத்தக்காரர்கள் சொல்லி, 'இப்போது நாம் மறுபடி வேதத்தில் இருந்த பிரகாரமே மாற்ற வேண்டும். றிக்ஷீமீ-ஜீ�§ஙுதீமீக்ஷீமீ ஹ் னீணீக்ஷீக்ஷீவீணீரீமீ (வயசு வரும் முன் கலியாணம்) என்ற அநாகரிகத்தைத் தொலைந்து விடவேண்டு"என்று வாதம் செய்தார்கள்.

தாங்கள் சொல்வது வாஸ்தவத்தில் சாஸ்திரோக்தமானது என்பதற்கு ஆதரவாக இவர்கள் குறிப்பாக இரண்டு சான்றுகளை காட்டினார்கள். ஒன்று விவாஹ சடங்கிலேயே வருகிற சில வேத மந்திரங்கள். மற்றது நம்முடைய தர்ம சாஸ்திரங்களிலெல்லாம் மிகச் சிறந்ததாக கருதப்படும் மநுஸ்மிருதி.

விவாஹப் பிரயோக மந்திரமான வேத வாக்கியத்தில் என்ன சொல்லியிருக்கிறது?இதைச் சொல்லுமுன் இன்னொரு விஷயம் சொல்ல வேண்டும். நம் ஒவ்வொரு தேகத்திலும் அங்கங்களுக்குள்ளே அவை ஒவ்வொன்றுக்கும் அதி தேவதையாக ஒரு தேவன் இருக்கிறான். கண்ணில் ஸூரியன், கையில் இந்திரன் என்றிப்படி நமக்குள் ஆத்யாத்மிகமாக தேவ சக்திகள் இருக்கின்றன. இது தவிர ஒவ்வொரு வயோவஸ்தையிலும் (வயசுக்கட்டத்திலும்) ஒவ்வொரு தேவதைக்கும் நம் மேல் ஆதிக்கம் இருக்கிறது. இவ்விதத்திலே ஒரு பெண்ணானவள் பிறந்ததிலிருந்து வஸ்திரம் கட்டிக் கொள்ளத் தெரிகிற வரையில் 'ஸோமன்'என்ற தேவதையின் ஆதீனத்தில் இருக்கிறாள். (புருஷர்கள் கட்டிக் கொள்ளும் வேஷ்டிக்கே 'சோமன்'என்று பேர் இருக்கிறது!)அதற்கப்புறம் ரிதுவாகும் வரையில் அவள் கந்தர்வனின் ஆதீனத்தில் இருக்கிறாள். வயசு வந்ததிலிருந்து மூன்று வருஷம் அக்னியின் ஆதிக்கத்தில் இருக்கிறாள். ஸோமன் என்றால் சந்திரன். ஸோமன் ஒரு பெண்ணை ஸ்வீகரித்துக் கொண்டிருக்கிற குழந்தைப் பிராயத்தில் அதனிடம் நிலா மாதிரியான குளிர்ச்சி இருக்கிறது. அப்புறம்

கந்தர்வன் என்ற உல்லாஸ ஜீவியான, நல்ல ஸுந்தரமான தேவதையிடம் இருக்கிற சிறுமிக்கு லாவண்யம் விசேஷமாக இருக்கிறது. பிறகு அக்னியின் அதிகார காலம் உண்டான போது காமாக்னியை ஏற்படுத்தும் சக்தி உண்டாகிறது. மூன்று தேவதைகளுடைய அதிகாரத்துக்கு இப்படி லௌகிகமாக அர்த்தம் பண்ணுவதுண்டு. இது இருக்கட்டும்.

சீர்திருத்தக்காரர்கள் சான்று காட்டும் வேத மந்திரங்களின் அர்த்தம் என்ன?வரன் எனப்படும் கல்யாணப்பிள்ளை வதூ எனப்படும் கல்யாணப் பெண்ணைப் பார்த்து சொல்லும் இந்த வேத வாக்கியங்களுக்கு அர்த்தம் என்ன என்றால், "முதலில் ஸோமன் உன்னை அடைந்தான்;இரண்டாவதாக கந்தர்வன் அடைந்தான்;

மூன்றாவதாக அக்னி உனக்கு அதிபதி ஆனான். மநுஷ்ய வர்க்கத்தைச் சேர்ந்த நான் நான்காமவனாக உன்னை ஆளுவதற்கு வந்திருக்கிறேன். உன்னை ஸோமன்

கந்தர்வனிடம் கொடுத்தான்;அக்னி என்னிடம் இப்போது கொடுத்திருக்கிறான்"என்று அர்த்தம்.

விவாஹத்தின் போதே சொல்லப்படுகிற மந்திரத்தில் இப்படி வருவதால் கல்யாணப் பெண்ணானவள் ரிதுமதியாகி அக்னியின் ஆதினத்தில் மூன்று வருஷம் இருந்த பிறகுதான் அவளை ஒருத்தன் கல்யாணம் பண்ணிக் கொள்கிறான் என்றுதானே அர்த்தம் ஆகிறது?

இதைச் சொல்லித்தான் சீர்திருத்தக்காரர்கள், "நாங்கள் ஒன்றும் சாஸ்திர விரோதமான reform (சீர்திருத்தம்) கொண்டு வரவில்லை. ஆதியிலிருந்த சாஸ்திரத்துக்கு விரோதமாகத் துருக்க ராஜ்யத்தில் ஏற்பட்ட வழக்கத்தை மாற்றிப் பழையபடி சாஸ்திரோக்தமாகப் பண்ண வேண்டும் என்றுதான் சொல்கிறோம். வேத வாக்கியத்தைவிட பெரிய பிரமாணம் இருப்பதாக எந்த ஸநாதனியும் சொல்ல முடியாதே!அதைத்தான் நாங்கள் 'அதாரிடி'யாகக் காட்டுகிறோம் என்று சொன்னார்கள்.

இதோடு மநுஸ்மிருதியிலிருந்து இவர்கள் ஒன்றை மேற்கோள் காட்டினார்கள்.

த்ரீணி வர்ஷாண்யுதீக்ஷேத குமாரீ ரிதுமதி ஸதீ |

ஊர்த்வம் து காலாத் ஏதஸ்மாத் விந்தேத ஸத்ருசம் பதிம்||

இதற்கு அர்த்தம், "வயசுக்கு வந்த பெண் அதற்கப்புறம் மூன்று வருஷம் வரன் தேடி வருகிறானா என்று காத்திருந்து பார்க்கவேண்டும். வராவிட்டால் அதன்பின் அவளே பதியைத் தேடிக் கொள்ளலாம்"என்பது. இங்கே post-puberty marriage (ரிதுமதி ஆனபின்பே விவாஹம்) என்றுதானே தெரிகிறது?அது மட்டுமில்லை. "பெரியவர்கள் பார்த்துத்தான் பண்ணி வைக்க வேண்டும் என்றுகூட இல்லாமல் ஒரு பெண் அநுமதிக்கிற அளவுக்கு அவ்வளவு 'மாடர்னாக' மநுதர்மம் இருக்கிறது. நடுவாந்திரத்தில் வந்த வைதிகக் குடுக்கைகளும், மடிஸஞ்சிகளுந்தான் எல்லாவற்றையும் மாற்றிக் காட்டுமிராண்டித்தனமாகச் செய்துவிட்டார்கள்"என்று சீர்திருத்தக்காரர்கள் சொன்னார்கள்.

"வேத மந்திரங்கள், தர்ம சாஸ்திர ச்லோகம் இவற்றின் அர்த்தத்தைப் பார்த்தால் அவர்கள் சொல்வது சரிதானே?இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள், ஸ்வாமிகளே!என்று கேட்டால், பதில் சொல்கிறேன்.

எட்டு வித விவாஹங்கள்

மநுஸ்மிருதி உட்பட்ட தர்ம சாஸ்திரங்களில் எட்டு விதமான விவாஹங்கள் சொல்லியிருக்கிறது.

ப்ரஹ்மோ-தைவ-ஸ்ததைவார்ஷ :

ப்ரஜாபத்ய-ஸ்ததாஸுர :।

காந்தர்வோ ராக்ஷஸச்சைவ

பைசாசாஷ்டம : ஸ்ம்ருத :

அதாவது பிராம்மம், தைவம், ஆர்ஷம், பிரஜாபத்தியம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்று கல்யாணத்தில் எட்டு தினுசு.

'பிராம்மம்'என்பது குருகுலவாஸம் முடித்து வந்த உத்தம பிரம்மசாரிக்காக அவனுடைய மாதா-பிதாக்கள் ஒரு நல்ல குலத்துப் பெண்ணின் மாதா பிதாக்களிடம் வந்து கன்யாதானம் பண்ணித் தரச்சொல்லிக் கேட்டுக்கொள்வது. பிள்ளைக்குப் பெண் வீட்டார் வரதக்ஷிணை தருவது, பெண்ணுக்குப் பிள்ளை வீட்டார் பரிசம் தருவது என்று இரண்டும் இதில் இல்லை. வியாபாரக் கொடுக்கல் வாங்கலாக இல்லாமல் இரண்டு குலங்கள் அபிவிருத்தியாக வேண்டும் என்ற உயர்ந்த லக்ஷ்யம் ஒன்றிலேயே பண்ணப்படுவது பிராம்ம விவாஹம். தர்ம சாஸ்திரங்கள் எட்டு வித விவாஹங்களில் இதைத்தான் மிகவும் சிரேஷ்டமாகச் சொல்லியிருக்கின்றன.

'தைவம்'என்பது ஒரு யாகத்திலேயே அதைப் பண்ணுகிற ரித்விக்குக்குப் பெண்ணைக் கல்யாணம் செய்து தருவது. உரிய காலத்தில் பெண்ணைத் தேடி வரன் வராததால், பெண் வீட்டுக்காரர்கள் அவனைத் தேடிப் போய் யாகசாலையிலே மாப்பிள்ளை பிடிப்பதென்பது, பிராம்ம விவாஹத்தை விடத் தாழ்த்தி என்பதே அபிப்ராயம். பெண்ணைப் பிள்ளை வீட்டுக்காரன் தேடிவருவதுதான் சிலாக்கியமான விவாஹம் என்பதாக ஸ்திரீகுலத்தை சாஸ்திரம் உயர்த்தி வைத்திருக்கிறது.

மூன்றாவதான ஆர்ஷ விவாஹம் என்பது ரிஷி ஸம்பந்தமானது என்று பொருள் படுவது;சியவன ரிஷிக்கு ஸுகன்யாவைக் கல்யாணம் செய்து கொடுத்த மாதிரி இருக்கும் என்று 'ஆர்ஷ'என்றே வார்த்தையைப் பார்த்தால் தோன்றுகிறது. ஆனால் தர்ம சாஸ்திரப்படி, வரனிடமிருந்து இரண்டு பசுக்களை வாங்கிக்கொண்டு பெண்ணை பதிலுக்குத் தருவது 'ஆர்ஷம்'என்று தெரிகிறது.

ஆர்ஷம் என்றால் ரிஷிக்குக் கொடுப்பது என்று அர்த்தம் செய்துகொண்டால், இதுவும் உரிய காலத்தில் பிராம்ம விவாஹம் ஆகாத கன்னிகையை ஒரு வயசான ரிஷிக்காவது சுசுருஷை செய்யும் பொருட்டுப் பத்தினியாக கொடுப்பது என்று ஆகும். வரனிடமிருந்து கோ வாங்கிக் கொண்டு கல்யாணம் செய்வது என்கிற போதும், அவனிடம் விசேஷமான சீலங்கள் இல்லாததால்தான் பசுவைக் கொடுத்துப் பெண் கேட்கிறான் என்றும், இந்தப் பெண் வீட்டுக்காரனுக்கும் பிராம்ம விவாஹப்படியான நல்ல ஸம்பந்தம் கிடைக்காததால்தான் திரவியத்தை வாங்கிக் கொண்டு பிரதியாகப் பெண்ணைக் கொடுக்கிறான் என்றும் ஏற்படுகிறது. உத்தமமான விவாஹத்தில் பண சம்பந்தமே, பிஸினஸ் அம்சமே கூடாது என்பது சாஸ்திர தாத்பரியம்.

நாலாவது பிராஜாபத்தியம். பிரஜாபத்தியம் பிஸினஸ் கொடுக்கல் வாங்கலாக இல்லாமல் ஒரு பிரம்மச்சாரிக்கு கன்யாதானம் பண்ணித் தருகிற

விவாஹ முறைதான். ஆனால், பிராஜாபத்தியம் என்கிற பெயரில் பிரஜையை உண்டு பண்ணுவது என்ற நோக்கம் அவஸரமாகத் தெரிவதால், தன் குமாரி சீக்கிரமே ரிதுவாகிவிட இருக்கிறாள் என்பதால் அவளுக்குக் கல்யாணம் பண்ணித்தர அவளுடைய தகப்பனார் அவஸரப்பட்டு வரனைத் தேடிக் கொண்டு தாமே போகிறார் என்று ஏற்படுகிறது. அதாவது, பிராம்மம் மாதிரி இல்லாமல் இங்கே பெண் வீட்டுக்காரர்களே பிள்ளையைத் தேடிக்கொண்டு போய்க் கல்யாணம் செய்து தருகிறார்கள். இது இரண்டாம் பக்ஷந்தான். கிருஹலக்ஷ்மியாக இருக்க வேண்டியவளை வரனின் கிருஹத்தார் தேடிவந்து, கேட்டுப் பண்ணிக் கொள்கிற பிராம்மம்தான் இதைவிட உசத்தி.

'ஆஸுரம்'என்றால் 'அஸுரத்தனமான'அர்த்தம். ஒரு பெண்ணுக்குப் பொருத்தமில்லாத (மாட்ச் ஆகாத) ஒரு வரனானவன் நிறையப் பணத்தை அவளுடைய தகப்பனாருக்கோ பந்துக்களுக்கோ கொடுத்து, அவர்களை அதனால் வசப்படுத்திக் கட்டாயப்படுத்தி அவளைக் கொடுக்கும்படிப் பண்ணுவதுதான் ஆஸுரம். ஆர்ஷப்படி கோவைக் கொடுத்துப் பெண் வாங்கினவன் வலுக்கட்டாயப்

படுத்துபவனில்லை. ஆஸுரக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவனைப் போல் அவனைப் பணமோ, அதிகாரமோ கொழுத்தவன் என்றும் சொல்ல முடியாது. ஆஸுரம் (அசுர சம்பந்தமானது) என்ற வார்த்தையே ஆர்ஷம் (ரிஷி சம்பந்தமானது) என்ற வார்த்தைக்கு விரோதமாகத்தானே இருக்கிறது?அநேக பணக்காரர்கள் இரண்டாதாரம் கல்யாணம் செய்து கொண்டது ஆஸுரம்தான்.

அடுத்ததான காந்தர்வ விவாஹம் என்றவுடன் சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் நடந்தது என்று உங்களுக்கு நினைவு வரும். இந்தக் காலத்தில் 'ஓஹோ'என்று கொண்டாடும் காதல் கல்யாணம் இதுதான்.

'ராக்ஷஸம்'பெண் வீட்டுக்காரர்களோடு யுத்தம் செய்து ஜயித்துப் பெண்ணை எடுத்து கொண்டு போய்க் கலியாணம் பண்ணிக் கொள்வது. கிருஷ்ண பரமாத்மா ருக்மணியை இப்படித்தான் விவாஹம் செய்து கொண்டார்.

கடைசி, எட்டாவது தினுசு விவாஹம், பைசாசம், அசுரத்தனமானது, ராக்ஷஸத்தனமானது, இவற்றுக்கெல்லாம் முடிவிலே பிசாசுத்தனமான பைசாசத்தைச் சொல்லியிருக்கிறது. ஆஸுரத்தில் பெண்ணின் ஸம்மதத்தை எதிர்பார்க்காவிட்டாலும், அவளுடைய மநுஷ்யர்களுக்காவது பணத்தைக் கொடுத்தான். ராக்ஷஸத்தில் அவளுடைய மநுஷ்யர்களை ஹிம்ஸித்த போதிலும் அவளுடைய இஷ்டத்தை மீறிக் கல்யாணம் செய்து கொள்ளமாட்டான். ருக்மிணி கிருஷ்ணரிடம் ஆசை வைத்துத் தானே இருந்தான்?பைசாசத்திலோ பெண்ணுடைய இஷ்டத்தையும் பார்ப்பதில்லை. அவளுடைய பெற்றோர்களுக்கும் திரவியம் தருவதில்லை. பெண் வீட்டுக்காரர்களைப் பகைத்துக் கொண்டு, கல்யாணப் பெண்ணையும் பலவந்தப்படுத்தி விவாஹம் பண்ணிக் கொள்வதைத்தான் பைசாசம் என்று வைத்திருக்கிறது.

ஒரு பக்கம் பைசாசம், இன்னொரு பக்கம் பிராம்மம். பிராம்மம் என்பது தைவத்தைவிட உயர்ந்தது. ஆனாலும் லோகத்தில் எல்லாருக்கும் ஒரே மாதிரி வியவஸ்தை செய்துவிடக்கூடாது. இதை உணர்ந்து அதிகாரி பேதம் சொல்லியிருப்பதுதான் நம் சாஸ்திரத்தின் பெருமை. இதை உணராத இக்காலத்திய அபேத வாதங்களால்தான் எல்லா அனர்த்தங்களும் வந்திருக்கின்றன.

காட்டுக் கட்டைகளாக, கடூரமான பழக்க வழக்கங்களோடு உள்ள வனவாஸிகளும் இருக்கிறார்கள். உள்ளூர அவர்களிடம் நாகரிகவாஸிகளைவிட உயர் பண்புகள் இருக்கும். இவர்களாலும் சமூகத்துக்கு அநேகப் பிரயோஜனம் இருக்கும். ஆனால் இவர்களுக்குள் எப்போதும் தங்களுக்குள்ளே சண்டை சச்சரவு, யீணீனீவீறீஹ் யீமீஉபீ நிறைய இருப்பதுண்டு. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் இவர்களுக்கு ராக்ஷஸ, பைசாச விவாஹங்களைக் கூட அநுமதித்தாக வேண்டியிருக்கிறது. விவாஹத்துக்கு ஏற்பாடு தன்னால் சண்டையெல்லாம் போய் ஸௌஜன்யமாகி விடுவார்கள். இதே மாதிரி சரீர புஷ்டி, பௌதிகமான ஸந்தோஷங்கள் முதலியவற்றை விசேஷமாகக் கொண்ட க்ஷத்ரியர் போன்றவர்களுக்கு காந்தர்வமும் அநுமதிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பெண்கள் தாங்களாகவே விவரமறிந்து புருஷனைத் தேடி மாலையிடுகிற 'ஸ்வயம்வர'உரிமையைக் கூடப் பெற்றிருக்கிறார்கள்.

இதனால்தான் வேதத்தை அடியொற்றிய பிவீஸீபீஉ லிணீஷ்-ஆன தர்மசாஸ்திரங்களில் எட்டு விதமான விவாஹங்களையும் அநுமதித்திருக்கிறது. மந்திர பூர்வமாக விவாஹம் செய்து கொள்வதற்கு இந்த எட்டு விதமான வதூவரர்களுக்கும் ரைட் கொடுத்திருக்கிறது.

இவற்றிலே பிராம்ம விவாஹம் தான் சிரேஷ்டமானது. அது பெண்ணானவள் ரிதுவாவதற்கு முன்பே செய்யப்பட வேண்டியது. "ப்ரதானம் ப்ராக் ரிதோ:"என்று தர்ம ஸூத்திரத்திலேயே இருக்கிறது. பையனின் உபநயன ஸ்தானத்தில் பெண்ணுக்கு ஏழாவது வயசில் (கர்ப்பத்தைக் கூட்டி எட்டாவது வயசில்) செய்ய வேண்டிய விவாஹம் அது.

துரதிருஷ்டவசமாகச் சில பெண்களுக்குப் பிள்ளையாகத் தேடி வந்து செய்துகொள்ளும் பிராம்ம விவாஹம் நடக்காதபோது வயசு ஏறிவிடுகிறது. பிறகு தைவமாகவோ, ஆர்ஷமாகவோ, பிராஜாபத்யமாகவோ நடக்கிறது. இவை மட்டுமே பிராம்மணருக்கு ஏற்பட்டவை. இதரர்களுக்கு இவற்றோடு வேறு விதமான கல்யாணங்களும் - வயசு வந்த பெண்ணே ஸ்வயம்வரமாகத் தேர்ந்தடுப்பது, அல்லது காந்தர்வமாகச் செய்து கொள்வது உள்பட - அநுமதிக்கப் பட்டிருக்கிறன்றன.

கல்யாண மந்திரங்களில் பல எட்டு வகையாரவையும் உத்தேசித்தவை. அவை

எல்லாருக்கும் பொதுவாக இருக்கப்பட்டவை. அதாவது ரிதுமதியான பெண்ணை விவாஹம் செய்து கொடுப்பதற்கும் உரியவனான மந்திரங்கள் விவாஹ ப்ரயோகத்தில் வருகின்றன.

இம் மாதிரி அனைவருக்கும் பொதுவாக இருக்கிற மந்திரங்களில் தான் முன்னே சொன்ன இரண்டும் இருக்கின்றன. ஸோமன், கந்தர்வன், அக்னி ஆகியோரின் ஆதீனத்திலிருந்து தன்னை வந்தடைந்த ரிதுமதியான வதூவைப் பற்றி வரன் சொல்கிற அந்த மந்திரங்கள், பிராம்மமாக மட்டுமின்றி மற்ற எல்லா விதமான விவாஹங்களையும் உத்தேசித்துச் சொல்லப்ட்டவையே ஆகும்.

அதையே பால்ய விவாஹம் செய்துகொள்ளும் வரனும் சொல்கிறான். இப்போது குழந்தையாயிருப்பவளை இவன் பாணிக்கிரஹணம் செய்து கொண்டாலும், பிற்பாடு அவள் யுவதியாக ஆன பிறகுதானே இவன் தாம்பத்தியம் நடத்தப் போகிறான்?அப்போது ஸோமன்-கந்தர்வன்-அக்னி ஆகிய மூவரின் ஆதிக்கத்திலிருந்தும் தனக்குக் கொடுக்கப்பட்டவளாக்தானே அவளை இவன் அடையப் போகிறான்? அதனால் அப்போது சொல்ல வேண்டிய மந்திரத்தை முன்கூட்டியே (வீஸீ ணீபீஸ்ணீஸீநீமீ) இப்போது விவாஹத்தில் சொல்லி விடுகிறான்.

நாம் இக்காலத்தில் பிள்ளை பிறந்தவுடன் செய்ய வேண்டிய ஜாதகர்மா, நாம கர்மா, சௌளம் முதலியவற்றை யெல்லாம் சேர்த்து வைத்து அவனுடைய விவாஹத்துக்கு முன் இருபது, இருபத்தி இரண்டு வயசில் பூணூல் போடும் போது காலம் தள்ளிச் சொல்லுகிறோமல்லவா?இப்படிப் பின்னால் காலம் தள்ளுவதற்குப் பதில், முன்பாகவே (அட்வான்ஸாகவே) பிராம்ம விவாஹக்காரன் இந்த மந்திரங்களைச் சொல்லி விடுகிறான்.

இதற்கு ஒரு மீஜ்ஜீனீஜீறீமீ (உதாரணம்) சொல்கிறேன். பிரம்மசாரி செய்கிற ஸமிதாதானத்தில் தனக்கு நல்ல பிரஜை ஏற்படவேண்டும் என்பதும் அநேக வேண்டுதல்களில் ஒன்றாக வருகிறது. இதைப் பார்த்து நம் சீர்திருத்தக்காரர்கள், "பிரம்மச்சாரியாக இருக்கும்போதே தகப்பனாராகிவிட்டு அப்புறம்தான் விவாஹம் பண்ணிக் கொண்டு கிருஹஸ்தனாக வேண்டும் என்பதே வேதத்தின் அபிப்ராயம்"என்று சொன்னால் எத்தனை அஸம்பாவிதமாக இருக்கும்?பிற்பாடு என்றைக்கோ உண்டாக வேண்டியதற்கு இப்போதே ஒரு பிரம்மச்சாரி பிராத்தனை பண்ணுகிறான் என்பதுதானே சரியான அர்த்தம்?அப்படித்தான் விவாஹ விஷயமாகச் சீர்த்திருத்தக்காரர் காட்டும் வேத வாக்கியமும்.

இந்த மந்திரங்கள் பெண்ணுக்கு வயசு வந்த பின் நடக்கிற மற்ற விதக் கல்யாணங்களிலோ விவாஹ ஸந்தர்ப்பத்திலேயோ யதார்த்தமாகச் சொல்வதற்குப் பொருத்தமாக இருக்கின்றன.

இதுதான் ரைட் ஆனரபிள் சாஸ்திரி கட்சிக்கு நாம் சொல்கிற பதில்.

பெண்ணுக்கு வயசு வந்த பின்னும் செய்யப் படும் சில வகைக் கல்யாணங்களை அங்கீகரித்து மேற்படி மந்திரங்கள் விவாஹத்தில் சேர்க்கப்பட்டிருப்பதால், எல்லா விவாஹமும் வயசு வந்த பின்தான் செய்ய வேண்டும் என்று அர்த்தம் ஆகாது என்று சொல்கிறோம்.

விவாஹங்களில் மிக உத்தமமானதாக சாஸ்திரங்களில் சொல்லப்படும் 'பிராம்ம ம்'என்பதன்படி, கல்யாணப் பெண் ரிதுவாகாதவளே என்பதற்கு அழுத்தமான சான்றாகவும் விவாஹச் சடங்கின் கடைசியில் ஒரு வேத மந்திரமே இருக்கிறது.

வஸ்திரம் கட்டிக் கொள்ளத் தெரிந்த பின் ரிதுவாகும் வரையுள்ள இடைக்காலத்தில் ஒரு பெண் குழந்தை கந்தர்வனின் ஆதிக்கத்தில் இருக்கிறாள் என்று சொன்னேனல்லவா?அந்த கந்தர்வனின் பெயர் விச்வாவஸு. இந்த விச்வாவஸுவைப் பார்த்து கல்யாணப் பிள்ளை சொல்கிற மந்திரம் தான் நான் இங்கே குறிப்பிடுவது. "ஏ விச்வாவஸுவே! உன்னை நமஸ்காரம் பண்ணுகிறேன். நீ இந்தப் பெண்ணை விட்டு எழுந்திருந்து போ. வேறொரு பெண் குழந்தையிடம் போய்ச் சேரு. இவளுக்கு நான் பதியாகி விட்டேன் அல்லவா?அதனால் என்னிடம் இவளைக் கொடுத்து விட்டு நீ, தகப்பனாரின் வீட்டில் இருப்பவளும் விவாஹம் ஆகாதவளுமான இன்னொரு பெண்ணைச் சென்றடைவாயாக" என்று இங்கே கல்யாணப்பிள்ளை வேண்டிக் கொள்கிறான்.

வரனானவன் விவாஹத்தின் போது கல்யாணப் பெண்ணை விட்டுப் போகுமாறு கந்தர்வ பூஜை பண்ணி அந்த கந்தர்வனிடம் பிரார்த்திக்கிறான் என்பதிலிருந்து அவள் இன்னம் அக்னியின் ஆதிக்கத்தின் கீழே வரவில்லை, கந்தர்வனின் ஆதிக்கத்தில் இருக்கிறாள், அதாவது வயசுக்கு வரவில்லை என்றுதானே தீர்மானமாக முடிவாகிறது?

"எல்லாம் சரி. ஆனால் மநுஸ்மிருதியிலிருந்து சீர்திருத்தக்காரர்கள் ஹீஷூலஷீமீமீ செய்தார்களே!ரிதுவாகி மூன்று வருஷம் வரனை எதிர்பார்த்துவிட்டு, அப்புறம் ஒரு பெண் தானே புருஷனைத் தேடிக் கொள்ளலாம் என்று அந்த ச்லோகம் சொல்கிறதே!அதற்கென்ன ஸமாதானம்?"

ஸமாதானம் இருக்கிறது. "வயசுக்கு வருமுன் கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிட வேண்டும்"(ப்ரதானம் ப்ராக்ரிதோ:) என்பதே தர்மசாஸ்திரத்தின் பொது விதி. அந்த விதி தப்பிப் போகிற கேஸ்களில் என்ன செய்வது?ஒரு பெண்ணை வரனாகத் தேடி வராவிட்டால் அவளுடைய பிதாவோ, பிராதாவோதான் பிள்ளை பார்த்து கல்யாணம் பண்ணித் தரவேண்டும். ஆனால் இப்படிச் செய்யாமல் அவர்கள் பாட்டுக்கு பொறுப்பில்லாமலிருந்தால்?அல்லது ஒரு பெண் நாதியில்லாமல், கார்டியன் இல்லாமல் இருந்தால்?அப்படிப்பட்டவளைப் பற்றித்தான் ரிதுவானதற்கு மூன்று வருஷத்திற்கு பின் தானே புருஷனைத் தேடலாம்

என்று மநுஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. அதாவது, நாதியே இல்லாதவளுங்கூட, வயசுக்கு வந்தபின் உடனே தானாக புருஷனுக்காகப் புறப்படாமல், யாராவது பந்து மித்ரர்களோ, அண்டை அசலாரோ, அபிமானமுள்ளவர்களோ தனக்காக மாப்பிள்ளை தேட மாட்டார்களா என்று பொறுத்திருந்து பார்த்துவிட்டு, அப்புறம்தான் தானாகவே தேடலாம் என்று சொல்லியிருக்கிறது.

சிஷீஸீமீ மீஜ்மீ (ஸந்தர்ப்பம்)-ஐப் பார்க்காமலும், முன்னுக்குப் பின் வருவதை நீஷீனீஜீணீக்ஷீவீமீ வீஸ்மீ-ஆக (ஒப்பிட்டுப் பார்க்காமலும் சாஸ்திர வசனங்களையும் வேத மந்திரங்களையும் துண்டாக எடுத்து வைத்துக்கொண்டு பார்ப்பதால்தான் சீர்திருத்தக்காரர்கள் ஆசாரசீலர்களாக உள்ளவர்களின் வழக்கத்திலிருப்பதற்கு மாறானதையே சாஸ்திரோக்தமானது என்று வாதிக்கும்படி ஆகியிருக்கிறது.

சாக்ராயண உஷஸ்தி என்ற ரிஷிக்கு பால்ய (ரிதுவாகாத) மனைவியிருந்ததாக உபநிஷத்திலேயே (சாந்தோக்யம் 1.10.1) இருக்கிறது. இம்மாதிரி விஷயங்களை ஆர அமர சரியாகப் பார்க்காமல் சீர்த்திருத்தக்காரர்கள் பதட்டப்பட்டுப் பேசி விடுகிறார்கள்.

இருந்தாலும் முன்பெல்லாம் சீர்திருத்த வாதங்களுக்கு எதிர் வாதம் செய்ய ஜனங்களுக்குத் தெரியாவிட்டாலுங்கூட, "இதுவரை பெரியவர்கள் எப்படிப் பண்ணி வந்திருக்கிறார்களோ அப்படியே போவோம்;புதிதாக ஒன்றை எடுத்துக் கொள்ள வேண்டாம்"என்ற அபிப்ராயம் இருந்தது. அதனால்தான் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி இந்த கல்யாண வயசு க்ஷீமீயீஷீக்ஷீனீ விஷயமாக இரண்டு முறை கவுன்சிலில் மசோதா கொண்டு வந்தும் அது நிறைவேறவில்லை. அப்புறம் தான் ஸார்தா என்பவர், இப்போது நாம் "சாரதா சட்டம்"என்று ஒரு அம்மாள் போட்ட

சட்டம் மாதிரி நினைத்துக் கொண்டிருக்கிற இந்த சட்டத்தைக் கொண்டு வந்தார். அதற்குக்கூட சரிக்குச் சமன் ஆதரவாக 50%, எதிர்தரப்பில் 50% என்றுதான் வோட் விழுந்தது. அந்த ஸந்தர்பத்தில் பிரிட்டிஷ் ஸர்க்காரானது, "காங்கிரஸ் கேட்கிற ஸ்வயராஜ்யத்தைத்தான் நாம் தரவில்லை;அவர்களுக்குத் திருப்தியாக, மதத்தைக் கெடுப்பதற்காவது ஸஹாயம் செய்யலாம்"என்று நினைத்து நாமினேட்டட் மெம்பரை வைத்து இந்த மசோதாவுக்கு ஆதரவாக வோட் பண்ணச்சொல்லி, விவாஹ வயதை உயர்த்தியேயாக வேண்டும் என்பதைச் சட்டமாகச் செய்து விட்டார்கள். அதாவது ஜீஔடீறீவீநீ ஷீஜீவீஸீவீஷீஸீ (பொது ஜன அபிப்ராயம்) -ஐ மீறி கவர்மென்ட் பலத்தினாலே அந்த மசோதா 'பாஸ்'ஆயிற்று.

இப்போது நிலைமை ரொம்பவும் மாறிவிட்டது பழைய பழக்கங்களில் பக்தி விச்வாஸம் போய்விட்டது. பிரிட்டிஷ் ராஜ்யத்தில் சாரதாச் சட்டம் அமுலானவுடன், அவர்கள் கொடுத்திருந்த மஹாமஹோபாத்யாய டைட்டிலை "வேண்டாம்"என்று துறந்த பண்டிதர்கள் உண்டு. வங்காளத்திலிருந்த பஞ்சாணன தர்க்க ரத்ன பட்டாசார்யரும், திருவிசநல்லூரிலிருந்து காசிக்குப் போய் ஸெட்டில் ஆகிவிட்ட

லக்ஷ்மண சாஸ்திரி (தமிழ்நாட்டு பிராம்மணர் என்று தெரிவதற்காக 'லக்ஷ்மண சாஸ்திரி திராவிட்'என்றே பெயர் வைத்துக் கொண்டவர்) என்பவரும் இப்படிப்பட்ட தியாகத்தைச் செய்தார்கள். இப்போது நம் ஸ்வதந்திர இந்தியாவில் ராஜாங்கத்தால் சாஸ்திர விஷயங்களில் செய்யப்படும் மாறுதல்களைப் பார்த்து இப்படிக் குமறி எழுகிற உணர்ச்சி யாருக்கு இருக்கிறது?

நம் குழந்தைகளுக்கு சாஸ்திர தாத்பரியங்களை முழுக்கவும் நன்றாகச் சேர்ந்துப் பிடித்துப் பார்த்துச் சொல்ல வேண்டும். இங்கே ஒன்றும், அங்கே ஒன்றும் பார்த்தால் நீஷீஸீயீறீவீநீமீ வீஸீ-ஆக (முரணாக)த்தான் இருக்கும். 'வேதத்தில் றீஷீஸ்மீ னீணீக்ஷீக்ஷீவீணீரீமீதான் சொல்லியிருக்கிறது என்கிற அளவுக்கு அரை குறை ரிஸர்ச் கொண்டு விட்டு விடுகிறது!சாஸ்திரங்களைப் பூராவாகப் பார்க்கவேண்டும். ஒன்றை எடுத்துக் கொள்ளும்போது அது சொல்லப்பட்ட ஸந்தர்பத்தைப் பார்க்க வேண்டும்;அதற்கு முன்னும் பின்னும், மற்றும் இதே விஷயமாக இதர இடங்களிலும் என்ன சொல்லியிருக்கிறது என்றெல்லாம் தீர்க்கமாகப் பார்த்து, விசாரித்தே, முடிவு சொல்ல வேண்டும்.

பிராம்ம விவாஹம் எல்லா ஜாதியாருக்கும் உண்டு. ஆனால் பிராம்மணர் தவிர மற்ற ஜாதியாருக்கு வேறு விதமான விவாஹமும் உண்டு. அதாவது ரிதுமதி விவாஹமும் அநுமதிக்கப்பட்டிருக்கிறது. சரீர ஸம்பந்தமான ஸௌக்கியங்களுக்கு முக்கியத்வம் தருவதானால் மற்ற விவாஹங்களும் செய்யலாம். ஆத்மாபிவிருத்திக்கு பிராம்ம விவாஹமே எடுத்தது.

Mõ£ý‹ â¡ø ú‹vè£óˆ¶,°Š ðô àˆ«îêƒèœ à‡´. ÜF«ô º,òñ£ù å¡Á, vFgèÀ,°„ Cˆî ðK²ˆF ãŸðìŠ ðF â¡ø å¼ H®Š¬ð ãŸð´ˆFˆ î¼õ¶. Ü¬îŠ H®ˆ¶, ªè£‡«ì Üõ˜èœ è¬ìˆ«îP M´õ£˜èœ. º¼Mì‹ Hó‹ñê£K Cwò¡ êóí£èF ð‡EŠ ð£ð GM¼ˆFò¬ì‰¶ ²ˆî ñù«ú£´ Þ¼,Aø ñ£FK Þ‰î, è¡Q¬è»‹ ÞõQì‹ Þ¼,è «õ‡´‹. ï‹º¬ìò è˜ñ£, ü¡ñ£ â™ô£õŸÁ,°‹ è£óí‹

மனஸின் சேஷ்டைதான். இந்த மனஸை வைத்துக் கொண்டு அதனுடைய இச்சைகளைப் பூர்த்தி பண்ணப் பாடுபடுவதில் தான் பாபங்கள் ஸம்பவிக்கின்றன;ஜன்மாக்கள் ஏற்படுகின்றன. மனஸை நிறுத்திவிட்டால் கர்மா இல்லை, ஜன்மா இல்லை, மோக்ஷம்தான். மனஸை நிறுத்துவது மஹாசிரமமான காரியம். அஷ்ட மஹாஸித்திகளைக் கூட அடைந்து விடலாம்;சிந்தையை அடக்கிச் சும்மா இருப்பதுதான் முடியாத காரியம் என்று (தாயுமானவர்) பாட்டுக்கூட இருக்கிறது. மனஸை நிறுத்த முடியாவிட்டாலும், அதைச் சொந்த விருப்பு, வெறுப்புகளுக்காக ஆடும்படி விடாமல் இன்னோரிடத்தில் அர்ப்பணம் பண்ணி விட்டால், அப்போது 'தனக்காகப் பண்ணிக் கொள்வது'என்பதால் ஏற்படும் பாபமும் ஜன்மமும் இல்லாமல் போகும். இன்னொருத்தர் ஆட்டி வைக்கிறபடி அவரிடம் மனஸை ஸமர்ப்பித்து விட்டோமானால் நமக்கு கர்த்தா என்கிற பொறுப்பில்லை. அதனால்

ஏற்படும் பாப புண்யமும் ஜன்மாவில் இல்லை. "என் செயலாவது யாது ஒன்றுமில்லை"என்று ஈச்வரனிடத்தில் இப்படித்தான் மனஸை அர்ப்பிக்கச் சொல்கிறார்கள். ஆனால் அதைச் செய்பவர் கோடியில் ஒருத்தர்தான். இதையே ஒரு பெண்ணுக்குப் பதியை ஈச்வரனாகக் காட்டியிருக்கிற நம் தர்மத்தில் ஏராளமான ஸ்திரீகள் ஸுலபமாகச் செய்து கடைத்தேற்றியிருக்கிறார்கள்.புருஷனை ஈச்வரனாக நினைப்பது கணவனே கண் கண்ட தெய்வம் என்ற கொள்கை, கல்லானாலும் கணவன் என்ற அடக்க ஸ்வபாவம், பாதிவ்ரதயம் (கற்பு), ஸௌமங்கலியம் (சுமங்கலித் தன்மை), ஸுமங்கலியாகவே செத்துப் போக வேண்டும் என்ற தீவர பிரார்த்தனை ஆகிய இவைகள் அநாதி காலமாக நம் தேசத்து ஸ்திரீ தர்மமாக, நம் தேசத்துப்பெண்களின் உத்தம ஜீவனத்துக்கு உயிர் நிலையாக இருந்து வந்திருக்கின்றது.

எந்தத் தேசத்திலும் உத்தம ஸ்திரீகள் இருந்திருப்பார்கள்தான். எந்த மதத்திலும் உயர்ந்த குணசாலினிகள் தோன்றியிருப்பார்கள். என்றாலும் மேலே சொன்ன விஷயங்கள் நம் தேசத்தின், நம் மதத்தின் நம் கல்ச்சரின் ஜீவாதாரமான ஒரு

அம்சமாக இருப்பது போல் மற்ற இடங்களிலே சொல்ல முடியாது. 'நாகரிகம்' என்று சொல்லி கொண்டு இதை மாற்ற நினைப்பது நம்முடைய மஹோன்னதமான பண்பாட்டுக்கே ஆதாரமாக இருக்கப்பட்ட ஒரு ஆணிவேரை வெட்டி விடுகிற மாதிரியாகும்.

காதல் கீதல் என்று சித்த விகாரம் ஏற்படாமல், சரீர நினைப்பும் காமமும் வருகிறதற்கு முந்தியே ஒருத்தனை பர்த்தாவாக அடைந்தால்தான் குழந்தை உள்ளத்தில் உண்டாகிற பணிவினால் அங்கே உண்மையான சரணாகதி செய்து, "இவனே நமக்கு குரு;இவனே நமக்கு ஈச்வரன்"என்று இருக்க முடியும்.

ஆந்திர தேசத்திலும் மஹாராஷ்டிரத்திலும் இன்றைக்கும் ஸ்திரீகளுக்கு விரதங்கள் அதிகம். அவற்றில் ஒன்று கன்னிகைகள் பரமேச்வரனையே பதியாக நினைத்துப் பூஜிப்பது. பிறகு ஒருத்தன் பதியாக வருகிறான். அவனையே பரமேச்வரனாகப் பூஜிப்பது, இப்போது பத்னியாகிவிட்ட அந்த கன்னிகைக்கு விரதமாக ஆகிறது. பரமேச்வரனைப் பதியாகப் பூஜித்து, முடிவில் எவன் பதியாக வந்தாலும் அவனே பரமேச்வரன் என்று பாவித்துவிட வேண்டியது.

கேள்வி கேட்காமல், நம்பிக்கையின் பேரில்தான், அதாவது பால்யத்தில்தான் ஒருத்தனைப் பரமேச்வரனாக நினைக்க முடியும். விவரம் தெரியாத போது வந்த இந்த நம்பிக்கை மனஸில் ஊறி ஊறி, நம் ஸ்வாபாவிகமான ஸ்திரீ தர்மத்தினால் மனஸில் உறுதிப்பட்டு விடுவதால், விவரம் தெரிந்த பின்னும் பதியே பரமேச்வரன் என்ற பக்தி நிலைத்து நின்றுவிடும். அவனிடத்திலேயே தன் மனஸை அர்ப்பணம் பண்ணித் தனக்கென்று மான அவமானம் எதுவும் இல்லாமல் ஒருத்தி இருந்துவிட்டால் அவளுடைய அஹம்பாவம் கரைந்து போய்விடுகிறது. அதுதான் ஜனன நிவிருத்தி, அது தான் மோக்ஷம். பக்தி, ஞானம், தபஸ், பூஜை, யக்ஞம்,

யோகம் என்ற எல்லாம் இந்த அஹங்கார நாசத்தைத்தான் உத்தேசமாகக் கொண்டிருக்கின்றன. இது ஒரு ஸ்திரீக்குப் பதிபக்தியால் ஸுலபமாக, இயற்கையாக ஸித்தித்து விடுகிறது.

இப்படி பாவித்து சரணாகதி பண்ணின நளாயினி, அநஸூயை, ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியான ஸீதாதேவி, ஸதி என்ற பெயர் பெற்ற தாக்ஷாயிணியான பராசக்தி, ஸாவித்ரி, கண்ணகி, திருவள்ளுவரின் பத்தினி வாஸுகி முதலானவர்களைத்தான் நம் தேசத்தில் தெய்வங்களுக்கும் மேலாக வைத்திருக்கிறது. அவர்களை நினைத்தாலே நமக்கு வேறெதிலும் உண்டாகாத பெருமைப் புளகாங்கிதம் உண்டாகிறது- நமஸ்காரம் பண்ணுகிறோம். ஏன் இப்படி இருக்க வேண்டும் என்றால் சொல்லத் தெரியாது!"பதியே ஈச்வரன் என்பது பேத்தல்;ஸூபர்ஸ்டிஷன்;பெண்களை அடக்கி, நசுக்கி வைக்கிற கொடுமை" என்று

எத்தனை ஆக்ஷேபித்தாலும், இப்படி இருப்பதுதான் இந்த தேசாசாரம். பாரத

தேசம் என்றால் இங்கே ஹிமோத்கிரியும் கங்கையும் இருக்கிறதோ இல்லையோ?ஏன் இருக்க வேண்டும் என்றால் என்ன சொல்வது?அப்படித்தான் நம் தேசத்துக் கற்பரசிகளின் சரணாகதி வாழ்க்கையும். ஆல்ப்ஸ் மலையை ஐரோப்பியர்கள் நினைக்கிற மாதிரிதானா நாம் கைலாஸத்தை நினைக்கிறோம்?மிஸிஸிபியை அமெரிக்காக்காரன் நினைக்கிற மாதிரி தானா நாம் கங்கையை நினைக்கிறோம்?அதற்கெல்லாம் மேலாக இவற்றிலே தெய்விகத்தை அநுபவிக்கிறோம் அல்லவா?அப்படியேதான் அவர்களுக்கு ஒரு குடும்ப ஏற்பாடாக மட்டும் உள்ள தாம்பத்தியத்தில் நம் சாஸ்திரங்கள் ஒரு பெண்ணுக்கு ஆத்மாவையே சுத்தப்படுத்தித் தருகிற பரம ஸாதனமான சரணாகதியைப் பிசைந்து வைத்திருக்கிறது. சமூக ரீதியில் பெண்களுக்கு நல்லது செய்வதாக நினைத்துக் கொண்டு இதற்குக் காரணமான பால்ய விவாஹத்தை மாற்றுவதனால் அவர்களுடைய ஆத்மாபிவிருத்திக்கு பெரிய ஹானியை உண்டாக்குகிறோம். சின்ன ஸௌகரியத்தை ஏற்படுத்திக் கொடுத்து மஹா பெரிய பிரயோஜனத்தை நஷ்டப்படுத்துகிறோம்.

பால்ய விவாஹம் பௌதிகமாகக் கெடுதல் என்பது வெறும் பேச்ச. குழந்தையாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டாலும் அப்புறம் அவள் சரீர ரீதியில் பக்குவமான பிறகுதான் தாம்பத்தியம் பண்ண அழைத்துக் கொள்ளப்படுவாள். அதுவும் தவிர தர்ச பூர்ணம் (அமாவாஸ்யை, பௌர்ணமி) போன்ற அநேக தினங்களில் பிரம்மசரிய நியமம் சொல்லியிருப்பதால் சரீரம், சித்தம் இரண்டுமே புஷ்டியோடு இருக்கும். இப்போதுதான் இந்தக் கட்டுப்பாடுகள் போய், சித்தவிகாரம், தேக பலஹீனம் இரண்டும் அதிகமாகி நரம்பு ஸம்பந்தமான டாக்டர்கள் நன்றாக விருத்தியாகும்படி ஆகியிருக்கிறது.

பால்ய விவாஹத்தினால் பால்ய விதவைகள் என்ற கொடூரமான களங்கம் ஏற்பட்டு ஹிந்து மதத்தையே மாசுபடுத்திவிட்டது என்பதுகூட மிகையான வாதம்தான் (மீஜ்ணீரீரீமீக்ஷீணீமீ'வீஷீஸீ) பால்ய விதவைகள் இருக்க வேண்டுமானால் அவர்களுடைய கணவன்மார்கள் உயிரோடு இருந்தால் பதினைந்து வயசிலிருந்து

இருபத்தைந்து வயசுக்குள் இருப்பார்கள். நான் கேட்டறிந்த மட்டில் இந்த 15-25 வயசு ணீரீமீ-ரீக்ஷீஷீ�ுஜீ-ல் சாவு ஏற்படுவது ரொம்பவும் குறைச்சல்தான். எனவே பால்ய விதவைகள் சொல்பமாகவே இருந்திருப்பார்கள். இல்லவே இல்லை என்று நான் சொல்லவில்லை. ஒரு குழந்தை வைதவ்யம் அடைந்தது என்றால்கூட மனஸுக்கு வேதனையாகத் தான் இருக்கிறது. ஆனால் மொத்த பலனை பார்க்கும்போது இதற்கெல்லாம் விட்டுக் கொடுக்க வேண்டியதுதான்.

இப்போது பெண்ணுக்கு இருபது வயசுக்கு மேல் கல்யாணம் செய்து கொடுக்கிறபோதும் விதி இருந்தால் உடனே வைதவ்யம் வரத்தான் செய்கிறது. ஒரு ரயில் ஆக்ஸிடென்ட், ப்ளேன் ஆக்ஸிடென்ட் என்கிறபோது கல்யாணமாகி

ஒன்று, இரண்டு மாஸங்களிலேயே ஜீவனை இழந்தவர்களும் அதில் பலர் இருப்பதைப் பார்த்து ரொம்பவும் கஷ்டப்படுகிறோம், வைதவ்யத்தைத் தடுப்பதற்காக பால்ய விவாஹத்தைத் தடுத்து விடலாம் என்றால், பிற்பாடு விவாஹத்தைத் தடுத்து விடலாம் என்றால், பிற்பாடு வயசு வந்தபின் கல்யாணமானவுடனே வைதவ்யம் வராமல் 'காரன்டி'தர நமக்குச் சக்தியில்லையே!

நம் தேசாரப்படி ஸ்திரீகள் பதியை ஈச்வரனாக பாவித்து அதன் மூலமாக மஹா பெரிய பலனான ஜன்ம நிவிருத்தியை அடைய வேண்டுமானால் சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதுதான் வழி. அதை விட்டுவிட்டு, "பெண்கள் நிறையப் படிக்கிறார்கள்;உத்யோகம் பார்க்கிறார்கள்;தங்கள் மனசுப்படி கல்யாணம் பண்ணிக் கொள்கிறார்கள்;இதெல்லாம் நம்முடைய ஜீக்ஷீஷீரீக்ஷீமீஉஉ (முன்னேற்றம்)"என்று சொல்பவர்கள் சொன்னாலும், எனக்கென்னவோ இந்தப் பெண்கள் இப்படிப் பலர் கண்ணில் பட்டுக்கொண்டு, சித்த விகாரங்களுக்கு ரொம்பவும் ஆளாகிற சூழ்நிலையிலே மாட்டிக் கொண்டிருக்கிறார்களே என்றுதான் ஓயாத கவலையாக, பயமாகக் கூட, இருக்கிறது.

'è†´Šªð†®è÷£è Þ¼‰¶ ªè£‡´ ÞŠð® ªð‡è¬÷ è†´Šð£´ ð‡E, ð£™ò Mõ£ý‹, ð£™ò ¬õîýšò‹ «ð£¡ø ªè£ÇóƒèÀ,° Ý÷£‚°Aø£˜è«÷'â¡Á Y˜F¼ˆî, è£ó˜èœ «è£Hˆ¶, ªè£‡´, ªð‡èÀ¬ìò êÍè àK¬ñ «ð£Aø¶ â¡Á Ü¿î£™, âù‚«è£, 'Þõ˜èœ Y˜F¼ˆî‹ â¡Aø ªðòK™ ï‹ ªð‡èO¡ ñèˆî£ù °ôîùñ£ù èŸ¹,° ý£Q à‡ì£°‹ð®ò£ù «ý¶è¬÷ ãŸð´ˆ¶Aø£˜è«÷' â¡Á Ü¬îMì, «è£ð‹ õ¼Aø¶;Ü¿¬è õ¼Aø¶. 'vFgèœ ªè†´Š «ð£ù£™ °ôþò‹î£¡;«ô£è«ñ «ð£Œ M´‹;â™ô£¼‹ ïóèˆ¶,°Š «ð£è«õ‡®ò¶î£¡:

'ஸ்த்ரீஷுதுஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ண ஸங்கர:|

ஸங்கரோ நரகாயைவ'

இக்காலப் பெண்களும் இதற்கு ஸம்மதித்திருக்கிறார்களே, பெற்றவர்களும் அங்கீகரித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே என்பதுதான் மனஸைச் சுடுகிறது.

எல்லா ப்ராக்ரெஸ்ஸையும் எல்லா அட்வான்ஸையும் விட நம் பெண் குழந்தைகள் கெட்டுப் போய்விடக் கூடாதே என்பதுதான் எனக்குப் பெரியதாக, அதே கவலையாக, இருக்கிறது. படிப்பதாலும் உத்யோகம் பார்ப்பதாலும் அப்படியொன்றும் நம் பெண்கள் சித்தம் கெட்டு விடவில்லை என்று எனக்கு ஆறுதல் சொல்கிறார்கள். எனக்கும் அந்த நம்பிக்கை போகவில்லை. ஆனாலும் இப்படி கண்டபடி திரிகிறார்களே, கெட்டுப் போக நிறைய சான்ஸ் இருக்கிறதே, கெடுப்பதற்கு என்றே ஸினிமாவும் நாவலும் பத்திரிகைகளும் இருக்கிறதே என்று

பயப்படுகிறேன். அவ்வப்போது கன்னாபின்னா என்று நடந்து விடுகிற சங்கதிகளும் வருகின்றன. தப்பு நடந்து பிறகு அதை என்ன பண்ணி மாற்றுகிறது? இப்படி ஒன்று, இரண்டு கேஸ்கள் கூட நசக்க இந்த தேசத்தில் விடலாமா? என்று மனஸூ கொதிக்கிறது. தாயார் - தகப்பனார்களுக்குத் தாஙகள் பெண்களைப் பற்றி இருக்க வேண்டிய கவலை, பயம் எல்லாவற்றையும் சேர்த்து வைத்து நான்தான் படுகிறேன் போலிருக்கிறது. எல்லாரும் கெட்டுப் போக வேண்டாம். ஆனாலும் ஒரு பால்ய விதவை உண்டானால்கூட களங்கம் என்று சீர்திருத்தக்காரர் சொன்னால், ஒரே ஒரு பெண் கெட்டுப் போனால்கூட அதைவிட ஆயிரம் மடங்கு களங்கம் என்று நான் பயப்படுகிறேன்.

**வேதம் ஒதிய வேதியர்க்கோர் மழை**

**நீதி மன்னர் நெறியினர்க்கோர் மழை**

**மாதர் கற்புடை மங்கைக்கோர் மழை**

**மாதம் மூன்று மழையெனப் பெய்யுமே.**

என்று சொல்லியிருக்கிறது. இதிலே 'நீதி மன்னர் நெறி' என் ஜூரிஸ்டிக்ஷனில் (அதிகார எல்லைக்குள்) இல்லாத விஷயம். அதனால் அதைப் பற்றி நான் கவலையோ, ஸந்தோஷமோ படுவதற்குப் பொறுப்பாளி இல்லை. ஆனால் வேதியரை வேதம் ஓதப் பண்ணுவதும், மாதர்களை கற்பு நெறி தவறக்கூடிய 'சான்ஸ்'களுக்குக் காட்டிக் கொடுக்காமல், காமம் புகுமுன்பே பதியை ஈச்வரனாக பாவிக்கக் கொடுத்து, அப்புறம் அவன் ஒருத்தனையன்றி மனஸ் கொஞ்சங் கூடச் சலிக்காத பாதிவ்ரயத்தை ஏற்படுத்தித் தருவதும் என் பொறுப்புதான். இந்த இரண்டுக்கும் என்னாலானதைச் செய்ய வேண்டும் என்றுதான் ஒயாமல் நினைத்துக் கொண்டு எதையாவது திட்டங்களைப் போட்டுக் கொண்டிருக்கிறேன். Goal ரொம்பவும் எட்டத்தில்தான் இருக்கிறது. என் பிரயத்தனத்தைவிட ஜாஸ்தி வேகத்தோடு அது விலகி விலகிப் போய்க் கொண்டேயிருக்கிறது. அதற்காக இந்த ரேஸில் நான் ஒய்ந்து விடக்கூடாது. அல்லது இப்போது வந்திருக்கிற நாகரிகப் போக்குகள் தான் சரி என்று 'ஆமாம் பூசாரி' யாகத் தலையாட்டி விடவும் கூடாது. 'போனது போனது தான்;சீர் செய்து சாத்தியப்படாது. இப்போது ஏற்பட்டிருக்கிற கலிப் பிரவாஹத்தைத் தடுத்து மாற்றுவது நடக்காத காரியம்'என்று விட்டு விடுவதற்காக என்னை இங்கே (பீடத்தில்) உட்கார்த்தி வைத்திருக்கவில்லை. அநாதி காலமாக இந்த தேசத்தில் உயர்ந்த நிலையில் இருந்து வந்திருப்பதும், இரண்டாயிரம் வருஷமாக இந்த மடம் பரிபாலித்து வந்திருப்பதுமான வேத அபிவிருத்தியையும் ஸ்திரீ தர்மங்களையும் என் காலத்தில் நான் வாயை மூடிக்கொண்டு வாரிக்

கொடுத்துவிட்டு 'ஜகத்குரு'பட்டம் சூட்டிக்கொண்டு, ஸாக்ஷாத் பகவத்பாதாளின் பெயரை வைத்துக் கொண்டிருந்தால் அதைவிடப் பெரிய தோஷம் இல்லை. பகவான் (கீதையில்) சொன்ன மாதிரி ஜயாபஜயம் அவன் கையில் இருக்கிறது என்று விட்டு விட்டு, நான் பாட்டுக்கு முன் வைத்த காலைப் பின் வைக்காமல், என் பிரயத்தனத்தை விடாமல் பண்ணிக் கொண்டேதான் போக வேண்டும். ரிஸல்ட் என்னுடைய 'ஸின்ஸரிடி'யையும், அந்தரங்க சுத்தத்தையும், தபஸையும் பொறுத்து அமையும். கணிசமான பலன் இதுவரைக்கும் ஏற்படவில்லை என்றால் என் ஸின்ஸிரிடி போதவில்லை, என் மனஸ் சுத்தமாகவில்லை, என் தபஸ் குறைச்சல் என்றுதான் அர்த்தம். லோகம் என்னை எத்தனை ஸ்தோத்திரம் பண்ணினாலும் எனக்கு இப்படித்தான் தோன்றுகிறது.

எல்லாம் போய்விட்டது என்றால் நான் இதைக்கூடச் சொல்ல வேண்டாம்;ஒரு யத்தனமும் பண்ணவேண்டாம், மடத்தைக் கலைத்து விடலாம். ஆனால், போய்விட வில்லை. ஒரு சின்ன பொறி அளவுக்காவது இருக்கிறது. அதுகூட இல்லையானால் நான் இத்தனை சொல்வதைக் கேட்டுக் கொண்டு நீங்கள் இவ்வளவு பேர் உட்கார்ந்து கொண்டேயிருக்க மாட்டீர்கள். நான் சொல்கிறபடி நீங்கள் செய்வதோ, செய்யாததோ ஒரு பக்கம் இருக்கட்டும். என்னை இவ்வளவு தூரம் சொல்லவாவது விட்டு எதிர்த்து கோஷம் போடாமல், பொறுமையோடு கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்களோ இல்லையோ?அதனால்தான் ஒரு பொறியாவது இருப்பதாக நம்பிக்கொண்டு, அதை எப்படியாவது விலா வெடிக்கிற மட்டும் ஊதி ஊதிக் கொஞ்சம் ஜ்வாலை வரும்படிச் செய்ய முடியுமா என்று முயன்று கொண்டிருக்கிறேன். ஜனங்களின் புதுப்போக்குப்படியே நானும் போவது என்றால் அது பகவத்பாதாளுக்குப் பண்ணுகிற துரோகந்தான்.

மனஸிலிருப்பதைக் கொட்டித் தீர்த்தால்தானே நல்லது?பரஸ்பரம் நீங்கள் என்னிடம் பக்தி செய்வதும், நான் ஆசீர்வாதம் செய்வதும் இருக்கட்டும். அது இருந்து கொண்டேதான் இருக்கும். ஆனாலும் இந்த மடம் எதற்காக ஏற்பட்டது என்று சொல்லி, அந்த வழியில் உங்களைப் போகப் பண்ணாமல், உங்கள் பணத்தை மட்டும் நான் வாங்கிக் கொண்டால் அது பிடுங்கியடித்துத் தின்கிற காரியந்தான் என்பதால் மனஸை விட்டுச் சொன்னேன்.

வேத ரக்ஷணத்துக்காகப் பண்ணின முயற்சிகளில், போட்ட திட்டங்களில், பராசக்தியின் அநுக்கிரஹத்தால் ஓரளவு நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறது. வீட்டுக்கு வீடு அத்யயனம் இருக்கும்படி பண்ண முடியாவிட்டாலும், அடுத்த தலைமுறைக்கு அத்யயனம் என்ற ஒன்றே இல்லாமல் போய் விடுமோ என்ற நிலைமை மாறி, இப்போது அநேக வித்யார்த்திகள் தேசம் முழுதும் பல பாடசாலைகளில் அத்யயனம், வேத பாஷ்யம் எல்லாம் படித்துப் பாஸ் செய்து வருகிறார்கள்.

இந்தக் கன்யா விவாஹந்தான் சட்டமாகவே வந்து கையை ரொம்பவும் கட்டிப் போட்டுவிட்டது. அரசாங்கச் சட்டத்துக்கு அடங்கித்தான் ஆகவேண்டும். ஒரு

பெண்ணுக்கு மனோபாவ விகாரம் இல்லாத காலத்திலேயே 'இதுதான் தெய்வம், என்று நினைக்கும்படியாக ஒரு புருஷனின் கையில் பிடித்துக் கொடுத்து, அந்தப் பழக்கம் ஊறிய பிறகு அதாவது விகாரம் உண்டாகிற காலத்தில் தன் சரீரத்தை அர்ப்பணம் செய்து கொள்ளும்படிச் செய்யவேண்டும் என்கிற தர்ம சாஸ்திரத்தின் நிரந்தரமான சட்டத்துக்கு விரோதமாகத்தான் அரசாங்கச் சட்டம் இருக்கிறது. என்றாலும்கூட சட்ட மறுப்பு பண்ணு என்று சொல்வது சரியில்லைதான். அதனால் எறும்பு ஊறக் கல் தேயும் என்கிற மாதிரி நாம் விடாமல் எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருந்து அவர்களுடைய மனஸ் மாறுகிறதா என்று பார்க்க வேண்டியதுதான்.

நாம் இப்போதே செய்ய வேண்டியது

அது ஆகிற போது ஆகட்டும். நாம் உடனே பண்ண வேண்டியது என்ன?அவர்கள் 14 வயசு, 16 வயசு, 18 வயசு என்று ஏதோ ஒரு வரம்பு வைத்திருந்தால், அந்த வரம்பு தாண்டின உடனேயாவது கல்யாணத்தைப் பண்ணி விடுவதற்கு முன் கூட்டியே வரன் பார்த்து மற்ற ஏற்பாடுகளையெல்லாம் பண்ணி வைத்துக் கொள்ள வேண்டும்.

எவ்வளவுக்கெவ்வளவு குறைந்த வயசில் கல்யாணம் பண்ண இடமிருக்கிறதோ அவ்வளவு குறைந்த வயசில் பண்ணி விட வேண்டும்.பெண்கள் நீண்ட கால்ம் மனோவிகாரப்பட்டுக் கொண்டிருக்கும்படி விட்டால் அது நமக்கு பாபம் என்கிற பய உணர்ச்சியோடு இந்த விஷயத்தில் இனியாவது காரியம் செய்யவேண்டும். தானே தட்டிப் போனால் வேறு விஷயம். புருஷ யத்தனம் இல்லாமலிருந்தால் அது பெரிய தப்பு.

அப்படியே எவ்வளவுக்கெவ்வளவு குறைந்த செலவில் பண்ண வேண்டுமோ அப்படிப் பண்ண வேண்டும்.

## விவாஹத்தில் எளிமை

சாஸ்திரம் விதிக்கிற வயஸை மீறுவதற்குச் சட்டம் காரணம் என்றால், சட்டம் போட்டிருக்கிற 'லிமிட்'டையும் மீறி 25 வயசு, 30 வயசுக்குக்கூடப் பெண்கள் கல்யாணமாகாமல் நிற்பதற்குக் காரணம் விவாஹத்தை பண சம்பந்தமான

விஷயமாக்கியிருப்பதுதான். இப்போது கல்யாணத்தில் நடக்கிற ஆடம்பரங்களும் வரதக்ஷிணை வாங்குவதும் சீர் செனத்தி கேட்பதும் சாஸ்திர ஸம்மதமானதல்ல. செலவழிப்பதற்கு பெண் வீட்டுக்காரன் என்று ஒருத்தன் ஏற்பட்டிருக்கிறான் என்பதால் அவனிடம் ஒட்டக் கறக்க வேண்டும் என்பதற்காகவே பிள்ளைக்கு 'ஸூட் வாங்கித் தா; பூட்ஸ் வாங்கித் தா;ரிஸ்டச் வாட்ச் வாங்கித் தா"என்று பறிமுதல் மாதிரிப் பண்ணி, இந்த அலங்காரங்களோடு ஜானவாஸ் ஊர்வலம் என்று ரொம்பவும் அத்யாவசியமான அம்சம் மாதிரி விவாஹத்துக்கு முதல் தினம் பண்ணுகிறார்களே, இது சாஸ்திரத்தில் அடியோடு இல்லாத விஷயம். இதற்கு ஒரு மந்திரமும் கிடையாது. பழைய நாளில் அதிபால்யத்தில் குழந்தைகளை உத்ஸாஹப்படுத்த வேண்டும், ஹோமப் புகையில் கஷ்டப்படுகிறதுகளே!என்று விளையாடல், நலுங்கு, ஊர்வலம் என்றெல்லாம் வைத்தார்கள், அவ்வளவு தான். "கன்யாம் கனக ஸம்பந்நாம்"என்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதால், தங்கமானது லக்ஷ்மி பிரஸாதத்தை உண்டாக்குவது என்பதால், தங்கத்திலே திருமாங்கல்யம் மட்டும் பண்ணினால் மட்டும் பண்ணினால் போதும். மற்ற நகைகள், வைரத் தோடு முதலியன வேண்டாம். பட்டும் வேண்டாம். நூலில் கூறைப் புடவை வாங்கினால் போதும். ஆந்திர தேசத்தில் இப்படித்தான் செய்கிறார்கள். எல்லாவற்றையும் விட வரதக்ஷிணை தொலைய வேண்டும். ஊர் கூட்டி சாப்பாடு, பாட்டு, சதிர், பந்தல் என்று விரயம் பண்ணுவது போகவேண்டும்.

### தாய்க்குலத்தின் பெருமை

வைரத்திலும் பட்டிலும் நம் ஸ்திரீகளுக்கு எப்படியாவது மோஹம் போய்விட்டால் போதும், நம்முடைய குடும்ப வாழ்க்கையையும் சமூக வாழ்க்கையும் மட்டுமில்லாமல் ஸ்திரீதர்மமே பிழைத்துப் போய்விடும். 'லக்ஷக்கணக்கான பட்டுப் பூச்சிகளைக் கொன்று அதிலிருந்து எடுக்கிற பட்டினால் நமக்கு ஒரு அலங்காரமா? சாப்பாட்டிலே நாம் சைவம் என்று சொல்லிக் கொண்டால் போதுமா?இத்தனை பட்டுப் பூச்சிகளின் கொலை பாவத்துக்கு ஆளாகிறோமே!'என்கிற எண்ணம் பெண்களுக்கு வந்துவிட்டால் போதும். இதிலே இன்னொரு அம்சம், இதனால் வசதியில்லாதவர்களுக்கும் பட்டிலும், வைரத்திலும் ஆசையைத் தூண்டி விடுவது. பிள்ளை வீட்டுக்காரர்கள் "இத்தனை பட்டுப் புடவைகள் வாங்க வேண்டும், வைரத் தோடு போட வேண்டும்"என்றெல்லாம் நிர்ப்பந்தப்படுத்தி அநேகப் பெண்களை கல்யாணமாகாது நிறுத்தி வைக்கும்படி பண்ணுவது பாபம். கல்யாணத்தை economic problem(பொருளாதாரப் பிரச்சனை)-ஆகப் பண்ணியிருப்பது அக்கிரமம். "அக்கிரமம்"என்கிற வார்த்தையைத்தான் சொல்ல வேண்டும். அவரவரும் ஆணோடு பெண்ணோடு பிறந்தவர்கள்தானே?நமக்கும் பெண்கள்

இருக்கிறார்கள். அப்படியிருக்க பிள்ளையகத்துக்காரன் என்று ஆனவுடன், "வரதக்ஷிணை கொண்டா, பாத்திரத்தைக் கொண்டா, நகையைக் கொண்டா, வைரம் போடு, பட்டு வாங்கு"என்று ஷைலக்மாதிரி கன்டிஷன் போட்டுப் பெண் குழந்தைகளை கல்யாணமாகாமல் கண்ணைக் கசக்கும்படியாகப் பண்ணுவதை மன்னிக்கிறதற்கேயில்லை. பெண்ணின் குணம், குலம் திருப்தியாயிருக்கிறதா?'நம் அகத்தை விளங்க வைக்க கிருஹலக்ஷ்மியாக இந்தக் குழந்தை வரவேண்டும்'என்று ஸந்தோஷமாக நினைத்து, எந்த கண்டிஷனும் போடாமல், பணம் காசைப் பற்றி நினைக்காமல் கலியாணம் பண்ணிக்கொள்கிற நல்ல மனஸ் நம் ஜனங்களுக்கு வரவேண்டும். இதில் ஸ்திரீகளின் பங்கு விசேஷமானது. பெண்ணாக பிறந்தவர்களுக்குத்தான் தங்கள் மாதிரியானவர்களிடம் அபிமானமும் அநுதாபமும் இருக்க வேண்டும். தங்கள் பிள்ளைகளுக்குக் கல்யாணம் பண்ணுகிற ஸமயத்தில் பெண்டுகள் குறிப்பாக நான் சொன்ன விதத்தில் உயர்ந்த பண்போடு நடந்து கொள்ளவேண்டும். 'அந்த அகத்தில் அப்படிச் சீர் செய்தார்களே;அந்த பிள்ளைக்கு அவ்வளவு செய்தார்களே;அந்த மாதிரி நம் பிள்ளைக்கு நடக்காவிட்டால் எப்படி?அது நமக்குக் குறைவு இல்லையா?என்ற மாதிரி அசட்டு எண்ணங்களை விட்டுவிட்டு, மற்றவர்கள் செய்த ஜம்பத்துக்கும் டாம்பீகத்துக்கும் நாம் இடம் கொடுக்காமல், இனிமேல் கல்யாணம் பண்ணப் போகிற மற்ற பிள்ளையகத்துக்காரர்களுக்கு நாமே வழிகாட்டியாக இருக்க வேண்டும். 'இதுவரை மற்றவர்வர்கள் செய்த ஜம்பத்துக்கும் டாம்பீகத்துக்கும் நாம் இடம் கொடுக்காமல், இனிமேல் கல்யாணம் பண்ணப் போகிற மற்ற மாதிரி அசட்டு எண்ணங்களை விட்டுவிட்டு, மற்றவர்கள் செய்த ஜம்பத்துக்கும் டாம்பீகத்துக்கும் நாம் இடம் கொடுக்காமல், இனிமேல் கல்யாணம் பண்ணப் போகிற மற்ற பிள்ளையகத்துக்காரர்களுக்கு நாமே வழிகாட்டியாக இருக்க வேண்டும். 'இதுவரை மற்றவர் பண்ணின தப்பை, அக்ரமத்தை ஏன் நாம் follow பண்ண வேண்டும்?இனிமேலே மற்றவர்கள் நம்மை follow பண்ணும்படியாக இப்போது நாம் ஒரு நல்ல மாற்றத்தை ஏற்படுத்தினால் இதுவேயல்லவா நமக்குப் பெருமை?'இப்படிப்பட்ட உணர்ச்சி தாய்க்குலத்துக்கு உண்டாக வேண்டும். 'நம்மகத்துப் பெண்ணுக்கு நாம் வரதக்ஷிணை கொடுத்தோமே!நமக்கே நம் அப்பாவும் அந்த காலத்தில் வரதக்ஷிணை கொடுத்தாரே!அதனால் இப்போது நாமும் வாங்கினால் தப்பில்லை'என்று தாங்களாக நியாயம் கற்பித்துக் கொண்டுவிடக் கூடாது. இந்தக் கெட்ட பழக்கம் - நம் தர்மத்தைச் சிதைக்கிற பழக்கம் எப்படியாவது நிற்க வேண்டும். இதற்காக யாராவது இப்போது தியாகியாக முதலடி எடுத்து வைத்துத்தான் ஆகவேண்டும். எதெதற்கோ தியாகம் என்று கிளம்புகிறார்களே! ஒரு ஊர் இந்த ஜில்லாவில் இல்லாமல் இன்னொரு ஜில்லாவுக்குப் போகிறது என்றால் அதற்காக நூறு பேர், ஆயிரம் பேர் மறியல் செய்து ஜெயிலுக்குப் போகிறார்கள்;எவனாவது ஒருத்தன் கெரஸினைத் தன் மேலே கொட்டிக் கொளுத்திக் கொண்டு, உயிரையே விடுகிறான்!நம்முடைய உயர்ந்த ஸ்திரீ

தர்மத்தைக் காப்பாற்ற நாம் கொஞ்சம் பண நஷ்டம் படக் கூடாதா? "ஸௌந்தர்யலஹரி சொல்கிறோம். அபிராமி அந்தாதி சொல்கிறோம்"என்று பல பெண்கள் என்னிடம் வந்து ஆசிர்வாதம் கேட்கிறார்கள். நல்ல காரியம்தான். ஆசீர்வாதம் பண்ணுகிறான். ஆனால் இதையெல்லாம் விட அதிகமாக அம்பாளுடைய பிரீதியை சம்பாதித்துக் கொள்ள வேண்டுமானால் இவர்கள் வரதக்ஷிணை, வைரத் தோடு, சீர் ஸெனத்தி என்ற கண்டிஷன் இல்லாமல் நான் சொன்ன மாதிர்க கலியாணங்களுக்கு மனப்பூர்வமாக சம்மதித்தால்தான் முடியும். தங்கள் மாதிரியான பெண்கள் வயசு வந்தும் கலியாணமாகாமல் நிற்பது, அதனால் மனோ விகாரப்படுவது, மானபங்கப்படுவது, அப்புறம் மான உணர்ச்சியும் மரத்துப் போய் விடுவது என்றிப்படி ஆகியிருக்கிற நிலைமையை மாற்றுவதற்கு இவர்களுக்கு மனசு இரங்கினால் இவர்களிடம் அம்பாளுக்கு மனசு தானாக இரங்கும். 'நாங்கள் கேட்காமல் பெண் வீட்டுக்காரர்களாகவே இத்தனை கொடுக்கிறோம் என்று ஸ்வயேச்சையாக வந்ததால் வாங்கிக் கொண்டோம்'என்று சொல்வதுகூட தப்பு. ஏனென்றால் ஒருத்தர் பண்ணுவதிலிருந்து இன்னொருத்தர் என்று இது செயின் மாதிரிப் போய்க் கொண்டிருக்கிற வழக்கம். கட்டாயப்படுத்தாமலே ஒருத்தர் வரதக்ஷிணை கொடுத்தாலும் இதனால் அவர் தன் பிள்ளைக்கும் கலியாணம் பண்ணும்போதும் வரதக்ஷிணை எதிர்பார்க்கத்தான் செய்வார். அதனால் அவர்களாகவே கொடுத்தாலும்கூட, "வேண்டாம்"என்று சொல்லுகிற உயர்ந்த மனோபாவம் வரவேண்டும். பெண்வீட்டாருக்கு மிதமிஞ்சிப் பணம் இருந்தால் கூட, "எங்களுக்குப் பணம் தராதீர்கள்". உங்கள் பெண்ணுக்கே ஸ்ரீ தனமாகப் போட்டு வையுங்கள்"என்று சொல்ல வேண்டும். பிள்ளை வீட்டுக்காரர்களின் செலவுக்கு - அதாவது பிள்ளையின் உறவுக்காரர்களுக்கு துணிமணி வாங்குகிறது;இவர்கள் கலியாணத்துக்குப் போகிற பிரயாணச் செலவு முதலானதுகளுக்கு - பெண் வீட்டுக்காரர் 'அழ'வேண்டும் என்பது துளிக்கூட நியாயமே இல்லை. நம் பிள்ளைக்கு தானே கல்யாணம்?நாமே ஏன் அதற்கு செலவழிக்கக் கூடாது?எவனோ கொடுக்கிற பணத்தில் நாம் டிரஸ் வாங்கிக் கொள்வது அவமானம்தான். நமக்கு வக்கில்லை என்றுதான் அர்த்தம். இதையே 'பிள்ளையகத்து ஸம்பந்தி'என்று பெரிய பெயரில் தங்கள் 'ரைட்'மாதிரி மிரட்டி உருட்டிச் செய்து வருகிறோம்!வரதக்ஷிணை நாமாகக் கேட்டாலும் சரி, அவர்களாகக் கொடுத்தாலும் சரி. திருட்டுச் சொத்து மாதிரி என்ற பயம் வேண்டும். இது இரண்டு தரப்போடு நிற்காமல் vicious circle-ஆக (விஷ வட்டமாக) ஸமூஹத்தையே பாதிப்பதால் எப்படியாவது இதை ஸமாப்தி பண்ண வேண்டும்.

### மணப்பிள்ளையின் கடமை

வரனாக இருக்கப்பட்ட பிள்ளைகளும் இதற்கு ஸஹாயம் செய்ய வேண்டும். சாதாரணமாக, மாதா பிதாக்களின் வார்த்தைக்குப் புத்திரர்கள் மாறு சொல்லவே கூடாதுதான். அப்படிச் சொல்லும்படி நான் புத்திரர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாதுதான். ஏற்கெனவே முன்னாளைப் போலப் பிள்ளைகள் அப்பா, அம்மாவுக்குக் கட்டுப்பட்டிராத இக்காலத்தில் நானும் அவர்களைக் கீழ்ப்படியாமல் இருப்பதில் ஊக்கக்கூடாதுதான். இதெல்லாம் எனக்குத் தெரிந்தாலும், விவாஹ விஷயத்தைப் பண ஸம்பந்முள்ளதாகப் பண்ணிப் பிராசீனமான நம் ஸ்திரீ தர்மத்துக்கு உண்டாக்குகிற பெரிய ஹானியைப் பார்க்கிறபோது, இந்த ஒரு விஷயத்தில் மட்டும் பிள்ளைகள் எனக்கு ஆதரவாக அப்பா, அம்மாவிடம் வாதம் பண்ணி, "வரதக்ஷிணையும், சீரும் கேட்காவிட்டால்தான் கல்யாணம் செய்து கொள்வேன்'என்று ஸத்யாக்ரஹம் பண்ண வேண்டும் என்று சொல்லத் தோன்றுகிறது. நிஜமான ஸத்யாக்ரஹமாக இருக்கவேண்டும். பெற்றோர் கேட்கவில்லை என்பதற்காக பிள்ளை அவர்களை ஒதுக்கிவிட்டு கல்யாணம் பண்ணிக் கொண்டால் அது ஸத்யாகிரஹம் இல்லை. ஸத்யாக்ரஹம் என்றால் அதிலே தியாகம் இருக்கவேண்டும். அதனால் வரதக்ஷிணை இல்லாமல் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டீர்களா?ஸரி, அப்படியானால் நான் கல்யாணமே பண்ணிக் கொள்ளாமல் பிரம்மசாரியாக இருந்து விடுகிறேன்'என்று தியாகமாக எதிர்ப்பு செய்தால்தான் ஸத்யாக்ரஹம். இப்படி பண்ணினால் எந்தத் தாயார்-தகப்பனார் மனசும் மாறாமல் போகாது. இதுதான் இப்போது இளைஞர்கள் செய்ய வேண்டிய பெரிய சீர்திருத்தம். கலப்பு மணம், காதல் கல்யாணம் பண்ணிக் கொள்வது மாதிரியான சாஸ்திர விரோதமான காரியங்களைச் செய்து பெருமைப்படுவதற்கு பதில் சாஸ்திரோக்தமான இந்த வரதக்ஷிணையொழிப்புக்கு நம்முடைய இளைஞர்கள் உறுதியோடு சகாயம் செய்தால் இதுவே பெரிய சீர்திருத்தமாயிருக்கும். மாதா-பிதா-குரு என்று மூன்றை வேதமே சொல்லியிருக்கிறதோ இல்லையோ?அதனால் மாதா-பிதாவைத் தானாக ஒரு புத்திரன் எதிர்த்துக் கொள்ளக் கூடாது என்றாலும் இப்போது நான் - குரு என்று பேர் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறன் - சொல்வதால் வரதக்ஷிணை விஷயத்தில் மட்டும் மாதா பிதாவின் அபிப்ராயம் சாஸ்திரப்படி இல்லாவிட்டால் பிள்ளைகள் அவர்கள் எதிர்த்து வாதம், ஸத்யாக்ரஹம் பண்ண வேண்டும். இது நம் யுவர்கள், கான்ஸர் மாதிரி நம் சமூகத்தில் புரையோடி அரிக்கிற ஒரு கொடுமையை அகற்றி நம் ஸமுதாய மறுமலர்ச்சிக்குச் செய்கிற மகத்தான தொண்டாக இருக்கும். நம் மதத்தின் மேன்மையில் உள்ள நம்பிக்கைக்காக மட்டும் இன்றி, மனிதாபிமானக் கடமையாகவும் இதை நம் இளைஞர்கள் செய்ய முன்வர வேண்டும். நெடுங்காலப் பயிராகவும், எதிர்காலத்துக்கு உத்தரவாதமாயும், தார்மிகப் பாதுகாப்பாகவும் இருக்கிற விவாஹம் என்ற விஷயத்தில் பெரியவர்கள் பார்த்துப் பெண்ணை நிச்சயம் செய்கிறபடிதான் பிள்ளைகள் செய்யவேண்டும். ஆனால் அந்தப் பயிரையே பூச்சி அரிக்கிற மாதிரி வந்திருக்கிற வரதக்ஷிணை கொடுமைக்கு உடந்தையாக இருந்து விடக்கூடாது. அப்பா, அம்மா சொற்படி

கேட்பதோடு சமூகத்துக்குச் செய்ய வேண்டிய கடமையும் இருக்கிறதல்லவா?வரதக்ஷிணை கேட்டால் கல்யாணத்துக்குக் கண்டிப்பாக மறுத்துவிட வேண்டியது பிள்ளையின் கடமை. இது குடும்பத்துக்கு, மடத்துக்கு, சமூகத்துக்கு, பெண் குலத்துக்கு எல்லாவற்றுக்கும் செய்கிற தொண்டு. இப்படியாக இளைஞர்கள் எல்லாரும் சபதம் செய்து, அதை நிறைவேற்ற வேண்டும்.

## மடத்தில் செய்துள்ள ஏற்பாடு

ஏழெட்டு வயசில் கல்யாணம் பண்ண முடியாவிட்டாலும், சட்டம் அநுமதிக்கிற வயசு வந்தவுடனேயாவது கல்யாணத்தைப் பண்ணிவிட வேண்டும் என்பதற்காக "கன்னிகாதான ட்ரஸ்ட்"என்று ஒன்றை ஆரம்பித்திருக்கிறோம். ஏழையான பெண் குழந்தைகளுக்குப் பணம் இல்லாததால் கல்யாணம் நடக்கவில்லை என்று இருக்கக்கூடாது என்று உத்தேசத்தோடு இந்த டிரஸ்டிலிருந்து வசதியில்லாதவர்களுக்குப் பரம சிக்கனமாகச் செலவுக்குப் பணம் கொடுத்துக் கல்யாணம் பண்ணி வைக்கிறோம். இதற்கு உபகாரம் பண்ணுவது பெரிய புண்ணியம். நம்முடைய தர்மத்துக்கு சேவை செய்கிற பாக்கியத்தை இது தரும். மற்ற ஜாதிகள் பிராம்மணர்களைப் போல இத்தனை கிரிசை கெட்டுப் போகவில்லை. அந்த ஜாதிகளில் இத்தனை வரதக்ஷிணைக் கொடுமையோ, பெண்கள் இத்தனை பெருவாரியாகக் காலேஜ் படிப்பு, உத்யோகம் என்று போய் ஸ்வயேச்சையாகத் திரியும்படித் 'தண்ணி தெளித்து' விட்டிருக்கிற நிலைமையோ இல்லை. ஆதலால் ஏழைப் பிராம்மணப் பெண்களை உத்தேசித்தே இந்த டிரஸ்ட் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இந்த கன்னிகாதான டிரஸ்டுக்கும் சரி, வேதரக்ஷண நக்ஷத்திரக் காணிக்கைக்கும் சரி, பிராம்மணர்களைத் தவிர மற்றவர்களிடம் பணம் வாங்கக் கூடாது என்பது என் அபிப்ராயம். காரணம், இவன் பண்ணின தப்புக்கு மற்றவர்களை ஜீமீஸீணீறீமீ்ஹ் (அபராதம்) செலுத்தும்படிப் பண்ணக்கூடாது என்பதுதான். வேதத்தை விட்டது இவன் பண்ணின பெரிய தப்பு. சட்டத்துக்கு உட்பட்டுகூட அதன்படியான மினிமம் வயசிலும் பெண்களுக்குக் கல்யாணம் பண்ணாமல் விட்டிருப்பது, அதே மாதிரி அல்லது அதைவிடப் பெரிய தப்பு. அதனால் இந்தத் தப்புக்களை நிவருத்தி பண்ணுவதற்காகச் செய்திருக்கிற ஏற்பாடுகளுக்கு இவனேதான் பணம் கொடுக்க வேண்டும். மற்றவர்களை உபத்ரவிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் இது இரண்டோடு மூன்றாவது தப்பாகும். பிராம்மணன்தான் இப்பொழுது எந்தத் தொழிலுக்கு வேண்டுமானாலும் போய் சம்பாதிக்கிறானே! கேளிக்கைகளுக்கும் யதேஷ்டமாகச் செலவழிக்கிறானே!வேண்டாத க்ளப்களுக்கும் கேளிக்கைகளுக்கும் யதேஷ்டமாகச் செலவழிக்கிறானே!அதனால் இவனேதான் இந்த இரண்டுக்கும் கொடுக்க வேண்டும் என்பது என் அபிப்ராயம். திருமாங்கல்யம், கூறைப்புடவை,

மூஹூர்த்த வேஷ்டி இவை கொடுத்து வெகு சிக்கனமாகக் கல்யாணத்தை முடிப்பதற்கு கன்னிகாதான டிரஸ்டின் மூலம் திரவிய ஸஹாயம் செய்யப்படுகிறது. வேதரக்ஷணத்துக்காகப் பண்ணிய ஏற்பாடுகளின் அளவுக்குக் கூட இந்தக் கன்யாதான ஏற்பாடு திருப்திகரமாகப் பிரச்சனையைத் தீர்க்கவில்லை. இதை ரொம்ப வருத்தத்தோடு சொல்கிறேன். கடப்பாரையை முழுங்கினவனுக்கு சுக்குக் கஷாயம் கொடுத்த மாதிரி, குட்டிச் சுவராகப் போன பிராம்மண சமூகத்துக்கு ஏதோ துளிதான் இதனால் பண்ண முடிந்திருக்கிறது. இப்போது கரை புரண்டு வந்திருக்கிற அதர்மப் பிரவாஹத்துக்கு அணை போட வேண்டும் என்ற எண்ணமே பெண்ணைப் பெற்றவர்களுக்கு இல்லாததால் ட்ரஸ்டை ஞூபமீ'வீறீவீஷமீ செய்து கொள்ள (பயன்படுத்திக் கொள்ள) போதுமானவர்கள் வரவில்லை. காலத்தில் கல்யாணமாகவில்லையே என்ற கவலை பெண்ணைப் பெற்றவர்களுக்கு விட்டுப் போய், அவர்கள் பாட்டுக்குப் பெண்ணை சம்பாத்தியத்துக்கு விட்டுவிடலாம் என்று ஹாய்யாக நினைக்கிற பொழுது, நாங்கள் 'டிரஸ்ட்'வைத்து என்ன பண்ணுவது?இப்போது பெண்ணைப் பெற்றவர்கள் பிள்ளை தேடுவதற்குப் பதில் அவளுடைய உத்தியோகத்துக்குத்தான் ரெகமன்டேஷன் தேடுவதாக நம் தேசத்தில் துர்த்தசை ஏற்பட்டிருக்கிறது. மிஞ்சினால் வருஷத்தில் ஐம்பது கலியாணத்துக்கு உதவி செய்கிறோம். ஒரு வருஷத்தில் ஐயாயிரம் பெண்கள் வேலைக்குப் போகிறார்கள். அதைப் போலப் பத்து மடங்கு பெண்கள் உத்தியோகம் தேடி அலைகிறார்கள் என்றால் நாங்கள் சொல்கிற வயசில் கல்யாணம் பண்ணிக்கொள்ள 50 பேர்தான் கிடைக்கிறார்கள்!இந்த டிரஸ்ட் வைத்தது, ஏதோ என் பீஞூபமீ'ஹ்-ல் நான் யீணீவீறீ ஆகவில்லை என்று என்னை நானே ஸமாதானப் படுத்திக் கொள்ளத்தான் கொஞ்சம் பிரயோஜனப்படுகிறது! சட்ட வரம்பு தாண்டினவுடனேயே கல்யாணம் பண்ணிக் கொடுக்கும்படியாகவாவது முன்னேற்பாடுகளைத் தயாராகச் செய்துவைத்துக் கொள்ளும்படி தாயார் தகப்பனார்மார்களுக்கு ஒரு மானம், வேகம், சுரணை பிறக்காதா என்பதால் இப்படி பச்சையாகச் சொல்கிறேன்.

**வாஸ்தவமான சீர்திருத்தம்**

இத்தனை வயசுக்குக் கீழே பண்ணக் கூடாது என்று flooring(அதம பக்ஷ வரம்பு) வைத்த சட்டத்திலே இத்தனை வயசுக்கு மேலே போகக் கூடாது என்று ceiling-ம்(உச்ச வரம்பும்) வைத்திருக்கக் கூடாதா என்று நினைக்கும்படியாக இருக்கிறது! இப்போது 25 வயசு, 30 வயசு என்று பெண்கள் கலியாணமாகாலிருப்பதற்குச் சட்டத்தைக் குறை சொல்வது துளிக்கூட நியாயமே இல்லை. நம்முடைய அசிரத்தைதான் இன்றைய கோளாறுகளுக்கெல்லாம் காரணம். பூணூல் போடுவதற்கு சாரதா சட்டம் இல்லையே!ஏன் முப்பது

வயசுக்குக் கல்யாணத்தோடு சேர்த்து (பூணூல்) போடுகிறோம்?சாஸ்திர விஷயத்தில் நமக்கு அத்தனை அலட்சியம்? இந்தப் பொதுவான அசிரத்தையோடு, கல்யாணம் பூணூல் முதலான காரியங்களைப் பெரிய தடபுடல் உத்ஸவமாகச் செய்வதற்குப் பணம் தயார் பண்ணிக் கொள்வது, எல்லாவற்றிலும் பெரிய தீமையாக கலியாணம் என்றால் ஒரு ஆயுஸுகால சேமிப்பும் போதாத அளவுக்கு வரதட்சிணைக்காகவும், சீர் செனத்திக்களுக்காகவும் செலவழிக்க வேண்டியிருப்பது ஆகியனவும் சேர்ந்து சாஸ்திரோக்தமான கால கெடுவின்படி இந்த ஸம்ஸ்காரங்களைப் பண்ணுவதற்கேயில்லை என்ற ஸ்திதிக்குக் கொண்டு விட்டிருக்கிறது. வேத சாஸ்திரங்களில் இவற்றுக்குப் பண ஸம்பந்தமே கூறப்படவில்லை. இது நாமாகப் பண்ணிக் கொண்டே அனர்த்தம். நான் மேலே சொன்ன எட்டுக் கல்யாணங்களில் எதிலுமே பெண்ணையும் கொடுத்துப் பணமும் கொடுப்பதாக இல்லை. ஆஸுர விவாகத்தில்கூட பெண் வீட்டுக்காரர்களுக்குத் தான் பணம் கொடுத்துப் பதிலுக்கு பெண் வாங்கிக் கொள்கிறான். அந்த வியாபாரமே அஸுரத்தனம் என்றால், "பெண்ணையும் கொடுத்துப் பணத்தையும் கொடு"என்று கேட்பது நம் தர்ம சாஸ்திரக்காரர்கள் கற்பனைகூடச் செய்து பார்க்காத ஒன்றுதான். 'கன்யா சுல்கம்'என்பதாக பெண்ணுக்குக் கொடுப்பதையாவது கொஞ்சம் சாஸ்திரத்தில் ஒப்புக் கொண்டிருக்கிறதே தவிர, பிள்ளை வீட்டாருக்கு வரதட்சினை கொடுப்பதற்கு அதில் ஆதாரமேயில்லை. நிஜமான கல்யாணச் சீர்திருத்தம் வரதட்சினை ஒழிப்புதான். அதைப் பண்ணாமல் வயசு விஷயத்துக்குச் சீர்திருத்தம் கொண்டு வந்ததில் நம்முடைய குடும்ப-சமூக வாழ்க்கை முறையே புரண்டு விட்டிருக்கிறது. பெண்கள் உத்யோகத்துக்குப் போவதைதான் சொல்கிறேன். வரதட்சிணைக்கும், சீருக்கும், ஆடம்பரக் கல்யாணத்துக்கும் வேண்டிய அளவு பணம் சேர்க்க முடியாதபோது, சாரதா சட்டம் ரொம்ப அநுகூலமாக வந்து கல்யாணத்துக்கு அவசரமில்லாமல் அவகாசம் தந்தது.

## பெண்கள் உத்தியோகம் பார்ப்பது

அப்புறம், கல்யாணமும் ஆகாமல் வெறுமே வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிற பெண், படித்து வேலைக்குப் போய் இரண்டு காசுதான் கொண்டு வரட்டுமே, கல்யாணச் செலவுக்கும் அது உதவுமே என்கிற எண்ணத்தில் பெண்களை உத்யோகத்துக்கு அனுப்புகிற வழக்கம் ஆரம்பித்தது. முதலில் வெட்கப்பட்டுக் கொண்டு, அவளே சம்பாதித்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும்படியாக விடுவது தகப்பனாருக்கு ரொம்ப அவமானம் என்ற உணர்ச்சியோடு வேலைக்கு அனுப்பினார்கள். நல்ல யௌவனத்தில் சித்த விகாரங்களைத் தூண்டி விடுகிற சூழ்நிலையில் இப்படிப் பெண்களை விடுகிறோமே என்று அப்போது கொஞ்சம்

பயம், கவலை எல்லாமும் இருந்தது. ஆனாலும் போகப் போக என்ன ஆகியிருக்கிறது என்றால் 'குளிர்' விட்டு விட்டது. ஜனகர் மாதிரியான ராஜ ரிஷிகளே கன்யாப் பெண்ணைக் கல்யாணமாகாமல் வைத்துக் கொண்டிருப்பது வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்கிற மாதிரி என்று பயந்ததாகப் புராணங்களில் பார்க்கிறோம். அந்த விவஸ்தை இப்போது கெட்டுவிட்டது;கட்டுவிட்டுப் போச்சு!அவமானமாக முதலில் நினைத்தே இப்போது நாகரிக முன்னேற்றத்துக்கு அடையாளமாக ஆகிவிட்டிருக்கிறது. பெண்ணைப் பெற்றவர்கள் தங்கள் பொறுப்பு உறைக்காமல், கூச்சம், கவலை, பயம் எல்லாவற்றையும் விட்டு விட்டுத் தங்கள் பெண் பெரிய உத்தியோகம் பார்க்கிறாள் என்று பெருமைப்படுகிற அளவுக்கு நம் தர்மம் ஹீன ஸ்திதி அடைந்திருக்கிறது. உத்யோகம் பார்க்கிற பெண்கள் என்னிடம் ப்ரமோஷன் ஆவதற்கு அநுக்கிரஹம் கேட்கிறதும், நானும் கண்டும் காணாத மாதிரி இருந்து கொண்டு எல்லோருக்கும் நல்ல சாமியாராகப் பெயர் வாங்கிக்கொள்வதாகவும் ஆகியிருக்கிறது! சீர்திருத்தக்காரர்கள், ஸ்திரீகள் காலேஜில் படித்து உத்தியோகம் பண்ணுவது பெரிய முன்னேற்றம்;இதனால் முன்னே பண்ணின அநீதி போய்விட்டது'என்கிறார்கள். முன்னே ஸ்திரீகளுக்கு அநீதி பண்ணவேயில்லை என்பது என் கட்சி. அப்படிப் பண்ணியிருந்தால், புருஷனுக்குத்தான் பண்ணியிருந்தது என்றுகூட வேடிக்கையாகச் சொல்வேன். ஏன்?ஒரு புருஷப் பிரஜையானவன் பிரம்மச்சரிய ஆசிரமம் முடித்ததிலிருந்தே கிருஹஸ்தாச்ரம தர்மங்களை மேற்கொண்டு ஔபாஸனாதி ஸம்ஸ்காரங்களைப் பண்ணினால்தான் அவனுடைய ஜன்மா கடைத்தேறும். ஸ்திரீப் ப்ரஜைக்கோ புருஷன் பண்ணுகிற ஸம்ஸ்காரங்களுக்கெல்லாம் மேலாக அவனிடம் இவள் மனஸை அர்ப்பணம் பண்ணி பதிவிரதையாயிருப்பதே ஜன்மாவைக் கடைத்தேறச் செய்கிறது. இது பெண்களுக்கு இழைத்த அநீதி என்று சீர்திருத்தக்காரர்கள் சொன்னாலும், எனக்கோ புருஷனைவிட பெண்ணுக்குத் தான் ரொம்பவும் ஸாதகமாக நம் சாஸ்திரத்தில் பண்ணியிருக்கிறது என்று தோன்றுகிறது. ஏனென்றால் அநேக ஸம்ஸ்காரங்களையும், அப்புறம் சிரவண, மனன, நிதித்யாஸனாதிகளையும் பண்ணித்தான் ஒரு புருஷனுக்கு மனோநாசம் உண்டாகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திக்கிறது. அந்த ஸாதனையின் முடிவான மனோநாசம் ஒரு பதிவிரதைக்குப் பதியிடம் சரணாகதி பண்ணுவதாலேயே ரொம்ப சீக்கிரத்தில் ஈஸியாக ஏற்பட்டு விடுகிறது. பதியின் இஷ்டத்தை அநுஸரிப்பதால் இவளுக்குத் தன்னிஷ்டம், மானாவமானம் எல்லாம் போய் அஹங்காரம் கரைந்து, மனோநாசத்துக்கு ரொம்பவும் கிட்டே போய் விடுகிறாள். மனஸை எங்கேயோ பூர்ணமாக அர்ப்பணம் பண்ணி, சரணாகதி என்று இருந்துவிட்டால் அப்புறம் மனோநாசம் பக்கத்திலேயே தானே?இன்றைக்கு உத்தியோகம் பார்க்கிற பெண்கள் பெறுகிற ப்ரமோஷனுக்கெல்லாம் மேலான ப்ரமோஷன் இப்படி அவளை ஆத்மபரிசுத்தி பண்ணி உச்சத்துக்குத் தூக்குவதுதான். இப்படி பதியிடம் மனஸை அர்ப்பணம் பண்ணியே தான் மஹா பெரிய ரிஷிகளை விட அதிகமான சக்திகளை நம்

தேசத்து பதிவிரதா ஸ்திரீகள் பெற்றிருக்கிறார்கள். அவள் பெய் என்றால் மழை பெய்கிறது என்று திருவள்ளுவர் சொல்கிறார். ஸூரியனை உதிக்காதே என்று அவள் சொன்னால் உதிப்பதில்லை!செத்த புருஷனை யமதர்ம ராஜாவிடமிருந்து அவளால் திரும்பவும் வாங்கிக் கொண்டு வர முடிகிறது. எந்த ரிஷிக்கும், தெய்வத்துக்குமே கூட கொடுக்காத உசந்த ஸ்தானத்தை இப்பேர்ப்பட்ட பதிவிரதைகளுக்குத்தான் நம் சாஸ்திரமும் சம்பிரதாயமும் தருகிறது. அவள் தெய்வங்களின் மேலேயே தண்ணியைத் தெளித்து தன் குழந்தைகளாக்கிக் கொண்டு விடுகிறாள் என்று புராணத்தில் பார்க்கிறோம். ஆகையால் பெண் எப்படியிருந்தால் நிஜமான உயர்வைப் பெறுவாளோ, அதைச் சொல்லி அப்படிப்பட்டவளைக் கோவில் எடுத்துக் கும்பிடுகிற நம் சாஸ்திரம் ஒரு நாளும் ஸ்திரீயை மட்டம் தட்டவில்லை. சீர்திருத்தவாதிகள் தான் அவளை அப்படி வளர முடியாதபடி மட்டப்படுத்துகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆக விவாஹம் என்பது புருஷனை சுத்தப்படுத்துகிற அநேக ஸம்ஸ்காரங்களில் ஒன்று என்றால், ஸ்திரீயையோ அத்தனை ஸம்ஸ்காரங்களில் ஒன்று என்றால், ஸ்திரியையோ அத்தனை ஸம்ஸ்காரங்களும் இல்லாமலே அவற்றின் முடிந்த பயனான பூர்ணத்துவத்தைப் பெறப் பண்ணுவதாகும். இப்பேர்ப்பட்ட ஸம்ஸ்காரத்தின் ஸாரத்தை விட்டுச் சக்கையாக ஒப்புக்கு ஏதோ இப்போது நடக்கிறது. விவாஹம் என்ற ஸம்ஸ்காரமும் கிருஹஸ்தாச்ரமும் லாவண்யம், வீர்யம், இந்திரிய ஸௌக்யம் இவற்றை மட்டும் குறித்த விஷயமல்ல என்பதையும், ஜன்மா கடைத்தேற வழியாகவே அது வகுக்கப்பட்டிருக்கிறது என்பதையும் புரிந்து கொண்டால் சாஸ்திரம் சொல்லியிருப்பதே சரி என்ற அறிவு உண்டாகும். பெண்கள் உத்தியோகம் பார்ப்பதால் பொருளாதார ரீதியிலேயே உண்டாகியிருக்கிற ஒரு அனர்த்தத்தை யாரும் கவனித்ததாக தெரியவில்லை. ணினீஜீரீஷீஹ்னீமீஸீமீ ஜீக்ஷீஷீதீறீமீனீ (வேலையின்மைப் பிரச்சனை)-ஐ தான் சொல்கிறேன். சில வருஷங்களுக்கு முந்தி 'கலியாணமாகிற வரையில் பெண் வேலைப் பார்க்கட்டும்;இதனால் அவள் கல்யாணமாகவில்லையே என்பதை நினைத்து நினைத்து அழுது கொண்டு வீட்டோடு இருக்காமல் அவளுக்கு ஒரு போக்காக இருக்கும். அதோடுகூட, பணசம்பந்தமானதாகப் பண்ணப்பட்டுவிட்ட கல்யாணத்தில் வரதட்சிணை, மற்ற செலவுகளுக்கு அவளுடைய சம்பாத்தியத்திலிருந்தே மிச்சம் பிடித்துச் சேமிக்கலாம்'என்ற எண்ணத்தில் ஒரு பெண்ணை விவாஹம் வரையில் வேலைக்கு விடுவதாகவும், அப்புறம் நிறுத்தி விடுவதாகவும் இருந்தது. புக்ககத்துக்காரர்களும் புருஷனும் அந்தப்பெண் கல்யாணத்துக்குப் பிறகு வேலைக்குப் போவதை நிஷித்தமாக (இழுக்காக) நினைத்தார்கள். ஆனால் வரவர இந்த பிராம்மண சமூகத்துக்கு இந்த ஒரு நூற்றாண்டாக ஏற்பட்டிருக்கிற பணத்தாசையில் இதுவும் மாறி, இப்போது கல்யாணமான பிற்பாடும் அவள் உத்தியோகத்திற்குப் போவது என்ற வழக்கம் வந்திருக்கிறது. இதனால் சிசு ரக்ஷணை (குழந்தை வளர்ப்பு) முதலான தாய்க் குலத்தின் உயர்ந்த கடமைகள் கெட்டுப்போய், வெள்ளைக்கார தேசங்கள் மாதிரி

குடும்பம், பெற்றோர், குழந்தை என்பதெல்லாமே ஹ்ருதயபூர்வமாகக் கட்டுப்பட்டில்லாமல் பிஸினஸ் போல் ஆகியிருப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். எகனாமிக் (பொருளாதார) ரீதியில் இதனால் உண்டாகியிருக்கிற கெடுதலைப் பார்க்கலாம். இப்போது வேலையில்லை, வேலையில்லை என்று லட்சக்கணக்கில் ஆண்கள் திண்டாடுகிறார்கள். அதே சமயம் இன்னொரு பக்கம் பல குடும்பங்களில் புருஷன் உத்தியோகம் பார்ப்பது மட்டும் இல்லாமல் ஸ்திரீயும் வேலைக்குப் போகிறாள். அவன் மட்டில் வேலைக்குப் போய் இவள் வீட்டிலிருந்தால் இவள் பார்க்கிற வேலை உத்யோகமில்லாத ஒரு ஆணுக்கு கிடைக்குமல்லவா?ஆனாலும் தன் பொண்டாட்டியைத் தன் சம்பாத்தியத்துக்குள்ளேயே கட்டும் செட்டுமாக வைத்துக் காப்பாற்றுவதுதான் கௌரவம் என்றில்லாமல் புருஷன் அவளையும் வேலைக்கு விட்டு அவளும்தான் காசு கொண்டு வரட்டுமே என்று இருக்கிறான். முதலில் தாயார் தகப்பனார் மானமில்லாமல் பெண்களை வேலைக்கு விடுகிறார்கள். அப்புறம் புருஷனும் அதையே பண்ணுகிறான். அந்த பெண்ணும் இதை ஒரு பெருமையாகவே நினைக்கிறது. ஆபீஸுக்குப் போய் உத்தியோக புருஷியாக இருந்த பிறகு வீட்டில் அடைபட்டுக் கிடக்கப் பிடிக்க மாட்டேன் என்கிறது. ஸ்வயமாக ஸம்பாதித்தால் புருஷன் தட்டிக் கேட்காமல் தன் இஷ்டப்படி செலவழித்துக் கொள்ளலாமே என்று இருக்கிறது. வீட்டோடு இருந்தால் அடைபட்டுக் கிடப்பது என்று அர்த்தமேயில்லை. நம்முடைய சாஸ்திரங்கள், புராணங்கள் தாய் பாஷையிலும் ஸம்ஸ்கிருதத்திலும் இருப்பதற்குக் குறைவேயில்லை. அவற்றிலே ஒரு ருசியை ஏற்படுத்திக் கொண்டால் நாளெல்லாம் படித்தாலும் போதாமல் ஜன்மா முழுதும் படித்துக் கொண்டு ஸந்தோஷமாக இருக்கலாம். பல பெண்கள் ஸத்ஸங்கமாகச் சேர்ந்து ஒவ்வொரு வீட்டில் இவற்றைப் படிக்கலாம். கிளப் என்றோ ஸ்தாபனம் என்றோ போர்டு போட்டுக் கொண்டு காரியாலயம் மாதிரி இல்லாமல் வீடுகளிலேயே இதைச் செய்யவேண்டும். மெம்பர், பிரஸிடென்ட் மாதிரிப் பதவிகள் உண்டாகாமல், இவற்றுக்காகப் போட்டிச் சண்டைகள் இல்லாமல் இருக்க வேண்டுமென்பதால் (இப்படிச்) சொல்கிறேன். இதோடுகூட மடம், ஆலயம் முதலியவற்றுக்காக சுத்தமான மஞ்சள் குங்குமம் பண்ணிக் கொடுப்பது, முனை முறியாத அக்ஷதை பொறுக்கிக் கொடுப்பது போன்ற காரியங்களைச் செய்தால் பெரிய சமூகத் தொண்டாகவும் இருக்கும். ஸ்திரீத்வம் (பெண்மை) என்ற உயர்ந்த சரக்கு பறிபோகாமலே இப்படிப் பட்ட ஸத்காரியங்களைப் பண்ணி வந்தால் வீட்டோடு இருப்பது அடைபட்டிருப்பதாக இருக்காது. ஆதம ஸ்வதந்திரத்துக்கு வழியாக ஆனந்தமாகவே இருக்கும். ஸ்திரீத்வத்தயும் இழந்து கொண்டு துராசைகளைப் பெருக்கிக் கொண்டு உத்யோகத்திற்குப் போவதைவிட இதுதான் சிரேயஸ். ஸ்வாபாவிகமாகவும் (இயல்பாகவும்) பெண்களுக்கு எடுத்தது இதுவே. வீட்டில் அடைபட்டில்லை என்று ஆபீஸுக்குப் போவதால் எத்தனை தப்புக்களுக்கு இடம் கொடுத்துப் போகிறது?'பெண் விடுதலை'என்று பெரியதாகச் சொன்னாலும்

ஆபீஸில் எத்தனை பேருக்கு அடங்கிப் பதில் சொல்லும்படி இருக்கிறது? இப்படி-யிருப்பதில் வாழ்க்கையில்தான் நிம்மதி உண்டா?நிம்மதியாகச் சமைத்துப் போட்டுச் சாப்பிடுவது;குழந்தை குட்டிகளின் வாத்ஸல்யத்தை பூர்ணமாக அநுபவிப்பது என்பதெல்லாம் இந்த 'விடுதலை'யில் உண்டா? சொல்லி என்ன பிரயோஜனம்?அவரவர்க்கும் ஸ்வயநலம் என்று அவரவரும் நினைத்துக் கொண்டிருக்கிற ஒன்று தான் முக்கியமாக இருக்கிறதே தவிர சமூகத்தில் பிறத்தியார் கஷ்டப்பட நாம் காரணமாய் இருக்கக் கூடாது என்ற நியாய உணர்ச்சி கொஞ்சங்கூட இல்லை. புருஷன் பெண்டாட்டி என்று சில குடும்பங்களில் இரட்டை சம்பாத்தியமும், வேறு சில குடும்பங்களிலோ இரண்டு பேரில் ஒருத்தருக்கும் உத்தியோகம் இல்லாமல் பரிதாபமாகவும் இருக்கிற நிலையில் கல்யாணமான பிறகாவது பெண்கள் வேலைக்குப் போவதை நிறுத்திக் கொண்டால், அத்யாவசியமாக வேலை பார்த்தே ஜீவிக்க வேண்டிய ஒரு புருஷனுக்கு அந்த வேலை கிடைத்து அந்தக் குடும்பம் உருப்படுமே என்ற பிரக்ஞை வரவேண்டும். பெண்களை சரி-சமம் பண்ணுகிறோம் என்கிறவர்களும் இந்த விஷயத்தைக் கவனிக்க வேண்டும். சரி நிகர் சமம் என்கிற வாதம் எதில் வரலாம், எதில் வரக்கூடாது என்ற வியவஸ்தையே இக்காலத்தில் தெரியவில்லை. ஒவ்வொன்றும் ஒரு விதமாக இருக்க வேண்டும். அப்படித்தான் பிரபஞ்ச வாழ்க்கை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. எல்லாம் ஒரே விதமாக ஆகவேண்டு ம்;அதுதான் சரி சமம் என்ற வாதமே அடியோடு தப்பு. அப்படி ஆக்கினால் இயற்கையான வாழ்க்கைமுறையே பாழாகிவிடும். ஒன்றொன்றும் இயற்கைப்படி, ஸமூஹத்தின் மொத்த வாழ்வுக்கு அநுகூலமாக எப்படியிருக்க வேண்டுமோ அப்படியிருப்பது தான் அதற்கு நிறைவு. அதிலேதான் அதற்கு நிஜமான ஸௌக்கியம் உண்டு. இந்த நிறைவை விட்டு விட்டு, செயற்கையாக ஸமத்வம் என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு அதற்காக ஒடுவதில் individualஆகவும் (தனி நபரளவிலும்) நிஜமான நிறைவு அவரவர்க்கு உண்டாவதில்லை;குடும்பமும், ஸமூஹம் இவற்றின் வாழ்க்கையும் இதனால் கெட்டே போகிறது. இயற்கைப் படி பெண்கள்தானே பிள்ளை பெற வேண்டும் என்று வைத்திருக்கிறது?நாம் எவ்வளவு ஸமத்வச் சண்டை போட்டாலும் அதை மாற்றமுடியாதல்லவா?பிள்ளையைப் பெற்றவளே அதை சவரக்ஷணை பண்ணுவது, அதற்காக கிருஹலக்ஷ்மியாக இருப்பது என்பதுதான் பெண்களுக்கு ஸ்வாபாவிக (natural) தர்மம். அதைப் பண்ணுவதால் அவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை. அதை விட்டதால் உயர்வும் இல்லை. அதனால் ஸமப்படுத்துகிற பேச்சுக்கு இங்கே அர்த்தமேயில்லை.

## எடுத்துச் சொல்லிப் பயனுண்டா ?

மிளகாய்க்கு நெய்விட்டுக் காரத்தை சமனம் பண்ணுகிறாற்போல் பிரகிருதி வேகங்களுக்கு விவாஹாதி ஸம்ஸ்காரங்களால் சமனம் உண்டாக்கப்படுகிறது. மிளகாயே இல்லாமல் இல்லை. அது இருக்கிறது. ஆனால் அதன் காரம் குடலை எரிக்காதபடி நெய் விட்டிருக்கிறது. லௌகிகமான, சரீர சம்பந்தமான ஸௌக்யம் கிருஹஸ்தாச்ரமத்தில் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது கொழுந்து விட்டெரியாமல் ஏகப்பட்ட ஸம்ஸ்காரங்களால் புருஷனை ஓர் அளவில் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரீக்கோ பாதி வ்ரத்யத்தோடு (கற்போடு) கூடின கிருஹரக்ஷணை என்ற ஒன்றே இத்தனை ஸம்ஸ்காரத்துக்கும் ஸமமாயிருக்கிறது. இது நமக்கு மனஸில் பட்டுவிட்டால் போதும். நாம் இந்த தேசத்தில் ஆத்ம சிரேயா லட்சியம் எந்த நாளும் வீணாகி விடக் கூடாது என்று ஹ்ருதய சுத்தத்தோடு நினைத்து பகவானைப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டு, அருள் துணையை நம்பி, எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருந்தால் என்றைக்காவது ஒரு நாள் வழி பிறக்கும். இப்போது போகிற போக்கிலே முடிவான ஒரு நிலையில் போய் முட்டிக் கொண்டு கடைசியில் இது அத்தனையும் அனர்த்தம்தான் என்று என்றைக்காவது ஜனங்கள் விழித்துக் கொள்கிறபோது, மீள்கிற வழி எது என்று தெரிவதற்காக நாம் சாஸ்திரத்திலுள்ளதைச் சொல்லிக் கொண்டேதான் இருக்க வேண்டும். 'வர்ணாச்ரமம், பால்ய விவாஹம் முதலானதுகளைப் பற்றிச் சொல்லி என்ன பிரயோஜனம்?அநேகமாக இவற்றில் முக்காலே மூணுவீசம் போயே போய்விட்டதே! பல விஷயங்களில் ராஜாங்கச் சட்டமே சாஸ்திரத்துக்கு மாறாக வந்துவிட்டதே!என்று கேட்கலாம். வாஸ்தவம்தான். அநேக விஷயங்களில் சட்டமே வந்து கையைக் கட்டித்தான் போடுகிறது. Secular State என்று நம் ராஜாங்கத்துக்குப் பேர் சொல்கிறார்கள். 'மதச்சார்பில்லாதது'என்று இதற்கு அதர்த்தம் சொல்கிறார்கள். அதாவது ஸமூஹ (social) விஷயங்களில் ஸர்க்கார் தலையிடலாமே தவிர, மத (religious) விஷயங்களில் தலையிடக் கூடாது என்று சொல்கிறார்கள். ஆனால் நம்முடைய மதத்திலே இப்படி மதம்-சமூகம் -வீடு-தனி மனுஷ்யன் என்று தனித்தனியாகப் பிரிக்காமல், எல்லாவற்றையும் சேர்த்துப் பின்னி integratமீபண்ணி (ஒருங்கிணைத்து) அல்லவா வைத்திருக்கிறது?அதனால் சமூக விஷயம் என்று ஸர்க்கார் போடுகிற சட்டமும் மதத்தையே அல்லவா பாதிக்கிறது?இதை ஒப்புக்கொள்ளாமல் 'இன்னின்ன விஷயங்களோடு மதம் முடிந்துவிடுகிறது;மற்றதெல்லாம் ராஜாங்கம் ஸம்பந்தப்பட்ட ஸமூஹ விஷயம்'என்கிறார்கள். சரி, எல்லா மதத்திலுமே சில அம்சங்களிலாவது ஸமூஹ ஸமாசாரங்களும் வந்து விடுகிறதே, அவற்றின் விஷயத்திலும் இந்தக் கொள்கையைக் கடைபிடிக்கிறார்களா என்று பார்த்தால்- இங்கே தான் ரொம்ப வேதனையாயிருக்கிறது. 'ஸெக்யூலர் ஸ்டேட்'டில் எல்லா மதமும் ஸமம் என்று சொன்னாலும், சிறுபான்மை மதஸ்தர்கள் social reform சட்டங்களை ஆக்ஷேபித்து, "இது எங்கள் மதத்தில் சொன்னதற்கு விரோதமாயிருக்கிறது. இது குரானுக்கு விரோதம்;கிறிஸ்துவக் கோட்பாட்டுக்கு முரணானது"என்று சொன்னால்

உடனே அந்த மதஸ்தர்கள் விஷயத்தில் இந்தச் சட்டங்களுக்கு விலக்கு தந்துவிடுகிறார்கள். இம்மாதிரிச் சிறுபான்மை மதஸ்தருக்கு மட்டும் குடும்பக் கட்டுப்பாடு போன்ற ஒன்றில் விலக்குத் தந்துவிடுகிறார்கள். இம்மாதிரிச் சிறுபான்மை மதஸ்தருக்கு மட்டும் குடும்பக்கட்டுப்பாடு போன்ற ஒன்றில் விலக்குத் தந்தால் எதிர்காலத்தில் அவர்களே பெரும்பான்மையாகி விடவும் இடமேற்படுகிறது. ஆநால் 'ஸெக்யூலர்ஸ்டேட்' டாக இருந்தும் ஹிந்து மத விஷயமாக மட்டும் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற தீர்மானம் ஏற்பட்டிருக்கிறது. 'மைனாரிட்டி ரிலிஜன்'காரர்கள் போல் நம்மிலே ஒரு சூடு பிறந்து ஆட்சேபிக்கிறவர்களே இல்லை. அப்படியே நாலு, பேர் எதிர்ப்புத் தெரிவித்தாலும், பிற்போக்குக்காரர்கள், பத்தாம் பசலிகள் (obscurantist) என்று அவர்களுக்குப் பெயர் கொடுத்துவிட்டுச் சட்டத்தைக் கொண்டு வந்துவிடுகிறார்கள். 'ஸெக்யூலர் ஸ்டேட்என்றால் மதச் சார்பில்லாத ஸர்க்கார் என்றே அர்த்தம். மத விரோதமான என்று அர்த்தமில்லை. ஒரு மதம் மட்டுமின்றி எல்லா மதமுமே அபிவிருத்தியாவது ஸெக்யூலர் ஸ்டேட்டுக்கு ஸம்மதமானதுதான்'என்றெல்லாம் பெரிசாகப் பிரஸங்கம் பண்ணுபவர்கள் பண்ணினாலும், பிரத்யக்ஷத்தில் ஹிந்து மதத்தைத் தவிர மற்ற மதங்களுக்கு விரோதமில்லாத காரியங்களைப் பண்ணுவதுதான் இங்கே ஸெக்யூலர் ஸ்டேட் எனறு நடந்து வருகிறது!தர்க்காஸ்து நிலம் மாதிரி ஹிந்து மதம் இருந்து வருகிறது. "இது தெரிந்தும் ஏன் ஸாத்தியமில்லாத சாஸ்திர விஷயங்களை நச்சு நச்சு என்று சொல்கிறாய்?"என்றால் - இப்போது இப்படி இருந்தாலும் இன்னும் எப்படி எப்படி போகும் என்று சொல்ல முடியாது. 'அமெரிக்காவில் டாலரே விளைகிறது;அங்கே ஜனங்களுக்கு ஒரு குறையும் இல்லை'என்றுதானே போன தலைமுறையில் நினைத்தோம். ஆனால் இப்போது எப்படியிருக்கிறது?அந்த தேசத்து ஜனங்களுக்கு இருக்கிற குறை மாதிரி, சூன்ய உணர்ச்சி மாதிரி, வேறு யாருக்குமே இல்லை என்று தெரிய வருகிறது. டாலரினாலேயே இத்தனை குறையும் என்றும் தெரிகிறது!லௌகிக ஸௌக்கியத்தின் உச்சாணிக்குப் போன பிறகுதான் அவர்கள் இதிலே ஆத்மாவை எப்படி சூன்யமாக்கிக் கொண்டு விட்டோம் என்று விழித்துக் கொண்டிருக்கிறார்கள். டாலரில் மிதந்ததால் எத்தனை குடி, கொள்ளை, கொலை, விபசாரம் முதலிய தப்புகளில் போய் விழுந்து விட்டோம் என்று உணர ஆரம்பித்திருக்கிறார்கள். . கடைசியில் மனஸில் நிம்மதியில்லையே, சாந்தி இல்லையே என்று நம்முடைய யோகம், ஞான விசாரம், பஜனை முதலானவற்றுக்கு கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருக்கிறார்கள். இதிலிருந்து, இரண்டு மூன்று தலைமுறைகளுக்கு நல்லதாகவே தோன்றி வந்த ஒன்று , அப்புறம் தலைதெறிக்கப் போன பிறகு அனர்த்தமானது என்று தெளிவாகிறது;அப்போது ஜனங்கள் விமோசனத்துக்கு ஒடுகிறார்கள் என்று தெரிகிறதல்லவா?இப்படியே இந்த இரண்டு தலைமுறைகளாக நல்லது என்று நினைத்து, பெரும்பாலும் நல்ல எண்ணத்துடனேயே, நம் தேசத்தில் பண்ணப்பட்டிருக்கிற சாஸ்திரத்துக்கு முரணான விஷயங்களாலும் எத்தனை

ஹானி ஏற்பட்டிருக்கிறது என்பதை என்பதை இன்னொரு தலைமுறை உணரக்கூடும். இப்போதுகூட ஆங்காங்கே இந்த உணர்ச்சி கொஞ்சம் தலை தூக்கிக் கொண்டுதான் இருக்கிறது. ஆரம்பத்தில் நன்றாகியிருந்து குதிரைக்குட்டி மாதிரியாயிருந்து போகப் போக ஸ்வயரூபத்தை காட்டுகிற மாதிரிதான் சீர்திருத்தக் காரியங்கள் நடந்திருக்கின்றன என்று முடிவிலே முட்டிக்கொள்கிற ஸ்திதியில் தெரிய வரலாம். கீதையில் பகவான் இரண்டு வித ஸௌக்கியங்களைச் சொன்னார். 'யதக்ரே விஷமிவ, பரிணாமே அம்ருதோபமம்'என்பது ஒன்று. ஆரம்பத்தில் விஷம் போல இருந்துவிட்டு முடிவிலே எது அமிருதமாகிறதோ அதுதான் உயர்ந்த ஸாத்விக ஸௌக்யம். முதலில் ஆலஹாலம் வந்து விட்டுப் பிறகு அமிருதம் வந்தது இப்படித்தான். சாஸ்திரம், தனி மநுஷ்யன், குடும்பம், ஸமூஹம் எல்லாவற்றையும் கட்டுப்படுத்துகிறதே என்று ஆரம்பத்தில் விஷம் மாதிரிக் கசந்தாலும், போகப் போக இதுதான் எல்லாக் கட்டுகளும் தெறித்துப் போகிற ஆத்ம ஸ்வதந்திரம் என்கிற பேரானந்தத்தைத் தருகிற அமிருதம் என்று தெரியும். இதிலே விஷம் தற்காலிகம்;அமிருதம் சாச்வதம். இன்னொரு ஸௌக்யம், 'யதக்ரே அம்ருதோபமம், பரிணாமே விஷமிவ'என்பது. முதலில் அமிருதமாகத் தித்தித்து விட்டுப் போகப்போக விஷமாகிவிடுவது. இங்கே அம்ருதம் தாற்காலிகம்;விஷம் சாச்வதம். அமெரிக்காவில் டாலர் இப்படித்தான் முதலில் அம்ருதமாயிருந்துவிட்டு இப்போது விஷமாகியிருப்பதை அவர்களே தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இப்படியே இங்கும் எதிர்காலத்தில் தனி மனித நிறைவு, ஸமூஹக் கட்டுக்கோப்பு இரண்டும் ஹானியடைந்து, சாஸ்திர விரோதமாகப் பண்ணினதெல்லாம் முதலில் அம்ருதமாயிருந்தாலும் பிறகு இப்படி விஷமாகி விட்டதே என்று புரிந்து கொண்டு அழுகிற காலம் வரக்கூடும். அப்போது அமிருதத்தைத் தேடுகிறவர்களுக்கு அது எங்கேயிருக்கிறது என்று தெரியவேண்டும் அல்லவா?இப்போது நாம் பண்ணுகிற மாறுதல்கள்தான் முற்றி அவர்களுக்கு விஷம் தலைக்கேறிய ஸ்திதி ஏற்படப் போகிறபடியால் இதை (அமிருதம் எங்கேயிருக்கிறது என்பதை) அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டியது நம் கடமை. அதற்காகத்தான், இப்போது நாமே இந்த சாஸ்திரோக்தமான ஸமாசாரங்கள் என்ற அமிருதத்தைக் குடிக்காவிட்டாலும், பின்தலைமுறைகளில் நம்மைவிட க்ஷீண தசைக்குப் போய் விஷம் தலைக்கேறி விமோசனம் தேடுகிறவர்கள் தேடும்போது அவர்களுக்கு உதவுவதற்காகவது இந்த ஸமாசாரங்கள் என்ற அமிருதத்தைக் குடிக்காவிட்டாலும், பின்தலைமுறைகளில் நம்மைவிட க்ஷீணதசைக்குப் போய் விஷம் தலைக்கேறி விமோசனம் தேடுகிறவர்கள் தேடும் போது அவர்களுக்கு உதவுவதற்காகவாவது இந்த ஸமாசாரங்களை (குழி தோண்டிப் புதைத்து விடாமல்) சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். இந்த தீபம் வருங்காலத்திலாவது வழிகாட்ட விடவேண்டும். இந்த எண்ணத்தில்தான், காரியத்தில் செய்ய முடியாமல் கையைக் கட்டிப் போட்டிருந்தாலும் இன்னம் வாயைக் கட்டவில்லையே என்பதால் சாஸ்திர விதிகளை ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

## செலவில் சாஸ்திரோக்தம்

வயசு விஷயத்தில் சாஸ்திரோக்தமாகப் பண்ணுவதற்கு முன்னால் பண விஷயத்தில் சாஸ்திரோக்தமாகப் பண்ணுவதற்காவது இப்போதே ஆரம்பித்து விடவேண்டும். முன்னேயே சொன்னாற் போல் சாஸ்திரப்படி விவாஹம் என்பது பணத்தைப் பற்றிய விஷயமில்லை. வேறொன்றும் சாஸ்திரோக்தமாகப் பண்ண நமக்கு மனஸோ, தைரியமோ இல்லாவிட்டாலும் கலியாணத்தை economic problem -ஆகப் பண்ணாமல் இது ஒன்றையாவது சாஸ்திரப்படி வெகு சிக்கனமாக நடத்தப் பார்க்கலாம். விவாஹம் என்பது ஸந்தியாவந்தனம் மாதிரியான செலவில்லாத ஒரு வைதிக கர்மாதான். இதில் நூதன தம்பதிக்கு (புது மணமக்களுக்கு) புது வஸ்திரம் - நூலே போதும் - தங்கத்தில் லேசாக திருமாங்கலியம், ரொம்பவும் நெருங்கின பந்துக்களை மட்டும் அழைத்துச் சாப்பாடு போடுவது, முஹூர்த்த சமயத்தில் ஒரு மங்கள வாத்திய சப்தம் கேட்கப் பண்ணி அதற்காக ஏதோ கொடுப்பது, வாத்தியார் தக்ஷிணை ஆகியவற்றை மட்டுமே செய்தால் போதும். இது பூர்ணமாக சாஸ்திர சம்மதமானதுதான். இப்படிப் பண்ண ஒரு குமாஸ்தாவுக்கும் முடியாமல் போகாது. பணம் கொழித்தவர்களுங்கூட தடபுடல் பண்ணாமல் இப்படிச் சிக்கனமாகவே பண்ணவேண்டும். ஏனென்றால் அவர்கள் பண்ணுகிற டாம்பிகம் மற்றவர்களுக்கு ஒரு கெட்ட precedent (முன்மாதிரி) ஆகிவிடுகிறது!ஆகையால் கச்சேரி, ஃபீஸ்ட் என்று தாங்கள் செலவிடக் கூடிய இந்தப் பணத்தைக் கொண்டு வசதியில்லாத ஒரு ஏழைப் பெண்ணுக்கு கல்யாணம் பண்ணி வைக்க வேண்டும். இப்படிப் பண்ணினால் தண்டச் செலவாகப் போகக்கூடியதை தர்மக் கரென்ஸியாக மாற்றிக் கொண்டதாகும். ஒவ்வொரு பணக்காரரும் தம் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணுகிறபோதே அதில் செலவைக் கட்டுப்படுத்தி இன்னொரு ஏழைப் பெண் கண்ணைக் கசக்காமல் வழி திறந்து விடலாம். 'மாஸ்'உபநயனம் மாதிரியே பல பேருக்கு ஒரு பொது இடத்தில் பொதுச் செலவில் கல்யாணங்கள் நடத்த ஏற்பாடு செய்யலாம். இதனால் அவரவருக்கும் செலவு நிரம்பக் குறையும். இப்போதெல்லாம் கல்யாண மண்டபங்களின் வாடகையே பாதிச் செலவை விழுங்கி விடுகிறது என்கிறார்கள். எத்தனை சின்ன கல்யாணமானாலும் இக்கால பிளாட் குடித்தனத்தில் வீட்டிலேயே பண்ண முடியாதுதான். அதனால் தர்மிஷ்டர்கள் ஒன்று சேர்ந்து வசதியில்லாதவர்களுக்காக அங்கங்கே சின்ன சின்ன கல்யாண மண்டபங்கள் கட்டித்தர வேண்டும். கல்யாணம் என்றாலே வெட்கப்பட்டுக்கொண்டு ஒடின பெண்கள், அப்புறம் (கல்யாணம்) ஆகுமா ஆகுமா என்று வாய்விட்டுக் கதறுகிற பரிதாப நிலை ஏற்பட்டு, இப்போது நிலைமை முற்றி கல்யாணமே இல்லாமல் உத்தியோக புருஷியாக

ஸ்வயேச்சையாக இருக்கலாமென்று ஏற்பட்டிருக்கிறது. இதனால் நம் பண்பாட்டின் ஜீவநாடியான ஸ்திரீ தர்மம் வீணாகி வருகிறது. நடக்கக் கூடாததெல்லாம் ஒவ்வோரிடத்தில் நடந்து விடுகிறது. இதிலே வயிற்றரிச்சல் என்னவென்றால், இந்தத் தப்புக்களைத் திருத்தல் வேண்டும் என்ற வேகம் யாருக்கும் வராதது மட்டுமில்லை;'ஸைகாலஜி', அது இது என்று சொல்லிக் கொண்டு இந்தத் தப்புக்களையே விஸ்தாரம் பண்ணி, அவற்றுக்கு ஸமாதானமும் சொல்லி, கதைகள் எழுதி, ஸினிமாக்கள் எடுத்து, இதனாலேயே இதை நன்றாக அபிவிருத்தியும் பண்ணி வருகிறார்கள்! கேட்டால் (கேட்பதற்கே ஆளில்லை!) 'எழுத்து ஸ்வதந்திரம், கல்பனை ஸ்வதந்திரம், கலா ஸ்வதந்திரம்'என்பார்கள். சாஸ்திரத்தைத் தவிர எல்லாவற்றுக்கும் குடியரசு யுகத்தில் ஸ்வதந்திரம் ஏற்பட்டிருக்கிறது! விவாஹம் சாஸ்திரப்படிப் பொருளாதார விஷயமில்லை என்பதில் ஆரம்பித்தேன். 'எல்லாம் ஸரி!ஆனால் சாஸ்திரத்தில் நாலு நாள் கல்யாணம் சொல்லியிருக்கிறதே!நாலு நாள் விருந்துச் சாப்பாடு, சத்திர வாடகை என்றால் செலவாகுமே!என்கலாம். நாலு நாள் கல்யாணத்தைப் பற்றிச் சொல்கிறேன்:சாஸ்திரத்தில் தாரித்திரியம் உண்டாக்குவதற்காக கர்மாநுஷ்டானங்கள் சொல்லப்படவில்லை. விவாஹம் பண்ணுகிறது ஒரு நாள்தான். அப்புறம் மூன்று நாள் மாப்பிள்ளை தன் சொந்த வீட்டில் பிரம்மசரிய தீக்ஷையோடு இருக்கவேண்டும். அந்தக் காலத்தில் மேளம் வேண்டாம். நலுங்கு வேண்டாம். மாற்ற விரும்புகிறவர்கள் இப்படி மாற்றலாம். இதுதான் வாஸ்தவமான சீர்திருத்தம் (க்ஷீமீயீஷீக்ஷீனீ)பிள்ளையகத்துக்காரர் இதைச் செய்யலாம். "ஒருநாள் கல்யாணம் உங்கள் அகத்தில் செய்வேன். பாக்கி மூன்று நாள் எங்கள் அகத்தில் செலவில்லாமல் பண்ணவேன்"என்று சொல்லிவிடலாம். கல்யாணம் ஆன மறுநாள் கிருஹஸ்தன் ஔபாஸனாக்னியைத் தன் வீட்டிற்குக் கொண்டு வர வேண்டும். அப்படி ஔபாஸன குண்டத்தை எடுத்துக் கொண்டு வரும் போதும், வண்டியில் வைக்கும் போதும், நுகத்தடியில் மாடுகளைப் பூட்டும்போதும், வழியில் வைக்கும் போதும், மறுபடியும் வண்டியில் வைக்கும்போதும் சொல்ல வேண்டிய மந்திரங்கள் இருக்கின்றன. இப்பொழுது மந்திரோக்தமாகவே மோட்டாரிலோ, ரயிலிலிலோ வைத்துக் கொண்டு வரலாம். அதனால் ஒரு தோஷமும் இல்லை. அந்த நாளில் பக்கத்து ஊர்களிலேயே சம்பந்தம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அதனால் ஒரு தோஷமும் இல்லை. அந்த நாளில் பக்கத்து ஊர்களிலேயே சம்பந்தம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அதனால் ஔபாஸன குண்டத்தை கொண்டு போவது ஸௌகரியமாக இருந்தது. அல்லது நாலு நாள் கலியாணத்தை இன்னொரு விதம் பண்ணலாம். இப்பொழுது கலியாணம் நடத்துகிற இடத்திலேயே பிள்ளையகம் என்று ஒன்று வைத்துக் கொள்கிறோமே, அங்கேயோ, வாடகை அதிகமானால் யாராவது உறவினர் வீட்டிலோ மூன்று நாளும் பண்ணவேண்டியதைப் பண்ணலாம். யாரையும் சாப்பிடச் சொல்லவேண்டாம். ஸம்பந்திக்குக்கூடச் சாப்பாடு போட வேண்டாம். உபாத்தியாயருக்கு மட்டும் ஸம்பாவனை பண்ணினால் போதும். ஒரு நாளில்

எல்லாவற்றையும் முடித்துவிடுவது சாஸ்திர சம்பந்தமே இல்லை. விவாஹத்துக்கு ஸம்வத்ஸர தீக்ஷை, அதாவது விவாஹமாகி ஒரு வருஷம் பிரம்மசரிய நியமம்;பிறகே சாந்தி கல்யாணம் - என்கிற நிலைமை பிற்பாடு மாறி, நாலு நாலாவது இப்படி நியமத்தோடு இருப்பதாக ஏற்பட்டது. கழுதை கட்டெறும்பாகத் தேய்ந்து அப்புறம் கட்டெறும்பும் இல்லை என்று இப்போது நடப்பதுபோல் ஒரே நாளோடு தீர்த்து விடக்கூடாது. மூன்று நாள் ஔபாஸனம் நிச்சயம் செய்ய வேண்டும். தெலுங்கர்கள் கல்யாணத்தில் வதூ-வரர்கள் (மணமக்கள்) வெள்ளை நூல் வஸ்திரத்தை மஞ்சளில் நனைத்துக் கட்டிக் கொள்ளுகிறார்கள். அது சிக்கனமாக இருக்கிறது. எத்தனை தனிகரானாலும் அதைத்தான் கட்டிக் கொள்ள வேண்டுமென்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். உத்தர தேசத்திலும் ஸாதாரணமாக ஸாமான்ய வஸ்திரங்களைத்தான் பெண்கள் கட்டிக் கொள்ளுகிறார்கள். இங்கே நாமும் அப்படிச் செய்ய ஆரம்பிக்கலாம். பிரவேச ஹோமம் என்று விவாஹ காலத்தில் ஒன்று செய்வதுண்டு. இது வரன் தன் வீட்டில் பிரவேசிப்பதற்குப் பண்ணுவது. விவாஹாக்கினியை எடுத்துக் கொண்டுபோய் ஔபாஸன ஹோமத்தைத் தன்னுடைய வீட்டில் அவன் பண்ண வேண்டும். அங்கே பண்ணுவதற்குத்தான் ஔபாஸனம் என்று பெயர். ஸௌகர்யத்தை உத்தேசித்தும் சாஸ்திர சம்மதமாகவும் நான் முன்னே சொன்னபடி பிள்ளையகத்தார் வந்து தங்கும் ஜாகையிலே செய்யலாம். கோவிலுக்குப் போய் ஒரு-நாள்-கல்யாணம் பண்ணிவிட்டு வந்து விடுவது என்பது தப்பான காரியம். பார்ட்டி, ரேஸ் என்று செலவழிக்கிற பணக்காரர்களும் நாலு நாள் ஒரு சாஸ்திரோக்த சடங்கு செய்யப் பிடிக்காததாலே இப்போதெல்லாம் கோயிலில் போய் தாலிகட்டி ஒரு வேளையோடு முடிக்கிறார்கள். பணக்காரர்கள் அப்படிச் செய்ய ஆரம்பித்தால் ஏழைகளும் பின்பற்றிக் கெட்டுப்போவார்கள். நான் சொல்வதை அநுஸரித்தால் நாலு நாள் பண்ணுவதில் செலவு இல்லை. பெண் ரிதுமதியான பின் விவாஹம், அதுவும் ஒரு நாள் கலியாணம், மறுநாளே அவளை (புத்தகத்துக்கு) அழைத்துப் போவது என்பதில் ஏற்பட்டிருக்கிற இன்னொரு விபரீதந்தான் விவாஹத்தன்றே சாந்தி கல்யாணம் பண்ணுவது. விவாஹமானவன் திரிராத்திர தீக்ஷையோடு இருக்க வேண்டுமென்பது அத்யாவசியம். அதாவது மூன்று நாட்களும் பூர்ண பிரம்மசரிய நியமத்தை அநுஷ்டிக்க வேண்டும். பிரம்மசரியம் எட்டு விதம். எப்போதுமே பிரம்மசரியம் இருக்க முடியாதவனும் சிற்சில தினங்களில் அந்த நியமத்துடன் இருக்கும்படியாக இந்த எட்டு விதிக்கப்பட்டிருக்கின்றன. அதமபக்ஷமாக, கல்யாணமான முதல் மூன்று தினங்கள் இப்படி இருக்க வேண்டும். இதுவும் போய், அன்றே நிஷேகம் என்பது மஹாதோஷம். மறுபடி மறுபடி சம்பந்திகளைக் கூப்பிடுவது, சாப்பாடுக்குச் செலவழிப்பது, மேளத்துக்குச் செலவழிப்பது என்றில்லாமல் ஒன்றாக பண்ணிவிடலாமே என்று இப்படிப் பட்ட தோஷத்தைச் செய்கிறார்கள். சாஸ்திரத்தில் இல்லாத தடபுடல்களைக் கொண்டு வந்து விட்டு, அப்புறம் இவைகளைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காகப் பெண்ணின் கல்யாணம்

வரையில் (அவளுடைய ஸஹோதரனான) பிள்ளையின் பூணூலை ஒத்திப் போடுவது, கல்யாணத்தன்றே ஸாந்தி கல்யாணத்தையும் (மந்திரோக்தமாகக் கூட இல்லாமல்) பண்ணிவிடுவது என்றெல்லாம் முறை கெட்டுச் செய்து வருகிறோம்.

### உற்றமும் சுற்றமும் செய்ய வேண்டியது

ஆகையால் இந்த வைதிக ஸம்ஸ்காரங்களில் செலவை எப்படியும் குறைத்தாக வேண்டும். இதில் பந்து மித்ரர்கள் செய்யக்கூடிய ஒரு உபகாரமும் உண்டு. அதாவது, கல்யாணம், உபநயனம் என்று அழைப்பு வந்தால் நண்பர்கள், உறவினர்கள் எல்லோரும் போகத்தான் வேண்டும் என்பதில்லை. பிரயாணத்துக்குச் செலவிட்டு ரயில்காரனும், பஸ்காரனும் வாங்கி கொள்வதில் என்ன பிரயோஜனம்?அதையெல்லாம் சேர்த்து வைத்துக் கல்யாணம் பண்ணிகிறவனுக்கு ரொக்கமாக அனுப்பிவிட வேண்டும். இதனால் விருந்துச் சாப்பாடு என்று ஒரு செலவு குறைவது ஒரு பக்கம்;அவசியமான செலவும் சீரும் செய்ய கல்யாணம் பண்ணிகிறவனுக்கு வரவினம் வலுப்பது இன்னொரு பக்கம்.

### சிக்கனத்துக்கு மூன்று உபாயம்

பண சம்பந்தத்தால் சாஸ்திரோக்த வாழ்க்கையே கெட்டுப் போய்விட்டது. சாஸ்திரோக்தமாக மாறுவதற்கு நாம் நிறைய சம்பாதிக்க வேண்டும் என்றில்லாமல் பண்ணிக் கொண்டு விட்டால் போதும். எனக்கு மூன்று விதத்தில் செலவைக் குறைக்கலாம் என்று தோன்றுகிறது (1) எல்லோரும் - நல்ல பணக்கார வீட்டு ஸ்திரீகளுல்பட - பட்டு முதலான பகட்டுத் துணிகளைவிட்டு கடைசித்தரமான வஸ்திரந்தான் வாங்குவது என்று வைத்துக் கொள்ள வேண்டும். (2) காப்பிக்குத் தலைமுழுகிவிட்டு காலையில் கோதுமைக் கஞ்சிதான் சாப்பிடுகிறதென்று வைத்துக் கொள்ளவேண்டும். அல்லது மோர் சாப்பிடலாம். காப்பி சாப்பிடுவது என்ற ஒரு பழக்கத்தைப் பண்ணிவிட்டதால் Substitute அதை மாற்ற ஏதாவது ஒன்று) வேண்டுமல்லவா?தக்ரம் (மோர்) அமிருதமென்று வைத்திய சாஸ்திரம் சொல்கிறது. இப்படிச் செய்வதனால் அநேக குடும்பங்களில் செலவில் நூற்றுக்கு அறுபது பங்கு குறைந்துவிடும் என்று தோன்றுகிறது. 'அரிசி எவ்வளவு ரூபாய்த்து வாங்குகிறோம்?பால், காப்பிக் கொட்டை எவ்வளவு வாங்குகிறோம்?என்று கணக்கு பார்த்தால் பால், காப்பிக்கொட்டைக்குத்தான் அதிக செலவு. (3) விவாஹத்துக்காகப் பணத்தைக் கொண்டு வா என்று வரதக்ஷிணை வாங்குவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். இப்படிப் பண்ணினால் டம்பம் போவது ஒன்று;நல்ல

ஆரோக்கியமும் மனஸின் அபிவிருத்தியும் ஏற்படுவது இன்னொன்று;மூன்றாவதவாக சாஸ்திரோக்தமான வாழ்க்கையையும் வழங்களையும் நிலை நிற்கும்படிப் பண்ணுவது. விவாஹத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்ததில் இத்தனை கதையும் வந்து சேர்ந்து விட்டது. இன்னொரு கதை விட்டுப் போச்சு. அதையும் சொல்கிறேன். புருஷப் பிரஜைகளைவிட பெண் பிரஜைகள் அதிகமாக இருப்பதற்கு ஒரு காரணம் சொன்னேன். மெய்வருந்தி உழைக்காமல் உட்கார்ந்து வேலை செய்வது காரணம் என்றேன். இன்னொன்று தோன்றுகிறது. அதையும் சொல்கிறேன். எனக்குத் தோன்றுவது மட்டுமல்ல, சாஸ்திரத்திலேயே சொல்லியிருப்பதுதான். அதாவது ஒளபாஸனாதிகளைப் பண்ணிக் கொண்டு ஆசார சீலனாகப் புருஷன் இருந்தால் அவன் ஆரோக்கியமாகவும் நல்ல மனவிருத்தியோடும் இருப்பதோடு ஆண் சந்ததி உண்டாகும். பிராசீனமான ஆசாரம் உடையவர்களுக்கு துர்பலம் இல்லை;வியாதி இல்லை. பிராசீன ஆசாரத்தை இப்பொழுது கொஞ்சமாவது அநுஷ்டித்து வருகிறவர்கள் ஸ்திரீகள்தாம். அதனால் அவர்களிடம் உண்டாகிற பிரஜைகளிலும் அதிகமாகப் பெண்களே இருக்கிறார்கள். புருஷர்களும் அதிகமாகப் பிராசீன ஆசாரத்தை வைத்துக் கொண்டிருந்தால் இப்போதைவிட ஆண் ஸந்ததி அதிகமாக உண்டாகும். இரண்டும் ஸமவிகிதமாகும். ஸ்தல தரிசனம், தீர்த்த ஸ்நானம், பூஜை முதலியவைகளைப் புருஷர்கள் பண்ணி வந்தார்கள். இப்பொழுது அவர்களுக்கும் சேர்த்து ஸ்திரீகள் பண்ணுகிறார்கள்!புருஷர்கள் ஆசாரத்தை விட்டதனால் புருஷப் பிரஜைகள் குறைவாக ஆகிவிட்டார்கள். ஆகவே பாக்கி எதற்காக இல்லாவிட்டாலும் குடும்ப வாழ்க்கை எகனாமிகலாக நன்றாக இருக்க வேண்டுமென்பதற்காவது புருஷர்கள் ஆசார அநுஷ்டானங்களை வைத்துக் கொள்ள வேண்டும். தாரித்திரிய நிவர்த்திக்கும் வரசுல்க (வரதக்ஷிணை) நிவர்த்திக்கும் ஆசார அநுஷ்டானந்தான் வழி கூட்டங்கூடி, சீர்திருத்தம் என்று சொல்லிக் கொண்டு யோஜிக்காமல் கையெழுத்துப் போடுகிறார்கள். அநத மாதிரிக் காரியங்களெல்லாம் தற்கால சாந்தியானவையே. பரிகாரம் நிரந்தரமார இருப்பதற்கு இதுதான் மருந்து.

## விவாஹத்தின் உத்தேசங்கள்

பிரம்மசரிய ஆச்ரமத்தில் வேதங்களை ஒருவன் கிரஹித்து விடுகிறான். அப்புறம் 'தியரி'யை 'ப்ராக்டிகல்'ஆக்க வேண்டும். வேதத்தில் சொன்ன கர்மாக்களை, யஜ்ஞங்களைப் பண்ணவேண்டும். அதற்கு தன்னோடு பிரிக்க முடியாத சொத்தாக ஒரு துணையைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவனுடைய வீட்டில் சமையல் முதலான காரியங்கள் நடப்பதற்கும், இவனுடைய இந்திரிய சுகத்தைப் பூர்த்தி பண்ணுவதற்காகவும் மட்டும் ஏற்பட்டவள் அல்ல பத்தினி என்பவள். தர்ம

பத்தினி, யஜ்ஞ பத்தினி என்று அவளுக்குப் பெயர். இவன் செய்யும் தர்மத்தைக் கூட இருந்து உத்ஸாஹப் படுத்தி நடத்த வேண்டியவள் அவள், யஜ்ஞத்தில் இவன் கூட நிற்க வேண்டியவள். இப்படியாக தேவ சக்திகளை லோகத்துக்கு அநுகூலம் பண்ணித் தருகிற கர்மாக்களுக்கு அவள் பக்கபலமாயிருக்கிறாள். இவனுக்கு சமையல்காரியாக, இவனுக்கு சரீர ஸௌக்கியம் கொடுக்கிறவளாக இருக்கிறபோதுங்கூட அதிலேயே லோக க்ஷேமத்தைச் செய்கிறவள் அவள். எப்படியென்றால்:இவன் வீட்டுச் சமையல் இவனுக்கு மட்டுமில்லை. 'ஆதித்யம்', 'வைச்வதேவம்'என்பதாக தினமும் அதிதிக்கும், தீனர்களுக்கும், பிராணிகளுக்கும் கிருஹஸ்தன் அன்னம் போட வேண்டும். அதற்கும்தான் அவள் சமைப்பது. இவளுக்குப் பிரஜை உண்டாவதும் தம்பதியுடைய ஸௌக்கியத்தினால் ஏற்பட்டதென்பதோடு முடிந்துவிடுவதில்லை. வேத தர்மம் என்றைக்கும் லோகத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக, வேத தர்மத்தை அநுஷ்டிப்பதற்கே இவள் பிரஜைகளைப் பெற்றுத் தரவேண்டும். புத்ரோத்பத்தியைக் கூட இப்படி எதிர்கால தர்ம வாழ்வை உத்தேசித்த ஸம்ஸ்காரமாகப் பண்ணுவதை வேறெந்த மதத்திலும் பார்க்க முடியாது. இப்படியாக ஐதிக (இஹலோக) சம்பந்தம் மட்டுமின்றி ஆத்ம சம்பந்தமும், லோக க்ஷேம உத்தேசமும் கொண்டதாக இருக்கிறது நம் மதத்தில் பதி-பத்னி உறவு. மற்ற மதங்களிலும் சர்ச் மாதிரியான இடத்தில் தெய்வ ஸாக்ஷியாகத்தான் விவாஹம் நடக்கிறதென்றாலும் அதற்கு இத்தனை உயர்ந்த லட்சியங்கள் கொடுக்கப்படவில்லை. புருஷனை மேலும் ஸம்ஸ்காரங்களில் செலுத்தி சுத்தப் படுத்தவோ, ஸ்திரீயைப் பதிவிரதத்தினால் பூர்ணத்வமே அடையப் பண்ணவோ அந்த விவாஹங்களில் இடமில்லை. மற்ற தேச விவாஹங்களில் இடமில்லை. மற்ற தேச விவாஹங்கள் ஒரு குடும்ப அல்லது சமூக ஒப்பந்தம் (contract)மாதிரித்தான். இங்கே அது ஆத்ம பந்தம். பந்தப்பட்டிருக்கிற ஆத்மாவை விடுவிப்பதற்காகவே ஏற்பட்ட பந்தம். அதனால்தான் இங்கே அது ஆத்ம பந்தம். அதனால்தான் இங்கே divorce (விவாஹரத்து) என்பதற்கு இடமேயில்லாமலிருக்கிறது. அந்த எண்ணம் வந்துவிட்டாலே நமக்குப் பயம். இத்தனை உத்தமமான விவாஹ ஸம்ஸ்காரத்தின் முக்யமான மூன்று உத்தேசங்கள்:ஒன்று, வேதத்தைப் படித்து முடித்து வந்த ஒருத்தனின் குடும்பம் நடக்க வழி செய்து கொடுத்து, அவன் வேத தர்மங்களை அநுஷ்டிப்பதற்குத் துணை சேர்த்துக் கொடுப்பது. இரண்டு, நல்ல ஸம்ஸ்காரமுடையவர்களுக்கே உத்தம தம்பதிகளாக இருந்து, உன்னதமான வேத தர்மத்துக்கு எதிர்கால வாரிசுகளை உற்பத்தி செய்து தருமாறு பண்ணுவது;அதாவது வரப்போகிற காலத்தில் லோகத்தில் உயர்ந்த மனோபாவமுள்ள ஜனங்கள் இருக்கும்படியாக ஏற்பாடு செய்வது. மூன்றாவது ஸ்திரீகள் கடைத்தேறப் பெரிய பிடிப்பாக ஒன்றை உண்டாக்கிக் கொடுப்பது. பரிபக்குவமடையாத நிலையில்தான் புருஷன் யக்ஞாதி அநுஷ்டானங்களைப் பண்ணுவது. அவன் அப்படிச் செய்வதற்குத் துணையாக வருகிற பத்தினியோ தன்னுடைய பாதி விரத்யத்தாலேயே அவனையும்விடப் பரிபக்குவம் அடைந்து விடும்படி

நம்முடைய வைதிக தர்மம் பண்ணிவிடுகிறது!இந்த மூன்றோடு, அல்லது மூன்றுக்குப் பிறகு நாலாவதாக வருவதுதான் தம்பதியின் இந்திரிய ஸௌக்கியம் என்பது. முக்கியமான மூன்றும் எடுபட்டுப் போய் நாலாவது மட்டுமே முழுக்கப் பிரதானமாகிவிட்ட இன்றைய கால ஸ்திதியிலிருப்பவர்கள் நான் சொன்ன சாஸ்திரோக்தமான அந்த உத்தேசங்களைப் புரிந்து கொண்டால் நாம் நல்லதற்கு மாறுவதற்கு வழி பிறக்கும். அப்படிப் புரிந்து கொள்வதற்கு சந்திரமௌலீச்வரர் அநுக்ரஹம் செய்யவேண்டும். பாணிக்ரஹணம் (மணமகள் மணமகளுடைய கையைப் பிடித்தல்), மாங்கல்ய தாரணம், ஸப்த பதீ என்று புது தம்பதி ஏழடி எடுத்துவைப்பது இவை விவாஹத்தில் பிரதானமான அம்சங்கள். மாங்கல்ய தாரணம் வேதத்திலேயே உண்டா, இல்லையா என்று பெரிய சர்ச்சைகள் செய்வதுண்டு. இது அவசியமில்லாத சர்ச்சை. எத்தனையோ ஆயிரம் காலமாக இருந்து வந்திருக்கிற மாங்கல்ய தாரணம் அவசியம் செய்ய வேண்டியதே!

## இல்லறத்தான் ; இல்லாள்

ஒரு யுவாவானவன் குருகுலவாஸம் முடித்து ஸமாவர்த்தனமாகிய உடனேயே அவனுக்கு ஒற்றைப் பூணூல் போய் இரட்டைப் பூணூல் ஏற்பட்டு விடுகிறது. பிரம்மசரிய ஆச்ரமத்தில் தரித்த தண்டம், கிருஷ்ணாஜினம் (மான் தோல்) மேகலை முதலியன போய்விடுகின்றன. இப்போது அவன் ஏகவஸ்திரத்தை தட்டாடையாக உடுத்துவதும் போய், பஞ்சகச்சம் கட்டிக்கொண்டு, உத்தரீயமாக மேல் வேஷ்டி போட்டுக் கொள்ள வேண்டும். பிரம்மசரியத்தில் போக்யம் உதவாது என்று ஒதுக்கின சந்தனம், குண்டலம், புஷ்பம் (புருஷர்களும் சிகையில் புஷ்பம் தரிப்பதுண்டு), பாதரக்ஷை முதலிய அலங்கார வஸ்துகளையும், ஸௌக்ய ஸாதனங்களையும் அணிந்து கொண்டு, மை கூட இட்டுக்கொண்டு, குடை பிடித்துக்கொண்டு போய் அவன் ராஜாவிடமோ, ராஜப் பிரதிநிதியிடமோ தன் வித்யையையும், சுத்த பிரம்மசரியத்தையும் நிரூபித்துவிட்டு, மேற்கொண்டு கல்யாணத்துக்கு வேண்டிய திரவியத்தை தானமாகப் பெறவேண்டும்- இது சாஸ்திரத்தில் சொன்னபடியாகும். கல்யாணம் செய்து கொள்ள இருக்கிற ஒரு யுவா அதற்காகவே தானம் வாங்க வேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதிலிருந்தே கல்யாணச் செலவு பிள்ளை வீட்டுக்காரனுடையதுதான் என்று அழுத்தமாகத் தெரிகிறதல்லவா? இன்னொன்றும் தெரிகிறது. ஸமாவர்த்தனம் பண்ணி ஸ்நாதகனான ஒருவன் பிற்பாடு கல்யாணம் செய்து கொள்ளாமல் ஏகாங்கியாகவே இருந்தாலுங்கூட அவனுக்கு இரட்டைப் பூணூல், பஞ்சகச்சம் இவை உண்டு என்று ஆகிறது. வேஷ்டி நுனி தெரியாமல் கொசுவிச் சொருகுவதால் ஒருவனின் சக்தி காப்பாற்றப்படுகிறது. முஸல்மான்கள் வேஷ்டி ஓரங்களைச் சேர்த்துத் தைத்துக் கட்டிக் கொள்கிறார்களல்லவா?பஞ்சகச்சமாக

இல்லாவிட்டாலும், தமிழ்நாடும் மலையாளமும் தவிர, மற்ற இடங்களில் எல்லாருமே (பூணூல் இல்லாதவர்களும்கூட) கச்சம் போட்டே கட்டுகிறார்கள். இப்போது வேஷ்டியே போய், என்னைப் பார்க்க வருகிறபோதுகூட முழு நிஜார் போட்டுக் கொள்வது என்றிருக்கிறது!இந்த ஸ்திதியில் கச்சம், தட்டாடை வித்யாஸங்களைச் சொல்வது வேடிக்கையாகத்தானிருக்கிறது!... இப்போது குருகுருவாஸம், பிறகு ஸமாவர்த்தனம், கங்காயாத்திரை முதலிய எதுவும் இல்லாவிட்டாலும் பெண் வீட்டுக்காரனிடமிருந்து "வசூல்"செய்வதற்கு இன்னொரு வீமீமீனீ-ஆகப் 'பரதேசிக் கோலம்' என்று ஒன்றை வைத்துக் குடை, பாதரக்ஷை, வாக்கிங் ஸ்டிக் எல்லாம் வாங்கித்தர வைக்கிறோம். மாப்பிள்ளைக்கு மையிட்டு சங்கிலி போட்டு காசி யாத்திரை என்று ஒன்று நடத்துகிறோம். கல்யாணமாகாமலே நைஷ்டிக பிரம்மசாரியாக இருப்பதை சாஸ்திரம் அநுமதித்தாலும் அது விதிவிலக்கான கேஸ்தான். பொது விதி, "யதோக்தமாக குருகுலவாஸம் முடித்ததும் பிரம்மசரிய ஆச்ரமத்தை முடித்து அடுத்ததற்குப் போ"என்பதுதான். அதாவது பிரம்மசரியம் சாஸ்திரோக்தமாக முடிந்தவுடன் கிருஹஸ்தாச்ரமத்துக்கு ஏற்பாடு செய்துவிட வேண்டியதுதான். பிராம்மணனுக்குப் பிறக்கும்போதே மூன்று கடன்கள் உள்ளனவே, ரிஷிகடன், தேவர் கடன், பித்ரு கடன் என்று! இவற்றில் பிரம்மசரியத்தில் செய்கிற வேத அத்யயனம் ரிஷிருணத்தை மட்டுந்தானே போக்குகிறது?யஜ்ஞங்கள் செய்து தேவருணத்தைத் தீர்ப்பதற்காகவும், நல்ல ஆண் ஸந்ததி மூலம் பித்ரு ருணத்தைத் தீர்ப்பதற்காகவும் இவன் கலியாணம் செய்து கொண்டால்தானே முடியும்? பித்ரு கடன் தீரவே முக்யமாய் ஸந்ததி வேண்டும். இவன் திவஸம் பண்ணினால் மட்டும் போதாது. மூன்று முன் தலைமுறைக்காரர்களைப் பித்ரு லோகத்திலிருந்து மேலே அனுப்ப வேண்டுமானால் இவன் காலத்துக்குப் பின்னும் இரண்டு தலைமுறைகளில் திவஸமும் தர்ப்பணமும் நடந்தாக வேண்டும். அதற்காகப் புருஷப் பிரஜை வேண்டும். நைஷ்டிக பிரம்மசாரியாகவோ, ஸந்நியாஸியாகவோ இருக்கத் தகுதி பெற்ற அபூர்வமான சிலரின் விஷயம் என்னவென்றால் அவர்களது பரிசுத்தியாலும் ஞானத்தாலும் பிற்பாடு சிராத்த கர்மாக்கள் இல்லாமலே மூன்று தலைமுறை மட்டுமில்லாமல் இருபத்தியோரு தலைமுறைகள் கடைத்தேறி விடுகின்றன. ஒரு புருஷன் கற்க வேண்டியதைக் கற்று முடித்தவுடன் லோகத்தில் தர்மங்களை அநுஷ்டிப்பதற்காகப் பத்தினி என்ற துணையைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்;அதுவே ஒரு கன்னிகைக்குப் பதி என்ற ஒரிடத்தில் மனஸை அர்ப்பணம் பண்ணி ஆத்ம பரிசுத்தி அடைய உபாயமாயிருக்க வேண்டும்;இருவருமாகச் சேர்ந்து நல்ல பிரஜைகளை உண்டாக்க வேண்டும் என்ற உத்தமமான அபிப்ராயத்தில் விவாஹமும் கிருஹஸ்தாச்ரமமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. கிருஹஸ்தாச்ரமத்தைத் தமிழில் இல்லறம் என்பார்கள். கிருஹம் என்றால் இல்லம்தான். "இல்லறமல்லது நல்லறமல்ல"என்று தர்ம சாஸ்திரங்களைப் போலவே தமிழ் ஆன்றோர்களும் இந்த ஆச்ரமத்தைத்தான் சிறப்பிக்கின்றனர். 'க்ருஹம்'என்றால் வீடு. குருவின்

வீட்டிலிருந்து திரும்பி வந்து சொந்த வீட்டில் தர்மங்களை நடத்துபவன் 'க்ருஹஸ்தன்'. 'க்ருஹ-ஸ்தன்'என்றால் நேர் அர்த்தம் 'வீட்டில் இருப்பவன். அதையே 'வீட்டிற்கு உடைமைக்காரன்' என்ற அர்த்தத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறோம். அவனை அகமுடையான், அகத்துக்காரன், வீட்டுக்காரன் என்றெல்லாம் வீட்டுக்கு முக்யஸ்தனாக வைத்தே பத்தினியானவள் குறிப்பிடுகிறாள். பத்தினியைத் தவிர மற்றவர்கள் அவனை இப்படிச் சொல்வதில்லை. அந்த பத்தினியை 'க்ருஹிணி'என்றே சொல்கிறார்கள். 'க்ருஹஸ்தை'என்று சொல்வதில்லை. 'க்ருஹிணி'என்பதால் வீட்டிலே அவளுக்குத்தான் முக்யத்வம் அதிகம் என்று தெரிகிறது. 'க்ருஹஸ்தை'என்றால் வீட்டிலே இருப்பவள் என்று மட்டுமே ஆகும். ஆனால் 'க்ருஹணி'என்கிறபோதோ வீடே இவளுடையதுதான், இவள்தான் வீட்டை நிர்வாகம் பண்ணுகிறவள் என்ற உயர்ந்த அர்த்தம் ஏற்படுகிறது. தமிழிலும் புருஷனை 'இல்லறத்தான்'- 'இல்- அறத்தான்'- என்பதாக கிருஹத்தில் பண்ண வேண்டிய தர்ம காரியங்களைச் செய்ய வேண்டியவன் என்றே குறிப்பிட்டு விட்டு, பத்தினியைத்தான் 'இல்லாள்'என்பதாக வீட்டுக்கே உடைமைக்காரி என்ற மாதிரி சொல்லியிருக்கிறது. 'இல்லான்'என்று புருஷனை சொல்வதில்லை. அப்படிச் சொன்னால் ஒன்றும் இல்லாதவன் என்றே ஆகும். இல்லத்தரசி, மனைவி, மனையாள் என்று பத்தினியை சொல்வதுபோல், புருஷனை இல்லத்தரசன், மனைவன், மனையான் என்று சொல்வதில்லை. தெலுங்கிலும் பத்தினியையேதான் 'இல்லு'என்கிறார்கள்

**ஔபாஸனம்**

பாணிக்ரஹணம், மாங்கல்ய தாரணம், ஸப்த பதி முதலிய எல்லாமே விவாஹத்தோடு முடிந்து போகிற சடங்குகள். ஆனால் அப்படி முடியாமல் விவாஹத்தில் தொடங்கி, ஸந்நியாஸம் அல்லது மரணம் வரையில் நீடிக்கிற ஒரு சடங்கு விவாஹத்திலிருந்து ஏற்படுகிறது. அதாவது, எந்த அக்னியின் ஸாட்சியாக விவாஹம் செய்யப்படுகிறதோ அந்த அக்னி என்றைக்கும் அணையாமல் அதிலே செய்கிற ஔபாஸனம் என்ற சடங்கு. அக்னி காரியம் வைதிக மதத்துக்கு முக்கியமானது. பிரம்மசாரி 'ஸமிதாதானம்'என்பதாக தினமும் இருவேளையும் ஸமித்துக்களை (சுள்ளிகளை) ஹோமம் பண்ணுகிறான். அந்தக் கர்மா கலியாணத்தோடு முடிந்து விடுகிறது. கலியாணத்திலிருந்து அக்னி காரியங்கள் - யாக, யஜ்ஞாதிகள் - அதிகமாகின்றன. முதலாவதாக ஸமிதாதானத்துக்குப் பதில் 'ஔபாஸனம்'ஆரம்பிக்கிறது. 'உபாஸனை' சம்பந்தப்பட்டது எதுவோ அதுவே ஔபாஸனம். பல தேவதைகளைப் பூஜை, மந்திரம், தியானம் முதலியவற்றால் உபாஸிப்பதாகச் சொன்னாலும், ஹிந்துக்கள் எல்லோருக்கும் வேதப்படி ஏற்பட்ட

உபாஸனை 'ஔபாஸனம்' என்றே பெயர் பெற்ற அக்னி காரியம்தான். இது எல்லா ஜாதியினருக்கும் விதிக்கப்பட்ட கர்மா. நான்காம் வர்ணத்தவர்களுக்கு உபநயனமில்லாவிட்டாலும் அவர்களுக்கும் விவாஹ ஸம்ஸ்காரமும் அதிலிருந்து ஏற்படும் ஔபாஸனம் என்ற அக்னி காரியமும் உண்டு. வைத்ய நாத தீக்ஷிதீயம் முதலான தர்ம சாஸ்திர நூல்கள் சூத்ர வர்ணத்தார் எப்படி ஜாதகர்மம், நாமகரணம், ஆன்ஹிகம் (நித்தியப்படி காரியங்கள்), ஸ்நானம், தானம், தேவபூஜை, அபர கர்மம் (ஈமச் சடங்கு), சிராத்தம் முதலியன செய்ய வேண்டுமென்று விவரித்துச் சொல்லியிருக்கின்றன. அவர்களுக்கு இருக்கிற இந்த 'ரைட்'களை அவர்களுக்கு தெரிவித்து அநுஷ்டிக்கப் பண்ணாமலே, 'எந்த ரைட்'டும் இல்லை'என்று சீர்திருத்தவாதிகள் சண்டைக்கு வருகிறார்கள். நமோந்தமான ('நமோ' என்று முடிகிற) ச்லோக ரூபமான மந்திரங்களைச் சொல்லி நாலாம் வர்ணத்தவர் மற்றவர்களைப் போலவே ப்ரதி தினமும் இரண்டு வேளையும் விவாஹத்திலிருந்து தொடங்கி ஔபாஸனம் செய்ய உரிமை பெற்றிருக்கிறார்கள்.

## புது பிராம்மண ஜாதி உண்டாக்கலாமா ?

ஸகல ஜாதியாரும் ஔபாஸனம் செய்ய வேண்டும் என்கிற போது இன்னொரு விஷயத்தையும் கவனிக்கத் தோன்றுகிறது. "ஔபாஸனம் மட்டும் என்ன?அத்யயனம், காயத்ரீ. யஜ்ஞம் ஆகிய எல்லாவற்றையுமே எல்லா ஜாதியாரும் பண்ணினால் என்ன?"என்று சில பேர் கேட்கிறார்கள். ஒரு பக்கம் ஒரே நாஸ்திகம், 'வேதத்தைக் கொளுத்த வேண்டும், பிள்ளையாரை உடைக்க வேண்டும்'என்று இருந்தால், அப்படி சொல்கிறவர்கள் தங்களை சீர்திருத்தக்காரர்கள் என்று சொல்லிக் கொண்டால், இன்னொரு பக்கம் இன்னொரு தினுசு சீர்திருத்தக்காரர்களோ ஏன் பாரபட்சமில்லாமல் அத்தனை ஜாதியாருக்கும் எல்லா வைதிக கர்மாவிலும் அதிகாரம் கொடுக்கக் கூடாது என்கிறார்கள். நான் பிராம்மணன் குட்டிச்சுவராகப் போனதற்காகத் திட்டுகிறேன் அல்லவா?இதையே ஒரு ஒரு ஆதாரமாக, தங்களுக்கு ஆதரவாகப் பிடித்துக் கொண்டு இவர்கள், 'பிராம்மணன்தானே தானும் கெட்டு மற்ற ஜாதிகளையும் கெடுத்து விட்டவன்?அதனால் இப்போது மறுபடி வைதிகமான வழிகளை, வேதாத்யயனம் முதலானதுகளை உயிர்ப்பிக்கிற போது, கடமையில் தப்பின பிராம்மண ஜாதிக்கு மட்டும் இவற்றில் ஏன் அதிகாரம் தரவேண்டும்?லோக க்ஷேமத்துக்காக வேதமும், வைதிக காரியமும் இருக்க வேண்டும் என்று நம்புகிற எந்த ஜாதியாரும், எல்லா ஜாதியாரும் இவற்றை மேற்கொண்டு, அநுஷ்டிக்கும்படிப் பண்ணிவிட வேண்டும் என்று கட்சி பேசுகிறார்கள். எல்லாருக்கும் பூணூல் போடலாம்;ஸகலருக்கும் வேதம் சொல்லிக் கொடுக்கலாம் என்கிறார்கள். ஆர்ய ஸமாஜம் மாதிரி

இருக்கப்பட்ட ஸ்தாபனங்களில் எல்லாருக்கும் வேத அத்யயனம், யஜ்ஞங்கள் ஆகியவற்றில் அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். பாரதி மாதிரி எங்கேயாவது யாராவது ஒருவர் பஞ்சமனுக்கு பிரம்மோபதேசம் பண்ணி வைக்கிறார். இப்படி வேதத்தை எல்லோருக்கும் பொதுவாக்கி விட்டால் என்ன என்று சீர்திருத்தவாதிகள் கேட்கிறார்கள். இது கொஞ்சங்கூட ஸம்மதமனதல்ல. சாஸ்திரத்தில் இருப்பதை நான் சொல்ல அதன் பிரதிநிதியாக இருக்கிறவன் தான் நான். ஆகையால், இது பரம தியாகிகளாக, கொஞ்சங்கூட சொந்தப் பற்று பாசம் இல்லாமல், தங்களுக்கென்று சொத்து சுதந்திரமில்லாமல் லோக க்ஷேமத்தையே உத்தேசித்து தர்மங்களை விபாகம் பண்ணிக் கொடுத்த சாஸ்திரக்காரர்களான ரிஷிகளுக்கு ஸம்மதமில்லை என்று சொல்ல வேண்டியது என் கடமை. பாபத்தில் இரண்டு தினுசு. தனக்கான கர்மாவை விடுகிறவன் ஒருவிதமான பாபத்தை பண்ணுகிறான். இவனை கர்ம ப்ரஷ்டன் எந்பார்கள். இன்னொருத்தன் தன் கர்மாவை விட்டதோடு நிற்காமல் இன்னொருத்தனின் கர்மாவை எடுத்துக் கொண்டு, அந்த ஜாதிக்காரன் மாதிரியே அவனுக்குரிய ஆசாரங்களை அநுஷ்டிக்கிறேன் என்று புறப்படுகிறான். இவனை 'கர்மாந்தர ப்ரவிஷ்டன்' என்பார்கள். இவன்தான் கர்ம ப்ரஷ்டனை விடப் பெரிய பாபம் செய்கிறவன் என்பது சாஸ்திரத்தின் அபிப்ராயம். ஏன் ? இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று - தன் கர்மத்தை விட்டவன், வர்ண தர்மமே முழுக்கச் சரியில்லை என்று ஏதோ ஒரு 'கன்விக்ஷன்' (மனசாட்சிப்படியான உறுதி)ஏற்பட்டதால் அப்படிச் செய்தான் என்றாவது சமாதானம் சொல்லலாம். சாஸ்திர விஷயத்தில் நம் மனசாட்சிக்குஇடம் கிடையாதானாலும், ஏதோ இப்படிக் கொஞ்சம் சமாதானம் சொல்லவாவது இடம் இருக்கிறது. ஆனால், இன்னொருத்தனின் கர்மாவையும் அதற்கான ஆசார நியமங்களையும் எடுத்துக் கொள்கிறவன் என்ன நினைக்கிறான்?தனக்கு ஏற்பட்ட கர்மாவும் அதற்கான ஆசாரமுந்தான் மட்டம். இன்னொன்று உசத்தி என்ற நினைத்தே அதற்குப் போகிறான். இப்படிக் கர்மாக்களுக்குள் உயர்வு-தாழ்வு நினைப்பது நவீன கால அபேதவாதத்துக்கும், இக்காலத்தில் பீவீரீஸீவீமீ ஹ் ஷீயீ றீணீதீஷீகுஸஊ (எத்தொழிலும் கௌரவமானதே) என்பதற்கும் பொருந்தாது;பழங்கால சாஸ்திர வாதப்படியும் பொருந்தாது. வர்ண தர்மம் முழுதையும் தள்ளி விடுகிற கர்ம ப்ரஷ்டன், ரிஷிகள் என்னவோ காலத்துக்கு ஒவ்வாமல் செய்து விட்டார்கள் என்றுதான் நினைக்கிறான். அவர்களைப் பக்ஷபாதிகள் என்று நினைக்கவில்லை. ஆனால் தன்னதை விட்டுவிட்டு இன்னொரு வர்ண தர்மத்தை எடுத்துக் கொள்கிறவனோ ரிஷிகளைப் பக்ஷபாதியாக்கி விடுகிறான். இவன் புதிசாகத் தழுவுகிற வர்ணமே ஆத்ம சிரேயஸ் தருவது;இவனுக்காகப் பாரம்பரியமாக ஏற்பட்ட வர்ணத்தில் அந்தப் பலன் இல்லை என்று நினைத்துத் தானே இவன் மாறுகிறான்? அப்போது ரிஷிகள் வர்ண விபாகம் என்று பண்ணினதே வஞ்சனை என்றுதானே ஆகிறது!இதனால்தான் இவன் பண்ணுகிற பாபமே பெரிசு என்பது. 'பிராம்மணர்கள் தவறி விட்டார்கள். அதனால் புதுப் பிராம்மணரை உண்டு

பண்ணுவோம். என்றால் அது, அவன் தன் தர்மத்தை விட்டதால் நானும் என் தர்மத்தை விடுவேன் என்கிற பேச்சுதான். விடுவதோடு இல்லாமல் இன்னொன்றை எடுத்துக் கொள்வேன் என்கிறபோது இன்னம் தப்பாகிறது. அத்தனை கர்மாவும் அஹங்காரம் நசிப்பதற்காகத்தான். நமக்கென்று சொந்தமாக விருப்பு வெறுப்பு இல்லாமல், "ஈச்வராக்ஞையானது வேத சாஸ்திர மூலமாக நமக்குப் பிறப்பிலேயே எந்தத் தொழிலைக் கொடுத்ததோ அதைச் செய்வோம்"என்ற அடக்கமும் விநயமும் தான் வர்ண தர்மத்துக்கு அஸ்திவாரம். அதன்மேல் நின்று கொண்டு ஒவ்வொருவனும் தனக்கான தொழிலில் ஸதா உழைக்கிற போது அஹங்காரம் கரைகிறது. புது ஜாதி உண்டுபண்ணுவது, புதுப் பிராம்மணனைப் பண்ணுவது என்கிறபோது- எத்தனை நல்ல எண்ணத்தோடு இப்படி ஆரம்பித்தாலும் சரி, வேத சப்தங்களும், வேத கர்மாக்களும் லோகத்தில் இருக்கப் பண்ண வேண்டும் என்று மனஸார நினைத்து, அந்த உயர்ந்த லட்சியத்துக்காகவே இப்படிச் செய்தாலும் சரி - இந்த மாதிரிச் செய்யும்போது அஹங்காரம் முந்திரிக்கொட்டை மாதிரி முந்திக்கொண்டு வரத்தான் செய்யும். இது இரண்டாவது காரணம். ஒரு பக்கத்தில் இப்படியென்றால், இன்னொரு பக்கமோ என்னதான் ஸமத்வம் பேசினாலும், பகுத்தறிவு வாதம் பண்ணினாலும், நாம் இதைப் பண்ணலாமா?பாரம்பரியமாகப் பண்ணி வந்தவர்கள் மாதிரி நம்மால் இந்த மந்திர உச்சாரணம் பண்ணியும் அநுஷ்டானங்களைப் பண்ணியும் பலன் பெற முடியுமா?என்று ஒரு எண்ணம் (வீஸீயீமீக்ஷீவீஷீக்ஷீவீமீ ஹ் நீஷீனீஜீறீமீஜ்) உள்ளூர உதைத்துக் கொண்டுத்தான் இருக்கும். ஆர்ய ஸமாஜத்திலும், அதற்கப்புறம் இன்று வரை புதிசு புதிசாக முளைத்துக் கொண்டிருக்கிற அநேக மதச் சீர்திருத்தங்களிலும் ஜாதியே இல்லை என்று வைத்து எல்லாருக்கும் வேதத்தில் பூர்ண அதிகாரம் கொடுத்திருந்தும்கூட இவற்றில் பிராமணரல்லாதவர் ஏன் கூட்டம் கூட்டமாக சேரவில்லை?புதிசாக ஒன்றை எடுத்துக் கொள்வதிலிருக்கிற கூச்சம்தான் முக்கியக் காரணம். நாஸ்திகமாகவே போனாலும் போகலாமே தவிர, பழை ஆஸ்திக ஆசாரங்களை நம் இஷ்டத்துக்கு திருப்பிக் கொள்ளக் கூடாது என்ற அடிப்படையான உயர்ந்த எண்ணம் பிராம்மணரல்லாதோருக்கு இருப்பதே முக்கிய காரணம். ஆகையினால், 'நாங்கள் எல்லோரையும் வேதத்துக்கு திருப்புவோம்'என்று ஓரிரண்டு பேர் கிளம்பினாலும், அவர்களோடு ஏதோ நாலைந்து சதவிகிதம் போனாலும் பாக்கி 95 சதவிகிதம் இப்போதுள்ள ஹிந்து சமுதாய அமைப்பில்தான் ஒட்டிக்கொண்டிருக்கும். இதனாலேயே அதில் சேருகிறவர்களுக்கும் உள்ளூர பயம், தாழ்வு மனப்பான்மை இருக்கத்தான் செய்யும். நாம் பண்ணி பலன் வருமா என்று சந்தேகம் இருக்கத்தான் செய்யும். இப்படியிருந்தால் சித்தம் சுத்தமாவது எப்படி?அஹங்காரம் மாதிரியே பயம், தாழ்வுணர்ச்சி, சந்தேகம் எல்லாம் அழுக்குகள். இவை இருக்கிறவரையில் சித்தம் சுத்தமாகாது. அப்படிச் செய்கிற காரியத்தால் லோகத்துக்கும் பிரயோஜனம் ஏற்படாது. ஒரு பக்கம் இப்படி இருக்கிற போதே, இன்னொரு பக்கம், "அவன் விட்டு விட்டதை நாம் செய்கிறோமல்லவா?என்ற அஹங்காரம், சவால் விடுகிற மாதிரியான

(நீலீணீறீமீஸீமீ பண்ணுகிற) மனப்பான்மை எல்லாமும் இருக்கும். இயற்கையாக ஒரு வர்ணத்தார் செய்து வந்ததை மற்றவர்கள் எடுத்துக் கொண்டு செய்கிறபோது அதைப் பெரிதாகப் பிரகடனம் பண்ணிக் காட்ட வேண்டும் என்று வந்துவிடும். 'டெமான்ஸ்ட்ரேஷன்'வந்துவிட்டால் அப்படிப்பட்ட காரியத்தில் ஹ்ருதயம் கலக்காது, ஹ்ருதய சுத்தி இருக்காது. மொத்தத்தில் இவனுக்கும் பலன் இராது;சமூகப் பயனும் விளையாது. உணர்ச்சி வசப்படாமல், பகுத்தறிவோடு ஆலோசனைப் பண்ணிச் சில யீணீநீமீ-களை (யதார்த்த உண்மைகளை) யீணீநீமீ-கள் என்று ஒப்புக் கொள்ள வேண்டும். வேத மந்திரங்களில் சுத்தமான சப்தத்துக்குள்ளேயே சக்தியைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறேன் அல்லவா?அந்த ஸரியான சப்தங்கள் தான் என்றில்லை. ஜெர்மன் பாஷை, அல்லது கிட்டத்திலேயே உள்ள உருது இவைகளை எடுத்துக் கொண்டாலும் அவற்றிலே உள்ள சில சப்தங்கள் நமக்கு நெஞ்சாங்குழியை வலிக்கிற மாதிரி, பல்லை உடைக்கிற மாதிரி இருக்கின்றன. லேசில் உச்சரிக்க வரமாட்டேன் என்கிறது. ரொம்பப் பக்கத்திலேயே உள்ள தெலுங்கை எடுத்துக் கொண்டால்கூட 'ச'வருகிற இடங்களில் 'த்ஸ' மாதிரி, 'ஜ'வருகிற சில இடங்களில் ஞ்ஜ சப்தம் மாதிரி அவர்கள் அநாயஸமாகப் பேசிக்கொண்டு போகிற மாதிரி நம்மால் முடியவில்லை. ஆனால் நம் ஊரிலே ஒரு ஜெர்மன் குழந்தை பிறந்தால், தெலுங்குக் குழந்தை பிறந்தால் அது பேச்சு வருகிறபோதே அந்தந்த பாஷையின் கஷ்டமான சப்தங்களைக் கூட 'நாச்சுரலாக' உச்சரித்து விடுகிறது. பாரம்பரியம் என்ற ஒன்று கிடையாது என்று என்னதான் சண்டை போட்டாலும் பிரத்யக்ஷ உண்மையாக யீணீநீமீ-ஆக இருக்கிறது. இப்படியே வேத சப்தங்கள் அவற்றையே யுகாந்தரமாக ரக்ஷித்து வந்திருக்கிற பரம்பரைக்கு - இப்போது இரண்டு, மூன்று தலைமுறைகளாக அந்த ரக்ஷணை விட்டுப்போன பிறகும் கூட- ஸுலபமாக, இயற்கையாக வருகிறது. மற்றவர்களுக்கு இப்படிச் சொல்ல முடியாது. மந்திரங்களில் உச்சாரணம் தப்பினால் பலனே போய்விடுகிறது என்பதைப் பார்க்கிற போது இவர்கள் எத்தனை நல்ல எண்ணத்தில் அத்யயனாதிகளைப் பண்ணினாலும் பலனில்லை என்றுதான் ஆகும்? இன்னொன்று - எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக ஒரு தர்மத்தில் வந்து பாரம்பரியாக (லீமீக்ஷீவீபீவீமீணீக்ஷீஹ்-யாக) அதற்கேற்ற ஸ்வபாவத்தைப் பெற்றவர்களே அதை விட்டு விடுகிறார்கள் என்கிறபோது புதிசாக, அதுவும் இந்த நவீன காலச் சூழ்நிலையில் வேறொருவன் அந்த தர்மத்தை எடுத்துக் கொண்டு அப்பியஸிக்கிறேன் என்றால் அது எப்படி உருப்படியாக வரும்?உத்தேசம் நல்லதாக இருந்தாலும்கூட மநுஷ்ய மனஸ் பண்ணுகிற திரிசமனில் இதெல்லாம் வெறும் "சாலஞ்சாக"வும் சண்டையாகவும்தான் முடியும். ஆனதால் யோஜித்துப் பார்க்கிறபோது, இப்போது தேசத்தில் இரண்டு வித விபரீதமிருக்கிறதே (வேத கர்மாநுஷ்டானமே வேண்டாம் என்று பிராம்மணன் விட்டுவிட்டு இருப்பது ஒரு விபரீதம். மற்றவர்களும் வேத கர்மாநுஷ்டானங்களை எடுத்துக் கொள்ளலாம் என்பது இன்னொரு விபரீதம்) இப்படி இரண்டு இருப்பதில் எது எதைவிடப்

பெரிய தப்பு என்று சொல்லத் தெரியவில்லை. செய்ய வேண்டியவன் அதைச் செய்யாவிட்டால் தப்பு;செய்யக்கூடாதவன் அதை செய்தாலோ அதைவிடத் தப்பு என்றுதான் பகவான் கீதையில் ஜட்ஜ்மென்ட் கொடுத்திருக்கிறார். "ஸ்வதர்மே நிதனம் ச்ரேய:பரதர்மோ பயாவஹ:" தனக்கான கர்மாவைப் பண்ணுவதால் சாவு ஏற்பட்டாலும் அதுவே சிரேயஸ். இன்னொருத்தனின் தர்மத்தை மேற்கொண்டால் அது பெரிய பயத்தைத் தருவது என்கிறார். சாவு எப்படியும் வருவதால் ஸ்வதர்ம நிஷ்டனாகச் செத்துப் போனால் மறுபடி பிறக்க வேண்டாம். பகவானிடமே போய் விடலாம். அதுதான் பெரிய ச்ரேயஸ். "இன்னொருவனின் தர்மத்தால் பயம்"என்றால் என்ன?அது நரகத்தில் தள்ளிவிடும் என்றுதான் அர்த்தம். பெரிய பயம் அதுதான். நரகம் என்று ஒன்று இருப்பதாக நம்பாவிட்டாலும், இந்த ஜன்மாவிலோ, அடுத்த ஜன்மாவிலோ நரகத்துக்கு சமமான கஷ்டத்தை அநுபவிக்கும்படியாகும் என்று வைத்துக் கொள்ளலாம். அது தவிர, இன்னொரு தர்மத்தைப் பண்ணும் போதே அதை நாம் பண்ணுவதால் பாபம் சம்பவிக்குமோ என்று உள்ளுக்குள்ளே ஒரு பயம் அரித்துக் கொண்டுதான் இருக்கும். ஏனென்றால் இவன் வேத சாஸ்திரங்களை நம்பாத நாஸ்திகனல்ல. அப்படியிருந்தால் பிராம்மணனுடைய வைதிக காரியங்களை இவன் எடுத்துக் கொண்டிருக்க மாட்டானே!ஆகையால் நல்ல உத்தேசம் என்று நினைத்துக் கொண்டே இவன் இப்படிப் பண்ணினாலும், வேத சப்தம் லோக க்ஷேமம் தரும் என்று சொன்ன அதே சாஸ்திரத்தில் தானே, இன்னொருத்தனின் தர்மம் பீதி விளைவிப்பது என்று சொல்லியிருக்கிறது!என்று உள்ளூரக் குடைந்து கொண்டு தானிருக்கும். மொத்தத்தில் விஷயம் என்ன வென்றால், சாஸ்திரம் என்றால் பூரணமாக சாஸ்திரத்தை ஒப்புக் கொள்வதாக இருக்க வேண்டும். அல்லது சாஸ்திரமே வேண்டாம் என்று முழுக்க நாஸ்திகனாக இருந்து விடவேண்டும். அப்படியில்லாமல் தம்முடைய புத்திசாலித்தனத்தைக் காட்டி சாஸ்திரத்தை நம் இஷ்டப்படி வளைத்துச் சிலதை எடுத்துக் கொள்வது, சிலதை விடுவது, சிலதை மாற்றுவது என்றால் அது நாஸ்திகத்தை விட பாபகரமானது. வேத மாதா நம் இஷ்டப்படி, இழுத்த இழுப்புக்கு வரவேண்டும் என்று நினைப்பது பெரிய தோஷம். இப்படி நினைத்துக் கொண்டே வேத அத்யயனம் பண்ணுகிறேன் என்றால் அது பரிஹாஸமான காரியம்தான். சீர்திருத்தவாதிகளிடம் எனக்குக் கோபமில்லை. அவர்களுடைய நல்ல எண்ணத்திலும் சந்தேகமில்லை. ஆனால் ஆலோசனை போதாததால், தெரியாமலே பெரியதோஷத்தைச் செய்யப் பார்க்கிறார்கள். இங்கேயிருந்து அங்கே போகிறேன் என்று இவர்கள் வேலியை உடைக்கிற போது அங்கே பாக்கிக் கொஞ்சம் பேர் இருக்கிறவர்களும் இங்கே வந்து விடலாம் என்று வழிவிட்ட மாதிரி ஆகிவிடுகிறது என்பதை யோஜித்துப் பார்க்க வேண்டும். வேதாத்யயனத்தில் இருக்கிற அதே கௌரவம் தன்னுடைய தொழிலில் இருக்கிறது என்ற நிஜமான உணர்ச்சி இருந்தால், இப்படி இதைவிட்டு அதற்குப் போகத் தோன்றாது. 'பிராம்மணர்கள் வேதத்தை விட்டு விட்டார்களே, அதனால் லோக க்ஷேமமான மந்திர சப்தம் போய் விடுகிறதே, அதற்காகத்தான்

புதுப் பிராம்மணர்களைப் பண்ண வேண்டும் என்றால் இதிலே அஹங்காரம், சாலஞ்ஜ், டெமான்ஸ்ட்ரேஷன், இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸ் ஆகிய இத்தனை அனர்த்த பரம்பரை உண்டாவதைக் கவனிக்க வேண்டும். ஆகையால் வேதம் உயிரோடு இருக்கவேண்டும் என்ற லக்ஷ்யத்திற்கு நிஜமாகப் பாடுபடுவதானால், அதற்காகவே ஏற்பட்டு, யுகாந்திரமாக அந்த தர்மத்தை அநுஷ்டித்து வந்தவர்களையேதான் அதிலே மறுபடி திருப்பிவிட வேண்டும். பிராம்மணனை நான் திட்டுகிறேன் என்றால் இவனை திருத்தவே முடியாது என்று தலைமுழுகிவிட வேண்டும் என்று அர்த்தமில்லை. பிராம்மண ஜாதிக்காரர் ஒருத்தன்தான் கெட்டதற்கெல்லாம் ஆஸ்பதமானவன் என்று நான் நினைப்பதாக ஆகாது. துருக்க ராஜ்யமும், பிரிட்டிஷ் ராஜ்யமும் வந்தபோது பிராம்மணர்கள் தர்மத்தை விட்டார்களே, இப்போதும் இந்த புது நாகரிகப் போக்குகளில் அதிகம் போகிறார்களே என்று நான் திட்டுவதால், இவர்களிடம் மட்டுமே ஸ்பெஷலாக தப்பு இருக்கிறது என்று ஆகாது. இவர்களுடைய ஸ்தானத்தில் யார் இருந்தாலும் இப்படிப் பட்ட ஸந்தர்ப்ப நெரிசல்களில் இதே மாதிரிதான் பண்ணியிருக்கக் கூடும். இப்போது இவரிகளைக் குற்றவாளிகளாக்கிவிட்டு இவர்களுடைய இடத்தில் தாங்கள் வந்தால் நல்லபடியாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறவர்களும் இந்த 'ஸர்கம்ஸ்டன்ஸ்'களில் (சூழ்நிலையில்) இதே தப்புகளைப் பண்ணியிருக்கக்கூடும். பாரம்பர்யமாக புத்தி வேலையிலேயே இருந்தவர்கள் சந்தர்ப்ப வேகங்களில் மத விஷயமாக, ஆத்ம ஸம்பந்தமாக அந்த புத்தி சக்தியை உபயோகிக்க முடியாமல் லௌகிகத்தில் இறங்கினால் இப்படித்தான் ஒரே தலைகீழாகக் சறுக்கிக்கொண்டு போகும்படியாகும். இதை நான் யி஡ூலவமீ வீயீஹ்பண்ணுகிறேன். (நியாயமென்று ஒப்புக்கொள்கிறேன்) எனறு அர்த்தமில்லை. ஆனாலும் இந்தக் காலத்தில் சீர்திருத்த எழுத்துக்காரரர்கள் விபச்சாரத்திற்குக்கூட 'ஸைகாலஜி'யைக் காட்டி சமாதானம் சொல்வதால், அந்த சமாதானம் பிராம்மணர்கள் கட்டுப்போனதற்கும் கொஞ்சம் உண்டு என்பதை எடுத்துக் காட்டினேன். நான் பிராம்மணர்களைக் கண்டிப்பதால், அவர்கள் மட்டும்தானஅ அயோக்கியர்கள் என்பதாக மற்றவர்களும் மட்டம் தட்ட வேண்டும் என்று ஆகாது. அவர்களுக்கு எடுத்துச்சொல்லி யெக்கியர்களாகப் பண்ணுவதுதான் மற்றவர்களினஅ கடமை. இந்த ஒரு நாற்பது ஐம்பது வருஷமாக *பிராம்மணன் என்றால் கிள்ளுக்கீரை என்று நினைத்து எத்தனை விதமாய் பரிஹாஸம், மான பங்கம் பண்ணினாலும் அத்தனையும் பொருத்துக் கொள்கிற ஸாதுக்களாயிற்றே;இதற்கு முந்தியும் நாலைந்து தலைமுறைகளுக்கு முன்வரையில் இத்தனை ஆத்மிக குலதனத்துக்கும் கலைகளுக்கு கார்டியன்களாகக் காப்பாற்றிக் கொடுத்தவர்களாயிற்றே என்பதை நினைத்து மற்றவர்கள் இப்போது அவர்களை அவர்களுக்கான வாழ்க்கை நெறியில் பிரியத்தோடு ஊக்க வேண்டும். அவர்கள் மறந்துவிட்ட உயர்ந்த தர்மத்தை, தியாகத்தை அவர்களுக்கு நயமாக எடுத்துக்காட்டி உறைக்கும்படியாகப் பண்ணவேண்டும். விஷயந்தெரியாத சில பிராமணர்கள் எப்போதோ மற்றவர்களைக் கொடுமைப் படுத்தினார்கள்

என்பதற்குப் பதிலடியாக இப்போது இவர்களை த்வேஷித்துக் காரியங்களைச் செய்வது சரியில்லை. பழைய கொடுமைகளைப் போக்க வேண்டும். மற்றவர்களுக்கு ஸமூஹத்தில் உயர்ந்த ஸ்தானம் வர வேண்டும் என்று போராடியதிலும் பிராம்மணர்கள்தானே முன்னிலையில் இருந்திருக்கிறார்கள் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். பிராம்மணர்களின் அதிக்கிரமத்தை பிராம்மணர்கள்தானே அதிகம் எடுத்துச் சொல்லி திருத்தினார்கள்?ஆகையால் துவேஷத்தை வளர்த்துக்கொண்டே போவதில் பயனில்லை. அது தமிழ்ப் பண்பாடு என்ற விசேஷித்து சொல்வதற்கு ஏதுமில்லை. துரதிஷ்டவசமாக பிராம்மணர்கள் நல்ல சீர்திருத்தம் என்று நினைத்து தப்பான ஸமத்துவங்களை ஏற்ப்படுத்தப் போனதில், கீழேயிருப்பதை மேலே உயர்த்துவதற்குப் பதில் மேலே இருக்கிறதை கீழே இறக்கியதாகத்தான் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு தினுஸில் ஸமமாய் இருக்கலாம். ஒன்று எல்லாம் உயர்ந்திருக்கலாம். அல்லது எல்லாம் தாழ்திருக்கலாம். பாரத்தை உயரே தூக்கிப் போவது கஷ்டம். கீழே உருட்டி விடுவது ஸுலபம். அந்த மாதிரிதான் நம்முடைய சீர்திருத்த சமத்துவம் எது ஸுலபமோ அதைப் பண்ணிவிட்டது. ணிஹீஸ்ஷணீறீவீமீ ஹ், மீஹீணீஸ்ஷறீவீமீ ஹ் (ஸமத்துவம்) என்று பண்ணினதில் ஹீஸ்ஷணீறீவீமீ ஹ்(தரம்) போய்விட்டது!வாஸ்தவத்தில் ஒரே மாதிரியான காரியத்தை எல்லாரும் பண்ணுகிற ஸமத்வம் அவசியமானதேயில்லை. பலவிதமாகப் பிரிந்து காரியங்களைச் செய்வதால் ஸமத்வம் இல்லை என்றும் அர்த்தம் இல்லை. இதைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறேன். எனவே இப்போது ஒரே மாதிரி எல்லாரும் செய்கிற ஸ்ஷஸீவீயீஷீக்ஷீனீவீமீ ஹ்-ஐ விட்டு விட்டு, பிரிந்து செய்தும் ஐக்கியமாயிருக்கிற ஸ்ஷஸீவீமீ ஹ்-க்காகப் பிரயத்தனம் பண்ண வேண்டும். தமிழ் நாகரிகத்தில் ப்ரம்ம தேவேஷமும், ஸம்ஸ்கிருத த்வேஷமும் இருந்ததேயில்லை என்பதைப் புரிந்து கொண்டு விட்டால் போதும். ஆத்மிக விஷயங்கள், மத சாஸ்திரங்கள், காவியங்கள், கலை நூல்கள் அத்தனையும் ஏராளமாக இருக்கிற ஸம்ஸ்கிருதத்திடமும் துவேஷம் போய், "அது நம் பாஷையும்தான்" என்ற உணர்ச்சி வர வேண்டும். எல்லோரும் அதைக் கற்க வேண்டும். லோக க்ஷேமத்துக்காக பிரம்மண்யம் என்று தனியாக ஒன்று இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட்டு, அதற்கான அத்யயன யஜ்ஞாதிகளை அவற்றில் அதிகாரம் பெற்றவர்கள் பண்ணும்படி உத்ஸாஹப் படுத்த வேண்டும். இப்போது வேதம் உபநிஷத்து எல்லாம் புஸ்தகமாக வந்துவிட்டதால் எல்லோரும் அவற்றின் கருத்துக்களைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் பல வருஷங்கள் பிடிக்கிற அத்யயனம், யஜ்ஞகர்மா முதலியவற்றைச் செய்யப் போக வேண்டாம். அது அவசியமேயில்லை. நல்ல எண்ணம், சீர்திருத்தம் எதுவானாலும் முதலில் அடக்கம் வேண்டும். அப்படியிருந்து கொண்டு செய்தால் சாஸ்திர விரோதமாக போக வேண்டியது வராது.

## ஸ்திரீகளின் ஒரே வைதிகச் சொத்து

ஔபாஸனம் எல்லா ஜாதியாருக்கும் உண்டு என்றேன். அதே போல் ஔபாஸனம் ஆண்-பெண் இருவருக்கும், பதி-பத்தினி இரண்டு பேருக்கும் சேர்ந்த பொதுக் காரியமாய் இருக்கிறது. பதி கிருஹத்திலிருக்கும் போது அவனோடு கூடச் சேர்ந்து பத்தினியும் ஔபாஸனம் பண்ணுகிறாள். அவன் ஊரிலில்லா விட்டாலும் ஔபாஸனாக்னியில் ஹோமம் பண்ண வேண்டிய அக்ஷதைகளை அதில் பத்தினியே போட வேண்டும். அந்த ரைட் அவளுக்கு வேதத்திலேயே கொடுக்கப்பட்டிருக்கிறது. பிற்பாடு வந்த பௌராணிகமான விரதங்கள், பூஜைகள் இவைகளைச் சேர்க்காமல் சுத்த வைதிகமாகப் பார்த்தால், ஔபாஸனத்தைத் தவிர ஸ்திரீக்குச் சொந்தமாக எந்த வேத கர்மாவும் இல்லை. புருஷன் பண்ணுகிறதிலெல்லாம் ணீ�்ஙூமீ ஷீனீணீமீ வீநீ-ஆக இவளுக்கு ஷலீணீக்ஷீமீகிடைத்து விடுகிறது. ஆகவே, 'இவள் கிருஹரக்ஷணை தவிர தனியாக எந்த தர்மமும், கர்மமும் பண்ண வேண்டாம். பண்ணினாலும் ஒட்டாது என்று தான் வைதிகமான தர்ம சாஸ்திரத்தில் இருக்கிறது. ஒரே மீஜ்நீமீஜ்மீ வீஷீஸ(விதி விலக்கு) ஔபாஸனம். ஆகையால் 'ரைட்' 'ரைட்'என்று கேட்கிற ஸ்திரீகளை இந்த விஷயத்தில் கிளப்பிவிட்டாவது வீட்டுக்கு வீடு ஔபாஸனாக்னி ஜ்வலிக்கும்படிச் செய்யலாமோ என்று எனக்கு ஆசை. ஔபாஸனம் செய்யாத புருஷனிடம் பத்தினியானவள், "உங்களுக்குக் கொஞ்சமாவது வேத ஸம்பந்தம் இருக்கும்படியாக, (நீங்கள் வைதிகமான பாக்கியெல்லாவற்றையும் விட்டுவிட்டாலும்) வேத மந்திரமான காயத்ரீயாவது பண்ணுகிறீர்கள். இப்போது பண்ணாவிட்டாலும், மந்திரமே மறந்து போயிருந் தாலும்கூட, பின்னாலாவது என்றைக்காவது பச்சாதாபம் ஏற்பட்டால் காயத்ரீ பண்ணுவதற்கு அநுகூலமாக உங்களுக்கு உபநயன ஸம்ஸ்காரமாவது ஆகியிருக்கிறது. எனக்கோ உபநயனமும் இல்லை, காயத்ரீயும் இல்லை. நம் மதத்துக்கே, லோகத்துக்கே, ஸ்ருஷ்டிக்கே ஆதாரமாக இருக்கப்பட்ட வேதத்தில் ஸ்திரீயான எனக்கு ஏதாவது 'ரைட்'இருக்குமானால் அது இந்த ஔபாஸனம்தான். நீங்கள் இதுவும் செய்யாவிட்டால் எனக்கு வேத ஸம்பந்தம் அடியோடு போய் விடுகிறதல்லவா?என்று சண்டை போட்டு அவனை ஔபாஸனம் ண்ண வைக்க வேண்டும்.இந்த மஹா பெரிய சொத்துரிமைக்குத்தான் பெண்கள் சண்டை போட வேண்டும். ஸ்திரீகளுக்காவது ஔபாஸனம், அக்னி ஹோத்ரம் (ஔபாஸனத்தைப் போலவே நித்யம் இரண்டு வேளை செய்கிற அக்னி ஹோத்ரம் என்று ஒன்று உண்டு. இதைப் பற்றி அப்புறம் சொல்கிறேன்) முதலிய வைதிக சொத்துக்களில் சிரத்தையிருக்க வேண்டும் என்பதே நான் சொல்வதன் தாத்பர்யம். ஸ்திரீகள் யோசித்துப் பார்ர்ர வேண்டும், "அகத்தில் எத்தனையோ அக்னி இருக்கிறதே!காப்பி போட, சமைக்க, ஸ்நானத்துக்கு வெந்நீர் வைக்க இதற்கெல்லாம் அகக்னியிருக்கிறதே! எதை சாட்சியாக வைத்துக் கொண்டு விவாஹம் பண்ணிக் கொண்டோமோ அது ஔபாஸனமில்லாமல் அணைந்துபோக விடலாமா? என்றுய அக்னி எப்போதும் அணையாமலிருக்க

உமி போட்டு வரவேண்டும். இதற்காக நெல்லை வீட்டில் குத்தினால் அதில் பல பிரயோஜனங்கள் ஏற்படுகின்றன. உமி கிடைப்பதோடு, நாம் சாப்பிட ஆரோக்யமுள்ள கைக்குத்தல் அரிசி கிடைப்பது;நெல்லைக் குத்துகிற ஏழைக்கு ஏதோ கொஞ்சம் ஜீவனோபாயம் கிடைப்பது, என்றிப்படி. ஹோமம் செய்ய வேண்டிய அட்சதை மட்டும் பத்தினியே குத்தியதாக இருக்க வேண்டும். இது மந்திர பூர்வமான காரியம். ஒளபாஸனத்துக்கு அதிகச் செலவு இல்லை. அதைச் செய்ய ரொம்ப நேரமும் பிடிக்காது. ஆகவே மனஸ் மட்டும் இருந்து விட்டால் எல்லாரும் செய்யலாம். இதிலே உமிக்காகப் பிறருக்குக் கூலி கொடுத்துச் குத்துச் செய்வதன் வழியாகப் பரோபகாரம்;மெஷின் உஷ்ணம் சேராமல் போஜனத்துக்கு ஆரோக்யமான வஸ்து என்கிறவையும், கைக்குத்தலரிசி சேர்ப்பதில் காந்தீயமும்கூட வந்து விடுகிறது. ஒளபாஸன அக்னியைக் காப்பாற்றி வந்தால் பூதப் பிரேத பிசாசாதிகளால் வரும் கஷ்டங்கள், வியாதிகள் கிட்டவே வராது. இப்பொழுது எவ்வளவோ பிராம்மணர்கள் வீட்டில் கூட வேப்பிலை போடுவது, பிரம்பால் அடிப்பது, மசூதிக்குப் போய் ஊதுவது, என்னிடம் வந்து பிரார்த்திப்பது என்றெல்லாம் செய்யும்படியாகியிருப்பது ஒளபாஸன அக்னி இல்லாததன் கோளாறுதான். புருஷப் பிரஜைகளும் ஸ்திரீ ப்ரஜைகளும் எந்த விகிதத்தில் பிறக்க வேண்டுமோ அப்படிப் பிறப்பதற்கும் ஒளபாஸனம் ஸஹாயம் பண்ணும் என்று முன்னமே சொல்லியிருக்கிறேன். ஒளபாஸன பஸ்மா (சாம்பல்) இட்டுக்கொள்வது பெரிய ரக்ஷை.

## அக்னியின் சிறப்பு

கிருஹஸ்தன் செய்ய வேண்டிய ஏராளமான அக்னி காரியங்களுக்கு ஆரம்பம்தான் ஒளபாஸனம். வேத மதத்துக்கு அக்னி ரொம்ப முக்கியம். அக்னி நாராயணன் என்றே அவரைச் சொல்கிறார்கள். ருத்ர ஸூக்தங்களைப் பார்த்தாலும் அக்னி சம்பந்தமே தெரிகிறது. திருவண்ணாமலையில் இப்படி அக்னி மலையாகவே ஈச்வரன் பூர்வத்தில் இருந்திருக்கிறார். அம்பாளையும் விளக்கிலே ஜோதி ஸ்வரூபிணியாக ஆராதிக்கிற வழக்கம் விசேஷமாய் இருக்கிறது. மலையாளத்தில் பகவதி பூஜைகளில் மூர்த்தி, யந்திரம் இவை முக்கியமில்லை;தீபத்தில்தான் தேவியை ஆவாஹனம் செய்கிறார்கள். ஈச்வரனின் அக்னி நேத்திரத்திலிருந்து உத்பவித்த ஸுப்ரமண்ய ஸ்வாமியையும் ஜோதி ஸ்வரூபமாகவே சொல்கிறோம். "ஆரியர்கள் என்றாலே திவீக்ஷீமீ-ஷ்ஷீக்ஷீஉலீவீஜீஜீமீக்ஷீஉ தான்" என்று ஆராய்ச்சிக்காரர்கள் சொல்கிறார்கள். வேத மதத்தில் ஒரு பிரிவாகவே இருக்கப்பட்ட பார்ஸிகளைப் பார்த்தாலும் அவர்கள் அக்னியை ரக்ஷிப்பதுதான் பிரதானமான வழிபாடு என்று என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். பிராம்மணர்களுடைய வீட்டுக்கு வீடு

அக்னி ஜ்வலித்து அதில் சாஸ்திரப்படி சேர்க்க வேண்டிய நெய், பால், ஹவிஸ் மணந்து கொண்டிருந்தால் அரோக திடகாத்திரமும் உத்தமமான மனோவிருத்திகளும் ஸகல ஜாதி ஜனங்களுக்கும் ஏற்படும். எந்த தேவதைக்கான யஜ்ஞம் செய்தாலும் அக்னியில்தான் ஹோமம் செய்ய வேண்டும் என்ற விஷயம் முன்பே சொன்னேன்.

## அக்னி காரியங்கள்

இப்படி ஏறக்குறைய நானூறு யஜ்ஞங்கள் வேதத்தில் இருப்பதாகச் சொல்கிறார்கள். இவற்றில் ஔபாஸனம் மட்டும் நாலு வர்ணத்தாரும் செய்யலாம் என்றாலும் பிரம்ம க்ஷத்ரியர்களே அதிகம் செய்ததாகவும் வைச்யர்கள் நடைமுறையில் அவ்வளவாகச் செய்து வரவில்லையென்றும், பிற்பாடு க்ஷத்ரியர் பண்ணுவதும் குறைந்து பிராம்மணர் மட்டுமே பண்ண ஆரம்பித்ததாகவும் சொல்கிறார்கள். க்ஷத்ரியர்களுக்கென்று மட்டுமே புஜபலம், வீர்ய விஜயம் முதலியவற்றைத் தருகிற யஜ்ஞங்கள் இருக்கின்றன. ராஜஸூயம், அச்வமேதம் முதலியவற்றைச் சக்கரவர்த்திகளே பண்ணியிருக்கிறார்கள். இப்படியே தன தானிய ஸம்ருத்தி (செழிப்பு)க்காக வைச்யர்களுக்கென்றேசில யஜ்ஞங்கள் உள்ளன. யாகத்தை நடத்திக் கொடுக்கும் ஹோதா, உக்தாதா, அத்வர்யு, பிரம்மா எல்லாரையும் பிராம்மணர்களாக வைத்துக் கொண்டு, யஜமானனாக க்ஷத்ரியனோ வைசியனோ இருந்து யாகம் செய்யவேண்டும். (அந்தக் காரியங்களையும் இந்த இரு ஜாதிகள் செய்வது என்றால் இவர்கள் செய்ய வேண்டிய ரக்ஷணை, வியாபாரம், விவசாயம் முதலியன பாழாகி விடுமே!) எல்லா யாகங்களையும் எல்லா பிராம்மணர்களும் செய்யவேண்டும் என்றில்லை. இவற்றில் அநேகம் குறிப்பிட்ட ஒவ்வொரு பலனுக்காக இருக்கும். பிள்ளை பிறக்கவேண்டுமென்பதற்காகப் புத்ரகாமேஷ்டி செய்வது என்று ராமாயணத்தில் கேள்வி பட்டிருக்கிறோமல்லவா?அப்படி. இவ்வாறு ஒரு இஷ்டத்தை உத்தேசித்துப் பண்ணுவது காம்ய கர்மா எனப்படும். அது ஒருவர் பிரியப்பட்டால் செய்கிற ஷீஜீமீ வீஷீஸீணீறீ காரியந்தான். இஷ்டமிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆத்ம சுத்திக்காகவும், லோக க்ஷேமத்துக்காகவும் செய்தே தீர வேண்டிய ஷீதீறீவீரீணீமீ ஷீகூஷீஹ் கர்மாக்களும் உண்டு. அவற்றுக்கு நித்யகர்மா என்று பெயர். 'நித்ய' என்றால் இங்கே தினந்தோறும் பண்ணுவது என்ற அர்த்தமில்லை. இப்படிப்பட்ட நித்ய கர்மாக்களாகப் பண்ண வேண்டியவை இருபத்தியோரு யக்ஞங்கள். நானூற்றில் மீதமுள்ளதைப் பண்ணினால் பண்ணலாம். பண்ணாவிட்டாலும் தோஷமில்லை. ஆனால் நாற்பது ஸம்ஸ்காரங்களிலேயே சேர்க்கப்பட்டு விட்ட இந்த இருபத்தியொன்றை ஜன்மாவில் ஒரு தரமாவது செய்யவேண்டும். இந்த இருபத்தியொன்றும் ஏழு பாக யக்ஞங்கள், ஏழு ஹவிர்

யக்ஞங்கள், ஏழு ஸோம யக்ஞங்கள் என்று பிரியும் என்று முன்பே சொல்லியிருக்கிறேன். விவாஹம் அக்னி ஸாட்சியாக அக்னியில் ஹோமத்துடன் தானே நடக்கிறது? அந்த அக்னியிலேயே விவாஹத்தின் போதே ஔபாஸனம் ஆரம்பிக்கப்படுகிறது. பிறகு வாழ்நாள் பரியந்தம் அந்த ஔபாஸனாக்னி அணையாமல் அதை உபாஸிக்க வேண்டும். பாக யஜ்ஞங்கள் என்று ஏழு சொன்னேனே, அவற்றையும், கிருஹத்தில் நடக்கும் உபநயனம் முதலான காரியங்களையும் சிராத்தம் முதலியவைகளையும் ஔபாஸனம் அக்னியைக் கொண்டேதான் செய்யவேண்டும். தகப்பனாருடைய ஔபாஸனாக்னியிலிருந்தே புத்திரனின் விவாஹத்தில் அக்னி வளர்க்கப்படும். இதுவே அப்புறம் புத்திரனின் ஜீவ பரியந்தமும் அவனுக்கு ஔபாஸனாக்னியாகிறது. இப்படி அவிச்சின்னமாக (முறிவு படாமல்) தலைமுறை தலைமுறையாக அநேத அக்னி போகும். ஒரு தனி மனிதனையும், அவனுடைய ஒரு குடும்பத்தையும் மட்டுமே மையமாகக் கொண்டு அமைகிற - அதாவது ஔபாஸன அக்னி உபயோகிக்கப்படுகிற - எல்லா கர்மங்களுக்கும் க்ருஹ்ய கர்மாக்கள் என்று பெயர். பாக யக்ஞங்கள் ஏழுங்கூட இப்படிப்பட்ட க்ருஹ்ய கர்மாக்கள்தான். இவை அநேகமாக ஒரு குடும்ப ஸமாசாரமாதலால் (பலன் நேராக ஒரு குடும்பத்தை உத்தேசித்ததானாலும், அதில் பிரயோகமாகிற வேத மந்திர சப்தம் ஸகல ஜகத்துக்கும் நல்லது செய்யத்தான் செய்யும்) ரொம்ப விஸ்தாரமாயில்லாமல் ஙனீணீறீறீ ஙநீணீறீமீ-ல் இருக்கிறவை. க்ருஹ்ய ஸூத்ரங்கள் இந்தக் கர்மாக்களை விவரிக்கின்றன.அவை ஸ்ம்ருதிகளைச் சேர்ந்தவை. ஸ்ம்ருதிகள் சொல்வதால் இவற்றுக்கு ஸ்மார்த்த கர்மாக்கள் என்றும் ஒரு பெயர் உண்டு. இப்படியில்லாமல் விசேஷமாக லோக க்ஷேமத்தை உண்டாக்குவதாக (ஒரு குடும்பத்தின் கல்யாணம், திவஸம், இவற்றில் ஸம்பந்தப்படுவதோடு நின்று விடாததாக) இருக்கிற மீறீணீதீஷீக்ஷீணீமீ மீ-ஆன (விரிவான) மற்ற யக்ஞங்கள் ச்ரௌத கர்மாக்கள் எனப்படும். வேதமான ச்ருதியையே நேர் ஆதாரமாகக் கொண்டு, இவற்றின் ஜீக்ஷீஷீநீமீபீஹுக்ஷீமீ(வழிமுறைகள்) சொல்லப்பட்டிருப்பதால் ச்ரௌதம் என்று பெயர் ஏற்பட்டது. இவற்றை விவரிக்கிற சாஸ்திரத்துக்கு ச்ரௌத ஸூத்ரங்கள் என்று பெயர். முன்பு ச்ருதிக்கும் ஸ்ம்ருதிக்கும் உயர்வு தாழ்வு கற்பிக்கக் கூடாது என்று சொன்னேன் அல்லவா?அது போலவே க்ருஹ்ய கர்மாவுக்கும் ச்ரௌத கர்மாவுக்கும் இடையிலேயும் தாரதம்மியங்கள் கற்பிக்கக்கூடாது. ஹிந்து மதம் என்று இப்போது சொல்கிற ஸநாதன தர்மத்தின் படி இரண்டும் இரு கண்களாக ரக்ஷிக்கப்பட வேண்டியவை. விவாஹத்தின்போது ஔபாஸனம் செய்யப்பட்ட அக்னியை இரண்டாகப் பிரிக்க வேண்டும். அதற்கென்று 'அக்னி ஆதானம்' என்று ஒரு சடங்கு உண்டு. இப்படிப் பிரித்ததில் ஒன்றே க்ருஹ்ய காரியங்களை செய்ய வேண்டிய க்ருஹ்யாக்னி (அல்லது ஸ்மார்த்தாக்னி) ஆகிறது. மற்றது ச்ரௌத காரியங்களைச் செய்வதற்கான ச்ரௌதாக்னியாகிறது. அதன் பின் இந்த இரண்டு அக்னிகளையும் சாச்வதமாக ரக்ஷித்து வரவேண்டும். இவற்றில் க்ருஹ்யாக்னிதான் ஔபாஸனாக்னி என்றும் பெயர் பெற்று தினமும் அதில்

ஔபாஸனம் செய்யப்படுகிறது. இது ஒரே குண்டத்திலிருக்கிற அக்னிதான். அதனால் இதற்கு 'ஏகாக்னி'என்றும் பெயர். ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் க்ருஹ்ய கர்ம விஷயங்களுக்கே 'ஏகாக்னி காண்டம்'என்று தான் பெயர். நான் இதுவரை சொல்லிவந்த ஸம்ஸ்கார ஸமாசாரங்கள், சாஸ்திரோக்த விதிகள் எல்லாமே பெரும்பாலும் ஆபஸ்தம்ப ஸூத்ரத்தை அநுஸரித்ததுதான். ஏனென்றால் அதை அநுஷ்டிக்கிற கிருஷ்ண யஜுர்வேதிகள்தான் தக்ஷிணத்தில் கணிசமான மெஜாரிட்டிக்காரர்கள். இங்கே மைனாரிடியாக உள்ள ரிக்வேதிகள் பின்பற்றுகிற ஆச்வலாயண ஸூத்ரத்திலும், ஸாம வேதிகள் அநுஸரிக்கிற கோபில ஸூத்ரத்திலும் சில விஷயங்கள் கொஞ்சம் மாறுபட்டிருக்கும். ஆனால், இந்த வித்யாசங்கள் க்ருஹ்ய கர்மாக்களில் தானேயன்றி ச்ரௌத கர்மாக்களில் வித்யாஸமே கிடையாது. ச்ரௌதம் எல்லோருக்கும் பொது. ச்ரௌத காரியங்களுக்கு முக்கியமாய் இருக்கிற ச்ரௌதாக்னி என்பது மூன்று அக்னிகளாக, மூன்று குண்டங்களில் இருப்பது. அதனால் 'த்ரேதாக்னி'என்று அதற்குப் பெயர். 'த்ரேதாக்னி காண்டம்'என்றே ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் இந்தப் பகுதிக்குப் பேர். இப்படி ச்ரௌதாக்னியை உபாஸிக்கிறவரையே 'த்ரேதாக்னி'என்று சொல்வதுண்டு. 'ச்ரௌதி'என்றும் சொல்வார்கள். ச்ரௌத-க்ருஹ்ய அக்னிகளை உபாஸிக்கிறவருக்கு 'ஆஹிதாக்னி' என்று பெயர். இப்படியே விஸ்தாரமான ஸோமயாகம் முதலானதைப் பண்ணினவருக்கு யஜ்வா, தீக்ஷிதர், மகி என்ற பெயர்கள் ஏற்படுகின்றன. ஸோம யாகங்களுக்குள் விசேஷமான வாஜபேயம் பண்ணினவர் வாஜபேயி எனப்படுகிறார். யாகம் அல்லது யஜ்ஞம் என்பதற்கு க்ரது, மகம் (இதிலிருந்துதான் யஜமானனுக்கு 'மகி'என்று பெயர் உண்டாகிறது), ஸவனம், இஷ்டி, ஸ்தோமம், ஸம்ஸ்தை என்ற பெயர்களும் உள்ளன. இவற்றில் சிலவற்றுக்கிடையே சில வித்யாசங்களும் உண்டு. 'முத்தீ', 'முத்தீ ஓம்புதல்'என்றெல்லாம் ரொம்பப் பழைய தமிழ் நூல்களில் சிறப்பித்துச் சொல்லியிருப்பது ச்ரௌதாக்னியைத்தான். மூன்று அக்னிகள் என்ன என்றால், ஒன்று 'கார்ஹபத்யம்'- அதாவது இல்லத்தின் அதிபதியான க்ருஹபதிக்கு உரியது. இந்த கார்ஹபத்ய குண்டத்திலேதான் அணையாமல் எப்போதும் ச்ரௌதாக்னி எரிந்து கொண்டிருக்க வேண்டும். இது முழுவட்ட வடிவமாக இருக்கும். இதிலே நேராக ஒரு ஹோமமும் கூடாது. இதிலே இருக்கிற அக்னியை பித்ரு காரியம் (இது க்ருஹ்யமான சிராத்தம் இல்லை; இது ச்ரௌதமாக அமாவாஸ்யை தோறும் செய்யும் பிண்ட பித்ரு கர்மா) செய்வதற்காகவும், சில சில்லறை தேவதா ஹோமங்களுக்காகவும் இரண்டாவதான ஒரு குண்டத்தில் எடுத்து வைத்துப் பண்ண வேண்டும். இந்தக் குண்டம் தெற்கே இருப்பதால் இந்த அக்னிக்கு 'தக்ஷினாக்னி'என்று பெயர். இது அரை வட்டமாக இருக்கும். பொதுவாக மற்ற எல்லா தேவதைகளுக்கும் செய்கிற ஹோமங்களை மூன்றாவதான 'ஆஹவநீயம்'என்ற கிழக்குப் பக்கமுள்ள குண்டத்தில் பண்ண வேண்டும். கார்ஹபத்ய அக்னியிலிருந்தே கிழக்குக் குண்டத்தில் எடுத்து வைத்து ஆஹவநீய அக்னியை உண்டாக்க வேண்டும். ஹவன், ஹவன் என்றுதானே

வடக்கே யாகத்தையே சொல்கிறார்கள்?அந்த ஹவனம் அல்லது ஆஹவனத்துக்கு ஆதாரமாக இருக்கப்பட்டதுதானஅ அஹவநீயம். இந்த ஆஹவநீய குண்டம் சதுரமாக இருக்கும். தேவதாப்ரீதியாகச் செய்யப்படும் ஸோம யாகம் முதலான எல்லாப் பெரிய வேள்விகளும் ஆஹவநீய அக்னியை க்ருஹத்திலிருந்து யாகசாலைக்கு கொண்டு போய் அங்கே அதில் செய்வதுதான். க்ருஹ்யத்தில் ஒளபாஸனம் போல, ச்ரௌத கர்மாக்களில் அன்றாடம் இரண்டு வேளையும் செய்ய வேண்டியது அக்னி ஹோத்ரம். முன்பு சொன்ன அக்னி ஆதானமும் அக்னி ஹோத்ரமும் ஏழு ஹவிர்யக்ஞங்களில் முதலிரண்டாகும். அக்னி ஹோத்ரம் செய்பவர்களையே அக்னி ஹோத்ரிகள் என்கிறோம். (இக்காலத்தில் ஹாஸ்யம் என்று நினைத்து, ஸிகரெட் ஊதுவதை அக்னி ஹோத்ரம் என்றும், ரேஸுக்குப் போவதை அச்வமேதம் என்றும் சொல்வது அபசாரமாகும்.) வஸந்த காலத்தில் (அதாவது ஏறக்குறைய நம் சித்திரை வைகாசி மாஸங்களில்) விவாஹம் செய்வதால் ஒளபாஸன ஸித்தியும், அக்னி ஆதானம் செய்வதால் அக்னி ஹோத்ர ஸித்தியும் உண்டாகின்றன. அக்னிஹோத்ர அக்னி எக்காரணத்திலாவது அணைந்து விட்டால் புணராதானம் என்பதாக மறுபடி ஆதானம் பண்ணி மீண்டும் ஆரம்பிக்கலாம். இப்படியே ஒளபாஸன அக்னி அணைந்தாலும், அக்னி ஸந்தானம் செய்து மறுபடி ஆரம்பிக்கலாம். தற்போது அநேகமாக அத்தனை பேர் வீட்டிலுமே ஒளபாஸன, அக்னி ஹோத்ர அக்னிகள் இல்லாததால் நான் இவற்றைச் செய்யச் சொல்லும்போது, "எப்படி முடியும்? விவாஹ காலத்திலிருந்து இந்த அக்னிகளை நாங்கள் ரக்ஷிக்காமல் விட்டு விட்டோமே!"என்று நீங்கள் கேட்டுவிடக்காமல் விட்டு விட்டோமே!"என்று நீங்கள் கேட்டுவிடக்கூடாது என்றே இதை - இப்போதுகூட இவற்றை ஆரம்பித்துக் கொள்ள இடமிருக்கிறது என்பதை - சொல்கிறேன். ஒளபாஸனத்தில் அக்ஷதையையும், அக்னி ஹோத்ரத்தில் பால், அக்ஷதை, நெய் இவற்றில் ஒன்றையும் ஹோமம் செய்யவேண்டும். (பொதுவாக அக்னி ஹோத்ரத்தில் பாலைச் செய்வதே வழக்கமாயிருக்கிறது.) கார்ஹபத்ய அக்னியை ச்ரௌதமான பிண்ட பித்ரு காரியத்துக்காக தக்ஷிணாக்னியிலும் வைத்து அந்தக் கர்மாக்களைப் பண்ணி முடிந்த பிறகு இந்த இரண்டு அக்னிகளும் 'ச்ரௌத அக்னி'என்ற உன்னதமான பெயரை இழந்து வெறும் 'லௌகிக அக்னி'யாகி விடும். இவற்றை விஸர்ஜனம் செய்து விடவேண்டும். ( அணைத்து விடவேண்டும்). கார்ஹபத்யம் மட்டுமே விஸர்ஜனமில்லாமல் ஒளபாஸனாக்னி போல எப்போதும் எரிந்து கொண்டிருக்க வேண்டும். முக்கியமாக ஒவ்வொரு பிரதமையிலும் க்ருஹ்யாக்னி, ச்ரௌதாக்னி இரண்டிலும் க்ருஹஸ்தன் செய்யவேண்டிய உபாஸனைகளாக முறையே ஒரு பாக யஜ்ஞும் ஒரு ஹவிர் யஜ்ஞமும் உள்ளன. இந்த பாக யஜ்ஞத்துக்கு ஸ்தாலீபாகம் என்று பேர். ஸ்தாலீ என்று சோற்றுப் பானைக்கு பெயர். ஒளபாஸன அக்னியிலே ஸ்தாலியை வைத்து 'சரு' என்கிற பக்குவ அன்னம் செய்வது ஸ்தாலீபாகம். இந்தச் சருவை ஹோமம் செய்ய வேண்டும். ஏனைய பலவற்றுக்கு அடிப்படையாக இருப்பதை 'ப்ரக்ருதி'என்பார்கள். இந்த

ப்ரக்ருதியைத் தழுவி சில மாறுதல்களுடன் செய்கிற மற்றவற்றுக்கு விக்ருதி என்று பெயர். ச்ராவணி என்கிற ஸர்ப்ப பலி, ஆக்ராஹாயணி முதலான பாக யக்ஞங்களுக்கு ஸ்தாலீபாகம் தான் ப்ரக்ருதி. அடி முதல் நுனி வரை கர்மா செய்ய வேண்டிய கிரமம் சொல்லப் படுவதே 'ப்ரக்ருதி'. அநேக விஷயங்களில் இதையே 'ஷெ' அல்லது பீவீமீ மீஷீ போட்டுக் காட்டி மற்ற விஷயங்களை மட்டும் சொல்வது 'விக்ருதி'. பிரதி பிரதமையும் ச்ரௌதாக்னியில் பண்ணவேண்டிய ஹவிர்யக்ஞத்துக்கு 'தர்ச பூர்ண இஷ்டி'என்று பெயர். தர்சம் என்றால் அமாவாஸ்யை;பூர்ணம் என்றால் பௌர்ணமி. இந்த இரண்டுக்கும் மறுநாளான பிரதமைகளில் செய்யப்படும் இஷ்டியாதலால் (இஷ்டி என்றால் யாகம்) தர்ச பூர்ண இஷ்டி என்று பெயர். இதை 'இஷ்டி' என்று மட்டுமே சுருக்கியும் சொல்வார்கள். ஹவிர்யக்ஞங்களுக்குள் இதுவே ப்ரக்ருதி, மற்றவை இதன் விக்ருதிகள். இப்படியே ஸோம யக்ஞங்களில் 'அக்னிஷ்டோமம்'என்பதுதான் ப்ரகிருதி. 'ஸ்தோமம்'என்றாலும் வேள்வி தான். அக்னி+ஸ்தோமம் என்னும்போது ஸந்தியில் 'ஸ்தோ'என்பது 'ஷ்டோ'வாகிறது. 'ஸ்தாபித'என்பதை இங்கிலீஷில் 'எஸ்டாப்லிஷ்'என்கிறபோது ஸ்தா ஸ்டாவாகிறதல்லவா?சில பாமர ஜனங்கள் ஸ்டார், ஸ்டாம்ப் என்பதை இஷ்டார், இஷ்டாம்ப் என்கவில்லையா?இவை வேதத்திலேயே சில ஸந்திகளில் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒலி மாற்றங்கள் (ஜீலீஷீஸீமீமீ வீநீ நீலீணீஸீரீமீவ). ஏழேழு பாக-ஹவிர்-ஸோம யஜ்ஞங்களில் பாக்கியுள்ளவை பற்றி கொஞ்சம் சொல்கிறேன். பாக யஜ்ஞங்கள் சின்னவை. இவை யாகசாலை போட்டுக்கொள்ளாமல் வீட்டிலேயே செய்கிற க்ருஹ்ய கர்மாக்கள். ச்ரௌத கர்மாக்களில் கூட முதல் நாலு ஹவிர் யக்ஞங்களான சாதுர்மாஸ்யம், (நிரூட) பசுபந்தம், ஸௌத்ராமணி இவையும், ஏழு ஸோம யக்ஞங்களும், மற்ற எல்லா யாகங்களும் யாகசாலை தனியாக அமைத்து அதிலேயே செய்யப்பட வேண்டியவை. யாகசாலைக்கு 'தேவ யஜனம்'என்றும் பெயர். அதந் அமைப்பைப் பற்றி ஸகல விவரங்களும் வெகு நுணுக்கமாக கல்ப ஸூத்ராதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. 'சயனம்'என்று செங்கல் வைத்துக் கட்டவேண்டிய யக்ஞ அமைப்புகள் உண்டு. (பாக யக்ஞங்களுக்கும் ஹவிர் யக்ஞங்களுக்கும் ஹவிர் யக்ஞங்களும் சயனம் கிடையாது). இவற்றுக்கும் ரொம்ப னீவீஸீ்ஞுமீமீ ஆக பீமீமீணீவீறீவ (நுணுக்கமான விவரங்கள்) தரப்பட்டுள்ளன. இதிலே கணித விஷயங்கள் உள்ளன என்று முன்பே சொன்னேன். கணித விஷயங்கள் உள்ளன என்று முன்பே சொன்னேன். ஹோமம் செய்கிற கரண்டியை எடுத்துக் கொண்டால் அதில் தர்வீ, ஸ்ருக், ஸ்ரவம் என்று பல தினுசு. ஒவ்வொன்றுக்கும் ஒரு அளவு, இன்ன வஸ்துவால் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று இருக்கிறது. இப்படியிப்படி கை முத்திரை பிடிக்க வேண்டும் என்று விதி உள்ளது. எந்த சின்ன விஷயமும் விட்டுப் போகாமல் இப்படி அளவுகள், இன்ன 'மெடீரியல்'என்பது எல்லாம் சொல்லியிருக்கும். அணு ஆராய்ச்சி, 'ஸ்பேஸ் ரிஸர்ச்'என்று லாபரட்டரியில் செய்கிற போது எப்படி ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் அதி ஜாக்ரதையுடன் செய்கிறார்களோ அப்படியே (இயற்கைக்கு

அதீதமான) ஸூபர்நாச்சுரல் சக்திகளை லோக க்ஷேமத்துக்காக இழுத்துக் கொடுக்கிற யஜ்ஞங்களிலும் இண்டு இடுக்கு விடாமல் ஸகல அம்சங்களையும் ஜாக்ரதையுடன் முறைப்படி செய்ய சாஸ்திரம் விரிவான விதிகளைக் கொடுத்திருக்கிறது. பாகயக்ஞம் ஏழும் சின்னவை. 'பாக'என்றால் 'சின்ன''குழந்தை மாதிரியான என்று ஒரு அர்த்தம். வெந்த உணவுக்கும் பாகம் என்று பெயர். அதனால்தான் சமையற்கலையையே 'பாக சாஸ்திரம்'என்கிறோம். றிணீணீளீணீ என்று சொல்லவேண்டும். ஙிணீணீரீணீ அல்லது ஙிலீணீணீரீணீஎன்பது தப்பு. சமைக்கிற இடம் பாகசாலை. அநேகமாக ஸ்தாலீபாகத்தில் அன்னைத்தை ஹோமம் செய்வது போல வெந்த தானியங்களையே பாக யக்ஞங்களில் ஆஹுதி பண்ணுபடியிருக்கிறது. கஞ்சி வடிக்கக்கூடாது. இதற்கு 'சரு ஹோமம்'என்று பெயர். ஆனால் ஔபாஸனத்தில் வேகவைக்காத அட்சதை (வரட்டு அரிசி) தான் ஹோமம். அஷ்டகா என்ற பாக யஜ்ஞத்தில் அடை மாதிரி உள்ள புரோடாசம் ஹோமம் செய்யப்படுகிறது. பாகயஜ்ஞங்கள் ஏழில் அஷ்டகா என்பது சிராத்தத்தைச் சேர்ந்த பித்ருகர்மா. சுக்லபக்ஷம், கிருஷ்ணபக்ஷம் என்று இருக்கிறதல்லவா?இவற்றில் சுக்லபக்ஷம் (வளர்பிறை) தேவர்களுக்கு விசேஷமானது, கிருஷ்ணபக்ஷம் (தேய்பிறை) பித்ருக்களுக்கு விசேஷமானது. பித்ரு காரியங்களுக்கு 'அபர காரியம்'என்றும் பெயர். அதனால் கிருஷ்ணபக்ஷத்தை அபரபக்ஷம் என்பதுண்டு. இந்த அபரபக்ஷத்தில் அஷ்டமி வருவதால் அது பித்ருக்களுக்கு அதி விசேஷமானது. ஹேமந்தருது (முன்பனிக்காலம்). சிசிர ருது (பின்பனிக்காலம்) என்கிற மார்கழி, தை மாசி, பங்குனி மாதங்களில் இந்த அஷ்டமிக்களில் அஷ்டகா சிராத்தம் செய்யப்பட வேண்டும். இவற்றில் மாசியில் செய்வதே சிறப்பாக அநுஷ்டிக்கப் பட்டிருக்கிறது. அஷ்டகையின் தொடர்ச்சியாக மறுதினம் செய்வது அன்வஷ்டகை. ஸ்தாலீபாகம் என்ற பாகயக்ஞத்தைப் பற்றி முன்பே சொன்னேன். பாகயக்ஞங்களில் இன்னொன்று பார்வணீ என்பதே சிராத்தங்களுக்கெல்லாம் பிரகிருதி. அது மாஸம் ஒரு முறை செய்யப்படுவதால் 'மாஸி ச்ராத்தம்'என்றும் கூறப்படும். இது ஆபஸ்தம்ப ஸூத்ரப்படி. கௌதம ஸூத்ரப்படி பார்வணம் என்பது ஒவ்வொரு பர்வாவிலும் செய்யும் ஸ்தாலீபாகத்தையே குறிப்பதாகும். ச்ராவணீ என்கிற பாகயக்ஞத்துக்கு 'ஸர்ப்ப பலி'என்றும் பெயர். ச்ராவண மாஸத்தில், அதாவது ஆவணியில் பௌர்ணமி ராத்திரியில் சருவாலும், ஆஜ்யத்தாலும் (நெய்யாலும்) ஹோமம் செய்து, பலாச(புரச) புஷ்பங்களையும் இரண்டு கைகளால் ஹோமம் பண்ண வேண்டும். புற்றிலோ வேறு சுத்தமான இடத்திலோ பச்சரிசி மாவால் கோலம் போன்ற சிலவற்றைப் போட்டு ஸர்ப்ப மந்திரங்களைச் சொல்லி பலிபோட வேண்டும். ஆவணியில் ஆரம்பித்ததை விடாமல் தினமும் மார்கழிப் பௌர்ணமி வரை செய்ய வேண்டும். மார்கழிப் பூர்ணிமாவில் 'ஆக்ரஹாயணி'என்கிற பாக யக்ஞத்தைச் செய்து, ஆவணியில் ஆரம்பித்த ஸர்ப்பபலியை உத்ஸர்ஜனம் (பூர்த்தி) செய்ய வேண்டும். 'ச்ராவணி'போலவே 'ஆக்ரஹாயணி'என்பதும் மாஸத்தின் பெயரால் ஏற்பட்டது. ஆக்ரஹாயணி என்று மார்கழிக்குப் பெயர்.

'ஹாயனம்'என்றால் வருஷம். வருஷத்தில் அக்ர மாதமாக (முதல் மாஸமாக) எது இருக்கிறதோ அது 'ஆக்ரஹாயனம்'.இதிலிருந்து மார்கழியை முதல் மாஸமாகக் கொண்டே ஆதியில் நம் வருஷம் இருந்திருப்பதாக ஏற்படுகிறது. ஜனவரி என்ற முதல் மாதம் இப்போதும் மார்கழி நடுவில் தானே வருகிறது?நம்மிடமிருந்துதான் மேல் நாட்டினர் இதைப் பூர்வத்தில் எடுத்துக் கொண்டார்கள். பிறகு நாம் அந்தப் பழக்கத்தை விட்டுவிட்டாலும் அவர்கள் விடவில்லை என்று தெரிகிறது. இதே மாதிரி சித்திரை என்னும் மாஸப் பெயரைக் கொண்டு 'சைத்ரி'என்பதாகவும் 'ஆச்வயுஜி'(ஐப்பசி) என்ற மாஸப் பெயரால் 'ஆச்வயுஜி'என்பதாகவும் இரண்டு பாக யக்ஞங்கள் உள்ளன. சைத்ரி என்பது நாலு வீதிகள் கூடுமிடத்தில் ஈசானனை உத்தேசித்துச் செய்யப்படுவதால் ஈசானபலி என்றும் கூறப்படும். ஈசானன் என்பதுதான் பரமேச்வரன் (சிவபெருமான்). மற்ற பாகயக்ஞங்களில் மற்ற தேவதைகளை உத்தேசித்து ஹோமம் செய்யப்படுகிறது. அவர்கள் த்வாரா (மூலம்) பரமேச்வரனுக்குப் ப்ரீதி ஏற்படும் அது ஸப்கலெக்டர் மூலம் ராஜாவுக்கு வரி கொடுக்கிற மாதிரி. சைத்ரியிலோ நேரே ராஜாவான பரமேச்வரனுக்கு கொடுக்கிறோம். ஐப்பசியில் குறுவை நெல் விளைந்து வரும். இதை 'ஆச்வயுஜி'என்ற கர்மாவில் முதலில் ஈச்வரார்ப்பணம் பண்ணிவிட்டு பிறகு மற்றவர்கள் புஜிப்பார்கள். இப்படியே நம் தக்ஷிண சீமையில் மார்கழியில் சம்பா நெல் அறுவடையானவுடன் ஆக்ரஹாயணி செய்துவிட்டு அப்புறம் சாப்பிடும்படியாக ஏற்படுகிறது. இப்படியாக ஏழு பாக யக்ஞங்கள். ஹவிர் யக்ஞங்களைப் பார்க்கலாம். இவை பாகயக்ஞங்களைவிட மீரீணீதீஷ்கூஷீணீமீ மீ ஆனவை(விரிவானவை). ஆனாலும் ஸோம யக்ஞங்களைப் போல் அவ்வளவு பெரியவை இல்லை. அக்னியில் ஆஹுதி செய்கிற எல்லாவற்றிற்குமே ஹவிஸ் என்று பெயர். 'ஆவி'என்று திருக்குறள் முதலான தமிழ் நூல்களில் சொல்லியிருக்கிறது. ஆனாலும் குறிப்பாக நெய்க்கு ஹவிஸ் என்ற பெயர் உள்ளது. ஸோமரஸ ஆஹுதி உள்ள யக்ஞங்களைத் தனியாக ஸோம யாகம் என்று வைத்தால், கிருஹ்யமான சின்னவற்றையும் பாகயக்ஞம் என்று தனியாய் வைத்ததால், நாற்பது ஸம்ஸ்காரங்களில் வந்து விடும் ச்ரௌதமான பாக்கி ஏழையும் 'ஹவிர் யக்ஞம்'என்றே ஹவிஸை முன்னிட்டு பெயரிட்டிருக்கிறார்கள். முன்னே யாகங்களைப் பற்றிச் சொல்லும்போது யாகத்தைப் பண்ணும் யஜமானன் என்பவனுக்காக ரித்விக்குகள் என்ற புரோகிதர்கள் அதை நடத்திக் கொடுப்பார்களென்றும் இந்த ரித்விக்குகளில் ரிக்வேதத்தால் தேவதைகளை ஸ்துதித்துக் கூப்பிடுகிறவர் ஹோதா, யஜுர் வேதப்படிக் காரியங்கள் செய்கிறவர் அத்வர்யு, ஸாமவேத கானம் செய்து தேவதைகளைப் ப்ரீதி செய்கிறவர் உத்காதா, அதர்வ வேத விதிகளின்படி 'ஸுபர்வைஸ்'செய்கிறவர் பிரம்மா என்றும் சொன்னேனல்லவா? பாக யக்ஞங்களில் யஜமானனைத் தவிர இந்த நாலு விதமான ரித்விக்குகளில் எவருமே கிடையாது. பிறத்தியார் துணையின்றி ஒவ்வொரு கிருஹஸ்தனும் தானே பத்தினி ஸஹிதமாக செய்ய வேண்டியனவே பாகயக்ஞங்கள். ஹவிர்யக்ஞங்களில் யஜமானனைத் தவிர யக்ஞத்தை நடத்தித்

தருபவர்களாக ஹோதா, அத்வர்யூ, அக்னீதரன், பிரம்மா என்ற நாலு ரித்விக்குகள் இருப்பார்கள். அதாவது நான் முன்சொன்ன நாலு தினுசான ரித்விக்குகளில் உத்காதாவுக்குப் பதில் அக்னீதரன் இருக்கிறார். ஸாமகானம் செய்பவர்தானே உத்காதா?ஸோம யாகங்களில்தான் ஸாம கானம் உண்டு;ஹவிர்யாகங்களில் இல்லை. அதனால் உத்காதாவும் இல்லை. உத்காதாவுக்குப் பதில்தானஅ அக்னீதரன் இருக்கிறார். சாதுர்மாஸ்யம், பசுபந்தம், முதலியவற்றில் அதிகப்படி நித்விக்கும் உண்டு. அந்த விவரங்கள் இங்கே வேண்டாம். காலமே சொல்ல முடியாமல் அவ்வளவு ப்ராசீனமாக ஏற்பபட்டு ஸமீபகாலம் வரை நடைபெற்று வந்த முக்கியமான யக்ஞகர்மாக்களைப் பற்றி ஒரு தீணீஉவீநீ ளீஸீஷீஷ்றீமீபீரீமீ (அடிப்படை அறிவாவது) இருக்கட்டுமென்றுதான் இவ்வளவாவது சொல்கிறேன். ஹவிர்யக்ஞங்களில் முன்பே அக்னியாதானம், அக்னி ஹோத்ரம், தர்சபூர்ணமாஸம் இவைபற்றிச் சொன்னது போதும். ஆக்ரயணம் என்ற இஷ்டி ஐப்பசிப் பூர்ணிமையில் செய்யப்படும் ஹவிர்யக்ஞம். சாமை என்று சொல்லப்படும் 'ச்யாமாகம்'என்ற கடுகு போலிருக்கும் தானியத்தை இதில் ஹோமம் செய்ய வேண்டும். 'சாதுர்மாஸ்யம்' என்ற ஹவிர்யக்ஞம் பல இஷ்டிகளை ஒன்றாக அடக்கினாற் போன்றது. வர்ஷா காலத்தில் (மழைக் காலத்தில்) ஸந்நியாஸி ஒரே இடத்தை விட்டுப் போகாமலிருப்பதற்குச் "சாதுர்மாஸ்யம்"என்று பேர் என்று உங்களில் சில பேருக்குத் தெரிந்திருக்கலாம். கிருஹஸ்தர்களான நீங்களே பண்ண வேண்டிய ஒரு ஹவிர்யாகத்துக்கு அதே பேர். மழைக் காலமான சதுர் மாஸங்கள் (நாலு மாஸங்கள்) துறவியானவன் ஒரே இடத்தில் இருப்பதால் 'சாதுர் மாஸ்யம்'என்று பேர் வந்தது. இங்கோ ஒரு கிருஹஸ்தன் நாலு மாஸங்களுக்கு ஒரு முறை, அதாவது கார்த்திகை, பங்குனி, ஆடி ஆகிய மாத ஆரம்பங்களில் இந்த யக்ஞத்தைப் பண்ணுவதால் அதே 'சாதுர்மாஸ்ய'ப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த யக்ஞத்திலிருந்துதான் கிருஹத்தில் செய்வது போய் யாகசாலையில் பண்ணுபவை தொடங்குகின்றன. இதற்கு அடுத்த ஹவிர்யக்ஞமான நிரூட பசுபந்தம் (வெறுமே 'பசுபந்தம்'என்றே இதைச் சொல்லுவது வழக்கம்) என்பதிலிருந்துதான் மிருக பலி ஆரம்பிக்கிறது. பலி என்ற வார்த்தையை நான் இங்கே சொன்னாலும் சாஸ்திரீய பரிபாஷை (மீமீநீலீஸீவீநீணீறீ மீமீக்ஷீனீ)ப் படிப் பார்த்தால் இது பலி இல்லை. அக்னியில் ஹோமமாகப் பண்ணாமல் அப்படியே நேராக அர்ப்பணம் பண்ணுவதுதான் பலி. ஹோமம் பண்ணப்படுவதற்கு ஆஹுதி, ஹவிஸ் என்றெல்லாம்தான் பெயர். ஸர்ப்பத்தின் புற்றில் அப்படியே மாவைப் போடுவது ஸர்ப்ப பலி. பஞ்ச மஹா யக்ஞங்களில் ஒன்றான வைச்வதேவத்தில் சிலதை அக்னியில் மந்திர பூர்வமாகப் போடுவார்கள்;இது ஹோமம். சிலதை மந்திர பூர்வமாக அப்படியே வீட்டிலும் வெளியிலும் ஒவ்வொரு ஸ்தானத்தில் பலவிதமான ஜீவன்களை உத்தேசித்து எறிந்து விடுவார்கள். இது பலி. இன்னொரு விஷயம் இங்கே சொல்ல வேண்டும் இப்படி மந்திர பூர்வமாக அர்ப்பணம் பண்ணும்போது, தேவதைகளுக்குச் செய்வதற்கே 'ஸ்வாஹா'என்று சொல்ல வேண்டும். பித்ருக்களுக்குச் செய்யும்

போது 'ஸ்வதா'என்று சொல்ல வேண்டும். மற்ற ஜீவன்களுக்கு 'ஹந்தா' என்று சொல்ல வேண்டும். அதிகார ஸ்தானத்தைப் பொறுத்து நாம் 'யுவர் மெஜஸ்டி', 'யுவர் ஆனர்'என்று பல தினுஸாகச் சொல்லவில்லையா?அப்படி. யஜ்ஞங்களில் ஒரு பசுவின் (மாடு) இல்லை. ஸம்ஸ்கிருதத்தில் எந்த மிருகமுமே 'பசு'தான்) இன்ன பாகத்தை ஹோமம் செய்ய வேண்டும் என்று இருக்கிறது. இது பலியில்லை;அக்னியில் போடுகிற ஹோமம்தான். பசுபந்தத்தில் ஒரே பசுதான். பசுவுள்ள யக்ஞங்களுக்கே யூப ஸ்தம்பம் என்பது உண்டு. மூங்கில் அல்லது கதிரம் என்னும் மரத்தாலான போஸ்டில் பசுவைக் கட்டுவார்கள். அதற்குத்தான் யூபம், அல்லது யூப ஸ்தம்பம் என்று பேர். அடுத்த, கடைசியான, ஹவிர்யக்ஞமான 'ஸெத்ராமணி'யில் மட்டுமே ஸுரை(கள்) அர்ப்பணம் ஒரிடத்தில் வருகிறது. சில க்ஷுத்ர சக்திகளுக்கு (சில்லுண்டி தேவதைகளுக்கு) அதில் பிரீதியிருப்பதால் அவற்றிடமிருந்து லோக க்ஷேமத்தைப் பெற ஸுரை ஹோமம் செய்யப்படுகிறது. நம் ராஜாங்கம் ரொம்ப வமீக்ஷீவீநீமீ-ஆக ஜீக்ஷீஷீலீவீதீவீமீ வீஷீஸ(மதுவிலக்கு)-ஐப் பின்பற்றினாலும், அந்நிய தேசப் பிரமுகர்கள் வருகிற போது, அவர்களால் நமக்கு ஏற்படக்கூடிய நன்மைக்காக, பரவாயில்லை என்று அவர்களுக்கு மட்டும் மதுவிலக்குக்கு விலக்கு தந்து ஒயின் கொடுப்பது சரியென்றால் ஸௌத்ரமணியில் ஸுரா ஹோமமும் சரிதான். இங்கேயும்கூட ஸுரையானது உத்தமமான தேவதைகளுக்குரிய ஆஹவநீயத்தில் ஹோமம் செய்யப்படாமல், தக்ஷிணாக்னியில் தான் ஹோமம் செய்யப்படுகிறதென்பது குறிப்பிடத்தக்கது. ஹோம சேஷமானதால் மந்திர பூர்வமாக சுத்தியாக்கப்பட்ட ஸுரை கெடுதல் பண்ணாதென்று, மிஞ்சியதை யாகம் செய்கிறவர்கள் பானம் பண்ண வேண்டும். இதன் அளவு கால் அவுன்ஸுக்கும் குறைவானது. ஆகையால் யஜ்ஞம் என்று சொல்லி ஸோமபானம், ஸுரா பானம் என்று இஷ்டப்படி குடித்தார்கள் என்று குற்றம் சாட்டுவது மஹா அக்ரமம். யஜ்ஞசேஷமான மாம்ஸ ஸ்வீகரணத்தைப் பற்றிய புரளியைக் குறித்தும் முன்பே சொல்லியிருக்கிறேன். ஸோம யாகங்களைப் பற்றி சிறிது சொல்கிறேன். இவற்றை 'ஸோம ஸம்ஸ்தை'என்றும் சொல்வதுண்டு. ஸம்ஸ்தை என்றால் என்ன? யாகத்திலே உத்காதா கானம் செய்கிற ஸாமவேத ஸ்தோத்திரத்தின் முடிவுக்குத்தான் 'ஸம்ஸ்தை'என்று பெயர். தேவதா பரமாக உள்ள எல்லாவற்றையுமே ஸ்தோத்திரம் என்று பொதுவில் சொன்னாலும், வைதிக வழக்குப்படி ரிக்வேதத்திலுள்ள ஸ்தோத்திரங்களுக்கு 'சஸ்த்ரம்'என்றே பெயர். இதையே ஸப்தஸ்வரங்கள் உள்ளூர தொனிக்கிற மாதிரி ஸாமவேதத்தில் அமைத்து கானம் செய்கிறபோதுதான் ஸ்தோத்ரம் என்ற பெயர் ஏற்படும். இப்படிப்பட்ட ஸாமவேத ஸ்தோத்ர கானம்தான் ஸோம யாகங்களில் மிகவும் முக்கியம். பாக-ஹவிர் யக்ஞங்களிலும் மற்ற நூற்றுக்கணக்கான யாகங்களிலும் ஹோமங்கள் குறைச்சலே. ஸ்தோத்ரங்கள்தான் அவற்றில் அதிகம். தேவர்களுக்கு ரொம்பவும் பிரீதியான ஸோமரஜம் ஹோமம் செய்யப்படுவதால்தான் இவற்றுக்கு ஸோமயாகம் என்று பெயர். ஸோம ரஸம் மட்டுமின்றி பசுவும் இவற்றில் உண்டு.

இருந்தாலும் இந்த ஹோமங்களை விட ஸாமகானம் தான் இவற்றில் நிறையச் செய்யப்படும். பிறகு ஹோமங்கள் குறைச்சலாகவே செய்யப்படும். அதனால் ஸோமயாகம் ஒருவிதத்தில் ஸாமயாகம்தான்!இந்த ஸாமகானம் ரொம்பவும் பரவசமூட்டுவதாக இருக்கும். ஒரு வித்வான் ஆலாபனை பண்ணிக் கொண்டே போய் தாரஸ்தாயி பஞ்சமத்தைப் பிடித்தவுடன் ரஸிகர்களுக்கு உத்ஸாஹம் உச்சிக்குப் போய் விடுகிற மாதிரி ஸாமகானமான ஸ்தோத்ரங்களின் முடிவான ஸம்ஸ்தை வருகிறபோது யஜ்ஞபூமியில் கூடியிருப்பவர்களுக்கு, அப்படியே தேவலோகமே வந்து இறங்கிவிட்டாற்போல் ஆனந்தம் கரைபுரண்டு போகும். அதனால்தான் ஸோம யஜ்ஞத்துக்கே ஸோம ஸம்ஸ்தை என்று பெயர் ஏற்பட்டு விட்டது. இப்படிப்பட்ட ஸோம யாகங்களில்தான் ஹோதா, அத்வர்யு, பிரம்மா என்ற ரித்விக்குகளோடு உத்காதா என்ற ஸாமகானக்காரரும் சேர்ந்து பூர்ண யஜ்ஞ லக்ஷணத்தோடு இருக்கிறது. இந்த நாலு பேரில் ஒவ்வொருவருக்கும் உதவியாக மூனறுபேர் இருப்பார்கள். ஆக அத்வர்யு கணத்தில் நால்வர், ஹோதா கணத்தில் நால்வர், உத்காதா கணத்தில் நால்வர், பிரம்மா கணத்தில் நால்வர் என்பதாக ஸோம யாகங்கள் ஒவ்வொன்றிலும் பதினாறு ரித்விக்குகள் இருப்பார்கள். ஸப்த ஸோம யக்ஞங்களில் முதலாவதான அக்னிஷ்டோமமே ப்ரகிருதி. மற்ற ஆறும் அதன் விக்ருதிகள். அத்யக்னிஷ்டஹோமம், உக்த்யம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்பன அவற்றின் பெயர். இவற்றில் வாஜபேயத்தை வெகு விசேஷமாகக் கருதிச் செய்வது வழக்கம். வாஜபேய யாகம் முடித்து யஜமானன் ஸ்நானம் செய்து வருகையில் (யஜ்ஞ முடிவில் செய்வதற்கு அவப்ருத ஸ்நானம் என்று பெயர்) அவருக்கு ராஜாவே ச்வேத சத்ரம் (வெண்பட்டுக் குடை) பிடிப்பான்! அவ்வளவு பெருமை இதற்கு . 'வாஜம்'என்றால் அன்னம்;'பேயம்'என்றால் பானம். அன்ன பானாதிகளை அதாவது நல்ல தானியச் செழிப்பையும், நீர்வளத்தையும் லோகத்தில் ஏற்படுத்தித் தருவதால் இதற்கு இப்படிப் பெயர். இன்னொரு விதத்திலும் இந்தப் பெயர் பொருந்துகிறது. இந்த யாகத்தில் ஸோம ரஸ ஹோமம், பசு ஹோமம் (23 பசுக்கள்) இவற்றோடு வாஜ (அன்ன) ஹோமமும் உண்டு. அது ஆன பின்பு சேஷான்னத்தால் (மிகுதியுள்ள அன்னத்தால்) யஜமானனுக்கு அபிஷேகம் செய்வார்கள். இதை இந்த யஜ்ஞத்திலேயே சிறப்பான அம்சமாக நினைப்பதுண்டு. வாஜத்தையே (அன்னத்தையே) பேயம் (ஜலம்) போல் அபிஷேகம் செய்வதாலும் வாஜபேயம் என்ற பெயர் பொருந்துகிறது. பிராம்மணன் சொத்தெல்லாம் ஸோமயாகத்துக்காகத்தான் என்று முன்பு சொல்வார்கள். திரவியங்களுக்காக ஒரளவும் பண்ணி வைக்கிற ரித்விக்குகளுக்கு தக்ஷிணையாக நிறையவும் செலவிட வேண்டும். இப்பொழுது சொத்து ஒன்றையேதான் நினைத்துக் கொண்டு ஸோம யாகத்தை மட்டுமின்றி செலவேயில்லாத ஸந்தியா வந்தனத்தைக்கூட விட்டு விட்டிருக்கிறோம். நாற்பது, ஐம்பது வருஷங்களுக்கு முந்திக் கூட நம்பூத்ரிகளில் பத்துக் குடும்பத்தில் ஒன்று வீதமாவது ஸோமயாகம் நடந்து வந்தது. அவர்களில் மூத்தவன்தான் ஸோமயாகம் செய்யலாமென்று இருந்ததால்

அவனுக்குத்தான் சொத்துரிமையும் இருந்தது. 'வஸந்தே வஸந்தே'என்று சொல்லியிருப்பதால், தரித்திரர்களாக உள்ள பிராம்மணர்களுங்கூட யாசகம் வாங்கியாவது வருஷா வருஷம் ஸோமயாகம் பண்ணி 'ப்ரதி வஸந்த சோமயாஜிகள்'என்று பெயர் வாங்கிய ஒரு காலமும் இருந்தது. மற்ற ஸோம யாகங்களைப் பண்ணா விட்டாலும் இவற்றில் முதலாவதான ஜ்யோதிஷ்டோமம் எனப்படும் அக்னிஷ்டோமத்தையாவது பண்ணினால் லோகத்தில் வைதிகஸ்ரீ பிரகாசிக்கத் தொடங்கும். இந்த இருபத்தியொரு யக்ஞங்களோடு நாற்பது ஸம்ஸ்காரங்களும் முடிந்து விடுகின்றன.

## மற்ற ஸம்ஸ்காரங்கள்

இந்த நாற்பதில் சொல்லா விட்டாலும் ஹிந்துக்கள் அனைவரும் கர்ண வேதனம் (காது குத்தல்), அக்ஷராப்யாஸம் (படிக்க வைத்தல்) ஆகியவற்றையும் மதாநுஷ்டானமாகவே செய்தாக வேண்டும். கடைசியில் செய்கிற தஹனமும் இப்படியே நாற்பதில் வராவிட்டாலும், அந்த்யேஷ்டி (அந்திய இஷ்டி-கடைசி வேள்வி) என்பதாக வைதிக மந்திரங்களோடு செய்யப்பட வேண்டியதாகும். அதைச் செத்துப் போனவனே பண்ணிக் கொள்ள முடியாதல்லவா?புத்திரர் அல்லது தாயாதிதாமே பண்ணவேண்டும்?அதனால் இவனது நாற்பது ஸம்ஸ்காரத்தில் வராமல் இவனுக்காகப் பிறர் பண்ணுவதான பித்ரு காரியங்களில் அது வந்து விடுகிறது. ஆஹிதாக்னியாக இருக்கப்பட்ட ஒருவனுக்கு அவன் ஆயுள் பூராவும் உபாஸித்த க்ருஹ்யாக்னி, த்ரேதாக்னி (முத்தீ) இரண்டையும் சேர்த்து இந்த நாலு அக்னிகளையுமே கொண்டு தஹன ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். இவன் ரக்ஷித்த அக்னியே இவன் சரீரத்தைப் போக்கி ஜீவனைப் புண்ய லோகத்தில் சேர்க்கிறது. த்ரேதாக்னி உபாஸிக்காமல், க்ருஹ்யமாக ஒளபாஸனம் மட்டும் பண்ணினவனுக்கு அந்த ஒளபாஸனாக்னியாலே தஹனம் செய்ய வேண்டும். இவன் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளாமலே செத்துப் போனால்தான் இப்படி துறவியானால் தஹனமே இல்லையே!தஹன ஸம்ஸ்காரம் அந்த்யேஷ்டி என்றே யாகமாகச் சிறப்பிக்கப்படுவதால் முன்பே சொன்ன மாதிரி மிகவும் பக்குவமானவர்கள் தவிர பாக்கிப் பேரெல்லாம் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளாமலே வாழ்க்கையை முடிப்பது சாஸ்திர ஸம்மதந்தான் என்று தெரிகிறது. எல்லா கிருஹஸ்தருக்கும் ஸந்நியாஸம் compulsory (கட்டாயம்) என்றால் இந்த தஹனகர்மா அவர்களுக்கு இராதே!இது இருப்பதாலேயே ஸந்நியாஸம் 'கம்பல்ஸரி'இல்லை என்றாகிறது.

## உடன் கட்டை ஏறுதல்

இதைச் சொல்லும்போது இன்னொன்றும் தோன்றுகிறது. இப்போது பலர் ஸதி,ஸஹகமனம், உடன் கட்டையேறுதல் என்ற பெயர்களில் பதியோடு சேர்ந்து பத்தினியையும் உயிரோடேயே தஹனம் செய்வது வலுக்கட்டாயமாக நடத்தப் பட்டுவந்தது என்கிறார்கள். கொடூரமாக ஸ்திரீகளை சிதையிலே தள்ளிக் கொளுத்தினார்கள் என்று வைகிறார்கள். எங்கேயாவது யாராவது இம்மாதிரி கொடூரமும் பண்ணியிருக்கலாமோ என்னவோ?ஆனால் இது பொது விதி இல்லை. இஷ்டப்பட்டவர்கள் மட்டுந்தான் - பரம பதிவிரதைகளாக இருந்தவர்கள்தான் - புருஷன் போனபின் ஜீவனை வைத்துக் கொண்டு இருக்கமுடியாமல் துடித்துத் தாங்களாகப் பிரியப்பட்டு உடன் கட்டை ஏறியிருக்கிறார்கள். என் பால்யத்தில் கூட இப்படிப்பட்ட பதிவிரதைகளைப் பறறிக் கேட்டிருக்கிறேன். 'ஐயோ உயிரோடு இப்படி அக்னியில் பொசுங்குகிறாயோ!'என்று பந்துக்கள் கதறிய போது, 'அக்னி பொசுக்கவேயில்லை. புரஷனை ஆலிங்கனம் செய்து கொள்கின்ற ஸுகத்தோடாக்கும் சாகிறேன்'என்று சிரித்துக் கொண்டே சொன்னபடி தஹனமாயிருக்கிறார்களாம். ஆஞ்ஜநேயரின் வாலில் வைத்த நெருப்பு ஸீதையின் பாதிவ்பத்யத்தால் (கற்புச் சக்தியால்) அவரை பாதிக்காமலேயிருந்தது. குமாரிலபட்டர் உமிக்காந்தல் அக்னியில் கருகின போது எதிரே நின்ற நம்முடைய ஆசார்யாளின் ஸாந்நித்யத்தால் அவருக்கு உஷ்ணமே தெரியாமல் ஜில்லென்று இருந்தது. அநேக பதிவிரதைகளுக்கு அவர்களுடைய பதி பக்தியினாலேயே சிதாக்னி சந்தனமாக இருந்திருக்கிறது. அவர்கள் கட்டியிருந்த புடவை அத்தனை அக்னியிலும் எரியாமலே இருக்கும். அதை எடுத்து வந்து பூஜை பண்ணுவதுண்டு. இன்னும் உயர்ந்த கற்பரசியானால் பதியின் உயிர் போனவுடனேயே இவர்களது பிராணனும் தானாகப் போய்விடும். கண்ணகி கதையில் பாண்டிய ராணி இப்படித்தான். புருஷன் 'குற்றம் செய்து விட்டோமே!'என்று பிராணத் தியாகம் பண்ணினதும், தானும் உயிரை விட்டு விட்டாள். அஷ்டபதி பாடின ஜயதேவருடைய பத்னி பத்மாவதியைப் பற்றியும் இப்படி ஒரு கதை உண்டு. அவளுடைய பாதிவ்ரத்யத்தைச் சோதித்துப் பார்க்க வேண்டும் என்று ராணி தமாஷுக்காக அவளிடம் ஜயதேவர் எங்கோ போன இடத்தில் மரணமடைந்து விட்டார் என்று சொன்னவுடனேயே அவளுடைய பிராணன் போய் விட்டது. இப்படி யோஜனை போதாமல் அனர்த்தம் பண்ணி விட்டோமே என்று ராணி ரொம்பப் பச்சாதாபப்பட்டபின் ஜயதேவரே கிருஷ்ண பரமாத்மாவின் அநுக்ரஹத்தால் பத்மாவதியை உயிர்ப்பித்தார் என்று கதை. இம்மாதிரி கற்பிலே உச்ச நிலையில் இருக்கிற ஸ்திரீகள் தான் உடன்கட்டை ஏறினார்களே தவிர, பிறர் வலுக்கட்டாயப்படுத்தி ஸ்திரீகளைப் புருஷர்களோடு போட்டுக் கொளுத்தி விடவில்லை. வலுக்கட்டாயம் செய்யாததோடு இஷ்டப்பட்டு ஸஹகமனம் செய்யப் போனவர்களைத் தடுத்துக்கூட இருக்கிறார்கள். பாண்டுவின் இரண்டு பத்னிகளில் மாத்ரி (இவள் தான் நகுல, ஸஹாதேவர்களின் தாயார்) தன்னோடு பாண்டு சேர்ந்ததால்தானே பூர்வ சாபப்படி

சாகும்படி ஆயிற்று என்று வேதனைப்பட்டு பிராயச்சித்தமாக உடன்கட்டை ஏறினாள். இதை அநுமதித்த பெரியவர்களே குந்தியும் உடன்கட்டை ஏறப்போனபோது, "கூடாது, கூடாது. நீ உயிரை வைத்துக் கொண்டு இந்த ஐந்து குழந்தைகளையும் வளர்த்து ஆளாக்குவதுதானஅ முறை"என்று தடுத்ததாக பாரதத்தில் பார்க்கிறோம். அப்பர் ஸ்வாமிகள் அந்தப் பேர் பெறாமல், மருள் நீக்கியார் என்ற பெயரில் பாலராக இருந்தபோது அவருடைய தகப்பனாரான புகழனார் மரணமடைந்துவிட்டார். அப்பொழுது பதிவிரதையான மாதினியார் என்ற அவருடைய பத்தினி உடன்கட்டை ஏறினாள் என்று 'பெரிய புராணம்'சொல்கிறது. இந்த கற்பை விட உசந்ததாயிருக்கிறது, இவர்களுடைய புத்திரி (அதாவது அப்பரின் தமக்கை) காட்டிய பாதிவ்ரத்யம். அவளுக்குத் திலகவதி என்றுப் பெயர். சின்ன வயசுதான். இன்னம் கல்யாணமாகவில்லை.கல்யாணமாகாமலே கற்பு என்பதுதான் விசேஷம்!பல்லவ ராஜாவிடம் சேனாதிபதியாக இருந்த கலிப்பகையார் என்பவருக்கு இவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதாக நிச்சயம் பண்ணியிருந்தார்கள். ஆனால் புகழனார் இறந்த அதே சமயத்தில் நல்ல வாலிபரான கலிப்பகையும் யுத்த பூமியில் வீர ஸ்வர்க்கமடைந்து விட்டார் என்ற தகவல் வந்தது. உடனே அந்தச் சின்ன பெண், "அவருக்கென்று என்னை எப்போது பெரியோர்கள் நிச்சயம் செய்துவிட்டார்களோ அப்போது அவருக்கு நான் மனைவிதான். எனக்கு இந்த எண்ணம் வந்த பிறகு நான் இன்னொரு ஆடவனுக்கு மாலையிட மாட்டேன். அவர் போய்விட்டதால் நானும் பிராணத் தியாகம் பண்ணிவிடப் போகிறேன்"என்று அதிசயமான கற்பு வேகத்தில் புறப்பட்டு விட்டாள். அப்புறந்தான் அப்பர் ரொம்பவும் அழுது அவளைத் தடுத்து, "அப்பா, அம்மா இருவரும் போனபின் நீயும் இல்லாமல் சின்னஞ் சிறுவனான நான் தன்னந்தனியாக என்ன பண்ணுவேன்? நானும் உன் பின்னாலேயே பரலோகம் வந்துவிடுகிறேன்"என்று பிடிவாதம் செய்தார். வேறு வழியின்றி தம்பியின் பராமரிப்புக்காக பரமத் தியாகமாக அவள் உயிர் வாழுவது என்ற முடிவு செய்தாள். திலகவதி எனற பேருக்கேற்ப மாதர் குல திலகம் என்கிறார்களே, அப்படி வாழ்ந்தாள். பிற்பாடு ஜைனத்துக்குப் போய் தர்மஸேனராகிவிட்ட மருள்நீக்கி மறுபடி சைவத்துக்கு வந்து நாமெல்லாம் கொண்டாடும் அப்பர் ஸ்வாமிகளாக ஆனதற்கு அவள்தான் காரணம். அது வேறு கதை. ராஜஸ்தானத்து உத்தம ஸ்திரீகள் இந்த ஸஹகமன நெறியை விசேஷமாக அநுஷ்டித்திருக்கிறார்கள். நான் சொல்ல வந்தது, கட்டாய உடன்கட்டை கிடையாது என்பது. ஆனால் தாமாக இப்படி பிராணத்தியாகம் பண்ண முன் வருபவரை ரொம்பவும் மதித்து அப்படிப் பண்ண நம் சாஸ்திரம் அநுமதித்திருக்கிறது. 'பதி போனபின் நாம் உயிரை வைத்துக் கொண்டிருக்க முடியாது'என்று நினைக்கும் உயர்ந்த உணர்ச்சி இன்றைக்கும் யாராவது லட்சத்தில், கோடியில் ஒரு ஸ்திரீக்கு இருக்கத்தான் செய்கிறது. அதனால்தான் எப்போதாவது வருஷத்துக்கு ஒரு தரமாவது, ஏதாவது ஊரில் இப்படி ஒரு ஸ்திரீ உடன்கட்டை

ஏறினாள்;சட்டம் இடம் தராத போதிலும், பந்துக்கள் தடுத்த போதிலும் கேட்காமல் இப்படிப் பண்ணினாள் என்று பேப்பரில் பார்க்கிறோம். பழைய காலத்து உடன்கட்டைகளைவிட இதுதானஅ ரொம்ப விசேஷம் என்று எனக்குத் தோன்றுவதுண்டு. பூர்வத்தில் அந்த லட்சியத்துக்கு அநுகூலமான சூழ்நிலை இருந்து பலபேர் அப்படி செய்தார்கள். இதனால் பிறத்தியார் கட்டாயப் படுத்தாவிட்டாலும், இப்படிப் பலபேர் போவதைப் பார்த்து அவர்களுக்கு உத்தம லோகம் ஸித்திப்பதாக சொல்கிறார்களே என்று தாங்களாகவே அரைமனஸாக ஒரிரண்டு பெண்கள் அக்காலத்தில் ஸஹகமனம் பண்ணியிருக்கலாம். இன்றைக்கோ அப்படிப்பட்ட சூழ்நிலை இல்லாததால் இத்தனை கலிப் பிரவாஹத்தில், சீர்திருத்த நாட்களில் யாராவது உடன்கட்டை ஏறினால் இதுதான் ரொம்ப genuine(உண்மையானது) என்று நினைக்கிறேன். இதே மாதிரி இன்னொன்றைக் கூட நினைப்பதுண்டு. குருகுலவாஸம் வேண்டுமென்று நான் அடிக்கடி சொல்கிறேன் அல்லவா?சதி மாதிரிதான் இதுவும் இப்போதைய சூழ்நிலையில் மறந்தேபோன விஷயமாகி விட்டது. முன்பு ஸர்வ ஸாதாரணமாய் இருந்த குருகுல முறையை இப்போது நடத்துவது அஸாத்தியமென்கிற அளவுக்கு ஆக்கியிருக்கிறோம். இப்படி இருக்கிற நிலையிலேயே இன்னமும் யாராவது ஒரு பையன், இரண்டு பையன் பிக்ஷாசார்யம் பண்ணி குருகுலவாஸம் பண்ணினால் இதுதான் ஆதிகாலத்தில் பண்ணினதை விடவும் genuineஎன்று நினைப்பதுண்டு. ஸந்நியாஸம் எல்லோருக்கும் 'கம்பல்ஸரி'இல்லை என்கிற மாதிரியே ஸஹகமனம் பெண்கள் யாவருக்கும் கம்பல்ஸரி இல்லை என்பதற்கு ஒரு அழுத்தமான காரணம் சொல்கிறேன் தர்ம சாஸ்திரங்களில் விதவா தர்மங்கள் என்பதாகக் கைம்பெண்கள் இருக்க வேண்டிய முறைகளைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறது. எல்லோருக்கும் ஸந்நியாஸம் என்றால் தஹன ஸம்ஸ்காரமே சாஸ்திரத்தில் இருக்காது என்ற மாதிரி, விதவைகள் எல்லோரும் புருஷனோடேயே சிதை ஏற வேண்டும் என்று கட்டாயமாக இருந்திருந்தால் விதவா தர்மம் என்று ஒன்று இருக்கவே இடம் இருந்திருக்காது அல்லவா? மரணமாவது எப்போது வருகிறது என்று எவருக்கும் தெரியாது. பால்யத்திலோ அல்லது கிருஹஸ்தாச்ரமத்திலோ திடீரென்று மரணம் ஸம்பவித்துவிடலாம். அதனால் எல்லோரும் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டுதான் சாக வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனபடியால் இவர்களை உத்தேசித்தாவது தஹன ஸம்ஸ்காரம் சொல்லித் தான் ஆகவேண்டும். விதவா தர்ம விஷயம் அப்படியில்லை. புருஷன் போய்விட்டான் என்றால் உடனே ஒருத்தியைச் சேர்த்து கொளுத்தத்தான் வேண்டுமென்பது சாஸ்திர அபிப்ராயமானால் அப்புறம் விதவா தர்மம் என்று ஒன்றை எழுதி வைக்கக் கொஞ்சம்கூட இடமில்லை.

**ஸம்ஸ்கார லக்ஷ்யம்**

இத்தனை ஸம்ஸ்காரங்களை (நாற்பதுக்கும் மேலே கூட ஒன்றிரண்டை)ச் சொன்னேன். வாழ்நாள் முழுக்க வேள்வி நடத்தி, அதனால் வாழ்க்கையையே லோக க்ஷேமார்த்தமான வேள்வியாக ஆக்கிவிட்டு ஒருத்தன் சாகிறபோது மந்திரபூர்வமாக ஸம்ஸ்காரம் பண்ணி அதனாலும் லோக க்ஷேமத்தை உண்டு பண்ணும்படி வைத்திருக்கிறது. தஹனம் இறுதி வேள்வி. ஸம்ஸ்காரங்கள் ஒரு ஜீவனை உத்தேசித்து அவனை சுத்தப்படுத்துகிறபோதே அதில் பிரயோஜனமாகிற மந்திர சப்தம் லோகத்துகெல்லாம் நல்ல வைப்ரேஷனைக் கொடுக்கிறது. தனி ஆளுக்கான கர்மா ஆயினும் ஸமஸ்த ஜீவ க்ஷேமத்தை வேண்டாத கர்மா எதுவுமில்லை. 'ஜகத்ஹிதாய க்ருஷ்ணாய'என்றே எந்தக் கர்மாவும் ஆரம்பிக்கப் படுகிறது. மந்திர ராஜாவான காயத்ரீயிலும், 'என் புத்தியை நல்ல நெறியில் தூண்டு'என்று இல்லாமல் 'எங்கள் புத்தியை'என்பதாக இத்தனை ஜீவர்களையும் உத்தேசித்துத்தான் பிரார்த்திக்கப்படுகிறது. ('எங்கள்'என்று பன்மையில் சொல்லியிருப்பதால் ஒரு பிராம்மணன் பண்ணினாலே நம்மையும் சேர்ந்துவிடும் என்று பிராம்மணர்கள் குதர்க்கம் பண்ணிக் கொண்டு காயத்ரீயை விட்டுவிடக் கூடாது. பிற ஜாதியார், வெளி தேசத்துக்காரர்கள், இன்னம் பசு, பட்சி, பூச்சி, பொட்டு என்ன இருக்குமோ அத்தனையையும் உத்தேசித்து பிரம்ம-க்ஷத்ரிய-வைசியர்கள் இப்படி 'எங்கள்'என்று பிரார்த்திக்க வேண்டும் என்பதே சரியான அர்த்தம்). நாற்பது ஸம்ஸ்காரங்களில் யஜ்ஞங்கள்தான் பெரும்பான்மையாக இருப்பதை கவனித்திருப்பீர்கள். இவற்றின் பலனைப் பற்றி பிருஹதாரண்யக உபநிஷத்தில் மந்திரம் இருக்கிறது (iv.4.22). 'ஆத்மாவை பிராம்மணர்கள் வேதாப்பியாஸத்தாலும் யஜ்ஞத்தாலும் தானத்தாலும் தபஸாலும் உபவாஸத்தாலும் அறிய முயல்கிறார்கள்' என்று அது சொல்கிறது. இந்த முயற்சி சித்தியானதும், இதெல்லாவற்றையும் விட்டுவிட்டு ஸந்நியாஸிகளாக கிளம்பி விடுகிறார்கள் என்று அது தொடர்ந்து சொல்கிறது. ஆகையால் கர்மாவைப் போக்கிக் கொள்ளவேதான் இத்தனை விஸ்தாரமான யஜ்ஞாதி கர்மாக்கள் என்று ஆகிறது. யக்ஞத்தில் இருக்கிற மற்ற பலன்களைவிட அதுவே கர்மாவை விடுவதற்குப் பழகுகிறதே அதுதான் விசேஷமானது. அதுவே பெரிய கர்மாவாக இருந்து கொண்டு எப்படிக் கர்மாவை விடுவதற்கும் பழக்கும்? கர்மாவில் இரண்டு தினுசு. ஒன்று நாம் சொந்த ஆசைகளின் மீது மனஸுக்குப் பிடித்தபடி பண்ணுவது. இது மனஸைத் தெளிவிக்கிறதற்குப் பதில் மேலும் குழப்பிக் கர்ம மூட்டையை இன்னும் பெரிசாகத்தான் ஆக்கும். இன்னொன்று, இப்படி ஆசையில்லாமல், சாஸ்திரம் சொல்கிறது என்பதற்காகவே பண்ணி ஈச்வரார்ப்பணம் செய்வது. இப்படிச் செய்கையில் ஒரு கர்மாவானது சித்த மலத்தை நீக்கி கர்ம மூட்டையை லேசாக்குவதாகிறது. கர்மாவையே விட்டு விடும்படி ஒரு ஸ்டேஜில் பண்ணிவிடுகிறது. அப்புறம் அப்படி விட்டவன் மூலம் பராசக்தியின் கருணையே லோக க்ஷேமார்த்தம் கர்மா பண்ணவும் பண்ணலாம். ஆனாலும் இவனுக்கு கர்த்ருத்வம் (நான் பண்ணுகிறேன் என்ற doership) இராது. சித்த மலம் எப்படி நீங்குகிறது?ஆசை, த்வேஷம், லாப நஷ்டம், ஜயாபஜயம்

(வெற்றி தோல்வி) இவற்றுக்கு மனஸில் இடமேயில்லாதபடி, பெரிசாக யக்ஞம் என்று இழுத்துப் போட்டுக் கொண்டு அதிலேயே சரீரம், வாக்கு, மனஸ், புத்தி எல்லாவற்றையு் ஈடுபடுத்துகிறபோது இந்த concentration-ஆலேயே (ஒருமுக அடர்த்தியினாலேயே) சித்தமலம் நீங்குகிறது. சித்தம் ஒரே சஞ்சலமாக நாலா திசையும் பாயாமல் ஒன்றிலேயே ஈடுபட்டிருந்தால், பூதக் கண்ணாடியில் ஸூர்ய கிரணம் ஒரு பாயின்டில் கான்ஸென்ட்ரேட் ஆகும்போது, அடியிலே இருக்கிற காகிதத்தில் தீப்பொறி உண்டாகிறதைப் போல் சித்த மலத்தை எரிக்கிற பொறி உண்டாகிறது. காரியமாக நூறாயிரம் ஒவ்வொரு யாகத்திலும் இருக்கும்;மந்திரமாக எத்தனையோ அதில் இருக்கும். தினுசு தினுசாகத் திரவியங்களும் வேண்டியிருக்கும். இதிலெல்லாம் இப்படி அநேகம் இருந்தாலும் இத்தனையும் ஒன்றையே மத்தியாகக் கொண்டு, அதைக் குறித்தே ஏற்பட்டிருக்கின்றன என்ற நினைவு அந்த ஆதாரமான ஒன்றிலேயே கர்த்தாவின் சித்தத்தை ஒருமுகப் படுத்தியிருக்கும். ஒரு ராஜா அச்வமேதம் செய்வதென்றால் எத்தனைக் காரியங்கள்?யஜ்ஞ சாலையில் இன்னின்ன மிருகங்களைக் கொண்டுவந்து கட்ட வேண்டும்;புலி முதலானவற்றைக் கூட கொண்டு வரவேண்டும் என்றெல்லாம் இருக்கிறது. இப்படிப் பல வருஷங்கள் ஒரே நினைப்பாக ஓடியாடி ஒருத்தன் காரியம் பண்ணினால் அப்படிப்பட்ட காரியமே சித்த அழுக்கைப் போக்கி, கார்யமற்ற பெரிய நிலைக்குப் போக இவனைத் தயார்ப்படுத்தி விடுகிறது. இப்படியேதான் கோபுரம் கட்டுவது, பெரிதாகக் குளம் வெட்டுவது அல்லது பெரிய அளவில் ஏதோ பொதுத் தொண்டு செய்வது என்று பண்ணுகிறபோது அந்தந்த காரியம் முடிந்து ஏற்படுகிற பலன் ஒரு பக்கமிருக்க, அதைச் செய்யும் போதே, அறுபது நாழியும் அதே குறியாகச் செய்வதாலேயே ஏற்படுகிற சித்தசுத்திதான் எனக்கு ரொம்ப விசேஷமானதாகத் தோன்றுகிறது. இப்படி யஜ்ஞாதிகளைப் பண்ணியும் ஒருத்தன் இந்த ஜன்மாவிலேயே காரியத்தை விட்டு ஸந்நியாஸியாகா விட்டாலும் பரவாயில்லை. அவனும் புண்ணிய லோகத்தை அடைந்து, அப்புறம் ஈச்வராநுக்கிரஹத்தால், அந்த ஈச்வரனே காரியமற்ற பிரம்மத்தில் பரமாத்மாவாக ஒடுங்குகிறபோது தானும் ஒடுங்கி ஒன்றாகிவிடுகிறான். ஈச்வரன் மறுபடி வெளிமுகப்பட்டு ஸ்ருஷ்டி செய்தாலும் இவன் அந்த ஸ்ருஷ்டியில் மாட்டிக் கொள்ளாமல் தப்பித்துக் கொண்டு விடுகிறான். அல்லது இன்னொரு விதமாகவும் சொல்வதுண்டு:கிருஷ்ண பரமாத்மா கீதையில் யோக ப்ரஷ்டனானவன் (யோகம் பண்ணியும் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடையாமல் இறந்து போகிறவன்) அடுத்த பிறவியில் விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்து மேலே போகிறான் என்கிறாரல்லவா?யோகம் என்றது யாகம் முதலான கர்மாக்களுக்கும் பொருந்தும்தான் என்று சொல்வதுண்டு. அதாவது இவற்றைப் பண்ணியும் ஸந்நியாஸியாகாதவனும் அடுத்த ஜன்மாவில் பிறக்கும்போதே விவேகியாகப் பிறந்து கர்மாவை விடுகிற அளவுக்குப் பக்குவியாகி ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ஸாக்ஷாத்காரம் அடைகிறான் என்று சொல்வதுண்டு. இந்த ஸம்ஸ்காரங்கள் இல்லாதவர்கள் தங்கள் தொழிலை

ஒழுங்காகச் செய்து, தெய்வ பக்தியோடுகூட ஆலயம் தொழுவது, ஸ்தோத்ரங்கள் படிப்பது முதலானவற்றையும் ஔபாஸனத்தையும் பித்ரு கடன்களையும் பண்ணிக் கொண்டு யோக்கியர்களாக இருப்பதாலேயே ஸத்கதி அடைகிறார்கள்.

## அந்தணனின் அன்றாடம்

"இத்தனை ஸம்ஸ்காரங்களை இந்தக் கால பிராமணர் செய்ய முடியுமா?செய்ய முடியாததைச் சொல்லி என்ன பிரயோஜனம்?"என்றால், முடியும்-முடியாது என்று நானே பிரித்துக் கொடுத்து விட்டால், அவர்கள் முடியாது லிஸ்ட்டைத் தாங்களும் நீட்டிக் கொண்டு போய் எதுவும் செய்யாததாகி விடுமே!"என்று நான் யோஜிக்கிறேன். அதனால் இப்போது முடியுமோ முடியாதோ, பிராம்மணர்கள் ரிடையர் ஆன பிறகாவது, அப்புறமும் எக்ஸெடென்ஷன், வேறு உத்தியோகம் என்று பறக்காமல் அவர்களுக்கான எல்லா அநுஷ்டானங்களையும் செய்யப் பிரயத்தனம் செய்ய வேண்டும் என்ற அபிப்ராயத்தில் சொல்கிறேன். சாஸ்திரம் பிராம்மணனுக்குப் போட்டுத் தந்திருக்கிற தினசர்யை (daily routine:அன்றாட அலுவல்) என்னவென்று சொல்கிறேன். ரொம்பவும் கடுமையான ருடீன் தான். ஸூர்யோதயத்திற்கு ஐந்து நாழிரை (இரண்டு மணி) முன்னதாகவே, அதாவது நாலு மணிக்கே எழுந்து விட வேண்டும். 'பஞ்ச பஞ்ச உஷத்காலே'என்பார்கள். 'ஐந்து *ஐந்து'அதாவது இருபத்தைந்தாவது நாழிகையில் என்று அர்த்தம். முதல்நாள் ஸூர்யாஸ்தமனத்திலிருந்து மறுநாள் உதயம் வரையுள்ள முப்பது நாழிகையில் இருபத்தைந்து நாழிகையானபின் என்று அர்த்தம். இதிலிருந்து ஸூர்யோதயம் வரை பிராம்ம முஹூர்த்தம். இப்படி விழித்துக் கொண்டு பல் துலக்கி, பச்சை ஜலத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டு ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும். இது தேவ யக்ஞம். அப்புறம் பிரம்ம யக்ஞம். அதாவது வேத அத்யயனம் பண்ணுவது;இதில் சில தர்ப்பணங்களும் பண்ண வேண்டும். (சில ஸூத்ரக்காரர்கள் இதைப் பிற்பாடு செய்கிறார்கள்) ஒரு பகல் பொழுதை - அதாவது காலம்பற 4 மணியிலிருந்து ராத்ர 8 மணி வரையுள்ள 16 மணியை - எட்டுப் பங்காக்கினால் இதோடு ஒரு பங்கு முடிந்திருக்கும். இரண்டாம் பாகத்தில் அத்யாபனம் என்பதாக வேதத்தை சிஷ்யனுக்கு ஓதுவதில் ஆரம்பிக்க வேண்டும். அப்புறம் பூஜைக்கான புஷ்பங்களைத் தானே பறித்து வர வேண்டும். பிறகு இவனுக்குச் சம்பளம் எனறு இல்லாததால், மூலதனமாகப் போதிய மானியம் இல்லாவிடில், வாழ்க்கைச் செலவுக்காகவும், யஜ்ஞ செலவுக்காகவும் பொருள் ஆர்ஜிதம் செய்யத் தக்க ஸத்பாத்திரங்களிடம் போய் திரவியம் வாங்கி வரவேண்டும். இப்படி தானம் வாங்க (அளவோடு அத்யாவசியத்துக்கே வாங்க) பிராம்மணனுக்கு உரிமை உண்டு. தானம் வாங்கினதில் கணிசமான பகுதியை இவன் யஜ்ஞத்தில் ரித்விக்குகளுக்கு தக்ஷிணையாக தானம் கொடுத்து விடுகிறான்

என்பதை கவனிக்க வேண்டும். பிராம்மணனுக்குரிய ஆறு தொழில்களில் 'ப்ரதிக்ரஹம்'என்பது தனக்கு வாங்கிக் கொள்வது;'தானம்'என்பது இவன் பிறருக்குக் கொடுக்க வேண்டியது. 'பிராம்மணனுக்கு மட்டும் தானம் வாங்க ரைட்டா?என்கிறவர்கள், அவன் தானம் கொடுக்க வேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருக்கிறதென்பதையும் முக்கியமாக இப்படிக் கொடுக்கவேதான் அவன் வாங்கினான் என்பதையும் கவனிக்க வேண்டும். அது தவிர இனி சொல்லப் போகிற ஆதித்ய. பூத யஜ்ஞங்களாலும் இவன் தாதாவாக இருக்கிறான். இப்படி ஒரு நாளில் இரண்டாம் பாகமும், மூன்றாவது பாகத்தில் கொஞ்சமும் ஆகியிருக்கிற போது மாத்யான்னிக ஸ்நானம் பண்ணினால் உடனே மாத்யான்னிக ஸந்தி செய்யச் சரியாக இருக்கும். அப்புறம் பித்ரு தர்ப்பணம் முதலியன. பிறகு பூஜை. நெருப்பிலே பண்ணும் ஹோமம், ஜலத்தால் பண்ணும் தர்ப்பணம், பஞ்சேந்திரியங்களால் நுகரப்படும் ஸகல வஸ்துக்களையும் ஈச்வரார்ப்பணம் பண்ணுவதான பூஜை என்ற மூன்றும் செய்யப்பட வேண்டியவை. பூஜையோடு நாலாம் பாகம் முடிந்து, பகல் பன்னிரண்டு மணியாகியிருக்கும். இதுவரை செய்த ஹோமத்தினாலும் பூஜையாலும் தேவ யஜ்ஞமும், முன்னே சொன்னபடி பிரம்ம யஜ்ஞமும், தர்ப்பணத்தால் பித்ருயஜ்ஞமும் பண்ணியாயிற்று. பஞ்ச மஹா யஜ்ஞங்களில் பாக்கி இரண்டு மநுஷ்ய யஜ்ஞம் என்ற விருந்தோம்பலும், பூத யஜ்ஞம் என்பதாகப் பிராணிகளுக்குப் பலியும் பிச்சையும் போடுவதுமாகும். இந்த இரண்டையும் முக்கியமாகக் கொண்டே பகலின் ஐந்தாவது பாகத்தில் வைச்வதேவம் என்ற கர்மா பண்ணப் படவேண்டும். இதிலே ஹோமம் என்ற அக்னியில் அன்னத்தைப் போடுவதோடு, அதே அன்னத்தை பலியாக, அதாவது அக்னியில் போடாமல், பல இடங்களில் வைக்கவேண்டும். பல தேவதைகளை உத்தேசித்து அக்னியில் ஹோமமும், க்ருஹத்தின் பல ஸ்தானங்களில் பலிகளும் போட்ட பிறகு நாய், காகம் முதலிய மிருக பக்ஷிகளுக்காக வீட்டு வாசலுக்கு வெளியே மந்திரோக்தமாக அன்னத்தை பலி போட வேண்டும். பிச்சைக்கு வருகிறவனுக்காக, சண்டாளனுக்காகவும் பதிதனுக்காகவும் கூட, இதே போல பலியை மந்திர பூர்வமாக போடவேண்டும். இதுவே பூதயக்ஞம். இதன்பின் மநுஷ்ய யக்ஞமான ஆதித்யம், அதாவது அதிதி ஸத்காரம் அல்லது விருந்தோம்பல். Aathithyam என்பதே சரி. Aadityam என்றால் ஆதித்யனான ஸூர்யனைச் சேர்ந்தது என்றாகும். அது தப்பு. எல்லாரும் ஆதித்யமும் வைச்வதேவமும் ஒழுங்காகச் செய்தால் வேலையில்லாப் பிரச்சனை, பிச்சைக்காரர் பிரச்சனை, திருட்டு என்ற மூன்றின் பாதிப்புமே வெகுவாகக் குறைந்து விடும். இதற்குப் பிறகுதான் அதாவது பிற்பகல் ஒரு மணிக்கு மேல்தான் பிராம்மணனுக்குச் சாப்பாடு. அதுவரை காபி, டிபன் கூடாது. மோர், க்ஷீரம் வேண்டுமானால் சாப்பிடலாம். இது நித்யப்படி. இதோடு பாக-ஹவிர்-ஸோம யக்ஞங்களோ மற்ற காம்யமான யஜ்ஞங்களோ சேர்கிற நாட்களில் இன்னும் அதிக நாழியாகும். அச்சமயங்களில் மற்ற கர்மாக்களில் சில அட்ஜஸ்ட்மென்ட்கள் உண்டு. சிராத்த தினங்களானாலும் அதிக நாழியாகும்.

சிராத்தம் ஆரம்பிப்பதே அபரான்ன காலத்தில்தான். அது என்னவென்று சொல்கிறேன். பின்மாலையிலிருந்து முன்மாலை முடியப் பதினாறு மணியை, எட்டுப் பங்காகப் பிரித்தது போலவே, ஸுர்யோதயத்திலிருந்து ஸுர்யாஸ்தமனம் வரையுள்ள பன்னிரண்டு மணியை ஒவ்வொன்றும் ஆறு நாழிகை கொண்ட ஐந்து பாகங்களாகவும் பிரித்திருக்கிறது. இதன்படி ஆறு மணிக்கு ஸுர்யோதயம் என்றால் 8.24 வரை பிராதஃகாலம். 8.24லிருந்து 10.48 வரை ஸங்கவ காலம். 10.48லிருந்து பகல் 1.12 வரை மாத்யான்னிக காலம் (மத்தியான்னம் என்பது) 1.12லிருந்து 3.36வரை அபரான்ன காலம். 3.36லிருந்து 6 மணி வரை (அதாவது அஸ்தமனம் வரை) ஸாயங்காலம். (அஸ்தமனத்தை ஒட்டினது ப்ரதோஷகாலம். 'தோஷம்'என்றால் இரவு. 'ப்ர'என்றால் முன்னால். இங்கிலீஷ் ஜீகூஷீமீ-யும் இதேதான். இரவின் முந்தய காலம் பிரதோஷம். சிராத்தம் அபரான்னத்தில் செய்யவேண்டும் என்றேன். சிராத்தம் முதலான பித்ரு காரியங்களுக்குப் பிறகுதான் பூஜை முதலான தேவகாரியம் செய்யவேண்டும். போஜனத்துக்கப் பின் புராணம் படிக்க வேண்டும். அதன்பின் பிறஜாதியாருக்கு அவரவர் வித்யைகளைக் கற்பிக்க வேண்டும். கொஞ்சங்கூட சிரம பரிகாரத்துக்கு பொழுதில்லாமல் மறுபடி ஸாயங்கால ஸ்நானம், ஸந்தியாவந்தனம், ஔபாஸன அக்னி ஹோத்ரம், மற்ற ஜபங்கள், இரவில் வைக்கிற வைச்வதேவம், ஸத்கதா சிரவணம் இவற்றைச் செய்துவிட்டு அப்புறம் போஜனம் செய்து சயனிக்கப் போகவேண்டும். அநேக நாட்களில் இரவில் பலகாரம்தான். ஏகாதசியில் முழுநாளும் பட்டினி. ஒரு க்ஷணம் விடாமல் கர்மாதான்;மீ வீரீலீமீ-ஷ்ஷீக்ஷீளீ-தான். சாஸ்திரங்களை பிராம்மணர்கள் எழுதி வைத்துக் கொண்டார்கள், ரக்ஷித்தார்கள் என்பதால் ஹாய்யாக வேலையில்லாமல் இருக்க வேண்டும் என்று பண்ணிக் கொண்டுவிடவில்லை. இடுப்பை உடைக்கிற மாதிரி வேலையும், மனஸைத் துளி இப்படி அப்படிப் போகாமல் கட்டிப் போடுகிற நியமங்களையுமே வைத்துக் கொண்டார்கள். இப்போது பத்துமணி ஆபீஸுக்குப் போகிறவர்களும் பிராம்ம முஹுர்த்தத்தில் எழுந்து, ஔபாஸன, அக்னி ஹோத்ர, பிராம்ம யக்ஞம் வரையில் பழைய கிரமப்படியே முடித்து, ஸங்கவ காலத்திலேயே (8.24 லிருந்து 10.48) பூஜை மாத்யான்னிகங்களைப் பண்ணி விடலாம். "மாத்யான்னிகம்"என்றே பெயர் இருந்தும் கால நிலைமையை உத்தேசித்து அதை ஸங்கவ காலத்தில் பண்ணலாம் என்கிறேன். சாயங்காலம் ஆபிஸிலிருந்து வந்து சாஸ்திரப்படியே எல்லாம் செய்யலாம். மனமிருந்தால் வழியுண்டு. லீவு நாட்களில் எல்லாவற்றையும் பண்ணலாம். காலமே எழுந்தவுடன் ஷிப்ட் என்று ஒடுகிறவர்களும் முடிந்தவரையில் செய்ய வேண்டும். மாலையில் சேர்த்து வைத்து காயத்ரீ பண்ண வேண்டும். ஒரு வாரம் காலை ஷிப்ஃட் என்றால் என்றால் அப்புறம் ஒரு வாரம் பிற்பகல் ஷிஃப்ட், இரவு ஷிப்ஃட் என்று வருகிறதோ இல்லையோ?இவற்றில் முடிந்த அநுஷ்டானங்களையெல்லாம் செய்யவேண்டும். செய்யவில்லையே என்ற தாபம் இருக்கவேண்டு ம்;செய்யவேண்டும் என்ற ஆர்வம் இருக்க வேண்டும். அதற்கே ஒரு வால்யூ

உண்டு. கருணாமூர்த்தியான பகவான் இதைக் கவனிக்காமல் போகமாட்டான். 'ரிடையர் ஆகிவிடப் போகிறோமே!'என்று அழாமல், 'எப்போது ரிடையராகி அநுஷ்டானங்கள் எல்லாவற்றையும் பண்ணுவோம்?'என்று எண்ண வேண்டும். ரிடையரான பிறகே அத்யயனத்திலிருந்து ஆரம்பித்து அநுஷ்டானங்களைப் பண்ணினவர்களும் லக்ஷத்தில் ஒருவர் இல்லாமலில்லை. உலகில் எந்த மதத்தையும்விடத் தொன்றுதொட்டு வந்திருக்கிற இந்த அநுஷ்டானங்கள் நம்மோடு போய்விடாமல் இவற்றால் நாம் பெறுகிற நன்மையையும், லோகம் பெறுகிற நன்மையையும் உண்டாக்குவதற்கே ஸகலப் பிரயத்தனமும் பண்ணவேண்டும்.

## உபவேதங்கள்

வேதங்கள் நாலு, வேதாங்கங்கள் ஆறு, உபாங்கங்களான மீமாம்ஸை-நியாயம்-புராணம்-தர்மசாஸ்திரம் என்கிற நாலு ஆக மொத்தம் இந்தப் பதினாலுமே ஹிந்து மதம் என்று சொல்லப்படுகிற ஸநாதன தர்மமான வேத ஸமயத்துக்கு ஆதாரமாக இருக்கப்பட்டவை.

தர்மத்தைச் சொல்லி, ஆத்மாவை சுத்தப்படுத்துவதால் இவற்றை 'தர்ம ஸ்தானங்கள்'என்பார்கள். அதோடு இவை அறிவையும் மனஸையும் வளர்ப்பதால் 'வித்யா ஸ்தானங்கள்'என்றும் பெயர் பெற்றிருக்கின்றன.

ஆத்மாவை நேராக சுத்தப்படுத்தப் பிரயோஜனப் படாமல் உடம்பை ரக்ஷித்து, அறிவைத் தந்து, உணர்ச்சிகளை உண்டாக்கி மனஸுக்கு இன்பம் தருவதாக உள்ள வேறு நாலு சாஸ்திரங்களும் உண்டு. அவை தர்ம ஸ்தானமாக இல்லாமல் வித்யா ஸ்தானமாக மட்டும் இருக்கிறவை. இவற்றைச் சேர்த்தால் வித்யா ஸ்தானங்கள் பதினெட்டு.

இப்படி வித்யா ஸ்தானமாக மட்டும் உள்ள நாலு ஆயுர் வேதம், தநுர்வேதம், கந்தர்வ வேதம், அர்த்த சாஸ்திரம் என்பன. அவற்றை 'உபவேதங்கள்'என்பார்கள்.

இவற்றில் ஆயுர்வேதம் என்பது வைத்ய சாஸ்திரம் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். அது உடம்பைப் பற்றியும், வியாதிகளைப் பற்றியும், வியாதிகளின் பரிஹாரங்களைப் பற்றியும் அறிவைக் கொடுக்கிற சாஸ்திரம். நேராக ஆத்ம ஸம்பந்தமுள்ளதென்று சொல்ல முடியாதது.

தநுர்வேதம் க்ஷத்ரியர்களுக்கு யுத்த அப்பியாஸத்தைத் தருவது. இங்கே தநுஸ் (வில்) என்பது எல்லா ஆயுதங்களையும் குறிக்கும். தேச ரக்ஷணைக்காக என்னென்ன ஆயுதங்களைஎப்படிப் பிரயோகம் பண்ண வேண்டும் என்ற

அறிவைத் தருகிற இதுவும் நேராக ஆத்ம சுத்திக்கு ஏற்பட்டதில்லைதான்.

காந்தர்வ வேதம் என்பது ஸங்கீதம், நடனம் முதலான கலைகள். இது கலையறிவைத் தருவது. மனஸின் உணர்ச்சிகளை ஸந்தோஷப்படுவது. 'பொழுது போக்கு' என்ற அளவில் எல்லா மநுஷ்யர்களுக்கும் இது வேண்டியிருக்கிறது. வித்யா ஸ்தானமாக மட்டும் இருக்கிற நாலில் இது ஒன்றுதான் நாதோபாஸனையாகவும், தெய்வபக்தியோடும் அநுஷ்டிக்கப்பட்டால் நேராக ஆத்ம ஸம்பந்தமுள்ளதாகிறது.

அர்த்த சாஸ்திரம் என்பது பொருளாதார சாஸ்திரம் என்று பொருள்படுவது.

முக்கியமாக இது ஆட்சிமுறையை, statecraft-ஐச் சொல்வது. இதிலே வரும் உபாங்கங்களான ஸாம, தான, பேத, தண்டத்தில் பேதமும் (பிரித்தாள்வதும்) தண்டமும் (தண்டனை தருவதும்) கொடுமையாக தோன்றினாலும் நடைமுறை வாழ்க்கையில் தவிர்க்க முடியாததால் ராஜாங்கத்துக்கு மட்டும் அநுமதிக்கப் பட்டுள்ளன.

இந்த நாலுமே spiritual life-ஐ (ஆத்மிக வாழ்க்கையை) விட practical living-க்கு (நடைமுறையில் ஜீவனம் நடத்துவதற்கு)த் தான் அவசியமாகின்றன. வாழ்க்கையில் நோய் வருகிறது. எனவே ஆயுர்வேதம் வேண்டியிருக்கிறது. எதிரி ராஜ்யங்கள் இருப்பதால் தநுர்வேதம் அவசியமாகிறது. எப்போதும் காரியம், அல்லது தூக்கம், சோம்பல் என்றில்லாமல் பொழுது போக்குகள் தேவையிருப்பதால் காந்தர்வ வேதம் இருக்கிறது. ஒரு நாடு என்றால் பிரஜைகளின் ஸமுதாய வாழ்க்கை ஒழுங்காக நடந்தால்தானே முடியும்?அப்படி நடத்தப்பண்ண அர்த்த சாஸ்திரம் தேவைப்படுகிறது. இவை practical necessity-கள் (நடைமுறைத்

தேவைகள்.)

அதனால் இவற்றின் பலனும் பிரத்யக்ஷம். மருந்து சாப்பிட்டால் உடனே வியாதி போவது கண்கூடு. ஆயுதத்தைப் பிரயோகித்தால் அது சத்ருவைத் தாக்குவதும் பிரத்யக்ஷம். பாட்டுக் கச்சேரி, டான்ஸ் அநுபவிக்கும்போதே ஆனந்தம் தருகின்றன. அர்த்தசாஸ்திரப்படி நடக்கிற ராஜ்ய விஷயங்களும் பிரத்யக்ஷமாகப் பலன் தந்து, பேப்பரில் அன்றன்றும் அடிபடுவதாகும்.

ஆத்மாவுக்கே ஏற்பட்ட பதினாலு தர்ம ஸ்தானங்கள் இப்படிப் பிரத்யக்ஷமான பலனுள்ளவை அல்ல. அவற்றுக்கு 'அத்ருஷ்ட பலன்'என்பார்கள். 'த்ருஷ்டம்'என்றால் திருஷ்டிக்கு அகப்படுவது. அதாவது பிரத்யக்ஷமானது. அப்படியில்லாதது அத்ருஷ்டம். ஆத்மா பரிசுத்தி அடைவதை நேரில் பார்த்துக்

கொள்ள முடியாது. பாப புண்ணியங்கள் ஒருவனை ஸ்வர்க்க நரகங்களுக்கு அழைத்துப் போவதை உடனே பார்த்துக் கொள்ள முடியாது. நாம் பார்க்கிறபோதும் பிறருக்கும் காட்டி ஒப்புக்கொள்ளும்படிப் பண்ண முடியாது!யாகம் செய்தால் ப்ரீதி அடைந்து தேவர்கள் மழை பெய்வித்தாலும் மழைதான் தெரியுமே தவிர, தேவர்கள் தெரிய மாட்டார்கள்!பரம சுத்தர்களுக்குத் தெரிந்தாலும் மற்றவர்களுக்குக் காட்ட முடியாது. அதனால், யாகம் பாட்டுக்குச் செய்தார்கள். மழை பாட்டுக்குப் பெய்கிறது. அதன் பலன்தான் இது என்று எப்படிச் சொல்ல முடியும் இது காக்கை உட்கார பனம் பழம் விழுந்த கதையாய் இருக்கலாம் என்று கூட ஆக்ஷேபிக்க இடமிருக்கிறது. இப்படியிருந்தாலும் வாஸ்தவத்தில் தர்ம ஸ்தானமான பதினாலுதான்

ஆத்மாவுக்கு, மெய்யான சாச்வதமான ச்ரேயஸுக்கு முக்கியமானவை. அவற்றுக்கு வழிகோலவேதான் மற்ற நாலு வித்யா ஸ்தானங்களும்.

"சரீரத்துக்குள்ளே ஆத்மா மாட்டிக் கொண்டிருக்கிறதே!இந்த சரீரம் இருக்கும்போதேதானே பாபத்தைப் போக்கும் புண்ய கர்மாக்களைப் பண்ணினால்

ஆத்மாவை அறியலாம்?என்ற அடிப்படையில்தான் சரீர ரக்ஷணத்துக்கான ஆயுர்வேதம் ஏற்பட்டிருக்கிறது. தனி மநுஷ்யனுக்கு தேகம் ஆரோக்யமாயிருந்தால் ஆத்ம ஸாதனை பண்ண அநுகூலமாயிருக்கும் என்பது போல், ஒரு ஜன ஸமூஹத்துக்கு சத்ருக்களால் ஹிம்ஸை இல்லாவிட்டால்தானே அது தேசரீதியில் ஆத்மாபிவிருதிக்காக நிம்மதியாகப் பாடுபட முடியும்?என்றே தநுர்வேதம் ஏற்பட்டிருக்கிறது. வெளியிலிருந்து மட்டுமின்றி உள்ளேயே இப்படிப்பட்ட குழப்பங்கள் ஏற்பட்டு ஒரு தேசத்தின் ஆத்மிக் அபிவிருத்திக்கான சூழ்நிலை கெட்டுப் போகக்கூடாதென்ற அர்த்த சாஸ்திரம் இருக்கிறது.

அர்த்த சாஸ்திரம் நீங்கலாக மற்ற மூன்றின் பெயரிலுமே வேதம் என்று வருகிறது. ஆயுர்வேதம் தநுர்வேதம், காந்தர்வ வேதம். நாலு வேதங்களுக்கு இந்த நாலும் உபவேதம் என்பார்கள்.

ஆகையால் இந்திரிய ஸௌக்கியம், கொலை முதலான தப்புத் தண்டாக்களில்கூட இழுத்து விட இந்த நாலில் இடமிருப்பதாகத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் நடைமுறை லோகத்தின் தேவைகளை அநுஸரித்தும், முடிவில் ஆத்மாவுக்கே உதவும்படியாகத்தான் இந்த நாலு சாஸ்திரங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

இந்தப் பதினெட்டோடு இப்போதுள்ள அத்தனை ஸயன்ஸ்களிலும், ஆர்ட் (கலை)களிலும் ஒன்று பாக்கியில்லாமல் அத்தனைக்கும் நம்மிடம் பிராசீனமான சாஸ்திரங்கள் இருக்கின்றன. நம் ஆயுர்வேதம் ஒன்றிலேயே நவீனர்களின் physiology (உடற்கூறு இயல்), Zoology (உயிரின இயல்), Botany (தாவர இயல்).

Medical Science (மருத்துவ இயல்), Chemistry (ரஸாயனம்) இத்தனையும் வந்து விடுகின்றன. இப்படி அநேகம். இவற்றில் Surgery (ரண சிகித்ஸை), கணிதத்தில் ஸைபர் முதலான பல விஷயங்கள் இந்தியாவிலிருந்தே மற்ற எல்லாத் தேசங்களுக்கும் கிடைத்ததாக இப்போது ஸகல தேசத்தாரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

துருக்கர்கள் வந்து நம் தேச வாழ்வில் நிம்மதியைக் கெடுத்து, அந்நியர் ஆட்சி ஏற்பட்டபின் இப்படி ஸகல வித்யையகளிலும் (64 வித்யை என்று ஒரு கணக்கு) நாம் ஆராய்ச்சி பண்ணுவதற்கு ஊக்கமும் மான்யமும் போய் விட்டது. அதற்கு அப்புறம்தான் நாம் ஸயன்ஸில் பின் தங்கியவர்களாகி விட்டோம்.

அதற்கு முன் நாம் கண்டு பிடித்திருந்த அநேக விஷயங்கள் மற்றவர்களுக்குத் தெரியாது. ஆனால் நாம் கண்டு பிடிக்காத ஒன்றே ஒன்று அவர்களுக்குத் தெரிந்திருந்ததால் தான் நாம் தோற்றுப்போய் தினக்ரமேண ஆத்மிகம், ஸயன்ஸ் இரண்டிலும் கீழே போகும்படியாகி விட்டது. அந்த ஒன்று வெடிமருந்து என்பதுதான். பீரங்கிக்குப் பதில் சொல்ல முடியாமல்தான் முகலாய ஆட்சிக்கு ஆளானோம். அதிலிருந்து எல்லாம் இறங்குமுகமாயிற்று - பரமபத ஸோபான படத்தில் பாம்பு வாயில் விழுந்த மாதிரி!

இப்போது நம் சாஸ்திரங்களான பழைய மருத்துவம், சில்பம் முதலியவற்றையே அநுஸரித்தோமானால் நமது சீதோஷ்ணம், நாகரிகம் இவற்றுக்கு அநுஸரணையான இவற்றாலேயே நம்முடைய சாஸ்திரோக்த வாழ்க்கைக்கு திரும்புவதையும் ஸுலபமாக்கிக் கொள்ளலாம்.

### சுதேசம்-விதேசம் ; பழசு-புதிசு

பிற தேச ஸமாசாரத்தையெல்லாம் ஒதுக்க வேண்டும் என்று நான் சொல்லவேயில்லை. அதில் நல்லதாக ஆத்மாபிவிருத்திக்கும், லோக க்ஷேமத்துக்கும் உதவுவதாக, நமது genius-கு (தேசபண்புக்கு) உகந்ததாக இருக்கிறவைகளை அங்கீகரித்துப் பயனடையத்தான் வேண்டும். 'வஸுதைவ குடும்பகம்'(லோகம் பூரா ஒரு குடும்பம்), ஆசார்யாளே சொன்ன மாதிரி 'ஸ்வதேசோ புவனத்ரயம் (மூவுலகும் நம் தாய் நாடு), 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'என்பதுதான் நம் ஸித்தாந்தம். அதனால் அந்நியம் என்பதாலேயே எதையும் கழித்துக் கட்ட வேண்டாம். காளிதாஸன் ('ñ£÷Mè£,Q I^ó'^ ªî£ì,è^F™)

புராணமித்யேவ ந ஸாது ஸர்வம்

ந சாபி காவ்யம் நவமித்யவத்யம்।

ஸந்த:பரீக்ஷ்யான்யதரத் பஜந்தே

மூட:பர:ப்ரத்யயநேய புத்தி:।।

என்கிறான். 'நம்முடையது, பழையது என்பதற்காகவே ஒன்றை நல்லது என்று தீர்மானித்து விடக்கூடாது. பிறருடையது புதுசு என்பதற்காகவே ஒன்றைத் தள்ளியும் விடக் கூடாது. பரீட்சை பண்ணிப் பார்த்தே ஏற்க வேண்டியதை ஏற்று தள்ள வேண்டியதை தள்ளி விட வேண்டும். முதலிலேயே முடிவு கட்டி மனஸைக் குறுக்கிக் கொள்வது மூடனின் காரியம்'என்று இதை விரித்துப் பொருள் கொள்ளலாம். அதனால்தான் விதேசமானது, நவீனமானது எதுவுமே நமக்குக் கூடாது என்று சொல்லிவிடவில்லை. ஆனால் இப்போது காளிதாஸன் சொன்னதற்கு நேர்மாறாக, 'நம்முடையது பழசு என்பதாலேயே மட்டம், அது தள்ள வேண்டியது;மேல் நாட்டிலிருந்து வந்ததுதான் ஶீஷீபீமீக்ஷீஸீ (புதிசு)என்பதாலேயே அதை அப்படியே யோசிக்காமல் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றாயிருக்கிறது. இதுவும் தப்பு.

ஆகையால் அந்நியமும், நவீனமுங்கூட எங்காவது நமக்குக் கொஞ்சம் தேவையாயிருந்தாலும் பெரும்பாலும் நம்முடையதான பழைய விஷயங்கள்தான் விசேஷமாக, அதிகமாக அநுஸரிக்கத் தக்கன என்று சொல்ல வேண்டியதாகிறது. புதிதில் எவையெல்லாம் வேண்டும் என்று நாம் ஆலாப் பறக்கிறோமோ, அவைகள் வேண்டவே வேண்டாம் என்று அவற்றைக் கண்டுபிடித்த நாடுகளிலேயே பக்குவிகள் விட்டு விட்டு நம்முடைய யோகம், பஜனை, ஆத்ம விசாரம் முதலியவற்றுக்குக் கூட்டம் கூட்டமாகத் திரும்பிக் கொண்டிருப்பதை முக்யமாகக் கவனிக்க வேண்டும்.

நவீனம் என்று நாம் எதை நாடிப் போகிறோமோ அதிலே கரை கண்டவர்கள் பெரும்பாலும் அது பிரயோஜனமில்லை என்றே உணர்ந்து நம் வழிகளுக்கு வந்து கொண்டிருக்கிறார்களாதலால், நாம் நம்முடைய பழைய பழைய வழியைத் தான் ஆதாரமாக வைத்துக் கொண்டு, அதன்படி செய்ய வேண்டும் என்பது தெளிவு.

இப்போது செய்கிற மாதிரி, மேல்நாட்டார் கழிசடை என்று ஒதுக்கித் தள்ளுகிறவற்றை நாம் கொண்டாடி எடுத்துக் கொள்வதற்காக நான் புது ஸயன்ஸ்களைப் படிக்கச் சொல்லவில்லை. நம் வழிக்குப் பாதகமில்லாமலே, அதற்கு அநுகூலமாகவே ஏதாவது அம்சங்களில் இந்த ஸயன்ஸ்களின் மூலம் பண்ணிக் கொள்ள முடியுமா என்று தெரிந்து கொள்வதற்கே இவற்றை தெரிந்து கொள்ளவேண்டும். இவை லோக க்ஷேமத்துக்குப் பிரயோஜனப்படுமா என்று தெரிந்து கொள்வதற்காகவே கற்றறிய வேண்டும். அல்லது இவற்றில் தப்பு இருந்தால் அதை எடுத்துச் சொல்லி நாம் திருந்துவதற்கும் இவற்றில் நமக்கு ஆழ் ந்த அறிவு இருந்தால்தானே முடியும்?அதற்காகவாவது, குமாரிலபட்டர் பௌத்த

தத்வங்களை கண்டிப்பதற்கே பௌத்த வேஷம் போட்டு அதன் ரஹஸ்ய சாஸ்திரங்களை படித்த மாதிரி நாம் மாடர்ன் ஸயன்ஸைப் படிக்க வேண்டும். அதில் நல்லதாகவும் பல அம்சம் இல்லாமலில்லை.

"களவும் கற்று மற"என்றார்கள். முதலில் நம் ஸமயாசாரங்களால் நல்லொழுக்கங்களைப் பாறை மாதிரி உறுதிப்படுத்திக் கொண்டுவிட்டால், அப்புறம் எதுவும் நம்மைக் கெடுக்க முடியாது என்ற நிச்சயத்துடன் கெட்டதோ, நல்லதோ எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு மற்றவர்களுக்கு நல்லது கெட்டதுகளை எடுத்துச் சொல்லலாம். ஆகையால் ளீஸீஷ்ஷ்றீமீபீரீமீ-க்கு (அறிவை வளர்த்துக் கொள்வதற்கு) முன்னால் நீலீணீக்ஷீணீநீமீ மீக்ஷீ (ஒழுக்கம்) அவசியம். இல்லாவிட்டால் அறிவு கெட்டதற்கு ணீஜீஜீறீஹ்ஆகி, கெட்டதுகளை வளர்க்கும். முதலில் வரவேண்டிய இந்த ஒழுக்கம் மதானுஷ்டானத்தால் தான் வரும்.

உபவேதங்கள், மற்ற வித்யையகள், விஞ்ஞானங்கள் யாவும் லௌகிகத்துக்கும் அறிவுக்கும் மட்டுமே பிரயோஜனமானாலும் இவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும். ஙிணீஉவீநீ-ஆக (அடிப்படையாக) தெய்வபக்தியும், ஸமயானுஷ்டானங்களும் இருந்துவிட்டால் அறிவுக்கும் மனோவளர்ச்சிக்கும் ஏற்பட்ட விஞ்ஞானங்களையும் கலைகளையும் தெரிந்து கொள்வதுகூட அந்த அறிவையும் மனஸையும் நன்றாக வளர்த்து சுத்தப்படுத்தவே உதவும். அப்புறம் இவற்றைத் தாண்டி ஆத்மாவிலேயே ஆணி அடித்த மாதிரி நிற்க. ஆரம்பத்தில் இவையே உபாயமாயிருக்கும்.

## Hø° «ð£è«õ ºîL™ «õ‡´‹

உபவேதங்கள் மட்டுந்தானா என்ன?கர்மாக்கள் அத்தனையும் - தர்மசாஸ்திரம் சொன்ன அத்தனை விஷயங்கள், வேதத்தின் கர்மகாண்டத்திலேயே

உள்ள அநுஷ்டானங்கள் எல்லாமும் கூட - முடிவிலே அடிபட்டுப் போகிறவைதான். ஆனால் அந்த முடிவிற்குப் போவதற்கே அடிமட்டத்தில் அவை வேண்டும். இத்தனை படிப்பதும், பார்ப்பதும், அறிவும், அநுபவிப்பதும், அநுஷ்டிப்பதும் பரமாத்மாவை தெரிந்து கொள்வதற்கு வழியாகத்தான்.

கற்றதனால் ஆய பயன் என் கொல் - வாலறிவன்

நற்றாள் தொழாஅர் எனின்?

என்று திருவள்ளுவரும் கேட்கிறார். அந்த goal (லட்சியம்) எந்நாளும் மறக்கக்கூடாது. அதை மறந்து விட்டால், வித்யைகளைப் பயிலுவது மட்டுமின்றி, வைதிக கர்மாக்களும், பூஜையும், க்ஷேத்ராடனம் தீர்த்தாடனம் செய்வதும்கூடப்

பிரயோஜனம் இல்லை. எங்கேயும் நிறைந்த பரம்பொருளிடம் மனஸார நாட்டமில்லாவிடில் இவை எதுவும் பிரயோஜனமில்லை என்று அப்பர் ஸ்வாமிகள் சொல்கிறார்.

கங்கை யாடிலென்?காவிரி யாடிலென்?

கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்?

ஒங்கு மாகட லோதநீ ராடிலென்?

எங்கு மீசன் எனாதவர்க் கில்லையே!

அப்பர் ஸ்வாமிகள் சொல்கிற மாதிரியேதான் பகவத் பாதாளும் 'பஜகோவி ந்த'த்தில்

**குருதே கங்கா ஸாகர கமனம்**

என்று கங்கையில் ஆரம்பித்து,

வ்ரத பரிபாலனம் அதவா தானம்

ஞான விஹீன:ஸர்வமதேன

முக்திம் ந பஜதி ஜன்மசதேந

என்கிறார். எங்குமாய் எல்லாமாய் இருக்கிற பரமாத்ம ஞானத்துக்கு ஆசைப்படாமல் கங்கா ஸங்கமத்தில் ஸ்நானம் செய்வதாலும், விரதங்களை அநுஷ்டிப்பதாலும், தானங்கள் பண்ணவதாலும் நூறு ஜன்மா எடுத்த பின்பும் முக்தி கிடைக்காது என்கிறார்.

அப்பரும், ஆசார்யாளும் சொன்ன இதே கங்கையைப் பற்றிய பிரஸ்தாவம் இவ் விஷயமாகவே "மநுஸ்மிருதி" யிலும் வருகிறது. தீர்த்தங்களில் கங்கை மாதிரி, க்ஷேத்திரங்களில் குரு க்ஷேத்ரம். இந்த இரண்டையும் சேர்த்து மநு சொல்கிறார்:

யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி ஸ்தித:|

தேன சேதவிவாதஸ்தே மா கங்காம் மா குரூன் கம:||

யமனுக்கு வைவஸ்தன் என்றும் பெயர். அவனுக்கே தர்மராஜா என்றும் பெயரல்லவா?அதனால் இங்கே 'யமோவைவஸ்வதோ ராஜா என்பதற்கு 'தர்மம்'

என்று பொருள் கொள்ள வேண்டும். "தர்மம் ஒருத்தனுடைய ஹ்ருதயத்தில் குடி

கொண்டு விட்டாலே போதும். அவனுடைய பாபமெல்லாம் போய் விடுகிறது. அவன் பாப நிவிருத்திக்காக கங்கைக்கும் குரு க்ஷேத்ரத்துக்கும் ஓட வேண்டியதே இல்லை"என்பது ச்லோகத்தின் கருத்து.

பக்குவம் வந்து விட்டால் சாஸ்திரம் வேண்டாம், க்ஷேத்திரம் வேண்டாம், தீர்த்தம் வேண்டாம். அந்த நிலையில் வேதமே வேதமில்லை, தேவர்களே தேவர்களில்லை என்று உபநிஷத்தே சொல்கிறதே!

அதற்காக அப்பரும், ஆசாரியாளும், மநுவும் பக்தி, கர்ம அநுஷ்டானங்களை ஆக்ஷேபித்தார்கள் என்று தப்பர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. இவற்றைச் செய்யும்போதே 'இவற்றை விட்டு விட்டுப் போகிற காலமும் வரவேண்டும் - அல்லது சரியாகச் சொன்னால், இவை நம்மை விட்டுப் போகிற காலமும் வரவேண்டும். அப்படி வந்து நாம் பரமாத்ம ஸத்யம் ஒன்றிலேயே கரைந்து இருக்க வேண்டும்'என்ற எண்ணத்தோடு பண்ண வேண்டும் என்று அர்த்தம்.

"கங்கா ஸாகரத்துக்கு ஏன் போக வேண்டும்?"என்று கேட்ட அதே ஆசார்யாள்தான் ஒரு க்ஷேத்ரம், ஒரு தீர்த்தம் பாக்கியில்லாமல் தேசம் நெடுக ஸஞ்சாரம் பண்ணியும் நமக்கு வழி காட்டியிருக்கிறார். வியாகரணத்தையும் அதையும் இதையும் படித்து என்ன பிரயோஜனம் என்று 'பஜ கோவிந்தம்', 'சிவாநந்த லஹரி'முதலியவற்றில் அவர் சொன்னாலும், அவர் தெரிந்து கொள்ளாத

சாஸ்திரமில்லை:'ஸர்வக்ஞ'பட்டமே பெற்றவர் அவர்.

ஆசார்யாளுக்கு எல்லாக் கலையும் தெரியுமா என்று பார்ப்பதற்காக ஒரு சக்கிலியின் பரீட்சை பண்ணினானாம். 'செருப்பு தைக்க வருமா? என்று அவரைக் கேட்டானாம். உடனே அவர் ஊசியை மூக்கின்மேலே தேய்த்துக் கொண்டு விட்டு, வெகு நேர்த்தியாகச் செருப்புத் தைக்க ஆரம்பித்து விட்டாராம். மூக்குத் தோல் மேல் ஊறும் ஒரு திரவம் ஊசியில் படுவதால் அது செருப்புக்குள் சுலபமாகத் துளைத்துக் கொண்டு போகும் என்பதால் சக்கிலியர் அப்படித்தான் தேய்த்துக் கொள்வார்களாம். அப்படியே பண்ணி அந்தத் தொழிலாளியிடம் 'ஸர்ட்டிஃஃபிகேட்'வாங்கினதில் ஜகதாசாரியர்களும் பெருமைப் பட்டார்களாம்.

இதே மாதிரி இன்னொரு கதை உண்டு. மாட்டின் முதுகில் ஏதாவது பட்டால் அது

சிலிர்த்துக் கொண்டு முதுகில் சுழி சுழியாகப் பரவுமே!அதே மாதிரி ஒரு பெரியவர் ராஜ சபையில் சுழித்துக் கொண்டு காட்டினாராம். ராஜா பீதாம்பரம் போர்த்தினானாம். அதே ஸமயத்தில் ஒரு கோனார் இந்த வித்தைக்கு ஸபாஷ் போட்டுத் தன் மேல் போட்டிருந்த கிழிந்த கம்பளியை எடுத்து அவர் மேல் போட்டானாம். அவர் ராஜாவின் பீதாம்பரத்தைவிட மாட்டோடேயே ஜீவனம்

செய்கிற இந்த கோனாரின் கிழிசல் கம்பளிதான் விசேஷமானது என்றாராம்!

இந்த இரண்டு கதைகளிலிருந்து எல்லா வித்தைகளும் தொழில்களும், அவற்றைச் செய்கிற தொழிலாளிகளும் கலைஞர்களும் பெற்றிருந்த உயர்ந்த மதிப்பு தெரிகிறது.

ஒரு நிலையில் எல்லாம் வேண்டும். அப்புறம் அவை போய்விட வேண்டும்.

"யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி"யில்

க்ரந்தமப்யஸ்ய மேதாவீ ஞான விஞ்ஞான தத்பர:|

பலாலமிவ தான்யார்த்தீ ஸர்வ சாஸ்த்ரம் பரித்யஜேத்:||

என்று இருக்கிறது. பார்த்துப் பார்த்து ஒருத்தன் நெல்லைப் பயிர் பண்ணுகிறான். அந்தக் கதிர் புஷ்டியாக வளர எத்தனை உண்டோ அத்தனையும் பண்ணுகிறான். அப்புறம் அறுவடை காலத்தில் என்ன செய்கிறான்?போரடித்துத் தான்ய மணிகளை மட்டும் பொறுக்கிக் கொண்டு அந்த கதிரை வெறும் வைக்கோல் என்று தள்ளிவிடுகிறான். இப்படித்தான் ஸர்வ சாஸ்திரங்களையும் படித்தும் அநுஷ்டித்தும் நெல் கதிரைப் போல் நன்றாகப் பேணிய பின், ஞானம் என்கிற பலனான தானியம் உண்டாகி முதிர்ந்த பிறகு, அத்தனை சாஸ்திரங்களையும் வைக்கோலாகத் தள்ளிவிட வேண்டும் என்பது தாத்பரியம்.

தானியமணிக்காகத்தான் இதைப் பயிரிடுகிறோம் என்று ஒரு விவஸாயிக்கு அடியிலிருந்து நினைவிருப்பது போல், நம்முடைய முடிவான பலன் ஆத்ம ஞானந்தான் என்பதை மறக்காமல் ஸகல சாஸ்திரங்களையும் ஸயன்ஸ்களையும் தெரிந்து கொண்டு, ஸகல அநுஷ்டானங்களையும் செய்ய முயலவேண்டும். இதுதான் நாம் வளர்க்கிற கதிர். அதற்குத்தான்விதையாவது போட வேண்டும் என்றே இவ்வளவு சொல்கிறேன்.

பதினாலு வித்யை, பதினெட்டு வித்யை பற்றிச் சொன்னதெல்லாம் இதற்குத்தான். இந்த பதினெட்டு வித்யைகளும் த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத, சைவ ஸித்தாந்த வித்யாஸங்களில்லாமல் ஹிந்துக்கள் என்ற பெயருள்ள அனைவருக்கும் பொதுவானவை. இவற்றிலே முதல் நாலு வித்யைகளான வேதங்களில் வருகிற உபநிஷத்துக்களுக்கு இந்த ஒவ்வொரு ஸித்தாந்த ஆசாரியரும் பண்ணின வியாக்யானங்களில்தான் வித்யாஸங்கள் வருகின்றன. அஷ்டாதச (பதினெட்டு) வித்தைகள் வித்யாசமில்லாமல் எல்லோருக்கும் பொதுவானவையே.

இவற்றில் வராவிட்டாலும் 'யோகம்'என்று ஒன்று இருக்கிறது. கர்மா, பக்தி, ஞானம் எல்லாமே யோகம்தான் என்றாலும் மனஸை அடக்குவதற்கென்றே அஷ்டாங்க

யோகம் என்று ஒன்று இருக்கிறது. ராஜயோகம் என்று அதைச் சொல்வார்கள். அது பதினெட்டு வித்யையில் வராவிட்டாலும் ஸாங்கியம் - யோகம், நியாயம்-வைசேஷிகம், மீமாம்ஸை-வேதாந்தம் என்று இரண்டிரண்டாகப் பிரிந்த ஷட்-தரிசனம் என்ற ஆறு சாஸ்திரங்களில் வருவது.

இது தவிர சைவர், வைஷ்ணவர், சாக்தர் முதலியவர்களின் வழிபாட்டுக்கு

ஆதாரமாக தந்திர சாஸ்திரங்கள் என்பனவும், ஆகம சாஸ்திரங்கள் என்பனவும் உள்ளன. நம் தேசத்தின் மத வாழ்வுக்கும், ஸமுதாய வாழ்வுக்கும் மையக் களமாகியுள்ள கோவில் நிர்மாணம், ஆலய வழிபாட்டு முறைகள் முதலியன ஆகமங்களில் இருப்பவையே ஆகும்.

இவற்றில் எவ்வளவுக்கெவ்வளவு தெரிந்து கொள்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு நம் மத அறிவு விசாலமாகும். நம் சாஸ்திரங்கள் மஹா சமுத்திரம் மாதிரி இருக்கின்றன. முடியுமட்டில் இவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு பக்கம் சாஸ்திர நம்பிக்கையுள்ள கட்டுப் பெட்டிகள், மறுபக்கம் நவீனக்கல்வி படித்தவர்கள் என்று பிரிந்திருப்பதே தவறு. சாஸ்திரங்களில் நம்பிக்கை மட்டுமல்லாமல், நாமே எல்லா சாஸ்திரங்களையும், வித்யைகளையும் படித்தால் கட்டுப்பெட்டிகளாக இருக்க வேண்டியதேயில்லை. அதனால் அவற்றையும் படித்து, மாடர்ன் ஸயன்ஸ்களையும் படித்து, இந்த ஸயன்ஸிலும் நிறை அம்சங்கள் நம் சாஸ்திரங்களில் இருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இதே மாதிரி ஸயன்ஸ்காரர்களும் சாஸ்திரங்களைப் படித்து புரிந்து கொள்ள வேண்டும் என்பது என் ஆசை. இதற்காக பகவானைப் பிரார்த்தனை பண்ணுகிறேன். ஒன்றுக்கொன்று 'காம்ப்ளிமென்டரி' யாக பழசும் புதிசும் இட்டு நிரப்பிக் கொள்ள வேண்டும்.

நானும் சரி, மற்றவர்களும் சரி எவ்வளவு பேசினாலும் லெக்சரால் கல்சர் (கலாசாரம்) வளராது. படிப்பதாலும் வளராது. நமக்கென்று காரியத்தில் பின்னி வைத்திருக்கிற அநுஷ்டானங்களைப் பண்ணினால்தான் சித்த சுத்தி ஏற்பட்டு, நாம் படிப்பதில் ஸாரம் எது என்று புரிந்து கொண்டு அதைக் கிரஹித்துக் கொண்டு கல்சரை வளர்க்க முடியும். பிற தேச விஷயங்களில் எதை எடுத்துக் கொள்வது என்று பரிசீலித்து முடிவு செய்வதற்கு அஸ்திவாரமாக முதலில் நம் சாஸ்திரப்படி வாழ முயற்சி பண்ண வேண்டும்.

இக்காலத்தில் ஆஹாரம், விஹாரம், வாஹனம் எல்லாமே மாறித்தான் விட்டது. அத்தனையும் நம் பண்பாட்டுப்படி மாற்ற முடியுமா என்று மலைப்பாயிருந்தாலும், கொஞ்சம் strain பண்ணிக்கொண்டாவது (சிரமப்படுத்திக் கொண்டாவது) சிலதையாவது மாற்ற ஆரம்பிக்கத்தான் வேண்டும். நம் மதத்துக்கு ஆதாரமான ஆசாரங்கள், ஆஹார சுத்தி முதலியவை, பழக்கத்தில் இருந்தால்தான்

போஷிக்கும். முதலில் லெக்சராகவும் அப்புறம் லைப்ரரியில் புஸ்தகமாகவும் மட்டும் இருந்தால் வெறும் வறட்டுப் பெருமை தவிரப் பிரயோஜனமில்லை.

நான் சொல்கிறபடி மாறுவது ஒன்றும் பெரிய கஷ்டமில்லை. ஒரே ஒரு அம்சத்தை மட்டும் நாம் பிடிவாதமாக மாற்றிக் கொண்டு விட்டால் இது ஸாத்யம் தான். "பணம் தான் பிரதானம்"என்பதே அந்த அம்சம். பணமே குறி என்று நாம் இறங்கின பிற்பாடுதான் ஆசாரங்கள், வித்யா ஞானம் எல்லாமே போய்விட்டன. நம் தேசத்தில் பணம் முக்யமாய் இருந்ததேயில்லை. லௌகிக வாழ்க்கையை ஆத்ம அபிவிருத்திக்கு உபாயமாக மட்டும் வைத்துக் கொள்வதுதான் நம்முடைய தேசாசாரம்.

வித்யை பணத்தையும் கொடுக்கும் - 'அர்த்தகரீ ச வித்யா'என்று சொல்லியிருக்கிறது. நாமோ நமக்குப் பணத்தைத் தருவது மட்டுமே வித்யை, பணம் சம்பாதிப்பதற்கே வித்யை - "அர்த்தகரீ ஏவ வித்யா" என்று பண்ணிக் கொண்டிருக்கிறோம். இந்த எண்ணம், பணப் பேராசை போய் விட்டால் சாஸ்திரோக்தமான ஆசாரங்களோடு வாழ்ந்து எல்லா வித்யைகளையும் சாஸ்திரங்களையும் ஆர்வத்தோடு படித்து, விவேகத்தோடு ஸாரத்தைக் கிரஹித்துக் கொண்டு நாமும் வளர்ந்து நம் பண்பாட்டையும் வளர்த்து வாழ்விக்க முடியும். இப்படி நம் தேசம் பூர்வத்தில் இருந்தபடி லோகத்துக்கு வழி காட்டியாக இருப்பதற்கு எல்லோரும் அடக்கத்தோடு பகவானைப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டு, நம்மாலான பிரயத்தனங்களைப் பண்ணுவோம்.

---

நம் மதத்தில் பிராம்மணர், க்ஷத்ரியர், வைச்யர், சூத்ரர் என்று நான்கு வர்ணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த வர்ணங்களை நாம் ஜாதி என்கிறோம்.

வாஸ்தவத்தில் ஜாதி வேறே, வர்ணம் வேறே, வர்ணங்கள் மேலே சொன்ன நாலுதான். இதற்குள்ளேயே ஒவ்வோன்றிலும் பல ஜாதிகள் இருக்கின்றன. நாலாம் வர்ணம் ஒன்றிலேயே முதலியார், பிள்ளை, ரெட்டி, நாயக்கர், நாயுடு, கவுண்டர், படையாட்சி என்கிற மாதிரி எத்தனையோ ஜாதிகள் இருக்கின்றன.

இருந்தாலும் பொது வழக்கில் வர்ணம் என்று சொல்லாமல் ஜாதி என்றே சொல்லுவதால், நானும் இந்த இரண்டிற்கும் வித்யாஸம் பார்க்காமல் வர்ணத்தையும் ஜாதி என்றே சொல்லிக்கொண்டு போகிறேன்.

நான்கு ஜாதிகளும் (அதாவது வர்ணங்களும்) சாஸ்திரங்களில் வெவ்வேறு விதமான கர்மாக்களையும் ஆசாரங்களையும் விதித்திருக்கிறது. இதனால் ஒரே மதஸ்தரிடையிலேயே ஏகப்பட்ட வித்தியாஸங்கள் உள்ளன. ஒருவர் சமைத்ததை

இன்னோருத்தர் சாப்பிடக்கூடாது. ஒருத்தரோடு ஒருத்தர் கல்யாணம் பண்ணிக் கொள்ளக்கூடாது. ஒருவர் செய்யும் காரியத்தை மற்றொருவர் செய்யக்கூடாது என்று இப்படி எவ்வளவோ வித்தியாசங்கள் இருக்கின்றன.

நாலு வர்ணம் என்று பெயரளவில்தான் இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் ஆயிரக்கணக்கான பிரிவுகள் இருக்கின்றன. இன்னும் பல பிரிவுகள் உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. இப்படி, இந்த ஹிந்து மதமானது ஒரு விசித்ரமான மதமாக இருக்கிறது.

லோகம் முழுவதற்கும் பொதுவாக இருந்தது இந்த ஒரே மதம் என்று அவ்வளவு பெருமைப்படும் படியான நம் மதத்தில் ஒன்றுக்கொன்று ஒரே வித்தியாசமாக இருப்பதைப் பார்த்தால் இந்தக் காலத்தவருக்கு ரொம்பச் சிறுமையாக, அவமானமாக இருக்கிறது. மற்ற மதங்களிலும் இத்தைச் செய்ய வேண்டும் என்ற விதிகளும், இத்தைச் செய்யக்கூடாது என்ற நிஷேதங்களும் உண்டு. ஆனால் அந்த மதங்களிலுள்ள எல்லோருக்கும் ஒரே விதமான விதிகள், ஒரே விதமான விளக்குகளே உண்டு. Ten Commandments [பத்துக் கட்டளைகள்] என்றால் அது கிறித்துவ மதத்தில் அத்தனை பேருக்கும் தான் பொது. சிலருக்கு அவை உண்டு, சிலருக்கு இல்லை என்று இல்லை. குரான் விதிகளும் இப்படியே. நமக் குள்ளேயோ ஒரே மதமாக இருந்தாலும் விதிகளும் நிஷேதங்களும் பல வகைகளாக இருக்கின்றன. ஒரு காரியத்தை ஒருவன் செய்தால் தர்மமாகிறது. அதையே வேறோருவன் செய்தால் அதர்மம் என்கிறோம். ஒருத்தன் பூணுல் போட்டுக் கொண்டு வேதம் சொன்னால் தர்மம், இன்னொருத்தன் இதைப் பண்ணினால் அதர்மம். வேதம் சொல்கிறவன் ஸ்நானம் பண்ணி வயிற்றைக் காயப்போடாவிட்டால் அதர்மம். மற்றவன் ஸ்நானம் பண்ணவேண்டுமென்றில்லை. உபவாஸமிருக்க வேண்டும் என்றில்லை. இப்படி ஏகப்பட்ட வித்தியாசங்களோடும் நம் மதம் உயிரோடிருப்பதை பார்த்தால் ஒன்று தோன்றுகிறது. ஒரு பெரியவர் ஒரு பெரிய ஆச்சரியத்தை சொல்லுகிறார். நாமெல்லாம் மரணமடைவது

ஆச்சரியமில்லை. இந்த உடம்பில் ஒன்பது ஓட்டைகள் இருந்த போதிலும் அவற்றின் வழியாக உயிரானது வெளியே போகாமல் நிற்கிறதே. அதுதான் பெரிய ஆச்சரியம். என்று அவர் சொல்லுகிறார்.

**நவத்வாரே சரீரே (அ) ஸ்மீன் ஆயு : ஸ்ரவதி ஸ்ந்ததம் l**

**ஜீவதீத்யத்புதம் தத்ர கச்சதீதி கிம் அபுர்தம் ll**

அதைப்போலப் பலவிதமான ஸந்தேஹங்களுக்கும் வித்தியாசங்களுக்கும் இடமான இந்த மதமானது எவ்வளவோ யுகங்களாக இன்னும் உயிருடன் இருக்கிறதே என்பதை நினைத்துதான் ஆச்சரியப்பட வேண்டியிருக்கிறது.

வேதத்தை விட்டால் சிலருக்குப் பாபம், வேதம் சொன்னால் சிலருக்குப் பாபம் என்பதைப் போல இவ்வளவு வித்தியாசங்களும் பக்ஷபாதங்களும் ஏன் நம் மதத்தில் மட்டும் இருக்கின்றன என்று தோன்றுகின்றன. இந்த விஷயங்களையெல்லாம் நாம் சொல்லிக் கொள்வது அவமானமாக இருக்கிறதென்று நாம் நினைக்கிறோம். இவை தொலைந்தால் நல்லதென்று நாம் நினைக்கிறோம். இந்த வித்தியாசங்கள், பல நல்ல அம்சங்களுடைய நமது மதத்துக்குக் களங்கமான இருக்கின்றன என்று பலர் சொல்லுகிறார்கள். இப்படிப் பலப்பேருக்கு இந்த விஷயங்கள் மனதில் உறுத்திக்கொண்டே இருக்கின்றன. சில பேர் ஏதாவது தெரிந்து சமாதானப் படுத்திக் கொள்கின்றார்கள். சில பேர் சில ஸமயங்களில் இந்த மாதிரி வித்தியாசங்களைப் பார்த்து ஆத்திரமடைந்து நாஸ்திகர்களாகி, இவற்றை எடுத்துக் காட்டி உறுத்தி உறுத்தி சொல்கின்ற போது அப்படிப் போகாத நமக்கு மனஸ் ரொம்பவும் கஷ்டப்படுகிறது.

இம்மாதிரி ஸமயங்களில் உள்ளூர மதாபிமானம் உள்ளவர்கள், இந்த வர்ண தர்மத்தை மட்டும் எடுத்துப் போட்டுவிட்டு, எல்லா ஜாதிகளையும் ஒன்றாக்கிவிட்டு, மற்ற மதஸ்தர்களைப் போலவே நாமும் ஆகிவிட்டால் நன்றாக ஆகிவிடும் என்கிறார்கள். வேதமோ, ஈச்வர ஆராதனமோ எல்லாவற்றையும் எல்லோருக்கும் ஒன்றாக்கி விடலாம். வெவ்வேறு ஆசாரம், அனுஷ்டானம் என்பதே வேண்டாம் என்கிறார்கள். இன்னும் குஞ்சம் அதிகமாகப்போய் நம்முடைய பூர்விகர்கள் கொள்கையே இதுதான். ஜீவாத்மாவும் பரமாத்மாவுமே ஒன்று என்று சொன்ன நம் மூல புருஷர்கள் ஜீவர்களுக்குள்ளேயே இத்தனை பேதம் சொல்லியிருப்பார்களா. அவர்களும் சரி, கீதையில் கிருஷ்ண பரமாத்மாவும் ஸரி, ஜீவர்கள் தங்கள் தங்கள் குணத்துக்கு ஏற்றபடி தொழில்களை நாலுவர்ணமாகப் பிரித்துக்கொண்டு செய்வதைத்தான் சொன்னார்களை தவிர பிறப்புப்படி ஜாதித்தொழில் வருவதாகச் சொல்லவில்லை என்றெல்லாம் சொல்லி நம் மதத்தில் களங்கம் என்று இவர்களுக்குத் தோன்றுகின்ற பாரம்பரியமான ஜாதிமுறையை மூலத்தில் நம் மதத்தில் இல்லாமல், பிற்பாடு சேர்ந்து விட்ட தப்பான விஷயந்தான் என்கிறார்கள்.

இதையெல்லாம் இப்போது கொஞ்சம் அலசி, ஆலோசித்துப் பார்ப்போம்.

## வேதம், கீதை இவற்றின் கருத்து

வேதத்திலேயே பிறப்பால் ஜாதி என்பதில்லை என்கிற வாதத்தை முதலில்

பார்த்து விடலாம். மூலம் வேதமாச்சே. அதனால் இவ்விஷயத்தை முதலில் தெளிவாக்கிக் கொண்டுவிட வேண்டும். இப்படி வாதம் பண்ணுவது, ப்ரௌடா விவாஹந்தான் (பெண்கள் வயதுக்கு வந்த பிறகு விவாஹம் செய்வதுதான்) வேத ஸம்மந்தமானது என்று வாதத்தைப் பற்றி சொன்னேனே, அதே மாதிரியானது,

அதாவது, Context- ம் Continuity- ம் (சந்தர்பத்தையும், தொடர்ச்சியையும்) பார்க்காமல் ஏதோ ஒரு பாகத்தை மட்டும் பார்த்து, அதுவே பொது விதி என்று விபரீதமாக அர்த்தம் பண்ணிக் கொள்வதைச் சேர்ந்ததுதான் இது.

பிறப்பைக் குறித்தே ஜாதி, குணத்தைக் குறித்ததல்ல என்பதற்கு அழுத்தமாக ஒரு Proof (நிரூபணம்) சொல்கிறேன். மூன்று வயசில் செய்கிற சௌளம் (குடுமி வைத்த்ல்), ஐந்து அல்லது ஏழாம் வயதில் பன்னுகின்ற உபநயனம் முதலானதுகளே ஜாதியைப் பார்த்து அதன்படி பண்ணுகிற ஸம்ஸ்காரங்கள்தான். இப்படி அதி பால்யத்திலேயே வெவ்வேறு ஜாதிகளுக்கான ஸம்ஸ்காரங்களில் வித்தியாசமிருப்பதால், குணத்தைப் பார்த்தே ஒருத்தனின் தொழில் நிர்ணயிக்கப்படுவதுதான் மூலசாஸ்திரங்களின் நோக்கம் என்பது அடியோடு அடிபட்டுப் போகிறது. அத்தனை சின்ன வயசுக்குள் ஒருத்தனின் குணத்தை நிர்ணயம் பண்ண முடியுமா?

கீதை விஷயத்தைப் பார்க்கலாம். ஸமதர்சனம்( எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பது) என்று கீதையில் சொல்லியிருப்பது வால்தவம். இதனால் ஜாதி வித்யாசமில்லை என்று அர்த்தம் பண்ணுவது அனர்த்தம்தான். கிருஷ்ண பரமாத்மா எந்த நிலையில் இந்த ஸமத்துவம் வருகிறது என்கிறார். அந்த Context ஐப் பார்க்கவேண்டும். ஸகல கார்யங்களும், லோக ஸ்ருஷ்டியும், ஈஸ்வரன் ஸ்ருஷ்டிகர்த்தா என்பதுங்கூட அடிபட்டுப் போய் ஆத்ம நிஷ்டனாக இருக்கிற ஞானியின் நிலையே அது என்கிறார். கர்மாவைவிட்டு ஸந்நியாசியாகி ஒருவன் முடிவான நிலைக்குப் போகிறபோது அவனுக்கு எல்லாம் சமமாகி விடுகிறது என்றார். வேத உபநிஷதங்களும் இதையே சொல்கிறது. உச்சியான அந்த நிலையில்தான் ஸமம். காரிய லோகத்தில் இல்லை. காரியம் பண்ணுகிற நமக்கும் அல்ல. ஸம தரிசனம், சம சித்தம், ஸம புத்தியின்படி யோகியின் பார்வையில்தான் பகவான் சமத்துவத்தை சொன்னாரேயன்றி, அவனால் பார்க்கப்படுகின்ற இந்த லோகத்தில் ஸம காரியத்தவம் என்று அவர் தப்பித் தவறிக்கூட கூரியதில்லை.

ஜாதி வித்தியாசமே இல்லை என்று பகவான் சொல்லவில்லை. ஆனால் பிறப்பின்படியன்றி, குணத்தின்படி கர்மாவைப் பிறித்துத் தரும் சதுர்வர்ணத்தைத் தாம் ஸ்ருஷ்டித்ததாகத்தான் சொல்கிறார். சாதுர்வர்ண்யம் மயாஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச என்றே சொல்லியிருக்கிறார் என்கிறார்கள்.

சரி, ஆனால் எத்தனை வயசுக்கு மேல் இப்படி குணத்தை அறிந்து அதை அநுசரித்து அதற்கான வித்யையைப் பயின்று அதற்கப்புறம் தொழிலை அப்பியாசம் பண்ணுவது. முக்கியமாக பிராம்மணர்களின் தொழிலை எடுத்துக்

கொண்டால், இவன் ஏழெட்டு வயஸுக்குள் குருகுலத்தில் சேர்ந்தால்தானே அப்புறம் பன்னிரன்டு வருஷங்களில் தன் தொழிலுக்காநவற்றை படித்துவிட்டுப்

பிறகு அவற்றில் தானே அநுஷ்டானம் பண்ண வேண்டியதைப் பண்ணவும், பிறருக்குப் போதிக்கவேண்டியதை போதிக்கவும் முடியும். குணம் form ஆன பிறகு (ஓர் அமைப்பில் உருவான பிறகு) தான் தொழிலை நிர்ணயிப்பது என்றால், கற்க வேண்டிய இள வயசு முழுதும் பலபேர் தொழிலை தெரிந்து கொள்ளாமல் வீணாவதாகவும், அப்புறம் சோம்பேரியாக ஒரு தொழிலுக்குப் போகப் பிடிக்காமல் இருப்பதாகவுமே ஆகும். அப்படியே கற்றுக் கொண்டு தொழிலுக்குப் போகும் போதும் ஸமூகத்திற்கு அவனால் கிடைக்கின்ற பிரயோஜனத்தில் வெகுவான காலம் நஷ்டமாகியிருக்கும். க்ஷணகாலம் கூட வீணாக்காமல் ஒழுங்காக, விதிப்படி கர்மாபண்ணிக்கொண்டே இருக்க வேண்டும் என்று திருப்பி திருப்பிச் சொல்லும் பகவான் இதை ஆதரித்துப் பேசியிருப்பாரா.

அப்படியானால் அவர் தியரியில் (கொள்கையளவில்) குணப்படித் தொழில் என்றாலும், ப்ராக்டிஸில் (நடைமுறையில்) பிறப்பால் தொழில் என்பதைத்தான் ஆதரித்தாரா, என்றால், பாலிடீஷியன்கள் (அரசியல்வாதிகள்) போல பகவான் கொள்கை ஒன்று, காரியம் இன்னோன்று என்று இருப்பவர் அல்ல. சரி, அவருடைய வாழ்க்கையில் நாம் என்ன பார்த்திறோம். நான் யுத்தம் பண்ண மாட்டேன். பத்து மித்ரர்களின் ரத்தத்தைத் சிந்தி ஸாம்ராஜ்யாபிஷேகம் பண்ணிக் கொள்வதைவிட, ஆண்டிப்பரதேசியாக பிக்ஷை எடுத்துச் சாப்பிடுவது எத்தனையோ மேல் என்று சொல்லிக்கொண்டு தேர்த்தட்டில் உட்கார்ந்து ஸத்யாக்ரஹம் பண்ணி விட்ட அர்ஜுன்னிடம் அவர் சொன்னார். நீ க்ஷத்ரிய ஜாதியில் பிறந்தவன். யுத்தம் பண்ணுவதுதான் உன் ஸ்வதர்மம். எடு வில்லை போடு சண்டையை என்றுதான் அவனை விடப்பிடிவாதம் பிடித்து அவனை யுத்தம் பண்ண வைத்தார்.

இங்கேயாவது ஒரு மாதிரி ஸமாதானம் சொல்லலாம். அர்ஜுன் மஹாரதன், மஹாவீரன். ஆனதால் அவனுக்கு பத்து மித்திரர்களைக் கொள்ள வேண்டியிருக்கிறதே என்ற பாசத்தால் Momentary-ஆக (தற்காலிகமாக)த்தான் யுத்தத்தில் வெறுப்பு உண்டாயிற்று. உள்ளூர அவனுடைய குணம், மனோபாவம், தன்னுடைய வீரத்தைக் காட்டுவதில்தான் இருந்தது. அதனால்தான் பகவான் யுத்தத்திலேயே தூண்டிவிட்டார். ஆனபடியால் அவர் ஸ்வதர்மம் என்று சொன்னது ஜாதி தர்மம் என்று ஆகாது. அவனுடைய சொந்த குணத்தை, இயற்கையான மனோபாவத்தைத்தான் ஸ்வதர்மம் என்று சொல்லி, அவனுக்கு எடுத்துக் காட்டினார் என்று சுற்றி வளைத்து அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

அப்படியானால் தர்மபுத்ரர் விஷயம் என்ன. சண்டையே கூடாது. ஸமாதானமாகவே போய்விட வேண்டும் என்றுதானே அவர் ஆரம்ப காலத்திலிருந்து இருந்து வந்திருக்கிறார். தங்கள் ஐந்து பேருக்கும் ஐந்து வீடு கொடுத்து விட்டால் போதும், ராஜ்ஜியத்தில் பாதி தர வேண்டும் என்று இல்லை என்கிற அளவுக்கு ஒரேடியாக இறங்கிவந்து விட்டார் அல்லவா அவர்.

அவரையும்

அவருக்கான தூது போன பகவானே யுத்தத்தில்தானே இழுத்து விட்டார். இதற்கு முந்தியும் தர்மபுத்திரரை எல்லா சிற்றரசர்களும் வென்று, ஸார்வபௌமராகும்படி பண்ணி, அவருடைய ராஜஸுூய யாகத்தை பகவான்தானே முன் நின்று நடத்தி வைத்தார். தர்மபுத்ரர் இதற்கெல்லாமா ஆசைப்பட்டவர். அவருடைய குணம், மனோபாவம் ஆகியன கொஞ்சங்கூட இந்த யுத்தம், ஸார்வ பௌமப் பதவி இவற்றுக்கு ஆசைப்படாததுதானே. அவரையும் பரமாத்மா க்ஷத்ரிய தர்மத்தைத்தான் அநுஷ்டிக்கப் பண்ணினார் என்றால், அவர் ஸ்வதர்மம் என்கிற போது அவரவர் ஜாதி தர்மத்தைத்தான் சொன்னார் என்று அர்த்தமாகும். பிராம்மணராகப் பிறந்ததும் க்ஷத்ரிய தர்மப்படி யுத்தத்தில் இறங்கிய த்ரோணாச்சாரியார் மாதிரியானவர்கள் பெரியவர்கள் என்பதால் பகவானாக அவர்களை நிந்திக்க மாட்டாராயினும், பீமஸேனன் போன்றவர்கள் அவர்களை ஜாதி தர்மம் விட்டதற்காகப் குத்திக் காட்டிப் பேசிய போதெல்லாம் பகவான் ஆக்ஷேபித்ததில்லை. அதனால் பிறப்பால் ஏற்படுகின்ற ஜாதி தர்மமே அவர் சொன்ன ஸ்வதர்மம் என்று உறுதியாகிறது. அப்படியானால் ஏன் குண கர்ம விபாசக. என்றார். என்றால்.

## பிறப்பாலேயே குணமும் தொழிலும்.

இந்த ஜாதி மதமேதான் உள்ளூர அவரவருக்குப் பாரம்பரியமாக ஏற்பட்ட குணமாகவும் இருக்குமாதலால் குணத்தால் சதுர்வர்ணம் பிரிவதாக பகவான் சொன்னதும், பிறப்பால் இப்படி ஜாதியாகப் பிரிவதும் ஒன்றேதான், ஒன்றுக் கொன்று முரணானதல்ல. தியரி, ப்ராக்டீஸ் என்று வெவ்வேறு விஷயங்களைச் சொல்கின்ற தோஷம் பரமாத்மாவுக்கு ஏற்படவில்லை.

பரசுராமர், த்ரரோணாச்சாரியார் இவர்கள் பிராம்மணராயினும் க்ஷத்ரிய குணத்தோடு இருந்தார்கரே. விச்வாமித்திரர் புஜபல பராக்ரமத்தோடும் ராஜஸ குணத்தோடும் இருந்துவிட்டே அப்புறம் பிரம்மரிஷி ஆனாரே என்றால் இதெல்லாம் கோடியில் ஒன்றாக இருந்த exceptionகள் (விதிவிலக்கு)தான். எந்த ரூலானாலும் எக்ஸப்ஷன் உண்டோ இவ்வியோ, பொதுவாக வெளிப்பட வேறு குணம் தெரிந்த போது கூட உள்ளூரப் பிறப்பாலான ஜாதித் தொழிலுக்கேற்ற குணந்தான் இருக்கும் என்ற அபிப்ராயத்திலேயே பகவான் காரியம் பண்ணினதாகத்தான் தெரிகிறது.

அதெப்படி பிறப்பையே குணத்தைத் தொழிலுக்கேற்றதாக அமைத்துக் கொடுத்து என்றால், INDIVIDUALITY யுடன் (தனித்தன்மையுடன்) HEREDITY (பாரம்பரியம்) என்பதும் சேர்ந்தேதான் ஒரு மனுஷனை உருவாக்குகிறது என்று ஸைக்காலஜியும் சொல்கிறதல்லவா. ஒருத்தனின் குணம் உருவாகும் முன்பே

அவன் தலைமுறை தத்துவமாக வந்த ஒரு தொழிலின் சூழ்நிலையிலேயே வளர்ந்து தானாகவும், கற்றுக் கொடுத்துத் தெரிந்து கொண்டும் அந்தத் தொழிலை எடுத்துக் கொண்டதால் குணமே தொழிலை அநுஸரித்து ஏற்பட்டது. நமக்கு என்று ஏற்பட்ட தொழில் இது என்று அவரவரும் துராசையோ, போட்டியோ இல்லாமல்

நிம்மதியாகப் பிரிந்திருந்து தொழில்களைச் செய்து கொண்டு மொத்த ஸமூஹம் ஒற்றுமையாக இருந்த காலத்தில் இப்படிப்பட்ட சூழ்நிலையில் பிறந்து, அதிபால்யத்திலேயே அந்தத் தொழ்லைப் பார்த்து அதிலே ஒரு பற்று, aptitude உண்டானதால், பிறப்புப்படி செய்வது குணப்படி செய்வதாகவும் ஆயிற்று. இப்போது சீர்திருத்தங்கள் என்ன சொன்னாலும், பழைய ஏற்பாட்டில்தான் திறமை, குணம் இவையும் தொழ்லோடு அநுஸரனையாகக் தொழிலைச் செய்தான் என்றால் அது பழைய தர்மப்படி செய்த போதுதான் இருந்தது என்பேந். இப்போது இதைத் தலைகீழாக மாற்றித் திரித்துப் பேசுகிறார்கள்.

இப்போது மனோதத்துவத்தை ரொம்பவும் ஆராய்ச்சி செய்கிறவர்கள்கூட என்ன சொல்கிறார்கள். ஒருத்தனின் குணத்தை, திறமையை, மனோபாவத்தை நிர்ணயம் பண்ணுவதில் heredity-க்கும் (பாரம்பரியத்துக்கும்) அவன் இருக்கிற environment -க்கும் (அதாவது) சுற்று வட்டாரத்துக்கும் மிகுந்த முக்கியத்துவம் இருக்கிறது என்கிறார்கள். பழைய நாளில் பாரம்பரியப்படிதான் அப்பன், பாட்டன், முப்பாட்டன் தொழிலை ஒவ்வொருவனும் பண்ணினான். இரண்டாவதாக, ஒவ்வொரு தொழில்காரரும் ஒரே கிராமத்தில், அக்ரஹாரம், பண்டாரவாடை, சேரி, சேணியர்தெரு, கம்மாளர் தெரு என்று, தனித்தனியாக, ஒவ்வொரு சமூகமாக வசித்தபோது என்வைரன்மென்டும் (சுற்றுச் சூழ்நிலையும்) ஸாதகமாக இருந்தது. இந்த இரண்டு அம்சங்களும் அழுத்தமான விதத்தில் ஒருத்தனுடைய குணத்தை அவனுடைய பரம்பரைத் தொழிலுக்கு மிகவும் ஏற்றதாகச் செய்து வந்தன.

இந்த விஷயத்தை நான் சொல்வதைக் காட்டிலும் காந்தி சொன்னதை எடுத்துக் காட்டினால் சீர்திருத்தக்காரர்கள் ஒத்துக் கொள்வீர்கள். காந்தி இப்படி சொல்கிறார்.

"கீதையானது குணத்தையும் கர்மாவையும் பொறுத்தே ஒருத்தனின் வர்ணம் (ஜாதி) அமைகிறது என்று தான் சொல்கிறது. (அதாவது பரம்பரையால், பிறப்பால் அமைகிறது என்று சொல்லவில்லை) ஆனால் குணமும் கர்மாவும் பிறப்பின் மூலம் பாரம்பரியமாகப் பெறப்படுகின்றனவையே"*

ஆகையால் கிருஷ்ண பரமாத்மா கொள்கை ஒன்று. காரியம் வேறொன்று என்று முரணாகப் பண்ணவில்லை யென்பது சீர்திருத்தவாதிகள் எல்லோரும் தலைவராக ஒப்புக்கொள்ளும் காந்தியின் வார்த்தையாலேயே உறுதியாகிறது. நவீனக் கொள்ளைக்காரர்கள் தங்கள் இழுப்புக்கு வேத சாஸ்திரங்களையும் கிருஷ்ண

பரமாத்மாவையும் இழுத்து வளைக்கக்கூடாது.

கிருஷ்ணர் "நான் சொல்கிறேன்;நீ கேள்"என்று அடித்துப் பேசுகிறவர்தான். ஆனால் அவரே ஜனங்கள் எப்படி காரியம் பண்ணவேண்டும் என்கிறபோது நான் இப்படி சொல்கிறேன் என்று சொல்லாமல் சாஸ்திரம் எப்படி சொல்கிறதோ அதுவே பிரமாணம் என்று அழுத்திச் சொல்லியிருக்கிறார். அவர் காலத்திலிருந்த சாஸ்திரப்படி ஜாதிகள் பிறப்புப்படிதான் பிரிந்திருந்தன என்பது பாரத, பாகவத,

விஷ்ணு புரணாதிகளிலிருந்து நிச்சயமாகத் தெரிகிறது. பிறப்பால் ஜாதி என்கிற சாஸ்திரங்களே கிருஷ்ணர் காலத்துக்குப் பிறகுதான் வந்தது என்றுகூட இக்கால ரிஸர்ச் காரர்கள் சொல்லக்கூடுமாதலால் இவ்விஷயத்தைச் சொல்கிறேன். கிருஷ்ண பரமாத்மாவின் காலத்தில் வர்ணாச்ரம விபாகங்களைச் சொல்கிற சாஸ்திரங்கள்தான் தர்மப் பிரமாணமாக இருந்தன என்று பாரத, பாகவத, விஷ்ணு புரணாதி க்ரந்தங்கள் ஸந்தேஹத்துக்கு இடமில்லாமல் சொல்கின்றன. இவ்வாறாக பிறப்பின்படியே வர்ணவிபாகம் செய்யும் சாஸ்திரங்கள் அநுஷ்டிக்கப்பட்ட காலத்தில்தான் பகவான் ஸ்வஷ்டமாக,

ய:சாஸ்திர விதிம் உத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத:l

ந ஸ ஸித்திம் அவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ll

தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யா கார்ய வ்யவஸ்திதௌl

ஜ்ஞாத்வா சாஸ்த்ர விதாநோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸிll

எவன் சாஸ்திர வித்யைமீறி சொந்த ஆசைகளின் வசப்பட்டு தொழிலை எடுத்துக் கொள்கிறானோ அவனுக்கு ஸித்தியில்லை, ஸுகமில்லை, கதி மோக்ஷமும் இல்லை. எந்தத் தொழில் செய்யலாம். எது கூடாது என்று வரையறுத்துக் கொள்வதற்கு சாஸ்திரம்தான் பிரமாணம். இப்படி சாஸ்திரோக்தமான வழியை உணர்ந்து அதன்படி தொழில் செய்வதற்கு உரியவனாகவே இருக்கிறாய் என்று சொல்லியிருக்கிறார். இதனால் அவர் பிறப்புப்படி ஜாதி என்பதைத்தான் நிர்த்தாரணம் பண்ணுகிறார்( வலியுறுத்தி நிலைநாட்டுகிறார்) என்பதில் லவலேசமும் ஸந்தேஹமேயில்லை.

## குணப்படி தொழில் தேர்வு நடைமுறையிலில்லை

சரி, வேதமும் கிருஷ்ண பரமாத்மாவும் ஜாதி தர்மத்தைச் சொன்னால் சொல்லிவிட்டுப் போகட்டும். அதை நாங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அது பக்ஷபாதாகத்தான் இருக்கிறது. அவரவர், குணப்படி, மனோபாவப்படி தொழிலைத் தேர்ந்தெடுத்து நடத்துவதற்குத்தான் வசதி செய்து தரவேண்டுமே

தவிர, ஜாதிப்படி செய்ய வேண்டும் என்று வைக்கக்கூடாது. இந்த விதியாஸத்தைத் தொலைத்துவிட வேண்டும் என்று சொல்லலாம்.

இருக்கட்டும் இந்த குணம், மனோபாவம் என்பதற்கும் நவீன ஸெட்-அப்பில் ஒருத்தர் எடுத்துக் கொள்ளும் தொழிலுக்கு என்ன சம்பந்தம். நன்றாக யோசித்துப் பார்த்தால் இது இந்த காலத்தில் வேண்டுமென்றே மிகைப்படுத்திச் சொல்கிற விஷயமாகத்தான் இருக்கிறது. இந்தக் காலத்தில் எல்லோருக்கும் ரொம்ப ஸ்வதந்திரம் வேண்டியிருக்கிறது. எல்லோருக்கும் தாங்கள் பெரியவர்கள் என்ற எண்ணம் ஏற்பட்டியிருக்கிறது. அதனால்தான் தங்கள் தங்கள் மனோபாவத்தை மதிக்க வேண்டும் என்கிறார்கள். அது ஸமூகத்திற்கு உதவுகிற நல்ல மனோபாவமா. கெட்டதனால் நல்லதாக்கிக் கொள்ளவேண்டுமே, அதற்காக ஒரிடத்தில் ஸ்வதந்திரத்தை விட்டுக் கொடுத்துக் கட்டுப்பட்டிருக்க வேண்டுமே என்பதை எல்லாம் நினைக்காமல் எல்லோரும் எல்லாவற்றுக்கும் ஸ்வ தந்திரம் கேட்கிறார்கள். இது ஒரு பக்கம் இருக்கட்டும்.

மனோபாவம் அல்லது குணத்துக்கும் தற்காலத்தில் ஒருத்தன் விரும்பும் வேலைக்கும் எந்த அளவுக்கு ஸம்பந்தம் இருக்கிறது என்று பார்த்தால் நூற்றுகு

தொண்ணூறு சம்பந்தமேயில்லை. ரொம்பக் குஞ்சம் பேர் விஷயத்தில்தான் குணத்துக்கும் தொழிலுக்குமிடையே சம்பந்தமிருக்கும். ரொம்பவும் வைராக்ய குணமுள்ளவன் எந்த வேலையிலும் ஒட்டாமலிருப்பான். துருதுருவென்று ப்ளான் போட்டு யோஜனை பண்ணுகிற ஸ்வபாவமுள்ளவனுக்கு மெஷின் மாதிரி வேலை செய்வதான தொழில்கள் பிடிக்காமலிருக்கும். ஆர்மிக்கு (தரைப்படைக்கு) த்தான் போவது, நேவிக்கு (கடற்படைக்கு) த்தான் போவது என்று சில பேருக்கு ஒரே ஆர்வம் இருக்கும். இன்னும் சிலபேர் கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் ஸைதன்யத்தில் சேருவதில்லை என்று இருப்பார்கள். எழுதுவது, பாடுவது, சிதிரம் போடுவது என்கிறவற்றில் ஆசை உள்ளவர்கள் வேறு எந்த வேலையிலும் பிடிமானம் வைக்க மாட்டார்கள்.

இப்போது நான் சொன்ன இத்தனை பேரும்-அதாவது தங்கள் இயற்கை மனோபாவப்படிதான் தொழில் பண்ணுவது என்று இருக்கிற அத்தனை பேரும்-மொத்தமுள்ள ஜன சமூகத்தில் கால்வாசிகூட இருக்கமாட்டார்கள். பத்து பெர்சன்ட்(சதவிகிதம்) கூட இருக்க மாட்டார்கள்.

இங்கே என்னை ஒரு மடத்துக்குள் உட்கார்த்தி வைத்திருக்கிறது என்றாலும் என்னிடம் எல்லா தினுசு ஜனங்களும் வந்து அவரவர் பிரார்த்தனையை, ஆசையைச் சொல்லிவிட்டுத்தானே போகிறார்கள். இதிலிருந்து எனக்கு தெரிவது, விசேஷமாக ஒருத்தனும் தொழிலைக் குணத்தோடு சம்பந்தப்படுத்தவில்லை என்பதுதான். ஒரு அப்பாக்காரர் வருகிறார். பையனுக்கு எஞ்சினியர் காலேஜிலும் மனுப்போட்டிருக்கிறது. பி. காமும் போட்டிருக்கிறது. எஞ்சினியரிங்

கிடைக்காவிட்டால் பி.காம் சேர்த்தாக வேண்டும். எஞ்சினியரிங்கே கிடைத்துவிட்டால் சிலாக்கியம். அநுக்ரஷம் பண்ணவேண்டும் என்கிறார். பி.காம் படித்தால் படிக்கிற ஆர்ட் வேலைக்கும், எஞ்சினியரிங் படித்து சர்வே, கிர்வே பண்ணுவதற்கும் குஞ்சமாவது சம்பந்தம் இருக்கிறதோ?. ஆனால் இந்தப் பய்யன் இந்த இரண்டுக்கும் தயாராக இருக்கிறான். இன்னொரு பையன் வருகிறான். இன்னர்மீடியட் ரொம்ப ஹை யாகப் பண்ணிவிட்டேன். மெடிகல் காலேஜில் சேரலாமா. எம்.ஏ. படித்துவிட்டு ஐ.ஏ.எஸ். எழுதலாமா என்று தெரியவில்லை என்கிறான். வைத்தியத் தொழிலுக்கும் கலெக்டர் வேலைக்கும் என்ன சம்பந்தம். குணத்தை வைத்து தொழில் என்றால் மெடிகல் காலேஜுக்குப் போகிறவன் எப்படி எம்.ஏ. ஐப் பற்றி நினைப்பான். ஒருத்தர் வக்கீலாக இருக்கிறார். அல்லது இண்டஸ்ட்ரி (தொழிற்தாலை) வைத்திருக்கிறார். அப்புறம் ஏதோ ஒரு கட்சியில் சேர்ந்து மந்திரியாகி விடுகிறார். மந்திரியாகி இருக்கிறவர்களில் வக்கீலாக இருந்தவர், அதிகாரியாக இருந்தவர், ப்ரோஃபஸராக இருந்தவர், டாக்டராக இருந்தவர் என்று பல தொழில்களில் இருந்தவர்களைப் பார்க்கிறோம். மந்திரித் தொழிலுக்கு எந்த குணங்கள் இருக்க வேண்டுமோ அது எப்படி இந்தத் தொழில்களுக்கும் வேண்டும் என்று சொல்ல முடியும்.

இப்படி பெரிய லெவலில்தான் என்று இல்லை. ஸினிமாக் கொட்டகையில் டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்தேன். இப்போது மிலிட்டரியில் சேர்ந்திருக்கிறேன், ஆசீர்வாதம் வேண்டும் என்று ஒருத்தன் வருகிறான். ஹோட்டல் சர்வராக இருந்து பெட்டிக்கடை வைத்திருக்கிறேன். என்று இன்னொருத்தன் வருகிறான். இந்த

இரண்டு தினுஸான வேலைகளுக்கு என்ன சமபந்தம்.

இன்னொன்று கூடச் சொல்லலாம். இப்போது ராஜாங்கமும் அபேத வார்த்தை ( ஸோஷலிஸத்தை) முக்கியமாகச் சொல்வதாகத்தான் ஆகிவிட்டது. அவனுக்கும் ஸ்வபாவப் படிப்பிற்கும் படிப்பு முலான தகுதிப்படியும்தான் வேலைதரவேண்டுமேயன்றி ஜாதிப்படி இல்லை என்பதும்தான் சர்க்காரின் கருத்தும். ஆனால் இவர்களே பெரிய உத்தியோகத்திற்காகப் பரீக்ஷை வைக்கிறபோது, ஒரு பரீக்ஷையை எழுதினவர்களில்தான் சில பேரை ஐ.ஏ.எ் என்று செலக்ட் செய்கிறார்கள். சில பேரை போலிசுக்கு அனுப்பி வைக்கிறார்கள். கலெக்டர் வேலைக்கும், போலீஸ் ஸுப்பிரன்டு வேலைக்கும் மனோபாவ ரீதியில் பார்த்தால் என்ன சம்பந்தம்? டெக்னிகல் ஸப்ஜெட்டாக இல்லாத வரையில் ஒரு டிப்பாட்மென்ட்காரர்களை சம்பந்தமே இல்லாத வேறே டிபார்ட் மென்ட்களுக்கு மாற்றுகிறார்கள்.

குணம், மனோபாவம் என்று பார்த்தால் அவற்றுக்கு ஆதரவாகச் சொல்ல இங்கெல்லாம் ஒன்றுமெயில்லை.ஆகவே பெரும்பாலும் ஜனங்கள் தங்கள் குணத்தைப் பார்த்து அதற்கு அநுஸரணையான தொழிலாக ஒன்றை எடுத்துக்

கொள்ளவே இல்லை. தங்களுக்கு பிடித்த தொழில் கிடைக்காவிட்டாலும், கிடைத்த தொழிலுக்கு எப்படியோ அட்ஜட்ஸ் செய்து கொள்கிறார்கள்.

பொதுவாக எதிலே ஜாஸ்தி பணம் கிடைக்குமோ, அஸெனகர்யம் குறைவோ, அந்தத் தொழிலுக்குத்தான் எல்லோரும் ஆசைப்பட்டு போட்டி போடுகிறார்களே யொழிய, குணம், மனோபாவம், அது இது என்பதெல்லாம் அநேகமாகப் புரளிதான். ஜாஸ்தி வருமா3னமும் குறைச்சல் சிரமமும் உள்ள தொழிலுக்குப் போவேன் என்பதே ஸ்வதர்மம் என்றால் பரிஹாஸத்துக்கு இடமல்லவா.

குணத்தைக் கொண்டு காரியத்தை தேர்ந்தெடுத்துக் கொள்வது என்று நவீனர்கள் சொல்வது வெற்றுச் சவுடாலாகத்தான் நிற்கிறது. நம்முடைய பூர்விகர்கள் கச்சிதம் பண்ணிக் கொடுத்திருக்கும் ஏற்பாட்டிலோ கார்யமே ஒருத்தனுக்கு இயற்கையாகவும் பாரம்பரியமாகவும் உண்டான குணத்தை அவனுடைய ஆத்மாபிவிருத்திக்கும், வெளிலோகத்தின் க்ஷேமத்திற்கும் ஏற்றபடி ஒரு ஒழுங்கில் ரூபப்படுத்திற்று. காயத்ரி அநுஷ்டானம் கத்தியைச் சுழற்றுவது (சுற்றுவது) Knack (நுணுக்கம்) தெரிந்து வியாபாரம் பேசுவது, மெய்வருந்த உழைப்பது, என்ற நாலு விதமான கார்யங்களே அததற்கான ப்ரஜையின் குணத்தை அந்தந்த துறையில் நன்றாகப் பிரகாசித்துத் தன்னையும் சுத்தி செய்து கொண்டு, ஸமுதாயத்தின் ஒட்டுமொத்த க்ஷேமத்திற்கும் உதவும்படிதாக ரூபப்படுத்தியது. காயத்ரி அநுஷ்டானக்காரனும் எப்படி மெய்யை வருத்திக் கொண்டானென்று அப்புறம் சொல்கிறேன்.

**அதிக ஸெளகர்யம் கூடாது.**

இப்போது ஆசைப்படுகிறபடி எல்லோருக்கும் ரொம்ப வசதி, சொகர்யம் பண்ணித்தருவது என்பது முடிவே இல்லாமல் துராசைகளைப் பெருக்கி விடுகிற ஏற்பாடுதான். எல்லோருக்கும் கார், பங்களா, ரேடியோ, டெலிபோன் இருக்கிற அமெரிக்காவில் ஜனங்கள் திருப்தியடைந்து விட்டார்களோ. இல்லை. அங்கேதான்

நம்மைவிட ஜாஸ்தி அதிருப்தி, அதனால் ஜாஸ்தி கொலை அல்லது தற்கொலை, மயக்க மருந்து சாப்பிட்டுவிட்டுத் தன்னை மறந்து கிடப்பது என்று இருக்கிறது. எல்லோருக்கும் கார் என்றாலும், இன்றைக்கு இருக்கிற கார் நாளைக்கு இல்லை. புதுப்புது மாடல்கள் இன்னும் ஜாஸ்தி ஸெனகர்யங்களோடு வந்தபடி இருக்கின்றன. எனவே இப்போது சேர்ந்துள்ள டாலர் போதவில்லை. அந்தப் புது மாடலுக்காக இன்னும் ஸம்பாதிக்க வேண்டும். அப்புறம் அதைவிட விலை ஜாஸ்தியாக, இன்னும் ஜாஸ்தி ஸெளகர்யங்களோடு இன்னோரு மாடல் வரும். அப்புறம் வீட்டுக்கு வீடே பறப்பதற்குகூட பிளேன்கள் வந்தாலும் வரும். இப்படியேதான் முதலில் வெறும் குடிசை. அப்புறம் ஒடு போட்டது. அப்புறம்

சிமென்ட் சுவர். ஒட்டுக் கட்டிடம். அதற்கப்புறம் சிமென்டிலேயே நைஸ் ரகங்கள். சாணி போட்டு மொழுகின தரை காரையாகி, ஸிமென்டாகி, அப்புறம் மொஸைக், அதைவிட இன்னும் வழுவழுப்பான ரகம் என்று மாறிக்கொண்டே இருக்கிறது. இதற்கு முடிவே கிடையாது. துணியை எடுத்துக் கொண்டாலும் நாளுக்கு நாள் புதுப்புது தினுசுகள். எல்லாவற்றையும் வாங்கியாக வேண்டும். இப்போது இருப்பதே ஸொகூர்யமாக இருந்தாலும் நம்முடைய புத்தி சாதூர்யத்தால் இதைவிட சொகர்யமான சாதனங்களைக் கண்டுபிடித்துக் கொண்டேபோய், எப்பொதும் நாம் இருப்பது அஸொகர்யம்தான் என்று ஆக்கிக் கொண்டு, அதைவிட ஸொகர்யத்திற்காக தவித்தபடி இருப்போம். திருப்தியோ, நிம்மதியோ இல்லாமல் மேலே மேலே ஸம்பாதனம் பண்ணிக் கொண்டேதான் போவோம். நெருப்பிலே பெட்ரோலை விட்டு அணைத்துவிடலாம் என்று நினைக்கிற மாதிரிதான், புதுப்புதி சாதனங்களைக் கண்டுபிடித்து ஆசையைப் பூர்த்தி செய்து விடலாம் என்று நினைப்பது.

இது நம் பூர்விகர்களான மஹரிஷிகளுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் மநுஷ்யனின் அத்யாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்குப் போகவேகூடாது என்று வைத்தார்கள். ஸமீக காலத்தில் காந்தி இதையேதான் வற்புறுத்திச் சொல்லிக் கொண்டிருந்தார்.

எல்லாவற்றையும் ஒரு மாதிரி டாம்பீக வாழ்க்கைக்கு ஆசைப்பட வைப்பது என்ற இந்த நூற்றாண்டில் முன்னேற்றம் எனப்படுகின்ற முயற்சிகள் இருக்கிற வரையில், தனியாக எவனுக்கும் திருப்தி இராது. சமூக ரீதியிலும் போட்டி, பொறாமை, வயிற்றெரிச்சல் போகவே போகாது. வர்ணாச்ரம தர்மப்படி எகானாமிகல் லெவலில் (பொருளாதாரத்தில்) பிராம்மணனும் மற்றவனும் ஸமம்தான். ஜாதி வித்தியாசமின்றி அத்தனை பேருக்கும் ஒரே மாதிரியான எளிய வாழ்க்கையைத்தான் சொல்லியிருக்கிறது. இப்படி எளிமையில் ஸமமாக இருப்பதுதான் ஸாத்யமுமாகும். இந்த நிலையில் தன் ஜீவனும் திருப்தி அடைகிறான். ஆத்ம க்ஷேமம் அடைகிறான். ஸமூஷத்திலும்ஒருத்தனைப் பார்த்து இன்னொருத்தனும் வயிற்றெரிச்சல் இல்லாமல் போகிறது.

பணமும் வசதியும் எந்தத் தொழில்காரருக்கும் அதிகம் இருக்கக் கூடாது. இவற்றைவிட முக்கியமானது இவை எவற்றை உத்தேசித்து ஏற்பட்டனவோ,

ஆனால் இவற்றாலேயே ஏதை நேராகப் பெற முடியவில்லையோ, அந்த ஆத்ம திருப்திதான், மன நிறைவுதான் மனிதனுக்கு வேண்டியது, திருப்தனாக இருந்தால்தான் ஆனந்தமாக பகவத் தியானம் பண்ண முடியும். அப்படிப் பட்ட மனசில்தான் பரம சத்தியமான வஸ்து எதுவோ அது தெரியும். அதனால்தான் நம் சாஸ்திரப்படி ரொம்பவும் எளிய வாழ்க்கையை விதித்திருக்கிறது. ஒரளவுக்கு மேல் ஸொகர்யங்கள் அதிக மாகி விட்டால் அப்புறம் இந்திரிய சுகத்துக்கு மேலான விஷயங்களுக்குப் போகவே முடியாது. அதே மாதிரி, உழைப்பு

இல்லாமல், சிரமமே படாமல் சுக ஜீவியாக இருந்தாலும் புத்தி கண்டதை நினைத்துக் கெட்டுதான் போகும். ஆகையினால் ஆத்மிகமாக உயர வேண்டுமானால் அஸெனகர்யமும், சிரமமும் கடும் உழைப்பும் வேணத்தான் வேண்டும். என்ன நிலைமையையும் ஸெனக்கியமாக பாவிக்கிற மனப்பான்மை அப்போதுதானே வரும்?

## ஒரு பெரிய தப்பபிப்ராயம்

இப்போது ஏற்பட்டிருக்கிற ஒரு பெரிய தப்பபிப்ராயம் என்னவென்றால் சாஸ்திரோக்தமான வர்ணாஸ்ரம தர்மத்தில் பிராமணனுக்குத்தான் ஸெனகர்யம் ஜாஸ்தி, வருமானம் ஜாஸ்தி, சிறமம் குறைவு என்ற எண்ணம். இது சுத்தப் பிசகு.

நம் சாஸ்திரம் பண்ணிக் கொடுத்துள்ள ஏற்பாட்டில் பிராமணன் சரீரத்தால் உழைத்த உழைப்பு ஒரு குடியானவனின் உழைப்புக்குக் குறைச்சலானது அல்ல. பிராமணனின் கர்மானுஷ்டானங்களைப் பற்றித் தெரியாததால் அவன் மற்றவர்களை பிழிய பிழிய வேலை வாங்கிவிட்டு, தான் ஹாயாக உட்கார்ந்து சாப்பிட்டான் என்று இந்தக் காலத்தில் தவறாக நினைக்கிறார்கள். பிராமணனானவன் காலம்பர (காலை) நாலு மணிக்கே முழித்துக் கொண்டு, மழைநாளாலும், பனிநாளானாலும் பச்சைத் தண்ணீரில் ஸிநானம் செய்ய வேண்டும். அதிலிருந்து அவனுக்கு ஒயாக கர்மானுஷ்டானம்தான். ஸந்தி, பிரம்மயக்ஞம், ஓாபாசனம், தேவ பூஜை, வைச்வ தேவம், இது தவிர இருப்பத்தியோறு யக்யங்களில் ஏதாவது ஒன்று என்றிப்படி சக்கையாக உழைத்தாக வேண்டும். ஹோமஜ்வாலையிலும், புகையிலும் நாலுநாள் உட்கார்ந்து பார்த்தால் தெரியும், எத்தனை சிரமம் என்பது. இவனுக்கு எத்தனை வ்ரதானுஷ்டானங்கள்? உபவாஸம் என்று எத்தனை நாள் வயிற்றைக் காயக் காயப் போட்டாக வேண்டும்?எத்தனை ஸ்நானம்?

இந்த சிரமங்கள் மற்ற ஜாதியினருக்கு இல்லை. ஒரு குடியானவன் விடிந்தெழுந்ததும் வயறு நிறைய ஜில்லென்று பழையது சாப்பிடுகிற மாதிரச் செய்ய பிராமணனுக்கு ரைட் கிடையாது. தன் ரைட்டுக்காகவும் செனகர்யத்துக்காகவும் பிராம்மணன் தர்ம சாஸ்திரங்களை எழுதி வைத்துக்கொள்ளவே இல்லை. அப்படி இருந்தால் இத்தனை கடுமையான விதிகளை, rigorous discipline-களைத் தனக்கே போட்டுக் கொண்டிருப்பானா? அவன் போஜனம் பண்ணுகிற போது பகல் 1 மணி 2 மணி ஆகிவிடும். (சிராத்தம், யாக தினங்களில் 3 மணி 4 மணி ஆரும்) குடியானவன் இறண்டாந் தரங்கூடச் சாப்பிட்டு விட்டு வயலோரத்தில் ஏதாவது ஒரு

மரத்தடியில் கொஞ்சம் ஒய்வு எடுத்துக் கொள்கிற சமயத்தில் தான் பிராம்மணனுக்கு முதல் சாப்பாடே, அதுவும் எப்படிப்பட்ட சாப்பாடு, அந்தக்

குடியானவன் சாப்பிடுகிற மாதிரி மிகவும் எளிமையானதுதான். குடியானவன் தேக புஷ்டி தருகிற பழையது சாப்பிடலாம். இவன் புது அன்னம்தான் சாப்பிட வேண்டும் என்பது தவிர அதிக வித்தியாசம் இருக்கக் கூடாது. குடியீனவன் குடிசைக்கும் பிராம்மணன் குடிசைக்கும்மே வித்தியாசம் கிடையாது. இரண்டு பேருக்கும் ஒரே மாதிரி நூல்துணிதான். குடியானவனானது நாளைக்கு என்று நாலு காசு மீத்து வைத்துக் கொள்ளலாம். பிராம்மணன் அப்படி வைத்துக் கொள்ளக் கூடாது. பிற்பாடு கொடுக்கலாம் என்று இப்போது கடன் வாங்கி கொஞ்சம் தாட்பூட் செலவு பண்ணக்கூட பிராம்மணனுக்கு ரைட் கிடையாது.

மஹாபாரதத்தில், யக்ஷ ப்ரச்னத்தில், பிராம்மணன் எத்தனை எளிமையாக இருந்தான். அவன் எப்படி இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறது.

பஞ்சமே (அ) ஹனி ஷனி ஷஷ்டே வா சகம் பசதி ஸ்வேக்ருஹேl

அந்ணீச (அ)ப்ரவாஸீ ச ஸ வாரிசர மோததேll

ஒரு நாளில் பகல் போதை எட்டுப் பங்காக்கினால், அதில்ஐந்தாவது அல்லது ஆறாவது பங்கில்தான் பிராம்மணன் கர்மாநுஷ்டானம் எல்லாம் முடித்துச் சாப்பிடுவான். அதன்முன், நாஸ்தா, கீஸ்தா எதுவும் கூடாது. இதுதான் பஞ்சமே அஹனி ஷஷ்டே வா அந்த வேலையில்கூட என்ன சாப்பாடு. சக்கரைப் பொங்களும் பாதாம்கீருமா. அல்லது தேஹ புஷ்டி தரும் மாம்ஸாதிகளா. இல்லை. சாகம் பசதி என்றால் ஏதோ ஒரு கீரையைப் பிடுங்கி வேக வைத்துத் தின்ன வேண்டும் என்று அர்த்தம். ஏதோ ஒரு முள்ளிக் கீரையோ, பசலைக் கீரையோ, போன்னாங்கண்ணியோ ஆற்றங்கரையில் யாருக்கும் சொந்தமில்லாமல் முளைத்திருப்பதை மட்டும் சமைத்துச் சாப்பிட வேண்டும். பிராம்மணன் நதி தீரத்தில் வசிக்க வேண்டும் என்று வைத்ததற்கு காரணமே அப்போது தான் அவன் அடிக்கடி ஸ்நானம் செய்ய முடியும் என்பது ஒன்று. இன்னொரு காரணம் அங்கே தான் பணம் காசே வைத்துக் கொள்ளக் கூடாத இவன், விலை கொடுக்கலாமா, யாசிக்கலாமா, நாலு கீரையைப் பிடுங்கி வேக வைத்து ஜீவனை ரக்ஷித்துப் கொள்ளலாம் என்பது யார் இந்தப் பார்ப்பான். பிடுங்கித் தின்ன வந்தான். என்று யாறும் அதட்ட முடியாதபடி வாழ வேண்டும் என்று அர்த்தம். கடன் வாங்கக் கூடாது. கடன் வாங்கலாமென்றால் போக்யங்கள். லக்ஷரிகளில் மனஸ்போதும். அதற்கு இடமே கொடுக்கக்கூடாது. இதுதான் அந்ருணீ என்றது. தரித்திரமும், அபரிக்ரஹமும்(அத்யாவசியத் தேவைக்கு அதிகமாக ஒரு புள்ளைக்கூட வைத்துக் கொள்ளாமலிருப்பதும்) தான் பிராம்மண லக்ஷணமானதால், கடனும் வாங்கக்கூடாது என்று இருக்கிறது.

இப்போது சர்க்காரிலிருந்து ஆரம்பித்து பெரிய பெரிய தொழிலதிபர்கள் உள்பட எல்லோருக்கும் கடன்தான். சாஸ்திரம் சொன்னபடி, கடன் இல்லாமலும், பிறகு ஏவுதலுக்கு ஸலாம் போடாமலும் தன் தர்மத்தைச் செய்து கொண்டு இப்போது

யாராவது இருக்கிறார்களா என்றால் அது நரிக்குறவர்கள்தான் என்று தோன்றுகிறது.

கடைசீயில் சொன்ன அப்ரவாசம் என்பதற்குத் தன் ஊரைவிட்டுப் போகக்கூடாது என்று அர்த்தம். மனமோ, அவமானமோ, கஷ்டமோ, நஷ்டமோ,

நமக்கேற்பட்ட தர்மத்தைச் செய்துகொண்டு ஊரோடு கிடக்க வேண்டும். இப்போது இங்கிலாந்தில் ஸெட்டில் ஆகிறோம், அமெரிக்காவில் ஸெட்டில் ஆகிறோம் என்று வெறும் பணத்துக்காக ஆசாரங்களை விட்டுப் பறந்து கொண்டு, இதனைப் பெருமையாக சொல்லிக் கொண்டிருக்கின்றோமே. இதை சாஸ்திரத்தில் ரொம்பவும் நிஷித்தமாக (இழுக்காக)ச் சொல்லியிருக்கிறது.

இந்த மாதிரி எல்லா ஜாதியாரும் நன்றாக உழைப்பது. எல்லா ஜாதியாரும் பரம எளிமையாக வாழ்வது என்று ஏற்பட்டு விட்டால் ஜாதி-த்வேஷமும், ஜாதிகள் போய்விட வேண்டும் என்ற பேச்சும் வரவே வராது. இப்போது ஒரு ஜாதிக்கு ஜாஸ்தி பணம்-சௌகரியமும், இன்னொன்றுக்கு தரித்திரம்-உழைப்பும் வரும்படியாக ஜாதிமுறை அமைக்கப்பட்டிருக்கிறது என்ற நினைப்பு ஏற்பட்டிருப்பதால்தான் இந்தச் சீர்திருத்தம் எனப்படுகின்ற அபிப்ராயங்கள் வந்திருக்கின்றன.

எளிமையும் உழைப்பும்தான் திருப்தி தருவது. சித்த சுத்தி தருவது. ஆயிரம் பதினாராயிரம் வருஷங்களாக நம் தேசத்தில் இப்படித்தான் நடந்து வந்திருக்கின்றது. வர்ணாச்ரமத்தைச் சொன்ன சாஸ்திரங்கள் இவற்றையும் வலியுறுத்தியிருப்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

குணம் அல்லது மனோபாவம் என்பதை வைத்து இக்காலத்திலும் தொழிலைத் தேர்ந்தெடுக்கவில்லை என்று சொன்னேன். இப்போது பணம், வசதி இவற்றை மட்டும் பார்த்து வேலை தேடுவதில்தான் அத்தனை கஷ்டமும் ஏற்பட்டிருக்கிறது. எல்லோரும் எல்லா வேலைக்கும் வந்து விழுந்து போட்டியும், பொறாமையும் வேலையில்லாத் திண்டாட்டமுமாக ஆகியிருப்பதற்கு இதுதான் காரணம்.

ஆதியில் கிறப்பினால் தொழிலை நிர்மித்துக் கொடுத்தபோது, அதிலேயே தன்னால் ஒவ்வொருவனுக்கும் ஒரு aptitute, அதை சுலபத்தில் கற்றுக் கொண்டு செய்கிற திறமை எல்லாம் ஏற்பட்ட மாதிரி இப்போது இல்லை. பிதுரார்ஜிதச் சொத்துபோல அப்போது பெருமிதத்தோடு, பிடிமானத்தோடு ஒவ்வொருவனும் தன் தொழிலை எடுத்துக் கொண்டதனால் அதில் நல்ல செய்நேர்த்தி இருந்தது. இப்போது inefficiency (திறமையின்மை) யைத்தான் எல்லாத் துறைகளிலும் பார்க்கிறோம்.

**ஸம் வாய்ப்பு விஷயம்**

குணம்,. மனப்பான்மை வைத்துத் தொழில் என்பது வெறும் புரள் என்கிற மாதிரியே தான் equality of opportunity (எல்லோருக்கும் ஸமமான வாய்ப்பு) இருக்க வேண்டும் என்பதும். இது நடைமுறை சாத்தியமே இல்லை. திருஷ்டாந்தமாக மெடிகல் ஸீட், எஞ்சினியரிங் ஸீட் இவ்வளவு தான் என்று நிர்ணயம் பண்ணிவிடுகிறார்கள். இதெல்லாவற்றையும்விட மிகக் குறைவாகத்தான் அட்டாமி ஸயின்ஸ் (அணு விஞ்ஞானம்) மற்றும் அநேக புதுப்புது ஒஜீமீநீவீணீறீவீ�louமீபீ ஒ஁ஆதீழ்மீநீமீ-களில் அட்மிஷனை நிர்ணயிக்கிறார்கள். இவற்றுக்கு ஒரே மாதிரி தகுதியுள்ள புத்திஸாலிகள் போட்டியிடும் போதே அவர்களின் அநேகரை ,ே லக்ட் பண்ணாமல், மற்றவர்களைத்தான் பண்ணுகிறார்கள். அப்படிப் பண்ணுவதுதான் நடைமுறை ஸாத்யம். பெரிய அதிகாரப் பதவிக்குப் பரீக்ஷை வைக்கிற போதும் இப்படியேதான் ஒரே க்வாலிஃபிகேஷன் உள்ளவர்களிலேயே பலரை நிறுத்தும்படியாகிறது. வைத்யம் பண்ணவும், புது விஞ்ஞான விஷயங்களில்

ஆராய்ச்சி பண்ணத் தெரிந்து கொள்ளவும் ஆசைப் படுகின்ற எல்லோருக்கும் அதாவது அதற்கான நல்ல தகுதி பெற்ற எல்லோருக்கும் சான்ஸ் கொடுக்கத்தான் வேண்டும் என்று வாதம் பண்ணினால் அது சரியாயிருக்குமா?இந்த தேசத்துக்கு இத்தனை டாக்டர் இருந்தால் போதும், ஸ்பெஷலிஸ்ட் இருந்தால் போதும், ஸயன்டிஸ்ட்களும் அதிகாரிகளும் இவ்வளவு போதும் என்பதால் ஒரு அளவோடு நிறுத்திக் கொண்டு, தகுதியுள்ள மற்ற எல்லாரையும் தள்ளும்படியாகிறது என்பதை எல்லாருமே ஒப்புக் கொண்டு பேசாமலிருக்கிறோம். இதே போலத்தான் தேவ சக்திகளை லோகத்துக்கு அநுகூலம் பண்ணித்தர ஜனங்களில் இத்தனை சதவிகிதம் மட்டும் கர்மாநுஷ்டானம் பண்ணினால் போதும்;பாரம்பரியமாக வந்திருக்கிற இவர்கள் போதும், இதற்கு மேல் அவசியமில்லை, அப்படி செய்தால் மற்றவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் கெட்டுப் போகும் என்று வர்ண விபாகம் பண்ணி வைத்திருக்கிறது. ஃப்ரெஞ்ச் ரெவல்யூஷன் (பிரான்சுப் புரட்சி) கொண்டு வந்துவிட்ட அநேக அபேதவாதங்களை சாஸ்திர விஷயத்தில் பொருத்த வேண்டுமென்று, யோசிக்காமல் கோஷம் போடுகிறோம் - அவை நம் லௌகிக லெவலிலேயே ஸாத்யமில்லை என்பதைப் பார்த்தும் புரிந்து கொள்ளாமலே!

ஐக்கிய சக்தி

"சரி, இப்படி தனித்தனியாக ஜாதிகள் பிரிந்திருந்தால் மொத்த ஸமூஹத்தில் கட்டுக்கோப்பு எப்படியிருக்கும்?" என்றால் அது (ஸமூஹக் கட்டுக்கோப்பு) இருக்கத்தான் செய்தது. த்வேஷத்தில் பிரிந்திருக்கிற இன்றைவிட அன்றைக்குத்தான் ஸமூஹ ஐக்கியம் இருந்தது. எப்படியிருந்தது என்றால்

அத்தனை பேருக்கும் இருந்த பொதுவான மத உணர்ச்சியாலும் சாஸ்திர நம்பிக்கையாலுந்தான். ஊருக்கே பொதுவாக, ஊருக்கே மத்தியமாக இருந்த ஆலயத்தால்தான். அத்தனை ஜனங்களும் ஈச்வர ஸந்நிதானத்தில் அரன்குடி மக்களாக ஒன்று சேர்ந்திருந்தார்கள்;வழிபாடுகளில், உத்ஸவாதிகளில் அத்தனை ஜாதியாரும் கலந்து கொண்டார்கள்;அவரவரும் ஒவ்வொரு விதத்தில் கைங்கர்யம் செய்தார்கள்.

ஆசௌசம் (தீட்டு) ஏற்பட்டுவிட்ட ஒரு ச்ரௌதிகள் மேலே பட்டால்கூட ஸ்நானம் செய்தவர்களே ரதோத்ஸவத்தில் பஞ்சமர்களோடு தோளோடு தோள் இடித்துக் கொண்டு வடம் பிடித்து இழுத்தார்கள்;திரும்பி வீட்டுக்கு வந்ததும் ஸ்நானம் செய்யாமலே சாப்பிட்டார்கள். ஏனென்றால் சாஸ்திரத்தில் அப்படியிருக்கிறது. மனஸில் த்வேஷமில்லாமல் ஐக்யமாயிருந்து தொழிலில் மட்டும் பிரிந்திருந்த காலம் அது. அப்போது ஜாதி முறையால் ஐக்கியமில்லாதிரு ந்ததாகக் கதை கட்டினாலும், வேத சாஸ்திர நம்பிக்கையும் கோவிலும் அன்றைக்கு ஸமூஹத்தை நன்றாக ஐக்கியப்படுத்தியது. இப்போது ஐக்கியம், ஐக்கியம் என்று சொல்லிக்கொண்டே த்வேஷப் பிரசாரத்தால் ஜனங்களைப் பரஸ்பர சத்ருக்கள் மாதிரிப் பிரித்திருக்கிறது!

இதனால்தான் அநேகமாக இப்போது 'வேதமும் வேண்டாம்;கோயிலும்

வேண்டாம்'என்பது 'ஜாதி வேண்டாம்' என்பதோடு சேர்ந்திருக்கிறது.

வேதம் வேண்டாம், கோயில் வேண்டாம் என்பதுதான் ரொம்பவும் உச்சநிலையில். வேதமே சொல்வது. ஞானம் வந்த நிலையில் வேதம் வேதமில்லை;

தீண்டாதவனில்லை என்று உபநிஷத்தே சொல்கிறது. அப்படி நிஜமாகவே இல்லையாக்கிக் கொள்வதற்காகவே அப்படிப்பட்ட ஞானம் வருகிற வரையில் வேதம் வேண்டும், கோயில் வேண்டும், ஜாதி வேண்டும் என்கிறது. ஒரே அபேதமாகி விடுவதற்கே முதலில் இத்தனை பேதமும் வேண்டும் என்கிறது.

இந்த லோக வாழ்க்கையை விட்டு விடுதலைக்கு ஓயாமல் பிரயாஸைப்படுகிறவனுக்கு முடிந்த முடிவில் எல்லாம் ஒன்றாகி விடுவதை வேதத்தில் சொல்லியிருக்கிறது;கிருஷ்ண பரமாத்மாவும் சொல்லியிருக்கிறார். முடிந்த முடிவில் காரியமே இல்லை. "தஸ்ய கார்யம் வித்யதே"(கீதை III. 17)

காரியம், தொழில் என்று ஏற்பட்டுவிட்ட இந்த நடைமுறை லோக வாழ்க்கை விஷயத்தில் அந்த அபேத தத்வத்தைச் சொல்லி, இதனால் எந்த பேதமும் காரியலோகத்தில் கூடாது என்பது தப்பான வாதம். காரிய லோகத்திலும் இந்த ஸம்பாவனையானது நம் மனஸில் அன்பு என்கிற ரூபத்தில் ஸகல ஜாதியிடமும், ஸகல பிராணிகளிடமும் கொஞ்சங்கூட ஏற்றத் தாழ்வில்லாமல் ஸமமாக நிறைந்து நிரம்பி இருக்க வேண்டும் என்றுதான் சாஸ்திரங்கள் சொல்கின்றன. அதாவது

அன்பிலேதான் அபேதம். காரியத்தில் அபேதம் இல்லை. 'எல்லாம் ஒன்று என்கிற பாவனை, உள்ளுணர்ச்சி எப்போதும் இருக்க வேண்டும்;அதனால் ஏற்படுகிற நிறைந்த ப்ரேமை இருக்க வேண்டும். ஆனால் காரியத்தில் வித்யாஸம் பார்க்கத்தான் வேண்டும்'என்பதே சாஸ்திரங்களில் சொல்லியிருப்பது.

பாவாத்வைதம் ஸதா குர்யாத்;க்ரியாத்வைதம் ந கர்ஹிசித் என்று சொல்லியிருக்கிறது. அதாவது 'எல்லாம் ஒன்று என்ற அத்வைதம் பாவனையில் எப்போதும் இருக்க வேண்டும்;காரியத்தில் ஒருபோதும் அல்ல'என்று அர்த்தம்.

லோக வாழ்க்கையில் இப்படி பேதப்படுத்தினால்தான் ஒழுங்கும், சீரான போகும் இருக்கும். அப்போதுதான் குழப்பமில்லாமல், மனக்கலக்கமில்லாமல் ஆத்ம சிந்தனையை வளர்த்துக் கொள்ள முடியும். லோக வாழ்க்கை பொய் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே, இப்படி அதை ரொம்பவும் நிஜம் மாதிரி ஒழுங்குப்படுத்தித் தர வேண்டும் என்பதுதான் ஸநாதன தர்மத்தின் ஏற்பாடு.

அதிலே நாலு வர்ணம் என்று வைத்தது இன்னம் கவடுவிட்டுப் பிரிந்து கலந்து பல ஜாதிகளாயின. ஸப்த ஸ்வரங்களே பலவகையாகச் சேர்ந்து எழுபத்திரண்டு மேளகர்த்தா ராகங்களும், மற்ற கணக்கில்லாத ஜன்ய ராகங்களும் உண்டானது போல், நாலு வர்ணத்துக்கு ஆதாரமான தத்வமே மேலும் பல ஜாதிகளாகப் பிரித்துக் கொடுத்தது. இவ்வளவு பிரிவுகளையும் அவற்றுக்குரிய தர்மங்களையும் பற்றி ஸம்பிரதாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

## பிற மதங்களில்

மற்ற மதங்களும் இப்படிப்பட்ட வித்யாஸங்களைப் பின்பற்றி வந்தால் நமக்கு இது குறையாகத் தோன்றாது. அவர்கள் நம்மை பரிஹஸித்து இந்த பேதத்தைக் குத்திக் காட்டுவதாலேயே நம்மவர்களுக்கும் இது தப்பாகத் தோன்ற ஆரம்பித்து விட்டது. ஆனால் நன்றாக ஆலோசித்துப் பார்த்தால் மற்ற எல்லா மதத்தையும்விட நம்முடைய மதமொன்றே ஆதிகாலத்திலிருந்து சிரஞ்சீவியாக இருந்து வருவதற்கும், நம்முடைய நாகரிகமே உலகத்தின் மற்ற நாகரிகங்களை விட மகோன்னதமாக இருந்து வருவதற்கும் காரணம் மற்ற மதங்களில் இல்லாத இந்த வர்ணதர்மம் தான் என்று தெரியும்.

மற்ற மதங்களில் ஜாதி தர்மம் என்று மூல நூல்களில் இல்லாவிட்டாலும், பிற்பாடு அவைகளிலும் ஒன்று சேர முடியாத பல பிரிவுகள் ஏற்பட்டுத்தான் இருக்கின்றன. இவர்கள் ஒருத்தருக்கொருத்தர் விவாஹ ஸம்பந்தம் செய்து கொள்ளாமல் தனித்தனி ஜாதி மாதிரிதான் இருக்கிறார்கள். இப்படி முஸ்லீம்களில் ஸியா,

ஸுன்னி, அஹமதியா என்று பிரிந்திருக்கிறார்கள். அது தவிர இங்கே பட்டாணி, லப்பை என்று இருப்பவர்கள் கூட பரஸ்பர விவாஹ ஸம்பந்தம் செய்வதில்லை. கிறிஸ்துவர்களில் காதலிக், பிராடெஸ்டென்ட், கிரீக் சர்ச் என்ற பிரிவினர்களும் இப்படியே. ஆனாலும் Division of Labour (தொழில் பாகுபாடு) என்ற உன்னத தத்வத்தின் மீது ஒரு லெவலில் மட்டும் பிரிந்திருந்து இன்னொரு லெவலில் ஐக்கியமாயிருக்கிற நம் ஜாதி முறையை, இம்மாதிரியில்லாமலே பிரிந்திருக்கிற அவர்கள் நிந்தித்துப் பேசுகிறார்கள். அதற்கு பதில் சொல்லக்கூட நமக்குத் தெரியவில்லை.

## ஹிந்து மதத்தின் சிரஞ்சீவித்வம்

மற்ற மதங்களில் எல்லோருக்கும் பொதுவாக வைத்த தர்மங்களை, அறநெறிகளை நம் மதத்திலும் எல்லோருக்கும் விதித்ததோடு அவரவர் தொழிலைப் பொறுத்து அதற்குத் தனியான விசேஷ தர்மங்களை வைத்து ஒன்றோடொன்று கலந்துவிடாமல் ஸமூஹத்தைப் பிரித்து வைத்ததுதான் நம் நாகரிகத்தின் சிரஞ்சீவித் தன்மைக்கு உயிர்நிலை.

நம்முடைய மதம் எவ்வளவோ யுகங்களாக நீடித்து வாழ்ந்து வந்திருக்கிறது. ஏதோ ஆதாரம் இருந்துதான் இந்த மதம் இவ்வளவு நாள் பிழைத்திருக்கிறது. எந்த மதமும் இவ்வளவு தீர்க்காயுஸோடு இருந்ததாகத் தெரியவில்லை. நம்முடைய மதத்தை நான் நம்முடைய கோயிலைப் போல நினைத்திருக்கிறேன். நம்முடைய கோயில்கள் மற்றவர்களுடைய சர்ச் அல்லது மசூதியைப் போல சுத்தமாக இல்லை. மற்ற மதஸ்தர்களுடைய கோயில்களோ வெள்ளையடித்து சுத்தமாக

வைக்கப்பட்டிருக்கின்றன. நம்முடைய கோபுரங்களில் முளைத்திருக்கும் மரங்களுக்குக் கணக்கேயில்லை. அவ்வளவையும் தாங்கிக் கொண்டு நமது கோயில்கள் நிற்கின்றன. ஆனால் மற்ற மதத்தார்களின் கோயில்களில் இரண்டு மூன்று வருஷத்திற்கு ஒரு முறை ரிப்பேர் செய்யா விட்டால் தாங்காது. நம் கோயில்கள் அப்படியில்லை. அவை கருங்கல்லால் கட்டப்பட்டிருக்கின்றன. பல ஆயிரம் வருஷத்திற்கு முன்பாக நம்முடைய பெரியோர்களா பலமாக அஸ்திவாரம் போட்டிருக்கிறார்கள். ஆகையால் தான் அவ்வப்போது ரிப்பேர் இல்லாமலே நம் கோயில்கள் நீடித்து நிற்கின்றன. நாம் கோயில்களில் பல ஆபாஸங்களைச் செய்கிறோம்;அபசாரங்கள் செய்கிறோம்;இவ்வளவுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு நம்முடைய கோயில் நிற்கிறது. லோகத்திற்குள் மிகப் புராதனமான கோயில்கள் இந்தியாவில்தான் இருக்கின்றன என்று எல்லோரும் சொல்கிறார்கள். சீமையில் இருந்து நம்முடைய கோயில்களைப் படம்

பிடிப்பதற்காகவென்றே பல பேர் வருகிறார்கள். நம்முடைய அலக்ஷ்யத்தால் அழிவதற்குரிய காரணங்கள் பல இருந்தும் அவை இப்படி நெடுங்காலமாக அழியாமல் நிற்கின்றன. அவற்றை இடித்து விடலாமென்றாலோ அதுவும் சிரமமாக இருக்கிறது. கட்டுவதற்கு எவ்வளவு சிரமப்பட்டிருக்க வேண்டுமோ அதைவிட இடிப்பதற்கும் படவேண்டும்.

நம்முடைய மதமும் இப்படித்தான் இருக்கிறது. நமக்குத் தெரியாமல் ஏதோ ஒன்று (மற்ற மதங்களில் இல்லாத ஏதோ ஒன்று) இதைத் தாங்கிக் கொண்டு நிற்கிறது. அதனால்தான் எவ்வளவோ வித்யாஸங்கள இருந்தாலும் இந்த மதம் அழியாமல் நிற்கிறது.

அந்த ஏதோ ஒன்று வர்ணாச்ரம தர்மந்தான். மற்ற மதங்களில் எல்லாருக்கும் ஒரே தர்மம் இருக்கிறது. அதனால் தான் அவைகள் அதிகப் பெருமை அடைந்திருக்கின்றன என்று நாம் நினைக்கலாம். ஆனால் அவை ஒரு ஸமயம் ஒரே அடியாக ஏறி நிற்கும். ஒரு ஸமயம் இருந்த இடம் தெரியாமற் போனாலும் போய்விடும். ஒரு காலத்தில் புத்த மதம் இருந்த தேசத்தில் பிற்பாடு கிறிஸ்துவ மதமும், கிறிஸ்துவ மதம் இருந்த தேசத்தில் இஸ்லாமும், இஸ்லாம் இருந்த தேசத்தில் கிறிஸ்துவமுமாக இப்படிப் பல மாறுதல்கள் ஏற்பட்டிருப்பது சரித்திர பூர்வமான உண்மை. எகிப்து, கிரீஸ், சைனா முதலிய தேசங்களில் ரொம்பவும் பூர்வத்தில் இருந்து உயர்ந்த நாகரிகங்களை உண்டு பண்ணின மதங்கள் இப்போது இல்லவேயில்லை. இத்தனை மாறுதல்களையும் பார்த்துக் கொண்டு, வெளியிலிருந்தும் உள்ளேயிருந்துமே எண்ணி முடியாத தாக்குதல்களை தாங்கிக் கொண்டு நம் ஹிந்து மதம் மட்டும் "சாக மாட்டேன்"என்று இருந்து வருகிறது.

ஒரு பனைமரம் இருந்தது. அதன்மேல் ஓர் ஒணான் கொடி கிடுகிடுடென்று படர்ந்தது. சில மாதத்திற்குள் பனை மரத்திற்கு மேல் வளர்ந்து விட்டது. அப்பொழுது அந்த ஒணாண்கொடி, "இந்தச் சில மாதமாக இந்த பனைமரம் ஓர் அங்குலம் கூட உயரவில்லையே! இது உபயோகம் இல்லாதது"என்று சொல்லி சிரித்தது. பனைமரம் சொல்லிற்று: "நான் பிறந்து பதினாயிரம் ஒணான்கொடியைப் பார்த்திருக்கிறேன். நீ பதினாயிரத்து ஒராவது கொடி. ஒவ்வொரு கொடியும்

இப்படித்தான் கேட்டது. எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை"என்று!இந்த மாதிரிதான் நம் மதமும் பிற மதங்களும் இருக்கின்றன.

நம் மதத்தில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி வேறு விதமான தர்மங்கள் இருந்தாலும் இந்த தர்மாநுஷ்டாங்களில் ஸமமான பலன்தான் உண்டாகிறது.

**சலுகை இல்லை**

தர்ம சாஸ்திரங்களை பிராம்மணர்களின் ஸ்வய நலத்துக்காகவே எழுதி வைத்துக் கொண்டார்கள் என்று சொல்வது எவ்வளவு தப்பு என்பது அந்த ஜாதிக்கே மிகக் கடுமையா நியமமும், ரொம்ப எளிமையான வாழ்க்கையும் விதிக்கப்பட்டிருப்பதிலிருந்து தெளிவாவது மட்டுமில்லை;தர்ம சாஸ்திரங்களின் நிஷ்பக்ஷபாதத்துக்கு இன்னொன்றும் இதைவிடப் பெரிய சான்றாக இருக்கிறது. ஸகல கலைகளையும், வித்யைகளையும் பிராம்மணன் கற்றாலும் பிறருக்குத்தான் அவற்றை போதிக்கலாமே தவிர, வைதிகாநுஷ்டானங்களைப் போல கஷ்டமாயில்லாததும், அதிகப் பண லாபம் தருவதுமான அந்தக் கலைகளில் ஏதொன்றையும் தானே தொழிலாக நடத்தக் கூடாது என்று கட்டிப் போட்டிருப்பதைத்தான் சொல்கிறேன். இப்போது எல்லாரும் எல்லாவற்றிலும் ஸமம், முக்யமாக நீதிக்கு முன் அனைவரும் ஸமம் என்றெல்லாம் நிறைய கோஷம் போட்டாலும், சட்டசபை, பார்லிமென்ட், கோர்ட் என்று எதை எடுத்தாலும் அததைச் சேர்ந்தவர்கள் தங்களை மற்ற பொது ஜனங்களோடு ஸமமாக வைக்கக் கூடாது என்று privileges(சலுகையான உரிமைகள்) எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களை யாராவது ஏதாவது (கண்டனமாகச்) சொன்னால் contempt charge (அவமதிப்புக் குற்றம்) என்று கொண்டு வந்துவிடுகிறார்கள். இப்படி நான் சொல்வதைக் கூட contempt என்று கொண்டு வரக்கூடும். இதே மாதிரி தங்களுக்கு அலவன்ஸ் வேண்டும், ரயில் பாஸ் வேண்டும் என்றெல்லாம் மற்றவர்களுக்கில்லாத சலுகைகளைத்தான் ஜனநாயக அபேதவாதிகளும் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். இதற்கெல்லாம் மாறாகத் தங்களையே வறுத்தெடுத்துக் கொண்டு கட்டுப்பாடுகளை வைத்துக் கொண்டவர்கள்தான் தர்ம சாஸ்திரங்களை ரக்ஷித்த ஜாதிக்காரர்கள். வேறொருத்தனால் இவர்களுக்கு அநாசாரம் வந்தால்கூட அவனுக்குத் தண்டனை இல்லை;தாங்கள்தான் ஸ்நானம் பண்ணி பட்டினி கிடக்க வேண்டும் என்ற அளவுக்குத் தங்களையே கஷ்டப்படுத்திக் கொண்டதைத்தான் சாஸ்திரங்களில் பார்க்கிறோம். பிராம்மணனுக்குப் பதினெட்டு வித்தைகளும் தெரிய வேண்டும். லோகத்திற்கு வேண்டியவைகளெல்லாம் தெரிய வேண்டும். ஸங்கீத வித்தையான காந்தர்வ வேதம் தெரிய வேண்டும். கிருஷி சாஸ்திரம் (உழவு) தெரிய வேண்டும். அது ஜ்யோதிஷத்தில் ஸம்ஹிதை என்னும் பிரிவில் வந்து விடும். வீடு கட்டத் தெரிய வேண்டும். இப்படி எல்லாத் தொழில்களையும் தெரிந்து கொண்டு அந்த அந்த வித்தைகளுக்கும் ஏற்ற ஜாதியினருக்கு அந்த அந்த வித்தையைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். இவனே அவற்றில் ஒரு விருத்தியிலும் (தொழிலிலும்) நுழையக் கூடாது. வேத அத்தியயனம்தான் பண்ண வேண்டும். வேறே தொழில் நடத்தி அதிக லாபம் ஸம்பாதிக்க வரக்கூடாது. தநுர்வேதம் விச்வாமித்ரருக்குத் தெரியும். விச்வாமித்ரர் யாகம் பண்ணினார். அதை ஸுபாஹு, மாரீசன் என்னும் ராக்ஷஸர்கள் வந்து கெடுக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது அவர், "எனக்குத்தான் தநுர்வேதம் தெரியுமே!நானே இவர்கள் பேரில் அஸ்திரங்களைப் போடுகிறேன்"என்று எண்ணிப் போடவில்லை. ராம

லக்ஷ்மணர்களைக் கூட்டிக் கொண்டு வந்தே அந்த ராக்ஷஸர்களை தொலைக்கச் சொன்னார். வழியிலே இவரேதான் அவர்களுக்கு அஸ்திர-சஸ்திர வித்தை உபதேசித்தார்! ஆகையால் பிராம்மணன் வேத அத்யயனத்தை மாத்திரம் ஜாக்கிரதையாக ரக்ஷித்து வர வேண்டும். ஆனால் மற்ற எல்லாவற்றையும் அவன் தெரிந்து கொள்ள வேண்டும். 'கத்தி சுற்றத் தெரியுமா?' என்றால் 'தெரியும்' என்று சொல்ல வேண்டும். 'சிகித்ஸை முறை தெரியுமா?'என்றால் 'தெரியும்' என்று சொல்ல வேண்டும். 'சித்திரம் எழுதுவாயா?' என்றால் 'எழுதுவேன்'என்று சொல்ல வேண்டும். வர்ணாச்ரம தர்மத்துக்குத் தக்கபடி அந்த அந்தத் தொழிலாளியைச் சிஷ்யனாக்கிக் கொண்டு அந்ச அந்த வித்யையைச் சொல்லிக் கொடுத்து அவன் தரும் குரு தக்ஷிணையைக் கொண்டு ஜீவிக்க வேண்டும். குரு தக்ஷிணை கொஞ்சமாக இருந்தாலும் திருப்தி அடைய வேண்டும். அப்படி எங்கேயானும் ஒரிரண்டு இடங்களில் ஒரு ஜாதிக் காரனுக்கு தனிச் சலுகை கொடுத்திருக்கிறது என்று தோன்றும்படியிருந்தாலும் அதற்கு நியாயமான காரணம் இருக்கும். டிக்கட் கொடுக்கும் இடத்தில் டிக்கெட் கொடுப்பவனை மட்டும் தனி ரூமில் வைத்து, மற்றவர்கள் வெளியிலிருந்து வாங்கிக் கொள்வது ஸமத்வமாகாது என்று எல்லாரும் உள்ளே புகுந்துவிட்டால் டிக்கெட் கொடுப்பவன் என்ன செய்வான்?மற்றவர்களுக்குந்தான் ஒழுங்காக டிக்கெட் கிடைக்குமா?ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்யச் சில சௌகரியங்கள் இருக்க வேண்டும். ஒரு பொது குடும்பத்தில் ஒருவருக்கு வியாதி உண்டானால் அவருக்குச் சில ஸௌகரியங்கள் செய்து கொடுக்கிறோம். மற்றவருக்கும் அப்படி வேண்டுமென்பது நியாயமா?எல்லாருக்கும் பொதுவான தர்மங்களும் நம் மதத்தில் நிறைய இருக்கின்றன. கடமையைச் செய்வதற்குச் சில ஸௌகரியங்கள் வேண்டுமல்லவா? வாஸ்தவத்தில் அவை ஸௌகரியங்களல்ல;சலுகையுமல்ல. அவர்களுக்குள்ள அந்த விசேஷ தர்மம் ஸமூஹத்துக்குப் பயன்படுவதற்கே வேண்டியவைதாம் இந்த சில வசதிகள். இதை எல்லாரும் அங்கீகாரம் செய்ய வேண்டும். ஏனென்றால் அவர்கள் செய்வது தங்களுக்காக மட்டுமல்ல;எல்லோருக்கும் ஸௌக்யம் உண்டாவதற்காகவே அவர்கள் தங்கள் விசேஷ தர்மங்களை அநுஷ்டிக்கிறார்கள். ஹ்ருதயத்தில் அன்பும் ஒற்றுமையும் இருக்க வேண்டும். எல்லாம் ஒரே ஜாதி என்று சேருவதால் மட்டும் ஒற்றுமை வந்துவிடாது. ஒன்றாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டும், ஒரே ஜாதியாகக் கட்டிப் புரண்டு கொண்டும் இருக்கிற மேல் நாடுகளில் இருக்கிற பரஸ்பரப் போட்டியும் த்வேஷமும் கொஞ்சமா நஞ்சமா?நம்முடைய சாஸ்திர தர்மப்படி ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் காரியங்களைச் செய்து கொண்டு மற்றவர்களுடைய காரியங்களும் நடக்கும்படி செய்து மனஸில் ஒற்றுமையாகவே இருந்து வந்தார்கள். மாமனாரிடம் மருமகள் பேசுவதில்லை;மரியாதைக்காக அப்படி இருக்கிறாள்;அது த்வேஷம் ஆகுமா?நமக்கு ரொம்பவும் நெருங்கிய நம் ஜாதிக்காரரான ஒருவருக்கே ஏதாவது தீட்டு வந்துவிட்டால் நாம் அவர் தொட்டுச் சாப்பிடுவதில்லை. அவரைத் தொடுவதில்லை;அதனால் த்வேஷம் உண்டா?இந்த

மாதிரி உள்ளவைகளை த்வேஷமென்று சொன்னால் அது நம் பார்வையில் உள்ள தோஷம்தான். நமக்குள்ள மனக் கலக்கத்தினால் நம்முடைய தர்மங்கள் தப்பாகத் தோன்றுகின்றன.

## அனைத்தும் அனைவர் பொருட்டுமே!

பிராம்மணன் கொடுக்கும் வைச்வதேவத்தில் பஞ்சமனுக்கும் வீட்டு வாசலில் பலி போட வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறது. வேதத்தில் சொன்ன ஸகல கர்மமும் "லோகா:ஸமஸ்தா:ஸுகினோ பவந்து"(உலகிலுள்ள உயிர்க்குலம் முழுவதும் இன்பம் அடைய வேண்டும்) என்ற லட்சியத்துக்காக ஏற்பட்டதுதான். வேத சப்தமும் யஜ்ஞமும் எல்லார் நலனுக்காகவும்தான். ஒரு க்ஷத்ரியன் அரசாள்வது, போர் செய்வது, police (காவல் பணி) செய்வது எல்லாம் ஸமஸ்த ஜனங்களின் நன்மையின் பொருட்டே யாகும். வைச்யன் வியாபாரம் பண்ணி லாபத்தை எல்லாம் தனக்கே மூட்டை கட்டிக் கொள்கிறான் என்று நாம் நினைத்தால் தப்பு. அவனும் பெரிய சமூக சேவை செய்கிறான். வைச்யர்கள் செய்யவேண்டிய தருமத்தை பகவான் கீதையில் ஒரு ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்: 'கிருஷி'என்றால் பூமியை வைத்துக் கொண்டு உழுது சாகுபடி செய்து ஜனங்களுக்கு உபயோகப்படுத்த வேண்டியது. அடுத்தது பசுவை ஸம்ரக்ஷிக்க வேண்டியது. மூன்றாவது, வியாபாரத்தினால் ஜனங்களுக்கு உபகாரம் செய்யவேண்டியது ஒரு வைசிய தர்மம். பசுவை நன்றாக ஸம்ரக்ஷணை செய்து அதன் கன்றுக்குக் கண்டு பாக்கியுள்ள பாலை யஜ்ஞங்களுக்கும் ஜனங்களுக்கும் உபயோகப் படுத்த வேண்டும். அவ்வளவு புஷ்டியாகப் பசுவை ஸம்ரக்ஷிப்பது இன்னொரு முக்கிய தர்மம். வியாபாரமானது வைச்யர்களுக்கு மூன்றாவது முக்கியமான தர்மம். அதாவது வெகு தூரமான தேசங்களில் விளையும் கோதுமை, பெருங்காயம், குங்குமப்பூ போன்ற ஸாமான்களை ஒர் இடத்தில் சேகரித்து ஜனங்களுக்கு விற்று உபகாரம் செய்வதே ஒரு தர்மம். ஒரு மனிதனுக்கு லட்சக்கணக்கான பணம் இருந்தும் பயிர் முதலியவை இல்லாத பாலைவனத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தால், இந்த பணத்தைக் கொண்டு மாத்திரம் அவன் ஜீவிக்க முடியுமா?அதே மாதிரி நெல் ஏராளமாக விளையும் தேசத்தில் நெல்லை மாத்திரம் வைத்துக் கொண்டு மற்றவை இல்லாமல் ஜீவிக்க முடியுமா?ஆகையால் வியாபாரம் என்பது பல இடங்களில் கிடைக்கும் ஸாமான்களை ஒர் இடத்தில் சேகரித்து ஜனங்களுக்குக் கிடைக்கப் பண்ணும் பெரிய உபகாரம் என்று தெரிகிறது. இது வைசியருக்கு முக்கிய தர்மமாக ஏற்பட்டிருக்கிறது. வைசியர்கள் தமக்கு வியாபாரம் வேண்டாமென்றிருப்பது பாபம். அதே மாதிரி ஒரு பிராம்மணன் கர்மானுஷ்டானத்தை விட்டுவிட்டுக் கண்ட தொழிலைப் பண்ணிக் கொண்டு பணம் ஸம்பாதித்தால் அதுவும் பாபம்.

வியாபாரத்தை அவரவர்கள் லாபத்தை உத்தேசித்துச் செய்கிறார்கள் என்று நினைக்கக் கூடாது. ஏனென்றால் ஒரு ஸமயம் ஒரு வாரம் ஹர்த்தால் ஏற்பட்டுக் கடைகள் மூடப்பட்டிருந்ததால் அப்பொழுது ஒரு ஸாமானும் கிடைக்காமல் ஜனங்கள் படும் சிரமம் சொல்லி முடியாது. ஆகையால் வியாபாரம் பொதுப் பிரயோஜனத்தை மட்டும் உத்தேசித்ததல்ல. வைசியர்கள் வியாபாரத்தைத் தங்கள் லாபத்துக்காகச் செய்கிறோமென்று எண்ணாமல் ஸமூஹ நலனுக்காக பகவானால் ஏற்படுத்தப்பட்ட காரியத்தைச் செய்கிறோமென்று நினைத்து செய்ய வேண்டும்.

## நாலாம் வர்ணத்தின் அநுகூல நிலை

நாலாவது வர்ணத்தவரின் தர்மம் மற்ற எல்லா விதமான சரீர உழைப்பையும் பண்ணுவது. மற்றவர்களுக்கு உள்ள status (அந்தஸ்து), சௌகரியம் இவர்களுக்கு இல்லை என்று தோன்றும். ஆனால் இவர்களுக்கு ஆசாரக் கட்டுப்பாடுகளை ரொம்பக் குறைத்து ஸ்வதந்திரமாக விட்டிருப்பதையும் கவனிக்க வேண்டும். இவர்கள் மற்ற எல்லாரைக் காட்டிலும் திருப்தியாக, பகவானுக்குக் கிட்டத்தில் இருந்து வந்தார்கள். "கலியுகம் மட்டம் இல்லை;நாலாவது வர்ணத்தவர்கள் மட்டம் இல்லை. கலிதான் ரொம்பவும் உசத்தி;நாலாவது வர்ணத்தவர்கள்தான் ரொம்ப உசந்தவர்கள் - "கலி:ஸாது சூத்ர:ஸாது" என்று ஸாட்சாத் வியாஸாசாரியர்களே சொல்லியிருக்கிறார். ஏன்?மற்ற மூன்று யுகங்களிலும் தியானம், தபஸ், பூஜை என்று ரொம்பவும் கஷ்டப்பட்டாலே அடைய முடிகிற பகவானை நாம ஸங்கீர்த்தனத்தாலேயே கலியில் எளிதில் அடைந்து விடலாம். அதனால் "கலி:ஸாது" என்கிறார். பிராம்மணன், க்ஷத்ரியன், வைச்யன் என்ற மற்ற மூன்று வர்ணத்தவர்களுக்கும் கர்வம் உண்டாக இடம் இருக்கிறது. தங்களைப் பற்றி அவர்களுக்கு இப்படி ஒரு அஹங்காரம் உண்டாகிவிட்டதானால் அப்புறம் ஆத்மா கிடைக்கிற வழியேயில்லை. 'நமக்கு புத்தி வன்மை இருக்கிறது' என்று பிராம்மணனும், 'நமக்கு அதிகார சக்தி இருக்கிறது'என்று க்ஷத்ரியனும், 'நமக்கு பண பலம் இருக்கிறது'என்று வைசியனும் அஹங்காரப் பட்டுக் கொண்டு தப்பாக போவதற்கு இடமிருக்கிறது. நாலாவது வர்ணத்தவனுக்கு இப்படி இல்லை. அடக்க குணத்துக்கு இடமாக இருக்கிறவன் அவன். "அடக்கம் அமரருள் உய்க்கும்"என்று வள்ளுவர் கூடச் சொல்கிறார் அல்லவா?அதனால் அவன் ஸ்வாமிக்குக் கிட்டேயே இருக்கிறான். அஹங்காரம் வந்துவிடக் கூடாது, அதை அழித்து ஜீவனை பகவத் பிரஸாதத்துக்கு உரியவனாகப் பண்ண வேண்டுமென்பதற்காகத்தான் மற்ற மூன்று வர்ணத்தாருக்கு வேதத்திலும் வேத காரியங்களிலும் மூன்று grade-களில் அதிகாரம் கொடுத்திருக்கிறது. அந்த வைதிக கர்மாநுஷ்டானங்களைப் பண்ணுவதானால் அதற்கு நிரம்ப ஆசாரங்கள், ஸ்நான-பான-ஆஹார நியமாதிகள் உண்டு. இந்த

நியமம் என்ற பத்தியம் இருந்தால்தான் வேத மந்திரம் என்ற மருந்து வேலை செய்யும். ஆசாரம் தப்பினால் அபசாரம். அது பெரிய பாபம். அதற்காகக் கஷ்டம் அநுபவித்தாக வேண்டும். அதனால் எப்போதும் அவர்கள் கண்குத்திப் பாம்பாக ஆசாரங்களை அநுஷ்டித்தாக வேண்டும். நாலாவது வர்ணத்தவனுக்கு இப்படி இல்லை. அவனுக்கு நியமங்கள் ரொம்பவும் குறைச்சல்தான். அவன் செய்கிற உழைப்பே அவனுக்கு சித்த சுத்தி, அதுவே அவனுக்கு வேத கர்மாநுஷ்டானம், ஸ்வாமி எல்லாமும்!இப்படி அவனுக்கு எளிதில் ஸித்தி ஏற்படுகிறது. இதனால்தான் "சூத்ர:ஸாது"என்று வியாஸரே இரண்டு கைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு சபதம் பண்ணினார். அவனுக்கு வயிறு ரொம்ப ஆகாரம் கிடைக்காவிட்டாலும், அவனுக்கு மாநத்தை ரக்ஷிக்கத் துணி கிடைக்கா விட்டால், அவனுக்கு மழை வெயிலிலிருந்து காப்பாக ஒரு குடிசை இல்லாவிட்டால் அது சமூஹத்துக்கு பாபம்;ராஜாங்கத்துக்கு பாபம். இந்த வசதிகளைப் பண்ணித்தர வேண்டும். இதே வசதிகளை - இவற்றுக்குத் துளிக்கூட அதிகமில்லாமல்தான் - பிராம்மணர்களும் பெற்றிருந்தார்கள் என்று முன்னே சொன்னதை திருப்பிச் சொல்கிறேன். அதாவது பொருளாதார லெவலில் பக்ஷபாதம் செய்ததாகச் சொல்லவே கூடாது என்பதற்காகச் சொல்கிறேன்.

### மரியாதைக் குறைவல்ல;அஹம்பாவ நீக்கமே!

"அது சரி, ஆனால் 'ஸ்வய மரியாதை என்ன ஆவது? என்று சோஷலிசம் சொல்கிற சீர்திருத்தக்காரர்கள் கேட்டால் அவர்கள் தங்கள் கொள்கைக்கு தாங்களே ஆக்ஷேபம் தெரிவிப்பதாகத்தான் ஆகிறது. இவர்கள் என்ன சொல்கிறார்கள்? Dignity of Labour (உழைப்பின் கௌரவம்) என்று நிறையப் பேசுகிறார்கள். ஒரு வேலை கூடத் தாழ்த்தியில்லை என்கிறார்கள். காந்தி கக்கூஸைக் கூடத் தாமே கழுவுவது என்று வைத்துக் கொண்டிருந்தார். ராஜகோபாலாச்சாரி பிரதம (முதன்) மந்திரியாக இருந்தபோதுகூடத் தாமே துணி தோய்த்துக் கொண்டார். இந்த டிக்னிடி ஆஃப் லேபரை காட்டுவதற்காகத்தான் வருஷத்தில் ஒரு நாள் மேயர் மாதிரியானவர்களே துடைப்பக் கட்டையை வைத்துக் கொண்டு தெருவைப் பெருக்குகிறார்கள். இதைப் பேப்பரில் ஃபோட்டோ பிடித்துப் போடுகிறார்கள். ஆகையால் சரீரத்தால் உழைத்துச் செய்கிற தொழில் ஸ்வயமரியாதைக்குக் குறைச்சல் என்று இவர்களே இன்னொரு பக்கத்தில் சொன்னால் அது ஒன்றுக் கொன்று முரண்தான். என்னைக் கேட்டால் 'status', 'ஸ்வயமரியாதை'என்றெல்லாம் சொல்வதைவிட, அஹங்காரம் என்ற வார்த்தையைச் சொல்லிவிட்டால் எல்லாம் சரியாகிவிடும். பிராம்மணனுக்கும் க்ஷத்ரியனுக்கும் வைசியனுக்கும் ஏற்படக்கூடிய அஹங்காரம் மற்றவனுக்கு ஏற்படவில்லை என்கிற angle-ல்(கோணத்தில்) இதைப் பார்த்தால், வியாஸர்

சொன்னமாதிரி நாமும் "சூத்ர:ஸாது"என்றுதான் முடிவு கட்டுவோம். இப்போது அபேதவாதத் தலைவர்கள் சொல்கிற மாதிரிதான் சாஸ்திரங்களிலும் எல்லா விதமான காரியங்களும் உசந்தவை என்று ஸமமாகச் சொல்லியிருக்கிறது. இவர்கள் லௌகிக (material) மட்டத்தில் மட்டும் இருந்துகொண்டு சொல்வதையே சாஸ்திரத்தில் ஆத்மாபிவிருத்திக்கு உரியதாக (spiritual-ஆக)ச் சொல்லி அதிலே பக்தியையும் கலந்து கொடுத்திருக்கிறது. அதாவது, 'லோக க்ஷேமத்துக்காகப் பல தினுஸான காரியங்கள் நடக்க வேண்டியிருப்பதால் அவற்றுக்குள் உயர்த்தி-தாழ்த்தி என்பதே இல்லை. அவரவரும் தங்களுக்கு லபித்த தொழிலை ஈச்வரார்ப்பணமாகச் செய்தால் சித்த சுத்தி பெறலாம்'என்கிறது. ஈச்வரார்ப்பணம் என்கிற போது பக்தி வந்துவிடுகிறது. சித்த சுத்தி என்பது ஆத்ம ஞானத்தில் கொண்டு சேர்க்கிறது. ஆகவே 'டிக்னிடி ஆஃப் லேபர்'என்று பார்த்தாலும் சரி, சித்த சுத்திக்காக ஈச்வரார்ப்பணம் பண்ணப்படவேண்டியதே கர்மா என்று பார்த்தாலும் சரி - இரண்டு விதத்திலும் 'ஸ்வயமரியாதை'என்கிற வார்த்தை அடிபட்டுப் போய் விடுகிறது. அஹம்பாவமில்லாமல் செய்தால் 'நமக்கு இந்த ஆசாரம் இருக்கிறதே, அல்லது இல்லையே', 'இந்த அநுஷ்டானம் இருக்கிறதே, அல்லது இல்லையே'என்ற குறைகள், கோபதாபங்கள் உண்டாகாது. இந்தத் தொழிலுக்கு இந்த ஆசாரம், இந்த ஆஹாரம்தான் சரி என்று ஒப்புக் கொள்ளத் தோன்றும். பிராம்மணன் க்ஷத்ரியனையும் வைசியனையும் போல ஸௌக்கியங்களை அநுபவித்தால் மந்திர சக்தியே இராது. ஒரு தொழிலாளி பிராம்மணனைப் போல உபவாஸம் இருந்தால் அவனால் உடலுழைப்புப் பண்ணவே முடியாது. ஒரு சின்ன விஷயம் விஷயம் ஒருத்தர் சொன்னார். 'சாஸ்திரத்தில் பிராம்மணன் வெள்ளை வஸ்திரமும், க்ஷத்ரியன் சிவப்பு வஸ்திரமும், வைச்யன் மஞ்சள் வஸ்திரமும் நாலாம் வர்ணத்தவன் நீல வஸ்திரமும் உடுத்த வேண்டும் என்றிருக்கிறது. முதலில் இதெல்லாங்கூட மட்டம் தட்டுகிற அபிப்ராயமே எனக்குத் தெரிந்தது. அப்புறம்தான் எனக்கு அதிலுள்ள நியாயம் புரிந்தது'என்றார். நான்கூட அப்போது இதைப் பற்றி நினைத்துப் பார்த்ததில்லை. ஆகையால், "இதிலே என்ன நியாயமிருக்கிறது?என்று கேட்டேன். "வெள்ளை வஸ்திரமாயிருந்தால் கொஞ்சம் ஏதாவது கறை பட்டாலும் தெரிந்துவிடும். பிராம்மணன் யஞ்ஞாதிகள் பண்ணுகிறபோது எந்த திரவியத்தையும் சிந்தாமல், வீணாக்காமல் ஜாக்கிரதையாக செலவழிக்காவிட்டால் அவனுடைய வஸ்திரமே காட்டிக் கொடுத்து விடும். பிறரை உபத்ரவித்துப் பணம் வாங்கக் கூடாத அவனுக்கு இந்த ஜாக்கிரதையும் சிக்கனமும் வேண்டும் என்றே வெள்ளை வஸ்திரம். க்ஷத்ரியன் யுத்தம் செய்கிறவன்;ரத்தம் சிந்துகிறவன். சிந்தப் பண்ணுகிறவன். இது தவிர்க்க முடியாதது. ஆனால் துணியைப் பாழாக்கிப் பயமுறுத்துகிற மாதிரி இது தெரியக் கூடாது என்றே சிவப்பு வஸ்திரமாக வைத்திருக்கிறது. வைசியர்கள் மண்டியில் பல ஸாமான்களை கையாண்டாலும் மஞ்சள்தான் சட்டென்று துணியில் ஒட்டிக் கொண்டு குபீரென்று தெரிவது. அவர்களுக்கான பசு ரக்ஷணையைப் பார்த்தாலும் மாட்டுக்கு நிறைய மஞ்சள் பூச

வேண்டியிருக்கிறது. இந்த மஞ்சள் ஒட்டிக் கொண்டு தெரியாமலிருக்கத்தான் மஞ்சள் கலரிலேயே வஸ்திரம். நிலத்தில் புழுதியில் வேலை செய்கிறவர்களுக்கு நீல வஸ்திரமானால்தான் அழுக்கு தெரியாது. இந்தக் காலத்தில் கூட ஃபாக்டரிகளில் தொழிலாளர்களுக்கு நீல யூனிஃபாரம் தான் கொடுத்திருக்கிறார்கள். எனவே அந்த ஜாதிக்கு நீலம் வைத்ததும் நியாயம்தான்"என்றார். யோசித்துப் பார்த்தால் இப்படி ஒவ்வொரு வித்யாஸத்திலும் நியாயம் தெரியும். அவரவருக்கு ஸௌக்கியமானதை உத்தேசித்து சாஸ்திரம்;"சாஸ்த்ராய ச; ஸுகாய ச"என்பதன் அர்த்தம் புரியும். இப்படி பலவற்றில் அர்த்தம் புரிவதாலேயே புரியாதவற்றிலும் உள்ளூர அர்த்தம் இருக்கவேண்டுமென்று தெரியும். "ஒருத்தன் செய்தால் தர்மமாக, புண்ணியமாக இருப்பதே இன்னொருத்தன் பண்ணினால் பாபமாக ஆகிறது என்று சொல்வதெப்படி?என்று இப்போது புத்திசாலிகளும் புரிந்து கொள்ளாமல் கேட்கிறோம். முன்னாளில் பாமர ஜனங்களும், இப்படிக் காரியங்களை மாற்றிக் கொண்டால் ஸமூஹத்துக்காக மொத்தத்தில் நடக்க வேண்டியவை எல்லாம் ஏறுமாறாவதால் இது அதர்மந்தான், பாபந்தான் என்று புரிந்து கொண்டு சாஸ்திரப்படியே செய்து வந்தார்கள். ஈச்வர ஸந்நிதானம், உத்ஸவம், பொதுத்தொண்டு தவிர பாக்கி விஷயங்களில் ரொம்பக் கலந்து கொண்டால் ஆஹாரம் முதலான எல்லா விஷயங்களிலுமே மாறிப் போகத் தோன்றும். ஒவ்வொரு ஆசாரமும் அந்த ஜாதியின் தொழிலுக்கு உதவுவதால், இப்படி ஒரேடியாக கலப்பது முடிவில் ஸமூஹ நன்மைக்கான தொழில் முறையையே கெடுக்கும் என்று அறிந்திருந்தார்கள். அதிலே ஒரு நிறைவு, ஸௌக்கியம் இல்லாமலா இத்தனை மெஜாரிட்டி ஜனங்கள் ஆயிரம் பதினாயிரம் வருஷங்கள் ஆக்ஷேபமில்லாமல் அநுஸரித்தார்கள்? பிற்பாடும் தன்னால் இங்கே இந்த வாதங்கள் வந்திருக்காது. வெள்ளைக்காரன் வந்தது, அதனால் பிராம்மணர்களுக்கு ராஜமானியங்கள் போனது, அதே சமயம் அவர்களுக்கு வெள்ளைக்கார ஆட்சியில் உத்யோகங்கள் கிடைத்தது, மெஷின்களும் நகர வாழ்க்கையும் ஏற்பட்டுக் கைத்தொழிலும் கிராம வாழ்க்கையும் நசிந்தது, இதனால் மற்றவர்கள் தொழிலுக்குக் கஷ்டப்படும்போது இவர்கள் மட்டும் நகத்தில் அழுக்குப்படாமல் சம்பாதித்தது, இதனால் ஏற்பட்ட போட்டி - இப்படி சாதுர்வர்ண்ய (நான்கு வர்ண) ஏற்பாட்டின் அஸ்திவாரத்தில் ஆட்டம் கொடுத்திருக்கிற சமயத்தில் வெள்ளைக்காரன் புதிய ஸமத்வக் கொள்கைகளையும், ரேஸ் தியரி (இனக் கொள்கை)யையும் கொண்டு வந்து விட்டதால் தான் சாஸ்திர நம்பிக்கையுள்ள பொது ஜனங்களின் மனசு மாறிவிட்டது. ஈச்வராநுக்ரஹத்தில் அது பழையபடி மாறினால், பிராமணனிலிருந்து பஞ்சமன் வரை ஒவ்வொருத்தனும் செய்கிற காரியம் அவனவனுக்குச் சித்த சுத்திக்கான ஸாதனம்;அதே சமயத்தில் ஒவ்வொருவன் செய்வதும் லோக க்ஷேமத்தை உத்தேசித்துத்தான் என்று புரிந்துவிடும். இதையெல்லாம் அலசி ஆலோசனை பண்ணிப்பார்த்தால், நம்முடைய மதத்தில்

மட்டும் இருக்கிற வர்ண தர்மத்தைப் பற்றி, நமக்குக் குறைவும் அவமானமும் ஏற்படுவதாகவும் ஆரம்பத்தில் சொன்னேனே, அது அப்படியே மாறி, இந்த ஏற்பாட்டில் பெருமையும் இதை வகுத்துக் கொடுத்தவர்களிடம் மரியாதையும் உண்டாகும்.

### நான் சொல்வதன் நோக்கம்

கைத் தொழில்கள் போய் ஆலைத் தொழில்களும், ஸமூஹம் சின்ன சின்னதாக வாழ்ந்த கிராம வாழ்க்கை போய் நகர வாழ்க்கை உண்டாகி, தேவைகளும் தொழில்களும் கணக்கில்லாமல் பெருகி, வாழ்முறையே சன்ன பின்னலாக ஆகிவிட்ட இப்பொழுது பழையபடி பாரம்பரியத் தொழிலையே ஏற்படுத்துவதென்பது அஸாத்யமாகத் தான் தோன்றுகிறது. க்ஷத்ரியர்கள்தான் மிலிடரியில் இருக்கலாம், வைசியர்தான் வியாபாரம் பண்ணலாம், நாலாம் வர்ணத்தார் தொழிலாளிகளாக உழைப்பது தவிர வேறே செய்யக்கூடாது என்றால் இப்போது நடக்கிற காரியமா?அப்படி நடத்தப் பண்ணுகிறது முடியக் கூடியதா?இந்தப் பிரத்யக்ஷ நிலைமை எனக்குத் தெரியாமலில்லை. பின்னே ஏன் வர்ண தர்மத்தை இப்படி நீட்டி முழக்கி ஸ்தோத்ரம் பண்ணுகிறேன் என்றால் இரண்டு காரணமுண்டு: ஒன்று - இப்போது நாம் எப்படியிருந்தாலும் சரி, பழைய வழிக்கு நாம் போகவே முடியாவிட்டாலும் சரி, "அந்த வழி ரொம்ப தப்பானது;அது சில vested interest-களால் (சுயநல கும்பல்களால்) தங்கள் ஸௌகரியத்துக்காகவே பக்ஷபாதமாக உண்டாக்கப்பட்ட அநீதியான முறை" என்று இப்போது எல்லாரும் சொல்லிக்கொண்டிருக்கிறார்களே, இப்படிச் சொல்வது சரியே இல்லை என்று உணர்த்துவது. அவனவனும் சித்த சுத்தி பெறவும், ஸமூஹம் கட்டுக்கோப்புடன் க்ஷேமத்தை அடையவும், கலாசாரம் வளரவும் தர்மத்தைப் போல் ஸஹாயமான ஸாதனம் எதுவுமில்லை என்று புரிந்து கொள்ள வைப்பது ஒரு காரணம். இதை விட முக்கியமான காரணம் இப்போது க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர ஜாதிகளின் தொழில் முறை கலந்தாங்கட்டியாக ஆகியிருந்தாலுங்கூட, எப்படியோ ஒரு தினுசில் ரா ய பரிபாலனம் - ராணுவ காரியம், பண்ட உற்பத்தி - வியாபாரம், தொழிலாளர் செய்ய வேண்டிய ஊழியங்கள் ஆகியவை நடந்து கொண்டுதான் இருக்கின்றன. தேசத்தின் practical necessity-யாக (நடைமுறைத் தேவைகளாக) அன்றாட வாழ்வுக்கும் ராஜாங்கம் நடத்துவதற்கும் இந்தக் காரியங்கள் நடந்தே ஆகவேண்டியிருப்பதால், கோணாமாணா என்றாவது நடந்து விடுகின்றன. ஆனால் இவற்றுக்கெல்லாம் பூர்த்தியை உண்டாக்குவதான பிராம்மண வர்ணத்தின் காரியம் மட்டும் அடியோடு எடுபட்டுப் போய்க் கொண்டிருக்கிறது. ஸகல காரியங்களுக்கும் ஆதாரமாக இருக்கிர தர்மங்களை எடுத்துச் சொல்லியும் வாழ்ந்து காட்டியும்

பிரசாரப்படுத்துவது, வேதங்களைக் கொண்டு தேவ சக்திகளை லோகக்ஷேமார்த்தமாக அநுக்கிரஹம் பண்ணவைப்பது, தங்களுடைய எளிய தியாக வாழ்க்கையால் பிறருக்கும் உயரந்த லட்சியங்களை ஏற்படுத்துவது, ஸமூஹத்தின் ஆத்மிக அபிவிருத்தியை உண்டாக்குவது, கலைகளை வளர்ப்பது - என்பதான பிராம்மண தர்மம் போயே போய்விடுகிற ஸ்திதியில் இருக்கிறோம், இது ஸூக்ஷ்மமானதால், practical neccesity என்று எவருக்கும் தெரியவில்லை. மற்ற மூன்று வர்ணங்களின் தொழில் நடக்காவிட்டால் நமக்கு வாழ்க்கை நடத்துவதற்கே முடியாது என்பதுபோல இது தோன்றவ்வில்லை. ஆனால் வாஸ்தவத்தில் வாழ்க்கைக்கு அர்த்தம் தந்து அது நிறைவான வாழ்க்கையாவதற்கு வழி செய்வது இதுதான். இதை விட்டு விட்டு மற்றவற்றில் மட்டும் கவனம் வைக்கிறோம். அவற்றில் உயர்வை அடைந்தால் prosperity, prosperity (ஸுபிக்ஷம்) என்று பூரித்துப் போகிறோம். ஆனால் ஆத்மாபிவிருத்தியும், கலாசார உயர்வுமில்லாமல் லௌகிகமாக மட்டும் உயர்ந்து என்ன பிரயோஜனம்?இந்த உயர்வு உயர்வே இல்லை என்று அமெரிக்கர்களுக்கு இப்போது ஞானம் வந்திருக்கிற மாதிரி நமக்கும் ஒரு நாள் வரத்தான் செய்யும். அதனால், மற்ற ஜாதிக் குழப்பங்கள் எப்படியானாலும், தேசத்தின் ஆத்மாவைக் காப்பாற்றிக் கொடுக்க பிராம்மண ஜாதி ஒன்று மட்டுமாவது, ஒழுங்காக ஸகல ஜனங்களுக்கும் வழிகாட்டிகளாக இருந்து கொண்டு, எளிமையாக, தியாகமாக வாழ்ந்து கொண்டு, வைதிக கர்மாக்களைச் செய்து லோகத்தின் லௌகிக-ஆத்மிக க்ஷேமங்களை உண்டு பண்ணிக் கொண்டு இருக்கும்படியாக செய்யவேண்டும். இந்த ஒரு ஜாதியை நேர்படுத்திவிட்டாலே மற்ற ஜாதிகளில் ஏற்பட்டிருக்கிற குழப்பங்களும் தீர ஆரம்பித்துவிடும். எந்த தேசத்திலும் இல்லாமல் தர்ம ரக்ஷணத்துக்கென்றே, ஆத்மாபிவிருத்திக்கென்றே யுகாந்தரமாக ஒரு ஜாதி உட்கார்ந்திருந்த இந்த தேசத்தில் அது எடுபட்டுப் போய் ஸகலருக்கும் க்ஷீணம் உண்டாக விடக்கூடாது என்று, இந்த ஒரு ஜாதியை உயிர்பித்துக் கொடுப்பதற்காகத்தான் இவ்வளவும் முக்யமாகச் சொல்கிறேன். தங்களுக்கு உசத்தி கொண்டாடிக் கொண்டு, ஸௌகர்யங்களை ஏற்படுத்திக் கொண்டு, ஹாய்யாக இருக்கிறதல்ல நான் சொல்கிற பிராம்மண ஜாதி, ஸமூஹ க்ஷேமத்துக்காக அநுஷ்டானங்களை நாள் பூரா பண்ணிக் கொண்டு, எல்லாரிடமும் நிறைந்த அன்போடு, பரம எளிமையாக இருக்க வேண்டியதே இந்த ஜாதி. இதை குல தர்மப்படி இருக்கப் பண்ணிவிட்டால் நம் ஸமூஹமே தர்ம வழியில் திரும்பிப் பிழைத்துப் போய்விடும் என்கிற உத்தேசத்தில் தான் இத்தனையும் சொல்வது.

## ஸர்வரோக நிவாரணி

ஜாதிமுறையினால் பிரிந்திருந்ததால் முன்னே தேசத்தில் ஒருத்தருக்கொருத்தர் விரோதமாக இருக்கவே இல்லை. இப்போது தான் ஸ்டேட்டுக்கு ஸ்டேட் (மாநிலத்துக்கு மாநிலம்) குத்துப்பழி வெட்டுப் பழியாக எல்லைத் தகராறு, ஆற்று ஜலப் பங்கீட்டுத் தகராறு எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. முன்னே காசி யாத்ரீகனுக்காக இங்கே செட்டிப் பிள்ளைகள் சத்திரம் கட்டி வைத்துச் சாப்பாடு போட்டார்கள். இங்கிருந்து காசிக்கும் பத்ரிநாத்துக்கும் போகிறவனுக்காக ஸேட்ஜி தரம்சாலா (தர்மசாலை) வைத்திருந்தான். அதாவது ஈச்வர பக்தியால் எல்லாரும் ஒன்று சேர்ந்து இருந்தார்கள். இப்போது அதுபோய் பாலிடிக்ஸ், புத்தி வாதம் ஆகியன அதிகமாகி விட்டதால்தான் எல்லாமே கோளாறாகி இருக்கிறது. அதனால் கடைசியில் எல்லாவற்றுக்கும் மருந்தாக, ஸர்வரோக நிவாரணியாக, தேசத்தில் பக்தி வளரவேண்டும் என்றுதான் பிரார்த்தனை பண்ணவேண்டும். "ஜாதி ஒழியனும், ஜாதி ஒழியனும்" என்று ஒயாமல் சொல்லிக் கொண்டிருப்பதால், இன்னும் ஜாஸ்தி துவேஷம்தான் உண்டாகிக் கொண்டிருக்கிறது. முப்பது, நாற்பது வருஷமாக இந்தப் பிரசாரம் பண்ணி வந்தாலும் ஒரு எலக்ஷன் என்று வருகிறபோது இப்போது பார்த்தாலும் ஜாதிதான் முன்னால் நின்று, ஒரு கம்யூனிட்டிக்காரன் இன்னொருவனை அடிப்பது, கத்தியால் குத்துவது என்கிற அளவுக்குப் போய்க் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இது பிராம்மண-அப்பிராம்மண ஜாதித்வேஷம் இல்லை. பிராம்மணனை நல்ல வேளையாக பாலிடிக்ஸிலிருந்து ரொம்ப தூரத்துக்கு வெளியே தள்ளியிருக்கிறது. இவனாக விலகாவிட்டாலும் மற்றவர்களாவது இப்படிக் கழுத்தைப் பிடித்துத் தள்ளியிருக்கிறார்களே என்று கொஞ்சம் ஆறுதலாயிருக்கிறது. அதனால் இப்போது நடக்கிற சண்டை மற்ற ஜாதிகளுக்குள்ளேயே தான்!தெலுங்கு தேசத்தில் கம்மாவுக்கும் ரெட்டிக்கும் சண்டை;கன்னட தேசத்தில் லிங்காயத்துக்கும் இன்னொரு ஜாதிக்கும் சண்டை என்கிற மாதிரி சாஸ்திரங்களில் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாத விபரீத ஜாதிச் சண்டைகளையெல்லாம் 'ஆக்வாலிடி'முழக்கம் ரொம்ப ஜாஸ்தியாகவுள்ள இப்போதுதான் பார்க்கிறோம். இங்கே (தமிழ்நாட்டில்) ஒரு ஜில்லாவில் படையாட்சி, இன்னொன்றில் செங்குந்தர் என்று இப்படி ஒவ்வொரு ஜாதிக்காரர்களையே பார்த்து அபேட்சகராக நிறுத்துகிறார்கள். candidate (வேட்பாளர்) களுக்கிடையே அரசியல் கொள்கையையெல்லாம் விட்டுவிட்டு, இந்த ஜாதி அடிப்படையிலேயே போட்டோ போட்டி நடப்பதைப் பார்க்கிறோம்.

### " ஒழியனும் " மறைந்து " வளரணும் " வளரட்டும் !

ஆகையால் 'ஒழியனும்'என்ற கோஷம் உள்ள மட்டும் ஒன்றும் வாஸ்தவத்தில் சரியாகாது. தமிழ்ப் பண்பாட்டையும், திருவள்ளுவர் முதலானவர்கள் அன்பையும்

அருளையுமே போற்றிச் சொன்னதையும் ஒரு பக்கம் ஓயாமல் சொல்லிக் கொண்டே, இப்படி 'ஒழிக'கோஷம் போடுவதும், தெருவெல்லாம் எழுதி வைப்பதும் நம் தமிழ் தேசத்துக்குக் கொஞ்சம் கூட ஏற்றதல்லவே என்று என் மனஸுக்கு ரொம்பவும் கிலேசமாக இருக்கிறது. 'ஒழியணும்'என்பதை விட்டு 'வளரணும்'என்று ஆரம்பித்தோமானால் அத்தனை பேதமும், த்வேஷமும், சண்டையும் போய்விடும். 'ஜாதி ஒழியணும்'என்பதற்குப் பதில் இனிமேல் பழையபடி 'பக்தி வளரணும்'; 'கோயில் வளரணும்'என்று ஆரம்பித்து அதற்கானதை ஸகல ஜனங்களும் சேர்ந்து பண்ணினால் ஆதி காலத்திலிருந்து இந்த தேசத்தை ஒரு குடும்பமாகப் பின்னி வைத்து வந்திருக்கிற ஈச்வர பக்தி இப்போதும் நம்மை ஒன்றாக்கிக் காப்பாற்றும். பக்தி வந்து விட்டால், ஜாதி த்வேஷம் போயே போய்விடும். இத்தனை காலமாக இப்படித்தான் இருந்தது. ஜாதி இருந்தது. ஆனால் அதனால் த்வேஷம் இல்லாமலே இருந்தது. 'ஜாதியில் தப்பில்லை;அதனால் த்வேஷமிருப்பதுதான் தப்பு'என்பதைப் புரிந்து கொள்ளாமல், எலி இருக்கிறது என்பதற்காக வீட்டையே கொளுத்தினமாதிரி இப்போது ஜாதியையே எடுத்துவிட வேண்டும் என்று ஆரம்பித்ததில் பழைய நல்ல தொழில் பிரிவினையும், திருப்தியும், சாந்தமும், அடக்கமும், ஸமூஹ ஸௌஜன்யமும் பாழானது தவிர, த்வேஷம் நன்றாகக் கப்பும் கிளையுமாக வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. இப்போதாவது விழித்துக் கொண்டு 'அழியணும்'என்கிற எண்ணத்தை விட்டுவிட்டு, 'பக்தி வளரணும்''சகலரும் ஒன்று சேர்ந்து பண்ணுகிற சமூகத் தொண்டுகள் வளரணும்'என்று முயற்சி செய்ய ஆரம்பித்தால், ஜாதி த்வேஷம் என்பதை ignore (அலக்ஷ்யம்) பண்ணினதாகிவிடும். அதை ரொம்பவும் லக்ஷ்யம் பண்ணி, எதிர்ப்புச் சண்டை போட்டால்தான் அதுவும் பதிலுக்குப் பதில் ஜாஸ்தி வீரியம் அடைகிறது!இப்படிச் செய்யாமல் மற்ற நல்ல விஷயங்களிலேயே கவனத்தைச் செலுத்தி அதை ignore செய்தோமானால், தானே இருந்த இடம் தெரியாமல் போய்விடும். 'மருந்து சாப்பிடுகிறபோது குரங்கை நினைத்துக் கொள்ளாதே' என்றால் தப்பாமல் அந்தக் குரங்கு நினைவுதான் ஒவ்வொரு தரமும் மருந்தை எடுக்கிற போது வரும் என்கிற மாதிரி, "ஜாதி ஜாதி என்று த்வேஷம் கூடாது"என்று சொல்கிற போதே ஜாதியினால் உயர்வு தாழ்வு உணர்ச்சியையும் ஞாபகப்படுத்திக் கொண்டேதான் போகிறோம்! அதனால் ஸகல ஜாதியாரும் சேர்ந்து கோயில் திருப்பணி, அல்லது தூர்ந்த ஏரியில் மண் வாருவது என்கிற மாதிரியான பெரிய காரியங்களை எடுத்துக் கொண்டு, ஓயாமல் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டிருந்தால் தன்னால் அன்பும் ஸமூஹ ஸௌஜன்யமும் ஏற்பட்டுவிடும். இப்போது காரியம் இல்லாமிருப்பதால்தான் எதையாவது நினைத்துக் கொண்டிருக்கத் தோன்றுகிறது. இதிலிருந்துதான் விதண்டாவாதம், வம்பு, தும்பு, 'ஒழிக'சண்டை எல்லாம் உண்டாகின்றன. 'ஒரு சண்டை பூசல் என்று கிளப்பி விட்டால்தான் ஸ்வாரஸ்யமாயிருக்கிறது. கிளர்ச்சி ஆர்ப்பாட்டம், புரட்சி என்று கிளப்பிவிட்டால்தான் தங்களைச் சுற்றி 'ஜே'போடப் பத்துப் பேர் செல்கிறார்கள்

என்பதால் இம்மாதிரி செய்கிறார்கள். இதற்கெல்லாம் பொழுதேயில்லாதபடி காரியங்களில் ஈடுபட்டிருந்தால் எல்லாம் சரியாகி சாந்தமாகிவிடும். தொண்டைத் தண்ணீர் வற்ற 'ஒழிக'கூச்சல் போட்டுக் கொண்டு, கால் வலிக்க ஊர்வலம் வருவதற்குப் பதில் இந்த man-power- ஐ (மனித சக்தியை) ஏதாவது ஆக்கரீதியான திசையில் திருப்பி விட்டால் எத்தனையோ வளர்ச்சி ஏற்படும். எல்லாவற்றையும் விடப் பெரிய வளர்ச்சி ஸமஸ்த ஜனங்களிடையும் உண்டாகிற அன்புதான். அநுஷ்டானங்கள் பண்ணுவது, கோவிலுக்குப் போவது, உபந்நியாஸத்துக்குப் போவது. லீவு நாளானால் ஸகல ஜாதியாரும் சேர்ந்து நாள் முழுக்க தெய்வப்பணி, ஸமூஹப் பணி செய்வது என்று 'டைட்'டாக டைம் டேபிள் போட்டுக் கொண்டு பண்ண ஆரம்பித்துவிட்டால் இந்த 'ஒழிக', 'வீழ்க' வுக்கெல்லாம் அவகாசமேயில்லாமல் எல்லாரும் வளர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஜாதியில் உயர்வு-தாழ்வு நிச்சயமாக இல்லை. மகான்கள் - அப்பர், நம்மாழ்வார், சேக்கிழார், நந்தனார், கண்ணப்பர் மாதிரியானவர்கள் - எந்த ஜாதியிலும்தான் தோன்றியிருக்கிறார்கள். ஆசார்யாளே கண்ணப்பரை ('சிவானந்த லஹரி')யில் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார். எவனொருவனும் தான் இன்னொருவனைக் காட்டிலும் உசந்தவன் என்று நினைக்கிறதே பாபம் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. மஹான்களும் இப்படித்தான் நமக்கு வழிகாட்டியிருக்கிறார்கள். "நாயினும் கடையேன்", 'நாயடியேன்'என்றெல்லாந்தான் அவர்கள் தங்களைச் சொல்லிக் கொள்கிறார்கள். இந்த மனப்பான்மை சுதந்திர யுகத்தில் போய்விட்டதுதான் கோளாறு. பழைய அடக்க மனோபாவம் நமக்கு வரவேண்டும். வந்து விட்டால் காரியத்தில் ஜாதி இருக்குமே தவிர, மனஸில் எள்ளளவும் பேதம் இராது. வாழ்க்கை முறையிலும் பொருளாதார ரீதியிலும் பேதம் இல்லாமல் எல்லாரும் எளிமையாக இருந்து விட்டால் கொஞ்சம் கூடப் பொறாமை, வயிற்றெரிச்சல் இருப்பதற்கு இடமில்லாமல் போகும். அந்த மாதிரி நிலையை உடனே ஏற்படுத்துவதற்கான தைரியமும், தியாக புத்தியும் நமக்கு இருந்தாலும் இல்லா விட்டாலும், அப்படிப்பட்ட ஒரு ideal- ஐயாவது (லக்ஷ்ய நிலையையாவது) நாம் புரிந்து கொண்டால், கொஞ்சம் கொஞ்சமாக வழி திறக்க இடமுண்டாகும். இதற்குப் பராசக்தி அநுக்ரஹம் செய்ய வேண்டும்.

## *மங்களாரத்தி*

### முதலுக்கு முதல் ; முடிவுக்கு முடிவு

இந்த ராமேச்வரம் ஸ்ரீ சங்கர மண்டபத்தில் மத்யமான ஸ்தம்பத்தின் உச்சியில் நடுநாயகமாக ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் எழுந்தருளியிருக்கிறார். பின்னால் இருக்கிற நூல் நிலையம் வெறும் ஹாலாக இல்லாமல் ஸரஸ்வதிதேவியைப் பிரதிஷ்டை செய்ததால் ஸரஸ்வதி மஹாலாக, மஹா (ஆ)லயமாக இருக்கிறது.

ஆசார்யாளின் முதுகுக்குப் பின்னால் ஸரஸ்வதி இருக்கலாமா என்றால் இப்படி இருப்பதிலேயே ஒரு ரஸம் இருக்கிறது. பிரம்மாவின் அவதாரமான மண்டன மிச்ரரை ஆசார்யாள் வாதத்தில் ஜயித்தபின், அவருடைய பத்னியும் ஸரஸ்வதி அவதாரமுமான ஸரஸவாணியையும் ஜயித்தார். மண்டனமிச்ரர் உடனே ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ஆசார்யாளின் பிரதான சிஷ்யர்களில் ஒருவரான ஸுரேச்வராசாரியரானார். ஸரஸவாணியோ வாதத்தில் தோற்றுப்போனவுடன் ஸரஸ்வதி ரூபத்தை அடைந்து, பிரம்ம லோகத்துக்கே கிளம்பிவிட்டாள். ஆனாலும் ஆசார்யாள் பூலோகத்தில் ஒரு நல்ல இடத்தில் அவளை இருக்கும்படியாகப் பண்ணி அவளுடைய ஸாந்நியத்தால் ஜனங்களுக்கு வித்யாப் பிரகாசத்தை உண்டாக்க வேண்டுமென்று நினைத்தார். அதனால் ஆகாசத்தில் கிளம்பியவளை வனதுர்க்கா மந்திரத்தில் கட்டி மேலே போக முடியாதபடி பண்ணினார்.

"அம்மா!நான் தேச ஸஞ்சாரம் புறப்படுகிறேன். நீயும் என்னோடு வரவேண்டும். எது உத்தமமான இடம் என்று தோன்றுகிறதோ அங்கே உன்னை சாரதா பீடத்தில் ஸ்தாபனம் பண்ண ஆசைப்படுகிறேன். அங்கேயிருந்து கொண்டு நீ லோகத்துக்கெல்லாம் அநுக்ரஹம் செய்து கொண்டிருக்க வேண்டும் என்று ஆசார்யாள் ஸரஸ்வதியைப் பிரார்த்தித்துக் கொண்டார்.

"அப்படியே செய்கிறேன். ஆனால் ஒன்று. நான் உன் பின்னாலேயேதான் வருவேன். நீ என்னை திரும்பிப் பார்க்கக்கூடாது. பார்த்தால் அந்த இடத்திலேயே ஸ்திரமாகக் குடிகொண்டு விடுவேன்"என்று ஸரஸ்வதி இவருக்கு ஸம்மதமாகச் சொல்லும்போதே ஒரு கண்டிஷனும் போட்டு விட்டாள். அதற்கு ஆசார்யாளும் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஆசார்யாள் புறப்பட்டார். பின்னால் ஸரஸ்வதி தேவியும் தொடர்ந்து சென்றாள். அவளுடைய பாதச் சிலம்பு 'ஜல், ஜல்'என்று சப்தமிடுமாதலால் அவள் பின்தொடர்கிறாள் என்று ஆசார்யாளுக்குத் தெரியும். அவர் திரும்பிப் பார்க்க வேண்டியஅவசியமேயில்லாதிருந்தது.

ஞானக்கண் படைத்த ஆசார்யாளுக்கு எதுவும் தன்னால் தெரியாமல் போகாது. ஆனால் மநுஷ்யர் மாதிரி அவதாரம் செய்தால் இப்படியெல்லாம் கொஞ்சம் செய்வதுண்டு.

இப்படியே ஆசார்யாள் ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டு வரும்போது துங்கபத்ரைக் கரையில் சிருங்ககிரி (சிருங்கேரி) என்ற இடத்தில் பூர்ணகர்ப்பிணியாக இருந்த ஒரு தவளைக்கு மேலே வெயில் படாமல் ஒரு பாம்பு குடை பிடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். பாம்புக்குத் தவளை நமக்கு சர்க்கரைப் பொங்கல் மாதிரி;பார்த்த மாத்திரத்தில் பாய்ந்து பிடித்துத் தின்றுவிடும். இங்கேயோ ஒரு

பாம்பே தவளைக்கு குடை பிடித்தது!பகையே இல்லாமல் இத்தனை அன்பு நிறைந்திருக்கிற உத்தமமான இடத்திலேயே ஸரஸ்வதியைப் பிரதிஷ்டை பண்ணிவிடலாமா என்று நினைத்தபடி ஆசார்யாள் நடந்து கொண்டிருந்தார்.

அப்போது சட்டென்று 'ஜல்,ஜல்' சப்தமும் நின்றுவிட்டது. ஸரஸ்வதி ஏன் வரவில்லை?என்ன ஆனாள்? என்று திரும்பிப் பார்த்தார். அந்த இடத்திலேயே ஸரஸ்வதி நிலைகுத்திட்ட மாதிரிப் பிரதிஷ்டையாகி விட்டாள்.

ஓசை கேட்காதற்குக் காரணம் என்னவென்றால், அது துங்கபத்ரையின் மணல் கரை. மணலிலே பாதம் புதைந்த நிலையில் அவள் நடந்து போக வேண்டியிருந்ததால் சிலம்போசை கேட்கவில்லை.

"இதுவும் நல்லதுதான். நாம் நினைத்ததும் ஸரஸ்வதியின் நிபந்தனையும் ஒன்றாக ஆகிவிட்டன" என்று ஆசார்யாள் ஸந்தோஷப்பட்டுக் கொண்டு அங்கே சாரதா பீடத்தை அமைத்தார்.

"உன் முதுகுக்குப் பின்னால் உன்னைத் தொடர்ந்து வருவேன்"என்று ஸரஸ்வதி சொன்னதற்கு பொருத்தமாகவேதான் இங்கே (ராமேச்வர சங்கர மண்டபத்தில்) ஆசார்யாளுக்குப் பின்னால் ஸரஸ்வதியின் சிலை பிரதிஷ்டையாயிருக்கிறது.

ஒரு புஸ்தகம் எழுதினால் அதில் முதலில் குரு வந்தனம், அப்புறம்தான் பிள்ளையார் ஸ்துதிகூட, மூன்றாவதாகவே ஸரஸ்வதி ஸ்துதி என்று க்ரமம் இருப்பதைப் பார்த்தாலும் ஸரஸ்வதிக்கு முன்னால் ஆசார்யாள் இருப்பது பொருத்தமே.

"அது ஸரி, அப்படியானால் எல்லாவற்றுக்கும் கடைசியில் மங்களம் என்று முடிக்கிற ஸமயத்தில் ஸ்தோத்திரம் செய்யப்பட வேண்டிய ஆஞ்ஜநேய ஸ்வாமி இங்கே வாசலிலேயே ஆசார்யாளுக்கும் முந்தி எடுத்த எடுப்பிலே இருக்கிறாரே!இது எப்படி பொருந்தும்?"என்று தோன்றலாம்.

அந்த ஆஞ்ஜநேய ஸ்வாமி தாமாகவே முதலில் வந்து விட்டவர். புதிதாக இங்குள்ள மற்ற மூர்த்திகளைச் செய்தது போல அவரைச் செய்யவில்லை. இந்த இடத்தில் அவர் ஆதியிலிருந்தே இருக்கிறவர். அவர் இருந்த இடத்திற்குத்தான் இப்போது ஆசார்யாளும் வந்து சேர்ந்திருக்கிறார்.

ஆஞ்சநேயரிடம் ஆசார்யாள் வந்து சேர்ந்ததில் ஒரு பொருத்தம் தெரிகிறது.

ஸ்ரீ ருத்ரத்தை கனம் என்ற கிரமத்தில் சொல்கிறபோது நம் ஆசார்யாளின்

நாமமான "சங்கர"என்பது பதின்மூன்று முறை வருகிறது. பதின்மூன்று

unlucky(துரதிருஷ்ட) நம்பர் என்பது நம் சாஸ்திரப்படி தப்பு. நல்லதையெல்லாம் செய்கிறவர் என்று பொருள்படுகிற 'சங்கர' நாமம் பதின் மூன்று முறை வருவதும் இதற்கு ஒரு சான்று.

ருத்ராம்சம் தான் ஆஞ்சநேயர். அவர் எப்போது பார்த்தாலும் பதின்மூன்று அக்ஷரம் கொண்ட "ஸ்ரீ ராம் ஜய ராம் ஜய ஜய ராம்"என்ற மந்திரத்தையே ஜபித்துக் கொண்டிருப்பவர். பதின்மூன்று நல்லது என்பதால் 'தேரா அக்ஷர்'என்று வடநாட்டில் இதை விசேஷித்துச் சொல்கிறார்கள். இந்த திரியோதசாக்ஷாரியையேதான் ஹநுமார் ஸமர்த்த ராமதாஸராக அவதரித்த போதும் ஸதா ஸர்வ காலமும் ஜபம் பண்ணிக் கொண்டு, அதன் சக்தியாலேயே சிவாஜியைக் கண்டு ஹிந்து ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கச் செய்தார்.

ருத்ர கன பாடத்தில் பதின்மூன்று தரம் சொல்லப்படும் (பரமேச்வராதாரமான) சங்கரர், ருத்ராம்சமாக வந்து பதின்மூன்று அக்ஷரத்தையே சொல்லிக் கொண்டிருக்கிற ஆஞ்ஜநேயரிடம் வந்து சேர்ந்திருப்பது பொருத்தம்தானே?

அந்த ஆஞ்சநேயரை இங்கே பின்னுக்குத் தள்ளிவிடக் கூடாது என்றுதான் முன்னாடியே வைத்திருக்கிறது.

அவர் எப்படியிருக்கிறார்?ஒரு கையை மேலே தூக்கி விரித்து கொண்டிருக்கிறார். இது அபயஹஸ்தமாக இருப்பதோடு மட்டுமில்லை. 'நில்'என்று கையை உயர்த்தி ஆக்ஞையிடுகிற மாதிரியும் இருக்கிறது. எதிரே பெரிய ஸமுத்ரம் இருக்கிறதல்லவா?அது இந்த ராமேச்வர க்ஷேத்ரத்தில் அலையைக் குறைத்துக் கொண்டு குளம் மாதிரி அடங்கியிருப்பதற்கு என்ன காரணம்?அந்த ஸமுத்ரத்துக்குத்தான்'மேலே வராதே, நில்!'என்று கையை தூக்கி ஆஞ்சநேய ஸ்வாமி உத்தரவு போடுகிறார். அதற்கு ஸமுத்ர ராஜாவும் ஆயிரம் பதினாயிரம் வருஷமாக அடங்கி வந்திருக்கிறான்.

அதனால் அவர் நேரே ஸமுத்ரத்தைப் பார்த்துக் கொண்டு - அவருக்கும் ஸமுத்ரத்துக்கும் குறுக்கே வேறு எந்த மூர்த்தியும் வராமல், இப்படி வாசலிலேயே இருப்பது தான் நமக்கு க்ஷேமம்.

எல்லாவற்றுக்கும் முடிவிலே வருகிறவர் எல்லாவற்றுக்கும் முன் வரவேண்டிய ஆசார்யாளுக்கும் முன்னே வரலாமா என்பதற்கு நியாயம் சொல்கிறேன்.

ஸரஸ்வதி, 'உனக்குப் பின்னால் நான் இருப்பேன்'என்று சொன்னதால் அவள் வாக்கை மதிப்பதுதான் அவளுக்குப் ப்ரீதி என்று இங்கே அவளை ஆசார்யாளுக்கு பின்னால் வைத்திருக்கிறதோ இல்லையோ?

இதே மாதிரி ஆசார்யாள், "எனக்கு முன்னால் நீ எப்போதும் பிரகாசித்துக் கொண்டிரு, அப்பா"என்று ஆஞ்சநேய ஸ்வாமியை வேண்டிக்கொண்டிருக்கிறார்.

"ஹநுமத் பஞ்சரத்னம்"என்று ஆசார்யாள் ஆஞ்சநேயர் மீது ஐந்து ச்லோகங்கள் கொண்ட ஒரு அத்புதமான ஸ்துதி செய்திருக்கிறார். ஸ்தோத்திரிக்கப்பட்டவர் ருத்ராம்சம்!ஸ்தோத்திரிப்பவர் சிவ அவதாரம். ஒரே வஸ்துதான்!இப்படியிருந்தும் இரண்டு பேரும் விநயத்துக்கு வடிவமாக இருந்தவர்கள். மஹாசக்திமான்களாக இருந்தும், மஹாபுத்திமான்களாக இருந்தும் எப்போதும் அடக்கமாக இருந்த இருவர் இவர்கள். இவர்களில் ஆஞ்சநேயரை ஆசார்யாள் விநயத்தோடு வேண்டிக்கொண்டு ஸ்தோத்திரம் செய்கிறார். அதில் ஒரு ச்லோகத்தில் "புரதோ மம பாது ஹநுமதோ மூர்த்தி" என்று வருகிறது.

மம-எனக்கு; புரதோ - முன்னால்;ஹநுமதோ மூர்த்தி:- ஆஞ்சநேய ஸ்வாமியின் உருவம்;பாது- பிரகாசிக்கட்டும்!

தனக்கு முன் ஆஞ்சநேயர் ஜொலித்துக் கொணடிருக்க வேண்டும் என்று ஆசார்யாளே வேண்டிக் கொண்டிருப்பதால், அவருக்கு முன் ஸ்தானத்தில் இங்கே ஆஞ்சநேயர் இருப்பதுதான் பொருத்தம். அதுதான் அவருக்குப் பிரீதி.

ஆரம்பமும் முடிவும் ஒன்றுதான்;ஆதியும் அந்தமும் ஒன்றுதான்;நாம் தேடிக்கொண்டே போகிற பரம்பொருள் கடைசியில் எல்லாத் தேட்டகத்துக்கும் முதல் நினைப்பாக இருக்கிற 'நான்'என்பதாகத்தான் முடிகிறது. இதுதான் அத்வைதம். ஆகையால் கடைசியில் வரவேண்டிய ஆஞ்சநேய ஸ்வாமி இங்கே முதலில் வரும் குருவுக்கும் முன்னால் வருவதே அத்வைதத்துக்கு விளக்கமாகத்தான் இருக்கிறது. 'தாஸோஹம்'(அடிமையாக இருக்கிறேன்) என்று ஸ்ரீராமசந்திரமூர்த்தியிடம் தாஸனாக இருந்தே, 'ஸோஹம்'என்கிற (பரமாத்மாவே நான் என்று உணருகிற) அத்வைத பாவத்தை அடைந்தவர் ஆஞ்சநேயர் என்று சொல்வதுண்டு. இதனால் அவரே முதலுக்கு முதலாகவும் முடிவுக்கு முடிவாகவும் இருப்பவர்தான்.

ஆஞ்சநேய ஸ்வாமியின் தூக்கிய கைக்குக் கட்டுப்பட்டு ஸமுத்ரம் அடங்கி நிற்கிறது. நாம் ஸம்ஸார ஸமுத்ரத்தில் தவிக்கிறவர்கள். நம் மனஸ் அலையடங்காமல் ஓயாமல் அடித்துக் கொண்டேயிருக்கிறது. ஆஞ்சநேய ஸ்வாமிதான் மனோஜயம் பண்ணினவர்;இந்திரியங்களை ஜயித்தவர். "ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம்" என்று சொல்லியிருக்கிறது. தூக்கிய கையோடு அவர் நிற்பதை தரிசனமும், தியானமும் பண்ணினோமானால் அவர் நமக்கு அபயம் தருவதோடு இந்த ஸம்ஸார ஸமுத்ரத்தை, மனஸின் அலை கொந்தளிப்பை அடக்கி ஸௌக்யமும் சாந்தியும் தருவார்.

---

## தெய்வத்தின் குரல்
## *ஒரு ராஜா ராணி கதை*

ராஜா ஒருத்தன். ராஜா என்றிருந்தால் சத்ரு ராஜா, யுத்தம் எல்லாமும் இருக்கத்தானே செய்யும்? இந்த ராஜாவை எதிர்த்து எதிரி ராஜா வந்தான். இவனுடைய துரதிருஷ்டம், யுத்தத்தில் இவன் தோற்றுப் போனான்.

'வெற்றி;இல்லாவிட்டால் வீர ஸ்வர்க்கம்!' என்று சில ராஜாக்கள் யுத்த பூமியிலேயே உயிரை விட்டு விடுவார்கள் தோற்றுப் போனால் ஓடி ஒதுங்கிப் பதுங்கிக் கொள்வார்கள். இவர்கள் எல்லோருமே வீரத்திலோ மானத்திலோ குறைந்தவர்கள் என்று அர்த்தம் இல்லை. பாய்கிற புலி பதுங்கும் என்கிற மாதிரி இவர்கள் பதுங்குவது பிற்பாடு படையெடுத்துப் பழி வாங்குவ - தற்காகத்தான். மகாசூரர்களும், மானஸ்தர்களுமான ராஜபுத்ர ராஜாக்கள் கூட, இப்படி முஸ்லீம்களின் படையெடுப்பின் போது ஒடிப்போய், பிறகு பெரிய சைனியம் திரட்டிக் கொண்டு வந்து சண்டை போட்டிருக்கிருக்கிறார்கள்.

என் 'கதை- ராஜாவும்'தோற்றுப் போனவுடன் பிராணஹத்தி பண்ணிக் கொள்ளாமல் ஓடிப்போய்விட்டான்.

அவன் மட்டுமாக ஒடவில்லை. அவனது பத்தினியையும் குதிரை மேல் வைத்துக் கொண்டு ஓடினான். அப்போது அவள் நிறை கர்ப்பிணி. இந்த நாளில் "அண்டர்க்ரவுண்ட்டாக போவது என்ற மாதிரி அப்போதும் உண்டு. இந்த ராஜாவுக்கு ரொம்பவும் அபிமான மந்திரி இப்படித்தான் தலைமறைவாகிவிட்டான். ராஜாவும் ராணியும் தப்பித்து ஓடியது அவனுக்கு மட்டும் அப்போதே தெரியும்.

ராஜாவின் குதிரை பிரதேசத்தில் போய்க் கொண்டிருந்தது. அவனைத் தேடிப் பிடித்து வர, சத்ரு ராஜா நாலாபக்கமும் குதிரைப் படையை அனுப்பியிருந்தான். அவர்களில் சிலர் இந்தக் காட்டுக்கே வந்துவிட்டார்கள். ராஜா போவதைத் தூரத்தில் பார்த்து அவனைப் பின் தொடர்ந்து துரத்தி வந்தார்கள். இவனைத் துரதிருஷ்டமும் துரத்திக் கொண்டு வந்தது. சத்ருக்கள் கிட்டே வந்து விட்டார்கள்.

பக்கத்திலே ஒரு வேடன் குடிசை இருந்தது. அதைப் பார்த்ததும் ராஜாவுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. குதிரையை நிறுத்தி , அதிலிருந்து இறங்கினான். ராணியையும் இறக்கினான். "சத்ருக்கள் என்னை விடமாட்டார்கள். அவர்கள் ஏராளமான பேர்கள் இருப்பதால் நான் எதிர்த்து எதுவும் பண்ணுவதற்கில்லை. என் முடிவு நிச்சயம். ஆனால் என்னோடு நீயும் போய்விடக்கூடாது. ஏன் சொல்கிறேன் என்றால், என்னால் பழி வாங்கமுடியாவிட்டாலும், இப்போது நீ கர்ப்பவதியாக இருக்கிறாயவல்லா?உனக்கு நம் குலம் விளங்க ஒரு புத்திரன் பிறந்தாலும் பிறக்கலாம்;பிறக்கப் போகும் பிள்ளையாவது சத்ருவை ஜயித்து

ராஜ்யத்தை மறுபடியும் நம் பரம்பரையின் கைக்குக் கொண்டு வரவேண்டும். ஆகையால் நீ பதிவிரதை என்பதற்காக என்னோடு செத்துப் போவதை விட, என் மனோரதத்தைப் பூர்த்தி பண்ணுவதற்காகவே உயிரோடிருந்து பிள்ளையைப் பெற்று வளர்க்கவேண்டும். இந்த வேடன் குடிசையில் அடைக்கலம் புகுந்து பிழைத்துக் கொள்' என்று ராணியிடம் ராஜா சொன்னான்.

அவளுக்கு அது தாங்க முடியாத கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனாலும் ராஜதர்மம் என்ற ஒன்று, அதற்கென்றே மானம், கௌரவம் என்றெல்லாம் இருந்ததால், பதியின் வார்த்தையை அவளால் தட்டமுடியவில்லை. 'புருஷன் சொல்வதுதானே நமக்கு வேதம்?அவன் சா என்றால் செத்துப் போகத் தயாராக இருக்கிற மாதிரியே, செத்துப் போவதுதான் சந்தோஷம் என்கிற ஸ்திதியில் அவன், 'சாகாதே. நீ உயிரோடுதான் இருக்கவேண்டும்'என்றால் அதையும் நாம் கேட்டுத்தானாக வேண்டும்'என்று தன்னைத் தானே ஒரு மாதிரி தேற்றிக் கொண்டு குடிசைக்குள் போய் மறைந்து கொண்டு விட்டாள்.

சத்ரு வீரர்கள் வந்து ராஜாவைப் பிடித்துக் கொண்டார்கள். அவன் கதை அத்தோடு முடிந்தது. அவர்களுக்கு ராணியையும் இவன் கூட அழைத்து வந்தது தெரியாது. 'தனக்கு என்ன ஆபத்து வந்தாலும் வரட்டும்;அவளுக்கு வரக்கூடாது'என்று தான் இவன் குதிரையில் அவளை முன்னே உட்கார வைத்து மறைத்துக் கொண்டு ஒட்டினான். பின்னாலிருந்து வந்த எதிரிகளுக்குக் குதிரை மேல் இவனுக்கு முன்னால் அவள் உட்கார்ந்த்திருந்தது தெரியவில்லை.

அதனால் ராணியைத் தேடிப் பார்க்காமலே அவர்கள், வந்த காரியம் முடிந்தது என்று சந்தோஷமாகப் போய்விட்டார்கள். வேடன் குடிசையில் வேடனின் அம்மாக் கிழவி இருந்தாள். பூர்ண கர்ப்பினியாகத் தஞ்சம் என்று வந்த ராணியை மனஸார வரவேற்று வைத்துக் கொண்டாள்.

படித்தவர்கள், நாகரிகக்காரர்கள் என்கிற நம்மை விட,பாமரமான ஏழை ஜனங்களிடம் உபகாரம் செய்கிற ஸ்வபாவம் , விஸ்வாசப் பண்பு எல்லாம் எக்காலத்திலும் ஜாஸ்திதான். ராஜ ஸ்திரீயை வேட ஸ்திரீ தன் வயிற்றில் பிறந்த மகளைப் போல் வைத்துப் பராமரித்தாள்.

ராணி வயிற்றில் ஒரு பிள்ளை பிறந்தது அதோடு தன் கடமை ஆகிவிட்டது என்கிற மாதிரி பிரஸவத்திலேயே ராணி மரணம் அடைந்து விட்டாள். பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகிவிட்டது. சத்ரு ராஜாவே பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான். ஆனாலும் ஜனங்களுக்கு அதில் திருப்தியில்லை. ஒரு ராஜ்யம் தோற்றுப் போனால்கூட ஜனங்களுக்குத் தங்கள் பழைய பாரம்பரிய ராஜா இல்லையே என்று தாபம் இருந்து கொண்டே தான் இருக்கும்.

இந்த 'கதை-ராஜ்ய'த்திலிருந்த ஜனங்களுக்கு ராஜாவோடு ராணியும் தப்பித்துப் போனதோ, காட்டிலே அவளுக்குக் குழந்தை பிறந்ததோ தெரியாது, அதனால்

தங்கள் கஷ்டத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு பொறுமையோடு இருந்தார்கள்.

மந்திரிக்கு மட்டும் ராஜ தம்பதி இரண்டு பேருமே ஒடியது தெரியுமல்லவா?அதனால் அவன் யோசித்தான். 'ஈச்வர கிருபையில் ராணிக்குப் பிள்ளைக் குழந்தையாகவே பிறந்திருந்து, அது இப்போது எங்கேனும் வளர்ந்துவந்தால் பன்னிரண்டு வயசு இருக்கும் அல்லவா?பாரம்பரியமான யுவராஜா என்றால் சைன்யத்தை நடத்தி யுத்தம் பண்ணவும், மந்திரிகளின் ஆலோசனையோடு ராஜ்ய பாரம் பண்ணவும் பன்னிரண்டு வயசு போதுமே!அதனால், ராஜகுமாரன் கிடைக்கிறானா என்று தேடிக் கண்டுபிடித்து அவனை கொஞ்சம் தநுர்வேதத்தில் (போர்ப் பயிற்சியில்) தேற்றிவிட்டால், ஜனங்கள் ஒரு மனஸாக அவன் கீழ் சேர்ந்து சத்ரு ராஜாவை அப்புறப்படுத்துவார்களே! என்று நினைத்தான்.

ரகசியமாக கோஷ்டி சேர்த்து, அவன் பழைய ராஜாவின் சந்ததி இருக்கிறதா என்று தேடினான். வேடனின் குடிசைக்கு வந்து சேர்ந்தான். அங்கே அநேக வேடப் பசங்களோடு ராஜாவின் பிள்ளையும் ஒரு கோவணத்தைக் கட்டிக் கொண்டு, தலையை முடிந்து இறக்கை சொருகிக் கொண்டு, குந்துமணி மாலையும் புலிநகமும் போட்டுக்கொண்டு அணில் குத்தி விளையாடிக் கொண்டிருந்தான். ஆனாலும் வம்சவாரியான ராஜ களை, பழைய ராஜாவின் ஜாடையெல்லாம் அவனுக்கு இருந்ததால், புத்திசாலியான மந்திரிக்கு ஊகமாக புரிந்தது.

அந்த கிழவி இப்போதும் உயிரோடு இருந்தாள். அவளிடம் கேட்டான். காட்டு ஜனங்களுக்கு சூது, வாது, பொய், புரட்டு தெரியாது. அதனால் அவள் உள்ளபடி சொன்னாள். ரொம்ப வருஷம் முந்தி ஒரு கர்ப்பிணி இங்கே வந்து அடைக்கலம் கேட்டாள். அவளை நான் என் மகள் மாதிரி வளர்த்தேன். ஆனாலும் அவள், தான் யார், என்ன என்று சொல்லிக்கொள்ளாமலே இந்தப் பிள்ளையை பெற்றுப் போட்டுவிட்டுக் கண்ணை மூட்க்கொண்டு போய்விட்டாள். அதற்கப்புறம் இந்தப் பிள்ளைக்கு நானே அம்மாவாக இருந்து வளர்த்து வருகிறேன். ராஜகுடும்பம் மாதிரியான பெரிய இடத்து வாரிசு என்று ஊகிக்க முடிந்தாலும் இன்னார் என்று எங்களுக்கு நிச்சயமாகத் தெரியாது. எங்களில் ஒருத்தனாக எங்களோடேயே வைத்துப் பராமரித்துக் கொண்டிருக்கிறோம்"மந்திரிக்கு உடனே இரண்டும் இரண்டும் நாலு என்கிற மாதிரி 'நம் ராஜகுமாரன்தான் இங்கே வளர்வது' என்று புரிந்து விட்டது. அதை அவன் சொல்லி , பிள்ளையை அழைத்துப் போக முன்வந்தவுடன், கிழவி, வேடன் எல்லோருக்கும் ரொம்பவும் கஷ்டமாகி விட்டது. வளர்த்த பாசம்! ஆனானப்பட்ட கண்வ மஹரிஷி, ஜட பரதர் மாதிரியானவர்களையே வளர்த்த பாசம் ஆட்டி வைத்திருக்கிறதே!ஆனாலும் ராஜ்யகாரியம் என்பதால், இந்த வேடர்கள் தியாக புத்தியோடு ஏற்றுக் கொண்டார்கள்.

ஆனால் வேடப்பிள்ளைகளோடு விளையாடிக் கொண்டிருந்த ராஜகுமாரனை

மந்திரி கூப்பிட்டதும், அவன் விழுந்தடித்துக் கொண்டு ஓடப்பார்த்தான். அவனுக்கு வேட சகவாசம்தான் பிடித்ததே தவிர, இந்தப் பெரிய மநுஷ சம்பந்தம் பிடிக்கவேயில்லை.

வேடப்பிள்ளை மாதிரியே, "இவங்கள்ளாந்தான் என் ஜாதி, ஜனங்க, இவங்களைவிட்டு வரமாட்டேன்"என்று ஒடினான். அப்புறம் அவனைப் பிடித்து வந்து மந்திரி அவனுக்கு வாஸ்தவத்தையெல்லாம் விளக்கிச் சொன்னான். "நீ ராஜகுமாரன். நீ பிறக்கும் முன்பே, சத்ருக்களிடமிருந்து தப்பி இங்கே ஓடிவந்த உன் தகப்பனார் கொல்லப் பட்டார்.அதற்கப்புறம் வேடர் குடிசையில் உன்னைப் பிரஸவித்து விட்டு உன் அம்மாவும் போய்விட்டாள். அதிலிருந்து நீ இங்கே வளர்ந்து வருகிறாய். ஆனாலும் நீ ராஜ்யத்தையெல்லாம் ஆள வேண்டியவன். உன்னைத் தலைவனாக வைத்துக் கொண்டு தான் நாங்கள் அதை சத்ருக்களிடம் மீண்டும் ஜயிக்க ஆலோசனை செய்திருக்கிறோம். இப்போது நீ இருப்பதைவிடக் கோடி மடங்கு உயர்ந்த ஸ்திதியில் இருக்க வேண்டியவன். 'மாட்டேன்"என்று சொல்லலாமா ?என்று எடுத்துச் சொல்லி விளக்கினான். அந்த பிள்ளைக்கு வீரம், பித்ருபாசம், அதற்காக எதிர் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்ற ஆர்வம் எல்லாவற்றையும் மூட்டி விட்டான்.தான் ராஜகுமாரன் என்று தெரிந்தவுடனேயே, அந்தப் பிள்ளைக்கு ரொம்ப சக்தி, தேஜஸ், காம்பீர்யம் எல்லாம் உண்டாகிவிட்டது. அப்புறம் அவனுக்கு அஸ்திர சஸ்திர அப்பியாஸம், கொஞ்சம் சொல்லிக் கொடுத்தவுடனேயே அவற்றை நன்றாகப் பிடித்துக் கொண்டான். வேட ஜனங்களை விட்டுப் போனான். மந்திரியின் சகாயத்துடன் நாட்டில் சைனியம் திரட்டினான். ராஜ விச்வாஸம் கொண்ட ஜனங்கள், தங்கள் பழைய பாரம்பரிய வாரிசு வந்திருக்கிறான் என்றவுடன் உத்ஸாகமாக அவன் கீழ் ஒன்று சேர்ந்தார்கள்.

இப்போதெல்லாம் குடியரசு யுகத்தில் ஒருத்தரைத் தலைவர் என்று ஸ்தோத்திரம் பண்ணி ஊரையெல்லாம் இரண்டு படுத்துகிற மாதிரி டெமான்ஸ்டரேஷன்கள் பண்ணிவிட்டு, கொஞ்ச காலமானால் அவரை எவரும் சீந்தாமல் தூக்கிப் போடுகிற மாதிரி இல்லை, ராஜ விஸ்வாசம் என்பது. அது நின்று நிலைத்து ஹ்ருதயபூர்வமாக இருந்து வந்த விஷயம். ராஜாக்களும் இந்த விஸ்வாசத்தைப் பெறுவதற்குப் பாத்திரர்களாகவே ரொம்பவும் ஒழுக்கத்தோடு குடிஜனங்களைத் தம் பெற்ற குழந்தைகளைப் போலப் பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று அதிகாரம் வந்து, அந்த ருசியில் கண்டது காணாதது போல் ஒழுங்கு தப்பிப போகிற மாதிரி இல்லை, பாரம்பரிய ராஜயாதிகாரம் என்பது. இந்தக் கதையில் வரும் பையன் மாதிரி திடீர் அதிகாரம் வந்தால்கூட பாரம்பரியப் பண்பு அவர்கள் தலைதெறிக்கப் போகாமலே கட்டுப்படுத்தும். புராணங்களைப் பார்த்தால் வேனனையும் அஸமஞ்ஜனையும் பல் எங்கேயாவது நூற்றிலே ஒரு ராஜாவோ ராஜகுமாரனோ முறை தப்பிப் போனால் அப்போது ஜனங்களே அதனைத் தொலைத்து முழுகியிருக்கிறார்கள். மொத்தத்தில் 'யதா ராஜா ததா ப்ரஜா'(அரசன் எவ்வழி;மக்கள் அவ்வழி) என்ற மாதிரி, அப்போது இரண்டு

பக்கத்திலும் தர்மத்துக்குப் பயந்தவர்களாக இருந்தார்கள். சட்டம் என்று வெறும் ராஜாங்க ரீதியில் போடுகிறபோது, முதலில் அதைப் பண்ணுகிறவர்கள் சரியாகயிருக்கிறார்களா என்ற கேள்வி வருகிறது. இந்த சட்டங்களுக்கெல்லாம் மேலான த்ரிலோக ராஜாவான பரமேச்வரனின் சட்டமான தர்மசாஸ்திரத்துக்கு அடங்கியே ஆளுகிறவர்கள், ஆளப்படுகிறவர்கள் ஆகிய இருவரும் இருந்தால்தான் லோகம் நன்றாயிருக்கும். பூர்வகாலங்களில் ஆளப்படுகிறவர்களுக்கும் ஆளுகிறவர்களே இப்படி தர்மத்துக்கு அடங்கியிருந்து வழி காட்டி - யிருக்கிறார்கள். இதனால்தான் ஜனங்களுக்கு ஸ்வபாவமாக, ரஜவிஸ்வாசம் என்ற ஆழ்ந்த, நிஜமான பற்று இருந்து வந்திருக்கின்றது.

'இவர்கள் தன் ஜனங்கள் 'என்ற பாந்தவ்யம் ராஜாவுக்கும், 'இவன் நம் ராஜா'என்ற அன்பு ஜனங்களுக்கும் இருந்து வந்தது. கதையில் சொன்ன பையன், சத்ருவை ஜயிக்க மந்திரியின் ஏற்பாட்டில் ஆயத்தம் பண்ணுகிறான் என்றவுடன் ஜனங்களெல்லாம் அவன் கட்சியில் சேர்ந்து யுத்தத்துக்கு கிளம்பிவிட்டார்கள். சுலபத்தில் சத்ருவை ஜயித்தும் விட்டார்கள். பையனுக்கு பட்டாபிஷேகம் பண்ணி ராஜா ஆக்கினார்கள். அவனுக்குத் தான் வேடனாக இருந்த எண்ணமே அடியோடு மறந்து போய்விட்டது. பூர்ண ராஜாவாகவே இருந்தான். இந்தக்கதையை நான் சொல்லவில்லை. பெரிய ஆசார்யர் ஒருத்தர், அத்வைத ஸம்பிரதாயத்தின் ஆதிகாலப் பிரவர்த்தகர்களில் ஒருத்தர் சொல்லியிருக்கிறார். குரு தத்வத்தைச் சொல்லும்போது இப்படிக் கதை சொல்லியிருக்கிறார். நான் கொஞ்சம் காது,மூக்கு வைத்தேன்.

## தெய்வத்தின் குரல்
## குரு பரம்பரை

அத்வைத ஆசார்யர் என்றால் உடனே எல்லோரும் நம்முடைய ஸ்ரீ சங்கர பகவத் பாதாளைத் தான் நினைத்துக் கொள்வீர்கள். அவர் தான் பரமேச்வராவதாரமாக வந்து, அத்வைதத்தை நன்றாக விளக்கி, என்றைக்கும் பெயர்க்க முடியாமல் ஸ்தாபனம் செய்துவிட்டுப் போனவர். ஆனால் அவர்தான் அத்வைத ஸித்தாந்தத்தை முதலில் கண்டுபிடித்தார் என்றில்லை. அவருக்கு ரொம்ப முன்னாடி லோகத்தின் முதல் கிரந்தமான வேதத்திலேயே - இப்படிச் சொல்வதுகூட தப்பு. லோகத்தையே பிரம்மா வேதத்தை guide ஆக வைத்துக் கொண்டுதான் சிருஷ்டி பண்ணியிருக்கிறார். அதனால் அதை லோகத்தின் முதல் கிரந்தம் என்கிறது கூட சரியில்லைதான். அப்படிப்பட்ட, லோக சிருஷ்டிக்கும் முந்தியதான வேதத்திலேயே - அத்வைத தத்துவம் சொல்லியிருக்கிறது. வேத சிரஸ் (மறைமுடி) என்கிற உபநிஷத்துகளிலெல்லாம் இந்தத் தத்துவம் நிறைய சொல்லப்பட்டிருக்கிறது. கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில் முடிவாக

இதைத்தான் சொல்லியிருக்கிறார். 'கீதை' என்றால் 'பகவத் கீதை'என்றே இப்போது பிரஸித்தமாயிருந்தாலும், ஒவ்வொரு ஸ்வாமிக்குமான புராணத்தைப் பார்த்தால் 'தேவி கீதை', 'சிவ கீதை' என்றெல்லாம் வரும். அந்த தெய்வங்களும் முடிவாக அத்வைத உபதேசமே செய்திருக்கின்றன. அப்புறம் ஆசார்யாள் (ஆதிசங்கரர்) வரையில் அநேக குருக்கள் வந்திருக்கிறார்கள். தக்ஷிணாமூர்த்தி, தத்தாத்ரேயர், நாராயணன், பிரம்மா ஆகியவர்களை அத்வைத சம்பிரதாய ஆசாரிய வரிசையில் முதலில் சொல்வது வழக்கம். இந்தத் தெய்வக்குருக்களுக்கு அப்புறம் வசிஷ்டர்,சக்தி, பராசரர், வியாஸர் என்ற ரிஷிகள் அத்வைதத்தை அப்பாவிடமிருந்து பிள்ளையாகப் பெற்று உபதேசம் செய்திருக்கிறார்கள். இவர்கள் ரிஷிகள். ரிஷிகளை மநுஷ்ய ஆசார்யர்களோடு சேர்க்கக் கூடாது. மநுஷ்யர்கள் அறியமுடியாததை அறிகிற, மநுஷ்யர்கள் கேட்காததைக் கேட்கிற , மநுஷ்யர்களால் செய்ய்முடியாததைச் செய்கிற அதீந்திரிய சக்திகள் உள்ளவர்களே ரிஷிகள். ஆகாசத்தில் பரவியுள்ள பரமாத்மாவின் சுவாஸ சலனங்களான சப்தங்களை மந்திரங்களாகப் பிடித்துத் தரக்கூடிய மகாசக்தி படைத்தவர்கள். அதனால் இவர்களை சாதாரணமாக மநுஷ்ய இனத்தோடே சேர்ப்பதில்லை.

உதாரணமாக, கோவில்களில் பிரதிஷ்டையாகியிருக்கிற மூர்த்திகளை நாலைந்து தினுசாகப் பிரித்திருக்கிறார்கள் - ஸ்வயம்வியக்தம், தைவிகம், மாநுஷம், ஆஸுரம், ஆர்ஷம் என்று ஸ்வாமி தானாகவே ஒரு இடத்தில் லிங்கமாகவோ, விக்ரஹமாகவோ ஆவிர்பவிப்பதற்கு "ஸ்வயம் வியக்தம்"என்று பெயர். "ஸ்வயம்பு", "சுயம்பு", "தான்தோன்றி "( "தாந்தோணியம்மன் "என்கிறதில் வரும் "தாந்தோணி ") என்பதெல்லாம் அதைத்தான். சிவ ஸ்தலங்கள் பலவற்றில் ஸ்வயம்பு லிங்கம் இருப்பதைப் பார்க்கிறோம். வைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கம், திருப்பதி, பத்ரிநாத், ஸ்ரீமுஷ்ணம், நைமிசாரண்யம், புஷ்கரம், ஸாலக்ராமம், நான்குநேரி என்று எட்டை ஸ்வயம்வியக்த க்ஷேத்ரங்களாகச் சொல்கிறார்கள். தேவர்கள் பிரதிஷ்டை பண்ணினது தைவிகம். காஞ்சீபுரத்தில் அம்பாளே மண்ணை லிங்கமாகப் பிடித்துவைத்தாள். திருவீழிமிழலையில் மஹாவிஷ்ணுவே லிங்கப் பிரதிஷ்டை செய்தார். அநேக ஸ்தலங்களில் இந்திரன் தோஷம் நீங்குவதற்காக ஈச்வரனையோ, விஷ்ணுவையோ பூஜை பண்ணினதாகச் சொல்வார்கள். இதெல்லாம் " தைவிகம் ". இதற்கு நேர் எதிர் வெட்டாக திரிசரன், ஒணன் மாதிரியான அசுரர்கள் ஸ்வாமியைப் பிரதிஷ்டை செய்த இடங்கள்தான் திரிசிரபுரம் என்ற திருச்சினாப்பள்ளி, காஞ்சீபுரத்தில் உள்ள ஒணகாந்தன் தளி முதலிய இடங்கள். Üஸுரர் பிரதிஷ்டை செய்ததுதான் "ஆஸுரம் ". மநுஷ்யர்கள் - அநேக ராஜாக்களும் பக்தர்களும் - பிரதிஷ்டை பண்ணினதுதான் "மாநுஷம் "என்று நீங்களே புரிந்துகொண்டிப்பீர்கள்.

இன்னொன்று "ஆர்ஷம்" என்று சொன்னேனல்லவா? "ஆர்ஷம் "என்றால் "ரிஷிகள் பண்ணினது" என்று அர்த்தம். குற்றாலத்தில் அகஸ்திய மஹரிஷி

மூர்த்திப் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார். சிக்கலில் வஸிஷ்ட மஹரிஷி, திருக்களரில் துர்வாஸர், ஜம்புகேச்வரம் என்ற திருவானைக்காவலில் ஜம்பு மஹரிஷி என்றிப்படி அநேக க்ஷேத்திரங்களில் ஆர்ஷப் பிரதிஷ்டைதான். ஏதோ, இப்போது நினைவில் வருவது, வாயில் வருவதை மட்டும் சொன்னேன்.

இதை எதற்கு சொல்ல வந்தேன் என்றால் பொதுவாக தேவ ஜாதி, அஸுர ஜாதி, மநுஷ்ய ஜாதி என்ற மூன்றைத்தான் நாம் சொன்னாலும், இங்கே ஆர்ஷம் என்று ரிஷிகளை மநுஷ்யர்களோடு சேர்க்காமல் தனி இனமாக வைத்திருக்கிறது என்று காட்டத்தான். மாநுஷ லிங்கம் என்று ராஜ ராஜ சோழன் பிருஹதீச்வரப் பிரதிஷ்டை பண்ணும் போதுகூட நேராக அவனே பண்ணாமல் கருவூர்ச் சித்தரைத்தான் பிராணப் பிரதிஷ்டை செய்ய வைத்திருக்கிறான். இதே மாதிரி "ரிஷிகள்" என்று சொல்லுகிற அளவுக்கு திவ்ய சக்தி இல்லாதவர்களானாலும் அந்தந்தக் காலத்தில் உள்ள மஹான்களை, ஸித்த புருஷர்களைக் கொண்டே மாநுஷ லிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. இப்போதுகூட காலனிக்குக் காலனி புதுக்கோயில் கட்டுகிறபோது யாராவது ஒரு ஸ்வாமிகளைக் கூப்பிட்டு வைத்துக் கொண்டுதானே கும்பாபிஷேகம் பண்ணுகிறீர்கள் ?ஆனால் பிராணப் பிரதிஷ்டை முதலானதுகளை சிவாச்சாரியர்களோ, பட்டர்களேதான் செய்கிறார்கள். இவர்கள் நியமத்தோடு செய்தால், மந்திரங்களுக்கே ஸ்வயமான வீர்யம் உண்டாதலால், மந்திரவத்தாக இவர்கள் செய்யும் பிரதிஷ்டையிலும் தெய்வ சாந்நித்யம் உண்டாகி லோகத்துக்கு க்ஷேமம் உண்டாகும்.

ரிஷிகள் தனி இனம் மாதிரி என்று சொல்ல வந்தேன். தேவ தர்ப்பணம் என்னும் போதும் ரிஷிகளைத் தனி இனமாகத்தான் வைத்திருக்கிறது. அத்வைத ஸம்பிராயத்தில் தக்ஷிணாமூர்த்தி, தத்தர், நாராயணர், பிரம்மா ஆகிய தேவர்களுக்கு அப்புறம், வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர் என்ற ரிஷிகள் குருமார்களாக வந்தார்கள். வியாஸரின் பிள்ளை சுகர். அவர் மநுஷ்யர், ரிஷி தேவர் எல்லாரையும்விடப் பெரியவர். சுகப்பிரம்மம் என்று சொல்லப்பட்டவர். பிரம்மமாக இருந்த சுகர் பிரம்மச்சாரி. அதனால் அவருக்கப்புறம் பிள்ளை வழியில் சம்பிரதாயம் போகவில்லை. சிஷ்யர் வழியில் போயிற்று. சுகருக்கு அப்புரம்தான், ரிஷிகள் என்று சொல்ல முடியாத ஸந்நியாஸிகளான கௌடபாதரும், அவருக்கப்புறம் அவருடைய சிஷ்யரான கோவிந்த பகவத்பாதரும் அத்வைத ஆசார்யர்களாக வந்தார்கள். ரிஷிகள் எல்லோரும் ஸந்நியாஸிகள் அல்ல. அவர்கள் பத்னிகளோடு இருந்திருக்கிறார்கள். அருந்ததி வஸிஷ்ட மஹரிஷிக்கு பத்தினி, அநுஸூயை அத்ரி மஹரிஷிக்கு பத்தினி என்றெல்லாம் படிக்கிறோமல்லவா?யக்ஞம், யக்ஞோபவீதம் (பூணூல்) முதலியவை ரிஷிகளுக்கு உண்டு. ஸந்நியாஸிகளுக்கு இவை இல்லை. ஸந்நியாஸிகளான கௌடபாதருக்கும் கோவிந்த பகவத்பாதர்களுக்கும் அப்புறம்தான் "ஆசார்யாள்" என்ற மாத்திரத்தில் குறிப்பிடப்படும் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் வந்தார்கள். சுகர் முதல் வருகிற துறவிகளான ஆசார்யர்களுக்குப்

"பரிவ்ராஜகர்கள்"என்று பெயர். "பரமஹம்ஸ பரிவ்ராஜக"என்பது வழக்கம். பரமேச்வரனானாலும் மநுஷ்ய ரூபத்திலேயே இருந்து கொண்டு, மநுஷ்யர் மாதிரியே காரியம் செய்து காட்டினவர் நம் ஆசார்யாள். மநுஷ்யராக இருந்து கொண்டே ரொம்பவும் சக்தியோடு வைதீக தர்மத்தை, அத்வைதத்தை நிலை நாட்டியதுதான் அவர் பெருமை.

ஆசார்யாளுடைய நேர் குரு என்பதால் கோவிந்த பகவத்பாதருக்குப் பெருமை. ஆசார்யாளே "பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம்" என்று மூன்று தரம் சொல்லும்போது, கிருஷ்ணனோடு கூடத் தம் குருவையும் நினைத்துக் கொண்டுதான் சொல்லியிருக்கிறார். பகவானுக்கு எத்தனையோ நாமாக்கள் இருந்தாலும், ஆசார்யாள் 'கோவிந்த' நாமத்தையே 'ஸெலக்ட்'பண்ணினதற்குக் காரணம், அது தம் குருவின் பெயராகவும் இருக்கிறது என்பதுதான்.

நாராயணம், பத்மபுவம், வஸிஷ்டம்

சக்திம் ச தத்புத்ர பராசரம் ச ।

வ்யாஸம் சுகம் கௌடபதம் மஹாந்தம்

கோவிந்த யோகீந்த்ரம் அதாஸ்ய சிஷ்யம்।।

ஸ்ரீ சங்கராச்சார்யம் அதாஸ்ய பத்ம

பாதம் ச ஹஸ்தாமலகம் ச சிஷ்யம்।

தம் தோடகம் வார்த்திககாரம் அன்யான்

அஸ்மத் குரூன் ஸந்ததம் ஆனதோஸ்மி।।

என்கிற ச்லோகத்தில், அத்வைத ஆசார்ய பரம்பரையை முழுக்க சொல்லி, "இப்படிப் பட்ட எல்லோரையும் நமஸ்காரம் பண்ணுகிறேன்" என்று முடித்திருக்கிறது. அத்வைத குரு பரம்பரையை "பிரம்ம வித்யா ஸம்பிரதாய கர்த்தா"க்கள் என்றே சொல்வார்கள். இதில் முதலில் நாராயணன். அதாவது மஹாவிஷ்ணு. அப்புறம் " பத்மபுவன்" என்றது பிரம்மா;தாமரையில் உண்டானவர் என்று அர்த்தம். அதற்கப்புறம் வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், கௌடர், கோவிந்த பகவத் பாதர் இவர்களைச் சொல்லி , இப்படிச் சொல்லும்போதே கௌடபாதருக்கு மஹான் (மஹாந்தம்) என்றும் கோவிந்தருக்கு யோகீந்திரர் என்றும் சிறப்புக் கொடுத்திருக்கிறது. ஆசார்யாளுக்கு மட்டும் "ஸ்ரீ"போட்டுத் தனி மரியாதை கொடுத்து கௌரவம் சொல்லியிருக்கிறது. அதற்கப்புறம், ஆசார்யாளின் முக்கியமான சிஷ்யர்களாக இருக்கப்பட்ட பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், ஸுரேச்வரர் ஆகியோர்களை சொல்லியிருக்கிறது. ஸுரேச்வரர் என்று சொல்லாமல் "வார்த்திககாரர்"என்று

சொல்லியிருக்கிறது. "வார்த்திகம்" என்ற விளக்கவுரை எழுதியவர் ஸுரேச்வரர். அதனால் இப்படிச் சொல்லியிருக்கிறது. "வார்த்திகம்" என்றால் பாஷ்யம், வியாக்யானம், விரிவுரை என்ற மாதிரியான விளக்கம். உபநிஷதங்களை விளக்கி ஆசார்யாள் பாஷ்யம் எழுதினாரென்றால், அவற்றில் பிருஹதாரண்யம், தைத்திரீயம் இவற்றுக்கான பாஷ்யங்களையும் இன்னும் விரிவாக விளக்கி "வார்த்திகம்" எழுதினவர் ஸுரேச்வராச்சாரியாள். இவர் வரையில் பேரைச்சொல்லி, அப்புறம் தனியாகப் பேர் சொல்லாமலே, "அவர்களுக்கப்புறம் இன்றுள்ள எங்கள் குருவரைக்கும் வந்துள்ள எல்லா ஆசார்யார்களுக்கும் நமஸ்காரம் பண்ணுகிறேன்"என்று ச்லோகம் முடிகிறது.

இங்கே சொன்னது ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களை ஆசார்யராகக் கொண்டவர்களின் குரு பரம்பரா ச்லோகம். மற்ற ஸம்பிரதாயத்தவர்களும் தங்கள் தங்கள் குரு பரம்பரையைத் தெரிந்து கொண்டு,அவர்கள் பெயரைச் சொல்லி நமஸ்காரம் பண்ண வேண்டும்.

ஆத்ம ஜ்யோதிஸை(ஜோதியை)ப் பூர்ணமாகப் பிரகாசிக்கச் செய்யவும், துக்கமில்லாமல் இருப்பதற்குரிய ஸாதனங்களைச் சொல்லவும் நமக்கு ஆசாரிய பரம்பரை வேண்டும். ஒரு ஆசாரியர் தமக்குப் பிற்காலத்தில் தம் காரியத்தைச் செய்ய  மற்றொருவருக்கு அதிகாரம் கொடுக்கிறார். இப்படி வருபவர்களின் வரிசைதான் ஆசாரிய பரம்பரை. அந்தப் பரம்பரை விஷயத்தில் நாம் நிரம்ப நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். ஆத்ம ஸ்யோதிஸை அடையவேண்டிய மார்க்கமாகிய நிதியைக் காப்பாற்றித் தந்தவர்கள் அவர்களே!யார் யார் மூலமாக இந்த நிதியானது லோகத்தில் இன்றுவரையில் அநுக்கிரஹம் உண்டாகும். ஆகவே குரு பரம்பரா ஞானமானது ஆத்ம தத்வத்தில் நாட்டமுடையவர்களுக்கு அவசியம் இருக்க வேண்டும்.

சாச்வத ஐச்வர்யமான ஆத்ம ஸாம்ராஜ்யத்தை நமக்குக் காட்டிக் கொடுத்த இந்த எல்லா ஆசார்யர்களின் பெயரையும் தினமும் சொல்லி, இந்த ச்லோகத்தால் அவர்களையெல்லாம் அனைவரும் நமஸ்கரிக்க வேண்டும்.  இங்கே ஆத்ம ஸாம்ராஜ்யம் என்று சொன்னேன். முதலில் ஒரு வேடப் பையனுக்கு ஸாம்ராஜ்யம் கிடைத்த கதையில் ஆரம்பித்தேன். அப்புறம் எங்கேயோ அத்வைத குரு பரம்பரை என்று கொண்டு போய்விட்டேன்!அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?சொல்கிறேன்:

ஆசார்யாளுக்கு முந்தி மநுஷ்ய ரூபத்தில் இருந்து கொண்டு அத்வைதோபதேசம் செய்தவர்களில் அவருடைய குருவான கோவிந்தர், குருவுக்கு குருவான பரமகுரு கௌடபாதர் ஆகிய இரண்டு பேரை மட்டும்  ச்லோகத்தில் சொல்லியிருந்தாலும், லோகத்திலும் பொதுவாக இந்த இருவரின் பேர் மட்டும் கொஞ்சம் தெரிந்திருந்தாலும் வேறு சில மநுஷ்ய ரூப அத்வைத ஆசார்யர்களும் நம் பகவத்பாதாளுக்கு முந்தியே, சுகருக்கு அப்புறம் இருந்திருக்கிறார்கள்.

நாராயணணிலிருந்து சுகர் வரையிலானவர்களை, அத்வைதிகளைப் போலவே மற்ற ஸித்தாந்திகளும் தங்கள் தங்கள் கொள்கைகளுக்கு மூல புருஷர்களாக வைத்துக் கொண்டு நமஸ்காரம் செய்கிறார்கள். ஆனால் கௌடபாதர், கோவிந்த பகவத்பாதர் இருவரும் அத்வைதந்தான் தத்வம் என்று, மற்ற ஸித்தாந்தங்களை நிராகரித்துத் தீர்மானம் பண்ணியிருப்பதால், இவர்கள் அத்வைதிகளுக்கு மட்டுமே ஆசார்யர்கள் ஆவர். இப்படி exclusive- ஆக அத்வைதத்துக்கு மட்டுமே கிரந்தங்கள் உபகரித்தவர்களில் ஆசார்யாளுக்குப் பூர்வத்தில் வேறு சிலரும் இருந்திருக்கிறார்கள். அவர்கள் பேரையாவது உங்கள் காதில் போட்டு வைக்கிறேன். ஆத்ரேய பிரம்மநந்தி என்பவர் ஒருத்தர்; ஸுந்தர பாண்டியர்கள் என்று ஒருவர் (ஏதோ தெற்கத்தி ராஜா பேர் மாதிரி இருக்கிறது!) ;பர்த்ரு ப்ரபஞ்சர் என்று இன்னொருவர்;பர்த்தருஹரியும் ஒருவர். ப்ரம்மதத்தர் என்று ஒருத்தர் ஸூத்ர பாஷ்யமே பண்ணியிருப்பதாகத் தெரிகிறது. இந்த த்ரவிடாசாரியரை விசிஷ்டாத்வைதிகளும் தங்கள் ஸித்தாந்தத்தை ஆதரிப்பவர் என்று சொல்லிக் கொள்வதுண்டு.

இவர்களுடைய கிரந்தம் எதுவும் இப்போது பூர்ணமாக நமக்குக் கிடைக்காவிட்டாலும், ஸாக்ஷாத் நம் சங்கர பகவத்பாதாள் உள்படப் பிற்கால அத்வைத கிரந்த கர்த்தாக்கள் இவர்களை மேற்கோள் காட்டியிருக்கிறார்கள். இவர்களில் த்ரவிடாசார்யார்தான் நம் கதைக்கு சம்பந்தப்பட்டவர்.

## ªîŒõˆF¡ °ó™ - குரு
## ˆóпMì Mûò‹

îI› â¡ð¶î£¡ 'ˆóMì'('Fó£Mì‹'â¡ð¶). ºî™ â¿ˆî£ù 'î'â¡ð¶ 'ˆó' â¡Á Þ¼‚Aø¶. ÞŠð® 'ó' è£ó‹ «ê¼õ¶ ú‹v‚¼î õö‚°. «ñ«ô ªê£¡ù „«ô£èˆF™ õ¼Aø '«î£ìè˜'â¡ø «ð¬ó‚Ãì 'ˆ«ó£ìè˜' â¡ø ªê£™½Aø õö‚è‹ Þ¼‚Aø¶. Þîù£™ Cô«ð˜ ú‹v‚¼îˆ¬î«ò "ªó£‹ð' ú‹vA¼îñ£‚A '«îè‹' â¡ð¬î‚ Ãì 'ˆ«óè‹'â¡Á ªê£™Aø£˜èœ!

த - மி - ழ் என்பதில் 'த', 'த்ர' வாயிருக்கிறது. 'மி' என்பது 'வி'என்றாயிருக்கிறது. 'ம'வும் ஒன்றுக்கொன்று மாறுவதற்கு ஃபைலாஜிக்காரர்கள் (மொழி ஒப்பு இயல் நிபுணர்கள்)நிறைய உதாரணம் கொடுப்பார்கள். ஸம்ஸ்கிருதத்துக்குள்ளையே இதில் ஒன்று மற்றதாகும். உதாரணமாக 'சாளக்ராவம்' என்பதுதான் 'சாளக்ராமம்' என்றாயிருக்கிறது . சம்ஸ்க்ருதத்தில் 'மண்டோதரி'என்பதைத் தமிழ் 'வண்டோதரி' என்கிறோம். 'த்ரவிட' என்பதையே 'த்ரமிட'

என்றும் சொல்வதுண்டு. 'ழ' வும் 'ள' வும் மாறுவது சகஜம். மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களில் போனால் 'வாளைப்பளத்தில் வளுக்கி விளுந்திடப்போறே'என்று சொல்வார்கள். 'ழ'வுக்கும் 'ள' வுக்கும் ரொம்பக் கிட்டத்தில் உள்ளதுதான் 'ட' வும்.

வேதத்திலேயே 'அக்னிமீடே'என்று வருவது 'அக்னிமீளே'என்றும் மாறுகிறது. இப்படித்தான் 'தமிழ்'என்பதில் உள்ள 'ழ்' 'த்ரவிட்'என்பதன் 'ட்' ஆக இருக்கிறது.

த - 'த்ர'வாகவும், மி - 'வி'யாகவும், - ழ் - 'ட்'டாகவும் - மொத்தத்தில் 'தமிழ்'என்பது 'த்ரவிட்' என்றிருக்கிறது.

இப்போது எல்லாவற்றிலும் தமிழ் சம்பந்தம் காட்டினால் ஒரு ஸந்தோஷம் உண்டாவதால், த்ரவிடாசார்யாரைச் சொல்லும்போது அவருக்குத் தமிழ் சம்பந்தம் காட்டி நாமுந்தான் ஸந்தோஷப்படுவோமே என்று தோன்றிற்று;சொன்னேன்.

பகவத்பாதாளே 'ஸௌந்தர்யலஹரி'யில் 'அம்மா, நீ தமிழ்க் குழந்தைக்குப் பால் கொடுத்தாயே?"என்கிறபோது, "த்ரவிட சிசு" என்று பதப் ப்ரயோகம் செய்திருக்கிறார்.

'தமிழ்'தான் 'த்ரவிட்'என்றால், ஆர்யன் - திராவிடன் 'ரேஸ்தியரி'(இனக்கொள்கை)யை வைத்துக் கொண்டு தப்பர்த்தங்கள் பண்ணிக்கொள்ளக் கூடாது.

வேத சாஸ்திரங்களைப் பார்த்தால் ஆரிய, திராவிட என்று இரண்டு வேறு வேறு 'ரேஸ்'

(இனம்) என்பதற்குக் கொஞ்சம் கூட ஆதாரம் இல்லை. ஆனால் வெள்ளைக்காரர்களின் ஞிவீஸ்வீபீமீ - ணீஸீபீ - கூஷீஞூறீமீ (HKˆ¶ ÝœAø) ªè£œ¬èŠð®, Üõ¡ Þ‰î «óv - FòK¬ò, è†® M†´M†ì£¡.

சாஸ்திரப் பிரகாரம் என்ன சொல்லியிருக்கிறது?ஆரிய இனம் என்று ஒன்றைச் சொல்லவேயில்லை. 'ஆர்ய' என்றால் மதிப்புக்குரிய என்று அர்த்தம். அவ்வளவுதான். இன்றைய ரேஸ் கொள்கைப்படி, ஆரியனான அர்ஜுனனைப் பார்த்தே பகவான் கீதையிலே, "நீ என்ன இப்படி பேடி மாதிரி மனத்தளர்ச்சி அடைந்து அநார்யனாகி விட்டாயே !'என்கிறார். அநார்யன் என்றால் ஆர்யன் அல்லாதவன் என்று அர்த்தம். (முன்னே அன் சேர்த்தால் எதிர்ப்பதமாகிவிடும். இதையே இங்கிலீஷிலும் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஹாப்பிக்கு எதிர்ப்பதம் அன்-ஹாப்பி) மதிப்பிற்குரியவனாக் அல்லாமற் போய்விட்டாயே!என்பதுதான் இங்கு பகவான் சொல்வதன் அர்த்தமே ஒழிய, இனரீதியில் இங்கே அர்த்தம் பண்ணமுடியாது. பழங்காலக் காவியங்களை நாடகங்களைப்பார்த்தால் ராணிகள் அதற்கு மாறாக திராவிட புத்ரிகளாக அல்லவா இருக்க வேண்டும்? ஐயர் ஜாதிப் பெண்ணொருத்தி ஒரு ஐயங்காரப் பையனைக் கல்யாணம் செய்து கொண்டால்

தான் அவனை ஐயங்கார் வீட்டுப் பிள்ளையே! என்று கூப்பிடலாம். இவளும் ஐயங்காரானால் அப்படிக் கூப்பிடுவாளோ ? மாட்டாள். ஸீதை ராமரை ஆர்ய புத்ர என்று கூப்பிட்டபோது ஆர்ய வுக்கு ரேஸ் அர்த்தம் கொடுத்தாள் அவள்

திராவிட ஜாதி என்றாகிவிடும். இது அபத்தம். இதனால் என்ன ஏற்படுகிறது ?இங்கேயும் ஆர்ய என்றால் மதிப்புக்குகந்த என்றுதான் அர்த்தம். ஆர்யபுத்ர என்றால் மதிப்புகுகந்த குடிமகனே என்று அர்த்தம்.

ஆர்ய என்பது ஒரு இனத்தைக் குறிப்பிடுவதாக சாஸ்திரங்களில் எங்குமே சொல்லவில்லை.

த்ரவிட என்பதும் இனப்பெயராக வரவில்லை.

ஒரே இனத்தைச் சேர்ந்த பாரத ஜனங்களைத் தான் விந்தியத்துக்கு வடக்கே உள்ளவர்களை கௌடர்கள் என்றும் தெற்கே உள்ளவர்களை திராவிடர்கள் என்றும் சொல்லியிருக்கிறது. ஆர்ய-திராவிட இன வேற்றுமை இல்லை., கௌடர்-திராவிடர் என்பதாக, இனத்தை வைத்துப் பிரிக்காமல், ஒரே இனக்காரர்களைப் பிரதேச ரீதியில் பிரித்திருக்கிறார்கள். ஆதியில் விந்திய மலைக்கு வடக்கே உள்ள தேசம் முழுதும் கௌட தேசம்;அதற்குத் தெற்கில் உள்ளது முழுவதும் திராவிட தேசம் என்றிருந்தது. கௌட தேசத்தில் வசித்த கௌடர்களை மேலும் பிரதேச ரீதியில் ஐந்தாகப் பிரித்தார்கள். அப்படியே திராவிடத்தில் வசித்தவர்களையும் ஐந்தாகப் பிரித்திருக்கிறது. இவர்களைப் பஞ்ச கௌடர், பஞ்ச த்ரவிடர் என்பார்கள். பஞ்ச கௌடர்களில் ரொம்பவும் வடக்கே காச்மீரத்தில் இருந்தவர்களை ஸாரஸ்வதர்கள் என்றும் அதற்கு தெற்கே பஞ்சாபில் இருந்தவர்களை கான்யகுப்ஜர்கள் என்றும், பிறகு கிழக்குவாக்காக உத்தரப்ரதேஷ், பிஹாரில் உள்ளவர்களை மைதிலர்கள் என்றும் அப்புறம் தெற்கே ஒரிஸாவில் இருப்பவர்களை உத்கலர் என்ரும் பிரித்துவிட்டு கடைசியாகக் கிழக்குக்கோடியில் வங்காளத்தில் இருப்பவர்களுக்கு தனியாகப் பெயர் தராமல் கௌடர்கள் என்றே விட்டு விட்டார்கள். ஆக, ஸாரஸ்வதர், கான்யகுப்ஜர், மைதிலர், உத்கலர், கௌடர் ஆகிய ஐவரும் பஞ்ச கௌடர்கள். இப்படியே விந்தியத்திற்குத் தெற்கே ஐந்தாகப் பிரிக்கப்பட்ட பிரிவுகள், கூர்ஜரர் (குஜராத்தி), மஹாராஷ்ட்ரர், ஆந்திரர், கர்நாடகர், கடைசியில் தெற்குக் கோடியில் வேறு பேர் இல்லாமல் திராவிடர் என்றே வைக்கபட்ட தமிழ் தேசத்தவர். இதிலே கேரளீயர்களான மலையாளிகளைச் சொல்லாததற்குக் காரணம், மலையாள பாஷை ஆயிரம் வருஷங்களுக்கு உள்ளாகத்தான் தனி ரூபம் கொண்டிருக்கிறது. அதற்கு முந்தி அதுவும் தமிழ் தேசமாகத் தான் இருந்தது.

இரண்டு வெவ்வேறு இனமில்லை; பிரதேச ரீதியில் ஒரே இனத்தில் பத்துப்பிரிவுகள். இரண்டு பாதிகளுக்குப் பேராக இருந்த கௌடம், திராவிடம் என்பன குறிப்பாக கிழக்குக்கோடி, தெற்குக் கோடிப் பிரதேசங்களுக்கு மட்டும் பேர் ஆகிவிட்டது. இன்று கௌடர்கள் என்றாலே வங்காளிகள் என்றாகி விட்டது. ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் அந்தத் தேசத்தவர்தான். அதனால் தான் அவர்களுடைய

மடத்தை கௌடீய மடம் என்றாகிறார்கள். அப்படியே திராவிடர்கள் என்றால் முக்கியமாகத் தமிழர்கள்தான் என்று ஆகிவிட்டது. இதிலே ஒரு வேடிக்கை. வங்காளத்திலும், தமிழ்த் தேசத்திலும் தான் வெள்ளைக்கார நாகரிகமும் இங்கலீஷ் படிப்பும் முதலிலேயே வேகமாகப் பரவிற்று;பிரிட்டிஷ் ராஜ்யத்தில் எங்கே பார்த்தாலும் குமாஸ்தாக்களாகப் போனவர்களும் இந்த இருவர்தான்.

ஒரு பிரதேசத்திலிருந்து இன்னொன்றுக்குப் போனவர்களை அந்தப் பிரதேசப் பேரை வைத்தே குறிப்பிடுவார்கள். மஹாராஷ்டிரத்தில் இப்போது பலருக்கு டிலாங் என்று (இயற்) பெயருக்குப் பின்னால் வருகிறதைப் பார்க்கிறோம். இவர்களுடைய முன்னோர்கள் தெலுங்கு தேசத்திலிருந்து மஹாராஷ்டிராவிற்குப் போய் அங்கேயே ஸெட்டில் ஆகிவிட்டார்கள். தெலுங்கு என்பதன் திரிபுதான் டிலாங். இதேமாதிரி காசி முதலான அநேக உத்தரதேச ஸ்தலங்களில் இருக்கிற சில பிராம்மணர்களுக்கு த்ரவிட் என்று வம்சப் பெயர் இருக்கிறது. ஆதிகாலத்தில் தமிழ் தேசத்திலிருந்து அங்கே போய் குடியேறினவர்களின் வம்சத்தில் வந்தவர்களே இந்த த்ரவிட்கள். இப்படி திராவிடர் என்று பெயர் கொண்ட வடக்கத்தியார் எல்லாரும் பிராம்மணர்களே என்பதைக் கவனிக்க வேண்டும். ரேஸ் தியரிப்படி பிராம்மணர்கள் திராவிடர்களுக்கு மாறானவர்கள், விரோதிகள், எதிரிகள் என்று கூடச் சொல்கிறார்கள். ஆனால் வாஸ்தவத்திலோ இன்றைக்கு வடதேசத்தில் தமிழ் நாட்டுப் பிராமண வம்சத்தவர்களுக்கே தான் த்ரவிட் அடைமொழி இருக்கிறது. இதிலிருந்தே திராவிட என்பது பிரதேசத்தைக் குறிப்பதேயன்றி இனத்தைக் குறிக்கவேயில்லை என்று தெரிகிறதல்லவா?

தமிழ் தேசத்தின் உச்சாரண வழக்குப்படி த்ரவிட் என்பது தமிழ் என்று இருக்கிறது. த்ர என்பது போல ஸம்ஸ்க்ருதத்தில் ஒற்றெழுத்தோடு சேர்ந்து வருகிற 'ர'காரம் தமிழில் உதிர்ந்து விடும். ஸம்ஸ்கிருத ச்ரமண தமிழில் சமண ஆகிறது;ப்ரவாள என்பது பவளமாகிறது. இப்படியே த்ர என்பது த என்று இருக்கிறது. FóMì£„ê£˜ò£¬óŠ ðŸP„ ªê£™ô Ýó‹H˜îF™ Þ˜î¬ù á˜‚è¬î õ‰¶ «ê˜‰¶ M†ì¶. Üõ˜ Ýê£˜ò£À‚° º¡ù£™ ï£›‰î Ü˜¬õî R˜î£‰F â¡Á ªê£¡«ù¡.

<u>*தெய்வத்தின் குரல்*</u> - <u>குரு</u>

<u>«õì«ù ó£ü£; põ«ù Hó‹ñ‹</u>

ஆசார்யாளும் பின்னால் வந்தவர்களும் சாந்தோக்ய உபநிஷத்துக்கு பாஷ்யம் பண்ணும்போது, அதில் மூன்றாவது, நாலாவது அத்தியாயங்களில் வரும் மதுவித்யை, ஸம்வர்க வித்யை முதலானவற்றை விளக்கும் போது த்ரவிடாச்சார்யாளை quote செய்திருக்கிறார்கள்.

இந்த சாந்தோக்ய உபநிஷத்தில்தான் தத்-த்வமஸி என்ற மஹாவாக்கியம்

வருகிறது. நீயேதானப்பா அந்த பிரம்மமாயிருக்கிறாய் என்று ச்வேதகேதுவுக்கு அவனுடைய பிதாவும் கருவுமான உத்தாலக ஆருணி திரும்ப திரும்ப ஒன்பது தடவை செய்த உபதேசம் அது.

தத்-த்வம்-அஸி என்பதில் தத் என்பது பரமாத்மாவான பிரம்மம்; த்வம் என்பது ஜீவாத்மா;அதற்கு பெர்ஸானிபிகேஷனாக உள்ள ச்வேதகேது; அஸி என்றால் இருக்கிறாய். நீ பிரம்மமாக இருக்கிறாய் என்று தகப்பனார் உபதேசிக்கிறார் - ஸாதனைகளெல்லாம் செய்து என்றைக்கோ ஒருநாள் பிரம்மமாக ஆகப் போகிறாய் என்று அல்ல! எதிர்காலத்தில் இல்லை; இப்போதும் எப்போதும் எல்லோரும் எல்லாமும் பிரம்மம்தான். இனிமேலேதான் பிரம்மமாக வேண்டும் என்பதில்லை.

அப்படியானால் ஸாதனை எதற்கு?என்றால் பிரம்மமாக இருந்தாலும் அதை நாம் தெரிந்து கொள்ளவில்லையே! தெரிந்து கொண்டிருந்தோமானால் இத்தனை அழுகை, இத்தனை காமம், கோபம், இத்தனை பயம் நமக்கு இருக்கவே இருக்காதே! அலையே எழும்ப முடியாமல் ஆகாசம் வரை முட்டிக் கொண்டு நிற்கிற ஆனந்த சமுத்திரமாக அல்லவா பிரசாந்த நிலையில் இருந்து கொண்டிருப்போம்? இப்படிப்பட்ட நம்மிடம், நீ எப்போதும் பிரம்மம் தானப்பா என்றால் எப்படி ஒப்புக் கொள்வது?

இதை ஒப்புக்கொள்ள வைப்பதற்காகத்தான் த்ரவிடாச்சார்யாள் வேடப்பையன் மாதிரி இருந்த ராஜகுமாரனின் கதையைச் சொல்லியிருக்கிறார். ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யத்தின் நடுவிலே (II-1-20) சங்கர பகவத்பாதாள், சிலந்தி தன்னிலிருந்தே நூலை இழுத்து வலை பின்னுகிற மாதிரியும், அக்னி தன்னிலிருந்தே பொறிகளை உதிர்க்கிற மாதிரியும், ஆத்மாவிலிருந்தே அத்தனை பிரபஞ்சமும் தோன்றியிருக்கிறது என்ற மந்திரத்துக்கு ரொம்ப விஸ்தாரமாக அர்த்தம் பண்ணிக்கொண்டு போகிறபோது, இந்தக் கதையை மேற்கோள் காட்டுகறார். இது திரவிடாச்சார்யாள் சொன்னது என்று பேரைச் சொல்லாமல் ரொம்பவும் மரியாதையுடன், ஸம்பிரதாயமறிந்த பெரியவர்களின் கதை இப்படியொன்று இருக்கிறது. - அத்ர ச ஸம்ப்ரதாயவித ஆக்யாயிகாம் ஸம்ப்ரசக்ஷதே - என்கிறார். ஆசார்யாளின் பாஷ்யத்தை மேலும் விரித்து உரை எழுதின ஆனந்தகிரி என்பவரே இது திராவிடாசார்யார்கள் சொன்ன கதை என்று பேரை வெளியிட்டிருக்கிறார்.

è¬îJ«ô «õìŠ¬ðòù£è Þ¼‰îõ¡ ó£ü°ñ£óù£è à¼ñ£øõ£ ñ£Pù£¡? Transform ஆனானா â¡ù? «õìŠ ¬ðòù£è«õ î¡¬ù G¬ùˆ¶, ªè£‡®¼‰î è£ôˆF½‹ Üõ¡ ó£ü£ Hœ¬÷î£«ù? Þ¬î ºîL™ ªîK‰¶ ªè£œ÷£F¼‰îî£¡. Üîù£™ «õì¡ ñ£FK õ£›‚¬è ïìˆFù£¡. à‡¬ñ¬ò ªîK‰¶ ªè£‡´ M†ì¾ì¡, ó£ü°ñ£óù£è«õ âŠ«ð£¶‹ Þ¼‰îõ¡ ó£ü°ñ£óù£è«õ Ü¸ðõˆF™ õ£›‰¶ è£†®ù£¡. Þó‡´«ð˜ Þ™¬ô. å¼ˆî¡

Þ¡ªù£¼ˆîù£è ñ£øM™¬ô. å«ó «ð˜õNî£¡ ºîL™ î¡¬ùˆ î£«ù ¹K‰¶ ªè£œ÷£ñ™ Þ¼‰î£¡. ÜŠ¹ø‹ ¹K‰¶ªè£‡´ M†ì£¡. ¹Kò£î G¬ôJ™ «õìù£è âƒ«è«ò£ W›G¬ôJ™ Aì‰îõ¡ ¹K‰¶ ªè£‡ì¾ì¡ ó£ü°ñ£óù£è àò˜¾ ªðŸÁM†ì£¡. ÜŠ¹ø‹ ê‡¬ì «ð£†´ ú£‹ó£xò£FðFò£è«õ ÝAM†ì£¡.

வேட வேஷத்தில் (வேட வேடத்தில்: வேஷம் என்பது தமிழில் வேடம் என்றாகும்) இருந்த ராஜகுமாரன் மாதிரித் தான் நாமெல்லாம் ஜீவாத்மா என்ற வேஷத்தில் ஸம்ஸாரிகளாகவே நம்மை நினைத்துக் கொண்டிருந்தாலும் வாஸ்தவத்தில் நாமும் பரமாத்மாவேதான். வேஷம் இப்படியானாலும் நமக்கு உள்ளே இருக்கிற வஸ்து இப்போதும் பரமாத்மாதான். இந்திரியங்கள் இழுக்கிற வழியில் ஒடி வேட்டையாடிக் கொண்டிருக்கிறோம். நாம் பிரம்மம் என்று தெரிந்து கொள்ள வேண்டும். தெரிந்து கொண்டாலும் அதை அநுபவத்தில் கொண்டுவர முடியாதபடி இந்திரியங்கள் இழுத்துக் கொண்டே இருக்கும். ராஜகுமாரனாகவே இருந்தாலும் வாஸ்தவத்தில் அரசத்தன்மையை அடைவதற்காக அவன் அஸ்திர சஸ்திர அப்பியாஸம் பண்ணி எதிரிகளை ஜயித்து ஸாம்ராஜ்யாதிபதியான மாதிரி, நாமும் பிரம்மமாகவே எப்போதும் இருந்தாலும் அதை உணராமலிருப்பதால் கர்மத்தில் ஆரம்பித்து பக்தி வழியாக, ஞான சாதனைகளைச் செய்து, உட்பகைகளையெல்லாம் ஜயித்து, ஆத்ம ஸாம்ராஜ்யத்தில் ராஜாவாக ஆகவேண்டும். 'ஸாம்ராட்'- அதாவது ராஜா - என்றே உபGû ˆF™ Ýˆñ ë£Q¬ò„ ªê£™LJ¼‚Aø¶.

ஐஸூம் ஸ்படிகமும் ஒரே மாதிரித்தான் வெளிப்பார்வைக்கு இருக்கின்றன. ஆனால் ஐஸ்தான் உருகி ஜலமாகுமே தவிர, ஸ்படிகம் ஜலமாகாது. ஏனென்றால் எது ஜலமாகவே இருந்து அப்புற‹ à¬ø‰¶ «õ«ø «õû‹ «ð£†´, ªè£‡®¼‚Aø«î£ Ü¶î£¡ à¼A ñÁð®»‹ î¡ võòñ£ù Ì˜õ Ïð ˆ¬î Ü¬ìò º®»‹. Hó‹ñ« põù£è à¬ø‰¶ «ð£J¼Šðî£™î£¡, Þ‰î põ£ˆñ£¾‹ à¼AŠ «ð£ù£™ ñÁð®»‹ Hóññ£è«õ Ü¸ðõˆF™ Ýè º®A¶. äv î£ù£è è¬óAø¶. ï£‹ è¬óò ñ†«ì£‹ â¡A«ø£‹.

கல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும்

என் கல்நெஞ்சம் உருகவில்லையே!

என்று தாயுமான ஸ்வாமிகள் நம் நிலைக்கு இறங்கி வந்து நமக்காகத்தான் பாடியிருக்கிறார். நம்மை உருக வைக்க ஒன்று தேவைப்படுகிறது. கதையில் ராஜகுமாரனை Practical- ஆக ராஜகுமாரனாக்குவதற்காக ஒரு மந்திரி வந்த மாதிரி, நம்மை உருக்கி நிஜ நாமாகப் பண்ண ஒருத்தர் வேண்டும். அவன் வரமாட்டேன் என்று முரண்டு செய்தாலும் வலிய இழுத்த மந்திரி மாதிரி, பாரமார்த்திகத்தின் பக்கமே போகமாட்டேன் என்ற அடம்பிடிக்கிற நம்மைக் கட்டி இழுக்க ஒருத்தர் வேண்டும். அப்படி ஒருத்தர் இருக்கிறாரா?நம்மை நம்முடைய நிஜ நாமாக

ஆக்கக்கூடிய ஒருத்தர இருக்கிறாரா?

இருக்கத்தான் செய்கிறார். வேடப்பையனுக்கு நீதானப்பா ராஜகுமாரன் என்று சொல்லிப்புரியவைத்து, அவனுக்கு அஸ்திரப் பயிற்சி தொடுத்து, அவனை ராஜாவாக்குவதற்காகஅவனை விட ஜாஸ்தி உழைத்த மந்திரி இந்த ஒருத்தருக்குத்தான் ரூபகம். (உருவகம்). நமக்கு நம் பரமாத்மத்வத்தை எடுத்துச் சொல்லி, அதை நாம் அநுபவமாக்கி கொள்வதற்கான ஸாதனைகளைச் செய்ய வைத்து, நம் கர்மா பாக்கி தீருவதற்காக தாமே தபஸைச் செலவு செய்து உபகாரம் பண்ணும் அந்த ஒருத்தர் தான் குரு என்பவர்.

## *தெய்வத்தின் குரல்*
## *குரு பக்தி*

ஈச்வரனைக் காட்டிலும், குரு பெரியவர்;ஈசுவர பக்தியைக் காட்டிலும் குருபக்தி விசேஷம் என்கிறார்களே, ஏன்?என்று கேட்டால்: ஈசுவரனை யாரும் பார்க்கவில்லை. பிரத்தியக்ஷமாக நாம் பார்க்ககடிய ஒரு மனிதர் எப்போதும் சுத்தமாய், ஞானம் உடையவராய், அசைவு இல்லாத சித்தம் உடையவராய், அப்பழுக்கு இல்லாமல் நமக்குக் கிடைத்து விட்டால் நாம் எந்த மனச்சாந்திக்காக ஈசுவரனிடத்தில் போகிறோமோ அந்த சாந்தி இவரிடம் பக்தி செலுத்தினாலே கிடைத்து விடுகிறது. அதனால் தான்,

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு:குருர் தேவோ மஹேச்வர:।

என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ச்லோகத்தில் குருவுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லியிருப்பது ஒரு விசேஷம். Incidental - ஆக இதிலேயே இன்னொரு விசேஷம், இதில் விஷ்ணு, சிவன் இருவரையும் சொல்லியிருப்பதால் இந்த ச்லோகத்தைச் சொல்லி நாம் குருவந்தனம் பண்ணினால் நமக்கு சிவ-விஷ்ணு அபேத பாவமும் உண்டாகி விடும். ஜகத்தை ஸ்ருஷ்டிப்பது, பரிபாலிப்பது போன்ற பல காரியங்கள் ஈசுவரனுக்கு இருக்கின்றன. அவை எல்லாம் குருவுக்கு இல்லை. அவனுக்கு ஆபீஸ் உண்டு;இவருக்கு ஆபீஸ் இல்லை. ஆபீஸ் இருக்கிறவனிடம் போய்த் தொந்தரவு கொடுப்பதைவிட ஆபீஸ் இல்லாமல் சும்மா இருக்கிறவரிடம் நம் காரியத்தை மிக எளிதாக முடித்துக் கொண்டு விடலாம். ஈச்வரனுக்கு என்ன என்ன உத்தமமான குணங்கள் எல்லாம் இருக்கின்றனவோ அவை எல்லாம் இந்த குருவிடத்தில் இருக்கின்றன. இவர் சுத்தமானவர், பொய் சொல்லாதவர்; வஞ்சனை தெரியாதவர்;இந்திரியங்களை எல்லாம் வென்றவர்;கருணை நிறைந்தவர்;மகா ஞானி. இவரைப் பிரத்யக்ஷமாக பார்க்கிறோம். பகவானையோ பிரத்யக்ஷத்தில் பார்க்கிறோம். பகவானையோ

பிரத்யக்ஷத்தில் பார்க்க முடியவில்லை. ஆகவே குருவின் திருவடிக் கரங்களைப் பற்றிக்கொண்டு பக்தி செய்ய ஆரம்பித்துவிட்டால், ஈசுவர பக்தியினால் நமக்கு என்ன அனுகூலங்கள் உண்டாகின்றனவோ அத்தனையும் சுலபமாக உண்டாகிவிடும். அதனால் தான் குருபக்தி உயர்ந்தது என்ற சொன்னார்கள்.

ஆனால் தெய்வ பக்தியை மறக்கக்கூடாது. இந்த குருவை இவனோடு சேர்த்து வைப்பதே தெய்வந்தானே? தெய்வ அநுக்ரகம் இல்லாவிட்டால் இந்த குருவை இவன் எப்படி அடைவான்? **துர்லபம் த்ரயமேவைதத் தேவாநுக்ரஹ ஹேதுகம்। மநுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரய:।** " தெய்வாநுக்ரஹத்தாலேயே ஒருத்தனுக்குக் கிடைக்கிற மூன்று பெரிய வாய்ப்புகள்: ஒன்று, மநுஷ்ய ஜன்மா கிடைப்பது. இரண்டு, ஸத்ய தத்துவத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை பிறப்பது; மூன்று, மஹா புருஷனான ஒரு குரு கிடைப்பது"என்று ஆசார்யாள் 'விவேக சூடாமணி' ஆரம்பத்தில் சொல்லியிருக்கிறார். எல்லோருக்கும் எக்காலத்திலும் குரு ஈச்வரன்தான்: தக்ஷிணாமூர்த்தி தான். ஸ பூர்வேஷாமபி குரு:காலேநாநவச்சேதாத்।। நம் குருவுக்கும் அந்த குருவுடைய குருவுக்கும் அவருடைய குருவுக்கும் ஞானம் எப்படிப் பூர்ணமாக ஏற்பட்டிருக்கும்?இப்படி ஒவ்வொருவருக்கும் ஒரு குருவைச் சொல்லிக்கொண்டே போனால் கடைசியில் ஒருத்தருக்கு ஸாக்ஷாத் ஈசுவரனேதான் குருவாக இருந்து ஞானத்தை தந்திருக்க வேண்டும் என்று தெரியும். அதனால்தான் தெய்வத்தை மறக்கக் கூடாது என்றார்கள். இதையே வேறு விதமாகவும் சொல்வதுண்டு. குரு, ஈசுவரன் என்ற இரண்டு பேர் என்று வைத்துக் கொள்ளாமல் ஈசுவரனே குருவாக வந்திருக்கிறான் என்று வைத்துக் கொண்டு விட்டோமானால் குரு பக்தி, ஈசுவர பக்தி என்ற இரண்டு தனித்தனியாகப் பண்ணவேண்டாம். குருவே ஈசுவரன் என்று கருதி அந்த குருவான ஈசுவரன் ஒருத்தனிடத்திலேயே பூர்ண் சரணாகதி பண்ணிவிடலாம். குரு பரம சுத்தமானவராக, உத்தமமானவராக இல்லாவிட்டாலும்கூட, இவர் மூலமாக நாம் நித்திய சுத்தனும் உத்தமோத்தமனுமான ஈசுவரனையே பக்தி பண்ணுவதால், அந்த ஈச்வரனே இவர் மூலமாக நமக்கு அநுக்கிரஹம் பண்ணிவிடுவான். இதனால் தான் குருவையே ப்ரம்மா, விஷ்ணு, சிவன், இந்த மூன்றுக்கும் ஆதாரமான பரப்பிரம்மம் என்று எடுத்த எடுப்பில் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு : குருர் தேவோ மஹேச்வர :।

குருஸ் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம :।।

பிரம்ம வித்யா ஆசார்யர்களில் முக்கியமான வியாஸரைப் பற்றிச் சொல்கிறபோது குருர் ப்ரம்மா சுலோகத்தின் தாத்பரியத்தையே இன்னும் ரஸமாகச் சொல்வதுண்டு. அசதுர்வதநோ ப்ரஹ்மா த்விபாஹுரபரோ ஹரி :। அபாலலோசந சம்பு : பகவாந் பாதராயண :।। என்பார்கள். பாதராயணர் என்று வியாஸருக்குப் பெயர். அவர் 'அசதுர்வதநோ ப்ரஹ்மா', அதாவது நான்கு முகம் இல்லாத ஒரு முக பிரம்மா;

த்விபாஹு:அபரோ ஹரி:',நாலு கையில்லாமல் இரண்டு கையுள்ள ஹரி, அதாவது விஷ்ணு, அபால லோசந:சம்பு:', நெற்றிக் கண் இல்லாத போதிலும் சிவன்! குருவைவிட சிரேஷ்டமானவர் இல்லை. நமக்கு அவரிடத்தில் பூர்ணமான நம்பிக்கை ஏற்பட வேண்டும். அது நிஜமான நம்பிக்கையாக இருக்க வேண்டும். நமக்கு அவரிடத்தில் ஈசுவரனே இப்படி வந்திருக்கிறான் என்ற நம்பிக்கை வந்துவிட்டால், அப்புறம் தனியாக ஸ் ாமிகூட வேண்டாம். இந்த நம்பிக்கையே, அவரிடத்தில் நாம் வைக்கிற பக்தியே நம்மைக் கடைத்தேறச் செய்து விடும். வைஷ்ணவர்களுக்கு ஆசார்ய பக்திதான் மிகவும் பிரதானம். ஈசுவர அபராதம் பண்ணினால் ஈசுவரனிடத்திலேயே போய் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்பது இல்லை;ஆசார்யன் மன்னித்து விட்டாலே போதும். ஈசுவரனுடைய கோபம் தணிந்து விடும். ஆனால் குருவினிடத்தில் அபசாரம் பண்ணிவிட்டு ஈசுவரனிடத்தில் போனாலும் ஒன்றும் நடக்காது. குருவிடத்திலேயே போய்த்தான் அந்த அபசாரத்துக்கும் நிவிருத்தி தேடிக்கொள்ள வேண்டும் என்று ஸ்வாமியே சொல்லி விடுவார். சிஷ்யனுக்காக குருவே பரமாத்மாவிடம் சிபாரிசு பண்ணினால் அவருக்குக் கோபம் போய் இவனுக்கு அநுக்கிரஹம் பண்ணிவிடுவார். ஆனால் குருவுக்கே கோபம் வந்து விட்டால் ரக்ஷிக்கிறவர் எவருமே இல்லை. இப்படி ஒரு ச்லோகம் கூட இருக்கிறது. அதனால்தான் குரு பக்தியை மிகவும் விசேஷமாக சாஸ்திரங்கள் சொல்கின்றன. உத்தமமான குரு கிடைக்கவில்லை என்றால், அறைகுறையாக ஒரு குரு இருந்தாலும் அவரை வழிகாட்டியாக வைத்துக்கொண்டு ஈசுவர பக்தி செய்ய வேண்டும். நாம் பக்தி செய்வதால் ஈசுவரனுக்கோ குருவுக்கோ ஒரு லாபமும் இல்லை. நமக்கேதான் பெரிய லாபம், என்ன லாபம் என்றால் : நாம் அழுக்கு உடையவர்களாக இருக்கிறோம்;சஞ்சலம் உடையவர்களாக இருக்கிறோம். மனஸை ஒரு நிமிஷங்கூட ஒர் இடத்தில் நிறுத்த முடியாதவர்களாக இருக்கிறோம். எப்போதும் சுத்தமாக, நிரம்பிய ஞானம் உடையவனாக, அசங்காமல், ஆடாமல், பட்ட கட்டை மாதிரியாக இருக்கிறவனை நாம் நினைத்தால்தான், நாம் நினைக்கிற அவனது நிச்சலமான நிலை நமக்கும் வரும். நாமே அவனாக ஆகிவிடுவோம். ஈசுவரனைத்தான் அப்படி நினைக்க வேண்டும் என்பது இல்லை. இப்படிப்பட்ட குணங்கள் உடையதாக எதை எடுத்துக்கொண்டாலும், நம்மைப் போன்ற ஒரு மனிதரையே இவ்வளவு குணங்கள் உடையவராகக் கருதி அவரையே குருவாக நினைத்து பக்தி செய்தாலும் நாம் அப்படியே ஆகிவிடுவோம். மனஸ் நின்றால்தான் ஆத்மா பிரகாசிக்கும்; அதாவது நமது நிஜமான ஆனந்த நிலை தெரியும். மனஸை நிறுத்துவதற்காகத்தான் குரு பக்தி வேண்டும், ஈசுவர பக்தி வேண்டும் என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

குருவின் அநுக்கிரஹத்தில்தான் ஞானம் கிடைக்கும் என்ற விஷயம் சாந்தோக்ய உபநிஷத் சொல்லியிருக்கிறது. ஆசார்யவான் புருஷோ வேத - ஆசார்யனைப் பெற்ற புருஷன் தான் ஞானத்தை அடைகிறான் - என்று அதில் இருக்கிறது. ஒரு சின்னக் கதை போல இதைச் சொல்லியிருக்கிறது. கந்தார தேசத்தை ( இந்த நாள்

காண்டஹார் என்பது அதுதான்) சேர்ந்த ஒருத்தனின் கண்ணைக் கட்டிக் கொண்டு போய் ஜனசஞ்சாரமில்லாத ஒரு இடத்தில் விட்டு விட்டால் எப்படி -யிருக்கும்?அவன் எப்படித் தன் ஊருக்குத் திரும்புவான்?கிழக்கா, மேற்கா, தெற்கா, வடக்கா என்று தெரியாமல்தானே தவித்துக்கொண்டிருப்பான்? இந்த மாதிரிதான் மாயை நம் கண்ணைக் கட்டி இந்த லோகத்தில் விட்டிருக்கிறது. அப்புறம் கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்டவனிடம் ஒருவன் வருகிறான். கட்டை அவிழ்த்து விடுகிறான். கந்தார தேசத்துக்குப் போகிற வழியையும் சொல்லிக்கொடுக்கிறான். அதற்கப்புறம் இவன் அழவில்லை. பயப்படவில்லை. அவன் சொன்ன மாதிரியே போய்த் தன் ஊரை அடைகிறான். இந்த மாதிரிதான் ஆசார்யனின் உபதேசத்தால், நாம் எங்கேயிருந்து வந்தோமோ அந்தப் பரமாத்ம ஸ்தானத்துக்கு வழியைத் தெரிந்து கொண்டு அங்கே போய்ச் சேருகிறோம் என்று சாந்தோக்யம் சொல்கிறது. ஜகத்குரு என்று பிரஸித்தி பெற்ற ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் எங்கு பார்த்தாலும் குருவின் பெருமையைச் சொல்கிறார். "ஒருவனுக்கு எத்தனைதான் பெருமை இருந்தால் என்ன?குருவின் சரணாரவி ந்தங்களில் அவன் தன் மனஸைக் கட்டிப் போட்டிருக்காவிட்டால் என்ன பிரயோஜனம்?'என்று ஒரே ஒரு தரம் தரம் கேட்கவில்லை. நாலு தரம், " தத:கிம்? தத:கிம்?தத:கிம்? தத:கிம்?"என்று கேட்கிறார். "குர்வஷ்டகம்" (அதாவது குரு ஸ்துதியான எட்டு ச்லோகங்கள்) என்ற ஸ்தோத்தரத்தில், ஒவ்வொரு அடி முடிவிலும் இப்படி நான்கு தரம், மொத்தம் முப்பத்திரண்டு தடவை கேட்கிறார். முடிவில், தம் சரீரத்தைவிட்டு அவர் புறப்படுவதற்கு முந்திப் பண்ணின உபதேசத்திலும், ஸத் வித்வான் உபஸ்ருப்யதாம் ப்ரதிதினம் தத்பாதுகா ஸேவ்யதாம் ப்ரஹ்மைகாக்ஷரம் அர்த்யதாம் ச்ருதிசிரோவாக்யம் ஸமாகர்ணயதாம் என்கிறார். "ஸத்தான வித்வானை ஆசார்யனாக வரிப்பாயாக! தின்தோறும் அவருக்குப் பாத பூஜை பண்ணுவாயாக!அவரிடமிருந்து உபதேசம், பிரணவ உபதேசம், உபநிஷத மஹாவாக்ய உபதேசம் எல்லாம் வாங்கிக் கொள்வாயாக!" என்கிறார். ("ப்ரதி தினம் தத்பாதுகா ஸேவ்யதாம்"என்று சொன்ன பகவத் பாதாளின் பாதுகைக்கு, இன்றைக்கும், ஒரு நாள் விடாமல் பிரதி தினமும் மடத்தில் பாத பூஜை நடந்து கொண்டிருக்கிறது!) இங்கே சொன்னது ஸந்நியாஸம் தருகிற ஸந்நியாஸ குருவைப் பற்றி ஆகும். அந்த ஆசிரமத்தில்தான் பிரணவோபாஸனை, மஹாவாக்ய அநுஸந்தானம் இவற்றின் மூலம் மோக்ஷத்தைத் தேடுவது. இது நாலு ஆச்ரமங்களில் கடைசி. முதலில் பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் ஒரு கிருஹஸ்த குருவை அடைந்து வேதாத்யயனமும், வேதகர்மாநுஷ்டானமும் பண்ணுவதிலிருந்து ஆரம்பித்து, கடைசியில் இந்த ஸந்நியாஸ நிலைக்கு வருமாறு ஆசார்யாள் உபதேசித்திருக்கிறார். முதலில் வேத கர்மா எதற்கு?மனமுடங்கிப் பரமசாந்தமாக இருந்து கொண்டு கேட்டால்தான் குருமூலமாகப் பெறுகிற பிரணவமும் மஹாவாக்யமும் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுக்கும். மனம் ஒருமைப்பாட்டுகேட்காவிட்டால் பிரயோஜனம் இராது. உழுத இடத்தில் ஊன்றினால் தான் விதை பிரயோஜனப்படும். நாம்

எவ்வளவோ உபந்நியாஸம் கேட்கிறோம்;கீதை முதலானதுகளை நிறைய வாசிக்கிறோம். ஆனாலும் நமக்கு ஏன் துக்கம் போக வில்லை? ஞானம் உண்டாகவில்லை?நாம் சித்த சுத்தி பண்ணிக்கொள்ளாமலே கேட்பதாலும் படிப்பதாலும்தான் அது நிரந்தரமாக நின்று பலன் தருவதில்லை. "வைதிக கர்மாக்களை நிறையப் பண்ணி ஈச்வரார்ப்பணம் செய். பலனை எதிர்பார்க்காமல், அதை பகவத் ஆராதனமாக நினைத்துக் கொள்"என்று ஆசார்யாள் இந்த உபதேசத்தின் ஆரம்பத்தில் சொன்னது, சித்த சுத்தியை, மனஸை உழுதாக வேண்டும். அது முதல் காரியம். அப்புறம் ஜலம் பாய்ச்ச வேண்டுமல்லவா?அதுதான் பக்தி. நம் ஹ்ருதயத்தில் ஜலம் பாய்ச்சுவது பக்திதான்.ஈச்வரனிடமும், ஆசார்யனிடமும் பக்தி செலுத்த வேண்டும். குரு பக்தி இருந்தால் மனது தானாக சாந்தத்தை அடைகிறது. பெரியவர்களுக்கு, மஹான்களுக்கு முன் ஒன்றை வாசித்தாலும் கேட்டாலும் அல்லது அவர்களே ஒன்றைச் சொன்னாலும், அது நன்றாகப் பதிகிறது. ஏனென்றால் அவர்கள் ஸந்நிதானத்தில் நம் மனஸ் ஒரு விதமான சாந்தத்தோடு இருக்கிறது. கிளப்பலும், லைப்ரரியிலும் இப்படி இருக்கவில்லை. அதனால்தான் அங்கெல்லாம் படிப்பதும், கேட்பதும் நிற்காமல் ஒடிப்போய்விடுகிறது. மனஸ் குரு பக்தியில் நனைத்தால் உடனே பலன் உண்டாகும். அதனால்தான் மஹான்களாக இருக்கிறவர்களிடமும் உபதேசம் கேட்க வேண்டும், எதையும் குருமுகமாக கற்க வேண்டும் என்பது. நாம் எவ்வளவோ படித்திருக்கிறோம். ஆனாலும் நமக்குள்ள அஞ்ஞான தடிப்பு கொஞ்சம் கூட குறையவில்லை. அது எந்த இடத்தில் குறையுமோ அங்கே போய்ச் சேர்ந்தால் அஞ்ஞானத்தடிப்புத் தேய்ந்து போய், ஞானம் உதயமாகத் தொடங்கும். அப்படிப்பட்ட இடம் தான் ஆசார்யனின் சந்நிதி. பிரம்மசரிய ஆசிரமத்தில் இப்படிச் சித்த சுத்திக்காக ஒரு குருவிடமிருந்து வேதங்களைத் தெரிந்து கொண்டபின், கிருஹஸ்தாச்ரமத்தில் அந்த வேதத்தில் சொன்ன கர்மாக்களைப் பண்ணி மனஸின் அழுக்குக்களையெல்லாம் போக்கடித்துக் கொண்டபின், ஸந்நியாஸ ஆசிரம குருவிடம் மஹாவாக்ய உபதேசத்தை வாங்கிக் கொண்டால் அது பயிராக விளைகிறது. அதாவது ஜீவன் பிரம்மத்தோடு ஐக்கியத்தைப் பெறுகிறான். அதற்கு வழி பண்ணுவது, ஆரம்பித்திலும் சரி, முடிவிலும் சரி குரு தான். இதனால் தான் குருபக்தியை எங்கு பார்த்தாலும் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறது.

## *தெய்வத்தின் குரல்*

## *குருகுல வாஸம்*

ராஜாங்கம் என்பது இந்த லோகத்தில் இருக்கும் பொழுது நாம் நன்றாக இருப்பதற்காக ஏற்பட்டது. துஷ்டர்களால் ஸாதுகளுக்குக் கஷ்டம் ஏற்படக்கூடாது, பலிஷ்டர்கள் ஸாதுக்களுக்குக் கஷ்டம் உண்டாகக் கூடாது. இந்த

ரக்ஷணையைத் தருவதற்கும், ஜனங்களுடைய மற்ற இகலோக ஸௌக்கியங்களை ஏற்படுத்தி தருவதற்காகவும், ராஜா என்று ஒருத்தனை வைத்தார்கள். இப்போது மந்திரி சபை என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். எதுவானாலும் நமக்கு இந்த ரக்ஷணையையும் வசதிகளையும் தருகிற ராஜாங்கத்துக்குப் பிரதியாக நாம் சேவை செய்கிறோம்; பலவிதமான வரிகள் செலுத்துகிறோம்.

இந்த லோகம் சாச்வதமல்ல. சாச்வதமான இன்னொரு லோகத்தில் நாம் இடம் பிடித்தாக வேண்டும். அதற்கு நாம் போக வொட்டாமல் உட்பகை என்று சொல்லுகிற ஆறு துஷ்டர்கள், பலிஷ்டர்கள் நம்மைத் தடுக்கிறார்கள். இவர்களிடமிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொண்டு, பக்தி, த்யான, ஞானாதிகளில் நாம் முன்னேறினால்தான் அந்த சாச்வத லோகத்துக்கு போய் சேரலாம். இப்போதும் எப்போதும் நமக்குள்ளையே இருப்பதுதான் அந்த சாச்வத லோகம் என்றால்கூட, அதற்குப்போய்ச் சேருவதுதான் பிரம்மபிரயத்தனமாக இருக்கிறது. அங்கே போவதற்கு நமக்கு ராஜாவாக, ராஜாங்கமாக ஸஹாயம் செய்கிறவரைத்தான் ஆசார்யர் என்பது. இந்த லோகத்தில் சுகமாக இருப்பதற்காக ராஜா (அல்லது மந்திரிஸபை) வேண்டியிருக்கிறது போலப் பரலோகம் (என்கிற உள்ளுலகமான ஆத்ம லோகம்) போகும் படியான காரியத்துக்கு ஆசார்யர் வேண்டும். இந்த லோகத்தில் மட்டும் நன்றாக இருந்தால் போதாது. இந்த லோகத்தில் நன்றாக இல்லாமலே போனால்கூட பரவாயில்லை. ஆனால் இங்கேயிருந்து போன பிறகு மறுபடி திரும்பி வராமல் அந்த சாச்வத லோகத்தில் சேர வேண்டியது ரொம்பவும் அவசியம்.

இந்த நச்வரமான [அழியும் தன்மை வாய்ந்த]லோக வாழ்க்கையின் போதே தான் நாம் அந்த சாச்வத வாழ்க்கைக்கு வழி பண்ணிக்கொள்ள வேண்டும்.

வாழ்க்கையைத் தொடங்குகிற போதே இந்த முக்கியமான காரியத்துக்கு ஏற்பாடு பண்ணிவிடவேண்டும். அதற்காகத்தான் பாலப் பருவத்திலேயே பிரம்மச்சரிய ஆச்ரமம் என்று ஆரம்பித்து குருகுல வாஸம் பண்ணவைத்தார்கள்.

இப்படி வைத்ததால், அந்தச் சின்ன வயசிலேயே இந்த லோகம் பொய், பரமாத்மா தான் நிஜம் என்று அதனிடமே ஒரு ஜீவனைத் திரும்பி விட்டார்கள் என்று அர்த்தமில்லை.

குருகுலத்தில் ஆத்ம வித்யா சாஸ்திரங்களைச் சொல்லிக் கொடுத்தது வாஸ்தவம். ஆனால் அதற்காக அப்போதே மாணாக்கனை லோக வாழ்க்கையை விட்டு ஓட்டி விடுவதாக அர்த்தமில்லை. மற்ற ஸகல வித்தைகளையும், சாஸ்திரங்களையும் (இவற்றில் இக்காலத்திய ஸயன்ஸ்களில் அநேகம் வந்துவிடும்), காவியங்களையும் நாடகங்களையும் கூட குருகுலத்தில் கற்றுக் கொடுத்தார்கள். இந்தப் பெரிய லோக நாடகத்தில் அரும்பு பூவாகி, பூ பிஞ்சாகி, பிஞ்சு காயாகி, அந்தக் காய்தான் கனிந்து பழமாகும் என்ற நியாயம் நம்

பூர்விகர்களுக்கு நன்றாகத் தெரியும். அபூர்வமாக எங்கேயோ எவரோ பால்யத்திலேயே பரம ஞானியாக வைராக்யத்தோடு மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்காரலாமே ஒழிய, மற்றவர்கள் படிப்படியாகத்தான் ஏற வேண்டும் என்று அவர்களுக்குத் தெரியும். ஆனால் இது படிப்படியாகத்தான் இருந்தாலும் ஏற்றி விடுவதாக இருக்க வேண்டும். இறக்கி விடுவதாக விட்டுவிடக்கூடாது என்றுதான் பிரம்மசரியத்துக்கு அப்புறம் கிருஹஸ்தாச்ரமமும், அதிலே தாம்பத்யம், சந்ததி விருத்தி எல்லாவற்றையும் வைத்து அப்புறம் ஒரளவு வைராக்யத்தோடு குடும்பத்தைவிட்டு, ஆனாலும் வைதீக கர்மாவை விடாமல் நடத்துகிற வானப்ரஸ்த ஆச்ரமத்தை விதித்து, கடைசியில் பூவை இயற்கையாக முதிரவிட்டுக் காயாகிக் கனிகிற நிலையில் ஸந்நியாஸத்தை வைத்தார்கள். லோக வாழ்க்கையை எடுத்த எடுப்பிலே விட்டுவிட முடியாது. அதனாலே அப்படிச் செய்ய வேண்டாம். ஆனால் அதே சமயத்தில் சாச்வதமான பரலோக வாழ்க்கையையும் மறக்கக்கூடாது. இவன் ஒரேடியாக ஏறாவிட்டால் பரவாயில்லை; ஆனால், ஒரே உருளலாக உருண்டு கீழேயும் போய் விடக்கூடாது - என்று தான் தர்ம சாஸ்திரங்களை இவனுக்கு வழிகாட்டியாக வைத்து, இவன் எந்த ஸ்டேஜில், எந்த ஆசிரமத்திலிருந்தாலும், எப்போதும் இவனுக்குக் கொஞ்சம் ஆத்ம சிந்தனை, தெய்வ பக்தி, நல்லொழுக்கம், பரோபகார பண்பு எல்லாம் இருக்கும்படி சீர்படுத்திக் கொடுத்தார்கள். ஆரம்பித்திலேயே வாழ்க்கையின் லக்ஷ்யமான பரம தத்வத்துக்கு விதையைப் போட்டுவிட வேண்டும்; அப்போதுதான், ஒருவன் உடனே அதற்கென்று தன்னை அர்ப்பணம் பண்ணிக்கொள்ளாவிட்டாலும், அவன் லோக வாழ்க்கை நடத்துகிற போதுகூடக் கெட்டுப்போய்விடாமல், இருக்கிற நிலையிலிருந்து இறங்கி விடாமல், கொஞ்சம் கொஞ்சமாக மேலே போவான் என்று தான் அவனுக்கு பிரம்மச்சரிய ஆசிரமத்திலேயே வேத உபநிஷத்துகளை உபதேசித்து விட்டார்கள். அதை உடனே உபயோகித்துக் கொண்டு (practical-ஆக apply பண்ணிக்கொண்டு)ஆத்ம விசாரம் பண்ணி ஜீவன் முக்தனாகிவிட வேண்டும் என்றில்லை. அது பாங்கில் போட்ட டிபாஸிட் மாதிரி. இவன் பக்குவம் அடைகிற வரையில் அதிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் வட்டி மாதிரி வந்து கொண்டிருந்தால் போதும். அப்புறம் உரிய பருவத்தில் அதைப் பூராவாக draw பண்ணி எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அந்த டிபாஸிட்டை வாழ்க்கை ஆரம்பிக்கிறபோதே போட்டு இந்த வட்டி கிடைக்கிற மாதிரியாகப் பண்ணிவிடவேண்டும். இல்லாவிட்டால் இவன் யெளவனத்தின் வேகத்திலும், நடுத்தர வயசின் உணர்ச்சி விகாரங்களிலும், ஏற்ற தாழ்வுகளிலும், விருத்தாப்பியத்தின் அசக்தத்திலும் (பலவீனத்திலும்)வீணாகவே போய்விடுவான்.

தற்போது பள்ளிக்கூடங்களிலும் காலேஜ்களிலும் ஒருத்தனின் ஜீவனோபாயத்துக்காக உதவுகிற படிப்பைச் சொல்லிக் கொடுப்பது போல, ஆதி காலத்திலும் இவனுக்குத் தொழிலைச் சொல்லிக் கொடுக்கிறபோதே அதோடு

நிறுத்திக் கொள்ளாமல் அத்யாத்ம சாஸ்திரங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். இதனால் இப்போது நடக்கிறமாதிரி வயிற்றுப்பாட்டுக்கு மட்டும் வழி செய்து விட்டு, ஜனங்களின் நன்னடத்தை (மொராலிடி), ஆத்மாபிவிருத்தி இவற்றுக்கு ஒன்றுமே செய்யாத மாதிரி அப்போது இல்லை. பரலோக லக்ஷ்யம், தர்மம்-மொராலிடி இவற்றைக் கெட்டியான அஸ்திவாரமாக வைத்துக்கொண்டே ஜீவன விருத்தி நடக்க வழி செய்தார்கள். ஒரேடியாக மநுஷ்ய ஸ்வபாவத்தைக் கவனிக்காமல் இவனை அத்யாத்ம மார்க்கம், வைராக்யம் என்று சின்ன வயசிலேயே கட்டுப்படுத்தவுமில்லை; ஒரேடியாக இவனைத் தறுதலையாக அறுத்துவிட்டிருக்கவும் இல்லை.

ரொம்பவும் sympathy, undersatnding என்று சொல்கிறார்களே அப்படி மநுஷ்ய இயல்பை ஆத்மா வீணாகப் போகாதபடி, அதை ஹிதமாகப் பக்குவம் பண்ணுகிற தினுசில், ஆச்ரம தர்மங்களை விபாகம் செய்திருக்கிறார்கள் [வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள்.] காளிதாசன் வாக்கிலே இது தெரிகிறது. முதலில் 'சைசவே அப்யஸ்த வித்யானாம்' என்கிறான். அப்படியென்றால், பாலப் பிராயத்திலேயே சகல வித்தைகளையும் கற்றுக்கொள்ள ஆரம்பித்துவிடவேண்டும். வேதம், உபநிஷத்துக்களைக் கூட அப்போதே தெரிந்து கொண்டுவிட வேண்டும். எதுவும் மனஸில் பதிந்து ஏறுகிற காலம் அதுதான். ஆனால் இதற்காக உடனே ஆத்மவிசாரம் என்று ஓடிப்போய் மூக்கைப் பிடித்துக் கொள்ள வேண்டுமா என்றால், அப்படி இல்லை. அடுத்தபடியாக 'யௌவனே விஷயைஷிணாம்' என்கிறான். யௌவனத்தில் கிருஹஸ்த தர்மத்தை மேற்கொண்டு இல்லற ஸுகங்களை (துக்கங்களையும்தான்) அநுபவிக்க வேண்டும். இந்த ஸுகமும் உண்மையில் துக்கம் தான் என்ற பேச்சு இந்த ஸ்டேஜில் எடுபடாது. ஆனாலும் இவன் குருகுலவாஸத்தின் போது அநுஷ்டித்த பிரம்மச்சரிய நியமமும், படித்த வேத உபநிஷத்துகளும் இவனை ஒரேடியாக விஷய ஸுகங்களில் தலைதெறித்துப் போகாதபடி கட்டுப்படுத்தும். இது இவன் ஓரளவுக்கு பொருள் சேர்த்து ஸம்பாத்தியம் செய்கிற சமயமும் ஆகும். ஆனாலும் பொருளாசையே பேராசையாகி விடாது. இவன் தர்மத்தை ஒருக்காலும் மீறாதபடி, முன்னே செய்த வித்யாப்யாஸம் இவனை ரக்ஷிக்கும். அதோடு இவனுக்கு இருக்கிற கர்மாநுஷ்டானம், அத்யாபனாதிகள், ஏராளமான யாகங்கள், யக்ஞங்கள் இவை யாவும் இவனை ஒரு நெறியில் (discipline--ல்)வைத்துச் சித்தம் ரொம்பவும் விகாரப்பட்டுப் போகாமல் காப்பாற்றும்.

இது பிராம்மணனுக்குச் சொன்னது. எந்த ஜாதியாரானாலும் அவரவர்களுக்கேற்பட்ட தொழிலைச் செய்து, பேராசையும் பொறாமையும் இல்லாமல் செய்து, ஈச்வரார்ப்பணம் பண்ணினால் அதுவே சித்த சுத்தி தந்துவிடும்.

தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி என்று பகவானே சொன்னதுபோல், தர்மம்

தப்பாமலே சில இயற்கையான ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வது யௌவனத்துக்கென்று சாஸ்திரமே அங்கீகரித்தது. நாளடைவில்

கர்மாநுஷ்டானங்களின் பலம் ஏறி ஏறி ஆசை, கோபம் முதலான வேகங்களெல்லாம் தாமாகக் குறைந்து கொண்டு வர ஆரம்பிக்கும். இப்போது கொஞ்சம் கிழத்தனமான வயசும் வந்திருக்கும். இந்த ஸமயத்தில் "வார்த்தகே முனிவ்ருத்தீனாம்" என்கிறானாம் காளிதாஸன். கிழப்பருவம் ஆரம்பிக்கிற காலத்தில் முனிவர்களை, தபஸ்விகளை அடுத்து உபதேசங்களைப் பெற்று, ஆசைகளைப் போக்கிக்கொண்டு, (விராகம், வீதராடிப்பட்டகம் என்று சொல்வார்கள் -ஆசை போன நிலையை, அப்படிப்பட்ட விரக்தியுடன்) நிறைய பகவத் த்யானம், தபஸ், ஆத்ம சிந்தனையென்று ஈடுபடவேண்டும் வானப்ரஸ்தம் என்ற இந்த ஆச்ரமத்தில் வீடு வாசலையும், பிள்ளை குட்டிகளையு ம்விட்டுவிட்டுப் பத்தினியை மட்டும் கூட அழைத்துக் கொண்டுபோய்க் காட்டிலே வைதீக கர்மாக்களை அநுஷ்டானம் பண்ண வேண்டும். அந்த அநுஷ்டானத்துக்கு ஸஹாயம் செய்வதற்காகத்தான் பத்தினி வேண்டும்; விஷய ஸுகத்துக்காக அல்ல. அப்புறம் கடைசி ஸ்டேஜ். "யோகேனாந்தே தநுத்யஜாம்" - அதாவது வைதீக கர்மாக்களையும் விட்டு விட்டு ஸந்நியாஸியாகி, சரீரத்தை விடுகிறபோது கொஞ்சம் கூட அழுகையில்லாமல் பேரானந்தமாக பரமாத்மாவுடன் இரண்டறச் சேர்ந்து விடுகிற யோகமாக மரணத்தை ஆக்கிக் கொண்டுவிடவேண்டும்.

அந்தப் பேரானந்த மோக்ஷத்துக்கு எங்கே அஸ்திவாரம் போட்டிருக்கிறது என்றால் "சைசவே அப்யஸ்தவித்யானாம்"என்று பாலபருவத்தில் படிக்கிறபோதே போட்டிருக்கிறது. அப்பொழுது போட்டுக் கொடுத்த moral foundation (தர்ம நெறி அடிப்படை) தான் அப்புறம் ஜன்மா முழுக்க கை கொடுத்துக் கொண்டே வந்து, குழந்தையாக இவன் படித்த உபநிஷத்தின் லக்ஷ்யமான ஜீவப் பிரம்ம ஐக்கியத்தை இவன் முடிM«ô ê£F,è^ ¶¬í ªêŒAø¶. °ö‰¬î ð¼õ^F«ô«ò å¿ƒA™ ªè£‡´ õ‰¶ Mì«õ‡´‹. å¿,è^FŸ° ºî™ Üƒèñ£è â¡ù «õ‡´‹? பணிவு ; அடக்கம்; விநயம்; கட்டுப்பட்டு நடப்பதற்கு அடக்கம் முதலில் வேண்டும். அஹங்காரம் போனால் தான் அடக்கம் வரும். ஸகல சீலங்களுக்கும் அடிப்படையாக இருக்கவேண்டியது விநயம்தான்.

மருந்தைவிட பத்தியம் முக்கியம். கல்வி என்கிற மருந்தைவிட விநயம் என்ற பத்தியம் முக்கியமானது. இந்த விநயத்தைத்தான் பழைய காலத்தில் மாணாக்கQ¡ Hóî£ù ôþíñ£è ¬õˆî£˜èœ. 'விநயமுடையவன்' என்ற பொருள் கொண்டதான 'விநேயன்'என்றே மாணாக்கனுக்குப் பேர். இந்த விநயகுணம் வருவதற்காகவேதான் முக்கியமாக அவனை குருகுலவாஸம் என்று ஒரு ஆசார்யனிடத்திலேயே வாழும்படியாகக் கொண்டு விட்டார்கள். எட்டு

வயசுக்குள் உபநயனம் (பூணூல் கல்யாணம்) பண்ணி குருகுலத்துக்கு அனுப்பினார்கள்.

உபநயனம் என்றால் என்ன?'நயனம்'என்றால் 'அழைத்துப் போவது'. கண்ணில்லாதவனை இன்னொருத்தன் தான் அழைத்துப்போக

வேண்டியிருக்கிறது. இதிலிருந்து கண்தான் நம்மை அழைத்துப் போகிறதென்று தெரிகிறது. எனவேதான் அதற்கு நயனம் என்று பேர். 'உப' என்றால் 'ஸமீபத்தில்' என்று ஒரு அர்த்தம். 'உபநயனம்'என்றால் 'ஸமீபத்தில் அழைத்துப் போகிறது'. எதற்கு, அல்லது யாருக்கு ஸமீபத்தில்?குருவுக்கு ஸமீபத்தில்தான். அதாவது, குருகுலத்தில் கொண்டு விடுவதற்குப் பூர்வங்கம்தான் உபநயனம்.

இதுவரை குழந்தையாக மனம் போனபடி விளையாடிக் கொண்டு இருந்தவன் இப்போதுதான் ஒரு ஆச்ரமத்தை ஏற்கிறான். இங்கே ஆச்ரமம் என்றால் பர்ணசாலை என்று அர்த்தமில்லை. வாழ்க்கையில் ஒரு நிலை - stage of life- â¡Á Ü˜ˆî‹. Þ‰î ºî™ Ý„óñˆ¶‚° Hó‹ñê˜ò Ý„óñ‹ â¡Á ªðò˜. Þƒ«è º¼î£¡ º‚Aò‹. ºî™ Ý„óñˆF™ ÞõÂ‚° úèôºñ£è Þ¼Šð¶ º¼î£¡. è¬ìCJ™ ú‰Gò£ú Ý„óñˆF½‹ Þ¡ªù£¼ º¼ õ¼Aø£˜. ÞŠ«ð£¶ «ð£†ì ÌÈ¬ô, è˜îK˜¶Š «ð£´õîŸ° Ü‰î º¼ õ‰î£è «õ‡´‹. ºî™ º¼ ªê£™L, ªè£´ˆî àðGû˜ ôzòñ£ù Hó‹ñˆ¬î Þõ¡ ú£þ£ˆè£ó‹ ð‡µõîŸ° úý£ò‹ ªêŒõîŸè£è Ü‰îˆ ¶øMò£ù º¼ õ¼Aø£˜. "º¼ ðó‹ð¬ó"â¡Á ï£‹ ïñvè£ó‹ ð‡µõªî™ô£‹ Ü‰î ú‰Gò£R º¼ñ£˜è¬÷ˆ î£¡.

ஆனால், அந்த குருவிடம் அந்தியத்திலாவது நாம் போகிறதற்கு யோக்யதையை உண்டாக்கித் தருபவர் யாரென்றால் பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் நமக்கு ஸகல வித்தைகளையும் தரும் இந்த குரு தான். இவர் அவரைப் போல சந்நியாஸி அல்ல. கிருஹஸ்தர்தான். கடைசி குரு பிரம்மவித் (பிரம்மத்தை அறிந்தவர்) என்றும் முதல் குரு வேதவித் (வேதத்தை அறிந்தவர்) என்றும் சொல்வதுண்டு. இந்த வேதவித்துக்கு பிரம்மத்தைப் பற்றிப் படிப்பறிவு நிறைய உண்டே தவிர ஞானம் அநுபவ ஞானம் இருக்கும் என்று சொல்லமுடியாது. இவரும் ஒரு பிரம்மவித்திடம் போய் இனிமேல்தான் ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு பிரம்மத்தை அநுஸந்தானம் பண்ணவேண்டும்.

இதனால் இவர் மட்டம் என்று இல்லை. ஆச்ரம தர்மப்படி வாழ்க்கையின் எந்த ஸ்டேஜில் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அப்படியிருப்பவர் இவர்.

மாணாக்கன் விநேயனாக இருக்க வேண்டும் என்றால் அப்படிப்பட்ட விநயத்தை அவனுக்கு ஊட்டுபவராக, அவனது இயல்பான மரியாதைக்கு பாத்திரராக இவர் வாழ்ந்தாக வேண்டும். நல்ல கர்மாநுஷ்டாதாவாக இருக்கவேண்டும். தர்மிஷ்டராக இருக்க வேண்டும். மாணாக்கனிடம் கண்டிப்பாக

இருந்து திருத்தும் போதே, மாதா பிதாக்களை விட்டுத் தன்னிடம் வாஸம் செய்ய வந்திருக்கிற அந்தக் குழந்தையிடம் பரிவுள்ளவராக இருக்க வேண்டும். 'விநேயன்' என்பது போலவே மாணாக்கனுக்கு 'அந்தேவாஸி'என்றால், ('உடன் வஸிக்கிறவன்') என்று அர்த்தம் சொல்கிறார்கள். உபநயனம் என்னும் போது ஸமீபத்தில் அழைத்துப் போகிறது என்பதை குருவுக்கு ஸமீபத்தில் அழைத்துப் போகிறது என்று பொருள் கொண்டது போலவே அந்தேவாஸி (உடன் வஸிக்கிறவன்) என்றாலும் குருவுடன்

வஸிக்கிறவன்' அர்த்தம் செய்து கொள்ள வேண்டும். வாஸ்தவத்தில் 'அந்தே'என்றால் உள்ளுக்குள்ளே என்றுதான் அர்த்தம். அந்தரங்கம், அந்தராத்மா, அந்தர்யாமி என்றெல்லாம் சொல்லும்போது 'அந்த' என்றால் 'ஹ்ருதயத்துக்குள்ளே' என்றே அர்த்தம். அம்மாதிரி ஆச்சார்யன் தன் ஹ்ருதயத்துக்கு உள்ளேயே சீஷப்பிள்ளைகளை அழைத்து வைத்துக் கொண்டு விட வேண்டும். அத்தனை அன்பு காட்ட வேண்டும்.

சிஷ்யனிடம் இவருக்குப் பெரிய பொறுப்பு இருக்கிறது. அதை ஆற்றாவிட்டால் இவருக்கே பெரிய ஹானி உண்டாகும். இந்தக் காலத்தில் உபாத்தியாயர்கள், 'பையன் உருப்பட்டால் என்ன?நம் சம்பளம் எப்படியும் வருகிறது'என்று இருக்கலாம். அந்த மாதிரி குருகுலம் நடத்துகிறவர் இருக்க முடியாது. ஏனென்றால் அங்கே குரு-சிஷ்ய உறவு வெறும் வியாபார ஒப்பந்தம் (பிஸினெஸ் கான்ட்ராக்ட்) மாதிரி இல்லை. இப்போதுள்ள படிப்புமுறை பிஸிநெஸ் காண்ட்ராக்டுக்கும் ஒரு படி கீழே!பிஸினஸ்கூட ஒரு விலை கொடுத்தால் அதற்கான ஒரு வஸ்துவைத் தரத்தான் வேண்டும். ஆனால் இங்கேயோ சம்பளம் (விலை) கொடுத்த ஒரு மாணாக்கன் ஃபயில் ஆனால் கூட அது உபாத்தியாரைப் பாதிப்பதில்லை. குருகுலம் நடத்துகிற பழைய கால குருவோ ஒரு மகத்தான பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார். அது என்ன?"சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத்" என்று நீதி சாஸ்திரம் சொல்கிறது. அதாவது சிஷ்யன் பண்ணபகிற பாபம் குருவையே போய்ச் சேருகிறது. இவனுக்கு வெறும் படிப்பை மட்டும் சொல்லித் தராமல், இவனை ஒழுக்கமுள்ளவனாக்கவும் அவர் பொறுப்பு எடுத்துக் கொள்கிறார். எடுத்துக் கொண்ட பொறுப்பை சரியாக நிறைவேற்றாவிட்டால், அதற்கு தண்டனை உண்டு. சிஷ்யனை இவர் யோக்கியனாக்க முடியவில்லை, அவன் ஒரு பாபம் செய்கிறான் என்றால், அந்தப் பாபம் சிஷ்யனைத் தாக்காது;அவனைச் சீர்திருத்தத் தவறிய குருவையே சென்றடையும்.

ஒரு குடும்பத்தில் பத்தினி ஒழுங்கு தப்பி நடந்தால் அதன் பாப பலன் அவளைத் தாக்காது;அவளை நல்வழிபடுத்தத் தவறிய புருஷனைத்தான் சேரும். தேச காரியத்திலே ஒரு பிரஜை தப்பு பண்ணினால், அதற்கான பாபம் அவனைத் திருத்தி வைக்காத ராஜாவைத் தான் சேரும். அந்த ராஜாவே பண்ணும்படியான

பாபம், அவனை நல்வழிப்படுத்தத் தவறிய ராஜப் புரோஹிதரைச் சேரும். நீதி சாஸ்திரத்தில் இப்படியாக ஒரு பர்த்தாவுக்கும், ராஜாங்கம் நடத்துகிறவனுக்கும், ஆசார்யனுக்கும் ரொம்பப் பெரிய பொறுப்பைத் தந்திருக்கிறது.

ராஜா ராஷ்ட்ர க்ருதம் பாபம் ராஜபாபம் புரோகிதம் ।

*பர்த்தாரம் ஸ்த்ரீக்ருதம் பாபம் சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத் / /*

ஒரு பர்த்தா என்றால் மனைவியும், ராஜாவானவன் குடிமக்களையும், குரு என்கிறவன் சிஷ்யனையும் அதட்டி அதிகாரம் பண்ணிக் கொண்டிருப்பதற்காக ஏற்பட்டவர்கள் அல்ல. இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் ஆதீனத்தில் உள்ளவர்களை நல்வழிப்படுத்தக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள். அந்த

கடமையை நிறைவேற்றத் தவறினால் தங்கள் ஆதீனத்தில் இருக்கிறவர்களின் பாபத்தைத் தாங்களே வாங்கிக்கொள்ள வேண்டியவர்கள் ஆவார்கள்.

சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத் என்று தெரிந்து கொண்டிருந்த பழையகால குரு எப்படியிருந்திருப்பார்?சிஷ்யனை நல்வழிப்படுத்துவதற்கான ஆத்ம சக்தி பெற்றவராகத் தம்மைப் பண்ணிக் கொண்டிருப்பார். அதாவது தாமே முன்னுதாரணமாக (EXAMPLE Ýè)Ü‰î ï™õNJ™ ïì‰¶ è£†®, ªè£‡®¼Šð£˜. "âƒèOì˜F½œ÷ ï™ô ïìˆ¬îè¬÷ (Üvñ£è‹ ú§êKî£Q) c H¡ðŸÁ"â¡Á ¬î˜Fgò àðGû˜F™ º¼ CwòQì‹ ªê£¡ù¶ Þ¬î˜î£¡.

அப்படிப்பட்டவரிடத்தில் ஒரு ஜீவனை பால்யத்திலேயே கொண்டு சேர்த்து விடவேண்டும். அந்தக்காலத்தில் ஒவ்வொரு பிதாவுக்கும் வேத சாஸ்திரங்கள் நன்றாகத் தெரிந்துதான் இருந்தது. இருந்தாலும் அவரவரும் தம் பிள்ளைகளுக்குத் தாங்களே கற்றுக்கொடுக்காமல் இன்னொரு குருவிடம் கொண்டுபோய் விட்டார்கள். ஏன்?அப்பா- பிள்ளையும் ஸ்வாதீனத்தினால் அவருக்கு ரொம்பவும் அடங்கி நடக்காமல் ஸ்வாதந்திரியமாக இருக்கப் பார்ப்பான். அடக்கம் (விநயம்) என்பதான வித்யையின் ஆதாரப் பண்பே இல்லாவிட்டால் இவன் என்ன படித்துதான் என்ன பிரயோஜனம்?

உபநிஷத்துகளைப் பார்த்தால் இது தெரியும். பாரத்வாஜர் மஹா பெரியவர். ஆனாலும் அவருடைய புத்ரரான ஸுகேசர் என்பவர் ஸமித்தும் கையுமாக குருவைத் தேடிப்போய் பிப்பலாதரை அடைந்தார் என்று "பிரச்சனோபநிஷத்"ஆரம்பிக்கிறது. (ஸமித்து என்றால் சுள்ளி. எளிதில் பிரீதி அடைந்துவிடும் அந்தக்கால குருமாருக்கு இதுதான் பெரிய காணிக்கை. அவருடைய யக்ஞ அநுஷ்டானத்துக்கு சுள்ளி தானே முக்கியம்?) இப்படி இன்னம் பல பேரையும் சொல்லியிருக்கிறது. ச்வேதகேது என்ற பிரம்மச்சாரியைப் பற்றி சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. இவன் தகப்பனாரிடமே வித்யாப்யாஸம்

பண்ணிவிட்டு ராஜ சபைக்குப் போகிறான். அங்கே ராஜாவாயிருந்த ஸத்வித்வானான ப்ரவாஹணர் இவனைக் கேள்விகள் கேட்கிறார். இவனுக்கு ஒரு கேள்விக்குக் கூட பதில் சொல்லத் தெரியவில்லை. பிதாவிடமே வித்யாப்யாஸம்

பண்ணினால் பிரயோஜனமில்லை என்று இங்கே Indirect Ýè (ñ¬øºèñ£è) ªê£™½Aø ñ£FK Þ¼‚Aø¶.

அடக்க குணம் வருகிறது ரொம்பவும் கஷ்டம். அதுவும் கல்வி கற்கத் "தான் அறிவாளி" என்ற அஹங்காரமும் ஏறிக்கொண்டே தான் வரும் என்பது இந்த ச்வேதகேதுவின் இன்னொரு கதையிலிருந்து தெரிகிறது. இதுவும் சாந்தோக்கியத்திலேயேதான் வருகிறது. இவன் பன்னிó‡´ õ¼ûƒèœ Hî£¬õM†´ ªõO Ýê£˜ò˜èOì‹ ð®ˆ¶M†´ˆ F¼‹¹Aø£¡. îù,° â™ô£‹ ªîK‰¶M†ì¶ â¡ø è˜õˆ¶ì¡ F¼‹¹Aø£¡. ÜŠ«ð£¶ Þõ¬Â¬ìò Hî£«õ è˜õˆ¬î å´‚°Aø£˜. Hó‹ñˆ¬îŠ ðŸP ÜõQì‹

கேட்டு, அவனுக்கு அது அடியோடு தெரியவில்லை என்று அவனே உணர்ந்து, தலைகுனிந்து, தம்மிடம் உபதேசம் வேண்டும்படி பண்ணுகிறார்.

அடக்கம் வேண்டும் என்பதற்காகவேதான் "குருகுல வாஸம்"என்று வைத்து, வீட்டைவிட்டுப் பிள்ளைகளை அங்கே அனுப்பி வைத்தார்கள். இப்போது வீட்டை விட்டு ஹாஸ்டல் என்று வெளியே போகிறபோது, வீட்டில் வளருவதைவிட இவன் இன்னம் ஒழுங்கு தப்பிப்போகிறதைத்தான் அதிகம் பார்க்கிறோம். அந்த நாளில் இப்படி இல்லாமலிருந்ததற்கு முதல் காரணம் ஆசார்யனாக இருக்கப்பட்டவனின் வாழ்க்கை உதாரணம். இரண்டாவதாக, பிரம்மசாரிக்கு வைத்த அநேக நியமங்கள். குறிப்பாக பிக்ஷாசர்யம். பிக்ஷாசர்யம் என்றால் பிக்ஷை எடுப்பது என்று அர்த்தம். பூணூல் போட்டவுடன் பாலனைப் பார்த்துத் தகப்பனார் "பிக்ஷாசர்யம் சர"என்கிறார். 'பிச்சை வாங்கி குருவிடம் கொடுத்து, அதில் அவர் கொடுப்பதைச் சாப்பிடும் நியமத்தை மேற்கொள்ளு" என்று அர்த்தம்.

நாற்பது வேலி ஐம்பது வேலி நிலக் குடித்தனக்காரனாலும், தன் புத்திரனை இப்படி பிக்ஷாசர்யம் பண்ணும்படி குருகுலத்தில் கொண்டு விட்டுவிட வேண்டும்.

பிதா "பிக்ஷாசர்யம் சர "என்றவுடன் "பாடம்" என்று இதற்குப் பாடம் (Baadham)என்றால் "அப்படியே செய்கிறேன்"என்று அர்த்தம்.

எத்தனை பணக்காரன் வீட்டுப்பிள்ளையானாலும் குருகுல வாஸத்தின் போது ஒரு கோவணத்தைக் கட்டிக் கொண்டு வீடுவீடாகப் போய் "பவதி பிக்ஷாம் தேஹி" பிச்சை வாங்க வேண்டும். ஏன் இப்படி வைத்தார்கள்?இவனுடைய அஹங்காரத்தைக் குறைக்க வேண்டும். இவனுக்குப் படிப்பாளி என்ற கர்வம்

வந்துவிடக் கூடாது. படிப்பின் வாஸ்தவமான பயனை இவன் அடைய வேண்டுமானால் இவனை விநயமுள்ளவனாக்க வேண்டும் என்பதற்கே இப்படி பிக்ஷாசர்யம் என்பதை வைத்திருக்கிறது.

சிஷ்யன் பிக்ஷை வாங்கி வந்ததை குருவிடம் சேர்த்து விடுவான். அவர்

பத்தினியிடம் கொடுத்துப் போடச் செய்வார். அதாவது சிஷ்யர்களுக்கு குரு போட்டுத்தான் சாப்பாடு கிடைத்தாக வேண்டும். இவன் அகத்திலே சாப்பிட்டுக் கொண்டு, ஸ்கூலிலோ, காலேஜிலோ போய்ப் படிக்கிறபோது, "வாத்தியார் கிடக்கிறார்"என்று அலக்ஷ்ய புத்தியோடு நினைக்கிறான். அவர் போட்டுத்தான் இவனஅ சாப்பிட்டாக வேண்டும் என்கிற போது இப்படி நினைக்க மாட்டான். அவருக்கு அடங்கித்தான் நடப்பான்.

சிஷ்யர்கள் வாங்கிவரும் பிக்ஷை இவர்களுக்கு மட்டுமின்றி குருவின் குடும்பத்துக்கும் போதுமானதாக இருக்கும். ஆனாலும் அப்போதிருந்த ஏற்பாட்டில் சிஷ்யன் குருவுக்குச் சோறு போடுகிறான் என்கிற மாதிரித் தெரியாமல்,

குருவே சிஷ்யனுக்குப் போடுகிறார் என்கிற மாதிரியாகத்தான் ஒழுங்கு செய்திருந்தது.

பிரம்மச்சாரி சாப்பிடுவதற்குக் கணக்கு இல்லை. வயிறு நிறைய சாப்பிடலாம். ஆனாலும் நாக்கு ருசிக்காக ஆத்மாபிவிருத்தியைப் பாதிக்கும்படியான பதார்த்தங்களை தின்னக்கூடாது. இப்போது ஹாஸ்டலில் சுதந்திரமாக இருக்கிற மாணாக்கன் எதை வேண்டுமானாலும் தின்கிறான். அதனால் மனோவ்ருத்தி (மனத்தின் போக்கு) கெட்டுப் போகிறது. குருகுல வாஸத்தில் குரு இப்படிப்பட்ட அபக்ஷ்யங்களை (உண்ணக் கூடாதவற்றை) சிஷ்யனுக்குப் போடமாட்டார்.

சாதாரணமாக ஒரு வேதத்தையும் அதன் அங்கங்களையும் மற்ற வித்யைகளையும் கற்பதற்குப் பன்னிரண்டு வருஷங்கள் பிடிக்கும். அதாவது எட்டு வயசுக்கு குருவிடம் வந்த பையன் சுமார் இருபது வயசு வரையில் குருகுலவாஸம் பண்ணியாக வேண்டும். பதினாலு பதினைந்து வயசுக்கு மேல் மனஸில் விகாரங்கள் ஏற்படக்கூடிய பருவம் "காளைப் பருவம்"என்று சொல்கிறபடி காளை மாதிரி இஷ்டப்படி ஒடவேண்டும் என்று வேகம் ஏற்படுகிற சமயம். இப்படிப்பட்ட சமயத்திலே சாந்தராகவும், பிரியராகவும், நல்ல சீலமுள்ளவராகவும் இருக்கிற குருவிடத்திலே படித்துக் கொண்டு பிக்ஷாசர்யம் பண்ணி வருவதானது பிரம்மசாரியின் இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, அவனை நல்ல பிரம்ம தேஜஸ் உள்ளவனாக ஆக்குகிறது. சரியாக இந்த விகாரங்கள், வேகங்கள் தோன்றுகிற காலத்திலேயே இவனுக்கு குருகுல வாஸத்தையும், பிக்ஷாசர்யத்தையும் ஏற்படுத்தினால் அது விபரீதமாகத்தான் ஆகும். பெரிதாக

வெள்ளம் வருகிறபோது கரைபோடப் பார்த்தால், கரையையும் கரைபோட வருகிறவர்களையும்கூட அது அடித்துக் கொண்டு போய் விடும். அந்த மாதிரி தான் இதுவும். அதனால்தான் இவனை இதற்கெல்லாம் ரொம்பவும் முந்தி, ஒரு ஆறு ஏழு வருஷத்துக்கு முந்தியே, எட்டு வயசுக் குழந்தையாக இருக்கிறபோதே, குருகுல வாஸத்துக்கும், பிக்ஷாசர்யத்துக்கும் பழக்கப்படுத்திவிடச் சொல்கிறது நம் சாஸ்திரம். காமம் உள்ளே புகுமுன்பே காயத்ரி புகுந்து இவனைச் சுத்தப்படுத்த ஆரம்பித்து விட்டது. அதுவும் இதரப் பிரம்மசர்ய ஆசிரம நியமங்களும், எல்லாவற்றுக்கும் மேல் உண்டாக்கி விடுகின்றன. இதில் இந்திரிய அடக்கமும் சேர்ந்து விடுகிறது. பிரம்மசாரி என்பவன், பேருக்கு அப்படியில்லாமல்,

வாஸ்தவமாகவே அப்படி இருப்பான்.

இகலோகத்துக்கு ராஜா(ராஜாங்கம்) மாதிரிப் பரலோகத்துக்குக் குரு என்று சொன்னேன். நேராகப் பரலோகத்தைக் காட்டிக் கொடுக்கிற ஸந்நியாஸ ஆசிரம குருவைப் போலவே,இதற்கு ஆதியில் அஸ்திவாரம் போட்ட வித்யாப்யாஸ குருவும் முக்கயமானவர் என்று சொன்னேன். ராஜாங்கத்துக்கு சேவை செய்கிறோமல்லவா?இப்படியே ஆரம்ப ஆசார்யர், அந்திம ஆசார்யர் இரண்டு பேருக்கும் பண்ணவேண்டும். பணிவிடை புரிய வேண்டும். தக்ஷிணை தர வேண்டும். நாம் ஒருத்தருக்கு ஒன்றைத் தராமல், அவரிடமிருந்து மட்டும் பிரயோஜனத்தை அடைந்துவிட முடியாது. எந்த வஸ்துவானாலும் அதற்கு விலை கொடுத்து வாங்கினால்தான் நம்மிடம் நிலைத்து நிற்கும். ஸந்நியாஸ குருவுக்கு

தக்ஷிணை என்று அதிகம் வேண்டாம். பணிவிடையே முக்கியம் வித்யாப்பாஸ குருவுக்கு இரண்டும் வேண்டும். அவருக்குக் குடும்பம் உண்டு. அதற்கு பிக்ஷாசர்யம் செய்து பெற்றுவந்த அன்னம் மட்டும் போதாது. இந்தக்குரு யக்ஞாதி கர்மாநுஷ்டங்கள் பண்ணவேண்டியவர். எனவே இதற்கு வேண்டிய திரவியத்தை அவருக்கு தக்ஷிணையாகத் தரவேண்டும். இப்போது படிக்கிற காலத்திலேயே ஃபீஸ் கட்டுகிற மாதிரி தக்ஷிணை கொடுத்தால்,' நாம் கொடுத்துதான் வாத்தியார் பிழைக்கிறார்'என்ற திமிர் வந்து, குரு பக்தி போய்விடும். இதனால்தான், ஒருவன் கல்வியை முடித்துவிட்டு, குருகுல வாஸத்தைப் பூர்த்தி பண்ணிவிட்டுத் திரும்புகிறபோதுதான், அவர் கேட்கிற தக்ஷிணையைத் தர வேண்டும் என்று சாஸ்திரத்தில் வைத்திருக்கிறது. குரு செய்ததற்கெல்லாம் பிரதி செய்யவே முடியாது என்றாலும், முடிந்த மட்டும் சேவை செய்து காணிக்கை கொடுக்க வேண்டும்.

சாந்தமும் விநயமும் இருந்த வரையில் வித்யை வளர்ந்தது. இப்போது சாந்தத்தைக் கெடுத்து சலனத்தைக் கொடுத்துத் தடுமாற வைக்க எத்தனை உண்டோ அத்தனை ஸினிமாவும் கதைப் புஸ்தகங்களும், ஸ்கூலில் படிக்கிற நாளிலேயே வந்து சேர்ந்து விடுகிறது. காமம் புகுந்து விகாரப் படுத்தாத

பிரம்மச்சரியம் என்பது படிக்கிறவனுக்கு இல்லை. சாந்தத்தைக் கெடுத்துச் சலனத்தைப் பெரிதாகக்கொடுக்கிற இன்னொரு சத்ரு குரோதம். அதைத்தான் பள்ளிக்கூட நாளிலிருந்தே இன்றைய அரசியல் கட்சிகள் பசங்களுக்கு ஊட்டி வருகிறது. சாந்தம் போய், விநயம் போய், அகம்பாவமும் கர்வமும் வந்தபின் அவற்றோடுகூட உண்மையான வித்யையும் போய்விட்டது.

பையன் வீட்டிலேயே ட்யூஷன் கற்றுக் கொண்டால் பையன் யஜமான், வாத்தியார் சேவகன் என்றே அர்த்தம். ஹாஸ்டலிலும், காலேஜிலும்கூடத் 'தான் யஜமான்' என்பதால் தான் ஸ்டிரைக் பண்ணுகிறான். வார்டனையும் ப்ரொபஸரையும் அடிக்கப் போகிறான். ஏனென்றால் இங்கெல்லாமும் முதலில் பையனிடம் கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டு விடுகிறார்கள் குருகுலத்திலோ கடைசியாகத் தான் தக்ஷிணை. இம்மாதிரி விஷயங்களில் நம் பூர்விகர்களின் ஸைகாலஜி - நுட்பம் ஆச்சரியமாயிருக்கிறது!பல வருஷம்

அவரோடு சேர்ந்து அன்பாகப் பழகினபின் சிஷ்யனுக்கே "எதைத் தருவோம், எதைத்தான் தரக்கூடாது?" என்று நன்றியும் ஆர்வமுமாக இருக்கும். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் "இந்திராணியின் குண்டலத்தைக் கொண்டு வா!நாகரத்தினத்தைக் கொண்டு வா!என்று கேட்ட குருமாரும் உண்டு. ஆனால் இப்படிக் கேட்டவர்கள் அபூர்வமே. சிஷ்யனால் இம்மாதிரி அஸாத்யத்தையும் சாதிக்க முடிகிறது என்று காட்டி அவனைப் பெருமைப்படுத்தவே இவர்கள் இப்படிக் கேட்பார்கள். பொதுவில் எந்த குருவும் துராசை பிடித்து எதுவும் கேட்கமாட்டார். அல்ப ஸந்தோஷியாக எதிலும் த்ருப்த்ப் பட்டு விடுவார்.

த்தவித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா|

உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞானின:தத்வதர்சின: ||

என்று பகவான் கீதையில் சொல்கிறார். "பரமாத்மா தத்வத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அப்படித் தெரிந்து கொண்டவர்களான ஞானிகளிடம் போ. அவர்களிடம் வணக்கத்தோடு, பணிவோடு (ப்ரணிபாதேன) நடந்து கொள்;அவர்களுக்கு சேவை பண்ணு (ஸேவயா);கவனமாகக் கேட்டுக் கேட்டு (பரிப்ரச்னேன) உபதேசங்களைப் பெற்றுக் கொள். நீ இப்படியெல்லாம் இருந்தால், அவர்கள் நிச்சயம் ஞானாபதேசம் தருவார்கள்"என்கிறார்.

"இஷ்டப்பட்ட தக்ஷிணையைக் கேள்"என்றதால், அந்த குருவானவன் துராசை பிடித்துப் பெரிதாக எதுவும் கேட்டு விடமாட்டான். சிஷ்ய லக்ஷணம் மாதிரியே குரு லக்ஷணமும் உண்டல்லவா?

தைத்திரியோபநிஷத்தில் ஒரு ஆசார்யரானவர் சிஷ்யன் படிப்பை முடித்துவிட்டு

அகத்துக்குத் திரும்பும் போது அவனுக்குப் பண்ணும் உபதேசத்தைச் சொல்லியிருக்கிறது. இதை உபநிஷத் காலத்திய கான்வகேஷன் அட்ரஸ் (பட்டமளிப்பு விழா உரை)என்று வேடிக்கையாகச் சொல்கிறார்கள்!அதில் "ஸத்யம் பேசு; தர்மப்படி நட;வேத அத்யயனத்தை ஒரு நாளும் விட்டுவிடாதே ( அவரவரும் ஸவதர்மப்படியான தொழிலை விடக்கூடாது என்று அர்த்தம் );இந்த வேத தர்மம் என்றைக்கும் நடக்க வேண்டியதாதலால் கிருஹஸ்தாச்ரமம் ஏற்று, ஸந்ததியை உண்டாக்கி, அதற்கு இந்த வேதச செல்வத்தை ( அல்லது வேத விதிப்படி அவரவருக்கும் லோக க்ஷேமார்த்தமாக ஏற்பட்ட கர்மாவைக்) கொடு. தேவ, பித்ரு காரியங்களை ஒரு நாளும் விடாதே. தாயை தெய்வமாகக் கொள்ளு:ஆசார்யனை தெய்வமாகக் கொள்ளு :அதிதியை தெய்வமாக கொள்ளு: வேதவிதி மீறாத கர்மாக்களையே பண்ணு" என்றெல்லாம் சொல்லி விட்டு குருவானவர், "எங்களிடம் நீ எப்பேர்ப்பட்ட நல்ல நடத்தையை (ஸுசரித்தை) ப் பார்த்திருக்கிறாயோ அதன்படியே நீயும்கூட;வேறு விதமாகப் போகாதே"என்று சொல்கிறார்.

இதிலிருந்து குருவாகப்பட்டவர் மிகுந்த நல்லொழுக்கத்துடன் இருந்திருக்க

வேண்டும் என்று ஏற்படுகிறது.

இப்படி தங்களுடைய நன்னடத்தையைத் தாங்களே சொல்லிக் கொள்வதும் கூட அஹங்காரமாகிவிடும் என்பதால் உடனேயே, "எங்களைவிட சிரேஷ்டமான பிராமணர்கள் எவர்களோ"அப்படிப்பட்ட பெரியவர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய விதத்தைச் சொல்கிறார். சிஷ்யன் மாதிரியே ஆசார்யனுக்கும் விநயம் இருக்கவேண்டும் என்பதால் சொன்ன வார்த்தைதான் இது;உபதேசம் பண்ணுகிற ஆசார்யனுக்கும் விநயம் இருக்கவேண்டும் என்பதால் சொன்ன வார்த்தைதான் இது;உபதேசம் பண்ணுகிற ஆசார்யரும் வாஸ்தவத்தில் ரொம்ப சிரேஷ்டர் தான் என்றே வைத்துக் கொள்ள வேண்டும்.

என்ன செய்வது, எப்படிச் செய்வது என்கிற விஷயங்களில் சிஷ்யனுக்கு சந்தேகம் வந்தால், அவன் யாருடைய உதாரணத்தைப் பார்த்து அதன்படி செய்யவேண்டும் என்பதைச் சொல்கிறார். "தீர விசாரித்துத் தெளிவு பெறும் திறமை வாய்ந்தவர்களும், சாஸ்திர முறைப்படியே ஒழுகுபவர்களும், பிறத்தியார் ஏவுதலுக்குக் கட்டுப்படாதவர்களும், குரூர ஸ்வமாவம் இல்லாதவர்களுக்கும் அதாவது அன்புள்ளம் படைத்தவர்களும் வெறும் விஷயகாமிகளாக இல்லாமல் தர்மகாமிகளாக, அதாவது அறவழியிலேயே பற்றுள்ளவர்களுமான வேத வித்துக்கள் எப்படி நடப்பார்களோ அப்படி நட" என்கிறார். இங்கே சொன்ன யோக்கியதாம்சங்கள் எல்லாம், உபதேசிக்கிற ஆசார்யருக்கும் இருப்பவை, இருக்க வேண்டியவை என்று அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். இத்தனைக் காலம் இவன் குருகுலவாஸம் பண்ணி ஆசார்யரோடேயே இருந்து, அவர் நடக்கிற முறைகளைப் பார்த்துக் கொண்டுவிட்டான். இப்போது அவரைவிட்டு,

வீட்டுக்குத் திரும்புகிறான். இனிமேலும் அவன் இதே ஒழுக்கங்களையே பின்பற்ற வேண்டும் என்பதைத்தான் உபநிஷத்தில் ஆசார்யரானவர் எடுத்துச் சொல்கிறார்.

ÞŠð® ï™ô Yôƒèàì¡ Þ¼,Aø º¼Mì‹ CwìòÂ,º ãŸð´Aø ð,Fî£¡ º¼ºô õ£ú ˆF¡ àJ˜ G¬ô.CwòÂ¬ìò Mïò‹,Þ‰FKò G,óý‹,HŸð£´ Þõ¡ ð®Šð®ò£èŠ ªðøŠ«ð£Aø ß²õó ð,F, Ý ˆñ£HM¼ˆF â™ô£õŸÁ,º‹ Íôîù‹ Þ‰î º¼ Íôîù‹ Þ‰î º¼ ð,Fî£¡.

இம்மாதிரி பக்தியைத் தாமாகப் பெறக்கூடிய ஸ்வயயோக்யதை இல்லாத குருவாக இருந்தாலும் சரி, சின்ன வயசில், "இவர்தான் உனக்கு தெய்வம் மாதிரி" என்று ஒரு குருவிடம் சேர்த்துவிட்டு, இவனை பிக்ஷாசர்யம் பண்ண வைத்து, பிக்ஷான்னத்தை அந்த குரு போட்டுத்தான் இவன் சாப்பிட்டாக வேண்டும் என்று ஒரு ஏற்பாட்டையும் பண்ணி விட்டால் இதுவே ஒரு பக்தியை உண்டாக்கிவிடும். இப்படி குருபக்தியோடு கல்வி கற்றால், இப்போது பார்க்கிற மாதிரி அடங்காமை (பல தினுசிலும் அடங்காமை) இல்லாமல், ஒருத்தன் கற்ற கல்வி அவனுக்கும் வாஸ்தவமாக க்ஷேமத்தைத் தரும்;லோகத்துக்கும் அவனால் க்ஷேமத்தைத் தரும்;

லோகத்துக்கும் அவனால் க்ஷேமத்தை உண்டு பண்ணும்.

இதனால்தான், தற்போது போய்க் கொண்டிருக்கிற போக்கு என் ஆசைக்கு முற்றிலும் எதிரிதிசையில் இருந்துங் கூட, குருகுல வாஸக் கல்வி முறையை எப்படியாவது உயிர்ப்பிக்க முடியுமா என்பதில் நான் ரொம்பவும் விசாரமாயிருக்கிறேன்.

என் ஆசை - பள்ளிக்கூடத்தில் ஒரு வருஷம் FAIL - ஆகி விட்டதாகவாவது நினைத்துக் கொண்டு ஒவ்வொருத்தரும் தங்கள் குழந்தைகளை ஒரே ஒரு வருஷமாவது குருகுல வாஸம், பிக்ஷாசர்யம் பண்ண வைக்க வேண்டும்.

பன்னிரண்டு வருஷம் என்றால் அடியோடு ஒருத்தரும் கேட்கமாட்டீர்கள். அதனால்தான் ஒரு வருஷம் என்று கேட்கிறேன். சின்ன வயஸில் ஒரு வருஷம் இந்தப் பழக்கம் இருந்தாலும்கூட அதற்கு ஒரளவு நல்ல பலன் ஏற்படும். ஃபெயில் ஆன மாதிரி என்று நான் சொன்னாலும் வாஸ்தவத்தில் இது 'வேஸ்ட்'டாகப் போகாது. ஒரு வருஷ பிக்ஷாசர்ய குருகுலவாஸத்தில் மாணாக்கனுக்கு மூன்று வருஷத்து புத்தி தீக்ஷண்யம் உண்டாகும். அடுத்த வருஷமே பள்ளிக்கூடத்தில் ஒரு 'டபுள் பிரமோஷன்'வாங்கி ஈடுபண்ணிவிடுவான். அதோடு குருவிடம் ஒரு வருஷம் தங்கியதில் பிராதஸ்நானம் (விடியற்காலக் குளியல்), ஸந்தியாவந்தனம் முதலான வழக்கங்கள் படிந்து ஆயுள் பூராவும் நிலைத்திருக்கும்.

இப்போது ஸ்கௌட் காம்ப் (சாரண முகாம்) என்று, குழந்தைகளை ஒரு மாஸம், அரை மாஸம் வெளியூருக்கு அனுப்புகிறீர்கள் அல்லவா?இதையே கொஞ்சம்

விஸ்தரித்து ஒரு ஆசார்யனிடத்தில் ஒரு வருஷமாவது கூட வஸித்து, பிக்ஷாசர்யம் பண்ணி வரும்படியாக ஏற்பாடு பண்ணுங்கள் என்று சொல்கிறேன். இதனால் அநேக நல்ல பழக்கங்கள், கட்டுப்பாடுகள் உண்டாகும்;குரு பக்தி என்பதன் த்வாரா (வழியாக) இத்தனையும் ஏற்படும்.

குழந்தைகளைத் தங்களோடு வைத்துக்கொண்டு பாடம் சொல்லிக் கொடுக்கப் பிரியப்படுகிற குருமார்களையும், அவர்களிடம் குழந்தைகளை அநுப்பி வைக்கக் கூடிய பெற்றோர்களையும் சமூக உணர்ச்சியின் மூலம்தான் உண்டாக்க வேண்டும்.இந்த ஸஹாயத்தைச் செய்யும்படியாக உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். படிப்பு முடிந்தபின் தக்ஷிணை தர முடியாத ஏழைக் குடும்பத்தினருக்காகவும் மற்றவர்கள் தரவேண்டும். அநேகமாக இப்படிப்பட்ட வசதியில்லதவரர்கள்தான் குழந்தைகளைக் குருகுல வாஸத்துக்கு அனுப்பக்கூடியவர்கள். அவர்களுக்கான ஸஹாயத்தை அங்கங்கே பத்துப்பேர் சேர்ந்து பண்ணினாலும் போதும். தனியாகப் பெரிய ஸ்தாபனம் என்று ஏற்படுத்தக் கூட வேண்டாம். ஸ்தாபனம் கூடவே கூடாது என்று சொல்வதாக அர்த்தமில்லை. ஆனால் அப்படி பெரிய ஸ்கேலில் நடப்பதற்காக நாம் காத்துக் கொண்டிருக்க வேண்டாம் என்கிறேன். இப்போது நம்மளவில் சாத்யமான அளவுக்கு ஆரம்பித்துவிடவேண்டும் என்கிறேன். நாம் ஒவ்வொருவரும் சொந்த அக்கறை

(Personal Interest) è£†®, î¡ù£ô£ù¬î,, ªêŒò «õ‡´‹ â¡ð«î º‚Aò‹ Þ‰î ñ«ù£ð£õ‹ õ¼õ¶ î£¡ ÜõCò‹.

ஜாஸ்தி படிக்க படிக்கத்தான் ஜாஸ்தி நாஸ்திகம், ஜாஸ்தி அடங்காமை, ஜாஸ்தி அநாசாரம் என்று இப்பொழுது கொண்டுவிட்டிருக்கிறது. இந்த நிலைமை மாற வேண்டுமானால் அதற்கு வழி - ஒரு உதாரணத்துக்குக் காட்டவாவது, என்பதை ஏற்படுத்திக் காட்ட வேண்டும். குருகுலவாஸப்படிப்பு முறையில்தான் குருபக்தி இருந்திருக்கிறது.

போன தலைமுறை வரையில் ஸங்கீதம் ஒன்றிலாவது குருகுலவாஸம்

இருந்தது. இப்போது அங்கேயும் போய்விட்டது. எனவே நாம் இதில் முயற்சி எடுக்கவேண்டும். யார் வருவார்கள் என்று முயற்சி பண்ணாமலே இருந்து விடக்கூடாது. மனப்பூர்வமாக முயற்சி பண்ணினால் பத்துப் பேராவது பலன் அடையாமல் போகமாட்டார்கள். ஈசுவர பக்தியும், அந்த ஈசுவர பக்தி வாஸ்தவமாக ஏற்பட்டு நிலைத்து நிற்பதற்கு வழி செய்கிற குருபக்தியும் அழிந்து போகாமல் இருப்பது லோக க்ஷேமத்துக்கு ரொம்ப அவசியம்.

---

குருவுடைய யோக்யதாம்சங்களை (Qualifications) பற்றி நிறையச் சொன்னேன். ஆரம்பகால வித்யா குருவான வேதவித்தானாலும் சரி, நம் ஆத்மாவைப் பரமாத்மாவிடம் சேர்க்கிற ஞான குருவான பிரம்மவித்தானாலும் சரி, இரண்டு பேருக்கும் ஒழுக்கம், பக்தி இரண்டும் முக்கியம் என்று சொன்னேன். பரலோகத்துக்கு வழி காட்டுகிற குரு பிரத்யக்ஷ ஈச்வரன் மாதிரிச் சித்தம் கொஞ்சம் கூடச் சலிக்காதவராக, மஹா ஞானியாக, கிருபா மூர்த்தியாக, பரம சுத்தராக இருக்க வேண்டும் என்றேன். இப்படிப்பட்ட குரு கிடைத்துவிட்டால் ஈசுவரனே கூட வேண்டாம் என்றேன். ஆனால் இந்த மாதிரி ஒழுக்கமுள்ள வித்யாப்யாஸ குருவோ, ஈசுவரத்வம் நிறைந்த ஆத்ம உபதேச குருவோ எல்லோருக்கும் கிடைக்க முடியுமா என்று ஒரு யோஜனை பிறக்கிறது. சுத்தியாக வேண்டுமென்று நிஜமான தாபம் இருந்தால், அப்படித் தாபப்படுகிறவர்களிடம் பகவானே குருவை அனுப்பித் தீருவான் என்றுதான் சாஸ்திரங்கள் சொல்கின்றன. மாணிக்கவாசகருக்கு ஈசுவரனே குருவாக வந்து குருந்த மரத்தடியின் கீழே இருந்து கொண்டு உபதேசம் பண்ணினான். திருவாசகத்தில் அநேக இடங்களில் மாணிக்கவாசகரே இதைச் சொல்லியிருக்கிறார். இதெல்லாம் நமக்குத் தெரிந்தாலும் சஞ்சலம் உண்டாகின்றது. குரு என்று நாம் தேடிப் போகிறவர் வாஸ்தவத்தில் ஒரு போலியாக இருந்துவிட்டால் என்ன பண்ணுவது?அவர் சுத்தரா இல்லையா என்று நமக்கு எப்படி நிச்சயமாகத் தெரியும்? சுத்தர் என்றே போகிறோம், அப்புறம் நேறு தினுஸாகத் தோன்றுகிறது என்றால் என்ன பண்ணுவது? இன்னோரிடத்துக்குப் போகலாம் என்றால், அங்கேயும் இதே மாதிரி ஏமாந்து போகமாட்டோம் என்று என்ன நிச்சயம்? இப்படி குழப்பமாயிருக்கிறது. லோகம் பொல்லாதது. நாலு தினுஸாகப் பேசும். ஒரு சுத்தரைப் பற்றியே அபவாதமாக சொல்லிவிடுகிறது. அது நிஜமாக இருந்துவிட்டால் நம் கதி என்ன ஆவது என்று அவரை ஆச்ரயித்தவர்களுக்கு பயம் உண்டாகிறது. இதற்கு என்ன பண்ணலாம்?வித்யாப்யாஸ குரு விஷயத்தில் இது பெரிய பிரச்சனை இல்லை. அவரிடம் மநுஷ்யர்களுக்குள் நல்ல சிஷ்டர்களால் முடியக்கூடிய ஒழுக்கங்களைத் தான் எதிர்ப்பார்க்கிறோம். இதை அநேகமாக அவர் பூர்த்தி பண்ணிவிடுவார். அவர் கிருஹஸ்தாச்ரமிதான் என்பதாலேயே ஸந்நியாஸ குருவுக்கு ரொம்பவும் களங்கமாகிற தப்புக்கள் இவருக்கு ஏற்படுவதற்கே இடமில்லாமல் போகிறது. அதுவும் தவிர இவரிடம் சிஷ்யனாக இருப்பது பால்யத்தில்தான். அப்போது மனஸ் தோண்டி எதையும் ஜட்ஜ் பண்ணாது. அதனால் இவரையும் ஜட்ஜ் பண்ணாது. இவர்தான் தெய்வம் மாதிரி என்று ரொம்பவும் இளமனஸில் ஏற்றி விட்டதால், அது அப்படியே நினைத்துக் கொண்டு பக்தியோடு இருந்துவிடும். ஆத்ம சுத்திக்கும், மோக்ஷத்துக்கும் என்றே ஏற்பட்ட இன்னொரு குருவைப் பற்றித்தான் பிரச்சனை (Problem) அவர் பூர்ணமானவர் என்று நாம் எப்படி நம்புவது?அவரிடம் தோஷம் தெரிந்தால் என்ன

பண்ணுவது?குரு என்று வந்தோம். தப்பானவர் என்று விட்டுப்போனால், அது குருத்ரோஹமா, பாவமா?தப்பானவர் என்று நினைத்ததே தப்பாக இருந்துவிட்டால்? இந்த மாதிரி சங்கட நிலையில் என்ன செய்யலாம் என்று எனக்குத் தோன்றுகிறதைச் சொல்கிறேன். குருவின் யோக்யதாம்சம் பற்றி முன்னே சொன்னதையெல்லாம் இப்போது நானே வாபஸ் வாங்கிக் கொண்டுவிடப் போகிறேன்.அதாவது!குருவுடைய யோக்யதாம்சத்தையே பார்க்காதீர்கள் என்கிறேன். வித்யாப்யாஸ குருவிடம் குழந்தை சிஷ்யன் இருக்கிற மாதிரியே, மோக்ஷ மார்க்கத்தைக் காட்ட வேண்டிய இவரிடம் வயதான சிஷ்யர்களும் இருந்துவிட வேண்டும் என்கிறேன். அதாவது அவரிடத்தில் முழு நம்பிக்கை வைத்து விட வேண்டும். அது கண்மூடித்தனம் என்று மற்றவர்கள் சொன்னாலும் சொல்லிவிட்டுப் போகட்டும். குரு வேண்டும் என்று தேடினோம். சுத்தமானவர், பூர்ணமானவர் என்று நம்பித்தான் இவரை ஆச்ரயித்தோம். இவரிடம் வந்தபோது இவர் அசுத்தமானவர், அபூர்ணமானவர் என்று நாம் நினைக்கவில்லை. அப்படி நினைத்தால் வந்தேயிருக்க மாட்டோம். வந்தபின் இப்போது சந்தேகம் ஏற்பட்டு விட்டதென்றால் என்ன செய்யலாம்?இன்னொருவரிடம் போவதென்றால் அவர் கதையும் பிறகு எப்படியாகுமோ என்று ஒரு பயம். இன்னொரு பயம், குரு என்று இவரை வரித்துவிட்டு, இன்னொருவரிடம் போனால் பாதிவ்ரத்ய தோஷம் (கற்பில் தவறுவது)போல், குருத்ரோஹம் என்ற பாபம் ஸம்பவிக்குமோ என்பது. இந்த நிலையில் ஒரே 'ஸொல்யூஷன்'(தீர்வு), யோக்யதாம்சத்தைப் பார்க்காமல்பா பார்க்காமலிருந்து விடுவதுதான் என்று தோன்றுகிறது. நாம் குருவைத் தேடினபோது, இவர்தான் கிடைத்து, இவரைத்தான் வரணம் செய்ய வேண்டியிருந்தது என்றால், ஈச்வரனே இவரைத்தான் நமக்கு குருவாக அனுப்பி வைத்திருக்கிறான் என்றுதானே அதற்கு அர்த்தம்?அப்படியே வைத்துக் கொள்வோம். குருவை ஈச்வரன் அனுப்பினான் என்று மட்டுமில்லாமல் ஈச்வரனே குருவாக வந்திருக்கிறான் என்று பாவிக்கும் படி தானே சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது!இவர் மநுஷ்ய குரு என்கிற வரையில்தான் இவர் நிர்தோஷமானவரா, தோஷமானவரா என்ற கேள்வி வருகிறது. இவரே ஈச்வரன் என்று நம்பிவிட்டால், இந்தக் கேள்விக்கே இடமில்லை. தோஷமுள்ள ஈச்வரன் என்று உண்டா என்ன?ஈச்வரனிடத்தில் தோஷம் மாதிரி ஏதாவது தெரிந்தால்கூட, இதுவும் நம் திருஷ்டி தோஷம் தானே?இப்படியே குருவைப் பற்றியும் நினைத்துவிட்டால் போகிறது. இவர் ஈச்வரனே என்று வைத்துவிட்டால் இவரைவிட்டு இன்னொருவரிடம் போவதற்கும் இடமில்லை. ஈச்வரன் ஒருத்தன்தானே?ஒரு ஈச்வரனை விட்டு இன்னொரு ஈச்வரனிடத்தில் போவது என்பது பரிஹாஸமான விஷயமல்லவா? அதனால் குரு என்று ஒருத்தரை அடைந்த பிறகு, அவர் எப்படியானாலும் இருக்கட்டும் என்று நாம் நம் பக்தியில் இறங்காமல், சலிக்காமல் அவரையே உபாஸித்து வரவேண்டும், இப்படிப் பண்ணினால் கடைசியில் ஈச்வரன் அவர் மூலமே நமக்கு சுத்தியை, ஞானத்தைக் கொடுத்துவிடுவான். அவர் மோக்ஷத்துக்குப் போனாலும் போகாவிட்டாலும் நாம்

போய்விடுவோம்! தூர்த்த குணம், கெட்ட பழக்கமுள்ள குருவை உபாஸிக்கிறோம் என்று உலகம் பரிஹாஸம்தான் செய்யும். செய்துவிட்டுப் போகட்டும். இதனால் நமக்கு எந்த அளவுக்கு நஷ்டம் வந்தாலும் வந்துவிட்டுப் போகட்டும். முடிவில் இதற்கெல்லாம் ஈடு செய்வதான லாப-நஷ்டம், மானாவமானம் பார்க்காமல் ஒரிடத்தில் நம்பி சரணாகதி பண்ணிவிட்டால், முடிவில் அதற்காக ஈச்வரன் பரம லாபமான ஆத்ம ஞானத்தைக் கொடுத்து விடுவான்.

லோகத்தில் லாப நஷ்டம் என்பவை உண்மையில் நிரந்தரமாக இல்லை. அவை கொஞ்ச நாள் இருப்பதுபோலத் தோன்றுவதுதாம். ஆதலால் பாக்கி இடங்களில் தான் லாபநஷ்டம் பாரத்தாலும் பார்க்கலாம். குருவிடத்தில் மட்டும் லாப நஷ்டம் பாராமல் சரணாகதி பண்ணிவிடவேண்டும்.

பூமௌ ஸ்கலித பாதானாம் பூமிரேவ (அ) வலம்பனம்।

த்வயி ஜாத (அ)பராதானாம் த்வமேவ (ஆ)லம்பனம் குரோ।।

மாடியிலிருந்து விழுந்தால் பூமி தாங்கும்.மரத்திலிலுந்து விழுந்தாலும் தாங்கும். பூமியிலேயே தடுக்கி விழுந்தால்?அப்போதும் பூமிதான் தாங்கும். ஈச்வராபசாரத்தை குருவினிடம் சொல்லித் தீர்த்துக்கொள்ளலாம். குருவிடம் அபசாரம் பண்ணினால், எங்கே அபசாரம் பண்ணினோமோ அங்கேயே தான் நிவர்த்திக்கும் போகவேண்டும்.

குரு ஒருவரைத் தேடவேண்டுவது நம் கடமை. மனம் மாறாமல் இருக்கவேண்டுமென்று பெரியவர்களை நாம் தேடுகிறோம். மனஸை அர்ப்பணம் பண்ணுவதைப் பிரதானமாக வைத்துக் கொண்டால் யாராயிருந்தாலும் சரி;போதும். இன்னம் சொல்லப்போனால், குரு நல்லவராக இருந்தால் அவரிடம் பக்தியாய் இருப்பதில் நமக்கு என்ன பெருமை?யோக்கியதை இல்லாத ஒருவர் குருவாக இருந்தும் அவரிடம் அடங்கியிருந்தாலே மனது நல்ல பக்குவமடையும். 'ஈச்வரன் நம்மைப் பரீக்ஷித்து மனஸின் பக்குவத்தைத் திடப்படுத்தவே இப்படி ஏற்பட்டிருக்கிறது;இதனால்தான் அதிகப் புண்ணியம் உண்டு'என்று வைத்துக்கொள்ள வேண்டும்.மகாமகக் குளத்தில் ஊற்றுப் போட்டு ஜலம் இறைத்தால் அதில் வெள்ளைக்காரன் கூட ஸ்நானம் பண்ணுவான். எவ்வளவு சேறானாலும் "இது புண்ணிய தீர்த்தம்" என்று முழுகினால்தான் உண்மையான பக்தி இருக்கிறதென்று அர்த்தம். இப்படி நம்மையே பரீக்ஷித்துக் கொள்ளலாம். மஹான்களை அடைகிறது நம்முடைய மனோபக்குவத்தைப் பரீக்ஷிக்க விரும்பாத சோம்பலால்தான். அவர்கள் பெரியவர்களாக இருந்தால் நமக்கு ஒரு பெருமையும் இல்லை. நம்முடைய பக்தியும் பிரயோஜனப் படவேண்டும். ஒரு மஹாக்ஷேத்திரத்தின் கோயிலி அர்ச்சகர் மிகவும் அசுத்தியாக இருக்கிறாரென்று வைத்துக்கொள்ளுவோம். அதற்காக நாம் தரிசனம் செய்யாமலிருக்கிறோமா?நாம் அர்ப்பணம் பண்ணுவதுதான் லாபம். குரு மஹானாக இல்லாவிட்டாலும் நாம்

பக்தியில் திடமாக இருந்தால் அதிகப் பண்ணியம் உண்டாகிறது.

நம் மனம் போகிற வழியில் விடாமல் எங்கேயோ ஓரிடத்தில் அதை அடக்கிப் போட்டு சரணாகதி பண்ணிவிட்டால் போதும். நம்மைக் காப்பாற்றப் போகிறவர் என்று முதலில் ஒருத்தரை நம்பினபோது அவரிடம் பண்ணின சரணாகதியை எக்காலத்திலும் மாற்றிக்கொள்ளாமலிருந்து விட்டால் எந்த ப்ரயோஜனத்துக்காக இந்த குருவிடம் நாம் வந்தோமோ அது ஈச்வர ப்ரஸாதமாகக் கிடைத்துவிடும்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*வேத மதம்*

### மதத்தின் மூலாதாரம் வேதமே

தர்ம பிரமாணங்கள் பதிநான்கில் பிரதானமானது வேதம். ரிக்-யஜுஸ்-ஸாமம்-அதர்வம் என்ற நாலு வேதங்களுந்தான் பதினான்கில் முதல் நாலாகும்.

பாக்கியுள்ள பத்தில் ஆறை வேதத்தின் அங்கம் என்றும், மிகுதியுள்ள நாலை உபாங்கம் என்றும் சொல்வார்கள்.

ஒரு மனிதன் என்றால், பல அங்கங்கள் இருக்கின்றன அல்லவா?இப்படியே வேதத்தை வேத புருஷன் (வேதமாதா என்றும் சொல்வதுண்டு) என்று உருவகப்படுத்தினால், அந்த புருஷனுக்கு ஆறு அங்கங்கள். இப்படி அங்கம் மாதிரி நேராக வேதத்தில் இருப்பவை என்று இல்லாவிடினும், வேத புருஷனுக்குத் துணை அங்கமாக இருக்கிற நாலும் உபாங்கங்கள். நேர் அங்கம் ஆறை ஷடங்கம் (ஷட்-ஆறு) என்பார்கள். இவை சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம் (ஜோதிடம்), கல்பம் என்பவை. உபாங்கம் நாலு. மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்பவை.

ஆகக்கூடிய வேதம்தான் முக்கியம். வேதத்துக்கு அங்கம், வேதத்துக்கு உபாங்கம் என்பதால்தான் மற்றப் பத்தும் வித்தைகளாக, சாஸ்திரங்களாக அந்தஸ்துப் பெறுகின்றன. பதினெட்டு வித்தைகள் என்கிறபோது மிச்சமிருக்கிற ஆயுர்வேதம், அர்த்த சாஸ்திரம், தநுர்வேதம், கந்தர்வ வேதம் இவற்றுக்கும் உப-வேதங்கள் என்றே பெயர் இருப்பதிலிருந்து, வேத அடிப்படையில்தான் இவையும் உண்டானவை என்று தெரிகிறது.

அங்கம், உபாங்கம் இவற்றோடுகூட வேதத்தைக் கற்க வேண்டும். அதற்கு 'ஸ'அங்க உபாங்க அத்யயனம் என்று பெயர். இதுவே "ஸாங்கோபாங்க ம்"என்பது. இப்போது எந்த விஷயமாயினும், அரசியல் கட்சி விஷயமானாலுங் கூட, ஒருத்தர் அந்த விஷயத்தை அடியிலிருந்து நுனி வரை எல்லாப்

பாயின்டுகளையும் எடுத்துக் காட்டிப் பேசினால் 'ஸாங்கோபாங்கமாகப் பேசினார்' என்கிறோம் அல்லவா?இந்த ஸாங்கோபாங்கம் என்ற சொல் பழைய சதுர்தச வித்யையைக் குறிப்பதுதான். அந்த வித்யாப்யாஸத்தை நாம் இப்போது அடியோடு மறந்துவிட்டாலும், வழிவழியாக அந்த பயிற்சிமுறை நம் நாகரிகத்தோடு கரைந்து விட்டதால் இன்றைக்கும் பூர்த்தியாக ஒரு விஷயத்தை விளக்குவதனால் "ஸாங்கோபாங்கமாக"என்று சொல்கிறோம். இதிலிருந்தே வேதம், அதன் ஆறு அங்கங்கள், நாலு உபாங்கங்கள் ஆகியவற்றின் அப்பியாஸமானது ஸாதாரண ஜனங்களுக்கும் தெரிகிற அளவுக்கு எவ்வளவு சிறப்பாக நம் தமிழ் நாட்டில் இருந்திருக்கிறது என்று புரிந்து கொள்ளலாம். அப்படியெல்லாம் இருந்தும், இன்று அவற்றின் பேர் கூடத் தெரியாத நிலைக்கு வந்துவிட்டதுதான் இன்னம் ஜாஸ்தி துக்கத்தைத் தருகிறது. இது இருக்கட்டும்.

வேதந்தான் பிரதானம்;மையமானது. அதை வைத்துத்தான் மற்றவை. நேரான தர்மப் பிரமாணம் நம் மதத்துக்கு எது என்றால் வேதம்தான். அதுதான் நம் பைபிள், குரான், கிரந்தஸாஹேப். இப்போது நான் இப்படி அந்த மற்ற மத நூல்களின் பெயர்களை வேதத்துக்குச் சூட்டினாலும் வேதம்தான் அவை யாவற்றிலும் முந்தையது. அவை எல்லாமுங்கூட வேதத்தின் ஒரு சில தத்வங்களிலிருந்து உண்டானவை தான். எனவே வேதம் என்றால்தான் பிரமாணநூல் என்றே அர்த்தமாகி விட்டது. நான் இப்போது மாற்றிச் சொன்னாலும் பைபிளையும், குரானையும் - மற்ற மதங்களின் ஆதார நூல்களையும்தான் - கிறிஸ்துவ வேதம், முஹம்மதியர் வேதம், ஸீக்கியர் வேதம், பார்ஸியர் வேதம் என்று சொல்கிற வழக்கம் இருக்கிறது. கிறிஸ்துவர்கள் நம் ஊரில் தங்கள் பைபிளை "ஸத்ய வேதம்" என்றே சொல்கிறார்கள்.

வேதத்தைப் பற்றிச் சொல்வதென்றால், எங்கே ஆரம்பிப்பது, எங்கே முடிப்பது என்று மலைப்பாக இருக்கிறது. அத்தனை விஸ்தாரமான மகிமை வாய்ந்தது அது.

**ப்ரமாணம் வேதாச்ச** என்று ஆபஸ்தம்ப தர்ம ஸூத்திரத்தில் சொல்லியிருக்கிற மாதிரி, எல்லாத் தர்மங்களுக்கும் மூலமான பிரமாணம் நாலு வேதங்களும்தான்.

மநு தர்ம நூல், மநு தர்ம நூல் என்று ஒன்றைத் தமிழ் தேசத்து மஹான்கள் ஆதிகாலத்திலிருந்து போற்றி வந்திருக்கிறார்கள். பாரத தேசம் முழுவதிலுமே நீதிகளை எடுத்துச் சொல்வதில் மநுவின் தர்ம சாஸ்திரம்தான் முதல் ஸ்தானம் பெற்றிருக்கிறது. தமிழ் நாட்டில் மநுநீதிச் சோழன் என்றே ஒருவன் மஹா நீதிமானாக இருந்து கொண்டு, தன் பிள்ளையின் தேர்ச் சக்கரத்தில் மாட்டிக் கொண்டு உயிரை விட்ட ஒரு கன்றின் தாய்ப்பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காக, அந்த பிள்ளையையே தேர்க்காலில் பலி கொடுத்தான் என்று கதை இருக்கிறது. தர்ம விஷயங்களுக்கு மநுநீதி சாஸ்திரந்தான் பிரமாணம் என்றே வைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் இந்த மநு தர்மசாஸ்திரத்தில் என்ன

சொல்லியிருக்கிறது?இந்த நால்தான் தர்மத்துக்கெல்லாம் மூலாதாரம் என்றா சொல்லியிருக்கிறது?இல்லை. "வேதோ (அ)கிலோ தர்ம மூலம்" -ஸகல தர்மங்களுக்கும் மூலம் வேதம்தான் - என்றே மநு சொல்லியிருக்கிறார். எல்லாக் காலத்துக்கும் பொதுவான சாச்வத தர்மங்களைச் சொல்வது வேதம்தான் என்றஏ அவர் சொல்லிவிட்டார்.

வேதம் எப்படி சொல்கிறதோ அப்படித்தான் செய்யவேண்டும். அது சொல்வதை மீறக் கூடாது. ஏனென்றால், அதுதான் தர்மமூலம். யாராவது ஒன்றைச் சொல்லி அதை நாம் துளிக்கூட ஆக்ஷேபிக்காமல் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்றால், "அது என்ன வேதவாக்கோ?"என்று கேட்கிற வழக்கம் இன்றும் நம்மிடம் இருக்கிறது. அதாவது, வேத வாக்கு என்றால் எதிர்க் கேள்வி கேட்காமல் அதன்படி செய்துதான் ஆக வேண்டும் என்று அத்தனை பொது ஜனங்களும் நம்பி வந்ததைத் தான் வேத வாக்கோ?என்று கேட்கிற வழக்கு நிரூபிக்கிறது. இப்படி எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக அதுதான் நமக்கு பெரிய சட்டமாக இருந்திருக்கிறது. அதனாலேயே, வைரம் பாய்ந்த மரம் என்கிறோமே, அது மாதிரி, வேதம் வைரம் பாய்ந்ததததாக இருக்கிறது. அநாதியாக வந்து கொண்டிருக்கும்படியாந சட்டப் புஸ்தகம் அது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*வேத மதம்*

### அநாதி - அபௌருஷ்யம்

அநாதியாக என்றால் என்ன அர்த்தம்?வேதத்துக்குக் காலமே சொல்ல முடியாது;அதற்கு முந்தையதாக, அதற்கு ஆதியாக எதுவும் இல்லை என்பதுதான் 'அநாதி'என்ற வார்த்தைக்கு அர்த்தம். அப்படியானால் அது என்றுமே இருந்திருக்கிறது என்று அல்லவா அர்த்தமாகும்?இப்படிச் சொன்னால் எப்படிப் பொருந்தும்?ஒரு புஸ்தகம் என்றால் அதை ஒருவரோ பல பேரோதான் எழுதியிருப்பார்கள். "ஓல்ட் டெஸ்ய்மென்டில்"பல ப்ராபெட்கள் சொன்னதைச் சேர்த்துப் போட்டிருக்கிறது. "நியூ டெஸ்ட்மென்டி"ல் கிறிஸ்துவின் உபதேசங்களைச் சொல்லியிருக்கிறது. முகமது நபி சொன்னதை குரான் தெரிவிக்கிறது. இவர்கள் யாவரும் ஏதோ ஒரு காலத்தில் இருந்தவர்கள்தான். அவர்களுக்கு முந்தி அந்த உபதேசம் இல்லை. இப்படியே வேதத்தையும் யாரோ ஒருத்தரோ, பல பேரோ எழுதியிருக்கவேண்டும். அவர்கள் ஒவ்வொரு காலத்தில்

இருந்திருப்பார்கள். அது ரொம்ப ரொம்ப முந்தைய காலம், பதினாயிரம் வருஷத்துக்கு முந்தயை காலம், அல்லது லக்ஷம் வருஷத்துக்கு முந்தயை காலம் என்று வேண்டுமானாலும் இருக்கட்டும். ஆனாலும் 'அநாதி'என்று சொல்லிவிட்டால் தப்புத்தானே?அந்தப் பத்து லக்ஷம் வருஷத்துக்கு முந்தி வேதம் இல்லாமல்தானே இருந்திருக்க வேண்டும்?

இந்த மாதிரி கேள்விகள் எழும்புகின்றன. வேதங்களை யாரோ மநுஷ்யர்கள் எழுதினார்கள் என்றால் இப்படிக் கேட்பது நியாயம்தான். அதை அநாதி - ஆதியற்றது - என்பது தப்புத்தான். ஆனால் இது சரிதானா?

சரியாகத்தானே இருக்கவேண்டும்?ஒரு புஸ்தகம் என்றால் அதை யாரோ மநுஷ்யர்கள் தான் எழுதியிருக்க வேண்டும். அதனால் அநாதி என்பது சரியில்லைதான் - இப்படித் தோன்றுகிறது.

வேதத்தை ரிஷிகள் என்ற மநுஷ்யர்கள் பண்ணினார்கள் என்றுதான் நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். நாம் படித்த சரித்திர புஸ்தகத்தில் அப்படித்தான் போட்டிருக்கிறது. அதில் போட்டிருப்பது மட்டுமில்லை.

வேதம் என்பது பல ஸூக்தங்களைக் கொண்டது. ஞானஸம்பந்தரின் தேவாரம் என்றால் அதில் பல ஸூக்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பதிகத்திலும் பத்துச் செய்யுள்கள் இருக்கிற மாதிரி, ஒவ்வொரு ஸூக்தத்திலும் பல மந்திரங்கள் இருக்கின்றன. ஸு+உக்தம் என்பதே 'ú§,î‹'. ú§ â¡ø£™ 'ï™ô'â¡Á Üˆ˜î‹. 'ú§°í‹' , 'ú§«ô£êù£'â¡ªø™ô£‹ ªê£™½A«ø£‹ Ü™ôõ£?'à,î‹'â¡ø£™ 'ªê£™ôŠð´õ¶', Üî£õ¶ õ£,°. ú¨,î‹ â¡ø£™ ï™õ£,° â¡Á Üˆ˜î‹.

சாஸ்திரோக்தமாக வேதத்தைச் சொல்கிறபோது, அதிலிருக்கிற ஒவ்வொரு ஸூக்தத்துக்கும் இன்னார் ரிஷி, அது இன்ன மீட்டரில் (சந்தஸ்) இருக்கிறது, அது இன்ன தேவதையைக் குறித்தது என்று சொல்லிவிட்டுத்தான் ஆரம்பிக்கிறோம். இப்படி அநேகம் ரிஷிகளின் பெயர்களிலேயே வேத மந்திரங்கள் இருப்பதால், இந்த ரிஷிகள்தான் இவற்றைப் பண்ணியிருக்க வேண்டும் என்று நினைக்கிறோம். ஒவ்வொரு

ரிஷியும் இன்னார் பிள்ளை, இன்ன கோத்திரம் என்று அவர்களுடைய மூதாதைகளைக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறது. "அகஸ்த்யோ மைத்ராவருணி:"என்றால், மித்ரா வருணர்களின் பிள்ளையான அகஸ்தியர் என்று அர்த்தம். இப்படி ஒவ்வொரு ரிஷியின் பேரில் மந்திரங்கள் இருக்கின்றன என்றால், அகஸ்தியர் பேரில் இருப்பது அவரது தகப்பனாரான மித்ரா வருணர்கள் காலத்தில் இல்லை என்று தானே அர்த்தமாகும்?அப்படியானால் அநாதி என்பது சரியில்லைதானே?இப்படியெல்லாம் கேட்கிறபோது, ஒவ்வொரு ரிஷியின் பேரில்

வேத மந்திரங்கள் இருப்பதால் அந்த ரிஷியே அதைச் செய்தார், இயற்றினால், நீஷீனீஜீஷீஃமீ பண்ணினார் என்று தப்பாக நினைத்து விடுகிறோம். உண்மையில் அந்த ரிஷிகள் மந்திரங்களைத் தாங்களே இயற்ற வில்லை.

வேதத்துக்கு "அபௌருஷேயம்"என்றுதான் லக்ஷணம் சொல்லியிருக்கிறது. ஒரு புருஷன் அல்லது மநுஷ்யன் செய்திருந்தால் அது பௌருஷேயம். எந்த மனிதருமே செய்யாததனால் அது பௌருஷேயம். ரிஷிகள் இயற்றிருந்தாலும் அது பௌருஷேயமாகிவிடும். ஆனால் அபௌருஷேயம் என்பதால் ரிஷிகளும் வேத மந்திரங்களைப் பண்ணவில்லை என்று ஆகிவிட்டது. மந்திரங்களை ரிஷிகள் இயற்றியிருந்தால் அவர்களுக்கு 'மந்திரங்களை ரிஷிகள் இயற்றியிருந்தால் அவர்களுக்கு "மந்திரகர்த்தா"என்றே பெயர் இருக்கும். ஆனால் வாஸ்தவத்தில் அவர்களுக்கு "மந்திரத்ரஷ்டா"என்றுதான் பெயர் இருக்கிறது. இதற்கு "மந்திரங்களைக் கண்டவர்கள்"என்றே அர்த்தம்;செய்தவர்கள் என்று அர்த்தமில்லை.

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார் என்றால் என்ன அர்த்தம்?அமெரிக்காவை அவரா உண்டு பண்ணினார்?இல்லை. ஏற்கெனவே இருந்த அமெரிக்காவை அவர் உலகுக்குத் தெரியும்படியாகப் பண்ணினார். இப்படியே தான் நியூடன், ஐன்ஸ்டீன் முதலிய எந்த விஞ்ஞானியும் புதுசாகச் சொல்கிற விதிகளை அவர்கள் செய்யவில்லை. நியூடன் சொல்லித்தானா ஒரு வஸ்துவை எறிந்தால் அது பூமியில் விழுகிறது? இல்லை. ஏற்கெனவே இருக்கிற விதிகளை இவர்கள்தான் புரிந்துகொண்டு லோகத்துக்குத் தெரிவித்தார்கள். அதே மாதிரி ஏற்கெனவே இருந்த மந்திரங்களைத்தான் அத்தனை ரிஷிகளும் கண்டுபிடித்து லோகத்துக்குக் கொடுத்தார்கள். அந்த மந்திரங்கள் இவர்களுடைய அப்பா, தாத்தா கால்த்துக்கும், அதற்கும் முந்தியுங்கூட இருக்கத்தான் செய்தன. ஆனால் அப்போது அவை உலகுக்குத் தெரியவில்லை. இவர்கள்தான் அவற்றைக் கண்டுபிடித்தார்கள். அதனால் இவர்கள் பேரிலேயே அவற்றைச் சொல்வது வழக்கமாகிவிட்டது. ஒருத்தன் புஸ்தகம் எழுதுகிறான். இன்னொருத்தன் பப்ளிஷ் செய்கிறான்;ஒருத்தன் ஸினிமா எடுக்கிறான்;இன்னொருத்தன் ரிலீஸ் பண்ணுகிறான். இப்படி மந்திரங்களை லோகத்துக்கு வெளியிட்டவர்கள் மட்டுமே தான் ரிஷிகள். ஏற்கெனவே அவை இருந்தாலும், நமக்குப் ப்ரயோஜனமாகிறபடி வெளிப்படுத்தி பரம உபகாரம் பண்ணினது ரிஷிகள்தான். அதனால் அவர்கள் பெயரைச் சொல்லி நமஸ்காரம் பண்ணுவது நியாயம்தான்.

ரிஷிகள் மந்திரங்களைக் கண்டார்கள் என்றால், அதற்கு முந்தி அவை எங்கே இருந்தன? அநாதி என்றால் சிருஷ்டியின் போதே அவையும் தோன்றினவா?மநுஷ்யர்கள் தோன்று முன்பே தோன்றி விட்டனவா?எப்படித் தோன்றின? இவர்கள் கண்டுபிடிக்கிற வரையில் எங்கே இருந்தன?

வேத மந்திரங்கள் சிருஷ்டியின் ஆரம்பத்தில் தோன்றின என்றால், பரமாத்மா லோகத்தில் சிருஷ்டி பண்ணுகிறபோதே இதையும் தாமே பண்ணிவிட்டார் என்று அர்த்தம் ஆகும். பரமாத்மாவே வேதங்களை எழுதி எங்கேயாவது போட்டுவிட்டாரா? அப்புறம் ஒவ்வொரு ரிஷிகள் அதில் ஒவ்வொரு பாகத்தைக் கண்டெடுத்தார்களா?ஆனால் இப்படி சிருஷ்டி ஆரம்பத்திலேயே வேதம் இருந்ததாகச் சொன்னால்கூட அது அநாதியாகிவிட்டது. ஏனென்றால் இப்போதிருக்கிற பிரம்ம சிருஷ்டி எப்போது உண்டாயிற்று என்பதற்கே கணக்கு இருக்கிறது. க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்று ஒவ்வொன்றுக்கும் இத்தனை வருஷங்கள் என்று சொல்லியிருக்கிறது. இம்மாதிரி ஆயிரம் சதுர்யுகம் கொண்டது பிரம்மாவுக்கு ஒரு பகல்;ஆயிரம் சதுர்யுகம் ஒரு இரவு. இந்தக் கணக்குப்படி அவருக்கு இப்போது ஐம்பது வயசுக்கு மேல் ஆகிவிட்டது என்று திருத்தமாக இன்றைய வயசை சொல்லியிருக்கிறது. எந்தக் கர்மாவுக்கும் சங்கல்பம் செய்து கொள்ளும்போது, ஒரு பத்திரம் எழுதினால் அதில் தேதி போடுகிற மாதிரி, அன்றைய தினத்தைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். இப்படிச் சொல்லும்போது பிரம்மாவின் இத்தனாவது வயசில், இத்தனாம் மாசத்தில், இன்ன பக்ஷத்தில், இன்ன நாளில், இன்ன யாமத்தில் என்று சொல்கிறோம். இதிலிருந்து என்ன ஏற்படுகிறதென்றால் சிருஷ்டி கர்த்தாவான பிரம்மா எப்போது உண்டானார் என்பதற்கே கால வரையறை இருக்கிறது. இத்தனை கோடி கோடி வருஷங்களுக்கு முந்தி பிரம்மா உண்டானார் என்றால் அவரே அநாதியில்லை. அதனால் அவரால் உண்டான லோக சிருஷ்டியும் அநாதியில்லை. சிருஷ்டியே அநாதியில்லை என்று சொல்லிவிட்டு வேதம் அநாதி என்றால் என்ன அர்த்தம்?

சிருஷ்டி தோன்றுவதற்கு முன்பும் பரமாத்மா இருந்தார். பிரம்மா இல்லை. ஆனால் பிரம்மம் என்று சொல்லப்படுகிற பரம்பொருள் அல்லது பரமாத்மா எப்பொதுமே இருந்திருக்கிறது. அதுதான் அநாதி. பிரபஞ்சம், ஜீவ ஜந்துக்கள் எல்லாம் அதிலிருந்துதான் உண்டாயின. பரமாத்மா தாமே நேரே இவற்றைப் பண்ணாமல் பிரம்மா மூலமாகப் பண்ணினார். விஷ்ணு மூலமாக பரிபாலித்தார். ருத்ரன் மூலம் ஸம்ஹாரம் பண்ணினார். அப்புறம் அந்த பிரம்ம, விஷ்ணு, ருத்ரர் எல்லாரையுங்கூட ஸம்ஹாரம் பண்ணிவிடுகிறார். இதனால் தான் பிரம்மாவுக்கும் ஆயுஸ் சொல்லியிருக்கிறது. இப்போதிருக்கிற பிரம்மாவுக்கு நூறு வயஸானபின் அவர் பரமாத்மாவோடு சேர்ந்துவிடுவார். அவர் ஆயுஸ் முடிந்துவிடும். மறுபடி இன்னொரு பிரம்மா வருவார். அவர் மறுபடியும் சிருஷ்டியை ஆரம்பிக்க வேண்டும். இம்மாதிரி இன்னொரு பிரம்மாவை உண்டு பண்ணுவதற்கு முந்தியே பரமாத்மா வேதங்களை உண்டு பண்ணி விடுவாரா?சிருஷ்டிக்கு முந்தியே வேதம் இருந்தது என்று சாஸ்திரங்களிலிருந்து தெரிகிறது. ஏனென்றால், பிரம்மாவே வேத மந்திரங்களைக் கொண்டுதான் சிருஷ்டியே செய்தார் என்று சொல்லியிருக்கிறது. வெறும் சப்தங்களேயான மந்திரத்தைக் கொண்டு சிருஷ்டி பண்ணினார் என்றால் என்ன என்று பிறகு சொல்கிறேன். இங்கே சொல்ல வந்தது, ரிஷிகளுக்கு முந்தி,

லோகமே ஏற்படுவதற்கு முந்தி, வேதங்கள் இருந்தன என்பதுதான். பிரம்மாவே வேதங்களின் உதவி கொண்டுதான் சிருஷ்டி பண்ண முடிந்தது என்று பாகவதாதி புராணங்களில் ஸர்க (சிருஷ்டி) வர்ணனை பண்ணும் இடங்களில் சொல்லியிருக்கிறது.

இதனால்தான் வேதத்தை அநாதி என்கிறார்களா?வேதம், ஈச்வரன் என்று இரண்டுமே அநாதி என்றால் இப்படி அர்த்தம் பண்ணிக்கொள்ளலாமா?யோசித்துப் பார்த்தால் இதுவும் தப்புதான்!சிருஷ்டி தோன்றாவிட்டாலும், ஈச்வரன் வேதத்தை உண்டு பண்ணினார் என்று சொல்லி விட்டாலே அது உண்டாகாத ஒரு காலமும் உண்டு என்று அர்த்தமாகும். லோகமும் ஜீவஜந்துக்களும் சிருஷ்டியாகாவிட்டாலும், பரமாத்மாவிடம் காலம் என்ற தத்துவம் உண்டான பிற்பாடுதான் வேதம் உண்டாயிற்று என்று அர்த்தமாகிவிடும். அதாவது அது அநாதி என்பது பொய்யாகிவிடும்.

வேதமும் அநாதி, ஈச்வரனும் அநாதி என்றால் இதை அவரும் பண்ணயிருக்கக்

கூடாது. ஈச்வரன் வேதத்தை உண்டு பண்ணினார் என்றால் அது ஆதியுடையதாகிவிடும். ஈச்வரனிலிருந்து தோன்றியதுதான் ஸகலமும். அவருக்குப் புறம்பாக எதுவுமே கிடையாது. ஆகையால் வேதம், ஈச்வரன் என்று இரண்டு அநாதிகள் இருந்தன என்றாலும் தப்பு. இப்படி ஒரே குழப்பமாயிருக்கிறது.

ஈச்வரனாலும் பண்ணப்படாமல், ஈச்வரனுக்கு தனியாகவும் இல்லாமல், வேதம் அநாதியாக இருக்க வேண்டும் என்றால் அது எப்படி?

Þ‰îŠ ªðKò ú‰«îý¨¶,° «õî«ñ ðF™ ªê£™LJ¼,Aø¶. «õî˜F™ å¼ ð°Fò£ù Š¼ýî£ó‡òè àðGû˜F™ (II.4.10) "K, -òü§v-ú£ñ-Üî˜õ «õîƒèœ ß„õóQ¡ ²õ£úñ£°‹"â¡Á ªê£™LJ¼,Aø¶. "G„õRî‹"- Í„²,è£ŸÁ -â¡ø õ£˜ˆ¬î¬ò Þ‰î Þì˜F™ «ð£†®¼,Aø¶.

நமக்கு ச்வாஸமில்லாவிடில் நாம் உயிரோடு இருக்க முடியுமா?முடியாதல்லவா?அப்படித்தான் பரமாத்மாவுக்கு உயிராக இருக்கிற ச்வாஸமே வேதம். அநாதியான அவர் என்றென்றும் உயிரோடு இருந்திருக்கிறார் என்பதால், வேதமே அவருடனேயே, அவரது ச்வாஸமாக, அநாதியா இருந்திருக்கிறது என்று ஆகிவிடுகிறது.

இதிலே கவனிக்க வேண்டிய விஷயம், ஈச்வரனைக்கூட வேதத்தை உண்டாக்கினவர் என்று சொல்கிற வழக்கமில்லை. நம்முடைய ச்வாஸத்தை நாம் உண்டாக்கினதாகச் சொன்னால் தப்புத்தானே?நாம் எப்போதிலிருந்து இருக்கிறோமோ அப்போதிலிருந்து ச்வாஸமும் இருக்கத்தானே

செய்கிறது?இப்படியேதான் ஈச்வரனும் வேதமும். அவரும் அதைப் பண்ணினார் என்று சொல்ல முடியாது.

வேதங்களுக்கு பாஷ்யம்(விரிவுரை) எழுதிய வித்யாரண்ய ஸ்வாமிகள், தம் குருவையே ஈச்வரனாக பாவித்து ஸ்தோத்திரம் பண்ணும்போது,

யஸ்ய நி : ச்வஸிதம் வேதா :

என்கிறார். 'எவருக்கு வேதங்கள்தான் சுவாஸமோ'என்று அர்த்தம். உபநிஷத்தில் போட்ட அதே 'நிச்வஸிதம்'இங்கே வந்திருக்கிறது. வேதத்தைப் பண்ணினார் என்று இங்கேயும் இல்லை.

பகவானும் கீதையில் சொல்கிறபோது "நானே எல்லா வேதங்களாலும் அறியப்படுகிறவன் (வேதைச்ச ஸர்வை:அஹம் ஏவ வேத்ய:)" என்று சொல்லிவிட்டு

தன்னை "வேத க்ருத்"(அதாவது வேதத்தை பண்ணினவன்) என்று சொல்லிக் கொள்ளாமல், "வேதாந்த க்ருத்"என்றே சொல்லிக் கொள்கிறார். தன்னை வேதம் அறிந்தவனாக (வேதவித்)சொல்லிக் கொள்கிறாரே அன்றி "வேத க்ருத்"என்று சொல்லவில்லை. வேதாந்தம் என்கிற தத்வ ரூபத்தில் இந்த வேதங்கள் ஈச்வரனோடு ஈச்வரனாக அவனது மூச்சாக இருந்திருக்கின்றன.

கீதையில் சொன்ன மாதிரியே பாகவதத்திலும் வேதங்களை பகவான் பண்ணினதாகச் சொல்லவில்லை. அவனுடைய ஹ்ருதயத்தில் வேதங்கள் ஸ்புரித்ததாகத் தான் சொல்லியிருக்கிறது. ஏற்கெனவே உள்ள ஒரு ஸத்தியம் நமக்குள் தானாகப் பளீரென்று வெளியிடப்படுவதுதான் ஸ்புரணம் என்பது. இல்லாத ஒன்றைப் புதிதாகப் பண்ணினால் அதை "ஸ்புரித்தது"என்று சொல்ல முடியாது. 'ஸகல மந்திரங்களையும் கண்டுகொண்ட ஆதரிஷி பிரம்மா. அவருக்குப் பரமாத்மாதான் இவற்றைக் காண்பித்துக் கொடுத்தார். எப்படி?வாயினால் சொல்லி உபதேசம் பண்ணினாரா?இல்லை, ஹ்ருதயத்தினால் வேதங்களைக் கொடுத்தார். - "தேனே ப்ரஹ்ம ஹ்ருதாய ஆதி கவயே"என்று பாகவதத்தின் முதல் ச்லோகம் சொல்கிறது. அதனால் பரமாத்மாவின் ஹருதயத்தில் எப்போதுமே வேதம் இருந்து கொண்டிருக்கிறது, அதை அவர் இயற்றவில்லை என்று தெரிகிறது. அவர் சங்கல்பம் பண்ணன மாத்திரத்தில் பிரம்மாவுக்கு அத்தனை வேதங்களும் தெரிந்துவிட்டன. அந்த சப்தங்களை வைத்துக் கொண்டு அவர் ஸ்ருஷ்டி பண்ண ஆரம்பித்து விட்டார்.

தேவாரம் ஈச்வரனை "வேதியா, வேதகீதா"என்கிறது. "சந்தோக ஸாமம் ஒதும் வாயானை""பௌழியின் காண்"என்று வேதசாகைகளின் (வேதக் கிளைகளின்)

பெயர்களைச் சொல்லி, அவற்றை பகவான் பாடிக் கொண்டிருக்கிறான் என்கிறது. பாடுகிறான் என்றால் என்ன? மூச்சு விடுவதே பெரிய பாட்டுத்தான். நாம் விடுகிற மூச்சை "ஹம்ஸ் கீதம்"என்று சொல்லியிருக்கிறது. இப்படி ஈச்வரனுடைய ச்வாஸ ஸங்கீதமாக இருப்பதுதான் வேதம் ஈச்வரன் பூணூல் போட்டுக் கொண்டு, விபூதி இட்டுக் கொண்டு, ஒயாமல் ஸ்நானம் பண்ணிக் கொண்டு, வேதத்தைச் சொல்லிக் கொண்டே இருக்கிறார். என்று தேவாரம் சொல்வதைப் பார்த்தால், பரமசிவன்தான் பெரிய கனபாடிகள் என்று தோன்றுகிறது!"பவளம் போல் மேனியில் பால் வெண்ணீரும்","வெண்ணூல் உண்டே, ஒதுவதும் வேதம்"என்றெல்லாம் அப்பர் ஸ்வாமிகள் வர்ணிக்கிறார்!இங்கேயும், "வேதம் ஒதுகிறார்", "வேதம் இசைக்கிறார்", என்றுதான் இருக்கிறதே தவிர, வேதத்தை இயற்றுகிறான் என்று ஒரிடத்தில்கூட இல்லை.

வேதங்களைப் பற்றியும், வைதிகமான யாக, யக்ஞாதிகளைப் பற்றியும் தேவாரத்தைப் போலவே வைஷ்ணவர்களின் திவ்யப் பிரபந்தங்களிலும் நிறையச் சொல்லியிருந்தாலும், எதனாலோ பெருமாள் வேதம் ஒதுவதாக எங்கும் சொல்லியிருக்கிறதாக எனக்கு நினைவில்லை.

புகழேந்தி புலவர், கஜேந்திர மோக்ஷத்தின் போது யானை 'ஆதிமூலமே'என்று அழைத்தவுடன் 'என்ன?'என்று கேட்டு வந்த மஹாவிஷ்ணுவை,

**வேதத்தின் முன் நின்றான் ; வேழம் முதலே என அழைப்ப**

**என் என்றான் எங்கட்கிறை**

என்று சொல்கிறார். இங்கே "வேதத்தின் முன்" என்றதால், "காலத்திலே வேதத்துக்கு முந்தி", என்று அவர் சொல்வதாக எனக்குத் தோன்றவில்லை. ஒருவர் வீட்டு வாசலில்

நின்றால் "வீட்டின் முன் நின்றான்"என்றுதானே சொல்வோம்?அப்படிச் சகல வேதங்களுக்கும் ஆரம்பத்தில் அவன் இருக்கிறான் என்பதையே "வேதத்தின் முன் நின்றான்"என்று சொல்லியிருப்பார். இன்னொன்று தோன்றுகிறது. பெருமாள் புறப்பாடு எப்படி நடக்கிறது?முதலில் திருவாய்மொழி கோஷ்டிக்காரர்கள் வருகிறார்கள். அப்புறம் பெருமாள்(உத்ஸவர்) வருகிறார். அவருக்குப் பின்னால் வேத பாராயணக்காரர்கள் வருகிறார்கள். இங்கேயும் ஸ்வாமி வேதத்தின் முன்னே நிற்கிறார்.

வைஷ்ணவமான ஆகமங்களின்படியும், புராணங்களின் படியும் மஹாவிஷ்ணுவையே விசேஷமாக யக்ஞ ஸ்வரூபி, வேதஸ்வரூபி என்று

சொல்லியிருக்கிறது;கருடனை வேத ஸ்வரூபம் என்றும், அதன்மேல் பகவான் இருப்பதாகவும் சொல்கிறதும் உண்டு. ஆனால் வேதத்தைப் படைத்ததாகச் சொன்னதாகத் தெரியவில்லை.

வேதத்திலேயே இருக்கப்பட்ட 'புருஷ ஸூக்தம்' ஒன்றில் தான் வேதங்கள் பிறந்தன (அஜாயத) என்ற வார்த்தையே வந்திருக்கிறது. ஆனால் 'புருஷ ஸூக்த'மானது ரொம்பவும் symbolical-ஆகவும், allegorical- ஆகவும் (உருவக அணி கொண்டதாகவும், ஆழ்ந்த உள்ளுறைபொருளை சம்பவம் போல் சொல்லுவதாகவும்) இருப்பதால், அதிலே "வேதம் பிறந்தது"என்று சொல்லுவதை அப்படியே நேர் அர்த்தம் பண்ணிக் கொள்ள முடியாது. பரம புருஷனையே பசுவாக புலி கொடுத்த ஒரு யக்ஞத்தில்தான் ஸ்ருஷ்டியெல்லாம் உண்டாயிற்று என்று சொல்லி, அப்போதுதான் வேதங்களும் உண்டானதாக அதில் சொல்லியிருக்கிறது. பரமபுருஷனை யக்ஞ பசுவாகப் பலி கொடுப்பது என்றால் என்ன?அதை நேர் அர்த்தம் பண்ணிக் கொண்டால் சரியாகாது அல்லவா?இந்த யாகத்திலே வஸந்த காலத்தை நெய்க்கு பதில் ஆஹுதியாக விட்டார்கள், கோடைக்காலம் ஸமித்துக் கட்டாயிற்று, சரத்காலம் ஹவிஸ் ஆயிற்று என்றெல்லாம் சொல்வதைப் புரிந்து கொள்ள முடிகிறதா?இதெல்லாம் மந்திர அர்த்தத்தைத் தியானம் பண்ணி, அதிலேயே ஊறினவர்களுக்குத்தான் அநுபவ ரூபத்தில் அர்த்தமாகும். நாம் வார்த்தைகளின் அர்த்தத்தை மட்டும் பார்த்துப் புரிந்து கொள்ள முடியாது. அதனால் வேதங்கள் பிறந்ததாக அதில் சொன்னதையும் அப்படியே பொருள் கொள்வதிற்கில்லை.

மொத்தத்தில் சாஸ்திர அபிப்ராயம், வேதம் அநாதி;அது அநாதியாக ஈச்வரனின் சுவாஸமாக இருக்கிறது என்பதுதான். ஈச்வரனின் சுவாஸம் இந்த மாதிரி சப்த ரூபத்தில் இருக்கிறது என்றால், இந்த சப்தங்களைக் கொண்டுதான் பிரம்மா சிருஷ்டி பண்ணினார் என்றால், நாகரிக மூளைக்கு "இதெல்லாம் சுத்த நான்-சென்ஸ்"என்று தோன்றுகிறது.

நன்றாக ஆராய்ந்து பார்த்தால், பெரிய விஞ்ஞான உண்மையே இதில் இருக்கிறதென்று தெரிகிறது. இப்படிச் சொல்லும்போது இன்றைய விஞ்ஞானத்துக்கு acceptable- ஆக (ஏற்புடைத்தாக) இருந்தால்தான் மத விஷயங்களை நாம் ஒப்புக் கொள்ளலாம் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை. நம் ஸயன்ஸும், ஸயண்டிஸ்டுகளும் எங்கே போக முடியாதோ அந்தப் பரமாத்ம தத்துவத்தைச் சொல்கிற வேதத்தை, ஸயன்ஸின் லிமிட்டுக்குள் கொண்டுவர வேண்டும் என்று நான் சொல்லவில்லை. அதிலுள்ள அநேக விஷயங்கள் ஸயன்ஸுக்கு ஒத்துவராமல்கூட

இருப்பதாகத் தோன்றலாம். அதனால் அவை தப்பு என்று ஆகிவிடாது. ஆனால்

இங்கே எடுத்துக் கொண்ட விஷயம் - மூச்சு எப்படி சப்தகோவைகளான மந்திரமாக இருக்க முடியும், அதை வைத்துக் கொண்டு எப்படி லோக ஸ்ருஷ்டி உண்டாக முடியும் என்ற விஷயம் - ஸயன்ஸுக்கும் ஒவ்வியதாகவே இருக்கிறது என்று மட்டும் சொன்னேன்.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*வேத மதம்*

ஒலியும் படைப்பும்

சப்தம் என்பது என்ன?ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீ தான் (அதிர்வுதான்) என்று இன்றைய ஸயன்ஸில் சொல்கிறார்கள். அணுவிஞ்ஞானமும், ஐன்ஸ்டீன் கொள்கையும் என்ன சொல்கின்றனவென்றால் அணுவுக்குள் புகுந்து பார்த்தால் எல்லா வஸ்துவும் ஒன்றுதான், அத்வைதம்தான். லோகமெல்லாம் ஒரே சக்தி வெள்ளம்தான். எல்லாம் ஒரேமீறீமீநீமீ க்ஷீஷீ-னீணீரீஸீமீமீ வீநீ(மின்காந்த) பிரவாஹம்தான். ஆனால் ஏன் இப்படி வேறு வேறு வஸ்துக்களாகத் தெரிகிறது என்றால், அந்த ஒரே சக்தியில் தோன்றுகிற வெவ்வேறு விதமான ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீகளால் தான் என்று சொல்கின்றன.

அதிர்வு உண்டானால் சப்தம் உண்டாகிறது. இதையே திருப்பிச் சொன்னால், சப்தம் உண்டாக வேண்டுமானால் அதற்கான அதிர்வு ஏற்பட்டாக வேண்டும்.

ஒரே சக்தியில் பலவிதஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீஏற்படுவதால் லோக சிருஷ்டி உண்டாவதாகச் சொல்கிற விஞ்ஞானக் கருத்தும், பரமாத்மாவின் சுவாஸமான வேத சப்தத்திலிருந்து லோகம் வந்தது என்பதும் முழுக்க ஒன்றேதான்.

மநுஷ்யர்கள், பிராணிகள் இருக்கிறோம். நம்முடைய ஆரோக்யம், உணர்ச்சிகள் முதலியன எப்படி ஏற்படுகின்றன்?நம்முடைய ச்வாஸ கதியிலிருந்துதான். நாடிகளில் ச்வாஸம் போகிறபோது ஏற்படுகிற ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீகளால் தான் தேகத்தின் பல பகுதிகளுக்கும் ஆரோக்யம், அல்லது ஆரோக்ய குறைவு ஏற்படுகிறது. யோக ஸாதனங்களால் ச்வாஸப் பயிற்சி மூலம் மூச்சை நாடிகளில் ஒழுங்குப்படுத்திக் கொள்கிறவர்களுக்கு ஆச்சர்யப்படும்படியான ஆரோக்யம் இருக்கிறது. அவர்களுடைய ரத்தக் குழாய்களை நறுக்கினால்கூட ரத்தம் கொட்டாமலிருக்கிறது. நாடித்துடிப்பு, ஹ்ருதயத்துடிப்பு இவற்றைக் கூட நிறுத்திவிட்டு, அவர்களால் பூமிக்கடியில் உயிரோடு ஸமாதியில் இருக்க முடிகிறது. பாம்பும் தேளும் கடித்தாலும் விஷம் அவர்களைப் பாதிப்பதில்லை.

மூச்சினால் உண்டாகும் நாடி சலனத்தை அவர்கள் ஒழுங்கு படுத்தியிருப்பதால்தான் இப்படி இருக்கிறது.

உடம்புக்கு மட்டும் தான் மூச்சு முக்கியம என்றில்லை. மனஸுக்கும் மனஸின் ஆரோக்யத்திற்கும் அதுவே முக்கியமாயிருக்கிறது. எண்ணங்களுக்கு மூலமான மனஸும், மூச்சுக்கு மூலமான பிராண சக்தியும் ஒன்றாகவே இருப்பதால்தான் இப்படியிருக்கிறது. நாடி சலனத்தாலேயே ஆரோக்யமான (நல்ல) அல்லது ஆரோக்யக் குறைவான (கெட்ட) எண்ணங்களும் உண்டாகின்றன. நீங்களே கவனித்துப் பார்த்தால் தெரியும். ஒரு தெய்வ ஸந்நிதானத்தில் அல்லது மஹானின் அருகில் மனஸ் சாந்தமாக இருக்கிறபோது மூச்சு எப்படி சஞ்சரிக்கிறது;காமத்தினால், கோபத்தினால் வேகம் உண்டாகிறபோது ச்வாஸகதி எப்படியிருக்கிறது என்று பார்த்தால், ஒன்றுக்கொன்று

நிரம்ப வித்யாஸமாயிருக்கும். ஸந்தோஷம் என்பதிலேயேகூட தெய்வ விஷயமாக ஒரு பஜனையில் அல்லது உத்ஸவத்தில் உண்டாகிறதற்கும், இந்திரிய சுகத்தை தருகிற விஷயங்களில் உண்டாவதற்கும் நாடி சலனத்தில் வித்யாஸம் தெரியும். பொதுவாக உத்தமமான ஸந்தோஷத்தில் மூச்சு வலது நாசித்துவாரத்தில் வரும்;வெறும் இந்திரிய ஸந்தோஷம் (புலனின்பம்) என்றால் இடது நாசித் துவாரத்தில் வரும். இத்தனை உணர்ச்சிகளுக்கும் ஆதாரமான சாந்தமான ஸத்வஸ்துவில் தியானம் வலுவாகிற போது, ஒரே சீராக, மிக மெதுவாக, இரு நாசிகளிலும் ஸமமாக மூச்சு வரும். இத்தனை உணர்ச்சிகளிலும் ஆதாரமான சாந்தமான ஸத்வஸ்துவில் தியானம் வலுவாகிற போது, ஒரே சீராக, மிக மெதுவாக, இரு நாசிகளிலும் ஸமமாக மூச்சு வரும். தியான லக்ஷ்யத்தில் ஒன்று பட்டுவிடுகிற போது மூச்சே நின்றுவிடும். மனஸும் நின்றுவிடும். ஆனால் உயிர் இருக்கும். ஞானம் என்ற பேருணர்வு பூரித்து இருக்கும். ஆக, ஜீவன் என்று எடுத்துக் கொண்டால், அவனுடைய ஜடமான சரீரம், சைதன்யமான அறிவு இரண்டும் ச்வாஸகதியால் உண்டாகி வளர்கிறவைதான்;அல்லது அழிகிறவைதான். முறையான ச்வாஸகதி என்பது நம் உள்-ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீ-களை ஒழுங்கு பண்ணிக் கொள்வதுதான்.

பரமாத்மாவிடமிருந்துதானே இத்தனை ஜட வஸ்துக்களும் சைதன்ய வஸ்துக்களும் தோன்றி விருத்தியாகின்றன?அழிவதும் வளர்வதுமாக இருக்கின்றன?இதற்கெல்லாம் ஏற்ற சலனங்கள் பரமாத்மா வஸ்துவில் ஏற்பட்டுத்தானே ஆகவேண்டும்?

பிரம்மம் நிர்குணமானது, சலனமற்றது என்கிற அத்வைதம் இருக்கட்டும். அந்த அத்வைதத்தின்படியும், இன்னதென்றே சொல்ல முடியாத (அநிர்வசனீயமான) மாயாசக்தியுடன் கூடி பிரம்மம் பலவான இந்த பிரபஞ்சமாக வேஷம் போட்டுக் கொண்டிருப்பதாகச் சொல்லித்தானே இருக்கிறது?வேஷமோ, கீஷமோ, இப்படி ஜடமான லோகமென்றும், சைதன்யமுள்ள ஜீவர்கள் என்றும் விவகார தசையில்

இருக்கிறமாதிரி ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. மாயை என்று சொன்னாலும், அதற்கும் ஆதாரமான "மாயின்"என்று ஈச்வரனேதான் இருக்கிறான். ஆகக்கூடி மாயாசக்தி என்று சொல்லிவிட்டாலும், இது அத்தனையும் பரப்பிரம்ம வஸ்துவில் தோன்றின சலனங்கள் தான்;க்ஷிவீதீக்ஷீணீமீ வீஷீஸீகள் தான். இத்தனை சலனங்களாலும் அது சலனமடையாமல், உள்ளூர நிர்குண சாந்த வஸ்துவாகவே இருக்கிறது.

ஆனாலும் நம் பார்வையில் சலனங்கள் உண்டுதான். அதுவும் கன்னாபின்னா சாந்த வஸ்துவாகவே இருக்கிறது. ஆனாலும் நம் பார்வையில் சலனங்கள் உண்டுதான். அதுவும் கன்னா பின்னா என்று இல்லாமல் பெரிய பெரிய சூரியன் முதலான கிரஹங்களின் ஸஞ்சாரத்திலிருந்து ஆரம்பித்து, ஒரு சின்ன புல், பூண்டு அல்லது கொசு உண்டாகிற வரை, எல்லாம் ஒரே மாதிரி நியதிப்படி, ஒழுங்குப்படி நடந்து வருகிறது.

லோக வாழ்க்கை க்ஷேமகரமாக நடக்க இந்த ஒழுங்குதான் ஒத்தாசை பண்ணுகிறது. இயற்கைச் சக்திகளை எல்லாம் ஒழுங்குப்படுத்தித்தான் பரமாத்மா லோக வாழ்க்கையை உண்டாக்கியிருக்கிறார். ஆனாலும் இதிலே கொஞ்சம் கொஞ்சம் ஒழுங்கு தப்பிப்போகிற மாதிரியும் நடக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறார். வாழ்க்கைக்கு அநுகூலம்

செய்யவேண்டிய இயற்கைச் சக்திகள் அப்படிச் செய்யாமலிருக்கிறதையும் பார்க்கிறோம். காலத்தில் மழை பெய்யமாட்டேன் என்கிறது;அல்லது வெள்ளம் வருகிறது. வேறு ஏதாவது உத்பாதம் உண்டாகிறது.

ஒழுங்கு தப்பிப் போவதில் இந்த மநுஷ்ய மனஸ் இருக்கிறதே, அது எவ்வளவு தூரம்தான் போகும் என்றே சொல்ல முடியாமல், குட்டிச் சாத்தனாக அலைகிறது.பிரபஞ்ச வாழ்க்கை முழுதிலும் எத்தனையோ ஒழுங்கு, கட்டுப்பாடு, நியதி இருந்தாலும், இந்த மனஸை எடுத்துக் கொண்டால், இது மட்டும் ஒரு கட்டுப்பாடும் இல்லாமல் வெறிநாயாகத் திரிகிறது.

இயற்கைக் சக்திகள் நமக்குப் பிரதிகூலமாக இருக்கிற போது, அவற்றைச் சரிப்படுத்த வழி உண்டா?நம் மனஸைக் கன்னாபின்னா என்று விடாமல் கட்டுப்பாட்டில் கொண்டு வர ஏதாவது வழி இருக்கிறதா?

சலனம் - சப்தம் இதனால்தான் சகல காரியமும் ஏற்பட்டிருக்கிறது என்றால், லோக சக்திகளை அநுகூலம் பண்ணித்த தரவும், நம் சித்தத்தையே சுத்தம் பண்ணிக் கொடுக்கவும் கூடச் சப்தங்கள் இருக்கத்தான் வேண்டும். அவைதான் வேதம், வேதம் என்பது.

நம்முடைய ச்வாஸகதியாலேயே, நாம் யோக மார்க்கத்தின் மூலம் பரமாத்மாவின் ச்வாஸத்தைப் பிடித்து, லோகோபகாரமாகவும், ஆத்ம க்ஷேமகரமாகவும் உள்ள

காரியங்களை நடத்திக் கொள்ளலாம். இங்கே நாடி சலனம் இருந்தாலும் அது மநுஷ்யக் காதுக்கு எட்டக் கூடிய சப்தமாக இருக்கவில்லை. ஸயன்ஸிலேயே மநுஷ்யனின் காதுக்கு எட்ட முடியாத சப்தங்கள், மநுஷ்யக் கண்ணின் லென்ஸுக்கு அகப்படாத ஒளி அலைகள் எல்லாம் உண்டு என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

இது மட்டுமில்லை. எட்ட முடியாததை நமக்கு எட்டுகிற மாதிரி மாற்றிக் கொடுக்கவும் முடிகிறது. ரேடியோவில் ஒருத்தன் பாடுகிறான் என்றால், முதலில் அவன் பாடுகிற சப்தங்கள் மின்சார சக்தியினால் ஒரு விதமான காந்த அலைகளாக மாறிவிடுகின்றன. இப்படி மாறின அலைகள்தான் ஆகாசத்தில் விடப்படுகின்றன. அப்போது இவற்றை நம் காதால் கேட்க முடிகிறதா?இல்லை. ஆனாலும் ரேடியோப் பெட்டியில் உள்ள கருவிகள் ஆகாசத்தில் இருக்கிற அந்த மின்சாரக் காந்த அலைகளைப் பிடித்து, மறுபடி நம் காதுக்கு எட்டுகிற மாதிரியே சப்த அலைகளாக்கிப் பாட்டாகக் கொடுக்கிறது.

இதைச் சொல்லும் போது விஞ்ஞானம் மதத்துக்கு விரோதியே இல்லை;மதத்தை வளர்க்க அதுவேதான் ரொம்ப ஒத்தாசை செய்கிறது என்று தோன்றுகிறது. ஒரு நூற்றாண்டுக்கு முன் டெலிபோன், ரேடியோ ஆகியன வருவதற்கு முந்தி, 'வேதசப்தமாவது, ச்வாஸமாவது?'என்று யாராவது நாஸ்திகர்கள் ஆக்ஷேபணை கிளப்பியிருந்தால், அவர்களுக்குப் பதில் சொல்லவே முடியாமல் இருந்திருக்கும். இப்போது இந்த ஸயன்ஸ் discoveries(கண்டுபிடிப்புகள்) தான் நமக்குக் கை கொடுக்கின்றன.

ஜடமான ரேடியோ பெட்டிக்கு இருக்கிற சக்தியை சைதன்யமுள்ள ஜீவர்களும் சம்பாதித்துக் கொள்ள முடியும். அதற்கு மேலும் செய்ய முடியும். தபஸ்தான் இந்த சக்தியைத் தருவது. ஒரு ஸத்தியத்தைத் தெரிந்து கொண்டுதான் ஆவது என்று, அதற்காக அன்ன ஆகாரத்தை விட்டு, வீடு வாசலை விட்டு, எப்போது பார்த்தாலும் அதே சிந்தனையாக மனஸை ஒருமுகப்படுத்தி விட்டால், அதுதான் தபஸ். இத்தனையிலும், 'நான் இத்தனை பிரயாசைப்படுகிறேன் அல்லவா?அதனால் எனக்கு ஸத்தியம் தெரிந்தே ஆகவேண்டும்'என்ற அஹம்பாவம் இருக்கக்கூடாது. நாம் எத்தனை பிரயாஸைப் பட்டாலும், பகவத் பிரஸாதமாகத்தான் எந்த ஸத்தியமும் பிரகாசிக்கும் என்ற விநயம் எப்போதும் இருக்கவேண்டும். இம்மாதிரி தபஸ் பண்ணி, யோக நிலையில் உச்சிக்குப் போனவர்கள்தான் ரிஷிகள்.

ரிஷிகளுக்கு லோக ஸ்ருஷ்டியிலே ஏற்படும் சகல சலனங்களும் -அதாவது பரமாத்மாவின் ச்வாஸகதிகளும் - தெரிந்தது. தெரிந்தது மட்டுமில்லை;மின்சார அலையை சப்தஅலையாக convertபண்ணுவது (மாற்றுவது) போல, அந்த

சலனங்களுக்குரிய சப்தங்கள் மநுஷ்யக் காதுக்கு எட்டுக்கு சப்தங்களாகவும் அவர்களுக்குத் தெரிந்தன. அப்படிப்பட்ட சப்தங்களையே வேத மந்திரங்கள் என்று தந்திருக்கிறார்கள்.

ஒன்று தோன்றுகிறது. வேதத்துக்கு "ச்ருதி"என்று ஒரு பேர். கேட்கப்படுவது எதுவோ அதுவே ச்ருதி. ச்ரோதம் என்றால் காது. புஸ்தகத்தில் எழுதிப் படிக்காமல், குரு சிஷ்ய பரம்பரையாக வாயால் சொல்லிக் காதால் கேட்டே வேதம் தலைமுறை தலைமுறை வந்திருப்பதால் அதற்கு "ச்ருதி"என்று பேர் ஏற்பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். எழுதிப்படிக்கக் கூடாது என்று ஏன் வைத்தார்கள் என்றால் வேத சப்தங்களை இப்படி எழுத முடியாது என்பதால்தான். 'ழ'வுக்கும், 'ள'வுக்கும் நடுவிலுள்ள சப்தம் மாதிரி, லிபியில் கொண்டு வர முடியாத பல சப்தங்கள் வேதத்தில் உண்டு. காதால் கேட்டுத்தான் இவை வரவேண்டும். அதோடுகூட உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்றெல்லாம் வேத மந்திரங்களுக்கும் ஸ்வரமும் உண்டு. அதாவது ஒரு அக்ஷரத்தை உயர்த்த வேண்டும். இன்னொன்றைத் தாழ்த்திச் சொல்ல வேண்டும். சிலதை ஸமமாகச் சொல்ல வேண்டும். சிலதை சமமாக சொல்ல வேண்டும். புஸ்தகத்தில் எத்தனைதான் diacritical markபோட்டு காட்டினாலும், அச்சுப்பிழை வந்து விட்டால், உச்சாரணக் கோளாறாகும்;உச்சரிப்பு தப்பினால் பலனே போய்விடும். ஓர் அக்ஷரத்தை அழுத்தி அல்லது மெல்லிசாகச் சொல்லுகிறதால் ஏற்படுகிற சலனத்துக்கும் இன்னோர் அக்ஷரத்தை அப்படிச் சொல்வதால் உண்டாவதற்கும் நிறைய வித்யாஸமிருக்கும். நம்முடைய உணர்ச்சிகள், இயற்கையை நடத்தி வைக்கும் தேவசக்திகள், இவையும் இந்த வித்யாஸத்துக்கு ஏற்ப மாறிப் போகும்.

ஒன்றுக் கொன்று உச்சாரணம் மாறுபட்டால் எத்தனை விபரீதம் உண்டாகிவிடும் என்பதற்கு, வேதத்திலேயே தைத்ரீய ஸம்ஹிதையில் ஒரு கதை இருக்கிறது. இந்திரனை வதைக்கக்கூடிய பிள்ளை தனக்குப் பிறக்க வேண்டும் என்பதற்காக த்வஷ்டா என்ற தேவதச்சன் ஒரு மந்திரத்தை ஜபம் பண்ணினான். அப்போது அக்ஷரங்களின் உச்சரிப்பில் உதாத்தம், அநுதாத்தம் என்று சொன்னேனே, இந்த உயர்த்தல் -தாழ்த்தலில் அவன் தப்பு பண்ணியதாலேயே, அவன் விரும்பின பலனுக்கு நேர்மாறாக, 'இந்திரனை

வதைக்கக் கூடிய பிள்ளை'க்கு நேர்மாறாக, 'இந்திரன் வதைக்கக்கூடிய பிள்ளை', அதாவது இந்திரனால் வதைக்கப் படக்கூடிய பிள்ளை'தனக்கு வேண்டும் என்று அவன் பிரார்த்தித்ததாக ஆகிவிட்டது. கதையும் அப்படியே பிற்பாடு நடந்தது.

ரேடியோவில் ஒரு wave length(அலைவரிசை) கொஞ்சம் தப்பினால்கூட, வேறு ஏதோ ஸ்டேஷனை அல்லவா பிடித்து விடுகிறது?மயிரிழை தப்பாமல் ரேடியோவில் வேவ்-லெங்க்த் வைத்தால்தானே சரியாகக்

கேட்கிறது?இப்படியேதான் வேத உச்சாரணமும். கொஞ்சம்கூட ஸ்வரம் தப்பிப் போகக் கூடாது. வேவ் - லெங்க்த் மாறினால் ஸ்டேஷன் மாறிவிடுகிற மாதிரி, வேத சப்தம் மாறினால் பலனே மாறிவிடும்.

இதனாலெல்லாந்தான் வேதத்தைக் காதால் கேட்டுப் பாடம் பண்ணவேண்டும் என்று வைத்தார்கள். "ச்ருதி" என்று ஸம்ஸ்கிருதத்திலும், 'எழுதாக் கிளவி'என்று தமிழிலும் வேதத்துக்கு பேர் ஏற்பட்டது.

"ச்ருதி" என்ற பெயருக்கு இன்னொரு காரணமும் தோன்றியதைச் சொல்ல வந்தேன். மற்ற சாதாரண ஜனங்களுக்குக் கேட்காத இந்த திவ்ய சலனங்களின் சப்தங்கள் ரிஷிகளுக்குக் கேட்கத்தானே செய்தது?அதை அவர்கள் புஸ்தகத்திலே படித்தார்களா?அல்லது அவர்களாக இயற்றினார்களா?இரண்டுமில்லாமல் ஆதியிலேயே கேட்கப் பட்டு லோகத்துக்கு வந்ததாலும் "ச்ருதி"என்று சொல்லலாம் என்று தோன்றிற்று. ரிஷிகளுக்கு "மந்த்ர த்ரஷ்டா"க்கள் என்று பெயர் என்று சொன்னேன். 'த்ரஷ்டா'என்றால், பார்ப்பவன். "பார்ப்பான்"என்பதற்குக் கூட அதுதான் அர்த்தம். மந்திரங்களைப் 'பார்த்தவர்கள்'என்றால், அவர்கள் "மந்திரங்களைக் கேட்கவில்லை" என்று ஆகும். மந்திரங்கள் அவர்களுடைய கண்ணுக்கு அகண்ட ஆகாசத்தில் கூட்டங்கூட்டமாக தெரிந்தன என்று 'மந்த்ர த்ரஷ்டா'என்பதற்கு அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

இதில் எது சரி?பார்த்தார்களா? கேட்டார்களா? பார்த்தார்கள் என்றால் வேதமந்திரங்கள் எந்த லிபியில் எழுதியிருந்தது?தேவநாகரி, கிரந்தம், எல்லாவற்றுக்கும் மூலமான ப்ராம்மி முதலான எந்த லிபியும் இல்லாத காலத்தில், எந்த எழுத்தில் மந்திரங்கள் தெரிந்தன?வேத சப்தங்களையும், ஸ்வரங்களையும் உள்ளது உள்ளபடி எந்த லிபியிலும் எழுதி முடியாதே!

இதற்கெல்லாம் பதில் என்னவென்றால், பார்த்தார்கள், கேட்டார்கள் என்றெல்லாம் சொன்னாலும், வாஸ்தவத்தில் வேத மந்திரங்கள் ரிஷிகளுடைய உயர்ந்த தியான நிலையில் அவர்களுடைய ஹ்ருதயத்திலே ஸ்புரித்தன, அதாவது flashஆயின என்பதுதான். அந்த நிலையில் அவர்களுடைய கண் பார்க்காமலும், காது கேட்காமலுங்கூட இருந்திருக்கும். அப்படி அப்படியே உள் மனஸில் மந்திர ஸப்தங்கள் flashஆகியிருக்கும்.

காண்பது, பார்ப்பது என்பது கண்ணால் செய்கிற காரியத்தை மட்டும் குறிப்பதல்ல. எல்லா உணர்ச்சியையும் அது குறிக்கும். "ஒருத்தன் வாழ்க்கையில் பல இன்ப துன்பங்களைக் **" கண்டான் "** என்று சொல்கிற இடத்தில், 'கண்டான்'என்றால்

கண்ணால் பார்த்தான் என்று மட்டுமா அர்த்தம்?'அநுபவித்தான்'என்பதுதானே அதன் பொருள்?

'மந்த்ர த்ரஷ்டா'என்றாலும், இப்படியே அநுபவித்தில் தெரிந்து கொண்டதாக வைத்துக் கொள்ளலாம்.

வேதம் சப்த ரூபத்தில் இருப்பதால் அதை நம்முடைய காதுகளுக்கு மேற்பட்ட திவ்ய சக்தி பெற்ற காதுகளால் (திவ்ய ச்ரோத்ரத்தால்) ரிஷிகள் கேட்டுக் கொண்டார்கள் என்றும் சொல்வதுண்டு.

அர்ஜுனன் பகவானின் விச்வரூபத்தைப் பார்க்க ஆசைப்பட்டான்;அப்போது கிருஷ்ண பரமாத்மா, 'இந்த உன் கண்ணால் என் விச்வரூபத்தை பார்க்க முடியாது. உனக்கு அதற்கான வேறு திருஷ்டியை, தெய்விகமான பார்வையைத் தருகிறேன் என்று சொன்னதாகக் கீதையில் இருக்கிறது.

**" திவ்யம் ததாமி தே சக்ஷு : "**

அர்ஜுனனுக்கு திவ்ய சக்ஷுஸ் (தெய்விக ஆற்றல் வாய்ந்த கண்) உண்டானது போல், ரிஷிகளுக்கு பரமாத்மாவிடமிருந்து தோன்றி அகண்ட ஆகாசத்தில் வியாபித்திருந்த மந்திர சப்தங்களைக் கிரஹிக்கக் கூடிய திவ்ய ச்ரோத்ரம் (தெய்வீக சக்தி வாய்ந்த காது) உண்டாகியிருந்தது.

லோக ச்ருஷ்டிக்கும் லோக வாழ்க்கைக்கும் வேண்டிய சப்த சலனங்களை மட்டும்தான் வேதம் கொடுக்கிறது என்றில்லை. இதைத் தாண்டி பரமாத்ம ஸத்யத்தோடு ஒன்றாகப் போய் விடவும் அதில் மந்திரங்கள் இருக்கின்றன. ஒருத்தன் வந்த வழியாகவே திரும்பிப் போனால் புறப்பட்ட இடத்துக்கே போய் சேரந்து விடுவான் அல்லவா? அந்த மாதிரி ஸ்ருஷ்டி எப்படி வந்தது என்று பார்த்துக் கொண்டே போகிற போது, கடைசியில் சலனமே எழும்பாத ஸ்தானத்துக்கு அது கொண்டு விட்டுவிடுகின்றது. சில மந்திரங்களினால் ஏற்படும் நாடி சலனமே அங்கே அழைத்துப் போகிறது. உபநிஷத் மஹா வாக்யங்கள், பிரணவம் எல்லாம் இப்படிப் பட்டவைதான்.

இவ்வளவும் எதற்குச் சொல்ல வந்தேன் என்றால், வேதத்தை யாரும் இயற்றவில்லை;ரிஷிகளும் இயற்றவில்லை;பரமாத்மாவுமேகூட யோசித்து யோசித்து ஒலைச் சுவடியும், எழுத்தாணியும் வைத்துக் கொண்டு வேதத்தை எழுதவில்லை என்று விளக்குவதற்குத்தான்.

போது தேசம் இருக்கிற துர்த்தயையில், 'ஓரியன்டலிஸ்ட்', 'இன்டாலஜிஸ்ட்'எனப்படுகிற வெள்ளைக்காரர்களும், அவர்களுடைய வழியைப் பின்பற்றுகிற நம்முடைய ஆராய்ச்சியாளர்களும் சொல்லுகிறதிலிருந்துதான் வேதங்களைப் பற்றி ரொம்பவும் உபயோகமான பல ஆராய்ச்சிகளை வெள்ளைக்காரர்கள் பண்ணியிருப்பதை ஒப்புக் கொள்கிறேன். அவர்களுடைய தொண்டுக்கு நாம் நன்றி சொல்லத்தான் வேண்டும். மாக்ஸ்முல்லர் போலப் பலர் வாஸ்தவமாகவே

வேதத்திலுள்ள கௌரவ புத்தியினாலேயே எத்தனையோ பரிச்ரமப்பட்டு தோண்டித் துருவிச் சேகரம் பண்ணி, ஆராய்ந்திருக்கிறார்கள். வால்யூம் வால்யூமாகப் புஸ்தகம் போட்டிருக்கிறார்கள். ஸர் வில்லியம் ஜோன்ஸ் என்று இருநூறு வருஷங்களுக்கு முந்திக் கல்கத்தா ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவர் ஆரம்பித்த "ஏஷியாடிக் ஸொஸைட்டி"போட்டிருக்கும் வைதிக புஸ்தகங்களைப் பார்த்தாலே பிரமிப்பாயிருக்கும். மாக்ஸ்முல்லர், ஈஸ்ட் இன்டியா கம்பெனி உதவியுடன் ஸாயண பாஷ்யத்தோடு ரிக் வேதத்தையும், இன்னும் பல ஹிந்து மத நூல்களையும் ஸீரியஸாக அச்சட்டிருக்கிறார். இப்படி இங்கிலீஷ்காரர்கள் மட்டுமின்றி, ஜெர்மனி -பிரான்ஸ்-ருஷ்யா தேசத்தவர்களும் நிரம்ப உழைத்து ஆராய்ச்சி பண்ணியுள்ளனர். "கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்ததைவிட, ஹிந்துக்களின் வேதங்களை நாம் கண்டுபிடித்ததுதான் பெரிய டிஸ்கவரி"என்று கூத்தாடிய வெள்ளைக்காரர் உண்டு. தேசம் முழுவதும் சிதறிக் கிடந்த வேத வேதாங்களைக் கண்டு பிடித்து, தர்ம -க்ருஹ்ய-ச்ரௌத ஸூத்ரங்களோடு மொழி பெயர்த்து பப்ளிஷ் பண்ணியிருக்கிறார்கள். வைதிக சாஸ்திரங்கள் மட்டுமின்றி குண்டலினீ தந்திரம் பிரபலமானதே ஆர்தர் அவலான் என்கிற ஸர் ஜான் உட்ராஃபின் புஸ்தகங்களால்தான்.

நம் கலாசாரத்தின் மற்ற அம்சங்களுக்கும் உதவிய வெள்ளைக்காரர் உண்டு. கர்ஸன் வைஸ்ராயாக இருந்தபோது**Protection of Ancient Monuments**என்று சட்டம் கொண்டு வந்தால்தான் நம்முடைய கோயில்கள் முதலியவற்றை யார் வேண்டுமானாலும் இடிக்கலாம் என்ற நிலை மாறிற்று. ஃபெர்கூஸன் தேசம் முழுவதும் உள்ள நம் சிற்பச் செல்வங்களை ஃபோட்டோ எடுத்துப் பிரச்சாரம் பண்ணினான். கன்னிங் ஹாம், மார்ட்டிமர் வீலர், ஸர் ஜான் மார்ஷல் முதலானவர்கள் ஆர்க்கியாலஜியில் (தொல் பொருளியலில்) நிரம்பச்

செய்திருக்கிறார்கள். மெக்கன்ஸி தேசம் முழுவதும் ஏட்டுச் சுவடிகளை சேகரித்தால்தான் நம் பழைய சாஸ்திரங்களில் பலவற்றை இன்று தெரிந்து கொள்ள முடிகிறது. எபிக்ராஃபிக்கென்றே (சாசனங்களுக்கென்றே) இலாகா வைத்ததும் வெள்ளைக்கார ஆட்சியில்தான்.

இப்படியாக, நமக்கு எத்தனையோ கெடுதலை உண்டு பண்ணின வெள்ளைக்கார ஆட்சியிலும் சில நன்மைகள் விளைந்தன. ஆனாலும் இந்த நன்மைக்குள்ளேயே கூடச் சில கெடுதல்களும் உண்டாயின. ஏனென்றால் ஒரியன்டலிஸ்ட், இன்டாலஜிஸ்ட் என்கிறவர்களில் பலருடைய உத்தேசம், வேதத்திலிருந்து சரித்திரத்தை நிர்மானிப்பது, அப்படிச் சொல்லிக்கொண்டு ஆரியர்-திராவிடர் என்று துவேஷம் உண்டாக்குவது முதலானவைதான். அவர்கள் 'பகுத்தறிவுக் கொள்கை'என்பதன்படி அதீந்திரியமானதையெல்லாம் allegory(உருவகம்) என்று தப்பர்த்தம் செய்வார்கள். இவல்யூஷன் தியரி (பரிணாமக் கொள்கைப்)படி வேதரிஷிகள் நம்மைவிட தாழ்ந்த Primitive-கள் என்றே வைத்து இவர்கள் பெரும்பாலும் வியாக்கியானம் செய்வார்கள். கிறிஸ்துவ மதத்தைப் பரப்பும் உள்நோக்கத்திலேயே நம் மதநூல்களை ஆராய்ச்சி செய்து, நடுநிலைமை மாதிரி காட்டிக் கொண்டே நம்மை மட்டந்தட்டியவர்களும் உண்டு. தங்கள் பாஷைக்கும் ஸம்ஸ்கிருதத்துக்கும் உள்ள ஒற்றுமையைப் பார்த்து comparitive philology(மொழி ஒப்பு இயல்) -காகவே ஆராய்ச்சி பண்ணினவர் அநேகர். அவர்கள் செய்த ரிஸர்ச், பிரசாரம், உழைப்புக்கெல்லாம் அவர்களை நாம் சிலாகிக்கலாம். ஆனால் வேதங்களின் முக்கிய நோக்கம் (purpose) லோக

க்ஷேமார்த்தம் வேத சப்தத்தை பரப்பி அத்யயனம் பண்ணுவது என்பனவே. இந்த இரண்டையும் தள்ளிவிட்டு, புத்திக்கு அதீதமான வேதத்தை புத்தியால் ஆராய்ந்து, ஜனங்களின் வாக்கிலும் காரியத்திலும் உயிரோடு வாழ வேண்டிய வேதத்தைப் பெரிய புஸ்தகங்களாக்கி லைப்ரரியில் வைப்பது, ஜூ (Zoo)வில் இருக்க வேண்டிய ஜீவ ஜந்துக்களைச் 'செத்த காலேஜில் (மியூசியத்தில்)வைக்கிற மாதிரிதான்.

வெள்ளைக்காரர்கள் விஷயத்துக்கு ஏன் வந்தேன் என்றால், வேதாம் அநாதி என்பதைப் பற்றிச் சொல்லும்போது, வெள்ளைக்காரர்களின் அபிப்ராயத்தைச் சொல்ல வந்தேன். வேதம் அநாதி என்றால் அவர்களுடைய மனப்பான்மைக்கு அது ஏற்கும்படியாக இல்லை. என்னதான் நடுநிலைமை,ஷிநீவீமீஸீமீ வீயீவீநீ கூஷீமீவமீணீகூஷீநீலீஎன்றாலும், 'இந்த ஹிந்துக்களின் புஸ்தகத்துக்கு இப்படி ஒரு ஏற்றம் தருவதா?என்று அவர்களில் சிலருக்கு மனஸுுக்கு ஸம்மதப்படவில்லை. இன்னும் சில பேர் இப்படியில்லாவிட்டாலும் பகுத்தறிவுப்படி, ஸயன்டிஃபிக்காக ஆராய்ச்சி பண்ணத்தான் எதையும் ஒப்புக்கொள்ளலாம் என்ற அபிப்ராயத்தில் ரிஸர்ச் செய்திருக்கிறார்கள். அநாதி என்கிற வாதத்தை ஏற்கமுடியாமல், இதே ரீதியில் அநேகம் படித்த ஹிந்துக்களும் ஆராய்ச்சி பண்ணியிருக்கிறார்கள்.

இவர்கள் ஆராய்ச்சி மூலம் காலம் கணிப்பதில் முக்யமாக இரண்டு தினுசு இருக்கிறது. ஒன்று வானசாஸ்திர ரீதியில் (ணீவமீ கூஷீஷீஸீஷீனீவீநீணீறீ-ஆகப்) பண்ணுவது. இன்னொன்று பாஷையின் ரூபத்தை வைத்து நிர்ணயம் பண்ணுவது. இப்படிச் செய்து வேதத்துக்கு வந்திருக்கிறார்களா என்றால், அதுதான் இல்லை. ஒவ்வொரு அறிஞர் ஒவ்வொரு அபிப்ராயத்தைச் சொல்கிறார். திலகர் கி.மு. 3000 என்கிறார்கள். அதைவிடக் கிட்டத்தில் கி.மு. 1500-க்கு வேதகாலத்தை இழுத்து விட்டிருக்கிறவர்களும் உண்டு.

மற்ற மதப் புஸ்தகங்களைப் பற்றி இப்படி அபிப்ராய பேதம் இல்லை. பௌத்தர்களின் த்ரிபிடகத்தை எடுத்துக் கொண்டால் அது அசோகன் காலத்தில் எழுதப்பட்டது என்றும், ஆனாலும் அதிலுள்ள புத்தரின் உபதேசங்கள் அசோகருக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முந்தி, அதாவது இன்றைக்கு 2500 வருஷத்துக்கு முன் புத்தர் சொன்னவை என்றும் ஏகமனதாக அபிப்ராயப்படுகிறார்கள். பைபிளின் ந்யூ டெஸ்ட்மென்ட் உண்டாகிக் கிட்டதட்ட 2000 வருஷம் ஆகிறது என்பதிலும் ஏகோபித்த அபிப்ராயம் இருக்கிறது. குரான் உண்டாகி சுமார் 1300 வருஷம் ஆகிறது என்று ஸகலரும் ஒப்புக் கொள்கிறார்கள். நம் வேதத்தின் விஷயத்தில் மட்டும் இப்படி ஒரு முடிவான தீர்மானம் ஏற்படாமலிருக்கிறது.

இரண்டு தினுசான காலக்கணக்கு என்று சொன்னேனே, அதைக் கொஞ்சம் விளக்க வேண்டும். வேதத்திலே சில இடங்களில் அப்போதிருந்த கிரஹங்களின் நிலைமை பற்றிச் சொல்லியிருக்கிறது. இப்படிப்பட்ட ணீவமீ கூஷீஷீறீஷீரீவீநீணீறீநீஷீஸீழீ௵ஸீநீமீ வீஷீஸீ(கிரஹச் சேர்க்கை) எப்போது ஏற்பட்டிருக்கும் என்று வான சாஸ்திரப்படிக் கணக்குக்கு வருகிறார்கள்.

ஆனால் இந்த மாதிரியான கிரஹச் சேர்க்கை ஒரே ஒரு தடவை கி.மு. 6000-ல் தான் ஏற்பட்டது என்று எப்படிச் சொல்ல முடியும்?அதற்கு முந்தியும் பல தடவை இதே மாதிரி இருந்திருக்கும். இந்த சிருஷ்டியில் மட்டுமில்லாமல், இந்த சிருஷ்டிக்கு முற்பட்ட பிரளயத்துக்கு முந்தியிருந்த சிருஷ்டிகளிலும் இதே கிரஹ

நிலைமைகள், ஜீறீணீஸீமீ ணீகூஷீஹ்ஜீஷீஉவீமீ வீஷீஸீஉஎத்தனையோ

தடவை இருந்திருக்கும். வேதத்திலே குறிப்பிட்டிருப்பது இவற்றில் எது எப்படித் தீர்மானமான முடிவு பண்ணுவது?ஆகையால், காலத்தையெல்லாம் துளைத்துக் கொண்டு பார்க்கக்கூடிய அதீந்திரிய சக்தி வாய்ந்த ரிஷிகள் சேர்த்துக் கொடுத்த வேதங்களில் இப்படிப்பட்ட கணக்குகள் பொருந்தாமல்தான் இருக்கின்றன. வேதத்திலேயே இருக்கப்பட்ட உட்சான்று (மிஸீமீ மீகூஷீஸீணீறீணிஸ்வீபீமீஸீநீமீ)என்று ஆராய்ச்சிக்காரர்கள் பெரிதுபடுத்துகிற வானசாஸ்திரக் கணக்கு, வாஸ்தவத்தில் விஷயத்தைத் தெளிவுபடுத்தவேயில்லை.

இன்னொரு, கணக்கு, பாஷையை வைத்துச் செய்வது என்று சொன்னேன். பாஷையை வைத்துச் செய்வது என்று சொன்னேன். பாஷையில் மொழி, லிபி, (வநீகூஷீவீஜீமீ)என்று இரண்டு இருக்கின்றன.

இப்போது நம் தேசத்தில் இருக்கப்பட்ட லிபிகளுக்கெல்லாம் ஆதிமூலமாக பிராம்மி லிபி இருக்கிறது. இப்போது பார்த்தால் தமிழ் எழுத்துக்கும், தேவநாகரி (ஸம்ஸ்கிருத) எழுத்துக்கும் சம்பந்தமே இல்லாத மாதிரி இருக்கிறது. ஆனால் - பல நூற்றாண்டுகளாக வந்திருக்கிற சாஸனங்களை ஆராய்ச்சி பண்ணிப் பார்த்து, நூற்றாண்டு வாரியாக பிராம்மி லிபியில் ஏற்பட்ட மாறுதல்களுகளுக்கு சார்ட்(நீலீணீகூஷீமீ)போட்டிருக்கிறார்கள். அதைப் பார்த்தால் மூலமான பிராம்மியிலேயே தான் ஒவ்வொரு காலத்தில் ஒருவிதமான மாறுதல்கள் ஏற்பட்டு, இப்போது பார்த்தால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமேயில்லாமல் தோன்றும் லிபிகள் எல்லாம் அந்த ஒரே மூலத்திலிருந்து வந்திருக்கின்றன என்று தெரிகிறது. இப்போது இருப்பதெல்லாம் பிராம்மியில் மீசை போட்டுக் கொண்ட எழுத்துக்கள், கொம்பு முளைத்த எழுத்துக்கள் என்றுதான் எனக்கு வேடிக்கையாகத் தோன்றும். சார்ட்டைப் பார்த்தால் உங்களுக்கும் அப்படித்தான் தோன்றும். சில சமயங்களிலும் பிராம்மி எழுத்தின் நடுவிலே மீசை மாதிரி ஒன்று சேர்கிறது. தேவநாகரி உ,ஊ எல்லாம் இப்படித்தான் இருக்கின்றன. தமிழ் எழுத்துக்கள் அநேகம் கொம்பு போட்டுக்கொண்டு தோன்றியிருக்கின்றன. இம்மாதிரியான ஒவ்வொரு மாறுதலும் ஏற்பட இத்தனை காலம் ஆகிறது என்று நன்றாக நிர்ணயமான சரித்திர காலச் சாஸனங்களைப் பார்த்து தெரிந்து கொள்ள முடிகிறது. இந்த அடிப்படையில் கணக்குப் பண்ணியே இதுவரை காலம் தெரியாதிருக்கிற ஒரு சமயத்தைச் சேர்ந்த சாஸனத்தின் லிபியைப் பார்த்து, அது இன்ன காலத்தைச் சேர்ந்தது என்று நிர்ணயம் பண்ணுகிறார்கள்.

வேதத்தைப் பொறுத்தமட்டில் அதை எங்கேயும் கல்வெட்டில் எழுதிவைக்கவில்லை. ஆனபடியால் லிபியைப் பார்த்து காலநிர்ணயம் பண்ண வேண்டிய பிரச்சனை இல்லை.

பாஷை ரீதியில் உள்ள இன்னொரு விதமான அடிப்படையில்தான் வேத காலத்தை ஆராய்கிறார்கள். அது என்னவென்றால் வார்த்தைகளில் ரூபம், ஒலிகளின் வடிவம் மாறிக் கொண்டே வந்திருக்கிறது. சங்க காலத்தில் இருந்த அநேக தமிழ் வார்த்தைகள் இப்போது ரொம்பவும் உருமாறியிருக்கின்றன. ஒவ்வொரு பாஷையிலும் இப்படியேதான். சில சப்தங்கள் தேய்ந்து, உதிர்ந்து போகின்றன. சப்தம் மட்டுமின்றி அர்த்தமும் மாறுகிறது. இப்போது 'வெகுளி'என்றால் 'அப்பாவி' என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். ஆனால் ஆதியில் 'வெகுளி' என்றால் கோபம், கோபிஷ்டன் என்று அர்த்தம் இருந்தது. இப்போதுங்கூட வெகுண்டு எழுந்தான் என்கிறபோது பழைய அர்த்தத்தில் தான் சொல்கிறோம். பழைய காலத்தில் மாண்ட என்றால் செத்துப் போன என்ற அர்த்தமே கிடையாது;புகழுடைய என்பதே அதன் அர்த்தம் என்று ஒரு தமிழ்ப் புலவர் சொன்னார். இதே மாதிரி ஸம்ஸ்க்ருதத்திலும் உண்டு. பிற்கால காவியங்களைப் புரிந்து கொள்கிற மாதிரி வேதங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லா பாஷையிலுமே இப்படி உண்டு. இதில் நம் தேச பாஷைகள் எவ்வளவோ தேவலை. இங்கிலீஷ் பாஷையில் ஒரு ஆயிர வருஷத்துக்கே உட்பட்ட கிஸீரீறீஷீ-ஷிணீஜ்ஷீஸீ என்கிற ஒல்ட் இங்கிலீஷில் ஒரு வரிகூட இன்றைய வெள்ளைக்காரர்களுக்குப் புரியாது. ஒரு முந்நூற்று சொச்சம் வருஷத்திலேயே அமெரிக்காவில் இங்கிலீஷ் ரொம்பவும் மாறி அமெரிக்கன் இங்கிலீஷ் என்று தனியாகப் பெயர் வைக்கிற அளவுக்கு ரூபபேதம் அடைந்திருக்கிறது.

சிறுகச் சிறுக ஒரு ஒலி ஜனங்களிடத்தில் புழக்கத்தால் தேயந்து தேய்ந்து உருமாறுவதற்கு எத்தனை காலமாகிறது என்று கணக்கு பண்ணியிருக்கிறார்கள்.

அர்த்தம் மாறுவதற்கு எத்தனை காலமாகிறது என்பதை ஆராய்ச்சியின் மூலம் இவ்வளவு தெளிவாக நிர்ணயம் பண்ணியிருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. ஆகையால் சப்த ரூபத்தைப் பார்க்கிற ரீதியிலேயே வேதவாக்யங்களைப் பார்த்துக் காலம் கணிக்கிறார்கள். ஒவ்வொரு இருநூறு வருஷத்துக்கும் ஒரு சப்தம் இப்படியிப்படி மாறுகிறது. இதன்படி பிற்கால சப்தமொன்று வேதத்தில் இப்படி இருக்கிறதென்றால் அது இத்தனை முறை மாறியிருக்க வேண்டும். இத்தனை னீ�ுஹ்பமீ ஓஹ்பணீமீ வீஷீஸீஏற்பட்டிருக்கிறது என்று அர்த்தம். வேத சப்தம் ஒன்றுக்கும் பிற்கால சப்தத்துக்கும் நடுவே பத்து மாறுதல்கள் ஏற்பட்டிருக்கிற வேண்டும் என்றால் 10*200=2000 வருஷத்துக்கு முந்தி வேதம் உண்டாயிற்று என்று அர்த்தம். ரொம்பவும் அதிகமாகப் போனால் இன்னொரு சப்தம் முப்பது தரம் மாறியிருப்பதாகத் தெரிகிறதென்றால், வேதம் உண்டாகி 30*200=6000 வருஷம் ஆகிறது என்று அர்த்தம். அதாவது கி.மு.4000-க்கு முந்தி வேதம் இல்லை என்கிற மாதிரி பல அபிப்ராயங்களைச் சொல்கிறார்கள். இந்த அடிப்படை தப்பு என்பதை ஒரு திருஷ்டாந்தத்தால் புரியவைக்க முடியும்.

நம் அகங்களில் அநேக விதமான பாத்திரங்கள் இருக்கின்றன. சிலவற்றை ஜாஸ்தி உபயோகிப்போம். சிலதை அவ்வளவுக்கு உபயோகிக்க மாட்டோம். வெண்கலப் பானையில் தினம் தினம் சாதம் வடிக்க வேண்டும். தினமும் அதை இரண்டு வேளையும் நன்றாகத் தேய்க்க வேண்டும். அதனால் அது சீக்கிரத்தில் தேய்ந்து போகிறது. இன்னொரு பெரிய அண்டா இருக்கிறது. அது சாமான் ரூமிலேயே புழங்காமல் கிடக்கிறது. அதற்கு தினப்படி உபயோகமேயில்லை. எப்போதாவது ஒரு கல்யாணம்,

கார்த்திகை வந்தால்தான் அதற்கு உபயோகம். அதைத் தேய்ப்பதும் அப்போதுதான். ஆகையால், வெண்கலப் பானை தேய்கிற மாதிரி இந்த அண்டா தேயுமா?வெண்கலப் பானை போன வருஷம்தான் வாங்கியிருக்கலாம். ஆனாலும் ஏகமாகத் தேய்ந்திருக்கும். அண்டா நம் பாட்டிக்குச் சீராகக் கொடுத்ததாக இருக்கலாம். ஆனாலும் கொஞ்சம்கூடத் தேயாமலே கிண்டாக இருக்கிறது. இதைப் பார்த்து வெண்கலப்பானைதான் முந்தி வாங்கினது, அண்டா பிந்தி வாங்கினது என்று முடிவு பண்ணலாமா?கல்யாணத்தின்போது ஒரே ஸமயத்தில் தான் சாப்பிடுகிற தட்டு, பன்னீர்ச்செம்பு இரண்டும் சீராகக் கொடுத்திருப்பார்கள். பத்து வருஷத்தில் தட்டு நசுங்கி, தேய்ந்து, மறுபடி அழித்துப் பண்ணுகிற அளவுக்கு வந்துவிடுகிறது. பன்னீர்ச் செம்போ புதுக் கருக்கே போகாமல் மெருகோடு இருக்கிறது.

இப்படித்தான் அன்றாடம் பழக்கத்தில் புழங்குகிற லௌகிக சப்தங்களும், வேத சப்தங்களும் இரண்டு வகையான பாத்திரங்களைப் போல் வித்யாஸமாக இருக்கின்றன. தினந்தினமும் பேசிக்கொண்டிருக்கிற வார்த்தைகளின் சப்தங்கள் பல விதங்களில் தேய்கினறன,மாறுகின்றன. வேதமும் தினம் தினம் ஓதப்படுவதுதான். ஆனாலும் அதன் மூல சப்தம் மாறாமலே ஓதப்படுவதுதான் அதன் தனிச்சிறப்பு. வேதத்தின் அங்கங்களில் சிக்ஷை, வியாகரணம் என்பவை பற்றிப் பிற்பாடு நான் சொல்லும்போது, ஒவ்வொரு வேத அக்ஷரத்தையும் மூல ரூபம் சிதையாமல் ரக்ஷித்து அப்படியே சுத்தமாக கொடுப்பதற்கு எத்தனை கட்டுத்திட்டமான ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வீர்கள். ஆகையினால் நித்யப்படி புழக்கத்திலுள்ள பாத்திரங்கள் தேய்கிற மாதிரி அன்றாட வழக்குச் சொற்கள் மாறுகிறதென்றால், வேத சப்தம் மாறாது;மாறவுமில்லை. அது கல்யாண காலங்களில் மட்டும் உபயோகமாகிற அண்டா மாதிரி இருக்கிறது.

"வேதங்களுக்குள்ளேயே ரிக்வேதம் முந்தியது;அப்புறம் யஜுஸ் வந்தது;கடைசியிலே அதர்வம்;ஒவ்வொரு வேத சாகையிலும் ஸம்ஹிதா பாகம் முந்தையது;பிராம்மணம் அதற்குப் பின்னாலும், ஆரண்யகம் கடைசியாகவும் வந்தது"என்றெல்லாம் சொல்லிக் கொண்டு, இவற்றுக்கிடையே உள்ள பாஷா வித்யாஸங்களைப் பார்த்து, மேலே சொன்ன மாதிரி காலக் கணக்கு போடுகிறார்கள். எத்தனைதான் ஆராய்ச்சி பண்ணினாலும் நான் சொன்ன

அடிப்படை வித்யாஸத்தைக் கவனிக்காததால், இது எதையும் சரியென்று ஒப்புக் கொள்வதற்கில்லை. எத்தனையோ கட்டுத் திட்டங்கள் பண்ணியும் வேத சப்தங்கள் கொஞ்சம் மாறி இருக்கின்றன என்றால், அந்த மாறுதல் 200 வருஷத்துக்கு ஒரு தரம் ஏற்படும் மாறுதலாக இருக்காது என்பதையும் பல ஆயிரம் வருஷத்தில் தான் இப்படிப்பட்ட மாறுதல் ஏற்பட்டிருக்க முடியும் என்பதையும் கவனிக்கவேண்டும். கீமீணீக்ஷீ ணீஸீபீ ஜிமீணீக்ஷீஎன்று சொல்வது (புழக்கத்தினால் ஏற்படும் தேய்மானம்) வேதத்தின் விஷயத்தில் மற்ற இலக்கியம் அல்லது பேச்சு மொழிக்கான மாதிரி இல்லை என்பதைப் புரிந்துகொண்டால், இந்தக் கால நிர்ணயமும் தப்புதான் என்று புரியும்.

ஹிந்தி என்று ஒரு பாஷையாக ஏற்படுத்தி வைத்தே சில நூற்றாண்டுகள்தான் ஆகின்றன. ஆனாலும் அது ஒரு பெரிய பிரதேசத்தில் பரவியிருப்பதாலும், அதில் ஸம்ஸ்கிருதம், அராபிக், பெர்ஷியன், இங்கிலீஷ் முதலிய பல பாஷைகள் கலப்பதாலும் இந்தச் சிறிது காலத்துக்குள்ளேயே அது ரொம்பவும் மாறிவிட்டது. ஒரு சின்னப்

பிரதேசத்திலேயே வளர்ந்த தமிழ், இப்படி அதிவேகமாக மாறவில்லை என்றாலும் தாயுமானவர் பாடல் புரிகிற அளவுக்குக் கம்பராமாயணம் புரியாது, கம்பராமாயணம் தேவாரம் புரிகிற அளவுக்குத் திருமுருகாற்றுப்படை புரியாது என்கிற ரீதியில், தமிழ் பாஷையும் மாறிக் கொண்டேதான் வந்திருக்கிறது. ஸம்ஸ்கிருதம் ஹிந்தியைப் போல, ஹிந்தியை விடவும், விரிவாக தேசம் பூராவிலும் பரவியிருந்தாலும், அது ஹிந்தியைப் போலவும் பேச்சு மொழியாக இல்லாமல் இலக்கிய பாஷையாகவே நெடுங்காலமாக இருந்திருப்பதால் தமிழன் அளவுக்குக்கூட மாறவில்லை. அதிலும் காவியங்களைவிடப் பரம ஜாக்ரதையுடன் ரக்ஷிக்கப்பட்ட வேதங்களில் மாறுதல் ஏற்படுவது ரொம்பவும் அபூர்வம்தான். ஆகையால் இப்போது ஆராய்ச்சிக்காரர்கள் மற்ற பாஷைகளின் விஷயத்தில் ஆயிரம் வருஷம் என்று கணக்குப் பண்ணும் மாறுதல், வேதத்தில் ஏற்படுவதற்கு லக்ஷம் வருஷம் வேண்டியிருக்கும்.

அக்ஷர சுத்தத்தால்தான் மந்திரங்களுக்கு சக்தியே ஏற்படுகிறது என்ற கொள்கையின் பேரில் வேத சப்தங்கள் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன. அதில் தவறுதல் ஏற்பட்டுவிடக் கூடாது என்றே தனியாக ஒரு ஜாதி உட்கார்ந்து கொண்டு, அதைத் தலைமுறை தலைமுறையாக மூல ரூபத்திலேயே காப்பாற்றிக் கொடுத்துக் கொண்டு வந்திருக்கிறது. இந்தப் பெரிய உண்மையைக் கவனிக்காமல்பண்ணுகிற ஆராய்ச்சிகளினால் யதார்த்தம் ஒரு நாளும் தெரியாது. வேதம் அநாதியில்லை என்று இந்த ஆராய்ச்சிகள் நிரூபிக்கவேயில்லை. அத்யயனத்தில் எத்தனை விதங்களை வைத்து வேத சப்தத்தை உள்ளபடி காப்பாற்றியிருக்கிறார்கள் என்பதை ஆலோசித்தோமானால் இது புரியும்.

*வேத மதம்*

## அத்யயன முறைகள்

எழுதி வைக்காமலே வேதத்தைத் துளிக்கூடப் பிழை வராமல் காப்பாற்றிக் கொடுப்பதற்காக நம்முடைய ஆன்றோர் பல வழிகளை வகுத்து வைத்தார்கள். ஒரு அக்ஷரம்கூட மாறிவிடாமல், ஒரு ஸ்வரம்கூட ஏற்றல் இறக்கலில் வித்தியாஸப் பட்டுவிடாமல், மந்திர சக்தியானது பூரணமாகப் பலன் தருவதற்காக அத்யயனத்தில் பல விதிகளை ஏற்படுத்தி வைத்தார்கள்.

ஒவ்வொரு பதத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் சொல்வதற்கு இத்தனை கால அளவை வேண்டும் என்று "மாத்ரா" கணக்கு வைத்திருக்கிறார்கள். மூச்சை எப்படி விடுவதால் சரீரத்தில் எந்தப் பகுதியிலே வைப்ரேஷன் ஏற்பட்டு சுத்தமான அந்த அக்ஷரம் பிறக்குமோ, அதைக் கூட சிக்ஷா என்ற வேதாங்கத்தில் நிர்ணயம் பண்ணிக் கொடுத்திருக்கிறார்கள். ஸங்கீத ஸ்வரத்துக்கும் வேத ஸ்வரத்துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை, மிருகங்கள், பக்ஷிகள் முதலியவை எழுப்பும் ஒலிகளுக்கும் வேத ஸ்வரங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை ஆகியவற்றைச் சொல்லி, சரியாக வேத ஸ்வரங்களை உச்சரிப்பதற்கு வழி காட்டியிருக்கிறார்கள்.

வார்த்தைகளும் அக்ஷரங்களும் மாறிப் போகாமலிருப்பதற்குச் செய்த ஒரு பெரிய உபாயம் என்னவென்றால், ஒரு மந்திரத்திலுள்ள பதங்களைப் பல தினுசில் கோத்து வாங்கி வாக்யம், பதம், க்ரமம், ஜடா, மாலா, சிகா, ரேகா, த்வஜம், தண்டம், ரதம், கனம் ஆகிய பலவிதமான முறைகளை (patterns)ஏற்படுத்தியிருப்பதுதான்.

இப்போது கனபாடிகள் என்று சிலபேரைச் சொல்கிறோம் அல்லவா?இவர்கள் "கனம்என்கிற முறையில் வேதம் ஒதுவது வரைக்கும் பாடம் படித்தவர்கள்"என்று அர்த்தம். 'பாடி'என்றால் பாடம் படித்தவன். 'கனம்'வரையில் பாடம் படித்தவன் 'கனபாடி'. ஒரு கனபாடி கனம் சொல்லும்போது கேட்கிறோம். ஒரு சில பதங்களையே அவர் அப்போது பல தினுஸாக மாற்றி மாற்றி, மடக்கி மடக்கி சொல்கிறார் என்று தெரிகிறது. இது கேட்பதற்கே பரமானந்தமாக கர்ணாம்ருதமாக இருக்கிறது. வேத மந்திரங்களுக்குப் பொதுவாகவே உள்ள காம்பீர்யம் இதனால் மேலும் ஜாஸ்தியானாற் போலிருக்கிறது. இப்படியேதான் க்ரமம், ஜடை, சிகா, மாலா முதலான முறைகளிலும் பதங்களை ஒவ்வொரு விதமாகச் சேர்த்துத்

திருப்பித்திருப்பிச் சொல்கிறபோது ரொம்பவும் கம்பீரமாக, தெய்விகமாக இருக்கிறது. ஆனால் இந்த ஓதுமுறைகளின் முக்யமான உத்தேசம் வேத மந்திரங்களின் அக்ஷரம் கொஞ்சம் கூட மாறிவிடாமலிருப்பதற்காக அவற்றைக் குறுக்கும் நெடுக்குமாய் பின்னிப் பின்னித் தரவேண்டும் என்பதே.

வாக்ய பாட் அல்லது ஸம்ஹிதா பாடம் என்பதுதான் மந்திரங்களை உள்ளபடி அப்படியே பாடம் பண்ணுவது. வாக்ய ரூபமாக மந்திரங்கள் வரும்போது, அதிலுள்ள பதங்கள் ஸந்தியில் ஒன்று கூடுவதுண்டு. இங்கிலீஷைவிடத் தமிழில் இம்மாதிரி ஸந்தியில் வார்த்தைகள் ஒன்று சேர்வது ஜாஸ்தி. இங்கிலீஷில் வார்த்தைகள் தனித்தனியாகவேதான் இருக்கும். தமிழில் பழைய தேவாரம், திருவாசகம், திருக்குறள், திவ்யபிரபந்தம் மாதிரியானவற்றில் நமக்கு தனித்தனியாக வார்த்தைகள் தெரியாத மாதிரி ஸந்தி சேர்த்திருப்பதைப் பார்க்கிறோம். ஸம்ஸ்கிருதத்தில் தமிழைவிடவும் தனித்தனி வார்த்தைகளின் ரூபம் தெரியாமல் ஸந்தி சேர்த்திருக்கும். இப்படி ஒவ்வொரு வேத வாக்யத்திலும் உள்ள பதங்களைத் தெளிவாகப் பிரித்துப் பிரித்துப் பாடம் பண்ணுவதற்குத்தான் 'பத பாடம்'என்று பெயர்.

ஸம்ஹிதா பாடத்துக்கு அடுத்தது பத பாடம். இதற்கு அடுத்தது க்ரம பாடம். இதிலே ஒரு மந்திரத்தின் முதல் வார்த்தையை இரண்டாவது வார்த்தையுடன் சேர்த்தும், இரண்டாவது வார்த்தையை மூன்றாவதுடன் சேர்த்தும் மூன்றாவதை நாலாவதுடன் சேர்த்தும், இப்படியே அந்த மந்திரம் முடிகிறவரைக்கும் சொல்லிக் கொண்டு போக வேண்டும்.

பழைய கால சாஸனங்கள் சிலதில் உள்ள ஊர் பிரமுகர்களின் பெயர்களில் சில பெருக்கு முடிவில் 'க்ரம வித்தன்'என்று போட்டிருக்கும். "வேதவித்"என்கிற மாதிரி (வேதவித்து என்று தமிழில் சொல்கிறோம்), 'க்ரமவித்'அல்லது 'க்ரமவித்தன்'என்றால், வேதத்தைக் கிரமம் என்ற அத்யயன முறையில் சொல்லத் தெரிந்தவன் என்று அர்த்தம். தமிழ் நாட்டில் இப்படி ஊருக்கு ஊர் பலர் இருந்திருப்பதைத்தான் சாஸனங்களிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

இதற்கப்புறம் ஜடா பாடம. இதிலே முதல் வார்த்தையை இரண்டாவது வார்த்தையுடன் சேர்த்துச் சொன்னவுடன், அதை மாற்றி இரண்டாவதை முதல் வார்த்தையுடன் சேர்க்க வேண்டும்;மறுபடியும் முதலை இரண்டாவதோடு சேர்க்க

வேண்டும். அப்புறம் இரண்டாவது வார்த்தையை மூன்றாவதோடும், அதை மாற்றி மூன்றாவதை இரண்டாவதோடும் திரும்பவும் இரண்டாவதை மூன்றாவதோடு ம்;இப்படியே பின்னால் வருகிற வார்த்தைகளையும் மாற்றிச் சேர்த்துக் கொண்டு போக வெண்டும். இப்படிச் சொல்ல வல்லவர்களையே 'ஜடாவல்லபர்'என்பது. இங்கே இரண்டு வார்த்தைகளைக் கோத்து வாங்கின மாதிரியே, மூன்று

வார்த்தைகளை முன்னும் பின்னுமாக மாற்றுவது சிகா பாடம்.

இதைவிட சிரமமானது கனபாடம். இதிலே நாலு தினுசு உண்டு. முன்னும் பின்னுமாக வார்த்தைகளைப் பல விதங்களில் permutation, combination என்று சேர்த்துச் சொல்லும் அத்யயன முறையே அது. அதையெல்லாம் விளக்கினால் கணக்கு க்ளாஸ் மாதிரி மண்டையை உடைக்கும்.

உயிரைக் காப்பாற்றுகிற ஒரு அபூர்வ மருந்தைக் காப்பாற்றுவதற்கு லாபரட்டரியில் எத்தனையோ ஜாக்ரதை செய்து வைத்திருப்பது போல, லோகத்தை ரக்ஷிக்கிற வேத சப்தங்களை எழுதி வைக்காமலே வாய் வார்த்தையில் லவலேசம் கூட மாறிப் போய் விடமால் காப்பாற்றித் தருவதற்காக, நம் பூர்விகர்கள் இப்படிப்பட்ட பாட முறைகளை ஏற்படுத்தித் தந்திருக்கிறார்கள்.

ஸம்ஹிதா பாடத்திலும், பத பாடத்திலும் மந்திரத்திலுள்ள வார்த்தைகளை அதே ஆர்டரில் ஒவ்வொன்றையும் ஒரே தரம் மட்டும் சொல்வதால் இவை ப்ரகிருதி (இயற்கை

யான) பாடம் எனப்படுகின்றன. மற்றவை விக்ருதி(செயற்கையான) பாடம் எனப்படும். க்ரமத்திலே வார்த்தைகள் ஒன்று - இரண்டு - மூன்று அசல் பிரகிருதியாகவே போகாவிட்டாலும், இரண்டுக்கப்புறம் ஒன்று, மூன்றுக்கப்புறம் இரண்டு என்று தலைகீழாகத் திரும்பாததால், அதைப் பூரணமான விக்ருதி என்று சொல்ல முடியாது. முழு விக்ருதியானவை க்ரமம் தவிர எட்டுப் பாடவகைகள் ஆகும். அஷ்ட விக்ருதி என்ற இந்த எட்டு விதமான பாடங்களின் பெயர்களையும் ஒரு ச்லோக ரூபமாக நினைவில் வைத்துக் கொள்கிற மாதிரிச் சொல்வதுண்டு:

**ஜடா மாலா சிகா ரேகா த்வஜோ தண்டோ ரதோ கன :**

**இத்-யஷ்ட-விக்ருதய : ப்ரோக்தா, க்ரம : பூர்வா மஹர்ஷிபி :|**

ரொம்பவும் ஆதிகாலத்தில் மஹரிஷிகளாலேயே இந்தப் பாடமுறைகள் ஏற்படுத்தப் பட்டன.

வேதம் வாய்மொழியாக மட்டுமே (புஸ்தகத்தில் எழுதி வைக்காமல்) வரும்போது,

அதன் ரூபம் கொஞ்சமும் மாறக்கூடாது என்றால், அதற்கு இத்தனை விதமான பாடமும் இருந்ததாக வேண்டும் என்று வைத்தார்கள். பதத்தில் வார்த்தை வார்த்தையாகவும், க்ரமத்தில் இரண்டிரண்டு வார்த்தையாகவும், ஜடையில் அதை முன்பின்னாகவும் இப்படியெல்லாம் பல தினுசில் சொல்வது ஒன்றுக்கொன்று tallyஆவதால் (ஒத்துப் போவதால்) மூலரூபம் மாறாவே இல்லை என்று

நிச்சயமாகிறதல்லவா?அதனால் இத்தனை விதமான பதச் சேர்க்கை முறைகளும் இருக்க வேண்டும் என்று வைத்தார்கள். இதில் ஒன்றைவிட இன்னொரு தினுசில் அத்யயனம் பண்ணுவதற்குப் பலனும் இத்தனை மடங்கு ஜாஸ்தி என்று கூடச் சொல்வதுண்டு.

**ஸம்ஹிதா பாட மாத்ரேண யத் பலம் ப்ரோச்யதே புதை :|**

**பதேது த்விகுணம் வித்யாத் க்ரமேது ச சதுர் குணம் |**

**வர்ண க்ரமே சதகுணம் ஜடாயாந்து ஸஹஸ்ரகம் |**

(ஸம்ஹிதா பாடத்தைவிட இருமடங்கு பலன் கொண்டது பத பாடம்;நான்கு மடங்கு பலனளிப்பது க்ரம பாடம்;நூறு மடங்கு பலன் வாய்ந்து 'வர்ண க்ரமம்'என்ற பாடமுறை;ஆயிரம் மடங்கு பலனளிப்பது ஜடாபாடம்.)

அநாதியான வேதம் மாறவே கூடாது என்பதற்காக இத்தனை ஜாக்ரதையாக நம் முன்னோர்கள் அதன் ரூபத்தை ரக்ஷித்துக் கொடுத்திருக்கும்போது, வேத சப்தங்கள் எப்படி மாறின என்பதைப் பார்த்து வேதத்துக்குக் கால நிர்ணயம் பண்ணுகிறோம் என்று நவீன கால ஆராய்ச்சியாளர்கள் கிளம்பியிருப்பது, ஒரு போதும் யதார்த்தத்தை உள்ளபடி அறியப் பிரயோஜனப் படாது.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*வேத மதம்*

ªîŒõ õ£‚°

அபௌருஷேயம் (மனிதர் செய்யாதது) என்றால், நம்ப மாட்டோம் என்பது சரியேயில்லை. நம் தேசத்தில் மட்டுமில்லாமல் மற்ற மதஸ்தர்களும் இப்படித்தான் சொல்கிறார்கள். கர்த்தரின் வார்த்தையையே தாம் சொல்வதாகவும், தாமாக எதையும் சொல்லவில்லை என்றும் இயேசு சொல்கிறார். முகமது நபி அல்லாவின் ஆக்ஞைகளையே வெளியிட்டதாக அந்த மதஸ்தர்கள் சொல்கிறார்கள். நாம் அபௌருஷேயம் என்பதைத்தான் அங்கே கூஷீமீஸ்மீணீறீமீபீ ஜிமீஜ்மீ என்கிறார்கள். தெய்வவாக்கே மஹான்கள் மூலம் மத நூல்களாக வந்திருக்கின்றன.

மதப் புஸ்தகமில்லாமல், எந்த துறையிலும் ஆழ்ந்து ஐகாக்ரியத்தோடு (ஒருமுனைப்பாட்டோடு) புகுந்து விட்டால், அதில் உள்ள உண்மைகள் தாமாகவே ஒருத்தருக்கு வெளிப்பட்டுவிடுகின்றன. அந்த ஸத்யமே ஸ்புரித்தது, யீறீணீஉலீ ஆயிற்று என்கிறார்கள். இதை வீஸீமீ ஞூவீமீ வீஷீஸீ என்கிறார்கள். ஐன்ஸ்டீன்

கூடத் தம்முடைய பிரசித்தமான 'ரிலேடிவிடி தியரி'யைத் தம் புத்தியால் யோசித்து யோசித்துப் பண்ணவில்லை என்றும், அந்த ஈக்வேஷன் அப்படியே இன்ட்யூஷனில் ஃப்ளாஷ் ஆயிற்று என்றுதான் சொல்லியிருக்கிறார் என்றும் ஒரு ப்ரொஃபஸர் தெரிவித்தார்.

இதையெல்லாம் ஒப்புக்கொள்ளும்போது, பரம சுத்தமான அந்த ஃகரணத்தை உடைய ரிஷிகளின் ஹ்ருதய ஆகாசத்தில் வேத மந்திரங்கள் தாமாகவே, அதாவது அபௌருஷேயமாக வெளிப்பட்டன என்பதை நம்பமாட்டோம் என்பது நியாயமில்லை.

## தெய்வத்தின் குரல் (முதல் பாகம்)

*வேத மதம்*

### «õîƒèœ Üù‰î‹

சிருஷ்டி அத்தனையும், சிருஷ்டிக்கு அப்பாற்பட்டதும் கூட சப்தப் பிரபஞ்சத்தில் இருக்கிறதென்றால், அது ரொம்ப ரொம்ப பெரிதாக அல்லவா இருக்க வேண்டும்?இப்போது வேதங்கள் என்று சொல்லப்படுகிற புஸ்தகங்கள் என்னதான் பெரிசாக இருந்தாலும், விச்வ வியாபாரத்தின் அத்தனை காரியங்களும் இந்த மந்திரங்களுக்குள் வந்துவிட்டன என்றால் சரியாக இருக்குமா என்று தோன்றலாம்.

இப்போது நமக்கு வந்திருக்கிற வேதங்கள் கொஞ்சம்தான். வேதத்திலேயே என்ன சொல்லியிருக்கிறதென்றால், வேதங்களுக்கு அளவே இல்லை - "அனந்தா வைவேதா:"- என்று இருக்கிறது. ரிஷிகளுக்கு அத்தனை வேதங்களும் ஸ்புரித்துவிட்டன என்று சொல்ல முடியாது. நாலு வேதங்களின் ஆயிரத்துச் சொச்சம் சாகைகளே (சாகை என்றால் கிளை) அவர்களுக்குத் தெரிந்தவை.

லோகம் முழுக்க சிருஷ்டித்த பிரம்மாவுக்கே வேதம் முழுக்கத் தெரிந்தது. இந்த பிரம்மாவுக்கு முன் ஒரு மஹாப் பிரளயம் நடந்தது. அதற்கு முந்தி இன்னொரு பிரம்மா இருந்தார். அதே மாதிரி அவருக்கும் முந்தி உண்டு. எல்லாவற்றுக்கும் முதலில் பரமாத்மாவின் எந்த ச்வாஸ சலனத்தால், சிருஷ்டிக் கிரமம் முதல் பிரம்மாவின் தொழிலாகத் தூண்டப்பட்டதோ, அந்தச் சலனம் மட்டும் ஆகாசத்தில் இத்தனை பிரளயங்களிலும் இருந்து கொண்டேதான் இருக்கிறது. அதற்கு மட்டும் அழிவே இல்லை. ஒவ்வொரு மஹாபிரளயத்துக்கும் அப்புறம் வருகிற புது பிரம்மா இந்த சலன சப்தங்களைக் கொண்டுதான் மறுபடி ஸ்ருஷ்டி முழுதையும் பண்ணுகிறார்.

நாம் எழுப்புகிற ஒலிகள் அழிகிறதேயில்லை! இரண்டாயிரம் வருஷத்துமுன் கிறிஸ்து பேசினதை, அவர் குரலிலேயே இப்போதும் பிடித்துத் தரமுடியும்;அதற்காக முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்று படித்ததாக ஞாபகம். அப்புறம் அது என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஆனால் இப்படி ஒரு possibility (சாத்தியக்கூறு) இருக்கிறது என்று தெரிகிறது. ஒரு ஒலி உண்டானபின், என்றுமே அது அழியாமல் ஆகாசத்தில் இருக்கிறது என்று தெரிகிறது.

இம்மாதிரி, பிரளயத்திலும் அழியாமலிருக்க வேத சப்தங்களைக் கொண்டுதான் பிரம்மா மறுபடி லேசாக சிருஷ்டி பண்ணியிருக்கிறார். கல், மண், மரம், இரும்பு முதலியவற்றை வைத்துக் கொண்டு, நாம் ஒரு ஊரை நிர்மாணம் பண்ணுகிறோம். ஆனால் இந்தக் கல், மண், மரம், இரும்பு எல்லாமே பரமாத்மாவின் எண்ணத்தில் இருந்து எண்ணுகிற மனஸுக்கும் ச்வாஸத்திற்கும் மூலம் ஒன்றாயிருப்பதால், அவருடைய ச்வாஸ சலனத்தினால் ஏற்பட்டவைதான். அந்த சலனங்களுக்குரிய சப்த ரூபத்தை, பிரம்மா வேதங்களாகக் கண்டு அத்யயனம் பண்ணின மாத்திரத்தில் சிருஷ்டி முழுக்க வந்து விட்டது.

இப்போது அடிக்கடி பேப்பரில் (செய்தித்தாளில்) பார்க்கிறோம். பலவிதமான

ஸௌண்ட் வைப்ரேஷன்களை (சப்த அதிர்வுகளை) செடிகளுக்கு அருகிலே உண்டு பண்ணினால், சில விதமான வைப்ரேஷனினால் செடி நன்றாக வளர்ந்து நிறையக் காய்க்கிறது. சிலவகை வைப்ரேஷனால் வளர்ச்சி குன்றுகிறது என்று நியூஸ் வருகிறது. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார சக்தி எல்லாம் சப்தத்துக்கு உண்டு என்பது இதிலிருந்து நிதர்சனமாகிறது.

பிரம்மாவின் தபோ மகிமையால், power of concentration - ஆல் லோகம் முழுவதையும் வேத சப்தத்தால் அவர் உண்டாக்க முடிந்தது. நாம் தினமும் ஜபிக்கிற அதே பஞ்சாக்ஷர மந்திரத்தை ஒரு தரம் சொல்லி ஒரு ஸித்தர் விபூதி பூசினால், உடனே ஒரு வியாதி சொஸ்தமாகிறது என்றால், அது எப்படி?நம்மைவிட அவருக்கு உள்ள கான்ஸென்ட்ரேஷன் (மன ஒருமைப்பாட்டு) சக்தியால்தான். அதோடுகூட மந்திரத்தை அக்ஷரம், ஸ்வரம் கொஞ்சங்கூட தப்பாமல் சுத்தமாகச் சொல்ல வேண்டும். அப்போதுதான் பலன் உண்டாகும். ஜகத் ச்ருஷ்டிக்குக் கருவியாகவே பிரம்மா பரமாத்மாவிடம் தோன்றியதால், அவருக்கு இவற்றில் பூர்ண சக்தி இருந்தது.

ஒன்றுமில்லாத ஆகாசத்திலிருந்து எலெக்ட்ரிஸிடியால் எவ்வளவோ காரியங்கள் செய்யப்படுகின்றன. அதைப் போல, எல்லாம் நிர்குணப் பிரம்மமான சைதன்ய வஸ்துவிடமிருந்து உண்டாகும். பிரளய ஸமயங்களில் அந்தச் சைதன்யம் தூங்கும். ஒரு ஸாண்டோ இருக்கிறான். அவன் தூங்கினால் அவனுடைய சக்தி

ஒன்றும் வெளியே தெரிவதில்லை. குஸ்தி முதலிய காரியங்களைச் செய்கிறது. நிர்குண வஸ்துவினிடத்திலிருந்து முதலில் ஒரு கான்ஸென்ட்ரேஷன் சக்தி (தபஸ்) கிளம்புகிறது. அதன் வழியே உண்டானவர் பிரம்மா. அவர் தபோரூபமாக உண்டானதால் சகல வேதங்களையும் பூர்ண சக்தியோடு கிரஹித்துக் கொண்டார். வேத சப்தத்திலிருந்து லோகத்தைச் சிருஷ்டித்தார். வேதங்கள் அளவிறந்தன. சிருஷ்டியும் பலவிதம்.

பரத்வாஜ மஹரிஷி மூன்று ஆயுஸ் பரியந்தம் வேதாத்தியயனம் செய்தார். பரமேச்வரன் அவருக்குப் பிரத்தியக்ஷமானார். "உமக்கு நாலாவது ஆயுஸ் கொடுக்கிறேன். அதைக் கொண்டு என்ன செய்வீர்?"என்று கேட்டார். பரத்வாஜர், 'அந்த ஆயுஸை வைத்துக் கொண்டும் வேதாத்தியயனமே பண்ணிக்கொண்டிருப்பேன் என்று சொன்னார். எத்தனை ஆயுஸ் கிடைத்தாலும் வேதங்களைப் பூர்ணமாக அத்யயனம் பண்ணுவது ஸாத்தியமில்லையாதலால், இந்த அஸாத்ய விஷயத்தில் ரிஷி பிரயத்னப்படுவதைப் பார்த்து பரிதாபம் கொண்ட பரமேச்வரன், அவர் மனஸை மாற்ற வேண்டும் என்று எண்ணினார். அங்கே மூன்று பெரிய மலைகளைத் தோன்றப் பண்ணி, ஒரு பிடி மண்ணை எடுத்துக் காட்டி, நீ இவ்வளவு வருஷக் கணக்காக அத்யயனம் பண்ணின வேதங்கள் இந்தப் பிடி மண்ணுக்கு ஸமானம். நீ இன்னும் தெரிந்து கொள்ளாதவை இந்த மலைகளைப் போல் இருக்கின்றன என்று சொன்னார்.

வேதகிரி என்னும் திருக்கழுக்குன்றம் தான் இப்படி வேதமே மலையான இடம் என்பார்கள். நான் அங்கே கிரி பிரதக்ஷிணம் பண்ணினபோது, கூட வந்தவர்கள் "தேவ தேவ தேவ மஹாதேவ" என்று பஜனை பண்ணினார்கள். நான் அதை "வேத வேத வேத மஹாவேத"என்று மாற்றிக் கொடுத்தேன்!

பரத்வாஜ ரிஷியின் இந்தக் கதை வேதத்திலேயே "காடக"த்தில் இருக்கிறது. இதனால் அனந்தமான வேதங்கள் உண்டு என்று தெரிகிறது. நாலுவேதம், ஆயிரத்து சொச்சம் சாகை என்பதெல்லாம் பிற்பாடு ஏற்பட்ட அமைப்புகள்தான்.

பிரம்மா உண்டானவுடன் அவருடைய ஹிருதயத்தில் வேத சப்தமெல்லாம் தோன்றின. அவருக்கு ஸ்ருஷ்டி செய்வதற்கு அந்த வேதம் வழி காட்டிற்று. எங்கே

பார்த்தாலும் வேச சப்தம் நிறைந்திருந்ததை அவர் அறிந்தார். அவருக்கு எல்லா வேதங்களும் தோன்றும். ரிஷிகளுக்குச் சிலச்சில மந்திரங்களே தோன்றும். இப்படி ரிஷிகளுக்குத் தோன்றிய மந்திரங்கள்தான் நமக்கு கிடைத்துள்ள வேதமாக இருக்கிறது.

நாம் மந்திரங்களுக்கு ரிஷி, சந்தஸ், தேவதை என்னும் மூன்றையும்

சொல்லுகிறோம். எல்லா மந்திரங்களுக்கும் அவைகளைச் சொல்லி வருகிறார்கள். தபஸ் பண்ணின ரிஷிகள் மூலமாக அறியப்பட்டவையே மந்திரங்கள். அந்தந்த ரிஷிகள்தான் அந்தந்த மந்திரங்களுக்குரிய ரிஷிகள். அவர்களுக்கு அந்த மந்திரங்களைக் கேட்கும் திவ்விய சுரோத்திரம் உண்டு. யோகசாஸ்திரத்தில் பெரிய ஆகாசமும் மனஸிலுள்ள ஆகாசமும் ஒன்றாக ஆகிவிட்டால் பெரிய ஆகாசத்திலுள்ள சப்தமெல்லாம் நமக்குக் கேட்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எங்கும் நிறைந்து அபேதமான நிலையை அடைந்தவர்களுக்கே அந்த சப்தங்கள் தெரியும். இம்மாதிரி ரிஷிகள் மந்திரங்களை லோகத்தில் பிரசாரத்துக்குக் கொண்டு வந்தவர்களேயன்றி, அவற்றை இயற்றியவர்களல்ல. ஆனாலும், ஏற்கனவே உள்ளதை வெளிப்படுத்தியதாலேயே நமக்குப் பரம உபகாரத்தைப் புரிந்திருக்கிறார்கள். ஒருவர் நமக்கு கங்கா தீர்த்தம் கொண்டு வந்து கொடுத்தால், கொடுத்தவரையே நமஸ்காரம் பண்ணி வாங்கிக் கொள்கிறோம். அவரா கங்கையை உண்டு பண்ணினார்?இல்லாவிட்டாலும், ஆயிரம் மைலுக்கு அப்பாலிருக்கும் கங்கை நமக்குக் கிடைக்கும்படி அவர் செய்த உபகாரத்தைப் போற்றுகிறோம். நம் காதுக்கு எட்டாத மந்திரங்களை நமக்காகப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்த ரிஷிகளை எவ்வளவு பூஜித்தாலும் போதாது. அதனால்தான் ஒரு மந்திரத்தைச் சொல்லும்போது, எந்த ரிஷி மூலமாக அது லோகத்துக்கு வந்ததோ அவர் பெயரைச் சொல்லி தலையைத் தொடுகிறோம். அவருடைய பாதங்களை சிரஸில் வைத்துக் கொள்கிறோம் என்பதற்கு இது அறிகுறி.

வேதங்கள் ஆதியற்ற அநாதி. அவை மநுஷ்ர்களால் செய்யப்படாத அபௌருஷேய கிரந்தம் என்பதெல்லாம் எப்படி என்று நான் இவ்வளவு நாழி சொன்னதிலிருந்து கொஞ்சங் கொஞ்சம் தெளிவாகியிருக்கலாம்.

## தெய்வத்தின் குரல்

*வேத மதம்*

### மந்திர யோகமும் மந்திர ஸித்தியும்

பதினான்கு உலகங்களும் ஒரு ராஜ்யம். இந்த ராஜ்யத்திற்கு ஒரு சக்ரவர்த்தி. அந்த சக்ரவர்த்திக்கு எல்லா ஜீவராசிகளும் பிரஜைகள். ராஜ்யமும் அநாதி, சக்ரவர்த்தியும் அநாதி. ராஜ்யமும் சக்ரவர்த்தியும் பிரஜைகளும் இருந்தால் அதற்கு ஒரு சட்டம் வேண்டும். இவைகள் எல்லாம் அநாதியாகத்தானே இருக்கணும்?அந்த அநாதிச் சட்டமே வேதம். இவற்றில் ராஜ்யமான

பிரபஞ்சத்தை "அநாதி"என்றாலும், அவ்வப்போது அதற்கு உற்பத்தி உண்டு;அழிவும் உண்டு. சக்ரவர்த்தியான பரமாத்மாவும், சட்டமான வேதமும் ஸர்வ சாச்வதம்.

உலகம் உற்பத்தி ஆகிறது, வளர்கிறது, பிரளயம் அடைகிறது. இப்படியே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. சக்ரவர்த்தியும் சட்டமும் மாத்திரம் ஸ்திரம். ஒவ்வொரு ஸ்ருஷ்டியின் ஆரம்பித்திலும், அந்த சக்ரவர்த்தி அதிகார புருஷர்களை ஸ்ருஷ்டி

செய்கிறான். அந்த அதிகாரிகளுக்கு வேண்டிய யோக சக்தியைக் கொடுக்கிறான். யோக சாஸ்திரத்தில் தன் ச்ரோத்திரத்திற்கும் வெளி ஆகாசத்திற்கும் அபேதமான ஒரு ஸாம்யம் (ஸமநிலை) உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அதை அநுஷ்டிக்கும் போது திவ்ய ச்ரோத்திரத்தைக் கொண்டு வெளி ஆகாசத்தில் ஸ்திரமாய்க் கிடக்கும் அநாதி சப்த அலைகளை ஈசனுடைய அருள் சகாயத்தால் அந்த அதிகார புருஷர்கள் அடைகிறார்கள். அவர்களே முதல் முதலில் வேதத்தை அறிந்தவர்களாகிறார்கள். அவர்களே மந்திரங்களுக்குக்கான மஹரிஷிகள்.

வேதாத்யயனம் ஒரு மந்திர யோகம். ஒவ்வொரு நாடி அசைவத்தினால் சித்தத்திற்கு ஒவ்வொரு விதமான விகாரங்கள் ஏற்படுகிறது. சில நாடி அசைவுகளால் காம விகாரங்களும், சில நாடிகளால் சோம்பல் விகாரங்களும், சில நாடிகளால் கோப விகாரங்களும் உண்டாகின்றன. இதை மாற்றிச் சொன்னால், காம விகாரம் ஏற்படும்போது சில நாடிகளில் அசைவும் உண்டாகின்றன. இவை பிரத்யக்ஷமாகவே அநுபவத்தில் காணப்படுகின்றன. சாந்தம் ஏற்படும்போது முகத்தில் ஒரு களை உண்டாகிறது. அந்தக் களை சில நாடிகள் குளிர்ந்ததன் பலனேயாம். இப்படியே காமம், குரோதம் ஒவ்வொன்றும், 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'என்றபடி முகத்திலேயே பிரதிபலிக்கின்றன. நாடி சலனம்தான் இந்த அடையாளங்களை உண்டாக்குவது. இவ்விதம் மனோவிகாரங்களால் நாடிகளில் சில விகாரங்கள் ஏற்படுவதால், அந்த நாடிகளை வசப்படுத்தி விட்டால், காமக் குரோதங்களையோ, சாரத்தையோ நமது இஷ்டப்படி வரவழைத்துக் கொள்ளலாம். அதற்கு வெளிப் பொருள்கள் தேவையில்லை. இப்படி நாடிகளை ஸ்வாதீனப்படுத்த ப்ராணாயாமத்தை முக்கியமாகக் கொண்ட ராஜயோகம் ஒரு மார்க்கம். அதே விதமாய் மந்திரயோகம் ஒரு மார்க்கம். ஒரு எழுத்தை நாம் உச்சரிக்கும்போது நமது நாக்கு, உதடு, மேல்வாய், கீழ்வாய்,கண்டம் முதலியவைகளின் இடைவெளி வழியாக ப்ராணவாயு வெளிப்படுகிறது. அப்பொழுதுதான் அக்ஷர த்வனி உண்டாகிறது. அந்த அக்ஷர த்வனிக்கு காரணமாக எந்தெந்த உறுப்புகளில் ப்ராணவாயு ஸஞ்சரிக்கிறதோ அந்தந்த இடம் ஸம்பந்தப்படும் நாடிகளில் ஸலனம் ஏற்படுகிது. நாடிகளில் சலனத்தினால் மனஸில் எந்த விதமான விருத்திகள் ஏற்பட்டு இகலோக க்ஷேமமும் பர லோக க்ஷேமமாகிய மோக்ஷம் முதலிய புண்யமும் ஏற்பட

வேண்டுமோ, அதற்கு அநுகுணமாக உள்ள உச்சாரணங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு, வேறுவிதமான உச்சாரணங்களை விலக்கி அமைந்தனவே வேத மந்திரங்கள்.

மந்திரத்துக்கு ஞிமீயீவீஸீவீமீ´வீஷீஸீ (லக்ஷணம்) "மனனாத் த்ராயதே"என்று சொல்லியிருக்கிறது. அதாவது திரும்பத் திரும்ப மனனம் செய்து உருப்போடுவதால் காப்பாற்றுவதே மந்திரம். அவைகளின் ஆவ்ருத்தியால் எந்தெந்த நாடிகளில் திருப்பித்திருப்பி சலனம் ஏற்பட்டு ஆத்மக்ஷேமம் கிட்டுமோ, அந்த க்ஷேமத்தைத் தானும் அடைந்து, தன் மந்திர சக்தியால் உலகத்தோரும் க்ஷேமம் அடையச் செய்வதே வேதியரின் பிறவிக் கடமை.

மந்திரங்களில் ஸித்தி பெற்றுப் பூரண பலனைப் பெற வேண்டுமானால் அவற்றை எப்படி ஒத வேண்டும் என்று ('சிக்ஷா' சாஸ்திரத்தில்) சொல்லியிருக்கிறது:

கீதி சீக்ரி சிர : கம்பீ ததா லிகித பாடக :।

Üù˜ˆî,ë : (U) Ü™ðè‡ì„ê û¬ì«î ð£ìè£îñ£ :|

"ÞŠð® ªò™ô£‹ «õîˆ¬îˆ îŠð£èŠ ðJôð õ˜èœ Üîñ˜èœ" â¡Á ªê£™L, Þ‰î „«ô£èˆF™ ÝÁ FÂê£ù îŠ¹è¬÷„ ªê£™LJ¼‚Aø¶. "WF"â¡ø£™ «õîˆ¬î

பாட்டு (கீதம்) மாதிரி இஷ்டப்படி ராகம் போட்டுப் பாடுகிறவன். இப்படிப் பண்ணக்கூடாது. வேதத்துக்கே உரிய ஸ்வரத்தில்தான் அதைச் சொல்ல வேண்டும். "சீக்ரி"என்றால் வேகமாகச் சொல்லிச் சீக்கிரத்தில் முடிப்பவன். இதுவும் பிசகு. வேத அக்ஷரங்களை அவற்றின் காலப் பிரமாணப்படி சொன்னால்தான் பூர்ண பலன் உண்டாகும். "சிர:கம்பீ"என்றால் தலையை ஆட்டிக்கொண்டு சொல்கிறவன். ஆடாமல் ஸமநிலையில் உட்கார்ந்து கொண்டு, மந்திரங்களால் தானாக ஏற்படும் நாடி சலனங்களைத்தான் உண்டாக்கிக் கொள்ளவேண்டும். பாட்டுப் பாடுகிறவர் மாதிரி சிரஃகம்பம் பண்ணினால் நாடி சலனம் வித்யாஸப்படும். 'லிகித பாடகன்' என்றால் எழுதி வைத்துக் கொண்டு படிப்பவன். இது தப்பு. வாயால் சொல்லிக் காதால் கேட்டே பாடம் பண்ண வேண்டும் என்று முன்பே சொன்னேன். 'அனர்த்தக்ஞ:'என்றால் அர்த்தம் தெரியாதவன். அர்த்தம் தெரிந்து கொண்டுதான் மந்திரங்களைச் சொல்ல வேண்டும்.

இந்த இடத்தில் எனக்கு வேடிக்கையாக ஒன்று தோன்றுவதைச் சொல்ல வேண்டும். ஸம்ஸ்கிருதத்தில் ஒன்றைச் சொல்லி, அதற்குப் பின்னால் தரம் என்று சேர்த்தால் முதலில் சொன்னதைவிட (comparitive degree) இது சிலாக்யமாகிறது என்று அர்த்தம். 'வீர்யவத்'என்றால் 'சக்தியுள்ள'என்று அர்த்தம். 'வீர்யவத்தர ம்'என்றால் 'அந்த சக்தி மேலும் அதிகமான'என்று அர்த்தம். சாந்தோக்ய உபநிஷத்தில் (1.1.10) ஓம்காரத்தின் தத்துவத்தை அறிந்து உபாஸிக்கிறவர்களுக்கே

'வீர்யவத்தர'மான பலன் கிடைக்கிறது என்று சொல்லியிருக்கிறது. இப்படித் தரம் போட்டு சொன்னதாலேயே அர்த்தம் தெரியாமல் ஓம்கார உபாஸனை பண்ணுகிறவர்களுக்கும் 'வீர்யவத்'தான பலன் கிடைக்கிறது என்று ஆகிறது. அறிந்து பண்ணுகிறவர்களின் அளவுக்கு இல்லாவிடினும் மற்றவர்களுக்கும் சக்தி வாய்ந்த பயன் ஏற்படுகிறது என்று ஆசார்யாளும் பாஷ்யத்தில் சொல்கிறார்.

ஏன் என்றால், அர்த்தம் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், 'பெரியவர்கள்'சொல்லியிருக்கிறார்கள்', நம் பூர்விகர்கள் பண்ணியிருக்கிறார்கள் என்பதற்காகவே ஒரு கர்மாவை ஒருத்தர் பண்ணினாலும், அந்த மனோபாவத்துக்கே நல்ல பலன் உண்டுதான். மற்ற கர்மாக்களை விட மந்திர உபாஸனையில் இதே விசேஷமாகச் சொல்ல வேண்டும். ஏனென்றால் மந்திரத்தில் சரியான அக்ஷர உச்சாரணத்தினால் ஏற்படுகிற சலனம்தான் முக்கியமாக க்ஷேமத்தைத் தருவது. சப்தம் உண்டாக்கும் பலன்தான் இங்கே விசேஷம். அர்த்தத்தின் விசேஷம் அதற்கப்புறம் வருவதுதான்.

இதைப்பற்றி யோசிக்கும்போது, எனக்கு அர்த்தம் தெரியாமல் செய்வதில்தான் 'வீர்யவத்தர'மான பலன்;அர்த்தம் தெரிந்து பண்ணினால் வெறும்

'வீர்யவத்'தான் என்றுகூட வேடிக்கையாகத் தோன்றுவதுண்டு. அர்த்தம் தெரிந்து கொள்ளாமல் மந்திர ஜபம் பண்ணினால் அதிகப் பிரயோஜனம் உண்டு;தெரிந்தால் அவ்வளவு இல்லை என்று தோன்றுகிறது. அது எப்படி?

ஒரு கலெக்டர் இருக்கிறார். அவருக்கு ஒரு படிப்பாளி வக்கீலை வைத்து மனு எழுதுகிறார். ஒரெழுத்துக்கூடத் தெரியாத ஒரு குடியானவன் யாராவது ஒருவரிடம் எழுதி கலெக்டரிடம் நேரில் கொடுக்கிறான். எப்படியாவது நல்லது பண்ணவேண்டும் எனறு வேண்டிக்கொண்டு மனுவைக் கொடுக்கிறான். கலெக்டர் பார்த்தால், 'பாவம்!ஒன்றும் தெரியாது! நம்பிக்கை மாத்திரம் இருக்கிறது என்று எண்ணி பண்ணுவார்.

அதைப் போன்றதுதான் மந்திரமும் மந்திரத்துக்கு அர்த்தம் ஈச்வரனுக்குத் தான் தெரியும். நாம் போக்கிரித்தனமாக இருக்கக்கூடாது. வக்கீல் வைத்துப் பேசினால், அதில் குற்றம் ஏற்படுமானால், கலெக்டர் கோபித்துக் கொள்வார்.

தெரிந்து தப்பாகப் பண்ணினால் அதிகக் கோபம் உண்டாகும். தெரியாமல் தப்பாக இருந்தால், தெரியாமல் பண்ணுகிறான் என்று மன்னிக்கிற எண்ணம் ஏற்படும். 'என்ன ஸார்!அர்த்தம் தெரியவில்லை;அதைப் பண்ணி என்ன பிரயோஜனம்?'

என்று சொல்வது தப்பு. அர்த்தம் தெரியாமல் பண்ணுவது தான் வீர்யவத்தரமாக எனக்குத் தோன்றுகிறது!

இது வேடிக்கைக்குச் சொன்னது. தற்காலத்தில் புத்தியின் கர்வமும், கிருத்ரிமமும் ஜாஸ்தியாகிவிட்டதையும், இதில் பாமரர்களுக்குள்ள விநய ஸம்பத்து

பறிபோய் விடுவதையும் பார்க்கிறபோது, புத்தியே இல்லாமல் வெறும் நம்பிக்கையின் பேரில் பண்ணினால் சிலாக்யமாய் இருக்குமோ என்று பட்டதால் இப்படிச் சொன்னேன். வாஸ்வத்தில் புத்தியும் இருந்து விநயமாகவும் இருக்க வேண்டும். மந்திரங்களுக்கு அர்த்தம் சப்தத்துக்கு அடுத்தபடிதான் முக்கியம் என்றாலும் மந்திரங்களே நமக்கு தர்ம சாஸ்திரச் சட்டமாகவும் இருப்பதால் அவற்றின் அர்த்தமும் தெரிந்தால்தான் அந்தச் சட்டப்படி நடக்க முடியும்.

வேத அப்யாஸத்தில் சொன்ன ஆறு தப்புகளில் கடைசியில் வரும்'அல்ப கண்டன்'என்றால், 'மெல்லிய குரலில் வேதம் சொல்லுகிறவன்'என்று அர்த்தம். இவனும் அதமன்தான். Full-throated என்று சொல்லுகிற மாதிரி நன்றாக கம்பீரமாக, உரக்க,வாய்விட்டு வேத சப்தம் எவ்வளவு தூரம் வியாபிக்கும் படியாகச் சொல்ல முடியுமோ அப்படிச் சொல்ல வேண்டும்.

வேத மந்திர சப்தம் அதைச் சொல்கிறவனுக்குள்ளே நல்ல நாடி சலனங்களை உண்டு பண்ணுவதோடு, கேட்கிறவர்களுக்கும் அப்படிப்பட்ட சலனத்தை உண்டு பண்ணுவது. அட்மாஸ்ஃபியரில் அது எவ்வளவு தூரம் வியாபிக்கும்படி பண்ண முடியுமோ அவ்வளவுக்கு பலமாக கோஷிக்க வேண்டும்.

மந்திரத்திலிருந்து முழுப் பிரயோஜனத்தை அடைய வேணடுமானால், இந்த ஆறு விதிகளைப் பின்பற்றினால் தான் முடியும்.

## வேதத்தின் மகிமை

வேதம் அநாதியானது, அபௌருஷேயமானது, ஸகல ஸ்ருஷ்டிக்கும் அதுவே மூலம் என்பது மட்டும்தானா அதன் மகிமை?இல்லை. வேறு பல பெருமைகளும் சிறப்புகளும் வேதத்துக்கு உண்டு.

அதன் சப்தம் நம்முடைய நாடிகளிலும், வெளி லோகத்திலும் (atmosphere) ஏற்படுத்தும் சலனங்களால் ஆத்ம க்ஷேமமும் லோக க்ஷேமமும் உண்டாகிறது. லோக க்ஷேமம் என்றால் மநுஷ்யர்களின் க்ஷேமம் மட்டுமில்லை. ஸகல பிராணி வர்க்கங்களும் நன்றாக இருக்கவேண்டும் என்று வேதம் சொல்கிற மாதிரி வேறெந்த மதத்திலும் சொல்லியிருக்கவில்லை. "தே த்விபாத் சதுஷ்பாத்" - இரு கால் பிராணி, நாலுகால் பிராணி எல்லாம் க்ஷேமமாக இருக்க வேதம் பிரார்த்திருக்கிறது. புல்,புண்டு, விருக்ஷம், மலை, நதி ஆகிய எல்லாவற்றின் நன்மையையும் கோருகிறது. இந்த ஸமஸ்தப் பிராணிகளின் க்ஷேமம் வேதத்தின் சப்த விசேஷத்தாலேயே நடந்து விடுகிறது.

சப்த விசேஷத்தோடு அர்த்த வேதத்துக்கு அளவிட முடியாததாக இருக்கிறது. வேதக் கருத்துக்களைப் பார்த்து இதர மதஸ்தர்களும், வெளி நாட்டு அறிவாளிகளும் கூட ஆச்சர்யப் படுகிறார்கள். காவிய ரீதியில் இருக்கிற அழகு, சமூக வாழ்வு முறைகளை நுட்பமாகச் சொல்லியருக்கிற அழகு, அத்யாத்ம தத்வங்கள், நன்னெறி உபதேசங்கள் (Moral Instructions), ஸயன்ஸ் கருத்துக்களுங்கூட வேதங்களில் கொட்டிக் கிடக்கிறது என்று ஆச்சர்யப்படுகிறார்கள்.

சப்த சலனமான மந்திரங்களுக்கெல்லாம் அர்த்தம் இருக்க வேண்டும் என்பதே இல்லை. பிரகிருதத்தில் (நடைமுறை வாழ்க்கையில்) பார்த்தாலும், வார்த்தையோ அர்த்தமோ இல்லாமலே ஒரு ராகத்தை ஆலாபனம் பண்ணிக் கேட்கிறபோது, அதன் வெறும் சப்தம் மட்டுமே நமக்கு ஆனந்தம், துக்கம் முதலான உணர்ச்சிகளைத் தருகிறது. வாத்திய ஸங்கீதத்தினால் ஏற்பட்ட Vibration-களினாலேயே கறிகாய்ச் செடிகளைத் தூண்டி யதேஷ்டமாக காய்க்க வைத்திருக்கிறோம் என்று ஸமீபத்தில்கூட ஒரு யூனிவர்ஸிடியில் பரிசோதனை பண்ணித் தெரிவித்திருக்கிறார்கள். சப்தத்துக்கு சிருஷ்டி சக்தி உண்டு என்பதற்கு இது ஒரு proof. அது ஒரு பக்கம் இருக்கட்டும். இங்கேயும் வாத்ய ஸங்கீதம் என்பதாலேயே வார்த்தையோ அர்த்தமோ முக்கியமில்லை என்று தெரிகிறது.

வேதத்தில் என்ன விசேஷம் என்றால் அதன் சப்தத்துக்கே தனியாக சக்தி இருப்பது மட்டுமின்றி, வார்த்தைகளாகவும் அதற்கு மிக உயர்ந்த அர்த்தம் இருக்கிறது.

தமிழில் அநேக உத்தமமான ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. அவற்றைப் படித்தால் மனஸ் உருகுகிறது. ஆனாலும் குறிப்பிட்ட பிரயோஜனம் வேண்டுமென்றால், அதில் சிலதை மட்டும்தான் உருவேற்றுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். "திருமுருகாற்றுப்படை", வியாதி தீருவதெற்கென்று ஒரு திருப்புகழ் ("இருமலுரோக"), தேவாரத்தில் மழை வேட்டல் பதிகம் என்றிப்படி சிலதை மட்டும் விசேஷமாகப் பல ஆவிருத்தி ஜபிக்கிறோம். இதே நக்கீரரும், அருணகிரிநாதரும், ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளும் இவற்றை விட நெஞ்சை உருக்கும்படியான வேறு ஸ்தோத்திரங்கள் பண்ணியிருக்கக்கூடும். ஆனால் அவற்றை விட்டு இவற்றை மட்டும் ஏன் எடுத்துக் கொள்கிறோம் என்றால் சப்த விசேஷந்தான். இந்தப் பாடல்களில் உள்ள சப்தங்களுக்கு மந்திர சக்தி இருக்கிறது. ஆசார்யாளேதான் "ஸௌந்தர்ய லஹரி", "சிவானந்த லஹரி" இரண்டும் செய்திருக்கிறார். ஆனால் "ஸௌந்தர்ய லஹரி"யில் ஒவ்வொரு ச்லோகத்தை ஜபிப்பதற்கும் ஒவ்வொரு விதமான

பலன் சொல்லியிருக்கிற மாதிரி,

"சிவானந்த லஹரி" க்குச் சொல்லவில்லை. காரணம் என்னவென்றால் சப்தங்களுக்கே உள்ள மந்திர சக்திதான்.

அர்த்தமே இல்லாத வெறும் சப்தமான மந்திரங்களும் உண்டு. அர்த்தத்தில் ரொம்ப உயர்வாக இருந்தாலும், விசேஷமாக மந்திர சக்தி இல்லாத மந்திரங்களும் உண்டு.வேதத்தின் மஹிமை என்ன என்றால் சப்தத்தின் மந்திர சக்தி, அர்த்தத்தின் கௌரவம் என்ற இரண்டும் கொண்ட மந்திர சமூகமாக அது இருப்பதுதான். ஒரு மருந்து கசப்பாக இருந்து கொண்டு தேகத்துக்கு நல்லது பண்ணுகிறது. ஒரு பக்ஷணம் வாய்க்கு ருசியாக இருந்தாலும் தேகத்துக்குக் கெடுதலை உண்டாக்குகிறது. மதுரமான ருசி, தேக புஷ்டி இரண்டையும் தரக்கூடிய கூச்மாண்ட லேஹ்யம் மாதிரி ஒன்று கிடைத்தால் எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறது?வேதத்தில் இப்படி இரட்டைப் பலன்: மந்திர சக்தி, தத்வ உபதேசம் என்று இரண்டும் இருக்கின்றன.

தத்வம் என்று எடுத்துக் கொள்கிறபோதும், லோக வாழ்க்கை, அத்யாத்ம வாழ்க்கை இரண்டுக்குமான உபதேசங்கள் அதில் இருக்கின்றன.ஒவ்வொரு ஜீவனும் ஒரு ஜன்மாவில் உண்டாகிறதிலிருந்து சாகிறவரையில் எப்படிச் செய்தால் அவனுடைய ஆத்மா க்ஷேமம் அடையும் என்பதற்கு அதில் உபதேசம் இருக்கிறது. இப்படி Indiviual Salvation(தனிமனிதனின் உய்வு)-ஐச் சொல்வதோடு மட்டுமில்லாமல், சமூக வாழ்க்கை எப்படி நடக்க வேண்டும், பொது ஜனங்களின் கடமைகள் என்ன, பிராம்மணன் எப்படி இருக்க வேண்டும், ராஜா எப்படி ராஜாங்கம் நடத்த வேண்டும், ஸ்திரீகள் எப்படியிருக்க வேண்டும், பொது ஜனங்கள் எப்படி செய்ய வேண்டும் என்பதையெல்லாம் அது சட்டம் மாதிரி

நமக்குப் போட்டுக் கொடுத்திருக்கிறது.

சட்ட புஸ்தகங்களுக்கெல்லாம் உச்சாணி வேதந்தான என்பது அதன் விசேஷங்களில் ஒன்று.

## தெய்வத்தின் குரல் (2ம் பாகம்)

*வேத மதம்*

ò,ë‹

வேதத்தின் பல சிறப்புகளைச் சொன்னேன். அதிலே முக்கியமாகச் சொல்ல வேண்டிய இன்னொன்று யக்ஞம் என்ற வேள்வியாகும்.

மந்திரங்களை வாயால் சொல்லிக் கொண்டு, அதோடு கூட அதற்கான ஒரு காரியத்தையும் அக்னி முகமாகப் பண்ணுவதுதான் யக்ஞம்.

"யஜ்" என்கிற வேர்ச் சொல்லிலிருந்து வந்தது "யக்ஞம்". அதனால் 'யக்ஞம்' என்பதை விஷயம் தெரிந்தவர்கள் 'யஜ்ஞம்' என்றே எழுதுகிறார்கள். 'யஜ்' என்றால் வழிபடுவது, பக்தி செலுத்துவது என்று அர்த்தம். பரமாத்மாவிடமும், தேவதைகளிடமும் ப்ரீதி பூர்வமான உணர்ச்சியுடன் ஒரு வழிபாடாகச் செய்யப்படுகிற கர்மமே யக்ஞம்.

யக்ஞம் என்பதை யாகம் என்றும் சொல்கிறோம்.

"மனனாத் த்ராயதே இதி மந்த்ர:" என்பது மந்திரத்துக்கு ஏற்பட்ட லக்ஷணம் (பீமீயீவீஸீவீமீ வீஷீஸீ). அதாவது, "மனனம் செய்தால் எது காப்பாற்றுகிறதோ அதுவே மந்திரம்" என்பது லக்ஷணம். 'த்ராணம்' என்றால் காப்பாற்றுவது. "பரித்ராணாய ஸாதூனாம்" (நல்லவர்களை நன்றாகக் காப்பாற்றுவதற்காக) என்ற கீதா வாக்கியம் எல்லாரும் கேள்விப்பட்டிருப்பீர்கள். மனனம் செய்வதால் த்ராணம் தருவதே (காப்பு)மந்த்ரம். மனனம் என்றால் மனசுக்குள் உருட்டிக் கொள்வதுதாந். வாய்விட்டு சொல்லக்கூட வேண்டாம். மனசுக்குள் மந்திர சப்தங்களைச் சொல்லிக் கொள்வதாலேயே உள்ளுக்குள்ளே (நான் முன்னே சொன்ன) க்ஷேமகரமான ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீ-கள், நாடி சலனங்கள் உண்டாகும். அதையே வாய்விட்டு வேத கோஷமாகப் பண்ணினால், அர்த்தம் புரியாவிட்டாலும் அதன் காம்பீர்யமே கேட்கிறவர்களுக்கெல்லாம் ஒரு திவ்ய ஆனந்தத்தைத் தருகிறது. அந்த சப்தங்களுக்கு லோக க்ஷேமத்தை விளைவிக்கக் கூடிய சக்தியும் இருக்கிறது.

மனனமாக, மானஸிகமாக இருப்பது வாசிகமாக வாக்கில் வெளிவருவதோடு, காயிகமாக காயம் எனப்படும் சரீரத்தால் ஒரு கர்மாவோடு சம்பந்தப்பட்டு வருகிறபோது மனோ, வாக்கு, காயம் மூன்றும் வேதத்தில் அர்ப்பணிக்கப்பட்டதாக ஆகிறது. இப்படிப்பட்ட வேத கர்மாக்களில் முக்கியமானதுதான் யாகம் எனப்படுகிற யக்ஞம்.

---

*மற்ற மதங்களில் இல்லாதது*

உலகத்திலே பிரஸித்தமாயிருக்கும் மற்ற பெரிய மதத்துக்கு வைதிக மதம் என்ற பெயர் இருக்கிறது. இந்த வைதிக மதத்துக்கும் லோகத்தில் இன்று இருக்கும் பாக்கிப் பெரிய மதங்களுக்கும் ஒரு பெரிய வித்யாஸம் இருக்கிறது. கிறிஸ்துவம், இஸ்லாம் முதலான மதங்களில் ஒரே ஒரு கடவுளையே அனைவரும் வழிபடுவதைத் தான் சொல்லியிருக்கிறது. வேதங்களிலும், இருப்பது ஒரே கடவுள்தான் ; அவனேதான் இந்த ஜீவனும்கூட என்று சொல்லியிருக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட ஒரே பரமாத்ம வஸ்துவை ஞானமார்க்கத்தில் ஆத்ம விசாரம் பண்ணி பண்ணித்தான் அநுபவத்தில தெரிந்து கொள்ள முடிகிறது. அந்த நிலை அடைவதற்கு ரொம்பவும் பக்குவம் வேண்டியிருக்கிறது. ஒரே கடவுளோடு நாம் ஐக்கியமாகி விடுகிற போது லோகமே நம் பார்வையிலிருந்து போய்விடுகிறது. அப்படிப்பட்ட நிலை வருவதற்கு நம்மை எப்படிப் பக்குவப்படுத்திக் கொள்வது என்றால், இந்த லோக வாழ்க்கையில் நாம் நன்றாக ஈடுபட்டிருக்கிற இப்போதைய நிலையிலேதான். இதிலே இருந்து கொண்டே தர்மமாக வாழ்க்கை நடத்தி, கர்மாக்களைப் பண்ணிக் கொண்டேயிருந்தால், அதனால் நாம் சித்த சுத்தி அடைந்து பக்குவமாகிக் கொண்டே போகிற போது லோகம் நம்மை விட்டுப் போய்விடும். இதற்கான தர்மங்களையும் கர்மங்களையும் வேதம் யதேஷ்டமாக நமக்குக் கொடுத்திருக்கிறது. இவற்றிலே ரொம்ப முக்கியமான கர்மாதான் யக்ஞம், யக்ஞம் என்பது. யாகம் என்று பொதுவிலே சொல்கிறது இதுதான். வேள்வி என்று இதற்கு ரொம்பவும் பழைய தமிழ்ப் பெயர் இருக்கிறது. ஒரே பரமாத்மாவுக்காக இல்லாமல், பல தேவதைகளுக்கு ஆஹுதிகளை அர்ப்பணம் பண்ண வைப்பதே யக்ஞம். இந்த யக்ஞம் என்பதுதான், பாக்கி உலகப் பெரிய மதங்களில் இல்லாமல் நமக்கு மட்டும் இருப்பதாகும். கிறிஸ்துவம், இஸ்லாமில் உள்ள தெய்வக்கொள்கையும் இல்லாதது பௌத்தம். அந்த பௌத்தத்திலும் யக்ஞம் இல்லை.

யக்ஞத்திலே அநேக விதமான திரவியங்களை மந்திர பூர்வமாக அக்னியில் போடச் சொல்லியிருக்கிறது. இப்படிப் போடுவதற்கு ஹோமம் என்று பெயர். அக்னியில் போட்டாலும்

அக்னிக்கே இந்தத் திரவியங்களை ஸமர்ப்பணம் பண்ணுவதாக அர்த்தமில்லை. அக்னியை உத்தேசித்த மந்திரங்களைச் சொல்லி அதில் போடுவது மட்டுந்தான் அக்னியைச் சேர்கிறது. ஆனால் மற்றத் தேவதைகளான ருத்ரன், விஷ்ணு, இந்திரன், வருணன், மாதரிச்வன் (வாயு), ஸோமன் முதலானவர்களுக்கான ஆஹுதிகளையும் அக்னியில்தான் போட வேண்டும். அக்னி இவற்றைத் தானே எடுத்துக் கொள்ளாமல், இவற்றின் ஸாரத்தை அந்தந்த தேவதைக்கு அனுப்பி வைப்பான். பல அட்ரஸ்களுக்கு எழுதின கடிதங்களை ஒரே தபால் பெட்டியில் போடுகிற மாதிரி பல தேவதைகளுக்குமான ஹவிஸ்களை (அவிகளை) அக்னியொன்றலேயே ஆஹுதி பண்ணவேண்டும்.

மற்ற மதங்களுக்கும் வைதிக மதத்துக்கும் இருக்கிற பெரிய வித்யாஸம் ஒரே ஒரு கடவுள் என்று சொல்லி அவருக்கு மட்டும் வழிபாடு பண்ணுவது என்றில்லாமல், பல தேவர்களுக்கு அக்னிமுகமாக ஆஹுதி பண்ணுவதுதான். தேவர்கள் என்பவர்கள் பகவத் ஸ்ருஷ்டியில் உயர்ந்த சக்தி படைத்த ஒரு இனம்.

லோகத்தில் மநுஷ்யர்களான நாம் ஒருத்தருக்கொத்தர் சேவை செய்து கொண்டால் பகவான் பிரீதி அடைகிறார் என்று சொல்கிறோமல்லவா ? பூஜை, சடங்கு ஆகியவற்றை விட்டுவிட்ட சீர்த்திருத்தக்காரர்கள் கூட, " மக்கள் சேவையே மஹேசன் சேவை " என்கிறார்களல்லவா ? இதே மாதிரி பரமாத்மாவின் படைப்பினத்தைச் சேர்ந்த தேவர்களுக்கு நாம் யக்ஞத்தின் மூலம் சேவை பண்ணினாலும் , அவர் அநுக்ரஹம் பண்ணி விடுகிறார்.

ஒரே கடவுள்தான், ஒரே ஸத்வஸ்துதான் அத்தனை தேவதைகளாகவும் ஆகியிருக்கிறது என்று வேதத்தில் அழுத்தந்திருத்தமாகச் சொல்லியிருக்கிறது. ஒவ்வொரு தேவதையைப் பற்றிச் சொல்லும்போதும், அதுவே பரமாத்மா என்று சிலாகித்துச் சொல்லியிருப்பதாலும் வேதம் ஒரே கடவுட்-கொள்கை ( monotheism ) உடையதுதான் என்று தீர்மானமாகிறது. பல தேவதைகளைச் சொல்லியிருப்பதால், வேதம் பல கடவுள்கள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது. றிஷீறீஹ்மீலீமீவீஷனீ- ஐச் சொல்கிறது என்று நினைப்பது பிசகு. ஒரே கடவுள் பல தேவதைகளாயிருப்பதைத்தான் அது சொல்கிறது. பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துவதற்காக ஒரே பரமாத்மாதாந் தன்னுடைய சக்தியைக் கொண்டே இந்தத் தேவதைகள் என்ற அதிகாரிகளை உண்டாயிருக்கிறார். இயற்கை என்று நாம் சொல்கிறதில் உஷ்ணம், மழை, காற்று, உணவு, ஸந்ததி, செல்வம், மநுஷ்யனின் உணர்ச்சிகள் முதலான பல விஷயங்களையும் நிர்வாகம் பண்ணுவதற்காக இந்த தேவதைகளை நியமித்திருக்கிறார். நம்மைப் படைத்தது போலவே தேவதைகளையும் படைத்திருக்கிறார். நம்மைத் தன்னிலிருந்துதானே படைத்தார். அதாவது அவரேதான் நாமாக ஆனார். அதனால் தான் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்று அத்வைதத்தில் சொல்வது. இதே மாதிரி தேவர்களாகவும் அவரேதான் ஆகியிருக்கிறார். ஆனாலும் நாம் அத்வைதத்துக்கு

நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்கிற வரையில், நம்மை வேறு வேறாக நினைத்துக் கர்மாக்களைப் பண்ணி நமக்குள் பரஸ்பர ஸஹாயம் செய்து கொள்வதால், தேவர்களையும் தனித்தனியாக நினைத்து, அவரவர்களுக்குரிய யக்ஞ ஆராதனையைப் பண்ணத்தான் வேண்டும் என்பது வேதம் போட்ட சட்டம். லோக வாழ்க்கை நமக்கும் ஸகல ஜீவகுலத்துக்கும் அநுகூலமாக இருக்க வேண்டுமானால் பிரபஞ்ச சக்திகளைப் பரமாத்மாவின் உத்தரவின்படி நிர்வாகம் பண்ணி வரும் தேவதைகளின் அநுக்ரஹம் நமக்கு இருக்கவேண்டும் என்று சொல்லி, அவர்களின் அநுக்ரஹத்தைப் பெற்றுத் தரவே அவர்களுக்குப் பிரீதியாக யக்ஞங்களைப் பண்ணவேண்டும் என்று வேதம் சொல்கிறது. ஞானம் வந்தபின் இந்த தேவர்கள் வேண்டாம். நேராகப் பரமாத்மாவை உபாஸிக்கலாம். ஆனால் த்வைதப் பிரபஞ்சத்திலிருந்து கொண்டே, இதிலிருந்து விடுபடுவதற்கான முயற்சிகளை நாம் செய்கிற காலத்தில், வேறு வேறாக தேவதைகளையும் உபாஸிக்கத்தான் வேண்டும் என்று வைத்திருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)

## வேதம்

## வேள்வியின் மூன்று பயன்கள்

யக்ஞத்துக்கு மூன்று விதமான பிரயோஜனங்கள்.
ஒன்று இங்கே உயிர் வாழ்கிற போதே நமக்கும் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் தேவர்களின் அருளினால் க்ஷேமத்தைப் பெறுவது.

இரண்டாவது, செத்துப் போன பிறகு நாம் தேவலோகம் போய் ஆனந்தமாக இருப்பது. தேவலோக வாஸம் நிரந்தரமானதில்லை. நம் புண்ணியம் தீருகிற வரைதான் அங்கு இருக்க முடியும். தேவலோக இன்பம் என்பது பரம பக்தர்கள், ஞானிகள் ஆகியவர்கள் அடைகிற ஆனந்தத்தைப் போல் பூர்ணமானதுமல்ல. ஸ்வர்க்க ஸௌக்கியம் என்பது ஆத்மானந்தம் அல்லது ஈச்வரனை அநுபவிக்கிற இன்பத்துக்கு ஸமதையே இல்லை.

இந்திரனின் இன்பமும் ஆத்மானந்தத்தில் துளித்துளிதான் ( " லேச லேசம்தான் " ) என்று ஆசார்யாள் " மநீஷா பஞ்சக " த்தில சொல்லியிருக்கிறார் . ஆனாலும் இந்த மநுஷ்ய லோகத்தில் ஓயாமல் அழுதுகொண்டிருப்பதைக் காட்டிலும் ஸ்வர்க்க வாஸம் என்பது எத்தனையோ ஆயிரம் மடங்கு உயர்ந்தது தான். இப்படி தேவலோக வாஸத்தை விரும்பி நாம் யக்ஞ கர்மாநுஷ்டானம் பண்ணினால், விரும்பிய அந்தப் பலனை அது கொடுக்கிறது என்பது யக்ஞத்தின் இரண்டாவது பிரயோஜனம்.

மூன்றாவதுதான் முக்கியமானது. அது என்னவென்றால் பலனை நினைக்காமல் கீதையில் சொன்னபடி நிஷ்காம்யமாக யக்ஞம் புரிவதால் ஏற்படுவது. இந்த லோகத்தில் நமக்கு க்ஷேமம் வேண்டும், பிறகு தேவலோகம் போகவேண்டும் என்பதெல்லாம் பலனை உத்தேசித்துதான். இப்படி உத்தேசிக்காமல், " லோக க்ஷேமத்துக்காக இது நமக்குக் கடமையாக வந்திருக்கிறது " என்று ஒரே உணர்ச்சியோடு, சொந்தப் பளனில் பற்றில்லாமல் யக்ஞங்களைப் பண்ணினால், அது விரைவிலேயே சித்த சுத்தியைக் கொடுத்து, நம்மை ஞான மார்க்கத்தில் சேர்த்து, முடிவிலே சாச்வத ஆனந்தமான மோக்ஷத்தில் சேர்த்துவிடும். அதாவது பரமாத்மாவோடு பரமாத்மாவாக நாம் கரைந்திருக்கிற நிலைக்குக் கொண்டு போய்ச் சேர்ந்து விடும். ஆத்ம ஸாக்ஷாத்காரத்தையும் ஞானத்தையுமே சொன்ன ஆதிசங்கர பகவத்பாதாள், " வேதோ நித்யம் அதீயதாம் : தத் உதிதம் கர்ம ஸுஅநுஷ்டீயதாம்- தினமும் வேதம் ஓதுங்கள் ; அதில் சொல்லியிருக்கிற யக்ஞாதி அநுஷ்டானங்களை நன்றாகப் பண்ணுங்கள் " என்று சொன்னது. இந்த மூன்றாவது பிரயோஜனத்தை உத்தேசித்துத் தான் . இந்த லோக வாழ்க்கை நன்றாக இருப்பற்காகவோ, பிறகு தேவலோகம் என்றும் ஸ்வர்க்கலோகம் என்றும் சொல்லப்படும் கேளிக்கை உலகத்தில் நாம் போய் இருப்பதற்காகவோ அவர் இப்படிச் சொல்லவில்லை. இப்படிப்பட்ட அல்ப பலன்களை நினைக்காமல், ஆத்மாவைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே வேத கர்மாக்களை நிஷ்காம்யமாகப் பண்ணினால், அது சித்த சுத்தி தரும் என்பதால்தான் ஆசார்யாளும் யக்ஞாநுஷ்டானம் பண்ணவேண்டும் என்று ஆக்ஞை போட்டிருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *தேவகுல - மனிதகுல பரஸ்பர சகாயம்*

இப்படிப்பட்ட யக்ஞமானது நம் வேத மதத்துக்கே முக்கியமானதாக உள்ளது. கீதையிலே பகவான் இதைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். ஆதியில் பிரம்மா மநுஷ்யர்களை சிருஷ்டித்தபோதே அவர்களுக்கான இந்த யக்ஞங்களையும் உண்டாக்கி விட்டாராம். " யக்ஞங்களைப் பண்ணிக் கொண்டு வாழுங்கள். இதனால் சகல நன்மைகளையும் பெற்று வாழுங்கள். நீங்கள் விரும்பியதையெல்லாம் கொடுக்கிற காமதேனுவாக இந்த யக்ஞங்கள் இருக்கட்டும் " என்று மநுஷ்யர்களுக்கு பிரம்மா ஆக்ஞை செய்து விட்டார் -

என்று கீதையில் ( iii.10 ) சொல்லியிருக்கிறது.

ஸஹ யஜ்ஞா : ப்ரஜா ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி :।

அனேன ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோ(அ)ஸ்(து) இஷ்டகாமதுக் :।

' பிரஜைகளோடு யக்ஞங்களை சிருஷ்டித்தார் ' என்றால் முதலில் மனிதர்களையும் அப்புறம் வேள்விகளையும் உண்டு பண்ணினார் என்று அர்த்தமாகலாம். ஆனால் இங்கே, " யக்ஞங்களோடு பிரஜைகளை உண்டாக்கினார் (ஸஹயஜ்ஞா : ப்ரஜா : ஸ்ருஷ்ட்வா) என்பதாக முதலில் யக்ஞத்தைச் சொல்லி, அப்புறம் மநுஷ்ய இனத்தைச் சொல்லியிருக்கிறது !

சிருஷ்டிக்கே மூலம் வேத மந்திரங்கள்தான். அந்த வேத மந்திரங்களைச் சொன்னாலே சிருஷ்டியில் பலவித அதிகாரங்களைப் பெற்றிருக்கும் தேவ சக்திகளை அந்த sound vibration- கள் ( ஒலி அதிர்வுகள்) பிடித்துக் கொண்டு வரும். யக்ஞத்தில் இப்படிப்பட்ட மந்திரங்களைச் சொல்வது கடிதத்தில் அட்ரஸ் எழுதுகிறமாதிரி. இப்படி அட்ரஸ் பண்ணி ஹோமம் செய்தால்தான் ஆஹுதியை அக்னி தேவர்களிடம் சேர்க்கிறார்.

மிருகங்களில் பூனையைவிட நாய், நாயைவிடகுதிரை, குதிரையைவிட யானை, யானையைவிடச் சிங்கம் என்று ஒன்றைக் காட்டிலும் இன்னொன்று அதிக சக்தி உடையதாக இருக்கிறதல்லவா ? இப்படியே சிருஷ்டியில் மநுஷ்யர்களைவிட அதிக சக்தி உடையவர்களும் இருக்கிறார்கள். அவர்களையே தேவர்கள் என்பது. அவர்கள் இந்த லோகத்தில் பஞ்ச பூதங்களில் கரைந்து இருப்பதோடு, கண்ணுக்குத் தெரிகிற ரூபத்தில் தேவலோகத்தில் இருந்துகொண்டிருக்கிறார்கள். மந்திரங்களை நன்றாக ஜபித்து ஸித்தி அடைந்தால், ஸுக்ஷ்ம ரூபத்தினால் அவர்கள் செய்கிற அநுக்ரஹங்களைப் பெறுவதோடு, தேவ லோகத்தில் அவர்களுக்கு உள்ள ஸ்தூல ரூபங்களையும் தரிசனம் பண்ணலாம். இந்த மந்திரங்களுக்கு ஆதாரமான மூல சப்த சலனங்களால்தான் அவர்கள் பரமாத்மாவில் தோன்றியது. எனவே இதையே திருப்பிச் சொல்வதானால் மந்திரங்களை தேவதைகளின் சப்த ரூபம் என்று சொல்லலாம்.

யக்ஞத்தில் ஒவ்வொரு தேவதை பற்றியும் மந்திரம் சொன்னால் அந்த தேவதை அங்கு ஆவிர்பாவமாகிறது. நல்ல பக்குவிகளுக்கு இது பிரத்யக்ஷமாகவே தெரியும். தெரியா விட்டாலும் அந்த தேவதா சக்தி அங்கு ஸூக்ஷ்மமாக வெளிப்பட்டிருக்கும். ஆனாலும், நேரே அதற்கு ஆஹூதி தரக்கூடாது. பத்திரம் எழுதினால், Bond எழுதினால் அதில் ஸ்டாம்ப் ஒட்ட வேண்டும், ரிஜிஸ்திரார் முத்திரை போடவேண்டும் என்றெல்லாம் இருப்பது போல் வேதத்தில் சொல்லியிருக்கிற விதிகளின்படி அக்னியில் போட்டால்தான் அது அவர்களுக்கு எந்த விதத்தில் ஏற்கத்தக்கதோ அந்த விதத்தில் போய்ச் சேரும்.

' அக்னி எரிந்துவிட்டதே, மிஞ்சியதை யக்ஞ சிஷ்டமாக (பிரஸாதமாக) யாகம் பண்ணினவர்களே சாப்பிட்டுவிட்டார்களே, அது எப்படி தேவர்களை அடைய முடியும் ?' என்று ஸந்தேஹப்படக் கூடாது. தேவர்கள் நம் மாதிரி பாஞ்ச பௌதிகமான (பஞ்சபூத மயமான) சரீரம் படைத்தவர்களலல்ல. எனவே நமக்குள்ள மாதிரி ஸ்தூலமான ஆஹாரம் அவர்களுக்குத் தேவை இல்லை. நமக்குங்கூட ஆஹாரங்களை வயிற்றிலுள்ள ஜாடராக்னி எரித்து, அதன் ஸத்தை மட்டும்தானே ரத்தமாக்கி அனுப்புகிறது. இப்படியே யக்ஞ அக்னியானது ஆஹுதிகளின் ஸூக்ஷ்மமான ஸாரத்தை தேவர்களுக்கு அனுப்புகிறது.

யக்ஞம் வரையில் போக வேண்டும் என்பதில்லை. இந்தக் காலத்திலும் டின்னர், ஃபீஸ்ட் நடத்துகிறார்கள். வெள்ளைக்கார நாகிரிகப்படி நடத்தினால் அதில் இன்னொருத்தனின் ஸௌக்கியத்துக்காகச் சாப்பிடுவதாகச் சொல்லிக் கொண்டு ' டோஸ்ட் ப்ரபோஸ் ' பண்ணகிறார்கள். சாப்பிடுவது இவர்கள் ; அதன் பலன் இன்னொருவனுக்கு என்கிறார்கள் ! ஒருத்தன் சாப்பிட்டால் அது அவனுக்குத் தானே புஷ்டி தரும் ? இன்னொருத்தனைப் பார்த்து ' உன் புஷ்டிக்காக நான் சாப்பிடுகிறேன் ' என்று இவன் டோஸ்ட் சொன்னால், எப்படி அது அந்த இன்னொரு ஆசாமிக்குப் போய்ச் சேரும் ? இந்த மாதிரி கேட்பது தப்பு. இதெல்லாம் ஒருவகையான நல்ல மனோபாவம். மனஸார இப்படி நினைத்து நல்லதைப் பண்ணினாலே, எண்ணத்தின் சக்தியால் ( thought - power- ஆல்) மற்றவனுக்கு அது க்ஷேமம் தரும் என்று தான் இப்படிப் பண்ணுகிறார்கள்.

ஸாக்ஷாத் பரமாத்மாவின் சக்தியே எண்ண அலைகளாகி, அவையே சப்த அலைகளாகி மந்திரம் என்று நமக்கு வந்திருக்கிற போது, அவை வாஸ்தவமாகவே மிகுந்த க்ஷேமசக்தி நிரம்பியதாகத்தான் இருக்கும். இப்படி மந்திர பூர்வமாகத் தரும் ஆஹுதி தேவர்களின் சக்தியை விருத்தி பண்ணுகின்றன. மநுஷ்யர்களைவிட தேவர்கள் ஜாஸ்தி சக்தி பெற்றவர்களென்றாலும், அவர்களும் பூரண சக்தர்களல்ல. நிறைந்த நிறைவாக நிரம்பி விட்டவர்களல்ல. அவர்களுக்கும் ஆசைகள் உண்டு. தேவைகள் உண்டு. அவற்றை இந்த யக்ஞங்களே பூர்த்தி செய்கின்றன. லோக வாழ்க்கையை நமக்கு அவர்கள் அநுகூலமாகித் தருகிறார்கள் என்றால், நாமும் அவர்களுடைய சக்தியை விருத்தி செய்து, அவர்களுடைய இஷ்டங்களை நிறைவேற்றித் தருகிற உபகாரத்தை யக்ஞத்தின் மூலம் பண்ணவேண்டும். அவர்கள் நன்றாக இருக்க வேண்டும் என்ற மனோபாவத்தோடு நாம் யக்ஞங்களைப் பண்ணினால், தேவர்களும் அப்படியே நாம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்று பாவித்து நமக்கு அநுக்ரஹம் செய்வார்கள். இப்படி பகவான் கீதையில் ( III.1.1) சொல்லியிருக்கிறார்.

" தேவான் பாவயதாநேந தே தேவா பாவயத்து வ :।

பரஸ்பரம் பாவயந்த : ச்ரேய : பரமவாப்யஸ்த ||"

இப்படி நம்முடைய மதத்தில் பல யக்ஞங்கள் செய்து தேவர்களைப் ப்ரீதி செய்வித்து ஈச்வரானுக்கிரஹத்திற்குப் பாத்திரராவதைச் சொல்லியிருக்கிறது.

' தேவர்கள்தான் லோகத்தில் மழை பெய்விக்கிறார்கள். மநுஷ்யர்களுக்கு தன தான்யங்களை, ஆரோக்ய ஐச்வரியங்களைத் தருகிறார்கள் என்று சொல்லிவிட்டு, அவர்களுக்கு மநுஷ்யர்கள் யாகம் பண்ணி, ஆஹுதி கொடுத்து ஆஹாரம் போடவேண்டும் என்று சொன்னால், " நம்மையெல்லாம் அன்ன வஸ்திரம் தந்து ரக்ஷிக்கிற அத்தனை சக்தி படைத்த தேவர்களுக்கு நாம் எதற்குச் சாப்பாடு போட வேண்டும் ? அவர்களே தங்கள் ஆஹாரத்தைக் கவனித்துக் கொள்ள மாட்டார்களா ? என்று தோன்றுகிறது. எதற்காக பரஸ்பரம் பாவயந்த : என்று பகவான் சொன்னார் ? அவர்களைப் பெரியவர்களாக வைத்து நாம் பூஜிக்கவேண்டும் என்றால் சரி. அவர்களை நமஸ்காரம் பண்ணுவோம் ; பிரார்த்தனை பம்ணுவோம். அதிலேயே அவர்கள் பிரீதி அடைந்து அநுக்ரஹம் செய்யட்டுமே ! இப்படியில்லாமல், நம்மையும் கொஞ்சம் அவர்களுக்கு ஸமதையாகவே உயர்த்துகிற மாதிரி, equal footing கொடுத்த மாதிரி, " நீங்கள் அவர்களை பாவியுங்கள் ; அவர்கள் உங்களை பாவிக்கட்டும் - நீங்கள் அவர்களுக்கு (யாகத்தால்) சாப்பாடு போடுங்கள் ; அவர்கள் உங்களுக்கு (மழையால்) சாப்பாடு போடட்டும் " என்று சொன்னால் எப்படி ? - இப்படிக் கேள்விகள் தோன்றுகின்றன.

இதைப்பற்றி நினைக்கிறபோது, எனக்கு, தேவலோகம் இங்கிலாந்து மாதிரி, தேவர்கள் இங்கிலீஷ்காரர்கள் மாதிரி என்று தோன்றுகிறது. இங்கிலீஷ் தேசத்தில் வயல் உண்டா ? கிடையாது ? பின்னே அவர்கள் லோகத்திலேயே கொடிகட்டிப் பறந்தார்களே ! எங்கள் ராஜ்யத்தில் சூரியனே அஸ்தமிப்பதில்லை என்கிறார்களே ! இத்தனை ஆதிக்கம் அவர்களுக்கு எப்படி வந்தது ?

இங்கிலாந்து தேசத்திலே சாப்பாட்டு வசதியில்லை. சரி, அங்கே வேறே என்ன இருக்கிறது என்று பாரத்தால், ஒரே நிலக்கரியும், சாக்குக் கட்டியும்தான். கன்னங்கரேல் என்று நிலக்கரி, வெள்ளை வெளேரென்று சாக்குக் கட்டி -இந்த இரண்டுந்தான் அந்தத் தேசத்தில் முக்கியமாக இருக்கின்றன. இவற்றை அவர்கள் சாப்பிட முடியாது. சாப்பிடக்கூடிய தானியங்களை நிறைய விளைவிக்கிற தேசங்களிலே, பெரிய மெஷின்களை வைத்து ஃபாக்டரிகளை ஏற்படுத்த வேண்டுமானால், அதற்கு நிலக்கரியும் சாக்குக் கட்டியும்தான் வேண்டியிருக்கிறது. நிலக்கரி இன்டஸ்ரிகளுக்கு அவசியம் என்பது எல்லோருக்கும் தெரியும். (பிற்பாடுதான் பெட்ரோல், எலெக்ட்ரிக் பவர் ; இப்போது ' அடாமிக் பவர் ' முதலியன வந்திருக்கின்றன.) நிலக்கரியின் அளவுக்கு இல்லாவிட்டாலும் ஸிமென்ட் முதலான பல தொழில்களுக்குச் சாக்குக்கட்டி தேவைப்படுகிறது.

இதனால் வெள்ளைக்காரர்கள் பெரிய யுக்தி செய்தார்கள். மெஷின்களை வைத்துச் செய்கிற ஆலைத் தொழில்களில் மற்ற தேசங்களையும் இழுத்து விட்டுவிட்டு - தங்களுடைய கரிக்கட்டியையும் வெள்ளைக்கட்டியையும் அங்கெல்லாம் விலை போகும்படியாக வியாபார ஸாமர்த்தியம் செய்தார்கள். விலையாகத் தானியம், தனம், பருத்தி என்றிப்படி எல்லாவற்றையும் யதேஷ்டமாகப் பெற்றார்கள். தேசம் தேசமாகத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்துவிட்டார்கள்.

தேவலோகத்தில் வயல் கிடையாது. தேவர்களுக்குச் சாப்பாட்டுக்கு வழி இல்லை. துர்பிக்ஷம் தேவலோகேஷுமநூநாம் உதகம் க்ருஹே என்று வேதத்திலேயே (தைத்திரீய ஆரண்யக முதல் ப்ரச்னத்தில் ) சொல்லியிருக்கிறது. மேல் மட்டத்தில் இருக்கிற மேகங்கள் மழையாக பூமியில் பெய்து, பூலோகத்தில்தான் ஜலம் ஆறு, ஏரி, கிணறு என்று எடுத்துப் பிரயோஜனப்படுத்திக் கொள்ளும்படி இருக்கிறது. உதகம்(ஜலம்) நம் லோகத்து மநுஷ்யனின் கிருஹத்தில்தான் உண்டு. ஜலத்தைக் கொண்டு பயிர் பண்ணி ஸுபிக்ஷம் அடைவது பூலோகத்தில்தான். வயல் இல்லாத தேவலோகத்தில் துர்பிக்ஷம்தான். இப்படி அந்த வேதவாக்கியம் சொல்கிறது. ஆனால், மேலேயிருக்கிற மேகம் நமக்கு ஜலமாக வரவேண்டுமானால், அது தேவர்களின் அநுக்ரஹத்தாலேயே நடக்கும். நாம் யக்ஞம் செய்தால்தான் அவர்கள் அந்த அநுக்ரஹத்தை செய்வார்கள். இல்லாவிட்டால் மழை பெய்யாது. பஞ்சம் தாந் வரும். பூமியில் பெய்யாமல் ஸமுத்திரத்திலேயே எல்லா மழையும் பெய்துவிடும். அல்லது, பயிரெல்லாம் அழுகி அடித்துக் கொண்டு போகும்படி பேய்மழையாகப் பெய்யும். ஒன்று அதிவ்ருஷ்டி- அளவுக்கு மீறிப் பெய்து வெள்ளத்தில் பயிர்நாசமாவது. இன்னொன்று அநாவ்ருஷ்டி-மழையே பெய்யாமல் பஞ்சம் ஏற்படுவது. இந்த இரண்டும் ஏற்படாமல், ஸுபிக்ஷத்துக்கு உரிய மழையை அளவாக அனுப்பி வைக்கிற சக்தி தேவலோகவாஸிகளுக்கே இருக்கிறது. இங்கிலீஷ் தேசத்தில், வயல் இல்லாவிட்டாலும் நிலக்கரி இருப்பதுபோல, தேவர்களிடம் தாங்களே பயிர் பண்ணிக் கொள்ள முடியாவிட்டாலும், அநுக்ரஹ சக்தி என்ற சரக்கு இருக்கிறது. அந்த அநுக்ரஹ சக்தியை வைத்துக் கொண்டு, அவர்கள் சாப்பிட்டுக்கு வேண்டிய மழையை அனுப்ப முடியும். அவர்களுக்கு இப்படிப்பட்ட அநுக்ரஹ சக்தியை நாமே வேத மந்திரங்களால் விருத்தி பண்ணுகிறோம். அந்த மந்திரங்களோடு செய்கிற ஹோமம், அவர்களுக்கு ஆஹாரமாகிறது.

நம்மூரில் பருத்தி விளைகிறது. இங்கே நூற்பு ஆலைகள் விருத்தியாகாதபோது நம்மூர்ப் பருத்தியை வெள்ளைக்காரன் லங்காஷயருக்கு எடுத்துக் கொண்டு போய், ' நைஸ் ' துணியாக்கி நம் தலையிலேயே நாலு மடங்கு விலை வைத்துக் கட்டினான். தேவர்கள் நம் லோகத்து ஸமுத்ரதிலிருந்து ஆவியாகி மேலே போகிற மேகத்தையேதான் நமக்கு மழையாகத் திருப்பி அனுப்புகிறார்கள். ஆனால், வெள்ளைக்காரன் செய்த மாதிரிக் கொள்ளை லாபம் அடிக்காமல், நாம் செய்வதற்கு அதிகமாகவே திருப்பி அநுக்ரஹம் பண்ணுவார்கள். ஆனாலும் நாம்

அவர்களுக்குக் கொடுத்தால்தான், திரும்ப நாலு மடங்காக நமக்கு நல்லது செய்வார்கள். நம்மைவிட அவர்களுக்குக் கொடுத்தால்தான், திரும்ப நாலு மடங்காக நமக்கு நல்லது செய்வார்கள். நம்மைவிட அவர்களுக்குச் சக்தி அதிகம்.

ஆனாலும் பகவான் யக்ஞ கர்மானுஷ்டானத்தை நமக்கே கொடுத்து, நாம் செய்கிற கர்மானுஷ்டானத்திலேயே அவர்கள் திருப்திப்படும்படியாக வைத்து, நம்மையும் அவர்களுடைய ஸ்தானத்துக்கே உயர்த்தி விட்டது போல வைத்திருக்கிறார். அதனால்தான், ' பரஸ்பரம் பாவயந்த :' என்று தட்டிக் கொடுத்துப் பேசுகிறார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*காரிய சக்தியும் காப்புச் சக்தியும்*

காரிய சக்தியை நம்மிடமும், ரக்ஷண சக்தியை தேவர்களிடமும் பகவான் கொடுத்திருக்கிறார். லோகத்திலும் இப்படியே இரண்டு பிரிவுகள் இருக்கன்றன. வயல், ஃபாக்டரி இவை காரியம் பண்ணும் இடம். போலீஸ், கோர்ட், மற்ற ஆபீஸ்கள் எல்லாமே ஒருவிதத்தில் ரக்ஷணை (காப்பு) தருகிற இடங்கள்தான். வயலிலும் ஃபாக்டரியிலும் காரியம் பண்ணி உண்டாக்கினது வீட்டுக்கு நியாயமாக வந்து சேரும்படி செய்வதற்குத்தான் ஆபீஸ்கள் இருக்கின்றன. ஆபீஸில் பதார்த்தங்கள் (ப்ராட்யூஸ்) இல்லை ; சாகுபடியில்லை. மெஷின் சத்தமும், மாட்டுச் சாணியும், புழுதியும், இல்லை. நகத்தில் அழுக்குப் படாமல் பங்களா, ஃபான், நாற்காலி என்ற சௌகரியங்கள் ஆபீஸில் இருக்கின்றன. உடம்பால் உழைக்க வேண்டியதில்லை. எல்லாம் பேனா வேலைதான். தேவலோகம் இப்படித்தான் இருக்கிறது. அது ஸர்வலோகங்களுக்கும் ரக்ஷணைக்கான ஆபீஸ். ஆபீஸ்காரர்கள் உழவில்லை, மிஷினைப் பிடித்துச் சுற்றவில்லை என்று நாம் குற்றம் சொல்வோமா ? அவர்கள் இதைச் செய்ய ஆரம்பித்தாஸ், நம் ரக்ஷணை போய்விடுமே ! தேவர்கள் இப்படி அதிகாரிகளாக இருக்கிறார்கள்.

பூலோகம்தான் வயல், ஃபாக்டரி. ஒரே சேரும் சகதியும் ; இல்லாவிட்டால் கடாமுடா என்று சத்தம். எண்ணெய்ப் பிசுக்கு, தூசி, தும்பு எல்லாம். உடம்பு

வருந்த உழைத்துக் கொட்டவேண்டும். இப்படித்தான் நாம் எல்லோரும் கர்மாநுஷ்டானும் பண்ணவேண்டும். ஹோமப்புகை, பசி, பட்டினி, எல்லாவற்றோடும் வேர்த்துக் கொட்டிக் கொண்டு பண்ணவேண்டும்.

இதனால் தேவர்கள் உசத்தி, நாம் தாழ்த்தி என்று பகவான் நினைக்கவில்லை. ஆபீஸில் ஜோராக உட்கார்ந்திருப்பவனுக்கு இந்த விவசாயியும், (ஃபாக்டரி) தொழிலாளியும்தான் சாப்பாடும், மற்ற ஸாமான்களும் உற்பத்தி பண்ணிக் கொடுக்கிறார்கள்.

இவர்கள் இல்லாவிட்டால் அவன் பட்டினிதான் ; அவனுக்கு ஒரு ஸாமானும் கிடைக்காது. அதே மாதிரி அவனுடைய ரக்ஷணையால்தான் இவன் உழவு பண்ணின தானியமும், உற்பத்தி பண்ணிய சரக்கும் இவன் வீட்டுக்கு வருகிறது ; சமூகத்திலும் எல்லாருக்கும் அவை கிடைக்கின்றன. ஆபீஸில் உட்கார்ந்திருக்கிற என்ஜினீயர் தான் வயலுக்கான கால்வாய் வெட்ட உத்தரவு போடுகிறார். விவசாய அதிகாரி பூச்சி மருந்து கொடுக்கிறார். ஒரு ஃபாக்டரி என்றால், லைசென்ஸ் தருவதிலிருந்து அதற்கான மூலச்சரக்குகளை வரவழைப்பது முதலான எல்லாம் ஆபீஸ் அனுமதியால்தான் நடக்கிறது. அப்புறம் சர்க்காரும், போலீஸூம், கோர்ட்டும்தான் இவை நியாயமாக எல்லாருக்கும் விநியோகமாகும்படி சகாயம் பண்ணுகின்றன. (நடைமுறையில் எப்படியிருந்தாலும், ராஜாங்கம் என்பது இதற்காக இருப்பதாகத்தான் பேர்.) இப்படி ஒருத்தரை ஒருத்தர் நம்பி, இவனால் அவனுக்கு ஸூகம், அவனால் இவனுக்கு ஸூகம் என்றிருக்கிறது.

இதனாலெல்லாந்தாந் " பரஸ்பரம் பாவயந்த :" என்றார். ஆனாலும், தேவர்கள் நம்மை எதிர்ப்பார்ப்பவர்களாக இருந்தாலும், அவர்கள் நம்மைவிட உயர்ந்த உயிரினம் என்பதை நாம் மறக்கக்கூடாது. அவர்களிடம் மரியாதையுடன் இருக்கவேண்டும்.

பிற மதங்கள் எல்லாம், ஒரே ஸ்வாமியையத்தான் நேராக வழிபடும். ஒரே கடவுளிடத்தில் நேராகப் பிரார்த்தனை செய்யும். பல தேவசக்திகளைப் ப்ரீதி செய்கிற யாக யக்ஞங்கள் மற்ற மதங்களில் இல்லை.

நம்முடைய மதத்தில் சந்நியாசிகள்தாம் சாக்ஷாத்பரமாத்மாவையே நேராக வழிபடலாம். மற்றவர்கள் தேவதைகளைப் ப்ரீதி பண்ணித்தான் பல ஹோமங்கள், யக்ஞங்கள் எல்லாம் பண்ணுகிறோம்.

ஒரு பெரிய ராஜா இருந்தால், எல்லாரும் ராஜாவிடமே நேரில் போக முடியுமா ? அந்த ராஜாவின் பரிபாலனத்திற்கு உட்பட்ட உத்யோகஸ்தர்களிடம் குடிமக்கள் நெருங்கித் தங்களுக்கு வேண்டிய அநுகூலங்களைப் பெறுகிறார்கள். உத்தியோகஸ்தர் தாங்களாகச் செய்வதில்லை ; அரசன் உத்தரவுப்படிதான் ஜனங்களுக்கு அநுகூலம் செய்கிறார்கள். ஆனாலும் அரசன்தானே செய்கிறான் ? என்று அரசனிடத்தில் குடிமக்கள் நேராக போகமுடியாது.

அப்படித்தான் நம் மதத்தில் சில வழக்கங்கள் இருக்கின்றன. பரமேச்வரன் மகாசக்ரவர்த்தி. ஸகல ஜனங்களும் குடமக்கள். வருணன், அக்கினி, வாயு போன்ற பல தேவதைகள் சக்ரவர்த்தியின் உத்தியோஸ்தர்கள். இவர்கள் மூலமாக நாம் பல நன்மைகளை அடையவேண்டும். அதற்காகவே, தேவர்களுக்குச் சக்தி அளிக்க யாகம் பண்ணுகிறோம். அக்னி முகமாக நாம் கொடுக்கிற ஹவிஸ்கள் தேவர்களுக்குச் சேர்ந்து ஆஹாரமாகின்றன : " அக்னிமுகா : தேவா :".

' நம்முடையது அன்று ' என்று நாம் கொடுக்கிற பொருள்கள் தேவதைகளுக்குப் போய்ச் சேருகின்றன. அக்கனியில் போடுவதுதான் நம்முடையது இல்லை என்றுது போகும். போடும்போது ' ந மம ' என்ரு சொல்லிப் போடுகிறோம். ' ந மம ' என்றால், என்னுடைய அல்ல என்று அர்த்தம். தேவர்களுக்கு ஆகாரம் போய்ச் சேருகிற வழிதான் அக்னி. இப்படியே நாம் எந்த வம்சத்தில் பிறந்தோமோ அந்த வம்சத்திலுள்ள பித்ருக்களைப் ப்ரீதி செய்யப் பல காரியங்களைச் செய்கிறோம். இதற்கும் வேதத்தில் வழி சொல்லியிருக்கிறது.

## *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## *வேதம்*

## *தேவகாரியமும் பித்ரு காரியமும்*

தெய்வ காரியங்களுக்கு பக்தி வேண்டும். பித்ரு காரியங்களுக்கு சிரத்தை வேண்டும். பக்தியோடு செய்வது யக்ஞம் ; சிரத்தையோடு செய்வது சிராத்தம். தெய்வகாரியங்களைப் பண்ணும்போது சிகையை நன்றாக முடிந்து கொண்டு, யக்ஞோபவீதம் (பூணூல்) இடது தோளில் இருக்கும்படியாக, சிரத்தையோடு செய்ய வேண்டும்.

இதற்காகத்தான் சிகை, யக்ஞோபவீதம் இரண்டும் இருக்கின்றன. சந்நியாசிகளுக்கு இவை இரண்டும் இல்லை. பித்ரு காரியத்தையும், பல தேவதைகளின் உபாஸனையையும் விட்டுவிட்டு, நேரே பரமாத்ம உபாஸனையை எந்தவிதமான லௌகிக அபேக்ஷையும் இன்றிச் செய்பவர்கள் அவர்கள். நேராகவே கடவுளிடம்

போகிற பிற மதஸ்தர்களுக்கும் சிகை, யக்ஞோபவீதம் இல்லை.

ஏன் இப்படித் தேவர்களுக்கு இடது தோளில் பூணூலோடும், பித்ருக்களுக்கு வலது தோளில் பூணூலோடும் காரியம் பண்ணி வேண்டும் என்று சொல்கிறேன் :

கிழக்கு முகமாக இருந்து கொண்டே காரியங்களைச் செய்ய வேண்டும். வடக்கு தேவர்களிடம் போகிற திசை, உத்தராயனம் என்பது அதுதான். உத்தரம் என்றால் வடக்கு. தெற்குதான் பித்ருக்கள் இருக்கும் பக்கம். ' தென்புலத்தார் ' என்று திருவள்ளுவர்கூடச் சொல்கிறாரல்லவா ? தக்ஷிணம் என்றால் தெற்கு. தக்ஷிணாயனம் என்பது பித்ரு லோக மார்க்கம்..... ' உத்தராயணம் ' என்பதில் மூன்று சுழி ' ண ' போட்டும், ' தக்ஷிணாயனம் ' என்னும்போது இரண்டு சுழி ' ன ' என்பது ' ண ' வாக மாறிவிடும். இது வியாகரண விதி. தற்காலத்தில் மனம் போனபடி பத்திரிகைகளில் எழுதுவதால் இதைச் சொல்ல நேர்ந்தது.

உத்தராயண தேவ மார்க்கத்தையும், தக்ஷிணாயன பித்ரு மார்க்கத்தையும் பற்றிப் பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார். நாம் கிழக்குமுகமாக இருந்துகொண்டு பித்ரு காரியம் பண்ணும்போது, எந்தத் தோள் தெற்குப் பக்கமாக இருக்கிறது ? வலது தோள்தான். அதனால்தான் பித்ரு காரியத்தில் யக்ஞோபவீதம் அந்தத் தோளின்மேல் இருக்கும்படியாகப் போட்டுக்கொள்ள வேண்டும் என்பது.

" பிரதக்ஷணம் பண்ணுவது " என்கிறோமே, இதற்குக் கூட தக்ஷிண (தெற்கு) திசையை நோக்கி என்றுதான் அர்த்தம். முக்காலே மூன்றுவாசிக் கோயில்களில் ராஜகோபுரம் கிழக்குப் பார்த்தான் இருக்கும். அதற்குள் நுழைந்து நாம் பிரதக்ஷிணம் ஆரம்பிக்கும்போது, முதலில் தெற்குப் பார்க்கத்தான் போவோம்.

இதே மாதிரி, நாம் கிழக்குமுகமாக இருந்துகொண்டு தேவகாரியம் பண்ணும்போது, தேவர்களின் திசையான வடக்கு திசையைப் பார்க்க இருப்பது நம்முடைய இடது தோள்தான். அதனால்தான், தேவ காரியங்களில் பூணூல் இடது தோள்தான். அதனால்தான், தேவ காரியங்களில் பூணூல் இடது தோள்மேல் இருக்க வேண்டும் என்பது.

தேவகாரியம், பித்ரு காரியம் இரண்டும் செய்யாத மற்ற வேளைகளில், அதாவது உத்யோக வேளை முதலானதுகளின் போது, பூணூலை ஒரு தோளின் மேலேயும் இல்லாமல், கழுத்திலிருந்தே மாலைமாதிரித் தொங்கவிட்டுக் கொள்ள வேண்டும். இதை யாரும் அனுஸரிக்கக் காணோம். பித்ரு காரியம் தவிர மற்ற எல்லா ஸமயங்களிலும் இடது தோள் மேலேயே யக்ஞோபவீதத்தைப் போட்டுக் கொள்கிறார்கள்.

தேவ காரியத்தின் போது இடது தோளுக்கு மேல் பூணூல் இருப்பதற்கு ' யக்ஞோபவீதம் ' என்றும், பித்ரு காரியத்தின் போது வலது தோளுக்கு மேல் இருப்பதற்கு ' ப்ராசீனாவீதம் ' என்றும், மநுஷ்யர்களுக்கான லோக காரியங்கள்

செய்யும் மற்ற எல்லா ஸமயத்திலும் மாலை மாதிரித் தொங்குவதற்கு ' நிவீதம் ' என்றும் பெயர். பிருஹதாரண்யக உபநிஷத்தில் ஒரு ஞானி இந்த எல்லாத் தினுஸுக் கர்மாக்களையும் விட்டு விட்டுப் பிச்சைக்கார ஸந்நியாஸியாகப் புறப்படுவதைப் பற்றி வருகிறது. ( III.5.1) . அதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும் போது, தேவ-பித்ரு-மநுஷ்ய கர்மாக்களை பண்ணுவதற்காகவே க்ருஹஸ்தனுக்குப் பூணூல் இருக்கிறதென்றும், எனவே, இந்த கர்மாக்களை விட்டுவிட்ட ஸந்நியாஸிக்குப் பூணூல் கிடையாதென்றும் ச்ருதி வாக்யங்களைக் காட்டி ஸ்தாபிக்கிறார். அந்த அலசலில், " நிவீதம் மநுஷ்யாணாம் " - மநுஷ்யர்களுக்கான காரியத்தின்போது (பூணூலை) மாலையாகப் போட்டுக்கொள்ள வேண்டும். என்று ச்ருதி ப்ரமாணமே இருப்பதாகக் காட்டியிருக்கிறார். ஆனாலும் நடைமுறையில் பஹுகாலமாகவே அந்த வழக்கம் எடுபட்டுப் போயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*வேள்வியின் தாத்பரியம்*

நம் மதத்தில் மட்டும் ஏன் யக்ஞம் இருக்கிறது என்று ஆலோசிக்கிற போது, இவ்வுலகில் மனிதர்களாகிய நம்முடைய ஜீவனரீதியைக் கவனிப்போம். ஒரு ஊரில் ஒரு ஸாமான் அதிகமாக விளைந்தால், அதை அந்த ஸாமான் விளையாத ஊருக்கு அனுப்பி, நம் ஊரில் விளையாததும் அந்த ஊரில் விளைவதுமான மற்றொரு ஸாமானை வாங்கிக் கொள்கிறோம். தச்சன், கொல்லன் முதலியவர்கள் நமக்காகச் சில காரியங்களைச் செய்கிறார்கள் ; நாம் அவர்களுடைய காலக்ஷேபத்திற்கு வேண்டியவைகளைக் கொடுக்கிறோம். பசுக்களுக்குப் புல் போடுகிறோம் ; அவை நமக்குப் பால் கொடுக்கின்றன. நாம் ராஜாங்கத்தினருக்கு வரி கொடுக்கிறோம். அவர்கள் நமக்குத் தீங்கு வராமல் காவல்

கட்டுச் செய்கிறார்கள். இப்படி உலக முழுவதுமே பரிவர்த்தனை க்ரமத்தில் (exchange) நடந்து வருகிறது. இப்படியே நாம் லோகாந்தரங்களுடன் சில பரிவர்த்தனை செய்து கொண்டிருக்கிறோம். இஞ்ஜினியர் முதலியவர்கள், பெய்த மழை நீரை ஒழுங்காகப் பிரித்து ஆறு முதலியவைகளில் பாயும்படி விடுவார்களேயொழிய, மழை பெய்யும்படிச் செய்ய அவர்களால் முடியாது. மழை பெய்ய வேண்டுமானால், நாம் சில ஸாமான்களைத் தேவ லோகத்திற்கு அனுப்ப வேண்டும். இந்த பரஸ்பர பரிவர்த்தனையே கீதையில் சொல்லியிருக்கிறது.

தேவான் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ :|

பரஸ்பரம் பாவயந்த ச்ரேய : பரம் வாப்ஸ்யத ||

இதன் அர்த்தம் : யாகத்தைக் கொண்டு நீங்கள் தேவர்களைத் திருப்தி செய்து வையுங்கள். அந்த தேவர்கள் மழை முதலியவற்றால் உங்களுக்கு க்ஷேமத்தைச் செய்யட்டும். இப்படியே நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு, மேலான க்ஷேமத்தை அடையுங்கள்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *ஜீவஹிம்ஸை செய்யலாமா ?*

யாகம் என்பது மந்த்ரம், தேவதை, ஹவிஸ் என்ற மூன்று ஸ்வரூபமாக உள்ளது. அவைகளுல் மந்த்ரம் என்பது வாயால் சொல்லப்பட வேண்டும். தேவதையை மனஸால் தியானம் செய்ய வேண்டும். ஹோமம் செய்வதற்கு முக்கியமாக வேண்டிய திரவியமே ஹவிஸ். அது காரியத்தில் ஆஹுதியாக அக்னியில்

செலுத்தப்பட வேண்டியது. இவ்வாறு மனோவாக்-காயம் என்ற மூன்றும் ஒருமுகப்படுத்தப் பெறுகின்றன.

ஹவிஸ்ஸில் நெய் முக்கியம். வெறும் நெய்யே ஹோமம் செய்யப்படுவது மட்டுமின்றி, வேறு எதை ஹோமம் செய்தாலும், அதை நெய்யால் சுத்தி செய்தே ஆஹுதி பண்ண வேண்டும்.

பல யாகங்களில் ஆஹுதியாகப் பிராணிகளின் வபையைக் கொடுக்கச் சொல்லியிருக்கிறது. யக்ஞம் பண்ணுவது பாபமா ? புண்ணியமா ? மிச்ரமா (இரண்டும் கலந்ததா) ? மத்வாசாரியர், பசுவைக் கொன்று யாகம் பண்ணக்கூடாது. மாவால் பசுவின் வபையைப் போல் பண்ணி ஆஹுதி பண்ண வேண்டும் என்று கருணையால் ஏற்பாடு பண்ணினார். (பசு என்றால் மாடு என்று அர்த்தமில்லை ; எந்தப் பிராணிக்கும் ஸம்ஸ்கிருதத்தில் பசு என்றே பெயர்).வியாஸர் " பிரம்ம ஸூத்திரம் செய்தார். அதில் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி வேதத்தின் ஞானகாண்டத்திலுள்ள உபநிஷத் சொல்வதன் தாத்பர்யத்தைச் சொல்லியிருக்கிறார். யக்ஞப் பிரயோகம் வேதத்தின் கர்மகாண்டமான பூர்வ மீமாம்ஸையில் இருக்கிறது. அதனுடைய பிரயோஜனம் வேதத்தின் ஞானகாண்டமான உத்தர மீமாம்ஸையில் இருக்கிறது. அதாவது யாகம் என்ற கர்மா செய்வதால் ஏற்படும் சித்த சுத்தியே ஒருவனை ஞானமார்க்கத்தில் சேர்க்கிறது.

" அசுத்தமிதி சேந்ந சப்தாத் " என்று அந்த பிரம்ம ஸூத்ரம் சொல்கிறது. ஆத்ம ஞான அங்கமாக ஸாக்ஷாத் வேதமே விதித்தது யக்ஞம். இது அசுத்தமான கர்மாவாக எப்படி ஆகும் ? அசுத்தம் என்று நாம் தீர்மானம் பண்ணுவதும், நல்லது கெடுதல் என்று தீர்மானம் பண்ணுவதும், எதனாலே ? சாஸ்திரங்களைக் கொண்டு நாம் செய்கிறோம். வேதந்தான் பெரிய சாஸ்திரம் ; வேதந்தான் பெரிய பிரமாணம். " யக்ஞம் ' சப்தம் ' எனப்படும் வேத ப்ரமாணத்திலேயே ஏற்பட்டதாதலால் பாபம் இல்லை ", என்று வியாஸர் பிரம்ம ஸூத்ரத்திலேயே சொல்கிறார். சுத்தம் அசுத்தம் ஆகியவை வேதம் என்ற சப்தப் பிரமாணத்தால் அறியப்படுகின்றன. கள் குடிக்காதே என்று வேதம் சொன்னால், அது அசுத்தம் என்று தெரிகிறது. வேத அபிப்ராயம் யக்ஞம் அசுத்தம் என்பதாக இருந்தால் வியாஸர் அதை அங்கமாகச் சொல்லமாட்டார்.மத்வாசாரியார் சொல்கிறபடி மாவினால் பசு பண்ணினாலும், அதில் பிராண பிரதிஷ்டை பண்ணுகிறோம். மந்திர பூர்வமாகப் பிராணப் பிரதிஷ்டை பண்ணிவிட்டால், அதுவும் உயிருள்ள பிராணிக்கு ஸமம்தானே ? எனவே, அப்பொழுதும் அதற்கு ஹிம்ஸை உண்டாகிறது என்றுதானே ஆகும் ?....

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்

உயிர்செகுத் துண்ணாமை நன்று

என்று திருக்குறளில் ஒரு செய்யுள் இருக்கிறது. ஹவிஸை அக்கினியில் ஆஹுதி பண்ணி ஆயிரம் யக்ஞம் பண்ணுவதைக் காட்டிலும், ஒரு பிராணியையும் வதைத்து உண்ணாமல் இருக்கிறது நல்லதென்பது இதன் அர்த்தம். இப்படிச் சொன்னதால், திருவள்ளுவர் யக்ஞத்தை நிந்திக்கிறார் என்று அர்த்தமாகாது.

தர்மத்துக்காகச் செய்யவேண்டியது, எப்படியிருந்தாலும் பண்ணவேண்டும் ; ஹிம்ஸையென்றும் பார்க்கக் கூடாது. யுத்தத்தில் சத்ருவதம் பணுணுவதை ஸகல ராஜ நீதிப் புஸ்தகங்களும் ஒப்புக்கொள்ளவில்லையா ? கொலைகாரனுக்குத் தூக்குத்தண்டனையை சட்ட புஸ்தகமே விதிக்கிறதல்லவா ? அப்படி, லோகத்தில் பல பேருக்குப் பெரிய க்ஷேமத்தை தேவர்கள் செய்யவேண்டுமென்ற உசந்த நோக்கத்தில் அவர்களுக்கு பசு ஹோமம் பண்ணுவதிலும் தப்பேயில்லை.

ஆயிரம் யக்ஞத்தைக் காட்டிலும், ஒரு பிராணியை ஹிம்ஸை பண்ணாமல் இருப்பது நல்லது என்பதால் யாகத்தைத் திருவள்ளுவர் நிந்தித்திருக்கிறார் என்று சொல்லுகிறார்கள். மற்ற யக்ஞங்கள் ஆயிரத்தைவிட, ஒரு அச்வமேத யாகம் செய்வது உயர்ந்தது என்ற மனுவே ஒரிடத்தில் சொல்லியிருக்கிறார். ஆயிரம் பாபத்தைக் காட்டிலும் ஒரு புண்ணியம் உத்கிருஷ்டமானது (உயர்வானது) என்று சொல்லுகிறார்களா ? 100 ஏகாதசி உபவாஸத்தைவிட ஒரு சிவராத்திரி உபவாஸம் உத்கிருஷ்டமானது என்று சொல்லலாம். 100 கசாப்புக் கடைகள் வைப்பதைக் காட்டிலும், ஒரு சிவராத்திரி உபவாஸம் உத்கிருஷ்டம் என்று சொல்லுவார்களா ? புண்ணிய கர்மாக்களுள்தான் இதைவிட இது உத்கிருஷ்டமானது என்று சொல்லுவார்கள்.

சாந்தோக்யோபநிஷத்தின் முடிவில், அஹிம்ஸையைச் சிறப்பிக்கும்போதுகூட, " அன்யத்ர தீர்த்தேப்ய :" என்ற விதிவிலக்குச் சொல்லியிருக்கிறது. அதாவது, வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களைத் தவிர, மற்ற இடங்களில் அஹிம்ஸையை அநுஷ்டிக்க வேண்டும் என்று அர்த்தம்.

யக்ஞம், யுத்தம், நீதிப்படி தண்டனை தருவது முதலிய இடங்களில் ஹிம்ஸை என்று நினைக்கக் கூடாது. யக்ஞத்தைவிட சிரேஷ்டமென்றால், " யக்ஞமும் சிரேஷ்டந்தான் ; அதைவிட அஹிம்ஸை சிரேஷ்டம் " என்றுதான் அர்த்தமாகும். ஆயிரம் யக்ஞங்கள் மிகவும் உயர்வானவை ; அவைகளிலும் அஹிம்ஸை உயர்வானது என்ற அர்த்தத்தில்தான் அந்தக் குறள் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும் இந்தக் குறள் ஆயிரம் யக்ஞங்களைச் செய்வதைக் காட்டிலும், ஸந்நியாஸி ஒரு பிராணிக்கும் ஹிம்ஸை செய்யாமலிருப்பது நல்லது என்ற அபிப்ராயத்தில் இந்தக் குறளைச் சொல்லியிருக்கிறார். சாஸ்திரப்படியும் துறவிக்கு யக்ஞம் செய்யும் அதிகராம் கிடையாது ; அவனுக்கே பூர்ண அஹிம்ஸை விதித்திருக்கிறது.

யாகங்களில் பலவிதம் உண்டு. அதைப்பற்றிப் பின்னால் வேதாங்கங்களில் ஒன்றான " கல்பத்தைப் பற்றியும், கிருஹஸ்தாச்ரமம் பற்றியும் சொல்லும்போது சொல்கிறேன். இங்கே சொல்ல வந்தது, எல்லா யாகத்திலும் பசு பலி செய்யப்படவில்லை என்பதே. ஆஜ்யம் என்று நெய்யை மட்டும் ஹோமம் செய்வது, ஹவிஷ்யான்னத்தை (நெய்ச் சாதத்தை) ஹோமம் செய்வது, சரு என்ற நன்றாகப் பக்குவமான ( cooked ) தானியத்தை ஹோமம் செய்வது, புரோடாசம் என்பதான அடைமாதிரியான ( baked ) ஆனிய பக்ஷங்களை ஹோமம் செய்வது, அக்னிஹோத்ரம் என்பதில் பாலை ஹோமம் செய்வது, ஔபாஸனத்தில் அக்ஷதையை ஹோமம் செய்வது, ஸமிதா தானத்தில் சுள்ளியை மட்டும் ஹோமம் செய்வது என்றிப்படிப் பல இருக்கின்றன. பசுபலி உள்ளதிலும், யக்ஞப் பிரஸாதமாக ஹோமம் செய்து மிஞ்சியதில் ரொம்பக் கொஞ்ச அளவே சாப்பிட வேண்டும்.

ஒருத்தன் செய்ய வேண்டியதாக 21 யக்ஞங்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன. பாக யக்ஞம், ஹவிர் யக்ஞம், ஸோம யக்ஞம் என்று மூன்று விதமான யக்ஞங்களில், ஒவ்வொன்றிலும் ே ழு வீதம் மொத்தம் 21 சொல்லியிருக்கிறது. இவற்றிலும் பாக யக்ஞம் ஏழிலும் பசு பலி இல்லை. ஹவிர் யக்ஞங்களிலும் முதல் ஐந்தில் பசுபலி இல்லை. ' நிரூட பசுபந்தம் ' எனற ஆறாவது யக்ஞத்திலிருந்துதான் பசுபலி ஆரம்பிக்கிறது.

' கூட்டம் கூட்டமாகப் பசுக்களைப் பலிகொடுத்து, பிராம்மணர்கள் ஏகமாக மாம்ஸம் சாப்பிட்டார்கள். புத்தர் கூட இப்படி யாகத்துக்காக ஒட்டிக் கொண்டு போகப்பட்ட மந்தைகளை ரக்ஷித்தார் ' என்றெல்லாம் இப்போது புஸ்தகங்களில் எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரி ஏகப்பட்ட பசுக்களை பலி கொடுப்பதாக, வாஸ்தவத்தில் எந்த யாகமும் இல்லை. பிராம்மணர்கள் செய்வதில் மிகவும் உயர்ந்ததான வாஜபேயத்துக்கும் 23 பசுக்களே சொல்லப்படுகின்றன. சக்ரவர்த்திகளே செய்கிற மிகப் பெரிய அச்வமேதத்துக்குக்கூட 100 பசுக்கள்தான் சொல்லியிருக்கிறது.

மாம்ஸ போஜனத்தில் இருந்த ஆசையினாலேயே பிராம்மணர்கள் " தேவ ப்ரீதி " என்று கதை கட்டி, யாகம் பண்ணினார்கள் என்று சொல்வது ரொம்பவும் பிசகாகும். ஒரு பசுவின் இன்னின்ன அங்கத்திலிருந்து மட்டுமே இத்தனை அளவுதான் மாம்ஸம் எடுக்கலாம். அதில் இடாவதரணம் என்பதாக ரித்விக்குகள் இவ்வளவுதான் புஜிக்க வேண்டும் என்பதற்கெல்லாம் சட்டம் உண்டு. அது துவரம் பருப்பளவுக்கு கொஞ்சம் அதிகம் தானிருக்கும். இதிலும் உப்போ புளிப்போ,காரமோ, தித்திப்போ சேர்க்காமல், ருசி பார்க்காமல் அப்படியே முழுங்கத்தான் வேண்டும். ஆகையால், வேறு என்ன காரணம் சொல்லி யக்ஞத்தை கண்டித்தாலும் சரி, பிராம்மணர்கள் இஷ்டப்படி மாம்ஸம் தின்னுவதற்கு யக்ஞம் என்று பெரிய பெயர் கொடுத்து ஏமாற்றினார்கள் என்றால்

கொஞ்சம்கூட சரியில்லை.

இப்போது ஒரு மருந்தைப் பரீக்ஷிப்பது என்பதற்காக லாபரிட்டரிகளில் எத்தனை ஜீவன்களைக் கொல்கிறார்கள் ? இப்படியே ஒரு பெரிய க்ஷேமத்துக்காகச் சின்ன ஹானியையும் உண்டாக்கலாம் என்றே யக்ஞங்கள் ஏற்பட்டிருக்கின்றன. வாஸ்தவத்தில் ஹானியும் இல்லை ; அந்தப் பசு ஸத்கதி பெறுகிறது என்பதே நம்பிக்கை.

இன்னொரு புரளி, ஸோம யாகம் என்று சொல்லிக்கொண்டு ஸோமரஸம் குடித்தது மதுபானம் மாதிரிதான் என்பது. ஸோமரஸம் போதைப் பொருள் அல்லவே அல்ல. அது intoxicating அல்ல. " அர்த்த வாதம் " என்கிற முறையில், மிகைப்படப் பேசும்போது, வேதத்தில் ஒரிடத்தில், இந்திரன் ஸோமரஸத்தால் மதமடைந்து சத்ருவதம் பண்ணினான் என்று வருவதை வைத்துக் கொண்டு இப்படிக் குயுக்தி பண்ணுகிறார்கள். தேவ சரீர தத்வமே மநுஷ்ய தர்மங்களுக்கு மாறானது. அது மட்டுமின்றி, ரித்விக்குகள் ஏதோ பாட்டில் பாட்டிலாகவோ மொந்தை மொந்தையாகவோ குடித்த மாதிரிப் பேசுவது அடியோடு விஷயம் தெரியாத பேச்சு. ஒரு யாகத்தில், உரல் மாதிரியான ரூபத்தில் ரொம்பவும் செய்ய வேண்டும், அதில் மீறுவதை ' ஹுத சேஷம் ' என்று சாப்பிட வேண்டும் என்ற சட்டம் இருக்கிறது. இம்மாதிரி ஒரு யாகத்தில் துளிதுளியாக செய்கிற ஸோம பானத்தையெல்லாம் சேர்த்தால்கூட ஒரு அவுன்ஸுக்குமேல் வராது. இப்படிச் சாப்பிட்டு எவரும் மயக்க மடைந்தததும் கிடையாது. ஸோமரஸம் என்பது அப்படியொன்றும் ருசியாக இருக்கவும் இல்லை என்கிறார்கள்.

ஸோம பானத்தை அந்தக் காலத்து காபி என்று சிலர் வியாக்யானம் பண்ணிவிட்டார்கள். ஸோம ரஸம் உண்டாக்குகிற ஸந்தோஷத்தைப் பற்றி வேத மந்திரங்கள் இருப்பதால் இப்படி தப்பர்த்தம் பண்ணிவிட்டார்கள். காபி சித்த விருத்தியைக் கெடுக்கிற வஸ்து. ஸோம ரஸம் சித்த சுத்தியை உண்டாக்குகிற வஸ்து. இரண்டையும் ஒன்று என்பது கொஞ்சங்கூட பொருந்தாது அந்தக் காலத்தில் ஸம்ருத்தியாகக் கிடைத்து வந்த ஸோமலதை இப்போது கிடைப்பதே ரொம்பவும் அபூர்வமாகிக் கொண்டு வருகிறது. வேத தர்மங்கள், ஆசாரங்கள் எல்லாம் நசித்து வருவதற்கு ஏற்றாற்போல், ஸோம யாகங்களுக்கு ஜீவாதாரமாக இருக்கப்பட்ட கொடியும் க்ஷீணித்துக் கொண்டே வந்திருக்கிறது. ஸமீபத்தில் கொல்லங்கோடு ராஜா, ஸோமயாகம் எங்கே நடந்தாலும் அதற்கு ஸோமலதை கொடுப்பதென்று வைத்துக் கொண்டிருந்தார். காபிக்கும் இந்த ஸோமலதைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை.

# *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## *வேதம்*

### *முறை வேறாயினும் முடிவு ஒன்றே*

சுருக்கமாக, யக்ஞங்கள் என்றால் ஒவ்வொரு தேவதைக்கும் மந்திர த்வாரா ஆஹுதிகளை அர்ப்பணம் பண்ணுவது என்று அர்த்தம். ஒரு விதத்தில் அந்த மந்திரங்களே தேவதா ஸ்வரூபமாகவும் இருக்கின்றன. இன்னொரு விதத்தில் ஆஹுதி செய்யப்படும் திரவியங்களைப் போலவே, இந்த மந்திராக்ஷங்களும் தேவதைகளுக்கு ' ஆஹாரம் ' மாதிரி ஆகி, அவற்றின் சக்தியை விருத்தி பண்ணுகின்றன. மந்திரம் என்பது இப்படி multipurpose ( பல நோக்கங்கள்) உள்ளதாக இருக்கிறது. நாம் வரி கொடுக்கிறோம். அவையெல்லாம் ஒரே ராஜாங்கத்துக்குப் போகிறவைதான். ஆனாலும் தொழில் வரி, நிலவரி, மோட்டார் வரி என்று பல வரிகளைச் செலுத்தும்போது ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் இடம் இருக்கிறது. ஒவ்வொன்றுக்கும் தனியாக முத்திரைக் கடிதாசு இருக்கிறது. அதுபோல ஒவ்வொரு கர்மாவுக்கும் மந்திரம், தேவதை, திரவியம், காலம் எல்லாம் தனித்தனியே இருக்கின்றன. இப்படி ஒவ்வொன்றுக்கும் கிரமம் வேறுவேறாக இருந்தாலும், எல்லாவற்றுக்கும் பரம தாத்பர்யம் பரமேச்வரனுக்கு அர்ப்பணம் பண்ணுவதுதான். வெவ்வேறு ஆபீஸில் டாக்ஸ்களைக் கட்டினாலும், ஒரே கவர்மென்டுக்குப் போகிறது என்ற அறிவு நமக்கு இருக்கிற மாதிரி, பல தேவதைகளை உத்தேசித்து வெவ்வேறு யக்ஞங்கள் செய்தாலும், எல்லாம் ஒரே பரமேச்வரனைச் சேர்கிறது என்ற ஞானத்தோடு, பாவத்தோடு செய்ய வேண்டும். நாம் செலுத்துகிற வரிக் கணக்குகளையும், இப்படி வரி செலுத்துகிற நம்மையுமேகூட ராஜாவுக்கு (அல்லது குடியரசானால் ராஜாங்கத் தலைவருக்கு ) தெரியாது. பரமேச்வரனாகிய ராஜாவுக்கோ நம் ஒவ்வொருவர் விஷயமும் நமக்கே தெரிவதைவிட நன்றாகத் தெரியும். யக்ஞ ரூபமான நம்முடைய கர்மா வரியைச் சரியாகக் கொடுக்கிறோமா என்ற கணக்கும் அவனுக்குத் தெரியும். அவனை ஏமாற்ற முடியாது.

ஒவ்வொரு யாக கர்மாவுக்கும் இவ்விதமாக மந்திரம், திரவியம், தேவதை என்ர மூன்று உள்ளன. வாயில் மந்திரம், கையில் (ஆஹுதி பண்ண வேண்டிய) திரவியம், மனஸில் தேவதை(யின் தியானம்).

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *கலியில் ஜீவபலி உண்டா ?*

ஒரு வாதம் உண்டு. அதாவது : பூர்வ யுகங்களில் மநுஷ்யர்கள் ரொம்பவும் உயர்ந்த சக்தியோடும் பண்புகளோடும் இருந்தார்கள். மனஸிலேபரமப் பிரியத்தை வைத்துக் கொண்டே லோகக்ஷேமத்திற்காக இவர்களால் ஜீவபலி கொடுக்க முடிந்தது. அதனால் அவர்கள் அசுவம், கோ இவற்றைக்கூட யக்ஞங்களில் பசு பலியாகத் தந்தார்கள். சிராத்தத்தில் மாம்ஸம் சேர்த்தார்கள். இப்படி மனஸில் பட்டுக்கொள்ளாமல், தேவ சக்திகளை லோகநலனுக்காகப் பிரீதி பண்ணும் பொருட்டே அவர்கள் நடுத்தர வயஸில் கிருஹஸ்தர்களாகக் கர்ம மார்க்கத்தில் இருந்து கொண்டு நிஷ்காம்ய கர்மம் செய்தார்களென்றால் பிற்பாடு விருத்தாப்யத்திலோ ஸகல கர்மாவையும் விட்டு விட்டு பூஜை புனஸ்காரங்களும் ஆசாரங்களுங்கூட இல்லாமல், அப்படியே செயலற்ற ஆத்மாராமர்களான ஸந்நியாஸிகளாக இருக்கவும் வர்களால் முடிந்தது. அவர்களுக்கு எப்பேர்ப்பட்ட உத்தமப் பண்பு இருந்தது என்றால், ஒரு ராஜ்யத்திலே தன் சகோதரனான ராஜா, வாரிசு இல்லாமல் செத்துப் போய்விட்டால், ' அராஜகம் வராமல் தேசம் க்ஷேமமாக இருக்கவேண்டுமே ' என்ற ஒரே எண்ணத்துக்காக, தங்களுக்கென்று

காமமே இல்லாமல் தங்களுடைய பிரம்மச்சரியம் குலையாமலே, ஸஹோதரனின் ஸ்தானத்தில் தாங்களே இருந்துகொண்டு புத்ரோத்பத்தி பண்ணக்கூட முடிந்தது. நம்முடைய கலியுகத்தில் இப்படிப்பட்ட நிஷ்காம்ய கர்ம பாவனையோ, பிரேமையோடேயே கொலைகூடச் செய்கிற பாவனையோ , ஸகல கர்மாவையும் விட்டு மனஸையும் அடக்கி ஸந்நியாஸியாக இருக்கிற தகுதியோ, ஸ்திரீ ஸங்கத்திலும் பிரம்ம்ச்சரிய பாவனை நழுவாத தன்மையோ எவருக்கும் இருக்க முடியாது. அதனால் அச்வமேதம், கோமேதம், சிராத்தத்தில் மாம்ஸம், ஸந்நியாஸம், ஸஹோதரன் ஸ்தானத்தில் புத்ரோத்பத்தி செய்வது ஆகிய இந்த ஐந்தும் கலியில் வர்ஜமாகும் (விலக்கத் தக்கதாகும்) என்பது ஒரு வாதம்.

அச்வாலம்பம் கவாலம்பம் ஸந்-ந்யாஸம் பல பைத்ருகம் ।

தேவரேண ஸுதோத்பத்திம் கலௌ பஞ்ச விவர்ஜயேத் ।।

இந்த ஸ்லோகத்தில் " அச்வாலம்பம் " என்பதற்குப் பதில் " அக்ன்யாதானம் " (அக்னி ஆதானம்) என்று சிலர் சொல்கிறார்கள். இப்படிச் சொன்னால் பசுபலி இல்லாத ஏராளமான கலியில் செய்யக்கூடாது ; அதாவது கலியில் வேள்வி என்பதற்கே total prohibition (முழு விலக்கு) என்று அர்த்தமாகி விடும். ஹவிர் யக்ஞங்களில் முதலாவதாக வருவதே இந்த அக்ன்யாதானம். அதுவே இல்லை என்றால் ' பாக யக்ஞம் ' என்ற ஏழு சின்ன யக்ஞங்களைத் தவிர யாக, யக்ஞாதிகளே அடியோடு இல்லை என்று அர்த்தமாகி விடும்.

ஆனால் இப்படிச் சொல்வது சரியல்ல என்பதே பெரியவர்களான சிஷ்டர்களின் அபிப்ராயம். வேத மார்க்கத்தைப் பிரதிஷ்டை செய்யவே வந்த சங்கர பகவத்பாதாள் " வேதோ நித்யம் அதீயதாம் " (வேதத்தை தினுமும் ஒதுங்கள்) என்று சொன்னதோடு நிறுத்தாமல், அதை ஒதினால் மட்டும் போதாது, அதில் சொன்ன கர்மங்களை அநுஷ்டிக்கவேண்டும் என்று தொடர்ந்து சொல்கிறார். தத் உதிதம் கர்மஸ்வநு : ஷ்டீயதாம் என்று. வேதகர்மா என்றால் முக்கியமாக யாகந்தான். அதை விட்டுவிட்டு வெறெந்த வேத கர்மாவைப்பண்ணுவது ? ஆதலால் சில விதமான யாகங்களை வேண்டுமானால் கலியில் விடலாமே தவிர முழுக்க விட்டுவிடக்கூடாது.

அக்னியாதானம் கூடாது ; அதாவது எந்த விதமான பெரிய யாகமுமே கூடாது என்று இந்த ச்லோகத்தில் முதலில் சொல்லியிருந்தால், அப்புறம் யாகத்தில் ஒருவிதமான (கோமேதம் என்ற) கவாலம்பம் கூடாது என்று வேறு ஏன் பிரித்துச் சொல்ல வேண்டும் ? அக்னியாதானம் போய் விட்டால், அதனுடன் தானே கவாலம்பமும் போய்த்தானே விடும் ? ஆனபடியால் சில தினுஸானவை தவிர மற்ற வேள்விகள் எக்காலத்திலும் நடக்க வேண்டியவைதான்.

தர்ம சாஸ்திரங்களிலிருந்தே இன்னொரு ச்லோகமும் சொல்லப்படுகிறது.

இதன்படி, கொஞ்சமாவது கலியில் வர்ணாச்ரம பேதங்கள் இருக்கிறவரையில், கொஞ்சமாவது வேத சப்தம் இருந்து கொண்டிருக்கிற வரையில் (யாவத் வர்ண விபாகோஸ்தி, யாவத் வேத ப்ரவர்த்ததே) அக்னியாதானமான யாக கர்மாவும் ஒரு கர்மாவும் இல்லாத ஸந்நியாஸமும் இருக்கலாம் என்று ஏற்படுகிறது. சில வகையான பசுபலி, சிராத்தத்தில் மாம்ஸம், ஸஹோதரனுக்காகப் புத்திரோத்பத்தி என்பவை மட்டும் கலியில் கூடாது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *யாகம் செய்பவர்கள்*

யாகம் பண்ணுகிறவர்களைப் பற்றி கொஞ்சம் சொல்ல வேண்டும். எவன் பொருளைச் செலவழித்து தக்ஷிணை கொடுத்து யக்ஞம் செய்கிறானோ அவனுக்கு யஜமானன் என்று பெயர். யஜ் என்றால் வழிபடுவது என்று அர்த்தம். யஜமானன் என்பதற்கு root meaning யக்ஞம் பண்ணுபவன் என்பதே. இப்போது நம் தமிழ் தேசத்தில் முதலாளியை யஜமான் - எசமான் என்கிறோம். முதலாளிதானே சம்பளம் தருகிறான் ? அதனால் யக்ஞத்திலே தக்ஷிணை கொடுத்து வந்த யஜமானனின் ஸ்தானத்தில் இவனை வைத்து விட்டோம்.

ஸாதாரண மக்களும் இப்படி முதலாளியை யஜமான் என்பதிலிருந்து இந்த தேசத்தில் வேதவழக்கம் எவ்வளவு ஆழ வேரோடியிருக்கிறது என்று தெரிகிறது.

இன்னொரு வார்த்தையும் நம் தேசத்தின் ஆழ்ந்த வைதிகப் பிடிமானத்தைக் காட்டுகிறது. தமிழ் நாட்டில் ஒருத்தனுக்கு இலவசமாகச் சாப்பாடு போடுகிற இடத்துக்கு சத்திரம் என்று பேர் சொல்கிறோம். வடக்கே போனால் சத்திரம் என்று சொல்லமாட்டார்கள்.

தரம்சாலா என்பார்கள். தர்ம சாலை என்பதன் திரிபு அது. இங்கே தக்ஷிணத்தில் மட்டும் ஏன் சத்திரம் என்கிறார்கள் ? சத்திரம் என்றால் என்ன ? ஸத்ரம் என்பதுதான் சத்திரம் என்றாயிருக்கிறது. ஸத்ரம் என்பது ஒரு வகை யாகத்தின் பெயர். அந்த யாகத்திற்கும் மற்ற யாகங்களுக்கும் என்ன வித்யாஸம் என்றால் மற்ற யாகங்களில் யஜமானன் என்கிற ஒருவன் தன் திரவியத்தைச் செலவு செய்து, தக்ஷிணை கொடுத்து, யாகம் பண்ணுகிறான் ; ரித்விக்குகள் என்ற பிராம்மணர்கள் (புரோகிதர்கள்) யஜமானனிடம் தக்ஷிணை வாங்கிக் கொண்டு அவனுக்காக யக்ஞத்தை நடத்தித் தருகிறார்கள். ஸத்ர யாகங்களில் மட்டும் யாகம் பண்ணும் அத்தனை பேருமே யஜமானர்கள் . ஒரு யக்ஞத்தினால் லோக க்ஷேமமும், அதில் கலந்து கொள்கிற எல்லோருக்கும் சித்தசுத்தியும், அதைத் தரிசிப்பவர்களுக்குக் கூட நன்மையும் ஏற்படுகின்றனவென்றாலும், இதனால் விசேஷமாகப் புண்ணியம் அடைவது எஜமானன்தான். ஸத்ர யாகங்களில் ரித்விக்குகளே யஜமானர்களாக இருப்பதால் அத்தனை பேருக்கும் ஸமமான புண்ணியம். இந்த யக்ஞம் தன்னுடையது என்ற உரிமை எல்லோருக்கும் இருக்கிற ஸோஷலிஸ யக்ம் இது ! இதை வைத்தே எவரானாலும் உரிமையோடு வந்து, யஜமானர்கள் மாதிரி வயிறாரச் சாப்பிட்டு போகிற இடத்துக்கு சத்திரம் என்று பேர் வந்துவிட்டது. இந்த வார்த்தையிலிருந்து சத்திரத்தில் சாப்பிடுகிறவனைவிடச் சாப்பாடு போடுகிறவன் தன்னை உயர்வாக நினைக்கவில்லை என்ற உயர்ந்த பண்பும் தெரிகிறது. தமிழ் நாட்டில் ஸத்ர யாகங்கள் விசேஷமாக நடந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

யஜமானன் தரும் தக்ஷிணையை யக்ஞ முடிவிலே பெற்று அவனுக்காக அதை நடத்தித் தருகிற மற்ற பிராம்மணர்களுக்கு ரித்விக் என்று பெயர். ரித்விக்குகளில் ஹோதா, உத்காதா, அத்வர்யு என்ற மூன்று பிரிவுகள் உண்டு. ஹோதா என்பவர் ரிக் வேத மந்திரங்களைச் சொல்லி, தேவதைகளை ,ஸ்துதித்து ஆஹுதிகளை ஏற்பதற்காக அவர்களைக் கூப்பிடுகிறவர். இவருக்கு உள்ள உயர்ந்த ஸ்தானத்தினால்தான் இன்றைக்கும் யாராவது நல்ல ஸ்தானத்தில் இருந்தால் ரொம்பவும் ஹோதாவுடன் இருக்கிறார் என்று சொல்கிறோம். ரிக் வேதத்தில் தேவதாபரமான ஸ்தோத்திரங்கள் நிரம்பியுள்ளன. காரிய ரூபத்தில் செய்யவேண்டிய யக்ஞ முறைகள் யஜுர் வேதத்தில் அதிகமாக இருக்கின்றன. இவற்றின்படி யக்ஞத்தை நடத்திக் கொடுப்பவர் அத்வர்யு. ஸாம கானம் என்பதாக ஸாம வேதத்தில் உள்ள மந்திரங்களை கானம் செய்வது, தேவதைகளை

விசேஷமாக பிரீதி செய்விப்பதாகும். இதைச் செய்பவர் உத்காதா. இப்படி நடக்கிற யாகத்தை ஒருவர் மேற்பார்வை (ஸுப்ரவைஸர்) பண்ணுகிறார். அவருக்கு பிரம்மா என்று பெயர்.

பிரம்ம என்றே வேதத்துக்கும் பேர். வேதமான பிரம்மத்தில் விசேஷமாக ஸம்பந்தப்பட்டவருக்கே வேதியர் என்பது போல பிராம்மணர் என்ற பேரும் ஏற்பட்டது. வேதம் பயிலபவனை பிரம்மசாரி என்பதும் இதனால்தான். இங்கே யாகத்தில் ஸூபர்வைஸருக்கு பிரம்மா என்று பேர். அவர் அதர்வ வேதப்படி இந்தக் கார்யத்தைப் பண்ணுகிறார். இப்படியாக, ஹோதா, அத்வர்யு, உத்காதா, பிரம்மா என்ற நாலு பேர் நாலு வேதங்களை represent பண்ணுகிறார்கள். இப்படிச் சொன்னாலும் ஹோதாவுக்கும், அத்வர்யுவுக்கும், உத்காதாவுக்கும், முறையே ரிக், யஜுஸ், ஸாம வேதங்களில் இருக்கிற ஸம்பந்தம், பிரம்மாவுக்கு அதர்வத்தில் இல்லை என்கிற அபிப்ராயமும் பிற்காலத்தில் கொஞ்சம் வந்திருக்கிறது. பிரகிருதத்தில் (நடைமுறையில்) பார்த்தாலும், யக்ஞங்களில் பங்கெடுத்துக் கொள்பவர்கள் மற்ற மூன்று வேதங்களை அத்யயனம் செய்திருக்கிறார்களே தவிர அதர்வ அத்யயனம் செய்தவர்கள் இருக்க வில்லை. அதனால் ரிக, யஜுஸ், ஸாம என்ற மூன்று வேதங்களையும் கொண்டே ஸோமயாகம் முதல் அச்வ மேதம் வரையில் எல்லா யக்ஞங்களும் செய்யப்படுகின்றன என்றும் அபிப்ராயம் இருக்கிறது.

அதர்வ வேதத்துக்கு என்று தனிப்பட்ட யக்ஞங்கள் இருக்கின்றன. அதர்வத்தில் சொல்லியுள்ள யாகத்தை இந்திரஜித் நிகும்பிலையில் பண்ணினான் என்று வால்மீகி ராமாயணத்தில் சொல்லியிருக்கிறது.

மற்ற மூன்று வேதங்களுமே அதிகம் பிரசாரத்தில் இருப்பவை. நாலு வேதங்கள், சதுர்வேதங்கள் என்று வித்யாஸ்தானங்களில் சொன்னாலும் அதர்வத்தை நீக்கி மற்ற மூன்றையுமே த்ரயீ என்ற பெயரில் வேதங்களாக விசேஷித்து சொல்வது வழக்கம்.

(சாந்திகம் என்பதாக சாந்தியையும், பௌஷ்டிகம் என்பதாக புஷ்டியையும், சத்ருக்களுக்குக் கெடுதலை உண்டாக்குகிற ஆபிசாரகம் எனப்படுபவையுமான மூன்று வித யாகங்கள் அதர்வத்தில் ஏராளமாக உள்ளன.)

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*ரிக்-யஜுஸ்-ஸாமம்-அதர்வம்*

" அனந்தா வை வேதா :" - வேதங்கள் எண்ணிறந்தவை என்றாலும், ரிஷிகள் சிலவற்றைத்தான் நமக்குப் பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள். நம்முடைய இஹ, பர நலனுக்கும் லோக க்ஷேமத்துக்கும் இதுவே போதும். அத்தனை வேதங்களையும் நாம் தெரிந்துகொண்டு பிரம்மா மாதிரிப் பிரம்மா மாதிரிப் பிரபஞ்சங்களை சிருஷ்டிக்க வேண்டுமா என்ன ? சிருஷ்டியாகிவிட்ட இந்த லோகம் நன்றாக இருக்கச் செய்வதற்கான அளவுக்கு நமக்கு வேதங்கள் தெரிந்தாலே போதும். இப்படிப் பல வேதங்களை ரிஷிகள் நமக்குத் தந்திருக்கிறார்கள். நாலு வேதம் என்று சொல்கிறோம். ஆனால் இது ஒவ்வொன்றிலும் பலவிதமான பாடங்கள், பாட பேதங்கள் உண்டு. பாடாந்தரம் என்று இதைச் சொல்வார்கள். ஒரே கீர்த்தனமானாலும், ஒரே ராகமானாலும் அதிலே மஹா வைத்யயநாதய்யர் பாணி, கோனேரிராஜபுரம் பாணி, சரப சாஸ்திரி பாணி என்று வெவ்வேறு தினுசு இருக்கிறது. சில பாணியில் அதிகம் சங்கதிகள் பாடுகிற மாதிரி, சில ஸூக்தங்கள் ஒரு பாடத்தில் அதிகம் இருக்கும். ஒன்றுக்கொன்று மந்திரங்கள் முன்பின்னாக இருக்கும்.

இந்த பாடாந்தரம் ஒவ்வொன்றையும் ஒரு சாகை என்று சொல்வார்கள். சாகை என்றால் கிளை. வேத விருக்ஷத்தில் இவை ஒவ்வொன்றும் ஒரு கிளை. அநேக கிளைகளுடன் கப்பும் கவடும் விட்டுக்கொண்டு ஒரு மஹா விருக்ஷம் மாதிரி, அடையாறு ஆலமரம் மாதிரி, வேதம் இருக்கிறது. இத்தனை சாகைகள் இருந்தாலும், இவற்றை ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற நாலில் ஒன்றை

சேர்ந்ததாகவே பிரித்திருக்கிறது.

இப்போது ஆராய்ச்சியாளர்கள் ரிக்வேதம் முந்தியது. யஜுர்வேதம் பிந்தையது எந்றெல்லாம் சொன்னாலும், சாஸ்திரப்படி எல்லாம் அனாதிதான். சிருஷ்டித் தொடக்கத்திலேயே பிரம்மாவால் ஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டதான யக்ஞத்தில் நாலு வேதங்களுமே பிரயோஜனமாகின்றன என்பதைப் பார்க்கும்போது, இந்த முந்தி பிந்தி ஆராய்ச்சிகளெல்லாம் எடுபடவில்லை.

இப்படித்தான் ஒரு வேத சாகை என்றால், அதில் இருக்கப்பட்ட ஸம்ஹிதை, ப்ராம்மணம், ஆரண்யகம் என்ற பகுதிகளில் இதற்கு இது முந்தியது என்கிற ஆராய்ச்சியும் சரியில்லை. ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டது வேதம் ; காலாதீதமான நிலையிலிருந்துகொண்டு திரிகாலங்களையும் பார்க்ககூடிய ரிஷிகள் கண்டுபிடித்துக் கொடுத்தது வேதம் என்பதை நம்பிவிட்டோமானால், எந்த காலக் கணக்கு ஆராய்ச்சியும் அதற்குப் பொருந்தாது என்று தெரியும். ரிக் வேதத்திலேயே பல இடங்களில் யஜுர் வேதம், ஸாம வேதம் முதலியவற்றைப் பற்றிய பிரஸ்தாவம் இருக்கிறது. ரிக்வேதம் பத்தாம் மண்டலத்தில் (தொண்ணூறாவது ஸூக்தமாக) வருகிற புருஷ ஸூக்தத்தில், இப்படி மற்ற வேதங்களைப் பற்றி வருகிறது. இதனாலேயே வேதங்களில் ஒன்று முன்னாடி, இன்னொன்று பின்னாடி என்றில்லை என்று தெரிகிறதல்லவா ?

ஒவ்வொரு சாகையிலும் ஸம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம் என்ற மூன்று உண்டு என்றேன். பொதுவாக வேத அத்யயனம் என்னும்போது இவற்றில் ஸம்ஹிதா பாகத்தின் அத்யயனம் என்று மட்டுந்தான் அர்த்தம் பண்ணிக்கொள்கிறோம். ரிக்வேத ஸம்ஹிதையை மட்டும் புஸ்தகமாகப் போட்டு, அதற்கு " ரிக் வேதம் " என்று பெயர் கொடுத்து விடுகிறோம். ஏனென்றால் ஸம்ஹிதைதான் ஒரு சாகைக்கு ஆதாரமாக, உயிர் நாடியாக இருப்பது.

ஸம்ஹிதா என்றால், " ஒழுங்குபடுத்தி சேர்த்து வைத்தது " என்று அர்த்தம். ஒரு வேதத்தின் தாத்பர்யம் என்னவோ, அவ்வளவையும் ஸிஸ்டமாடிக்காகச் சேர்த்து மந்திரங்களாகக் கொடுத்திருப்பதுதான் ஸம்ஹிதை.

ரிக் வேத ஸம்ஹிதை முழுக்கவும் பொயட்ரி (செய்யுள்) ரூபத்தில் இருப்பது. பிற்காலத்தில் ச்லோகம் என்று சொல்லப்பட்ட செய்யுளுக்கே வேதகாலத்தில் ரிக் என்று பெயர். பிற்கால ச்லோகத்திற்கும் வேத ரிக்குக்கும் பெரிய வித்யாஸம் என்னவென்றால் ரிக்குகளைத்தான் ஸ்வரப்படி ஏற்றி இறக்கி அல்லது ஸமமாகச் சொல்ல வேண்டியிருப்பது. " ரிக் " என்றால் ஸ்தோத்திரம் என்றும் அர்த்தம். ரிக் வேத ஸம்ஹிதை முழுக்கவும் இப்படிப்பட்ட ஸ்தோத்திரங்களாகவே இருக்கிறது. பல தேவதைகளைப் பற்றின ஸ்தோத்திரங்கள். ஒவ்வொரு ரிக்கும் ஒரு மந்திரம். ஒரு தேவதையைப் பற்றிப் பல ரிக்குகள் சேரந்து ஒவ்வொரு ஸூக்தமாக ஏற்பட்டிருக்கின்றன.

ரிக் வேதத்தில் - அதாவது ஸம்ஹிதையில் - பத்தாயிரத்து சொச்சம் (10170) ரிக்குகள் (மந்திரங்கள்) உள்ளன. (1028 ஸூக்தங்கள்). ரிக் வேதத்தைப் பத்து மண்டலங்களாகவும், எட்டு அஷ்டகங்களாகவும் இரண்டு விதத்தில் பிரித்திருக்கிறது. அக்னியைப் பற்றிய ஸூக்தத்தோடு ஆரம்பித்து, அக்னியைப் பற்றிய ஸூக்தத்தோடேயே அது முடிகிறது. வேதங்களுக்குள்ளே தேவதா ஸ்தோத்ர ரூபமாயிருப்பது ரிக் வேதம். அதில் உபக்ரமம் (ஆரம்பம்), உபஸம்ஹாரம் (முடிவு) இரண்டிலும் அக்னியைச் சொல்லியிருப்பதால், அக்னி உபாஸனைதான் ( fire worship ) வேத தாத்பர்யம் என்றே கொள்கிறவர்களும் உண்டு. அக்னி என்றால் ஆத்ம சைதன்யத்தின் பிரகாசம் (ஸத்ய தத்துவத்தைப் பற்றிய அறிவொளி) என்றால், இதுவும் ஸரிதான். ரிக் வேதத்தின் கடைசி ஸூக்தம் அக்னியைப் பற்றியதாக இருந்தாலும் அதில்தான் இப்போது தேசியகீதம் - National Anthem - என்று சொல்வதற்கு மேலாக, ஸர்வ தேசத்திற்குமான ஒற்றுமைப் பிரார்த்தனை - International Anthem - இருக்கிறது. " எல்லா ஜனங்களும் ஒன்று சேர்ந்து ஏக மனஸாக இணைந்து ஆலோசனை பண்ணட்டும். எல்லோருக்கும் ஒரே லக்ஷ்யமாக இருக்கட்டும். எல்லா ஹ்ருதயங்களும் அன்போடு ஒன்று சேரட்டும். இப்படி ஏகோபித்த எண்ணத்தோடு எல்லாரும் ஆனந்தமாக இருக்கட்டும் " என்று ரிக் வேதம் முடிகிறது.

யஜ் - வழிபடுவது - என்ற தாதுவிலிருந்து யஜுஸ், யக்ஞம் என்ற இரண்டும் வந்திருக்கின்றன. ரிக் என்றாலே எப்படி ஸ்தோத்திரம் என்று அர்த்தமோ, அதே மாதிரி யஜுஸ் என்றாலே யக்ஞ ஸம்பந்தமான வழிபாட்டுக் காரியக்ரமத்தை விவரிப்பது என்று அர்த்தம் ஆகிறது. இதற்கேற்றாற்போல் ரிக்வேதத்திலுள்ள ஸ்துதி ரூபமான மந்திரங்களை யக்ஞம் என்கிற காரியத்தில் பொருத்திக் கொடுப்பதே

(practical applictaion ) யஜுர்வேதத்தின் முக்கியமான லக்ஷ்யமாக இருக்கிறது. ரிக்வேதத்தில் உள்ள பல மந்திரங்கள் இதிலும் கூறப்படுகின்றன. அதோடு கூட, ப்ரோஸில் (உரைநடையில்) யக்ஞம் முதலான வேத கர்மாநுஷ்டானங்களைச் சொல்கிறது. வாயால் ஸ்தோத்திரம் செய்ய ரிக் வேதம் உபகரிக்கிறது. காரியத்தில் வழிபாடு பண்ண யஜுர்வேதம் முக்கியமாக உபகாரம் செய்கிறது.

ஒவ்வொரு வேதத்திலும் பல சாகைகள் இருக்கிற மாதிரி மட்டும் இல்லாமல், யஜுர் வேதம் தனக்குள்ளேயே நிரம்ப மாறுபாடுகள் உள்ள இரண்டு தனி வேதங்களாகவே பிரிந்திருக்கிறது. இந்தப் பிரிவுகளுக்கு சுக்ல யஜுர் வேதம், கிருஷ்ண யஜுர் வேதம் என்று பெயர். சுக்லம் என்றால் வெளுப்பு. கிருஷ்ணம் என்றால் கறுப்பு. சுக்ல யஜுர் வேத ஸம்ஹிதைக்கு " வாஜஸநேயி ஸம்ஹிதா " என்றும் பெயருண்டு. " வாஜஸநி " என்பது சூரியனுடைய பெயர். சூரியனிடமிருந்தே யாக்ஞவல்கிய ரிஷி இந்த ஸம்ஹிதையை உபதேசிக்கப்

பெற்று, லோகத்துக்குக் கொண்டு வந்ததால், இதற்கு வாஸநேயி ஸம்ஹிதா என்று பேர் ஏற்பட்டது.

இதைப்பற்றி ஒரு பெரிய கதை உண்டு. சுருக்கமாகச் சொன்னால், யாக்ஞவல்கியருக்கு முன்னால் யஜுர் வேதம் ஒன்றாகத்தான் லோகத்துக்கு வளி வந்திருந்தது. அந்த யஜுர் வேதத்தை வைசம்பாயனரிடமிருந்து யாக்ஞவல்கியர் கற்றுக்கொண்டார். அப்புறம் வைசம்பாயனருக்கும் யாக்ஞவல்கியருக்கும் மனஸ்தாபம் உண்டான போது, குருவானவர் சிஷ்யரிடம், " நான் கற்றுக் கொடுத்ததை எல்லாம் திரும்ப கக்கி விடு " என்றார். அவர் சொல்வது நியாயம்தான் என்று அப்படியே யாக்ஞவல்கியர் கக்கிவிட்டு, சூரியனை குருவாக ஏற்றுக்கொண்டு சரணாகதி செய்தார். அனந்தமான வேதங்களில் அதுவரை லோகத்துக்கு வராதிருந்த இன்னொரு வித யஜுர் வேதத்தை சூரிய பகவான் அவருக்கு உபதேசித்தார். அது வாஜஸநேயி என்றும், சுக்ல யஜுஸ் என்றும் பேர் அடைந்தது. இது ' சுக்லம் ' என்பதால், ஏற்கெனவே வைசம்பாயனர் உபதேசித்தது, இதற்கு மாறாக ' கிருஷ்ண ' யஜுர்வேதம் என்று பெயர் பெற்றது.

கிருஷ்ண யஜுர் வேதத்தில் ஸம்ஹிதை, பிராம்மணம் என்று முழுக்கத் தனித்தனியாகப் பிரிக்காமல், ஸம்ஹிதா மந்திரங்களுக்கு அங்கங்கேயே ப்ராம்மண பாகங்களைச் சேர்த்திருக்கிறது. கலந்து போனதை ' கிருஷ்ண ' என்று சொல்வது வழக்கமாதலாலேயே இந்த வேதத்திற்கு அப்படிச் பெயர் வந்ததாகவும், கலக்காமல் தனித்தனியே ஸ்வச்சமாயிருப்பதை ' சுக்லம் ' என்று சொல்லும் வழக்கப்படி மற்றது அந்தப் பேர் பெற்றதாகவும் சொல்கிறார்கள்.

அத்தனை தேவதைகளுக்குமான ஸ்தோத்திர மயமாக இருப்பது ரிக்வேதத்தின் பெருமை. அதோடு சமூக வாழ்க்கை முறைகளையும் அதுவே நன்றாக எடுத்துச் சொல்கிறது என்று அறிஞர்கள் கொண்டாடுகிறார்கள். உதாரணமாக ஸூரியனுடைய புத்திரியின் கல்யாணத்தைப்பற்றி அது சொல்லியிருப்பதை அனுஸரித்துத்தான் விவாஹச் சடங்கே உருவாகியிருக்கிறது. புரூவரஸ்- ஊர்வசி ஸம்வாதம் ( உரையாடல்) போன்ற பல நாடக விசேஷமுள்ள பகுதிகளும் ரிக்வேதத்தில் உண்டு. பிற்காலத்தில் காளிதாஸாதிகள் இவற்றை விஸ்தரித்து எழுதியிருக்கிறார்கள். உஷஸ் (விடியற்காலையின் அதிதேவதை) பற்றிய வர்ணனை போன்ற ரிக் வேதப் பகுதிகளை, மிக உத்தமமான கவிதை என்று ரசிகர்கள் கொண்டாடுகிறார்கள்.

வேதங்களில் முதலாவதாக ரிக் வேதத்தை வைத்ததாலேயே, அதற்கு ஒரு ஏற்றம் இருக்கத்தானே வேண்டும் ? யஜுர் வேதத்தில் உள்ள கர்மா, ஸாம வேதத்தில் பண்ணப்பட வேண்டிய (ஸாம கானம் இவற்றிற்கும் தாய்ச்சரக்கு ரிக்வேத ரிக்குகள்தான்.

கர்மயோகத்தை நன்றாக அமைத்துக் கொடுத்திருப்பது யஜுர் வேதத்தின்

பெருமை, தர்ச பூர்ண மாஸம், ஸோம யாகம், வாஜபேயம், ராஜஸூயம், அச்வமேதம் முதலான அநேத யக்ஞங்களைப் பற்றியும், பலவிதமான ஸத்ர யாகங்களைப் பற்றியும் விரிவாக நமக்குத் தெரிவிப்பது கிருஷ்ண யஜுஸில் உள்ள தைத்ரீய ஸம்ஹிதைதான். அதோடுகூட மந்திரங்களும் இதில்தான் வருகின்றன. உதாரணமாக, இப்போது பெரும்பாலும் வழக்கில் சொல்லப்படும் ' ஸ்ரீ ருத்ரம் ' யஜுர் வேதத்திலிருந்து எடுத்ததுதான். ரிக் வேதத்திலும் பஞ்சருத்ரம் என்று ஐந்து ஸூக்தங்களை எடுத்திருந்தாலும் இன்று ' ஸ்ரீ ருத்ரம் ' என்ற மாத்திரத்தில் யஜுர் வேதத்தில் வருவதைத்தான் குறிப்பிடுவதாயிருக்கிறது. இதனால்தான் பரம சாம்பவரான அப்பய தீக்ஷிதர் தாம் யஜுர் வேதத்தில் பிறக்காமல் போனதற்காக விசனப்படுகிறார். அவர் ஸாம வேதி.

இன்றைக்கு அதிகம் பேர் அநுஸரிப்பது யஜுர் வேதத்தைத்தான். யஜுர் வேதிகள் தான் மெஜாரிட்டி. வடக்கே இருப்பவர்களில் பெரும்பாலோர் சுக்ல யஜுர் வேதிகளாகவும், தெற்கத்திக்காரர்களில் பெரும்பாலோர் கிருஷ்ண யஜுர் வேதிகளாகவும் இருக்கிறார்கள். உபாகர்மா (ஆவணி அவிட்டம்) என்று கவர்மென்டில் லீவ் விடுவதானால்கூட ரிக்வேதிகளுக்கோ, ஸாம வேதிகளுக்கோ என்றைக்கு உபாகர்மமோ அன்றைக்கு விடுவதில்லை ; யஜுர் உபாகர்மாவுக்குத்தான் லீவ் விடுகிறார்கள். யஜுர்வேதிகள் மெஜாரிட்டியாக இருப்பதாலேயே இப்படியாயிருக்கிறது.

ரிக் வேதத்திலுள்ள ' புருஷ ஸூக்தத் ' திலேயே சில மாறுதல்களோடு யஜுர் வேதத்திலும் வருகிறது. இன்று புருஷ ஸூக்தம் என்றால் பொதுவாக யாஜுஷமானது (யஜுர் வேதத்திலுள்ளது) தான் என்றாயிருக்கிறது.

அத்வைதிகள் விஷயத்திலும் யஜுர் வேதத்துக்கு ஒரு விசேஷம் இருக்கிறது. எந்த ஸித்தாந்தமானாலும் அதற்கு ஸூத்ரம், பாஷ்யம், வார்த்திகம் என்ற மூன்று இருக்கவேண்டுமென்பது வித்வான்கள் சொல்வார்கள். ஸூத்ரம் என்பது ஸித்தாந்தத்தை ரத்தினச் சுருக்கமாகச் சொல்வது. பாஷ்யம் என்பது அதற்கு விரிவுரை. இந்த விரிவுரையையும் ஸாங்கோபாங்கமாக விஸ்தரித்து விளக்குவதுதான் வார்த்திகம். அத்வைத ஸித்தாந்தத்தில் " வார்த்திககாரர் " என்றால் ஸுரேச்வராச்சார்யாள் என்பவரையே குறிக்கும். அவர் எந்த பாஷ்யத்துக்கு வார்த்திகம் செய்தார் ? உபநிஷத்துக்களை ஸூத்தரத்தின் ஸ்தானத்தில் வைத்தால், ஆசார்யாள் (சங்கரர்) அந்த உபநிஷத்துக்களுக்கு பாஷ்யம் பண்ணினார். பிரம்ம ஸூத்ரம் என்பதற்கும் பாஷ்யம் செய்தார். இந்த பாஷ்யங்களை மேலும் விளக்கியே ஆசார்யாளின் நேர் சிஷ்யரான ஸுரேச்வரர் வார்த்திகம் எழுதினார். அப்படி எழுதும்போது, அப்படி எழுதும்போது, ஆசார்யாள் செய்த பத்து உபநிஷத பாஷ்யங்களையும் எடுத்துக் கொள்ளாமல், அவற்றில் இரண்டை மட்டுமே எடுத்துக் கொண்டு, அவற்றுக்கு வார்த்திகம் எழுதினார். அந்த இரண்டு, தைத்ரீய உபநிஷத்தும், பிருஹதாரண்ய உபநிஷத்தும்

ஆகும். இவற்றில் தைத்திரீய உபநிஷத்தும், பிருஹதாரண்ய உபநிஷத்தும் ஆகும். இவற்றில் தைத்திரீயம் கிருஷ்ண யஜுஸைச் சேர்ந்தது ; பிருஹதாரண்யகம் சுக்ல யஜுஸைச் சேரந்தது. ஆக இரண்டுமே யஜுர் வேதம்தான்.

தசோபநிஷத்துக்கள் என்கிற முக்கியமான பத்து உபநிஷத்துக்களில் முதலாவதான ' ஈசாவாஸ்யம் ', முடிவான ' ப்ருஹதாரண்யகம் ' சுக்ல யஜுஸைச் சேர்ந்தது. ஆக இரண்டுமே யஜுர் வேதம்தான்.

தசோபநிஷத்துக்கள்தான் என்கிற முக்கியமான பத்து உபநிஷத்துக்களில் முதலாவதான ' ஈசாவாஸயம் ' முடிவான ' ப்ருஹதாரண்யகம் ' இரண்டுமே சுக்ல யஜுர் வேதத்தில் உள்ளவையே என்பதும் இந்த வேதத்துக்கு ஒரு பெருமை.

ஸாமம் என்றால் மனஸை சாந்தப்படுவது, சந்தோஷப் படுத்துவது என்று அர்த்தம். ஸாம-தான-பேத-தண்டம் என்கிறபோது, முதலில் எதிரியைக்கூட அன்பினாலே ஸ்நேஹிதமாக்கிக் கொள்வதற்கு ' ஸாமம் ' என்று பெயர் இருக்கிறது. இப்படி தேவ சக்திகளையும் பரமாத்மாவையும் நமக்கு அந்நியோந் நியமாகப் பண்ணித்தருவது ஸாம வேதம். ஒருத்தரை சந்தோஷப்படுத்த என்ன வழி ? ஸ்தோத்திரம் செய்தால் அது சந்தோஷப்படுத்துகிறது. அல்லது பாட்டு பாடினால் சந்தோஷப்படுத்துகிறது. ஸ்தோத்திரத்தையே பாட்டாகவும் கானம் செய்து விட்டால் இரட்டிப்பு ஸந்தோஷம் உண்டாக்கும் அல்லவா ? இம்மாதிரிதான் ரிக் வேதத்தில் ஸ்துதிகளாக இருக்கப்பட்ட மந்திரங்களில் பலவற்றையே ஸாம கானமாக ஆக்கித் தருவது ஸாம வேதம். ரிக் வேத மந்திரமேதான். ஆனால் ரிக்கில் முன்னே சொன்ன உதாத்தம், அநுதாத்தம் முதலான ஸ்வரங்கள் மட்டுமே இருக்க ஸாமத்திலோ கானமாகவோ அவற்றை நீட்டிப் பாட விதிகள் செய்திருக்கிறது. பிற்பாடு உண்டான ஸப்த ஸ்வர ஸங்கீதத்துக்கு மூலம் ஸாம கானம்தான். ஸாமகானத்தினால் ஸகல தேவதைகளும் பிரீதி அடைந்து விடுகிறார்கள். யக்ஞங்களில் ஆஹுதி தருவது மட்டுமின்றி, உத்காதா என்பவர் ஸாம கானம் பண்ணுவதாலேயே தேவதாநுக்கிரஹம் ஸித்திக்கிறது.

ஸோம யக்ஞங்கள் என்பதாக, ஸோம ரஸத்தைப் பிழிந்து ஆஹுதி கொடுத்துப் பண்ணுகிற யக்ஞங்களுக்கு ஸாமகானம் ரொம்ப முக்கியமாகும்.

ரிக்வேத மந்திரங்களேதான் என்றாலும், ஆத்ம சிரேயஸையும் தேவதா ப்ரீதியையும் விசேஷமாக அளிக்க வல்ல கானரூபத்தில் அமைந்துவிட்டதால், ஸாம வேதத்துக்குத் தனிச் சிறப்பு சொல்லப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே, கீதையில் " வேதானாம் ஸாமவேதோஸ்மி " என்கிறார். " வேதங்களுக்குள் ஸாமவேதமாக இருக்கிறேன் என்கிறார். " வேதங்களுக்குள் ஸாமவேதமாக இருக்கிறேன் என்கிறார். நல்லது, கெட்டது எல்லாமே அவர்தான். இருந்தாலும்

தன்னுடைய தெய்வீகம் விசேஷமாகப் பிரகாசிக்கிற இடங்களை அர்ஜுனனுக்குச் சொல்லிக் கொண்டு வரும் போது, ஸாம வேதத்தையே குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். அம்பாளுக்கு " ஸாம கான ப்ரியா " என்றே லலிதா ஸஹஸ்ர நாமத்தில் ஒரு பேர் வருகிறது. ' ரிக்வேத ப்ரியா ' ' யஜுர்வேத ப்ரியா ' என்று இல்லை. சியாம சாஸ்திரிகளும் ' ஸாம கான விநோதினி " என்று மீனாக்ஷியைப் பாடியிருக்கிறார். சிவ அஷ்டோத்திரத்தை எடுத்துக் கொண்டால், அங்கேயும் " ஸாம ப்ரியாய நம :" என்று வருகிறது. ' சந்தேக சாமம் ஓதும் வாயான் ' என்று தேவாரமும் போற்றுகிறது. ஈச்வரன், அம்பாள், விஷ்ணு என்ர மூன்று பேரையும் ரத்ன த்ரயம் என்பதாக, தேவதைகளின் உச்சஸ்தானத்தில் இருக்கப்பட்டவர்களென்று அப்பய தீக்ஷிதர் நிர்த்தாரணம் பண்ணியிருக்கிறார் (நிலை நாட்டியிருக்கிறார்). அப்படிப்பட்ட மூவருக்கும் ஸாம வேத ஸம்பந்தமே விசேஷமாகச் சொல்லியிருக்கிறது.

அதர்வன் என்றால் புரோஹிதர் என்று அர்த்தம். அந்தப் பெயரிலேயே ஒரு ரிஷி இருந்தார். அதர்வா என்ற அந்த ரிஷியின் மூலம் பிரகாசமானது அதர்வ வேதம். அதிலே பலவிதமான ஆபத்துக்களைப் போக்கிக் கொள்வதற்கும், சத்ருக்களை அழிப்பதற்கும் மந்திரங்கள் இருக்கின்றன. ப்ரோஸ், பொயட்ரி இரண்டும் கலந்து இருக்கின்றன. மற்ற வேத மந்திரங்களுக்கும் இந்த பிரயோஜனம் உண்டு. ஆனால் மற்ற வேதங்களில் இல்லாத அநேக தேவதைகள், இன்னம் கோரமான பல வித ஆவிகள் இவற்றைக் குறித்தும் மந்திரங்கள் அதர்வத்தில்தான் இருக்கின்றன. மாந்திரீகம் என்று இப்போது சொல்கிற அநேக விஷயங்கள் அதர்வ வேதத்திலிருந்து வந்தவைதான்.

ரொம்ப உயர்ந்த தத்வங்களைக் கொண்ட மந்திரங்களும் அதர்வத்தில் இருக்கின்றன. லோகத்தில் இருக்கப்பட்ட ஸ்ருஷ்டி விசித்ரத்தை எல்லாம் கொண்டாடுகிற ' ப்ருத்வீ ஸூக்தம் ' இந்த வேதத்தில் தான் வருகிறது.

யக்ஞசத்தை மேற்பார்வை இடுகிற பிரம்மாவை அதர்வ வேதத்துக்குப் பிரதிநிதியாகச் சொல்லியிருப்பது இதற்கு ஒரு பெருமை. இதன் ஸம்ஹிதா பாகத்தின் அத்யயனம் வடக்கே ரொம்ப ரொம்பத் தேய்ந்து போய் தெற்கே அடியோடு இல்லாமல் போய்விட்டாலும் பிரஸித்தமான பத்து உபநிஷத்துக்களுக்குள், ' பிரச்னம் ', ' முண்டகம் ', ' மாண்டூக்யம் ', என்ற மூன்று உபநிஷத்துக்கள் அதர்வ வேதத்தைச் சேர்ந்தனவாகவே உள்ளன. முமுக்ஷுவானவன் (ஞான சாதகன்) மோக்ஷம் பெறுவதற்கு மாண்டூக்ய உபநிஷத் ஒன்றே போதும் என்ற வசனம் இருக்கிறது. அப்படிப்பட்ட உபநிஷத் அதர்வத்தை சேர்ந்ததாகவே இருக்கிறது.

பிற்காலத்தில் அதர்வ அத்யயனம் விட்டுப் போனாலும் நீண்ட காலம் அது வழக்கில் இருந்திருக்கிறது என்று கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. திண்டிவனத்திற்குப் பக்கத்தில் பேரணிக்குக் கிட்டே எண்ணாயிரம் என்ற

ஊரிலும், காஞ்சீபுரத்திற்குப் பக்கத்திலுள்ள வாலாஜாபாத் ஸமீபத்திலேயும் கிடைத்திருக்கிற கல்வெட்டுக்களில், ஆங்காங்கே இருந்த பெரிய வித்யாசாலைகளைப் பற்றித் தகவல்கள் இருக்கின்றன. இவற்றைப் பார்த்தால், பிற்காலச் சோழர் ஆட்சி காலத்திலுங்கூடத் தமிழ் தேசத்தில் அதர்வ வேத அத்யயனம் இருந்திருக்கிறது என்று தெரிகிறது.

வடக்கே ஒரிஸாவில் இருக்கும் பிராமணர்களில் பதினெட்டுப் பிரிவுகள் உள்ளன. அவர்களில் 'ஆதர்வணிகர்' என்றே ஒரு பிரிவுக்குப் பெயர். அதர்வ வேதிகள் என்பதே இதற்கு அர்த்தம். இப்போதும் குஜராத், ஸௌராஷ்டிரம், கோசலம் முதலான தேசங்களில், ரொம்பவும் அபூர்வமாக அதர்வ வேதிகள் இருக்கிறார்கள்.

மந்திரங்களுக்குள் மஹாமந்திரமாக விளங்கும் காயத்ரி மூன்று வேத ஸாரம் என்று கருதபபடுகிறது. மூன்று வேதம் என்பதால் இங்கே அதர்வத்தை சேர்க்கவில்லை என்றாகிறது. இதனால் அதர்வ வேதத்தை அத்யயனம் பண்ணுமுன் புனருபனயனம் (இரண்டாம் முறை பூணூல் கல்யாணம்) பண்ணவேண்டும் என்ற அபிப்ராயமும் இருக்கிறது. பொதுவாக பிரம்மோபதேசத்தில் உபதேசிக்கப்படும் காயத்ரிக்கு "த்ரிபதா காயத்ரி" என்று பெயர். அது மூன்று பாதம் உடையதாக இருப்பதால் இப்படிப் பெயர். ஒவ்வொரு பாதமும் ஒரு வேதத்தின் ஸாரமாகும். அதர்வ வேதத்துக்கு வேறு காயத்ரி உண்டு. இப்போது அதர்வ வேதிகள் என்று யாரும் இல்லாத போது, அந்த வேதத்தை மற்ற வேதக்காரன் அத்யயனம் பண்ண வேண்டுமானால் இன்னொரு முறை உபநயனம் செய்து கொண்டு அதர்வ காயத்ரியை உபதேசம் வாங்கிக் கொண்டு, பிறகு அந்த வேதத்தைக் கற்க வேண்டும். மற்ற மூன்று வேதங்களைச் சேர்ந்தவர்கள் அந்த மூன்றில் மற்ற இரண்டை அத்யயனம் பண்ண வேண்டுமானால், இப்படி புனருபனயனம் செய்து கொள்ள வேண்டியதில்லை. ஏனென்றால், இந்த த்ரிவேதிகளுக்கும் பொதுவாக ஒரே காயத்ரி இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*பொதுவான பெருங் கருத்து*

இப்படி வேதங்கள் பலவாக இருந்தாலும், அதில் ஒவ்வொன்றைச் சேர்ந்தவர்களிடையே ஆசாரங்களில் சில வித்தியாஸங்கள் இருந்தாலும், எல்லா வேதங்களும் ஒரே லக்ஷ்யத்தை உடையவைதான். ஸமஸ்த லோகத்திற்கும், ஸகல ஜீவ ஜந்துக்களுக்கும் க்ஷேமத்தைக் கோருவதும், அவனவன் ஆதாமாவை அபிவிருத்தி பண்ணிக்கொண்டு, ஸத்ய தத்வத்தோடு சாச்வதமாகச் சேர்ந்து விடுவதும்தான் எல்லா வேதங்களுக்கும் பொதுவான லக்ஷ்யம்.

வேதங்களில் பொதுவான இன்னொரு பெருமை, 'இது ஒன்றுதான் வழி', 'இது ஒன்றுதான் தெய்வம்' என்று அது சொல்லாமல், சிரத்தையோடு எந்த மார்க்கத்தை அனுஸரித்து, எந்தத் தேவதையை எப்படி உபாஸித்தாலும், அதுவே சத்தியமான ஒரு வழியில் கொண்டு விட்டுவிடும் என்பதுதான். வேதம்தவிர இந்த மாதிரிப் பல வழிகளை ஆதரித்துப் பேசுகிற மதப் பிரமாண நூல் வேறெதுவுமே லோகத்தில் இருக்கவில்லை. தன் வழி ஒன்றே மோட்ச மார்க்கம் என்றுதான் அந்தந்த மதத்தின் மூலநூலும் சொல்லும். ஒரே ஸத்தியத்தைப் பல பேர் பல தினுசாகக்கண்டு கொள்ளலாம் என்று விசால மனப்பான்மையோடு சொல்வது வேதம் மட்டும்தான்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*பிராம்மணம், ஆரண்யகம்*

இதுவரைக்கும் நான் வேதம் என்று சொன்னதெல்லாம், அநேகமாக ஒரு வேத சாகையின் ஸம்ஹிதா பாகத்தைத்தான். ஸம்ஹிதைதான் வேதத்தின் main text. இதைத் தவிர, ஒவ்வொரு வேதத்திலும் ப்ராஹ்மணம் என்று ஒரு பாகமும், ஆரண்யகம் என்று ஒரு பாகமும் உண்டு.

ப்ராஹ்மணம் என்ற பாகத்தில் வைதிகமான கர்மாக்கள் இன்னின்ன வென்று விதிக்கப்படுகின்றன. அவற்றை இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்றும் அவற்றில் விளக்கியிருக்கிறது. வேத ஸம்ஹிதையில் வருகிற மந்திரங்களை யக்ஞம் என்ற காரியமாக்குகிறபோது இன்னின்ன வார்த்தைக்கு இப்படி அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்றும் பிராம்மணத்தில் சொல்லியிருக்கும். யக்ஞாதி கர்மாக்களைப் பண்ணுவதற்கு இவை guide-bookஎன்றும் சொல்லலாம்.

ஆரண்யகம் என்பதில் 'ஆரண்ய'என்ற வார்த்தை இருக்கிறது. தண்டகாரண்யம், வேதாரண்யம் என்றெல்லாம் கேள்விப்பட்டிருப்பீர்கள். அரண்யம் என்றால் காடு. வேத ஸம்ஹிதையிலோ, பிராம்மணத்திலோ "வீட்டை விட்டுக் காட்டுக்குப் போ"என்று சொல்லியிருக்கவில்லை. வீட்டிலே வாழ்ந்து கொண்டு கிருஹஸ்த தர்மத்தை (இல்லற வாழ்நெறியை) நடத்திக் கொண்டு வரும்போது பண்ண வேண்டியதுதான் யக்ஞம் முதலான வைதிக கர்மாநுஷ்டானங்கள். ஆனால், இவற்றால் சித்த சுத்தி ஏற்பட்டபின், காட்டுக்குப் போய் மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்காரத்தான் வேண்டும். அதற்கான பக்குவத்தை அடைவதற்குத்தான்

அத்யயனமும், யக்ஞ கர்மானுஷ்டானமும் பூர்வாங்கம். காட்டுக்கு ஒடுவதற்குத் தயார் பண்ணுவதுதான் ஆரண்யகம்.

ஸம்ஹிதையில் மந்திரமாகவும், பிராம்மணத்தில் கர்மாவாகவும் இருப்பதன் தத்வார்த்தம் என்னவோ, உள்பொருள் என்னவோ அந்த ஸித்தாந்தங்களை, ஃபிலாஸபியை, விளக்குவதற்கே ஆரண்யகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மறை பொருளாகவும், உருவகமாகவும் வேதத்தில் சொல்லியிருப்பதை ஆரண்யகம் விண்டு விளக்கும். யாகம் பண்ணுவதைவிட அதன் உள்ளர்த்தத்தை விசாரணை செய்வதுதான் ஆரண்யகங்களுக்கு முக்கியம். காட்டிலே (ஆரண்யகங்களிலே) ஆசிரமவாஸிகள் சேர்ந்து பண்ணின இப்படிப்பட்ட ஆராய்ச்சிகள் ரூபமாகவே ஆரண்யகங்களை இக்கால அறிவாளிகள் கருதுகிறார்கள். ஆரண்யகமாகவும் உபநிஷத்தாகவும் சேர்ந்து இருக்கப்பட்ட ப்ருஹதாரண்யக உபநிஷத், அச்வமேத யாகத்தைப் பற்றிய இப்படிப்பட்ட தத்வ விளக்கத்தோடுதான் ஆரம்பிக்கிறது.

## *உபநிஷதங்கள்*

இந்த ஆரண்யகங்களுக்கு முடிவிலேதான் உபநிஷதங்கள் வருகின்றன. ஸம்ஹிதை மரம் என்றால், அதற்கு பிரமாணம் பூ, ஆரண்யகம் காய், உபநிஷந்தான் முடிவான பழம் (பலம்-பலன்). ஞானமார்க்கத்திலே ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை ஸாதித்துக் கொடுப்பதற்காக ஏற்பட்ட நேர் ஸாதனம் உபநிஷத்துதான். இதில் நம்மைச் சேர்ப்பதற்கே ஸம்ஹிதையும், பிராம்மணமும் ஆரண்யகமும் இருக்கின்றன. உபநிஷத்துக்களில் பலதரப்பட்ட வித்யைகள், யக்ஞங்கள், தேவதா உபாஸனைகள் அங்கங்கே சொல்லியிருந்தாலும், முக்கியமாக அது தத்வ விசாரம்தான். கர்மா எல்லாம்

விட்டுப் போகிற நிலையைச் சொல்வதுதான் உபநிஷதங்களின் பரம தாத்பரியம். இதை வைத்துத்தான் வேதத்தையே கர்மகாண்டம், என்று இரண்டாக பிரித்திருக்கிறது. இதையே (முறையே) பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை என்று சொல்வதுண்டு.

கர்ம காண்டத்தை ஆராய்ச்சி பண்ணி, அதுவே முடிந்த முடிவான பலன் என்று ஜைமினி மஹரிஷி செய்திருக்கிற சாஸ்திரத்துக்குப் "பூர்வ மீமாம்ஸை"என்று பெயர் இம்மாதிரியே ஞானகாண்டத்தை விஸாரித்து அதையே பரம தாத்பரியமாக முடிவு பண்ணி, வியாஸர் செய்த பிரம்ம ஸூத்ரம் "உத்தர மீமாம்ஸை"எனப்படுகிறது. கர்ம காண்டத்தோடு பார்க்கும்போது, உபநிஷத் பாகமான ஞானகாண்டம் ரொம்பச் சின்னதுதான். இதற்கேற்பவே ஜைமினி ஸூத்ரம் ஆயிரம் ஸெக் ஷன் கொண்ட, "ஸஹஸ்ர அதிகரணி"யாகவும், பிரம்ம ஸூத்ரம் இருநூறுக்கும் குறைவான அதிகாரணமுள்ளதாகவும் இருக்கின்றன. ஒரு விருக்ஷத்தில் இலைகள் நிறைய இருந்தாலும் புஷ்பமும் பழமும் கொஞ்சமாகவே இருக்கிறார்போல், வேத விருக்ஷத்தில் கர்மகாண்டம் நிறையவாகவும், உபநிஷத் பாகம் கொஞ்சமாகவும் இருக்கிறது.

உபநிஷத்தின் தத்வ விசாரம் என்பது இதர தேசங்களில் ஃபிலாஸஃபிகாரர்கள் புத்தி பூர்வமாக ரொம்பவும் ஆழமாக ஸத்யத்தை ஆராய்கிற மாதிரி மட்டும் முடிந்து விடவில்லை. புத்தியினால் ஆராய்ந்ததை அநுபவத்தில் தெரிந்து கொள்வதுதான் முக்கியம். ஹல்வா தித்திக்கிறது என்று தெரிந்து கொண்டால் மட்டும் என்ன பிரயோஜனம்?அதைச் சாப்பாடுத் தித்திப்பை அநுபவிக்க வேண்டும். மற்ற ஃபிலாஸஃபிகளுக்கு இல்லாமல் உபநிஷதங்களுக்கு மாத்திரம் இருக்கிற பெருமை, அது மந்திராக்ஷரங்களைக் கொண்டதாதலால் எந்த தத்வங்களைச் சொல்கிறதோ அதை மந்திர சப்தத்தின் சக்தியால் அநுபவத்துக்குக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறது. மற்ற தேசத்து ஃபிலாஸஃபிகள் போல் வெறும் அறிவாராய்ச்சியாக அதை அநுபவத்தில் உறைக்கும்படியாகப் பண்ணுவதற்கு எப்பேர்ப்பட்ட வாழ்முறை வேண்டுமோ அப்பேர்ப்பட்ட தர்மங்கள் நிறைந்த ஒழுக்கமான வாழ்க்கையை வேதத்தின் கர்மகாண்டம்

சொல்லியிருக்கிறது. அதன்படி வாழ்ந்து, தன்னைச் சுத்தப் படுத்திக் கொண்டு, அப்புறம் கர்மாக்களை விட்டுவிட்டு, இந்த உபநிஷத்துக்களை ஒருத்தன் அநுஸந்தானம் பண்ணும்போது, அதிலுள்ள தத்வங்கள் வெறும் புத்திவாதமாக இல்லாமல் அவனுடைய அநுஷ்டானத்திலேயே ஜீவனோடு பிரகாசிக்கின்றன. இந்த தத்வங்களுக்கெல்லாம் உச்சியில்தான் ஜீவப் பிரம்ம அபேதம் இருக்கிறது.

பரமாத்மாவும் ஜீவாத்மாவும் இரண்டறக் கலக்கும் அந்த உச்சஸ்தானத்தைப் பிடிப்பதற்காகத்தான், ஸகல கர்மாக்களால் பக்குவம் பெற்ற ஒருத்தன், ஸகல கர்மங்களையும் விட்டுவிட்டு ஸந்நியாஸம் வாங்கி கொள்வது. அப்படி வாங்கி கொள்கிற ஸமயத்தில் அவனுக்கு மஹா வாக்யங்கள் என்று நாலு மந்திரங்கள் உபதேசிக்கப் படுகின்றன. இந்த நாலும் ஜீவப்பிரம்ம அபேதத்தைச் சொல்லுபவையே. அவற்றை மனனம் பண்ணி, நிதித்யாஸனம் என்ற பெயரில் ஆழ்ந்து தியானம் செய்தால், அபேத நிலை பிரத்யக்ஷமாகவே ஸித்தித்து விடும். இப்படிப்பட்ட நாலு மஹாவாக்கியங்களும் நாலு உபநிஷத்துக்களில்தான் இருக்கின்றன. எத்தனையோ கர்மா, தினுசு தினுசான பிரார்த்தனை, வாழ்க்கை விதிகள் எல்லாம் ஸம்ஹிதை, பிராம்மணம் முதலான பாகங்களில் இருந்தாலும், முடிந்த முடிவாகப் பரம லக்ஷ்யத்தைப் பிடிக்க வேண்டும் என்று வருகிறபோது, அதை ஸாதித்துக் கொடுப்பதாக இருப்பது உபநிஷத் மஹாவாக்கியங்கள்தான் .

"உயர்ந்த அநுபவ ஞானமேதான் பிரம்மம்"என்ற தாத்பரியத்தில் ஐதரேய உபநிஷத்தில் ஒரு மஹாவாக்கியம் இருக்கிறது. இது ரிக்வேதத்தைச் சேர்ந்த உபநிஷத்து. "நான் பிரம்மமாக இருக்கிறேன்"எனறு அர்த்தமுள்ள ஒரு மஹாவாக்கியம் ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் வருகிறது. இது யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. "நீயும் பரமாத்மாவும் ஒன்றுதான்" என்று சிஷ்யனுக்கு குரு உபதேசிக்கிற ரூபத்தில் சாந்தோக்ய உபநிஷத்திலே ஒரு மஹா வாக்கியம் இருக்கிறது. இதுதான் ஸாம வேதத்துக்கான மகா வாக்கியம். இந்த ஆத்மா என்பது பிரம்மமேதான் என்று சொல்கிற மஹாவாக்யம், மாண்டூக்ய உபநிஷத்தில் வருகிறது. இது அதர்வ வேதத்தைச் சேர்ந்த உபநிஷத்துக்களிலேயே வருகின்றன.

ஆசார்யாள், கடைசியில் உபதேச ஸாரமாகச் சொன்ன "ஸோபான பஞ்சக"த்தில், வேதத்தை (ஸம்ஹிதையை) அத்யயனம் பண்ணுங்கள், அதில் (பிராம்மணத்தில்) சொல்லியுள்ள எல்லா கர்மாக்களையும் பண்ணுங்கள் என்று ஆரம்பித்து, இந்த மஹாவாக்யங்களில் உபதேசம் வாங்கிக் கொண்டு, அவற்றையே அநுஸந்தானம் செய்து பிரம்ம பாவத்தை அடையுங்கள் என்று முடிக்கிறார்.

அத்தனை வேதங்களுக்கும் முடிவான நிலை உபநிஷத்தில் சொன்னதுதான். உபநிஷத்துக்களுக்கே "வேதாந்தம்"என்ற பெயர் இருக்கிறது. அந்தம் என்றால் முடிவு;வேதத்துக்கு அந்தமாக இருப்பது வேதாந்தம்.

உபநிஷத்துக்கள் இரண்டு விதத்தில் வேதத்துக்கு முடிவாக இருக்கின்றன.

ஒவ்வொரு சாகையை எடுத்துக் கொண்டாலும் முதலில் ஸம்ஹிதை, அப்புறம் பிராம்மணம், பிறகு ஆரண்யகம் என்று வந்து, அந்த ஆரண்யகத்தின் கடைசியில் உபநிஷத்து வருகிறது. அதனால் ஒவ்வொரு சாகைக்கும் முடிவாக இருக்கிறது. அதோடுகூட வேதங்கள் சொல்லும் தாத்பரியத்துக்கும் முடவாக, லக்ஷ்யமாக இருப்பது உபநிஷத்துக்கள்தான். இப்படியாக புஸ்தகங்களில் அமைப்பு (order of texts), தாத்பரியம் என்ற இரண்டு விதத்திலும் வேதங்களுக்கு முடிவாக இருப்பவை உபநிஷத்துக்கள். ஊருக்குக் கோயில், கோயிலுக்குக் கோபுரம், கோபுரத்துக்கு சிகரம் என்று உயர்ந்துகொண்டே போகிற மாதிரி, நம்முடைய தத்துவங்களுக்கு சிகரமாக, வேத முடிவாக இருப்பது உபநிஷத்துக்களே.

'உப-நி-ஸத' என்றால் பக்கத்திலே உட்கார்ந்து கொள்வது என்று அர்த்தம். சிஷ்யனை இப்படி உட்கார்த்திவைத்துக் கொண்டு குருவானவர் செய்த உபதேசம்தான் உபநிஷத்துக்கள். பிரம்மத்துக்கு ப் பக்கத்திலேயே போய்ச் சேரும்படியாகச் செய்வது என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். உபநயனம் என்றால், 'குருவிடம் கொண்டுவிடுவது', 'பரமாத்மாவிடம் கொண்டு விடுவது' என்று இரண்டு விதமாகவும் அர்த்தம் பண்ணிக் கொள்ள இருப்பதுபோல, உபநிஷத் என்றாலும் இப்படி இரட்டைப் பொருள் கொள்ளலாம்.

பக்கத்தில் வைத்துக் கொண்டு செய்கிற உபதேசம் என்றால். அது ரஹஸ்யமானது என்று அர்த்தம். மதிப்புத் தெரியாத அபக்குவிகளுக்கு அது சொல்லத் தக்கதல்ல. இதனால்தான் உபநிஷத்துக்களுக்குள்ளேயே கதா பாகங்களாக இல்லாமல் ரொம்பவும் ஸூக்ஷ்மமான தத்தவங்களைச் சொல்கிறபோது, 'இது உபநிஷத், இது உபநிஷத்'என்று குறிப்பிட்டுச் சொல்லியிருக்கும். வேதத்தில் மறை பொருளாக இருக்க வேண்டியவற்றை 'ரஹஸ்யம்'என்பார்கள். வேதாந்தமான உபநிஷத்தில் அப்படிப்பட்ட ரஹஸ்யங்களையே 'உபநிஷத்'என்று சொல்லியிருக்கும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*பிரம்ம ஸூத்ரம்*

ஒவ்வொரு ஸித்தாந்தந்துக்கும் ஸூத்ரம், பாஷ்யம், வார்த்திகம் என்ற மூன்று உண்டு என்று சொன்னேன். இப்போது நம் தேசத்திலிருக்கப்பட்ட சங்கரர், ராமாநுஜர், மத்வர், ஸ்ரீகண்டர் (சைவ சம்பிரதாய ஆசாரியர்) முதலியவர்களின் ஸித்தாந்தங்களுக்கெல்லாம் வேதாந்த மதங்கள் என்றே பொதுப்பெயர். இந்த ஆசார்யர்கள் எல்லோருமே உபநிஷத்துக்களில் தங்கள் தங்கள் கொள்கையைத்தான் சொல்லியருக்கிறது என்று அர்த்தம் காட்டுகிறார்கள். உபநிஷத்துக்களில் பத்தை முக்கியமாக எடுத்து அவற்றுக்குத் தங்கள் ஸித்தாந்தப் பிரகாரம் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்கள். அதனால் வேதாந்த மதத்துக்கு ஸூத்ரத்தின் ஸ்தானத்தில் உபநிஷத்துக்களையே சொல்ல வேண்டும். "ஸ்தானத்தில்"தான்;வாஸ்தவமாக உபநிஷத்துக்கள் ஸூத்ர ரூபத்தில் இல்லை.

ஸூத்ரம் என்றால் எப்படியிருக்க வேண்டும்?ரொம்ப ரொம்பச் சுருக்கமாகத் தத்வங்களைச் சொல்லிக் கொண்டே போக வேண்டும். மினிமம் (அதம பக்ஷமான) வார்த்தைகளில் சொல்லிக் கொண்டு போகிறதை (Aphorism-என்பதை)த் தான் ஸூத்திரம் என்பது என்று சொல்லமுடியாது. ஆனாலும் வேதாந்த ஸம்பிரதாயங்கள் எல்லாவற்றுக்கும் ஆதார நூலாக (basic text-ஆக) ஒரு அசல் ஸூத்ர புஸ்தகமும் இருக்கிறது. அதுதான் ப்ரஹ்ம ஸூத்ரம் என்பது.

ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு ஒவ்வொரு ஸம்பிரதாயத்தை ஒட்டியும் பாஷ்யம் உண்டு. இந்த பிரம்ம ஸூத்ரம் என்பது என்னவென்றால், உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கிற தத்வங்களின் ஸாரத்தை ரத்தினச் சுருக்கமாக ஸூத்ர ரூபத்தில் வியாஸ மஹரிஷி எடுத்துச் சொல்லியிருப்பதுதான். பதரி என்னும் இலந்தை மரத்தடியில் இருந்ததால், வியாசருக்கு பாதராயணர் என்றும் ஒரு பேர் உண்டு.

அதனால், இதற்கு பாதராயண ஸூத்ரம் என்ற பெயரும் இருக்கிறது.

ஜீவன் யார்?அவன் வாழ்கிற ஜகத் என்பது என்ன?இதற்கெல்லாம் காரணமான ஸத்ய தத்துவம் என்ன?என்கிற மூன்று விஷயங்களை முக்கியமாக விசாரிக்கும் வேதாந்த ஸம்பிரதாயங்களுக்கெல்லாம் ஆதார நூலாக பிரம்ம ஸூத்ரம் இருக்கிறது. ஆனால் அதுவும் வியாஸரின் சொந்த அபிப்ராயங்களைச் சொல்வதல்ல. ஏற்கெனவே இருந்த வேதாந்த சாஸ்திரமான உபநிஷத்துக்களின் அர்த்தத்தை விசாரித்து வியாஸர் பண்ணினதுதான் அது. வேதத்தின் பிற்பகுதியில் வரும் உபநிஷத்தை ஆராய்வதால், "உத்தர மீமாம்ஸை"என்று அதற்குப் பேர்.

அதில் ஐந்நூற்றுச் சொச்சம் (555) ஸூத்ரங்கள் இருக்கின்றன. அந்தப் புஸ்தகம் நாலு அத்யாயங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு அத்யாயமும் நாலு பாகங்களாக இருக்கிறது. மொத்தம் எல்லாவற்றிலும் சேர்ந்து, 'அதிகரணம்'என்கிற சுமார் இருநூறு (191) ஸெக்ஷன்கள் இருக்கின்றன.

ஸந்நியாஸ லக்ஷ்யத்தை முடிவாகச் சொல்வதால் "பிக்ஷு ஸூத்ரம்"என்றும், சரீரத்துக்குள் இருக்கிற ஆத்மாவைப் பற்றி விசாரிப்பதால் "சாரீரகம்"என்றும் பிரம்ம ஸூத்ரத்துக்குப் பெயர்கள் உண்டு.

ஸூத்ரம் என்றால் கயிறு என்று ஒரு அர்த்தம். மங்கள ஸூத்ரம் என்று தாலிக் கயிற்றைச் சொல்கிறோமல்லவா?இந்த அர்த்தத்தை வைத்து ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்தில் (1.1.2) சிலேடையாகச் சொல்கிறார்.

வேதாந்த வாக்ய குஸும க்ரதனார்த்தத்வாத் ஸூத்ராணாம் வேதம் என்ற விருக்ஷத்தில் பூத்த உபநிஷத் புஷ்பங்கள் உதிர உதிரியாக இருந்தால் நாம் எப்படி அதை மாலையாகப் போட்டுக்கொள்ள முடியும்?அதற்காக உபநிஷத் புஷ்பங்களையெல்லாம் ஒன்றாகத் தொடுத்துத் தருகிற கயிறாக இந்த பிரம்ம ஸூத்ரம் இருக்கிறது என்று ஆசார்யாள் சொல்கிறார்.இன்றைக்கு ஹிந்து மதம் என்ற பெயரில் உள்ள எல்லா ஸம்பிரதாயங்களுக்கும் , ஸித்தாந்தங்களுக்கும், ஆதாரமான ஸூத்ரம் பிரம்ம ஸூத்ரம என்றால், அந்த பிரம்ம ஸூத்ரத்திற்கு ஆதாரமாக இருப்பது உபநிஷத்துக்கள்தான். இதனால் தான் வைதிக மதங்களை எல்லாமே "ஔபநிஷத மதங்கள்"என்று சொல்கிற வழக்கமும் இருக்கிறது.

" Vedanta, Vedanta" என்று மேல்நாட்டு அறிவாளிகள் கொண்டாடுவது உபநிஷத்துக்களைத்தான். இஹலோகத்தின் அல்ப விஷயங்களை விட்டுக் கொஞ்சம் வைராக்யமாக, ஞானமாக யாராவது ஏதாவது சொன்னாலும், "என்னடா வேதாந்தம் பேசுகிறாய்?"என்றுதான் பொது வழக்கில் கேட்கிறோம்!அப்படியாக, ஞானத்தைப் பூரணமாக வைத்து இந்த உபநிஷத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன.

வேதத்தின் முடிவு என்கிற மாதிரியே வேதத்தை ஒரு புருஷனாகச் சொன்னால்,

அந்த வேத புருஷனுக்கு சிரஸாக இருப்பது உபநிஷத்துக்களே என்ற அர்த்தத்தில், அதற்கு 'ச்ருதி சிரஸ்'என்றும் பெயர் இருக்கிறது. 'சு(ரு)தி முடி'என்றும், 'மறை முடி' என்றும் தமிழில் பெயர் இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *வேதமும் வேதாந்தமும் முரணானவையா ?*

வேதத்தின் கர்மகாண்டத்தில் என்ன காரியங்களை எல்லாம் சொல்லியிருக்கிறதோ, அதை எல்லாம் இல்லாமல் பண்ணுவதாக இருக்கிறது அதே வேதத்தின் ஞானகாண்டமான உபநிஷத்து!கர்ம காண்டத்தில்

தேவதைகளை உபாஸிக்கச் சொல்லி, அதற்கு ஏகப்பட்ட வழிபாட்டு முறைகளைக் கொடுத்துவிட்டு, இங்கே உபநிஷத்தில் அதே வேதம், "தேவ பூஜைபண்ணுகிறவன் அசடு, அவன் பசுவுக்கு ஸமானம்"என்று கேலி பண்ணுகிறது.

இது இப்படி ரொம்பவும் விசித்ரமாக இருக்கிறது, ஒரே விதத்தின் ஆரம்பத்தில் என்ன இருக்கிறதோ, அதற்கு முழுக்க மாறாக அதன் முடிவு இருக்கிறது. ஒரு பக்கம் கர்ம மயமாகவும், இன்னொரு பக்கம் ஞான மயமாகவும் வித்யாஸமாக இருக்கிறது. இந்த வித்யாஸத்தினால், "வேதம்"என்றாலே கர்மகாண்டம் என்றும், "வேதாந்தம்"என்றால் ஞான காண்டமான உபநிஷத் என்றும் பிரித்து அர்த்தம் பண்ணிக்கொள்கிற அளவுக்கு ஆகியிருக்கிறது.

வேதாந்தத்தைத்தான் கீதையில் பகவான் சொல்லியிருக்கிறார். அவரே அதே கீதையில் (கர்மகாண்டமான) வேதத்தைத் திட்டுத் திட்டு என்று திட்டுகிறார். புத்தரும், மஹாவீரரும்தான் முதலில் வேதத்தைத் திட்டினார்கள் என்று பொதுவில் சொல்கிறார்கள். இது சரியில்லை. ஸாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மாதான் இவர்களுக்கு முந்தியே வேதத்தை நன்றாக வைதிருக்கிறார். ஒரிடத்தில் (ll.42-45) "வேதமெல்லாம் ஸத்வ-ரஜோ-தமோ-குண ஸம்பந்தமானதுதான். இந்த முக்குணங்களையும் கடந்த நிலையை நீ அடையவேண்டும்"என்று அர்ஜுனனிடம் சொல்கிறார். "காமாத்மாக்களாக ஸ்வர்க்கத்தில் ஆசை வைத்து, போகத்தையும் ஐச்வர்யத்தையுமே நினைத்து கொண்டு, இந்த வேத கர்மடர்கள் மறுபடி மறுபடி ஜன்மா எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்கு ஸமாதியில் உண்டாகிற நிச்சயமான புத்தி ஏற்படாது"என்றெல்லாம் நிந்திக்கிறார். இன்னோரிடத்தில் ( Xl -48) "வேத யக்ஞ அத்யயனங்களால் நான் அடையத் தக்கவனில்லை"என்கிறார்.

வேதம்தான் ஸகல தர்மத்துக்கும் மூலம் என்று இத்தனை நேரம் நான் நீள நெடுக அளந்துவிட்டு, இப்போது இப்படிச் சொன்னால் முரணாக இருக்கும்! தீர விசாரித்துப் பார்த்தால், இதிலே முரணாக ஒன்றும் இல்லை என்று தெரியும். சாதாரணமாக நாம் இருக்கப்பட்ட நிலையில், முக்குணங்களையும் கடந்து மனஸை ஆடாமல் அசையாமல் நிறுத்தித் தியானம் பண்ணுவது, உபநிஷத்தில் சொல்கிற ஆத்மாவின் ஸத்ய நிலையைத் தெரிந்து கொள்வது என்றால், துளிக்கூட முடியாமல்தானே இருக்கிறது?அந்த நிலையில் நம்மைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு சேர்ப்பதற்காகத்தான் வேத கர்மானுஷ்டானங்கள் யாவும் இருக்கின்றன. லோகம் என்பது நிஜம் என்று நினைத்துக் கொண்டிருக்கிற வரையில், இதிலே நாம் க்ஷேமமாக இருப்பதற்காகத் தேவதைகளை உபாஸிக்கிறோம். லோகம் நிஜம் என்று நினைப்பதால், அந்த லோகத்துக்கும் தேவர்களால் க்ஷேமத்தை உண்டு பண்ணுகிறோம். இந்த லோகம் மாதிரியே தேவலோகம் நிஜம், தேவதைகளும் நிஜம் என்று வைத்துக் கொண்டு அந்த

தேவதைகளுக்கு உபகாரம் பண்ணி, அவர்களிடமிருந்து பிரத்யுபகாரமாகப் பல நன்மைகளை பெறுகிறோம். இந்த லோகத்தில் ஸந்தோஷமாக வாழ்க்கை நடத்துவது போலவே, தேவலோகத்துக்குப் போய் ஸ்வர்க்க போகங்களை அநுபவிக்க ஆசைப்படுகிறோம். இதெல்லாம் சரிதான். ஆனால் இதோடேயே நின்றுவிட்டால், முக்கியமான லக்ஷ்யத்தைக் கோட்டை விட்டதாக அல்லவா ஆகிவிடுகிறது?வாஸ்தவத்தில் நாம் பரமாத்மாவை சாச்வதமாகச் சேர்ந்திருப்பதுதானே லக்ஷ்யம்?அதை விட்டுவிட்டு, மற்றவற்றை மட்டும் பிடித்துக் கொண்டிருந்தால் அது அசட்டுத்தனந்தானே?

நாம் இருக்கிற நிலையில் லோகத்தைப் பொய்யென்று நினைத்துக் கொள்ள முடியவில்லை என்பதால், 'சரி, மெய்யென்றுதான் வைத்துக் கொள்'என்று சொல்லி, லோக க்ஷேமத்துக்கான கர்மாக்களை வேதம் கொடுத்திருக்கிறது. நாம் உள்ள நிலையில் அரூபமான ஒரே பரமாத்மாவை அபேதமாக உபாஸிக்க முடியவில்லை என்பதால், அநேகம் தேவதைகளின் உபாஸனைகளை அது கொடுத்திருக்கிறது. ஆனால் இப்படிக் கர்மாவும் உபாஸனையும் பண்ணும் போதே, லோகமெல்லாம் அடிபட்டுப்போய், கர்மாவும் நின்று விடுகிற ஞானநிலை நமக்கு வர வேண்டும்;பல தேவதைகளை உபாஸிப்பதாக இல்லாமல், பரமாத்மாவுக்கு அன்னியமாக நாம் என்றே ஒன்று இல்லை என்று கரைகிற நிலை வரவேண்டும். அதற்கு ஆரம்பப் படிகளாக சித்தசுத்தியும், மனஸின் ஐகாக்ரியமும் (ஒருமுனைப் பாடும்) ஏற்படுவதற்காகவே இந்த கர்மாக்களையும், உபாஸனைகளையும் வேதம் கொடுத்திருக்கிறது என்ற அறிவோடு பண்ண வேண்டும். அப்படியில்லாமல், வெறுமே லௌகிகமான க்ஷேமத்தை உண்டாக்கிக் கொள்வது, தேவதைகளிடம் கொடுக்கல் -வாங்கல் வியாபாரம் மாதிரி யக்ஞம் கொடுத்து நன்மை பெறுவது என்று இதோடேயே நிறுத்திக் கொண்டால், ஸத்ய ஸாக்ஷாத்காரம் கிடைக்கவே கிடைக்காது. தேவலோகத்துக்குப் போனாலும், ஆத்மஸுகம் என்ற ஸத்ய ஸாக்ஷாத்கார ஆனந்தம் அதில் கிடைக்காது. மேலும், தேவலோக வாஸமும் நம் புண்ணியம் தீர்ந்தவுடன் முடிந்து, நாம் மறுபடி பூலோகத்தில் கர்ப்ப வாஸம் பண்ணுவதற்காகத் திரும்பித்தானாக வேண்டும். ஒரு அளவுக்கு நம் இப்போதைய மனப்பான்மைக்கு விட்டுக்கொடுத்தும், நம்மை இன்றுள்ள நிலையிலிருந்தே சிறுகச் சிறுக (gradual-ஆக)ப் பக்குவப்படுத்தவுமே கர்மாவும், உபாஸனையும் வேதத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதனால், இதோடேயே நின்றுவிடுவேன், மேலே போக மாட்டேன் என்றால், அது தப்பு.

முதலில் வேத கர்மாநுஷ்டானங்களைப் பண்ண மாட்டேன் என்பதும் தப்பு. அப்புறம், அதை ஒருநாளும் விடமாட்டேன் என்பதும் தப்பு. இந்தக் காலத்தில் எல்லோரும் முதலிலேயே, யக்ஞமாவது?அத்யயனமாவது?இதெல்லாம் வேண்டவே வேண்டாம், நேரே உபநிஷத்துக்குப் போகிறோம் என்கிறார்கள். இதனால் புத்தி பூர்வமாக (intellectual)உபநிஷத்தைப் பற்றி நிறையப் பேசுகிற ஸ்திதிதான் வந்திருக்கிறதே தவிர, அநுபவத்தில் சாந்தர்களாக,

வைராக்யசாலிகளுக்கு, ஆத்ம ஞானிகளாக யாரும் வரக்காணோம்!ஆரம்பகாலத்திலேயே அதற்கான ஸாதனைகளான கர்மாநுஷ்டானங்களை விட்டுவிட்டதன் கோளாறுதான் இதற்கு காரணம். இதுஒரு விதத்தில் தப்பு என்றால் ஞானத்துக்கே வரமாட்டேன் என்று கர்மடர்களாகவே நின்று விடுவது, இன்னொரு விதத்தில் தப்பாக இருக்கிறது.

முதல் கிளாஸ், இரண்டாம் கிளாஸ் என்று ஒவ்வொன்றாகப் படித்துதான் பி.ஏ.வுக்குப் போக வேண்டும். எடுத்தவுடனேயே பி.ஏ.போவேன் என்றாலும் தப்பு;ஆரம்ப க்ளாஸ்களிலேயே ஃபெயிலாகிக் கொண்டு அப்படியே இருப்பேன், மேல் கிளாஸுக்குப் போக மாட்டேன் என்றால் அதுவும் தப்பு.

ஆதிகாலத்தில் பிந்திய கோஷ்டி நிறைய இருந்தது;இப்போது முன்னால் சொன்ன மாதிரியானவர்கள் அதிகம் இருக்கிறார்கள். கிருஷ்ணபகவான் காலத்தில், கர்மாநுஷ்டானத்தைவிட்டு ஞானத்துக்கு வராதவர்கள் அதிகம் இருந்தார்கள். அவர்களைத்தான் அவர் திட்டினார். வேதத்தை அவர் திட்டியதாகத் தோன்றுவதெல்லாம், வாஸ்தவத்தில் வேத தாத்பர்யத்தை சரியாகப் புரிந்து கொள்ளாமல், வேத கர்மாவோடு நின்று விட்டவர்களைக் குறித்து அவர் திட்டியதுதான். உள்ளபடி வேதத்தை அவர் ஒரு நாளும் திட்டமாட்டார். வேதங்களை ரக்ஷித்துக் கொடுப்பதற்காகவே தான், அவர் திரும்பத் திரும்ப அவதாரம் பண்ணினது. அவருடைய காலத்தை ஒட்டி, கிருஷ்ண பரமாத்மா இப்படி கர்ம மார்க்கக்காரர்களைத் திட்டினார். இப்போது அவர் புதிதாக கீதை சொன்னால், இன்றைக்கு வேத கர்மாவே வேண்டாம் என்று நேராக உபநிஷத்துக்களுக்குப் போகிறவர்களைத்தான் திட்டியிருப்பார். கீதையிலே கர்மடர்களைத் திட்டுவதைவிட இன்னம் கடுமையாகத் திட்டியிருப்பார் என்றுகூடத் தோன்றுகிறது. ஏனென்றால் அதைவிட இதுதான் பெரிய தப்பு. முதல் கிளாஸ், இரண்டாம் கிளாஸ் எப்படியும் படித்துத்தான் ஆக வேண்டும். அவனுக்கு நன்றாகச் சொல்லிக் கொடுத்து மேல் கிளாஸுக்கு படித்துத் தள்ளிவிடலாம். ஆனால் முதலிலேயே பி.ஏ.போகிறேன் என்பவன் ஒரு வழிக்கும் வரவில்லை;அவனை ஒரு வழிக்கும் கொண்டு வரவும் முடியாது. ஆரம்ப கிளாஸில் படிக்கிறவன் கொஞ்சமாவது விஷயம் தெரிந்து கொள்கிறான். இவனோ ஒன்றும் தெரிந்து கொள்ளமுடியாது.

வேதத்துக்கும் வேதாந்தத்துக்கும் முரண்பாடே இல்லை. வேதாந்தத்துக்குப் பக்குவப்படுத்துவதற்காகவே வேதம் (கர்மகாண்டம்) இருக்கிறது. அது லோக ஸம்பந்தமானதுதான், பல தேவதைகளின் ஸம்பந்தமானதுதான். ஆனாலும் லோகத்தைவிட்டு, தேவதையும் உபாஸனையும் வேறில்லை என்று குணம் கடந்த நிலைக்கு போவதற்குப் பூர்வாங்கமாகவே அது அப்படியிருக்கிறது என்று புரிந்துகொண்டு, அதை அநுஷ்டித்தால் அது தானாக ஞானகாண்டத்தில் கொண்டு சேர்த்து விடும்.

"ஸ்வய நன்மை மட்டுமில்லாமல், லோகத்திலுள்ள ஸமஸ்த பிராணிகளுக்கும் வேத சப்தமும், யக்ஞமும் க்ஷேமம் கொடுப்பதாயிற்றே! இவன் லோகம் பொய் என்று ஞானியாக போய்விட்டால், லோக க்ஷேமம் என்ன ஆவது?"இப்படித் தோன்றுகிறது. அவனுக்கு லோகம் பொய்யாக போய்விட்டாலும் நமக்கு அது நிஜம் மாதிரித்தானே இருந்து கொண்டு உபத்ரவப்படுத்துகிறது?இந்த உபத்ரவம் தீருவதற்கு யக்ஞம் மாதிரியான அநுஷ்டானம் எதுவும் ஞானி பண்ணவில்லையே என்று தோன்றுகிறது. ஆனால் ஞானி இருக்கப்பட்ட உத்தமமான ஸ்திதியைப் பார்த்தால், அவன் யக்ஞம் என்ற ஒன்று பண்ணித்தான் லோக க்ஷேமத்தை உண்டுபண்ணவேண்டும் என்றே இல்லை. அவன் வாழ்க்கை முழுக்கவே யக்ஞமாகத்தான் இருக்கிறது. அவன் லோகத்தை அடியோடு பொய்யென்று நினைத்தாலும் சரி, அல்லது இந்த லோகம் பகவானின் லீலை என்று நினைத்தாலும் சரி, அவன் மூலமாக இந்த லோகத்துக்குப் பகவானின் அநுக்ரஹம் ஓயாமல் வெளிப்பட்டுக் கொண்டே தான் இருக்கிறது. ஞானிகளிடம் ஜனங்கள் கூட்டங் கூட்டமாகப் போவதற்குக் காரணம் என்ன?அவர்கள் ஜனங்களை விட்டுப் போனாலும் கூட, இவர்கள் போய் அவர்களுடைய காலில் விழுவதற்கு காரணம் என்ன? அவர்கள் செய்கிற அநுக்ரஹந்தான் காரணம். அவர்கள் செய்கிற அநுக்ரஹந்தான் காரணம்.

அவர்கள் உத்தேசித்துச் செய்கிறார்களோ இல்லையோ, அவர்கள் மூலமாக ஈச்வராநுக்ரஹம் லோகத்துக்குப் பாய்கிறது. அவர்களது சந்நிதானத்திலேயே ஜனங்களுக்கு ஒரு தாப சாந்தி கிடைக்கிறது. லோக ரீதியான வேண்டுதல்கள்கூட நிறைவேறுகின்றன. தனக்கு அன்னியமாக தேவதை இல்லை என்ற ஞானத்தை அடைந்துவிட்ட ஞானியே தேவதைகளுக்கெல்லாம் மேலே பெரிய அநுக்ரஹத்தைப் பண்ணி விடுகிறான். அதனால், அவன் யக்ஞம் செயய்வில்லையே, லோக க்ஷேமத்துக்கு எதுவும் செய்யவில்லையே என்று நினைப்பது தப்பு.

பிற்காலத்திய வேதாந்த (ஹிந்து) மதத்தை, வேத கர்மாநுஷ்டான காலத்திலிருந்து பிரித்து, "இந்த ஹிந்துக்களுக்கு individual salvation(தனி மநுஷ்யனின் மோக்ஷம்) தான் முக்யம்;லோக க்ஷேமத்தை இவர்கள் கவனிப்பதேயில்லை;தியானம், யோகம், ஸமாதி எல்லாம் இன்டிவிஜுவல் ஸால்வேஷனையேதான் மையமாகக் கொண்டவை"என்று பிற மதஸ்தர்கள் சொல்கிறார்கள். "கிறிஸ்து, நபி,புத்தர் மாதிரி அன்பு(love) ஸஹோதரத்வம் (brotherhood)இவற்றைச் சொல்லி ஒஷீநீவீணீறீ consciousness(சமூக உணர்வை) ஹிந்து மதம் வளர்க்கவில்லை"என்கிறார்கள். ஆனால் நம் மதத்தைச் சரியாக புரிந்து கொண்டால் வேத மதம், வேதாந்த மதம் என்று பிரிப்பதே முழுப் பிசகு. கடைசியில் ஸந்நியாஸாச்ரமத்தில் எவன் வேதாந்தியாக ஞானவிசாரம் பண்ணி, இண்டிவிஜுவல் ஸால்வேஷன் அடைகிறானோ, அவனேதான் அதற்கு முந்திய ஆச்ரமங்களில் அத்யயனமும், கர்மாநுஷ்டானமும் பண்ணும் வைதிகனாக

இருந்துகொண்டு, இவற்றால் லோக க்ஷேமத்தை உண்டு பண்ணுகிறான். அப்படிப் பண்ணியதே தான் இவனுக்கு சித்த சுத்தியைக் கொடுத்து, தன்னுடைய சொந்த மோக்ஷத்துக்கு நேர்வழியான வேதாந்தத்தில் சேர்க்கிறது. அதிலே ஸித்தி அடைந்து ஞானியான பிறகும், இவன் காரியம் என்று பண்ணாமலே, தன் ஸந்நிதான விசேஷத்தாலேயே லோகானுக்ரஹம் பண்ணிக் கொண்டிருக்கிறான். தனி மநுஷ்யனின் விமோசனம் (individual salvation),சமூக க்ஷேமம் (collective welfare)என்ற இரண்டில், எது மதத்துக்கு முக்கியமாக இருக்க வேண்டும் என்ற பெரிய கேள்வியை இங்கே நான் ஆராயவில்லை. அது தனி விஷயம். சமூகம் ஷேமம் அடைவதும், அடையாததும் ஒரு பக்கம் இருக்கட்டும். ஒரு மதத்தைச் சேர்ந்தவன் பரமாதம தத்வத்தை அநுபவத்தில் தெரிந்து கொள்கிற ஞானியாகாவிட்டால் அந்த மதம் இருந்தாலென்ன, இல்லாவிட்டால் என்ன?

இந்த ஞானநிலைக்கு வருவதற்காகத்தான் அத்தனை கர்மாவும் உபாஸனையும் வைத்திருக்கிறது. வித்யாஸமே இல்லாமல் எல்லாம் ஒன்றாகிப் போய்விடுகிற ஞான நிலையை அடைவதற்கு வழியாகவேதான் நூறாயிரம் வித்யாஸமுள்ள வர்ணாச்ரம தர்மங்கள், இன்னார்தான் இன்ன பண்ணலாம் என்ற அதிகார பேதங்கள் எல்லாம் பூர்வாங்கமாக வைத்திருக்கிறது. வெறும் கர்மாவோடு, வித்யாஸத்தோடு நின்றுவிட்டால் தப்பு. 'கர்மாவைச் சொல்கிற வேத பாகம்தான் அர்த்தமுள்ளது. ஞானத்தைச் சொல்கிற பாகம் அர்த்தமில்லாதது' என்று சொன்ன பூர்வ மீமாஸகர்களைத் திட்டுகிற உத்தேசத்தில்தான், கிருஷ்ண பரமாத்மா வேதத்தையே திட்டுகிற மாதிரிப் பேசுகிறார். அவர் வாஸ்தவத்தில் திட்டினது 'வேத வாத ரதா:என்று அவரே சொல்கிறபடி, வேதத்தைப் பற்றி வெறும் வாய்ச்சவடாலில் அர்த்தம் பண்ணிக்கொண்டு அதிலேயே சந்தோஷப்பட்டுவிட்டு, அதன் லக்ஷ்யமான அநுபவ ஞானத்துக்கு யத்தனம் பண்ணாதவர்களைத் திட்டினதுதான்.

முதலில் கர்மா வேண்டும். அதாவது வேதம் சொன்னபடி காரிய ரூபத்தில் கடமைகளைப் பண்ண வேண்டும். ஆனாலும் கர்மா இல்லாமல் போகிற பெரிய ஆத்மாநுபூதி நிலைக்குப் போவதற்கே இது ஆரம்பப் படி என்று தெரிந்து கொண்டு பண்ண வேண்டும். இதே மாதிரி, முதலில் தேவதாஉபாஸனை வேண்டத்தான் வேண்டும். ஆனாலும், உபாஸிக்கப்படும் தேவதையும் உபாஸகனான தானும் வேறில்லை என்று ஆகிறதற்கு ஆரம்ப ஸாதனமாகவே உபாஸிக்கிறோம் என்று புரிந்து கொள்ள வேண்டும். முதலில் வித்யாஸங்கள் பார்க்கத்தான் வேண்டும். லோக வியாபாரம் ஒழுங்காக நடக்க வேண்டுமானால், நமக்குள் காரியங்களைப் பல தினுஸாகப் பிரித்துக் கொண்டு, அந்தந்த காரியத்தையும் சுத்தமாகப் பண்ணுவதற்கு என்ன தனிப்பட்ட ஆசார அநுஷ்டானாதிகள் உதவி செய்யுமோ, அப்படிப் பிரிந்துதான் அவரவருக்கான தர்மங்களைக் கடைபிடிக்கவேண்டும். ஆனாலும் இதுவும், கடைசியில் ஸகல வித்யாஸமும் போய், எல்லாமும் எல்லாரும் "தானே"என்று தெரிந்து

கொள்வதற்குத்தான் என்ற அடிப்படை உணர்ச்சி இருக்க வேண்டும். வேத அத்யயனம், வேத கர்மானுஷ்டானம் எல்லாம் அந்த வேதமே அவசியமில்லாமல் போய்விடுகிற அகண்டமான மஹா அநுபவத்துக்கு வழிதான் என்று வைத்துக் கொண்டு, அவற்றை அப்பியாஸம் பண்ண வேண்டும். புஷ்பம் இருந்தால்தான் பிறகு பழம் உண்டாகும். புஷ்பம் பார்க்க ரொம்ப அழகாக இருந்தாலும், அது காய்ந்து போய் விழுந்தால்தான் பழம் உண்டாகும். பூவே இல்லாமல் காய்க்க வேண்டும் என்று, இந்த நாளில் வைதிகாநுஷ்டானமே இல்லாமல் வேதாந்தத்துக்கு போகிறவர்கள் நினைத்தால், அது யதார்த்தத்துக்குச் சரியாக வராது. இதனால் பூவோடேயே நின்றுவிட வேண்டும் என்று நினைத்து, வேதாந்த ஞானத்துக்கு யத்தனம் செய்யாமல் கர்மடர்களாக நின்றுவிட்டால், அதுவும் தப்புத் தான். எதிலும் sense of proportion வேண்டும்.

கீதையில் சொன்ன மாதிரியே, பிருஹதாரண்யக உபநிஷத்திலும் (வீஸ்.3.22) "எவன் ஆத்ம ஸ்வரூபத்தை உணர்ந்து கொண்டு விட்டானோ அவனுக்கு அந்த நிலையில் வேதம் அத்தனையும் வேதமில்லாமல் போய்விடும்;தேவர்கள் யாவரும் தேவரல்லாமல் போய்விடுவார்கள்;பிராமணர்கள் பிராமணரில்லாமல் ஆகிவிடுவார்கள்;சண்டாளன் சண்டாளனில்லாதவனாகி விடுவான் என்று சொல்லியிருக்கிறது. ச்ருதி எனற வேதத்தைச் சொல்கிற போது அதில பிராமணமும், ஆரண்யகமும் (உபநிஷத்துக்களும்) அடக்கந்தான். கீதை ச்ருதி இல்லை. அது ஸ்மிருதியைச் சேர்ந்ததாகவே சொல்வது வழக்கம். ஸ்மிருதிகளைப் பற்றிப் பிறகு பதினாலு வித்யையகளில் ஒன்றான தர்மசாஸ்திரத்தைப் பற்றி சொல்கிறபோது சொல்கிறேன். வேதகர்மாவும் உபாஸனையும் ஞானத்தில் கொண்டு போய் விடாவிட்டால் பிரயோஜனம் இல்லை என்று கீதையான ஸ்மிருதி சொல்கிறது. ச்ருதி-ஸ்மிருதி -புராணம் என்கிற மூன்று பிரமாணங்களில், புராணத்திலும் அநேக இடங்களில் வெறும் கர்மாநுஷ்டானத்தோடு நின்று விடுவதைக் கண்டித்திருக்கிறது. தாருகா வனத்தில் ரிஷிகள் கர்ம மார்க்கமே ஸகலமும் என்று தங்களுடைய யக்ஞோபாஸனையிலேய கர்வப்பட்டுக் கொண்டிருந்தபோது, பரமேச்வரன் அவர்களுடைய அஹங்காரத்தை அழித்த கதையை சைவமான புராணங்கள் சொல்கின்றன. பாகவதத்திலும் இப்படியே யக்ஞபத்தினிகளின் உபாக்யானத்தில், ஒன்றுமே தெரியாமல் வீஸீஸீஷீநீமீஸீமீ - ஆக இருந்த அந்தப் பிராம்மண ஸ்திரீகளுக்குத்தான் யக்ஞபுருஷனான மஹாவிஷ்ணுவே பாலகிருஷ்ணனாக வந்திருக்கிறான் என்று தெரிந்தது என்றும், அவர்களுடைய புருஷர்களான கர்மமார்க்க்காரர்கள் இதைத் தெரிந்து கொள்ள முடியாமல், பிறகு ரொம்பவும் பச்சாதாபப் பட்டார்கள் என்றும் வருகிறது.

ஆனாலும் பிரமாணங்களில் ச்ருதிப் பிரமாணத்துக்குப் பிறகுதான் ஸ்மிருதி-புராணப் பிரமாணங்களைக் கொள்ள வேண்டும். கர்மா மட்டும் போதாது என்பதற்கு ச்ருதிப் பிரமாணமும் இருக்கிறது என்பதற்கு இங்கே பிருஹதாரண்யக உபநிஷத்தை quote செய்தேன். ஆனாலும் ச்ருதியை கர்மகாண்டம், ஞான

காண்டம் என்று பிரிக்கிறபோது, இது ஞான காண்டமான உபநிஷத்தில் வருவதுதானே?ஞான காண்டத்தில் ஞானத்தைச் சிறப்பித்துச் சொல்லி, கர்மாலக்ஷ்யம் இல்லை என்று சொல்லியிருப்பதில் விசேஷம் ஒன்றுமில்லையே என்று கேட்கலாம். ஆகையால் கர்ம காண்டத்திலேயே, கர்மாவே எல்லாம், அதுவே லக்ஷ்யம் என்று நினைப்பதைக் கண்டனம் பண்ணியிருக்கிறது என்பதையும் காட்டுகிறேன். வேதத்தில் சொல்லியிருக்கிற பல விதமான யக்ஞங்களையுமே அதன் நோக்கமறிந்து செய்வது சிலாக்கியந்தான் என்று பகவான் கீதையிலே "ஏவம் பஹுவிதா யக்ஞா விததா ப்ரஹ்மணோமுகே"என்று பாராட்டிச் சொல்லிவிட்டு, ஆனால் இந்த ஸகலவிதமான கர்மாநுஷ்டானங்களும் ஞானத்தில் தான் பூர்த்தியடைகின்றன -

**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே**

-என்றதை, வேதத்தின் கர்மகாண்டத்திலேயே ஒரு அழுத்தமான திருஷ்டாந்தத்தால் சொல்லியிருக்கிறது. "வெறும் கர்மாநுஷ்டானங்களை மாத்திரம் செய்து கொண்டு, ஈச்வரனை எவனொருவன் உணராமல் இருக்கிறானோ, அவன் நெருப்பிலே விறகைப் போட்டுப் புகையை மாத்திரம் எழுப்பிக் கொண்டிருக்கிறான். அவன் மூடன், அவன் ஆத்ம ஸ்வரூபத்தை ஒருநாளும் அறிந்து கொள்ளமாட்டான்"என்று ச்ருதியில் கர்மகாண்டத்திலேயே தைத்திரீய காடகத்தில் (முதல் ப்ரச்னம், கடைசி அநுவாகம், 4-ம் வாக்யம்) வருகிறது. விறகை மூட்டினால் அதன்மேல் வெண்கலப் பானையை வைத்துச் சாதம் வடிக்க வேண்டும். அப்படித் தன்னையே ஞானத்தில் பக்குவம் பண்ணிக்கொள்ளப் பிரயத்தனப்படாமல் ('பக்குவம்'என்றால் சமைக்கப்படுவது என்றே அர்த்தம். நமக்குள்ளே இப்படி முழுமை பெற்று, அரிசி சாதமாகிறாற்போல் நன்றாகக் குழைந்து விடுவதையும் 'பக்குவம்' என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்கிறோம்) வெறுமே யக்ஞாதிகள் செய்கிறவன், வெண்கலப் பானையை ஏற்றாமலே அடுப்பை எரிய விடுகிறவன்தான். இப்படி வேதமே சொல்கிறது. யக்ஞத்திலே நெருப்பில் ஹவிஸைப் போடாமலே பெரிசாக அக்னியை வளர்த்து என்ன பிரயோஜனம்?புகை ஜாஸ்தியாவதுதான் பலன்!இநத மாதிரிதான் கர்ம பலனையே ஹவிஸாகப் போட்டு எரிக்கிற புத்தியோடு யக்ஞத்தைச் செய்யாவிடில், அது வெறும் புகையாகப் போய் விடுகிறது. "பிரம்மாக்னியில் ஆத்மாவை ஹவிஸாகத் தர வேண்டும். ஸம்யமம் என்ற புலனடக்க அக்னியில் இந்திரிய நுகர்ச்சிகளை ஹோமம் பண்ண வேண்டும்; பஞ்சப் பிராணன்களை ஒன்றிலொன்று ஹோமம் பண்ணவேண்டும்"என்றெல்லாம் பகவான் கீதையில் சொன்ன ஸ்திதிக்குப் போவதற்காகத்தான் திரவ்ய ரூபமான, காரிய ரூபமான வைதிக யக்ஞங்கள் எல்லாம் இருக்கின்றன. இதைத் தெரிந்து கொள்ளாமல் எத்தனை யக்ஞம் செய்தாலும் ஒருவன் கொஞ்சங்கூட புத்திசாலியே இல்லை;அவனுக்குப் புத்தியே இல்லை என்று வேதமும் சொல்கிறது. அவனுடைய புத்தி எங்கே போகும்?ஹோமப் புகை போலத்தான் அதுவும் போகிற இடமெல்லாம் கருப்பாகப்

பண்ணிக் கொண்டு, கடைசியில் பிசுபிசுவென்று ஒன்றுமில்லாமலாகிவிடும்.

வேத கர்மாவை ஈச்வரார்ப்பணம் பண்ணினால், அது கட்டுவதற்குப் பதில், கட்டிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக அவிழ்ந்துவிட ஆரம்பிக்கும். நிஷ்காம்யமாக, பகவத் பிரீதிக்காகவே கர்மாவைப் பண்ணப்பண்ண அது சித்தசுத்தியைத் தந்து, முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட ஸ்தானத்துக்கு அழைத்துக்கொண்டு போகும்.

யக்ஞம் என்ற பெயர் இதைத்தான் குறிப்பிடுகிறது. இங்கிலீஷில் இதை sacrifice என்றுதானே சொல்கிறார்கள்?யாகம் என்றால் தியாகம் என்றுதான் அர்த்தம். "ந மம"("எனதில்லை") என்று ஒன்றை நெருப்பிலே போடுகிற தியாக சித்தம்தான் யக்ஞத்தின் உயர்நிலை. நெருப்பிலே போட்டதை எடுக்க முடியுமா?எடுத்தாலும் அது க்ஷண காலத்தில் உருச் சிதைந்துதானே போகிறது?அந்த மாதிரி அஹங்கார மமகாரங்களை பஸ்மமாக்க வேண்டும். இப்படி உயர்ந்த அர்த்தத்தைக் கொடுக்கக்கூடியதான "யக்ஞம்"என்பதை, அதன் பேருக்கு நேர் விரோதமாக ஸ்வர்க்கப் பிராப்தி முதலான சொந்த லாபங்களுக்காக, அல்ப பலன்களுக்கா, ஒருத்தன் பண்ணினால் அவன் முட்டாள்தானே?

கர்ம காண்டம், ஞான காண்டம் என்பனவற்றுக்குள் முரண்பாடு (contradiction) இல்லை. கர்மகாண்டத்திலேயே அநேக இடங்களில் கர்மாவின் லிமிடேஷனைச் சொல்லி, ஞானத்தையே விசேஷித்திருக்கிறது. ரொம்பவும் உயர்ந்த ஞானப் பிரதமான தத்துவங்களைச் சொல்கிற நாஸாதீய ஸூக்தம், புருஷ ஸூக்தம், திரயம்பக மந்திரம் முதலியவை வேதத்தின் ஸம்ஹிதா பாகத்திலேயே வருகின்றன. உபநிஷத்துக்களில் இல்லை. இதற்கு எதிர் வெட்டாக உபநிஷத்துக்களிலும் நாசிகேதாக்னி முதலான பல கர்மாக்களைச் சொல்லியிருக்கிறது. கர்மானுஷ்டானங்களில் விசேஷமாகப் பிரயோகமாகிற மந்திரங்கள், தைத்திரீய உபநிஷத்திலிருந்தே கிடைக்கின்றன. ஒன்றுக்கொன்று விரோதமானது என்றால் இப்படியிருக்குமா?ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குப் போக வேண்டும் என்பதே தாத்பரியம்.

கர்மாவை ஈச்வரார்ப்பணமாகப் பண்ணினால், அதுவே ஞானத்துக்கு உபாயம் என்று ஸ்மிருதியான கீதையில் சொன்னதற்கு ஆதாரம் ச்ருதியான உபநிஷத்தில் இருக்கிறது. தசோபநிஷத்துக்கள் என்ற பத்தில், முதலாவதாக வைக்கப்பட்டிருக்கிற ஈசாவாஸ்யத்தில் இதைத்தான் எடுத்தவுடனேயே உபதேசித்திருக்கிறது. நூறு வருஷம் வேத கர்மாக்களைப் பண்ணிக் கொண்டிரு. ஆனாலும் ஈச்வரார்ப்பண புத்தியோடு பண்ணு. அப்போது அது உன்னைக் கட்டிப்போடாது என்கிறது. ஆகையால் உபநிஷத் என்றாலே inaction(காரியமில்லாமலிருப்பது), கர்மாவுக்கு விரோதமானது என்று நினைத்தால் சரியில்லை.

கர்மாதான் லக்ஷ்யம் என்று நினைத்துவிடக் கூடாது. லோக க்ஷேமத்தை உண்டு பண்ணுவதற்காகவும் சித்த சுத்திக்காகவும் தேவதைகளை உபாஸித்தாலும் அதோடு நின்று விடக்கூடாது. ஞானத்தை அடைந்து பரமாத்மாவைத் தவிர தான் என்று ஒன்றில்லை, லோகமென்று ஒன்று இல்லை. தேவதைகள் என்று வேறு இல்லை என்கிற நிலையை அடையவேண்டும். இந்த நிலையை அடைந்தால் வேதமும் வேதம் இல்லாமல் போய்விடும் என்று, அந்த வேதமே சொல்கிறது.

வேதம் என்பது என்ன?பரமேச்வரன் போட்ட சட்டம். அந்த சட்டத்தைப் பிரஜைகளான சகல ஜனங்களும் மதித்து நடக்க வேண்டும். ஆனால் ஞானியாகி ஸதா ஸர்வகாலமும் பரமாதம ஸத்யத்திலே ஒருவன் உள்ளும் புறமும் ஊறியிருக்கிற போது, அவன் வேத சட்டத்தைப் பார்த்துப் பார்த்துக் காரியங்களைப் பண்ண வேண்டும் என்பதில்லை. அதனால்தான், வேதம் வேதமில்லாமல் போகிறது என்று சொல்லியிருக்கிறது. நாமும்தான் வேதத்தைச் சட்டமாக மதிக்கவில்லை. நமக்கும் வேதம் வேதமாக இல்லாமல் தானிருக்கிறது. ஆனால் ஞானம் என்றால் என்ன என்றுதான் நமக்கு வாஸனைக் கூடத் தெரியவில்லை.

உபநிஷத்துக்கள் என்கிற பரவித்தையில் கொண்டு சேர்க்கிற உபாயமே கர்மகாண்டம் என்பதைத் தெரிந்து கொள்ளாவிட்டால், வேதமானது (அதாவது, அதன் கர்மகாண்டம்) மற்ற ஹிஸ்டரி, ஜாகரஃபி மாதிரி அபர வித்தையாகத்தான் (அதாவது லௌகிக அறிவு நூலாகத்தான்) நின்றுவிடும். முண்டக உபநிஷத்தில் (ĩ.5) வேதத்தையும் அபரவித்தையோடு சேர்த்திருப்பதற்கு இதுதான் அர்த்தம். இம்மாதிரி தாற்காலிக சௌக்கியத்தோடு வேதத்தின் பயனை நிறுத்திக் கொண்டு விடுபவனை உபநிஷத் வெறும் பசுப்பிராயமானவன் என்றே சொல்லியிருக்கிறது.

ஸகல தேவதைகளும் எதில் தோன்றியிருக்கின்றனவோ, அந்தப் பரமாத்மாவோடு ஐக்கியமாகி விடுகிற ஞானிக்கு அந்தத் தேவதைகளும் அந்நியமில்லை. பரமாத்மோவோடு பரமாத்மாவாக இவன் இரண்டறக் கலந்துவிட்ட பிறகு, தேவதைகளுங்கூட இவனுக்குள் இருக்கிறவர்களே. தேவதைகளை உபாஸிக்கிற காலத்திலேயே இவனுக்கு இது அநுபவத்தில வராவிட்டாலுங்கூட, நாம் வெளியே நமக்கு வேறாக தேவதை என்று ஒன்றை உபாஸனை பண்ணுகிறோமே, இதுவுங்கூட ஆத்மாவுக்கு அந்நியமானதில்லை என்ற எண்ணம் இருந்துகொண்டேயிருக்க வேண்டும். வெளிக்காரியத்தில் பிரிந்து பிரிந்து வித்யாஸமாகத்தான் செய்ய வேண்டுமென்றாலும், இந்த வித்யாஸங்கள் எல்லாம் ஒடுங்கிப் போகிற ஒரே மூல தத்வத்தில் நாம் கடைசியிலே சேரவேண்டும் என்ற எண்ணம் எப்போதும் இருக்க வேண்டும். இப்படியில்லாமல் எவனொருவன் தேவதையைத் தனக்கு முழுக்க வேறானது என்றே நினைத்து உபாஸித்திருக்கிறானோ, அவன் ஸத்தியத்தைத் தெரிந்து கொள்ளாதவன், அவன் தேவர்களுக்குப் பசு மாதிரியானவன் என்று பிருஹதாரண்ய உபநிஷத்தில் (l.4.10)

சொல்லியிருக்கிறது.

பசு என்று சொன்னதற்கு நிரம்ப அர்த்தமுண்டு. மநுஷ்யனுக்கு உள்ள ஆறாவது அறிவு இல்லாமல், வெறும் மிருகப் பிராயமாக இருப்பவன் என்பது மேலேழுந் தவாரியான அர்த்தம். உள்ளர்த்தத்தைச் சொல்கிறேன். நாம் எதற்குப் பசுவைப் போஷிக்கிறோம்?அது நமக்குப் பால் கொடுக்க வேண்டும் என்பதற்காகத்தான். நமக்கு அது க்ஷீரத்தைக் கொடுக்கிறது என்பதற்காகத்தான் நாம் அதற்குப் புல்லும், வைக்கோலும், புண்ணாக்கும், பருத்திக் கொட்டையும் போடுகிறோம். இதே மாதிரி நாம் யக்ஞத்தில் ஹவிஸ்ஸுகளை ஹோமம் கொடுத்து தேவதைகளுக்குப் பிரீதியைச் செய்கிறோம். இப்படி நாம் செய்வதற்குப் பிரதியாகத்தான், அவர்கள் நமக்கு மழை, தான்ய விருத்தி முதலான பல அநுக்ரஹங்களைச் செய்கிறார்கள். நாம் முன்னேயே சொன்ன மாதிரி இந்தத் தேவதைகள் மநுஷ்ய இனத்தைவிட உயர்ந்தவர்களானாலும், இவர்களும் நிறைந்த நிறைவான ஆனந்தத்தை அடைந்தவர்கள் இல்லை. மநுஷ்ய ஜன்மா எடுத்தே ஞானியாக ஆகிவிட்ட ஒருவன் அடைகிற பிரம்மானந்தத்தில் லக்ஷத்தில் ஒரு பங்கு கூட தேவர்களுக்குக் கிடையாது.

தைத்திரீய உபநிஷத்திலும் (II.8) பிருஹதாரண்யக உபநிஷத்திலும் (1V.3.33) மநுஷ்ய லோக ஆனந்தம், பித்ரு லோக ஆனந்தம், தேவலோக ஆனந்தம், அந்த தேவர்களுக்குள்ளேயே இந்திரனின் ஆனந்தம், பிருஹஸ்பதியின் ஆனந்தம், பிரஜாபதியின் ஆனந்தம் என்று ஒன்றைவிட ஒன்று நூறு மடங்கானது என்று ஒரு பெருக்கல் வாய்ப்பாடு சொல்லிக்கொண்டே போய், கடைசியில்தான் பிரம்மானந்தம் என்ற ஞானியின் ஆனந்தத்தைச் சொல்லியிருக்கிறது. ஆதலால், தேவர்களும் குறையுள்ளவர்கள்தான். அதோடுகூட, எல்லாக் குறையையும் பூர்த்தி செய்கிற ஞானத்துக்காக அவர்கள் பாடுபடுவதும் இல்லை. தங்களுக்கு மநுஷ்யர்களால் உண்டாகிற லாபங்களை எதிர்பார்த்துக் கொண்டு, நாம் செய்கிற யக்ஞம் முதலான உபாஸனைகளை எதிர்பார்த்துக் கொண்டுதான் அவர்கள் இருக்கிறார்கள். இதனால் அவர்களுக்கு மநுஷ்யர்கள் ஞானியாகி விடுவதும் பிடிக்கவில்லை. ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் இப்படி வியக்தமாகச் சொல்லியிருக்கிறது. 'மனிதர்கள் ஆத்மாவை அறிந்து கொள்வது தேவர்களுக்குப் பிரியமாக இல்லை'என்று அந்த உபநிஷத்தில் (I.4.10) சொல்லியிருக்கிறது. காரணம் என்ன?ஆத்ம ஞானியாக ஆகிவிட்டால் அப்புறம் ஒருவன் தேவர்களைத் திருப்திப் படுத்துகிற யக்ஞாதி கர்மங்களைப் பண்ணமாட்டான்.

நம்முடைய வீட்டு வேலைக்காரன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு ஸ்வல்ப சம்பளம் கொடுத்து வருகிறோம். வேறு புது வேலைக்கான் வந்தால் அதிகச் சம்பளம் கொடுத்து வருகிறோம். வேறு புது வேலைக்காரன் வந்தால் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டும். நமது வேலைக்காரன் மேலே பரீக்ஷைகளில் பாஸ் பண்ணி வேறு வேலைக்குப் போய் விருத்தியாக எண்ணுகிறான். பரீக்ஷைக்குப்

போகிறான். நாம் அவன் பரீக்ஷயில் தேறவேண்டுமென்று நினைப்போமா?மாட்டோம். தேறக் கூடாதென்றுதான் நினைப்போம். தேறிவிட்டால் அவனுக்குக் கௌரவம் வந்துவிடும்;வேறு வேலைக்குப் போய் விடுவான். அவன் போய்விட்டால் அவனைப் போல் ஸ்வல்ப சம்பளத்தில் ஒரு வேலைக்காரனும் நமக்குக் கிடைக்க மாட்டான். இதைப் போலத்தான் இங்கேயும் இருக்கிறது. மநுஷ்யன் ஞானியாக உயர்ந்து, தங்கள் உபாஸனையை விட்டுவிடுவது தேவர்களுக்குப் பிடித்தமில்லை.

ஞானி தேவர்களுக்குப் பிரியமில்லாதவன் என்றால் ஞானியாக இல்லாதவன்தான் அவர்களுக்குப் பிரியன் என்றாகி விடுகிறது. ஆகையால் தேவர்களுக்குப் பிரியமானவன் அஞ்ஞானி, அறியாதவன் என்றாகிறது. அதனால்தான் மூர்க்கன் என்பதற்கே தேவனாம் ப்ரியன், அதாவது தேவர்களுக்குப் பிரியமானவன் என்று வியாகரணத்தில் இன்னொரு பெயர் கொடுத்திருக்கிறது. இந்த பெயருக்கு உபநிஷத்தில் மூலம் இருக்கிறது.

சங்கர பகவத்பாதாள் பிரம்ம ஸூத்ர பாஷ்யத்தில் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்று என்றால் ஜீவாத்மாவின் கஷ்ட ஸுகங்கள் பரமாத்மாவுக்கும் உண்டாகும் என்று நினைக்கிறவனுக்கு பதில் சொல்லும்போது, நீ என்ன ரொம்ப அசடாயிருக்கிறாயே என்ற அர்த்தத்தில் தேவானாம் ப்ரியனாக இருக்கிறாய் என்கிறார். இதம் தாவத் தேவானாம் ப்ரிய ப்ரஷ்டவ்ய :

தேவர்களுக்குப் பிரியமானவன் - "தேவானாம் பிரியன்" - என்ற பெயரைக் கேட்டால், இதோ பெரிய டைட்டில் மாதிரித் தோன்றுகிறது. ஆனால், அதற்கு நிஜ அர்த்தத்தை பார்த்தால் அசடு என்று இருக்கிறது.

அசோக சக்ரவர்த்தியின் கல் வெட்டுத் தூண்களில் அவரை "தேவானாம் ப்ரிய"என்றே சொல்லியிருக்கிறது. அசோகர் காலத்துக்கு முந்தியே, பாணினி தமது வியாகரண புஸ்தகத்தில் தேவானாம் ப்ரியன் என்றால் மூர்க்கன் என்று எழுதி வைத்திருக்கிறார். ஆகையால், பௌத்தனான அசோகனை மட்டம் தட்டவே பிற்காலத்து வைதிகர்கள் அவன் சாஸனத்தில் போட்டுக் கொண்டிருக்கிற டைட்டிலுக்கு அசடு என்று அர்த்தம் பண்ணிக் களங்கம் உண்டாக்கிவிட்டார்கள் என்று நினைப்பது தப்பு. வேத தாத்பரியம் தெரியாதவனைத்தானே நம் ஆசாரியாள் ஸூத்ர பாஷ்யத்தில் தேவானாம் ப்ரியன் என்கிறார்?அசடு என்ற அபிப்ராயத்தில் இப்படிச் சொன்னார். ஆனால் அந்த அபிப்ராயத்தை விட்டுவிட்டு வேதத்தை ஆட்சேபிக்கிறவன் எப்படிப்பட்டவனானாலும் அவனுக்கு இந்தப் பெயரைக் கொடுத்து விடலாம் என்ற எண்ணத்தில், அவைதிக மதமான பௌத்தத்தைச் சேர்ந்த அசோக சக்ரவர்த்திக்கு தேவானாம் ப்ரிய என்ற பெயரைக் கொடுத்திருக்கிறார்கள் போலிருக்கிறது.

வைதிக மார்க்கத்தை அநுஸரித்து உபநிஷத் வாயிலாக ஞானியாக ஆன ஒருவன், தேவதைகளைப் பிரீதி பண்ணும் யக்ஞத்தை விட்டு விடுவதால் அவன் தேவர்களுக்குப் பிரியமில்லாதவனாகி விடுகிறானென்றால் , பௌத்தத்திலோ யாருமே யக்ஞம் பண்ணக் கூடாதாகையால், அவர்கள் எல்லோரையுமே தேவருக்குப் பிரியமாகாதவர்களாகத்தான் சொல்ல வேண்டும். ஆனாலும், "அவைதிக பௌத்தத்தை விசேஷமாக ஆதரித்த அசோகனை, தேவானாம் ப்ரிய என்று சொல்லியிருக்கிறதே, ஏன்?என்றால், அவன் வேதாந்தத்தின்படியான ஞானத்தை அடைந்து, தேவர்களுக்கு அப்பிரியமாக ஆகமாட்டான் என்பதை மட்டும் நினைத்து, இப்படிச் சூசகமாகப் பெயர் கொடுத்த மாதிரி இருக்கிறது. அதாவது நல்ல புத்தி சாதுர்யமுள்ளவனாகவும், தேவர்களுக்குப் பிரீதியாக உள்ள யக்ஞ கர்மாக்களைப் பண்ணாதவனாகவும் ஒருவன் அவைதிக பௌத்தம் போன்ற மதத்தில் இருந்தாலும் கூட, அவன் வேதாந்தம் சொல்லுகிறபடி ஞானியாக மாட்டான் என்ற அளவில், அவனையும் தேவானாம் ப்ரியன் என்று சொல்லுகிற வழக்கம் வந்திருக்கலாம்.

அல்லது, விஷயம் தெரியாத சில்பியோ ராஜாங்க அதிகாரியோ, தேவானாம் ப்ரியன் என்றால் நல்ல பேராக, நல்ல அர்த்தமாகத் தெரிகிறதே என்று நினைத்து சாஸனத்தில் அப்படி வெட்டியிருக்கலாம்.

தேவானாம் ப்ரியனாக யக்ஞம் பண்ணிக் கொண்டிருப்பவன் ஞானியாக ஆகிக் கர்மாநுஷ்டானத்தை விட்டுவிட்டால் நமக்கு ஒன்றும் கிடைக்காதே என்று தேவதைகள் பிரதிபந்தங்கள் (இடையூறுகள்) செய்வார்கள். ரிஷிகளின் தபஸைக் கலைப்பதற்கு ரம்பை, மேனகை முதலியவர்களை அனுப்புவார்கள் என்று புராணங்களில் பார்க்கிறோம்.

ஞானியாகும்வரையில் மனிதன் தேவதைகளுக்குரிய கர்மாக்களைச் செய்து கொண்டிருக்கிறான். அதற்காக, அவர்கள் மனிதனுக்கு நல்லது பண்ணுகிறார்கள். மழை பெய்யச் செய்கிறார்கள். அதற்காக ஹவிர்பாகம் கொடுக்க வேண்டும். நமக்கு இந்த உலகத்தில் ஒருவர் ஓர் உபகாரம் செய்தால் பிரதி உபகாரம் செய்ய வேண்டுமல்லவா?அதைப்போல மழைக்கும் செய்யவேண்டும். அதற்காகத்தான் யக்ஞம் செய்கிறோம். யாராவது ஒரு பிராம்மணர் தேவதைகளுக்கு ஹவிர்பாகம் கொடுக்கிறார். அவர் எல்லோருக்கும் பிரிதிநிதியாக இருந்து கொடுக்கிறார். யாராவது ஒருவர் வரி கொடுப்பதைப் போல் அவர் கொடுக்கிறார்.

ஆகவே ஞானியாகும் வரைக்கும் மனிதன் தேவதைகளுக்குப் பிரியமான கர்மாக்களைச் செய்து அவர்களுக்குப் பிரியமானவனாக இருக்கிறான். மாடு கறந்து பால் பெற்றுக் கொள்வது போலத் தேவர்கள் அவன் மூலம் லாபத்தை அடைகிறார்கள்.

மாடு கறப்பது இல்லையானால், அந்த மாட்டால் மனிதனுக்கு என்ன பிரயோஜன

ம்?அதுபோல மனிதன் பசுவைப் போல இருக்கிறவரையிலும் தேவதைகள் அவன் மேல் பிரியமாக இருப்பார்கள்;பசுவாயில்லாமற்போனால் வெறுப்பார்கள்;உபத்திரவப் படுத்துவார்கள். அதாவது இரண்டு அர்த்தப்படியும் மனிதன் தேவதைகளுக்குப் பசுவாக இருக்கிறான். அறிவில்லாதவன் என்ற அர்த்தத்தில் மாடு மாதிரி இருப்பதால்;கறவை நின்ற பசுவை நாம் ரக்ஷிக்காத மாதிரி கர்மாவை நிறுத்தினவனைத் தேவர்கள் ரக்ஷிக்காமல் விடுவதாலும் பசு மாதிரி.

தேவதை தனக்கு வேறல்ல என்று அறிவதே ஞானம். அதற்குத்தான் வேதாந்தம் வழி சொல்லிக் கொடுக்கிறது. கர்மாவும் தேவதா உபாஸனையுங்கூட நின்று போய், அனைத்தும் தானாகிவிடுகிற நிறைந்த நிலைக்கு வழி சொல்கிறது. அந்த வேதாந்தத்துக்கு நம் தேசத்தில் எத்தனை கௌரவம் இருந்திருக்கிறது என்பதற்கு ஒரு பெரிய அத்தாட்சி சொல்கிறேன்.

அனந்தமாக இருந்த வேதங்களில் ரிஷிகள் பிடித்துக் கொடுத்ததே ஓரளவுதான். ஆனால் அதுவுங்கூட கலிகால அற்பசக்தர்களால் அப்பியஸிக்க முடியாதது என்பதால், 1180 சாகைகளாகப் (கிளைகளாக) பிரித்து, இதில் ஒவ்வொன்றிலும் ஸம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம், முடிவிலே உபநிஷத் என்று வைத்து, இதில் ஒன்றையாவது ஒருத்தன் அத்யயனம் பண்ணவேண்டும் என்று வைத்தார்கள். பிற்காலத்தில், இதிலும் அநேகம் வழிக்கொழுந்து போய்விட்டன. பாக்கியையும் தீர்த்துக்கட்டிவிடுகிற நிலைமைக்கு இந்தத் தலைமுறையைச் சேர்ந்த நாம் புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறோம். அது இருக்கட்டும் நான் சொல்ல வந்தது, ஒவ்வொரு சாகையிலும் ஒரு உபநிஷத் இருக்கிறது. அம்மாதிரி, இப்போது பூர்ணமாக உள்ள சாகைகளில் இருக்கிற உபநிஷத்துக்களோடுத் தற்போது பிரசாரத்தில் வேறு பல உபநிஷத்துக்களும் இருக்கின்றன. இந்த உபநிஷத்துக்கள் எந்தச் சாகையைச் சேர்ந்தனவோ, அந்தச் சாகையில் ஸம்ஹிதை, பிராம்மண் முதலிய பாகங்கள் தற்போது அத்யயனம் செய்யப்படவில்லை. அவற்றில் பலவற்றின் டெக்ஸ்ட் கூட நமக்கு அகப்படவில்லை. ஆனாலும் அவற்றை சேர்ந்த அந்த உபநிஷத்துக்கள் மட்டும் இன்று வரை அழியாமல் வந்திருக்கின்றன. உதாரணமாக ரிக் வேதத்தில் சாங்காயன சாகை என்பதன் ஸம்ஹிதா பாகம் இப்போது அத்யயனத்தில் இல்லை;அதை இழந்து விட்டோம். ஆனாலும் அந்த சாகையின் முடிவிலே வருகிற கௌஷீதகீ உபநிஷத் மட்டும் இன்றைக்கும் நம்மிடையே ஜீவனோடு இருந்து வருகிறது. ரிக் வேதத்திலேயே பாஷ்கல மந்த்ரோபநிஷத்து என்று ஒன்று நமக்கு வந்திருக்கிறது. அடையாறு லைப்ரரியில் இதன் சுவடிகள் இருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் இது எந்தச் சாகையின் முடிவில் வருகிறதோ, அந்த "பாஷ்கல சாகை" என்பதன் ஸம்ஹிதையைப் பற்றியோ பிராம்மணத்தைப் பற்றியோ நமக்கு ஒன்றும் தெரியவில்லை. கடோபநிஷத் என்பது கிருஷ்ண யஜூர் வேதத்தில் கடசாகை என்பதைச் சேர்ந்தது. உபநிஷத் என்பது

ஆரண்யகத்தின் கடைசியில் வருவது என்று முன்பே சொன்னேனல்லவா?ஆனால் இன்றைக்குக் கடைபநிஷத்து மிகவும் பிரஸித்தமாக, தசோபநிஷத்துக்க்ளிலேயே ஒன்றாக இருந்த போதிலும், இதற்கான ஆரண்யகம் நமக்குக் கிடைக்கவில்லை. அதர்வ அத்யயனம் வட இந்தியாவில் சில பாகங்களில் கொஞ்சம் மூச்சைப் பிடித்துக் கொண்டிருப்பது தவிர, தக்ஷிண தேசத்தில் அடியோடு மறைந்து போய்விட்டிருக்கிறது. ஆனாலும், பத்து உபநிஷத்துக்களில் மூன்று ('ப்ரச்னம்', 'முண்டகம்', 'மாண்டூக்யம்') அதர்வ வேதத்தைச் சேர்ந்தவைகளாகவே இருக்கின்றன.

அதாவது கர்மாக்களுக்குப் பிரதானமாக இருக்கிற சாகா (சாகையின்) பாகங்கள் மறைந்து போகும்படி விட்டுவிட்டாலும், தத்வத்தை மட்டும் விடக்கூடாது என்று, நம் தேசத்தில் இப்படி ஞான உபாயமான உபநிஷத்துக்கள் பலவற்றை விசேஷமாகக் காப்பாற்றி வந்திருக்கிறார்கள்.

உபநிஷத்துக்கள் ஏகப்பட்டன இருந்திருக்கின்றன. இருநூறு வருஷங்களுக்கு முன் காஞ்சீபுரத்திலே இருந்த ஒரு யதிகள் 108 உபநிஷத்துக்களுக்கு பாஷ்யம் எழுதியிருக்கிறார். அவருக்கு உபநிஷத் பிரம்மேந்திராள் என்றே பேர் ஏற்பட்டுவிட்டது. இன்னமும் அங்கே அவர்களுடைய மடம் இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*தசோபநிஷத்துக்கள்*

"தசோபநிஷத்"என்ற பத்தைப் பொறுக்கி ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் அத்வைத பரமாக பாஷ்யம் பண்ணினார். பின்னால் வந்த விசிஷ்டாத்வைதம், த்வைதம் முதலியவற்றை சேர்ந்த பெரியவர்களும் இதே பத்துக்குத் தங்கள் தங்கள் ஸித்தாந்தப் பிரகாரம் பாஷ்யம் செய்தார்கள். இந்த பத்தையும் சுலபமாக ஞாபகத்தில வைத்துக் கொள்வதற்காகப் பெயர்களை ஒரு ச்லோக ரூபத்தில் கோத்துச் செல்வதுண்டு.

ஈச-கேன -கட-ப்ரச்ன -முண்ட-மாண்டூக்ய-தித்திரி।

ஐதரேயம் ச சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம் தச।।

ச்லோகத்தில் சொல்லியிருக்கிற order(வரிசைக் கிரமப்) படித்தான் ஆசார்யர்கள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்கள்.

இதிலே ஈசம் என்பது ஈசாவாஸ்ய உபநிஷத். அது சுக்ல யஜுர் வேதத்தில் ஸம்ஹிதையிலே முடிவாக வருவது. "ஈசாவாஸ்யம்" என்ற வார்த்தையோடு ஆரம்பிப்பதால் இந்த உபநிஷத்துக்கு இப்படிப் பெயர். "கேன"என்று ஆரம்பிக்கும் அடுத்த உபநிஷத்துக்கு "கேனோபநிஷத்"என்றே பேர். ஈச்வரனால்தான் இந்த லோகம் முழுக்கவும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. அவனுக்கே கர்மாக்களை அர்ப்பணம் பண்ணிப் பரமாத்ம தத்வத்தை நாம் அடைய வேண்டும் என்று ஈசாவாஸ்யோபநிஷத்து கூறுகிறது.

மரயானைப் பொம்மையைப் பார்த்தால் குழந்தை அது யானை என்றே எண்ணுகிறது. பெரியவர்களுக்கு அது யானை மாதிரி இருந்தாலும் மரம்தான் என்று தெரிகிறது. குழந்தைக்கு மரம் மறைந்து யானை தெரிகிறது. பெரியவர்களுக்கு யானை மறைந்து மரம் தெரிகிறது. இப்படியே பார்(உலகம்) முதலாக பஞ்ச பூதங்களும் பரமாத்மா என்ற மரத்தால் பண்ணின பொம்மைதான்.

பரமாத்மாதான் இத்தனையும் என்று நாம் பார்க்கவேண்டும்.

மரத்தை மறைத்தது மாமத யானை

மரத்தில் மறைந்தது மாமத யானை

பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்

பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்

என்று திருமூலர் சொன்னபடி, பஞ்ச பூதங்களையே பார்த்துக்கொண்டு, அதன் காரணமான பரமாத்மாவை மறந்திருப்பதை விட்டு, இவற்றால் பரமாத்மா மறைந்துப்போகவிடாமல், இவற்றிலும் வியாபித்திருப்பது பரமாத்மாதான் என்று, அனைத்தையும் ஈச்வர வியாபகமாகப் பார்க்க வேண்டும். திருமூலர் சொன்னதையே அச்சடித்தாற்போல் "தந்தினி தாரு விகாரே" - மதத்தின் மாற்று ரூபத்தில் யானை - என்று ஆசார்யாள் சொல்கிறார். இவற்றில் எது முந்தி, எது பிந்தி என்ற வாதத்துக்கு நான் வரவில்லை. மஹா புருஷர்களுக்கு ஒரே மாதிரித்தான் தோன்றும்.

கேனம் என்பது கேனோபநிஷத். அது ஸாம வேதத்தில் ஜைமினி சாகையில், தலவகார பிராம்மணக்கில் வருவதால் தலவகார உபநிஷத் என்றும் சொல்வதுண்டு கெட்டதைக் கேனத்தில் தேடு என்று வசனம் இருக்கிறது. அடிமுடி தெரியாத பரம்பொருளை, அஹம்பாவம் பிடித்த தேவர்கள் தெரிந்து கொள்ள முடியாமல் தேடினபோது, ஸாக்ஷாத் அம்பிகையே தேவேந்திரனுக்கு ஞானோபதேசம் செய்ததை இந்த உபநிஷத் சொல்கிறது. நம்முடைய சகல சக்திகளும் ஒரே மஹாசக்தியிடமிருந்து வந்ததுதான் என்று ஸாக்ஷாத் பராசக்தியே உபதேசிக்கிறாள். இதற்கு ஸ்ரீ பகவத்பாதாள் மற்ற உபநிஷத்துக்களுக்கு பாஷ்யம் செய்த மாதிரிப் பதம் பதமாக எடுத்துக்கொண்டு பாஷ்யம் செய்ததோடு நிற்காமல், வாக்கியம் வாக்கியமாகவும் எடுத்துக் கொண்டு இன்னொரு பாஷ்யம் செய்ததோடு நிற்காமல், வாக்கியம் வாக்கியமாகவும் எடுத்துக் கொண்டு இன்னொரு பாஷ்யம் செய்திருக்கிறார். அதாவது இந்த உபநிஷத்து ஆசார்யாளின் இரட்டை பாஷ்யத்தைப் பெற்றிருக்கிறது. ஸௌந்தர்ய லஹரியிலும் ஆசார்யாள் இந்த உபநிஷத்தை முக்கியமாக நினைத்துக் கொண்டே, "வேத மாதாவின்சிரஸில் வைக்கப்பட்ட உன் திருவடிகளை என் தலை மேலும் வையம்மா"என்று அம்பாளை பிரார்த்தனை பண்ணுகிறார். வேதாந்தம் என்ற மாதிரியே வேத சிரஸ், ச்ருதி சிரஸ் என்ற பெயரும் உபநிஷத்துக்களுக்கு உண்டு. சிரஸ் என்றால் தலை. முடி என்றும் தமிழில் சொல்கிறோம். வேதத்தின் அந்தமாக, முடிவாக இருப்பதோடு அதன் சிரஸான முடியாகவும் இருப்பவை உபநிஷத்துக்களே. வேத மாதாவின் சிரஸில் அம்பாள் பாதம் இருக்கிறது என்றால், அது உபநிஷத்தில் இருக்கிறது என்றே அர்த்தம். இந்தக் கேனோபநிஷத்தில்தான் அம்பாள் ஞானாம்பிகையாக வருகிறாள். " ஸாமகான

ப்ரியா " என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் அவளுக்கு ஒரு பெயர் சொன்னதற்கு ஏற்றாற்போல், இந்த ஸாமவேத உபநிஷத்தில் அவளுடைய பெருமை விசேஷமாகத் தெரிகிறது. ஒரு வஸ்துவை நாம் பார்க்கிறோம் என்றால், பார்க்கப் படுகிற objectஎன்றும், பார்க்கிறவனான subjectஎன்றும் இரண்டு ஏற்பட்டுவிடுகின்றன. நம் உடம்பை நம்மால் object-ஆகத் தெரிந்து கொள்ள முடிகிறது. "என் உடம்பு நன்றாயிருக்கிறது;அல்லது நன்ராக இல்லை"என்று நாம் அதைப்ப பற்றித் தெரிந்து கொள்கிறோம் என்றால், அப்போது அது பற்றித் தெரிந்து கொள்கிறோம் என்றால், அப்போது அது object- ஆகி விடுகிறது. அதிலிருந்து வேறாக, 'நாம்'என்ற ஏதோ ஒன்று Subject- ஆக இருந்து கொண்டு, அதைப் பார்க்கிறது என்று ஏற்படுகிறது. அப்படிப் பார்ப்பது எதுவோ அதுதான் ஆத்மா. இந்த Subject-ஐ எதனாலும் தெரிந்து கொள்ள முடியாது. அப்படித் தெரிந்துகொள்ள முடிந்து விட்டால் அதுவும் Object -ஆகி, அதைப்பார்க்கிற இன்னொரு subject- தான் நிஜ நாம் என்றாகிவிடும். நிஜமான நாமான ஆத்மா subject- ஆகத்தான் இருக்கமுடியுமே தவிர object ஆகாது. எனவே சரீரம் முதலான object- களைத் தள்ளவிட்டு இந்த subject -ஆக நாம் அநுபவத்தில் தனித்து இருந்து கொண்டுதான் இருக்க முடியுமே தவிர அதை அறிந்து கொண்டு இருக்க முடியாது. அறிவது என்றால், இதைவிட இன்னொன்று இதை objectஆக்கி ஆராய்ந்தால்தான் முடியும். ஆத்மாவின் விஷயத்தில் இது அஸம்பாவிதம். ஆத்மாதான் நிஜமான நாம், அதை அறியவேண்டும் என்றால், அப்படி அறிகிற வஸ்து ஆத்மாவுக்கு வேறானதாகத்தான் இருக்க வேண்டும். நம்மில் நம்முடைய நிஜமான ஸ்வரூபத்துக்கு வேறாக என்ன இருக்கமுடியு ம்?ஆத்மாவுக்கு அந்நியமாக அதை அறிய எது உண்டு?எதுவும் கிடையாது. அதனால், "ஆத்ம ஞானம்", "ஆத்மாவை அறிவது" என்ற வார்த்தைகளைச் சொன்னால்கூட, இங்கெல்லாம் ஞானம், அறிவது என்பதற்கு ஒரு ஸப்ஜெக்ட் இன்னொரு ஆப்ஜெக்டை அறிகிறது என்று அர்த்தமில்லை. தன்னைத்தானே அநுபவித்துக் கொள்வதைத்தான் இந்த இடங்களில் 'ஞானம்', 'அறிவது'என்ற வார்த்தைகளால் சுட்டிக் காட்டுகிறோம். இதனால் தான் கேனோபநிஷத், எவன் ஆத்மாவை அறிந்துவிட்டேன் என்கிறானோ அவன் அறியவே இல்லை;எவன் அறியவில்லை என்ற நிலையில் இருக்கிறானோ அவன்தான் அறிகிறான். தெரியும் என்று நினைக்கிறவனுக்குத் தெரியாது; தெரியாது என்ற நிலையில் இருக்கிறவனுக்கே தெரிந்தது"என்கிறது. "கண்டவர் விண்டிலர்;விண்டவர் கண்டிலர்"என்று சொல்வதும் இதைத்தான்.

"கட"என்றது கடோபநிஷத். க்ருஷ்ண யஜுஸில் கடஸாகையில் வருவது. அதிலே, செத்தபின் ஜீவன் என்ன ஆகிறான் என்பதைப்பற்றி நசிகேதஸ் என்ற பிரம்மச்சாரிக்கு யமதர்மராஜா பண்ணின உபதேசம் வருகிறது. கதை மாதிரி ஆரம்பித்துப் பெரிய தத்வத்தில் கொண்டு போய்விடும். கீதையில் பகவான்

முக்கியமாக இந்த உபநிஷத் வாக்யங்களைத்தான் எடுத்துக்கொண்டு, திருப்பிச் சொல்லியிருக்கிறார்.

முன்னே ஸப்ஜெக்ட் - ஆப்ஜெக்ட் பற்றி நான் சொன்னது இந்த உபநிஷத்தின் கடைசியில் ரொம்பவும் அழுத்தமாக, உபதேசிக்கப் பட்டிருக்கிறது. பயிர்த்தண்டிலிருந்து கதிரை உருவி எடுக்கிறோம் அல்லவா?ஒரு ஈர்க்குச்சியில் மேல் தோலிலிருந்து உள்ளேயிருக்கும் ஈர்க்கை அப்படியே உருவி விடுகிறோம் அல்லவா?அந்த மாதிரி, ஆப்ஜெக்டான சரீரத்திலிருந்து ஸப்ஜெக்டான ஆத்மாவைத் தைரியமாக உருவி எடுத்துக்கொண்டு, அதுவாகவே இருக்கவேண்டும் என்று அந்த மந்திரம் (vi:17)சொல்கிறது. 'காமம்,க்ரோதம், த்வேஷம், பயம் எல்லாம் மனஸை சேரந்தனவே ஒழிய, ஆத்மாவான எனது அல்ல. பசி, தாகம் முதலியன உடம்பைச் சேர்ந்தனவே, தவிர என்னுடையன அல்ல, என்று ஆத்மாவைச் சேராத எல்லா அநாத்மவஸ்துக்களையும் objectify பண்ணி, வெளியே தள்ளுவதற்கு ஸதா பழகிக் கொண்டேயிருக்க வேண்டும். இம்மாதிரி எப்பொழுதும் அநுஸந்தானம் செய்து வந்தால், உடம்பும் மனஸும்தான்நாம் என்பதாக வேரூன்றியிருக்கும் அபிமானம் கொஞ்சம் கொஞ்சமாக நலிந்து, மறைந்தே போய்விடும். உடம்புக்கும் மனஸுக்கும் இருக்கப்பட்ட அழுக்குகள் எதுவுமில்லாத சுத்தமான ஆத்மாவாக நாம் இருக்கலாம். இப்படி, சரீரத்திலிருந்தும் மனஸிலிருந்தும் ஆத்மாவைப் பிரிப்பதற்கு, முஞ்சம் புல்லுக்குள்ளிலிருந்து ஈர்க்கு பளிச்சென்று சுத்தமாக வழவழவென்று பிரிந்து வருவதைத் திருஷ்டாந்தமாகச் சொல்லியிருக்கிறது. இதோ பக்கத்தில் இருக்கிற இந்த வாழைக்கட்டை வாடி வதங்கிப் போனால், நாம் வாடி வதங்குகிறோமா?அந்த வாழைக்கட்டையை விட, இன்னம் கொஞ்சம் கிட்டேயிருக்கும் மாம்ஸக் கட்டை என்றே இந்த சரீரத்தை எண்ணவேண்டும். அந்த வாழைக்கட்டை ஸப்ஜெக்டான நாமாக இல்லாமல் ஆப்ஜெக்டாக இருக்கிற மாதிரியே ஆத்மா என்ற ஸப்ஜெக்டுக்கு இந்த நம் உடம்பையும் வேறான ஆப்ஜெக்டாக இருக்கிற மாதிரியே ஆத்மா என்ற ஸப்ஜெக்டுக்கு இந்த நம் உடம்பையும் வேறான ஆப்ஜெக்டாகப் பார்க்கப் பழக வேண்டும்.

இந்த லோகத்தில், நாம் சரீரத்தில் இருப்பதாகத் தோன்றும் இப்போதே, இப்படி சரீரத்தை நானல்ல, என்னுடையதல்ல என்று பண்ணிக்கொள்ள வேண்டும். அப்போது, செத்துப் போனபின் தான் வேறு ஏதோ கைலாஸ வைகுண்டாதி லோகங்களுக்குப் போய் மோக்ஷம் அடையலாம் என்று இல்லாமல், இங்கேயே மோக்ஷமாகி விடும்!மோக்ஷம் என்றால், எந்த பாரமும் இல்லாமல் விடுபட்ட ஸதாநந்தம் என்றே அர்த்தம். அப்படி இந்த லோகத்திலேயே சரீரப் பிரக்ஞையை விட்டு, ஆத்மாராமனாக இருப்பவனைத்தான் ஜீவன் முக்தன் என்பது. வேத வேதாந்தங்களின் பரம தாத்பர்யம் ஒருத்தனை இப்படி ஜீவன் முக்தனாக்குவதுதான். கீதையில், பகவான் ப்ராக் சரீர விமோட்சனாத் (சரீரத்திலிருந்து உயிர் வெளியே போகிறதற்கு முந்தியே), இந்த லோகத்தில்

இருக்கும்போதே -இஹைவ - எவன் காம க்ரோத வேகங்களை அடக்கி விடுகிறானோ அவனே யோகத்தில் நிலைத்து நித்ய ஸுகத்தை அநுபவிக்கிறவன் என்று, இதே கருத்தைத்தான் சொல்லியிருக்கிறார். இஹைவ - இஹ ஏவ - அதாவது இங்கே இந்த பூலோகத்தில் இருக்கிற போதே, இப்படி ஆத்மாவைத் தெரிந்து கொண்டுவிட்டால் (அதாவது அநுபவித்து விட்டால்), சரீரம் போனாலும் போகிறது தெரியாது. சரீரம் இருக்கிறபோதேதான் அது தன்னுடையதல்ல என்று போக்கிக் கொண்டாகி விட்டதே!ஆகையால், சாவு என்று ஒன்று வந்து சரீரத்தைப் போக்கடிக்க வேண்டுமா என்ன?

சரீரம் (சரீரம் என்கிறபோது மனஸையும் சேர்த்துத்தான் சொல்வதாக அர்த்தம்) தனதல்ல என்றாக்கி விட்டால், அப்புறம் சாவே இல்லை. தனதில்லாத சரீரத்துக்கு வருகிற சாவு தன்னை எப்படி பாதிக்கும்? ம்ருத்யுவான சாவு இல்லாததால், இவன் அமிருதமாகி விடுகிறான். இஹைவ இவன் இப்படி அமிருதமாவதைத்தான் கர்மகாண்டத்திலே வருகிற புருஷஸூக்தாதி மந்திரங்களும் சொல்கின்றன. உபநிஷத்துக்களில் இந்த கருத்து விசேஷமாகத் திரும்பத் திரும்பக் கூறப்படும்.

நமக்கு துக்கஹேதுவாக இருப்பது சரீரமும் அதன் மூலம் செயல்படுகின்ற மனஸும்தான். துக்கம் போய் ஸதா ஆனந்தமாக இருப்பதைத்தான் எல்லா மதத்திலும் மோக்ஷம் என்று சொல்லியிருக்கிறது. அதற்காக வேறு ஏதோ பரலோகம், மோட்ச லோகம் என்ற ஒன்றுக்குப் போகவேண்டும் என்றுதான் அத்வைதத்தைத் தவிர மற்ற ஸம்பிரதாயங்களெல்லாம் சொல்கின்றன. இந்த லோகங்களில் கிடைப்பதைவிட நிறைவான ஆனந்தம், நிஜமான மோக்ஷம், இந்த லோகத்தில் இருக்கும்போதே, சரீர அபிமானத்தை அடியோடு தள்ளி விட்டு ஆத்மாவில் வேரூன்றி நிற்பதால் கிடைக்கிறது என்று சங்கர பகவத் பாதாள் ஸ்தாபித்திருக்கிறார்.

ததேதத் அசரீரத்வம் மோட்சாக்யம்

என்று ஸூத்ர பாஷ்யத்தில் (I.1.4) சொல்கிறார். அசரீரி என்றால் நாம் என்ன நினைத்துக் கொண்டிருக்கறோமென்றால், ஆள் தெரியாமல் ஒரு குரல் மட்டும் கேட்பது என்று. அசரீரி என்றால் சரீரம் இல்லாமலிருப்பது என்பதே அர்த்தம். சரீரம் நான் என்கிற பிரக்ஞை போகிறதுதான் அசரீரத்வம். அதுதான் மோட்சம் என்று ஆசார்யாள் லட்சணம் கொடுக்கிறார். சரீரம் இல்லாமல் அசரீரியாகப் பண்ணிக்கொள்வது என்றால், தற்கொலை செய்துகொள்வது என்று அர்த்தமில்லை. தற்கொலையும் ஸாதாரணச் சாவும் ஸ்தூல தேஹத்திற்குத்தான். இது போனபின்னும் மனோமயமான ஸூட்சும தேஹம் இருந்து கொண்டு கஷ்டப் படுத்தும் ஆசைகளை குறைத்துக் கொண்டே வந்து, அடியோடு தேய்த்து விட்டால் தான் சரீராபிமானம் முற்றிலும் போய், அபிமானிக்கிற மனஸும் போய்விடும். உள்ளேயிருக்கிற ஆத்மா மட்டுமே பிரகாசிக்கும். இதற்காக, வேறு எந்த லோகத்துக்கும் போகத் தேவையில்லை. இதைத்தான் வேத வேதாந்தங்கள்

இஹைவ, இஹைவ என்பது.

இந்த அம்ருத நிலையை அடைவதற்கு முக்யமான இரண்டு சத்ருக்கள் காம, க்ரோதம் என்று கீதையான ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. அதற்கு ஆதாரம் ச்ருதியான சாந்தோக்யத்தில் உள்ள (VIII.12.1) 'ப்ரிய அப்ரியம்'என்ற வாக்கியம், விருப்பு வெறுப்பு என்று அர்த்தம். விருப்பு தான் காமம்;வெறுப்பு க்ரோதம். சரீரம் இல்லாதவனை விருப்பு வெறுப்புகள் தொடமாட்டா என்று சாந்தோக்யம் சொல்கிறது. அதாவது, "நீ விருப்பு வெறுப்பிலிருந்து விடுபட வேண்டுமானால் உயிரோடு இருக்கிறபோதே சரீரம் நானில்லை என்று ஆக்கிக்கொள்" என்கிறது.

ஒரே ஜீவாத்மாவின் அஹங்கார - மமகாராதிகளை ஒட்டி (நான் எனது என்ற பாவனைகளை ஒட்டி) கௌணாத்மா, மித்யாத்மா, முக்யாத்மா என்று மூன்றாகரப் பிரித்துச் சொல்வது வழக்கம். பெரியோர்கள் இந்த விஷயத்தை ச்லோகமாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த ச்லோகமானது பகவத்பாதாளால் ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்தில் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது.

கௌண-மித்யாத்மனோ(அ) ஸத்வே புத்ர தேஹாதி பாதனாத்।

ஸத் -ப்ரஹ்மாத்மாஹம் இத்யேவம் போதே கார்யம் கதம் பவேத்।।

( ஸூத்ர பாஷ்யம் I.1.4)

புத்ர மித்திரர்கள் நாமே என்றும், அவர்களுடைய ஸுகதுக்கம் நம்முடையது என்றும் எண்ணும் அபிமானமானது எல்லாரிடத்திலும் குடிகொண்டிருக்கிறது. அதுதான் கௌணாத்மா. கௌணமென்றால், உபசாரமாகச் சொல்லுவதென்று அர்த்தம். நாம் வேறு, புத்ர மித்ரர்கள் வேறு என்று நமக்குத் தெரிந்திருக்கும் பொழுதே, நாம் நாம் என்கிற அபிமானம் நமக்கு அவர்களையொட்டி வருவதால் கௌணாத்மா என்று சொல்லப்பட்டது. அவர்களைவிட நெருங்கின சரீரம் முதலியவற்றில் நான் என்கிற அபிமானம் உண்டாவது மித்யாத்மா. சுத்தமான ஆத்ம ஸ்வருபத்தைப் பிரித்து,ப்ரம்ம ஸ்வரூபமே நான் என்பது அநுபவத்திற்க்கு வருகிறபொழுது,ப்ரம்மமே ஆத்மாவாகி விடுகிறது.அதைத் தான் முக்கியாத்மாவென்று சொல்வது.முதலில் சொல்லப் பட்ட கௌணாத்மா,மித்யாத்மா இவ்விரண்டையும் விலக்கி விட்டால் புத்ர மித்திரர்கள், சரீர இந்திரியங்கள் இவைகளுடைய ஸம்பந்தம் நீங்கிவிடும். அப்பொழுது 'ஸத்யமான ப்ரம்ம ஸ்வரூபமாகவே நான் இருக்கிறேன்'என்கிற ஞானம் உண்டாகிறது. அதற்குப் பிறகு செய்யவேண்டியது ஒன்றுமே கிடையாது என்பது மேலே சொல்லிய ச்லோகத்தின் தாத்பரியம்.

"Arise, awake: எழுந்திருங்கள்,விழித்துக் கொள்ளுங்கள்"என்று, விவேகாநந்தர் எல்லாரையும் தட்டி எழுப்பி, ராமகிருஷ்ணா மிஷனுக்கு motto-வாக(லஷ்ய

வாசகமாக) வைத்தது, கடோபநிஷத்தில் வருகிற மந்திரம்தான். இப்போது நிறைய மேற்கோள் காட்டப்படும் அநேக வாசகங்கள் இந்த உபநிஷத்தில் வருகிறவையே. உதாரணமாக, "படிப்பாலோ மேதாவித்தனத்தனத்தாலோ ஆத்மாவை அடைய முடியாது"("நாயமாத்மா") என்கிற மந்திரம்; ஜீவன் என்ற தேர்க்காரனுக்கு சரீரம் தேர்,புத்தி ஸாரதி,மனஸ் கடிவாளம், இந்திரியங்கள் குதிரைகள் என்ற விஷயம்; ஹ்ருதய குகையில் பரமபுருஷன் அங்குஷ்ட (கட்டை விரல்) பிரமாணமாக ஜோதி ரூபத்திலிருக்கிறான் என்ற ஸமாசாரம்;தீபாராதனை செய்கிறபோது சொல்லும் ந தத்ர ஸூர்யோ பாதி மந்திரம் (பரமாத்மாவின் ஸந்நிதானத்தில் சூரியன். சந்திரன், நட்சத்திரம் அக்னி எல்லாமே ஒளி மழுங்கி விடுகின்றன. அவனால் தான் இவற்றுக்கெல்லாம் பிரகாசமாதலால், இவற்றால் அவனை விளக்கிக் காட்டமுடியாது என்ற அர்த்தம். நம் அறிவெல்லாம் அந்தப் பிரகாசமாதலால், இவற்றால் அவனை விளக்கிக் காட்டமுடியாது என்று அர்த்தம்.நம் அறிவெல்லாம் அந்தப் பேரறிவிலிருந்தே உண்டானதால், இந்த நம் சிற்றறிவால் அவனை விளக்க முடியாது);பிற்பாடு கீதையிலும் பகவான் சொல்லும் ஸம்ஸாரம் என்ற தலைகீழ் அச்வத்த விருட்சத்தைப் பற்றிய பிரஸ்தாவ ம்;ஹ்ருதயத்தில் குடிகொண்டுள்ள ஆசைகளை எல்லாம் ஒழித்துவிட்டால், இங்கேயே மனிதன் அமிருதமாகி பிரம்மத்தை அநுபவிக்கிறான் என்ன விஷயம் - இப்படி அநேக சமாசாரங்கள் இன்று quote பண்ணப்படுவதெல்லாம் கடோபநிஷத்துக்கு அப்புறம் வரும் ப்ரச்னோபநிஷத் முண்டகோபநிஷத், மாண்டூக்யோபநிஷத் ஆகிய மூன்றும் அதர்வ வேதத்தைச் சேர்ந்தவை. ப்ரச்னம் என்றால் கேள்வி. பிரஜைகள் உறபத்தியானது எப்படி?அவர்களை ரக்ஷிக்கிற தேவர்கள் யார்?பிராணன் எப்படி சரீரத்தில் வந்து இயங்குகிறது?விழிப்பு, தூக்கம், ஸ்வப்னம் என்கிற நிலைகளைப் பற்றின உண்மை என்ன?ஓங்கார உபாஸனையின் பிரயோஜனம் என்ன?பரம புருஷனுக்கும்ஜீவனுக்கும் என்ன சம்பந்தம்?- என்கிற ஆறு பிரச்னங்களுக்கு விடை சொல்வதால் இந்த உபநிஷத்துக்கு இப்படிப் பெயர் ஏற்பட்டிருக்கிறது.

முண்டகம் என்றால் தலையை மொட்டை அடித்துக் கொள்வது. ஸந்நியாஸிகள் மாதிரியான பரம பக்குவமான வைராக்யசாலிகளே அப்யஸிப்பதற்கு அதிகாரம் பெற்ற உபநிஷத்துக்கு முண்டகோபநிஷத் என்ற பெயர் இருக்கிறது. அக்ஷர பிரம்மத்தைப் பற்றிச் சொல்கிற உபநிஷத் இது. அழிவில்லாதது எதுவோ அதுவே அக்ஷரம். அக்ஷரம் என்றால் ஒலி என்ற அர்த்தமும் இருக்கிறது. பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் என்றெல்லாம் சொல்கிறோம் அல்லவா?இந்த ஒலிகளுக்கெல்லாம் மூலமான அக்ஷரம்தான் பிரணவம் என்னும் ஒம்காரம். அக்ஷரப் பிரம்மம் என்ற லக்ஷ்யத்தில் சேர்வதற்கு அக்ஷரமான பிரணவம் விசேஷ ஸாதனமாக இருக்கிறது. ஒம்கார வில்லில் ஆத்மா என்ற அம்பைப் பூட்டிக் கொஞ்சங்கூட கலக்கமில்லாமல் பிரம்மம் என்ற குறியில் அடித்து ஒன்றாக்கி விடவேண்டும் என்று இந்த உபநிஷத் சொல்கிறது. ஜீவாத்மா, பரமாத்மா இரண்டையும் சரீரம் என்கிற ஒரே பிப்பில மரத்திலிருக்கிற இரண்டு பக்ஷிகளாகவும், அவற்றில்

ஜீவாத்ம பக்ஷி மட்டும் பழத்தை(கர்ம பலத்தை)ச் சாப்பிடுவதாகவும், பரமாத்ம பக்ஷி சாக்ஷி மந்திரமாகப் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருப்பதாகவும் இந்த உபநிஷத்தில்தான் வருகிறது. இதுவே பைபிளில் ஆதம் (ஆத்மா) ஆப்பிள் (பிப்பில) பழத்தைச் சாப்பிடாமலிருந்ததாகவும், ஈவ் (ஜீவன்) அதைச் சாப்பிட்டதாகவும் கதையாயிற்று. இப்போது குடியரசு சர்க்காரில் ஸத்யமேவ ஜயதே என்ற Motto (லக்ஷ்ய வாசகம்) வைத்துக்கொண்டிருக்கிறார்களே, அது முண்டகோபநிஷத் மந்திரம்தான். இந்த லோகத்திலேயே ஜீவன் முக்தர்களாக இருந்து, சரீரம் போனபின் விதேஹ முக்தர்களாக இருந்து, சரீரம் போனபின் விதேஹ முக்தர்களாக ஸந்நியாஸிகளைப்பற்றியும் இதில் ஒரு மந்திரம் இருக்கிறது. இப்போது ஸந்நியாஸிகளுக்குப் பூர்ண கும்பம் கொடுக்கும்போது சொல்கிற மந்திரங்களில் இந்த மந்திரமும் வருகிறது. வெவ்வேறு பெயரில், வெவ்வேறு ரூபத்தில் ஓடுகிற நதிகள் யாவும் ஸமுத்திரத்தில் தங்கள் பெயரையும் உருவத்தையும் இழந்து ஸமுத்திரமாகவே ஆகிவிடுவதுபோல, ஞானி நாம ரூபங்களை இழந்து பராத்பரனான புருஷனில் இரண்டறக் கலந்துவிடுகிறான் என்று இந்த உபநிஷத் சொல்கிறது.

'மாண்டூக்யோபநிஷத்து'அடுத்தது. மாண்டூக்யம் என்றால் தவளை. தவளை உபநிஷத்து என்று ஏன் பேர்?ஒரு காரணம் தோன்றுகிறது. தவளை ஒவ்வொரு படியாக ஏற வேண்டும் என்பதில்லை. அப்படியே தாவி முதல் படியிலிருந்து நாலாம் படிக்கு எகிறிக் குதித்து வரும். இந்த உபநிஷத்திலே ஜாக்ரம் (விழிப்பு நிலை), ஸ்வப்னம் (கனவு நிலை), ஸுஷுப்தி (தூக்க நிலை) இவற்றைத் தாண்டி ஆத்மவெளியான துரீயத்தில் (நாலாம் நிலையில்) சேருவதற்கு வழி சொல்லியிருக்கிறது. ஓம் என்ற அக்ஷர உபாஸனையாலேயே இப்படி ஒரே தாவாகத் துரீயத்துக்குத் துள்ளிக் குதிப்பதைச் சொல்லியிருக்கிறது. அதனால்தான் தவளை உபநிஷத்து என்று பேர் வந்துவிட்டதோ என்று தோன்றுகிறது. ரிஸர்ச் செய்பவர்கள், ஆதிகால ஜனங்களில் ஒவ்வொரு கோஷ்டியும் ஒவ்வொரு பிராணி

வர்க்கத்தின் பேரில் totemஎன்று அடையாளம் வைத்துக் கொண்டு, தனி தனிப்பிரிவுகளாகச் சேர்ந்திருந்தார்கள் என்றும், இதிலே தவளை அடையாளம் வைத்துக் கொண்ட மாண்டூக்யர்களிடம்ிருந்த உபநிஷத்தே இது என்றும் சொல்கிறார்கள். இந்த உபநிஷத்தின் ரிஷி மண்டூக ரூபியான வருண பகவான் என்று சொல்லப்படுகிறது.

உபநிஷத்துக்களுக்குள் ரொம்பச் சின்னது இதுதான். மொத்தம் பன்னிரண்டே மந்திரங்கள்தான். ஆனால் கீர்த்தியிலும், சக்தியிலும் இந்த உபநிஷத் விசேஷமான இடம் பெற்றிருக்கிறது. பிரணவத்தின் நாலு பாதங்களைக் காட்டி ஜீவாத்மா, பரமாத்மா இரண்டும் ஒன்றே என்ற இது நிர்த்தாரணம் செய்கிறது. கடைசியில் பிரபஞ்சமெல்லாம் ஒடுங்கிப் போகிற துரீய அநுபவத்தை "

சாந்தம்-சிவம்-அத்வைதம் " என்று இந்த உபநிஷத் வர்ணிப்பது பிரஸித்தமாக இருக்கிறது.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் குருவுக்கு குருவான ஸ்ரீ கௌட பாதாச்சார்யாள் 'மாண்டூக்யோப நிஷத் காரிகை'என்று இந்த உபநிஷத்தின் தத்துவத்தை விளக்கி எழுதியிருக்கிறார். அதற்கு பகவத்பாதாள் பாஷ்யம் செய்திருக்கிறார். தசோபநிஷத்துக்களின் பேரச்சொல்லும் ச்லோகத்தில் அடுத்தாற்போல் தித்திரி என்று வருவதுதான், தைத்ரீய உபநிஷத்.

வைசம்பாயனருக்குத் தம்முடைய சிஷ்யரான யாக்ஞவல்கியரிடம் மனோபேதம் உண்டாகி, "நான் சொல்லிக் கொடுத்த வேதத்தைக் கக்கிவிடு"என்று கோபித்துச் சொன்னதாகவும், யாக்ஞவல்கியர் அப்படியே செய்துவிட்டு, பிறகு சூரியபகவானிடம் சென்று அவரிடமிருந்து இதுவரை லோகத்துக்கு வராதிருந்த சுக்ல யஜுர்வேதத்தில் உபதேசம் பெற்று வந்தார் என்றும் முன்னே சொன்னேனல்லவா?யாக்ஞவல்கியர் முதலில் கற்றுக்கொண்ட வேதத்தைத் தம்முடைய மந்திர சக்தியால் வாஸ்தவமாகவே அன்ன ரூபமாக்கிக் கக்கி விட்டார். அப்போது வைசம்பாயனரின் உத்தரவுப்படி, மற்ற சிஷ்யர்கள் தித்திரி என்கிற புறா மாதிரியான பக்ஷியின் ரூபத்தை எடுத்துக் கொண்டு யாக்ஞவல்கியர் கக்கியதைச் சாப்பிட்டு விட்டார்கள். அதனால், உடனே அவர்களுக்கு அந்த வேதம் முழுவதையும் அறிந்து கொள்ள முடிந்து விட்டது. அந்த வேத சாகைக்கு கிருஷ்ண யஜுஸின் தைத்திரீய சாகை என்ற பெயரும் உண்டாகிவிட்டது. 'தித்திரிக்கு'adjectival form 'தைத்திரீய'என்பது. தைத்திரீய சாகையில் உள்ள ஸம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம் எல்லாவற்றுக்கும் தைத்திரீயம் என்றே பெயர். தைத்திரீய ஆரண்யகத்தில் தான் இந்த உபநிஷத்து உள்ளது.

மற்ற எல்லா உபநிஷத்துக்களைவிட அதிகமாக அத்யயனம் செய்யப்படுகிற உபநிஷத்து இதுதான். கர்மாநுஷ்டானங்களில் பிரயோகமாகும் அநேக மந்திரங்கள் இதிலிருந்து எடுத்தவைதான்.

சீக்ஷாவல்லி, ஆனந்தவல்லி, ப்ருகுவல்லி என்று இந்த உபநிஷத்தில் மூன்று பாகங்கள் உண்டு. சீக்ஷாவல்லியில் சிக்ஷையை (கல்விப் பயிற்சியை)ப் பற்றிய பல விஷயங்களைச் சொல்லியிருக்கிறது. பிரம்மச்சர்ய ஆசிரம நியமங்கள், அதன் மகிமை, வேத அத்யயனக் கிரமம், பிரணவ உபாஸனை முதலியவற்றைப் பற்றி இந்த பாகம் உபதேசிக்கிறது. பிரம்மசாரிகள் தங்கு தடையில்லாமல் தன்னிடம் வந்து வேதத்தை ஸ்வீகரிக்க வேண்டும் என்று ஆசாரியன் செய்கிற ஆவஹந்தீ ஹோமம் இதில்தான் இருக்கிறது. இன்றைக்குக்கூட, இந்த ஹோமத்தைப் பண்ணிப் பார்த்ததில் பல இடங்களில் குற்றுயிரும் குலை உயிருமாக இருந்த (வேத) பாடசாலைகளில் புதிதாக வித்யார்த்திகள் சேர்ந்து அவற்றுக்குப் புத்துயிர் உண்டானதைக் கண்கூடாகப் பார்த்திருக்கிறோம். இப்போது ராஜரீக ரீதியில் நாம் சொல்கிற ஸ்வராஜ்யத்தைவிட, சாச்வதமான ஆத்ம "ஸ்வராஜ்ய"த்தைப் பற்றியும்

இதிலே சொல்லியிருக்கிறது. ஸத்யம் வத, தர்மம் சர (உண்மையே பேசு;தர்மப்படியே ஒழுகு) முதலான உபதேசங்கள் இங்கேதான் வருகின்றன. வேத அத்யயனத்தையும் ஸ்வதர்மத்தையும் ஒருநாளும் விடக்கூடாது;இவை எந்நாளும் லோகத்தில் இருந்து வருவதற்காகவே, கலியாணம் பண்ணிக்கொண்டு பிரஜா விருத்தி பண்ணவேண்டும் என்று சிஷ்யனுக்கு குரு உபதேசிக்கிறார். மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, ஆசார்ய தேவோ பவ, அதிதி தேவோ பவ (அன்னை, தந்தை, குரு அதிதி ஆகியோரை தெய்வமாகப் போற்ற வேண்டும்) என்ற மந்திரங்கள் இங்கேதான் இருக்கின்றன. தான தர்ம சிந்தனையை விசேஷித்து உபதேசிப்பதும் இங்குதான்.

மற்ற ஆனந்தங்கள் ஒவ்வொன்றையும் நூறால் பெருக்கிக் கொண்டே போய்க் கடைசியில் பிரம்மானந்தத்தைச் சோல்லியிருக்கிறது என்று முன்னே சொன்னேன் அல்லவா?அந்தப் பெருக்கல் வாய்ப்பாட்டைச் சொல்லி பிரம்மானந்தத்தோடு முடிகிற உபநிஷத் பாகத்துக்கே 'ஆனந்தவல்லி' என்று பெயர். சோற்றால் வளரும் மாம்ஸ சரீரமான அன்னமயகோசம், அதற்குள் மூச்சு விடுகிற பிராணமய கோசம், எண்ணங்களை உண்டாக்குகிற மனோமய கோசம், அவற்றல் நல்லது கெட்டதுகளை அறிந்து கொள்கிற விஞ்ஞானமய கோசம், இந்த நாலு கோசத்துக்கும் ஆதாரமாக இருக்கிற தனிஜீவ மூலமான ஆனந்தமய கோசம் என்று ஐந்தைச் சொல்லி, ஆனந்தமயத்துக்கு அடி ஆதரமாய்யுள்ள பிரம்மம் ஸ்வச்சமாகத் தன்னுடைய பேரின்ப நிலையில் இருக்கிற விஷயம் இங்கே விளக்கப்படுகிறது. ஒவ்வோரு கோசத்தையும் ஒரு பக்ஷியாக உருவகக்படுத்தி, அந்த பக்ஷிக்கு இது தலை, இது வலதுபக்க சிறகு, இது இடதுபக்க சிறகு, இது உடம்பு, சொல்லியிருக்கிறது. அடிக்கடி quote பண்ணப்படும் "யதோ வாசோ" ('எந்த ஸ்தானத்தை எட்டிப் பிடிக்க முடியாமல் வாக்கும் மனஸூம் திரும்பி விடுகன்றனவோ, அந்த ஆனந்தமான பிரம்மத்தை அறிந்தவனுக்கு பயமில்லை') முதலான மந்திரங்கள் இதில் வருவதுதான்.

"பிருகுவல்லி"என்பது, வருணபகவான் தன்னுடைய புத்திரரான பிருகுவுக்குச் செய்த உபதேசமாகும். உபதேசம் என்று சொன்னாலும் எல்லாவற்றையும் குருவே 'டிக்டேட்' பண்ணுவதாக இல்லாமல் சிஷ்யன் தானாக ஒவ்வொரு ஸ்டேஜாக எக்ஸ்பெரிமென்ட் பண்ணி, சொந்தத்தில் எக்ஸ்பீரியன்ஸ் அடைகிற விதத்தில் இங்கே பிருகுவை வருணன் உத்யாஹப்படுத்திக் கொண்டு போகிறார். இந்த மாதிரி பிருகு தாமாகத் தபஸ் பண்ணிப் பண்ணியே, முதலில் அன்னமயமான சரீரம்தான் ஸத்தியம் என்று நினைத்த ஸ்திதியிலிருந்து ஒவ்வொன்றாக மேலே ஏறிப்போய், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் இவற்றைக் கடந்து, கடைசியில் ஆனந்த மயத்துக்கு ஆதாரமான ஆத்மாதான் பரம ஸத்தியம் என்று அநுபவத்தில் தெரிந்து கொள்கிறார்.

இப்படிச் சொன்னதால், முக்கியமாக அன்னமய சரீரத்தோடேயே நின்றுவிடுகிற

யதார்த்த லோக வாழ்க்கையை இந்த உபநிஷத் தள்ளிவிடுகிறது என்று அர்த்தமில்லை. லோகத்தில் இருந்து கொண்டே உத்தமமான ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு இந்த லோக வாழ்க்கையே தர்மமாக நடத்தி, உபாயமாக்கிக் கொள்ள வேண்டும். அதனால்தான் இங்கே ஆனந்தமய கோசத்துக்குப் போனபின், மறுபடி'அன்னத்தை இகழாதே'அன்னத்தை எறியாதே, நிறைய அன்னத்தை விளைவியுங்கள்'என்றெல்லாம் உபதேசிக்கப்படுகிறது. சர்க்காரில் கூட உணவு அபிவிருத்தி இயக்கத்தில் (Grow More Food Campaign™) இந்த மந்திரங்களைப் பிரசாரப் படுத்தினார்கள். ஞானியானவன், "அன்னம், அதை உண்பவன், அன்னத்துக்கும் உண்பவனுக்கும் சம்பந்தம் உண்டாக்கியவன் ஆகிய எல்லாமும் நானே"என்று ஈச்வரனோடு ஈச்வரனாகத் தன்னை உணர்ந்து ஆனந்தமாக கானம் பண்ணிக் கொண்டிருப்பான்ெ ன்று முடிகிறது.

ரிக் வேதத்தின் ஐதரேய ஆரண்யகத்தில் வருகிற ஐதரேய உபநிஷத் அடுத்ததாக இருக்கிறது. ஐதரேயர் என்ற ரிஷியின் மூலம் இது பிரசாரத்துக்கு வந்ததால் இப்படிப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஒரு ஜீவன் பிதாவிடமிருந்து மாதா கர்ப்பத்தில் புகுவது, பிறகு லோகத்தில் பிறப்பது, புண்ய பாபங்களால் மறுபடி மறுபடி பல லோகங்களில் ஜன்மா எடுப்பது முதலான விஷயங்களைச் சொல்லி, ஆத்மாவைத் தெரிந்துகொள்வதன் மூலமே ஜன்மாவிலிருந்து, ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறுவதை இந்த உபநிஷத் சொல்கிறது. கர்ப்பத்திலிருக்கிற காலத்திலேயே வாமதேவர் என்ற ரிஷி சகல ஜன்மாக்களைப் பற்றியும் தெரிந்து கொண்டு, அத்தனை கோட்டைகளையும் கடந்து ஆகாசத்தின் உச்சியில் பறக்கிற பருந்து மாதிரி விடுதலையை நோக்கிக் கிளம்பிவிட்டதாக இந்த உபநிஷத்தில் சொல்கிறார். இதிலே ஆத்மாவைப் பற்றிய பிரத்யக்ஷ ஞானமான பிரஜ்ஞானத்தை சிறப்பித்துச் சொல்லப்படுகிறது. அந்த ஞானத்தினால் பிரம்மம் பெறப்படுகிறது என்பதுகூடச் சரியில்லை. அந்த பிரஜ்ஞானமேதான் பிரம்மம் என்று முடிகிறது. இதுவே ரிக்வேக மஹாவாக்யம்.

பத்தில் கடைசி இரண்டான "சாந்தோக்ய உபநிஷத்"தும், "பிருஹதாரண்யக உபநிஷத்"தும் ரொம்பவும் பெரியவை. மற்ற எட்டு உபநிஷத்துக்களையும் சேர்த்தால் எவ்வளவு ஆகுமோ அதைவிட இவை பெரியவை. சாந்தோக்ய உபநிஷத் என்பது ஸாம்வேதத்தில் சாந்தோக்ய ப்ராம்மணத்தில் இருப்பது. சந்தோக என்பதைக் குறித்தது சாந்தோக்யம். சந்தோகன் என்றால் ஸாம கானம் செய்கிறவன் என்று அர்த்தம். 'சந்தோகன் காண்' என்று தேவாரத்தில்கூடப் பரமேச்வரனைச் சொல்லியிருக்கிறது. சந்தோக அவஸ்தா என்பதே Zend - Avesta என்றாகிப் பார்ஸியர்களின் மதநூலாக இருக்கிறது.

கீதையில் கடோபநிஷத் வெகுவாகக் கையாளப்படுவதுபோல் பிரம்மஸூத்ரத்துக்கு நிரம்ப ஆதாரமாக சந்தோக்யோபநிஷத் மந்திரங்களே

இருக்கின்றன என்று சொல்வதுண்டு.

சாந்தோக்யம், பிருஹதாரண்யகம் ஆகிய இரண்டு உபநிஷத்துக்களிலும் பல ரிஷிகளின் உபதேசங்களைச் சேர்த்து கொடுத்திருக்கிறது.

சாந்தோக்ய ஆரம்பத்தில் ஓம்காரத்துக்கு உத்கீதம் என்று பேர் சொல்லி, அதன் உபாஸனையை விவரித்திருக்கிறது. இந்த உபநிஷத்தில் அக் ஷி வித்தை, ஆகாச வித்தை, மது வித்தை, சாண்டில்ய வித்தை, பிராண வித்தை, பஞ்சாக்னி வித்தை போன்ற பல வித்தைகளைச் சொல்லியிருக்கிறது. இவையெல்லாம் அத்வைதமான பரமாத்ம தத்வத்தைப் பல வழிகளில் சென்று தெரிந்துகொள்வதற்கு உதவுகிற த்வைதமான உபாஸனைகள். இவற்றுக்கு உச்சியிலே வருவது தஹரவித்தை. அகண்ட ஆகாசமாக இருக்கிற பரம்பொருளை ஜீவனானவன் தன் உளளத்துக்குள்ளே இருக்கிற சின்னஞ்சிறிய ஆகாசத்தில் கண்டுகொள்வதுதான் தஹர வித்தை.

இந்த உபநிஷத்திலே, சுவாரஸ்யமான பல கதைகளைச் சொல்லி, அதன் வழியே தத்வங்கள் உபதேசிக்கப்படுகின்றன. வெளிப்பார்வைக்கு விசித்திரமாகத் தோன்றும் பிரம்ம ஞானியின் போக்கு ரைக்வர் என்பவரின் கதையில் தெரிகிறது. தன்னுடைய கோத்திரத்தைத் தெரிந்து கொள்ளாத ஸத்யகாமன் என்ற ஒரு சிறுவன் அதை ஒளிக்காமல் சொன்னதாலேயே அவனை நல்ல பிராமணனாகக் கொண்ட அதை சாந்தோக்யத்தில்தான் வருகிறது. 'சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு' என்ற திருக்குறளுக்குக் கதா ரூபமாக இது இருக்கிறது. ஸத்யகாமனுக்கு உபதேசம் பண்ணுவதற்கு முந்தி குருவானவர் நிரம்ப சோதனைகள் வைக்கிறார். அவருடைய பத்னியே ஸத்யகாமனுக்கு நேரெதிராக வித்யா கர்வத்தோடு இருந்த ச்வேதகேது என்ற பிரம்மச்சாரிக்கு அவனுடைய தகப்பனாரான உத்தாலக ஆருணி அடக்கத்தை உண்டுபண்ணி, கடைசியில் ஜீவப்பிரம்ம அபேதத்தைச் சொல்லும் தத்-த்வமஸி உபதேசம் செய்வதுதான் ஸாம வேதத்துக்கே உயிர்நிலையாக மஹா வாக்யத்தைச் சொல்லும் இடம். ச்வேதகேதுவைப் போலில்லாமல் ஸகல வித்தைகளையும் கசடறக் கற்றிருந்தும், இவற்றால் ஆத்மாவைத் தெரிந்துகொள்ள முடியவில்லையே என்று பரிதவித்துக் கொண்டிருந்த நாரத மஹரிஷிக்கு ஸனத்குமாரர் செய்கிற உபதேசமும் இந்த உபநிஷத்தில்தான் வருகிறது. "தைத்திரீயத்" தில் அன்ன மயத்தில் ஆரம்பித்து மேலே மேலே கொண்டு போன மாதிரியே, ஸனத்குமாரரும் ஆகார சுத்தியில் ஆரம்பித்து அந்த ஃகரண சுத்திக்குக் கொண்டு போய், அப்போதுதான் கட்டுக்கள் எல்லாம் தெறித்து ஆத்மானந்தம் ஸித்திக்கும் என்கிறார்.

உபதேசம் ஒன்றேயானாலும், சிஷ்யர்களின் பக்குவத்தைப் பொறுத்தே ஒவ்வொருவரும் அதனால் பிரயோஜனம் அடைகிறார்கள் என்பதை இன்னொரு கதை காட்டுகிறது. தேவராஜாவான இந்திரன், அசுர ராஜாவான விரோசனன் இரண்டு பேருக்கும் பிரஜாபதியானவர், "கண்ணினால் எவன் பார்க்கிறானோ

அவனே ஆத்மா"என்று ஒரே உபதேசத்தைச் செய்கிறார். கண், அறிவு முதலான எல்லாவற்றுக்கும் பின், அவற்றுக்கு ஆதாரமாக இருக்கிற வஸ்துவை அவர் இப்படி மறைமுகமாக குறிப்பிட்டார். ஆனால் இதை சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவர்கள் இருவரும் தங்களைத் தாங்களே கண்களால் பார்த்துக் கொள்ளும்படியாகத் தோன்றும் தங்களுடைய பிரதிபிம்பங்களையே ஆத்மா என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்கள்.

பிரதிபிம்பத்தில் சரீரம் தானே தெரிகிறது?அதனால் சரீரமே ஆத்மா என்று விரோசனன் முடிவாகத் தீர்மானம் பண்ணி விடுகிறான். அதிலிருந்து நாஸ்திகவாதம், லோகாயதம், materialismஎன்றெல்லாம் சொல்வது அசுரர்களின் கொள்கையாகி விடுகிறது. இந்திரனும் முதலில் இப்படித் தப்பாக நினைத்தாலும், அப்புறம் (தைத்ரீயத்திலே வருகிற) பிருகு அன்னமய கோசத்திலிருந்து ஒவ்வொன்றாகத் தாமே பரீக்ஷித்துப் பரீக்ஷித்து ஆனந்தமய கோசத்துக்குப் போன மாதிரி, இங்கே இந்திரனும் ஸ்தூல தேகத்திலிருந்து ஸூக்ஷ்ம தேகமான ஸ்வப்ன சரீரம், அப்புறம் ஸ்வப்னமும் இல்லாமல் ஆழ்ந்து தூங்குகிற காரண சரீரம் முதலியவற்றை ஆராய்ந்து கொண்டே போய், மாண்டூக்யோபநிஷத்தில் சொன்ன துரீயம்தான் ஆத்மா என்று தெரிந்து கொள்கிறான்.

பிருஹதாரண்யக உபநிஷத்து எல்லாவற்றுக்கும் கடைசியில் வருவது. பிருஹத் என்றால் பெரியது என்று அர்த்தம். பிருஹதீச்வரர், பிருஹந்நாயகி என்பவற்றைப் பெருவுடையார், பெரியநாயகி என்கிறோமல்லவா?உபநிஷத்துக்களுக்குள் பெரியது பிருஹதாரண்யகம். ஸாதாரணமாக ஒரு ஆரண்யகத்தின் முடிவிலே வருவதுதான் உபநிஷத். இதற்கு மாறுதலாக சுக்ல யஜுஸ் ஸம்ஹிதையிலேயே வருவது ஈசாவாஸ்ய உபநிஷத். அதே சுக்ல யஜுஸ்ஸில் ஒரு முழு ஆரண்யகமாக (ஆரண்யகத்தின் கடைசிப் பகுதியாக மட்டுமில்லாமல் முழு ஆரண்யகமாகவே) இருக்கிற உபநிஷத்துத்தான் பிருஹதாரண்யகம். இதில் இரண்டு பாடம் உண்டு. மாத்யந்தின சாகையில் இருப்பது ஒன்று;காண்வ சாகையில் இருப்பது இன்னொன்று. பகவத்பாதாள் காண்வ சாகைப் பாடத்துக்கே பாஷ்யம் எழுதியிருக்கிறார்.

இதில் மொத்தம் ஆறு அத்யாயங்கள். முதல் இரண்டை மது காண்டம் என்றும், அடுத்த இரண்டை யாக்ஞவல்கியர் பெயரில் முனி காண்டம் என்றும், கடைசி இரண்டைக் கில காண்டம் என்றும் சொல்வார்கள். மது என்றால் ஆனந்த ரஸமாக இருப்பது என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். எல்லாம் பரமாத்ம ஸ்வரூபம் என்று தெரிந்து கொண்டால் லோகம் பூராவும் ஜீவர்களுக்கு மதுவாக இருக்கும். ஜீவர்களும் லோகத்துக்கு மதுவாக இருப்பார்கள். ஆத்மா ஸகலத்துக்கும் மது. இந்த விஷயம் மது காண்டத்தில் வருகிறது.

பிற்பாடு இதே உபநிஷத்தில்தான் (iv.4.22)ஆத்மா இப்படி இல்லை, இப்படி

இல்லை என்று தள்ளித்தள்ளி, அதை இப்படி இருக்கிறது என்று வர்ணிக்க முடியாது;நமக்குத் தெரிந்த எதுவாகவும் அது இல்லை என்று சொல்லியிருக்கிறது. இதற்கு "நேதி நேதி" வாதம் என்று பெயர். "ந இதி"என்பது ஸந்தியில் "நேதி" என்றாகும். "ந இதி"என்றால் இவ்வாறு என்று சொல்வதற்கு இல்லாதது'என்று அர்த்தம். முதலில் இப்படி 'நேதி'கொள்கைப்படி பிரபஞ்சம், சரீரம், மனஸ் எல்லாவற்றையும் தள்ளிவிட்டுத்தான் வர்ணனாதீதமான ஆத்மாவை அறிந்துகொள்ள வேண்டும். அப்படி அறிந்து கொண்டதற்குப் பின் விவகாரத்தில் தோன்றுகிற லோகம், ஜீவர்கள் எல்லாமும்கூட அதே ஆனந்தரஸத்தால் ஆனதுதான் என்ற பாவம் உண்டாகும்.

இப்போது அநேக இடங்களில் ப்ரேயர் மாதிரிச் சொல்லப்படும் அஸதோ மா ஸத்கமய மந்திரம் பிருஹதாரண்யகம் ஆரம்ப அத்யாயத்திலேயே இருக்கிறது. (1.3.28) க்ஷத்ரிய ராஜாவான அஜாதசத்ருவிடம் கார்க்கியர் என்ற பிராம்மணர் உபதேசம் வாங்கிக்கொண்டது இரண்டாம் அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அஜாத சத்ரு, ஜனகர் போன்ற ராஜாக்கள் பிரம்ம ஞானிகளாக இருந்திருப்பது இதிலிருந்து தெரிகிறது. இதே போல் ஸ்திரீகளும் ராஜ ஸதஸில் ரிஷிகளுக்கு ஸமமாகக் கேள்விகள் கேட்டு வாதம் பண்ணிய 'ப்ரம்மவாதினி'களாக (பிரம்மத்தைப் பற்றி ஆராய்ந்து பேசுகிறவர்களாக) இருந்திருப்பதை, ஜனகரின் வித்வத் ஸதஸில் இருந்த கார்கி என்பவளைப் பற்றிச் சொல்கிறபோது தெரிந்து கொள்கிறோம். யாக்ஞவல்கியரின் இரண்டு பத்தினிகளில் ஒருத்தியான காத்யாயனி ஸாதாரண லௌகிக ஸ்த்ரீயாகவும், இன்னொருத்தியான மைத்ரேயி பிரம்மவாதினியாகவும் இருந்ததை இந்த உபநிஷத்து சொல்கிறது. யாக்ஞவல்கியர் மைத்ரேயிக்குப் பண்ணின உபதேசம் இந்த உபநிஷத்தில் மதுகாண்டம், முனிகாண்டம் இரண்டிலும் (2ம் அத்யாயம் 4ம் பிரிவிலும், 4ம் அத்யாயம் 5ம் பிரிவிலும்) கொஞ்சம் கொஞ்சம் வித்யாஸத்தோடு திருப்பிச் சொல்லப்படுகிறது. அது ரொம்பவும் அழகான கதையும் தத்வமும் சேர்ந்ததாக இருக்கிறது.

யாக்ஞவல்கியர் வீட்டை விட்டுவிட்டு ஸந்நியாஸியாகப் போவதற்கு உத்தேசம் பண்ணி, இரண்டு பத்னிகளுக்கும் சொத்தைப் பாகம் பிரித்துக் கொடுக்கிறார். காத்யாயனி சொத்திலேயே திருப்தி அடைந்து விடுகிறாள். ஆனால் மைத்ரேயியோ, இந்த சொத்திலெல்லாம் இல்லாத ஸௌக்கியம் ஸந்நியாஸத்தில் இருக்கிறது என்பதால்தானே இதைவிட்டு அதற்குப் போகிறீர்கள்?அப்படிப்பட்ட அந்த ஸௌக்கியம் என்ன?அதை எனக்கும்தான் எடுத்துச் சொல்லுங்களேன்!என்று கேட்கிறாள். அதற்கு யாக்ஞவல்கியர், நீ எப்போதுமே எனக்கு பிரியமானவளாக ஆகிவிட்டாய்!என்று சொல்லி, உபதேசிக்க ஆரம்பிக்கிறார். இந்தப் பிரியம் என்பது என்ன என்பதையே தத்வார்த்தமாக விஸ்தாரம் செய்கிறார். பதியிடம் பத்தினிக்குள்ள பிரியமும், பத்தினியிடம் பதிக்குள்ள பிரியமும், இப்படியே புத்திரரிடத்திலுள்ள பிரியமும், செல்வங்களில் உள்ள பிரியமும், எல்லாவிதமான பிரியங்களுமே எதனிடம்

செலுத்தப்படுகின்றனவோ அந்தப் பதி, பத்தினி, புத்ரர், செல்வம், மற்ற விஷயங்கள் இவற்றின் பொருட்டாக உண்டாவதில்லை. இப்படிப் பிரியமாக இருப்பதால் ஒருவனுக்குத் தன் நிறைவு ஏற்படுகிறதல்லவா? அவ்வாறு தன் ஆத்மாவுக்கு இது ஸந்தோஷம் உண்டாக்குகிறது என்பதால்சதான் எதனிடமும் பிரியத்தைச் செலுத்துகிறான். அப்படியானால் அந்த ஆத்மா அன்பு ஸ்வரூபமாக இருக்கிறது என்பதுதானே அர்த்தம்?அதை மட்டும் பிரித்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான் அதுவரை பிரியமாக இருந்த எல்லாவற்றையும் விட்டுவிட்டு, ஸந்நியாஸியாகப் போவது. அதைத் தெரிந்து கொண்டபின், அதற்கு அந்நியமாக எதுவுமே இல்லை என்று ஆகிவிடும். எல்லாமும் பிரியமானதாகிவிடும். முதலில் சிலதில் பிரியம் வைத்தபோது, அதற்கு மாறான வேறு சிலதில் அப்ரியம் என்று இருந்தது. இவை எல்லாவற்றையும் விட்டு விட்டு ஆத்மாவைத் தெரிந்து கொண்டு விட்டால் ஏற்றத்தாழ்வில்லாமல், எல்லாமே ஆத்ம ஸ்வரூபம் என்ற உணர்ச்சி ஏற்பட்டு, சிலதில் மட்டுமின்றி, எதனிடமுமே த்வேஷம் இல்லாமல் எல்லாமே ப்ரியமானதாகி விடும் என்று உபதேசம் செய்கிறார்.

இப்படி அவர் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளப் புறப்படுமுன் ஜனகராஜனின் சபையில் பரமாத்ம தத்வம் பற்றிக்கஹோளர், உத்தாலக ஆருணி, கார்கி ஆகியவர்களிடம் நடத்தின வாதங்களும், அப்புறம் ஜனகருக்குப் பண்ணின உபதேசங்களும் முணிகாண்டத்தில் சொல்லப்படுகின்றன. விசிஷ்டாத்வைதத்தில் விசேஷமாகச் சொல்லப்படும் அந்தர்யாமிக் கொள்கைக்கு ஆதாரம், உத்தாலக ஆருணிக்கு யாக்ஞவல்கியர் சொன்ன பதிலில் இருக்கிறது. லோகம் முழுக்கவே மாயை என்று அத்வைதத்திலுள்ளபடி சொல்லாமல், லோகம் சரீரம் என்றால், அதற்கு உயிராக உள்ளே பரமாத்மா இருக்கிறார் என்பதுதான் அந்தர்யாமிக் கொள்கையின் முக்யமான கருத்து. இதை ஒரு குறிப்பிட்ட நிலையில் யாக்ஞவல்கியர் ஒப்புக்கொண்டு பேசினாலும், மற்ற சமயங்களில் பூர்ணமாக அத்வைதந்தான் சொல்கிறார். மைத்ரேயிக்கு உபதேசித்து முடிக்கும்போது பரம அத்வைதமாக, "கொஞ்சம் தனித்து த்வைதமாக இருந்தாலும், இன்னொன்றைப் பார்ப்பது, முகர்வது, ருசிப்பது, தொடுவது, கேட்பது, நினைப்பது என்றெல்லாம் ஏற்பட்டு விடும். ஆனால் ஆத்மாவை அநுபவத்தில் தெரிந்து கொள்கிற போது இந்த எதுவுமே இல்லை. எதனால்தான் பார்வை, கேள்வி, ருசி, வாஸனை, எண்ணம் எல்லாமே ஏற்படுகின்றனவோ அதை எப்படி, எதைக் கொண்டு பார்க்கவும் கேட்கவும், ருசிக்கவும், முகரவும், நினைக்கவும் முடியும்?"என்பதாக, அகண்ட ஏக உணர்வைத்தான் சொல்கிறார். ஜலத்தோடு கலந்து ஜலம் மாதிரிப் பரமாத்மாவுடன் அத்வைதமாக (ஒன்றாகி) விடுகிறான் என்றே ஜனகருக்கும் அத்வைதமாக உபதேசிக்கிறார். எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டவ் சரீரத்தில் இருக்கிற போதே பிரம்மாக இருந்து கொண்டு, சரீரம் விழுந்த பிற்பாடு பிரம்மத்தோடு ஐக்கியமாகி விடுகிறான் என்றும் சொல்கிறார்.

இந்த உபநிஷத்தின் கடைசியில் வருகிற இரண்டு அத்தியாயங்களும் சிதறிக் கிடக்கிற பல ஸமாசாரங்களைச் சேர்த்துக் கொடுப்பதால் 'கில காண்டம்'என்று வழங்குகின்றன. ஒரு வஸ்து சிதைந்து போனால் அது கிலமாகிவிட்டது என்று சொல்கிறோமல்லவா?கொஞ்சங்கூட சிதையாமல் பூர்ணமாக இருப்பதுதான் அகிலம்.

ஸாதகர்களின் தராதரத்தைப் பொறுத்து, ஒரே உபதேசத்துக்கு மூன்று விதமான அர்த்தம் உண்டாவதைக் கில காண்டத்தில் உள்ள ஒரு கதை விளக்குகிறது. தேவஜாதி,மநுஷ்ய ஜாதி, அசுர ஜாதி ஆகிய மூவரும் பிரஜாபதியிடம் உபதேசம் வேண்டுகிறார்கள். அவர் "த"என்ற ஒரு எழுத்தை மட்டும் உபதேசமாகச் சொல்கிறார். புலனடக்கம் போதாத தேவர்கள் 'த'என்றால் 'தத்த'ஸ்வபாவமாகக் கொண்ட மநுஷ்யர்கள் 'த'என்றால் 'தாம்யத'(அடக்குங்கள்) என்று அர்த்தம் செய்து கொள்கிறார்கள். தனக்கென்று சேர்த்துக் கொள்வதையே ஸ்வபாவமாகக் கொண்ட மநுஷ்யர்கள் 'த'என்றால் 'தத்த'(கொடு, தானம் பண்ணு) என்று பொருள் கொள்கிறார்கள். குரூர குணம் படைத்த அஸுரர்கள் 'த'என்பதற்கு 'தயத்வம்'(தயையோடு இருங்கள்) என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்கள். பிருஹதாரண்யக உபநிஷத்தின் கடைசிப் பாகத்தில் வருகிற ஒரு மந்திரம் எனக்கு ரொம்பவும் ரஸமாக, ஆறுதலாகத் தோன்றுவதுண்டு. இந்த மந்திரம் என்ன சொல்கிறது?

"வியாதிக்காரன் ஒருத்தன் ஜ்வரதாபத்தில் கஷ்டப்படுகிறான் என்றால் அது பெரிய தபஸ். இப்படி நோய் நொடியைத் தபஸ் என்று ஒருத்தன் தெரிந்து கொண்டு விட்டானானால், அவனுக்கு உயர்ந்த பரலோகம் (மோக்ஷம்) கிடைத்துவிடுகிறது"என்று

மந்திரத்தில் சொல்லியிருக்கிறது.

இப்படிச் சொன்னால் ஒன்றும் புரியவில்லையே!இதில் என்ன ரஸம், என்ன ஆறுதல் இருக்கிறது?என்று கேட்கலாம். சொல்கிறேன். விரதம், தபஸ் முதலியவற்றால் உடம்பை வருத்திக் கொள்வதால் சரீராபிமானம் விலகுவதோடுகூட, நம்முடைய பூர்வ பாபங்களும் தேய்கின்றன. பூர்வ கர்ம பாபம் போவதற்கு ஒரு பிராயச்சித்தமாகத் தபஸ் இருக்கிறது. முன்னே உடம்பால் நாம் பாபம் பண்ணினதால், அதே உடம்பால் சிரமப்பட்டு தபஸ் செய்தால் பாபம் போகிறது.

இதனால்தான் மஹான்களும் தபஸ் பண்ணியதாகப் புராணங்களில் வருகிறது. ஸாக்ஷாத் ஜகன்மாதாவான அம்பிகையே பரமேச்வரன் வார்த்தையை மீறி தக்ஷனின் யக்ஞத்துக்கு வந்து அவமானப்பட்டு, அப்போதே பிராணத்தியாகம் செய்தபின், மறுஜன்மாவில் ஹிமவானுக்குப் புத்திரியாக அவதாரம் செய்தபோது, பூர்வத்தில் பதியின் உத்தரவை உல்லங்கனம் பண்ணியதற்கு (மீறியதற்கு)

பிராயச்சித்தமாகத் தபஸ் பண்ணினால்தான் மறுபடி இந்த ஜன்மாவில் அவரை அடைய முடியும் என்பதால் ரொம்பவும் உக்ரமான தபஸுகளைப் பண்ணியிருக்கிறார்கள். (காளிதாஸனின்) குமார ஸம்பவத்தில் ரொம்ப அழகாக, மனஸை உருக்கும்படியாக இதை வர்ணித்திருக்கும். குளிர் காலத்தில் ஹிமயமலையில் எத்தனை குளிராக இருக்கும்?அந்த சமயத்தில் பனிப் பாறைகளின் மேல் உட்கார்ந்து கொண்டோ, பனியாக உறைந்து கொண்டிருக்கும் தடாகங்களுக்குள் நின்று கொண்டோ தபஸ் பண்ணுவாள். நல்ல கோடை வெயில் கொளுத்துகிறபோது, தன்னைச் சுற்றி நாலு பக்கமும் நெருப்பை மூட்டிக் கொண்டு தபஸ் பண்ணுவாள். நாலு பக்கம் நெருப்பும், மேலே ஐந்தாவது நெருப்பாக ஸூரியனும் இருப்பதால், இதற்கு பஞ்சாக்னி தபஸ் என்று பேர்.

இம்மாதிரியான கடுமையான தபஸ்களை அநேக மஹான்கள் பண்ணியிருக்கிறார்கள். இப்போது நம் விஷயம் என்ன?அவர்கள் ஏதோ ஒரு தப்பு இரண்டு தப்பு பண்ணினார்களென்றால், நாம் பண்ணுகிற தப்புகளுக்கோ கணக்கு வழக்கே இல்லை. ஆனால், அவர்கள் செய்த தபஸில் கோடியில் ஒரு பங்குகூடப் பண்ண நமக்கு மனஸும் இல்லை, சக்தியும் இல்லை. இப்படியிருந்தால் நம் பாபம் போகிறது எப்படி?

இம்மாதிரி நினைத்துக் கஷ்டப்படுகிற போதுதான் (மேலே சொன்ன) உபநிஷத் மந்திரம் ஆறுதலாக வருகிறது. நமக்கு disciplined life (நெறியான வாழ்க்கை) இல்லாததால், எப்போதும் பார்த்தாலும் வியாதி, வக்கை, ஜ்வரம் முதலியன வருகன்றனவல்லவா?நம்மைப் பார்த்துத்தான் உபநிஷத், இந்த நோய், நொடி, காயலா எல்லாமே பெரிய தபஸ்தான். இப்படிப் பார்ப்பதற்குப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டாயானால், தபஸினால் கிடைக்கிற பாபத்தின் அழிவு உனக்கும் உண்டாகி, மோக்ஷ லோகத்துக்குப் போய் உண்டாகி, மோட்ச லோகத்துக்குப் போய் விடுவாய்"என்று சொல்கிறது. இவ்வளவுplain-ஆக தெளிவாக, நேராகச் சொல்லாவிட்டாலும், அந்த மந்திரத்தின் அர்த்தம் இதுதான்.

ஜ்வர தாபம், தாப ஜ்வரம் என்றெல்லாம் சொல்கிறோமல்லவா?'தாபம்'என்றால் கொதிப்பது, வேகிறது என்று அர்த்தம். 'தபஸ்', 'தாபம்'என்று இரண்டுக்கும் rootஆன'தப'என்னும் வார்த்தைக்குக் கொளுத்துவது என்று அர்த்தம். ஸூர்யனுக்குத் தபனன் என்றே பேர். ஆகையால் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தபஸை நாம் பண்ணாவிட்டாலும், தானாக வந்த இந்த ஜ்வர தாபத்தையே நம் பாபத்தைப் போக்குவதற்காக ஈச்வரனே தந்திருக்கிற தபஸ்தான் என்று வைத்துக் கொண்டுவிட வேண்டும்.

டைபாய்ட், நிமோனியா மாதிரி வந்து 105, 106(டிகிரி) என்று உடம்பை வறுத்து எடுக்கிறதா?அப்பாடா நாம் பஞாசாக்னி தபஸ் பண்ணாததற்கு பதிலாகத்தான் ஸ்வாமி இந்த தாப ஜ்வரத்தைத் தந்திருக்கிறார் என்று நினைத்து நிம்மதிப் படுத்திக்

கொள்ள வேண்டும்.

மலேரியா வந்து, எத்தைனைக் கம்பிளி போர்த்தினாலும் போதாமல் குளிர் நடுக்கி எடுக்கிறதா?ரொம்ப நல்லது!நாம் குளிர்காலத்தில் ஐஸுக்குள் இருந்து கொண்டு தபஸ் பண்ணமாட்டோமோல்லியோ?அதனால்தான் பரம கருணையோடு பகவானே நமக்கு இந்தக் குளிர் ஜுரத்தை அனுப்பியிருக்கிறார் என்று வைத்துக் கொண்டு விடவேண்டும்.

இப்படி இந்த உடம்பு (நோய் வந்தாலும்), அடிபட்டாலும், காயம் பட்டாலும், ஒவ்வொன்றையும் ஒரு தபஸாக - நாமாகப் பண்ணாத போதிலும் பகவானே அனு ப்பி வைத்திருக்கிற தபஸாக எடுத்துக் கொண்டு விடவேண்டும். பழகப் பழக இதனால் நோய் நொடியைத் தாங்கிக் கொள்கிற சக்தி உண்டாகும். டாக்டர், மருந்து என்று ஒரு அதன் வழி விட்டு விடுவோம். பாப கர்மாவைத் தீர்த்து வைக்கிற ஒரு நல்ல உபாயமாக நம்மைத் தேடி வந்திருக்கிற தேக சிரமத்தை நாமாகப் போக்கிக் கொள்ள மாட்டோமில்லையா?இதனால் doctor fees, ;மருந்துச் செலவு எல்லாமும் லாபம். எல்லாவற்றையும் விடப் பெரிய லாபம், சிரமத்தை சிரமமாக நினைக்காமல் ஏற்றுக்கொள்கிற 'திதிக்ஷை' என்ற உயர்ந்த பண்பைப் பெற்று விடுவோம்.

இவ்வளவையும்தான் உபநிஷத் மந்திரம் ஸம்க்ஷேபமாக (சுருக்கமாக)ச் சொல்லிவிடுகிறது. மஹத்தான் பாபங்களைப் பண்ணிவிட்டு அதற்குப் பிரயாச்சித்தமான விரதம், தபஸ் எதையும் பண்ணாமலே, பண்ண முடியாமலே, திராணியில்லாமல் இருக்கிறோமே என்று துக்கப் படும்போது, இந்த மந்திரம் நமக்கும் ஸ்வாமியே அனுப்பிவைக்கிற தபஸ் இருக்கிறது என்று ஆறுதல் சொல்கிறது.

தசோபநிஷத்துக்களும் முடிகிற இடமான பிருஹதாரண்யகத்தின் கடைசி அத்தியாயத்தில், கர்ம காண்டத்துக்கு வேதாந்தம் விரோதமே இல்லை என்று அழுத்தமாகக் காட்டுகிற மாதிரி பஞ்சாக்நி வித்யையையும், ஸுப்ரஜைகளை (நன்மக்களை) விரும்பும் கிருஹஸ்தர்கள் அநுஷ்டிக்க வேண்டிய கர்மாக்களையும் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

## *வேதங்களின் முக்கிய தாத்பர்யம் என்ன ?*

வேதங்களில் அநேக விஷயங்களைப் பற்றிச் சொல்லியிருக்கும்போது, வேதாந்தமான உபநிஷத்தில் சொன்ன ஆத்ம ஸாக்ஷாத்காரம்தான் வேதங்களுக்கு எல்லாம் முக்கியமான தாத்பர்யம் என்றால், எப்படி ஒப்புக்கொள்வது?

அக்னி ஹோத்ரம், ஸோம யாகங்கள், ஸத்ர யாகங்கள், இஷ்டிகள் என்கிற பல வேள்விகள், பல விதமான கர்மாக்கள், ஹோமங்கள் எல்லாம் வேதத்தில் இருக்கின்றன. இவைதான் வேதத்தின் லக்ஷியம் என்று ஏன் சொல்லக் கூடாது? கல்யாணத்தில் என்ன செய்ய வேண்டும்?சாவில் என்ன செய்ய வேண்டும்? எப்படி ராஜ்ய பரிபாலனம் பண்ணினால் நல்லது?ஸதஸில் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?என்கிற மாதிரிப் பல விஷயங்களும்தான் வேதத்தில் வருகின்றன. இதில் எதை அதன் மையமான லக்ஷயம் என்பது?

யாகம், யக்ஞம் இவற்றையெல்லாம் தவிர, அநேக உபாஸனா மார்க்கங்கள்

வேதத்தில் சொல்லப்படுகின்றன. தனித்தனியாகத் தியானம் சொல்லியிருக்கிறது. 'இந்த சரீரத்துக்குள் ஆத்மா எப்படிப் போகிறது, கடைசியில் சரீரம் என்னவாகப் போகிறது, திரும்பியும் மநுஷ்ய சரீரத்தில் எப்படியெல்லாம் பிரவேசிக்கிறது?'என்பன போன்ற விஷயங்களும் அதில் காணப்படுகின்றன.

இன்னும், சரீர ஆரோக்கியத்திற்கு வேண்டிய வைத்திய சிகித்ஸைகள், சத்ருக்களினால் ஹிம்ஸை வந்தால் அதை நிவருத்தி பண்ணுவதற்கான சாந்திகள், இப்படி வேறே பல சமாசாரங்களும் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் பார்க்கும் போது நமக்கு ஒரு கேள்வி உண்டாகிறது. அதாவது, "வேதத்தின் முக்யமான உத்தேசம் என்ன?எதற்காக வேதம் ஏற்பட்டுள்ளது?"

'எல்லா வேதங்களும் சேர்ந்து ஒரு பொருளைத்தான் சொல்லுகின்றன' என்று உபநிஷத் சொல்கிறது (கடோபநிஷத் II.15). அந்த ஒரு பொருள் என்ன? 'ஓங்கார அர்த்தமாக இருக்கும்படியான ஒரு பரம்பொருளைத்தான் எல்லா வேதங்களும் சேர்ந்து சொல்கின்றன என்பது அந்த உபநிஷத்து வாக்கியம்.

வேதம் வெவ்வேறு விஷயங்களைச் சொல்கிறதே!வெவ்வேறு தேவதைகளைப் பற்றியும் சொல்லுகிறதே என்று நமக்குச் சந்தேகம் வருகிறது. ஜட்ஜ் ஸதாசிவ ஐயர் என்று ஒருவர் இருந்தார். மைசூர் ராஜ்யத்தில் இருந்த பரமசிவ ஐயர் அவர் சகோதரர். வேதங்கள் என்றால் பௌதிக சாஸ்திரந்தான். வேதம், ஜியாலஜியைப் பற்றியே (நில இயல்) சொல்கிறது என்று இந்த பரமசிவ ஐயர் எழுதியிருக்கிறார். இன்னும் பலபேர் பல பிரகாரமாகச் சொல்கிறார்கள். அந்தக்காலத்தில் இந்தியாவில் உள்ளவர்களுக்கு ஸூர்யனையும், சந்திரனையும் பார்த்து ஆச்சரியமாக இருந்தது. அதிகமாக விஞ்ஞானம் விருத்தி அடையாத காலம் அது.அதனால் அவரவர்களுக்குத் தகுந்தாற்போல், அவரவர்கள் இயற்கைத் தோற்றங்களைப் பார்த்து ஆச்சரியமாக இருந்தது. அதிகமாக விஞ்ஞானம் விருத்தி அடையாத காலம் அது. அதனால் அவரவர்களுக்குத் தகுந்தாற்போல், அவரவர்கள் இயற்கைத் தோற்றங்களைப் பார்த்துப் பல விஷயங்களைச் சொன்னார்கள். அதைப் பாட்டாகப் பாடும்படியான சக்தி எல்லாருக்கும் இல்லை;சில பேருக்குத்தான் இருந்தது. இவர்கள் பாடிய பாட்டுக்களையே மந்திரங்கள் என்று தொகுத்து வேதமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று சில வெள்ளைக்காரர்கள் அபிப்ராயப் படுகிறார்கள்.

இவற்றையெல்லாம் பார்த்தால், எல்லா வேதமும் ஒரு பொருளைத்தான் சொல்கிறது என்று உபநிஷத்துக்கள் சொன்னாலும், வெவ்வேறு பதார்த்தத்தைத்தான் அது சொல்வதாகத் தெரிகிறதே தவிர, ஒரு பொருளைச் சொல்வதாக நமக்குத் தோன்றவில்லை.

ராமாயணத்தைப் பற்றி ஒரு ச்லோகம் இருக்கிறது;

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே|

வேத:ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா||

"வேதவேத்யே"- வேதத்தினால் அறிய்பபட வேண்டிய ஒருவன். அவன் யார்?" பரே பும்ஸி"- பரம புருஷன். வேதத்தினாலே அறியப்பட வேண்டிய பரம புருஷன். வேதத்தினாலே அறியப்பட வேண்டிய பரம புருஷன் ராமனாக உலகில் அவதாரம் செய்தான். அவன் தசரதனுடைய குழந்தையாக வந்தவுடன்,வேதம், ராமாயணமாக அவதாரம் பண்ணுவோம் என்று வால்மீகியின் குழந்தையாக வந்தது!இதுதான் மேலே சொன்ன சுலோகத்தின் அர்த்தம். இங்கேயும் பரம்பொருள், அல்லது பரம புருஷன், அல்லது ஓங்காரம் என்கிற ஒரே ஸத்ய தத்வம்தான் எல்லா வேதங்களுக்கும் பொதுவான லக்ஷியம் என்று தெரிகிறது. கடோபநிஷத்தில் "ஸர்வே வேதா:" என்று சொன்னாற் போலவே, கீதையிலும் பகவான் "வேதைச்ச ஸர்வை:அஹம் ஏவ வேத்ய:" - எல்லா வேதங்களாலும் நானே அறியப்படுகிறேன்" என்கிறார்.

இவற்றையெல்லாம் பார்க்கிறபோது, "வேதத்தில் அநேக சமாசாரங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் வேதங்கள் எல்லாம் சேர்ந்து பொது லக்ஷயமாக எல்லாம் சேர்ந்து பொது லக்ஷயமாகச் சொல்வது ஒரு பொருளைத்தான்"என்று ஆகிறது.

"அப்படியானால், ஒரு பொருளைச் சொல்வதற்கு அநேகம் பொருளை வேதம் எதற்காகச் சொல்கிறது?"என்று நமக்குத் தோன்றும். அநேகம் பொருள்கள் மூலமாகத்தான் அந்த ஒரு பொருளை அறிய முடியும். யோகம், தியானம், தபஸ், யக்ஞம், கர்மாநுஷ்டானம், கல்யாணம் முதலான சடங்குகள், ராஜ்ய நிர்வாகம், சமூக வாழ்க்கை, கவிதை ஆகிய இவை எல்லாம் முடிந்த முடிவில் சுட்டிக்காட்டுகிற ஒரு பொருள் எதுவோ அந்த ஒரு பொருள்தான் வேதத்தின் உண்மையான தத்துவமாக இருக்கிறது. அந்த உண்மையான பொருள் ஒன்றைத் தவிரப் பாக்கி எல்லாம் மாறி மாறிப் போகும்படியான பொருள்கள்; பின்னால் அந்தக் கதையும் மறைந்து போகிறது. ஒன்று தெரியாமல் பலவான லோகம்தான் நமக்குத் தெரிகிறது?அதனால், நமக்குத் தெரிகிற ஒவ்வொன்றையும் காட்டி, அதன் மூலமே ஒன்றுக்கு அழைத்துக் கொண்டு போவதற்காகத்தான் வேதம் பல பல விஷயங்களையும் சொல்கிறது.

வேதத்தினால் சுட்டிக் காட்டப்படுகிற மெய்யான ஒரு பொருளை அறிந்து கொள்ள வேண்டுமானால், அந்த ஒன்றைப் பற்றிய நினைவு நமக்கு வருவதற்குச் சித்தத்திற்குச் சில பழக்கங்கள் (disciplines) வரவேண்டும். யாகங்கள் பண்ணுவது, தபஸ் பண்ணுவது, தானதர்மங்களை செய்வது, கோபுரம் கட்டுவது, குளம் வெட்டுவது, சமூக கார்யங்கள், கலியாணம் முதலான ஸம்ஸ்காரங்கள் ஆகிய எல்லாம் சித்தத்தைச் சுத்திசெய்து, சித்த விருத்தி நிரோதம் (ஒடிக்

கொண்டே இருக்கும் மனஸை அடக்கல்) செய்வதற்காகத்தான். பல்வேறு கர்மாக்களின் நோக்கம் ஒரே பரமாத்மாவை அடைவதற்குத் துணைபுரிவதுதான்.

"வேத" என்றால் அறிவது. 'எந்த ஒன்றை அறிந்து கொண்டால், அனைத்தையும் அறிந்து கொண்டதாகுமோ அதுதான் ஆத்மா;ஆஸாமியை அடையாளம் காட்டுகிற அடிச்சுவடு மாதிரிதான் மற்ற எல்லாமும் அந்த ஒன்றுக்கு அடிச்சுவடுகள் என்று உபநிஷத்து சொல்கிறது. அப்படிப்பட்ட ஆத்மாவைப்பற்றி அறிவிப்பதுதான் வேதத்தின் லட்சியம். வேத ஆரம்பத்தில் வருகிற கர்மாவாகட்டும், முடிவில் வருகிற ஞானமாகட்டும், இரண்டுக்குமே - விஷயமாக இருப்பது ஈச்வரன், பிரம்மம், ஆத்மா என்றெல்லாம் சொல்லப்படுகிற ஒன்றுதான். ஸ்வாமிக்கு புஷ்பம் போடும்போது கூறும் மந்திர புஷ்பத்தின் போதும், ஒரு மஹானை வரவேற்கும் போதும், நாம் "யோ வேத (ஆ) தெள ஸ்வர:ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டித:"என்கிறோமே, இது மேலே சொன்னதற்கு proof தான். வேதத்தின் ஆதியிலும் (ஆரம்பத்திலும்), அந்தத்திலும் (முடிவிலும்) பிரதிஷ்டையானது ஒரே மஹா தத்வமான ஈச்வர தத்வம்தான் என்று இந்த மந்திரம் சொல்கிறது. ஆரம்பத்தில் வரும் கர்மா முடிவில் வருகிற ஞானம் இரண்டுக்கும் லட்சியத்தில் கொஞ்சம்கூட வித்யாஸமில்லை என்று இங்கே ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. அநேக ஆயிரம் தினுசாகப் பிரிந்திருக்கும் கர்மா, ஒன்றே ஒன்றாயிருக்கிற ஞானம் இரண்டுக்கும் பொதுவாக - அதாவது வேதம் முழுவதற்கும் subject-ஆக- இருப்பது ஒன்றுதான். ஆத்மாவைப் பார்த்துக் கொள்ள முடியாமல் வெளிப்பார்வை உள்ளதாகவே, வெளி வஸ்துக்களை நோக்கி ஒடுவதாகவே இந்திரியங்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. இதைக் கடோபநிஷத்தும் (வீஸ்.1) சொல்கிறது. விஷயத்தைக் கவனிக்காமல், வேறு எதையாவது பார்ப்பதை பராக்குப் பார்ப்பது என்கிறோமல்லவா?ஆத்மா ஒன்று தான் விஷயம். அதைவிட்டு வெளியிலே பார்ப்பதைத்தான் பரா(ங்) முகம் என்பது. அதுதான் பராக்குப் பார்ப்பது. இதைத் தான் கடோபநிஷத் சொல்கிறது.

அப்படிப் பராக்குப் பார்க்காதே என்றால் மனஸ் அடங்காது. அதனால் வெளிக்காரியங்களைப் பண்ணிப் பண்ணித்தான் உள்ளே பார்த்துக் கொள்ளும்படியாந பக்குவத்தை அடைய வேண்டும். இந்திரியங்களும், மனஸும் இழுக்கிற இழுப்புக்கெல்லாம் ஒடாமல் வைதிக கர்மாக்களை நிறையச் செய்யச் செய்யத்தான், கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே பார்த்துக் கொள்கிற பக்குவம் உண்டாகும். மற்ற விஷயங்களையெல்லாம் அறிந்து, சோதித்து, சீர்தூக்கிப் பார்த்த பின்தான், எல்லாவற்றையும் அறிகிற அறிவை, எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகுமோ, அதைப் பிடிக்க முடியும். இதற்காகத்தான் அநேக வித்தைகளை, உபாஸனைகளை, கர்மாக்களை, கலைகளை, Socialduty-களை வேதத்தில் சொல்லியிருக்கிறது. சரீரத்தால் கர்மா பண்ணிப் பண்ணியே சரீராபிமானத்தைக் கரைக்க வேண்டும். பல வித்தைகளைச் சிந்தனைப் பண்ணியும் தத்வங்களை ஆராய்ச்சி பண்ணியும், உபாஸனைகள் பண்ணியுமே

மனஸ், புத்தி இவற்றைக் கரைக்க வேண்டும். கெட்ட காரியம் செய்வதில் சரீராபிமானம் ஜாஸ்தியாகும். துர்விஷயங்களை ஆராய்வதால் மனஸின் தடிப்பு ஜாஸ்தியே ஆகும். மாறாக, மந்திர பூர்வமான, லோக க்ஷேமமான வைதிக கர்மாக்கள், வைதிக உபாஸனைகள் இவற்றை அநுஷ்டிக்கிறபோது, சரீரம் சித்தம் இவற்றின் ஆக்ரஹம் தளர்ந்து கொடுக்கிறது. முடிவிலே உள்ளே பார்த்துக் கொள்வதற்கான முதிர்ச்சி, பரிபக்குவம் உண்டாகிறது. அப்படிப் பார்த்துக் கொண்டபின், இங்கேயே ('இஹைவ') மோட்ச ஆனந்தத்தைப் பெறுகிறான். மோட்சம் என்றால், 'விடுபட்ட நிலை', 'விடுதலை'என்று அர்த்தம். எதிலிருந்து என்றால் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை. சரீரமும் மனஸும் 'தான்'இல்லை என்று அவற்றிலிருந்து உபநிஷத்து சொன்னபடி விடுவித்துக் கொண்டுவிட்டால், ஸம்ஸாரத்திலிருந்தும் விடுதலையாகி விடுகிறது.

இந்த லோகத்திலேயே மோட்சத்தை ஸம்பாதித்துக் கொடுப்பதுதான் வேதங்களின் உத்தேசம். அதுதான் அதன் பெருமையும். இதர மதங்களில் இருப்பதுபோல், செத்துப்போனபின் பரலோகம் போய்தான் மோட்சம் என்றால், அந்த மோட்சம் எப்படியிருக்கும் என்று இங்கே நாம் தெரிந்து கொள்ள முடியாது. அதை அடைந்தவர்களும் திரும்பிவந்து தங்கள் அநுபவத்தை நமக்குச் சொல்ல மாட்டார்கள். அதனால் அப்படி ஒன்று உண்டா என்று ஸந்தேஹமும் அவநம்பிக்கையும் ஏற்படலாம். ஆனால் இந்த லோகத்திலேயே, ஆசைகளுக்கெல்லாம் ராஜிநாமா கொடுத்துவிட்டு, ஆத்ம விசாரம் பண்ணினால் மோட்சம் இப்போதே ஸ்வயம் ஸித்தமாக இருக்கிறது என்று வேதம் சொல்வதால், அது ஸந்தேஹத்துக்கு இடமில்லாத ஸத்தியத்தையே சொல்கிறது என்று ஏற்படுகிறது.மற்ற மார்க்கங்கள் மலேரியாவுக்குக் கொய்னா கொடுத்து அப்போதைக்கு ஜ்வரத்தை இறக்குகிற மாதிரி தற்கால சாந்தி கொடுக்கின்றன. மறுபடி ஒரு போதும் அந்த ஜ்வரம் வராதபடி செய்யவேண்டுமானால், வியாதியின் மூல காரணத்தையே கண்டுபிடித்து அதை அழிக்க வேண்டும். இப்படியே ஜீவனின் மூலம் என்ன என்கிற இடத்துக்கே போய், பரமாத்மாவிலிருந்து இப்படி அது பிரிகிற மூலத்தையே அடைந்து, பேதத்தை அழிப்பது வேத மதம்தான். அதுதான் தற்கால சாந்தியாக இல்லாமல் சாச்வத மோட்சமாக இருப்பது.

வேதத்தின் கர்மகாண்டத்தில் சொல்லியிருப்பதெல்லாமும் தற்கால சாந்திதான். ஆனாலும் எப்போதும் ஒரே அசாந்தியில் தத்தளித்துக் கொண்டிருக்கிறவனை, எடுத்த எடுப்பில் ஆத்மாராமனாக, பிரசாந்தனாக ஆக்கிவிட முடியாது. அதனால், தற்கால சாந்தியைத் தருகிற கர்மாக்களைக் கொடுத்திருக்கிறது. இவற்றால் சாச்வத சாந்திக்கு வேண்டிய qualification - ஆன (யோக்யதாம்சமான) சித்த சுத்தியும் ஏற்படுகிறது. யக்ஞம், விரதம், பூர்த்தம் என்கிற பொதுத்தொண்டு போன்றவற்றையும் வேதம் விவரமாக விதித்தாலும், இது ஒவ்வொன்றையுமே முடிந்த முடிவாகக் கொள்ளவில்லை. இவற்றில் சரீரத்தைக் கிருசம் பண்ணுவதும்

(மெலிவிப்பதும்), இவற்றிலேயே மனஸைச் செலுத்துவதால் மனம் ஒருமுகப்படுவதும் நம் சித்த மலத்தை நீக்க வழியாகிறது என்பதற்காகவே இவை விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆக வேதங்களில் அநேக ஸமாசாரங்கள் நீள நெடுகச் சொல்லப்பட்டிருந்தாலும், அவை எல்லாமும் முடிவான வேதாந்தத்தில் சொல்லப்பட்ட ஞான விசாரத்தில் கொண்டு விடுவதற்காக ஏற்பட்டவைதான்.

முடிவில் சொல்வதுதான் தீர்மானம். ஒரு பத்திரிக்கையில் வந்திருக்கும் ஒருவருடைய பிரசங்கம் அல்லது கட்டுரையைப் படித்து அவர் என்ன சொல்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறோம். அவர் நிறையப் பேசியிருக்கிறார். அல்லது எழுதியிருக்கிறார். எல்லாவற்றையும் படிக்க நேரம் இல்லை. அதனால் ஆரம்பத்தை படித்து விட்டு சட்டென்று அதனுடைய கடைசிப் பாராவைப் பார்க்கிறோம். முதலில் கொஞ்சம் பார்த்து விட்டு, அப்புறம் கடைசியில் இருப்பதைப் படித்துவிட்டால் போதும். அவர் எந்த கட்டுரையில், அல்லது பிரசங்கத்தில் என்ன சொல்லியிருக்கிறார் என்பது ஒரு விதமாகத் தெரிந்துவிடும். ஆரம்பத்தையும் முடிவையும் படித்துவிட்டே அதில் என்ன விஷயம் இருக்கும் என்று தீர்மானம் பண்ணிவிடலாம். இந்த மாதிரி "வேத ஆதௌ" விலும் (வேத ஆரம்பத்திலும்) "வேதாந்தே ச"விலும் (வேத முடிவிலும்) ஒரே பரமாத்மாவான ஈச்வர தத்வத்தையே சொல்லியிருப்பதால் அதுவே வேதத்தின் ஸப்ஜெக்ட் ஆகிறது.

சர்க்காரில் அநேக சட்டம் பண்ணுகிறார்கள். ஆனால் அந்தச் சட்டங்களின் அபிப்ராயங்களைப் பற்றியே சில சமயங்களில் சிக்கல்கள் வந்து விடுகின்றன. அப்போது சட்டத்துக்கு வியாக்கியானம் இப்படித்தான் என்று இன்னொரு சட்டம் வகுத்து, அதன் மூலம் நிர்ணயம் செய்கிறார்கள். இதை Law of interpretationஎன்கிறார்கள். இப்படியே ஈச்வரனின் நிரந்தரச் சட்டமான (Eternal Law- ஆன) வேதங்களின் தாத்பர்யத்தை நிர்ணயம் செய்ய, மீமாம்ஸை என்ற சாஸ்திரம் வியாக்கியான சட்டமாக (Law of Interpretation-ஆக) இருக்கிறது. பதினான்கு வித்யாஸ்தானங்களில் ஒன்றான மீமாம்ஸையைப் பற்றி மற்ற விஷயங்கள் பின்னால் சொல்லுகிறேன். இப்போது ஒரு ஸமாசாரத்தை மட்டும் எடுத்துக் கொள்கிறேன்.

வேத வாக்கியம் ஒன்றுக்கு இன்னதுதான் அர்த்தம் என்று நிர்ணயம் பண்ணுவதற்கு, மீமாம்ஸா சாஸ்திரத்தில் ஆறு வழிகள் சொல்லியிருக்கின்றன. அந்த ஆறு, உபக்ரம- உபஸம்ஹாரௌ அப்யாஸ: அபூர்வதா பலம்।

அர்த்தவாத உபபத்தீ ச லிங்கம் தாத்பர்ய நிர்ணயே।।

என்று சொல்லியிருக்கிறது.

உபக்ரம - உபஸம்ஹாரம், அப்யாஸம், அபூர்வதா, பலம், அர்த்தவாதம், உபபத்தி

என்பனவே இந்த ஆறு. வேதம் மட்டுமின்றி, எந்த ஒரு கட்டுரை அல்லது பிரவசனத்துக்கும் உத்தேசம் என்ன என்று கண்டுபிடிக்க இந்த ஆறும் உதவி செய்கின்றன.

உபக்ரமம் என்றால் ஆரம்பம். உபஸம்ஹாரம் என்றால் முடிவு. ஆரம்பத்தையும் முடிவையும் சேர்த்து ஒன்றாகப் பார்ப்பது உபக்ரம-உபஸம்ஹாரம் என்ற முதல் வழி. இரண்டும் ஒன்றையே சொல்வதாக இருந்தால், அதுவே தாத்பர்யம் என்று நிர்ணயம் பண்ணி விடலாம். அப்யாஸம் என்றால் திரும்பத் திரும்பச் சொல்லப்படுவது. திரும்பத் திரும்பத் தண்டால் போடுவதால் அதை தேகாப்யாஸம் என்கிறோம். ஒரு பிரஸங்கத்தில் அல்லது வியாஸத்தில் ஒரு விஷயம் பலமுறை திருப்பிச் சொல்லப்பட்டால் அதுதான் அதற்கு விஷயம் என்று தெரிகிறது. அபூர்வதா என்றால், பூர்வத்த்தில் சொல்லாமல் புதிதாகச் சொல்வது. ஏற்கெனவே சொன்னதை அல்லது எழுதினதைக் காட்டிலும், புதிதாக ஒரு விஷயத்தைக் கொடுத்தால், இதுவே தாத்பர்யம் என்று தெரிகிறது. இப்படிச் செய்தால் இந்தப் பலன் கிடைக்கும் என்று சொன்னால், இப்படிச் செய்து இந்தப் பலனை அடை என்று சொல்வதாகவே ஆகும். அதாவது இந்தப் பலனை அடைவிப்பதுதான் உத்தேசம் என்று தெரிகிறது. பலம் என்பது இதுவே. அநேக ஸமாசாரங்களைச் சொல்லி, அவற்றைத் தழுவியதாக ஒரு கதை சொல்லி, அதன் மூலம் ஒரு விஷயத்தை பெருமைப்படுத்தினால், பெருமைப்படுத்தப் படுகிற விஷயமே நமக்கு தாத்பரியம் என்று தெரிகிறது. இதுதான் 'அர்த்தவாதம்' என்பது. ஒன்றைச் சொல்லி அதற்குக் காரண நிரூபணம், பொருத்தம் முதலியன விளக்கப்பட்டிருந்தால், அந்த விஷயந்தான் முக்யமான கருத்து என்று ஏற்படுகிறது. இந்த முறைக்கு 'உபபத்தி' என்று பெயர்.

இப்படித்தான், வேதத்தின் ஆரம்பத்தையும் முடிவையும் பார்த்துவிட்டுவந்த ஒருத்தர். என்னிடம் சொன்னார்:'வேதம் சொல்லவந்த முக்ய ஸமாசாரம் என்னவென்றால் Fire Worship (அக்னி உபாஸனை) தான். வேதம் உபக்ரமத்தில், அதாவது ஆரம்பிக்கும்போது 'அக்னிமீளே' என்று சொல்கிறது. கடைசியில் உபஸம்ஹாரம் பண்ணி முடிக்கிறபோது அக்னி என்றே முடிகிறது. கடைசியில் உபஸம்ஹாரம் பண்ணி முடிக்கிறபோது அக்னி என்றே முடிகிறது. ஆரம்பம், முடிவு இரண்டும் அக்னிதான். ஆனபடியால், வேதத்தின் தாத்பர்யம், ரீவீவமீ (ஸாரம்) fire worship தான் என்று அவர் சொன்னார்.

இதிலேயும் ஒரு உண்மை இருக்கிறது. அக்னி இருப்பது ஆத்ம சைதன்யம்தான்; அறிவொளிதான். அறிகிறவனாகவும் அறியப்படுவதாகவும், அறிவாகவும் இருக்கிற ஒரே ஆத்ம சைதன்யம்தான் வேதத்தின் பரம தாத்பரியம்.

ஆனால் வார்த்தைப்படி (literal-ஆக) எடுத்துக் கொண்டு, அக்னி உபாஸனைதான் தாத்பர்யம் என்றால் சரியில்லை. ஏதோ ஒரு தேவதா

உபாஸனைதான் பெரிசு என்று சொல்லாததுதான் வேதத்தின் பெருமை. எல்லா தேவதைகளாகவும் இருக்கிற ஆத்மாவையே பிரியமானதாக உபாஸிக்க வேண்டும் என்றுதான் வேதம் (பிருஹதாரண்யகம் 1.4.8.) சொல்கிறது. "ஆத்மாவே பார்க்கப்பட வேண்டும். ஆத்மாவே கேட்கப்படவேண்டும். ஆத்மாவே மனனம் செய்யப்பட்ட வேண்டும். ஆத்மாவே அநுபவித்து அறியப்பட வேணடும். அதனாலேயே எல்லாம் அறியப்பட்டதாகும்"என்றுதான் யாக்ஞவல்கியர் மைத்ரேயிக்குச் செய்கிற உபதேச வாயிலாக, நம் எல்லாருக்கும் வேதமானது முடிவான goal-ஐ(லக்ஷ்யத்தை)ச் சொல்கிறது.

Goal(குறிக்கோள்) என்று ஒன்றைச் சொல்லவேண்டுமானால், 'இப்போது நாம் இருக்கிற இடம் வேறு;இந்த ஆரம்பத்திலிருந்து நாம் அந்த முடிவான இடத்துக்குப் போயாக வேண்டும்'என்ற கருத்து அதில் தொக்கி நிற்கிறது.

"அத:" என்று 'அது'வாகத் தூரத்தில் சுட்டிக் காட்டப்படுவது கோல்;'இதம்' என்று இதுவாக இப்போது நாம் இருக்கிற நிலைதான் ஆரம்ப ஸ்தானம். இங்கேயிருந்து அங்கே போயாக வேண்டும்.

ஆனால் வாஸ்தவத்தில் அந்த லக்ஷ்யம் (அது) இங்கே (இது என்பதில்) இல்லையா?இருக்கத்தான் செய்கிறது. எல்லாம் பிரம்மந்தான் என்று தெரிந்து கொள்கிற போது 'அது', 'இது' இரண்டுமே பிரம்மந்தான்; அதாவது இரண்டுமே ஒன்றுதான். 'அது', 'இது' என்ற இரண்டுகூட இல்லவே இல்லை. 'இது' என்று இப்போது நாம் சொல்வதே 'அது' என்று இப்போது நினைக்கிற ஸத்யவஸ்துவாக, முடிவிலே ஆகிவிடுகிறது.

"அத:" என்ற மாதிரியே, "தத்" என்றும் பரமாத்மாவைச் சொல்வது வேதத்தின் வழக்கம். "தத்"என்றால் 'அது' என்றே அர்த்தம். "ஓம் தத் ஸத்" என்று எந்தக் காரியத்தையும் முடிப்பதற்கு, 'தத்'தாக உள்ள அது ஒன்றே ஸத்யம் என்று அர்த்தம்.

புருஷத்வம், மஹத்வம் (மகத்துவம்) என்பது போல் பல வார்த்தைகளை முடிவில் 'த்வம்' சேர்த்துச் சொல்கிறோம். இங்கே 'த்வம்' என்பதற்குத் தன்மை என்று பொருள். மஹத்தின் தன்மை மஹத்வம். புருஷனின் தன்மை புருஷத்வம். ஸரி, தத்வம், தத்வம் என்று ஸத்யமான முடிவுகளைச் சொல்கிறோமே! இது எப்படி? 'தத்வம்' என்றால் தத்-த்வம், அதாவது 'தத்'தினுடைய தன்மை என்று பொருள். தத்வ விசாரம், தத்வ உபதேசம் என்பவற்றிற்கு, பிரம்மமான தத்தினுடைய தன்மையை விசாரிப்பது, தத்தினுடைய தன்மையை உபதேசம் செய்வது என்பதே பொருள்.

வேதம் தத் என்று பரம்பொருளைத் தூரத்திலுள்ள 'அது'வாக சொல்கிறது என்றால், நமக்கு அதனால் என்ன பயன்?அப்படி இல்லை. வெகுதூரத்தில் இருக்கிறவர்தாம்

மிகவும் அருகில் இருக்கிறார்" - தத்தூரே தத்வந்திகே" என்று வேதம் உணர்த்துகிறது. கல்யாணம் ஆகவேண்டிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெற்றோர் பந்துக்களுக்குள்ளேயே முறைப் பையனைப் பார்த்து அவனுக்கு அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கத் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அந்தப் பெண், "புருஷர்களில் எல்லாம் உயர்ந்தவன் எவனோ, அவனைத்தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்" என்று பிடிவாதம் பண்ணினாள். அவர்களும், "உன் இஷ்டப்படியே போ!" என்று விட்டு விட்டார்கள்.

அந்தப் பெண், 'புருஷர்களுக்குள்ளேயே உயர்ந்தவன் ராஜாதான். கல்யாணம் பண்ணிக்கொண்டால் அவனைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்வேன்'என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு, அவ்வூர் ராஜா பின்னாலேயே போய்க் கொண்டிருந்தாள்.

ஒரு நாளைக்கு ராஜா பல்லக்கில் போய்க் கொண்டிருந்த போது ஒரு சாமியார் எதிரே வந்தார். ராஜா பல்லக்கை விட்டுக் கீழே இறங்கி, அந்தச் சாமியாருக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுத் திரும்பவும் பல்லக்கில் ஏறிக்கொண்டு போனான்.

இதை அந்தப் பெண் பார்த்தாள். அடடா! ராஜாதான் புருஷர்களுக்குள் உயர்ந்தவன் என்று எண்ணி இத்தனை நாளும் ஏமாந்து போய்விட்டேனே! ராஜாவைக் காட்டிலும் உயர்ந்தவர் சாமியார் போல இருக்கிறதே!கல்யாணம் பண்ணிக்கொண்டால் இந்தச் சாமியாரைத் தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு அந்தச் சாமியார் பின்னாலேயே சுற்ற ஆரம்பித்து விட்டாள்.

சாமியாரோடு போகும்போது, ஒருநாள் அவர் தெருக்கோடியில் இருந்த பிள்ளையாருக்கு முன் நின்று குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போடுவதை அவள் பார்த்தாள். "சாமியாரைவிடப் பெரியவர், உயர்ந்தவர் இந்தப் பிள்ளையார்தான். அதனால் பிள்ளையாரைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும்"என்று தீர்மானம் பண்ணிக் கொண்டாள். சாமியாரோடு போகாமல், அந்தப் பிள்ளையாருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து விட்டாள்.

அவளைத் தவிர அந்தப் பிள்ளையாரிடம் யாரும் அடிக்கடி வருகிற இடமாக அது இல்லை. அது கோயில்கூட இல்லை;வெறும் மரத்தடிதான். அதனால், தெருவோடு போகிற நாய் ஒன்று அந்தப் பிள்ளையார் மேலே காலைத் தூக்கிக் கொண்டு 'ஒன்றுக்கு'ப் போயிற்று. அதைப் பார்த்தவுடன், 'அடடா, இந்தப் பிள்ளையாரையும் விட உசந்தது இந்த நாய்தான்!'என்று , அந்த நாயைத் துரத்திக் கொண்டு, அவள் போக ஆரம்பித்துவிட்டாள். தெருவில் ஒடுகிற அந்த நாயைத் துரத்திக் கொண்டு, அவள் போக ஆரம்பித்துவிட்டாள்.

தெருவில் ஒடுகிற அந்த நாயை, ஒரு பையன் கல்லால் அடித்தான். அது 'வள்,

வள் என்று குரைத்துக் கொண்டு ஓடிவிட்டது. 'ஏண்டா அந்த நாயை அடித்தாய்?என்று அந்தப் பையனை ஒருவன் பிடித்துக் கொண்டு அதட்டினான். நாயைக் காட்டிலும் நாயை அடித்தவன் பெரியவன் என்று எண்ணினேன்; அடித்தவனையே திருப்பி அடிக்கிற இவன்தான் உயர்ந்தவன் என்று தீர்மானம் பண்ணிவிட்டாளாம் அந்தப் பெண்.

இப்படிக் கடைசியில் அவள் கண்டுபிடித்த அந்த ஆஸாமிதான் அவளுடைய அப்பா அம்மா முதலில் அவளுக்குத் தீர்மானம் பண்ணியிருந்த பிள்ளை!வெகு தூரத்தில் யாரோ இருக்கிறான், இருக்கிறான் என்று எண்ணிக் கொண்டே சுற்றினாள். கடைசியில், அவன் அவளுக்கு அருகிலேயே இருந்தவனாகப் போய்விட்டான். இப்படி லௌகிகமாக ஒரு கதை சொல்வதுண்டு.

எங்கோ தூரத்தில் இருக்கிறான் ஸ்வாமி என்று ஊரெல்லாம்சுற்றுகிறாயே!தெரியாதவரையில் அவன் தூரத்தில் இருப்பவன்தான். ஊரெல்லாம் சுற்றினாலும் அவனைப் பார்க்க முடியாது. அவன் உன்கிட்டேயே இருப்பவன்தான். " தத்தூரே தத்வந்திகே " - 'தூரத்திற்கெல்லாம் தூரம், சமீபத்திற்கெல்லாம் சமீபம் என்று ச்ருதி சொல்கிறது.

ஹொரைஸன் என்பார்களே, தொடுவானம்;இங்கிருந்து பார்த்தால் ஆகாசமும் பூமியும் அந்த இடத்தில் சேருவது போல் இருக்கும். அங்கே ஒரு பனைமரம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தப் பனைமரத்தடிக்குப் போனால் பூமியும் வானமும் சேருகிற இடத்தைப் பிடித்து விடலாம் என்று இங்கே இருந்து பார்க்கிறபோது நமக்குத் தோன்றும். ஆனால் அங்கே போனால் தொடுவானமும் அங்கிருந்து வெகுதூரத்திற்கு அப்பால் போய்விட்டது போல தெரியும் நாம் போகப் போக அதுவும் போய்க் கொண்டே இருக்கும். இந்தப் பனைமரத்தில் வந்து நின்றால் தொடுவானம் வெகுதூரத்திற்குப் போய்விட்டதே, அதைப் பிடிக்க இன்னும் நாமும் போக வேண்டும் என்று போய்க் கொண்டிருந்தால், அதைப் பிடிக்க முடியுமா?இந்தப் பனை மரத்துக்கு வெகுதூரத்தில் இருந்து பார்க்கும்போது இந்த இடத்தில்தான் தொடுவானம் இருப்பதுபோல இருந்தது. இந்த இடத்திற்கு வந்தவுடன் அது நம்மைவிட்டு இன்னும் வெகுதூரத்திற்குப் போய்விட்டது போலத் தெரிகிறது. ஆகவே அது எங்கே இருக்கிறது?நீ இருக்கிற இடத்தில்தான் இருக்கிறது. நீ இருக்கிற இடந்தான் அது. அப்படி 'அது' 'அது'என்று சொல்லப்படுகிற, வெகு தூரத்தில் இருக்கிற ஸ்வாமி, உன் கிட்டேயே - உன் உள்ளேயே - இருக்கிறது;நீயே அதுதான் என வேதம் உணர்த்துகிறது.

நீயே அது என்பதை'தத்-த்வமஸி'என்ற மஹாவாக்கியமாக வேதம் சொல்கிறது. தத்வம் என்றால் இங்கே தத்தின் தன்மை என்று அர்த்தமில்லை. 'த்வம்' என்பதற்கு இரண்டு அர்த்தம் உண்டு. தன்மை என்பது ஒன்று. நீ என்பது இன்னொரு அர்த்தம். தத்- த்வம் அஸி என்னும் போது 'தத் - அது, த்வம் - நீ(யாக), அஸி- இருக்கிறாய்' என்று அர்த்தம். த்வம் என்பதற்கு இருக்கும் இரண்டு அர்த்தங்களை

வைத்து, ஆசார்யாள் கூட "ஸௌந்தர்ய லஹரி" யில் சிலேடையாக ஒரு சுலோகம் பண்ணியிருக்கிறார்.

தத்-த்வம் என்ற இரண்டு வார்த்தைகளும் சேர்ந்துதான் தத்வம் என வழக்கில் வந்திருக்கிறது. ஒரே ஸத்யமான பரமாத்மாவின் தன்மையைத் தெரிவிக்கிற வார்த்தையைக் கொண்டே, எந்த ஸத்யமான முடிவுக்கும் 'தத்வம்' என்று பெயர் சொல்லுகிறோம்.

நான் நான் என்று எதை நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அதுதான், அந்த அறிவுதான் ஸ்வாமி. அந்தப் பிரகாசம் உன்னிடத்தில் இல்லையென்றால், உன்னால் ஸ்வாமி என்றே ஒன்றை நினைக்க முடியாது. 'நான் என்று அறிகிறேன், நான் என்று நினைக்கிறேன், அப்படி நினைக்கிற அறிவுக்கு மூல வஸ்து வெகுதூரத்தில் இருந்து கொண்டிருக்கிற 'தத்' என்று நினைக்கிறாயே, அந்த தத்தும் நீயும் ஒன்றுதானப்பா!' இதுதான் வேதத்தின் முடிவில் சொல்வது.

இது இது என்று எதைச் சொல்லிக்கொண்டிருக்கிறோமே, அந்த இதம் என்பது, மூலம் இல்லாதது அன்று மூலம் இல்லாமல் இது என்று ஒன்று தோன்றாது. விதை இல்லாமல் மரம் தோன்றாது. இவ்வளவு பிரபஞ்சத்திற்கும் - மலைகள், சமுத்திரம், ஆகாசம், பூமி, மாடு, மனுஷன், கோபம், பயம், பிரியம், இந்திரியங்கள், சக்தி இப்படி எல்லாவற்றுக்கும் - இது என்று சுட்டப்படும் எல்லாவற்றுக்கும் - மூலம் உண்டு. பார்க்கப்படுகிறது, கேட்கப்படுகிறது, முகரப்படுகிறது, நினைக்கப்படுகிறது, உஷ்ணம் சீதளம் என்பதாக ஸ்பர்சிக்கப்படுகிறது, மனசினாலே இந்திரியங்களினாலே ஆராயப்படுகிறது. அநுபவிக்கப்படுகிறது - இவை எல்லாவற்றுக்கும் 'இதம்' என்றுதான் பெயர். புத்திசாலித்தனம், ஆச்சரியமான காரியங்கள், இதுவரை வந்த விஞ்ஞானக் கண்டு பிடிப்புகள் முதலிய எல்லாம், அதாவது அறியப்படுவன எல்லாம் 'இதம்' தான். இவை எல்லாம் ஒரு மூலத்தையே காரணமாக உடையன. மூலம் இல்லாது போனால் 'இது' என்கிறது ஒன்றுமே இராது. மூலம் இல்லாது போனால் இது என்கிறது ஒன்றுமே இராது. மூலம் இல்லாமல் ஒரு பொருள் கிடையாது. எல்லாவற்றுக்கும் ஒரு மூலம், பீஜம் இருக்கிறது. மநுஷ்ய சரீரம் என்றால் பீஜம் இருக்கிறது. மநுஷ்ய சரீரம் என்றால் பீஜம் இருக்கிறது. மரம் என்றால் அதற்கு ஒரு பீஜம் (விதை) இருக்கிறது. மூலம் இல்லாமல் ஒன்றுமே கிடையாது. ஆதலால் பிரபஞ்சத்துக்கு ஒரு மூலம் இருக்க வேண்டும். பிரபஞ்சத்தில் என்ன என்ன சக்தி இருக்கிறதோ அவ்வளவும் அந்த மூலத்தில் இருக்க வேண்டும்.

புளியங்கொட்டை முளைக்கிறபோது பார்த்தால் தெரியும். முளை கண்டவுடன் அந்த விதையை இரண்டாகப் பிளந்து பார்த்தால் அதற்குள் ஒரு மரமே இருப்பது தெரியும். பெரிய மரமாக வளரக்கூடிய சக்தி அதனிடத்தில் இருக்கிறது. எல்லா விதைகளிலும் அப்படியே இருக்கும். என்றாலும், புளியங்கொட்டையில்தான் நன்றாக நாம் பார்க்க முடியும்.

மந்திரங்களில் பீஜாக்ஷரங்கள் என்று உண்டு. ஒரு சின்ன விதைக்குள் ஒரு மஹாவிருக்ஷம் இருப்பதுபோல், இந்த அக்ஷரங்களுக்குள்ளே அளவுகடந்த சக்தியை அடைத்து வைத்திருக்கிறது. ஐகாக்ரியத்தோடு (one-pointed concentration-ஒடு)லக்ஷக்கணக்கான ஆவிருத்தி அந்த அக்ஷரத்தை ஜபித்தால், அதன் உள் சக்தி முழுதையும் கிரஹிக்க முடியும்.

உலகத்திற்குள் எவ்வளவு சக்தி இருக்கிறதோ, எவ்வளவு மேதை இருக்கிறதோ அவ்வளவும் மூலமான ஸ்வாமிகள் இருக்க வேணடும். மூலம் இல்லாமல் இவை ஒன்றுமே தோன்றாது.

வேதம் முரசறைவதாவது, "இது இது என்று தோன்றும் பொருள்கள் எல்லாம் ஒரு மூலம் இன்றித் தோன்றவில்லை. மூலத்தில் இருக்கும்படியான சக்தி எதுவோ அதுவேதான் உலகம் முழுவதும் வியாபித்துக் கொண்டிருக்கிறது. அந்த மூலம் எங்கே இருக்கிறது? இது இது என்று பார்க்கப்படுகிவனவற்றுள், உள்ளே இருந்து பார்த்துக் கொண்டிருக்கிற ஆத்மாவேதான் மூலம்."

பெரிய நிலைக்கண்ணாடியை வைத்துவிட்டு அதில் பார்க்கிறோம். நம் உருவம் அதில் இருக்கிறது. நான்கு நிலைக் கண்ணாடிகளை முன்பின் வரிசையாக வைத்துவிட்டுப் பார்த்தால் ஆயிரம் உருவங்கள் தெரிகின்றன. அந்த ஆயிரத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறவன், ஆயிரத்துக்கும் மூலமான ஒரே ஒருவன்தான். இப்படி இத்தனை கோடி ஜீவர்களுக்கும் உள்ளே இருந்து, இது இது என்று பார்த்துக் கொண்டிருக்கிற ஒரே ஒருத்தன்தான் ஸ்வாமி!பார்க்கிற பொருள்தான் பார்க்கப் படுகிற வஸ்துக்களுக்கெல்லாம் மூலம். அந்த மூலம் என்பது அறிவுதான்.அறிவு என்பதே எல்லா ஜகத்திற்கும் காரணம். அந்த அறிவு எங்கே இருக்கிறது?உன்னிடமே இருக்கிறது. அகண்டமாக (பிரிவில்லாததாக) இருக்கக்கூடிய இது, உன்னிடம் கண்டமாக (பிரிந்ததாக)த் தோன்றுகிறது.

இது சின்ன பல்பு, அது பெரிய பல்பு. அது நீல விளக்கு, இது பச்சை விளக்கு. விளக்கில் அநேக உருவங்கள் இருக்கின்றன. இருந்தாலும் அவை எல்லாவற்றுக்குள்ளும் இருக்கும் சக்தி- மின்சார சக்தி - ஒன்றுதான். எங்கும் வியாபித்திருக்கிற மின்சக்தி இங்கே, இந்த விளக்குக்குள் இருந்து பிரகாசிக்கச் செய்கிறது;fan (விசிறி) க்குள் இருந்து சுற்ற வைக்கிறது. இந்த எல்லாக் காரியங்களுக்கும் மூலமான சக்தி ஒன்று. அது அகண்டமானது. அதுவே ஒயர் (கம்பி)க்குள் வருகிறபோது கண்டமாகிறது. இயற்கையில் பளீர் பளீர் என்று மின்னும்போது, ஜலம் அருவியாகக் கொட்டும் போது, அங்கெல்லாம் இது தானே வெளிப்பட வந்து விடுகிறது. இந்த மாதிரி உனக்குள்ளேயே இருக்கிற பரம ஸத்யமான தத்வம் உனக்கு flash ஆகும்படியாக (பளிச்சிடும்படியாக) பண்ணிக் கொள். கர்மாநுஷ்டானத்தில் ஆரம்பித்து, யக்ஞம், தேவதா உபாஸனை எல்லாம் பண்ணிக்கொண்டே போய், மஹாவாக்யத் தியானத்தில் முடிகிற வேத வேதாந்த

ஸாதனங்களெல்லாம் இதற்குத்தான். வேதத்தில் இருக்கிற சமூக வாழ்க்கை முறைகள், குடும்ப தர்மங்கள், ராஜாங்க நீதிகள், கவிதை, வைத்தியம், ஜியாலஜி முதலான சாஸ்திரங்கள் எல்லாமும், இந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் கொண்டு போய் விடுவதற்காக ஏற்பட்ட படி வரிசைதான். முதலில் இப்படி 'தத்'தும் 'த்வம்'மும் ஒன்றாயிருப்பதை, மின்னல் வெட்டு மாதிரி சில க்ஷணங்களுக்கு மட்டுமே தெரிந்து கொள்வாய். பிரம்மானுபவம் மின்னலில் மின்னல் மாதிரிக் கண்கொட்டுகிற நேரம்தான் உண்டாகும் என்று கேனோபநிஷத்தில் (iv.4) சொல்வது இந்த நிலையில்தான். அதோடு விடாமல் அப்யாஸம் செய்து கொண்டேயிருந்தால், அருவி தாரை கொட்டுகிறபோதும் எப்போதும் மின்சாரம் உண்டாகிற மாதிரி, எப்போதும் அந்த அநுபவத்திலேயே இருக்கலாம். இதுதான் சரீரத்தில் இருக்கிறபோதே மோக்ஷம். அப்புறம் சரீரம் போனபின், அந்தப் பரம ஸத்தியமாகவே இருந்து விடலாம். இப்படி சரீரம் உள்ளபோது ஜீவன் முக்தி, உயிர் போனபின் , அந்தப் பரம ஸத்தியமாகவே இருந்து விடலாம். இப்படி சரீரம் உள்ளபோது ஜீவன் முக்தி, உயிர் போனபின் விதேஹமுக்தி என்று வித்யாஸம் சொல்வதுகூட, மற்றவர்கள் பார்வையில்தான். ஞானிக்கு இரண்டும் ஒன்று தான்.

இப்படி, எல்லாம் ஒரே பிரம்மம்தான் என்று நாம் அநுபவத்தில் தெரிந்து கொண்டு, இங்கேயே மோக்ஷத்தில் இருக்கும்படியாகப் பண்ணுவதுதான் ஸகல வேதங்களுக்கும் பரம தாத்பர்யமாகும்.

இன்றைக்கு லோக விஷயங்களைப் பத்திரிக்கைகளின் (ந்யூஸ் பேப்பர்களின்) மூலம் தெரிந்து கொள்கிறோம். பல தேசத்திலுள்ள ரிப்போர்ட்டர்கள், ந்யூஸ் ஏஜென்ஸிகள் எல்லோரும் கடிதம் எழுதியும், தந்தி கொடுத்தும், டெலிப்ரிண்டர் மூலம் மெஸேஜ் கொடுத்தும் இந்தச் செய்திகள் எல்லாம் கிடைக்கின்றன. லோகத்திலுள்ள இப்படிப்பட்ட கருவிகளாலும், ஸாதாரண மநுஷ்ய புத்தியாலும் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்கள் இருக்கின்றனவே! அவற்றைத் தெரிந்துகொள்ள ஒரு பத்திரிக்கை வேண்டாமா?எதை இந்தக் கருவிகளால் தெரிந்து கொள்ள முடியாதோ, எந்த ஊரிலிருந்து தந்தியும் டெலிப்ரின்டரும் வராதோ, அங்கேயுள்ள விஷயங்களைச் சொல்கிற பத்திரிக்கைதான் வேதம். அதீந்திரிய சக்தி வாய்ந்த ரிஷிகள் அந்தப் பத்திரிக்கையின் வழியாகத்தான் லோகாதீதமான, நம் ஸாதாரண புத்திக்கு அதீதமான ஸமாசாரங்களைச் சொல்லியிருக்கிறார்கள்.

இப்படி அநேக ஸமாசாரங்கள் வேதத்தில் இருந்தாலும் அதிலும் தள்ளப்படும் சில பாகங்கள் உண்டு.

"தள்ளப்படுவது" என்றால் ஒரேடியாகத் தப்பு என்று ஒதுக்கி விடுவது என்று அர்த்தமில்லை. வேதத்தில் தப்பான ஸங்கதி ஒன்றுகூட இருக்க முடியாது. அப்படியிருக்கும் என்று நினைத்தாலே அபச்சாரம். ஆனாலும், முக்யமான ஒரு விஷயத்தை ஏற்கச் செய்வதற்குப் பக்க பலமாகவும், பூர்வாங்கமாகவும் அதிலே

பல விஷயங்கள் வரும்போது முக்கியமான விஷயத்தை மட்டுமே எடுத்துக் கொண்டு பாக்கியைத் தள்ளவேண்டியதுதான் என்று நம் பூர்விகர்களே ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள். ஒரு ஆரம்ப நிலையில் அல்லது இடைநிலையில், சில விஷயங்களை எடுத்துக் கொண்டாலும், மேல் நிலைக்குப் போகிறபோது அவற்றை விட்டு விடும்படியாக ஜீவனை உயர்த்திக் கொண்டே போகிற வேதத்தில் இருக்கின்றன. இவை ஒரு நிலையில் ஏற்கப்பட்டாலும் அதற்கு மேலே இன்னொரு நிலையில் தள்ளப்படுகிறவைதான்.

இப்படியில்லாமல் பரம தாத்பரியம் அல்லது "விதி"என்பதாக பூர்ணமாக ஏற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்களும் வேதத்தில் இருக்கின்றன. அப்படியில்லாமல், ஸாரம் போக, பாக்கி தள்ளப்பட வேண்டியவற்றுக்கு "அர்த்தவாதம்" என்றும் "அநுவாதம்" என்றும் பெயர்.

ஒரு தத்வத்தை, விதியை நம் மனஸிலே படுகிற மாதிரி எடுத்துச் சொல்வதற்காக, அதற்கு மிகவும் உயர்வைக் கல்பிக்கிறதான அநேக கதைகளை வேதம் சொல்வதுண்டு. இப்படிச் சொல்லும்போது, விதியையே பூர்ணமாக எடுத்துக்கொள்ள வேண்டும். கதைகளை வேதம் சொல்வதுண்டு. இப்படிச் சொல்லும்போது, விதியையே பூர்ணமாக எடுத்துக்கொள்ள வேண்டும். கதைகளை 'அர்த்தவாதம்' என்று தள்ளி விடலாம். அதாவது, அவற்றை நாம் அனுஷ்டானத்துக்கு எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. இது "அர்த்தவாதம்".

"அநுவாதம்"என்றால் என்ன?நமக்குத் தெரியாததை முடிவாகச் சொல்வதற்காகவே, நமக்குத் தெரிந்த ஒன்றில் வேத் ஆரம்பித்து, அதையும் விவரித்துக் கொண்டு போகும். புதிசாக ஒரு விதியை அல்லது தத்வத்தைச் சொல்லாமல், சில இடங்களில் ஏற்கெனவே நமக்குத் தெரிந்ததைத் திரும்பவும் சொல்லும். அதாவது வேதப் பிராமாண்யம் தேவைப் படாமல் நமக்கே நடைமுறையில் பிரத்யக்ஷப் பிரமாணம் முதலானதுகளால் தெரிய வருகிற விஷயங்களையும் சில இடங்களில் வேதம் சொல்ல வேண்டியதாகும். இதுதான் "அநுவாதம்" என்பது.

அநுவாதமும், அர்த்தவாதமும் முக்யமானவை அல்ல. அவை வேதத்தின் முடிவான உத்தேசத்தைச் சொல்ல வந்தவை அல்ல. நமக்கு மற்ற எந்தப் பிரமாணங்களாலும் தெரியாததை வேதம் சொன்னால், அதுதான் விதி;அதுதான் முக்யமான வாதம். அதுதான் ஸத்யமான தத்வம். அதுதான் வேதத்தின் உத்தேசம், உபதேசம் எல்லாம்.

அதாவது இதர கருவிகளைக் கொண்டு தெரிந்து கொள்ளக் கூடியதை வேதமும் சொன்னால், அது மறுக்க முடியாத வேதப் பிரமாணமாகி விடாது. தெரியாததைத் தெரிவிக்க ஏற்பட்டதுதான் வேதம். அது நமக்குத் தெரிந்ததையும் சொல்லி, தெரியாததையும் சொல்லிற்று என்றால், தெரியாதது தான் அதன் பரமதாத்பரியம்

என்றே அர்த்தமாகும். நமக்குத் தெரிந்த இடத்தில் ஆரம்பிக்க வேண்டும் என்ற கருணையாலேயே தெரிந்ததையும் சொல்கிறது. ஆனால் இதுவே ஸத்ய தத்வம் என்றால் தெரியாததைச் சொல்லவேண்டிய அவசியமே இல்லை!"நமக்குத் தெரியாத ஒரு தத்துவத்தை வேதம் நீள நெடுகச்சொல்லியிருக்கு மானால் அப்போது அதைத் தள்ளிவிடுங்கள்:தெரிந்ததையே வைத்துக் கொள்ளுங்கள்"என்று சொன்னால் அது பரிஹாஸத்துக்கு இடமாக அல்லவா ஆகும்? இதற்கு ஏன் தெரியாததை நீட்டி முழக்கி சொல்லியிருக்க வேண்டும்?சொல்லாமல் விட்டிருக்கலாமே!

சரி நமக்குத் தெரிந்தது என்ன?தெரியாதது என்ன?உலக வஸ்துக்களின் விஷயத்தில் இரண்டு விதமான அபிப்ராயங்கள் இருக்கின்றன. நமக்குத் தெரிகிற இத்தனை வஸ்துக்களும் ஒரே பொருளா, வேறு வேறா என்ற ஸந்தேஹம் ஏற்பட்டு இரண்டு பிரிவாகப் பிரிகிறது. நாம் பிரத்யக்ஷப் பார்வையை மட்டும் வைத்துக் கொண்டு, வஸ்துக்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று வேறே வேறேதான் என்கிறோம். அப்படி வேற வேறேயாக வைதது்க் கொண்டால்தான், நமக்குக் காரியம் சரியாக நடக்கிறது. நமக்கு ஜலம் வேறே, எண்ணெய் வேறேதான். தீபம் வேண்டுமானால் எண்ணெய் விட்டால்தான் எரியும். ஜலத்தை விட்டுப் பிரயோஜனமில்லை. அதே தீபம் பெரிசாக எரிந்து நெருப்புப் பிடித்துக் கொண்டுவிட்டால், அப்போது ஜலத்தை விட்டுத்தான் அணைக்க வேண்டும். எண்ணெய் விட்டால் இன்னம் பெரிசாக ஜ்வாலை விடும். இப்படியே எந்தக் காரியமானாலும், வஸ்துக்களிடையே வித்யாஸம் பார்த்து, அவை வேறே வேறே என்று வைத்துக் கொண்டு செய்தால்தான் காரியம் நடக்கிறது. இப்படி வேறே வேறேயாகவே வைத்துக் கொள்கிறது தான் த்வைதம். வேதத்தில் அநேக கர்மாங்கள், உபாஸனைகளைச் சொல்லியிருப்பதெல்லாம் இப்படிப்பட்ட த்வைத அடிப்படையிலேதான். அதனால், இங்கெல்லாம் வேதம் த்வைதமாக இருக்கிறது என்றுதான் ஏற்படுகிறது. இதை அத்வைதிகள் என்பதற்காக நாம் யாரும் ஆக்ஷேபித்துப் பேச வேண்டாம்.

ஆனால், இப்படி நமக்குத் தெரிந்த த்வைதத்தோடு வேதம் நின்றுவிட்டதா என்று பார்க்கலாம். அப்படி நின்று விட்டால் த்வைதந்தான் வேத தாத்பரியம் என்று சொல்லி விடலாம். ஆனால் வேதத்திலே என்ன பார்க்கிறோம்?ஸம்ஹிதையிலே ஆங்காங்கும், கடைசியில் உபநிஷத்தில் ஏகப்பட்டதாகவும், பிரத்யக்ஷத்தில் நமக்குத் தெரியாத அத்வைதத்தைச் சொல்லியிருக்கிறதே!வஸ்துக்கள் வேறு வேறு இல்லை - எல்லாம் ஒரே ஆத்மாவின் வெளித்தோற்றங்கள் தான் - என்ற அபிப்ராயத்துக்குக் கொண்டு விடுகிறதே!

நம்முடைய மதப் புஸ்தகங்களில் 'பூர்வபக்ஷம்', 'ஸித்தாந்தம்'என்று இரண்டு உண்டு. முதலில், பூர்வபக்ஷம் என்பதில் புஸ்தகத்தின் கொள்கைக்கு மாறுபட்டவர்களின் கொள்கையைச் (opposite point of view) சொல்லியிருக்கும்.

அதை மட்டும் பார்த்தால் புஸ்தகத்தின் அபிப்ராயத்தையே நாம் நேர்மாறாகப் புரிந்து கொண்டு விடுவோம். இப்படி எதற்கு பூர்வபக்ஷம் பண்ணியிருக்கிறதென்றால் அப்புறம் ஸித்தாந்தம் செய்வதற்காகத்தான். அதாவது எதிர்வாதங்களை வென்று புஸ்தகத்தின் கொள்கையான சித்தாந்தத்தை நிலைநாட்டுவதற்கே, முதலில் அந்த எதிர்வாதங்களைச் சொல்லியிருக்கும். அப்புறம் ஸித்தாந்தம் என்ற பாகத்தில், அந்த வாதங்களுக்கெல்லாம் பதில் சொல்லி நிராகரித்து விட்டுத் தன் கொள்கையையே கெட்டியாக நிலை நாட்டியிருக்கும். எதிராளியின் அபிப்ராயத்தையும் மறைக்காமல் சொல்லி, அதற்கு இப்படி நம் தரிசனங்களில் ('தரிசனம்' என்றால் தத்வ சாஸ்திரங்கள் என்று அர்த்தம்) பதில் சொல்லியிருப்பதைப் பிறதேசத்து அறிஞர்களும் கொண்டாடுகிறார்கள்.

இதை எதற்கு சொன்னேன் என்றால், 'வேதத்தின் அத்வைபத்தைச் சொன்னது, இப்படிப் பூர்வபக்ஷமாக அநதக் கருத்தைச் சொல்லி அப்புறம் அது சரியில்லை என்று நிர்த்தாரணம் பண்ணுவதற்காக?'என்று பார்த்தால், இப்படி இல்லை.

அத்வைதத்தை விசேஷமாகச் சொல்கிற உபநிஷத்துக்கள் தான் ஸித்தாந்தம் மாதிரி 'ஞானகாண்டம்'என்று கடைசியில் வருகிறது. த்வைதத்தை சொல்லும் 'கர்மகாண்டம்' பூர்வ பக்ஷம் மாதிரி இதற்கு முந்தியே வந்து விடுகிறது. ஆகவே நமக்குத் தெரிந்த த்வைதத்தையும் வேதம் முதல் நிலையிலே சொல்லி, தெரியாத அத்வைதத்தையும் வேதம் முதல் நிலையிலே சொல்லி, தெரியாத அத்வைதத்தையும் முடிவிலே சொல்கிறது என்றால், அந்த அத்வைதந்தான் வேதம் சொல்ல வந்த லக்ஷ்யம், அதுவே வேதத்தின் பரம தாத்பரியம் என்றுதான் அர்த்தம்.

ஆனாலும் பூர்வபக்ஷத்தைக் கண்டிக்கிற மாதிரி வேதத்தில் த்வைதத்தைக் கண்டிக்கவில்லை. ஏனென்றால், காரணம் சொல்கிறேன். த்வைதத்தை வைத்துக் கொண்டு செய்கிற கர்மா, உபாஸனை ஆகியன அத்வைதானுபவத்துக்குப் போவதற்கு விரோதமில்லை. மாறாக அதற்கு உபாயமே இவை. அதனால் பூர்வபக்ஷத்தில் எதிர்க்கட்சிக்காரன் என்று ஒருத்தனை வைத்து அப்புறம் அவனைக் கண்டித்த மாதிரி, இங்கே த்வைதமான அபிப்ராயங்களையும், கர்மாக்களையும் விரோத பாவத்துடன் எதிர்க்கட்சி என்று வைக்கவில்லை. விரோத பாவத்துடன் எதிர்க்கட்சி என்று வைக்கவில்லை. ஆகையால், அவற்றை அப்புறம் கண்டிக்கவுமில்லை. முதலிலே பூ இருந்து, அப்புறம் அந்தப் பூ உதிர்ந்து பழமாகிற மாதிரி, முதலில் த்வைதமாக இருந்தே, நாம் அப்புறம் அதை விட்டு அத்வைதமாக வேண்டியிருக்கிறது. பூவுக்கும் பழத்துக்கும் விரோதமா என்ன?பழந்தான் முற்றிய நிலை என்பதற்காகப் பூவைக் கண்டிப்பதில்லையல்லவா? மற்ற எல்லாமும் அதது இருக்கவேண்டிய லெவலில் இருந்தால், அவற்றை அத்வைதத்தில் கண்டிக்க வேண்டியதேயில்லை. லெவலை

மீறுகிற போதுதான் கண்டிக்க வேண்டியிருக்கிறது. இப்படித்தான் (சங்கர பகவத்பாத) ஆசார்யாளும், மற்ற அத்வைத கிரந்த கர்த்தாக்களும் இதர ஸித்தாந்திகளைக் கண்டனம் பண்ணி எழுதினது.

ஈச்வர கிருபையால், விஞ்ஞான வளர்ச்சியானது ஆத்மிகத்துக்குக் கெடுதலைப் பண்ணாமல், இதுவரைக்கும் வேதத்தால் அன்றித் தெரிந்து கொள்ள முடியாதிருந்த அத்வைதத்துக்கும் கிட்டே கிட்டே கொண்டு போவதாகவே 'மாடர்ன் ஸயன்ஸி'ல் ஏற்பட்டிருக்கிறது. ஸயன்ஸில் ஏற்பட்டிருக்கிறது. ஸயன்ஸில் ஆரம்பத்தில் பார்த்தால் உலகத்திலுள்ள வஸ்துக்கள் எல்லாம் வேறு வேறு என்றே நினைத்தார்கள். பிறகு எல்லாவற்றுக்கும் மூலமாக 72 எலிமென்ட்களே இருக்கின்றன என்று தீர்மானித்திருக்கிறார்கள். அந்த 72ம் தங்களுக்குள் ஒன்றுக்கொன்று பல தினுசில் சேருவதால்தான் இத்தனை கோடி வஸ்துக்களும் வந்தன என்றார்கள். அப்புறம் Atomic Science(அணு விஞ்ஞானம்) என்பதில் ஆராய்ந்து கொண்டே போனதில், இந்த 72 பதார்த்தங்களுக்கும் மூலம் ஒன்றே ஒன்றேதான், ஒரே எனர்ஜி (சக்தி) தான் என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

ஆத்ம தத்வத்தை விசாரித்து, ஸத்யத்தைத் தெரிந்து கொண்டவர்கள், அந்த ஸத்யம் அறிவு மயமானதே என்று சொல்லி, இந்த அறிவுக்குள்ளேயே ஜட வஸ்துக்களை மட்டுமில்லாமல் அறிவோடு (சைதன்யத்தோடு) இருக்கபட்ட ஜீவாத்மாவையும் சேர்த்து அத்வைதமாகச் சொல்கிறார்கள்.

ஒரே எனர்ஜி என்றாலும் சரி, ஏக சைதன்யம் என்றாலும் சரி, விஞ்ஞானிகளும் ஞானிகளும் சொல்கிற அந்த ஒன்றேயான வஸ்து நமக்குப் பிரத்யக்ஷத்தில் தெரியவில்லை. அதன் வேஷமான பல பல வஸ்துக்கள்தான் வேறே வேறே மாதிரி 'த்வைதமாக'த் தெரிகின்றன. இந்த த்வைதமே ஸத்யமானால், அதற்கு வேதத்தைப் பார்க்க வேண்டுமென்பதே இல்லை. நம்முடைய கண்ணுக்கும் புத்திக்கும் தெரிந்ததைச் சொல்ல வேதம் எதற்கு?நமக்குத் தெரியாததாகவும், தெரிந்த இடத்திலிருந்து ஆரம்பித்து நாம் போகக்கூடியதாகவும், கடைசியிலே முடிவான விஷயமாகவும் வேதம் ஒன்றைச் சொல்லுமானால், அதுதான் வேதங்கள் அத்தனைக்கும் முடிவான தாத்பர்யம் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். இப்படியிருப்பது 'ஜீவாத்மா தன்னுடைய நிஜ நிலையைப் பெற வேண்டுமானால் பரமாத்மாவில் அத்வைதமாகக் கரைந்து பிரம்மமாகி விட வேண்டும். என்ற தத்வம்தான்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*வேதமும் தமிழ்நாடும்*

வேதமிருந்தால்தான் லோகம் நன்றாக இருக்கும், ஆத்மாவும் க்ஷேமமடையும் என்பது என் அபிப்ராயம். இந்தப் பெரிய மூலதனம் இப்போது வீணாகப் போயிருக்கிற நிலை மாறி, இதை மறுபடி தழைக்கும்படியாகப் பண்ணவேண்டுமென்பதே எனக்கு ஸதா விசாரமாக இருக்கிறது. அதற்காகத்தான் என்னாலானதை ஏதோ திட்டம் கிட்டம் போட்டு வேத ரக்ஷணம், ஸ்டைபண்ட் என்று பல இடங்களில் ஏற்பாடு செய்திருக்கிறது. ஆனால் இது இந்த மடம், அல்லது சில ஸ்தாபனங்களின் கடமை மட்டுமல்ல; இது நம் எல்லோர் கடமையுமாகும்; உங்கள் எல்லோருடைய ட்யூட்டியும் ஆகும். நிர்ப்பந்தத்துக்காக இல்லாமல், ஆசையோடு ஆர்வத்தோடு நீங்கள் எல்லோரும் சேர்ந்து இது வேத பூமி என்பதை மறுபடி நிஜமாக்கப் பிரயாஸைப் படவேண்டும். தமிழ்நாட்டுக்கு இதை நான் முக்கியமாகச் சொல்கிறேன்.

வேத விருக்ஷம் நன்றாக விழுது விட்டு வளர்ந்த மண் இந்தத் தமிழ் பூமி, "வேதம் நிறைந்த தமிழ்நாடு" என்று (பாரதி)பாடியிருப்பது கவியின் அதிசயோக்தி இல்லை. அப்படித்தான் தமிழ்தேசம் இருந்திருக்கிறது. சங்க காலத்திலிருந்து, எங்கே பார்த்தாலும் வேத வேள்விகளை வானளாவப் புகழ்ந்து சொல்லியிருக்கிறது. சங்கம் வளர்த்த பாண்டிய ராஜாக்கள் வைதிகமான யக்ஞாதிகளை நிறையச் செய்து, "பல் யாகசாலை முது குடுமிப் பெருவழுதி"என்ற மாதிரியான பட்டங்களைத் தங்களுக்குப் பெருமையோடு சூட்டிக் கொண்டிக்கிறார்கள். அவர்களுடைய ராஜதானியான மதுரையைப் பற்றி இரண்டு பெருமை. ஒன்று, 'மாடு கட்டிப் போர் அடித்தால் மாளாது என்று யானை கட்டிப் போர் அடித்தது.'இது தான்ய ஸுபிக்ஷத்தைச் சொல்வது. இன்னொன்று ஆத்ம ஸுபிக்ஷத்தையும், லோக ஸுபிக்ஷத்தோடு சேர்த்துச் சொல்வது. அதாவது, பல ஊர்க்காரர்கள் தங்கள் தங்கள் ஊர்ப் பெருமையைச் சொல்லும்போது மதுரைவாசிகள், "எங்கள் ஊரில் வேத சப்தத்தோடேயாக்கும் பொழுது விடிகிறது. சேரர்களின் தலைநகரான வஞ்சியில் இருப்பவர்களும், சோழர்களின் தலைநகரான கோழி என்ற உறையூரில் இருப்பவர்களும், தினுமும் கோழி கூவுவதைக் கேட்டு விழித்துக் கொள்கிறார்கள். அதைவிடப் பெருமைப்படத்தக்க விதத்தில் விழித்துக் கொள்பவர்கள் பாண்டிய ராஜதானியான மதுரையில் வசிக்கிற நாங்களே. வேத அத்யயனத்தை, மறையொலியைக் கேட்டுக் கொண்டு தான் நாங்கள் விழித்துக் கொள்கிறோம்"என்று பெருமைப் பட்டுக் கொள்கிறார்கள்!இது சங்க இலக்கியத்திலேயே இருக்கிற விஷயம்.

திருக்குறளில் பல இடங்களில் வேதநெறி சிறப்பித்துப் பேசப்படுகிறது. வேதத்திலுள்ள பஞ்ச மஹாயக்ஞங்களைத்தான் திருவள்ளுவர் சொல்கிறார்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தார் ஒம்பல் தலை.

ராஜநீதி தவறினால் கோ-ப்ராம்மணர்களுக்கு க்ஷீணம் உண்டாகும் என்பது ஒரு முக்யமான வைதிகக் கொள்கை. கோ (பசு)வையும், பிராம்மணர்களையும் தனியாகக் குறிப்பிட்டுச் சொல்வதற்குக் காரணம், கோ தருகிற நெய், பால், சாணம் முதலியனதான் யக்ஞ திரவியங்களில் முக்யமானவை;யாகத்தைப் பண்ணுகிற அதிகாரம் பெற்றவர்களோ பிராம்மணர்கள்- என்பதுதான். இதே மாதிரி கோ-பிராம்மணர்களைத் திருவள்ளுவர் குறிப்பிட்டு, அரசின் நீதித் தண்டம் தவறினால், இந்த இருவராலும் கிடைக்கிற லோக உபகாரம் வீணாகிவிடும் என்கிறார்.

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்

காவலன் காவான் எனின்.

'ஷட் கர்ம நிரதர்'என்று பிராம்மணர்களுக்கு உள்ள வைதிகமான பெயரை, அப்படியே மொழிபெயர்த்து "அறு தொழிலோர்"என்கிறார். அத்யயனம்-அத்யாபனம் (தான் வேதம் ஓதுவது-பிறருக்கும் ஓதுவிப்பது); யஜனம்-யாஜனம் (தான் வேள்வி செய்வது-பிறருக்கு வேள்வி செய்விப்பது):தானம் - ப்ரதிக்ரஹம் (வேள்வியில் தானே தக்ஷிணை தருவது;இம்மாதிரி செலவழிப்பதற்கு வேண்டிய மூலதனத்துக்காகவே பிறத்தியாருக்கு சிக்ஷை சொல்லி முடித்தபின் அவர்களிடமிருந்து தக்ஷிணை வாங்கிக் கொள்வது) என்ற ஆறும் தான் பிராம்மணனுக்கு உரிய ஷட்கர்மாக்கள். இது மநுஸ்மிருதியில் சொன்னது. தர்ம சாஸ்திரங்களில் இன்னொன்றான பராசர ஸ்மிருதியில் வேறு தினுசாக ஆறு கர்மாக்களை பிராம்மணனின் நித்யப்படியாக (daily routine-ஆக) சொல்லியிருக்கிறது.

ஸந்த்யா-ஸ்நானம் ஜபோ ஹோமம் தேவதானாம் ச பூஜனம்।

ஆதித்யம் வைச்வதேவம் ச ஷட்கர்மாணி தினே தினே।

ஒன்று ஸந்தியாவந்தனம்;அதை ஸ்நானத்தோடு செய்ய வேண்டும். ப்ராம்மணன் பச்சைத் தண்ணீரில் முழுகப் பயப்படவே கூடாது. எப்போது பார்த்தாலும், தினமும் இரண்டு மூன்று வேளையும் ஸ்நானம் செய்யவேண்டும். ப்ராத ஸ்நானம்(விடியற்காலை), மாத்யான்னிக ஸ்நானம் (பகல்) ஸாயங்கால ஸ்நானம் என்று பண்ண வேண்டும். இப்படி மூன்று வேளையும் ஸ்நானம் பண்ணியே அந்தந்த வேளைக்கான ஸந்தியா வந்தனம், அப்புறம் ஸ்நானம் என்று சொன்னதால், ஸந்தியா வந்தனம் பண்ணிவிட்டுப் பிறகு ஸ்நானம் செய்யவேண்டும் என்று குயுக்தி பண்ணக் கூடாது...

இந்தக் காலத்தில் இப்படியெல்லாம் விதண்டாவாதம், மரியாதைக்கு அர்ஹமான (உரிய) விஷயங்களில் கேலிப்பேச்சுக்கு பேசுவதெல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. ஆசார்யாள் முடிவாக உபசதேசித்த "ஸோபான பஞ்சக"த்தில் 'துஸ்தர்க்காத் ஸுவிரம்யதாம்'என்று சொல்கிற போது, குதர்க்கமாக, குயுக்தியாக மத விஷயங்களில் அர்த்தம் பண்ணுவதைத்தான் கண்டித்திருக்கிறார். மிகவும் பூஜ்யமான வேதத்தின் விஷயத்தில் இது மிகவும் அவசியம். பவ்யத்தோடு பணிவோடு அதைக் கேட்டுக் கொள்ள வேண்டும். வேதாந்த நிர்ணயத்துக்கு நல்ல யுக்திகளை ஒரு பிரமாணமாக ஆசார்யாள் ஒப்புக் கொள்கிறார். குயுக்தி, துஸ்தர்க்கம் (குதர்க்கம்) தான் கூடாது என்கிறார். எந்த அளவுக்குத்தான் மநுஷ்ய அறிவு போக முடியுமோ அந்த எல்லைக்குள்ளேயே அதற்கு அதிகாரம் கொடுத்து வேதத்தை ஆராய்ச்சி பண்ணுவதில் தப்பில்லை. ஆனால், நம் சிற்றறிவுக்கு எல்லையே வகுக்காமல் பூரண அதிகாரம் கொடுப்பதுதான் தப்பு...

ஸ்நானம்-ஸந்த்யா என்றில்லாமல், ஸந்த்யா-ஸ்நானம் என்றதற்குக் காரணம்:பிராம்மணனுக்கு ஸந்த்யா வந்தனம் தான் மற்ற எல்லா

அனுஷ்டானங்களைவிட முக்கியமாக இருப்பது. அதனால் அவனுடைய கர்மாவைச் சொல்லும்போது அதற்கே முதலிடம் கொடுத்திருக்கிறது.

ஆறு தொழில்களில் முதலாவது ஸந்த்யா-ஸ்நானம். இரண்டாவது ஜபம் - அநேக மஹாமந்திரங்களை, அவரவர் குலதேவதை இஷ்டதேவதை முதலியவற்றின் மந்திரங்களை ஜபிப்பது. மூன்றாவது ஹோமம், அதாவது யக்ஞம். நாலாவதாக தேவதா பூஜனம் - கந்த, புஷ்ப, தூப, தீப, நிவேதனங்களால் ஈச்வரனை வழிபடுவது. ஐந்தாவதாகச் சொன்ன ஆதித்யம் என்றால் அதிதியை உபசரிப்பது.. அதாவது விருந்தோம்பல். கடைசியில் வைச்வ தேவம். பஞ்சமனும், நாய் முதலான ஜந்துக்களும் உள்பட ஸகலப் பிராணிகளுக்கும் பலி போடுவது வைச்வதேவம்.

இப்படிப் பண்ணுபவர்களைத்தான் 'அறுதொழிலோர்'என்று ரொம்பவும் பெரியவரான வள்ளுவர் சொல்கிறார். கெட்ட ராஜ்யத்தில் பிராம்மணர்கள் வேத அத்யயனம் பண்ண மாட்டார்கள், வேதத்தை மறந்து விடுவார்கள் என்கிறார் - அறு தொழிலோர் நூல் மறப்பர். பிராம்மணர்கள் வேதத்தை மறக்காமல் இருக்க வேண்டும்;அப்படிப்பட்ட நல்ல ராஜ்யம் ஏற்படவேண்டும் என்பதுதான் வள்ளுவரின் ஆசை என்று இதிலிருந்து தெரிகிறது.

தமிழ்த் தெய்வம் என்று சொல்லப்படும் ஸுப்ரமண்ய ஸ்வாமியின் ஆறுமுகங்களை வர்ணிக்கும்போது, சங்க நூலான திருமுருகாற்றுப் படையில், அவருடைய முகங்களில் ஒன்று பிராம்மணர்கள் வேதவிதி தப்பாமல் செய்யும் யக்ஞங்களை ரக்ஷிக்கவே இருக்கிறது என்கிறது.

ஜைன பௌத்த சம்பந்தமே முக்கியமாக உள்ள ஐம்பெரும் காப்பியங்களில்கூட, பல இடங்களில் வேதத்தை, வைதிக தர்மத்தை ரொம்பவும் சிலாகித்துச் சொல்லியிருக்கிறது. சிலப்பதிகாரத்தில் எங்கே பார்த்தாலும் வர்ணாச்ரம தர்மங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறது;'அந்தணர் ஒம்பலை' விசேஷித்துச் சொல்லியிருக்கிறது; வேத சப்தம், யக்ஞம் ( ஆரண ஒதையும் செந்தீ வேட்டலும் ) இவற்றைக் கொண்டாடியிருக்கிறது என்று புலவர்கள் சொல்லுகிறார்கள். வைச்யனான கோவலன் அநேக வேத கர்மானுஷ்டானங்களைப் பண்ணினதற்கு அதிலே குறிப்புகள் இருக்கின்றன என்கிறார்கள்.

தமிழ் வார்த்தைகளும், வழக்கிலுள்ள அநேக வசனங்களுமே, இந்த நாட்டின் வைதிக ஈடுபாட்டுக்குப் பெரிய சான்றுகளாக இருக்கின்றன. 'யஜனம், யக்ஞம்' என்பனவற்றுக்கு 'வேட்டல், வேள்வி'என்ற வார்த்தைகள் பிராசீனமாக இருந்து வருகின்றன. 'சயனம்'என்ற யக்ஞ மண்டப அமைப்புக்குப் 'பரப்பு'என்ற வார்த்தை பழங்காலத்திலிருந்து இருக்கிறது. இம்மாதிரி வேறு நாகரிகத்திலிருந்து வந்த விஷயங்களுக்கு, ஒரு பாஷையில் தனிப்பெயர்கள் ஆதிகாலத்திலிருந்து இருக்க முடியாது. இப்போது கிறிஸ்துவ தேசத்திலிருந்து பைபிள் வந்தால், அதற்கு நாம்

'கிறிஸ்துவ வேதம்' என்று பேர் கொடுத்தாலும், வேள்வி மறை என்பவை போல் இந்தப் பேர் வேரூன்றாமல் பைபிள், பைபிள் என்றேதான் சொல்கிறோம். அதுவுமில்லாமல் அதை வேதம் என்கிறபோது, வேதம் என்று ஏற்கெனவே நம்மிடமிருக்கிற மூல சாஸ்திரத்தின் பேரைக் கொண்டுதான் அதற்குப் பேர் வைத்திருக்கிறோம். பைபிளைத் தவிர வேறு வேதம் நமக்கு உண்டு. ஆனால் வேத யக்ஞத்தைத் தவிர வேறே 'வேள்வி'என்று ஒன்று கிடையவே கிடையாது. 'வேள்வி' என்று தமிழிலே பெயர் இருந்தாலும், வைதிக தர்மத்தில் இல்லாததாகத் தமிழ் நாட்டுக்கு என்று மட்டும் வேள்வி என்ற வேறு கர்மா இருக்கவில்லை. இப்படியே 'மறை'என்றால் வேதம்தான். தமிழிலே வேறே மறை என்று ஒன்று இருந்து, அந்தப் பெயரை வேதத்துக்கு வைக்கவில்லை.

இந்த 'மறை' என்ற வார்த்தை ரொம்பவும் ஆழமான, பொருத்தமான பொருள்

கொண்டதாகும். வேதங்களில் அங்கங்கே மறைவாக ரக்ஷிக்கவேண்டிய பகுதிகளுக்கு 'ரஹஸ்யம்' என்று வேதத்திலேயே பேர் கொடுத்திருக்கிறது;உபநிஷத்துக்களில் இப்படிப்பட்ட ரஹஸ்யமான பாகங்களையே தனியாக 'உபநிஷதம்'என்று குறிப்பிட்டிருக்கிறது. வேதியர்கள் தங்களுக்குள்ளயே ஜாக்ரதையுடன், கொஞ்சமும் அம்பலப் படுத்தி விடாமல் மறைவாக ரக்ஷிக்க வேண்டிய சில பாகங்களை மட்டுமே வேத, உபநிஷத்துக்கள் இப்படிச் சொல்கின்றன. தமிழ் இன்னம் ஒரு படி மேலே போய் வேதம் முழுதையும் 'மறை' என்று சொல்லிவிட்டது!'மறை'என்றால் மறைத்து ரஹஸ்யமாகக் காப்பாற்றப்பட வேண்டியது என்று அர்த்தம். வேதம் அதிலே அதிகாரம் பெற்றவர்களிடம் மட்டும் பேசிற்று. 'இன்னின்ன பாகங்களை நீங்கள் மறைவாகப் போற்றி வாருங்கள் என்று அதிகாரிகளுக்குச் சொல்லிற்று. தமிழ் பாஷை வேதியர்களை மட்டும் எடுத்துக் கொள்ளாமல், ஸமஸ்த ஜன சமூகத்தையும் எடுத்துக் கொண்டு பேசும்போது, எப்படி வேதமானது பிராம்மணர்களுக்குள்ளேயே சில பாகங்களை ரஹஸ்யமாக ரட்சிக்க வேணடும் என்கிறதோ, அதே மாதிரி ஸகல வர்ணத்தாரையும் எடுத்துக் கொள்கிறபோது வேதம் முழுதையும் அதில் அதிகாரமுள்ளவர்கள் அதிகாரமில்லாதவர்களிடமிருந்து ரஹஸ்யமாக ரட்சிக்க வேண்டும் என்று கருதியே, முழு வேதத்துக்கும் "மறை" என்று பேர் கொடுத்து விட்டது!அதை எல்லாருக்கும் என்று democratise பண்ணிவிடக்கூடாது என்பதுதான் தமிழ் ஜனங்களின் தொன்று தொட்ட அபிப்ராயம் என்பது "மறை"என்ற இந்த வார்த்தையிலிருந்தே தெரிகிறது.

இன்னொரு விதத்திலும் 'மறை' என்று பெயர் பொருத்தமாயிருக்கிறது. வேதத்தினால் ஏற்படும் பயன் முழுவதும் உடனே தெரிந்து விடாது. ஆத்யாத்மிகமாக அதனால் அடையப்படும் பிரயோஜனங்கள் இப்போது

மறைந்திருந்து பிற்பாடுதான் வெளிப்படும். இதனால் வேதமானது 'அதிருஷ்ட பலனை'ச்சொல்வது என்பார்கள். திருஷ்டியில் தெரியாதது தான் அதிருஷ்டம். தெரியாதது என்றால் மறைந்திருக்கிறது என்றுதானே அர்த்தம்?எதன் பலன் இப்படி மறைந்திருக்கிறதோ அதை "மறை" என்றே சொல்லி விட்டார்கள்.

நம் மதத்துக்கு வேதம் வேர். பக்தி, கோவில், தியானம், ஞானம் எல்லாவற்றுக்கும் மூலம் அது. மூலம் என்றால் வேர் என்றே அர்த்தம். கோவில், பக்தி, பூஜை முதலான மற்றதெல்லாம் வெளியே தெரிகிற அடிமரம், கிளை, பூ, காய், பழம் என்றால் வேதம் வேர். அதனால்தான் அடிமரம் முதலானவை இருக்கின்றன. வளர்கின்றன. ஆனால் வேர் இவற்றைப் போல் வெளியில் தெரியாமல் பூமிக்குள்ளேதான் ஒடிக்கொண்டு மறைவாக இருக்கிறது. இவ் விதத்திலும் மறை என்ற பெயர் மிகவும் பொருத்தமாயிருக்கிறது.

'ஒத்து'என்றும் வேதத்துக்கு அழகான, அர்த்த புஷ்டியுள்ள தமிழ்ப் பேர் இருக்கிறது. எது எழுதப்படாமல், வாய்மொழியாகவே, அதாவது ஒதப்பட்டே அப்யஸிக்கப் படவேண்டுமோ அதுதான் "ஒத்து". திருக்குறளில் இந்தப் பேர் இருக்கிறது. வடார்க்காடு ஜில்லாவில் திருவோத்தூர் என்று ஒரு ஊர் இருக்கிறது. ஞானஸம்பந்தர் அங்கே ஆண் பனையைப் பெண் பனையாக மாற்றினார். திருஒத்து-ஊர் என்பதே திருவோத்தூர் என்பது. வேதங்கள் பரமேச்வரனைப் பூஜை பண்ணின க்ஷேத்ரமாதலால் இப்படி பேர் ஏற்பட்டது. ஸம்ஸ்கிருதத்தில் அதற்கு 'வேதபுரி' என்று பெயர் இருக்கிறது.

மறை, ஒத்து, என்பது போல் "ஆரணம்" என்ற பெயரும் வேதத்துக்கு தமிழ் பாஷையில் இருக்கிறது. "ஆரணன்காண்"என்று அடிக்கடி திருமுறைகளில் வரும். 'வேத வாக்கோ!' என்று கேட்பது, தர்மசாலையை 'சத்திரம்' என்பது, முதலாளியை 'யஜமான்'என்பது, 'ஸாங்கோபாங்கம்'என்பது - இப்படி நடுவே நடுவே நான் சொன்ன' நேக விஷயங்களும், வைதிக அநுஷ்டானங்கள் தமிழ் தேசத்தில் எப்படி வேரோடியிருக்கிறது என்று காட்டுகின்றன. எழுதி வைக்காமல் குரு-சிஷ்யன் என்று தலைமுறை தத்துவமாகக் காதால் கேட்டே பாடம் பண்ணப்பட வேண்டிய வேதத்துக்கு 'ச்ருதி'என்று ஸம்ஸ்கிருதத்தில் பேர் இருக்கிறதென்றால், தமிழிலோ 'எழுதாக் கிளவி' என்று இன்னம் அழுத்தமான பேர் இருக்கிறது. 'ச்ருதி என்றால் 'கேட்கப்படுவுது'. இப்படி சொல்வதாலேயே 'எழுதப்படக்கூடாதது'என்று ஊகித்துக் கொள்ளும்படியாக விட்டு விட்டார்கள்.

ஆனால் தமிழிலோ வேதத்தை எழுதக்கூடாது என்று வெளிப்படையாக தெரியும்படியாக 'எழுதாக் கிளவி' என்று பேர் வைத்திருக்கிறது. வேதம் அதற்குள்ள நியமப் படியே ரக்ஷிக்கப்பட வேண்டும் என்பதில் தமிழ் தேசத்துக்கு அவ்வளவு உறுதியிருந்திருக்கிறது!

இப்போது எந்த மதக் காரியமானாலும் 'சடங்கு' என்றுதானே தமிழில் சொல்கிறோம்?இது நான் இனி மேலே சொல்லப் போகும் "ஷடகங்கள்" என்கிற வேதத்தின் ஆறு அங்கங்களை வைத்தே ஏற்பட்ட பேர்தான்.

வேதங்களுக்குப் பிராணன் மந்திரங்கள் என்றால், அந்த மந்திரங்களுக்குப் பிராணன் அக்ஷர சுத்தம். அதாவது, சரியான உச்சரிப்புத்தானே?இது மாறினால் வெளி ஆகாசத்து சலனம் (vibration), உள்ளே நாடி சலனம் இரண்டும் மாறிப் பலனே மாறிவிடும் என்று சொன்னேனல்லவா?எந்தெந்த அக்ஷரம் சரீரத்தில் எங்கே யெங்கே பிறந்து எப்படி வெளிப்படுகிறது என்பதையெல்லாம் ரொம்பவும் scientific- ஆக விஞ்ஞான ரீதியில்) சிக்ஷா சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. வெளியிலே மநுஷ்யர் காதுபடக் கேட்கிற 'வைகிரி' என்ற சப்தத்துக்கு ஆதாரமாக உள்ளே 'பரா' என்ற சப்தம் இருக்கிறது. 'வைகிரி' வாயில், உதட்டில் வருவது. 'பரா' என்ற மூல ரூபம்தான் மூலாதாரத்தில் நாபிக்குக் கீழே இருக்கிற சப்தம். அது வைகரியாக வாய் வழியே வருவதற்கு முன் பச்யந்தி, மத்யமா என்ற இரண்டு நிலைகள் இருக்கின்றன. யோக சித்தியில் மேலே போகப் போகத்தான் படிப்படியாக பச்யந்தி, மத்யமா, பரா முதலிய சப்தங்களை கேட்க முடியும். யோகேச்வரர்களான ரிஷிகள் பரா வாக்கையே கேட்கக் கூடியவர்கள். மூலாதாரத்தில் பரா வாக்காக எந்தெந்த சப்தங்கள் இருந்தால், அவை வைகரியாக எல்லா மநுஷ்யர்களும் வெளிப்படக் கேட்கக் கூடியபடி வரும்போது, அவற்றால் தேவதாப் பிரீதியும், லோகக்ஷேமமும், ஆத்மாபிவிருத்தியும் உண்டாகுமோ, அப்படிப்பட்ட பரா வாக்குகளையே ரிஷிகள் அகண்ட ஆகாசத்திலிருந்து கிரஹித்து வேத மந்திரங்களாக நமக்குத் தந்திருக்கிறார்கள். இந்த விவரங்களைத் தொல்காப்பியத்தில் ரொம்பவும் நன்றாகப் புரிந்து கொண்டு சொல்லியிருக்கிற விஷயம் ஸமீபத்தில் தெரிய வந்தது.

பரா, பச்யந்தி என்பவற்றைப் பரை, பைசந்தி என்று என்று பழைய தமிழ் நூல்களிலேயே சொல்லியிருப்பது முன்னமே தெரிந்தது. ஆனாலும் பஞ்சப் பிராணங்களில் உதானன் என்ற மேல்நோக்கிப் போகிற காற்றினால்தான் மூலாதாரத்தில் சப்தங்கள் உண்டாகின்றன என்பது உள்பட, மந்திரயோகம் இத்தனை நுணுக்கமாகத் தமிழின் முதல் நூலான தொல்காப்பியத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறதென்று இப்போது தான் தெரிந்தது. வேத ஸ்வரங்களைத் தூக்கியும், தாழ்த்தியும், ஸமனாகவும், ஸ்வரபேதமில்லாமலும் சொல்வதை உதாத்ம், அநுதாத்தம், ஸ்வரிதம், பிரசயம் என்று சொல்கிறார்கள். அந்த சூட்சுமங்களை எல்லாம்கூடத் தெரிந்து கொண்டு தொல்காப்பியத்தில் சொல்லியிருக்கிறது.

கோவிலில் ஏன் ஸம்ஸ்கிருத மந்திரங்களைச் சொல்ல வேண்டும்?தமிழில் சொன்னால் என்ன? என்ற ஒரு கேள்வி ஸமீபத்தில் வந்ததல்லவா?அப்போதுதான் நன்றாகப் படித்த தமிழ்ப் புலவர்கள் இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு விளக்கிச் சொன்னார்கள். 'மந்திரங்களைப்

பொறுத்தமட்டில் எந்த பாஷை என்று பார்ப்பது அடிப்படையிலேயே தப்பு;இங்கே பாஷை, அர்த்தமெல்லாம் இரண்டாம் பக்ஷம்தான். சப்த மாத்திரத்திலேயே ஏற்படுகிற பலன்தான் மந்திரங்களுக்கு இப்படி சப்தத்தினாலேயே கௌரவம், சக்தி இருக்கிறது என்று தொல்காப்பியரே சொல்லியிருக்கிறார்'என்று அவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

அந்த விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்குள், இங்கே நான் இன்னொன்றையும் சொல்லி விட வேண்டும். உங்களில் ரொம்பப் பேருக்கு அது விசித்ரமாக இருக்கும். அதாவது, வேதம் ஸம்ஸ்கிருத பாஷையில் இருக்கிறது என்றுதானே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?அதுவே தப்பு. வேத பாஷைக்கு 'ஸம்ஸ்க்ருதம்'என்று பேர் இல்லை. அதற்குப் பேர் 'சந்தஸ்' என்பதுதான். சந்தஸ் என்றால் சந்தம்(னீமீமீ மீக்ஷீ) மட்டுமில்லை. சந்தங்களில் அமைந்த வேதங்களுக்கும் வேதபாஷைக்கும்கூட 'சந்தஸ்'என்றே பேர். வேதம் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் (லௌகிகமான பேச்சு, எழுத்து, காவியங்கள் ஆகியன மட்டுமின்றி தர்ம சாஸ்திரம், புராண இதிஹாஸம் உள்பட எல்லா விஷயங்களிலும்) பிரயோகமாகிற பாஷக்குத்தான் ஸம்ஸ்கிருதம் என்று பேர். வேத பாஷை சந்தஸ். 'வேத பாஷையில் இப்படி இருக்கிறது'என்று சொல்லுமிடங்களில், வியாகரண சாஸ்திரம் எழுதிய பாணினி, 'இதிசந்தஸி' என்பார். மற்றபடி ஸம்ஸ்கிருதத்தைச் சொல்லும்போது 'இதி லோகே'என்பார்.

ஸம்ஸ்கிருதம் என்பது பார்த்துப் பார்த்து ஸம்ஸ்காரம் பண்ணப்பட்ட- அதாவது பழுதில்லாமல், வழுவில்லாமல் ரூபம் பண்ணப்பட்ட - பாஷை. ஆனாலும் முழுக்கவும் லோக க்ஷேமார்த்தமான சப்தங்களின் மூலத்தைக் கொண்டே ஏற்பட்ட ஒரு பாஷை உண்டென்றால் அது வேத பாஷையான சந்தஸ்தான். 'கிருதம்' என்றால் 'செய்யப்பட்டது' என்று அர்த்தம். 'ஸம்ஸ்கிருதம்'என்றால் நன்றாக செய்யப்பட்டது. அப்போது யாரோ உட்கார்ந்து கொண்டு பிரயத்தனப்பட்டு இந்த பாஷையை செய்திருக்கிறார்கள் என்று ஆகிறது. வேத பாஷை இப்படி இல்லையே !அது தானாக யீறீணீஞ்லீ ஆனது (பளிச்சிட்டது) என்றுதானே இத்தனை நாழி கதை சொன்னேன்? அதனால் அதில் grammar(இலக்கணம்) முக்கியமில்லை. லோகோபகாரமாக இப்படி வந்த சப்தங்களை வைத்தே அதற்கு நன்றாக grammarமுதலியவையும் இருப்பதாக ஸம்ஸ்காரம் செய்து, தேவஜாதியினர் ஸம்ஸ்கிருத பாஷையைப் பண்ணி அதில் பேசலானார்கள். அதனால்தான் Vedic Grammar (வேத இலக்கணம்), Vedic Prosody (வேதத்தின் யாப்பு) என்றெல்லாம் தனியாக இருக்கின்றன. வேதத்திலிருந்து ஸம்ஸ்கிருதம் பண்ணப்பட்டது என்பதாலேயே வேதம் ஸம்ஸ்கிருதம் இல்லை. பிற்பாடு ஸம்ஸ்கிருதம் தானாக வளர்ந்தும், ஸர்வ தேசப் பரிவர்த்தனைகளாலும் அநேக புது வார்த்தைகள் அதில் சேர்ந்த மாதிரி வேதத்தின் பாஷையில் ஏற்படவில்லை. வேதம் ஸம்ஸ்கிருதம் இல்லை என்பதே,

இப்போது நம் தாய் பாஷைகளுக்கு இல்லாத ஸ்தானம் ஸம்ஸ்கிருதத்துக்கு ஏன் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தால் வேத வித்யையை ஆதரிக்காமல் கோபப்படுகிறவர்களுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும். இரண்டு கால் பிராணி, நாலு கால் பிராணி ஆகிய அனைத்துக்கும் க்ஷேமத்தை உண்டு பண்ணும் சலனங்களை உண்டாக்கக் கூடிய சப்தங்களையே உடையதான வேத பாஷையும், மற்ற அநேக மந்திர சாஸ்திர மந்திரங்களின் பாஷையும், நாம் நடைமுறையில் சொல்கிற அர்த்தத்தில் பாஷையே இல்லை. அவை ஒரு ஜாதிக்கோ, இனத்துக்கோ உரியன இல்லை. ஸமஸ்தப் பிரபஞ்சத்துக்குமான பாஷை என்று வேண்டுமானால் சொல்லலாம். சந்திரன் எல்லா தேசத்துக்கும் ஜிலுஜிலு என்ற நிலா அடிக்கிறது;சூரியன் லோகம் பூராவுக்கும் ஜீவஸத்தைத் தருகிறது. "எந்த தேசத்து சந்திரன்?எந்த தேசத்து சூரியன்? எங்களுக்கு இது வேண்டாம்"என்பார்களா?

தொல்காப்பியர், வேத சப்தங்கள் பரா என்கிற மூலத்தில் தோன்றியதால் முக்கியத்துவம் பெற்றவையாகும் என்று சொல்லி, "இப்படிப்பட்ட அக்ஷரங்களைப் பற்றி இந்த தொல்காப்பியத்தில் நான் சொல்லப் போவதில்லை. இங்கே சாதாரண மனிதர்களின் காதுக்கு எட்டும் வைகரி சப்தங்களை மட்டுந்தான் விவரிக்கப் போகிறேன். மற்றது, உள் விஷயம், மந்திராக்ஷரம், 'அந்தணர் மறைத்தே'என்று எழுத்ததிகாரத்தில் (102ம் சூத்திரம்) சொல்லியிருப்பதாகவும், ஆதலால் ஆலயங்களில் மந்திர சப்தங்களை மாற்றாமல் ரக்ஷிப்பதற்குத் தொல்காப்பியமே ஆதரவாகத்தான் இருக்கிறது என்றும், அந்தத் தமிழ்ப் புலவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

'நம் பாஷையில் ஒன்று இருந்தால்தான் உசந்தது;வேறெந்தப் பாஷையில் இருந்தாலும் மட்டம்; அது வேண்டாம்'என்று நினைப்பது கொஞ்சம்கூடப் பகுத்தறிவாகத் தோன்றவில்லை. உலகத்திலிருக்கிற அத்தனை புத்திசாலித்தனமும், நல்லதும் நம் பாஷையில்தான் இருக்க வேண்டும் என்று நாம் நினைத்தால், அவரவர்களும் இப்படித்தானே தங்கள் தங்கள் தாய் பாஷையைப் பற்றி நினைப்பார்கள்?அதனால் இநதப் பாஷைதான், அந்தப் பாஷைதான் என்றால் - அதில் துளிகூடப் பகுத்தறிவும் இல்லை;யதார்த்த ஞானமும் இல்லை. ஒரு பக்கத்தில் நம்பிக்கையின் மீதே அநேக விஷயங்களை ஏற்கவேண்டிய ஆஸ்திக்யத்தை பரிஹாஸம் செய்து, "பகுத்தறிவு, பகுத்தறிவு"என்கிறார்கள். இன்னொரு பக்கத்தில், இப்படி பிரத்யக்ஷத்திலேயே பகுத்தறிவு இல்லாமல் இருக்கிறது!ஒரு பக்கத்தில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'என்பதுதான் தமிழ்நாட்டின் தேசாசாரம் என்று சொல்கிறோம். இன்னொரு பக்கம், ஆதிகாலத்திலிருந்து இங்கு உறைந்து போய்விட்ட ஸநாதனமான ஸமாசாரங்களைக்கூட எப்படியாவது இல்லாமல் பண்ணிவிட்டால் தேவலை என்று நினைக்கிறோம்!மந்திரங்களை நாம் விடுவதால் மந்திரங்களுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. நமக்குத்தான் நஷ்டம். மைசூரிலிருந்து காவேரி வருகிறது,

வெளிதேசத்திலிருந்து உயிரைக் காப்பாற்றக்கூடிய ஒரு மருந்து வருகிறது என்றால், அதெல்லாம் வேண்டாம்; உள்ளூர் ஜலம் கிடைத்தால்தான் குடிப்போம்;உள்ளூர் மருந்தானால்தான் சாப்பிடுவோம்'என்று உயிரை விடுவார்களா?நமக்குப் பெரிய ரக்ஷையாக இருக்கிற மந்திரங்களில் பாஷையைக் கொண்டுவந்து, அந்நியம் எனறு ஒதுக்குவது இப்படித்தான். வாஸ்தவத்தில் அது அந்நியமும் இல்லை. நம்மோடு அந்நியோந்நியமாக ஆதிகாலத்திலிருந்து கரைந்ததுதான்.

ஆதிநாளிலிருந்து சென்ற நூற்றாண்டு வரை நம் தமிழ் தேசத்தில் இப்படிப்பட்ட பேத உணர்ச்சி இல்லவே இல்லை. ரொம்பவும் தொன்மை வாய்ந்த புறநானூற்றிலேயே, நீண்ட சடாமுடியைக் கொண்ட இறைவன் எப்போது பார்த்தாலும் ஆறங்கத்துடன் கூடிய வேதத்தை ஒதிக் கொண்டிருக்கிறான் என்று இருப்பதாக ஸமீபத்தில் ஒரு கட்டுரையில் பார்த்தேன். இன்னொரு புறநானூற்றுப் பாட்டில் இப்படி வருகிறது - அதாவது:தமிழ்நாட்டு மூவேந்தர்களுக்கிடையில் எப்போது பார்த்தாலும் குஸ்திதான். இதற்கு மாறாக ஒரு சமயத்தில் சேர, சோழ, பாண்டிய ராஜாக்கள் மூன்று பேரும் ஒரே இடத்தில் சிநேகத்தோடு சேர்ந்திரு ந்தார்களாம். அந்தச் சோழ ராஜாவின் பேரே வைதிக ஸம்பந்தமானது- இராசசூயம் வேட்ட பெருநற்கள்ளி என்று அவன் பெயர். இப்படி மூவரும் ஒற்றுமையுடன் சேர்ந்திருப்பதைப் பார்த்தாளாம் அவ்வைப்பாட்டி. அவளுக்கு ஆனந்தம் தாங்கமுடியவில்லை. இந்த காட்சியை ரொம்பவும் உசந்த ஒன்றோடு ஒப்பிட வேண்டுமென்று நினைத்துக் கடைசியில், "பிராம்மணர் வீட்டில் கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்ற மூன்று அக்னிகளும் ஒன்று சேர்ந்திருக்கிற மாதிரி அல்லவா நீங்கள் மூவரும் சேர்ந்திருக்கிறீர்கள்?"என்றாளாம்.

சங்க காலத்துக்கு அப்புறம் பார்த்தாலும், சேர சோழ, பாண்டிய, பல்லவ ராஜாக்கள், எங்கே பார்த்தாலும் பிராம்மணர்களுக்கு 'இறையிலி'யாக (வரியில்லாததாக) நிலம் கொடுத்து ரட்சித்திருக்கிறார்கள். கடிகை என்றும், பாடசாலை என்றும் நிறைய வைத்து, ஏராளமாக மான்யங்கள் தந்து வேத வித்யைகளை வளர்த்திருக்கிறார்கள். தமிழ் மறைகளாக முறையே சைவர்களும், வைஷ்ணவர்களும் கொண்டாடுகிற தேவாரத் திருமுறைகளையும் திவ்வியப் பிரபந்தங்களையும் பார்த்தாலோ, ஸ்வாமியைப் பற்றிச் சொல்கிற அளவுக்கு வேதங்களைப் பற்றியும் சொல்லியிருக்கிறது.

பக்தி என்பதுதான் தேவார-திவ்யப் பிரபந்தங்களுக்கு முக்கியம், கர்மா இல்லை என்று நாம் நினைத்துக் கொண்டிருந்தாலும், இவற்றைப் பார்த்தால் ஈச்வர பூஜையைவிட ஒரு படி அதிகமாகவே யக்ஞ கர்மாவைத்தான் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறது.

வேத பாஷை ஸம்ஸ்கிருதம் இல்லை என்ற மாதிரியே, இன்னொரு விசித்ரமான

விஷயம் இப்போது சொல்லப் போகிறேன். அதாவது, நாஸ்திகம் என்றால் ஸ்வாமியில்லை என்று சொல்கிற நிரீச்வரவாதம் என்றுதானே இப்போது நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்?இது தப்பு. ஸ்வாமி இல்லை என்று சொல்லிக்கொண்டே கூட ஆஸ்திகர்களாக இருக்க முடியும். அப்படிப் பல பேர் இருந்திருக்கிறார்கள். 'இது என்ன வேடிக்கையாக இருக்கிறது?அப்படியானால் ஆஸ்திகம் என்றால் என்ன?'என்றால், ஆஸ்திகம் என்றால் வேதத்திலே நம்பிக்கை இருப்பது என்றுதான் அர்த்தம். ஸ்வாமியிடம் நம்பிக்கை இல்லாவிட்டால் கூடப் பரவாயில்லை;வேத சப்தங்களின் மந்திர சக்தியில் நம்பிக்கை வைத்து, யக்ஞாதி அநுஷ்டானங்களைப் பண்ணி விட்டாலும் அது ஆஸ்திகம்தான். 'வேதங்கள் ஒன்றேயான ஈச்வரனைச் சொல்லவில்லை. பல தேவதைகளைத்தான் சொல்லியிருக்கிறது. அவர்கள் மநுஷ்யர்களைப் போன்ற ஒரு இனந்தான் - பரமாத்ம தத்வத்தின் ரூபங்கள் இல்லை. ஆனாலும் இவர்களைத் திருப்தி பண்ணனால் க்ஷேமம் உண்டாகும்'என்று அரைகுறையாகப் புரிந்து கொண்டு, வேத கர்மாநுஷ்டானம் பண்ணுகிறவன்கூட ஆஸ்திகன்தான். 'வேத கர்மாக்களைப் பரமேச்வர அர்ப்பணமாகச் செய்யாமல் அதன் பலனுக்காகவே பண்ணவேணடும்'என்கிற கொள்கையைப் பின் பற்றின கர்ம மீமாம்ஸகர்களை ஆஸ்திகர்கள் என்றே கருதுகிறோம். அவர்கள் வேதத்துக்குச் செய்து கொண்ட அர்த்தம் தப்பாகவே இருக்கட்டும்;ஆனாலும் வேதம்தான் தர்ம ப்ரமாணம் என்று நம்பியிருக்கிறார்களல்லவா? அதனால் தான் அவர்களை ஆஸ்திகர்களோடு சேர்த்தது. இதே சமயத்தில் பாசுபதம், பாஞ்சராத்ரம் முதலான சைவ, வைஷ்ணவ சம்பிரதாயங்களில் வேதத்துக்கு விருத்தமான (முரணாண) விஷயங்கள் இருப்பதாக ஒருத்தருக்குத் தோன்றினால், இந்த மதங்கள் வேதத்தின் பிராமாண்யத்தை (பிரமாணமாக இருக்கும் ஸ்தானத்தை) ஆட்சேபிப்பதாகத் தோன்றினால், அவர் இப்படிப்பட்ட சம்பிரதாயங்களைப் பின்பற்றி ஓயாமல் சிவனையோ விஷ்ணுவையோ பூஜை பண்ணுகிறவரைக் கூட நாஸ்திகர்களுடனேயே சேர்த்துவிடுவார். பழைய கால புஸ்தகங்களில் இப்படித்தான் இருக்கிறது. இப்படியே சாக்த தந்திரங்கள் ஒருவருக்கு அவைதிகமாகத் தோன்றினால், அவர் சாக்தர்களை நாஸ்திகர்களோடு சேர்த்து விடுவார்.

வைதிக வழக்கை ஆட்சேபிப்பதுதான் நாஸ்திகம் என்பதே ஞானசம்பந்தரின் கொள்கையாகவும் இருந்திருக்கிறது; ஈச்வர பக்தி இல்லாமலிருப்பதுகூட அல்ல.

ஞானஸம்பந்தமூர்த்தி சைவ சமயாசாரியர்களுல் ஒருவர். குமாரஸ்வாமி அம்சமாதலால் ஈச்வரனான ராஜாவுக்குப் பிள்ளையான யுவராஜா மாதிரி ஹோதா படைத்தவர். "ஆணை நமதே!"என்று தம்முடைய கோளறு பதிகத்தைப் பாராயணம் செய்கிறவர்களை நவக்ரஹங்கள் தொடமுடியாதென்று, தம் வாக்காலேயே கம்பீரமாக உத்தரவு போட்ட யுவராஜா!அதனால் தமிழ் தேசத்தில் அவர் வாக்குக்குச் சட்டம் மாதிரியான அதிகாரம் உண்டு. பாலியத்தில் பல

ஸ்தலங்களுக்குப் போய் பல அற்புதங்களைச் செய்திருக்கிறார். பட்டீச்சுரம் என்னும் ஸ்தலத்தில முத்துப் பல்லக்கு முதலியவைகளை ஈச்வரன் கொடுக்கப் பெற்றுக் கொண்டார். முத்துப் பல்லக்கில் ஏறிக்கொண்டு ஸ்தல யாத்திரை செய்து கொண்டு வந்தார். அவருடன் 5000 பேர் பஜனை செய்து கொண்டு போவார்கள். பரமேச்வர பக்தி பண்ணிக் கொண்டு, சிவ க்ஷேத்திரங்களான ஊர்களுக்குப் போய்க் கொண்டிருந்தார்.

அந்தக் காலத்தில் ஜைனமதம், பௌத்த மதம் என்னும் இரண்டும் இந்தத் தேசத்தில் இருந்தன. வேதம் தப்பு;அதன்படி நடந்தால் பிரயோஜனமில்லை என்று அந்த மதஸ்தர்கள் சொல்லிக் கொண்டு இருந்தார்கள். இவர்களில் பாண்டிய அரசனையும் தங்கள் மதத்திற்கு இழுத்துக் கொண்டார்கள். மதுரையிலிருந்த பாண்டியன் சமணன் ஆனான். ஆனால், அவனுடைய பத்னியான மங்கையர்கரசியும், மந்திரி குலச்சிறையும் சிவபக்தி மிகுந்தவர்களாக இருந்தார்கள். அரசன் சமணனாய் விட்டதற்காக அவர்கள் மிகவும் வருந்தினார்கள்.

ஞானஸம்பந்த மூர்த்தியின் பிரபாவத்தை அவர்கள் கேட்டார்கள். அவர் மூலமாக அரசனை மாற்றலாம் என்று எண்ணி, அவரை மதுரைக்கு அழைத்துப் போனார்கள். அவர் மதுரைக்குப் போனவுடன் சமணர்கள் வாதத்துக்கு வந்தார்கள். அப்பொழுது அரசியும் மந்திரியும் இந்த சமணர்கள் இவரை என்ன செய்துவிடுவார்களோ என்று பயந்தார்கள்.

ஈச்வரனுடைய கிருபை இருந்தால், எந்த ராஜ்யம் எப்படிப் புரண்டாலும் பயம் இல்லாமல் இருக்கலாம். முடிவிலே அருள் வெல்லும். ஒருவனுக்குப் பரமாத்மாவின் பரிபூரண கடாக்ஷம் இருந்தால் எப்பொழுதும் ரக்ஷிக்கும். பீரங்கிகளும் மற்ற ஆயுதங்களும் அவன் காலில் வந்து நமஸ்காரமாக விழும். பக்தியும் பகவத் கடாக்ஷமும் குறையும்பொழுது, தேசத்துக்கும் மதத்துக்கும் குறைவு உண்டாகிறது. ஈச்வர கடாக்ஷத்தைப் பரிபூரணமாகப் பெற்றவன் ஒருவன் இருந்தாலும் போதும்;அவன் மூலமாகத் தேசம் க்ஷேமத்தை அடையும்; அப்பொழுது எது வந்தாலும் பயமில்லை.

ஆகவே, ஈச்வர கடாக்ஷத்தைப் பூர்ணமாகப் பெற்ற ஞானசம்பந்த மூர்த்தி கொஞ்சமும் பயமில்லை என்று வாதம் செய்யத் துணிந்தார். வாதம் செய்யப் போவதற்கு முன் ஸுந்தரேச்வர ஸ்வாமி ஸந்நிதானத்தை அடைந்து ஒரு பதிகத்தால் ஸ்தோத்திரம் பண்ணினார். அதில் 'ஜைனர்களை வாதத்தில் ஜெயித்து உன்னுடைய புகழை நிலை நிறுத்த வேண்டும்'என்று பிரார்த்தித்தார். ஒவ்வொரு பாட்டிலும் கடைசியில், "ஞால நின்புகழே மிக வேண்டும் தென்

ஆலாவாயி லுறையும் எம் ஆதியே"

என்று பாடினார். ஆலவாய் என்றால் மதுரை.

ஜைனர்களை ஏன் ஜயிக்க வேண்டும்?' அவர்கள் சிவன் கோயிலுக்கு வருவதில்லை;திருநீறிடுவதில்லை;ருத்திராக்ஷம் அணிவதில்லை; சிவபக்தியைப் பழிக்கிறார்கள்'என்று சொல்லி, இதனாலா அவர்களை ஜயிக்க வேண்டும் என்று சம்பந்தர் சொன்னார்?ஞாலமெல்லாம் சிவன் புகழ் பரவ வேண்டுமென்று ஆசைப்பட்ட அவர், இப்படித்தான் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அவர் இப்படிசி சொல்லவில்லை. பின் என்ன சொன்னார்?

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்

ஆதமில்லி யமணொடு தேரரை

வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே

பாதி மாதுட னாய பரமனே

ஞால நின்புக ழேமிக வேண்டும்-தென்

ஆல வாயிலு ரையுமெம் மாதியே

என்று முதல் பாட்டிலேயே சொல்கிறார்.

சமணரும், தேரரும் வேத வேள்வியை, அதாவது வேதங்களையும் யக்ஞங்களையும் நிந்திக்கிறார்கள் என்பதாலேயே அவர்களை வாதம் பண்ணி ஜயிக்க வேண்டும் என்கிறார்.

சமணர் என்றால் ஜைனர்கள். 'ஜினர்'என்கிற மஹாவீரரைப் பின்பற்றுவதால் 'ஜைனர்'என்ற பேர் உண்டாயிற்று. ச்ரமணர் என்ற வார்த்தை தமிழில் சமணர் என்று ஆயிற்று. 'ச்ர' என்று ஸம்ஸ்கிருதக் கூட்டு எழுத்து 'ச', அல்லது வெறும்'அ'வாக ஆகி விடும். 'ச்ராவணம்' என்பது இப்படித் தான் 'ஆவணி'என்றாயிருக்கிறது. சங்கரன், சட்டி என்பதிலெல்லாம் வரும் ச (sa) சப்தம், தமிழில் சில இடங்களில் 'அ'வாகி விடும். 'சமர்'(யுத்தம்) என்பது 'அமர்' என்று வருகிறது. யுத்தகளம்தான் சமர்க்களம் என்பது. அதை 'அமர்க்களம்' என்கிறோம். சரீரத்தை ரொம்பவும் சிரமப்படுத்தி, கடினமான விரதங்களை அநுஷ்டிப்பதால் ஜைனர்களுக்கு 'ச்ரமணர்'என்று பேர். அது தமிழில் 'சமணர்'என்றும், 'அமணர்'என்றும் ஆகிறது. ஜைனர்களில் 'ச்வேதாம்பர் என்ற பெயரில் வெள்ளை வஸ்திரம் கட்டிக் கொள்பவர்கள் உண்டு. இல்லாது போனால் திகம்பரர்களாக, நிர்வாணமாகவே இருப்பார்கள். இதனால்தான், துணி கட்டிக் கொள்ளாத எவனையுமே அமணனாகச் சொல்லி 'அ(ம்)மணக்கட்டை' என்கிறோம்.

தேரர் என்றால் தேராவாதிகள் எனப்படும் பௌத்தர்கள். இந்த இரண்டு மதஸ்தர்களையும்தான் 'அமணொடு தேரரை'என்று முதற் பாட்டில் சொல்கிறார்.

அவர்கள் வேதத்தையும் யக்ஞத்தையும் நிந்திப்பவர்கள் என்று தோஷம் சொல்லுகிறார். அது பெரிய பாவம் என்கிறார். சிவபக்தி இல்லாதவர் என்று சொல்லவில்லை. இந்தப் பதிகத்தில் மற்றொரு பாட்டில்,

மறைவ ழக்கமி லாதமா பாவிகள்

பறித லைக்கயர் பாயுடுப் பார்களை

முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே

மறிய லாங்கையின் மாமழு வாளனே

ஞால நின்புக ழேமிக வேண்டும்-தென்

ஆல வாயிலு றையுமெம் மாதியே

என்று சொல்கிறார். இதில் 'மறை வழக்கமில்லாத மாபாவிகள்'என்று நன்றாகவே திட்டிச் சொல்லியிருக்கிறார். ஒழுக்கம், வழக்கம் என்று தமிழில் இரண்டைச் சொல்லுவார்கள். ஆசாரம், அனுஷ்டானம் என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்லுவதே தான் இது. ஒழுக்கம் ஆசாரம்; வழக்கம் அநுஷ்டானம். மறை வழக்கமென்பது வைதிக அனுஷ்டானம். வைதிகாநுஷ்டான மில்லாதவர்கள் ஜைனர்கள். அது மஹா பாவம் என்று நினைத்ததனால்தான், 'மாபாவிகள்'என்றார்.

'பறிதலைக்கையர்'என்று அவர்களைச் சொல்லியிருக்கிறார். வித்யாரண்ய ஸ்வாமிகள் என்பவர் வேத பாஷ்யம் செய்தவர். ஸகல வித்தைகளையும் அறிந்தவர். விஜய நகர ராஜ்யத்தை ஸ்தாபித்தவர். அவர்"ஸர்வதர்சன ஸங்க்ரஹம்" என்று ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். தர்சனம் என்பது மதத்துக்கு ஒரு பெயர். தர்சனம் - பார்ப்பது. உள்ளதை உள்ளபடி பார்ப்பது மதமாகையால் தர்சனம் என்னும் பெயர் பெற்றது. அந்தப் புஸ்தகத்தில், அந்தக் காலத்தில் இருந்த எல்லா மதங்களைப் பற்றியும் எழுதியிருக்கிறார். ஜைன மதத்தைப் பற்றி எழுதியிருக்கும் இடத்தில், ஜைனர்கள் 'கேசோல்லுஞ்சனம்' பண்ணிக் கொள்ளுவார்கள் என்று சொல்லியிருக்கிறார். உல்லுஞ்சனம் என்றால் பிடுங்குதல் என்று அர்த்தம். 'பாபம் செய்வதற்குப் பலனாகக் கஷ்டத்தை அநுபவிக்க வேண்டும். கஷ்டத்தை அநுபவித்தால் பாபம் போய் விடும்.தலையிலுள்ள கேசத்தை ஒவ்வொன்றாகப் பிடுங்குவதால் கஷ்டம் உண்டாகும். அதனால் பாபம் குறையும்'என்பது ஜைனர்களுடைய அபிப்ராயம். அதனால், ஒவ்வொரு மயிராகப் பிடுங்கிக் கொள்வார்கள். அவர்கள் வஸ்திரம் உடுத்தமாட்டார்கள். "கடவஸனா" என்று சொல்லப்பட்டிருக்கிறது. கடம் என்றால் பாய். வஸனம் என்றால் ஆடை. பாயை உடுப்பார்கள். இதைத்தான், "பறி தலைக்கையர், பாயுடுக்கையர்" என்று ஞானஸம்பந்தர் சொல்லியிருக்கிறார். அவர்கள் செய்யும் பாபம் மறை வழக்கத்துக்கு பாஹ்யர்களாக (வெளியாராக) இருப்பதும், வேத வேள்வியை

நிந்தனை செய்வதும் என்று சொல்லியிருக்கிறார்.

பத்துப் பாடல்களில் முதல் ஏழெட்டில் இப்படி ஈச்வர பக்தி இல்லாதவர்கள் என்பதை அடியோடு சொல்லாமல், வேதத்தையும் கர்மாநுஷ்டானத்தையும் விட்டவர்கள் என்பதற்காகவே சமணர்களைக் கண்டித்துவிட்டுக் கடைசியில் தான் பக்தியில்லாதவர்கள் என்பதற்காகக் கண்டனம் பண்ணுகிறார். முதலிலெல்லாம், "வைதிகத்தின் வழியொழுகாத;அந்தணாளர் புரியும் அருமறை சிந்தை செய்யா அருகர்; வேட்டு வேள்வி செயும் பொருளை விளி மூட்டு சிந்தை முருட்(டு) அமண்; அழல(து) ஓம்பும் அருமறையோர் திறம் விழல(து) என்னும் அருகர்"என்று சொல்லிவிட்டு, பிறகுதான் அவர்கள் சிவபக்தியில்லாமலிருப்பதைச் சொல்லுகிறார். சைவர்கள் மேல் பட்ட காற்றைக் கூட அவர்கள் ஒதுக்குகிறார்களாம்!

நீற்று மேனியா ராயினர் மேலுற்ற

காற்றுக் கொள்ளவும் நில்லா அமணரை

என்று சொல்லிவிட்டு கடைசியில்தான்,

அன்று முப்புரம் செற்ற அழக! நின்

துன்று பொற்கழல் பேணா அருகரை

என்பதாக, நேராக, அவர்கள் ஈசன் எந்தையின் இணையடியை வழிபடாததைத் தோஷமாகச் சொல்கிறார். இதற்கு முந்தி வைதிக கர்மாவுக்குத்தான் பிராதான்யம் கொடுத்துச் சொல்லியிருக்கிறார்.

தேவாரத்திலும் திவ்யப் பிரபந்தத்திலும் பிராம்மணர்களைப் பற்றிச் சொல்லும் இடங்களிலெல்லாம் அவர்கள் யக்ஞ கர்மாநுஷ்டானத்தில் வல்லவர்கள் என்பதற்காகவே ரொம்பவும் பாராட்டிச் சொல்லியிருக்கிறது.

கற்(று) ஆங்கு எரி ஓம்பிக் கலியை வாராமே

செற்றார் வாழ் தில்லை.

என்பதாக, "வேதத்தைக் கற்று, அதன்படி அக்னி வளர்த்து (எரி ஓம்பி) யாகம் பண்ணுவதாலேயே கலி புருஷனை விரட்டுகிற பிராம்மணர்கள் வசிக்கிற சிதம்பரம்" என்று சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் சொல்கிறார்.

ஒமாம்புலியூர்த் தேவாரத்தில், யக்ஞங்களைப் பற்றி நிறையச் சொல்கிறார். அதில் ஒரிடத்தில்,

பரப்பைப் படுத்(து) எங்கும் பசு வேட்(டு) எரி ஓம்பும் என்று வருகிறது.

பரப்பு என்றால் யாகவேதியை முறைப்படி அமைப்பது. சயனம் என்பது அதுதான். 'பசு வேட்டு' என்றதால் யக்ஞத்திலே ஜீவஹிம்ஸை தப்பில்லை என்கிற அபிப்ராயத்துக்குத் தேவாரத்தின் ஆதரவு தெரிகிறது. ஸம்பந்தர் பிராம்மணர், அதனால் யாகாதிகளைக் கொண்டாடிச் சொல்லியிருக்கிறார் என்று நினைத்தால் சரியில்லை. அப்பிராம்மணரான அப்பரும் ஸ்வாமியை வேத வேள்வி சம்பந்தப்படுத்திய ஸ்தோத்திரம் செய்கிறார்.

' வேதியா வேத கீதா '; ' வேதங்கள் நான்கும் கொண்டு விண்ணவர்

பரவி ஏத்த '; ' வேதத்தான் என்பர், வேள்வியுளான் என்பர் ';' வேத நாயகன், வேதியர் நாயகன் ' என்பதெல்லாம் அப்பர் ஸ்வாமிகள் வாக்குதான். ஸ்வாமியே வேதாத்தியயனம் பண்ணுகிறார் என்று அவர் சொல்கிறார்:

" வேதமோதி வந்(து) இல்புகுந்தார் " " வேதங்கள் வேள்வி

பயந்தார் போலும். "

மேலே சொன்ன ஒமாம்புலியூரில் அப்பரும் தேவாரம் பாடியிருக்கிறார். அதிலே,

ஓதி மிக அந்தணர்கள் எரி மூன்(று) ஓம்பும்

உயர் புகழ் ஆர்தரும் ஒமாம்புலியூர்.....

ஒன்றிய சீர் இருபிறப்பர் முத்தீ ஓம்பும்

உயர்புகழ் நான் மறை ஒமாம்புலியூர்

என்றெல்லாம் புகழ்ந்து, ஒமம் (ஹோமம்) நிறைந்ததே ஒமாம் புலியூர் என்று கொண்டாடுகிறார். எரி மூன்று, முத்தீ என்பவை கார்ஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்பதாகப் பிராம்மணன் வளர்க்க வேண்டிய மூன்று அக்னி குண்டங்களைச் சொல்வது. இத்தனை நுணுக்கமாக அப்பர் ஸ்வாமிகள் பிராம்மண ஆசாரங்களைத் தெரிந்து கொண்டிருக்கிறார்.

திவ்யப் பிரபந்தத்திலும் அநேக இடங்களில் ஒரு பெருமாள் க்ஷேத்திரத்தை வர்ணிப்பதானால், யக்ஞத்தில் எழும்புகிற ஹோமப் புகையே மேகங்கள் மாதிரி ஆகாசம் முழுதையும் அடைத்துக் கொண்டிருக்கிற ஊர் என்று அதை வர்ணித்திருக்கும். இங்கேயும் ஜாதி வித்யாஸம், ஜாதி த்வேஷங்கள் இல்லாமல், அப்ராம்மணர்களான ஆழ்வார்களும் வேதங்களின் பெருமையைப் பாடியிருக்கிறார்கள். பிராம்மணரில்லாதவரான திருமங்கையாழ்வார்தான் பெருமாளையே,

சந்தோகன், பௌழியன், ஐந்தழலோம்பு

தைத்திரீயன், சாமவேதி!

என்று வேத சாகைகளைச் சொல்லி அவற்றால் துதிக்கிறார். அப்பர் 'முக்தீ'யைச் சொன்னார் என்றால், இவர் இன்னும் சூக்ஷ்மமாக வைதிக ஆசரணைகளைத் தெரிந்து கொண்டு, பிராம்மணர்களிலேயே ரொம்பவும் விஷயம் தெரிந்தவர்கள் அந்த மூன்றோடு ஸப்யம், ஆவஸத்யம் என்ற வேறு இரண்டு அக்னிகளைச் சேர்த்துப் பஞ்சாக்னி வளர்ப்பதை 'ஐந்தழல் ஓம்புவது' என்கிறார். ஓமாம்புலியூரைத் தேவாரத்தில் சொன்ன மாதிரியே திருநாங்கூர், திருநறையூர் முதலான க்ஷேத்திரங்களை இவர் வேத விதி வழுவாத பிராம்மணர்களின் ஊர் என்பதற்காகவே திரும்பத்திரும்பப் போற்றிப் பாடியிருக்கிறார்.

தமிழில் தொல்காப்பியம் என்று மிகப் பழைய இலக்கண நூல் இருக்கிறதல்லவா? அது அகஸ்திய சிஷ்யர்கள் பன்னிரண்டு பேர்களுல் ஒருவரான திருணதூமாக்கினியால் செய்யப்பட்டது. அந்தப் புஸ்தகத்துக்கு பனம்பாரனார் செய்துள்ள சிறப்புப் பாயிரத்தில், 'அரங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசான்' என்று வருகிறது. இதற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதும் போது, 'இங்கே ரிக்-யஜுஸ்-ஸாம- அதர்வ வேதங்களை நான்மறை என்று சொல்லவில்லை. அல்பாயுஸும், அநேக வியாதிகளும், ஸ்வல்பமே அறிவும் கொண்ட கலிகால ஜனங்களான 'சின்னாட் பல்பிணிச் சிற்றறிவின'ரின் ஸௌகரியத்தை முன்னிட்டு, மஹா ஸமுத்ரமாயிருந்த வேதங்களை வியாஸர் நாலாகப் பிரிப்பதற்கும் முற்பட்ட காலத்தில் தொல்காப்பியம் உண்டாயிற்று. ஆகையால், இங்கே நான்மறை என்பவை தைத்தரியம், பௌடிகம், தலவகாரம், ஸாமம் என்ற ஆதிகால வேத பாகங்களே என்று எழுதியிருக்கிறார். திவ்வியப் பிரபந்தத்தில், 'பௌழியா சந்தோகா'என்று வருகிறது. அதில் 'சந்தோகம்' என்பது ஸாமவேதம். 'பௌழியம்'என்பதே மேலே சொன்ன 'பௌடிகம்'. ரிக்வேத சாகைகளில் ஒன்றைச் சேர்ந்த 'கௌஷீதகீ ப்ராஹ்மணம்'என்ற 'பௌஷ்யம்'தான் பௌழியம் என்றும், பௌடிகம் என்றும் ஆகியிருக்கிறது. தலவகாரம், தைத்ரீயம், பௌழியம் என்பவை முறையே ஸாமவேதம், க்ருஷ்ண யஜுர்வேதம், ரிக் வேதம் ஆகியவற்றைச் சேர்ந்த வேத சாகைகளின் பெயர்கள். ஸாமம் மட்டுமே முழுவேதத்தின் பெயர்.

மலையாளத்தில் உள்ள நம்பூத்ரிப் பிராம்மணர்கள் யாவரும் வேதாத்தியயனம் செய்வார்கள். லௌகிகப் பிரவிருத்தி உள்ளவர்கள்கூட இளமையில் வேதாத்தியயனம் பண்ணினவர்களாகத்தான் இளமையில் வேதாத்தியயனம் பண்ணினவர்களாக இருப்பார்கள். ஈ.எம். எஸ். நம்பூத்ரிப்பாடு என்று முதன் மந்திரியாக இருந்த கம்யூனிஸ்டு தலைவர்கூட, பால்யத்தில் அத்யயனம் பண்ணியவர்தான். சமீப காலம் வரை அங்கே பிரம்மச்சாரிகள் கௌபீனம், கிருஷ்ணாஜினம் (மான்தோல்) தண்டம், ஸமிதாதானம் முதலியவைகளை விடாமல் கைக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால், இப்பொழுது அவர்கள்கூட

மாறிக் கொண்டு வருகிறார்கள். எந்த ஜாதியினர் அதிக சிஷ்டர்களாக இருக்கிறார்களோ அவர்கள் தவறினால் தான் மிகவும் கீழே போய்விடுகிறார்கள். நம்பூதிரிகளில் ரிக்வேதத்தினர்கள் அதிகம். அவர்களுடைய சுவடி ஒன்றில் ரிக்வேதத்திற்கு 'பௌழியம்' என்றே பேர் எழுதியிருக்கிறது. அதனால் பௌழியம் என்பது ரிக்வேதத்தின் பெயர் என்று தீர்மானமாகத் தெரிய வந்தது. அதுதான் தொல்காப்பிய உரைகாரர் சொன்ன பௌடிகம்.

சங்கர பகவத் பாதாள் அவதாரம் பண்ணின இந்த நம்பூத்ரி வம்சத்தில் இன்றைக்கும் வைதிக சிரத்தை அடியோடு போய்விடாத பெருமை இருக்கிறது. பல தப்பான மதங்கள் தலைவிரித்தாடிய சமயத்தில் வேத தர்மத்தை மீண்டும் ஸ்தாபிப்பதற்காகவே அவதாரம் செய்ய நினைத்த பரமேச்வரன், இருப்பதற்குள் எங்கே வேத அத்யயனமும் அநுஷ்டானமும் நிறைய இருக்கிறது என்று தேடிப்பார்த்தே, கேரளத்தில் காலடியில் ஒரு நம்பூத்ரி குடும்பத்தில் அவதாரம் பண்ணினார் என்று சொல்லியிருக்கிறது. அவர் காலத்தில் மலையாள மொழியே தோன்றியிருக்கவில்லை. தமிழ் மொழி தான் அங்கும் இருந்தது. ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகளின் அத்யந்த ஸகாவான சேரமான் பெருமாள் நாயனார் காலத்தில்கூட மலையாளம், தமிழ் பாஷை பேசின சீமையாகத்தான் இருந்திருக்கிறது. அவர் தமிழில்தான் "திருக்கைலாய ஞான உலா" பாடியிருக்கிறார். அவர்

மலையாளத்திலுள்ள திருவஞ்சைக்களத்திலிருந்துகொண்டு ராஜ்ய பரிபாலனம் பண்ணினவர். திவ்யப்பிரபந்தத்தில் "பெருமாள் திருமொழி" என்ற பெயரிலுள்ள பாசுரங்களைச் செய்த குலசேகர ஆழ்வாரும் திருவனந்தபுரத்திலிருந்து கொண்டு ஆட்சி செய்தவர்தான். அப்போதும் தமிழ்தான் அங்கே இருந்திருக்கிறது. இதற்கெல்லாம் முந்தி, இரண்டாயிரம் வருஷத்தக்கு முந்தி, ஈச்வரனே சங்கரராக அவதாரம் செய்த போது கேரளம் தமிழ் தேசமாகவேதான் இருந்திருக்கிறது. பாரத நாட்டிலேயே இந்தத் தமிழ் நாட்டுப் பகுதியில்தான் வேதம் ரொம்பவும் ஜீவனோடு இருந்தது என்பதால்தான் அவர் அங்கே அவதரித்தார் என்பதிலிருந்து தமிழ் தேசத்துக்கு வேதத்தில் இருந்துள்ள விசேஷமான பற்றுதல் தெரிகிறது.

இன்றைக்கு கேரளாவில் ஜாஸ்தி வேதாத்யயனம் இருப்பதற்குக் காரணம், ஆதியில் அது தமிழ் நாடாக இருந்ததுதான். அதே மாதிரி, ஸமீபத்தில் தமிழ் நாட்டைவிட ஆந்திராவில் வேதாத்யயனம் அதிகம் இருந்தாலும்கூட, ஆதியில் ஆந்திரர்களுக்கும் சோழர்களுக்கும் கல்யாண சம்பந்தம் ஏற்பட்டபோது, அந்தத் தெலுங்கு ராஜாக்கள் தமிழ் நாட்டிலிருந்தே ஏராளமான வேத வித்துக்களை அழைத்துக் கொண்டு போய்த்தான் தங்கள் தேசத்தில் வைதிகஸ்ரீயை விருத்தி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அதாவது, ஏதோ துர்பாக்கியவசமாகத்தான் இப்போது மற்ற திராவிட மாகாணங்களைவிடத் தமிழ்நாட்டிலேயே வைதிக த்வேஷம் தலை தூக்கியிருந்தாலும், பூர்வத்தில் அந்தச் சீமைகளுக்கும் வேத வித்யை இங்கிருந்துதான் போயிருக்கிறது. ஆந்திராவில் 'த்ராவிடலு'என்று பேர்

போட்டுக் கொள்கிற பிராம்மணர்கள், ஆதியில் தமிழ்நாட்டிலிருந்து போன குடியினர்கள்தான்.

தமிழ்நாட்டில் ஆதிகாலத்திலிருந்து இருந்து வந்திருக்கிற மதம் உள்பட , சைவம், வைஷ்ணவம், சாக்தம் முதலிய ஷண்மதங்கள்; ஸாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம் முதலிய ஸித்தாந்தங்கள்;மந்திர தந்திர ஆகமங்கள் எல்லாமே வேதத்தை ஆதாரமாகக் கொண்டவைதான்;வேதப் பிராமாண்யத்தை ஒப்புக் கொள்கிறவைதான். நவீன ஆராய்ச்சிக்காரர்கள் வேதம் வடக்கிலிருந்து வந்ததாகவும், தென்னாட்டில் வேறு மதமும் வேறு முதல் நூல்களும் இருந்ததாகவும் சொல்லி, அவர்கள் ஆரியர்கள், இவர்கள் திராவிடர்கள் என்று பெயர் கட்டிவிட்டுச் சண்டையைக் கிளப்பிவிட்டிருப்பதற்கெல்லாம் உண்மையாக ஸம்ஸ்கிருத சாஸ்திரங்களையும், தமிழின் பழ நூல்களையும் ஆராய்ந்து பார்த்தால் ஆதாரமேயில்லை. சாஸ்திரங்களை மூடநம்பிக்கையுடன் ஏற்றுக்கொண்டு ஏமாந்து போகக்கூடாது என்று இந்த நவீன ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

கடைசியில், இப்போது ஏற்பட்டிருக்கிற நிலைமை என்ன என்றால், இவர்கள் தாங்களே பகுத்தறிவோடு, ஸயன்டிஃபிக்காகச் சொல்கிறோம் என்று அடித்துச் சொல்லிவிட்டதால், அநேக ஜனங்கள் இவர்கள் சொல்வதையே ஆராய்ச்சி பண்ணாமல், 'இதுதான் சரி'என்று வெறும் நம்பிக்கையின் மேலேயே ஏற்றுக்கொண்டு நிஜமென நினைக்க ஆரம்பித்திருக்கிறார்கள். வேத சாஸ்திரங்களில் நம்பிக்கையின் மீதே அனுஸரிக்க வேண்டிய விஷயங்கள் இருக்கத்தான்

செய்கின்றன. அவற்றை அறிவால் ஆராயக் கூடாதுதான். ஆனால் அவற்றில் நன்றாக பகுத்தறிவோடு ஆராய்ந்து பார்க்கிற பகுதிகளும் உண்டு. அதோடு சேர்த்துச் சேர்த்து நம் தாய் பாஷைகளில் உள்ள ஆதி நூல்களையும் அலசி அலசிப் பார்த்தாலோ, இந்த ஆராய்ச்சிக்காரர்கள் சொல்கிற race theory (ஆரிய திராவிட இன பேதக் கொள்கை), தமிழ் மதம் வேறே என்பதெல்லாம் இருந்த இடம் தெரியாமல் அடிபட்டுப் போய்விடுகிறது. இப்படியெல்லாம் நம் தேசத்தில், நல்லதற்கில்லாமல் அநேக தப்பபிப்ராயங்கள், த்வேஷம், சாஸ்திரத்தில் அவநம்பிக்கை ஆகியன ஏற்பட்டுவிட்டதே என்று வருத்தமாக இருக்கிறது. இதெல்லாம் போய் இங்கே ஸமஸ்த லோகங்களுக்கும் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் க்ஷேமத்தைத் தரக்கூடியதான வேத மரபு மறுபடி நன்றாக தழைக்கவேண்டும். இதுதான் நாம் பரமேச்வரனிடம் எப்போதும் செய்துகொள்ள வேண்டிய பிரார்த்தனை.

இப்போதே அநேத வேதசாகைகள் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன. மற்றவையும் அழியும்படி விடவே கூடாது. இதைவிடப் பெரிய ட்யூட்டி, கடமை எதுவும் நமக்கில்லை. நமக்கிருக்கிற புத்தி பலம், திரவிய பலம், கூட்டுறவு சக்தி எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து நாம் பண்ணவேண்டிய காரியம், தற்போது

எங்கெங்கேயோ கொஞ்சம் கொஞ்சம் உயிரை வைத்துக் கொண்டிருக்கும் வேத சாகைகள் எல்லாம் அழிந்து போய்விடாதபடி, அவைகளுக்கு ஆக்ஸிஜன் கொடுத்து உயிரூட்டுவதுதான்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*பிராம்மணரல்லாதார் விஷயம்*

பிராம்மணன் தவிர மற்றவர்கள் பரிசுத்தியாக வேண்டாமா?அவர்களுக்கு இந்தக் கர்மாநுஷ்டானம் அத்யயனம், இவை இல்லையே என்றால், அவரவருக்கும்

அவரவர் செய்கின்ற தொழிலே சித்தசுத்தியைத் தருகிறது. எந்த ஜாதியானாலும், தங்களுக்கு ஏற்பட்ட கர்மாவை (தொழிலை)ச் செய்து அதை ஈச்வரார்ப்பணம் பண்ணினால் ஸித்தி அடைந்து விடுகிறார்கள். இந்த விஷயத்தை பகவான் கீதையில் (xviii.46) தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ:।

யுத்தம் செய்வது, காவல் காப்பது முதலான தொழில் ஒருத்தனுக்கு ஏற்பட்டிருக்கிறது. இன்னொருவன் வியாபாரம் செய்கிறான், பசுவை ரக்ஷிக்கிறான். வேறொருவன் இந்த நாளில் தொழிலாளர்கள் என்று சொல்கிற labour forceஆக இருக்கிறான். பிராம்மணன் சமூகத்துக்காகச் செய்ய வேண்டிய தொழில் என்ன? இந்த லோக ரீதியில் மற்றவர்கள் தொழில் செய்கிறார்கள். ஆனால் நம்முடைய பரமாத்மாவின் அநுக்ரஹந்தானே எல்லாவற்றுக்கும் முக்யமாக வேண்டியிருக்கிறது? அதை ஸகல ஜாதியாருக்கும் ஸம்பாதித்துக் கொடுப்பதற்கான காரியங்களே பிராம்மணனுக்கு ஏற்பட்டவை. பரமாத்மாவோடுகூட, முன்னமே சொன்னபடி அவரது அதிகாரிகளைப் போல இருக்கிற தேவர்களை ஸகல ஜீவ ஜந்துக்களிடமும் பிரீதி உள்ளவர்களாகப் பண்ணவேண்டியதும் பிராம்மணின் தொழிலைச் சேர்ந்தது. அவன் அத்யயனம் பண்ணும் மந்திரங்கள், அவன் புரிகிற கர்மாநுஷ்டானங்கள் எல்லாமே ஸகல ஜாதியாரின் க்ஷேமத்தை உத்தேசித்தவைதான். இந்த லோகத்தின் லெவலை மீறிய சக்திகளோடு இவனுக்குக் காரியம் இருப்பதால், இவன் மற்றவர்களைவிட அதிக நியமங்கள், விரதங்களோடு இருந்து மந்திர சக்தியை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. மற்றவர்களுக்கு இவ்வளவு வேண்டாம். அவர்களுக்காகவும் சேர்த்து இவனுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று புரிந்து கொண்டால் இவனுக்கு மட்டும் ஸ்பெஷலாக வைத்திருக்கிறது என்ற தப்பபிப்ராயம் உண்டாகாது. இந்தக் காரியம் தவிர, லோகரீதியிலேயே இவன்தான் எல்லா வித்யைகளையும், சாஸ்திரங்களையும், மற்ற எல்லார் செய்கிற தொழில் முறைகளையும் நன்றாகப் படித்து, அவரவர்க்கும் உரிய தொழிலை அவரவர்களுக்குச் சொல்லி கொடுக்க வேண்டும். Teaching (கற்றுக் கொடுப்பதே) இவன் தொழில். மற்ற தொழில்களை இவனே செய்யாமல், அவற்றைப் பற்றிய நூல்களைப் பயில மட்டும் செய்து, அததற்கு உரியவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதோடு நிற்கவேண்டும். மற்றவர்களின் சரீரத்தைக் காப்பாற்றுகிற காவல் காரியம், வியாபாரம், உடலுழைப்பு முதலியவற்றைவிட, அவர்களுடைய தொழில் முறை, வாழ்க்கை நெறி இவற்றையே காப்பாற்றிக் கொடுப்பதன் மூலம், அவர்களுடைய மனஸையும், அறிவையும் ரக்ஷித்துக் கொடுப்பதான இந்தத் தொழில் ரொம்பவும் பொறுப்பு வாய்ந்த்தாக இருக்கிறது. இந்தப் பொறுப்பை ஆற்றுகிறவன் நல்ல சித்த பரிபக்குவம் வாய்ந்தவனாக இருந்தாலன்றி இவன் செய்கிற காரியம் பலன் தராது. மனஸிலும், அறிவிலும் இவன் உயர்ந்த தூய்மையை அடைந்திருந்தால்தான் இவன் பிறரை அவற்றில் உயர்த்திவிட முடியும். அதே சமயத்தில்,

இவனுக்குத்தான் மற்றவர்களுக்கு இல்லாத பிரதிபந்தகம் (handicap) ஒன்றும் இருக்கிறது. புத்தியால் காரியம் செய்கிறோம் என்பதால் இவன் மற்றவர்களைவிடத் தனக்கு உயர்வு இருப்பதாக நினைத்து விட்டால், அது பெரிய பிரதிபந்தமாகிவிடும். இம்மாதிரிக் காரணங்களால், இவனைத்தான் ரொம்பவும் பரிசுத்தமாகிவிடும். நிரம்பவும் அஹம்பாவம் உண்டாக்கக்கூடிய ஹேதுக்கள் இருந்தும், இவனைக் கொஞ்சங்கூட அஹம்பாவமே இல்லாதவனாகப் பண்ண வேண்டியிருக்கிறது. அதனால்தான், இவனை நாற்பது ஸம்ஸ்காரங்களால் நன்றாக வறுத்தெடுத்து சக்கையாகப் பிழிந்து சுத்தமாக வேண்டும் என்று வைத்திருப்பது.

மந்திரங்கள் பலிதம் ஆகவேண்டுமானால் கடும் நியமங்களை அநுஷ்டித்தால்தான் முடியும். தேள்கடி மந்திரம் மாதிரி ஒன்றை ஜபித்து விஷத்தை இறக்குகிறவர்களை இன்றைக்கும் பார்க்கிறோம். அவர்களைக் கேட்டால் நியமம் தப்பினால் தங்களுடைய ஜபம் பலிக்கிறதில்லை என்கிறார்கள். இன்ன வேளையில்தான் ஜபம் பண்ணலாம், இன்ன வேளையில் கூடாது, வாரத்தில் இந்த நாளில் கூடாது, தூபம் காட்ட வேண்டும், பலி போட வேண்டும் என்று ஒவ்வொரு மந்திரத்துக்கும் ஒவ்வொரு விதி இருக்கிறது. விதி தப்பினால் பலனில்லாமல் போய்விடுகிறது என்கிறார்கள். கிரஹண காலத்தில் ஜபித்தால் நல்ல வீர்யம் ஸித்திக்கிறது என்கிறார்கள். இவ்விதமாக மந்திரம் பலன் தருவதற்கும், ஒரு வேத வித்து ஆத்மசுத்தி பெறுவதற்கும் ஆதாரமான விஷயங்கள் அத்தனையும் ஒரு சாகைக்குள் வந்து விடும்படியாக வைத்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*சாகைகளின் பிரிவினையும் வழக்கில் உள்ளவையும்*

ஆதிகாலத்திலிருந்தவர்கள் மஹாசக்தர்களாக, நிரம்ப யோக சக்தியும் புத்திவன்மையும் உடையவர்களாக இருந்ததால் ஒவ்வொருவரும் ஏகப்பட்ட வேத சாகைகளை அப்பியாஸம் பண்ணி வந்தார்கள். அநேகம் மஹிரிஷிகளுக்கு தாமாகவே வேத மந்திரங்கள் ஸ்புரித்ததும் உண்டு. குருவிடமிருந்து அஸாதரணமாக மேத சக்தியினால் அபரிதமான வேத சாகைகளை கற்றுக்கொண்டார்கள். அதற்கப்புறம் இவர்களுக்காகவே வேத மந்திரங்கள் ஸ்புரித்ததும் உண்டு. குருவிடமிருந்து கற்றதற்கு மேலாகப் புதுப் புது வித்யைகளைப் பிரகாசப்படுத்தினார்கள். வேதம் முழுக்க ஸமுத்ரம் என்றால், அதைப் பூரணமாக அறிந்த யாரும் இருக்கவில்லைதான். ஆனாலும், இப்படி அந்த ஸமுத்ரத்தில் நிறைய பாகங்களைப் பற்றித் தெரிந்தவர்களாக ஆதிகாலத்தில் இருந்தார்கள்.

பிற்காலங்களில் மநுஷ்யர்களின் தெய்விகமான யோக சக்திகள் குறைந்துகொண்டே வந்து, கலி ஆரம்பத்தில் ரொம்ப க்ஷீணமடைந்து விட்டது.

ஜனங்களின் ஆயுஸ், ஆரோக்யம், புத்திபலம் எல்லாமே ரொம்ப குறையலாயிற்று. புராணங்களில் இப்படிச் சொல்லியிருப்பதைத்தான், மேலே சொன்ன நச்சினார்க்கினியர் உரையிலும், 'சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர்'என்று சொல்லியிருக்கிறது. இதெல்லாம் பரமாத்மாவின் லீலைதான். ஏன் இப்படிகுறைய வேண்டும் என்றால் சொல்லத் தெரியவில்லை. "வேதங்களை நிரம்பக் கற்று யக்ஞாதிகளும் முடிவிலே ஆத்ம விசாரமும் பண்ணிக் கொண்டு வந்தவர்கள், தலைமுறை தலைமுறையாக நன்றாக விருத்தியாகிக் கொண்டுதானே வரவேண்டும்? அப்படியில்லாமல் நூதன நூதனமாக, விசித்ரமாக விளையாடிக்கொண்டு இந்த லோக நாடகத்தை நடத்துவதால் இப்படியிருக்கிறது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. ஆகக்கூடி evolution, evolution என்று

(உயிரினம் மேலே மேலே அபிவிருத்தியாகிற கிராமத்திலேயே ஸ்ருஷ்டி போய்க்கொண்டிருக்கிறது என்று) டார்வின் முதலானவர்கள் சொன்னாலும், ஆத்மிகமாகவும், புத்திப் பிரகாசம், நல்ல குணம், யோகசக்தி முதலியவற்றை வைத்தும் பார்க்கிற போது evolution-கு நேர்மாறாக, கீழே கீழே டிக்ரி போவதாகத்தான் இருந்திருக்கிறது. இதிலே ஒரு freezing point (அப்படியே குளிர்ந்து, உறைந்து போய்விடுகிற நிலை) மாதிரி கலியுக ஆரம்பம் வந்தது.

கிருதயுகத்திலிருந்து மநுஷ்யர்களின் சக்தி குறைந்து கொண்டே வந்திருக்கிறது. அந்த யுகத்தில் அஸ்தி (எலும்பு) இருக்கும்வரை ஒருத்தருக்கு ஆயுஸ் இருக்கும். ரத்தம், மாம்ஸம் எல்லாம் வற்றிப் போய்விட்டாலும்கூட, எலும்புக் கூடு உளுத்து விழுகிற வரையில் உயிரோடு இருப்பார்கள். அவர்களுக்கு நிரம்பவும் தியான சக்தி உண்டு. அவர்களை 'அஸ்தி கத ப்ராணர்கள்'என்று சொல்லியிருக்கிறது. த்ரேதாயுகக்காரர்கள் 'மாம்ஸ கத ப்ராணர்'கள். அதாவது ரத்தம் சுண்டி விட்டால்கூட மாமிஸம் அழுகுகிறவரை உயிரோடு இருப்பார்கள். இவர்களுக்கு யக்ஞாதி கர்மாக்களைப் பண்ணும் சக்தி விசேஷமாக உண்டு. த்வாபரயுக ஜனங்களுக்கு 'ருதிர கத ப்ராணர்'என்று பெயர். 'ருதிரம்' என்றால் ரத்தம். தமிழில் உதிரம் என்றாகியிருப்பது இதுதான். இவர்கள் ரத்தம் வற்றுகிறவரை ஜீவனோடு இருப்பார்கள். பூஜை பண்ணுவதில் இவர்களுக்கு சக்தி அதிகம். அப்புறம், இப்போது கலியுகத்தில் இருக்கிற நாம் 'அன்ன கத ப்ராணர்'கள். சோறு உள்ளவரைதான் நமக்கு உயிர் உடம்பில் தரித்திருக்கும். நமக்கு த்யான சக்தி, கர்மாநுஷ்டான சக்தி, பூஜை பண்ணும் சக்தி எதுவும் இல்லை. "கிருஷ்ணா, ராமா" என்று நாமாவைச் சொல்கிற சக்திதான் இருக்கிறது. நாமாவே காப்பாற்றிவிடும் என்பது வாஸ்தவந்தான். ஆனாலும் அதற்காக பிரம்ம ஸ்ருஷ்டியிலிருந்து வந்திருக்கிற வேதங்களை அழிந்து போகும்படிப் பண்ணலாமா?அது பெரிய நஷ்டமல்லவா? அந்த நஷ்டத்துக்கு ஹேது கிருஷ்ண பகவானின் தேஹோத்ஸர்ஜத்தோடு (தேக வியோகத்தோடு) பெரிதாக ஆரம்பித்தது. கிருஷ்ண பரமாத்ம சரீரத்தை பரித்யாகம் பண்ணிவிட்டு, லோகத்தைவிட்டுப் புறப்பட்டவுடன் ஒரு பெரிய இருட்டு வந்து சூழ்ந்து கொண்டுவிட்டது. கிருஷ்ண பரமாத்மா பேரிலும் இருட்டு (கிருஷ்ண-கருப்பு);அவர் பிறந்ததும் இருட்டு;காராக்ருஹ்திலே நட்ட நடுநிசியிலே அவர் பிறந்தார். ஆனால் அவரே லோகத்துக்கெல்லாம் ஞான ஜோதியாக இருந்தார்!அவர் மறைந்ததும் ஞானத்துக்குப் பெரிய ஹானி உண்டாகி பெரிய இருள் சூழ்ந்துவிட்டது. கெட்ட சக்திகளுக்கு ஒரு ரூபமாக இருக்கப்பட்ட கலிபுருஷனுக்கு அதிகாரம் ஏற்பட்டுவிட்டது. இதெல்லாம் எதற்காகவோ பரமாத்மாவே விளையாடிப் பார்த்துக் கொள்கிற லீலைதான்.

ஒரே ஜோதியாக வந்தார்; அப்புறம் ஒரே இருட்டு வந்து விடுமோ என்று பயப்படும்படியான நிலையை உண்டு பண்ணினார். இதற்கப்புறம் ஒரு கருணை உண்டாகி, "லோகம் இப்படி ஒரேடியாக வீணாகி விடவேண்டும்; கலிக்குக்

கொஞ்சம் மாற்று மருந்து - கலியின் விஷத்தை முறிக்கிற மருந்து - கொடுத்து ரட்சிக்கலாம்"என்று நினைத்தார். வேதந்தான் அந்த மருந்து. கலி புருஷன் அதைக் கபளீகரம் பண்ணிவிடாமல் காப்பாற்றிவிட்டால் போதும், லோகம் வழிகாட்டிக் கொண்டிருக்கும் என்று பரம கருணையோடு எண்ணினார். பழைய மாதிரி வேதம் ஜோதியாகப் பிரகாசிப்பது கலியில் சாத்தியமில்லை. கலிபுருஷனுக்கு அதிகாரம் கொடுத்தபின் அப்படிப் பண்ணுவதற்கில்லை. ஆனாலும், அது குறைந்த அளவுக்காவது எவ்வளவு பிரகாசிக்க வேண்டுமோ அந்த அளவு இருக்கும்படிப் பண்ணவேண்டும் என்று நினைத்தார். தம்முடைய அம்சாவதாரமான வேத வியாஸ மஹரிஷி மூலமாக இந்தப் பெரிய உபகாரத்தைச் செய்தார்.

அப்போது வேத வியாஸருக்கு அந்தப் பேர் இருக்கவில்லை. அவருடைய (இயற்) பெயரும் கிருஷ்ணர் என்பதுதான். தீவில் (த்வீபத்தில்) பிறந்தவராதலால் த்வைபாயனர் என்பார்கள். கிருஷ்ண த்வைபாயனர், பாதராயணர் என்ற பேர்கள் அவருக்கு இருந்தன. 'பதரி'என்னும் இலந்தை மரத்தடியில் தபஸ் பண்ணியதால் பாதராயணர் என்றும் அவரைச் சொல்வார்கள்.

பல மஹரிஷிகளின் மூலமாக லோகத்துக்கு வந்திருந்த 1180 வேத சாகைகளும் கிருஷ்ண த்வைபாயனருக்குத் தெரியும். அக்காலத்தில் அதெல்லாம் கலந்து ஒரே பிரவாஹமாகத்தான் இருந்தது. அதில் நிறைய கிரஹிக்கும் சக்தி பூர்விகர்களுக்கு இருந்தது. அவதார புருஷரானதால் த்வாபரக் கடைசியில் பிறந்த போதிலும் கிருஷ்ண த்வைபாயனருக்கே அத்தனையையும் க்ரஹிக்கும் சக்தி குறைந்த நமக்காக அவர் அவற்றை நாலு வேதங்களாகவும், அதில் ஒவ்வொன்றிலும் இன்னின்ன சாகை என்றும் பிரித்தார். ஒரு dam போட்டுப் பெரிய பிரவாஹத்திலிருந்து பல வாய்க்கால் வெட்டி விடுகிற மாதிரி நாலு வேதங்கள், அவற்றின் சாகைகள் என்று விபாகம் (பகுப்பு) செய்தார். அது அவருடைய யோக மகிமை, தபஸின் வலிமை. இவற்றில் பிரார்த்தனா ரூபமான ரிக்வேத சாகைகள், யக்ஞ விதிகளின் ரூபமான யஜுஸ் சாகைகள், கான ரூபமான ஸாமவேத சாகைகள், ஆபத்துக்களைப் போக்கிக் கொள்வதற்கும் சத்ருக்களை நாசம் பண்ணுவதற்குமான மந்திரங்களையும் யக்ஞங்களையும் முக்யமாகக் கொண்ட அதர்வ சாகைகள் எல்லாம் இருந்தன.

தேவர்கள் ரொம்பவும் ஸந்தோஷப்படுத்துவதற்காக ஸாமவேதத்தில் அதிகப்படியான சாகைகள் இருந்தன 1180ல் ஆயிரம் சாகைகள் ஸாமவேதத்திலேயே இருந்தனவாம். ரிக் வேதத்தில் 21 சாகைகள் இருந்தன. யஜூர் வேதத்தில் 109 இருந்தன. (சுக்ல யஜுஸில் 15; கிருஷ்ணயஜுஸில் 94) அதர்வ வேதத்தில் 21 சாகைகள்இருந்தன.

1180 என்பது விஷ்ணுபுராணத்தில் வருவதாக ஒரு பண்டிதர் எடுத்துக் காட்டிய கணக்காகும். இதற்குக் கொஞ்சம் வித்யாஸமாக இன்னொரு கணக்கும்

இருக்கிறது. அதன்படி ரிக் வேதத்தில் 21 சாகைகள்;யஜுஸில் 101;ஸாமத்தில் 1000;அதர்வத்தில் 11; மொத்தம் 1133 சாகைகள்.

இனிமேல் வரப்போதும் கலிகால ஜனங்கள் அல்ப சக்தர்களாகவே இருப்பார்களாதலால் இந்த ஆயிரத்து நூற்றுச் சொச்சத்தில் ஒரு சாகையை அத்யயனமும் அநுஷ்டானமும் பண்ணினால் போதும் என்று கிருஷ்ண த்வைபாயனர் கருதினர். பகவத் ஸங்கல்பமே அவருக்கு இந்த எண்ணத்தைத் தந்தது. அதனால் ஒருத்தரே பல வேதங்களைக் கற்றுக்கொள்கிற பழைய முறைபோய், ரிக், யஜுஸ், ஸாம, அதர்வங்களில் ஏதாவது ஒன்றிலே ஒரு சாகையைப் படித்து மனப்பாடம் பண்ணி, அதன்படி செய்தால் போதும் என்ற புது ஏற்பாட்டைச் செய்தார். தம் சிஷ்யர்கள் நாலு பேரில் ஒவ்வொருவரிடம் ஒரு வேதம் என்று பிரித்துக் கொடுத்து, 'இதன் சாகைகளை நீங்கள் பிரசாரம் செய்யுங்கள்'என்று ஆக்ஞை பண்ணினார். ரிக்வேத சாகைகளைப் பைலர் என்ற சிஷ்யரிடமும், இப்படியே யஜுஸை வைசம்பாயனரிடமும், ஸாமத்தை ஜைமினியிடமும், அதர்வத்தை ஸுமந்து என்பவரிடமும் கொடுத்துப் பிரசாரம் செய்ய வைத்தார்.

இப்படி ஒரு ஜீவனுக்கு இது போதும் என்று வேதத்தை நாலாகவும், அந்த நாலை 1180 சாகைகளாகவும் பிரித்துக் கொடுத்ததாலேயே, கிருஷ்ண த்வைபாயனருக்கு 'வேத வ்யாஸர்'என்ற காரணப்பெயர் உண்டாயிற்று. வ்யாஸம் என்றால் கட்டுரை, essay, composition என்று அர்த்தம். ஒரு விஷயத்தை மட்டும் பிரித்து எடுத்துக்கொண்டு விளக்குவதால் அதற்கு வியாஸம் என்று பெயர் வந்தது. பல விஷயங்கள் இருக்கிறபோது, ஒவ்வொரு பொருள் பற்றியும் (subject wise-ஆக) விபாகம் பண்ணுவது (பிரித்து classifyபண்ணுவது) தான் வியாஸம். ஏகப்பட்டதாக இருந்து வந்த வேதசாகைகளைத் தீர்மானமாக இது போதும் என்று பிரித்து விபாகம் செய்ததாலேயே, க்ருஷ்ண த்வைபாயனருக்கு வேத வ்யார் என்ற பெயர் வந்துவிட்டது.

ஒரு சாகை போதும் என்று அவர் ஏற்பாடு பண்ணினதால், அதற்குமேல் கற்றுக் கொள்ளக் கூடாது என்று தடை போட்டுவிட்டதாக அர்த்தமில்லை. 'மினிமம்'ஒரு சாகையாவது பயில வேண்டும் என்று வைத்தார். வியாஸர் வேதங்களை விபாகம் செய்து இப்போது ஐயாயிரத்துச் சொச்சம் வருஷமாகிறது. ஓரளவுக்குச் சரித்திர பூர்வமாகவே இதை நிர்ணயம் பண்ணியிருக்கிறது.

சாஸ்திரங்களால் தீர்மானமாகத் தெரிகிற இந்தக் காலக் கணக்கை ஒப்புக் கொள்ளாமல் சரித்திரக்காரர்கள் மஹாபாரத காலம் கி.மு.1500 என்று சொல்லி வந்தார்கள். இப்போது அது இன்னம் சில நூற்றாண்டுகளுக்கு முந்தியும் போயிருக்கும் என்று சொல்லி, 5000 வருஷம் என்ற கணக்கு சரியாக இருக்கும் என்று அபிப்ராயம் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். வியாஸர் விபாகம்

பண்ணிய பிறகும் ரொம்ப காலம் ஒருவரே ஒரு வேதத்தில் ஒரு சாகையை அத்யயனம் செய்தபின், இன்னொரு வேதத்தின் இன்னொரு சாகை, அப்புறம் மூன்றாவதாகப் பின்னுமொரு வேதத்திலே ஒரு சாகை என்றெல்லாம் அத்யயனம் பண்ணி வந்திருக்கிறார்கள் இன்றைக்கும் வடக்கத்தியர்களின் பேர்களுக்குப் பின்னால் சதுர்வேதி, த்ரிவேதி, த்விவேதி என்றெல்லாம் வருவதைப் பார்க்கிறோம். த்ரிவேதி ஒருத்தர் கவர்னராகக் கூட இருந்தார். 'துபே', 'தவே' என்பதெல்லாம் 'த்விவேதி' என்பதன் திரிபுகள்தான். நாலு வேதங்களிலும் ஒவ்வொரு சாகை அத்யயனம் பண்ணினவர்களின் பரம்பரையில் வந்தவர்களே 'சதுர்வேதி' என்கிறவர்கள். இவர்களை பெங்காலில் சட்டர்ஜி என்பார்கள். மூன்று வேதங்களில் அத்யயனம் பண்ணியவர்கள் த்ரிவேதிகள்;இரண்டில் பண்ணினவர்கள் த்விவேதிகள். இப்போது ஒன்றைக்கூடப் பண்ணினவர்கள் ரொம்பவும் அபூர்வமாகி விட்ட போதிலும் குடிப் பெயரிலாவது இப்படி ஒன்றுக்கு மேற்பட்ட வேதங்களை அத்யயனம் பண்ணின பூர்விகர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சி கிடைக்கிறது. ஞானஸம்பந்தர், தம்மை " நான்மறை ஞானஸம்பந்தன்" என்று சொல்லிக் கொள்கிறார். நாலு வேதங்களையும் அத்யயனம் பண்ணினவர் அவர். அம்பாளின் க்ஷீரத்தைப் பானம் பண்ணினவராதலால், அவருக்கு ஸகல வேதங்களும் உடனே தெரிந்திருக்கும்.

இந்த ஐயாயிரத்துச் சொச்சம் வருஷத்தில், அநேக சாகைகள் வழக்கொழிந்து போய்விட்டன. கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்து கொண்டே வந்து, 1180 என்பது சமீபகாலமாக ஆறேழு சாகைகளில் நிற்கிற பரம துர்ப்பாக்ய ஸ்திதியில் இருக்கிறோம்!(சாகை என்று, அதில் முதலில் வரும் ஸம்ஹிதையைச் சொல்கிறேன்.) ரிக்வேதத்தின் 21 சாகைகளில் இப்போது இருக்கிறது ஒன்றுதான். சாகல சாகை என்று அதற்குப் பேர். ஐதரேய உபநிஷத் வருகிற சாகையாதலால் ஐதரேய சாகை என்றும் சொல்வதுண்டு. சுக்ல யஜுஸின் 15 சாகைகளில் இப்போது இரண்டுதான் இருக்கின்றன. காண்வ சாகை என்பது மஹாராஷ்டிரத்தில் இருக்கிறது. மாத்யந்தின சாகைதான் வட இந்தியாவில் நிறைய இருக்கிறது. கிருஷ்ண யஜுஸின் 94 சாகைகளில் தைத்ரீயம்தான் அதிகம் உள்ளது. தக்ஷிணத்தில் மிகவும் அநுஷ்டானத்தில் இருப்பது இதுதான். ஸஹஸ்ர சாகை கொண்ட ஸாமத்தில் 997-ஐப் பறிகொடுத்து விட்டோம்!தமிழ்நாட்டில் தலவகார சாகை எனப்படும் ஜைமினீய சாகை ஒன்றுதான் எஞ்சியிருக்கிறது. மஹாராஷ்டிரத்தில் மட்டும் கொஞ்சம் கொஞ்சம் ராணாயணீய சாகை என்பது இருக்கிறது. மேற்கே குஜராத் முதலான இடங்களிலும், கேரளத்திலும் கௌதும சாகை என்பது இருக்கிறது. அதர்வத்தின் ஐம்பது சாகைகளில் ஒன்றுகூட இல்லையோ என்று பயந்து கொண்டிருந்தோம். சல்லடை போட்டுச் சலித்ததில் சௌனக சாகையை நன்றாக அத்யயனம் பண்ணின ஒருவர், குஜராத்தில் ஸினோர் என்ற இடத்திலிருக்கிறார் என்று தெரிந்தது. அவரிடமிருந்து இந்த அதர்வ சாகையை அத்யயனம் பண்ண நம் ஊர்ப் பசங்களை அனுப்பிற்று.

ரிக்வேதத்தை சேர்ந்த பிராம்மணங்களில் ஐதரேய ப்ராம்மணமும் கௌஷீதகீ ப்ராம்மணமும் (சாங்காயன ப்ராம்மணம் என்றும் இதற்குப் பெயர் உண்டு) நமக்கு வந்திருக்கின்றன. இவற்றைச் சேர்ந்த ஆரண்யகங்களில் வரும் 'ஐதரேய உபநிஷத்'தும் 'கௌஷீதகீ உபநிஷத்'தும் இன்றைக்கு வழக்கில் உள்ளன.

சுக்ல யஜுஸைச் சேரந்த பிராம்மணங்களில் 'சதபத ப்ராம்மணம்'ஒன்றே அநுஷ்டானத்தில் இருப்பது. இது மாத்யாந்தின சாகை, காண்வ சாகை இரண்டிலும் (கொஞ்சங் கொஞ்சம் வித்யாஸங்களோடு) பொதுவாக இருப்பது. வேதங்கள் எல்லாவற்றுக்கும் விளக்கமாக இருக்கிற பெரிய புஸ்தகம் இது. ஆரண்யகமாகவும், ஆரண்யகம் பூராவுமே உபநிஷத்தாகவும் இருக்கப்பட்ட 'பிருஹதாரண்யகம்' ஒன்றே இன்றைக்கு சுக்ல யஜுஸில் நமக்குக் கிடைத்திருப்பது. 'ஈசாவாஸ்ய உபநிஷத்'இந்த வேதத்தின் ஸம்ஹிதா பாகத்திலேயே வருகிறது என்று முன்னேயே சொன்னேன்.

கிருஷ்ண யஜுஸில் இப்போது வழக்கில் இருக்கிற பிராம்மணம் 'தைத்திரீய ம்'தான். இந்த வேதத்தின் ஆரண்யகங்களிலும் 'தைத்திரீயம்'என்பது இருக்கிறது. அதில்தான் தைத்திரீய உபநிஷத்தும், மஹா நாராயண உபநிஷத்தும் இருக்கின்றன. நிறையப் பிரயோஜனப்படுகிற ஸூக்தங்களும் மந்திரங்களும் மஹா நாராயண உபநிஷத்தில் இருப்பவையே. 'மைத்ராயணி ஆரண்யக'மும் அதே பேரைக் கொண்ட உபநிஷத்தும் இதே கிருஷ்ண யஜுஸில் கிடைத்திருக்கின்றன. கட சாகை (ஸம்ஹிதை), அதன் பிராம்மணம், ஆரண்யகம் எதுவும் இப்போது அநுஷ்டானத்தில் இல்லாத போதிலும் அதன் கடைசியில் வருகிற கடோபநிஷத் மட்டும் வழக்கில் இருக்கிறதென்று முந்தியே சொன்னேன்.

இதே போல ச்வேதாச்வர உபநிஷத்தும், கிருஷ்ண யஜுஸைச் சேர்ந்த ச்வேதாச்வர ஸம்ஹிதையின் முடிவாக வருவது என்றாலும் இந்த உபிநிஷத்தைத் தவிர அந்த சாகையின் மற்ற பாகம் எதுவும் கிடைக்கவில்லை.

ஸாம சாகா ஸம்ஹிதைகளில் 997 நஷ்டமாகி விட்ட போதிலும், அதன் பிராம்மணங்களில் மட்டும் ஏழெட்டுத் தப்பிப் பிழைத்திருக்கின்றன. தண்ட்ய ப்ராம்மணம், ஆர்ஷேய ப்ராம்மணம், தேவதாத்யாய ப்ராம்மணம், ஸம்ஹிதோபநிஷத் ப்ராம்மணம், வம்ச ப்ராம்மணம், (ஷட்விம்ச ப்ராம்மணம், ஸாமவிதான ப்ராம்மணம், சாந்தோக்ய ப்ராம்மணம், ஜைமினீய ப்ராம்மணம்) என்றிப்படிப் பல இருக்கின்றன. இந்த வேதத்தைச் சேர்ந்த ஆரண்யகங்களில் தலவகார ஆரண்யகம் என்பதை தலவகார ப்ராம்மணம் என்றும் சொல்வதுண்டு. இது ஜைமினீய ப்ராம்மணத்தில் வருவதுதான். இதில் கடைசியில் உள்ளதுதான் கேனோபநிஷத். அதனால் அதற்குத் 'தலவகார உபநிஷத்' என்றும் ஒரு பெயர் இருக்கிறது. சாந்தோக்ய பிராம்மணத்திலிருந்து 'சாந்தோக்ய உபநிஷத்'கிடைத்திருக்கிறது.

அதர்வ வேதத்தில் எல்லாம் போய் விட்டாலும், அதிலிருந்து 'பிரச்னம்,''முண்டகம்,' 'மாண்டூக்யம்'என்ற மூன்று உபநிஷத்துக்கள் கிடைத்திருப்பதாக முன்பே சொன்னேன். 'நிருஸிம்ம தாபனீ உபநிஷத்'தும் அதர்வத்தைச் சேர்ந்ததுதான். இந்த வேதத்தில் நமக்குக் கிடைத்துள்ள ஒரே பிராம்மணத்துக்கு 'கோபத ப்ராம்மணம்' என்று பெயர்.

1180-சாகைகளில் இப்படி ஏழெட்டு மட்டும் மிஞ்சியிருப்பதுங்கூட அடுத்த தலைமுறைக்கு நசித்துப் போய் விடும்படியாகப் பண்ணிவிட்டால், அது மஹாபாபமாகும். ஒரு பரிஹாரமும் பிராயச்சித்தமும் இல்லாத பாபமாகும். திராவிட தேசம் என்று சொல்லப்படுகிற தக்ஷிணதேசத்தில், கேரளத்தில், வேத வித்யையானது நம்பூத்ரிகளுக்குள் இன்னமும் அணையாமல் இருந்து வருவதைச் சொன்னேன். அடுத்தபடியாக, ஆந்திரத்தில் வேதாப்பியாஸம் சமீபம் வரையில் நன்றாக நடந்திருக்கிறது. இதற்குப் பெரிய ஆதரவாக இருந்தது விஜயவாடாவில் நவராத்திரி ஸமயத்தில நடத்திவந்த வருஷாந்தரப் பரீக்ஷைகளும், வித்வத்ஸதஸும் ஆகும். பரீக்ஷையில் தேறினவர்களுக்கும், ஸதஸில் கலந்து கொண்ட பண்டிதர்களுக்கும், ரொக்கமாகப் பணம் கொடுத்து ஸன்மானிப்பார்கள். அதோடுகூட ஒரு ஸர்ட்டிஃபிகேட் (நற்சான்றுப் பத்திரம்) கொடுப்பார்கள். இதிலே விசேஷம் என்ன என்றால்:இந்தப் பரீக்ஷக்கும், ஸதஸுக்கும் வெளியூர்களிலிருந்து, தூர தூரப் பிரதேசங்களிலிருந்துகூடப் பிரம்மச்சாரிகளும், க்ருஹஸ்த வைதிகர்களும் வருவார்கள். பிற்பாடு இவர்கள் தங்கள் ஊருக்குத் திரும்புகிறபோது வழியிலுள்ள கிருஹஸ்தர்களின் வீடுகளில் ஸர்ட்டிஃபிகேட்டைக் காட்டினால் அந்த கிருஹஸ்தர்கள் இவர்களுக்கு நிரம்ப மரியாதை செய்வார்கள். இவர்களை அகதிகளாக உபசரித்து ஸத்காரம் செய்வதோடு, தங்களும் திரவிய ஸம்மானம் செய்வார்கள். இதே மாதிரி, ஆந்திர தேசத்தில் ஒரு கல்யாணம் பண்ணும்போது, அதில் வேத பண்டிதர்களுக்கென்று ஒரு பங்கு தக்ஷிணையாக ஒதுக்குகிற வழக்கமும் இருந்தது. இப்பேர்ப்பட்ட cashincentive -க்கள் (ரொக்கத் தொகை தருகிற ஊக்க உற்சாகம்) காரணமாக வேதாப்யாஸம் ஆந்திர தேசத்தில் செழிப்பாக இருந்தது.

பிராம்மணன் பணம் பணம் என்று பறக்கக்கூடாதுதான். அப்படிப் பறந்தால் அவன் பிராம்மணனே இல்லை. ஆனாலும், வேதம் தவிர மற்ற எந்தத் தொழில் போனாலும் பர்ஸ் நிறைய பணம் வரும். வேதத்துக்கு (வைதிக வாழ்க்கைக்கு)ப் பின்னால் அன்ன வஸ்திரத்துக்குக்கூட வழியில்லாமல் அவஸ்தைப்பட வேண்டியதுதான் என்கிற சூழ்நிலை போய், வைதிகனும் ஒரளவு ஸுபிக்ஷமாக, நிர்விசாரமாக ஜீவயாத்திரை நடத்த முடியும் என்பதற்கு ஏற்பாடு செய்து கொடுக்கத்தான் வேண்டியிருக்கிறது. அப்படிச் செய்ததால் தான் தெலுங்கு தேசத்தில் ஸமீப காலம் வரையில் வேதாப்பியாஸம் ஒரளவுக்கு நல்ல நிலையில் இருந்திருக்கிறது.

தேசம் பூராவுக்கும் திட்டம் போட்டு, குறிப்பாகத் தமிழ் நாட்டில் இப்படி அவசியமான திரவிய சகாயத்துக்கு வழிகள் செய்துதான் இப்போது வேத பாடசாலைகளை உயிர்ப்பிக்கப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.

தமிழ் நாட்டில் கடைசியாக நாயகர், மஹாராஷ்டிரர் முதலிய ஹிந்து ராஜாக்கள் ஆண்டவரையிலும், அதற்கப்புறம் இங்குள்ள சுதேச ஸம்ஸ்தானங்களிலும் வைதிகர்களுக்கு நிரம்ப ராஜமானியங்கள் அளிக்கப்பட்டு வந்தன. ஒரு வேதசாகை முழுதையும் அத்யயனம் செய்கிறவனுக்கு 'ச்ரோத்ரியன்' என்று பெயர். 'ச்ருதி' என்றால் வேதம் அல்லவா?அதிலிருந்து வந்தது 'ச்ரோத்ரியன்'. இப்படிப்பட்ட ச்ரோத்ரியனுக்கு பூதானம், சின்னதாக ஒரு கிராமத்தையேகூட தானம் பண்ணுவது, அநேக தமிழ் ராஜாக்களின் வழக்கமாக இருந்திருக்கிறது. அந்தக் கிராமத்துக்கு வரி கிடையாது. 'இறையிலி' என்று இதைத்தான் பழைய சாஸனங்களில் சொல்லியிருக்கிறது. 'பிரம்மதேசம்'என்று இப்போது சொல்லப்படுகிறவை பிராம்மணனுக்குத் தானமாக ('தேய'மாக)தரப்பட்ட ஊர்கள்தான். 'பிரம்மதேயம்'என்றே சாஸனத்தில் போட்டிருக்கும். "சதுர்வேதி மங்கலம்" என்ற பெயரிலுள்ள ஊர்கள், நான்மறையாளருக்கு ராஜமான்யமாகத் தரப்பட்டவையே. வேதாத்யயனம் பண்ணி இன்னொருத்தனுக்குச் சொல்லிக் கொடுக்கிறவர்களுக்கு ஸம்பாத்தியமுள்ள வேறு வேலை இல்லாதபடியால், அவர்களால் கிஸ்தி கட்ட முடியாது என்று உணர்ந்தே வரி விலக்கு அளித்திருந் தார்கள். நவாப் ராஜ்யத்திலும், கம்பெனி ஆட்சியிலும், பிரிட்டிஷ் ராஜ்யத்திலுங்கூட இந்த வரிவிலக்கு நீடித்தது. வேதத்தை வளர்க்க இவர்களாக ஏற்பாடு பண்ணாவிட்டாலும், ஏற்கெனவே ச்ரோத்ரிய கிராமங்களுக்கு இருந்த வரிவிலக்கை மட்டும் ரத்து பண்ணாமலேயிருந்தார்கள். அப்படியும் பிராம்மணர்கள் தாங்களே நிலங்களை விற்று விட்டு, ஸர்ட்டிஃபிகேட்டுகளாக மாற்றிக் கொண்டு கிராமத்தையும் விட்டு டவுன்களுக்கு வந்து, இங்கிலீஷ் படிப்பு, இங்கிலீஷ் ஸர்க்காரில் வேலை என்று போய், வேத ஸம்பந்தத்தை அடியோடு கத்திரித்துக் கொண்ட துர்க்கதி உண்டாகி விட்டது.

லௌகிகத்தில் (உலகியலில்) பிரவிருத்தி (தொழிலீடுபாடு) வைத்துக் கொள்ளாமல் ஆத்ம லாபகரமான காரியங்களையே தனக்காகவும் சமூகத்துக்காகவும் பாரம்பரியமாகச் செய்து வருவது என்ற உன்னதமான ஏற்பாடு நம் ஒரு தேசத்தில்தான் இந்த லோகம் பூராவிலுமே யுக யுகாந்தரமாக இருந்து வந்திருக்கின்றது. இதன் பெருமையை பிராம்மணர்களே உணரத் தவறி, வேதத்தைவிட்டு வெள்ளைக்கார நாகரிகத்துக்குப் பாயந்தபின் மற்றவர்களும் இந்த ஜாதியின் அவசியத்தை மறந்து போன ஸ்திதி ஏற்பட்டுவிட்டது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*பிராம்மணர் கடமை*

இவ்வளவு தூரம் கேட்டதற்குப் பிரயோஜனமாக பிராம்மணர்கள் எல்லாரும் ஏதாவது ஒரு காரியம் வேதத்தை ரக்ஷிப்பதற்காகப் பண்ணவேண்டும். நித்தியம் பிரம்ம யக்ஞம் பண்ண வேண்டும். பஞ்ச மஹா யக்ஞங்களில் அது ஒன்று. இங்கே 'பிரம்ம' என்றால் வேதம் என்று அர்த்தம். அகண்ட தீபம் போல் மந்திர சக்தியானது நம்மிடம் அணையாதிருப்பதற்காக நாம் அதைச் செய்ய வேண்டும். நாம் அத்தியயனம் பண்ணவேண்டிய சாகையின் மஹரிஷி எவரோ அவருக்குத் தர்ப்பணம் பண்ணவேண்டும். பண்ணி விட்டு இரண்டு அக்ஷரமாவது வேத அத்யயனம் பண்ண வேணடும். அதுவும் முடியாவிட்டால், காயத்ரீ ஜபத்தையாவது விடாமல் செய்ய வேண்டும். காயத்ரீ வேதத்தின் ஸாரமானது.

காயத்ரீயை உபதேசம் பண்ணிக் கொண்ட பின்பு தான், வேதாக்ஷர உச்சாரணம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அத்தகைய காயத்ரீயை ஸஹஸ்ராவிருத்தி (ஆயிரம் முறை ஜபிப்பது) தினந்தோறும் செய்யவேண்டும். கடைசி பக்ஷம் பத்தாவது பிரதி வேளையும் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. காயத்ரீ மந்திரம் சித்த சாந்திக்குக் காரணம். அதனுடைய தேவதை சூரியன். சூரியனுக்கு உரிய நாளாகிய ஞாயிற்றுக்கிழமை, இந்த காலத்தில் எல்லோருக்கும் லீவு நாளாக இருக்கிறது. ஆகையால் அன்று மட்டுமாவது விடியற்காலம் 4-மணிக்கு எழுந்து எல்லாரும் ஸஹஸ்ராவிருத்தி காயத்ரி ஜபம் பண்ணவேண்டும். செய்தால் க்ஷேமம் உண்டாகும்.

புருஷஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், ருத்ரம் முதலான வேத ஸூக்தங்களையாவது எல்லா பிராம்மணர்களும் கற்றுக் கொள்ள வேண்டும்.

இதெல்லாம் தற்போது உத்தியோகங்களில் இருக்கிற பிராம்மணர்களுக்குச் சொன்னது. இனிமேல் இவர்கள் பூராவாக அத்யயனம் பண்ணுவது கஷ்டமாதலால் அதமபக்ஷம் வேத சம்பந்தமாக இவ்வளவாவது செய்தாக வேண்டும் என்றேன். ஆனால், கஷ்டத்திலும் ஒன்றை எடுத்துக் கொண்டு முடித்தால்தான் பெருமை ஜாஸ்தி. அந்த விதத்தில் இவர்கள் என்ன கஷ்டமானாலும் பெரிதில்லை என்று, எத்தனையோ ஆயிரம் தலைமுறைகளாகத் தொடர்ந்து வந்திருக்கிற வேத வித்யையை ஸ்வீகாரம் பண்ணியே தீருவது என்ற பக்தியும் சிரத்தையும் வைத்து விட்டால், இப்போதிருந்தாவது அத்யயனத்தை ஆரம்பித்துச் சில வருஷங்களில் பூர்த்தி செய்துவிடலாம். மேலே மேலே ஆராய்ச்சி பண்ணி, ஐம்பது வயசு, அறுபது வயசு அப்புறங்கூடப் பல வருடங்கள் படித்து, உழைத்து பி.ஹெச். டி பட்டம் முதலானதுகளைப் பல யூனிவர்ஸிட்டிகளில் வாங்குகிறார்கள் இல்லையா?மனஸ் இருந்தால் எதுவும் செய்யலாம். வேதம் என்றால் என்னவென்றே தெரியாமலிருந்துவிட்டு, அப்புறம் ஒரு ஆவேசம் வந்து நாற்பது வயசுக்குமேல் அத்யயனம் பண்ணினவர்கள் இருக்கிறார்கள். நம் வேத ரக்ஷணத் திட்டங்களின் பொறுப்புள்ள office-bearer-களிலேயே இப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். ஆனபடியால் சிரத்தையும் சங்கல்பமுந்தான் முக்கியம்.

வயதாகி உத்யோகத்துக்கு வந்துவிட்ட பிராம்மணர்களின் சொந்த விஷயம் எப்படிப் போனாலும், இவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கெல்லாம் தப்பாமல் வேத அறிவைத் தர ஏற்பாடு செய்ய வேண்டும். அத்யயனம் பண்ணுவதற்கு விட முடியாவிட்டாலும் (இப்படி நானே விட்டுக் கொடுத்துச் சொல்வது தப்புத்தான். நான் கொஞ்சம் இளக்கிக் கொடுத்து விட்டால் பாக்கியும் பிசுபிசுவென்று போய்விடும். ஆனாலும், நான் பிடிவாதமாக ஒரு ஆக்ஞை போடுவதால் ஒன்றுமே நடக்காமல் போய்விடுமோ என்பதால், இப்படி விட்டுக் கொடுத்துச் சொல்ல வேண்டியதாகிறது), தங்கள் பிள்ளைகளுக்கு எட்டாம் வயசில்

உபநயனத்தைப் பண்ணி, அப்புறம் ஏழெட்டு வருஷமாவது ஸாயங்காலங்களில் ஒரு மணி நேரம் முக்யமான வேத பாகங்களைக் கற்றுக் கொடுக்க ட்யூஷன் வைக்க வேண்டும். ஓரிடத்தில் பல பிள்ளைகளைச் சேர்த்துக் கூட்டுறவு அடிப்படையில் (co-operative basis) இதைச் செய்தால் செலவு குறையும். அதோடு ஏழைப் பசங்களும் கற்றுக்கொள்ள முடியும்.

இது எல்லாவற்றுக்கும் மேலாக, இன்றைக்கும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நடக்கும் வேத பாடசாலைகள் மூடிப் போகாதபடியும், இவற்றில் மேலும் வித்யார்த்திகள் சேருமாறு பண்ணவேண்டும். வித்யார்த்திகளுக்கும் அத்யக்ஷகர் (வாத்தியார்) களுக்கும் கணிசமான திரவிய சகாயம் பண்ணினால்தான் இந்தக் காரியம் நடக்கும். முன்னமே சொன்னமாதிரி, பிராம்மணனுக்கு ரொம்பவும் ஜாஸ்தியாக லௌகிக சௌகரியங்களையும், தன வஸதியையும் தரக்கூடாதுதான் என்றாலும், நல்ல ஸம்பாத்தியம் தரக்கூடிய பல தொழில்கள் அவர்களை வசீகரிக்கிற தற்காலத்தில், சிலராவது இப்படிப் பூர்ணமாக வேதத்தைக் கற்றுக்கொண்டு பிற்பாடு சொல்லிக் கொடுப்பது என்ற பிராம்மண ஸ்வதரமத்தையே செய்ய வேண்டுமானால், அப்படிப்பட்டவர்கள் "இல்லை"என்று அழாத அளவுக்கு அவர்களுக்கு வஸதி பண்ணித் தரத்தான் வேண்டும். ஆதியில் இல்லாத அநேக புதுப்புது சௌகரியங்களும், சுக சாதனங்களும் வந்துவிட்ட இந்த நாளில், சிலரை மட்டும் பரம வைராகிகளாக இருந்து கொண்டு ஸ்வதர்மத்தைப் பண்ணுங்கள் என்று சொன்னால், வேதரக்ஷணம் என்பது நின்றே போய்விட வேண்டியதுதான். அதனால் வேதத்துக்கே தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் படியாகச் சிலரைப் பண்ணும்போது, அவர்களுக்கு நாம் நன்றாக சன்மானம் செய்து, திரவிய சகாயம் நிறையக் கொடுக்கத்தான் வேண்டும். அவர்களுக்கு 'லக்ஷுரி'கூடாதாயினும்,மற்றத் தொழில்கள் அவர்களை இழுத்துக் கொள்ளாத அளவுக்கு ஸௌகர்யம் பண்ணித் தரத்தான் வேண்டும். இப்படியெல்லாம் செய்யத்தான் அநேக திட்டங்கள் நடத்தி வருகிறோம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*வேதம்*

*வேத பாஷ்யம்*

அர்த்தம் தெரியாமலே வேதத்தை அத்யயனம் பண்ணி அந்த சப்தத்தை ரக்ஷித்து வந்தாலும் போதும், மந்திர சக்தி வாய்ந்த அந்த சப்தமே க்ஷேமத்தைக் கொடுத்து விடும்;அர்த்தம் தெரியாமலும், ஒரு நம்பிக்கையின் பேரில் வேதாத்யயனம் பண்ணுவதுதான் வீர்யவத்தரம் - என்றெல்லாம் நடுநடுவே சொல்லியிருக்கிறேன். அதனால் அது தான் என் பூர்ணமான அபிப்ராயம் என்று அர்த்தமில்லை!வேதத்துக்கு அர்த்தம் தெரிந்து கொள்வதென்றால் அதற்கு ஏகப்பட்ட காலம் படிக்க வேண்டியிருக்கிறது. அத்யயனத்துக்கு அப்புறமும் இத்தனை வருஷம் ஒருவனைப் பாடசாலையில் கட்டிப்போடுவது என்றால் சிரமம்தான். அதனால்தான் அர்த்தம் தெரிந்துகொண்டுதான் வேதாத்யயனத்தை ரக்ஷிக்க வேண்டும் என்றால் ரொம்பப் பெரிசாக எதிர்ப்பார்த்து அடியோடு ஒன்றுமே நடக்காமல் போய்விடப் போகிறதே, அத்யயனத்துக்குக்கூட யாருமே வராமல் போய்விடப் போகிறார்களே என்று நினைத்து பாதி ஸீரியஸாகவும், பாதி விளையாட்டாகவும், 'அர்த்தமே வேண்டாம்;(வேத) சப்தமே போதும்'என்று சொல்லி வந்தேன்.

வாஸ்தவத்தில், சப்தத்தை மட்டும் ரக்ஷித்துத் தருகிறவர்களாவது நிறைய இருக்கவேண்டும்;அதோடுகூட வேத மந்திரங்களுக்கு அர்த்தத்தையும் தெரிந்து

கொண்ட சிலராவது இருக்கும்படியாகவும் பண்ணத்தான் வேண்டும். இதனால்தான் வேதபாஷ்யத்தில் ரொம்பவும் அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறோம்.

வேதத்துக்கு விசேஷமான அர்த்த கௌரவம் இருப்பதால்தான் அநேக மஹான்கள் அவற்றுக்கு பாஷ்யம் என்கிற பேரில் விரிவாக அர்த்தம் (உரை) எழுதியிருக்கிறார்கள். அவை வீணாகப் போகவிடலாமா?

நாம் நம் அகங்களில் விவாஹம் முதலான பல காரியங்கள், சிராத்தம் முதலான பித்ரு காரியங்கள், இன்னம் சில ஹோமங்கள், ஆவணியவிட்டம் (உபாகர்மம்) முதலான வைதிக காரியங்கள் என்று பலவற்றைப் பண்ணுகிறோம். இவற்றின்போது வாத்தியார் சொல்லிக் கொடுக்கிற மாதிரி அநேக வேத மந்திரங்களைச் சொல்கிறோம். அடியோடு இந்தக் கர்மாக்களை விட்டுவிடுகிற துர்பாக்கிய ஸ்திதி ஈச்வரானுக்ரஹத்தில் இதுவரை ஏற்படவில்லை. ஆனாலும் முன்னைக்கு இப்போது தினந்தினமும் கர்மாக்கள் க்ஷீணித்துக் கொண்டுதான் வருகின்றன. இதற்கு ஒரு முக்யமான காரணம், சொல்கிற மந்திரங்களுக்கு அர்த்தம் தெரியாததுதான். அர்த்தம் தெரியாமலே, வாத்தியார் சொன்னதை ஒப்பிக்கிறது என்றால் இந்தக் காலத்தில் படிப்பாளிகளாக இருக்கப்பட்ட நாகரிகக்காரர்களுக்கு அதிலே ஈடுபாடு இருப்பதில்லை. அர்த்தம் தெரியாவிட்டாலும், சிரேயஸ் என்ற நம்பிக்கையோடு சிரத்தையை இந்தக் காலத்தில் எதிர்ப்பார்க்க முடியாது. வாஸ்தவத்திலும், ஒவ்வொரு சடங்குக்கும் வெவ்வேறு மந்திரம் இருப்பதாலேயே அததற்கும் பொருத்தமான அர்த்தத்தோடுதான் அவை இருக்கின்றன என்று ஆகிறது. அந்த தாத்பர்யத்தைத் தெரிந்து கொண்டால், அவற்றில் பலவற்றுக்கு scientific basis(விஞ்ஞான பூர்வமான ஆதாரம்) இருப்பதாகத் தெரிகிறது; இன்னும் பல மந்திரங்களுக்கு emotional appeal (உணர்ச்சி பூர்வமான கவர்ச்சி) இருப்பது அவற்றுக்கு அர்த்தம் தெரிகிறபோதுதான் வெளியாகிறது. இப்படி அர்த்தம் தெரிந்தால் ஈடுபாடு உண்டாகிறது. இதனால் தான் ஈடுபாடே இல்லாமல் மொண மொண என்று எதையாவது சொல்வதை 'திவச மந்திரம்' என்றே சொல்கிற வழக்கம் வந்துவிட்டது. ஆகையால், இனிமேலாவது திவஸ மந்திரம் உள்பட எல்லாவற்றுக்கும் அர்த்தம் தெரியும்படியாகப் பண்ண வேண்டும்.

எப்படிப் பண்ணுவது?முதலில் வாத்தியாருக்கு அர்த்தம் தெரிய வேண்டும். இப்போது பெரும்பாலான வாத்தியார்களுக்கே அர்த்தம் தெரியவில்லை. ஒரு கர்த்தா அல்லதுயஜமானன் 'பண்ணி வைக்கிற' வாத்தியாரை, "இதன் அர்த்தம் என்ன?" என்று கேட்டால் அவருக்குச் சொல்லத் தெரியவில்லை. இப்படியிருந்தால், பண்ணுகிறவனுக்கு சிரத்தை எப்படிக் குறையாமல் இருக்கும்?

இன்றைக்கு உள்ள பல நடுத்தர வயசுக்காரர்களுக்கு, "நாம் சொல்லும் மந்திரங்களுக்கு அர்த்தம் என்ன?" என்று தெரிந்து கொள்கிற ஆர்வம் இருக்கிறது

என்றே எனக்கு நம்பிக்கை. அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளாமல், வெறும் சப்தத்தைக் கிளிப்பிள்ளை மாதிரி ஒப்பிக்கிறது என்பதாலேயே அவர்களுக்குக் கர்மாவில் சிரத்தை குறைகிறது என்பது நம் அபிப்ராயம். ஆதலினால் வைதிக விருத்தியை (உபாத்யாயத் தெ&

## *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

### *ஷடங்கங்கள்*

ஹிந்து மதத்தின் ஆதாரப் புஸ்தகங்களில், வேதத்துக்கு அடுத்தபடியாக வருவது வேதத்தின் ஆறு அங்கங்கள். வேதத்தை ஒரு மூர்த்தியாகச் சொல்லும் போது அந்த வேத புருஷனுக்குப் பல அங்கங்கள் இருக்கின்றன. வாய், மூக்கு, கண், காது, கை, பாதம், என்ற ஆறு அங்கங்கள் இருக்கின்றன. இவற்றை "ஷட்(ஆறு) அங்கம்","ஷடங்கம்"என்று சொல்லுவார்கள். சடங்கு என்று சொல்லுவது அந்த வார்த்தையிலிருந்து மருவி வந்ததுதான்.

"வேதமோ(டு) ஆறு அங்கம் ஆயினான்"என்று தேவாரம் சொல்லும் ஆறு அங்கம் ஷடங்கமே.

# *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## *ஷடங்கங்கள்*

### *கல்வெட்டும் செப்பேடும்*

பழைய காலத்தில் தர்மசாஸனங்களெல்லாம் கோயில் சுவர்களில் கல்லில் வெட்டப்பட்டிருக்கின்றன. தர்மங்களைப் பதிவு செய்யும் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் பழைய நாளில் கோயில்தான்!திருவாங்கூர் ஸம்ஸ்தானத்து ராஜ்யாதிகாரிகளில் திருமந்திர ஒலை என்பவன் ஒர் உத்தியோகஸ்தன். ஸமீப காலம் வரையில் அந்த ராஜயத்தில் இந்த உத்யோகம் இருந்தது. பூர்வத்தில் தமிழ்நாட்டில் எல்லா அரசர்களிடமும் இப்படியொரு அதிகாரி இருந்தான். இந்தக் காலத்தில் 'பிரைவேட் ஸெகரெட்டரி'என்று சொல்கிறார்களே, அந்த மாதிரி, அவன் ரசன் எது சொன்னாலும் அதை ஒலையில் எழுதிக் கொள்ளவேண்டும். பின்பு அதை யார் யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவர்களுக்கு அனுப்ப வேண்டும். அந்தக் காலத்தில் யார் எந்த தர்மம் பண்ணினாலும், அதை மஹாராஜாவுக்குத் தெரிவுக்க வேண்டும். அவன் அதை ஒத்துக் கொண்டு ஆக்ஞை பண்ணுவான். அந்த ஆக்ஞையைத் திருமந்திர ஒலைக்காரன் எழுதி அனுப்புவான். அப்படி எழுதிக் கடைசியில், கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளுவதாகவும்"என்று முடிப்பான். அந்த ஆக்ஞை எந்த ஊரில் தர்மம் செய்யப்படுகிறதோ அந்த ஊர் ஸபையாருக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கோயில் சுவரில் வெட்டச் செய்வார்கள். இதுதான் 'கல்லில் வெட்டிக் கொள்வது'என்பது. அநேகக் கோயில்களிலுள்ள சிலாசாஸனங்கள் இவைதான்.

'செம்பில் வெட்டிக் கொள்வது'என்பது தாமிர சாஸனமாக செப்பேடுகளில் எழுதி, ஒரு ஏட்டுக்கு மேல் போனால் ஒட்டை பண்ணி வளையம் போட்டுக் கோத்து வைப்பதாகும். இதற்கும் உள்ளூர் ஸபையார் அங்கீகாரம் கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட செப்பேடுகளும் கோவில்களிலேயே பாதுகாப்பாக பூமிக்கு அடியிலுள்ள "க்ஷேமம்"என்கிற (க்ஷேமம் என்றால் பாதுகாப்பு என்றுதானே அர்த்தம்?) இடத்தில் வைக்கப்படும். தேச வாழ்வே ஈச்வரன் கையில் ஒப்பிக்கப்பட்ட, ஆலயம் என்பதே ஒரு நாட்டின் உயிர்நிலையாகக் கருதப்பட்டு வந்தால், இப்படி அதுவே ரிஜிஸ்திரார் ஆபீஸ், எபிக்ராஃபி ஆபீஸ் எல்லாமாக

இருந்தது!அந்த விஷயம் இருக்கட்டும். ஊர் தோறும் இருந்த ஸபை விஷயத்துக்கு வருகிறேன். ஒவ்வொரு ஊரிலும் பிராம்மணர்கள் அங்கம் வஹிப்பதாக இந்த "ஸபை" என்பது இருந்தது. அதில் வேதமும் மந்திரப் பிராம்மணமும் தெரிந்தவன் அங்கத்தினனாகலாம். அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் உண்டு. இன்ன இன்ன குற்றம் செய்தவர்களும் அவர்களுடைய பந்துக்களும் ஸபைக்கு அங்கத்தினர் ஆகக்கூடாது என்ற நியதியும் உண்டு. அங்கத்தினராவதற்குப் போட்டி போடும் ஒவ்வொருவர் பெயரையும் ஒலையில் எழுதிக் குடத்தில் போட்டு ஒரு குழந்தையைக் கொண்டு எடுக்கச் சொல்லுவது வழக்கம். அப்படி எடுத்த ஒலையில் உள்ள பெயருடையவர் ஸபைக்கு அங்கத்தினராவர். உத்தரமேருர் என்னும் ஊரில் உள்ள சிலாசாஸனத்தில் இந்த விஷயங்கள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

அந்த ஸபையினருக்குள் பல பிரிவுகள் உண்டு. நீருக்காக ஒரு பிரிவு, வரி போட ஒரு பிரிவு முதலிய பல பிரிவுகள் உண்டு. தர்மத்துக்கு நிலம் கொடுத்தாலும், பணம் கொடுத்தாலும், மாடு ஆடுகளைக் கோயில்களுக்கு விட்டாலும், தீபம் போடுவதற்காக ஏற்பாடு செய்தாலும் இப்படி எதுவானாலும் அந்த ஸபையினர் மூலமாக விடவேண்டும். அவர்கள் அதை அங்கீகரிப்பார்கள். அந்த தர்மசாஸனத்தில் 'இங்ஙனம் ஸபையோம்' என்று அவர்கள் கையெழுத்து போடுவார்கள். அப்படி உள்ள கையெழுத்துக்களால் பல அங்கத்தினருடைய பெயர்கள் இப்பொழுது தெரியவருகின்றன. அவற்றிலிருந்து 'ஷட்கர்மநிரதன்'என்றும் 'சடங்கவி'என்பது 'ஷடங்கவித்'என்பதன் சிதைவாகும். ஷட்+அங்கம் +வித் - அதாவது "ஆறு அங்கங்களை அறிந்தவன்" என்பது அதன் அர்த்தம். அந்த பிராம்மணர்கள் ஆறு அங்கங்களையும் அறிந்தவர்கள் என்று தெரியவருகிறது. இப்படி நம் நாட்டின் சின்ன சின்ன ஊர்களில் கூட எத்தனை ஷடங்கவித்துக்கள் இருந்திருக்கிறார்கள் என்று பழைய சாஸனங்களிலிருந்து தெரிகிறது. இவர்கள் முக்கியமாக வைதிக கர்மாநுஷ்டான செய்தவர்கள்தானே? இதனால் தான் வைதிக கர்மாக்களுக்கே "சடங்கு" என்று சொல்லும் வந்தது. ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்குப் பெண் கொடுக்க வந்தவருக்கு 'சடங்கவி சிவாசாரியார்'என்றே பெயர் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*ஷடங்கங்கள்*

*ஆறு அங்கங்கள்*

அந்த ஆறு அங்கங்களாவன:சிக்ஷை (எழுத்திலக்கணம்), வியாகரணம் (சொல்லிலக்கணம்), நிருக்தம் (நிகண்டு), கல்பம் (கர்மாநுஷ்டான முறை), சந்தஸ் (பாவிலக்கணம்), ஜ்யோதிஷம் (சோதிடம்) என்பவை. பிராம்மணன் வேதங்களையும் இந்த ஆறு அங்கங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். முதலில் வேதாத்யயனம் செய்யவேண்டும். அந்த வேதத்திற்கு அர்த்தம் தெரிந்து கொள்ளும் பொருட்டு, இந்த ஆறு அங்கங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

வேத புருஷனுக்கு சிக்ஷை மூக்கு;வியாகரணம் முகம் அதாவது வாய் (வியாகரணப்படி ஒன்றைச் சொல்ல முடியாவிட்டால் உளற வேண்டும்);கல்பம் கை; நிருக்தம் காது;சந்தஸ் பாதம்;ஜ்யோதிஷம் கண்;நிருக்தம் காது; சந்தஸ் பாதம்; ஜ்யோதிஷம் கண். ஜோஸ்யம் என்பது ஜ்யோதிஷத்தையே ஆகும்.

ஏன் இப்படி ஒவ்வொரு சாஸ்திரத்தை ஒவ்வொரு அவயமாகச் சொல்லியிருக்கிறது என்பதை அந்தந்த சாஸ்திரத்தைப் பற்றிச் சொல்லும்போது பார்க்கலாம்! பொருத்தமாகத்தான் இப்படி வைத்திருக்கிறார்கள் என்று தெரியும்.

முதலில் 'சிக்ஷை'யில் ஆரம்பிக்கலாம்.

## *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## *சிக்ஷை:வேதத்தின் மூக்கு*

### *மூச்சு அவயவம்*

சிக்ஷை என்பது வேதத்தின் ஆறு அங்கங்களில் பிரதம அங்கம். வேதத்துக்கு நாசி (மூக்கு) ஸ்தானம் சிக்ஷை. மூக்கு என்பதால் மோந்து பார்க்கிற சின்ன உபயோகத்துக்காக ஏற்பட்டது என்று (அர்த்தம்) இல்லை. மூக்கினால்தானே மூச்சு விடுகிறோம்?நமக்குப் பிராணாதாரமான சுவாஸத்தை விடுவதற்கு நாசி உதவுகிறாற்போல், வேத மந்திரங்களுக்கு உயிர் மூச்சாக இருக்கிற அங்கம் சிக்ஷை.

வேத மந்திரங்களுக்கு உயிர் எதில் இருக்கிறது?மந்திரங்களின் ஒவ்வொரு எழுத்தையும், அதன் பரிமாணம் எப்படியிருக்க வேண்டுமோ அப்படிச் சரியாக உச்சரிக்க வேண்டும். 'அக்ஷர சுத்தம்'என்று இதற்குப் பெயர். அதோடுகூட ஒவ்வொரு ஒவ்வொரு எழுத்தையும் உயர்த்திச் சொல்வதா, தாழ்த்திச் சொல்வதா, ஸமனாகச் சொல்வதா என்ற பாகுபாடும் உண்டு. இந்த மூன்றையும் முறையே உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்று சொல்வார்கள். இவை இருக்க வேண்டியபடி இருந்தால் அதற்கே 'ஸ்வர சுத்தம்'என்று பெயர். இப்படியாக அக்ஷர சுத்தம் ஸ்வர சுத்தம் இரண்டும் இருந்தால்தான் மந்திரங்கள் பலன் தரும். மந்திரங்களில் அர்த்தத்தைவிடக் கூட இம்மாதிரி அவற்றின் ஒலி சரியாக இருக்க வேண்டியது தான் முக்கியம். அர்த்தம் தெரியாவிட்டாலுங்கூட, மந்திரங்களின் சப்த ரூபத்தை உள்ளபடி உச்சரித்து விட்டால் அவை பலன் தந்துவிடும். ஆகையால், மந்திர ஸமூஹமாகவே இருக்கப்பட்ட வேதத்துக்கு எது மூச்சு ஸ்தானம் என்றால் சப்தரூபம்தான்.

தேள்கொட்டு மந்திரம் இருக்கிறது. அதற்கு அர்த்தம் சொல்லக்கூடாது. அதில் உள்ள எழுத்துக்களுக்குத்தான் யோக்கியதை உண்டு. சில வகையான சப்தங்களுக்குச் சில சக்தி உண்டு. திவஸ மந்திரங்களை ஸம்ஸ்கிருதத்திலே ஏன் சொல்ல வேண்டும்?இங்கிலீஷிலாவது தமிழிலாவது சொன்னால் என்ன?அப்பொழுது சப்தம் வேறாய் விடுகிறது. அந்த சப்தந்தான் பிரதானம். பில்லி சூனியம் வைக்கிறவர்களுடைய பல்லைத் தட்டிவிட்டால் அவர்கள் செய்கிறது பலிக்காது. ஏனென்றால் பல் போனபின்பு உச்சாரணத்தில் தப்பு

ஏற்படும். உச்சாரணம் வேதத்துக்குப் பிரதானம். அது ஸரியாக இருக்க என்ன செய்வது? அக்ஷரத்தை இப்படியிப்படி ஒலிக்க வேண்டுமென்று நன்றாக வரையறுத்து லக்ஷணம் சொல்ல வேண்டும்.

இப்படி அக்ஷர லக்ஷணத்தைச் சொல்வதுதான் சிக்ஷை என்பது. வேதாக்ஷரங்களின் லக்ஷணத்தை வரையறை செய்து கொடுப்பதே சிக்ஷா சாஸ்திரம்.

ஒரு பாஷையில் இப்படியிப்படி உச்சரிக்கவேண்டும் (pronounce பண்ணவேண்டும்) என்று முறைப்படுத்துகிறதை phoneticsஎன்கிறார்கள். மற்ற பாஷைகளை விட வேத பாஷைக்கு இந்த ஃபோனடிக்ஸ் ரொம்பவும் முக்கியம். ஏனென்றால் உச்சரிப்பு மாறினால் பலனே மாறிவிடுகிறதை அந்தப் பாஷையில் பார்க்கிறோம். இப்படிப்பட்ட Vedic Phonetics-ஆக இருப்பதால்தான் சிக்ஷா சாஸ்திரத்தை வேத புருஷனின் ஆறு அங்கங்களில் முதலாவதாக வைத்துள்ளார்கள். தமிழில் அதை "எழுத்திலக்கணம்"என்று சொல்லலாம்.

சிக்ஷையைப் பற்றி வேத முடியான உபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறது. தைத்திரீய உபநிஷத்து "சீக்ஷாவல்லி"என்பதிலேயே ஆரம்பிக்கிறது. அதன் முதன் மந்திரம் "சீக்ஷா சாஸ்திரத்தை இப்போது வியாக்யானம் பண்ணுவோமாக, அதாவது விளக்குவோமாக!என்று ஆரம்பிக்கிறது.

இங்கேயும் சரி, மற்றும் அநேக வேத நூல்களிலும் சரி, 'சிக்ஷா'என்பதை நீட்டி 'சீக்ஷா' என்றே சொல்லியிருக்கும். ஆசார்யாள் (ஆதி சங்கரர்) தம்முடைய பாஷ்யத்திலே 'தைர்க்யம் சாந்தஸம்"என்கிறார். தைர்க்யம் என்றால் தீர்க்கமாக ஆவது;அதாவது, குறிலாக இருக்கவேண்டிய 'சி'நெடிலாக 'சீ'என்று ஆவது. தமிழில்கூடப் 'பொயட்ரி'யில் 'நிழல்' என்பதை நீட்டி 'நீழல்', 'திருவடி நீழல்' என்கிறோம். வேத பாஷைக்கு ஸம்ஸ்கிருதம் என்று பேர் இல்லை என்றும், அதற்கு சந்தஸ் என்றே பேர் என்றும் முன்னே சொன்னேனல்லவா? 'சாந்தஸம்' என்பது அப்படிப்பட்ட சந்தஸ் பாஷையை, அதாவது வேதத்துக்கேயான விசேஷப் பிரயோகத்தைச் சொல்வது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*சிக்ஷை:வேதத்தின் மூக்கு*

ஹார்மோனியத்திலும், நாயனத்திலும், புல்லாங்குழலிலும் காற்றைப் பலவிதமாக அளவுப்படுத்திச் சில இடைவெளிகளால் விடுகிறதால்தானே சப்தம் உண்டாகிறது?நம் தொண்டையிலும் அப்படிப்பட்ட அமைப்பு இருக்கிறது. தொண்டை மட்டுமில்லை;நாபிக்குக் கீழே மூலாதார ஸ்தானத்திலிருந்து சுவாஸம் என்கிற காற்றின் கதியைப் பல தினுசில் அளவு படுத்திக் கொண்டு வருவதால்தான் நாம் பேசவும் பாடவும் முடிகிறது. பகவான் பண்ணின இந்த மநுஷ்ய வாத்யம் ஹார்மோனியம், நாயனம் முதலியவற்றை விட சிரேஷ்டமானது. எப்படியென்றால், அவற்றில் வெறும் ஒலிகளை மட்டுந்தான் எழுப்ப முடியும். அ, க, ச, ங மாதிரியான அக்ஷரங்களை எழுப்ப முடியாது. மநுஷ்யனுக்கு மட்டுமே இந்தத் திறமை இருக்கிறது. மிருகங்களும் கூட ஏதாவது ஒரிரண்டு விதமான சப்தங்களைத்தான் போடமுடிகிறதே தவிர, இப்படி இத்தனை ஆயிரம் அக்ஷரங்களை எழுப்ப முடியாது.

மநுஷ்யனுக்கு மட்டுமே இந்த ஆற்றலை ஈச்வரன் தந்திருக்கிறான் என்பதாலேயே அதன் முக்கியத்துவத்தை அறியலாம். இவ்வளவு முக்கியமான ஒன்று, இப்போது நாம் பண்ணுகிற மாதிரி விருதாப் பேச்சில், அரட்டையில் வீணாகக் கூடாது. இதை வைத்துக் கொண்டு தேவ சக்திகளைப் பிடிக்க வேண்டும். அதனால் உலக நலனை உண்டாக்க வேண்டும்;நம் ஆத்மாவை உயர்த்திக் கொள்ள வேண்டும். இந்த மூன்று காரியங்களையும் செய்யும் சப்தங்களாகத்தான் வேத மந்திரங்களை ரிஷிகள் பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள். இதைப் புரிந்து கொண்டால் உச்சாரணத்துக்கே இத்தனை மதிப்பு கொடுத்து சிக்ஷா சாஸ்திரம் என்ற ஒன்று ஏன் ஏற்பட்டிருக்கிறது என்பது புரியும். அதிலே ரொம்பவும் மைன்யூட்டாக (நுணுக்கமாக) இன்றைய பாஷா சாஸ்திர நிபுணர்களும், ஸயன்டிஸ்ட்களும்கூட ஆச்சரியப்படும் படியாக, அடிவயற்றிலிருந்து ஆரம்பித்து இன்னின்ன மாதிரிக் காற்று புரளும்படியாகப் பண்ணி, அது இன்னின்ன இடத்திலே பட்டு, வாய்வழியாக இப்படியிப்படி வரவேண்டும் என்று அக்ஷரங்களை அப்பழுக்கில்லாமல், அக்யூரேட்டாக நிர்ணயம் பண்ணிக் கொடுத்திருக்கிறது.

காற்றானது இப்படி நமக்குள்ளே பல விதமாகச் சொல்கிறபோது அதுவும் ஒரு தினுசில் யோக ஸாதனையாகவே ஆகிறது. ச்வாஸ கதியினால் நம் நாடிகளில் ஏற்படுகிற சலனங்களால்தான் நம்முடைய உணர்ச்சிகள், சக்திகள் எல்லாம் உருவாகின்றன என்றும், 'அண்டத்தில் இருப்பதெல்லாம் பிண்டத்தில் உண்டு'என்றபடி இதே சலனங்கள் வெளி லோகத்திலும் அநேக விதமான அதிர்வுகளை ஏற்படுத்தி உலக வியாபாரத்தை உண்டாக்குகிறது என்றும் முன்னேயே சொன்னேனல்லவா?இதனால்தான் மூச்சையடக்கி யோக ஸித்தி பெற்ற மஹான்களுக்கு உள்ள அதே சக்தி மந்திர ஸித்தி பெற்றவர்களுக்கும் உண்டாகிறது. யோகம் என்று நாம் பொதுவிலே சொல்வது ராஜ யோகம் என்றால்,

இதை மந்திர யோகம் என்றே சொல்லலாம்.

மந்திரங்களில் ஒவ்வொரு அக்ஷரமும் இப்படி உண்டாக வேண்டும், அதன் ஸ்வரம் இப்படியிருக்கவேண்டும், 'மாத்திரை'என்பதில் குறில் நெடில் என்பன போன்ற விஷயங்கள் விளக்கப்படும்;குறிலுக்கு 'ஹ்ரஸ்வம்'என்றும், நெடிலுக்கு 'தீர்க்கம்'என்றும் பேர். வார்த்தைகளை ஸந்தி பிரிக்காமல் சேர்த்துச் சொல்கிறதற்கான guidanceமுதலான அநேக விஷயங்கள் - அத்யயனம் செய்கிறவர்களுக்கு உறுதுணையான விஷயங்கள் - சிக்ஷா சாஸ்திரத்தினாலேயே தெரிய வருகின்றன.

'க'மாதிரியான ஒரு சப்தம் கழுத்துக்கும் தொண்டைக்கும் நடுவேயிருந்து இப்படி வரவேண்டும்;இன்னொன்றிலே மூக்காலும் (nasal) வரவேண்டும் (அதாவது ஞ மாதிரியானவை);இன்னின்ன பல்லிலே நாக்குப் பட்டு வரவேண்டும் ('த'முதலிய சப்தங்கள்);இன்னின்ன மேலண்ணத்தில் நாக்குப் பட ஒலிக்க வேண்டும் ('ல'போன்றவை); முழுக்க உதட்டை மடித்து வரவேண்டிய சப்தம் ('ம'); பல்லும் உதடும் சேர்ந்து உண்டாக்க வேண்டியது ('வ'- labio-dentalஎன்று சொல்கிறது) - என்றிப்படி ரொம்பவும் நுட்பமாக அக்ஷர லக்ஷணங்களைச் சொல்லியிருக்கிறது. இது ரொம்பவும் scientific-ஆக (விஞ்ஞான பூர்வமாக) இருக்கிறது. இப்படியிப்படி அங்கங்களையும் தசைகளையும் மூச்சையும் இயக்கினால் இன்ன அக்ஷரம் வரும் என்று சிக்ஷா சாஸ்திரத்தில் சொல்லியுள்ளபடியே நாம் நடைமுறையில் செய்து பார்த்தால் இருக்கிறது. ஸயன்ஸாக இருந்துகொண்டே இது மந்திர யோகமாக, சப்த யோகமாகவும் இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

*சிக்ஷை:வேதத்தின் மூக்கு*

*மூல பாஷையில் ஸம்ஸ்கிருதமே*

வார்த்தையின் அர்த்தத்தைவிட சப்தம் முக்யம் என்று சொன்னேன் இதைச் சொல்லும் போது இன்னொன்றும் நினைவு வருகிறது. வார்த்தையின் சப்தமே அதன் அர்த்தத்தைக் காட்டும்படியாக அநேக பதங்கள் சந்தஸ் என்ற வேத பாஷையிலும், அதை வைத்தே உருவாக்கிய ஸம்ஸ்கிருதத்திலும் இருக்கின்றன. உதாரணமாக, 'தந்தம்'என்று ஒரு வார்த்தை இருக்கிறது. 'பல்'என்று அதற்கு அர்த்தம் என்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கும். பல் நாக்கிலே நன்றாக

அடித்து, அதாவது சப்தத்தை எழுப்புவதில் பல்லுக்கே முக்யமான வேலையைக் கொடுப்பதாக இந்த 'தந்தம்'என்ற வார்த்தையே அமைந்திருக்கிறது. தந்தம் போனவர்களை (பல் இல்லாதவர்களை) 'தந்தம்'என்று சொல்லிச் சொல்லிப் பார்த்தால் தெரியும். அவர்களால் இந்த வார்த்தையை ஸ்பஷ்டமாகச் சொல்லவே முடியாது.

இந்தச் சின்ன விஷயத்திலிருந்து அநேக பாஷைகளை ஒப்பிட்டு ஆராய்ந்து எது முந்தி, எது பிந்தி என்று நிர்ணயிக்கிற Comparitive Philogy,கே முக்கியமான ஒரு ஸமாசாரம் தெரிகிறது. ஸம்ஸ்கிருதம், க்ரீக், லாடின் (லத்தீன்), ஜெர்மன் (ட்யூடானிக் என்பது;இங்கிலீஷ் பாஷையும் ட்யூடானிக்கில் சேர்ந்ததுதான்) இன்றைய பிரெஞ்சு உள்பட அநேக பாஷைகளுக்கு மூலமான ஸெல்டிக் போன்ற பல மொழிகள் ஒரே தாய்பாஷையிலிருந்து வந்தவை என்று சொல்லி இவற்றை 'இண்டோ யூரோபியன் குரூப்'என்று ஃபைலாலஜியில் சேர்த்து வைத்திருக்கிறார்கள். எது தாய்ப்பாஷை என்பதில் மட்டும் முடிவான அபிப்ராயம் ஏற்படவில்லை. ஸம்ஸ்கிருதம் (இப்படிச் சொல்லும்போது வேத பாஷையான சந்தஸையும் சேர்த்துதான் சொல்லப்படுகிறது) தான் ஆதி பாஷை, தாய்பாஷை என்றால் அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. ஆனால் இப்போது சொன்ன 'தந்தம்' போன்ற வார்த்தைகள் ஸம்ஸ்கிருதம்தான் மூலபாஷை என்று சொல்வதற்குச் சான்றாக இருக்கின்றன.

Dental (டென்டல்) என்று இன்றைக்கு இங்கிலீஷில் சொல்வதும் பல்லைக் குறிப்பதுதான். 'தந்த் - டென்ட்'என்கிறதில் நிறைய ஒற்றுமை நமக்குத் தெரிகிறது . பிரெஞ்சு, லாடின் முதலான பாஷைகளிலும் 'டென்ட்' ஸம்பந்தமே தெரிகிறது. அதாவது 'ட' காரம் வருகிறதே தவிர, ஸம்ஸ்கிருதத்தில் உள்ள 'தந்த'த்தில் வருகிற 'த' காரம் இல்லை. "இருந்துவிட்டுப் போகட்டும். இதனால் ஸம்ஸ்கிருதம் மூலபாஷை என்று எப்படி ஆகும்? ஏன் 'டென்டல்'என்பதிலிருந்துதான் ஸம்ஸ்கிருத 'தந்தம்'வந்தது என்று வைத்துக் கொள்ளக் கூடாது?"இப்படிக் கேட்டால், இங்கிலீஷ், பிரெஞ்சு, லாடீன் எல்லாவற்றுக்கும் ஸம்ஸ்கிருதமே தாய்ப்பாஷை என்பதற்கு 'தந்தம்' என்கிறதில் வருகிற சப்தங்களே ஆதரவாயிருக்கிறது. எப்படியென்றால் மேலே சொன்னது போல், "தந்தம்" என்பதைச் சொல்லவே தந்தம் (பல்) வேண்டியிருக்கிறது. 'டென்டல்'முதலான மற்ற பாஷை வார்த்தைகளைச் சொல்லிப் பாருங்கள். அதிலே பல் ஸம்பந்தமே இல்லை. நாக்கின் நுனி மேலண்ணத்தில் படுவதாலேயே 'டென்ட்'சப்தம் உண்டாயிருக்கிறது. வார்த்தையே அர்த்தத்தை குறிப்படுமானால், அது ஸம்ஸ்கிருத 'தந்த'த்தில் தான். அதனால் இது தான் மூல ரூபம்;இதுதான் திரிந்து 'டென்டல்'வந்தது என்று தெரிகிறது.

இன்னும் சில வார்த்தைகளில், ஒன்றின் எழுத்துக்களை மாற்றுவதாலேயே அதோடு ரொம்பவும் ஸம்பந்தமுள்ள இன்னொன்றைக் குறிப்பிடும் வார்த்தை

உண்டாகிறது. சிங்கத்துக்கு முக்யமான குணம் என்ன?ஹிம்ஸை செய்வது. "ஹிம்ஸ" என்ற எழுத்துக்கள் மாறியே 'ஸிம்ஹ'என்றாகியிருக்கிறது. 'கச்யபர்'ரிஷிகளுக்கெல்லாம் முதன்மையானவர். தேவஜாதி, அஸுர ஜாதி, மநுஷ்ய ஜாதி எல்லாவற்றுக்கும் மூல புருஷர். அவருக்கு ஏன் இந்தப் பேர் வந்தது?அவரே ஸத்யத்தைப் பார்த்தவர்;அதாவது உண்மையை உள்ளபடி அறிந்த ஞானி. ஞானத்தைப் பார்வை (த்ருச்யம்) என்றே சொல்வது வழக்கம். கச்யபரே "பார்த்தவர்". "பார்த்தவர்"என்பதற்கு ஸம்ஸ்கிருத பதம் 'பச்யக'என்பது. 'பச்யக'என்பதன் எழுத்துக்களே மாறி 'கச்யப'என்று வந்தது. "பச்யக"தான் "பார்ப்பான்" என்பது!ஸத்ய தத்துவத்தைத் தெரிந்து கொண்டவர்கள் என்ற அர்த்தத்தில் பிராம்மண ஜாதிக்குத் தமிழிலே இப்படி உயர்ந்த பெயர் உண்டாயிற்று. இப்போது அதுவே மட்டந்தட்டுகிற வார்த்தையாக உபயோகிக்கப்படுகிறது.

## *தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## *சிக்ஷா:வேதத்தின் மூக்கு*

## *உச்சரிப்பு விதிகள்*

உச்சாரணம், ஸ்வரம், மாத்திரை, பலம், ஸமம், ஸந்தானம் என்ற பல விஷயங்களை சிக்ஷா சாஸ்திரம் சொல்லி, ஒவ்வொரு மந்திரத்தையும் ஒரு மயிரிழைகூட அதன் சப்த ரூபம் தப்பாத வகையில் வகுத்துக் கொடுக்கிறது. அதிலும் இன்னின்ன எழுத்துக்கள் மநுஷ்ய சரீரத்தில் இன்னின்ன இடத்தில் பிறப்பவை, இவை இப்படிப்படியான முயற்சியால் உண்டானவை என்று அது நிர்ணயித்திருக்கிறது ரொம்பவும் ப்ராக்டிலாகவும், ஸயண்டிஃபிக்காகவும் இருக்கிறது. உதடுகளை இப்படிச் சேர். இன்ன சப்தம் வரும் என்று அது சொன்னால் வாஸ்தவத்தில் அப்படியே இருக்கிறது. இதைச் சொல்லும்போது ஒன்று ஞாபகம் வருகிறது. ப,ம,வ போன்ற சப்தங்களில்தானே உதட்டுக்கு வேலை இருக்கிறது?க,ங,ச,ஞ,ட,ண,த,ந முதலியவற்றில் உதடு படுவதில்லை இல்லையா?இப்படி உதடு படாத சப்தங்களைக் கொண்ட வார்த்தைகளாலேயே ஆன ராமாயணம் ஒன்றை ஒருத்தர் எழுதியிருக்கிறார். அதற்கு 'நிரோஷ்ட ராமாயணம்'என்றே பேர். 'ஒஷ்டம்'என்றால் உதடு:அதிலிருந்து 'ஔஷ்ட்ரக ம்'என்பது தமிழில் ஒட்டகம் ஆயிற்று. 'நிர்- ஒஷ்டம்'என்றால் உதடு இல்லாதது

என்று அர்த்தம். தன்னுடைய பாஷா ஸாமர்த்தியத்தைக் காட்டுவதற்காக அவர் இப்படி நிரோஷ்டமாக ராமாயணம் பண்ணினதாகத் தோன்றலாம். ஆனால் எனக்கு இன்னொரு காரணமும் தோன்றுகிறது. அவர் ரொம்பவும் மடிக்காரராக (ஆசார சீலராக) இருந்திருக்கக்கூடும்!அதனால் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் கதையைப் பாராயணம் செய்கிற போது, எச்சில் படாமலே இருக்க வேண்டும் என்று இப்படி உதடு சேராத விதத்தில் பண்ணினார் போலிருக்கிறது!

வேதாக்ஷரங்களை எத்தனை கவனத்தோடு, ஜாக்ரதையோடு சொல்ல வேண்டும் என்பதற்குப் பாணினி மஹரிஷி செய்த 'பாணினீய சிக்ஷா'வில் ஒரு அழகிய ச்லோகம் இருக்கிறது.

வ்யாக்ரீ யதா ஹரேத் புத்ரான்

தம்ஷ்ட்ராப்யாம் ந ச பீடயேத்।

பீதாபதனபேதாப்யாம்

தத்வத் வர்ணான் ப்ரயோஜயேத்।।

வேதாக்ஷரங்களை ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டும். சப்த ரூபம் கொஞ்சங்கூட குழறுபடியாகக் கூடாது. ஒலி நழுவி விடவே கூடாது. அதற்காக ரொம்பவும் நறுக்கு நறுக்கு என்றும் சொல்லக் கூடாது. வேத எழுத்துக்களை கீழே நழுவாதபடியும் அழுத்தி ஹிம்ஸிக்காமலும் உச்சரிக்க வேண்டும். எப்படியென்றால் ஒரு பெண்புலி, தன் குட்டிகளைக் கவ்விக் கொண்டு போவது போல!பூனை, எலி முதலானதுகள் குட்டியைப் பல்லால் கவ்வுகின்றன. கீழே விழாதபடி கெட்டியாகக் கவ்வுகின்றன. ஆனாலும் குட்டிக்கு வலிக்கிற மாதிரியாக கடித்துவிடுகிறதா?இல்லை. அந்த மாதிரி நாசூக்காக அக்ஷரங்களை உச்சரிக்க வேண்டும் என்பது ச்லோகத்தின் பொருள். இதே பாணினிதான், வேதாந்தங்களில் அடுத்ததான வியாகரணத்திலும் முக்கியமான நூலை உபகரித்திருக்கிறார். பாணினியைத் தவிர இன்னம் அநேக மஹரிஷிகளும் சிக்ஷா சாஸ்திரங்கள் எழுதியிருக்கிறார்கள். இப்படிக் கிட்ட தட்ட முப்பது இருப்பதாகத் தெரிகிறது. பாணினியுடையதும், யாக்ஞவல்கிய சிக்ஷையும் விசேஷமானவை.

"ப்ராதிசாக்யம்"என்பதாக ஒவ்வொரு வேத சாகைக்கும் விசேஷமாகவும் வித்யாஸமாகவும் உள்ள வேத சப்தஸ்வரங்களை விரிவாக ஆராய்கிற நூல்களும் ஒவ்வொரு வேதத்துக்கும் உண்டு. இவற்றில் சிலவும் இவற்றுக்குரிய பிராசீனமான வியாக்யானங்களும் கிடைத்திருக்கின்றன. இவையும் "சீக்ஷா"என்பதில் அடங்கியவையே.

## *பல மொழிகளின் லிபிகள்*

இன்ன ஒலிக்கு இது அடையாளம் (வரி வடிவம்) என்று காட்டுவதற்குத்தான் பல எழுத்துக்களைக் கொண்ட வெவ்வேறு லிபிகள் தோன்றியிருக்கின்றன. இங்கிலீஷ் முதலான பாஷைகளின் 'ஆல்ஃஃபெட்டை' ரோமன் லிபி (Roman Script) என்கிறோம். பிராம்மி என்ற ஒரு லிபி இருந்தது. அசோக சாஸனங்கள் அதில் எழுதியதுதான். அதிலிருந்தே இப்போது ஸம்ஸ்கிருதத்துக்கு வழங்குகிற க்ரந்த லிபியும், தேவநாகிரி லிபியும், மற்றும் தமிழ் முதலான அநேக இந்திய லிபிகளும் உருவாயிருக்கின்றன.

பிராம்மி லிபியின் இரண்டு விதமான பிரிவுகளில் தக்ஷிணத்தில் வழங்கி வந்த பல்லவ -க்ரந்தம் என்பதிலிருந்து தான திராவிட பாஷைகளின் லிபிகள் ஏற்பட்டுள்ளன. எல்லா லிபிகளுக்குள்ளும் தெலுங்கு லிபிக்கு ஒரு விசேஷம் உண்டு. மற்ற லிபிகளிலெல்லாம் தக்ஷிணாவர்த்தமாக, அதாவது வலது பக்கம் சுழித்து எழுத்துக்கள் எழுதப்படுகின்றன. தெலுங்கில் மட்டும் வாமாவர்த்தமாக இடது பக்கம் சுழித்து எழுத்துக்கள் இருக்கின்றன. ஈச்வரனின் வாமபாகத்திலிருக்கிற பராசக்திக்கு வாமமார்க்கம் என்ற உபாஸனையும் உண்டு. இடது அவளுக்கு விசேமானதால் அவளுக்குரிய ஸ்ரீசக்ரத்தில் அக்ஷரங்களை ஆந்திர லிபியிலேயே எழுத வேண்டும் என்பதுண்டு. ஆந்திர பாஷை சிவப் பிரதானமானது என்பார்கள். ஏனென்றால் மற்ற எல்லா இடங்களிலும் மஹா விஷ்ணுவின் ஷ்டாக்ஷரத்துடனேயே அக்ஷராப்யாஸத்தை (படிப்புத் தொடக்கத்தை) ஆரம்பிக்கிறார்களென்றால், தெலுங்கு தேசத்தில் சிவ பஞ்சாக்ஷரத்துடன் தொடங்குகிறார்கள். ஆந்திர தேசமும் தெற்கே காளஹஸ்தி, மேற்கே ஸ்ரீ சைலம், வடக்கே கோடிலிங்க க்ஷேத்ரம் என்பதாக மூன்று சிவஸ்தலங்களுக்குள் - த்ரிலிங்கங்களுக்குள் - அடங்கியிருப்பதால்தான் அதற்கு தெலுங்கு தேசம் என்ற பெயரே உண்டாயிற்று. இதனால்தான் அப்பைய தீக்ஷிதர் தாம் ஆந்திரராகப் பிறக்கவில்லையே என்று குறைப்பட்டு ச்லோகம் செய்திருக்கிறார்.

ஆந்த்ரத்வம் ஆந்த்ரபாஷாசாப் - யாந்த்ர தேச ஸ்வஜன்ம பூ:।

தத்ராபி யாஜுஷீ சாகா ந(அ) ல்பஸ்ய தபஸ:பலம்।।

ஸாமவேதியாகப் பிறந்தவர் அப்பைய தீக்ஷிதர். "வேதங்களுக்குள் நான் ஸாமவேதம்" என்றே பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார். ஆனால் சிவ பக்த சிகாமணியான தீக்ஷிதர். சிவபஞ்சாக்ஷர மந்திரத்தைத் தனது மத்தியில் கொண்டதான யஜுர் வேதத்தில் ("யாஜுஷீ சாகா"என்று இதையே ச்லோகம் சொல்கிறது) பிறப்பதற்கும், தெலுங்கு தேசத்தில் பிறப்பதற்கும் தபஸ் செய்திருக்கவில்லையே என்று குறைப்பட்டிருக்கிறார். லிபி விஷயத்துக்கு வருகிறேன். இப்போதுள்ள இந்திய லிபிகள் எல்லாம் பிராம்மியிலிருந்து வந்தவைதான் என்றாலும் ஆதியிலிருந்த பிராம்மி லிபியைப் பார்த்தால் நமக்கு ஒன்றுமே புரியாது. அதனால் புரியாத விஷயத்தை "பிராம்மி லிபி"என்று சொல்ல ஆரம்பித்தார்கள். அப்புறம், அது திரிந்து பிரம்மா நம் நெற்றியிலே எழுதியிருக்கிற "பிரம்ம லிபி"யோடு ஒன்றாக்கப்பட்டுவிட்டது!இப்போது ஒன்றும் புரியாவிட்டால் "பிரம்ம லிபி" என்று நாம் சொல்வது "பிராம்மி லிபி"என்றுதான் இருக்க வேண்டும்.

கரோஷ்டி என்றும் ஒரு லிபி இருந்தது. கர-ஓஷ்டம் என்றால், 'கழுதையின் உதடு' என்று அர்த்தம். கழுதை உதடு துருத்திக் கொண்டு வருகிற மாதிரி அந்த லிபி எழுத்துக்களில் வளைசல்கள் பிதுங்கிக் கொண்டிருக்கும். பார்ஸி பாஷைக்கு அதுதான் லிபி.

ஐரோப்பாக் கண்டத்தின் எல்லா பாஷைகளுக்கும் ரோமன் லிபி ஒன்றேயிருப்பதுபோல் நமக்குப் பொது பிராம்மி. தற்போது அதிலிருந்து வந்த தேவநாகிரியே வடக்கத்தி பாஷைகளின் லிபியில் நன்றாக தெரிகிறது.

ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு விதமான ஒலியைச் சொல்கிறது என்று நமக்குத் தெரியவில்லை. அதனால்தான் "தமிழில் ஏன் 'ன', 'ந' என்ற இரண்டு எழுத்துக்கள் ஒரே சப்தத்துக்கு இருக்கின்றன?வேறு எந்த பாஷையிலும் இப்படி இல்லையே!"என்று நினைக்கிறோம். வாஸ்தவத்தில் 'ன' சப்தத்துக்கும், 'ந'சப்தத்துக்குமிடையே சூக்ஷ்மமான வித்யாசம் உண்டு. 'ந' வில் நாக்கு முன்னம் பல்லின் உள்பக்கம் படும்;"ன" விலோ நாக்கு இன்னும் மேலேறி மேலண்ணத்தைத் தொடும். தெலுங்கிலேகூட ஒரே 'ந'தான். மற்ற பாஷைகளிலும் இப்படியே.

தமிழுக்கும் தெலுங்குக்கும் மட்டும் பொதுவாயிருப்பது 'ர', 'ற' என்ற இரண்டு வகை இருப்பது. ஒன்று இடையினம், மற்றது வல்லினம் என்று சொல்லுகிறோம். மற்ற பாஷைகளில் இப்படி இரண்டு இல்லை. இதிலும் தமிழுக்கும் தெலுங்குக்கும் ஒரு வித்யாஸம் உண்டு. தமிழில் வல்லின 'ற'மட்டுமே ஒற்றோடு கூட 'ற்ற'என்று சேர்ந்து வரும். 'குற்றம்', 'சுற்றம்', 'மற்றும்', சொற்றுணை'என்கிற மாதிரி வார்த்தைகளில் இப்படி வருகிறது. ஆனாலும் இங்கே எழுத்தைப் பார்த்து ஒலியை அப்படியே உச்சரிப்பதில்லை. 'குட்றம்', 'சுட்றம்', 'மட்றும்',

'சொட்றுணை'என்கிற மாதிரி 'ற'கர ஒற்றானது 'ட'கர ஒற்றானது போலவே உச்சரிக்கிறோம். தெலுங்கில் இப்படி வராது. இதற்கு மாறாக, தெலுங்கிலே குதிரைக்கு என்ன சொல்கிறார்கள்?'குர்ரம்'என்கிறார்கள். 'ர்'ஸவுண்டும், 'ர'ஸவுண்டும் கொஞ்சங்கூட மாறாமல் உள்ளபடியே சொல்கிறார்கள். தமிழில் இப்படி 'ர்ர'உள்ள வார்த்தையே கிடையாது.

தெலுங்கு பாஷையில் உள்ள வேறு சில விசேஷ சப்தங்கள்:சில இடங்களில் 'ஜ'என்பதை **j**சப்தமாக இல்லாமல் **z**சப்தமாக சொல்கிறார்கள். 'சால'என்பதை 'த்ஸால'என்பதுபோல் சில இடங்களில், 'ச' வுக்கு 'த்ஸ' என்று, சொல்கிறார்கள். ஸம்ஸ்கிருதத்துக்கான தேவநாகிரி, க்ரந்த லிபிகளில் 50 எழுத்து இருக்கிறதென்றால், தெலுங்கிலே ஜகாரத்திலும் சகாரத்திலும் ஒவ்வொன்று அதிகமிருக்கிற எழுத்துக்களைச் சேர்த்து 52 இருக்கின்றன. மஹாராஷ்ட்ர பாஷையிலும் இந்த

ஸூக்ஷ்மமான இரண்டு சப்தங்களும் இருக்கின்றன. இரண்டாவது 'த'(tha)வை நாலாவது 'த'(dha)வாகவும் தெலுங்கர்கள் மாற்றிக் கொள்வதுண்டு. தியாகய்யர்வாள் பாட்டிலேயே இப்படிச் சில இடங்களில் இருக்கிறதென்று ஒருத்தர் சொன்னார்.

ஒரு பாஷையில் உள்ளதை அப்படியே இன்னொரு பாஷையின் லிபியில் எழுதுகிற போது (transliterate பண்ணுகிற போது) இந்த விஷயங்களைத் தெரிந்து கொண்டு பண்ண வேண்டும். இப்படிப் பண்ணகிறபோது ஸம்ஸ்கிருதத்தில் 'ன'இல்லாததால், 'ஸத்யவான்','தர்மவான்' என்கிற மாதிரி வார்த்தைகளைக் கூட 'ஸத்யவாந்', 'தர்மவாந்'என்றுதான் எழுத வேண்டும். ஆனாலும் தமிழில் இப்படிப்பட்ட வார்த்தைகள் இல்லாததால், நம் கண்ணுக்கு அது விசித்ரமாகப் படும்!உச்சரிப்பு சரியாக இருக்க வேண்டும் என்று Phoneticspelling ஆக எழுதினால் அது நாம் இப்போது எழுதுவதற்கு வித்யாஸமாகத்தான் இருக்கும். தெலுங்கிலே வருவதைக் 'கன்னதல்லி'என்று எழுதாமல், 'கந்நதல்லி'என்றுதான் எழுவேண்டும். அது அச்சிலே விநோதமாகத்தான் இருக்கும்.

உச்சரிப்புக்களை உள்ளபடி தெரிந்து கொண்டால் தமிழில் ன, ந என்ற இரண்டு எழுத்து ஏன் இருக்கிறது என்பது போல் நமக்குப் புரியாமலிருக்கிற பல விஷயங்கள் புரிந்து விடும். இங்கிலீஷில் கூட இப்படியே நமக்கு "ஒரே 'வ'காரத்துக்கு ஏன் V,Wஎன்று எழுத்துக்கள்?"என்று தோன்றினாலும், இவற்றுக்கிடையே வித்யாஸம் உண்டு என்று ஒரு ப்ரொஃபஸர் சொன்னார். 'V' வருகிற இடத்தில் நம் பாஷைகளின் 'வ' மாதிரி கீழ் உதட்டை மடித்து, அதன்

மேலே மேல் வரிசைப் பல் படவேண்டும்; 'W'வரும்போது பல்லே படாமல், உதட்டையே ரவுன்டாகக் குவித்துச் சொல்ல வேண்டும்;ஆகையால் இந்திய பாஷைகளில் வருகிற 'ஸரஸ்வதி', 'ஈச்வரன்'முதலான வார்த்தைகளை Sarasvati, Isvaran என்றுதான் எழுதவேண்டும் என்றார். இன்னொன்று கூட:இங்கிலீஷில் 'ண' கரம் கிடையாது;'ன'தான் உண்டு. ஆனபடியால் 'and', 'band' போன்ற வார்த்தைகளை 'அண்ட்', 'பாண்ட்',என்று எழுதாமல் 'அன்ட்', 'பான்ட்'என்றுதான் எழுதவேண்டும்.

ஸ்பெல்லிங்கைப் பார்த்தே ப்ரொனௌன்ஸியேஷன் (உச்சரிப்பு) சரியாகப் பண்ணுவது என்பது, மற்ற எந்த பாஷையையும் விட ஸம்ஸ்கிருதத்திலேயே பூர்ணமாகத் தப்பில்லாமல் இருக்கிறது. இங்கிலீஷில் ஒரே கோணாமாணா! 'Legistlature wound up'என்று ஸமீபத்தில் பேப்பரில் பார்த்தேன். Wound என்பதை ஏதோ நினைவில் 'வூன்ட்' என்று படித்ததில் அர்த்தமே புரியவில்லை. 'வூன்ட்'என்றால் காயம் அல்லவா?இங்கே 'வௌன்ட்'என்று அதே ஸ்பெல்லிங்கைப் படிக்க வேண்டியிருக்கிறது!'சுற்றுவது' என்கிற அர்த்தமுள்ள wind- க்கு இது past participle. இங்கே 'வௌன்ட் -அப்'என்றால் 'ஸமாப்தி பண்ணப்பட்டது'என்று அர்த்தம். இந்த wind என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டாலும் ஸ்பெல்லிங் ஒன்றாகவே இருந்தாலும், அதைக் காற்று என்ற அர்த்தத்தில் எடுத்துக் கொள்ளும்போது 'வின்ட்'என்று சொல்ல வேண்டும்;'சுற்றுவது'என்ற அர்த்தம் பண்ணும் போது 'வைன்ட்'என்று சொல்ல வேண்டும். இப்படி ஒரே குழப்பம்!B-U-Tபட், C-U-Tகட், என்று இருந்தாலும் P-U-T மட்டும் 'பட்' இல்லை, 'புட்'என்கிறான். வால்க், சால்க் என்று உச்சரிப்புகளைக் கொடுக்கும்படியான Walk, Chalkஎன்பவைகளை வாக், சாக் என்றே சொல்கிறான். கேட்டால், சில எழுத்துக்கள் ஸைலன்ட் ஆகிவிடுகின்றன என்கிறான்.

தமிழில் இப்படியில்லை என்றுதான் தோன்றும். ஆனாலும் ஸம்ஸ்கிருதம் முதலான பிற பாஷைச் சொற்கள் தமிழில் நிறையக் கலந்திருப்பதால் அவற்றைத் தமிழில் எழுதம்போது மற்ற பாஷைகளில் ஒரே அக்ஷரத்தில் உள்ள நாலுவிதமான சப்தங்களைக் குறிப்பிட நாலு எழுத்துக்கள் இருக்கிறபோது, தமிழிலோ நாலுக்கும் ஒரே எழுத்துத்தானே இருக்கிறது என்ற குறை தெரிகிறது. 'கண்'என்பதில் வருகிற 'க' வேறு;'முகம்' என்பதில் வரும் 'க' வேறு. 'முகம்' என்பதில் khaஎன்று அழுத்திச் சொல்லவேண்டும். கங்கை என்பதில் வரும் 'க' வோ இன்னொரு தினுசு;

ரீணீ சப்தமாக உள்ளது. இதையே இன்னம் அழுத்தி gha-காரமாக 'கடம்' என்ற

வார்த்தையில் சொல்ல வேண்டும். Ka, kha, ga, gha இவற்றுக்கு மற்ற இந்திய பாஷைகளில் நாலு எழுத்து இருக்கும்போது, தமிழில் ஒரே 'க' தான் நாலுக்கும் பொதுவாயிருக்கிருக்கிறது. பீமன் கையிலே வைத்திருக்கிற 'கதை' (gadai), எழுத்தாளர்கள் எழுதுகிற கதை (kathai) இவற்றில் இரண்டு அக்ஷரங்களும் வித்யாஸமாயிருந்த போதிலும், தமிழில் ஒரே மாதிரித்தான் எழுத வேண்டியிருக்கிறது. தமிழில் t'a, d'a இரண்டுக்கும் ஒரே 'ட';ta,da இரண்டுக்கும் ஒரே 'த' என்று ஏற்பட்டிருப்பதில், ஸ்பெல்லிங்கை வைத்தே சரியாக உச்சரிக்க முடியாமல் இருக்கிறது. 'தோ(do)ஷம்'என்றால் குறை;'தோ(to)ஷம்'என்றால் மகிழ்ச்சி. ('ஸந்தோஷம்'இதிலிருந்து வந்தது தான்.) ஆனால் இப்படி நேர்மாறாக அர்த்தமுள்ள இரண்டு வார்த்தைகளையும், தமிழில் ஒரே எழுத்துக்களால்தான் எழுத வேண்டியிருக்கிறது!கூடிய மட்டும் லிபியைக் கொண்டே சரியாக உச்சரிக்க வேண்டும் என்பதால்தான் ஸ, ஹ, ஜ, ஷ, க்ஷ முதலான கிரந்த எழுத்துக்களைத் தமிழில் சேர்த்தது. ஆனால் இப்பொழுது, முன்னெல்லாம் கவிப்பண்பை உத்தேசித்து தமிழ்க் கவிதைகளில் மட்டும் செய்து வந்தது போல் வசன நடையிலும்கூட இந்த எழுத்துக்கள் கூடாது என்கிற ரீதியில் எழுதி வருவதால், குழப்பமாகிறது. ஸம்ஸ்கிருத வார்த்தைகளைத்தான் பூர்ணமாக ஒழித்துக் கட்ட முடியவில்லை என்பதால், அதற்கே விசேஷமான சப்தங்களுக்குரிய இந்த எழுத்துக்களையாவது ஒழித்து விடலாமா என்று ஆரம்பித்திருப்பதில் வார்த்தைகளைத் தப்புத் தப்பாகப் படிக்கும் படி ஆகியிருக்கிறது. 'சாதகம்'என்று எழுதினால் அது 'ஸாதக'மாகவும் இருக்கலாம், 'ஜாதக'மாகவும் இருக்கலாம் என்றால், அர்த்தம் குழம்பித்தானே போகும்?சிலது தவிர்க்க முடியாது. முன்னே சொன்ன மாதிரி க,ச,ட,த,ப முதலானவற்றில் நாலு தினுசான வித்தியாஸம் தெரிவிக்கத் தமிழில் ஆதியிலிருந்தே எழுத்து இல்லை. ஆனால் பிறகு சேர்த்தவைகளைக் கூட இப்போது ஏன் விடவேண்டும்?இதனால் தமிழுக்கு வெற்றியா?ஸம்ஸ்கிருதத்துக்குத் தோல்வியா?பாஷைகள் என்ன, ஒன்றுக்கொன்று சண்டையா போட்டுக்கொள்கின்றன? நாம் தப்புத் தப்பாக வார்த்தைகளைச் சொல்கிறோம் என்பது தவிர இப்படிப்பட்ட பாஷா த்வேஷக் காரியங்களால் ஒரு பலனும் இல்லை. இது இருக்கட்டும். பிற பாஷைச் சொற்களாக இல்லாமல் தமிழிலேயே உள்ள சொற்களை எழுதுவதற்குத் தமிழ் லிபி ரொம்பவும் திட்ட வட்டமாகத்தான் இருக்கிறது. ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, கன்னட பாஷைகளில் க, ச,

ட, த,ப, முதலியவற்றில் நாலுவித ஒலிகள் இருப்பது மாதிரி தமிழ் பாஷையில் கிடையாது. Kha, ga, gha முதலிய சப்தங்கள் இதர பாஷை வாரத்தைகளைத் தமிழில் எடுத்துக் கொள்ளும் போதுதான் வருகின்றன. ஆகையால் தமிழுக்கு என்றே ஏற்பட்ட சப்தங்களை எழுதத் தமிழ் லிபி போதுமானதாகத்தான் இருக்கிறது. இங்கிலீஷில் சொந்த பாஷை வார்த்தைகளையே எழுத்தைப் பார்த்துச் சரியாக உச்சரிக்க முடியாமலிருக்கிறதே, அந்த மாதிரித் தமிழில் இல்லை.

ஆனாலும், இங்கேயும் கூடத் தமிழ் லிபி பூர்ணமாகச் சரியாக இல்லை என்று நான் சொன்னால், உங்களுக்கு ஆச்சர்யமாயிருக்கும்!ஒப்புக் கொள்ளமாட்டீர்கள். ஆனால், நான் பிரத்யக்ஷத்தில் பார்த்த ஒன்றைச் சொன்னால் ஒப்புக் கொள்வீர்கள்.

வடக்கத்திக்காரன் ஒருத்தன் தமிழ் லிபியை (ஆல்ஃபபெட்டை) நன்றாகத் தெரிந்து கொண்டான். அதாவது ஒவ்வொரு எழுத்தையும் எழுத்தெழுத்தாகத் தெரிந்து கொண்டான். அப்புறம் அவனுக்கு வார்த்தை வார்த்தையாக எழுத்துக்களைச் சேர்த்துக் கற்றுக்கொடுப்பதற்கு ஆள் கிடைக்கவில்லை. தேவார திருவாசகங்களை மூல ரூபத்தில் படிக்க வேண்டும் என்ற ஆசையால்தான் அவன் இப்படித் தமிழ் கற்றுக்கொண்டது. 'எழுத்துக்கள் தெரிந்து விட்டதல்லவா?'என்று, அவனே அதற்கப்புறம் தேவாரபுஸ்தகத்தை வைத்துக்கொண்டு, ஒவ்வொரு எழுத்தாகப் பார்த்துப் பாடம் பண்ண ஆரம்பித்தான். அவனுக்குத் தமிழ் பாஷா ஞானம் (மொழியறிவு) இல்லை. ஆனால் அர்த்தம் தெரியாவிட்டாலும் மஹான்களின் வாக்கைச் சொன்னாலே புண்ணியம் என்று இப்படிப் பாடம் பண்ணினான். அப்புறம் ஒருநாள் அவன் என்னிடம் வந்தான். "தேவாரம் சொல்கிறேன்"எனறான். எனக்கு ரொம்பவும் ஸந்தோஷமாயிற்று. சொல்லச் சொன்னேன்.

ஆனால், அவன் சொன்னது எனக்கு வேடிக்கையாயிருந்தது. அவன் அப்பர் ஸ்வாமிகள் திருவையாற்றில் ஸர்வத்தையும் உமாமஹேச்வர ஸ்வரூபமாகப் பார்த்துப் பாடின பிரஸித்தி பெற்ற "மாதர் பிறைக் கண்ணியானை" என்ற பாடலைப் பாடினான். ஆனால் எப்படி பாடினான்? எடுத்த எடுப்பிலேயே நாம் "மாதர்" என்பதை maadar என்கிறோம் என்றால் அவன் maatarஎன்று ஆரம்பித்தான். 'இதென்னடா, தர் புர்ரென்று ஆரம்பிக்கிறானே!'என்று எனக்கு விசித்ரமாயிருந்தது. அப்புறம் malaiyaan mahalod'u (மலையான் மகளொடு) என்பதில் makalot'uஎன்று 'க'வையும் 'ட'வையும் அழுத்தி பாடினான்.

'மலையான் மகளொடு பாடி' என்பதில், நாம் 'paad'i' என்பதை அவன் 'paat'i'என்று பாடினபோது, எனக்குச் சிரிப்பே வந்துவிட்டது. இப்படியே போயிற்று. 'புகுவார்' நாம் சொல்கிற Puhuvaar-ஆக இல்லாமல் Pukuvaar - ஆக இருந்தது. 'யாதும் சுவடு படாமல்'(yaadum s'uvadu pad'aamal) என்பது yaatum chuvat'u pat'aamalஎன்று அவன் வாயில் மாறி ஸ்வரூபம் கொண்டதற்கப்புறம் என்னால் அடக்கவே முடியவில்லை.

வடக்கத்தியான் ஒருத்தன் நம் தமிழ் பாடலைக் கற்றுக் கொண்டு பாடுகிறானே

என்ற சந்தோஷத்தில், அவனை உத்ஸாஹந்தான் படுத்தவேண்டும் என்று அது வரை பேசாமல் இருந்த நான், அதற்கப்புறம் பொறுக்க முடியாமல், அவனுடைய உச்சரிப்பில் இருந்த ஏராளமான கோளாறுகளை அவனுக்கு ஹிதமாக எடுத்துக் காட்டினேன்.

அதற்கு அவன், "நான் என்ன பண்ணலாம்?புஸ்தகத்தில் இப்படித்தானே எழுதியிருக்கிறது?"என்று காட்டினான்.

அவன் சொன்னது வாஸ்தவம்தான். புஸ்தகத்தில் எழுதியிருக்கிற லிபியின்படி பார்த்தால், அவன் சொன்ன விதம் சரிதான். புஸ்தகத்தை வைத்துக்கொண்டு எழுத்தெழுத்தாக நானும் நீங்களும் படித்தாலும் அவன் சொன்ன மாதிரியே தான் படிப்போம்.

ஆகவே தமிழிலும் அநேகம் சப்தங்களை எழுத்திலே மாற்றித்தான் எழுதுகிறோம் என்று தெரிந்தது. குறிப்பாக வார்த்தைகளுக்கு ஆரம்பத்தில் வராமல்

நடுவிலும் முடிவிலும் வருகிற சப்தங்கள் எழுத்திலே வித்யாஸமாகத்தான் ஆகின்றன. 'மஹளொடு'என்று உச்சரிப்பதை 'மகளொடு'என்று எழுதுகிறோம். 'அதற்காஹ'என்று உச்சரிப்பில் சொன்னாலும் 'அதற்காக'என்று உச்சரிப்பில் சொன்னாலும் 'அதற்காக'என்றே எழுதுகிறோம். ஆரம்ப 'க'நடுவிலும் கடைசியிலும் 'ஹ'ஆகிறது. தமிழின் வார்த்தை ஆரம்பத்தில் 'த' வை 'ta' என்கிறோம்;பிறகு வந்தால் '' da'என்கிறோம். 'தந்தை என்கிறபோது முதலில் 'த' என்பது 'ta'ஸவுண்ட்; 'தை'என்பதோ 'dai'ஸவுண்டாயிருக்கிறது. இப்படியே ஆரம்பத்தில் வராமல் நடுவிலே வருகிற 'ட''d'a' தான்;'t ' a' இல்லை. கடவுள், இடம் என்பதில் எல்லாம் 'd'a' தானே சொல்கிறோம்?

இம்மாதிரி விஷயங்கள் தமிழ் இலக்கண நூல்களில் நன்றாக வரையறுத்துச் சொல்லியிருக்கிறது. ஸம்ஸ்கிருதத்தில் போலவே ஸம்ஸ்கிருதத்தில் போலவே தமிழிலும் 'தொல்காப்பியம்', 'நன்னூல்'முதலான அநேகம் உயர்ந்த புஸ்தகங்களில் வார்த்தைகளின் ரூபம், சப்த ரூபம், அவற்றில் ஏற்படுகிற வித்யாஸம் முதலியவைகளைச் சொல்லித்தான் இருக்கிறது. இந்த எழுத்தின் பின் s'aஎன்பது cha ஆகும்;ka என்பது ha சப்தத்தைக் கொடுக்கும்என்றெல்லாம் விதி இருக்கிறது.

பொதுவாக, தமிழில் வார்த்தையின் முதலில் 'க'வரும் போது ka சப்தமாகவும், நடுவிலும் முடிவிலும் வரும்போது ha சப்தமாகவும் இருக்கிறது. 'த'என்பது வார்த்தை முதலில் ta-வாகவும், பிற்பாடு da-வாகவும்;இப்படியே 'ப'வும் முதலில் pa-வாகவும், பிற்பாடு ba-வாகவும் தொனிக்கிறது. (தமிழ் வார்த்தையின்

நடுவிலோ, முடிவிலோ தனியாக 'ப'வருவதாகத் தெரியவில்லை. 'அன்பு', 'அம்பு', 'இன்பம்'என்பது போல் கூட்டுச் சப்தமாகத்தான் வருகிறது. ஜபம், சாபம், கபம், சுபம் என்கிறதுபோல, நடுவிலே தனி 'ப' வரும் வார்த்தைகள் ஸம்ஸ்கிருதத்திலிருந்து வந்தவைதான்) 'ச' விலே ஒரு வேடிக்கை. க-ங-ச-ஞ-ட-ண-த-ந-ப-ம- என்கிற போது ka-nga-cha-ngya-t'a-na-ta-na-pa-ma என்று cha-காரமாகச் சொன்னாலும், தமிழில் க,த,ப முதலியன ஆரம்பத்தில் வரும்போது ka,ta,pa என்றே தொனிப்பது போல், 'ச' என்பது cha-வாகத் தொனிக்காமல் s'a என்றே தொனிக்கிறது. சட்டி,சிவப்பு என்பதை s'atti, s'ivappu என்றுதான் சொல்கிறோம். ஆனால் ஒற்றெழுத்தோடு சேரும்போது chcha சப்தம் வந்து விடுகிறது;s's'aஅல்ல - அச்சம், பச்சை, குச்சு என்பது போல!'சொல்'என்கிறபோது s'ol என்கிறோம். அதையே பெயர்ச்சொல், வினைச்சொல் என்னும்போது peyarchchol, vinaichchol என்கிறோம். ஆனால், தமிழிலிருந்தே வந்த மலையாளத்தில், வார்த்தை ஆரம்பத்திலேயே 'ச' வுக்கு cha சப்தம் கொடுக்கிறார்கள். சிவப்பு என்பதை மலையாளிகள் chivappu என்றுதான் சொல்வார்கள். இன்னொரு பக்கத்தில், சில ஸமயங்களில் வார்த்தைக்கு நடுவே 'ச்ச' வரும்போது chcha என்று சொல்லாமல் s's'a என்றும் சொல்கிறார்கள். காவிச் சேரி, நெல்லிச்சேரி முதலான ஊர்ப் பெயர்களை நாம் (தமிழர்கள்) Kaavis's'eri, Nellis's'eri என்கிறார்கள். தெலுங்கிலே 'ர்ர' வருகிற மாதிரி, மலையாளத்தில் s's'aஇருக்கிறது. அச்சன், எழுத்தச்சன் என்னும்போது, நம்மாதிரி chcha சப்தமாகவும் சொல்கிறார்கள்.

தமிழிலக்கண நூல்களைப் பார்த்தால், இந்த மொழியின் genius (பண்பு) படி, எந்தெந்த இடத்தில் எந்தெந்த சப்தம் எப்படியிப்படி ஆகும் என்பது விளக்கமாகத் தெரியும். ஆனாலும்கூட, லிபியைப் படிப்பதிலேயே உச்சரிப்பு கொஞ்சங்கூடத் தப்பாமலிருப்பது தமிழிலும் ஸாத்தியமில்லாமல்தான் இருக்கிறது.

ஸம்ஸ்கிருதத்தில்தான், இப்படிப்பட்ட மாறுபாடு இல்லை; இரண்டே இரண்டு விலக்கு தவிர, வேறெங்கும் இல்லை. அது பூர்ணமாக phonetic spelling-ஆகவே இருக்கிறது. 'ஏது இரண்டு விலக்கு?முழுக்க முழுக்க ஸம்ஸ்கிருதம் உச்சரிப்புக்குச் சரியான எழுத்துக்களை உடையதல்லவா?' என்றால் சொல்கிறேன்:

ஒன்று 'ப'(pa) வுக்கு முன்னால் ':' என்ற ஸர்க்கம் வரும்போது ஏற்படுகிற சப்த மாறுதல். விஸர்க்கம் ஏறக்குறைய 'ஹ'சப்தத்தைத் தருவது. 'ராம:' என்பதை 'ராமஹ'என்று சொல்லவேண்டும். பூர்ணமான 'ஹ'வாக இன்றிக் கொஞ்சம் தாழ்த்திச் சொல்லவேண்டும். தமிழ் நாட்டில் பூர்ண 'ஹ'வாகவே சொல்கிறார்கள். குறைத்துச் சொல்கிற மற்றவர்களை கேலியாக நினைக்கிறார்கள். வாஸ்தவத்தில்

சிக்ஷா விதிப்படி அவர்கள் சொல்வதுதான் சரி. இந்த விஸர்க்கம் 'ப'வுக்கு முன்னாடி வரும்போது 'ப'என்பது 'fa' (ஃப) என்கிற ஸவுண்டைப் பெறுகிறது. லிபியை மட்டும் பார்த்து உள்ளபடி படித்தால் இங்கே தப்பாகிவிடும்.

இரண்டாவசு மாறுதல்;ஸம்ஸ்கிருதத்தில் ஸுப்பஹ்மண்யன், ப்ரஹ்மா, வஹ்நி என்று எழுதினாலும், படிக்கும்போது ஸுப்ரம்ஹண்யன், ப்ரஹ்மர், வன்ஹி என்றே உச்சரிக்க வேண்டியிருக்கிறது. சரி, 'y' சேர்ந்த கூட்டெழுத்துக்கள் எல்லாவற்றுக்குமே இது பொது விதியா என்று பார்த்தால், அப்படியும் இல்லை. 'கஹ்வரம்', ' ஜிஹ்வா', 'குஹ்யம்', 'தஹ்ரம்', 'ப்ரஹ்லாதன்'முதலான வார்த்தைகளை உள்ளபடியே படிக்கிறோமே ஒழிய 'கவ்ஹரம்', 'ஜிவ்ஹா', 'குய்தம்', 'தர்ஹம்', 'ப்ரல்ஹரதன்'என்று (மேலே சொன்ன ரீதியில்) மாற்றிப் படிக்கவில்லை.

இந்த இரண்டு தவிர, முற்றிலும் உச்சரிப்பும், லிபியும் ஸம்ஸ்கிருதத்தில் ஒன்றாகவே இருக்கின்றன.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## வியாகரணம் : வேதத்தின் வாய்

## இலக்கணத்தின் பெருமை

வேதபுருஷனுக்கு இரண்டாவது அங்கமாக வரும் வ்யாகரணம் முகம். முகம் என்றால் இங்கே வாய். வ்யாகரணம் என்பதே இலக்கணம். பாஷையின் 'லக்ஷண'த்தைச் சொல்வதால் 'இலக்கணம்'. லக்ஷ்மணன் என்பது இலக்குமணன் என்றாவது போல, லக்ஷணம் என்பது இலக்கணமாகிறது. பாஷைக்கு வாய்தானே முக்கியம்?

வியாகரணங்கள் பல இருக்கின்றன. முக்கியமாகப் பிரசாரத்தில் இருப்பது பாணினி மஹரிஷி செய்த வியாகரணம். அந்த வியாகரண ஸூத்திரங்களுக்கு ஒரு வார்த்திகம் (விரிவுரை மாதிரியானது) இருக்கிறது. அதைச் செய்தவர் வரருசி. வியாகரணத்திற்கு பாஷ்யம் செய்தவர் பதஞ்சலி. இந்த மூன்றும் முக்கியமான

வியாகரண சாஸ்திரங்கள்.

மற்ற சாஸ்திரங்களுக்கும் வியாகரணத்திற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. மற்றவைகளில் பாஷ்யத்தைவிட ஸூத்திரங்களுக்குத்தான் கௌரவம் அதிகம். வியாகரணத்தில் அப்படியில்லை. ஸூத்திரத்தைவிட வார்த்திகத்திற்கு மதிப்பு அதிகம். அதைவிட பாஷ்யத்திற்கு அதிக மதிப்பு.

ஆறு சாஸ்திரங்கள் என்று ஒரு பிரிவு உண்டு. அந்தப் பிரிவில் வியாகரணமும் ஒன்று. நான்கு சாஸ்திரங்கள்மிக்க பிரஸித்தி உடையவை. அவை தர்க்கம், மீமாம்ஸை, வியாகரணம், வேதாந்தம் என்பவை. அவைகளிலும் வியாகரணம் ஒன்றாக இருக்கிறது. பாணினியின் வியாகரணம் ஸூத்திர ரூபமாக இருக்கிறது. சிறு சிறு வார்த்தைகளால் சுருக்கமாகச் செய்யப்பட்டது ஸூத்ரம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**வியாகரணம் : வேதத்தின் வாய்**

**வியாகரணமும் சிவபெருமானும்**

**ஸூசனாத் ஸூத்ரம் ।**

விரித்துச் சொல்லாமல் சூசனையாகவே புரிந்து கொள்ளும்படி சுருக்கிச் சொல்வதே ஸூத்ரம். ஒவ்வொரு சாஸ்திரத்துக்கும் பாஷ்யம் உண்டு. அவைகளை எல்லாம் இன்ன இன்ன பாஷ்யம் என்று குறிப்பிட்டுச் சொல்வதுண்டு. வியாகரண பாஷ்யத்தை மட்டும் மஹா பாஷ்யமென்று சொல்வார்கள். அதனாலேயே அதனுடைய பெருமை தெரிய வருகின்றது. அந்த பாஷ்யம் மஹரிஷி பதஞ்சலியால் இயற்றப்பட்டது.

சிவன் கோயில்களில் "வ்யாகரண தான மண்டபம்"என்னும் பெயருடைய மண்டபம் ஒன்று இருப்பதுண்டு. "வக்காணிக்கும் மண்டபம்"என்று திரித்துச் சொல்வார்கள். அத்தகைய மண்டபம் திருவொற்றியூரிலும் இருக்கிறது. சோழ நாட்டில் பல கோயில்களிலும் இருக்கிறது.

எதற்காகச் சிவன் கோயில்களில் வியாகரண தான மண்டபம் இருக்கிறது?ஏன் விஷ்ணு கோயிலில் இல்லை. சிவனுக்கும் பாஷைக்கும் என்ன சம்பந்தம்?பேச்சே இல்லாத தட்சிணாமூர்த்தியாக இருக்கிறவரல்லவா சிவன்?

ந்ருத்தாவஸானே நடராஜ ராஜோ நநாத டக்காம் நவபஞ்ச வாரம்।

உத்தர்துகாம:ஸனகாதி ஸித்தான் ஏதத் விமர்சே சிவ ஸூத்ர ஜாலம்।।

என்று ஒரு ச்லோகம் இருக்கிறது. இதைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுகிறேன்.

பேசாத சிவன் ஆடாமல் அசங்காமலிருப்பார். அவரே ஒரே ஆட்டமாக ஆடுகிறபோதுதான் பாஷா சாஸ்திரமே பிறந்தது. இதை மேற்படி ச்லோகம் தெரிவிக்கிறது.

நடராஜர் என்பது ஆடும் பரமேசுவரனுடைய பெயர். நடன், விடன், காயகன் என்ற உல்லாச கலைக்காரர்களில் நடன் நாட்டியம் செய்பவன். அந்த நடர்களுக்கெல்லாம் ராஜா நடராஜா. யாரைக் காட்டிலும் உயர்ந்த நடனம் செய்யமுடியாதோ அவன்தான் நடராஜா. மஹா நடன் என்று அவன் சொல்லப்படுகிறான்.

" மஹாகாலோ மஹாநட :" என்று ஸம்ஸ்கிருத அகராதியான "அமரகோச ம்"சொல்கிறது. ' அம்பலக் கூத்தாடுவான் ' என்று தமிழில் சொல்லுவார்கள். அம்பலக்கூத்தாடுவான் பட்டன் என்பது பிராமணர்களுக்கு உரிய பெயராக இருந்ததென்று சாஸனங்களால் தெரிய வருகிறது. ஆதியில் பிராம்மணர்களும் இப்படி நல்ல தமிழ்ப் பெயராக வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

'நிர்ணயஸாகரா பிரெஸ்'என்று பம்பாயில் ஒரு அச்சுக்கூடம் இருக்கிறது. அதில் பழைய காலத்தில் இயற்றப்பட்ட சிறு காவியங்கள் 'Kavyamala Series'என்னும் பெயரில் வரிசையாக வெளியிடப்பட்டன. அந்த மாலையில் 'பிராசீன லேகமாலை'என்னும் பெயருடைய சில புஸ்தகங்கள் இருக்கின்றன. பழைய காலத்து ஸம்ஸ்கிருத சாஸனங்கள் அதில் இருக்கின்றன. அந்த சாஸனங்களுக்குள் வேங்கி நாட்டு சாஸனம் ஒன்று இருக்கிறது. வேங்கிநாடு என்பது, கிருஷ்ணா நதிக்கும் கோதாவரி நதிக்கும் நடுவில் இருப்பது. அந்த நாட்டில் அகப்பட்ட தாம்ர சாஸனம் ஒன்றை அந்தப் புஸ்தகத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அந்தத் தெலுங்குச் சீமையில் அரசாட்சி செய்து வந்த கீழைச் சாளுக்கிய ராஜாக்களுக்கும் நம்முடைய தஞ்சாவூர் சோழ ராஜாக்களுக்கும் விவாஹ ஸம்பந்தம் இருந்தது. பிருஹதீச்வர ஸ்வாமி கோயிலைக் காட்டிய ராஜராஜ சோழனுடைய புத்ர வம்சம் பௌத்தர்களோடேயே முடிந்து போய்விட்டது. அவனுடைய தௌஹித்ரி (பெண் வழிப் பேத்தி) அம்மங்கா தேவி வாழ்க்கைப் பட்டிருந்தது ராஜராஜ நரேந்திரன் என்ற கீழைச்சாளுக்கிய ராஜாவுக்குத்தான். அவர்களுடைய பிள்ளையான குலோத்துங்கன்தான் அப்புறம் சோழ நாட்டுக்கும் ராஜா ஆனது. அவன் ஆந்திர தேசத்தில் வேதாத்தியயனம் விருத்தியடைய வேண்டுமென்று எண்ணித் தமிழ்நாட்டிலிருந்து 500 பிராம்மணர்களைக் கொண்டுபோய் வேங்கிநாட்டில் குடியேற வைத்தான். ஆந்திரதேசத்தில் உள்ள திராவிடலு என்ற பிரிவினர் இந்த 500 பிராம்மணர்களுடைய வம்சஸ்தர்களே.

அந்த 500 பிராம்மணர்களுடைய பெயர்களும், கோத்திரங்களும், அந்த சாஸனத்தில் சொல்லப்படுகின்றன. இன்ன இன்ன சாஸ்திரத்தில் வல்லவர், இன்ன இன்ன காரியங்கள் செய்ய வேண்டியவர் என்பவைகளைப் போன்ற பல விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஊரில் மொத்தமுள்ள நிலத்தில் அவர்களில் இன்னார் இன்னாருக்கு இந்த இந்தப் பூமி தானம் தரப்படுகிறது என்பதும், அந்தப் பூமியின் எல்லை முதலியவைகளும் அதில் காட்டப்படுகின்றன. சிஷ்யராக வருகிறவர்களுக்கு அவர்கள் தங்களுக்குத் தெரிந்த வேதங்களையும் சாஸ்திரங்களையும் சொல்லி

வைக்கவேண்டும்;அதற்காகவே அவர்களுக்கு நிலங்கள் மானியமாக விடப்பட்டிருக்கின்றன.

ரூபாவதார வக்து : ஏகோ பாக :

என்று அதில் ஒரு வாக்கியம் இருக்கிறது. அதாவது 'ரூபாவதாரம்' சொல்லுபவருக்கு ஒரு பாகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ரூபாவதாரம்' என்பது ஒரு வியாகரண சாஸ்திரம்தான்.

திண்டிவணத்தருகில் உள்ள 'எண்ணாயிரம்'என்ற ஊரில் இருந்த 340 மாணார்களைக் கொண்ட வித்யாசாலையில், 40பேர் ரூபாவதாரம் படித்ததாக முதலாம் ராஜேந்திர சோழனின் சாஸனம் இருக்கிறது. பாண்டிச்சேரி ராஜ்யத் திரிபுவனத்தில் ராஜாதிராஜன் (கி.பி.1050 ) போஷித்த பாடசாலையிலும் ரூபாவதாரம் போதிக்கப்பட்டிருக்கிறது. வீரராஜேந்திர தேவனின் கி.பி. 1067-ம் வருஷத்திய சாஸனத்திலிருந்து, காஞ்சிக்கு அருகேயுள்ள திருமுக்கூடல் வித்யாசாலையில் இந்த நூல் கற்பிக்கப்பட்டதை அறிகிறோம்.

ஸித்தாந்த கௌமுதி என்று ஒரு வியாகரண இப்பொழுது அதிகமாக பிரசாரத்தில் இருந்து வருகிறது. அடையபலம் என்ற ஊரில் அவதாரம் செய்தவர்களும், 104 கிரந்தங்களை எழுதினவர்களும், சைவகிரந்தங்களை அதிகமாகச் செய்தவர்களும், 'குவலயானந்தம்' என்னும் அலங்கார சாஸ்திரத்தை எழுதினவர்களுமாகிய அப்பைய தீக்ஷிதரவர்களுடைய சிஷ்யராகிய பட்டோஜி தீக்ஷிதர் என்பவர் அந்த 'ஸித்தாந்த கௌமுதியை'ச் செய்தவர். அது பாணினியின் ஸூத்ரத்திற்கு வியாக்கியான ரூபமாக உள்ளது.

"அர்த்த மாத்ரா லாகவேண புத்ரோத்ஸவம் மன்யந்தே வையாகரணா:"என்று, வியாகரணமானது பண்டிதர்களுக்குத் தரும் பரமானந்தத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. "அரை மாத்திரை லாபம் கிடைத்தால், அது வியாகரண சாஸ்திரம் அறிந்தவர்களுக்கு, நிரம்ப நாள் பிள்ளையில்லாதவனுக்கு ஒரு புத்திரன் உண்டானதுபோல ஸந்தோஷத்தைக் கொடுக்கும்"என்பது இதன் அர்த்தம். 'அ'என்பதை 'ஆ' என்று நீட்டினால், அப்படி நீட்டினதற்குப் பலன் சொல்ல வேண்டும். அதுவே மாத்திரை லாபம். ரத்ன சுருக்கமாகவே ஸூத்ரம் இருப்பதால்

அதிலே சிக்கல்கூட ஏற்பட்டு மாத்திரைகள் பற்றி அபிப்ராய பேதங்களும் உண்டாகும். அப்போது வியாக்யானந்தான் தெளிவு படுத்தித் தந்து, புத்ரோத்ஸவ ஆனந்தத்தைத் தருவது!அதற்காக வியாக்யானம் வளவள என்று இருக்க வேண்டியதில்லை;நறுக்குத் தெறித்த மாதிரி சுருக்கமாயிருந்தும் தெளிவு பண்ணமுடியும் என்பதற்கு "கௌமுதி"எடுத்துக் காட்டு. ஸூத்திரத்தில் எழுத்துக்களெல்லாம் மிகவும் கணக்காக இருந்தால் ஸித்தாந்த கௌமுதியில் வியாக்கியானமும் கணக்காக இருக்கும்;வளவளப்பே கிடையாது. ஸூத்திரத்தில் அதிகம் இருந்தாலும் இருக்குமோ என்னவோ?இதில் இராது. அந்தக் கௌமுதி இப்பொழுது பிரஸித்தி அடைந்திருக்கிறது. அது சற்றேறக் குறைய 400 வருஷங்களுக்கு முன் செய்யப்பட்டது. இப்பொழுது அதைத்தான் ஸம்ஸ்கிருத வியாகரணம் வாசிக்கிறவர்கள் முதலில் வாசிக்கிறவர்கள் முதலில் வாசிக்கிறார்கள். (இந்த வியாகரணத்தைச் செய்த பட்டோஜி தீக்ஷிதரென்பவரே

'தத்வகௌஸ்துபம்'என்ற ஒரு கிரந்தம் செய்து, அதைக் குருவுக்குக் காணிக்கையாக

அர்ப்பணம் செய்தார். அந்தப் புஸ்தகத்தில் பிரம்மத்தை விட வேறுண்டென்று சொல்வது உபநிஷத்துக்களோடு ஒட்டாது என்றும், அத்வைதந்தான் உண்மையானது என்றும் தீர்மானம் செய்திருக்கிறார். மத்வமத கண்டனமாக 'மத்வமத வித்வம்ஸனம்'என்ற கிரந்தம் ஒன்றும் அப்பைய தீக்ஷிதரவர்களுடைய ஆக்ஞையின் மேல் செய்திருக்கிறார். அதெல்லாம் ஸித்தாந்திகளுக்குள் சண்டையை உண்டாக்குவது. எல்லா ஸித்தாந்திகளுக்கும் பொதுவானது வியாகரண வியாக்யானம்.)

அவர் செய்த ஸித்தாந்த கௌமுதிக்கு முன்பு, முன்சொன்ன 'ரூபாவதாரம்'என்னும் வியாகரண சாஸ்திரமே பிரஸித்தமாயிருந்தது. 'ரூபம்' என்பதற்கு இங்கே சப்தத்தின் 'முழு ஸ்வரூபம்'என்று அர்த்தம். அவதாரம் என்றால் இறங்குதல்;அதாவது, வரலாறு. இந்த ரூபாவதாரத்தை பிரஸிடென்ஸி காலேஜில் உபாத்தியாயராயிருந்த ரங்காசாரியார் என்பவர் பிரசுரம் செய்தார்.

அந்த ரூபாவதாரத்தைச் சொல்லி வைக்கிறவர்களுக்குத் தனியே ஒரு பாகம் ராஜமானியங்களிலிருந்து கொடுக்கப் பட்டதென்பது முன்னே சொன்ன சாஸனத்திலிருந்து தெரிய வருகிறதால், வியாகரணம் எவ்வளவு முக்கியமாக நினைக்கப்பட்டு வந்தது என்றும் புரிகிறது.

அந்த வேங்கி சாஸனம் ஏறக்குறைய 850 வருஷங்களுக்கு முன் ஏற்பட்டது. அதில் தானம் பெற்ற ஒவ்வொரு பிராம்மணனுடைய பேரும் இருக்கிறது. ஷடங்கவித் என்ற பட்டம் அந்தப் பிராம்மணர்களில் பல பேருக்கு இருக்கிறது. அவர்களுடைய பேர்களில் பல தமிழில் இருக்கிறது. அம்பலக் கூத்தாடுவான் பட்டன், திருவரங்கமுடையான் பட்டன் என்பவை போன்ற பல பெயர்கள் அதில்

வருகின்றன. ஒன்று சிவக்ஷேத்திரங்களில் "கோயிலாக"இருக்கப்பட்ட சிதம்பர (அம்பல) சம்பந்தமுடைய பேர்;இன்னொன்று வைஷ்ணவ க்ஷேத்திரங்களின் "கோயிலான"ஸ்ரீரங்க சம்பந்தமுடைய பேர்!

இங்கே சைவம், வைஷ்ணவம் என்று நான் சொன்னாலும், அவர்கள் எல்லாரும் ஸ்மார்த்தர்களே. சிவபக்தியும் விஷ்ணுபக்தியும் எந்த காலத்திலும் இருந்தது. அதனால்தான் சிவன் பெயரும் விஷ்ணு அவர்கள் வைத்துக் கொண்டிருந்தார்கள். வடதேசத்திலும் மலையாளத்திலும் இப்பொழுதும் ஸ்மார்த்தர்களே பெருமாள் கோயில்களில் பூஜை செய்கிறார்கள். திருவரங்கமுடையான் பட்டன் என்றால், வைஷ்ணவரென்று நினைக்கவேண்டாம். 'திருவரங்கமுடையான்'என்பதை ஸம்ஸ்கிருதத்தில் 'ரங்கஸ்வாமி'என்போம். உடையான் என்றால் ஸ்வாமி. 'ஸ்வம்'என்றால் உடைமை.

திருவம்பலக் கூத்தாடுவானென்பது நடராஜாவுடைய தமிழ்ப்பெயர். அவருக்கும் வியாகரணத்துக்கும் உள்ள ஸம்பந்தத்தைத்தான் சொல்ல வந்தேன். "ந்ருத்தாவஸாநே" ச்லோகத்தின் விஷயம் இதுதான். அவர் பெரிய கூத்து ஆடுகிறார். நாமெல்லாம் ஆடவேண்டிய கூத்தைச் சேர்த்து வைத்து அவர் ஆடுகிறார். அந்த நடராஜ விக்கிரஹத்தின் தலையில் படர்ந்தாற்போல் ஒன்று இருக்கும்;அது இரண்டு பக்கத்திலும் நீண்டு இருக்கும். அதில் சந்திரன் இருக்கும். கங்கையும் இருக்கும் அது என்ன? அதுதான் நடராஜாவுடைய ஜடாபாரம். இந்தக் காலத்தில் போட்டோ எடுக்கிறார்கள். அதில் "ஸ்நாட்-ஷாட்" என்பது ஒன்று. ஒரு வஸ்து சலனத்தில் இருக்கும்பொழுதே, திடீரென்று ஓர் அவஸரத்தில் போட்டோ எடுப்பது அது. நடராஜா வெகு வேகமாக நர்த்தனம் பண்ணுகிறார். பண்ணி நிறுத்தப் போகிற ஸமயத்தில் ஜடாபாரம் இரண்டு பக்கங்களிலும் நீட்டிக்கொண்டு இருக்கும். அந்த நிலையை அந்தக் காலத்துச் சிற்பி மனஸிலே எடுத்த ஸ்நாப்-ஷாட் தான் அந்த ஸ்வரூபம்.

நடராஜாவுடைய கையில் ஒரு உடுக்கு இருக்கிறது. அது குடுகுடுப்பாண்டி வைத்திருப்பதைவிடப் பெரியது, மாரியம்மன் கோயிற் பூஜாரி வைத்திருப்பதைவிடச் சிறியது. அதற்கு டக்கா என்றும் டமருகம் என்றும் பெயர்கள் உண்டு. பாதத்தின் தாளத்தை அநுஸரித்து, அந்த டமருக தாளமும் இருக்கும். இதன் ஒலியைத்தான் மேலே ச்லோகத்தில்'நநாத டக்காம்' என்று சொன்னது.

வாத்தியங்களில் முக்கியமானவை மூன்று வகை. அவைசர்ம வாத்தியம் (டக்கா, மேளம், கஞ்சிரா,மிருதங்கம் போலத் தோல் சேர்ந்த வாத்தியம்), தந்திரி வாத்தியம் (வீணை, ஃபிடில் போலத் தந்தி போட்டது), வாயுரந்திர வாத்தியம் (நாயனம்,புல்லாங்குழல் முதலிய துளை போட்டுக் காற்றை ஊதும் கருவிகள்) என்பவை. இவைகளில் சர்ம வாத்தியம் தண்டத்தாலோ ஹஸ்தத்தாலோ அடிக்கப்படும். அந்த வாத்தியத்தை நிறுத்தும்பொழுது சாப்புக் கொடுப்பது,

அதாவது, சேர்ந்தாற்போலச் சில அடிகள் அடிப்பது வழக்கம். அதுபோல நடராஜருடைய டமருகத்தில் நடனம் முடியும் காலத்தில் - ந்ருத்த அவஸானே- ஒரு சாப்புத் தொனி உண்டாயிற்று. அதைப்பற்றித்தான் முன்சொன்ன ச்லோகம் ஆரம்பிக்கிறது.

நடராஜா நிருத்தம் செய்கிறார். ஸனகாதிகள், பதஞ்ஜலி, வியாக்கிரபாதர் முதலியவர்கள் சுற்றி நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மஹா தபஸ்விகள் ஆகையால் அந்த நிருத்தத்தைக் கண் கொண்டு பார்க்க முடிந்தது. நடராஜாவுடைய நடனத்தை ஞானநேத்திரம் உடையவர்கள்தாம் பார்க்க முடியும். ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய விச்வ ரூபத்தைத் தரிசிக்கும் சக்தியை பகவானே அர்ஜுனனுக்குக் கொடுத்தார். இதே சக்தியை வியாஸர் ஸஞ்சயனுக்கும் கொடுத்து, அவனையும் விச்வரூபத்தைக் கண்டு திருதராஷ்டிர மஹாராஜாவுக்கு வர்ணிக்கும்படிப் பண்ணினார். அந்த ஸ்வரூபத்தை அவர்களால் மட்டும் பார்க்க முடிந்தது. குருக்ஷேத்ர யுத்த பூமியில் இருந்த மற்றவர்களால் பார்க்க முடியவில்லை. தேவதைகளும், ரிஷிகளும், யோகிகளும் ஸ்ரீ நடராஜமூர்த்தியின் தாண்டவத்தைப் பார்ப்பதற்காகப் பலப் பிரயத்தனம் செய்து, அதற்கு வேண்டிய பார்வையைப் பெற்றார்கள். அந்தப் பார்வை திவ்விய திருஷ்டி என்று சொல்லப்படும். 'திவ்ய சக்ஷுஸ்'என்று கீதையில் பகவான் சொல்கிறார்.

நிஜமான கண்களைக் கொண்டு ஸனகாதிகள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நடராஜாவின் டான்ஸ் கச்சேரியில் விஷ்ணு மத்தளம் கொட்டிக் கொண்டிருக்கிறார். பிரம்மா தாளம் போட்டுக் கொண்டிருக்கிறார். நிருத்தம் முடிகிற ஸமயத்தில், டமருகத்தில் சாப்பு கிடுகிடுவென்று 14 சப்தங்களாக உதிர்ந்தது. ச்லோகத்தில் சொன்ன 'நவ பஞ்சவாரம்'என்றால் ஒன்பதும் ஐந்தும் சேர்ந்த பதினாலு. நநாத டக்காம் நவபஞ்சவாரம்.

அந்தச் சப்தங்களின் கணக்குப் போலவே வித்தைகளின் கணக்கு 14 ஆகத்தான் இருக்கின்றது!ஹிந்து மதத்துக்கு ஆதாரம் சதுர்தச வித்யா என்கிற 14 என்றால், நடராஜாவின் சாப்பும் பதினாலு சப்தத்தையே கொடுத்தது!அந்தப் பதினான்கு சப்தம் ஸனகாதிகளை உத்தாரணம் செய்வதற்காக உண்டாயின என்கிறது ச்லோகம்.

தக்ஷிணாமூர்த்திக்குப் பக்கத்தில் வயதில் முதிர்ந்த நாலு பேர்கள் இருப்பதாகக் கோயிலில் பார்க்கிறோமே, அவர்தாம் ஸனகாதிகள். தேவாரம், திருவாசகம் மட்டுமின்றி ஆழ்வார் பாட்டிலும், பல இடங்களில் "அன்றாலின் கீழிருந்து அறம் நால்வருக்கு உரைத்த" விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நால்வர்தம் ஸனகாதிகள்.

அப்படி எழுந்த சப்தங்கள் சிவஸ்வரூபத்தை ஏகபோகமாக அநுபவிப்பதற்கு மார்க்கமாக இருந்தன. அந்த சப்தங்களை "மாஹேச்வர ஸூத்திரம்" என்று

வைத்து, அவைகளுக்கு நந்திகேச்வரர் 'காரிகா'(காரிகை) என்கிற பாஷ்யம் எழுதினார். அப்பொழுது அங்கே இருந்தவர்களுல் பாணினி மஹரிஷி என்பவர் ஒருவர். அந்தப் பாணினி என்பவருடைய கதை "பிருஹத் கதை"என்ற புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த பிருஹத் கதையானது, ஸம்ஸ்கிருதத்தின் பேச்சு மொழிக் கொச்சைகளான பிராகிருத பாஷைகள் ஆறில் ஒன்றாகிய பைசாச பாஷையில் குணாட்யர் என்பவரால் செய்யப்பட்டது.

பிருஹத் கதையின் ஸங்கிரஹத்தை (சுருக்கத்தை) க்ஷேமேந்திரர் என்பவர் ஸம்ஸ்கிருதத்தில் எழுதினார். அதை அநுசரித்து ஸோமதேவ பட்டர் "கதாஸரித்காரம்" என்று ஒன்று எழுதியிருக்கிறார். அரேபிய இரவுக் கதைகள் (Arabian Night Tales) ஈஸாப் கதைகள் (Aesop Fables), பஞ்ச தந்திரக் கதைகள் முதலியவைகளுக்கெல்லாம் மூலம் அதில் இருக்கிறது. தமிழிலும் "பெருங்கதை" என்று ஒன்று இருக்கின்றது. 'ப்ருஹத் கதை'என்ற வார்த்தையின் நேர் தமிழாக்கம் தான் 'பெரும் கதை'.

'கதாஸரித்ஸாகர'த்தில் பாணினியின் கதை சொல்லப் பட்டிருக்கிறது. மகத தேசத்தில், இப்பொழுது பாட்னாவென்று வழங்கும் பாடலிபுத்ரத்தில் வர்ஷோபாத்யாயர், உபவர்ஷோபாத்யாயர் என்ற இருவர் இருந்தார்கள். உபவர்ஷோபாத்தியாயர் இளையவர்.அவர் பெண் உபகோஸலை. வர்ஷோபாத்தியாயரிடம் வரருசி என்பவரும் பாணினியும் பாடம் கேட்டு வந்தார்கள். பாணினிக்குப் படிப்பு வரவில்லை. அதனால் அவரை வர்ஷோபாத்தியாயர், "ஹிமாசலத்திற்குப் போய் தவம் பண்ணு" என்று அனுப்பி விட்டார். அவர் அப்படியே போய்த் தபஸ் செய்து ஈச்வர கிருபையை அடைந்தார். நடராஜாவுடைய தாண்டவத்தைப் பார்க்கும் சக்தியைப் பெற்றார். நடராஜ தாண்டவத்தின் அவஸான (முடிகிற) காலத்தில் உண்டான 14 சப்தங்களையும் கொண்டு, அவற்றை பதினான்கு ஸூத்திரங்களாக வியாகரணத்துக்கு மூலமாக வைத்துக் கொண்டு, "அஷ்டாத்யாயி"யை எழுதினார். வியாகரண மூலநூல் இதுவே. எட்டு அத்தியாயம் கொண்டதாதலால் "அஷ்டாத்யாயி"எனப்படுகிறது.

அந்த பதினான்கு ஸூத்ரங்களையும் ஆவணியவிட்டம் பண்ணுகிறவர்கள் கேட்டிருப்பார்கள். மஹேச்வரனின் டமருவிலிருந்து உண்டானதால், அவை மாஹேச்வர ஸூத்ரம் எனப்படும்.

மநுஷ்யனின் கையால் அடிக்கப்படுகிற, அல்லது மீட்டப்படுகிற, அல்லது ஊதப்படுகிற வாத்யங்களிலிருந்து அக்ஷரங்கள் இல்லாத வெறும் சப்தந்தான் வருகிறது.

நாதப்பிரம்மம் சப்தப் பிரம்மமுமாக இருக்கப்பட்ட பரமேச்வரனுடைய ஹஸ்த விசேஷத்தால், அந்த டமருகத்தின் சாப்புகளோ பதினாலு விதமான அட்சரக்

கோவகளுக்காகவே ஒலித்தன!அவற்றைத்தான் ஆவணியவிட்டத்தில் கேட்கிறோம்:

1.அ இ உண்:2.ருலுக்:3. ஏ ஒங்:4. ஐ ஔச்:5. ஹயவரட்; 6. லண்;7. ஞம ஙண நம்;8. ஜ2 ப4ஞ்; 9. க ட த ஷ்;10. ஜ ப க ட த ச்; 11. க ப ச ட த சடதவ்; 12. கபய்;13. சஷஸர்;14. ஹல் - இதிமாஹேச்வராணி ஸூத்ராணி.

ஆவணி அவிட்டத்தில் இதைச் சொல்கிற போது வேடிக்கையாகக் சிரித்துக்கொண்டே கேட்டிருப்பீர்கள். அது எந்த விஷயத்தைச் சொல்கிறது என்று தெரியாமலே ஒப்பித்திருப்பீர்கள். பரமேச்வரன் உடுக்கை அடித்துக்கொண்டு கிர்ர், கிர்ர் என்று சுற்றி ஆடி முடித்தபோது கொடுத்த சாப்புகள் தான் இவை. சலங்கை 'ஜல் ஜல்' லென்று சப்திக்கிறது;டமாரம் 'திமுதிமு' என்று அதிர்கிறது:மேளத்தில் 'டம் டம்' என்று ஓசை வருகிறது என்கிறோம் அல்லவா?வாஸ்தவத்தில் இதே சப்தங்களா அவற்றிலிருந்து வருகின்றன?ஆனாலும் கிட்டத்தட்ட வருவதால்தான் இப்படிச் சொல்கிறோம். 'பிப்பீ'என்று நாயனம் ஊதினதாகச் சொல்லுவோமே யொழிய, 'பிப்பீ'

என்று தவில் வாசித்தான் என்போமா?'டம்டம்'என்று தவில் வாசித்ததாக சொல்லுவோமே யொழிய, 'டம்டம்'என்று நாயனம் ஊதியதாக சொல்வோமா?அடிக்கிற வாத்யங்களுக்குள்ளேயே மேளத்தை 'டம் டம்' என்றும் மிருதங்கத்தை 'திம்திம்'என்றும் சொல்லுகிறோம். ஊதுகிறவாத்யங்களுக்குள்ளேயே நாயனத்தைப் 'பிப்பீ' என்றால், சங்கை 'பூம் பூம்'என்று ஊதினான் என்றுதான் சொல்கிறோம். வீணை மாதிரி மீட்டுகளை 'டொய்ங் டொய்ங்'என்கிறோம். ஆகையால், எல்லா வாத்தியங்களிலுமே ஸ்பஷ்டமாக அக்ஷரங்கள் வராவிட்டாலும் அக்ஷரம் மாதிரியான ஒலி வருகிறது என்றே ஆகிறது. மனிதர்கள் வாசிக்கிற வாத்தியங்களிலேயே இப்படியென்றால், ஸாக்ஷாத் நடராஜா, பஞ்ச கிருத்யம் செய்யும் பரமேச்வரன், அடிக்கிற உடுக்கிலே ஏன் ஸ்பஷ்டமாக அக்ஷரங்கள் வராது?இப்படிப் பதினாலு எழுத்துக் கூட்டங்கள் வந்தன.

இந்த எழுத்துக்களைப் பாணினி எப்படி உபயோகப் படுத்திக் கொண்டார் எழுத்துக்களைச் சேர்த்துச் சொல்ல ஒரு சுருக்கமான ஸம்ஜ்ஞையை (சமிக்ஞையை) இந்த ஸூத்ரங்களிலிருந்து பாணினி ஏற்படுத்திக் கொண்டார். 14 ஸூத்ரங்களில் ஒன்றின் முதலெழுத்தையும் மற்றொன்றின் கடைசி எழுத்தையும் சேர்த்துச் சொன்னால், நடுவில் இருக்கிற எல்லா எழுத்தையும் அது குறிக்கும் என்று பண்ணிவிட்டார். உதாரணமாக,'ஹயவரட்' என்பதில் முதல் எழுத்தான ஹ-வையும், 'ஹல்'என்பதில் முடிவான 'ல்'லையும் சேர்த்தால் 'ஹல்' என்றாகிறது. அது இடையிலுள்ள மெய்யெழுத்துக்கள் எல்லாவற்றையும் குறிக்கும். இப்படியே 'அ இ உண்'ஆரம்பமான 'அ'-வை 'ஔச்'முடிவான 'ச்'- உடன் சேர்ந்த 'அச்'என்பது உயிரெழுத்துக்களைக் குறிக்கும். பதினாலு கோவைகளுக்கும்

முதலெழுத்தாகிய 'அ-வையும், கடைசி எழுத்தாகிய 'ல்' லையும் சேர்த்து, 'அல்'என்றால் அது அத்தனை எழுத்தையுமே சேர்த்துக் குறிக்கும்.

அலோந்த்யஸ்ய என்பது அஷ்டாத்யாயியில் ஒரு ஸூத்திரம். 'அல்' என்றாலே எழுத்து என்று அர்த்தம் வந்துவிட்டது. எல்லா பாஷைகளுக்குமே அகாரம் ஆதியாயிருக்கிறது. உருது பாஷையில் 'அலீப்'என்பது முதலெழுத்து. கிரீக்கில் 'ஆல்ஃபா'என்பது முதலெழுத்து. இந்த இரண்டும் எழுத்துக்களையெல்லாம் குறிக்கும் 'அல்' என்பதிலிருந்து வந்ததுதான். லோகம் பூராவும் வைதிக மதம் இருந்ததற்கு இதுவும் ஒரு அடையாளம்.

இவ்வாறு வியாகரணத்திற்கு மூலகாரணமாயிருந்தது நடராஜாவிடனுடைய டமருகத்தில் இருந்து உண்டாகிய மாஹேச்வர ஸூத்திரங்களென்று தெரிகிறது. லோகத்தில் சப்த சாஸ்திரங்களை ஏற்படுத்தியதற்குக் காரணமாக இருந்தவர் பரமேச்வரராகையினால்தான் சிவன் கோவிலில் வியாகரணதான மண்டபம் அமைக்கப்பட்டிருக்கிறது;பெருமாள் கோவிலில் இல்லை.

நடராஜாவுக்கருகில் பதஞ்சலி, வ்யாக்ரபாதர் என்னும் இருவர் இருக்கிறார்கள். எந்தக் கோயிலிலும் அவர்களுடைய பிம்பங்களை நடராஜாவினுடைய பிம்பத்துக்குப் பக்கத்தில் பார்க்கலாம். சீர்க்காழிக்கருகில் ஒரு க்ஷேத்திரத்திற்குப் போயிருந்தேன். அங்கே கோயிலில் நடராஜாவுக்குப் பக்கத்தில் பதஞ்சலி, வியாக்ரபாதர் இவர்களுடைய உருவங்களுக்குக் கீழே அவர்களுடைய பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. எழுதுகிறவன் நன்றாக தெரிந்துக் கொள்ளாமையால் 'பதஞ்சலி' என்னும் பெயரைப் 'பதஞ்சொல்லி'என்று எழுதியிருந்தான். அந்தப் பெயரும் அவருக்குப் பொருந்தியதை நினைத்து அறியாமையிலும் ஒரு தத்துவம் இருக்கிறதென்று ஸந்தோஷம் அடைந்தேன்!"பதஞ்சொல்லி" என்பது வியாகரணத்திற்கே ஒரு பெயர். பதவாக்ய ப்ரமாண என்கிறபோது 'பதம்' என்பதற்கு வியாகரணம் என்பதுதான் அர்த்தம். ஆகவே பதஞ்சொல்லி என்பதற்கு வியாகரணம் சொன்னவர் என்று அர்த்தமாகிறது. பதஞ்ஜலி வியாகரண பாஷ்யம் செய்தவர் என்பதை முன்பே சொன்னேன் அல்லவா?

'பதஞ்சொல்லி'என்று தப்பாக எழுதினதே பதஞ்ஜலிக்குப் பொருத்தமாயிருப்பதைப் பார்த்த போது, இன்னொன்று நினைவு வந்தது. ஸம்ஸ்கிருதத்தில் 'குணாக்ஷர நியாயம்' என்று ஒன்று சொல்லுவார்கள். 'குணம்'என்றால் செல்லு முதலான பூச்சிக்குப் பெயர். அது மரத்தையோ ஏட்டுச் சுவடியையோ அரித்துக் கொண்டே போயிருக்கும். சில சமயங்களில் இப்படி அரித்திருப்பதே எழுத்துக்களைப் பொரித்த மாதிரி இருக்கும். பூச்சி பாட்டுக்கு அரித்தது அக்ஷரங்களின் வடிவத்தில் அமைந்துவிடும். செல்லுப் பூச்சி உத்தேசிக்காமலே இப்படி ஏற்பட்டு விடுவதுண்டு. இம்மாதிரி உத்தேசிக்காமலே ஏதோ ஒன்றைப் பண்ணி அதிலும் ஒரு அர்த்தம் ஏற்பட்டு விடுவதை 'குணாக்ஷர (குணஅக்ஷர) நியாயம்'என்பார்கள். பதஞ்ஜலி பதஞ்சொல்லியானதும் குணாக்ஷர

நியாயம்தான் என்று தோன்றியது. இது இருக்கட்டும்.

தஞ்சாவூர் ராஜ்யத்தில், நானூறு வருஷங்களுக்கு முன் நாயக வம்சத்தைச் சேர்ந்த ரகுநாத நாயக்கர் ஆண்டபோது ஏற்பட்ட ஸாஹித்ய ரத்னாகரம் என்ற காவியத்தை நான் பார்க்க நேர்ந்தது. அதை எழுதிய யக்ஞ நாராயண தீக்ஷிதர் பெரிய சிவபக்தர். அவர் அதிலே ஒரிடத்தில் சொல்லியுள்ள ஈச்வர ஸ்தோத்திரம் ஒன்றிலும் வியாகரணத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆதௌ பாணிநிநாததோ (அ)க்ஷர ஸமாம்னா-யோபதேசேனஸ்ய:

சப்தானாம் அநுசாஸநான்யகலய:சாஸ்த்ரேண ஸூத்ராத்மனா।

பாஷ்யம் தஸ்ய ச பாதஹம்ஸகரவை: ப்ரௌடாசயம் தம் குரும்

சப்தார்த்த ப்ரதிபத்தி ஹேதும் அநிசம் சந்த்ராவதம்ஸம் பஜே

(ஸாஹித்ய ரத்னாகர காவியம்,XI-124)

இந்த ச்லோகத்தில் வரும் 'அக்ஷர ஸமாம்னாயம்' என்பது வ்யாகரணத்திற்குப் பெயர். அக்ஷரங்களைக் கூட்டமாகச் சேர்த்து வைத்த இடம் என்று அர்த்தம். ஈச்வரனுடைய மூச்சுக்காற்று வேதம். அவருடைய கைக்காற்று அக்ஷர வேதம். அதாவது மாஹேச்வர ஸூத்திரம். "சப்தானுசாஸனம்"என்பதும் அதன் பெயர். 'பாணினி நாதத:'என்பதற்குப் "பாணிகளால் (கைகளால்) சப்தம் பண்ணினாய்"என்றும், "பாணினிக்குச் சப்தம் ஏற்பட்டது"என்றும் சிலேடையாக இரண்டு அர்த்தங்கள் உண்டாகின்றன. அதாவது ஈச்வரன் கையிலிருந்து உண்டான சப்தத்தை வைத்துக் கொண்டு பாணினி வியாகரணம் பண்ணினார் என்னும் கருத்து இதில் குறிக்கப்படுகிறது.

"நீ கையாட்டியதால் வியாகரண ஸூத்திரங்கள் ஏற்பட்டன. காலையாட்டியதால் அதற்கு பாஷ்யத்தை உண்டு பண்ணினாய்"என்று ச்லோகம் சொல்லுகிறது. மஹாபாஷ்யத்தைச் செய்த பதஞ்ஜலி ஆதிசேஷாவதாரம். ஆதிசேஷன் பரமேச்வரன் காலில் பாதரஸமாக இருக்கிறார்!இதை நினைத்துத்தான் காலாட்டி பாஷ்யத்தை உண்டு பண்ணினார் என்று கவி சொன்னது!"சப்தமும் அர்த்தமும் உன்னாலேயே ஏற்பட்டது"என்று அவர் முடிக்கிறார்.

வியாகரணத்திற்கு இப்படிப் பல காரணங்களால் பரமேச்வரன் மூல புருஷனாய் இருப்பதால், அவருடைய கோயிலில் வ்யாகரண தான மண்டபங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன என்று தெரிந்து கொண்டேன்.

## வியாகரணம் : வேதத்தின் வாய்

### இலக்கண நூல்கள்

இங்கே பரமேச்வரனைக் கவி "சந்த்ராவதம்ஸன்"என்கிறார். அப்படியென்றால் சந்திரனைத் தலையணியாக, சிரோபூஷனமாகக் கொண்டவன் என்று அர்த்தம். "சந்திரசேகரன்","இந்துசேகரன்"என்றாலும் இதே பொருள்தான். வியாகரண சாஸ்திரங்களில் இரண்டுக்கு ஆச்சரியமாக இந்த 'இந்துசேகர'ப் பெயர் இருக்கிறது. ஒன்று, 'சப்தேந்து சேகரம்'வியாகரணத்தில் இந்த நூல் வரைக்கும் ஒருத்தன் படித்து விட்டால், "சேகராந்தம் படித்தவன்"என்று பாராட்டிச் சொல்வார்கள். 'இன்னொரு புஸ்தகம், "பரிபாஷேந்து சேகரம்"என்பது.

சிக்ஷா சாஸ்திர நூல்கள் சுமார் முப்பது இருப்பது போல், வியாகரணத்திலும் ஏராளமான கிரந்தங்கள் இருக்கின்றன. அவற்றில் பாணினி ஸூத்ரம், அதற்குப் பதஞ்ஜலி பாஷ்யம், வரருசி வார்த்திகம் ஆகிய மூன்றும் தலைமை ஸ்தானத்தில் இருக்கின்றன. வரருசியும் காத்யாயனரும் ஒருத்தரே என்ற அபிப்ராயத்தில் இங்கே நான் சொல்லியிருக்கிறேன். அவர்கள் வெவ்வேறு பேர் என்றும் சிலர் சொல்கிறார்கள்.

விக்ரமாதித்தன் ஸபையிலிருந்த 'நவரத்ன'ங்களில் ஒருத்தர் வரருசி. இலக்கண புஸ்தகங்கள் எழுதினவர். வார்த்திகம் பண்ணின காத்யாயனர் இவரா இல்லையா என்பதில் அபிப்ராய பேதம் இருக்கிறது. பர்த்ருஹரியின் "வாக்யபாதயம்"என்ற நூலும் முக்யமான வியாகரண புஸ்தகங்களில் ஒன்றாகும்.

'நவ வ்யாகரணம்'என்பதாக ஸம்ஸ்கிருதத்தில் ஒன்பது இலக்கண நூல்கள் குறிப்பிடப் படுகின்றன. ஆஞ்ஜநேய ஸ்வாமி ஸூரிய பகவானிடமிருந்து இவற்றைக் கற்றுக் கொண்டார். பிற்பாடு ஸ்ரீராமரே ஆஞ்சநேயரை "நவவ்யாகரண வேத்தா" என்று புகழ்கிறார்.

நவ வியாகரணங்களில் ஒன்று "ஐந்திரம்" - இந்திரனால் செய்யப்பட்டதால் இப்படிப் பெயர். தமிழ் இலக்கணத்துக்கு மூலமான "தொல்காப்பியம்"இந்த ஐந்திரத்தை மூலமாகக் கொண்டு அந்த வழியிலேயே செய்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)

## வடமொழி வியாகரணமும் தமிழிலக்கணமும்

'இலக்கணம்'என்ற தமிழ் வார்த்தை 'லக்ஷணம்'என்பதிலிருந்து வந்த மாதிரியே, இலக்கண சம்பந்தமான வேறு பல வார்த்தைகளும் ஸம்ஸ்கிருத வியாகரணத்தில் உள்ளதை அநுசரித்தே தமிழில் உண்டாயிருக்கிறது. உதாரணமாக, தமிழிலக்கணத்தில் 'பகுதி', 'விகுதி' என்று இரண்டைச் சொல்கிறோம். 'ராமனுக்கு'என்கிற வார்த்தையில் 'ராமன்' என்பது விகுதி என்கிறோம். 'பகுதி', 'விகுதி'என்பன 'ப்ரக்ருதி', 'விக்ருதி'என்ற ஸம்ஸ்கிருத வார்த்தைகளின் மரூஉதான். "அதெப்படிச் சொல்லலாம்?பகுதி என்பது நல்ல தமிழ் வார்த்தையல்லவா?'பகுத்தல்' என்ற வினைச்சொல்லின் வேரிலிருந்து உண்டான பெயர்ச்சொல் அல்லவா பகுதி?"என்று ஆக்ஷேபிக்கலாம்.

'பகுப்பட்ட'என்ற அர்த்தத்தில் சுத்தத் தமிழ் வார்த்தையாகப் 'பகுதி' என்று ஒன்று இருப்பது வாஸ்தவம்தான். ஒரு வஸ்து நாலாகப் பகுக்கப்பட்டால், அதை 'கால் பகுதி' என்கிறோம். இங்கே 'பகுதி' என்பது சுத்தத் தமிழ் வார்த்தையாகப் 'பகுதி' என்ற ஒன்று இருப்பது வாஸ்தவம்தான். ஒரு வஸ்து நாலாகப் பகுக்கப்பட்டால், அதை 'கால் பகுதி'என்கிறோம். இங்கே 'பகுதி' என்பது சுத்தத் தமிழ் வார்த்தைதான். ஆனால் ஸம்ஸ்கிருத 'ப்ரகிருதி' என்பது மருவி 'பகுதி' என்ற இன்னொரு தமிழ் வார்த்தையானதும் உண்டு என்கிறேன். இப்படி 'ப்ரக்ருதி' என்ற அர்த்தத்தில் தான் 'ராமனுக்கு' என்பதில் 'ராமன்' என்பதைப் பகுதி என்கிறோம். ஸம்ஸ்கிருத வியாகரணப்படி ராமன்-பரக்ருதி;கு-விக்ருதி. இந்த 'விக்ருதி'யே 'விகுதி'என்றாயிற்று. 'பகுதி'விஷயமாகத் தமிழ் தாதுவிலிருந்தே வந்ததோ என்று சந்தேகம் ஏற்படுவதுபோல் 'விகுதியின் விஷயத்தில் சந்தேகமே இல்லை. 'பகு(த்தல்)'என்பது போல 'விகு(த்தல்)'என்று தமிழ் வேர்ச்சொல் இருப்பதாக யாரும் சொல்ல மாட்டார்கள். விக்ருதிதான் விகுதி என்பதாலேயே, ப்ரகிருதிதான் பகுதி என்று நிச்சயமாகத் தெரிகிறது.

(விக்ருதியைப் 'பிரத்யயம்' என்றும் சொல்வார்கள். ஒரே ப்ரக்ருதிக்குப் பல அர்த்தங்களை உண்டாக்குவது ப்ரத்யயம்தான். 'ராமனை அடித்தேன்'என்றபோது 'ஐ' என்ற ப்ரத்யயம் ராமன் என்ற ப்ரக்ருதியை அடிவாங்கினவனாகப் பண்ணுகிறது. 'ராமனால் அடிபட்டேன்'என்றால், அதே ராமன் என்ற ப்ரக்ருதி 'ஆல்'என்ற ப்ரத்யயத்தால் அடிக்கிறவனாக ஆகிறான்!)

தமிழைவிட ஸம்ஸ்கிருதத்துக்கு உயர்வு தருவதற்காக இதையெல்லாம் நான் சொல்லவில்லை. ஒன்றுக்கு உயர்வு, இன்னொன்றுக்குத் தாழ்வு சொல்லிச் சந்தோஷப்படுவது எப்போது?ஒன்றுதான் நம்முடையது, மற்றது பிறத்தியானுடையது என்று நினைக்கும்போதுதான்!'ரேஸ்'வித்யாஸங்களை நிஜம் என்று நினைத்து இதில் ஒன்றே நம்மைச் சேர்ந்தது என்றால்தான் இதை உயர்த்திச்

சொல்லி, இன்னொன்றை மட்டம் தட்டுவதில் ஆசை உண்டாகும். 'இந்த ரேஸ் வித்யாஸமே தப்பு;இரண்டும் ஒன்றுதான்;ஒரே இனத்திலேயே, ஒரே கலாசாரத்திலேயே வெவ்வேறு பாஷைகள் மட்டும் ஏற்பட்டன'என்னும்போது உயர்த்துவது, தாழ்த்துவது என்பதற்கு இடம் ஏது?ஆகையால் யதார்த்தத்தை யதார்த்தமாக (fact-ஐ fact-ஐ) சொல்கிறேனேயொழிய, ஒன்றுக்கு உசத்தி சொல்லி இன்னொன்றுக்கு மட்டும் தட்டுவதற்குத் சொல்லவில்லை.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## வியாகரணம் : வேதத்தின் வாய்

## ஸம்ஸ்கிருதம் சர்வதேச மொழி

ஸம்ஸ்கிருதம் அத்தனை மநுஷ்யர்களுக்குமான பாஷை. அது ஸர்வதேச பாஷை. அதுவே தேவ பாஷையும் ஆகும். தேவர்களுக்கு 'கீர்வாணர்' என்று பெயர். அதனால் ஸம்ஸ்கிருதத்துக்கு 'கைர்வாணீ' என்ற பெயரும் இருக்கிறது. 'தேவ பாஷை'என்று அதைத் தமிழ்க் கவிதைக்குச் சக்கரவர்த்தி ஸ்தானத்திற்கு வைக்கப்பட்ட கம்பரும் சொல்கிறார்:"தேவ பாடையில் இக்கதை செய்தவர்"என்கிறார்.

## ஸம்ஸ்கிருதம் நாம தைவீ வாக்

என்று தண்டி காவ்யாதர்சத்தில் சொல்கிறார். தேவர்கள் வாக்கு - தைவா வாக். நம் எல்லாருக்கும் தேவர்கள் பொதுதான். அதனால், ஸம்ஸ்கிருதமும் நம் எல்லோருக்கும் வேண்டியதுதான். அவ்யக்தம் எனப்படுகிற ஸ்பஷ்டமற்ற 'அக்ஷரங்களே இல்லாத பாஷை அது. இங்கிலீஷில் word என்கிறபோது 'வே(ர்)ட்'என்று எழுதுவதா என்று தெரியவில்லை. வியக்தமான ஏகாரம், வியக்தமான ஓ-காரம் இரண்டுமில்லாத ஒரு சப்தமாக அது இருக்கிறது. ஸம்ஸ்கிருதத்தில் இப்படிப்பட்ட ஒலிகள் இல்லை. Word என்பதை 'வேர்ட்'என்று ர்-ஐ வியக்தமாகச் சொன்னாலும் தப்பாக இருக்கிறது;அதற்காக 'ர' காரமே இல்லாமல் 'வேட்'என்றாலும் சரியாயில்லை;துளித்துளி ர-சப்தத்தைத் தொட்டுக்கொண்டு ட்-டுக்குப் போக வேண்டியிருக்கிறது. இம்மாதிரி அவ்யக்த சப்தங்கள் ஸம்ஸ்கிருதத்தில் இல்லை.

அதேபோல், தாது இல்லாத பதம் என்பதே இல்லாத பாஷையாகவும் ஸம்ஸ்கிருதமே இருக்கிறது. எந்த ஒரு பதத்தை எடுத்துக் கொண்டாலும், அதை அக்ஷர அக்ஷரமாகப் பிரித்து அர்த்தம் சொல்ல முடிகிறது. காதுக்கும்

மங்களமாகவும், கம்பீரமாகவும் இருக்கிறது. அதைச் சிலபேருக்கு மட்டுமானது என்று குறுக்கி த்வேஷம் பாராட்டுவது சரியே இல்லை.

ஏதோ சத்தம் போட்டு அதன் மூலம் விஷயத்தைத் தெரிவிப்பது என்றில்லாமல், சப்தங்களை நன்றாக ஸம்ஸ்காரம் பண்ணி (அதாவது சுத்தப்படுத்தி) அப்புறம் பதம், வாக்கியம் முதலானதுகளையும், பெயர்ச்சொல், வினைச்சொல் முதலான parts of speech-களையும் அலசி அலசி வரையறைப்படுத்தி ஸம்ஸ்காரம் செய்திருப்பதாலேயே இதற்கு 'ஸம்ஸ்க்ருதம்'என்ற பேர் ஏற்பட்டது. சிக்ஷா சாஸ்திரமும், அதைவிட முக்யமாக வியாகரணமும் இப்படிப் பட்ட ஸம்ஸ்காரங்களைச் செய்கின்றனவை ஆகும்.

அந்த பாஷையைப் பேசினால் அதுவே மநுஷ்யனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்கிறது. தேவ பாஷையிலிருந்து உண்டானதால் திவ்ய சக்திகளின் அநுக்கிரஹத்தைப் பெறும் படியாகச் செய்கிறது. ஸம்ஸ்கிருத சப்தங்கள் உத்தமமான நாடி சலனங்களால் நல்லது செய்வதோடு nervous system-ஐ (நரம்பு மண்டலத்தை)க்கூட வலுவாக்கி, ஆரோக்கியம் தருகிறது என்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## வியாகரணம் : வேதத்தின் வாய்

## மொழி ஆராய்ச்சியும் சமய சாஸ்திரமும்

சிக்ஷை, வியாகரணம், இதற்கப்புறம் சொல்லப் போகிற சந்தஸ், நிருக்தம் ஆகிய இந்த நாலு வேதாங்கங்களும் பாஷா சம்பந்தமான சாஸ்திரங்கள்தான்.

"நம் மதத்துக்கு ஆதாரமான சாஸ்திரங்கள் என்று சொல்லி விட்டு, இப்படி மொழி ஆராய்ச்சியாகவும் (linguistic research) இலக்கணமாகவும் (Gramamar) இன்னும் prosody என்கிற செய்யுள் இலக்கணமாகவும் சொல்லிக் கொண்டே போகிறேனே!மதநூல் என்றால் ஸ்வாமியைப்பற்றி, வழிபாட்டு முறைகளைப் பற்றி, பக்தி ஞானாதிகளைப் பற்றி, தத்துவங்களையும் கோட்பாடுகளையும், வாழ்க்கை தர்மங்களையும் பற்றிச் சொன்னால்தானே சரியாயிருக்கும்?"என்று தோன்றலாம்.

'வேதம்' என்கிற விஷயத்தில் இப்படிப்பட்ட மதவிஷயமாகவே கருதப்படும் சமாசாரங்கள் நிறைய வந்தன. இனிமேல் சொல்லப் போவதில் கல்பம், மீமாம்ஸை, நியாயயம், புராணம், தர்ம சாஸ்திரம் முதலியவற்றிலும் இவ்விஷயங்கள் வரும். ஆனால், நடுவே இப்படி மத சம்பந்தமில்லாத மாதிரித் தோன்றுகிற பாஷா

சாஸ்திரங்களும் வருகின்றன.

ஏனென்றால், வேத மதத்தின்படி எல்லாமே தெய்வ சம்பந்தமானதுதான். அதனால் இது மதவிஷயம், இது மதவிஷயமில்லை என்றே இல்லை. சரீர ஸௌக்யத்தைச் செய்கிற வைத்யம் (ஆயுர்வேதம்), யுத்தம் போட உதவுகிற தநுர்வேதம் இவைகூட ஆத்மாபிவிருத்திக்கு உதவுகிறவை என்பதாலேயே வித்யாஸ்தானத்தில் சேர்ந்தார்கள். பொருளாதாரம், அரசியல் இவற்றைச் சொல்லும் அர்த்த சாஸ்திரம் கூடத்தான்.

வாழ்க்கையின் ஸகல அம்சங்களையும் எப்படிச் சீர்படுத்தி நடத்தினால் ஜீவன் பரிசுத்தி பெற்று மோட்ச மார்க்கத்திலே செல்ல முடியுமோ, அதற்கு வழி சொல்லித் தருவதால்தான், இவை யாவும் மதப் பிரமாண கிரந்தங்களாக மதிக்கப்படுகின்றன.

இவற்றிலே பரமாத்மாவின் மிக உத்தம ஸ்வரூபமாக சப்தமே இருப்பதால் அது சம்பந்தப்பட்ட பாஷையின் ஸம்ஸ்காரத்தால் நமக்கு ஆத்ம க்ஷேமத்தை உண்டாக்கிக்

கொள்ள வேண்டும் என்றே வியாகரணம், சி க்ஷை ஆகியன ஏற்பட்டிருக்கின்றன. சப்தப் பிரம்ம வாதத்தை வியாகரணம் எடுத்துச் சொல்கிறது. ஸங்கீதத்திலே நாதப் பிரம்ம உபாஸனை என்று சொல்வதும் இதிலே மோன ஒரு கிளைதான். சப்தங்களைச் சரியாக தெரிந்துகொண்டு பேச்சாகப் பிரயோஜனப்படுத்தும்போது அதனால் ஸமாசாரங்களை தெரிவிப்பதோடு மட்டுமில்லாமல் நம்மையே சுத்தி பண்ணிக் கொள்ளவும் இந்தப் பாஷா சாஸ்திரங்கள் ஒத்தாசை செய்கின்றன.

வியாகரணத்திற்கு நம் சம்பிரதாயத்தில் எத்தனை மதிப்புக் கொடுத்திருக்கிறார்கள் என்பது அதற்கு நடுநாயகமாக இருக்கிற பதஞ்சலியின் "மஹாபாஷ்ய"த்துக்குக் கொடுத்திருக்கிற 'மஹா'பட்டத்திலிருந்தே தெரிகிறது. வேத பாஷ்யம், பிரம்ம ஸூத்ர பாஷ்யம், உபநிஷத் பாஷ்யம், கீதா பாஷ்யம் என்றிப்படி பல பாஷ்யங்கள் பல ஆசார்ய புருஷர்களால் பண்ணப்பட்டிருந்தாலும் அவற்றுக்குக்கூடத் தராத 'மஹா' டைட்டிலை இந்த பாஷா சாஸ்திரத்துக்கே தந்து பெருமைப்படுத்தியிருக்கிறார்கள். வித்வானான ஒருவனுக்கு ஒரு ஸாம்ராஜ்யத்தையே சாஸனம் பண்ணிக் கொடுத்தால் எத்தனை ஸந்தோஷம் உண்டாகுமோ, அத்தனை ஸந்தோஷம் மஹாபாஷ்யத்தைப் படிப்பதிலேயே ஏற்பட்டுவிடும் என்று ஒரு வசனம் இருக்கிறது:

**மஹாபாஷ்யம் வா படநீயம்**

மஹாராஜ்யம் வா சாஸநீயம்

பழைய ராஜாங்கங்களில் வியாகரண சாஸ்திரப் பிரசாரத்தை எவ்வளவு போற்றி

வளர்த்திருக்கிறார்கள் என்பதற்கு வேங்கி சாஸனம் மாதிரி சமீபத்தில் ஒரு சான்று கிடைத்தது. முன்னே central provinces (மத்ய மாகாணம்) என்று சொல்லி, சுதந்திர இந்தியாவில் 'மத்ய ப்ரதேஷ்'என்கிறார்களே அங்கே, 'தார்'என்று ஒரு ஸம்ஸ்தானம் இருந்தது. இப்போது இந்தியன் யூனியனோடு சேர்ந்துவிட்டது. அந்த 'தார்'தான் கொடைவள்ளலும், கலைகளை எல்லாம் போஷித்தவனுமாகிய போஜராஜாவுடைய தலைநகரான "தாரா"என்பது. அந்த தாரா-தார் - பட்டிணத்திலே ஒரு மசூதி இருக்கிறது. அந்த மசூதியில் ஒரு பொந்துக்குள் ஏதோ ஸம்ஸ்கிருத எழுத்துக்கள் தெரிவதாக வெளியிலே தெரிய வந்தது. ஆனாலும் அந்நிய மதஸ்தர்களின் இடமாகி விட்டது. அவர்கள் அநுமதித்தால்தான் அங்கே போய் என்னவென்று பார்க்க முடியும். இதனால், எபிக்ராஃபிகல் டிபார்ட்மென்ட்காரர்களே ஒரு பத்து பதினைந்து வருஷம் ஒன்றும் பண்ண முடியாமல் சும்மா இருந்தவிட்டார்கள். அப்புறம், சுதந்திரம் வந்து சில வருஷங்களுக்கு அப்புறம்தான் கொஞ்சம் கொஞ்சமாக அது என்ன எனறு பார்க்க போவது போல் போய், அப்புறம் மசூதிக்காரர்களிடம் உத்தரவு வாங்கிக்கொண்டு, அந்த பொந்தைப் பிரித்துப் பார்த்தார்கள்.

அதிலே ஒரு பெரிய சக்கரம் இருந்தது. அந்தச் சக்கரத்தில் ஏகப்பட்ட ச்லோகங்கள் எழுதியிருந்தது. அதிலுள்ள எழுத்துக்கள்தான் முன்னே தெரிந்தவை.

ச்லோகங்கள் சொன்ன விஷயம் என்ன என்று பார்த்தால் அத்தனையும் வியாகரணம் தான்!வியாகரணம் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் சக்கராகாரமாகப் பாடல்களாக அமைத்து, ஆச்சரியப்படும்படியான நீலீணீகூஷீமீ-ரூபத்தில் எழுதி வைத்திருக்கிறது.

போஜராஜா காலத்தில் ஸரஸ்வதியின் ஆலயமாக இருந்த இடத்தில்தான் இப்போது மசூதி இருக்கிறது. வாக்தேவியான ஸரஸ்வதி ஆலயத்தில் பாஷா சாஸ்திரம் இருக்கவேண்டும் என்றே வேத புருஷனுக்கு வாக்கு ஸ்தானமான வியாகரணத்தை எழுதி வைத்திருக்கிறார்கள். அந்த பெரிய சக்கரத்தை ஒரு பெரிய சக்கரத்தை ஒரு பார்வை பார்த்தால் வியாகரணம் முழுக்கத் தெரிந்துவிடும் என்கிறார்கள். அதற்கு வழிபடத்தக்க பெருமை உண்டு என்பதாலேயே ஆலயத்தில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அந்தக் கோயில் மசூதியாகப் போய் அநேக வருஷங்கள் கழித்து வாக்தேவியின் அநுக்ரஹத்தால் இந்தச் சக்கரம் நமக்குக் கிடைத்திருக்கிறது. அதை எபிக்ராஃபி இலாகாகாரர்கள் அச்சுப் போட்டிருக்கிறார்கள். இங்கிலீஷிலும் மொழி பெயர்த்திருக்கிறார்கள். வியாகரணம் மாதிரியான சாஸ்திரங்களைக் கூட வெறும் லௌகிகம் என்று தள்ளாமல் பூஜார்ஹமாக (வழிபாட்டுக்கு உரித்தானதாக) வைத்து, ராஜாங்கத்தாரே போஷித்து வந்திருக்கிறார்கள் என்று இதிலிருந்து தெரிகிறது.

## சந்தஸ் : வேதத்தின் பாதம்

### செய்யுளிலக்கணம்

சந்தத்தமிழ் என்ற வார்த்தையைக் கேட்கிறோம். சந்தத்தமிழில் பாடி இறைவனை துதிக்க வேண்டும் என்று அடியார்கள் வேண்டுகிறார்கள். சந்தம் என்ற இந்த வார்த்தைக்கு மூலம்தான் "சந்தஸ்".

"சந்தஸ்"என்றால் வேதம் என்று முன்பு அர்த்தம் சொல்லியிருக்கிறேன். ஸ்ருஷ்டி என்ற அச்வத்த விருட்சத்துக்கு வேதங்கள்தான் இலைகள் என்று கீதையில் பகவான் சொல்கிற போதும் "சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி"என்றே சொல்கிறார் - 'வேதம்'என்பதற்குப் பதில் 'சந்தஸ்'என்கிறார். ஆனால் வேத புருஷனுக்குக் காலின் ஸ்தானத்தில் இருக்கிறதும், இப்போது நான் எடுத்துக் கொண்டிருக்கிறதுமான "சந்தஸ்"என்ற வித்யாஸ்தானம் "வேதம்" என்ற அர்த்தத்தைச் சொல்வதல்ல.

இங்கே "சந்தஸ்"என்பது செய்யுளிலக்கணம், பாவிலக்கணம் என்றே பொருள்படும். ரிக்வேதம், ஸாமவேதம் இரண்டும் முழுக்கச் செய்யுள்களாக இருப்பவை. யஜுஸில் "ப்ரோஸ்"உண்டாயினும் அதுவும் 'பொயட்ரி'யோடு கலந்து கலந்துதான் வருகிறது. இப்படி சந்தஸ்கள் நிறைந்ததாகவே வேதம் இருப்பதால் தான், அதற்கே சந்தஸ் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது.

நாம் ஸூட் போட்டுக் கொள்வதானால் தையற்காரன் அளவெடுத்துக் கொண்டு போகிறான். அதன்படி துணியை வெட்டித் தைக்கிறான். அளவு எடுக்காவிட்டால் தைக்க முடியாது. இதேபோல் நம் எண்ணங்களுக்குச் செய்யுள் ரூபம் கொடுக்கிறபோது, எண்ணத்தையே ஒரு உருவமாகக் கொண்டு வரவேண்டுமானால் அதற்குப் போட வேண்டிய டிரெஸ்தான் செய்யுள். அதற்கு அளவு வேண்டும் அல்லவா? சட்டை இத்தனை இன்ச் நீளம், இத்தனை இஞ்ச் அகலம் என்கிற மாதிரி செய்யுளுக்கும் இத்தனை அடி, இத்தனை எழுத்து என்றெல்லாம் நிர்ணயம் செய்து தரவேண்டும். அப்படிச் செய்வதுதான் "சந்தஸ்" என்ற சாஸ்திரம்.

சந்தம் என்றும், metre என்றும் சொல்லும் செய்யுள் அளவைகளை அதுவே வகுத்துக் கொடுக்கிறது. பிங்களர் என்பவர் செய்த "சந்தஸ் ஸூத்ரம்" தான் இப்போது அதற்கு முக்யமான நூலாக இருக்கிறது. வேத புருஷனுக்குப் பாதமாக இருப்பது சந்தஸ் என்னும் அங்கம். மந்திரத்தின் ரிஷியைச் சொல்லி மூக்கைத்

தொடுவார்கள்;தேவதையைச் சொல்லி ஹ்ருதயத்தைத் தொடுவார்கள். செய்யுள் உருவில் உள்ள வேத மந்திரங்களெல்லாம் சந்தஸ்;மற்ற, அதாவது வேதத்தில் வராத, செய்யுள்களை ச்லோகம் என்று சொல்வார்கள். வசனத்தை 'கத்யம்'என்றும், சந்தஸை 'பத்யம்' என்றும் ஸம்ஸ்கிருதத்தில் சொல்வதுண்டு. தமிழில் நாம் செய்யுள் என்பதைத் தெலுங்கிலும் பத்யம் என்பார்கள். இங்கிலீஷில் பொயட்ரி என்று சொல்வார்கள்.

வேதச் செய்யுளுக்கே 'சந்தஸ்'என்று பெயர் இருப்பதோடு, 'சந்தஸ்' ' என்றால் எந்தச் செய்யுளுக்கும் இருக்கவேண்டிய சந்தம் அல்லது metre என்ற வ்ருத்தமும் (விருத்தமும்) ஆகும். செய்யுளில் பலவிதமான வ்ருத்தங்கள் இருக்கின்றன. ச்லோகங்களும் விருத்தங்களே. அநுஷ்டுப் விருத்தம் என்பது ஒன்று. புராண ச்லோகங்களும் ராமாயண ச்லோகங்களும் அந்த விருத்தங்களே. விருத்த லட்சணம்தான் சந்தஸ்.

ஒவ்வொரு விருத்தத்திற்கும் இவ்வளவு பாதம் இருக்க வேண்டும், ஒவ்வொரு பாதத்திற்கும் இவ்வளவு எழுத்துக்கள் இருக்கவேண்டும் என்ற நியமம் உண்டு. "ஆர்யா" என்று ஒரு சந்தஸ் இருக்கிறது. அதற்கு மாத்திரைக் கணக்கு உண்டு. அதாவது இவை குற்றெழுத்து, நெட்டெழுத்துக் கணக்கு உள்ள சந்தஸ்களாகும். இவற்றில் 'ராம' என்பது இரண்டெழுத்து என்ற கணக்குப் பண்ண மாட்டார்கள். 'ரா'என்கிற நெடிலுக்கு இரண்டு மாத்திரை, 'ம'என்ற குறிலுக்கு ஒரே மாத்திரை என்று மாத்ரா ரீதியிலேயே கணக்கு பண்ணி, 'ராம'என்றால் மூன்று மாத்திரை என்பார்கள். குறில் நெடில் வித்யாஸம் பார்க்காமல் ஒவ்வொரு செய்யுளிலும், ஒவ்வொரு பாதத்தில் இத்தனை எழுத்து இருக்கவேண்டும் என்பதாக நிர்ணயிக்கப்பட்ட சந்தஸ்களே அதிகம். அவற்றைத்தான் குறிப்பாக 'விருத்தம்'என்பது. 'ஆர்யா'சந்தஸைப் போல குறில்-நெடில் வித்யாஸம் பார்த்துப் பாதத்துக்கு இவ்வளவு மாத்திரை இருக்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டவற்றுக்கு 'ஜாதி'என்று பெயர்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**பாதம் - அடி - FOOT**

சந்தஸை வேத புருஷனின் பாதம் என்றேன். சந்தஸ் தனக்கு விஷயமாக (subject) எடுத்துக் கொள்கிற செய்யுளுக்கும் 'பாதம்'இருக்கிறது. தமிழில் ஈரடிக் குறள், நாலடியார் என்பதிலெல்லாம் வரும் 'அடி'தான் செய்யுளின் 'பாதம்'.

நாலடியார் என்றால் நாலு அடியார்கள் என்று அர்த்தமில்லை. அடியார்கள் என்று பக்தர்களுக்கு ஏன் பேர் ஏற்பட்டது என்றால், அவர்கள் ஈச்வர சரணாரவிந்தத்திலேயே, திருவடித் தாமரையிலேயே கிடக்கிறவர்கள். ஸம்ஸ்கிருதத்திலும் ஆசார்ய பாதர், கோவிந்த பாதர், கௌடபாதர், பகவத் பாதர் என்று ஈச்வரனின் பாத ஸம்பந்தம் உடையவர்களாகவே மஹான்களைச் சொல்கிறோம். நாலடியார் என்றால், 'நாலு அடி கொண்ட செய்யுள்கள்'என்று அர்த்தம்.

காலுக்குத் தானே ஸம்ஸ்கிருதத்தில் பதம் அல்லது பாதம் என்றும், தமிழில் அடி என்றும் பெயர் இருக்கிறது?இங்கிலீஷிலும் ஒரு Stanza-வில் இத்தனை feetஇருக்க வேண்டும் என்றுதான் சொல்கிறார்கள். அதன் மீட்டர்களும் feet-க்கு இத்தனை அக்ஷரம் என்றுதான் வகுக்கப்படுகின்றன. காலைக்குறிப்பிடும் foot என்பது division of a stanza -வுமாகும். பாதம் -அடி-foot என்று எல்லா பாஷைகளிலும் ஒரே பொருள்படும் வார்த்தை செய்யுள் அளவையாக இருக்கிறது. பொருள்படும் வார்த்தை செய்யுள் அளவையாக இருக்கிறது. எதில் போனாலும், இப்படி ஜன சமுதாயம் முழுவதற்கும் ஐக்யத்தைக் காட்டுவது மனஸுக்கு ஸந்தோஷமாக இருக்கிறது.

இன்னொரு ஒற்றுமை கூட. இங்கிலீஷில் பன்னிரண்டு அங்குல நீளமுள்ள அளவை footஎன்கிறார்கள்;தமிழிலும் இதை 'அடி'என்றே சொல்லுகிறோம்.

ஒரு மந்திரம் அல்லது ஸ்லோகத்தில் பாதம் என்பது நாலில் ஒரு பங்காக அதாவது கால் பாகமாகவே இருக்கிறது. இடுப்பு வரை பேர்பாதி - கீழே பாதி. அந்தப் பாதி இரண்டு கால்களாக இருக்கிறது. அதனால் ஒவ்வொரு காலும் பாதியில் பாதியான காலாகவும் (1/4) இருக்கிறது. இப்படியேதான், இடுப்புக்கு அரை என்று பேர் இருப்பதும். 'அரைஞாண்'என்று இடுப்பிலே கட்டும் கயிற்றைச் சொல்லும் போது, 'அரை'என்றால் இடுப்பு. அதுதான் மநுஷ்ய சரீரத்தின் நடுவாக இருந்து கொண்டு, அதை இரண்டு அரை (1/2) களாகவும் பிரிக்கிற அவயவம். அதனால், இப்படிப் பெயர்.தமிழில், கால் என்றால் பாதத்திலிருந்து இடுப்புவரையுள்ள LEG என்ற முழு அவயவத்தையும், பாதம் அல்லது பதம் என்றால் திளிளிஜி என்றும் பெரும்பாலும் அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். ஆனால் சில இடங்களில் மட்டும் 'கால்'என்பதே FOOT என்ற அர்த்தத்திலும் பிரயோகமாகிறது. 'உள்ளங்கால்', 'புறங்கால்'என்னும்போது, கால் என்பது முழு LEG இல்லை;FOOT தான். ஸம்ஸ்கிருதத்தில் LEG, FOOT இரண்டும் பாதம்தான். 'பாதம்'என்றால் கால், கால் வாசி.

### சந்தஸ் : வேதத்தின் பாதம்

### கணக்கிடுவது எப்படி ?

ஒரு வேத மந்திரம் அல்லது வேதமல்லாத ச்லோகத்தை எடுத்துக் கொண்டால், அதை நாலாகப் பிரித்திருக்கும். முக்கால்வாசி மீட்டர்களை, ஸமமான அக்ஷரங்கள் அல்லது ஸமமான மாத்திரைகள் கொண்ட நாலாகவே பிரிந்திருக்கும். பாதத்துக்குப் பாதம் ஸமமாக இல்லாததை 'விஷமம்'என்பார்கள். 'வி-ஸமம்'என்பதே 'விஷமம்'. ஸமம் என்பது வித்யாஸமில்லாத நிலைமையைக் காட்டுவது. இதனால்தான், நடுநிலைமை தப்பிப் பண்ணுகிற காரியங்களை 'விஷமம்'என்கிறோம். தந்திரமாகப் பண்ணுகிற தப்புக்கு, mischief என்ற அர்த்தத்தில் இந்த வார்த்தை வழக்கத்தில் வந்து விட்டது. Unequal என்பதே அதன் நேர் அர்த்தம்.

எல்லாப் பாதங்களும் ஒன்றுக்கொன்று வித்யாஸமாயிருந்தால் அது விஷம வ்ருத்தம். ஒன்று விட்டொன்று (alternate) பாதங்கள் ஒரே மாதிரி இருப்பது, அர்த்த ஸமவ்ருத்தம். அதாவது முதல் பாதத்துக்கும் இரண்டாம் பாதத்துக்கும் அக்ஷர வித்யாஸம் இருக்கும்;மூன்றாம் பாதத்துக்கும் நாலாம் பாதத்துக்கும் இப்படியே வித்யாஸம் இருக்கும்;ஆனால், முதல் பாதமும் மூன்றாம் பாதமும் ஒரே மாதிரியிருக்கும்;இரண்டும் நாலும் ஒன்றாக இருக்கும்.

அநேகமாகப் பாதங்கள் யாவும் ஸமமாகவே இருக்கும். உதாரணமாக, எல்லோருக்கும் தெரிந்த (அல்லது அப்படி அப்படி நான் நினைத்துக் கொண்டிருக்கிற)

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ।

ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்நோபசாந்தயே । ।

என்பதில் உள்ள நாலு பாதங்கள்:

ஒன்று - சுக்லாம்பரதரம் விஷ்ணும்

இரண்டு - சசிவர்ணம் சதுர்புஜம்

மூன்று - ப்ரஸந்நவதநம் த்யாயேத்

நான்கு - ஸர்வவிக்நோப சாந்தயே.

எண்ணிப் பார்த்தால் இந்தப் பாதங்கள் ஒவ்வொன்றிலும் எட்டு

அக்ஷரமேயிருக்கும்.
உயிரெழுத்தையும், உயிர் மெய்யெழுத்தையும் மட்டும் தான் அக்ஷரமாகக் கணக்குப் பண்ண வேண்டும்; மெய்யெழுத்துக்களைத் தள்ளிவிட வேண்டும். அப்போதுதான் எட்டு என்ற கணக்கு சரியாகி வரும். இப்படிச் செய்தால் 'சுக்லாம் பரதரம் விஷ்ணும்'என்பதில் தமிழ் லிபிப்படி பதின்மூன்று எழுத்து இருந்தாலும் கூட, எட்டு அக்ஷரங்கள்தான் என்று ஆகும். 1-சு;2-க்லாம்;3-ப;4-ர; 5-த; 6-ரம்; 7-வி;8-ஷ்ணும். இதே மாதிரியே மற்றப் பாதங்களிலும் எட்டெட்டுத்தான் இருக்கும்.

தமிழிலே இப்படி எழுத்துக் கணக்கும் அக்ஷரக் கணக்கும் வித்யாஸப்படுகிற மாதிரி ஸம்ஸ்கிருத லிபியில் இல்லை. அதில் கூட்டெழுத்துக்கள் உண்டு. அதனால், 'க்லாம்', 'ரம்', 'ஷ்ணும்'என்பவை ஒவ்வொரு எழுத்தாகவே எழுதப்படுகின்றன. கிரந்தம், தேவநாகரி முதலான ஸம்ஸ்கிருத ஆல்ஃஃபெட்டுகளில் இதுவும் ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

ஒவ்வொன்றும் எட்டு அக்ஷரம் கொண்ட நாலு பாதங்களை உடைய 'சுக்லாம்பரதரம்'போன்ற ச்லோகங்களின் மீட்டருக்கு 'அநுஷ்டுப்'சந்தஸ் என்று பெயர்.

இந்த மீட்டர் வேதம், பிற்பாடு வந்த காவிய இலக்கியம் இரண்டிலுமே இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**காவிய சந்தம் பிறந்த கதை**

வேதத்திலே சப்தங்களை ஏற்றி இறக்குகிற ஸ்வரங்கள் உள்ள மாதிரி, காவியம் முதலிய மற்ற ச்லோகங்களில் அக்ஷரங்களை ஏற்றுவது என்று கிடையாது. ஸ்வரங்களோடேயே சொல்லி வந்த வைதிக அநுஷ்டுப் மீட்டரில் ஸ்வரமில்லாமல் முதன் முதலில் வந்த வாக்கு வால்மீகியுடையதுதான். அவர் வேண்டுமென்று யோசித்து இப்படி பண்ணவில்லை.

தம்பதியாக இருந்த இரண்டு பக்ஷிகளில் ஒன்றை ஒரு வேடன் அடித்துக் கொன்றதை அவர் பார்க்கும்படி நேரிட்டது. அப்போது பக்ஷிகளிடம் அவருக்கு ஏற்பட்ட கருணையே வேடனிடம் மஹா கோபமாக மாறிற்று. அவனைப் பார்த்து, 'ஏ வேடனே!ஸந்தோஷமாகக் கூடிக் களித்துக் கொண்டிருந்த பக்ஷிகளில் ஒன்றை வதைத்த உனக்கு எந்தக் காலத்திலுமே நல்ல கதி இல்லாமல் போகட்டும்'என்று சபித்துவிட்டார். ஸம்ஸ்கிருதத்திலே அவருடைய சாப வாக்கு இப்படி வந்தது:

மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம்

அகம : சாச்வதீ ஸமா :

யத் க்ரௌஞ்ச மிதுநாத் ஏகம்

அவதீ : காம மோஹிதம் ।।

அவர் யோசிக்காமலே, கருணை உணர்ச்சி பீறிக்கொண்டு வந்து இப்படி சபித்துவிட்டார். உடனே ரொம்பவும் வருத்தப்பட்டார், "நாம் ஏன் இப்படி சாபம் கொடுத்திருக்க வேண்டும்?" என்று. இதை யோசித்துப் பார்க்கும் போது அவருக்கு ஆச்சரியமாக ஒன்று ஸ்புரித்தது. தாம் கொடுத்த சாபமே எட்டெட்டு அக்ஷரங்கள் கொண்ட நாலு பாதமாக அநுஷ்டுப் வ்ருத்தத்தில் அமைந்திருக்கிறது, என்று தெரிந்தது!"மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம்"என்பது ஒரு பாதம். "அகம:சாச்வதீ ஸமா:"என்பது இரண்டாவது பாதம். "யத் க்ரௌஞ்ச மிதுநாத் ஏகம்"என்பது மூன்றாவது பாதம். "அவதீ:காமமோஹிதம்"என்பது நாலாவது பாதம். தன்னை மீறி உணர்ச்சி வந்தாற் போலவே, தன்னைமீறி இப்படிப்பட்ட விருத்த ரீதியான வார்த்தை ரூபமும் வந்திருப்பதை அறிந்து ஆச்சரியப்பட்டார்.

அவர் கொடுத்த சாபத்துக்கே இன்னொரு அர்த்தமும் இருப்பதையும் உணர்ந்தார். வேடனைப் பார்த்து இவர் சொன்னதே மஹா விஷ்ணுவைப் பார்த்து, "ஹே, லக்ஷ்மிபதியே!தம்பதியாக இருந்த இருவரில் ஒருவன் காம மோகத்தால் செய்த காரியத்துக்காக நீ அவனைக் கொன்றது உனக்கு எந்நாளும் கீர்த்தி தரும்"என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளும்படியாகத் தம்முடைய சாபவாக்கு அமைந்திருக்கிறது என்று கண்டு கொண்டார். ராவணன் - மண்டோதரி என்ற தம்பதியில், காமதுரனான ராவணனைக் கொன்றதால் உலகம் உள்ளளவும் கீர்த்தி பெறப்போகிற ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பற்றியே இப்படி அவர் வாயில் அவர் அறியாமல் சந்தத்தோடு வார்த்தை வந்து விட்டது. அதிலிருந்து ஈச்வர ஸங்கல்பத்தைப் புரிந்து கொண்டு, அதே மீட்டரில் வால்மீகி ராமாயணத்தைப் பண்ண ஆரம்பித்து விட்டார்.

வேத ஸ்வரமில்லாத ச்லோக ரூபம் என்பது அப்போதுதான் ஏற்பட்டது. வேதம் மாதிரியே, இனிமேலும் உயர்ந்த விஷயங்களை எல்லோரும் நினைவு வைத்துக் கொள்ளும் படியாக சொல்வதற்கு வசதியாக இப்படி ஒரு ஸாதனம் - ச்லோகம் என்ற சாதனம் - கிடைத்ததே என்று ஸந்தோஷப்பட்டு, முதல் காவியமாக ஸ்ரீராம சரித்திரத்தைப் பாடினார்.

ப்ரோஸ் மறந்து போய்விடும். மீட்டர் அளவைகளுக்கு உட்படுத்திய பொயட்ரிதான் நினைவிலிருக்கும். இதனால் தான் ஆதியில் எல்லாம் பொயட்ரியாகவே எழுதினார்கள். ப்ரிண்டிங் ப்ரெஸ் வந்தபின், 'நினைவு வைத்துக்

கொள்ள வேண்டியதில்லை;புஸ்தகத்தைப் பார்த்துக் கொள்ளலாம்'என்று ஏற்பட்ட பிறகுதான் ப்ரோஸ் வளர்ந்தது.

ஆனாலும், விஷயங்களைச் சொல்வதில் பொயட்ரிக்குத் தான் அழகும், சக்தியும் அதிகம். முதலில் உண்டான பொயட்ரி வால்மீகி ராமாயணம். அதனால்தான் வால்மீகி ராமாயணத்துக்கு "ஆதி காவியம்"என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

பகவத் பிரஸாதமாக 'சந்தஸ்'கிடைத்ததால்தான் ராமாயணமே பிறந்தது. மற்ற ஸ்தோத்திரங்கள், புராணங்கள், காவியங்கள் எல்லாவற்றுக்கும் வேண்டிய ச்லோகம் என்ற ரூபம் பிறக்கச் சந்தந்தான் உதவியது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**சில சந்த வகைகள்**

இந்த்ர வஜ்ரா, உபேந்தர வஜ்ரா, ஸ்ரக்தரா என்றெல்லாம் காவியங்களிலும் ஸ்தோத்திரங்களிலும் பல சந்தஸ்கள் இருக்கின்றன. சிலது ரொம்பச் சிக்கலாக மஹா புத்திமான்களாலேயே இயற்றக் கூடியதாக இருக்கும்.

ஒரு பாதத்துக்கு எட்டு அக்ஷரம் இருப்பதை 'அநுஷ்டுப்' என்றேன். ஒன்பது அக்ஷரம் இருந்தால் 'ப்ருஹதீ'என்று அந்த சந்தஸுக்கு பெயர். 'பங்க்தி'என்பது பாதத்துக்குப் பத்து அக்ஷரம் கொண்ட மீட்டர். 'த்ரிஷ்டுப்'என்பது பதினொன்று கொண்டது. பன்னிரண்டு அக்ஷரம் கொண்டது 'ஜகதீ'. இப்படியே ஒரு பாதத்துக்கு 26 அக்ஷரம் கொண்ட ('உத்க்ருதி'என்ற சந்தஸில் 'புஜங்க விஜ்ரும்பிதம்'என்ற வகையில் அமைந்த) ச்லோகம் வரை பல மீட்டர்கள் உண்டு. அதற்கு மேல் போய்விட்டால் 'தண்டகம்'என்று பெயர். தண்டகத்தில் பல வகைகள் உண்டு. "திருத்தாண்டகம்"என்று அப்பர் பாடினது தண்டக சம்பந்தமுள்ளதுதான்.

வ்ருத்தங்களுக்குப் பேர் அழகாகவும், பொருத்தமாகவும், காவிய நயமுள்ளதாகவும் இருக்கும். புலி விளையாட்டாகப் பாய்ந்து போகிற மாதிரி ஒரு சந்தஸில் அக்ஷரங்கள் போகும். அதற்கு 'சார்தூல விக்ரீடிதம்'என்றே பேர். 'சார்தூலம்'என்றால் புலி;'விக்ரீடிதம்'என்றால் விளையாட்டு. இது பாதத்துக்குப் பத்தொன்பது அக்ஷரம் கொண்ட 'அதி த்ருதி' மீட்டர்களில் ஒரு வகை. ஒவ்வொரு பாதத்துக்குள்ளும் இந்த 19 அக்ஷரங்கள் 12 என்றும் 7 என்றும் பிரியவேண்டும். ஆச்சார்யாளின் "சிவானந்த லஹரி"யில் 28-லிருந்து பல ச்லோகங்கள் இப்படி அமைந்தனவே. காமாக்ஷியைப் பற்றியதான "மூக

பஞ்சசதீ"யில் 'ஸ்துதி சதக'ஆரம்ப ச்லோகங்கள் இந்த வ்ருத்தம்தான். கடைசி நூறான 'மந்தஸ்மித சதகம்'முழுதும் இந்த வ்ருத்தமே. பாம்பு ஊர்ந்து போகிற மாதிரி சப்த அமைப்பு உள்ள சந்தஸுக்கு 'புஜங்க ப்ரயாதம்'என்று பெயர். புஜங்கம் என்றால் பாம்பு தானே? ஆசார்யாளின் 'ஸுப்ரமண்ய புஜங்கம்'இந்த மீட்டரில் இருப்பதுதான். இது பாதத்துக்குப் பன்னிரண்டு அக்ஷரமுள்ள 'ஜகதீ'யில் ஒரு வகை. இந்தப் பன்னிரண்டும் சரியாக ஆறு ஆறாகப் பிரிந்திருக்க வேண்டும் என்பது விதி:

ம-யூ-ரா-தி-ரூ-டம்

ம-ஹா-வா-க்ய-கூ-டம்

என்கிற மாதிரி.

ஆசார்யாளின் "ஸௌந்தர்ய லஹரி"ஸ்தோத்திரமானது 'சிகிரிணி' விருத்தத்தில் அமைந்ததாகும். இதிலே பாதத்துக்குப் பதினேழு எழுத்து. 'அத்யஷ்டி'என்பது இப்படிப்பட்ட பதினேழு எழுத்தும் ஆறு - பதினொன்று என்று பிரிந்து பிரிந்து வந்தால் அதற்கு 'CAKE'என்று பெயர். 'மூகபஞ்சசதீ'யில் 'பாதாரவிந்த சதகம்'இந்த மீட்டரில்

இருப்பதே. வாய் கொள்ளாமல், ச்லோகங்களைக் கடல் மடை திறந்தது போல் சொல்லிக் கொண்டே போவதற்கு 'ஸ்ரக்தரா'ரொம்பவும் ஏற்றதாகும். ('ப்ரகிருதி'என்ற) 21அக்ஷரம் கொண்ட பாதத்தை உடைய இந்த மீட்டரில் இருப்பதே. வாய் கொள்ளாமல், ச்லோகங்களைக் கடல்மடை திறந்தது போல் சொல்லிக் கொண்டே போவதற்கு 'ஸ்ரக்தரா' ரொம்பவும் ஏற்றதாகும். ('ப்ரகிருதி'என்ற) 21 அக்ஷரம் கொண்ட பாதத்தை உடைய இந்த மீட்டரில், ஒவ்வொரு பாதமும் மூன்று ஏழு அக்ஷரங்களாகப் பிரிந்திருக்கும். ஈச்வரன், விஷ்ணு இருவரைக் குறித்தும் ஆசார்யாள் செய்திருக்கிற பாதாதி கேச, கேசாதி பாத வர்ணனை ஸ்தோத்திரங்களை இந்த வ்ருத்தத்திலேயே பாடியிருக்கிறார்.

முதலில் 'இந்த்ர வஜ்ரா'என்றேனே, அது பாதத்துக்குப் பதினொரு அக்ஷரம் கொண்ட 'த்ருஷ்டுப்'என்று சந்தஸில் ஒரு வகை. இந்தப் பதினொரு அக்ஷரத்திலேயே வேறு விதமானது உபேந்த்ர வஜ்ரா. இரண்டையும் கலந்து 'உபஜாதி'காளிதாசனின் 'குமார ஸம்பவம்' இந்த உபஜாதி மீட்டரில் தான் ஆரம்பிக்கிறது.

இவையெல்லாம் வேதத்துக்குப் பிற்பட்ட காவியங்களிலும் ஸ்தோத்திரங்களிலும் வருகிற சந்தஸ்கள். வேதத்திலும் வருவதான சந்தஸ்கள்:'காயத்ரீ', 'உஷ்ணீக் ', 'அநுஷ்டுப்','ப்ருஹதீ', 'பங்க்தீ', 'த்ருஷ்டுப்','ஜகதீ'முதலானவை.

'காயத்ரீ' மஹா மந்திரம், அதுவே மந்திரராஜன் என்று கொண்டாடுகிறமே,

அப்படிப்பட்ட உயர்ந்த மந்திரத்துக்கு அது அமைந்துள்ள 'காயத்ரீ' என்ற சந்தஸை வைத்தே பெயர் அமைந்திருக்கிறது. ஸாதாரணமாக ஒரு மந்திரம் என்றால், அது எந்த தேவதையைக் குறித்ததோ அதை வைத்தே பேர் சொல்வோம். சிவ பஞ்சாக்ஷரி, நாராயண அஷ்டாக்ஷரீ, ராம த்ரயோதசீ என்று தேவதையின் பெயரையும் மந்திரத்திலுள்ள அக்ஷரங்களின் எண்ணிக்கையையும் சேர்த்துச் சொல்கிறோம். காயத்ரீ என்பது மீட்டரின் பெயர்தான். ஆனாலும் மீட்டரையே வைத்து மந்திரத்துக்குப் பேர் சொல்கிறோம். சப்தத்துக்கும் ஸ்வரத்துக்குமே தனியாக தெய்விக சக்தி உண்டு என்பதுபோல், சந்தஸின் அமைப்புக்கும் இருக்கிறது என்று இதிலிருந்து தெரிகிறது.

'நாலு கால் சேர்ந்தால் ஒன்று. அதனால் ஒரு மந்திரமானாலும், ச்லோகமானாலும் நாலு பாதம் உண்டு'என்றேன். இதற்கு வித்யாஸமாக, இந்த காயத்ரீ மந்திரத்தில் மூன்று பாதங்கள்தான் இருக்கின்றன. ஒவ்வொன்றும் எட்டெழுத்துக்கொண்ட மூன்றே பாதங்களாலான 24 அக்ஷர மீட்டராகவே வேதத்திலுள்ள இந்த 'காயத்ரீ'இருக்கிறது. மூன்று பாதம் இருப்பதால், இதை 'த்ரிபதா காயத்ரீ'என்கிறோம். வேறு பல காயத்ரீ வகைகளும் உண்டு. வேதத்தின் முதல் மந்திரமான 'அக்னீமீளே'ஸூக்தமே காயத்ரீ சந்தஸில் அமைந்ததுதான்.

காவிய, ஸ்தோத்திரங்களில் 24 அக்ஷர காயத்ரீயானது தலைக்கு ஆறு அக்ஷரமுள்ள நாலு பாதங்களாகப் பிரியும். பாதமொன்று ஏழு அக்ஷரமுள்ள 28 அக்ஷர வ்ருத்தம் "உஷ்ணிக்"எனப்படும். இது வரை சொன்னதெல்லாம் அக்ஷரக் கணக்கு. அதாவது குறில் நெடில் என்று வித்யாஸம் பார்க்காமல் அ,ஆ,இரண்டையும் ஒரே அக்ஷரமாகக் கணக்குப் பண்ணும் முறை. மற்ற இடங்களில் குறிலை 'ஹ்ரஸ்வம்'என்றும், நெடிலை 'தீர்க்கம்'என்றும் சொன்னாலும் இந்த prosody-ல், அதாவது சந்தஸ் சாஸ்திரத்தில், குறிலை 'லகு'என்றும், நெடிலை 'குரு'என்றுமே சொல்வது வழக்கம். குறில் நெடில் வித்யாஸமில்லாதவையே 'வ்ருத்தம்'என்றும், வித்யாஸம் பார்த்து மாத்திரைக் கணக்கெடுப்பதை 'ஜாதி'என்றும் சொன்னேன். இப்படிப்பட்ட ஜாதிகளில் குறிலுக்கு ஒரு மாத்திரை, நெடிலுக்கு இரண்டு மாத்திரை என்று கணக்கு. குறிலே இன்னின்ன எழுத்துக்கு முன்னால் வந்தால் இரண்டு மாத்திரை என்றும் அதில் உண்டு. ஒவ்வொரு பாதத்திலும் இத்தனை அக்ஷரம் இருக்க வேண்டும் என்பதற்குப் பதில், இத்தனை மாத்திரை இருக்க வேண்டும் என்பது விதி.

முன்னமையே சொன்ன 'ஆர்யா'என்ற மீட்டரில்தான் "மூக பஞ்சசதீ"யின் ஆரம்பமான 'ஆர்யா சதகம்'உள்ளது. ரொம்பவும் உயர்ந்தவளால்தான் 'ஆர்யை'யாக இருக்கப் பட்ட அம்பாளை ஸ்தோத்திரம் பண்ணுவதோடு, மீட்டரும் ஆர்யாவாக இருப்பதாலேயே 'ஆர்யா சதகம்' என்று பேர். இதிலே அக்ஷரங்களைக் கணக்குப் பண்ணாமல், மாத்திரைகளைக் கணக்குப் பண்ணினால் ச்லோகங்கள் ஒரு கிரமத்தில் செய்யப்பட்டிருக்கின்றன என்று தெரியும்.

அக்ஷரக்கணக்குப் பண்ணினால், "இதென்ன, ச்லோகத்துக்கு ச்லோகம் மீட்டர் வித்யாஸமாயிருக்கிறதே?"என்று தோன்றும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**சந்தஸ் சாஸ்திரத்தின் உபயோகம்**

ஒரு மந்திரம் உருவான பின், அதன் சரியான உச்சாரணத்துக்கு ரக்ஷையாக இருப்பது சிக்ஷா சாஸ்திரம். ஆனாலும் அந்த மந்திர ரூபமே சரியா என்று பார்ப்பதற்கு ரக்ஷையாக இருப்பது சந்தஸ் சாஸ்திரந்தான். மந்திர ரூபம் தப்பாக வரவே வராதுதான். ஏனென்றால், அது ரிஷிகள் யோசித்து யோசித்துப் பண்ணினதே இல்லை. பகவானே ஸ்புரிக்க வைத்தவைதான் மந்திரங்கள். அதனால் பகவத் ஸ்ருஷ்டியில் மநுஷ்யன், மிருகம், மரம் ஒவ்வொன்றும் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற நியதிப்படி தாமே சரியான ரூபத்தோடு உண்டாகிற மாதிரி மந்திரங்களிலும் சந்தம் தானே சரியாகத்தான் இருக்கும். ஆனாலும் இப்போது நமக்கு ஒரு மந்திரம் அல்லது வேத ஸூக்தம் சொல்லிக் கொடுக்கப்படுகிறபோது அது சரியான மூல ரூபத்தில் வந்திருக்கிறதா என்று நிச்சயப்படுத்திக் கொள்ள சந்தஸ் சாஸ்திரந்தான் உதவி செய்கிறது. அதன் மீட்டரிலுள்ள அக்ஷரங்களை எண்ணிப் பார்த்து சரியாக இல்லாவிட்டால், விஷயம் தெரிந்தவர்களைக் கேட்டு, அதன் சரியான ரூபத்தை தெரிந்து கொள்ளலாம்.

தாமாகத் தோன்றிய மந்திரங்கள் தவிர கவிகளே உட்கார்ந்துகொண்டு இயற்றுகிறபோது சந்தஸின் கணக்குத்தான் அவர்கள் எண்ணத்துக்கு ச்லோக ரூபம் தருவதற்கு வகை செய்கிறது.

பாட்டுக்குத் தாளம் மாதிரி ச்லோகங்களுக்கு சந்தஸ் என்பது. இப்படி ஒரு கணக்கில் கொண்டு வருவதால்தான் நிர்ணயமான ரூபம் கிடைக்கிறது. அது மனப்பாடம் பண்ணவும் ஸௌகரியம் செய்கிறது. ஆனால் எதிலுமே கட்டுப்பாடு வேண்டாம் என்கிற நவீன ஸமுதாயத்தில், கவிதைகளுக்கும் மீட்டர் வேண்டாம் என்று மனம் போனபடி பண்ண ஆரம்பித்திருக்கிறார்கள். கட்டுப்படுவதிலேயே தான் பெரிய ஸ்வதந்திரத்துக்கு வழி இருக்கிறது என்று இந்த நாளில் தெரியவில்லை.

வேதத்தில் ஒரு அக்ஷரங்கூடக் கூட்டவும் குறைக்கவும் முடியாதபடி மூல ரூபத்தை ரக்ஷித்துத் தருவது சந்தஸ் சாஸ்திரந்தான். ஆத்மார்த்தமான வேதத்தில்

ஒரு சப்தம் கூட அதிகமாகவோ, குறைந்து விடவோ அனுமதிக்கக்கூடாது அல்லவா?

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## சந்தஸ் : வேதத்தின் பாதம்

## வேதத்தின் பாதம், மந்திரத்தின் மூக்கு

ஒவ்வொரு மந்திரமும் ஒரு தேவதையைக் குறித்து. ஆகையால் மந்திரம் ஒவ்வொன்றுக்கும் ஒரு தேவதை உண்டு;அதன் மீட்டரான சந்தஸ் உண்டு;அதை லோகத்துக்குத் தந்த ரிஷியும் உண்டு. எந்த ரிஷியின் மூலமாக ஒரு மந்திரம் லோகத்திற்கு வந்ததோ அந்த ரிஷி அந்த மந்திரத்தின் ரிஷியாவார். அவர் பெயரைச் சொல்லித் தலையில் கையை வைத்துக்கொள்வது அவருடைய பாதங்களை சிரஸில் வைத்துக் கொள்வதற்கு அறிகுறி. ரிஷிகளால்தான் அந்த மந்திரங்கள் நமக்குக் கிடைத்தன;ஆகையால் அவர்களுக்கு முதலில் வணக்கம் செலுத்த வேண்டும்.

சந்தஸைச் சொல்லி மூக்கில் கை வைக்கிறோம். மந்திரத்தின் ரூபத்தை ரக்ஷிப்பது சந்தஸ். அது அதற்கு பிராணன் போன்றது. அதனால் பிராண ஸ்தானமாகிய மூக்கில் கையை வைக்கிறோம். மூச்சு இல்லாவிட்டால் பிராணன் இல்லையல்லவா?அதைப் போல, மந்திரங்களுக்கு மூச்சாக இருப்பது சந்தஸ். வேதம் என்ற மொத்த ரூபத்துக்கு சிக்ஷை மூக்கு, சந்தஸ் பாதம் என்றால், வேதத்திலுள்ள மந்திரங்கள் என்பதன் ரூபத்துக்குச் சந்தஸே மூக்கு, அதாவது ஜீவாதாரமான ச்வாஸ அவயவம்.

அந்த மந்திரத்தின் அதி தேவதையைத் தியானம் செய்ய வேண்டும். தேவதையின் ஸ்வரூபத்தை ஹ்ருதயத்தில் தியானம் செய்து மந்திர ஜபம் ஆரம்பிக்க வேண்டும். அதற்காகத் தான் தேவதையைச் சொல்லி ஹ்ருதயத்தைத் தொடுகிறோம். சந்தஸ் மந்திரங்களுக்கு ஆதாரம். கால் என்ற ஆதாரத்தின் மேல் நாம் நிற்பதுபோல், வேத புருஷன் சந்தஸாலேயே நிற்கிறார்.

சந்த:பாதோ வேதஸ்ய

என்று சொல்லியிருக்கிறது. காலில்லாமல் நிற்க முடியாது. வேதமந்திரங்களை சந்தஸின் அமைப்பே நிற்க வைக்கிறது.

நிருக்தம்: வேதத்தின் காது

நிருக்தம் என்பது வேதத்துக்கு அகராதி (dictionary) அகராதி என்பது 'கோசம்'என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்லப்படும். 'அமர கோசம்'என்று பிரஸித்தமான அகராதி இருக்கிறது. 'நிகண்டு'என்றும் சொல்வதுண்டு. தமிழிலும் 'நிகண்டு'என்றே சொல்வர். ஒவ்வொரு வார்த்தையும் இந்த தாதுவிலிருந்து வந்தது என்று அட்சர அட்சரமாகப் பிரித்து ஒவ்வொரு அட்சரத்துக்கும் அர்த்தம் சொல்வது நிருக்த சாஸ்திரம். இதை Etymology என்கிறார்கள்.

நிருக்தம் வேதபுருஷனுக்கு ச்ரோத்திர ஸ்தானம், அதாவது, காது. வேதத்தில் உள்ள அரிய வார்த்தைகளுக்கு இன்ன இன்ன அர்த்தம் என்று அது சொல்கிறது. ஏன் இந்தப் பதம் இங்கே உபயோகப்படுத்தப்பட்டது என்பதைக் காரணத்துடன் அது சொல்லும்.

நிருக்த சாஸ்திரம் பலரால் செய்யப்பட்டிருக்கிறது. இவற்றில் முக்கியமானது யாஸ்கர் செய்தது. வேத நிகண்டுகளில் ஒவ்வொரு பதத்திற்கும் அது இப்படி உண்டாயிற்றென்று காரணம் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஹ்ருதயம்'என்றே ஒரு பதம் இருக்கிறது. அது ஏன் இப்படி வந்தது?வேதமே அதன் காரணத்தைச் சொல்லியிருக்கிறது. 'ஹ்ருதி அயம்':'ஹ்ருதயத்தில் அவன் இருக்கிறான்'என்பது அர்த்தம். 'ஹ்ருத்'என்பதே பௌதிகமான ஹ்ருத.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நிருக்தம் : வேதத்தின் காது**

நிருக்தம் என்பது வேதத்துக்கு அகராதி (dictionary) அகராதி என்பது 'கோசம்'என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்லப்படும். 'அமர கோசம்'என்று பிரஸித்தமான அகராதி இருக்கிறது. 'நிகண்டு'என்றும் சொல்வதுண்டு. தமிழிலும் 'நிகண்டு'என்றே சொல்வர். ஒவ்வொரு வார்த்தையும் இந்த தாதுவிலிருந்து வந்தது என்று அட்சர அட்சரமாகப் பிரித்து ஒவ்வொரு அட்சரத்துக்கும் அர்த்தம் சொல்வது நிருக்த சாஸ்திரம். இதை Etymology என்கிறார்கள்.

நிருக்தம் வேதபுருஷனுக்கு ச்ரோத்திர ஸ்தானம், அதாவது, காது. வேதத்தில் உள்ள அரிய வார்த்தைகளுக்கு இன்ன இன்ன அர்த்தம் என்று அது சொல்கிறது. ஏன் இந்தப் பதம் இங்கே உபயோகப்படுத்தப்பட்டது என்பதைக் காரணத்துடன் அது சொல்லும்.

நிருக்த சாஸ்திரம் பலரால் செய்யப்பட்டிருக்கிறது. இவற்றில் முக்கியமானது யாஸ்கர் செய்தது. வேத நிகண்டுகளில் ஒவ்வொரு பதத்திற்கும் அது இப்படி

உண்டாயிற்றென்று காரணம் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஹ்ருதயம்'என்றே ஒரு பதம் இருக்கிறது. அது ஏன் இப்படி வந்தது?வேதமே அதன் காரணத்தைச் சொல்லியிருக்கிறது. 'ஹ்ருதி அயம்':'ஹ்ருதயத்தில் அவன் இருக்கிறான்'என்பது அர்த்தம். 'ஹ்ருத்'என்பதே பௌதிகமான ஹ்ருதயத்தின் பெயர். ஆனால் 'அயம்'என்று அதில் கிட்ட உள்ளவனான ஈச்வரனனையும் சேர்த்துச் சொல்வதால் அதன் ஆத்மிகமான முக்யத்வமும் குறிப்பிடப்படுகிறது.எந்த சாஸ்திரமானாலும் ஈச்வரனில் கொண்டுவிட வேண்டும். ஹ்ருதயத்தில் பரமேச்வரன் இருப்பதால், அதற்கு, 'ஹ்ருதயம்'என்று பெயர் வந்தது என்று தெரிய வருகிறது. இபப்டி ஒவ்வொரு பதத்திற்கும் காரணம் உண்டு. அதை ஆராய்வது நிருக்தம். ஸம்ஸ்கிருதத்தில் எல்லாப் பதங்களுக்கும் தாது உண்டு. தாதுவை "ரூட்"என்று இங்கிலீஷில் சொல்லுவார்கள். இங்கிலீஷில் கிரியாபதங்களுக்கு (verbs) தாது உண்டே தவிரப் பெயர்ச் சொல்லுக்கும் இன்ன க்ரியையால் இப்படிப் பெயர் வந்தது என்று தாது காட்ட முடிகிறது. அப்படி உள்ள பதங்களின் விகாரங்களை மற்ற பாஷைகக்காரர்கள் எடுத்து உபயோகித்தார்கள். அதனால்தான் அந்த பாஷைக்காரர்கள் எடுத்து உபயோகித்தார்கள். அதனால்தான் அந்த பாஷைகளில் பல வார்த்தைகளுக்கு ரூட் தெரிவதில்லை. அந்த பாஷைக்கே உரிய சொல்லாக இருந்தால்தானே சொல்ல முடியும்?மணியை இங்கிலீஷில் Hour என்று சொல்லுகிறார்கள். அந்தப் பதத்தில் அமைந்துள்ள எழுத்துக்களின் உச்சரிப்பை அநுசரித்துப் பார்த்தால், ஹௌர் அல்லது ஹோர் என்றே சொல்ல வேண்டும். ஒரு காலத்தில் "ஹோர்"என்றே சொல்லியிருக்க வேண்டும். "ஹோரா சாஸ்திரம்"என்று ஸம்ஸ்கிருதத்தில் ஒரு சாஸ்திரம் உண்டு. 'அஹோராத்ரம்' (இரவு பகல்) என்பதிலிருந்து, அந்த 'ஹோரா' என்பது வந்தது. 'ஹோரா'என்பது தமிழில் 'ஒரை'ஆயிற்று. கல்யாணப் பத்திரிக்கைகளில் முஹூர்த்த காலத்தை 'நல்லோரை'என்று

போடுகிறார்கள். அந்த ஹோராவே இப்போதைய இங்கிலீஷ் ஸ்பெல்லிங்கில் hour-ஆகவும், உச்சரிப்பில் 'அவர்' என்றும் வந்திருக்கிறது. இப்படியே heart என்பது ஸம்ஸ்கிருத 'ஹ்ருத்'என்பதிலிருந்து வந்தது. இப்படிப் பல வார்த்தைகள் இருக்கின்றன. இவைகள் பிற பாஷைகளில் தற்காலத்திய ஸ்வரூபத்தை அடைவதற்கு எவ்வளவோ காலம் ஆகியிருக்க வேண்டும். அந்த பாஷைகாரர்களுக்குப் பதங்களின் மூலம் தெரியாமல் இருப்பதற்குக் காரணம் இந்தப் பழமைதான்.

அர்த்தம் தெரிந்தாலொழிய ஒரு பாஷையைக் கேட்டு பிரயோஜனம் என்ன?அது கேட்டும் கேளாமல், செவிடாக இருப்பதற்கு ஸமம்தானே?இதனால்தான் நிருக்தத்தை வேத புருஷனுக்குக் காது என்பது. காதால் கேட்கப்படும் ச்ருதிக்கும் (வேதத்துக்கும்) இது ச்ரோத்ரம்!

வியாகரண சாஸ்திரத்தையும் நிருக்த சாஸ்திரத்தையும் வெள்ளைக்காரர்கள்

காசியிலிருந்த பண்டிதர்களிடமிருந்து தெரிந்து கொண்டார்கள். இன்ன இன்ன காரணங்களால் இன்ன இன்ன பதம் இவ்விவ்வாறு வந்தது என்று நிருக்தத்திலே சொல்லியிருப்பதைத் தெரிந்து கொண்டனர். இதிலிருந்தே மொழி ஆராய்ச்சி என்று ஒரு புதிய சாஸ்திரம் (science) உண்டாக்கினார்கள். அது ஃபைலாஜி (philology) எனப்படும். இப்படியாக நவீன பாஷா சாஸ்திரமும் ஏற்பட்டதற்கு மூலகாரணம் வியாகரணமும் நிருக்தமுமே.

அவர்கள் ஆராய்ச்சியால் பற்பல பாஷைகள் ஒவ்வொரு மூலத்திலிருந்து வந்தவைகளென்று சொல்கிறார்கள். அந்த மூலபாஷையைப் பேசிய மனிதர்களிருந்த இடத்தில்தான் அந்த இனத்தின் ஆதிஜனங்கள் இருந்தார்களென்றும், அப்புறம் பல இடங்களுக்கு பரவினார்களென்றும் சொல்கிறார்கள். ஸம்ஸ்கிருத மூல பாஷைகாரர்களின் ஆதி இடம் பற்றி அபிப்ராய பேதங்கள் இருக்கின்றன. ஏதாயிருந்தாலும் நமக்குக் கவலையில்லை. நாம் எல்லாம் நம்முடைய ஊரே என்ற கொள்கையுடையவர்கள்:- "யாதும் ஊரே!", "ஸ்வதேசோ புவனத்ரயம்!"-மூன்றுலகமும் நமக்குச் சொந்தமான நாடு தான்!பல இனம், அவற்றுக்கான பல மூல பாஷைகள் என்று இவர்கள் சொன்னாலும் அத்தனை இனத்துக்கும் ஒரே மூல இனமுண்டு;இவர்கள் மூல பாஷைகளாகச் சொல்வதற்கெல்லாமும் பொதுவாக ஒரே மூல பாஷை உண்டு என்பது நம் கொள்கை. நவீன ஆராய்ச்சிகளும் அதில் கொண்டுவிட்டு உலக ஜன சமுதாயம் முழுக்க ஒன்று என்று நிரூபணமாக வாக்தேவி அநுக்ரஹிக்க வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்

### கண் என்பது ஏன்?

நம்முடைய வைதிக மதத்திற்கு ஆதாரமாகிய பதினான்கு வித்யாஸ்தானங்களுல் ஷடங்கங்களில் சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம் என்பவற்றைப் பற்றிச் சொன்னேன். அடுத்தது ஜ்யோதிஷம் (சோதிடம்) என்பது.

வேதபுருஷனுக்கு ஜ்யோதிஷம் நேத்திர ஸ்தானம், அதாவது கண். ஜ்யோதிஷ சாஸ்திரமானது மூன்று ஸ்கந்தங்கள் அடங்கியது. அதனால், அதற்கு "ஸ்கந்த த்ரயாத்மகம்"என்று பெயர்.

கர்க்கர், நாரதர், பராசரர் முதலிய பல ரிஷிகள் பல ஜ்யோதிஷ ஸம்ஹிதைகளைச் செய்திருக்கிறார்கள். ஸூரிய பகவான், அசுரத் தச்சனாகிய மயனுக்கு ஜ்யோதிஷ

உபதேசம் பண்ணினதாக ஒரு கிரந்தம் இருக்கிறது. அதற்கு, "ஸௌரிய ஸித்தாந்தம்"என்று பெயர். இப்படித் தேவர்களும் ரிஷிகளும் இயற்றிய பல ஜ்யோதிஷக் கிரந்தங்கள் உண்டு. மனிதர்கள் செய்த கிரந்தங்களும் இருக்கின்றன. வராஹமிஹிரர் என்பவர் பல கிரந்தங்களை எழுதியிருக்கிறார். ஆர்யபட்டர், பாஸ்கராச்சாரியார் முதலியவர்கள் பண்ணின கிரந்தங்கள் பல இருக்கின்றன. சமீப காலத்தில் சுந்தரேச்வர ச்ரௌதிகள் என்பவர் சித்தாந்த கௌஸ்துபம் என்ற ஜ்யோதிஷ க்ரந்தத்தைச் செய்திருக்கிறார். ஜ்யோதிஷத்தை ஏன் வேத புருஷனுக்குக் கண்ணாகச் சொல்லியிருக்கிறது?

கண் இல்லாதவன் குருடன், கண் எதற்காக இருக்கிறது?பக்கத்திலுள்ள வஸ்துக்களைக் கையினால் தடவிப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். தூரத்திலுள்ளதன் ரூபம் தெரிய வேண்டுமானால், அப்பொழுது கண்ணினால் பார்த்தே தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இடத்திலே தூரத்தில் இருப்பதைத் தெரிந்துகொள்ள நம்முடைய கண் எப்படி உபயோகப்படுகிறதோ, அப்படிக் காலத்திலே தூரத்தில் (அதாவது பல வருஷங்களுக்கு முன்னால் அல்லது பல வருஷங்களுக்கு அப்புறம் ) உள்ள க்ரஹ நிலைகளைத் தெரிந்து கொள்ள ஜ்யோதிஷ சாஸ்திரம்தான் உதவி புரிகிறது. இன்றைக்கு சூரியனும் சந்திரனும் மற்ற கிரஹங்களும் எங்கே இருக்கின்றன என்பதைப் பிரத்யக்ஷத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். கண்ணில்லாவிட்டாலும் கையால் தடவியே கிட்டத்தில் உள்ளதன் ரூபத்தைத் தெரிந்து கொள்வதுபோல், ஜ்யோதிஷ சாஸ்திரம் தேவைப்படாமல் நம் கண்ணாலேயே பார்த்து, காலத்தில் கிட்டே, அதாவது நிகழ்காலத்தில் உள்ள கிரஹ நிலைமைகளை அறிந்து கொண்டுவிடலாம். ஆனால் 50 வருஷத்துக்கு முன்னால் அல்லது பின்னால் கிரஹங்கள் எங்கே இருக்கும் என்று தெரிய வேண்டுமானால் ஜ்யோதிஷ சாஸ்திரத்தைப் பார்த்தாலே தெரியும்!

கிட்டத்தில் உள்ளதைத் தடவிப் பார்த்து, அதன் உருவத்தை அறிகிறபோதுகூட அது பச்சையா, சிவப்பா, வேறு என்ன கலர் என்று தெரிந்து கொள்ள முடிவதில்லை. இதை அறியக் கண் வேண்டியிருக்கிறது. இதே போல, பிரத்யக்ஷத்தில் ஒரு கிரஹம் தெரிந்தால்கூட, அது அந்த நிலையில் இருப்பதால் ஏற்படுகிற பயன் என்ன, அது நம்மை எப்படிப் பாதிக்கிறது என்று நமக்குத் தெரியாது. இதை ஜ்யோதிஷந்தான் நமக்குத் தெரிவிக்கிறது.

ஆகவேதான், ஜ்யோதிஷத்தை வேத புருஷனுக்குக் கண் என்றார்கள். வைதிகக் காரியங்களைச் செய்வதற்கு, இன்னின்ன க்ரஹம் இன்னின்ன க்ரஹம் இன்னின்ன இடத்தில் இருக்க வேண்டும் என்ற விதி உண்டு. 'நாள் பார்ப்பது', 'முஹூர்த்தம் வைப்பது'என்றெல்லாம் க்ரஹ நிலைகளை ஒட்டித்தானே சடங்குகளைப் பண்ண வேண்டியிருக்கிறது?இதனால் ஜ்யோதிஷம் நேத்ர ஸ்தானத்தைப் பெறுகிறது.

ஜ்யோதிஷத்துக்கு 'நயனம்' என்று ஒரு பெயர் உண்டு. 'நய'என்றால் அழைத்துக் கொண்டு போவது (to lead) . கண்ணில்லாதவனை இன்னொருவர்தானே

அழைத்துக் கொண்டு போக வேண்டியிருக்கிறது?அதனால் கண்தான் அழைத்துப் போகிற லீடராக இருக்கிறது என்பது தெரிகிறது!வேத கர்மாக்களைப் பண்ணுவதற்கான காலத்தை நிர்ணயம் பண்ணி, நம்மை அந்தக் காரியத்துக்கு அழைத்துக் கொண்டு போகிற கண்ணாக இருப்பது ஜ்யோதிஷமே.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்**

**வான சாஸ்திரமும் ஜோஸ்யமும்**

வான சாஸ்திரம் (Astronomy) என்பதாக கிரஹங்களின் நிலைமைகளை மட்டும் ஆராய்ச்சி பண்ணுவதோடு இன்றைய ஸயன்ஸ் நின்றுவிடுகிறது. அவை அந்த நிலைகளில் இருப்பது லோகத்தை எப்படிப் பாதிக்கிறது, நம்மை எப்படிப் பாதிக்கிறது, அவற்றை நமக்கு அநுகூலமாக்கிக் கொள்ள என்ன பண்ணவேண்டும் என்ற விஷயங்களை - அதாவது, "ஜோஸ்யம் பார்ப்பது"என்று நாம் சொல்கிற Astrology சமாசாரங்களையும் Astronomy யோடு சேர்த்துச் சொல்வது ஜ்யோதிஷ சாஸ்திரம்.

கிரஹங்கள், நக்ஷத்ரங்கள், திதி ஆகியன இப்படியிப்படி இருந்தால், அந்த சமயத்தில் செய்யும் கர்மாக்களுக்கு இப்படியாகப்பட்ட பலன்கள் உண்டாகின்றன என்பதைச் சொல்லவே ஜ்யோதிஷ சாஸ்திரம் ஏற்பட்டது. வைதிக கர்மாக்களைச் செய்வதற்குரிய அநுகூலமான காலங்களை நிர்ணயிப்பதற்காகவே வேதாங்கமான ஜ்யோதிஷம் ஏற்பட்டது. இதில் கிரஹ ஸஞ்சாரம் முதலானதுகளை கணக்குப் பண்ண வேண்டியிருந்ததால் கணிதமும் நிறையச் சேர்ந்துவிட்டது.

யாகம் பண்ணும் இடமான யக்ஞவேதி, சயனம் என்பதான யக்ஞபூமி அமைப்பு ஆகியவற்றுக்கு நிர்ணயமான அளவுகள் உண்டு. அந்த அளவுப்படி அமைத்து யக்ஞம் பண்ணினாலே பலன் உண்டு. அதனால் யக்ஞவேதிகளின் அளவுகளைத் தீர்மானமாகக் கணக்குப் பண்ணிக் கொடுக்க வேண்டியதாயிற்று. இந்த ரீதியிலும், வேதத்துக்குத் துணையங்கமாக கணிதம் அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## புராதன கணித நூல்கள்

ஜ்யோதிஷத்தில் மூன்று ஸ்கந்தங்கள் இருக்கின்றன என்பதாக முன்பே சொன்னேன். மடத்தில் ஜ்யோதிஷம் தெரிந்த ஒரு சாஸ்திரிகள் இருந்தார். அவருக்கு ஒரு பட்டம் கொடுக்க யோசித்தோம். கடைசியில் 'த்ரிஸ்கந்த பாஸ்கர' என்னும் பட்டத்தைக் கொடுத்தோம். ஸ்கந்தம் என்றால் மரத்தின் அடிக்கட்டையில் இருந்து பிரிகிற பெரிய கிளைகளுக்குப் பெயர் ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் ஸித்தாந்த ஸ்கந்தம், ஹோரா ஸ்கந்தம், ஸம்ஹிதா ஸ்கந்தம் என்று மூன்று ஸ்கந்தங்கள் இருக்கின்றன.

அரித்மெடிக், டிரிக்னாமெட்ரி, ஜியாமெட்ரி, அல்ஜீப்ரா என்று பலவிதமாக உள்ள கணிதங்களெல்லாம் ஸித்தாந்த ஸ்கந்தத்தில் அடங்கி இருக்கின்றன. மேற்கத்தியர்கல் எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு அப்புறம் 'டெவலப்'செய்த Higher Mathematics-ன் விஷயங்கள் எல்லாம் புராதனமான நம் ஜ்யோதிஷத்தில் வந்து விடுகின்றன.

அரித்மெடிக் (Arithmetic) என்பது வியக்த கணிதம். எண்களைத் தெளிவாகக் கொடுத்துப் பலன் கேட்பது வியக்த கணிதம். சாதாரணக் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் என்பவைகள் வியக்த கணிதத்தைச் சார்ந்தவை. அவ்யக்தம் என்பது 1,2,3,4 போலத் தெரிந்த எண்ணிக்கையாக இராமல் கி,ஙீஎன்று வைத்துக் கொள்வது. அதைத்தான் அல்ஜீப்ரா என்று சொல்கிறார்கள். அவ்யக்தம் என்பதற்கு 'வெளிப்படையாகத் தெரியாதது'என்பது அர்த்தம். க்ஷேத்ர கணிதம் என்பதுதான் 'ஜ்யாமெட்ரி'. 'ஜ்யா'என்றால் பூமி; 'மிதி'என்றால் அளவை முறை என்று அர்த்தம். யாகவேதி, யக்ஞ குண்டம் இவை எப்படியிருக்க வேண்டும் என்று அளவைகளைச் சொல்வதற்காகவே முதலில் ஏற்பட்ட ஜ்யாமிதிதான் இங்கிலீஷ் ஜ்யாமெட்ரியாயிருக்கிறது. 'ஜ்யாகரபி'யில் வருவதும் இதே 'ஜ்யா'தான். ஸமீகரணம் என்று ஒரு கணக்கு உண்டு. அது அவ்யக்தங்களைக் கொடுத்து வியக்தங்களைக் கண்டு பிடிப்பது. அவ்யக்தமான எண்ணிக்கைகளின் கூட்டங்களைத் தனியாகக் கொடுத்து அவைகளை சமமாக செய்யச் சொல்லுவது ஸமீகரணம். ஸமீகரணம் என்பதற்குச் சமமாகப் பண்ணுதல் என்பது அர்த்தம். அதைத்தான் equation என்கிறார்கள்.

வேதத்தின் ஆறாவது அங்கமாக இருக்கும் கல்ப சாஸ்திரத்துக்கு (இதைப் பற்றி பிறகு சொல்வேன்) வேதத்தின் ஐந்தாவது அங்கமான இந்த ஜ்யோதிஷத்தில் வரும் ஸித்தாந்த ஸ்கந்தத்தின் உதவி ரொம்பவும் தேவைப்படுகிறது. கல்ப சாஸ்திரத்தில் கல்ப ஸூத்திரங்கள் என்று ஒரு பாகம் உண்டு. இந்த சுல்ப ஸூத்திரங்களில் யக்ஞங்களை பற்றிச் சொல்லும்போது யக்ஞம் செய்ய வேண்டிய சாலையில் யக்ஞவேதி எப்படி கட்ட வேண்டும் என்பன போன்றவற்றுக்கு அளவு

முறைகளைத் திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறது இந்த யக்ஞ பூமி அமைப்புகளுக்கு "சயனம்"என்று பெயர். கருடன் போன்ற ஆக்ருதியில்(வடிவத்தில்) ஒரு சயனம். இன்னம் இப்படிப் பல ஆக்ருதிகளில் சயனங்கள் அமைப்பதைப் பற்றி சொல்லும்போது, செங்கல் சூளை போடும் விதம்,

இத்தனை அளவுள்ள இத்தனை செங்கல்கள் அடுக்கினால் இந்த ஆகிருதியுள்ள சயனம் வரும் என்ற கணக்குகள் சுல்ப ஸூத்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு ஸித்தாந்த ஸ்கந்தத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொண்டால்தான் முடியும்.

ஆபஸ்தம்ப சுல்ப ஸூத்திரத்தில் ஒரு ஸமீகரணம் (equation)இருக்கிறது. அதை விடுவிக்க - ப்ரூவ் பண்ண - ஸமீபகாலம் வரையில் முடியாமலிருந்தது. வெள்ளைக்கார கணித விதிகளின் படி அதை 'ஸால்வ்'பண்ண முடியாமலிரு ந்ததால், அது தப்பு என்றுகூட நினைத்துவிட்டார்கள். அப்பறந்தான் மேலும் ஆராய்ச்சி செய்து பார்த்ததில், அந்த சுல்ப ஸூத்திர ஸமீகரணம் சரியானதே என்று தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இத்தனை நுட்பமான கணித ஞானம், இவ்வளவு காலம் தங்கள் கண்ணிலேயே மண்ணைத் தூவி வந்த அளவுக்கு ஸூக்ஷ்மமான ஞானம், ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முந்தியே இந்தியர்களுக்கு இருந்திருக்கிறதே என்று ஆச்சரியப்படுகிறார்கள். இதைப் போல இன்னம் கண்டுபிடிக்க வேண்டிய கணக்குகளுக்கு உரிய ஸூத்திரங்கள் எவ்வளவோ இருக்கின்றன. இந்த ஸமீகரணங்களும், அளவுகளும், ஸித்தாந்த ஸ்கந்தத்தின் உதவியால் நிரூபணம் செய்ய வேண்டியவையாகும்.

ரேகா கணிதம், குட்டகம், அங்கபாதம் என்றெல்லாம் பலவகைக் கணக்குகள் நம் சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்றன. அவ்யக்த கணிதத்திற்கு பீஜ கணிதம் என்றும் ஒரு பெயர் உண்டு. எண்ணூறு வருஷங்களுக்கு முன் பாஸ்கராச்சாரியார் என்று பெரிய கணித ஸித்தாந்தி ஒருவர் இருந்தார். நமக்கு என்னதான் கெட்டிக்காரத்தனம் இருந்தாலும், பகவத் ஸங்கல்பத்தை மாற்ற முடியாது என்பதற்கு திருஷ்டாந்தமாக அவர் வாழ்க்கையில் ஒன்று நடந்தது. அவருடைய பெண்ணுக்கு லீலாவதி என்று பெயர். ஜாதகப்படி அவளுக்கு ரொம்பவும் மாங்கல்ய தோஷம் இருப்பதை ஜ்யோதிஷப் புலியான பாஸ்கராச்சாரியார் அறிந்திருந்தார். ஆனாலும் தமது கெட்டிக்காரத்தனத்தினால் ஸகல க்ரஹங்களும் தீர்க்க ஸௌமங்கல்யத்தைத் தரும்படியான ஒரு லக்னத்தைக் கண்டுபிடித்து அதிலே புத்ரிக்கு விவாஹம் செய்து விட்டால் அவள் தீர்க்க ஸுமங்கலியாக இருக்கச் செய்து விடலாம் என்று நினைத்தார். அந்த மாதிரியான க்ரஹ சேர்க்கை உடைய ஒரு லக்னத்தில் லீலாவதிக்குக் கல்யாண முஹூர்த்தம் வைத்தும் விட்டார்.

அந்தக் காலத்தில் இப்போது போல் கடிகாரம் கிடையாது. வாஸ்தவத்தில் அக்காலத்தில் இருந்ததுதான் அசல் கடிகா. கடம், கடிகா, கடிகை என்பதெல்லாம்

பானை மாதிரியான தீர்த்த பாத்திரத்தைக் குறிக்கும். இப்படிப்பட்ட ஜல பாத்திரமே பூர்வகாலத்திய கடிகா அல்லது கடிகாரம். அதிலே மேல்பாகம், கீழ்பாகம் என்று பிரிந்திருக்கும். மேல் பாகத்தில் துளித்துளியாக விழும். மருந்து பாட்டிலில் டோஸ் மார்க் பண்ணியிருக்கிற மாதிரி, கீழ் பாகத்தில் அளவுக்கோடுகள் போட்டிருக்கும். துளித்துளியாய் விழும் ஜலம் இன்ன கோடுவரை வந்தால் இத்தனை நாழிகை என்று கணக்குப் பண்ணிவிடுவார்கள். அதிலுள்ள டோஸ் மார்க் ஒருநாளில் அறுபதில் ஒரு பங்காகும். 'நாழிகை'என்று தமிழில் சொல்லப்படும் இந்தக் கால அளவுக்கு ஸம்ஸ்கிருதத்தில் 'நாடிகா'என்பதோடு 'கடிகா'என்றே இன்னொரு பெயர் உண்டு. அது 24 நிமிஷம் கொண்டது. Water -clock, Water glass என்று இங்கிலீஷிலும் சொல்வார்கள். ஜலம் சீதோஷ்ணத்தைப் பொறுத்து evaporate(ஆவி) ஆவதால், இதில் ஏதாவது கணக்குத் தப்பு வரும் என்று, ஜலத்துளிக்குப் பதில் 'எவாபொரேட்'ஆகாத மண் துகள் விழுகிற மாதிரிச் செய்யும் கடிகாரத்துக்கு hour-glass என்று பெயர்.

அந்நாள் வழக்கப்படி, லீலாவதி விளையாட்டுப் பெண்ணாக இருந்த சின்ன வயசிலேயே கல்யாணம் நிச்சயித்திருந்தது. அந்தக் குழந்தை மேலே சொன்ன மாதிரியான ஜல கடிகாரத்திடம் வந்து, குனிந்து பார்த்து ஏதோ சேஷ்டை பண்ணிற்று. அப்போது அதன் மூக்குத்தியிலிருந்து ஒரு சின்ன முத்து கடிகாரத்துக்குள் விழுந்து, மேல் பாகத்துக்கும் கீழ் பாகத்துக்கும் நடுவேயுள்ள துவாரத்தில் மாட்டிக் கொண்டு விட்டது.

இதனால் விழுகிற துளி சின்னதாகி விடும் அல்லவா?இப்படி, இருக்க வேண்டியதைவிடச் சின்னதான துளிகளாக விழுந்து முஹூர்த்த லக்னக் கோட்டுக்கு ஜலம் வந்தபோது, வாஸ்தவத்தில் அந்த சுபநேரம் தப்பி, அடுத்த லக்னம் வந்து விட்டது!அது கெட்ட லக்னம். அந்த லக்னத்தில் விவாஹமானதால் லீலாவதி ஜாதகப்படியே ரொம்பவும் பிஞ்சு வயஸில் பதியை இழந்து விட்டாள்!

முத்து விழுந்ததை அந்தக் குழந்தை உள்பட ஒருத்தரும் முதலில் கவனிக்காதலால் இத்தனை பெரிய விபரீதம் நடந்துவிட்டது. அப்புறம் விஷயம் தெரிய வந்தபோது விதியை யாரும் மாற்ற முடியாது என்று தெரிந்து கொண்டார்கள்.

கணித சாஸ்திர விஷயமாப் பிற்காலத்தில் பாஸ்கராசாரியார் ஒரு கிரந்தம் செய்ய வேண்டுமென்று நினைத்தார். தமது புத்திரியின் பெயராகிய லீலாவதி என்னும் பெயரையே அந்த புஸ்தகத்துக்கு வைத்தார். சின்ன வயசிலேயே விதவையாகித் தம்மிடம் வந்துவிட்ட புத்திரி லீலாவதியை கணிதத்தில் பண்டிதை ஆக்கி, அவள் பெயரிலேயே தம் புஸ்தகத்தை எழுதினார். ஸாதாரணமாக ஒரப பரம்பரையில் பாட்டி, முப்பாட்டிகளின் பேரைக் குழந்தைக்கு வைத்து அவர்களுடைய நினைவை நீடிக்கச் செய்கிறார்களல்லவா?பாஸ்கராச்சாரியாரோ என்ன

பண்ணினாரென்றால், குழந்தையே பெறாத தம்முடைய குழந்தை, கணித மாணாக்கப் பரம்பரை முழுதற்கும் ஒரு ஆதி பாட்டியாகச் சிரஞ்சீவித்வம் பெறும்படி தம்முடைய புஸ்தகத்திற்கே "லீலாவதி கணிதம்"என்று அவள் பேரை வைத்துவிட்டார்.

அதில் வியக்த கணிதம், பீஜ கணிதம் முதலிய பலவகைக் கணிதங்கள் இருக்கின்றன. "லீலாவதி கணக்கு"கள் கதை மாதிரியும், விடுகதை மாதிரியும், கவிதை மாதிரியும் சுவாரஸ்யமாக இருக்கும். கிரஹ ஸ்திதிகள், கிரஹங்களின் கதிகள் முதலியவற்றை நிர்ணயிப்பதற்கு உபயோகமாக "ஸித்தாந்த சிரோமணி"என்ற ஒரு கிரந்தத்தையும் பாஸ்கராசாரியார் எழுதியிருக்கிறார்.

"பிராசீனலேகமாலை"என்னும் பழைய சாஸனங்களின் தொகுப்பான புஸ்தகத்தில் உள்ள ஒரு சாஸனத்தால், பூர்வ காலத்தில் பாஸ்கராச்சாரியாருடைய கிரந்தங்களைப் பிரசாரப் படுத்துவதற்காக கூர்ஜர (குஜராத்) தேசத்தில் இருந்த சிங்கணன் என்னும் அரசன் மானியம் விட்டிருந்தானென்று தெரிய வருகிறது.

நவீன க்ஷேத்திர கணித கிரந்தமாகிய "யூக்ளிட்"புஸ்தகத்தில் நடுவில் உள்ள 7,8,9,10-ம் பாகங்களைக் காணவில்லை என்று சொல்லுகிறார்கள். ஸம்ஸ்கிருதத்தில் 12 புஸ்தகங்களும் அப்படியே இன்றைக்கும் இருக்கின்றன. நமக்கு ஒன்றும் தெரியவில்லை. 'பல முறை கூட்டல் போடுவதுதான் பெருக்கல்;பலமுறை கழிப்பதுதான் வகுத்தல்'என்பது போன்ற சின்னவிஷயங்கள்கூடத் தெரியாமலிருக்கிறோம்!

பாஸ்கராசாரியாருக்கு முன்பு, அதாவது இன்றைக்கு 1500 வருஷங்களுக்கு முன்பு வராஹமிஹிரர் என்று ஒருவர் இருந்தார். அவர் 'ப்ருஹத் ஸம்ஹிதை', 'ப்ருஹத் ஜாதகம்' முதலிய பல கிரந்தங்களைச் செய்திருக்கின்றார். 'ப்ருஹத் ஸம்ஹிதை' என்பது ஸகல சாஸ்திரங்களுக்கும் ஸயன்ஸுகளுக்கும் digest- ஆகும். இத்தனை ஸயன்ஸா நம் பூர்விகர்களுக்குத் தெரிந்திருந்தது?என்று அதைப் பார்த்தால் ஆச்சரியமாக இருக்கும். 'ப்ருஹத் ஜாதக'த்தில் ஜ்யோதிஷ விஷயங்கள் யாவும் உள்ளன.

ஆரியபடர் என்பவர் 'ஆரியபட ஸித்தாந்த'மென்று ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். இவரும் 1500 வருஷத்துக்கு முன்பு இருந்தவரே. இப்பொழுது வழங்கி வரும் வாக்கிய கணிதமானது 'ஆரியபட ஸித்தாந்த'த்தை அநுசரித்தது என்று சொல்லுவார்கள். வராஹமிஹிரரையும், ஆரியபடரையும் நம் கால mathematician களும் கொண்டாடுகிறார்கள்.

இவ்வளவு கணித சாஸ்திரங்களும் நக்ஷத்திரங்கள், ஒன்பது கிரஹங்கள் என்பவைகளின் கதியைப் பற்றியும் ஸ்திதியைப் பற்றியும் சொல்லுபவைகள். கிரஹங்கள் ஏழுதான். ராகு கேதுக்கள் நிழல். அதனால்

அவைகளைச்சாயாக்கிரஹங்கள் என்று சொல்லுவார்கள். சூரியனுக்கும் சந்திரனுக்கும் நேர் விரோதமாக அவை ஒடும். அவைகளுக்குத் தனி கணனம் வேண்டாம். சூரிய சந்திரர்களுக்கான கணனத்தின் விபரீத (தலைகீழ்) கணனமே அவைகளுக்குரிய கணனமாகும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்

## கிரஹமும், நக்ஷத்திரமும்

நக்ஷத்திரங்களுக்கும் க்ரஹங்களுக்கும் உள்ள வித்தியாஸம் என்ன?நம்முடைய ஸுர்யனைச் சுற்றி வருகிறவையே க்ரஹங்கள். ஸுர்ய மண்டலத்தைச் சேராதவை நக்ஷத்திரங்கள். நம்முடைய கண்ணுக்கு தெரிகிற அடையாளம் ஒன்று இருக்கிறது. வைரத்தை ஆட்டிக்கொண்டே இருந்தால் அது பளபளவென்று அசைந்து ஜ்வலித்துக் கொண்டே இருக்குமல்லவா?அதைப் போல நக்ஷத்திர அசைவோடு ஜ்வலித்துக் கொண்டிருக்கும். கிரஹங்கள் அசையாமல் ஜ்வலிக்கும்.

சூரியனும் நக்ஷத்திரங்களுந்தான் ஸ்வயம் பிரகாசம் உடையவை. (அதாவது அவையே இயற்கையாகப் பிரகாசமுள்ளவை. க்ரஹங்கள் இப்படிப்பட்ட இன்னொரு ஸ்வயம் பிரகாச வஸ்துவினால்தான் தாங்களும் பிரகாசிக்கின்றன. அவற்றுக்கு இயற்கை ஒளி கிடையாது. நக்ஷத்திரங்களில் பலவிதமான வர்ணங்களில் டால் அடிக்கும். பட்டை தீர்த்த வைரத்தில் நீலம், பச்சை, முதலிய நிறங்கள் ஜ்வலிப்பது போல அவை இருக்கும். க்ரஹங்களான குருவும் சுக்கிரனும் கொஞ்சம் பெரிய நக்ஷத்திரங்களைப் போல இருக்கும். ஆனால் அவற்றில் தளதளப்பு இராது. நக்ஷத்திரங்கள் தளதளவென்று இருக்கும். சூரியனும் அப்படித்தான் இருக்கும். சூரியனைக் கொஞ்சம் உற்று கவனிக்க ஆரம்பித்தால் சுற்றிலும் காணப்படுகின்ற பிசிர் போய்விடும். அப்புறம் கண்ணாடியில் தட்டையாகச் செய்யப்பட்ட ஒன்று ஜலத்தில் மிதப்பது போல் தளதளவென்று தோன்றும். அசைவு இருக்கும். சந்திரன் இந்த மாதிரி இருக்காது. ஸுர்யனுக்கு உள்ளே ஒளி அசைவு உள்ளது என்பதற்கு ஒரு நிரூபணம் சொல்கிறேன். கூரையில் ஒரு துவாரம் வழியாக ஸுர்ய வெளிச்சம் வருகிறது. நிலாவும் வருகிறது. ஸுர்யனின் வெயிலானதால்தான் இந்தக் கதிர் ஆடுகிறதைப் பார்க்கிறோம். சந்திர கிரணம் அசையாமலே இருக்கும். மற்ற க்ரஹங்களும் சந்திரனம் மாதிரியே. நக்ஷத்திரம் பெரியதாக இருந்தால் VIBGYOR என்று சொல்லப்படும் ஏழு நிறங்கள் இந்த அசைவில் தோன்றும் - வைரத்திலிருந்து கலர்கள் கொட்டுகிற மாதிரியே!

சூரியனுக்கு ஸப்தாச்வன் என்பது ஒரு பெயர். அவனுடைய தேரில் ஏழு (ஸப்த) குதிரைகள் (அச்வங்கள்) உண்டு என்ற அர்த்தம் சொல்வார்கள். ஒரே அச்வந்தான், அதற்கு ஏழு பேர்கள் இருக்கின்றன என்று சொல்வதும் உண்டு. அச்வம் என்பதற்கே கிரணம் என்று அர்த்தம் உண்டு. சூரியனுக்கு ஏழு தினுஸான வர்ணங்களை வெளிவிடும் கிரணங்கள் இருக்கின்றன என்பதுதான் தாத்பர்யம். ஒரே கிரணந்தான் ஏழு தினுசாகப் பிரிந்து கலர்களாகிறது. விப்ஜியார் என்பதும் அதுதான். ஒரே கிரணத்திற்குதான் ஏழுபேர் என்று ஸ்பஷ்டமாக வேதத்தின் தைத்திரீய ஆரண்யகத்திலேயே இருக்கிறது. ஏகோ அச்வோ வஹதி ஸப்தநாமா . ஒரே வெண்மைதானே refraction என்ற ஒளிச்சிதறலில் ஏழு வர்ணமாகிறது?

நக்ஷத்திரமே ஸ்வயம் பிரகாசமுடையது. கிரஹமானது வேறு ஒன்றிடமிருந்து ஒளியைக் கடன் வாங்கிக் கொள்கிறது - சந்திரன் ஸூர்யனிடமிருந்து வாங்கிக் கொள்கிறது போல! நக்ஷத்திர ஒளி அசைவதால்தான் "அது கண்ணைச் சிமிட்டுகிறது"; Twinkle twinkle little star" - என்பது. கிரஹங்கள் கண்ணைச் சிமிட்டின என்று யாராவது எழுதினால் தப்பு.

நக்ஷத்திரங்கள் கிழக்கே உதயமாகி மேற்கே அஸ்தமிக்கும். கிரஹங்களும் மேற்கே போகும். ஆனால் நித்தியம் கொஞ்சம் கிழக்கே நகர்ந்துகொண்டே போகும். கிழக்கே ஓடும் ரயிலுக்குள் ஒருத்தன் மேற்கே நடக்கிறதுபோல், ஏழு கிரஹங்களும் கிழக்கே நகர்ந்து கொண்டே போகும். இவற்றின் ஸ்திதிகளை ஜ்யோதிஷ சாஸ்திரம் சொல்லுகிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்

## கிரஹங்களும் மனித வாழ்வும்

பிரபஞ்சத்தில் நவக்ரஹங்களின் ஸ்திதிகளைப் போலவே மனிதர்களுடைய ஸ்திதியும் மாறிக்கொண்டே வருகிறது. கஷ்டம், சௌக்கியம், துக்கம், ஸந்தோஷம் உன்னத பதவி, தாழ்ந்த பதவி என்று இப்படி எல்லோருடைய ஸ்திதியும் மாறி வருகிறது. இப்படி மாறிக் கொண்டே இருப்பவன் மனிதன் மட்டும் அல்லன். ஸ்தாபனங்களுக்கும் அப்படியே. தேசங்களுக்கும் உயர்ந்த காலம், தாழ்ந்த காலம் என்று வருகிறது.

லோகத்தில் நடக்கும் ஸுகதுக்கங்களுக்கும் கிரஹங்களுக்கும் ஸம்பந்தம் உண்டென்று கண்டு மஹரிஷிகள் இன்ன இன்ன மாதிரி கிரஹங்கள் இருந்தால்

இன்ன இன்ன பலன் கிடைக்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒரு காரியம் ஆரம்பித்தால், அதன் ஆரம்பகால கிரஹரீதிகளைக் கொண்டு, மேலே நடக்கும் ஸுகதுக்கப் பலன்களைச் சொல்லும் பாகத்திற்கு "ஹோரா ஸ்கந்தம்"என்று பெயர். ஜனன காலத்தை ஆரம்பமாக வைத்துக் கொண்டு ஜாதகம் கணித்து வாழ்நாள் முழுவதற்கும் சுகதுக்க பலன்களைச் சொல்லிவிடலாம். சுகதுக்க பலன்களைச் சொல்லிடலாம். சுகதுக்க பலன்களைச் சொல்லிவிடலாம்.

சுகதுக்க பலன்களுக்குக் காரணம் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. இது பலபேர் ஒரே வியாதிக்கு வெவ்வேறு காரணம் சொல்கிற மாதிரிதான். வைத்தியர்கள் தாது வித்யாசத்தால் இந்த வியாதி உண்டாயிற்றென்று சொல்கிறார்கள். மந்திரவாதி தெய்வக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறான். ஜ்யோதிஷன் கிரஹ கதியால் அது வந்தது என்கிறான். தர்ம சாஸ்திரமோ பூர்வ கர்ம பலன் என்று சொல்லுகிறது. உணர்ச்சி மாறுதல்களாலேயே தேத ஸ்திதியும் மாறிவிடுகிறது என்று மனோ தத்துவ நிபுணர்கள் சொல்லுகிறார்கள். இப்படி ஒன்றுக்கே பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. உண்மையில், கிரஹ கதியால் வருகிறதா?மனத்தின் சலனத்தால் வருகிறதா?மற்றவைகளால் வருகிறதா?

இவற்றில் ஒன்றும் பொய்யில்லை. எல்லாம் காரணங்களே. எல்லாம் ஒன்றின் அடையாளங்களே. நாம் தெரிந்து கொள்ளுவதற்காக இப்படிப் பலவகையிலும் காரணங்கள் ஏற்பட்டு ஒன்றாகக்கூடி அநுபவத்தைக் கொடுக்கின்றன. ஒவ்வொருவர் ஒவ்வொரு காரணத்தை எடுத்துக் கொள்கிறார்கள். மழை பெய்தால் ஈரம் உண்டாகிறது;ஈசல் உண்டாகிறது;தவளை கத்துகிறது. இவ்வளவும் மழை பெய்ததற்கு அடையாளங்கள். அதுபோல் நம் பூர்வ கர்மாவின் பலன் உண்டானதற்கு அநேக அடையாளங்கள் அமைகின்றன. ஒவ்வொன்றும் அதற்கு அடையாளந்தான். எல்லாவற்றிற்கும் ஸம்பந்தம் உண்டு. கர்மாவை அநுஸரித்து கிரஹகதி ஏற்படுகிறது,வியாதி ஏற்படுகிறது, மனசஞ்சலம் உண்டாகிறது, பிசாசாதிகளின் பீடை உண்டாகிறது. எல்லாம் ஒரு கர்மாவின் பலனாகவே உண்டாகின்றன. ஒவ்வொரு வழியிலும் தெரிந்து கொள்ளலாம். இவற்றில் க்ரஹரீதியாக உள்ள பலன்களைத் தெரிந்து கொள்ள கணக்கு மிகவும் உபயோகமாக இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்**

**சகுனம், நிமித்தம்**

ஜ்யோதிஷ சாஸ்திரத்தில், "ஸம்ஹிதா ஸ்கந்தம்"என்று ஒரு பிரிவு இருக்கிறது என்றேனல்லவா?ஜலம் எங்கே ஓடுகிறது?பூமிக்குள் நதி under-current ஆக எங்கெங்கே போகிறது. உள்ளே ஜலம் இருப்பதற்கு மேலே என்ன என்ன அடையாளம் இருக்கும்?- என்பவைகளைப் போன்ற பல விஷயங்கள் அதில் சொல்லப்பட்டிருக்கின்றன. வாசனைத் திரவியங்கள் செய்யும் விதம், வீடு கட்டும் அளவு, சகுன சாஸ்திரம், நிமித்த சாஸ்திரம் முதலிய எல்லாம் இந்த ஸம்ஹிதையில் சொல்லப்படும்.

சகுனம் வேறு, நிமித்தம் வேறு. நிமித்தம் என்பதுதான் வரப்போவதை ஏதோ ஒரு தினுஸில் அடையாளம் காட்டுவதற்குப் பொதுப் பெயர். அதில் ஒரு வகையே சகுனம். சகுனம் என்பதற்கு 'பக்ஷி'என்பது அர்த்தம். பக்ஷிகளால் ஏற்படும் நிமித்தங்களுக்குத்தான் சகுனம் என்று பெயர். உலகத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாத வஸ்து ஒன்றும் இல்லை. நடக்கும் காரியங்களும் அப்படியே. ஸரியான கணக்குத் தெரிந்தால் எல்லாம் தெரிந்து கொள்ளலாம். உலகத்தில் நடப்பவை எல்லாம் ஒரே ஒருவருடைய ஆக்ஞையால்தான் நடக்கின்றன;ஒரே கணக்காக நடக்கின்றன. அதனால் ஒரு காரியத்தைக் கொண்டு மற்ற எல்லாவற்றையும் கண்டு பிடிக்கலாம். கை ரேகை, ஆரூடம், க்ரஹநிலை முதலிய எல்லாம் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் உடையனவாகவே இருக்கின்றன. எல்லாம் நிஜம்தான். இவற்றில் ஒன்றே நிமித்தம். அதில் ஒரு அங்கமே சகுனம்.

ஒரு பக்ஷி வலமிருந்து இடம்போனால் இன்ன பலன்;இன்ன பக்ஷி கத்தினால் இன்ன விளைவு ஏற்படும் என்று சகுன சாஸ்திரம் கூறும்.

'நிமித்தம்'என்பதிலேயே, நாம் 'சகுனம் பார்ப்பது'என்று சொல்வதிலுள்ள மற்ற எல்லாம் வரும். Omen என்று பொதுவாகச் சொல்வது நிமித்தம்தான். (கீதை ஆரம்பத்தில்) " நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ " என்று யுத்தம்

ஆரம்பிக்குமுன் அர்ஜுனன் பகவானிடம் சொல்கிறான். 'கெட்ட சகுனங்களைப் பார்க்கிறேன்'என்று நாம் சொல்வதைத்தான், 'விபரீதமான நிமித்தங்களைப் பார்க்கிறேன்'என்கிறான். அவன் நிமித்தம் என்பதுதான் சரி. நாம் சகுனம் என்பதே நல்லது அல்லது கெட்டதற்குச் சூசகமான பொதுப்பெயர் என்று நினைப்பது தப்பு. இந்த சூசகங்களில் பக்ஷிகளால் விளைவது மட்டுமே சகுனம். ஒரு பூனை குறுக்கே போனால் அது நிமித்தம். கருடன் குறுக்கே போனால் அது சகுனம்.

பிற்பாடு பகவானும் அர்ஜுனனிடம் 'நிமித்த'த்தைப் பற்றிச் சொல்கிறார். "நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாசின்"(X1.33) "சத்ருக்களை வதைப்பதாவது, அதனால் பாவம் வருமே!"என்று அழுத அர்ஜுனனிடம், "இந்த யுத்தத்தில் இவர்களை வதைப்பதாக நான் ஏற்கெனவே ஸங்கல்பம் பண்ணியாகிவிட்டது. அதனால் இவர்கள் இப்போதே செத்துப் போனவர்கள்தான். இவர்களைக் கொல்பவன் நான் தான். நீ வெறும் கருவி மாத்திரமாக இரு"என்று பகவான் சொல்கிறபோது, 'நிமித்த

மாத்ரம் பவ'என்கிறார்.

அதனால் நிமித்தம் என்பது அதுவே பலனை உண்டாக்குவதில்லை;இன்னொன்று நிச்சயம் பண்ணிவிட்ட பலனை இது வெளிப்படத் தெரிவிக்கிறது என்றே ஆகிறது. இதே போல, நம்முடைய பூர்வகர்ம பலனைத்தான் நிமித்தங்கள் யாவும் தெரிவிக்கின்றன.

சுருக்கமாகச் சொன்னால், மூன்று ஸ்கந்தங்களில் பொதுவாக கணிதத்தையும் கிரஹதிகளை சொல்லுவது 'ஸித்தாந்தம்'. தனித்தனியாக மனிதனுடைய ஸுகதுக்க பலனைச் சொல்லுவது 'ஹோரை' அல்லது ஜாதகம். 'ஹோரா'விலிருந்து ஜாதகமே 'ஹாரஸ்கோப்' எனப்படுகிறது. மிச்சம் உள்ளவை எல்லாம் 'ஸம்ஹிதை'.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்

### புராதன நூல்களில் நவீனக் கண்டுபிடிப்புக்கள்

வராஹமிஹிரர் "ப்ருஹத் ஸம்ஹிதை'என்று ஒரு கிரந்தம் எழுதியிருக்கிறார் என்றேனல்லவா?அதில் இல்லாத விஞ்ஞானக் கண்டுபிடிப்பு இல்லை. வெறும் ஆகாசத்தில் இந்தக் கிரஹங்களெல்லாம் இருக்கின்றனவே. விழாமல் எப்படி நிற்கின்றன?இதற்குக் காரணத்தை நியூடன் என்பவர்தாம் கண்டுபிடித்தார் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். மிகப் பழைய காலத்தில் உண்டான சூரிய சித்தாந்தத்தின் ஆரம்பத்தில் இருக்கிற ச்லோகமே, பூமி விழாமல் இருப்பதற்கு ஆகர்ஷண சக்தி காரணம் என்று சொல்லுகிறது. நம் பகவத்பாதாளின் உபநிஷத் பாஷ்யத்திலும் பூமிக்கு ஆகர்ஷண சக்தி இருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வஸ்துவை நாம் மேலே வீசி எறிந்தால் அது மறுபடியும் கீழே வந்து விழுகிறது. அப்படி விழுவது அதனுடைய ஸ்வபாவகுணம் அல்ல. அது பூமியில் விழுவதற்குக் காரணம் பூமியின் ஆகர்ஷண சக்தியென்றால் இழுக்கும் சக்தி என்பது அர்த்தம். பிராணன் மேலே போகும்;அபானன் அதைக் கீழே இழுக்கிறது. ஆகவே, கீழே இழுக்கிற சக்திக்கு அபானசக்தி என்று பெயர். ஸ்ரீ ஆசார்யரவர்கள் பிருதிவிக்கு அபானசக்தி, அதாவது ஆகர்ஷண சக்தி, இருக்கிறதென்று சொல்லியிருக்கிறார்கள். ப்ரச்நோபநிஷத்தில் (III-8) "ப்ருத்வியின் தேவதையே மநுஷ்ய சரீரத்தில் அபானனை இயக்குகிறது"என்று வருகிறது. அதன் பாஷ்யத்தில் ஆசார்யாள், மேலே போட்ட பொருளை பூமி ஆகர்ஷிக்கிற மாதிரி, மேலே போகிற பிராணனை அபானம் கீழே இழுப்பதைப் பற்றிச் சொல்கிறார். இதனால்

உபநிஷத்திலேயே Law of Gravitation பேசப்படுவதாக ஆகிறது. இவைகளைப் போன்ற பல அருமையான விஷயங்கள் நம்முடைய சாஸ்திரங்களில் இருக்கின்றன. நமக்கு இவைகள் தெரியாததனால் தேசாந்திரத்தில் உள்ளவர்கள் நமக்கு எவ்வளவோ காலம் பிற்பட்டு எழுதியவைளுக்கு அளவில்லாத கௌரவத்தைக் கொடுக்கிறோம்.

இப்பொழுது எவ்வளவு விதமான கணக்குகள் லோகத்தில் இருக்கின்றனவோ அவ்வளவு கணக்குகளும் எவ்வளவோ வருஷங்களுக்கு முன்பே உண்டான நம்முடைய ஜ்யோதிஷ சாஸ்திரங்களில் இருக்கின்றன.

(ஸ்ருஷ்டி தொடக்கமான) கல்பாரம்பத்தில் எல்லாக் கிரஹங்களும் ஒரே நேராக இருந்தன. அப்புறம் மாறிக்கொண்டே வருகின்றன. மற்றொரு கல்பாரம்பத்தில் மறுபடியும் நேராக வந்துவிடும்.

நாம் செய்யும் கர்மாக்களில் முதலில் சொல்லும் ஸங்கல்பத்தில பிரபஞ்ச வர்ணனை, கால அளவை என்றெல்லாம் சொல்லப்படுகிற அவ்வளவும் ஜ்யோதிஷ விஷயந்தான்.

பூ ஆகர்ஷணம் மட்டுமில்லை, பூமி சுற்றுவதையும்கூட ஆர்யபடர், வராஹமிஹிரர் முதலானவர்கள் சொல்லியிருக்கிறார்கள். 'பூமிதான் நம் பிரபஞ்சத்துக்கு மத்தியாக நின்ற இடத்தில் நின்று கொண்டிருக்கிறது. ஸூர்யனே அதைச் சுற்றி வருகிறான். அதனால்தான் இரவு பகல் உண்டாயிருக்கின்றன'என்றே மேலை நாட்டவர்கள் பதினாறாம் நூற்றாண்டுவரை நினைத்து வந்தார்கள். இதற்குக் கொஞ்சம் மாறாக யாராவது ஆராய்ச்சி பண்ணிச் சொன்னால், அவரை மதகுருமார்கள் stake என்ற கம்பத்தில் கட்டி நெருப்பை வைத்துக் கொளுத்தினார்கள்!ஆனால் ரொம்பவும் பூர்வ காலத்திலேயே நமக்கு இந்த விஷயங்கள் தெரிந்திருந்தன.

பூமிதான் ஸூர்யனைச் சுற்றுகிறது, ஸூர்யன் பூமியைச் சுற்றுவதில்லை என்பதற்கு, ஆர்யபடர் ரொம்ப அழகாக ஒரு பேர் கொடுத்திருக்கிறார். அதற்கு 'லாவக கௌரவ நியாயம்'என்று பேர். லகு என்றால் லேசானது. சின்னது என்று அர்த்தம். 'லகு'வைக் குறிப்பது லாவகம். ' லேசாக' 'லைட்டாக ஒன்றை எடுத்துக் கொண்டு செய்வதைத்தான் 'கை லாவகம்', ஹஸ்த லாவகம் என்கிறோம். லகுவுக்கு ஆப்போஸிட் (எதிர்ப்பதம்) குரு. கணமானது, பெரியது எதுவோ அதுவே குரு.

மஹாகனம் பொருந்தியவர், கனவான், பெரியவர்கள் எனப்படுகிறவரே குரு. அவர்தான் ஆசாரியர். ஆசாரியர் என்றால் குரு என்றால் அப்போது சிஷ்யன்தான் லகு. குருவான ஆசாரியரனைத்தானே லகுவான சிஷ்யன் பிரதக்ஷிணம் பண்ணுகிறான்?அதாவது சுற்றிச் சுற்றிவருகிறான்?ஆசாரியர் சிஷ்ய பிரதக்ஷிணம் பண்ணுவாரா?மாட்டார். நம் பிரபஞ்சத்தில் (solar system-லே)

பெரியது, குருவானது ஸூர்யன் தான்;லகு பூமி. குருவைத்தான் லகு பிரதக்ஷிணம் செய்யும் என்பதே 'லாகவ-கௌரவ நியாயம்'!இதன்படி பூமிதான் ஸூர்யனைச் சுற் வேண்டும். இப்படிப் பிரபஞ்சத்தை குரு சிஷ்ய கிரமமாக பார்த்து சாஸ்திரமாகவும் ஸயன்ஸாகவும் ஆர்யபடர் சொல்லியிருக்கிறார்.

இப்போது நாம் எந்த மதஸ்தர்கள் விஞ்ஞான சாஸ்திரம் வளர முடியாதபடி விஞ்ஞானிகளை 'ஹெரிடிக்'என்று சொல்லிக் கொளுத்தினார்களோ, அதே மதஸ்தர்களோடு சேர்ந்துகொண்டு, "இந்தியாவில் ஸயன்ஸ் வளராததற்கு காரணம் ஹிந்து மதம்தான். பரலோகம், பரலோகம் என்று சொல்லிக்கொண்டு ஹிந்து மதம் இந்த லோகத்து விஷயங்களையெல்லாம் அலக்ஷ்யம் செய்துவிட்டது" என்று குற்றம் சொல்கிறோம்!வாஸ்தவத்தில் அத்தனை ஸயன்ஸுகளும் நம் சாஸ்திரங்களிலே இருக்கின்றன.

ஸூர்யன் இருந்தபடிதான் இருக்கிறது;பூமிதான் அதைச் சுற்றி வருகிறது;பூமி சுறறுவதால்தான் ஸூர்யன் உதிப்பதாகவும் அஸ்தமிப்பதாகவும் தோன்றுகிறதேயன்றி வாஸ்தவத்தில் ஸூர்யன் உதிப்பதாகவும் அஸ்தமிப்பதாகவும் தோன்றுகிறதேயன்றி வாஸ்தவத்தில் ஸூரியன் பூமியின் கிழக்கே தினம் தினம் உதித்து அப்புறம் மேற்கே நகர்ந்துகொண்டேபோய் அஸ்தமிக்கவில்லை என்ற விஷயம் ரிக்வேதத்திலுள்ள ஐதரேய பிராம்மணத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸூர்யன் உதிப்பதும் இல்லை;அஸ்தமிப்பதும் இல்லை'என்று அதிலே தெளிவாகச் சொல்லியிருக்கிறது?

ஈச்வரனுக்கு அஷ்டமூர்த்தி என்பது ஒரு பெயர். பூமி, ஜலம், வாயு, அக்னி, ஆகாசம், ஸூர்யன், சந்திரன் (யாகம் செய்கிறவனான) யஜமானன் ஆகிய இந்த எட்டும் ஈச்வரனுடைய மூர்த்திகள். இவற்றிலே யஜமானன் ஒருத்தனுக்கு மட்டும் ப்ரமணம் உடையவையே என்று அப்பய தீஷிதர் சொல்லியிருக்கிறார். அப்படி அவர் சொல்லியிருக்கிறார் என்பதை அவருடைய தம்பி பேரரான நீலகண்ட தீக்ஷிதர் இந்த ச்லோகத்தில் எடுத்துக்காட்டியிருக்கிறார்.

காற்று நின்ற இடத்தில் நிற்காமல் சுற்றுவதும், நெருப்பும் கொஞ்சம்கூட ஸ்டெடியாக இல்லாமல் அசைந்து ஆடுவதும், ஜலமும் இப்படியே ஒரு இடமாக இருக்க முடியாமல் ஒடுவதும் நம் கண்ணுக்கே தெரிவதுதான். ஆகாசத்தைப் பார்க்கும் போது ஸூர்ய - சந்திரர்கள் சுற்றுவது தெரிகிறது. ஆகாசத்திலேதான் ஸகல ஸப்தங்களும் இருக்கின்றன. சலனம்தான் சப்தமூலம் என்பதால் அந்த ஆகாசமும் ப்ரமணமுடையது என்று தெரிகிறது. ஆனால் பூமியைப் பார்த்தால் அது, போட்டது போட்டபடி இருக்கிற மாதிரித்தானே தெரிகிறது?இப்படித் தெரிந்தாலும், அதுவும் சுற்றுகிற ஏழில் ஒன்று என்றே அப்பைய தீக்ஷிதர் கருதியிருக்கிறார். "பூமிர் ப்ராமயதி"என்று ச்லோகம் ஆரம்பிப்பது பூமியின் சுழற்சியைத் தான் சொல்கிறது.

பூமியின் ஆகர்ஷணம், சுற்றுவது முதலியன இருக்கட்டும். பூமியின் ரூபத்தையே பார்க்கலாம். வெள்ளைக்காரர்கள் என்ன சொல்கிறார்கள்?'பூமி தட்டையாகத் தோசைக்கல் மாதிரி இருக்கிறது என்றுதான் பழங்காலத்தில் நினைத்தார்கள். அது தட்டையாக இல்லை, பந்து மாதிரி உருண்டையாக இருக்கிறது என்று நாங்கள்தான் ஸமீப நூற்றாண்டுகளில் கண்டுபிடித்தோம்'என்கிறார்கள். ஸரி, 'ஜாகரஃபி' க்குப் பேர் என்ன சொல்கிறோம்?'பூகோள சாஸ்திரம்' என்கிறோம். 'பூசாஸ்திரம்'என்று சொன்னாலே போதும். ஆனாலும் பூமியானது கோளமாக, அதாவது உருண்டையாக இருப்பது நமக்கு ஆதிகாலத்திலிருந்தே தெரியும் என்று தெரிவிப்பதாகத்தான் 'பூகோளம்'என்று சொல்லியிருக்கிறது.

Universe எனப்படும் ஸகல நக்ஷத்ர லோகங்களும் உட்பட்ட பிரபஞ்சத்தை 'ப்ரம்மாண்டம்'என்கிறோம். பிரம்மானால் படைக்கப்பட்ட அன்டம் இது. அன்டம் என்றால் என்ன தெரியுமா? கோழி முட்டை. கோழி முட்டை திட்டமான உருண்டையாக இருப்பதல்ல. ஒரு உருண்டையின் ஒரங்களைத் தட்டிவிட்ட மாதிரி நீளவட்டத்தில் கணபரிமானம் உள்ளதாக முட்டை இருக்கிறது. நவீன விஞ்ஞானத்திலும் Universe என்பது உருண்டையாக (spherical) இல்லை;முட்டை மாதிரி oval வடிவத்தில் கனபரிமாணமுள்ளதாக elliptical-ஆகவே இருக்கிறது என்கிறார்கள்.

இந்தப் பிரபஞ்சம் முழுக்க நகர்ந்து கொண்டேதான் இருக்கிறது என்ற மாடர்ன் அஸ்ட்ரானமியில் சொல்கிறார்களென்றால் வேதகாலத்திலிருந்து நாம் இதற்குத் தந்திருக்கிற பேரே இந்த உண்மையைத்தான் சொல்கிறது. 'ஜகத்'என்றால் நின்ற இடத்தில் நிற்காமல் போய்க் கொண்டேயிருப்பது என்றுதான் அர்த்தம் .

பூமி சுற்றுகிறது என்ற வாதத்தை ஆக்ஷேபித்தவர்களும் நம்மவர்களில் சிலர் இருந்துதான் இருக்கிறார்கள். அவர்களில் ஒரு சாராருடைய அபிப்ராயத்தைச் சொல்கிறேன்:பூமியின் சுற்றளவு (circumference) சுமார் இருபத்தையாயிரம் மைல். அதனால் ஒரு நாளில் (24 மணிகளில்) பூமி ஒரு தடவை தன்னைத்தானே சுற்றிக் கொள்கிறது என்றால், அது மணிக்கு ஆயிரம் மைல் சுற்றுகிறது என்று அர்த்தம். அப்படியென்றால், ஒரு நிமிஷத்தில் இந்த மயிலாப்பூர் இருக்கிற இடத்தில், அடுத்த நிமிஷம் இங்கேயிருந்து பதினேழு மைலில் இருக்கிற ஒரு ஊரோ, சமுத்ரமோ வந்தாக வேண்டும். இந்த நிமிஷத்திலே இந்த மயிலாப்பூரில் உட்கார்ந்து கொண்டிருக்கிற காக்காய் உட்கார்ந்த இடத்தைவிட்டு எழும்பி ஆகாசத்தில் நேரே போகிறது. அடுத்த நிமிஷம் அது கீழே வருகிறது. முன்னே எங்கே உட்கார்ந்திருந்ததோ அதே மயிலாப்பூர் மரத்தில் அல்லது மாடியில் வந்து உட்காருகிறது. பூமி சுற்றுவது நிஜமானால் இது எப்படி ஸாத்தியமாக இருக்க முடியும்?அது மேலே எழும்பின ஒரு நிமிஷத்தில் கீழே இருக்கிற பூமி சுற்றுகிற சுற்றில் மயிலாப்பூர் இருக்கிற இடம் நகர்ந்து பதினேழு மைலுக்கு அந்தண்டை உள்ள இடமல்லவா இங்கே வந்திருக்க வேண்டும்?இப்படிக் கேட்கிறார் பூப்ரரமண

ஸித்தாந்தத்தை ஆக்ஷேப்பிக்கிறவர்.

இதற்கு மேற்படி ஸித்தாந்திகள் என்ன பதில் சொல்கிறார்கள் என்று நான் பார்க்கவில்லை. ஆனால் நவீன விஞ்ஞானம் படித்தவர்களைக் கேட்டபோது, "பூமியைச் சுற்றி சுமார் 200 மைலுக்கு atmosphere என்ற காற்று மண்டலம் இருக்கிறது;அதற்கப்புறமும் உறைகள் மாதிரிச் சில மண்டலங்கள் இருக்கின்றன;இவையும் பூமியோடு கூடவே சுற்றி வருகின்றன"என்று விளக்குகிறார்கள். நான் இப்போது சொன்னதில் கொஞ்சம் பிசகு இருந்தாலும் இருக்கலாம். அதெப்படியானாலும், பூமி மட்டுமன்றி அதன் அட்மாஸ்ஃபியரும் அதோடுகூட சுறறுகிறது என்பதில் சந்தேகமில்லை.

Arabic Numeral என்று சொல்கிற 1,2,3,4 இலக்கங்களக்கு இந்தியாதான் மூலமான தாய்வீடு என்று, இப்போது மேல் நாட்டினர் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஸைஃபர் என்பதே இந்தியாவிலிருந்து வந்ததுதான் என்று மேல்நாட்டு அறிஞர்கள் சொல்கிறார்கள். இது தெரிய வந்ததால்தான் கணித சாஸ்திரம் பூரண ரூபம் பெற முடிந்தது என்கிறார்கள்.

ஸைஃபர் வந்தது மட்டுமில்லை, எந்த இலக்கத்தை ஸைஃபரால் வகுத்தாலும் infinity (அனந்தம்) வருகிறது என்ற சூக்ஷ்மமான கணித உண்மையையும் பாஸ்கராச்சாரியார் சொல்லி அதைப் பரமாத்ம தத்வத்தோடு சேர்த்துத் தம் கணித சாஸ்திரத்தின் மங்கள ச்லோகமாகக் கூறுகிறார்.

வகுக்கும் எண் (divisor) சின்நதாக ஆக ஆக ஈவு (quotient) பெரிதாகும் அல்லவா?பதினாறை எட்டால் வகுத்தால் (அதாவது வகுக்கும் எண் எட்டாக இருந்தால்) ஈவு 2;வகுக்கும் எண் நாலானால் ஈவு 4;இரண்டானால் ஈவு 8 ஆகிறது. ஸைஃபராலேயே வகுத்து விட்டால்?அப்போது ஈவானது எண்ணிக்கையாலேயே குறிப்பிட முடியாத அனந்தமாகிவிடுகிறது; infinityஆகி விடுகிறது. வகுபடும் எண் எதுவானாலும் சரி, அதை வகுக்கிற எண் ஸைபஃரானால் ஈவு அனந்தம். இதற்கு கஹரம் என்று பாஸ்கராச்சாரியர் பேர் கொடுத்திருக்கிறார். 'கம்'(Kham) என்றால் ஸைஃபர்;'ஹரம்' என்றால் வகுத்தல், 'இப்படி அனந்தமாக இருக்கிற பரமாத்மாவை நமஸ்கரிக்கிறேன்'என்று தம்முடைய கணித சாஸ்திரத்தில் அவர் சொல்கிறார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்**

## மூடநம்பிக்கையல்ல ; ஆதார பூர்வமான உண்மைகளே !

"ஹிந்து சாஸ்திரங்களில் ஒரே நான்ஸென்ஸாக விஷயங்கள் இருக்கின்றன. பூமிக்கு வடக்கே மேரு சிகரம் இருக்கிறதாம். அங்கே உள்ள தேவர்களுக்கு நம்முடைய ஒரு வருஷம் ஒரு நாளாகி விடுகிறதாம். அந்த மேருவை ஸூர்யன் சுற்றுகிறானாம். உப்பு ஸமுத்திரம் மட்டுமில்லாமல் இக்ஷு (கருப்பஞ்சாற்று) ஸமுத்ரம், க்ஷீர ஸமுத்ரம் (பாற்கடல்) என்று ஏழு விதமான ஸமுத்ரங்கள் இருக்கின்றனவாம். ஐந்து கண்டங்களாகவே பிரிந்துள்ள உலகத்தை ஏழு தீவு கொண்டது ('ஸப்த த்வீபா') என்று வேறு சொல்கிறார்கள். எல்லாம் ஒரே பேத்தல்"என்று பரிஹாஸம் பண்ணுகிறார்கள்.

இருக்கட்டும். இந்த ஸமுத்ரம் ஏன் இத்தனை உப்புக் கரிக்க வேண்டும்?யார் அதிலே இவ்வளவு உப்பைக் கொட்டினது?இதே மாதிரி தித்திப்பு, பாலின் சுவை முதலி உள்ள கடல்களில் ஏன் இருந்திருக்க முடியாது?சரி, ஸப்த த்வீபா என்றும் ஸப்த ஸாகரம் என்றும் சொல்வது தப்பு என்கிறார்களே, இவற்றைச் சொல்கிற சாஸ்திரத்தில் பூமியின் பொஸிஷனைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறது?'பூமியின் வடகோடியிலே மேரு இருக்கிறது. அதற்கு நேர் எதிரே த்ருவ நக்ஷத்திரம் இருக்கிறது'என்று சொல்லியிருக்கிறது.

வடகோடிதான் North pole (வட துருவம்) என்று வைத்துக் கொள்ளலாம். இப்போது த்ருவ (துருவ) நக்ஷத்ரம் இதற்கு நேரேயா இருக்கிறது என்று பார்த்தால், அப்படியில்லை. Pole-க்கு 'த்ருவம்' என்ற பெயரே அந்த நக்ஷத்திரத்தின் பெயரை வைத்துத்தான். ஆனாலும் இப்போது அதற்கு நேரே 'போல்' இல்லை. "ஆதியில் நேரேதான் இருந்தது. அப்புறம் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுப் பூமி கொஞ்சம் சாய்ந்து விட்டது"என்று நவீன ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். நேரே சுற்றும் பம்பரமாக த்ருவ நக்ஷத்ரத்தை நேரே நோக்கிய நிலையில் பூமி சுற்றிய காலத்தைச் சொல்கிற சாஸ்திரம் அப்போது இருந்த ஏழு தீவுகளையும் ஏழு கடல்களையும் சொல்கிறது. பம்பரம் சுற்றுவதில் கோணல் ஏற்பட்ட போது, ஸப்த சமுத்ரங்களும் கலந்து உப்பாகிவிட்டது என்கிறேன். அந்த வெள்ளத்தில் ஸ்பத த்வீபங்கள் ஐந்து கண்டங்களாக மாறிவிட்டன என்கிறேன்.

நம்முடைய வட துருவத்தின் மேலே ஒரு ஸ்தானம் இருக்கிறது என்றால், அதுதான் ஸ்வர்க்கம் இருக்கிற மேரு. இந்த பூலோகம் ஒரு எலுமிச்சம் பழம் என்று வைத்துக் கொண்டால் அதன் உச்சியில் உள்ள புள்ளி மேரு சிகரம். அந்த உச்சிக்கு எந்தப்பக்கமும் தெற்குதான். உச்சியான அந்த பாயின்டிலிருந்து கிழக்கேயோ, மேற்கேயோ, வடக்கேயோ, எங்கே போவது?எங்கேயும் போகமுடியாது. கீழே தெற்கில் இறங்குகிறது தவிர வேறு திசையே இல்லை. எலுமிச்சம் பழத்தின் உச்சியில் ஒரு பாயிண்டை வைத்துப் பார்த்தால் இது தெரியும். பூமியில் உள்ள எல்லாத் தேசங்களுக்கும் (வர்ஷங்களுக்கும்) வடக்கு

மேருதான். ஸர்வேஷாமபி வர்ஷாணாம் மேரு:உத்தரத ஸ்தித:என்றதன் அர்த்தம் இதுதான்.

துருவத்திலே எப்படியிருக்கிறது?அங்கே ஆறுமாஸம் முழுவதும் பகலாகவும், ஆறு மாஸம் முழுவதும் இரவாகவும் இருக்கிறது. இதை ஆரம்ப கிளாஸிலேயே படித்திருக்கிறோமே!ஒரு பகலும் ஒரு இரவும் சேர்ந்தது ஒரு நாள் என்கிறபடி, ஆறுமாஸம் பகலாகவும் ஆறு மாஸம் இரவாகவும் உள்ள துருவதற்கு நம்முடைய ஒரு வருஷம் ஒரு நாளாகிறது. இதைத்தான் தேவர்களுடைய ஒரு தினம் நமக்கு ஒரு வருஷம் என்பது.

பூமி சுற்றும்போது அதன் பக்கவாட்டிலிலுள்ள ஸகல பாகங்களும் சுற்றினாலும், உச்சிப் பாயின்டும், இதே மாதிரி அடியில் தென்துருவத்தில் உள்ள பாயின்டும் சுற்ற முடியாது. சுற்ற முடியாத அளவுக்குச் சின்னதுதானே பாயின்ட்?சுற்றுவதினாலேதான் மற்றப் பகுதிகளில் சூரிய சந்திரனோடு தினந்தினமும் பல கோணங்களில் சம்பந்தப்பட்டு ஒரிடத்தில் பதினெட்டு மணி வெய்யில் அடிக்கிறது;ஆறு மணி அளவே ராத்திரியாயிருக்கிறது. அதற்கு நேர் எதிரே ஒரிடத்தில் ஆறே மணி வெய்யிலாகவும் பதினெட்டு மணி ராத்திரியாகவும் இருக்கிறது. இரவு பகலில் பூமியின் பல பாகங்களுக்கிடையில் ஏகப்பட்ட கால வித்யாஸம் இருக்கிறது. சில நாட்களில் மட்டுமே சூரியன் நேர்கிழக்காக உதிக்கிறான்;தலைக்கு நேரே ஒரு டிகிரக் கூடத் தப்பாமல் வருகிறான்;மற்ற நாட்களில் வடகிழக்கிலிருந்து தென்கிழக்கு வரையில் பல கோணங்களில் (angle-களில்) சூரியோதயம் ஏற்படுகிறது. வட துருவத்தில இப்படியில்லை. அங்கே ஆறு மாஸம் இரவுக்குப் போய், மறுபடி அதிலிருந்து ஆறு மாஸம் இரவுக்குப் போய்,மறுபடி அதிலிருந்து ஆறு மாஸம் பகலுக்கு வரும் போது சூரிய கதியைப் பார்த்தால், அந்த இடமானது சூரியனைச் சுற்றாமல் , சூரியன்தான் அந்த இடத்தைச் சுற்றி வருகிறான் என்றே தோன்றும். மேரு ஸூரியனைப் பிரதக்ஷிணம் பண்ணுகிறான் என்பது இதைத்தான்.

வடதுருவத்தில் ஸூரிய வெளிச்சமுள்ள ஆறு மாஸங்களை உத்தராயணம் என்றும், அங்கே இரவாகித் தென்துருவத்தில் வெளிச்சமிருக்கிற ஆறு மாஸங்களை தக்ஷிணாயனம் என்றும் சொல்கிறோம். வடதுருவத்துக்கு ஸுமேரு என்றும், தென் துருவத்துக்குக் குமேரு என்றும் பெயர். (ஸுமேரியா தேசம்கூட 'ஸுமேரு'விலிருந்து வந்ததுதான். அங்கே வேகத்தில் வரும் தேவதைகளின் வழிபாடு இருந்தது எனறு சொல்கிறார்கள்) வடக்கே தேவர்கள் இருப்பது போல் தெற்கே பித்ரு லோகமும் நரகமும் இருக்கின்றன. தேவதைகளையோ, பித்ருக்களான ஆவிகளையோ, நரகவாஸிகளையோ பார்ப்பதற்கு யோக சக்தியினால் திவ்ய திருஷ்டி பெறவேண்டும். நமக்கு அந்த த்ருஷ்டி இல்லாததால் அப்படிப்பட்ட லோகங்களும் இல்லை, ஜீவர்களும் இல்லை என்று சொல்லிவிட முடியாது. ருஷ்யாவில் பிறந்து, அமெரிக்காவில் வஸித்துவிட்டு, இந்தியாவில்

வந்து 'தியாஸாஃபிகல் ஸொஸைடி' ஆரம்பித்த ப்ளாவட்ஸ்கி முதலானவர்கள் ஆவி உலக, தேவதா லோக விஷயங்களைத்தான் முக்யமாகச் சொல்லியிருக்கிறார்கள். இது மட்டுமில்லை. இக்கால ஸயன்டிஸ்ட்களில் ரொம்பவும் முக்யமாக நினைக்கப்படுகிற ஆலிவர் லாட்ஜ் என்பவர்கூட, பிற்காலத்தில் ஸயன்ஸைவிட முக்யமாக இந்த ஆவிகள், தேவதைகள் இவற்றின் ஆராய்ச்சியிலேயே இறங்கி, 'இவை எல்லாம் நிச்சயமாக இருக்கின்றன;இவைகளைக் கொண்டு மனிதன்

அநுகூலங்களை அடையலாம்ட என்று புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார். ஜ்யோதிஷம் முதலான சாஸ்திரங்கள் ஒருபுறம் அஸ்ட்ரானமி மாதிரியான ஸயன்ஸ்களைச் சொல்லிவிட்டு உடனே spiritualism-க்கும் போகிறதே என்று கேட்டால், இவை இரண்டுக்கும் விரோதமில்லை என்று சொல்வது போல ஒரு பெரிய விஞ்ஞானியே ஸமீபத்தில் இப்படிப் பண்ணியிருக்கிறார்.

நாம் ஒருவருக்கொருவர் பழகிக் கொள்கிறதுபோல மநுஷ்யர்கள் தேவர்களோடு பழகி வந்த புராதன காலத்தில் ஏற்பட்டவை நம் சாஸ்திரங்கள். நம்முடைய (கர்மாக்களைத் தொடங்கு முன் செய்ய வேண்டிய) ஸங்கல்பத்தைப் பார்த்தாலே இது தெரிகிறது. இந்த ஸங்கல்பமானது எத்தனையோ யுகாந்தரங்களுக்கு முன், கோடிக்கு அப்புறம் எத்தனையோ ஸைஃபர்கள் போட வேண்டிய அத்தனை காலத்துக்கு முன் ஸ்ருஷ்டி ஏற்பட்டதிலிருந்து இன்று வரைக்கும் காலத்தை நிர்ணயம் பண்ணித்தருகிறது. யுகத்தின் ஆரம்பத்தில் க்ரஹங்கள் எப்படியிருந்தன என்பது கூட ஜ்யோதிஷக் கணக்கால் தெரிகிறது. அப்போது எல்லா க்ரஹங்களும் ஒரே வரிசையில் இருந்தனவாம்.

சில கணக்குகள் இப்போது வித்யாஸப் படுகின்றன, பிரத்யக்ஷத்தில் பார்க்கிற சில நிலவரங்கள் சாஸ்திரத்துக்கு மாறாக இருக்கின்றன என்றால், உடனே 'சாஸ்திரம் புளுகு மூட்டை' என்று ஆரம்பித்துவிடக்கூடாது. எல்லா க்ரஹங்களும் நேராக இருந்த புராதன காலம், துருவ நக்ஷத்ரத்துக்கு சரியாக நேரே பூமியின் துருவம் இருந்த ரொம்பப் பழைய காலம்- இவற்றிலிருந்தே சாஸ்திரங்கள் இருந்திருக்கின்றன. அதற்குப் பின், பல யுகங்களில் Nature-ல் (இயற்கையில்) மகத்தான மாறுதல் ஏற்பட்டு, பூமி மலையாகவும்,மலை ஸமுத்ரமாகவும், ஸமுத்திரம் பாலைவனமாகவும் இப்படியெல்லாம் ஆகியிருக்கிறது. இந்த விவரங்களையெல்லாம் ஜியாலஜிஸ்ட்கள் சொல்கிறார்கள். அதோடுகூட வானமண்டலத்தில் கிரஹ ஸஞ்சாரங்களிலும் மாறுதல்கள் ஏற்பட்டிருப்பதாக அஸ்ட்ரானமிகாரர்கள் சொல்கிறார்கள். இதனாலெல்லாந்தான் சாஸ்திரத்தில் என்றைக்கோ சொன்னதற்கு வித்யாஸமாகவும் சிலவற்றை இன்றைக்கு பார்க்கிறோம்.

ஜ்யோதிஷத்தில் கணக்குப் பண்ணி சிருஷ்டி எப்போது ஆரம்பித்தது என்று

சொல்கிறார்களோ, அதுவே நவீன ஆராய்ச்சியால் அநுமானிக்கிற சிருஷ்டி காலத்துக்குக் கிட்டத் தட்ட சரியாக இருக்கிறது என்று சொல்கிறார்கள்.

கலியுகத்துக்கு 4,32,000 வருஷங்கள். த்வாபரயுகத்துக்கு இதைப்போல இரண்டு மடங்கான 8,64,000 வருஷம். த்ரேதாயுகத்துக்கு மூன்று மடங்கான 12,96,000 வருஷம். க்ருதயுகத்துக்கு நாலு மடங்கான 17,28,000 வருஷம். நாலு யுகங்களும் சேர்ந்த 'சதுர்யுகம்' அல்லது 'மகாயுகம்'என்பதற்கு 43,20,000 வருஷம். இப்படி ஆயிரம் மஹா யுகங்கள் சேர்ந்தால், அதுதான் பிரம்மாவின் ஒரு பகல் வேளை. அதுவே கல்பம் என்பது. அது 14 மநுக்களின் ஆட்சிக்காலம். 'மநு'வின்

ஆட்சிக்காலம்தான் 'மன்வந்த்ரம்' என்பது. நாம் பல ராஜாக்களையும் குடியரசுகளையும் வைத்துக் கொண்டிருந்தாலும் , லோகம் பூராவுக்கும் மேலாதிக்கம் உள்ளவராக பகவான் மநு என்பவரையே வைதத்திருக்கிறார். இப்படிப்பட்ட மநுக்கள் பதினாலு பேர், மநுஷ்ய இன ஸ்ருஷ்டிலிருந்து அது முடிகிறவரை ஆட்சி நடத்துகிறார்கள். மநுவிலிருந்து தோன்றுவதால்தான் நமக்கு மநுஷ்யர், மநுஜர் முதலான பேர்கள் இருக்கின்றன. Man என்பதும் மநுவிலிருந்து வந்ததுதான். இப்போது ச்வேத வராஹ கல்பம் என்ற பிரம்மாவின் பகல் வேளையில் ஏழாமவரான வைவஸ்த மநுவின் காலத்திலே, இத்தனாம் ஆண்டில் நாம் இருக்கிறோம் என்று ஸங்கல்பத்தில் சொல்லப்படுகிறது. இதிலிருந்து கணக்கு பண்ணி முதலாமவரான ஸ்வாயம்புவ மநு எப்போது தோன்றியிருப்பார், அதாவது இந்த கல்பத்தில் ஸ்ருஷ்டி எப்போது ஆரம்பித்திருக்கும் என்று பார்த்தால், அந்தக் காலக் கணக்கும் மநுஷ்ய் இனம் (Human Species) எப்போது தோன்றிற்று என்று ஸயன்ஸில் சொல்லுகிறார்களோ அதுவும் ரொம்பக் கிட்டத்தில் இருக்கிறது என்கிறார்கள்.

'மன்' என்றால் 'நினைப்பது'.நினைக்கிற காரியத்தைச் செய்கிற அங்கம்தான் மனஸ். அதை வைத்தே மநுவுக்கு இப்படிப் பெயர் ஏற்பட்டது. சிந்தனா சக்தி வாய்ந்த மனிதகுலத்துக்கு முதல்வராக அவர் இருக்கிறார். Man is a thinking animal என்று சொல்வதற்கேற்ப, நினைக்கத் தெரிந்ததே இவனுடைய சிறப்பு என்பதால்தான், மநுவிடமிருந்து வந்தவர்களுக்கும் மநுஷ்யர் என்ற பெயர் ஏற்பட்டுவிட்டது.

பதினாலு மநுக்களின் ஆயுட்காலமும் சேர்ந்த ஆயிரம் சதுர்யுகங்கள் பிரம்மாவுக்கு ஒரு பகல் என்றால் அதற்கு 432,00,000 (432 கோடி) வருஷம்;அதே அளவு வருஷம் ஒரு ராத்திரி. அதாவது 864 கோடி வருஷம் பிரம்மாவுக்கு ஒரு முழு நாள். அதுவே கல்பம் என்பதுமுண்டு. அதிலே பகலில்தான் ஸ்ருஷ்டி நடப்பது. ராத்திரியில் ஸ்ருஷ்டி அடங்கிப் போன ப்ரளயம். இப்படி 365 நாட்கள் ஒரு பிரம்ம ஸம்வத்ஸரம் (வருஷம், ஆண்டு). இதைப் போல் நூறு வருஷங்கள் அவருடைய ஆயுஸ். இந்த பிரபஞ்சத்தின் ஆயுஸூம் அதுவே. அவரது ஆயுள்

முடிகிற போது ஸகல லோகங்களும் இல்லாமல் போய்விடும். அதுதான் 'ஆத்யந்திக பிரளயம்'என்பது. அப்புறம் ஒரு பிரம்மா மட்டும் பிரபஞ்சமில்லாமல், தான் மாத்திரமாக இருக்கும். அப்புறம் மறுபடி இன்னொரு பிரம்மாவைக் கொண்டு சிருஷ்டியை ஆரம்பிக்கும். ஆஞ்சநேயர்தான் அடுத்த பிரம்மாவாக வரப்போகிறார் என்று சொல்வார்கள்.

'ஆத்யந்திக ப்ரளயம்' என்றால் சாச்வதமான ப்ரளயம் என்று அர்த்தம். 'அத்யந்தம்'என்ற வார்த்தையிலிருந்து 'ஆத்யந்திக'என்பது உண்டாயிருக்கிறது. 'ப்ரளயம்' என்றால் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு, உணர்ச்சியில்லாமல் லயித்திருப்பது. ஆத்யந்திக ப்ரளயத்தில் இந்த லயம் என்பது பரமாத்மாவோடேயே சாச்வதமாக ஐக்யமாகி விடுவதாகி விடுகிறது. ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரம்மா நூறு வயஸு பூர்த்தியாகிப் பரமாத்மாவோடு ஐக்யமாகி விடுகிறது. ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரம்மா நூறு வயஸுபூர்த்தியாகி பரமாத்மாவோடு ஐக்யமாகிறபோது, அவர் உண்டாக்கிய ஸ்ருஷ்டியும் சேர்ந்து ஐக்யமாகிவிடுகிறது. அப்புறம் புது ப்ரம்மா புது ஸ்ருஷ்டி ஆரம்பிக்கும் போதும் இந்த ஜீவர்கள் அதில் மறுபடி பிறப்பதில்லை. அதனால் இதை 'மஹா ப்ரளயம்'என்றும் சொல்வது.

வேறே இரண்டு ப்ரளயங்களும் உண்டு. ஒவ்வொரு சதுர்யுக முடிவிலும் ஏற்படுவது ஒன்று. இதை வெறுமே 'ப்ரளயம்'என்பார்கள். ஆயிரம் சதுர்யுகத்திற்கொருதரம் பிரம்மாவின் ஒவ்வொரு பகலின் முடிவிலும் ஏற்படும் கல்ப ப்ரளயம் இன்னொன்று. அவருடைய ஒவ்வொரு இராக்காலமும் முடிகிறவரை இது நீடித்து, அடுத்த பகல் உதிக்கும் போது முடிந்துவிடும். இரண்டு பகல்களுக்கு நடுவேயுள்ள 'இன்டர்வெல்' லில் இது நடப்பதால் இதற்கு 'அவாந்தர ப்ரளயம்' என்றும் பெயர். சதுர்யுக முடிவான ப்ரளயத்தில் அடங்கின ஜீவர்கள் அடுத்த சதுர்யுக ஸைக்கிள் ஆரம்பிக்கும் போது மறுபடி பிறக்கத்தான் செய்வார்கள். 'அவாந்தர ப்ரளயம்'அல்லது 'கல்ப ப்ரளயம்'என்பதில் அடங்கியவர்களும் அடுத்த கல்பத்தில் பிறக்கத்தான் செய்வார்கள்.

பூலோகம், புவர் வோகம், ஸுவர் லோகம், மஹர் லோகம், ஜன லோகம், தபோ லோகம், ஸத்ய லோகம் என்று ஏழு. இவற்றுக்குள்தான் மநுஷ்யர்கள், தேவர்கள் முதலான ஸகல இனங்களும் இருக்கின்றன. இவற்றில் பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் இவை மூன்றும் ஒரு group-ஆக இருக்கின்றன. 'பூர்ப்புவஸ்ஸுவ:'என்று இவற்றைத்தான் அடிக்கடி கர்மாக்களில் குறிப்பிடுகிறோம். மற்ற நாலு லோகங்களும் இவற்றைவிட உயர்ந்தவை. பிரம்மா ஒவ்வொரு இரவிலும் தூங்கும்போது அவாந்தர ப்ரளயம் ஏற்படுகிறதல்லவா?அப்போது இந்த முதல் மூன்று லோகங்கள் மட்டும் பிரளயத்தில் அழிந்துவிடும். அவரது ஆயுஸ் முடிவான மஹாப் பிரளயத்திலோ மற்ற லோகங்களும் அழிந்துவிடும்.

ஸூர்யனுடைய உஷ்ணம் நமக்குத் தெரியாத அளவுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வருகிறது என்று நவீன ஸயன்ஸில் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஸூர்ய உஷ்ணம் இல்லாவிட்டால் லோக வாழ்க்கை ஸாத்யமே இல்லை. ஆஹாரத்திலிருந்து ஆரம்பித்து லோக வாழ்வுக்கு வேண்டிய மழை, பருவக்காற்று எல்லாவற்றுக்கும் ஸூர்ய உஷ்ணம் குறைந்து கொண்டே போவதால், எத்தனையோ கோடி வருஷங்களுக்கு அப்புறம் நம் லோகமே இல்லாமற்போக வேண்டியதுதான் என்று ஒரு கணக்குக் கொடுத்திருக்கிறார்கள். சாஸ்திரப்படி பிரம்மாவின் அடுத்த அவாந்தரப் பிரளயம் எப்போது வரவேண்டுமோ, அதுவும் ஸயன்டிஸ்டுகள் கொடுக்கிற காலக் கெடுவும் சற்றேறக்குறைய ஒத்திருக்கின்றன.

ஸங்கல்பத்தில் சொல்கிறபடி இப்போது பிரம்மாவுக்குப் பாதிக்கு மேல் ஆயுஸ் தீர்ந்துவிட்டது. நமக்கு வாரத்தில் ஏழு நாள் பெயர்கள் மாதிரி ஏழு கல்பப் பெயர்கள் பிரம்மாவின் விஷயமாகச் சொல்கிறார்கள். அதில் இப்போது நாலாவதான ச்வேத வராஹ கல்பத்தில் பாதிக்குமேல் வந்து விட்டோம். பிரம்மாவுக்கு இன்றைக்கு வயது, இத்தனை மாஸம், தேதி, அதில் இன்ன யாமம், அப்புறம் நாம் இன்ன கல்பத்தில், இன்ன மன்வந்தரத்தில், இன்ன சகாப்த்தில், ப்ரபவ முதலான அறுபது வருஷங்களில் நம் மநுஷ்யப் பஞ்சாங்கத்தின்படி இன்ன வருஷம், மாஸம், தேதியில், லக்னத்தில் இருக்கிறோம் என்கிற வரையில் எல்லாவற்றையும் ஸங்கல்பத்தில் சொல்கிறோம்.

இந்தக் கணக்குப்படி பிரம்மா எப்போது தோன்றியிருப்பார் என்று பார்த்தால், அதுவும், பிரபஞ்சம் எப்போது தோன்றியிருக்கும் என்று ஸயன்ஸில் போட்டிருக்கிற கணக்கும், ஏறக்குறைய ஸரியாக இருக்கின்றன என்றார்கள்.

பிரம்மாவின் வயஸைச் சொல்வதில் ஒரு வேடிக்கை. 'பரார்ரத -த்வய-ஜீவி'என்று பிரம்மாவைச் சொல்கிறார்கள். அதாவது இரண்டு பரார்தங்கள் உயிர் வாழ்கிறவர் என்று அர்த்தம். பரார்தம் என்றால் 'பர'என்கிற எண்ணிக்கையில் பாதி (அர்த்தம்) என்று அர்த்தம். அதாவது 'பரார்த்த-த்வய -ஜீவி'என்றால் 'இரண்டு *அரைப் பர ஆயுஸ்காரர்'என்று அர்த்தம்.

'இரண்டு அரைப் பர'என்றால் ஒரு 'பர'தானே?அதனால் 'பரார்த்த த்வயம்'என்காமல் 'பர' என்றே சொல்லி விட்டால் போதும். ஆனாலும் பிரம்மா இப்போது பாதிப் 'பர'வைத் தாண்டி 51-வது வயதில் இருப்பதால், 'பர'வில் பாதியை முக்யமாக நினைத்து, 'பரார்த்த'த்தையே குறிப்பிடுகிறோம்.

ஆயிரம் சதுர்யுகம் கொண்டதான பிரம்மாவின் ஒரு பகலுக்குள் 14 மநுக்களின் ஆட்சி நடப்பதால் ஒரு மந்வந்தரத்திற்கு 71 சதுர்யுகங்கள். இந்த வைவஸ்வத மன்வந்தரத்தில் இப்போது நடப்பது 28-வது சதுர்யுகம். அதில் இது கலியுகம். நாம் பண்ணும் ஸங்கல்பத்தில் இவ்வளவும் இருக்கின்றன!திதி,லக்னம் வரையில்

சொல்வதுண்டு. இவ்வளவும் காலக் கணக்கு.

தேசக் கணக்கு வேறு அந்த ஸங்கல்பத்தில் இருக்கிறது. பிரம்மாண்டம் முழுதையும் வர்ணித்து, அதிலே நாம் இருக்கிற ஊர் வரையில் கொண்டு வந்துவிடுகிறது. நாம் கடிதங்களில் ஊரையும் தேதியையும் எழுதுவது போல ஸங்கல்பத்தில் தேசத்தையும் காலத்தையும் சொல்லிக் கொள்கிறோம். இவ்வளவு அருமையான கணக்குகள் ஜ்யோதிஷ சாஸ்திரத்தினால் அறியப்படுகின்றன.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**ஜ்யோதிஷ ம் : வேதத்தின் கண்**

**ப்ரத்யக்ஷ நிரூபணம்**

ஒரு கொட்டகையில் மேற்கூரையிலுள்ள துவாரம் வழியாக வரும் சூரிய கிரணம் ஓரிடத்தில் படுகிறது. அதே கிரணம் அடுத்த மாஸம் எங்கே படும் என்று கேட்டால் நமக்குத் தெரியாது. ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் சொல்லியுள்ள கணநங்களைச் செய்தால் தெரியும். பழைய காலத்தில் ஒரு முத்தைத் தொங்கவிட்டு, இன்ன காலத்தில் இன்ன இடத்தில் அதனுடைய நிழல் விழும் என்று ஸரியாகக் கோடு போட்டுக் காண்பித்தால், அப்படி காண்பித்தவர்களுக்கு அரசர்கள் உயர்ந்த ஸன்மானங்களைச் செய்து வந்தனர்.

மற்ற சாஸ்திரங்களிலெல்லாம் வாக்கியார்த்தம் செய்து வாதத்தில் ஜயித்தே சம்மாணம் பெறுவார்கள். ஜ்யோதிஷ சாஸ்திரத்திலோ பிரத்யக்ஷமாகக் காட்டி சம்மாணம் பெறவேண்டும். அதில் ஏமாற்ற முடியாது. அதற்கு சூரிய சந்திரர்களே சாக்ஷி.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**கல்பம் : வேதத்தின் கை**

வேத புருஷனுக்குக் கல்பம் என்றாவது ஆங்கம் கரம் என்பார்கள். காரியங்களைச் செய்வதினால் கைகளுக்குக் கரம் என்று பெயர் வந்தது. செய்யும் தொழில் உடையதால், தெலுங்கிலும் 'செய்'என்று வழங்குகிறது.

காரியத்தில் ஏவும் சாஸ்திரமே கல்பம். வேதத்தையு் , சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம் முதலிய எல்லாவற்றையும் தெரிந்து கொண்ட பின்பு என்ன செய்வது?இவற்றால் ஏதாவது காரியம் செய்ய வேண்டும். மனஸில் தோன்றுகிற காரியங்களெல்லாம் பண்ணி ஸம்பாதித்த பாபங்களெல்லாம் தொலைய நல்ல காரியம் பண்ணவேண்டும். அந்த நல்ல காரியம் என்னவென்று தெரிய வேண்டும். அதற்குரிய மந்திரம், அதன் சரியான உச்சாரணம், அர்த்தம் முதலியவைகள் தெரிய வேண்டும். அந்தக் கர்மாக்களைச் செய்வதற்குப் பல திரவியங்கள் வேண்டும். அந்த வீட்டுக்கு வாஸ்து லக்ஷணம் வேண்டும். பின்பு அந்தக் கர்மாக்களின் பலனை ஈச்வரனுக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும். இவைகளைப் பற்றிய விஷயங்களைச் சொல்வதுதான் கல்பம்.

வேதத்தை அத்யயனம் பண்ணி, அதிலே உள்ள அக்ஷரங்களைப் பற்றிச் சிக்ஷையால் தெரிந்து கொண்டு, இலக்கணத்தை வியாகரணத்தால் அறிந்து, மீட்டர், அர்த்தம் என்பனவற்றையும் சந்தஸ், நிருக்தம் இவற்றால் தெரிந்துகொண்டு, ஜ்யோதிஷத்தின் மூலம் கர்மாக்களைச் செய்யும் காலத்தைத் தெரிந்து கொள்ளுவதின் பிரயோஜனம் என்னவெனில், கல்பத்தில் சொல்லியுள்ள நல்ல கர்மாக்களைப் பண்ணுவதே.

எந்தக்கர்மாவை எப்படிப் பண்ணுவது, எந்த எந்த வருணத்தார் எந்த எந்த காரியங்களைச் செய்ய வேண்டும். எந்த எந்த ஆசிரமத்தார் எதை எதை செய்ய வேண்டும் என்பவைகளையும், எந்தக் கர்மாவுக்கு எந்த மந்திரம், திரவியம், தேவதை என்பவைகளையும், இவை போன்ற மற்றவைகளையும், யக்ஞங்களில் எத்தனை ரித்விக்குகளை வைக்க வேண்டும், எந்த விதமான பாத்திரங்களை உபயோகப்படுத்த வேண்டும் என்பவைகளையும் , இவை போன்ற மற்றவைகளையும் சொல்வது கல்பம். நாம் 'சடங்கு'என்று சொல்வதையெல்லாம் கல்பமே வகுத்துக் கொடுக்கிறது. ' ஷடங்கம் ' என்பதே சடங்கு ஆயிற்று என்று சொன்னேன். அல்லது, கல்பம் வேதத்தின் ஆறாவது அங்கமானதால் ஷஷ்டாங்கமாகிறது. ஷஷ்டாங்கமே சடங்கு என்றாகியிருக்கிலாமோ என்று தோன்றுகிறது.

கல்ப சாஸ்திரத்தை அநேக ரிஷிகள் செய்திருக்கிறார்கள். தக்ஷிணத்தில் வெகுவாகப் பின்பற்றப்படும் கிருஷ்ணயஜுர் வேதத்திற்கு ஆபஸ்தம்பர், போதாயனர், வைகானஸர், ஸத்யாஷாடர், பாரத்வாஜர், அக்னிவேசர் என்னும் ஆறுபேர்கள் கல்பஸூத்ரங்கள் செய்திருக்கிறார்கள். ரிக்வேதத்திற்கு ஆச்வலாயனர் செய்ததே அதிகம் வழக்கிலுள்ளது. ஸாங்காயனர் என்பவரும் செய்திருக்கிறார். சுக்ல யஜுர் வேதத்திற்கு காத்யாயனர் கல்ப ஸூத்திரம் செய்திருக்கிறார். ஸாமவேதத்தில் கௌதும சாகைக்கு லாட்யாயனரும், ராணாயநீய சாகைக்கு த்ராஹ்யாயணரும், தலவகார சாகைக்கு ஜைமினியும் ஸூத்திரம் செய்திருக்கிறார்கள்.

கல்பத்தில் ஒவ்வொரு சாகைக்கும் க்ருஹ்ய ஸூத்ரமென்றும், ச்ரௌத ஸூத்ரமென்றும் இரண்டு வகை உண்டு. 'ச்ருதி'எனப்படும் வேதத்திலேயே பூர்ணமாக வருகிற யக்ஞம் முதலானவையே 'ச்ரௌதம்'என்பவை. இவை விரிவாகச் செய்யவேண்டிய பெரிய காரியங்களாகும். கிருஹத்தில், வீட்டில் இல்லாமல், வெளியே பெரிசாக யாகசாலை போட்டுக் கொண்டு செய்யப்படுபவை. இதனால் தான் கிருஹத்திலேயே பண்ணப்பட்ட மற்ற சின்ன வைதிக கர்மாக்களுக்கு "க்ருஹ்யம்"என்றே பேர் வந்துவிட்டது. கர்ப்பம் உண்டாவது முதல் தேஹம் அக்கினிக்கு ஹோமம் பண்ணப்படும் தகனக்கிரியை வரையில் செய்யப்படுகின்ற நாற்பது கிரியைகளை இவ்விரு ஸூத்திரங்களும் சொல்லும். தஹனக்கிரியையும் ஒருவகையான ஹோமம்தான்!அந்தியேஷ்டி, அதாவது கடைசி வேள்வி, என்று சொல்லுவார்கள். இந்த இஷ்டியில், வேள்வியில், தேஹமே திரவியமாக அக்னியில் ஹோமம் செய்யப்படுகிறது!

அக்னி ஹோத்திரத்தை ஆதாரமாகக் கொண்டு பண்ணும் ஏழு ஹவிர்யஜ்ஞம்;ஏழு ஸோமயஜ்ஞம்;ஏழு பாக யக்ஞங்கள் என்பதாக மொத்தம் 21 யக்ஞங்களைப் பிராம்மணன் பண்ண வேண்டும். இவற்றில் ஏழு ஹவிர் யக்ஞமும் ஏழு ஸோம யக்ஞங்களும் க்ருஹ்ய ஸூத்திரத்தில் வராது. இந்தப் பதினாலும் "ச்ரௌத ஸூத்திர"த்தில் வருவன. இவற்றையும் சேர்த்தே ஒருவன் 40 கர்மாக்கள் உள்ளன. இவற்றை 40 ஸம்ஸ்காரம் என்பர்.

ஸம்ஸ்காரம் என்றால் தூய்ப் படுத்துவது. வீட்டில் செய்வது அக்கினிஹோத்திரம். யாகசாலை போட்டுக் கொண்டு பண்ணுவது யக்ஞம். பெரிய யாகங்களை ச்ரௌத ஸூத்திரம் சொல்லும். Domestic rites என்று அகத்தோடு

பண்ணுவதை க்ருஹ்ய ஸூத்ரம் சொல்லும். நான் மேலே ச்ரௌத ஸூத்ரக்காரர்களின் பேர்களையே சொன்னேன்.

நாற்பது ஸம்ஸ்காரங்களும் எட்டு ஆத்ம குணங்களும் கல்ப ஸூத்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த நாற்பது ஸம்ஸ்காரங்களில் முன்பு சொன்ன பதினான்கு ஹவிர், யோம யக்ஞங்களைத் தவிர மிகுதியுள்ள இருபத்தியாறும் கிருஹ்ய ஸூத்திரத்தில் சொல்லப்படும். அதில் கர்ப்பாதானம், பும்ஸுவனம், ஸீமந்தம், ஜாதகர்மா, நாமகரணம், அன்னப்ரச்நம், சௌளம், உபநயனம், விவாஹம், அந்தியேஷ்டி முதலியவைகள் சொல்லப்படுகின்றன. இவற்றைப் பிற்பாடு விளக்குகிறேன்.

எட்டு ஆத்ம குணங்களாவன:தயை, பொறுமை, அசூயை இல்லாமலிருத்தல், சுத்தி (தூய்மை), பிடிவாதமின்மை, மனங்குளிர்ந்திருத்தல் லோபமின்மை, நிராசை என்பவைகள். இவை எட்டும் ஸாமான்ய தர்மங்களைச் சேர்ந்தவைகளே. அதாவது எல்லா ஜாதிக்காரர்களும் கைக்கொள்ள வேண்டியவை.

நாம் இன்ன ஸூத்ரத்திரத்தைப் பின்பற்றுகிறவர்கள் என்று நமஸ்காரம் பண்ணும்போது சொல்லும் அபிவாதனத்தில் சொல்கிறோம். அது ச்ரௌத ஸூத்திரத்தைத்தான் குறிக்கிறது. திருஷ்டாந்தரமாக ஸாமவேதிகள் "த்ராஹ்யாயண ஸூத்திரம்" என்று சொல்கிறார்கள். த்ராஹ்யாயணர் ச்ரௌத ஸூத்திரம் மாத்திரமே செய்திருக்கிறார். வேறொருவர் (கோபிலர்)தான் கிருஹ்ய ஸூத்திரம் செய்திருக்கிறார். ஆனாலும் பூர்வத்தில் பெரிய யக்ஞ கர்மாநுஷ்டானங்கள் விசேஷமாக செய்யப்பட்டு வந்ததாலேயே, இவற்றைச் சொல்லும் ச்ரௌத ஸூத்ரத்தையே தன்னுடைய ஸூத்ரம் என்று சொல்லி வந்து, இப்போதும் அதுவே அபிவாதனத்தில் நீடிக்கிறது. ஆனால் பிற்காலத்தவரான நாமோ பெரிய ச்ரௌத கர்மாக்களைப் பண்ணாமல் க்ருஹ்ய ஸூத்திரத்தில் வரும் விவாஹம் முதலியவற்றை மட்டும் பண்ணுகிறோம். க்ருஹ்ய கர்மாக்கள் லகுவாகச் செய்யவேண்டியவை. அவற்றில் சிலதே இப்பொழுது பலத்துப் போய்விட்டன.

பூர்வத்தில் ச்ரௌத கர்மாவை ஏழையாய் இருப்பவனும் யாசகம் பண்ணிச் செய்தான். பழைய காலத்தில் 'பிரதி வஸந்த யோமயாஜிகள்'என்று பல பேர்கள் இருந்தார்கள். அதாவது ஒவ்வொரு வஸந்த காலத்திலும் ஸோமயாகம் செய்வார்கள். ஒரு வருஷத்தின் வரவு மூன்று வருஷ செலவுக்கு போதுமானதாக இருந்தால் அந்த வரவை உடையவர்கள் ஒவ்வொரு வஸந்த காலத்திலும் ஸோமயாகம் செய்து வந்தார்கள்.

இப்பொழுது எல்லாம் கெட்டுப் போய்விட்டது. இக்காலத்து பணக்காரர்கள் கூட ஒரு வருஷ வரவுக்கு மூன்று வருஷ செலவை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வியாபார ரீதியில் உண்டான மாறுதல்களால் தனிகர் உட்பட எல்லோருக்கும் தரித்திரமும் கஷ்டங்களும் உண்டாகியிருக்கின்றன. எதிலும் மிதமாக இருக்க வேண்டும்;அமிதம் கூடாது. இந்தக் காலத்து புத்தி சாமர்த்தியங்களுக்களெல்லாம் எத்தனை வந்தாலும் போதாத தரித்திரத்தில் கொண்டு போய்விடுகின்றன. ஒருவன் பணக்காரனாக இருக்கிறானென்றால் அவனுக்கும் தாங்க முடியாதபடி அபாரமான செலவுகளை வைத்துக் கொண்டிருக்கிறான். இவைகளையெல்லாம் மிதப்படுத்திக் கொண்டிருக்கிறான். இவைகளையெல்லாம் மிதப்படுத்திக் கொண்டு நல்ல காரியங்களை செய்யவேண்டும்.

சிகை, புண்ட்ரம், கர்மாநுஷ்டானம் முதலியவைகள் ஸூத்திரத்துக்குத் தக்கபடி பலவகையாக இருக்கின்றன. சிலர் ஊர்த்வ சிகை (உச்சிக் குடுமி) வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் பூர்வ சிகை (முன்குடுமி) யுடையவர்கள ாயிருக்கிறார்கள். அப்படியே நெற்றிக்கு இட்டுக் கொள்வதிலும் ஊர்த்வ புண்ட்ரம், த்ரிபுண்டரம் என்று பேதங்கள் இருக்கின்றன. இவைகளெல்லாம் அவரவரும் தங்களது முன்னோர்களுடைய ஆசாரப்படி அநுஷ்டிக்க வேண்டும்.

சயனம் என்று யாக சாலையில் பல கட்டுமான அமைப்புக்கள் சொல்லப்படுகிறது. அவற்றினுடைய லக்ஷணங்கள் முதலியவைகளைச் சொல்லும் "கல்ப

ஸூத்திரம்"என்று ஒரு பிரிவு கல்பத்தில் இருக்கிறது.

கல்ப ஸூத்திரங்கள் சாமான்ய ஸூத்திரங்களென்றும் விசேஷ ஸூத்திரங்களென்றும் இருவகைப்படும். காத்யாயனர், போதாயனர், ஹிரண்யசேகர் ஆகியோர் சுல்ப ஸூத்திரம் செய்திருக்கிறார்கள். ஆண்டப்பிள்ளை பிரயோகம் என்பது இப்பொழுது பிரசாரத்தில் இருந்து வருகிறது. ஆண்டபிள்ளை என்பவர் திருப்பனந்தாளில் இருந்தவர். திருவிடை மருதூர்ப் பிள்ளையாருக்கு ஆண்ட பிள்ளையார் என்பது பெயர். அந்தப் பெயர் அவருக்கு வைக்கப்பட்டது. பிரயோகத்தின்படி இப்பொழுது ச்ரௌத கர்மாக்கள் நடந்து வருகின்றன. இப்பொழுது யாகங்கள் நடப்பது மிகவும் குறைந்துவிட்டது. கிருஹ்ய ஸூத்திரம்தான் கொஞ்சமாவது பிரசாரத்திலிருந்து வருகிறது. மற்ற தேசாந்தர சாஸ்திரங்களெல்லாவற்றிற்கும் அதிகப் பிரதான்யம் ஏற்பட்டிருக்கின்றது.

நம்முடைய சாஸ்திரங்கள் எல்லாம் ஈச்வர சரணாரவிந்தத்தைக் கட்டிப்பிடிக்கின்றன. எதைப் படித்தாலும் அது ஈச்வரார்ப்பணமாகவும் ஆத்ம லாபத்தைத் தருவதாகவும் இருக்கவேண்டும். நம்முடைய சாஸ்திரங்கள் எல்லாம அப்படிப்பட்டவைகளே. அவற்றிலே வேத மதத்துக்கு வெகு முக்யமாக இருக்கப்பட்ட ச்ரௌத கர்மாக்கள் (ஹவிர்-ஸோம யக்ஞங்கள்) ஒரேடியாகத் தேய்ந்து கொண்டே வந்திருப்பது ரொம்பவும் வருத்தப்பட வேண்டிய விஷயம்.

கல்ப ஸூத்திரம் செய்தவர்களான ஆபஸ்தம்பர், போதாயனர், ஆச்வலாயனர் முதலியவர்களில் த்ராஹ்யாயனர், காத்யாயனர் நீங்கலாக பாக்கி உள்ள எல்லோரும் ச்ரௌத ஸூத்ரம், க்ருஹ்ய ஸூத்ரம் என்ற இரண்டையும் செய்திருக்கிறார்கள்.

அதோடுகூட "தர்ம ஸூத்ரங்கள்"என்றும் சில இருக்கின்றன. இவற்றில் மனிதன் தன் வாழ்விலும், வீட்டிலும், சமூகத்திலும் கடைபிடிக்க வேண்டிய நெறிகள் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றிலிருந்தே பிற்காலத்தில் தர்ம சாஸ்திரங்கள் யாவும் அபிவிருத்தியாயின. பிற்காலத்தில் இங்கிலீஷ் Law-வில் கூட ஒப்புக்கொள்ளப்பட்ட மநு, மிதாக்ஷரி முதலான அநேக நீதி சாஸ்திரங்களும் இவற்றிலிருந்து உண்டானவையே. (ரிக் வேதத்தில் வஸிஷ்டர், விஷ்ணு,கிருஷ்ண யஜுஸில் மநு, போதாயனர், ஆபஸ்தம்பர், ஹிரண்யகேசி;ஸாமத்தில் ஜௌதமர் ஆகியவர்களுடைய தர்ம ஸூத்ரங்கள் கிடைத்துள்ளன.) அதர்வம் அநுஷ்டானத்தில் இல்லைச அதனால் அதன் கல்ப ஸூத்ரங்களும் வழக்கில் இல்லை.

ஒவ்வொரு சின்ன காரியத்தையும் சொல்லிக் கொடுப்பது கல்பம். பிராம்மணன் செய்கிற ஒவ்வொரு சின்ன காரியமும் வேதத்தோடு சம்பந்தப்பட்டது. அப்படியிருந்தால் தான் அவன் விடுகிற ஒவ்வொரு மூச்சாலும், அவன் எடுத்து

வைக்கிற ஒவ்வொரு அடியாலும் லோகத்துக்கு க்ஷேமகரமான திவ்ய சக்திகளைப் பிடித்துக் கொடுக்க முடியும். "இப்படி உட்காரு, இப்படிச் சாப்பிடு, இப்படி வேஷ்டியைக் கட்டிக் கொள்ளு"என்று ஒவ்வொன்றையும் சட்டமாக அவனுக்கு உத்தரவு போடுவது இதற்காகத்தான்.

உதாரணமாக வீடு கட்டுவதைப் பற்றிக் கூட கல்ப சாஸ்திரத்தில் இருக்கிறது. கிருஹ நிர்மாணம், வாஸ்து லக்ஷணம் என்றெல்லாம் அது விவரிக்கப்படுகிறது. இதைப் பற்றி எதற்கு சாஸ்திரத்தில் சொல்லவேண்டும் என்றால், ஒருவன் பண்ண வேண்டிய காரியத்துக்கு வீட்டின் சில்பம் (architecture, கட்டுமான அமைப்பு) அநுகூலமாயிருக்க வேண்டும். வைச்வ தேவ பலியை இன்ன மாதிரி த்வாரத்தில் (வாசலில்) போடவேண்டும் என்று விதி இருந்தால் அந்த மாதிரி வாசல் உடைய வீடு இருந்தால்தானே முடியும்?Flat-ல் முடியுமா?அநுஷ்டானங்களுக்கு அநுகூலமாகயிருப்பதற்கே க்ருஹ நிர்மாணமும் கல்ப ஸூத்திரத்தில் சொல்லப்பட்டு விடுகிறது. ஔபாஸனம் பண்ணுகிற இடம் ஒரு குறிப்பிட்ட மாதிரி இருந்தால்தான் முடியும். அந்த லக்ஷணம் சாஸ்திரத்தில் இருக்கிறது. அந்த லக்ஷணத்துக்கு ஒத்து வராத கட்டிட அமைப்பானால் அங்கே இந்தக் கர்மாவைச் செய்வதற்கே சிரமமாகிறது. ஸ்கூலில் பசங்களை உட்கார்த்தி வைத்துப் பாடம் சொல்லிக் கொடுக்கும் க்ளாஸ்-ரூம்கள் ஒரு மாதிரியாக, ஒரு விதமான பெஞ்சுகள் மேஜைகளோடு இருக்க வேண்டியிருக்கிறது. அங்கேயே இவர்கள் எக்ஸ்பெரிமென்ட் பண்ண வேண்டியிருக்கிறது. அங்கேயே அவர்கள் எக்ஸ்பெரிமென்ட் பண்ண வேண்டிய லாபரட்டரியில் எல்லாம் வித்யாஸமாயிருக்கிறது. காரியத்தைப் பொறுத்தே சில்பம் (கட்டிட அமைப்பு, furniture முதலான திரவியங்கள்) என்பதற்கு இது ஒரு திருஷ்டாந்தம்.

நான் பூஜை பண்ணுகிறேன். அதற்கென்று தனியாக சில லக்ஷணத்தோடு இடம் இருக்க வேண்டும். பங்களா ஒன்றில் எல்லா இடமும் ஸமமாக இருக்கிறது. அப்படிப்பட்ட இடம் ஒன்றில் பூஜை செய்ய ஆரம்பித்தால் கூட்டம் அதிகமாக வந்தால் மேலே மேலே வந்து பூஜைக்குப் பக்கத்தில் வந்து விடுகிறார்கள். ஸ்திரீகள், புருஷர்கள், விழுப்பு, மடி, ஆசார அநுஷ்டானம், வர்ணாசிரம தர்மம் முதலிய பிரிவுகள் அந்தக் கூட்டத்தில் மாறிவிடுகிறது. பங்களா அப்படி மாறும்படிச் செய்து விடுகிறது. இந்த பங்களா அப்படி மாறும்படிச் செய்து விடுகிறது. இந்த பங்களா சில்பம் யாருடையது? இந்த மாதிரி வித்யாஸங்கள் இல்லாத வெள்ளைக்காரருடைய சில்பம்!தனித்தனியாகவும் பிரிந்து இருக்க வேண்டும்;அதே சமயம் எல்லோருக்கும் இடம் இருக்க வேண்டுமென்ற நம் ஆசாரப்படி செய்ய ஆசையிருந்தாலும் புது மாதிரியான வீட்டுப்ளானே கலந்தாங்கட்டியாகப் பண்ணி விடுகிறது. மேடை, கூடம், உள் என்று தனித்தனியாக உட்கார்ந்து கொள்ள வேண்டிய மாதிரியைச் சொல்லிக் கொடுக்கும். நம்முடைய ஸம்பிரதாயத்தை அநுசரித்து நம்முடைய சில்பம் ஏற்பட்டிருக்கிறது. கீழை மழமழவென்று சிமென்டுத் தரையாக இருந்தால்

எச்சிலைமெழுக ஜலம் விட்டால் அது பரவி எல்லா இடமும் ஒரே எச்சிலாய் விடுகிறது. அந்த சில்பம் உடையவர்கள் மேஜையின்மேல் சாப்பிடுகிறவர்கள். ஆகையால் அவர்களுக்கு எப்படி இருந்தாலும் பாதகமில்லை. நமக்குத்தான் கஷ்டமாக இருக்கிறது. இப்போது இந்த இடத்தில் நான் பூஜை பண்ணவும், பேசவும் வசதியாக இந்த மேடை இல்லாவிட்டால் எத்தனை கஷ்டமாயிருக்கும்?

நம்முடைய சில்பப்படி கிருஹ நிர்மாணம் பண்ண வேண்டும். கிருஹஸ்தன் என்பது கிருஹஸ்தன் என்பது கிருஹம் என்பதிலிருந்து ஏற்பட்ட பெயர். அவன் நம்முடைய சில்பப்படிதான் கிருஹ நிர்மாணம் செய்ய வேண்டும். அதை ஸூத்திரக்காரர்கள் சொல்லியிருக்கிறார்கள். பற்று, விழுப்பு, மடி எச்சில் முதலிய வைகளைக் கவனித்துக் கொண்டு இருக்க விரும்புபவர்கள் நம்முடைய சில்பத்தை அநுசரிக்க வேண்டும். மற்றவர்களின் சில்பப்படி உள்ள இடங்களில் நாம் வஸிக்க ஆரம்பிக்கிறோம். அதனால் ஆசாரங்களை அநுசரிக்க முடியாமல், முதலில், 'இப்படியிருக்கிறதே, என்ன பண்ணுவது?' என்று எண்ணுகிறோம். பின்பு குளிர் விட்டு விடுகிறது. ஆசாரமே மாறிவிடுகிறது. வீட்டை விடப்பிடிக்காமல் ஆசார அநுஷ்டானத்தை விட்டு விடுகிறோம்.

கல்பம் வேதாந்தங்களில் ஆறாவதானது. இதிலே அடங்குகிற 40 ஸம்ஸ்கார விஷயங்களை பிற்பாடு தர்ம சாஸ்திரங்களைச் சொல்லும்போது கொஞ்சம்விவரமாகச் சொல்கிறேன்.

சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்ற ஆறோடு நாலு வேதங்களைப் பற்றிய ஸமாசாரங்களையும் சேர்த்து இதுவரை பதினாலு வித்தைகளில் பத்தைப் பார்த்து விட்டோம். பாக்கி நாலு இருக்கின்றன. அவற்றைப் பார்ப்போம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**வேதத்தின் சட்ட விளக்கம்**

நம் மதத்துக்கு பிரமாணமான பதினாலு வித்தைகளில் நாலு வேதங்களும் ஆறு வேதாங்கங்களும் போக மீதமுள்ள நாலும் வேத உபாங்கங்கள் எனப்படுபவை.

உப+அங்கம்=உபாங்கம். "உப"என்றால் துணையாக இருப்பது. உப ஸபாநாயகர் என்றால் ஸபாநாயகருக்கு அடுத்த ஸ்தானத்தில் இருப்பவர்தானே?இப்படி ஆறு அங்கங்களுக்கு அப்புறம் வேதத்தின் துணை உறுப்புகளாக, உப அங்கங்களாக

நூலு வருகின்றன. மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்ற நாலுமே இந்த உபாங்கங்கள். 'மீமாம்ஸை'என்ற வார்த்தையில் 'மாம்'என்பது தாது;'ஸன்'என்பது பிரத்யயம்'(விகுதி). இந்த வார்த்தைக்கு அர்த்தம் 'பூஜித விசாரம்'. தமிழில் சொல்வதானால், 'நல்ல விஷயத்தைப் பற்றிய விசாரணை அல்லது ஆராய்ச்சி."

எது பூஜிதம்?எது நல்ல விஷயம்?வேதம்தான். வேதத்தை விசாரித்து - ஆராய்ந்து - அர்த்தத்தை எடுத்துச் சொல்வது மீமாம்ஸை. நிருக்தத்தில் வேதத்தின் வார்த்தைகளுக்கு மட்டும் டிக்ஷனரி மாதிரி அர்த்தம் கொடுத்திருக்கிறது. மீமாம்ஸையில் அப்படியில்லை. மந்திரங்களின் தாத்பரியம் என்ன, உத்தேசம் என்ன என்று ஆராய்ச்சிப் பண்ணித் தீர்மானிப்பது மீமாம்ஸை சாஸ்திரமே.

வேதத்தில் கர்ம காண்டம், ஞான காண்டம் என்று இரண்டு பாகம் உண்டு என்று முன்பே சொன்னேன். சாகைகளின் முதல் பாகத்தில் வருவதால் கர்ம காண்டத்துக்குப் பூர்வ பாகம் என்றும், முடிவில் வருவதால் ஞான காண்டத்துக்கு உத்தர பாகம் என்றும் பெயர். மீமாம்ஸையிலும் இப்படி இரண்டு உண்டு-பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை என்பதாக.

கர்ம காண்டத்தில் சொன்ன யக்ஞம் முதலான அநுஷ்டானங்களே முக்கியம் என்பது பூர்வ மீமாம்ஸையின் கொள்கை. ஞான காண்டத்தில் சொன்ன ஆத்ம ஸாக்ஷாத்காரமே முக்கியம் என்பது உத்தரமீமாம்ஸையின் கொள்கை.

உபநிஷத்துக்களையும், பிரம்ம ஸூத்ரத்தையும் பற்றிச் சொல்லும்போதே உத்தர மீமாம்ஸையைப் பற்றி சொல்லிவிட்டேன்.

உத்தர மீமாம்ஸையான இந்த பிரம்ம ஸூத்ரம், உபநிஷத் இவைகளே பிரம்ம வித்யா என்றும் வேதாந்த என்றும் வேதாந்த மதம் என்றும் சொல்லப்பட்டு, அத்வைத-விசிஷ்டாத்வைத-த்வைத சம்பிரதாயங்களுக்கு முக்கியமான ஆதாரங்களாக இருக்கின்றன.

பூர்வ மீமாம்ஸைதான் இப்போது நாம் எடுத்துக் கொண்டுள்ள விஷயம். "மீமாம்ஸை"என்றாலே பொதுவில் குறிக்கப்படுவதும் இதுதான். உத்தர மீமாம்ஸைக்கு "வேதாந்தம்"என்ற பெயர் பிரபலமாகி விட்டதால், 'மீமாம்ஸை' என்பது பூர்வ மீமாம்ஸைக்கே பெயர் மாதிரி ஆகிவிட்டது. ஆனால் இதைச் சொல்லும் போதே உத்தர மீமாம்ஸை சமாசாரங்கள் வந்து சேரத்தான் செய்யும்.

ஒவ்வொரு சாஸ்திரத்துக்கும் ஸூத்ரம்-வார்த்திகம்-பாஷ்யம் என்ற மூன்று உண்டு என்று சொல்லியிருக்கிறேனல்லவா?இப்படி (பூர்வ) மீமாம்ஸைக்கான ஸூத்ரத்தைச் செய்தவர் ஜைமினி மஹரிஷி. அதற்கு பாஷ்யகாரர் சபரஸ்வாமி என்பவர். வார்த்திககாரர் குமாரிலபட்டர். குமாரிலபட்டரின் "பாட்ட தீபிகை"இந்த சாஸ்திரத்தின் மிக முக்கியமான நூலாக இருக்கிறது. ஸாக்ஷாத்குமாரஸ்வாமியான

ஸுப்ரமண்யரின் அவதாரமே குமாரிலபட்டர். மீமாம்ஸையில் குமாரிலபட்டருடைய

அபிப்ராயத்துக்குச் சில விஷயங்களில் வித்யாஸமாகப் பிரபாகரர் என்பவர் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அதனால் மீமாம்ஸகர்களில் "பாட்டமதம்", "ப்ரபாகர மதம்" என்று இரண்டு உட்பிரிவு (Sub division) உண்டாயிற்று. இந்த உள் வித்யாஸங்கள் நமக்கு வேண்டாம். ஜெனரலாக இருக்கப்பட்டவைகளையே பார்க்கலாம்.

(குமாரில) பட்டர் கொள்கைகளைச் சொல்கிறதாலேயே ஒரு பிரிவுக்கு பாட்ட மதம் என்ற பெயர் வந்தது. ஸூத்ரங்களுக்குள் ஜைமினியின் பூர்வ மீமாம்ஸா ஸூத்ரமே மிகப் பெரியதாக இருக்கிறது. இதிலே பன்னிரண்டு அத்தியாயங்கள் உண்டு. ஒவ்வொரு அத்தியாயத்தையும் பல பாதங்களாகவும், ஒவ்வொரு பாதத்தையும் பல அதிகரணங்களாகவும் பிரித்திருக்கிறது. இப்படி ஆயிரம் அதிகரணங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் அதிகரணத்தில் ஒவ்வொரு விஷயமாக ஆயிரம் விஷயங்களை விசாரம் செய்வது பூர்வ மீமாம்ஸை. வேதவாக்கியங்களை எடுத்துக் கொண்டு அது விசாரம் செய்யும்.

வேதம் என்பது ஈச்வரன் உண்டாக்கிய சட்டம். ஆதி அந்தமில்லாத நித்யமான சட்டம், Eternal Law. நாம் பிரஜைகள், ஈச்வரன் நமக்கு அரசன். அவர் பல அதிகாரிகளை ஏற்படுத்தியிருக்கிறார். அவருடைய ராஜாங்கத்தில் இந்திரன், வாயு, வருணன், அக்கினி, யமன், ஈசானன், குபேரன், நிர்ருதி முதலிய அஷ்ட திக்பாலர்களையும் இன்னும் பல தேவதைகளையும் லோகத்தை ஸம்ரக்ஷிக்கும் அதிகாரிகளாக நியமித்திருக்கிறார். அந்த அதிகாரிகள் பதினாலு லோகத்திலும் உள்ள ஜீவராசிகளாகிய பிரஜைகளை ரக்ஷிப்பதற்கு ஒரு சட்டம் வேண்டும் அல்லவா?அந்தச் சட்டம்தான் வேதம். அதன்படி பிரஜைகளான நாம் எப்படி நடப்பது, அதிகாரிகள் எப்படி பரிபாலனம் பண்ணுவது என்று ஆராய்ச்சி செய்து அறியலாம். லௌகிகத்தில் இம்மாதிரி ஸந்தோஷம் வந்தால் ஜட்ஜுகள் யோசித்துத் தீர்ப்புச் சொல்லுகிறார்கள். வக்கீல்கள் ஆலோசிக்கிறார்கள். அது போல தர்மத்தை அநுஷ்டானம் பண்ணும் வழிகளையெல்லாம் சொல்லும் வேதமாகிற சட்டத்திற்கு அர்த்த நிர்ணயம் பண்ணினவர் ஜைமினி. அதுதான் மீமாம்ஸை.

ஓர் ஊரில் ஒரு வழக்கு வந்தால் அலஹாபாத்தில் இந்த மாதிரி வந்த கேஸில் இந்த மாதிரித் தீர்ப்பு செய்திருக்கிறார்கள், பம்பாயில் இப்படித் தீர்ப்பு பண்ணினார்கள் என்று தெரிந்துகொண்டு அவைகளை அநுசரித்துத் தீர்மானம் செய்கிறார்கள். அதுபோல ஓர் இடத்தில் அர்த்த நிர்ணயம் செய்ததை வேறு சில இடங்களில் எடுத்து அமைத்துக் கொள்ளலாம். இப்படி ஆயிரம் விதமான விஷயங்களை எடுத்துக் கொண்டு எவ்வளவு யுக்தி உண்டோ அவ்வளவினாலும்

ஆக்ஷேபணை செய்து அவ்வளவையும் பூர்வபக்ஷம் செய்து நிர்ணயம் செய்வது மீமாம்ஸை. முதலில் ஒரு வேதவாக்கியத்தை எடுத்துக் கொள்வது (விஷயயாக்யா);

இரண்டாவதாக அதன் அர்த்தம் இதுவா என்ற கேள்வி (ஸம்சயம்);மூன்றாவதாக எதிர்த்தரப்பிலே அர்த்தம் பண்ணுவது (பூர்வ பக்ஷம்);நாலாவதாக, அந்தத் தரப்பை ஆக்ஷேபிப்பது (உத்தரபக்ஷம்);ஐந்தாவதாக, கடைசியில் இதுதான் தாத்பரியம் என்று முடிவு பண்ணுவது (நிர்ணயம்). ஒவ்வொரு விஷய நிர்ணயம் ஒவ்வொரு அதிகரணமாக இருக்கிறது.

ஜைமினி செய்தவை சின்னசின்ன ஸூத்திரங்களாக இருக்கின்றன. அந்த ஸூத்திரங்களின் அபிப்ராயத்தை விரிவாக விளக்குவது சாபரபாஷ்யம். சபரர் செய்த பாஷ்யம் சாபரம். சபரர் என்று வேடர்களுக்குப் பேர் உண்டு. சபரி பூர்வத்தில் வேட ஸ்திரீ என்பார்கள். சபரர் ஈச்வராம்சம் உடையவர். ஈச்வரன் அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுக்க வேடராக வந்தபோது சபரராகி இந்த வார்த்திகம் செய்தார் என்றும் சொல்வதுண்டு.

ஆயிரம் அதிகரணத்தை உடைமையால் பூர்வமீமாம்ஸைக்கு 'ஸஹஸ்ராதிகரணி'என்று ஒரு பெயர் உண்டு. வேதத்தில் உள்ளவற்றிற்கு அர்த்த நிர்ணயம் செய்கையில் பலவகையாக உள்ள குயுக்திகளைப் போக்கித் தீர்மாணம் செய்வது இது.

பூர்வமீமாம்ஸை வேதத்தின் பூர்வகாண்டத்திற்கு அர்த்த நிர்ணயம் செய்வது போல உத்தரகாண்டமாகிய உபநிஷத்துக்களின் அர்த்தத்தை நிர்ணயம் செய்வது உத்தர மீமாம்ஸை. பரமாத்மாவைப் பற்றியும் அதனோடு வேறாகாமல் ஒன்றாவதைப் பற்றியும், இவைப் போன்ற வேறு விஷயங்களைப் பற்றியும் சொல்லுவது உபநிஷத். அந்தச் சட்டத்துக்கு பிரம்ம ஸூத்திரத்தின் மூலம் அர்த்த நிர்ணயம் செய்தவர் வியாஸர். இதிலே வேடிக்கை, இப்படி உத்தர மீமாம்ஸைக்கு ஸூத்ரகாரரான வியாஸரே பூர்வமீமாம்ஸை செய்த ஜைமினியின் குருவாக இருக்கிறார்.

ஞான காண்டமான உத்தர மீமாம்ஸைக்கு ஞான (அத்வைத) மார்க்கப்படியே பூர்ணமாக ஏற்பட்டுள்ள (தைத்திரீய, ப்ருஹதாரண்யக) வார்த்திகத்தை எழுதினவர் யாரென்று பார்த்தால், அவர் பூர்வாசிரமத்தில் ரொம்பவும் தீவிரமான பூர்வ மீமாம்ஸைக்காரராக இருந்த ஸுரேச்வராசாரியாளாக இருக்கிறார்! இவரே பிற்பாடு கர்மாவிலிருந்து ஞானத்துக்கு மாறி, (சங்கர) ஆசாரியாளின் சிஷ்யராகி, ஆசார்ய பாஷ்யத்துக்கு வார்த்திகம் எழுதினார். பூர்வாசிரமத்தில் அவருக்கு மண்டன மிச்ரர் என்று பேர். இந்த வியாஸர், ஜைமினி இரண்டு பேரையுமே மண்டனமிச்ரர் திவஸப் பிராமணர்களாக வைத்து ச்ராத்தம் செய்த போதுதான் ஆசார்யாள் அவரிடம் வாதத்துக்குப் போனார் என்று கதை.

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**கடவுட் கொள்கை இல்லை**

ஆசார்யாள் ஏன் மீமாம்ஸகரான மண்டனமிச்ரரிடம் வாதச்சண்டை போட வேண்டும்?

மீமாம்ஸையில் ஞானபரமான உத்தர மீமாம்ஸை, கர்ம பரமான பூர்வமான மீமாம்ஸை என்ற இரண்டு இருந்தாலும் பொதுவாக மீமாம்ஸை என்றால் பூர்வ மீமாம்ஸைதான் என்றேன். அதனால் மீமாம்ஸகர் என்றாலே கர்ம மீமாம்ஸகர் தான் என்றாகி விட்டது. அதனால்தான் மண்டன மிச்ரரை மீமாம்ஸகர் என்றது. உத்தர மீமாம்ஸை பொதுவில் 'வேதாந்தம்'எனப்படுவதால் உத்தர மீமாம்ஸகர்களான நாம் எல்லாரும் 'வேதாந்திகள்'எனப்படுகிறோம்.

ஆசார்யாள் வைதிக மதத்தையே திரும்பவும் உயிர்களை கொடுத்து ஸ்தாபனம் பண்ணியவர். இப்படிப் பட்டவர் வேதத்துக்கு உபாங்கமாக இருக்கப்பட்ட மீமாம்ஸையை எதற்காக ஆக்ஷேபிக்க வேண்டும்?

இதற்குப் பதில் சொல்லுமுன் மீமாம்ஸையாகத்தான் இருக்கட்டும், வேறு எந்த சாஸ்திரமாகத்தான் இருக்கட்டும். அது எந்த லக்ஷ்யத்தை உத்தேசித்து என்று பார்ப்போம். ஒரு சாஸ்திரம் என்றால் அது ஈச்வரனிடம் கொண்டு விடவேண்டும். நம் சாஸ்திரங்கள் யாவும் அப்படிப்பட்டனவே என்று சொன்னேன். Grammar, dictionary, யாப்பிலக்கணம் இதுகளும்கூட அப்படிப்பட்டவை என்பதால்தான் சதுர்தச வித்யாஸ்தானங்களில் இவற்றை வைத்தார்கள் என்று சொன்னேன். இப்போது, பூர்வ மீமாம்ஸையில் உள்ள கடவுள் தத்துவம் என்ன?

இதைத் தெரிந்து கொள்ளும் முன் நம் ஆசார்யாள் பூர்ணமாக ஸம்மதித்து பாஷ்யம் பண்ணிப் பிரசாரம் செய்த வேதாந்தத்தில் (உத்தர மீமாம்ஸையில்) கடவுள் தத்துவம் எப்படியிருக்கிறதென்று பார்த்து விடலாம். நமக்கு முக்கியம் ஆசார்யாள்;ஆசார்யாளுக்கு முக்கியம் வியாஸாசார்யாளுடைய பிரம்மஸூத்ரம். அது என்ன சொல்கிறது?

'ஈச்வரன் யார்?அவனுக்கு உரிய லக்ஷணங்கள் என்ன?என்பதைப் பற்றி வேதாந்தத்தை விளக்கும் முக்யமான சாஸ்திரமாக வியாஸாசாரியாள் பண்ணிய பிரம்ம ஸூத்ரம் என்ன சொல்கிறது என்று பார்க்கலாம்.

பிரம்ம ஸூத்ரம் ஜீவாத்மாவைப் பற்றிச் சொல்கிறபோது, "கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்" என்கிறது. சாஸ்திரங்கள் அநேக விதமான கர்மாக்களை ஒரு ஜீவனுக்கு விதித்திருப்பதால் அவன் காரியம் செய்ய அதிகாரம் பெற்ற "கர்த்தா"என்று இதற்கு அர்த்தம். ஆனால் ஜீவன் காரியாதிகாரியான கர்த்தா மட்டுமேதான்;பலனுக்கு அதிகாரியில்லை. அதாவது, அவன்தானே தன் காரியங்களுக்குப் பலனைக் கொடுத்துக் கொள்ள முடியாது. அப்படிக் கொடுப்பது லோகத்தையே உண்டு பண்ணியிருக்கிற ஜகத்கர்த்தாவான ஈச்வரன்தான். (இந்தக் 'கர்த்தா'வை எடுத்துக் கொண்டுதான் அந்நிய மதஸ்தர்களும் 'கர்த்தர்'என்கிறார்கள்.) ஜீவாத்மாவும் ஒரு தினுஸில் கர்த்தாவாயிருந்தாலும் அவன் செய்கிற நல்ல காரியம், தப்புக் காரியம் எல்லாவற்றுக்கும் தகுந்தபடி பலனைக் கொடுப்பது பரமாத்மாவான ஈச்வரன்தான். இதையும் பிரம்ம ஸூத்ரம் சொல்கிறது - "பலமதஉபபத்தே:" என்று.

கர்ம பலன்களைக் கொடுக்கிற "பல தாதா"ஈச்வரன். மனோ, வாக்கு, காயங்களினால் நல்லதை நினைக்கிறோம்;செய்கிறோம். கெட்டதையும் நினைக்கிறோம்;செய்கிறோம். இவை எல்லாவற்றையும் ஈச்வரன் கவனித்துக் கொண்டிருந்து அந்தந்த கர்மத்திற்கேற்ற பலனைக் கொடுக்கிறான். இப்படி, கர்த்தாவான ஜீவாத்மாவுக்குப் பலதாதாவாக இருப்பது, ஜீவாத்மாக்கள் காரியம் பண்ணும் ஜகத்தின் கர்த்தாவாகவே இருப்பது - என்ற இரண்டு லக்ஷணங்கள் ஈச்வரனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது நம் ஆசார்யாளுடைய வேதாந்த மதமாகிய உத்தரமீமாம்ஸைப்படி.

'மீமாம்ஸை'என்றே வழங்கும் 'பூர்வ மீமாம்ஸை'யில் - அதாவது நாம் எடுத்துக் கொண்டிருக்கிற வேத உபாங்கத்தில் - ஈச்வரனைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறது?

நம் தேசத்தில் வேதத்தை அநுசரித்துக் கொண்டிருக்கும் மதஸ்தர்களில்தான் ஸாங்கியர், மீமாம்ஸகர் என்ற இரண்டுவகையினரும் உள்ளனர். அவர்களில் ஸாங்கிய மதத்தைச் சேர்ந்தவர், 'ஈச்வரன் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல'என்று தீர்மானம் பண்ணியிருக்கிறார்கள். 'ஈச்வரன் ஞானஸ்வரூபி. இந்த ஜகத் வெறும் கல் மண்ணாலாகிய ஜடப் பொருள். ஞானப் பொருள் ஜடப் பொருளுக்குக் காரணமாகாது. ஆகவே ஈச்வரனை ஜகத்துக்குக் கர்த்தா என்று சொல்வது தப்பு. ஈச்வரன் கர்த்தாவே அல்ல'என்று ஸாங்கிய மதஸ்தர் நிர்த்தாரணம் பண்ணப் பார்க்கிறார்கள்.

ஜகத்தில் பட்டுக்கொள்ளாமலும், காரியமே இல்லாமலும் கேவல (சுத்த)ஞானமாயிருக்கிற ஈச்வரனை ஸாங்கியர்கள் 'புருஷன்'என்பார்கள். இந்தப் புருஷன்தான் நம் ஆசார்யாள் முடிந்த முடிவாகச் சொல்லும் நிர்குணப் பிரம்மம். ஆனாலும் ஆசார்யாள் இதுவே மாயையினால் ஸகுணப் பிரம்மமான ஈச்வரனாகவும் இருந்து கொண்டு ஜகத் ச்ருஷ்டி முதலான வியவகாரங்களைச்

செய்வதாகத் தோன்றுகிறது என்று சொல்லி ஸாங்கியர்களை ஆக்ஷேபித்தார்.

மீமாம்ஸகர்கள் வேதத்தில் சொல்லியிருக்கும் கர்மாநுஷ்டானங்களுக்கு மட்டுமே பிராதான்யம் கொடுப்பவர்கள். 'ஜகத்'ச்ருஷ்டிக்கு ஈச்வரன் கர்த்தாவா இல்லையா?'என்பதைப் பற்றி அவர்கள் எதுவும் சொல்லவில்லை. அவர்களைப் பொறுத்த மட்டில் இது அவசியமில்லாத விஷயம். ஆனால் 'ஈச்வரன் பலதாதா அல்ல'என்பதை மீமாம்ஸகர்கள் பலமாகச் சொன்னார்கள். இவர்கள் ஜகத்துக்கு ஈச்வரன் கர்த்தாவா அல்லவா என்று சண்டை போடவில்லை. "நாம் செய்கிற நல்ல காரியங்களுக்கும் கெட்ட காரியங்களுக்கும் ஏற்ற பலனைக் கொடுக்கிறவன் ஈச்வரன் என்பது தப்பு. அவன் பலதாதா அல்ல;அந்தந்தக் காரியமே அதனதன் பலனைக் கொடுத்துக் கொள்கிறது"என்றார்கள்.

ஆகவே ஈச்வரனைப் பற்றி நம்முடைய வேதத்திலும் பிரம்மஸூத்திரத்திலும் சொன்ன இரண்டு லக்ஷணங்களையும் இந்த ஸாங்கிய மதஸ்தர்கள், மீமாம்ஸகர்கள் ஆகிய இரண்டு பேரும் ஆளுக்கு ஒன்றாகத் தள்ளிவிட்டார்கள்.

மீமாம்ஸகர்கள் ஈச்வரன் பலதாதா அல்ல என்று சொன்னதற்குக் காரணம், நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனை அளிக்கின்றன என்று அவர்கள் கருதியதனால்தான். வேத சாஸ்திரங்கள் எந்தக் கர்மாவை அநுஷ்டித்தால் புண்ணியம் வரும் என்று சொல்லியிருக்கின்றனவோ அந்தக் கர்மாவை அநுஷ்டித்தால் புண்ணியம் வரும் என்று சொல்லியிருக்கின்றனவோ அந்தக் கர்மாவை அநுஷ்டித்தால் புண்ணியம் வருகிறது. எதைச் செய்தால் பாவம் ஸம்பவிக்கும் என்று அவை சொல்லுகின்றனவோ அதைச் செய்தால் பாவம் ஸம்பவிக்கிறது. இப்படி நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனை அளிக்கின்றனவே தவிர ஈச்வரன் பலதாதா அல்ல என்று இவர்கள் சொன்னார்கள்.

வேதத்தை ஒப்புக் கொண்டிருக்கிற மதங்களுக்குள்ளேயே, 'ஈச்வரன் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல. அவன் பலதாதா அல்ல'என்று சொன்ன மதங்கள் இந்த ஸாங்கிய மதமும் மீமாம்ஸக மதமுந்தான்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

## பௌத்தத்தை வென்ற நியாமும் மீமாம்ஸையும்

ஆசார்யாள் அவதாரம் பண்ணி புத்த மதத்தைக் கண்டனம் பண்ணினதால்தான்

அது இந்த தேசத்தை விட்டே போயிற்று என்று பலர் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இது தப்பு. வேதத்தை ஆக்ஷேபித்த புத்த மதத்தை அவர் ஸவதந்திரமாகக் கண்டனம் செய்கிற இடங்கள், அவர் பாஷ்யங்களைப்பார்த்தால் மிகவும் ஸ்வல்பமாகவே இருக்கும். அதைவிட, அநேக மடங்கு அதிகமாக நம் ஆசார்யாள்,வேதத்தை அநுஸரித்த ஸாங்கியமதம், மீமாம்ஸக மதம் இவற்றைத்தான் கண்டித்திருக்கிறார். இவை இரண்டைச் சேர்ந்தவர்களும், ஜகத்துக்கு கர்த்தா ஈச்வரன் அல்ல;அவன் பலதாதா அல்ல'என்று சொல்கிறார்களே என்பதால், அவர்களுடைய தத்துவத்தைப் பற்றியே விசாரித்து, 'அப்படிச் சொல்வது தப்பு. வேத வாக்கியப்படி, பிரம்ம ஸூத்திரப்படி சொல்லியிருக்கிற லக்ஷணங்கள்தாம் உண்மையானவை'என்று நிர்த்தாரணம் செய்தார். ஈச்வரன் இல்லாமல் ஜகத் உண்டாகாது. நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனைக் கொடுக்கும் என்று சொல்ல முடியாது. ஈச்வரன்தான் பலனைக் கொடுக்கிறான். அவனுடைய சைதன்யன்தான், ஸங்கல்பந்தான் உலகத்தை சிருஷ்டித்து, அவரவர்களுடைய கர்மாக்களுக்கு ஏற்ற பலனைக் கொடுக்கிறது'என்று ஸாங்கிய மதத்தையும் மீமாம்ஸக மதத்தையும் எதிர்த்து நிறைய எழுதியிருக்கிறார். புத்த மதத்தைக் கண்டனம் பண்ணி எழுதியிருக்கு ம்படியாகத் தோன்றும் சில இடங்களிலுங்கூட, ஸூத்ரம் அப்படி இருப்பதனால் அதற்கேற்றபடி பாஷ்யம் எழுதிருக்கிறார். ஆசார்யாள் புத்தமதத்தைக் கண்டித்ததால் தான் புத்த மதம் இந்தத் தேசத்தைவிட்டே போயிற்று என்று சொல்வதற்கு அவர் பாஷ்யத்தில் ஆதாரம் இல்லை என்று சொல்ல வந்தேன்.

பின்னே புத்த மதம் நம் தேசத்தில் ஏன் இல்லாமல் போயிற்று?யாரோ கண்டனம் பண்ணித்தானே அது போயிருக்க வேண்டும்?அப்படி புத்த மதத்தை பலமாக கண்டித்தது யார்? மீமாம்ஸகர்களும், தார்க்கிகர்களும்தான்.

தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர்கள் 'தார்க்கிகர்'கள். பதினாலுவித்யையகளில் 'மீமாம்ஸை'க்கு அடுத்ததாக வரும் 'நியா சாஸ்திர'த்தைச் சேர்ந்தே 'தர்க்கம்'. நியாய சாஸ்திர வல்லுநர்களுக்கு 'நையாயிகர்'என்று பெயர். வியாகரணத்தில் வல்லவர்களுக்கு 'வையாகரணி'என்று பெயர். புராணத்தில் வல்லவர் 'பௌராணிகர்'.

தார்க்கிகரான உதயனாச்சாரியர், மீமாம்ஸகரான குமாரில பட்டர் என்னும் இரண்டு பேருமே ஒவ்வொரு காரணத்திற்காக பௌத்த மதத்தை பலமாகக் கண்டித்திருக்கிறார்கள்.

ஈச்வரன் என்று ஒருத்தன் இல்லை என்று சொன்னதற்காக உதயனாசாரியார் புத்த மதத்தை பலமாகக் கண்டித்தார். மீமாம்ஸகர்களுக்கு வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாநுஷ்டானங்களே பிரதானம் என்று சொன்னேன். 'ஈசுவரன் பலதாதா அல்ல'என்று இவர்கள் சொன்னாலும், நாம் செய்கிற கர்மாநுஷ்டானங்கள் பலனைத் தருகின்றன. வேத தர்ம சாஸ்திரங்களை எல்லாம் சிரத்தையுடன்

அநுஷ்டிக்க வேண்டும் என்பவர்கள் அல்லவா?எனவே அநுஷ்டானம் ஒன்றுமே வேண்டாம் என்று புத்த மதத்தினர் சொன்னதற்காக, புத்த மதத்தை மீமாம்ஸகர்களும் பலமாகக் கண்டித்தனர். குமாரிலபட்டர் அதைக் கண்டித்துப் பல இடங்களில் நிறைய எழுதியிருக்கிறார். உதயனாசாரியர், குமாரில பட்டர் இவர்களால் பௌத்தர்களுடைய கொள்கைகள் வித்வத் ஜனங்களுடைய மனஸில் பரவுவதற்கு இல்லாமல் நின்று போயின. பிறகுதான் நம் ஆசார்யாள் வந்தார்கள். பௌத்தத்தை ஏற்கெனவே உதயனரும் குமாரிலரும் கண்டித்து விட்டதால் அதை ஆசார்யாள் விசேஷமாக எடுத்துக் கொள்ள அவசியம் இருக்க வில்லை. இந்த உதயன-குமாரிலர்களின் ஸித்தாந்தங்களிலும் தப்புக்கள் இருக்கின்றன என்று எடுத்துக் காட்டி அவற்றைக் கண்டனம் செய்வதே ஆசாரியாளுக்கு முக்ய வேலையாயிற்று. ஆசாரியாள், 'ஈச்வரன்தான் ஜகத்துக்கெல்லாம் கர்த்தா;அவன்தான் பலதாதா'என்று நிர்த்தாரணம் பண்ணி வைத்தார். தப்பான விஷயங்களைக் கேட்டு உங்களுக்கு உண்மை தெரியாமல் போகக்கூடாது என்பதற்காக இதைச் சொன்னேன். குமாரிலபட்டர் 'தர்க்கபாதம்'என்னும் அத்தியாயத்தில் பௌத்தத்தை நிறையக் கண்டித்திருக்கிறார். உதயனாசாரியாரும் 'பௌத்தாதிகாரம்'என்று தம் நூலில் அவர்களைப் பற்றியே கண்டித்து எழுதியிருக்கிறார். புத்தமதம் இந்த தேசத்தில் நலிந்து போனதற்குக் காரணம் முக்கியமாக இந்த இரண்டு பேர்தான்;சங்கர பகவத்பாதாள் அல்ல. நாம் ஹிஸ்டரிப் புஸ்தகத்தில் படித்தது தப்பு .

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

பௌத்தமும் பாரத ஸமுதாயமும்

என் அபிப்ராயப்படி ஒரு காலத்திலும் பௌத்த மதத்தை பூர்ணமாக அநுஷ்டித்தவர்கள் நம் தேசத்தில் ஏராளமாக இருந்துவிடவில்லை. இப்போது சிலபேர் தியாஸபிகல் சொஸைட்டியில் சேர்ந்திருக்கிறார்கள். ஆனாலும் ஹிந்துக்கள் மாதிரியேதான் பண்டிகைகளைக் கொண்டாடுகிறார்கள்;கல்யாணம் முதலானவற்றைப் பண்ணுகிறார்கள். ராமகிருஷ்ண பரமஹம்ஸாவின் பக்தர்களாகச் சிலர் இருக்கிறார்கள். இவர்களும் பெரும்பாலும் ஸம்பிரதாயமான ஆசாரங்களைத்தான் பின்பற்றி வருகிறார்கள். ஸ்ரீ R. ராமாநுஜாசாரியார், இப்போது "அண்ணா"(ஸ்ரீ என். ஸுப்ரமண்ய அய்யர்) முதலானவர்கள் ராமகிருஷ்ணா மிஷனில் நெருங்கின ஸம்பந்தமுள்ளவர்களாயிருந்தாலும், ஸம்பிரதாயமான ஆசார அநுஷ்டானங்களை விடாதவர்கள்தான். இப்படியே பல

பெரியவர்கள் தோன்றுகிறபோது அவர்களுடைய கருணை, ஞானம் முதலான குணங்களால் அநேகர் ஆகர்ஷிக்கப்படுகிறார்கள். இருந்தாலும் அவர்கள் பேரிலேயே ஏற்பட்டிருக்கிற ஸ்தாபனங்களில் ஸநாதன வைதிக ஆசாரங்களை கொஞ்சமோ நிறையவோ மாற்றியிருப்பதுபோல், இந்த பக்தர்கள் தங்கள் அகங்களில் செய்வதில்லை. பழைய ஆசாரங்களைத்தான் அநுஸரித்து வருகிறார்கள். காந்தி, காந்தீயம் என்று எல்லாரும் இவரையும் ஒரு மதஸ்தாபகர் மாதிரி ஆக்கி, ராம-கிருஷ்ணாதி அவதாரங்களைவிடக் கூட காந்தி தான் பெரியவர் என்றெல்லாம் சொன்னாலும், இவர்களிலும் பெரும்பாலோர் சொந்த வாழ்க்கையில் காந்தி சொன்ன மாதிரி விதவா விவாஹம், பஞ்சமர்களோடு (ஹரிஜனங்களோடு) தொட்டுக்கொண்டு இருப்பது என்ற விஷயங்களில் காந்தீயத்தைக் கடைபிடிக்காமல்தானே இருக்கிறார்கள்?சொந்த வாழ்க்கையில் தியாகம், ஸத்யம், பக்தி, தொண்டு முதலான நல்ல அம்சங்கள் காந்தியிடம் இருந்ததால் அவரிடம் எல்லாருக்கும் மதிப்புணர்ச்சி ஏற்பட்டதால் அவர் சொன்ன கொள்கைகள் எல்லாவற்றிலும் இவர்களுக்குப் பிடிப்பு ஏற்பட்டதாக ஆகவில்லை. இப்படித்தான் புத்தரைப் பற்றியும் அவருடைய தனி வாழ்க்கையின் (personal life-ன்) உயர்வைப் பார்த்து, ஒரு ராஜகுமாரர் நல்ல யௌவனத்தில், லோகத்தில் கஷ்டமில்லாமல் பண்ண வேண்டும் என்ற ஒரே எண்ணத்துக்காகப் பத்தினியையும், புத்ரனையும் விட்டுவிட்டு ஓடினாரே!என்ன வைராக்யம்?என்ன தியாகம்?எவ்வளவு கருணை?என்று அவரிடம் மதிப்பு வைத்துக் கொண்டாடியிருக்கிறார்கள். இதனால் அவர் சொன்ன பௌத்தக் கொள்கைகளை எல்லாம் அவர்கள் ஒத்துக்கொண்டு அநுசரிக்க ஆரம்பித்ததாக அர்த்தமில்லை. வைதிக அநுஷ்டானங்களை புத்தர் கண்டித்தார் என்பதற்காக பெரும்பாலோர் இவற்றை விட்டு விடவில்லை. வர்ண விபாகம் (ஜாதிப் பகுப்பு), மற்ற யக்ஞாதி கர்மாக்கள் இவற்றைப் பண்ணிக் கொண்டே புத்தரையும் பெரும்பாலும் இவற்றை விட்டு விடவில்லை. வர்ண விபாகம் (ஜாதிப் பகுப்பு), மற்ற யக்ஞாதி கர்மாக்கள் இவற்றைப் பண்ணிக் கொண்டே புத்தரையும் அவருடைய personal qualities-காக (தனி மனித குணநலன்களுக்காக)க் கொண்டாடி வந்திருக்கிறார்கள். புத்தர் ஆசைப்பட்ட மாதிரி கூட்டம் கூட்டமாக எல்லாருமே புத்த பிக்ஷுக்கள ாகிவிடவில்லை. வைதிக ஸமயாசரங்களுடன் கிருஹஸ்தர்களாகவே இருந்து வந்தார்கள்.

அசோக சக்ரவர்த்தி தாம் பௌத்தராக இருந்து பௌத்தத்துக்காக எவ்வளவோ பண்ணியிருந்துங்கூட, ஸமூகத்தில் வைதிக தர்மங்களை மாற்றவில்லை. வர்ணாசிரம தர்மத்தை அவரும் ரக்ஷித்தே வந்திருக்கிறார் என்று அவருடைய புகழ் பெற்ற ஸ்தம்பங்கள், Edicts-லிருந்து தெரிகிறது. புத்த பிக்ஷுக்களைத் தவிர கிருஹஸ்தர்கள் பெரும்பாலும் வேத வழியைத் தான் அநுசரிக்கிறார்கள். ஈச்வரனைப் பற்றியும் தெய்வங்களைப் பற்றியும் புத்தர் சொல்லாவிட்டாலும், பெரிய புத்த பிக்ஷுக்கள் எழுதிய புஸ்தகங்களில்கூட ஆரம்பத்தில் ஸரஸ்வதி

ஸ்துதி இருக்கிறது. தாரா, நீலதாரா மாதிரி அநேக தெய்வங்களை அவர்கள் வழிபட்டிருக்கிறார்கள். திபெத் பக்கங்களிலிருந்துதான் தேவதாராதனத்துக்கான ஏராளமான தந்த்ர நூல்கள் கிடைத்திருக்கின்றன. ஹர்ஷன், பில்ஹணன் முதலியவர்களுடைய ஸம்ஸ்கிருத கிரந்தங்களையும், இங்கே இளங்கோ முதலியவர்களின் காப்பியங்களையும் பார்த்தால் ஸமுதாயத்தில் பௌத்தர் செல்வாக்கோடு இருந்த காலங்களிலும் வைதிக ஆசாரங்களும், வர்ணாசிரம விதிகளும் வழுவாமலே அநுசரிக்கப்பட்டுத்தான் வந்தன என்று தெரிகிறது.

இப்போது இதற்கு மாறாகச் சீர்திருத்தக்காரர்களும் வியாஸர், ஆசார்யாள், ராமாநுஜர் ஆகியோரைப் புகழ்கிறார்கள். இப்போது நான் சொல்கிற அநேக ஆசாரங்களை ஏற்றுக்கொள்ளாத சீர்த்திருத்தக்காரர்கள்கூட என்னிடம் வருகிறார்கள் அல்லவா?என்னிடம் ஏதோ நல்லது இருப்பதாக நினைத்துக் கொண்டிருப்பதால்தானே, நான் சொல்கிற கொள்கைகளை ஒப்புக் கொள்ளாவிட்டால்கூட ஒரு personal regard (மனிதர் என்ற தனிப்பட்ட முறையில் மரியாதை) காட்டுகிறார்கள்? இந்த மாதிரிதான் இந்த தேசத்தில் வைதிக சமயாசாரத்துக்கே கொஞ்சம் வித்யாஸமுள்ள கொள்கைகளை சொன்ன பெரியோர்களிடமும், ரொம்பவும் வித்யாஸப்பட்டு ஆக்ஷேபித்தே சண்டை போட்ட பெரியவர்களிடமுங்கூட, அவர்களுடைய சொந்த குணத்துக்காகவும் தூய்மையான வாழ்க்கைக்காகவும் எல்லோரும் மரியாதைச் செலுத்தி வந்திருக்கிறார்கள். ஆனாலும் மரத்திலே வஜ்ரம் பாய்ந்த மாதிரி நீண்ட நெடுங்காலமாக ஊறி உறைந்து உறுதிப்பட்டு விட்ட வைதிக ஸமய அநுஷ்டானங்களை விட்டு விடுகிற துணிச்சல் இந்தக் கடைசி ஒரு நூற்றாண்டு வரையில் நம் ஜனங்களுக்கு ஏற்படவில்லை. ஆகவே ஸகல ஜாதியினரும் அப்பன், பாட்டன், முப்பாட்டன் காலத்திலிருந்து வந்திருக்கிற ஆசாரங்களைத்தான் விடாமல் தொடர்ந்து வந்திருக்கிறார்கள். புத்தர் ஸமாசாரமும் இப்படித்தான் என்பது என் அபிப்ராயம். இதனால் அவர் கொள்கைகளை உதயனர், குமாரிலர் முதலானவர்கள் கண்டனம் பண்ணியவுடன் புத்தருடைய கொள்கைகளை முழுக்க ஒப்புக் கொண்டிருந்த கொஞ்சம் பேரும்கூடச் சட்டென்று அதை விட்டுவிட்டு பழைய வைதிகமான வழிக்கே திரும்பி வந்திருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**சங்கரரும் இதர ஸித்தாந்தங்களும்**

வைதிக காரியங்களை எல்லாம் விட்டு விட்டுத் தத்வம் என்ன என்று தியானம் பண்ணிக் கொண்டு உட்காருவதைத்தான் ஆசார்யாள் முடிந்த முடிவான நிலையில் சொன்னார். ஆனால் புத்தரைப்போல, ஆரம்ப தசையிலேயே எல்லாரும் வேதகர்மாவை விட்டுவிட வேண்டும் என்று சொல்லவில்லை. ஆரம்பத்தில் நிறையக் கர்மா பண்ணிப் பண்ணி, அதனால் சித்த சுத்தி அடைந்த அப்புறந்தான் அதைவிட்டு ஆத்ம விசாரம் பண்ணவேண்டும் என்றார். முதலில் மீமாம்ஸை சொல்கிற கர்மாவை ஒப்புக்கொண்டே கடைசியில் பௌத்தம் சொல்கிற கர்மாவை விட்ட நிலைக்குப் போகவேண்டும் என்றார்.

பௌத்தம், மீமாம்ஸை, ஸாங்கியம், நியாயம் எல்லாவற்றையும் ஒரு நிலையில் ஒப்புக்கொண்டு இன்னொரு நிலையில் ஆக்ஷேபித்தவர் நம் ஆசார்யர்கள். இவை ஒவ்வொரு அம்சத்தையே முடிந்த முடிவாகப் பிடித்துக் கொண்டிருந்தன என்றால் ஆசார்யாள் இந்த எல்லா அம்சங்களையும் சேர்த்து harmonise பண்ணி (இசைவித்து)க் கொடுத்தார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**ஸாங்கியம்**

ஸாங்கியத்தில் எதிலேயும் பட்டுக் கொள்ளாததான - ஆனால் எல்லாவற்றுக்கும் ஆதாரமான - ஆத்மாவைப் பருஷன் என்றும், எல்லாவற்றையும் நடத்தி வைக்கிற சக்தியான மாயையை 'ப்ரக்ருதி'என்றும் சொல்லியிருக்கிறது. ப்ரக்ருதி உள்படப் பிரபஞ்சம் என்பது 24 தத்வங்களில் அடங்கியிருக்கிறது என்று ஸாங்கியம் சொல்கிறது. பிரகிருதி என்பது முதல் தத்வம். அதற்கு 'ப்ரதானம்'என்றும் ஒரு பேர். அதிலிருந்து மஹத் என்ற இரண்டாவது தத்வம் வருகிறது. மநுஷ்யனின் புத்தி மாதிரிப் பிரிகிருதியின் புத்திதான் மஹத். 'மஹத்'திலிருந்து மூன்றாவது தத்வமாக 'அஹங்காரம்'உண்டாகிறது. தான் என்று தனியாக ஒன்று இருக்கிறது என்ற உணர்ச்சி (ego)தான் அஹங்காரம். அஹங்காரம் இரண்டாகப் பிரிகிறது. ஒரு பக்கம் சைதன்யமுள்ள (உயிரும் அறிவும் உள்ள) ஜீவனாகி அவனுடைய மனஸாகவும் ஐந்து தன்மாத்ரைகளாகவும், ஐந்து மஹா பூதங்களாகவும் ஆகிறது. ஜீவனின் ஞானேந்திரியங்கள் என்பவை வெளியில் உள்ள வஸ்துக்களைப் பற்றி இவனுக்கு அறிவிக்கிற ஐந்து உறுப்புக்கள். வெளியில் உள்ளதைப் பார்க்கிற கண், முகர்கிற மூக்கு, ருசிக்கிற வாய், கேட்கிற காது, தொடுகிற சர்மம் என்கிற ஐந்தும் ஞானேந்திரியம். ஜீவனே நேராகக் காரியம் செய்ய உதவுபவை கர்மேந்திரியங்கள். இங்கேயும் வாய் இருக்கிறது. வெளியிலே உள்ள ருசியை ஜீவனுக்கு அறிவிக்க

உபயோகப்பட்ட ஞானேந்திரியமான வாய் பேசுவது என்ற கர்மாவை செய்வதால் கர்மேந்திரியமாகவும் இருக்கிறது. பல காரியங்களைச் செய்ய உதவும் கை ஒரு கர்மேந்திரியம். நடக்கிற கால், மலஜல விஸர்ஜனம் செய்கிற அவயவம், ஜனனேந்திரியம் ஆகியன மற்ற மூன்று கர்மேந்திரியங்கள்.
ஞானேந்திரியங்களுக்கு ஆசிரயமாக சப்தம் (காது), ஸ்பரிசம் (சர்மம்), ரூபம் (கண்), ரஸம் அல்லது சுவை (வாய்), கந்தம் என்ற வாஸனை (மூக்கு) என்ற ஐந்து சூட்சுமமாக இருக்கின்றன அல்லவா?இந்த ஐந்துமே தன்மாத்ரைகள். இந்த தத்வங்கள் ஜடமாக விரிந்திருக்கும் ஆகாசம் (சப்தம்), வாயு (ஸ்பரிசம்), அக்னி (ரூபம்), ஜலம் (ரஸம்), பிருத்வி (கந்தம்) என்பவை ஐந்து மஹாபூதங்கள்.
இப்படியாக பிரகிருதி, மஹத், அஹங்காரம், மனம், ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கர்மேந்திரியம், பஞ்ச தன் மாத்திரைகள், பஞ்ச மஹாபூதங்கள் என்று மொத்தம் 24 இருக்கின்றன.

இந்த இருபத்து நாலையும் அத்வைத வேதாந்தமும் ஒப்புக் கொள்கிறது. ஆனால் ஈச்வரன் என்கிற ஒருவன் (ஸகுண ப்ரம்மம்) தான் நிர்குணமான புருஷனையு ம்(ஆத்மாவையும்) பிரகிருதியையும் (மாயையையும்) சேர்த்து வைக்கிறவன் என்பதை அத்வைதம் சொல்கிறதே ஒழிய ஸாங்கியம் ஈச்வரனைப் பற்றிச் சொல்லவில்லை.

அத்வைதம் முதலிய எல்லா வேதாந்த ஸம்பிரதாயங்களும் ஒப்புக் கொள்ளும் ஸத்வ-ரஜோ-தமோ குணங்களை ஸாங்கியம் சொல்கிறது. தெளிந்த சாந்தமான உயர்ந்த நிலை ஸத்வம். ஒரே வேகமும் சலனமுமாக இருக்கும் நிலை ராஜஸம் (ரஜோகுணம்). சோம்பல், தூக்கம், ஜடத்தன்மை ஆகியன தாமஸம் (தமோ குணம்). கீதையில் "குணத்ரய விபாக யோக"த்தில் இவற்றைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறது. "முக்குணங்களையும் கடந்த ஆத்மாவிலேயே நிலையாக நில்லு"(நிஸ்த்ரைகுண்யோ பவ) என்று கீதை ஆரம்பத்திலேயே பகவான் சொல்கிறார். (II.45) ஸாங்கியத்திலும் முக்குணங்களின் ஏற்றத்தாழ்வால்தான் எல்லா அனர்த்தங்களும் உண்டாவதாகவும், இவற்றை ஸமமாக்கி நிறுத்திவிடவேண்டும் என்றும் சொல்லியிருக்கிறது. ஆனால் கீதாதி சாஸ்திரங்களைப் போல இப்படிப் பண்ணிக் கொள்வதற்கு ஈஸ்வர ஆராதனை, சரணாகதி, ஞானவிசாரம் மாதிரியான எதையும் அது சொல்லவில்லை.

புருஷனுக்குத்தான் ஜீவசைதன்யம் இருக்கிறது. பிரகருதி ஜடந்தான். அதனால் பிரகிருதி தானாக எதுவும் பண்ண முடியாது. அது 24 தத்வங்களாகப் பரிணமிப்பது சைதன்ய புருஷனின் ஸாந்நியத்தால்தான் என்றும், ஆனாலும் புருஷன் பிரகிருதி ஸம்பந்தமேயில்லாத கேவல ஞானஸ்வரூபி என்றும் ஒன்றுக்கொன்று முரணாகச் சொல்கிறது ஸாங்கியம்.

கேவலம் என்றால் பிறக்கலப்பு இல்லாமல் தன்னந்தனியாக, ஸ்வச்சமாக இருப்பது என்று அர்த்தம். இதற்கு அட்ஜெக்டிவ்தான் 'கைவல்யம்' என்பது. 'கைவல்ய

ம்'என்பதே ஸாங்கியத்தில் மோக்ஷம் என்பதற்குக் கொடுத்துள்ள பெயர். ஜீவனானவன் இருபத்து நாலு தத்வங்களையும் தள்ளிவிட்டு, ஜடத்திலிருந்து விடுபட்டு, சைதன்யமான புருஷனின் தனித்த ஸ்வச்ச நிலைமையில் இருப்பதே கைவல்யம். (தமிழில் எப்படியோ "கேவலம்"என்றால் மட்டமானது, தாழ்வானது என்ற அர்த்தம் ஏற்பட்டு விட்டது).

இப்படிப் புருஷன் என்கிற ஆத்மாவிலேயே நிலைத்து, மற்ற எல்லாவற்றையும் மாயை என்று தள்ளவிடுவதுதான் அத்வைதத்தின் லக்ஷ்யமும் ஆகும். ஆனால் அதற்கு ஆசார்யாள் கர்மா, உபாஸனை, (பக்தி), அப்புறம் ஞான விசாரம் என்று வழிபோட்டுக் கொடுத்த மாதிரி ஸாங்கியத்தில் இல்லை. தள்ள வேண்டியதான 24 தத்வங்களின் விசாரம்தான் அதில் அதிகமிருக்கிறது.

இன்னொரு குறை. புருஷன் (ஆத்மா) காரியமில்லாத கேவல ஞானம், பிரகிருதி காரியமுள்ள ஆனால் ஞானமில்லாத, ஜீவசைதன்யமில்லாத ஜடம் என்று ஒரேடியாகப் பிரித்துவிட்டு, இந்த ஜடம் எப்படி மற்ற தத்வங்களாகப் பரிணமிக்க முடியும் என்பதற்குச் சரியாகக் காரணம் சொல்ல முடியாமல், ஜீவ சைதன்யமுள்ள புருஷனின் சாந்நியத்தால் மட்டுமே இது நடக்கிறது என்று ஸாங்கியத்தில் சொல்லியிருப்பது திருப்தியாக இல்லை. "காரியமேயில்லாதது புருஷன் என்று சொல்லிவிட்டு அதன் ஆதாரத்தில்தான் பிரகிருதி காரியம் செய்கிறது என்று சொல்கிறீர்களே!இது எப்படி?" என்று கேட்டால் ஸாங்கியர்கள், "ஒரு காந்தம் ஒரு இடத்தில் இருப்பதாலேயே இரும்புத் துண்டுகள் ஆடி அசையவில்லையா?காந்தம் அவற்றை அசைக்க வேண்டும் என்று உத்தேசிக்கிறதா என்ன?அது பாட்டுக்கு இருக்கிறது. அப்படி இருப்பதாலேயே இரும்புத் துண்டுகள் அசைகின்றன. இப்படித்தான் புருஷன் தன் பாட்டுக்கு இருந்தாலே போதும். அதன் சைதன்ய விசேஷத்தால் பிரக்ருதி ஆடுகிறது.

புருஷனும் பிரகிருதியும் முடவனைப் பொட்டையன் தூக்கிக் கொண்டு போகிற மாதிரிச் சேர்ந்து காரியம் பண்ணுகின்றன. முடவனால் நடக்க முடியாது. குருடனால் பார்க்க முடியாது. அதனால் குருடன் தோள்மேல் ஏறிக்கொண்டு முடவன் வழிசொல்ல, அதன்படி குருடன் நடக்கலாம். இப்படித்தான் காரியம் பண்ண முடியாத, ஆனால் ஞான மயமான புருஷனைத் தூக்கிக் கொண்டு காரியம் செய்கிற, ஆனால் ஞான மயனான புருஷனைத்தூக்கிக் கொண்டு காரியம் செய்கிற, ஆனால் ஞானமில்லாத ஜடப் பிரகிருதி பிரபஞ்ச வியாபாரத்தைப் பண்ணுகிறது"என்கிறார்கள். இது ஏதோ கதையாக, உவமையாக நன்றாயிருக்கிறதே தவிர, அத்வைதத்தில் காரியமற்ற நிர்குணப் பிரம்மமே காரியமுள்ள ஸகுண ஈச்வரனாகவும் இருந்துகொண்டு மாயாசக்தியால் பிரபஞ்சத்தை நடத்துகிற மாதிரித் தோன்றுகிறது என்று பொருத்தமாகச் சொல்வது போல இல்லை.

அத்வைதத்துக்கும் ஸாங்கியத்துக்கும் இன்னொரு பெரிய வித்யாஸம், சுத்த ஞான

ஸ்வரூபமான புருஷனைப் பற்றி ஸாங்கியம் சொன்ன போதிலும், இத்தனை ஜீவாத்மாக்களும் அந்த ஏக புருஷனே என்று அத்வைதமாகச் சொல்லாமல் அநேக புருஷர்கள் இருப்பதாகவே சொல்கிறது.

இப்படிச் சில குழறுபடிகள் இருந்தாலும் ஸாங்கியம் என்பது தத்துவங்களைக் கணக்கெடுத்துச் சொல்வதில் ('ஸங்கியை என்றால் கணக்கெடுப்பது என்று அர்த்தம். ஜனஸங்கியை என்று ஸென்ஸஸ் எடுப்பதைச் சொல்கிறோமல்லவா?'ஸங்கியை'யிலிருந்து வந்ததுதான் 'ஸாங்கியம்'')நமக்கு ஒரு ஆதார ஸாஸ்திரமாக இருக்கிறது.

கபில மஹரிஷி ஸாங்கிய மதத்துக்கு ஸூத்ரம் எழுதியிருக்கிறார். ஈச்வரகிருஷ்ணர் என்பவர் செய்த ஸாங்கிய காரிகையும், ஸாங்கிய ஸூத்ரத்துக்கு விஞ்ஞான பிக்ஷு எழுதிய பாஷ்யமும் இந்த ஸித்தாந்தத்தின் முக்யமான நூல்களாகும்.

கீதையில் பகவானே அநேக ஸாங்கிய கொள்கைகளைச் சொல்லியிருக்கிறார். ஆனால் ஸாங்கியம், யோகம் என்று இரண்டு மார்க்கங்கள் இருப்பதாக அவர் சொல்கிறபோது ஸாங்கியம் என்றால் வேதாந்தமான ஞான மார்க்கம் என்றே அர்த்தம். யோகம் என்பது கர்மயோகம்;ராஜயோகமல்ல.

ஸாங்கியத்தில் புருஷனைப் பிரகிருதியிலிருந்து பிரித்து உணரவேண்டும் என்று சொல்லி வெறுமனே விட்டு விட்ட இடத்தில் ஆரம்பித்து, எந்த மாதிரி உபாயத்தினால் என்ன ஸாதனைகளைப் பண்ணி எப்படி பிரிக்கிறது என்று 'ப்ராக்டிக'லாக வழி சொல்லித் தருவதுதான் (ராஜ) யோக ஸாஸ்திரம். ஆனால் யோகத்திலே ஈச்வரனை ஒப்புக் கொண்டு ஈச்வர ஆராதனையையும் மனோநிக்ரஹத்துக்கு (மனம் அடங்குவதற்கு) வழியாகச் சொல்லியிருக்கிறது. சித்த ஒட்டத்தை நிறுத்துவதுதான் "யோகா"என்ற பொதுப் பெயரில் வழங்குகிற பதஞ்சலி மஹர்ஷியின் ராஜயோகம். இப்போது Yoga என்று மேல் நாடுகளில் அதுதான் கொடிகட்டிப் பறக்கிறது.

ஸாங்கியமும், யோகமும் சதுர்தச அல்லது அஷ்டாதச வித்தைகளில் சேராவிட்டாலும் அவையும் நம் சாஸ்திரங்களில் முக்கியமான இரண்டாக இருப்பதால் சொன்னேன்.

மீமாம்ஸையில் ஈச்வர பக்தி கிடையாதென்றாலும் அது வேதப் பிரமாணத்தை ஒப்புக்கொண்டும், நிரீச்ரவாதம் பண்ணுவதாக ஸாங்கியம் இருக்கிறது.

பௌத்தம், அதைக் கண்டித்த நியாயம்- மீமாம்ஸை என்ற இரண்டு, மீமாம்ஸை மாதிரியே ஈச்வரனை ஒப்புக்கொள்ளாத போதிலும் சப்த (வேத) ப்ரமாணத்தை ஒப்புக் கொள்கிற ஸாங்கியம் - ஆகிய இந்த நாலிலிருந்தும் நம் ஆசார்யாள் எடுத்துக் கொள்ள வேண்டிய அம்சங்களை எடுத்துக் கொண்டு, கண்டிக்க

வேண்டியதைக் கண்டித்துத் தள்ளிவிட்டு, இவை எல்லாம் உண்டாகக் காரணமானதுமான மூல வேதாந்தத்தையே ஸ்தாபித்தார். ஆசாரியாள் பௌத்தத்தில் முடிந்த முடிவாகச் சொன்ன உயர்ந்த ஞான நிலை, நிர்குணப் பிரம்மத்தின் ஸ்தானத்தில் ஸாங்கியத்தில் சொன்ன கேவலமான ஸ்வரூபமான புருஷன், மாயையின் ஸ்தானத்தில் அது சொல்கிற ப்ரக்ருதி, அதிலே சொல்லப்படும் 24 தத்வங்கள், மீமாம்ஸை சொல்லும் கர்மாநுஷ்டானம், நியாயத்திலே சொல்லப்பட்டுள்ள ஈச்வரன், அது சொல்லும் பிரமாணங்கள் இவற்றையெல்லாமே ஒப்புக் கொண்டவர். ஆனால் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு அம்சத்தை மட்டுமே பிடித்துக் கொண்டு அதையே லக்ஷ்யமாக்கிவிட்டபோது அவற்றைக் கண்டித்து இந்த எல்லா அம்சங்களையும் சேர்த்து ஒழுங்கு படுத்திக் கொடுத்தார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

## மீமாம்ஸையும் ஆதிசங்கரரும்

பௌத்தத்தில் ஈச்வரனைச் சொல்லவில்லை என்பதற்காக உதயனர் முதலிய நையாயிகர் அதைக் கண்டித்தது ஆசாரியாளுக்கு ஸம்மதமானதே. அதே போல, வைதிக கர்மாநுஷ்டானங்கள் பௌத்தத்தில் இல்லை என்பதனால் அதைக் குமாரிலர் போன்ற மீமாம்ஸகர்கள் கண்டனம் பண்ணியதும் அவருக்கு ஸம்மதந்தான். ஏனென்றால் மீமாம்ஸகர்கள் முக்யமாகக் கொண்டிருக்கும் கர்மாநுஷ்டானங்கள் சித்த சுத்திக்கும், ஸமூக ஒழுங்குக்கும் அவசியம் வேண்டியனவே என்பது தான் நம் ஆசாரியாளின் அபிப்ராயம். ஆனாலும் 'ஈச்வரன் என்ற பல தாதா வேண்டாம்;கர்மாவினால் சுத்தியானபின் ஞானத்துக்குப் போகவேண்டாம்;கர்மாவை விட்டுவிட்ட ஸந்நியாஸம் தப்பானது'என்ற கொள்கைகளை மீமாம்ஸகர்கள் பின்பற்றியதனால் அவர்களையும் ஆசாரியாள் கண்டனம் பண்ணினார்.

மீமாம்ஸகர்களில் குமாரிலபட்டர், மண்டன மிச்ரர் இருவரும் முக்கியமானவர்கள். இவர்களில் குமாரிலபட்டரின் அந்திம காலத்தில் ஆசார்யாள் அவரை வாதத்தில் ஜயித்தார். இன்னொருவரான மண்டனமிச்ரரை ஜயித்து அவரைத் தனது நாலு பிரதான சிஷ்யர்களில் ஒருவரான ஸுரேச்வராசாரியராக ஆக்கினார்.

வேத மதத்துக்குள்ள பதினாலு ஆதாரங்களில் ஒன்றான மீமாம்ஸையை ஆசார்யாள் கண்டித்தார் என்றால், அது அடியோடு தப்பு என்று நிராகரணம்

பண்ணினார் என்று அர்த்தமில்லை. 'மீமாம்ஸையில் சொன்ன கர்மாக்களைப் பண்ணியாகத்தான் வேண்டும். ஆனால் மீமாம்ஸகர் போல் ஈச்வர பக்தியில்லாமல் பண்ணக் கூடாது. அந்த கர்மாவே தருகிற ஸ்வர்காதி பலன்களை ஈச்வரனுக்கு அர்ப்பணம் பண்ணிவிட்டு, இந்த கர்மபல தியாகத்தினாலே சித்த சுத்தியை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும். பலதாதா ஈச்வரன் என்று உணர்ந்தால்தான் சின்னதான, ஸ்வர்க்கம் முதலான பலன்களை விட்டு ஈச்வரன் தருகிற பெரிய பலனான சித்த சுத்திக்குப் போகமுடியும்'என்பதே ஆசாரியாளின் உபதேசம். மீமாம்ஸகர்களின் கர்மாநுஷ்டானம் முழுக்கவும் ஆசாரியாளுக்கு ஸம்மதமானதுதான். ஆனாலும் கர்மாவுக்காகவே கர்மா(end in itself) என்று நினைத்து அவர்கள் அதற்கு மேல் போகாமல் - பலதாதாவான ஈச்வரனிடம் பக்தி, அதற்கப்புறம் அந்த ஈச்வரனேதான் நாமாகி இருப்பதை அநுபவத்தில் அறிகிற ஞானம் ஆகிய இவற்றுக்குப் போகாமல் - நின்றுவிட்டது தப்பு என்று உபதேசம் பண்ணினார். கர்மாவை அவர் ஆக்ஷேபிக்கவே இல்லை என்பதால்தான் தமது சரீரத்தை விடுவதற்குமுன் கடைசியாக உபதேசித்து "ஸோபான பஞ்சக"த்தை

வேதோ நித்யம் அதீயதாம்

ததுதிதம் கர்மஸ்வநுஷ்டீயதாம்.

என்று ஆரம்பித்தார். "தினமும் வேத அத்யயனம் பண்ணுங்கள். அதிலே சொல்லியுள்ளபடி கர்மாக்களை நன்றாக அநுஷ்டானம் பண்ணுங்கள்" என்று அர்த்தம்.

ஆனால் இப்படி கர்மாவுடனே நின்றுவிடக் கூடாது. அதை ஈச்வரார்ப்பணம் பண்ணவேண்டும். இதனால் சித்த சுத்தியை உண்டாக்கிக் கொண்டு அப்புறம் ஞானோபதேசம் வாங்கிக் கொள்ளவேண்டும். அப்புறம் கர்மாவை எல்லாம் நிறுத்திவிட்டு ஸந்நியாஸியாகி அந்த உபதேசத்தையே தியானம் பண்ணி, விசாரம் பண்ணி, சொந்த அநுபவமாக்கிக் கொள்ள வேண்டும். இப்படி படிப்படியாகக் கொண்டு போகிறார்.

ஈச்வரனிடத்தில் கொண்டுவிடவே, ஏற்பட்ட வேதத்தின் கர்ம காண்டத்தை, அப்படிப் பண்ணவிடாமல் வெறும் கர்மாவோடேயே நிறுத்தி, சாச்வத ஆனந்தமான அத்வைத மோக்ஷத்தில் சேர்ப்பதற்கு வழிபண்ணித் தருவதற்குப் பதில், புண்யகர்மா செலவழிகிற வரையில் மாத்திரம் வெறும் போகபூமியான ஸ்வர்க்கத்தில் சேர்ப்பதோடு நின்றுவிடுகிறார்களே என்பதற்காகத்தான் மீமாம்ஸகர்களை ஆசார்யாள் கண்டனம் பண்ணினார்.

கர்மாக்களை விஸ்தாரம் பண்ணி அது பற்றின வேத சட்டங்களை வியாக்கியானம் செய்கிறதில் மீமாம்ஸா சாஸ்திரம் சொல்கிற அவ்வளவும் ஏற்க வேண்டியதுதான். ஏனென்றால் வேத சப்தத்தை விசாரிக்கிற போது அந்த சாஸ்திரம் இந்த சப்தப்

பிரமாணத்துக்கு அப்படியே surrender (சரணாகதி)பண்ணி, அதனாலேயே அதனுடைய அர்த்தத்தை உள்ளபடி தெரிந்து கொண்டு நிர்ணயம் பண்ணி விடுகிறது. எனக்கு மீமாம்ஸையைப் பற்றி ஒன்று வேடிக்கையாகத் தோன்றுகிறது. மீமாம்ஸா சாஸ்திரம் கண்ணுக்குத் தெரிகிற ஒரு ஸ்வாமியிடம் 'ஸரணடர்'செய்து, அதனாலே அவனுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ள ப்ரயத்னம் செய்யவில்லைதான். அதனால் என்ன? வேதம்தான் பெரிய ஸ்வாமி. வேத சப்தம் கண்ணுக்குத் தெரிகிற ஸ்வாமியாக இல்லாவிட்டாலும் காதுக்குக் கேட்கிற ஸவாமியாக இருக்கிறது. அந்த சப்தம் சொல்கிற கர்மாக்களை எதிர்க கேள்வி கேட்காமல் பண்ணுவோம்'. இங்கே ஒரே ஸரண்டர்தான். இப்படி ஸரண்டர் பண்ணி வேத வாக்கியங்களின் தாத்பர்யத்தை நிர்மயம் பண்ணுவோம் என்று மீமாம்ஸகர்கள் இருந்திருக்கிறார்கள். அதனால் கண்ணுக்குத் தெரிகிற ஸ்வாமியை அவர்கள் நம்பினாலும் நம்பாவிட்டாலும், காதுக்குக் கேட்கிற வேத ஸ்வாமியின் ஸ்வரூபத்தை (அர்த்தத்தை) நன்றாகத் தெரிந்து கொண்டு சொல்லிவிட்டார்கள் என்று நான் நினைப்பதுண்டு.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

## அர்த்த நிர்ணயம் எப்படி ?

வேதத்தின் வாக்கியம் ஒன்று இருக்கிறது;அத்தியாயம் ஒன்று இருக்கிறது. அதிலே என்ன அபிப்ராயம் சொல்லி இருக்கிறது என்பதை எப்படித் தெரிந்து கொள்வது?எந்தத் தீர்மானத்தை வலியுறுத்த அது ஏற்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் என்ன செய்வது?

வேதத்தை அர்த்தம் செய்வதற்குச் சில விதிகள் இருக்கின்றன. அவற்றை மீமாம்ஸா சாஸ்திரம் சொல்கிறது. வேதம் என்கிற சட்டத்திற்கு 'லா ஆப் இண்டர்ப்ரடேஷன்'மீமாம்ஸைதான். சர்க்காரில் அநேகச் சட்டங்களைப் பண்ணும்போது, அவற்றின் அர்த்தத்தைப் பற்றியே சந்தேகம், குழறுபடி உண்டாகும். அப்போது அந்த சட்டத்தை வியாக்யானம் பண்ண இன்னொரு சட்டம் வகுப்பார்கள். அதுதான் Law of Interpretation. வேதத்துக்கு இப்படியிருப்பது மீமாம்ஸை. அதில் வேதத்தை அர்த்தம் செய்து கொள்ளச் சில வழிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

உபக்ரம-உபஸம்ஹாரம், அப்யாஸம்,அபூர்வதா,பலம், அர்த்தவாதம், உபபத்தி என்று ஆறு வழிகளைக் காட்டி இவற்றால் வேதமந்திரங்களின் உத்தேசத்தைத்

தெரிந்து கொள்ளலாம் என்று மீமாம்ஸை சொல்கிறது.

ஆரம்பமும் முடிவும் ஒரே விஷயமாக இருந்தால் அதுதான் உத்தேசம். இது இரண்டுக்கும் நடுவில் ஆயிரம் ஸமாசாரம் சொல்லியிருந்தாலும் இந்த ஆயிரம் ஸமாசாரமும் அந்த ஒரே உத்தேசத்தைத் தீர்மானிக்கத்தான் வந்திருக்கின்றன என்று ஸந்தேஹம் இல்லாமல் சொல்லிவிடலாம். இதற்குத் தான் 'உபக்ரம-உபஸம்ஹாரம்'என்று பெயர். 'உபக்ரமம்' என்றால் தொடக்கம்;'உபஸ ம்ஹாரம்'என்றால் முடிவு.

ஒரு உபந்நியாசத்திலோ ஒரு கட்டுரையிலோ ஒரே விஷயத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தால், அப்படிச் சொல்லப்படுகிற விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவதற்காகத்தான் அந்த உபந்நியாசம், அல்லது கட்டுரை என்று தீர்மானித்து விடலாம். பிரசங்கம் எதைப்பற்றி என்று தெரியாது;இன்விடேஷனைப் பார்க்கவில்லை;நோட்டீஸ் போடவில்லை. ஆரம்பித்துப் பதினைந்து நிமிஷம் கழித்துத்தான் நாம் வந்தோம். அந்தப் பிரஸங்கத்தின் நடுவில் பிரஸங்கி அநேக ஸமாசாரங்களைச் சொல்கிறார். ஆனாலும் எது திருப்பித் திருப்பிச் சொல்வது, அல்லது செய்வதுதான் 'அப்யாஸம்'. ஏதாவது ஒன்றை மனனம் பண்ண வேண்டுமென்றால் திருப்பித் திருப்பிச் சொல்லப்படுகிறதோ அதுதான் அந்தப் பிரஸங்கத்தின் தீர்மானம் என்று முடிவு செய்யலாம். ஒன்றை அடிக்கடி திருப்பித் திருப்பிச் சொல்வது, அல்லது செய்வதுதான் 'அப்யாஸம்'. ஏதாவது ஒன்றை மனனம் பண்ண வேண்டுமானால் திருப்பித் திருப்பி உருப்போடுகிறோம். திருப்பி திருப்பி தண்டால் முதலியன போடுகிறார்கள்;அது தேகாப்பியாஸம். அப்படி ஒரு விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவதற்கு உபயோகப்படுவது 'அப்யாஸம்'. திருப்பித் திருப்பிச் சொல்லப்படும் விஷயந்தான் அதன் முடிவான தீர்மானம் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

இன்னொன்று 'அபூர்வதா'. ஒரு பிரஸங்கத் தொடர் முந்தாநாள் கேட்டிருக்கிறோம்;நேற்று கேட்டோம்;இன்றும் கேட்கிறோம். நேற்று, நேற்றுக்கு முந்தினநாள் சொன்ன விஷயங்களை இன்றைக்கும் சொல்லலாம். இருந்தாலும் இதுவரைக்கும் சொல்லாத சமாசாரம் இன்றைக்கு ஏதாவது சொன்னால் அதுதான் இன்றைய பேச்சின் முக்கியமான உத்தேசம். இதுவரைக்கும் சொல்லாத ஒன்றை இன்றைக்கு அதிகப்படியாகச் சொன்னால் அதிகப்படியாகச் சொல்கிற புது விஷயந்தான் இன்றைய பிரசங்கத்தின் விஷயம் என்று தெரிந்து கொள்ள வேண்டும். நடுவில் என்ன என்ன சமாசாரங்கள் சொன்னாலும் அவை எல்லாம் இந்த ஒன்றுக்கு அநுகுணமானவையே. இப்படி ஒரு விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவது 'அபூர்வதா'- புதிதாகச் சொல்லப்படும் விஷயம். பூர்வத்தில் வராதது அபூர்வதா.

இப்படியேதான் ஒரு புஸ்தகத்தில் அநேக விஷயங்கள் சொல்லியிருந்தாலும் எதற்குப் பலன் சொல்லியிருக்கிறதோ, 'இப்படிச் செய்தால் இன்ன பலன்

தரும்'என்று சொல்லியிருக்கிறதோ அதுதான் அந்த புஸ்தகத்தின் தீர்மானம் என்று தெரிந்து கொள்ள வேண்டும். இதற்குத்தான் 'பலம்'என்று பெயர்.

அநேக சமாசாரங்களைச் சொல்லிக் கொண்டு வருகிறோம். நடுவில் ஒரு கதை சொல்லி ஒன்றைப் பற்றி ஸ்தோத்திரம் பண்ணுகிறோம். எதைப்பற்றி ஸ்தோத்திரம் பண்ணுகிறோமோ அந்த விஷயந்தான் பிரதானம். அதைச் சொல்வதற்காகத்தான் கதையெல்லாம் சொன்னது என்று புரிந்து கொண்டு விடலாம். கதைகளை ஆதாரமாகச் சொல்லி ஒன்றை ஸ்தோத்திரம் பண்ணுவதற்கு 'அர்த்த வாதம்'என்று பெயர். இதன் மூலமும் தீர்மானத்தைக் கண்டுபிடித்து விடலாம்.

ஒன்றைச் சொல்லி அதற்குக் காரண நிரூபணம், பொருத்தம் முதலியவை விளக்கப்பட்டிருந்தால் அந்த விஷயந்தான் முக்கியமான உத்தேசம். இந்த முறைக்கு 'உபபத்தி'என்று பெயர்.

உபக்ரமோபம்ஹாரௌ அப்யாஸோ (அ) பூர்வதா பலம் ।

அர்த்தவாதோபபத்தீ ச லிங்கம் தாத்பர்ய நிர்ணயே ।।

என்று இந்த ஆறு விதமான லிங்கங்களினால் ஒன்றைத் தீர்மானம் செய்து கொள்ளலாம் எனறு மீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. இவற்றுக்கு தாத்பர்ய லிங்கம் என்று பெயர்.

சம்ஸ்கிருதத்தில் 'லிங்கம்'என்றால் அடையாளம் என்பது பொருள். ஆரம்பமும் முடிவும் சொல்லமுடியாத பரமாத்ம தத்துவத்துக்கும், நீள உருண்டையாக இருக்கிற பிரபஞ்சத்துக்கும் அடையாளமாக இருப்பதுதான் கோவில்களில் உள்ள லிங்கம். லிங்கத்தைக் குறி என்றும் சொல்லலாம். குறிப்பு என்றும் சொல்வதுண்டு. ஒரு உபந்நியாஸமோ, ஒரு புஸ்தகமோ எந்த தீர்மானத்தைச் சொல்கிறது, எந்த முடிவை வற்புறுத்துகிறது என்பதை இந்த ஆறுவிதமான குறிப்புகளை வைத்துக் கொண்டே நாம் தீர்மானம் பண்ணிவிடலாம்.

வேதத்தில் சொல்லப்பட்ட ஒரு வாக்கியமோ ஒரு அத்தியாயமோ எந்த விஷயத்தை தீர்மானிக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க இந்த ஆறு தாத்பர்ய லிங்கங்களைக் கொண்டே, ஆறு விதமான குறிப்புகளைக்கொண்டே தீர்மானம் செய்து கொள் என்று சொல்கிறது மீமாம்ஸா நியாயம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

## மீமாம்ஸைக் கொள்கைகள்

மீமாம்ஸா மதத்துக் கொள்கை என்னவென்று இன்னம் கொஞ்சம் சொல்கிறேன். "ஸ்வாமி இருக்கிறாரா, இல்லையா?"என்ற கவலை வேண்டாம். இருந்தால் இருக்கட்டும், இல்லாவிட்டால் போகட்டும். நாம் பண்ண வேண்டியது வேதத்தில் சொன்னபடி கர்மாநுஷ்டானம் செய்து வருவதுதான். அந்தக் கர்மாவே பலன் தரும். காரியம் பண்ணினால் பலன் இல்லையா?நடுவில் ஸ்வாமி யென்றொருவர் எதற்கு?காரியமே பலனைத் தருகிறது. நம்மகத்துத் தோட்டத்தில் இருக்கிற வாழை இலையைப் பறித்து வருவதற்குக் கறிகாய்காரனுக்குப் பணம் கொடுக்க வேண்டுமா என்ன?இப்படித்தான் நம் கர்மாவே தருகிற பலனுக்கு ஈச்வரன் என்ற எவனுக்கோ 'க்ரெடிட்'கொடுப்பது என்பார்கள். க்ருஷி (உழவு) பண்ணுகிறோம். அதனால் நெல் விளைகிறது. அது மாதிரி வேதம் நமக்குத் தெரியாததைச் சொல்கிறபடி காரியம் பண்ணினால் பலனுன்டு. காரியத்துக்குப் பலன் தர ஸ்வாமி வேண்டுமென்கிற அவசியமில்லை. ஜகத்தை ஸ்வாமி உண்டு பண்ணியிருக்க வேண்டுமேயென்றால், 'ஸ்வாமி உண்டு பண்ணுவானேன்?இப்பொழுது இருப்பது போலவே ஜகத் எப்பொழுது இருந்து கொண்டிருக்கிறது. திடீரென்று உண்டானதாக ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும்?'என்பார்கள்.

ந கதாசித் அநீத்ருசம் ஜகத் ।

இந்த ஜகத் எப்பொழுதும் இப்படித்தான் இருந்து கொண்டிருக்கிறது. இப்படி இல்லாமல் எப்பொழுதும் இருந்ததில்லை. காரியம் பண்ணு, அதுவே பலன் கொடுக்கும். என்ஜினைச் சுற்றினால் மோட்டார் ஓடுகிற மாதிரி.

புத்திக்கு அகப்படாததை வேதம் சொல்லுகிறது. அதன்படி கர்மா பண்ணினால் பலன் உண்டாகிறது. அநாதியாக சப்தம் இருக்கிறது. அதுதான் வேதம். காலமும் ஆகாசமும் போல எப்பொழுதும் வேதமும் இருக்கிறது. நம்முடைய புத்திக்கு எட்டாததைச் சொல்ல வேதம் இருக்கிறது.

கெட்டது பண்ணினால் கெட்ட பலனும் நல்லது பண்ணினால் நல்ல பலனும் உண்டாகின்றன. காரியம் பலன் கொடுத்துக் கொண்டேயிருக்கிறது. அந்தப் பலனை அநுபவித்துக் கொண்டு சுற்றிக்கொண்டேயிருக்கிறோம். இதற்கு ஸ்வாமி வேண்டாம். வேதம் சொன்ன வேலையைச் செய்யாமல் நாம் இருக்கக்கூடாது. அப்படியிருப்பது பாபம். அதனால் நமக்கு நரகம் கிடைக்கும்.

'கர்மாவை நிறுத்தினால் பாபம் உண்டாகும். நித்தியமென்றும், நைமித்திகமென்றும், காம்யமென்றும் கர்மாக்கள் மூன்று விதமிருக்கின்றன. நித்திய கர்மாக்கள் எப்பொழுதும் பண்ணவேண்டியவை. ஒரு நிமித்தத்தில் பண்ணுவது நைமித்திகம். கிரஹணம் வருகிறது. அப்பொழுது ஸ்நானம், தர்ப்பணம் முதலியவை செய்யவேண்டும். யாராவது பெரியவர் நம் வீட்டிற்கு வந்தால், அவருக்கு உபசாரம் முதலியவை செய்ய வேண்டும். இவைகளெல்லாம் நைமித்திகம். ஒரு

ஸந்தர்ப்பம் நேரும்போது பண்ணுவது நைமித்திகம். நித்திய நைமித்திகங்களை எல்லோரும் அவசியம் பண்ணவேண்டும். மூன்றாவதான காம்யம் என்பது ஒரு பிரயோஜனத்தை இச்சித்துப் பண்ணவது. மழை வேண்டுமென்ற ஆசை இருக்கிறது;புத்ர காமேஷ்டி செய்கிறோம். ஆயுளை உத்தேசித்து ஆயுஷ்ய ஹோமம் பண்ணுகிறோம். இவை காம்யம். இவைகளை ஒருவன் பண்ணித்தானாக வேண்டுமென்ற அவசியமில்லை.

இது மீமாம்ஸகர்கள் மதம். அவர்கள் சொல்லும் யுக்திகள் வேறு இருக்கின்றன. நித்ய கர்மாவுக்கு லக்ஷணம் சொல்லியிருக்கிறார்கள். கர்மாக்கள் அகரணே ப்ரத்யவாய ஜனகம், கரணே(அ)ப்யுதயம் என்று இரண்டு இரண்டு வகை.

செய்யாவிட்டால் உபத்திரவத்தைத் தருவது ஒன்று. செய்தால் ஸந்தோஷத்தைத் தருவது இன்னொன்று. 'அகரணே'என்றால் 'செய்யாவிட்டால்';'பிரத்யவாய ம்'என்றால் 'உபத்திரவம்'. 'கரணே என்பது 'செய்தால்'; 'அப்யுதயம்'என்பது ஸந்தோஷத்திற்குக் காரணமான பலன். நல்ல கிருஹம், தனம் புத்திரர், கீர்த்தி, அறிவு இவைகளெல்லாம் அப்யுதயம் என்பதில் சேர்ந்தவை. வேதாந்தத்தில் 'நிச்ரேயஸம்'என்று ஒன்று சொல்லப்பட்டிருக்கிறது. எந்த ஸந்தோஷம் பெரிய ஸந்தோஷமோ அந்த பேரானந்தமாக மோக்ஷம்தான் நிஃஃச்ரேயஸம். சின்ன சந்தோஷத்துக்குக் காரணமானது "அப்யுதயம்". இதைப்பற்றித்தான் மீமாம்ஸை சொல்லும். வேதாந்தத்தில் கூறப்பட்ட நிஃஃச்ரேயஸமான பெரிய ஸந்தோஷம்,

பேரானந்தம் பற்றி மீமாம்ஸை சொல்லாது. அது சொல்லும் ஸ்வர்கவாஸமும் அப்யுதயத்தைச் சேர்ந்ததுதான்.

வேலை என்றால் அதற்குக் கணக்குண்டு. தகுந்த பலனும் உண்டு. இது கர்ம மார்க்கம். செய்தால் நல்ல ஸந்தோஷம் உண்டாவது ஒரு வகை. செய்யாமற் போனால் உபத்திரவம் உண்டாவது ஒரு வகை. நித்ய கர்மாவைச் செய்யாவிட்டால் உபத்திரவம் உண்டாகும். ஸந்தியாவந்தனம் பண்ணு என்றால், இக்காலத்தில், "செய்யமாட்டேன். அந்தப் பலன் எனக்கு வேண்டாம்."என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கு மீமாம்ஸையால் ஸுலபமாகப் பதில் சொல்லிவிடலாம்.
ஸந்தியாவந்தனம் என்பது பலனக்காகப் பண்ணும் காம்யமான (optional) கர்மா இல்லை;அதைப் பண்ணாமற் போனால் உபத்திரவம் உண்டாகும் என்று மீமாம்ஸை சொல்கிறது!

பண்ணினால் பலன் என்பது நியாயம். பண்ணாவிட்டால் உபத்திரவம் என்பது என்ன நியாயம்?ஸந்தியாவந்தனம் பண்ணாவிட்டால் தோஷம் என்கிறார்கள். பண்ணினால் ஐச்வரியம் வரும் என்று சொல்லமாட்டார்கள். செய்யாவிட்டால் உபத்திரவம் என்னும் வகையிற் சேர்ந்தது அது.

கோவிலில் அர்ச்சனை, அபிஷேகம், அன்னதானம் முதலியவை பண்ணினால்

விசேஷ பலன் உண்டு என்று சொல்லுகிறார்கள். அவை "கரணே அப்யுதயம்"என்னும் வகையை சேர்ந்தவை. இது நியாயமாகப் படுகிறது.

"அகரணே ப்ரத்யவாயம்"என்பது நியாயமா?லோகத்தில் அதற்கு திருஷ்டாந்தம் உண்டா?உண்டு.

நாம் பிச்சைக்காரனுக்கு அரிசி போடுகிறோம். ஏதாவது ஸொஸைட்டிக்கு நன்கொடை கேட்டால் நூறு, இருநூறு ரூபாய் கொடுக்கிறோம். பரோபகாரம் பண்ணினால் புண்ணியம் உண்டென்ற பண்ணுகிறோம். சில சமயங்களில் உபகாரம் பண்ண வேண்டாமென்று தோன்றுகிறது. புண்ணியம் வேண்டாமென்று நினைக்கிறோம். அப்பொழுது முடியாது என்று சொல்லி விடுகிறோம். கடமையைச் செய்ய வேண்டியதுதான்;அதற்குமேல் தானம், தர்மம் இவை போன்றவைகளைச் செய்ய முடியாவிட்டால் பெரிய தோஷம் என்று சொல்ல முடியாதுதான்;

ஒருவனிடம் நாம் 500 ரூபாய் கைமாற்று வாங்கி இருந்தோம். அதைத் திருப்பித் தராமல் அவனிடம், "உனக்கு 500 ரூபாய் கொடுக்கிற புண்ணியம் எனக்கு வேண்டாம் "என்றால் அவன் விடுவானா?'நான் புண்ணியத்திற்கு வரவில்லை. கொடுத்ததைக் கேட்கத்தான் வந்தேன். 'என்று சொல்லுவான். கேஸ் போட்டு நமக்கு அதிகப்படி தண்டனையும் வாங்கிக் கொடுப்பான். இது "அகரணே ப்ரத்யவாய ஜனக"த்தைச் சேர்ந்தது.

அதைப் போலத்தான் ஸந்தியாவந்தனமும். ஸந்தியாவந்தனம் பண்ணமாட்டேன் என்பது வாங்கின கடனைத் திருப்பித் தர முடியாது என்கிறதைப் போல. தமிழில் ஸந்தியாவந்தனத்தைக் காலைக் கடன், மாலைக் கடன் என்றே சொல்வார்கள். அந்தப் பெயர்கள் மிகவும் அழகாய் இருக்கின்றன.

'கடன் வாங்கின திருஷ்டாந்தம் சொன்னால் போதாது. யார் எங்கே கடன் வாங்கினார்கள்?ஸந்தியாவந்தனம் யாரிடம் கடன் வாங்கப்பட்டது?என்று சிலர் கேட்கலாம்.

வேதத்தில் "தைத்திரீய ஸம்ஹிதை"(Vl-3)யில் "பிராம்மணன் பிறக்கும் பொழுதே மூன்று கடனோடு பிறந்திருக்கிறான். ரிஷிருணம், தேவருணம், பிதிர்ருணம் என்று மூன்று கடன்கள் உண்டு"என்று சொல்லியிருக்கிறது. "வேதம் ஒதுவதால் ரிஷிக்கடனும், யாகமும் பூஜையும் ஸந்தியா வந்தனாதி உபாஸனைகளும் பண்ணுவதால் தேவர்கடனும், தர்ப்பணம் சிரார்த்தம் இவற்றால் பிதிர்கடனும் தீர்கின்றன" என்கிறது. கடன் வாங்கினது நமக்குத் தெரியாது. தெரியாததை வேதம் சொல்லியிருக்கிறது. அதைக் கொண்டு நாம் யுக்தி பண்ணிப் பார்க்க வேண்டும். நம்பிக்கையுள்ளவர்களுக்கு அதை அநுஸரித்த யுக்தி தோன்றும்.இல்லாதவர்களுக்கு விபரீத யுக்தி தோன்றும்.

இரண்டு ஸஹோதரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் மாஜிஸ்டிரேட் உத்தியோகம் பார்க்கிறான். மற்றவன் வைதிகன். முதல்வனுக்குக் கச்சேரி(court)க்குப் போகிற கடன் ஏற்பட்டிருக்கிறது. அவன் கச்சேரிக்குப் போகாமல், "இரண்டாமவன் போகவில்லையே;நான் மட்டும் எதற்காகப் போகவேண்டும்?"என்றால், 'நீதான் வரவேண்டும்'என்று அதிகாரிகள் சொல்லுவார்கள். அதைப் போல நல்ல கதி வரவேண்டுமென்று நாம் முன்ஜன்மத்தில் செய்த ஸத்காரியம் என்பதான மனுப் போட்டிருக்கிறோம். அதற்கேற்றபடி கர்மாக்களைச் செய்ய வேண்டுமென்று உத்தரவாய் இந்த (நிகழ்) ஜன்மா லபித்திருக்கிறது. உத்தரவு பண்ணியவர் ஒருவர் கண்ணுக்குத் தெரியாமலே ஸர்வ ஸாட்சியாக இருக்கிறார். இது வேதாந்தத்தியின் மதம். எந்த வேலைக்காக 'மனு'ப்போட்டோமோ அதுவே நமக்குப் பலனைத் தருகிறது என்பது மீமாம்ஸகர்கள் மதம். கர்ம பலன் தானே நடக்கும் (Automatic) என்பது இவர்களுடைய மதம்.

ஆகக்கூடி, இரண்டு அபிப்ராயங்களின் படியும் கர்மாவுக்கேற்ற ஜன்மம் நமக்கு வந்திருக்கிறது. இதற்கேற்ற கர்மாக்களை நாம் செய்ய வேண்டும். செய்யாவிட்டால் உபத்திரவம் உண்டாகும். எங்கெங்கே பிறந்தோமோ அதற்கேற்பக் கர்மாக்களைச் செய்ய வேண்டும். லோகத்தில் ஆசார அநுஷ்டானங்கள் முறையாக இருக்க வேண்டும். வேதார்த்தங்களைத் தான் தெரிந்து கொண்டு, மற்றவர்கள் துக்கப்பட்டால் சாந்தப்படுத்திக் கொண்டு, அவர்களுடைய தொழில்களைப் போதித்துக் கொண்டு இருக்கவேண்டியது பிராம்மணன் கடமை. இம்மாதிரியே ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட கர்மாக்களைச் செய்ய வேண்டும். வாணியன் எண்ணைய் ஆட்டித்தர வேண்டும். பிராம்மணன் கண்டவற்றைத் தின்னாமல் தேஹம், மனஸ், ஆத்மா என்பவைகளில் பரிசுத்தனாக இருந்துகொண்டு பரமாத்மத் தியானம் பண்ணிக்கொண்டு இருக்கவேண்டும். மற்றவர்களையும் தியானம் பண்ணிக்கொண்டு இருக்கும்படிச் சொல்லவேண்டும். அதற்குத்தான் அவரவருக்கும் மானியம் ஏற்பட்டிருந்தது. பழைய காலத்தில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் அவனுடைய தொழிலைச் செய்வதற்காக மானியம் கொடுத்திரு ந்தார்கள். அந்தத் தொழிலை நிறுத்திவிட்டால் லௌகிகத்திலும் உபத்திரவம் உண்டாகும். அவனுடைய மானியத்தை பிடுங்கி மற்றொருவனுக்குக் கொடுத்து விடுவார்கள். இந்தக் காலத்தில் அந்த நிலத்துக்கு வரி போட்டு விடுவார்கள். ஆகவே சாஸ்திரப்படி அவரவருக்கான கர்மாக்களைப் பண்ணாதவர்களுக்குப் பாபம் உண்டாவதோடு லௌகிக ஸௌகர்யங்களும் இல்லாமற் போய்விடும். அந்தக் கர்மாவைச் செய்வதனால்தான் மரியாதை உண்டாயிற்று. எதற்காக, எப்படி நம்முடைய ஜன்மம் ஏற்பட்டதோ அதை அப்படியே பண்ணாமல் இருப்பதனால்தான் இப்போது நம்முடைய தேசத்தில் இந்த மாதிரி கஷ்டமான நிலைமை ஏற்பட்டுவிட்டது. அந்த அந்தத் தொழிலைச் செய்து கொண்டு வந்தால், அதனால் மற்றவர்களுக்கும் லௌகிக ஸௌகர்யங்கள் ஏற்படும். அந்த நிலை

மாறிவிட்டதனால்தான் இப்பொழுது தரித்திர நிலை வந்துவிட்டது.

"அகரணே ப்ரத்யவாய ஜனக"மாகிய நித்ய கர்மாக்கள் ஸந்தியாவந்தனம் முதலியவை. நித்ய கர்மாவைப் பண்ணாவிட்டால் பாபம் உண்டாகிறது. பண்ணினால் பாபம் இல்லாமையாகிய ஒரு லாபம் உண்டாகிறது. அதற்குமேல், க்ஷேமம் உண்டாகிறது. கடனைத் தவணைப்பிரகாரம் கொடுத்தால் கடன் போய்விடுகிறதாகிய ஒரு லாபமும், அதற்குமேல் "நாணயமானவன்"என்ற நல்ல பெயரும் உண்டாகும். அந்த நாணயத்தால் வியாபார விருத்தி ஏற்படுகிறது. அதுபோல நித்திய கர்மாவினால் பாபம் இல்லாமற்போவது ஒன்று;சிரேயஸ் உண்டாவது இரண்டு;ஆக இரண்டு லாபங்கள் உண்டாகின்றன.

'அகரணே ப்ரத்யவாய ஜநகம், கரணே அப்யுதயம்'என்னும் இந்த இரண்டும் நமக்கும் (வேதாந்திக்களுக்கும்) உண்டு. நாமும் இவைகளை ஒத்துக் கொள்கிறோம். இந்த மாதிரி உள்ள கர்மாக்களை எப்பொழுதும் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும். அக்னிஹோத்ராதி ச்ரௌத கர்மாக்களையும், ஔபாஸனம் முதலான ஸ்மார்த்த கர்மாக்களையும் தவறாமல் செய்துவர வேண்டும்.

"ஜீவனோடிருக்கிற வரையில் அக்னி ஹோத்திரம் செய்ய வேண்டும் என்ற வேதம் சொல்லுகிறது. அதைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்து கொண்டிருப்பதே போதும்"என்பது மீமாம்ஸகர் மதம். ஆனால் ஸந்நியாஸாசிரமத்தில் அக்னிஹோத்ரம் முதலான கர்மாக்கள் இல்லை. இப்படிக் கர்மாக்களை விட்டால் அது பெரிய தோஷம் என்பார்கள். புத்தி பூர்வமாகக் கர்மாக்களை விட்டுவிட்டு ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வது அவர்களுக்கக் கிறிஸ்துவனாகவோ துருக்கனாகவோ ஆவதைப் போன்றது. உபநிஷத் "கர்மாவைச் செய்து கொண்டு நூறுவருஷம் இருக்க வேண்டும்" என்கிறது. (ஈசாவாஸ்யோபநிஷத்: 2வது மந்திரம்) தைத்திரீய ப்ராஹ்மணம், "அக்னிஹோத்ர நெருப்பை அணைத்தால் வீரஹத்தி தோஷம் வருகிறது"என்று சொல்லுகிறது.

"கெட்ட கர்மாவைச் செய்தால் பாபம் என்பது போல நித்ய கர்மாவை விட்டாலும் பாபம். ஸந்நியாஸம் என்பவை கர்ம ப்ரஷ்டன். ஆகையால், அவனைப் பார்த்தாலும் பாபம்;பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்"என்பது மீமாம்ஸகர்கள் மதம், "பாபியைப் பார்த்தாலும், பேசினாலும், தொட்டாலும், அவனோடு சேர்ந்து பங்க்தி போஜனம் பண்ணினாலும் நமக்கு பாபம் ஒட்டிக்கொள்ளும். அதுபோல ஸந்நியாஸியைப் பார்க்கவும் கூடாது"என்பது மண்டனமிச்ரர் முதலானவர்களின் அபிப்ராயம்.

"வேதத்தில்தானே ஞான காண்டத்தில் ஸந்நியாஸம், ப்ரஹ்மம். மோக்ஷம், ஞானம் என்பவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன?அவைகளைச் சொல்லுவதும் வேதம்தானே?அப்படி இருக்க நீங்கள் அவைகளை வைகிறீர்களே?"என்று

கேட்டால், அவர்கள் என்ன பதில் சொல்லுகிறார்கள் என்பதை இப்பொழுது பார்க்கலாம்.

"ஞானம், ப்ரஹ்மம் என்பவை உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன என்பது உண்மைதான். வேதம் என்பது என்ன?வேதம்,சப்தம் அதாவது வார்த்தை. அது எதற்கு ஏற்பட்டது?தெரியாததைச் சொல்ல ஏற்பட்டது. அது சப்த ப்ரமாணம். கண்ணுக்கும் ஊகத்திற்கும் அகப்படாததைத் தெரிவிப்பது சப்த ப்ரமாணம். அது உபயோகமில்லாத ஒன்றைச் சொல்ல ஏற்பட்டதல்ல. எல்லா வார்த்தைகளுக்கும் இரண்டு வகைப் பிரயோஜனம் உண்டு. அதைச் செய், அல்லது அதைச் செய்யாதே என்பதுதான் சப்தத்தினுடைய பிரயோஜனம்.

"ப்ரவ்ருத்திர்வா நிவ்ருத்திர்வா நித்யேன க்ருதகேன வா।

பும்ஸாம் யேநோபதிச்யதே தத் சாஸ்த்ரம் அபிதீயதே।।

"நமக்குக் காரியம் இல்லாமல் ஏதாவது வஸ்துவை மாத்திரம் சொல்லும் சப்தங்கள் வீண் வம்பைச் சேர்ந்தவை. அவை பியோஜனமில்லாதவை. காக்கா பறக்கிறது என்று ஒருவன் சொல்லுகிறான். அதைக் கேட்பதனால் என்ன பிரயோஜனம் உண்டாகிறது?காக்கா கருப்பு என்கிறான். அதனால் என்ன பிரயோஜனம்? நாளைக்கு ராத்திரி இங்கே உபந்நியாஸம் நடக்கும் என்றால் அதற்கு ஒர் அபிப்ராயம் உண்டு. எல்லாரும் வரவேண்டுமென்று அதற்கு அர்த்தம். இது பிரவிருத்தி பிரயோஜனம். கும்பகோணத்தில் நாளைக்கு உபந்நியாஸம் என்றால் இது வீண் வம்பு. இங்கிருந்து யார் போகப் போகிறார்கள்?பிரயோஜனம் இல்லாமல் எந்த வார்த்தையும் இருக்கக்கூடாது;ஒன்றிலே ஈடுபட வைக்கும் பிரவிருத்திப் பிரயோஜனமாவது இருக்கவேண்டும். பஞ்ச மஹா பாதகங்களைச் சொல்லி, 'இவற்றைப் பண்ணாதே' என்று வேதம் சொன்னால் இது நிவருத்திப் பிரயோஜனம். அந்தப் பாப காரியத்திலிருந்து விடுபடுவதே பயன். இந்த இரண்டுமில்லாத மற்றவை வெறுங்கதை. வேதம் இரண்டு பாகம். இன்னின்ன செய்ய வேண்டும் என்ற விதிகளையும், இன்னின்ன செய்யலாகாது என்ற நிதேஷங்களையும் சொல்லுவது ஒரு பாகம். அதுதான் கர்மகாண்டம். மற்றொரு பாகம், ஞான காண்டம் என்பது, வெறுமே கதை சொல்லும்.கதைக்கு சொந்தமாகப் பிரயோஜனம் இல்லை. இந்த வேதக் கதைகள் விதியோடு சேர்ந்தால்தான் அர்த்தமாவது"என்று மீமாம்ஸகர்கள் சொல்வார்கள்.

தாதுபுஷ்டி லேஹ்யத்தைப் பற்றி ஒரு விளம்பரம் போட்டிருக்கிறது. சிங்கத்தோடு ஒரு மநுஷ்யன் குஸ்தி போடுவதுபோல அந்த விளம்பரத்தில் படம் போட்டிருக்கிறது. இந்தப் படத்தை எதற்காகப் போடுகிறான்?'எல்லோரும் ஏமாந்து பணத்தைக் கொடுத்து அதை வாங்குங்கள்' என்பது தாத்பர்யம். அந்தப் படம் மாதிரி வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற கதைகளுக்கு விதிதான் பிரயோஜனம். இந்தக் கதையானது "அர்த்த வாதம்"எனப்படும். பல இடங்களில் நற்சாக்ஷிப்

பத்திரம் (certificate) வாங்கியிருப்பதை ஒரு டாக்டர் மருந்து விளம்பரத்தில் ஏன் போடுகிறான்?இவன் மருந்தை எல்லாரும் வாங்க வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்கிறான். இம்மாதிரியான அர்த்தவாதங்களில் நிஜத்தோடு பொய் கலந்திருப்பதுமுண்டு. பொய்யை குணார்த்தவாதம் என்று சொல்லுவார்கள். (அநுவாதம் என்று ஒன்று சொல்லப்படும். தெரிந்ததையே அநுஸரித்துச் சொல்வது அது. நெருப்பு சுடும் என்பது தெரிந்தது. அதை மறுபடியும் சொல்லுவது அநுவாதம். மருந்தில் இன்ன இன்ன ஒஷதி இருக்கிறது என்று சொல்லுவது பூதார்த்தவாதம்.) குணார்த்தவாதம் என்பது பொய்க்கதையாவது சொல்லி விதிக்குப் பிரயோஜனப்படுத்துவது. கள் குடிக்காதே என்று சொல்லுவது விதி. கள் குடிப்பவன் உடனே தொலைந்தானென்று கதை எழுதினால் அது அர்த்தவாதம் கள் குடிக்கக்கூடாது என்பதுதான் தாத்பர்யம். கள் குடித்தால் மயக்கம் வருமென்பது அநுவாதம். ஆகக்கூடி, அர்த்தவாதமான கதைகள் எல்லாம் நம்மை விதிபூர்வமான ஒரு காரியத்தில் சேர்க்க வேண்டும்.

வேதத்தில் ஒரு யக்ஞத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. தக்ஷிணையாக ஸுவர்ணம் கொடு;வெள்ளி கொடுக்காதே என்று அங்கே சொல்லப்பட்டிருக்கிறது. யாகங்களில் வெள்ளி கொடுக்கக் கூடாதென்று தைத்திரீய ஸம்ஹிதையில் சொல்லியிருக்கிறது. இந்த இடத்தில் ஒரு நீளமான கதையைச் சொல்லி வெள்ளியைக் கொடுக்காதே என்று சொல்லுகிறது. (இன்னசெய்யவேண்டும் என்று நிர்ணயிப்பது விதி;இன்ன செய்யக்கூடாது என்பது நிஷேதம். இந்த மாதிரியான அர்த்தவாதங்களுக்கு நேராக அதன் சப்தத்தில் பிரயோஜனமில்லை.

இந்த விஷயத்தைக் கொண்டுதான் மீமாம்ஸகர்கள் முன்சொன்ன ஞானகாண்ட ஆக்ஷேபணைக்குப் பதில் சொல்லுகிறார்கள். பிரம்ம ஸ்வரூபத்தைப் பற்றித்தான் உபநிஷத் சொல்லுகிறது. அங்கே காரியத்தைச் சொல்லுகிறதேயில்லை. பிரம்மாநுபவம் என்பது காரியமே இல்லாத நிலை என்றே சொல்கிறது. வேதம் எப்பொழுது பிரமாணமாகும்?காரியத்தைச் சொன்னால்தான் வேதம் பிரமாணமாகும். இல்லாவிட்டால் வெறும் கதை சொல்கிறதற்கு ஸமானந்தான்; அர்த்தவாதந்தான். உள்ள வஸ்துவைப் பற்றி இந்த பாகம் சொல்லுகிறது. நாம் தெரிந்து கொள்ள வேண்டி உள்ள வஸ்துவா?செய்ய வேண்டிய காரியமா?'பிர ம்மம்'இருக்கிறது;ஆத்மா என்பதும் அதாகவே இருக்கிறது என்ற மாதிரி உள்ளதைச் சொல்வதில் நமக்கு எந்த காரியத்தையும் வேதம் கொடுக்கிவில்லையே!யாகம், யக்ஞம் முதலியவைகளை நாம் செய்ய வேண்டும். இது மாதிரி நாம் நடத்த வேண்டிய காரியத்தைச் சொல்லத்தான் வேதம் வேண்டும். அதற்குத்தான் சப்தம் (வேதம்) ஏற்பட்டது. இருப்பதை அறிய சப்தம் வேண்டாம். இருப்பது எப்பொழுதாவது தன்னால் தெரியும். தெரியாவிட்டாலும் போகட்டும். ஆகையால் வெறுமே வஸ்துவைச் சொல்லும் வேத பாகம் அர்த்தவாதம். ஆகையினால் உபநிஷத் பிரமாணம் இல்லை. பின் எதற்காக அது

இருக்கிறது?யக்ஞம் செய்பவனை உயர்த்திச் சொல்வதற்கு அது இருக்கிறது. கர்மாவுக்கு அபேக்ஷிதான ஜீவனை ஸ்தோத்திரம் பண்ணி, அவன் கர்மாவை அதிகம் பண்ண வைப்பதற்காகத் தான் அப்படிச் சொல்லுகிறது. ஜீவனே பிரம்மம் என்று உபநிஷத் சொல்லுவது, கர்மாநுஷ்டானம் செய்பவனுக்கு ரொம்பவும் ஏற்றம் கொடுத்து ஸ்தோத்திரம் செய்திருக்கிறது என்றால், எல்லாரையும் அந்தக் கர்மாநுஷ்டானங்களில் ஈடுபடுமாறு உத்ஸாஹப் படுத்துவதற்குத்தான். தாது புஷ்டி லேஹ்யம் சாப்பிட்டவன் சிங்கத்தோடு ஒரு நாளும் குஸ்தி போட முடியாது என்கிற மாதிரி இந்த ஜீவனும் பிரம்ம ஸ்தானத்தை அடைய முடியாது. உபநிஷத்து அப்படிப்பட்ட வெறும் கதைதான். "பிரம்மம், ஞானம், மோக்ஷம், ஈச்வரன் என்ற இந்த பேச்சே நமக்கு வேண்டாம். கர்மாவே நமக்கு எல்லாம். கர்மா செய்யாமல் இருப்பது தப்பு. ஸந்நியாஸி ஆவது தப்பு". இதுதான் மீமாம்ஸகர்களின் அபிப்ராயம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**சங்கரர் தரும் பதில்**

நம்முடைய ஆசாரியாள் இதற்கு என்ன பதில் சொல்கிறார்?சப்தம் (வேதம்) ஒன்றைச் சொன்னால் அது காரியத்தில் பிரயோஜனம் ஆகவேண்டும் என்று மட்டுமில்லாமல், அந்தக் காரியமும் பிரயோஜனமாய் இருக்கிறது என்பதால்தான் மீமாம்ஸகர்கள் அங்கீகரிக்கிறார்கள். ஆகவே காரியத்தால் ஏற்படும் பிரயோஜனந்தான் சப்த தாத்பர்யமேயன்றிக் காரியமே லக்ஷ்யம் இல்லை என்றாகிறது. காரியம் இல்லாமல் இருப்பதே ஒரு பெரிய பிரயோஜனமாக இருந்தால் அப்பொழுது அந்தக் காரியமற்ற நிலையைச் சொல்லும் ஞான காண்ட சப்தத்தை அங்கீகரிக்கலாமல்லவா?அதாவது வேலை இல்லாதிருப்பதே பிரயோஜனமானால் அதுவும் சப்தத்தினுடைய தாத்பர்யந்தான். சப்தத்தினுடைய தாத்பர்யம் ஒரு பிரயோஜனமேயன்றி வேலை அல்ல. "ஸுராபானம் (மதுபானம்) பண்ணுக்கூடாது"என்று வேதத்தில் சொல்லியிருக்கிறது. அதைக் கேட்டவுடன் என்ன காரியம் செய்வது?ஒன்றும் செய்வதற்கில்லை. அப்படியானால் அந்த சப்தத்துக்குத் தாத்பரியம் இல்லையா?கள்ளுக் குடித்துக் கெட்டுப் போகாமல் இருப்பதுதான் அதற்குத் தாத்பர்யம். இப்படி ஒன்று செய்யாமல் இருப்பதை 'அபாவம்'என்பார்கள். நிஷேதங்களுக்கு எல்லாம் அபாவம்தான் தாத்பர்யம். இம்மாதிரி 'இதைச் செய்யாதே'என்று வேதம் பல காரியங்களிலிருந்து நம்மை விலக்குவதையும் மீமாம்ஸகர்களே ஒப்புக் கொள்கிறார்கள். வேதத்தில் நிஷேதம் என்று விலக்கப்பட்ட காரியங்களைச் செய்யாமலே இருக்கிறார்கள். இப்படி சில

காரியம் செய்யாமல் இருப்பது பிரயோஜனமாக இருக்க முடியுமானால் எந்தக்காரியமும் இல்லாமல் பிரம்மமாக இருப்பது பெரிய பிரயோஜனமாக இருக்க முடியும் என்பதை எப்படி ஆக்ஷேப்பிக்கலாம்?காரியம் ஒன்றுமே இல்லாத பரம பிரயோஜனமாக ஆத்ம ஸாக்ஷாத்காரம் இருப்பகனால் வேதாந்த சப்தங்களும் மிகவும் உபயோகம் உள்ளவையே. அவற்றை அர்த்தவாதம் என்று தள்ளக்கூடாது.

ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே என்று பகவான் கீதையில் சொல்லி இருக்கிறார். "எல்லாக் கர்மாக்களும் போய்க் கடைசியில் ஞானத்தில்தான் நன்றாக ஸமாப்தி ஆகின்றன"என்கிறார். எல்லாக் கர்மாவும் பரமேச்வரனிடம் விநியோகம் ஆகவேண்டும். காரியமே இல்லாமல் இருப்பதுதான் பரம ப்ரயோஜனம், அதுதான் பிரம்மானந்தம். அதனால் ஜன்மமே இல்லாமல் போயவிடும். வேதத்திற்குப் பரமதாத்பர்யம் அதுதான். கர்மகாண்டம் எல்லாம் ஞானகாண்டத்தில் போய் அன்வயிக்க வேண்டும். அப்பொழுதுதான் அதற்குப் பிரயோஜனம் உண்டு.

இந்தக் கருத்தைத்தான் ஸ்ரீ சங்கராச்சாரியர்கள் மண்டனமிச்ரர், குமாரில பட்டர் ஆகியோரிடம் எடுத்துச் சொல்லி அவர்கள் ஏற்றுக் கொள்ளும்படியாகச் செய்தார். சுருக்கமாக, "கர்மத்திலும் சித்தத்தை சுத்தி செய்வதற்கான கொஞ்சம் பிரயோஜனம் இருக்கிறது என்பதாலேயே வேதமானது கர்ம காண்டத்தில் காரியத்தைச் சொல்கிறது. இப்படிக் காரியம் பண்ணினால் என்ன பிரயோஜனமோ அதைக் காட்டிலும் கோடி கோடி பிரயோஜனம் காரியம் இல்லாதிருப்பதால் ஏற்படுமானால் அதுவே வேதத்தின் நிறைந்த தாத்பர்யம் ஆகும். இதுதான் ஞான காண்டத்தின் அபிப்ராயம். அதனால் கர்மாவைப் பற்றிச் சொல்கிற பாகங்களெல்லாம் சித்தமலத்தைப் போக்கி ஈச்வரனிடத்தில் கொண்டு சேர்க்க ஆரம்ப ஸ்திதியில் உதவுகின்றன என்பதாலேயே தாத்பர்யம் உடையவனாக இருக்கின்றன. வறட்டுக் கர்மாவினால் மட்டும் பிரயோஜனமில்லை. கர்மா நின்று போய் பரமாத்ம ஸ்வரூபமாகவே இருக்கும் நிலையே பரமப் பிரயோஜனம். அதை அடைவிக்கும் ஸந்நியாஸ ஆச்ரமத்தின் பெருமையை வேதம் முடிவு பாகத்தில் சொல்லுகிறது. அதையே முடிவான தாத்பர்யமாக அங்கீகரிக்க அடைய வேண்டும்" என்று ஸ்ரீ ஆசார்யாள் சொல்லித்தான் மண்டனமிச்ரருக்கு ஸந்நியாஸம் கொடுத்தார்.

கர்ம காண்டத்திலேயே வேதம் சில கர்மாக்களைப் பாபம் என்று சொல்லித் தள்ளுகிறது. ஆனால் இந்தப் பாபம் பண்ணுவதால் ஏதோ இன்பம், லாபம் தருகிறது என்று தான் ஒருத்தன் அதைப் பண்ணுகிறான். இதைப் பண்ணாதவனுக்கு அந்த இன்பம் இல்லை. ஆனாலும் வேதம் "பண்ணாதே!"என்கிறது. ஏன்?பாபம் இப்போதைக்கு இன்பத்தை, திருப்தியைத் தந்தாலும் அப்புறம் இதைவிடப் பெரிதான ஆனந்தத்தை நமக்குச் சேர விடாமல்

தடுத்து விடும். அதனால் "பண்ணாதே!"என்று தடுக்கிறது. இந்தத் தடையை ஒப்புக் கொண்டு மீமாம்ஸகர்களும் அதன்படியே பாப கர்மாக்களையெல்லாம் விட்டுவிடுகிறார்கள். இவர்கள் பண்ணுகிற வைதிக அனுஷ்டானங்களான ஸத்கர்மாவின் பலனாகவும் இவர்களுக்கு ஒரு லாபம், ஆனந்தம் கிடைக்கிறது. இக வாழ்க்கையிலே ஸெளக்கியம் ஏற்படுகிறது. பித்ரு லோகம், தேவலோகம் முதலியன கிடைக்கின்றன.

ஆனால் இவை மட்டும் சாச்வதமான ஸௌக்கியமா என்றால் இல்லை. புண்ய கர்ம பலன் தீர்ந்தவுடன் இந்த ஸௌக்கியங்களும் தீர்ந்து போகும். தேவ லோகத்துக்குப் போனாலும் புண்ணியம் தீர்ந்தவுடன் பூலோகத்தில் வந்து விழ வேண்டியதுதான். "க்ஷீணே புண்யே மத்யலோகம் விசந்தி"என்று சொல்லியிருக்கிறது (கீதை:ix.21). தீராத ஸௌக்கியம், மாறாத நிறைந்த ஆனந்தம் என்பது உண்டென்றால் அது பரமாத்ம தத்வத்தில் அதோடு அதாகவே கரைந்து, எந்தக் காரியமும் இல்லாமல் கிடைக்கிற ஞானியொருவன் அநுபவிக்கிற நிலைதான். ரொம்பவும் அல்பமான, ரொம்பவும் குறுகிய காலத்துக்கு மட்டுமேயான இன்பத்தைத் தருகிற பாப கர்மாக்களை விட்டுவிட்டு அதைவிட உயர்ந்ததான ஸத்கர்மாவுக்குப் போகவேண்டும். அதாவது வைதிக கர்மாநுஷ்டானங்களை குறைவேயில்லாமல் செய்ய வேண்டும். ஆனால் இதனாலும் நிறைந்த நிறைவான ஆனந்தத்தை சம்பாதித்துக் கொள்ள முடியவில்லை என்றால் என்ன பிரயோஜனம்?'கர்மாநுஷ்டான பலனும் சாச்வத ஸௌக்கியமாக இல்லையே!அதனால் இதைப் பண்ணாமலே இருந்து விடலாமா?நேரே அந்த சாச்வத ஸௌக்கியத்துக்கே போய்விடலாமா?' என்றால் அதுவும் நம்மால் முடியவில்லை. ஞானம் வருவது ஸுலபத்தில் ஸாத்தியமா?அதற்கு முதலில் சித்தம் சுத்தமாக வேண்டும். கர்மாதான்

சித்தத்தை அலை பாயாமல் ஒரு ஒழுங்குப்படுத்திக் கட்டுகிறது. அதனால் கர்மாநுஷ்டானம் பண்ணவேண்டும். அப்படிப் பண்ணும்போது அது தருகிற ஸ்வர்க்க லோகம் முதலான இன்பங்களை உத்தேசிக்காமல், அதாவது பலனில் பற்றின்றி நிஷ்காம்யமாகப் பண்ணிவிட்டால், சித்தத்திலுள்ள மலங்கள் நீங்குகின்றன. இந்தக் கர்மாவுக்கு என்றே சொல்லியிருக்கிற பலன்கள் வேண்டாம் என்று பலதாதாவான ஈச்வரனிடமே அவற்றை அர்ப்பணம் செய்து விட்டால், அவன் இவைகளை விடப் பெரிய பலனான சித்த சுத்தியை அநுக்ரஹிபபான். அப்புறம் ஞானவிசாரம் பண்ண மனசு பக்குவமாகும். அதனாலே காரியமில்லாமல் தானாக இருக்கிற தனிப்பெரும் ஆனந்தத்தை அடையலாம்

## வேதாந்த மதங்களும் மீமாம்ஸையும்

வேதகர்மாக்களை யெல்லாம் அங்கீகரிக்கிறது என்ற அளவில் அத்வைதம் மீமாம்ஸையையை ஆதரிக்கிறது என்பதோடுகூட, மீமாம்ஸையில் பாட்ட மதத்தினர் சொல்கிற அதே ஆறு பிரமானங்களைத்தான் அத்வைதத்திலும் ஒப்புக் கொண்டிருக்கிறோம்.

ஸ்ரீ சங்கரரின் அத்வைதம், ஸ்ரீ ராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம், ஸ்ரீ மத்வரின் த்வைதம்மூன்றுமே வேதாந்த மத்ங்கள்தான். அத்வைதத்தைப் போலவே இந்த மற்ற இரண்டு ஸித்தாந்திகளும் வைதி கர்மாநுஷ்டானங்களை விடக்கூடாது என்பவர்கள்தான். ஆதலால் பொதுவாக வேதாந்த மதங்கள் எல்லாவற்றுக்கும் இந்த அம்சத்திலே மீமாம்ஸை ஸம்மதமானதுதான்.

பிரமாணங்களில் மீமாம்ஸை சொல்கிற ஆறையும் அத்வைதிகள் எடுத்துக் கொண்டிருக்கிறோம். விசிஷ்டாத்வைதிகள் இந்த ஆறில் 'பிரத்யக்ஷ ம்','அநுமானம்', 'சப்தம்', (வேதம்) என்ற மூன்று பிரமாணங்களை மட்டும் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எப்படியானாலும் இவை மீமாம்ஸகர்கள் சொன்ன ஆறிலே இருக்கிற மூன்றுதான். இந்த பிரமாண ஸமாசாரத்தை 'நியாயம்'என்று அடுத்த உபாங்கத்தைப் பற்றிச் சொல்லும்போது கொஞ்சம் விரிவாகச் சொல்கிறேன்.

மொத்தத்தில், மீமாம்ஸையை அடியோடு நிராகரணம் பண்ணாமல் அதை வைத்துக்கொண்டு அப்புறமே அதைக் கடந்து மேலே பக்தியில் த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்றும், பிறகு ஞானத்தில் அத்வைதம் என்றும் போவதற்கு நமக்கு முக்கியமாக இருக்கப்பட்ட மூன்று வேதாந்த மதாசாரியர்களும் வழி பண்ணியிருக்கிறார்கள்.

கர்மாவே எல்லாம் என்பதால் மீமாம்ஸையைக் கர்ம மார்க்கம் என்பார்கள். ஆனால் கர்ம-பக்தி-ஞான மார்க்கங்கள் என்று நாம் வேதாந்த மதத்தில் சொல்கிற அர்த்தத்தில் இது கர்ம மார்க்கமில்லை. வேதாந்த மதத்தில் கர்மாவை கர்மாவுக்காகவே பண்ணி, அதுவே முடிந்த அளவு என்று வைக்கவில்லை. கர்ம பலனை நினைக்காமல் , நிஷ்காம்ய கர்மம் என்பதாக அந்தப் பலனை ஈச்வரார்ப்பணம் செய்ய வேண்டும் என்பதே வேதாந்தப்படி கர்ம மார்க்கம், அல்லது கர்ம யோகம். முக்யமாக கீதையில் பகவான் இதைத்தான் சொல்லியிருக்கிறார். மீமாம்ஸகர்களின் கர்ம மார்க்கத்திலோ ஈச்வர பக்தியே இல்லை. ஆனால் இந்த கர்மாக்களே லோகக்ஷேமம், சமூகத்தின் ஒழுங்கான வாழ்க்கை ஆகியவற்றைத் தருவதோடு அவற்றைப் பண்ணுகிற ஜீவனுக்கும் சித்த சுத்தியைத் தந்து அவனை பக்தியிலும் ஞானத்திலும் ஏற்றி விடுகிறது என்பதால், மீமாம்ஸை எதை ஸாத்யமாக (goal-ஆக, லக்ஷ்யமாக) சொல்லிற்றோ அதே

கர்மாக்களை ஸாதனமாக (means-ஆக) வேதாந்தத்தில் ஆக்கிக் கொடுத்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**மீமாம்ஸை : கர்ம மார்க்கம்**

**பண்டிதருலகில் மீமாம்ஸையின் மதிப்பு**

வேத அர்த்த நிர்ணயத்தில் மீமாம்ஸை செய்கிற பெரிய உபகாரத்தினால் அதனுடைய கர்மாக் கொள்கையை ஆக்ஷேபிப்பவர் உள்பட எல்லாப் பண்டிதர்களும், வித்வான்களும் இந்த சாஸ்திரத்தை அப்யஸித்தும், தாங்களே இதில் புதுப் புஸ்தகங்கள் எழுதியும் வந்திருக்கிறார்கள். தேர்ந்த வேதாந்தியான மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள் (பெயரைச் சொல்லாமல் 'மன்னார்குடிப் பெரியவாள்'என்றே அவரைச் சொல்வது வழக்கம்),திருவிசநல்லூர் வேங்கடஸுப்பா சாஸ்திரிகள், அதே ஊரைச் சேர்ந்த நீலமேக சாஸ்திரிகள், ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியார், கிருஷ்ண தாதாசாரியார், மண்டகுளத்தூர் சின்னஸ்வாமி சாஸ்திரிகள் முதலான பண்டித சிம்மங்கள் மீமாம்ஸையில் நிரம்ப ஈடுபாடு காட்டியிருக்கிறார்கள். இதிலே ஒரு வேடிக்கை!வேங்கடஸுப்பா சாஸ்திரிகளுக்கும் நீலமேக சாஸ்திரிகளுக்கும் குருவாக இருந்த திருவிச நல்லூர் ராமஸுப்பா சாஸ்திரிகள் யாக கர்மாக்களை பலமாகக் கண்டனம் பண்ணியவர். மீமாம்ஸகர்களுக்கு முக்யமான ச்ரௌத கர்மாவை இவர் ஆக்ஷேபித்த போதிலும், 'தியரி'யில் மீமாம்ஸா சாஸ்திரத்தின் உயர்வைப் பார்த்து அதை நன்றாக அப்பியாஸம் பண்ணி மீமாம்ஸையில் ஒரு 'அதாரிடி'யாக இருந்தார்.

மயிலாப்பூரிலுள்ள ஸம்ஸ்கிருத காலேஜ் ஏற்பட்ட பிறகு இதில் பிரின்ஸிபல்களாகவும், வாத்தியார்களாகவும் இருந்திருக்கிற பல பேர் நல்ல மீமாம்ஸா பண்டிதர்களாக இருந்து வந்து கொண்டிருப்பதால் இந்த சாஸ்திரம் தற்போது விருத்தியாகி விடுகிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நியாயம் : யுக்தி சாஸ்திரம்**

## அநுமானம் முக்யமான பிரமாணம்

ந்யாய சாஸ்திரம் தர்க்க சாஸ்திரம் என்றும் வழங்கும். இது கௌதம மஹரிஷியால் செய்யப்பட்டது. இதன் முக்கிய உத்தேசம், இந்த உலகத்துக்கெல்லாம் கர்த்தா பரமேச்வரன் என்பதை யுக்திகளைக் கொண்டு தீர்மானப்பதுதான். அது அநுமானத்தால் ஈச்வரனை ஸாதித்துக் கொடுக்கிறது. ஆகவே அது யுக்திப் பிரதானமான சாஸ்திரம்.

யுக்தி அவசியம் வேண்டும். வேதம் ஒரு விஷயத்தைச் சொல்லுகிறது. அதனுடைய அர்த்தத்தை மீமாம்ஸை நிர்ணயிக்கிறது. நாம் வேதத்தை நம்புகிறோம். நம்பினாலும் மனசு ஸந்தேஹப்படும். ஆகையினால் அந்த ஸந்தேஹத்தை நிவர்த்தி பண்ணுவதற்கு வேதம் சொன்னதைப் பலவித யுக்திகளைக் கொண்டு தீர்மானப் படுத்தினால் அந்தத் தீர்மானம் த்ருடமாயிருக்கும். பந்தற்கால் நடும் பொழுது அதை ஆட்டி அசைத்துப் பார்த்து வைத்தால்தான் உறுதியாக நிற்கும். அம்மாதிரி யுக்தியால் நன்றாக ஆட்டி உண்மைகளை உறுதிப்படுத்த வேண்டும். யார் யுக்திவாதம் பண்ணினாலும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனால் யுக்திகள் எல்லாம் ஸரியான ஆதாரத்தை வைத்துக் கொண்டு பண்ண வேண்டும். குயுக்திகள் பண்ணக்கூடாது.

ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் லோகத்தை விட்டுப் போகும்போது சிஷ்யர்களெல்லாம் சேர்ந்து ஸங்கிரஹமாக (சுருக்கமாக) ஒரு உபதேசம் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அப்படிப் பிரார்த்தித்த பொழுது "உபதேச பஞ்சகம்"அல்லது "ஸோபான பஞ்சகம்"என்று ஐந்து ச்லோகத்தை ஆசாரியர்கள் சொன்னார்கள். அதிலே துஸ்தர்க்காத் ஸுவிரம்யதாம்;ச்ருதிமதஸ் தர்க்கோ(அ) நுஸந்தீயதாம் என்று வருகிறது. அதாவது, விதண்டாவாதங்களை விட்டு, வேதக் கருத்தை மதித்து அநுஸரிக்கும் நல்ல யுக்திகளையே உபயோகப்படுத்த வேண்டும். யுக்திகளினால் நிர்ணயம் பண்ணிக் கொள்ளாவிட்டால் காட்டிலே போவது போன்றதுதான். ஆனால் அந்த யுக்திகளை ஒர் ஆதாரம் வைத்துக் கொண்டு செய்யவேண்டும். இப்படி யுக்திகளைக் கொண்டு வேதார்த்தத்தை நிர்ணயம் பண்ணுவதுதான் "ந்யாயம்".அந்த சாஸ்திரம் கௌதமரால் செய்யப்பட்டது என்றேன். கணாதர் என்பவர் ஒரு விதமான ந்யாய சாஸ்திரம் பண்ணியிருக்கிறார். அது "வைசேஷிகம்"என்று தனியாகப் பிரித்துச் சொல்லப்படும்.

ஒன்றிலிருந்து இன்னொன்றைப் பிரித்து அடையாளம் கண்டுகொள்வதற்குக் காரணம் அதிலுள்ள விசேஷத் தன்மை (particularity)தான். இந்த விசேஷத் தன்மையையே முக்யமாக விசாரிப்பதால் கணாத சாஸ்திரத்துக்கு வைசேஷிகம் என்று பெயர் வந்தது. ரொம்பவும் ஸயன்ஸாகவே போகிற நியாய சாஸ்திரமானது, அத்யாத்ம விஷயங்களான ஜீவன், ஜகத், மோக்ஷம் (மோக்ஷம் என்பதை அவர்கள் 'அபவர்க்கம்'என்று சொல்வார்கள்) இவற்றை ஜாஸ்தி விசாரிக்கிற

வைசேஷிகத்தோடு போய்ச் சேர்ந்து கொள்கிறது. இவை இரண்டிலும் logic(தர்க்கம்), philosophy(தத்வம்) இரண்டும் இருக்கின்றன. 'லாஜிக் மூலமாகவே 'பிலாஸஃபி'சொல்லப்படுகிறது.

நாலு பிரமாணங்களை வைத்துக் கொண்டு உண்மையை ஆராய்கிறது நியா சாஸ்திரம். அவை 'பிரத்யக்ஷம்', 'அநுமானம்', 'உபமானம்', 'சப்தம்'என்பவை யாகும். பிரத்யக்ஷமாகக் கண்ணால் பார்ப்பது, காதால் கேட்பது முதலியனதான் முதலில் சொன்ன பிரத்யக்ஷ பிரமாணம். அடுத்து வருகிற அநுமானம் என்ற பிரமாணந்தான் நியாயத்துக்கு ரொம்பவும் முக்கியமானது. அநுமானம் என்பது என்ன?தூரத்தில் மலையிலே புகை தெரிகிறது. புகை மட்டும்தான் தெரிகிறது. நெருப்பு தெரியவில்லை. முன்னே இருக்கிற பாறைகள் நெருப்பை மறைக்கின்றன. அதனால் புகை மாத்திரம் தெரிகிறது. ஆனாலும் நாம் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் மலையிலே இருக்கிற காட்டில் நெருப்புப் பிடித்துக் கொண்டிருக்கிறது என்று ஊகித்து விடுகிறோம். இதுதான் 'அநுமானம்'என்பது. இங்கே நெருப்புக்கு 'ஸாத்யம்'என்றும், அதை நாம் அநுமானிப்பதற்கு அடையாளமாயிருக்கிற புகைக்கு 'ஸாதனம்', 'லிங்கம்','ஹேது'என்றும் பெயர்.

இப்போது நாம் அநுஸரிக்கிற மதமான வேதாந்தத்தின் படி குருவிடமிருந்து சிரவணம் என்பதாக உபதேசம் பெற்றபின் அதை மனனம் பண்ண வேண்டும். மனனம் என்பது ஆசாரியர் மூலமாகக் கேட்டதைப் புத்தியில் ஏற்படும் யுக்தியைக் கொண்டு நினைத்து நினைத்துப் பார்ப்பது. இதிலே அநுமானம்தான் விசேஷமாகக் கை கொடுக்கிறது. அநுமானத்தால்தானே பிரத்யக்ஷமாக அறிய முடியாததை வேறு காரணங்களைக் கொண்டு அறிய முடிகிறது?பரமாத்ம, ஜீவாத்ம ஸ்வரூபங்கள் நம் கண் முதலியவற்றுக்குப் பிரத்யக்ஷமாகத் தெரியவில்லை. மூக்காலோ, வாயாலோ அவற்றை அறிய முடியவில்லை. மோக்ஷஸ்வரூபமும் தெரியவில்லை. கடைத்தேறுவதற்குரிய வழியும் தெரியவில்லை. இவைகளையெல்லாம் அநுமானத்தால்தான் தெரிந்த கொள்ள வேண்டும். தெரிந்த ஒன்றை வைத்துக் கொண்டு தெரியாதவற்றைத் தெரிந்து கொள்ளுவது அநுமானம். இடி இடிப்பதால் மேகம் உண்டென்று அநுமானிக்கிறோம். அதுபோல. வைதிக கர்மாக்களால் சித்த சுத்தி உண்டாயிற்று. நல்ல ஆசாரியரை அடைந்தோம். அவர் ஒன்று சொன்னார். அதை நம்பி விட்டோம். பின்பு வேறு ஒருவர் வித்தியாஸமாக ஒன்று சொன்னால் நமக்கு ஸந்தேஹம் உண்டாகும். எத்தனை தினுஸான ஆக்ஷேபணைகள் உண்டோ அவ்வளவையும் பண்ணித் தீர்மானிக்க வேண்டும். அப்படித் தீர்மானிக்க அநுமானம் முதலான பிரமாணங்கள் உபயோகப்படும். அந்த அநுமானத்தைப் பிரதானமாக வைத்துக் கொண்டு ஆராய்வது நியாயம். வைசேஷிகமும் அப்படியே.

## நியாயம் : யுக்தி சாஸ்திரம்

### பதார்த்தம்

நம்முடைய மத ஸித்தாந்தம், எல்லாப் பதார்த்தங்களையும் அடிமூலத்துக்குப் போய் நன்றாகத் தெரிந்து கொள்ளுவதால் ஸத்ய தத்வம் பிரகாசித்துவிடு' என்பது. எல்லாவிதமான பிரமாணங்களையும் உபயோகப்படுத்தி அப்படித் தெரிந்து கொள்ள வேண்டும். எதைக் கொண்டு பதார்த்தங்களைத் தெரிந்து கொள்ளுகிறோமோ அதுதான் பிரமாணம்.

பிரத்யக்ஷப் பிரமாண கண் காது முதலியவைகளுக்குள் அகப்படும் விஷயங்கள் கொஞ்சந்தான். அகப் படாதவை அதிகமாக இருக்கின்றன. அவைகள் அநுமானப் பிரமாணத்தில் அகப்படும். அந்த அனுமானத்தை விரிவு படுத்த வேண்டும். அது வேத தத்வத்தை அறியும் ஞானத்துக்கு உபயோகப்படுத்துகிறது. அதனால்தான் நியாயம் ஒர் உபாங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மீமாம்ஸை சிரவணத்திற்கு உபயோகம். மனனத்துக்கு சாதனமாக இருப்பது நியாயம்.

நியாயத்தில் பதார்த்தங்களை ஏழு விதமாகப் பிரித்திருக்கிறார்கள். ஒவ்வொன்றையும் தனியாக அறிய முடியாததால் மொத்தமாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த ஏழுவகைப் பதார்த்தங்களில் இரண்டு பிரிவு உண்டு. உள்ளது என்பது ஒன்று, இல்லாதது என்பது ஒன்று.

### பாவோ அபாவச்ச

இந்த ஏழுவகைப் பதார்த்தங்களுல் ஏழாவது "இல்லாதது"என்பது. இருக்கிறது என்பது பாவம். இல்லாதது அபாவம். அபாவம் ஏழாவது. "பாவ"மாக இருப்பதை ஆறுவிதமாகப் பிரித்திருக்கிறார்கள்.

இல்லை என்பது எப்படிப் பதார்த்தமாகும்?பதார்த்தம் என்பது என்ன?பதத்தின் அர்த்தம்தான் பதார்த்தம். இல்லை என்னும் ஒரு பதத்திற்கும் அர்த்தம் இருக்கிறதல்லவா?

அபாவம் சில இடத்தில் இருக்கிறது;சில இடத்தில் இல்லை. இங்கே புஷ்பம் இல்லை. அதாவது புஷ்பத்தின் அபாவம் இங்கே இருக்கிறது!அங்கே பூஜாமண்டபத்தில் புஷ்பம் இருக்கிறது;புஷ்பத்தின் அபாவம் அங்கு இல்லை. இப்படி அபாவமானது சில இடங்களில் இருக்கிறது;சில இடங்களில் இல்லை. அப்படியே சில ஸமயத்தில் இருக்கிறது;சில ஸமயத்தில் இல்லை. இப்படி, சில கால தேசங்களில் அபாவம் இருப்பதனால் அது பதார்த்தம் ஆகிறது.

ஏழு பதார்த்தங்களாவன:திரவியம், குணம், கர்மம், ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம், அபாவம் என்பவை. திரவியம், குணம், கர்மம் இந்த மூன்றும் ஸத்தான பதார்த்தம். அவற்றை இருக்கிறதென்று நம்மால் காட்ட முடியும். அதுதான் ஸத். பாக்கி நான்கும் அப்படிக்காட்ட முடியாதது. "ஸத்தை"யோடு கூடியது முதல் மூன்றுதான் இவற்றில் முதலாவதான த்ரவ்யம் ஸ்தூலமாக காட்டக் கூடியது. ஞானம், ஆசை, ஸந்தோஷம், துக்கம் முதலிய குணங்களைத் தனியாக பிரித்துக் காட்ட முடியாது. இவைகளெல்லாம் ஒன்றை ஆசிரயித்தே இருக்கும், தனியாகப் பிரிக்க முடியாது. தாமரை சிவப்பாக இருக்கிறது. சிவப்பு தாமரையினுடைய குணம். அந்தச் சிவப்பைத் தனியாகப் பிரித்துக் காட்ட முடியாது. இப்படி ஒரு ஆசிரயத்தை ஒட்டிக் கொண்டு இருப்பதுதான் குணம். அது எதை ஆசிரியத்திருக்கிறதோ அந்த ஆசிரியந்தான் த்ரவ்யம். சந்தோஷத்தையும் துக்கத்தையும் தனியாகக் காட்ட முடியாவிட்டாலும் ஒருத்தன் ஸந்தோஷமாகவும் துக்கமாகவும் இருப்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறதல்லவா?அப்போது ஸந்தோஷம், துக்கம் இவற்றையும் தெரிந்துகொண்டு விடுகிறோம். சிவப்புத் தாமரையைப் பார்க்கும்போது சிவப்பு என்னவென்று தெரிந்து கொண்டு விடுகிறோம். கர்மம் என்பது காரியம். சலனம், போதல், ஒடுதல் முதலிய வேலைகள் கர்மாக்கள். அவைகளும் திரவியத்தை ஆசிரயத்தே நிற்கும். ஒருவன் ஒடுகிறான், ஒடுதலை அவனிடத்திலிருந்து பிரிக்க முடியாது. அப்போது அவன் உட்கார்ந்திருக்க வில்லை, படுத்திருக்கவில்லை என்ற வித்யாஸம் தெரிகிறது. அதனால் ஒட்டத்தை நாம் பார்க்கிறோம் என்ற அர்த்தம். ஸாமான்யம் என்பது நாலாவது பதார்த்தம். அது ஜாதியை குறிப்பது. பல மாடுகள் இருக்கின்றன. அவைகளுக்குள் மாட்டுத்தன்மை என்னும் ஒரு பொதுமை இருக்கிறது. அதை நாம் ஜாதி என்கிறோம். அது எல்லாப் பசுக்களிடத்திலும் இருக்கிறது. அதுதான் "ஸாமான்யம்". ஒரே மாதிரி இருந்தும் வெவ்வேறாக இருப்பது "விசேஷம்". பசுக்கள் ஒரே ஜாதியாக இருந்தும் அப் பசுக்களிடத்தில் ஒவ்வொன்றையும் தனித்தனியே பிரித்துக் காட்டக்கூடிய சில 'விசேஷ'அடையாளங்கள் இருக்கின்றன. திரிவியத்தையும் குணத்தையும், திரவியத்தையும் அதன் கார்யத்தையும், தனித்தனியானவற்றை பொதுமையையும், ஒரு முழு வஸ்துவையும் அதன் அவயவங்களையும் பிரிக்க முடியாமல் ஒட்டி வைத்திருப்பதுதான் "ஸமவாயம்"எனப்படுகிறது. அக்னியில் பிரகாசமான ரூபம் இருக்கிறது. அந்தப் பிரகாசத்தையும் ரூபத்தையும் பிரிக்க முடியாது. அது ஸமவாயம். திரவியமும் திரவியமும் சேர்ந்தால் அதை ஸம்யோகம் என்று சொல்வார்கள். இவை ஒன்றோடொன்று சேராமல் தனித்தும் இருக்க முடியும். திரவியமும் குணமும் சேர்ந்தால் அது ஸமவாயம்;திரவியமும் கர்மாவும் சேர்ந்தால் அதுவும் ஸமவாயந்தான். குணமும் கர்மாவும் ஒரு திரவியத்தைச் சேராமல் தனித்தும் இருக்க முடியாது.

கடைசியாக வரும் அபாவத்தைப் பற்றி முதலிலேயே சொல்லிவிட்டேன். இப்படிப் பதார்த்தங்களை ஏழுவகையாகப் பிரித்தது போல ஒவ்வொரு

பதார்த்தத்தையும் பலவகையாகப் பிரத்திருக்கிறார்கள். திரவியம் ஒன்பது விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவை பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனது என்பவை. இவைகளில் முதலில் சொல்லப்பட்ட ஐந்துக்குப் பஞ்ச பூதங்களென்று பெயர். பிருதிவிஎன்பது பூமி, அப்பு ஜலம், தேஜஸ் அக்னி, வாயு காற்று, ஆகாசம் என்பது எல்லாவற்றிற்கும் இடம் கொடுப்பது.

இந்த பஞ்ச பூதங்களிலும் ஒரு வேடிக்கை இருக்கிறது. இவைகளுக்கு ஸரியாக உடம்பில் ஐந்து தினுஸான அறிவுகள் இருக்கின்றன. பார்க்கிற சக்தியுள்ள கண், கேட்கும் காது, ருசிக்கும் நாக்கு, உஷ்ணம் சீதம் தெரிந்துகொள்ளும் ஸ்பரி சேந்திரயம், கந்தம் தெரிந்துகொள்ளும் மூக்கு என்பவை ஐந்து. ஸ்பரிச இந்திரியம் என்பது வெளித்தோலோன சர்மம் மட்டும் இல்லை. உடம்பு முழுவதிலும் ஸ்பரிச உணர்ச்சி இருக்கிறது. உடம்புக்கு உள்ளேயும் இருக்கிறது. வயிற்று வலி, மார்(பு) வலி முதலியவை அதனால்தான் தெரிகின்றன. இந்த ஐந்து விதமான அறிவும் ஒவ்வொன்றால் அறியப்படுகிறது. ஒவ்வொரு விஷயம் ஒவ்வோர் இடத்தில் தான் உணர்ச்சியைத் தருகிறது. பார்வை கண்ணில்தான் இருக்கிறது;காதினால் பார்க்க முடியாது. காதினால் கேட்கிற ஸங்கீதத்தை கண்ணினாலோ மூக்கினாலோ கேட்க முடியாது. நாக்கிலே ஒரு பதார்த்தத்தைப் போட்டால் அதனுடைய ருசியைத் தெரிந்து கொள்ளமுடியுமேயொழிய வாஸனையை அறிய முடியாது. கற்கண்டு தித்திக்கிறது என்று மூக்கு தெரிந்து கொள்ளாது. இப்படி ஐந்து திநுஸான குணங்களை ஐந்து இந்திரியங்களில் ஒவ்வொன்றுதான் தெரிந்து கொள்ள முடியும். ரூபம் என்னும் குணத்தைக் கண் அறிகிறது. நிறம், அளவு முதலியவைகள் ரூபம். சுக்ல, பீத, நீல, ஹரித, ரக்த,கபிசம், அதாவது (முறையே) வெள்ளை, மஞ்சள், கறுப்பு, பச்சை, சிவப்பு, காப்பி நிறம் (brown)என்பவை நிறங்கள். சப்த பேதங்களைக் காது அறிகிறது. கெட்ட வாஸனை, நல்ல வாஸனைகளை மூக்கு அறிந்து கொள்கிறது. ஆறுவகை ரஸங்களை நாக்கு உணர்ந்து கொள்கிறது. உஷ்ணம், சீதம் முதலியவைகளை ஸ்பரிசேந்திரியம் தெரிந்து கொள்ளுகிறது. இப்படி ஐந்து இந்திரியங்கள் ஐந்து வகையான குணங்களை உணர்ந்து கொள்ளுகின்றன. இவைகளுக்கு ஞானேந்திரியங்கள் என்று பெயர். இந்திரியம் இல்லாவிட்டால் குணம் தெரியாது. நமக்கு இந்திரியங்கள் ஆறாக இருந்தால் ஆறு வகையான குணங்களை நாம் அறியக் கூடுமாயிருக்கும். ஆயிரம் இந்திரியங்கள் இருந்தால் ஆயிரம் குணங்கள் அறியப்படக் கூடலாம்!உலகத்தில் எத்தனை விஷயங்கள் இருக்கின்றனவோ, தெரியவில்லை!நமக்கு ஸ்பரிசேந்திரியம் கொடுக்காவிட்டால் சீதம், உஷ்ணம் முதலியவை உண்டு என்று அறிய முடியாது தானே?அந்த இந்திரியம் கொடுத்ததனால் சீதோஷ்ணங்கள் அறியப்படுகின்றன. சீதோஷ்ணங்கள் வெளியில் இருப்பதனால் மட்டும் நமக்குத் தெரிகின்றன என்று சொல்லக்கூடாது. வெளியில் இருப்பதை அறிய நமக்கு இந்திரியம் இருந்தால்தான் அவை தெரியும். குருடர்களுக்கும் செவிடர்களுக்கும் ரூபம், சப்தம் என்பவை வெளியில் இருந்தபோதிலும் தெரியாததைப் பார்க்கிறோமல்லவா?

கண், நாக்கு, மூக்கு, தொடு உணர்ச்சிப் புலன் (த்வக்) காது என்னும் ஐந்து இந்திரியங்களுக்கும் ரூப, ரஸ, கந்த , ஸ்பரிச, சப்தங்கள் முறையே விஷயமாகின்றன.

இந்த ஐந்து குணங்களையும் பகவான் பஞ்ச பூதங்களில் வைத்திருக்கிறார். மண்ணில் ஐந்து குணங்களும் இருக்கின்றன. அதற்கு ரூபம் இருக்கிறது;ருசி இருக்கிறது. நம் உடம்பு, கத்திரிக்காய், வெல்லம் எல்லாம் மண்தான்! மண்ணுக்கு வாஸனை இருக்கிறது. வாஸனை உள்ள புஷ்பம் மண்தான். கடினம், சீதம் உஷ்ணம் முதலியதான ஸ்பரிசத்தால் அறியும் குணங்களும் மண்ணுக்கு இருக்கின்றன. சப்தமுங்கூட இருக்கிறது. நூலைக் கட்டிக் கேட்டால் சப்தம் கேட்கிறது. கட்டையைத் தட்டினால் சப்தம் உண்டாகிறது. ஜலத்தில் கந்தத்தைத் தவிர மிகுதியுள்ள நான்கு குணங்களும் இருக்கின்றன. நாம் வாஸனைப் பதார்த்தங்களைக் கலந்தால்தான் ஜலத்தில் கந்தம் உண்டாகிறது. ஜலத்திற்கு ரூபம், ரஸம், சப்தம், ஸ்பரிசம் என்னும் நான்கும் இருக்கின்றன. ஜலத்தை அடித்தால் சப்தம் உண்டாகிறது. மண்ணில் ஐந்து குணங்களும் இருந்தாலும் மற்ற நான்கிலும் இல்லாமல் போனால் ரஸம் இல்லை. அதனால்தான் ரஸேந்திரியமாகிய நாக்கில் எப்பொழுதும் தண்ணீர் இருக்கிறது. நாக்கில் நீர் வற்றி மரத்துப் போனால் ருசியை அறிய முடியாது!ரஸம் என்பதற்கே ஜலம் என்று ஒரு அர்த்தம் உண்டு. தேயுவுக்கு (நெருப்புக்கு) ரஸமும் இல்லை, கந்தமும் இல்லை. ரூபம், சப்தம், ஸ்பரிசம் என்ற மூன்றுதான் இருக்கின்றன. அதற்கு ரூபம் விசேஷ குணம். வாயுவில் ரூபம் இல்லை. சப்தமும் ஸ்பரிசமும் மாத்திரம் இருக்கின்றன. அதற்கு ஸ்பரிசம் விசேஷ குணம். அதனால்தான் நம் மேலே காற்று பட்டால் தெரிகிறது. ஆகாசத்திற்கு சப்தம் மட்டுமே உண்டு. வாயுவினால்தான் சப்தம் உண்டாகிறதென்று முதலில் நவீனர்கள் கருதியிருந்தார்கள். கம்பியில்லாத் தந்தி முதலியவை ஏற்பட்ட பிறகு காற்றினுடைய மாறுதல்களுக்கு உட்படாமல் சப்தம் கேட்பதால் ஆகாசத்தினுடைய குணம் அது என்று தெரிந்து கொண்டு வருகிறார்கள்.

சப்தம் என்ற ஒரே குணமுள்ள ஆகாசம்;சப்தத்தோடு நம் மேலே படுவதால் தெரிந்துக் கொள்ளக்கூடிய ஸ்பரிசமும் உள்ள வாயு;சப்தம், ஸ்பரிசம் என்ற இரண்டோடு கண்ணுக்குத் தெரிகிற ரூபமும் உள்ள அக்னி;இந்த மூன்றோடு ரஸமும் சேர்ந்த ஜலம்;இந்த நாலு குணங்களோடு கந்தமும் உள்ள ப்ருத்வி - என்று பஞ்ச பூதங்கள்.

ஐந்து குணங்களுக்கு ஆசிரியங்களாக பஞ்ச பூதங்களாகிய திரவியங்கள் இருக்கின்றன. நியாய சாஸ்திரம் சொல்லும் ஒன்பதில் மிகுதியுள்ள திரவியப் பிரிவுகள் காலம். திக்கு, ஆத்மா, மனது என்பவை. மணி, நேற்று, இன்று, நாளை, வருஷம், யுகம் முதலியவை காலம். அதாவது Time என்ற தத்வம். திக்கு என்பது தேசம் - மேல் கீழ், அங்கே, இங்கே என்பனவெல்லாம்!அதாவது Space என்ற தத்துவம். இவ்வளவையும் அறிவும் மனத்தை உடையவனே ஆத்மா. மற்ற

எல்லாம் அவனுக்காகத்தான் இருக்கின்றன! அவன் இரம்டு விதம். அசட்டு ஆத்மா ஒருவன். அசடாயில்லாத ஆத்மா ஒருவன். இவர்கள் முறையே ஜீவாத்மா, பரமாத்மாவென்று சொல்லப் படுவார்கள்!லோகத்தில் நடப்பதையெல்லாம் வெறுமே பார்த்துக் கொண்டிருப்பவன் ஒருவன் (பரமாத்மா). இதிலே மாட்டிக் கொண்டு துக்கப்படுபவன் மற்றவன் (ஜீவாத்மா). ஜீவாத்மா பலர்;பரமாத்மா ஒருவர். இவ்விருவரும் சைதன்ய (அறிவுள்ள ஜீவ) வஸ்துக்கள். வேதாந்தம் அறிவே ஆத்மா என்று சொல்லுகிறது. நியாய சாஸ்திரமானது அறிவை உடையவனான ஞானவான் ஆத்மா என்று த்வைதமாகத்தான் நியாயம் பேசுகிறது. வேதாந்தப் படியோ ஏகமான பேரறிவே ஆத்மா;அதற்கு வேறாக அறியப்படும் ஒன்றே இல்லை;பல ஜீவாத்மாக்கள் என்று கூட இல்லை. ஆனால் நியாயப்படி அறிவு குணத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது;ஆத்மா திரவியம்;ஞானம் அதன் குணம்;ஞானாச்ரயன் ஆத்மா.

பரமாத்மாவினுடைய ஞானத்தில் தெரியாத ஒன்றும் இல்லை என்பதாக அவரை மட்டுமே நியாயத்தில் பேரறிவாகச் சொல்லியிருக்கிறது. ஜீவாத்மாக்கள் கொஞ்சம் ஞானம் உடையவர்களே. அதனால் நமக்கு "கிஞ்சித்ஞர்கள்"என்னும் பெயர் ஏற்பட்டிருக்கிறது. 'கிஞ்சித்'என்றால் கொஞ்சம். பரமாத்மாவே ஸர்வக்ஞர். நாம் ஞானாச்ரயமாகவும் அஞ்ஞான ஆச்ரயமாகவும் கலந்து இருக்கிறோம். பரமாத்மா பூர்ண ஞானாச்ரயமாக இருக்கிறார். 'ஆத்மா விபு, அதாவது அது எங்கும் நிறைந்திருக்கிறது;பரமாத்மாவும் எங்கும் நிறைந்திருக்கிறது'என்று நியாய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டாலும் ஜீவாத்ம பரமாத்ம அபேதம் சொல்லப் படவில்லை. ஏனென்றால் இந்த சாஸ்திரத்தின் நோக்கில் அறிவு என்பது ஒவ்வொரு ஜீவரிடத்திலும் தனித்தனியாக ஏற்பட்டிருக்கிறது. அந்த இடம் தான் மனது. அந்த மனதினால்தான் சுகமும் துக்கமும் உண்டாகிறது.

குணம் 24 பிரிவாகவும், கர்மம் 5 பிரிவாகவும் நியாய சாஸ்திரத்தில் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட பதார்த்த ஞானம் இருந்தால் உண்மையை அறிந்து, மற்றவற்றில் வைராக்கியம் உண்டாகி மோக்ஷம் வரும் என்கிறது நியாய சாஸ்திரம். துக்கம் ஸுகம் எதுவுமில்லாத வெறுமையாகவே அது மோக்ஷத்தைச் சொல்லும். வேதாந்த மார்க்கத்தின்படியே நாம் மோக்ஷத்தைச் அபேக்ஷித்தாலும் அந்த வழியிலும் உபதேசத்தை ஆராயும் மனனத்திற்கு நியாயம் மிகவும் உபயோகப்படும்.

பஞ்ச பூதங்களையும், ஜீவாத்மாவையும், மனஸையும் நாம் தெரிந்து கொள்ள முடியும்?அவன் ஒருவன்தான் அறிய முடியாதவன். அவனை அறிவதற்காகத்தான் அநுமானம் வேண்டும். மற்றவைகளை அறிவதற்குப் பிரத்யக்ஷப் பிரமாணமே போதும். ச்ருதி வாக்கியமானது ஈச்வரன் இருக்கிறான் என்று சொல்லுகிறது. இருந்துதான் ஆகவேண்டும் என்று அநுமானத்தால் ஸித்தாந்தம் செய்வது நியாயம். ஒரு சின்ன அநுமானத்தை இப்பொழுது

பார்க்கலாம். நான் உட்கார்ந்துள்ள இந்த ஸிம்மாஸனம் இந்த ஸிம்மாஸனம் ஒருவன் பண்ணித்தான் ஆகியிருக்கிறது என்பது நமக்குத் தெரியும். பண்ணினவனை நேரில் தெரியாததால் இது பண்ணப்பட்டது என்பதே பொய் என்று சொல்லலாமா?வேறு ஸிம்மாசனங்களைப் பண்ணி நாம் பார்த்திருக்கிறோம். அதைக் கொண்டு இதையும் பண்ணினவன் ஒருவன் இருக்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்கிறோம். அவனுக்கு இதைப் பண்ணுகின்ற சக்தியுண்டு என்பதையும் அறிந்து கொள்ளுகிறோம். அதைப் போல ஜகத்து எல்லாவற்றையும் பண்ணுகிறவன் ஒருவன் இருக்கிறான். அவன் ஸர்வஜ்ஞன், ஸர்வசக்திமான். எல்லாரையும் ரக்ஷிக்கின்றமையால் கருணாநிதியாகவும் அவன் இருக்க வேண்டும். இம்மாதிரி விஷயங்களை ஆக்ஷேபணை, ஸமாதானங்களோடு ஸரியான அனுமானத்தைக் கொண்டு நிர்ணயிப்பது நியாய சாஸ்திரம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நியாயம் : யுக்தி சாஸ்திரம்**

**பிரமாணங்கள்**

பிரத்ய அனுமானங்களோடு நியாயம் சொல்கிற நியாயம் சொல்கிற மற்ற இரு பிரமாணங்கள் உபமானமும் சப்தமும் ஆகும். உபமானம் என்பது என்ன?நமக்குத் தெரியாத ஒன்றைத் தெரிந்து ஒன்றின் ஒப்புவமையால் தெரிந்து கொள்வது. 'கவயம்'என்று ஒரு மிருகம் இருக்கிறது. அது எப்படியிருக்கும் என்று நமக்குத் தெரியவில்லை. காட்டெருமை மாதிரி ஒன்று அது;பார்த்தால் மாடு மாதிரியே இருக்கும் என்று அதைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. நாம் எங்கேயோ காட்டுப் பக்கம் போகிறோம். அங்கே இப்படி மாடு மாதிரியான ஒரு மிருகத்தைப் பார்க்கிறோம். 'உபமானம்'என்பது இதுவே.

சப்தப் பிரமாணம் என்பது வாக்கு ரூபமான வேதப் பிரமாணமும், ஸத்துகளான பெரியவர்களின் வாக்குமாகும். நமக்குத் தெரியாத விஷயங்களை வேதமும், மஹான்களும் சொல்லும்போது அதிலே பொய்யே இருக்காது என்று பிரமாணமாக எடுத்துக் கொள்ள வேண்டும். "வேதம் ஈச்வர வாக்கு"என்பதே நையாயிகர்களின் (நியாய சாஸ்திரக்காரர்களின்) கருத்து. அதனால் அது பிரமாணம். ஸத்ய ஸந்தர்களாக இருக்கப்பட்ட மஹான்கள் சொல்வதும் சப்தப் பிரமாணத்தில் சேர்க்கப்பட வேண்டியது.

இந்த நாலு பிரமாணங்களும் மீமாம்ஸையில் குமாரில பட்டரின் ஸித்தாந்தத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. இவற்றோடு கூட அர்த்தாபத்தி அநுபலப்தி

என்ற இரண்டையும் சேர்த்து அவர் ஆறு பிரமாணங்களைச் சொல்கிறார். நம்முடைய அத்வைத வேதாந்தத்திலும் இந்த ஆறு பிரமாணங்களையும் ஏற்றுக் கொண்டிருக்கிறோம்.

அர்த்தாபதி என்பதற்கு நம் சாஸ்திர நூல்களில் ஒரு உதாரணம் சொல்லிச் சட்டென்று புரிய வைத்திருக்கிறது. "பீனோ தேவதத்தோ திவா ந புங்க்தே"என்று சொல்லியிருக்கும். "குண்டன் தேவதத்தன் பகல் வேளையில் சாப்பிடுவதில்லை"என்று அர்த்தம். பகலில் சாப்பிடாமலும் அவன் இளைக்கவில்லை, குண்டன் தேவதத்தன் பகல் வேளையில் சாப்பிடுவதில்லை"என்று அர்த்தம். பகலில் சாப்பிடாமலும் அவன் இளைக்கவில்லை. குண்டாக இருக்கிறான் என்று இந்த வாக்கிலிருந்து ஆகிறது. இதிலிருந்து என்ன தெரிகிறது?அவன் இரவில் நன்றாகச் சாப்பிடுகிறான் என்று தெரிகிறது. சாப்பிடாமலிருப்பது, ஆனாலும் அதனால் இளைக்காமலிருப்பது என்பது மாதிரியான ஒரு முரண்பாட்டிலே இது முரண்பாடு இல்லை என்பதற்கான காரணத்தை கண்டு கொள்ள உதவுவதே 'அர்த்தாபத்தி'என்ற பிரமாணம். தேவதத்தன் இரவிலே சாப்பிடுகிறான் என்று நாம் ஊகிப்பது முன்னே இரண்டாவதாகச் சொன்ன 'அநுமானம்'என்ற பிரமாணத்தைச் சேராது. அநுமானத்தில் ஒரு விஷயத்தை ஊகிப்பதற்கு அதிலிருந்தே ஒரு அடையாளம் - மேகத்திலிருந்தே இடிமாதிரி, நெருப்பிலிருந்தே புகை மாதிரி - தோன்ற வேண்டும். இங்கே அப்படிப்பட்ட 'லிங்கம்'எதுவுமில்லை.

உபமானத்திலும் இப்படியே. 'இது கவயம்'என்று நாம் காட்டு மிருகத்தைக் கண்டவுடன் ஊகித்து விடுவதால் மட்டும் அது அநுமானமாகி விடாது. இங்கேயும் லிங்கத்தைக் கொண்டு மிருகத்தை நாம் அடையாளம் புரிந்துகொள்ளவில்லை. ஏற்கெனவே நமக்குத் தெரிந்த கவய வர்ணனையின் ஒப்புவமையாலேயே அறிகிறோம். கடைசிப் பிரமாணம் அநுபலப்தி. ஒன்று இல்லை என்பதை அறிந்து கொள்வதே அநுபலப்தி. அபாவம் என்பதை ஏழு பதார்த்தங்களில் கடைசியாக நியாயத்தில் சொல்லியிருக்கிறது என்றேனல்லவா?அந்த அபாவத்தை நாம் எதனால் தெரிந்து கொள்கிறோமே அதுவே அநுபலப்தி. "அந்தக் கொட்டகையில் யானை இருக்கிறதா, போய்ப் பார்!" என்று சொன்னால் போய்ப் பார்க்கிறோம். யானை இருந்தால் இருக்கிறது என்று தெரிந்து கொள்கிற மாதிரியே, யானை இல்லாவிட்டால் இல்லை என்பதையும் தெரிந்து கொள்கிறோம். யானையைத் தெரியவில்லை. ஆனால் அது அங்கே இல்லை என்ற உண்மை தெரிகிறது. இம்மாதிரி ஒன்று தெரியாததாலேயே உண்மை தெரிவது அநுபலப்தி.

நியாயத்தில் அர்த்தாபத்தியும், அநுபலப்தியும் இல்லை. மீமாம்ஸையிலும், அத்வைத வேதாந்தத்திலுமே உள்ளன. (மீமாம்ஸையிலும் பாட்ட மதத்தில் மட்டுமே அநுபலப்தி உண்டு; பிரபாகரரின் ஸித்தாந்தத்தில் கிடையாது.)

பகவானைக் காட்டவே பகுத்தறிவு இப்படிப்பட்ட பிரமாணங்களைக் கொண்டு

ஆராய்ந்து கொண்டே போவதில் நியாயம் விட்ட இடத்தில் வைசேஷிகம் பிடித்துக் கொண்டது. வைசேஷிக ஸ்தாபகரான 'கணாதர்'என்ற மஹரிஷி, எல்லாம் கடைசியில் பரமாணுக்களால் ஆனது என்று கொண்டு போய் நிறுத்துகிறார். அந்த பரமாணுக்களை ஈச்வரன் பல தினுஸில் ஒன்று சேர்த்தே ஜகத்தை உண்டாக்கியிருக்கிறான் என்கிறார். ஜகத்து, ஜீவன் எல்லாமே ஈச்வரனுக்கு வேறேயாக த்வைதமாகத்தான் நியாய - வைசேஷிகங்களில் பேசப்படுகின்றன. சைதன்யமான ஜீவனின் சிற்றறிவு எங்கேயிருந்து வந்தது, ஜடமான அணு எங்கேயிருந்து வந்தது என்று கேட்டுக் கொண்டே மேலே மேலே போகிற போது தான் கடைசியில் எல்லாம் பரமாத்மாவின் பல தோற்றங்கள், வேஷங்கள் தான் என்று அத்வைதமாக முடிகிறது. அந்த அத்வைதத்தில் முடிவதற்கும் நியாயசாஸ்திரம் இடைநிலையில் வேண்டியிருக்கிறது. பகுத்தறிவுக்கு உரிய இடத்தைக் கொடுப்பதே நம்முடைய 'நியாயம்'அல்லது 'தர்க்கம்'. அது அறிவு ஆராய்ச்சி நிரம்பப் பண்ணுகிறது. அதற்காக rationalism என்பது materialism, astheism மாதிரியான லோகாயத வாதமாக, நிரீச்வரவாதமாக, நாஸ்திகமாகத்தான் இருக்க வேண்டும் என்றில்லை என்றும் காட்டுகிறது. அறிவு ஆராய்ச்சியின் மூலமே, இத்தனை கிரமத்தோடு ஒரு லோகம் ஏற்பட்டு அதில் இத்தனை ஜீவஜந்துக்களின் வாழ்க்கை ஒன்றுக்கொன்று இசைந்து உண்டாயிருக்கிறதென்றால் இதையெல்லாம் செய்கிற ஒரு ஈச்வரன் இருக்கத்தான் வேண்டும் என்கிறது. நம் பகுத்தறிவு போகமுடியாத இடமும் உண்டு என்பதை நியாய சாஸ்திரம் ஒப்புக் கொள்வதால்தான் நம்மால் நிரூபித்துப் பார்த்துக் கொள்ள முடியாத விஷயங்களைக் கூட வேதம் சொன்னால் ஏற்கத்தான் வேண்டும் என்கிறது. அதாவது நியாய சாஸ்திரத்தில் யுக்தி என்பது குயுக்தியாக (ஆசார்யாள் வாக்குப்படி, 'தர்க்கம்' என்பது 'துஸ்தர்க்க'மாக ஆகிவிடாமல் ஸத்ய தத்வத்தைக் காட்டிக் கொடுக்கவே பிரயோஜனப்படுகிறது.

அறிவால் நல்ல முறையில் ஆராய்ச்சி பண்ணுவது அந்த அறிவையே சுத்தப்படுத்தும். புத்தித் தெளிவு, intellectual clarity என்பதைக் கொடுக்கும். அப்படிப்பட்ட நிலையிலே புத்திக்கு அதீதமான ஸத்யங்களும் ஸ்புரிப்பதற்கு (flash ஆவதற்கு) இடம் ஏற்படும்.

புத்தி ஆராய்ச்சியே செய்யாமல் பகவானையும் சாஸ்திரங்களையும் பூர்ணமாக நம்பிக் கொண்டு இருந்துவிட்டால் அது ரொம்பவும் சிலாக்யம்தான். ஆனால் இப்படிப் பூர்ணமாக நம்பிக் கொண்டு அதிலேயே ஈடுபட்டு ஆத்மாவைக் கடைத் தேற்றிக் கொள்ள நம்மால் முடிகிறதா?அப்படி முடியாத நிலையில் தெய்வ பரமான சிந்தனையோ, ஆத்மாவைப் பற்றிய நினைப்போ இல்லாமல், அதே சமயத்தில் எந்த விதமான அறிவு விசாரணையும் செய்யாமல் வெறுமே தின்று கொண்டும் தூங்கிக் கொண்டும் சோம்பேறியாக இருப்பதைவிட, புத்தியைக் கொண்டு ஆராய்ந்து, "ஈச்வரன் இல்லை;நாஸ்திகம்தான் சரியானது"என்ற

முடிவுக்கு வந்தால்கூடத் தேவலை என்பேன். ஸத்ய தத்வத்தைத் தெரிந்து கொள்ள ஒரு முயற்சியும் பண்ணாத சோம்பேறியைவிட, தன் மூளையைச் செலவழித்து ஏதோ பரிசிரமப் பட்டு ஒருத்தன் நாஸ்திகமான முடிவுக்கு வந்திருக்கிறான் என்றால், இந்தச் சோம்பேறியைவிட அந்த நாஸ்திகன் உயர்ந்தவன் என்பேன். அந்த நாஸ்திகன் இன்னும் ஆராய்ந்து கொண்டே போய் புத்தித் தெளிவு (clarity) பெற்றானானால் அப்புறம் நாஸ்திகத்தை விட்டுவிடவும் வழி பிறக்கும். ஆனால் இந்த் சோம்பேறிக்குத்தான் ஒரு வழியும் இல்லை!

இதனால்தான் 'சார்வாகம்'என்கிற நாஸ்திக ஸித்தாந்தத்தையும் ஒரு மதமாக ஆதியில் வைத்தார்கள். சாரு+வாகம் என்பதே சார்வாகம். அதாவது கேட்பதற்கு நன்றாக இருக்கிற வாக்கு என்று அர்த்தம். "சாமி, பூதம் என்றெல்லாம் அலட்டிக் கொண்டு விரதம், தபஸ், இந்திரிய நிக்ரஹம், மனோ நிக்ரஹம் என்று அவஸ்தைப்பட வேண்டாம். மனம் போனபடி, இந்திரியம் போகிற வழியில் ஆனந்தமாயிருப்போம்!என்று கேட்பதற்கு ரம்யமாகச் சொல்வதால் சார்வாகம் என்று அதற்குப் பேர்.

ஆனால் அப்படி நடக்கும்போது ஆனந்தத்தோடு துக்கமும் தானே வருகிறது? இந்த துக்க நிவிருத்திக்குத்தான் மெடீரியலிஸமாக இல்லாத மற்ற மதங்கள் வழி சொல்கின்றன.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## நியாயம் : யுக்தி சாஸ்திரம்

## எல்லாவித அறிவும் வேண்டும்

புத்தி, மனஸ், இவற்றை நன்றாக உபயோகித்து இவை தம்மைத் தாமே நன்றாக சாணையில் தீட்டுகிறதுபோல தீக்ஷண்யமாகும்படிப் பண்ணிக் கொள்வது ஸத்ய தத்வத்தைக் கண்டுபிடிப்பதற்கு ரொம்பவும் பிரயோஜனப்படும். இல்லாது போனால் லோகமெல்லாம் மாயை என்று சொல்லவந்த ஆசார்யாள் எதற்காக அத்தனை ஸாஸ்திரங்களையும், கலைகளையும், ஸயன்ஸ்களையும் தெரிந்து கொண்டு ஸர்வக்ஞ பீடாரோஹனம் பண்ணவேண்டும்?

நியாயத்துக்கு 'தர்க்கம்'என்றும் 'ஆன்வீக்ஷிகி'என்றும் பெயர்கள் உண்டு. இந்த ஆன்வீக்ஷிகியான நியாயத்தையும், கபில மஹரிஷி ஸ்தாபித்தால் 'காபிலம்'எனப்படும் ஸாங்கியத்தையும், பதஞ்சலியின் பெயரால் பாதஞ்ஜலம் எனப்படும் யோக சாஸ்திரத்தையும், குமாரில பட்டரின் பாட்ட மதமான

மீமாம்ஸையையும் நம் ஆசார்யாள் கரைத்துக் குடித்திருக்கிறார் என்று, 'சங்கர விஜய'ங்களில் ஒன்றில் ஒரு ச்லோகம் இருக்கிறது.

ஆன்வீக்ஷிக்யைக்ஷி தந்த்ரே பரிசிதி-ரதுலா

காபிலே காபி லேபே

பீதம் பாதஞ்ஜலாம்ப:பரமபி விதிதம்

பாட்ட கட்டார்த்த தத்வம்।("மாதவீயம்"மிக்ஷி.20)

அத்வைதத்தைச் சொல்லாத சாஸ்திரங்களும் அத்வைதத்தில் அடங்குகிறவைதான் அதனால்தான் சங்கராச்சாரியார் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிற நான் இந்த எல்லா சாஸ்திரங்களையும் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். த்வைதம்-விசிஷ்டாத்வைதம், சைவம்-வைஷ்ணவம் இவற்றில் எல்லாவற்றையும் தனக்குள்ளே வைத்துக் கொண்டிருப்பது அத்வைதம். மற்றவை இதைத் திட்டினாலும், அவற்றையும் இது தனக்குள்ளே இடம் கொடுத்து வைத்துக் கொண்டிருக்கிறது. அவற்றை இது திட்டுகிற இடங்களிலும், அவைதான் முடிந்த முடிவு என்றும் அத்வைதம் தப்பு என்றும் அவை சொன்னதை ஆக்ஷேப்பிப்பதற்காகத்தான் திட்டு இருக்குமே தவிர, அவை அடியோடு தப்பு என்று அத்வைதம் சொல்லாது. அவற்றுக்கும் எங்கே எவ்வளவு இடம் தர வேண்டுமோ அதைத் தரும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நியாயம் : யுக்தி சாஸ்திரம்**

**தர்க்க சாஸ்திர நூல்கள்**

'ந்யாய சாஸ்திரம்'செய்த கௌதம மஹரிஷிக்கு 'அக்ஷ பாதர்' என்று ஒரு பேர். அவர் அறிவால் ஒயாமல் சிந்தனை பண்ணிக்கொண்டே இருப்பவராதலால் வெளி உலகமே அவர் கண்ணுக்கு தெரியாதாம். இந்நாளில் ஸயன்டிஸ்டுகளும் புரொஃபஸர்களும் எப்போது யோசித்துக் கொண்டே இருப்பதால் absent-mindedஆக இருக்கிறார்கள் என்கிறோம் அல்லவா?இப்படி விகடத் துணுக்குகள் கூட நிறையப்போடுகிறார்கள். கௌதமர் இப்படித்தான் இருந்தார். ஆனால் எதையோ பலமாக யோசித்துக் கொண்டே போய் ஒரு கிணற்றில் விழுந்து விட்டாராம். அப்போது பகவானே அவரை மேலே ஏற்றி விட்டு அவருடைய காலிலேயே கண்ணை வைத்து விட்டாராம். கால் தானாக, involuntary-யாக

நடக்கிறபோது அதிலுள்ள கண்ணும் தானாகப் பார்த்து விடும்படி அநுக்ரஹம் செய்தாராம். பாதத்திலே அக்ஷம் (கண்) ஏற்பட்டதால் இவருக்கு அக்ஷபாதர் என்று பேர் வந்தது என்று கதை .

இவருடைய ஸூத்ரத்துக்கு பாஷ்யம் எழுதியவர் வாத்ஸ்யாயனர்;வார்த்திகம் செய்தவர் உத்யோகரர்;பரம அத்வைதியான வாசஸ்பதி மிச்ரர் இந்த வார்த்திகத்துக்கு ஒரு விளக்கம் எழுதியிருக்கிறார். 'ந்யாய-வார்த்திக-தாத்பர்யடீகா'என்று அதற்குப் பேர். இந்த விளக்கத்துக்கு விளக்கம் எழுதியிருக்கிறார் உதயனாச்சாரியார். தாத்பர்ய-டீகா-பரிசுத்தி என்று அதற்குப் பெயர். 'ந்யாய குஸுமாஞ்சலி'என்றும் உதயனர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். இவர்தான் புத்தமதத்தைக் கண்டனம் பண்ணி நம் தேசத்தில் இல்லாமல் பண்ணியவர்களில் முக்யமான ஒருவர். 'ந்யாய குஸுமாஞ்ஜலி'என்றும் உதயனர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். இவர்தான் புத்தமதத்தைக் கண்டனம் பண்ணி நம் தேசத்தில் இல்லாமல் பண்ணியவர்களில் முக்யமான ஒருவர். 'ந்யாய ஸூத்ர'த்துக்கு ஜயந்தர்எழுதிய 'ந்யாய மஞ்சரி'என்ற பாஷ்யமும் இருக்கிறது. அன்னம் பட்டர் என்பவே 'தர்க்க ஸங்கிரஹம்'என்றும் அதற்குத் தாமே விரிவுரையாக ஒரு தீபிகை'யும் எழுதியிருக்கிறார். ஸமீபத்தில் உத்தமூர் வீரராகவாச்சாரியார் "வைசேஷிக ரஸாயநம்"என்ற நூலை எழுதியிருக்கிறார்.

வைசேஷிகத்துக்கு "ஔலூக்ய தர்சனம்"என்றும் ஒரு பெயர் உள்ளது. 'உலூகம்'என்றால் ஆந்தை. 'உலூ'தான் இங்கிலீஷில் 'Owl' என்று ஆயிற்று. ஆந்தை சம்பந்தப்பட்டது ஔலூக்யம். கணாதருக்கே 'உலூகம்'என்று பேர் வந்ததாகச் சொல்கிறார்கள். கௌதமர் யோசனையிலேயே இருந்ததால் கண் தெரியாமல் கிணற்றில் விழுந்தார் என்றால், கணாதர் பகலெல்லாம் ஆராய்ச்சியிலேயே இருந்துவிட்டு இரவுக்குப் பின்தான் H புறப்படுவாராம். பகலில் கண்ணுக்கு அகப்படாமல் ராத்ரியிலேயே இவர் சஞ்சாரம் செய்ததால், 'ஆந்தை'என்று nick-name பெற்றதாகச் சொல்கிறார்கள். அஞ்ஞானியின் ராத்திரி ஞானிக்குப் பகலாயிருக்கிறது என்று கீதையில் பகவான் சொல்லும்போது எல்லா ஞானிகளையும் ஆந்தையாகத்தான் சொல்லிவிட்டார்.

கணாதர் ஸ்தாபித்தால் 'காணாதசாஸ்திரம்'என்றும் வைசேஷிகத்துக்குப் பெயர். "தமிழ் 'காணாத' அல்ல;எல்லாவற்றையும் 'கண்டு'சொன்னவர்"என்று ஒரு பண்டிதர் வேடிக்கையாக சொன்னார்.

மற்ற எந்த சாஸ்திரத்தையும் படித்து அறிவதற்கு வியாகரணமும் வைசேஷிகமும் நிரம்ப ஒத்தாசை செய்கின்றன என்பது வித்வான்களின் அபிப்ராயம். இதனால், காணாத பாணினீயம் ச ஸர்வசாஸ்த்ரோபகாரகம்

என்று வசனமும் இருக்கிறது.

(காணாதம்-வைசேஷிகம்;பாணினீயம்-வியாகரணம்) வியாகரணம் நடராஜாவின் டமருவிலிருந்து வந்தது என்றால் நியாய-வைசேஷிக சாஸ்திரங்களும் சிவபெருமான் ஸம்பந்தமுடையனவே. வைசேஷிக சாஸ்திரங்களில் மஹேச்வரனையே பரமாத்மாவாக சொல்லி நமஸ்காரம் பண்ணியிருக்கிறது. ஜகத்துக்கு ஈச்வரன் "நிமித்த"காரணம் என்று கொள்வதில் சைவ மதங்கள் நியாய சாஸ்திரத்தையே பின் பற்றுகின்றன எனலாம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நியாயம் : யுக்தி சாஸ்திரம்**

**உலகப் படைப்பின் காரணம்**

நிமித்த காரணம், உபாதான காரணம் என்று இரண்டு உண்டு. ஒரு பானை இருந்தால் அது உண்டாவதற்கு மண் என்று ஒரு வஸ்து இருக்க வேண்டும். மண்தான் பானைக்கு உபாதான காரணம். ஆனால் மண் எப்படிப் பானையாக ஆகும்?தானே அது ஒன்று சேர்ந்து பானையாகுமா?குயவன்தான் மண்ணைப் பானையாகப் பண்ண வேண்டியிருக்கிறது. மண்ணினால் ஒரு பானை உண்டாக வேண்டுமானால் அதற்குக் குயவன் என்ற காரணமும் உண்டாயிருக்கிறது. குயவன்தான் நிமித்த காரணம். ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் சொன்ன நிமித்தம் வேறு, இந்த நிமித்தம் வேறு.

அணுக்களை உபாதான காரணமாகக் கொண்டு ஈச்வரன் என்கிற நிமித்த காரணம் ஜகத்தைப் பண்ணியிருக்கிறது என்பது நியாய- வைசேஷிகக் கொள்கை. மண்ணைப் பானையாக்குவதற்குக் குயவன் அவசியம் வேண்டும். அவன் இல்லாவிட்டால் மண்ணிலே பானை இல்லை. இல்லாத பானை என்ற விளைவை மண்ணிலிருந்து குயவன் உண்டாக்குகிறான் என்று சொல்வார்கள். இதற்கு ஆரம்பவாதம் என்றும், அஸத்-கார்ய-வாதம் என்றும் பெயர். 'ஸத்'என்றால் இருப்பது. 'அஸத்'இல்லாதது. வெறும் மண்ணிலே பானை இல்லை. இல்லாத பானை அதிலிருந்து விளைந்தது. இப்படித்தான் ஈச்வரன் அணுக்களைக் கொண்டே அணுக்களில் இல்லாத சிருஷ்டியைப் பண்ணியிருக்கிறான் என்கிறார்கள். இது நியாயக் கொள்கை.

ஸாங்கியர்களுக்குக் கடவுளே கிடையாது என்று முன்னேயே சொல்லியிருக்கிறேன். அவர்கள் பிரகிருதி என்ற இயற்கையே ஜகத்தாகப் பரிணமித்தது என்பார்கள். இது இந்தக் காலத்து நாஸ்திகர்கள் சொல்வது மாதிரியே என்று நினைத்து விடக்கூடாது. ஏன் என்றால் (நிர்குண பிரம்மத்தின்

ஸ்தானத்தில் இருக்கப்பட்ட) சுத்த ஞான ஸ்வரூபமான 'புருஷன்'என்பவனையும் ஸாங்கியர்கள் சொல்வார்கள். ஜடமான ப்ரகிருதி இத்தனை ஒழுங்காக இயங்குவதற்கு புருஷனின் ஸாந்நித்தியமே காரணம் என்பார்கள். ஸாந்நித்தியம்தான் காரணம், புருஷனே நேராக ஈடுபட்டு ஸ்ருஷ்டியைச் செய்யவில்லை என்கிறார்கள்.ஸூரிய வெளிச்சத்தில் தானாக பயிர் முளைக்கிறது, ஜலம் வற்றுகிறது, துணி காய்கிறது;ஸந்நிதி விசேஷத்தாலேயே இவை நடக்கின்றன. ஸூரியன் இங்கே உள்ள இன்ன பயிரை முளைக்க பண்ண வேண்டும், இந்த குட்டையிலுள்ள ஜலத்தை வற்ற வைக்க வேண்டு என்று நினைத்தா இவை நடக்கின்றன?ஐஸைத் தொட்டால் கை மரத்துப் போகிறது. அதனால் அந்த ஐஸ் நம் கையை மரக்கப் பண்ண வேண்டும் என்று உத்தேசித்ததாகச் சொல்லலாமா?இப்படித்தான் புருஷன் ஸ்ருஷ்டியிலே கொஞ்சங்கூடப் பட்டுக் கொள்ளாவிட்டாலும் புருஷனிடமிருந்து பெற்ற சக்தியாலேயே பிரகிருதி இத்தனையையும் தன்னிலிருந்து தானே உண்டாக்கிக் கொள்கிறது. நிமித்த காரணம் என்பதாக ஈச்வரன் என்று ஒருவன் பண்ணவில்லை. பிரகிருதியே இப்படி ஸ்ருஷ்டியாகப் பரிணமித்திருக்கிறது என்பது ஸாங்கியர் கொள்கை. இதற்குப் பரிணாமவாதம் என்று பேர்.

நையாயிகர்களின் அஸத்-கார்ய-வாதத்திற்கு மாறாக ஸாங்கியர் கொள்கை. இதற்குப் பரிணாமவாதம் என்று பேர். நையாயிகர்களின் அஸத்-கார்ய-வாதத்திற்கு மாறாக ஸாங்கியர்கள் ஸத்-கார்ய-வாதத்தைச் சொல்கிறார்கள். உபாதான காரணமான மண்ணிலே இல்லாத பானையை நிமித்த காரணமான குயவன் பண்ணினான் என்று அஸத்-கார்ய-வாதிகள் சொல்கிறார்களல்லவா?ஸத் கார்யவாதிகளான ஸாங்கியர்ள் "மண்ணுக்குள்ளே பானை முதலிலேயே இருக்கத்தான் செய்தது. எள்ளுக்குள்ளேயே இருக்கிற எண்ணெயைத்தானே வாணியன் செக்கிலே ஆட்டி வெளிக்கொண்டு வருகிறான்?அதுபோல மண்ணில் மறைமுகமாக இருக்கிற பானைதான் பிறகு காரியத்தால் வெளியிலேயும் பானையாக வருகிறது. மண்ணை உபயோகித்தால்தானே பானை வருகிறது?எள்ளை வைத்துப் பானை பண்ணை பண்ண முடியுமா?அல்லது மண்ணைப் பிழிந்து எண்ணெய் எடுக்க முடியுமா? பானையிலே இருப்பதனைத்தும் மண்ணின் அணுக்கள்தான். அந்த அணுக்களின் ரூபத்தை இப்படி ஒழுங்கு செய்ததால் பானை என்ற ஒன்று உண்டாயிருக்கிறது"என்பார்கள்.

நம் ஆசார்யாள், "ஆரம்ப வாதமுமில்லை. பரிணாம வாதமும் இல்லை. பிரம்மம்தான் மாயா சக்தியால் இத்தனை ஸ்ருஷ்டி மாதிரி வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறது. பரமாத்மக் குயவனுக்கு வேறாக ஒரு மண்ணே இல்லை. அதனால் ஆரம்பவாதம் சரிப்படாது. பரமாத்மா ஜகத்தாகப் பரிணமித்தது - பால் தயிராகப் பரிணமித்த மாதிரி என்றாலும் தப்பு. அப்படிச் சொன்னால் பால் தயிரானபின் தயிர் தான் இருக்குமே தவிர பால் இருக்காது. இம்மாதிரி பரமாத்மா ஜகத்து பரிணமித்தபின் இல்லாமல் போய் விட்டார் என்றால் அது மஹா

தப்பல்லவா?அதனால் பரிணாமமும் இல்லை. தான் தானாக சுத்த ஞான ஸ்வரூபமாக ஒரு பக்கம் இருந்துகொண்டே இன்னொரு பக்கம் மாயையால் ஜீவ-ஜகத்துக்களாகத் தோன்றுகிறார். இதெல்லாம் ஒரே ஸத்வஸ்துவின் தோற்றம்தான், வேஷம்தான்!ஒருத்தன் ஒரு வேஷம் போட்டுக் கொள்கிறான் என்றால் அப்பொழுது அவன் அவனாக இல்லாமல் போய் விடுகிறானா என்ன?அப்படித்தான் இத்தனையும் வேஷம், கண்கட்டு வித்தை!இத்தனையாலும் பாதிக்கப்படாமல் ஸத்வஸ்து ஏகமாக அப்படியே இருந்துகொண்டேயிருக்கிறது"என்று ஒரே அடியாக அடித்துவிட்டார். இதற்கு "விவர்த்த வாதம்"என்று பெயர்.

ஒரு கயிறானது பாம்பு மாதிரித் தோன்றுவது விவர்த்தம். கயிறு என்ற உபாதான காரணத்தை வேறு ஒரு நிமித்த காரணம் பாம்பாக மாறவில்லை. எனவே இது ஆரம்ப வாதம் இல்லை. கயிறு பாம்பாகப் பரிணமிக்கவுமில்லை; அதாவது transform ஆகிவிடவில்லை. கயிறு கயிறாகவே தான் இருக்கிறது. ஆனால் நம் அஞ்ஞான்தால் பாம்பு மாதிரித் தோன்றுகிறது. இப்படியே அஞ்ஞானம் அல்லது அவித்யை என்பதால் பிரம்மம் லோகவாகவும் தனித்தனி ஜீவர்களாகவும் நமக்குத் தெரிகிறது.

ஆசார்யாள் சொன்ன இந்த உண்மைக்குப் போவதற்கு நியாயத்தின் யுக்திவிசாரணை படி போட்டுக் கொடுக்கிறது. யுக்தியால் பதார்த்தங்களைத் தெரிந்து கொண்டு, அதிலிருந்து வைராக்யம் பெற்று, சுகதுக்கங்கள் இல்லாத வெறுமையான அபவர்க்கம் என்ற ஸ்தானத்துக்குப் போவதோடு நியாய-வைசேஷிகம் நிறுத்தி விடுகிறது. த்வைதத்தில் இதற்குமேல் போகமுடியாது. அத்வைதமாக ஒரே ஸத்தைப் பிடித்து அதுவே நாம் என்கிற போதுதான் நிறைந்த நிறைவான மோக்ஷம் கிடைக்கிறது. ஆனாலும் இப்போதிருக்கிற லோக வாழ்வோடு திருப்திபடாமல் இதற்கு மேலே ஒரு அபவர்க்கத்துக்குப் போக நியாயம் தூண்டி விடுகிறது என்பதே விசேஷந்தான்.

இந்த சாஸ்திரத்தின் இன்னொரு பெருமை, அது எத்தனை தினுசான யுக்தி உண்ட உண்டோ அத்தனையையும் கொண்டு வாதம் பண்ணி, பௌத்தர்கள், ஸாங்கியர்கள், சார்வாகர்கள் (எனப்படும் லோகாயதர்கள்) ஆகியோருடைய கொள்கைகளை ஆக்ஷேபித்து ஈச்வரன் என்ற கர்த்தா உண்டு என்று நிலை நாட்டியிருப்பதாகும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**நியாயம் : யுக்தி சாஸ்திரம்**

## சில கதைகளும் வாதங்களும்

அறுபத்து நான்கு வாதங்களை கங்கேச மிச்ரோபாத்யாயர் என்பவர் தம்து 'தத்வ சிந்தாமணி'யில் சொல்லியிருக்கிறார். இதுவரை தத்வ விஷயங்களில் மண்டையைக் குழப்பிக் கொண்டதால் இப்போத கொஞ்சம் கதை சொல்கிறேன். கங்கேசருடைய கதைதான்.

கங்கேசர் பூர்வத்தில் மஹா அசடாக இருந்தார். அவர் வங்காளத்தில் இருந்தவர். குலீன பிராம்மண குலத்தைச் சேர்ந்தவர். குலீனர் என்றால் நல்ல குலத்தில் உண்டானவர்கள் என்று அர்த்தம். நல்ல குலத்தில் பிறந்த இவர்களுக்கே மட்டமான பிராமணப் பெண்களையெல்லாம் கல்யாணம் செய்து கொடுத்து விடுவது வங்காளதேசத்து வழக்கம். அதனால் குலீனர் ஒருவர் ஐம்பது பேருக்கு மேல் கல்யாணம் பண்ணிக் கொள்வதுமுண்டு. கங்கேச மிச்ரர் ஒரு பெண்ணை மட்டும் கல்யாணம் பண்ணிக் கொண்டு மாமனார் வீட்டிலேயே இருந்தார். அசட்டுக்கு ஒரு பெண்ணுக்கு மேலே யார் கொடுப்பார்கள்?

வங்காளிகள் மத்ஸ்யம் சாப்பிடுவார்கள். வங்காளத்தில் ஆறு மாஸம் தேசமுழுவதும் பிரவாஹமாகவே இருக்கும். கறிகாய் போட இடமிருக்காது. அதனால் இந்த மாஸங்களில் மத்ஸ்யத்தை அவர்கள் உபோயகப்படுத்துவார்கள். கிழக்கு வங்காள தேசத்தார் அதை 'ஜல புஷ்பம்' என்றே சொல்லுவார்கள். அதாவது அது வெஜிடேரியன் உணவு என்று அர்த்தம்!

கங்கேசருடைய மாமனார் வீட்டில் அந்த ஸாமான் சமைப்பது வழக்கம். "மாப்பிள்ளை"என்று மரியாதையாகக் கூப்பிடாமல் கங்கேசரை "கங்கா"என்று எல்லோரும் கூப்பிடுவார்கள். அவர் அசடு என்பதால் அவர் இலையில் எலும்பை மட்டும் பரிமாறுவார்கள். மற்றவர்கள் இலையில் ஸத்தைப் பரிமாறுவார்கள். மற்றவர்கள் இலையில் ஸத்தைப் பரிமாறுவார்கள். பிறகு அவரை எல்லோரும் பரிஹாஸம் செய்வார்கள்.

அது அவருக்குப் பொறுக்கவில்லை. ஒரு நாள் ஒருவரிடமும் சொல்லாமல் காசிக்குப் போய்விட்டார். அங்கே போய்ப் பத்து வருஷம் படித்தார். வீட்டிலுள்ளவர்கள், அசடு எங்கேயோ போய்விட்டதென்று பேசாமல் இருந்து விட்டார்கள். அவர் படித்து விட்டு வீட்டுக்கு வந்தார். எங்கேயோ சுற்றி அலைந்து வந்திருக்கிறது, இன்னமும் அசடாகவே இருக்கும் என்று எல்லோரும் நினைத்தார்கள். வழக்கப்படி அஸ்தியை (மீன் எலும்பைப்) பரிமாறினார்கள். அப்பொழுது அவர் சொன்னார்:

"நாஹம் கங்கா:கிம்து கங்கேச மிச்ர:"

'நான் கங்கா அல்ல; கங்கேச மிச்ரனாக்கும்'என்று அர்த்தம். 'அசட்டு கங்காவாக இருந்தால் - கங்கையிலேதான் அஸ்தியை கரைக்கிறதாலே - எனக்கும்

அஸ்திபோடுவது நியாயந்தான்!ஆனால் இப்போது அந்த கங்கா பேருக்குப் பின்னாடி 'மிச்ரா'போட்டுக் கொள்கிற யோக்யதையோடு, படித்துப் பண்டிதனாகவும் வந்திருக்கிறேன்!'என்று ரத்தின சுருக்கமாகத் தெரிவித்து விட்டார்.

வேட்டகத்துக்காரர்களுக்கு அவர் பெருமை தெரிந்தது. அந்த கங்கேசமித்திரர்தான் பிறகு "நவ்ய ந்யாயம்"என்ற பெயரில் புத்துயிர் பெற்று எழுந்த ந்யாய சாஸ்திரத்தின் மூல புருஷராகித் 'தத்வ சிந்தாமணி'யை எழுதினவர். அதற்கு ரகுநாத சிரோமணி என்பவர் 'தீதிதி'என்று ஒரு வியாக்கியானம் எழுதியிருக்கிறார். அவர் காலத்திற்குப் பின்புதான் 'சிரோமணி' என்னும் பட்டம் வழக்கத்தில் வந்தது. கதாதரர் என்பவர் அதில் பத்து வாக்கியத்திற்கு வியாக்யானம் ஒரு பெரிய புஸ்தக ரூபமாக எழுதியிருக்கிறார். ஆனாலும் ஒரு வாக்கியங்கூட அதிகமாகத் தோன்றாது. 'கதாதரியில் (கதாதரர் எழுதிய புஸ்தகத்துக்கு 'கதாதரி'என்று பெயர்) ஐந்து வாதம் வாசித்தால் அவன் புத்திசாலியாவான்;பத்து வாதங்கள் வாசித்தால் இன்னும் கெட்டிக்காரனாகிறான்;அதில் ப்ராமாண்ய வாதம் என்ற ஒன்று இருக்கிறது;பிரமாணங்களைப் பற்றிய வாதமே ப்ராமாண்ய வாதம். அதை வாசித்தவன் எல்லோரையும் விடக் கெட்டிக்காரன் ஆகிறான்'என்று சொல்வதுண்டு. 'கதாதரி'யை இன்றும் தர்க்க சாஸ்திரம் படிப்பவர்கள் வாசித்து வருகிறார்கள்.

ப்ரமாண்ய வாதம் என்றேனே, அதைச் சொல்வதென்றால் மூளை குழம்பும். ஆனால் நம் ஆசார்யாள் அவதாரம் பண்ணிய காலத்தில் மண்டனமிச்ரரின் வீட்டு வாசலில் இருந்த கிளிகள்கூட இந்த பிராமாண்ய வாதத்தை 'டிஸ்கஸ்'பண்ணிக் கொண்டிருந்தனவாம்!

மண்டனமிச்ரரின் ஊரான மாஹிஷ்மதிக்கு சங்கர பகவத் பாதாள் போனால். அந்த ஊரில் நதியிலிருந்து தீர்த்தம் எடுத்துக் கொண்டு போகிற பெண்களைப் பார்த்து, "மண்டன மிச்ரரின் வீடு எங்கே இருக்கிறது?"என்று கேட்டார். அந்த ஊரிலே ஸாமான்ய ஸ்திரீகளுக்குக் கூட நிரம்பப் பாண்டித்யம் இருந்தது. அதனால் ச்லோக ரூபமாகவே ஆசாரியருக்கு அவர்கள் பதில் சொன்னார்கள். இப்படி மண்டனமிச்ரரின் வீட்டு அடையாளம் சொல்வதாக அந்தப் பெண்கள் சொன்ன ச்லோகங்களில் ஒன்று-

ஸ்வத:ப்ரமாணம் பரத:ப்ரமாணம்

கீரங்கனா யத்ர டச ஸங்கிரந்தே।

த்வாரஸ்த நீடாந்திர ஸந்நிருத்தா

ஜாநீஹி தன்-மண்டன பண்டிதௌக:।।

'ஆதிகாலத்தில் இந்தியாவில் புருஷர்கள்தான் படிப்பறிவு பெற்றிருந் தார்கள்;பெண்களை மட்டம் தட்டி நிரக்ஷரகுக்ஷிகளாகவே அடைத்து வைத்திருந் தார்கள்'என்று சொல்வது எவ்வளவு தப்பு என்பது இம்மாதிரியான நிகழ்ச்சிகளிலிருந்து தெரிகிறது. மனுஷப் பெண்கள் மட்டுமல்ல. கிளியிலே கூட பெண்களாக இருக்கப்பட்ட 'கீராங்கனா'க்களும் சாஸ்திர ஆராய்ச்சி பண்ணினவாம். அதைத்தான் ச்லோகம் சொல்கிறது.

'எந்த வீட்டு வாசலில் உள்ள பெண் கிளிகள் 'ஸ்வத:ப்ரமாணம் - பரத:ப்ரமாண ம்'என்பவை பற்றி வாதம் பண்ணிக் கொண்டிருக்கின்றனவோ, அந்த வீடுதான் மண்டன மிச்ர பண்டிதருடையது என்று தெரிந்து கொள்வீராக!என்பது ச்லோகத்தின் அர்த்தம்.

மேலே நான் சொன்ன ப்ராமாண்ய வாதத்தில்தான் இந்த 'ஸ்வத:ப்ராமண'மும் 'பரத:ப்ரமாண'மும் வருகின்றன. இத்தனை சொன்னபின் அது என்ன வாதம் என்றுதான் கொஞ்சம் பார்த்துவிடலாம். அதைப்பற்றி வேடிக்கையாக ஒரு கதை கூட உண்டு. நம் தென் தேசத்தவர்களில் ஒருவர் தர்க்கம் வாசிக்கலாமென்று வங்காளத்தில் உள்ள நவீத்பவத்துக்குப் போனாராம். வங்காளத்தில்தான் தர்க்கம் வாசித்தவர்கள் அதிகம். நம் ஊரிலிருந்து போனவர் மஹாகவி. தம்முடைய கவித்வத்தினால் நம் ஊரில நிறையப் பணம் ஸம்பாதித்தார். பின்பு பிராமாண்யவாதத்தை நேரே நவீத்வீபத்திற்குப் போய் வாசிக்கலாமென்று போனார். வாசித்தார். ஆனால் ஒன்றும் ஏறவில்லை. மேலும், பிரயத்னம் பண்ணிப் பார்த்தார். இதனால் அவருக்கிருந்த கவித்வ தாரை போய்விட்டது!தர்க்கத்தில் போய் முட்டிக் கொண்டதில் ஏற்கெனவே இருந்த கவித்வமும் போய்விட்டது. பணமும் போய்விட்டது. கவித்வமாவது இருந்தால் மறுபடி பணம் ஸம்பாதித்துக் கொள்ளலாம். அதுவும் போய்விடவே மிகவும் வருத்தப்பட்டார். பிராமாண்யவாதமும் வரவில்லை. ச்லோகம் பண்ணும் சக்தி கடைசியாக துளி மிஞ்சியிருந்ததைக் கொண்டு இப்படிப் புலம்பினாராம்:

நம:ப்ராமாண்ய வாதாய மத்-கவித்வ- (அ) பஹாரிணே।

'என்னுடைய கவிதா சக்தியை அபஹரித்த பிராமாண்ய வாதத்திற்கு நமஸ்கார ம்'என்பது அதனுடைய அர்த்தம்!

இந்தப் பிராமாண்ய வாதத்தைத்தான் மண்டனமிச்ரர் வீட்டுக் கிளிகள் பேசிக்கொண்டு இருந்தன. அந்த வாதத்தைப் பற்றி நாம் கொஞ்சம் விசாரிப்போம். ஒரு வஸ்துவைப் பார்த்தால் அதைப்பற்றிய ஞானம் உண்டாகிறது. சில ஞானங்கள் சரியாய் இருக்கின்றன. சில தப்பாய் இருக்கின்றன. ஸ்படிகத்தைக் கற்கண்டு என்று நினைக்கிறோம். அது தப்பான ஞானம். கற்கண்டைக் கற்கண்டாக நினைப்பது சரியான ஞானம். சரியான ஞானத்தைப் ப்ரமா (bhrama) என்று சொல்லுவார்கள். ஸம்சயஞானம் என்றும் நிச்சய ஞானம் என்றும் இரண்டு விதம்.

இது சரியான அறிவா என்ற ஐயத்துடன் கூடியது ஸம்சயஞானம். ஐயமில்லாமல் உறுதியுடன் அறிவது நிச்சயஞானம். சில சமயங்களில் ஒன்று தப்பாக தோன்றினாலும் அப்போதைக்கு நிஜமாகத்தான் தோன்றுகிறது. அப்பொழுது இந்த ஞானம் பிரமாணம்தான் என்று தோன்றும்- ஸ்படிகக் கற்கண்டு மாதிரி. சில ஞானங்கள் தோன்றும் பொழுதே பொய்யாகத் தோன்றுகின்றன. குளத்திற்குள் தலைகீழாகத் தெரிகிற மரத்தின் பிரதி பிம்பத்தை அறியும் பொழுதே அது நிஜமல்ல, அப்ரமாணம் என்றும் தோன்றுகிறது. ஞானம் வரும் பொழுதே பிரமாணம் என்று தோன்றுவதும் அப்ரமாணம் என்று தோன்றுவதும் ஆக இரண்டு வகை. வரும் காலத்திலே இது நிஜந்தான் என்று வருகிற ஞானம் பிராமாண்ய க்ரஹ ஞானம்;தோன்றும் பொழுதே அப்ரமாணம் என்று தோன்றுவது அப்ரமாண்ய க்ரஹ ஆஸ்கந்தித ஞானம். ப்ரமை (pramai)யில் போலவே ப் ரமை (bhramai) யிலும் பிரமாண ஞானம் உண்டு. அதனால்தான் ஸ்படிகத்தைக் கற்கண்டாக நினைக்கும்பொழுதும் நம்முடைய நினைப்பு பிரமாணமாகத் தோன்றுகிறது.

இப்படியாக ஒரு வஸ்து தோன்றும் போதே அது நிஜமானது (ப்ரமாணம்) அல்லது பொய்யானது (அப்ரமாணம்) என்றும் தோன்றுகிறதே, இந்த ப்ரமாண அப்ரமாண அறிவானது வஸ்துவைப் பார்க்கிற நம்முடைய ஞானத்திலிருந்து (subjective-ஆக) தோன்றுகிறதா, அல்லது (objective-ஆக) அந்த வெளி வஸ்துவிலிருந்து தோன்றுகிறதா?நம்மிலிருந்து தோன்றினால் 'ஸ்வத:ப்ரமாணம்'.

இந்த இரண்டில் எது சரி என்றுதான் மண்டனர் வீட்டுப் பெண் கிளிகள் வாதம் செய்தனவாம்.

நமக்கு உண்டாகும் ஞானம் பிரமாணமானது அல்லது அப்பிரமாணமானது என்று ஏற்படுகிற உறுதி நம் ஞானத்துள்ளேயே ஸப்ஜெக்டிவ்வாக இருப்பதில்லை. அது நாம் அறிகிற வஸ்துவிடமிருந்து நடைமுறையில் பிரயோஜனம் அடைய முடிந்தால்தான் நம்முடைய ஞானம் சரியானது அல்லது தப்பானது என்று ஆகிறது. அதாவது நம் ஞானம் சரியா தப்பா என்பது ஆப்ஜெக்டிவ்தான் என்பதே நியாய சாஸ்திரத்தின் கருத்து. மண்டனமிச்ரர் போன்ற மீமாம்ஸர்களின் அபிப்ராயமோ இதற்கு மாறானது. நம் ஞானம் பிரமாணமானது என்கிற உறுதி நம்முடைய அறிவையே சேர்ந்த விஷயந்தான்;ஆனால் நம் ஞானம் பிரமாணமில்லை (அப்ரமாணம்) என்று தெரிவது வெளிவஸ்துவைப் பொறுத்த விஷயம்- "ப்ராமாண்யம் ஸ்வத:அப்ரமாண்யம் பரத:"- என்பது அவர்கள் கட்சி.

இந்த வாதங்களெல்லாம் தர்க்கத்தில் வரும். "வாதம்"என்றாலே இந்தக் காலத்தில், தான் சொன்னதே சரியென்று பிடிவாதம் பண்ணுவது என்று தப்பாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். வாஸ்தவத்தில் வாதமென்பது நாமும் பேசி எதிராளியையும் பேசவிட்டு இரண்டையும் ஆலோசித்துச் சீர்தூக்கி உண்மையை

அறிவதுதான். அநேக இடங்களுக்குப் போய் மண்டனமிச்ரர் போன்றவர்களிடம் ஆசாரியாள் வாதம் செய்தார் என்பது செய்தார் என்பது இப்படித்தான்.

மற்றவன் சொல்கிறதையும் கேட்டே அவர் அத்வைதம் தான் சத்தியம் என்று முடிவு பண்ணினார். ஆகையால் வாதம் என்பது exchange of thoughts(பரஸ்பரக் கருத்துப் பரிவர்த்தனை) தான்;பிடிவாதம் இல்லை. நாம் சொல்வதே சரி என்று முதலிலேயே தீர்மானம் பண்ணிக்கொண்டு அதற்காகவே கட்சி கட்டிக் கொண்டு பேசுவதற்கு "ஜல்பம்"என்று பெயர்;"வாதம்"என்று இல்லை. மூன்றாவதாக இன்னொன்று இருக்கிறது:ஜல்பத்தில் உள்ள மாதிரி தனக்கென்று ஒரு கட்சி இல்லாமல், ஆனாலும் மற்றவர் எந்தக் கட்சியைச் சொன்னாலும் அதை ஆக்ஷேபித்து சண்டை போடுவதுதான் அது. அதற்கு 'விதண்டை'என்று பெயர். 'விதண்டாவாதம்'என்று இதிலிருந்துதான் வந்தது.

அசட்டு கங்கேசர் மஹாபுத்திமானாகி வங்காளத்துக்கு வந்ததிலிருந்து (கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து) நியாய சாஸ்திரம் புத்துயிர் பெற்றது. வங்காளத்தில் புதிதாக ஏற்பட்டு, பிற்பாடு விருத்தி அடைந்த இந்த சாஸ்திரத்துக்கு 'நவ்ய-ந்யாயம்'என்று பெயர் உண்டு. 'நவ்யம்'என்றால் 'புதிதான'என்று அர்த்தம். அந்தப் பெயர் ஏற்பட இன்னொரு காரணம் வங்காளத்தில் 'நவத்வீபம்'என்ற பாகத்திலேதான் கங்கேசரும், பிறகு அவரை அநுஸரித்து வந்தவர்களும் வாழ் ந்தனர். 'நவத்வீபம்'என்ப்தை 'நதியாத்'(nadiad)என்கிறார்கள். ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் அந்தச் சீமையில் பிறந்தவர்தான். சைதன்யரும் மஹாவித்வான்.சாஸ்திரங்களையெல்லாம் படித்தவர். அப்புறம் "கிருஷ்ணா கிருஷ்ணா'என்று ஸங்கீர்த்தனம் பண்ணிக்கொண்டு, இந்த பஜனைதான் மோக்ஷமார்க்கம் என்று ஸித்தாந்தம் செய்தார்.

லோகம் நிஜமானது, மாயை அல்ல, ஜீவாத்மாக்கள் பல உண்டு, பரமாத்மா வேறே என்கிற த்வைதமான அபிப்ராயங்களை நியாய சாஸ்திரம் சொன்னாலும், நிரீச்வர வாதத்தை ஆக்ஷேபித்து ஈச்வரனை நிலைநாட்டியதனாலும், அத்வைதமான யுக்திக்குப் போவதற்கு இதனுடைய வாதங்கள் அஸ்திவாரம் போட்டுக் கொடுப்பதாலும் உத்தமமான சாஸ்திரமாக இருக்கிறது.

நியாயம் நிரம்ப அறிவு வாதமுள்ள வேத உபாங்கமாக இருக்கிறதென்றால், இதற்கு அடுத்ததாகச் சதுர்தச வித்தைகளில் வருகிற 'புராண'த்தைத்தான் இக்காலப் படிப்பாளிகள் ஒரே 'superstitious' (மூட நம்பிக்கைகளின் மயமானது)என்கிறார்கள். அதைப் பற்றிக் கொஞ்சம் பார்க்கலாம்.

## புராணம்

### வேதத்தின் பூதக் கண்ணாடி

புராணம் என்பது வேதத்துக்குப் பூதக் கண்ணாடி. சின்னஞ்சிறியதாக இருப்பதை பூதக்கண்ணாடி. சின்னஞ்சிறியதாக இருப்பதை பூதக்கண்ணாடி நன்றாகப் பெரிசுப் பண்ணி காட்டுகிறதல்லவா?இம்மாதிரி வேதத்தில் சுருக்கமாக, சின்ன சின்னதாகப் போட்டிருக்கிற தர்மவிதிகளை கதைகள் மூலம் பெரிசு பண்ணிக் காட்டுவது தான் புராணம்.

ஒன்றைச் சுருக்கமாகச் சொன்னால் அது மனஸில் ஆழப்பதியாமல் போய்விடலாம். அதையே சுவாரஸ்யமான கதையாக விஸ்தாரம் பண்ணிச் சொன்னால் நன்றாக மனஸில் பதியும்.

'ஸத்யம் வத'(உண்மயே பேசு) என்று மட்டும் வேதம் சொல்கிறது. அப்படிப் பேசுவதால் எத்தனை பெருமை ஏற்படுகிறது என்பதை ஹரிச்சந்திரன் கதை பல அத்யாயங்களில் விஸ்தாரமாகச் சொல்கிறது. 'தர்மம் சர'(அறத்தைப் பின்பற்று) என்று இரண்டு வார்த்தையில் வேதம் சொன்னதை நீள நெடுக மஹாபாரதத்தில் தர்ம புத்திரரின் கதையாகச் சொல்லியிருக்கிறது. 'மாத்ரு தேவோ பவ',' பித்ரு தேவோ பவ'(அன்னை தந்தையை தெய்வமாகக்கொள்) என்ற வேத வாக்குக்கு ஸ்ரீ ராம சரித்ரம் பூதக்கண்ணாடியாய் இருக்கிறது. அடக்கம், பொறுமை, தயை, கற்பு முதலான அநேக தர்மங்களை வேதத்தில் - கட்டளையிட்டுள்ளவற்றை - புராண புருஷர்களும், புண்ய ஸ்திரீகளும் தங்களுடைய சரித்திரத்தின் மூலம் நன்றாகப் பிரகாசிக்கும்படிச் செய்திருக்கிறார்கள். அவற்றைப் படிப்பதாலும், கேட்பதாலும் இந்த தர்மங்களில் நமக்கு இந்த ஆழ்ந்த ஈடுபாடு உண்டாகிறது.

இவர்கள் எல்லாருக்கும் சோதனைகளும் கஷ்டங்களும் நிறைய வந்திருக்கின்றன. அநேக தப்பு தண்டாக்களைச் செய்கிற நம்மைவிட இந்த உத்தமமான புராண பாத்திரங்கள்தான் ஜாஸ்தி கஷ்டப்பட்டிருக்கிறார்கள். ரொம்பவும் பயங்கரமான சோதனைகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள். ஆனாலும் இவர்களுடைய சரித்திரத்தைப் படிக்கும்போது, "தர்மங்களை அநுஸரிப்பதனால் கஷ்டந்தானே ஏற்படுகிறது?ஆனால் அநுஸரிக்க வேண்டாமே!" என்று தோன்றுவதேயில்லை. அத்தனை கஷ்டத்திலும், சோதனையிலும் விட்டுக் கொடுக்காமல் அவர்கள் பாறாங்கல் மாதிரி தர்மத்திலேயே நிற்பதால் பெற்றிருந்த மனத் தெளிவுதான் நம் மனஸில் பதிகிறது. அதோடுகூட அந்த உத்தமர்கள் படும் கஷ்டங்களைக் கேட்கும்பொழுது நம் உள்ளம் உருகுவதாலேயே நம்முடைய அழுக்குகளையும் அலம்பிவிட்டாற்போல் இருக்கிறது. முடிவிலே அவர்களுக்கு ஏற்படுகிற பெரிய வெற்றியும் கீர்த்தியும் நமக்கு அந்த தர்மங்களில் கெட்டியான பிடிமானத்தை உண்டாக்கித் தருகின்றன.

## புராணம்

### புராணமும், சரித்திரமும்

நம் தேசத்தில் History (சரித்திரம்)இல்லை என்று ஒரு குறை சொல்லப்படுகிறது. புராணம் சரித்திரந்தான். ஆனாலும் இக்காலப் படிப்பாளிகள் கிறிஸ்துவுக்குப் பிற்பாடு ஒரு இரண்டாயிரம் வருஷத்துக்குள் நடந்தது தவிர மற்ற எதையும் - புராணங்களில் ஏதோ கொஞ்சம் உண்மை இருக்கலாம் என்று தங்கள் ஆராய்ச்சியில் தெரிவதாகச் சொல்லிக் கொண்டு, தங்களுக்குப் பிடித்த ஆரிய திராவிட பிரிவினைக் கொள்கை மாதிரியான பொய் விஷயங்களுக்கு மட்டும் புராணங்களில் ஆதாரம் இருப்பதாகக் காட்டிவிட்டு, பாக்கி அதில் வருகிற அற்புதமான விஷயங்கள் (miracles), அதீந்திரியமான விஷயங்கள் (supernatural)எல்லாம் கட்டுக் கதை, புளுகு மூட்டை என்று தள்ளி விடுகிறார்கள்.

புலன்களுக்கு அகப்படுகிற விஷயங்களுக்கு அப்பாற்பட்டதாக எதுவும் யதார்த்தத்தில் நடந்திருக்க முடியாது என்கிற தீர்மானத்தில் இவர்கள் இருப்பதால், 'மிஸ்டரி'(மர்மமான அதிசயங்கள்) நிறைய வருகிற புராணங்களை 'ஹிஸ்டரி' இல்லை என்று ஒதுக்கி விடுகிறார்கள்.

இப்போது தாங்கள் எழுதி வைத்திருக்கிற சரித்திரத்தை எல்லோரும் படிக்க வேண்டும் என்று ஸ்கூலிலேயே பாடமாக வைத்துவிட்டுப் புராணத்தைக் கழித்துக் கட்டுவது குழந்தைகளுக்கு நல்லது செய்வதாகாது. புராணங்கள் குழந்தைகளுடைய உள்ளத்தை நல்ல நெறிகளில் சேர்ப்பது போல சரித்திரத்தில் எதுவும் இல்லை.

சரித்திரம் படிக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. படிக்கத்தான் வேண்டும். புராணங்களும் சரித்திரம்தான். அதனால் அவற்றையும் படிக்க வேண்டும் என்கிறேன்.

ஏன் சரித்திரம் படிக்க வேண்டும் என்பதற்குச் சொல்கிற அநேக காரணங்களில் ஒன்று - "History repeats itself" என்பது. சரித்திரம் திரும்பத் திரும்ப ஒரே மாதிரி நடக்கிறது என்கிறார்கள். அதனால் பூர்வத்தில் எப்படி நடந்தது என்று தெரிந்து கொண்டால் அதிலிருந்து இனி எப்படி நடக்கும் என்று தெரிந்து கொள்ளலாம். பூர்வத்தில் நடந்ததிலிருந்து எதிர்காலத்துக்குப் படிப்பினைப் பெறலாம்.

இப்படியிப்படிச் சூழ்நிலை உருவாகிக் கொண்டு போனால் யுத்தம் ஏற்படும், ஜனங்களின் வாழ்வு கெட்டுப் போகும், ஒரு பெரிய நாகரிகமே விழுந்து விடும் என்பது சரித்திரத்தைப் பார்க்கும்போது தெரிகிறது. இதனால் அதே மாதிரியான சூழ்நிலைகள் இப்போது உருவானால் அவற்றை முதலிலேயே உஷாராக இருந்து தடுத்துவிட வசதியாக இருக்கும். இது சரித்திரத்தின் ஒரு பிரயோஜனம் என்கிறார்கள்.

கல்பத்துக்குக் கல்பம் ஒரே மாதிரியாக ஸம்பவங்கள் நடக்கின்றன;ஒவ்வொரு கல்பத்திலும் ராமாயணம், பாரதம், பாகவதம், தசாவதாரம் மற்றும் எல்லாப் புராணங்களும் நடக்கின்றன என்று நம் சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதைத்தான் History repeats itself என்று கொஞ்சம் மாறுதலான அபிப்ராயத்தோடு சொல்லுகிறார்கள்.

ஆனாலும் நடைமுறையில் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிற ஹிஸ்டரியைப் பார்த்து யாராவது எந்தப் படிப்பினையாவது பெறுகிறார்களா என்று பார்த்தால் அதுதான் இல்லை!செங்கிஸ்கான், தைமூர், கஜினி, மாலிக்காஃபூர் போலப் பலபேர் அவ்வப்போது தோன்றி தேசங்களைச் சூறையாடி ஹதாஹதம் செய்திருக்கிறார்கள் என்று சரித்திரத்திலிருந்து தெரிகிறது. தெரிந்து கொண்டால் மட்டும் இப்படிப்பட்ட வெறிப் போக்குகளை நிறுத்த முடிந்திருக்கிறதா என்ன?இவர்கள் மாதிரியே ஒரு ஹிட்லரும் முஸோலினியும் வந்து மறுபடி ஹதாஹதம் செய்கிறார்கள். இன்னும் கிட்டத்தில் பிரத்தியக்ஷமாகவே பார்க்கிறோம் - ஒரு லஞ்சம், 'கரப்ஷன்'வேண்டியவர்களுக்குப் பட்சபாதம் காட்டுவது, வேலை கொடுப்பது என்றெல்லாம் ஒரு ராஜாங்கத்தார் பண்ணினால் அதற்கு ஜனங்களின் ஆதரவு போய்விடுகிறது என்று எலெக்ஷனில் தெரிகிறது. அப்புறம் வேறே சிலர் ராஜாங்கத்தை அமைக்கிறார்கள். ஆனால் படிப்பினை ஒன்றும் பெற்றதாகத் தெரியக் காணோம்!அதே தோஷங்களை இவர்களும் செய்ததாக ஏற்பட்டு, அடுத்த எலக்ஷனில் அதே கதி இவர்களுக்கும் உண்டாகிறது. ஒரு குறுகிய காலத்துக்குள்ளேயே இப்படி ஏற்படுகிறது. ஆகையால் repeats itself என்று தெரிந்து கொண்டு விடுவதால் மட்டும் அதிலிருந்து நல்ல பாடம் எதையும் படிக்கமுடியவில்லை என்று தெரிகிறது. 'ரிபீட்'ஆகாமல் ஹிஸ்டரியை நிறுத்தும்படிச் செய்வதற்கு அதில் எதுவும் இல்லை.

தர்மத்தை நாம் ஏற்கும்படியாகச் சரித்திரத்தோடு குழைந்து கொடுத்தால்தான் அது நம்மை நல்வழிப்படுத்தித் தப்பான ஸமாசாரங்கள் 'ரிபீட்'ஆகாமல் செய்ய உபாயமாகும். புராணம் இதைத்தான் செய்கிறது. சரித்திரத்தில் வெறுமே காலவாரியாக ராஜாக்களின் வரலாற்றைத்தான் தந்திருக்கிறது. இதிலே கொடுங்கோலர்கள் கெடுதல் அடைந்தார்களா, உத்தமமான ராஜாக்கள் உயரந்த கதியைப் பெற்றார்களா என்பதற்கு முக்யமில்லை. கர்ம நியதிப்படி ஈச்வரன் இவர்களுக்குத்தான் இப்படிப்பட்ட பாப புண்ய பலன்களைக் கொடுத்துத்தான்

இருப்பார். ஆனால் அது இந்த ஜன்மாவிலேயே கொடுக்கப்பட வேண்டும் என்பதில்லை அல்லவா?பின் ஜன்மாக்களில் இந்தப் பலன்கள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் இதை விசாரிப்பது ஹிஸ்டரியின் காரியமில்லை. விசாரித்து அறிகிற சக்தியும் சரித்திரக்காரார்களுக்குக் கிடையாது. ஒரு கஜினியோ, ஹிட்லரோ இந்த பூமியில் வாழ்ந்தவரை கொடி கட்டித்தான் பறந்தார்கள் என்றாலும் உயிர்போனபின் அவர்களுக்கு நரக வாஸம் கிடைத்தது;அல்லது ரொம்பவும் நீசமான மறு ஜன்மா ஏற்பட்டது என்றால் இதையும் புராணம் விசாரித்துச் சொல்லும். புராண கர்த்தாக்களுக்கு அந்த சக்தி உண்டு;இதைச் சொல்கிற லக்ஷ்யமும் உண்டு. ஹிஸ்டரி நிபுணர்களுக்கு இந்த இரண்டும் இல்லை. அதனால்தான் ஹிஸ்டரியில் பார்க்கிறவர்களில் அநேகரின் ஜீவிதத்திலிருந்து பாப புண்யங்களைப் பற்றி நாம் படிப்பினை பெற முடிவதில்லை.

புராணமும் சரித்திரந்தான் என்றாலும் அது பாப-புண்யங்களில் ஜனங்களுக்கு பாடம் கற்பித்து அவர்களை தர்மத்தில் செலுத்தும்படியான வரலாறுகளை மட்டும் 'ஸெலக்ட்'பண்ணிக் கொடுக்கிறது. தர்மசாலிகளாக இருந்ததால் அந்த ஜன்மாவிலேயே உயர்வை அடைந்தவர்கள் யாரோ, தர்மத்தை விட்டதால் அந்தப் பிறவியிலேயே கெடுதலை அடைந்தவர்கள் யாரோ, அப்படிப்பட்டவர்களின் கதைகளையே புராணங்கள் பெரும்பாலும் 'ஸெலக்ட்'பண்ணி நமக்குக் கொடுக்கின்றன. இல்லாவிட்டால் அடுத்த ஜன்மாக்களைச் சொல்லி அதில் பாத்திரங்கள் பாப-புண்ய பலன்களை அடைந்ததைச் சொல்லும். பாப-புண்ய பலன்களில் நம்மைச் சேர்க்காத புராணக் கதை எதுவுமே கிடையாது. ஆகையால், "பழைய சரித்திரங்களைப் படிப்பதனால் அந்தப் பழைய அநுபவங்கள் இனிமேல் நடக்க வேண்டியதற்கு வழிகாட்டியாக இருக்கும். நல்லவர்களாக இருந்து நல்ல காரியங்களைச் செய்து நன்மையை அடைந்தவர்களுடைய சரித்திரங்களை நாம் படித்தால் நாமும் அப்படியிருக்க ஒரு தூண்டுகோலாக இருக்கும். கெட்டவர்களாக இருந்து உலக க்ஷேமத்துக்குக் கேடு பண்ணிக்கொண்டு முடிவில் தாங்களே அதைவிடக் கஷ்டம் அடைந்தவர்களுடைய கதைகளைப் படிப்பதால் நாம் அந்த வழியில் போகாமல் லகானை இழுத்த மாதிரி இருக்கும்"என்பதாகச் சரித்திரப் படிப்புக்குப் பிரயோஜனம் சொல்வதானால், இந்தப் பிரயோஜனத்தை வாஸ்தவத்தில் தற்கால ஹிஸ்டரியால் அடைய முடியவில்லை. புராணத்தில்தான் அடைய முடிகிறது.

'நல்லது கெட்டவைகளைப் பற்றி நமக்கு ஒருவிதமான பாடமும் கற்பிக்காமல் வெறுமே காலவாரியாக பல ராஜாக்கள் ஆண்டதையும் சண்டை போட்டதையும் வளர்த்திச் சொல்லவேண்டியதில்லை. நாம் வாழ்க்கையில் எடுத்துத் கொள்ளும்படியான உபதேசம் இல்லாத சரித்திரம் நமக்கு வேண்டாம். ஆத்மலாபமான சரித்திரங்களையே சொல்வோம்'என்ற அபிப்ராயத்தோடு புராணங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

சந்திர வம்சம், சூரிய வம்சம் என்பது போலப் புராணங்களிலும் ராஜாக்களின் பரம்பரை முழுக்கச் சொல்லியிருக்கும். இவனுக்குப் பின் இவன் என்று பெரி லிஸ்ட் கொடுத்திருக்கும். ஆனால் அவர்களில் நாம் நல்வழிப்படப் பிரயோஜனப் படாதவர்களின் கதையை ஒரு வரி, இரண்டு வரியில் சொல்லி முடிந்திருக்கு ம்;அல்லது பேரை மட்டும் சொல்லி விட்டிருக்கும். நாம் படிப்பினை பெறும்படியானவர்களின் சரித்திரங்களையே விஸ்தாரமாகச் சொல்லியிருக்கும். உதாரணமாக த்ருவனின் (துருவனின்) அப்பாவான உத்தானபாதன், த்ருவனுக்கு அப்புறம் அரசாண்ட அவனுடைய பிள்ளை இவர்களைப் பற்றியும் பாகவத புராணத்தில் சொல்லியிருக்கிறது. ஆனால் ஏதோ இரண்டு வரி, நாலு வரிதான் இருக்கும். பக்தி, விடாமுயற்சி, மனவுறுதி முதலியவற்றுக்குப் பாடமாக உள்ள த்ருவ சரித்ரத்தை மட்டும் ஸவிஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறது.

புராணம் பொய்யென்று இங்கிலீஷ்காரர்கள் சொல்லி நம்முடைய தேசத்தின் ஹிஸ்டரியை எழுதினார்கள். அதிலே தங்களுக்குப் பிடித்த divide-and-rule (பிரித்து ஆளும்)கொள்கைகக்கு ஸாதகமான ரேஸ் தியரி முதலான அநேக விஷயங்களை ரொம்பவும் நடுநிலையிலிருந்து ஆராய்ச்சி பண்ணினது போலவே காட்டிச் சேர்த்துவிட்டார்கள். புராணம் பொய்யென்று இவர்கள் சொன்னார்கள் என்றால், இப்போது இவர்கள் எழுதிய சரித்திரத்திலும் பொய் இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு உள்ளது உள்ளபடி இந்திய சரித்திரத்தை எழுதுவதற்கு (reconstruct செய்வதற்கு) முயற்சிகள் நடக்கின்றன. இப்படிச் செய்கிறவர்களுக்கும் அநேக கொள்கைகளில் வேண்டியது-வேண்டாததுகள் (prejudice-கள்)இருக்கலாம். அதனால் என்னதான் நடுநிலையிலிருந்து எழுதுவதாகச் சொன்னாலும், எவ்வளவு தூரத்துக்கு முழுக்க நிஜமான சரித்திரம் உருவாகும் என்று சொல்வதற்கில்லை.

பதினெட்டுப் புராணங்களை எழுதிய வியாஸாசாரியாள், அநேக ஸ்தல புராணங்களை எழுதிய பெரியவர்கள், பக்தர்களின் சரித்ரங்களை எழுதிய சேக்கிழார் முதலியவர்கள்தான் வாஸ்தவத்தில் விருப்பு வெறுப்பில்லாமல் எழுதினவர்கள்.

ஸாம்ராஜ்யங்கள், சண்டை, படையெடுப்புக்கள், ராஜவம்சங்கள் இவைதான் சரித்திரம் என்று நினைப்பது ஸரியில்லை. எல்லா விஷயங்களுக்கும் சரித்திரம் உண்டு. அரசியல் சரித்திரத்தை மட்டும் ஹிஸ்டரியில் பிரதானமாக வைத்து விட்டார்கள். தர்ம விஷயங்களைப் பிரதானமாக வைத்து அதற்கு ராஜவம்சத்தை மட்டுமின்றி மற்ற புண்ய புருஷர்கள், ரிஷிகள், ஸாமானிய ஜனங்கள் முதலியோரின் கதைகளையும், மற்ற எல்லா விஷயங்களின் சரித்திரத்தையும் துணையாக சேர்த்துத் தருவனவாகப் புராணங்களில் இருக்கின்றன. புராணங்களைப் பார்த்தால் அந்தக் கால அரசியல் மட்டுமின்றி cultural life(கலாச்சார வாழ்வு), அக்கால வித்தைகள், ஸயன்ஸ்கள் எல்லாவற்றையும்

பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது. அவற்றில் முக்யமாக சொல்லப்படுவதோ தர்மங்களும் ஆத்யாத்மிக க்ஷேமமாகும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## புராணம்

### புராணங்கள் பொய்யா, உருவகமா ?

புராணத்தை நம்ப முடியாது என்று சொல்லி அதற்குக் காரணம், 'அதிலே இப்பொழுது நாம் பார்க்கிற யதார்த்த நிலவரங்களுக்கு வேறான விஷயங்கள் இருக்கின்றன'என்கிறார்கள். தேவர்கள் வந்தார்கள், போனார்கள், வரம் கொடுத்தார்கள் என்றால் அதெல்லாம் இந்தக் காலத்தில் நடக்காததால், புரளி என்று தோன்றுகிறது. பெண்ணைக் கல்லாகச் சபித்தார்கள், கல்லைப் பெண்ணாகும்படி வரம் கொடுத்தார்கள், சூரியன் உதிக்காமல் நிறுத்தி வைத்தார்கள் என்றெல்லாம் பார்த்தால் - இதெல்லாம் நம் சக்தியில் இல்லாத காரியங்களாக இருப்பதால் 'வெறும் புரட்டு'என்று நினைக்கத் தோன்றுகிறது.

இந்தக் காலத்தில் முடியவில்லை, இந்தக் காலத்தில் நடக்கவில்லை என்பதற்காக எந்தக் காலத்திலும் நடக்கவில்லை, நடக்கமுடியாது என்று எப்படிச் சொல்லலாம்?வேத மந்திர சக்தியும், உயர்ந்த தபஸூம், யோகாநுஷ்டானமும் பூர்வத்தில் நிறைய இருந்தன என்பதற்கு எந்தப் பழைய புஸ்தகத்தைப் பார்த்தாலும் நிறைய ஆதாரம் இருக்கிறது. இவை இருந்த மட்டும் தேவசக்திகளெல்லாம் இந்த லோகத்திலனராலேயே ஸூலபமாக கிரஹிக்கும்படி இருந்திருக்கின்றன. வெளிச்சம் இருந்தால் கூடவே நிழலும் இருக்கும் என்கிற ரீதிப்படி தேவசக்திகளைப் போலவே அஸூர ராக்ஷஸ சக்திகளும் ஸ்தூலமாகத் தெரிகற மாதிரி லோகத்தில் இருந்திருக்கிறார்கள். இப்போதும் தேவாஸூர யுத்தம் முதலாநவை மநுஷ்யனின் கண்ணுக்குத் தெரியாமல் (நல்லது கெட்டதுகளின் மோதலாக) நடந்த கொண்டேதான் இருக்கிறது. அந்தக் காலத்தவர்களுக்கு இந்த நல்ல சக்திகளையும் கெட்ட சக்திகளையும் தபோ சக்தியால் கண்கொண்டு பார்க்க முடிந்தது. எல்லா விதமான light wave களும் (ஒளி, ஒலி அலைகளும்) மநுஷ்யக் கண்ணின் லென்ஸூக்கு அகப்பட்டு விடாது என்று விஞ்ஞானிகளே சொல்கிறார்கள். அதில் சில விஞ்ஞானிகள் இன்னும் ஒரு படி மேலே போய் occult என்கிற இயற்கைக்கு அதீதமான மர்ம சக்திகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து, 'தேவதைகள் இருக்கின்றன;நல்ல தேவதைகள், துர்த்தேவதைகள் எல்லாம் இருக்கின்றன'என்றுகூட எழுதி வைத்திருக்கின்றார்கள்.

இப்போதும் அநேக யோகிகள், ஸித்த புருஷர்கள் இருக்கிறார்கள். ஐஸில் கிடந்தாலும் நெருப்பில் கிடந்தாலும் அது அவர்களுடைய சரீரத்தை பாதிப்பதில்லை. மழையை வரப்பண்ணுகிறார்கள்;பெய்கிற மழையை நிறுத்தவும் செய்கிறார்கள். இப்படிப் பலர் அதீந்திரயமான சக்தியோடு இருந்துகொண்டுதான் இருக்கிறார்கள். நமக்குத்தான் எதிலும் நம்பிக்கையில்லை எல்லாவற்றிலும் ஸம்சயம் பூர்வ காலத்தில் இப்படிப்பட்ட விசேஷ சக்திகளை இன்றைவிட ஏராளமானவர்கள் பெற்றிருந்தபடியால்தான் புராணங்களைப் பார்த்தால் ஏகப்பட்ட 'மிராகிள்'களை சொல்வதாக இருக்கிறது.

மிராகிள் வந்தால் ஹிஸ்டரி இல்லை என்று ஒதுக்கி விடுகிறார்கள். கூன் பாண்டியனுக்குப் பஞ்சாக்ஷர பஸ்மாவின் மகிமையால் ஞான ஸம்பந்தர் வெப்பு நோயை நீக்கினார், கூனை நீக்கி 'நின்றசீர் நெடுமாறன்'ஆக்கினார் என்றால் அதை ஹிஸ்டரியாகச் சேர்ப்பதற்கில்லை என்கிறார்கள். ஆனாலும் இப்படியொரு பல்லவ ராஜாவும், பாண்டிய ராஜாவும் நாற்பது ஐம்பது வருஷங்களுக்குள் ஜைனமதத்தை விட்டு வைதிகத்திற்கு மாறினான் என்றால் அதை ஹிஸ்டரியாக எடுத்துக் கொள்ள முடியாது என்கிறார்கள். ஆனாலும் இப்படியொரு பல்லவ ராஜாவும், பாண்டிய ராஜாவும் நாற்பது ஐம்பது வருஷங்களுக்குள் ஜைனமதத்தை விட்டு சைவத்துக்கு வந்திருக்க வேண்டுமென்பது மட்டும் மற்ற circumstantial evidence (ஸந்தர்ப்ப ஸாக்ஷியம்) எல்லாவற்றையும் பார்த்தால் உறுதியாகத் தெரிகிறது. ஆறு ஏழாம் நூற்றாண்டுகளில், தமிழ்நாட்டில் சமண மதம் வெகுவாக நலிவடைந்து வைதிக மதம் (குறிப்பாக சைவம்) பிரகாசமாக ஜொலிக்க ஆரம்பித்திருக்கிறது என்று சரித்திர நிபுணர்களே ஒப்புக்கொள்ளும்படித் தெரிகிறது. இப்படி ஒரு பெரிய மாறுதல் நடக்க வேண்டுமானால் அதற்குக் காரணமாக அப்பர் ஸ்வாமிகளின் கதையிலும் ஞானஸம்பந்தர் கதையிலும் வருகிற மாதிரியான அற்புதங்கள் நடந்திருக்கக்கூடும்தான் என்பதை எப்படி ஆக்ஷேபிக்கலாம்?இந்த விஷயங்களை அந்த ராஜாக்கள் கல்வெட்டிலோ செப்பேட்டிலோ எழுதி வைக்கவில்லை என்பதால் அவை நடக்கவில்லையென்று சொல்லி விடலாமா?

ராமாநுஜாசாரியார் கன்னட தேசத்தை ஆண்டு கொண்டிருந்த ஜைனனான பிட்டி தேவன் என்ற ஹொய்ஸள வம்ச ராஜாவுடைய பெண்ணுக்குப் பிடித்திருந்த பேயை ஒட்டினதாலேயே அவன் ஜைனத்தை விட்டு வைஷ்ணவனானான் என்று குரு பரம்பரைக் கதையிலிருந்து சொல்கிறார்கள். சரித்திரக்காரர்கள், 'பேய் ஒட்டுகிற ஸமாசாரத்தையெல்லாம் எடுத்துக் கொள்ள மாட்டோம்'என்கிறார்கள். ஆனாலும் ராமாநுஜர் ஜீவித்த பதினொன்றாம் நூற்றாண்டில் கன்னட ராஜ்யத்தில் ஜைனம் மங்கி வைஷ்ணவ வழிபாடு, கோவில் முதலியன அதிகமானதையும், பிட்டி தேவனே பிற்பாடு விஷ்ணுவர்த்தன தேவன் என்று பெயர் பெற்றதையும் சரித்திரத்தில் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இது குரு பரம்பரைக் கதையில் சொன்னதன் விளைவாகவே இருக்கலாம் என்பதை எப்படி ஆக்ஷேபிக்க

முடியும்?

இங்கிலீஷ் படிப்புப் படித்து விட்டதால், ஸயன்ஸில் நிரூபிக்க முடியாததெல்லாம் புரளியென்று சொல்லிப் புராணங்களைத் தள்ளுவது கொஞ்சங்கூட சரியான மனப்பான்மையாகாது.

இப்போதுங்கூட அங்கங்கே பத்துப் பன்னிரண்டு அடி நீளமுள்ள மனித எலும்பக் கூடுகள், புராண வர்ணனைப்படியான - தற்போது இல்லாத - பெரிய பெரிய மிருகங்களின் எலும்புக் கூடுகள் அகப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. இதைப் பார்த்தால் பனை மர, தென்னை மர உயரமுள்ள ராக்ஷஸர்கள், சிங்கம் மாதிரியான உடம்பும் யானை மாதிரியான தும்பிக்கையும் கொண்ட யாளி போன்ற மிருகங்கள் பூர்வத்தில் இருந்திருக்கக் கூடுமென்றே ஏற்படுகிறது. காலெலும்பு மாத்திரம் பதினாறு அடி நீளமுள்ள ஒரு மநுஷ்ய எலும்புக்கூடு, யானையைப் போல பத்து மடங்குகள் உள்ள ஒரு மிருகத்தின் எலும்புக்கூடு முதலானதுகளை ஐஸ்பெர்க்கில் ஆர்க்டிக் ரீஜனில் பனிக்கட்டிக்குள்ளிருந்து கண்டுபிடித்திருக்கிறார்கள். இதைப் பெரிய archelogical find (புதைபொருள் கண்டுபிடிப்பு) என்று கூத்தாடினார்கள். ஆர்க்கியாலஜியோடு, ஜியாலஜி (பூ-இயல்) யையும் சேர்த்து, இவை இத்தனை லட்சம் வருஷத்திற்கு முன் இருந்தவை என்கிறார்கள். இதோடு 'மைதாலஜி'(புராண இயல்) யையும் சேர்த்தால் நம்முடைய பழைய கதைகள் நிஜந்தான் என்றாகிவிடும்.

ஒரு காலத்தில் பனை மர உயர ஆள், இப்போது ஆறடி உயர ஆசாமி, வேறொரு காலத்தில் அங்குஷ்டப் பிரமாண (கட்டை விரல் அளவேயான) ஆள் என்றிப்படி கால வித்யாஸத்தில் பல தினுஸாக ஆகிறது. ஜீவராசிகள், படைப்பினங்களும் மாறுகின்றன. இந்த வித்யாஸங்களையும் புராணங்கள் சொல்லுகின்றன.

"வானரர்கள் என்று குரங்கு மநுஷ்யர்களாம்!மிருகத்தின் உடம்பும் மநுஷ்ய முகமுமாம்!இரண்டு தலை, பத்துத் தலைக்காரர்களாம்!எல்லாம் வெறும் பொய்"என்று புராணங்களைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். அல்லது இப்படித் திட்டாதவர்களும். "இதெல்லாம் ஒவ்வொரு symbol(தத்வ ரூபகம்). தத்துவங்களைத்தான் பாத்திரங்களைக் கொண்டு விளக்கியிருக்கிறது;allegorical representation"என்கிறார்கள்.

கதாத்வாரா (கதை மூலமாக) தத்வமும் போதிக்கப் படுவது வாஸ்தவம்தான். அதற்காகக் கதையைப் பொய்யென்று சொல்ல முடியாது. இப்போது கூட எப்போதேனும் நியூஸ் பேப்பரில் பார்க்கிறோம் - இரண்டு தலையும் நாலு கையுமாக ஒரு குழந்தைப் பிறந்தது; மிருகத்திலும் சேராமல் மநுஷ்ய இனத்திலும் சேராமல் நடுவாந்தரமாக ஒரு விசித்திரக் குழந்தை பிறந்தது - என்றிப்படி! freak என்று இதைச் சொல்கிறார்கள். தப்பவே முடியாத இயற்கையும் கொஞ்சம் தப்பிப்

போவதைத்தான் freak என்கிறார்கள். இப்பொழுது freak ஆகச் சொல்லப்படுவதே பூர்வகாலங்களில் ஒரு உத்தேசத்தோடு இப்போதை விட அதிகமாகவும் ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கலாம். இக் காலத்தில் நமக்கிருப்பதைவிட அதிகமாக அவர்களுக்கு இயற்கைக்கு அதீதமான சக்திகள் இருந்ததால் இயற்கையிலும் இப்படிப்பட்ட அதிசயப் பிறப்புக்கள் அதிகம் நேர்ந்திருக்கலாம். அதனால் இப்போதுள்ள நமக்குத் தெரிவதுதான் ஸகலமும், இதற்கு வித்யாஸமாக எதுவும் இருந்திருக்க முடியாது'என்று நாம் ஆக்ஷேபிப்பதற்கே இல்லை.

நமக்குத் தெரியாதது, தெரிய முடியாதது எல்லாவற்றுக்கும் பொய்யென்று பெயர் வைத்து விடுவது நியாயமில்லை. புராணத்திலே நம்பமுடியாதது என்று நாம் தள்ளிவிடுகிற ஒன்றே அவ்வப்போது நம் காலத்தில் நடந்துவிடுகிறது. பூர்வ ஜன்மத்தைச் சொல்வது முதலான அதிசயங்கள் இப்போதும் நியூஸ் பேப்பர்களில் வந்து கொண்டேதான் இருக்கின்றன. அதுவும் ஸமீப காலமாக இம்மாதிரி அதிசயச் செய்திகள் அதிகமாக வந்து கொண்டிருக்கின்றன. ஒன்று சொல்கிறேன்.

புராணத்தில், 'காச்யபருக்கு கத்ரு என்று ஒரு பத்தினி இருந்தாள். அவளுக்குப் பாம்புகள் குழந்தையாகப் பிறந்தன என்று பார்த்தால் உடனே இதனெல்லாம் ஒரே அஸம்பாவிதம் என்று தள்ளிவிடுகிறோம். ஆனால் போன வருஷம் (1958) பேப்பரிலேயே (செய்தித்தாள்) வந்ததை ரொம்பப் பேர் பார்த்திருப்பீர்கள். ஒரு மார்வாடிப் பொண்ணுக்கு பாம்பு பிறந்தது என்று அந்த 'ந்யூஸ்'இருந்தது. அதைப் பார்த்த போது தான் எனக்கே இந்த மாதிரி இன்னொரு விஷயம் உறுதிப்பட்டது .

நான் ஸ்வாமிகளாக ஆகிறதற்கு முந்தி ஒரு குடும்பத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த வீட்டில் பிறந்த பெண்களும் ஸரி, அந்த வீட்டுப் பிள்ளைகளுக்கு வாழ்க்கைப்படுகிற பெண்களும் ஸரி, தாழம்பூ வைத்துக் கொள்ளப்பட்டார்கள். பின்னாளில் நான் ஸ்வாமிகளான அப்புறம் அவர்களிடம் ஏனென்று கேட்டபோது அவர்கள் ஒரு கதை சொன்னார்கள். கதையென்றால் இட்டுக் கட்டினது இல்லை.

"பத்துப் பதினைந்து தலைமுறைகளுக்கு முன்னாடி எங்கள் குடும்பத்தில் ஒரு பெண்ணுக்கு பாம்பு குழந்தையாகப் பிறந்து விட்டது. இதை வெளியில் சொல்லிக் கொள்ள வெட்கம். ஆனாலும் வீட்டோடு வளர்த்து வந்தார்கள். பாம்புக்குப் பால் போட்டி (புகட்டி) குழந்தை மாதிரியே வளர்த்தார்கள். அதுவும் யாருக்கும் ஹிம்ஸை பண்ணாமல் தன்பாட்டுக்கு வீட்டோடு விளையாடிக் கொண்டிருந்ததாம். இந்த விசித்திர குழந்தையை எங்கேயும் எடுத்துக் கொண்டு போக முடியவில்லை, விட்டு விட்டும் போக முடியவில்லையென்பதால் அம்மாக்காரி ரொம்ப அவசியமானால் ஒழிய எங்கேயும் வெளியே போகவே மாட்டாள். 'கல்லானாலும் கணவன்'என்கிற மாதிரி 'பாம்பானாலும் குழந்தை'தானே?அந்த வாத்ஸல்ய ம்!எங்கேயும் போக மாட்டாளாம். ஆனால் ரொம்பவும் நெருங்கின பந்துக்களின் கல்யாணமொன்று வந்தபோது அவளால் போகாமல் இருக்க முடியவில்லை.

"அப்போது வீட்டில் ஒரு வயசான கிழவி இருந்தாள். (அவள் பாம்புக் குழந்தையின் பாட்டியின் பாட்டியா என்பது தெரியவில்லை. அந்தக் காலத்தில் தூர பந்துக்களில்கூட நாதியற்றவர்களை வைத்துப் பராமரிக்கிற நல்ல பழக்கம் இருந்து வந்தது. இப்போதுதான் தாயார் தகப்பனாரோடேயே சேர்ந்தில்லாமல் தனிக்குடித்தனம் போகவேண்டுமென்று நவீன நாகரீகத்தில் பறக்கிறார்கள். முன்னெல்லாம் அவிபக்த குடும்பம்தான் (joint family). அதிலே யாராவது ஒரு அத்தை பாட்டி, ஒன்று விட்ட சின்ன தாத்தா என்று வைத்துக் கொண்டு ரக்ஷிப்பார்கள். இந்த கதை நடந்த அகத்தில் ஒரு கிழவி இருந்தாள்) அவளுக்குக் கண் தெரியாது.

"அந்தக் கிழவியின் பாதுகாப்பில் பாம்புக் குழந்தையை விட்டுவிட்டு அதன் தாயார் தவிர்க்க முடியாத நிலைமையில் வெளியூருக்குப் போனாள்.

"பாம்புக்கு விசேஷமாக என்ன செய்ய வேண்டும்?குளிப்பாட்ட வேண்டுமா?தலை வார வேண்டுமா?சட்டை போட வேண்டுமா?இல்லாவிட்டால், தூக்கி வைத்துக் கொள்ள வேண்டுமா?இதெல்லாம் இல்லை. வேளைக்கு அதற்குப் பால் விட்டால் மட்டும் போதும். அதனால் அம்மாக்காரி அந்தக் கிழவியிடம், "காய்ச்சின பாலை, கை நிதானத்திலேயே கல்லுரலைத் தடவிப் பார்த்து அதன் குழியிலே விட்டு வைத்து விடுங்கள். நேரத்தில் குழந்தை (பாம்பு) வந்து அதைக் குடித்து விடும்"என்று சொல்லிவிட்டு ஊருக்குப் போனாள். அந்தப் பாம்பை இப்படிப் பழக்கியிருந்திருப்பாள் போலிருக்கிறது.

"கிழவி அப்படியே செய்தாள். பாம்பும் தாயார் சொன்னபடியே வந்து குடித்துவிட்டுப் போயிற்று. அப்புறம் ஒரு வேளை நாழி தப்பிப் போயிற்று. கிழவி அசந்து விட்டாளோ என்னவோ?கல்லுரலில் பார்த்த பாம்புக்குப் பாலில்லை. அது ரொம்ப ஸாது. கொஞ்ச நேரம் காத்துப் பார்த்தது. அப்புறம் அதுவும் அசந்துபோய் அந்தக் கல்லுரல் குழியிலேயே சுருட்டிக் கொண்டு படுத்துக் கொண்டு விட்டது.

கிழவி அதற்கப்புறந்தான், கொதிக்க கொதிக்கப் பாலைக் காய்ச்சி எடுத்துக் கொண்டு கல்லுரலுக்கு வந்தாள். அதிலே பாம்புக்குட்டி படுத்துக் கொண்டிருப்பது அவளுக்குத் தெரியவில்லை;வழக்கம்போலவே கொதிக்க கொதிக்க இருந்த பாலை அப்படியே ஒரு நிதானத்தில் குழிக்குள்ளே விட்டாள்.

பாம்பின் மேலேயேதான் விட்டுவிட்டாள். பாவம்! அந்தக் குட்டி பாம்பு அப்படியே செத்துப்போய் விட்டது.

அங்கே ஊருக்குப் போயிருந்த அம்மாக்காரிக்கு ஸொப்பனமாச்சு. ஸொப்பனத்திலே அந்தப் பாம்புக்குட்டி வந்து, 'நான் செத்துப் போய் விட்டேன். நீ போய் என்னை எடுத்து தாழங் காட்டிலே தஹனம் பண்ணிவிடு. இனிமேல்

உங்கள் அகத்தில் பிறக்கிற பெண்களும், வாழ்க்கைப் படுகிற பெண்களும் தாழம்பூ வைத்துக் கொள்ள வேண்டாம்"என்று சொல்லிற்று. (தாழம்பதர்தான் பாம்புக்கு ரொம்ப ப்ரீதி)

"அதிலிருந்து எங்கள் குடும்பத்தில் யாரும் தாழம்பூ வைத்துக் கொள்வதில்லை"என்று அந்த அகத்துப் பெண்கள் சொன்னார்கள்.

இந்தக் கதையைப் பற்றி எனக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது, இப்படிக்கூட நடந்திருக்குமா என்று.

நான் ஸ்வாமிகளாகிவிட்ட பிற்பாடு, அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் என்னைப் பார்க்க வந்ததற்கு முக்யமாக ஒரு காரணம் இருந்தது. அது பாம்பு பூர்விகத்தை சொல்வது இல்லை. அவர்கள் குடும்பத்தில் ஒரு பழைய செப்பேடு இருந்தது. எனக்கு இதில் 'இன்டரஸ்ட்'உண்டு என்பதால் அதைக் கொண்டு வந்து காண்பித்தார்கள்.

அது கிருஷ்ண தேவராயருக்குப் பிறகு ஆட்சி பண்ணிய அச்சுத தேவராயர் காலத்து தாம்ர சாஸனம் (செப்பேடு). அதில் எழுதியிருந்ததிலிருந்து, பிராமணன் ஒருத்தன் வேறே 108 பிராமணர்களுக்கு தானம் கொடுத்த விவரம் தெரிந்தது. ராஜாவுக்காகவே இந்த ஒரு பிராமணன் இப்படி 108 பேருக்கு தானம் பண்ணியிருக்கிறான்.

அது ஏன், எதற்காக என்று சொல்கிறேன். பிராமணன் ஸதாஸர்வகாலமும் வேத அத்தியயனமும், கர்மாநுஷ்டானமும் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டுமென்பதால் அவன் உத்தியோகத்தில் போய் ஸம்பாதிக்கக் கூடாது. ஆனால் அவன் குடும்பம் நடக்கவேண்டுமே!அவன் பெரிய யக்ஞங்களும் பண்ண வேண்டுமே!இவற்றுக்காக அவன் தானம் வாங்கலாம் என்று சாஸ்திரம் அநுமதித்தது. ராஜாக்களும் மற்றப் பிரபுக்களும் இப்படியே அவர்களுக்குக் கொடுத்து ஆதரித்து வந்தார்கள். ஆனால் தானம் வாங்குகிற ரைட் இருக்கிறது என்பதற்காக, இந்தக் காலத்தில் சிலர் தப்பாக நினைப்பது போல, பிராமணர்கள் மற்றவர்களைச் சுரண்டவில்லை. ரொம்பவும் மானஸ்தர்களாக இருந்து கொண்டு அவசியமானால்தான் அதுவும் தங்களுக்கு வேண்டிய அளவுக்கே, தானத்தை அங்கீகரித்தார்கள். ஒரு ராஜாவின் பரம்பரை உத்தமமானதாக இருந்தால்தான், அவன் நல்ல க்ஷத்ரியனாக இருந்தால்தான் அவனுடைய மான்யத்தை ஏற்றுக்கொள்வார்கள். இவர்கள் பிடுங்கித் தின்பதால் ராஜாக்கள் கஷ்டப்படாமல், 'நாம் கொடுப்பதை வாங்கிக்கொள்ள மாட்டேன் என்கிறார்களே!ஸத்பாத்திரத்துக்கு தானம் செய்கிற புண்ணியம் நமக்குக் கிடைக்காமல் போகிறதே! என்றுதான் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். இம்மாதிரி ஸந்தர்ப்பங்களில் ராஜாக்களும் பிரபுக்களும் ஒரு யுக்தி பண்ணியிருக்கிறார்கள். அதாவது, தீன தசையில் உள்ள ஒரு பிராமணனை 'மசிய'வைத்து அவனுக்கு ஏகப் பட்டதாக தானம்

செய்துவிடுவார்கள். ஆனால அது முழுவதும் அவன் ஒருத்தனை உத்தேசித்ததேயில்லை. அவன் வழியாக மற்ற பிராம்மணர்களுக்கும் தானம் பண்ணி விடவேண்டுமென்பதே உத்தேசம். அதாவது இந்த ஒரு பிராம்மணன் 'பேருக்கு'அவ்வளவு தானத்தையும் வாங்கிக் கொள்வதுபோல வாங்கிக் கொள்வதால் அவர்களுக்கு 'ப்ரதிக்ரஹ தோஷம்'('ஏற்பது இகழ்ச்சி' என்ற குறை) ஏற்படாது. எனவே மற்ற பிராம்மணர்கள் இவன் செய்கிற தானத்தை ஏற்பார்கள். பிரபுவின் உத்தேசம் இப்படியாக நிறைவேறிவிடும்.

இப்படித் தந்திரம் பண்ணினது நடுவிலே வருகிற அந்த ஒரு பிராம்மணனுக்கு தோஷமாகாதா?பிரபு நல்ல எண்ணத்தில் எப்படியாவாது வேதவித்துக்களை ஆதரிக்க வேண்டுமென்று இப்படி யுக்தி செய்வதில் தப்பில்லைதான். ஆனால் இப்படி ஒரு தந்திரத்துக்கு உடன்பட்ட பிராமணனுக்கு பாபமில்லையா என்றால், இல்லை. எப்படியென்றால், பிரபு கொடுத்த தானம் சட்டப்படி இவனுடைய சொத்தாகத் தான் ஆகிறது. இவன் பேரிலேதான் அவன் தத்தம் செய்திருக்கிறான். அதனால் அப்புறம் இவன் அதற்கு உரிமை கொண்டாடாமல் அதிலே முக்கால்வாசிக்கு மேல் மற்றவர்களுக்குக் கொடுத்துவிட்டுத் தான் ஸ்வல்ப பாகமே வைத்துக் கொள்வதால் இவனுக்கும் தோஷம் போய்விடுகிறது.

ராஜப் பிரதிக்ரஹமே தோஷமானது - அரசனிடமிருந்து வாங்குவதே தப்பு- என்றுதான் தியாகையர் மாதிரியானவர்கள், சரபோஜி போன்றவர்கள் "கொடுத்தே தீருவேன்" என்று வலுக்கட்டாயப் படுத்தினால்கூட அதை உதறித்தள்ளிவிட்டு, "நிதி சால ஸுகமா?"(பணமா செளக்கியம் தருவது?) என்று சீறியிருக்கிறார்கள்.

நாட்டுக்கோட்டை செட்டிப்பிள்ளைகள் (நகரத்தார்) அநேக சத்திரங்களைக் கட்டினபோது, பிராம்மணர்கள் அவற்றில் போய் சாப்பாட்டுக்கு உட்காருவதற்குத் தயங்கிய போது, இதே போலத்தான் ஒரு பிராம்மணனைத் தேடிப் பிடித்து அவன் பேரில் சத்திரத்தின் கட்டளைகளை எழுதி, அவன் மற்றவர்களுக்குப் போடுகிற மாதிரிப் பண்ணியிருக்கிறார்கள்.

நான் மேலே சொன்ன செப்பேட்டில் இப்படித்தான் ஒரு பிராம்மணன், ராயரிடமிருந்து வடார்க்காட்டிலுள்ள மாம்பாக்கம் என்ற கிராமத்தை பூதானம் வாங்கிக் கொண்டு அதை 108 பிராம்மணர்களுக்கு விநியோகம் செய்திருக்கிறான். அந்த 108 பிராமணர்களுடைய பேரையும் சொல்லி, அவர்கள் இன்ன வேத சாஸ்திரம் படித்தவர்கள், அவர்களுக்கு இத்தனை நிலம் கொடுக்கப்படுகிறது என்ற விவரங்கள் அந்த ஸாஸனத்தில் எழுதியிருந்தது.

அப்படி நூற்றெட்டுப் பேரை உத்தேசித்து கிராம தானம் வாங்கிக் கொண்ட பிராமணர் பாம்புக் குழந்தைக் குடும்பத்தில் வந்தவர்தான். அவரிடமிருந்து தானம் பெற்ற மற்றவர்களின் வம்சம் எதுவும் இப்பொழுது தெரியவில்லை. இவர்கள் குடும்பத்தில் மட்டும் இந்தச் செப்பேடு தலைமுறை தலைமுறையாக

வந்திருக்கிறது.

இதிலே குறிப்பிட்டு சொல்லவேண்டியது, செப்பேட்டில் சொல்லியிருக்கிற மூதாதையின் பெயர் 'நாகேச்வரன்'என்று இருப்பதுதான். இப்போது இந்தத் தலைமுறையில் இதை என்னிடம் கொண்டு வந்த குடும்பத் தலைவர் பெயரும் நாகேச்வரன். விசாரித்துப் பார்த்ததில் அவர்கள் குடும்பத்தில் ஒவ்வொரு தலைமுறையிலும் நாகேச்வரன் என்ற பெயரை வைத்துக் கொண்டு வருகிறார்களென்று தெரிந்தது.

உடனே ஊகிக்க முடிந்தது - பாம்புக் குழந்தையின் ஸம்பந்தத்தால்தான் இந்த நாகப் பெயர் ஏற்பட்டிருக்கிறதென்று. அதோடுகூட அச்சுத தேவராயர் காலத்திலேயே அவர்கள் சொன்ன கதைக்கு ஆதாரம் இருக்கும்படியாக இந்தப் பெயர் இருந்திருப்பதும் தெரிந்தது.

'இப்படியும் இருக்குமா?'என்று நான் முன்பு நினைத்ததற்கு இது பதில் சொல்கிறார்போல் இருந்தது. அப்புறம் போன வருஷம் ஒரு பெண்ணுக்குப் பாம்பு பிறந்த ந்யூஸைப் பார்த்தபின் இதைப் பற்றி ஸந்தேஹப்பட வேண்டாம் என்று மேலும் உறுதியாயிற்று.

உங்களுக்கு புராண நம்பிக்கைப் போதவில்லை என்று நான் கண்டிப்பது தப்புத்தான். எனக்கே ந்யூஸ் பேப்பரில் வருவது நிஜம் என்று தோன்றின மாதிரி, ஐதிஹ்யமாக ஒரு குடும்பத்தில் சொன்னதில் நம்பிக்கை போதாமல் ந்யூஸைக் கொண்டுதானே ஐதிஹ்யத்தை confirm செய்து கொள்ள வேண்டியிருந்தது?

இதுதான் இப்போது நாம் இருக்கிற ஸ்திதி:பேப்பரில் வந்து விட்டால் எத்தனை நம்பத் தகாததானாலும் பொய் என்று தோன்றவில்லை ஆனால் புராணம் என்றாலே கட்டுக் கதை என்று அலக்ஷ்யம். "அவர்களுக்கு வேலையில்லை. ஏடு இருந்தது, கதை கதையாகக் கட்டி வைத்து விட்டார்கள். இதில் சிலதில் கெட்டிக்காரத்தனமாவது இருக்கிறது. பாக்கியெல்லாம் அபத்தம்"என்று நினைக்கிறோம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**புராணம்**

**கற்பனையேயானாலும் கருத்துள்ளதே !**

புராணங்களில் வெறும் கற்பனையும் எங்காவது இருக்கலாம்தான்.

பிற்காலத்தவர்கள் இடைச் செருகலாக (Interpolation என்பதாக) சிலதை நுழைத்து விட்டும் இருக்கலாம். ஆனால் எது வெறும் கற்பனை, எது இடைச் செருகல், எது மூல ரூபம் என்று யார் நிர்ணயிப்பது?அவரவரும் தங்களுக்கு இடைச் செருகலாகத் தோன்றுவதை நீக்கி விடுவது என்று ஆரம்பித்ததால் அத்தனை கதைகளும் போய் விடும். மூலக் கதையென்றே ஒன்று நிற்காது. அதனால் சில தப்புக்கள், கோளாறுகள் இருப்பதாகத் தோன்றினாலுங்கூட இன்றைக்கு நம் கைக்கு எந்த ரூபத்தில் புராணங்கள் வந்திருக்கின்றனவோ அதை அப்படியே வைத்து ரக்ஷிக்கத்தான் வேண்டும்.

அதிலே ஏதாவது கட்டுக்கதை இருந்தாலும் இருந்து விட்டு போகட்டும். அது நம் மனஸை பகவானிடம் கொண்டு போய் விட்டு சாந்தப்படுத்துகிறதோ இல்லாயோ? கடைக்கு ஒரு பண்டம் வாங்கப் போகிறோம். நல்ல சரக்காகக் கிடைக்கிறது. நம் உத்தேசம் பூர்த்தியாகிவிட்டது என்று ஸந்தோஷப்படுவதா, அல்லது கடையில் இன்ன குறை இருந்தது, கடைக்காரனிடம் இன்ன தோஷம் இருந்தது என்று சொல்லி அதிருப்தி படுவதா?பூகோள - ககோள (வான் இயல்) வர்ணனைகள், மன்வந்த்ரம் முதலான கால வர்ணனைகள் எங்கேயாவது தப்பிப் போனால்தான் போகட்டுமே!இதெல்லாம் தெரிந்து கொள்ளத்தான் ஜாகரஃபியும் அஸ்ட்ரானமியும் ஹிஸ்டரியும் இருக்கிறதே!ஜாகரஃபியிலும் ஹிஸ்டரியிலும் அஸ்ட்ரானமியிலும் கொடுக்க முடியாத பரமாத்ம தத்வத்தை, பக்தியை, தர்மத்தைச் சொல்கிற லக்ஷ்யத்தைப் புராணம் பூர்த்தி பண்ணுகிறதோ இல்லையோ?

'த்ரேதாயுகம் என்று அத்தனை லட்சம் வருஷம் முன்னாடி ராமர் இருந்திருக்க முடியாது. அப்போது ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிற நாகரிக வாழ்வு ஏற்பட்டே இராது'என்கிறது போலப் பல வாதங்கள் செய்கிறார்கள். இதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. இருந்தாலும் ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன்:ராமர் த்ரேதாயுகத்தில் இல்லாமலே இருந்திருக்கட்டும். இப்படியே அதற்கு முந்தி க்ருதயுகத்தில் நடந்ததாக சொல்லப்படும் கதைகள் அவ்வளவு பூர்வ காலத்தில் நடந்திருக்காமே இருக்கட்டும். எல்லாம் ஒரு ஏழாயிரம் எட்டாயிரம் வருஷத்துக்குள் நடந்தது என்றே வைத்துக் கொள்ளலாம். அதனால் ஸ்ரீ ராம சரித்திரமோ, மற்ற கதைகளோ மதிப்பிலே குறைந்து விடுமா?அவற்றால் நாம்

பெறுகிற படிப்பினை கெட்டுப் போய்விடுமா?

புராணத்தில் சொல்லியுள்ள கதைகளின் காலம் தப்பு என்பது போலவே, இந்த புராணங்கள் ஏற்பட்ட காலத்தைப் பற்றியே சொல்வதெல்லாமும் தப்பு என்கிறார்கள். ஐயாயிரம் வருஷத்துக்கு முந்திக் கலியுக ஆரம்பத்தில் வியாஸர் புராணங்களைக் கொடுத்தார் என்பது சாஸ்திரங்களில் சொல்லியுள்ள விஷயம். அவருக்கு முன்பே புராணம் உண்டு. சாந்தோக்ய உபநிஷத்தில் நாரதர் தாம் அத்தியயனம் பண்ணின வித்தைகளின் பேரைச் சொல்லும்போது அவைகளில் ஒன்றாகப் புராணத்தை குறிப்பிடுகிறார். அதனால் வேத- உபநிஷத காலத்திலேயே

புராணம் இருந்ததாகத் தெரிகிறது. பிற்கால ஜனங்களின் குறைந்த சக்திக்கு ஏற்ற மாதிரி, ஏற்கெனவே இருந்த வேதங்களை வியாஸர் பல சாகைகளாகப் பிரித்துக் கொடுத்தது போலவே இந்தப் புராணங்களையும் தாமே விரிவாக எழுதிக் கொடுத்திருக்கிறார் போலிருக்கிறது.

ஆனால் இங்கிலீஷ் படிப்பாளிகள் புராணங்கள் அவ்வளவு பழையவை இல்லை என்கிறார்கள். இருந்து விட்டுப் போகட்டுமே!(சென்னை டவுனில் உள்ள) கந்த ஸ்வாமி கோயிலில் ஜே ஜே என்று கூட்டம் சேருகிறது, நல்ல ஸாந்நித்தியம் இருக்கிறது, அங்கே நல்ல பக்தி ஏற்படுகிறது, ஸந்நிதானம் நம் துக்கத்தைப் போக்கி அருள் சுரக்கிறது என்றால் அதுதான் கோவிலின் பிரயோஜனம். இதிலே திருப்திப் படாமல், 'இந்தக் கோவில் எப்போது கட்டியது?அருணகிரிநாதர் காலத்தில் இது இருந்ததா?அவர் திருப்புகழ் பாடியிருக்கிறாரா?' என்று கேட்டுக் கொண்டு போவதில் என்ன அர்த்தம்?இம்மாதிரியானதுதான் புராண காலத்தைப் பற்றிய ஆராய்ச்சிகளும்!நம் மன அழுக்கை, சித்த மலத்தைப் போக்குவதுதான் புராணங்களின் லட்சியம் என்பதை நினைவில் வைத்து, பயபக்தியோடு படித்தால் இப்போது எழுகிற அநேக ஆக்ஷேபங்களுக்கு இடமிராது.

ஆராய்ச்சி, கீராய்ச்சி, research என்று சொல்லிவிட்டால் உடனே நாம் நம்பிவிடுவது என்பதுதான் எல்லாவற்றையும் விடப் பெரிய ஸூபர்ஸ்டிஷனாக (மூட நம்பிக்கையாக) இருக்கிறது!இப்போதையை ஆராய்ச்சிகளிலும் நிறையப் பொத்தல்கள், குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. இது ஸரியாக இருந்து, புராணம் கற்பனையாக இருக்கிற இடத்திலுங்கூட, 'நல்லதைச் செய்தவன் வாழ் ந்தான்;தப்பைச் செய்தவன் கெட்டான்;இப்படிக் கெட்டவர்களையும் அநேக ஸந்தர்ப்பங்களில் பகவான் கை தூக்கிவிட்டிருக்கிறான்'என்பதைப் புராணம் நம் மனஸில் அழுத்தமாகப் பதிப்பிக்கிறதால் அதன் உத்தேசம் பூர்த்தியாயிற்று என்றுதான் அர்த்தம்.

நவீன மனப்பான்மைக்காரர்கள் மட்டுமின்றி சாஸ்திரஜ்ஞர்கள், சிஷ்டர்கள் கூடப் புராணத்தை இரண்டாம் பட்சமாக நினைத்து வருவதாக எதனாலோ ஏற்பட்டுவிட்டது. மற்ற சாஸ்திரங்களில் வாக்யார்த்தம், உபந்நியாஸம் பண்ணுகிறவர்களைவிடப் புராணப் பிரவசனம் செய்யும் பௌராணிகர்கள் தாழ்த்தி என்ற அபிப்ராயமும் இருக்கிறது. ஆனால் மஹாமஹோபாத்யாய பட்டம் பெற்ற மஹா பண்டிதர்களான யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள், காபே ராமசந்திராச்சார் முதலியவர்கள் புராணப் பிரவசனம் நிறைய பண்ணி வந்திருக்கிறார்கள். இப்போது ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா பதினெண் புராணங்களைக் கண்டுபிடித்துத் தமிழில் (சுருக்கியாவது) அச்சுப் போடுவதே காரியமாக இருக்கிறார்.

## புராணம்

## வியாஸர் தந்த செல்வம்

வேதத்தில் இருப்பதை எல்லோருக்கும் நன்றாக விளங்க வைப்பதற்காக, வேதங்களை வகுத்துக் கொடுத்த அதே வேதவியாஸர் பதினெட்டுப் புராணங்களை உபகரித்தார். பதினென் புராணங்களை அஷ்டாதச புராணம் என்பார்கள்.

வியாஸரைத்தான் நான் முதல் 'ஜர்னலிஸ்ட்'(பத்திரிகை எழுத்தாளர்), இன்றைய ஜர்னலிஸ்ட்களுக்கெல்லாம் 'ஐடிய' லாக (முன்னுதாரணமாக) இருப்பவர் என்று நினைக்கிற வழக்கம். கதை, சரித்திரம், பூகோளம், தத்வம், தர்மம், கலைகள் எல்லாவற்றையும் புத்திமான்களுக்கு மட்டுமில்லாமல் பாமர ஜனங்களுக்கும் ஸ்வாரஸ்யமாகத் தருவதற்கே அவர் புராணங்களை எழுதிப் பெரிய செல்வமாகக் கொடுத்திருக்கிறார். இதைத்தானே ஜர்னலிஸ்ட்களும் செய்கிறார்கள்?ஆனால் இவர்கள் பெரும்பாலும் ஸ்வாரஸ்யம், ஜன ரஞ்ஜகம் என்பதோடு நிறுத்திக் கொண்டு விடுகிறார்கள். வியாஸர் பாமர ஜனங்களையும் தர்மத்தில் கொண்டு சேர்க்கவே, பரமாத்மாவிடம் கொண்டுபோய் விடுவதற்கே ஸ்வாரஸ்யத்தை ஸாதனமாக வைத்துக் கொண்டார். அந்த ஸ்வாரஸ்யத்தையே 'கோல்'(லட்சியம்) என்று வைத்துக் கொண்டால் பத்திரிக்கைகள் தர்ம விருத்தமான (தர்மத்துக்கு முரணான) விஷயங்களையும் பிரசாரம் செய்யும்படி ஆகிறது. வியாஸரை முன்னோடியாக வைத்துக் கொண்டால் பத்திரிகைக்காரர்களின் எழுத்து சுத்தமாகி விடும். லோகத்துக்கு ஒரு பெரிய நல்லது பிறக்கும்.

நாலு லட்சம் கிரந்தங்களில் வியாஸர் இந்த 18 புராணங்களை எழுதியிருக்கிறார். ஒரு கிரந்தம் என்பது 32 எழுத்துக் கொண்ட ச்லோகம். இந்த நாலு லட்சத்தில் கால்வாசியை, அதாவது ஒரு லட்சம் கிரந்தத்தை 'ஸ்காந்த புராண'மே எடுத்துக் கொண்டு விடுகிறது. உலகத்தின் மிகப் பெரிய புஸ்தகம் அதுவாகத்தான் இருக்கும். மீதி 17 புராணங்களுமாக மூன்று லட்சம் கிரந்தம். இது தவிர லட்சம் கிரந்தம் கொண்ட மஹாபாரதத்தையும் வியாஸர் உபகரித்திருக்கிறார். ('புராண ம்'என்கிற பதினெட்டில் சேராமல் 'இதிஹாஸம்'என்று இருப்பவை பாரதமும், ராமாயணமும்.)

ஒவ்வொரு தேவதா மூர்த்தியைப் பற்றியும் ஒவ்வொரு புராணம் சொல்லும். சைவமானவை, வைஷ்ணவமானவை, சாக்தமானவை என்றிப்படிப் பல தேவதைகளைக் குறித்துப் புராணங்கள் இருக்கின்றன.

பிரம்ம புராணம் (பிராம்ம்), பத்ம புராணம் (பாத்மம்), விஷ்ணு புராணம் (வைஷ்ணவம்), சிவ புராணம் (சைவம்), பாகவதம், நாரத புராணம் (நாரதீயம்), மார்க்கண்டேய புராணம், அக்னி புராணம் (ஆக்னேயம்), பவிஷ்ய புராணம், பிரம்ம வைவர்த்த புராணம், லிங்க புராணம், வராஹ புராணம் (வாராஹம்), ஸ்காந்த மஹா புராணம், வாமண புராணம், கூர்ம புராணம் (கௌர்மம்), மத்ஸ்ய புராணம் (மாத்ஸ்யம்), கருட புராணம் (காருடம்), பிரம்மாண்ட புராணம் என்பவை பதினெட்டுப் புராணங்கள்.

இந்தப் பதினெட்டில் பத்து சிவபரமானது என்று சொல்கிறார்கள். இப்போது நமக்குப் பிரஸித்தமாகத் தெரிகிற அநேக விருத்தாந்தங்கள் இவற்றிலேதான் வருகின்றன. சரித்திரம், கதை, தத்துவம் எல்லாம் இவற்றிலே இருக்கின்றன.

விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஆசார்யாள் விஷ்ணு புராணத்திலிருந்து நிறைய மேற்கோள் காட்டுகிறார். வியாஸ மஹரிஷியின் பிதாவான பராசரர் பண்ணின புராணம் அது. ஸ்ரீ ராமாநுஜரின் ஸித்தாந்தத்தில் விஷ்ணு புராணம் ஒரு முக்யமான அதாரிடி (ஆதாரநூல்).

ஸ்ரீ ராமநுஜருக்கு முந்தி விசிஷ்டாத்வைதத்தின் மூல புருஷர்களில் ஒருவராக இருந்தவர் ஆளவந்தார். அவரிடம் ராமாநுஜர் போய்ச் சேருவதற்குள்ளேயே அவருடைய உயிர் பிரிந்துவிட்டது. ராமாநுஜரிடம் முக்யமாக மூன்று காரியங்களை ஒப்புவிக்க வேண்டுமென்று ஆளவந்தார் நினைத்தார். அதனால் பிராணன் வெளியே போன பிறகும் அவருடைய சரீரத்தில் மூன்று விரல்கள் மடங்கி இருந்தனவாம். ஒவ்வொரு விரலும் இன்ன ஆக்ஞையத் தெரிவிக்கிறது என்று புரிந்து கொண்டு ராமாநுஜர் சொன்னவுடன், உயிரில்லாத அந்த உடம்பின் மடங்கின விரல்கள் ஒவ்வொன்றாக நிமிர்ந்தனவாம்!அந்த மூன்று ஆக்ஞைகளில் ஒன்று, பிரம்ம ஸூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைதப்படி பாஷ்யம் எழுதவேண்டும் என்பது. இரண்டாவது, திருவாய்மொழிக்கு வியாக்யானம் எழுதப் பண்ண வேண்டும் என்பது. மூன்றாவதாக வியாஸர், பராசரர் ஆகிய இருவரின் கீர்த்தியும் உலகில் இருக்கும்படியாகப் பண்ணுவது. விஷ்ணு புராண கர்த்தா என்பதால் இப்படிப் பராசரருக்கு ஏற்றம் கொடுக்கப்பட்டது. இதை மனஸில் வைத்துக் கொண்டுதான் ராமாநுஜர் தம்முடைய முக்கியமான சிஷ்யரான கூரத்தாழ்வாரின் இரண்டு பிள்ளைகளுக்கும் பராசர பட்டர், வேத வியாஸ பட்டர் என்று பெயர் வைத்தார். பராசரருக்கு ஏற்றம் கொடுக்கப்பட்டது. இதை மனஸில் வைத்துக் கொண்டுதான் ராமாநுஜர் தம்முடைய முக்கியமான சிஷ்யரான கூரத்தாழ்வாரின் இரண்டு பிள்ளைகளுக்கும் பராசர பட்டர் பிற்காலத்தில் வைஷ்ணவ ஆசாரியர்களில் முக்யமான ஒருவரானார்.

'விஷ்ணு புராணம்' பண்ணியவர் பராசரர் என்றாலும், பதினெட்டுப் புராணங்களையும் நாம் பார்க்கிற ரூபத்தில் ஸரிபண்ணி எழுதிக் கொடுத்தது வியாஸர்தான். வேதங்களை அவர்தான் விபாகம் பண்ணினார் (வகுத்துக்

கொடுத்தார்) என்ற விஷயத்தை முன்பே சொல்லியிருக்கிறேன். வேதத்திலுள்ள விதிகளை எல்லோருக்கும் நன்றாக மனஸிலே ஆழமாகப் பதியச் செய்ததற்காக அவரே புராணங்களையும் அநுக்ரஹித்தார்.

இதற்கு இன்னொரு காரணமும் உண்டு. வேதத்தை அத்யயனம் பண்ணும் அதிகாரம் சிலருக்குத்தான் இருக்கிறது. மற்றவர்களுக்கு இல்லை. அதனால் அப்படிப்பட்ட பொது ஜனங்களுக்கு வேத தத்வார்த்தங்கள் தெரிய வேண்டும் என்றே புராணங்களை வியாஸர் எழுதினார் என்பதே அந்தக் காரணம்.

விஷ்ணு புராணத்தை வியாஸரின் தகப்பனார் மூல ருபத்தில் சொன்னார் என்றால், பாகவதத்தை வியாஸரின் புத்திரரான சுகாசாரியார் பரீக்ஷித்துக்கு உபதேசிக்கிறார்.

பதினெட்டுப் புராணங்களில் "பாகவதம்"என்று சொல்லப்படுவது, கிருஷ்ண பரமாத்மாவின் சரித்திரத்தை முக்யமாக வைத்து மற்ற அவதாரங்களின் கதைகளையும் சொல்கிற விஷ்ணு பாகவதாமா என்ற இரண்டு விதமான அபிப்ராயங்கள் உண்டு. நமக்கு இரண்டும் வேண்டும். 'விஷ்ணு பாகவதம்', 'தேவி பாகவதம்'இரண்டும் உத்தமமான கிரந்தங்களாக இருக்கின்றன. சைதன்யர், நிம்பார்க்கர், வல்லபாசாரியார் போன்றவர்களின் ஸித்தாந்தங்களில் விஷ்ணு பாகவதம் வேதத்துக்கு ஸமதையான அந்தஸ்துப் பெற்றிருக்கிறது. அதே சமயத்தில் அவர்களை ஆட்சேபிக்கிற அத்வைதிகளும் அதைத் தலைக்கு மேல் கொண்டாடுகிறார்கள்.

சிவபுராணம் வேறே, ஸ்காந்த புராணம் வேறே. ஸ்காந்தத்தில் முக்கால்வாசி சிவனைப் பற்றிய கதைகள், தத்வங்கள் தான். ஆனாலும் ஸ்கந்தனான முருகனைப் பற்றிய விருத்தாந்தம் இதிலே வருவதால் இதற்கு 'ஸ்காந்தம்'என்று பெயர் வந்தது. இதிலே வருவதால் இதற்கு 'ஸ்காந்தம்'என்று பெயர் வந்தது. இதிலே ஸுப்ரமண்யரின் விஷயமாக இருப்பதையே முக்யமாக வைத்துக் காஞ்சீபுரத்தைச் சேர்ந்த கச்சியப்ப சிவாச்சாரியார் தமிழிலே 'கந்த புராணம்'என்று எழுதியிருக்கிறார்.

மார்க்கண்டேய புராணத்தில் தான் 'துர்கா ஸப்த சதீ'என்கிற துர்க்காம்பாளின் விருத்தாந்தம் வருகிறது. ('தேவி மாஹாத்மியம்'என்பதும் அதுவே.) 'சண்டீ ஹோமம்'- சத, சண்டி, ஸஹஸ்ர சண்டி - என்று பண்ணுவெதல்லாம் இதில் இருக்கிற எழுநூறு மந்திரங்களைக் கொண்டுதான். இதிலே ஒவ்வொரு ச்லோகமும் ஒரு மந்திரமாக மதிக்கப் படுவதால் அதைச் சொல்லி ஹோமம் செய்யப்படுகிறது.

பவிஷ்யம் என்றால் எதிர்காலம் (future) என்று அர்த்தம். 'பவிஷ்ய புராண'த்தில் இப்போது நாம் பார்க்கிற கலியின் கிருத்ரிமம் உள்பட அநேக விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

மௌரியர்கள் போன்ற பழைய ராஜாக்களை மட்டுமின்றி, வெள்ளைக்காரர்கள் இங்கே வந்தது உள்படப் புராணத்தில் இருக்கிறெதன்றால், இக்காலத்தவர்கள் "இதெல்லாம் வியாஸர் கலியுக ஆரம்பித்தில் எழுதினதே இல்லை. ஸமீபத்தில்தான் யாரோ எழுதி அவர் பேரைப் போட்டு விட்டார்கள்"என்கிறார்கள். இடைச் செருகல் எங்கேயாவது கொஞ்சம் இருக்கச் செய்யலாம்தான். அதற்காக ஒரேடியாக "எல்லாம் புதுசுதான்"என்று தள்ளிவிட முடியாது. யோகசக்தி வாய்ந்தவர்கள் எந்தக் காலத்தையும் காண முடியும்;இருந்த இடத்திலே இருந்து கொண்டே எந்தத் தேசத்தில் நடப்பதையும் சொல்லி முடியும். இம்மாதிரியான சக்தி பெற்ற மஹாபுருஷர்களின் பெயரில் யார் வேண்டுமானாலும் கிரந்தம் பண்ணிப் பிரசாரப் படுத்துவது என்பது ஸுலபமான காரியமில்லை.

கருட புராணத்தில் பித்ருலோகம், பித்ரு காரியம் முதலியவற்றைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறது. அதனால் சிராத்த கர்மாவில் இந்தப் புராணத்தைப் படிக்கிற வழக்கம் இருக்கிறது.

பிரம்மாண்ட புராணத்தில்தான் "லலிதோபாக்யானம்"(லலிதாம்பிகையின் சரிதம்), லலிதா ஸஹஸ்ரநாமம் முதலானவை வருகின்றன. பதினெட்டு புராணங்களையும் சொல்லி முடிக்கிறபோது ராஜராஜேச்வரி பட்டாபிஷேகம் வரும் இந்த புராணத்தோடுதான் பூர்த்தி பண்ணுவதாக ஸம்பிரதாயம் இருக்கிறது என்பதைப் பற்றி தேவீ உபாஸகர்கள் பெருமைப் பட்டுக் கொள்வார்கள்.

இப்போது ஒவ்வொரு ஸ்வாமிக்கும் நாம் சொல்லும் அஷ்டோத்திரம், ஸஹஸ்ரநாமம், கவசம் முதலானவைகள் பெரும்பாலும் புராணங்களில் வருகிறவைதான். விஷ்ணு ஸஹஸ்ரநாமம், சிவ ஸஹஸ்ரநாமம் இரண்டுமே மஹாபாரதத்தில் வருபவை.

அநேக ஸ்தோத்திரங்களும் இவற்றிலிருந்தே நமக்குக் கிடைக்கின்றன. "ஆதித்ய ஹ்ருதயம்"ஸ்ரீமத் ராமாயணத்தில் வருவது. "ப்ரதோஷ ஸ்தோத்ரம்"ஸ்காந்தத்தில் வருகிறது. இப்படி அநேகம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

### புராணம்

### உப-புராணங்களும் பிற புராணங்களும்

பதினெட்டு புராணங்களைத் தவிர பதினெட்டு உப-புராணங்களும் இருக்கின்றன. 'விநாயக புராணம்', 'கல்கிபுராணம்'முதலியவை உப-புராணங்களில் தான்

இருக்கின்றன. முக்யமாகப் பதினெட்டு உப-புராணம் என்று சொன்னாலும் மேலும் அநேகம் இருக்கின்றன.

மாஸங்களின் மகிமைகளை சொல்கிற துலா புராணம்(ஐப்பசி) புராணம், மாக (மாசி) புராணம், வைசாக (வைகாசி) புராணம் என்றெல்லாம் இருப்பவை பதினெட்டு புராணங்களிலும் உப-புராணங்களிலும் அடங்கியிருக்கிற சில பகுதிகளே.

ஸ்தல புராணங்கள் என்று ஒவ்வொரு க்ஷேத்திரத்துக்கும் இருக்கிறது. இவற்றிலும் பல முன்னே சொன்ன புராணங்களுக்குள்ளேயே இருப்பவைதான். தனியாக இருப்பவையும் அநேகம்.

இப்படியே காவேரி, கங்கை முதலான தீர்த்தங்களின் மாஹாத்மியங்களும் புராணங்களின் பாகமாகவும், தனியாகவும் இருக்கின்றன. துலா புராணத்தில் முக்யமாக காவேரி மகிமைதான் வருகிறது. துலா மாஸத்தில் காவேரி ஸ்நானம் விசேஷமானது.

பகவானைப் பற்றிய புராணங்களைத் தவிர பக்தர்களைப் பற்றியேயான புராணங்களும் இருக்கின்றன. 'பெரிய புராணம்'என்ற திருத்தொண்டர் புராணம் சிவனடியார்களான 63 நாயன்மார்களின் கதைகளைச் சொல்வது. இதுவே ஸம்ஸ்கிருதத்தில் 'உபமன்யு பக்தி விலாஸம்' என்ற பெயரில் இருக்கிறது. பண்டரீபுரத்திலுள்ள பாண்டுரங்கனிடம் விசேஷமாக ஈடபட்டிருந்த துகாராம், நாமதேவர் முதலானவர்களின் சரித்திரத்தைச் சொல்வதாக "பக்த விஜயம்" என்ற நூல் இருக்கிறது. வட தேசத்து பக்தர்களைப் பற்றி நாபா தாஸ் என்பவர் "பக்த மாலா"என்று எழுதியிருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**புராணம்**

## " இதிஹாஸம் " - " புராணம் ": பெயர் விவரம்

ராமாயணமும் மஹாபாரதமும்தான் நம் தேசத்தில் பாமர-பண்டித பேதமின்றி எல்லோருக்கும் இரண்டு கண்கள் போல இருந்து கொண்டு யுகாந்திரமாக நல்ல வழியைக் காட்டி வந்திருக்கின்றன. இந்த இரண்டையும் புராணங்களோடு சேர்க்காமல், தனி ஸ்தானம் கொடுத்து 'இதிஹாஸ'ங்கள் என்று வைத்திருக்கிறது.

'புரா'என்றால் 'பூர்வத்தில்'என்று அர்த்தம். பூர்வத்தில் நடந்ததைச் சொல்பவை

புராணங்கள். அவற்றில் எதிர்கால prediction-ம் வருகிறது.

பூர்வத்தில் நடந்த கதையைச் சொல்வது என்று மட்டுமில்லாமல், புராணம் என்பதே பூர்வ காலத்தில் எழுதப் பட்டது என்றும் அர்த்தம் செய்து கொள்ளலாம். பொயட்ரி, டிராமா முதலான பூர்வகால இலக்கிய ஸ்ருஷ்டிகளுக்குப் பிறகு ஸமீபத்தில் ப்ரோஸிலேயே கதையை எழுதுவது என்று ஒரு இலக்கிய ரூபம் உண்டாயிற்று. அதற்கு Novel என்றே பெயர் வைத்தார்கள். "நாவல்"என்றால் புதியது என்று அர்த்தம். அந்தக் காலத்தில் இந்த ரூபம் பொயட்ரியைப் போலவும்,

டிராமாவைப் போலவும் இல்லாமல் புதிதாக வந்ததால் 'நாவல்' என்றே பெயர் வைத்தார்கள். இந்த ரூபம் நம் நாட்டிலே வந்த போதும் 'நாவல்'என்பதை மொழி பெயர்த்து 'நவீனம்'என்கிறார்கள். நவீனம் புதியது என்றால் புராணம் பழையது. இந்தப் பெயரே புராணங்களின் தொன்மையைக் காட்டுகிறது.

புராணம் என்று இருந்தால் அது சொல்ல வேண்டிய விஷயங்கள் ஐந்து இருக்கின்றன என்று பஞ்ச லக்ஷணம் கொடுத்திருக்கிறது. அவை:ஒன்று, ஸர்க்கம் (ஆதியில் நடந்த சிருஷ்டி). இரண்டு, ப்ரதி ஸர்க்கம் (அப்புறம் அந்த ஸ்ருஷ்டி யுகங்கள் தோறும் கவடு விட்டுக் கொண்டு பரவியது. மூன்று, வம்சம் (பிரம்ம புத்ரர்களிலிருந்து ஆரம்பித்து ஜீவகுலம் எப்படி தலைமுறை தலைமுறையாக வந்தது என்ற விஷயம்.) நான்கு, மன்வந்தரம் (ஆயிரம் சதுர்யுகங்களில் லோகம் பூராவுக்கும் மநுஷ்யகுல முன்னோர்களாக இருக்கப் பட்ட பதினாலு மனுக்களின் காலத்தைப் பற்றிய விஷயங்கள்.) ஐந்தாவது, வம்சாநுசரிதம் (தேசத்தைப் பரிபாலித்த ராஜாக்களின் வம்சாவளி;ஸுர்ய வம்சம், சந்திர வம்சம் என்பது போன்ற dynasty-களின் விவரம்). இன்னம், பூகோள வர்ணனை, ககோள வர்ணனை என்பதாக லோகங்களைப் பற்றி விரிவாக வர்ணிக்க வேண்டும். இங்கே புராணம் என்பது ஹிஸ்டரியாக மட்டுமின்றி ஜாகரஃபியாகவும் ஆகிறது.

'இதிஹாஸம்' என்பது இதி- ஹ - ஆஸம். 'இதி-ஹ-ஆஸம் என்றால் இப்படி நடந்தது என்று அர்த்தம். 'இதி ஆஸம்'என்றாலே 'இப்படி நடந்தது'என்றாலும், நடுவிலே ஒரு 'ஹ'போட்டிருக்கிறது. 'ஹ'வுக்கு 'நிச்சயமாக', 'வாஸ்தவமாக', 'ஸத்தியமாக'என்று அழுத்தம் கொடுக்கிற அர்த்தமுண்டு. கொஞ்சங்கூடப் பொய் கலக்காமல் உள்ளது உள்ளபடியே எழுதினது 'இதிஹாஸம்'. அது எழுதப்பட்ட காலத்திலேயே நடந்தது. ராமர் இருந்த போதே வால்மீகி ராமாயணத்தை எழுதினார். பஞ்ச பாண்டவர்கள் இருந்த போதே வியாசாரியாள் கூட இருந்து பாரதத்தில் வரும் ஸம்பவங்களை எல்லாம் நேரில் பார்த்தவர்.

'புராணம்'என்ற பெயர்ப்படி அவர் பழைய விஷயத்தை சொன்ன போதும், தீர்க்க திருஷ்டியால் உள்ளது உள்ளபடிப் பார்த்துத்தான் எழுதியிருப்பார். என்றாலும் அதைக் கேட்ட மற்றவர்களுக்கு - அவர் காலத்தவர்களுக்கு - அந்த விஷயங்கள் தெரியாது. மஹாபாரதம், ராமாயணம் ஆகியவை இப்படி இல்லை. அவை

முதலில் பிரசாரமானபோது லோகத்தில் இருந்தவர்களுக்கே அவற்றிலுள்ள அநேக பாத்திரங்களையும், ஸம்பவங்களையும் தெரியும். அதனால்தான் இவற்றில் நிஜம்தானா என்று நாம் ஸம்சயிப்பதற்கு இடமே இல்லை என்பதைக் காட்ட 'இதி-ஹ-ஆஸம்'என்று 'ஹ'போட்டு உறுதிப்படுத்தியிருக்கிறது.

"இதி-ஹ-ஆஸம்'என்றால் 'இப்படி(யிருக்க வேண்டுமென்று) அவர்கள் (பெரியோர்) சொல்கிறார்கள்'என்றும் அர்த்தம் செய்து கொள்ளலாம்.

நேரே நடப்பதை வைத்துக் சொல்லாமல், இப்படியிருந்தது என்று ஒரு நம்பிக்கையின் மேல் எடுத்துக் கொள்வதே 'ஐதிஹ்யம்'. 'ஐதீகம்'என்று தமிழில் அதைத்தான் சொல்கிறோம். அதாவது மரபு அல்லது tradition-க்கு இப்படிப் பேர். இப்போது நாம் நேரில் பார்க்கிற ஒன்றைக் கொண்டு இதை ஏற்படுத்தவில்லை. நமக்கு நீண்ட காலத்துக்கு முன்னாலிருந்து அநுஸரிக்கப்பட்டதா, சரி, நாமும் பின்பற்றவேண்டும் என்று இருப்பதே ஐதீகம். 'இதி'என்ற வேர்ச் சொல்லிலிருந்தே 'ஐதிஹ்யம்'வந்திருக்கிறது. 'இப்படிப் (பெரியோர்)சொன்னது'என்பதற்காகவே நாம் பின்பற்ற வேண்டியது ஐதிஹ்யம். நாம் நேரில் பார்ப்பது 'இது'; இன்னொருத்தர் சொன்னால் 'இப்படி'!

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**புராணம்**

## இதிஹாஸங்களின் பெருமை

புராணங்களை வேதத்துக்கு உபாங்கமாகச் சொன்னால், இதிஹாஸ -ங்களையோ வேதத்துக்கு ஸமானமாகவே உயர்த்திச் சொல்லியிருக்கிறது. பாரதத்தை 'பஞ்சமோ வேத:'- ஐந்தாவது வேதம் - என்று சொல்லியிருக்கிறது. ராமாயணத்தைப் பற்றி "வேதத்தால் அறியத்தக்க பரமபுருஷன் தசரதனின் குழந்தையாக அவதாரம் பண்ணியவுடன் அந்த வேதமும் வால்மீகியின் குழந்தையாக அவதாரம் பண்ணியவுடன் அந்த வேதமும் வால்மீகியின் குழந்தையாக அவதாரம் பண்ணி விட்டது"என்று சொல்லியிருக்கிறது.

வேதவேத்யே பரே பும்ஸி

ஜாதே தசரதாத்மஜே।

வேத:ப்ராசேதஸாதாஸீத்

ஸாக்ஷாத் ராமாயணாத்மனா||

(பிரசேதஸின் பிள்ளையானதால் வால்மீகிக்குப் பிராசேதஸ் என்று பெயர்.)

ராமாயண- பாரதக் கதைகள் நம் தேச ஜனங்களின் ரத்தத்திலேயே ஊறிப் போனவை.

இந்த இதஹாஸ படனம் குறைந்து போய்விட்ட இந்த நாற்பது, ஐம்பது வருஷத்துக்கு முன்புவரை பாமர ஜனங்கள் உள்பட எல்லோருமே வெளி தேசத்தார் வியக்கும்படியான நல்லொழுக்கங்களோடு யோக்யமாக இருந்து வந்தார்கள் என்றால் அதற்கு முதல் காரணம் ராமாயணமும் பாரதமும்தான். பாரதப் பிரவசனம் விடாமல் ஒவ்வொரு ஊர்க் கோயிலிலும் நடக்க வேண்டும் என்பதற்காகத் தமிழ் ராஜாக்கள் மானியம் கொடுத்து வந்திருக்கிறார்கள். நாற்பது, ஐம்பது வருஷத்துக்கு முந்தி வரையில் பூசாரி உடுக்கடித்துக் கொண்டு பாரதம் பாடுவதை கேட்கத்தான் கிராம ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் போவார்கள். அதுதான் அவர்களுக்கு ஸினிமா, டிராமா எல்லாம். ஆனால் இந்த ஸினிமா டிராமாக்களினால் ஒழுக்கத்துக்கு ஏற்பட்டிருக்கிற ஹானிகள் இல்லாமல், பாரதக் கதை கேட்டுக் கேட்டே அவர்கள் ஸத்யத்துக்கு பயந்து கபடு, சூது இல்லாமல் நல்ல வாழ்க்கை நெறியில் போனார்கள். பாரதத்துக்கு இந்தத் தமிழ் தேசத்திலிருக்கிற மதிப்பு, கிராம தேவதை ஆலயத்தை, "திரௌபதை அம்மன் கோயில்"என்று சொல்வதிலிருந்து தெரிகிறது.

ஒவ்வொரு பெரிய புராணத்தையும் எடுத்துக் கொண்டால் அதிலே தனித்தனிக் கதையாக அநேகம் இருக்கும். ஒவ்வொரு கதையும் ஒரு குறிப்பிட்ட தர்மத்தை வலியுறுத்துவதாக இருக்கும். இதிஹாஸத்திலோ ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஒரே கதையாக இருக்கும். நடுவே வேறு பல உபாக்யானங்கள் வந்தாலும்கூட அவையும் பிரதானமான ஒரு கதையைச் சுற்றியே இருக்கும். புராணத்தில் ஒவ்வொரு கதை ஒவ்வொரு தர்மத்தைச் சொல்கிறது என்றால் இதிஹாஸத்தின் மையமான கதையில் ஸகல தர்மங்களும் நடத்திக் காட்டப்பட்டிருக்கும். உதாரணமாக, தனிக்கதைகளான ஹரிச்சந்திர உபாக்யானம் ஸத்யம் என்ற ஒரு தர்மத்தை மட்டும் சொல்கிறது;சிரவணன் கதை பித்ரு பக்தியை மட்டும் சொல்கிறது;நளாயினி கதை கற்பை மட்டும் சொல்கிறது;ரந்திதேவன் கதை பரம தியாகத்தை, கருணையை மாத்திரம் சொல்கிறது. ஆனால் ராமர், பஞ்ச பாண்டவர்கள் இவர்களுடைய வாழ்க்கையைச் சுற்றி அமைந்த இதிஹாஸங்களில் இவர்கள் ஸகல தர்மங்களையும் நடத்திக் காட்டியிருக்கிறார்கள்.

## தெய்வங்களுள் பேதம் ஏன் ?

ஒவ்வொரு ஸ்வாமியையும் குறித்ததாக ஒவ்வொரு புராணம் இருப்பதால் சில ஸந்தேஹங்கள் வருகின்றன. சைவமான புராணங்களில், சிவன் தான் பரமாத்ம தத்வம்;சிவன்தான் ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரம் எல்லாவற்றுக்கும் அதிகாரி. இவர் சொல்படி இவருக்கு அடங்கித்தான் விஷ்ணு பரிபாலனம் பண்ணுகிறார். அவர் (விஷ்ணு) வெறும் போகி, மாயையில் அகப்பட்டுக் கிடப்பவர். சிவன்தான் யோகி, சிவன்தான் ஞானஸ்வரூபி'என்றெல்லாம் சொல்லியிருக்கும். 'சிவனுக்கு விஷ்ணு அடங்கினவர். சிவனை விஷ்ணு பூஜை பண்ணுகிறார். சிவனுக்கு அடங்காமல் சில சமயத்தில் அவர் சிவனை எதிர்த்தபோது தோற்றுப்போய் மானபங்கப் பட்டிருக்கிறார்'என்றெல்லாம் சொல்லி, இது ஒவ்வொன்றுக்கும் திருஷ்டாந்தமாக அநேக கதைகளைச் சொல்லியிருக்கும். வைஷ்ணவமான புராணங்களைப் பார்த்தாலோ இதை அப்படியே தலைகீழாகத் திருப்பி வைத்து, அதற்கும் ஆதரவாக ஏகப்பட்ட விருத்தாந்தங்களைக் காட்டியிருக்கும். "பேய் பிசாசுகளைக் கட்டிக்கொண்டு சுடுகாட்டில் உட்கார்ந்திருக்கிற சிவனா ஒரு ஸ்வாமி?சக்கரவர்த்தியான வைகுண்டநாதனின் தாஸர்தான் அவர்"என்று அவற்றில் சொல்லியிருக்கும்.

சிவன் விஷ்ணு என்ற இரண்டு தெய்வங்களுக்குள் மட்டும் என்றில்லை. ஒவ்வொரு புராணத்திலும் ஏதோ ஒரு தெய்வத்தை - அது ஸுப்ரமண்யராயிருக்கலாம், பிள்ளையாராக இருக்கலாம், அல்லது சூரியனாக இருக்கலாம். ஏதோ ஒன்றை - முழுமுதற் கடவுளாகச் சொல்லி மற்ற எல்லா தெய்வங்களையும் மட்டம் தட்டி, அவை இந்த ஒரு மூர்த்தியைத்தான் பூஜை பண்ணுகின்றன., அப்படிப் பண்ணாமல் அஹம்பாவப்பட்டபோது இதனிடம் தோற்றுப் போய் மானபங்கப்பட்டிருக்கின்றன என்று கதைகளிருக்கும்.

இதைப் பார்த்தால், 'என்ன இப்படி ஒன்றுக்கொன்று வித்தியாஸமாய் இருக்கிறதே!இதில் எது நிஜம், எது பொய்?எல்லாம் நிஜமாக இருக்கமுடியாது. சிவன் விஷ்ணுவைப் பூஜை பண்ணினார் என்றால் விஷ்ணு சிவனை பூஜை பண்ணுவது அயுக்தம். இப்படி நடக்காது. திரிமூர்த்திகளுக்கு மேல் அம்பாள் இருக்கிறாள் என்றால் அவளே பரமேச்வரனிடம் பதிவிரதையாக அடங்கிக் கிடக்கிறாளென்பது தப்பு. அதனால் எல்லாப் புராணமும் நிஜமாய் இருக்கமுடியாது. எது நிஜம்?எது பொய்?ஒரு வேளை எல்லாமே பொய்தானே?அப்படித்தான் இருக்கும் போலிருக்கிறதே!என்று ஸந்தேஹங்கள் தோன்றுகின்றன.

தர்க்க ரீதியாகப் பார்த்தால் எல்லாம் நிஜமாக இருக்க முடியாதென்று தோன்றினாலும், எல்லாமே நிஜம்தான். ஒரு சமயத்தில் தோற்றுப்போன

ஸ்வாமியே இன்னொரு சமயம் ஜெயிக்கிறது. ஒரு சமயம் பூஜை பண்ணின ஸ்வாமியே இன்னொரு சமயம் பூஜை பண்ணப்படும் ஸ்வாமியாகிறது.

இது எப்படி?எதற்காக இப்படி இருக்க வேண்டும்?

ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய சகலத்தையும் செய்கிற பரமாத்மா ஒன்றேதான் இருக்கிறது. அதுவேதான் இத்தனை தெய்வங்களாகவும் ஆகியிருக்கிறது. எதற்காக?இந்த லோக வியாபாரம் ருசியாக இருக்கவேண்டும் என்பதற்காக எல்லா ஜனங்களையும் ஒரே அச்சாகப் படைக்காமல் பலதரப்பட்ட மனோபாவ வித்தியாஸங்களுடையவர்களாகத் தானே பரமாத்மா சிருஷ்டித்திருக்கிறார்?இந்த ஒவ்வொரு மனோபாவத்துக்கும் பிடித்த மாதிரி பரமாத்மாவும் ஒவ்வொரு ரூபத்தை எடுத்துக் கொண்டால்தான் அவரவரும் தங்களுக்குப் பிடித்ததை இஷ்ட தேவதையாய்க் கொண்டு உபாஸித்து நல்ல கதியைப் பெற முடியும். அதற்காகத்தான் ஒரே பரமாத்மா பல தெய்வரூபங்களை எடுத்துக் கொள்கிறது.

ஒவ்வொருவருக்கும் தங்கள் இஷ்ட மூர்த்தியிடமே அசையாத நம்பிக்கை ஏற்படவேண்டுமல்லவா?"இதுதான் பரமாத்ம ஸ்வரூபம், பரப்பிரம்ம ஸ்வரூபம். இதற்கு மேல் ஒரு சக்தியில்லை"- என்ற உறுதியை அவர்களுக்கு ஊட்ட வேண்டுமல்லவா?அதற்காகத்தான் ஒவ்வொரு ரூபத்திலும் மற்ற ரூபங்களையெல்லாம்விடப் பெரியதாகத் தன்னைக் காட்டிக் கொண்டிருக்கிறது. மற்ற ரூபங்கள் தன்னை பூஜை பண்ணினதாகவும் தன்னிடம் தோற்றுப் போனதாகவும் காட்டியிருக்கிறது.

இப்படிச் சொன்னதாலேயே ஒவ்வொரு தெய்வமும் மற்ற தெய்வங்களைப் பூஜித்ததுமுண்டு, மற்ற தெய்வங்களால் பூஜிக்கப்பட்டதுமுண்டு;மறற தெய்வங்களிடம் தோற்றதுமுண்டு, மற்ற தெய்வங்களால் தோற்கப் பண்ணினதுமுண்டு என்று ஆகிறதல்லவா?

இவற்றிலே சைவமான புராணங்களில் சிவனின் உயர்வை மட்டுமே காட்டுகிற விஷயங்களாகத் தொகுத்துக் கொடுத்திருக்கும்;வைஷ்ணவமான புராணங்களில் விஷ்ணுவின் உத்கர்ஷத்தை (மேன்மையை) சொல்கிற ஸம்பவங்களை மட்டுமே சேர்த்துத் தந்திருக்கும். இப்படியே அம்பாள், ஸுப்ரமண்யர் முதலய மற்ற தேவதைகளைப் பற்றிய ஒவ்வொரு புராணத்திலும் அது ஒன்றே முழுமுதல் தெய்வம் என்னும்படியான விருத்தாந்தங்களை மட்டும் கொடுத்திருக்கும்.

ஆக, உத்தேசம் மற்றவற்றை மட்டம் தட்டுவதில்லை. எது ஒருத்தனுக்கு உபாஸ்யமோ அதனிடமே இவன் அனன்ய பக்தி செலுத்தும்படி பண்ணவேண்டும் என்பதே உத்தேசம். அன்னியமாக இன்னொன்றிடம் பக்தி சிதறாமல் இருப்பதுதான் 'அனன்யம்' என்பது. இந்த தெய்வத்தை உயர்த்திக் காட்டி இதன் உபாஸகனை உயர்த்துவதுதான் லக்ஷ்யமேயன்றி, மற்றவற்றை

நிந்திப்பது அல்ல. இதை 'நஹி நிந்தா நியாயம்'என்பார்கள்.

எல்லாம் ஒரே பரமாத்மாவின் பல ரூபங்கள் என்று பார்க்கிறவர்களுக்கு அனன்ய பக்தி என்பதற்கு அவசியமே இல்லை. ஏனென்றால் ஒரு தெய்வத்துக்கு இன்னொன்று அன்னியம் என்று அவர்கள் நினைத்தால்தானே ஒன்றைவிட்டு இன்னொன்றிடம் திரும்புவதைப் பற்றிய பேச்சே வருகிறது?எல்லாம் ஒன்றின் வேஷமே என்று புரிந்து கொண்டுவிட்டால் அப்போது எல்லாப் புராணங்களும் ஒரே பரமாத்மாவின் லீலா விநோதம்தான்;அந்த ஒன்றேதான் தன்னை வெவ்வேறு மனோபாவக்காரர்கள் அநுபவிக்கும்படியாக வெவ்வேறு தெய்வம்போல் ஆக்கிக் கொண்டு இத்தனை கூத்தும் அடிக்கிறது என்று புரிந்து கொண்டு, ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றுகிற எல்லாக் கதைகளையும் ரஸிக்கவும் பக்தி செலுத்தவும் முடிகிறது.

பாணாஸுரன் கதையிலே சிவன் கிருஷ்ணனிடம் தோற்றுப் போகிறாரா?திருவண்ணாமலைக் கதையிலே விஷ்ணு சிவனுடைய அடியைக்காணமுடியாமல் தோற்றுப் போகிறாரா?இரண்டும் ஸத்யந்தான். கிருஷ்ண பக்தர்களை அவர்தான் பரமாத்மா என்று நம்பப் பண்ணுவதற்காக ஈச்வரன் தயங்காமல் கிருஷ்ணனிடம் தோற்றுப் போகக் கூடியவர்தான். சைவர்களுக்கு ஈச்வரனிடம் பிடிப்பை உறுதியாக்க வேண்டும்என்பதற்காக விஷ்ணு தம்மையே குறைத்துக் கொண்டு ஈச்வரனிடம் தோற்கக் கூடியவர்தான். நாம் ஜயித்தவர் - தோற்றவர் என்று வித்யாஸமாக நினைத்தாலும் அவர்களுக்குத் தாங்கள் வேறு இல்லை, ஒருவரேதான் என்று தெரியுமல்லவா?தன்னையே ஜயித்துக் கொள்வதாவது?தன்னிடம் தோற்றுப் போவதாவது?அதனால் இதெல்லாம் விளையாட்டுத்தான்!

இப்படி ஒரே பரமாத்மா பல ரூபம் எடுத்துக் கொண்டு லீலை செய்கிறது. இன்னொரு காரணமும் உண்டு. ஜனங்களுக்கு வழி காட்டியாக இருப்பதுதான் அது. லோகத்தில் பக்தி விருத்தியாக வேண்டும். இதற்காக பகவானே வழி காட்ட வேண்டும். அதற்காகத்தான் சில கதைகளில் சில க்ஷேத்ரங்களில் விஷ்ணுவே பக்தனாக இருந்து கொண்டு ஈச்வரனுக்குப் பூஜை செய்கிறார்;வேறு சில கதைகளில், க்ஷேத்ரங்களில் சிவன் விஷ்ணுவுக்குப் பூஜை பண்ணுகிறார்.

மற்ற தெய்வங்களும் இப்படியே. பொதுவாக சைவம், வைஷ்ணவம் என்றே நாம் பெரிய பிரிவுகளாகப் பிரிந்திருப்பதால் ஈச்வரன், விஷ்ணு என்ற இரண்டையே அதிகம் சொல்கிறேன்.

லோகத்தில் பாதிவ்ரத்யம் (கற்பு நெறி) இருக்கவேண்டும். அதனால் அம்பாளே பதிவிரதைகளுக்கெல்லாம் வழி காட்ட வேண்டும். அப்போது, தான் பராசக்தியாக இருந்தாலும் பதிக்கு அடங்கி ஒடுங்கினவளாகத்தானே இருக்க வேண்டும்?

ஆக, புராணங்களிலே ஒன்றுக்கொன்று வித்தியாஸமாக, இந்த ஸ்வாமிதான்

உசத்தி என்றும், அந்த ஸ்வாமிதான் உசத்தி என்றும் காட்டும்படியான கதைகள் வருவது அந்தந்தக் குறிப்பிட்ட சமயத்தில் ஒன்றிடமே இதுதான் பரமாத்மா என்று நாம் ஆழமாக ஈடுபட்டு நிற்பதற்காகச் சொன்னது என்றே எடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்றைத் தாழ்த்தியது போல் சொன்னது உண்மையில் அதை நிந்திப்பதற்காக இல்லை;இன்னொன்றை இதுவே ஸகலமும் என்று கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் செய்வதுதான் உத்தேசம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**புராணம்**

**ஒன்றே பலவாக**

ஒரே பரமாத்மாதான் பல தேவதா மூர்த்திகளாகியிருக்கிறார். ஒவ்வொருத்தனுக்கு ஒவ்வொரு மூர்த்தியிடம் அலாதிப் பிடிமானம் உண்டாகிறது. அவனவனுக்கும் அந்தப் பிடிப்பையே உறுதிப் படுத்திக் கொடுப்பதற்காகப் பரமாத்மா தம் ஸ்வரூபத்தில் ஒன்றை இன்னொன்றிடம் ஒரு சமயத்தில் குறைத்துக் கொள்கிறார். தஞ்சாவூர் சீமையிலேயே எடுத்துக் கொண்டால்:திருக்கண்டியூரில் பரமசிவனை மஹாவிஷ்ணுவுக்கு முன்னால் குறைத்துக் காட்டுகிறார். பிரம்ம சிரஸைக் கிள்ளியதால் பரமேச்வரனுக்கு ஏற்பட்ட சாபத்துக்கு அவர் மஹாவிஷ்ணுவிடம் சாபவிமோசனம் பெறுகிறார். அடுத்தாற்போல் திருவீழிமிழலையில் அந்த மஹாவிஷ்ணு பரம சிவனுக்கு முன்னால் குறைந்தாற் போல் இருக்கிறார். அங்கே விஷ்ணு சிவனுக்குப் பூஜை பண்ணுகிறார். ஒவ்வொரு கமலமாக சிவ ஸஹஸ்ர நாமம் சொல்லி அர்ச்சனை செய்கிறார். கடைசியில் ஒரு கமலம் குறைகிறது. உடனே புண்டரீகாக்ஷனான (தாமரைக் கண்ணனான) பெருமாள் தன் கண் ஒன்றையே பறித்து அர்ச்சனை செய்கிறார். ஈச்வரன் பிரஸன்னமாகி அவருக்குச் சக்கரம் வழங்குகிறார். இங்கே 'நேத்ரார்ப்பணேச்வரர்'என்றே ஈச்வரனுக்குப் பெயர். கண்டியூர் கதையைக் கேட்கிறபோது பெருமாள் மஹாபாபத்தையும் சாபத்தையும் போக்குகிற பரமகருணாமூர்த்தி என்ற பா வத்தை, ஸாரத்தைத்தான் நாம் கிரஹிக்க வேண்டும். அப்படியே திருவீழிமிழலைப் புராணத்தில், தன் கண்ணைக் கூடத் தயங்காமல் கொடுக்கிறதுதான் பக்தி என்னும் ஸாரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். எவரைவிட எவர் உசத்தி அல்லது தாழ்த்திஎன்று பார்ப்பதை முக்யமாய் நினைக்கக் கூடாது.

முன்பெல்லாம் லாந்தர் விளக்குகள்தாம் இருந்து வந்தன. அதில் நாலு பக்கம் கண்ணாடி போட்டது மாதிரியும் உண்டு. நாம் இந்த முப்பட்டை லாந்தரைப் பார்ப்போம். கண்ணாடிக்குள்ளே விளக்கு ஏற்றி வைத்திருக்கும். அதன் ஒளி

மூன்று பக்கத்தாலும் கண்ணாடி வழியாக வெளியே வரும். சில சமயங்களில் அலங்காரமாக, இந்தக் கண்ணாடி ஒவ்வொன்றுக்கும் ஒரு வர்ணம் பூசியிருப்பார்கள். உள்ளேயிருக்கிற ஒரே ஒளி அந்தந்தப் பக்கத்துக் கண்ணாடி வழியாக வருகிறபோது அததன் வர்ணமாக தெரியும். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்ற மூன்று காரியங்களை ஒரே பரமாத்மா பண்ணுகிறது. ஒரே சைதன்யம் (அறிவொளி) தான் மூன்றுக்கும் காரணம். அந்த சைதன்யம் முப்பட்டை லாந்தருக்குள் இருக்கிற விளக்கு மாதிரி.

மூன்று பட்டையில் ஒன்றுக்கு சிவப்புக் கலர் பூசியிருக்கிறது. அதுதான் ச்ருஷ்டி. ஸ்பெக்டராஸ்கோப்பில் சுத்த வெளிச்சத்திலிருந்து சிவப்பைப் பிரித்தால் , பாக்கி ஆறு கலர்களும்கூட பிரிந்துவிடும். ஒன்று பலவாக ஆகிற சிருஷ்டி இதுதான் . அதனால்தான் சிருஷ்டிகர்த்தாவான பிரம்மனச் சிவப்பு நிறமாகச் சொல்வது. முப்பட்டைக் கண்ணாடியில் இன்னொன்று நீலம். ஸயன்ஸ்படி நிற மாலையின் கடைசியில் உள்ள 'வயலெட்'அதுதான். ஆரம்பம் சிவப்பு (infra-red),முடிவு வயல்ட் (ultra-violet). சிருஷ்டிக்கப்பட்ட லோகத்தையெல்லாம் பரிபாலித்துக் கொண்டிருக்கும்போதே, இந்த லோகம் என்பது தன்னில் தானே நிறைந்த பூர்ண சத்தியம் இல்லை;இது பரமாத்மாவின் வேஷம்தான்;அவருடைய லீலைதான்'என்று ஞானத்தினால் காட்டிக் கொண்டிருக்கிறவர் மஹாவிஷ்ணு. அந்த ஞான அக்னியில் லோகமெல்லாம் கரியாகிறது. ஒரு வஸ்து அடியோடு நீற்றுப் போய்விடாமல் தன் ரூபத்தோடேயே, ஆனால் வர்ணத்தை இழந்து, கரிக்கட்டையயாக நிற்கிற நிலை இது!லோகம் என்று ஒன்று இருக்கவும் இருக்கிறது;ஆனால் அதன் தனி குணம் - மாயை - எரிந்து, கரிந்து அதுவம் விஷ்ணு மயமே என்று தெரிகிறது: ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத் ! கரியான், நீலமேனியான் என்றெல்லாம் விஷ்ணுவைச் சொல்கிறோம். நீலம், கறுப்பு, வயலெட் எல்லாம் கிட்டக் கிட்ட இருக்கிற வர்ணங்கள். பரமாத்மா முத்தொழிலுக்காக ஒரு முப்பட்டை லாந்தர் மாதிரி இருக்கிறபோது நீலப்பட்டை வழியாக உள்ளேயிருக்கிற ஒளி வருகிறபோது அதை விஷ்ணு என்கிறோம்.

முப்பட்டை லாந்தரில் மூன்றாவது பக்கம் கண்ணாடிக்குக் கலர் பூசாமல் உள்ளபடியே விட்டிருக்கிறது. ஞானத்தில் எல்லாம் எரகிறபோது முதலில் கரிக்கட்டையாக ஆயிற்று. அந்தக் கரியையும் எரித்தால் எல்லாம் சாம்பலாகி விடுகிறது. ரூபம் என்பதே இல்லாமல் நீற்றுப் பொடியாகி விடுகிறது. இப்போது நிறமும் மாறிக் கறுப்பு அத்தனையும் வெள்ளை வெளேர் என்று ஆகிவிடுகிறது. வெளுப்பு சுத்த வெளிச்சத்துக்கு ரொம்பக் கிட்டின வர்ணம். அந்த வெளிச்சத்திலிருந்து வந்த எல்லாக் கலர்களும் - அதாவது பரமாத்மாவிடமிருந்து உண்டான சகல பிரபஞ்ச வியாபாரங்களும் - அடியோடு அடிபட்டு நீற்றுப் போய், அந்தப் பரமாத்மா மட்டுமே மிஞ்சி நிற்கிற நிலை இது. நிற்பது - நீறு. எல்லாம் போனாலும் நிலைத்து நிற்கிற நிலை இது. 'மஹா பஸ்மம்'என்கிற பரமேச்வரன் அதுதான். ஸம்ஹாரம் என்கிற பேரில் எல்லாவற்றையும் அழிக்கிற போது அது

கொடூரமான காரியமாகத் தோன்றினாலும், அழிப்போடு நிற்காமல், ஆதாரமான சத்தியத்தில் சேர்க்கிற பரம காருண்யமான தொழிலைத்தான். சிவபெருமான் செய்கிறார். விஷ்ணு, லீலையோடு சேர்த்துச் சேர்த்து ஞானத்தைத் தந்தபோது, நானா தினுசான (ஸர்வம்) லோகம் (ஜகத்) என்பது ஒரு கரிக்கட்டை மாதிரி பார்வைக்குத் தெரிந்தது. அதனால்தான் 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்'என்றது. இப்போது லீலை எல்லாம் முடிந்து ஸம்ஹாரம் என்ற பரம ஞான நிலை வந்திருக்கிறபோது ஸர்வமும் இல்லை, ஜகத்தும் இல்லை. அதனால்தான் 'சிவமயம்'என்று மட்டும் சொல்கிறோம்.

ஒரே விளக்குத்தான் - பிரம்ம சைதன்யம். அதுவே சிவப்புப்பட்டை வழியாகத் தெரியும்போது பிரம்மா எனப்படுகிறது;நீலப்பட்டை வழியாகப் பார்க்கிறபோது அதுவே விஷ்ணு;வர்ணம் பூசாத ட்ரான்ஸ்பாரன்ட் வெளுப்புக் கண்ணாடி மூலம் பார்த்தால் அதுவே சிவன்.

"ஒருருவே மூவுருவாய்" என்றுதான் நம் பெரியவர்கள் பாடி வைத்திருக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட ஃபிலாஸபியைத்தான் சொல்ல வேண்டும், ஒரு சித்தாந்தத்தைத்தான் நிலைநாட்ட வேண்டும் என்ற எண்ணங்கள் இல்லாமல் திறந்த மனஸோடு, விசாலமான பார்வையோடு தங்களுக்குத் தோன்றிய சத்தியங்களையே சொல்லிக் கொண்டு போன மகாகவிகள் எல்லோரும் ஒரே வஸ்துதான் மும்மூர்த்திகளாக, முப்பத்து முக்கோடி தேவதைகளாக ஆகியிருக்கிறதென்று சொல்லியிருக்கிறார்கள். பாணன் " ஸர்க- ஸ்திதி-நாச ஹேதவே " (ஸர்கம் என்றால் ஸ்ருஷ்டி) என்று ஒரே வஸ்துவை மூன்று தொழிலுக்காக மூன்றானதாகச் சொல்கிறான். காளிதாஸனும் ஸ்பஷ்டமாக, " ஏக ஏவ மூர்த்தி : பிபதே த்ரிதாஸா " - ஒன்றுதான் பரமாத்மா; அது முத்தொழிலுக்காக மூன்றாகப் பிரிந்தது என்கிறான்.

"பதினெண் புராணங்கள்"என்பனவற்றில் சைவமானவைதான் பிரமாணமு டையவை, வைஷ்ணவமானவை தான் பிரமாணமுடையவை என்று கட்சி கட்டினால், கட்சி தான் நிற்குமே ஒழிய, சண்டைதான் மிஞ்சுமே தவிர, தெளிவு உண்டாகாது;சாந்தி பிறக்காது. 'ஒன்று ஸத்;அதைத்தான் ஞானிகள் பல பேரில் சொல்கிறார்கள்'என்கிற வேத வாக்கியத்துக்கு அதிகமாக நமக்கு பிரமாணம் இல்லை.

ஆகையால் சைவ வைஷ்ணவ பேதபாவங்கள் இ் லாமல், எல்லோரும் அன்போடு கூடி சகல தெய்வங்களையும் பற்றிய விருத்தாந்தங்களை சிரவணம் செய்து சிரேயஸை அடைய வேண்டும்.

திருவிசநல்லூர் அய்யாவாள் என்று ஒரு மஹான் இருந்தார். ஸ்ரீதர் வேங்கடேச்வரர் என்பது அவர் பெயர். ஆனால் அவர் இருந்த ஊரை மட்டும் சொல்லி, பேரைச் சொல்லாமல் 'திருவிசநல்லூர் அய்யாவாள்'என்றே ஸகல

ஜனங்களும் மரியாதையோடு குறிப்பிடுவார்கள். சுமார் முந்நூறு வருஷங்களுக்கு முன் இருந்தவர். பகவந்நாம போதேந்திராளின் மூத்த 'கான்டெ ம்பரரி'(சமகாலத்தவர்). போதேந்திராள் விசேஷமாக ராம நாமாவையும், கோவிந்த நாமாவையும் பிரசாரம் செய்து வந்தார். அதே சமயத்தில் அய்யாவாள் சிவ நாமாவின் மகிமையைப் பரப்பி வந்தார். இரண்டு பேருக்குமே சைவ வைஷ்ணவ பேதம் கிடையாது. அதனால் இருவருமே சேர்ந்துகூடத் திருவிசநல்லூரில் நாம ஸித்தாந்தத்தைப் பிரசாரம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்குள் பரஸ்பரம் அந்பும் மரியாதையும் இருந்தன. கலிகாலத்தில் கைகண்ட மருந்து எனப்படும் நாமத்தின் பிரபாவத்தை இரண்டு பேருமே நிலைநாட்டினார்கள். பஜனை சம்பிரதாயத்தில் இவர்களைத்தான் முக்கியமான ஆசார்யர்களாக ஸ்தோத்திரம் செய்து விட்டு அப்புறம் மற்ற தெய்வபரமான நாமாவளிகள் சொல்வது வழக்கம். முதலில் போதேந்திராளைப் பற்றியும், அப்புறம் அய்யாவாளைப் பற்றியும், குருவந்தனம் சொல்லிவிட்டுத்தான் பஜனை செய்வார்கள்.

அய்யாவாள் ஒரு சிராத்த தினத்தன்று பஞ்சமனுக்கு போஜனம் பண்ணி வைத்தார் என்பதற்குப் பிராயச்சித்தமாக அவர் கங்கா ஸ்நானம் செய்து வரவேண்டும் என்று நாட்டாண்மைக்காரர்கள் தீர்ப்பு பண்ண, அவர் தம் வீட்டுக் கிணற்றிலேயே கங்கையைப் பொங்கவைத்தார் என்ற விஷயம் அநேகமாக எல்லாருக்கும் தெரிந்திருக்கும். இப்படி கங்கை வந்தது ஒரு கார்த்திகை அமாவாஸையில். இப்போதும் அந்தப் புண்ய தினத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் திருவிசைநல்லூர் அந்தக் கிணற்று ஜலத்தில் ஸ்நானம் செய்தால் கங்கா ஸ்நான பலன் கிடைக்கும் என்று நம்பிச் செய்து வருகிறார்கள்.

அய்யாவாள், ஸீதா கல்யாணத்துக்கு முன்னால் ஸ்ரீராம சந்திர மூர்த்தி சிவதநுஸை ஒடித்த விஷயத்தை ஒர் இடத்தில் சொல்லியிருக்கிறார். அங்கே "ஸ்வகர ப்ரதிபாடித ஸ்வசாப:" என்கிறார். அதாவது, தன் கையாலேயே தன் வில்லை ஒடித்துக் கொண்டார் என்கிறார். சிவதநுஸ் ஏற்கெனவே நாராயணனால் விரிசல் ஆக்கப்பட்டது. அப்புறம் நாராயணன் ஸ்ரீராமனாக வந்து அதை நன்றாக ஒடித்தே போட்டு விட்டார்'என்பதாக இந்த தநுர்பங்க சமாசாரத்தை வைத்து ஈச்வரனத் தாழ்த்தி பேசுவது நீண்ட காலமாக வந்த ஒரு வாதம். ஆனால் ஸமரஸமாக பார்த்த அய்யாவாளுக்கோ, சிவ விஷ்ணு பேதமே தெரியவில்லை. 'சிவனேதான் விஷ்ணு;விஷ்ணுவேதான் ராமன். ஆகையினால் ராமனும் சிவனும் ஒன்றுதான். சிவதநுஸ் என்றால் அதுவேதான் ராம தநுஸும்!தன் கையால் தன் வில்லையே முறித்துப் போட்டார்! அவருடைய லீலைக்கு இதெல்லாம் வேண்டியிருக்கிறது!என்று எழுதிவிட்டார்.

## புராணம்

### வழிகள் பல ; குறிக்கோள் ஒன்றே

ஆழ்வார்கள் விஷ்ணுபரமாகப் பாடி வைத்திருக்கிறார்கள். நால்வர் சிவபரமாகப் பாடினார்கள். வேதத்தில் ஸகல தெய்வங்களையும் ஒரே மாதிரி ஸ்தோத்திரம் செய்திருக்கிறது. உபநிஷத்து என்று போனால், அங்கே தெய்வங்களைப் பற்றி அதிகம் பேச்சில்லாமல் எல்லாம் ஆத்ம தத்துவமாகச் சொல்லியிருக்கிறது. இங்கே திருவள்ளுவரை எடுத்துக் கொண்டால் அவர் தெய்வம், தத்வம் இவைகளைப் பற்றி வைதிக சம்பிரதாயப் படியே சொல்லியிருந்தாலும், அதை விட ரொம்ப அதிகமாக தர்மங்கள், நன்னெறிகள் (Morals) இவற்றையே சொல்கிறார். இன்னொரு பக்கம் திருமூலரைப் பார்த்தால் அங்கே ஸ்வாமி பக்தி என்பதை விடப் பிராணாயாமம், தியானம், தாரணை, ஸமாதி இத்யாதி யோக சமாச்சாரங்கள்தான் நிறைய வருகின்றன. இப்படி ஒவ்வொன்றும் ஒவ்வொன்றைச் சொன்னால் எதை எடுத்துக் கொண்டாலும் தப்பில்லை. நாம் எடுத்துக் கொண்டதை நடுவிலே விடாமல், அதையே நம்பிக்கையோடு பிடித்துக் கொண்டு போய்க் கொண்டேயிருந்தால் முடிவில் எது பரமார்த்த சத்தியமோ அதையே அடைந்து விடுவோம். ஆரம்பத்தில் இவை வேறு வேறு வழிகளாகத் தோன்றினாலும், முடிவில் எல்லாம் கொண்டு சேர்க்கிற இடம் ஒன்றுதான்.

தேவர் குறளும் திருநான்மறை முடிவும்

மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை

திருவாசகமும் திருமூலர் சொல்லும்

ஒரு வாசகம் என்(று) உணர்.

இதே மாதிரி 'சிவமஹிம்ன ஸ்தோத்திர'த்திலும் சொல்லியிருக்கிறது. புஷ்ப தந்தர் என்ற மகான் - கந்தர்வராக இருந்து ஈச்வர சாபத்தால் பூமியில் விழுந்தவர் என்று சொல்வார்கள் - பரமேச்வரன் மகிமைகளைப் பற்றிச் சொல்கிற ஸ்தோத்திரம் அது. அதிலே ஒரு ச்லோகத்தில், 'த்ரயீ (வேதம்), ஸாங்கியம் (தத்வ ஆராய்ச்சி), யோகம், பசுபதி மதம், வைஷ்ணவம் என்பதெல்லாம் அவரவரின் ருசி விசித்திரத்தைப் பொறுத்து ஒரே பரமாத்ம தத்வத்தில் கொண்டு சேர்க்க ஏற்பட்டவைதான் - எந்த நதியானாலும் ஒரே சமுத்திரத்தில் போய் விழுகிற மாதிரி!என்று சொல்லியிருக்கிறது.

இங்கிலீஷ்காரர்கள் இதே ஸமரஸ திருஷ்டியில்தான் 'Jehovah, Jove, Lord' என்கிறார்கள். பைபிள் தோன்றிய, இஸ்ரேல் பிரதேசங்களில் இருந்த ஹீப்ரு,

ஸெமிடிக், மத ஸ்வாமிதான் ஜெஹோவா. கிரீஸ் முதலான தேசங்களில் இருந்த ஹெல்லெனிக் மதத்தின் கடவுள் 'ஜவ்'. ஜூபிடரின் இன்னொரு பெயர்தான் ஜவ். 'லார்ட்'- பிரபு - என்பது பொதுவாக எல்லா மதத்திலும் ஈச்வரனுக்குச் சொல்கிற பேர். பேர் வேறாயிருந்தாலும் ஆசாமி ஒருத்தனேதான் என்று வெள்ளைக்கார தேசத்து அநுபவிகளும் சொல்லியிருக்கிறார்கள்.

புராணங்களைப் பணிவோடு, மரியாதையோடு, அதனால் பயனடைய வேண்டும் என்ற எண்ணத்தோடு படித்தால் குழப்பம் எதுவும் உண்டாகாது. நம்முடைய க்ஷேமத்துக்காகவே ஏற்பட்டவைதான் அவை என்ற நல்லறிவு பெறுவோம். கொஞ்சம் கூட்டிக் குறைத்துச் சொல்லியிருந்தாலும் அதுவுங்கூட நல்ல உத்தேசத்துடன்தான் என்று புரிந்து கொள்வோம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## புராணம்

## புராணத்தை போதித்தவர்

இந்தப் புராணங்களை ஈச்வரனே தேவிக்குச் சொல்வதாக அல்லது விஷ்ணுவுக்குச் சொல்வதாக, அல்லது விஷ்ணுவோ ப்ரம்மாவோ நாரதருக்கோ அல்லது ஒரு ரிஷிக்கோ சொல்வதாக அவற்றில் சொல்லியிருக்கும். அப்படி தெய்வங்களே சொன்ன கதைகளை அப்புறம் ஒரு ரிஷிக்கோ ராஜாவுக்கோ இன்னொரு ரிஷி சொன்னார் என்று சொல்லிக் கொண்டு போய்க் கடைசியில் இவற்றை வியாஸர் ஸூதருக்கு உபதேசிக்க ஸூதர் நைமிசாரண்யத்திலுள்ள ரிஷிகளுக்குச் சொன்னார் என்று முடித்திருக்கும்.

நைமிசாரண்யத்து ரிஷிகள் அப்பிராம்மணரான ஸூதருக்கு உயர்ந்த ஆஸனமளித்து உட்கார வைத்து மரியாதை பண்ணி அவரிடமிருந்து புராண சிரவணம் பண்ணினார்கள். இதிலிருந்தே புராணங்களுக்குள் மதிப்புத் தெரிகறது. அதோடுகூட, பிறப்பைவிட அறிவுக்குத்தான் மதிப்புத் தந்தார்கள் என்றும் தெரிகிறது. உயர்ந்த விஷயத்தை எந்த ஜாதியார் சொன்னாலும் மரியாதையோடு கேட்டுக் கொண்டார்கள் என்று தெரிகிறது.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## நண்பனாகப் பேசுவது

ஒரு நல்ல காரியம் நடக்க வேண்டுமானால் அதை மூன்று தினுசுகளில் நடக்குமாறு பண்ணலாம். ராஜாங்கம் உத்தரவு போடுகிறது போலக் கட்டளை செய்வது ஒன்று. இதற்கு 'ப்ரபு ஸம்மிதை'என்று பெயர். பிரபுவான யஜமானன் வேலைக்காரனுக்கு ஆர்டர் பண்ணுவது போலச் சொல்வது பிரபு ஸம்மிதை. பண்ணா விட்டால் தண்டனை உண்டேயென்று, பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும் பயத்தோடு கட்டளைப் பிரகாரம் காரியத்தைப் பண்ணியாக வேண்டும். இப்படி அதிகார ஸ்தானத்திலிருந்து கொண்டு உத்தரவாகப் போடாமல் ஒரு சினேகிதன் நம்மிடம் ஒரு காரியத்தைச் செய்யச் சொன்னாலும் செய்கிறோம். இங்கே பயம் இல்லை. அன்பாலேயே செய்கிறோம்.நமக்கு நல்லதையே நினைக்கும் சிநேகிதன் அவன் என்ற நம்பிக்கை இருப்பதால் செய்கிறோம். இப்படி நம்மிடம் நல்ல மனஸ் உள்ள சிநேகிதனுக்கு 'ஸுஹ்ருத்' என்று பெயர்.அதனால் நம் ஸகா மாதிரியான ஸ்தானத்திலிருந்து கொண்டு நம்மை நல்ல காரியத்தில் ஏவுவது "ஸுஹ்ருத் ஸம்ஹிதை". இதை விடவும் சுலபமாகக் காரியத்தைச் சாதித்துத் தர வல்லது எது என்றால் பத்தினியின் பிரிய வசனம்தான். யஜமானனின் உத்தரவு பாரமாக இருக்கிறது என்றால், அதையே சிநேகிதன் சொல்லும்போது லகுவாகிறது. இதைவிடவும் லேசாகி விடும்,அதையே பத்தினி சொல்கிறபோது. இது மாதிரி ரம்மியமாக ஒன்றைச் சொல்லியே செய்யப் பண்ணுவது 'காந்தா ஸம்மிதை'எனப்படும். காந்தா என்றால் பத்தினி.

வேதம் பிரபு ஸம்மிதை, புராணங்கள் ஸுஹ்ருத் ஸம்மிதை,காவியங்கள் காந்தா ஸம்மிதை என்று சொல்வதுண்டு.

யத் வேதாத் ப்ரபு ஸம்மிதாத் அதிகதம்

சப்த ப்ராமாணாத் சிரம்

யத் ச அர்த்த ப்ரவணாத் புராண வசனாதிஷ்டம்

ஸுஹ்ருத் ஸம்மிதாத்।

காந்தா ஸம்மிதயா யயா ஸரஸதாம் ஆபாத்ய

காவ்யச்ரியா

கர்த்தவ்யே குதுகீ புதோ விரசிதஸ் தஸ்யை

ஸ்ப்ருஹாம் குர்மஹே।।

(வித்யாநாதரின் "பிரதாபருத்ரீயம்"-ச்லோ.8)

"இப்படிச் செய். அப்படிச்செய்" என்று மட்டும் வேதம் சொல்கிறது. ஏன் என்று காரணம் சொல்லாது. காரணம் கேட்டாலே நாம் வேதத்தை அவமரியாதை பண்ணுகிறோம் என்று வேறு சொல்கிறார்கள்! புராணம் என்ன பண்ணுகிறது? "அப்பா, இப்படி செய்வதால் இம்மாதிரியான கெடுதல் உண்டாகிறது" - என்று கதை மூலம் காரணம் சொல்கிறது. காரணம் சொல்வது மட்டும் புராணத்தின் விசேஷமில்லை. அந்தக் காரணத்தை நமக்கு ஸ்வாரஸ்யமாக இருக்கிற கதைகளின் மூலமாகச் சொல்லி நாம் அதை விரும்பிக் கேட்கும்படி பண்ணுவதே புராணத்தின் விசேஷம். 'ஹரிச்சந்திரன் இப்படித்தான் செய்தான். நளன் இப்படித்தான் செய்தான்.

இன்னும் இன்னின்ன பெரியவர்கள் இப்படியிப்படிச் செய்தார்கள். அதனால்தான் நடுவிலே அவர்களுக்கு எத்தனை கஷ்டங்கள், சோதனைகள் வந்தாலும், கடைசியில் பரம க்ஷேமமும், இன்றைக்கு நாமும் இன்னம் லோகம் உள்ளளவும் ஜனங்கள் அவர்களை மரியாதை பண்ணும்படியான சாச்வத கீர்த்தியும் உண்டாயிற்று. இதற்கு மாறாக ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு, ராவணன், துரியோதனன் போன்றவர்கள் செய்தார்கள். தாற்காலிமாக அவர்கள் பெரிய ஸ்தானத்தைப் பெற்று ஸந்தோஷம் அடைந்தாலும், கடைசியில் நாசமாகி, உலகம் உள்ளளவும் அபகீர்த்திக்கு ஆளாகியிருக்கிறார்கள்' என்று எடுத்துக்காட்டி நம்மை நல்லவற்றில் தூண்டுகிறது; கெட்டவற்றிலிருந்து தடுக்கிறது. வாஸ்தவத்தில் நடந்த கதைகளைத்தான் புராணம் சொல்கிறது. ஸுஹ்ருத்தான சினேகிதனும் உண்மைக்கு மாறாகப் பே ாமலேதான், ஆனாலும் நம் மனஸ் ஏற்கிற விதத்தில் நல்லதைச் சொல்வான்.

காவியம் என்ன செய்கிறது? கவி என்ன செய்கிறான்? அவன் யதார்த்த உண்மையிலே தன் கற்பனையையும் நிறைய கூட்டிக் கொள்கிறான். கல்பனா சக்தியாலேயே கதைகளைக்கட்டி விடுகிறான். ஒன்றை மிகைபடச் சொல்கிறான். வேறொரு விஷயத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்கிறான் (கூறியது கூறல்). இதை எல்லாம் செய்வதற்கு அவனுக்கு 'ரைட்' கொடுத்திருக்கிறது. யதார்த்தத்துக்கு கண், காது, மூ,க்கு வைத்து ஜோடனை பண்ணி அனைவரும் ரசிக்கும்படியாகச் செய்வதே கவியின் காரியம். ஸுஹ்ருத் (நண்பன்) போல் உள்ளதை உள்ளபடி மட்டும் சொல்லாமல், புருஷன் நல்லவழியில் போக வேண்டுமென்பதற்காகக் காந்தாவானவள் கூட்டியும், குறைத்தும், மாற்றியும் கூடப் பேசி அவனுக்கு ஹிதமாக இருக்கும்படியாக 'நைஸ்' பண்ணி விஷயங்களைச் சொல்லி அவனை சரி பண்ணுவள் என்பது ஐதிஹ்யம். இந்தக் காந்தாவின் ஸ்தானத்தில் காவியமும், பிரபுவின் ஸ்தானத்தில் புராணங்களும் இருந்து கொண்டு நமக்கு தர்மங்களைச் சொல்கின்றன.

## புராணம்

### உபந்யாஸமும் திரைப்படமும்

முன்னாளில் தாயார் விடிய நாலு நாழிகளையிருக்கும் போதே எழுந்திருந்து வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருக்கும்போதே - சாணி தெளிப்பது, கோலம் போடுவது, தயிர் சிலுப்புவது முதலான காரியங்களைச் செய்யும் போதே - புராணங்களில் வரும் புண்ணியமான கதைகளைப் பாட்டாகப் பாடி கொண்டிருப்பாள். குழந்தைகள் அதைக் கேட்டுக் கொண்டே புராணக் கதைகளைத் தெரிந்து கொண்டார்கள். தர்மங்களை ஜீவனுள்ள கதாபாத்திரங்களில் குழைத்துக் கொடுப்பதால் அவை இளம் உள்ளங்களில் ஆழப் பதிந்துவிடும். இதையே பிற்பாடு பௌராணிகர்கள் சொல்லக் கேட்டும், தாங்களே மூல நூலைப் படித்தும் விவரமாகத் தெரிந்துகொண்டார்கள். இதெல்லாம் முற்கால ஸம்பிரதாயங்கள்.

இப்போது இந்த நல்ல வழக்கங்கள் போய்விட்டன. ஸினமாப் பாட்டு, பாலிடிக்ஸ், நாவல், பத்திரிக்கைகள் இவைதான் சின்ன வயஸிலிருந்தே எல்லாரையும் எல்லாரையும் இழுக்கும்படியாக ஏற்பட்டிருக்கிறது. இப்போதும் ஸினிமா - டிராமாக்களில் புராணக் கதைகளையும் நடிப்பதால் அந்த அளவுக்குக் கொஞ்சம் புராண ஞானம் உண்டாகலாம். ஆனால் இது ஸரியான ஞானமாக இருக்குமா என்பது ஸந்தேஹம். புராணப் படத்தைப் பார்த்தாலுங்கூட நல்லதை விட அதிகமாகக் கெட்டதே வந்து சேரும்படி இருக்கலாம். ஏனென்றால் புராணக் கதையை ஸினமிவாகவோ டிராமாவாரவோ ஆக்குகிறபோது அதை எத்தனைக்கெத்தனை ஜன ரஞ்ஜகமாகப் பண்ணலாம் என்றுதான் பார்ப்பார்கள். இதனால் தாந்தா ஸம்மிதத்துக்கு நல்லதை வலியுறுத்துவதற்காகவே தரப்பட்ட சுதந்திரத்தைத் தப்பாகப் பிரயோஜனப்படுத்திக் கொண்டு மூலக் கதையை ரொம்ப சிதைத்து விடுகிற ஹேது அதிகமிருக்கிறது.

டிராமா, ஸினிமாவில் இன்னொரு கெடுதல், இவைகளைப் பார்க்கப் போகிறவர்கள் உத்தமமான கதாபாத்திரங்களின் குணங்களை கிரஹித்துக் கொள்வதற்குப் பதில் அந்த வேஷம் போட்டுக் கொள்ளும் நடிகருடைய குணங்களையே கிரஹித்துக் கொள்ளுவது!

நல்ல நடத்தையோடு கூடியவர்களாகவும், புராணம் சொல்கிற தத்வங்களில் ஈடுபாடு உள்ளவர்களாகவும், அதிலே வரும் உத்தம புருஷர்களின் குணங்களில் தோய்ந்தவர்களாகவும் இருக்கப்பட்ட பெரியவர்கள் செய்கிற புராணப் பிரவசனத்தைக் கேட்டால்தான் கேட்பவர்களுக்கும் அதிலுள்ள தர்மங்கள், அதில் வருபவர்களின் ஸத்குணங்கள் இவற்றை கிரஹித்துக் கொள்ள முடியும். பணம், புகழ் இவற்றையே நினைப்பவர்களாகவும், தாம் சொல்கிற விஷயங்களைத் தாமே

அனுஷ்டானத்துக்கு எடுத்துக் கொள்ளாதவரகாகவும் இருக்கிற பௌராணிகர் பண்ணும் உபந்நியாஸமும் டிராமா, ஸினிமா போலத்தான். நல்ல பலனைத் தராது. சாஸ்திரத்தில் சொன்ன நாடக தர்மப்படி இருந்தால் டிராமாவும், சினிமாவும் கூட நல்லதைச் செய்யமுடியும். நிஜ வாழ்க்கையில் புருஷன் பொண்டாட்டியாக இருப்பவர்கள் தான் நாடகத்திலும் ஸதி-பதியாக வரலாம்; ச்ருங்காரக் காட்சியில் இப்படியிப்படியான கட்டுப்பாடுகள் வேண்டும் என்று நாடக சாஸ்திரத்தில் இருக்கிறது.

தினமுமே இப்பொழுதெல்லாம் பட்டணங்களில் நிறைய உபந்நியாஸங்கள் நடக்கின்றன. நியூஸ் பேப்பரில் 'எங்கேஜ்மென்ட் கால' த்தைப் பார்த்தால் என்கே ஆச்சரியமாக இருக்கிறது. நான்கூடக் கேள்விப்படாத மத விஷயங்கள், கதை, புராணங்கள் உபந்நியாஸங்கள் நடக்கின்றன. ஜனங்களும் கூட்டம் கூட்டமாக இவற்றுக்குப் போகிறார்கள். ரொம்பவும் நாகரிகமான வழியில் இருக்கப்பட்டவர்கள், படித்த யுவர்கள் யுவதிகள்கூட இவற்றுக்கு வருகிறார்கள் என்று தெரிகிறது. நடுவாந்தரத்தில் இருந்த நிலையோடு பார்க்கும்போது இதை ஒரு ரினையஸான்ஸ் (மறுமலர்ச்சி) என்றுகூடச் சொல்லத் தோன்றுகிறது.

ஆனால் இதிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, பௌராணிகர்கள் எந்த அளவுக்கு ரஸாபாஸம் உண்டாக்காமல் கதை சொல்கிறார்கள் என்பதுதான். ஏதோ கொஞ்சம் பாலிடிக்ஸ், ஹாஸ்யம், உபகதைகள் வந்தால் பரவாயில்லைதான். ஆனால் இதுகளே கதையை, அதன் தத்வார்த்தத்தை அடித்துக் கொண்டு போகிற மாதிரி செய்து விட்டால் அது ரஸாபாஸம். பகவான் நினைவை உண்டாக்குதுதான் ரஸம். அதையும் அந்தப் புராணத்தில் சொல்லியிருக்கிற பிரகாரம், அதை விட்டு ரொம்பவும் வெளியே ஒடிவிடாமல், மனஸில் பதிகிற மாதிரி சொல்ல வேண்டும். இதற்கு முக்கியமாக ஸ்வானுபூதி இருக்க வேண்டும். கதை சொல்கிறவருக்கே ஆஸ்திக்யம் பட்டணங்களில் உள்ளது போல சின்ன ஊர்களிலும் கிராமங்களிலும் இவ்வளவு உபந்நியாஸங்கள், பஜனைகள், ஆஸ்திக ஸங்கங்களைப் பார்க்க முடியவில்லை. ரொம்பவும் நாகரிகம் முற்றிய இடத்திலேயே, 'ஆக்ஷ'னுக்கு ஸமமாக 'ரியாக்ஷ'னும் இருக்கும் என்ற 'நியூடன் லிணீஷ்'ப்படி அதற்கு மாற்றாக, இம்மாதிரி ஸத் விஷயங்களும் வளர்ந்து வருகின்றன. எல்லா இடத்திலும், கிராமங்களிலும்கூட, இப்படி நடக்க வேண்டும். எந்த இடமானாலும் ஏகாதசியன்று பக்திக்காகவும் தர்மத்துக்காகவும் என்றே புராண படனமும் (படிப்பதும்) சிரவணமும் (கேட்பதும்) நடக்க வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**புராணம்**

## ஸ்தல புராணங்கள்

புராணங்களை நம்புகிறவர்கள் கூட 'ஸ்தல புராணங்கள்'என்று ஊருக்கு ஊர் சின்னதாக இருக்கிறவற்றை நம்புவதற்கு யோஜிக்கிறார்கள். படிப்பாளிகள் எல்லாப் புராணமுமே பொய்யென்றால், ஸ்தல புராணம் வெறும் குப்பை என்று சொல்லும் அளவுக்குப் போய் விடுகிறார்கள். என்ன காரணம் என்றால் அநேக ஸ்தல புராணங்களில் ஒவ்வொன்றிலும், 'இங்கேதான் இந்திரனுக்கு சாப விமோசனம் ஆயிற்று', 'இங்கேதான் அகஸ்தியர், பார்வதி-பரமேச்வராள் திருக்கல்யாணக் காட்சியைப் பார்த்தார்'என்று இருக்கிறது. இது எப்படி ஸாத்தியம்?அவரவரும் தங்கள் ஊரை உயர்த்திச் சொல்ல வேண்டுமென்பதற்காக இட்டுக் கட்டி வைத்திருக்கிறார்கள்'என்று சொல்கிறார்கள்.

இதைப் பற்றி விஷயம் தெரிந்த ஆஸ்திகர்களைக் கேட்டால், 'கல்பத்துக்குக் கல்பம் அதே கதைகள் திரும்பவும் நடக்கிறது. அதை கதை நடந்தாலும் ஒரே அச்சாக இல்லாமல் கொஞ்சம் கொஞ்சம் பேதமும் இருக்கும். ஒரு கல்பத்தில் ஒரு ஸ்தலத்தில் நடந்த கதை இன்னொரு கல்பத்தில் இன்னொரு ஸ்தலத்தில் நடக்கிறது. அதனால்தான் அநேக ஸ்தலங்களில் ஒரே புராணக் கதை நடந்ததாகச் சொல்லப்படுகிறது'என்கிறார்கள்.

இதை ஒத்துக் கொள்ள முடியாதவர்களுங்கூட, ஒவ்வொரு ஊர்க்காரர்களும் புராணங்களில் வரும் புண்ணிய சம்பவங்கள் தங்கள் ஊரில் நடந்ததாக சொல்லிக் கொள்வதில் ஒரு பெருமை இருக்கிறதென்று நல்ல முறையில்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். பாமர ஜனங்கள் தங்கள் ஊருக்கே ராமர் வந்தார், கிருஷ்ணன் வந்தார், மஹரிஷிகள் வந்தார்கள், அங்கே மஹா கொடூரமான பாவங்களுக்கு விமோசனம் கிடைத்தது என்ற நம்பிக்கையைப் பெற்றதால் அந்த கோவில்களுக்குப் போவதிலும் உத்ஸவங்கள் நடத்துவதிலும் உத்ஸாஹம் அடைந்து, நல்ல பக்தி சிரத்தைகளைப் பெற்றிருக்கிறார்களா, இல்லையா?இதைத்தான் நாம் கவனிக்க வேண்டும். 'புத்திசாலி'களான நம்முடைய சந்தேகங்கள் இல்லாமல் அந்த எளிய ஜனங்கள் பெறும் நிறைவை ஏன் குலைக்க வேண்டும்?இந்த மாதிரி விஷயங்களில் உண்மை என்பதாக ஏதோ ஒரு யதார்த்தத்தை (fact) சொல்லி, அதனால் சாமான்ய ஜனங்கள் பெறும் திருப்தியைக் கெடுத்து அவர்களுக்கு புத்திக் கலக்கத்தை உண்டாக்கக் கூடாது. பகவானே கீதையில் சொல்கிறார்:

ந புத்திபேதம் ஜனயேத் அக்ஞானம் கர்ம ஸங்கினாம்।

இப்படிச் சொல்வதால் ஸ்தல புராணங்கள் யதார்த்தமான சத்தியத்தைச் சொல்லவில்லை என்கிற கோஷ்டியோடு நான் சேர்ந்துவிட்டதாகவும், ஆனாலும் அதனால்கூடப் பொதுஜனங்களிடம் நல்ல விளைவை ஏற்படுத்த முடிகிறது என்பதற்காகத்தான் அவற்றை அங்கீகரிக்க வேண்டும் என்று சொல்வதாகவும்

நினைத்துவிடக் கூடாது. பெரும்பாலான ஸ்தல புராணங்கள் உண்மையான விருத்தாந்தங்களைத்தான் சொல்கின்றன - என்பதே என் நம்பிக்கை. சிலது வேறு தினுஸாக இருக்கலாம். அப்படி இருந்தாலும் இருந்து விட்டுப் போகட்டும் என்றுதான் சொல்கிறேன். எல்லாஸ்தல புராணமுமே பொய்யென்று நான் சொல்ல வரவில்லை.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

புராணம்

## ஸ்தல புராணங்களின் ஸத்தியத்வம்

வேதத்தில் என்ன சொல்லியிருந்தாலும் அது ஸத்தியம் என்று நம்ப வேண்டும் என்பது போல, சைவ - வைஷ்ணவங்களுக்குத் தமிழ் வேதமாக உள்ள தேவார- திவ்யப்ரபந்தங்களில் சொல்லியிருப்பதை நாம் உண்மையென்று ஒப்புக் கொள்ள வேண்டும். அநேக க்ஷேத்ரங்களில் பாடப்பெற்ற தேவாரங்களிலும் ஆழ்வார்களின் பாசுரங்களிலும் அந்தந்த ஸ்தல புராண விஷயங்கள் வருகின்றன. 1500 வருஷத்துக்கு முந்திய இந்த தேவார - திவ்யப்ரபந்தங்களிலேயே ஸ்தல புராணக் குறிப்புகள் இருப்பது அந்தப் புராணங்களின் பழமைக்குச் சான்றாக இருக்கிறது.

உதாரணமாக ஸ்ரீரங்கத்திலே பெருமாள் வேறு எந்த ஊரிலும் இல்லாத மாதிரி தெற்கே பார்த்துக் கொண்டிருக்கிறார். இதற்கு அந்த க்ஷேத்ர புராணத்தில் காரணம் சொல்லியிருக்கிறது. ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்குப் பட்டாபிஷேகம் ஆனபிறகு விபீஷணன் லங்கைக்குத் திரும்பிப் போனபோது, ராமர்தாம் வழிபட்டு வந்த ரங்கநாத விக்ரஹத்தை அவனுக்கு கொடுத்தாரென்றும் அதுதான் ஒரு காரணத்தால் அவன் போகிறவழியில் உபயகாவேரிக்கு நடுவே ஸ்ரீ ரங்கத்தில் பிரதிஷ்டையாகி விட்டதென்றும், தன்னோடு லங்காபுரிக்கு எடுத்துப்போக முடியவில்லையே என்று துக்கப்பட்ட விபீஷணனைத் திருப்திபடுத்தவே ஸ்ரீரங்கநாதர் தெற்கு நோக்கிப் படுத்திருக்கிறார் என்றும் ஸ்ரீரங்க ஸ்தல புராணத்தில் விரிவாகக் கதை சொல்லியிருக்கிறது. இந்த விஷயத்தை ஆழ்வார்கள் தங்கள் பாட்டில் சொல்கிறார்கள்.

மஹாவிஷ்ணு தெற்கே பார்த்திருப்பதற்குப் புராணம் சொல்கிற காரணம் ஆழ்வார் காலத்திலேயே நிச்சமயாக இருந்திருக்கிறதென்றால் அந்தப் புராணம் அதற்கும் முந்தியதாகத்தானே இருக்க வேண்டும்?

காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதர் அம்பாளே பிடித்து வைத்துப் பூஜை பண்ணிய

பிருத்வி (மண்ணாலான) லிங்கம்;ஸ்வாமி அவள் பூஜை பண்ணுகிறபோது பெரிய வெள்ளத்தைப் பிரவஹிக்கச் செய்யும் அவள் விடாமல் லிங்கத்தைக் கட்டிக்கொண்டாள்;அதிலிருந்து ஸ்வாமியே ஆவிர்பவித்தார் - என்று ஸ்தல புராணத்தில் இருப்பதைத் தேவாரமும் சொல்கிறது. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் ஏகம்பத்தில் பாடிய தேவாரத்தில் பாட்டுக்குப்பாட்டு அம்பாள் பூஜை பண்ணிய மஹிமையைச் சொல்கிறார்.

ஸ்ரீ ரங்கத்துக்குப் பக்கத்தில் இருக்கிற ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்காவில்) ஜம்பு மஹரிஷி என்பவர் ஜம்பு (நாவல்) விருக்ஷமாக ஆக, அதன் கீழேயே ஈச்வரன் வந்து கோயில் கொண்டார். அங்கே லிங்கத்துக்கு ஒரு சிலந்தி பந்தல் போட்டுப் பூஜித்தது. இந்த பந்தலை அறுத்துக் கொண்டு ஒரு யானை லிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணிற்று. இதனால் சிலந்திக்க ஆத்திரம் வந்து யானையின் தும்பிக்கைக்குள் புகுந்து கொண்டு அதன் மண்டைக்குள் போய் குடைந்தது. அப்போது யானை மண்டையை மோதிக் கொண்டு தானும் செத்து சிலந்தியையும் சாக அடித்து விட்டது. இந்த சிலந்தி தான் பிற்பாடு கோச்செங்கட் சோழனாக பிறந்து ஜம்புகேச்வர ஆலயத்தைக் கட்டிற்று. இந்தக் கதையை ஸ்தல புராணம் சொல்கிறது.

இத்தனைக்கும் தேவாரத்திலேயே reference இருக்கிறது. மூலஸ்தானத்தில் எப்போதும் காவேரி ஊற்று இருக்கும்படியான அற்புத ஸ்தலம் அது என்பதற்கு அப்பர் தேவாரம் ஒன்றில் பத்துப் பாட்டிலும் குறிப்பு இருக்கிறது.

திருக்கழுக்குன்றத்தில் தினமும் மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு இரண்டு கழுகுகள் வந்து பண்டாரம் கொடுக்கிற சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டு விட்டுப் போகிறதல்லவா?இது நூற்றாண்டுகளாக நடந்துவருகிறது என்று சொல்வதற்கு என்ன ஆதாரம் என்று கேட்கிறார்கள். இந்த ஊர் பேரே தேவார காலத்திலிருந்து "கழுக்குன்றம்"என்று இருக்கிறது. இதைவிடப் பெரிய ஆதாரம் என்ன வேண்டும்?

திருவிடைமருதூரில் தைப்பூச ஸ்நானம் விசேஷமானது என்று க்ஷேத்ர மாஹாத்மியத்தில் சொல்லியிருக்கிறது என்றால் இந்த விசேஷத்தை சுமார் 1300 வருஷங்களுக்கு முன்பு அப்பரும் சம்பந்தருமே பாடியிருக்கிறார்கள்.

ஸ்ரீரங்கம், ஜம்புகேச்வரம், காஞ்சீபுரம், திருக்கழுக்குன்றம், திருவிடைமருதூர் போன்ற மஹாக்ஷேத்ரங்கள் புராதனமாக ப்ரஸித்தமானதால் அவற்றைப் பற்றிய புராண வழக்குகள் பழைய தமிழ் நூல்களில் வந்திருப்பதில் ஆச்சரியமில்லை என்று தோன்றலாம். சின்ன சின்ன க்ஷேத்ரங்களில் உள்ள பு ாண ஐதிஹ்யங்களுக்குக் கூட பழைய தமிழ் மறைகளில் குறிப்பு இருப்பதுதான் ஆச்சிரியமாக இருக்கிறது.

பிரஸித்தியடையாத சில க்ஷேத்ரங்களில் ரிஷிகளோ தேவர்களோ வண்டுகளாக இருந்து பூஜை பண்ணினதாக ஸ்தல புராணங்களில் இருக்கிறது. இப்போதும் அந்த ஊர்களில் சன்னதியிலேயே பெரிய தேனடைகள் இருந்து கொண்டிருக்கின்றன. நன்னிலத்தில் இப்படி இருக்கிறது. 'மதுவனம்' என்றே அதற்கு ஒரு பெயர் இருக்கிறது. (மது - தேன்). திருத்துறைப்பூண்டிக்குப் பக்கத்தில் சிதாதம்பூர் என்று சொல்கிற ஊர் இருக்கிறது. இதற்கு தேவாரத்தில் திருச்சிற்றேமம் என்று பெயர். இங்கேயும் ஸ்வாமி சன்னதியில் தேன்கூடு இருக்கிறது. ஸித்தர்கள் தேனீக்களாக வந்து பூஜிக்கிறார்கள் என்று ஐதிஹ்யம். இந்த தேனடைக்கும் தினந்தோறும் பூஜை நடக்கிறது. வைஷ்ணவ திவ்ய தேசங்களில் திருக்கண்ண மங்கையில் தேனடையிருக்கிறது. இவற்றைப் பற்றி அந்தந்த ஊர் தேவார-திவ்யப்ரபந்தங்களிலும் reference இருக்கிறது.

ஸ்தல புராண விஷயங்களை தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முதலியவற்றில் குறிப்பிட்டிருப்பதால் அவற்றின்பழமை, பிராமாண்யம் (authentificity) இரண்டும் தெரிகின்றன.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

## புராணம்

### பல வரலாறுகளிடை தொடர்பு

ஒரு ஸ்தல புராணத்தில் இருக்கிற ஸம்பவத்தை ஸம்மந்தப் படுத்தி இன்னொன்றில் வருகிறது. இப்படிப் பல புராணங்களுக்கிடையே ஒரே கதையை தொடர்பு படுத்திச் சொல்லியிருக்கிறது;interconnected ஆகச் சொல்லியிருக்கிறது. எல்லாவற்றையும் சேர்த்துப் படித்தால்தான் முழுக்கதையும் தெரிகிறது. இம்மாதிரி ஒரு ஸ்தல புராணத்தில் விட்ட இடத்தில் இன்னொன்று தொடங்குவதாக அநேகம் இருப்பதே ஸ்தல புராணங்கள் பொய்யில்லை என்பதற்கு ஒரு சான்றாக இருக்கிறது.

ஸ்தல புராணங்களுக்குள்ளே மட்டுமில்லாமல் 18 மஹாபுராணங்கள், உபபுராணங்கள் இவற்றில் பல அம்சங்களைக் கூட ஸ்தல புராணங்கள்தான் பூர்த்தி செய்கின்றன என்பதைப் பார்க்கும்போது இவற்றின் authenticity (நிஜத்தன் மை)யைப் பற்றி மேலும் உறுதியாகிறது.

உதாரணமாக: அம்பாளும் ஈச்வரனும் கைலாஸத்தில் சொக்கட்டான் ஆடினார்களும். "நான்தான் ஜெயித்தேன்", "நான்தான் ஜெயித்தேன்" என்று

இரண்டு பேரும் அபிப்பிராய பேதமாகச் சொன்னார்களாம். பல தினுஸாக லோகத்துக்கு தர்மங்களை எடுத்துக் காட்டுவதற்காக ஸ்வாமியும் அம்பாளும் இப்படியெல்லாம் கூத்தடிப்பார்கள். அப்படித் தான் இப்போது அவர்களுக்குள்ளே கலகம் வந்து விட்டது. காசு வைத்து இந்த மாதிரிப் பந்தயம் ஆடினால் எவரும் ஒழுங்கு தப்பிப் போகும்படிதான் ஆகும் என்று காட்டுகிற மாதிரி, சொக்கட்டான் ஆட்டத்தின் முடிவில் கலகம் வந்ததாக ஆட்டம் போட்டார்கள்.

தன்னுடைய உடைமையையெல்லாம் பந்தயம் வைத்துத் தோற்றுப்போன ஸ்வாமிக்குக் கோபம் வந்து அம்பாளை, "நீ பூலோகத்தில் போய்ப் பசுவாகத் திரிந்து கொண்டிரு"என்று சாபம் கொடுத்து விட்டார். அவர் பசுபதி. வெறித்துத் திரிந்து கொண்டிருக்கிற இந்திரியங்களான பசுக்களை அடக்கி வைக்கிற பதி அவர்.

அஹங்காரம் பிடித்த ஜீவனுக்கு இந்த அநுக்ரஹத்தைப் பண்ண மாட்டார் என்று காட்டுவதற்காக ஸாக்ஷாத் பராசக்தியைப் போக்கிடமில்லாத பசுவாகத் திரிந்து கொண்டிருக்கும்படி ஆக்ஞை பண்ணி விட்டார்!மஹாசக்தியாக இருக்கப்பட்ட அம்பாளும், உடனே தன் தப்பை உணர்ந்து, அவருக்கு அடங்கிய பதிவிரதையாக - இந்தக் கற்பு நெறி உலகத்துக்குத் தெரிவதற்காக - ஒரு சாதாரணப் பசு மாடாக ஆகி பூலோகத்துக்கு வந்து திரிய ஆரம்பித்து விட்டாள்.

"கோமாதா, குஹஜன்மபூ:"- என்று அம்பாளுக்கு ஸஹஸ்ரநாமாவில் பேர் சொல்லியிருக்கிறது. இப்படி கோமாதாவாக பூலோகத்துக்கு வந்து விட்டாள்.

மஹாவிஷ்ணு அவளுடைய அண்ணா அல்லவா?அந்தப் பாசம் அவருக்கு!மாப்பிள்ளை (ஈச்வரன்) அவளை விரட்டி விட்டார் என்றதும், 'அவர் பசுபதியாக இருந்து ரக்ஷிக்காவிட்டால் போகட்டும்;தங்கையை நாம் ரக்ஷித்துப் பாதுகாப்பில் வைத்துக் கொள்வோம்'என்று நினைத்து மஹாவிஷ்ணு மாட்டிடையனாக ஆகித் தானும் அம்பாளோடு வந்துவிட்டார். இடையனாகி பூலோகத்தில் அலைய வேண்டும் என்று இவருக்கு ஒரு சாபமும் இல்லை. ஆனாலும் ஸஹோதர வாத்ஸல்ய தர்மத்தைக் காட்டுவதற்காகத் தங்கையோடு கூடத் தாமும் வந்து விட்டார். இந்த அநுபவத்திலே ஏற்பட்ட ருசியினால்தான் கிருஷ்ணாவதார காலத்திலேயும் மாடு மேய்த்து ஸந்தோஷப் பட்டார். கோபாலன் என்றே பேர் வாங்கினார். 'கோபாலன்'என்றாலும் பசுபதி என்றாலும் ஒரே அர்த்தம்தான். இந்தப் பெயர்களை ஆலோசித்துப் பார்த்தாலே சைவ-வைஷ்ணவ பேதம் போய்விடும். அது இருக்கட்டும்.

அண்ணாவும் தங்கையும் இப்படிக் கோனாராகவும், கோவாகவும் வந்த ஊர்தான் திரு அழுந்தூர். "தேரழுந்தூர்"என்று சொல்வது அதுதான். கம்பருடைய ஊர் அதுவே. 'கம்பர்மேடு'என்று இப்போதும் அங்கே இருக்கிறது. அங்கே (திருமங்கை) ஆழ்வார் மங்களாசாஸனம் பண்ணின கோயில் இருக்கிறது.

பெருமாள் கோபால மூர்த்தியாகவே கர்ப்பக்ருஹத்தில் பசுவோடு கூட இருக்கிறார். பசுவுக்கு ஸகாவாக வந்தால் அவருக்கு 'கோஸகன்'என்று பேர். கோஸக க்ஷேத்ரம் என்றே தேரழுந்தூருக்குப் பேர் இருக்கிறது. 'கோ-ஸகர்'என்பதை 'ஆமருவிப்பன்'என்று தமிழில் சொல்கிறோம். 'ஆ'என்றால் பசு.

அந்த ஊரில் வேதபுரீச்வரர் என்ற பெயரில் சிவனுக்கு கோயில் இருக்கிறது. ஒரு ஊர் என்று இருந்தால் ஒரு கோடியில் சிவன் கோயிலும் இன்னொரு கோடியில் பெருமாள் கோயிலும் இருக்கவேண்டும் என்பது பழைய கால சாஸ்திரப்படியான town-planning.

தேரழுந்தூரில் உள்ள பெருமாள் கோயிலுக்கு ஆழ்வார் பாடல் இருக்கிறதென்றால், ஈச்வரன் கோயிலுக்கு (ஞான சம்பந்தரின்) தேவாரம் இருக்கிறது. ஆழ்வார்கள் பாடிய ஸ்தலங்களை 'மங்களாசாஸனம் பெற்றவை'என்பார்கள். தேவாரம் உள்ள க்ஷேத்ரத்தைப் பாடல் பெற்ற ஸ்தலம்' என்பார்கள். அநேக க்ஷேத்திரங்களுக்கு இந்த இரண்டு பெருமைகளும் இருக்கிறது. தேரழுந்தூருக்கும் இருக்கிறது.

பசுவாக வந்த அம்பாளை மஹாவிஷ்ணு புல் மேல் மேயவிட்ட இடங்கள் தேரழுந்தூருக்கு பக்கத்திலேயே பில்லூர் ('புல்'என்பதைத் தஞ்சாவூர் ஜில்லாக்காரர்கள் 'பில்'என்றுதான் சொல்லுவார்கள்), மேக்கிரி மங்கலம் என்ற பெயர்களில் இருக்கின்றன. ஆன் ஆங்கூர் என்பதும் இன்னொரு பக்கத்துக்குக் கிராமம். அதுவும் பசு திரிந்ததற்கு அடையாளமாகப் பேர் வைத்துக் கொண்டிருக்கிறது!(ஆன்-பசு).

பசு புல் மேயும். கோனார் மேய விட்டுக் கூடப் போய் பாதுகாப்பார். அம்பாளும், மஹாவிஷ்ணுவும் ஈச்வர ஆராதனை பண்ண வேண்டுமல்லவா?அதற்காகத்தான் கோஸக க்ஷேத்திரத்தில் பெருமாள் வேதபுரீச்வரரைப் பிரதிஷ்டை பண்ணினார். (வேதபுரீச்வரர் கோயில், ஆமருவியப்பன் கோயில் இரண்டும் ஒரே மானேஜ்மென்டில்தான் இருக்கிறது.)

வேதத்துக்கு கோ ரொம்பவும் அவசியம். யாகத்துக்கு வேண்டிய நெய், பால் முதலானவற்றைத் தரும் கோ, யாகத்தைப் பண்ணி வைக்கும் பிராம்மணர்கள் இருவரும் வேத மதம் விளங்குவதற்குக் குறிப்பாக இருக்க வேண்டும். 'கோ-ப்ராஹ்மணேப்யோ சுபமஸ்து நித்யம்'என்றும் 'வாழ்க அந்தணர் வானிவர் ஆனினம்' என்றும் இதனால்தான் சொல்லியிருக்கிறது.

அம்பாள் 'கோ' வாக வந்த இடத்தில், அவளைப் அப்படிச் சபித்தவர் வேதபுரீச்வரராக வந்தார். அந்த ஊரில் ஸமீப காலம் வரை வேத சாஸ்திர வ்யுத்பன்னர்கள் (விற்பன்னர்கள்) நிறைய இருந்திருக்கிறார்கள். "அழுந்தை

மறையோர்"என்று அவர்களை சம்பந்தர் தேவாரத்தில் திரும்பத் திரும்பப் போற்றியிருக்கிறார்.

இந்த ஊர்ப் பெருமாளையே ஆழ்வார் ரொம்பவும் வேத சம்பந்தமுள்ளவனாக, "சந்தோகா!பௌழியா!தைத்திரியா! சாமவேதியனே!நெடுமாலே!"என்று கூப்பிடுகிறார்.

ஒரு நாள் மேய்ச்சலின் போது பசுவின் குளம்பு இடித்து பூமிக்குள்ளிருந்து ஒரு கல் வந்தது. பார்த்தால் சிவலிங்கமாய் இருந்தது. இப்படிப் பெரிய சிவ அபராதம் பண்ணி விட்டதால் பசு மிரண்டு ஒடியது. மஹாவிஷ்ணு அதை சமாதானப் படுத்தி அழைத்து வந்தார். அந்த இடத்துக்கு "திருக்குளம்பியம்" என்று பெயர் இருக்கிறது.

இதையெல்லாம் பார்த்த மஹாவிஷ்ணுவுக்கு ரொம்பவும் வேதனை உண்டாயிற்று. ஏதோ ஒரு விளையாட்டில் தன் ஸஹோதரி அஹங்காரப்பட்டதற்காக இத்தனை விபரீதங்கள் வந்து விட்டதே என்று ரொம்பவும் வருத்தப்பட்டார்.

ஸுந்தரேச்வரருக்கு மீனாக்ஷியை மஹாவிஷ்ணுதான் தாரை வார்த்துக் கொடுத்தார். அந்த மாதிரி இங்கேயும் தங்கையை எப்படியாவது ஈச்வரன் மறுபடியும் சேர்த்துக் கொள்ளும்படியாக பண்ணவேண்டும் என்று மஹாவிஷ்ணு பிரார்த்தனையும் பூஜையும் பண்ணிக் கொண்டிருந்தார்.

ஈச்வரன் மனஸுக்கு, திருப்தி உண்டாயிற்று. மஹாவிஷ்ணுவிடம், 'நீ இப்படியே அவளை (பசுவாக இருக்கிற அம்பாளை) மேய்த்துக் கொண்டே போய்க் காவேரியில் ஸ்நானம் பண்ணுவித்து எழுப்பு. பழைய ரூபம் வரும். அப்புறம் நானே வந்து எப்போது கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்பதைச் சொல்கிறேன்"என்றார்.

அவர் சொன்னப் பிரகாரமே கோஸகர் பசுவக் காவேரி ஸ்நானம் பண்ணுவித்து, திரும்ப அது அங்கிருந்து போய் அடைந்த ஊரைத்தான் இப்போது 'திருவாவடுதுறை' என்கிறோம். 'ஆ-ஆடு-துறை'தான் அது. எந்தக் காவேரித் துறையிலே ஆ(பசு) நீராடிக் கிட்டே போய்ச் சேர்ந்தோ ('ஆ-ஆடு'என்பதில் வரும் 'அடுதலு'க்குக் கிட்டே போய்ச் சேருதல் என்று அர்த்தம்) அந்த ஊர் என்று அர்த்தம். (திருமூலர் 'திருமந்திரம்'செய்ததால் பெருமை படைத்த ஊர் இந்தத் திருவாவடுதுறைதான். ஊர்ப் பேருக்குப் பொருத்தமாக த் திருமூலரும் செத்துப் போன ஒரு இடையனின் உடம்புக்குள்ளே பரகாயப் பிரவேசம் பண்ணியிருக்கிறார்!)

அங்கே ஈச்வரன் வாக்குப்படியே அம்பாளுக்குப் பசுரூபம் மறைந்து ஸ்ய ரூபம் வந்தது. ஈச்வரனும் பிரத்யக்ஷமானார். ஆனால் இன்னும் கொஞ்சம் ஆட்டம் போட நினைத்தார். பக்கத்திலே குற்றாலம் என்ற ஊரில் (இது திருநெல்வேலி

குற்றாலமில்லை. அருவி விழுகிறதே அந்த ஊர் இல்லை. இது தஞ்சாவூர் ஜில்லாவில் மாயவரத்துக்குப் பக்கத்தில் இருப்பது. 'திருத்துருத்தி'என்பது இதற்குப் பழைய பெயர். அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் தேவாரம் பாடியுள்ள 44 க்ஷேத்ரங்களில் அது ஒன்று.) அந்த ஊரிலே அம்பாளைப் பெண்ணாக வளர்க்க வேண்டும் என்று ஒரு ரிஷி தபஸ் பண்ணிக் கொண்டிருந்தார். 'அம்பாள் பூலோகத்துக்கு வந்ததுதான் வந்தாள். ரிஷியுடைய இஷ்டத்தை பூர்த்தி செய்வதற்காகவும் இந்த சந்தர்ப்பத்தையே 'யூடிலைஸ்'பண்ணிக் கொண்டு விடலாமே!'என்று ஈச்வரன் நினைத்தார். இல்லாவிட்டால் அவளை மறுபடி ஒரு தடவை அல்லவா பூலோகத்துக்கு அனுப்ப வேண்டிவரும்?'

அதனால் ஈச்வரன் அம்பாளிடம், "நீ போய் திருத்துருத்தியில் அந்த ரிஷியின் பெண்ணாகக் கொஞ்ச காலம் இருந்து வா. அப்புறம் நான் வந்து கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன்"என்றார்.

அம்பாளும் அப்படியே செய்தாள்.

அப்புறம் ஸ்வாமி அங்கே பிரஸன்னமானார். கோஸக க்ஷேத்ரத்தில் வாக்குக் கொடுத்தவரே இங்கே வந்தார் என்பதற்கு ஒரு உட்சான்றாக இங்கேயும் ஸ்வாமிக்குப் பேர் வேதேச்வரர் என்று இருக்கிறது.

அந்க ரிஷியும், இந்தக் கல்யாணத்துக்காகவே காத்துக் கொண்டிருந்த மஹாவிஷ்ணுவும் ஈச்வரனை எதிர்கொண்டு அழைத்த ஊருக்கு 'எதிர்கொள்பாடி'எனறு பேர் ஏற்பட்டுவிட்டது.

கல்யாணத்துக்கு முன்னால் 'வ்ரதம்'என்று பண்ணுகிற ஹோமத்தை ஈச்வரன் பக்கத்தில் ஒரு ஊரில் செய்தார். அதனால் அதற்கு 'வேள்விக் குடி'என்றே பேர் உண்டாயிற்று.

அப்புறம் எங்கே அவர் அம்பாளைக் கல்யாணப் பெண்ணாகப் பார்த்து பாலிகை தெளித்தாரோ அந்த ஊர் குறுமுளைப்பாலி என்று வழங்கி வருகிறது. அப்போது இரண்டு மூன்று கிராமங்களையே அடைத்துப் பெரிதாக கல்யாணப் பந்தல் போட்டார்களாம். அதற்கு நடுமத்யமாக இருக்கிற ஊருக்கு 'திருமணஞ்சேரி'என்றே பெயர் இருக்கிறது. அங்கேதான் ஸாக்ஷாத் பார்வதி-பரமேச்வரர்களுக்குத் திருக்கல்யாணம் பண்ணி வைத்து மஹாவிஷ்ணு மனங்குளிர்ந்தார்.

இப்போது நான் சொன்ன இந்தக் கதையில் அஹம்பாவம் கூடாது, சூதாட்டம் கூடாது, பதியின் வாக்குக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும், ஸஹோதர வாத்ஸல்ய பரிபாலனம் முதலான அநேக தர்மங்கள் வெளியாவதால் ஸ்தல புராணங்களை உபயோகமில்லாதவை என்று ஒதுக்குவது எவ்வளவு தப்பு என்று தெரிகிறது. அது மட்டுமில்லை. நான் கதை சொன்னதும் இதை நினைத்து இல்லை.

இந்த ஒரு கதைக்குள்ளே துண்டு துண்டாக ஒரு ஏழெட்டு ஸ்தல புராணங்கள் சேர்ந்திருக்கின்றன. ஒன்றுவிட்ட இடத்தில் இன்னொன்று ஆரம்பிக்கிறது. எல்லாம் சேர்ந்தாலாதான் கதை பூர்ண ரூபம் பெறுகிறது.

தேரழுந்தூர், பில்லூர், ஆனாங்கூர், திருக்குளம்பியம், திருவாவடுதுறை, குற்றாலம், எதிர்கொள்பாடி, வேள்விக்குடி, குறுமுளைப்பாலி, திருமணஞ்சேரி என்று இத்தனை ஊர்களைப் பற்றிய ஸ்தல புராணங்கள் ஒன்று சேர்ந்து ஒரே கதையை உருவாக்கியிருப்பதால் அந்தக் கதை நிஜந்தான் என்று ஆகிறது. அநேகமாக அந்த ஸ்தலங்களின் பேரிலேயே 'எவிடென்ஸ்' இருக்கிறது.

இதைவிடத் தஞ்சாவூர் ஜில்லாக்காரர்களுக்கு அதிகம் தெரிந்த ஒரு கதை கும்பகோணத்தையும் அதன் சுற்றுப்பட்ட க்ஷேத்ரங்களையும் இணைக்கிறது:

பிரளயத்தின் போது பிரம்மா அடுத்த சிருஷ்டிக்கான பீஜங்களை அமிருதத்தில் வேத சப்தங்களோடு சேர்த்து ஒரு மண் கும்பத்தில் (குடத்தில்) போட்டு அதற்கு யதோக்தமாக மாவிலை, தேங்காய் வைத்துப் பூணூல் போட்டு மேரு உச்சியில் வைத்துவிட்டார். பிரளய வெள்ளத்தில் அது மிதந்து வந்தபோது பரமேச்வரன் மறுபடி சிருஷ்டியை ஆரம்பித்து வைக்கவேண்டுமென்று நினைத்தார். அப்போது கும்பத்தின் மேலே வைத்திருந்த தேங்காய் புயலின் ஆட்டத்திலே சரிந்து விழுந்து விட்டது. உடனே பிரளய வெள்ளத்திலிருந்து அந்தப் பிரதேசம் வெளியிலே வந்துவிட்டது. தேங்காய் விழுந்த இடத்திற்குக் கிட்டேதான் பிற்பாடு அமிருதம் மஹாமகக் குளமாகப் பெருகிற்று. இப்போதும் அங்கே ஸ்வாமிக்கு நாரிகேளேச்வரர் என்று பெயர் இருக்கிறது. (நாரிகேளம் எந்றால் தேங்காய்.) அவர் மேற்குப் பார்க்க இருப்பதால் 'அபிமுகேச்வரர்'என்கிறார்கள். அப்புறம் மாவிலை விழுந்தது. அந்த இடமும் பிரளயத்தை மீறிக் கொண்டு பூப்பிரதேசமாக வெளியில் வந்தது. கும்பகோணத்திற்கு வடமேற்கே நாலு மைலில் உள்ள திருப்புறம்பயம்தான் அது. 'பயம்'என்றால் 'பயஸ்'-ஜலம், அதாவது பிரளயம்;'புற ம்'-புறம்பாக இருப்பது. பிரளயத்துக்குப் புறம்பாக அதை மீறி இருப்பது திருப்புறம்பயம். அப்புறம் பூணூலும் இப்படியே விழுந்தது. அது மஹாமகக்குளத்தின் கிட்டே ஒரு இடம். அங்கேயுள்ள கோவிலில் ஸ்வாமி பெயர் 'ஸூத்ரநாதர்'என்றே இருக்கிறது. ஸூத்ரம் என்றால் பூணூல். 'உபவீதம்'என்றாலும் பூணூல். அதனால் 'உபவீதேச்வரர்'என்றும் சொல்வதுண்டு. அங்கே கௌதம மஹரிஷி பூஜை செய்ததால் 'கௌதமேச்வரர்'என்றே அதிகம் வழங்குகிறது.

இந்த கும்பத்துக்கு வாயைத் தவிர மூக்கும் இருந்தது, கிண்டி, கமண்டலு முதலியவற்றுக்கு இருப்பது போல!நான் வைத்துக் கொண்டிருக்கிற கடத்துக்குக் கூட மேல் பக்கம் வாய் இருப்பதோடு, பக்கவாட்டில் மூக்கும் இருக்கிறதல்லவா?கடம் அல்லது குடத்தை உள்ளே நிரப்புவதற்கு வாய் வழியாக ஜலம் விடவேண்டும். அதிலிருந்து ஜலத்தை வெளியில் விடவேண்டுமானால் மூக்கு வழியாகத்தான் விடவேண்டும். இம்மாதிரி சாஸ்திரோக்தமான குடமாகவே

அந்த அமிருத கடமும் இருந்திருக்கிறது. பரமேச்வரன் பார்த்தார் - கும்பம் தானாகக் கவிழ்ந்து சிருஷ்டி பீஜமும் அமிருதமும் வெளியில் வராததால் தாம் பாணத்தினால் டித்துக் கும்பத்தை உடைத்து அவற்றை வெளிப்படுத்தி விடுவது என்று தீர்மானம் பண்ணினார். உடனே பாணத்தையும் போட்டார். பாணபுரி எந்ற 'பாணத்துறை' யான அந்த இடத்தைத்தான் இப்போது 'வாணாதுறை'என்கிறார்கள். அங்கே ஸ்வாமிக்குப் பேர் பாணபுரீச்வரர். குடத்தின் வாய் சிதறி விழுந்த இடம் (குடவாசல்) என்று பெயர் பெற்றது. ஆனால் சாஸ்திரோக்தமாக மூக்கு வழியாக அமிருதம் வெளி வரவேண்டும் என்று ஸ்வாமி நினைத்ததால் மூக்கு உடைந்து அமிருதம் வெளிவந்த க்ஷேத்திரமே மற்ற க்ஷேத்திரங்களைவிடப் பெருமை உடையதான 'கும்பகோணம்'ஆயிற்று. 'கோணம்'என்றால் மூக்கு. கும்பத்தின் கோணம் விழுந்து இடம் 'கும்பகோணம்'. 'குடமூக்கு' என்பதே அதற்குத் தேவாரத்தில் உள்ள பெயர். அங்கே லிங்கமாக அந்த மண் கலயமே வைக்கப்பட்டு விட்டது. இப்போதும் அப்படித்தான் இருக்கிறது. கவசம் போட்டுத்தான் அதற்கு அபிஷேகம் நடக்கிறது. 'கும்பேச்வரர்'என்று பெயர். அமிருதம் விழுந்த இடம்தான் மஹாமகக் குளம்.

இது அமிருதம் வெளிவந்த க்ஷேத்ரம் என்பதற்குப் பொருத்தமாக இங்கேயுள்ள சார்ங்கபாணிப் பெருமாளை "ஆரா அமுதன்"என்றே ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்கள்!வைஷ்ணவர்கள் கும்பகோணத்தைக் குடந்தை என்பார்கள்.

இப்படிப் பல க்ஷேத்ரங்கள் inter-connected ஆக இருந்து கொண்டு ஸ்தல புராணங்கள் நிஜந்தான் என்று உறுதிப்படுத்துகின்றன. திருவழுந்தூர், கும்பகோணம் குறித்த பல க்ஷேத்திரங்கள் ஒன்றுக்கொன்று கிட்டக் கிட்ட இருப்பவை. இவை ஒரு நாலைந்து மைல் ரேடியஸுக்குள் அகப்பட்டு விடும்.

இதைவிட விஸ்தாரமான ஸ்கேலில் தூர தூர இருக்கிற க்ஷேத்திரங்களின் பரஸ்பர ஸம்பந்தத்தைச் சொன்னால், ஸ்தல புராணங்கள் கட்டுக்கதை இல்லை என்று இன்னும் திடமாகத் தெரியும். சொல்கிறேன்.

ராமேச்வரம், வேதாரண்யம், பட்டீச்வரம் என்ற மூன்று க்ஷேத்ரங்கள் மேலே சொன்னவை மாதிரிக் கிட்டே கிட்டே இருப்பவை அல்ல. ராமேச்வரம் ராமநாதபுரம் ஜில்லாவில் தெற்கு ஸமுத்ரகோடியில் இருக்கிறது. வேதாரண்யம் தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு கோடியில் ஸமுத்ரகரையில், திருத்துறைப்பூண்டி தாலுகாவில் இருக்கிறது. அதே ஜில்லாவில், ஆனால் அதற்கு ரொம்பவும் தள்ளி கும்பகோணத்துக்குப் பக்கத்தில் பட்டீச்வரம் இருக்கிறது. இப்படி ஒன்றுக் கொன்று தூரத்தில் உள்ள ஸ்தலங்களில் ஒரே வரலாறு சரடு மாதிரி இழையோடுகிறது என்றால் அதைப் பொய்யென்று சொல்ல முடியாதுதானே?

இந்த மூன்று ஊர்களிலும் ஈச்வரன் கோயிலில் 'ராமலிங்கம்'என்ற பெயரில் லிங்கம் இருக்கிறது. மூன்றும் மஹா க்ஷேத்ரங்கள். ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின்

ஸம்பந்தமுள்ள க்ஷேத்திரங்கள் என்ற மகிமை அவற்றுக்கு இருக்கின்றன. அதோடுகூட இந்த மூன்று இடங்களிலும் நாராயணாவதாரமான ஸ்ரீராமன் லிங்கப் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார் என்பதால் சைவ வைஷ்ணவ ஒற்றுமைக்கும் இவை பலம் கொடுப்பதாக இருக்கின்றன. இதல்லாமல் மற்ற விசேஷங்களும் கொண்ட க்ஷேத்ரங்களாக இவை இருக்கின்றன.

பாரத தேசத்தின் நாலு கோடிகளில் உள்ள நாலு முக்ய க்ஷேத்திரங்களான "சார்-தாம்"எனப்படும் சதுர் தாமங்களில் (வாஸ ஸ்தானங்களில்) ராமேச்வரம்தான் தக்ஷிணத்துக்குரிய பெரிய க்ஷேத்ரமாக இருக்கிறது. வடக்கே பத்ரிநாதம், மேற்கே ஸோமநாதம், கிழக்கே (புரி) ஜகந்நாதம், தெற்கே ராமநாதம் என்பவையே சார்தாம். வேதாரண்யம் சுதந்திரப் போராட்டத்தின் போது உப்பு ஸத்தியாக்ரஹம் நடந்த ஊர். 'திருமறைக்காடு'என்பதாக மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலமாக அது இருக்கிறது. இங்கே வேதங்கள் ஈச்வரனைப் பூஜித்து திருக்காப்பு செய்த கதவைத் திறக்கும்படியாக அப்பர் ஸ்வாமிகள் பதிகம் பாடினார். திருஞான ஸம்பந்தர் பாடல்பாடி மறுபடி மூடும்படிச் செய்தார். பட்டீச்வரம் என்பது காமதேனுவின் நாலு பெண்களில் ஒன்றான பட்டி பூஜித்த க்ஷேத்ரம். மேலே திருஆவடுதுறையில் சொன்னது போல, பசு பூஜித்த க்ஷேத்ரங்கள் அநேகம் உள்ளன. திருஆமாத்தூர் என்று பண்ருட்டியருகே அப்பரோடு ஸம்பந்தமுள்ள ஸ்தலம் இருக்கிறது. அங்கேயும் பசு பூஜித்திருக்கறது. அப்படிப்பட்ட ஒரு ஊர் பட்டீச்வரம். ஞாந ஸம்பந்தமூர்த்தி - குழந்தை - நல்ல வெயிலில் ஈச்வர நாமாவைச் சொல்லிக் கொண்டு ஆடிப்பாடிக் கொண்டு வருவதைப் பார்த்து ஈச்வரனே மனமுருகி பூதங்களைக் கொண்டு ஸுப்ரமண்ய அவதாரமான அந்தப் பிள்ளைக்கு ஊர் பூராவும் முத்துப் பந்தல் போட்டு வெயில் தெரியாமல் வரவழைத்துக் கொண்டு க்ஷேத்திரம் பட்டீச்வரம். நானூறு, நானூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் தஞ்சாவூரிலிருந்து ஆண்டு வந்த நாயக ராஜாக்களுக்கு மந்திரியாக இருந்த மஹான் கோவிந்த தீக்ஷிதருக்கு இந்த ஊரில் ஒரு தனியான வசீகரம் இருந்தது. இந்தக் கோயிலுக்கு அவர் விசேஷமாகத் திருப்பணிகள் செய்திருக்கிறார். அம்பாள் ஸந்நதியில் அவருக்கும் அவருடைய பத்தினிக்கும் பிம்பங்கள் இருக்கின்றன.

ராமலிங்க ஸம்பந்தத்துக்காக இந்த மூன்று க்ஷேத்ரங்களைப் பற்றி சொல்ல வந்தேன். அகஸ்தியர் திருக்கல்யாணக் காட்சி கண்ட இடம் என்று ஒரே ஸம்பவத்தையே பல க்ஷேத்ரங்களில் சொல்வது மாதிரி இல்லை, இந்த மூன்று ஸ்தலங்களில் உள்ள ராமலிங்கப் பிரதிஷ்டை. ஒவ்வொரு பிரதிஷ்டைக்கும் வெவ்வேறு காரணம் இருக்கிறது.

ராவணனைக் கொன்றதால் ராமருக்கு மூன்று தோஷங்கள் ஏற்பட்டன. முதலாவது, ராவணன் விச்ரவஸ் என்ற மஹரிஷியின் பிள்ளையானதால் பிராம்மணன் என்பது. அவனை ஸம்ஹாரம் செய்ததால் ராமருக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டாயிற்று.

சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி இந்த தோஷத்தை அவர் போக்கிக் கொண்ட இடந்தான் ராமேச்வரம்.

இப்போது ராம ராவண யுத்தத்தை ஆரிய திராவிடச் சண்டை என்று சில பேர் சொல்வது அடியோடு தப்பு என்பதற்கு இதைவிட வேறு proof(சான்று) வேண்டாம். ராமாயணத்தைப் பொய் என்று தள்ளினால் ராம ராவண யுத்தத்தையும் அடியோடு தள்ளத்தான் வேண்டும். இந்த யுத்தத்திற்கு மட்டும் historical basis (சரித்திர அடிப்படை) இருக்கிறது என்று சொல்லக் கூடாது. ராமாயணம் நிஜம் என்று ஒப்புக் கொண்டால் அதிலே ராவணனைப் பற்றி திரும்பத்திரும்ப ரிஷிபுத்ரன், வேதாத்யயனம் பண்ணினவன், ஸாமகானம் செய்தே பரமேச்வரனை திருப்திப்படுத்திக் கைலாஸத்துக்கு அடியிலிருந்து மீண்டவன் என்றெல்லாம் சொல்லியிருப்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேம்டும். 'எங்களுக்குப் பிடித்ததை மட்டும் ஒப்புக் கொள்வோம். பாக்கியெல்லாம் கட்டுக்கதை'என்றால் அது முறையான வாதத்தில் சேராது.

ராமாயண புஸ்தகத்தில் எழுதி வைத்தது இருக்கட்டும். பிரத்யக்ஷமாகத் தெரிகற மாதிரி இந்த லோகத்திலேயே மிகப்பெரிய பிரகாரங்களோடு ராமேச்வரத்தில் கோவில் இருக்கிறது. சரித்திரக்காரர்களே ஒப்புக் கொள்கறபடி ஆயிரக்கணக்கான வருஷங்களாக அங்கே ராமர் பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதற்காகப் பிரதிஷ்டை செய்த லிங்கம் என்று ராமநாத ஸ்வாமியைச் சொல்லி தேசம் பூராவும் வழிபட்டு வந்திருக்கிறது. இதனால் ராவணன் பிராம்மணன் என்ற நம்பிக்கைக்கு மாறாகத் தமிழ் நாட்டில் பூர்விகர்கள் நினைத்ததேயில்லை என்று தெரிகிறது.

ராவணன் பிராம்மணன் என்பது மட்டுமில்லை. அவன் மஹாவீரன். லோகங்களெல்லாம் கிடுகிடுவென்று நடுங்கும் படியாகப் பண்ணினவன். கார்த்தவீர்யார்ஜுனனையும் வாலியையும் தவிரத் தான் சண்டை போட்ட அத்தனை பேரையும் ஜயித்தவன். இப்படிப்பட்டவனைக் கொன்றதால் வீரஹத்தி தோஷமும் ஸ்ரீராமனுக்கு உண்டாயிற்று. இந்த தோஷத்துக்குப் பிராயசித்தமாகத்தான் ராமர் வேதாரண்யத்தில் ராமலிங்கப் பிரதிஷ்டை செய்தார்.

பிராம்மணன், வீரன் என்பது தவிர ராவணனுக்கென்று வேறு பெருமைகளும் உண்டு. அவன் நல்ல சிவபக்தன். வீணை வாசித்துப் பாடுவதில் நிபுணன். இம்மாதிரி நல்ல அம்சங்களை 'சாயை'என்பார்கள். 'சாயை'ஒளி, நிழல் என்று இரண்டு அர்த்தமும் உண்டு. 'மரகத சாயே'லெ ன்று மீனாக்ஷியைச் சொல்கிற போது 'மரகதம் போன்ற ஒளி உடையவளே'என்று அர்த்தம். ஒளி என்பது பெருமை வாய்ந்த குணங்களையெல்லாம் குறிப்பிடும். சாயை (பெருமை) உடைய ராவணனை வதம் செய்ததால் ராமருக்கு சாயாஹத்தி என்ற மூன்றாவது தோஷம் உண்டாயிற்று. இது தீருவதற்காகத்தான் அவர் பட்டீச்வரத்தில் ராமலிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜை பண்ணினார்.

சாஸ்திரப்படி பார்த்தால் பாவணனை ஸம்ஹரித்த மநுஷ்யருக்கு பிரம்மஹத்தி, வீரஹத்தி, சாயாஹத்தி என்ற மூன்று தோஷங்கள் ஏற்பட்டுத்தான் இருக்கவேண்டும். பதித பாவனான ராமசந்திரமூர்த்திக்கு வாஸ்தவத்தில் தோஷமே ஏற்பட முடியாதுதான். எவன் பெயரை ஸ்மரித்தாலே ஸமஸ்த மஹா பாபங்களும் ஒடிப் போகுமோ அப்படிப் பட்ட தாரக நாமனான ராமன் தனக்கே பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டியதே இல்லைதான். ஆனாலும் அவர் இந்த பூலோகத்தில் 'ஐடியல்'மநுஷ்யராக வாழ்ந்து காட்டவேண்டும் என்றுதான் நரவேஷம் போட்டுக் கொண்டு வந்திருந்தார். ஒவ்வொரு சின்ன காரியத்துக்குங்கூட சாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறது என்று பார்த்துப் பார்த்தே அந்தப் பிரகாரம் பண்ணினார். சாஸ்திர தர்மங்களைத் துளிக்கூட வழு இல்லாமல் பண்ணிக் காட்டுவதில் ராமரை மிஞ்சி இன்னொருத்தர் கிடையாது. ராமாயணத்தில் எங்கே பார்த்தாலும் இந்த குணாதிசயத்தைப் பார்க்கிறோம். தம்மை ஸாதாரண மநுஷ்யராகவே வைத்துக் கொண்டு, மநுஷ்யர்களுக்கு சாஸ்திரத்தில் என்னென்ன தர்மங்கள், விதிகள், பிராயச்சித்தங்கள் சொல்லியிருக்கின்றனவோ அவற்றையெல்லாம் விடாமல் செய்தார். ஆகவே ஒவ்வொரு அல்ப காரியத்துக்குங்கூட சாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறது என்று பார்த்து பார்த்தே அந்தப் பிரகாரம் பண்ணினார். சாஸ்திர தர்மங்களைத் துளிகூட வழுவில்லாமல் பண்ணிக்காட்டுவதில் ராமரை மிஞ்சி இன்னொருத்தர் கிடையாது. ராமாயணத்தில் எங்கே பார்த்தாலும் இந்த குணாதிசயத்தைப் பார்க்கிறோம். தம்மை ஸாதாரண மநுஷ்யராகவே வைத்துக் கொண்டு, மநுஷ்யர்களுக்கு சாஸ்திரத்தில் என்னென்ன தர்மங்கள், விதிகள், பிராயச்சித்தங்கள் சொல்லியிருக்கின்றனவோ அவற்றையெல்லாம் விடாமல் செய்தார். ஆகவே ஒவ்வொரு அல்ப காரியத்துக்குங்கூட சாஸ்திரத்தைப் பார்த்து அதன்படி பண்ணின ராமன் இந்த மூன்று பெரிய தோஷங்களுக்கு மட்டும் பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ளாமல் இருந்திருப்பாரா?அப்படிச் சொல்வது கொஞ்சங்கூட பொருத்தமில்லை. அதனால் வால்மீகி ராமாயணத்தில் இது என்னவோ விட்டுப் போய்விட்டது என்றுதான் ஆகிறது. அதிலே விட்டுப் போன குறையைத்தான் ராமேச்வரம், வேதாரண்யம், பட்டீச்வரம் ஆகிய ஊர்களுக்கான ஸ்தல புராணங்கள் பூர்த்தி செய்கின்றன.

இது ராமாயணத்தில் இல்லை;அதனால் ஏதோ அத்தைப்பாட்டிக் கதை என்று நினைப்பது தப்பு. ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் குணத்தை நன்றாக ஆழ்ந்து அநுபவித்துப் பார்த்தால் அவர் இந்த மூன்று பிராயச்சித்தங்களைப் பண்ணிக்கொண்டுத்தான் இருப்பார்;அப்படிப் பண்ணினால்தான் அவர ராமர். ஆகையால் ஏதோ காரணத்தால் ராமாயணத்தில் விட்டுப்போன இந்த விஷயத்தைச் சொல்கிற ஸ்தல புராணங்கள்தான் அவருடைய மனோபாவத்துக்கும், சரித்திரத்துக்கும் (conduct-கும்) பூர்த்தியைத் தருகின்றன. என்ற தெளிவு உண்டாகிறது. லோகத்தையெல்லாம் ஹிம்ஸித்து வந்தவனும், ஜகன்மாதாவான ஸீதையை கெட்ட எண்ணத்தோடு மாறு வேஷத்தில் வந்து

நீசமாகத் திருடிக்கொண்டு போனவனுமான ஒருத்தனை ஸம்ஹாரம் பண்ணி, அதனால் ஸமஸ்த ஜீவராசிகளும் ஸந்தோஷம் அடைந்து அவரைக் கொண்டாடும் சமயத்தில், அப்படிப்பட்ட சத்ருவிடத்தில் இருந்த மூன்று பெருமைகளை நினைத்து அவனைக் கொன்றதற்காக தன் மீதே மூன்று தோஷங்களை சுமத்திக் கொண்டு பிராயசித்தம் பண்ணிக் கொண்டதாக ஸ்ரீ ராமனைச் சொல்வதுதான் அவருடைய உத்தம ஸ்வபாவத்தையே ஒரு தூக்குத் தூக்கிப் பிரகாசிக்கப் பண்ணுவதாக இருக்கிறது. லிங்கப் பிரதிஷ்டை பண்ணினது ஹரி-ஹர அபேதத்துக்கு ஒத்தாசை செய்கிறது.

இந்த மூன்று ஸ்தல புராணங்களுக்குள் ஒன்றுக்கொன்று முரண்பாடு (contradiction), ஒன்றில் சொன்னதையே இன்னொன்றில் திருப்பிச் சொல்வது (duplicate பண்ணுவது) என்பதெல்லாம் இல்லை. ராமேச்வர புராணத்தில் பிரம்மஹத்தி நீங்கினதை மட்டுமே சொல்லியிருக்கிறது. மற்ற இரண்டு தோஷங்கள் அங்கே போனதாகச் சொல்லவில்லை. அங்கேயிருந்து அப்படியே ஸமுத்திரக் கரை ஓரமாகவே வடக்காகப் போயிருப்பார் போலேயிருக்கிறது. அங்கே வேதாரண்யத்தில் வீரஹத்தி போக லிங்கப் ப்ரதிஷ்டை செய்திருக்கிறார். வேதாரண்ய ஸ்தல புராணத்திலும் வீரஹத்தி மட்டும் நிவருத்தியானதைத்தான் சொல்லியிருக்கிறது. இங்கேயும் பிரம்மஹத்தி போனதாகச் சொல்லியிருந்தால் தப்பு என்கலாம். அப்படியில்லை. அப்புறம் உள்நாட்டுப்பக்கமாக (interior-க்கு)ப் போய் பட்டீச்வரத்தில் மூன்றாவது ராமலிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்து சாயாஹத்தியை நிவ்ருத்தி செய்து கொண்டிருக்க வேண்டும். பட்டீச்வரம் ஸ்தல புராணத்திலும் இந்த ஒரு தோஷத்தைத்தான் சொல்லியிருக்கிறது.

அதாவது இந்த மூன்று க்ஷேத்ரங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு தோஷத்தையே - அதுவும் மற்றதில் விட்டுப்போன ஒன்றையே- சொல்லி அதற்கு concrete evidence-ஆக (கண்ணுக்குத் தெரியும் சாட்சியாக) ஒவ்வொரு கோவிலிலும் 'ராமலிங்கம்'என்று பேருள்ள ஒரு லிங்கத்தைக் காட்டியிருக்கிறது. ஒரே நிஜமான கதையின் இழைதான் மூன்று ஸ்தல புராணங்கள் வழியாகவும் போய்ப் பூர்த்தியாகிறது. இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று சுமார் நூறு, நூற்றைம்பது மைல் தள்ளியுள்ள ஊர்கள். ரயிலும் ப்ளேனும் இல்லாத காலத்தில் அது ஆயிரம், ஆயிரத்தைந்நூறு மைலுக்கு ஸமானம். ஆகவே இவ்வளவு தள்ளியுள்ள ஊர்களுக்கிடையே ஒரே கதையின் விவரங்கள் பொருத்தமாக அமைந்திருக்கின்றன என்றால் ஸ்தல புராணங்கள் நிஜம்தான் என்றுதானே ஏற்படுகிறது?

நவீன ஆராய்ச்சிக்காரர்கள், சாஸ்திரக்ஞர்கள் இருவருக்குமே விசித்ரமாகத் தோன்றினாலும் சரி, என் அபிப்ராயம் ஒன்றைச் சொல்கிறேன். வால்மீகி ராமாயணத்தை 'அதாரிடி'யாக எடுத்துக் கொள்ள முடியாது என்று பொதுவாக ஒரு அபிப்ராயம் வந்துவிட்டாலும், வால்மீகி ராமாயணம், மற்றும் பாரதம், தற்போது

authentic(அதிகார பூர்வமானது) என்று நினைக்கப்படுகிற விஷ்ணு புராணம், பாகவதம் முதலியவற்றை விடக்கூட ஸ்தல புராணங்கள்தான் நிஜத்தைச் சொல்வதில் பெரிய 'அதாரிடி'என்று நான் இம்மாதிரி அநேக திருஷ்டாந் தங்களிலிருந்து முடிவுக்கு வந்திருக்கிறேன்.

முதலில் தஞ்சாவூர் ஜில்லாவில் கும்பகோணத்திலும், மாயவரம் தாலுக்காவுக்குள்ளே திருவழுந்தூரைச் சுற்றியுள்ள ஏழெட்டு ஸ்தலங்களிலும் புராணத்து details (விவரங்கள்) tally ஆவதை (ஒன்றுக்கொன்று பொருந்துவதை) சொன்னேன். அப்புறம் ராமநாதபுரம், தஞ்சாவூர் இரண்டு ஜில்லாக்களில் உள்ள மூன்று க்ஷேத்திர ஸமாசாரங்கள் ஒத்து வருவதாகச் சொன்னேன். இப்போது இன்னும் பெரியதாக ஆல் இண்டியா-ஸ்கேலில் ஒன்று சொல்கிறேன்.

'காவேரி புராண'த்தில் இரண்டு விதமான பாடங்கள் உண்டு. அதிலே ஒன்று ஸ்ரீரங்கத்திலுள்ள காவேரித் துறையான அம்மா மண்டபத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. துலா மாஸம் எனப்படும் ஐப்பஸியில் காவேரி ஸ்நானம் மஹா விசேஷமாகும் என்று இதில் சொல்லியிருக்கிறது. இதிலே முக்கியமான கதாபாத்திரம் தர்மவர்மா என்ற சோழ ராஜா. இவன் நிசுளபரியிலிருந்து கொண்டு ஆட்சி செய்தான் என்று சொல்லியிருக்கிறது. நிசுளம், நிசோளம், சோளம், சோளி என்ற ஸம்ஸ்கிருத வார்த்தைகளுக்கு 'உடம்போடு போட்டுக் கொள்கிற உறை மாதிரியான உடுப்பு'என்று அர்த்தம். "உறையூர்"எனப்படுவதே ஸம்ஸ்கிருதத்தில் "நிசுளபுரி" யாக இருக்கிறது!சோளப் பயிருக்கு என்ன விசேஷம்?"சோளக் கொண்டை" என்று, நன்றாக உறை தைத்துப் போட்டுக் கொண்ட மாதிரி இந்த தானியம் ஒன்றுதான் தானிய மணிகளைச் சுற்றிச் சோளி போட்டுக்கொண்டு வளர்கிறது!சோளி போட்டுக் கொண்டிருக்கிற தானியம் சோளம்!இந்த மொழி ஆராய்ச்சி இருக்கட்டும்.

'காவேரி புராண'த்தில் இன்னொரு பாடத்தில் மாயவரத்தில் இருக்கப்பட்ட காவேரித் துறையான துலா கட்டத்துக்கு முக்யத்வம் கொடுத்திருக்கிறது. இப்போது அதை லாகடம் என்று ஜனங்கள் சொல்கிறார்கள். இது துலா கட்டம் என்பதன் திரிபுதான். துலா ஸ்நானத்துக்கு வரும் யாத்ரிகளுக்கு வசதியாகக் கட்டப்பட்ட படித்துறைதான் துலா கட்டம் (லாகடம்). மாயவரத்திலும் இன்னும் ஆறேழு காவேரிக் கரை க்ஷேத்ரங்களிலும் துலா கட்டங்கள் இருக்கின்றன. இவை அனைத்தையும் அச்சடித்ததைப் போல் ஒரே ப்ளானில் கட்டப்பட்டிருக்கின்றன. துலாஸ்நான மகிமையைச் சொல்கிற இடத்தில், காவேரி புராணத்தில் ஒரு பாடத்தின்படி ஸ்ரீ ரங்கத்துக்கும் தர்மவர்மாவுக்கும் முக்யத்வம் தந்திருக்கிறதென்றால், இன்னொரு பாடத்தில் மாயவரத்துக்கும் அங்கே துலா ஸ்நானம் செய்து மோக்ஷம் அடைந்த ஒரு பிராம்மண தம்பதிக்கும் முக்யத்வம் தந்திருக்கிறது.

நாத சர்மா என்று அந்த பிராம்மணனுக்குப் பேர். அவருடைய பத்தினி அநவத்யை. விதிவத்தாக துலா ஸ்நானம் செய்தே மோக்ஷம் அடைந்தார்கள் என்று சொல்லியிருக்கிறது.

இவர்கள் பல இடங்களுக்கு க்ஷேத்ராடனம் பண்ணினதாகச் சொல்லுமிடத்தில் கேதாரத்துக்கு (கேதாரிநாத்) போனார்கள், காசிக்குப் போனார்கள் என்று சொல்லியிருக்கிறது.

இது இங்கே மாயவரத்தில மட்டுமே தெரிந்த கதை. காசி இங்கேயிருந்து ஆயிரம் மைலுக்கு அப்பால் இருக்கிறது. காசியில் கங்கையில் இருக்கிற பல கட்டங்களில் ('காட்' என்று சொல்வார்கள்) 'கேதார் காட்'என்று ஒன்று இருக்கிறது. அந்தக் கேதார்காட்டில் அதைக் குறித்த ஸ்தல புராணம் சொல்லப்படுகிறது. அதிலே நாததசர்மா - அநவத்யை என்ற பிராம்மண தம்பதி ஸ்நானம் செய்த இடம் அது என்று வருகிறது!

நாதசர்மா கதை நம்மூர்க்காரர்களுக்கே அதிகமாகத் தெரியாது. ராமர், கிருஷ்ணர், ஹரிச்சந்திரன், நளன் முதலியவர்களைப் போல தேசம் முழுவதும் தெரிந்தவரில்லை, அவர். அப்படிப்பட்ட ஒருவரைப்பற்றி இங்கே மாயவரத்தில் சொல்கிற புராணக் கதையும், ஆயிரம் மைல் தாண்டி காசியில் சொல்வதும் 'டாலி'ஆகிறது என்பதைப் பார்க்கும்போது ஆச்சரியமாயிருக்கிறது!

ஸ்தல புராணங்களை நம்புவதற்கில்லை என்று சொல்வது எவ்வளவு தப்பு என்பதற்கு திருஷ்டாந்தமாகத்தான் இதைச் சொன்னேன்.

காசிக்கும் காஞ்சிக்கும் நடுவே ஆயிரம் மைலுக்கு மேல் இருக்கிறது. காசியில் அன்னபூர்ணி விசேஷம். காஞ்சீபுரத்திலும் ஜகன்மாதா 32 தர்மங்களைப் பண்ணும் போது அன்னதானம் பண்ணியிருக்கிறாள். காமாக்ஷி ஆலயத்தில் கர்ப்பகிருஹத்தின் நுழைவாசலுக்கு நேரே அன்னபூர்ணேச்வரிக்கு ஸந்நிதி இருக்கிறது!அதன் விமானத்தில் தக்ஷிணதேசத்தில் வேறே எங்கேயும் இல்லாத விதத்தில் ஆறு சிகரங்கள் இருக்கின்றன. ஏன் இப்படி இருக்கிறது என்பதற்குப் பதில் காசியில் கிடைக்கிறது!காசியில் அன்னபூரணி விமானத்தில் இதே மாதிரி ஆறு சிகரங்கள் இருக்கின்றன. அதன் அச்சாகத்தான் இங்கே ஆயிரம் மைல் தாண்டி காஞ்சியிலும் இப்படி இருக்கிறது!சின்ன விஷயங்களில்கூட இவ்விதம் தேசத்தின் வெவ்வேறு கோடிகளில் உள்ள ஸ்தலங்களில் ஒற்றுமையிருப்பதால் க்ஷேத்ர ஐதிஹ்யங்களை லேசாகத் தள்ளி விடுவதற்கில்லை என்று தெரிகிறதல்லவா?

புராணம்

ஸ்தலபுராணங்களின் சிறப்பு

என் அபிப்ராயம், அநேக சரித்திர உண்மைகளைத் தெரிந்து கொள்ளவும், local culture, local custom (பிரதேச பண்பாடு, பிரதேச வழக்குகள்)முதலியவற்றைத் தெரிந்து கொள்ளவும் இந்த ஸ்தல புராணங்கள்தான் ரொம்பவும் உதவும் என்பது. இவற்றை நன்றாக ஒன்றோடொன்று சேர்த்து ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால், பதினெட்டு மஹாபுராணங்களை விடவும் உபபுராணங்களை விடவும், இதிஹாஸங்களை விடவும் நம்முடைய சரித்திரம், பண்பாடு முதலியவற்றை அறிய இவை உதவும் என்று தோன்றுகிறது. இவை ஒன்றுக்கொன்று விஷயங்களை ஸப்ளிமென்ட் செய்து கொண்டு (கூட்டிக் கொண்டு) போவது மட்டுமின்றி மஹாபுராணக் கதைகளிலுங்கூட விட்டுப் போவது மட்டுமின்றி மஹாபுராணக் கதைகளிலுங்கூட விட்டுப் போனதைப் பூர்த்தி பண்ணுகின்றன. 'ஹிஸ்டரி'(சரித்திரம்) சரியானபடி தெரிய ஸ்தல ஐதிஹ்யங்களும் புராணங்களும் நிரம்ப உதவும்.

உதாரணமாக, இப்போது படிப்பாளிகளில் பலருக்கு அத்வைதியான பகவத்பாதள் அநேக க்ஷேத்ரங்களுக்குப் போய் ஆலய பூஜா க்ரமங்களை சரிப்படுத்திக் கொடுத்தார் என்று சொன்னால் நம்பிக்கைப்படமாட்டேன் என்கிறது. 'அவர் ஞான மார்க்கத்தைத்தான் சிலாகித்துச் சொன்னார். அதனால் இந்த பக்தி வழி பாடுகள், ஆலய ஆகம ஸமாசாரங்கள் ஆகியவற்றில் அவர் பிரவேசித்திருக்க மாட்டார்'என்கிறார்கள். ஆனால் அவர் புதுக் களை ஊட்டினதாக க்ஷேத்ர ஐதிஹ்யங்களின்படி சொல்லப்படும் ஸ்தலங்களை (ஒன்றுக்கொன்று ஆயிரம், இரண்டாயிரம் மைல் தள்ளியிருப்பவைகளை) போய்ப் பார்த்தால் அவற்றுக்கு ஆசார்யாளின் ஸம்பந்தமிருப்பது அழுத்தமாகத் தெரிகிறது. வடக்கே ஹிமாசலத்துக்கு நடுவில் உள்ள பத்ரிநாத்துக்குப் போனால் அங்கே 'ராவல்'என்று பூஜை பண்ணுகிறவர் கேரளத்து நம்பூத்ரியாக இருக்கிறார். இங்கே இந்த சென்னைப் பட்டணத்திலேயே திருவொற்றியூரில் திரிபுரஸுந்தரி அம்மனுக்குப் பூஜை பண்ணுவது யார் என்று பார்த்தால் இதுவும் ஒரு நம்பூத்ரி பிராம்மணர்தான்!ஆசார்யாள் நம்பூத்ரிப் பிராமணர்தான் என்றும் அவர் புதிதாக ஜீவ களையூட்டிய பல ஸ்தலங்களில் நம்பூத்ரிகளையே பூஜகர்களாக வைத்தார் என்றும் கர்ண பரம்பரையாகச் சொல்லி வருவதற்கு இப்படி பிரத்யக்ஷ ஸாட்சியும் இருக்கிறது.

தர்மோபதேசத்திலும் இந்த ஸ்தல புராணங்கள் மஹா புராணங்களுக்குப் பின்தங்கி விடவில்லை. சின்ன சின்ன தர்ம நுணுக்கங்கள் நமக்குக் கிடைத்துள்ள ஆயிரக் கணக்கான ஸ்தல புராணங்களில்தான் பளிச்சென்று போதிக்கப்

பட்டிருக்கின்றன.

இப்போது படிப்பாளிகளில் மத நம்பிக்கை உள்ளவர்களும்கூட ஸ்தல புராணம் என்பதை ரொம்பவும் மட்டம் தட்டினாலும், தமிழ் தேசத்தில் ஸமீப காலம் வரையில் அதற்குப் பண்டிதர்களிடையே நிரம்ப கௌரவம் இருந்திருக்கிறது. அதனால்தான் அநேக ரிஷிகளின் பெயரிலுள்ள புராணங்களைப் பின்பற்றித் தமிழிலும் மஹா பண்டிதர்களாக, பெரியவர்களாக இருந்த அநேகர் ஸ்தல புராணங்களை இயற்றியிருக்கிறார்கள். ஸ்தலபுராணம், மான்மியம், கலம்பகம், உலா என்றெல்லாம் அநேக க்ஷேத்ரங்களின் மகிமையைச் சொல்கிற சிறந்த தமிழ் நூல்கள் இருக்கின்றன. (மஹிமை வாய்ந்தது 'மாஹாத்மியம்'. அதைத் தமிழில்'மான்மியம்'என்பார்கள்.) சங்ககாலம், தேவார- திவ்யப்பிபந்த காலம், கம்பர் ஒட்டக்கூத்தர் முதலானவர்களின் காவிய காலம் என்றெல்லாம் தமிழிலக்கியத்தைக் காலவாரியாகப் பாகுபடுத்தும்போது 16-ம் நூற்றாண்டைத் தலபுராண காலம் என்றே புலவர்கள் சொல்கிறார்கள் பதிநாலாம் நூற்றாண்டிலேயே உமாபதி சிவாசாரியார் எழுதிய சிதம்பர மாகாத்மியமான 'கோயிற்புராணம்'தான் முன்னோடி என்கிறார்கள். கமலை ஞானப் பிரகாசரையும் சைவ எல்லப்ப நாவலரையும் முக்யமான புராணகர்த்தாக்களாகச் சொல்கிறார்கள். கந்தப் புராணம் எழுதிய கச்சியப்ப சிவாசாரியார், திருவிளையாடற் புராணம் எழுதிய பரஞ்சோதி முனிவர், சைவ சமயாச்சாரியார்களின் ஒரு முக்யஸ்தரான உமாபதி சிவாசாரியார், சிவப்பிரகாச ஸ்வாமிகள், இரட்டைப் புலவர்கள், அந்தகக் கவி வீரராகவ முதலியார், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், திரிகூட ராசப்பக் கவிராயர் முதலான, நிரம்ப யோக்யதை வாய்த்தவர்களெல்லாம் ஸ்தல புராணம் செய்திருப்பதிலிருந்து அதற்கு இருந்த பெருமை தெரிகிறது. உ.வே. ஸ்வாமிநாதய்யருடைய குருவான மஹாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஸமீபத்தில் அநேக க்ஷேத்ரங்களுக்கு ஸ்தல புராணம் எழுதிக் கொடுத்திருக்கிறார். இதனால் தமிழின் சமயத்துறையிலும், இலக்கியத் துறையிலும் 'தலபுராண ம்'என்பதற்குத் தனிச்சிறப்பு உண்டு என்று தெரிகிறது.

பெரிய சம்ஸ்கிருத சாஸ்திர பண்டிதரான கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள் தமிழில் 'வேதாரண்ய மாஹாத்மியம்' எழுதியிருக்கிறார். ஸ்தல புராணம் பிரசாரம் ஆவதற்குத் தமிழ் தேசத்தில் ராஜாங்கமே ஆதரவுதந்து, உத்ஸாஹப் படுத்தியிருக்கிறது. 450 வருஷத்துக்கு முந்தி தஞ்சாவூரில் நாயக ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட்டதற்குக் காரணமாக இருந்த மந்திரி கோவிந்த தீக்ஷிதரின் விருப்பப்படியே, ஸம்ஸ்கிருதத்திலிருந்து பஞ்சநத (திருவையாறு) க்ஷேத்ர புராணத்தைத் தாம் தமிழில் பண்ணினதாக மொழி பெயர்ப்பாசிரியர் சொல்லியிருக்கிறார்.

### புராணம்

### காத்துத்தருவது நம் கடமை

கோயில்களும் அவற்றில் நடக்கிற உத்ஸவாதிகளுந்தான் நம் மதத்துக்கு ஆயிரம் பதினாயிரம் காலமாக எத்தனையோ எதிர்ப்புகள் வந்தபோதிலும் முட்டுக் கொடுத்து அவற்றைத் தாக்குப் பிடிக்கச் சக்தி தந்து வந்திருக்கின்றன. ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு கதை உண்டு. ஒவ்வொரு உத்ஸவத்துக்கும் ஒரு ஐதிஹ்யம் (ஐதீகம்) உண்டு. இவை எல்லாம் புராண வாயிலாகவே நமக்குக் கிடைத்திருக்கின்றன. இந்த பெரிய மூலதனத்தை அலக்ஷ்யம் செய்வது ஜனங்களின் மத உணர்ச்சிக்கே பெரிய தீங்கு உண்டாக்கிவிடும்.

பிரிண்டிங் பிரெஸ் (அச்சுக்கூடம்) இல்லாத பூர்வகாலங்களிலும் ஒலைச் சுவடிகளாவே கண்ணெனக் காக்கப்பட்டு வழிவழியாக வந்துள்ள புராணங்களை இத்தனை புஸ்தகங்கள் அச்சுப் போட்டுக் கொண்டிருக்கிற இந்த நாளில் (அதில் பெரும்பாலானது ஆத்ம சிரேயஸுக்கு ஹானி செய்வதாகத் தான் இருக்கிறது) நாம் ஒரு பிரசாரமுமில்லாமல் மங்கும்படிச் செய்துவிட்டால் வருங்காலத்து ஜனங்களுக்கு நல்ல விஷயங்களில் ஈடுபடுத்தும் ஒரு பெரிய தூண்டுகோல் இல்லாமல் போய்விடும். இவற்றை எதிர்காலத்துக்கு ரக்ஷித்துத் தர வேண்டியது நம் கடமை.

### சுவடிகள், நூலகங்கள்

முன்னெல்லாம் வீட்டுக்கு வீடு நிறைய ஒலைச்சுவடிகள் இருக்கும். இதிஹாஸ புராணங்களும் ஸ்தல புராணங்களும் எழுதப்பட்ட ஒலைச் சுவடிகள் அவற்றில் இருக்கும். இதிஹாஸ புராணங்களும் ஸ்தல புராணங்களும் எழுதப்பட்ட ஒலைச் சுவடிகள் அவற்றில் இருக்கும். சுவடி பழுதாக ஆரம்பித்தால் மறுபடி புது ஒலைகளில் அவற்றை எழுத்தாணியால் 'காப்பி'பண்ணுவார்கள். பழுதான சுவடிகளை ஒரு பக்கம் சேர்த்து வைப்பார்கள். இப்படிச் சேர்ந்ததை எல்லாம் 'பதினெட்டாம் பேர்'அன்றைக்குக் காவேரியிலோ வேறு புண்ய தீர்த்தங்களிலோ யதோக்தமாகக் கொண்டு போய்ப்போட்டு விடுவார்கள்.

ஆடிமாதம் பதினெட்டாம் தேதி காவேரிக்கு விசேஷ தினம். அச்சமயத்தில் காவேரியில் புது வெள்ளம் வரும். 'பதினெட்டாம் பெருக்கு'என்பதைத்தான் 'பதினெட்டாம் பேர்'என்று சொல்கிறோம்.

கை ஒடிய இப்படி எழுத்தாணியால் ஒலை நறுக்குகளில் எழுதி எழுதி, எழுதினதைக் காப்பி பண்ணி நம் முன்னோர் நம் தாத்தா காலம் வரைக்கும் கொண்டுவந்து கொடுத்ததைப் பிற்பாடு காப்பி எடுக்காமலே காவேரியில் போட்டு

விட்டு அதற்கும் சேர்ந்து "ஸ்நானம்"பண்ணிவிட்டார்கள். இதனால் இப்போதே அநேக புராணங்கள் மறுபடி நமக்குக் கிடைக்குமா என்ற ரீதியில் நஷ்டமாகி விட்டன. புராணங்கள் மட்டுமில்லை. இதர சாஸ்திரச் சுவடிகளும்தான்!சேகரிக்க முடிந்த சுவடிகளையெல்லாம் எத்தனையோ சிரமப்பட்டு அலைந்து திரிந்து சேகரித்து சில லைப்ரரிகளில் சேர்த்து வைத்திருக்கிறது. தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹால் லைப்ரரி, மெட்ராஸில் ஓரியன்டல் மானுஸ்க்ரிப்ட்ஸ் லைப்ரரி, அடையாறு லைப்ரரி, இவற்றில் இப்படி நிறையச் சுவடிகளைச் சேர்த்து வைத்திருக்கிறது. அடையாற்றிலே தியாஸாஃபிகல் ஸொஸைடிகாரர்கள் இதிலே செய்திருக்கிற பணி ரொம்பவும் உயர்ந்தது.

தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹாலிலும் இப்படியே சரபோஜி முதலான ராஜாக்கள் அரும்பாடுபட்டு ஏட்டுச் சுடிகளைச் சேகரித்து வைத்தார்கள்.

ஏடு என்றால் நடுவிலே நரம்பும் அதற்கு இரண்டு பக்கம் இலையுமாக இருக்கிறதில் ஒரு பக்கம் என்று அர்த்தம். வாழையிலையை இப்படிக் குறுக்காகப் பிளந்து ஒவ்வொரு பாதியையும் ஏடு என்கிறோம். பனை மட்டையில் இருக்கிறதை இப்படியே நடு நரம்பை எடுத்து விட்டு ஒவ்வொரு பக்கத்தையும் எடுத்து ஏடு என்பதுதான் ஏட்டுச்சுவடி. அது தான் நீண்ட நாளானாலும் பழுத்துப் போகாத, பழுதாகாத nature-ன் paper (இயற்கையின் காகிதம்..)!அதில் எழுத்தாணியை வைத்துக் கொண்டு செதுக்கி எழுத வேண்டும். ஞானசம்பந்தரின் தேவார ஏடு வைகையை எதிர்த்துக் கொண்டு கரையேறிய இடம் இன்றைக்கும் பாண்டிய நாட்டில் திருவேடகம் (திரு ஏடு அகம்) என்ற ஸ்தலமாக விளங்குகிறது. அங்கே ஈச்வரனுக்குப் 'பத்ரிகா பரமேச்வரர்'என்று பெயர். இப்போது 'பேப்பர்'என்றால் காகிதம் என்பது ஒரு அர்த்தம்;"மாகஸின்"(ஸஞ்சிகை) என்றும் அர்த்தம். "மாகஸின்" என்பதை "பத்திரிகை"என்கிறோம். நேச்சரின் பேப்பரான இயற்கை பத்திரிகை கரையேறின ஊரில் ஸ்வாமியே 'பத்திரிகா பரமேச்வரன்'என்று ஜர்னலிஸ்ட் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார். 'பத்ரம்', 'பத்ரிக'என்றாலும்இலை என்றே அர்த்தம். இலையிலிருந்து வந்தது தானே ஏடு?அதனால் ஏட்டுக்குப் பத்திரிகை என்று பெயர். இது தான் அந்த நாள் காகிதமாக இருந்ததால் கடிதாசும் இதிலேதான் எழுதுவார்கள். அதனால் கடிதாசுக்குப் 'பத்ரம்' என்றே பேர் வந்து விட்டது. இதெல்லாம் இருக்கட்டும்.

ஸரஸ்வதி மஹாலைப் பற்றிச் சொன்னேன். இதைப் பற்றி ஸ்வாரஸ்யமான ஒரு விஷயம் நினைவு வருகிறது. பழைய காலத்தில் வெளிதேசத்திலிருந்து படையெடுக்கிறவர்கள் ஒரு தேசத்திற்கு விளைவிக்கிற மிகப் பெரிய ஹானி, அந்த தேசத்தின் லைப்ரரியைக் கொளுத்தி விடுவதுதான் என்று வைத்துக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் ஒரு தேசத்தின் லைப்ரரியைக் கொளுத்தி விடுவது தான் என்று வைத்துக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் ஒரு தேசத்தின் பொருளாதாரத்துக்கு கஜானா எப்படியோ அப்படி அதன் அறிவுக்குக்

கஜானாவாக இருந்தது இந்த லைப்ரரிதான். கலாசார கஜானா என்று சொல்லலாம். இப்போது போல் அப்போது பிரன்டிங் பிரஸ் இல்லாததால் பல பிரதிகள் கிடையாது. சில நூல்களில் ஒரே பிரதிதான் இருக்கும். இப்படிப்பட்ட சுவடிகள் கொண்ட லைப்ரரியைக் கொளுத்தி விட்டால் அது அந்த தேசத்தின் கஜானாவைக் கொள்ளையடிப்பதற்கு மேலே, அந்த தேசத்தின் பெண்களை மானபங்க படுத்துவதற்கு மேலே என்று இதர தேசத்தார் நினைத்தார்கள். எதிரி தேசத்து அறிவுச் செல்வங்களான புஸ்தகங்களைக் கொளுத்துவது, அவர்களுடைய கோயில்களை இடிப்பது, அந்த தேசத்து ஸ்திரீகளை மானபங்கப்படுத்துவது முதலானவற்றுக்கு நம்முடைய ராஜநீதி சாஸ்திரங்களில் இடமே கிடையாது என்பதைப் பெருமையோடு சொல்லிக் கொள்ளவேண்டும். ஜைனம் போன்ற ஒரு எதிராளி மதத்தைச் சேர்ந்த அமரஸிம்ஹன் மாதிரியானவர்கள் ஹிந்து சமயாசாரியர்களிடம் வாதத்தில் தோற்றவுடன் தாங்களாகவே தங்கள் சுவடிகளை நெருப்பிலே போட்டாலும் நம் ஆசாரியாளைப் போன்றவர்கள், "கூடாது, கூடாது! எந்த தத்வத்தைச் சேர்ந்ததானாலும் சரி;ஒரு புஸ்தகத்தை இல்லாமல் பண்ணக்கூடாது"என்று எதிராளியின் கையைப் பிடித்துத் தடுத்திருக்கிறார்கள்.

இதர தேசத்தவர்களுக்கோ பண்பாட்டில் சிறந்த இன்னொரு ராஜ்யத்தைப் பிடிக்கிறபோது அங்கேயுள்ள லைப்ரரியை கொளுத்துவது பெரிய சொக்கப்பானை போன்ற உத்ஸாஹ விளையாட்டு!'அறிவுச் செல்வம் எல்லாருக்கும் பொது;எதிரியுடைய ஊரைச் சேர்ந்ததானாலும் அதை நாமும் எடுத்துக் கொண்டு பயனடையலாம்' என்ற விவேகமில்லாமல், தங்களைவிட அறிவாளிகளாக உள்ள சத்ருக்களின் புஸ்தகங்களை பஸ்மம் பண்ணி அவர்களை வயிறெரியச் செய்ய வேண்டும் என்று நினைத்து இப்படிப்பட்ட பெரிய அக்ரமத்தைச் செய்தார்கள். இப்படித்தான் ஈஜிப்டில் (எகிப்தில்) அலெக்ஸான்ட்ரியா என்ற இடத்தில் அலெக்ஸான்டர் காலத்திலிருந்து சேகரிக்கப்பட்ட அநேகத் துறைகளில் உயர்ந்த புஸ்தகங்களைக் கொண்ட லைப்ரரியையும்;டர்க்கியில் (துருக்கியில்) இஸ்டான்புல் என்று இப்போது சொல்லப்படுகிற கான்ஸ்டான்டினோபிளில் கிரேக்கர்கள், ரோமானியர்கள் ஆகியவர்கள் பல காலமாகப் பேணி வளர்த்த லைப்ரரியையும் பதினைந்து - பதினாறாம் நூற்றாண்டில் துருக்கர்கள் படை எடுத்தபோது இருந்த படம் தெரியாமல் கொளுத்திவிட்டார்கள். பழைய சங்க நூல்களை ஸமுத்திரம் கொண்டு போய்விட்டது என்கிற மாதிரி இயற்கை உத்பாதமாக இல்லாமல், சத்துருக்களின் பண்பாட்டுக் குறைவால் அந்த தேசங்களில் பழைய அறிவு நூல்களில் பல வீணாகி விட்டன.

இங்கே நம் தக்ஷிண தேசத்திலும் கர்நாடிக் நவாப் முதலியவர்கள் கை ஓங்கித் தமிழ்நாடு முழுவதிலும் துருக்க சைன்யம் பரவினபோது தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹாலுக்கு ஆபத்து வந்துவிட்டது. அதைக் கொளுத்திவிட்டால் தஞ்சாவூர்

பெரிய கோவிலை இடிப்பதற்கு ஸமானம் என்று ரொம்ப ஆவலாக சத்ருக்கள் வந்தார்கள். அப்போது டபீர் பந்த் என்ற மஹாராஷ்டிர பிராம்மணர் தஞ்சாவூர் ராஜாவுக்கு (சிவாஜி வம்சத்தவருக்கு) மந்திரியாக இருந்தார். அவருக்கு ஸமயோசிதமாக ஒரு யுக்தி தோன்றிற்று. "இதிலே எங்கள் ஹிந்து புஸ்தகங்கள் மட்டும் இல்லை. குரான் பிரதிகளும் வைத்திருக்கிறோம்"என்றார். உடனே, வந்தவர்கள் "குரான் இருக்கிறதா?அப்படியானால் கொளுத்த மாட்டோம்" என்று நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போய்விட்டார்கள்.

அப்புறம் இங்கிலீஷ்காரர்கள், பிரெஞ்சுக்காரர்கள் எல்லோரும் வந்தார்கள். அவர்களுக்கு எதிலும் ஆராய்ச்சி புத்தி ஜாஸ்தி. இன்னொரு தேசத்து விஷயமானாலும் கொளுத்துவது என்று இல்லாமல், அதனால் தாங்கள் பிரயோஜனம் அடைய முடியுமா என்று பார்ப்பார்கள். ஜெர்மன் தேசத்தவர்களும் கலாசார ஆராய்ச்சி , மொழி ஆராய்ச்சிக்காக வந்து நம் நாட்டுச் சுவடிகளை எல்லாம் தேடித் தேடிப் பார்த்தார்கள். இதனால் நமக்கே பல புது சாஸ்திரங்களை இந்த அந்நிய தேசத்தவர்கள்தான் தேடிப் பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள். அதற்காக நம் நன்றி தெரிவிக்கவேண்டும். குறிப்பாக மெக்கன்ஸி என்பவர் ஸர்வேயர்-ஜெனரலாக இருந்தபோது ஊர் ஊராகப் போய் கிடைக்கக்கூடிய ஸகல ஏட்டுச்சுவடிகளையும் கலெக்ட் பண்ணி, அப்போது இதற்காக சர்க்காரின் டிபார்மென்ட் இல்லாவிட்டாலுங்கூட, அங்கங்கே படிக்கத் தெரிந்தவர்களைக் கொண்டு படிக்கப் பண்ணி, எல்லாவற்றையும் ரிகார்டாக preserve பண்ணி வைத்ததைச் சொல்ல வேண்டும். மெக்கன்ஸியின் ஆள் கும்பகோணத்தில் நம் மடத்துக்குக்கூட வந்து விவரங்கள் சேகரித்துக் கொண்டு போயிருக்கிறான்.

ஸரஸ்வதி மஹால் முதலிய இடங்களில் இருந்த ஸயன்ஸ், குறிப்பாக தநுர்வேதம், ஸம்பந்தமான நம் பழைய சுவடிகளை மேல் நாட்டுக்காரர்கள் எடுத்துக் கொண்டே போய்விட்டார்கள் என்று சொல்கிறார்கள். இப்படி எடுத்துக் கொண்டு போய்தான் ஹிட்லர் சில தினுஸான குண்டுகள், ப்ளேன்கள் முதலியன செய்தான் என்கிறார்கள்.

இருந்தாலும் இன்னமும் போஜராஜாவின் 'ஸமாராங்கான ஸூத்ரம்'போன்ற நம்மிடமே உள்ள சுவடிகளிலிருந்து மந்திர பூர்வமான அஸ்திரங்கள் மட்டுமின்றி, scientific (விஞ்ஞான பூர்வமான) ஆயுதங்களான சஸ்திரங்களும் நம் தேசத்தில் நீண்ட காலத்துக்கு முன்பே இருந்திருப்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. வராஹமிஹிரரின் 'ப்ருஹத் ஸம்ஹிதை'மாதிரியான 'டைஜஸ்டுகள்'நம் நாட்டின் அநேகத் துறை சாஸ்திரங்களையும் ஸயன்ஸ்களையும் சேர்த்துக் கொடுத்திருக்கின்றன.

சாஸ்திரங்கள், மற்ற வித்யையகள், நம்முடைய மருத்துவம், விஞ்ஞானம் எல்லவாற்றுக்கும் பழைய சுவடிகள் இருக்கின்றன. புராணங்களும் இவற்றில்

இருக்கின்றன. இவைகளில் ஸ்தல புராணங்கள் மற்றவற்றை விடவும் ரொம்ப நஷ்டப்பட்டிருக்கின்றன. எஞ்சியதை நாம் காப்பாற்ற வேண்டும். தேடித் தேடிப் புதுசாகக் கிடைப்பதைச் சேகரம் செய்ய வேண்டும்.

வேதம் சொல்லும் பரமாத்ம தத்வத்தையும் தர்மங்களையும் நன்னெறிகளையும் ஒழுக்கங்களையும் ஸகல ஜனங்களுக்கும் விளக்கிச் சொல்லி ரஸிக்கும்படியான கதைகளைச் சொல்லி ரஸிக்கும்படியான கதைகளாகச் செய்திருப்பது புராணத்தின் சக்தியினால்தான். ஹ்ருதயத்தைத் தொடும் விதத்தில் உபதேசம் பண்ணுபவை அவை. நம்முடைய ஜனங்களின் தொந்றுதொட்டு வந்த நற்பண்புகளுக்கு முதுகெலும்பு புராணம்தான். ஆகையால் இப்போது அதனிடம் நமக்கு இருக்கும் அசட்டை மனப்பான்மையை மாற்றி கொண்டு, அதை ஒரு செல்வமாகக் காப்பாற்றுவோம். பல புராணங்களையும் ஒன்று சேர்த்து ஒப்பிட்டு ஆராய்ச்சிகள் செய்வோம்;இதனால் நாம் பயனடைந்து லோகத்துக்கும் பயனைத் தருவோம்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**சுதேச-விதேச மொழிகளும், லிபிகளும்**

இந்திய பாஷைகள் எல்லாவற்றுக்குமே ஒரு விசேஷம். அவற்றில் எழுதியிருப்பவை ஸ்பஷ்டமான சப்தங்களாகச் சொல்லப்பட வேண்டியவை. World என்று எழுதினாலும் சொல்லும்போது, முதலில் வருவதே 'வே'யும் இல்லாமல், 'வோ'வும் இல்லாமல் ஒரு அஸ்பஷ்ட (ஸ்பஷ்டமில்லாத) சப்தம்; அப்புறம் 'r' என்பதையும் அஸ்பஷ்டமாக மழுப்பிக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. இப்படி அநேக அஸ்பஷ்ட சப்தங்கள் அந்நிய பாஷைகளில் இருக்கின்றன. இவற்றை 'அவ்யக்த சப்தம்' என்பார்கள். நம் தேச மொழிகள் யாவும் ஸ்பஷ்டமான வ்யக்த சப்தங்களே கொண்டவை.

எழுத்துக்கும் உச்சரிப்புக்கும் பொதுவான ஒரே விதி இல்லாமல் பல விதமாக குழப்புகிறதும் அந்நிய பாஷைகளில்தான் மிகவும் அதிகமாகக் காண்கிறது. ஒரே 'க' சப்தத்துக்கு சி,ரி,னி, என்று மூன்று எழுத்து இருப்பது போல் இந்திய பாஷைகளில்

இராது. 'ஃப' சப்தம் ஒன்றுக்கே இங்கிலீஷில் f (fairy), ph (philosophy), gh(rough) என்று மூன்று விதமான ஸ்பெல்லிங் இருக்கிறது. C என்ற எழுத்தை 'R' என்ற ஸகாரமாகச் சொன்னாலும், அந்த எழுத்தில் ஆரம்பிக்கிற

பெரும்பாலான வார்த்தைகள் 'க' காரமாகவே இருக்கின்றன. ஸெல், ஸெலுலாய்ட், ஸினிமா மாதிரி ஏதோ சிலதில்தான் நீ-க்கு ஸகார சப்தம் இருக்கிறது. இன்னொரு பக்கத்திலோ அந்நிய பாஷைகளில் ஒரு எழுத்துக்கே வெவ்வேறு சப்தமும் இருக்கிறது. இன்னொரு பக்கத்திலோ அந்நிய பாஷைகளில் ஒரு எழுத்துக்கே வெவ்வேறு சப்தமும் இருக்கிறது. மேலே சொன்னபடி நீ என்பது க, ஸ இரண்டுக்கும் வருகிறது. Fat என்கிறபோது a என்பது 'ஏ' மாதிரி தொனிக்கிறது. Fast என்கிற போது அதே a என்பது 'ஆ' வாகத் தொனிக்கிறது. சில ஸ்பெல்லிங்களுக்கும் உச்சரிப்புக்கும் சம்பந்தமே இல்லை. Station, Nation முதலான வார்த்தைகளில் tion என்று எழுதிவிட்டு, அதை ஸம்பந்தமேயில்லாமல் 'ஷன்' என்று படிக்க வேண்டியிருக்கிறது.

ரோமன் ஆல்ஃபபெட் என்கிற இங்கிலீஷ் முதலான பாஷைகளின் லிபியில் இருபத்தியாறே எழுத்துக்கள் இருப்பதால் முதலில் கற்றுக் கொள்ள ஸுலபமாக இருக்கிறது. நம் தேச பாஷா லிபிகளில் நிறைய எழுத்து இருப்பதால் முதலில் சிரமப்பட்டே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் இப்படி ஒரு வருஷம் கஷ்டப்பட்டு பால சிக்ஷை வாசித்து விட்டால், பிற்பாடு அந்த பாஷையிலுள்ள ஸகல புஸ்தகங்களையும் கிறுகிறுவென்று வாசித்து விடலாம். இங்கிலீஷிலோ எம்.ஏ.பாஸ் பண்ணின பிறகு கூட, அநேக வார்த்தைகளின் உச்சரிப்புக்கு டிக்ஷனரியில் போட்டிருக்கிற உச்சரிப்பு விளக்கத்தை பார்க்க வேண்டியிருக்கிறது.

இப்படி இந்திய பாஷைகளுக்கு இருக்கிற சிறப்பு இந்திய பாஷைகளுக்குள்ளும் ஸம்ஸ்கிருதத்துக்கு பரிபூரணமாக இருக்கிறது. இதனால் நம் தேசத்தை விட அந்நியமானது மட்டமானது என்றோ, நம் தேசத்திலேயே ஸம்ஸ்கிருதத்தை விட மற்றப் பாஷைகள் தாழ்த்தி என்றோ சொல்லவில்லை. சில fact-களை (நடைமுறை உண்மைகளை) சொன்னேன். அவ்வளவுதான்!

சப்த ப்ரம்மாத்மகமாக இருக்கப்பட்ட பரமாத்மாவின் பரிபூர்ண ஸ்வரூபமாக ஸம்ஸ்கிருதம் இருக்கிறது என்று தெரிவதைச் சொன்னேன்.

எல்லா பாஷையும் எல்லாருக்கும் பொதுதான் என்ற மனப்பான்மை வரவேண்டும். அப்போது யாரையும் யாரும் மட்டம் தட்டத் தோன்றாது. பரஸ்பரம் அபிப்ராயப் பரிவர்த்தனைக்காக ஏற்பட்டதே பாஷை என்ற அடிப்படையான உண்மையை மறந்து விட்டதால்தான், இப்போது தாய் பாஷை ஒன்றிடமே வெறி மாதிரியான பற்றுதல், பிறபாஷைகளிடம் துவேஷம் எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. மற்ற எல்லா விஷயங்களிலும் பரந்த மனப்பான்மை, இன்டர்நேஷனல் அவுட்லுக் (ஸர்வ தேச நோக்கு) என்று சொல்லி விட்டு இந்த பாஷை விஷயத்தில் மட்டும் இத்தனை குறுகின புத்தி வந்துவிட்டதைப் பார்க்கிறபோது பரிதாபமாக இருக்கிறது.

ஸம்ஸ்கிருத சப்தங்களை சிக்ஷா சாஸ்திரம் எப்படி ஸ்பஷ்டமாக நிர்ணயித்துக் கொடுத்திருக்கிறது என்பதில் ஆரம்பித்து, பெரிய பாரதமாக மொழி ஆராய்ச்சி சண்டைகளில் கொண்டு விட்டுவிட்டது! அக்ஷர, ஸ்வர சுத்தம் மாறினால், ஒரு மந்திரத்தின் பலன் ஏற்படாது என்பதோடு மட்டுமின்றி விபரீத பலனே உண்டாகிவிடும் என்பதால், மந்திர அநுஸந்தானத்தில் பரம ஜாக்ரதையாக இருக்க வேண்டும். இதை வலியுறுத்தி சொல்கிற கதையொன்று வேதத்திலேயே தைத்திரீயத்தில் வருகிறது. (தைத்திரீய ஸம்ஹிதை - II.4.12) த்வஷ்டா என்கிறவன் ஒரு காரணத்துக்காக, 'இந்திரன் மேல் பழி தீர்த்துக் கொள்ளவேண்டும், அவனைக் கொல்லக் கூடிய பிள்ளையைப் பெற வேண்டும்' என்று நினைத்து, ஒரு மந்திரம் சொல்லி ஹோமம் பண்ணுகிறான். "இந்த்ர சத்ருர் வர்தஸ்வ" என்று அந்த மந்திரத்தைச் சொல்லும் போது 'இந்த்ர' என்பதை ஏற்றல் இறக்கல் இல்லாமல் ஸமமாகவும், 'சத்ரு' என்பதில் 'த்ரு'வைத் தூக்கியும் (உதாத்தமாகவும்), 'வர்தஸ்வ' என்பதில் 'ர்த' வையும் இப்படியே தூக்கியும் சொல்லியிருக்கவேண்டும். அப்படிச் சொன்னால் த்வஷ்டாவின் பிள்ளை, 'இந்திரனைக் கொல்லுபவனாக வளரட்டும்' என்ற அர்த்தம் ஏற்படும். ஸ்வர சக்தியாலேயே அவன் அப்படி வளர்ந்து, இந்திரனை வதம் பண்ணியிருப்பான். அதாவது, 'இந்த்ர' என்பதில் 'த்ர'வைத் தூக்கியும் (உதாத்தமாகவும்), வர்ஸ்தவ என்பதில் 'ர்த' வையும் இப்படியே தூக்கியும் சொல்லியிருக்கவேண்டும். அப்படிச் சொன்னால் த்வஷ்டாவின் பிள்ளை, 'இந்திரனைக் கொல்லுபவனாக வளரட்டும்' என்ற அர்த்தம் ஏற்படும். ஸ்வர சக்தியாலேயே அவன் அப்படி வளர்ந்து, இந்திரனை வதம் பண்ணியிருப்பான். ஆனால் த்வஷ்டா உச்சரிப்பிலே தப்புப் பண்ணிவிட்டான். அதாவது, 'இந்த்ர' என்பதில் 'த்ர' வைத் தூக்கியும் 'சத்ரு' என்பதை ஸமமாகவும், 'வர்தஸ்வ' என்பதில் 'ர்த'வை ஏற்றுவதற்குப் பதில் இறக்கி அநுதாத்தமாகவும் சொல்லிவிட்டான். இதனால் 'இந்திரனை இவன் கொல்பவனாக வளரட்டும்' என்று அர்த்தம் தலைகீழாக மாறிவிட்டது. வார்த்தைகளும் எழுத்துக்களும் மாறாவிட்டாலும்கூட, ஸ்வரங்களில் ஏற்பட்ட பிழையாலேயே த்வஷ்டா வேண்டியதற்கு நேர்மாறான பலன் உண்டாகிவிட்டது. இவனுடைய பிள்ளையை இந்திரன் வதம் பண்ணிவிட்டான். த்வஷ்டாவின் பிள்ளையான விருத்திரன் இந்திரனால் கொல்லப் படுவதற்கு அவன் தகப்பனாரே இப்படிக் காரணபூதனாகி விட்டான்.

இதைச் சொல்லி, மந்திர உச்சாரணத்தில் நம்மை ஜாக்ரதைப் படுத்தும் ச்லோகம் ஒன்று உண்டு:

மந்த்ரோ ஹீன: ஸ்வரதோ வர்ணதோ வா

மித்யாபரயுக்தோ ந தமர்த்தமாஹ।

ஸ வாக் வஜ்ரோ யஜமானம் ஹினஸ்தி

யதா இந்த்ரசத்ரு: ஸ்வரதோ (அ)பராதாத்।।

இந்திரனுடைய வஜ்ராயுதத்துக்குப் பதில், த்வஷ்டா தப்பாகச் சொன்ன வாக்கே வஜ்ரமாகிக் கொன்றுவிட்டதாம்!

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**சில சிறிய வித்யாஸங்கள்**

வேதத்தின் அக்ஷர சுத்தத்தைப் பற்றி இத்தனை சொன்னேன். நான் சொன்னதற்கு அநுஸரணையாகவே ஆஸேது ஹிமாசலம் (ராமேச்வரத்திலிருந்து இமயமலைவரை) அத்தனை இடங்களிலும், ஒருத்தருக்கொருத்தர் தொடர்பேயில்லாமல், புஸ்தகமுமில்லாமல், வாய்மொழியாகவே வேதத்தைப் பாடம் பண்ணி வந்துள்ள போதிலும் எல்லாப் பாடங்களும் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சதவிகிதம் அக்ஷர வித்யாஸமில்லாமல் ஒன்றாகவே இருக்கிறது.

அப்படியானால், இந்த பாக்கி ஒரு சதவிகத்தில் வித்யாஸம் இருக்கிறதா என்றால் இருக்கத்தான் செய்கிறது. ஒவ்வொரு பிரதேசத்திலும் உள்ள ஒவ்வொரு சாகைக்கும் இடாயில் இம்மாதிரி துளித்துளி அக்ஷர வித்யாஸம் இருக்கத்தான் செய்கிறது.

இப்படி இருக்கலாமா?ஒரு அக்ஷரம் தப்பினால்கூட விபரீத பலனாகும் என்று சொல்லிவிட்டு, ஒரே மந்திரமானது வெவ்வேறே சாகைகளில் வெவ்வேறே பிரதேசங்களில் வருமபோது அதில் ஒரு பெர்ஸென்ட் அக்ஷர வித்யாஸம் ஏற்படுகிறது என்றால் இதை ஏற்றுக்கொள்ள முடியவில்லையே!மூலரூபம் ஒன்றுதான் என்றால், அதில் ஒரு பெர்ஸன்ட் வித்யாஸத்தோடு இன்னொன்று வந்தால்கூட, அது பலன் தராதுதானே? அல்லது விபரீத பலன்தானே தரும்?

இப்படிக் கேள்வி கேட்டால் பதில் இருக்கிறது. ஒரு மருந்துக்குப் பதில் இன்னொன்றை மாற்றிச் சாப்பிட்டால் விபரீதம் என்ற மாதிரி, அக்ஷரத்தை மாற்றினால் தப்புத்தான். ஆனால் மருந்தை மாற்றக்கூடாது என்பது வியாதியஸ்தனுக்குச் சொன்னதுதான். அவனாக மருந்தை மாற்றிவிடக்கூடாது. ஆனால் டாக்டர் மாற்றலாம் அல்லவா?ஒரே வியாதிக்குப் பல மருந்துகள் இருக்கின்றன. அப்போது இதைச் சாப்பிடலாம், அல்லது இன்னொன்றைச் சாப்பிடலாம் என்ற டாக்டரே 'பிரிஸ்க்ரைப்' பண்ணினால் அதில் தப்பில்லை

தானே?ஒரே வியாதி இரண்டு பேருக்கு வந்திருக்கிறபோது, அவர்களின் தேகவாகிலே இருக்கிற வித்யாஸத்தை அநுசரித்து, ஒரே மருந்திலேயே கொஞ்சம் கொஞ்சம் சரக்குகளை மாற்றி, டாக்டர் கொடுக்கலாம் அல்லவா?

இம்மாதிரிதான், ஒன்றுக்கொன்று விபரீதமான பலன் உண்டாக்குகிற அக்ஷரங்களாக இல்லாமல், ஒரே மாதிரியான பலனை உண்டாக்குகிற அக்ஷரங்களை ரிஷிகள் பல சாகைகளுக்கிடையில் மாற்றிக் கொடுத்திருக்கிறார்கள். அந்த சாகையை அத்யயனம் செய்ய அதிகாரிகளாக யார் பிறப்பார்களோ அவர்களுக்கு இந்த அக்ஷர மாற்றங்கள் க்ஷேமத்தை

உண்டு பண்ணும் என்பதால் இப்படிச் செய்திருக்கிறார்கள். இவற்றைப் பற்றிய விதிகள் பிராதிசாக்யத்தில் தெளிவாகக் கூறப்படுகின்றன.

அக்ஷரங்களுக்குள்ளே மாறுபாடு என்றால் பெரிய வித்யாஸம் இல்லை. அக்ஷரங்கள் ஸம்பந்தாஸம்பந்தமில்லாமல் மாறிவிடாது. பெரும்பாலும் ஒரே மாதிரியாக ஒலிக்கிற சப்தங்களே ஒன்றக்குப் பதில் இன்னொன்று வரும். அவ்வளவுதான். ரொம்பவும் கிட்டக் கிட்ட இருக்கிற அக்ஷரங்களில் ஒன்றுக்குப் பதில் இன்னொன்று வரும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

## வேத சப்தமும் பிரதேச மொழிச் சிறப்பும்

இந்திய பாஷைகள் பலவற்றிலே இருக்கப்பட்ட தனிப்பட்ட விசேஷங்களையெல்லாம் அங்கங்கே இருக்கிற வேதாத்யயன அக்ஷர வித்யாஸங்களோடு இணைத்துப் பார்க்கிறபோது, ஒவ்வொரு பாஷைக்கும் உள்ள தனிப் பண்புகளுக்கும், இதனால் அவைகளுக்கிடையே ஏற்பட்டுள்ள வித்யாஸங்களுக்கும் அந்தந்தப் பிரதேசத்திலுள்ள வேத சப்தங்களே காரணம் என்ற பெரிய விஷயம் தெரிகிறது. இப்படி நான் ஃபைலாலாஜிகலாகப் பண்ணின சில ஆராய்ச்சிகளைச் சொல்கிறேன்:

ட(d'a) - ர-ல-ள-ழ என்று ஐந்து சப்தங்களும் ஒன்றுக்கொன்று கிட்டத்தில் இருக்கிறவை. ஒரு குழந்தையிடம் போய், "ரயில் என்று சொல்லு, ராமன் என்று சொல்லு" என்றால் அது "டயில்", "டாமன்" என்கிறது. 'ர' வும் 'ட'வும் கிட்டத்தில் இருப்பதாலேயே இப்படிச் சொல்கிறது. 'சிவராத்ரி' என்பதைப் பல பேர் 'சிவலாத்ரி' என்கிறார்கள். 'துளிப்போல' என்பதற்குத் 'துளிப்போர' என்கிறோம். இங்கே 'ல'வும்

'ர'வும் ஒரே மாதிரியான சப்தங்கள் என்று தெரிகிறது. மேலே 'ர' வும் 'ட'வும் மாறுவதைச் சொன்னேன். அதனால் 'ல' வும் 'ள' வும் ரொம்ப நெருங்கினவை. அநேகமாக நாம் 'லளிதம்,' 'நளினம்,' 'சீதளம்' என்று சொல்கிறதை, ஸம்ஸ்கிருத புஸ்தகங்களில் 'லலிதம்', 'நலினம்,' 'சீதலம்' என்றுதான் போட்டிருக்கும்; அத்தனை நெருங்கினவை. 'ள'வும் 'ழ' வும் ரொம்ப ஆப்தம் என்பதைச் சொல்லவே வேண்டாம். தமிழுக்கே ஏற்பட்ட மதுரையிலே இருக்கிறவர்கள் 'வாழைப் பழம்' என்பதை 'வாளைப் பளம்' என்றுதானே சொல்கிறார்கள்? தமிழுக்கே பிரத்யேகமானது என்று நினைக்கிற 'ழ'வை மாற்றிச் சொல்கிறார்கள்?

இப்போது நான் ஒரு புது விஷயம் சொன்னேன். தமிழில் மாத்திரம் இருப்பதாக நினைக்கப்படும் இந்த 'ழ' வேதத்திலும் இருக்கிறது என்று. ஸாமவேதத்தில் ஜைமினி சாகை என்று ஒன்று இருக்கிறது. அதைத் தலவகார சாகை என்றும் சொல்வார்கள். மற்ற வேதங்களில் மற்ற சாகைகளில் 'ட' அல்லது 'ள' வாக இருப்பதை, தலவகார சாகையில் 'ழ'மாதிரிதான் ஒலிக்க வேண்டும். முறைப்படி தலவகார சாகையில் அத்யயனம் பண்ணினவர்கள் இப்படித்தான் 'ழ' காரமாகச் சொல்கிறார்கள். அதைப் பூர்ணமான 'ழ' என்று வேண்டுமானால் சொல்ல முடியாமல் இருக்கலாம். ஆனால் உள்ளூர (அந்தர்பாவமாக) அது 'ழ' சப்தந்தான் என்பதில் ஸந்தேஹமில்லை.

ரிக்வேதத்திலேயே கூட இப்படி 'ழ'காரம் சில இடங்களில் ஒலிக்கிறதுண்டு. ஸாதாரணமாக 'ட'வும் 'ள'வும் ஒன்றுக்கொன்று மாறிவரும் என்றபடி, யஜுர் வேதத்தில் 'ட'காரம் வருமிடங்களில், ரிக் வேதத்தில் 'ள' காரம் வருவதுண்டு. வேதத்தில் முதல் மந்திரத்தில் முதல் வார்த்தை 'அக்னிமீடே' என்பது. 'அக்னிமீடே' என்பது இப்போது அநுஷ்டானத்திலே மெஜாரிட்டியாக இருக்கிற யஜுர்வேதப் பாடம்தான். ரிக்வேதத்தில், இது 'அக்னிமீளே' என்றுதான் இருக்கிறது. இங்கே 'ளே' என்பதை 'ழே' மாதிரிச் சொல்ல வேண்டும். யஜுர்வேதத்திலே வருவதும், ரொம்பப் பிரஸித்தியோடு இருப்பதுமான ஸ்ரீ ருத்ரத்தில், 'மீடுஷ்டமாய' என்று ஒரு இடத்தில் வருகிறது. இந்த வார்த்தை ரிக்வேதத்திலும் உண்டு. அங்கே "மீடு"வில் வரும் 'டு' என்பது 'ள' காரமாக இல்லாமல், 'ழ' காரம் அந்தர்பாவமாகத் தொனிக்கிற சப்தமாகவே இருக்கிறது.

பொதுவாக, ரிக் வேதத்தில் 'ள'வாக இருப்பது, யஜுர் வேதத்தில் 'ட'வாகவும், தலவகார ஸாமவேதத்தில் 'ழ'வாகவும் இருப்பதாகச் சொல்லலாம். இப்போது இந்த ஒவ்வொரு வேதமும் நிறைய அநுஷ்டானத்திலுள்ள பிரதேசங்களை எடுத்துக் கொண்டு, அந்தப் பிரதேச பாஷைகளின் விசேஷத்தைப் பார்க்கலாம்.

'வேதம் ஆரியர்களைச் சேர்ந்தது; திராவிடம் அதற்கு வித்யாஸமானது' என்று இக்காலத்தில் கிளப்பி விட்டிருப்பதால், திராவிடத்திலுள்ள மூன்று பிரதேசங்களையே எடுத்துக் கொள்ளலாம். அதாவது, தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று பாஷைகளை எடுத்துக் கொள்ளலாம்.

தமிழிலே 'ழ'காரம் விசேஷம். தெலுங்கிலே 'ட' (da) சப்தத்தின் பிரயோகம் விசேஷமாக வருகிறது. கன்னடத்தில் 'ள' என்ற சப்தம் அதிகமாக இருக்கிறது. கன்னடத்தில் 'ள' என்ற சப்தம் அதிகமாக இருக்கிறது. தமிழிலே 'ழ' வரும் இடங்களில், தெலுங்கிலே 'ட'வும் கன்னடத்தில் 'ள' வும் வருகின்றன. உதாரணமாக, 'ப்ரவாளம்' என்று ஒரு ஸம்ஸ்கிருத வார்த்தை இருக்கிறது. 'பவழம்' என்று தமிழில் சொல்வது அதுதான் . இதையே தெலுங்கிலே சொல்லும்போது 'பகடாலு' என்கிறார்கள். கன்னடத்தில் 'ஹவள' என்கிறார்கள்.

'ப்ரவாளம்' என்பதுதான் 'பவழ' மாயிருக்கிறது; 'பகடாலு' ஆகியிருக்கிறது. ஸம்ஸ்கிருத வார்த்தை தமிழில் மாறியதைவிடத் தெலுங்கில் ஜாஸ்தி மாறி, 'ப்ரவாளத்'தில் வரும் 'வ'வும் 'க' என்று வித்யாஸப்பட்டிருக்கிறது. அது தெலுங்கு மொழிப்பண்பு (genius of the language). இதே போல, 'ப்ரவாள' என்பது கன்னட 'ஹவள' மாகிற போது, முதல் எழுத்தே ரொம்பவும் மாறுகிறது. 'ப்ர' என்பது தமிழிலும், தெலுங்கிலும் 'ப' ஆனது சின்ன மாறுதல்தான். கன்னடத்திலோ 'ஹ' என்றே மாறிவிட்டது. ஆனால் இதுதான் கன்னடத்தின் பிரத்யேக மொழிப்பண்பு. மற்ற பாஷைகளில் 'ப' வாக இருப்பது அதிலே 'ஹ' வாக விடும். 'பம்பா' (ஸரஸ்)

என்பது 'ஹம்பா' என்றாகி, 'ஹம்பி' (Humpi ruins) என்றாகியிருக்கிறது. நாம் 'பால்' என்பதை கன்னடத்தில் 'ஹாலு' என்கிறார்கள். நாம் 'புகழ்' என்றால் கன்னடத்தில் 'ஹொகளு' என்பார்கள். இங்கெல்லாம் 'ப' என்பது 'ஹ' வாகிறது போலத்தான், 'ப்ரவாளமும் ஹவளமாகிறது'.

நான் இந்த ப-ஹ வித்தியாஸத்தைச் சொல்ல வரவில்லை. 'ப்ரவாள'த்தின் 'ள', தமிழில் 'ழ' வாகவும், தெலுங்கில் ட வாகவும், கன்னடத்தில் மூலமான ள ரூபத்திலேயே இருப்பதையுந்தான் சுட்டிக்காட்ட வந்தேன்.

இந்த வார்த்தை மட்டும் இல்லாமல், அதாவது ஸம்ஸ்கிருத 'ரூட்'டிலிருந்து வந்த ப்ரவாளம் போன்ற வார்த்தைகளில் மட்டும் இன்றி, திராவிட பாஷைகளில் மட்டுமே இருக்கிற வார்த்தைகளிலும் கூடத் தமிழில் 'ழ' வரும் இடத்தில் தெலுங்கில் ட வும் கன்னடத்தில் ள வும் தான் வருகிறது. மேலே சொன்ன "புகழ்" என்பதே இதற்கு ஒரு உதாரணம். 'புகழ்' என்ற வார்த்தை ஸம்ஸ்கிருத தாதுவிலிருந்து வந்ததல்ல. அது ஒரு திராவிட பாஷைச் சொல்தான்....

ஆரியர், திராவிடர் என்று இரு இனமாகப் பிரிந்திருக்காவிட்டாலும், ஒரே இனத்துக்காரர்கள் ஸம்ஸ்கிருதத் தொடர்புடைய பாஷைகளாகவும், திராவிட பாஷைகளாகவும் பிரிந்திருக்கிறார்கள் என்றுதான் இப்போது ஆராய்ச்சி உள்ள நிலையயிலிருந்து தெரிகிறது. இன்னும் நன்றாக ஆராய்ச்சி பண்ணினால் இந்தப் பாஷா வித்யாஸமும் கூட இல்லாமல், எல்லாம் ஒரே மூலபாஷையிலிருந்து (Parent Stock-லிருந்து) வந்ததுதான் என்றுகூட ஏற்பட்டுவிடலாம். சில மொழி

ஆராய்ச்சிக்காரர்கள் (linguists) இப்படித் தமிழ் - ஸம்ஸ்கிருத பாஷைகளின் ஐக்கியத்தைக் கூட ஆராய்ச்சி செய்வதாகத் தெரிகிறது. மிக மிக ஆதிகாலத்துக்குப் போனால் அப்படியிருக்கலாம். ஆனால் அதற்குப் பின் ஆயிரக்கணக்கான வருஷங்களாக, திராவிட பாஷைகள் வேறு ரூபமாக மாறிக் கொண்டுதான் வந்திருக்கின்றன. இந்த நிலையை ஏற்றுக்கொண்டு, இப்போதைக்கு திராவிட பாஷைகளைத் தனியாகப் பிரித்தே தான் இங்கே பேசுகிறேன்.

'புகழ்' என்ற தமிழ் வார்த்தை கன்னடத்தில் 'ஹொகளு' என்றும், தெலுங்கில் 'பொகடு' என்றும் இருக்கிறது. இதிலிருந்தும் தமிழ் 'ழ' காரம் தெலுங்கில் 'ட'காரமாகவும், கன்னடத்தில் 'ள' காரமாகவும் இருப்பதாகத் தெரிகிறது.

இப்படித் தமிழுக்கு 'ழ'வும், தெலுங்குக்கு 'ட'வும் கன்னடத்துக்கு'ள'வும் விசேஷமாக இருப்பதற்கு ஏதாவது காரணம் இருக்குமோ என்று ஆலோசித்துப் பார்த்த போது, அந்தந்தப் பிரதேசத்திலுள்ள வேத சாகையின் அத்யயனத்திலுள்ள அக்ஷர வித்யாஸம்தான் இதற்குக் காரணம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்.

மஹாராஷ்டிரம், கர்நாடகம் உள்பட மேற்குப் பிரதேசத்தில் எந்த வேதம் நிறைய அநுஷ்டானத்தில் இருக்கிறது என்று பார்த்தால், ரிக் வேதமாகத்தான் இருக்கிறது. நாஸிக்கிலிருந்து கன்யாகுமரிவரை மேற்குக்கரைப் பிரதேசத்தில் பார்த்தால், ரிக்வேதம்தான் அதிகம். அதனால்தான், அந்தப் பிரதேசத்தில் வழங்குகிற கன்னட பாஷையில் 'ள' முக்கியமாக இருக்கிறது. வேத 'ள' வே திராவிட பாஷையாக நினைக்கப்படும் பிரதேச மொழியான கன்னடத்திலும் விசேஷ சப்தமாக வந்துவிட்டது!

விசாகப்பட்டினத்திலிருந்து மெட்ராஸுக்கு வடக்கு வரை கிழக்கு ஸமுத்திரக் கரையையும், அதை ஒட்டிய உள்நாட்டையும் எடுத்துக் கொண்டு, அதாவது ஆந்திர தேசத்தைப் பார்த்தால், அங்கே நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டுப் பேர்கள் யஜுர்வேதிகள்தான்; பாக்கி இரண்டு சதவிகிதம் ரிக்வேதிகள். தெலுங்கு தேசத்தில் ஸாமவேதிகள் இல்லை என்றே சொல்லி விடலாம். இந்தப் பிரதேசத்தில் யஜுர் வேதம் முக்கியமாயிருப்பதால், அத்யயனத்திலே ரிக்வேதத்தில் வரும் 'ள' இங்கே 'ட'வாகத்தானே ஓதப்படும்?

விசாகப்பட்டினத்திலிருந்து மெட்ராஸுக்கு வடக்குவரை கிழக்கு ஸமுத்திர கரையையும் அதை ஒட்டிய உள்நாட்டையும் எடுத்துக் கொண்டு, அதாவது ஆந்திர தேசத்தைப் பார்த்தால், அங்கே நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டுப் பேர்கள் யஜுர்வேதிகள்தான்; பாக்கி இரண்டு சதவிகிதம் ரிக்வேதிகள். தெலுங்கு தேசத்தில் ஸாமவேதிகள் இல்லை என்றே சொல்லி விடலாம். இந்த பிரதேசத்தில் யஜுர் வேதம் முக்கியமாயிருப்பதால், அத்யயனத்திலே ரிக்வேதத்தில் வரும் 'ள' இங்கே 'ட'வாகத் தானே ஓதப்படும்? இதை வைத்தே, இங்கே regional language

(பிரதேச பாஷை) ஆக உள்ள தெலுங்கிலும், மற்ற பாஷைகளின் 'ள' என்பது 'ட'வாகி விடுகிறது!

தமிழ் தேசத்தை எடுத்துக் கொண்டால், பிற்காலத்தில் இங்கேயும் யஜுர்வேதிகள்தான் அதிகமாகி விட்டார்கள். ஆனாலும், தெலுங்கு தேசத்தில் உள்ள அளவுக்கு இருக்கமாட்டார்கள். தமிழ் நாட்டில் நூற்றுக்கு எண்பது பேர் யஜுர்வேதிகள் என்று சொல்லலாம். பாக்கியில், 15% ஸாமவேதம் இருக்கும்; 5% ரிக்வேதம் இருக்கும்.

இப்போது இப்படி இருந்தாலும், முற்காலங்களில் தமிழ் தேசத்தில் ஸாமவேதம் இன்னம் நிறைய இருந்திருக்கிறது என்பதற்கான சான்றுகள் இருக்கின்றன. ஸாம வேதத்திலிருந்த ஆயிரம் சாகையைச் சேர்ந்தவர்களும் தமிழ் நாட்டில் இருந்திருக்கிறார்கள் என்று ஊகிக்க முடிகிறது. "ஆயிரம் சாகை உடையான்" என்பதாகத் தேவாரத்திலேயே சில இடங்களில் ஈச்வரனை ஸ்தோத்திரம் செய்திருக்கிறது.

இந்த ஆயிரம் சாகைகளில், தற்போதுள்ள ஸாம வேதிகளில் 'கௌதுமம்' என்ற சாகையைச் சேர்ந்தவர்களே அதிகமாயிருந்தாலும், பூர்வத்தில் 'ஜைமினி சாகை' அல்லது 'தலவகாரம்' எனப்படுவதைச் சேர்ந்த ஸாம வேதிகள் நிறைய இருந்திருக்கிறார்கள். 'சோழியர்'கள் என்பதாகச் சோழ தேசத்துக்கே சிறப்பித்துப் பேசப்படுபவர்களில் இன்றைக்கும் ஸாமவேதிகளாக இருப்பவர்கள் தலவகார சாயையினராகத் தான் இருக்கிறார்கள். பாண்டிய நாட்டின் கோடியில், திருநெல்வேலியில் உள்ள சோழியர்களைப் பார்த்தால் கூட தலவகார சாகைகாரர்களான ஸாமவேதிகளாக இருக்கிறார்கள். ஆதியில் சோழ தேசத்தில் மட்டுமின்றி பாண்டிய தேசத்திலும் ஸாமவேதம் நிறைய இருந்திருக்கவேண்டும் என்று இதிலிருந்து தெரிகிறது.

"சோழியர்" என்றால், ரொம்பவும் பூர்வத்திலிருந்தே தமிழ் நாட்டுக்காரர்களாக இருந்த பிராம்மணர்கள் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம். அவர்கள் தமிழ் நாட்டின் ஆதிவாசிகளான பிராம்மணர்கள். ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், தமிழ் நாட்டு பிராம்மணர்களில் "வடமர்" என்றும் ஒர் பிரிவு இருக்கிறது. 'வடமாள்', 'வடமா' என்கிறோம். "என்ன வடைமாவா, தோசை மாவா?" என்று கேலிகூடப் பண்ணுகிறோம். இது "வடமர்" என்பதே. தமிழ் நாட்டில் ஆதியிலிருந்து வஸித்துவந்த சோழியர்களைத் தவிர பிற்பாடு வடக்கேயிருந்து, குறிப்பாக நர்மதா நதிப் பிரதேசத்திலிருந்து, தமிழ் நாட்டுக்கு வந்து குடியேறிய பிராம்மணர்களதான் இந்த வடமர்கள். பெயரே அவர்கள் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்று காட்டுகிறது

ஆனால், இப்போது சிலர் நினைக்கிற மாதிரி, "அத்தனை பிராம்மணர்களுமே வடக்கேயிருந்து இங்கே வந்தவர்கள்தான்;தமிழ் தேசத்தில் ஆதியில்

பிராம்மணர்களே இல்லை"என்பது தப்பான அபிப்ராயம் என்பதற்கும், "வடமர்"என்ற வார்த்தையே proof-ஆக இருக்கிறது. எல்லா பிராம்மணர்களுமே வடதேசத்தைச் சார்ந்தவர்கள்தான் என்றால், தமிழ் நாட்டில் உள்ள அத்தனை பிராம்மணர்களுக்குமே "வடமர்"என்ற பெயர் ஏற்பட்டிருக்கும். அப்படியில்லாமல், தமிழ் நாட்டு பிராம்மணர்களில் ஒரு பிரிவுக்கு மட்டுமே "வடமர்" என்று பெயர் இருப்பதாலேயே, பாக்கியுள்ள பிராம்மணர்கள் ஆதியிலிருந்து தமிழ்நாட்டையே சேர்ந்தவர் என்றுதானே அர்த்தமாகும்?அந்த ஆதித் தமிழ் பிராம்மணர்கள் தான் 'சோழியர்கள்'எனப்பட்டவர்கள்.

"வடமர்"கள் நர்மதா தீரத்திலிருந்து வந்தவர்கள் என்பதற்கு ஒரு ஆதாரம் இருக்கிறது. வடமர்கள் மட்டும் இன்றைக்கும் ஸந்தியாவந்தனத்தில்,

நர்மதாயை நம:ப்ராத:நர்மதாயை நமோ நிசி।

நமோஸ்து நர்மதே துப்யம் பாஹி மாம் விஷ ஸர்ப்பத:।।

என்பதாக, நர்மதைக்குக் காலையிலும் நிசியிலும் வந்தனம் சொல்லி, தங்களை ஸர்ப்ப பயத்திலிருந்து ரக்ஷிக்கும்படி வேண்டிக் கொள்கிறார்கள்.

தெற்கேயே இருந்த சோழியர்களில், சோமாசி மாற நாயனார் என்று அறுபத்து மூவரில் ஒருவராகக் கூட ஒரு பெரியவர் இருந்திருக்கிறார். 'சோமாசி' என்றால் பக்ஷணம் இல்லை. "சோமயாஜி"-ஸோம யாகம் பண்ணுகிறவர் - என்பதே "சோமாசி"என்றாயிற்று. ஸ்ரீ ராமாநுஜாசாரியாரின் தகப்பனாரும் ஸோம யாகம் பண்ணினவர். கேசவ ஸோமயாஜி என்று அவருக்குப் பெயர். ஸாம வேதந்தான் ஸோம யாகங்களுக்கு விசேஷமானது.

தமிழ்நாட்டிலே முக்யமாகச் சோழியர்கள் ஆதியில் இருந்தார்கள் என்றால், இங்கே தலவகார ஸாமமும் வெகுவாக அநுஷ்டானத்தில் இருந்திருக்க வேண்டும் என்றே அர்த்தம். இங்கே சோழ, பாண்டிய தேசங்களைப் பற்றிச் சொன்னேன். பல்லவ தேசம், சேரநாடு இவற்றின் பிராம்மணர்களைப் பற்றிச் சொல்லவில்லையே என்று தோன்றலாம். ரொம்பவும் பூர்வத்தில் பல்லவ ராஜ்யத்தில் இல்லை. சேர-சோழ-பாண்டியர்கள் என்பவர்கள்தான் மூவேந்தர்கள். பிற்காலப் பல்லவ ராஜ்யத்தில் அடங்கியிருந்ததுதான். அதனால் அங்கிருந்த பூர்விகப் பிராம்மணர்களும் சோழியர்கள்தான். 'வடமர்கள்' என்று வடக்கேயிருந்து வந்தவர்களில் பலர், தமிழ் நாட்டின் வடபகுதியான பல்லவ ராஜ்யத்திலேயே தங்கிவிட்டார்கள். இவர்களுக்கு 'ஔத்தர வடமர்'என்று பிற்பாடு பெயர் உண்டாயிற்று. தமிழ் நாட்டுக்கு வடக்கேயிருந்து வந்தபின், தமிழ்நாட்டுக்குள் அதன் "அதன் உத்தர"பாகத்தில் (வடக்குப் பகுதியில் ) தங்கி விட்டதால் "ஔத்தர"என்று அடைமொழி ஏற்பட்டது. வடமர்களிலும் ஸாமவேதிகள் சிலர் உண்டு. ஆனால் இவர்கள் ஜைமினீயம் எனப்படும் தலவகார

சாகையைச் சேர்ந்தவர்களல்லர். அதிக அநுஷ்டானத்திலுள்ள கௌதும சாகையைச் சேர்ந்தவர்களே. தமிழ்மொழியும் இலக்கியமும் முறையாக ரூபம் பெற்று வந்த பழைய காலத்துக்கு வடமர்களின் வருகை ரொம்பவும் பிற்பட்டது. ஆதலால் அவர்களுடைய அத்யயன முறை நாம் எடுத்துக் கொண்ட விஷயத்துக்குச் சம்ந்தமில்லாதது. தமிழ் பாஷை நன்றாக ரூபம் பெற்று, சங்க இலக்கியங்கள் தோன்றிய பின்பே வந்த பல்லவர் ஸமாசாரம் நம் ஸப்ஜெட்டுக்கு அவசியமில்லாத விஷயந்தான்.

சேரநாட்டு ஸமாசாரத்தைப் பார்க்கலாம். தற்போது கேரளமாகி விட்ட சேர நாட்டிலே மலையாள பாஷை வழங்குகிறது. தமிழ்-தெலுங்கு-கன்னடத்தைச் சொன்ன போது மலையாளத்தைச் சேர்க்காமல் விட்டதற்குக் காரணம், இந்த பாஷையும் பல்லவர்களைப்போல, வடமர்களைப் போல, பிற்காலத்து ஸமாசாரம் என்பதேயாகும். சுமார் ஆயிரம் வருஷத்துக்கு முந்தி வரையில், கேரளநாடு தமிழ்நாட்டின் பாகமான சேரநாடாகவும், அங்கிருந்த பாஷை தமிழாகவும்தான் இருந்தது. பிறகுதான் தமிழிலிருந்தே மலையாளம் தோன்றியது. தமிழ் 'ழ'தெலுங்கில் 'ட'வாகவும், கன்னடத்தில் 'ள'வாகவும் வித்தியாசப்பட்டு இருந்தாலும், மலையாளத்தில் 'ழ'வாகவே தங்கிவிட்டது. நாம் 'புழை' என்பதை மலையாளத்தில் 'புழா'என்றே சொல்கிறார்கள். நாம் 'ஆலப்புழை', 'அம்பலப்பு ழை'என்றால் அவர்கள் 'ஆலப்புழா',

'அம்பலப்புழா'என்பார்கள். இத்தனைக் கொஞ்சம்தான் வித்தியாசம். அதனால் மலையாள பாஷையை விட்டுவிட்டு, அந்தச் சீமையில் ஆதியிலிருந்தே இருந்து வந்திருக்கிற வேதத்தைப் பார்ப்போம். நம்பூதிரிகள் எனப்படும் மலையாள பிராம்மணர்கள்தான் நீண்ட நெடுங்காலமாக ரொம்பவும் சாஸ்திரோக்தப்படி வேத அத்யயனம் செய்து வருகிறார்கள். இவர்களில் (ரிக்,யஜுஸ், ஸாமம் என்கிற) த்ரிவேதிகளும் இருக்கிறார்கள். குறிப்பாக, ஸாமவேதிகளில் தலவகார சாகையைப் பின்பற்றும் நம்பூதிரிகள் இருக்கிறார்கள். 'பாஞ்சான்மனை'என்று நல்ல வைதிகமான ஒரு நம்பூத்ரி பரம்பரை இருக்கிறது. அவர்கள் எல்லாரும் தலவகார சாகையினரே. தமிழ்நாட்டு ஸாமவேதிகளில் தற்போது கௌதும சாகையினர் அதிகமாகி விட்டபோதிலும், மலையாளத்தில் ஸாமவேதிகள் தலவகார சாகையினராகவே இப்போதும் இருக்கிறார்கள்.

பரம்பரையாக தலவகாரம் ஒதுவருகிற நம்பூத்ரிகள் மற்றை சாகைகளில் 'ட'அல்லது 'ள'வாக வருவதை 'ழ' காரமாகவே உச்சரிக்கிறார்கள். அதாவது தமிழ்நாட்டில் அத்யயனம் செய்வதுபோலவே தான் அங்கேயே இருக்கிறது. ஆதியில் அதுவும் தமிழ்நாடாகவே தான் இருந்திருக்கிறது.

மலையாளத்திலும், தமிழ்நாட்டிலும் உள்ள தலவகார ஸாமச் சுவடிகளில் எல்லாம் 'ழ'என்றே இந்த இடங்களில் எழுதியும் இருக்கிறது. சுவடியில் மட்டுமின்றி, அச்சுப்போட்ட பிரதிகளிலும் இப்படியே இருக்கிறது.

இப்படியாக, வேறெந்தப் பகுதியிலும் இல்லாத அளவுக்குத் தமிழ் தேசத்திலேயே தொன்று தொட்டுத் தலவகார ஸாமஸாகை இருந்து வந்திருக்கிறது;வேறெந்தப் பகுதியிலும் இல்லாத 'ழ'உச்சரிப்பும் அதோடு வேத அத்யயனத்திலே வந்திருக்கிறது.

சங்க நூல்களின் உரையாசிரியர்களுல் முக்யமானவரான நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்துக்கு எழுதிய உரையில் 'தைத்திரீயம், பௌடிகம், தலவகாரம், ஸாமம்'என்று நாலு வேதங்கள் இருந்ததாகச் சொல்லியிருக்கிறார். இவர் சாகைகளையே வேதம் என்று தவறுதலாகச் சொன்னாலும்கூட, இதிலிருந்தே ஆதியில் தமிழ்நாட்டில் தலவகாரம் என்பதே ஒரு முழு வேதம் மாதிரியான ஸ்தானத்தைப் பெற்றிருந்தது என்றும் தெரியவருகிறது அல்லவா?தைத்திரீயம் என்பது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்த தைத்திரீய சாகை. பௌடியம் என்பது 'பௌஷ்யம்' எனப்படும். ரிக் வேதத்தில் ஸாங்காயன சாகையைச் சேர்ந்த கௌஷீதகீ ப்ராம்மணத்துக்குத்தான் பௌஷ்யம் என்றும் பெயர். இங்கே 'பௌடியம்'என்று இவர் சொல்வது ஆழ்வார் வாக்கிலே 'பௌழியா'என்று வருவதிலிருந்தும் 'ட'வுக்கும் 'ழ'வுக்கும் உள்ள தொடர்பு தெரிகிறது.

ஆக இப்படி வேத சாகைகளில் உள்ள உச்சாரண பேதத்தை வைத்தே, அந்தந்தப் பிரதேசங்களிலுள்ள பாஷைகளில் தனித் தன்மையுள்ள எழுத்து உண்டாயிருக்கிறது.

திராவிட தேசத்தை மட்டும் வைத்து நான் இப்படி சொன்னதை, இப்போது ஆல் இண்டியா லெவலிலும் (அகில இந்திய ரீதியிலும்) இண்டர்-நேஷனல் லெவலிலும் (சர்வதேச ரீதியிலும்) சொல்லப் போகிறேன்.

இப்போது வட இந்தியாவை எடுத்துக் கொண்டால், அங்கே 'ய' வரவேண்டிய இடங்களில் 'ஜ'வையும், 'வ' வரவேண்டிய இடங்களில் 'ப' (தீணீ) வையும் உபயோகப்படுத்துவது

அவர்களுடைய வழக்கமாயிருக்கிறது. பேச்சு மொழியில் (colloquial-ஆக) மட்டுமின்றி அவர்களுடைய பாஷைகளில் இலக்கிய மொழியிலும் கூட (literary) யாகவே இப்படி ஏற்பட்டிருக்கிறது. அதிலும்'வ'வை 'ப'வாக்குவது வங்காளத்திலும் 'ய'வை 'ஜ'வாக்குவது உத்தரபிரதேசம், பஞ்சாப், இன்னம் வடக்கான இடங்களிலும் மிகவும் அதிகமாகக் காண்கிறது.

வங்காளத்தில் 'வ-பயோரபேதம்',அதாவது வ வுக்கும் ப (ba)வுக்கும் பேதமில்லை என்பதை ஒரேயடியாகப் பின்பற்றுகிறார்கள். தமிழிலும், 'பீஷ்மர்'என்பதை 'வீட்டுமர்'என்றும்

பீமன் என்பதை வீமன் என்றும் 'ப'வை 'வ'ஆக்குகிறோம். ஆனால் ஒரேயடியாக

மாற்றுவதில்லை. வங்காளிகளோ 'வ'வை எல்லா இடங்களிலுமே 'ப'வாக்குகிறார்கள். வங்காளமே பெங்கால் ஆகிறது.

வங்கவாஸி என்பதை பங்கபாஸி என்று சொல்லுவார்கள். இப்படிச் சொல்வது பிழை என்பதை அவர்களே அறிந்து கொண்டார்கள். வங்காள தேசத்தில் இந்தத் தப்பை திருத்த ஒரு பரிஷத் ஏற்படுத்தினார்கள். "வங்க பரிஷத்" என்பது அதன் பெயர். இனிமேல் பதிப்பிக்கும் புஸ்தகங்களிலெல்லாம், பகாரம் உள்ள இடங்களில் வகாரமாகத் திருத்தவேண்டுமென்று நினைத்து, அப்படியே செய்து வந்தார்கள். அப்படிச் செய்ததில் ஸ்வபாவமாக பகாரம் இருக்க வேண்டிய இடத்திலும் வகாரமாக மாற்றிவிட்டார்கள். பந்து வென்பதைக் கூட வந்து வென்று மாற்றி விட்டார்கள். வங்கபந்து என்ற சரியான ரூபத்தை இதற்கு முன் அவர்கள் 'பங்கபந்து'என்று தப்பாக சொன்னார்கள் என்றால், இப்போதும் 'வங்க வந்து' என்று வேறு விதத்தில் தப்பாகச் சொல்ல ஆரம்பித்து விட்டார்களாம்.

வடக்கே மற்ற மாகாணங்களிலும் ஒரளவுக்கு இப்படி 'வ'வுக்கு பதில் 'ப' சொல்கிறார்கள்.

'பிஹார்'என்பதே 'விஹார்'தான். புத்த விஹாரங்கள் நிறைய இருந்த பிரதேசம் அதுவே. ராஷ்பிஹாரி என்கிறார்களே அது ராஸவிஹாரி என்பதுதான். அவர்கள் வகாரத்தைப் பகாரமாக மாற்றி உச்சரிப்பதற்கு காரணம் என்ன?பிராதிசாக்கியத்தில் அந்தச் சீமையில் உள்ள ஒரு குறிப்பிட்ட சாகையில் இப்படிச் சொல்ல வேண்டும் என்று இருக்கிறது. அந்த விதியை வேதத்துக்கு மட்டுமின்றி, பேசுவது எழுதுவது எல்லாவற்றிற்கும் உபயோகப் படுத்திக் கொண்டார்கள். இதனால் வேதத்தில் சொன்ன சிக்ஷா விதிகள் இந்தத் தேசம் முழுவதும் ஒரு காலத்தில் சிரத்தையாக அநுஷ்டிக்கப்பட்டு வந்ததென்று தெரிகிறது.

தேசம் பூராவிலுமே யஜுர் வேதம்தான் மெஜாரிட்டியாகப் பரவியிருக்கிறது என்று முன்பே சொன்னேன். இந்த யஜுஸில் கிருஷ்ண யஜுஸ், சுக்ல யஜுஸ் என்று இரண்டு இருப்பதாகவும் சொல்லியிருக்கிறேன் அல்லவா?இவற்றில் தக்ஷிணத்தில் அதிகம் பிரசாரத்திலிருப்பது கிருஷ்ண யஜுஸ்;உத்தர தேசத்தில் விசேஷமாக அநுஷ்டானத்திலிருப்பது சுக்ல யஜுஸ்.

சுக்ல யஜுஸின் பல சாகைகளில் ஒன்று மாத்யந்தின சாகை என்பது. அதுதான் வடக்கே சிறப்பாக பின்பற்றப்படுகிறது. இதன் பிராதிசாக்யத்தில் 'ய'வுக்கு பதில் 'ஜ'வரலாம் என்று இருக்கிறது;'ஷ'வுக்குப் பதில் 'க'வரலாம் என்றும் இருக்கிறது. இதனால்தான் நாம் 'புருஷ ஸுக்தத்தில் "யத் புருஷேண ஹவிகா"என்கிறான். அவன் அப்படிச் சொல்வதைக் கேட்டால்

நமக்கு சிரிப்பு வருகிறது. வேதத்தைத் தப்பாகச் சொல்கிறான் என்ற கோபங்கூட வருகிறது. நாம்தான் வேத சப்தங்களின் Purity-ஐ காப்பாற்றி வருகிறோம் என்று

நினைக்கிறோம். ஆனால் வாஸ்தவத்தில் அவன் சொல்வதற்கு சிக்ஷா சாஸ்திரத்தின் அங்கீகாரமேயிருக்கிறது.

ஏற்கெனவே நான் சொன்னபடி, மிக நெருங்கிய தொடர்புள்ள சப்தங்கள்தான் இப்படி ஒன்றுக்கொன்று மாற்ற அநுமதிக்கப்படுகின்றன. 'ஜ'வும் 'ய'வும் கிட்டிய பந்துக்கள் என்பது தமிழைப் பார்த்தாலும் தெரிகிறது. ஜாவா என்று சொல்கிற ஜாவகத் தீவை தமிழ் நூல்களில் யாவகம் என்றே சொல்லியிருக்கும். ஸாதாரணமாக, ஒரு வார்த்தையின் முதல் எழுத்தாக வருகிற 'ஜ'வை 'ச'என்பதே தமிழ் வழக்கமாயிருந்தாலும், வார்த்தைக்கு நடுவே 'ஜ'வந்தால் அதை'ய' என்றே ஆக்கி வருகிறோம். 'அஜன்','பங்கஜம்'என்பனவற்றை 'அயன்', 'பங்கயம்'என்கிறோம். 'ஷ'என்பது 'ச'வில் ஒரு வகைதான். 'ஷ'வும் 'க'வும் பரஸ்பரம் மாறும் என்பதால், 'ச'என்பதால், 'ச' வும் 'க'வும் அப்படி மாறலாம் என்றே தெரிகிறது. இதற்கேற்றாற்போல் நாம் 'கை'என்பதை தெலுங்கில் 'செய்'என்கிறார்கள். (சை என்கிற ஒலிதான் இது.) செய்வது (காரியம் பண்ணுவது) முக்கியமாகக் கையின் தொழில்தான். அதனால் 'கை'என்பதைவிட தெலுங்கிலே உள்ள செய் என்பதுதான் அதன் காரியத்தைத் தெரிவிக்கிற செய் (பண்ணு) என்ற ரூட்க்கு பொருத்தமாயிருக்கிறது. ஸம்ஸ்கிருதத்திலும் இப்படித்தானே 'கர'என்றால் செய்வது என்கிற அர்த்தமும், கை என்ற அர்த்தமும் இருக்கிறது? சங்கரர் - நல்லதைச் செய்கிறவர், 'கரோமி'என்றால் 'செய்கிறேன்'. கைக்கும் 'கர'என்றே வார்த்தையிருக்கிறது. ஆதலால் தமிழிலும் முதலில் செய்யாக இருந்தது தான் அப்புறம் 'கை'ஆயிற்றோ என்னவோ?இப்போது தமிழில் 'செய்' என்பது verb-ஆக மட்டுமே இருக்கிறது. அந்த 'ச'என்பது 'க'வாக மாறி 'கை'உண்டாயிருக்கிறது. இன்னொரு விஷயம்:ஷ-வும் ட்ச -வும் ரொம்பவும் கிட்டின ஒலிகள்.

தமிழிலே ப (ba) என்பது வ ஆகிறதென்றால், வடதேசத்து பாஷைகளில் வ என்பது ப ஆகிறது என்றேனல்லவா?அவ்விதமே, தமிழில் ஜ என்பது ய ஆகிறது, ஷ என்பது க ஆகிறது என்றால், எதிர்வெட்டாக வடக்கிலே ய என்பது ஜ-வாகவும், ஷ என்பது க-வாகவும் ஆகிறது. அது அவர்களுடைய அநுஷ்டானத்திலுள்ள வேத சாகையின் சிக்ஷா விதிப்படி ஏற்பட்டதாகும். இதனால்தான் யத் புருஷேண ஹவிஷா -வை ஜத் புருஷேண ஹவிகா என்கிறான்.

இதே மாற்றத்தை வடக்கிலே உள்ள எல்லா வார்த்தைகளுக்கும் ஏற்படுத்தி விடுகிறார்கள். 'யமுனா'வை 'ஜமுனா'வாக்கி விடுகிறார்கள். 'யோகி'யை 'ஜோகி'யாக்குகிறார்கள். 'யுகயுக' என்பதற்கு 'ஜுகஜுக'என்பார்கள். 'யாத்ரா' என்பது 'ஜாத்ரா' ஆகிறது. ஷ என்பது க-வாக மாறுவதில், 'ரிஷி'என்பதை 'ரிகி'என்கிறார்கள். க்ஷ-வும்

'ஷ'வும் ரொம்ப 'பந்து'க்கள் அல்லவா? நம்மிலேயே எத்தனை பேர் 'லக்ஷ்மி'என்பதை 'இலக்குமி'என்கிறோம். இப்படி அநேகம் சொல்லிக் கொண்டே போகலாம்.

இப்போது இண்டர்நேஷனல் லெவலுக்குப் போகலாம். கிறிஸ்துவ வேதமான பைபிள் பிறந்த பாலஸ்தீனம் - இஸ்ரேல் முதலான ஸெமிடிக் நாடுகளுக்குப் போகலாம். பைபிளின் 'ஒல்ட் டெஸ்ட்மென்ட்'முகமதியர்களின் குரானுக்கும் ஆதாரமாக இருக்கிறது. ஒல்ட் டெஸ்ட்மென்ட்'முகமதியர்களின் குரானுக்கும் ஆதாரமாக இருக்கிறது. ஒல்ட் டெஸ்ட்மென்டில் வந்தவர்கள் குரானிலும் வருவார்கள். ஆனாலும் அரேபியாவில் உச்சாரணம்

மாறுகிறது. 'ஜோஸப்'என்பது 'யூஸஃப்'ஆகிறது;'ஜெஹோவோ'என்பது 'யெஹோவோ'என்று வருகிறது. கிறிஸ்துவத்துக்கும் இஸ்லாத்துக்கும் இப்படி வித்யாஸம் என்பது மட்டுமில்லை. கிறிஸ்துவ தேசங்களுக்குள்ளேயே சில பாஷைகளில் ய-கரம் ஒலிக்கிறது:சிலவற்றில் ஜ-கரம் ஒலிக்கிறது. ஜேஸூ-யேஜூ (இயேசு) என்பதாக அந்த மதஸ்தாபகர் பேரே இரண்டு விதமாகவும் வருகிறது. கிரீஸ் பக்கம் போய்விட்டால் 'ஜ'காரம் வந்துவிடுகிறது.

இதற்கெல்லாம் மூலம் வேதத்தில் இருக்கிறது என்றும் ஆராய்ச்சி பண்ணப்பட்டிருக்கிறது. 'யஹ்வன்'என்று வேதத்தில் சொல்லப்படும் தேவதைதான் ஜெஹோவா - (யெஹோவா) என்கிறார்கள். 'த்யௌ-பிதார்'( த்யாவா - ப்ருதவி என்பது) என்பதே 'ஜூபிடர்'ஆயிற்று என்கிறார்கள். ஸம்ஸ்கிருத வார்த்தை ஒன்றின் ஆரம்பத்தில் ஒற்றெழுத்து வந்தால், அது மற்ற பாஷைகளில் உதிர்ந்துவிடும். இம்மாதிரி 'த்யௌபிதார்'என்றால் 'யௌபிதார்'தான். அது 'ஜூபிடர்'ஆயிற்று.

இப்படி மூல ரூபத்தில் யஹ்வன், (த்) யௌபிதார் என்று இருந்ததே அப்புறம் 'ஜ'கார பேதம் அடைந்து ஜெஹோவா, ஜூபிடர் என்று ஆயிற்று என்றால் என்ன தோன்றுகிறது?ஆதியில் எங்கேயும், லோகம் பூராவும் வேதாநுஷ்டானம் இருந்தபோது, கிரீஸைச் சுற்றியிருந்த தேசங்களில் யஜூர் வேதத்தின் மாத்யந்தின சாகை அதிகம் பிரசாரத்திலிருந்து என்றுதானே ஊகிக்கமுடிகிறது?

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**வேத உச்சரிப்பால் பிரதேச மொழி விசேஷமா ? பிரதேச மொழியை வைத்து வேத உச்சரிப்பா ?**

வேதத்தில் எந்த எழுத்து எந்தப் பிரதேசத்தில் சிறப்பாக இருந்திருக்கிறதோ, அதே எழுத்துத்தான் அந்தந்தப் பிரதேசத்துப் பாஷையிலும், அவர்களுடைய பேச்சிலும் சிறப்பாக இருந்திருக்கிறது என்று தெரிவிப்பதற்காக இவ்வளவும் சொன்னேன். இதிலிருந்தே எல்லாத் தேசங்களிலும் வேதம் இருந்ததும் தெரிகிறது. நமக்கு நன்றாகத் தெரிகிற தமிழ் தேசத்தில் வேதம் இல்லாமல் இருந்த காலமே இல்லை என்றும் தெரிகிறது.

தமிழ் என்பதிலேயே ழ் என்று உட்கார்ந்து கொண்டு நம் பாஷைக்கு பெருமையைத் தருகிற ழ காரம் வேதத்தின் தலவகார சப்தப் பிரகாரம் உண்டானதுதான். இப்படிச் சொல்வது சரியா?அல்லது தமிழிலே ழ இருக்கிறதாலும், வடக்கே பாஷைகளில் ஜ இருக்கிறதாலுந்தான், அந்தந்த பிரதேசங்களிலுள்ளவர்கள் வேதத்திலும் இப்படிப்பட்ட சப்தங்களாக மாற்றிக் கொள்ளலாம் என்று பண்ணிக் கொண்டார்கள் என்றால் சரியாயிருக்குமா?ஏற்கெனவே பிரதேச மொழிகளில் இருந்ததைத்தான் பிற்பாடு வேதத்திலும் எடுத்துக்கொள்ள இடம் தந்திருப்பார்களோ?அதையே தான் தலைகீழாக மாற்றி, வேதத்திலிருந்த ழ சப்தம்தான் தமிழுக்கு முக்யமாக ஆயிற்று, அதன் ஜ வடக்கத்திக்காரர்களுக்கு முக்யமாக ஆயிற்று, ப வங்காளிக்கு விசேஷமாக ஆயிற்று என்று சொல்கிறேனா? இதிலே எது சரி?

வேத சிக்ஷா விதிதான் பிரதேச பாஷைகளிலும் முக்கியமான ஒலியாக வந்தது என்பதுதான் சரி. ஏனென்றால் பிராதிசாக்ய விதி ஒரு பிரதேசத்துக்கு மட்டும் ஏற்பட்டதல்ல;அந்த சாகை அநுஷ்டானத்திலுள்ள ஸகலப் பிரதேசத்துக்கும் ஏற்பட்டது. தமிழ் நாட்டில் மட்டுமில்லாமல், எங்கேயாவது காஷ்மீரிலோ, காமரூபத்திலோ (அஸ்ஸாம்) ஒரு தலவகார சாகா அத்யாயி (அத்யயனம் செய்பவன்) இருந்தாலும், அவன் மற்றவர்கள் ட வும் ள வும் சொல்கிற மந்திரங்களில் ழ வைத்தான் சொல்லுவான். ஒரு பிரதேசத்துக்கு என்றில்லாமல், அதாவது தெலங்கன் மட்டுமில்லாமல் கிருஷ்ண யஜுஸில் அத்யயனம் பண்ணுகிறவன் எந்த பாஷைகாரனாக இருந்தாலும், அவன் குஜராத்தில் இருந்தாலும், மஹாராஷ்டிரத்தில் இருந்தாலும், வேறே எங்கே இருந்தாலும் ட தான் சொல்ல வேண்டும். இப்படியே கன்னடஸ்தன் மட்டுமின்றி ரிக்வேதியாக இருக்கப்பட்ட எவனுமே ' ள ' காரம் தான் சொல்ல வேண்டும். குறிப்பிட்ட பிரதேசத்துக்கு என்றில்லாமல் பொதுவாக எழுதி வைக்கப்பட்ட பிராதிசாக்யத்தில் இப்படித்தான் சப்த ரூபத்தை நிர்ணயம் பண்ணிக்கொடுத்திருக்கிறது. ஆகவே, ஒரு சாகை எங்கே அதிகமாக அநுஷ்டிக்கப்படுகிறதோ அங்குள்ள பிரதேச பாஷையிலும் இந்த அக்ஷர விசேஷம் நாளடைவில் உண்டாகி விடுகிறதென்றே ஆகிறது.

பெரும்பாலும், ம்ருக சீர்ஷ நக்ஷத்திரம் பௌர்ணமியன்று வருகிற ஒரு மாஸத்துக்கு ' மார்கசீர்ஷி ' என்று பேர் வைக்கப்பட்டது. அதைத்தான் நாம்

மார்கழி என்கிறோம். ' ஷி ' என்பது ' டி 'யாகி, ' டி ' என்பது ' ழி ' ஆகிவிட்டது. முதலில் ஷ என்பது ட ஆனது, தமிழ் மொழிப் பண்பின்படியாகும். ' புருஷன் ' என்பதை தமிழில் ' புருடன் ' என்போம். ' நஹுஷன் ' என்பதை ' நகுடன் ' என்றே கவிதையில் எழுதியிருக்கும். கம்பர் விபீஷணனை வீடணன் என்றுதான் சொல்கிறார். சரி, அதனால் ' மார்கசீர்ஷி ' என்பது ' மார்கசீர்டி 'யாகி நடுவிலே உள்ள சீர் உதிர்ந்து போனாலும், மார்கடி என்றுதானே நிற்க வேண்டும்?ஏன் ' ழ ' காரம் வந்து, ' மார்கழி ' ஆயிற்று என்றால், இதுதான் தமிழ் நாட்டில் பிராசீனமாயிருந்த தலவகார சாகையின் சிறப்பினால் ஏற்பட்ட விளைவு.

இந்த சாகைக்காரன் ' ழ 'சொல்கிற இடத்திலே, க்ருஷ்ண யஜுர்வேதிகள் ' ட ' சொல்வார்கள் அல்லவா?இந்தப் பழக்கம் அவர்களை அறியாமலே அவர்களுக்கு இன்னமும் விட்டுப்போகவில்லை.எப்படிச் சொல்கிறேன் என்றால், தெலுங்கு தேச வைஷ்ணவர்கள் நம்முடைய தமிழ் திவ்யபிரபந்தங்களைச் சொல்லி கோவிலில் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணுகிறார்கள். திருப்பதியில் வேங்கடரமண ஸ்வாமிக்கு இப்படித் ' திருப்பாவை ' அர்ப்பணம் பண்ணப்படுகிறது. அதன் எடுத்த எடுப்பில் " மார்கழித் திங்கள் "என்று வருகிறதல்லவா? ழி என்பது தெலுங்கர்களின் வாயில் வராது. அதனால் ' மார்களி ' என்றோ ' மார்களி ' என்றோ சொல்வதில்லை. ' மார்கடி திங்கள் 'என்று ட காரம் போட்டே சொல்கிறார்கள். தமிழ் நாட்டிலுள்ள ஸாமத்தைத் தாங்கள் யஜுஸில் சொல்லும்போது ழ என்பது ட ஆவது அவர்களுக்கே தெரியாமல் ரத்தத்தில் ஊறி வந்திருக்கிறது. அதனால் தான் ' மார்கழி 'யை ' மார்கடி ' என்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**மாதப் பெயர்கள்**

மார்கசீர்ஷி என்பது மார்கழி என்றானதாகச் சொன்னதில், பாஷா வித்யாஸங்கள் நன்றாகத் தெரிந்தன அல்லவா?தமிழில், அநேகமாக ஒவ்வொரு மாஸப் பெயரிலுமே, அந்த பாஷையின் தனி லக்ஷணப்படி மூலமான ஸம்ஸ்கிருதப் பேர் எப்படி மாறுகிறதென்று தெரிகிறது.

பெரும்பாலும் ஒரு மாஸத்தில் பௌர்ணமியன்று எந்த நக்ஷத்திரமோ அதுவே அந்த மாஸத்தின் பெயராக இருக்கும். அன்றைக்கு ஒரு பண்டிகையாகவும் விழாவாகவும் இருக்கும். அநேகமாக சித்ரா நக்ஷத்தரத்தன்றுதான் சித்திரை மாஸத்தில் பௌர்ணமி வரும். சித்ரா பூர்ணிமை ஒரு விசேஷ நாளாக இருக்கிறது.

தமிழில் சித்திரை என்ற மாஸப் பெயர் மூலத்துக்கு மாறாமலே இருக்கிறது. விசாக சம்பந்தமுள்ளது வைசாகம். விசாக நக்ஷத்திரத்தில் பெரும்பாலும் பௌர்ணமி ஏற்படுகிற மாஸம்தான் வைசாகி. மதுரை மருதையாவது போல், ஸம்ஸ்க்ருத வைசாகி தமிழில் வைகாசியாகிறது. (பெங்காலில் பைஷாகி என்பார்கள்) வைகாசி விசாகமும் உத்ஸவ நாளாக இருக்கிறது. நம்மாழ்வார் திருநக்ஷத்ரம் அன்றுதான். இப்போது, புத்த பூர்ணிமா என்பதாக அதற்கு விசேஷம் கொடுத்திருக்கிறார்கள்.

அநுஷ நக்ஷத்ர ஸம்பந்தமுள்ளது ஆநுஷீ. அந்த நக்ஷத்ரத்தில் பௌர்ணமி ஏற்படுகிற ஆநுஷீமாஸம், தமிழில் ஆனி ஆகிறது. ஷகாரம் தமிழில் உதிர்ந்துவிடுகிறது.

ஆஷாடத்தில் பூர்வ ஆஷாடம், உத்தர ஆஷாடம் என்று இரண்டு. பூர்வம் - முன்;உத்தரம் -பின். 'பூர்வாஷாட'த்தில் 'ர்வ'கூட்டெழுத்துச் சிதைந்தும், 'ஷா'உதிர்ந்தும், தமிழில் 'பூராடம்'என்கிறோம். இப்படியே உத்தராஷாடத்தை 'உத்திராடம்' என்கிறோம். இந்த ஆஷாடங்களில் ஒன்றில் பௌர்ணமி ஸம்பவிப்பதால், 'ஆஷாடீ'எனப்படுவதுதான், நம்முடைய 'ஆடி' மாஸம்.

ச்ராவணம் என்பது ச்ரவண நக்ஷத்ரத்தைக் குறித்தது. முதலில் உள்ள 'ச்ர'தமிழில் அப்படியே drop-ஆகி, 'வண'த்தை 'ஓணம்'என்கிறோம். அது மஹாவிஷ்ணுவின் நக்ஷத்ரமாதலால், 'திரு'என்ற மரியாதைச் சொல்லைச் சேர்த்துத் திருவோணம் என்கிறோம். (இவ்வாறே 'ஆர்த்ரா'என்ற சிவபெருமானின் நக்ஷத்ரத்தை ஆதிரை என்றாக்கி, அதற்கும்'திரு' சேர்த்துத் 'திருவாதிரை'என்கிறோம். திரு அச்வினி, திருப் பரணி என்றெல்லாம் சொல்வதில்லை. கார்த்திகை மாஸ தீப உத்ஸவத்தை மட்டும் திருக்கார்த்திகை என்றாலும், மற்ற சமயங்களில் திரு போடாமல் கார்த்திகை என்றே சொல்கிறோம். ஹரி-ஹரபேதம் பார்க்காத தமிழ் மரபு அவ்விருவர் நக்ஷத்ரத்துக்கு மட்டும் எப்போதும் 'திரு'போட்டு மரியாதை தருகிறது. இந்த விஷயம் இருக்கட்டும்) அநேகமாகப் பௌர்ணமி ச்ரவணத்திலேயே வருவதான 'ச்ராவணி'தான், ஸம்ஸ்கிருதத்துக்கே உரிய சகார, ரகாரக் கூட்டெழுத்து drop ஆகி, ஆவணியாகிறது.

இப்படி ஏகப்பட்ட எழுத்துக்கள் தமிழில் உதிர்வதற்கு 'ஸிம்ஹளம்'என்பது 'ஈழம்'என்றானது ஒரு திருஷ்டாந்தம். ஸ வரிசையம் ச வரிசையும் தமிழில் அ வரிசையாய் விடும்.

'ஸீஸம்' என்பதுதான் 'ஈயம்'என்றாயிருக்கிறது. 'ஸஹஸ்ரம்'என்பது கன்னடத்தில் 'ஸாஸிரம்' என்றாயிருக்கிறதென்றால், அந்த 'ஸாஸிரம்' தமிழில் 'ஆயிரம்'என்று ஸகாரங்களை உதிர்த்துவிட்டு உருவாயிருக்கிறது.

'ஆயிர'த்தைச் சொன்னதால் மற்ற எண்களைப் பற்றியும் சொல்லிவிடுகிறேன். ஒன்று, இரண்டு, மூன்று முதலியன ஏக, த்வி, த்ரி முதலான ஸம்ஸ்கிருத

வார்த்தைகளின் தொடர்பில்லாதவையாகவே உள்ளன. பஞ்ச-அஞ்சு;அஷ்ட-எட்டுஎன்பன மட்டும் ஸம்பந்தமிருக்கிறாற்போல் தோன்றுகிறது. இங்கிலீஷ் two, three என்பவை ஸம்ஸ்கிருத த்வி,த்ரி ஸம்பந்தமுடையவைதான். Sexta, hepta, octo, nove,deca என்பதாக ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து சம்பந்தத்தைச் சொல்லும் வார்த்தைகள் ஷஷ்ட, அஷ்ட, நவ, தச என்ற ஸம்ஸ்கிருத மூலத்திலிருந்தே வந்திருப்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆனால் முதல் எண்ணான one என்பது 'ஏக' என்பதன் ஸம்பந்தமே இல்லாமல், தமிழ் 'ஒன்று' என்பதன் ஸம்பந்தமே இல்லாமல், தமிழ் 'ஒன்று'என்பதன் முதல் இரண்டு எழுத்துக்களாக இருப்பது ஆச்சரியமாயிருக்கிறது. தெலுங்கிலோ தமிழ் ஒன்று-வின் 'ஒ' வும், ஸம்ஸ்கிருத 'ஏக'வின் 'க'வும் சேர்ந்து 'ஒகடி'என்றிருக்கிறது. இதெயெல்லாம் பார்க்கும்போது இனத்தில் எல்லாம் ஒன்று என்பதுபோல், திராவிட -ஸம்ஸ்கிருத பாஷைகளுக்குங்கூடப் பொதுவான ஒரே மூலபாஷை இருந்திருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது.

ஸிம்ஹளத்தில் 'ஸிம்ஹ'என்பதில் ஸ,ஹ இரண்டும் drop-ஆகி 'இம்ளம்', 'ஈளம்' என்றாகி, ள வும் ழ வாகி ஈழம் என்று ஏற்பட்டிருக்கிறது.

ப்ரோஷ்டபதம் என்பதற்கும் ஆஷாடம் போலவே பூர்வமும் உத்தரமும் உண்டு. பூர்வ ப்ரோஷ்டபதம்தான் தமிழில் பூரட்டாதி என்றாயிற்று. 'அஷ்ட' என்பது 'அட்ட'என்றாவது தெரிந்ததுதானே?உத்தர ப்ரோஷ்டபதம் உத்திரட்டாதி ஆயிற்று. இந்த நக்ஷத்ரங்கள் ஒன்றிலோ, அதை ஒட்டியோ பௌர்ணமி ஏற்படுகிற ப்ரோஷ்டபதீ என்பதே புரட்டாசி என்று எப்படியெப்படியோ திரிந்து விட்டது.

ஆச்வயுஜம், அச்வினி என்பதை அச்வதி என்கிறோம். அதிலே பௌர்ணமி வருகிற ' ஆச்வயுஜீ ' அல்லது ' ஆச்வினீ ' தான், நம் ' ஐப்பசி '.

கிருத்திகாவுக்கு adjective-ஆன கார்த்திகம்தான் கார்த்திகை என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. முக்காலே மூன்று வாசி திருக்கார்த்திகை தீபோத்ஸவம் பௌர்ணமியாகத்தானே இருக்கிறது?மார்கசீர்ஷி மார்கழியாவதில்தான் ஆரம்பித்தேன். அம்மாதப் பௌர்ணமி திருவாதிரைப் பண்டிகையாகத் தடபுடல் படுகிறது. புஷ்யம்தான் தமிழில் பூசம். (இந்தப் 'பூச' சப்தம் பழகிப் பழகியே புனர்வஸுவையும் புனர்பூசம் என்கிறோம். அது புனர்வஸுவேயன்றி புனர் புஷ்யம் இல்லை!)புஷ்ய ஸம்பந்தமானது பௌஷ்யம்.புஷ்யத்துக்குத் திஷ்யம் என்றும் பெயர். பூர்ணிமை திஷ்யத்திலே வரும் மாஸம் 'தைஷ்யம்'. அதிலே கடைசி மூன்று எழுத்துக்களும் போய்த் தமிழில் 'தை'மட்டும் நிற்கிறது.

மாசி மகம் பௌர்ணமியில்தான் வருகிறது. மாகமாஸம் என்று மகநக்ஷத்ரத்தை வைத்துப் பெயரிட்டது, தமிழில் மாசி என்றாகியிருக்கிறது. ககாரம் சகாரமாகி, மாகி என்பது மாசி என்றாயிருக்கிறது. வைகாசி, புரட்டாசி, ஐப்பசி என்று சி யில்

முடிந்தாற்போலவே, இங்கேயும் சி யில் முடித்து, மாசி என்று சொல்கிறோம்.

பூர்வ பல்குனம், உத்தர பல்குனம் என்ற இரண்டு நக்ஷத்ரங்கள் உண்டு. இரண்டிலும் நாம் முக்யமான பெயரான பல்குனம் என்பதைத் தள்ளவிட்டு, 'பூர்வ'த்தை 'பூரம்' என்றும், 'உத்தர'த்தை உத்தர நக்ஷத்திரம் என்றுமே சொல்கிறோம். ஆனால், இந்த நக்ஷத்ரங்களில் ஒன்றில் பௌர்ணமி ஏற்படுகிற மாஸத்தை மட்டும் "பல்குன"என்ற சப்த ஸம்பந்தமுள்ள "பங்குனி" என்ற பெயரால் குறிக்கிறோம். அந்தப் பௌர்ணமியில்தான் பங்குனி உத்தரம் என்று திருக்கல்யாண உத்ஸவம் செய்கிறோம்.

இப்படிப் பன்னிரண்டு மாஸப் பெயர்களைப் பார்த்தாலே, ஸம்ஸ்கிருதத்திலுள்ள எந்தெந்த ஒலிகள் தமிழில் எப்படியெப்படி மாறும் என்பது தெரிந்துவிடும்.

*தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்)*

**சந்தஸ் : வேதத்தின் பாதம்**

**சிக்ஷா சாஸ்திரத்தின் மற்ற சிறப்புகள்**

வேத சப்தத்தை மாற்றக்கூடாது, ஸ்வரத்தை மாற்றக் கூடாது என்றாலும், சாகா பேதத்தை உத்தேசித்துச் சப்தத்தைக் கொஞ்சம் கொஞ்சம் மாற்றவும் சிக்ஷா விதிகள் உள்ளன என்று இதுவரை சொன்னேன். இதே போல், ஸ்வரத்திலும் ஸ்வல்ப மாறுதலை அநுமதித்திருக்கிறது. மற்ற வேதங்களின் ' ஆ 'காரம் ' ஏ ' காரம் போன்ற சப்தங்களைச் சில இடங்களில் ரிக்வேதிகள் மேலும் நீட்டி அழுத்தி ' ஆ-ஆ ', ' ஏ-ஏ ' என்று சொல்லுகிறார்கள். சில சாகைகளில் ' ம் ' என்று வருவது., வேறு சிலவற்றில் ' க்ம் ' (ரீனீ)என்று வரும். இதை 'அநுஸ்வார ம்'என்பார்கள். இதுவும் அக்ஷர பேதத்தைவிட அழுத்திலுள்ள பேதத்தால் - அதாவது ஸ்வர பேதத்தால் - ஏற்படுவதே எனலாம்.

வேத அத்யயனத்தில் ஸம்ஹிதா, பதம், க்ரமம் என்று பல இருப்பதாக முன்னே சொன்னனல்லவா ?இப்படி ஸம்ஹிதா பாடத்தை பதம், க்ரமம் முதலான மற்ற அத்யயன முறைகளில் மாற்றிக் கொடுப்பதற்கும், சிக்ஷா சாஸ்திரத்தைச் சேர்ந்த ப்ராதிசாக்யங்கள்தான் உதவி புரிகின்றன.

ஏதோ சப்தந்தானே என்று அலட்சியம் பண்ணுவதிற்கில்லை. சப்தத்தில்தான் அத்தனையும் இருக்கிறது. அதனால் சிக்ஷா சாஸ்திரம் வேத புருஷனுக்கு மூச்சு விடுகிற நாஸியாகிறது. வேத சப்தத்திலிருந்து வந்ததுதான் ஸம்ஸ்கிருதத்தின் ஐம்பது அக்ஷரங்கள். " ஜ்ஞ " என்ற எழுத்தைத் தனியாகக் கொண்டால்

ஐம்பத்தியொன்று அக்ஷரங்கள். அவற்றுக்கு ' மாத்ருகா ' என்று பெயர். இதற்குப் பல அர்த்தம் சொல்லலாம். முக்கியமாக, ' மாத்ரு ', ' மாதா ' என்றால் ஜகன்மாதாவாக இருக்கப்பட்ட அம்பாள், அந்தப் பராசக்தியின் ஸ்வரூபமே இந்த 51 அக்ஷரங்கள். பராசக்தியால்தான் ஸகலப் பிரபஞ்சங்களும் உண்டாயின என்றும் சொல்லி, சப்தத்தால்தான் ஜகத்ஸ்ருஷ்டி உண்டாயிற்று என்பதாகவும் சொன்னால், அந்த அம்பாள் 51 அக்ஷர ஸ்வரூபிணியாகத்தானே இருக்க வேண்டும்?சாக்த தந்திரங்களில் இந்த 51 அக்ஷரங்களுமே அம்பாளுடைய தேகத்தின் அவயங்கள் என்றும், எந்த அக்ஷரத்துக்கு எந்த அவயவம் என்றும் சொல்லியிருக்கிறது. நம் தேசத்தில் அந்த அவயவ சம்பந்தமுள்ள க்ஷேத்ரங்கள்தான் 51 சக்தி பீடங்களாக ஆகியிருக்கின்றன.

வேத புருஷனுக்கு நாசி என்ற ஒரு அங்கமாக சிக்ஷா சாஸ்திரம் சொல்லப்படுவது அதற்குப் பெருமை என்றால், அதிலே விளக்கப்படுகிற அக்ஷரங்கள் சேர்ந்தே அம்பாளின் பூர்ண ஸ்வரூபம் என்று சொல்வது அதற்கு மேலும் பெருமை தருவதாக இருக்கிறது.

## பிள்ளையார் சுழி

எதை எழுத ஆரம்பித்தாலும் முதலிலே பிள்ளையார் சுழி போட்டுவிட்டுத்தான் ஆரம்பிக்கிறோம். பெரிய காவியமாகத்தான் இருக்கவேணும் என்றில்லை; ஒரு போஸ்ட் கார்டானாலும் ஸரி, கடை ஸாமான் லிஸ்டானாலும் ஸரி, முதலில் பிள்ளையார் சுழி போட்டு விட்டுத்தான் எழுத ஆரம்பிக்கிறோம். எழுதுவது மட்டுமில்லாமல் எந்தக் காரியமானாலும் ஆரம்பிக்கிற போது அது விக்நமில்லாமல் பூர்த்தியாவதற்கு மஹாகணபதியைக் கொண்டு வந்துதான் ஆகணும். அவரைக் ஸ்மரிக்காமல் எந்தக் காரியமுமே இல்லையானாலும், இந்த எழுத்துக் காரியத்தில் அவரை ஸ்மரிக்கிறோம் என்பது **Written proof -**ஆகவே (எழுத்து மூல நிரூபணமாகவே) பிள்ளையார் சுழியில் தெரிகிறது.

பின்னாடி நாம் எழுதுகிற விஷயம் 'சுழித்து'ப் போகாமலிருப்பதற்காக முன்னாடி பிள்ளையார் சுழி போட்டு விடுகிறோம்.

பிள்ளையார் சுழி போடாமல் 'ஓம்'போடுகிறவர்களும் கிரந்தம், தமிழ் இரண்டிலுமே அந்த ஓமுக்கும் சுழித்தே ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. அதுமட்டுமில்லை, இந்த ப்ரணவ ஸ்வரூபமும் பிள்ளையார்தானே?

சுழி என்பது வளைசல்; 'வக்ரம்' என்பார்கள். பிள்ளையாரின் தும்பிக்கை நுனி வளைந்து சுருட்டிக் கொண்டிருக்கிறது. அதனால் 'வக்ரதுண்டர்'என்றே அவருக்கு ஒரு பேர். பிள்ளையார் சுழி போடுவதில் பாதியாக இருக்கிற வளைசல் பூர்ணமாகிவிட்டால் முழு வட்டம். பூலோகமும், பல லோகங்களும், நக்ஷத்ர மண்டலங்கள் அடங்கியுள்ள பிரம்மாண்டமும் எல்லாமே வட்டமானவைதான். 'அண்டம்'என்றாலே முட்டை என்றுதான் அர்த்தம். முட்டை வட்ட வடிவந்தானே?

இந்தப் பூர்ணரூபத்தையே ஸைஃபருக்கும் சொல்வதுதான் ஆச்சரியம்! 'பரீக்ஷையில் கோழி முட்டை'என்கிறோம். 'பூர்ணமும் பிள்ளையார்தான், சூன்யமும் பிள்ளையார்தான். உள்ளது அல்லது எல்லாம் பரமாத்மாதான்'என்கிற மஹா தத்துவத்தையே சுழி காட்டுகிறது. காரியத்தை ஸஃபைர் பண்ணிக்கொண்டு வருகிறவனை, "என்னடா சுழி!"என்று ப்ரக்ருதத்திலும் (நடைமுறையிலும்) சொல்கிறோம். கையிலிருக்கிற மோதகத்தில் தித்திப்புப் பூர்ணத்தை வைத்துக்கொண்டு தன்னுடைய பூர்ணத்வத்தை 'டெமான்ஸ்ட்ரேட்'பண்ணும் பிள்ளையாருக்கே சுழி போடுகிறோம். இந்தச் சுழி மற்றச் சுழியையெல்லாம் முழுசாகப் பண்ணிவிடுவது.

வளைசலான கொம்போடு ஆரம்பிக்கிற பிள்ளையார் சுழி, கொஞ்சம்கூட வளையாத நேர்கோட்டோடு முடிகிறது. பிள்ளையார் பூர்ணம், சூன்யம் இரண்மாக ஆனாற்போலவே வக்ரமானதும் அவர்தான், ஆர்ஜவமானதும் (நேரானதும்) அவர்தான் என்பது தாத்பரியம். வக்ர குணத்துக்கு நேரெதிரானதை ஆர்ஜவம் என்பார்கள். தமிழில் இதைத்தான் நேர்மை என்பது. இங்கிலீஷிலும் straightness, **straight-forward** என்கிறார்கள். குணம் குணஹீனம் எல்லாம் ஒரே நிர்குண பரமாத்மாவின் வேஷங்கள்தான்.

'உ'என்பது ப்ரணவத்தின் இரண்டாவதான நடு அக்ஷரம். அ-உ-ம என்ற மூன்றும் சேர்ந்தே 'ஓம்'காரமான ப்ரணவம். விஷயம் தெரிந்தவர்கள் இதை இங்கிலீஷில் **Om** என்று எழுதாமல் **Aum** என்றே எழுதுவார்கள். 'அ'என்பது ஸ்ருஷ்டி;பிரம்மா. உ என்பது பரிபாலனம்; விஷ்ணு. ம ஸம்ஹாரம்;ஈஸ்வரன். த்ரிமூர்த்திகளும் தோன்றியது ஏக பராசக்தியால்தான். அதனால் அவள் ப்ரணவ ஸ்வரூபிணி. ஆனாலும் ஓமை தேவீ ப்ரணவம் என்று சொல்வதில்லை. 'உமா'என்பதே தேவீ ப்ரணவம் என்பார்கள். அ-உ-ம என்ற சப்தங்களே

மாறி 'உமா' வில் உ-ம-அ எனற இருக்கின்றன அல்லவா?ஓமில் ஸ்ருஷ்டி பீஜமான 'அ'முதல் எழுத்தாயிருக்க, 'உமா' விலோ ஸ்திதி (பரிபாலன) பீஜமான 'உ'என்பது முதல் எழுத்தாயிருப்பதால்தான், அன்போடு ரக்ஷித்து, காத்து, பரிபாலனம் பண்ணும் அம்பாளின் ப்ரணவம் 'உ' வில்தான் ஆரம்பிக்க வேண்டுமென்று காரணம் சொல்லி, இதனாலேயே 'உமா'என்பதை அம்பாளுடைய ப்ரணவமாகக் கூறுகிறார்கள்.

அ-உ-மவில் ஹ்ருதயம் மாதிரி நடுவேயிருப்பது 'உ'அதுவே கருணாமயமாகக் காப்பாற்றுகிற தேவீ ப்ரணவத்தில் ப்ரதம ஸ்தானத்திலிருக்கிறது. ப்ரணவ ஸ்வரூபப் பிள்ளையார் 'அ'வும் 'ம'வும் சேராமல் இந்த 'உ'காரமாக மட்டுமே பிள்ளையார் சுழியில் இருப்பதைப் பார்க்கும்போது ஒன்று தோன்றுகிறது. அதாவது அவர் ''தாயைப் போலப் பிள்ளை''மட்டுமில்லை;தாயாருக்கும் ஒரு படி மேலே என்று தோன்றுகிறது. எப்படி?அவளும் ரக்ஷிக்கிற 'உ'வுக்குப் பின்னாடியாவது ஸம்ஹார 'ம'ஸ்ருஷ்டி 'அ'இவற்றையும் வைத்தக் கொண்டிருக்கிறாள். ஆனால் பிள்ளையோ எப்போது பார்த்தாலும் எல்லாரையும் ரக்ஷிப்பது தவிர வேறு ஜோலியே வைத்துக்கொள்ளாத பூர்ண கருணாமூர்த்தியாக இருந்துகொண்டு 'உ'ஒன்றோடேயே நின்றுவிடுகிறார்.

ப்ரணவத்தில் 'உ'விஷ்ணுவின் ரூபம். உமாவும் விஷ்ணு ரூபிணியாக, நாராயண ஸஹோதரியாக, 'விஷ்ணு மாயா விலாஸினி'யாக, 'நாராயணி'என்றே பெயர் படைத்தவள ாயிருக்கிறாள்.பிள்ளையாரைப்பற்றி ஸகலரும், ஸகல கார்ய ஆரம்பத்திலும் சொல்லும் ஸ்லோகத்திலும் ''சுக்லாம்பரதரம் விஷ்ணும்''என்றே வருகிறது. (இங்கே விஷ்ணு என்றால் ஸர்வ வியாபகமானவர் என்று அர்த்தம்) 'உ'என்பது சிவ-சக்தி புத்ரனை விஷ்ணுவோடும் ஸம்பந்தப்படுத்தி, சைவ வைஷ்ணவத்தை ஸமரஸம் பண்ணி விடுகிறது!

வளைசலும் நேர்கோடுமாக இருக்கிற பிள்ளையார் சுழியில் நிறையத் தத்வார்த்தம் இருக்கிறது. சக்ராகாரமாக எந்த ஒன்று சுற்றினாலும் அதற்கு மத்தியில் அதற்கு ஆதாரமாக, அச்சாக ( ணீஜ்வீழ- ஆக) நேரான ( வமீ்க்ஷீணீவீரீலீமீ- ஆன) ஒன்று இருந்தாக வேண்டும். விஷ்ணு தன் விரலையே நேராக நிமிர்த்திக்கொண்டு அதிலேதான் சக்ராயுதத்தைக் கோத்துக் கொண்டு சுற்றுகிறதாகவே விக்ரஹங்களில் காட்டியிருக்கும். சுற்றச் சுற்றப் பொறிப் பொறியாகக் கொட்டுகிற கார்த்திகை வாணமானாலும் ஸரி (இது ஒளி)- விரலிலே மாட்டிக்கொண்டு சுற்றிச் சுற்றி டபடபவென்று அடிக்கிற கிரிச்சட்டியானாலும் ஸரி (இது ஒலி) - இதுகளின் வட்டமான சுழற்சிகளுக்கு ஆதாரமாகக் கையோ, குச்சியோ எதுவோ ஒன்று நேர்கோடாக இருக்க வேண்டியிருக்கிறது. யுனிவர்ஸில் லோகங்களெல்லாம் ஸர்குலராகத்தான் சுற்றிக்கொண்டிருக்கின்றன என்கிறபோது இவற்றுக்கும்கூட வமீ்க்ஷீணீவீரீலீமீ ரீவீஸீமீ -ஆக ஒரு ஆதார ணீஜ்வீழ நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் மீஸீமீக்ஷீரீஹ் (சக்தி) ரூபத்தில் இருக்கத்தான் வேண்டும். வட்டமாகச் சுற்றுகிற ஸகலப் பிரபஞ்சத்தையும் அதற்கு ஆதார சக்தியான கோட்டையும் சேர்த்துத்தான் பிள்ளையார் சுழியில் வட்டமாகவும் நேர்கோட்டு பாகமாகவும் போடுகிறோம்.

எங்கேயோ படித்த, அல்லது கேட்ட, ஞாபகம், எனர்ஜி உண்டாகிறதே பிள்ளையார் சுழி ரூபத்தில்தான் என்று. தாரை கொட்டி அதிலிருந்து எலெக்ட்ரிஸிடி எடுக்கிறபோது ரொடேஷனிலிருந்து (வட்டத்திலிருந்து) நேர்கோடாகத்தான் மின்ஸாரம் புறப்படுகிறதென்று எடுத்துக்காட்டியிருந்தது. பிள்ளையார் சுழியில் கொம்பு தான் ரொடேஷன்;கோடு அதிலிருந்து சக்தி உத்பவம். இந்த இரண்டையும் சிவ-சக்தி ஸ்வரூபமான நாத-பிந் துக்களாகக்கூடச் சொல்லிக்கொண்டு போகலாம். அதெல்லாம் ஸூக்ஷ்மமான விஷயம்.

ஆரம்பித்த இடத்துக்கே வந்து முடிந்துவிடுகிற வட்டம் ஏகமான பிரம்மத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். வட்டத்தில் ஆரம்பித்து அரை வட்டத்துக்கு அப்புறம் நேர்கோடாகிற பிள்ளையார் சுழி, ஏகமான பிரம்மத்தை ஸங்கேதமாகக் காட்டிவிட்டு அதிலிருந்து அநேகமான ஸ்ருஷ்டி தோன்றினதையும் சேர்த்துத் தெரிவிக்கிறது என்று சொல்லலாம். பிரம்மமும் பூர்ணம். பிரபஞ்சமும் பூர்ணம். பிரம்ம பூர்ணத்திலிருந்து பிரபஞ்ச பூர்ணம் உண்டாயிற்று என்று உபநிஷத்தில் சாந்தி மந்திரம் சொல்கிறோம். ஆரம்ப ஸ்வாமியின் அடையாளமாக எதன் ஆரம்பத்திலும் போடும் பிள்ளையார் சுழி, பிரம்ம பூர்ணத்தை வளைசல் கொம்பாலும், பிரபஞ்ச பூர்ணத்தை நேர் கோட்டாலும் காட்டி, முதலில் கொம்பு அப்புறம் கோடு என்பதால் பிரம்மத்திலிருந்துதான் பிரபஞ்சம் உண்டாச்சு என்றும் தெரிவிக்கிறது.

கொம்பு, கோடு என்று இரண்டு வார்த்தைகள் சொன்னேன். வேடிக்கையாக இரண்டுமே பிள்ளையாரின் தந்தத்துக்குப் பேராயிருக்கின்றன. 'ஏக தந்தர்'என்பதை 'ஒற்றைக் கொம்பன்'என்பார்கள். "பெரும்பாரக்கோடும்", "கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே"என்றெல்லாம் அவ்வைப் பாட்டி சொல்லும்போது 'கோடு'என்றாலும் தந்தந்தான். எப்பொழுதும் குழந்தையாயிருக்கிற ஸ்வாமியை வேண்டிக்கொண்டதாலேயே குழந்தைப் பிராயத்தில் கிழவியாகிவிட்ட அவ்வை சொன்ன 'கொடுவினை'என்பதுதான் ஜன்மாந்தர பாபங்களான பிராரப்த கர்மா. அந்தக் கர்மா எப்படியெப்படி நம்மைப் பழிவாங்க வேண்டும் என்று பிரம்மா நம் தலையில் எழுதியிருக்கிறாரென்று, சொல்லி, இதை பிரம்மலிபி என்பார்கள். 'தலைச்சுழி'என்பதும் இதைத்தான். இந்த தலைச் சுழியையும் கழித்து விடுவது பிள்ளையார் சுழி. "கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே!"

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### எழுத்துப் பணியில் விநாயகர் தொடர்பு

**நா** ம் போடுகிற பிள்ளையார் சுழி ஒரு சின்ன எழுத்தின் மூலம் விக்நேஸ்வரரை ஸங்கேதமாகத்தான் காட்டுகிறது;வெளிப்படையாகப் பிள்ளையார் பேரைத் தெரிவிக்கவில்லை. ஆனால் பழங்காலச் சுவடிகளைப் பார்த்தால் அவற்றின் ஆரம்பத்தில் வெளிப்படையாகவே **'' ஸ்ரீ கணாதிபதயே நம :''** என்று போட்டிருக்கும்.

எந்தக் காரியத்துக்குமே முதலில் கணபதிப் பிரஸாதத்தைப் பிரார்த்திக்க வேண்டுமென்றாலும், இந்த எழுத்து வேலையில் மட்டும் அவருக்கு எதனால் தனி முக்யத்துவம் என்று யோசித்துப் பார்த்தேன். இங்கே முதலில் ஸரஸ்வதியைச் சொல்லாமல் பிள்ளையாரை ஏன் சொல்லவேண்டும் என்று நினைத்தேன். அவரைச் சொல்லும்போதும் விநாயகர், விக்னேஸ்வரர், வக்ரதுண்டர், ஹேரம்பர் முதலான மற்ற எந்தப் பெயரையும் போடாமல் கணாதிபதி என்றே எந்தச் சுவடியிலும் போட்டிருப்பது ஏன் என்று யோசித்தேன். வித்வான்களுடன் டிஸ்கஸ் பண்ணினதில் ஒரு மாதிரி புரிந்தது. கண என்ற வார்த்தைக்கு உள்ளே அநேக அர்த்தங்களில் பாஷா ஸம்பந்தமாகவே ஒன்று இருக்கிறது. ஒரே வித்க்குக் கீழே வருகிற எல்லா தாதுக்கள் அல்லது வார்த்தைகளை ஒரு கணம் என்று தொகுத்து வியாகரணத்தில் கொடுத்திருக்கிறது. இந்த கணங்களுக்கெல்லாம் அதிபதிதான் கணாதிபதி. பரமேஸ்வரனுடைய பூத கணங்களுக்குத் தலைவரானதால் கணபதி, கணாதிபதி, கணேசர், கணநாதர் என்றெல்லாம் அவருக்குப் பெயர் இருப்பதோடு, பத ஸமூஹங்களுக்கெல்லாம் தலைவர் என்ற அர்த்தத்திலும் இப்படிப் பெயர் பெற்றிருப்பதால்தான் **கணாதிபதயே நம :** என்று போட்டு எழுத ஆரம்பித்துருக்கிறார்கள்.

விநாயகர் ப்ரணவ ஸ்வரூபம் என்றால், அந்த ப்ரணவம்தானே ஸகல சப்தங்களுக்கும் வார்த்தைகளுக்கும் ஆதாரம்?அதனால் அவரைப் பத ஸமூஹங்களின் அதிபதியாகக் கொண்டு, எழுத ஆரம்பிக்கும்போது முதலில் நமஸ்காரம் தெரிவிப்பது பொருத்தந்தான்.

இன்னொரு காரணங்கூடச் சொல்லலாம். அவரே பெரிய 'எழுத்தாள'ராக இருந்திருக்கிறார்!லோகத்திலேயே பெரிய புஸ்தகம் எது என்றால் மஹாபாரதம் தான் என்று எவரும் சொல்வீர்கள். யாராவது ஏதாவது நீட்டி முழக்கினால், "அந்த மஹாபாரதமெல்லாம் வேண்டாம்"என்கிறோம். லக்ஷம் கிரந்தம் கொண்டது பாரதம். **பஞ்சமோ வேத :,** ஐந்தாவது வேதம், என்று அதற்குப் பெயர். மற்ற நாலு வேதங்கள் 'எழுதாக் கிளவி'- எழுத்தில் எழுதப்படாமல் காதால் கேட்டு மனப்பாடம் பண்ணியே ரக்ஷிக்கப்பட வேண்டியவை. ஐந்தாவது வேதமான பாரதம் தான் எழுதி வைக்கப்பட்டது. வேத வியாஸ பகவான் சொல்லச் சொல்ல அதை ஸாக்ஷாத் மஹாகணபதிதான் மேரு சிகரத்திலே எழுதினார். அதனால் அவர் எழுத்தாளராகிறார். (ஸ்ரீ பெரியவர்களின் இந்த உரையாடலில் கலந்து கொண்ட ஒரு பக்தர், எழுத்தாளர் என்பது மூல ஆசிரியராயிருக்கப் பிள்ளையார் அவர்

கூறியதை எழுதமட்டும் செய்ததால் அவரை எழுத்தர் என்றே சொல்லலாமென்றும் கூறப் பெரியவர்கள் தொடர்கிறார்:) பிள்ளையாரை எழுத்தாளரென்று சொல்லப்படாது என்றால் எழுத்தர் என்று நிச்சயமாகச் சொல்லலாம். இங்கிலீஷில் **Writer** என்றால் **Original author ,** அதை எழுதிய Copyist என்று இரண்டு அர்த்தமும் ஏற்படுகிறது. அதனால் பிள்ளையாரை **Writer** என்று சொன்னால் எந்த ஆக்ஷேபணையும் வராது!

அவர் எழுத்தாளராயில்லாமல் எழுத்தராக மட்டுமிருந்தாலும்கூடச் சுவடிகளில் முதல் நமஸ்காரம் பெற 'க்வாலிஃபை'ஆனவர்தான். எப்படியென்றால், இந்தச் சுவடிகளை எழுதினவர்களும் ஒரிஜனல் ஆசிரியர்களில்லை. பழையகாலத்தில் க்ரந்தகர்த்தா ஒருவராகவும், அதை அவர் சொல்லச் சொல்ல எழுதுகிறவர் இன்னொருத்தராகவும் இருப்பார்கள். அப்போது ரொம்பப் படித்தவர்கள்கூட எழுதத் தெரிந்துகொண்டிருந்தார்கள் என்று சொல்ல முடியாது. **Calligraphist** என்கிறது போல, அழகாக எழுதுவதற்கென்றே 'கணக்கர்'கள் என்று தனியாகச் சிலர் இருந்தார்கள். அந்த நாளில் எத்தனை பெரிய சாஸ்திரமானாலும் வித்யார்த்திகள் படித்தும் எழுதியும் அப்யஸிப்பது என்று இல்லை. குரு வாயினால் சொல்கிறதை சிஷ்யன் காதால் கேட்டுத் திரும்பத் திரும்ப வாயால் தானும் சொல்லிச் சொல்லி, நெட்டுருப் போட்டு, எல்லாவற்றையும் மனப்பாடமாகவே கற்றுக்கொண்டான். ஆனாலும் ஒரு காப்பாகச் சுவடி எழுதுவதற்கென்றே இருந்தவர்களைக் கொண்டு ஏட்டிலும் எழுதி வைத்துக் கொண்டார்கள். இந்தக் கணக்கர்கள் பாரதத்தை எழுதிவைத்த கணாதிபதியையே தங்களுக்கு முதல்வராக நினைத்து முதல் நமஸ்காரம் தெரிவித்தது நியாயந்தான்.

தன் தந்தத்தையே உடைத்து அதை எழுத்தாணியாக வைத்துக் கொண்டு எழுதினார். யானையின் பெருமைக்கு முக்ய காரணமே தந்தந்தான். "இறந்தாலும் ஆயிரம் பொன்"என்பது தந்த மதிப்பை வைத்துத்தான். அப்படிப்பட்ட தந்தத்தை லோகத்தில் தர்மநூல் தெரியணும், பரவணும் என்பதற்காக முறித்துப் பரம கருணையோடு விக்னேஸ்வரர் எழுதி வைத்தார். ப்ரணவ ஸ்வரூபமாகவும், தெய்வங்களில் அக்ரஸ்தானம் வஹிப்பவராகவும், ஸாக்ஷாத் பார்வதி-பரமேஸ்வராளின் ஜ்யேஷ்ட குமாரராகவும் இருக்கப்பட்ட மஹா கணபதி, தர்மப் பிரசாரம் பண்ணணும் என்பதற்காக வியாஸருக்குக் குமாஸ்தாவாக, **Scribe-** ஆகத் தம்மைக் குறைத்துக்கொண்டு பாரதத்தை எழுதினார்.

நடராஜாவே மாணிக்கவாசகர் பாடப்பாட எழுதினார். கிருஷ்ண பரமாத்மாவும் 'கீத கோவிந்த'த்தில் (அதன் ஆசிரியரான) ஜயதேவரின் வேஷத்தில் வந்து ஒரு அடி எழுதினதாகக் கதை இருக்கிறது. ஆனால் அலுக்காமல் சலிக்காமல் லக்ஷம் ஸ்லோகம் எழுதின ஸ்வாமி பிள்ளையார்தான்.

இதனால் "ஸ்ரீ கணாதிபதயே நம:" â¡Á Üõ¼‚°, °‹H´ «ð£†´M†´ â¿¶Aø âõ¼‚°‹ GÁˆî£ñ™, îƒ°î¬ìJ™ô£ñ™ â¿¶‹ ê‚F õ‰¶M´‹.

இவர் எழுதுகிற வேகத்துக்கு ஈடு கொடுத்து சிஷீனீஜீஷீலமீ பண்ண முடியாமல்தான் வியாஸர் 'பாரத குட்டு'என்கிற அநேக சிக்கலான ஸ்லோகங்களை அங்கங்கே சொல்லி, இவரைக் கொஞ்சம் யோசனையில் நிறுத்தப் பண்ணி, அதற்குள் ஸுதாரித்துக்கொண்டு மேலே சொல்ல ஆரம்பித்தார். நாம் பிள்ளையார் குட்டு (ரி஖ூமீமீ஖ூ) குட்டிக் கொள்கிறோம் என்றால் வியாஸரோ பிள்ளையாருக்கு பாரதத்தில் குட்டு (ரீ஖ூமீமீ஖ூ) வைத்தார். கன்னட பாஷையில் குட்டு என்றால் ரஹஸ்யம், மர்மமான புதிர். அநேக கன்னட வார்த்தைகளைத் தமிழ் எடுத்துக் கொண்டிருக்கிறது. அதனால்தான் தமிழில் கூட ''குட்டு உடைஞ்சுப் போச்சு"என்கிறோம்.

பிள்ளையாருக்கே கொஞ்சம் புதிராக வியாஸர் பண்ணின ஸ்லோகங்களுக்குத்தான் ''பாரத குட்டு"என்று பேர். ஆனாலும் அவர் ஞான ஸ்வரூபமானதால் அடுத்த க்ஷணமே அவருக்கு ''குட்டு உடைஞ்சுடும்!''மறுபடி எழுத ஆரம்பித்துவிடுவார்*. அப்படிப்பட்டவரை ஸ்மரித்து விட்டு எழுதத் தொடங்கினால், எந்தச் சிக்கலான விஷயமும் நொடியில் தெளிவாகி, மேற்கொண்டு எழுதிக் கொண்டு போக முடியும் என்ற நம்பிக்கை 'ஸ்ரீ கணாதிபதயே நம:' என்று ஆரம்பித்தால் உண்டாகும்.

* பாரத குட்டுக்களில் ஒன்றின் சுவையான விளக்கம் "கவி சாதுர்யம்"என்ற உரையில் 'பாரத குட்டுகள ஒன்று'என்ற பிரிவில் காணலாம்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### வலம்புரியானை வலம் புரிவோம் !

கு ட்டிக்கொள்வது, தோப்புக்கரணம் போடுவது, சிதறு தேங்காய் உடைப்பது, எருக்கும் அருகும் அர்ச்சனை பண்ணுவது, மோதகம் நிவேதிப்பது இவையெல்லாம் பிள்ளையார் வழிபாட்டில் விசேஷமாயிருக்கிறாற்போலவே அவரைப் பலமுறை பிரதக்ஷிணம் பண்ணுவதும் ஒரு விசேஷமாகும். பிள்ளையார் சுழி போடுகிறபோதும் பிரத்க்ஷிணக் கிரமத்தில்தான் கொம்பை ஆரம்பிக்கிறோம்!பிள்ளையாரை குறைந்தது, மூன்று தடவை பிரதக்ஷிணம் பண்ணுவது வழக்கம். இருபத்தியொரு தடவை, நூற்றியெட்டுத் தடவை என்றெல்லாம் சுற்றிச் சுற்றி வருவார்கள். பார்வதி பரமேஸ்வரர்களை ஸர்வ பிரபஞ்சமாகவும் புரிந்து கொண்டு வலம் வந்து பலம் (பழம்) பெற்ற விக்னேஸ்வரரை நாமும் வலம் வந்தால் ஸகல பலனும் பெறலாம். அவருடைய தொப்பை வயிறே உருண்டையாகப் பிரபஞ்சம் மாதிரிதானே இருக்கிறது?அவரை வலம் வருவதே நமக்கு பலமாகும் - தேஹபலம், புத்திபலம் எல்லாம்!

அவரே வலம்புரி விநாயகராகவும் இருக்கிறார். விக்னேஸ்வரர் மூர்த்தத்தில் ஏகப்பட்ட ரூப பேதங்ளிருந்தாலும் பொதுவாக நாம் பார்க்கிற பிள்ளையார்கள் தும்பிக்கையை இடது பக்கமாகச் சுழித்துக் கொண்டிருப்பவையாகவே இருக்கும். அபூர்வமாகச் சில இடங்களில் வலது பக்கம் தும்பிக்கையைச் சுழித்துக் கொண்டிருப்பார். இவரைத்தான் வலம்புரி விநாயகர் என்பது. தக்ஷிணா வர்த்தமாக உள்ள சங்கை எப்படி வலம்புரிச் சங்கு என்று சிறப்பிக்கிறோமோ அப்படியே வலம்புரி விநாயகருக்கும் விசேஷமான அனுக்ரஹ சக்தி இருப்பதாக ஆகமத்தில் சிறப்பித்திருக்கிறது. இப்படித் தும்பிக்கை வலமாகச் சுழித்திருக்கிறபோதுதான் (இது பிள்ளையாரே போடும் சுழி!தம்முடைய ஒரு அங்கத்தாலேயே போடுகிற சுழி!) அவருடைய வாயின் வலது ஓரத்தில் ஆரம்பித்து, கன்னம், மஸ்தகம் (சிரஸ்) இவற்றைச் சுற்றிக்கொண்டு, இடது பக்கம் தும்பிக்கை வழியாக இறங்கி, அதன் சுழித்த முடிவுக்கு வந்தால், இந்த அவுட்லைன், க்ரந்தாக்ஷர 'ஓம்'(தமிழ் 'ஓ'மாதிரி) இருக்கும். இடது பக்கம் தும்பிக்கையைச் சுழித்த பிள்ளையார் ரூபத்தில் இப்படி ப்ரணவ ஸ்வரூபம் கிடைக்காது. இது வலம்புரியின் விசேஷம்.

வலம்புரி விநாயக க்ஷேத்ரங்களில் கும்பகோணத்துக்குக் கிட்டேயிருக்கிற 'திருவலஞ்சுழி'என்றே பெயர் பெற்ற ஸ்தலம் விசேஷமானது. அதனுடைய மஹிமையைக் காட்ட ஒன்று சொல்கிறேன்.

மஹாராஷ்டிராவில் கணபதி உபாஸனை அதிகம். ஆரம்ப ஸ்வாமியான பிள்ளையார், முடிவிலே வரும் ஸ்வாமியான ஆஞ்ஜநேயர் ஆகிய இருவருக்கும் அங்கே ரொம்ப வழிபாடு நடக்கிறது. பிரிட்டிஷ் கெடுபிடியின் போது நம் ஜனங்களை ஒன்று கூட்டவே, திலகர் பிள்ளையாரை வைத்துத்தான் வழி கண்டுபிடித்தார். பிள்ளையார் சதுர்த்தியன்று பெரிசு பெரிசாக, கலர் கலராகப் பிள்ளையார் பொம்மைகளை பண்ணி ஊர்வலம் விடுகிறது என்று ஆரம்பித்து, இதனாலேயே பதினாயிரக் கணக்கான ஜனங்களைக் கூட்டம் கூட்டினார். மத விஷயம் என்பதால் வெள்ளைக்கார ராஜாங்கம் இதில் தலையிடவில்லை. (நம்முடைய 'சொந்த'ராஜாங்கம் என்று சொல்லப்படுவது ஏற்பட்ட அப்புறந்தான் ஹிந்து மதம் ஒன்றின் விஷயத்தில் மட்டும் ஸர்க்கார் பிரவேசித்து என்ன வேண்டுமானாலும் செய்யலாமென்று இருக்கிறது. அது வேறு விஷயம்.) திலகர் நாளில் இப்படி "கணேஷ் சதுர்த்தி"என்ற பெயரில் ஜனங்களை கூட்டிய பின் அவர்களுக்கு ஸ்வதந்திரப் பற்றை ஊட்டி தேசத் தலைவர்கள்

பேசுவார்களாம்!இப்போதும் பம்பாய் மாதிரி ஊர்களில் பிள்ளையார் சதுர்த்தியென்றால் ஒரே அல்லோல கல்லோலந்தான். இப்படிப்பட்ட மஹாராஷ்டிராவில் காணபதர்கள் பூர்வத்தில் நிறைய இருந்திருக்கிறார்கள்.

காணபத்யம் என்பதாக கணபதியையே முழுமுதற் கடவுளாக வழிபடுகிற மார்க்கத்தைச் சேர்ந்தவர்களே காணபதர்கள். ஒரே வேதாந்த ஸமயத்தில் ஆறு பிரிவுகள். ஒரே நதியில் ஆறு துறைகள் மாதிரி. இதில் கணபதி உபாஸனையையே மோக்ஷ உபயமாகச் சொல்வது காணபத்யம். குமாரஸ்வாமி (முருகன்) உபாஸனையைச் சொல்வது கௌமாரம். அம்பாள் சக்தியின் உபாஸனையைச் சொல்வது சாக்தம். ஸூர்யனையே பரம்பொருளாகச் சொல்வது ஸௌரம். விஷ்ணுவைச் சொல்வது வைஷ்ணவமென்றும், சிவனைச் சொல்வது சைவமென்றும் தெரிந்திருக்கும். ஷண்மதங்கள் என்ற இந்த ஆறு உபாஸனாக்ரமங்களையும் சுத்தப்படுத்தி வைதிகமாக நிலைநாட்டியதாலேயே பகவத்பாதாளுக்கு (ஆதி சங்கரருக்கு) ஷண்மதப்ரதிஷ்டாபனாசார்யர் என்று பெயர்.

இதில் ஒன்றான காணபத்யம் அதிகம் அநுஷ்டானத்திலிருந்த மஹாராஷ்டிராவில் 'அஷ்ட விநாயகர்'கள் என்ற எட்டுப் பிள்ளையார்களுக்கான எட்டு க்ஷேத்ரங்கள் இருக்கின்றன. அவர்களில் 'மயூரேசர்'என்ற பிள்ளையாருக்கும் அவர் இருக்கிற 'மோர்காம்'க்ஷேத்ரத்துக்கும் பிரஸித்தி ஜாஸ்தி. 'மோர்காம்'என்பது 'மயூரக்ராமம்'என்பதன் திரிபு. பிள்ளையாரைச் சுற்றி அவருடைய பரிவார தேவதைகள் இருக்க வேண்டிய க்ரமத்திலேயே மோர்காமைச் சுற்றிப் பரிவார தெய்வங்களின் கோயில்கள் இருக்கின்றன.

மயூரம் என்பது தமிழில் மயில் என்றும், வடக்கத்தி பாஷைகளில் மோர் என்றும் இருக்கிறது. ஸுப்ரம்மண்யர் தான் மயில் வாஹனர் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். புராணங்களின்படியும் தந்த்ர சாஸ்திரங்களின்படியும், நாம் மூஷிகவாஹனராகவே நினைக்கிற பிள்ளையாருக்கும் மயில் வாஹனத்தோடு ஒரு அவஸரம் (ரூப பேதம்) உண்டு. அவர்தான் மயூரேசர்.

மயூரேச க்ஷேத்ரமான மஹாராஷ்டிர மோர்காமின் க்ஷேத்ர புராணத்தில் நம் தமிழ்நாட்டுத் திருவலஞ்சுழியை உசத்திச் சொல்லியிருக்கிறது!'தசஷிணாவர்த்தம்'என்று இதற்கு அங்கே பெயர் கொடுத்திருக்கிறது. 'தக்ஷிண'-வல;'ஆவர்த்தம்'-சுழி. இந்த 'தக்ஷிணாவர்த்தம்'தான் பிள்ளையாருடைய ராஜதானி, அதாவது சிணீஜீவீமீ ணீறீ என்று சொல்லியிருக்கிறது.

திருவலஞ்சுழியில் சிவன் கோயிலில் ஒரு ஸந்நிதியாகத்தான் வலம்புரிப் பிள்ளையார் இருக்கிறார். அது தவிர கோவிலுக்கு வெளியே தனியாக ஒரு வெள்ளைப் பிள்ளையார் இருக்கிறார். அவர் இடம்புரிக்காரர்தான். ஆனாலும் ஏக ப்ரஸித்தியோடிருக்கிறார். இந்த ஸ்தலத்து ஈஸ்வரனை ஞானஸம்பந்தரும் அப்பரும் பாடியிருக்கிறார்கள். ஆனால் பிரஸித்தியெல்லாம் வெள்ளை பிள்ளையாருக்கே இருக்கிறது!அவர் இருக்கும் மண்டபம் ரொம்பவும் வேலைப்பாடு அமைந்தது. குறிப்பாக, அங்கேயிருக்கிற ஸலவைக்கல் பலகணியைச் சொல்ல வேண்டும்.

பழைய காலத்தில் கோயில் நிர்மாணிக்கிற சில்பிகள் வேலை ஒப்புக்கொண்டு முச்சிலிக்கா எழுதித்தருகிறபோது, ஐந்து தினுஸான நிர்மாணங்கள் தவிர பாக்கியெல்லாம் தாங்கள் செய்து தருவதாகக் குறிப்பிடுவார்களாம். அந்த ஐந்து மட்டும் தங்கள் திறமைக்கு அப்பாற்பட்டது என்று விட்டுவிட்டதாக அர்த்தம். ஆவுடையார்கோயில் கொடுங்கை, கடாரங் கொண்டான் மதில், தஞ்சாவூர் கோபுரம், திருவீழிமிழலை வௌவால் ஒட்டி மண்டபம் என்ற நாலோடு திருவலஞ்சுழிப் பலகணியும் ஐந்தாவதாக இந்த அற்புதங்களில் ஒன்றாக அந்த ஸ்தபதிகளால் சொல்லப்பட்டிருக்கிறது!

பதினாறு துளைகள் போட்டு, நுட்பமாக வேலைப்பாடு செய்து இந்தப் பலகணி அமைக்கப்பட்டிருக்கிறது. 'ஷோடச கணபதி'என்று பிள்ளையார் மூர்த்தங்களில் பதினாறைச் சொல்வதற்கேற்ப இங்கே பதினாறு த்வாரங்கள் இருக்கின்றன. பதினாறுதான் பூர்ணத்வம். ஷோடச கலாபூர்ணம் என்பது.

பூர்ணமான ப்ரணவ ஸ்வரூபமாக விளங்கும் இந்த வெள்ளை விநாயகரை தேவேந்திரன் பூஜை பண்ணியதால் தான் க்ஷீரஸாகரத்தில் அம்ருதம் திரண்டு வந்ததாம். அந்த ஸாகரத்தின்

பால் ஏட்டினாலேயே அவரைப் பண்ணியதால்தான் வெள்ளை வெளேரென்று இருக்கிறார். வெண்மை நிறத்தைக் கொண்டே அவருக்கு 'ச்வேத விநாயகர்'என்று பெயர். அவரைத் தொடாமலே பூஜை பண்ண வேண்டும். அங்கே பிரம்மோத்ஸவமே அவருக்குத்தான்;ஈஸ்வரனுக்கு இல்லை.

திருவலஞ்சுழியில் இன்னொரு விசேஷம். கோவிலுக்குள்ளே ஒரு விநாயகர் தும்பிக்கையை வலது பக்கம் சுழித்துக் கொண்டிருப்பது போலவே இங்கே காவேரியும் திரும்பி வலது பக்கமாக சுழித்து ஓடுகிறது!

காவேரிக்கும் விக்னேஸ்வரருக்கும் கிட்டின ஸம்பந்தமுண்டு. குடகு தேசத்தில், ஸஹ்ய பர்வதத்தில் அகஸ்தியர் கமண்டுலுவுக்குள் பொத்திப் பொத்தி வைத்துக் கொண்டிருந்த காவேரியைப் பிள்ளையார்தான் காக்காய் ரூபத்தில் வந்து கவிழ்த்துவிட்டு, லோகோபகாரமான புண்ய நதியாக ஓட வைத்தார். நம் தமிழ் நாட்டின் உடம்பு, உள்ளம் இரண்டையும் வளர்க்கிற காவேரியைக் கொடுத்தவர் என்பதற்காகப் பிள்ளையாரிடம் நாம் விசேஷமாக பக்தி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

குடகிலிருந்து கர்நாடக தேசத்தைத் தாண்டித் தமிழ்நாட்டில் பாய்ந்த காவேரி கும்பகோணம் தாண்டினதும் ஒரு பிலத்துக்குள் மறைந்துவிட்டாளாம். அப்போது ஹேரண்டர் என்ற மஹரிஷி பரம கருணையோடு தம்மையே பலி கொடுத்துக்கொண்டாராம். உடனே காவேரி பிலத்துக்குள்ளேயிருந்து பொங்கிக் கொண்டு வெளியிலே வந்து இந்தப் பிள்ளையார் க்ஷேத்ரத்தைப் பிரதக்ஷிணமாக, வலப் பக்கம் சுழித்துக் கொண்டு மேலே ஓடினாளாம்.

தலைக்காவேரியில் கன்னங்கரேலென்று காக்காயாக வந்தவர் இங்கே வெள்ளை வெளேரென்று காட்சி தருகிறார்!

"ப்ரணவ ஸ்வரூப வக்ர துண்டம்"என்கிறபடி இங்கேயே இன்னொரு மூர்த்தி வலம்புரியாக இருக்க, தீர்த்தமும் வலப்பக்கமாக ஓடுகிற பெருமை திருவலஞ்சுழிக்கு இருக்கிறது.

வலம்புரி விநாயகரை - அவர் இடம்புரியாகக் கோயில் கொண்டிருக்கிற இடங்களிலும் ப்ரணவ ஸ்வரூபி என்றே புரிந்துகொண்டு - நாம் வலம் வந்து வணங்கி எல்லா நலமும் பெறுவோமாக!

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### குரு

**கு** ரு, ஆசார்யார் என்ற இரண்டு வார்த்தைகளைப் பொதுவாக ஒரே அர்த்தத்தில் சொல்கிறோம். ஆனால் இதில் ஒன்றுக்கொன்று கொஞ்சம் வித்யாஸமும் வித்வான்களால் சொல்லப்படுகிறது.

### 'ஆசார்ய' இலக்கணம்

**ஆ** சார்யர் என்பதில் ஆசரணம், ஆசாரம், சர என்ற வார்த்தைகளின் ஸம்பந்தம் இருக்கிறது. 'சர'என்றால் நடப்பது. சரிதம், சரித்ரம் என்றால் நடத்தை ( **Conduct)** . பல நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாக நடப்பதால் தேச சரித்ரம், ஜீவ்ய சரித்ரம் என்றெல்லாம் சொல்கிறோம். நின்றபடியில்லாமல் ஒரு ஒழுங்கில் தொடர்ந்து போவது தானே 'நடை'?இப்படி ஒரு வழிப்படி நடப்பதுதான் சரித்ரம். ஒரு வழியில் 'ஒழுகுவது'என்று தமிழில் சொல்வார்கள். ஜலம் ஒழுகுகிறபோது தாரையாக ஒரு தொடராகத்தானே விழுகிறது?இப்படிச் சில விதிகளின் படியே, அதைப் பின்பற்றிப் போவதுதான் 'ஒழுகுவது'. 'ஒழுக்கம்'என்பது இதிலிருந்துதான் வந்தது. 'சர'தாதுவின் மேல் இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் 'ஆசாரம்'என்று இருக்கிறது. சாஸ்திர விதிப்பிரகாரம் ஒழுகுவது, தர்ம நூல்களின் ஒழுக்கம்தான் ஆசாரம். இப்படி நடப்பது ஆசரணம்.

ஆசார்யனுக்கு முக்கியம் இப்படி ஒரு ஒழுங்குமுறையில் நடந்து காட்டுவது. **Basic -**ஆக (அடிப்படையாக) ஸகல ஜனங்களுக்கும் ஸாதாரண தர்மங்கள் என்பதாக அஹிம்ஸை, ஸத்யம் முதலிய ஒழுக்கங்கள் இருப்பதோடு நம் ஹிந்து மதம் ஒன்றுக்குள்ளேயே அநேக ஸம்ப்ரதாயங்களுக்குத் தனி சாஸ்திரங்கள் ஏற்பட்டு, அவற்றில் தனித்தனி ஒழுக்கங்களும் சொல்லியிருக்கிறது. வைஷ்ணவர்களுக்கென்று ஒரு ஆசாரம்;மாத்வர்களுக்கென்று ஒன்று;சைதன்யர், நிம்பார்க்கர் இப்படிப் பல பெயரில் தனித்தனி ஒழுக்கங்களும், பழக்கங்களும், வழக்கங்களும் இருக்கின்றன. சைவர்களுக்கென்று தனி சாஸ்திரங்கள், அவர்கள் இன்னின்ன இப்படி யிப்படிப் பண்ண வேண்டும் என்ற விதிகள் இருக்கின்றன. சைவத்திலேயே ஸித்தாந்த சைவம், வீரசைவம், காஷ்மீரி சைவம், பாசுபாதம் என்று பல பிரிவுகள். வைஷ்ணவத்துக்குள்ளேயும் இப்படி ஏகாந்திகள், பாஞ்சராத்ரிகள், வைகாநஸர்கள் என்று **sub-sections** உண்டு. ஒவ்வொன்றுக்கும் ஒரு **set of rules (**விதியமைப்பு முறை) இருக்கிறது. அத்வைதிகளுக்கு ஒரிஜனலாக ஸ்மிருதிகள் சொன்ன ரூல்கள் இருக்கின்றன.

இப்படி ஏதாவது ஒரு ஸம்ப்ரதாயத்தை சாஸ்த்ரோக்தமாகத் தானே அநுஷ்டித்துக் காட்டுகின்றவன் தான் ஆசார்யன்.

'ஆசார்ய' பதத்துக்கு **definition (**லக்ஷணம்) சொல்கிற ஸ்லோகம் சில பேர் கேள்விப்பட்டிருக்கலாம்.

**ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்தாத்**

**ஆசாரே ஸ்தாபயத்யபி I**

**ஸ்வயம் ஆசரதே யச்ச**

**தம் ஆசார்யம் ப்ரசக்ஷதே II**

எவன் சாஸ்திரத்தின் அர்த்தங்களை ஆராய்ந்து, ('பிறருக்கு அதை போதித்து' என்பது இங்கே **understood:** சொல்லாமல் சொன்னது,) பிறரை அந்த சாஸ்த்ரங்களின் விதிப்பிரகாரம் நடக்கப் பண்ணுகிறார்களோ, (இப்படி 'பிறத்தியாரை ஒரு ஆசாரத்தில் நிலைநாட்டுவது மட்டுமல்லாமல்' என்பதும் **understood )** தானே அந்த வழிப்படி நடந்து காட்டுகிறானோ அவனே ஆசார்யன் எனப்படுகிறான்-என்று அர்த்தம்.

**''Precept, practice** இரண்டிலும்'' என்று சொல்வது இதைத்தான்-அதாவது வாய் உபதேசத்தால் மட்டுமில்லாமல் (அல்லது கையால் புஸ்தகம் எழுதுவது மட்டுமில்லாமல்) தன்னுடைய வாழ்க்கை உதாரணத்தாலேயே ஒரு ஸம்ப்ரதாயத்துக்கான ரூல்களை நடத்திக் காட்டுகிறவனே ஆசார்யன்.

ஆசார-அநுஷ்டானம் என்று இரண்டைச் சேர்த்துச் சொல்கிறோம். சாஸ்த்ரம்-ஸம்ப்ரதாயம் என்று இரண்டைச் சொல்கிறோம். தமிழில் பழக்க-வழக்க-ஒழுக்கம் என்று மூன்றைச் சேர்த்துச் சொல்கிறோம். இந்த எல்லாமே **inter-connected:** ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டது. சாஸ்திரத்தில் அநேக இடங்களில் சொல்லியிருக்கிற ரூல்களை வாழ்க்கையில் அநுஷ்டித்துக் காட்டுவதற்கு ஏற்ற விதத்தில் **codify** பண்ணியே ஒவ்வொரு ஸம்ப்ரதாயமும் உண்டாயிருக்கிறது. சாஸ்திரங்களில் பல தினுஸான கொள்கைகள் இருக்கிறபோது ஒவ்வொரு விதமான கொள்கையை மட்டும் அவற்றிலிருந்து பிரித்து ரூபம் கொடுத்து ஸம்ப்ரதாயங்கள் ஏற்படுகின்றன. ஒரே வேத மதத்தில் இப்படி சங்கர ஸம்ப்ரதாயம், ராமாநுஜ ஸம்ப்ரதாயம் என்றெல்லாம் பல வந்திருக்கின்றன.

சாஸ்த்ரம், ஸம்ப்ரதாயம் என்று சாதாரணமாகச் சொல்லும்போது வேறு விதமான ஒரு பாகுபாடும் நினைக்கப்படுகிறது. அதாவது, 'சாஸ்த்ரம் என்பது சட்ட புஸ்தகமாக எழுதி நிலையாக வைத்துவிட்டது; ஸம்ப்ரதாயம் என்பது இப்படிச் சட்டமாக நாட்டப்படாவிட்டாலும் சாஸ்த்ரக்ஞர்கள் உள்பட ஸமூஹத்தார் எல்லாராலும் பின்பற்றப்படுகிற விஷயங்கள்' என்று நினைக்கப்படுகிறது. சாஸ்த்ரம் என்பது **scripture ,**

ஸம்பரதாயம் என்பது மீகூஷீணீபீவீமீ வீஷீஸீ, ஷ்ஸுவணீரீமீ - 'மரபு' என்பது. சாஸ்த்ரமாக எழுதி வைத்தது எல்லாருக்கும் பொதுவாயிருக்கும். ஸம்ப்ரதாயமாகப் பழக்கத்தில் வந்தது ஒவ்வொரு பிராந்தியத்துக்கும் மாறலாம்; 'குலாசாரம்', 'தேசாசாரம்' என்று குடும்பங்களுக்கிடையில், பல சீமைகளுக்கிடையில் மாறுதலாயிருக்கலாம்.

ஒரு வழியைச் சட்டதிட்டங்களால் காட்டிக் கொடுத்து அது ஜனங்களுக்கிடையில் நீண்டகாலம் 'வழங்க'ப்படும் போது 'வழக்க'மாகிறது. ஜனங்கள் இதற்குப் 'பழகி'ப் போகிறபோது 'பழக்கம்' எனப்படுகிறது. பழக்க-வழக்கங்கள் என்று பொதுவாக இருப்பவற்றை ஒரு வீஸீபீவீஸ்வீபீஷ்ஸுணீறீ (தனி நபர்) பற்றி 'ஒழுகும்' போது - அதாவது அனுஷ்டிக்கும் போது - அது இவனுக்கு உண்டாக்குகிற சீலமே 'ஒழுக்கம்' என்பது. சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களின் ஆசார அனுஷ்டானங்களான பழக்க வழக்கங்களைப் பின்பற்றி ஒழுக்கமாக - பீவீஷீவீஜீறீவீஸீமீபீ -ஆக வாழ்கிறவனே ஆசார்யன். அவனே ஜெனரலாக எல்லாருக்கும் ஏற்பட்ட தர்ம நியதிகளோடு கூட, ஒரு குறிப்பிட்ட ஸம்ப்ரதாயத்தின் சாஸ்திரங்களை அறிந்து அனுஷ்டித்துக் காட்டுபவனாக இருக்க வேண்டும். தன்னளவில் இப்படியிருக்கிறவனை மட்டும் ஆசார்யன் என்று சொல்லிவிட முடியாது. உங்களுக்குகே தெரியுமே, ஆசார்யன் என்றால் உடனே சிஷ்யன் என்பவனும் இருந்தாக வேண்டும். அதாவது இவன் பிறத்தியானையும் சிஷ்யனாக்கிக் கொண்டு அவனுக்கு இந்த தர்மாசாரங்களை போதனை பண்ணி, அதன்படியே அவன் நடக்கும்படிப் பண்ண வேண்டும். போதனை செய்ய வேண்டுமென்பதால், அவன் கற்றறிந்த வித்வானாக இருந்தாக வேண்டும். அப்போதுதான் ஸந்தேஹங்களைப் போக்கவும், எதிர்வாதத்தைக் கண்டனம் பண்ணவும் முடியும். இவனிடம் ஒரு சிஷ்யன் நீண்ட காலம் பயிற்சி பெற்றதால்தான் இவ்வளவும் கற்றுக்கொள்ள முடியும்.

இந்தக் காலத்தில் ஆசார்யர்கள் என்பவர்களின் இடத்தில் ஆசிரியர்கள் (பள்ளிக்கூட டீச்சர்களும் காலேஜ் ப்ரொஃஸர்களும்) இருக்கிறார்கள். ஆனால் இங்கே சொந்த வாழ்க்கையிலும் ஸரி, போதிப்பதிலும் ஸரி, தர்மங்களின் ஸம்நபந்தமேயில்லாமலிருக்கிறது!

பழைய காலத்திலும் பௌதிக வித்யைகளையும் கலைகளையும் சொல்லித் தருகிற ஆசாரியர்கள் இருக்கத்தான் செய்தார்கள். க்ருபாச்சாரியார், த்ரோணாச்சாரியார், என்று தனுர்வேதம் - வெறும் ஆயுதப் பயிற்சி - சொல்லிக் கொடுத்தவர்களையும் அந்த நாளிலேயே 'ஆசார்யர்' என்று சொல்லியும் இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும்கூட தர்மசாஸ்திர- ஸம்ப்ரதாயங்களை அறிந்தவர்களாகவும், சொந்த வாழ்க்கையில் பின்பற்றி, தங்களுடைய வித்வத், திறமை இவற்றுக்காக மட்டுமின்றி, நடத்தைக்காகவும் (ஆசரணைக்காகவும்) மதிப்புப் பெற்றவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### 'குரு' இலக்கணம்

**ஆ** சார்யாளிடம் வஸித்து, வித்தையை அப்யாஸம் பண்ணுவதற்கு 'குருகுலவாஸம்' என்று பெயர். 'ஆசார்ய குல வாஸம்' என்றில்லை. இதைப் பார்த்தால் ஆசார்யர், குரு இரண்டும் ஒன்றேதான் என்று தோன்றும். ஜகத்குரு **சங்கராச்சாரியார்** என்பதால் ஒருத்தரே குரு ஆச்சார்யார் இரண்டுமாக இருக்கிறார் என்று ஏற்படுகிறது. இப்படியிருப்பதாலேயே இரண்டும் கொஞ்சம் வேறாயிருக்கலாமோ என்றும் தோன்றுகிறது.

'குரு' என்றால் நேர் அர்த்தம் என்ன? 'ஆச்சார்யார்' என்ற வார்த்தைக்கு **definition** சொன்னதுபோல 'குரு'வுக்கு என்ன சொல்வது?

'குரு' என்றால் 'கனமானது', 'பெரிசு' என்று அர்த்தம். அதாவது பெருமை உடையவர், மஹிமை பொருந்தியவர் என்று அர்த்தம். பெரியவர்களை கனவான், மஹாகனம் என்கிறோமல்லவா? ('ரைட் ஆனரபிள்' என்ற பட்டத்தை 'மஹாகனம்' என்றே சொல்வார்கள்.) 'பெரியவர்கள்' என்று இங்கே நான் சொன்னதே பெரிசை வைத்துதான். 'குரு'

என்கிற மாதிரியே 'ப்ரஹ்மம்' என்றாலும் பெரிசு என்றுதான் அர்த்தம். கனமானவர், பெரியவர் என்றால் எதைக்கொண்டு இப்படிச் சொல்கிறது?. கனமென்றால் **Weight** ஜாஸ்தி என்று அர்த்தமா? பெரியவரென்றால் வாட்டசாட்டமாக இருப்பதாக அர்த்தமா? மஹான், மஹான் என்றாலும் பெரிசானவர், பெரியவர் என்றுதான் அர்த்தம். எதில் பெரிசு? என்னை குரு என்கிறீர்கள். பெரியவா என்கிறீர்கள். இன்னும் குஞ்சம் அபிமானம் ஜாஸ்தியானால் மஹான் என்றும் சொல்கிறீர்கள். ( **Weight** , வாட்டசாட்டம் இவற்றைப் பார்த்தால்) என்னை இப்படிச் சொல்ல நியாயமில்லை. அதனால் இப்படியெல்லாம் சொல்லும்போது ஒருத்தர் உள்ளுக்குள்ளேயே அறிவாலோ, அநுபவத்தாலோ, அருளாலோ கனம் வாய்ந்தவர், பெருமை பெற்றவர் என்றுதான் அர்த்தம். பகவத்பாதாளின் பெயர் என்னிடம் ஒட்டிக் கொண்டிருக்கிற ஒரே காரணத்துக்காக, எனக்கு இதெல்லாம் இருப்பதாக ஏமாந்து குரு, பெரியவா, மஹான் இன்னம் என்னென்ன ஸாதோத்ரமாக உண்டோ அத்தனையும் சொல்கிறீர்கள்.

ஆக, குரு என்றால் அவர் உள்ளுக்குள்ளே ரொம்பப் பெருமை படைத்தவராகயிருக்க வேண்டும். ஆசாரியர் என்பவர் வெளியிலே படிப்பிலே பெரியவர், வெளியிலே போதனை பண்ணுவதில் சதுரர், வெளியிலே நடத்தையால் வழிகாட்டுவதிலே சிறந்தவர். அவருடைய உள் சீலம் ( **Character** ) தான் வெளிநடத்தையாக ( **conduct** ) ஆக வெளிப்படுகிறதே தவிர, வெளியே அவர் போலியாக உத்தமர் போல நடித்துக் காட்டுபவரல்ல என்பது நிஜமானாலுங்கூட அவரை வெளி லோகத்துடன் பொருத்தியே வைத்திருக்கிறது-உலகத்துக்கு அவர் தாம் உபதேசிக்கிற ஐடியல்களை வாழ்ந்து காட்ட வேண்டும்.

குரு ஸமாச்சாரம் என்ன? அவர் வெளியிலே எதுவுமே பண்ண வேண்டுமென்றில்லை. அவருக்கு வெளிப்படிப்பு, வித்வத் வேண்டும் என்றில்லை. அவர் சாஸ்திரங்களைப் படித்துக் கரை கண்டிருக்க வேண்டுமென்றில்லை. அவர் எந்த சாஸ்த்ரத்தையோ ஸம்பரதாயத்தையோ ஆசார்யரைப்போல வழுவறப் பற்றி ஒழுகிக்காட்ட வேண்டுமென்பதில்லை. ஏன், அவர் வாயைத் திறந்து போதனைப் பண்ணணும், உபதேசிக்கணும் என்றுகூட இல்லை. மௌனகுரு என்றே இருந்திருக்கிறார்களே!

தன்னில் தானாக நிறைந்து ஒருத்தர் எங்கேயாவது தன்னந்தனியாக உட்கார்ந்திருந்தால்கூட அவருடைய உள்பிரபாவம் தெரிந்தவர்கள் அவரை குருவாக வரிக்கிறார்கள். அதற்காக அவர் இவர்களுக்கு சாஸ்த்ரபாடம் சொல்ல வேண்டும் என்பது இல்லை. ஆனாலும் அவரை குருவாக வரித்தவரிடம் அவருடைய அநுக்ரஹ சக்தியே வேலை செய்து விடுகிறது. அவர் இவரை 'சிஷ்யர்'என்றுகூட நினைத்திருக்கமாட்டார். ஆனாலும் தம்மை அவருக்கு சிஷ்யராக நினைத்தவர் எதை நாடி அவரிடம் போனாரோ அது ஸித்தித்துவிடுகிறது.

படிப்பு என்றால் என்ன என்றே தெரியாமல் இப்படிப் பல குருக்கள். பாடம் நடத்தாமல் எத்தனையோ குருக்கள். வாயையே திறக்காத தக்ஷிணாமூர்த்திதான் ஆதிகுருவே! சாஸ்திர விதிகள் எதற்கும் கட்டுப்படாமல் பேய் மாதிரி, பிசாசு மாதிரி, பைத்தியம் மாதிரி, உன்மத்தம் மாதிரித் திரிந்த அதிவர்ணாச்ரமிகள் பலர் குருமார்களாக இருந்திருக்கிறார்கள். திகம்பரமாக இப்படித் திரிந்த தத்தாத்ரேயரைத்தான் அவதூத குரு என்று ரொம்பவும் ஏற்றம் கொடுத்துச் சொல்கிறோம்.

ஆசாரியன் என்பவன் எல்லாவற்றிலும் 'ஸிஸ்டம்'உள்ளவர். அவர் ஏதாவது ஒரு ஸிஸ்டத்துக்கு (சாஸ்த்ர ஸம்ரதாயத்துக்கு) பிரதிநிதியாக இருக்க வேண்டும். அதன் புத்தகங்களை, விஷயங்களை அவர் 'ஸிஸ்டமாடிக்'காகக் கற்றும் கேட்டும் அறிந்திருக்க வேண்டும். இதை கற்றும் கேட்டும் அறிந்திருக்க வேம்டும். இதை மற்றவர்களும் 'ஸிஸ்டமாடிக்'காக 'டீச்'பண்ணணும். எல்லாவற்றுக்கும் மேலே தாமும் 'ஸிஸ்டமாடிக்'காக வாழ்ந்து காட்ட வேண்டும்.

குருவுக்கு இப்படியெல்லாம் இருந்துதான் ஆக வேண்டும் என்று நிபந்தனை எதுவும் இல்லை. அவர் உள் அநுபவி. அவருடைய அநுபவத்தின் பெருமையாலேயே அவரை மஹான் என்பது. அதன் கனத்தாலேயே குரு என்பது. **Character, Conduct** (சீலம்,

நடத்தை) என்பதற்கெல்லாம் அவர் மேலே போனவர். பகவானின் காரெக்டர், காண்டக்ட் எப்படி என்று யாராவது பார்ப்போமா?அப்படித்தான் இதுவும். சாஸ்திரத்தைப் பார்த்துப் பண்ண வேண்டும் என்பதும் குருமார்களுக்கு இல்லை. ஆத்மா அல்லது பிரம்மம் என்பதோடு சேர்ந்த ஞானிகளாக அவர்கள் இருப்பார்கள்;அல்லது ஈஸ்வரன், பகவான் என்கிற மஹாசக்தியுடன் 'டச்'உள்ளவர்ளாக இருப்பார்கள்;அல்லது மனஸை அடக்கி ஸமாதியிலிருக்கிற யோகிகளாக இருப்பார்கள்.

உள்ளே இப்படியிருக்கிறவர்களே வெளியில் ஆச்சார்யர்களாகவும் வித்வத்துடன் பிரகாசித்துக் கொண்டு, சிஷ்யர்களுக்குப் போதனை பண்ணிக்கொண்டு, தாங்களே சாஸ்த்ரப் ப்ரகாரம் கார்யங்கள் செய்துகொண்டும் இருக்கலாம். பகவத்பாதாளும் மற்ற மதாசார்யர்களும் இப்படியே குரு, ஆசார்யன் இரண்டுமாக இருந்திருக்கிறார்கள்.

ஆத்ம ஸாக்ஷாத்காரம், ஈஸ்வர ஸாக்ஷாத்காரம், யோக ஸமாதி என்கிற அளவுக்குப் போகாவிட்டாலும் முன்னாளில் வித்யாப்யாஸம் செய்வித்த ஆசார்யர்கள் எல்லோருமே உள்ளூர ஒரு பெருமை படைத்தவர்களாகயிருந்தால்தான் அவர்களை குரு என்றும், அவர்களிடம் போய்ப் படிப்பதை குருகுலவாஸம் என்றும் சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது. ஒரு ஸிஸ்டத்தில் கட்டுப்படாதவராகயிருந்தாலுங்கூட சொந்தமாகவும், சாஸ்திரங்களைக் காட்டியும் நிறைய உபதேசம் செய்த குருக்களும் உண்டு. அவர் சொன்னபோது அவை குறிப்பிட்ட சாஸ்திர ஸிஸ்டமாக இல்லாவிட்டாலும், அவருக்குப் பிற்பாடு அவை அவர் பேரிலேயே ஒரு **Systematised** சாஸ்திரமாகி, அவரே அதற்கு மூல ஆசார்யர் என்றாகிவிடுவார். வெளியிலே ஸிஸ்டப்படி இருந்த அநேக ஆசார்யர்கள், உள்ளே தனக்குத்தானே ஒரு பெருமை படைத்த குருவாக இருந்திருக்கிறார்கள்; குருவாக இருந்த பலர் எந்த ஸிஸ்டத்திலும் வராமலும் இருந்திருக்கிறார்கள்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### உள் குருவுக்கும் வெளித் தொடர்பு

**ஸி** ஸ்டமாடிக்காக டீச் பண்ண வேண்டும் என்று நினைக்காவிட்டாலும், அநுக்ரஹம் பண்ண வேண்டும் என்ற எண்ணம் எந்த குருவுக்கும் இருந்திருக்கிறது. "தன்னை இவன் சிஷ்யனாக ஆச்ரயித்திருக்கிறான்; இவனுக்கு நாம் அநுக்ரஹிக்க வேண்டும்" என்ற எண்ணத்தையும் கடந்து ஒரு மஹாத்மா இருந்தாலும், அப்போது, "இவரை நம்பி வந்தவனை நாம் கைவிடப்படாது" என்று ஸாக்ஷாத் ஈஸ்வரனே அவர் மூலமாக அவனுக்கு அநுக்ரஹம் பண்ணி விடுவான்.

ஆகையால் குரு என்பவர் தாமாக 'குருத்வ'த்தைத் தேடாவிட்டாலும் சிஷ்யன் என்று ஒருத்தன் வந்து சேர்ந்தால் அவனிடம் அநுக்ரஹ ஸம்பந்தம் அவருக்கு ஏற்படவே செய்கிறது. இங்கேதான் 'குரு' என்கிற வார்த்தைக்குச் சொல்கிற இன்னொரு அர்த்தம் பொருந்துகிறது.

ஒரு அர்த்தம் சொன்னேன்; வெளி ஸம்பந்தமில்லாத உள் கனம், பெருமை உள்ளவரே குரு என்று. உள் விஷயமானதால் இங்கே கார்யம் ஒன்றும் இல்லை. இன்னொரு அர்த்தம் என்ன?'கு'என்பது இருட்டு;'ரு'என்பது போக்குவதைக் குறிக்கும்; 'குரு'என்றால் இருட்டைப் போக்குபவர் என்று சொல்கிறார்கள். 'கும்மிருட்டு'என்று ரொம்பவும் இருட்டாயிருப்பதைச் சொல்லும் போது 'கு'என்பது இருட்டைக் குறிப்பதுதான். இருட்டைப் போக்கடிப்பவர் என்பதே குருவுக்கு அர்த்தமாகிறது. 'தேவ'என்றாலும் பிரகாச ரூபி என்றே அர்த்தம். இருட்டு என்றால் அஞ்ஞானம்தான். **தமஸோ மா ஜ்யோதிர் கமய** என்கிறபோது தமஸ் (இருட்டு) என்பது அஞ்ஞானமே;ஜ்யோதி என்பது ஞானம்;அஞ்ஞான மாயை இருள், ஞான ஒளி என்றே சொல்வது வழக்கம். ஆத்ம ஞானமும் மாயா அஞ்ஞானமுந்தான் என்றில்லை;எந்த ஒரு விஷயமோ வித்தையோ ஆனாலும் அது தெரியாத நிலையில்

அதை அறிவின் இருட்டு என்றும், தெரிந்த நிலையை அறிவு வெளிச்சம் (புத்தி பிரகாசம்) என்றும் சொல்வதே வழக்கம். இப்படி புத்திக்கு ஒரு விஷயத்தைப் பிரகாசிப்பிக்கிறவர் குரு;முக்கியமாக முடிவாக ஞானப் பிரகாசத்தைக் கொடுக்கிறவர். சாஸ்திரம் படிக்காத, சாஸ்திரப்படி பண்ணாத, சாஸ்திரங்களை உபதேசிக்காதவரானாலும் ஒரு மஹானை குரு என்று ஒருத்தன் நாடிப்போய் ஆச்ரயித்துவிட்டானானால் அவர் அவனுடைய உள் இருட்டைப் போக்கி ஞானம் தந்துவிடுவார். இவனுக்கு தெரியாத வேறு விஷயங்கள், வித்யைகள் கூட அவருடைய அநுக்ரஹ சக்தியால் வெளிச்சமாகிவிடும்.

'இருட்டைப் போக்குபவர்'என்று குருவை **define** செய்கிறபோது அவருக்குப் 'போக்குவது'என்ற கார்யம் ஏற்பட்டுவிடுகிறது. இவருடைய உள் பெருமை இப்போது கார்யமாக வெளியிலே வேலை செய்கிறது. தனித்து இருக்காமல் இப்போது இவர் இன்னொருத்தனுடன் கார்யத்தால் ஸம்பந்தப்பட்டு விடுகிறார். வாயால், வாழ்க்கையால் உபதேசித்தோ, அல்லது வெறும் அநுக்ரஹ சக்தியாலோ, அல்லது அந்த அநுக்ரஹத்தையுங்கூட இவர் **conscious** -ஆக (புத்தி பூர்வமாக பண்ணாமல் ஈஸ்வரனே இவர் மூலம் பண்ணியோ, எப்படியோ ஒரு விதத்தில் இவர் சிஷ்யன் என்னும் இன்னொருத்தனுடைய அறியாமையை (சின்ன விஷயங்களில் அறியாமை, ஆத்ம ஸம்பந்மான அறியாமை எதுவோ ஒன்றை, அல்லது இரண்டையும்) நிவ்ருத்தி செய்கிறவராகிவிடுகிறார்.

இப்படி ஒரு கார்யம் இவரால், இவரைக் கொண்டு சிஷ்யன் பொருட்டு ஏற்படுகிறது என்றால் அப்போது இவருக்கும் சிஷ்யனுக்கும் ஒரு **link** (தொடர்பு) உண்டாக வேண்டும். பவர்ஹவுஸிலிருக்கும் எலெக்ரிஸிட்டி நம் அகத்து பல்பில் எரிகிறது என்றால் அதையும் இதையும் கனெக்ட் பண்ண ஒயர் இருந்தாக வேண்டும். ரெட்ஹில்ஸ் ஜலம் நம் அகத்தில் கொட்டுகிறது என்றால் இரண்டையும் கனெக்ட் செய்ய பைப்-லைன் இருந்தாகணும். இப்படியே குருவினால் சிஷ்யனுக்கு புத்திப் பிரகாசம், அறிவு தாரை உண்டாகிறது என்றால் அவரையும் இவரையும் சேர்த்து வைக்க ஒரு 'லிங்க்'இருக்கத்தானே வேண்டும்?

குருவாயால் விஷயங்களை விளக்கினால் அந்தப் பேச்சு ஒரு 'லிங்க்'. வாழ்க்கை உதாரணத்தால் புரிய வைத்தால் இதுவும் ஒருவித கம்யூனிகேஷன்தானே?அதோடு, அதைவிட, அவருடைய அநுக்ரற சக்தி என்பதன் ரேடியேஷனையும் சொல்லவேண்டும். இதையும் ஒரு **link** என்று சொல்ல வேண்டும். வெளிப்படத் தெரிவித்தாலும், உள்ளர்த்தமாகக் காட்டினாலும் சிஷ்யனுடைய அறியாமை போவதற்காக குரு பண்ணுகிற எதையும் உபதேசம் என்றே சொல்ல வேண்டும். உபதேசமாகப் பிரஸங்கம் பண்ணாமல் வாழ்க்கை உதாரணத்தாலேயே உபதேசித்துவிடுவதைத்தான் **''verbal message** Þ™¬ô;Üõ¼¬ìò life -ã message" â¡Á ªê™õ¶.

ஆக ஸ்தூலமாகவோ ஸூக்ஷ்மமாகவோ குருவுக்கும் சிஷ்யனுக்கும் 'லிங்க்'காக உபதேசம் என்பது இருக்கிறது.

வாய் வார்த்தையாலும், வாழும் வாழ்க்கையாலும் உபதேசித்தேயாக வேண்டும் என்ற 'ட்யூட்டி'உள்ளவரைத் தான் 'ஆச்சார்யர்'என்று ஆரம்பத்தில் சொன்னேன். குரு என்பவர் இப்படி வார்த்தையாலும், வாழ்க்கையாலும் உபதேசிக்க வேண்டுமென்றில்லா விட்டாலும் அநுக்ரஹம் என்கிற ரூபத்தில் அவருக்கும் சிஷ்யனுக்கும் ஏற்படுகிற கனெக்ஷனும் உபதேசம் தான் என்றேன்-அறியாமையைப் போக்கி அறிவொளியை ஏற்படுத்துகிற எதுவும் உபதேசம்தான் என்பதால்.

பொதுவாக, பெரும்பாலாக, குருவின் அநுக்ரஹ சக்தி சிஷ்யனுக்கு மந்த்ர உபதேசம் என்ற 'லிங்க்'மூலமே பாய்கிறது. வாயால் ப்ரஸங்கம் பண்ணி, எக்ஸ்ப்ளெயின் செய்யாதவராக இருக்கிற மஹாத்மாக்கள் கூட 'மந்த்ரோபதேசம்'என்ற ஒன்றை மாத்திரம் பண்ணிவிடுவதே பெரும்பாலும் நாம் பார்ப்பது. கதைகளில் படிக்கிறோம்;ஒரு மஹானால் தனக்கு உய்வு கிடைக்காதா என்று அவரிடம் போய் அநேக சிஷ்யர்கள் காத்துக் கிடப்பார்கள். அப்புறம் என்றைக்காவது ஒரு நாள் அவர் சிஷ்யனுக்கு ஒரு மந்த்ரம் உபதேசித்து விடுவார். அதிலிருந்து இவனுக்கு ஞானம் பிரகாசமாகத் தொடங்கிவிடும். எப்படியாவது இம்மாதிரி

குரு வாயிலிருந்து மந்த்ரோபதேசம் வாங்கிக் கொண்டுவிட வேண்டும் என்பதற்காகத் தபஸ் இருந்து, தந்திரம் பண்ணினவர்கள் கூட உண்டு.

கபீர்தாஸுக்கு ராமாநந்தர் என்ற மஹானிடமிருந்து ஸ்ரீராம மந்த்ர உபதேசம் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று ஆசை. இவரோ முஸ்லீம், ஹிந்துவாகப் பிறந்து முஸ்லீம் வீட்டில் முஸ்லீமாகவே வளந்தவர் என்பார்கள். அதனால் தமக்கு ராமாநந்தர் உபதேசம் பண்ணமாட்டாரோ என்று இவருக்குப் பயம். இதனால் ஒரு யுக்தி பண்ணினார். என்ன யுக்தி என்றால், ப்ராம்ம முஹூர்த்த*இருட்டிலே, கங்கையின் படித்துறையிலே, ராமாநந்தர் வருகிற வழியில் போய்ப் படுத்துக் கொண்டு விட்டார். உஷத்கால ஸ்நானத்துக்கு வந்த ராமாநந்தர் கவனிக்காமல் படியிலே கிடந்தவரை மிதித்து விட்டார். இதையே பாத தீக்ஷை என்று கபீர் எடுத்துக் கொண்டார். ('தீக்ஷை'விஷயத்துக்கு அப்புறம் வருகிறேன்) மிதித்தவுடன் அது ஒரு மனுஷ்ய சரீரம் என்று ராமாநந்தருக்குப் புரிந்துவிட்டது. அபசாரமாக ஒன்றைப் பண்ணிவிட்டால் உடனே பிராயச்சித்தமாக "சிவ சிவ" என்றோ "ராம ராம"என்றோ சொல்வதுதானே வழக்கம்?இவர் பேரே ராமாநந்தராயிற்றே!

ஒரு ஜீவனைக் காலால் மித்தித்துவிட்டோமே என்று பதறினவர், "ராம ராம"என்று சத்தம் போட்டுச் சொல்லிவிட்டார். கபீர்தாஸ் அதையே உபதேசமாக எடுத்துக் கொண்டார். தன் நிமித்தமாக அவரை எப்படியாவது ராம நாம தாரக மந்த்ரத்தைச் சொல்ல வைத்துவிட்டால் அதுவே தனக்கு உபதேசம் என்றுதான் இப்படி வேண்டுமென்றே அவர் மிதிக்கும்படியாக வந்து இவர் படியிலே கிடந்தது!

எதற்குச் சொன்னேனென்றால் குரு வாய் வார்த்தை சொல்ல வேண்டுமென்றில்லாவிட்டாலும் அநேகமாக இப்படிப்பட்டவருக்குக் கூடச் சிஷ்யரிடம் மந்த்ரோபதேசம் என்ற ஒன்றினால்தான் ஒரு ஜீவ ஸம்பந்தமுண்டாகிறது. இந்த மந்த்ரோபதேசத்தைத்தான் 'வார்த்தை', 'திருவார்த்தை'என்றெல்லாம் சொல்வார்கள். 'ஒரு வார்த்தை'என்றும் பாடல்களில் வரும் - அதாவது வேறே வார்த்தைகள் எதுவும் உபதேசத்துக்கு வேண்டாவிட்டாலும் மந்த்ரம் என்கிற ஒரே ஒரு வார்த்தை மட்டும் வேண்டும் என்று அர்த்தம். "மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்(கு) ஓர் வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே"என்று தாயுமானவர் இதைத்தான் சொல்கிறார்.

ஆகையினாலே மந்த்ரம் உபதேசிக்கிறவர் குரு என்று ஏற்பட்டிருக்கிறது. உள்பெருமை உள்ள ஒரு மஹானை குரு என்பது அவர் வெளியில் ஒரு சிஷ்யனுடன் ஸம்பந்தப்படும் போதுதான். இந்த ஸம்பந்தம் முக்யமாக மந்த்ரோபதேசத்தாலேயே ஏற்படுகிறது. குரு என்பவர் ஒரு ஸமயத்தில் மந்த்ரத்தை உபதேசித்துவிட்டால் போதும். அப்புறம் கூடவே சிஷ்யனை உட்கார்த்தி வைத்துக்கொண்டு, அவனுக்கு விஸ்தாரம் பண்ணி, அவனை அப்யஸிக்கப் பண்ண வேண்டும் என்றில்லை. இப்படி **long-term training** கொடுப்பதென்பது ஆசார்யனுக்குத்தான் ஏற்பட்ட பொறுப்பு. மஹானான குரு அகஸ்மாத்தாகச் செய்கிறது போலக்கூட ஒரு மந்த்ரத்தைச் சொல்லிவிட்டு, அவர் பாட்டுக்குப் போய்விடுவார். ஆனாலும் அதனாலேயே ஸூக்ஷ்மமாக அவருக்கும் சிஷ்யனுக்கும் 'லிங்க்'ஏற்பட்டு, மந்த்ரத்தின் மூலமாக அநுக்ரஹ சக்தி (அநுக்ரஹத்தின் மூலமாக மந்த்ர சக்தி என்றும் சொல்லலாம்) சிஷ்யனுக்குள் வேலை செய்ய ஆரம்பித்துவிடும்.

ரொம்பவும் உசந்த குருவாயிருந்தால், அல்லது சிஷ்யன் ரொம்ப பக்வியாக (பக்குவமானவனாக) இருந்தால் இந்த மந்த்ர ரூபமான வாயுபதேசம் கூட வேண்டியதில்லை. ஆனாலும் ஏதோ ஒரு தினுஸில் 'லிங்க்'இருக்க வேண்டுமென்றேனே, அது இங்கே வேறெப்படி ஏற்படும்?குரு இவனை ஒரு பார்வை பார்த்து விட்டாலே போதும். அதுவே உபதேசந்தான். அந்தக் கடாக்ஷம் இவனுக்கு உள்ளே போய் வேலை செய்ய ஆரம்பித்துவிடும் அல்லது அவர் இவனைத் தொட்டுவிட்டால் அந்த ஸ்பரிசமே உபதேசமாகிவிடும். இதெல்லாங்கூட வேண்டாம், 'இந்தக் குழந்தை நன்...னா இருக்கணும்'என்று அவர் நினைத்துவிட்டாலே போதும்;அதுவே உபதேச "லிங்க்"தான்.

---

## தீக்ஷை

**இ** ப்படி குரு-சிஷ்யாளுக்கு இடையில் ஏற்படும் தொடர்பை நான் "உபதேசம்"என்று சொன்னாலும் சாஸ்த்ரத்தில் இதற்குச் சொல்லியிருக்கிற வார்த்தை ( **technical term** ) "தீக்ஷை"என்பதேயாகும். 'தீக்கை'என்று தமிழில் சொல்லியிருக்கும். 'இனிஷியேஷன்'என்கிறார்கள். குருவிடமிருந்து எது புறப்பட்டுப் போய், சிஷ்யனுக்குள்ளே புகுந்து, அவனை ஒரு மார்க்கத்தில் தீவிரமாக தூண்டிச் செலுத்துகிறதோ அதற்கு 'தீக்ஷை'என்று பெயர். இப்படி ஒரு மார்க்கத்தில் சிஷ்யன் பிரவேசிப்பதற்கு ஆரம்ப சக்தியாக இருப்பதால்தான் 'இனிஷியேட்'பண்ணுவது என்கிறார்கள். ஆனால் ஆரம்பித்து வைத்துவிடுவதோடு (இனிஷியேட் பண்ணுவதோடு) அந்த சக்தி தீர்ந்து போய்விடுவதில்லை. ஆரம்பித்து வைத்த பிறகு வழி நெடுகவும் கூட வந்து துணை செய்து, மேலே மேலே போகப் பண்ணி, லக்ஷ்யத்தை அடைந்து ஸித்தி பெறவும் வைக்கிறது.

மந்த்ர ரூபமாகவோ, ஒரு கடாக்ஷமாகவோ, ஸ்பர்சமாகவோ, அநுக்ரஹ ஸ்மரணத்தினாலோ க்ஷண காலம் இப்படி ஒரு குரு ஒருத்தனோடு 'லிங்க்'பண்ணிக் கொண்டு விட்டாலும், அதுவே சாஸ்வதமாக அவருடைய அநுக்ரஹத்தை இவனுக்குக் கொடுத்துக் கொண்டு 'பெர்மனென்ட் கனெக்ஷ'னாக இருக்கும் - ஒரு தடவை ஸ்விட்சைத் தட்டிவிட்டு விட்டால் பல்ப் அது பாட்டுக்கு எரிந்து கொண்டேயிருக்கிறாற்போல!'கைவல்ய நவநீதம்'முதலான புஸ்தகங்களில் இந்த ஸ்பர்ச, கடாக்ஷ, ஸ்மரண தீக்ஷைகளை (முறையே) ஹஸ்த, நயந, மானஸ தீக்ஷைகள் என்று சொல்லியிருக்கிறது.

ஆசார்யர் என்பவர் ஸ்தூலமாக சிஷ்யனிடம் **long-term contact** (நீண்டகாலத் தொடர்பு) வைத்துக் கொண்டு அவனைப் படிப்பிலும் நடத்தையிலும் **train** பண்ண வேண்டியவர். குருவுக்கோ சிஷ்யனிடம் ஸ்தூலத் தொடர்பு ரொம்பவும் கொஞ்சகாலம் இருந்தால் போதும்;அல்லது அதுவுங்கூட இல்லாமலுமிருக்கலாம். ஆனால் தீக்ஷையின் மூலமாக அவருக்கும் சிஷ்யனுக்கும் ஏற்பட்ட ஸூக்ஷ்மமான **contact** -ஓ (தொடர்போ) **long term** க்கும் மேலே;அது **life-long** ஆனது (வாழ்க்கை முழுதற்குமானது); **life circle** எல்லாம் போய், ஜன்மங்கள் எல்லாம் தீர்ந்து சிஷ்யன் ஸித்தி பெறுகிற வரையில் நீடிக்கிற **contact** இது.

இப்படி தீக்ஷை தருகிறதுதான் குருவுக்கு முக்யமான லக்ஷணமாய் நினைக்கப்படுகிறது. தீக்ஷா குரு, குருதீக்ஷை என்றே சொல்கிறது வழக்கம். தீக்ஷை கொடுப்பவரையே குரு என்பது வழக்காயிருக்கிறது. பழையகால இதிஹாஸம், புராணம், காவியம் இவைகளைப் பார்த்தால் தகப்பனாரையே குரு என்று சொல்லியிருக்கும். தகப்பனாராக இருக்கப்பட்டவனுக்கு குருவுக்கு இருக்க வேண்டிய உள்பெருமை, கனம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், புத்ரனைப் பொறுத்தமட்டில் பிதா தெய்வத்துக்கு ஸமானமல்லவா?"முன்னறி தெய்வம்"அல்லவா?அதனால் இப்படி அவரை குரு என்று உயர்த்திச் சொல்லியிருக்கலாம். இதே மாதிரி, பாடம் சொல்லிக் கொடுக்கிற வாத்தியாரும், "எழுத்தறிவித்தவன் இறைவன்"â¡Aø£Ÿ«ð£ô ªîŒõñ£è G¬ù,èŠðì «õ‡®òõ˜;"H˜¼ «î«õ£ ðõ"¾,° Ü´ˆ«î "Ýê£˜ò «î«õ£ ðõ"â¡Á‹ «õî‹ Ý,¬ë ªêŒF¼,Aø¶!Üîù£™ Þõ¬ó»‹ '°¼'â¡Á ªð¼¬ñŠð´ˆ¶õî£è ãŸð†®¼,èô£‹. Hî£¬õ º¼ â¡ðîŸ° Þ¡ªù£¼ è£óí°‹ «î£¡ÁAø¶. å¼ põÂ,° ºî™ àð«îê‹ â¶?è£ò˜gî£¡. Ü‰î ñ‰ˆó˜¬î àð«îê‹ (Šóy«ñ£ð«îê‹) ªêŒõ¶ Hî£ î£«ù?Üî£õ¶ è£ò˜g ñ‰ˆó b¬þ ÜŠð£î£¡ ð‡µAø£˜.

இப்படி தீக்ஷை தருவதாலேயே அவரை 'குரு'என்கிற வழக்கம் உண்டாயிருக்கலாம். காயத்ரீ உபதேசத்தில் அதிகாரமில்லாதவர்களுக்கும்கூட அக்ஷராப்யாஸம் என்பது இருக்கிறது. அப்போது அஷ்டாக்ஷரமோ, பஞ்சாக்ஷரமோ உபதேசித்து அப்பன்காரன்தான் பிள்ளையை 'ஆனா'எழுத வைக்கிறான். இந்த மந்த்ரோபதேசத்தாலேயே குரு ஆகிவிடுகிறான்.

உள்ளநுபவ கனமும் பெருமையும் இல்லாதவனான தகப்பனாரையோ, வாத்தியாரையோ குருவாக நினைத்து சரணாகதி செய்து விட்டாலும், அந்த சரணாகதியின் கனத்தாலும் பெருமையாலுமே இப்படிப்பட்ட யோக்யதைக் குறைச்சலான குருவிடமிருந்தும் ஞானத்தைப் பெற்றுவிடலாம். அதாவது அநுக்ரஹிக்க வேண்டும் என்ற எண்ணங்கூட இல்லாத மஹா அநுபவியான குரு மூலம் அநுக்ரஹத்தைச் செய்கிற அந்த பகவானே, கொஞ்சங்கூட அநுக்ரஹ சக்தி இல்லாத இந்த குரு மூலமாகவும் சிஷ்யனுடைய சரணாகதியை மெச்சி அருள் புரிந்து விடுவான்*. குரு என்று ஆச்ரயிக்கப்படுபவர் அபாத்ரராயினும் அவரிடம் அந்தரங்க விஸ்வாஸம் வைத்து, அவர் என்ன செய்தாலும் அவருடைய பெருமைக்குக் குறைவாகப் பேசாமலும் நடக்காமலும் ஒரு சிஷ்யன் இருந்துவிட்டால், அந்த குரு உய்வு பெற்றாலும் பெறாவிட்டாலும், இந்த சிஷ்யன் உய்வு பெற்று விடுவான்.

இப்படிப்பட்ட குரு பக்தியை நினைக்கும்போது எனக்கு ஒரு ஸம்பவம் ஞாபகம் வருகிறது. ஒரு தரம் மடத்துப் பாடசாலைப் பசங்கள் - சின்ன வயசுப் பசங்கள்-இரண்டு பேரிடம், வாத்தியார் வந்துவிட்டாரா என்று கேட்டேன். ஒரு பையன் வரவில்லை என்றான். மற்றவன் வந்துவிட்டார் என்றான். அப்புறம் முதல் பையன் சொன்னதுதான் நிஜம் என்று தெரிந்தது. நான் இரண்டாவது பையனிடம், "ஏன் பொய் சொன்னே?பொய் சொன்னா தப்பில்லையா?"என்று கேட்டேன். அதற்கு அவன் தைரியமாக, "பாட நேரம் வந்தும் வாஸ்தவத்தில் வாத்தியார் வராமலிருந்தாரென்றாலும், அவர் வரவில்லை என்று சொன்னால் குருவின் தப்பை வெளியிலே சொன்னதாகும். பொய் சொல்வதைவிட இப்படி குருவுக்குத் தப்பு சொல்வதுதான் பெரிய தப்பு என்பதாலேயே அப்படிச் சொன்னேன்"என்றான். நானும் அவன் பண்ணினதை ஸரி என்று ஒப்புக் கொண்டேன். குரு பக்தி விசேஷத்துக்காகச் சொன்னேன். குரு எப்படியிருந்தாலும் அவருக்கு ஆத்மார்ப்பணம் பண்ணிவிட்டால், குருவால் எது கிடைக்க வேண்டுமோ அது ஈஸ்வர ப்ரஸாதமாகச் கிடைத்துவிடும்.

நாமே ஒன்றைப் படித்துத் தெரிந்துகொள்ளும் போது அதில் இந்த சரணாகதி, ஸமர்ப்பண புத்தி உஷூகூஷீகூஷீமீஸீபீமீகூஷீ பண்ணுவதில் இருக்கிற லீஷூஞீவீறீவீமீஹ் (விநயம்) இதெல்லாம் இல்லை. நாமாகவே படித்துப் புரிந்து கொள்வதில் இதற்கெல்லாம் நேர்மாறாக அஹங்காரமே உண்டாக இடமிருக்கிறது. வித்யை நிஜமான வித்யையாக இருந்தால் அஹங்காரத்தைப் போக்கத்தான் வேண்டும். அதனால்தான், தானே ஒரு வித்தையைக் கற்பது, தானே ஒரு மந்த்ரத்தை எடுத்துக் கொள்வது, தானே ஒரு புண்ய கர்மாவைப் பண்ணுவது எல்லாம் சாஸ்திரத்தில் விலக்கப்பட்டு, குரு முகமாக உபதேசம் வாங்கிக் கொண்டே இவற்றைச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. தானாகவே படித்தும் தெரிந்து கொள்ளலாம் தான்;ஆனாலும் இந்த அறிவு ஆத்மாபிவிருத்திக்குப் பிரயோஜனப்படாது என்பதை ஒரு உபமானத்தால் சுரீலென்றே மனஸில் தைக்கிறாற்போலச் சொல்லியிருக்கிறது - இது ஜாரபுருஷனிடம் புத்ரனைப் பெற்றுக் கொள்கிற மாதிரி;புத்ரன்தான் என்றாலும் அவன் வைதிக கர்மா எதற்கும் உதவாதது போல என்று.

பூர்ண யோக்யதை பெற்ற குரு-அதாவது கனமான உள்ளநுபவம் பெற்றவர்-எந்த விதமான தீக்ஷையும் தரவேண்டுமென்றில்லா விட்டாலுங்கூட கூஷீணீகூஷீமீ மீஜ்நீமீஜீமீவீஷீஸீ (அஸாதரணமான விதிவிலக்கு) தவிர அவராலும் ஏதாவது ஒரு தீக்ஷை நடக்கிறதென்று சொன்னேன் அல்லவா?இதில் வாக்கால் கொடுக்கிற தீக்ஷைதான் மந்த்ரோபதேசம்;மந்த்ர தீக்ஷை என்பது. த்ருஷ்டியால் (பார்வையால்) தீக்ஷை தருவது சக்ஷுு தீக்ஷை;நயன தீக்ஷை என்றும் சொல்வார்கள். தொடுவதால் தீக்ஷை தருவது ஸ்பர்ச தீக்ஷை. ஹஸ்த தீக்ஷை என்று சொல்வது இதைத்தான்.

இதிலே பல வகை உண்டு. குரு சிஷ்யனின் தலையைத் தம் கையால் தொட்டுத் தம் உஜீவீகூஷீவீமீஷூணீறீ மீஸீமீகூஷீரீஹ் -யை (ஆத்ம சக்தியை) அவனுக்குள் செலுவதற்கு ஹஸ்த மஸ்தக தீக்ஷை என்று பெயர். (எல்லா தீக்ஷையிலுமே குரு தம்முடைய அநுபவ சக்தியை சிஷ்யனுக்கு ஊட்டுகிற தியாகத்தைதான் செய்கிறார்.) பாதத்தால் சிஷ்யனை ஸ்பர்சிப்பது பாத தீக்ஷை. (கபீர்தாஸ் ராமாநந்தரிடம் பாத தீக்ஷை, மந்த்ர தீக்ஷை இரண்டும் பெற்றதாகிறது!) குரு தம்முடைய பாதத்தை சிஷ்யனுடைய அங்கங்களில் குறிப்பாக சிரஸில் வைப்பதைத்தான் ரொம்பப் பெரியப் பேறாகக் கருதுவது. 'திருவடி தீக்கை'என்று இதைச் சொல்வார்கள். குருபாதம் எப்போதுமே சிரஸில் இருப்பதாக தியானம் செய்ய வேண்டும்.

இது வெறும் வார்த்தையாக, பாவனையாக இல்லாமல், எல்லா குருவுக்கும் மூலகுருவான ஈசனின் இணையடிகள் தங்கள் தலையிலேயே இருப்பதை அநுபவித்து அறிந்தவர்களைத் தான் ''அடியார்''என்பது;'பாதர்', 'ஸ்ரீசரணர்'என்று ஸம்ஸ்க்ருதத்திலும் சொல்கிறது வழக்கம். 'பகவத்பாதர்'என்றால் பகவானின் பாதத்தை தரித்து அதுவாகவே ஆனவர். அதனால் அந்த பகவத்பாதரையே நாம் சிரஸிஸ் தரிக்கணும்.

ரொம்ப உயர்ந்த, பக்வ நிலையில் குரு நேரே வாயால் உபதேசிக்க வேண்டாம், பார்க்க வேண்டாம், தொடவேண்டாம், அவர் எங்கேயோ இருந்துகொண்டு ஒருத்தனை நினைத்துவிட்டாலே அது மானஸ தீக்ஷையாகி இவனைத் தூக்கிவிட்டு விடும்.

-----------------------------------------------------------------------------------------------------------------------

*"ªîŒõˆF¡ °ó™" Þó‡ì£‹ ð°FJ½œ÷ "êóí£èF«ò º,Aò‹" â¡ø à¬ó ð£˜,è.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### அம்பிகை அருளும் தீக்ஷைகள்

**அ** ம்பாள்தான் ஞானம். ஸத்-சித்-ஆனந்தம் என்று அடிக்கடி கேள்விபடுகிறோமே, அதில் சித் என்கிற பேரறிவான ஞானம் அம்பிகைதான். சைதன்ய ரூபிணி என்பார்கள். "சிதேக ரஸ ரூபிணி"என்று (லலிதா) ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. காளஹஸ்தியில் ஞானாம்பாள் என்றே அவள் பிரகாசித்துக் கொண்டிருக்கிறாள்.

அம்பாள்தான் குரு ரூபத்தில் வருபவள் என்று பெரியவர்கள் அநுபவத்தில் சொல்லியிருக்கிறார்கள். காளிதாஸன் ('நவரத்ந மாலிகா'வில்) '' **தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்** '' என்கிறார். அம்பாள் தன்னுடைய காருண்ய விலாஸத்தை குரு ஸ்வரூபமாக வந்தே காட்டுகிறவள் என்று அர்த்தம். 'தேசிக'என்பதும் குரு, ஆசார்ய என்பவை போல நம்மை நல்ல வழிக்கு நடத்திக் கொண்டு போகிறவரைக் குறிக்கும் இன்னொரு வார்த்தை. (வைஷ்ணவர்களில்) வடகடலை ஸம்ப்ரதாயத்துக்கு மூலபுருஷரை வேதாந்த **தேசிகர்** என்றே சொல்கிறோம். அந்த ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள் தேசிகர் என்று 'ர்'போடாமல், தேசிகன் என்று 'ன்'போட்டே சொல்வார்கள். ரொம்பவும் மரியாதை முற்றி அன்பு மேலிடுகிறபோது ஏகவசனம்தான் வந்துவிடும். பகவானையே 'நீ'என்றுதான் சொல்கிறோம்;'நீங்கள்'என்பதில்லை. அப்படி தேசிகரை தேசிகன் என்றே அவரை அநுஸரிப்பவர்கள் பிரேமையினால் சொல்வார்கள். நம் பகவத்பாதாளை அவர் காலத்திலேயே அவருடைய நேர் சிஷ்யரான தோடாகாசார்யார் ஸ்தோத்திரித்தபோது, "சங்கர தேசிகமே சரணம்"என்றே ஒவ்வொரு அடியிலும் முடித்திருக்கிறார்*.

அம்பாள் தேசிக ரூபத்தில் வந்து ஞானம் தருவதாகச் சொல்லியிருக்கிறது. குறிப்பாக ஸ்பர்ச தீக்ஷை, நயன தீக்ஷை, மானஸ தீக்ஷை ஆகியற்றில் ஒவ்வொன்றையும் அவள் ஒவ்வொரு ரூபத்தில் செய்வதாகச் சொல்வார்கள்.

இங்கே இன்னொன்று சொல்ல வேண்டும். ஸ்பரிச தீக்ஷைக்குக் 'குக்குட தீக்ஷை'என்று இன்னொரு பெயர். 'கோழி தீக்ஷை'என்று அர்த்தம். நயன தீக்ஷைக்கு 'மத்ஸ்ய தீக்ஷை'(மீன் தீக்ஷை) என்றும் பேர். மானஸ தீக்ஷைக்குக் 'கமட தீக்ஷை'என்று பேர். 'கமடம்'என்றால் ஆமை.

கோழி, மீன், ஆமை என்று தீக்ஷைகளைச் சொல்வது வேடிக்கையாயிருக்கிறது. ஆனால் வேடிக்கைக்குள்ளே தத்வார்த்தம் நிரம்ப இருக்கிறது.

ஒரு தீக்ஷையானது நிஜமான சக்தி வாய்ந்ததாக இருந்தால், சிஷ்யனுக்கு இதுவரை இருந்த அசட்டு வாழ்க்கை அதோடு முடிந்து, அவன் பாரமார்த்திகமாக ஒரு புது வாழ்க்கை

ஆரம்பித்துவிடுவான். அதாவது அது உசந்ததாகப் புனர்ஜன்மா எடுக்கிற மாதிரியாகும். காயத்ரீ தீக்ஷையானவுடன் இப்படித்தான் ஒருவன் பிராம்மணனாக இரண்டாம் ஜன்மா எடுக்கிறானென்ற அர்த்தத்தில், அவனுக்கு 'த்விஜன்'என்றும், 'இருபிறப்பாளன்'என்றும் பெயர் ஏற்பட்டிருக்கிறது.

---

*ஒரு தேசத்தின் எல்லா இடங்களையும் அறிந்து பிறருக்கு வழிகாட்டுபவருக்கு தேசிகன் எனப் பெயரென்றும், இதுவே உவமையாகு பெயராக ஒரு சாஸ்திரத்தின் எல்லா நுட்பங்களையும் அறிந்து அம்மார்க்கத்தில் பிறருக்கு வழி காட்டியாயிருக்கும் ஆசாரியருக்கும் பொருத்தப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

இப்படி தீக்ஷைக்கு முன்னாலே ஒரு ஜன்மா, அப்புறம் முற்றிலும் வேறான இன்னொரு ஜன்மா என்று சொல்வது அவ்வளவு ஸரியில்லை என்கிற அபிப்ராயத்தில் இன்னொரு விதமாகவும் சொல்கிறதுண்டு. இதன்படி, இப்போது ஒருத்தன் எடுத்திருக்கிற ஜன்மாவிலே அவன் அசட்டு அஞ்ஞான ஸ்திதியிலிருந்தாலும் இப்போதுங்கூட உள்ளுக்குள்ளே பிரம்மத்தோடு பேதமில்லாத ஆத்மாவாகத்தானிருக்கிறான். ஆனால் இப்போது இது இவனுக்குத் தெரியாமல் ஒரு கருவை அது முட்டையாயிருக்கும்போது ஓடு மறைக்கிறது போல, அஞ்ஞான ஓடு மூடி மறைந்திருக்கிறது. குரு என்பவர் தீக்ஷை என்பதன் மூலம், தாய்ப் பறவை முட்டையை அடைகாத்துக் குஞ்சு பொரிப்பது போல, இவனுடைய அஞ்ஞான ஓடு பிளந்து, இவன் தன் ஸத்ய நிலையை உணர்ந்த பக்ஷியாகப் பிறக்கச் செய்கிறார் என்பார்கள். அதாவது இரண்டு வெவ்வேறு ஜன்மாக்கள் இல்லை;b¬þ,° º¡«ù º†¬ì,è¼ «ð£ô ºìƒA, Aì‰î G¬ô;ÜîŸ°Š HŸð£´ Ü¶«õ võî‰Fóñ£èŠ ðø,°‹ G¬ô.

தாய் முட்டையைக் குஞ்சு பொரிப்பதில் மூன்றுவகை சொல்கிறார்கள். இங்கேதான் கோழி, மீன், ஆமை மூன்றும் வருகின்றன. தாய்க்கோழி என்ன செய்கிறது?முட்டையின் மேலேயே உட்கார்ந்து, அதாவது அதன் மேல் தன் ஸ்பரிசம் நன்றாகப் படும்படி அடைகாத்துக் குஞ்சு பொரிக்கிறது. இதுதான் ஸ்பரிச தீக்ஷை-குரு சிஷ்யனைத் தொட்டு அவனுடைய அறியாமை ஓட்டைப் பிளக்கப் பண்ணுவது. குக்குட தீக்ஷை என்ற பெயர் இப்போது புரிகிறதல்லவா?மீன் ஜலத்துக்குள் முட்டை போடுகிறது. பிரவாஹத்தில் மீன் ஒரு இடமாக நிற்காமல் சஞ்சாரம் செய்துகொண்டேயிருக்கும். முட்டையும் ஓடுகிற ஜலத்தில் ஒரு இடத்தில் நிற்காமல் மிதந்துகொண்டே இருக்கும். தாய் மீன் முட்டையின் மேலே உட்கார்ந்து குஞ்சு பொரிப்பதில்லை. பின்னே என்ன செய்கிறது?இதைப்பற்றி பயாலஜி, ஜூவாலஜியில் என்ன சொல்வார்களோ, நம் சாஸ்திரங்களும் காவியங்களும் ஒரு மரபாகச் சொல்லி வருவதை நானும் ஒப்பிக்கிறேன். தாய் மீன் என்ன செய்யுமென்றால், முட்டையைத் தன் கண்ணால் தீக்ஷண்யமாகப் பார்க்குமாம். உடனே முட்டையை உடைத்துக் கொண்டு மீன் குஞ்சு வெளியில் வந்து விடுமாம். குரு கடாக்ஷம் செய்கிற நயன தீக்ஷையை மத்ஸ்ய தீக்ஷை என்பது இதனால்தான். கமட தீக்ஷை, அதாவது ஆமை தீக்ஷை என்றனே அது என்ன?ஜலத்திலே இருந்து தாய் ஆமை கரைக்கு வந்து முட்டையிட்டுவிட்டு, அப்புறம் ஜலத்துக்குள்ளேயே எங்கேயோ போய் விடுமாம். முட்டை ஒரு இடத்தில் கிடக்க, தாயோ எங்கேயோ போயிருக்குமாம். ஆனாலும் அது முட்டை குஞ்சு ரூபமாக நல்லபடி பொரிய வேண்டுமே என்ற சிந்தனையாகவே இருக்குமாம். அதனுடைய அந்தத் தீவிர நினைப்பின் சக்தியிலேயே இங்கே முட்டை வெடித்துக் குஞ்சு வெளியே வந்துவிடுமாம். இதுதான் குரு செய்கிற மானஸ- அல்லது கமட தீக்ஷை. அம்பாள் இந்த மூன்று தீக்ஷைகளை அளிப்பது எப்படி?

அம்பாளுக்கு கண்ணழகை, கடாக்ஷ விசேஷத்தை வைத்து மூன்று பிரஸித்த க்ஷேத்ரங்களில் மூன்று விதமான ரூபங்கள் இருக்கின்றன. காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி என்னும் ரூபங்கள். காஞ்சீபுரத்தில் காமாக்ஷியாகவும், மதுரையில் மீனாக்ஷியாகவும், காசியில் விசாலாக்ஷியாகவும் இருக்கிறாள். மூன்றிலும் கண்ணழகு, கடாக்ஷ விசேஷம் என்று சொன்னாலும் மூன்றிலுமே நயன தீக்ஷை தருகிறாள் என்று சொல்வதில்லை. மீன்தானே நயன தீக்ஷைக்குச் சொன்னது?மீனாக்ஷி என்ற பெயரிலேயே மீன் இருக்கிறதே!இதனால் அவளைத்தான் கடாக்ஷத்தாலேயே ஞான தீக்ஷை தந்துவிடும் குருவாகச் சொல்லியிருக்கிறது. இது மத்ஸ்ய தீக்ஷை. காமாக்ஷி பக்தனை ஸ்பரிசித்து, அவன்

தலையிலே பாதத்தை வைத்து ஞானியாக்கிவிடுபவள்.

"ªú÷%‰î˜òôýK"v«î£ˆFK,Aø Í˜ˆF è£ñ£V î£¡-è¼‹¹ M™, ¹wð ð£í‹, ð£ê Üƒ°êˆ«î£´ ê¶˜¹¬üò£è Þ¼,Aø Í˜ˆF. ÜF«ô å¼ v«ô£èˆF™ Ýê£˜ò£œ Ü‹ð£Oì‹, "«õîƒèœ àðGûˆ¶ â¡Aø îƒèÀ¬ìò CóR«ô î£ƒA, ªè£‡®¼,Aø¬õò£ù à¡Â¬ìò F¼õ®è¬÷ â¡ î¬ôJ™Ãì î¬òJù£™ ¬õò‹ñ£!"â¡Á Hó£˜ˆF,Aø£˜.

ச்ருதீநாம் மூர்தாநோ தததி தவ யௌ சேகரதயா

மமாப்யேதௌ மாத : சிரஸி தயயா தேஹி சரணௌ மி

உபநிஷத்துக்கள்தான் வேதாந்தம் என்பது. ஆசார்யாளின் அத்வைதமான ஞானமார்க்கத்துக்கு வேதாந்த ஸம்ப்ரதாயம் என்றே பெயர். அதனால் இங்கே ஆசார்யாள் ஞான குரு ரூபிணியாகவே அம்பாளை பாவித்துத் திருவடி தீக்ஷை வேண்டுகிறார் என்று ஆகிறது. அதற்குக் காமாக்ஷியிடம் ஸ்பர்சமான குக்குடதீக்ஷை கேட்டிருக்கிறார். காசியிலே இருக்கப்பட்ட விசாலாக்ஷி பக்தர்களை அநுக்ரஹ சிந்தையோடு மனஸால் நினைத்தே ஞானம் அளித்துவிடும் கமட தீக்ஷை குருவாயிருப்பவள்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------------------

* "„ÏFï£‹ Í˜î£«ï£" â¡Á ªî£ìƒ°‹ 84-õ¶ v«ô£è‹. Þ¶ °P˜î Cô Mõóƒèœ "ªîŒõˆF¡ °ó™" ºîŸ ð°FJ™ "Ýê£Kò£œ è£†´‹ Ü‹ð£œ" â¡ø à¬óJ™ è£íô£‹.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### ஒரே நிறைவுக்குப் பல மார்க்கங்கள்

**இ** ப்படி தீக்ஷையில் பல விதம். தீக்ஷையினால் சிஷ்யனைச் செலுத்துகிற மார்க்கங்களும் பல விதம். கடைசியில் போய் சேருகிற இடம் ஒன்றேயானாலும், ஆரம்பத்தில் தீக்ஷையால் தூண்டிவிடுகிற போது - 'இனிஷியேட்'பண்ணுகிறபோது - பல மார்க்கங்களில் பல குருமார்கள் செலுத்துகிறார்கள். ஒரே குருவேகூட வெவ்வேறு சிஷ்யர்களை வெவ்வேறு மார்கங்களில் இனிஷியேட் பண்ணுவதுமுண்டு. ஆனால் ஆசார்யர் என்றால் அவர் ஒரு ஸிஸ்டத்தில்தான் பண்ணுவார். ஒரு குரு ஒரே சிஷ்யனுக்குக்கூட அவனுடைய மனோவ்ருத்தியை (மனப்போக்கை)ப் பொருத்தும், ஸாதனையில் அவனுடைய அபிவ்ருத்தியைப் பொருத்தும் வேறு வேறு காலங்களில் வெவ்வேறு மார்க்கங்களில் தீக்ஷை கொடுத்துக் கொண்டே போகலாம்.

இப்படி மந்த்ர சாஸ்திரம், தந்த்ர சாஸ்திரம், யோக சாஸ்திரம், த்வைத-அத்வைத சாஸ்திரங்கள் என்று பலவற்றில் தீக்ஷை தருகிற குருமார்கள் இருக்கிறார்கள். தாயுமானவர் இப்படி எல்லா குருவாகவும் இருந்ததாக தம்முடைய ஒரே குருவைச் சொல்லி முடிவாக, " **மூலன்மரபில் வரு மௌனகுருவே !''** என்று முடிக்கிறார். 'திருமந்திரம்'செய்த திருமூலர் அந்த நூலில் எல்லா மார்க்கத்தையுந்தான் சொல்லி யோக-ஞானங்களில் முடிக்கிறார். அவரிலிருந்து ஆரம்பித்து ஒரு குரு பரம்பரை. அவர்களில் திருச்சிராப்பள்ளியில் மடம் ஏற்படுத்திக் கொண்ட ஸாரமா முனிவர் ஒருவர். இந்த மடத்தில் பட்டத்துக்கு வந்தவர்களில் ஒருவரான மௌன குரு ஸ்வாமிகள் என்பவர்தான் தாயுமானவருக்கு குரு. தாயுமானவர் காலம் பதினேழாம் நூற்றாண்டு. (மௌன குரு ஸ்வாமிகளுக்குப் பிறகு அந்த மடம் தர்மபுர ஆதீனத்தின் பராமரிப்பில் வந்துவிட்டது.)

தாயுமானவர் இங்கே தம்முடைய நேர் குருவான மௌன குருவைச் சொன்னாலும், அவர் சொல்வது மற்ற எல்லா மார்க்கமும் மௌனத்தில்தான் கொண்டுவிடுகிறது என்று சொல்லி, இப்படி மௌன உபதேசத்தாலேயே பரம அத்வைதத்தை அநுக்ரஹிக்கும் தக்ஷிணாமூர்த்தியை ஸ்தோத்திரிக்கிறாற்போலவும் த்வனிக்கிறது. இவரே '' **சிரகிரி**

**விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே, சின்மயானந்த குருவே** '' என்றும் நிறையப் பாடி வைத்திருக்கிறார்.

அந்த மௌனந்தான் நம்முடைய நிஜமான இயல்பு. ஆனால் அதைத்தான், நம்முடைய நிஜமான நம்மையேதான், நாம் இழந்து, மறந்துவிட்டு, இல்லாத அவஸ்தைகளிலெல்லாம் மாட்டிக் கொண்டிருக்கிறோம். இதை மாயை என்கிறார்கள். மாயைதான் அம்பாள் என்கிறார்கள். அந்த அம்பாளே மாயையைப் போக்கடிக்க ஞானாம்பிகையாகவும் வருகிறாள். குருவாக வந்து ஞானத்தைப் புகட்டுகிறாள். தாயாரே குருவாகி ஞானப்பாலை ஊட்டுகிறாள். அவள் எல்லாவற்றிலும் தினுஸு தினுஸாகப் பண்ணிப் பார்த்து ஸந்தோஷிக்கிறாள். பக்ஷி என்றால் பல தினுஸு. மிருகங்களில் பல தினுஸு. புஷ்பம் என்று எடுத்துக் கொண்டால் அதில் முடிவே இல்லாமல் எத்தனை கலர் வகை, வாஸனை வகை, எத்தனைவிதமான 'ஷேப்'?இப்படியே மநுஷ்ய மனஸிலும் விசித்ர விசித்ரமாக எத்தனையோ ரகம். அது ஒவ்வொன்றுக்கும் 'ஸூட்'ஆகிறதற்காகத்தான் ஞானகுரு ஆசாரியர்களிலும் பலவிதமானவர்களை, பலவித ஸம்பிரதாயங்களைக் காட்டுபவர்களாக வைத்திருக்கிறாள். எத்தனை பேச்சு, வாதம், எழுத்து, க்ரியைகள் உண்டோ அத்தனையும் உள்ள குருவிலிருந்து மௌனகுரு வரையில் பல வகையாகக் காட்டுகிறாள். ஆனால் உள்ளே இத்தனை பேரும் ஒரே குருத்வத்தைதான் உடையவர்களாக இருப்பார்கள். ஸத்யம் ஒன்றாகத்தானே இருக்க முடியும்?

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### குரு-ஆசார்ய அபேதம்

**ஆ** க, மொத்தத்தில் நான் சொன்னது;நமக்கு ஞானம் தருவதற்காக ஏற்பட்டவர்களையே குரு, ஆசார்யர் எனற இரண்டு பெயரில் சொல்வது. உள் பெருமையை வைத்து ஒருத்தரை குரு என்கிறோம். வெளிநடத்தை, படிப்பு, வெளி மநுஷ்யர்களை **train** பண்ணுவது ஆகியவற்றில் இருக்கிற பெருமையை வைத்து இன்னொருத்தரை ஆசார்யர் என்கிறோம். ஒருத்தர் ஸிஸ்டத்துக்கு அதீதமானவர். இன்னொருத்தர் ஸிஸ்டத்திலேயே வருகிறவர். ஒருத்தர் அநுக்ரஹத்தாலேயே முக்யமாக ஞானம் தருகிறவர். மற்றவர் சாஸ்த்ர, ஸம்ப்ரதாய, ஆசார அநுஷ்டானம், வித்வத் இவற்றின் மூலம் ஞானம் பெற உதவி பண்ணுகிறவர்.

இப்படி இரண்டு பேராகச் சொன்னாலும், ஆசார்யர் என்பவர் பூர்ண யோக்யதை உள்ளவராக இருந்தாரானால் தாமே குருவாகவும் இருப்பார். அதாவது, தம்மைப் பொறுத்தமட்டில் உள்ளுக்குள்ளே ஸிஸ்டம்கள் கடந்தவராக, ப்ரத்யக்ஷமாக ஈஸ்வராநுபவமும் ஆத்மாநுபவமும் பெற்ற பெருமை வாய்ந்தவராக, அநுக்ரஹ சக்தி கூடியவராக இருந்துகொண்டே, வெளிநடத்தை படிப்பு இவற்றிலும் சிறந்தவராக இருந்துகொண்டு, ஒரு ஸிஸ்டத்துக்குக் கட்டுப்பட்டாற்போல் வாழ்ந்து காட்டிக் கொண்டு மற்றவர்களுக்கு வித்யை, ஆசரணை இவற்றை போதனை பண்ணி அவர்கள் அவற்றைப் பின்பற்றுமாறு செய்வார். நம்முடைய ஆசார்ய புருஷர்கள் யாவரும் இப்படி இருந்தவர்கள்தான். குருவின் க்ஷணகால அநுக்ரஹத்தாலேயே சுத்தியும் ஞானமும் பெறுகிற யோக்யதை உள்ளவர்கள் ரொம்பவும் ஸ்வல்பமே இருப்பார்களாதலால் இப்படி ஆசார்யனாக நீண்ட கால போதனை ஸிஸ்டமாடிக்காகச் செய்பவராகவே பொது ஸமூஹத்திற்காக ஒரு குரு இருப்பது வழக்கம்.

ஸரியாகப் புரிந்து கொண்டோமானால் ஒரு நிஜமான ஆசார்யன் குருவாக இல்லாமலிருக்க முடியாது. உள்ளுக்குள்ளே பெருமை இல்லாத ஒருத்தன் எப்படி வெளியிலே பெரியவனாக இருக்க முடியும்?

கட்டுப்பாடு என்ற feeling-ஓடு, அதாவது கட்டுப்பட்டிருக்கிறோம் என்ற feeling-ஓடு ஒரு ஆசார்யான் ஒரு ஸம்ப்ரதாயத்துக்கு - அதாவது தார்மிகமான ஸிஸ்டதுக்கு - அடங்கி, அதில், சொல்லியிருக்கிறபடி ஸதாசாரத்துடன், நன்னடத்தையுடன் வாழ்கிறானென்றால்

அப்போது அவன் ஆசார்யனில்லை, மாணாக்கன்தான். எப்போது ஒழுக்கமான நடத்தை என்பது ஒரு சட்டமாக வெளியிலிருந்து வந்து கட்டுப்படுத்தாமல், தன்னியல்பாகப் பின்பற்றபடுகிறதோ அப்போதுதான் அது சுத்தமான பூர்ண ரூபத்தில் பிரகாசிக்கும். கம்பல்ஸரியாக இல்லாமல் நாச்சுரலாக ஒழுக்க வாழ்வு வாழ்கிற போதுதான் அதில் ஸ்வதந்த்ரத்துக்கே உரிய ஸௌக்யமும் நிறைவும் இருக்கும். மனம்போனபடி திரிகிற நாம் முதலில் ஒரு கம்பல்ஷனின் கீழ்தான் ஒழுக்க நெறிக்கு உட்பட்டு நடக்க ஆரம்பிக்க வேண்டும். ஆனால் இப்படி கம்பல்ஷன் இருக்கிற வரையில் நாம் மாணவனாக, சிஷ்யனாக இருப்பவர்கள்தான். போகப் போக, எதை நிர்ப்பந்தமாக ஏற்றுச் செய்ய ஆரம்பித்தோமோ அதையே ஸ்வதந்த்ரமாக, நம் ஸ்வபாவமாக ஆக்கிக் கொண்டு செய்யத் தொடங்கி விடுவோம். இப்படி ஒழுக்கத்தை ஸ்வாபாவிகமாக்கிக் கொண்டு ஸ்வதந்த்ர ஸௌக்யத்துடனேயே ஒருத்தன் பின்பற்றுகிற போதுதான் அவனுடைய வாழ்க்கைக்கு மற்றவர்களையும் follow பண்ண வைக்கிற சக்தி உண்டாகும். இப்படிப்பட்ட நிலையிலிரு ந்துகொண்டு ஒருத்தன் போதனை பண்ணினால்தான் அது பிறரிடம் ஆழமாகப் பதிந்து அவர்களையும் அப்படியிருக்கத் தூண்டும்.

இப்போது ஆசார்யர்களின் இடத்திலிருக்கிற ஆசிரியர்களுக்கு அறிவு மட்டும் இருந்தால் போதும், அவர்களுடைய அநுஷ்டானத்தைப் பற்றிக் கவலையில்லை என்பதாயிருக்கிறது. பழைய நாளில் அநுஷ்டானமும் சேர்ந்தே ஒருத்தனை 'ஆசார்யன்'என்ற ஸ்தானத்துக்குத் தக்கவனாக ஆக்கிற்று. இந்த அநுஷ்டானம் என்பதும் முடிந்த முடிவு இல்லை;இது வெளிநடத்தைதான். அநுஷ்டானமும் பூர்த்தியாகிற இன்னொரு இடம் உண்டு. அந்த இடம்தான் அநுபவம், ஸ்வாநுபூதி. அந்த அநுபவம் ஏற்பட்டால்தான் நன்னடத்தை என்பது ஸ்வபாவமாக அமையும். அதாவது வெறும் அறிவு எப்படி அநுஷ்டானத்தின் ஆதாரத்தில்தான் முழுமை பெறுகிறதோ, அப்படியே அநுஷ்டானமும் அநுபவத்தின் அஸ்திவாரத்தில்தான் பலமும் பூர்ண ரூபமும் பெறுகிறது. ஆகையால் அநுபவியாக இருக்கிறவன் குரு, அநுஷ்டாதாவாக இருப்பவன் ஆசார்யன் என்று 'டிஸ்டிங்க்ஷன்'சொல்வது ஸரியான விஷய ஞானத்தோடு செய்கிற பாகுபாடே இல்லை. ஆசார்யன் அரைகுறை அநுஷ்டாதாவாக இருக்க முடியாது. அநுபவம் வருகிறவரையில் அவன் அரைகுறைதான் - ஒரு நிர்ப்பந்தத்தின் மேலேயே அநுஷ்டானம் பண்ணுபவனாகத் தானே இப்போது இருக்கிறான்?இதில் நிறை ஏது?குறைதான் இருக்கும்!எனவே அநுபவியாகவும் இருந்து கொண்டே அநுஷ்டாதாவாகவும் வாழ்ந்து காட்டுகிறவன்தான் நிஜமான ஆசார்யன் என்று ஏற்படுகிறது. எவன் உள்ளே வெளியிலே அநுஷ்டாதாவான ஆசார்யனாகவும் இருப்பது. எவன் உள்ளே ஸிஸ்டத்துக்கு அதீதமாயிருக்கிறானோ, அவனேதான் இஷ்டப்படி திரிகிறவர்களை ஒரு கட்டுப்பாட்டில் கொண்டுவர வேண்டும் என்பதற்காக, அதற்குத் தானே மாடலாக வெளியிலே ஸிஸ்டப்படி இருக்கிறான். உள்ளே மௌனமாயிருந்து கொண்டே வெளியில் நிறைய உபதேசம், உபந்நியாஸம் செய்கிறான்.

குருவும் ஆசார்யனும் ஒரே ஆஸாமிதான். நிஜமான ஆசார்யன் என்றால் அவன் குருவாக இல்லாமலிருக்க முடியாது. விஷயமே தெரியாத நிலையில் நாம் குரு, ஆசார்யன் இரண்டையும் ஒன்றாக நினைத்துதான் சொல்லிக் கொண்டிருக்கிறோம். "அப்படியில்லை;விஷயம் தெரிந்தவர்கள் இந்த இரண்டுக்கும் கொஞ்சம் வித்யாஸம் சொல்கிறார்கள்"என்று ஆரம்பித்தேன். அந்த வித்யாஸங்களையும் சொன்னேன். அப்புறம் விஷயம் தெரிந்தவர்களாக மட்டுமில்லாமல், அதன் ஆழத்துக்குப் போய்ப் புரிந்து கொள்ளப் பார்த்தால், மறுபடியும், "வித்யாஸமே இல்லை. இரண்டும் ஒன்றுதான்"என்று தெளிவாவதை இப்போது பார்க்கிறோம்!

ஆதியிலிருந்தே, இப்படி குருவுக்கும் ஆசார்யனுக்கும் பேதம் கற்பிக்காததால்தான் இரண்டு வார்த்தைகளையும் synonymous-ஆக (ஒரே பொருள் உள்ளதாக)க் கருதி உபயோகித்திருக்கிறார்கள். வேதத்தின் சிரஸான உபநிஷத்தில், "ஆசார்ய தேவோ பவ"என்றும், வித்யாப்யாஸ முடிவில் 'ஆசார்ய'னுக்குப் பிரியமான தக்ஷிணையைத் தர வேண்டுமென்றும், எவன் ஆசார்யானை உடைய 'ஆசார்யவானா'க இருக்கிறானோ அவனுக்கே ஞானமுண்டாகிறதென்றும் - எல்லா இடத்திலும் 'ஆசார்ய'சப்தமே

சொல்லப்பட்டிருக்கிறது;'குரு'என்று இல்லை. ஆனாலும் சிஷ்யர்கள் ஆசார்யனிடத்தில் போய் வஸித்து வித்யாப்யாஸம் பண்ணுவதற்கு 'குருகுலவாஸம்'என்றே பெயர் இருந்திருக்கிறது. 'ஆசார்ய குருகுலவாஸம்'என்று கேள்விப்பட்டதில்லை. ஆசார்யாளுக்கு நன்றி தெரிவித்து ஆராதிக்கிற தினத்தை 'குரு பூர்ணிமை'என்று தான் சொல்கிறோம். வ்யாஸாசார்யாள், சுகாசார்யாள், கௌடபாதாசார்யாள், கோவிந்தபாதாசார்யாள், (சங்கர) ஆசார்யாள், ஸுரேச்வராசார்யாள், தோடகாசார்யாள், என்றெல்லாம் இருக்கும் ஆசார்யார்களைச் சேர்த்துச் சொல்கிற போது 'குரு பரம்பரா'என்று சொல்கிறோம். இப்படியே ராமாநுஜாசார்யார், வல்லபாசார்யார், மத்வாசார்யாரை சேர்ந்தவர்களும் சொல்கிறார்கள். ஆசார்ய புருஷர்களுக்கு நமஸ்காரம் பண்ணுவதை 'குரு வந்தனம்'என்றே சொல்கிறோம்.

பண்டைத் தமிழ் வழக்கு பூர்ணமாக வைதிகத்தை அநுஸரித்துதான் இருக்கும். ஆனதால் "மாத்ரு, பித்ரு, ஆசார்ய தேவோ பவ"என்ற வேத வாக்யத்தையொட்டித் தமிழில் "மாதா, பிதா, குரு, தெய்வம்"என்று சொல்கிற வழக்கம் ஏற்பட்டிருக்கிறதென்றால், ஆசார்யன் என்பவனே குருவாக இருந்திருக்கிறான் என்று தீர்மானிக்கிறது. (ஆசார்யன் என்பதை 'ஆசான்'என்று தமிழில் சொல்லியிருக்கும்.) ஸித்தாந்த சைவத்தில் மெய்கண்டாச்சாரியார், ஸமயாசாரியார், ஸந்தனாசாரியார், சிவாசாரியார் என்றெல்லாம் 'ஆசார்யப்'பெயரே கொடுத்துச் சொல்லுகிறார்களென்றாலும், இவர்களுடைய ஆராதனையை (நினைவு நாள் வழிபாட்டை) 'குரு'பூஜை என்று குறிப்பிடுகிறார்கள்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### ஆசானை ஈசனாக

**ஆ** கையால், நம்மைப்போல பந்த நிலையிலில்லாமல் விடுபட்டு ஸ்வதந்திர புருஷராக இருக்கிற குருவேதான் நம்மை ஒரு ஒழுங்கிலே கட்டுப்படுத்துவதற்காகத் தாமும் அந்த ஒழுக்கத்தில் கட்டுப்பட்டு வாழ்ந்து காட்டி நமக்கு போதனை செய்கிற ஆசார்யராக இருக்கிறார் என்று புரிந்து கொண்டு நம்முடைய ஆசார்ய புருஷர்களிடம் பக்தி செலுத்த வேண்டும். ஈஸ்வரனேதான் இப்படி குரு, ஆசார்யர் என்ற ரூபத்தில் வந்து ஞானாநுக்ரஹம் செய்கிறான் என்று நினைத்து பக்தி பண்ணினால் பலன் சீக்கரத்தில் கிடைக்கும். ஈஸ்வரன்தானே எல்லாமுமாகி இருப்பது?கல்லு, மண்ணு எல்லாங்கூட அவன்தான். அதனால் ஆசார்ய ஸ்வரூபமாக, குரு வடிவாக இருப்பவன் அவன்தான் என்பதில் என்ன ஆக்ஷேபணை?

இப்படிப் பார்த்தால், நாம் மட்டும் அவனில்லாமல் யார் என்று கேள்வி வருகிறது. நாமே ஈஸ்வரன் என்கிறபோது ஆசார்யன் என்று இன்னொருத்தனை எதற்காக ஈஸ்வரனாக உபாஸிக்க வேண்டும் என்பது அடுத்த கேள்வி.

எல்லாம் அவன்தான் என்றாலும் ஒன்றுக்கும் தன்னுடைய ஈஸ்வரத்வம் தெரியவில்லையே!நமக்கு நம் ஈஸ்வரத்வம் கொஞ்சமாவது தெரிகிறதா?தெரிந்தால் இத்தனை ஆசை, கோபம், பயம், அழுகை, பொய், பாபம் இருக்குமா? அதனால் எல்லாம் அவன் என்றாலும், பூர்ணமான அவனாகத் தன்னைத் தெரிந்துகொள்ளாமல் அவனே போட்டுக் கொண்ட வேஷங்களாகத்தான் இருக்கின்றன. நாமெல்லாம் நன்றாக அஞ்ஞான வேஷம் போட்டுக்கொண்டு, மூல ஆஸாமியை அடையாளமே கண்டுகொள்ள முடியாதபடி ஆனவர்களாக இருக்கிறோம். ஆசார்யர் என்பவர் இத்தனை கோணா-மாணா வேஷமாக இல்லை. அவரிடம் ஆஸாமியை அடையாளம் கண்டுகொள்ள முடிகிறது. அதனால் அவரிடம் ஈஸ்வரத்வத்தை நாம் பக்தி பண்ணினால் கண்டு அநுபவிக்கலாம். நம்மிடமே தெரிந்து கொள்ள முடியாத தெய்வத்தன்மையை அவரிடம் ஸுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். பல தினுஸாக வேஷம் போடுகிற ஒரே ஈஸ்வரன்தான், ரொம்பவும் அசட்டு வேஷமான நம்மை சமர்த்தாக்குவதற்கே, ஸ்பெஷலாக ஆசார்ய வேஷத்தில்

வந்திருக்கிறான். இப்படி உணர்ந்து அவரிடம் பக்தி பண்ணினால் அப்புறம் அங்கே வேஷத்தை முழுசாகவே கலைந்துவிட்டுத் தன்னையே தெரியப்படுத்திக் கொண்டு விடுவான். அப்புறம், அப்புறந்தான் - நம் வேஷத்தின் அசட்டுதனங்களையும் போக்கி, அப்புறம் இந்த வேஷத்தையும் கலைத்து, நாமும் அவனேதான் என்று அறிந்து அநுபவிக்குமாறு அருள் செய்வான்.

முடிந்த முடிவான அந்த நிலைக்குப் போக இப்போது நாம் செய்ய வேண்டியது ஆசார்யரை ஈஸ்வரனாக நினைத்து அவர் உபதேக்கிறபடி நடப்பதுதான்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### குலவழக்கையே கொள்க !

**ந** ம்முடைய பிறப்பு பூர்வ கர்மாவை அநுஸரித்து ஈஸ்வரனாலேயே நிர்ணயிக்கப்படுகிறது என்பதே சாஸ்திரம். அதனால் நாம் ஏதோ ஒரு மதத்தில், ஸம்ப்ரதாயத்தில் பிறந்திருக்கிறோமென்றால், அதுவே கர்மவசாத் ஈஸ்வரனால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என்று அதை வரவேற்று, இதைக் கொண்டே நாம் கர்மாவைப் போக்கிக் கொண்டு நம்மை மேம்படுத்திக் கொள்ள முயல வேண்டும். அவரவர்கள் தாங்கள் பிறந்த ஸம்ப்ரதாயத்தையும் குலாசாரத்தையும் ரக்ஷிக்கிற ஆசார்யார்களின் உபதேசப்படி நடந்தாலே போதும். அதன் தத்துவங்கள் அபூர்ணமாக இருந்தால்கூடப் பரவாயில்லை. கர்ம சேஷத்தினால் அபூர்ணமாக இருக்கிற இந்த ஜீவனுக்கு அந்த சேஷம் தீர இந்த அபூர்ண ஸமயாசாரமே உதவி பண்ணிவிடும். ஈஸ்வரன் என்று ஒருத்தனிடம் அசையாத நம்பிக்கையும், பக்திவிஸ்வாஸமும் வைத்து, "நீ இப்படி ஜன்மா தந்ததால் இந்த ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஆசார்யரை ஆச்ரயிக்கிறேன்"என்று அவனிடம் விட்டுவிட்டுத் தன் குலாசாரத்தை அநுஷ்டித்தால் அவன் ஒரு நாளும் கைவிடமாட்டான். எப்படி, எப்போது, எந்த தினஸில் பூர்ண தத்வத்தை இவனுக்குக் கொடுக்க வேண்டுமோ அப்படித் தானே பண்ணி விடுவான். ஆசார்யன் ஈஸ்வர ஸ்வரூபமே என்ற நம்பிக்கை மட்டும் நமக்கு இருந்து விட்டால் போதும். எந்த குருவிடம் நாம் பிரபத்தி செய்தாலும் (சரணாகதி அடைந்தாலும்) ஈஸ்வரனிடம் பிரபத்தி செய்ததாக ஏற்பட்டு, பலன் ஸித்தித்துவிடும். உபநிஷத் சாந்தி பாட க்ரமத்தில் இதுதான் சொல்லிக் கொடுத்திருக்கிறது.

**யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்**

**யோ வை வேதாச்ச ப்ரஹிணோதி தஸ்மை I**

**தம் ஹ தேவம் ஆத்ம் புத்தி ப்ரகாசம்**

**முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே II ***

ஒரு 'ஸிஸ்ட்'த்துக்குக் கட்டுப்படாவிட்டால் ஒரு மேதாவியின் ஸாமர்த்தியத்தாலே அனர்த்தம்தான் ஏற்படும். இப்படிப்பட்ட மேதாவியால்தான் முட்டாளை விட ஜாஸ்திக் கெடுதல் உண்டாகும். இதை நம் ஆசார்யாள் "உபதேச ஸாஹஸ்ரீ"யிலே சொல்லி, ஒரு ஸம்பிரதாயத்தில் வராத எவனும் மூர்க்கனுக்கு ஸமம்தான் என்கிறார். அதாவது ஞானத்துக்குப் புஸ்தகப் படிப்பைவிட குருபக்தி தான் முக்கியம்.

---

* கருத்து:எவன் ஆதியில் பிரம்மாவைப் படைத்து அவருக்கு வேதங்களைக் கொடுத்தானோ அந்த தேவ தேவனே நம் புத்தியைப் பிரகாசிக்கச் செய்பவன். முக்தி நெறியில் விழைவு கொண்ட நான் அவனையே சரண் புகுகிறேன்.

---

## மஹான்கள் காட்டும் குருபக்தி

### தெய்வங்களும் சீடர்களாக

நமக்கெல்லாம் குருபக்தி போதமாட்டேனென்கிறது. ஆனால் நம் ஸம்பிரதாயங்களுக்கு மூலமான குருமார்களாகவும் முக்யமான குருமார்களாகவும் இருந்த மஹா பெரியவர்களோ தாங்களே தங்கள் குருமார்களிடம் அபாரமான பக்தி செலுத்தியிருக்கிறார்கள்.

ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி. அவருக்கும்கூட ஒரு குருவிடம் தாம் பணிவாக இருந்து, சிஷ்யனாகி, உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று இருந்திருக்கிறது. பரமேஸ்வரனான அவரே தம் சொந்தக் குழந்தையிடம், கைகட்டி, வாய் பொத்திப் பிரணவோபதேசம் வாங்கிக் கொண்டிருக்கிறார்.

ஞானமே வடிவானவள் அம்பாள். அவளும் பதியான ஈஸ்வரனிடம் சிஷ்யையாகி உபதேசங்கள் வாங்கிக் கொண்டிருக்கிறாள். அநேக ஆகம, தந்த்ரங்கள் ஈஸ்வரன் அம்பாளுக்கு உபதேசம் பண்ணினவைதான்.

**ஸ்ரீ ராம ராம ராமேதி ரமே ராமே மநோரமே I**

**ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வராநநே II**

என்பதாக (மும்முறை ராமநாமா சொன்னால் அது ஸஹஸ்ர நாமம் சொன்னதற்கு ஸமானம் என்று) ராம நாம மஹிமையைச் சொல்லும் ஸ்லோகம் அம்பாளுக்கு ஈஸ்வரன் உபதேசித்ததுதான் என்று 'விஷ்ணு ஸஹஸ்ர நாமம்'அறிந்தவர்களுக்குத் தெரிந்திருக்கும்.

ஜம்புகேஸ்வரம் (திருவானைக்கா) போன்ற பல க்ஷேத்ரங்களில் அம்பாள் ஈஸ்வரனிடம் உபதேசம் வாங்கிக் கொள்வதாக ஸ்தல புராணங்களில் இருக்கிறது.

மஹாவிஷ்ணு ராம, க்ருஷ்ண அவதாரங்களில் வஸிஷ்டர், ஸாந்தீபினி ஆகியவர்களிடம் பரம விநயத்தோடு குருகுலவாஸம் செய்திருக்கிறார். க்ருஷ்ண பரமாத்மா ஸுதாமா (குசேலர்) என்கிற ஸப்ரஹ்மசாரியுடன் (கூடப் படித்த மாணவருடன்) காட்டுக்குப் போய் இடி மழையில் ஸாந்தீபனி குருவுக்காக ஸமித்து (சுள்ளி) பொறுக்கிக் கொண்டு வந்திருக்கிறார். ராமர் வஸிஷ்டர் சொன்ன ப்ரகாரமேதான் ராஜ்யபாரம் பண்ணினார். "ராஜ்யபாரம் பண்ண வரமாட்டேன்"என்று சித்ரகூட பர்வதத்தில் அவர் பரதனோடு வந்த வஸிஷ்டரிடம் மறுத்தபோதுகூட, அவரிடம் எத்தனை பணிவுடன் தெரிவிக்கலாமோ அப்படியே செய்து அவருடைய ஸம்மதத்தைப் பெற்றபின் தான் அந்த முடிவை நடத்திக் காட்டினார்.

குரு பரம்பரையில் தத்தாத்ரேயருக்கு ரொம்பவும் உன்னதமான ஸ்தானம் உண்டு. அப்படிப்பட்டவரோ மண்ணு, தண்ணி, மலைப்பாம்பு, குளவி, ஒரு தாஸி, ஒரு வேடன், ஒரு சின்னக் குழந்தை இவை உள்பட இருப்பது நாலு பேரைத் தம்முடைய குரு என்று சொல்லிக் கொண்டு அவர்களிடமிருந்து தாம் இன்னின்ன பாடம் கற்றேன் என்று (பாகவதத்தில்) சொல்கிறார்.

---



### ஆதிசங்கரரின் ஆசார்ய பக்தி

"ஆசார்யாள்"என்ற மாத்திரத்தில் லோகமெல்லாம் நினைத்துப் போற்றும் நம் பகவத்பாதாளுக்கு இருந்த குருபக்தி சொல்லி முடியாது. பத்ரிநாத்தில் அவர் தம்முடைய

குருவான கோவிந்த பகவத்பாதரையும், பரமகுரு (குருவுக்கு குரு)வான கௌடபாதரையும் ஸாக்ஷாத் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாகவே பார்த்து, அப்போதுதான் தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் சொல்லி, அடிக்கு அடி அவர்களை நமஸ்காரம் பண்ணினார், என்று சொல்கிறதுண்டு. இவரே அந்த தக்ஷிணாமூர்த்தியின் அவதாரந்தான். குருவின் மஹிமையை ஆசார்யாள் ஒரு இடத்தில் ச்லாகித்துச் சொல்லும்போது, "பித்தளையைக் கூடப் பொன்னாக்குகிற ஸ்பர்சவேதி மாதிரி குருவானவர் பித்தளை மனஸுக்கரார்களையும் மாற்றித் தங்கமாக ஜ்வலிக்கச் செய்பவர் என்று சொன்னால்கூட குரு மஹிமையை உள்ளபடி சொன்னதாகாது. ஏனென்றால் ஸ்பர்சவேதியில் இருந்த பித்தளை தான் மட்டுமே ஸ்வர்ணமாக ஆகுமே தவிர, மற்ற பித்தளை வஸ்துக்களை ஸ்வர்ணமாக்குகிற ஸ்பர்சவேதியாக மாறாது. ஆனால் குருவை ஆச்ரயித்த சிஷ்யனோ, தான் பூர்ணத்வம் பெறுவதோடு மட்டுமின்றி, தானும் குருவாகி மற்றவர்களுக்குப் பூர்ணத்வம் தருபவனாகி விடுகிறான். அதனால் குரு ஸ்பரிசவேதிக்கும் மேலே"என்கிறார்*. காசியில் பரமேஸ்வரனே சண்டாள வேஷத்தில் வந்துபோது, "ஆத்ம ஞானியான ஒருத்தன் பிராம்மணனாகத்தான் இருக்க வேண்டும் என்றில்லை;அவன் சண்டாளனாகப் பிறந்தவனாயிருந்தாலும் ஸரி, அவனே எனக்கு குரு"என்று பரம விநயமாகச் சொன்னார் - ஜகதாசார்யர் என்று பிருதம் பெற்றவர் இப்படி நடுவீதியில் சொன்னார்*.

-----------------------------------------------------------------------------------------------------------------------------------

* சதச்லோகீ முதல் ஸ்லோகம்

* ஸ்ரீ ஆதிசங்கரரின் குரு பக்தி குறித்து மேலும் சில விவரங்கள் "தெய்வத்தின் குரல்" : இரண்டாம் பகுதியில் "குரு பக்தி"என்ற உரையில் காண்க.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

### ராமாநுஜரின் குருபக்தி

**ரா** மாநுஜாசாரியார் திருக்கோட்டியூர் நம்பி என்கிற தம்முடைய ஒரு குருவின் வார்த்தையை உல்லங்கனம் பண்ணி (மீறி) எல்லா ஜனங்களுக்கும் உபதேசம் செய்தார் என்று பலர் கேட்டிருப்பீர்கள். ஆனால் அவரே இதே நம்பியிடம் எத்தனை அடக்கத்தோடு நடந்து காட்டியிருக்கிறாரென்றும் வைஷ்ணவ குரு பரம்பரா கதைகள் சொல்கின்றன. உபதேசம் தருவதற்கு முந்தித் திருகோட்டியூர் நம்பி ராமாநுஜாசாரியாரைப் பதினெட்டு தடவை ஸ்ரீரங்கத்திலிருந்து திருகோட்டியூருக்கு நடக்கப் பண்ணிவிட்டே கடைசியில் உபதேசம் கொடுத்தாராம். ராமாநுஜர் கொஞ்சம்கூட முகம் சுளிக்காமல் இப்படி நடையாக நடந்தாராம்.

ஸ்மார்த்தர்கள் ஆசார்யனுக்கு நாலு தரம் நமஸ்காரம் பண்ணுவது வழக்கம். வைஷ்ணவர்கள் ஆசார்யன் போதும் போதும் என்கிற வரையில் பண்ணிக் கொண்டேயிருப்பார்கள். ஒரு தரம் ஸ்ரீரங்கத்துக்கு வந்த திருகோட்டியூர் நம்பி ஜில்லென்று காவேரி ஜலத்திலே (அல்லது படித்துறை மண்டபமாயிருக்கலாம்) நின்று கொண்டிருந்தாராம். வெளியிலே ஆற்றங்கரை மணலோ நல்ல வெயிலில் நெருப்பாகக் கொதித்துக் கொண்டிரு ந்ததாம். அப்படிப்பட்ட மண்ணில் ராமாநுஜர் உடம்பு கன்றிப் போவதையும் பொருட்படுத்தாமல் நமஸ்காரம் பண்ணிக் கொண்டேயிருந்தாராம். அவருடைய குரு பக்தியை சோதனை பண்ணவேண்டும் என்று இப்படிச் செய்த நம்பி அப்புறம் மனஸ் தாங்காமல் அவரை நிறுத்தினாராம்.

---

## தெய்வத்தின் குரல் - மூன்றாம் பகுதி

இதேபோல (சங்கர) ஆசார்யாள், ராமாநுஜர் ஆகியவர்களுடைய நேர் சிஷ்யர்களும் தாங்களே மஹா பெரியவர்களாயிருந்தபோதிலும் தங்கள் தங்கள் ஆசாரியரிடத்தில் அஸாத்யமான பக்தி வைத்திருக்கிறார்கள். ஆசார்யாளின் சிஷ்யர்களில் ஒருவரான தோடகாசார்யார் அவரை "நீங்களேதான் பரமேஸ்வரன்" **(பவ ஏவ பவான்),** "விருஷபத்வஜர் நீங்களே" **(புங்கவ கேதன)** என்று ஈஸ்வர ஸ்வரூபமாகவே தெரிந்து கொண்டு ஸ்துதித்திருக்கிறார். இன்னொரு சிஷ்யரான பத்மபாதரும், ஆசார்யாளிடம் வ்யாஸர் வ்ருத்த ப்ராம்மண வேஷத்தில் வந்து வாதம் நடத்தினபோது, "இதென்ன இப்படி இவர்கள் முடிவே இல்லாமல் வாதம் நடத்திகிறார்களே!"என்று ஆச்சர்யப்பட்டு, இப்பேர்ப்பட்ட பண்டித ஸிம்ஹங்கள் யாராயிருக்க முடியும் என்று பக்தியோடு த்யானித்துப் பார்த்து, **'' சங்கர : சங்கரஸ் ஸாக்ஷாத் வ்யாஸோ நாராயண ஸ்வயம் ''** - "சங்கரர் ஸாக்ஷாத் சிவ பெருமானான சங்கரனே, வ்யாஸரோ மஹாவிஷ்ணு அவதாரம்"என்று சொல்லியிருக்கிறார். வ்யாஸர் செய்த பிரம்ம ஸூத்ரத்துக்கு ஆசார்யாள் செய்த பாஷ்யத்தைப் பற்றித்தான் இப்படி வ்யாஸரே மாறு, வேஷத்தில் வந்து வாதம் நடத்தினார். கடைசியில் பத்மபாதர் இப்படி, 'அவர்தான் விஷ்ணு;ஆசார்யர்களோ பரமசிவன்'என்றவுடன் அவர் தம்முடைய வ்யாஸ ரூபத்தைக் காட்டி, ஆசார்ய பாஷ்யம் தம்முடைய அபிப்ராயத்தையே பூர்ணமாக அநுஸரிக்கிறது என்று மெச்சினார். பிற்காலத்தில் இந்த பத்மபாதரே வ்யாஸ ஸூத்ரத்துக்கு ஆசார்யாள் செய்த பாஷ்யத்தை மேலும் விஸ்தாரப்படுத்தி உரை எழுதினார். அதில் முதல் ஐந்து பாதங்கள் மட்டுமே நமக்குக் கிடைத்திருப்பதால், "பஞ்சபாதிகா"என்கிறோம். அதிலும் பத்மபாதர் குரு வந்தனம் சொல்லும் போது ஆசார்யாளைப் பரமேஸ்வரனாகவே "அபூர்வ சங்கரம்"என்று சொல்லியிருக்கிறார்.

அவருடைய குரு பக்தி மஹிமையால்தான் அவருக்குப் "பத்மபாதர்"என்ற பெயரே வந்தது. அதற்கு முந்தி அவருக்கு ஸநந்தனர் என்று பெயர். அவர் தமிழ் தேசத்துப் பிராம்மணர்;சோணாட்டவர் (சோழ நாட்டுக்காரர்). ஆசார்யாள் தம்முடைய 'மிஷனை'(ஜீவதப் பணியை)க் காசியில் ஆரம்பித்த காலத்திலேயே, அதாவது அவருக்குப் பதினாறு வயஸ் பூர்த்தியாகுமுன்பே ஸநந்தனர் அவரிடம் வந்து சிஷ்யராகச் சேர்ந்து விட்டார். ஆசார்யாள் தம்முடைய பதினாறாவது வயஸிலேயே பாஷ்யமெல்லாம் பண்ணி முடித்துவிட்டு, அதோடு சரீரயாத்ரையையும் முடித்துவிட நினைத்தார். அப்போதுதான் வ்யாஸர் வந்து வாதம் பண்ணி அவரை வாழ்த்தி, அவர் பாஷ்யம் பண்ணினது மட்டும் போதாது, அவரேதான் அதை தேசம் பூராவும் வித்வான்களுடன் வாதம் பண்ணிப் பிரசாரம் செய்து நிலைநாட்டவும் வேண்டும் என்று சொல்லி, அவருக்கு இன்னொரு பதினாறு வருஷம் ஆயுள் கொடுத்தார். அந்த விஷயம் இருக்கட்டும்.

ஆசார்யாள் காசியில் வாஸம் செய்த அப்போது ஒருநாள் அவர் கங்கைக்கு இக்கரையிலும், ஸநந்தனர் அக்கரையிலுமாக இருந்தார்கள். ஆசார்யாளின் வஸ்திரங்களைக் காயப்போட்டு ஸநந்தனர் வைத்துக் கொண்டிருந்தார். ஆசார்யாள் அப்போது சிஷ்யருடைய குரு பக்தியை லோகத்துக்கு வெளிப்படுத்த வேண்டுமென்று நினைத்தார். அதனால் தாம் இருந்த கரையைச் சேரவே ஸ்நானம் பண்ணிவிட்டு, ஈர வஸ்திரத்துடன் நின்றுகொண்டு, அக்கரையிலிருந்த சிஷ்யரிடம் "காய்ந்த வஸ்திரம் கொண்டு வா"என்றார்.

ஆசார்யன் ஒன்று சொல்லிவிட்டால் அதை உடனே பண்ணியாக வேண்டும் என்ற பக்தி வேகம் ஸநந்தனருக்கு வந்து விட்டது. ஆசார்யாள் சொட்டச் சொட்ட ஈரக் காஷாயத்தோடு நிற்கிறாரே என்று அவருக்கு மனஸ் பறந்தது. ஆவேசமாக அன்பு, பக்தி வந்துவிட்டால் அங்கே rational thinking(அறிவுப் பூர்வமான சிந்தனை) எல்லாம் நிற்காது. அதனால் படகு பிடித்துக்கொண்டு போக வேண்டும் என்று ஸநந்தனரால் காத்துக் கொண்டிருக்க முடியவில்லை. எதிரே, அன்னை பெரிசாக, ஆழமாக அலை வீசிக்கொண்டு கங்கா நதி என்று ஒன்று இருப்பதே அவருக்குத் தெரியவில்லையே!அப்புறம் படகைப் பற்றி எப்படி நினைப்பார்?கொஞ்சம் தூரத்தில் ஆசார்யமூர்த்தி ஈரத்துணியுடன் நிற்கிறார், காய்ந்த

வஸ்திரம் கேட்டு அவர் ஆக்ஞை பண்ணிவிட்டார் என்பது மாத்திரம்தான் அவர் புத்தியில் 'டோட்ட'லாக வியாபித்திருந்தது. அதனால் எதிரே ஏதோ ஸம பூமி, கட்டாந்தரை இருக்கிறது போல, அவர் பாட்டுக்கு கங்கைப் பிரவாஹத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்து விட்டார். கங்கையின் ஆழத்தில் முழுகிப் போவோமே, முழுகாமல் நீந்தினால் கூட வஸ்திரம் நனைந்து போய் குருநாதன் போட்ட ஆக்ஞையின் 'பர்பஸே'கெட்டுப்போய் விடுமே என்பதெதுவும் அப்போது அவருக்குத் தெரியவில்லை.

இப்படி ஒரு பக்தி பரவசம் ஏற்பட்டபோது, ஈஸ்வரன் (அந்த ஈஸ்வரன்தான் ஆசார்ய ரூபத்தில் வந்து நின்று கொண்டிருப்பதும்) அதற்கான பெருமையைத் தரமால் போவானா?அதனால் அப்போது ஒரு அதிசயம் நடந்தது. பத்மபாதர் பாட்டுக்குப் பிரவாஹத்தின் மீது நடக்க அவர் அடுத்த அடி வைக்க வேண்டிய இடத்தில் கங்காதேவி நீரோட்டத்துக்கு மேலாக ஒவ்வொரு பெரிய தாமரைப் பூவாகப் புஷ்பித்துக் கொண்டே போனாள். இந்த பத்மங்களில் காலை வைத்துக் கொண்டே ஸநந்தனரும் கங்கையின் மேலே நடந்து போனார். ஆனால் அவருக்கு இப்படித் தாமரைகள் முளைத்துத் தம் அடிவைப்பைத் தாங்குவதும் தெரியாது. தீமிதியில் நெருப்புத் தெரியாது என்றால் இவருக்கு ஜில்லென்று, மெத்தென்று புஷ்பம் இருப்பது தெரியவில்லை.

எல்லாரும் பார்ப்பது அவருடைய குருபக்தி விசேஷத்தைச் வியந்து கொண்டிருக்கு ம்போதே, இப்படி அந்தப் பெரிய நதியைத் தாண்டி இக்கரைக்கு வந்து குருமூர்த்திக்கு வஸ்திரத்தை ஸமர்ப்பித்தார்.

"எப்படியப்பா நீ கங்கையைத் தாண்டி வந்தே?"என்று ஆசாரியாள் வேடிக்கையாகக் கேட்டார்.

அப்போதுகூட ஸநந்தனர் ஆற்றைத் திரும்பிப் பார்த்து பத்மங்கள் முளைத்ததைத் தெரிந்து கொள்ள நினைக்கவில்லை. 'Ý,¬ë ð‡Eù¶ Ýê£˜ò¡. Üõ˜ Ý,¬ë ð‡E M†´ Ü¶ âŠð® G¬ø«õø£ñ™ «ð£°‹?Üõ˜ Ü¸,óý«ñ ï‹¬ñ Üƒ«èJ¼‰¶ Þƒ«è à¼†®, ªè£‡´ õ‰¶M†ì¶'â¡Á Üõ¼,° G„êò‹.

அதனால், தங்களை ஸ்மரித்தால் கடக்க முடியாத ஸம்ஸார ஸாகரமே 'முழங்கால் மட்டும்'ஜலமாகிவிடும்போது, தாங்களே வாயைத் திறந்து ஆக்ஞை பண்ணியிருக்கையில் நான் கங்கையைத் கங்கையைத் தாண்டினது என்ன பிரமாதம்?"என்றார்.

அப்புறம்தான் ஆசார்யாளே அவருக்குப் பத்மங்கள் புஷ்பித்ததைக் காட்டி, அவை இவருடைய பாதத்தை தரித்ததால் "பத்மபாதர்"என்ற பெயரை இவருக்கு வைத்தார்.

ஈஸ்வரனாகவே ஒரு நிலையில் இருந்தாலும், இன்னொரு நிலையில் அவனுடைய பாதபத்மமாக நினைக்கப்படும் பகவத்பாதருக்குப் பொருத்தமாக இப்படி சிஷ்யரும் பத்மபாதராக அமைந்தார்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ராமானுஜ ஸம்ப்ரதாயத்தில்

**ரா** மாநுஜாசார்யாரின் சிஷ்யர்களிலும் இப்படி ஆவேசம், வெறி என்று சொல்லக்கூடிய தீவ்ர குருபக்தி உள்ளவர்கள் உண்டு.

வைஷ்ணவர்களுக்குப் பொதுவாகவே நைச்ய பாவம் (தன்னை ரொம்பவும் தாழ்த்தியாக நினைப்பது) முக்கியம். அதனால் எல்லோரிடத்திலுமே அவர்கள் ரொம்பவும் மரியாதையாக நடப்பார்கள்;பேசுவார்கள். நாம் (வைஷ்ணவரல்லாதார்) "நீங்கள்"என்று சொல்கிற இடத்தில் அவர்கள் "தேவரீர்"என்பார்கள். தங்களை "தாஸன்", "தாஸன்"என்றே எவரிடமும் சொல்லிக் கொள்வார்கள். "ஸேவிக்கிறேன்"என்று சொல்லிக் கொண்டு விழுந்து விழுந்து நமஸ்காரம்

பண்ணுவார்கள். ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர மற்ற ஸம்ப்ரதாயப் பெரியவர்களை "ஸ்வாமி"என்று சொல்வார்கள்;தங்கள் ஸம்ப்ரதாயத்தில் தங்களைவிடப் பெரியவராயிருக்கிற எல்லாரையும் "பெருமாள்"என்றே சொல்வார்கள். வார்த்தை மரியாதை அவர்களுக்கு ரொம்ப ஜாஸ்தி. வேடிக்கையாகச் சொல்வதுண்டு குருவைத் தீர்த்துக் கட்டிவிட்டு, தானே பட்டத்துக்கு வரவேண்டுமென்று சிஷ்யன் அவருக்காகக் குழிவெட்டி வைத்திருந்தானாம். அப்போதுகூட, "தேவரீரே ஏள்றீரா?தாஸன் ஏளப்பண்ணட்டுமா?"(தேவரீர் தாமாகவே குழிக்குள் எழுந்தருளுகிறீர்களா?இல்லாவிட்டால் அடியேன் அப்படி எழுந்தருளபண்ணட்டுமா?") என்று மரியாதையாகத்தான் விக்ஞாபித்துக் கொண்டானாம்!

குரு பரம்பரைக் கதைகள் என்று வைஷ்ணவர்கள் போற்றிப் பாராயணம் பண்ணும் விருத்தாந்தங்களில் நம் நெஞ்சைத் தொடுகிற ஏராளமான குருபக்தி சரித்திரங்களைப் பார்க்கிறோம். பெருமாள் கோயில்களிலும் பாருங்கள், ஆழ்வார்கள் ஸந்நிதி, முக்யமாக ஆண்டாள் ஸந்நிதி, தென்கலைக் கோயிலானால் மணவாள மாமுனிகள், பிள்ளை லோகாசார்யார் முதலியவர்களின் ஸந்நதி, வடகலைக் கோயிலானால் வேதாந்த தேசிகரின் ஸந்நிதி ஆகியவற்றில் எத்தனை பக்தியோடு, விமரிசையோடு ஆராதனை நடத்துகிறார்கள்?ராமாநுஜருடைய ஜன்ம ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் பெருமாளே இரண்டாம் பக்ஷம்தான்;'உடையவர், உடையவர்'என்று தங்களுடைய ஆசார்ய புருஷருக்கு ஏற்றம் தந்து, அவருக்குத்தான் நித்யப்படி பூஜை, பத்து நாள் உத்ஸவமெல்லாம் ரொம்பவும் பெரிய ஸ்கேலில் செய்கிறார்கள். உடையவர் ஸந்நிதிக்கு மேலே தங்கத்திலேயே விமானம் வேய்திருக்கிறார்கள். ஸ்ரீவில்லிப்புத்தூரில் இப்படித்தான் ஆண்டாளுக்கே பிரதான்யம். 'கோதை, கோதை நாயகி'என்று கொண்டாடுவார்கள். மதுரையில் மீனாக்ஷிக்கே பிரதான்யம், 'மீனாக்ஷி கோயில்'என்று சொல்வது, ஸுந்தரேஸ்வரர் அவளுக்கு அப்புறம் தான் என்பதுபோல், இங்கே ரங்கமன்னாரை (கண்ணனை) இரண்டாவது இடத்துக்குத் தள்ளிவிட்டு ஆண்டாளைத்தான் முதலில் வைத்து 'ஆண்டாள் கோயில்'என்றே சொல்கிறார்கள். நம்மாழ்வார் அவதாரம் பண்ணின ஊருக்கு ஆதியில் 'குருகூர்'என்று பெயர் அப்புறம் அவருடைய ஜன்ம ஸ்தலமானதால் அதற்கு 'ஆழ்வார் திருநகரி'என்றே பெயரை மாற்றி விட்டார்கள். அங்கே அவருக்கு நடக்கிற உத்ஸவமும் ரொம்ப விசேஷமானது. இப்படியே ஒவ்வொரு ஆழ்வாருக்கும் செய்கிறார்கள்.

ராமாநுஜருக்கு முன்னும் பின்னும் வந்த ஸம்ப்ரதாய முக்யஸ்தர்களான நாதமுனிகள், ஆளவந்தார், மணக்கால் நம்பி, திருகச்சி நம்பி, கூரத்தாழ்வார், பட்டர், நஞ்சீயர் முதலான பலருக்கு விக்ரஹங்கள், பூஜையெல்லாம் அநேக ஆலயங்களில் பார்க்கிறோம்.

இந்த அளவுக்கு சிவாலயங்களில் நாயன்மார்கள், மாணிக்கவாசகர், சைவமதக் கோட்பாடுகளையும் புஸ்தகங்களையும் தந்த ஸ்ரீகண்டாசார்யார், மெய்கண்டசிவம், உமாபதி சிவாசார்யார் முதலியவர்களுக்குச் சிற்ப்புக் கொடுக்கவில்லைதான்!

(சங்கர) ஆசார்யாளையும் அவருக்கு முன்னும் பின்னும் வந்த அத்வைத ஸம்பிரதாயப் பெரியவர்களையும் எடுத்துக் கொண்டாலோ ஆலய விக்ரஹம், வழிபாடு இவற்றில் ஸைஃபர் என்றே சொல்ல வேண்டும். ஆசார்யாளுக்கு மட்டும் அபூர்வமாகச் சில கோயில்களில் பிம்பமிருக்கிறது. காஞ்சீபுரத்திலும் சுற்றுபுறங்களிலும் மாத்திரம் இது கொஞ்சம் நிறையவே இருக்கிறது. மாங்காடு, திருவொற்றியூர் இப்படிச் சில ஸ்தலங்களிலும் ஆசார்ய பிம்பங்கள் இருக்கின்றன. ஆனாலும் மொத்தத்தில், நான் அடிக்கடி சொல்வது போல, கோயில் விக்ரஹங்களின் 'ªú¡úv'ð£˜ˆ¶ å¼ R˜î£‰î˜F¡ 'Þ¡çŠÀªò¡'¬ú èEŠð¶ â¡ø£™, Þ‰Fò£ «îê˜F«ô Ü˜¬õî‹ â¡Á å¼ ¬õFè ñî‹ Þ™ô«õJ™¬ô â¡Áî£¡ º®õ£°‹!

இதற்குக் காரணம் அத்வைதிகள் சைவம், வைஷ்ணவம் இரண்டையும் சேராத, ஆனால் இரண்டையும் ஒரு அளவுவரை ஒப்புக் கொள்கிற ஸ்மார்த்தர்களாக இருப்பதுதான்.

நான் சொல்லவந்த விஷயம் ராமாநுஜ ஸம்ப்ரதாயத்தில் மதாசார்யர்களிடத்தில் விசேஷ பக்தி காட்டுகிறார்கள் என்பது.

ராமாநுஜருடைய நேர் சிஷ்யர்கள் அவரிடம் வைத்திருந்த பக்தி அஸாத்யமானது.

உயிரையே கொடுப்பது என்கிறதற்கேற்க, கூரத்தாழ்வார் என்பவர் ராமாநுஜருக்காகப் பிராணத் தியாகமும் பண்ணத் தயாராயிருந்திருக்கிறார். இவர் காஞ்சீபுரத்துக்குப் பக்கத்திலுள்ள கூரம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். மரியாதை வாசகத்துக்குப் பெயரெடுத்த வைஷ்ணவர்களே பக்தி முதிர்ச்சியில், தாங்கள் ரொம்பவும் பெரியவராக நினைக்கிற வேதாந்த தேசிகரை "தேசிகன்"என்று ஒருமையில் அழைப்பதாகச் சொன்னேனல்லவா?அதுபோலவே கூரத்தாழ்வாரைக் "கூரத்தாழ்வான்"என்றுதான் சொல்வார்கள். வெறுமனே 'ஆழ்வான்'என்று வைஷ்ணவர்கள் சொன்னாலே அது கூரத்தாழ் வார்தான். ('ஆழ்வார்'என்று 'ர்'போட்டுச் சொன்னால் அது நம்மாழ்வார்தான்)

ராமாநுஜர் காலத்தில் ராஜாவாக இருந்த சோழன் தீவிர சிவபக்தன். ராமாநுஜரோ, "விஷ்ணு ஒருத்தருக்குத் தான் "ஏகாந்தி"களாகப் பூஜை பண்ண வேண்டும். சிவனுக்கு பண்ணக் கூடாது"என்கிற ஸித்தாந்தத்தைப் பிரசாரம் செய்து கொண்டிருந்தார். அதனால் சோழராஜா, "எந்த ஆதாரத்தைக் கொண்டு விஷ்ணு தவிர சிவன் முதலான தேவதாந்தரங்களை வழிபடக்கூடாது என்று நிர்த்தாரணம் பண்ணுகிறீர்?"என்று ராமாநுஜரைக் கேட்டு வாதம் நடத்துவதற்காக ஒரு வித்வத் ஸதஸைக் கூட்டினான். அப்போது கங்கைகொண்ட சோழபுரம் ராஜ்யத் தலைநகராயிருந்தது. அங்கே அந்த ஸதஸைக் கூட்ட நிச்சயித்து, ராமாநுஜாசார்யாரை அழைத்துக்கொண்டு வருவதற்காக ஆள் அனுப்பினான். அப்போது அவர் ஸ்ரீரங்கத்தில் இருந்தார்.

ராஜஸேவகரைப் பார்த்ததும் கூரத்தாழ்வாருக்கு விசாரம் உண்டாய்விட்டது. 'ராஜாவோ சைவன்;அவனே நிறைய சிவாலயங்கள் கட்டியிருக்கிறான். நம்முடைய குருவானால் சிவாராதனை கூடாது என்கிறார். அதனால் அவருக்கு இவரிடம் த்வேஷம் இருக்கும். இப்போது வித்வத ஸதஸ் என்று சொல்லி அழைத்துக் கொண்டு போய் இவரை என்ன பண்ணுவானோ?ராஜாவானதால் என்னவும் பண்ணிவிடமுடியும். நம்முடைய அருமை ஆசார்யருக்கு அவன் ப்ராணஹானி விளைவித்துவிட்டால் என்ன செய்வது?'என்று ரொம்பவும் பயமும் கவலையும்பட்டார்.

அப்போதுதான் அவர் குருவுக்காகத் தம் உயிரையும் தியாகம் செய்ய முன்வந்தது. அதாவது குருவின் காஷாயத்தைத் தாம் உடுத்திக் கொண்டு, தம்மையே ராமாநுஜாசார்யார் என்று சொல்லிக்கொண்டு ராஜஸபைக்குப் போய்விடுவது என்று தீர்மானித்து விட்டார். "வருகிற ஆபத்து எனக்கே வரட்டும். தங்களுக்காக இந்த ஸேவை செய்கிற பாக்யத்தை எனக்கு மறுக்காமல் அருள வேண்டும்"என்று ராமாநுஜரிடம் பிரார்த்தித்து, அவரை ஸம்மதிக்கப் பண்ணினார். ராமாநுஜர் வெள்ளை வேஷ்டி கட்டிக் கொண்டு, சோழ ராஜ்யத்தையே விட்டு, கர்நாடகத்திலுள்ள மேல்கோட்டை என்னும் திருநாராயணபுரத்துக்குப் போய்விட்டார். அங்கே இப்போதும் "வெள்ளை சாத்துப்படி"என்று அவருக்கு உத்ஸவம் நடத்துகிறார்கள்.

கூரத்தாழ்வார் காஷாயம் தரித்துக்கொண்டு ராமாநுஜராக கங்கை கொண்ட சோழபுரத்துக்குப் போனார். அங்கே வித்வஸ் ஸதஸ் நடந்தது. இவர் சிவபரத்வத்தை ஒப்புக்கொள்ள மறுத்தார். அதனால் இவர் நினைத்தப்படியே ராஜதண்டனை விதிக்கப்பட்டது. ஆனால் ராஜா கொலைத்தண்டனை தரவில்லை. இவருடைய கண்ணைப் பிடுங்கும்படியாக உத்தரவு போட்டுவிட்டான்.

குருவுக்கு ஏற்பட இருந்த இந்த கொடுமை நமக்கு வாய்த்ததே என்று கூரத்தாழ்வார் தண்டனையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார். குருடராக ஆனார்.

அப்புறம் அந்த ராஜா காலமானபின் ராமாநுஜாசாரியார் தமிழ்நாட்டுக்குத் திரும்பி வந்தார். தமக்காக சிஷ்யர் கண்ணை இழந்துவிட்டாரே என்று துக்கப்பட்டார்.

ராமாநுஜர் பிற்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் வாஸம் செய்தபோதிலும், ஆரம்பத்தில் காஞ்சீபுரத்தில் வஸித்துக் கொண்டு வரதராஜ ஸ்வாமிக்குத்தான் தீர்த்த கைங்கர்யம் செய்துகொண்டு, அவரையே இஷ்ட தெய்வமாக உபாஸித்து வந்தார். ஸ்ரீரங்கநாதர் ஆலயத்தின் ஆராதனை க்ரமங்களை அமைத்துக்கொடுத்து அங்கே இவர் இருந்த காலத்திலும் கூட வரதராஜாவிடம் ஒரு தனியான பற்று வைத்திருந்தார். அதனால் இப்போது கூரத்தாழ்வாரிடம், "எனக்காக உன் கண் போயிற்று. அதனால் உனக்காகப் பார்வை மீள வேண்டும் என்று இல்லாவிட்டாலும் என் மனஸ் ஆறுவதற்காக நீ வரதராஜாவை வேண்டிக்கணும்"என்றார். கூரத்தாழ்வாரும்

அப்படியே காஞ்சீபுரம் பெருமாளிடம் ஸ்தோத்ரம் பண்ணி வேண்டிக் கொண்டார். அவருக்கு த்ருஷ்டி திரும்பணும் என்று நிஜமாகவே ஆசை இல்லை. 'எல்லா இந்த்ரியங்களையும் அடக்கினால்தான் ஈஸ்வர தர்சனம் கிடைக்கும் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. நமக்கோ ராஜசிக்ஷை ரூபத்தில் கண் போனதில் இந்த ஒரு இந்திரியமாவது கண்டதைப் பார்த்துக் கெட்டுப் போகாமலிருக்கும் அநுக்ரஹம் கிடைத்திருக்கிறது. இதைப் மாற்றப்பண்ணி மறுபடியும் லோகக் காட்சி பார்த்து என்ன ஆக வேண்டும்?'என்றே நினைத்தார். ஆனாலும், 'ஆசார்யன் ஆக்ஞைக்குக் கீழ்படிந்தாகவும் வேண்டுமே!அவர் பச்சாத்தாபம் படும்படியாக விடக்கூடாதே!'என்று யோசித்தார். யோசித்து ஸ்வாமியிடம், "எனக்குப் பார்வையை தா. ஆனால் எல்லா விஷயங்களையும் நான் பார்க்க வேண்டியதில்லை. என் ஆசார்யனுடைய திவ்யரூபத்தை தர்சனம் பண்ணுவதற்கும், உன் மங்கள விக்ரஹத்தை தர்சிப்பதற்கும் மட்டுமே கண்ணுக்குச் சக்தி தா"என்று கேட்டார். வரதராஜாவும் அப்படியே வரம் கொடுத்தாராம்.

ராமாநுஜருக்கு முந்தி இருந்த பெரியவரான ஆளவந்தார் திருநாட்டை அலங்கரிக்க முடியாமல் (சரீரயாத்ரை முடிந்து பரமபதம் சேர்வதைத் "திருநாட்டை அலங்கரிப்பது"என்றே வைஷ்ணவர்கள் சொல்வார்கள்) அவருடைய ப்ராரப்தம் 'டிலே'பண்ணினபோது, பெரிய த்யாகமாக சிஷ்யர் ஒருத்தரே*அந்தக் கர்மசேஷத்தை ராஜபிளவை என்ற பயங்கரக் கட்டி ரூபத்தில் ஏற்று அநுபவித்துத் தீர்த்தார் என்றும் ஒரு கதை இருக்கிறது.

---

மாறனேர் நம்பி என்ற தீண்டாதார். அடுத்ததாகக் கூறப்படும் 'ரஸ' மான வரலாற்றில் குறிப்பிடப்படும் சீடர் வடுகநம்பி.

ரஸத்தோடு, ஹாஸ்ய ரஸனையோடு கூடியதாக இன்னொரு குரு பரம்பரைக் கதை உண்டு. ராமாநுஜரின் சிஷ்யர்களில் ஒருத்தர். அவர் ஒருநாள் உள்ளே ஆசார்யருக்காகப் பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். வாசலில் ஸ்ரீரங்கநாதர் ஊர்வலம் வந்தது. "தர்சனம் பண்ண வா, வா!"என்று ராமாநுஜாசார்யார் வாசலிலிருந்து சிஷ்யரைக் கூப்பிட்டுக் கொண்டேயிருந்தார். ஆனால் சிஷ்யர் போகாமல் பாலையே கவனித்துக் கொண்டிருந்தார். ஸ்வாமி அந்த இடத்தைத் தாண்டிப் போய்விட்டது. ராமாநுஜர் உள்ளே வந்து, "வாசலிலியே பெருமாள் ஸேவை ஸாத்திகிறபோது ஸேவிக்காமல் நீ இப்படிப் பண்ணலாமா?"என்று கோபித்துக் கொண்டார். அதற்கு அந்த சிஷ்யர், "உங்கள் பெருமாளை நீங்கள் ஸேவித்தது ஸரிதான்!அது நீங்கள் பண்ண வேண்டியதுதான். ஆனால் அதற்காக நான் என் பெருமாளுக்குப் பண்ணும் பால் ஸேவையை ஏன் பாதியில் விட்டுவிட்டு வரணும்?"என்று கேட்டாராம்!

குருவுக்காக எந்தக் கஷ்டத்தையும் ஸந்தோஷத்தோடு பொறுத்துக் கொள்கிற அளவுக்கு பக்தியானது சக்தி தந்திருக்கிறது. க்ஷத்ரியர்களை த்வேஷித்த பரசுராமரிடம் பிராம்மண த்வேஷம் போட்டுக் கொண்டு வந்து வில்வித்தை கற்றுக்கொண்ட கர்ணனை, ஒருநாள் இவன் மடியில் அவர் தலை வைத்துப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும்போது ஒரு வண்டு கொட்டித் தீர்த்து விட்டது!அசைந்து கொடுத்த அதை விரட்டினால் குருவின் நித்திரைக்கு பங்கம் வந்துவிடுமே என்று கர்ணன் ஆடாமல் அசையாமல் அத்தனை கொட்டையும் ஸஹித்துக் கொண்டான் என்ற கதை கேட்டிருப்பீர்கள். அப்புறம் அந்தக் கதை வேறு விதமாய்ப் போய்விடுகிறது.

குருவை எந்த வித்யைக்காக ஆச்ரயித்தானோ, அந்த வித்யையையே சிஷ்யன் அப்யஸிக்க முடியாதபடி ரொம்பக் கடுமையாக, கொடுமையாக குருவானவர் தக்ஷிணை கேட்டபோது தயங்காமல் கொடுத்த ஏகலைவன் கதையையும் இன்றுவரைக்கும் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

ஆழ்வார்களில் மதுரகவி என்று ஒருத்தர். அவர் பாடினது (பதினோறு அடிகள் கொண்ட) ஒரே ஒரு பாசுரந்தான். அதுவும் மஹாவிஷ்ணுவைப் பற்றியதில்லை. ஆனாலும் அதை நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலே சேர்த்து, மதுரகவியையும் ஒரு ஆழ்வாராக உயர்த்தி வைத்திருக்கிறார்கள். ஏனென்றால் அவருடைய குருபக்தி விசேஷத்துக்காகத்தான். அவர் பாடினது நம்மாழ்வாரைப் பற்றி. ராமாநுஜ ஸித்தாந்தத்தில் ஆழ்வார்களுக்கெல்லாம்

ஆசார்ய ஸ்தானம் மாதிரியான சிறப்பு உண்டு. அந்த ஆழ்வார்களுக்குள்ளேயும் நம்மாழ்வாருக்கு "ப்ரபன்ன ஜன கூடஸ்தர்"என்பதாக விசேஷ ஸ்தானம் தந்திருக்கிறது.

நம்மாழ்வார் அப்பிராம்மணர். மதுரகவியோ நல்ல பிராம்மணர். அவர் வடதேசங்களில் ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டிருந்தபோது தெற்கேயிருந்து ஒரு ஜ்யோதி ரச்மி (ஒளிக்கதிர்) அவருக்குத் தெரிந்தது. அந்த ரச்மியையே பின்தொடர்ந்து ஆயிரம் மைலுக்கு மேலே வந்து திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கிற திருக்குருகூரை (இப்போது 'ஆழ்வார் திருநகரி'என்கிறோம்) அடைந்தார். அங்கே ஒரு புளியமரப் பொந்துக்குள் ரச்மி ஐக்கியமாகிவிட்டது. அதற்குள்ளேதான் நம்மாழ்வார் எத்தனையோ காலமாக அப்படியே நிஷ்டையிலிருந்து கொண்டிருந்தார். அவரை மதுரகவி நிஷ்டையிலிருந்து எழுப்பி ஆத்ம ஸம்பந்தமாக ஸங்கேத பாஷையில் கேள்வி கேட்டாரென்றும், நம்மாழ்வாரும் அதே போல ஸங்கேத பாஷையில் பதில் சொன்னாரென்றும் கதை.

(அந்தக் கேள்வியையும் பதிலையும் நான் சொன்னால் அப்புறம் 'எக்ஸ்ப்ளெயின்'பண்ணாமலிருக்க முடியாது. ரொம்ப நாழி ஆகும். அப்படியும் புரியுமோ புரியாதோ, ஸந்தேஹம். அதனாலே இத்தனை தத்வார்த்தத்துக்கும் மேலே எதுவோ அந்த குருபக்திதானே நம் ஸப்ஜெக்ட்?அதற்கே போகிறேன்.) அந்தப் பதில் மதுரகவிக்கு மந்த்ரோபதேசம் மாதிரி ஞானத்தைக் கொடுத்துவிட்டது. அவர் 'ப்ரபன்ன ஜன கூடஸ்த'ரான நம்மாழ்வாரிடமே ப்ரபத்தி (பூர்ண சரணாகதி) பண்ணி அவரை ஸ்தோத்திரம் செய்து பாசுரம் பாட ஆரம்பித்துவிட்டார். அதிலே நம்மாழ்வாரைத் தவிர தனக்கு வேறே ஸ்வாமியே கிடையாது-"தேவு மற்றறியேன்"- என்று பிரமாணம் மாதிரிப் பண்ணுகிறார். "நம்மாழ்வார் மஹாவிஷ்ணுவை ஸ்வாமி என்று வழிபட்டால் வழிபட்டுவிட்டுப் போகட்டும்;எனக்கு நம்மாழ்வாரேதான் ஸ்வாமி. அவரைப்பற்றித் தான் பாடுவேன். பெருமாளைக்கூட பாடமாட்டேன்"என்று குருவிடம் பரம பக்தியில் பாடிவிட்டார்.

'நம்முடைய ஸித்தாந்தத்தில் ஆசார்ய புருஷர்களுக்கு மேலேயும், பெருமாளுக்கு அடுத்ததாகவும் இருக்கிற ஆழ்வார்களில் பிரதானமாயுள்ள நம்மாழ்வாரிடம் ஏகாந்த பக்தி வைத்து மதுரகவி பாடியிருப்பதும் பெருமாள் மேலேயே 'அருளிச் செயல்'என்னும் பிரபந்தம் பாடினமாதிரிதான்'என்றே அந்த ஸம்பிரதாயத்துப் பெரியவர்கள் இதை நாலாயிரத்திலே சேர்த்து, அவருக்கும் ஆழ்வார் என்று ஏற்றம் கொடுத்திருக்கிறார்கள்.

"தேவு மற்றறியேன்"என்று இவர் சொன்ன மாதிரியே தான் வேதாந்த தேசிகரும் "ஆசார்யாத் இஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே"என்று சொல்லியிருக்கிறார்.

---



## ஸிக்கியரின் குருபக்தி

**ஆ** சார்யன்கிடைத்துவிட்டால் போதும், ஸ்வாமிகூட வேண்டாம்; ஸ்வாமிகூட ஆசார்யனுக்கு ஸமதையில்லை என்று பக்தி பண்ணினவர்கள் எல்லா ஸம்பிரதாயத்திலும் உண்டு. குரு என்றால் கூடவே இருந்தாக வேண்டிய 'சிஷ்யன்'-'சிக்ஷை'என்பதை வைத்துத்தான் 'சிக்கிய'மதம் என்பது ஏற்பட்டிருக்கிறது.

அதில் குரு கோவிந்த ஸிங் என்பவர் 'கல்ஸா'என்கிற அவர்களுடைய ஸ்தாபனத்தை ஏற்படுத்தும்போது, நரபலி வேண்டும் என்று கேட்டாராம். உடனேயே ஒருத்தர் எழுந்திருந்து தன் தலையையே கொடுப்பதற்காக அவரோடு போனாராம். அவரை அழைத்துக் கொண்டு போன கோவிந்த ஸிங் கொஞ்ச நாழிக்கு அப்புறம் ரத்தம் சொட்டும் கத்தியோடு திரும்பி வந்து இன்னொரு பலி வேண்டும் என்றாராம். உடனே இன்னொருத்தர் எழுந்திருந்து அவரோடு போனாராம். மறுபடியும் அவர் ரத்தம் சொட்டுகிற கத்தியோடு திரும்பி வந்தாராம். இப்படியே ஐந்து தடவை அவர் பலி கேட்க ஐந்து பேர் ஸந்தோஷமாக குரு வார்த்தைக்காகப் பிராணத் தியாகம் பண்ணுவதும் பெரிசில்லை. என்று அவர் பின்னோடு போனார்களாம். அப்புறம் அவர் அந்த ஐந்து பேரையுமே ஸபைக்கு அழைத்துக் கொண்டு

வந்து, தம்மைச் சேர்ந்தவர்களின் பக்தி விஸ்வாஸத்தை சோதனை பண்ணுவதற்காகவே இப்படி விளையாட்டாக பலி கேட்டதாகவும் வாஸ்தவத்தில் எவரையும் கொல்லாமல் ஏதோ ஆட்டு ரத்தத்தைத்தான் காட்டியதாகவும் சொல்லி, உயிரைத் திருணமாக நினைத்து பலியாவதற்கு வந்த அந்த ஐந்து பேரையும் கல்ஸாவில் முக்கியஸ்தர்களாக நியமித்தாரம்.

இப்படி எல்லா மதங்களிலும் அவற்றில் தோன்றிய மஹான்களை தெய்வமாக விச்வாஸித்த சிஷ்யர்கள் இருந்திருக்கிறார்கள். இந்த குருபக்தியாலேயே அவர்களும் குருவைப் போன்ற யோக்யதை ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்; இப்படி ஒரு **Spiritual Status** (ஆத்மிக அநதஸ்து) வந்துவிட்டும் தங்களை மேலே கொண்டுவந்த மஹானையே உயர்த்திச் சொல்லிப் பணிந்து வந்திருக்கிறார்கள்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

ஸமூஹ, தனிவாழ்க்கை நெறிகள்

பரோபகாரம்

'' அனைவருக்கும் உரிய அச்வமேதம் ''

**இ** ந்தக் காலத்தில் இருக்கிற நாமெல்லோரும் அச்வமேத யாகம் செய்ய முடியுமா?

'இதென்ன கேள்வி?ஸ்வாமிகள் சரியாகத்தான் பேசுகிறாரா?'என்று தோன்றும். 'இந்தக் காலத்திலாவது?அச்வமேதமாவது?பழைய காலத்திலேயே க்ஷத்ரிய வர்ணத்தில் பிறந்த மஹாராஜாக்கள் இரண்டொருத்தர் தான் அச்வமேதம் செய்ய முடிந்திருக்கிறது. ஒரு ராஜ்யத்து அரசனாகப் பட்டாபிஷேகம் ஆனபின், சதுரங்க ஸேனா பலத்தோடுகூடச் சொந்தமாகவும் வீரதீர பராக்ரமங்கள் படைத்த ஒரு ராஜாதான் அச்வத்தை ஸகல தேசங்களும் ஓட்டி, அந்தத் தேசங்களையெல்லாம் ஜயித்து, திக்விஜயம் பண்ணிச் சக்ரவர்த்தி என்ற பிருதத்தை அடைந்து அச்வமேதம் பண்ணமுடியும். இப்போது நம்மில் யார் அப்படிச் செய்ய முடியும்?'என்று தோன்றும் நம்மில் யாரவது அச்வமேதம் செய்ய முடியுமா என்று கேட்காமல் (இப்படிக் கேட்டாலே அஸம்பாவிதம்தான்!)நாம் எல்லோரும் அச்வமேத யாகம் செய்ய முடியுமா என்று கேட்கிறேனே என்று ஒரே குழப்பமாகத் தோன்றும்.

முடியுமா, முடியாதா என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். எதற்காக அச்வமேதம் செய்ய வேண்டும்?நம் பதவியையும் பவிஷையும் அது காட்டுகிறதே என்பதற்கா?அச்வமேதம் செய்தல் இந்திரலோகம் கிடைக்கும் என்பதற்கா?இதற்காகவெல்லாம் என்றால் அச்வமேதம் செய்யவே வேண்டாம். பதவி, பவிஷு, தேவலோக ஸௌக்கியம் எல்லாமே அஹங்காரத்தை வளர்த்துக் கொள்கிற காரியங்கள்தாம்!நம்மிடம் கொஞ்சநஞ்ச ஞானம்கூடச் சேரவொட்டாமல் இடைஞ்சல் செய்கிறவைதாம். பின் எதற்காக அச்வமேதம் என்றால்:

**ஹயமேத ஸமர்ச்சிதா**

என்று அம்பாளுக்கு லலிதா த்ரிசதியில் ஒரு நாமா சொல்லியிருக்கிறது.

'த்ரிசதி'என்பது முந்நூறு பெயர்கள் கொண்ட நாமாவளி. அர்ச்சனையில் பிரயோஜனமாவது 'ருத்ர த்ரிசதி'என்பது வேதத்திலிருந்தே எடுத்தது. 'லலிதா த்ரிசதி'வேதத்தில் இல்லாவிட்டாலுங்கூட அதற்கு ஸமதையான கௌரவம் பெற்றிருக்கிறது. ஹயக்ரீவரிடமிருந்து 'லலிதா ஸஹஸ்ரநாம'உபதேசம் பெற்றுங்கூட மனசாந்தி அடையாத அகஸ்தியர் இந்த த்ரிசதியைக் கேட்டுத்தான் தெளிவை அடைந்தார். ஆசார்யாளே பாஷ்யம் பண்ணியிருக்கிற பெருமையும் இந்த த்ரிசதிக்கு இருக்கிறது. லலிதா த்ரிசதி, லலிதா ஸஹஸ்ர நாமம் இரண்டுமே ரொம்ப மந்தரவத்தானபடியால் இவற்றை உரிய நியமங்களோடு ரஹஸ்யமாகவே ரக்ஷிக்க வேண்டும்.

ஹயக்ரீவர் உபதேசித்த இந்த த்ரிசதியில் "ஹயமேத ஸமர்ச்சிதா"என்று ஒரு நாமா இருக்கிறது. ஹயம் ஹயம் என்றால் அச்வம், குதிரை என்று அர்த்தம். கழுத்துக்கு மேலே குதிரை முகம் படைத்த மஹாவிஷ்ணுவின் அவதாரமாக இருப்பவரே ஹய-க்ரீவர். ஹயமேதம் என்றாலும் அச்வமேதம் என்றாலும் ஒரே அர்த்தந்தான். "ஸமர்ச்சிதா"என்றால் நன்றாக, பூர்ணமாக ஆராதிக்கப்படுபவள் என்று அர்த்தம். "ஹயமேத ஸமர்ச்சிதா"- அச்வமேத யாகத்தால் நன்கு ஆராதிக்கப்படுபவள்.

அதாவது ஒருத்தன் அச்வமேதம் செய்தால், அதுவே அவன் அம்பாளுக்குச் செய்கிற விசேஷமான ஆராதனையாகி விடுகிறது. வெறும் யஜ்யம் என்றால் அதற்கென புத்ர ப்ராப்தி, தன லாபம், பதவி, ஸ்வர்க வாஸம் மாதிரியான பலன்கள்தான் உண்டு. இந்தப் பலன்களோடு, இவற்றைவிட முக்யமாக, அநேகக் கட்டுப்பாடுகளோடும், ஐகாக்ரியத்தோடும் ( **one-pointed concentration** ) ஒரு யாகத்தைச் செய்வதால் "சித்த சுத்தி"என்கிற மஹா பெரிய பலனும் ஏற்படுகிறது. ஒரு யாகம் அம்பாள் ஆராதனையாகிறபோதோ அதற்குச் சின்னச் சின்னப் பலன்களாக இல்லாமல் ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய சக்தி உண்டாகிறது. ஸாக்ஷாத் பரதேவதை ப்ரீதி அடைந்தால் எதைத்தான் தரமாட்டாள்? பதவி, பவிஷு, இந்திர லோகம் எல்லாவற்றுக்கும் மேலாக பரம ஞானத்தை, ஸம்ஸார நிவிருத்தியை, மோக்ஷ ஸாம்ராஜ்ய லக்ஷ்மியையே அம்பாள் மனசு குளிர்ந்தால் அநுக்கிரஹித்துவிடுவாள். ஆனதால், அம்பாளை அச்வமேதம் பண்ணிவிட்டால், அதனால் அம்பாளை ஆராதித்ததாகி விடுமாதலால், இம்மை மறுமைக்கு வேண்டியதில் பாக்கியில்லாமல் ஸகல சிரேயஸ்களையும் பெற்று விடலாம். எதற்காக அச்வமேதம் செய்ய வேண்டும் என்று முதலில் ஒரு கேள்வி போட்டேனே, அதற்கு இது பதில்.

ஆனால் ஒரு ஸஹஸ்ரநாமம், த்ரிசதி மாதரியானவற்றுக்கு நியமங்கள் இருக்கின்றன என்றால் அச்வமேதம் செய்வதற்கோ ஏகப்பட்ட கட்டுப்பாடுகள், ஆயிரம் தினுசான நியமங்கள், கெடுபிடிகள் சொல்லியிருக்கிறது. இந்தக் காலத்தில் இதெல்லாம் ஸாத்யமே இல்லை.

ஸரி, அப்படியானல் நாம் அச்வமேதம் செய்வதற்கே இல்லை என்று விட்டுவிட வேண்டியது தானா?

இல்லை நம் அனைவருக்கும் ஸாத்யமான ஓர் அச்வமேதத்தை சாஸ்திரங்களிலேயே சொல்லியிருக்கிறது. ஜீவகாருண்யத்தின்மேல் செய்யவேண்டிய அநேக பரோபகாரங்களைச் சொல்லிக்கொண்டே போய், அவற்றுக்கெல்லாம் சிகரம் மாதிரி ஒன்றைச் சொல்லி அதுவே அச்வமேதத்தின் பலனை அளிக்கக் கூடியது என்கிறது.

**சொல்லிவிட்டால்**

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

" என் கடன் பணி செய்து கிடப்பதே "

**இ** ப்போதுநான் "ஜீவகாருண்யம்","பரோபகாரம்"என்று இரண்டு வார்த்தைகள் சொன்னேன். யோசித்துப் பார்த்தால் இந்த இரண்டு வார்த்தையுமே தப்புத்தான் ஏனென்றால்:

காருண்யம் - கருனை காட்டுவது - என்றால் இப்படிக் கருணை காட்டுகிறவர் ஒரு படி உயர நிற்கிற மாதிரியும், கருணைக்குப் பாத்திரமாகிறவர் **ஒ** ரு படி கீழே நிற்கிற மாதிரியும் தொக்கி நிற்கிறது."நாம் உசந்த ஸ்தானத்தில் இருக்கிறோம், நம் உதவியைப் பெறுகிறவர் நம்மைவிடத் தாழ்த்தியாக இருக்கிறார், நாம் 'கருணை'காட்டுகிறோம்"என்று நினைக்கிறபோதே நாம் செய்கிற உபகாரம் அசுத்தமாகிவிடுகிறது. உபகாரம் செய்வதன் பயனாக நமக்கு எளிமை, அடக்கம், அஹங்கார நிக்கம் ஆகியன உண்டாக வேண்டும். மாறாக நாம் உபகாரம் பண்ணும்போது, போனால் போகிறது என்றும் யாருக்கோ கருணை காட்டுகிற மாதிரி நினைத்தோமானால், இது ஆணவ அஹங்காரங்களுக்கு இடமாகிவிடுகிறது. உபகாரத்தால்

நம் ஆதமாவை உயர்த்திக் கொள்வதற்கு நேர்மாறாக ஆத்மஹானியே உண்டாகிவிடும்.

கருணை, காருண்யம் என்கிற வார்த்தையைச் சொல்வதைவிட அன்பு என்று சொல்லிவிட்டால் இந்த ஏற்றத் தாழ்வு தொனிக்காமல் இருக்கும். அன்பு என்பது நம்மவர்களிடமே நாம் ஸ்வபாவமாகச் செய்கிற காரியம். இதிலே போனால் போகிறதென்று யாரோ அந்நியருக்கு இரக்கம் காட்டுகிற மாதிரியான அஹங்கார எண்ணம் இல்லை.

ஆனாலுங்கூட நடைமுறை உலகில் இப்படி நம்மவர், அசலார் என்கிற பேதமேயில்லாமல் ஸகலரையும் ஒரே பேல் பாவித்து, தாரதம்மியம் இல்லாமல் ஸவாபாவிகமான அன்பைச் செலுத்துவது என்றால் அது ஆரம்ப காலத்தில் ஸாத்யம் இல்லாமல்தான் இருக்கிறது. இந்தப் பொது இயற்கையை ஒப்புக் கொள்கிறது போலத் தான் திருவள்ளுவர்கூட அன்பு, அருள் (அருள் என்பதைக் கருணை என்று வைத்துக்கொள்ளலாம்) என்று பிரித்து **distinction** சொல்லியிருக்கிறார். அவர் என்ன சொல்கிறார்? அருள் என்னும் அன்பீன் குழவி என்கிறார். அன்பு ஈன்ற குழந்தையே அருள் என்று அர்த்தம்.

இப்போது நமக்கு வேண்டியவர்கள் என்று சிலரை மட்டும் நினைத்துக் கொண்டு அன்பு செல்லுத்துகிறோம் அல்லவா? இந்த 'வேண்டியவர்'களை நம் ஊரார், தேசத்தார், உலகத்தார் என்று மேலே விஸ்தரித்துக் கொண்டே போனால், அன்பிலிருந்தே படிப்படியாக அருள் பிறக்கிறது. அப்புறம் இப்படி அருள் பண்ணுகிறவனைப் பொருத்த மட்டும் அது 'அருள்' 'கருணை' என்றெல்லாம் உயர்வு விஷயமாக இல்லாமல், ஸ்வபாவமான, ஹைஜமான அன்பாகவே ஆகிவிடுகிறது. ஆனாலும் இந்த அன்பைப் பெறுகிறவர்களோ அது ஸாதாரனமாக நண்பர்களிடையே பந்துக்களிடையே இருக்கிற அன்புமாதிரி இல்லாமல், நல்ல கனிவு பெற்று தெய்விகமான சக்தி பெற்றிருப்பதாக உணர்கிறார்கள். இந்த பக்குவமான, திவ்யசக்தி வாய்ந்த அன்பை 'அருள், அருள்'என்கிறார்கள்.

'எல்லா உயிர்களும் ஒன்றே; எல்லாவற்றிலும் ஈஸ்வரன் இருக்கிறான்'என்று ஒருத்தன் உணர்கிறபோது தான் அவனுக்கு அருள் உண்டாகிறது. இவன் தன் மநுஷ்யர்களுடன் ஸமமான நிலையில் இருந்துகொண்டு பிரியம் காட்டுவதைவிட இன்னும் ஒருபடி கிழே இறங்கி தன்னைக் குறைத்துக்கொண்டு, மற்றவனை ஈஸ்வரனாக நினைத்துதான் ஸேவை செய்கிறான். 'நைச்சியம்' என்று இதை வைஷ்ணவர்கள் விசேஷித்துச் சொல்லுவர்கள் தன்னைத் தாழ்ந்தவானக, நீசனாக நினைத்து இன்னொருத்தனுக்கு ஸேவை செய்வதுதான் 'நைச்சியம்'.

இப்படி இவன் தன்னைக் குறைத்துக் கொள்கிறபோதுதான் இவனுடைய அன்பு வெறும் பேச்சாக, எண்ணமாக மட்டுமில்லாமல் அதற்குக் காரிய ருபத்திலேயே தெய்விகமான சக்தி உண்டாகி, அது 'அருளாக'ஆகிவிடுகிறது! கொஞ்சங்கூட மமதையே இல்லாமல் "நாம் பெரியவர், உபகாரம் பண்ணுகிறோம்" என்ற அகந்தையே இல்லாமல் இவன் ஸமஸ்தப் பிராணிகளிடம் ஈஸ்வர ஆராதனையாக அன்பைச் செலுத்துகிறபோது, அதுவே இவனை ஸகல பிராணிகளுக்கும் மேலே உயர்த்தி விடுகிறது. இவனுடைய அன்பு வெறும் பேச்சாகவும் எண்ணமாகவும் மட்டுமில்லாமல், காரியத்திலேயே ஈஸ்வரானுக்ரஹத்தை வாங்கித் தரக்கூடிய அருட் சக்தியைப் பெற்றுவிடுகிறது.

இவனுடைய ஜிவகாருண்யத்தால் இப்படி இவனே உயர்வதுதான் பெரிய பிரயோஜனமாகிறது. ஒருத்தன் உபகாரம் என்று நினைத்து இன்னொருத்தனுக்குச் செய்வது அவனுக்கு அபகாரமாக ஆனாலும் ஆகலாம்; அல்லது இவனுடைய உபகாரத்தை அவன் விரும்பாமலும் இருக்கலாம். அதாவது பிறத்தியானைப் பொருத்தமட்டில் இவனுடைய ஸேவை வீணாகவே போனாலும் போகலாம். ஆனால் இவனையே பொருத்தமட்டில் இவனுடைய அஹங்காரத்தைக் கரைத்து, இவனை (ஆத்மிகத்தில்) உயர்த்திவிடுகிறது.

இதனால்தான் 'ஜீவகாருண்யம்'என்கிற மாதிரியே 'பரோபகாரம்'என்ற வார்த்தையும் ஒரு தினுஸில் தப்புதான் என்றேன். பரனுக்கு (பிறத்தியானுக்கு) இவனுடைய ஸேவை உபகாரமாக இல்லாவிட்டாலும்கூட, ஸ்வயமாக இவனுக்கே சித்த பரிசுத்தியை உண்டாக்குவதால், இதை 'ஸ்வய உபகாரம்' என்றுதான் சொல்லவேண்டும்.

இது வேடிக்கையாக இருக்கிறது. அதாவது நாம் கருணை பண்ணுகிறோம், அருள் காட்டுகிறோம் என்ற எண்ணமே இல்லாதபோதுதான், இவனுக்கு தெய்விகமான 'அருளுடைமை'யே உண்டாகிறது. இப்படியே இவன் ஸ்வய நலனைக் கொஞ்சம்கூட நினைக்காமல் பரோபகார ஸேவை செய்வதுதான் உண்மையில் ஆத்ம லாபம் என்கிற பெரிய 'ஸ்வயோபகாரமாக'இருக்கிறது.

நல்ல அத்வைத திருஷ்டி வந்துவிட்டால் ஸ்வயம், பரம் என்கிற பேதமே இல்லாமல், எல்லாம் ஈஸ்வர ஸ்வரூபமாகப் பார்த்து, பல தினுஸில் கஷ்டப்படுகிறவர்களுக்கும் ஒருத்தன் தன்னுடைய இயற்கையான தர்மமாகவே ஆனந்தமாகப் பணி செய்து கொண்டிருப்பான். இப்போதும் 'பர உபகாரம்' என்ற ஜீலீகூஷீணீவமீ தப்பாகி விடுகிறது! தனக்குப் பரமாகத்தான் இவனுக்கு எதுவுமில்லையே! "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்னது இந்த நிலையில்தான்.

"நம் கடன் பணிசெய்து கிடப்பதே"என்பதுதான் நம் வாழ்க்கையின் குறிக்கோளாக, விஷீமீ்மீ்ஷீ - வாக் இருக்க வேண்டும்.

கடன் என்றால், 'கடனே என்று செய்தேன்', 'கடனிழவே என்று செய்தேன்' என்றெல்லாம் சொல்லுகிறோமே, அந்த மாதிரி வேண்டா வெறுப்பாகச் செய்வது என்று அர்த்தமில்லை. கடன் என்றால் கடமை, ஸ்ரீஹ்ஸமீஹ் .அதை அன்போடு, ஆர்வத்தோடு ஹ்ருதய பூர்வமாகச் செய்ய வேண்டும்.

லோகத்தில் இத்தனை ஜீவராசிகள், பசு பக்ஷிகள், தாவர வர்க்கங்கள் இருக்கிறோமே, இதில் ஒன்றுக்கொன்று வாழ்வுக்கு அவசியமானவைகளைப் பரஸ்பரம் கொடுத்துக் கொண்டுதான் ஜீவிக்கிறோம். இதிலே மநுஷ்யர்களான நாம், நம் போன்ற ஸஹ மநுஷ்யர்களிடமிருந்தும், மிருகங்கள், பக்ஷிகள், தாவரங்கள், இன்னும் வீஸீணீஸீவீனீணீமீ்மீ என்கிற ஜடவஸ்துக்களிடமிருந்துங்கூட எத்தனையோ உதவி பெறுவதால்தான் ஜீவ யாத்திரையை நடத்திக்கொள்ள முடிகிறது. இதனால்தான் ஜடம் என்று நினைக்கிற பூமி, ஜலம், அக்னி இவற்றுக்குக்கூட நாம் செய்கிற பிரதியாக வைதிக மதத்தில் பலவிதமான சடங்குகள் இருக்கின்றன.

தாவரங்களுக்கு உயிர் இருக்கிறது, உணர்ச்சிகள் இருக்கின்றன என்று ஜகதீஷ்சந்திர போஸ்தான் கண்டு பிடித்தார் என்றில்லை. வனஸ்பதி, அச்வத்தம் என்கிற மாதிரியாக அதுகளையும் உயிரும் உணர்ச்சியும் கொண்டதாகப் பார்த்து மந்திரபூர்வமாக அவற்றுக்கும் நம் ப்ரத்யுபகாரமாக பூஜைகளைப் பண்ண சாஸ்த்திரம் இருக்கிறது. 'தூர்வா ஸூக்தம்', 'ம்ருத்திகா ஸூக்தம்' என்றெல்லாம் அருகம்புல், மண் முதலானவற்றிலிருக்கிற தெய்வ சக்தியைக்கூட ஆராதிக்க வேத மந்திரங்கள் இருக்கின்றன. தினமும் செய்கிற 'ப்ரஹ்ம யஜ்ஞ'த்தில் சேதன-அசேதனங்கள் அத்தனையிலும் இருக்கிற சைதன்ய சக்திக்கு நம் நன்றியறிதலாகத் தர்ப்பணம் சொல்லியிருக்கிறது.

ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டுவிட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்தக் காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணிவிட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டியில் கட்டி ஸவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்கு பௌதிகமாகவும் ஆத்மார்தமாகவும் பண்ணுகிற உபகாரம் கொஞ்சநஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்றுவிட்டு, மநுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம் பிரதி உபகாரம் பண்ணாமல் இருந்தால் பாபம் அல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று", "எந்நன்றி கொன்றார்க்கும் உயவுண்டாம் உய்வில்லை செய்ந்நின்றி கொன்ற மகற்கு" என்றெல்லாம் மஹா பெரியவர் வள்ளுவர், இன்னும் மநு, வியாஸர் எல்லாரும் சொல்கிறார்களே!

மந்த்ரவத்தாகவும், கிராம ஜனங்களின் வழக்கத்தில் வந்துள்ளதுமான அநேக சடங்குகளைப் பண்ணினாலே அசேதனம் (வீஸீணீஸீவீனீணீமீ்மீ) என்று நாம் நினைக்கிறவற்றின் அதிதேவதைகள் திருப்தி அடைந்து விடுகிறார்கள். இது தவிர தாவரங்களுக்கு ஜலம் கொட்ட வேண்டும். மிருகங்களிடம் அன்பு பாரட்ட வேண்டும். அவற்றிக்குக் கொடுமை செய்யவே கூடாது. "வாயில்லா ஜீவன்"என்றே அவைகளை ரொம்பவும் பரிவொடு சொல்வது வழக்கம். முன்காலத்தில் ஊருக்குள் மட்டுமின்றி, வெளியே மாடுகள்

மேய்ச்சலுக்குப் போகிற இடங்களில் கூட அவற்றுக்கெனவே குளம் வெட்டி வைப்பார்கள். ஒரு பசுவுக்கு கழுத்திலே அரிக்கிறது. நம்மைப்போல் அதற்குக் கையா இருக்கிறது, சொரிந்து கொள்ள?"எனக்கு அரிக்கிறது" என்று சொல்ல அதற்கு வாய் கூட இல்லையே!அதன் கஷ்டத்தை உணர்ந்து, பசு சொரிந்து கொள்வதற்கென்றே அங்கங்கே கற்களை நாட்டி வைத்தார்கள். "ஆதீண்டு குற்றி நிறுவுதல்"என்று இதை ஒரு பெரிய தர்மமாக நீதி நூல்களில் சொல்லியிருக்கிறது. கடைசியில் நம் மாதிரியான மநுஷ்யர்களிடத்தில் வந்தால், ஸ்ருஷ்டியில் பாக்கியுள்ள அத்தனை ஜீவ இனங்களுக்கும் எத்தனை கஷ்டம் இருக்குமோ அத்தனையும் சேர்த்து வைத்து ஒவ்வொரு மநுஷ்யனுக்கும் இருக்கிறது!இது இவனுடைய அலாதி புத்தியினால் இவனே ஸம்பாதித்துக் கொண்ட சொத்து!இவனைப்போல ஜீக்ஷீஷீதீறீமீனீ (பிரச்னை) வேறு எதற்கும் இல்லை. இதிலே முக்கால்வாசி இவனே கல்பித்துக்கொண்டதுதான்!இதைச் சரிப்படுத்துகிற மஹாபெரிய பரோபகாரத்தைத்தான் மஹான்கள் செய்கிறார்கள்.

இது தவிரவும் வைத்தியசாலைகள், சிறைச்சாலைகள், ஏழை விடுதிகள், அநாதாசிரமங்கள், விதவா இல்லங்கள், பிச்சைக்காரர் விடுதிகள் முதலியவற்றைப் போய்ப் பார்த்தால் தெரியும், மநுஷ்யர்கள் எத்தனை தினுஸான கஷ்டங்களுக்கு ஆளாகிறார்கள் என்பது. இவற்றை மஹான்கள்தான் என்றில்லை. ஸாதாரண ஜனங்களான நாமும் ஓரளவுக்குத் தீர்த்து வைக்கமுடியும். இம்மாதிரியான இடங்களைப் போய்ப் பார்த்தால் நம் போன்றவர்களின் உபகாரத்தைக்கூட ஈஸ்வரன் எத்தனை ரூபங்களில் வந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று தெரியும்.

நாம் செய்யவேண்டியது என்னவென்றால், ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், துக்கம் எங்கே உண்டோ, அங்கே நாம் வலுவில் போய், அந்த துக்க நிவிருத்திக்கு நம்மால் ஆகக்கூடியதையெல்லாம் பண்ண முயலுவதேயாகும். பணத்தாலோ, சரீரத்தாலோ, வாக்காலோ நம்மால் முடிந்த உதவியைப் பண்ண வேண்டியது நம் கடன், கடமை, ஞி�௵மீ ஹ்.

இதைத்தான் தர்மம், அறம் என்று சொல்வது. முதலிலேயே நான் சொன்னபடி, இதைச் செய்வதால் எதிராளிக்கு வாஸ்தவத்தில் எந்த அளவுக்கு துக்கநிவிருத்தி உண்டாகுமோ அதற்கு நாம் 'காரன்டி'சொல்லமுடியாது. அதற்கு நாம் ஜவாப்தாரியும் அல்ல. ஆனால் இப்படிச் செய்வதால் நமக்குச் சித்தசுத்தி நிச்சயமாக ஸித்திக்கிறது. அதாவது மனமாசு அகல்கிறது. திருவள்ளுவர்கூட தர்மத்துக்கு பீமீயீவீஸீவீமீ வீஷீஸீ (லக்ஷணம்) சொல்லும்போது மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன் என்றுதான் சொல்கிறார்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### அந்தரங்க சுத்தம் அவசியம்

'**அ** னைத்து அறன்', அதாவது ஸர்வ தர்மமும் என்னவென்றால் அவரவரும் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்', அதாவது, தங்கள் மனஸைத் தாங்களே துளிகூட அழுக்கில்லாமல் நிர்மலமாக சுத்தம் செய்துகொள்வதுதான் என்கிறார் திருவள்ளுவர். கர்மாநுஷ்டானத்தால் அவரவரும் சித்தசுத்தி ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்கிற வைதிக ஸம்பிரதாயத்தைத்தான் இங்கே திருக்குறளும் சொல்கிறது. முதலில் இவன் தன்னைத்தானே சுத்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். இது இல்லாமல் பரோபகாரம், ஸோஷல் ஸர்வீஸ் என்று கிளம்பினால் அது வெற்றுக் காரியம்தான்.

தான் அடங்கியிருக்க வேண்டும்;பக்தியோடு ஈஸ்வர ஸேவை என்று நினைத்து ஸமூஹ ஸேவை செய்ய வேண்டும். அப்போதுதான் அது பலனளிக்கும். அந்தரங்க சுத்தமில்லாமல் செய்கிற காரியங்கள் வெறும் படாடோபமாகவும், 'ஷோ'வாகவுமே முடிந்து போகும். இந்த படாடோபத்தால் 'ஸேவை'என்று செய்கிறவனுக்கு அஹங்காரம் மேலும் ஜாஸ்தியாகத்தான் செய்யும். அஹங்காரம் தொலைவதற்கு உதவவேண்டிய ஸேவையை அடக்கமும் பணிவும் பக்தியும் அன்பும் இல்லாமல் செய்தால் அஹங்காரத்தை அதிகமாக்கிவிடும். குளிக்க

வேண்டும் என்று போய்ச் சேற்றை வாரிப் பூசிக்கொண்டதாகிவிடும்.

"தான் சுத்தமாவதுதான் ஸர்வ தர்மமும்"என்றால் இது ஸ்வயநலம் மாதிரி அல்லவா இருக்கிறது என்று தோன்றலாம். ஆனால் இது நாம் லோக ரீதியில் நினைக்கிற மாதிரியான ஸ்வயநலம் இல்லை. பிறத்தியாரைக் கஷ்டப்படுத்தியாவது நம் இந்திரிய ஸுகங்களைப் பூர்த்தி பண்ணிக் கொள்வதுதான் தப்பான ஸ்வயநலம். மனஸை சுத்தப்படுத்திக்கொள்ளவேண்டுமானால் நாம் கஷ்டப்பட்டாவது நல்லதே பண்ண வேண்டியதாகிறது. இது இந்திய ஸௌக்கியங்களிலிருந்து நம் மனஸை மீட்டு சாச்வதமான பேரின்பத்தில் சேர்ப்பதற்கு உதவுகிறது. 'உபகாரம்'என்றால் பிறத்தியாருக்குச் செய்தால் மட்டும் போதுமா?இதோ நமக்கென்று ஈஸ்வரன் ஓர் உயிரைக் கொடுத்த மாதிரி கொஞ்சம் வெளியே அவிழ்த்து விட்டிருக்கிறானே, மனஸ் என்ற ஒன்றைக் கொடுத்து அதை நல்லது கெட்டது இரண்டிலும் ஆடுகிற மாதிரி விட்டிருக்கிறானே!இந்த நம் உயிருக்கு ஜீவாத்மா என்கிறார்களே அதற்கு, மட்டும் நாம் உபகாரம் பண்ணாமல் இருக்கலாமா?மனஸை நல்லதிலேயே செலுத்தி, பகவான் தந்திருக்கிற வாக்கு, சரீரம் எல்லாவற்றையும் நல்ல பேச்சு, நல்ல காரியங்கள் இவற்றிலேயே பிரயோஜனப்படுத்தி இந்த உயிரைப் பேரின்ப நெறியில் சேர்க்க நாம் கடமைப்பட்டிருக்கவில்லையா? சின்னதான ஸ்வயநலத்தைவிட்டு, இந்தப் பெரிய 'ஸ்வயநல'த்துக்கு எல்லோரும் பாடுபடத்தான் வேண்டும்.

இப்படிச் செய்வதற்குப் பரநலப் பணிகளே ரொம்பவும் ஸஹாயம் செய்கிறது. இதிலே ஒரு வேடிக்கை - இவன் மனஸ் சுத்தமாக இருந்தால்தான் பரோபகாரம் நிஜமாக நடக்கிறது, பலன் தருகிறது;பரோபகாரத்தால் தான் இவன் மனஸே சுத்தமாகத் தொடங்குகிறது என்றால் **contradiction** (முரண்) மாதிரித்தானே இருக்கிறது?ஆனால் முரண்பாடு இல்லை. முதலில் இவனுக்கு மனஸ் சுத்தமாக இருக்க வேண்டும் என்ற தாபம் இருந்தாலே போதும். மனஸ் லேசில் கட்டுப்பட்டு வரத்தான் வராது. இந்திரிய ஸௌக்யத்தையே நினைத்து அது திரும்பத் திரும்ப ஓடிக்கொண்டுதான் இருக்கும். அப்போது, 'ஐயோ, இது திருந்த வேண்டுமே!'என்ற உண்மையான கவலை இருந்தால் இந்த விசாரத்துக்கே ஒரு நல்ல சக்தி ( **effect** ) உண்டு. இப்படி ஒரு தாபத்தோடு பரோபகார காரியங்கள் என்ற லகானைப் போட்டு அப்போதப்போதும் ஓடுகிற மனஸை இழுத்து ஒரு பொதுத் தொண்டில் செலுத்த வேண்டும். ஒன்றுக்கொன்று போஷித்து இட்டு நிரப்புவது, **complementary** என்கிறார்களே, அப்படிப், பரோபகாரப் பணி மனஸைக் கொஞ்சம் கொஞ்சமாக சுத்தம் பண்ணப் பணண, அந்தச் சித்த சுத்தியால் நாம் செய்கிற தொண்டும் கொஞ்சம் கொஞ்சமாக சுத்தமாகிக் கொண்டு சக்தியோடு பலன் தர ஆரம்பிக்கிறது. இப்படிப் பரோபகாரமும் ஆத்மாபிவிருத்தியும் ஒன்றுக்கொன்று கைகோத்துக் கொண்டு, பரஸ்பரம் பலம் தந்து கொண்டு வளர்கின்றன.

என்ன சொன்னாலும் வெளி உலகத்தை நாம் முழுக்க ஸரி பண்ணுவது நம் கையில் இல்லை. பல பேர் பல தினுஸான கர்மாவால் கஷ்டப்படும்போது நாம் எத்தனை ஸேவை செய்தாலும், அவர்கள் கர்மா குறுக்கே நின்று வெளியிலே பலன் இல்லாமலும் போகலாம். ஆனால் பிடிவாதமாக நாம் இந்தக் காரியத்தைச் செய்து கொண்டே வந்தால், அது நிச்சயமாக நம் கர்மாவைக் கழுவத்தான் செய்யும்;கர்ம வாஸனையால் ஏற்பட்ட நம் உள் அழுக்குகளை அலம்பத்தான் செய்யும். இதனால்தான் திருவள்ளுவர், "வெளியில் உன் தொண்டு பலன் தந்ததா என்று **proof** (நிரூபணம்) தேடாதே!உன் மனஸிலே அழுக்கு போச்சா, மனத்துக்கண் மாசிலன் ஆனாயா என்று பார்த்துக்கொள். இந்த உள் **proof** - இதை யாரும் உன்னிடமிருந்து ஒளிக்க முடியாது - கிடைத்துவிட்டால் நீ பண்ணின தர்மம், அறன் பலித்துவிட்டது என்று அர்த்தம்"என்று சொல்கிற மாதிரி குறளைப் பண்ணியிருக்கிறார்.

---

இ ப்போதெல்லாம் ரொம்பப் பேருக்கு ஒரு தப்பு அபிப்பிராயம் இருக்கிறது. அதாவது 'புத்தர், ஜீஸஸ், நபி எல்லோரும் அஹிம்ஸை, அன்பு, ஸஹோதரத்வம் ஆகியவற்றைச் சொன்ன மாதிரி வைதிக மதத்தில் சொல்லவில்லை. வைதிக மதத்தில் எப்போது பார்த்தாலும் கர்மாநுஷ்டானம் என்று ஏதாவது யாகம், யஜ்ஞம், திவஸம், தர்ப்பணம் இந்த மாதிரியும், பெரிய பெரிய பூஜை உத்ஸாவதிகளும், விரதம், யோகம், ஞான விசாரம் இதுகளும்தான் சொல்லியிருக்கிறதே தவிர, ஜீவகாருண்யத்தைப்பற்றி ஒன்றுமே இல்லை'என்று ஓர் அபிப்ராயம் இருக்கிறது. நல்ல வைதிகமாக ஆசாரமாக இருக்கிறவர்களைப் பார்த்தாலும், என்னவோ வறட்டு வறட்டு என்று ஏதாவது சடங்குகளைப் பண்ணிக்கொண்டு, 'மாடி'கொண்டாடிக் கொண்டு ஒதுங்கி ஒதுங்கித்தான் இருக்கிறார்களே தவிர, ஒரு மிஷனரி ஆர்வம் காட்டுகிற மாதிரிப் பரோபகாரப் பணிகளில் ஈடுபடுவர்களாக இல்லையே என்றுதான் தோன்றுகிறது.

வாஸ்தவத்தில் நம் சாஸ்திரங்களில் வர்ணாச்ரமப் படி அவரவருக்கான அநுஷ்டானங்களை, ஸம்ஸ்காரங்களைச் சொல்வதற்கு முன் ஒவ்வொரு ஜீவனுக்கும் இருக்க வேண்டிய எட்டு ஆத்ம குணங்களைச் சொல்லியிருக்கிறது;ஸாமான்ய தர்மங்கள் என்ற பெயரில் சில ஒழுக்க நெறிகளைச் சொல்லியிருக்கிறது. ஸாமான்ய தர்மங்களில் முதலாவதே அஹிம்ஸைதான். ஸத்யம்கூட இதற்கு அப்புறம்தான் வருகிறது. அந்த ஸத்யத்துக்கும் definition (லக்ஷணம்) கொடுக்கிறபோது,

**ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்**

அதாவது, ஸத்யம் என்பது வெறுமனே நடந்ததை நடந்தபடி வாயால் சொல்திறது மட்டுமில்லை, எது ஜீவராசிகளுக்கு ஹிதமானதாக, பிரியமானதாக இருக்கிறதோ அதுவே ஸத்யம் என்றுதான் சொல்லியிருக்கிறது.

இப்படியே நாற்பது ஸம்ஸ்காரங்களுக்கு முந்திச் சொல்லியிருக்கிற அஷ்டகுணங்களில் முதலாவதாக,

**தயா ஸர்வ பூதேஷு**

"எல்லா ஜீவராசிகளிடமும் அருள் இருக்க வேண்டும்"என்று அன்புக்கே முக்யத்வம் தந்திருக்கிறது.

அன்புடைமை, அருளுடைமை இத்யாதிகளை ஒருத்தன் தான் அப்யாஸம் பண்ணாமல் பகவான் மட்டும் தனக்கு அருள் பண்ண வேண்டும் என்று நினைத்து எத்தனை பூஜை, யாகம் இதுகள் செய்தும் பிரயோஜனமில்லைதான். இவனுக்குத் தன் மாதிரி இருக்கப்பட்ட மற்றவர்களிடம் ஒரு தயை, தாக்ஷிண்யம், ஈவு, இரக்கம் இவை இல்லாவிட்டால், தன்னிடம் மட்டும் பகவான் தயை காட்டவேண்டும் என்று கேட்க வாய் ஏது? முன்னாலேயே நான் சொன்ன மாதிரி பரோபகாரம், ஆத்மாபிவிருத்திக்கான ஸம்ஸ்காரங்கள், பூஜை முதலான ஸாதனங்கள் எல்லாம் கலந்து, கலந்து ஒன்றையொன்று இட்டு நிரப்பிக் கொண்டு (Complementary) பரஸ்பரம் ஒன்றால் ஒன்று பரிசுத்தமாக்கப்பட்டுத்தான் அநுஷ்டிக்கப்பட வேண்டும்.

நடுவாந்தரத்தில் ஈஸ்ட் இண்டியா கம்பெனி வந்து, கொஞ்சம் கொஞ்சமாக வெள்ளைக்கார ராஜ்யம் ஏற்பட்டு இங்கே இங்கிலீஷ்காரர்களின் வழக்கங்கள் புகுந்தபின்தான் நல்ல வைதிக ஆசாரத்துடன் இருப்பவர்களுக்கும் பொது ஸமூஹ ஸேவைக்கும் ஒரு பிரிவினை மாதிரி ஏற்பட்டிருக்கிறதே தவிர, அதற்கு முந்தியெல்லாம் பரமசிஷ்டர்களும் கூட ஸகல ஸமூஹத்தின் அன்பையும் மதிப்பையும் பெற்று அவர்களுக்கு உபகாரம் செய்துதான் வந்திருக்கிறார்கள். அப்பைய தீக்ஷிதர், கோவிந்த தீக்ஷிதர், திருவிசநல்லூர் அய்யாவாள் மாதிரியான பெரியவர்களின் வாழ்க்கையைப் பார்த்தால் அவர்கள் சேரி ஜனங்கள் உள்பட எல்லாருக்கும் உபகாரம் பண்ணிக் கொண்டிருந்தார்கள் என்று தெரிகிறது.

லோக க்ஷேமார்த்தம் தொழில்களைப் பாரம்பரியமாகப் பங்கீடு பண்ணிக்கொண்டு, அந்தந்தத் தொழிலைப் பொருத்து அநுஷ்டானங்களும் ஆசாரங்களும் ஏற்படுவதால்

இவற்றில் குழறுபடி உண்டாகி லோக க்ஷேமம் கெட்டுப் போகக்கூடாது என்பதற்காகவே பிரிந்து வாழ்ந்தாலும்கூட, பரோபகாரத்துக்கு அப்போது குறைச்சலே இருக்கவில்லை. இப்போது"ஸோஷல் ஸர்வீஸ்" என்று பேச்சில் ரொம்பவும் அடிப்பட்டு, நியூஸ் பேப்பரில் ஃபோட்டோக்கள் போடுவதுபோல் அப்போது செய்யாவிட்டாலும், வாஸ்தவமான ஸமூஹ ஸேவை அப்போது ஸ்வபாவமாகவே செய்யப்பட்டு வந்தது.

வெள்ளைக்காரர்களோடு town-life (நகர வாழ்க்கை) என்று ஒன்று வந்து நம் ஆசாரங்களுக்கெல்லாமே ஹானியாக எல்லாரையும் போட்டுப் பலபட்டையாகக் குழப்புகிற நிலைமை ஏற்பட்டபின் ரொம்பவும் ஆசார சீலர்கள் இந்தப் படையெடுப்புக்குப் பயந்து ஸமூஹத்திலிருந்தே ஒதுங்கிப் போன மாதிரி விலக வேண்டி வந்தது. அதனால்தான் சாஸ்திரோக்தமாக இருக்கிறவர்களுக்குப் பொதுத்தொண்டு மனப்பான்மை இல்லாதமாதிரி ஏற்பட்டுவிட்டது.

ரொம்பவும் கலந்து போகவும் கூடாது;ஒரேயடியாகப் பிரிந்தும் இருக்கக்கூடாது;அவரவரின் ஸ்வதர்மப்படியான காரியத்தில் பிரிந்திருக்க வேண்டும்;ஆனால் மனஸிலே ஒன்று சேர்ந்து அனைவரும் 'அரன் குடிமக்களாக'ஐக்கியப்பட்டு இருக்க வேண்டும் என்ற உத்க்ருஷ்டமான ஏற்பாடு இதற்கப்புறம் வீணாய்ப் போக ஆரம்பித்து விட்டது. ஒரு பக்கம் சீர்திருத்தக்காரர்கள்ஆசார அநுஷ்டானங்களையே கண்டனம் செய்தார்களென்றால், இன்னொரு பக்கம் ஆசாரக்காரர்களும் இந்த ஸமத்வம் என்கிற குழப்படிக்கு பயந்து ஒதுங்கி ஒதுங்கித் தனியாகப் போனதால், அவர்களுக்குப் பொதுவான ஸமூஹ உணர்ச்சியே குறைந்து பொதுத் தொண்டிலிருந்து விலகி விலகிப் போக ஆரம்பித்து விட்டார்கள். இப்படி ரொம்பவும் விலகிப் போகிறபோது மனஸில் அன்பு, ஐக்கிய பாவம் எல்லாம் குறையத்தான் செய்யும். இதனால்தான் ஒருவேளை இப்போது ஆசாரக்காரர்கள் என்றாலே மநுஷாபிமானம் இல்லாமல் வறண்டு போனவர்கள் என்று மற்றவர்கள் நினைக்கிற மாதிரி ஆகியிருக்கலாம். ஆனால் நம் ஸநாதன தர்மத்தை உள்ளபடி பின்பற்றுவதானால் அதற்கு ஸம்ஸ்காரங்கள் எத்தனை அவசியமோ அத்தனை அவசியம் ஆத்மகுண அபிவிருத்தியும் அப்படிப்பட்ட குணங்களில் முதலில் அருளுடைமையைத்தான் சொல்லியிருக்கிறது. யாக-யஜ்ஞ்திகள் யதேஷ்டமாகச் செய்த ரந்திதேவனைவிட இதற்கு வேறு உதாரணம் வேண்டாம். அவன் கதை கொஞ்சம் சொல்கிறேன்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

ரந்தி தேவன்

ரந்திதேவன் என்பவன் சந்திர வம்சத்தில் வந்த ராஜா. இவன் ஏகப்பட்ட யாகயஜ்ஞாதிகளைச் செய்த விஷயம் மஹாபாரதத்தில் வருகிறது. இப்படிக் கர்மாநுஷ்டத்திலேயே ஈடுபட்டிருந்ததால் இவனுக்கு ஜீவகாருண்யம் வற்றிவிடவில்லை என்கிற கதையை ஸ்ரீமத் பாகவதம் சொல்கிறது.

பழைய சாஸ்திரங்களில் 'இஷ்டம்', 'பூர்த்தம்', என்று ஜனங்கள் அநுஷ்டிக்க வேண்டிய இரண்டு விஷயங்களைச் சொல்லியிருக்கிறது. இவற்றில் 'இஷ்டம்'அல்லது 'இஷ்டி'என்பது யாக யஜ்ஞாதிகள் தசரதன் புத்ர காமேஷ்டி பண்ணினான் என்கிறோமே, அது புத்ர காம இஷ்டி தான் - அதாவது பிள்ளையை விரும்பிச் செய்த இஷ்டி (யாகம்).

'பூர்த்தம்'என்பது என்னவென்றால், அதுதான் தற்காலத்தில் ரொம்பப் பேர் நம் மதத்தில் இல்லாதது என்று நினைக்கிற ஸோஷல் ஸர்வீஸ். கிணறு-குளம் வெட்டுவது, ரோடு போடுவது, கோயில் கட்டுவது முதலிய ஸமூஹப் பணிகளுக்குப் 'பூர்த்தம்' என்று பேர். இஷ்டம் செய்யச் சில பேருக்குத்தான் அதிகாரம் உண்டு. அது ரொம்பக் கஷ்டம்கூட! நியமங்கள் ஜாஸ்தி. பூர்த்தம் இப்படியில்லை. பாமர ஜனங்களிலிருந்து ச்ரௌதிகள் வரையில் ஏழை-பணக்காரன், அந்த-ஜாதிக்காரன் இந்த ஜாதிக்காரன் என்கிற பேதம் கொஞ்சம்கூட

இல்லாமல் ஸகல ஜனங்களும் ஒன்று சேர்ந்து பண்ண வேண்டியதே பூர்த்தம். பூர்த்தத்தைப் பற்றிப் பின்னால் இன்னும் சொல்கிறேன். இப்போது ரந்திதேவன் கதையைப் பார்க்கலாம்.

இந்த ரந்திதேவன் யஜ்ஞங்கள் செய்து ஏகமாக தக்ஷிணை கொடுத்து, தானம் பண்ணினான். அவனுடைய கஜான முழுக்கக் காலியாகி விட்டது. ஒரு செல்லாக் காசு பாக்கியில்லை. அப்படி வாரி வாரி, "தேஹி"என்று வந்தவர்களுக்கெல்லாம் "நாஸ்தி" என்று சொல்லாமல் தானம் பண்ணிவிட்டான்.

அப்போது பகவான், மஹாவிஷ்ணு, ஒரு சோதனை பண்ணினார். ராஜ்யத்திலே பெரிய பஞ்சம் வரும்படியாகப் பண்ணிவிட்டார். நியாயமாகப் பார்த்தால் யஜ்ஞம் செய்வதே மழை, தான்ய ஸம்ருத்திக்காகத்தான், இப்போது நேர்மாறாக ஒரே பஞ்சமாகிவிட்டது.

அப்போதும் ரந்திதேவன் தன்னுடைய உடைமைகளையெல்லாம் ஒவ்வொன்றாக தானம் பண்ணிக் கொண்டே வந்தான். கடைசியில் ராஜாவான அவனுக்கும், அவனுடைய ராஜ குடும்பத்துக்குமே ஒரு வேளை கூழுக்குக் கூட கதியில்லை என்கிற நிலைமை வந்து விட்டது. ஆனால் கொடுத்தே பழகிய அவன் யாசகம் பண்ணவில்லை. நாற்பத்தெட்டு நாள் - ஒரு மண்டலம் - குடும்பத்தோடு சுத்த உபவாஸம் இருந்து விட்டான். அப்பறம் எப்படியோ வெளியிலே ராஜ குடும்பம் பட்டினி கிடக்கிறது என்று தெரிந்து விட்டது. ஆனானப்பட்ட ராஜா - வள்ளலாகப் பிரஜைகளை ரக்ஷித்தவன் - குடும்பத்தோடு வயிறு காயக் கிடக்கிறான் என்றவுடன் யாரோ எப்படியோ கொஞ்சம் கோதுமைக் கஞ்சியும் தண்ணீரும் சேகரம் பண்ணி நாற்பத்தொன்பதாவது நாளன்று அவனுக்கும் அவனுடைய பத்தினி புத்தரர்களுக்குமாக அனுப்பிவைத்தார்கள்.

முதுகோடு வயிறு ஒட்டிக்கொள்கிற மாதிரிக் காய்ந்து கிடந்த ஸ்திதியில் இது தேவாம்ருதமாக வந்தது. ஆசையோடு அந்தக் கஞ்சியை ராஜகுடும்பத்தினர் வாயில் விட்டுக் கொள்ளப் போகிற ஸமயம். அப்போது பார்த்து ஒரு பிராம்மணன் அங்கே வந்து சேர்ந்தான், "பிக்ஷாம் தேஹி"! என்று.

துளி அன்னம் விழுமா விழுமா என்று வயிறு தபித்து ஏங்கிக் கொண்டிருந்த ஸமயம். ராஜாவாக பஞ்ச பக்ஷ்யம் சாபிட்டவன் பஞ்சத்தில் அடிப்பட்டு துடித்துக் கொண்டிருக்கும்போது கடைசியில் கொஞ்சம் கஞ்சி கிடைத்ததென்றால், சொல்லி வைத்தாற்போல் அப்போது யாசகர் வந்து விட்டார்.

ரந்திதேவன் யாசகரைப் பார்த்தான். எப்படிப் பார்த்தான்?'சனியன் பிடித்தவன்எங்கே வந்தான்?'என்றா?இல்லை. ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனாகவே அந்தப் பிராம்மணனைப் பார்த்தான்.

'நல்லவேளை, இதை நானே சாப்பிடாமல் இந்த க்ஷணத்தில் இவர் வந்தாரே!நான் பகவதபசாரம் செய்யமால் காப்பாற்றினாரே! என்று ஸந்தோஷப்பட்டான்.

அவனுடைய பத்தினி புத்திரர்களும் உதார குணத்தில் அவனுக்குக் குறையாதவர்கள். எல்லாரும் தங்களிடமிருந்ததைப் பங்கு போட்டுப் பிராம்மணனுக்கும் கொடுத்தார்கள். அது இவர்களுக்கே போதும் போதாததாகத்தான் இருந்தது. ஆனால் அதிலே கணிசமாக ஒரு பங்கு யாசகருக்குக் கொடுத்து அவரைத் திருப்திப்படுத்தி அனுப்பினார்கள்.

பாக்கியை ராஜ குடும்பத்தினர் சாப்பிட இருந்தபோது மறுபடியும் ஒரு யாசகன் முளைத்தான். இப்போது வந்தவன் நாலாம் வர்ணத்தவன். பசிக்கும் கருணைக்கும் வர்ணம், ஜாதி என்ற பேதங்கள் உண்டா என்ன?இவர்கள் ஏற்கனவே குறைந்து போய்விட்ட கஞ்சியிலிருந்தும், தாங்கள் கால் வயிறு சாப்பிட்டால் போதும் என்று கொஞ்சமே வைத்துக் கொண்டு, பாக்கியை அந்தப் பிச்சைக்காரனுக்குக் கொடுத்து விட்டார்கள். ராஜாவின் கண்ணில் இவனும் விஷ்ணுவாகத்தான் தெரிந்தான்.

மிச்சமிருந்த கஞ்சியில் மற்றவர்கள் தங்கள் பங்கைக் குடித்தார்கள். ரந்திதேவன் மாத்திரம் இந்த ஸமயத்திலும் இரண்டு ஜீவன்களுக்கு உபகாரம் பண்ணும்படியாக பகவான் அநுக்ரஹம் செய்ததையே நினைத்துக் கொண்டோ என்னவோ, சாப்பிடாமல் யோசனையில்

இருந்தான்.

இவனுக்கு சாப்பிடுகிற எண்ணம் வந்த அதே ஸமயத்தில் மறுபடியும் ஒரு தீனக்குரல் வந்தது. மநுஷக் குரலோடு நாய்கள் குரைப்பு வேறு! நாய்களைப் பிடித்துக் கொண்டு ஒரு வேடன் வந்து நிற்கிறான். இந்தக் கஞ்சிக்குத்தான் போட்டியாக வந்திருக்கிறான்!

நாய்கள் நாய்க்காரான் எல்லோருமே ரந்திதேவனுக்கு நாராயண ஸ்வரூபமாகத்தான் தெரிந்தார்கள். வேதத்தில் ஸ்ரீருத்ரத்தில் பரமேஸ்வரனை 'நாய்களின் உருவத்தில் இருக்கிறவன்; நாய்களை வைத்திருக்கிற வேடனாக இருக்கிறவன்'என்று சொல்லியிருக்கிறது. ரந்திதேவன் வாஸ்தவத்திலேயே அப்படி ஈஸ்வர ரூபமாகப் பார்த்தான்.

ரந்திதேவனுக்கு அப்படிப்பட்ட த்ருஷ்டி இருந்தது. 'நாராயணன்தான் இப்படி நாய்களாகவும் அதைப் பிடித்துக்கொண்டு வருபவனுமாக வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறான். தனக்குப் பசியிருப்பதாக வேஷம் போடுகிறான். அதைத் தணிப்பதுதான் பகவத் ஆராதனம்'என்று நினைத்தான். கொஞ்சம்கூட மனஸ் கலங்காமல் தன் பங்கில் பாக்கியிருந்த கஞ்சி முழுவதையும் அவர்களுக்கு முன்னால் வைத்துவிட்டான். 'நாய்க்கு நமஸ்காரம், நாயின் யஜமானுக்கு நமஸ்காரம்'â¡Á ¼ˆó‹ ªê£™Aø ñ£FK«ò Üõ˜èÀ‚° ïñvè£ó‹ ð‡Eù£¡.

இப்போது அவனிடம் இருந்ததெல்லாம் வெறும் தீர்த்தம்தான். ஒரே வறட்சிக் காலமாதலால் அந்தத் தீர்த்தம் கிடைப்பதுகூட ரொம்ப துர்லபமாகத்தான் இருந்தது. அதையாவது பானம் பண்ணினால்தான் இவனுடைய ஜீவன் உடம்பிலே நிற்கும் என்கிற ஸ்திதி.

இப்போதும் பகவான் சோதனையை நிறுத்தவில்லை. ஜலத்தையாவது குடித்துப் பிராணனை ரக்ஷித்துக் கொள்ளலாம் என்று இவன் பார்க்கிறபோது, மறுபடியும் "சாமீ, தாஹம், தாஹம்!"என்று பிரலாபம் வந்தது.

"அந்தத் தண்ணீரையாவது ஊத்து சாமீ"என்று சொல்லிக் கொண்டு ஒரு பஞ்சமன் (புலையன்) வந்து நின்றான்.

அப்போது ரந்திதேவன் சொன்னதாக பாகவதத்தில் இரண்டு ஸ்லோகங்கள் வருகின்றன. இரண்டும் இரண்டு ரத்னங்கள். த்யாகத்துக்கு, பரோபகாரத்துக்கு இதைவிடப் பெரிய மந்திரமில்லை என்று சொல்லலாம். அதை அவன் சொன்ன வார்த்தையிலேயே சொல்கிறேன். அப்புறம் தமிழில் அர்த்தம் சொல்கிறேன்.

ந காமயே (அ)ஹம் கதிம் ஈஸ்வராத் பராம்

அஷ்டர்த்தி யுக்தாம் அபுநர்பவம் வாமி

ஆர்த்திம் ப்ரபத்யே (அ)கில தேஹ பாஜாம்

அந்தஸ்திதோ யேன பவந்த்யது:கா:மிமி

¼ˆF â¡ø£™ RˆF â¡«ø Ü˜ˆî‹ ð‡E, ªè£œ÷ô£‹. ÜŸ¹î ê,Fè¬÷ (miracle-èœ ªêŒAø ê,Fè¬÷) â†´ RˆFèœ Ü™ô¶ ¼ˆFèœ â¡Á ªê£™õ£˜èœ. Þ‰î 'Üwì ¼ˆF'î£¡ 'Üwì˜ˆF' â¡Á v«ô£èˆF™ õ¼Aø¶. Þ¬õ Þ¼‰¶M†ì£™ ú˜õ «ô£è¬î»‹ Ý†®Šð¬ìˆ¶ Ý÷£ô‹. ó‰F«îõ¡ â¡ù ªê£™Aø£¡ â¡ø£™, "(ðó£‹-) àò˜‰îî£ù Þ‰î RˆFè¬÷Š ªðÁAø (èF‹-) õN¬ò,Ãì ï£¡ (ßvõóù£ˆ-) ßvõóQìI¼‰¶ (ï è£ñ«ò-) Þ„C,èM™¬ô;Šó£˜ˆF,èM™¬ô. âù,° ñè£ ê,Fèœ «õ‡´ªñ¡ÁÃìŠ Hó£˜ˆî¬ù ð‡íM™¬ô". êK, ÜŠð®ò£ù£™ Þ‰î ê,F â™ô£‹ ÜìƒA ÜŠð®«ò ðóñ ê£‰îñ£è Ýì£ñ™ Ü¬êò£ñ™ Þ¼,Aø úñ£F G¬ô¬ò, «ñ£þˆ¬îŠ Hó£˜ˆF,Aø£ù£?ñÁð®»‹ Høõ£ ªïPò£ù 'Ü¡¹ù˜õ‹'â¡ø º,F¬ò M¼‹¹Aø£ù£?"Ü¶¾‹ âù,° «õ‡ì£‹; ï è£ñ«ò (Ü)ý‹ Ü¹ù˜ðõ‹ õ£ " . H¡«ù ßvõóQìI¼‰¶ â¬î˜ˆî£¡ Þõ¡ Þ„Cˆ¶Š Hó£˜ˆF,Aø£ù£‹?

புழுவாகவோ பூச்சியாகவோ பக்ஷியாகவோ மிருகமாகவோ மநுஷ்யனாகவோ சரீரம் என்று ஒன்றை வைத்துக்கொண்டு இத்தனை ஜீவராசிகள் இருக்கின்றவே, இந்த (அகில-) அனைத்து

(தேஹ பாஜாம்-) சரீரம் படைத்த பிராணிகளுக்கும் ஏதாவது துன்பம் இருக்கிறதல்லவா?'ஆர்த்தி'என்றால் துன்பம், துக்கம். அந்தத் துன்பத்தை ஒவ்வொருவருக்கும் உள்ளே இருக்கிற உள்ளம்தானே உணர்கிறது?உள்ளேயிருப்பதால் தான் அதற்கு உள்ளம் என்று பேர். "அந்த:"- உள்ளே, "ஸ்தித:"- இருப்பது அந்த உள்ளம்தான். "எப்படியோ ஒரு தினுஸில் என்னால் மட்டும் அந்த உள்ளங்களுக்குள் இருக்க முடிந்துவிட்டால், ஜீவராசிகளின் துன்பம் எல்லாம் என்னிடம் வந்து சேர்ந்துவிடுமல்லவா?இப்படி ஸகல ஜீவர்களின் கஷ்டத்தையும் வாங்கிக் கொண்டு அநுபவிக்கிற சக்தியைத்தான், ஈஸ்வரா, உன்னிடம் நான் விரும்பிப் பிரார்த்திக்கிறேன். (யேன-) எதனால் பிராணிகள் (அது:கா:) துக்கமற்றவையாக (பவந்தி-) ஆகுமோ, அதைத்தான் உன்னிடம் வேண்டுகிறேன்"என்கிறான்.

துக்கம் என்பது பாப கர்மாவினால்தான் வருகிறது. ஒருத்தருடைய பாபத்தை இன்னொருத்தர் வாங்கிக் கொண்டு அநுபவிப்பதை ஸ்வீநீணீக்ஷீவீஷீஹ்ணூ ஹீணீயீயீமீக்ஷீவீஸீரீ என்று சொல்வார்கள். ஜீஸஸ் இப்படித்தான் லோகம் பூராவின் பாபத்தையும் வாங்கிக்கொண்டு தீர்ப்பதற்கே சிலுவையில் அறைபட்டதாகச் சொல்வார்கள். அந்த உத்க்ருஷ்டமான தியாக சிந்தனை நம் மதத்துக்குப் புதிதானதல்ல. ரந்திதேவன் வேண்டினது இதைத்தான். "அகில தேஹ பாஜாம் ஆர்த்திம் ப்ரபத்யே - ஸகல உயிரினத்துடையவும் கஷ்டங்களை ஏற்றுக் கொள்கிறேன்"என்று இதைத்தான் வேண்டினான்.

இதில் 'ப்ரபத்யே'என்று ஒரு வார்த்தை வருகிறது. அநேக ஸ்தோத்ரங்களில் - முக்யமாக ஸ்ரீவைஷ்ணவ க்ரதங்களில் - "சரணம் ப்ரபத்யே, சரணம் ப்ரபத்யே"என்று வருவதைக் கேட்டிருப்பீர்கள். வேதத்திலேயே இருக்கப்பட்ட ஸ்ரீஸூக்தத்திலும் துர்கா ஸூக்தத்திலும் "சரணம் ப்ரபத்யே"என்று வருகிறது. 'ப்ரபத்யே'என்றால் 'அடைக்கலம் புகுகிறேன்', 'சரணாகதி பண்ணுகிறேன்'என்று அர்த்தம். ஒன்றிடம் ஸர்வஸங்க பரித்யாகம் (மீஷீமீணீறீ ஹீஆக்ஷீக்ஷீமீஸீபீமீக்ஷீ) பண்ணிவிடுவதுதான் ப்ரபத்தி. அதாவது 'ஸரண்டர்' பண்ணுகிறவன் தன்னை அடியோடு ஸைஃபராக்கிக் கொண்டுவிட வேண்டும். அப்போது எதனிடம் இவன் 'ஸரண்டர்' பண்ணுகிறானோ, அது இவனை ஆட்கொண்டு, அப்படியே ரொப்பி விடும். இப்படியே பகவானிடம் தன்னை அடியோடு ஸைஃபராக்கிக் கொண்டு அவனாலேயே பூராவும் ரொப்பப்படுகிற நிலையைத்தான் பொதுவாக நாம் பார்க்கிற ஸ்தோத்ரங்கள், மந்தரங்கள் எல்லாவற்றிலும் 'ப்ரபத்யே', 'ப்ரபத்யே' என்று சொல்லியிருக்கிறது. மஹாலக்ஷ்மியை, துர்காதேவியை சரணடைகிறேன் என்று வேத ஸூக்தத்தில் வருகிற மாதிரி, மற்ற ஸ்தோத்ரங்களில் "இந்த ஸ்வாமியை சரணடைகிறேன்," "அந்த ஸ்வாமியை சரணடைகிறேன்", என்று ஒவ்வொரு ஸ்வாமி பெயரைச் சொல்லி வரும். உபநிஷத்தை சாந்தி பாடக்ரமத்தில் ஆரம்பிக்கும்போது, "மோக்ஷத்தில் நாட்டமுடைய முமுக்ஷுவான நான் புத்தியைப் பிரகாசிக்கப் பண்ணும் பரமாத்மாவை அடைக்கலம் புகுகிறேன்"என்கிறபோதும் இந்த "சரணம் ப்ரபத்யே" வருகிறது. ஆனால் ரந்திதேவன் என்ன சொன்னான்? " ஆர்த்திம் ப்ரபத்யே" என்றான்!'ஆர்த்தி'என்றால் துன்பம், இன்னல், கஷ்டம். பரமாத்மா என்னை அப்படியே ஆட்கொள்ளட்டும் என்று சொல்லாமல், "ஜீவலோகத்தின் ஸகல கஷ்டமும் என்னைப் பூராவாக ஆட்கொண்டு என்னிடமே வந்து சேரட்டும். நான் லோகத்தின் கஷ்டத்துக்கு சரணாகதி பண்ணுகிறேன்" என்று பரம த்யாக நிலையில் இருந்துகொண்டு சொல்கிறான்!

எல்லாரும் பொதுவாக என்ன வேண்டுவோம்?எல்லா இன்பமும் எனக்குக் கிடைக்கட்டும் என்றுதான். ரந்திதேவனோ "எல்லார் துன்பமும் எனக்கு வந்து சேரட்டும்"என்றான். "எல்லா ஜீவராசிகளின் கஷ்டங்கள் அனைத்தையும் நான் எடுத்துக்கொண்டு அநுபவிக்கிறேன். அதனால் அவற்றின் துக்கம் தீரட்டும்"என்றான். இன்னொரு ஸ்லோகம் சொன்னான்.

க்ஷுத்-த்ருட்-ச்ரமோ காத்ர பரிப்ரமச்ச

தைன்யம் க்லம:சோக விஷாத மோஹா:மி

ஸர்வே நிவ்ருத்தா: க்ருபணஸ்ய ஜந்தோ:

ஜிஜீவிஷோ ஜீவ ஜலார்ப்பணாத் மேமிமி

ªðKò „ªó÷F,À,° î£ù‹ ð‡µAø«ð£¶ ñ‰^ó‹ ªê£™L,ªè£‡´ b˜ˆî‹ «ð£´Aø ñ£FK, Ü‰îŠ

ð…êñÂ,º¨ î¡Qì‹ â…CJ¼‰î b˜˜î¯¬î»‹ î˜î‹ ªêŒ¶ªè£‡´ ó‰F«îõ¡ Þ‰î v«ô£è˜¬î„ ªê£¡ù£¡. ÞîŸº â¡ù Ü˜î‹?"Þ«î£ Þ‰î üô˜¬î, ªè£´,A«ø«ù, Þ¶ Þ‰îŠ ð…êñ¡ å¼˜îÂ,º ñ†´‹ î£è ê£‰F, î£ð ê£‰F ð‡µõî£?Þ™¬ô. ú˜õÌî Ü‰îó£˜ñ£õ£ù ï£ó£òíù£è Þõ¬ù G¬ù˜î™ô«õ£ Þ¬î ÞõÂ,º Ü˜Šðí‹ ð‡µA«ø¡?Üîù£™ Þ‰î üô«ñ úèô àJ˜èÀ,º‹ î£è ê£‰F¬ò, ¶,è Gš¼˜F¬ò, ªè£´,è†´‹."

(ஜீவ ஜிஜீவிஷோ-) உயிர்வாழ வேண்டுமென்று விரும்பும், (க்ருபணஸ்ய-) நிராதரவான (ஜந்தோ:-) ஸகல ப்ராணிகளும் (மே-) நான் கொடுக்கிற இந்த (ஜலார்ப்பணாத்-) தீர்த்த தானத்தால் (க்ஷுத்-) பசி (த்ருட்-) தாகம் இவற்றால் ஏற்படும் (ச்ரம:-) ச்ரமத்திலிருந்தும் (காத்ர பரிப்ரமச்ச-) வியாதி வக்கை மாதிரியான சரீரக் கஷ்டங்களிலிருந்தும் (தைன்யம்-) மனஸின் கஷ்டமான தீனநிலை, (க்லம:-) மனத்தளர்ச்சி, (சோக-விஷாத-மோஹா:-) துக்கம், கலக்கம் (பீமீழீமீநீமீ`வீஷீஸீ), மயக்கம் (ஸர்வே-) முதலிய எல்லாத் துன்பங்களிலிருந்தும் (நிவ்ருத்தா:-) நிவாரணம் பெறட்டும்.

ஒரே ஒருதனுக்குத் தருகிற கொஞ்சம் தீர்த்தம் இப்படி ஸர்வ ஜீவன்களின் கஷ்டத்தையும் போக்குமா என்றால்:

த்ரௌபதி அலம்பி வைத்திருந்த அக்ஷய பாத்திரத்தில் துளிப்போல ஒட்டிக் கொண்டிருந்த கீரையை க்ருஷ்ண பரமாத்மா சாப்பிட்டார்;உடனேயே துர்வாஸருக்கும் அவருடைய பதினாயிரம் சிஷ்யர்களுக்கும் பெரிய ஸமாராதனை சாப்பிட்ட மாதிரி வயிறு நிரம்பி விட்டது என்று படிக்கிறோமல்லவா?அந்த மாதிரிதான் இதுவும். 'இவன் யாரோ ஒரு பஞ்சமன்' என்று நினைக்காமல் பரமாத்ம ஸ்வரூபமாகவே அவனைப் புரிந்து கொண்டு அவனுக்குக் கொடுக்கிறபோது, அந்த பரமாத்மாவுக்குள்ளேயே அடங்கியிருக்கிற ஸகல ப்ரபஞ்சமும் அதனால் த்ருப்தியாகிறது. பாவம் நிஜமாக இருக்கவேண்டும். அதுதான் முக்யம்.

த்யாகத்தின் உச்சநிலையில் இருந்துகொண்டு இப்படி ரந்திதேவன் தன் ப்ராணனை ரக்ஷிப்பதற்கு அத்யாவச்யமாயிருந்த தீர்த்தத்தையும் புலையனுக்குக் கொடுத்தானோ இல்லையோ, உடனே முதலில் வந்த பிராம்மணன், அப்புறம் வந்த நாலாம் வர்ணத்தவன், அதற்குப் பின்னால் நாய்களோடு வந்த நாய்க்காரன், கடைசியில் வந்த பஞ்சமன் எல்லோரும் விஷ்ணு தூதர்களாக அவன் முன் தங்கள் நிஜ ரூபத்தைக் காட்டினார்கள்.*

"Üõ¡ Üõ˜èÀ,º ïñvè£ó‹ ð‡EM†´ ï£ó£òí ˆò£ù˜F™ Í›AM†ì£¡. Þ‰î ñ£ò õ£›‚¬è å¼ èù£ ñ£FK ÜõQìI¼‰¶ ñ¬ø‰«î «ð£ŒM†ì¶"â¡Á ð£èõ˜F™ Þ‰î ¹‡ò êK˜Fó‹ º®Aø¶.

சாதரணமாக நம் புராணங்களிலோ, மற்ற காவிய நாடகங்களிலோ கூட முக்கியமானபாத்திரம் (பிமீக்ஷீஷீ) செத்துப் போனதாக முடியாது. 'ட்ராஜெடி'நம் ஸம்பிரதாயத்திலில்லை. மங்களமாக முடிய வேண்டும் என்று, லோக ரீதியிலே ஸந்தோஷமாக ஒரு கல்யாணம், ஒரு பட்டாபிஷேகம் என்றிப்படி முடிப்பதுதான் வழக்கம். ராமாயணம், மஹாபாரதம் இவற்றில் ஸ்ரீராமனும், பஞ்சபாண்டவர்களும் வைகுண்ட ஆரோஹணம், ஸ்வர்க ஆரோஹணம் பண்ணுவதாகே வால்மீகியும், வியாஸாசாரியாளும் மூல க்ரந்தத்தில் முடிந்த்திருந்தும்கூட, இப்போதும் ஒரு ஹரிகதை, அல்லது உபந்யாஸம் என்று நடக்கிறபோது ஸ்ரீராம பட்டாபிஷேகம், தர்மராஜ பட்டாபிஷேகம் இவற்றோடு பூர்த்தி பண்ணி, அதற்கு மேற்பட்ட அந்திமக் கதையைச் சொல்லாமலே விட்டு விடுவதைத்தான் பார்க்கிறோம். த்ருவன், ப்ரஹ்லாதன் மாதிரியானவர்கள் பகவான் ப்ரத்யக்ஷமானதும் அவனோடேயே முக்தி அடைந்துவிட வேண்டும் என்று ப்ரார்த்தித்தாலும்கூட, பகவான்"அதெல்லாம் கூடாது"என்று சொல்லி, அவர்களுக்குப் பட்டாபிஷேகம் பண்ணினதாகத்தான் பாகவத புராணத்திலேயே சொல்லியிருக்கிறது. ஆனால் இந்த ரந்திதேவன் கதையில் மட்டும் விஷ்ணு தூதர்கள் வந்தார்கள் என்று சொன்னபின், 'உடனே பஞ்சமெல்லாம் தீர்ந்துவிட்டது; ரந்திதேவனின் பசி, தாகம் எல்லாம் தீர்ந்து நெடுங்காலம் ராஜ்யபாரம் பண்ணினான்' என்று சொல்லாமல், "மாயையே ஒரு ஸொப்பனம் மாதிரி அவனைவிட்டு ஓடிப்போயிற்று"பரலோகம், பரமபதம் என்கிறார்களே, அதற்குப் போய் விட்டான் என்றுதான் அர்த்தம் ஏற்படுகிறது. அவனுடைய மஹா த்யாகம் நம் மனஸில் நன்றாக உறைப்பதற்காகவே இப்படி மங்கள முடிவை மாற்றிச் சொல்லியிருக்கிறாற் போல்

தோன்றுகிறது.,

இந்த லோகத்தின் ஸந்தோஷம் எப்படியும் சாஸ்வதமில்லை. கல்யாணம், பட்டாபிஷேகம் எல்லாம் தாற்காலிக ஸந்தோஷம்தான். பகவானிடம் போய்ச் சேருவதுதான் நிரந்தரமான மங்களம். அப்படிப் பார்த்தால் ரந்திதேவன் கதைக்குத்தான் நிஜமான மங்கள முடிவு.

ரந்திதேவன் கதை மாதிரி இன்னொன்று பாரதத்தில் வருகிறது.

--------------------------------------------------------------------------------

*ÿ ªðKòõ˜èO¡ à¬óò£ì™èOL¼‰¶ å¼ ð,î˜ â´˜î °PŠ¹èOL¼‰¶ ÞŠð°F à¼õ£,èŠð†®¼,Aø¶. ÜF™ "Mwµ Éî˜èœ" â¡«ø è£‡Aø¶ Ýù£™ ÿñˆ ð£èõî˜F«ô£ Í¾ôA¡ Üb„õó˜èœ â¡Á àœ÷¶. Hó‹ñ, Mwµ, ¼ˆó˜è÷£Aò FKÍ˜ˆFò¬ó«ò ð£èõî‹ Í¾ôè Übêó£è, ÃÁñ£îô£™, ð£èõî šò£,ò£î£,èœ °‹Í˜ˆFò£˜ ó‰F«îõÂ,° îKêù‹ î‰îî£è, ÃÁAø£˜èœ. Ýù£™ ºîL™ Hó£ñí¡, Hø° ï£¡è£‹ õ˜í˜îõ¡, ÜŠ¹ø‹ ï£Œ,è£ó¡, è¬ìCJ™ b‡ì£î£¡ âù ï£™õ¬ó„ ªê£™LM†´ Üõ˜è¬÷ Í¡Á Í˜ˆFè÷£è, °PŠH´õ¶ âŠð®Š ªð£¼‰¶ªñùŠ ¹KòM™¬ô. ï£¬òŠ H®ˆ¶ õ‰îõ¡, c˜ «è†ìõ¡ ÝAò Þ¼õ¼‹ å¼õù£è«õ Þ¼,èô£‹. ÿ ªðKòõ˜èœ "Mwµ Éî˜èœ"â¡Á ÃPJ¼Šð£«óò£A™ ÞšMî êƒ¬èèÀ,° ÞìI™¬ô.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## விசித்திரக் கீரிப்பிள்ளை

**த** ர்மபுத்ரர் அஸ்வமேத யாகத்துக்கு அங்கமாக ஏராளமான அன்னதானம் பண்ணினார். அந்த மாதிரி ஸகல ஜனங்களுக்கும் வயிறும் மனஸூம் ரொம்பிப் போகிற முறையில் எவருமே அன்னதானம் பண்ணினதில்லை என்று எல்லோரும் ஏகமாகக் கொண்டாடினார்கள். வயிறு ரொம்பப் போட்டு விடலாம். அது பெரிசில்லை அதே ஸமயத்தில் மனஸூம் ரொம்புகிற மாதிரி பரம அன்போடு போடுவதுதான் விசேஷம். 'இது யாகத்தின் அங்கம். இதைப் பண்ணினால்தான் தனக்குப் பலன் கிடைக்கும்'என்று காரியார்த்தமாக மட்டுமில்லாமல், கடனே என்று இராமல், நிஜமான பரிவோடு பாண்டவர்கள் இப்படிப் பெரிய அன்னதானம் செய்து லோகமெல்லாம் ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது, இதனால் அவர்களுக்கு கர்வம் வந்துவிடக் கூடாதே என்று பகவான் பார்த்தார். கர்வம் வந்ததோ அத்தனை தர்மமும் அதிலே "ஸ்வாஹா" ஆகிவிட வேண்டியதுதான்! அதனால் இந்த ஸமயத்தில் அவர்களைக் கொஞ்சம் மட்டம் தட்டினாலும் நல்லதுதான் என்று பகவான் நினைத்தார். வெறுமனே மட்டம் தட்டினால் மட்டும் போதாது;அதோடு ஸர்வ லோகத்துக்கும் தானத்தின் உத்க்ருஷ்டமான தத்வம் தெரியும்படியாகவும் பண்ண வேண்டும் என்றும் நினைத்தார். இந்த இரண்டு லக்ஷ்யங்களையும் பூர்த்தி பண்ணுகிற ஒரு ஸம்பவம் அப்போது பகவத் ஸங்கல்பத்தால் நடந்தது.

ஏகப்பட்ட ஜனங்கள் சேர்ந்து தர்மபுத்ரரை ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டிருந்த அந்த ஸந்தர்ப்பத்தில் அங்கே திடீரென்று ஒரு விசித்திரமான கீரிப்பிள்ளை தோன்றிற்று. விசித்ரம் என்னவென்றால் அந்தக் கீரிப்பிள்ளையின் உடம்பில் சரியாக ஒரு பாதி மட்டும் பளபளவென்று தங்கம் மாதிரி பிரகாசித்தது.

அந்தக் கீரிப்பிள்ளை போஜனசாலையில் சிந்தியிருந்த அன்னாதிகளின்மேல் புரண்டுவிட்டு, மநுஷக் குரலில், "இது என்ன பெரிய தானம்?இதென்ன பெரிய யாகம்?அந்தக் குருக்ஷேத்திரத்து உஞ்சவ்ருத்தி பிராம்மணர் பண்ணின தானத்துக்கு இது வீசம்கூடக் காணாது"என்று தூக்கி எறிந்து பேசிற்று.

பார்வைக்கே பாதித் தங்கமாக அது விசித்ரமாக இருந்தது என்றால், மநுஷக் குரலில்

பேசினது அதைவிட விசித்ரம். பேசிய விஷயமோ எல்லாவற்றையும் விட விசித்ரமாக இருந்தது. லோகம் முழுவதையும் கட்டி ஆள்கிற ஸார்வபௌமரான தர்மபுத்ரர் செய்ததைவிடப் பெரிய தானத்தை உஞ்சவ்ருத்தி பிராம்மணன் எப்படிப் பண்ண முடியும்?

உஞ்சவ்ருத்தி என்றால் தற்காலத்தில் பிச்சை எடுப்பது, வீடு வீடாகப் போய்த் தான்ய பிக்ஷை வாங்குவது என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரி தெருத் தெருவாகப் போய் அக்ஷதை வாங்குவதை உஞ்சவ்ருத்தி பஜனை என்றுகூட பஜனை ஸம்ப்ரதாயத்தில் சொல்கிற ஒரு பழக்கம் வந்துவிட்டது. ஆனால் ஆதி காலத்தில், நம் தர்ம சாஸ்திரங்களின்படி பார்த்தால், உஞ்சவ்ருத்தி என்பதற்கு அர்த்தமே வேறே. சாஸ்த்ரப்படி, களத்திலே நெல்லடித்து, சொந்தக்காரன் அந்த தான்யத்தைக் கொண்டு போகிறபோது, அடிவரைக்கும் வழித்து வாரிக்கொண்டு போகாமல், கொஞ்சத்தை அப்படியே களத்திலேயே விட்டுவிட வேண்டும். இதைத்தான் சோற்றுக்கு வேறு வழி இல்லாத பிராம்மணர்கள் பொறுக்கி எடுத்துக் கொள்ள வேண்டும் 'உஞ்சம்'என்றால் 'சிதறிப் போனதைத் திரட்டி எடுப்பது'என்றே அர்த்தம்.

கீரிப்பிள்ளை உஞ்சவ்ருத்திப் பிராம்மணனை ஓஹோ என்று புகழ்ந்ததும் ஸபையில் கூடியிருந்தவர்கள் அதனிடம், "நீ யார்?நீ சொல்கிற உஞ்சவ்ருத்தி பிராம்மணன் யார்?அவன் பண்ணின மஹா பெரிய தானம் என்ன?"என்று கேட்டார்கள்.

கீரிப்பிள்ளை கதை சொல்ல ஆரம்பித்தது. அந்தக் கீரி ரொம்ப வயஸானது. அதனால் எத்தனையோ வருஷங்களுக்கு முன்னால் நடந்த கதையைச் சொல்லிற்று.

அப்போது குருக்ஷேத்திரத்தில் ஒரு பெரிய பஞ்சம் ஏற்பட்டது. பெரிய பெரிய ப்ரப்புக்களே அன்னத்துக்குப் பரிதவிக்கும்டியான ஸ்திதி ஏற்பட்டது. அப்போது உஞ்சவ்ருத்தி பிராம்மண்ணன் நிலை எப்படி இருக்கும்?எப்போதோ எங்கேயோ பொறுக்கி வந்த கோதுமையில் தான் கொஞ்சம் குப்பையும் கூளமுமாக மட்கி, நாற்றமெடுத்துக் கை வசம் இருந்தது. அதை மாவாக அரைத்து வைத்துக் கொண்டிருந்தார்கள். அவனுடைய குடும்பத்திலே நாலு ஜீவன்கள். பிராம்மணன், அவனுடைய பத்னி, பிள்ளை, மாட்டுப்பெண் - இந்த நாலு பேருக்கு ஒரு வேளைக்குத்தான் இந்த மாவு போதும். 'ஏதோ இந்த வேளையை இப்படித் தள்ளுவோம்;அடுத்த வேளை இதுவும் இல்லாமல் ப்ராணன் போக வேண்டியதுதான்'என்று நினைத்து நாலு பேரும் வெறும் மாவை ஆளுக்கு ஒரு பிடி தின்னலாம் என்று உட்கார்ந்தார்கள்.

இந்த ஸமயம் பார்த்து "தேஹி!"என்று சொல்லிக்கொண்டு ஒரு யாசகர் அங்கு வந்து சேர்ந்தார்.

'கலத்திலே சோற்றை இட்டுக் கைப்பிடித்து இழுப்பது'என்பார்களே, அந்த மாதிரியான ஸந்தர்ப்பம்.

அந்த ஸந்தர்ப்பத்திலுங்கூட அந்தக் குடும்பத்தில் ஒருத்தராவது விருந்தோம்பல் பண்பில் பின்வாங்கவில்லை. பிராம்மணன், அவனுடைய பத்னி, புத்திரன், மாட்டுப்பெண் ஆகிய நாலு பேருமே போட்டி போட்டுக்கொண்டு அதிதிக்குத் தங்கள் பங்கு மாவைக் கொடுக்க முன்வந்தார்கள்.

அதிதி ஸத்காரம் - அதாவது விருந்தோம்பல் - என்பது ஸமூஹ தர்மம், socialduty. இதோடு குடும்ப தர்மம், domestic duty என்றும் ஒன்று இருக்கிறது. ஒரு குடும்பத்தில் இன்னின்னார் இன்னின்ன கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று நிர்ணயிக்கிற தர்மம் இது. நாலு பேருமாக ஸோஷல் ட்யூட்டியைப் பண்ண முன்வருகிறபோதே, தங்களுக்குள் டொமெஸ்டிக் ட்யூட்டியை எடுத்துக் காட்டிக் கொண்டார்கள். "புருஷன் இல்லாமல் ஒரு பத்னி இருப்பாளா? உங்கள் பங்கைக் கொடுத்துவிட்டு நீங்கள் உயிர் விட நான் பார்ப்பேனா?அதனால் என் பங்கை நான் தருகிறேன்"என்று பத்னி பிடிவாதம் பிடித்தாள். பிள்ளையோ, "ப்ரத்யக்ஷ தெய்வமான மாதா பிதாக்களுக்குப் பிராணாபத்து என்கிறபோது ஒரு புத்ரன் அதைப் பார்த்துக் கொண்டிருக்கலாமா?"என்று அவர்களைத் தடுத்து,

அதிதிக்குத் தன் பங்கைத் தரப்போனான். உஞ்சவ்ருத்தி பிராம்மணனிடம் அவனுடைய பத்னி எந்தப் பதிவிரதா தர்மத்தை எடுத்துச் சொன்னாளோ, அதையே மாட்டுப்பெண் பிள்ளையிடம் சொல்லி, "நான்தான் என் பங்கைத் தருவேன்"என்று பிடிவாதம் பண்ணினாள்.

நாமாக இருந்தால் ஏதாவது ஒரு வஸ்து நமக்குக் கிடைக்கிறதென்றால் நான் முந்தி, நீ பிந்தி என்று போட்டி போடுவோம். கொடுக்கிறதென்றால் அவரவரும் பின் வாங்கத்தான் செய்வோம். இந்த ஏழை பிராம்மணக் குடும்பத்திலோ உயிரையே கொடுப்பதற்கு, பிராணத்யாகத்துக்குப் போட்டி போட்டார்கள். த்யாகம், தானம் எல்லாம் பணக்காரர்களால்தான் முடியும் என்றில்லை!ðóñ ã¬öè÷£½‹ º®»‹. ªðKò ó£ü£õ£ù ó‰F«îõ¡ °´‹ð^Fù˜ ªêŒî Ü«î ^ò£è^¬î^ˆî£¡ ÞŠ«ð£¶ ðóñ îK^Fó˜è÷£ù Þõ˜èÀ‹ ªêŒAø£˜èœ!

கடைசியில் பிராம்மணன் மற்றவர்களை அடக்கிவிட்டு, "குடும்பத் தலைவன் என்று பேர் வைத்துக் கொண்டிருக்கிற என் கடமை உங்கள் மூவரையும் ரக்ஷிப்பது. மனஸறிந்து உங்களில் எவரையும் பட்டினி போட்டு மரணத்துக்கு ஆளாக்கினால் நான் ப்ரஷ்டனாகி விடுவேன்"என்று தீர்மானமாகச் சொல்லித் தன் பங்கு மாவை யாசகருக்கு அன்போடு தானம் செய்தான்.

அவர் அதைச் சாப்பிட்டுவிட்டுப் பசி தீரவில்லை என்றார்.

உடனே பத்னி தன் பங்கை அவருக்கு மகிழ்ச்சியோடு கொடுத்தாள்.

Ü¬î»‹ ê£ŠH†´M†´, 'Þ¡ùº‹ ªè£‡ì£!'â¡Á à†è£˜‰¶M†ì£˜ ÜFF.

கொஞ்சம்கூடக் கோபமே இல்லாமல் பிள்ளையும் தன் பங்கு மாவை அவருக்குக் கொடுத்தான்.

அதையும் ஏப்பம் விட்டுவிட்டு, இன்னும் வந்தாலும் கொள்ளும் என்று உட்கார்ந்துவிட்டார் அதிதி.

கடைசியில் மாட்டுப்பெண்ணும் அவருக்கு மனஸாரத் தன் பங்கு மாவைக் கொடுத்தாள்.

அதிதி அதைச் சாப்பிட்டு முடித்தாரோ இல்லையோ, ஆளைக் காணவில்லை!

அந்த நாலு பேர் மேலே ஆகாசத்திலிருந்து புஷ்ப வ்ருஷ்டி பொழிந்தது.

"நான்தான் தர்மதேவதை. உங்களைப் பரிசோதிக்கவே யாசகப் பிராம்மணனாக வந்தேன். பரீக்ஷையில் நீங்கள் அற்புதமாக ஜயித்துவிட்டீர்கள். உயிரைக் கொடுத்தாவது விருந்தோம்பலை நடத்திக் காட்டுவதில் உங்கள் குடும்பத்தைப்போல் எங்குமே கண்டதில்லை. அவரவரும் கொடுத்த பிடி மாவு உங்களுக்கு ஸ்வர்கத்திலேயே இடம் 'பிடி'த்துக் கொடுத்துவிட்டது. எல்லாரும் ஆனந்தமயமான தேவலோகத்துக்கு வந்து சேர்வீர்களாக"என்று அசரீரி கூறிற்று.

(அசரீரி கேட்டதா, தர்மதேவதை நேரில் வந்ததா என்று ஸரியாக நினைவில்லை. தாத்பர்யம் இதுதான்.)

உடனே தேவர்கள் அங்கே அலங்கார விமானத்தோடு வந்தார்கள். உஞ்சவ்ருத்தி பிராம்மணக் குடும்பத்தினர் அதிலே ஏறிக்கொண்டு ஸ்வர்கத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

ஸ்வர்கத்துக்குப் போனார்கள் என்றால் இந்த லோகத்தில் ப்ராணனை விட்டார்கள் என்று அர்த்தம். குசேலர் மாதிரி இந்த லோகத்திலேயே அவர்களுக்கு ஸகல ஸம்பத்தும் வந்ததாகச் சொல்லவில்லை. இவர்கள் ஸ்வர்கவாஸம் கிட்டும் என்று அபேக்ஷித்து தானம் செய்யவில்லை. விருந்தோம்பல் பண்புக்காகவே உயிரைவிட்டார்கள். தானாக ஸ்வர்க்கம் ஸித்தித்தது.

இந்தக் கதையைச் சொன்ன கீரிப்பிள்ளை, "அந்த மையத்தில் நான் குருக்ஷேத்திரத்தில் அந்த வீட்டில்தான் இருந்தேன். அவர்கள் தானம் கொடுத்த மாவு ஏதோ துளித் துளி கீழே

சிந்தியிருந்தது. நான் அந்த இடத்துக்கு மேலாக ஓடுகிறபோது என் சரீரத்தின் இந்தப் பக்கத்தில் அந்த மாவு பட்டதனால்தான் இந்தப் பக்கமே ஸ்வர்ண வர்ணமாகி விட்டது"....

இப்போது கூட ரொம்ப நல்லவர்களைத் 'தங்கமான மனஸு'என்றுதான் சொல்கிறோம். இங்கிலீஷில்கூட 'நிஷீறீபீமீஸீ லீமீணீக்ஷீமீ மீபீ'என்கிறார்கள் அல்லவா?தங்க மனஸு படைத்த த்யாகக் குடும்பம் செய்த தானத்தில் இது ஸ்தூலமாகவே நிஜமாயிருக்கிறது!

"அதற்கப்புறம், இப்படி ஒரு பக்கம் மட்டும் தங்கமாக இருக்கிறதே, இதே மாதிரி வேறெங்காவது பரம உத்க்ருஷ்டமான தானம் நடக்கிற இடத்தில் சிந்திப்போனது இன்னொரு பக்கத்தில் பட்டால் அதுவும் தங்கமாகி, முழுக்கத் தங்கமாகலாமே என்கிற ஆசையில் நானும் பெரிய பெரிய ஸந்தர்ப்பணைகள், அன்னசாலைகள், தர்மசத்திரங்களுக்கெல்லாம் போனபடிதான் இருக்கிறேன். ஆனால் என் மறுபாதி தங்கமாக மாறவேயில்லை. தர்ம புத்ரர் மஹா பெரிய யாகம் பண்ணி, அன்னதானம் செய்கிறாரே இங்கே சிந்திப் போனதிலாவது என் சரீரத்தின் பாக்கி பாதி தங்கமாகுமாக்கும் என்றுதான் இங்கும் வந்து புரண்டு பார்த்தேன். இங்கேயும் பலனைக் காணோம்!"என்று கீரிப்பிள்ளை முடித்தது.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### தர்மங்களில் தலையானது தானமே !

**ர** ந்தி தேவன் கதையிலிருந்தும், உஞ்சவ்ருத்திப் பிராம்மணன் கதையிலிருந்தும் என்ன தெரிகிறதென்றால் தனக்கென்று ஒன்றுமே வைத்துக்கொள்ளாமல் தானம் பண்ண வேண்டும்;தன் ப்ராணனே போனாலும் ஸரி, இன்னொரு ஜீவனை நம் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற வேண்டும் என்ற த்யாக தத்வம் தெரிகிறது. இன்னொன்று என்ன தெரிகிறதென்றால், ஒருத்தர் கஷ்டத்தில் இருக்கிறபோது அவர் என்ன ஜாதி, என்ன மதம், நல்லவரா - கெட்டவரா என்று இதையெல்லாம் ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்காமல், யாராயிருந்தாலும், எப்படிப் பட்டவராயிருந்தாலும் நம்மாலான உபகாரத்தைப் பண்ணி, கஷ்டம் நிவ்ருத்தியாவதற்கு ஸஹாயம் பண்ண வேண்டும் என்பது.

வித்யாஸங்கள் பார்க்கவேண்டிய இடத்தில் பார்த்துத்தான் ஆகவேண்டும். சாஸ்த்ரப்படி லோக க்ஷேமத்துக்காக ஏற்பட்ட அதிகார பேதங்களைக் காப்பாற்றத்தான் வேண்டும். ஆனால் கஷ்டம், துக்கம் என்று வருகிற போது வித்யாஸமே பார்க்கக் கூடாது.

குறிப்பாக, அன்னதானத்தைப் பற்றிச் சொல்கிறபோது **' யார்க்கும் இடுமின், அவர் இவர் என்னன்மின் '** என்றே திருமந்திரத்தில் சொல்லியிருக்கிறது.

"யாரானாலும் எவரானாலும், நாராயண ஸ்வரூபம்" என்று ரந்திதேவன் அன்னதானம் செய்தான். மஹாதாரித்ரியத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த இளையான் குடிமாற நாயனாரிடம் ஒரு சிவனடியார் பிக்ஷை கேட்டு வந்தபோது அவர், ஈஸ்வரனே இப்படி வந்திருக்கிறான் என்று நினைத்தார். கொட்டுகிற மழையிலே வயலுக்குப் போய் அங்கே விதைத்திருந்த நெல்லையே மறுபடி பொறுக்கி எடுத்துக்கொண்டு வந்து சிவனடியாருக்கு பிக்ஷை பண்ணினார். வாஸ்தவத்திலேயே அந்த சிவனடியார் பரமேஸ்வரன்தான். அப்படியே காட்சி கொடுத்தார். இது பெரியபுராணக் கதை.

எல்லா தானங்களிலும் அன்னதானம் விசேஷம். பகவானும் கீதையில் (3.13) எவன் தனக்காக மட்டும் ஆஹாரம் தேடிச் சாப்பிட்டுக் கொள்கிறானோ அவனுடைய பாபத்தையும் முழுக்க அவனேதான் அநுபவித்தாக வேண்டும்;வேறு யாரும் அதில் பங்கு எடுத்துக்கொள்ள மாட்டார்கள் என்கிறார். பிறனுக்குப் போடாமல், தான் மட்டுமே தின்கிறவன் சாதம் சாப்பிடவில்லை, பாபத்தையே புஜிக்கிறான் என்கிற மாதிரிச் சொல்கிறார்.

அன்னதானத்துக்கு என்ன விசேஷம் என்றால் **இதிலேதான் ஒருத்தரைப் பூர்ணமாகத் திருப்திப்படுத்த முடியும்.** பணம், காசு, வஸ்த்ரம், நகை, பூமி, வீடு இந்த மாதிரியானவற்றை

எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவன் அதற்குமேல் தந்தாலும், 'வேண்டாம்'என்று சொல்லமாட்டான். அன்ன போடுகிற போதுதான் ஒருத்தன் என்னதான் முட்ட முட்டச் சாப்பிட்டாலும், ஓர் அளவுக்கு மேல் சாப்பிட முடியாது. 'த்ருப்தோஸ்மி: போதும் என்று சொல்கிறான். அந்த அளவுக்கு மேல் போய் விட்டால், "ஐயையோ!இனிமேல் போடாதீர்கள்"என்று மன்றாடவே செய்கிறான். இம்மாதிரி ஒருத்தன் பூர்ண மனஸோடு திருப்தி தெரிவ்க்கிறபோதுதான் தாதாவுக்கும் தானத்தின் பலன் பூர்ணமாகக் கிடைக்கும்.

நேராக உயிரோடு உடம்பைச் சேர்த்து வைத்து ரக்ஷிப்பதும் அன்னம்தான். அதனால்தான் ' **உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தாரே** ' என்று சொல்லியிருக்கிறது. மணிமேகலையில் இப்படி அன்னதான விசேஷத்தைச் சொல்லியிருக்கிறது. இது பௌத்த ஸம்பந்தமான காப்பியம். பௌத்தம், ஜைனம் எல்லாமே கலந்தாங்கட்டியாக வைதிக ஸம்பிரதாயங்களோடு சேர்ந்திருப்பதாகவே தமிழில் உள்ள ஐம்பெருங்காப்பியங்களிலிருந்து தெரிகிறது. மணிமேகலைக்கு காஞ்சீபுரத்தில் அக்ஷயபாத்திரம் கிடைத்து, அதை அவள் வைத்துக்கொண்டு ஸகல ஜனங்களின் பசிப்பிணியையும் போக்கினாள். இதற்கு அநேக யுகங்கள் முந்தியே இதே காஞ்சீபுரத்தில் ஸாக்ஷாத் அம்பாளும் இதே அன்னதானத்தைப் பண்ணியிருக்கிறாள். ஜகன்மாதா இங்கே, 'இரு நாழி நெல் கொண்டு எண் நான்கு அறம் இயற்றினாள்'என்று சொல்லியிருக்கிறது.

எண் நான்கு அறம் என்றால் முப்பத்திரண்டு தர்மங்கள். தர்மம் என்றால் மநுஷ்ய வாழ்க்கை நெறிகள் எல்லாமும்தான் என்றாலும், பொது வழக்கில் 'தானம்' என்ற ஒன்றுக்குமட்டுமே வந்துவிட்டது 'தர்மம்' என்ற பேரும் வந்துவிட்டது. தர்மங்களில் இது அத்தனை உசத்தியான இடத்தைப் பெற்றுவிட்டது! 'தான-தர்மம்'என்று சேர்த்தே சொல்கிறோம். 'தர்மம் போடு தாயே!' என்றுதான் பிச்சைக்காரர்கள் கூடச் சொல்கிறார்கள். தர்மசாலை என்றாலே அன்னசத்திரந்தான். வேதப் பிரமாணத்துக்கு ஸமதையான சிறப்புப் பெற்ற அவ்வை வசனத்திலும் ' **ஈதல் அறம்** ' என்று தானத்தையே தர்மம் என்று equate பண்ணியிருக்கிறது.

இதிலே ஒரு வேடிக்கை அதாவது பரஸ்பர விருத்தம் (முரண்பாடு) மாதிரி ஒரு அம்சம். தானம் என்று பண்ணினால் அதை வாங்கிக் கொள்ளவும் ஒருத்தன் இருந்தாகணும். Donor இருந்தால் Donee-யும் இருக்கணும். ஆனால் தானம் கொடுப்பதை ரொம்பவும் சிறப்பித்துச் சொல்கிற அதே சாஸ்திரங்களே தானம் வாங்குவதை மிகவும் தாழ்வானதாகச் சொல்லியிருக்கின்றன. "நான் கொடுக்கிறவனாகவே எப்போதும் இருக்கணும்; வாங்குகிறவனாக ஒருபோதும் இருக்கக்கூடாது"- யாசிதாரச்ச நஸ்ஸந்து மா ஸ்ம யாசிஷ்ம கஞ்சந - என்றே பிரார்த்தனை இருக்கிறது. ஆத்திசூடியிலும் " ஈவது விலக்கேல் " என்றவுடனேயே " ஏற்பது இகழ்ச்சி " என்றும் வருகிறது. ஏற்பதற்கு ஒருத்தன் இல்லாவிட்டால் எப்படி ஈவது? யாசகன் இல்லாமல் தாதா ஏது?

அக்ஷர-த்வய-மப்யஸ்தம் நாஸ்தி நாஸ்தீதி யத் புரா மி

ததேவ தேஹி தேஹீநி விபரீத-முபஸ்திதம் மிமி

என்று ஸ்லோகமிருக்கிறது. "நாஸ்தி, நாஸ்தி" (இல்லை, இல்லை) என்கிற இரண்டு எழுத்துக்களை*எவன் முன் ஜன்மாவில் சொல்லி யாசகர்களை விரட்டி அடித்தானோ, அவனே மறு ஜன்மாவில் "தேஹி தேஹி"என்கிற இரண்டு எழுத்துக்களை சொல்லிக்கொண்டு பிச்சைக்காக அலைகிறான் என்று அர்த்தம். இங்கே ஈகையின் சிறப்பு, ஏற்பதன் இகழ்ச்சி இரண்டும் தெரிகிறது. பகவானே யாசகம் கேட்கவேண்டி வந்ததே என்று 'உடம்பைக் குறுக்கிக் கொண்டு'தான் வாமனரூபமாக ஆகி மஹாபலியிடம் போனான் என்கிறார்கள்.

இப்படி யாசகம் வாங்குவதை ரொம்பவும் இழிவாகச் சொன்னதற்குக் காரணம் அத்யாவசியமிருந்தாலொழிய பிறத்தியானைப் பிடுங்கக் கூடாது என்பதால்தான். ஸம்பாத்தியம் அவனவனும் உடம்பாலோ புத்தியாலோ உழைத்துப் பெறத்தான்

பிராகாசிக்க வேண்டும். இப்படிப்பட்ட அகவொளியோடு, புற ஒளியாக தீபத்தை ஏற்றி மேலே சொன்னது போல் ப்ரார்த்திக்க வேண்டும்.

முன்பெல்லாம் சொக்கப்பானை என்று ஆலயத்திலிருந்து தீபத்தைக் கொண்டுவந்து பெரிதாக ஏற்றினார்களே, திருவண்ணாமலையில் இப்போதும் மலை உச்சியில் மஹா பெரிய ஜோதியாக தீபம் ஏற்றுகிறார்களே, இதன் உள்ளர்த்தம் என்ன?சின்ன அகலமாக இருந்தால், அதன் ப்ரகாசம் கொஞ்ச தூரம்தான் பரவும். சொக்கப்பானை என்றால் அதன் ப்ரகாசம் ரொம்ப தூரத்துக்குத் தெரியும். அண்ணாமலை தீபம் மாதிரி மலையில் ஏற்றி வைத்துவிட்டாலோ, அது எத்தனையோ ஊர்கள் தாண்டிக்கூடத் தெரியும். அத்தனை பெரிய எல்லைக்குள் இருக்கிற ஸகல ஜீவஜந்துக்களின் மீதும் இந்தப் பிரகாசம் பட்டு அவற்றின் பாபங்கள் போகவேண்டும் என்ற உத்தமமான சிந்தனையில்தான் சொக்கப்பானை, அண்ணாமலை தீபம் என்றெல்லாம் நம் பூர்விகர்கள் ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள்.

ஸாதரணமாக இரண்டு கால் ப்ராணி, நாற்கால் ப்ராணிகள்தான் அதிகம். வண்டுக்கு ஆறு கால். சிலந்திக்கு எட்டுக் கால்கள். மரவட்டை, கம்பளிப் பூச்சி என்று எடுத்துக் கொண்டால் அதற்கு எண்ணி முடியாத கால்கள். வேதத்தில் அடிக்கடி 'த்விபாத்"சதுஷ்பாத்'என்று இருகால், நாற்கால் ப்ராணிகள் க்ஷேமத்தைக் கோருகிற மாதிரியே எத்தனை காலுள்ள ப்ராணிகளானாலும் அவற்றுக்கும், இன்னும் பாம்பு மாதிரி, மீன் மாதிரி காலே இல்லாத ப்ராணிகளுக்கும் க்ஷேமம் உண்டாகட்டும் என்று மந்திரங்கள் இருக்கின்றன.

பரம ஞானிக்கு பிராம்மணன் பஞ்சமன் (ப்ராம்மணே ... ச்வபாதே) என்ற வித்யாஸம் தெரியாது என்று கீதையில் (5.18) சொல்லியிருக்கிறது. நமக்கும்கூட, காரியத்தில் பேதத்தைப் பார்த்தாலும் மனஸில் சுரக்கும் அன்பில் வித்யாஸமே கூடாது என்கிற மாதிரிதான் ரந்திதேவன் முதலில் பிராம்மணனுக்கும் கடைசியில் பஞ்சமனுக்கும் தானம் பண்ணியிருக்கிறான். இந்தக் கார்த்திகை தீப ஸ்லோகத்திலும் "ஸ்வபசா ஹி விப்ரா:என்று பஞ்சமன், ப்ராம்மணன் இருவரையும் சொல்லியிருக்கிறது. க்ஷேமத்தைக் கோரும்போது ஜாதி வித்யாஸமே இல்லை. நல்லவன் கெட்டவன் என்றும் வித்யாஸம் பார்க்கக் கூடாது. மஹாபாபத்தைச் செய்துவிட்டு நரகவாஸிகளாயிருப்பவர்களிடமும் அன்பு பாராட்டி, அவர்களுக்கும் உபகாரம் செய்யச் சொல்வது நம் சாஸ்த்ரம். அதைப்பற்றிக் கொஞ்சம் சொல்கிறேன்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### நரகவாஸிக்கும் நலன்

**ந**ரகவாஸிக்கும் இருப்பவர்களுக்குக்கூட, நம் சாஸ்திரப்படி பரோபகாரம் நடக்கிறது.

திவஸமும், தர்ப்பணமும் செய்கிறபோது பூலோகத்திலோ வேறு எங்கோ, எந்த ரூபத்திலோ பிறந்திருக்கிற நம் மூதாதைகளுக்கு அது க்ஷேமத்தைக் கொடுக்கிறது. இங்கே நாம் கொடுக்கிற எள், தண்ணீர், பிண்டம் முதலானவைகளைப் பித்ரு தேவதைகள் நம் மூதாதைகள் எந்த ரூபத்தில் எங்கே பிறந்திருந்தாலும், அதற்கேற்ற ஆஹாரமாக மாற்றி அங்கே கிடைக்கச் செய்து விடுவார்கள். நம் நாட்டு ரூபாயை வெளிதேசக் கரன்ஸியாக்க எக்ஸ்சேஞ்ச் பாங்க் இருக்கிற மாதிரி பித்ரு தேவதைகள் இப்படி ஆஹாரத்தை மாற்றிக் கொடுக்கிறார்கள்.

இந்த தேசாசாரம் ஜனங்களின் ரத்தத்தில் அடியோடு வற்றிப் போய்விடாததால் இன்னமும் அநேகமாக எல்லாரும் ரொம்பச் சுருக்கமாகவாவது பித்ரு கார்யங்கள் திவஸம், தர்ப்பணம் முதலியவற்றைச் செய்து வருகிறார்கள். ஆனால் சிரத்தைதான் போய்விட்டது. பித்ரு காரியங்களுக்கு 'ச்ராத்தம்'என்று பேர் இருப்பதே அதற்கு ச்ரத்தை முக்யம் என்பதால்தான். ச்ரத்தை இருந்தால் இப்படி சுருக்கமாகவும், குறுக்கியும், ச்ராத்தகாலம் தப்பியும் பண்ணுவது போலில்லாமல் யதோக்தமாக, புஷ்களாமாக நடக்கும். பலனும் ப்ரத்யக்ஷமாகத் தெரியும்.

என்ன பலன் என்றால் சொல்கிறேன். இப்போது பெரும்பாலோர் ஏதோ ஒப்புக்குத்தான் பித்ரு கார்யங்கள் பண்ணுகிறார்கள். பாக்கியிருப்பவர்களோ மேலும் துணிந்து 'ஸூப்பர்ஸ்டிஷன்'என்றே இவற்றை அடியோடு நிறுத்தியிருக்கிறார்கள். இதன் விபரீத பலன் எனக்குத்தான் தெரியும். அநேக வீடுகளில் சித்தப்பிரமம், அபஸ்மாரம் (காக்காய் வலிப்பு), இன்னும் போன தலைமுறைகளில் கேள்வியே படாத அநேக ரத்த வியாதிகள், nervous disease- களுடன் அநேகர் அவஸ்தைப் பட்டுக் கொண்டு ஜோஸ்யர், ஆரூடக்காரர், மாந்த்ரிகர் எல்லாரிடமும் போய்விட்டு என்னிடம் வருகிறார்களே - இந்த கஷ்டங்களுக்குப் பெரும்பாலும் காரணம் பித்ரு கார்யங்களை விட்டு விட்டதுதான். "மாதா பிதாக்கள் உயிர் போனபின் அவர்களுக்காக மக்கள் செய்யாதது மக்களைத் தாக்கும்"என்றும் புரிந்து கொள்ள வேண்டும். அப்பாவும், அம்மாவும் மற்ற வம்ச முதல்வர்களும் எங்கேயாவது கோபித்துக் கொண்டு சபிப்பார்களா என்று கேட்கக் கூடாது. பித்ருக்கள் சபிக்காமலிருக்கலாம். ஆனால் பித்ரு தேவதைகள் இருக்கிறார்களே, அவர்கள் இந்தப் பின் தலைமுறையினர் தங்கள் மூலமாக முன்னோர்களுக்கு எள்ளோ, தண்ணியோ, அன்னமோ அளிக்கவில்லையே என்பதைப் பார்த்துச் சபித்துவிடுவார்கள். ஆனபடியால் நாமும் நம் பின்ஸந்ததியும் நன்றாயிருக்கவே முன் தலைமுறையினருக்கு திவஸ தர்ப்பணாதிகள் பண்ணத் தான் வேண்டும். அதாவது இங்கே பரோபகாரத்தோடு ஸ்வய உபகாரமும் சேருகிறது.

செத்துப் போனவுடனேயே எல்லாரும் மறுபடியும் இந்த பூலோகத்திலேயே பிறந்து விடுவதில்லை. நன்றாக வேலை செய்தால் இன்க்ரிமென்ட் மட்டுமல்லாமல் போனஸூம் தருகிறார்கள் அல்லவா?ரொம்ப நன்றாகச் செய்தாலோ ப்ரமோஷனே கொடுத்து மேலே தூக்கி விடுகிறார்கள். வேலையில் தப்புப் பண்ணினால் இன்கிரிமென்டை நிறுத்தி விடுகிறார்கள். பெனல்டி (அபராதம்) விதிக்கிறார்கள். ரொம்ப மோசமாகப் பண்ணினால் கீழே வேலைக்கே தள்ளி விடுகிறார்கள். இதேபோல், புண்யம் பண்ணினவர்களுக்கு, இன்கிரிமென்ட் மாதிரி இந்த பூலோகத்தில் ஸௌக்கியமான இன்னொரு ஜன்மா கிடைப்பதற்கு முன்னாடி ஒரு போனஸ் கிடைக்கிறது. ஸ்வர்க வாஸம்தான் இந்த போனஸ். ரொம்பப் புண்யம் பண்ணியிருந்தால் ஸ்வர்க்க லோகத்துக்கே நிரந்தரமான ப்ரமோஷன். இப்படியே பாபம் பண்ணினவர்கள் முதலில் பெனல்டியாக நரக லோகத்தில் வஸிக்க வேண்டும். அப்புறம் இன்க்ரிமென்ட் இல்லாத மாதிரி பூலோகத்தில் கஷ்டத்திலே பிறக்க வேண்டும். ரொம்பப் பாபம் பண்ணினால் கீழ் வேலைக்கே போகவேண்டியது - நிரந்தர நரகவாஸம்.

தர்ப்பணம், திவஸம் இவற்றின் பலன் நரகலோகம் தவிர மற்ற லோகங்களில் உள்ளவர்களையே சேரும். ஸ்வர்க்கத்திலேயே பல தினுஸூகள்;பல லோகங்கள். தேவலோகம், கந்தர்வ லோகம், வித்யாதர லோகம் என்று இப்படி நரகத்திலும் தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம், புத், ரௌரவம் என்று பல உண்டு. நாம் இறைக்கிற எள்ளும் தண்ணீரும், கொடுக்கிற பிண்டமும் இப்படிப்பட்ட லோகங்களிலுள்ள நரகவாஸிகளுக்குப் போய்ச் சேராது.

ஒரு தேசத்துக்கும் இன்னொரு தேசத்துக்கும் சண்டை ஏற்பட்டுவிட்டால், அப்போது பணம் எக்ஸ்சேஞ்ச் பண்ணி எதிரி தேசத்துக்கு அனுப்பவே முடிவதில்லையல்லவா?இப்படி நரகவாஸிகளுக்காகப் பித்ரு தேவதைகள் ஆஹார எக்ஸ்சேஞ்ச் பண்ணுவதில்லை.

இப்படிப்பட்ட நரகவாஸிகளான மஹா பாபிகளிடமும் நம்முடைய ரிஷிகளுக்கு மனஸ் உருகி, அவர்களுக்கும் க்ஷேமம் உண்டாக்குவதற்காக மந்த்ர பூர்வமாக சில வஸ்துக்களைக் கொடுக்கச் சொல்லி ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள். சுத்தமான வஸ்துக்களை அவர்களுக்கு நாம் சேர்க்க முடியாது. ஆனால் சில அசுத்த வஸ்துக்களே அவர்களுடைய மஹா கஷ்ட நிலையில் ஆஹாரமாக அவர்களுக்குக் கிடைக்கலாம் என்று பகவான் வைத்திருக்கிறான்;நாம் வேஷ்டியை பிழிகிற அழுக்கு ஜலம், குளிக்கிறபோது நம் சிகை வழியாக வருகிற ஜலம் இவை எல்லாம் நரகத்திலுள்ளவர்களுக்கு ஆஹாரமாக மாறி, அவர்களுடைய மஹா கஷ்டத்தில் கொஞ்சம் கொஞ்சம் ஸூகம் தருகின்றன. அவர்களை உத்தேசித்து நாம் அன்பான பாவனையோடு துணியைப் பிழிந்தால், குடுமி ஜலத்தைப் பிழிந்தால், இந்தப் பலன் அவர்களுக்குக் கிடைக்கும். மந்த்ரமும் சொல்லி இந்தக்

காரியங்களைச் செய்ய அதிகாரம் பெற்றவர்கள் அப்படியே செய்ய வேண்டும். சாப்பிட்டு முடிந்தபின் எச்சில் கை ஜலத்தை இலைக்கு வலது பக்கத்தில் மந்த்ரம் சொல்லி விட்டால் அது நரகங்களிலேயே ரொம்பக் கொடூரமாக ரௌரவத்தில் எத்தனையோ கோடி வருஷங்களாக இருப்பவர்களின் தாஹத்தை தீர்க்க உத்வுகிறது. ஆந்திரர்கள் உத்தராபோஜனத்துக்குப் பின் இதைத் தவறாமல் பண்ணுகிறார்கள். இப்படி எச்சிலையும், அழுக்கு ஜலத்தையும் ஒருவருக்குத் தருவதா என்று நினைக்க வேண்டாம். நரக வாஸத்தில் அவர்கள் இருக்கிற ஸ்திதியில் இதுவேதான் அவர்களுக்குப் பிடித்தமானதாக இருக்கும். நம் லோகத்திலேயே வராஹத்தைப் பார்க்கவில்லையா?கரப்பான்பூச்சி முதலானவை அழுக்குகளையே தின்னவில்லையா?

நாம் பண்ணும் பாபத்தையெல்லாம் எத்தனையோ கருணையோடு மன்னிக்கும் பகவான் இப்படி ஒருத்தரை ரௌரவத்தில் போட்டு வதைக்கிறான் என்றால் அவர்கள் செய்திருக்கிற பாபம் ரொம்பவும் பயங்கரமாயிருந்திருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்களுக்குங்கூட தாஹம் தீரட்டும், தாபம் தணியட்டும் என்று நினைத்து அதற்கான வழியைச் சொல்கிறது. நம் தர்ம சாஸ்த்ரம்.

பௌத்த மதம், கிறிஸ்தவ மதம் மாதிரி நம் மதத்தில் ஜீவகாருண்யத்துக்கு முக்கியத்துவம் தரவில்லை என்று தப்பாக நினைக்கிறவர்கள் இதையெல்லாம் கவனிக்க வேண்டும்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### வேத, சாஸ்த்ரங்களில் தான தர்மம்

' எண் நான்கு அறம்'என்று முன்னே சொன்ன முப்பத்திரண்டு மட்டுமில்லாமல் வேத சாஸ்திரங்களில் ஏராளமான தானங்களைச் சொல்லியிருக்கிறது. ராஷ்ட்ரகூட ராஜ்யத்தில் முக்யமான ஸ்தானத்தில் இருந்த ஹேமாத்ரி என்றவர் இந்த தானங்களையெல்லாம் தொகுத்து ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். "தான ஹேமாத்ரி"என்றே அதற்குப் பெயர். எழுநூறு வருஷங்களுக்கு முன் எழுதிய இந்தப் புஸ்தகத்துக்கு ஆதாரம் அதற்கும் இருநூறு வருஷங்கள் முந்தி லக்ஷ்மீதரர் எழுதிய 'க்ருத்ய கல்பதரு'. இப்போது 'கனோஜ்'என்கிற கான்யகுப்ஜத்தில் வஸித்தவர் இந்த லக்ஷ்மீதரர். அதிலே சொல்லாத தானமே இல்லை. 'வித்யா தானம்' என்று படிப்புத் தருவது, அணைகள் கட்டி ஜனங்களுக்கு உபகாரம் பண்ணுவது முதலான ஸோஷல் ஸர்வீஸ் எல்லாவற்றையுமே அதில் தானம் பண்ணுவது என்று சொல்லியிருக்கிறது.

வேதத்திலும் தான மஹிமை எங்கு பார்த்தாலும் சொல்லியிருக்கிறது. வேத சிரஸான உபநிஷத்துக்களில் ரொம்பப் பெரிசானது 'ப்ருஹதாரண்யகம்'- அந்தப் பேருக்கு அர்த்தமே 'பெரிய காடு' என்பது. அப்படிக் காடாக விரிந்த அந்த உபநிஷத்தில் (5.2) ஒரு கதை வருகிறது. உபநிஷத்துக்களில் தத்வங்கள் (ஃபிலாஸஃபி) அப்படியே கொட்டிக் கிடப்பது மட்டுமில்லை;நடுநடுவே ரஸமான கதைகள் வரும். இந்தக் கதைகளின் மூலமும் ஒரு பெரிய தத்வம் பிரகாசிக்கும். அப்படி 'ப்ருஹதாரண்யக'த்தில் கொடையைப் பற்றி ஒரு கதை வருகிறது.

தேவர்கள், அஸுரர்கள், மநுஷ்யர்கள் எல்லாருமே பிரம்மாவுக்கு ஒரே மாதிரி குழந்தைகள்தாம். பரமாத்மாவுக்கு பல தினுஸான லீலை வேண்டியிருக்கிறது. நல்லது கெட்டதுகளை மோதவிட்டு வேடிக்கை பார்க்க வேண்டியிருக்கிறது. அதற்காக அவர் பிரம்மாவைக் கொண்டு தேவஜாதி, அஸுரஜாதி, மநுஷ்யஜாதி முதலானவைகளை ஸ்ருஷ்டிக்கச் செய்கிறார். இந்த மூன்று ஜாதிக்கும் நல்லதைச் சொல்ல பிரம்மா கடமைப்பட்டிருக்கிறார்.

ஒரு ஸமயம் தேவர்கள் எல்லோரும் பிரம்மாவிடம் போய், "எங்களுக்குச் சுருக்கமாக ஒரு உபதேசம் பண்ணுங்கள்"என்று ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.

ப்ரம்மா,"த"என்ற ஒரே ஒரு அக்ஷரத்தை மட்டும் சொல்லிவிட்டு, "இதுதான் உபதேசம். இதற்கு அர்த்தம் புரிந்து கொண்டீர்களா?"என்றார்.

நம்மிடத்திலே இருக்கிற தப்பு நமக்கே நன்றாகத் தெரியுமானதால் யாராவது ரொம்ப ஸூக்ஷ்மமாக, ஸூசனையாக எடுத்துக் காட்டினால்கூட உடனே புரிந்து கொண்டு விடுவோம்.

இந்த ரீதியில் தேவர்களுக்கு, ப்ரம்மா "த"என்று சொன்னவுடனேயே அதற்கு இன்னதுதான் அர்த்தமாக இருக்கும் என்று புரிந்துவிட்டது. தேவர்களிடம் இருக்கிற பெரிய கோளாறு இந்த்ரிய நிக்ரஹம் (புலனடக்கம்) இல்லாததுதான். தேலோகம் ஆனந்த லோகமல்லவா?அங்கே ஸுகவாஸிகளாக மனம்போனபடி இருப்பது தேவர்களின் வழக்கம். ஆனபடியால், "இந்த்ரியங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள்"என்றுதான் ப்ரம்மா பண்ணுகிறார் (குறிப்பால் உணர்த்துகிறார்) என்று புரிந்து கொண்டார்கள்.

"புரிந்துவிட்டது. 'தாம்யத' என்று தாங்கள் உபதேசித்துவிட்டார்கள்"என்று பிரம்மாவிடம் சொன்னார்கள்

தமம், சமம் என்று இரண்டு உண்டு. இரண்டும் அடக்கத்தைக் குறிப்பது. புலனடக்கம், மனஸடக்கம் என்ற இரண்டைக் குறிப்பிட தமம், சமம் என்று ஒரே 'அடக்க'த்திற்கான இரண்டு வார்த்தைகளைச் சொல்வது. சமம் தமம் முதலான ஆறு குணங்களை "சமாதி ஷட்க ஸம்பத்"என்று பெயரிட்டு ஸாதகர்களுக்கெல்லாம் நம் பகவத்பாதாள் விதித்திருக்கிறார். சமத்தோடு கூடிய நிலைதான் சாந்தி. தமத்தில் அடங்கியிருப்பது தாந்தி. ஒன்றை மட்டும் சொன்னால் அதுவே இரணடுவித அடக்கத்தையும் குறிக்கும்.

"தாம்யத" என்றால் "தமத்தைச் செய்யுங்கள். அதாவது இந்த்ரியங்களையும் மனஸையும் கட்டுப்பாடு (control) பண்ணிக் கொள்ளுங்கள்"என்று அர்த்தம்.

ப்ரும்மா "த"என்று சொன்னது 'தாம்யத'வுக்கு abbreviation (சுருக்கம்) என்று தேவர்கள் அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள்.

ஒரு முழு வார்த்தையைச் சொல்வதைவிட அதில் முதல் எழுத்தை மட்டும் சொன்னால் அதற்கு ஜாஸ்தி சக்தி இருக்கிறது. சர்ச்சில்கூட " வி ஃபார் விக்டரி " என்று சொல்லி, எங்கே பார்த்தாலும் அந்த 'வி'யை மந்த்ரம் மாதிரிப் பரப்பினார்.

"நீங்கள் அர்த்தம் பண்ணிக் கொண்டது ஸரிதான்"என்று சொல்லி ப்ரம்மா தேவர்களை அனுப்பினார்.

மநுஷ்யர்களுக்கும் இதேமாதிரி உபதேசம் வாங்கிக் கொள்கிற ஆசை வந்தது.

அவர்களும் பூர்வகாலத்தில் ப்ரம்மாவை நெருங்கக் கூடியவர்களாக இருந்தார்கள். அதனால் அவரிடம் போய், "உபதேசம் பண்ணுங்கள்"என்று வேண்டிக் கொண்டார்கள்.

மறுபடியும் ப்ரம்மா "த"என்ற அதே சப்தத்தை மட்டும் சொன்னார்.

மநுஷ்யர்களுக்கும் தங்கள் குற்றம் உள்ளுக்குள் உறுத்திக் கொண்டிருந்ததால், தங்களுக்கு அத்யாவச்யமான உபதேசம் இன்னது என்று பளிச்சென்று புரிந்து கொண்டார்கள்.

"அர்த்தம் தெரிந்ததா?"என்று ப்ரம்மா கேட்டவுடன்,

"தெரிந்து கொண்டோம் - 'தத்த' என்று உபதேசம் பண்ணியிருக்கிறீர்கள்"என்றனர்.

"தத்த"என்றால் "கொடு", "தானம் பண்ணு"என்று அர்த்தம். 'தத்தம் பண்ணுவது', தத்து கொடுப்பது'முதலான வார்த்தைகள் வழக்கத்தில்கூட இருக்கின்றனவே!

"ஆமாம், நீங்கள் ஸரியாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள்"என்று ப்ரம்மா மநுஷ்ய ஜாதியிடம் சொல்லி அனுப்பி வைத்தார்.

தேவர்களும் மநுஷ்யர்களும் உபதேசம் வாங்கிக் கொண்டால் அஸுரர்கள் மட்டும்

சும்மாயிருப்பார்களா? அவர்களும் ப்ரம்மாவிடம் வந்து உபதேசம் கேட்டார்கள். அவரும் பழையபடி அந்த 'க்ரிப்டிக்' (சுருக்கமான) "த"உபதேசத்தை பண்ணினார். "புரிந்ததா?"என்று கேட்டார்.

அஸுரர்களும் உடனே, "புரிந்து விட்டது 'தயத்வம்'என்று உபதேசம் பண்ணிவிட்டீர்கள்"என்றனர்.

ப்ரம்மாவும், "ஆமாம்"என்றார்.

'தயத்வம்' என்றால் 'தயையோடு இருங்கள்'என்று அர்த்தம்.

இரக்கமில்லாதவர்களைத்தானே அரக்கர் என்று சொல்லியிருக்கிறது?கொஞ்சம்கூட தயா தாக்ஷிண்யம் இல்லாத க்ரூர ஸ்வபாவம்தான் அஸுரர்களின் இயற்கை. அதனால் 'த'வுக்கு இப்படி அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள்.

இடி இடிக்கிறபோது "தத‌த"என்கிற மாதிரி சப்தம் கேட்கும். "தாம்யத - தத்த - தயத்வம்"என்பதுதான் அந்த மூன்று 'த'.

இது ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் வருகிற கதை.

நம் சங்கர பகவத் பாதாள் இதற்கு பாஷ்யம் எழுதுகிறபோது, "இங்கே தேவர் அஸுரர் என்று சொன்னதெல்லாமும், மநுஷ்யர்களுக்கு வேறல்லர். மனிதர்களிலேயே எல்லா நல்ல குணமும் இருந்தும் புலனடக்கம் இல்லாதவர்கள் தேவர்கள்; கொடுக்கிற ஸ்பாவமேயில்லாமல் லோப குணத்தோடு இருப்பவர்கள் அஸல் மநுஷ்யர்கள்;ஹிம்ஸை பண்ணிக்கொண்டு க்ரூரமாக இருக்கிற மனிதர்களே அஸுரர்கள். ஆனதால் மூன்று உபதேசங்ளும் நமக்கே ஏற்பட்டவை என்றுதான் நாம் அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும்"என்று சொல்லியிருக்கிறார்.

வாஸ்தவந்தான். ஆனாலும் இங்கே சொல்லியிருப்பதிலிருந்து மனிதவர்க்கத்துக்கு என்று ப்ரத்யேகமாக இருக்கிற பெரிய குறைபாடு லோபித்தனம்தான் என்று தெரிகிறது. இந்த்ரிய மனோ நிக்ரஹம் பண்ணினவர்களாகவும், க்ரூர ஸ்வபாவம் துளிக்கூட இல்லாமலும்கூட மனிதர்கள் தங்களை உயர்த்திக்கொண்டு விடலாம். ஆனால் இப்படிப்பட்டவர்கள்கூடப் பொருளை எடுத்துக் கொடுப்பது, தானம் செய்வது என்றால் கொஞ்சம் பின்னேதான் நிற்கிறார்கள். பொருளில் பற்றை விடுவது தான் மநுஷ்யனுக்கு மஹா கஷ்டமாக இருக்கிறது. இதனால்தான் மனிதனுக்கு முக்யமாக " தத்த - தானம் பண்ணு " என்று வேதத்தின் முடிவில் இருக்கப்பட்ட உபநிஷத்தே உபதேசம் பண்ணுகிறது.

நம்மில் ஒவ்வொருவர் ஒவ்வொரு மந்த்ரத்தை உபதேசம் வாங்கிக் கொள்கிறோம். சிலர் (சிவ) பஞ்சாக்ஷரீ எடுத்துக் கொள்கிறார்கள். சிலர் (நாராயண) அஷ்டாக்ஷரீ எடுத்துக் கொள்கிறார்கள். இப்படியே (முருகனுக்கான) ஷடக்ஷரீ, ராம மந்த்ரம், க்ருஷ்ண மந்த்ரம், அம்பாள் மந்த்ரங்கள் என்று பல இருக்கின்றன. இவற்றை அவரவர் தங்கள் இஷ்டப்படி எடுத்துக் கொள்கிறார்கள். ஆனாலும் நம் அத்தனை பேருக்கும், மநுஷ்ய ஜன்மா எடுத்த ஸகலருக்கும், வேத சிரஸான உபநிஷத்திலேயே உபதேசித்துள்ள மந்த்ரம் " தத்த : - தானம் பண்ணு; நல்ல கொடையாளியாக இரு"என்பதுதான். நம் இஷ்டம், இஷ்டமில்லை என்பதற்கெல்லாம் இடமில்லாமல், இது நமக்கு வேதம் போட்டிருக்கிற ஆஜ்ஞை!மற்ற மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். இந்த "தத்த"மந்த்ரத்தைக் காரியத்தில் பண்ணிக் காட்ட வேண்டும்.

இந்த உபதேசம் வருகிற ப்ருஹதாரண்யக உபநிஷத் என்பது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. நாலு வேதங்களுக்குள் இன்று தேசம் முழுக்க ரொம்பவும் அநுஷ்டானத்திலிருப்பது யஜுர்வேதம்தான். அதில் சுக்லம், க்ருஷ்ணம் என்று இரண்டு பிரிவு உண்டு. வட இந்தியா முழுவதிலும் பெரும்பாலும் அநுஷ்டானத்தில் இருப்பது சுக்ல யஜுஸ்;தென்னிந்தியாவில் ரொம்பவும் அநுஸரிக்கப்படுவது க்ருஷ்ணயஜுஸ். சுக்ல யஜுஸைச் சேர்ந்த ப்ருஹதாரண்யக உபநிஷத்திலிருந்து தானத்தைப் பற்றி சொன்னேன். இதேமாதிரி க்ருஷ்ண யஜுஸில் உள்ள தைத்திரீயோபநிஷத்திலும் (1.11.3) தானத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறது.

அது என்ன சொல்கிறது? ''சிரத்தையோடு தானம் கொடுக்க வேண்டும். அசிரத்தையோடு கொடுக்கக் கூடாது''என்கிறது. ஸ்ரீயை (அதாவது செல்வத்தை)க் கொடுக்கும்போதே மனஸை ஸ்ரீயாக (லக்ஷ்மீகரமாக, மங்களமாக, ஸந்தோஷமாக) வைத்துக்கொண்டு கொடுக்க வேண்டும் என்கிறது. முகத்தைச் சுளிக்காமல் கொடுக்க வேண்டும். ஸ்ரீயின் நிறைவுதான் 'ச்ரேயஸ்'என்பது. மனஸில் ஸ்ரீயுடன், மனமலர்ச்சியுடன், கொடுத்தால் இந்த தானத்தின் பலனாக 'ச்ரேயஸ்'கிடைக்கிறது. இன்னம் ஜாஸ்தி கொடுப்பதற்கு நம்மால் முடியவில்லையே என்று வெட்கத்தோடு கொடுக்க வேண்டும். ஹ்ரீயுடன் கொடு என்கிறது உபநிஷத். 'ஹ்ரீ'என்றால் வெட்கம், லஜ்ஜை என்று அர்த்தம். புருஷ ஸூக்தத்தில் பகவானுக்கு ஹ்ரீ, ஸ்ரீ (லக்ஷ்மி) என்று இரண்டு பத்னிகள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது. இங்கேயும் லக்ஷ்மியை, அதாவது பொருளைத் தரும்போது, ''ஸ்ரீயோடு கொடு'', ''ஹ்ரீயோடு கொடு''என்று சொல்லியிருக்கிறது. வெட்கம் இரண்டு காரணத்துக்காக. ஒன்று, இன்னும் ஜாஸ்தி தரமுடியவில்லையே என்று;இரண்டாவது, தானம் பண்ணுவது வெளியிலேயே தெரியக்கூடாது என்ற கௌரவமான கூச்சம். வெளியில் தெரிந்தால் மற்றவர்களும் 'தேஹி'என்று பிடுங்குவார்களோ என்பதால் அல்ல. இவன் தர்மிஷ்டன் என்று நாலு பேருக்குத் தெரிந்து நம்மை ஸ்தோத்ரம் பண்ண ஆரம்பித்தால் நமக்கு அஹம்பாவம் வந்துவிடும். அது தானத்தின் பலனையெல்லாம் சாப்பிட்டு விட்டுப் போய்விடும்.

தானம் பண்ணிவிட்டு நாம் நம் பெயரைப் பேப்பரில் போட்டுக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனாலும், 'எப்படியாவது நாலு பேருக்கு நாம் தானம் பண்ணினதை நைஸாகத் தெரியப்படுத்த வேண்டும்'என்கிற எண்ணம் உள்ளூர இருந்தால் அதுவும் தோஷம்தான். அந்த நாலுபேர் நாம் தானம் பண்ணினதற்காக ஒரு பங்கு கொண்டாடினால், அதோடு, ''பண்ணின தானத்தை வெளியிலேயே தெரிவிக்காமல் எத்தனை உத்தமமான குணம்!'' என்று பத்து பங்கு ஸ்தோத்திரம் பண்ணுவார்கள். மனஸுக்குள் நாம் இந்த ஸ்தோத்திரத்துக்கு ஆசைப்பட்டுவிட்டால், பேப்பரில் போட்டுக் கொள்வதைவிட இதுவே பெரிய தோஷமாகிவிடும். ஆனாலும் இப்படியெல்லாம் ஆசை, கீசை தலைதூக்கிக்கொண்டுதானே இருக்கிறது? அது தலையைத் தூக்கவொட்டாமல் அழுத்தி வைக்க என்ன பண்ணலாம்?ஒன்று பண்ணலாம் என்று தோன்றுகிறது. அதாவது, 'தானம் வாங்குகிறவன் நமக்கு அந்நியன் இல்லை; நம்மவனேதான்'என்ற உணர்ச்சியை நன்றாக வளர்த்துக்கொண்டுவிட்டால் கொடுத்ததை வெளியில் சொல்லவே தோன்றாது. நம் குழந்தைக்கு அல்லது நெருங்கிய பந்துக்களுக்கு நாம் ஏதாவது செய்தால் அதை வெளியில் விளம்பரம் செய்து கொள்வோமா?அதே மாதிரிதான் எவரும் நமக்கு பந்துதான். ஸகல ஜந்துக்களும் ஒரே பார்வதி பரமேஸ்வராளின் குழந்தைகள்தான். அதனால் நாம் 'தானம் கொடுக்கிறோம்' என்ற வார்த்தையைச் சொல்வதுகூடத் தப்புதான். 'பகவான் நம்மைக் கொடுக்கும்படி வைத்தான். கொடுத்தோம்'என்று அடங்கி, பவ்யமாகக் கொடுக்க வேண்டும். எங்கே இதிலும் ஓர் அஹங்காரம் வந்துவிடுமோ என்று பயந்து கொண்டு கொடுக்க வேண்டும். '' பியா தேயம் '' என்கிறது உபநிஷதம். ''பியா''என்றால், 'பயந்துகொண்டு'என்று அர்த்தம். ஸாதாரணமாக, வாங்குகிறவன்தான் பயந்து கொண்டு நிற்பான்;கொடுக்கிறவன் அதட்டிக்கொண்டு கொடுப்பான். வாஸ்தவத்தில் கொடுக்கிறவன்தான் பயப்பட வேண்டும் என்கிறது உபநிஷத். கடைசியாக, 'ஞானத்தோடு'கொடுக்க வேண்டும் என்று முடிக்கிறது. 'ஸம்வித்துடன் என்று சொல்கிறது. 'ஸம்வித்'என்றால் 'நிறைந்த ஞானம்' கொடுக்கிறவன், வாங்கிக் கொள்கிறவன் இரண்டு பேர்வழிகளும் வாஸ்தவத்தில் ஒருவனேதான் என்ற அறிவுதான் அந்த 'ஸம்வித்'.

வேதத்தில் கொடையைப் பற்றி இவ்வளவு சொல்லியிருக்கிற மாதிரியே கீதையிலும் (அத்.17) பகவான் சொல்லியிருக்கிறார். அவர் தானத்தில் மூன்று தினுஸு சொல்லியிருக்கிறார். ஒன்று ஸாத்விகம் - உத்தமமானது;இரண்டாவது ராஜஸம் - மத்யமமானது;மூன்றாவது தாமஸம் - அதமமானது. துளிக்கூட ப்ரதி உபகாரத்தை எதிர்பார்க்காமல், தகுந்த பாத்திரத்துக்குத் தகுந்த இடத்தில், தகுந்த காலத்தில் தருவதுதான் 'ஸாத்விகம்'. தானம் செய்வதால் கிடைக்கிற புண்ய பலனையும், தானம் வாங்கினவன் செய்கிற ப்ரதி உபகாரத்தையும் நினைத்துக்கொண்டு, பொருளில் பற்றுப் போகாததால் உள்ளுக்குள் கொஞ்சம் கஷ்டப்பட்டுக் கொண்டே கொடுக்கிற தானம் 'ராஜஸம்'என்ற வகையைச் சேர்ந்தது. பாத்திரமில்லாதவர்களுக்குத் தகாத இடத்தில், தகாத காலத்தில், அவமானப் படுத்திக் கொடுப்பது 'தாமஸம்'இப்படி க்ருஷ்ண பரமாத்மா தானத்திலேயே distinguish (பாகுபாடு) பண்ணுகிறார்.

புராணங்களிலும் எங்கு பார்த்தாலும் தானத்தின் மஹிமை சொல்லியிருக்கிறது. இன்ன மாஸத்தில், இன்ன இடத்தில், இன்னாருக்கு இன்ன தானம் பண்ணினால் இன்ன பலன் என்று நிறையைச் சொல்லியிருக்கிறது - துலா மாஸத்தில் தானம் விசேஷம்;கங்காதீரத்தில் தானம் விசேஷம் என்கிறாற்போல தர்ம சாஸ்த்ரங்ளிலும், திருக்குறள், ஆத்திசூடி முதலான நீதி நூல்களிலும் அப்படியே ஈகையின் சிறப்பை விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறது. ஈகை, தானம் என்பதெல்லாம் என்ன? பரோபகாரத்தின் ஒரு ரூபம் தானே?

ஆனபடியால், 'ஹிந்து மதத்தில் பரோபகாரத்தைப் பற்றி ஒன்றுமில்லை - ஆசாரம், அநுஷ்டானம், பூஜை, யோகம், ஆத்மவிசாரம் இதுகள்தான் உண்டு' என்று நினைப்பது கொஞ்சம்கூட ஸரியில்லை.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### விதி விலக்கானவர்கள்

வை திகக் குடுக்கைகள், மடிஸஞ்சிகள் என்று மற்றவர்கள் திட்டுகிற மாதிரி சிலர் ஜீவகாருண்யம் இல்லாமல் வெறுமே கர்மா, பக்தி என்று பண்ணிக் கொண்டிருந்தால் அது ஸரியில்லைதான். ஆனாலும்கூட இவர்கள் உணர்ந்தாலும், உணராவிட்டாலும், இந்த யாகயஜ்ஞம், திவஸம், தர்ப்பணம், பூஜை எல்லாமும்கூட, அததன் உள்ளர்த்தத்தைக் கவனித்தால் ஸோஷல் ஸர்வீஸ்தான். லோகத்தின் ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் க்ஷேமத்தை உண்டாக்கிக் கொடுப்பதுதான் யாக மந்த்ரங்கள், சடங்குகள் ஆகியவற்றின் தாத்பர்யம். இந்த லோகத்தில் உள்ள ஜீவராசிகளில் செத்துப்போன நம் பித்ருக்களும் எங்கேயோ பிறந்துதானே இருக்கிறார்கள்?அவர்கள் எந்த இடத்தில் எந்த ரூபத்தில் பிறந்திருந்தாலும் அவர்களுக்கு க்ஷேமம் உண்டாவதற்குத்தான் பித்ரு தேவதைகளுக்குத் தர்ப்பணாதி, சிராத்தம் முதலானதுகளைச் செய்கிறோம்.

லோக க்ஷேமத்துக்காவேதான் பகவானைப் பூஜை பண்ணுவதும்."ஜகத்ஹிதாய க்ருஷ்ணாய"அதாவது, உலகமெல்லாம் கஷ்டம் தீர்ந்து ஸந்தோஷமாக இருக்க ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவைப் ப்ரார்த்தித்துத்தான் பூஜையை ஆரம்பித்து, முடிக்கிறபோது "லோகா:ஸமஸ்தா: ஸுகினோ பவந்து"அதாவது, வையகமும் துயர் தீர்கவே!'என்று முடிக்கிறோம்.

யோகம், ஞானம் என்று ஜனங்களையே விட்டுவிட்டு எங்கேயோ குகையில் உட்கார்ந் துகொண்டு மூக்கைப் பிடித்துக் கொண்டிருக்கிறானே அவன் கதை என்ன?'இப்படிப்பட்டவனுக்கு பிக்ஷை போடாதே. அவன் ஸோஷல் ஸர்வீஸ் என்ன செய்கிறான்?ஸமூஹத்தைப் பிடுங்கி தின்கிறான் (parasite) என்றெல்லாம்கூட இந்த நாளில் கோஷம் பே ாடுகிறார்கள். ஆண்டி, பண்டாரம், ஸந்நியாஸி என்று கிளம்பியிருப்பவர்களில் வேஷம் போடுபவர்களும் இருப்பார்கள்தான். அது வேறு விஷயம். ஆனால் வாஸ்தவமாகவே ஒருத்தன் ஆத்ம அபிவிருத்தி அடைவதற்காக ஏகாந்தமாக, ஸமூஹத்தை விட்டு, ஒரு தொழிலும் செய்யாமல் இருக்கிறான் என்றால் அவன் ஸமூஹத்துக்குப் பிரயோஜனம் இல்லாதவன்தானா?

இப்படி நினைப்பது முழுப் பிசகு. ஒவ்வொரு ஜீவனும் தன் மனஸை சுத்தப்படுத்திக்கொண்டு, அதை ஈஸ்வரனோடு ஈஸ்வரனாகச் சேர்த்துக் கறைக்கிற அளவுக்கு உயர்வதற்காகப் பாடுபடத்தான் வேண்டும். மற்ற ஜீவராசிகளுக்குச் செய்கிற பரோபகாரங்கூட அவர்களையும் கடைசியில் இப்படி ஆத்மார்த்தமாக உயர்த்தாவிட்டால், அத்தனை உபகாரத்தாலும் ப்ரயோஜனம் ஒன்றுமில்லை. ஆகையினால் நம்மில் ஒருத்தன் அப்படி உயரப் பாடுபடுகிறான் என்றால் அதுவே நமக்கு ஸந்தோஷம் தரத்தான் வேண்டும். நம் மாதிரி ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டு கஷ்டப்படாமல், இதிலிருந்து தப்பிக்கிறதற்கு ஒரு தீரன் முயற்சி பண்ணுகிறான் என்றால் அவனைப் பார்த்து நாம் பெருமைதான் படவேண்டும். அவனுடைய சரீர யாத்திரை நடப்பதற்கு அத்யாவச்யமான ஸஹாயத்தை நாம் செய்து கொடுக்கத்தான் வேண்டும். அப்புறம் அவன் நல்ல பக்குவம் அடைந்து யோக

ஸித்தனாக, அல்லது பூர்ண ஞானியாக ஆகிவிட்டான் என்றால், அதன்பின்னும் அவன் கார்யத்தில் ஸோஷல் ஸர்வீஸ் என்று பண்ணவே வேண்டாம். தன்னாலேயே அவனிடமிருந்து ஜனங்களின் தாபங்களையெல்லாம் தீர்க்கிற சக்தி வெளிப்படும்;radiate ஆகும். ஜனங்களின் மனஸுக்குத் தாப சாந்தி உண்டாக்குவதை விடப்பெரிய ஸமூஹ ஸேவை எதுவும் இல்லை.

ஒரு மஹானின் தர்சனத்தால் கிடைக்கிற இந்த சாந்தி, விச்ராந்தி தாற்காலிகமாக இருந்தால்கூட, அது பெரிய ஸோஷல் ஸர்வீஸ்தான். அப்படிப் பார்த்தால் எந்த ஸோஷல் ஸர்வீஸ்தான் சாச்வதமாயிருக்கிறது?எல்லாமே தாற்காலிகம்தான். தர்ம ஆஸ்பத்திரி வைத்து ஒரு வியாதிக்கு மருந்து கொடுத்து ஸரி பண்ணினாலும் அப்புறம் இன்னொரு வியாதி வரத்தான் வருகிறது. அன்ன சத்திரம் வைத்து ஒருவேளை சாதம் போட்டால், அடுத்தவேளை பசிக்கத்தான் பசிக்கிறது. அதனால் இந்த லோகத்தில் எல்லாமே தாற்காலிகம்தான்.

ஒருத்தன் பூர்ணத்வம் அடைந்துவிட்டால் மற்றவர்களின் மனஸின் கஷ்டத்தைப் போக்குவது, அதை சுத்தப்படுத்துவது தவிர, அவன் அவர்களுடைய லௌகிகமான வேண்டுதல்களைக்கூட நிறைவேற்றுகிற அநுக்ரஹ சக்தியும் பெற்றுவிடுகிறான்.

எந்த விதி (rule) இருந்தாலும், அதற்கு ஒரு விலக்கு (exception) இருக்கத்தான் செய்யும். அம்மாதிரி அத்யாத்ம மார்க்கத்தில் போகிறவர்களை - பக்தி, யோகம், ஆத்ம விசாரம் என்று தீவிரமாக இருக்கிறவர்களை - ஸோஷல் ஸர்வீஸில் இழுக்கக்கூடாது;அவர்களை 'பாரஸைட்'என்று திட்டக்கூடாது என்பதற்காகச் சொல்கிறேன்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### தான எண்ணத்தையும் தானம் செய்க !

வே தம் என்றாலே முதலில் ஞாபகம் வருவது யாகம்தான். யாகமும் த்யாகமும் ஒன்றுதான். இங்கிலீஷில்கூட யாகம், த்யாகம் இரண்டையும் 'ஸாக்ரிஃபைஸ்' என்றுதானே சொல்கிறார்கள்? ஆனதால், வைதிகம் என்பது தன்னலமே கருதுவது என்கிற அபிப்ராயம் அடியோடு பிசகு. தன்னலத்தை முழுக்க த்யாகம் பண்ணுவதுதான் ஸநாதன தர்மத்தின் லக்ஷ்யம். இங்கே 'தர்மம்'என்பதே மதம். வேத தர்மம், ஹிந்து தர்மம் என்றாலே வேதமதம், ஹிந்து மதம் என்றுதான் அர்த்தம். இதே 'தர்மம்' பரோபகாரங்களில் ஒன்றான ஈகையாக நினைக்கப்படுவதை முன்பே சொன்னேன். அதனால் நம் மதமே பரோபகாரமானதுதான்.

யாகத்திலே நெருப்பில் வஸ்துக்களை, உடைமைகளைப் போட்டு த்யாகம் பண்ணினால் தேவ சக்திகளுக்கு ப்ரீதி உண்டாகிறது. அவர்கள் லோகத்துக்கு மழை, ஸுபிக்ஷம் நல்ல எண்ணம் எல்லாவற்றையும் அநுக்ரஹம் பண்ணுகிறார்கள். ஒருவன் தன் உடைமையை வேள்வித் தீயில் த்யாகம் பண்ணி இப்படி லோக க்ஷேமத்தைச் செய்ய வேண்டும்.

சொத்து ஸ்வதந்திரங்களை நாமே வைத்துக்கொண்டு அநுபவிப்பதில் பெறுகிற ஸுகம் ரொம்பவும் தாற்காலிகமானது இந்தத் தாற்காலிக ஸுகம் நித்ய ஸௌக்கியமான ஆத்மாபிவிருத்திக்கு ஹானியாகவும் ஆகிறது. ஆனால் இதே உடைமைகளை நாம் வைத்துக்கொண்டு அநுபவிப்பதைவிட, கொடுத்து அநுபவித்தால், இதுவே பரம ஆனந்தத்தை தருகிறது;சாஸ்வத ஸௌக்யத்துக்கும் வழிகோலுகிறது. இதனால்தான் உபநிஷத்துக்களில் முதலாவதான "ஈசாவாஸ்ய" த்தில் முதல் மந்த்ரத்திலேயே, "த்யாகம் பண்ணி அநுபவி" என்று சொல்லியிருக்கிறது. காந்திகூட இதில்தான் தம்முடைய ஃபிலாஸஃபி முழுக்க இருக்கிறது என்று சொல்லி, இந்த உபநிஷத்தை தலைக்கு மேலே வைத்துக்கொண்டு ஸ்லோகித்து வந்தார்.

கொடுக்க வேண்டும். அதுதான் த்யாகம். அதைத்தான் வேதம் எங்கே பார்த்தாலும் வற்புறுத்துகிறது. எந்தக் கர்மாவும் செய்து முடிக்கும்போது, "நான் தான் கர்த்தா என்பதால் இதன் ப்ரயோஜனம் முழுதும் எனக்கே வந்துவிடப் போகிறதே!அப்படி என் ஒருத்தனுக்கு

மட்டும் பலன் கிடைத்துவிடக் கூடாது" என்கிற பரம த்யாக புத்தியில் "ந மம" - "எனதில்லை;எனக்கில்லை"என்று அதன் பலனை லோக க்ஷேமார்த்தம் த்யாகம் பண்ணச் சொல்கிறது நம்முடைய மதம்.

மற்ற வஸ்துக்களை கொடுத்துவிட்டு, "நான் கொடுத்தேன்" என்ற எண்ணத்தை மட்டும் வைத்துக்கொண்டே இருந்தால் இந்த அஹங்காரமானது த்யாகத்தாலும் தானத்தாலும் கிடைக்கிற ஆத்மாபிவிருத்தியை அப்படியே ஏப்பம் விட்டுவிடும். த்யாகம் பண்ணவேண்டும்; அதைவிட முக்யமாக த்யாகம் பண்ணினேன் என்ற எண்ணத்தையும் த்யாகம் பண்ணிவிட வேண்டும்.

மஹாபலி நிறையக் கொடுத்தான்; வாரி வாரிக் கொடுத்தான். ஆனால் தான் கொடுக்கிறோம் என்ற அஹங்காரத்தை அவன் பகவானுக்கு பலி கொடுக்கவில்லை. இதானால்தான் பகவானே அவனிடம் இந்த அஹங்காரத்தை யாசகமாகப் பெற்று,அஹங்கார நாசத்துக்கு அடையாளமாகத் தலையிலே கால் வைத்தான்.

"ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிறேன்"என்று சொல்லிக்கொண்டு வெளியில் ஏதேதோ பண்ணிக் கொண்டு அஹங்காரத்தைக் கரைக்காமல் இருந்தால் இவனுக்கும் ப்ரயோஜனமில்லை; இவனுடைய ஸர்வீஸால் லோகத்துக்கும் ப்ரயோஜனமிராது. தாற்காலிகமாக ஏதோ நன்மை நடந்ததுபோல் படாடோபமாகத் தெரியலாம்; ஆனால் அது நின்று நிலைத்து விளங்காது.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### புறாவின் த்யாகம்

"என்பும் உரியர் பிறர்க்கு" என்று குறள் சொன்ன மாதிரி, தங்களுடைய ஸர்வத்தையும் பரோபகாரமாக த்யாகம் பண்ணவேண்டும். சிபியின் கதை எல்லோருக்கும் தெரியும். ஒரு புறாவுக்காகத் தன் சரீரத்தையே, ப்ராணனையே த்யாகம் செய்ய முற்பட்ட மஹாபுருஷன் அவன். நம் மதத்தில் ஜீவகாருண்யத்துக்குத் தந்திருக்கிற முக்யமான ஸ்தானத்துக்கு சிபி கதை ஒன்றே போதும். வேத பூமியான இந்த பாரத பூமியின் விசேஷம் மநுஷ்யனுக்காக மட்டுமில்லாமல் மற்ற ஜீவராசிகளுக்கும், பூச்சி பொட்டுகளுக்குங்கூட க்ஷேமத்தைக் கோரி த்யாகம் பண்ணச் சொல்வது. இதில் இன்னொரு பக்கம், இந்த மண்ணின் விசேஷத்தால் மற்ற ஜீவராசிகளுக்குங்கூட இப்படிப்பட்ட பரோபகார சிந்தனையும், த்யாக புத்தியும் இருப்பதாகச் சொல்கிற புராண விருத்தாந்தங்களைப் பார்க்கிறோம். புறாவுக்காக த்யாகம் செய்த சிபியைப் பற்றிச் சொன்னேன். புறாக்களே செய்த பரம த்யாகத்தைக் 'கபோத உபாக்யானம்'சொல்லுகிறது. 'கபோதம்'என்றால் புறா என்று அர்த்தம். 'உபாக்யானம்'என்றால் சின்னக்கதை என்று அர்த்தம். இந்தப் புறாக்களின் கதை மனஸை ரொம்பவும் உருக்குவது.

வேடன் ஒருத்தன் இருந்தான். அவன் காட்டிலே வலை வீசி ஒரு பெண் புறாவைப் பிடித்தான். அப்போது ஒரே இடியும் மழையுமாக வந்தது. இந்தப் புறாவும் அதன் ஜோடியான ஆண் புறாவும் வஸித்த மரத்தடியிலேயே அவன் ஒண்டிக்கொண்டான். மழை நின்றபோது நல்ல இருட்டாகி விட்டது. ஒரே குளிர் வேறு. வேடனால் அங்கிருந்து புறப்பட முடியவில்லை. குளிரில் உடம்பெல்லாம் நடுங்க அங்கேயே ஒடுங்கி உட்கார்ந்து விட்டான்.

இதைப் பார்த்த மரத்தின் மேலிருந்த ஆண் புறா தன்னுடைய ப்ரிய பத்னியைப் பிடித்த பாபி நன்றாக அவஸ்தைப் படட்டும் என்று நினைக்கவில்லை. நேர் மாறாக, நம் தேசத்தின் விருந்தோம்பல் பண்பு முழுதும் அந்தச் சின்ன பக்ஷியிடம் திரண்டு வந்துவிட்டது. நாம் வஸிக்கிற மரத்தின் கீழ் இவன் வந்துவிட்டான். அதனால் இவன் நம் வீட்டுக்கு வந்துவிட்ட மாதிரி 'அதிதி தேவோ பவ'- விருந்தாளியை தெய்வமாக நினை' என்பது வேத ஆக்ஞை. எனவே, இந்த அதிதிக்குத் தன்னாலான ஒத்தாசையைச் செய்ய வேண்டும்' என்று நினைத்தது.

முதலில், குளிரில் நடுங்குகிறவனுக்குக் கணப்பு மூட்ட வேண்டும் என்று நினைத்தது. தன்

கூட்டையே பிரித்து அதிலிருந்த காய்ந்த குச்சிகளை வேடனுக்கு முன்னால் கொண்டு வந்து போட்டது. தன் வீடு போனாலும் ஸரி, அவனுக்கு ஸௌகர்யம் பண்ணித் தர வேண்டும் என்ற உத்தமமான எண்ணம்.

'சிகிமுகி'கல் என்று ஒன்று உண்டு. 'சிக்கிமுக்கி'என்று பேச்சு வழக்கில் சொல்லுகிறார்கள். 'சிகி'என்றால் நெருப்பு என்று அர்த்தம். 'சிகை'உள்ளதெல்லாம் 'சிகி'தான். சிகையை விரித்துக் கொண்டு ஆடுகிற மாதிரிதானே நெருப்பு ஜ்வாலை நாக்குகளை நீட்டிக்கொண்டு கொழுந்து விட்டு எரிகிறது? 'முகம்'என்றால் வாய். வாயில் நெருப்பை உடைய கல்தான், அதாவது தேய்த்தால் நெருப்பை உமிழ்கிற கல்தான் 'சிகிமுகி'.

இப்படிப்பட்ட சிகிமுகிக் கற்களைப் புறா தேடிக்கொண்டு வந்து போட்டது.

வேடன் அவற்றை ஒன்றோடொன்று தட்டி நெருப்பு உண்டாக்கி அந்த நெருப்பில் சுள்ளிகளைப் பற்ற வைத்துக் குளிர் காய்ந்தான்.

தனக்குப் புறா இத்தனை உபகாரம் செய்ததும் வேடனுடைய க்ரூர ஸ்வபாவம்கூட மாறி மனஸ் இளகிவிட்டது. தான் பிடித்திருந்த அதனுடைய பேடையை விட்டு விட்டான்.

'விருந்தோம்பல் என்றால் முக்யமாக அதிதிக்குச் சாப்பாடு போடுவதுதான். இந்த வேடன் இங்கே நம் விருந்தாளியாக வந்து விட்டுப் பட்டினி கிடந்தால் அதனால் நமக்கு மஹாபாபம் ஏற்படும். இவனுடைய பசியை ஆற்றுவதே நம் முதல் தர்மம்'என்று பெண் புறா நினைத்தது.

அவனுடைய ஆஹாரத்துக்காக அது வேறு எங்கேயோ போய்த் தேடவில்லை. தானே இருக்கும்போது வேறு ஆஹாரம் தேடுவானேன் என்று நினைத்தது. உடனேயே கொஞ்சங்கூட யோசிக்காமல், பரம ஸந்தோஷத்தோடு, அந்த அக்னியில் தானே விழுந்து ப்ராணத்தாயகம் பண்ணி விட்டது. நெருப்பில் வெந்து பக்வமான தன்னை அவன் புஜிக்கட்டும் என்ற உத்தம சிந்தை.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த அதனுடைய ஜோடிப் பக்ஷியும் அந்த நெருப்பிலேயே விழுந்து தன்னை வதக்கிக் கொண்டது.

" என்பும் உரியர் பிறர்க்கு " என்ற மாதிரி இப்படி உயிரையே தந்தாவது இன்னொருத்தருக்கு உபகரிக்க வேண்டும் என்ற தத்துவத்தை நம் மத க்ரதங்களிலெல்லாம் நிறையச் சொல்லியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### யமனும் அஞ்சினான் !

அதிதியை தெய்வமாக நினைப்பது, அவனைக் கவனிக்காவிட்டால் தெய்வக் குற்றம் செய்த மாதிரி பயப்படுவது, இதெல்லாம் நம் மதத்தின் முக்யமான அம்சங்களாகும். யமன் என்றால் நாம் எல்லோரும் கதி கலங்குகிறோம். அப்படிப்பட்ட யமனே கதிகலங்கி விட்டதாகக் கடோபநிஷத்தில் ஒரு கதையில் வருகிறது. அவன் யாரிடம் பயப்பட்டான்?ஒரு சின்ன பிராம்மணப் பிள்ளையிடம் தான் பயப்பட்டான்! ஏன் பயப்பட்டான்? இந்தப் பையன் யமனுடைய க்ருஹத்துக்கு வந்து மூன்று நாட்கள் எதுவும் சாப்பிடாமல் பட்டினி கிடந்துவிட்டான்! (அவன் ஏன் வந்தான் என்பது வேறு கதை) அதிதியொருவனின வயிற்றுக்குப் போடாவிட்டால் அது மஹா அபசாரமாகுமே என்றுதான் ஸாக்ஷாத் யமனே பயந்து விட்டான். ஸர்வ லோகத்தையும் நடுங்கச் செய்கிறவன் இந்த வாண்டுப் பயலிடம் நடுங்கிக் கொண்டு வந்து, "என் க்ருஹத்தில் நீ என்று ராத்திரி சாப்பிடாமல் இருந்து விட்டாய். இதனால் எனக்கு தோஷம் உண்டாகமல் இருக்க உனக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன் அப்பா. ஒவ்வொரு நாள் பட்டினி இருந்ததற்கும் ஈடாக ஒவ்வொரு வரம் வீதம் என்னிடம் நீ மூன்று வரம் வாங்கிக் கொள்" என்று ப்ரார்த்தித்ததாக உபநிஷத் சொல்கிறது.

இங்கெல்லாம் 'பரோபகாரம்'என்று செய்கிறபோது இருக்கக்கூடிய 'ஸுபீரியாரிடி' மனப்பான்மை இல்லாமல், உபகாரத்துக்குப் பாத்திரனாகிறவனிடம் பயந்து பயந்து தாழ்ந்து, தெய்வத்துக்குப் பூஜை செய்கிற மாதிரி அவனுக்கானதைச் செய்வதையே பார்க்கிறோம். பரோபகாரத்தில் ஒரு முக்யமான அங்கமான ஈகையில் சிறந்தவர்களை நம் தர்மத்தில் தலைக்குமேல் வைத்துக் கொண்டு கொண்டாடுகிறோம். எத்தனையோ துர்குணங்கள் இருந்தால்கூட கர்ணன் போன்றவர்களைக் கொடைக்காகவே போற்றுகிறோம்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### தமிழ் நாட்டு வள்ளல்கள்

தமிழ் தேசத்திலும் வள்ளல்கள் என்று இவர்களை தெய்வத்துக்கு ஸமானமாகக் கொண்டாடுகிற வழக்கம் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கிறது." முதலெழு-இடையெழு-கடையெழு வள்ளல்கள்"என்று குமணன், அதியமான் முதலான 21பேரை ஸ்லோகித்துச் சொல்லியிருக்கிறது. காரி, பாரி ஓரி என்றெல்லாம் ஏழு பேரைக் கடையெழு வள்ளல்கள் என்பார்கள். பாரி வள்ளல் முல்லைக் கொடி படருவதற்காகத் தன் தேரையே கொடுத்த கதை எல்லோருக்கும் தெரியும். இன்னொருத்தன் (பேகன்) மயில் குளிரில் நடுங்குகிறதே என்று தன் உத்தரீயத்தையே எடுத்து அதற்குப் போர்த்தினானாம்.

அதியமானுக்கு சிரஞ்ஜீவித்வத்தைத் தரக்கூடிய நெல்லிக்கனி கிடைத்தது. 'நாம் சிரஞ்ஜீவியாக இருந்து என்ன ஸாதிக்கப் போகிறோம்?அவ்வைப் பாட்டி இருக்கிறாளே, ஸதாவும் லோக க்ஷேமத்தைப் பண்ணிக் கொண்டு, ஊர் ஊராக ஓடி குழந்தைகளுக்கு உபதேசம் செய்து வருகிறாளே, அவள் திடகாத்திரத்தோடு எத்தனை ஆயசு இருந்தாலும் அதுதான் லோகத்துக்கு நல்லது' என்று அவன் நினைத்து அவளுக்கே அந்த நெல்லிக்கனியை தானம் பண்ணிவிட்டான்.

'அதியமான் பண்ணியது புத்திசாலித்தனமாக இருக்கிறது. ஆனால் முல்லைக்குத் தேராவது?மயிலுக்கு எங்கேயாவது குளிருமா?அதற்குப் பட்டுப் பீதாம்பரத்தைப் போர்த்தவாவது?இதெல்லாம் புத்தி இல்லாத கார்யமாக அல்லவா இருக்கிறது?' என்று கேட்கலாம். என்னைக் கேட்டால், இப்படி புத்திக்கு வேலையே இல்லாமல் முட்டாள்தனம் மாதிரி கூடத் தோன்றுகிற கார்யங்களைச் செய்வதுதான் நிஜமான அன்பை, நிஜமான த்யாகத்தைக் காட்டுகிறது என்பேன். அன்பு பீறிக்கொண்டு வருகிறபோது மூளையினால் அதற்கு நியாய அநியாயங்கள் பார்க்க முடியாது. இப்படித்தான், நாயன்மார்களைப் பார்த்தால் பெண்டாட்டியையே ஒருத்தர் தானம் பண்ணினார், இன்னொருத்தர் பிள்ளையையே கறி பண்ணிப் போட்டார் என்கிறபோது, இதெல்லாம் மூடத்தனம், உணர்ச்சிக் கட்டுப்பாடில்லாத கார்யம் என்று சொல்லக்கூடாது. அவர்களுக்கு எப்படிப்பட்ட த்யாக சிந்தனை இருந்தது என்பதுதான் முக்யம். மூளையால் ஸமாதானம் சொல்ல வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் உருட்டிப் புரட்டிக் கொண்டு வந்துவிட்ட த்யாகம்தான் நிஜமான த்யாகம் என்று என் அபிப்ராயம்.

இம்மாதிரி ஆவேசமாகப் பரோபகாரம் பண்ணின பெரியவர்கள் நம் தேசத்தில் ஆதிகாலத்திலிருந்து அவிச்சின்னமாக (தொடர் முறியாமல்) வந்து கொண்டே இருந்திருக்கிறார்கள்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ஸநாதன தர்ம ஸாரம்

வை திக தர்மத்துக்கு ஸாரமாக இருப்பது பஞ்ச மஹாயஜ்ஞங்கள் என்ற ஐந்து வேள்விகள். இவற்றில் 'ப்ரம்மயஜ்ஞம்' என்பது வேதம் ஓதுதல், ஓதுவித்தல். இதுவே நிஜமான வித்யா

தானமாகிய பெரிய பரோபகாரம். 'பித்ரு யஜ்ஞம்' என்பது முன்னமே சொன்னாற்போல் மூதாதைகளுக்குச் செய்யும் தர்ப்பணம். 'தேவ யஜ்ஞம்' என்பது ஈஸ்வர ஆராதனம். இது தான் மற்ற எல்லா தான தர்மங்களுக்கும் பூர்த்தி ஸ்தானம். 'பூத யஜ்ஞம்' என்பது நாயும், காக்கையும் உள்பட எல்லா ஜீவராசிகளுக்கும் பலி போடுவது. 'ந்ரு யஜ்ஞம்' என்பது அதிதியை உபசாரம் பண்ணுவது. பஞ்ச மஹாயஜ்ஞங்களைப் பார்த்தால் நம் வேத மதத்தைப் போல் பரோபகாரத்தைக் கார்யத்தில் கட்டாயமாக விதித்திருக்கிற மதம் வேறு இல்லை என்றே தோன்றுகிறது. ஸ்ருஷ்டியில் ஒரு பிரிவைக்கூட விடாமல் உபகாரம் பண்ணி வைப்பது பஞ்ச மஹா யஜ்ஞம்.

இது தவிர 'பூர்த்தம்' என்ற பெயரில் ஸோஷல் ஸர்வீஸைப் பற்றி தர்ம சாஸ்திரங்களில் நிறையச் சொல்லியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### " பூர்த்த தர்மம் " : பலர் கூடிப் பொதுப்பணி

பூர்த்தம் காதாதி கர்ம யத் என்று ஸம்ஸ்க்ருத டிக்ஷனரியான 'அமர'த்தில் சொல்லியிருக்கிறது. 'காதம்'முதலான கர்மாக்கள் பூர்த்தம் ஆகும் என்று அர்த்தம்.

காதம் என்றால் வெட்டுவது;அதாவது குளமோ, கிணறோ, வாய்க்காலோ வெட்டி உபகாரம் பண்ணுவது. சாஸ்திரங்களில் விசேஷித்துச் சொல்லியிருக்கிற இந்தப் பூர்த்த தர்மத்தை மறந்தால்தான் ஜலக்கஷ்டம் (Water scarcity) என்று ஓயாமல் அவஸ்தைப் படுகிறோம். அந்தக் காலத்தில் இந்தக் கார்யம் ரொம்பவும் முக்யமாகக் கருதப்பட்டதால்தான் நாம் கூப்பிட்டு ஒருத்தன் வரவில்லை என்றால், "அவன் அங்கே என்ன வெட்டிக் கொண்டிருக்கிறானோ?"என்று கேட்கிற வழக்கம் வந்திருக்கிறது. அதாவது அவன் வெட்டிக் கொண்டிருந்தால் மட்டும் நாம் எத்தனை அவஸரத்தில் கூப்பிட்டாலும் வராமலிருக்கலாம் என்று அர்த்தமாகிறது!

இப்போது வெட்டுகிற கார்யம் போய், தூர்ப்பது தான் முக்யமான கார்யமாக இருக்கிறது!குழாயில் தண்ணீர் நின்றுவிட்டாலோ அல்லது பூச்சியும் புழுவுமாகக் குழாய் ஜலம் வரும்போதோ, "ஏண்டா குளத்தைத் தூர்த்தோம், கிணற்றை மூடினோம்?"என்று துக்கமாக வருகிறது.

முன்பெல்லாம் ஒரு குளம் என்றால் வாய்க்கால்கள், வடிகால்கள் என்றெல்லாம் போட்டு வெகு சுத்தமாக வைத்துக் கொள்வார்கள். கிணறு என்றால் இழுக்கத் தெரிந்த மநுஷ்யனுக்கு மட்டும்தான் அது ப்ரயோஜனமாகும். குளமானாலோ வாயில்லா ப்ராணிகளுக்கும்-காக்காய், குருவி முதற்கொண்டு ஸகல ஜீவராசிகளுக்கும்-அது பயன்படும். பாதை போடுவது ஒரு தர்மம். வ்ருக்ஷம் வைப்பது இன்னொரு தர்மம். புதிதாக வைப்பதோடு, இருக்கும் வ்ருக்ஷங்களை வெட்டாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். புதிதாக வைக்கிற செடிக்கு தினம் ஜலம் விட்டு, அது வ்ருக்ஷமாக வளரப் பண்ண வேண்டும். "வனமஹோத்ஸவம்"என்று இன்றைக்குப் பெரிய மநுஷர்கள் வந்து செடி நட்டுவிட்டு நாளைக்கே அதற்கு ஜலம் விட ஆள் இல்லாமல் அது பட்டுப்போனால் என்ன ப்ரயோஜனம்?இதுமாதிரி டெமான்ஸ்ட்ரேஷன், வெளிவேஷம் நமக்கும் உதவாது, லோகத்துக்கும் உதவாது. இதற்குப் பதில் யாருக்கும் தெரியாமல் ஒருத்தன் ஏதோ ஒரு ஒற்றையடிப் பாதையில் உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால், அதுவே மற்றவர்களுக்கு வழியை சுத்தி பண்ணுவதோடு இவனுக்கும் சித்த சுத்தியைக் கொடுத்துவிடும்.

ஒவ்வோர் அவயவத்தாலும் ஏற்படக்கூடிய தோஷத்தைப் போக்கிக்கொள்ள அந்த அவயவத்தாலேயே செய்யக்கூடிய புண்ய கர்மாக்கள் இருக்கின்றன. குப்பைத் தொட்டியான மனஸை சுத்தம் பண்ண அந்த மனஸாலேயே த்யானம் செய்ய முடிகிறது. கண்டதைப் பேசுகிற நாக்கை சுத்தப்படுத்திக் கொள்ள அந்த நாக்காலேயே பகவந்நாமாவைச் சொல்ல முடிகிறது. குயுக்தி எல்லாம் பண்ணும் மூளையை சுத்தமாக்கிக் கொள்ள அந்த மூளையாலேயே தத்வ ஆராய்ச்சி பண்ண முடிகிறது. இப்படியே, இந்த சரீரத்தால் -

கையாலும், காலாலும், உடம்பாலும் எத்தனையோ தப்பு தண்டா பண்ணுகிறோமல்லவா?அதை இந்த சரீரத்தாலேயே தான் சுத்தப்படுத்திக்கொள்ள வேண்டும்.

சரீரப் பிரயாஸையாலேயே பண்ணிக்கொள்ளும் இந்த சுத்திதான் பொதுக்கார்யங்களான பூர்த்த தர்மங்கள்-ஸோஷல் ஸர்வீஸ்-அத்தனையும், சரீரப் பிரயாஸையாலேயே இது சித்த சுத்தியையும் தரக்கூடியது. ஏனென்றால் சரீரத்தால் செய்கிற இந்தக் கார்யங்களுக்கு மூலமாகப் பரோபகாரம் என்ற எண்ணம் நம் சித்தத்தில் இருப்பதுதான்.

தயை என்பது ஒவ்வொருவர் மனஸிலும் இருக்க வேண்டிய உயர்ந்த குணம். அந்த தயைக்கு உருக்கொடுக்கும்படியான ஒரு கார்யத்தை சரீரத்தினாலும் அவசியம் செய்ய வேண்டும்.

* * *

விநோபா 'ச்ரம்தான்'(ச்ரம தானம்) என்று சொல்லி வருகிறாரே, இதைத்தான் பூர்த்த தர்மம் என்று நம் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. வாரத்தில் ஒரு நாளாவது இந்த சரீர கைங்கர்யத்தை ஸகல ஜனங்களும் பண்ண வேண்டும் என்பது என் ஆசை. யாராயிருந்தாலும் வாரத்துக்கு ஒரு நாள் ஹாலிடே (விடுமுறை) இருக்கிறதல்லவா?அன்றைக்கு லோகோபகாரமாக சரீரத்தால் ஒரு பொதுப்பணி செய்ய வேண்டும். மனப்பூர்த்தியுடன், அல்லது மனப் பூர்த்திக்காக பூர்த்த தர்மம் பண்ண வேண்டும்.

அவரவருக்கும் எத்தனையோ குடும்பக் கார்யங்கள் இருக்கும் என்பது வாஸ்தவம்தான். இந்தக் கார்யங்களை லீவு நாளில் பார்த்துக் கொள்ளலாம் என்றுதான் வைத்திருப்பார்கள். ஆனாலும் இதோடுகூட பார்வதீ-பரமேஸ்வராளின் பெரிய லோக குடும்பத்துக்கும் தன்னாலானதை ஒரு 'ட்யூட்டி'யாக செய்யத்தான் வேண்டும். இதற்காக அதையும் விடக்கூடாது. அதற்காக இதையும் விடக்கூடாது. கொஞ்ச நேரமாவது இந்தப் பரோபகாரப் பணி புரிய வேண்டும்.

சரீர கைங்கர்யம் உடம்புக்கே ஒரு நல்ல exercise (அப்யாஸம்). அதோடு பரோபகாரமாகப் பண்ணுகிற போது மனஸுக்கும் அலாதியான உத்ஸாஹம் இருக்கும். முடிவில் சித்த சுத்தியைத் தரும்.

ஸங்கமாகச் செய்ய வேண்டும். உதிரி உதிரியாக அவரவர்கள் செய்வதைவிட எல்லாரும் சேர்ந்து செய்தால் ஜாஸ்தி உபகாரம் பண்ண முடியும்.

அதுவும் இந்தக் கலிகாலத்தில் பலர் கூடிப் பண்ணுவதுதான் பலன் தரும்- கலௌ ஸங்கே சக்தி : என்றே வசனமிருக்கிறது. முன் யுகங்களில் வீஸீபீவீஸ்வீபீ�ுணீறீ-ஆக ஒவ்வொருத்தனுக்கும் தேஹ, மனோ சக்திகள் அதிகமிருந்தன. இப்போது அது போய்விட்டது. அதனால்தான் நாமும் பார்க்கிறோம், எல்லா னீணீவ வீஷீஸ்மீனீமீஸீ-களாகவே (வெகுஜன இயக்கங்களாகவே) இருப்பதை அநேகமாக, 'கலி'என்றாலே சண்டை, சச்சரவு என்று அர்த்தமிருப்பதற்குப் பொருத்தமாக இந்த ஸங்க சக்தி மறியல் 'ஒழிக'ஊர்வலம் நடத்துவது, ரயிலைக் கொளுத்துவது முதலான காரியங்களுக்குத்தான் பிரயோஜனப்படுகிறது!

இந்த ஸங்க சக்தியை இனிமேலாவது நாம் நல்லதற்கு channeliseபண்ணி ஸமூஹப் பணிகளை விருத்தி செய்ய வேண்டும்.

ஸங்கமாகச் சேர்ந்து தொண்டு செய்கிறவர்களுக்கு அத்யாவசியமாயிருக்க வேண்டிய யோக்யதாம்சங்கள்: அவர்களுக்குக் கட்டுப்பாடு (நியமம்) ரொம்பவும் தேவை. எடுத்துக்கொண்ட வேலையில் கொஞ்சம்கூடப் பொறுப்பு குறையக்கூடாது. ஸத்தியமும், அந்தரங்க சுத்தமும் இதுபோலத் தேவை. அன்போடு மதுரமாகப் பேசவும் பழகவும் வேண்டும். பணத்தைக் கையாளுவதில் அப்பழுக்கில்லாதவர்கள் என்ற நம்பிக்கையை உண்டு பண்ணக்கூடியவர்களாக இருக்கணும். நியாயமாக ஸந்தேஹப்படுபவர்களிடம் பொறுப்பில்லாமலோ, பொறுமையிழந்தோ பதில் சொல்லக்கூடாது.

முதலியவற்றை நன்றாக அநுபவித்துப் பயன் அடைவதற்குத்தான் மற்ற ஸோஷல் ஸர்வீஸ் எல்லாமே. "நாஸ்திகனுக்கு வைத்யம் பண்ணி ஆயுஸை நீடிக்கப்பண்ணினால் அவன் மேலும் நாஸ்திக பாபத்தை வ்ருத்தி செய்துகொள்ள இடம் தருவதாக ஆவதால் அவனுக்கு வைத்யம் பண்ணாதே!"என்று ஆயுர்வேத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. ஆனபடியால் மக்கள் பணியெல்லாம் அந்த மக்களை பகவானிடம் சேர்ப்பதற்குத்தான். அதனால், எல்லோருமாகச் சேர்ந்து ஆலயத் திருப்பணி செய்தால் மெய் வருத்தி ஒரு கோயிலுக்கு மதில் கட்டினால், அதுதான் ஜனங்களுக்கான மஹா பெரிய ச்ரமதானம்.

ஆத்மார்த்தமாகவே சில ஸமூஹ ஸேவைகள் உண்டு. உதாரணமாக, மஹான்களுடைய நூல்கள், மஹான்களைப் பற்றிய நூல்கள், புராணங்கள், ஸ்தோத்ர க்ரந்தங்கள், துதிப்பாடல்கள் முதலியவற்றை அச்சிட்டு ஜெயிலில் இருக்கிறவர்களுக்கும் ஆஸ்பத்திரியில் இருக்கிறவர்களுக்கும் இலவசமாகக் கொடுப்பது ஒரு பெரிய பரோபகாரம். அந்தந்த அதாரிடி (நிர்வாகிகள்) அனுமதித்தால் இந்த இடங்களில் மத ஸம்பந்தமான பேச்சு, பஜனை, காலக்ஷேபம் இதெல்லாம் நடத்தலாம்.

*உ-ம் கபில அவதாரத்தில் உபதேசம் (111.29)

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### தொண்டின் உட்பயன்கள் ; ' திரு ' ப்பணி

இதனாலெல்லாம் என்ன பெரிய ப்ரயோஜனம் வந்துவிடப் போகிறது என்று நினைக்கக் கூடாது. ராமாயண அணில் நமக்கெல்லாம் முன்னுதாரணம். அத்தனாம் பெரிய ஸேது பந்தத்தில், 'நாம் அல்ப ஜந்து, என்ன பெரிய ஸஹாயம் பண்ணமுடியும்?'என்று அது நினைத்ததா?அது பண்ணின ஸேவை ராமருக்கு என்ன உபகாரம் பண்ணிற்றோ பண்ணவில்லையோ, அதற்கே பெரிய உபகாரம் பண்ணி விட்டது - ஸ்ரீராமனின் கருணையை, கர ஸ்பரிசத்தை ஸம்பாதித்துத் தந்துவிட்டது. இப்படி 'நாம் என்ன பண்ணி கிழிக்கப் போகிறோம்?'என்று ஒதுங்கியில்லாமல், நம்மாலான தொண்டு செய்தால், மற்றவருக்கு நம்மால் நல்லது நடந்தாலும் நடக்காவிட்டாலும் நமக்கு ஈஸ்வரப் பிரஸாதம் கிடைத்து சித்த சுத்தி லபித்துவிடும்.

ராமாயண அணில் மாதிரி இரண்டு பேரை என் life time-ல் நினைக்கிறேன். (1944 பிப்ரவரியில்) காஞ்சீபுரத்தில் காமாக்ஷிக்குப் பெரிசாகக் கும்பாபிஷேகம் பண்ணினபோது, திருநெல்வேலியில் ஏதோ சின்ன கடை வைத்திருந்த ஒருவர், 'என்னால் இதற்குமேல் பண்ணச் சக்தி இல்லையே!'என்று மனஸார வருத்தப்பட்டு நீளமாக எனக்கு ஒரு கடிதாசு எழுதி, ஒரு ரூபாய் மணிஆர்டர் பண்ணியிருந்தார். இதேமாதிரி இளையாத்தங்குடியில் ரொம்பப் பெரிசா முதல் ஸதஸ் (1962 நடைபெற்ற ஆகம-சில்ப-வ்யாஸ பாரத-கிராமகலா-வித்வத்-ஸதஸ்) நடத்தினபோது சென்னையிலிருந்து ஒருத்தர் ஐந்து ரூபாய் அனுப்பி வைத்து, பெரிய டொனேஷன்களோடுகூட இந்த அல்பக் காணிக்கையையும் அங்கீகரிக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். பெரிய டொனேஷனெல்லாம் மறந்து போனாலும், அந்த ஒரு ரூபாயும், இந்த அஞ்சு ரூபாயும்என் மனஸை விட்டுப் போகவில்லை.

முன்னயே நான் திரும்பத் திரும்பச் சொன்ன மாதிரி நம்முடைய தானம், தொண்டு இவற்றால் மற்றவர்கள் லாபமடைந்தாலும், அடையாவிட்டாலும் நம்முடைய மனஸின் அஹங்காரம் நிச்சயமாகக் குறையும். ஸங்கமாக எல்லாரும் சேருவதால் ஸமூஹத்தில் ஸௌஜன்யம் உண்டாகும். எல்லாரும் சேர்ந்து குளம் வெட்டினால், அப்போது கொஞ்சம் கொஞ்சம் நம் அஹம்பாவத்தையும் வெட்டி எடுக்கிறோம். குளத்தில் ஜலம் வருவதைவிட நம் நெஞ்சில் ஈரம் வருகிறதே, அது போதும்!இந்த ஈரம், அன்பு, அருள் பரமாத்ம ஸ்வரூபத்தை நாம் உணருவதற்குப் பிரயோஜனமாகும். 'பகவானிடத்தில் பக்தி வரவேண்டும், அவனருள் கிடைக்க வேண்டும்'என்றால் எப்படி வரும்?பரோபகாரம் பண்ணி மனஸ் பக்குவமானால்தான் நிஜ பக்தி வரும். ஈஸ்வராநுக்ரஹமும் வரும்.

அநாதைக் குழந்தைகளின் ஸம்ரக்ஷணை, திக்கற்ற ஏழைகளுக்கு ஸேவாஸதனம் வைப்பது, ப்ராணி வதையைத் தடுப்பது பசு வளர்ப்பது, பசிக்கஷ்டம் யாருக்கும் வராமல் உபசரிப்பது என்றிப்படி எந்தெந்த விதத்தில் முடியுமோ அப்படி நம் அன்பை, வெறும் பேச்சாக இல்லாமல், கார்யத்தில் காட்டினால் பரமேஸ்வரனின் அன்பு நமக்கும் கிடைக்கும்.

ஈஸ்வரானுக்ரஹம் எங்கேயும் ப்ரவாஹம் மாதிரி ஓடிக்கொண்டேன்தான் இருக்கிறது. ஆனால் நம் மனஸ் கல்லாக இருந்தால், கல்லுக்குள் ஜலம் ஊறாத மாதிரி அநுக்ரஹத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடிவதில்லை. அதுவே ஒரு துணியை வெள்ளத்தில் போட்டால் அதுதானே விரிந்து ஜலத்தை இழுத்துக் கொள்கிறது. துணியை வெளியே இழுத்துப் பிழிந்தால் ஜலம் கொடுக்கிறது. கல் மனஸைப் பரோபகாரத்தில் இப்படி லேசாகத் துணி மாதிரி ஆக்கிக் கொண்டால் எப்போதும் நம்மைச் சூழ்ந்திருக்கிற அநுக்ரஹத்தை நன்றாக உறிஞ்சிக் கொள்ளலாம். ஜீவனுக்குச் செய்கிற பெரிய உபகாரம் அவனுக்குக் கருணாமூர்த்தியான ஈசனிடம் பிடிப்பு ஏற்படுத்தித் தருகிற திருப்பணிதான்.

பணி என்றால் ஸர்வீஸ். ஸ்கூல் வைப்பது, ஆஸ்பத்திரி கட்டுவது, ஜல வஸதி பண்ணித் தருவது எல்லாம் ஸர்வீஸ்தான். நாம் ஸோஷல் ஸர்வீஸ்-ஸமூஹப் பணி-என்றாலே இதுகளைத்தான் நினைக்கிறோம். ஆனால் இந்தப் பணியெல்லாம் இறைபணியில் கொண்டு சேர்த்தால்தான் நிறைவுள்ளதாகும் என்று நமக்குப் புரிய வைக்கிறதற்காகத்தான் ஈஸ்வர ஸம்பந்தமான பணிக்கே 'திரு'என்று அடைமொழி கொடுத்து 'திருப்பணி'என்று பேர் வைத்திருக்கிறார்கள். 'திருப்பணி'என்கிற வார்த்தை எல்லா ஸர்வீஸுக்கும் உச்சி அதுதான் என்று அர்த்தம் கொடுக்கிறது.

ஏழை இந்தியாவிலுள்ள இத்தனை பிரம்மாண்டமான கோயில்களைச் சம்பளத்துக்காக ஜனங்கள் கட்டவில்லை. ராஜாக்கள் கோயில் கட்டின தொழிலாளிகளுக்கு நிறையக் கொடுத்தது வாஸ்தவம். ஆனால் இவர்கள் ஸர்வீஸாகத்தான் செய்தார்கள். இவர்களுடைய காலக்ஷேபம் நடக்க வேண்டும் என்று ராஜா தானாகப் பொருள் கொடுத்தான். அந்த நாள் ஸொஸைட்டியின் ஸெட்-அப், எகானமி எல்லாமே வேறே. ஜனத்தொகை குறைச்சல், சோற்றுக்கும் துணிக்கும், ஜாகைக்கும் கஷ்டமேயில்லை. அத்யாவசியங்கள் தவிர லக்ஷுரிகள், சினிமா, அது இது என்று செலவுமில்லை. இன்றைக்கு மாதிரி ஃபாக்டரிகளும், டாம்களும் கட்டவேண்டிய அவசியம் ராஜாங்கத்துக்கு இல்லை. ஸைன்யத்தை வைத்து ரக்ஷிக்கிற ஒரு செலவு தவிர, மற்றபடி Welfare State என்று இப்போது ஸமூஹ அபிவிருத்திக்குச் செலவழிக்கிற அநேகச் செலவினங்கள் ராஜாவுக்கு இல்லை. அதனால் இன்றைக்கு உள்ள ஃபாக்டரி, டாம் எல்லாவற்றையும் சேர்த்து வைத்துக் கோயில் கோயிலாகக் கட்டினான். புதிதாகக் கட்டுவது, பழசை விஸ்தரிப்பது என்று ஜனங்களுக்கு ஓயாமல் வேலை கொடுத்து, சம்பளமும் கொடுத்து வாழ வைப்பதற்குக் கோயில் திருப்பணிதான் முக்யமாக நடந்து வந்தது. இதனால் வேலை செய்கிற ஜனங்களின் மனஸும் ஈஸ்வர பரமாகப் போனதில் அவர்கள் நல்ல பக்தியோடு, சாந்தர்களாக இருந்து வந்தார்கள். தேசமே க்ஷேமமாக இருந்தது. வெறும் பணியாக இல்லாமல் திருப்பணியாக இருந்ததால், 'ரைட்'கேட்பது, 'ஸ்ட்ரைக்'பண்ணுவது என்பதெல்லாம் இல்லாமல், மனப்பூர்வமாக உழைத்தார்கள். கார்யம் ஒழுங்காக நடந்து, இன்றைக்கும் லோகமே ப்ரமிக்கும் படியாக எங்கே பார்த்தாலும் கோயிலும் கோபுரமுமாக இருக்கிறது!இப்போது இத்தனை ஜனங்கள், என்ஜினீயரிங் முன்னேற்றம் எல்லாம் இருந்தும், அவற்றைப் பழுதுபார்க்கக்கூட நமக்கு சக்தியில்லை!

"மக்களுக்குச் செய்வதே மஹேசனுக்குச் செய்வது"என்று வெறும் வாய்ப் பேச்சாகச் சொல்லிக்கொண்டு, மஹேசனை மறந்து இப்போது கார்யங்களைப் பண்ணும்போது என்ன ஆயிருக்கிறது?தெய்வ ஸம்பந்தமில்லாமல் பணியைக் கத்தரித்து விட்டிருப்பதால், நல்ல குறிக்கோளோடு பண்ணுவதெல்லாமே அனர்த்தங்களைக் கொண்டு வந்து விடுகிறது.

பழைய நாளில் பக்தியால் தேசத்தில் கன்யாகுமாரியிலிருந்து காஷ்மீர் வரை எல்லா ஜனங்களும் ஏகோபித்திருந்ததால், வடக்கே கோயில் கட்டுகிறார்களா, தெற்கே கோயில் கட்டுகிறார்களா என்று சண்டை போடாமல், வடக்கத்திக்காரன் தென்தேசத்துக் கோயில்களுக்கும், தெற்கத்திக்காரன் வடதேசக் கோயில்களுக்கும் போனான். இப்போதோ

ராஜாங்கம் எந்த டாம் கட்டட்டும், எந்த ஃபாக்டரி வைக்கட்டும், உடனே அத்தனை ஸ்டேட்காரர்களும், தங்கள் தங்கள் ஸ்டேட்டில் தான் அதைக் கட்ட வேண்டும் என்று சண்டைக்கு ஆரம்பிக்கிறார்கள்.

எல்லாருக்கும் படிப்பு என்று சொல்லிக் கொடுக்கிறார்கள் நல்ல எண்ணத்தில்தான் செய்கிறார்கள். ஆனால் 'தெய்வ ஸம்பந்தமே இருக்கக்கூடாது;அப்படியிருந்தால் நம் ஸெக்யூலரிஸத்துக்கு (மதச்சார்பின்மைக்கு) களங்கமாய்விடும்'என்று நினைத்து வெறும் அறிவு வ்ருத்தியை மட்டும் படிப்பினால் உண்டாக்கித் தருகிறார்கள். இதனால் படிப்பறிவில்லாவிட்டால் ஸாது ஜனங்களாக இருக்கக் கூடியவர்களுக்கும் ஃபோர்ஜரி மாதிரி அநேக தப்புத் தண்டாக்களையும், புத்திசாலித்தனத்தால் செய்யக்கூடிய அநேக ஒழுங்கீனங்களையும் கற்றுக் கொடுத்ததாகவே ஆகிறது.

எங்கே பார்த்தாலும் ஆஸ்பத்திரி என்று வைத்து அதே ஸமயத்தில் மதாநுஷ்டானத்தாலேயே உண்டாகிற கட்டுப்பாடுகள் இல்லாமல் ஜனங்களை அவிழ்த்து விட்டிருப்பதாலும் அனர்த்தங்கள் உண்டாகின்றன. 'குடிக்கலாம், எதை வேண்டுமானாலும் தின்னலாம். 'அபார்ஷன்'மாதிரி இன்னும் பெரிய தப்புகளும் பண்ணலாம் - இதனாலெல்லாம் கெடுதி வராமல் வைத்யம் பண்ணிக்கொண்டு விடலாம்'என்று ஜனங்களுக்குத் துணிச்சல் கொடுத்துப் போகிறது.

ஸமூஹ நலன் என்று க்ராமம் க்ராமமாக பாங்குகள் வைத்து தாராளமாகக் கடன் தருகிறார்களென்றால், உடனே அதை வாங்குவதற்கு எத்தனை பொய் பித்தலாட்டம் உண்டோ அத்தனையிலும் ஜனங்களை இழுத்து விடுவதாகவும் ஆகிறது. இப்படிப் பலபேர் அப்ளிகேஷன் போடுவதில், சிலருக்குத்தான் ஸாதகமாகிறது என்கிற போது அதிகாரிகள் லஞ்ச ஊழல், பாரபக்ஷம் எல்லாம் சேர்கிறது.

தப்பிப் போனவர்களுக்கு ஸகல வசதிகளுடன் ஸேவாஸதனம் வைக்கிறதென்பதே, மனக்கட்டுப்பாடு போதாதவர்களை இன்னமும் தளர்ந்து கொடுக்கத் துணிச்சல் அடையுமாறு செய்யலாம்.

ஆகையால் தெய்வப் பணியை விட்டுவிட்டு தேசப்பணி, மக்கட்பணி என்று புறப்படுவது தப்பு.

இதிலே நமக்கெல்லாம் வழிகாட்டினவர் அப்பர் ஸ்வாமிகள். "என் கடன் பணி செய்து கிடப்பதே"என்ற அவர் என்ன செய்தார்?'பாடும் பணி'யினால் ஸகல ஜனங்களின் நெஞ்சமும் உருகிப் பரமேஸ்வரனிடம் சேருமாறு பண்ணிவைத்தது அவர் செய்த வாக் கைங்கர்யம். அது தவிர சரீர கைங்கர்யமாக, ஒரு உழவாரப்படையை வைத்துக்கொண்டு கோயில் கோயிலாய்ப் போய் அங்கே ப்ராகாரத்தில் முளைத்திருந்த புல்லைச் செதுக்கிக் கொண்டிருந்திருக்கிறார். உலகத்திலுள்ள ஜீவர்களுக்குச் செய்கிற தொண்டிலேயே, உலக ஜீவர் எல்லோருக்கும் அம்மையப்பனான பரம்பொருளுக்குச் செய்கிற தொண்டையும் சேர்த்து ஜனங்களின் உய்நெறிக்கு உபகாரம் பண்ணியதே அப்பரின் பெருமை.

அப்பர் காட்டிக் கொடுத்தபடி அம்மையப்பரிடம் பக்தி வைத்து, எல்லாரும் அந்த ஒருவனின் குழந்தைகள் என்கிற அன்பில் ஒன்றுபட்டுச் சேர்ந்து ஸேவை செய்கிற போதுதான் த்வேஷம், கட்சிச்சண்டை, ஏமாற்று, வெறும் நடிப்பான 'இன்டக்ரேஷன்'(ஒருமைப்பாடு) இவை இன்றி களங்கமில்லாத பரிசுத்த ஒற்றுமையும், உத்ஸாஹத்தோடு உழைக்கிற மனப்பான்மையும் ஏற்படும். பெரிய பெரிய கார்யங்களையெல்லாம் ஸுலபமாக ஸாதிக்கலாம். அந்தச் சூழ்நிலையிலேயே ஆனந்தத்தின் ஸுகந்தத் தென்றல் வீசும். கெட்டதுகளின் வாடையே அங்கு தலை காட்டாது.

ஆசாரங்களையும், தர்ம சாஸ்த்ரக் கட்டுப்பாடுகளையும் விட்டு விலகி விலகிப் போகிறதுதான் ஸோஷல் ஸர்வீஸ் என்றில்லாமல், அவற்றில் இன்னம் கிட்டே கிட்டே போய் ஒட்டிக்கொள்கிற மாதிரி தெய்வ ஸம்பந்தத்துடன்தான் தேசப்பணி செய்ய வேண்டும்.

தங்களுக்கும் ஸமூஹத்துக்கும் ஒன்று செய்துகொள்வதற்கு முன்னால், பகவானுக்கு எல்லாரும் சேர்ந்து செய்ய வேண்டும். தீபாவளி என்றால் தாங்கள் எண்ணெய் தேய்த்துக் கொள்வது, புது வஸ்த்ரம் கட்டிக் கொள்வதோடு ஏழை பாழைகளுக்கும் எண்ணெய்,

சீயக்காய், துணி கொடுக்க வேண்டும். அது மட்டும் போதாது. எல்லாரும் சேர்ந்து முதலில் கோயிலில் உள்ள அறுபத்து மூவர் உள்பட எல்லா மூர்த்திகளுக்கும் தைலம் சாத்தி, புது வஸ்த்ரம் அணிவிப்பதில்தான் கொண்டாட்டத்தை ஆரம்பிக்க வேண்டும். இப்படியே பொங்கல் என்றால் அவரவர் வீட்டுக்குச் சுண்ணாம்பு அடித்து சுத்தப்படுத்துவதோடு, வசதியில்லாதவர்களுக்கும் இந்த உதவியைப் பண்ணுவதோடு, வசதியுள்ளவர், வசதியில்லாதவர் எல்லாருமே ஒன்று கூடிப் பக்கத்திலுள்ள ஆலயங்களில் களை பிடுங்கி, தேய்த்து மெழுகி அலம்பிவிட்டு, பொக்க பொறைகளை அடைக்க வேண்டும்.

இப்போது நமக்கு உள்ளே இருக்கிற அழுக்கும் முள்ளுந்தான் கோயிலில் அழுக்காகவும் முள்ளாகவும் ரூபம் எடுத்திருக்கிறது!கோயிலில் செதுக்கி, மெழுகி சுத்தப்படுத்துகிறபோது நம் மனஸின் முள்ளையும் அழுக்கையும் அகற்றித் துப்புரவாக்கிக் கொண்டு விடுவோம். அப்போது நம் மனஸே தங்கமாகிவிடும். அந்தக் கனகஸபையில் அன்பே உருவான சிவம் வந்து குடிகொண்டு நாமே ஆலயமாகி விடுவோம்.

நடமாடும் மனிதருக்குச் செய்வதே படமாடும் பரமனுக்குச் செய்ததாகும் என்று சொல்லும் அதே திருமூலர் முதலில் ஈஸ்வரனுக்கு பத்ர அர்ச்சனையைச் சொல்லிவிட்டு அப்புறம்தான் பசுவுக்குப் புல், பிற்பாடு (இப்போது நான் பிடியரிசித்*திட்டம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறேனே அம்மாதிரி) ஏழை ஜனங்களுக்கு ஒரு கவளம் அன்னம் இவற்றைச் சொல்லிவிட்டு முடிவாக, இப்படிக் கையால் பொருளாக உபகாரம் பண்ணாவிட்டாலும், வாயாலாவது ஸகலரிடமும் மதுரமாகப் பேசி உபகாரம் பண்ணவேண்டுமென்று சொல்கிறார்.

யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை

யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை

யாவர்க்குமாம் உண்ணும்போதொரு கைப்பிடி

யாவர்க்குமாம் பிறர்க்(கு) இன்னுரை தானே.

ஆக ஈஸ்வர ஸேவையில்லாமல் மநுஷ்ய ஸேவை என்பதில்லை.

ஸமூஹ ஸேவையும் தெய்வப்பணியும் கைகோர்த்து நடக்க வேண்டுமென்றுதான் ஸ்ரீமட தொண்டு ஸபை என்பதாக மத ஸம்பந்தமாகத் துண்டுப் பிரசுரம் போடுபவர்களையும் பொதுத்தொண்டு செய்யும் ஸ்ரீமட முத்ராதிகாரிகளோடு சேர்த்து விட்டது.

"பகவான் நம்மைக் கண் திறந்து பார்க்க வேண்டும்"என்று எல்லாரும் குறைபட்டுக் கொள்கிறோம். கருணைக்கடலான ஈஸ்வரன் கண்ணைத் திறந்து பார்த்துக்கொண்டேதான் இருக்கிறான். ஏன் அவன் நாம் இஷ்டப்படுகிற மாதிரி நமக்கு ஸௌபாக்யங்களைத் தரவில்லை என்றால், நாம் கண்ணைத் திறந்து லோகத்தின் கஷ்டங்களைப் பார்த்துஅது நிவ்ருத்தியாவதற்கு நம்மாலான உபகாரத்தைப் பண்ணாமலிருப்பதால்தான் நம் மனஸ் மற்றவர்களிடம் தயையால் நிரம்பினால், உடனே கருணையே உருவமான ஈஸ்வரனும் நமக்குத் தயை புரிவான். ஆனதால், கண்ணைத் திறந்து பார்க்க வேண்டியது நாம்தான்;பகவானல்ல.

கண்ணைத் திறந்து பல தினுஸாகக் கஷ்டப்படுபவர்களையும் பார்த்து நம்மாலானவரையில் அதை நிவ்ருத்தி பண்ண வேண்டும். அது மட்டும் போதாது. அவர்களும் தங்கள் கண்ணைத் திறந்துகொண்டு, இத்தனை கஷ்ட நிவ்ருத்திக்கும் எவன்தான் மூலகாரணமோ, எவனுடைய கருவி மாத்திரமாகவேதான் நாம் தொண்டு செய்வதல்லாமோ - அவனைப் பார்த்து, இந்தக் கஷ்டம் ஸுகம் எல்லாவற்றையும்விடப் பெரிசு அவனை அடைவதுதான் எனறு உணரும்படியாகப் பண்ண வேண்டியதே நம்முடைய தலையாய பணி.

நம் மதத்தில் பொதுத்தொண்டு உண்டா என்று கேட்பவர்கள் கேட்டுவிட்டுப் போகட்டும் நான் சொல்கிறேன் இப்போது நம் மதத்துக்கே தொண்டால்தான் பார்த்துக்கொள்ள வேண்டும். ஹிந்துமதம் வேலி இல்லாத தர்காஸ்து நிலம் மாதிரிக் கிடக்கிறது. இந்த நிலைமை மாறி இந்த மதத்தைக் கவனிக்க மநுஷ்யர்கள் இருக்கிறார்கள் என்ற நம்பிக்கையை உண்டு பண்ண வேண்டும். ஸ்வய மரியாதையுடன் நம் மதத்தில் இருக்கலாம் என்று ஸகல வகுப்பினருக்கும் நம்பிக்கையை உண்டுபண்ணுவது எல்லோரும் ஸங்கமாகக்

கூடிச் செய்கிற பொதுத்தொண்டு தான். இந்தத் தொண்டுகளை அப்புறம் சொல்கிறேன். இப்படி ஸகல ஹிந்துக்களும் சேர்ந்து கொண்டு, செய்வதே நம் மதத்துக்கு வேலியாகி, இது 'தர்காஸ்து'நிலமில்லை என்று ஆக்கும். 'நம்முடைய சொந்த மதம்'என்ற அபிமானம் எல்லா வகுப்பாருக்கும் உண்டாகி விடுமாதலால் வேறு யார் வேண்டுமானாலும் இதிலிருக்கிறவர்களை ஸ்வாதீனம் பண்ணிக்கொள்ளலாம் என்ற நிலைமை போகும். மதமாற்றம் ஏற்படாமல் ஹிந்துக்களின் நிலைமையை மாற்ற நாம் எதிர் பிரசாரம் பண்ணிச் சண்டை உண்டாக்க வேண்டியதில்லை. நம்முடைய அசட்டையும், கடினமும் போய் நாம் மனமாற்றம் அடைந்து நம் ஜனங்களையெல்லாம் பரோபகாரத்தில் அணைத்துக் கொண்டாலே மதமாற்றம் நின்று போய்விடும். இதுதான் ஹிந்து ஸமூஹத்தை ஹிந்து ஸமூஹமாகவே வைத்துக் காப்பாற்றுவதற்கு சாந்தமான வழி. மதத்துக்காக ulterior motive-ஓடு (உள் நோக்கத்தோடு) நாம் பரோபகாரம் பண்ணாமல் அன்பின் நிறைவுக்காகவே பண்ணி, side by sideமதத்தையும் ரக்ஷிக்க வேண்டும். எனக்கு உபசாரம் பண்ணிப் பூர்ணகும்பம் கொடுத்து மாலை போடுவதைவிட இப்படி ஹிந்துக்கள் அனைவரும் தொண்டினால் ஒன்று சேர்ந்து மதத்தை ரக்ஷித்துத் தருவதுதான் எனக்கு நீங்கள் பண்ணுகிற பெரிய உபசாரம், உபகாரம் எல்லாமும்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### முத்திராதிகாரித் திட்டம்

ஒருத்தன் ஸரியானபடி ஸநாதன தர்மத்தைப் புரிந்து கொண்டு, அநுஷ்டித்துக் காட்டினால் அவனுடைய ஆசாரம், அநுஷ்டானம், விரதம் ஸம்பாத்யம் முதலான எதுவுமே தன்னலனுக்காக இல்லை. ஆனால் இந்த உயர்ந்த தத்துவம்-வெறும் தத்வமாக புஸ்தகத்திலும் மூளையிலும் மட்டும் இருந்து கொண்டிருக்காமல் வாழ்க்கையிலே ப்ரகாசித்துக் கொண்டிருந்த தர்மம் - எப்படியோ பிற்காலத்தில் வீணாகிவிட்டது. இதை மறுபடி புத்துயிரூட்ட வேண்டும். இந்த உத்தேசத்தோடுதான் 1940லிருந்து 'முத்ராதிகாரிகள்'என்று தஞ்சாவூர் ஜில்லாவில் அநேகமாக எல்லா க்ராமங்களிலும் நம் மடத்திலேயே ஒவ்வொருத்தருக்கு அதிகாரம் தந்து அவர் முயற்சியில் ஜனங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பொதுநலப் பணிகள் செய்ய ஏற்பாடு செய்தோம். அதிலே பூர்த்த தர்மம் என்று மேலே சொன்ன குளம், கிணறு வெட்டுகிற காரியங்களோடு, இந்த தர்மமெல்லாம் பூர்த்தியாகிற பகவத் கைங்கர்யங்களாகிற தேவலாயப் பாதுகாப்பு, ஏகாதசி புராண படனம் முதலியனவும் நன்றாக நடந்து வந்தன. கோயில் கோபுரங்களிலும் மண்டபங்களிலும் முளைத்திருக்கும் மரம், செடிகளைப் பிடுங்குவது, ப்ராகாரத்தில் நெடுஞ்சிமுள் முதலானதுகளை அப்புறப்படுத்துவது முதலான கார்யங்கள் தேவலாயப் பாதுகாப்பாகச் செய்யப்பட்டன.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### கோ ஸம்ரக்ஷண

ஹி ந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் ஒரு பசுக்காவது ஒரு பிடி புல் கொடுக்க வேண்டும்;தோட்டம் உள்ள எல்லோரும் அதில் கொஞ்சமாவது மாட்டுக்கேற்ற அகத்திக்கீரை போடவேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு செய்து அதன்படியே ரொம்பப் பேர் நடத்தி வந்தார்கள். மாட்டுக்கு ஒரு பிடி என்பதை " கோ க்ராஸம் " என்று சொல்லியிருக்கிறது. இதிலிருந்துதான் இங்கிலீஷில் புல்லுக்கு "க்ராஸ்"என்று பேர் வந்ததோ என்னவோ?மேய்ச்சல் நிலமெல்லாம் குடியமைப்பாயும், தார் ரோடாயும் மாறி வருவதால் நம் கொல்லையிலேயே துண்டு இடமிருந்தால் அதில் ஆத்தி, அறுகு வைத்துக்

கால்நடைகளுக்குக் கொடுக்க வேண்டும்.

இதற்கெல்லாமாவது கொஞ்சம் செலவு, த்யாகம் பண்ண வேண்டியிருக்கிறது. இதுகூட இல்லாமல், நம் அகத்தில் கறிகாய் முதலியவற்றை நறுக்கும் போது தோலை வீணாகத்தானே போடுகிறோம்?அப்படிப்போடாமல், சிலர் வீடுவீடாகப்போய் இந்தத் தோலை எல்லாம் 'கலெக்ட்'பண்ணி மாடுகளுக்குப் போட ஏற்பாடு பண்ணினோம். நான் திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லி அநேக இடங்களில் இந்தக் கார்யம் நடந்தது. இப்போதும்கூடப் பல இடங்களில் தொடர்ந்து நடக்கிறது.

உண்டி வாயிலே மெகானிகலாகப் பணத்தைப் போடுவது பெரிசில்லை. அதுவும் இப்போது இருக்கிற inflation-ல் எவரும் ஏதோ கொஞ்சம் உண்டியில் போட்டு விட்டுப் போய்விடலாம். அதுவும் பண்ணவேண்டியது தான். ஆனாலும் இப்படி மெகானிகலாக உண்டி வாயில் போடுவதைவிட, ஒரு செலவும் நமக்கு இல்லாமலே கறிகாய்த் தோல்களை நேரே உயிருள்ள ஒரு பசு வாய்க்குப் போட்டு, அது தின்பதைப் பார்த்தால், இதில் நமக்குக் கிடைக்கிற உள்ள நிறைவே அலாதி என்று தெரியும். ஸேவையிலே இதுதான் முக்யமான அம்சம்;அதில் பணமும் உழைப்பும் பேசுவதைவிட ஜீவனோடு ஜீவன் பேச வேண்டும்.

ஸேவை செய்கிறவர்கள் ஸங்கமாக ஒன்று கூடும்போது இப்படி உயிர்த் தொடர்பு ஏற்படுவது மட்டுமின்றி, ஸேவைக்குப் பாத்திரமாகிறவர்களையும் நேரே தங்களோடு தொடர்பு படுத்திக்கொள்ள வேண்டும். ஒரே ஈஸ்வரன்தானே இத்தனை ஜீவன்களுமாகியிருப்பது?ஜீவலோகத்துக்குச் சொரிகிற அன்பினால், ஸேவையால் அந்த ஈஸ்வரத்வத்தை அநுபவித்து அவனுக்கு வழிபாடாகவே இதைச் செய்வதுதான் ஸேவையின் ஸாரம்.

கறவை நின்ற மாடுகளை அடிமாட்டுக்காக விற்காமல் ஜீவிய காலம்வரை அவற்றைக் காப்பாற்ற வழி செய்யவேண்டியதும் நம் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை - தாயாருக்குச் செய்யவேண்டிய கடமைக்கு ஸமதையான கடமை. பகவத் ஸ்ருஷ்டியிலேயே தன் கன்றுக்கு வேண்டியதைவிட உபரியாக மற்றவர்களுக்கென்றும் பாலைச் சுரக்கிற பசு நமக்கெல்லாம் தாயார்தான்.

ஆஃப்கானிஸ்தான் மாதிரியான துருக்க ராஜ்யங்களில் கூடப் பல வருஷங்கள் முன்பே கோஹத்தியை ban செய்திருக்கிறார்கள். நம் தேசத்தில் பிரிட்டிஷ்காரர்கள் இதில் வேண்டுமென்றே மத த்வேஷங்களைத் தூண்டி விட்டிருந்தார்கள். எந்த ஸர்க்கார் இருந்தாலும், எந்தச் சட்டம் வந்தாலும், வராவிட்டாலும் பசுக்கள் கசாப்புக் கடைக்குப் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம் புனிதமான கடமை என்று நாம் இருந்தோமானால் கோமாதாவுக்கு ஹானி இல்லை. இதிலே நாம் குஜராத்தி, மார்வாரிகளைப் பார்த்து அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். கோபாலக்ருஷ்ணன் வாஸம் பண்ணின பிரதேசமானதால் போலிருக்கிறது இவர்களுக்கு கோ ரக்ஷணத்தில் அலாதிப்பற்று இருக்கிறது!

முன்காலங்களில் ' பசு மடம் ' என்று வைத்து நம் க்ராமமெல்லாம் போஷிக்கப்பட்ட இந்த தர்மத்தில் பிற்பாடு நாம் ச்ரத்தை இழந்துவிட்டோம். ஆனால் "பிஞ்சரபோல்", கோசாலா என்று வைத்து இந்த வடக்கத்திக்காரர்கள் எத்தனை வாத்ஸல்யத்தோடு பக்தியோடு பசுக்களைப் பராமரிக்கிறார்கள்?

கோவதை கூடாது என்று சட்டம் பண்ணிவிடலாம். ஆனால் கறவைக்கும் உழவுக்கும் ப்ரயோஜனமிஸ்ஸாத மாடுகளைப் பராமரிக்க மக்களான நாம் தக்க ஏற்பாடு பண்ணாவிட்டால் அவை வயிறு காய்ந்து குற்றுயிரும் குலை உயிருமாகக் கஷ்டப்பட வேண்டித்தான் வரும். கோ-ரக்ஷணம் என்பது ஜீவகாருண்யத்துக்கு ஜீவகாருண்யம்;அதுவே ஒரு பெரிய லக்ஷ்மி பூஜையும் ஆகும்.

முதலில் நான் சொன்னமாதிரி, நானே க்ராமம் க்ராமமாகப் போய் இந்தக் காரியங்களை emphasize செய்தபோது, நல்ல response இருந்தது. அதுவும், இவற்றில் குளம் வெட்டுகிற கைங்கர்யத்தைப் பார்க்கும்போது எனக்கே ரொம்ப நிறைவாக இருந்தது. கூலிக்கு வேலையாக இல்லாமல் அன்புப் பணியாக இது நடக்க வேண்டும் என்றுதான் ஏற்பாடு. ஆனால் ரொம்பவும் ஏழைகளாக இருக்கப்பட்ட குடியான ஜனங்களுக்குச் சாப்பாடு போடுவது என்று வைத்திருந்தோம். இருந்தாலும், அநேக இடங்களில் அந்தப் பரம ஏழைகள்கூடத் தாங்களே சோறு கட்டிக் கொண்டுவந்து உத்ஸாஹத்தோடு குளம் வெட்டியதைப் பார்க்கிறபோது, 'நம் தேச ஏழைகளுக்கு இன்னம் நல்ல பண்புகள் போகவில்லை;நாம்தான் அதை ஸரியாகக் கார்யத்தில் கொண்டு வரவில்லை'என்று தெரிந்தது. ரதோத்ஸவம் மாதிரி, பெரிய பெரிய மிராஸ்தாரிலிருந்து அந்த மிராஸில் கடைசியாக நிற்கிற பண்ணையாள் வரையில், ச்ரௌதிகளின் பத்தினியிலிருந்து புல்லுக் கட்டுக்காரி வரையில் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து பூர்த்த தர்மம் செய்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. ''அப்புறம் நடக்கிற பரோபகாரம் இருக்கட்டும்;இப்போது இப்படி ஸமூஹம் முழுக்க ஐக்யமாகச் சேர்ந்திருக்கிறதே, இதுவே போதும்;என்று இருந்தது. ஒரு தடவை நல்ல பௌர்ணமி ராத்திரி. அந்த நிலா வெளிச்சத்திலே மாயவரத்துக்குக் கிட்டே இப்படித்தான் ஸகல ஜனங்களும் ஒரு மனஸாகச் சேர்ந்து குளம் வெட்டினார்கள். நானே போய்க் கூட இருந்து பார்த்துக் கொண்டேன். வெட்டுவது ஜில்லென்று குளம்;சந்திரிகையும் ஜில்லென்று வர்ஷித்துக் கொண்டிருந்தது;தொண்டு ரூபமாக அத்தனை உள்ளங்களும் ஜில்லென்று அன்பை வர்ஷித்துக் கொண்டிருந்தன. இப்போது நினைத்தாலும் நெஞ்சு குளிர்கிறது. அப்புறம் நான் நூறாயிரம் கார்யத்தை வைத்துக்கொண்டு எங்கெங்கோ சுற்றப்போனதில் அவர்களுக்கு உத்ஸாஹம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிட்டது. இதை விட்டு விட்டுப் போனது என் தப்புத்தான்.

தஞ்சாவூர் ஜில்லாவில் மாத்திரம் இரண்டாயிரம் ஸங்கங்கள் போல் நிறுவி, ஒவ்வொன்றுக்கும் ஒரு முத்திராதிகாரிகளையும் உப முத்திராதிகாரியையும் தொண்டர்களையும் நியமனம் பண்ணியிருந்தோம். தாலுகா கமிட்டி, கோட்டகக் கமிட்டி, க்ராமச் சங்கம் என்று இதை மூன்றாகப் பிரித்திருந்தோம். (நாலு க்ராமம் சேர்ந்து ஒரு கோஷ்டம், அல்லது கோட்டகம் என்று வைத்திருந்தோம்) பட்டணங்களில் தெருவுக்கு ஒரு முத்திராதிகாரிகூடப் போட்டோம். அநேகமாக தஞ்சாவூர் ஜில்லா க்ராமங்களில் எல்லாம் மடத்துக்கென்றே பட்டயமான்யம் என்று ஒரு துண்டு நிலம் இருக்கும். அவற்றின் வருமானத்தை எல்லாம் முத்திராதிகாரிகளிடமே ஒப்படைத்து இந்த ஜீவாத்ம கைங்கர்ய தர்மங்களைப் பண்ணச் செய்தோம். சுமார் 5000 தொண்டர்கள் சேர்ந்து, ரொம்ப ஈடுபாட்டோடு பணிகள் செய்து வந்தார்கள். ஸூர்யோதயத்திலிருந்து ஸூர்யாஸ்தமனம் வரை, பௌர்ணமியானால் ராத்திரி பூராவும் ஊர்ஜனங்கள் எல்லாரும் ஏக மனஸாக பகவந் நாமாவைச் சொல்லிக் கொண்டு குளம் வெட்டியது இப்போது கூடக் கண் முன்னால் நிற்கிறது.

ஒவ்வொரு க்ராமத்திலும் இருக்கிறவர்கள் ஒன்று சேர்ந்தது மட்டுமில்லை. நாலு நாலு க்ராம ஜனங்களாகச் சேர்ந்து ஒரு வருஷம் ஒரு க்ராமத்தில் குளம் வெட்ட வேண்டும் இருக்கிற குளத்தை தூர் வார வேண்டும்;அடுத்த வருஷம் இவர்கள் அந்த நாலில் இன்னொரு க்ராமத்தில் இந்தப் பணியைச் செய்ய வேண்டும்;அதற்கடுத்த வருஷம் மூன்றாவது க்ராமத்தில், அதற்கும் அடுத்த வருஷத்தில் நாலாவது க்ராமத்தில் பண்ண வேண்டும் என்று வைத்ததால் கோட்டக ஜனங்களுக்குள்ளே ஒற்றுமை, ஒத்துழைப்பு உண்டானதோடு, அது தாற்கலிகமாய் இருந்து பிசுபிசுத்து விடாமல், நாலு வருஷமாவது உயிரோடு நீடித்து வந்தது. தஞ்சாவூர் ஜில்லாவில் நாலு ஐந்து மாஸம் ஜலம் இருக்காததால் 'காதம்'என்கிற இந்தக் குளம் வெட்டுகிற பணிக்கு நிறைய அவசியம் உண்டு. சேரியிலும் வெட்ட வேண்டும், இன்னும் ஜனங்களுக்கு என்றே இல்லாமல் ஆடு மாடுகளாக்காகவும் ஊருக்கு வெளியில் மேய்ச்சல் பூமியில் வெட்ட வேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு பண்ணி அப்படியே நடந்து வந்தது. வெயிலில் கஷ்டப்படுகிற வாயில்லா ஜீவன்களுக்குத் தண்ணீர் கைகங்கர்யம் செய்வது உத்தமமான தர்மம்.

சாஸ்திரத்தில், குளிக்கப் போகிற ஒவ்வொருவனும் குளத்திலிருந்து நாலு கை மண்

அள்ளிப்போட்டு விட்டுக் குளிக்க வேண்டும் என்று ஸூக்ஷ்மமாகச் சொல்லியிருக்கிற ஸ்வல்ப தர்மத்தைப் பின்பற்றினால் ஜலக் கஷ்டம் எவ்வளவோ குறையும்.

கோனேரிராஜபுரத்தில் ஒரு ப்ராம்மண குடும்பம். அவர்கள் எங்கே குளம் வெட்டினாலும் அதற்குப் பாதிப் பணம் கொடுப்பார்கள். ஆனால் ஒரு கண்டிஷன் சொல்வார்கள். அதாவது, குளத்துக்கு ஒரு பக்கம் படித்துறை கட்டாமல், நிலத்தையே ஜல மட்டம் வரை சரித்துவிட வேண்டும் என்பார்கள். ஏனென்றால், ஆடு மாடுகளுக்குப் படிகளில் ஸௌகர்யமாக இறங்கிவந்து நின்று ஜலம் குடிக்கத் தெரியாது. எனக்கு ஆசை, ஹரிஜனங்களும் குடியான ஜனங்களும் நம்ம மடத்துப் பிரதிநிதிகளாகக் கோட்டகம் தோறும் கால்நடைகளுக்கென்று குளம் வெட்டவேண்டும் என்று.

பட்டுக்கோட்டை தாலுகா தவிர ஜில்லா முழுக்க இப்படி நிறையச் செய்தோம். பட்டுக்கோட்டையில் ஒவ்வொரு வீடுமே ஒரு காடாக இருக்கும். இடுப்பளவு வெட்டினாலே ஜலமும் வந்தவிடும். ஒரு பண்ணையார் வீடு என்றால் பண்ணையாள் வீடு உள்பட எல்லாம் அந்த வேலிக்குள்ளே இருக்கும். அதனால் அவனவன் பாட்டுக்கு ஜலம் உள்ளேயே கிடைக்கும். இதனால் அங்கே மட்டும் 'காத'த் திருப்பணி செய்யாமல் எல்லோருமாக சேர்ந்து ரோடு போட்டார்கள்.

பொதுவாக, முத்ராதிகாரிகள் திட்டத்தில் மாஸத்தில் இரண்டு ஏகாதசியும் புராண படனம், வருஷத்தில் ஒரு கோட்டகத்தில் ஒரு குளம் வெட்டுவது என்ற இரண்டும் நன்றாக நடைபெற்றன.

பிற்பாடு ஸமூஹத்துக்கு ஒரு நன்மை கிடைப்பது பிற்பாடு இந்த மாதிரி உழைப்பே ஒருத்தனுக்கு சித்தசுத்தி தருவது எல்லாவற்றுக்கும் மேலாக, அப்போதே இம்மாதிரிக் கார்யங்கள் பல ஜனங்களை ஜாதி, 'ஸ்டேடஸ்'சண்டைகளில்லாமல் ஒரு குடும்பமாகச் சேர்த்து வைத்ததைப் பார்த்ததிலிருந்து தனித்தனியாகப் பரோபகாரம் செய்வதைவிடப் பலர் சேர்ந்து ஸங்கமாகச் செய்வது ரொம்ப விசேஷமானது என்று தெரிந்தது. கழகம், கம்யூனிஸம் எல்லாவற்றுக்கும் பெரிய மாற்று மருந்து, கொஞ்சங்கூட அரசியல் வாடையே இல்லாத பொதுநலப் பணிதான் என்றும் தெரிந்தது.

பலர் சேரவேண்டும் என்பதற்காக இதை ஒரு அஸோஸியேஷன் என்று சொல்லி ரிஜிஸ்டர் பண்ணி, சேர்மன், ஸெக்ரடரி, கவர்னிங் பாடி அது இது என்று சொல்லிக்கொண்டு, 'ஸ்தானங்கள்', அதற்காக சண்டை போட்டி என்று ஆகிவிடக்கூடாது. பரோபகாரத்தின் பெரிய பலனாக அஹம்பாவ நாசமே இதனால் அடிப்பட்டுப் போய்விடும். அதனால் இதிலே 'ஆஃபீஸ்'எதையும் உள்ளே விடக்கூடாது.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### வார வழிபாடு

'வார வழிபாட்டுச் சங்கம்'என்று ஊருக்கு ஊர் இருக்க வேண்டும் என்று நான் ஓயாமல் சொல்லி வருவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வாரத்தில் ஒருநாள் ஜனங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கோயிலில் வழிபாடு நடத்த வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இதர மதஸ்தர்கள் அத்தனைபேரும் இதை யாரும் சொல்லாமலே தாங்களாகச் செய்து வருகிறார்கள். இதன் ப்ரத்யக்ஷ சக்தியால்தான் அவர்களுக்குப் புது ஸ்வதந்திர தேசமே முதற்கொண்டு கிடைக்கிறது!நமக்கோ லோகம் முழுக்க ஏற்கனவே இருந்த கௌரவமும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டிருக்கிறது!நம் ஜனங்கள் எல்லாரும் வாரத்தில் ஒரு நாளாவது ஒன்று சேர்ந்து தங்கள் கோணா மாணாவையெல்லாம் விட்டுவிட்டு பகவானிடம் கொஞ்சம் மனஸைக் கரைத்தால்தான் இந்த தேசத்துக்கு ஏதாவது நல்லது பிறக்க முடியும் என்றுதான் 'வார வழிபாட்டுச் சங்கம்'நிறுவச் சொல்லி அநேக இடங்களில் ஆரம்பித்திருக்கிறார்கள். இவர்களே மேலே சொன்ன மற்ற பரோபகார, ஜீவாத்ம கைங்கர்யப் பணிகளையும் எடுத்த நடத்த வேண்டும். தனி ஆர்கனைஸேஷன் எதுவும் வேண்டாம்.

மாயவரத்திலிருக்கிற திருப்பாவை-திருவெம்பாவைக் குழு இம்மாதிரி அநேகப் பணிகளைத் திட்டம் போட்டுச் செய்து வருகிறது. அதன் முக்ய நோக்கம் பாவை மஹாநாடு நடத்துவதும், பாவைப் புஸ்தகங்களைப் பள்ளிக்கூடப் பசங்களுக்கு ஃப்ரீயாக டிஸ்ட்ரிப்யூட் செய்து பரீக்ஷை பண்ணி, ப்ரைஸ் தருவதும்தான். இவற்றோடுகூட (1) ஜெயில் கைதிகளுக்கு பக்தி நூல்கள் கொடுப்பது;அவர்களை பஜனை பண்ண வைப்பது, (2) ஆஸ்பத்திரி நோயாளிகளுக்குப் பிரஸாதமும், ஸ்தோத்ரப் புஸ்தகங்களும் விநியோகிப்பது, (3) ஸத்ஸங்கம் யார் ஏற்படுத்தித் தெரிவித்தாலும் அவர்களுக்கு மத ஸம்பந்தமான பிரசுரங்கள் அனுப்புவது, (4) அநாதைப் பிரேத ஸம்ஸ்காரம் பண்ணுவது, (5) வெட்ட வெளியில் கோயிலில்லாமல் இருக்கிற மூர்த்திகளுக்கும், இடிந்து பாழான கோயிலிலுள்ள மூர்த்திகளுக்கும் கொட்டகை போட்டு, அங்கே, பூஜைக்கு ஏற்பாடு பண்ண முடியாவிட்டாலும், ஒரு அகலையாவது ஏற்றி வைக்கப் பண்ணுவது, (6), கோயில் நந்தவனங்களைப் பராமரிப்பது, (7) பசுக்களுக்கு மேய்ச்சல் திடல் வளர்ப்பது;அதுகள் சொறிந்து கொள்ளக் கல் நாட்டுவது, (8) சுமைதாங்கி நாட்டுவது, (9) வார வழிபாடு என்கிறனே, அதன்படி பிரதிவாரமும் ஒரு கிழமையில் பகவந் நாம பஜனையுடன் உள்ளூரிலோ, வெளியூரிலோ அருகேயுள்ள ஒரு கோயிலுக்குப் போய்ப் பிரதக்ஷிணம் பண்ணி கோபுர வாசலில் கொஞ்சம் கொஞ்சம் நாழி மௌனம், த்யானம், நாம ஸ்மரணம், ஸங்கீர்த்தனம், பிரவசனம் முதலியன பண்ணுவது - என்று பல காரியங்களை செய்கிறார்கள்.

"வாரத்தில் ஒரு நாள் கூட்டு வழிபாடு, வாரத்தில் ஒரு நாள் பொதுப்பணி என்றால் எப்படி முடியும்?ஒரு நாள் தானே 'லீவ்'இருக்கிறது?"என்று கேட்பீர்கள். அந்த ஒரு நாளிலேயேதான் இரண்டையும் சேர்த்துச் செய்யச் சொல்கிறேன். தெய்வப்பணி, ஸமூஹப்பணி இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஞாயிற்றுக்கிழமை தோறும் செய்ய வேண்டும்.

முதலில் கோவில் வாசலில் எல்லா ஜனங்களும் சேர்ந்து வழிபட்டு, அத்தனை பேரும் அந்த ஒரே பராசக்தியின் குழந்தைகளாகச் சேர்ந்து பகவந் நாமத்துடனயே கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு போய்க் குளம் வெட்டுவதையோ, ரோடு போடுவதையோ, நந்தவனம் வளர்ப்பதையோ செய்ய வேண்டும். வேலையெல்லாம் முடிந்த பின்னும் கோவிலுக்கே திரும்பிவந்து, "உன் க்ருபையால் இன்றைக்கு கொஞ்சம் பாபத்தைக் கழுவிக் கொள்ள முடிந்தது;சரீரம் எடுத்ததற்குப் பயனாக ஓர் உபகாரம் பண்ண முடிந்தது"என்று நமஸ்காரம் செய்ய வேண்டும். கொஞ்சம் பஜனை - ஒரு பத்து நிமிஷம் இருந்தால் கூடப் போதும் - கொஞ்சம் உபந்யாஸம் நடத்தி விட்டு எல்லாரும் கலைய வேண்டும். அறுபத்திமூவர் அல்லது ஆழ்வாராதிகள் அல்லது பக்த விஜயத்தில் வரும் மஹான்கள் இவர்களைப் பற்றிய உபந்யாஸமாக இருந்தால், நம் மாதிரி மனிதர்களாக இருந்தவர்களே எப்படியெல்லாம் த்யாகத்தாலும், ப்ரேமையாலும் தெய்வமாக உயர்ந்திருக்கிறார்கள் என்று மனஸில் ஆழப் பதியும்.

வார வழிபாடு

' வா ர வழிபாட்டுச் சங்கம்'என்று ஊருக்கு ஊர் இருக்க வேண்டும் என்று நான் ஓயாமல் சொல்லி வருவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வாரத்தில் ஒருநாள் ஜனங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கோயிலில் வழிபாடு நடத்த வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இதர மதஸ்தர்கள் அத்தனைபேரும் இதை யாரும் சொல்லாமலே தாங்களாகச் செய்து வருகிறார்கள். இதன் ப்ரத்யக்ஷ சக்தியால்தான் அவர்களுக்குப் புது ஸ்வதந்திர தேசமே முதற்கொண்டு கிடைக்கிறது!நமக்கோ லோகம் முழுக்க ஏற்கனவே இருந்த கௌரவமும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டிருக்கிறது!நம் ஜனங்கள் எல்லாரும் வாரத்தில் ஒரு நாளாவது ஒன்று சேர்ந்து தங்கள் கோணா மாணாவையெல்லாம் விட்டுவிட்டு பகவானிடம் கொஞ்சம் மனஸைக் கரைத்தால்தான் இந்த தேசத்துக்கு ஏதாவது நல்லது பிறக்க முடியும் என்றுதான் 'வார வழிபாட்டுச் சங்கம்'நிறுவச் சொல்லி அநேக இடங்களில் ஆரம்பித்திருக்கிறார்கள். இவர்களே மேலே சொன்ன மற்ற பரோபகார, ஜீவாத்ம கைங்கர்யப் பணிகளையும் எடுத்த நடத்த வேண்டும். தனி ஆர்கனைஸேஷன் எதுவும் வேண்டாம்.

மாயவரத்திலிருக்கிற திருப்பாவை-திருவெம்பாவைக் குழு இம்மாதிரி அநேகப் பணிகளைத் திட்டம் போட்டுச் செய்து வருகிறது. அதன் முக்ய நோக்கம் பாவை மஹாநாடு நடத்துவதும்,

பாவைப் புஸ்தகங்களைப் பள்ளிக்கூடப் பசங்களுக்கு ஃப்ரீயாக டிஸ்ட்ரிப்யூட் செய்து பரீக்ஷை பண்ணி, ப்ரைஸ் தருவதும்தான். இவற்றோடுகூட (1) ஜெயில் கைதிகளுக்கு பக்தி நூல்கள் கொடுப்பது;அவர்களை பஜனை பண்ண வைப்பது, (2) ஆஸ்பத்திரி நோயாளிகளுக்குப் பிரஸாதமும், ஸ்தோத்ரப் புஸ்தகங்களும் விநியோகிப்பது, (3) ஸத்ஸங்கம் யார் ஏற்படுத்தித் தெரிவித்தாலும் அவர்களுக்கு மத ஸம்பந்தமான பிரசுரங்கள் அனுப்புவது, (4) அநாதைப் பிரேத ஸம்ஸ்காரம் பண்ணுவது, (5) வெட்ட வெளியில் கோயிலில்லாமல் இருக்கிற மூர்த்திகளுக்கும், இடிந்து பாழான கோயிலிலுள்ள மூர்த்திகளுக்கும் கொட்டகை போட்டு, அங்கே, பூஜைக்கு ஏற்பாடு பண்ண முடியாவிட்டாலும், ஒரு அகலையாவது ஏற்றி வைக்கப் பண்ணுவது, (6), கோயில் நந்தவனங்களைப் பராமரிப்பது, (7) பசுக்களுக்கு மேய்ச்சல் திடல் வளர்ப்பது;அதுகள் சொறிந்து கொள்ளக் கல் நாட்டுவது, (8) சுமைதாங்கி நாட்டுவது, (9) வார வழிபாடு என்கிறனே, அதன்படி பிரதிவாரமும் ஒரு கிழமையில் பகவந் நாம பஜனையுடன் உள்ளூரிலோ, வெளியூரிலோ அருகேயுள்ள ஒரு கோயிலுக்குப் போய்ப் பிரதக்ஷிணம் பண்ணி கோபுர வாசலில் கொஞ்சம் கொஞ்சம் நாழி மௌனம், த்யானம், நாம ஸ்மரணம், ஸங்கீர்த்தனம், பிரவசனம் முதலியன பண்ணுவது - என்று பல காரியங்களை செய்கிறார்கள்.

"வாரத்தில் ஒரு நாள் கூட்டு வழிபாடு, வாரத்தில் ஒரு நாள் பொதுப்பணி என்றால் எப்படி முடியும்?ஒரு நாள் தானே 'லீவ்'இருக்கிறது?"என்று கேட்பீர்கள். அந்த ஒரு நாளிலேயேதான் இரண்டையும் சேர்த்துச் செய்யச் சொல்கிறேன். தெய்வப்பணி, ஸமூஹப்பணி இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஞாயிற்றுக்கிழமை தோறும் செய்ய வேண்டும்.

முதலில் கோவில் வாசலில் எல்லா ஜனங்களும் சேர்ந்து வழிபட்டு, அத்தனை பேரும் அந்த ஒரே பராசக்தியின் குழந்தைகளாகச் சேர்ந்து பகவந் நாமத்துடனயே கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு போய்க் குளம் வெட்டுவதையோ, ரோடு போடுவதையோ, நந்தவனம் வளர்ப்பதையோ செய்ய வேண்டும். வேலையெல்லாம் முடிந்த பின்னும் கோவிலுக்கே திரும்பிவந்து, "உன் க்ருபையால் இன்றைக்கு கொஞ்சம் பாபத்தைக் கழுவிக் கொள்ள முடிந்தது;சரீரம் எடுத்ததற்குப் பயனாக ஓர் உபகாரம் பண்ண முடிந்தது"என்று நமஸ்காரம் செய்ய வேண்டும். கொஞ்சம் பஜனை - ஒரு பத்து நிமிஷம் இருந்தால் கூடப் போதும் - கொஞ்சம் உபந்யாஸம் நடத்தி விட்டு எல்லாரும் கலைய வேண்டும். அறுபத்திமூவர் அல்லது ஆழ்வாராதிகள் அல்லது பக்த விஜயத்தில் வரும் மஹான்கள் இவர்களைப் பற்றிய உபந்யாஸமாக இருந்தால், நம் மாதிரி மனிதர்களாக இருந்தவர்களே எப்படியெல்லாம் த்யாகத்தாலும், ப்ரேமையாலும் தெய்வமாக உயர்ந்திருக்கிறார்கள் என்று மனஸில் ஆழப் பதியும்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### செலவு விஷயம் ; ஜாக்ரதை தேவை

செலவுக்கு என்ன செய்வதென்றால், பணக்காரனைத் தான் நம்பிக் கொண்டிருப்பது என்றில்லாமல், அவனவனும் ஒரு காலணாவாவது கொடுக்க வேண்டும். பணக்காரனும் சரீரத்தால் உழைக்க வேண்டும்;ஏழையும் திரவியத்தால் துளி உதவி பண்ண வேண்டும். இதுதான் நிஜமான த்யாகம். பணக்காரனை அதிகப் பணம் கேட்கவே கூடாது என்று எனக்கு அபிப்ராயம். காரணம் சொல்கிறேன்.

யோசித்துப் பார்த்தால் பணக்காரன் பாடுதான் ரொம்ப கஷ்டம் என்று தோன்றுகிறது. அந்தஸ்து (status), பேர் இவற்றுக்காக அவன் அநேக கார்யங்களை இஷ்டம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் செய்யவேண்டியதாக இருக்கிறது. இது ஒவ்வொன்றுக்காகவும் தண்டம் அழவேண்டியிருக்கிறது. பெரிய மநுஷன் என்று தெரிய வேண்டுமானால் அதற்கு அநேக 'கிளப்'களில் மெம்பராக வேண்டும். அதற்காக 'ஸப்ஸ்கிருப்ஷன்'செலவுகள். அப்புறம் ஏதாவது இரண்டு ஸ்கூல், காலேஜிலாவது எண்டோமென்ட் வைத்து ப்ரைஸ் கொடுக்கச் செய்ய வேண்டியிருக்கிறது. இதற்கப்புறம் டைட்டில், கியட்டில் வாங்குவதற்காக (நேரே

அப்படித் தெரியுமால்) பல தினுஸுகளில் செலவு செய்ய வேண்டும். கார், பங்களா டிரஸ், பொழுதுபோக்குச் செலவுகள் வேறு. இவனுடைய கம்பெனியோ பண்ணையோ நன்றாக நடக்க வேண்டுமே, அதை உத்தேசித்து வெளியில் சொல்லக் கூடியதும் சொல்லக் கூடாததுமாகப் பலவிதங்களில் செலவு செய்ய வேண்டும். இது ஓரளவுக்குக் கடமை மாதிரியே ஆகிவிடுகிறது. இதெல்லாம் போதாது என்று (அரசியல்) கட்சிகள் வேறு டொனேஷனுக்கு வருகின்றன. அதிலும் இவனுக்கு வாஸ்தவத்திலேயே ஒரு கட்சியிடந்தான் அபிமானம், அது இருந்தால்தான் தனக்கு நல்லது என்று தோன்றினால்கூட அதற்கு மட்டும் டொனேஷன் கொடுப்பதோடு போக மாட்டேன் என்கிறது. இவனுக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும், ஒரு ஸமயத்தில் யாரிடம் நிர்வாஹம் இருக்கிறதோ, அவர்கள் இவன் தலையில் கை வைக்காமலிருப்பதற்காக அந்தக் கட்சிக்கும் நிறையக் கொடுத்துத் திருப்திப்படுத்த வேண்டியிருக்கிறது!இன்னும் அகத்தில் கல்யாணம், கார்த்திகை, ஃபீஸ்ட், அது இது என்றும் வாரிவிட வேண்டியிருக்கிறது. வரிகள் வேறு!செலவு செய்வதற்கும், தானம்(gift) பண்ணுவதற்கும் கூட வரி கொடுக்க வேண்டியிருக்கிறது. இந்த நிலையில் பாவம், மனஸார இவன் எந்த நல பணிகளுக்குக் கொடுக்க ஆசைப்படுகிறானோ, அதற்குத்தான் ரொம்பக் குறைச்சலாகக் கொடுக்கும்படியாக ஆகிறது. பேர், புகழ், மாதிரியான ஸமாசாரங்கள், "பிஸினஸ் இன்டரஸ்ட்"முதலானதுகள் அத்யாவசியமாகி விடுகின்றன. இப்படி இருக்க வேண்டாமே!என்று நாம் சொல்லிப் பிரயோஜனமில்லை. நாமே அந்தப் பணக்காரனாக இருந்தாலும் இப்படித்தான் செய்வோம்.இம்மாதிரி வேண்டாததற்குச் செலவழித்துவிட்டு, வேண்டியதற்குச் செலவு செய்ய முடியாதபோது, அவனுக்கே guilty-யாகத் தான் இருக்கும். 'இந்த ஸமயத்தில் நாம் வேறு போய் அவனிடம் யாசகம் கேட்டு அவனைக் கஷ்டப்படுத்துவானேன்?தனக்குப் பிடித்த கார்யத்துக்கே மனஸாரக் கொடுக்க முடியாத பரிதாபமான ஸ்திதியில் அவனைக் கொண்டுபோய் நாம் வைப்பானேன்?'என்று எனக்குத் தோன்றுகிறது.

ஸமூஹக் கார்யங்கள் என்றால் எத்தனையோ இருக்கின்றன. ஆனால் இந்தக் கார்யங்களுக்கு பேட்ரனாக இருக்கக்கூடிய பணக்காரர்கள் யார் என்று பார்த்தால் ஒவ்வொரு ஊர் அல்லது பேட்டையிலும் ஒரு பத்து, பன்னிரண்டு பேர்தான் இருப்பார்கள். இவர்களிடமே ஒவ்வொரு கார்யத்துக்கும் ரசீதுப் புஸ்தகத்தைத் தூக்கிக் கொண்டு ஓடினால் அவர்களுந்தான் என்ன செய்வார்கள்?ஒன்று, வேண்டா வெறுப்பாகக் கொடுப்பார்கள். அல்லது விருப்பம் இருந்தும்கூட நிறையக் கொடுக்க முடியவில்லையே என்று துக்கப்படுவார்கள்.

நமக்கும் யோசனை வருகிறது;அந்தப் பணம் கணக்கில் வந்ததா, வராததா;கணக்கில் வராதது என்றால் அந்த மாதிரிப் பணத்தை தர்மத்துக்குப் பிரயோஜனப்படுத்திக் கொள்ளலாமா என்றெல்லாம் யோசனை வருகிறது.

ஆனதால், பணக்காரர்களை நம்பித்தான் ஸோஷல் ஸர்வீஸ் என்று வைத்துக் கொள்ளவே கூடாது. அவர்களாகவே காதில் விழுந்து கூப்பிட்டுக் கொடுத்தால் தாராளமாகவே வாங்கிக் கொள்ளலாம். நாமாகப் போய் பிடுங்கி எடுக்கக் கூடாது என்று தோன்றுகிறது.

இதில் இன்னொன்றுகூட. சில பணக்காரர்களே அதிகப் பங்கு செலவு ஏற்கிறார்கள் என்றால் அதனாலேயே அவர்களுக்கு ஸங்கத்தில் அதிக 'ரைட்'உண்டாகிவிடும். அவர்களுக்கு மற்றவர்கள் பவ்யப்படும்படியாக ஆகும். எதிலும் அவர்கள் சொல்லுவதுதான் முடிவு என்றாகிவிடும். இது கூடாது.

பொதுவாகவே பணத்தின் 'டச்'(ஸ்பரிசம்) வந்து விட்டால் அதோடு ஒரு காரியத்தில் அநேகக் கெடுதல்களும் வந்துவிடும். பொதுத்தொண்டு செய்யப் புறப்படுகிறவர்கள் பணவிஷயத்தில் ரொம்பவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நல்ல ஆதரவு திரவிய ஸஹாயமாகவும் நம் கார்யத்துக்குக் கிடைத்தால்கூட அதனால்over-enthusiastic ஆகி (அதீத உத்ஸாஹம் அடைந்து), இப்போது இந்தியா கவர்மென்ட் செய்கிற மாதிரி ambitious planning (அதி ஆசைத் திட்டம்) போட்டுப் நிறையப் பணம் 'கலெக்ட்'பண்ண ஆரம்பிக்கக் கூடாது. இப்படி ஆரம்பித்தால் அதற்கு ஒரு முடிவே இருக்காது. இதனாலே பரோபகாரம் என்கிற அன்பு எண்ணத்தையும், அதில் அங்கமாகச் செய்கிற தேவாலய கைங்கர்யங்களின் பக்தி எண்ணத்தையுங்கூட 'வசூல் எண்ணம்'முழுங்கிவிடும். எப்போது பார்த்தாலும் ரசீது

புஸ்தகமும் கையுமாக அலைவதும், 'பேப்பர்காரர்களைப் பிடித்து அப்பீல் பண்ணலாமா, அட்வர்டைஸ்மென்ட் பிடித்து ஸோவனீர் போடலாமா?'என்பதே சிந்தையாகத் தவித்துக் கொண்டிருக்கும்படியும் ஆகும். நிறையப் பணம் சேர்ந்து அதைக் கையாள வேண்டியிருக்கும்போது நாமே எப்படி மாறிப் போய்விடுவோமோ என்ற பயம் ஸதாவும் இருக்கணும். அதுவுமில்லாமல், ரொம்பவும் பணம் சேர்ந்தால் ஊரிலிருப்பவர்களுக்கும் அது ஸரியாகப் பிரயோஜனமாகிறதா என்ற ஸந்தேஹம் எழும்பும். இதோடுகூட, சற்றுமுன் சொன்ன மாதிரி, இஷ்டமில்லாதவனையும் நிர்ப்பந்தப்படுத்தி வாங்குவதும், இப்படி வாங்கிவிட்டதால் அப்புறம் அவனிடம் பவ்யப்பட்டு நிற்பதும் நம் பணியையே அசுத்தம் செய்துவிடும். ஆனதால் எந்த நல்ல காரியமானாலும் 'அதி'யாக அதைக் கொண்டுபோய்விடாமல் அவசியத்தோடு நிறுத்திக்கொண்டு, செட்டும் கட்டும் சிக்கனமுமாகவே அதற்கான வரவு செலவுகளை நிர்வஹிக்க வேண்டும்.

பொதுத் தொண்டுக்கு மூல பலம் பணம் இல்லை, ஐக்யப்பட்ட மனம்தான் என்று புரிந்துகொள்ள வேண்டும். பணம் கொடுத்தவன் என்று எவனையும் பிரகடனப்படுத்தி, அதனால் அவனுடைய புண்யபலன் போய்விடும்படியாகச் செய்து விடக்கூடாது. திருப்பூந்துறை அய்யனார் கோயிலில் குளம் வெட்டினபோது பணம் வசூலித்து, கூலி கொடுத்து, 'காமகோடி'பத்திரிகையிலும் நன்கொடைக்காரர்களின் பெயரைப் போட்டு விட்டார்கள். அடுத்த 'இஷ்யூ'விலேயே நான் கொட்டை எழுத்தில், "இனிமேல் இப்படிப் பண பலத்தில் பண்ணாமல், ஆட்களின் அன்பு பலத்திலேயே பண்ண வேண்டும் என்பதற்காகத்தான் அப்படிப் போட்டோம்"என்று நாசூக்காக மன்னிப்பு, பச்சாத்தாபம் தெரிவிக்கிற மாதிரி 'பப்ளிஷ்'பண்ண வைத்தேன்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### திரவியம், தேஹம் இரண்டாலும்

கா ல் காசு ஐவேஜியில்லாமல்தான் சிவன் ஸமீபத்தில் இருந்திருக்கிறார். ஆனால் அவர் பெயரிலேயே அன்னதான என்பது ஒட்டிக்கொள்கிற மாதிரி, மஹா க்ஷேத்திரங்களில் நடந்த மஹோத்ஸவங்களிலெல்லாம் லக்ஷக்கணக்கான ஜனங்களுக்கு முட்ட முட்ட விருந்துச் சாப்பாடு போட்டிருக்கிறார். பரம த்யாகியாக இருந்து கொண்டு, கட்டின துண்டோடு ஊர் ஊராகப் போய் இவர் தனிகர்களை, மிராஸ்தார்களை, பண்ணையார்களைப் பார்த்து, "இத்தனை மூட்டை அரிசி அனுப்பு;இத்தனை தூக்கு புளி அனுப்பு"என்று சொன்னால் அதை ஒரு பாக்யமாக, ஆக்ஞையாக நினைத்து அவர்களும் அனுப்பி விடுவார்கள். உத்ஸவத்துக்கு வந்தவர்களுக்கெல்லாம் வயிறார அன்னதானம் பண்ணி விடுவார். ஆனால் அவர் தாம் மாத்திரம் இந்த விருந்துச் சாப்பாட்டைத் தொடவே மாட்டார். ஏதோ கொஞ்சம் பழையதைததான நாலு வாய் உருட்டிப் போட்டுக் கொள்வார். அதனால்தான் அவர் சாமான்களைக் கொடுத்த தனிகர்களுக்கு பவ்யப்படாமல் இருக்க முடிந்தது. அவர்கள் இவரிடம் கை கட்டிக்கொண்டு நின்றார்கள். பரோபகாரம் என்று வரும்போது பணத்தைக் காட்டி ஒரு ஸுபீரியாரிடி ஏற்படுத்திக் கொள்ளாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது ரொம்பவும் அவச்யம் என்பதற்காகச் சொன்னேன்.

பணக்காரர்கள் பரம த்யாகிகளாக, trustees (தர்மகர்த்தாக்கள்) மாதிரி, தங்கள் பணத்தை ஸமூஹக் காரியங்களுக்காகத்தான் ப்ரயோஜனப்படுத்த வேண்டும் என்பதே நம் தர்மம். மநு, திருவள்ளுவர் நாளிலிருந்து காந்திவரை இப்படித்தான் சொல்லி வந்திருக்கிறார்கள். இது வாஸ்தவத்தில் நடந்தால் கம்யூனிஸம், ரெவல்யூஷன் எதுவுமே இல்லாமல் லோகமெல்லாம் ஸந்தோஷமாக சாந்தமாக இருக்கும். இதெல்லாம் எனக்குத் தெரியாமல் போகவில்லை. ஆனாலும் அவர்கள் தாங்களாக தர்ம சிந்தையை வளர்த்துக்கொண்டு, பிரியப்பட்டு உபகாரம் செய்யத்தான் நாம் தூண்டுதலாகப் பிரசாரம் செய்ய வேண்டுமே தவிர அவர்களைப் போய் நிர்ப்பந்தப்படுத்த வேண்டாம். என்று தோன்றியதால் சொன்னேன். பாதி ஸீரியஸாகவும் பாதி விளையாட்டாகவும் சொன்னேன்.

இன்னொன்றுகூட நான் விளையாட்டாகச் சொல்வதுண்டு. பொதுக் கார்யம் செய்கிறவர்கள்

இப்போது முதலில் இன்னின்னார் நிறைய உதவக்கூடும் என்று 'லிஸ்ட்'போட்டுக்கொண்டு அந்த வரிசைப்படி கலெக்ஷனுக்குப் போகிறார்கள் அல்லவா?இதில் அநேகமாக ஏமாற்றங்கள்தான் உண்டாகின்றன. நாம் ரொம்பவும் தாராளமாகக் கொடுப்பான் என்று நினைக்கிறவனுக்கு ஏதாவது ச்ரமமிருக்கிறது. அல்லது மனஸில்லை. கையை விரித்துவிடுகிறான். அல்லது மூக்கால் அழுதுகொண்டு சுஷ்கமாகக் கொடுக்கிறான். உடனே நமக்குப் பணியிலேயே உத்ஸாஹம் குறைந்துவிடுகிறது. அந்த ஆசாமியைத் தூற்ற ஆரம்பிக்கிறோம். இதற்குப் பதிலாக நான் என்ன சொல்கிறேன் என்றால், யாரார் நன்கொடை தர மாட்டார்கள் என்று தோன்றுகிறதோ அவர்களை ஒரு லிஸ்ட் போட்டுக் கொள்ளுங்கள், முதலில் இப்படிப்பட்டவர்களைப் போய்ப் பாருங்கள். அவர்கள் கையை விரித்து விட்டால் அதற்காக நமக்கு மனஸ் தளரப் போவதில்லை. ஏனென்றால் இது நாமே எதிர்பார்த்தது தானே?மாறாக அவர்கள் ஏதோ கொடுத்தாலும் கொடுக்கலாம்,

சில சமயம் அள்ளியும் கொடுக்கலாம். இப்படிக் கொடுக்க நேரிட்டால் நமக்கு உத்ஸாஹம் கரைகடந்துவிடும்!பணியில் இன்னும் தீவிரமாக இறங்குவோம். இப்படி என் வார்த்தைப்படி, கொடுக்காமல் இருக்கக்கூடியவர்களின் லிஸ்டைப் போட்டுக்கொண்டு முதலில் அவர்களிடம் வசூலுக்குப் போய், அப்புறம் கொடுக்கக் கூடியவர்களைப் பார்த்தவர்கள், பிற்பாடு என்னிடம் வந்து 'ஸைகலாஜிக'லாக இதில் தங்களுக்கு ரொம்பவும் த்ருப்தியும், உத்ஸாஹமும் உண்டானதாகச் சொல்லியிருக்கிறார்கள். யாசகக் கலையில் இப்படிப் பல 'ட்ரிக்கு'கள் இருக்கின்றன!

நான் சொல்ல வந்தது என்னவென்றால், ஏழையோ, பாழையோ, ஸமூஹத்தில் உள்ள அத்தனை பேரும் ஒரு காலணா அரையணாவாவது போட்டு எல்லோருமாகச் சேர்ந்தே பொதுக் காரியங்களுக்கான செலவுகளை ஏற்க வேண்டும். பணக்காரன் பணம் மட்டும் கொடுத்துவிட்டு, சரீரத்தால் உழைக்காமலிருந்தான் என்று இருக்கக்கூடாது;ஏழை சரீரத்தால் மட்டும் உழைத்து விட்டுப் பணம் கொடுக்காமலிருந்தான் என்றும் இருக்கக் கூடாது. பணக்காரன் ரூபாய் தருவதும், ஏழை சரீர கைங்கர்யம் செய்வதும் பெரிய த்யாகமில்லை. பணக்காரன் ஏழைகளோடு வந்து நின்றுகொண்டு மண்வெட்டி எடுத்து வெட்ட வேண்டும்; ஏழை தன் கூழுக்கு ஒரு மிளகாய் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக காலணா டொனேஷன் கொடுக்க வேண்டும். அதுதான் பெரிசு. ஸோஷல் ஸர்வீஸ் பண்ணும்போதே பண்ணுகிறவர்கள் மனஸில் உயர்ந்து வளர வேண்டுமானால் செலவு, உழைப்பு இரண்டிலுமே ஒவ்வொருத்தனுக்கும் பங்கு இருக்க வேண்டும். ச்ரமதானத்துக்கு பலஹீனர்கள் மட்டும் எக்ஸெப்ஷன் (விதிவிலக்கு).

எனக்கு தெரிந்த ஒரு ப்ராம்மணர். இரண்டே இரண்டு தென்ன மரம் உள்ள பூமிதான் அவருக்கு ஆரம்பத்தில் இருந்தது. அதில் தானே மண்வெட்டி பிடித்து வேலை பண்ணினார். சாஸ்தரப் பிரகாரம் பண்ண வேண்டியது எதையும் இதற்காக விட்டுவிடவில்லை. காலையில் எழுந்து அக்னி ஹோத்ரம், பூஜை எல்லாம் செய்வார். அப்புறம் மண்வெட்டியும் கையுமாகப் போய் வேலை ஆரம்பித்து விடுவார். அந்த வேலை முடிந்த அப்புறம் மாத்யான்ஹிக ஸ்நானம் செய்து, பாக்கி கர்மாநுஷ்டானங்களும் பண்ணிவிட்டுச் சாப்பிடுவார். இப்படி தன் கையாலேயே உழைத்து இரட்டைத் தென்ன மர பூமியைத் தென்னந் தோப்பாகவே மாற்றிவிட்டார் பசங்களுக்கு இப்படி நல்ல பூ ஸ்திதி தேடி வைத்தார். நல்ல விருத்தாப்யம் வந்த பிற்பாடும், எண்பது எண்பத்தைந்து வயஸூ வரைக்கும்கூடத் தோப்புக்குத் தினமும் போய்த் தன் கையால் வெட்டி கொத்தி வேலை செய்வதை அவர் நிறுத்தவில்லை. இப்போது திரவிய ஸௌகர்யம் ஏற்பட்டு, இவர் உழைத்துத்தான் ஆக வேண்டும் என்று இல்லாவிட்டாலுங்கூட, "இந்தக் கார்யம்தானே நமக்கு இத்தனை அபிவ்ருத்தியைத் தந்தது?இதை விடப்படாது"என்று சரீர உழைப்பில் பக்தி விச்வாஸம் வைத்து சாகிறவரை பண்ணி வந்தார்.

அவர் சொந்த நிலத்தில் வேலை செய்து அடைந்த ஸந்தோஷத்தைவிட ஜாஸ்தியாகவே பொதுத்தொண்டுகளில் சரீரத்தை சிரமப்படுத்தி வேலை பண்ணுவதில் நிறைவு கிடைக்கும். பண்ணிப் பார்த்தால் தெரியும்.

கொஞ்ச நேரமாவது குளம் வெட்டுவது, ஆலயத்தில் நந்தவனம் வைப்பது என்கிற மாதிரி ஏதோ ஒன்றில் தேஹத்தை ஈடுபடுத்த வேண்டும். கொஞ்சம் காசாவது இம்மாதிரி

கார்யங்களுக்குச் செலவழிக்க வேண்டும். ஏழை வித்யார்த்திக்கு ஒரு பலப்பம் வாங்கிக் கொடுக்கலாம்;நாலு பிச்சைகாரார்களுக்குக் கூழ் வார்க்கலாம்;மோர்த் தண்ணியாவது நம் செலவில் கொடுக்கலாம்.

எந்த ஆஃபீஸானாலும் ஃபாக்டரியானாலும் வாரத்தில் ஒருநாள் லீவ் இருக்கிறதல்லவா?பள்ளிக்கூடம், கோர்ட் முதலியவற்றில் வாரத்துக்கு இரண்டு நாள் லீவ்கூட இருக்கிறது. இந்த லீவ் நாட்களெல்லாம் பொதுத் தொண்டுக்கு என்றே பகவான் கொடுத்திருப்பது என்று நினைத்து, கூட்டாகச் சேர்ந்து ஸேவை செய்யவேண்டும். மனஸ் மட்டும் இருந்துவிட்டால், செய்வதற்கு எத்தனையோ பணிகள் இருக்கின்றன.



## ஜாதி அம்சமில்லாத ஸேவை தேவை

நான் சொன்ன அநேக பரோபகாரப் பணிகளுக்குப் பணம் வேண்டும், உழைப்பு வேண்டும். அதோடு மத ஸம்பந்தமான விஷயம் தெரிந்தவர்கள் வேண்டும். அவர்கள் தங்களுக்குத் தெரிந்ததை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். பஜனை பண்ணத் தெரிந்தவர்கள் மற்றவர்களையும் கூட்டி, பகவந்நாமாவைப் பாடப் பண்ண வேண்டும்.

இப்போது ஊருக்கு ஊர், பேட்டைக்குப் பேட்டை பஜனை கோஷ்டி இருக்கிறது. இந்த கோஷ்டிக்காரர்களே வார வழிபாட்டையும் மற்ற பரோபகார கார்யங்களையும் எடுத்த நடத்த வேண்டும். ச்ரத்தையாக உழைக்க கூடியவர்கள், பணவிஷயத்தில் நாணயமாக இருக்கக் கூடியவர்கள், 'இவர்கள் சுத்தமானவர்கள்' என்று ஸமூஹத்துக்கு நம்பகமாக இருக்கிறவர்கள் ஒரு பத்து பேர் அங்கங்கே சேர்ந்து விட்டால் போதும். ஊர் உலகத்தில் ஒரு குறைவில்லாமல் பொதுநலக் கார்யங்கள் ஜாம் ஜாம் என்று நடந்துவிடும்.

பணியில் சேர்கிறவர்கள், பணியால் பயனடைகிறவர்கள் (beneficiaries) இரண்டிலும் 'ஜாதி'என்ற அம்சமே இருக்கக் கூடாது. பணக்காரன்-ஏழை, படித்தவன்-படிக்காதவன் எல்லோரும் ஒன்று சேர்ந்து செய்கிற முறையில் இது ஒன்றிலாவது நேராகவோ, மறைமுகவோ 'கம்யூனல் ரெப்ரஸென்டேஷன்'(ஜாதிவாரிப் பிரதிநிதித்வம்) இல்லாமல் கார்யம் நடக்க வேண்டும்.

ஜாதிகளையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று ஆரம்பித்தால்தான் சண்டை ஜாஸ்தியாகிறது!ஆரியன்-திராவிடன் பேதமில்லை என்று சொல்லி ஸௌஜன்யத்தை உண்டாக்க வேண்டும் என்று நல்லெண்ணத்தோடு ஆரம்பித்தால்கூட, உடனே இதற்கு ஹிஸ்டாரிகலாக (சரித்திர பூர்வமாக), எத்னாலாஜிகலாக (இன-இயல்-ரீதியில்) ஆக்ஷேபணைகள் வந்து ஒரே வாதச் சண்டையாகிறது!ஆனதால் வர்தத்தால் ஒற்றுமையை ஸ்தாபிக்க யத்தனம் செய்யமால், ஒற்றுமைக்காகப் பாடுபடுகிறோம் என்றுகூட இல்லாமல், இப்படிப் பல பொதுக் கார்யங்களை எடுத்துப் போட்டுக் கொண்டு எல்லாரும் சேர்ந்து அவற்றைச் செய்தாலே தன்னால் ஒற்றுமையும் அன்பும் ஸௌஜன்யமும் உண்டாகிவிடும்.



## ஜீவனோபாயத் தொழிலை தர்ம உபாயமாக்குக !

ஸங்கமாகச் செய்வதோடு தனித்தனியாக அவரவரால் முடிந்த உபகாரங்களைச் செய்ய வேண்டும். ஸர்க்கார் உத்யோகம், கம்பெனி உத்யோகம் என்றிராமல் ஸ்வதந்திரமாக அநேகம் பேர் எதை வருத்தியாக (ஜீவனோபாயத் தொழிலாக) வைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அதையே ஸம்பாத்யமில்லாமல், கொஞ்சம் இலவசமாகவும் செய்ய வேண்டும் என்பது என் ஆசை. முடிகிற தொழில்களில் உத்யோகஸ்தர்களும்கூட ஃப்ரீ ஸர்வீஸ் பண்ண வேண்டும்.

யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்

வித்தம் தேந விநோதய சித்தம்

என்று ஆசார்யாள் ('பஜகோவிந்த'த்தில்) சொல்லியிருக்கிறார். அதாவது, 'தனக்கென்று ஏற்பட்ட தொழிலால் என்ன ஸம்பாதிக்கிறாயோ, அதனால் (உடம்பைவளர்த்துக் கொள்வது மட்டுமின்றி, தானதர்மங்கள் பண்ணி) உள்ளத்தையும் உயர்த்திக்கொள்'என்கிறார்.

இது ஒரு ஐடியல் இது அநுஷ்டிக்கப்பட வேண்டியதே. அவரவர் தொழிலே இதில் ஆத்மாபிவ்ருத்திக்குப் பிரயோஜனமாகிறது. ஆனால் இப்போது காலத்தின் கோளாற்றில், அநேகத் தொழில்களிலேயே தவிர்க்க முடியாமல் பாபமும் தோஷமும் வந்து சேருகிறதே!'ஸோஷல் லைஃபி'ன் எல்லா அம்சங்களிலும் கலிதோஷம் 'கரப்ஷ'னாக (லஞ்ச ஊழலாக) வந்து புகுந்து கொண்டு இப்படி ஆகியிருக்கிறதே!இப்படியாக, ஸம்பாதித்த திரவியத்திலேயே தோஷமும் கொஞ்சமாவது ஒட்டிக் கொண்டிருக்கிறபோது, இந்த திரவியத்தால் தான தர்மம் செய்துவிட்டால் மட்டும் போதுமா?அதுவே tainted money-யாகவும் (களங்கமுற்ற பணமாகவும்) கொஞ்சமாவது இருக்கிறதே!ஆசார்யாள் அருள் மனஸோடு, 'உனக்கான தொழிலைப் பண்ணுவதில் ஸம்பாதி;அதிலே தப்பு இல்லை;ஆனால் ஸம்பாதியத்தை ஆத்ம ச்ரேயஸுக்குப் பிரயோஜனமாக்கிக் கொள்'என்றபோது, இப்படி அதிலேயே ஒரு கரப்ஷன் அம்சம் வந்து சேரும் என்று நினைத்திருக்கமாட்டார். இந்த தோஷத்துக்கு எனக்கு ஒரு பரிஹாரந்தான் தோன்றுகிறது. அதாவது அவரவர் தொழிலுக்குரிய ஸம்பாத்யத்தைப் பெறுவதில் தப்பில்லை என்று ஆசார்யாள் சொன்னாலும், இப்போதைய கரப்ஷன் ஸெட்-அப்பில் அவரவரும் கொஞ்சமாவது ஸம்பாத்யமே இல்லாமல், தகுந்த பாத்திரத்துக்காக ஃப்ரீ ஸர்வீஸ் பண்ணுவதுதான் பரிஹாரம் என்று நினைக்கிறேன். தொழிலால் ஸம்பாதித்து அப்புறம் அந்த ஸம்பாத்யத்தால் தானதர்மம் பண்ணுவதோடுகூட, தொழிலையே ஸம்பாத்யமில்லாமலும் கொஞ்சம் இலவசமாகச் செய்ய வேண்டும் என்கிறேன். ஒரு தொழிலில் ஏற்படுகிற கரப்ஷன் களங்கத்துக்குப் பிராயச்சித்தமாக அந்தத் தொழிலையே தான் கொஞ்சம் தியாகமாக, பரோபகாரமகச் செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன். கரப்ஷன் ஸம்பந்தமேயில்லாமல் சுத்தமாகத் தொழில் செய்கிறவர்களும் அதை ஓரளவாவது திரவிய லாப அம்சமே கலக்காமல் உபகாரமாகப் பண்ணினால் அத்தனைக்கத்தனை புண்ணியந்தான்.

நீ ஒரு டாக்டரா?நீ ஃபீஸ் வாங்கிக்கொண்டு வைத்யம் பண்ணுவதும் பரோபகாரம்தான். ஆனால் இதில் உனக்கே ஸ்வயோபகாரமான ஆத்மசுத்தி கிடைக்காது. அதுமட்டுமில்லை தவிர்க்க முடியாமல் சில பேர் 'ஸிக் லீவ்'கேட்கிறபோது, நீ பொய் ஸர்டிஃபிகேட் தரும்படி ஆகியிருக்கலாம். இப்படியே பொய்யாக 'மெடிகல் ஃபிட்னெஸ் ஸர்டிஃபிகேட்'டும் சில பேருக்குக் கொடுத்திருப்பாய். இதனாலெல்லாம் ஆத்மா சுத்தி பெறாதது மட்டுமில்லாமல் அதில் புது அழுக்கும் படிந்திருக்கும். த்யாக ஸேவைதான் இந்த அழுக்கை அலம்பிட முடியும். ஆகையால் தினமும் ஒரு ஏழைக்காவது இனாமாக வைத்யம் பண்ணு. உன் ஜன்மாவில் ஒருவனுக்காவது, வீட்டில் கற்றுக்கொடுக்கக் கூடிய அளவில் நீ பழகிய வைத்ய முறையைக் கற்றுக் கொடு. அவன் அதை முடிந்த வரையில் ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளட்டும்.

நீ யாரப்பா?வக்கீலா?ஸரி. மாஸத்துக்கு ஒரு கேஸாவது தர்ம நியாயமுள்ளதாகப் பார்த்து, தகுந்த பாத்திரத்துக்காக ஃப்ரீயாக நடத்து. அதே மாதிரி ஒரு வியாஜ்யமேனும் கோர்ட்டுக்கு வெளியிலேயே ராஜியாகும் படிப் பண்ணு. வக்கீல் தொழிலில் ஏற்படுகிற தப்புக்களால் உனக்குப் பாபமுண்டாகாமல் தப்பிக்க இப்படிப் பரோபகாரம் பண்ணு. பாபம் போவது மட்டுமின்றி, இந்தமாதிரிச் சில வருஷம் நியமத்துடன் செய்து வந்தாயானால், உனக்கு பப்ளிக்கில் நல்ல பெயர் ஏற்படும். அந்த நல்ல பெயரினாலும் அநேக பொதுநலக் காரியங்களுக்கு உதவி பண்ணிப் புண்யம் ஸம்பாதிக்கலாம்.

நீ ஒரு ஸங்கீத வித்வான் என்றால் தர்மக் கச்சேரி பண்ணி ஒரு பணிக்குப் பணம் வசூலாக உதவலாம். எழுத்தாளனானால் ஸமய ஸ்தாபனங்களுக்கு ஸத் விஷயங்கள் கொஞ்சம் இலவசமாக எழுதிக் கொடுக்கலாம். புஸ்தக பப்ளிஷர் என்றால் ஏழை மாணவர்களுக்குப் புஸ்தகங்கள் இலவசமாகத் தரலாம்;அல்லது உத்தமமான க்ரதங்கள் ஒன்றிரண்டையாவது

(ஃப்ரீயாக இல்லாவிட்டாலும்) அடக்க விலைக்கு விற்கலாம். ஸத் விஷயமாக தூண்டு பிரசுரங்கள் இனாமாகவே அச்சிட்டு விநியோகிக்கலாம். இப்படி எந்தத் தொழிலானாலும் அதை (vritti)வ்ருத்தி க்காக இல்லாமல் ஆத்ம அபிவ்ருத்தி (vriddhi)க்காகவும் ஓரளவு ப்ரயோஜனப்படுத்த வேண்டும்.

"நான் ரொம்பவும் ஸாதாரணப்பட்ட டைப்பிஸ்ட் ஆச்சே!"என்கிறாயா?பரவாயில்லை, அதிகமாகவே பரோபகாரம் பண்ண முடியும். உத்யோகமில்லாமல் எத்தனை ஏழைப் பசங்கள் திண்டாடுகிறார்கள்?அவர்களில் ஆறு மாஸத்துக்கு ஒரு பையன் வீதம் ஓரளவு 'ஒர்கிங் நாலெட்ஜ்'பெறுகிற மாதிரி டைப் அடிக்க ட்ரெயின் பண்ணு. இந்த உதவியை இனாமகப் பண்ணு. இதனால் அவர்களுக்கு ஆயுஸ்காலம் பூராவுக்கும் ஜீவனோபாயம் கிடைக்க வழி ஏற்படும். அவர்களுடைய நன்றியும் வாழ்த்தும் உன்னை இம்மையிலும் மறுமையிலும் ரக்ஷிக்கும்.

இப்படி அவரவரும் ஏதாவது ஒரு தினுஸில் தனித்த முறையில் தங்கள் தொழிலைக்கொண்டு உபகாரம் பண்ண முடியும். கார்யத்தால், திரவியத்தால் ஒன்றுமே பண்ண முடியாவிட்டாலும், குறைந்த பக்ஷம் திருமூலர் சொன்னாற்போல், "யாவர்க்கும் இன்னுரை"என்றபடி ப்ரியமாகப் பேசிக் கஷ்டத்தில் ஆறுதல் தருகிற உதவியையாவது பண்ணுங்கள்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ரிடையர் ஆனவர்களுக்கு

"நாங்கள் 'ரிடையர்'ஆன கிழங்களாச்சே!தொழிலை விட்டு விட்டவர்களாச்சே!எங்களால் என்ன உதவி பண்ண முடியும்?"என்கிறீர்களா?உங்களால் முடியாதா? உங்களால்தான் ஜாஸ்தி முடியும் என்று உங்களைத்தான் இத்தனை நாழி எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நீங்கள் உங்களைப் பட்டுப் போன மரம் என்று நினைக்க வேண்டாம். மனஸ் வைத்தால் நீங்கள் தான்இந்த தேசத்தை தேவலோகமாக்கக் கூடிய கல்பக வ்ருக்ஷங்கள் என்று நான் நினைக்கிறேன். தெய்வ பலத்தை தனக்காக இல்லாமல், உலகத்துக்காகச் செய்தால் கிழத்தனத்தின் பலஹீனமும் ஓய்ச்சலும் இல்லாமல் யுவர்களைவிட உத்ஸாஹமாகப் பண்ணலாம். கிழவன் நானே சொல்கிறேன்.

மற்றவர்கள் ஆஃபீஸ் காரியம் போக மிஞ்சிய கொஞ்சம் போதில்தான் பொதுத்தொண்டு பண்ண முடியுமென்றால் ரிடையரான நீங்களோ புல் டைமும் ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிற பாக்யம் பெற்றிருக்கிறீர்கள். ஆஃபீஸுக்குப் போய்வந்த காலத்தில் உங்களுக்குக் குடும்ப பொறுப்பும் அதிகம் இருந்தது. இப்போது அதுகளைக் கூடியவரையில் குறைத்துக் கொள்ள வேண்டும். அநேகமாக ரிடையர் ஆகிற வயஸில் ஒருத்தனுக்கு நேர் பொறுப்பு உள்ள பிள்ளைகளின் படிப்பு, பெண்ணின் விவாஹம் முதலான கார்யங்கள் முடிந்திருக்கு ம்.அதற்கப்புறமும் பேரன் படிப்பு, பேத்தி கல்யாணம் என்றெல்லாம் இழுத்துப் போட்டுக் கொண்டேயிருந்தால் அதற்கு முடிவே இருக்காது. ரிடையரானவர்களும் குடும்ப விசாரம் என்று அழுது கொண்டிருந்தால், மற்றவர்களும் இதையே நினைத்துக் கொண்டு ப்ரலாபிக்க வேண்டியதுதான். ஓரளவு வயஸான பிற்பாடாவது விவேக வைராக்யாதிகளைப் பழக வேண்டாமா?கொஞ்சமாவது வானப்ரஸ்தாச்ரமிகளைப் போல, வீட்டுப் பொறுப்புக்களைஅடுத்த தலைமுறைக்கு விட்டு விட்டுத் தங்கள் தங்கள் ஆத்மாவை கவனித்துக் கொள்ள வோண்டும். உத்யோக காலம் முடிந்த பின் சொந்த பிஸினஸ் பண்ணலாமா, ஃபாக்டரி வைக்கலாமா, ஃபார்ம் வைக்கலாமா, எக்ஸ்டென்ஷனுக்கு 'ட்ரை'பண்ணலாமா என்று தவித்துக் கொண்டிருக்காமல், தன்னைக் கடைத்தேற்றிக் கொள்வதற்கான வழிகளைத் தேட வேண்டும். ஸ்வயோபகாரமில்லாமல் பரோபகாரமில்லை என்றனே!அதனால், இதற்கு முன்னால் தெரிந்து கொண்டு, அவற்றின்படி இதுவரை பண்ணாத அநுஷ்டானங்களை இப்போதாவது பண்ண ஆரம்பிக்க வேண்டும்.

இதெல்லாம் பண்ணினாலும் உச்சிப்பொழுதுக்கு அப்புறம் நிறைய அவகாசம் இருக்கும். அதில் பரோபகாரங்கள் பண்ண வேண்டும்.

இருக்கிற ஓய்வை நன்றாகப் பிரயோஜனப்படுத்திக்கொண்டு ஸத் விஷயங்களைத் தாங்கள் படித்தும் கேட்டும் தெரிந்து கொள்வதோடு மற்றவர்களுக்கும் அவற்றை எடுத்துச் சொல்வது பெரிய உபகாரம்.

அது தவிர நீங்கள் எந்தத் தொழில் செய்தீர்களோ, அதை நாலு ஏழை இளைஞருக்கு ஃப்ரீயாகச் சொல்லிக் கொடுத்து அந்த உத்யோகத்துக்கான பரீக்ஷைகளுக்கு அவர்கள் போகிறதற்கு உதவி செய்யுங்கள். கொஞ்சம் வசதியாகப் பென்ஷன் வாங்குகிறவர்கள ாயிருந்தால் இப்படி வித்யாதானம் செய்வது மாத்திரமில்லாமல் அவர்களில் ஓரிரண்டு பேருக்காவது அன்னதானமும் சேர்த்துப் பண்ணுங்கள். சொந்தக் குடும்பத்துக்கு சொத்துச் சேர்த்து வைத்தால் மட்டும் போதாது. வெளி மநுஷ்யாள் இரண்டு பேர் வயிறும் குளிரப் பண்ணுங்கள். இப்படி ஆதரவில்லாதவர்களுக்கு ஸமூஹத்திலேயே திருட்டு, புரட்டு எவ்வளவோ குறையும். இல்லாமையால்தான் (வசதியிருக்கிறவர்களுக்கு மனமில்லாமையாலு ந்தான்!) அநேகர் ஏமாற்றுக்காரர்களாகவும் திருடர்களாகவும் ஆகிறார்கள்.

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## ஆசாரத்தைக் காக்க உதவி

நான் சொல்கிறது எல்லோருக்கும்தான் என்றாலும் ப்ராம்மணர்களில் வசதியுள்ள பென்ஷனர்களுக்கு இதைக் குறிப்பாகச் சொல்கிறேன். மற்ற ஸமூஹங்களில் நிராதரவான இளைஞர்களை ஆதரிக்க அந்தந்த ஸமூஹத்தில் வசதியுள்ளவர்கள் நிரம்ப ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். ப்ராமணர்களுக்குத்தான் அந்த 'ஸ்பிரிட்'இல்லை. காலேஜ் அட்மிஷன், உத்யோகம் பெறுவது எல்லாவற்றிலுமே கம்யூனல் ஜீ.ஓ. வந்த நாளாக ப்ராம்மணப் பசங்கள் அதிகக் கஷ்ட தசையில் இருக்கிற இப்போதும் அந்த ஸமூஹத்தில் ஸௌகர்யமுள்ளவர்கள் இதை கவனிக்காமலிருப்பது நியாயமில்லை.

ஒரு காலத்தில் ப்ராம்மணப் பசங்களை காலேஜ் அட்மிஷன், அப்பாயின்ட்மென்ட் எல்லாவற்றிலும் ஸர்க்கார் கழித்துக் கட்டுவதைப் பார்த்து நான் ஸந்தோஷப்பட்டதுகூட உண்டு. ஆமாம், ஸந்தோஷந்தான் பட்டேன்!ஏனென்றால், "இவன் தனக்கான வேத வித்யையையும், எளிய வாழ்க்கையையும் விட்டுவிட்டுப் பணமே குறியாக துராசாரத்தில் இறங்கியிருப்பதற்கு இந்த இங்கிலீஷ் படிப்பும், உத்யோகமும்தானே காரணம்?இவனாக இதுகளை விடாவிட்டாலும், மற்றவர்களும் ஸர்க்காரும் சேர்ந்து இவனுக்கு இதுகள் கிடையாது என்று விரட்டி அடிப்பதால், இப்போதாவது வேறு வழியில்லை என்று அத்யயனத்துக்குத் திரும்பி, உள்ளதே போதும் என்று த்ருப்தனாக ப்ராம்மண லக்ஷணப்படி க்ராமத்தோடு இருந்துகொண்டு ஸிம்பிகளாக வாழ ஆரம்பிப்பானல்லவா?"என்று மனப்பால் குடித்துத்தான் ஸந்தோஷப்பட்டேன்.

ஆனால் நடந்தது என்ன என்றால், இவனுக்கு மேல் படிப்பில்லை, அழுக்குப்படாத உத்யோகமில்லை என்றதும், இவன் தன் ப்ராசீன ஜீவித முறைக்குத் திரும்பாமல், இன்னம் படுமோசமாகத் துராசாரத்திலேயே இறங்க ஆரம்பித்து விட்டான். ஸினிமாவில் சேர்வது, மிலிடரியில் சேர்ந்து மது மாம்ஸாதிகளைச் சாப்பிடுவது, ஹோட்டலில் சேர்ந்து கொஞ்சம்கூட ஆஹார சுத்தமில்லாமல் தின்பது என்றெல்லாம் ஆரம்பித்து விட்டான். இதைப் பார்த்த பின்தான் எனக்கு இதைவிட இவனை வேறு விதத்தில் இங்கிலீஷ் படிப்பும் லௌகிகமான தொழிலும் பெறும்படிப் பண்ணிவிட்டு, அதோடு கூடத்தான் முடிந்த மட்டும் ப்ராம்மண தர்மங்களை அநுஷ்டிக்கச் செய்ய வேண்டும் என்று தோன்றியிருக்கிறது. இதில்தான் பென்ஷனர்களின் ஸஹாயத்தைக் கேட்கிறேன்.

முதலில் ப்ராம்மணன் தலையில் கைவைத்தது பரவிப் பரவி இப்போது 'ஃபார்வர்ட் கம்யூனிடீஸ்'என்று பேர் வைக்கப்பட்ட செட்டிமார், முதலியார், பிள்ளைமார் என்று ஒவ்வொரு ஸமூஹமாகக் காலேஜ் அட்மிஷன், ஸர்க்கார் உத்யோகம் எல்லாவற்றிலும் பின்னால் தள்ளப்படுவதில் முடிந்திருக்கிறபடியால், இவர்கள் எல்லாரும் எதிர்காலத் தலைமுறைகள் விஷயத்தில் விழிப்போடு ஏற்பாடு செய்ய வேண்டும். பின்தங்கிய

வகுப்பினர் என்பவர்களுக்கும் நம்மாலான ஸகல உபகாரமும் செய்யத்தான் வேண்டும். பரோபகாரத்தில் மேல் ஜாதி, கீழ் ஜாதி என்கிற எண்ணமே தப்பு என்பதுதான் நம் motto-வாக (லக்ஷிய வாசகமாக) இருக்க வேண்டுமாயினும், இந்த படிப்பு, உத்யோகம் ஆகிய விஷயங்களில், சில வகுப்பாருக்கு உரியதையும் புறக்கணித்து ஸர்க்காரே பிற்பட்ட வகுப்பாருக்கு அதிகப்படி சலுகை காட்டுவதால்தான், இந்த விஷயத்தில் மட்டும் நான் கொஞ்சம் கம்யூனல்-பேஸிஸில் (வகுப்பு அடிப்படையில்) பேசியாக வேண்டியிருக்கிறது. என்று சொல்கிறார்களே, அந்த தாழ்த்தப்பட்டவர்களை நியாயமக முன்னேற்றுவதை நான் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் இப்படிச் சொல்லிக்கொண்டு செய்கிற காரியங்கள் மற்றவர்களை பண்ணித் தாழ்த்தி வைப்பதற்காக ஆகிறபோது இவர்கள் தாங்களாகவே மேலே எழும்புவதற்கு முயற்சி பண்ண வேண்டும் என்கிறேன். இந்த இனத்தில் மட்டும் தங்கள் வகுப்புக்குத் தனியாக உபகாரம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்கிறேன்.

அதாவது ஸர்க்காரும் கைவிட்டு, சொந்த ஸமூஹத்திலும் போதிய ஆதரவு இதுவரை பெறாத ப்ராம்மணப் பசங்களுக்குக் குறிப்பாகவும், மற்ற முன்னேறிய வகுப்பினர் எல்லோருக்குமே பொதுவாகவும் இந்த ஸமூஹங்களைச் சேர்ந்த பென்ஷனர்கள் ஒன்று சேர்ந்து ட்யூடோரியல் காலேஜ் வைத்துப் பலவிதமான தொழில்களும் சொல்லிக்கொடுக்க வேண்டும். பென்ஷனர்கள் தங்களுக்குச் சம்பளம் வாங்கிக் கொள்ளாமல் இவற்றில் ஆசிரியர்களாகச் சொல்லிக் கொடுத்தால் விசேஷம். ஆனாலும், ஒரு காலேஜ் என்று நடத்தினால் இதர செலவுகள், maintenance charges ஆகுமல்லவா?அதனால், அவசியச் செலவுக்கு மட்டும் கட்டுப்படி ஆகிறமாதிரி குறைச்சல் ஃபீஸ் வாங்கலாம். இதன்மூலம் முன்னேறியதாகச் சொல்லப்படும் ஜாதிக்காரப் பிள்ளைகள், இவ்வளவு தூரம் தங்களை பஹிஷ்கரிக்காத ஸென்ட்ரல் ஸர்வீஸ், பாங்கு, கம்பெனிகள் ஆகியவற்றில் வேலைக்குப் போவதற்கோ, ஸ்வதந்திரமாக ஒரு தொழில் செய்து பிழைத்துப் போகவோ வழிசெய்ததாகும். ட்யூடோரியல் காலேஜில் படித்தால் அப்புறம் ப்ரைவேட்டாக அநேக யூனிவர்ஸிடிகளில் பரிக்ஷை எழுதி டிகிரி வாங்கலாமல்லவா?ரெகுலர் காலேஜ்களில்தான் ஸர்க்கார் ஸீட் ரிஸர்வேஷன் வைத்து இவர்களை விரட்டுகிறதே!அதனால்தான் இந்த யோசனை.

பல துறைகளில் அநுபவஸ்தர்களான பெரியவர்கள் ரிடையராகி ஓய்வில் இருக்கிறீர்களல்லவா?நீங்கள் ஒன்று சேர்ந்து கணிதம், ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, மற்றும் புது ஸயன்ஸ்கள், என்ஜினீயரிங், அக்கவுன்டன்ஸி. இன்னம் இப்போது ஏற்பட்டிருக்கிற அநேக டெக்னலாஜிகல் ஸப்ஜெக்ட்கள், வீவிங் (நெசவு) போன்றவை கூடத்தான், ஸங்கீத வாத்யங்கள் வாசிப்பதைக் கூடச் சேர்த்துக் கொள்ளலாம்-இந்த எல்லாவற்றிலும் பயிற்சி தருவதற்குப் பிரைவேட்டாக ட்யூட்டோரியல் காலேஜ் ஆரம்பியுங்கள்*போதகர், போஷகர் இரண்டாகவும் இவற்றில் பணிசெய்து இரட்டிப்புப் புண்யம் பெறுங்கள். கற்ற வித்தையை, உங்களுக்கு இத்தனை நாள் ஸம்பாத்யமும் இப்போது பென்ஷனும் வாங்கிக் கொடுக்கிற வித்தையை, தினம் ஒருமணி இரண்டுமணி பிறருக்கு உபகாரமாகச் சொல்லித் தரக்கூடாதா?இதனால் ஒரு பெரிய ஸமூஹ ப்ரச்னை தீரவும் உதவி செய்ததாகிறது.

வெறுமனே தொழிலுக்கான படிப்பாக மாத்திரமில்லாமல், இந்த ட்யூடோரியல் காலேஜ்களில் அவரவர் கலாசார முறைப்படிக் கொஞ்சம் ஸமயக் கல்வியும், அநுஷ்டான போதனையுங்கூடக் கொடுக்கலாம்.

இந்த ஸமயக் கல்வி போதனையில் பிற்பட்ட வகுப்புக்காரர்களுக்கும் முன்னேறிய வகுப்புக்காரர்கள் ஏற்பாடு செய்து தரவேண்டும். ஸர்க்காரின் ஏற்பாட்டில் அவர்களுக்கு தெய்வபக்தி உண்டாக்க எதுவுமில்லை. அது மட்டுமில்லாமல் அவர்களுக்காகப் போராடுவதாகச் சொல்லிக்கொள்கிற நாஸ்திகக் கட்சிகளின் வலையிலும் அவர்கள் விழப் பார்க்கிறார்கள். இதே ஸமயத்தில் அவர்களைப் படிப்பு, பதவி, இவற்றிலும் தூக்கிவிட்டு, உரிமை, ஸ்ட்ரைக், ஒத்துழையாமை என்றெல்லாம் வேறு சொல்லிக் கொடுப்பதால், தலைமுறை தலைமுறையாக அவர்களுக்கு வந்தருக்கிற ஸ்வபாவமான பக்தியும், அடக்கப் பண்பும் மறைந்துபோய் அவர்கள் தறிகெட்டுப் போகும்படியான நிலை உண்டாகியிருக்கிறது. ஆனபடியால் அவர்களையும் தெய்வத்தின் பக்கம் திருப்ப வேண்டிய கடமை ஜன ஸமுதாயம் முழுவதற்குமே இருக்கிறது. அது ஒரு பக்கம் இருக்கட்டும்.

இங்கே என்ன சொன்னேனென்றால், ஸம வாய்ப்பு இழந்து விட்டவர்களுக்காக வைக்கிற ட்யூட்டோரியல் காலேஜ்களில் அவரவர் குலாசாரப்படி ஸமயக்கல்வி, அநுஷ்டானங்களையும் போதிக்கலாம் என்பது. இப்போது லோகம் இருக்கிற இருப்பில், இதை 'கம்பல்ஸரி'யாகப் பண்ணினால், இம்மாதிரி காலேஜில் சேர வருகிறவர்களே குறைந்து போய்விடுவார்களோ என்று பயமாயிருக்கிறது!ஆனபடியால் இதை 'ஆப்ஷன'லாக வைக்கலாம். கட்டாயப் பாடமாக இல்லாததாலேயே 'இதில் என்னதான் இருக்கு?பார்ப்போமே!'என்று பலருக்கு ஆர்வம் ஏற்பட்டு இஷ்ட பாடமாக எடுத்துக் கொள்ளலாம்.

காளைப் பருவத்தில் ஆஹார சுத்தி இல்லாமல் கண்டபடிச் சாப்பிட்டு மாணவர்கள் மனஸ் விகாரப்படுவதைத் தடுப்பதாக, இந்தக் காலேஜ்களில் சாஸ்திர ஸம்ப்ரதாயப்படியான ஹாஸ்டல்களும் வைக்கலாம்.

ஆஹாரசுத்தி ஆத்ம சுத்திக்கே அஸ்திவாரம் மாதிரி. அது இப்போது ரொம்பவும் சீர்கெட்டுப் போயிருக்கிறது. கண்டதைத் தின்பதற்குக் கண்ட இடமெல்லாம் ஹோட்டல் மயமாயிருக்கிறது. முன்னே ஹோட்டல் என்பதே என்னவென்று நம் ஸமூஹத்துக்குத் தெரியாது. ஹோட்டல் வைத்துக் காசு வாங்கிக் கொண்டு அன்ன விக்ரயம செய்வது (உணவை விற்பது) நம் சாஸ்திரப்படி பாபமேயாகும். முன்னெல்லாம் ஊருக்கு ஊர் இதனால்தான் யாத்ரிகர்களுக்காக சத்திரம் என்று தர்மசாலை இருந்தது. அதிலே சாஸ்திரப்படியான ஆஹாரமே, நாள் கிழமைகளிலும் வ்ரத உபவாஸ தினங்களிலும் எப்படிப் போடணுமோ அப்படியே போட்டு வந்தார்கள். யாத்ரிகர்கள் இம்மாதிரி போஜனம் பண்ணுவதில் அவர்களுக்கு "ஏற்பது இகழ்ச்சி"என்பது இல்லாமலே, சத்திரம் நடத்துகிறவர்களுக்கு மட்டும் ஈகையின் புண்யம் கிடைத்து வந்தது!

மற்றவர்களை விடவும், வித்யாப்யாஸம் செய்கிற இளம் பருவத்திலிப்பவர்களை வயோ சேஷ்டையால் புத்தி விகாரப்படாமல் ரக்ஷிக்க வேண்டியது ரொம்பவும் அவசியமானதால் அவர்களுக்காக சாஸ்த்ரீயமான ஹாஸ்டல்கள் வைத்து சுத்தமான ஆஹாரம் போடுவதை முக்யமாகக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையின் கடைசி ஸ்திதியில் இருக்கும் பென்ஷனர்களான நீங்களே யோசித்துப் பாருங்கள். எத்தனையோ ஆயிரம் வருஷமாக நம் பெரியோர்கள் ரக்ஷித்துக்கொடுத்த ஆசார, ஆஹார சுத்திகள் இன்னவென்றே தெரியாமல் இளந்ததலைமுறையினரால் தாரை வார்க்கப்பட விடலாமா?விடக்கூடாது என்றால், யாரைக் கொண்டு இதைப் பண்ணுவது?ராஜாதான் முன்காலங்களில் தர்ம ரக்ஷணத்தை கவனித்துக் கொண்டது. ஆனால் இப்போதுள்ள ஸர்க்காரைக் கொண்டு ஆசார அபிவிருத்திக்கு 'ரூல்'போடப் பண்ண நினைப்பதே பரிஹாஸம் அல்லவா?நேராக இந்த ஆசாரங்களைத் தாங்களே நாசம் பண்ணுவதோ அல்லது பிறர் நாசம் பண்ணும் போதாவது 'ஆஹா'என்று வேடிக்கை பார்த்துக் கொண்டு இருப்பதோதான் நம் தேசத்தில் 'முற்போக்குக்காரர்'களின் கொள்கையாக இருக்கிறது. அவர்களை மீறி நம்முடைய 'ஸெக்யூலர்'ராஜாங்கமும் போகாது. ஆகையால் நம்முடைய புராதன தர்மங்களைக் காப்பாற்ற நாமேதான் ஆனதைச் செய்ய வேண்டும் எனவே உங்களில் கற்றறிந்து, அநேக இடங்களில் நல்ல பதவிகள் வகித்து ஓரளவு செல்வமும் செல்வாக்கும் பெற்று தற்போது நிறைய ஸாவகாசம் பெற்றுள்ள பென்ஷர்களான பெரியோர்களே இந்த விஷயத்தில் தங்களாலியன்ற பொறுப்பை எடுத்துக்கொள்ள வேண்டும்.



## பள்ளிப்படிப்போடு பண்டைய சாஸ்த்ரங்கள்

இலவசமாக வேத சாஸ்த்ரம் கற்றுக் கொடுக்கிறோம் என்று ஆரம்பித்தால்கூட அதற்குரெஸ்பான்ஸ் (வரவேற்பு) இல்லை. வேத சாஸ்த்ரம் மட்டுமில்லை திருக்குறள்,

தேவார-திவ்ய ப்ரபந்தம், அல்லது நம் தேசத்தில் நீண்டகாலமாக இருந்து இப்போது நசித்துவரும் ஸித்தர் சாஸ்த்ரம் முதலானவற்றில்கூட இலவச வகுப்பு நடத்தச் சில பெரியோர்கள் எடுத்த நல்ல முயற்சிகள் பலன் தரவில்லை. இந்தப் படிப்பிலே போனால், உத்யோகத்துக்கு உதவி செய்கிற ஸ்கூல் படிப்புக்கு பாதகமாகிறது என்று ஜனங்கள் இவற்றை ஆதரிக்காமலே விட்டுவிடுகிறார்கள். அதனால் எனக்கு என்ன தோன்றுகிறது என்றால் ஸ்கூல் பாடத்தை விடாமல், அதோடேயே வேதாப்யாஸத்துக்கு உரியவர்களுக்கு வேதத்தையும், மற்றவர்களுக்கு இதர புராதன சாஸ்த்ரங்கள், கலைகள் இவற்றையும் சேர்த்துக் கற்றுக் கொடுப்பதற்காக ப்ரைவேட் ஸ்கூல்கள் ஆரம்பிக்கலாம். தினமும் அரை மணி, ஒரு மணி ஸ்கூல் டயத்தை நீட்டி, லீவ் நாட்களையும் கொஞ்சம் குறைத்தக் கொண்டால் இந்த மாதிரி ரெகுலர் ஸிலபஸோடு கூடவே சாஸ்த்ரங்கள், தேசியக் கலைகள் இவற்றையும் சொல்லிக் கொடுக்க முடியும். இப்படிப் பசங்களைத் தயார் பண்ணிக் கால விரயமில்லாமலே 'மெட்ரிக்'பரீக்ஷைக்கு அனுப்புவதாக ஏற்பாடு செய்தால் அநேகப் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இப்படிப்பட்ட ஸ்கூல்களில் சேர்க்க முன் வருவார்கள்.

பென்ஷனர்கள் மாத்திரந்தான் இதைச் செய்ய வேண்டுமென்பதில்லை. எல்லாரும் சேர்ந்து செய்யலாம். மனப்பூர்வமாக ஈடுபட்டு, "பிற்பாடு டிக்ரி, டிப்ளமோவுக்கு ஹானியில்லாமலே, நம்முடைய புராதன சாஸ்த்ரங்கள், பக்தி நூல்கள், நீதி நூல்கள், கலைகள் ஆகியவை அழிந்து போகாமல் சொல்லிக் கொடுக்கிறோம்"என்று பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொன்னால், அவர்கள் நிச்சயம் தங்கள் பிள்ளைகளை இப்பள்ளிக்கூடங்களில் சேர்ப்பார்கள். நம்முடைய தொன்று தொட்ட மஹத்தான நாகரிகத்துக்கு வாரிசாக வருங்காலப் பிரஜைகளை உருவாக்குகிற பேருபகாரம் இது.

இந்த நாகரிகத்துக்கு அடிவேரில் ஜலம் விடுகிற மாதிரியான தர்மம் எதுவென்றால் வேதம் படிக்க விருப்பமுள்ளவர்களுக்கும், கற்றுக்கொடுக்க முன் வருகிறவர்களுக்கும் கஷ்டமில்லாமல் ஜீவனம் நடத்துவதற்கான ஸௌகர்யங்களைப் பண்ணித் தருவதாகும்.

எவரும் தன்னாலான எந்த தர்மத்தையும் செய்ய வேண்டும் என்பது பொது விதியானாலும், குறிப்பாக வித்யாதானம் ப்ராம்மணருக்கும், கோஸம்ரக்ஷணை வைச்யர்களுக்கும் அவசியக் கடமையே ஆகிறது.

வித்யாதானம் என்கிறபோது, நம்முடைய தேச வாழ்வுக்கு உயிர்நிலையாக உள்ள வேத வித்யைக்கும், நம்முடைய மதத்துக்கு முக்ய பாஷையாக இருக்கிற ஸம்ஸ்கிருதப் படிப்புக்கும் முதல் இடம் கொடுத்து உதவி புரிய வேண்டும். எனக்கு ஒன்று தோன்றுகிறது. கன்யாதானத்தையும், வித்யாதானத்தையும் விசேஷமாகச் சொல்கிறார்கள் அல்லவா?கன்யாதான விஷயம் அப்புறம் சொல்கிறேன். இந்த இரண்டுக்காகவும் நம் மடத்தில் அபிமானமுள்ளவர்கள் இன்ஷூரன்ஸ் பாலிஸிகள் எடுத்துக் கொள்ள வேண்டும். இதற்காகக் 'கன்யாதான ட்ரஸ்ட்', 'வேத ரக்ஷண நிதி ட்ரஸ்ட்'என்று இரண்டு ட்ரஸ்ட் ஆரம்பிக்கிறோம். இவற்றின் ட்ரஸ்டிகளை நியமிக்க இந்த மடத்தின் ஸ்வாமிகளுக்கு அதிகாரமிருக்கும். மடத்துக்கு ட்ரஸ்டிகள் கணக்குக் காட்டுவார்கள். மற்றபடி ட்ரஸ்ட்கள் ஸ்வேயேச்சையாகவே நடக்கும். இந்த ட்ரஸ்ட்களை nominee-களாக (தொகை பெறுபவர்களாக)ப் போட்டு மடத்து பக்தர்கள் இன்ஷூரன்ஸ் பாலிஸிகள் எடுத்துக் கொள்ளலாம். முழுத் தொகையும் ட்ரஸ்டைச் சேரும்படியாகப் போட வேண்டும் என்பதில்லை. பாதித்தொகை இன்ஷூரன்ஸ் எடுத்துக் கொண்டவரின் குடும்பத்துக்குச் சேரும்படியாகவும், மீதிப் பாதி ட்ரஸ்டைச் சேரும்படியாகவும் பண்ணினால் போதும். குழந்தைகள் இருக்கிறவர்கள் தங்கள் பெண் குழந்தையின் பேரில் கன்யாதான பாலிஸியும் ஆண் குழந்தையின் பேரில் வேதவித்யாதான பாலிஸியும் எடுத்துக் கொள்ளலாம். ட்ரஸ்டின் மூலம் வேறு யாரோ ஒரு கன்யாக் குழந்தைக்குக் கல்யாணமும், வேறு யாரோ ஒரு பிள்ளைக்கு வேதஞானமும் ஏற்படுகிற புண்யம் பாலிஸி ஹோல்டர்களான குழந்தைகளைச் சேரும். இதனால் நிஜத்தில் ப்ரீமியம் கட்டுகிற தகப்பனார் தான் அந்தப் பெண்குழந்தையை ரிதுமதியாவதற்கு முன்பே கன்யா தானம் பண்ணிக் கொடுக்காத தோஷத்துக்கும், அந்தப் பிள்ளையை அத்யயனத்துக்கு விடாத தோஷத்துக்கும் கொஞ்சம் பரிஹாரம் செய்து கொண்டதாகவும் ஆகும். தங்கள் குழந்தைகளுக்கு சாஸ்திரோக்தமாகச் செய்ய வேண்டியதைச் செய்தவர்களுக்கும் இந்தக் கன்யா, வித்யா தானங்களைச் செய்தால் இரட்டிப்புப் புண்யம்!

*ஆவி பிரியும் காலத்தில்*

உ யிர் போனபிறகு உடம்புக்குப் பண்ண வேண்டிய கார்யத்தைச் சொன்னேன். உயிர் போகிற சமயத்தில் செய்யவேண்டிய பணி ஒன்றும் இருக்கிறது. இதைவிட ஒரு ஜீவனுக்குச் செய்யக்கூடிய பெரிய பரோபகாரம் எதுவுமில்லை. அது என்ன?

க்ருஷ்ண பரமாத்மா அர்ஜுனனிடம், "உடம்பு போனாலும் ஆத்மா சாகிறதில்லை. அதனால் ஒரு பெரிய தர்மத்தை உத்தேசித்து நீ யுத்தம் பண்ணவேண்டிய கடமை, ஸ்வதர்மம் இருக்கிறபோது, 'பந்துமித்ரர்களைக் கொல்லமாட்டேன்'என்று பின் வாங்குவது ஸரியில்லை"என்று உபதேசம் பண்ணினார். அந்த உபதேசந்தான் பகவத்கீதை. ஸரி, ஆத்மா செத்துப்போகவில்லை. உடம்பு போன பிறகு அது என்ன ஆகிறது?எல்லா உ.யிர்களும் உடனே பரமாத்மாவிடம் ஐக்கியமாகி விடுகிறதா?க்ருஷ்ண பரமாத்மா அப்படிச் சொல்லவில்லை. அந்த உயிர் அதன் கர்மத்தைப் பொறுத்து இன்னோர் உடம்பில் புனர்ஜன்மம் எடுக்கிறது என்றுதான் சொல்கிறார். 'மஹா புண்யசாலிகள் ஸ்வர்க்கத்துக்குப் போய்ப் புண்யப்பலனை அநுபவித்து விட்டு, அது தீர்ந்ததும் மறுபடியும் இந்த பூமியிலேயே மநுஷ்யர்களாகப் பிறக்கிறார்கள் (9.21);த்வேஷமும், க்ரூரமும் பிறப்பெடுக்குமாறு நானே தள்ளுகிறேன்'(16.19) என்றெல்லாம் சொல்கிறார். அப்படியானால் இந்த ஜனன மரண சக்கரத்திலிருந்து மீட்சியே இல்லையா?இருக்கிறது. அதையும் சொல்கிறார்.

பக்தி யோகத்தாலோ ஞான யோகத்தாலோ தன்னை உபாஸிப்பவர்களை மறுபடி இந்த லோகத்துக்குத் தள்ளாமல் பரமாத்மாவான தன்னிடமே அடக்கம் பண்ணிக்கொண்டு விடுவதாக பகவான் சொல்றிறார். பக்தன் ஞானியாகிவிட்டால் செத்துப்போன அப்புறம்தான் பரமாத்மாவிடம் ஐக்யமாகவேண்டும் என்றில்லை. அவன் இந்த லோகத்தில் இருக்கிற மாதிரி பிறத்தியாருக்குத் தோன்றும்போதே மோக்ஷத்தில்தான் இருந்து கொண்டிருப்பான். ஸகல துக்கங்களிலிருந்தும் விடுபட்ட ஸதானந்த நிலைதான் மோக்ஷம். இப்படி பக்தியோகம், ஞானயோகம் அப்யாஸம் பண்ணுவதற்கு பகவான் அத்யாயம் அத்யாயமாக வழி சொல்லிக் கொடுத்துக்கொண்டே போகிறார். ஆனால் இந்தமாதிரிப் பண்ணி ஜயித்து மீளுகிறவன் எங்கேயாவது கோடியில் ஒருத்தன்தான் இருப்பான். இதையும் அவரே சொல்கிறார். 'மநுஷ்யர்களில் ஆயிரத்தில் ஒருத்தன்தான் ஸித்திக்கு முயற்சியே பண்ணுவான். அதிலும் அபூர்வமாக எவனோதான் முயற்சியில் ஜயித்து என்னை வந்தடைகிறான்'என்கிறார் (7.3).

இப்படியானால் என்ன பண்ணுவது?எல்லாவற்றுக்கும் ஒரு குறுக்குவழி இருக்கிறதே, அந்தமாதிரி ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு short-cutஇல்லையா?

ஒன்றே ஒன்று இருக்கிற மாதிரி பகவானே சொல்லியிருக்கிறார் 'ஒருத்தன் செத்துப்போகிற ஸமயத்தில் எதை நினைத்துக்கொண்டு உடலை விடுகிறானோ, அதையே மறுஜன்மாவில் அடைகிறான். என்னையே ஸ்மரித்துக்கொண்டு எவன் சரீரத்தை விடுகிறானோ. அவன் என்னை அடைந்துவிடுகிறான்'என்று சொல்லி " நாஸ்தி அத்ர ஸம்சய :" - "இதில் ஸந்தேஹமே இல்லை"என்று 'காரன்டி'கொடுத்திருக்கிறார்!

'ரொம்ப ஸுலபமான வழியாக இருக்கே வாழ்க்கை முழுக்க எப்படிக் குட்டிச்சுவராக நடத்தினாலும் அந்திம ஸமயத்தில் மட்டும பகவானை நினைத்துக் கொண்டால் போதுமாமே!அதனாலேயே இந்த ஜனன-மரணச் சக்கரத்திலிருந்து தப்பித்துக்கொண்டு விடமுடியுமாமே!'என்று தோன்றுகிறது.

ஆனால் பகவான் இங்கே 'பொடி'வைத்துப் பேசுகிறார். 'கடைசிக் காலத்தில் என்னை நினைத்துக் கொண்டு'என்பதற்கு ' அந்தகாலே மாம் ஸ்மரன் ' என்று சொன்னால் போதும். ஆனால் பகவான் அப்படிச் சொல்லவில்லை. 'அந்த காலே ச மாம் ஏவ ஸ்மரன்'என்று ஒரு '

ச ' வும் ' ஏவ ' வும் போட்டு ஸம்ஸார நிவ்ருத்தி இத்தனை ஸுலபமில்லையப்பா என்று ஆக்கியிருக்கிறார்!இந்த ' ச ' வுக்கும் ' ஏவ ' வுக்கும் என்ன அர்த்தம்?'அந்த காலே ' ச ' என்றால் 'சாகிற ஸமயத்திலும்'என்று அர்த்தம். 'மாம் ' ஏவ ' என்றால் 'என்னை'என்று மட்டும் அர்த்தமில்லை;'என்னை மட்டுமே'என்று அர்த்தம்.

அவரை மட்டுமே அந்திமத்திலும் 'ஸ்டெடி'யாக ஸ்மரிக்க வேண்டும். அப்போதுதான் மோக்ஷம். நம் மனஸ் லகான் இல்லாத குதிரையாக ஓடுகிற ஓட்டம் நமக்குத் தெரியும். ஏதோ இந்த க்ஷணம் அது அப்படியே பரமாத்மாவிலேயே தோய்ந்து விட்டாற்போல இருக்கும். பார்த்தால் அடுத்த க்ஷணமே அது பிய்த்துக் கொண்டு ஏதாவது குப்பைத் தொட்டிக்குப் போயிருக்கும். நமக்கே ஆச்சர்யமாக, தாங்கமுடியாத வ்யஸனமாக இருக்கும் - 'அவ்வளவு நல்ல சாந்த நிலையில் இருந்தோமே;இது எப்படி அங்கேயிருந்து அறுத்துக்கொண்டு கிளம்பிற்று?என்று. இங்கிலீஷில் fraction of a secondஎன்கிறார்களே, அதுமாதிரி, ஒரு ஸெகண்டில் வீசம் பாகங்கூட இந்த மனஸ் ஒன்றில் நிலைத்து நிற்க மாட்டேன் என்கிறது. எனவே, 'மாம் ஏவ ஸ்மரன்'- பகவானை மாத்திரமே நினைப்பது - என்பது ரொம்பக் கஷ்டம்தான்.

சாகத்தான் போகிறோம் என்று முதலில் தெரியவேண்டும். அதற்கப்புறம் அதற்காக பயந்து நடுங்காமல், புத்தியை நன்றாகத் தெளிவு படுத்திக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட தெளிவோடு, இந்த க்ஷணம் உயிர் போகிறது என்றால்கூட அந்த ஒரு க்ஷணத்திலாவது ஐகாக்ரியத்தோடு (ஒரு முகமான சிந்தனையோடு) பகவானை மட்டுமே நினைக்க வேண்டும். அப்படி ஒரே க்ஷணத்தில் ப்ராணன் போய்விட்டால் நல்லது. பகவானை விட்டு ஸ்மரணை நகராதபோதே உயிரைவிட்டு, அவனிடமே போய்ச்சேரலாம். ஆனால் இப்படி யாரும் சாகக்காணோமே!குண்டு போட்டுச் சுட்டால்கூட ஒரு ஐந்து பத்து நிமிஷத்துக்கு அப்புறம்தானே உயிர் போகிறது அத்தனை நாழி -அந்த ஐந்து, பத்து நிமிஷமும் ப்ராண ப்ரயாணத்தின் மஹா அவஸ்தைகளை மறந்து பகவானை ஸ்டெடியாக நினைத்துக்கொண்டு அப்படியே ப்ராணனை அதன் மூலத்தில் கரைக்கிறது ஸாத்யமா?'எலக்ட்ரிக் ஷாக்'மாதிரி அடித்து உடனே சாவு instantaneous வருகிறது என்றால், அந்த 'இன்ஸ்டன்ட்'டில் பகவான் நினைவு வந்துவிட்டால் போதும். ஆனால் வரவேண்டுமே!வராவிட்டால்?பயம் வரக்கூடாதே!அல்லது, அப்படியே உணர்ச்சி மரத்துப்போய் ப்ரக்ஞையில்லாமலும் சாகக்கூடாதே!

உடனே ப்ராணண் போகாமல் எந்த க்ஷணமும் போகலாம் என்று' து பாட்டுக்கு இழுத்துப் பறித்துக் கொண்டிருந்தால், அத்தனை நாழியும் (அது நாள் கணக்கில் கூட இருக்கலாம்) பகவானையே நினைத்தாக வேண்டும்;அல்லது நினைக்கிறதற்குக்கூட அவகாசம் தராத விதத்தில் மஹா பீதியையே துளியூண்டு நாழிகைக்குள் தருகிற விதத்தில் - எலெக்ட்ரிக் ஷாக் மாதிரி அடித்துச் சாவதானாலும், அந்த fraction of a second-லும் பகவத் ஸ்மரணை பூர்ணமாக ரொம்பிக்கொண்டு வந்து நிற்க வேண்டும்.

இது தானாக, அந்த ப்ராணாவஸ்தை ஸமயத்தில் கைகூடுகிற விஷயமா?இல்லை. அதனாலேதான் 'அந்த காலே ச'என்று ஒரு 'ச'போட்டார். இதைப்பற்றி மேலேயும் சொல்கிறார்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆயுள் முழுவதும் செய்வதே அந்திமத்தில் வரும்*

வாழ்நாள் பூராவும் ஏதாவது ஒன்றில் நம் மனஸ் அழுத்தமாக ஆழமாக ஈடுபட்டிரு ந்தால்தான் அந்த விஷயமே ப்ராணன் போகிற ஸமயத்திலும் கிளம்பி வந்து நம் மனஸ் முழுவதையும் ரொப்பி வியாபித்துக் கொள்ளும். நாம் அதை நினைக்கிறோம் என்பதில்லை. அதுவே முட்டிக்கொண்டு வந்து தன்னை நினைக்கும்படியாகப் பண்ணும்.

இப்போது ஸைகாலஜியில் சொல்கிறார்கள், நமக்கே தெரியாமல் நாம் எப்பொழுதோ ஆழமாக, அழுத்தமாக நினைத்த விஷயங்கள்தான் தாமாக மனஸின் மேல்மட்டத்துக்கு எழும்பி வருகிறது என்கிறார்கள். குறிப்பாக வெளி வியாபாரமில்லாமல் தூங்குகிறபோது இம்மாதிரி பழைய ஸ்டாக் கிளம்பி வந்து ஸ்வப்னமாகிறது என்கிறார்கள். தூக்கந்தான் என்றில்லை. கார்யமில்லாமல் இருக்கிற போதுகளிலெல்லாம், ஒரு த்யானம் என்று உட்கார்ந் தால்கூட, ஜலத்துக்கடியே கையினால் அழுத்தி வைக்கிற கார்க், கையை எடுத்தவுடன் மேலே கிர்ரென்று வருகிறமாதிரி, உள் நினைப்புகள் மேலே வந்து நம்மைப் பிடித்துக் கொள்கின்றன. சாஸ்த்ரங்களிலும் பூர்வ வாஸனை என்று இதுகளைச் சொல்லி, இவற்றை அடியோடு இல்லாமல் வாஸனாக்ஷயம் பண்ணிக் கொண்டால்தான் மனஸ் பரமதெளிவாகத் தெளிந்து நின்று அதில் ஆத்ம ஜ்யோதிஸ் பளீரென்று அடிக்கும் என்று சொல்லியிருக்கிறது. ஆனால் நாம் "போ, போ"என்று பிடித்துத் தள்ளினாலும் அது போகுமா?போகாது. அதைப் போகப் பண்ணுவதற்கு வழி நம்மால் எவ்வளவு முடியுமோ அத்தனை பாடும் பட்டு ஸத்விஷயங்களை, ஸத்துக்களிலெல்லாம் பரம ஸத்தான - 'ஏகம் ஸத்'தான - பரமாத்மாவை நினைத்துக் கொண்டேயிருப்பதுதான். இந்த நல்ல வாஸனையை 'வா, வா'என்று-சொல்லிக் கொண்டேயிருந்து வரவழைத்து மனஸுக்குள் உட்கார்த்தி வைத்துக்கொண்டால்தான், கெட்ட வாஸனைகள் தங்களுக்கு இடமில்லை என்று ஓடிப்போகும். அமேத்யத்தை எவ்வளவு தேய்த்து அலம்பி விட்டாலும் நாற்றம் போகமாட்டேன் என்கிறது. ஒரு ஊதுவர்த்தியை ஏற்றிவைத்து விட்டால் அது இருந்து இடம் தெரியாமல் போகிறது.

கடைசியில் நல்ல வாஸனைகளும் போக வேண்டும் மனஸே போக வேண்டும். அதெல்லாம் ரொம்பப் பின்னாடி வருகிற நிலை.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

## *பகவத் ஸ்மரணம்*

இப்போதும், எப்போதும் - இதுவரை செய்யாவிட்டாலும் இப்போதிருந்தாவது - நாம் செய்ய வேண்டியது பகவத் ஸ்மரணையை அழுத்தமாக, ஆழமாக ஏற்படுத்திக் கொள்வதுதான். அப்படி வாழ்நாள் பூரா, வெளியில் எத்தனை கார்யம் செய்து கொண்டிருந்தாலும், உள்ளூர ஓர் இழை பரமாத்மாவிடமே சித்தம் ஒட்டிக் கொண்டிருந்தால்தான் அந்திம காலத்தில் கன்னாபின்னா நினைப்புகள் வராமல் அவன் நினைவு மட்டும் - மாம் ஏவ என்ற மாதிரி அது மாத்திரமே - இருந்து கொண்டிருக்கும். இழுத்துப் பறித்துக்கொண்டு கிடந்தாலும் அத்தனை இழுபறியிலும் விடாமல் பகவத் ஸ்மரணமே இருக்கும். அல்லது அநாயாஸ மரணமாக இயற்கையாக ஸம்பவிக்கும்போதும் அவனையே நினைக்கத் தோன்றி அந்த ஒரு சில க்ஷணங்களானாலும் அதிலேயே ஜகாக்ரியத்தோடு முழுகிவிட முடியும். அல்லது திடீரென்று ஒரு புலி வந்து அடித்துப் போட்டாலோ, அல்லது கரென்ட் ஷாக் அடித்தாலோ அப்போதுகூட பயமோ, அதிர்ச்சியோ இல்லாமல், ப்ரக்ஞை போய்விடாமல், 'டாண்'என்று பகவத் ஸ்மரணம் வந்து நிற்கும்.

' ப்ராண ப்ரயாண ஸமயே கபாவத பித்தை : - உயிரின் நெடும் ப்ரயாண ஸமயத்தில் கபாவத பித்தங்கள் கட்டியிழுக்கிறபோது உன்னை எப்படி நினைப்பேனோ?1 என்று குலசேகரர் மாதிரிப் பெரியவர்களே பயப்படுகிறார்கள். பகவத் பாதாளும் இந்த 'ப்ராண ப்ரயாண'பதப்பிரயோகம் பண்ணியிருக்கிறார்.

ப்ராண ப்ரயாண பவபீதி ஸமாகுலஸ்ய

லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்2

உயிர் கிளம்புகிற ஸமயத்தில் ஏற்படுகிற பயத்தைப் போக்க, ஸகல பயத்தையும் நிவ்ருத்தி பண்ணும் லக்ஷ்மிநரஸிம்ம மூர்த்திதான் கைப்பிடிப்பாக (கர அவலம்பம்) வந்து ரக்ஷிக்க வேண்டும் என்கிறார். இதேமாதிரி ஸுப்ரஹ்மண்ய புஜங்கத்திலும், ' ப்ரயாணோன்முகே மயி அநாதே ' - 'அநாதையான நான் நெடும் பயணம் கிளம்பும்போது, அப்பா

குஹனே!தயாளுவே!நீ முன்னே வந்து நிற்கவேண்டும் என்கிறார். இதையே அச்சடித்த மாதிரி 'திருப்புகழி'லும் சொல்லியிருக்கிறது. அது மஹான்கள் எப்போதும் பகவத் ஸ்மரணம் அல்லது ஆத்மாநுஸந்தானத்தில் இருந்தவர்கள். அதனால் நிஜமாக அவர்களுக்கு இந்த பயம் இல்லை. நம்மை உத்தேசித்து, நமக்குப் பிரார்த்திக்கக் கற்றுக்கொடுக்கத்தான் இப்படியெல்லாம் பாடி வைத்திருக்கிறார்கள்.

பெரியாழ்வார் இன்னும் கொஞ்சம் ஸ்வாதீனமாகக்கூட பகவானிடம் சொல்கிறார்: " அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் " . " சாகிற ஸமயத்தில் உன்னை நான் நினைக்காமலும் போகலாம். அதற்காக நீ என்னை விட்டுவிடாதே. இப்போது உன்னை என்னால் நினைக்க முடிகிறது. அதனால் இப்போது செய்கிற இந்த 'ஸ்மரணை'யையே அப்போதைக்கென்று 'ரிஸர்வ்'பண்ணினதாக வைத்துக்கொள்"என்கிறார்!

ஆனால் கீதா வாக்யத்தைப் பார்த்தால், இப்படி என்றைக்கோ செய்த ஸ்மரணத்தை பகவான் 'ரிஸர்வேஷ'னாக நினைக்கவில்லை;கடைசிக் காலத்தில் நினைக்கத்தான் சொல்லுகிறார். 'ச'போட்டு 'கடைசிக் காலத்திலும்'என்கிறார். அதாவது வாணாள் பூராவும் என்னை நினைத்துக் கடைசியிலும் நினை என்று இந்த ஸ்லோகத்தில் சொல்லாமல் சொல்கிறார். மேலே இரண்டு ஸ்லோகம் தள்ளி, ஸ்பஷ்டமாகவே சொல்கிறார்.

" தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர "

ஆனபடியால் என்னை ஸர்வகாலங்களிலும், எப்போதும் நினைத்துக்கொண்டே இரு என்கிறார். இப்படி எப்போதும் நினைத்தால்தான் முடிவில் அந்த நினைவு வரும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*அந்திம நினைப்பின் முக்யத்துவம்*

ஆனாலும் அந்திமத்தில் நினைப்பதற்கு ஏன் இந்த முக்யத்வம்?இப்படி அந்திமத்தில் பகவானை ஸ்மரிப்பதற்கும் நான் இங்கே எடுத்துக்கொண்ட பரோபகாரம் என்ற விஷயத்துக்கும் என்ன ஸம்பந்தம்?

'மரணம் என்பது ஆத்மாவைக் கொஞ்சங்கூட பாதிப்பதில்லை. உடம்புக்குத்தான் சாவு உண்டு, ஆத்மாவுக்குக் கிடையாது. ஒரு சட்டை கிழிந்தால் அதோடு சட்டைப் போட்டுக் கொள்கிறவனும் அழிந்து போய்விடுகிறானா என்ன?இல்லை. ஒரு சட்டை போனால் அவன் இன்னொரு சட்டையை எடுத்துப்போட்டுக் கொள்கிறமாதிரி ஒரு சரீரம் அழிந்து போனாலும், ஆத்மா அழியாமல் இன்னொரு சரீரச் சட்டைக்குள் புகுந்து கொள்கிறது'என்று பகவான் கீதையில் (2.22) சொல்லியிருக்கிறார். 'இப்படி எத்தனை சட்டைகள் கிழிந்து கிழிந்து, இன்னொன்று, அதற்கப்புறம் இன்னும் ஒன்று என்று இந்த ஆத்மா புகுந்து புகுந்து அல்லாடிக்கொண்டிருக்க வேண்டும்?இதற்கு ஒரு முடிவு கிடையாதா?'என்று கேட்டால், 'ஞானியாகிவிட்டால் ப்ரம்ம நிர்வாணம் அடைந்து விடலாம். என்னிடமே பக்திபண்ணிக் கொண்டிருந்தால் என்னை நினைத்துக் கொண்டே உயிரை விட்டால்கூடப் போதும். அப்புறம் இன்னொரு சட்டை போட்டுக்கொள்ள வேண்டாம்'என்கிறார்.

'சாவு ஒன்றும் பெரிய விஷயமில்லை;சட்டை கிழிகிற மாதிரிதான்'என்றுசொல்லிவிட்டு, 'சாகிற ஸமயத்தில் என்னை நினைத்தால் என்னிடமே வந்து அடுத்த ஜன்மா இல்லாமல் ஆக்கிக் கொள்ளலாம்'என்று சொன்னால், சாவு ஒரு பெரிய விஷயம் மாதிரிதானே இருக்கிறது?அந்த ஸமயத்தில் நினைப்பதற்கு என்ன இத்தனை முக்யத்வம்!

ஆத்மா என்ற மாறாத ஸத்யத்தின் நிலையிலிருந்து பார்க்கிறபோது சரீரமும் சாவும் துச்சம்தான்;அவை ஒன்றுமே இல்லை. ஆனால் நாம் மாறாத ஆத்மா என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்களாகத்தானே இருக்கிறோம்?நமக்குத் தெரிந்தது மாறிக்கொண்டே இருக்கிற இந்த மனஸும், மாறிக்கொண்டே இருக்கிற இந்த ப்ரபஞ்சமும்தானே?சாவு உண்டாகி அடுத்த ஜன்மா ஏற்படுகிறபோது இந்த ஜன்மாவிலே இந்த ப்ரபஞ்சத்திலே நமக்கு இருந்த

தொடர்புகளெல்லாம் துண்டித்துப்போய், வேறு புதுத் தொடர்புகள் உண்டாகின்றன. இதே இடத்தில் இதே குடும்பத்தில் நாம் மறுபடியும் பிறந்தால்கூட நமக்கு அது தெரியப்போவதில்லை. ஆனால் இப்படி இங்கேயேதான் பிறப்போம் என்று சொல்ல முடியாது. வேறே சூழ்நிலையில், வேறு தினுஸான மதத்தில், நாகரிகத்தில், ஸம்ப்ரதாயத்தில் போய்ப் பிறந்தாலும் பிறப்போம்.

ஆத்மா மாறாதது என்றாலும் நமக்கு அது தெரியாத விஷயம். மனஸின் ஆட்டங்கள்தான் நமக்குத் தெரிந்ததெல்லாம். அந்த மனஸின் வளர்ச்சி - அது நல்ல வளர்ச்சியாக இருந்தாலும் ஸரி, கெட்ட வளர்ச்சியாக இருந்தாலும் ஸரி - பெரிய அளவுக்கு சூழ்நிலையினால் உருவாக்கப்படுகிறது. இந்த ஆயுஸ் பூராவும் நாம் ஒருமாதிரி சூழ்நிலையில் பழகி வளர்ந்து விட்டோம். குறிப்பிட்ட ஸம்பந்தங்களை ஏற்படுத்திக்கொண்டு விட்டோம். குறிப்பிட்ட ஸம்ப்ரதாயங்களை அநுஸரித்து அவற்றில் ஒட்டிக் கொண்டு விட்டோம். இதெல்லாம் சாவோடு கத்தரித்துப் போகிறது என்பதைப் பார்க்கிறபோது, (சாவு ஆத்மாவைக் கொஞ்சம்கூட பாதிப்பதில்லை என்றாலும்) ஆத்மாவாக இருக்கத் தெரியாத நம்மை ரொம்பவும் பாதிக்கத்கதானே செய்கிறது?'அடுத்த ஜன்மாவில் எந்த மாதிரிப்பிறவி ஏற்படுமோ?எந்த மாதிரிச் சூழ்நிலையில் பிறப்போமோ?'என்று பெரிய கேள்வியாகத்தானே இருக்கிறது? ' இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ?'என்று பெரிய பெரிய மஹான்களே பயப்பட்டிருக்கிறார்களே!

இதனால் பகவான் ஒரு ஜீவனுடைய தொடர்புகள் அடியோடு மாற இருக்கிற அந்த மரண ஸமயத்தில் "ஐயோ, பாவம்!இந்த ஜீவன் மறுபடியும் ஜன்மா இல்லாமல் பண்ணிக்கொள்ள ாமலேயே உயிரை விடுகிறது. இப்பொழுது முழுக்க வேறு தினுஸான சூழ்நிலையில் பிறந்து, 'அடியைப் பிடிடா பாரதபட்டா'என்று ஆத்மாபிவிருத்திக்கான கார்யத்தை இது ஆரம்பித்தாக வேண்டும். இந்த ஜன்மாவின் கர்மாதான் அடுத்த ஜன்மாவிலும் துரத்திக்கொண்டு வரும் என்பது வாஸ்தவமானாலும், அடுத்த ஜன்மாவில் சூழ்நிலை வேறுதானே?அதிலே இது பழைய கர்மாவைக் கழித்துக்கொண்டு மேலே போகுமா அல்லது இன்னும் கெட்ட கர்மாவைப்பண்ணி வீணாகுமோ?'என்று பரம கருணையோடு நினைப்பான போலிருக்கிறது. இப்படி பகவானே இரக்கப்பட்டுத்தான் ரொம்பவும் பெரிய மனஸோடு, "ஸரி, இந்தச் சாகிற ஸமயத்தில் இது நம்மை நினைத்துவிடட்டும். அது போதும். இதற்கு மறுபடியும் ஜன்மா இல்லாமல் நாமே எடுத்துக்கொண்டு விடலாம்"என்று பெரிய 'கன்ஸெஷன்'தந்திருக்கிறான் என்று தோன்றுகிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*தெய்வ நினைப்புடன் தூக்கம்*

வாழ்நாள் முழுக்க எதன் நினைப்பு ஒருத்தன் மனஸில் ஜாஸ்தியாக இருக்கிறதோ, அதைப்பற்றிய சிந்தனைதான் அந்திமத்தில் வரும். இப்படி நமக்குக் கடைசியில் பகவத் ஸ்மரணம் வருமா என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு ஒரு பரீக்ஷை வைத்துக் கொள்ளலாம் அதாவது:

அன்றைக்கும் நாம் தூங்குகிறோம் அல்லவா?இதையும் ஒரு சாவு மாதிரி என்றுதான் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. தூங்குகிறபோது கட்டைபோல ஒன்றும் தெரியாமல், ஞானமே இல்லாமல்தானே கிடக்கிறோம்?இதனால்தான் இப்படிச் சொல்லியிருக்கிறது. 'நித்யப் பிரளயம்'என்று தூக்கத்தைச் சொல்வார்கள். இப்படி தினமும் நாம் 'சாகிற'போது பகவானையே ஸ்மரித்துக்கொண்டு 'சாக'முடிகிறதா என்று அப்யாஸம் பண்ணிப் பார்க்கலாம். தூங்குகிறதற்கு முன்னால் நம் இஷ்ட தேவதையையே ஸ்மரித்துப் பார்க்க வேண்டும். அந்த நினைப்போடேயே தூக்கத்தில் ஆழ்ந்துவிட வேண்டும். வேறே நினைப்பு வரக்கூடாது. சொல்லும்போது ஸுலபமாக இருக்கும். ஆனால் பண்ணிப் பார்த்தால் எத்தனை கஷ்டம் என்று தெரியும். காமாக்ஷியோ, நடராஜாவோ, தக்ஷிணாமூர்த்தியோ, வேங்கடரமண ஸ்வாமியோ, முருகனோ - எந்தத் தெய்வமாக வேண்டுமானாலும் இருக்கலாம். அந்த இஷ்ட

தெய்வத்தையே அல்லது தெய்வத்துக்கு ஸமானமாக நமக்கு சாந்தியும் ஸந்துஷ்டியும் தருகிற ஒரு குரு, அல்லது மஹானையோ வேறே நினைப்பு வராமல் ஸ்மரிப்பதென்றால், 'இதிலே என்ன கஷ்டம் இருக்கிறது?மனஸுக்கு ரம்யமாகவும் ஆறுதலாகவும் இருக்கப்பட்ட இந்த ரூபங்களை நினைப்பதில் என்ன ச்ரமம்?'என்றுதான் தோன்றும். ஆனால் எதனாலோ, சிறிது நேரமானால் இத்தனை நல்ல, திவ்யமான ஸ்மரணையை விட்டுவிட்டு மனஸ் வேறேங்கேயாவதுதான் போய் விழும்;அப்படியே கண்ணை அசக்கித் தூக்கத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். இப்படி ஏமாறாமல் பழக்கிக் கொண்டால் சாகிற ஸமயத்திலும் பகவானை விடமால் நினைக்க முடியும் என்ற நிச்சயத்தைப் பெறலாம். எல்லாம் அப்யாஸத்தில், விடாமுயற்சில்தான் இருக்கிறது. நம்முடைய ச்ரத்தையைப் பொறுத்து பரமாத்மாவே கை கொடுப்பார்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*மோக்ஷத்துக்குக் குறுக்கு வழி*

ஆக வாழ்நாள் பூராவும் எதிலே ரொம்பவும் ஈடுபாடு இருக்கிறதோ, அதுதான் அந்திமத்திலும் ஒருத்தனை இழுக்கும். வாழ்நாள் முழுவதும் பகவத் சிந்தனையோடு இருந்தால்தான் கடைசியிலும் அது ஸித்திக்கும். ஸரி, அது தானாகவே ஸித்தித்துவிட்டுப் போகிறது. ஒருவன் ஜீவியகாலம் முழுவதும் ஈஸ்வர பக்தி பண்ணிக்கொண்டேயிருந்தால், கடைசியில் இவன் படுக்கையில் விழும்போதும் தானே, 'ஆடோமாடிக்'-ஆக அதே ஸ்மரணந்தான் இருக்கப்போகிறது. ஆனதால் "ஸர்வகாலத்திலும் என்னை நினை"என்று சொன்ன க்ருஷ்ண பரமாத்மா "அந்திமத்திலும் என்னை நினை"என்று ஒன்றைச் சேர்த்திருக்க வேண்டாமே?ஸர்வகால ஸ்மரணை தானாக அந்திமத்திலும் வந்துவிட்டுப் போகிறது!

இங்கேதான் மோக்ஷத்துக்குக் கொஞ்சம் குறுக்கு வழி (short-cut) சொன்னமாதிரி இருக்கிறது. 'ஒருத்தன் அந்திமத்தில் எதை எதை நினைத்துக்கொண்டு உடம்பை விட்டாலும் அதையே போய் அடைகிறான்'என்று கீதையில் ஸ்பஷ்டமாகச் சொல்கிறார்.

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்யந்தே களேவரம்

தம் தம் ஏவைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித :

இப்படிச் சொல்கிறபோது, வாழ்நாள் முழுக்க நினைக்காத ஒன்றை ஒருத்தன் அந்திமத்தில் நினைத்துவிட்டாலும் ஸரி, அந்திமத்தில் நினைத்த அதையே மரணத்துக்குப்பின் அடைந்து விடுவான் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ள இடம் இருக்கிறது.

வாழ்நாள் முழுதும் நினைப்பதுதான் அந்திமத்தில் நினைவுவரும் என்பது பொதுவாக வாஸ்தவம். ஆனால் இப்படியில்லாமல், அஸாதாரணமாக, வாழ்நாள் பூரா நினைக்காத ஒன்று ப்ரணன் போகிறபோது நினைப்புக்கு வந்துவிட்டால்?இப்படியானாலும் அந்தக் கடைசி நேரத்தில் எதை நினைத்தானோ அதை இவனுக்கு ஸ்வாமி கொடுத்துவிடுகிறார். 'இதற்கு முன்னாடி நீ அதை நினைக்கவில்லையே!'என்று இவனைக் கேட்பதில்லை. கீதா வாக்யத்திலிருந்து இப்படித்தான் அர்த்தமாகிறது.

வாழ்க்கையில் அவ்வளவாக பக்தி பண்ணாவிட்டாலும் கூட, சாகிற ஸமயத்திலே ஈஸ்வர ஸ்மரணத்தோடு மூச்சை விட்டால்போதும்;அவனை அடைந்துவிடலாம் என்று கீதை சொல்வதாக ஏற்படுகிறது. இது ரொம்ப 'ஷார்ட்-கட்'தானே?

ஆனால் வாழ்நாள் முழுக்க நினைத்ததுதானே அந்திமத்தில் வரும்?அதெப்படி வேறு ஒரு நினைப்பு அப்போது வரும்?இது எப்படி 'ஷார்ட்-கட்'?சும்மாவுக்காக 'ஷார்ட்-கட்'மாதிரி பகவான் ஏமாற்றுகிறாரா?

## உயிர்பிரிகிறவனுக்கு உயர் உதவி

இங்கேதான் சாகிற ஸ்திதியில் இருக்கிற ஒரு ஜீவனுக்கு மற்றவர்கள் பண்ணுகிற பெரிய பரோபகாரம் வருகிறது;அந்த ஜீவனைப் பரமாத்மாவிடம் அனுப்பி வைக்கிற பரம உத்க்ருஷ்டமான பரோபகாரம்!

இயற்கையாக ஒருத்தனுக்கு அந்திமத்தில் ஏதாவது கன்னாபின்னா நினைப்புகளே வரலாம். ரொம்பப் பேருக்கு அப்படித்தான் வருகிறது-அல்லது ஸ்மரணையே தப்பிப் போய்விடலாம். ஆனால் இந்த மாதிரி சமயத்தில் பக்கத்தில் இருக்கிறவர்கள் பகவந்நாமாவையே கோஷித்துக் கொண்டிருந்தால் அது அவனை மற்ற நினைப்பிலிருந்து இழுத்துக்கொண்டே இருக்கும். ஸ்மரணை ஏதோ லவலேசம் ஒட்டிகொண்டிருந்தால்கூட, அந்த உள் பிரக்ஞையில் ஒருவேளை ஈஸ்வர நாமா சுரீல் என்று ஒரு தைப்பு தைத்தாலும் தைக்கும். அவனுக்குத் தானாக பகவான் நினைவு வராமல், வாழ்நாள் முழுதும் நினைத்த விஷயங்கள்தான் அந்திமத்திலும் நினைவுக்கு வந்தாலும், மற்றவர்கள் இப்படி நாமோச்சாரணம் பண்ணினால் அதனாலேயே அவனுக்கு மற்ற நினைவுகள் அமுங்கி பகவானின் நினைப்பு ஏற்படும்படிப் பண்ணலாம்.

நாம் எங்கேயோ ஒரு பீச்சுக்குப் போகிறோம்;அல்லது ஸினிமாவுக்குப் போகிறோம். கண்டதை நினைத்துக்கொண்டு அரட்டை அடித்துக்கொண்டுதான் போகிறோம். ஆனால் போகிற வழியில் ஏதாவது ஒரு ஸத்ஸங்கத்திலிருந்து "ஹர ஹர மஹாதேவா", "ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே"என்கிற மாதிரி ஒரு கோஷம் வந்தால் சட்டென்று நம்முடைய கன்னாபின்னா நினைப்புப்போய், பகவந்நாமா க்ஷணகாலம் மனஸுக்குள் போய் நம்மைக் கொஞ்சம் உருக்கிவிடுகிறது. நாமாவுக்கு அப்படி ஒரு சக்தி இருக்கிறது. ஆனதால் வாழ்க்கைப் போராட்டத்தின் முடிவிலே ஒரு ஜீவாத்மா உயிருக்காகப் போராடிக் கொண்டு மனஸ் நாலா திசையிலும் அலைபாய்கிறபோது, அல்லது ஸ்மரணை தப்பிக் கொண்டிருக்கிறபோது பக்கத்திலே இருக்கிறவர்கள் பகவந்நாமாவை கோஷித்துக்கொண்டிருந்தால் அது அந்த ஜீவாத்மாவை அதன்மூலமான பரமாத்மாவிடம் இழுப்பதற்கு ரொம்பவும் சக்திகரமான (effective) வழியாக இருக்கும். ஒருத்தன் எத்தனை துன்மார்க்கத்தில் போனவனாயிருந்தாலும், அந்தக் கடைசி நாழியில் இந்த ஸம்ஸாரத்திலிருந்து தப்புவதற்கு பகவானைப் பிடித்துக் கொள்ளத் தவிக்கத்தான் செய்வான். அவனுக்குத் தானாக அந்தத் தாபம் வராவிட்டால்கூட நாம் உண்டாக்கிச் தந்து விட்டால் பிடித்துக்கொண்டு விடுவான். இப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது.

உற்றார் ஆர் உளரோ ? உயிர்கொண்டு போம் பொழுது ?

குற்றாலத்துறை கூத்தன் அல்லால் நமக்(கு) உற்றார் ஆர்உளரோ ?

என்ற மாதிரி, அந்த அந்திம ஸமயத்தில் எல்லா பந்துமித்ரர்களையும் விட்டுவிட்டுப் புறப்பட்டேயாகவேண்டும் என்னும்போது அவன் ஒருத்தனே பந்து என்று எந்த ஜீவனும் புரிந்துகொள்ளத்தான் செய்யும். புரிய வைக்காமல் கர்ம வாஸனை அதை நாலா தினுஸில் பிய்த்துப் பிடுங்கலாம். ஆனால் அந்த ஸமயத்தில், சுற்றியிருப்பவர்கள் பகவந்நாமாவைச் சொல்லிக் கொண்டிருந்தால், சட்டென்று அது ஒரு லகான் போட்டு அநதச் சாகிற ஜீவனின் நினைப்பை பகவானிடம் திரும்பும்படிப் பண்ணலாம். அந்த ஸமயத்திலேயே ப்ராணன் ஒடுங்கிவிட்டால் அவனை பரமாத்மா எடுத்துக்கொண்டுதான் ஆகவேண்டும். கீதையில் அவர் அப்படி வாக்குக்கொடுத்திருக்கிறார். வாழ்நாள் முழுவதும் நினைக்கிறானா, நினைக்கவில்லையா என்பதைப் பாராட்டாமல் irrespective-ஆக "கடைசியில் எதெதை நினைத்தாலும் அத்தை அடைகிறான்"என்று அவர் சொல்லி விட்டதால், இந்த ஜீவன் எப்படி வாழ்க்கை நடத்தியிருந்தாலும், கடைசியில் அவரை நினைத்துவிட்டதற்காக அதை அவர் எடுத்துக் கொண்டுதான் ஆகவேண்டும். கடைசி நேரத்தில் அடியோடு நிராதரவான ஒரு ஜீவனுக்கு உண்டாகிற தாபத்தோடு, சுற்றியிருக்கிற நமக்கும் அது கடைத்தேற வேண்டுமே என்பதில் ஹ்ருதய பூர்வமான கவலை இருந்து பகவானை ப்ரார்த்தித்துக்கொண்டு நாமாவைச் சொன்னால் அதற்குப் பலன் இராமல் போகாது.

எல்லா பரோபகாரங்களையும்விட உத்தமமானது ஒரு ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கிறதுதான். ஆகையால் நாம் செய்கிற நாம உச்சாரணத்தால் அந்திமத்தில் ஒரு ஜீவன் பகவானை நினைக்கும்படியாகப் பண்ணி, அதனால் பகவான் அந்த ஜீவனை எடுத்துக்கொள்ளச் செய்துவிட்டால் அதைப்போன்ற உபகாரம் வேறே எதுவும் இல்லை.

கடைசிகால ஈஸ்வர ஸ்மரணை ஜன்மாவை அப்படியே அழித்துவிடாவிட்டால்கூடப் பாவாயில்லை. நிச்சயம் அது பாபத்தைப் பெரிய அளவுக்கு அலம்பி விட்டுவிடும். இதைப்பற்றி ஸந்தேஹமில்லை. பகவந்நாமா மனஸுக்கு உள்ளே ஊறிவிடுகிறபோது பாபத்தை நிச்சயம் கழுவிவிடும். ஆனதால், பகவந்நாமாவோடு கண்ணை மூடுகிறவன் ஜன்மாவே இல்லாமல் விடுபட்டு விடுகிறான் என்று வைத்துக்கொள்ளாவிட்டாலும், மறுபடியும் பாபஜன்மா எடுக்கவே மாட்டான்;நல்ல புண்ய ஜன்மாவாக எடுப்பான் என்பது நிச்சயம்.

புண்ய ஜன்மா என்றால் பணம், காசு, அழகு, உசந்த ஜாதி, இதுகளா?இல்லை இந்த ஜன்மா முடிவிலே வந்த பகவத் ஸ்மரணை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து அடுத்த ஜன்மாவிலும் எப்போது பார்த்தாலும் இருக்கும்படியான சூழ்நிலையும் மனநிலையும் கொண்டதுதான் புண்யஜன்மா. அப்படி எடுத்து அடுத்த ஜன்மத்தோடாவது சொந்த முயற்சியினாலேயே ஸம்ஸார நிவர்த்தியை ஸம்பாத்தித்துக்கொள்ள ஒரு ஜீவனுக்கு இந்த ஜன்மத்திலேயே அந்திம நேரத்தில் நாம் நம்மாலான ஸஹாயத்தைப் பண்ண வேண்டும்.

இந்த மஹா பெரிய தர்மத்தை, ஈடில்லாத உபகாரத்தை, முதலில் சொன்னேனே, வாவழிபாடு, ஜீவாத்ம கைங்கர்யம், மற்ற பரோபகாரங்களுக்காக ஸங்கமாகச் சேரவேண்டும் என்று, இந்த ஸங்கத்துக்காரர்கள் தவறாமல் செய்ய வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*செய்ய வேண்டிய பணி*

தங்கள் க்ராமத்தில் அல்லது பேட்டையில் ஒருத்தன் சாகிற நிலையில் இருக்கிறான் என்று தெரிந்தால் அங்கே ஸங்கத்திலிருந்து ஒருத்தரோ சிலரோ போக வேண்டும். வீட்டிலே இல்லாமல் ஆஸ்பத்திரியிலோ ஜெயிலிலோ உயிரை விடுகிறவர்ளும் உண்டு. எனவே இப்பேர்ப்பட்ட இடங்ளுக்கும் தங்களை அனுமதிக்கும் படியாக அந்தந்த அதிகாரிகளிடம் பெர்மிஷன் வாங்கி வைத்திருக்க வேண்டும். அங்கே வெறும் கையோடு போகக்கூடாது. நாமம்தான் ஸர்வரோக நிவாரணி என்பது வாஸ்தவமே. அதற்கு வெளி வஸ்து ஒன்றும் வேண்டியதில்லைதான். ஆனால் ஸ்தூலமாக ப்ரஸாதம் என்று ஒன்றைக்கொண்டுபோய்க் கொடுத்தால் அதற்கும் ஒரு தனி உத்ஸாஹ சக்தி உண்டுதான்;அது சாகிற ஜீவனுக்கு ஜாஸ்தி ஆறுதலாக இருக்கும். ஆனதால், முதலிலேயே கையில் சிவன்கோவில் விபூதி, பெருமாள் கோயில் துளசி 'ஸ்டாக்'வைத்திருக்கவேண்டும். அம்பாள் கோயில் குங்குமம், முருகன் அல்லது பிள்ளையார் கோயில் விபூதி என்று எது இருந்தாலும் ஸரி. சிவபரமாகவும், விஷ்ணுபரமாகவும், ஏதாவது இரண்டு கோயில் ப்ரஸாதம் ஸ்டாக் இருக்கவேண்டும். கங்கா ஜலம் ஸர்வ பாப சமனம் ஆனதால் சங்கா தீர்த்தமும் வைத்திருக்க வேண்டும். மரணமடைகிற ஜீவன் சைவ மதமோ, வைஷ்ணவ மதமோ அதைப்பொறுத்து அந்தந்த ப்ரஸாதத்தை எடுத்துப்போக வேண்டும். கங்கா தீர்த்தம் எல்லோருக்கும் பொது. அநேக சைவர்கள் துளஸி ப்ரஸாதத்தையும் ஆக்பிக்ஷேக்க மாட்டார்கள். இப்போதெல்லாம் வைஷ்ணவர்கள்கூட, ஈஸ்வரன் கோயில் ப்ரஸாதம் என்றால் விபூதி ப்ரஸாதம் கேட்டு வாங்கிக்கொண்டு போகிறார்கள். ஆனால் நாம் அவரவர் அபிப்ராயத்துக்கு அநுகூலமாகத்தான் ப்ரஸாதத்தைத் தரவேண்டும். மரண ஸமயத்திலே ஓர் இடத்தில் போய் ஸித்தாந்தச் சண்டைகளைக் கிளப்பக் கூடாது. யாருக்கு எது ஹிதமாக இருக்குமோ, அப்படிப்பட்ட ப்ரஸாதமாக எடுத்துப்போக வேண்டும்.

விபூதிப்ரஸாதம் என்பது சிவன் கோயிலில் இருக்கும் தக்ஷிணாமூர்த்திக்கோ, அல்லது தனிக் கோயிலில் இருக்கிற பிள்ளையாருக்கோ, ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்கோ அபிஷேகம் பண்ணப்பட்ட விபூதியாக இருக்க வேண்டும். ஸாக்ஷாத் பராசக்தியான அம்பாள் பாதத்தில்

அபிஷேகம் செய்யப்பட்ட தீர்த்தமும் கங்கா ஜலத்துடனோ, கங்கா ஜலம் கிடைக்காவிட்டால் அதற்குப் பதிலாகவோ வைத்திருந்து, மரிக்கிறவனுக்குக் கொடுக்கலாம். இதேபோல் விஷ்ணுபரமாக, பெருமாளுக்கு அர்ச்சனை செய்த துளஸியைக்கொண்டு வந்து உலர்த்தி ஸ்டாக் வைத்துக்கொள்ள வேண்டும். பெருமாள் பாதத்தில் அபிஷேகமான தீர்த்தமும் கொடுக்கலாம். கங்கை கிடைக்காவிட்டால், அதற்கு பதில் வைஷ்ணவர்களுக்குப் பெருமாள் பாத தீர்த்தம் தரவேண்டும். பெருமாளுக்கு நித்யப்படி முழு அபிஷேகம் இராது. திருமஞ்சனம் என்று சில நாட்களில்தான் செய்வார்கள். அதனால் மூர்த்தியின் பாதத்தில் மட்டும் அபிஷேகம் பண்ணுவித்து அந்தத் தீர்த்தத்தை வாங்கி ஸ்டாக் வைத்துக்கொள்ள வேண்டும். எதற்கும் கங்கை கைவசம் இருப்பது நல்லது.

சாவு என்றால் எவனுக்கும் பயம்தான். ஆயுஸ் முழுக்க நாஸ்திகனாக இருந்தவன்கூட அந்திம காலத்தில் ஏதோ ஒரு பெரிய சக்தியின்கையில் தானிருக்கிறோம் என்று கொஞ்சமாவது தெரிந்து கொள்ளாமலிருக்கமாட்டான். அந்த நேரத்திலே பயத்தைப்போக்க அந்த சக்திதான் கதி என்ற எண்ணம் எவனுக்கும் வராமல் இருக்காது. எவனுமே ஈஸ்வர த்யானத்தோடுதான் சாக விரும்புவான் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆனதால், நாம் அவனுக்கு உபகரிப்பதை அவன் நிச்சயம் ஏற்றுக்கொள்வான். அவனுடைய பந்துக்களும் இந்தக் கைங்கர்யத்தை வரவேற்பார்கள். சில கிழம் கட்டைகள் போகாதா என்று இருக்கும்போது, வைத்யம் பார்க்கிறோம் என்று நாம் போனால் ஒருக்கால் பந்துக்கள் அசட்டை பண்ணக்கூடும் ஆனால் 'புறப்பாடு'நன்றாக நடப்பதற்கே நாம் உபகாரம் பண்ணுகிறோம் என்றால் எவரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள்!அதிலும் நாம் அவர்களுக்குச் எந்தச் செலவும் சிரமமும் வைக்காததால் நிச்சயம் ஆக்ஷேபிக்கமாட்டார்கள் ஆனதால் நாம் இப்படிப்பட்ட தொண்டு செய்கிறோம் என்று தெரிந்துவிட்டால், அவர்களே நம்மைக் கூப்பிடுவார்கள். கூப்பிடாவிட்டாலும் நாம் போகவேண்டும். அவர்கள் கடும் நாஸ்திகர்களாக இருந்து ஆக்ஷேபித்தால் கொஞ்சம் எடுத்துச் சொல்லிப் பார்க்கலாம். அப்படியும் கேட்காவிட்டால் திரும்பிவிடலாம். ஆனால் அப்போதுகூடக் கோபம் இல்லாமல் சாகிற ஜீவனுக்கான ப்ராத்தனையை நமக்குள் செய்துகொள்ள வேண்டும். மொத்தத்தில் மான, அவமானம் பார்க்காமல் நம்மால் முடிந்த தொண்டைச் செய்யப் பாடுபட வேண்டும். மான அவமானம் பார்க்க ஆரம்பித்துவிட்டால் அது தொண்டே இல்லை.

செய்யவேண்டியது என்னவென்றால், ப்ராணா வஸ்தையில் இருக்கிறவர்களிடம் கோயில் ப்ரஸாதத்துடன் போகவேண்டும். அவர்களுக்கு கங்கா தீர்த்தம் கொடுக்க வேண்டும். விபூதி இடவேண்டும். துளஸியை வாயில் போடவேண்டும். அவர்கள் பக்கத்தில் உட்கார்ந் துகொண்டு 'சிவ சிவ சிவ சிவ'என்றோ 'ராம ராம ராம ராம'என்றோ உரக்கச் சொல்ல வேண்டும். உரக்கச் சொல்லவேண்டியது அவசியம். ஜீவன் காதிலே அதுபட்டு மனஸைத் திருப்ப வேண்டுமாதலால், உயிர்போகும் வரையில் இப்படி நாம ஜபம் செய்வதுதான் ச்ரேஷ்டம். ஆனால் ப்ராணாவஸ்தையிலேயே ஒரு ஜீவன் மணிக்கணகாகக இழுத்துக் கொண்டிருந்தால் என்ன பண்ணுவது?நமக்கு மற்றக் கார்யம் இருக்கத்தானே செய்யும்?அதனால் பக்கத்திலே பந்துக்களில் யாராவது ஒருத்தர் முறைபோட்டுக்கொண்டு உட்கார்ந்து நாம ஜபம் பண்ணும்படியாக ஏற்பாடு செய்துவிட்டு நாம், 'நம் கடமையைக் கொஞ்சமாவது செய்தோம்'என்று புறப்பட வேண்டும். குறைந்த பக்ஷம் சிவநாமாவோ, ராமநாமவோ 1008 தடவையவது நாம் ஒரு ஜீவனுக்காகச் சொல்லவேண்டும். இப்படிப் பலபேர் சொன்னது அந்த ஜீவனுக்குள்ளே போய் தானாக அது உள்நினைவில் பகவானை நினைத்துக்கொண்டிருக்கும் படியாகப் பண்ணியிருக்கும் என்று வைத்துக்கொள்ளலாம். ஆனால் இது இரண்டாம் பக்ஷந்தான். நாம் கடைசிவரை இருக்கமுடியாமல் வந்துவிட்டாலும்கூட, ஒரு ஜீவன் பிரிகிறபோது அங்கு பகவந்நாம சப்தம் இருக்கும்படியாக அவனுடைய பந்துக்களையாவது ஜபிக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டு வருவதே ச்லாக்யம்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

## *திவ்ய ஸ்மரணைக்குப் பின் திவஸம் ஏன் ?*

ஒரு ஜீவன் இருக்கும்போதும், இறக்கும்போதும், இறந்தபின்பும் செய்யவேண்டிய

தொண்டுகளை நிறையச் சொல்லிக்கொண்டே போயிருக்கிறேன். 'இறக்கும்போது நாம் செய்கிற பணியினால் அந்த ஜீவன் பகவத் ஸ்மரணையோடு உயிரை விட்டால் அது பகவானை அடைந்துவிடுமல்லவா?இதற்கப்புறம் அதற்கு இறந்தபின் செய்யவேண்டிய ஸம்ஸ்காரம், திவஸம், திங்கள் எல்லாம் எதற்குச் செய்யவேண்டும்?'என்று கேட்டுவிடக்கூடாது. ஏனென்றால் நமக்குத் தெரிவது அந்த ஜீவனின் அந்திம காலத்தில் அது பகவானை நினைக்கும்படியான முயற்சியை நாம் பண்ணுகிறோம் என்பதுதான். அந்த முயற்சி எவ்வளவு பலித்தது என்பது நமக்குத் தீர்மானமாகத் தெரியாதது. நாம் கங்கா தீர்த்தம், விபூதி, துளஸி கொடுத்து நாமோச்சாரணம் பண்ணுவதை அந்த ஜீவன் எந்த அளவுக்கு மனஸுக்குள் வாங்கிக்கொண்டது என்பது நமக்குத் தெரியாது. அது பகவத் ஸ்மரணையோடுதான் உயிரை விட்டதா என்பது நமக்குத் தெரியாத விஷயம். ஆனதால், அது பகவானிடந்தான் போய்விட்டது என்று நாமாகத் தீர்மானம் பண்ணிக்கொண்டு அபரகார்யம், ச்ராத்தம் முதலானவைகளை நிறுத்திவிடக்கூடாது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*சரீர-சித்த பரிசுத்தி*

ஏ கப்பட்டதாகப் பரோபகாரங்களைச் சொல்லிக் கொண்டே போயிருக்கிறேன். பொதுவாகப் பரோபகாரம் என்றே நினைக்காத சில விஷயங்களைக்கூட இந்தப் பெரிய 'லிஸ்ட்'டில் சேர்த்துச் சொல்லியிருக்கிறேன்.

இம்மாதிரி இன்னொன்று அவனவனும்:தன் உடம்பையும் புத்தியையும் சுத்தமாக வைத்துக்கொள்வதே பெரிய பரோபகாரம்தான். துர்ப்பழக்கங்களால் ஒருத்தன் வியாதியை ஸம்பாதித்துக் கொள்கிறான் என்றால், அப்புறம் அவனால் எப்படிப் பரோபகாரம் பண்ண முடியும்?இது மட்டுமில்லை. இவனுடைய வியாதி பிறத்தியாருக்குப் பரவக்கூடும். அதனால் நம் அஜாக்ரதையால், துர்ப்பழக்கத்தால் வியாதியை வரவழைத்துக்கொள்கிறபோது பர அபகாரமும் பண்ணிவிடுகிறோம். நம்மை மீறி வந்தால் அது வேறே விஷயம்.

இந்தக் காலத்தில் எல்லோரும் நோயும் நொடியுமாக அவஸ்தைப்படுகிற மாதிரி நாற்பது, ஐம்பது வருஷங்களுக்கு முந்தியெல்லாம் இல்லை. காரணம் என்னவென்றால் இப்போது அநேகருக்கு மனஸில் நெறியில்லாமல் இருப்பதும், அநேக துராசாரங்கள் வந்திருப்பதும்தான். " சாஸ்த்ராய ச ஸுகாய ச " என்பார்கள் - அதாவது சாஸ்த்ர ப்ரகாரம் நெறியோடு,ஆசாரத்தோடு இருப்பதுதான் ஸௌக்யமாக, ஆரோக்கியமாக இருக்கவும் உதவுவது என்று அர்த்தம். இப்போது எச்சில் தீண்டல் பார்காததாலேயே அநேக வியாதிகள், தொத்து நோய்கள் பரவிக்கொண்டு வருகின்றன. இப்படி வியாதிக்குக் காரணமாயிருக்கிற அநாசாரத்தை ஃபாஷன் என்ற பெயரில் ஸ்வீகரித்துக்கொண்டிருக்கிறோம்!

சரீர வியாதிதான் தொத்துகிறது என்றில்லை. எண்ணங்களும் பிறத்தியாரை பாதிக்கவே செய்கின்றன. இப்போது ஸயன்ஸில்கூடச் சொல்கிறார்கள், 'மூளை எண்ணங்களாக வேலை செய்வதுகூட ஒரு எலெக்ட்ரிக் கரென்ட்தான்;சிந்தனா சக்திக்குப் (மீலீஷீஹுலீமீ-ஜீஷீஷமீக்ஷீ) பிறரையும் பாதிக்கிற தன்மை இருக்கிறது'என்று. அதனால் நாம் சரீரத்தையும், புத்தியையும் சுத்தமாக வைத்துக் கொண்டிருப்பதாலும் பிறரின் தேக மன ஆரோக்கயங்களுக்கு உபகாரம் பண்ணியவர்களாக (அபகாரம் பண்ணாதவர்களாகவாவது) ஆகிறோம்.

நேராக மூளையை சுத்தப்படுத்திக் கொள்கிறேன் என்று உட்காருவதைவிட, நான் சொன்ன அநேக தினுஸான பரோபகாரங்களை - எல்லாவற்றையுமோ, சிலவற்றையோ நிறையச்செய்து கொண்டிருந்தாலே, தானாகச் சித்தம் சுத்தமாகிவிடும்.

பரோபகாரம் சித்தசுத்திக்கு உதவ வேண்டுமானால் அதற்கு உயிர்நிலை அஹங்காரம் என்பது லவலேசங்கூட இல்லாமல் தொண்டு செய்வதுதான். 'நாம் பெரியவர்;உபகாரம் பண்ணுகிறோம்'என்ற நினைப்பை தலையெடுக்கவே விடக்கூடாது. கொஞ்சம் அப்படி

நினைத்தாலும் அது உபகாரம் பண்ணுவதன் பலனை - சித்த சுத்தியை - சாப்பிட்டு ஏப்பம் விட்டுவிடும். இரண்டாவது, (அதிலேயே இதுவும் அடக்கம்தான்) ப்ரதி ப்ரயோஜனத்தை துளிக்கூட எதிர்பார்க்கக்கூடாது. உபகாரம் செய்தால் நமக்கு ஸித்திக்கிற சித்த சுத்தியேதான் பெரிய ப்ரயோஜனம்.

அவரவரும் தம் நிலையில் தம் வருமானம், குணம், சரீர வசதி, ஆற்றல் இவைகளுக்கு ஏற்றபடி எவ்விதங்களில் பரோபகாரம் செய்ய முடியுமோ அப்படியெல்லாம் செய்யவேண்டும். உடம்பிலே எந்த அவயவத்துக்குத் துன்பம் வந்தாலும் கண் அழுகிறது அல்லவா?அதைப்போல், உலகத்தில் எங்கே, யாருக்குத் துன்பம் உண்டானாலும் நாம் மனம் கசிந்து, ஒவ்வொருவரும் நம்மாலான உதவியைச் செய்ய வேண்டியது நம் கடமை. இதில் பெருமைக்காகச் செய்வது எதுவும் இல்லை. பிறத்தியாரின் வற்புறுத்தலுக்காகவும் செய்ய வேண்டியதில்லை. லோகம் முழுக்க பகவத் ஸ்வரூபம் என்று மனஸில் வாங்கிக்கொண்டால், தன்னால், ஸ்வபாவமாக, பிறர் துயரத்தை நிவ்ருத்தி செய்வதில் ஈடுபடுவோம். இதிலே நமக்கு ச்ரமம் வந்தால்கூட, அது ச்ரமமாகவே தெரியாது. எத்தனை த்யாகம் செய்தாலும் அதுவே பரமானந்தமாக இருக்கும். இப்படி த்யாகம் பண்ணுவதற்கு எல்லையே இல்லை. உபகரிக்கப்பட்டவன் முகத்தில் மகிழ்ச்சி தவழப் பார்க்கிறோமே, அந்த ஆனந்தத்துக்கு எத்தனை த்யாகமும் ஈடாகாது என்றுதான் தோன்றும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*
*பணியற்ற நாள் பாழே*

தி னமும் தூங்கப்போகுமுன்பு இன்று ஜன ஸமுதாயத்துக்கு நாம் ஏதாவது கைங்கர்யம் பண்ணினோமா என்று கேட்டுக்கொள்ள வேண்டும். ஈஸ்வரனைப் பற்றிப் " பேசாத நாளெல்லாம் பிறவா நாளே " என்று தேவாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த மாதிரி நாம் பரோபகாரம் பண்ணாமலே ஒருநாள் போயிற்று என்றால், அது நாம் பிறவா நாளே - அன்றைக்கு நாம் செத்துப் போனதற்கு ஸமம்தான் - என்று வருத்தப்பட வேண்டும். பந்துக்கள் செத்துப்போனால் நமக்கு தீட்டு என்று, ஒரு புண்ய கார்யத்துக்கும் உதவாமல் ஒதுக்கிவிடுகிறார்கள். நாமே செத்த மாதிரி என்றால் இதுதான் பெரிய தீட்டு;பரோபகாரம் செய்யாத ஒரு தினத்தில் புண்யத்தின் பக்கத்திலேயே நாம் போகவில்லை, தீட்டுக்காரர்களாகி விட்டோம் என்று யீமீமீறீபண்ணவேண்டும்.

நாம் எத்தனை சின்னவர்களாக இருந்தாலும் நம்மாலும் முடியக்கூடிய சின்னத் தொண்டு இல்லாமலில்லை. இப்படி அவரவரும் தனியாகவோ, ஸங்கமாகச் சேர்ந்தோ ஏதாவது பொது நலக்கைங்கர்யம் பண்ணியே ஆகவேண்டும். தண்ணீரில்லாத ஊரில் ஒரு பத்து பேர் சேர்ந்து கிணறு வெட்டுவது;ஏதோ ஒரு பிள்ளையார் கோயில் மதில் இடிந்திருந்தால் அதை நாலு பேராகச் சேர்ந்து கட்டுவது;பூஜை நின்று போன ஒரு க்ராமக் கோயிலில் ஒரு காலப் பூஜைக்காவது நாலு பேரை யாசித்து மூலதனம் சேகரித்து வைப்பது;பசுக்கள் சொறிந்து கொள்வதற்கு ஒரு கல்லேனும் நாட்டுவது;நாம் படித்த நல்ல விஷயங்களை நாலுபேருக்குச் சொல்லுவது, எழுதுவது இரண்டு ஸ்லோகமாவது பாசுரமாவது நாமாவளியாவது பாடி நாலு பேர் மனஸில் பகவானைப் பற்றிய நினைப்பை உண்டாக்குவது;குப்பை கூளங்களைப் பெருக்குவது - இந்தமாதிரி ஏதாவது தொண்டு அன்றன்றும் செய்யவேண்டும். ஓசைப்படாமல் செய்ய வேண்டும் என்பது முக்யம்.

குடும்பக் கடமைகளை விட்டுவிட்டு ஸோஷல் ஸர்வீஸ் என்று கிளம்ப வேண்டியதில்லை. அதையும் விடாமலே, இதுவும் கடமை என்ற உணர்வோடு சேர்த்துக்கொண்டு செய்ய வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*
*இதுவே வேத தர்மம்*

மேல் நாடுகளில் பெரிதாக ஸ்தாபன ரீதியில் institutionalise செய்து பரோபகாரப் பணிகள் செய்கிறார்கள். இப்படித் தனி ஸ்தாபனங்கள் இல்லாமலே தனி மனிதர்களாகவும், ஸங்கமாகவும் பொதுநலப்பணி புரிவது நமது வைதிக தர்மத்துக்கு ஆதாரமான ஓர் அம்சமாக ஆதியிலிருந்து இருந்து வந்திருக்கிறது.

'இன்ஸ்டிட்யூஷனலைஸ்'செய்யாமல் தன்னியல்பாக நம் வாழ்முறையிலேயே கண்ணுக்குத் தெரியாமல், ஒட்டிக்கொண்டு பரோபகாரம் நடைபெறுதில் ஒரு உத்தமமான அம்சம் என்ன என்றால் இங்கேதான் அஹங்காரம் தலைதூக்கவே இடமில்லாமலிருக்கிறது.

'இன்ஸ்டிட்யூஷன்' என்றால் office-bearers (அதில் பதவி வகிப்பவர்கள்) எலெக்ஷ்ன், போட்டா போட்டி, ப்பளிஸிடி எல்லாமும் வந்துதான் சேரும். அதனால்தான் நான் ஸங்கமாகச் செய்ய வேண்டிய அநேகப் பணிகளைச் சொல்கிறபோதுகூட, இதற்காகத் தனி ஆர்கனைஸேஷனும் office-bearers-உம் வேண்டாம். ஏற்கனவே இருக்கிற வார வழிபாட்டுக் கழகம், பாவை கமிட்டி, பஜனை கோஷ்டி, ஸத்ஸங்கம் ஏதாவது ஒன்றின் மேற்பார்வையிலும் பொறுப்பிலும் இந்தப் பணிகளையும் கொண்டுவந்து விடுங்கள் என்கிறேன். ரொம்பப் பெரிசாக திட்டம் போடவேண்டாம், அவசியத்துக்கு அதிகமாக வசூல் பண்ணவேண்டாம் என்றெல்லாம் நான் எச்சரிப்பதற்கும் காரணம், இப்படிப் பெரிசாகக் கால் வைத்தால் முதலில் இதைச் செய்யும் நம் ஸ்தாபனத்துக்கு பப்ளிஸிடி தேடவேண்டிவரும். அது அப்படியே வழுக்கி விட்டு ஸ்தாபனத்தில் ஈடுபட்டிருக்கிற நமக்கும் self-publicity தேடிக்கொள்கிற சபலத்தில் கொண்டுவிடும். ஆண்டு விழாவில் நாம் வரவேற்பு சொல்ல மாட்டோமோ, வந்தனோபசாரம் சொல்ல மாட்டோமோ, வருகிற முக்கியஸ்தர்களுக்கு மாலையாவது போடமாட்டோமா, ஃபோட்டோவிலாவது தெரியும்படி நிற்கமாட்டோமா என்று இப்படியெல்லாம் மனஸை அலையச்செய்யும். அதாதவது அஹங்காரத்தை அழித்துக்கொள்ளவே ஏற்பட்ட பொதுத்தொண்டு, நேர்மாறாக அஹங்காரத்தை விருத்தி செய்கிறதாக விபரீத ரூபம் எடுத்துவிடும். தான் இருக்கிற இடமே தெரியாமல், தன் காரியம் மட்டுமே தெரிவதுதான் தொண்டின் லக்ஷணம். இதனால்தான் ' தர்மே க்ஷரதி கீர்த்தநாத் ' என்று சொல்கிறது. அதாவது, பாபம் பண்ணிவிட்டேன் என்று ஒருத்தன் வெளியில் சொன்னாலே எப்படி அவனுடைய பாபம் நசித்துவிடுமோ, அப்படி "தர்மம் பண்ணுகிறேன்"என்று தண்டோரா போட்டுக்கொண்டால் அதனால் ஒருத்தனுக்குக் கிடைக்கிற புண்யமும் நசித்துவிடுமாம்!ஸம்ஸ்க்ருதத்தில் subtle-ஆக (நுட்பம் மிக்கதாக) "தர்ம த்வஜன்"என்பார்கள். தர்ம த்வஜன் என்றால் தர்மக்கொடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருப்பவன் என்று அர்த்தம். இது பாராட்டுகிற டைட்டில் மாதிரி தொனித்தாலும் இதற்கு உள்ளர்த்தம் "போலி தர்மவான்"என்பதே!தன் தர்மத்தை உசத்திக் காட்டுவதாலேயே அதை இவன் போக்கிக் கொண்டுவிடுகிறான் என்பது தாத்பர்யம்!

'இன்ஸ்டிட்யூஷனலைஸ்'பண்ணுவதுபற்றிச் சொல்ல வந்தேன்.

மேல்நாடுகளில் Orphan-home (அநாதை இல்லம்) என்று தனியாக வைக்கிறார்களென்றால், நம் சாஸ்த்ரப்படி ஒவ்வொரு இல்லத்திலும் அநாதைக்கும் அதிதிக்கும் இடமுண்டு. மேல் நாட்டுக்காரர்களின் வீட்டுக்குள் அநாதைகளோ அதிதிகளோ நுழையக்கூட முடியாமல் நாய் கட்டியிருக்கும்!அவன் வாழ்க்கையோடு, ரத்தத்தோடு அதிதி ஸத்காரமும், அநாதை பராமரிப்பும் ஒட்டாமல் அவைபாட்டுக்கு மெகானிகலாக ஸ்தாபன ரீதியில் நடக்கும். (எல்லாரும் இப்படி என்று நான் சொல்லவில்லை. எந்த தேசத்திலும் உத்தமர்கள், பரோபகாரிகள், த்யாகிகள் உண்டு. அப்படியே ஸ்வயநலக்காரர்களும் உண்டு. பொதுவாகச் சொன்னேன்.) மேல்நாட்டானைக் காப்பியடித்து, " அதிதி தேவோ பவ " என்ற கொள்கையைக் கொண்ட நம் தேசத்திலும் வீட்டு வாசல்களில் "நாய் ஜாக்கிரதை!"போர்டு தொங்குவதைப் பார்த்தால் வேதனையாயிருக்கிறது. "வா வா"என்று வழிப்போக்கர்களைக் கூப்பிட்டுப் படுக்க வைத்துக்கொள்ளவே 'திண்ணை'என்பது நம்முடைய வைதிகமான க்ருஹ சில்பத்தில் இருந்தது. இப்போது அதெல்லாம் போச்சு. இப்படியே அன்றன்றும் வைச்வதேவ பலியில் தெருவில் போகிற எவனோ பஞ்சமன் சாப்பிடக்கூட ஒரு பங்கு அன்னம் போடப்பட்டு வந்த இந்த தேசத்தில் இம்மாதிரி அநுஷ்டானங்களை 'ஸுபர்ஸ்டிஷன்'என்று தள்ளி வைத்து விட்டதும் மனஸுக்கு க்லேசமாயிருக்கிறது.

மேல்நாட்டு மோஸ்தரில் இங்கேயும் தனி மநுஷ்யனின் குடும்பம் தனக்கே என்று ஆனபிறகு, இங்கேயும் அங்கே மாதிரி ஸமூஹப் பணிகளை இன்ஸ்டிட்யூஷனலைஸ் செய்வதாகவும் என்பதாக ராஜாங்கமே அநாதையில்லம், வயஸானவர் பென்ஷன் என்றெல்லாம் நடத்துவதுமாக ஆகிவிட்டது. இன்றைய ஸெட் அபிபில் இதுவுமில்லாவிட்டால் நிராதரவானவர்களின் பாடு ரொம்பவும் கஷ்டமாகத்தான் ஆகிவிடும். ஆனாலும் பூர்வத்தில் ஒவ்வொருவரும் வஸுதைவ குடும்பகம் (லோகம் முழுக்க ஒரு குடும்பம்) என்ற அன்பான எண்ணத்தோடு தாங்களே ஆதரவற்றவர்களைத் தாங்கி தரித்த முறையோடு பார்த்தால் இப்போது ராஜாங்க ரீதியில் ஆபீஸாக ஸமூஹ காரியங்களை நடத்துவது இரண்டாம் பக்ஷம்தான்.

சுருக்கமாக வேத தர்மம் என்பது நம்மிடத்தில் இருக்கும்படியான எல்லா சக்திகளும் ஈஸ்வர சக்தியில் துளித்துளிதான். இந்த சக்திகளை ஈஸ்வரனுக்கே அர்ப்பணிக்க வேண்டும். நாவினாலே அவன் நாமாவைச் சொல்வது, மனஸினாலே த்யானம் பண்ணுவது, சரீரத்தாலே பூஜை பண்ணுவது என்று எல்லாம் ஈஸ்வர ஸம்பந்தமாக்க வேண்டும். பூஜை என்பதில் கர்மாவைச் செய்வதும், கடமையைச் செய்வதும் அடக்கந்தான். ஆசார்யாள் முடிவாக உபதேசித்த ஸோபான பஞ்சகத்தில் கர்மாவைப் பண்ணுவதுதான் ஈஸ்வர பூஜை என்று நிர்த்தாரணம் செய்திருக்கிறார். ஸ்வதர்மப்படி அவரவருக்கு ஏற்பட்ட கர்மாவோடு, ஸர்ஜனங்களுக்கும் ஏற்பட்ட ஸாதாரண தர்மங்களைச் சேர்ந்த ஒரு முக்யமான கர்மா இந்தப் பரோபகாரம் என்பது.

அதனால் நாக்கால் நாமா சொல்கிறதோடு ஜனங்களுக்கு நல்லதாக, மதுரமாக நாலு வார்த்தை சொல்லவேண்டும். மனஸால் த்யானம் பண்ணுவதோடு, 'லோகமெல்லாம் க்ஷேமமாயிருக்கணும்'என்று ஒவ்வொரு நாளும் நாலு க்ஷணமாவது அன்போடு நினைக்க வேண்டும். சரீரத்தால் பூஜை, ப்ரதக்ஷிணம், நமஸ்காரம் செய்வதோடு கொஞ்ச நேரமாவதுவெட்டியோ கொத்தியோ வேறு தினுஸிலோ ஒரு பொதுத்தொண்டு பண்ணவேண்டும். திரவ்யத்தையும் இப்படியே தேங்காய், பழம், புஷ்பம் வாங்குவதோடு தான தர்மத்துக்கும் கொஞ்சமாவது செலவழிக்க வேண்டும். இவற்றையும் ஈஸ்வர ப்ரீதிக்காக ஈஸ்வர பூஜையாக நினைத்தே செய்ய வேண்டும். இதுவே நம் பூர்விகர்கள் போன வழி. அதாவது தெய்வகார்யம், ஸமூஹ கார்யம் இரண்டில் ஒன்றையும் விடாமல் பண்ண வேண்டும்.

பரோபகாரம் நம் மதத்தில் சொல்லப்படவில்லை என்ற தப்பான பிரசாரத்தை நம்பக்கூடாது. குழந்தையாக இருக்கிறபோதே 'ஸுபாஷிதம்','நீதி சாஸ்திரம்'என்றெல்லாம் சொல்லிக் கொடுப்பார்கள். அதிலேயே பரோபகாரத்தைப் பற்றிய அநேக போதனையிருக்கிறது. ' பரோபகாரார்த்தம் இதம் சரீரம் ' - 'உலகத் தொண்டு பண்ணவே இந்த உடம்பு வாய்த்திருக்கிறது'என்று அப்போதே கற்றுக் கொடுத்து விடுவார்கள். இன்னொன்றும் சொல்வதுண்டு, ' பரோபகாராய ஸதாம் விபூதய :' - 'நன்மைகளின் ஸகல சக்திகளும், உடைமைகளும் பரோபகாரத்துக்காகவே ஏற்பட்டவைதான்'என்று அர்த்தம். இதை இரண்டு விதத்தில் சொல்லி இளமனஸில் ஆழமாகப் பதிப்பிப்பார்கள். ஒன்று:பிறருக்குப் பிரயோஜனமாவதற்குத்தான் மரம் பழுக்கிறது ( பரோபகாரார்த்தம் பலந்தி வ்ருக்ஷா : );பிறருக்குப் பிரயோஜனமாவதற்குத்தான் ஆறுகள் ஜலத்தைச் சுமந்து ஓடுகின்றன ( பரோபகாரார்த்தம் வஹந்தி நத்ய : );பிறருக்குப் பயனாவதற்கேதான் பசுக்கள் பால் கொடுக்கின்றன ( பரோபகாரார்த்தம் துகந்தி காவ : );அப்படியே இந்த மநுஷ்ய காயம் ஏற்பட்டிருப்பதும் பிறருக்கு உதவும் பொருட்டே ( பரோபகாரார்த்தம் இதம் சரீரம் ).இன்னொன்று : இப்போது சொன்னதையே இன்னு கொஞ்சம் நயத்தோடு சொல்வது - மரம் தன் பழத்தைத் தானே சாப்பிட்டுக் கொள்வதில்லை ( காதந்தி ந ஸ்வாது பலாநி வ்ருக்ஷா : );ஆறு தன் ஜலத்தைத் தானே குடித்துக் கொள்வதில்லை ( பிபந்தி நத்ய : ஸ்வயமேவ நாம்ப : );மேகம் தன் மழையாலுண்டாகிற பயிரைத் தானே சாப்பிடுவதில்லை ( பயோதரா : ஸஸ்யமதந்தி நைவ );இதேபோல ஸஜ்ஜனங்களின் (நல்லோரின்) எல்லாத் திறமைகளும், செல்வமும் பரோபகாரத்திற்குத்தான் ( பரோபகாரய ஸதாம் விபூதய : ).

படிக்கிற காலத்திலேயே, "உன்னை சாச்வதமாக உயிர்வாழ்கிற தேவஜாதியாக நினைத்துக்கொண்டு கல்வியையும் பொருளையும் நிறுத்தாமல் மேலே மேலே ஸம்பாதித்துக்கொண்டே போ"என்று சொல்லிக் கொடுத்துவிட்டு, அதே மூச்சில், அந்த

ஸ்லோகத்திலேயே, "தர்மம் பண்ணுவதில் மட்டும் அப்புறம் என்று ஒத்திப்போடாமல், எப்போதும் யமன் உன் தலைமயிரைப் பிடித்து இழுத்துக் கொண்டேயிருக்கிறான் என்று நினைத்து, உடனுக்குடனே பண்ணிவிடு"என்று சொல்லிக் கொடுத்தார்கள்:

அஜராமரவத் ப்ராஜ்ஞ : வித்யாம் அர்த்தம் ச ஸாதயேத் மி

க்ருஹீத இவ கேசேஷுு ம்ருத்யுநா தர்மம் ஆசரேத் மி

வியாஸர் பதினெட்டு புராணங்களையும் பண்ணி முடித்தபின் சிஷ்யர்கள் அவற்றின் ஸாராம்சத்தை ஒன்றிரண்டு ச்லோகங்களில், ஸுலபமாக நினைவில் வைத்துக்கொள்ளுூம்படியாகச் சுருக்கித் தரும்படிப் பிரார்த்தித்தார்களாம். உடனே அவர் "ஒன்றிரண்டு ச்லோகம் எதற்கு?இந்தப் பதினெட்டுப் புராணம் மட்டுமின்றி மொத்தமிருக்கிற கோடிப் புஸ்தகங்களின் ஸாரத்தையும் அரை ச்லோகத்திலேயே சொல்கிறேன்" " ச்லோகார்தேந ப்ரவக்யாமி யதுக்தம் க்ரந்த கோடிஷுு மி" என்று ஒரு ச்லோகத்தின் முதல் பாதியாகச் சொல்லிவிட்டு மற்ற பாதியில் அந்த ஸாரமான தத்துவத்தைச் சொன்னாராம்:

" பரோபகார : புண்யாய பாபாய பரபீடநம் II"

இருக்கிற அத்தனைகோடி தத்வம் என்னவென்றால், "புண்யம் ஸம்பாதிக்க வேண்டுமானால் பரோபகாரம் பண்ணு;பாபத்தை மூட்டை கட்டிக் கொள்வதனால் மற்ற ஜீவன்களுக்குக் கஷ்டத்தைக் கொடு"என்பதுதான் - என்று இதற்கு அர்த்தம்.

பாபம் எது என்று தெரிந்துகொண்டு அதை விலக்குவதற்கும், புண்யம் எது என்று தெரிந்துகொண்டு அதைப் பண்ணுவதற்குந்தான் மதம் என்பதே இருக்கிறது. இங்கே நம் மதத்துக்கு முக்யமான மூல புருஷர்களில் முதன்மையாயிருக்கிற வ்யாஸாசார்யாள் பர உபகாரம் தான் புண்யம், பர அபகாரம்தான் பாபம் என்று சொல்கிறாரென்றால், அதற்கப்புறம் நம் மதத்தில் பரோபகாரத்துக்கு இடமுண்டா என்ற வாதத்துக்கே இடமில்லை.

'ஆத்மார்த்தமாக, ஒருத்தன் தனக்குப் பண்ணிக் கொள்வதைப்பற்றித்தான், வேத மதத்தில் நிறைய இருக்கிறது. பிறத்தியாருக்குப் பண்ணுவதைப்பற்றி இல்லை'என்று சில பேர் criticiseபண்ணினாலும் இப்படி இவன் ஸ்வய உபகாரம் பண்ணிக்கொண்டு தன்னை சுத்தப்படுத்திக் கொண்டாலன்றி இவன் செய்கிற பரோபகாரத்துக்கு effectஇருப்பதில்லை என்பதால்தான், தன்னுடைய spiritual power(ஆத்ம சக்தி)-ஐக் கொண்டு ஒருத்தன் 'ஸோஷல் ஸர்வீஸ்'பண்ணணும்;அந்த 'ஸோஷல் ஸர்வீஸா'லேயே இந்தப் 'பவரை'விருத்தி செய்து கொள்ளணும் என்பதாக இரண்டையும் கைகோர்த்துக் கொண்டு, ஒன்றால் மற்றது புஷ்டி பெறுகிற ரீதியில், நம்முடைய மதத்திலே அமைத்துக் கொடுத்திருக்கிறது.

வேத தர்மத்தைப் பூர்ண ஜீவசக்தியுடன் ப்ரகாசமாகத் தூண்டிவிட்ட ஆசார்யள் வினா-விடை ரூபத்திலே 'ப்ரச்நோத்தர ரத்நமாலிகா'என்று அநுக்ரஹித்திருக்கிறார் அதிலே ஒரு கேள்வி:

" கிம் மநுஜேஷுு இஷ்டதமம் ?"

"மநுஷ்யனாகப் பிறந்தவன் விரும்ப வேண்டியவற்றில் தலை சிறந்தது எது?"என்பது கேள்வி.

" ஸ்வ பர ஹிதாய உத்யதம் ஜந்ம " என்பது இதற்குப் பதில். 'ஸ்வஹிதம்'- தனக்கு நன்மையானது அதாவது ஸ்வயோபகாரம் இதோடு 'ப்ரஹிதம்'என்கிற பரோபகாரம். இரண்டுக்காகவும் பாடுபடும் வாழ்க்கைதான் மநுஷ்யன் வேண்டத் தக்கவற்றில் உச்சியானது என்று பதில் சொல்கிறார். இங்கே ஆசார்யாள் நவீனர்களின் 'க்ரிடிஸிஸ'த்துக்கு ஆணி அடித்தாற்போல் விடை சொல்லியிருக்கிறார்.

இதே க்ரந்தத்தில் இன்னோரிடத்தில் சந்திர கிரணத்துக்கு ஸமானமான மனிதர்கள் ஸஜ்ஜனங்களே என்கிறார். சந்திர கிரணம் லோகத்துக்கெல்லாம் தாப சமனம் தருகிறது. சந்திரனுக்கு இப்படி உலகத்துக்கு உதவி செய்ய வேண்டும் என்று ஆசை இருந்து, இதற்காக அது ப்ரயத்தனப்படவேண்டும் என்று இல்லை. தன்னியல்பாகவே அது லோக ஹிதத்தை உண்டாக்குகிறது. அதேபோல லஜ்ஜனங்கள் என்கிற ஸாதுக்கள் "ஸோஷல் ஸர்வீஸ்

பண்ணனும்"என்று அரிப்புப் பட்டுக்கொண்டு, தண்டாரோ போட்டுச் செய்யணும் என்றே இல்லை. அவர்கள் தங்களுடைய 'நேச்சர்'படி இருப்பதே, நடப்பதே லோகஹிதமாக, பரோபகாரமாகத்தானிருக்கும். இதையேதான் ஸஜ்ஜனங்களுக்கெல்லாம் சிகரமாகப் பரம சாந்தர்களாக, மஹாந்தர்களாக இருக்கப்பட்ட ஜீவன் முக்தர்களின் லக்ஷணமாகவும் (ஆசார்யாள்) "விவேக சூடாமணி"யில் சொல்கிறார். இங்கே 'சந்திர கிரணம் மாதிரி'என்றவர் அங்கே "வஸந்த காலம் மாதிரி"என்கிறார்.

வஸந்தவத் லோகஹிதம் ச்ரந்த

வஸந்தகாலம் போல உலக நலனைப் பண்ணியபடி உலாவுகிறார்களாம் மஹான்கள். வஸந்தம் என்று ஒன்று கண்ணுக்குத் தெரிகிறதோ?சந்திரனாவது தெரிகிறது. மஹான்கள் தங்களை இப்படிக் காட்டிக் கொள்வதுகூட இல்லை!ஆனாலும் வஸந்தம் வந்தால் தன்னால் தென்றல் ஹிதமாக வீசுகிறது. புஷ்ப ஜாதிகள், மல்லிகை முக்யமாக, எங்கே பார்த்தாலும் மலர்ந்து கம்மென்று வாசனை வீசுகின்றன. மா முதலான பழங்கள் குலுங்க ஆரம்பிக்கின்றன. சிசிர ருது என்கிற பின்பனிகாலத்தில் இலையை உதிர்த்துவிட்டு நின்ற மரமெல்லாம் வஸந்தம் வந்ததும், அதற்குப் பச்சைக்கொடி காட்டுகிறதுபோல பச்சைப்பசேல் என்று தளிர் விடுகின்றன இப்படித்தான் இந்த சரீரத்திலிருக்கும்போதே 'தான் பிரம்மம்'என்று தெரிந்துகொண்டுவிட்ட ஜீவன்முக்தனும்கூட unconscious-ஆக (தன்னுடைய புத்தி பூர்வமாக இல்லாமலே), unnoticed ஆக (தன்னைக் காட்டிக் கொள்ளாமலே) லோக ஹிதத்தை உண்டாக்குகிறான் என்று இப்படி இருந்து காட்டிய ஆசார்யாளே, unself-conscious ஆக (தன்னைப்பற்றிச் சொல்லிக் கொள்கிறோம் என்ற நினைப்பேயில்லாமல்) சொல்லியிருக்கிறார்!

"பொதுவாகவே ஹிந்து மதத்தில் பரோபகாரம் கிடையாது. அதிலும் அந்த மதத்தில் உள்ள அத்வைதத்தில் லோகமே மாயை;ஆத்மாவைத் தவிரப் பிறத்தியானென்றே இல்லை'என்று சொல்லித் துளிக்கூடப் பரோபகார ப்ரக்ஞைக்கு இடமேயில்லாமல் அடைத்து விட்டிருக்கிறது"என்று ஒரு criticismஇருந்தாலும், அத்வைத ஆசார்யாளே அத்வைத ஸித்தியை அடைந்து விட்டவனும் லோக ஹிதத்துக்காகத்தான் உலகத்தில் உலாவிக் கொண்டிருக்கிறான் என்கிறார்.

பகவானும் (ஸ்ரீ கிருஷ்ணரும்) ஜீவன்முக்தர்களான ஜனகாதியர்கூட 'லோக ஸங்க்ரஹ'த்துக்காக கார்யம் பண்ணிக்கொண்டு தானிருக்கிறார்கள் என்று (கீதையில்) சொல்கிறார். 'ஸங்க்ரஹம்'என்றால் அன்போடு வழிகாட்டி உசத்துவது. தன்னில்தானே ஸகல ஸாதனைகளுக்கும் லக்ய ஸ்தானமாயிருந்தபோதிலும், தான் பண்ண வேண்டிய ஸாதனையோ, அடைய வேண்டிய லக்ஷ்யமோ எதுவும் இல்லாதபோதிலும், பகவானான தாமும் லோகத்தார் எப்படி வாழவேண்டும் என்ற 'ஐடிய'லை அவர்களுக்குக் காட்டிகொடுப்பதற்காகவே ஓயாமல் ஒழியாமல் கார்யங்கள் பண்ணிக்கொண்டிருப்பதாகச் சொல்கிறார். எதுவும் ஸாதிக்க வேண்டாத பகவானும் பரோபகாரத்தை ஸாதிக்கிறார்!இதையேதான் "ப்ரச்னோத்தர ரத்நமாலிகா"விலும் (ஆசார்யாள்), "கிம் ஸாத்யம்?"- "ஸாதிக்கத் தக்கது என்ன?"என்று கேட்டு, "பூத ஹிதம்"-"உயிர்க்குலத்துக்கு நன்மை செய்வது"என்று பதிலாகக் கொடுக்கிறார்.

'டாப் லெவ'லில் இருப்பவனுக்கே பரோபகாரத்தைச் சொன்ன அத்வைத ஆசார்யாள் ஸாதாரண மநுஷ்யனுக்கும் அந்த லெவலுக்கு ஏறுகிற வழியில் இதை அங்கமாகச் சொல்லித்தானிருக்கிறார். "பணம் ஸம்பாதிக்கிறாயா?ஸம்பாதித்துவிட்டுப்போ. ஆனால் அதை தார்மிகமாக ப்ரயோஜனப்படுத்தினாயானால் அதுவே உன் சித்தத்தைப் பரிசுத்தி பண்ண உதவும்"-

யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்

வித்தம் தேந விநோதய சித்தம்

என்று 'பஜகோவிந்த'த்தில் சொல்கிறார். அதிலேயே ஆத்ம ஸம்பந்தமாக, பகவத் ஸம்பந்தமாக, "கீதையைச் சொல்லு, ஸஹஸ்ரநாமம் சொல்லு, விடாமல் லக்ஷ்மிபதியான மஹாவிஷ்ணுவை த்யானம் பண்ணு, ஸத்ஸங்கத்திலேயே மனஸை ஈடுபடுத்து"

என்றெல்லாம் சொல்லிவிட்டு, முடிவாக "ஏழை எளியவர்களுக்குத் தான தர்மம் பண்ணு"என்று பரோபகாரத்தோடு முடிக்கிறார்:

கேயம் கீதா நாம ஸஹஸ்ரம் மி

த்யேயம் ஸ்ரீபதிரூபம் அஜஸ்ரம்

நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்

தேயம் தீநஜநாய ச வித்தம் மிமி

ஆனதால் வேத தர்மம் (லோகம், ஜீவன் எல்லாம் மாயை என்கிற அத்வைதமும்கூட) ஜீவாத்ம கைங்கர்யங்களை ஈஸ்வர ஸம்பந்தத்துடனே சேர்த்துச் சேர்த்து எல்லாரும் பண்ணியைக வேண்டுமென்று கொடுத்திருப்பதைப் புரிந்து கொண்டு அப்படியே செய்ய வேண்டும். நம் பூர்விகர்கள் போனவழி அதுதான். அதிலேயே நாமும் போய் அத்வைத த்ருஷ்டியில் எல்லா உயிர்களையும் ஈஸ்வர ஸ்வரூபமாகப் பார்த்துத் தொண்டு செய்து ஈஸ்வர ஸ்வரூபமாகப் பார்த்துத் தொண்டு செய்து ஈஸ்வர ப்ரஸாதத்தை அடைய வேண்டும்.

ஸர்வேஜநா : ஸுகிநோ பவந்து I

லோகா : ஸமஸ்தா : ஸுகிநோ பவந்து I

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*தன் கையே தனக்குதவி*

*ஸ்தோத்திரமும் கண்டனமும்*

இன்றைக்கு*1ஒரே விஷயமாக இரண்டு தினுஸான அபிப்ராயங்கள் என்னிடம் வந்தன. ஒன்று எனக்கு ஸ்தோத்ரம் இன்னொன்று வசவு. கௌரவமாக, நாஸூக்காக வைதார்கள். வைதார்கள் என்று நான் குற்றம் சொல்லவில்லை. அவர்கள் வைததில் எனக்கு புத்திமதி இருப்பதாகவே தெரிந்துகொள்கிறேன்.

ஸ்தோத்ரத்தைவிட வசவுதான் எப்போதுமே ஒருத்தனுக்கு நல்லது பண்ணுவது. ஸ்தோத்ரம் கர்வத்தில் கொண்டுவிட்டு ஆத்மஹானிக்குத்தான் வழி செய்கிறது. ஒருத்தர் வைகிறபோதுதான் நமக்கு நம் தப்புத் தெரிய இடமேற்படுகிறது. அதனால் அதைத் திருத்திக்கொண்டு ஆத்மாவை சுத்தி பண்ணிக்கொள்ள வழி உண்டாகிறது. ஆகையால் நமக்கு நல்லது செய்வது யார் என்றால் நம்மை ஸ்தோத்ரம் செய்கிறவனில்லை நாம் பண்ணுகிற தப்பைச் சொல்கிறவன்தான். சொல்கிறதுண்டு:"சிரிக்கச் சிரிக்கச் சொல்கிறவர் மற்றபேர்;அழ அழச் சொல்கிறவர் உற்றபேர்."

ஒரே விஷயமாக இப்படி இரண்டு வித உபசாரங்களும் - நான் கர்வப்படும்படி ஸ்தோத்ர உபதாரமும், எனக்கு புத்தி வரும்படி கண்டன மஹா உபசாரமும் - கிடைத்தன.

எப்பொழுதெப்பொழுதோ, எங்கெங்கேயோ நான் ஸோஷல் ஸர்வீஸ் பற்றிச் சொன்னதை இப்போது போட்டுக் கொண்டிருக்கிறார்களோல்லியோ?*2அதை இப்போதுதான் நான் புதிசாக எழுதுகிறேனாக்கும் என்று நினைத்துக் கொண்டுதான் ஒருத்தர் வந்து அதற்காக என்னை ஸ்தோத்ரம் பண்ணிவிட்டுப் போனார்.

அதனால் எனக்கு கர்வம் வந்தவிடப் போகிறதே என்று அம்பாளே அனுப்பி வைத்தமாதிரி, தம்பதியாக இரண்டு பேர் வந்து இதைப்பற்றிய வேறே தினுஸான அபிப்ராயம் சொல்லிவிட்டுப் போனார்கள். அவர்களில் அகமுடையான் கொஞ்சம் எடுத்துக்கொடுத்தவுடன் பெண்டாட்டியும் சேர்ந்து கொண்டுவிட்டான். 'வசவு, வசவு'என்று

நான் சொன்னாலும் அவர்கள் தாபத்தை ரொம்ப அடக்கிக்கொண்டு, வார்த்தையில் கொஞ்சம்கூடப் பதட்டப்படாமல், மரியாதைக் குறைவாக ஒரு சொல்கூடச் சொல்லாமல்தான் பேசினார்கள். கோபப்பட வேண்டிய இடத்தில் துக்கப்பட்டுக்கொண்டே சொன்னார்கள். ஆனாலும் அதை வசவு என்று வைத்துக் கொண்டால்தான் எனக்கு ரோஷம் வந்து கொஞ்சம் deep-ஆக என்னை நானே அலசிப் பார்த்துக்கொள்வேன் என்று தோன்றியதால் "வசவு, வசவு"என்று சொல்கிறேன்.

----------

*1. 1976-ம் ஆண்டு பிற்பகுதியில் ஒரு தினம்.

*2. 'கல்கி'யில் அச்சமயம் வெளியாகி வந்த 'ஜீவகாருண்யம்'என்ற ஸ்ரீ பெரியவர்களின் உரைத்தொகுப்புத் தொடர் குறிப்பிடப்படுகிறது. இத்தொடர் நமது இந்நூலின் முந்தைய உரையான 'பரோபகாரம்'என்பதில் அடங்கும்.



## *சாஸ்திரக் கட்டளை*

சாஸ்திரத்தில் அவனவனும் தன் வஸ்திரத்தைத் தானே தோய்த்துப் போட்டுக்கொள்ளணும், தன் சாதத்தை தானே களைந்து வைத்துப் பொங்கித் தின்ன வேண்டும். (ஸ்வயபாகம் என்பது இதுதான்) என்றெல்லாந்தான் சொல்லியிருக்கிறது. "கந்தையானாலும் கசக்கிக் கட்டு"என்கிறபோது கட்டிக் கொள்வது மட்டும் இவன் என்றில்லை;'கசக்க'வேண்டியவனும் இவன்தான்!'அம்மாவையோ வேறு யாரையோ கசக்கும்படி பண்ணி (மனஸூம் கசக்கும்படிப் பண்ணி) நீ கட்டிக்கொள்'என்று இல்லை.

ஒருத்தனுடைய நித்ய சர்யைகளை (அன்றாட நடவடிக்கைகளை) தர்ம சாஸ்திரத்தில் சொல்கிறபோது அவன் கார்யம் முழுவதையும் அவனே பார்த்துக் கொள்ளும்படிதான் வைத்திருக்கிறது. பூஜைக்குப் புஷ்பம், பத்ரங்கூட அவனவனேதான் பறித்துக்கொள்ள வேண்டுமென்று இருக்கிறது. ஆனாலும் குரு மாதிரி ஸ்தானத்திலிருக்கிற ஒரு பெரியவர், வயோதிகர், மாதா பிதாக்கள் ஆகியவர்களுக்குக் கைங்கர்யம் செய்வது புண்யமென்பதால் இப்படிப்பட்டவர்களுக்காக சிஷ்ய ஸ்தானத்தில், புத்ர ஸ்தானத்திலிருப்பவர்கள் வஸ்திரம் தோய்த்துப் போடுவது, புஷ்பம் பறித்து வருவது, பூஜா கைங்கர்யம் பண்ணுவது என்றெல்லாம் ஏற்பட்டிருக்கிறது.



## *பெரியோர்கள் உதாரணம்*

பெரிய ஆசார்ய ஸ்தானத்திலிருந்தவர்களில் கூடத் தங்கள் காரியத்தை சிஷ்யர்களிடம் விடாமல் தாங்களே செய்துகொண்டவர்களுண்டு. வேதாந்த தேசிகன் ஒரு பெரிய ஸம்பிரதாயத்துக்கே மூல புருஷராயிருந்தபோதிலும் தம்முடைய ஆஹாரத்துக்குத் தாமேதான் உஞ்சவ்ருத்தி செய்திருக்கிறார். திருவையாற்றில் தியாகராஜ ஸ்வாமிகளும் இப்படிப் பண்ணியிருக்கிறார். இவர்களுக்கு எத்தனையோ பேர் ஸத்காரம், ராஜோபசாரமே பண்ணக் காத்துக் கொண்டிருப்பார்கள்!Mahomet (முஹமது நபி) கூட religious head ஆக (மதத் தலைவராக) மட்டுமின்றி temporal power (ஆட்சியதிகாரம்) பூராவும் வைத்துக்கொண்டிருந்தாலும் தம் கார்யம் முழுவதையும் தாமே பண்ணிக்கொண்டார் என்கிறார்கள்.

நாமதேவர், கோராகும்பர், திருநீலகண்ட நாயனார், திருக்குறிப்புத் தொண்ட நாயனார் போன்ற மஹா பாகவதர்களும் சிவனடியார்களும் தங்கள் குடும்ப ட்யூட்டிக்காக தையல்வேலை, குசவுவேலை, ஏகாலித் தொழில் இவைகளை விடாமலே பண்ணி வந்திருக்கிறார்கள்.

சிவாஜி தன் ராஜ்யத்தையே ஸமர்த்த ராமதாஸின் காலடியில் குருதக்ஷிணையாகப் போட்டு விட்டு, அவர் பெயரில்தான் ராஜ்யபாரம் பண்ணினான். அப்படியிருந்தும் ராமதாஸ் 'மாதுகரி'பிக்ஷைதான் வைத்துக் கொண்டிந்தார்*

தங்கள் பொருட்டுப் பிறத்தியாரை ச்ரமப்படுத்தக் கூடாது என்ற உசந்த கொள்கைதான் இதற்குக் காரணம்.

ஆகவே வெளியிலே ஸோஷல் ஸர்வீஸ் செய்பவனாகப் பேர் வாங்கிவிட்டு, வீட்டிலே இவன் மற்றவர்களின் ஸர்வீஸை வாங்கிக்கொள்கிறானென்றால் அது 'ஹம்பக்'தான்.

ஆனால் வீட்டுக் கார்யம், சொந்தக் கார்யம் என்பதும் சாஸ்த்ர ஸம்மதமானதாக இருக்க வேண்டும். இப்போது ஒவ்வொருத்தனுக்கும், அவனுடைய குடும்பத்துக்காரர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் பேராசைகளையெல்லாம் பூர்த்தி செய்வதை 'ட்யூட்டி'என்று சொல்ல முடியாததுதான். இத்தனையையும் கவனித்து விட்டுத்தான் ஒருத்தன் பொதுத்தொண்டுக்குப் போகலாம் என்றால் பொதுத்தொண்டே நடக்காது. வீட்டு மநுஷ்யர்கள் அப்படி சொல்வதைக் கேட்கவேண்டுமென்பதில்லை.

----------

* 'மதுகரம்'என்றால் வண்டு. வண்டு பல புஷ்பங்களிலிருநது துளித்துளியாகத் தேன் எடுத்துக்கொள்வதுபோல் எந்த ஒரு கிருஹஸ்தருக்கும் அதிக ச்ரமம் தராமல் ஒரு குடும்பத்திலிருந்து ஒரு கவளம் வீதம் பல குடும்பங்களில் பிக்ஷை வாங்கி உண்பதே 'மாதுகரி பிக்ஷை'. ஐந்த குடும்பங்களில் மாதுகரி பிக்ஷை பெற வேண்டும் என்றும் நியமமுண்டு.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*மாதா-பிதா விஷயம்*

ஆனாலுங்கூட மாதா பிதாக்களை இம்மாதிரி விஷயங்களில் ஒருத்தனால் சாந்தமாக எடுத்துச் சொல்லிக் 'கன்வின்ஸ்'பண்ண முடியவில்லை என்றால் அப்போது அவர்களிடம் சண்டைக்குப் போகப்படாது. அவர்களை மீறியும் செய்யக்கூடாது. சாஸ்த்ரப்படி மாதா பிதா வாக்ய பரிபாலனத்துக்கு அப்புறந்தான் எந்த தர்மமும். அதனால் அவர்கள் தப்பாகச் சொன்னாலும் அவர்களுக்குத் தெளிவு தரவேண்டுமென்று பகவானைப் பிரார்த்திக்க வேண்டுமே தவிர மீறிச் செய்யக்கூடாது. அதன் பாபமோ புண்யமோ அவர்களைச் சேர்ந்தது என்று விட்டுவிட வேண்டும். இப்போது இந்த நிமிஷம், இந்த மாதா பிதாக்களின் கஷ்டத்தைப் பார்த்ததில் இப்படித்தான் கொஞ்சம் கடுமையாகவே சொல்லத் தோன்றுகிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*மனைவி மக்கள் விஷயம்*

பத்னி,புத்ரர் விஷயம் வேறு. அவர்கள் நம்மைவிட ஸ்தானத்தில் சின்னவர்கள். அதனால் நியாயமாக அவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகளைப் பூர்த்தியாகப் பண்ணுவதற்கு மேலாக அவர்கள் நம்மைத் தங்கள் ஸமாசாரங்களிலேயே இழுத்து லோகஸேவை செய்யவொட்டாமல் தடை பண்ணினால் அதற்குக் காது கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அதை மீறியும் நம்மாலான லோகப்பணிகளைச் செய்யத்தான் வேண்டும். சாஸ்த்ரப்படி நம் கட்டுப்பாட்டின்கீழ் இருப்பவர்களான பத்னி, புத்ரர்களையும் நாம் பொதுத் தொண்டுகளில் ஈடுபடுத்த வேண்டும். ஆனால் எந்தப் பக்கமானாலும் அதில் மிகையாகப்

போய்விடக்கூடாது. பெண்டாட்டி, பிள்ளைகுட்டிகளைக் கவனிக்காமல் பரோபகாரம் என்று புறப்படக்கூடாது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*நோக்கத்துக்கே குந்தகம்*

இதிலே ஸைகலாஜிகலாக ஒன்று கவனிக்க வேண்டும். ஒருத்தன் தன் வேலை, வீட்டு வேலைகளை மற்றவர்களிடம் விட்டுவிட்டுப் பொதுப்பணிக்குப் போகிறான் என்னும்போது, வீட்டின் மற்ற பேருக்கு இவனிடம் ஏற்படுகிற அதிருப்தியில் ஸமூஹத்தொண்டே பிடிக்காமல் போய்விடுகிறது. "போதும், இன்னொருத்தன் ஊர்க்கார்யம் என்று உழப்பறித்துக்கொண்டு அகத்துக் காரியத்தை விட்டிருப்பது. நமக்கு இந்த ஸேவையும் கீவையும் வேண்டாம்"என்று அவர்களுக்கு ஒதுங்கிப்போகத் தோன்றிவிடும். அதுவே அவன் அளவறிந்து அகத்துக் காரியத்தையும் கவனித்துக் கொண்டு பொதுக் காரியமும் பண்ணினானென்றால் அப்போது வீட்டின் மற்ற மநுஷ்யர்களும் இவனோடுகூடவெளித்தொண்டுக்கு வந்து தங்களாலானதைச் செய்வார்கள் வீட்டுக் காரியத்தைக் கவனிப்பதால் இவனொருத்தன் செய்யும் ஸோஷல் ஸர்வீஸ் குறைந்து போகிறதென்றால், இப்போது அதைவிட ஜாஸ்தியாக மற்றவர்களின் ஸர்வீஸ் ஸொஸைட்டிக்குக் கிடைத்துவிடும். இவன் அதியாகப் போய் வீட்டு மநுஷ்யர்களின் அதிருப்தியை ஸம்பாதித்துக் கொள்ளும்போதோ, தன் நோக்கத்துக்கே பாதகமாக, அவர்களால் ஏற்படக்கூடிய ஸோஷல் ஸர்வீஸைத் தடுத்துவிடுகிறான்!

தொண்டுக்குப் போகிறவர்களுக்கு ஒரு 'ட்ரிக்'சொல்லித் தருகிறேன். அன்போடு பதவிசாக நடப்பதுதான் 'ட்ரிக்'!வெளி மநுஷ்யர்களிடம் மட்டுமில்லை, அகத்துப் பேரிடமும் இப்படிப் பரிவாக, பணிவாக இருந்தானானால் அவர்களே, "நாம்தான் வீட்டையே கட்டிக்கொண்டு அழுகிறோம். இவனாவது லோகத்துக்குப் பண்ணி, நமக்கும் சேர்த்துப் புண்யம் ஸம்பாத்தித்து தரட்டும்"என்று நினைத்து அவனிடம் வீட்டு வேலைகளைக் கூடிய மட்டும் காட்டாமல் தாங்களே பண்ணுவார்கள்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*வீட்டுக்குப் பின்பே வெளியுலகு*

ஒருத்தன் ஸந்நியாஸாச்ரமத்துக்குப் பாத்ரமான உத்தமாதிகாரியாக இருந்தால்கூட, ஏக புத்ரனானல் தாயார், தகப்பனார் ஸம்மதமில்லாவிட்டால் அவனுக்கு ஆச்ரமம் தரமாட்டார்கள்;இப்படியே க்ருஹஸ்தனானால் பெண்டா ட்டி பிள்ளை-குட்டிகளை நிர்கதியாக விட்டுவிட்டு வந்தவனுக்கும் எத்தனை யோக்யதை இருந்தாலும் ஸந்நியாசம் தருவதில்லை. அதாவது சொந்தக் கடமையை, குடும்பப் பொறுப்பை விட்டனுக்கு பாரமார்க்கத்திலேயே மூழ்கிவிடுவதற்குகூட 'ரைட்'இல்லை என்று வைத்திருக்கும்போது, ஆத்ம, ஞானத்துக்கு முதல் 'ஸ்டெப்'மட்டுமேயான லோக ஸேவைக்காக ட்யூட்டியை, ரெஸ்பான்ஸிபிலிடியை விடுவதென்பதைக் கொஞ்சங்கூட ஆமோதிக்கிறதற்கில்லை.

இதைப்பற்றி நான் இதுவரை அழுத்தமாகச் சொல்லாதது தப்புத்தான். இப்போது இதற்காக நான் மறபடி 'லெக்சர்'அடிக்கிற வழக்கத்தை ஆரம்பிக்கிறதாகவும் இல்லை. ஆனாலும் என்னிடம் இப்போதும் வருகிறவர்கள் போகிறவர்களிடத்தில் இதைச் சொல்லணும் என்று நினைத்துக் கொள்கிறேன். நான் எல்லவற்றையும் விடணும் என்று நினைத்த அப்புறமும், வருகிறது வந்து சேர்ந்துகொண்டுதானிருக்கிறது!இப்போதுதான் நான் சொல்கிறதையெல்லாம் - சொல்லாததையெல்லாம்கூட - ஜாஸ்திப் பிரசாரம் பண்ணுவதாகவும் ஏற்பட்டிருக்கிறது!அப்படி இந்த அபிப்ராயமும் - சொந்தக் கார்யத்தையும் டொமெஸ்டிக் ஸர்வீஸையும் விட்டுவிட்டு ஸோஷல் ஸர்வீஸுக்குப் போகப்படாது என்று சொல்வதும் -

பரவினால் பரவட்டும்.

இப்போது இந்த தம்பதி வந்து அழுததுதான் என்றில்லை. அவ்வப்பொழுது இப்படி ஏற்பட்டிருக்கிறது. கடிதாசுகளும் வந்திருக்கின்றன. ஒரு பிராம்மணர். அவர் வக்கீலாக ப்ராக்டிஸ் பண்ணிக் கொண்டிருந்தார். அவரை நான் என் ஸ்வய கார்யத்தில் ஒரேயடியாக இழுத்துவிட்டேன். இந்த தேசம் பூராவும் எங்கெங்கே என்ன வேத சாகை இருக்கிறது என்று அவரை அலைந்து திரிந்து ஸ்டாடிஸ்டிக்ஸ் எடுத்துவரப் பண்ணினேன்;பாடசாலை பாடசாலையாக ஏறி இறங்க வைத்தேன். இதனால் அவருடைய பத்னியும், ஒரே பெண்ணும் ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். அந்தக் குழந்தை என்னோடு சண்டையே போட்டிருக்கிறது. சண்டை என்று சொல்வது தப்பு - உபதேசம் பண்ணிற்று என்று சொல்லணும். "அப்பா ப்ராக்டிஸ் போயிடுத்து உடம்பும் வீணாப்போயிடுத்து. நாங்களும் நிராதரவாகப் போய்விட்டோம். எனக்கு அப்பா யார் என்று அடையாளமே மறந்து போய்விடுகிற அளவுக்கு இப்படி அவரைப் பிடித்து வைத்துக்கொண்டு ஊர் ஊராக அலையப் பண்ணுகிறீர்களே!"என்று அந்தப்பெண் கேட்கும். அப்படியும் நான் பாட்டுக்கு, 'அவர்கள் விசாரம் அவர்களுடைய ஸமாசாரம்;என் கார்யம்தான் எனக்கு'என்று அந்த மநுஷ்யரை அப்படியே அல்லாட விட்டுக் கொண்டிருந்தேன். அப்புறம் அவர்களே "இதுதான் நமக்கு விதி"என்று ஓய்ந்து போய்விட்டார்கள். ஒரு பக்கம் என்னிடம் இப்படி அவர்களுக்கு வருத்தம் இருந்த போதிலும் பக்தியும் உண்டு. அதனால் தங்கள் குடும்பத்தில் ஏற்பட்ட அநேக நல்லதுகளுக்கு என் அநுக்ரஹம்தான் காரணம் என்று நினைத்துக்கொண்டு என்னிடம் மரியாதை விச்வாஸங்களோடேயே இருக்கிறார்கள்.

ஒருவன் எப்படியிருந்தாலும் பத்னி புத்ரான் ஸஹித்துக்கொள்ளத்தான் வேண்டும். என்கிற சாஸ்திரப்படி, நான் இப்படிச் சும்மாவே இருந்ததற்கு ஸமாதானம் சொல்லிவிடலாம். ஆனால் இப்போது ஒரு மாதாபிதாக்கள் துக்கப்பட்டுக்கொண்டபோது - மாதா, பிதாவுக்கு அப்புறந்தானே குரு என்று நான் வருகிறேன்?- நான் சொல்லிக்கொள்ள ஸமாதானம் எதுவும் இல்லை என்று நியாயம் உறைத்து, இதையெல்லாம் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*உச்சநிலை உதாரணமாகாது*

பிரஸங்கம் பண்ணின நாளில், "ஊர்க்குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே வளரும்"என்று அடிக்கடி quote பண்ணித்தான் இருக்கிறேன். அதாவது உன் குழந்தையைப் பட்டினி போட்டுவிட்டாவது போய் ஊர்க் குழந்தையை ஸவரக்ஷணை பண்ணு என்று சொல்லித்தான் வந்திருக்கிறேன். அப்படிப் பழமொழி இருப்பதும் வாஸ்தவம். ஸத்யமாக இல்லாத ஒன்று பழமொழியாக ஆகிறதில்லை. ஆனால் இந்தப் பழமொழி ரொம்ப உசந்த நிலையில், தொண்டு மனப்பான்மையில் அப்படியே ஊறிப்போனவர்களைக் குறித்து ஏற்பட்டிருக்க வேண்டும். அவர்கள் மனஸறிந்து தன் குழந்தையைக் கதற விட்டுவிட்டு ஊர்க் குழந்தையைச் சீராட்டினார்களென்று அர்த்தமில்லை. பரோபகாரத்தில் அவர்களுக்குள்ள தீவிர உணர்ச்சி வேகம் அவர்களை இப்படி அடித்துக்கொண்டு போயிருக்கிறது. பக்தி வெறியில் ஒவ்வொரு நாயன்மார் லோக தர்மங்களுக்கு விரோதமாகக்கூடப் பண்ணவில்லையா?அப்படி இதுவும் ஒரு பரவச நிலையில் பண்ணுவது. அப்படி இவர்கள் தங்களுக்கு அதீதமான ஒரு சக்தியின் கீழ் ஊரிலே உள்ள அநாதைக் குழந்தைகளின் நலனுக்கே தங்களை அர்ப்பணம் பண்ணிக்கொண்டபோது, ஈஸ்வர பிரஸாதமாக வீட்டிலே இவர்களுடைய குழந்தைகள் கவனிப்பு இல்லாமலே (அல்லது ஈஸ்வரனின் கவனிப்பிலேயே) நன்றாக வளர்ந்திருக்கும். இது ஸாதாரணமாக லோகத்திலிருக்கப்பட்டவர்களுக்கு 'எக்ஸாம்பிள்'ஆகாது.

தன் குழந்தையைக் கவனிக்காமல் ஊர்க் குழந்தையைச் சீராட்டுவது பற்றி வேடிக்கையாக ஒருத்தர் சொன்ன கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தக் காலத்தில் ஸ்த்ரீகள் ஸோஷல் ஸர்வீஸ் என்று கிளம்பியிருப்பது பற்றிக் கேலியாக அவர் சொன்னாராம்:ஒரு பணக்கார வீட்டு அம்மாள் பெட்ரோலைச் செலழித்துகொண்டு ஏதோ ஒரு சேரிக்குப் போய், ஏந்த

தேசத்திலிருந்தோ வந்திருக்கிற பவுடர் பாலைக் கரைத்து அங்கே ஒரு குழந்தைக்குப் போட்டி (புகட்டி) விட்டு வருவாளாம். இங்கே இவளுடைய வீட்டில், இவள் எந்தக் குழந்தைக்குபால் போட்டினாளோ அதனுடைய அம்மாக்காரியே இவளுடைய குழந்தைக்கு ஆயாவாகப் பால் கரைத்துப் போட்டிக் கொண்டிருப்பாளாம்!

அதாவது ஸோஷல் ஸர்வீஸ் செய்கிறோமென்று தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டுவிடக்கூடாது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*கடமை தவறுவதற்குத் தண்டனை*

இதற்கெல்லாம் basic-ஆக ஒரு ஞானம் இருந்துவிட்டால் போதும். அதாவது நம்முடைய லோக ஸேவையால்தான் லோகம் நடக்கிறது என்ற பிரமை ஒருகாலும் இருக்கக்கூடாது. மரம் வைத்தவன் தண்ணீர் விடுகிறான். லோகத்தைப் பண்ணின ஒருத்தன் இருக்கிறானே அவனே அதை ரக்ஷித்துவிட்டுப் போவான். அதற்கு நாம் ஒரு கருவிதான். நம்முடைய பாப கர்மா கழியவே பரோபகாரமே தவிர நாமில்லாவிட்டால் அந்த உபகாரம் லோகத்துக்குக் கிடைக்காமல் போய்விடாது என்ற ஞானம் இருந்தால் அளவோடு நிற்போம். ஜீவனத்துக்கு அவச்யமான சொந்தக் கார்யங்கள், குடும்பக் கடமைகள் இவற்றைப் பண்ணிக் கொள்வதிலும் கர்மநாசம், சித்த சுத்தி ஏற்படத்தான் செய்யும். ஈஸ்வராநுக்ரஹத்தில் இப்படிப்பட்ட பொறுப்புகள் அதிகமில்லாதவர்கள் நிரம்பப் பரோபகாரப் பணிகளில் ஈடுபட்டே ஆத்மாவைப் பரிசுத்தி பண்ணிக்கொள்ள வேண்டும்;அப்படிப்பட்டவர்களுக்கு இதுவே ட்யூட்டி ஆகிறது. டொமெஸ்டிக் ட்யூட்டிபோல ஸோஷல் ட்யூட்டியும் உண்டுதான். எத்தனை டொமெஸ்டிக் ட்யூட்டி இருந்தாலும், அதைப்பண்ணிவிட்டு, அதைப் பண்ணின அப்புறந்தான் ஸோஷல் ட்யூட்டியும் செய்ய வேண்டும். ரொம்ப அதிகம் குடும்பப்பொறுப்பு இருக்கிற ஒருசிலரைத் தவிர மற்ற எல்லோருக்குமே நியாயமான சொந்தக் கடமைகளைப் பண்ணிவிட்டும் ஸமூஹக் கடமை பண்ண அவகாசம் இருக்கவேசெய்யும். எப்படியானாலும் தன் காரியத்தைப் பிறர் கையில் விட்டுவிட்டும், அகத்து வேலையைக் கவனிக்காமலும் ஊர்க் காரியம் என்று போவதில் பிரயோஜனமில்லை. இப்படிப் போனதில் அந்தப் பையன், வீடு என்றாலே எரிச்சல் படுகிறான் என்றார்கள். இப்படிக் கோபமும் தாபமும்தான் பரோபகாரம் பண்ணினதில் ஒருத்தனுக்கு மிஞ்சினது என்று ஏற்பட்டால் அது சித்த சுத்திக்குப் பதில் சித்த அசுத்திக்குத்தான் வழி பண்ணியிருக்கிறது என்றே ஆகிறது. அதாவது பரோபகாரம் நல்ல பலன் தராதது மட்டுமில்லாமல், விபரீத பலனே உண்டாக்கியிருக்கிறது!சாஸ்த்ர ரீதியான கடமையை விட்டதற்காக இப்படி நல்லதே தண்டனையாக ஆகிறது!

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*தொண்டு மனத்தின் தன்மை*

இரண்டு மூன்று பழமொழி சொன்னேன். முடிவாக இன்னொன்று தோன்றுகிறது: "தன் கையே தனக்கு உதவி"தன் கை பிறருக்கும் உதவியாகப் பரோபகாரப் பணிகளைச் செய்யத்தான் வேண்டும். ஆனால் தன் கை தன் கார்யத்துக்கு உதவியாக இல்லாமல், தன் கார்யத்துக்கு அகத்தின் மற்ற மநுஷ்யர்களின் கையை எதிர்பார்த்துக்கொண்டு அவர்கள் கையில் நம் கார்யப் பொறுப்பை போட்டுவிட்டு, நாம் ஊருக்கு உபகாரம் பண்ணுவது என்பது தப்பு.

ஊருக்குப் பண்ணினால் நாலு பேர் நம்மைக் கொண்டாடுவார்கள். வீட்டுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையைச் செய்வதற்காக, வீட்டார் நம்மைக் கொண்டாடமாட்டார்கள்தான். வீட்டுக்குப் பண்ணாமல், தன் சொந்தக் கார்யத்தைப் பண்ணிக்கொள்ளாமல், ஊருக்கு ஒருத்தன் பண்ணுகிறான்;அதற்கு இடைஞ்சலாகச் சொல்கிறார்களே என்று

வீட்டுக்காரர்களிடம் எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் அவனுக்கு வாஸ்தவமான தொண்டு உள்ளமே இல்லை, பேர் வாங்குவதற்காகத்தான் ஸோஷல் ஸர்வீஸ் என்று பண்ணுகிறான் என்றே அர்த்தம்.

தொண்டு உள்ளத்துக்கு லக்ஷணம் அன்பும் அடக்குமும்தான். "தொண்டர் தம் பெருமை"என்று அதைப் பெரியதற்கெல்லாம் பெரியதாக மற்றவர்கள் கொண்டாடலாமேயொழிய, தொண்டு செய்கிறவனுக்குத் 'தான் பெரியவன்'என்ற எண்ணம்லவலேசங்கூட இருக்கக்கூடாது. தான் ரொம்பவும் சின்னவன் என்ற எண்ணமே இருக்க வேண்டும். பேருக்கு ஆசைப்பட்டுக் கொண்டு தொண்டு செய்வதென்றால் அந்தத் தொண்டையே அழுக்குப் பண்ணினதாகத்தான் அர்த்தம். அடக்கமும் அன்பும் இருந்தால் வீட்டிலே இருக்கிறவர்களை எதிர்த்துக் கொண்டும் அவர்களிடம் எரிந்து விழுந்து கொண்டும் எவனும் வெளியிலே தொண்டு செய்யப் போகமாட்டான்.

தான் பிறர் பாரத்தைத் தாங்குகிறவனாகத்தான் இருக்க வேண்டுமே தவிர, தன் பாரத்தை இன்னொருவரிடம் தள்ளினால் அது தனக்கு அவமானம்;தன் கை பிறருக்கு உதவுவதாக இருக்க வேண்டுமேயொழியத் தானே இன்னொரு கையை உதவிக்கு எதிர்பார்த்தால் அது தனக்கு ரொம்பவும் கௌரவஹீனம் என்ற உணர்ச்சி பரோபகாரத்தில் ஈடுபடுகிற எவனுக்கும் basic-ஆக ஏற்பட்டுவிட்டால் இப்போது கம்ப்ளெய்ன்ட் வந்தது போலக் கோளாறாக ஆகவே ஆகாது. லோக ஸேவைக்குப் போகிறவர்கள், ' என் கார்யம் பூராவையும் நானே பார்த்துக் கொண்டுதான் பொதுத்தொண்டுக்குப் போவேன் ' என்று பிரதிக்ஞை பண்ணிக் கொண்டுவிட்டால் எல்லாம் ஸரியாய்விடும்.

தன் கார்யம் என்பதில் தன் வீட்டுக் கார்யம், மாதா-பிதா-பத்னி-புத்ரர்-ஸஹோதரர் முதலான வீட்டு மநுஷ்யர்களின் கார்யம் அடக்கந்தான்.

என் கடமையில் தப்பாமல், குடும்பத்துக்குச் செய்ய வேண்டியதைச் செய்துகொண்டே உன் குடும்பமான - வஸுதைவ குடும்பகம் : லோகமெல்லாம் ஒரு குடும்பம் என்கிறபடி - ஸகல மக்களுக்கும் என்னாலான பணியைச் செய்ய அருள் பண்ணப்பா"என்று ஈஸ்வரனைப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டால் அவன் அப்படி அனுக்ரஹம் செய்வான். அதுதான் நாம் பண்ணிக்கொள்ள வேண்டிய வேண்டுதல்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*பொதுத்தொண்டும், குடும்பப் பணியும்*

ஸோஷல் ஸர்வீஸ் பற்றி நான் சொன்னதில் அவர்களுக்கு என்ன ஆக்ஷேபம்?ஸோஷல் ஸர்வீஸ் என்பதை நான் over-emphasize பண்ணி (மிகையாக அழுத்தங் கொடுத்து)ச் சொன்னதால் ஸெல்ஃப் ஸர்வீஸ் (அவனவன் தனக்குச் செய்து கொள்ள வேண்டியது), டொமெஸ்டிக் ஸர்வீஸ் (குடும்பத்துக்கான பணி) ஆகியவையெல்லாம் கெட்டுப் போகும்படியாகப் பண்ணியிருக்கிறேன் என்றுதான் ஆக்ஷேபம். அவர்கள் 'ஆக்ஷேபம்'என்று சொல்லிச் சண்டை போடாமல் அழுது விட்டுத்தான் போனார்களென்றாலும் இதுதான் அதற்கு அர்த்தம்.

நான் எப்பொழுது எதைச் சொன்னேனோ?(பத்திரிகைக்காரர்கள்) இப்பொழுது அதில் எதைப் போடுகிறார்களோ?அவனவன் தனக்குத்தானே பண்ணிக்கொள்ள வேண்டிய கார்யங்களையும், தன் வீட்டுக்குப் பண்ணவேண்டிய ட்யூட்டிகளையும் விட்டு விட்டு பரோபகாரம் என்று போக வேண்டும் என்று நான் நினைத்ததேயில்லை. அப்படி நான் 'அட்வைஸ்'பண்ணவும்மாட்டேன் ஆனாலும் உபந்நியாஸம் என்று செய்கிறபோது இதைப்பற்றி விசேஷமாகச் சொல்லாமலிருந்திருக்கிறேன் போலிருக்கிறது. தனக்கும் தன் குடும்பத்துக்கும் ஒருவன் செய்துகொள்வது சொந்தமாக ஏற்பட்ட ஸ்வபாவமான ஸமாசாரம். இதைப்பற்றி வெளி மநுஷ்யர்கள் விசேஷமாக எடுத்துச் சொல்ல வேண்டுமென்பதில்லை. ஸமூஹம் முழுவதற்கும் நல்லதற்கானதைச் சொல்லவும், அதற்காகத் திட்டங்களைப் போட்டுக் கார்யங்கள் பண்ணவுந்தான் நாங்கள் (ஆசார்ய பீடங்கள்) ஏற்பட்டிருக்கிறோம்.

அதனால் ஸோஷல் ஸர்வீஸை stress பண்ணியிருப்பேன்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஹிந்து மதமும் தனிமனிதனும்*

இதனால் individual(தனி நபர்), family(குடும்பம்) இதுகளை நாங்கள் இரண்டாம் பக்ஷமாய் வைத்துவிட்டோம் என்று அர்த்தமேயில்லை. நான் திரும்பச் திரும்பச் சொல்லியிருக்கிறேன் - ஹிந்து மதம் individual-ஐ சுத்தி செய்கிறதற்குத்தான் முதல் இடம் கொடுக்கிறது. மற்ற மதங்கள் மாதிரி அதில் social spirit (ஸமூஹ உணர்வு) இல்லை என்று அந்த மற்றவர்கள் கண்டனம் செய்கிறபோது, நாமும் இப்படி ஒரு மதம் இருந்தால் அது உசந்தநிலைதான் என்று தப்பாக நினைத்துக்கொண்டு அவர்களிடம், "அதெல்லாமில்லை, எங்கள் மதத்தில் பரோபகாரத்தைப் பற்றி எவ்வளவு இருக்கிறது பாருங்கள், அதுதான் எங்களுக்கு முக்கியம்"என்று defensive-ல் (தற்காப்பில்) argueபண்ணவே வேண்டாம். ஏனென்றால் வாஸ்தவத்திலேயே ஸொஸைட்டியைவிட நம் மதத்துக்கு இன்டிவிஜுவல் தான் முக்கியம். அவனவனும் தன்னுடைய ஆசார அநுஷ்டானத்தால் அவனவனை சுத்தி செய்து கொள்வதுதான் நம் மதத்துக்கே உயிர்நிலை என்பது என் அபிப்பிராயம். இன்டிவிஜுவல்களின் ஸ்வய அநுஷ்டான பலத்தினாலும், அவர்களுடைய பரிசுத்தியின் சக்தியினாலுந்தான் இந்த மதம், மற்ற எந்த மதமும் தோன்றுவதற்கும் முன்னாலிருந்து பதினாயிரம், லக்ஷம் வருஷங்களாக அந்த எல்லா மதங்களும் இதன்மேல் படையெடுத்து வந்ததையும் மீறி, இன்றைக்கு எந்த மதமுமில்லாத நாஸ்திக்யம் கரைபுரண்டு வந்துங்கூட ஸமாளித்து ஜீவனோடு இருக்கிறது என்பதே என் அபிப்பிராயம்.

ஹிந்துக்களின் மதத்துக்கு உயிர்நிலை தனி மநுஷ்யனின் ஸ்வதர்மப்படியான சுத்த வாழ்க்கை;கிறிஸ்தவர்கள் மதத்துக்கு உயிர்நிலை பரோபகாரம்;துருக்கர்கள் மதத்துக்கு உயிர்நிலை கட்டுப்பாடு என்பது என் அபிப்ராயம். பொதுவில் ஹிந்து மதம் தவிர மற்ற எல்லா மதத்தினருமே ரொம்பவும் organised-ஆக இருப்பார்கள். நமக்கு ஆர்கனைஸேஷன் போதாது;இங்கே தனி மநுஷ்ய சக்தியாலேயே மதம் ஜீவிக்கிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*மற்ற மதங்களுடன் வித்யாஸம்*

" ஸங்கம் சரணம் கச்சாமி"என்பதாக புத்தர் பல பேர் சேர்ந்து ஆர்கனைஸேஷனாக மதத்தைக் காப்பாற்றும்படிப் பண்ணினார். கிறிஸ்டியானிடியிலும் mass,congregation என்று எல்லாரும் சேர்ந்துதான் செய்கிறார்கள். மசூதியிலும் இப்படித்தான். இஸ்லாங்காரர்களுக்குள் இருக்கிற ஆர்கனைஸேஷனல் கட்டுப்பாடு சொல்லிமுடியாது. ஸிக்குகள், பார்ஸிக்காரர்கள் மாதிரி எண்ணிக்கையிலே குறைச்சலா யிருக்கிறவர்களைப் பார்த்தாலோ, அங்கேதான் எண்ணிக்கைக்கு எதிர் proportion-ல் ஆர்கனைஸேஷன், கட்டுப்பாடு இன்னும் ஜாஸ்தியாயிருக்கிறது. தங்களுடைய சின்ன ஸமூஹம் சிதறிவிடக்கூடாது என்பதாலேயே அவர்கள் ஸமய ரீதியில் ஸமூஹம் முழுவதும் பிரியாமல் ஒட்டிக்கொண்டிருக்கும் படி வைத்து நடத்துகிறார்கள்.

ஹிந்துமதம் தவிர மற்றவை எல்லாமே social based (ஸமூஹத்தை அடிப்படையாகக் கொண்டவை) என்கிறபடிதான் அவற்றின் மத வழிபாடு அமைந்திருக்கிறது. தனியாக அவனவனும் meditate பண்ணுவது (தியானிப்பது) என்பது எந்த மதத்திலும் இல்லாமலில்லை. புத்தமதத்தில் குறிப்பாக இது விசேஷ ஸ்தானம் பெற்றுத்தான் இருக்கிறது. ஆனாலுங்கூட கூட்டுப்பூஜை தவிர வீட்டுப்பூஜை என்று மற்ற மதங்களில் இல்லை. எல்லோரும் சேர்ந்து கூட்டு வழிபாடு, வர்ண-ஆச்ரமங்களால் ஏற்படும் தனித்தனி

அநுஷ்டானமில்லாமல் எல்லாருக்கும் ஒரேவிதமான அநுஷ்டானங்கள் என்பவைதான் மற்ற மதங்களில் முக்யமாக இருக்கின்றன.

"மற்றவர்கள் சர்ச்சில், மசூதியில், குருத்வாராவில் கூட்டு வழிபாடு பண்ணுகிறார்களென்றால் நாமும்தானே கோயிலில் சேர்ந்து உத்ஸவாதிகள் பண்ணுகிறோம்?"என்று கேட்கலாம். வாஸ்தவந்தான். ஆனால் அவர்கள் மாஸ், நமாஸ் பண்ணுவது போலக் கோயில்களில் நாம் கூட்டுப் பிரார்த்தனை ஒன்றும் செய்வதில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். கோயில்கள்தான் நம் வேத பாரம்பர்யத்துக்கே backbone (முதுகெலும்பு)-ஆக இந்த நாகரித்தைக் காப்பாற்றிக் கொடுத்துக் கொண்டிருக்கிறதென்றாலும், கோயில் மூலமாக நமக்குக் கிடைக்கிற ஈஸ்வர ப்ரஸாதத்தை இன்டிவிஜுவல் அநுஷ்டானத்தால் விருத்தி பண்ணிக் கொள்ளும்படியாகவே நம் மதம் அமைந்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

## *நமது ஆலய வழிபாட்டின் நோக்கம்*

ஆலயங்களில் ரிஷிகளின் தபஸை டெபாஸிட் மாதிரிப் போட்டு வைத்திருந்து அதிலுருந்து நாம் எடுத்துக் கொள்வது நிஜம். மூர்த்திகளிலிருந்து தெய்வாநுக்ரஹம் கிடைப்பது நிஜம். மந்த்ர பூர்வமான ஆராதனைகளால் நமக்கு ஆலயத்திலிருந்து ஆத்மார்த்தமான நன்மை நிறைய உண்டாவதும் நிஜம். இத்தனையும் இருந்தாலும் ஆலய வழிபாடும் நாம் தனிப்பட நம்மை உருப்பட வைத்துக் கொள்வதற்கு அங்கம்தானேயன்றி, communitysalvation-காக (ஒரு ஸமூஹம் முழுதும் மோக்ஷம் பெறுவதற்காக) அல்ல.

கோயிலில் பலபேர் சேர்ந்து பூஜைகள், உத்ஸவங்கள், கும்பாபிஷேகங்கள் செய்து, பொன்னையும் பொருளையும். கந்தம், புஷ்பம், நைவேத்யம், மேளதாளம் எல்லாவற்றையும் அர்ப்பணம் பண்ணுகிறோமென்றால் இதற்குப் பர்பஸே (நோக்கமே) வேறு. இப்படிப்பட்ட கூட்டுப்பணிதான் மதத்தின் முடிவு என்ற அபிப்பிராயத்தில் இதைச் செய்யவில்லை. ஆனால், community thanks giving-ஆகவே இதைச் செய்கிறோம். ஈஸ்வரனிடமிருந்து ஸமூஹம் முழுதும் பலவிதமான அநுக்ரஹங்கள் பெறுகிறதல்லவா?அதற்காக ஸமூஹம் முழுவதும் சேர்ந்து அவனுக்கு நன்றி தெரிவ்ப்பதற்கு அடையாளமாக, நன்றிக்கும் அன்புக்கும் ஸ்தூலமான அடையாளமாக, அவன் நமக்குக் கொடுத்திலிருந்தே திரும்ப அவனுக்கு வஸ்திரம், நைவேத்யம், வாஹனம் என்றெல்லாம் அர்ப்பணிப்பதுதான் நம்முடைய கூட்டு ஆலயப்பணியின் பர்பஸ்.

'ஸால்வேஷ'னுக்கு (விடுதலைக்கு) இதோடு நின்றுவிட்டால் போதாது. ஈஸ்வரனின் பரம க்ருபையில் கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தும், அந்த மூர்த்திகளில் அப்படியே உள்ளம் சொக்கி பக்தி பண்ணியுமே மோக்ஷ ஸாம்ராஜ்யத்துக்கும் போனவர்கள் உண்டுதான். ஆனாலும் இங்கேயுங்கூட அது அவர்கள் இன்டிஜுவலாக (தம்மளவில் மட்டும்) செய்து கொண்டதுதானே?பொதுவில் ஆலயத்திலிருந்து பெறுகிற சக்தியைத் தனி வாழ்க்கையின் அநுஷ்டான சுத்தத்தால் விருத்தி செய்து கொள்வதாகவே நம் மதம் இருக்கிறது. அவனவன் இப்படி சுத்தமாக அநுஷ்டானம் பண்ணித் தன்னைத்தானே கடைத்தேற்றிக் கொள்வதற்கான சக்தியையும் கோயிலுக்குப் போய்ப்போய், வேண்டி வேண்டியே பெறலாம்.

ரொம்பவும் controversial-ஆன (சர்ச்சைக் கிடமான) புஸ்தகம் எழுதின ஒரு வெள்ளைக்காரர்*என்னிடம், "உங்கள் கோயில்களில் என்ன இப்படி ஒரே சத்தமும் கூச்சலுமாயிருக்கே?"என்று கேட்டபோது நான் இதைத்தான் சொன்னேன். "சர்ச்சில், மசூதியில் புத்தவிஹாரத்தில் silent prayer செய்கிறதுபோலக் கோயிலில் செய்யணும் என்பது முக்ய உத்தேசமில்லை;எங்களுக்கு ஏகாந்தத்தில் த்யானம்தான் முக்யம். த்யானம், congregational worship (கூடிப் பிரார்த்தனை சொல்லி வழிபடுவது) ஆகியவற்றிற்காகக் கோயில் இல்லை. ராஜா நம்மை ரக்ஷிக்கிறான் என்பதற்காக அவனுக்கு அரண்மனை, அலங்காரம், பரிவாரம், படாடோபம் எல்லாம் கொடுக்கிறோம்;வரியும் கொடுக்கிறோம்

அல்லவா?அதே மாதிரி ஸர்வலோக ராஜாவாக, ஸர்வ கால ரக்ஷகனாக இருக்கப்பட்ட பகவானுக்குப் பொன்னையும் பூஷணத்தையும் கொடுத்து பெரிசாகக் கோயில் கட்டி வைத்து, மேளதாள விமரிசைகளோடு உத்ஸவம் செய்யவே, community thanks-giving-ஆக (ஸமூஹ நனறியறிவிப்பாக) collective offering-ஆக (கூடிக் காணிக்கை செலுத்துவதாக) எங்கள் ஆலய வழிபாட்டு முறை அமைந்திருக்கிறது. இங்கே அமைதியை எதிர்பார்க்க முடியாது. அமர்க்களம், ஆரவாரம், மேளதாளம், கண்டாமணி அதிர்வேட்டு இருக்கத்தானிருக்கும். அமைதியாக த்யானம் பண்ண அவரவர் வீட்டிலும் பூஜாக்ருஹமுண்டு. ஆற்றங்கரை, குளத்தங்கரை உண்டு"என்று சொன்னேன்.

இப்படிச் சொன்னதால் கோயிலில் அவரவர்களும் இரைச்சல் போட்டுக்கொண்டு, அரட்டை அடித்துக் கொண்டிருப்பதற்கு லைஸென்ஸ் தந்ததாக அர்த்தமில்லை. சாஸ்த்ரோக்தாக அநுமதிக்கப்பட்டிருக்கும் ஓசைகளை - மணி அடிப்பது, வேத கோஷம், தேவாரம், பஜனை, மேளம், புறப்பாட்டில் வெடி இவற்றைத்தான் - நான் சொன்னது.

இந்த மாதிரி சாஸ்த்ரோக்தமான சப்தங்களுக்கே மௌன த்யானத்தில் ஒருத்தனை ஈடுபடுத்துகிற அபூர்வமான சக்தி உண்டு. இம்மாதிரி சப்தங்களுக்கு நடுவிலேயே ஸந்நிதானத்தில் சிறிது கண்ணை மூடிக்கொண்டால், அல்லது தக்ஷிணாமூர்த்திக்கு எதிரே ஐயம் பண்ண உட்கார்ந்துவிட்டால், சட்டென்று ஒரு லயிப்பு உண்டாகிவிடும். தனி மநுஷ்யன் தன்னைத் தனக்குரிய அநுஷ்டானத்தால் சுத்தப்படுத்திக்கொண்டு தன் வாழ்க்கை உதாரணத்தாலேயே மற்றர்களுக்கும் வழிகாட்டுவதுதான் ஹிந்து மதத்தின் உயிர்நிலை. சிறு வயஸில் இதை குருகுலத்திலும் விருத்தாப்பியத்தில் ஸந்நியாசியாக ஏதாவது மடம் அல்லது ஆச்ரமத்திலும் அப்யாஸம் பண்ணுவதுபோக, மீதம், வாழ்க்கையின் மிகப்பெரிய பாகம் இவன் க்ருஹஸ்தனாக வீட்டில்தான் இருக்க வேண்டும். இதனாலேயே நம் தர்ம சாஸ்த்ரத்தில் இவனால் கிருஹத்தில் இதரர்களுக்குச் செய்யப்பட வேண்டிய கடமைகள் பற்றியும், இவனுக்குப் பத்தினி, புத்ரர் முதலான அந்த இதரர்கள் செய்ய வேண்டிய கடமைகள் பற்றியும் வேறு இல்லாத அளவுக்கு நிறையச் சொல்லியிருக்கிறது. ஆத்மாபிவிருத்தி பெரும்பாலும் வீட்டிலேயே ஏற்படவேண்டியிருப்பதால் க்ருஹஸ்த தர்மம் என்று ஏகப்பட்டதாகச் சொல்லியிருக்கிறது.

* ஆர்தர் கீஸ்லரும் அவர் எழுதிய "Darkness at Noon" என்ற நூலும் குறிப்பிடப் பெறுகின்றன.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*முரணுக்குக் காரணம்*

இந்தக் கதையெல்லாம் இப்போது எதற்கு அளக்கிறேனென்றால், நான் நம் ஹிந்து தர்மப்படி பரோபகாரம் செய்ய வேண்டும் என்பதை emphazise பண்ணினதில் தனி ஆள், குடும்பம் இவற்றின் கார்யம் கெட்டுபோகும்படிப் பண்ணிவிட்டேன் என்று ஒரு 'கம்ப்ளெய்ன்ட்'வ ந்திருக்கிறென்றால், இதற்கு நேர்மாறாக, நம் மதத்துக்கே தனி ஆளும், அவனை உருவாக்குகிறதும் அவனால் உருவாக்கப்படுவதுமான அவனுடைய குடும்பமுந்தான் அச்சாணியாயிருக்கிறதே யொழிய, பொதுப்படையான ஜன ஸமூஹமல்ல என்றும் ஒரு 'கம்ப்ளெய்ன்ட்'இருக்கிறது என்று காட்டத்தான்!பரோபகாரத்தை விஷயமாக எடுத்துக்கொண்டபோது நான் தனி ஆளின் கடமை, குடும்பக் கடமை இவற்றை neglect பண்ணிவிட்டேன் என்கிறமாதிரியே, நம்முடைய ஸமயசாரங்களைப்பற்றி நான் பேசுவதை மட்டும் கேட்டுவிட்டு ஸொஸைட்டியை நான் ignore பண்ணினதாகச் சண்டை போட்டவர்களும் உண்டு. சண்டை என்றால் சண்டை இல்லை. வசவு என்று நான்

சொன்னதை கௌரமான முறையிலேயே அவர்கள் பண்ணினார்கள் என்பதைப்போல, சண்டையும் மரியாதையாகத்தான் போட்டார்கள். நான்தான் அதில் இருக்கக்கூடிய நியாயம் எனக்கு நன்றாக உறைப்பதற்காகச் 'சண்டை'என்று சொல்லிக்கொள்கிறேன்.

நான் சொன்னது எல்லாவற்றையும் பேப்பர்காரர்கள் போடவில்லை என்று ஸமாதானம் சொல்லி நான் தப்பித்துக்கொள்ள இஷ்டப்படவில்லை அந்தந்த ஸமயத்தில் எந்த விஷயத்தை எடுத்துக் கொள்கிறேனோ அதில் கேட்பவர்களுக்குக் கெட்டியான பிடிமானம் உண்டாகவேண்டும் என்றே அதைக் கொஞ்சம் ஜாஸ்தியாக stress செய்துவிடுகிறேன் என்று தோன்றுகிறது. இப்படிச் சொன்னால்கூடப் பிறத்தியாரை உத்தேசித்துத்தான் இப்படி செய்கிறேன் என்று காட்டி எனக்கு நல்லபேர் கேட்கிற மாதிரி இருக்கிறது. அதனால் இப்படியெல்லாம் நியாயம் கல்பித்துக் கொள்ளாமல் எந்த ஸப்ஜெக்டை எடுத்துக்கொள்கிறேனோ அதுவே என்னைக் கொஞ்சம் இழுத்துக்கொண்டு போய்விடுகிறது, அதன் பக்ஷமாகவே என் கண்ணைத் திருப்பிவிட்டு விடுகிறது என்று வேண்டுமானால் ஒப்புக்கொண்டு விடுகிறேன்.என் விஷயம் இருக்கட்டும். இப்போது பொது விஷயத்தைப் பார்க்கலாம். வைதிக ஸமயாநுஷ்டானம் என்பதைப்பார்த்தால் அது முக்யமாக தனி மநுஷ்யனைத்தான் centre-ல் வைத்திருக்கிறது. அதில் ஒரு ஸமூஹப்பணி. ஸமூஹத்தை நலமடையச் செய்யும்போதே, அப்படிச் செய்வதாலேயே இந்தத் தனி மநுஷ்யன் ஆத்ம பரிபக்குவம் அடைவதுதான் இந்தப் பரோபகாரத்துக்கும் குறிக்கோள்*. ஸேவைக்குப் பாத்திரமாகிறவனும், அதாவது தானம் பெறுகிற தீனன், சிகித்ஸை பெறுகிற நோயாளி, வித்யாதானத்தால் ப்ரயோஜனமடையும் மாணவன், இப்படியாகப் பலவித பரோபகாரங்களுக்கும். பாத்ரமாக இருக்கப்பட்டவனும் இந்த லௌகிக உபகாரங்களைப் பெற்றதோடு த்ருப்தி பெற்று நின்றுவிடக்கூடாது. இவனும் தன்னுடைய இந்த லௌகிகமான problemதீர்ந்தது, இதற்கான விசாரம் இனி இல்லாமல் ஆத்மா பக்கம் விச்ராந்தியாகத் திரும்புவதற்குத்தான் என்று புரிந்து கொண்டு அந்த வழியில் போக வேண்டும். வெறுமே லௌகிகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதோடு பரோபகாரம் நின்றுவிடுமானால் அது செய்தவனுக்குத் தான் சித்த சுத்தி என்ற பெரிய லாபத்தைக் கொடுப்பதாகுமேயொழிய உபகாரம் பெற்றவனுக்கு சாச்வதமான லாபம் தரவில்லை என்றேயாகும்.

நான் ஸோஷல் ஸர்வீஸ் பற்றியும் பேசியிருக்கிறேன்;தனி மநுஷ்யனின் அநுஷ்டானங்கள் பற்றியும் பேசியிருக்கிறேன். ஸோஷல் ஸர்வீஸில் அநேக லௌகிகமான உபகாரங்களைச் சொல்லியிருக்கிறேன். அன்னதானம் செய்வது, வைத்யசாலை வைப்பது, வித்யாதானம் (ஸெக்யூலர் எஜுகேஷனையும் சொல்லியிருக்கிறேன்), வேலையில்லாதவர்களுக்கு உத்தயோக வசதி பண்ணித்தருவது, ஏழைகளுக்கு விவாஹத்துக்கு உதவி செய்வது என்று நான் சொன்ன அநேக விஷயங்கள் லௌகிகமானவைதான். இவை நேரே ஆத்மாபிவிருத்திக்கு உதவுகிற பணிகளல்ல.

ஆனால் ஒரு இன்டிவிஜுவலின் ஆத்மாபிவிருத்திக்காக நான் அநுஷ்டானங்களைப் பற்றிச் சொல்லும்போது ஜெனரலாக க்ருஹஸ்த தர்மம், ஸ்த்ரீ தர்மம் என்றெல்லாம் சொன்னாலும், லௌகிக அம்சங்களை விஸ்தாரப்படுத்திச் சொன்னதில்லை. ஆத்மாபிவிருத்தியை aim-ஆக (லக்யமாக) வைத்தே அதற்காக ஸ்த்ரீ புருஷர்கள் தனி வாழ்க்கையிலும் குடும்பத்திலும் என்ன செய்ய வேண்டும். என்பதை மாத்திரந்தான் சொல்லி வந்திருக்கிறேன். மற்றபடி 'ஒரு ஏழைக்குக் காசுபோடு'என்கிற மாதிரி 'உனக்குக் காசு தேடிக்கோ'என்று சொன்னதில்லை. கதியில்லாத ஒரு வியாதியஸ்தனுக்குச் சிகித்ஸை பண்ணு'என்று சொன்ன மாதிரி, 'உனக்கோ, வீட்டு மநுஷ்யர்களுக்கோ உடம்பு ஸரியில்லாவிட்டால் டாக்டரிடம் காட்டு'என்று நான் சொன்னதில்லை;'ஏழைப்பிள்ளை ஒருத்தனுக்குப் படிப்புக் கொடு;வேலை பண்ணி வை'என்று சொல்லியிருக்கிறேனே தவிர 'உன் பிள்ளையை நன்றாகப் படிக்க வைத்து நல்ல உத்யோகமாக ஸம்பாதித்துக்கொடு'என்று சொன்னதில்லைதான்!'எவனோ ஒரு ஏழையின் பெண்ணுக்குக் கன்னிகாதான ஸஹாயம் பண்ணு'என்பேனே தவிர, 'உன் பெண்ணுக்கு வரன் பார்த்துக் கல்யாணம் பண்ணு'என்பதில்லை. 'ஊருக்குக் குளம் வெட்டு'என்பேனே தவிர 'உன் வீட்டுக்குக் குழாய் போட்டுக்கொள்'என்று சொன்னதில்லை.

ஏன்?இந்த லௌகிக உதவிகளை இன்னொருத்தனுக்குப் பண்ணுவதே இவனுக்கு ஆத்மிகமாக உதவி பண்ணுகிறது இவனுடைய சித்த சுத்திக்கு ஸஹாயம் செய்கிறது.

ஆனால் இதே லௌகிக விஷயங்களைத் தனக்கும் தன்னைச் சேர்ந்த குடும்பத்தவர்களுக்கும் பண்ணிக்கொள்கிறபோது அதிலே ஆத்ம ஸம்பந்தமாக எந்த லாபமும் சேராமலே போகிறது. காரணம் - தான், தன் மநுஷ்யர் என்பவர்களுக்குச் செய்வது தனக்கே பண்ணிக்கொள்ளும் உபகாரந்தான். அதாவது லௌகிகமான லாபம் இவனுக்கே கிட்டுகிறது. நிறையப்பணம் நஷ்டப்பட்டுப் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணிப் பெரிய இடத்தில் ஒப்படைக்கிறான் என்றாலுங்கூட அதிலும் நம் பெண் நல்ல இடமாகப் போய் அடைந்தாளே என்ற ஸ்வய பாச திருப்தி என்ற லௌகிகமான ஸ்வய லாபம் இருக்கத்தான் செய்கிறது. லௌகிக லாபத்தைப் பிறத்தியானுக்குக் கிட்டப் பண்ணினால் அதற்குப் பிரதியாக இவனுக்கு ஆத்மலாபம் கிடைப்பதே நியாயம். லௌகிக லாபமே நேராக இவனுக்குக் கிடைக்கிறபோது அதற்கு குட்டிப் போட்டுக்கொண்டு ஆத்ம லாபமும் எப்படி கிடைக்கும்?



## *சொந்தப் பணியைச் சொல்லாததேன் ?*

ஆத்ம லாபத்துக்கு உதவாத விஷயம் என்பதால்தான் இதுகளைப் பற்றி நான் சொல்வதில்லை. உபதேசம் செய்கிற எவருமே சொல்வதில்லை. சொல்லாமலே அவனவனும் இவைகளைச் செய்து கொண்டுதானிருக்கிறான். லோகமெல்லாம் நன்றாயிருக்ககணும் என்று பிரார்த்திக்க வேண்டுமென்றுதான் யாரும் பதேசிப்பார்களே தவிர, 'நான் நன்றாயிருக்கணும்;என் மநுஷ்யாள் நன்றாயிருக்கணும்'என்று பிரார்த்தித்துக் கொள்ளும்படிச் சொல்வதில்லையே!யாரும் சொல்லிக் கொடுக்காமல் அவனவனும் தானாகவே இப்படித் தன்நலத்தை, தன் குடும்ப நலத்தைப் பிரார்த்தித்தபடிதான் இருக்கிறான். அந்த நலம் ஆத்மாவைப் பொருத்ததாயிருந்தால் இப்படிப்பட்ட பிரார்த்தனை நியாயமானது தான். லௌகிகமாகவும் ஜீவனத்துக்கு அவசியமான அளவுக்கு மட்டும் வேண்டிக்கொண்டால் தப்பில்லைதான். ஆனால் எல்லாரும் இந்த லௌகிக 'நலம்'என்பதையே ஆத்மாவுக்கு ஹானி உண்டாக்குகிற அளவுக்குப் பிரார்த்திக்கிறார்கள். பிரார்த்திப்பதோடு அதற்கான முயற்சிகளை ஓயாமல் பண்ணியபடி இருக்கிறார்கள். இதிலேயே ஓவராக ஈடுபட்டு பாசத்தினால் தர்மாதர்மங்களைக்கூட மறந்து, தப்பு வழியில் போயும் இம்மாதிரி லௌகிக அபிவிருத்தியிலேயேதான் அநேகமாக எல்லாரும் கண்ணாயிருக்கிறார்கள். இதனாலேயே பரோபகாரத்துக்குப் பொழுதோ, மனஸோ, த்ரவ்யமோ எதுவும் கொடுக்காதவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனதால் இப்படிப்பட்டவர்களை ஸ்வய விஷயம், ஸ்வய குடும்ப விஷயம் இவற்றைக் குறைத்துக்கொண்டு ஸமூஹ க்ஷேமத்துக்கானவற்றைக் கவனிக்கும்படித் திருப்ப வேண்டியதுதான் எங்களைப் போன்றவர்களின் கடமையாயிருக்கிறது. ஆனதால், நான் மட்டுமில்லை, ஜனங்களை நல்ல வழியில் திருப்புவதற்குப் பிரயத்தனப்படுகிற பொறுப்பு கொண்டே எவருமே, "சொந்த விஷயங்களை கவனித்துக்கொள்;வீட்டுக் கார்யங்களை கவனித்துக்கொள்"என்று உபதேசம் பண்ணுவதில்லையென்பது மட்டுமில்லாமல், "சொந்த விஷயங்களையே கவனித்துக் கொண்டிருந்தால் போதாது. இப்படிப்பட்ட ஆசைகளை, தேவைகளைக் குறைத்துக்கொண்டு, அதனால் லௌகிக உழலலையும் குறைத்துக்கொண்டு, கொஞ்சமாவது ஆத்மாவை கவனித்துக் கொள்ளுங்கள்;அதற்கு வழியாக, ஒரு அங்கமாக ஸமூஹத்தை, லோகத்தை கவனித்துத் தொண்டு செய்யுங்கள்"- என்றே சொல்லும்படியிருக்கிறது.

ஆனால் இப்படி 'அட்வைஸ்'பண்ணுவதிலுங்கூட நான இன்னம் கொஞ்சம் ஜாக்ரதையாகத்தான் இருக்க வேண்டும் என்று எனக்கு புத்தி சொல்லித் திருந்துகிற மாதிரி இன்றைக்கு அந்த தம்பதி வந்து, (நான் வசவு என்று சொன்னாலும்) வ்யஸனத்தோடு விஞ்ஞாபனம் பண்ணிக் கொண்டு போனார்கள் எனக்குத் தெரிந்தோ தெரியாமலோ என் ஜாக்ரதைக் குறைவால், நான் பரோபகாரத்தைச் சொல்லும்போது அதற்கு ஒரு qualifying clause(நிபந்தனைப் பிரிவு) போடாமலே இருந்துவிட்டேன் என்பதற்காக என்னை வையத்தான் வேண்டும். அதனால் அவர்களுக்கு ரொம்பவும் கஷ்டம் யதார்த்தத்தில் ஏற்பட்டுவிட்டதால் திட்டித்தானிருக்க வேண்டும். ஆனால் வயஸு, லாயக்கிருக்கோ இல்லையோ அதுவாக வந்து சேர்ந்துவிட்ட 'குரு ஸ்தானம்', இதுகளை உத்தேசித்துத் திட்டாமல் மரியாதையாகவே சொல்லிவிட்டுப் போனார்கள். அவர்களுக்கு என்ன கஷ்டம் ஏற்பட்டுவிட்டது அவர்கள் வீட்டுப் பிள்ளை, பிரம்மசாரிப் பையன், வேலையிலிருக்கிறவன், என் பரோகார உபதேசங்களைப் படித்துவிட்டு அதிலேயே ஓவராக ஈடுபட்டு விட்டானாம். தன் கார்யம், வீட்டுக் கார்யம் எதையும் கவனிப்பதில்லையாயம். ஆபீஸ் கார்யம்கூட ச்ரத்தையாகப் பண்ணுகிறானோ இல்லையோ என்று பயமாயிருக்கிறதாம். எப்போர்து பார்த்தாலும் பிடி அரிசி கலெக்ஷன், (மாடுகளுக்காக) காய்கறித் தோல் கலெக்ஷன், இப்படி ஒரு பக்கம் கலெக்ன், இன்னொரு பக்கம் டிஸ்ட்ரிப்யூஷன் - ஆஸ்பத்திரியில் பிரஸாத டிஸ்ட்ரிப்யூஷன் மாதிரி, என்றிப்படி ஓயாமல் ஒழியாமல் அலைந்து கொண்டிருக்கிறானாம்."தான் கட்டிக்கொண்ட துணியைக்கூடத் தோய்க்கிறதில்லை;இவள்தான் தோய்த்துப்போட வேண்டியிருக்கு"என்று அந்த மநுஷ்யர் கம்ப்ளெயின் பண்ணினார்.உடனே அவர் behalf-ல் அந்த அம்மாள் பரிந்துகொண்டு, "வீட்டுக்கு ஒரு ஸாமான், காய்கறி பார்த்து வாங்கிப் போடுகிறதில்லை. சொன்னால்கூடக் காதில் போட்டுக்கொள்வதில்லை இத்தனை வயஸுக்கு இவரேதான் பண்ணும்படி இருக்கிறது"என்று சொன்னாள்."ஊர் வெயில் மழை எல்லாம் அவன் மேலேதான். உடம்பு வீணாய்ப் போயிடுத்து. கையை விட்டுச் செலவும் நிறையப் பண்ணுகிறான். நாங்கள் கேட்கிறோமென்பதால் எரிச்சல், கோபம். ஏதோ கொஞ்சம் அகத்தில் தலைகாட்டுவதையும் நிறுத்திவிடப் போகிறானே என்று முடிந்த மட்டும் நாங்களும் வாயைத் திறப்பதில்லை. இருந்தாலும் மநுஷ்யர்கள்தானே?சொல்லாமலேயும் இருக்க முடியவில்லை. நீங்கள்தான் அவனுக்கு நல்ல புத்தி வரப்பண்ணணும்"என்று சொன்னார்கள். பெற்ற மனஸு!

அவர்கள் அப்படிப் பிரார்த்தனை பண்ணிக்கொண்ட போதிலும், "இந்தக் கஷ்டம் உண்டாக நீதானே ஜவாப்தாரி?நீதான் இதை ஸரி பண்ணணும்"என்று அவர்கள் இடித்துக் காட்டினதாகவே நான் நினைத்துக் கொள்கிறேன்.இனிமேலே எனக்குப் பிரஸங்கம் பண்ணுகிற உத்தேசமில்லை*.ஆனாலும் இப்போதுதான் என்னைப் பார்க்க வருகிறவர்களும், அட்வைஸ் கேட்கிறவர்களும் ஜாஸ்தியாகிக்கொண்டு வருகிறார்கள். அதனால் இனிமேல் பிரஸங்கம் பண்ணாவிட்டாலும், என்னிடம் வருகிறவர்களிடம் பேசுகிறபோது, நல்லதைச் சொல்கிறபோது, ஒவ்வொருவனும் பொதுத்தொண்டு ஏதேனும் அத்யாவச்யமாகப் பண்ணித்தானாக வேண்டும் என்று சொல்லும்போதே, "without prejudice to" (இன்னதற்கு ஹானி இன்னியில்) என்று அநேக ஒப்பந்தங்களில் qualifying clause போடுகிறார்களே, அந்த மாதிரி இதற்கும் ஒரு நிபந்தனை, 'தன் கார்யம், குடும்பக் கடமைகளைக் கொஞ்சங்கூட விடாமல்'என்றும் போடவேண்டுமென்று தீர்மானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். பிற்பாடு இது ஸமயத்தில் நினைவு வந்து சொல்வேனோ மாட்டேனோ, அந்த (பரோபகார) ஸப்ஜெக்டே என்னை இழுத்துக்கொண்டு போய்விடுமோ என்னவோ, எப்படியானாலும், இன்றைக்கேனும் அந்தத் தாயார் தகப்பனார் படுகிற கஷ்டத்தைப் பார்த்ததில் இப்படிச் சொல்கிற ஞானம் எனக்கு உண்டாயிருக்கிறது.

"தானி அவிழ்த்துப்போட்ட துணியைத் தாயார்க்காரி தோய்க்கணும்;வயஸுக் காலத்தில் அப்பன்காரன் கடை கண்ணி ஏறி இறங்கணும்"என்று விட்டு விட்டு ஒருத்தன் ஸோஷல் ஸர்வீஸுக்கு கிளம்பணும் என்று நான் நினைத்ததேயில்லை. நினைக்காவிட்டாலும் இதை வாய்விட்டு நான் சொல்லாதது தப்புத்தான். இதனால், இன்றைக்கு இங்கே வந்து போனவர்கள் மாதிரி இன்னும் எத்தனை பேர் வீட்டில் அனர்த்தத்தை உண்டாக்கியிருக்கிறேனோ?எல்லாருக்கும் என்னிடத்தில் வந்து சொல்லிக்கொள்ள

முடியுமா?"சொல்லிக்கொள்வதே 'பெரியவா'மேலே குறை சொல்கிற மாதிரித்தானே ஆகும்?அப்படிப் பண்ணலாமா?"என்றே பலபேர், பாவம், வாயை மூடிக்கொண்டு என்னால் ஏற்பட்ட கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கலாம்.

இன்றைக்கு வந்தவர்கள் எனக்கு என்ன உபதேசம் பண்ணியிருக்கிறார்கள்?'வசவு', 'வசவு'என்று இத்தனை நாழி நான் சொன்னதை 'உபதேசம்'என்று சொல்லியிருக்கலாம். வசவானால்தான் feeling-ஐக் கிளப்பிவிடும் என்று அப்படிச் சொன்னேன். அதனால் உண்மையை அலசிப் பார்த்துத் தெரிந்துகொள்ள வழி ஏற்படுமென்றேன். அதைவிட 'உபதேசம்'என்று அடக்கமாக எடுத்துக்கொண்டு விட்டால் இன்னம் ச்லாக்யம் என்று தோன்றுகிறது. ஸ்வய ஸமாசாரங்களிலேயே ஒருத்தன் அதியாக ஈடுபட்டுப் பொதுக் கார்யங்களை கவனிக்காமலிருப்பதுதான் 'ஜெனரல் ரூல்'என்றாலும், எதிர்த்திசையில் சில பேர் அத்யாவசியமான சொந்தக் கார்யம், கடமைகளையும் விட்டு விட்டுப் பொதுக் கார்யம் என்று பறந்துகொண்டு, வீட்டு மநுஷ்யர்களுக்கு ச்ரமம் உண்டாக்கவும் கூடும் என்பதை நான் மறக்கக்கூடாது. அதனால், "சொந்தக் கார்யம் என்பதையே கவனித்துக் கொண்டிருந்தால், அலை ஓய்ந்துதான் ஸமுத்ர ஸ்நானம் என்கிற மாதிரி பொதுக் கார்யங்களை எவருமே எப்போதுமே செய்ய முடியாது"என்று நான் அட்வைஸ் பண்ணும்போதே, அதை qualify பண்ணி, "அதற்காக, அத்யாவச்யமான சொந்த வேலைகளை, அகத்து ட்யூட்டிகளை ஒருநாளும் விடக்கூடாது"என்றும் எடுத்துச் சொல்லிவிட வேண்டும். இதுதான் எனக்குக் கிடைத்திருக்கும் உபதேசம்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*மோசடி ; போலித்தனம்*

தன் வேலையை இன்னொருத்தனிடம் விட்டுவிட்டு தான் 'ஊரானுக்குத் தொண்டு செய்கிறேன்'என்று போனால் அது பரிஹாஸந்தான், fraud (மோசடி) தான். தாயார், தகப்பனார், ஸஹோதரர், பத்னி, புத்ரர் இருந்தால் அவர்கள் - ஆகியவர்களுக்குச் செய்ய வேண்டிய ட்யூட்டிகளைச் செய்யாமல் லோகத்துக்கு உபகாரம் செய்கிறேன் என்றால் அது 'ஹிபாக்ரிஸி'(போலி வேஷம்) தான். இப்படியெல்லாம் பண்ணிவிட்டு பந்துக்கள் எடுத்துக்காட்டினால் கோபம் வருகிறது, எரிச்சல் வருகிறது என்றால் பரோபகாரத்தால் இவனுக்கு எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்றுதான் அர்த்தம். 'எல்லாரிடமும் அன்பாயிருக்கணும், மதுரமாய்ப் பழகணும்'என்பதுதான் தொண்டு செய்கிறவனுக்கு லக்ஷணம். பொதுத்தொண்டு என்பதற்காகவே வீட்டு மநுஷ்யர்களிடம் அன்பு போய், எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் இவன் தொண்டு செய்து என்ன புண்யம்?இவனுக்கு என்ன சித்த சுத்தி ஏற்பட முடியும்?குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்கிற மாதிரி பண்ணிக்கொள்ளக் கூடாது.தன் லிமிடேஷனை எவனும் எப்போதும் உணர வேண்டும். மநுஷ்யராய்ப் பிறந்துவிட்டோம். அதனால் நாம் பல திநுஸில் கட்டுப்பட்டுதான் கிடக்கிறோம். ஆசைகள், ஆஸ்தைகள் பெரிசாய் இருக்கலாம். அவை நல்லதாகவும் இருக்கலாம். லோகத்துக்கு நல்லது பண்ணணும் என்றே ஆர்வமிருந்தாலும் நமக்கும் நம் குடும்பத்துக்கும் செய்தேயாக வேண்டும் என்ற நிர்பந்தம் இருப்பதை உணர்ந்து இந்த ட்யூட்டிக்கு ஹானியில்லாமல்தான் லோக ஸேவை செய்ய வேண்டும்.

"தன்னைப்பெற்ற தாயார் கிண்ணிப்பிச்சை எடுக்கிறபோது கோதானம் பண்ணினானாம்"என்று சொல்வதுண்டு. முதலில் தன் குடும்பத்தைக் கவனிக்க வேண்டும். தன் சொந்தக் கார்யங்களை ஒருகாலும் பிறத்தியாரிடம் காட்டிக்கொடுக்கவே கூடாது. இதுதான் சாஸ்திரம். அவனவன் தன் வஸ்திரத்தை தானேதான் தோய்துக்கொள்ள வேண்டும். 'டயார்க்கி'யில் (இரட்டை யாட்சியில்) ராஜகோபலாச்சாரி மெட்றாஸ் ப்ரஸிடென்ஸிக்கு ப்ரைம் மினிஸ்டராக (அப்போது டில்லியில் ப்ரைம் மினிஸ்டர் இல்லாததால் ப்ரெஸிடென்ஸியில் பிரதான மந்திரியாக இருக்கப்பட்டவரை ப்ரைம் மினிஸ்டர் என்று சொல்வார்கள். இப்போது பிரெஸிடென்ஸியை ஸ்டேட் என்றும், இதன் ப்ரைம் மினிஸ்டரை சீஃப் மினிஸ்டர் என்றும் சொல்கிறார்கள். இப்படி அவர் ப்ரைம் மினிஸ்டராக) இருந்துபோதுகூடத் தன் துணியைத்

தானேதான் தோய்த்துக் கொண்டார். இப்படியே பல பேர் பெரிய ஸ்தானத்திலிருந்தபோதுகூடத் தன் பூட்ஸுக்குத் தானேதான் பாலிஷ் போட்டுக்கொண்டார்கள் என்று சொல்கிறார்கள். நம் கார்யத்தை நாமே செய்து கொள்கிறதிலே கௌரவக் குறைச்சலே இல்லை. பிறத்தியாரிடம் இவற்றை விடுவதுதான் கௌரவக் குறைச்சல். நாம் பரோபகாரி என்று வெளியிலே 'ஷோ'பண்ணிக்கொண்டு ஊராரிடம் நல்ல பேர் வாங்கிக் கொள்வதற்காக வீட்டுக்காரர்களெல்லாம் நமக்கு பரோபகாரம் பண்ணும்படியாகத் தாழந்து போய் அவர்களுக்கு ச்ரமத்தைக் கொடுத்து நல்லெண்ணத்தையும் போக்கிக் கொள்வது நமக்கே நாம் பண்ணிக்கொள்கிற கௌரவக் குறைச்சல்தானே?



## கண்டனமே பாராட்டு !

நம் மதத்தைப் பற்றி இரண்டு 'க்ரிடிஸிம்'சொல்கிறார்கள். ஏகம் ஸத், ப்ரம்மம் ஒன்றுதான்;இந்த ஜீவன்கூட அதுதான் என்று ஒரு பக்கம் சொல்கிறோம். ஜீவனே ப்ரம்மம் என்பதால் ஈஸ்வர பூஜை, பக்தி எல்லாவற்றையுங்கூட ஞானம் உண்டாகிறபோது மூட்டை கட்டி வைத்துவிட வேண்டுமென்கிறோம். இன்னொரு பக்கம் பார்த்தால் இங்கேதான் மற்ற எந்த மதத்திலும் இல்லாத அளவுக்கு ஏகப்பட்ட சாமிகள், ஒன்றொன்றுக்கும் அகமுடையான், பெண்டாட்டி, பிள்ளை-குட்டிகள் என்றெல்லாம் வேறு ஒரு பட்டாளமே வைத்துக்கொண்டு நுறாயிரம் ஸந்நிதி, புராணக் கதை, ஒவ்வொன்றுக்கும் ஒரு பண்டிகை, வ்ரதம், மந்த்ரம் என்று பண்ணிக்கொண்டிருக்கிறோம். இதர மதஸ்தர்கள் ஒரே பரமாத்மா, அவனிடம் பக்தி, பிரார்த்தனை, த்யானம் என்று தீர்மானமாக வைத்துக் கொண்டிருக்கிற மாதிரியில்லாமல், ப்ரமாதமாக அத்வைதத்தைச் சொல்கிற நாம்தான் ஏகப்பட்ட சாமிகள் வைத்துக்கொண்டு திண்டாடுகிறோம்!கிறிஸ்துவர்களுக்கு க்ரைஸ்ட்டும் (கிறிஸ்துவும்), துருக்கர்களுக்கு நபியும், இப்படியே ஸிக்குகளுக்கு நானக் என்றும் அந்தந்த மதஸ்தருக்குத் தங்கள் மதஸ்தாபகரிடம் மட்டும் ஈஸ்வரனுக்கு ஸமதையான பக்தி இருக்கிறதென்றால் அது நியாயம். தங்களை ஈஸ்வரனிடம் கொண்டு சேர்க்க வழி போட்டுக் கொடுத்தவர்கள் என்று குருபக்தி மாதிரி அவர்களுக்கு ஏற்பட்டிருப்பது நியாயம். பௌத்தத்திலும் ஜைனத்திலும் ஈஸ்வரனே கிடையாது. ஆனாலும் தத்வ ரீதியில் அவர்கள் சொல்லும் மோக்ஷ நிலையை ஸ்வயமாக அடைந்து, அப்படிப்பட்ட ஸ்திதியிலிருப்பவன் எப்படியிருப்பான் என்று ப்ரத்யக்ஷமாக புத்தரும், ஜினரும் காட்டுகிறார்கள் என்பதால் அவர்களைப் பக்தியோடு பூஜிக்கிறார்கள். புத்தரை, ஜினரை ஸ்ருஷ்டிகர்த்தா, ஸ்வாமி என்று அந்த மதஸ்தர்கள் சொல்லவே மாட்டார்கள். புத்தரை அவதாரம் என்று நாம்தான் சொல்கிறோமே தவிர, பௌத்தர்கள் அப்படிச் சொல்வதில்லை. பூர்ண ஞானி என்றே புத்தரை, ஜினரை அந்த மதக்காரர்கள் பூஜை பண்ணுகிறார்கள். இந்த இரண்டு மதங்களுக்கு ஸ்வாமி இல்லாவிட்டாலும் கர்மா-theoryயிலும் எனவே ஜன்மாந்தரத்திலும், நம்பிக்கை உண்டு. நிர்வாணம், கைவல்யம் என்கிற மோக்ஷ ஸ்திதிலபிக்கிற வரையில், லோகம் என்று ஒன்று நடக்கிறபோது அது கர்மாபடியே பலன் தருகிறது என்கிறார்கள். இப்படி லோகம் உள்ளவரையில் தேவதைகள், க்ரஹங்கள் எல்லாமும் உண்டு. அவற்றுக்கு உள்ள ஒவ்வொரு சக்தியால் ஒவ்வொரு வித அநுக்ரஹம் பண்ணுகின்றன என்று வைத்துக்கொண்டு நம் மாதிரியே பூஜை, பரிஹாரம் செய்கிறார்கள். தங்களைவிட ஜாஸ்தி ஞானம் படைத்தவர்கள் என்பதற்காக புத்தரை, ஜினரைப் பூஜை பண்ணுகிறதுபோலவே, தங்களுக்கு இல்லாத சில சக்திகள் படைத்தவர் என்பதால் தேவதைகளுக்குப் பூஜை செய்கிறார்கள். ஸ்வாமி என்று நினைத்தல்ல.

ஹிந்துக்கள் மட்டும் ஸ்வாமி, ஸ்வாமி என்று நினைத்துக்கொண்டே ஏகப்பட்ட தெய்வங்களைப் பூஜை பண்ணுகிறார்கள் என்பது முதல் க்ரிடிஸிஸம்.

*சிக்கனமும் பரோபகாரமும் **

*பரோபகாரத்துக்காகவே சிக்கனம்*

சொ ந்த வாழ்க்கையில் சிக்கனமாக இருந்தால் தான் பிறத்தியாருக்கு உதவியாக திரவிய ஸஹாயம் செய்ய முடியும். அநாவசியங்களையெல்லாம் அத்யாவசியமாக்கிக் கொண்டு மேல்நாடுகளைப் பார்த்து material comfort, luxury என்று மேலே மேலே போய்க் கொண்டிருந்தால் தனக்கும் ஒரு நாளும் த்ருப்தி இராது;பிறத்தியாருக்கும் தான தர்மம் பண்ண முடியாது. மோட்டார் ஸைகிளுக்கு மேலே கார் வேணும், அப்புறம் அந்தக் காரிலும் இன்னம் பெரிசாக வேணும், அதற்கப்புறம் அதையே ஏர்-கன்டிஷன் பண்ணணும் என்கிறது போல, ஸிமென்ட் மொஸெய்க் ஆகணும், மொஸெய்க் மார்பிள் ஆகணும் என்கிறதிபோல ஒன்றுக்கு மேல் ஒன்று ஸெளகர்யத்தைத் தேடிக் கொண்டேயிருப்பதால் எப்போது பார்த்தாலும் அதிருப்தி என்ற பெரிய அஸெளகர்யத்திலேதான் ஒருத்தன் இருந்து கொண்டிருப்பான்! அது மட்டுமில்லை. எத்தனை ஸம்பாத்யம் வந்தாலும் போதவும் போதாது. அதனால்தான் இன்றைக்கு அத்தனை பணக்காரர்களும் கடனாளியாக - கடன் என்கிறதையே ஓவர்-ட்ராஃட் என்று கௌரவமான பெயரில் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள். இவனே கடனாளியாக இருந்தால் மற்றவர்களுக்கு எங்கேயிருந்து தர்மம் பண்ணுவது?

இப்போது பொதுவாக உள்ள பரிதாப நிலை என்னவென்றால், ஒன்று, சிக்னமாக இருப்பவன் தானும் அநுபவிக்காமல் பிறத்தியானுக்கும் உதவி பண்ணாமல் கருமியாக இருக்கிறான்; செலவாளியாக இருப்பவனோ ஸெளகர்யம், இன்னும் ஸெளகர்யம்'என்று பறப்பதில் தனக்கே போதாமல் கடனாளியாக நிற்பதால் இவனாலும் பரோபகாரம் நடப்பதில்லை.

பிறருக்குச் செய்வதற்காகவே சொந்த விஷயத்தில் சிக்கனமாயிருக்கவேண்டும் என்ற உயர்ந்த கொள்கையை ஒவ்வொருவனும் கடைப்பிடித்தால் எவ்வளவோ புண்யத்துக்குப் புண்யம், நிம்மதிக்கு நிம்மதி, எத்தனையோ தீனர்களும் க்ஷேமமடைவார்கள்.

சிக்கனமாயிருந்தாலொழிய, இப்போது இருக்கிற போக போக்ய இழுப்பில், எவனுக்குமே மிச்சம் பிடிக்க முடியாது. அதனால் சிக்கன வாழ்க்கை நடத்தினால்தான் 'தனக்கு மிஞ்சி'தர்மம் பண்ண முடியும். அதாவது எத்தனை சிக்கனமாயிருக்க முடியுமோ அப்படியிருந்து தனக்கு மிஞ்சும்படியாகப் பண்ணிக்கொண்டு தர்மம் பண்ணணும்.

--------------------------

* சிக்கன வாழ்க்கை பற்றி "தெய்வத்தின் குரல்"முதற் பகுதியில் "சமூக விஷயங்கள்"என்ற பகுதியிலுள்ள 'வாழ்க்கைத் தரம்', 'எளிய வாழ்வு', 'கணக்காயிருக்கணும்'என்ற உரைகளில் காண்க. இங்கு காணும் இவ்வுரையிலுள்ள சில விஷயங்கள் இப்பகுதியிலுள்ள 'பரோபகாரம்'என்ற உரையிலும் கூறப்பட்டிருப்பினும், விஷய முக்யத்வத்தினால் இங்கு பூர்ண உருவில் தனியே கொடுக்கப்பட்டிருக்கிறது.

கீதை முதல் ஸ்லோகத்தில் வருகிற தர்ம க்ஷேத்ரம் என்பது இந்த சரீரம்தான். ஒரு வயல் என்றால் அதில் விளைச்சல் பண்ணுவதற்கு பூஸாரம் வேண்டும்;அப்புறம் ஒவ்வொரு தானியத்துக்குரிய பருவகாலம் பார்க்க வேண்டும். க்ஷேத்ரம் என்றால் வயல். நம்முடைய சரீர வயலுக்கு எது பூஸாரம்?புத்தி பிரஸன்னமாயிருப்பது;இந்திரியங்கள் பழுதாகாமல் சுத்தமாயிருப்பது;விஷயங்களைக் கிரஹித்துக் கொள்ளும் ஞானேந்திரியங்கள், கார்யங்கள் பண்ணும் கர்மேந்திரியங்கள் இரண்டும் தீக்ஷ்ண்யமாயிருப்பது - இதுதான் பூஸாரம். ஓடியாடவும் தளர்ச்சியில்லாமல் ஆலோசிக்கவும் சக்தி இருப்பதுதான் பருவ காலம். இதையெல்லாம் பொருத்து இந்த சரீர வயலில் தர்மப் பயிரை வளர்த்து, தர்ம க்ஷேத்ரமாக்க வேண்டும். அந்தப் பயிரை வளர வொட்டாமல் ஹானி செய்கிற களைதான் தனக்காக அவசியத்துக்கு மீறிச் செலவழிப்பது. வயல் நிறையக் களை மண்டியிருப்பதைப் பார்த்து நல்ல விளைச்சலென்று ஸந்தோஷிப்பது போலத்தான், தனக்காகச் செலவழித்து அதில் ஏற்படும் ஸெளகர்யங்களைப் பார்த்து ஸந்தோஸிப்பது!களை பிடுங்குவதில் எத்தனை

கவனமாயிருக்கிறோமோ அத்தனை கவனமாக அத்யாவச்யத்துக்கு மேலான செலவுகளைப் பிடுங்கிப் போட வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*கடன் அனைவருக்கும் தீங்கு*

சிக்கனம் தன் சேமிப்புக்காக அல்ல, பரோபகாரத்துக்காகவே என்பது போலவே, கடன் வாங்காமலிருப்பதும் தன் நன்மையைக் கருதி மட்டுமில்லாமல் பரோபகார உத்தேசத்தின்மீதே இருக்க வேண்டும். கடன் பட்டுவிட்டால் அதை அடைப்பதற்கே பாடுபடுவது ஒரு கடன் அடைந்த பிறகு ஏற்கெனவே கடன் வாங்கின பழக்கத்தில் மறுபடி மறுபடி கடனுக்குப் போவது என்றுதான் அனர்த்தமாகப் போய்க்கொண்டிருக்கும். இப்படி தனக்கே இல்லாத நிலையை உண்டாக்கிக் கொண்டால் பிறருக்கு எப்படிச் செய்வது?

ஆசார்யாள் 'ப்ரச்நோத்ர ரத்ன மாலிகா'என்று கேள்வியும் பதிலுமாக ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். அதிலே ஒரு கேள்வி, "உலகத்தில் தீட்டாக ஆவது எது?"என்பது:" கிமிஹ ஆசௌசம் பவேத் ?"

சுசி என்றால் சுத்தம். அசுசி (என்றால்) அசுத்தம். அசுசியுள்ளது ஆசௌசம். தேவ கார்யங்களுக்கு உதவாத படி ஆக்குகிற சாவுத் தீட்டு, பிரஸவத் தீட்டு முதலானவற்றையே சாஸ்திரங்களில் ஆசௌசம் என்று சொல்லியிருக்கிறது. இங்கே, சிஷ்யன் "ஆசௌசம் எது?"என்று கேட்பதாகவும், அதற்கு குரு பதில் சொல்வதாகவும் ஆசார்யாள் சொல்லுகிறார். அந்தப் பதில் என்ன?

ருணம் ந்ருணாம்

"ந்ருணாம்"என்றால் "மநுஷ்யனுக்கு", "மநுஷ்யனாகப் பிறந்த எல்லாருக்கும்"என்று அர்த்தம். "ருணம்"என்றால் 'கடன்', "மநுஷ்ய ஜன்மா எடுத்தவனுக்குப் பெரிய தீட்டு கடன் படுவதுதான்"என்று ஆசார்யாள் சொல்கிறார். ஏன் அப்படிச் சொன்னார்?

தீட்டு வந்தால் என்ன பண்ணுகிறோம்?இந்தக் காலத்தில் ஒன்றும் பண்ணுவதில்லை. "தீட்டாவது, துடக்காவது?எல்லாம் ஸூபர்ஸ்டிஷன்"என்று ஆலய ஸந்நிதானம் உள்பட எல்லா இடத்திலும் ஆசௌசங்களைக் கலந்து கொண்டிருக்கிறோம். பலனாகத்தான் துர்பிக்ஷம், நூதன நூதன வியாதிகள், மஹாக்ஷேத்ரங்களிலேயே விபத்துக்கள் என்று ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆகையால் ஐம்பது வருஷத்துக்கு முன்வரை இருந்த நடைமுறையை வைத்தே, ஆசார்யாள் எழுதினதற்கு அர்த்தம் சொல்கிறேன். இரண்டாயிரம் வருஷம் முந்தி அவர் இருந்தபோதும், அவருக்கும் எத்தனையோ ஆயிரம் வருஷம் முந்தியும் இதே ஆசார - ஆசௌசங்கள்தானே அநுஷ்டானத்திலிரு ந்திருக்கின்றன?ஒருத்தனுக்குத் தீட்டு ஸம்பவித்துவிட்டால் அந்த நாளில் என்ன பண்ணுவார்கள்?மற்றவர்கள் அவன் கிட்டேயே வரமாட்டார்கள். மேலே பட்டு விடப்போகிறான் என்று தள்ளித் தள்ளியே போவார்கள். கடனாளியாக இருக்கிறவனைக் கண்டும் பயந்து, "எங்கே நம்மைக் கேட்டுவிடுவானோ?"என்று மற்றவர்கள் ஒதுங்கித்தானே ஓடுகிறார்கள்!இவனும் கடன் கொடுத்தவன் எங்கே எதிர்ப்பட்டு விடுவானோ என்று பயந்துகொண்டு ஜன ஸமூஹத்தின் கண்ணில் படாமல் ஒளிந்துகொண்டுதான் போவான். தலையில் துணியைப் போட்டுக்கொண்டு போவது என்பார்கள், அடையாளம் தெரியாமலிருப்பதற்கு தன்னைத்தானே இப்படிப் பெரிய ஆசௌசம் ஏற்பட்டு விட்டதுபோலக் கடனாளி ஸமூஹ ப்ரஷ்டம் செய்து கொண்டுவிடுகிறான்.

ஒருத்தன் கடன் பழக்கம் ஏற்படுத்திக் கொள்வதால் அத்தனை பேருக்கும் கஷ்டம். "கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான்"என்று கம்பரே சொன்னபடி, கடன் வாங்கிவிட்டவன் கொடுத்தவனை நினைத்து எப்போதும் பயந்துகொண்டு கஷ்டப்படுகிறான்;தப்பித்துக்கொள்வதற்காகப் பொய் சொல்கிறான்;மிஞ்சினால் கடனை அடைப்பதற்காகத் திருடவும் துணிகிறான். கடன் பட்டாரைப் போல, அல்லது அதை

விடவும், "கடன் கொடுத்தார் நெஞ்சமும்"கலங்கிக் கொண்டுதான் இருக்கம் - பணத்தை அழுதவன் இவன் தானே?அது திரும்பி வருமா வராதா என்று எப்போது பார்த்தாலும் கவலைப்பட்டுக் கொண்டிருப்பான். கடன் கொடுத்தவனான இவனுக்கு எத்தனை எரிச்சலும் மனக் கொதிப்பும் உண்டாயிருக்கிறது என்பது "கடன்காரன், கடன்காரி"என்று வசவு ஏற்பட்டிருப்பதிலிருநந்தே தெரிகிறது.

கடன்காரன் என்றால் கடன் கொடுத்தவன், வாங்கினவன் என்று இரண்டு தினுஸாகவும் அர்த்தம் பண்ணிக்கொள்ள இடமிருக்கிறது!வளர்ந்த குழந்தைகள் செத்துப்போனால், "கடன்காரன் (கடன்காரி) போயிட்டானே (போயிட்டாளே)"என்று தாயாக இருக்கப்பட்டவள் மனஸ் நொந்து பிரலாபிப்பதுண்டு. இங்கே கடன்காரன் என்றால் பூர்வ ஜன்மத்தில் நமக்குப் பணமாகவோ உழைப்பாகவோ கொடுத்தவன் என்று அர்த்தம். அப்படிக் கொடுத்ததை, கடனைத் திருப்பி வாங்கிக்கொள்கிற மாதிரி வாங்கிக்கொள்ளவே இப்போது பிள்ளையாகப் பிறக்கிறான். பெற்றவர்களுக்குச் செலவு, தேஹ ச்ரமம் எல்லாம் வைக்கிறான். இவற்றில் தான் முன் ஜன்மாவில் கொடுத்த அளவுக்குத் திரும்ப அவர்களிடம் வாங்கிக் கொண்டவுடன் கடன் தீர்ந்தாயிற்று என்று கண்ணை மூடிக்கொண்டு போய்விடுகிறான்.

"ஜன்மாந்தர கடன்காரன்"என்று சொல்கிற போதும் பூர்வஜன்மத்தில் நாம் ஒருத்தனால் பெற்றதைத் திரும்ப நம்மிடமிருந்து வாங்கிக்கொள்ள அவன் வந்திருக்கிறான் என்றே அர்த்தம். ஒருத்தன் கடன் படுவதனால், கடன் படுகிறவன் மட்டுமில்லாமல் கடன் தருகிறவனும் கஷ்டத்துக்கு ஆளாகிறான் என்று சொல்ல வந்தேன். இப்போது நவீன 'ஐடியாலஜி'போய்க்கொண்டிருக்கிற போக்கில் கடன் கொடுத்தவர்தான் அதிகக் கஷ்டத்துக்கு ஆளாகவேண்டியிருக்கிறது. ஸர்க்காரே கடன் வாங்கிப் பெரிய பெரிய திட்டம் போடுவதாக இருப்பதால் போலிருக்கிறது, கடன்பட்டவர்களுக்குத்தான் இப்போது ஸர்க்காரில் எல்லா சலுகையும்!வெளி தேசங்களில் உள்ள லக்ஷுரிகள்தான் இப்போது நம் ஸர்க்காருக்கு 'டார்கெட்'(குறிக்கோள்)!வாஸ்தவத்தில் தேசத்தில் திருப்தியும் ஆத்யாத்மிகமான அபிவிருத்தியும் ஏற்பட வேண்டுமானால், ஜனங்களுக்கு இடையில் பொறாமையும் போட்டிகளும் போகவேண்டுமானால், 'வாழ்க்கைத் தரம்'என்று சொல்வதைக் குறைப்பதற்குத் தான் திட்டம் போடவேண்டும். ஆனால் வாழ்க்கைத் தரத்தை மேல் நாடுகளின் தரத்துக்கு உயர்த்தியே தீரவேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டு வேண்டாத வஸ்துக்களை அத்யாவசியத் தேவையாக ஆக்குவதற்கே ஸர்க்கார் திட்டம், திட்டம் என்று ஓயாமல் போட்டுக் கொண்டிருக்கிறது. இதற்காக, இந்த தேசத்திலுள்ள எல்லா ஜனங்களின் கடனையும் சேர்த்து வைத்து ஸர்க்காரே ஒன்றுக்கப்புறம் எத்தனையோ ஸைஃபர்கள் போடுகிற தொகை லோகம் பூராவும் கடன்பட்டிருக்கிறது. வேண்டாத வஸ்துக்களில் ஜனங்களுக்கு அபிருசியை உண்டாக்கி விட்டு, அதனாலேயே அவர்களை சம்பள உயர்வுக்காக எப்போது பார்த்தாலும் சண்டை, ஸ்டிரைக் என்று இறங்குவதற்குத் தூண்டிக்கொண்டிருக்கிறது. 'திட்டம்'என்ற பெயரில் திட்டமில்லாமல் செய்கிற காரியத்தால் ஏற்பட்டிருக்கிற inflation-ல் (பணவீக்கத்தில்) என்ன (வருமானம்) வந்தாலும் போதமாட்டேனென்கிறது. ஜனங்கள் கடனாளியாக வேண்டியிருக்கிறது. இதற்கு ஸர்க்காரே 'இன்ஸென்டிவ்'தருவதாக இருக்கிறது!ஜனங்களைக் கடன் வாங்குவதற்கு நன்றாகப் பழக்கி வைக்கிற ரீதியில் கிராமத்துக்கு கிராமம் பாங்குகள் திறந்து அநேக ஜனங்களுக்கு 'லோன்'கொடுக்கிறது.

இதனாலே எத்தனையோ பொய், மோசடி, கரப்ஷன், பாங்கு சொல்கிற இனத்துக்காக் கடன் வாங்குவதாகச் சொல்லிக்கொண்டு அதை வேறு காரியங்களுக்குப் பிரயோஜனப்படுத்துவது, அதற்காக inspection staff-க்கு 'அழுவது'முதலில் பல பேர் மனுப்போடும் போட்டியில் 'லோன்'வாங்குவதற்கே அதிகாரிகளுக்கு 'நைவேத்யம் பண்ணுவது'என்றெல்லாம் ரொம்பக் குழறுபடியாகப் போய்க்கொண்டிருக்கிறது. அப்புறம் கடனைத் திருப்பி வசூலிப்பதும் கஷ்டமாகிறது. கட்டாயப்படுத்தி வாங்கினால் 'வோட்'போய்விடப் போகிறதே என்ற பயத்தில் கடனை write off பண்ணி விடுகிறார்கள்!சொந்தப் பணமா என்ன, ஜனங்கள் வரி முதலானவைகளைக் கொடுத்துதானே என்பதால் ஸுலபமாகக் கடனை வஜா செய்துவிட்டு நல்ல பெயரும், வோட்டும் ஸம்பாதிக்கப் பார்க்கிறார்கள். அதோடு போகவில்லை. சொந்தப் பணத்தைக் கடனாகக் கொடுத்தவன் அல்லது குத்தகைப் பணம் பெற வேண்டியவன் முதலியவர்களெல்லாருங்கூடத் தங்கள் பணத்தை விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும் என்பதாக அவர்களை வயிறெரிய வைத்து, 'மொரடோரியம்'என்று 'ஆர்டினன்ஸ்'போட்டு

விடுகிறார்கள்.

ஏழைகளுக்கு வாஸ்தவமாக நன்மை பண்ணுவதை யாரும் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் பொதுவாக அடக்கப் பண்பும் எளிமையும் உள்ள நம் ஏழை ஜனங்களை வீண் டாம்பீகத்திலும், பலவிதமான பொய் பித்தலாட்டங்களிலும் தூண்டிவிட்டு, 'பட்ட கடனைத் தீர்க்கத்தான் வேண்டும் என்ற பெரிய தர்மத்துக்கு விரோதமாக நாம் போனாலும் ஸர்க்கார் நமக்குத்தான் ஆதரவாக இருக்கும்'என்று துணிச்சல் கொள்ள வைப்பது நன்மை இல்லவே இல்லை;தீமைதான். 'வோட்டுப் பெட்டி பலம் நமக்குத் தானிருக்கிறது'என்று அவர்களை எண்ண வைத்து, அதற்காக தர்ம பலத்தையும் தெய்வ பலத்தையும் அவர்கள் இழக்கும்படிச் செய்வது அவர்களுக்குச் செய்கிற தீமைதான்.

கடன் கொடுத்தவன் எப்படியெல்லாம் கடின சித்தனாகிக் கொடுமை பண்ணுகிறான் எனபதும் எனக்குத் தெரியாமலில்லை. அநியாய வட்டி வாங்குவது, எத்தனை திருப்பினாலும் அசலில் கழித்துக் கொள்ளாமல் வட்டியிலேயே கழித்துக் கொள்வது என்று அவர்களும் அநேக அக்ரமங்கள் பண்ணத்தான் பண்ணுகிறார்கள்.

கடன் வாங்குவது என்ற தப்பை ஒருவன் பண்ணுவதால்தான் இப்படி இன்னொருத்தன் (கடன் கொடுப்பவன்) பாவம் செய்பவனாக ஆகிறான். கடைசியில் ஸர்க்கார் அவனுக்கு நாமம் போடுகிறபோது அவனும் கஷ்டப்படுகிறான்.

ஆதலால், அடிமுதலில் எவனானாலும் கடன் என்றே போகாமல் தன் வருவாயில்தான் காலம் தள்ளுவது என்று ஆக்கிக்கொள்ள வேண்டும்.கடன் கஸ்தியால்தான் அநேகர் திருடர்களாவது போலி ஸந்நியாஸிகளாகி ஊரை ஏமாற்றுவது. மானஸ்தர்களில் பலர் குடும்பத்தோடு பிராணஹானி பண்ணிக் கொள்வதாகவும் அவ்வப்போது பேப்பரில் பார்க்கும்போது மனஸ் வேதனைப்படுகிறது.

முன்னயே சொன்ன மாதிரி கடன் கொடுத்தவன், கடன் பட்டவன் என்ற இரண்டு பேர் மட்டுமில்லாமல் ஊரார் எல்லாருமே ஒருவன் கடனாளி என்றால் "அவன் எங்கே நம்மை உபத்ரவம் பண்ண வருவானோ?"என்று ஓடும்படியிருக்கிறது. கடன் பழக்க்த்தினால் இப்படி லோகம் முழுக்க சிரமங்கள் ஏற்படுவதால்தான், இந்த லோகத்திலேயே அதுதான் பெரிய தீட்டு என்று ஆசார்யாள் தீர்ப்புப் பண்ணிவிட்டார். பரோபகாரம் என்பதைச் சொல்லும்போது, உபகாரம் பண்ணாவிட்டாலும் பர அபகாரம் எப்படியெப்படிப் பண்ணாமலிருக்க வேண்டும் என்றும் சொல்ல வேண்டுமல்லவா?Ten Commandments (கிறிஸ்தவர்களின் பத்துக் கட்டளைகள்) கூட எல்லாமே negative-ஆகத்தானே (இன்னின்னவற்றை செய்ய வேண்டும் என்பதற்குப் பதில் கூடாது என்பதாகத்தானே) இருக்கின்றன! வைதிகமான ஸாமான்ய தர்மங்களிலுள்ள அஸ்தேயம் (திருடாமை), யோக சாஸ்திரத்திலுள்ள அபரிக்ரஹம்(பொருள் சேர்த்துக்கொள்ளாமை) என்பதாக 'நெகடிவ்'ஆக உள்ள இரண்டுமே பரோபகாரத்துக்கு அங்கம்தான். இந்த இரண்டையும் பின்பற்றினால் கருமித்தனம், ஊதாரித்தனம், கடன் வாங்குவது எல்லாமே போய்விடும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*பரோபகாரமே ஒரு ' கடன்* !

இப்போது நான் விசித்ரமாக ஒன்று சொல்லப்போகிறேன். பரோபகாரம் பண்ண வேண்டுமென்பதே நமக்கு உண்டான ஒரு 'கடன்'தான்!பிதிர்கடன் என்கிறோம். சாஸ்திரத்திலேயே 'ருண த்ரயம்'என்று மூன்று கடன்களைச் சொல்லியிருக்கிறது. பிராம்மண ஜன்மா எடுத்தவன் ரிஷிகளிடமும், தேவர்களிடமும், பித்ருக்களிடமும் கடன்பட்டிருக்கிறானென்றும் வேதாத்யனத்தால் ரிஷிக் கடன் தீர்கிறதென்றும், புத்ர ஸந்ததி உண்டுபண்ணுவதால் பிதிர் கடன் தீர்கிறதென்றும் சொல்லியிருக்கிறது. வேத சாஸ்திரங்களிலேயே சொன்ன பஞ்ச மஹா யஜ்ஞங்களில் 'ந்ரு யஜ்யம்'என்பதாக மற்ற மனிதர்களுக்குப் பண்ணவேண்டியதும், 'பூத யஜ்ஞம்'என்பதாக எல்லா உயிரினங்களுக்குமே பண்ண வேண்டியதும் விதிக்கப்பட்டிருக்கிறது. அதனால்,

மநுஷ்யர்கள் மிருகங்கள் பக்ஷிகள் எல்லாவற்றுக்கும் நாம் ஆற்ற வேண்டிய பரோபகாரத்தையும் 'கடன்'என்றே சேர்த்துக்கொள்ள வேண்டும்.

நாமாக ஒருத்தனுக்கு தானம் பண்ணாமல் இருக்கலாம். எவனோ கடன் கேட்டால் கொடுக்க மாட்டேன் என்று சொல்லலாம். "கொடுத்தா வைத்திருக்கிறீர்?என் பணம். கொடுப்பதும் கொடுக்காததும் என் இஷ்டம்"என்று சொல்லலாம். ஆனால் நாம் கடன் பட்டிருக்கும் போது கடன் கொடுத்தவன் திருப்பிக் கேட்டால் இப்படிச் சொல்ல முடியுமா?முடிகிறதோ இல்லையோ எப்பாடு பட்டாவது அவனுக்குக் கொடுத்துத் தீர்க்கத்தானே வேண்டும்?இப்படித்தான் நாம் கடன் பட்டிருப்பவர்களுக்காக வேதம் பஞ்ச மஹா யஜ்ஞங்களை விதித்திருக்கிறது. கடன் என்றால் திருப்பித்தானே ஆகவேண்டும்?ஆகவே இதைச் செய்யமாட்டேன் என்று சொல்ல நமக்கு 'ரைட்'டே கிடையாது. நம் போன்ற மநுஷ்யர்களுக்கும், பசு பக்ஷிகளுக்கும் உபகாரம் என்ற ரூபத்தில் யஜ்ஞம் செய்து அவற்றைத் திருப்திப்படுத்த வேண்டியது நம் கடமை. 'கடன்'என்பதிலிருந்தே 'கடமை'என்பது வந்திருக்கிறது. ஈஸ்வரன் இந்தப் பிரபஞ்சத்திலே ஒரு ஜீவனைப் பிறப்பித்து, அந்தப் பிரபஞ்சத்தால் அவன் பலவிதமான ஸௌக்கியங்களை அடைய வேண்டுமென்று வைத்திருக்கிறபோதே அதைச் சேர்ந்த எல்லா வகை ஜீவ இனங்களுக்கும் - பூச்சி பொட்டிலிருந்து ஆரம்பித்து தேவ, ரிஷிகள் வரைக்கும் - தன்னலான தொண்டை அவன் செய்ய வேண்டும் என்று வேதத்தின் மூலம் ஆர்டர் போட்டிருக்கிறான். ஆதலால் இதைக் கடனாக, கடமையாகச் செய்தேயாக வேண்டும். 'கடனே'என்று செய்யாமல் அன்பைக் கலந்து, உபகாரத்துக்குப் பாத்திரமாகிற எல்லாரையும் அந்த ஈஸ்வர ஸ்வரூபாகவே பாவித்து அடக்கத்தோடு பணி செய்ய வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*தனக்கு மிஞ்சி* !

இந்த உணர்ச்சி வந்து விட்டால் - பரோபகாரம் என்பது ஈஸ்வரனின் கட்டளையான கடன் என்று புரிந்து கொண்டு விட்டால் - நாம் எத்தனை கஷ்ட தசையிலிருந்தாலும் பரோபகாரத்தை விட்டுவிடாமல் செய்வோம். "தனக்கு மிஞ்சி தர்மம் என்றுதானே சொல்லியிருக்கு?நீயே ச்ரம தசையிலிருக்கிறபோது மற்றவர்களுக்காக வேறு ஏன் ச்ரமப்படுகிறாய்?"என்று கேட்கத்தான் கேட்பார்கள். அப்போது, "நான் ச்ரம தசையில் இருக்கிறேன் என்றால் பூர்வ ஜன்மாவில் ஈஸ்வராக்ஞைகளை ஸரியாகப் பண்ணாததற்கு இது தண்டனை என்றே அர்த்தம். போன ஜன்மத்தில் நான் பிறத்தியாருக்கு எந்த உபகாரமும், தொண்டும் பண்ணாததால் இப்போது கஷ்டப்படுகிறேன். அதனாலேயே இப்போதுதான் நிச்சயமாக நான் பரோபகாரம் செய்தாக வேண்டும். தனக்கு மிஞ்சி - போன ஜன்மாவின் (கர்ம) பாக்கியாக, அப்போதைய உடம்பு போன பிறகும் மிஞ்சி - இப்போது வந்து சேர்ந்திருக்கும் இந்தக் கஷ்டம்தான், 'தனக்கு மிஞ்சி'. இது தீருவதற்காகவே தர்மம் செய்தாக வேண்டும். அதுதான் 'தனக்கு மிஞ்சி தர்மம்'. நீர் அதற்கு வேறேதோ தப்பர்த்தம் பண்ணிக் கொண்டிருக்கிறீர். இப்போது நான் தன்னையும் மிஞ்சி - அதாவது என் சொந்தக் கஷ்டத்தையும் மிஞ்சி - தர்மம் பண்ணனால்தான் வருங்காலத்திலாவது நன்றாயிருப்பேன்"என்று பதில் சொல்ல வேண்டும்.

எத்தனையோ கஷ்டத்திலும் இளையான்குடிமாறநாயனாரைப் போலப் பரோபகாரம் பண்ணினவர்களின் ஞாபகம் நமக்குப் போகக்கூடாது.

தான் எத்தனை கஷ்டப்பட்டாலும் அதைப் பொருட்படுத்தாமல் அதற்கு மேம்பட்டு வெளியிலே வருவதுதான் தனக்கு மிஞ்சுவது. இப்படி வந்து லோகத்துக்கு உபகரிப்பதுதான் "தனக்கு மிஞ்சி தர்மம்"என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

இது ரொம்ப ஹை லெவலில் (உயர் மட்டத்தில்). லோயர் லெவலில் (அதற்கு கீழ்ப்பட்ட நிலையில்) பிறருக்கு திரவிய ஸஹாயம் செய்வதற்காகவே தான் மிச்சம் பிடிக்கும் விதத்தில் வரவுக்குள் செலவை அடக்கி, கடன் கஸ்தி இல்லாமல் சிக்கனமாக வாழவேண்டும்.

*சேமிப்புக்கு வழி*

சோற்றுச் செலவைவிட ஜாஸ்தியாகும் காபியை நிறுத்துவது;பட்டுத் துணி வேண்டாம் என்று விடுவது;ஸ்வயம்பாக நியமத்தால் (தன் சாப்பாட்டைத் தன் கையாலேயே சமைத்துச் சாப்பிடுவது என்ற நெறியால்) ஹோட்டல் செலவை அடியோடு குறைப்பது;ஸினிமாவுக்குப் போவதை நிறுத்துவது என்ற இந்த நாலை மட்டும் செய்து விட்டால் போதும். எவனும் கடன் கஸ்திப்படாமலிருப்பதோடு, பிறத்தியாருக்கும் திரவிய ரூபத்தில் ஏதோ கொஞ்சமாவது உபகரிக்க முடியும். இதெல்லாம் ஒரு குடும்பத்தில் தினப்படி ஸமாசாரங்கள். இவற்றோடு ஸமூஹ ப்ரச்னையாகிவிட்ட வரதக்ஷிணையையும், ஆடம்பரக் கல்யாணத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். வரதக்ஷிணை இல்லை, கல்யாணத்துக்காக ஆயிரம் பதினாயிரம் என்று செலவழிப்பதில்லை என்றால் எந்தக் குடும்பத்திலும் பணமுடை, கடன் உபத்ரவம் ஏற்படவே ஏற்படாது. பொதுப் பணிகளுக்கு உதவ ஸம்ருத்தியாகக் கிடைக்கும்.

எது இன்றியமையாதது, எதெது இல்லா விட்டாலும் வாழ்க்கை நடத்த முடியும்;எதெதுகள் இல்லாமலும் நம் அப்பன் பாட்டனெல்லாரும் ஸந்தோஷமாகவே வாழ்ந்தார்கள் என்று ஆலோசித்துப் பார்த்துத் தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழவேண்டும். முதலில் சிரமமாக இருக்கும். சபலங்கள் இழுத்துக்கொண்டு தான் இருக்கும். இருந்தாலும் தாயான அம்பாளை வேண்டிக்கொண்டு, அநுக்ரஹ பலத்தில் தேஹித் தெளிந்து ஜயிக்க வேண்டும். அப்புறம் தெரியும், அந்த எளிய வாழ்க்கையில்தான் எத்தனை நிம்மதி இருக்கிறதென்று!போக்ய வஸ்துக்களைத் தேவை தேவை என்று சேர்த்துக் கொண்டே போனால் அப்புறம் வீடு பெரிசாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால் வாடகைச் செலவு ஏறுகிறது. இப்படி ஒன்றிலிருந்து ஒன்றாக நமக்கே வருமானம் போதாமல் ஆக்கிக்கொண்டால் பரோபகாரம் பண்ணி நம் கர்மாவைக் கழுவிக் கொள்வதெப்படி?அநாவசியங்களை எல்லாம் கழித்துக் கட்டிவிட்டால் நமக்கும் நிம்மதியாக, பிறருக்கும் உதவியாக ஜன்மாவை உயர்த்திக் கொள்ளலாம். அம்பாள் தாயாக, அந்த ஒரே தாயாருக்கு நாம் அத்தனை பேரும் குழந்தைகளாக, ஒரு குடும்பத்தில் பத்துக் குழந்தைகள் இருந்தால் அவை ஒட்டிக் கொண்டு இருக்கிறாற்போல், ஒருத்தருக்கொருத்தர் உபகாரம் பண்ணிக்கொண்டு வாழலாம். இந்த உபகாரம்தான் என்று generalise பண்ணவேண்டியதில்லை;அவாவாள் ஸ்திதியில் எது ஸாத்யமோ அந்த உபகாரத்தைச் செய்து கொண்டு ஆனந்தமாக வாழலாம்.



**ஆசாரம்**

**வஜ்ரம் பாய்ந்த விருக்ஷம்**

பூர்விகர்கள் ஒழுகிய வழியில் போவதற்கே 'ஆசாரம்'என்று பெயர். ஆசார-வ்யவஹாரங்கள் என்று சொல்வதுண்டு. வ்யவஹாரம் என்பது நிகழ்கால நடப்பாக மட்டும் இருப்பது. ஆசாரம் என்பது பூர்வத்தில் நெடுங்காலமாக நம் முன்னோர்கள் தங்கள் நன்னடத்தைக்கு ஆதாரமாக என்ன செய்தார்களோ அது. அதற்கு நீண்ட காலம் நிலைத்து நின்றதால், நெடுங்கால மரத்தில் உண்டாகிற வஜ்ரம் போன்ற உறுதி உண்டு. அந்த உறுதியான அஸ்திவாரத்தின் மேல் நாமும் நம் வாழ்முறையை எழுப்பிக்கொண்டால்தான் நமது வாழ்க்கை ஸ்திரமாக இருக்கும்.

நம் பூர்விகர்கள் எப்படிப்பட்ட நெறிகளைக் கைக் கொண்டிருந்தார்களென்றால், நம் சாஸ்திரங்களிலும் ஸம்பிரதாயங்களிலும் என்னென்ன உண்டோ அவற்றைத் தான். அவற்றை அவர்கள் அநுஷ்டித்த சிறப்பினால்தான் நம் தேசமே தொன்றுதொட்டுப்

பாரமார்த்திகத்திலும், ஞானத்திலும், பக்தியிலும், அது மட்டுமின்றி எல்லாக் கலைகளிலுங்கூட லோகத்திலேயே முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது. இன்றைக்கு நாம் இவ்வளவு சீரழிந்துவிட்ட பிறகுங்கூட நாம்தான் ஆத்யாத்மிகத்தில் தங்களுக்கு வழிகாட்ட வேண்டுமென்று மற்ற தேசத்தவர்கள், மற்ற மதஸ்தர்கள் இங்கே உள்ள ஆச்ரமங்களுக்குக் கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருக்கிறார்கள் என்றால் அது பூர்வாசாரம் 'பெடல்'பண்ணிவிட்ட வேகத்தின் எஞ்சிய பலத்தால்தான்!

இந்த ஆசாரங்களில் பெரும்பாலானவற்றை விட்டுவிட வேண்டுமென்றுதான் ஸமீப காலமாக, ஓரிரு நூற்றாண்டாக, நம் நாட்டில் சீர்திருத்தக்காரர்கள் சொல்லி வருகிறார்கள். ஒவ்வொரு சீர்திருத்தக்காரரும் வரும்போது, நம்முடைய மதம் என்னும் வயலில் இதுதான் களை, இதை எடுத்துவிட்டால் போதும், பயிர் நன்றாக இருக்கும் என்று சொல்கிறார்கள். இப்படி அவரவருக்குத் தோன்றுகிறபடி ஒவ்வொன்றாக எடுத்துப் போட்டுக் கொண்டேயிருந்தால் பயிர் என்றே ஒன்றும் மிஞ்சாது!ஆனதால் நம்மைவிட அறிவிலும், அருளிலும், அநுக்ரஹ சக்தியிலும் எவ்வளவோ மேல் நிலையிலுள்ள ரிஷிகள் தர்ம சாஸ்திரங்களில் என்னென்ன சொல்லியிருக்கிறார்களோ அவற்றைப் பூர்ணமாக அநுஸரிப்பதற்குத்தான் நாம் ப்ரயத்தனப்பட வேண்டும். அதற்கான மன உறுதியைத் தரும்படி பகவானிடம் பிரார்த்திக்க வேண்டும்.

இன்னொன்று யோசித்துப் பார்க்க வேண்டும். இத்தனை சீர்திருத்தத் தலைவர்கள் வந்து இவ்வளவு சீர்திருத்த இயக்கங்களை ஆரம்பித்தும் இவற்றிலிருந்து நாம் மஹானாக ஞானியாக எத்தனை பேரைப் பெறமுடிந்திருக்கிறது?யாரை வேண்டுமானாலும் ரிஷி, அவதாரம், Messenger of God என்று சொல்லிவிடலாம். ஆனால் வாஸ்தவத்தில் ஜனங்களின் தாபத்தை சமனம் செய்கிற அநுக்ரஹ சக்தி இவர்களுக்கு இருக்கிறதா என்பதே கேள்வி. ஸம்பிரதாயமாக வருகிற குரு உபதேசத்தால் இப்போதும் பலபேர் பெற்று வருகிற அநுக்ரஹமும் ஸ்வாநுபூதியும் இந்த reform-காரர்களிடமிருந்து வருமா?நேற்றைக்கொன்று, இன்றைக்கொன்று என்று சொல்லிக் கொண்டிருக்கும் இவர்களுக்காக tradition என்ற வஜ்ரம் பாய்ந்த ஸம்பிரதாய விருக்ஷத்தை வெட்டி விடுவதா?இப்படி நான் கேட்கவில்லை. பத்துப் பன்னிரண்டு வெள்ளைக்காரர்களே - அவர்கள் ஆத்ம ஸம்பந்தமாக நிறையப் படித்து ரொம்பவும் ஸாதனைகளும் செய்தவர்கள் - என்னிடம் வந்து இப்படி வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"Traditionஎன்கிற சாஸ்திர மரபு, அதன்படியே சொந்த வாழ்க்கையை நடத்தினதால் பரிசுத்தி பெற்ற குருமார்கள், அப்படிப்பட்டவர்களின் அநுபவத்தில் ஊறிப் பக்குவமாகி வருகிற உபதேசம் தீக்ஷை முதலானவை, இவை சிஷ்யனுக்குள்ளேயும் போய் அவனை சுத்தி பண்ணுவது - என்றிப்படியில்லாமல் ஆத்மாநுபவம் எப்படி வர முடியும்?எத்தனையோ மதங்கள், reform-கள் வந்துவிட்டாலும் பூர்வாசாரத்தில் ஊறிய ஆசார்யர்களைப் பின்பற்றா விட்டால் ஆத்மாபிவிருத்தி என்பது மிகவும் துர்லபமாகத் தானே இருக்கிறது?"என்று அவர்கள் கேட்டார்கள்.

அநுபவிகளுக்குள்ளேயே வித்யாஸம் உண்டுதான். அதனால்தான் அநேகமாகப் பெரிய மத ஸ்தாபகர்கள் எல்லாரும் அநுபவிகளாயிருந்தாலும் ஸமயாசாரங்கள் வித்யாஸப்படுகின்றன. ஆனாலும் எவனொருவன் எங்கே பிறந்திருந்தாலும் அந்த மதத்துக்கான ஆசாரங்களைப் பின்பற்றினால் அவனுடைய ஆத்மா கடைத்தேறிவிடும். ஆத்மா கடைத்தேறச் சீர்திருத்தக்காரர்களை நம்பிப் பிரயோஜனம் இல்லை. அநேகமாக இந்த reformer-கள் ஸமத்வம், அது, இது என்று சொல்லி, இந்த லோக வாழ்க்கையில் எல்லோருக்கும் பெருமையான ஸ்தானம் வாங்கித் தருபவர்களாயிருக்கிறார்களே தவிர, ஆத்ம லோகத்தில் இவர்களால் ஒன்றும் ப்ரயோஜனமில்லை என்பதுதான் அந்த வெள்ளைக்காரர்கள் கட்சி.

எனக்கு எந்தக் கட்சியும் கிடையாது. ஒரு ஜட்ஜை எந்தக் கட்சி என்று கேட்டால் என்ன சொல்வது?'லா'வை (சட்ட புத்தகத்தை)ப் பார்த்து, சொந்த அபிப்ராயமில்லாமல், அதன் பிரகாரம் சொல்லத்தான் ஜட்ஜ் இருக்கிறார். 'எடர்னல் லா'(ஸநாதன தர்மம்) என்கிற சாஸ்திரங்களைப் பார்த்து அதிலிருப்பதைச் சொல்லவும், என்னால் முடிந்தமட்டும் அப்படிச் சொல்லியிருப்பதன் பிரகாரமே நடக்கப் பிரயத்னப்படவுந்தான் நான் இருக்கிறேன். அந்த

சாஸ்திரங்களில் சொல்லியுள்ள ஆசாரங்களின்படி நீங்கள் நடக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியதுதான் ஆசார்யாளின் சின்னப் பிரதிநிதியாக இருக்கிற என் பொறுப்பு. நான் சொல்வது உங்களுக்கு ஏறுவதும் ஏறாததும் நானே அந்த சாஸ்திரப்படி எவ்வளவுக்குச் செய்கிறானோ, செய்யவில்லையோ அதைப் பொறுத்ததுதான். எனக்கு அநுஷ்டான சக்தி இருந்தால் தான் என் சொல்லுக்கு அதன்படி சாஸ்திர ரீதியாக உங்களை நடக்கப் பண்ணுவிக்கிற சக்தி இருக்கும்.

வெவ்வேறு மதங்களுக்கிடையிலேதான் ஆசாரங்களில் வித்யாஸம் இருக்கிறதென்றில்லை. ஒரு மதத்திலேயேகூட பல கிளை ஸம்பிரதாயங்கள் உண்டாகி மாறுபட்ட ஆசாரங்கள் இருக்கின்றன. பௌத்தத்திலேயே ஹீனயானம், மஹாயானம், Zen என்றெல்லாம் வெவ்வேறு ஆசாரங்கள் இருக்கின்றன. கிறிஸ்டியானிடியில் காதலிக், ப்ராடெஸ்டென்ட், க்ரீக் சர்ச் என்று இருக்கின்றன. இஸ்லாத்தில் ஷியா, ஸுன்னி, அஹமதீயா என்று மூன்று பிரிவு உண்டு. ஹிந்து மதத்திலும் சைவம், வைஷ்ணவம், வைதிகம், தாந்த்ரிகம் என்றெல்லாம் பல இருக்கின்றன.

தேச வித்யாஸத்தாலும் ஆசார வித்யாஸம் ஏற்படுவதுண்டு. நம் தேசத்திலேயே வடக்கே குளிர்காலத்தில் ஜலமெல்லாம் ஐஸாகப் போகிற ஊர்கள் இருக்கின்றன. அதனால் அங்கே பண்டா சட்டை போட்டுக்கொண்டே பூஜை பண்ணுவான். அங்கங்கே கிடைக்கும் தான்யாதிகளைப் பொருத்து நைவேத்யம், போஜன ஆசாரம் முதலியன கொஞ்சம் மாறும்.



## *பிறந்த குலாசாரமே உய்நெறி*

இதெல்லாம் எப்படியானாலும் ஸரி, எந்த இடத்தில் எந்த மதத்தில், கிளை மதத்தில், ஒருவன் பிறந்திருந்தாலும் அந்த இடத்திலிருந்த அந்த மதத்து, கிளை மதத்து, பூர்விகப் பெரியவர்கள் எப்படிப்பட்ட வாழ்முறையை, வாழ்க்கை நெறியை ஏற்படுத்திக் கொண்டிரு ந்தார்களோ, அதுவே தனக்கான ஆசாரம் எனக் கொண்டு பின்பற்றவேண்டும். இப்படி அவனவனும் தன்னுடைய மூதாதைகள் போன வழியில்தான் போக வேண்டும்;இல்லாவிட்டால் அவன் பதிதனாகிவிடுகிறான் என்று சொல்லியிருக்கிறது.

**சிகாம் ஸூத்ரம் ச புண்ட்ரம் ச ஸமயாசாரமேவ ச * பூர்வை-ராசரித குர்யாத் அந்யதா பதிதோ பவேத் ****

சிகாம் :- சிகை எப்படியிருக்க வேண்டும்?துருக்கர்கள் மொட்டை அடித்துக் கொள்கிறார்கள். ஸிக்கியர்கள் முடி, தாடி வளர்க்கிறார்கள். கிறிஸ்தவர்கள் க்ராப் பண்ணிக் கொள்கிறார்கள். ஹிந்துக்கள் குடுமி வைத்துக்கொள்வது சாஸ்திரத்தில் மந்த்ர பூர்வமாகச் சொல்லியுள்ள ஒரு சடங்கு. இதிலும் பல வித்யாஸம். சோழியன், நம்பூதிரி, சிதம்பரம் தீக்ஷிதர்கள், மற்றவர்கள் ஆகியோருக்குள் குடுமியை முடிந்துகொள்வதில் வித்யாஸங்கள் இருக்கின்றன. சிலர் ஊர்த்வ சிகை என்பதாக உச்சியில் முடிந்துகொள்கிறார்கள். சிலர் பூர்வ சிகை என்று தலைக்கு முன்பக்கமாக முடிந்து கொள்கிறார்கள். "இவற்றில் நீ பிறந்த மரபிலே எப்படி சிகை வைத்துக் கொண்டார்களோ அப்படியே நீயும் பண்ணு"என்று சாஸ்திரம் சொல்கிறது.

சிகைக்கு அப்புறம் 'ஸூத்ரம்'என்றது பூணூலை அல்ல. ஏனென்றால் பூணூல் விஷயத்தில் அத்தனை குலசாரங்களுக்கும் ஒரே விதிதான். என்னென்ன அநுஷ்டானம் செய்ய வேண்டுமென்று விரிவாக codify செய்து ஆச்வலாயன ஸூத்ரம், ஆபஸ்தம்ப ஸூத்ரம், போதாயன ஸூத்ரம் என்றெல்லாந்தான் வெவ்வேறு பல சாஸ்திரங்கள் இருக்கின்றன. இவற்றில் நாம் பிறந்த குடும்பதாருக்கு எது ஸூத்ரமோ அதில் சொல்லியிருப்பவற்றையே எடுத்துக் கொள்ளவேண்டும்.

'புண்ட்ரம்'என்று சொன்னது நெற்றிக்கு இட்டுக் கொள்வதை. விபூதி, கோபி சந்தனம், நாமம்,

கரிப்பொட்டு, இவற்றிலும் வெவ்வேறு வகைகள் என்று இருப்பதில் குலாசாரப்படி இட்டுக்கொள்ள வேண்டும்.

'ஸமயாசாரம்'என்பது மதாநுஷ்டானம். ஹிந்து மதத்துக்குள் உள்ள அநேக ஸம்பிரதாயங்களுக்குள் நீ பிறந்திருக்கிற குடும்பம் எதைச் சேர்ந்ததோ அதற்கான ஆசாரத்தையே பின்பற்று. இந்த தேசத்தில், இந்த ஊரில், இந்தக் குடும்பத்தில் நீ பிறந்திருக்கிறாயென்றால் இது தற்செயலாக (accidental-ஆக) நேர்ந்ததில்லை;உன் பூர்வ கர்மாவைப் பார்த்து, அதை அநுபவிக்கும்போதே நீ தர்ம கர்மாவைப் பார்த்து, அதை அநுபவிக்கும்போதே நீ தர்ம ரீதியாகப் போனால் எதனால் உனக்கு ஆத்மாபிவிருத்தி ஏற்பட முடியும் என்று திட்டம் பண்ணி ஈஸ்வரனேதான் உன்னை இந்தக் குடும்பத்தில் பிறக்க வைத்திருக்கிறார். அதனால் அதன் ஸமயாசாரத்தையே நீ அநுஷ்டி.

" பூர்வை : ஆசரித குர்யாத் "என்றால் "உன்னுடைய பூர்விகர்கள் எப்படிப் பண்ணினார்களோ, அப்படியே நீயும் பண்ணு"என்று அர்த்தம். அதாவது முன்னே சொன்ன சிகை, ஸூத்ரம், புண்ட்ரம், ஸமயாசாரம் எல்லாவற்றிலும் உன் மூதாதைகள் கடைப்பிடித்த ஆசாரங்களையே நீயும் கைக்கொள்ளு என்று அர்த்தம்.

**அந்யதா பதிதோ பவேத்**

இப்படிச் செய்யாமல், அதாவது தன் குலமுன்னோர் வழக்கைப் பின்பற்றாமல், வேறு மார்க்கத்தில் போனால் வேறுவித வாழ்க்கை முறைகளையும் வெளி அடையாளங்களையும் மேற்கொண்டால், அதாவது தன் மதத்திலிருந்தும் கிளை ஸம்பிரதாயத்திலுருந்தும் வேறொன்றுக்குப் போனால் அப்படிச் செய்கிறவன் பதிதன் ஆகிவிடுவான் என்று சொல்லியிருக்கிறது.

பதனம் என்றால் விழுவது. பதிதன் என்றால் 'விழுந்தவன்'என்று அர்த்தம். அதாவது ஸன்மார்க்கத்தில் நடந்து போகாமல், அதோகதியில் விழுந்து விட்டவன் என்று அர்த்தம். பாதிவ்ரத்யத்தில் (கற்பு நெறியில்) தப்பாகப் போனவர்களைப் பதிதை என்பார்கள். அதைத்தான் சறுக்கிக்கொண்டு விழுந்தவள் என்ற அர்த்தத்தில் 'சறுக்கி', 'சிறுக்கி'என்பது. "வழுக்கி விழுந்தவர்கள்"என்று நவீன எழுத்தாளர்கள் சொல்கிறார்கள். இவள் புருஷனுக்கு த்ரஹோம் செய்கிற மாதிரி ஈஸ்வரனுக்கு, பரமபுருஷனுக்கு த்ரோஹம் செய்து கீழ்லோகத்துக்கும், இப்போதைவிட ரொம்ப ஹீன ஜன்மாவுக்கும் விழுந்துவிடுகிறவன்தான் பதிதன். பூர்விகர்களின் ஆசாரப்படி செய்யாதவன் இப்படிப்பட்ட பதிதன் ஆகிவிடுகிறான். லௌகிகத்திலும் பல தினுஸில் கஷ்டப்பட்டுக்கொண்டு, ஆத்மாவையும் உசத்திக்கொள்ள முடியாத கஷ்ட ஜீவனமாகவே அவனுடைய வாழ்க்கை இருக்கும்.

பகவான் நம்மை ஏதோ ஒரு இடத்தில் ஒரு ஸமூஹ தர்மத்தில், குலாசாரத்தில் பிறப்பித்திருக்கிறான். என்ன அர்த்தம்?புருஷனை அநுஸரித்துப் பத்தினி கடைத்தேற வேண்டுமென்பதுபோல், ஜீவன் இவ்வாறு தனக்குப் பிறப்பால் எந்த சாஸ்திரமும் ஸம்பிரதாயமும் ஏற்பட்டிருக்கிறதோ அதை அநுஸரித்து ச்ரேயஸ் அடைய வேண்டுமென்றுதான் அர்த்தம். "மாட்டேன்;இந்த ஆசாரப்படி செய்ய முடியாது"என்றால் அது பதியைத் திரஸ்காரம் பண்ணுவது போன்ற பெரிய தோஷந்தான். "இந்த ஸமயாசாரத்தை விட்டு இன்னொன்றுக்குப் போவேன்;வேறே மதத்தில் சேருவேன்"என்றால் இன்னம் தப்பு. அது பதியை விட்டு விட்டுப் பரபுருஷனிடம் போகிறது போல, அதனால்தான் "பதிதோ பவேத்"என்றது.

இப்படி ஆகாமல் தப்புவதுதான் நமக்கு முக்கியம். சீர்திருத்தவாதி ஏதோ இந்த லோகத்துக்கு, இப்போது நடத்துகிற வாழ்க்கை உயர்வுக்கானவற்றை மட்டும் பார்த்து மதுரமாகச் சொல்கிறாரென்பதால் அதன்படிச் செய்து நரக விஷத்தில் போய் விழக்கூடாது. ஆசாரம் ஒருவனை விழாமல் காப்பது மட்டுமில்லை;அவனை இப்போதைய ஸ்திதியிலிருந்து இன்னமும் தூக்கிவிட்டு ஈஸ்வர ஸந்நிதானத்தில் கொண்டு நிறுத்திவிடும்.

## அநுபவ கனம்

தலைமுறை தலைமுறையாக வந்த அநுபவ weight ஆசாரத்துக்குத்தான் இருக்கிறது.

Tradition (மரபு) என்று ஒன்றை மதித்து அதன்படிச் செய்கிறபோதுதான் நம் மனஸை, இந்திரியங்களை, போக்குகளை, கார்யங்களை ஒரு நெறியில் சீராகக் கட்டுப்படுத்திக் கொண்டு வருகிற discipline-ம் ஏற்படுகிறது. இதுதான் மோக்ஷ த்வாரத்துக்கு முதல் வாசலான 'சித்த சுத்தி'என்பதைத் திறந்துவிடுவது. நன்றாக ஸ்திரப்பட்டுவிட்ட established tradition-ஐ(நன்கு நிலைப்பட்ட மரபை) மதிக்காமல், அதை நம்பாமல், அதில் ஏன் அது இப்படி, இது இப்படி என்று கேள்வி கேட்டுக் கொண்டேயிருப்பதோடு முடிந்து போகிறதே தவிர, பதிலாக, இப்போது இருக்கிற ஆசாரங்களை எடுத்து விட்டதற்குப் பதிலாக வெயிட் உள்ள டிஸிப்ளின் எதையும் நிலைநாட்ட முடியவில்லை. காந்தி மாதிரி தன்னளவில் சுத்தராக இருந்துகொண்டு, ஈஸ்வர பக்தியும் பண்ணிக்கொண்டு, பழைய இந்திய வழக்கப்படியே எளிய வாழ்க்கை, தேஹ உழைப்பு இவற்றை மேற்கொண்டு இருந்தவர்களே பழைய ஆசாரங்களில் சிலவற்றை எடுத்துவிட்டு, பழசில் மீதி சில ஒழுக்கக் கட்டுப்பாடுகளையும், புதிதாகத் தாங்களே ஆச்ரமங்களில் ஏற்பாடு பண்ணி, கண்குத்திப் பாம்பாக நேராகத் தாங்களே நிர்வாஹத்தைக் கவனித்து வரும் போதுகூட, ஒழுங்குத் தப்பான கார்யங்கள் நடந்து. அதற்காகத் தாங்களே பஹிரங்க கண்டனம் பண்ணிப் பட்டினி கிடக்கும்படியாக ஆகிறது.

---



## சீர்திருத்தத்தால் கட்டுப்பாட்டுக் குலைவு

என்ன காரணமென்றால், established -ஆக (நன்கு நிலைப்பட்டதாக) உள்ள சாஸ்திர ஆசாரங்களில் கை வைத்துக் கொஞ்சமோ நஞ்சமோ மாற்றிச் 'சீர் திருத்தம்'பண்ணலாம் என்கிற எண்ணம் வந்தவுடனேயே ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு நடப்பது என்ற அடக்க குணம் போக ஆரம்பித்து விடுகிறது. பழையதான ஒரு ஒழுங்கு முறையை, "இது மநுஷ்ய ஸ்வதந்திரத்தை நெரிக்கிறது"என்று சொல்லி ஒரு சீர்திருத்த தலைவர் மாற்றியவுடனேயே, அவரைச் சேர்ந்தவர்களுக்கு அவரே போடுகிற புது ஒழுக்க நெறிகள் உள்பட எல்லாக் கட்டுப்பாட்டையும் உடைத்தவிட்டு மனம் போனபடி ஸ்வந்திரமாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது. ஒரு தலைவர், "பழைய ஆசாரக் கெடுபிடியிலிருந்து உங்களை விடுவிக்கிறேன்"என்று ஸ்வயமாசார்யராக, தாமே தம்மை ஒரு 'ஸேவியராக'(ரக்ஷகராக) ஆக்கிக்கொண்டு உதவ வருகிறாரென்றால், அவரைச் சேர்ந்தவர்கள் கொஞ்ச நாளிலிலேயே, "நீங்கள் பழைய ஆசாரக் கெடுபிடிகளிலிருந்து எங்களுக்கு விடுதலை கொடுத்தீர்களானால், இப்போது நீங்கள் புதிதாகப் போடுகிற கெடுபிடிகளிலிருந்தும் நாங்களே விடுபடுகிறோம்"என்று வெளியே கிளம்பிவிடுகிறார்கள்!

அதனால்தான் எந்தக் கட்டுபாடுமில்லாமல் ஜனங்களை அவிழ்த்துவிட்டிருக்கிற சீர்திருத்த இயக்கங்களைச் சேர்ந்தவர்களைப் போலவே, கட்டுப்பாடுகளை வற்புறுத்தும் சீர்திருத்தத் தலைவரைப் பின்பற்றுகிறவர்களும் கொஞ்ச காலத்திலேயே அவரவர் இஷ்டப்படி செய்பவர்களாகிறார்கள். தேசபக்தி, நேர்மை, ஸ்வதேசியம், த்யாகம் முதலியவற்றை எத்தனையோ கட்டுப்பாட்டோடு காத்து வந்த ஸ்தாபனத்துக்காரர்கள் இப்போது எப்படியிருக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறோமல்லவா?

ஆசாரம்

## கீதையின் கட்டளை

இதனால்தான் பகவான் (கீதையில்) பூர்வாசாரத்தில் ஏதேனும் ஒன்றிரண்டு ஸரியில்லாமலிருந்தால்கூட அதில் கைவைத்து, அறியாமை நிலையிலே இருக்கிற பெரும்பாலான ஜனங்களுக்குப் புத்திக் கலகத்தை உண்டுபண்ணவே கூடாது என்று அடித்துச் சொல்லியிருக்கிறார். 'சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி தான் ஸமூஹத் தலைவர்களாக இருக்கப்பட்ட அறிவாளிகள் எல்லாக் காரியமும் செய்யவேண்டும். தங்களுக்கு அந்தக் கார்யங்கள் தேவையில்லை, அதற்கு மேல் ஸ்திதிக்குப் போயாச்சு என்றால்கூட, இப்படித் தாங்கள் சாஸ்திரத்தை மீறிப் பண்ணினால் மற்றவர்களும் கட்டுப்பாட்டை இழந்து புத்தி மாறாட்டத்தில் குழறுபடியாகச் செய்ய ஆரம்பிப்பார்களே என்பதால் தாங்களும் வழிகாட்டிகளாக சாஸ்திர கர்மாக்களுக்குக் கட்டுப்பட்டுத்தான் நடக்க வேண்டும்'என்கிறார்.

ந புத்திபேதம் ஜனயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் I

ஜோஷயேத் ஸர்வகர்மானி வித்வான் யுக்தஸ் ஸமாதரன் II (3.26)

"கீதை கீதை"என்று இப்போது எல்லோரும் சொன்னாலும் இது மாதிரியான ஸ்லோகங்களை முழுங்கி விடுகிறார்கள்!இப்படியேதான் இன்னோரிடத்திலும், "எது செய்யலாம் எது செய்யகூடாது என்று வியவஸ்தை பண்ணுவதற்கு உனக்கு சொந்தமாக அதிகாரம் கிடையாது. சாஸ்திரத்தைப் பார். அதுதான் 'அதாரிடி'. அதில் செய் என்று சொன்னதைச் செய்;செய்யாதே என்பதைச் செய்யாதே"என்று ஒரு அத்யாயத்தில் முடிந்த முடிவாகச் சொல்லியிருக்கிறார்.

தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே

கார்யாகார்ய வ்யவஸ்திதௌ I

(16.24)

ரிஃபார்ம் செய்பவர்களுக்கு கீதை வேண்டியிருக்கிறது. ஆனால் இம்மாதிரி விஷயங்களை அப்படியே மறைத்துக்கொண்டு போய்விடுகிறார்கள். அல்லது இன்னம் ஒருபடி மேலே போய் இதெல்லாம் interpolation (இடைச் செருகல்) என்று சொல்லி விடுவார்கள்!



ஆசாரம்

## சீர்திருத்தத் தலைவர்கள்

ரி ஃபார்ம், ரிஃபார்ம் என்று சொல்வதெல்லாம் கடைசியில் அவரவரும் மனஸ் போனபடி, ஒரு டிஸிப்ளினும் இல்லாமலிருக்கலாம் என்று அவிழ்த்து விடுவதில்தான் முடிந்திருக்கிறது. ரிஃபார்ம்களை ஆரம்பித்துவைத்திருக்கிற எல்லா லீடர்களையும் ஒழுங்கு தப்பினவர்கள் என்று சொல்வதற்கில்லைதான். சாஸ்த்ர, ஸம்ப்ரதாய விதிகளாகிற ஒழுங்குகளில் பலதை இவர்களும் விட்டவர்கள்தான் என்பதால் இவர்களை ஸநாதன தர்ம பீடங்களான மட ஸ்தாபனங்களிலிருக்கிற நாங்கள் ஒப்புக் கொள்ளத்தான் இல்லை. என்றாலும் இவர்கள் personal life-ல் (தனி வாழ்க்கையில்) ஸத்யம், நேர்மை, ஒழுக்கம், த்யாகம், அன்பு போன்ற பலவற்றைக் கடைப்பிடித்தவர்கள் என்பதை ஆக்ஷேபிப்பதற்கில்லை. ஓரளவுக்குப் படிப்பு, விஷயஞானம் எல்லாம் உள்ளவர்களாகவும், ஜனங்களை நல்லதில் கொண்டு போகவேண்டும் என்பதில் நிஜமான அக்கரை கொண்டவர்களாகவுமே இந்தச் சீர்திருத்தத்

தலைவர்களில் பலர் இருந்திருக்கிறார்கள் என்றும் சொல்லலாம். ஆனாலும் இவர்கள் பண்ணுகிற பெரிய தப்பு என்னவென்றால் தங்கள் புத்திக்கு ஸரியாகத் தோன்றுவது தான் ஸரி, பாக்கி எல்லாம் தப்பு என்று நினைப்பதுதான். தாங்கள் சுத்தர்கள்தான், விஷயம் தெரியாதவர்கள்தான் என்றாலும் தர்ம சாஸ்திரங்களை வேத வழிப்பிரகாரம் பணணிவைத்த ரிஷிகளும், மநு முதலிய பெரியவர்களும் தங்களைவிடவும் எவ்வளவோ சுத்தர்கள், எவ்வளவோ விஷயம் தெரிந்தவர்கள் என்று உணர்கிற மரியாதை இவர்களுக்கு இல்லை. இன்னொன்று, 'அத்ருஷ்ட பலன்'என்பதாக சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதை நம்பாமல் வெள்ளைக்காரர்கள் எண்ணப்போக்குப்படி இவர்களும் practial result என்று உடனுக்குடனே லோகத்தில் வெளிப்படையாகத் தெரியும் பலன்களை மட்டுமே கருதிக் கார்யம் செய்வதுதான். யதார்த்தத்துக்கு மேல், யதார்த்தத்துக்குப் பிடிபடாத தெய்வ சக்தி ஒன்று இருக்கிறது. அது அப்போதைக்கப்போது கண்ணுக்குத் தெரியும்படியாக மட்டும் ரிஸல்டைக் காட்டிவிடுவதில்லை. நம் கார்யங்கள், எண்ணங்கள் இவற்றின் பலன் உடனே இங்கேயே தெரியாமல், ஏதோ காலத்தில், ஏதோ ஜன்மாந்தரத்தில், ஏதோ லோகாந் தரத்தில்கூட விளையும் படியாகத்தான் விஸ்தாரமான அளவிலே லீலை பண்ணிக் கொண்சிருக்கிறது. இப்படி உடனுக்குடனே பலன் தெரியாமல் எப்போதோ விளைய இருப்பதைத்தான் 'அத்ருஷ்ட பலன்' என்பது. இதிலே இந்த ரிஃபார்மர்களுக்கு அநேகமாக நம்பிக்கையே கிடையாது. அவர்களுடைய படிப்பு, பார்வை எல்லாம் வெள்ளைக்காரர்களின் வழியிலேதான் இருக்கிறது. அதனால்தான் லோகத்தில் அநேக வித்யாஸங்கள் இருப்பதெல்லாம் ஜன்மாந்த்ர கர்மாப்படி அவரவரும் ரத்மாபிவிருத்தி அடைவதற்காக ஏற்பட்டது என்பதை ஒப்புக்கொள்ளாமல், ஸமத்வம், அபேதவாதம் என்று எதையோ சொல்லிக்கொண்டு எல்லாவற்றையும் பலபட்டையாகப் போட்டுக் குழப்ப வேண்டும் என்கிறார்கள். இப்படியே லோகாந்தரங்களிலும்அத்ருஷ்ட பலன்ஏற்படுவதைப் புரிந்து கொள்ளாததால்ஸ தேவதைகளுக்கான யஜ்ஞாதி கர்மாக்கள், பித்ருக்களுக்கான திவஸ தர்ப்பணாதிகள் ஆகியவற்றை வீண்கார்யம், ஸூபர்ஸ்டிஷன் என்று கேலி செய்கிறார்கள். லோகந்த்ர, ஜன்மாந்தரங்களில் பலனைத் தருபவனாக ஈஸ்வரனொருவன் இருக்கிறானென்பதை மறந்து, தாங்களே அதிகாரி, தாங்களே கர்த்தா என்று நினைத்துக்கொண்டு, இவர்கள் விரும்புகிற சீர்திருத்தம் முன்னேற்றம் எல்லாம் தங்கள் வாழ்நாளிலேயே நடந்து பார்த்தாக வேண்டும் - "In my life time" - என்கிறார்கள்.

இவர்களில் சிலர் கொஞ்சம்கூட அடக்கமில்லாமலிருக்கும்போது " தம்ப-மான-மதான்விதா :" என்று (கீதையில்) சொல்லியிருப்பதுபோல1த் தாங்களே எதையும் ஸாதித்துவிட முடியும் என்று தற்பெருமையில் மதம்பிடித்து டம்பபாகத் திட்டங்களை போட்டு, 'லோகத்தையே மாற்றிவிடப் போகிறேனாக்கும்'என்று கிளம்புகிறார்கள். இவர்களைப் படம் பிடித்துக் காட்டுவதுபோல பகவான்.

" இதமத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மநோரத ம் " -

"இன்றைக்கு இதை ஸாதித்து விட்டேனாக்கும். இன்னமும் பெரிசாக நாளைக்கு ஸாதிப்பேன்"என்று வெறும் லௌகிகமாகவே எதெதையோ பண்ணிப் பூரித்துப் போகிறார்கள் என்கிறார்2. இப்படியெல்லாம் செய்கிறவர்களிடத்தில் சாஸ்திரப்படி சொல்லப்படும் சௌசம் (தூய்மை, மடி-விழுப்பு பார்ப்பது) இருக்காது, எந்த ஆசாரமுமே இருக்காது:" ந சௌசம் ந அபி ச (ஆ)சார :"என்கிறார்3.

உபநிஷத்திலும், " ஸ்வயம் தீரா : பண்டிதம் மன்ய மானா :"என்று "நானே மஹா புத்திசாலி, மஹா பண்டிதன்"என்று பரலோக விஷயங்களைப் புரிந்து கொள்ளாமல் கிளம்புகிறவர்களையும், அவர்களை வழிகாட்டியாகக் கொண்டு பின்னே போகிறவர்களையும் சொல்லி, இவர்கள் எல்லாரும் குருடர்களால் வழிகாட்டப்பட்ட குருடர்கள் மாதிரி சுற்றிச் சுற்றித் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறது4.

## *தலைவர்களும், பின்பற்றுகிறவர்களும்*

ரிஃபார்ம் லீடர்களுக்கும் ஃபாலோயர்களுக்கும் (அவர்களைப் பின்பற்றுவோருக்கும்) இடையே ஒரு வித்யாஸம். இதைக் கொஞ்சம் பார்க்கலாம்.

இந்த நாளில் மதம் விதிக்கிற சீலங்கள் (religious viruteவ) மத ஸம்பந்தமில்லாத வெறும் ethical excellences(நன்னெறிப் பண்புகள்) என்று ஒரு விசித்ரமான பாகுபாடு பண்ணுவது வழக்கமாயிருக்கிறது. மத ஸம்பந்தம் அதாவது ஈஸ்வரப் பிரேரணையான (மத) சாஸ்திர ஸம்பந்தம் என்பது இல்லாமல் நன்னெறி, ethics,morality என்று எதுவுமே இல்லை. ஆனாலும் இப்படி 'சாஸ்திரம்'என்று பூர்விகக் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்கிறோம் என்றால் அது இந்தக் காலத்தவருக்கு அவமானமாக, தங்கள் கௌரவத்தைக் குறைத்துக் கொள்வதாக இருக்கிறது. சாஸ்திரங்களில் கண்ணுக்குத் தெரியாத 'அத்ருஷ்ட'தத்வங்களை base பண்ணியே அநேக தர்மங்களையும், அந்த தர்மங்களை நடைமுறையில் காட்டுவதற்கான கர்மங்களையும் சொல்லியிருப்பதெல்லாம் 'ஸுபர்ஸ்டிஷன்'என்று மேல்நாட்டுக்காரர்கள் சொல்வதால் இதையெல்லாம் நாம் ஏன் அநுஸரிக்க வேண்டும் என்று அவமானமாயிருக்கிறது. நம் சாஸ்திரத்தை நாம் ஸரியாகப் புரிந்துகொண்டு அவர்களுக்கு எடுத்துச்சொல்ல வேண்டும் என்றில்லாமல், அவர்கள் தங்களுடைய பார்வையில் பட்டபடி இதைப்பற்றிச் தப்பாகச் சொல்வதையெல்லாம் நம்மவர்களே எடுத்துக்கொண்டு ஃபாஷனாக ரிஃபார்ம் பண்ணிவிட வேண்டுமென்று ஆரம்பிக்கிறார்கள்.

கொஞ்ச காலமாக, நாம் எடுத்துச் சொல்லாமலே, வெள்ளைக்காரர்கள் தாங்களாக ஆராய்ச்சிகளும் பரிசோதனைகளும் பண்ணி ஏற்கனவே தாங்கள் பரிஹாஸம் பண்ணின அநேக ஸமாசாரங்களைப் பெரிசாகக் கொண்டாட ஆரம்பித்திருக்கிறார்கள். ஹோமம் பண்ணுவதில் பலன் இருக்கிறது. மந்திரத்தில் பலன் இருக்கிறது, லோகாந்தரங்கள் இருக்கின்றன என்றெல்லாம் அவர்களே ஆரம்பித்திருக்கிறார்கள். இப்போது அவர்கள் ஸர்ட்டிஃபிகேட்டின் மீது நம்மவர்களும் இவற்றைக் கொஞ்சம் ஒப்புக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்.

ரிஃபார்ம் லீடர்கள் மதசீலம், நெறிக் கோட்பாடு என்று இரண்டாகப் பிரித்ததில் முதலாவதில் பலவற்றை ஆக்ஷேபித்தாலும், பின்னதில் (நெறிகளில்) பலவற்றைப் பின்பற்றுவதால் தங்களைப் பொறுத்தமட்டில் ஏதோ ஒர ஒழுங்குக்குக் கட்டுப்பட்டவர்களாயிருக்கிறார்கள். இந்த ஒழுங்குகளையும், பழைய ஆசாரங்களை மாற்றிச் சீர்திருத்தம் என்ற பெயரில் இவர்கள் செய்கிற புது விதிகளையும் சேர்த்து இவர்களே புது மதங்களை (அப்படிச் சொல்லிக் கொள்ளாவிட்டாலும்) ஸ்ருஷ்டிக்கிறார்கள். Leader-கள் விஷயம் இப்படியிருக்கட்டும். இவர்களுடைய follower-கள் விஷயம் என்ன?பழைய கட்டுப்பாடிலிருந்து அவிழ்த்து விடுகிறார்களே, இப்போதே லௌகிகமாக நமக்குப் பலன் தருகிற ஏற்பாடுகளைச் சொல்கிறார்களே என்றுதான் இவர்களை follow பண்ண ஆள் செல்கிறது. ஸ்வாதந்திரியமாக இஷ்டப்படிப் பண்ணலாம் என்பதற்காகத்தான் பிராசீனமான ஏதோ ஒரு பக்வம், படிப்பு, அநுபவம், கொள்கைப் பிடிமானம் எல்லாம் இருப்பதால் இவர்கள் மதாசாரங்களை விட்டாலும் தாங்களாகச் சில ஒழுக்க நெறிகளுக்காவது கட்டுப்பட்டிருக்கிறார்களென்றால் ஃபாலோ பண்ணும் பொது ஜனங்களுக்கு இந்த யோக்யதாம்சங்கள் எப்படி விசேஷமாக இருக்க முடியும்?அதனால், இவர்கள் (வீடர்கள்) religious virtues-ஐ (மதசீலங்களை) மட்டும் விட்டார்களென்றால் தாங்களோ எந்தக் கட்டுப்பாடுமே வேண்டாம் என்று ethical virtueவ-ஐயும் (நன்னெறிகளையும்) விட்டுவிட ஆரம்பிக்கிறார்கள்.

"ஸமயாசார வேலியை நீ உடைக்கலாம்"என்று சீர்திருத்தத் தலைவர் முதலில் சொல்லிக்

கொடுத்தால் அப்படி உடைத்து ஸ்வதந்த்ரத்தில் ருசி கண்ட ஜனங்கள் "நீ போட்டிருக்கும் 'மாரல்'வேலியையும் உடைப்பேன்"என்று பிற்பாடு அவரிடமே திருப்பிக் கொள்கிறார்கள்!பார்க்கவில்லையா - சடங்கும் ஆலய பூஜையும் ஸம்ஸ்கிருதத்தில் மட்டும் ஏன் பண்ண வேண்டும் என்று கேட்பதற்கு தேசத் தலைவர்கள் முதலில் ஜனங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்;அப்புறம் ஜனங்கள் அவர்களிடமே திருப்பிக்கொண்டு ஹிந்தி மாத்திரம் ஏன் நேஷனல் லாங்க்வேஜாக இருக்க வேண்டும் என்று கேட்டுப் பெரிய கலஹமாகவே ரயிலைக் கவிழ்த்தும் பஸ்ஸைக் கொளுத்தியும் எதிர்க்க ஆரம்பித்து விட்டார்கள். ஸத்யாக்ரஹம், 'ஸிவில்டிஸ்-ஒபீடியன்ஸ்', மறியல் என்று எதையெல்லாம் அந்நிய ராஜாங்கத்தை எதிர்த்து ரொம்பஸ முக்யமான விஷயங்களுக்காக ஆதியில் சொல்லிக் கொடுத்தார்களோ, அவற்றையே இப்போது உப்புப் போதாத விஷயங்களுக்காக இவர்களை எதிர்த்தே ஜனங்கள் செய்கிறார்கள். ஸாதாரண ஜனங்களைக் கிளப்பி விடும்போது எத்தனை முன்யோசனை வேண்டும் என்று நினைக்காததன் பலனை அநுபவிக்கிறோம்.

கதை சொல்வார்கள். பிரதிவாதி கடனைத் திருப்பித் தரவில்லை என்று வாதி பிராது போட்டானாம். பிரதிவாதியின் வக்கீல் தன் கட்சிக்காரர்களிடம், "நீ கோர்ட்டில் பைத்தியக்காரன் மாதிரி நடி;என்ன கேள்வி கேட்டாலும் 'பெப்பே''பெப்பே'என்று பேத்திக் கொண்டிரு. 'சித்தப்பிரமம் பிடித்தவன்;இவன் மேல் கேஸ் போட்டது தப்பு'என்று ஜட்ஜ் தள்ளுபடி பண்ணி விடுவார்"என்று சொல்லிக் கொடுத்தாரம். பிரதிவாதியும் அதே மாதரிப் பண்ணி வியாஜம் தோற்றுப் போகும்படிச் செய்துவிட்டானாம். கோர்ட்டுக்கு வெளியிலே வந்தவுடன் வக்கீல் அவனிடம் ஃபீஸ் கேட்டாராம். உடனே அவன் அவரிடமும் அவர் சொல்லிக் கொடுத்த தந்த்ரத்தையே திருப்பினானாம். "பெப்பே""பெப்பே" என்றானாம்!"என்ன?என்கிட்டேயுமா இப்படிப் பண்ணுகிறாய்?"என்று வக்கீல் கேட்க, "உன்கிட்டே மட்டுமென்ன?உன் அப்பன், பாட்டன் வந்தாலும் இதேதான் நடக்கும்" என்று அர்த்தம் தொனிக்க "உனக்கும்பெப்பே!உங்க அப்பனுக்கும் பெப்பே!"என்றானாம்.

இப்படித்தான் ரிஃபார்மர்கள் "சாஸ்திரம் சொல்கிற ஒழுங்குகள் வேண்டாம். நாங்கள் சொல்கிற ஒழுங்குகளைக் கடைபிடியுங்கள்"என்றால், ஃபாலோயர்கள் முதலில் பிரதிவாதி வக்கீல் துணையில் கேஸை ஸாதகமாக்கிக் கொண்டதுபோல, இந்த லீடர்களின் ஸஹாயத்தில் தங்களுக்கு ஸமூஹத்தில் அநேக ஆதாயங்களை அடைந்துவிட்டு, கொஞ்ச நாள் ஆன அப்புறம், "சாஸ்த்ர ரூலுக்கும் பெப்பே;உன ரூலுக்கும் பெப்பே"என்று, எந்த ஒழுங்குமில்லாமல் போக ஆரம்பிக்கின்றார்கள். இம்மாதிரி ஸந்தர்ப்பதில் தன்னளவில் ஓரளவு நன்றாகவே சுத்தராகவுள்ள லீடர்கள் தங்களைச் சேர்ந்தவர்களையே கண்டித்துவிட்டுத் தாங்களும் பட்டினி கிடப்பது போல ஏதாவது பிராயச்சித்தம் பண்ணிக் கொள்கிறார்கள் மற்ற தலைவர்களுக்குத் தங்களைச் சேர்ந்தவர்கள் விட்டு விட்டுப் போகிறார்கள் என்றால் அவமானயிருக்கிறது. அதனால் கண்டும் காணாமலும் ஏதோ தட்டிக் கொடுத்துக் கொண்டு போகிறார்கள். ரொம்பவும் மிஞ்சிப் போனால்தான் 'எக்ஸ்பெல்'பண்ணுகிறார்கள் (ஸ்தாபனத்திலிருந்து வெளியேற்றி விடுகிறார்கள்) அநேகமாக அந்தத் துணிச்சல் இவர்களுக்கு வருவதற்குள், இவர்களிடம் அபிப்பிராய பேதப்பட்டவர்களே பலமடைந்து தாங்கள் மட்டும் சேர்ந்து இன்னொரு சீர்திருத்த இயக்கம் ஆரம்பிக்கிற ஸ்திதிக்கு வந்துவிடுகிறார்கள். அதனால், "நீங்கள் என்ன 'எக்ஸ்பெல்' பண்ணுவது? நாங்களே முழுக்குப் போட்டுவிட்டு வெளியில் வந்துவிட்டோம்"என்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*பிரத்யக்ஷச் சான்று*

இந்த நூற்றாண்டில் பிரத்யக்ஷமாகத் திரும்பத் திரும்பப் பார்த்த விஷயம் சொல்கிறேன். தர்மசாஸ்திர ஆசாரங்கள் எத்தனையோ ஆயிரம் வருஷங்களாகப் பிளவுபடாமலே

இருந்திருக்கின்றன. அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்றெல்லாம் தத்வரீதியில் பிரிந்த போதுங்கூட இவர்கள் புதுப்புது தர்ம சாஸ்திரங்களை எழுதி வைத்துக்கொண்டு விடவில்லை. பழைய சாஸ்திரங்களின்படியேதான் பெரும்பாலான ஆசாரங்கள் இருந்தன. ஆதிலியிருந்த ஆபஸ்தம்ப, ஆச்வலாயனாதி ஸூத்ரங்களும், மநுதர்ம சாஸ்திரம், நிபந்தன க்ரந்தங்கள் முதலியனவுந் தான் எல்லா ஸித்தாந்திகளுக்கும் பொதுவாகத் தொடர்ந்து இருந்திருக்கின்றன. இவற்றுக்குள்ளேயேதான் சில ஸித்தாந்திகள் சிலதை விட்டும் சிலதைச் சேர்த்தும், சிலதைக் கூட்டியும் சிலதைக் குறைத்தும் பண்ணுகிறார்கள். இப்படி வைதிகாசாரமானது ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஒரே மாதிரியாக இருந்துவந்திருக்க, ஒரு நூற்றாண்டுக்குள்ளேயே அநேகமாக ஹிந்துமதச் சீர்திருத்த இயக்கங்களாகத் தோன்றிய எல்லாவற்றிலும் பிளவுகள் ஏற்பட்டு வெவ்வேறு "க்ருப்"கள் தோன்றி விட்டன!

மதச் சீர்திருத்த அம்சங்களையே நிறையக் கொண்ட அரசியல் கட்சிகளிலும் இப்படியே ஒவ்வொன்றும் இரண்டாக, மூன்றாக உடைந்து போயிருக்கின்றன. இப்படி இதுகளுக்கு stability(ஸ்திரத்தன்மை) போதாததே இவற்றிலே ஸத்ய பலம் குறைச்சல் இவற்றை ஆரம்பித்தவர்களுக்கு (அவர்கள் நல்லவர்களாகவும், நல்ல நோக்கமுள்ளவர்களாகவும் இருந்தாலும்) தபோ பலம் குறைச்சல் என்பதற்கு அழுத்தமான proof-ஆக இருக்கிறது. கொள்கைகளின் ஸத்யமும், அவற்றைச் சொன்ன ரிஷிகளின் தபோ பலமும்தான் வைதிக ஸமயாசாரத்தை யுகயுகாந்தரங்களாகக் காப்பாற்றியிருக்கிறது. இன்றைக்கு இத்தனை சீர்திருத்த மத இயக்கங்கள் ஏற்பட்ட பின்னும் முக்கால்வாசிக்கு மேலான ஜனங்கள் இவற்றில் சேராமல் மூலமான ஹிந்து மதத்தில்தான் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

வெளியிலே ஆசாரத்துக்கு மாறாகச் சொல்கிறவர்கள் கூட உள்ளூர (அதற்குக்) கொஞ்சம் பயப்படத்தான் செய்கிறார்கள். தங்கள் சொந்த விஷயத்தில் ரஹஸ்யமாக அநேக 'ஸூபர்ஸ்டிஷன்'களை அநுஸரித்துக் கொண்டுதானிருக்கிறார்கள்!இப்படி அநேகம் என்னிடம் அற்றுபடியாகிக் கொண்டிருக்கின்றன!எலெக்ஷனுக்கு டெபாஸிட் கட்டுவதென்றால் எத்தனை ரேஷனலிஸ்டானாலும் நாள், நக்ஷத்ரம் பார்த்துத்தான் செய்கிறார்கள் என்று கேள்வி!

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

## *ஒரு பரீக்ஷை போதும் !*

பழைய ஆசாரம் வேணுமா, சீர்திருத்தம் வேணுமா என்பதற்கு ஒரு 'டெஸ்ட்'போதும். ஒழுங்கீனம், லஞ்சம், திருட்டுப்புரட்டு, மோசடி, கொலை, வியபசாரம் இத்யாதிகள் நாம் 'ஸூபர்ஸ்டீஷிய'ஸாக இருந்தபோது ஜாஸ்தியிருந்ததா, இப்போது 'என்லைடன்'ஆகிவிட்ட பிறகு ('அறிவுப் பிரகாசம்'அடைந்த பிறகு) ஜாஸ்தியாகியிருக்கிறதா என்று பார்த்து விட்டால் போதும்!இத்தனை அனர்த்த பரம்பரையோடுதான் நாம் 'சீர்திருந்தி'யிருக்க முடியுமென்றால், இதைவிட மூட நம்பிக்கைகளைக் கட்டிக்கொண்டு அழுவதேமேல் என்றுதான் தோன்றுகிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

## *மனத்தூய்மையும் வெளிக் காரியமும்*

அநேக ஸமயாசாரங்களை, சடங்குகளைச் சீர்திருத்தக்காரர்கள் ஒதுக்குவதற்கு ஈஸியாக ஒரு காரணம் சொல்லி விடுகிறார்கள்:"மனஸு சுத்தமாக இருக்க வேண்டியதுதானே முக்யம்?'ரிசுவல்'(சடங்கு) எதற்கு?இந்த 'ஃபார்மாலிடீஸ்'எதற்கு?"என்கிறார்கள்.

மனஸைத் தனியாக விட்டால் அது கட்டுப்படாமல் கெட்ட வழிகளில்தான் போய்க் கொண்டிருக்கும். எவனாவது ஆயிரம், பதினாயிரத்தில் ஒருத்தனுக்குத்தான் காரியத்தில் போகாத போதும் மனஸ் கட்டுப்பட்டு நல்லதிலேயே போய்க் கொண்டிருக்கும். மற்றவர்களுக்கு ஒரு காரியத்தைக் கொடுத்து, 'கார்ய த்வாரா'மனஸை பகவானியமோ, ஜலஸேவையிலோ திருப்பி விட்டால்தான் உண்டு. இதைக் கவனித்துத் தான் ஆசார அநுஷ்டானங்கள் வைக்கப் பட்டிருக்கின்றன.

மனஸைத் தனியாக விட்டால் என்று மட்டுமில்லை அதை நாம ஜபம், ஸ்தோத்ரம் என்று வாக்குடன் சேர்த்துவிட்டாலுங்கூடக் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் அது பிய்த்துக் கொள்கிறது. அதனால் மனோ-வாக்-காயம் என்றபடி மனஸை வாக்கு மட்டுமின்றி, சரீர கார்யத்தோடும் பிணைத்தே சடங்குகளைக் கொடுத்திருக்கிறது. மந்திரங்களை வாக்கால் சொன்னபடியே ஹோமம் என்ற காரியத்தைப் பண்ணுவது ஸஹஸ்ரநாமத்தை வாக்கால் சொன்னபடியே அர்ச்சனை என்ற கார்யத்தைப் பண்ணுவது-என்று வைத்திருக்கிறது.

கேசவ, நாராயண, த்ரவிக்ரம என்று வாயால் சொன்னால்கூட பகவான் மஹிமையில் மனஸ் நன்றாக ஈடுபடுமாட்டேன் என்கிறதே!அதற்காக, "அந்தப் பன்னிரண்டு நாமங்களைச் சொல்லிக்கொண்டே உடம்பில் பன்னிரண்டு நாமங்களைத் திருமண்ணால் போட்டுக் கொள்ளு"என்று பெரியவர்கள் வைத்திருக்கிறார்கள். த்ரவிக்ரமன்தான் உலகளந்தான். உலகத்தை அளந்தவனே அதை ச்வேத வராஹமாக அவதாரம் பண்ணி வெள்ளைவெளேரென்ற தெற்றிப் பல்லிலே தூக்கி நிறுத்தினான். பல்பட்ட இடத்தில்தான் 'ச்வேத ம்ருத்திகை'என்ற வெளுப்பு மண்கட்டி கிடைக்கிறது. 'திருமண்'என்பது அதுதான். துளஸிக்கு அடிமண்ணும் இப்படி விசேஷமானது. இப்படிப்பட்ட மண்ணைக் குழைத்து ஒரு காரியமாக்கி உடம்பிலே போட்டுக் கொண்டால், அப்போதுதான் 'த்ரிவிக்ரம'என்கிறபோது, "அப்பா, உன் ஸ்பரிசம் பெற்ற மண்ணை என் சரீரத்திலும் தாரணம் பண்ணிக் கொள்கிறேன்"என்கிற மனக் குழைவு உண்டாகும்.

ஆத்மாபிவிருத்தியில் ஓரளவுக்கு மேலே போகப்போக மனஸின் ஒருமுக தியானத்துக்கு வாக்கு, கார்யம் ஆகியவையே இடைஞ்சலாகத்தான் ஆகும். கார்யம் ஸ்தோத்ரம், மந்திரம் எல்லாமே அப்போது நின்று போய்விடும். ஆனால் இது தானாகவே விடப்போகிற ஸமாசாரம். தவளையை உதராணமாகச் சொல்வது வழக்கம். தவளை ஜலத்தில்தான் முட்டை போடும். அப்புறம் முட்டையிலிருந்து வெளியே வந்தவிட்டும் சிலகாலம் மீன் மாதிரி ஜலத்தில் மட்டும்தான் இருக்கும். அந்த ஸ்டேஜில் அதற்கு நிலத்திலே ச்வாஸிப்பதற்கு வேண்டிய லங்ஸ் கிடையாது. மீன் மாதிரி ஜலத்தில் கரைந்திருக்கிற ஆக்ஸிஜனை தனக்குள்ளே இழுத்துக் கொள்ளும் gills என்ற உறுப்பு மட்டுந்தான் அப்போது தவளைக்கு உண்டு. அப்புறந்தான் அது வளர வளர இந்த உறுப்பு எப்படி மறைந்தது என்றே தெரியாமல் தானாக மறைந்து, அதற்கு நிலத்திலே இருந்து கொண்டு, காற்றிலேயுள்ள ஆக்ஸிஜனை ச்வாஸிக்கக்கூடிய லங்ஸ் உண்டாகிறது. இப்படி ஹையர் ஸ்டேஜுக்குப் போகும்போது தானாகச் சடங்கு, மந்த்ரம் எல்லாம் நின்று போகும்.

அதற்காக ஆரம்பத்திலேயே இதெல்லாம் வேண்டாம், மனஸ் சுத்தம் போதுமென்றால், அது தவளை முதலில் ஜலத்திலிருக்கும்போதே லங்ஸ்தான் வேண்டும் என்று தனக்கு இருக்கிற ச்வாஸ அவயவத்தையும் விட்டு விட்டு ... விட்டால் என்ன ஆகும்?உயிரையும் விட வேண்டியதுதான்!

வெளிச்சின்னங்கள், வெளிக்கார்யங்கள், வெளிவித்யாஸங்கள், இவற்றின் மூலந்தான் உள்ளே ஒரு அடையாளமும், காரியமும், பேதமும் இல்லாமல் ஆகிற நிலைமையை அடைய முடியும்*. முதலிலேயே கார்யத்தைக் கொடுக்காமல் மனஸை மட்டும் வைத்துக்கொண்டு தியானம் பண்ணு என்றால் மனஸ் மட்டும் வைத்துக்கொண்டு தியானம் பண்ணு என்றால் மனஸ் ரொம்ப நேரம் கண்டபடி ஓடிவிட்டு, அப்புறம் எழுந்துவிடத்தான் வைக்கும். அல்லது களைத்துத் தூக்கத்தில் கொண்டுவிடும்.

மனஸ் சுத்தம் டிஸிப்ளின் இல்லாமல் வராது. உள் டிஸிப்ளின் வெளி டிஸிப்ளின் இல்லாமல் வராது. ரூல்களும், ஃபார்மாலிடிகளும், வெளிக் கார்யங்களும், அந்தக் கார்யங்களைப் பொறுத்த அநேக வித்தயாஸங்களுமில்லாமல் வெளி டிஸிப்ளின் இல்லவேயில்லை.

"மனஸ் சுத்தத்தை மட்டுந்தான் கவனிப்போம்"என்று நவீனர்கள் சொன்னாலும், இதில் யாரோ ஒன்று இரண்டு தலைவர்கள் மட்டும் வேண்டுமானால் அப்படியிருக்கக்கூடுமே தவிர மற்றவர்கள், "மனம் போனபடிதான் இருப்போம்"என்று ஆவதாகவே முடிந்திருக்கிறது!இதற்கு நான் தொண்டை தண்ணீர் போக இத்தனை சொல்ல வேண்டியதேயில்லை. ரிஃபார்ம், ரிஃபார்ம் என்று ஆரம்பித்த பின் தேசத்தில் டிஸிப்ளினே இல்லை என்பது எல்லாருக்கும் பட்டவர்த்தனமாகத் தெரிகிற விஷயம். ஆனாலும் 'அதனால்தான் இது'(சீர்திருத்தம் என்ற காரணத்தால்தான் கட்டுப்பாட்டுக் குலைவு என்ற விளைவு) என்பதை ஒப்புக்கொள்ள யாருக்கும் மனஸு வரவில்லை.

நாஸ்திகர்கள் என்று போகிறவர்களை விட்டு விடலாம். அவர்கள் ரொம்பக் கொஞ்சம் பேர்தான். "ரிலிஜன்"என்று போற்றிச் சொல்லி, "நாங்கள்தான் வேதத்தின் ஸ்பிரிட்டை ஸரியாகப் புரிந்து கொண்டு இன்டர்ப்ரெட் பண்ணுகிறோம்", "அதை 'ஆர்த்தடாக்ஸி'யின் ஆதிக்யத்திலிருந்து மீட்டு உள்ளபடி ப்ரகாசம் பண்ணுகிறோம்". என்று சொல்லிக் கொண்டே ரிஃபார்ம்காரர்கள் அநாதிகாலமாய் ஒழுங்காயிருந்து வந்த ஸமுதாயத்தைக் கட்டுப்பாடேயில்லாமல் 'டிஃபார்ம்'(உருக்குலைவு) பண்ணுகிறார்களே என்பதுதான் துக்கமாயிருக்கிறது. ஆயிரலக்ஷம் ஆசாபாசங்கள், அழுக்குகள் இருக்கிறவர்களை எடுத்த எடுப்பில் உச்சாணிக் கொம்பிலுள்ள மனஸ் சுத்தத்துக்கு ஏறுங்கள் என்று, சொல்லி தாங்கள் இங்கேயுமில்லாமல் அங்கேயுமில்லாமல் திரிசங்கு லோகத்தில் தொங்குவது போதாது என்று, மற்றவர்களையும் அவர்கள் ஏற்கனவே இருந்த இடத்துக்கும் கீழே உருட்டி விடுகிறார்களேயென்று துக்கம் துக்கமாக வருகிறது. வேறே ஒன்றும் தெரியாவிட்டாலும், ஈஸ்வரன் என்று ஒருத்தனுக்கு பயந்து தர்ம நியாயமாக நடக்கவேண்டும்;பெரியவர்கள், முன்னோர்கள் காட்டும் வழியில் போகவேண்டும் என்பதால் இதுவரை ஜனங்களுக்கு இருந்த ஒழுக்கத்தையும் பணிவையும்கூட இந்தச் சீர்திருத்தங்கள் போகப் பண்ணிவிட்டன. ஸ்வதந்திரம், ஸ்வதந்திரம் என்று சொல்லி எல்லோரையும் - ஸ்வபாவமாக விநயகுணம் உள்ள நம்முடைய நல்ல பொது ஜனங்களை - மமதையில் கொண்டு தள்ளியிருப்பதுதான் சீர்திருத்தவாதிகள் செய்திருக்கிற கைங்கர்யம். யாரும் யாருக்கும் அடங்க மாட்டோம் என்று ஆக்கியிருக்கிறார்கள். எல்லாருக்கும் ஸ்வயநலம்தான் - ரைட் ரைட் என்ற பெயரில் - ஸகலமுமாகி விட்டது.

ஆனபடியால், "நாங்கள் ஹிந்து மத அபிமானிகள் தான்;நாங்கள்தான் நிஜமான ஹிந்துமதத்தின் அபிமானிகள்;we are for religion" என்று சொல்லிக்கொண்டே, இவர்கள் "கார்யத்தில் சாஸ்த்ர விரோதமாக எதை வேண்டுமானாலும் செய்வோம்"என்று போகிறவரையில் இவர்கள் பிரசாரம் செய்வது irreligion (மத விரோதம்) தான். 'சாஸ்திரம் வேண்டாம், சடங்கு வேண்டாம், மனஸ் தான்'என்று இருக்கிறவன் ஒன்றுக்கும் உதவாதவன்தான்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*நவீன ' ஸுபர்ஸ்டிஷன் ' கள்*

அத்ருஷ்ட பலனை நம்பால் பிரத்யக் பலனை மட்டும் பார்த்து அநேக விஷயங்களை ஸுபர்ஸ்டிஷன் என்று தள்ளுகிறார்கள் என்றாலும் இவர்களுடைய பகுத்தறிவு ('ரீஸன்') படி பதில் சொல்ல முடியாத அநேக ஸுபர்ஸ்டிஷனை இவர்களே உண்டாக்கிக் கொண்டும் பின்பற்றிக் கொண்டும்தான் இருக்கிறார்கள்!'ஜெய் ஹிந்த்'என்று சத்தம் போட்டு விட்டால் அதில் என்ன பிரரத்யக் பலன்?இப்படிக் கத்துவதால் தேசம் ஸுபிக்மாய்விடுமா

என்ன?ஆனாலும் "மந்த்ராஸ்"என்று கேலி பண்ணுகிற பிரதம மந்திரியே1*பிரஸங்கம் பண்ணி முடித்தவுடன், "ஜெய் ஹிந்த் கோஷிக்க வேண்டும்;இன்னும் பலமாக கோஷிக்கணும்;இது கூடப்போதாது"என்று மூன்று நாலு தரம் ஜனங்கள் தொண்டை கொண்ட மட்டும் கத்தச் சொல்கிறாராம்!

நம் தேசத்தில் மட்டுந்தான் என்றில்லை Faith-ஐ (நம்பிக்கையை)க் குலைத்து அதனிடத்தில் reason-ஐ (பகுத்தறிவு என்கிற வெறும் புத்தி தர்க்கத்தை) வைத்து, நம்மையும் இப்படியிழுத்து விட்டிருக்கிற எல்லா தேசத்திலுமே இப்படியிருக்கிறது. Rational-ஆகப் பார்த்தால் flag (கொடி) என்பது என்ன ஏதோ ஒரு துணிதானே!அதன் மீது தப்பினால் அது தேசத்ரோகம் என்றால் இது த்ருஷ்ட பலனா என்ன? ஆனாலும் இப்படிப் பண்ணுகிறவனுக்கு த்ருஷ்ட பலனாகவே ஜெயில் தண்டனை கொடுக்கிறார்கள் மந்த்ரபூர்வமாய் ஒரு ப்ரதிமையில் தெய்வத்தை ஆவாஹனம் பண்ணிப் பூஜை பண்ணுவதைக் கேலி செய்துவிட்டு, ஒரு துணிதான் தேசத்துக்கு ஸிம்பல் என்றால் அது எப்படி?புண்யகாலமாவது, புண்ய க்ஷேத்ரமாவது என்று சொல்லிவிட்டு நாஸ்திகப் பிரசார விழாக்களைக்கூட புத்தர், அம்பேத்கர் பிறந்த நாளில் பண்ணுகிறார்கள்!ஈரோட்டில், காஞ்சீபுரத்தில்தான் ஆரம்பவிழா என்கிறார்கள்!அதாவது அவர்களும் ஏதோ ஒரு 'புண்ய'- இப்படிச் சொல்வது எனக்கே வேடிக்கையாகத்தான் இருக்கிறது!- புண்யகாலம், க்ஷேத்ரம் இவற்றில் நம்பிக்கை வைத்துத்தானிருக்கிறார்கள்!ரொம்ப விசித்ரம், 'ஸமாதி', 'ஸமாதி'என்கிற பேர் வைத்து (நாம் ஏதோ வருஷத்தில் ஒருநாள் திருவையாறு, நெரூர் மாதிரி இடங்களில் 2*ஆராதனை நடத்துகிறோம் என்றால்) அவர்களோ நித்தியப்படி ஆராதனையே பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்!ஆஸ்திகர்களாயிருக்கிற சட்டசபைக்காரர்கள் பதவிப் பிரமாணத்துக்கு முந்தி கோயிலுக்குப் போகாமலிருந்தாலும் இருப்பார்கள்;போய்விட்டு வந்தாலுங்கூடச் சொல்வதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு இருந்தாலும் இருப்பார்கள்;ஆனால் இவர்கள் (பகுத்தறிவாளர் என்று சொல்லிக் கொள்கிறவர்கள்) 'ஸமாதி'என்கிறார்களே அதற்கு ஊர்வலமாகப் போய் மரியாதை பண்ணிவிட்டு வராமல் swearing-inசெய்வதேயில்லை.

வெறும் ரீஸன் என்று மட்டும் எடுத்துக் கொண்டால் அதற்குப் பொருந்தாத அநேக விஷயங்களை எவருமே பண்ணத்தான் வேண்டியிருக்கிறது;அப்போதுதான் நம்முடைய லக்ஷ்யத்தில் நமக்கு ஒரு ஆர்வத்தை, ஈடுபாட்டை எழுப்பி அதற்கு மற்றவர்களின் ஆதரவையும் திரட்டமுடிகிறது. இதற்குச் சின்னங்களும் காரியமும் இருந்தேயாக வேண்டியிருக்கிறது. இப்படி கறுப்பு-சிவப்பு அல்லது கதர் போட்டுக் கொண்டு கொடியையும் ஸ்லோகன் அட்டையையும் தூக்கிக் கொண்டு பாத யாத்திரை, ஸைகிள் ஊர்வலம், மாட்டுவண்டி ஊர்வலம் என்று நடத்தும்போது இதில் பகுத்தறிவுக்குச் சேராத எத்தனை விஷயம் இருக்கிறது என்று பார்ப்பதில்லை.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*தெய்வமும் மதமும் தர்மமும்*

தெய்வ ஸம்பந்தம் போச்சோ இல்லையோ தர்ம ஸம்பந்தமும் போய்விட்டது. 'நாங்களும் தெய்வத்தை நம்புகிறவர்கள்தான், ஆத்மாவை நம்புகிறவர்கள்தான்'என்று மதச் சீர்திருத்தக்காரர்கள் சொல்லிப் பிரயோஜனமில்லை. தெய்வமானாலும், ஆத்மாவானாலும், எதுவானாலும் நேராக அந்த தெய்வ சக்தியினாலேயே inspiration பெற்று (உள் உந்துதல் பெற்று)ப் பரமத் தியாகிகளான ரிஷிகள், அல்லது மதாந்தரங்களின் மூல புருஷர்கள ாயிருக்கப்பட்ட Prophet-கள் ஒரு சாஸ்திரம் அல்லது பைபிள் அல்லது குரான் என்று கொடுத்து அதுவும் அநுபவிகளான பல பூர்விகர்களால் அநுஷ்டிக்கப்பட்டு ஒரு tradition என்கிற weight-ஐப் பெற்றிருந்தால் அப்போது அதன்படியே நடந்தால்தான் தர்மமும், ஒழுக்கமும் இருக்கிறது. அந்தந்த தேசத்திலிருக்கிறவர்கள், "இதுதான் ஈஸ்வரன்

நமக்கேயென்று கொடுத்திருக்கிற மார்க்கம். எந்த மார்க்கத்தில் போனாலும், ஒரு மார்க்கத்திலுமே போகாவிட்டாலும்கூட அவனைப் பிடித்து விடலாம் என்பது நிஜம் என்றே வைத்துக் கொண்டாலும், அவன் எப்போது எத்தனையோ ப்ளானோடு, ஆர்டரோடு பிரபஞ்ச வியவஹாரங்களை நடத்துவதில் நம்மை இன்ன இடத்தில் இன்ன ஸமயாசாரத்தில் பிறக்கப் பண்ணியிக்கிறானோ, அப்போது இங்கே அவன் கட்டளையாக எந்த சாஸ்திரம் இருக்கிறதோ அதை நாம் அநுஷ்டானம் செய்ய வேண்டுமென்பதுதான் அவன் சித்தம்"என்று புரிந்துகொண்டு (இப்படிப் புரிந்து கொள்வதுதான் நிஜமான விழிப்பு) அந்தப்படியே பண்ண வேண்டும். இப்படி அவரவருடைய பூர்விகர் போன ஆசார வழியில் போவதைத்தான், " ஸமயாசாரமேவ ச பூர்வை : ஆசரித : குர்யாத் : என்று சொன்னது. இவ்வாறு பண்ணாமாற்போனால் - "அந்யதா", அதாவது வேறே வழியில் போனால் - "பதிதோ பவேத்":விழுந்து விடுகிறான்.

விழுகிறான் என்றால் எப்படி?ஏணியின் நடுவில் ஏதோ ஒரு கட்டையில் நின்று கொண்டிருக்கிறான். படிப்படியாக மேலே கொண்டு போவதற்கு சாஸ்திரம் இருக்கிறது. ரிஃபார்ம்காரர், "இப்படி இன்ச் இன்ச்சாக நீ ஏறுவதென்றால் ரொம்ப நாள் ஹீனஸ்திதியில் இருந்து கொண்டிருக்கணும், ஒரே தாவாக மேலே தாவு"என்று கிளப்பிவிட்டு இவன் நிற்கிற கட்டையை உடைத்து விடுகிறார். இவனுக்கா மேலே தாவுகிற சக்தி இல்லை. என்ன ஆகும்?இருக்கிற ஸ்திதியிலிருந்து இன்னம் கீழே விழவேண்டியதாகவே ஆகிறது. அந்யதா பதிதோ பவே த் : பதிதனாக, விழுந்தவனாக ஆகிறான்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

### *தலைவர் கடமை : கீதை உபதேசம்*

பகவான் கீதையில் நன்றாக எச்சரிக்கை பண்ணியிருக்கிறார். "லோகாசாரங்களுக்கு, உலக வழக்குகளுக்கு வித்யாஸமாக நீ போனாயானால் (உன்னளவில் நீ அவற்றை விட்டு விடலாமென்றாலுங்கூட) நீ ஜனங்களுக்குத் தப்பான வழிகாட்டியாகி விடுவாய். உன்னைப் பார்த்து அவர்களும் அவற்றை விட்டு விடுவார்கள். ஆனால் நீ உன்னுடைய பக்வ விசேஷத்தால் இப்போது விட்டதைவிட உசந்த வழிக்குப் போகக்கூடுமென்றாலும், ஸாதாரண ஜனங்கள் தற்போது இருக்கிற ஸ்தானத்தை விட்டதோடு மட்டும் இருக்குமே தவிர, விட்டபின் இதைவிட உசத்தியான ஒன்றைப் பிடித்துக் கொள்ள அவர்களுக்கு சக்தியும், ஸம்ஸ்காரமும் போதாது. இருக்கிற பிடிப்பையும் விட்டு விட்டு இன்னம் கீழே விழுந்து விடுவார்கள்"என்ற இவ்வளவு அபிப்ராயங்களையும் அடக்கித்தான், அடைத்து வைத்துத்தான்

ஸக்தா :கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத I

குர்யாத்-வித்வாம்-ஸ்ததா (அ)ஸக்த-சிகீர்ஷுர்-லோகஸங்க்ரஹம் II

ந புத்தி பேதம் ஜநயேத் அஜ்ஞானாம் கர்ம ஸங்கிநாம் I

என்றார் (3.25-26).

ஜனங்கள் பொதுவாக "கர்மஸங்கி"களே. அதாவது கார்யத்தில்தான் கட்டுப்பட்டிருப்பவர்கள். அவர்களிடம் வெறுமனே ஆத்மா, த்யானம் என்று ஐடியல் நிலையைச் சொல்லிப் பிரயோஜனமில்லை. சாஸ்திரங்களில் அவர்களுக்கு அநேகக் காரியங்களைக் கொடுத்து அதற்கு த்ருஷ்டமாகவோ அத்ருஷ்டமாகவோ இன்னின்ன பலன் என்று சொல்லியிருக்கிறது. வேதத்தில் சொல்லியிருக்கப்பட்ட அநேக யாக யஜ்ஞங்களுக்கு இப்படிப்பட்ட பலன்களைத்தான் சொல்லியிருக்கிறது. இந்த தேசத்திலேயே மழை பெய்து தான்யஸம்ருத்தி உண்டாகும் அல்லது மேதாவிலாஸம், ஸதஸில் வாக் விலாஸம் உண்டாகும்

முடிவாக ஸ்வர்க்கவாஸம் கிடைக்கும் என்றே சொல்லியிருக்கும். இந்திரியங்களால் இன்பங்களை அடையும் ஸ்வர்க்க வாஸத்தைத்தான் சொல்லியிருக்குமே தவிர, இந்திரிய பந்தமெல்லாம் தெறித்துப்போன மோக்ஷமான ஜீவ-ப்ரம்ம ஐக்கியத்தைக் கர்மாவுக்குப் பலனாக சொல்லியிருக்கவில்லை. ஏனென்றால் முதலிலேயே மோக்ஷம் என்றால் யாரும் அதை நாடமாட்டார்கள் என்று அதற்குக் கீழ்ப்பட்ட ஸ்வர்காதி ஸௌக்கியயங்களுக்காகவே கர்மாவைக் கொடுத்து அந்தக் கர்மாவினால் இவனுக்கு உண்டாகிற கட்டிப்பாட்டிலிருந்து, இவனறியாமலும், உத்தேசிக்காமலும், விரும்பாமலுமேகூட இவனுக்குச் சித்தசுத்தி தந்து இவனைப் பாரமார்த்திகமாகத் திருப்பத்தான் இப்படிச் செய்திருக்கிறது. பிற்காலத்தில் மதம் என்பதில் யஜ்ஞகர்மா குறைந்துவிட்டது. ஆனாலும் லௌகிக லாபங்களுக்காகவே வேறுவித அநுஷ்டானங்களைக் காரியமாக கொடுப்பது தொடர்ந்திருக்கிறது. "ராமஸ்வரத்துக்குப் போ, அரச மரத்தைச் சுற்று, பிள்ளை பிறக்கும். ஸூர்ய நமஸ்காரம் பண்ணு நேத்ர ரோகம் ஸரியாகப் போகும். கனகதாராஸ்தவம், சொல்லு ரூபாய் வரும்"என்றெல்லாம் லௌகிக பலன்களுக்காகவே பல காரியங்களை சாஸ்த்ரம் சொல்கிறது. இந்தப் பலனில் உள்ள பற்றினாலேயே பெரும்பாலான ஜனங்கள் இதுகளைப் பண்ணுகிறார்கள். இவர்கள் வாஸ்தவத்தில் உயர்ந்த அறிவு பெறாத 'அவித்வான்'கள்தான். இவர்களைத்தான் "ஸக்தா:கர்மண்யவித்வாம்ஸோ"என்கிறார். இவர்களிடம் "இப்படி அல்ப பலனையெல்லாம் நினைக்காதீர்கள். ஈஸ்வரானுபவம் என்ற உசந்த லக்ஷ்யத்தையே நினையுங்கள்"என்று உபதேசம் பண்ணினால் எடுபடாது.

அவர்களுடைய ஸம்ஸ்காரக் குறைவு காரணமாக, அவர்களை இப்போது இருக்கிற இடத்திலிருந்தே அவர்களுடைய மனஸை அநுஸரித்துக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் மேலே கொண்டு போக வேண்டும். இதற்கு அவர்களைப் பக்குவப்படுத்துவதற்காகத்தான் சாஸ்திரங்களே அவர்களுக்கு இப்படிப்பட்ட ஆத்ம ஸம்பந்தமில்லாத காரியங்களையும் கொடுக்கிறது. பலனுக்காகத்தான் அவர்கள் இவற்றைப் பண்ணுகிறார்கள். பண்ணிவிட்டுப் போகட்டும். ஆனால் இப்படிக் காரியம் பண்ணுவதால் என்ன ஏற்படுகிறதென்றால் இவர்கள் உத்தேசித்த பலன் உண்டாவதோடு கூட, இவர்கள் உத்தேசிக்காமேலே கொஞ்சங் கொஞ்சமாகச் சித்தசுத்தி என்ற பெரிய பலன் உண்டாக ஆரம்பிக்கிறது.

லௌகிக பலனை நினைத்தே கார்யம் பண்ணினாலும் சித்த சுத்தி உண்டாகிறது என்று இப்போதுசொல்லுகிறேன். இத்தனை நாழி என்ன சொன்னேன் இம்மாதிரி லௌகிகமான ஸமத்துவம், 'ரைட்'இவற்றுக்காகவே மதத்தை மாற்ற முயல்வது சித்தத்தை மேலும் அசுத்தம்தான் செய்திருக்கிறது என்று சொன்னேன். இது ஒன்றுக்கொன்று மாறாக இருக்கிறது. கொஞ்சம் ஆலோசித்துப் பார்க்கலாம்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

## *மூன்று விதமான கொள்கைகள்*

மூன்று கட்சிகள். ஒன்று, மதமே ஒரு ஸ்டேஜ் வரையில் உலக ஸம்பந்தமான ஸௌக்யங்களையும் ஆதரித்துக் காரியங்களைக் கொடுப்பது. இன்னொன்று:மதம் ரொம்ப உசந்த லக்ஷ்யத்துக்காக, ஸ்வச்சமான ஆத்மா என்கிற ஹை லெவலை மட்டுமே சேர்ந்ததாக இருக்க வேண்டும்;ஆதலால் அதிலிருந்து சடங்கு சின்னம், கர்மா எல்லாவற்றையும் அப்படியே உருவி விட்டு அதைச் சீர்திருத்த வேண்டுமென்பது. மூன்றாவது:லௌகிகமான அபிவிருத்திகள், ஸ்வய மரியாதை, ஸயன்டிஃபிக் அவுட்லுக் (இதை 'ரீஸன்'என்றும் சொல்கிறார்கள்;அதாவது புத்தியின் தர்க்கத்துக்குப் புரிபடுவதாக இருக்க வேண்டும் என்பது அபிப்பிராயம்) இவற்றுக்கு மதசாரங்கள் ஹானி செய்வதால் அப்படிப்பட்ட அம்சங்களை மாற்றிச் சீர்திருத்த வேண்டுமென்பது. அதாவது சீர்திருத்தத்திலேயே இரண்டு கட்சி. ஒன்று, இது அநேகமாகப் பொலிடிகலாக இருப்பது - ஆத்ம ஸம்பந்தமே அடியோடு இல்லாமல் லோக வாழ்க்கைக்காகவே சீர்திருத்தம் பண்ண வேண்டுமென்பது. இன்னொன்று ரொம்ப

உயர்ந்த ஆத்மாநுபவங்களை எல்லோருக்கும் பொதுவாக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்திலேயே மதத்தைச் சீர்படுத்தச் சொல்வது. லௌகிகமாக மநுஷனுக்கு மநுஷன் வித்யாஸம் இருக்கப்படாது என்ற ஸமத்வத்தைச் சொல்வதில் இரண்டு தினுஸான சீர்திருத்தவாதிகளும் ஒத்துப்போகிறார்கள்.

இதுவரை நான் சீர்திருத்தக்காரார்கள் என்றபோது இரண்டு கோஷ்டிகளையும் கலந்து கலந்து சொல்லிக் கொண்டு வந்துவிட்டேன். அதனால் கொஞ்சம் குளறிப் போயிருக்கும். இப்போது, என்னமோ இப்படிப் பேச ஆரம்பித்ததில் எனக்கே துளித் துளி புரந்து கொண்டு வருவதால் உங்களுக்கும் கொஞ்சம் தெளிவு பண்ணப் பார்க்கிறேன்.

இரண்டு கோஷ்டிகளும் மதச் சீர்திருத்தம் வேண்டும் என்று சொன்னாலும், இரண்டு பேரும் -ஐச் (ஸமூஹச் ஸமத்துவத்தை) சொன்னாலும், ஒரு கோஷ்டி ஆத்ம லக்ஷியத்துக்காகவே ஆசாரத்தை மாற்றச் சொல்கிறது. இன்னொரு கோஷ்டி லௌகிக லக்ஷியம் ஒன்றுக்காக மாத்திரம் ஆசாரத்தைவிடச் சொல்கிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

## *லௌகிக லக்ஷியச் சீர்த்திருத்தம்*

பின்னாடி சொன்னவர்கள் பொலிடிகல் லீடர்களாக இருக்கிறார்கள். லேபர், ஸ்டூடன்ட் மூவ்மெண்ட், ஸ்திரீ ஸ்வதந்திரம் என்றெல்லாம் சொன்னாலும் இதெல்லாம் ஒரு மாதிரிப் பொலிடிக்லாகவேதான் இருக்கின்றன. ஸோஷல், பொலிடிகல் என்று வார்த்தை வித்தியாஸத்துக்காகப் பிரித்துப் பேசுகிறார்களென்றாலுங்கூட நம் தேசத்தில் எல்லாமே தெரிந்தும் தெரியாமலும் பொலிடிகலாகத்தான் ஆகியிருப்பது நம்முடைய துர்த்தசை. ரிலிஜனில்கூட பாலிடிக்ஸ்தான்!இது இருக்கட்டும். இந்த ஸோஷல் ரிஃபார்மர்கள் பூர்வாசாரங்களை, பரம்பரையாக ஜனங்களுக்கு ஏற்பட்ட கார்யங்களை எடுத்துவிட்டு, அவர்களை வெறும் வாழ்க்கை முன்னேற்றத்தில் மட்டும் வெறிப்படுத்தி அதற்கான காரியங்களில் ஈடுபடுத்துகிறார்கள். இதில் அங்கமாகவே ஸ்ட்ரைக், டொமான்ஸ்ட்ரேஷன், அடிதடி, ரகளை எல்லாமும் நிறையக் கிளறிவிடப்பட்டிருக்கின்றன.

இதெல்லாமும் கார்யம், சாஸ்திரத்தில் பிள்ளை பிறப்பதற்கும் பண ஸம்பாதனைக்கும் சொன்னதும் கார்யம்தான் என்றாலும் இரண்டையும் செய்வதிலே எத்தனை வித்யாஸமிருக்கிறது?இரண்டுக்கும் லக்ஷ்யம் லௌகிகம்தான். இருக்கட்டும். ஆனாலும் மதத்திலே ஒரு கார்யத்தைச் சொல்லியிருக்கும்போது அதை தெய்வ பரமான லக்ஷ்யமாக இல்லாமல் வாழ்க்கை முன்னேற்றத்திற்காகவே பண்ணும்போதுகூட தெய்வத்தின் நினைப்பு இருக்கிற விதத்திலேயே செய்திருக்கிறது. ஈஸ்வரனுக்கு, தேவதைகளுக்கு, சாஸ்திரங்களுக்கு, பெரியவர்களுக்கு அடங்கி பக்தியுடனே, நாம் வேண்டுகிற வாழ்க்கை நலத்தை நம்மைவிடப் பெரிய ஒரு சக்திதான் தருகிறது என்ற நம்பிக்கையில்தான் இந்தக் கார்யங்களைப் பண்ணுகிறோம். அதாவது, ... கொஞ்சம் விசித்திரமாகத் தான் இருகிகிறது ... உலக ஸம்பந்தமான உபாயங்களைக் கொண்டே உலகுக்கு அப்பாற்பட்ட சக்தியைப் பிடிப்பதற்குத்தான் மதாசாரம் என்பது ஒரு பக்கம் உண்மையென்றால், இங்கேயோ ஒருவிதத்தில் அந்த ஈஸ்வர சக்தியை உபாயமாக வைத்துக்கொண்டு, உலக வாழ்க்கையிலே நன்மை பெறக் கார்யங்களைப் பண்ணுகிறோம் இப்படிப்பட்ட கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டுப் பண்ணு என்று சாஸ்திரம் சொல்கிறபடி கட்டுப்பட்டு ஒழுங்கோடு பண்ணுகிறோம். இப்படி இதிலே தொக்கி நிற்கிற தெய்வ பக்தி, நம்பிக்கை ஆகியவற்றாலும், ஒவீபீமீ மீயீயீமீநீமீ-ஆக உண்டாகிற அடக்கம், ஒழுங்குமுறை இவற்றினாலும், நாம் கேட்காமலே நமக்குக் கொஞ்சம் இவற்றினாலும், நாம் கேட்காமலே நமக்குக் கொஞ்சம் கொஞ்சமாகச் சித்த சுத்தியும் உண்டாக ஆரம்பிக்கிறது. அதிலே மேலே மேலே தேறிப் போகிறபோதுதான் தன்னாலே இதுபோன்ற அல்ப பலன்களுக்காக இல்லாமல் ஈஸ்வரனுக்காகவே மதாநுஷ்டானங்கள் பண்ண வேண்டும் என்ற பக்வம் உண்டாகிறது.

இப்படி ஏதோ ஒரு விதத்தில் தெய்வ சிந்தனை, பூர்விக ஆசாரத்தில் ஒரு சிரத்தை இவற்றோடு கார்யம் பண்ணுவதற்கும், அடிமுதல் நுனிவரை எங்கேயும் தெய்வத்திற்கோ, ட்ரெடிஷனுக்கோ கட்டுப்படாமல், முழுக்க லௌகிகமாக தற்குறியாக, தறிகெட்டுக் கார்யம் பண்ணுவதற்கும் ரொம்ப வித்தியாஸமிருக்கிறது. அதனால் தான் லோக வாழ்க்கைக்கானதையே பண்ணும்போதுகூட, மத ஸம்பந்தமானவை ஒருத்தனுக்கு சித்த சுத்தியைக் கொடுக்க ஆரம்பிக்கிறதென்றால், வேறு விதமாகச் செய்வது சித்தத்தில் மேலும் அழுக்கையேற்றி அஹங்காரத் தடிப்பை ஜாஸ்தி பண்ணுகிறது.

ஒரு சின்ன த்ருஷ்டாந்தம் சொல்கிறேன். பலனை உத்தேசித்துத்தான் அநேகச் சடங்குகள் பண்ணுகிறோம். ஆனால் உத்தேசித்தபடி பணம் வரவில்லை, பிள்ளை பிறக்கவில்லை. என்ன பண்ணுகிறோம் அப்போதைக்கு ஒரு ஏமாற்றம் உண்டாகத்தான் செய்கிறது. ஆனால் அது ஆழமாகப் போய்விடுவதில்லை. என்ன இருந்தாலும் சாஸ்திரத்தை நம்பித்தானே செய்தோம் அந்த சாஸ்திரத்தின் ஆணிவேரான கொள்கை என்ன கர்மாப்படி நடக்கும் என்பதுதானே ஈஸ்வராநுக்ரஹ பலத்தால் அந்தக் கர்மாவை நமக்குக் கொஞ்சம் ஸாதகமாக்கிக் கொள்ளலாமென்றுதான் சாஸ்திரம் சொன்ன ஏதோ ஒன்றைப் பண்ணினோம். பலிக்கவில்லை. பலிக்காவிட்டாலும் அந்த சாஸ்திரமே நம்மை, "கர்மா!அநுபவித்துத்தானாகணும்!"என்று தேற்றிக்கொள்ளும்படி பண்ணுகிறது. நாம் எதையோ உத்தேசித்து தெய்வ ஸம்பந்தமான ஒன்றைச் செய்தோமென்றாலும், உத்தேசம் ஃபெயில் ஆனபிற்பாடும் அந்த தெய்வ ஸம்பந்தத்தையும், சாஸ்திர ஆசரணையையும் அதோடு விட்டு விடுவதற்கு மனஸு வருதில்லை. இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக நல்ல வழியிலேயே திருப்பிவிடப் படுகிறோம். நெருங்கின பந்துக்களின் ஆயுஸுக்காக எத்தனையோ பிரார்த்தனை, ஹோமங்கள் செய்து அது பலிக்காமல் பெரிய சோகம் ஏற்பட்டு விட்டது என்பதில்கூட frustrate-ஆகி (ஏமாற்றத்தில் மனம் சிதைந்து) நாஸ்திகர்களாகப் போனவர்கள் அபூர்வமாகவே இருப்பார்கள்.

ஆனால் இதுவே ஸோஷல் அல்லது பொலிடிகல் ரீதியில் ஒரு கார்யத்தைப் பண்ணி (கார்யம் என்றாலே இந்த நாளில் 'போராட்டம்'தான்!) அது தோற்றுப் போனால் என்ன நடக்கிறது?''நம் கர்மா''என்று சொல்லிக் கொண்டு எவராவது பேசாமல் இருப்பார்கள ா?உடனே இன்னம் பெரிய போராட்டம், கிளர்ச்சி என்று ஊரை இரண்டாக்குகிறார்கள், த்வேஷம் நாளுக்கு நாள் ஜாஸ்தி தான் ஆகிறது. இது சித்தத்துக்கு அழுக்குதானே?

கார்யம் தோற்றுப் போகாமல் ஜயித்தாலும் இதே வித்தியாஸத்தைப் பார்க்கலாம். சாஸ்திரப்படி பண்ணி ஒரு லாபத்தை அடைந்து விட்டால், மறுபடி அதே லாபத்துக்காக பகவானிடம் போவதற்குத் தன்னாலேயே ஒரு லஜ்ஜை உண்டாகிறது. "அவன் இத்தனை பண்ணினதே பெரிசு"என்று அவனைச் சும்மா சும்மா வேண்டிக் கொண்டு தொந்தரவு பண்ணாமல், "அன்பாக பக்தி பண்ணணும், நாம் இப்படிப்பட்ட ஆசைகளைக் குறைத்துக் கொள்ளணும்"என்ற அறிவு துளித் துளியாவது வருகிறது. அந்த அளவுக்கு அது சித்த சுத்தி. 'போராட்டம்'நடத்தி கார்யத்தை ஸாதித்துக் கொள்ளும்போது என்ன ஆகிறது?"நாம் சக்தியைக் காட்டினால் பயப்பட்டுக்கொண்டு, கேட்டதைப் பண்ணுகிறார்களல்லவா?இன்னம் கொஞ்சம் மிரட்டிப் பார்ப்போம்"என்று புதுப்புது ரைட்கள் கொண்டாடிக் கொண்டு, மேலே மேலே டிமான்ட் செய்வதையே பார்க்கிறோம். தோற்றால் த்வேஷம் ஜாஸ்தியாகிறது என்றால், ஜயித்தாலோ ஆசையும் அஹங்காரமும் ஜாஸ்தியாகிறது. இதுவும் அழுக்குத்தான்.



## *ஆத்மிக லக்ஷியச் சீர்திருத்தம்*

இதுவரை ஸோஷல் ரிஃபார்ம் மட்டும் சொன்னேன். ஆத்ம ஸம்பந்தமாக ஜனங்களை உயர்த்த வேண்டும் என்கிற லக்ஷியத்தில் ஏற்பட்டுள்ள ரிலிஜியஸ் ரிஃபார்ம் மூவ்மென்ட்கள்

விஷயம் என்ன?இவையும் equality (ஸமத்வம்) என்ற பெயரில் யாரும் எதையும் செய்யலாம் என்கிற ஸ்வதந்திரதைதயும் அதனாலேயே ஓரளவு விநயக்குறைவையும் உண்டாக்கி விடுகின்றன. ஆர்த்தடாக்ஸி, ஸூபர்ஸ்டிஷன் என்று ஏதாவது பேரைச் சொல்லி ட்ரெடிஷனை break பண்ணலாம் என்று இந்தத் தலைவர்கள் சொல்வது, எதையுமே break பண்ணும் துணிச்சலை ஃபாலோயர்களுக்குக் கொடுத்து விடுகிறது. அந்தந்த மூவ்மென்டுக்கு என்று புதிதாக பண்ணியிருக்கிற ஒழுங்கு விதிகளையும் புதிதாக ஏற்படுத்தியிருக்கிற 'சடங்கு'களையும் organised-ஆகச் சில சில இடங்களில் அதன் ஃபாலோபயர்கள் நன்றாகவே அநுஸரித்து வருகிறார்களென்பது உண்மைதான். ஆனாலுங்கூட இப்படி ஒரு காலனியாக இல்லாமல் தனித்தனியாக இருக்கப்பட்டவர்கள் அந்தப் புது ஒழுங்கிலும் வராமல் வீணாகத்தான் போகிறார்கள். இன்னொரு வேடிக்கை:இப்படிப்பட்ட மூவ்மென்ட்களின் தலைவர்கள் அல்லது மூலபுருஷர்களின் பிறந்த தினம், நூற்றாண்டு என்று கொண்டாடும்போது ராஜாங்கத் தலைவர்கள், அறிவாளிகள், பத்திரிகைகள் எல்லாம் அவர்களைப் பற்றி ஏராளமாக எழுதுகிறார்கள், பேசுகிறார்கள். ஸ்டாம்ப் போடுவது, 'ஸ்டாச்சு'வைப்பது எல்லாம் பெரிய சடங்காய் நடக்கின்றன. ஆனாலும் இந்த இயக்கங்களுக்கே dedicateபண்ணிக்கொண்ட மெம்பர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள், காலத்துக்கு ஒவ்வாத அசட்டு, முரட்டு ஒரிஜினல் ஹிந்து மதத்தில் எவ்வளவு பேர் இருக்கிறார்களென்று பார்த்தால், நூற்றுக்கு தொண்ணூறு பேர் புதிய புத்திசாலி கோஷ்டிகளுக்குப் போவதற்குப் எதனாலோ தயங்கிக் கொண்டு பழைய பத்தாம் பசலி மதத்தில்தான் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள்!

இப்படி நான் பெருமையடித்துக் கொள்ளும் போதே இதுதான் வருத்தப்பட வேண்டிய விஷயம், அவமானப்பட வேண்டிய விஷயமென்றும் தெரிகிறது. ட்ரெடிஷனலான ஹிந்து மதத்தில் இருந்துகொண்டே புதிய ரிஃபார்ம்களை ஆதரித்து அதற்கும் ஜே போடுகிறார்கள் இதில் இருந்துகொண்டேதான் ரிஃபார்ம்காரர்களையும் ஸ்தோத்ரம் பண்ணுகிறார்களென்றால் என்ன அர்த்தம்?இப்படி இருக்கவும் மனப்பூர்வமான பிடிமானம் இல்லை;அப்படிப் போகவும் தைரியம் இல்லை;மொத்தத்தில் ஒருவித கன்விக்ஷனுமில்லை என்றுதானே ஆகிறது ட்ரெடிஷனலான மதத்தில் இருக்கிற மாதிரி இருந்து கொண்டே அதிலே புல்லுருவி மாதிரித் தோன்றும் ஆசார ஹீனப்போக்குகளைப் போஷிக்கிறதென்றால் அது தாய் மதத்துக்குச் செய்கிற ஹானிதானே?

இந்தத் தப்பைப் போது ஜனங்கள் மட்டுந்தான் பண்ணுகிறார்கள் என்றில்லை. மஹான், தெய்வாம்சமே இருக்கிறவர் என்று நினைத்துக்கொண்டு ஜனங்கள் போகிற நவீனகால மதத்தலைவர்கள்-லீடர்கள் சிலரும் தெரிந்தோ தெரியாமலோ இதற்குக் காரணமாயிருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*தனிப் பிரிவாகாத நவீன மதத் தலைவர்கள்*

ஸநாதனமான ஆசார்யபீடமொன்றில் நான் இருப்பதால் நான் இந்த விஷயத்தைச் சொன்னால் உடனே vested interest (ஸ்வய நல நோக்கம்) எனற கண்டனம் வரும். வந்தாலும் வரட்டும் என்றுதான், மனஸில் படுவதைச் சொல்லாவிட்டால் தோஷம் என்பதால் சொல்கிறேன். இப்போது அநேக ஸ்வாமியார்கள் தோன்றியிருக்கிறார்கள். இவர்கள் ஹிந்துமதம் என்ற parent body-யிலிருந்து, மூலஸ்தானத்திலிருந்து தாங்கள் பிரிந்து போய்ச் சீர்திருத்த மதம் தனியாக ஆரம்பித்திருப்பதாகக் காட்டிக் கொள்வதில்லை. அதாவது இவர்கள் பெயரிலும் ஸ்தாபனம், மிஷன் ஏதாவது இருந்தாலும் அதை ஹிந்து மதத்தின் main stream-கு வெளியாக பிரம்ம ஸமாஜ், ஆர்ய ஸமாஜ் என்று அநேகச் சீர்திருத்த இயக்கங்கள் தனியாக இருப்பது போலக் காட்டிக் கொள்வதில்லை ஸம்ப்ரதாயமாக

வந்துள்ளதும், இன்றும் பெரும்பாலான ஜனங்கள் விட்டுப் போகத் தைரியமில்லாமல் ஒட்டிக் கொண்டிருக்கிற மாதிரி இருப்பதுமான traditional ஹிந்து மதத்தின் பிரதிநிதிகளாகவே தங்களை இந்த ஸ்வாமிஜிகள் சொல்லிக் கொள்கிறார்கள். நம்முடைய வேதாந்தம், இதிஹாஸம் இவற்றைப் பற்றி நன்றாகப் பிரஸங்கம் செய்தும் புஸ்தகம் போட்டும் பிரசாரம் பண்ணுகிறார்கள். நம்முடைய பண்டிகைகளைக் கொண்டாடுகிறார்கள். பஜனையிலிருந்து யோகம் வரையில் எல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்கள். இதையெல்லாம் பார்க்கிறபோது traditional-ஆக வந்துள்ள எங்களைப் போன்ற தர்ம பீடங்களை விடக்கூட இவர்கள்தான் மதப்பிரசாரத்துக்காக நிறையப் பண்ணி, "மறுமலர்ச்சி"என்கிறார்களே அப்படி ஸமய விஷயத்தில் ஜனங்களைச் சக்தியோடு திருப்பி வருகிறார்கள் என்று தோன்றுகிறது. அப்படிப்பட்ட கூட்டம் இவர்களிடம் சேருகிறது. இவர்களில் சிலருக்கு விசேஷ வாக்குவன்மை இருக்கிறது. ஆத்மார்த்தமான விஷயங்களைப் பொது ஜனங்கள் ரஸித்துக் கேட்கும் விதத்தில் அழகாகவும் மனஸில் பதியும்படியும் எடுத்துச் சொல்கிறார்கள். இன்னம் சில பேருக்கு வியாதி, வக்கை, வேறே ஏதோ கஷ்டம், ஆபத்து என்றால் அதைத் தீர்த்து வைக்கிற சக்தி இருக்கிறதென்று போகிறார்கள். ஸித்திகள் உள்ளவர்களாக இப்படிச் சிலர் இருக்கிறார்கள். அவர்களிடம் போகிறவர்கள் இம்மாதிரி லாபங்களைப் பெறுவது மட்டுமில்லாமல் சில ஸமயாநுஷ்டானங்களையும் பின்பற்ற ஆரம்பிக்கிறார்கள்.

ஆகையால் பிராசீனமான தர்ம பீடங்களில் இல்லாமல் தனியாகத் தோன்றியிருக்கிற ஸ்வாமியார்களாலும் மதத்துக்கு நல்லது நடந்துதான் வருகிறது. மனஸ் விட்டுச் சொன்னேனானால், எங்களைப் போன்ற ஸநாதன ஆசார பீடங்களைக் கட்டுப்பெட்டி என்று படிப்பாளிகளும், தேசத்தலைவர்களும் திருப்பித் திருப்பிச் சொல்லி, புது ஜெனரேஷன்களுக்கு ஒரு ப்ரெஜுடிஸே உண்டாக்கியிருந்த ஸந்தர்ப்பத்தில், ஜனங்கள் அடி நாஸ்திகமாகப் போகாமல் ஏதோ கொஞ்சமாவது மத விச்வாஸம் பெற்றதற்குக் காரணமே இந்தத் தனி ஸ்வாமிஜிகள்தான் என்று கூடச் சொல்லலாம். சித்தாகத்தான் இருக்கட்டும், வேறு ஏதோ சக்தியாகத்தான் இருக்கட்டும்;நாலு பேருக்கு கஷ்டத்தைப் போக்குகிறார்கள், அதோடு அவர்களைக் கொஞ்சம் பயபக்தியில் தூண்டிவிடுகிறார்கள், ஆத்ம விஷயங்களைப் பேசியும் எழுதியும் பிரசாரம் பண்ணுகிறார்களென்பதற்காக இவர்களைப் பற்றி நல்லதாகத்தான் நினைக்க வேண்டும்.

இது ஒரு நல்ல தொழிலாயிருக்கிறதே என்று போலிகளும் கிளம்பியிருக்கலாம் ஜனங்கள் அவர்களிடம் ஏமாந்தும் போகலாம். தடுக்கி விழுந்த இடமெல்லாம் ஒரு Divine Messenger (திவ்ய தூதர்), Messiah (இறைவன் அனுப்பி வைத்த லோக ரக்ஷகர்), தெய்வாம்சமே பெற்றவர் என்று ஏதாவதொன்று சொல்லிக் கொண்டு பலபேர் இருந்தால் genuine-ஆக இருக்க முடியுமா என்று ஜனங்களுக்கும் கலக்கம். ஆனாலும் 'எத்தைத் தின்றால் பித்தம் தெளியும்?'என்று பாவம், அங்கேயும் ஓடுகிறார்கள். இப்படியே ஒரு பக்கம் வெளிதேசத்தவர்களும் Gurudom, Swamidom என்று கேலி பண்ணிக் கொண்டே, இன்னொரு பக்கம் கூட்டம் கூட்டமாக இவர்களிடம் வந்து சிஷ்யர்களாகிறார்கள்.

போலி இருக்கலாம் என்பதற்காக, எல்லாம் போலி என்று சொல்லிவிட முடியாது. வேறே எது போலியோ இல்லையோ, ஒரு ஸ்வாமிஜியிடம் போகிறான், ஏதோ ஒரு கஷ்டம் தீர்கிறது என்றால், வாஸ்தவத்தில் அவர் அதைத் தீர்த்து வைக்காவிட்டால்கூட, இவனுக்கு ஒரு தாப சாந்தி உண்டாவது போலியில்லையே?நிஜந்தானே?பிரஸங்கம் பண்ணுகிறபடி அவர் (சொந்த வாழ்க்கையில்) இல்லாவிட்டாலும் போகட்டும், அதைக் கேட்டதில் இவனுக்கு ஒரு தெளிவு வந்தது நிஜந்தானே?அவர் எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும் - இவன் நல்லது என்று நினைத்துப் போனான், தன் அஹங்கார மமகாரங்களை விட்டு நமஸ்காரம் பண்ணினான். ஏதோ நல்லதையும் அடைந்தான். முடிவில் கொஞ்சமாவது தெய்வ பக்தி பெற்று ஏதோ கொஞ்சம் மதாநுஷ்டானத்தையும் எடுத்துக்கொள்கிறான். இந்த மட்டில் நல்லதுதான்.

ஆனாலும் ஸமயாசாரம் என்று பார்க்கும்போது என்ன ஆகிறது?இந்த ஸ்வாமிஜிக்கள் அநேகமாக சாஸ்திர ஆசாரங்களில் பெரும்பாலானவற்றைக் கழித்துக் கட்டி விடுகிறார்கள். இவர்களில் முக்காலே மூணுவீசம் பேரும் அதிகார பேதத்தை*ஆதரிக்காதவர்கள்தான். வேறு பல ஆசார அநுஷ்டானங்களையும் காலத்துக்குப் பொருந்தாது என்று எடுத்துப்

போட்டுவிட்டார்கள்தான். சாறு - சக்கை, தானியம் - உமி என்று சொல்லிக்கொண்டு, ஸமயாசார அநுஷ்டானங்களில் அவரவருக்கு எது ஸரியென்று தோன்றுகிறதோ, எது இஷ்டமாயிருக்கிறதோ, ஸௌகரியமாயிருக்கிறதோ அது மட்டுமே சாறு, அதுதான் தானியம் என்று வைத்துக்கொண்டு பாக்கியெல்லாமே சக்கை, உமி என்று விட்டு விடுகிறார்கள். எங்களைப் போன்ற ஸநாதனிகள் ஆசாரம் ஆசாரம் என்று சொல்லிக் கொண்டு, ஸ்பிரிட்டை (உயிரை) விட்டு விட்டு ஸ்கெலிடனை (எலும்புக்கூட்டை) மட்டும் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று இவர்கள் சொல்லி, ட்ரெடிஷனல் மதத்தில் தொண்ணூறு பெர்ஸென்டாக இருக்கும் ஆசார அநுஷ்டானாதிகளை விட்டு விட்டிருக்கிறார்கள். ஆனாலும் ஹிந்துமத parent body -யிலிருந்து வெளியேறித் தனியான சீர்திருத்த இயக்கமாகவும் இல்லாமல் இதிலேயே இருந்துகொண்டு, இவர்கள் அநுஷ்டிப்பதுதான் ஸரியான ஹிந்துமதம் என்று ஜனங்கள் பிரமை கொள்ளும்படிப் பண்ணுகிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*' நவீன வேதாந்தி ' கள்*

ரி ஃபார்ம் ரிலிஜன் என்று தனியாகப் போகாமல் நம்முடைய மதத்துடைய 'நிஜ ஸ்பரூப'த்தின் custodians (காவலர்) தாங்கள்தான் என்கிறவர்களில் இன்னொரு வகையினர் வேதாந்தா, வேதாந்தா என்று சொல்லிக் கொண்டு, ஃபிலாஸபியைத் தவிர கர்மாக்களாக இருக்கிற எல்லாமே நம் மதத்தின் சக்கைதான் என்று தூக்கிப்போடச் சொல்கிறார்கள். வாஸ்தவத்தில் ஸாமானிய மநுஷ்யனின் தரத்தை உயர்த்தக் கர்மா இல்லாமல் முடியவே முடியாது. அதனால்தான் வைதிகாநுஷ்டானங்களை விலக்கி விட்டவர்களும் ராட்டையைச் சுற்ற வேண்டும், handicrafts செய்ய வேண்டும் என்று ஓயாமல் ஏதாவது வேலை வாங்கினார்கள். திருப்பத் திருப்பிச் சொன்னதையே, எத்தனை தரம் சொன்னாலும் போதாது என்று, மறுபடியும் சொல்கிறேன் : காரியம், ஓயாத உழைப்பு இல்லாமல் சித்த சுத்தி ஸாத்யமேயில்லை.

சாஸ்திரத்தில் முதலில் இவன் மனஸை அநுஸரித்து இஹ லோக, ஸ்வர்க்க லோக லாபங்களுக்காகவே, அதாவது இந்திரிய ஸௌக்யங்களுக்காகவே கர்மாவைக் கொடுத்திருக்கிறது. ஆனால் இந்தக் கர்மாக்காளைச் செய்வதாலேயே இந்திரியங்களின் இழுப்பு கொஞ்சங் கொஞ்சமாகக் குறைகிறது. சித்தம் சுத்தமாகி மனஸ்னாது (கார்யமில்லாமலே) தியானம் செய்யப் பழக்கப் படுத்தப்படுகிறது. கார்யமே வேண்டாம், "வேதாந்தா","த்யானா"என்றால் என்ன ஆகிறது?இதை நான் சொல்வதைவிடக் கிருஷ்ண பரமாத்மாவின் வாக்கில் சொல்கிறேன்:

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந் I

இந்த்ரியார்தான் விமூடாத்மா மித்யாசார : ஸ உச்யதே II

(கீதை : 3.6)

அதாவது :"காரியத்திலா ஞானம் இருக்கிறது?அதெல்லாம் வேண்டாம்"என்று கை, கால் முதலான கர்மேந்திரியங்களுக்கு வேலை கொடுக்காமல் நிறுத்திவிட்டு நேராக மனஸை சுத்தமான தியானத்தில் நிறுத்துவதற்கு ஆரம்பித்தால் என்ன ஆகிறது அந்த மனஸ் பரமாத்மாவையா நினைக்கிறது?இல்லை.

**இந்த்ரியார்தான் மநஸா ஸ்மரந் -**

இந்திரியங்களுக்கு வேண்டிய அல்ப ஸுகங்களைத்தான் மனஸு நினைக்கிறது. கர்மாவால் கர்மேந்த்ரியங்களை அழுக்கெடுத்து சுத்தப்படுத்திக் கொள்ளாதபோது மனஸும் அழுக்கைவிட்டு மேலே போகாதுதான். வெளியிலே இவன் பெரிய ஃபிலாஸபர், தத்வஞானி, ரிஷி என்றேகூட (இப்போது பத்திரிகைகள் நிறைய ஏற்பட்டபின் எல்லாவற்றுக்கும் அதிசயோக்தி தான்!) பெத்தப் பெயர் இருந்தாலும், லெக்சரிலும் புஸ்தகத்திலும் இவன் எவ்வளவு சோபித்தாலும், இப்படி மனஸிலே அழுக்கை வைத்துக் கொண்டிருப்பவனை பகவான் விமூடாத்மா - 'மஹா மூடன்'என்றுதான் சொல்கிறார். 'மூளையில்லாமல் காரியங்களைக் கட்டிக் கொண்டு அழச் சொல்கிறவர்களிடமிருந்து நம்மையும் நம் மதத்தையுமே ரக்ஷிக்கிற இவர்தான் மஹா புத்திமான்'என்று லோகத்தார் எவரைக் கொண்டாடுகிறார்களோ, அவரையே பகவான் "விமூடாத்மா"என்கிறார். அதற்கும் மேலே இன்னொரு வார்த்தை சொல்கிறார்.

**மித்யாசார :**

மித்யா என்றால் நிஜம் போல இருந்து கொண்டே பொய்யாகப் போகிற வேஷம் என்று அர்த்தம். ஆசாரமே வேண்டாமென்று இருக்கிற வாய் வேதாந்தியை 'மித்யாசாரன்'என்கிறார். இவன் கர்மாவை விட்டு விட்டான். 'மனஸ் சுத்தம்தானே எல்லாம்?'என்கிறான். ஆனாலும் இவன் மனஸ் அழுக்கிலேயே கிடக்கிறது. வெளியே வேதாந்தி போல வேஷம் போடுகிறான். இப்படி வெளியே ஒன்றாகவும் உள்ளே வேறாகவும், உயர்ந்த லக்ஷ்யத்தைப் பேசிக்கொண்டும் கீழான ஒழக்கத்தில் போய்க்கொண்டும் இருப்பதால் 'மித்யாசாரன்'என்கிறார். 'மித்யாசாரன்'என்பதற்கு ஸரியான வார்த்தை hypocrite. காரியம் பண்ணப் பிடிக்காத சோம்பேறித்தனம், ஒரு ஒழுக்கத்தில் கட்டுப்பட்டிருக்கப் பிரியமில்லாமை - இதற்காகவேதான் "Vedanta, Vedanta" என்று சாஸ்திர கர்மாவிலிருந்து பிரித்துப் பேசுகிறார்கள். உள்ளே பார்த்தால் - இதைச் சொல்ல ரொம்ப வருத்தமாயிருக்கிறது - எந்தக் கட்டுப்பாட்டிலும் இல்லாமல் இவர்கள் போயிருப்பதால் அநேக lapses* இருப்பது தெரிகிறது. ஆசாரக்காரர்கள் மூடர்களாயிருக்கட்டும், ஸ்வயநலக் கும்பலாயிருக்கட்டும், இரக்கமேயில்லாத துஷ்டர்களாகத்தான் இருக்கட்டும். ஆனால் அவர்களிடம் இப்படிப்பட்ட lapses இருப்பதில்லையல்லவா?அதுதான் discipline (நெறி) என்பதன் சக்தி.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*நிகர விளைவு*

ஆகக்கூடி பலவிதமான ஆசாரச் சீர்திருத்தங்களைப் பற்றிச் சுருக்கமாகப் பார்த்தோமேயானால் பழைய ஒழுக்கத்தையும் காரியங்களையும் எடுத்துவிட்டுப் புதியதை வைத்தால், பழசை மீறிய பழக்கத்தில் புதிசையும் மீறிக் கட்டுப்பாடில்லாமல் போகிறார்கள். இவர்கள் காரியம் என்று பண்ணுவதெல்லாம் ஸ்வயலாபம், 'தான்'என்கிறதை வளர்த்துக்கொள்வது என்பதற்காகத்தான் ஆகிறது. ஆசாரங்கள் கடுமையாக இருக்கிறதென்று இளக்கி, ஃபாஷன் பண்ணினால் பலனும் இளகி ஓடியே விடுகிறது. சித்த சுத்தி ஏறப்பட மாட்டேன் என்கிறது. "கார்யத்தில் ஒன்றுமில்லை;வேதாந்தா"என்றால் வெறும் சோம்பேறியாகப் போகிறான்;அப்போது மனஸ் சுத்தமாகாமல் போகிறது என்பது மட்டுமின்றி, இருக்கிற சுத்தமும் போய் அழுக்கைச் சேர்த்துக் கொள்கிறது. ஆசாரமில்லாமலிருக்கிற அநாசாரம்;ஆசாரக் கட்டுப்பாடு போனதால் கண்டதைத் தின்பது, குடிப்பது, கலஹம் செய்வது, இன்னும் மஹாபாபங்களைப் பண்ணுவது என்கிற துராசார ம்;உள்ளொன்றும் புறமொன்றுமாக ஹிபாக்ரிஸி செய்யும் மித்யாசாரம் என்பவைதான் மொத்தத்தில் விருத்தியாகின்றன.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*அறிந்தவனும் அறியாதாரும்*

இப்படி எல்லா ஜனங்களையும் அதர்மப் பிரவாஹத்தில் அவிழ்த்துவிடக் கூடாது என்றுதான் பகவான் அர்ஜுனனை 'வார்ன்'பண்ணுகிறான். அதில்தான் ஆரம்பித்தேன். அப்புறம் 'ஸப்ஜெக்ட்'எங்கெங்கேயோ - ஆனால் எல்லாமும் ஸமயாசார ஸம்பந்தமுள்ளதாகவே - போய்விட்டது. ஜனங்கள் 'கர்மஸங்கிகள்'தான் - பலனில் ஆசைவைத்து கர்மாக்களைப் பண்ணுவதில் ஈடுபாடு கொண்டவர்கள் தான். நிஷ்காம்யம், நைஷ்கர்ம்யம், த்யானம், ஞானம் என்றால், அவர்கள் இருக்கிற நிலையில் எடுபடாது என்று பகவான் சொன்னதைச் சொன்னேன். இவர்களை நல்லறிவு பெறாத 'அவித்வாம்ஸ:'என்றே சொல்லியிருப்பதையும் சொன்னேன்.

ஸரி, நல்லறிவு பெற்ற 'வித்வான்'என்ன பண்ண வேண்டும்?இப்போது சீர்திருத்தக்காரர்கள் பண்ணுகிற மாதிரி காரியங்களைக் குறைத்து ஈஸியாக்கித்தர வேண்டுமா?"கர்மா எல்லாம் யூஸ்லெஸ்;மனஸின் purity தான் முக்கியம்;அதனால் அதனால் ஞானத்துக்கு வாருங்கள்"என்று உபதேசிக்க வேண்டுமா?முடிவிலே பகவான் இப்படித்தான் கர்மஸந்நியாஸத்தை உபதேசித்து, ஞானத்தில் எல்லாக் கர்மாவையும் பஸ்மீகரமாக்கச் சொல்கிறார். ஆனால் முடிவிலேதான்;ஆரம்பத்திலே அல்ல. ஆரம்பத்தில் வித்வான் என்ன பண்ண வேண்டுமென்கிறார்?

... அவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத குர்யாத் வித்வாம்-ஸ்ததா...

"பாரதா!"என்று அர்ஜுனனைக் கூப்பிட்டு, யதா அவித்வாம்ஸ:குர்வந்தி ததா வித்வான் குர்யாத்"என்கிறார். ரொம்ப விசித்ரமாகச் சொல்கிறார். வித்வான் - அதாவது விஷயம் தெரிந்த ஞானி - எப்படிப் பண்ணுகிறானோ அந்த வழியிலேயே அவித்வானான அஞ்ஞானியும் பண்ணிப் பார்க்க வேண்டுமென்றுதான் பொதுவாக லோகமெல்லாம் சொல்வது. ஆனால் பகவான் சொல்வதற்கு அர்த்தமோ இதற்கு அப்படியே நேர்மாறாக இருக்கிறது; யதா - எவ்வாறு, அவித்வாம்ஸ :- அஞ்ஞானிகளான பொது ஜனங்கள், குர்வந்தி - செய்கிறார்களோ, ததா - அவ்வாறே, வித்வான் - ஞானியும், குர்யாத் - செய்ய வேண்டும்.

அஞ்ஞானி பண்ணுகிற மாதிரிதான் ஞானியும் பண்ண வேண்டும் என்று ஸ்பஷ்டமாகச் சொல்கிறார்!

அஞ்ஞானிக்கு இச்சா லாபத்திலேயே பற்று;அதற்காகவே சாஸ்திர கர்மாக்களைச் செய்கிறான். "அந்த சாஸ்திர கர்மங்களையே ஞானியும் பண்ணணும்ப்பா"என்கிறார். "ஞானிக்கு இப்படிப்பட்ட இச்சை, ஆசைப்பற்று இருக்கலாமா?அதுதானே நரக த்வாரத்துக்கு வழி?"என்று கேட்டால், "நான் அப்படிச் சொன்னேனா?ஞானியும் கர்மா பண்ணணும் என்றேனே தவிர, தன்னுடைய இச்சா பூர்த்திக்காப் பண்ணணும் என்று சொல்லவில்லையே!ஸந்தேஹமிருந்தால் இப்போதே qualifying clause போட்டு விடுகிறேன்:

குர்யாத் வித்வான் ததா அஸக்த :"

என்று 'அஸக்த:'வைச் சேர்க்கிறார். "அஸ்கத:"என்றால் 'பற்றில்லாதவனாக'என்று அர்த்தம். முதலில் அஞ்ஞானியைச் சொல்லும்போது முதல் வார்த்தையாகவே "ஸக்தா:"என்றார்.

"பற்றுள்ளவர்களான"என்று ஆரம்பித்தார். சிறியதான இந்திரிய இன்பப் பயன்களில் பற்றுக் கொண்டவர்களாக அவித்வான்கள் எந்தெந்த கர்மாக்களைச் செய்கிறார்களோ அவற்றையே வித்வானும் இப்படிப்பட்ட பற்று இல்லாமல் செய்ய வேண்டும் என்கிறார்.

"எதற்காக?ஞானி என்றால் ஞானம் அடைந்து விட்டவன் என்று அர்த்தம். ஞானத்துக்கு அப்புறம் அவன் அடைய வேண்டியது எதுவுமில்லை. அவனுக்கு எந்தப் பலனும் தேவைப்படாதபோது இந்தக் கர்மாக்கள் எதற்காக?"

"அதுவா?அவன் தனக்காக இப்படிச் செய்ய வேண்டும் என்று நான் சொன்னேனா என்ன?பின்னே ஏன் செய்ய வேண்டுமென்றால் -

சிகீர்ஷு : லோக ஸங்க்ரஹம் " .

"ஸங்க்ரஹம்"என்றால் நன்றாகப் பிடித்துக் கொள்வது;அதாவது கட்டிப் பிடித்துக் காப்பாற்றுவது. "லோக ஸங்க்ரஹம்"என்றால் லோகத்தை இப்படிப் பரம அன்போடு கட்டிக்காப்பது - நல்வழிப்படுத்துவது. லோகம் என்றால் அஞ்ஞானிகள்தான். ஞானி லோகத்துக்கு மேலே போனவன்.

"சிகீர்ஷு:"- விரும்பி;"லோகஸங்க்ரஹம் சிகீர்ஷு:"- உலகத்தை உயர்ந்த மார்க்கத்தில் கொண்டு போக வேண்டுமென்று விரும்பி.

ஞானிக்கு ஆசை இருக்கக் கூடாதுதான் என்றாலும் பகவானே அவன் மனஸு கருணை சுரக்கும்படிப் பண்ணி, "ஐயோ, லோகம் இப்படிக் கெட்டுப்போய் கஷ்டப்படுகிறதே;இதை ஸங்க்ரஹம் பண்ண வேண்டும்"என்று ஆசைப்பட வைக்கிறான்.

அதாவது ஜனங்களை மேலே கொண்டு போவதற்காகவேதான் ஞானியும் அவர்களைப் போல சாஸ்திர கர்மாக்களைப் பண்ணிக் காட்ட வேண்டும். தன்னுடைய உச்ச நிலைக்கு அவர்களை அழைத்துக் கொண்டு போவதற்காகவே அவர்கள் இருக்கிற ஏணிப்படிக்கு இறங்கி வந்து, அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்டு, 'ஸம்-க்ரஹம்'என்றபடி நன்றாக இறுக்கிப் பிடித்து மேலே ஏற்றிக் கொண்டு போக வேண்டும்.

சாஸ்திரோக்தமாக ஸாதாரண ஜனங்கள் என்னென்ன கர்மா செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் ஞானியே மாடலாக இருந்து பண்ணிக் காட்டி, அவர்களையும் பண்ண வைக்க வேண்டும். அவனுடைய ஞானத்தையும் பக்தியையும் அப்புறந்தான் அவர்களுக்கு கொடுக்க வேண்டும். இப்போது அவர்களுக்கு அதில் ருசி வராது. அதனால் முதலில் அவர்கள் சாஸ்திரோக்த கர்மாக்களைப் பண்ணுவதற்கே, தன்னளவில் அவற்றைக் கடந்துவிட்ட ஞானியும் (ஞானி என்றால் பக்திமானும் தான்) இவற்றைச் செய்து ஊக்குவிக்க வேண்டும். அவர்கள் இவன் மாதிரி ஆவதற்காகவே முதலில் அவர்கள் மாதிரி இவன் ஆக வேண்டும். மேல்நிலையில் இருக்கிற அவன் வாஸ்தவத்தில் கர்மாவில் ஒட்டாவிட்டாலும் அப்படி நடக்க வேண்டும். (இதற்கு நேர்மாறாகத்தான் இப்போது நிஜமாக வேதாந்தத்தில் ஒட்டிக் கொண்டிருந்தவர்களும் அப்படி நடிக்கிறார்கள்!)

அப்படியானால் ஞானிக்கு மட்டும் உள்ளொன்றும் புறமொன்றுமாக இருக்கிற "மித்யாசார தோஷம்"ஒட்டாதா?

ஒட்டாது. வாஸ்தவத்தில்தான் அவனுக்கு உள் - புறம் என்ற பேதமேயில்லையே!எதிலும் ஒட்டாத நிலைதானே ஞானம்?அதில் தோஷம் மட்டும் எப்படி ஒட்டும்?இன்னொரு எக்ஸ்ப்ளனேஷன்:இவன் வேதாந்திவேஷம் போடுகிறவனைப் போலத் தன்னைப் பற்றி லோகம் உசத்தியாக நினைக்கவேண்டுமென்றா துராசையில் இப்படிச் செய்கிறான்?கர்மாவைச் செய்யப் பிடிக்காத அடங்காக் குணத்தாலே அவன் ஞானி வேஷம் போடுகிறானென்றால், இவனோ நிச்சிந்தையான நிஷ்க்ரிய ஞான நிலையின் நிம்மதிலேயே தான் பாட்டுக்குக் கிடக்கலாம் என்றில்லாமல் பாமர ஜனங்களிடம் பரம கருணையாலல்லவா கர்மி மாதிரித் தன்னைக் குறைத்துக் காட்டிக்கொண்டு, தனக்கு வேண்டியே யில்லாத கார்யங்களை இழுத்துப் போட்டுக்கொள்கிறான்?இது தியாகமே தவிர, மித்யாசாரமாக எப்படி ஆகும்?

ஸரி, இவன் எதற்காக இந்த சாஸ்திர கர்மாக்களைச் செய்ய வேண்டும்? இவனை லோகம்

ச்ரேஷ்டன் என்று நினைக்கிறது. இவனைப்போல உயர்ந்த ஸ்தானத்திலிருக்கிறவர்கள் எப்படி நடக்கிறார்களோ அப்படி நடந்து பார்க்க வேண்டுமென்று ஜனங்களுக்கு உள்ளூர ஒரு ஆசையுண்டு.

யத் யத் ஆசரதி ச்ரேஷ்ட : தத் தத் ஏவ இதரோ ஜந :

(3.21)

ஆசை உண்டே தவிர, ச்ரேஷ்டர்கள் நடப்பது ரொம்பவும் உயர்ந்த மாதிரி இருந்தால், இவர்களால் பின்பற்ற முடியாமல், அதை அநுஸரிக்க முடியாமல் தோற்றுப் போவார்கள்;தோற்றுப்போவது தெரியக்கூடாது என்று போலியாக வேஷம் போடுவார்கள். அதனால் ச்ரேஷ்டனாயிருக்கப்பட்டவனே ஸாதாரண ஜனங்கள் இருக்க வேண்டிய, இருக்கக்கூடிய கீழ் லெவலுக்கு வந்து, அந்த லெவலின் ஒழுங்குகளை நடத்திக் காட்டுகிறான். ஞானிக்கு அது கீழ் லெவல் என்றாலும் ஸாதாரண மநுஷ்யனுக்கு அவனால் முடியக் கூடியதான சற்று உயர்ந்த லெவல்தான். சாஸ்த்ரோக்த கர்மா என்ற இந்த லெவலை விட்டால்தான் அவன் இன்னம் கீழ் லெவலில் பாழாய் விடுவான். இந்திரியம் இழுத்தபடிச் சிற்றின்பக் காரியங்களை மட்டுமே செய்தால் பாமர ஜனங்கள் அந்தச் சேற்றிலேயே புதைந்து போய், அப்புறம் ச்ரேஷ்டனாலுங் கூட அவர்களைத் தூக்கிவிட முடியாமல் போய்விடும். அதனால் சின்ன லாபங்களையே ஒரு நிலையில் தருவதாயிருந்தாலும், இதற்காக இந்திரியங்களை தெறிகெட்டுப் போகவிடாமல் அவற்றுக்கு இஷ்டமான பலன்களை ஒரு பக்கம் கட்டுப்படுத்தி சுத்தி பண்ணிக்கொண்டுமிருப்பதான சாஸ்திர கர்மாக்களை ச்ரேஷ்டன் பற்றில்லாமல், பட்டுக் கொள்ளாமல் அநுஷ்டித்துக் காட்ட வேண்டும். இவனைப் பார்த்து இவன் மாதிரியே பண்ண விரும்பும் ஜனங்களாலும் இவற்றை அநுஸரிக்க முடியும். த்யானம், ஆத்மவிசாரணை பண்ண முடியாது என்கிற மாதிரிக் கர்மாக்களைப் பண்ண முடியாது என்கிற மாதிரிக் கர்மாக்களைப் பண்ண முடியாது என்று இல்லை. எல்லாரும் பண்ணுவார்கள். அதற்கு goal-ம் மோக்ஷம், ஸம்ஸார நிவிருத்தி என்பது போல் அவர்களுக்கு அப்பீலாகாத ஏதோ ஒன்றாயில்லாமல், அவர்கள் ஆசைப்படும் லாபங்களாகவே இருப்பதால் இந்தக் கர்மாக்களைப் பண்ணுவதில் ச்ரமங்கள் நியமங்கள் இருந்தாலுங்கூடப் பொறுத்துக் கொண்டு பண்ணுவார்கள். இப்படி ச்ரமப்பட்டும், நியமத்துக்குக் கட்டுப்பட்டும் பண்ணுவதாலேயே கர்மாவானது இவர்கள் உத்தேசித்த பலனைத் தருவதோடு, உத்தேசிக்காத பலனாக இவர்களுடைய உள்ளத்தின் அழுக்குகளை அலம்பி, இவர்களுடைய ஆசைப்பற்றுக்களையும் குறைக்க ஆரம்பிக்கும். அப்புறம் ஐஹிகமான (இஹலோகத்து) பலனுக்காக இல்லாமல், ஸமூஹம் ஒரு ஒழுங்கில் நடக்க வேண்டும், குடும்பம் ஒரு ஒழுங்கில் நடக்க வேண்டும், தனி ஆள் ஒரு கட்டுப்பாட்டில் சீராக அபிவிருத்தியாக வேண்டும் என்பதற்காகவே சாஸ்திர கர்மாக்களைத் தொடர்ந்து பண்ணிக் கொண்டிருப்பார்கள். நிஷ்காம்யகர்மா என்பது இதுதான். அதற்கு போவதற்கு வழி காம்யமாக சாஸ்திர கர்மா பண்ணுவதுதான். பலனில் ஆசையோடு பண்ணுவதே காம்யம்.

மேல்நிலையில் உள்ளவன் - "ச்ரேஷ்டன்"என்று சொல்லப்பட்டவன் - ஸாதாரண ஜீவனைக் காம்யமாகவாவது சாஸ்திர ஆசாரங்களுக்குக் கட்டுப்பட்டு கர்மா பண்ண வைப்பதற்காகத்தான் அவற்றைத் தானும் நிஷ்காம்யமாகப் பண்ணி வழிகாட்ட வேண்டும் என்று பகவான் உத்தரவு போடுகிறார். பாமரஜனங்கள் 'ஸக்தர்'களாகப் பண்ணுவது என்று அவர் சொன்னதே காம்யம்;அதை வித்வான் 'அஸக்த'னாகப் பண்ண வேண்டுமென்பதே நிஷ்காம்யம்.

வித்வான் பண்ணிக் காட்டாவிட்டாலும் பொது ஜனங்கள் ஏதாவது கர்மா பண்ணிக் கொண்டேதான் இருப்பார்கள் - காம்யமாக, "அது வேணும், இது வேணும்"என்று எதையாவது கார்யத்தைப் பண்ணிக் கொண்டிருக்காமல் எவனும் க்ஷணங்கூடச் சும்மா இருப்பதில்லை; ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்-யகர்மக்ருத். ஏனென்றால் பிரகிருதி என்ற மாயை இப்படித்தான் ஸத்வ-ரஜோ-தமோ குணங்களால் ஜீவனைக் கட்டி அவனறியாமலே எதையாவது பண்ணிக் கொண்டிருக்கும்படி ஆட்டி வைக்கிறது : கார்யதே ஹ்யவச : கர்ம : ஸர்வ-ப்ரக்ருதிஜைர் குணை : (3.5).

ஆதலால் வித்வான் என்கிற ச்ரேஷ்டன் முன்னுதாரணமாகச் செய்து காட்டாவிட்டாலுங்கூட ஸாதாரண ஜனங்கள் தாங்களாகவே ஆசைப் பூர்த்திக்காக எதையாவது

செய்துகொண்டுதானிருப்பார்கள். இதையேதான் இவர்கள் சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டுச் செய்யுமாறு வித்வான் தன் எக்ஸாம்பிளால் தூண்டுதல் தருகிறான். காம்ய கர்மாதான் 'ஆப்ஜெக்டிவ்', அதாவது லக்ஷ்யம் என்றாலும்கூட அதற்குப் போகிற வழி, means,தன்னிஷ்டப்படியில்லாமல் சாஸ்திரோக்தமாக மாற்றி அமைக்கப்படும்போது அதன் தன்மையே அடியோடு மாறிப்போகிறது!மட்டமாக இருப்பதே உத்தமமாக மாற்றப்படுகிறது. இச்சா பூர்த்திக்காகவே பண்ணுவதென்கிற போதும் சாஸ்திர கர்மா என்றால், "இத்தனை மணிக்கு எழுந்திருக்க வேண்டும், ஸ்நானம் பண்ண வேண்டும், ஸத்வமாக இன்ன ஆஹாரந்தான் இத்தனை மணிக்கு அப்புறம் சாப்பிட வேண்டும், வேர்க்க விருவிருக்க ஹோமம் பண்ண வேண்டும், மணியடிக்க வேண்டும்"என்றெல்லாம் எத்தனை கட்டுப்பாடுகள் இருக்கின்றன?இதெல்லாம் சாஸ்திரோக்தமாகயில்லாமல் தன்னிஷ்டப்படி செய்யும் போது இல்லை அல்லவா?நெறியில்லாமல் செய்வதாலேயே ஆசையும் அழுக்கும் அதிகமாகின்றன. அதையே நெறியோடு செய்தால் சாந்தியும், சுத்தியும் ஏற்பட ஆரம்பிக்கின்றன. தன்னிஷ்டப்படியே செய்யும்போது அஹங்காரந்தான் அதிகமாகிறது;பயபக்திக்கு அங்கே இடமேயில்லை. சாஸ்திர கர்மாவினால் இஷ்ட பலனைத் தருபவனும் ஒரு ஈஸ்வரன்தான் என்று காட்டி, அவனைப் பிரார்த்தித்து அவனுக்கு அடங்கியே காம்யமானதைக் கேட்டுப் பெறச் சொல்லும்போது பயபக்தி உண்டாகி இவனை சுத்தி செய்கிறது.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*சர்க்கரை பூசிய மாத்திரை*

கா ம்ய பலனுக்காவே சாஸ்திர கர்மாவைக் காட்டி ஜீவனை நல்ல வழியில் 'தாஜா'பண்ணிக்கொண்டு வருவதற்கு sugar-coated pills-ஐ (சர்க்கரை தடவிய மாத்திரையை) உதாரணமாகச் சொல்லலாம். இஷ்ட பலன்தான் சர்க்கரை மாதிரி ஜீவனுக்குத் தித்திருக்கிறது. அவன் குழந்தையைப் போல அறியாதவனாயிருக்கிறான். சர்க்கரை உடம்புக்குச் சூடு என்று குழந்தைக்குத் தெரியாததுபோல இந்த ஐஹிக ஸௌக்யங்கள் ஆத்மாவுக்குக் கெடுதி என்று அவனுக்குத் தெரியவில்லை. சாஸ்திரகாரர்களான ரிஷிகளுக்கு இந்தக் குழந்தையிடமும் கருணை. அதனால் அது கேட்கிற பெப்பர்மின்டைக் கொடுக்க நினைக்கிறார்கள். குழந்தை பெப்பர்மின்ட் என்றே நினைத்தாலும் அது உள்ளுக்குள்ளே மருந்து. உள்ளே மருந்தை வைத்து மேலே சர்க்கரையைப் பூசியிருக்கிறது. சூட்டைத் தணிக்கிற மருந்துச் சரக்கு உள்ளே நிறைய இருக்கிறது;மேலே மட்டும் கொஞ்சூண்டு சூடு பண்ணும் சர்க்கரை தடவியிருக்கிறது. இதுதான் சாஸ்திரோக்த கர்மா. இஷ்ட பூர்த்தி என்று வெளியிலே தித்திப்பாகத் தெரிகிறது. உள்ளே இந்த இஷ்டமெல்லாம் கஷ்டம்தான் என்று புரியவைத்து இஷ்டப்படி செய்யாமல் நல்ல நெறியில் கட்டுப்படுத்துகிற விவேக மருந்து இருக்கிறது. மருந்து இருப்பது தெரியாமலேதான் குழந்தை சாப்பிடுகிறது. ஆனால் அது பலிக்காமல் போய்விடுமா என்ன?

இன்னொன்று :காம்ய கர்மாவைத்தான் பகவான் இங்கே சொல்கிறாரென்றாலும், சாஸ்த்ரோக்தமாகப் பண்ண ஆரம்பிக்கும்போதே, காம்ய கர்மாக்களோடு நிஷ்காம்யமாகவும் சில காரியங்களைக் கொடுத்துத்தானிருக்கிறது. ஸந்த்யாவந்தனம் போன்றவற்றைப் பண்ணுவதால் காம்யமாக இன்ன லாபம் கிடைக்கும் என்று சொல்லியிருக்கவில்லை;இவற்றைப் பண்ணாமல் விட்டால் பாவம், தோஷம் என்று சொல்லி, அதற்குப் பயந்துதான் பண்ண வைத்திருக்கிறது. காம்யபலன் வேண்டும் என்ற ஆசையினால் அதற்கான சாஸ்த்ரோக்த கர்மாக்களைச் செய்யும் ஜீவன் அதோடுகூடச்

சொன்ன இம்மாதிரி நிஷ்காம்யமான கர்மாக்கள் ஒன்றிரண்டையும் செய்கிறான். இது இவன் சித்த சுத்தியில் பக்வப்படுவதற்கு மேலும் ஸஹாயம் செய்கிறது.

## *தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

### *ஆசாரம்*

### *அன்று கண்ட அபிவிருத்தியும் இன்று காணும் சீரழிவும்*

இப்போது சில சீர்திருத்தக்காரர்கள் சொல்வது பாமர ஜனங்கள் உள்பட எவருமே சாஸ்திரோக்த கர்மாக்களைப் பண்ணாமல் ஞானி மாதிரி தத்வ விசாரம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டுமென்பது;பகவானும் சாஸ்திரங்களும் சொல்வதோ, ஞானி கூடப் பாமரன் மாதிரி சாஸ்திர கர்மாவைப் பண்ணி ஆசார அநுஷ்டானாதிகளை நடத்திக் காட்ட வேண்டுமென்பது.

எது ஸரி என்பதற்கு ஹிஸ்டரியையும், யதார்த்தத்தையும் பார்த்தால் போதும். பகவான் சொன்னபடி செய்து கொண்டிருந்தவரையில் நம் தேசம் லோகத்துக்கே மாடலாக ஸத்ய தர்மங்களிலும், பக்தியிலும் ஞானத்திலும், கலாசார நாகரிகத்திலும், ஸமூஹம் பூராவின் சீரான ஒழுங்கிலும் தலைசிறந்து இருந்திருப்பதை ஹிஸ்டரி காட்டுகிறது. இப்போது ரிஃபார்மர்கள் அபிப்ராயப்படி செய்ய ஆரம்பித்தபின் எப்படியிருக்கிறோம் என்பது தெரிந்ததே. கீதை சொன்னபடி மேலே இருந்தவனும் கீழே இருக்கிறவனைப் போலச் செய்து காட்டிக் கொண்டிருந்த வரையில் எல்லாரும் மேலே போனார்கள்;இப்போது கீழே இருக்கிறவனும் மேலே போய் விட்ட மாதிரி பாவித்துக்கொண்டிருப்பதில் எல்லாரும் அதல பாதாளத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறோம்!கட்டெல்லாம் விட்ட பரம ஸ்வதந்த்ர நிலையிருந்த ஞானியும் சாஸ்திரக் கட்டுப்பாட்டுப்படிச் செய்து மற்றவர்களையும் அதேபோலச் செய்வித்துக் கொண்டிருந்தபோதே தேசம் ஆத்மிகமாக மட்டுமில்லாமல், இப்போது ஸயன்ஸ் என்பதில் வரும் அநேக வித்யைகள், வியாபாரம் (கடல் கடந்தெல்லாம் கூடப் போய் வாணிபம் பண்ணியிருக்கிறார்கள்) எல்லாவற்றிலும் உன்னதமாயிருக்கிறது. "லோகம் பொய்;ஆத்மா, ஆத்மா"என்று சொல்லிக் கொண்டு ஸயன்ஸிலும், பொருளாதாரத்திலும் நாம் பிற்பட்டு நின்றதாகச் சொல்வதற்கு கொஞ்சங்கூட ஆதாரமில்லை. துருக்கர்கள், பிரிட்டிஷ்காரர்கள் ஆகியவர்களுடைய ஆதிக்கத்தில்தான் ஹிந்து ஸமுதாயம் ஒடுங்கி இவற்றில் backward state வந்ததே தவிர அதனுடைய மதாசாரத்தாலும் ஃபிலாஸஃபியாலும் அல்ல*. கட்டுப்பட்டிருந்தாலே சுத்தியாகக்கூடிய ஸாமானிய ஜனங்களையும் ஸ்வதந்திரம் என்று அவிழ்த்து விட்டிருக்கும் இப்போதோ எல்லாவற்றிலும் கீழேதான் போய்க்கொண்டிருக்கிறோம். "பாரமார்த்திமாகக் கீழே போகிறோம் என்று வேண்டுமானால் சொல்லுங்கள்;ஸயன்ஸில், காமர்ஸில் அபிவிருத்திதான் ஆகியிருக்கிறோம். Atom research, electronics எல்லாங்கூட கரைத்துக் குடித்து விட்டோமாக்கும்"என்று சொல்லலாம். ஆனால் நம்முடைய moral standard கீழே போய்விட்டதென்று மற்ற தேசத்தார் - இதுவரை நம் தேசத்தை தர்மபூமி என்று கொண்டாடிக் கொண்டிருந்தவர்கள் -அபிப்ராயப்பட ஆரம்பித்தபின் இவற்றில் நாம் முன்னேறி என்ன பிரயோஜனம்?'காமர்ஸ்'ஜாஸ்தியாச்சு என்று நாம் பெருமைப்பட்டாலும் இறக்குமதி செய்கிற அந்நியர்கள் சொல்வதைக் கேட்டால் அவமானமாயிருக்கிறது. "இந்த இந்தியர்கள் முதலில் காட்டுகிற 'ஸாம்பிள்'ஒன்றாயிருக்கிறது;அப்புறம் அனுப்பி வைக்கிற சரக்கு வேறாயிருக்கிறதே!நாணயமில்லாமல் நடக்கிறார்களே!"என்கிறார்கள். ஸயன்ஸ் அபிவிருத்தியில் பரஸ்பரம் தெரியாததைத் தெரிந்துகொண்டு, கூடச் சேர்ந்து ஆராய்ச்சி பண்ணுவதற்கும் நம்மை அவ்வளவாக நம்பமாட்டேனென்கிறார்கள் என்று கேள்வி. முன் நாளில் கட்டுப்பாட்டால் ஏற்பட்ட தர்மபலம் என்கிற அஸ்திவாரத்தின் மேலேயே விஞ்ஞான வித்யைகள், வியாபாரம் எல்லாம் நல்ல பெயரோடு விருத்தியாயின. அஸ்திவார பலம் இல்லாமல் இப்போது இவற்றில் ஏற்படுவதாகச் சொல்லப்படும் முன்னேற்றம் (நிலைத்து)

நிற்காது.

பூர்வாசாரங்கள் வேண்டியதில்லை என்று ஸுலபமாகச் சொல்லி, ஜனங்கள் இதை வேத வாக்காக (வேத வழி வேண்டாம் என்பதையே வேத வாக்காக) நம்பச் செய்து விட்டார்களே என்று மிகவும் துக்கமாக இருக்கிறது. வேணுமா, வேண்டா என்பதற்கு அதிகமாக வாதப் பிரதிவாதம் எதுவும் செய்ய வேண்டியதில்லை. நான் இத்தனை நேரம் சொன்னதெல்லாங்கூட அவசியமில்லை தான். ஒரு சின்ன விஷயத்தைக் கொண்டே முடிவு செய்து விடலாம். வியாதியஸ்தன் மருந்து சாப்பிட வேண்டுமா, வேண்டாமா என்பதற்கு விவாதம் பெரிசாகப் பண்ண வேண்டுமா?மருந்தைக் கொடுத்துப் பார்த்தால் என்ன நடக்கிறது, கொடுக்காவிட்டால் என்ன நடக்கிறது என்று பார்த்தால் போதாதா?மருந்து கொடுக்கிற மட்டில் வியாதி குறைகிறது, விட்டு விட்டால் ஜாஸ்தியாகிறது என்று பிரத்யக்ஷத்தில் தெரிகிறது. அப்போது மருந்து வேண்டத் தான் வேண்டும் என்றுதானே அர்த்தம்?பூர்வாசாரங்கள் இருந்தவரையில் தேசத்தில் எல்லாத் துறையிலும் அபிவிருத்தி இருந்தது. இதற்கு மேலாக ஒழுக்கமும் ஒற்றுமையும் இருந்தன. அவற்றை ஒழிக்க ஆரம்பத்ததிலிருந்து இவற்றையெல்லாமும் விரட்டியாகிறது என்பதிலிருந்தே அந்த மருந்து இல்லாவிட்டால் ஆத்மாவுக்கு வியாதிதான் என்று தெரியத்தானே வேண்டும்?ஒருவேளை சாப்பாட்டை நிறுத்தினால், உடனே ஓய்ச்சலாக வந்தால் சாப்பிட வேண்டும் என்று தெரிகிறதோ இல்லையோ?சாஸ்திரத்தை விட்டபின் தனி வாழ்க்கை, ஸமுதாய வாழ்க்கை இரண்டிலும் நிம்மதி போன பிற்பாடும் பூர்வாசாரம் வேண்டும் என்று தெரிந்து கொள்ள மாட்டோமென்றால் என்ன பண்ணுவது?தலைவர்களாயிருக்கப்பட்டவர்கள் மாட்டேனென்கிறார்கள்.

தப்புப் பண்ணிவிட்டோமென்று ஒப்புக்கொள்வது கஷ்டந்தான் என்றாலும் ஒரேயடியாகப் முழுகிப் போகிற நிலை வந்தபோதாவது, ஒப்புக்கொண்டு வெளியே வரவும் மற்றவர்கள் வெளியில் இழுத்துப் போடவும் முயலத்தானே வேண்டும்?இன்னம் முழுகியே போய்விடவில்லை. அதனால்தான் இதை நான் சொல்லி, நீங்கள் கேட்டுக் கொண்டாவது உட்கார்ந்திருப்பது!கேட்டது போதாது. புயல் வருகிறது என்று weather forecast கேட்டால் மட்டும் பிரயோஜனமில்லை. அது நம்மை பாதிக்காமலிருக்க என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்ய வேண்டும். Weather proof ஆக, தர்ம ரக்ஷையாக, கவசமாக இருப்பது பூர்விகர்களின் ஸமயாசாரம் தான். ஆகையால் இதைக் கேட்டதற்கு லக்ஷணம் இனிமேலாவது கேட்டபடிப் போவதற்குப் பிரயத்தனப்படுவதுதான்.

சிகாம் ஸூத்ரம் ச புண்ட்ரம் ச ஸமயாசாரமேவ ச I

பூர்வை : ஆசரித : குர்யாத் அந்யதா பதிதோ பவேத் II

பதிதபாவனன் என்று பகவானைச் சொல்கிறோம். "பதிதபாவன ஸீதாராம்"என்பதாவது காந்தியால் நின்றிருக்கிறது. அந்த ராமன் ஸகல கார்யமும் சாஸ்திரத்தைப் பார்த்துப் பார்த்தேதான் செய்தான். அந்த வழியிலிருந்து நாம் அடியோடு வழுக்கி விழுந்து பதிதர்களான பின் அவன் நம்மை பாவனப்படுத்துவது என்றில்லாமல், அவனை நாம் அவ்வளவு வேலை வாங்காமல், இப்போதிலிருந்தே நம்மை முன்னோர்களின் நெறியில் அவன் தூக்கி விட்டு ரக்ஷிக்கும்படியாகப் பிரார்த்தனை செய்வோம்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

*ஆசாரம்*

*ஒற்றையடிப் பாதை*

இன்னார், இன்ன காலத்தில் ஏற்படுத்தினார்கள் என்றே தெரியாமல் நம்முடைய ஆசாரங்கள் வந்திருக்கின்றன. ராமாநுஜர், மத்வர், சைதன்யர் என்று நமக்குப் பெயர் தெரிந்தவர்கள் ஒரொரு காலத்தில் ஏற்படுத்தின ஸம்பிரதாயத்திலிருப்பவர்களும் பின்பற்றுகிற

ஆசாரங்களில் பெரும்பாலானவை இப்படிக் காலம் தெரியாததாக, கர்த்தா தெரியாதவராகத்தான் இருக்கின்றன. மற்ற மதங்களைப் பற்றித் திட்டவட்டமாக இன்னார் இன்ன காலத்தில் ஏற்படுத்தின ஆசாரம் என்று தெரிவதுபோல நமக்கு இல்லை.

அந்த மதங்கள் இந்த இன்ஜினீயர் இந்த வருஷத்திலே போட்டார் என்று சொல்லக்கூடிய தார் ரோடுகள் மாதிரியிருக்கின்றனவென்றால், நம் மதம்?

இது ஒற்றையடிப் பாதை மாதிரியிருக்கிறது!ஒற்றையடிப் பாதையை யார் எப்போது போட்டார்கள்?சொல்லத் தெரியவில்லை.மேல் பார்வைக்குத் தார் ரோட் உசத்தியாயிருக்கிறது. ஆனால் யோசனை பண்ணிப் பார்த்தால் தார் ரோடைவிட ஒற்றையடிப்பாதைதான் பல விஷயங்களில் மேல் என்று தெரிகிறது. தார் ரோடும் கொண்டு விடாத இடத்துக்கு இந்த ஒற்றையடிப் பாதை தானே கொண்டு சேர்க்கிறது?ஜனங்கள் நடக்க நடக்கத் தார் ரோட் ரிப்பேராகி வருஷா வருஷம் மராமத்து பண்ண வேண்டியிருக்கிறது. ஒற்றையடிப் பாதையோ நடக்க நடக்கத்தான் இன்னம் நன்றாக ஆகிறது. ரிப்பேர் என்ற பேச்சே கிடையாது. அதேபோல ஆக்ஸிடென்டும் தார் ரோட்டில் தானேயன்றி, ஒற்றையடிப்பாதையில் உண்டோ?மேலே வழியில்லை என்று blind alley-யாகச் சிலர் தார் ரோட் மொட்டையாக முடிகிற மாதிரி எந்த ஒற்றையடிப் பாதையாவது முடியுமா?நன்றாகத் திறந்து விட்ட மார்க்கம், கூட்டங், கூட்டமாகப் பூர்விகர்கள் போயே புல் பூண்டு இல்லாமல் பாலிஷ் ஆன மார்க்கம், ஆக்ஸிடென்டே இல்லாத மார்க்கம், தார் ரோட் மாதிரிப் பார்க்கப் பகட்டு இல்லாவிட்டாலும், பரம ஸௌகர்யமாக, நிதானமாகக் கால் நடையிலேயே பரமாத்மாவிடம் கொண்டு விடுகிற மார்க்கம் - இப்படிப்பட்ட ஒற்றையடிப் பாதைதான் நம்முடைய பூர்வாசாரம். 'தார் ரோடானால் கார் ஸவாரி பண்ணிச் சுருக்க (விரைவில்) போய்ச் சேர்ந்து விடாலமே'என்றால், ஒற்றையடிப் பாதையிலோ அப்படிச் சுற்றிக் கொண்டு போகாததால், குறுக்கு வழியில் நடந்தே, அதே நேரத்தில் ஆக்ஸிடென்ட் எதுவுமில்லாமல் போய்ச் சேர்ந்து விடலாம். ரோடே போட முடியாத இடங்களில் - காட்டிலே, மலையிலே கூட - இதுதான் மார்க்கமாயிருக்கிறது.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## ஆசாரம்

## மனநெறி இயற்கைநெறியை ஆள்வது

ஆசாரத்தால்தான் டிஸிப்ளின் எனும் மனநெறி ஏற்படுகிறது. ஆசாரம் வெளிவிஷயம் என்பது சுத்தப் பிசகு. அதனால்தான் மனஸில் உத்தமமான பண்பும், உயர்ந்த கட்டுப்பாடும் உண்டாகிறது. மநுஷ்யனின் மனநெறி நன்றாயிருந்து விட்டால் அதன் சக்தி ஸாமான்ய மானதில்லை. அது இவனுடைய 'நேச்சர்'என்னும் இந்திரிய வேகங்களை அடக்கியாள்வது மட்டுமில்லை;வெளி 'நேச்சரை'யே அடக்காயாண்டு விடுகிறது. பிராம்மணன் அத்யயன ஆசாரத்தை அநுஷ்டித்தால் அதற்காகவே மும்மாரிகளில் ஒன்று பெய்கிறது என்பது தமிழ் மூதுரை; வேதம் ஓதிய வேதியர்க்கோர் மழை.

இப்படியே பதிவ்ரதைகளின் கற்பு நெறியினால் இயற்கை இன்னொரு மழையைப் பெய்கிறது என்று சொல்கிறது: மாதர் கற்புடை மங்கையர்க்கோர் மழை.

இதையே இப்போது பகுத்தறிவாளர்களும் கொண்டாடும் திருக்குறளும் சொல்கிறது:

தெய்வம் தொழான் கொழுநற் றொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் மழை

ராஜா நீதி நெறிப்படி ஆட்சி பண்ணுவதும் ஒரு மழையை வரவழைத்துவிடும் :

நீதி மன்னர் நெறியினர்க்கோர் மழை இதற்கு மறுதிசையில், இவர்கள் நெறி தப்பினால் இயற்கையும் கன்னா பின்னா என்ற பண்ண ஆரம்பிக்கும்.

வள்ளுவரே சொல்கிறார்:ராஜா நீதிமுறை தப்பினால் பிராம்மணனும் தன் ஆசாரமமான அத்யயனத்தை மறந்துவிடுவான் - அறுதொழிலோர் நூல் மறப்பர். ஒருத்தன் முறை தப்பினால் மற்றவர்களும் முறை தப்பிப் போய்விடுவார்களென்று எச்சரிக்கிறார். இப்படி மநுஷ்யனுக்கு மநுஷ்யன் மனநெறி கெட்டுப்போவதால் பாதகமான பலன் தொடர்ந்து போவது மட்டுமில்லை. ராஜா தன் ஆசாரத்தை விட்டால் பால் வளமும் குன்றிவிடும்:ஆ பயன் குன்றும் என்று 'தெய்வப்புலவர்'என்னும் திருவள்ளுவர் சொல்கிறார். இதற்குப் பகுத்தறிவு பதில் சொல்ல முடியாது.

மாற்ற முடியாதவை என்கிற Natural Forces-ம் (இயற்கைச் சக்திகளும்) மநுஷ்யனின் மனநெறிக்கு அடங்கியவைதான்.

ஒரே ஈஸ்வரனின் தர்ம ஸ்வரூபந்தான் (வெளி) இயற்கையில் இருக்கிற மஹத்தான ஒழுங்குக் கட்டுப்பாடு, மநுஷ்ய மனஸின் தர்மக் கட்டுப்பாடு இரண்டாகவும் ஆகியிருப்பது. இதிலே மநுஷ்யன்தான் மனமறிந்து மனஸின் தர்மத்தை உண்டாக்கிக் கொண்டு, அதில் ஈஸ்வர ஸாந்நித்யத்தை வரவழைத்துக் கொள்ள முடியும். அந்த திவ்ய சக்தியால்தான் (வெளி) இயற்கையும் இவன் கட்டியாள முடிவது.

நெறிதான் ஸூர்யனை, சந்திரனை, வாயுவை, gravity-ஐ ஆர்டரில் நிறுத்தி வைத்திருக்கிறது. 'ஃபிஸிக்ஸ்'மட்டுமில்லை. மனஸ் நன்றாயிருந்தால்தான் இவை லோகாநுகூலமாக நன்றாயிருக்கும். ஜனங்கள் மனஸ் கெட்டுப் போனால் இயற்கையிலும் உத்பாதங்கள் ஜாஸ்தியாகும் என்று 'சரக ஸம்ஹிதை'என்ற ஆயுர்வேத சாஸ்த்ரம் சொல்கிறது.

நெறியில் சிறந்தவர்கள் என்னென்ன அற்புதங்கள் பண்ணினார்கள் என்று கதை புராணங்களில் எத்தனையோ பார்க்கிறோம். 'பெய்யெனப் பெய்யும் மழை' என்கிற மாதிரியே 'பாய் எனப் பாயும் அக்கினி'யைப் பற்றி கண்ணகி கதை சொல்கிறது. அதே மதுரையில் ஞான ஸம்பந்தரும் அவர் தங்கியிருந்த மடத்திற்குச் சமணர்கள் வைத்த நெருப்பு, அவர்களை ஆதரித்த பாண்டிய ராஜாவையே (இறுதியில் அவன் நல்வழிப்படுவதற்கு ஆரம்ப தண்டனையாக) தாக்கவேண்டும் என்று ஈஸ்வரனைப் பிரார்த்தித்தவுடன் அவனிடம் வெப்பு நோய் உருவில் போய்ச் சேர்ந்தது.

Action and reaction are equal and opposite (செயலும் பிரதிச் செயலும் ஸமசக்தி வாய்ந்ததாகவும் எதிரிடையானதாகவுமிருக்கும்) என்ற 'ந்யூடன் லா'எல்லாக் கார்யங்களையும் பற்றின 'கர்மா தியரி'யை அடிப்படையாகக் கொண்டது என்பது மட்டுமில்லை;எண்ணத்தின் பிரதிபலனையும், மன நெறியின் சக்தி மற்ற மனங்களின் மீது மட்டுமின்றி 'நேக்சுரல் ஃபோர்ஸஸ்'மீதும் பிரதி விளைவுகளை உண்டாக்குவதையும் அடிப்படையாகக் கொண்டதுதான். Mental plane, metaphysical plane, physical plane (மன மட்டம், பௌதிகாதீதமான ஆத்மிய மட்டம், பௌதிக மட்டம்) மூன்றையும் கோத்து நம் மதத்தில் சொன்னதை physical plane-ல் (பௌதிக மட்ட்ததில்) மட்டும் சொல்வதே ந்யூடன் லா. 'ரியாக்ஷன் ஆப்போஸிட்'டானது (பிரதிச் செயல் எதிரிடையானது என்று அவர் சொன்னது நல்லதற்கு எதிர் விளைவாகக் கெட்டதும், புண்யத்துக்குப் பிரதியாகப் பாபமும் உண்டாகும் என்று அர்த்தம் கொடுக்காது. பின்னே 'ஆப்போஸிட்'என்று ஏன் சொன்னாரென்றால், ஒரு பந்தைச் சுவர் மேல் எறிந்தால் அது அதே விசையுடன் 'ஆப்போஸிட் டைரக்ஷ'னில் (எதிர் திசையில்) திரும்பி வருகிறாற்போலத்தான் physical plane-ல் எல்லா ரியாக்ஷனும் இருப்பாதலேயே!நாம் செய்த நல்லது (புண்யம்) எப்படி வெளியிலே பரவுகிறதோ அப்படியே வெளியிலிருந்து நமக்கு நல்லது (புண்யம்) திரும்புகிறது;கெட்டதும் (பாபமும்) இப்படியே என்றுதான் அதற்கு அர்த்தம்.

வெறும் physical plane-லேயே ஜட இயற்கை என்கிற வெளிநேச்சர் அடங்கியிருந்ததானால் ஸூர்யன் எப்போதோ குளிர்ந்து போயிருக்கும் என்று ஸயன்ஸ்டிஸ்டுகளே சொல்கிறார்கள். எப்படியோ அதில் உஷ்ண சக்தி ஊறிக் கொண்டேயிருக்கிறது என்று சொல்லி இதன் காரணத்தைப் பலவிதமாக ஊஹம் செய்கிறார்கள். ஆதி காரணம் ஈஸ்வர சக்திதான். அதுதான் இந்த பிரபஞ்ச தர்மத்துக்காக, லோகங்களின் நெறியான போக்குக்காகவும் வாழ்க்கைக்காகவும் ஸூர்யனில் குறையாத உஷ்ண சக்தியை ஊட்டிக்

கொண்டேயிருக்கிறது. ஸயன்டிஸ்ட்கள் ஒன்றொன்றாகக் கேள்வி கேட்டுக் கொண்டு காரணங்களைக் கண்டுபிடித்துக் கொண்டே போனாலும் கடைசியில் ஸயன்ஸினால் காரணம் சொல்ல முடியாத ஒரு 'ஆரிஜினி'ல் (தோற்றுவாயில்) தான் போய் முட்டிக் கொண்டு நிற்கிறார்கள். ஐன்ஸ்டைன் மாதிரி ரொம்பப் பெரியவர்கள் அதுதான் ஈஸ்வர சக்தி என்று நமஸ்காரம் பண்ணுகிறார்கள். மநுஷ்ய மனநெறி, மனித வாழ்வின் ஒழுங்கு ஆகியனவும் அதே சக்தியுடைய தர்மத்துக்கு இன்னொரு ரூபந்தானாகையால், மனநெறியே இயற்கையையும் ஸாதகமாகவோ பாதகமகவோ ஆக்குகிறது.

விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் 'பல ச்ருதி'யில் பகவானை நேச்சர் என்கிற ஜடப் பிரபஞ்ச தர்மம், மநுஷ்ய மனநெறியை உண்டாக்கும் மதாசார தர்மம் ஆகிய இரண்டுக்கும் மூலமாக ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறது. தரிப்பது (தாங்குவது) தர்மம் வெட்ட வெளியிலே விழாமல் தொங்கிக் கொண்டிருக்கிற நக்ஷத்ரங்களையும், திக்குகளையும், பூமியையும், உருண்டையான பூமியிலிருந்து வழியாமல் கொட்டாமல் ஸமுத்ரத்தையும் ஸூக்ஷ்மமாக தரிக்கும் தர்ம ஸ்வரூபம் பகவானே என்று அதில் ஒரு ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறது.

த்யௌ ஸ சந்த்ரார்க-நக்த்ரா கம் திசோ பூர்-மஹோததி :I

வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதாநி மஹாத்மந :II

வாஸுதேவனுடைய வீர்யம்தான் அண்ட கோளத்தையும், பூகோளத்து ஸமுத்ரத்தையும் தாங்கித் தரிக்கிறது என்று இங்கே சொல்லிவிட்டு, அப்புறம் மநுஷ்யன் என்ற சைதன்யப் பிரபஞ்சத்தைச் சேர்ந்த இந்த்ரியம், மனஸ் புத்தி, பிரத்யேக குணம், தேஜஸ், பலம், தைர்யம், க்ஷேத்ரம் என்ற சரீரம் அதில் அறிவாயிருக்கிற க்ஷேத்ரஜ்ஞன் என்ற ஆத்மா எல்லாமே வாஸுதேவ மயமானது என்று வர்ணிக்கப்படுகிறது.

இந்த்ரியாணி மநோ புத்தி : ஸத்-த்வம் தேஜோ பலம் த்ருதி :I

வஸுதேவாத்மகான்-யாஹு க்ஷேதரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச :II

ஜடப் பிரபஞ்ச வஸ்துக்களை பகவானே நேராகச் சேர்த்துப் பிடித்து ஸம்பந்தப்படுத்தி தர்ம நெறியில் வைத்திருக்கிறான். சைதன்யமான ஜீவப் பிரபஞ்சத்திலோ மனஸ் என்று ஒன்றைத் தந்து, அதற்கு ஸ்வதந்திரம் தந்து ஆட்டம் போட்டுவிட்டு, ஜீவன் தானாகவே அதை நெறிப்படுத்திக் கொள்கிற ரீதியில் சாஸ்திரங்களையும் கொடுத்து அதில் ஆசாரத்தை முதலாவதாக வைத்திருக்கிறான் என்பதை அடுத்த ஸ்லோகம் உணர்த்துகிறது. இத்தனை நாழி நான் சொன்ன 'ஆசாரம்'என்ற விஷயத்துக்கு முத்தாய்ப்பு வைப்பதாக அந்த ஸ்லோகம் இருக்கிறது:

ஸர்வாகமாநாம் ஆசார : ப்ரதமம் பரிகல்பதே I

ஆசார-ப்ரபவோ தர்மோ தர்மஸ்ய ப்ரபு-ரச்யுத :II

'ஸர்வ ஆகமங்கள்'என்கிற ஸகல சாஸ்திரத்துக்கும் ஆசாரமே முதலானதாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது ஆசாரத்திலிருந்து உண்டாவதே தர்மம் அந்த தர்மத்துக்குப் பிரபு அச்யுதனான பகவான் - என்று அர்த்தம். அச்யுதன் என்றால் அசங்காமல் 'ஸ்டெடி'யாக இருக்கிறவன். தர்மம் என்ற அறநெறி ஸ்டெடியாக இருக்க வேண்டியதல்லவா?

ஜீவப் பிரபஞ்சத்தின் ஆசார வழியாய் உண்டாகும் தர்ம நெறியையும் ஜடப் பிரபஞ்சத்தின் சீரான ஒழுங்கையும் இப்படி இணைத்துக் கொடுத்திருக்கிறது. அதாவது நம்முடைய ஆசாரத்தால்தான் நம் சொந்த வாழ்க்கை, நம் ஸமூஹ வாழ்க்கை இவை மட்டுமின்றி லோக வாழ்க்கையே நல்ல முறையில் அமையும். இதை நவீன மனப்பான்மையுள்ளவர்கள் எல்லாரும் புரிந்து கொள்ளும்படி அந்த பகவான், வாஸுதேவன், அச்யுதன் அருள் செய்ய வேண்டும். ஆசாரங்களிலேயே தர்மம் பிறப்பதால் தர்மத்தின் பிரபுவான பகவான் ஸதாசாரம் தழைக்கும்படியாக அநுக்ரஹிக்க வேண்டும்.

மதாசாரத்தின் உட்பிரிவுகள்

முந்தைய உரைத் தொடர்பாக ஒரு விளக்கம்1

'**சி** காம், புண்ட்ரம், ஸூத்ரம்' என்று சொன்ன2 மூன்று விஷயங்களும் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவைதான். மதாந்தரங்களில் இவையில்லை. ஆனதால் ஹிந்து மதத்துக்குள்ளேயே வெவ்வேறாயுள்ள பிரிவுகளை ஒப்புக்கொண்டு, இவற்றில் பிறந்தவர்கள் தங்கள் முன்னோரின் பிரிவுக்குரிய ஆசாரத்தையே பின்பற்ற வேண்டும் என்று ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது.

அப்போது ஒரு கேள்வி வருகிறது. ஹிந்து மதம் வேதமதம்தான். அதற்கு முதல் ஆதாரம் ச்ருதி என்ற வேதம்;அடுத்தபடியான ஆதாரம் அந்த வேதத்தை ஆதாரமாகக்கொண்டே அதில் சுருக்கமாகவும், மறைமுகமாகவும், குறிப்பாகவும் (hint-ஆகவும்) சொல்லியுள்ளவற்றை விளக்கி வைக்கிற ஸ்ம்ருதி என்ற தர்ம சாஸ்திரம். ஆக, வேதம்தான் (இந்த மதத்துக்கு) மூச்சு. இந்த வேதத்தின் பரமதாத்பரியம் என்ன என்பதிலே ஏற்பட்ட வித்யாஸத்தால்தான் இதற்குள் பல பிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. த்வைதம் என்று ஒருத்தர் நிர்தாரணம் பண்ணுகிறார்;அத்வைதம் என்று இன்னொருத்தர், இரண்டுமில்லை விசிஷ்டாத்வைதம், சுத்தாத்வைதம், த்வைதாத்வைதம் என்றெல்லாம் பலபேர் பல விதமாக முடிவு பண்ணுகிறார்கள். வைதிக மதத்தில் எல்லா தெய்வமும் ஒரே பரமாத்மாதான் என்று ஒருத்தர் சொல்கிறார். இன்னொருத்தர் விஷ்ணுதான் பரமாத்மா மற்ற தெய்வங்களில்லை என்கிறார். வேறொருவர் இதே மாதிரி சிவனைச் சொல்கிறார். எல்லாரும் தாங்கள் சொல்வதுதான் வேதத்தின் ஸரியான அபிப்ராயமென்கிறார்கள், 'த்வைதம், அத்வைதம் என்றெல்லாம் பெயர் கொடுத்தாலும் இது sub-titleதான். நாங்கள் வேதமதம் என்பதுதான் title' என்று அவரவரும் சொல்கிறார்கள்.

இதிலிருந்துதான் கேள்வி வருகிறது. வேதமதத்தை விட்டு வேறு மதத்துக்குப் போனால்தான் தப்பா?பதிதனாகிறானா?அல்லது ஒரே வேத மதத்திலேயே இருக்கிற ஒரு பிரிவிலிருந்து அதிலே பிறந்தவன் இன்னொரு பிரிவுக்குப் போனாலும் பதிதனாகிற தோஷம் வருமா?

ஸ்லோகத்தில் வைதிக ஸமயத்தில் மட்டுமேயுள்ள சிகை, புண்ட்ரம், ஸூத்ரம் இவற்றைச் சொல்லி, அப்புறம் ஸமயசாரத்தையும் சொல்லி, இவையெல்லாவற்றிலும் ஒருவன் பூர்விகரின் ஆசாரத்தைத்தான் கடைபிடிக்க வேணடும்; இல்லாவிட்டால் பதிதனாகிறான் என்று ஸ்பஷ்டமாக இரிக்கிறபோது, ஹிந்து மதத்திலேயே ஒரு பிரிவிலிருந்து இன்னொன்றுக்குப் போகலாமா என்று கேட்பது ஸரியில்லைதான். ஆனாலும் இப்படிக் கேட்பது அடியோடு தப்பான விதண்டாவாதம் என்று தள்ளிவிட முடியாது. கேட்பவர்களின் ஆர்க்யுமென்டிலும் நியாயமிருக்கிற மாதிரித் தோன்றுகிறது. அதனால் அதைக் கேட்டு, தீர்க்கமாக ஆலோசனை செய்துதான் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது.

ஆர்க்யுமென்ட் என்ன?"மதாந்தரங்கள் என்றால் அவை வேதத்தை ஆதாரமாக, ப்ராமண நூலாகக் கொள்ளாதவை. பைபிள், கொரான், த்ரிபிடகம், ஃஜென்டோவஸ்தா, க்ரந்த ஸாஹேப், ஓல்ட் டெஸ்ட்மென்ட்*1 என்று ஏதோ ஒன்றைத்தான் அவை ஆதார க்ரந்தமாகக் கொண்டிருக்கின்றன. ஆகையால் வேத மதம் என்பதில் பிறந்துள்ள நாம் இந்த வேத மதத்தை விடாமலே இதில் ஒரு பிரிவிலிருந்து இன்னொன்றுக்குப் போனால் எப்படித் தப்பு?இந்தப் பிரிவுகள் தோன்றுவதற்கு முந்தி எப்படியிருந்தது?நீங்களே இதைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறீர்கள்?'மாறுபட்ட எல்லா ஹிந்துமத ஸித்தாந்தங்களின் அபிப்ராயத்துக்கும் வேதம் ஒவ்வொரு ஸ்டேஜில் இடம் கொடுக்கிறது. த்வைதம் விசிஷ்டாத்வைதம்-அத்வைதம், சைவம் வைஷ்ணவம் என்றெல்லாம் தனித்தனி ஸம்ப்ரதாயங்களாகப் பிரிவதற்கு முன்னாலும் தன்னுடைய பக்குவ ஸ்திதியில் ஒருவர் எந்த ஸ்டேஜில் இருந்தாரோ அதைப் பொறுத்துத் தத்வரீதியில் த்வைதியாகவோ, அத்வைதியாகவோ, இன்னொன்றாகவோ, இதே மாதிரி தெய்வ உபாஸனை என்று

வரும்போது சிவ பக்தராகவோ, விஷ்ணு பக்தராகவோ, அம்பாள் பக்தராகவோ, தம் பாட்டுக்கு இருந்து கொண்டுதான் இருந்தார். ச்ருதி, ஸ்ம்ருதிகளைப் பார்த்தால் இது ஒன்றுதான் தத்வம், இது ஒன்றுதான் என்று முடிவுகட்டி எல்லாருக்கும் பொதுவாக எதையும் சொல்லியிருக்கவில்லை. ஆதலால் பிரிந்து போகாமலே தமக்குக் 'கன்விக்ஷன்'உள்ள தத்வத்தை அநுஸரித்துக் கொண்டும், தமக்கு 'அப்பீலா'கிற தெய்வத்தை உபாஸித்துக் கொண்டும் ஒரே ஸம்பிரதாயமாகத்தான் ஹிந்துக்கள் எல்லாரும் இருந்திருக்கிறார்கள். ஸம்ஸ்காரங்களிலும், ஆசாரங்களிலும் எல்லாரும் தர்ம சாஸ்திரப்படி ஒரே மாதிரிதான் அநுஷ்டித்து வந்திருக்கிறார்கள். ஒரே குடும்பத்திலேயே கூட இருந்தவர்கூட வெவ்வேறு தத்வ ஸித்தாந்தத்தை அநுஸரித்துக் கொண்டும், அவர்களில் ஒருவர் சிவபூஜை பண்ணுகிறவராகவும், இன்னொருவர் விஷ்ணு பூஜை பண்ணுகிறவராகவும் இருந்திருக்கிறார்கள். ச்ரௌத ஸ்மார்த்த*2 கர்மாக்களான பஞ்ச மஹா யஜ்ஞங்கள், நாற்பது ஸம்ஸ்காரங்கள், ஸந்த்யாவந்தனம் முதலியவற்றில் வித்யாஸமில்லாமல் எல்லாரும் ஒரே போலப் பண்ணி வந்தார்கள். பிற்காலத்தில்தான் ஸித்தாந்தம், தெய்வம் என்பதற்காக வேறுவேறு பிரிவுகளானது'என்றெல்லாம் நீங்களே சொல்லியிருக்கிறீர்களே!ஆகையால் இப்போது த்வைதியாகப் பிறந்திருக்கிற ஒருத்தனுக்கு அத்வைதத்தில்தான் 'கன்விக்ஷன்'என்றால் அவன் அப்படி மாறக் கூடாதா?சிவபூஜையே பண்ணி வருகிற ஒரு குடும்பத்தில் பிறந்த ஒருவனுக்கு விஷ்ணுவிடம் தான் பக்தியிருக்கிதென்றால் அவன் அகத்துப் பூஜையை விட்டு விட்டு விஷ்ணுவைப் பூஜை பண்ணினால் தப்பா?இந்தப் பிரிவுகள் பிற்காலத்தில் ஏற்படுவதற்கு முன்னால் ஒருவனுக்கு இப்படிப்பட்ட ஸ்வந்திரம் இருந்தது என்பதால் இப்போதும் இப்படி வேத மதத்துக்கு விரோதமாகப் போகாமல். அதற்குள்ளேயே மனஸ்ஸாக்ஷிப் படி குலாசாரத்தை விட்டு வேறுவிதமாகச் செய்தால் அது எப்படித் தப்பாகும்?"

இதற்கு மேலேயும் கேள்வி போகிறது நானே சொன்னதை வைத்தே என்னை மடக்குகிறார்கள்!"சங்கராசார்யார் தம் ஸித்தாந்தப்படிப் போகிறவர்களை வேத ஸம்பிரதாயத்தில் புதுப் பிரிவு என்றே நினைக்கவுமில்லை, வைக்கவுமில்லை. இதற்கு அத்தாட்சியாக அதுவரை ஹிந்துக்களுக்கு இருந்து வந்திருக்கிற பொதுப் பெயரான 'ஸ்மார்த்தர்'என்பதேதான் இன்றுவரை அவரை ஆசார்யராகக் கொண்டிருக்கிறவர்களுக்கும் பெயராக இருக்கிறது. ராமாநுஜரைச் சேர்ந்தவருக்கு ஸ்ரீவைஷ்ணவர் என்றும், மத்வரைச் சேர்ந்தவர்களுக்கு மாத்வர் என்றும், இப்படியே மற்ற ஸம்பிரதாயஸ்தர்களுக்கு ஒவ்வொரு தனிப்பெயரும் ஏற்பட்டிருப்பதுபோல் சங்கரரைச் சேர்ந்தவர்களுக்கு இல்லாமல், 'ஹிந்துவாகப் பிறந்த எல்லோருக்கும் பொதுவான தர்ம சாஸ்திரங்களைப் பின்பற்றுகிறவன்' என்று அர்த்தம் கொண்ட 'ஸ்மார்த்தர்'என்பதுதான் பெயராயிருக்கிறது.

அவர் அவருக்கு முற்பட்ட சாஸ்திரங்களில் சொல்லியுள்ள ஆசார, அநுஷ்டான, ஸம்ஸ்காரங்களையேதான் அவலம்பித்தாரே (நிலைநாட்டினாரே) தவிர அவற்றில் மாறுதல் எதுவும் செய்யவில்லை. பிற்பாடு மற்ற ஆசார்யர்கள் வந்த போதுதான் தங்கள் தங்கள் ஸம்பிரதாயத்துக்குத் தனிப் பெயர் தந்தது;இவர்களும் ஆசார, அநுஷ்டான, ஸம்ஸ்காரங்களில் பூர்விகமான தர்ம சாஸ்திரங்களைத் தான் பெரும்பாலும் பின்பற்றினார்களென்றாலும், அவற்றோடு தங்களுடைய புதிய பிரிவைத் தழுவுவதற்கு அடையாளமாக அதிகப்படியான சிலவற்றையும் (ஸமாச்ரயணம், முத்ராதாரணம் முதலியவற்றைப் போன்றவை) சேர்த்தார்கள். ச்ரௌத ஸ்மார்த்த கர்மாவுக்குக் கொஞ்சம் முக்யத்தைக் குறைத்து புராணாதிகளுக்கு அதிகம் முக்யம் தருவது போன்ற சில மாறுபாடுகளையும் செய்தார்கள். புண்ட்ரத்திலும் (நெற்றிக்கு விடுவதிலும்) புது விதமாக வைத்தார்கள்"என்றெல்லாம் நான் சொல்லியிருக்கிறேனல்லவா?*3இதை வைத்தே கேட்கிறார்கள்:"நீங்கள் சொல்லியிருப்பதிலிருந்தே, பிற்கால ஆசார்ய புருஷர்களாக இருக்கப்பட்டவர்களே அதுவரை இருந்து வந்த அவர்களுடைய குலாசாரத்துக்கு வித்யாஸமாகப் பண்ணியிருக்கிறார்களென்று ஆகிறதே!அப்படியானால் இப்போதும் அப்படியே ஒருத்தன் ஹிந்துவாகவே இருந்துகொண்டு ஸ்மார்த்தத்திலிருந்து வைஷ்ணவத்துக்கோ, மத்வ மதத்திலிருந்து ஸ்மாத்தத்துக்கோ போனால் என்ன?" - இப்படி ஆர்க்யுமென்ட் போகிறது.

இதில் நியாயம் இருப்பதாகப்பட்டாலும் சாஸ்திர அபிப்ராயத்தைத்தான் நான் சொல்ல வேண்டும், பூர்விகர் வழிதான் போகவேண்டும் என்று உங்களுக்கெல்லாம் உபதேசித்துவிட்டு நானே பூர்விகர் அபிப்ராயத்துக்கு மாறாகச் சொல்லக்கூடாது என்பதால், அவரவரும் தாங்கள் பிறந்திருக்கிற குலாசாரப்படித்தான் நடக்க வேண்டும் என்றே சொல்கிறேன். சாஸ்திரத்தை நம்ப வேண்டுமென்றால் அப்புறம் ஆர்க்யுமென்டுக்கு வால்யூ இல்லை ஆர்க்யுமென்டில் எத்தனை நியாயம் இருக்க வேண்டும் என்று ஒப்புக்கொண்டு அதன்படிதான் செய்ய வேண்டும். நம்பிக்கை (யீணீவீமீலீ) என்னும்போதே அது புத்தியால் மட்டும் புரிந்துகொள்ளக் கூடியதல்ல என்று தானே அர்த்தம்?புத்திக்குப் புரிவதைத் தீர்மானமாக நாமே தெரிந்துகொண்டு விடுவோமாதலால், இதிலே 'நம்ப'என்ன இருக்கிறது?தெரியாததைத்தான் நம்ப வேண்டும். இதோ எதிரே 'மைக்'இருக்கிறது என்று கண்ணுக்குத் தெரிவதைச் சொன்னால் அதிலே 'நம்புவதற்கு'என்ன இருக்கிறது?ஆனபடியால் மத நம்பிக்கை, சாஸ்திர நம்பிக்கை, தெய்வ நம்பிக்கை என்றெல்லாம் வார்த்தைகள் இருப்பதாலேயே - மதத்துக்குப் பேரே திணீவீமீலீ என்று வைத்திருப்பதாலேயே - அதில் எல்லாவற்றையும் புத்தி தர்க்கத்தால் விளக்கிக் கொள்ள முடியாது என்றுதான் அர்த்தம்.

ஆனாலும் இப்படிச் சொல்லி அடியோடு விட்டுவிடாமல் (ஹிந்து மதப்பிரிவுகளுக்குள்ளும் பிறப்பின் படி அமைந்த பிரிவுக்கான பூர்வாசாரப்படித்தான் பண்ண வேண்டும் என்பதற்கு) கொஞ்சம் காரணமும் சொல்கிறேன்.

முதல் கேள்வி:தத்வத்தில் 'கன்விக்ஷன்'(உண்மை என்ற உறுதிப்பாடு) என்பதற்காக த்வைதத்திலிருந்து அத்வைதத்துக்கு அல்லது அத்வைதத்திலிருந்து விசிஷ்டாத்வைதத்துக்கு மாறலாமா?இதற்காகக் குலாசாரத்தை விடலாமா?- என்பது.

தத்வத்தில் கன்விக்ஷன் என்பது முழுக்க ஒருத்தனின் உள்விஷயம். மனம் போனபடி ஏதோ ஒன்றைப் பிடித்துக் கொள்ளாமல், நன்றாகச் சுற்றறிந்து ஆலோசித்து ஏற்பட்டதாகவோ, அல்லது நல்ல உள்ளநுபவத்தில் ஏற்பட்டதாகவோயிருந்தால் அதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். கன்விக்ஷன் மேம்போக்காக இருக்கக்கூடாது. ஆழமாகப் போயிருக்க வேண்டும். ஏன் அந்த ஸித்தாந்தத்திலே பற்று என்பதற்குக் காரணம் சொல்லத் தெரிந்திருக்க வேண்டும்.

காரணமில்லாமலே ஆழ்ந்த பற்று என்றால், அப்போது ஸம்ஸ்கார விசேஷத்தால் அப்படி ஏற்பட்டிருக்கும்;அப்போது அறிவால் சொல்லத் தெரியாதது அநுபவத்தில் பேச ஆரம்பிக்கும். எப்படியாயினும் ஒரு தத்வத்திலே, ஸித்தாந்தத்திலே ஒருவனுக்குப் பற்று மேலெழுந்தவாரியாயில்லாமல் உறுதியாக இருக்கிறது என்றால் அந்த உள்விஷயத்தை யாரும் ஆக்ஷேபிப்பதற்கும், இப்படி மாறக்கூடாது என்று சொல்வதற்கும் இல்லை. ஆனால் - இப்போது நான் சொல்லப் போகிறது ரொம்ப முக்கியமான பாயின்ட் - ஒருத்தனுக்குப் பூர்விகர்களின் ஸித்தாந்தத்துக்கு வித்யாஸமாக இன்னொன்றில்தான் ஆழமான விச்வாஸமிருக்கிறது என்கிறதற்காக அவன் குலாசார அநுஷ்டானங்களை மாற்றிக் கொள்ள வேண்டியதேயில்லை.

"இதென்ன?தத்வத்தில் வேறேயாகப் போவதை ஒப்புக்கொள்ளலாம் ஆனால் ஸமயாசாரத்தை மாற்றிக் கொள்ளக் கூடாது என்றால் குழப்பமாயிருக்கிறதே!"என்று தோன்றும். இதை நன்றாக அலசி, ஆலோசித்துப் பார்ப்போம். பார்த்தால் தத்வத்தைப் பற்றின உள்ளநுபவத்துக்கும் ஆசார அநுஷ்டானம் என்பதான வெளிக்கார்யம், வெளிச் சின்னங்களுக்கும் நேர் ஸம்பந்தம் இருக்கவில்லை என்று தெரியும். நேர் ஸம்பந்தம் இல்லாவிட்டாலும் சுற்றி வளைத்து நிச்சயமாய் ஸம்பந்தம் இருக்கிறது. அடியோடு ஸம்பந்தமேயில்லாமலில்லை. "ஸித்தாந்தம் அநுபவ விஷயம்;அதற்கு வெளி ஸமாசாரமான ரிசுவல் எதற்கு, ஆசாரம் எதற்கு?"என்று கேட்கிற ரிஃபார்ம்காரர்களோடு நான் சேர்ந்து கொள்ளவில்லை. அவர்கள் வெளிக் கார்யம், சின்னத்துக்கும் உள்ளே அநுபவம் உண்டாவதற்கும் அடியோடு ஸம்பந்தமில்லை என்று தப்பாக நினைத்துக் கொண்டிருப்பவர்கள். அவர்கள் நினைப்பதில் தப்பு என்ன என்பதைத்தான் இவ்வளவு நாழி எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தேன்.

இப்போது என்ன சொல்கிறேனென்றால்:ஆசார அநுஷ்டானங்களில் பொரும்பாலானவற்றுக்கும் ஸித்தாந்தத்துக்கும் நேர் ஸம்பந்தம் அதிகம் கிடையாது என்கிறேன். ஸமயாசாரங்களும் கர்மாக்களும் எதற்காக என்று திருப்பித் திருப்பிச் சொன்னேன்?ஒரு ஜீவனுடைய சித்த சுத்திக்காக என்றுதானே சொன்னேன்?ஒரு ஜீவன் முடிவான லக்ஷ்யமாக ஏதோ ஒரு தத்வத்தின், ஸித்தாந்தத்தின் ஸத்யத்தைப் பிரத்ய அநுபவமாக்கிக் கொள்வதற்கு நேர் உபயமாகவே சாஸ்திர கர்மாவைப் பண்ணவேண்டும் என்று சொல்லவில்லையே? கிருஷ்ண பரமாத்மாவும் ஸரி, சங்கர ராமாநுஜ மத்வாதி ஆசார்யர்களும் ஸரி, கர்மாக்கள் ரூபத்திலும் வெளிச் சின்னங்களாகவும் இருக்கிற ஆசார அநுஷ்டானங்களைச் சொன்னதெல்லாம் சித்த சுத்திக்காகத்தானேயொழிய முடிவான லக்ஷ்யமான தத்வ ஞான ஸ்வாநுபூதிக்காக அல்ல. (ஞானம் என்று இங்கே நான் சொல்வது பக்தி ஸித்தாந்தங்களில் பக்தி என்ன தத்வத்தை உள்ளபடி அறிந்துகொள்வதையும் குறிக்கும்.) எந்த ஸித்தாந்தமானாலும் அதன் ஸத்யத்வத்தை ஒருவன் தெரிந்து கொள்கிற பக்வம் வரவேண்டுமானால் அவனுடைய மனஸு அழுக்கிலாமலிருந்தால்தான் முடியும். சித்தம் என்ற கண்ணாடி அழுக்காகவும் ஆடிக்கொண்டும் இருக்கிற வரையில் அதில் எந்த ஸித்தாந்தத்தின் உண்மையும் தெளிவாகவோ, ஸ்திரமாகவோ பிரதிபலிக்காது. ஆகையால் ஸித்தாந்தம் வேறே வேறேயானாலும் அதைப் பெறுவதற்கு முந்தி எல்லாரும் நீஷீனீனீஷீஸீ-ஆகப் பெற வேண்டியது சித்த சுத்தி. இப்படி சுத்தி ஏற்படவே ஆசார அநுஷ்டானம் என்பதே மறுபடி மறுபடி சொன்ன விஷயம். அதாவது ஸித்தாந்தத்தில் ஸித்தி என்ற முடிவான லக்ஷியத்துக்கு நேர் உபாயமான சித்த சுத்தி என்ற பூர்வாங்கமான லக்ஷ்யம் ஸித்திப்பதற்கு உபாயமாகத்தான் ஆசார அநுஷ்டான ரூபமான கர்மாக்களை வைத்திருக்கிறது. ஸித்தாந்தத்துக்கும் கார்யத்துக்கும் டைரக்ட் ஸம்பந்தம் கிடையாது.

ஆலோசனை பண்ணிப் பார்த்தால் தெரியும். லோகத்தில் எத்தனையோ ஸித்தாந்தங்களிருக்கின்றன. எல்லாவற்றுக்கும் ஏற்பட்டிருக்கிற கார்யங்களோ ஏறக்குறைய ஒரே மாதிரிதான் இருக்கின்றன. நாம் தீபாராதனை பண்ணினால் இன்னொருத்தன் மெழுகுவர்த்தி ஏற்றி வைக்கிறான் நாம் சாந்த்ராயண விரதம் என்றால் வேறே ஒருத்தன் ரம்ஜான் யீணீவமீ்வீஸீரீ என்கிறான். நம்முடைய தேவாலயங்களில் எப்படி பூஜை நடக்கிறதோ அப்படியேதான் பௌத்த, ஜைன ஆலயங்களிலும் நடக்கிறது. நமக்குள்ளேயே எடுத்துக் கொண்டால் ஒரேபோல தப்த சின்னங்களை தரித்துக் கொள்கிறதில் (சூடு போட்டு முத்திரை பதித்துக்கொள்கிறதில்) த்வைத அநுபவம், விசிஷ்டாத்வைத அநுபவம் என்று வேறேவேறாயாக வருகின்றனவா என்ன அத்வைதத்துக்கு, இப்போது "வேதாந்தா"லெக்சர் பண்ணுபவர்கள் சொல்கிறபடி, எந்த ஆசார அநுஷ்டானமுமே இருக்கக்கூடாதுதான். ஆனால் அத்வைத ஆசார்யர்களும், மடங்களும் விதித்திருக்கிறபடி இந்த ஸித்தாந்திகளும் மற்றவர்களைப் போலவே ஸ்நான பானம், பூஜை, தீர்த்த யாத்திரை, திவஸ தர்ப்பணம் என்றுதானே பண்ணுகிறார்கள்?சைவன் எப்படி அபிஷேகம், அர்ச்சனை, கந்த, புஷ்ப உபசாரங்கள் செய்கிறானோ அப்படியேதான் வைஷ்ணவனும் செய்கிறான். ஸாளக்ராமமும் லிங்கமும் வேறேயாக இருக்கட்டும். இவன் போடுகிற துளஸியும் அவன் போடுகிற வில்வமும் வேறேயாக இருக்கட்டும். புளியோதரையும் சம்பாப் பட்டையும் வேறாக இருக்கட்டும். அவன் வைகுண்ட ஏகாதசிக்குக் கண்விழித்துப் பட்டினி கிடக்கிறானென்றால் இவன் சிவராத்திரிக்குத்தான் அப்படிச் செய்வது என்றே இருக்கட்டும். ஆகக்கூடி கார்யம் ஒன்றுதானே?இப்படியே சின்னங்களும்;சாந்துப்பொட்டு, திருமண், விபூதி ஏதோ ஒன்று, ஆக நெற்றியில் சின்னம் இருந்தாக வேண்டும். மடிசார்ப் புடவை வலது பக்கம், இடது பக்கம், வெளியிலே கச்சம் தெரிவது, தெரியாதது - எதுவானாலும் கச்சம் என்ற சின்னம் பொது. ஸந்நியாஸியாகிவிட்டால்கூட ஏக தண்டம், த்ரி தண்டம் என்று ஏதோ ரூபத்தில் தண்டம் என்ற சின்னம் இருந்தாகணும்.

ஒரே மாதிரி ஸந்தியாவந்தனம், ஒரே மாதிரி பூஜை, பஜனை, விரத உபவாஸங்கள், க்ஷேத்ராடன தீர்த்தாடனங்கள், திவஸம் முதலியன பண்ணிக்கொண்டே வெவ்வேறே ஸித்தாந்தங்களில் ஸித்திக்காக முயற்சி பண்ணுவது என்றால் என்ன அர்த்தம்?ஒன்று, எந்த ஸித்தாந்தமானாலும் இவை வேண்டத்தான் வேண்டும் என்பது. இன்னொன்று வேறு வேறு மாதிரியான ஸித்தாந்தங்களுக்கும் ஒரே மாதிரியான ஆசாரணை என்பதால் ஆசாரமும் ஸித்தாந்தமும் நேராக ஸம்பந்தப்பட்டவையல்ல என்பது. ஆசாரமில்லாமல் தத்வ ஞானமோ, ஏதோ ஒரு ஸித்தாந்தத்தில் ஸித்தியோ வராது. ஒரு ஜீவனின் பழைய மூட்டை*4யெல்லாம்

தீர்க்கிற அளவுக்கு அவனுக்கு ஓயாமல் நிறையக் கர்மாக்களைக் கொடுத்து அழுக்கு மூட்டையை சுத்தம் பண்ணுகிறதாகவே எல்லா ஸம்பிரதாயத்து ஸமயாசாரமும் இருக்கிறபடியால், அதில் இதைத்தான் பண்ண வேண்டும் என்றில்லாமல், எதைப் பண்ணினாலும் ஆனால் நிச்சயமாகப் பண்ணத்தான் வேண்டும் என்று வழுவறப் பண்ணினால் இவனுக்குப் பிடிமானமுள்ள ஸித்தாந்தத்திலேயே ஸ்வாநுபூதி அடைய அதுவே இவனுக்கு ஸஹாயம் செய்துவிடும். ஆகையால் ஒருத்தன் தத்வத்தில் தான் பிறந்த குடும்பத்துக்கு வேறாக கன்விக்ஷன் இருக்கிறது என்பதற்காக அதன் ஸமயாசாரத்தைவிட வேண்டியதில்லை. "பூர்வைராசரித:குர்யாத்"என்ற உத்தரவை மீறிப் பதிதனாகப் போக வேண்டியதில்லை.

அப்படியானால் பூர்விகர்களின் ஸித்தாந்தத்துக்கு வேறாக ஒன்றில் மட்டும் பற்று வைக்கலாமா, அப்போது மாத்திரம் பதிதனாகிவிட மாட்டானா என்றால், இப்படிப் பண்ணுவது தப்பு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். எப்படி சொல்லலாம் என்றால் நான் சொன்ன ஸ்லோகமே " சிகாம் , புண்ட்ரம் "என்று வெளிச் சின்னங்களையும் " ஸூத்ரம் "என்று கர்மாக்களைச் சொல்லும் ச்ரௌத, ஸ்மார்த்த ஸூத்ரங்களையும், "ஸமயாசாரமேவ"என்று, ஒரு ஸமயத்துக்கு அநுகூலமானது என்று வெளி நடத்தையாக வைத்த ஆசாரங்களையும்தான், " பூர்வை : ஆசரித் : குர்யாத் "முன்னோர்களின் ஆசரணைப்படியே பண்ண வேண்டும் என்கிறதே தவிர, தத்வ நம்பிக்கை பற்றிச் சொல்லவில்லை.

தத்வம் அநுபவத்தில் ஸித்திக்க வேண்டுமென்றால் முதல் படியாக மனஸ் கன்னா பின்னா என்று போகாமல் அதை நன்றாக ஏதோ ஒரு நெறியால் கட்டுப்படுத்தத்தான் வேண்டும். உனக்கு ஜன்மா வாய்த்தபடி எந்த குலாசாரம் வந்திருக்கிறதோ அதுவே இதைப் பண்ணிவிடும். அதனால் இதை விடாதே பதிதனாய்ப் போகாதே.

"சில ஸமயாசாரங்களே கொஞ்சம் 'லீனியன்ட்'டாக இருந்துகொண்டு, மனஸைக் கட்டுப்படுத்துவதற்கு அவசியமான ஆசார அநுஷ்டானங்களை கொஞ்சம் விட்டுக்கொடுத்து விடுகின்றனவே!காயக் காய உபவாஸமிருந்தால்தான் கர்மா போகும்;வயிற்றிலே ஆஹாரமில்லாமலிருந்தால்தான் நன்றாகப் பிராணாயாமம், த்யானம் பண்ண முடிகிறது என்று பார்த்தால் கோவிலேயே 'திருப்பக்ஷி'('திருப்பள்ளி எழுச்சி'என்பது தான் இப்படியாயிருக்கிறது!) என்று அக்கார அடிசிலும் புளியோதரையும், ததியோரையும் போடுகிறார்களே!ப்ரஸாதமானதால் "வேண்டாம்"என்றாலும் தோஷமாகுமே"என்றால்' .. பரவாயில்லைப்பா!அதைச் சாப்பிடு. உன் மனஸு பகவானுக்குத் தெரியும். உனக்குச் சாப்பாட்டில் ஆசையில்லாவிட்டாலுங்கூட, அது வேண்டாம் என்றே இருந்தாலும்கூட, பகவான் பிறப்பித்த படி நமக்கென்று ஏற்பட்ட பெரியார்கள் பண்ணி வைத்த வழிக்கு அடங்கி நடக்க வேண்டுமென்றுதான் பிரஸாதத்தைச் சாப்பிடுகிறாய் என்பது ஸ்வாமிக்குத் தெரியும். அந்த மனப்பான்மையை மெச்சியே அவன் வெறும் வயிற்றில் செய்யும் த்யானத்தினால் ஏற்படுகிற பலனைக் கொடுத்துவிடுவான். ப்ராணாயாமம் என்று நீயாகப் பண்ணுவதை பகவானின் கிருபை பண்ணிவிடும்.

அல்லது ப்ரஸாதத்தை வாங்கிக்கொள்;ஆனால் உடனேயே சாப்பிடாமல் வீட்டுக்கு எடுத்துக்கொண்டுபோய் உன் தியானம் முடிந்தபின் சாப்பிடு. பூர்வாசாரத்தை விடப்படாது என்ற உறுதியிருந்தால் எப்படியாவது 'அட்ஜஸ்ட்'பண்ணிக் கொண்டுவிடலாம்.

நீ உன் பூர்விகர்களின் ஸித்தாந்தத்தை விட்டு விட்டாய் என்று கூட வெளியில் தெரியவேண்டியதில்லை. நீ பாட்டுக்கு ஸம்ஸ்கார பலத்தால், படிப்பால், அநுபவத்தால், பகவதநுக்ரஹத்தால் அந்த உன் உள் விஷயத்தில் போய்க் கொண்டிரு. வெளியிலே குலாசாரப்படியே பண்ணு. அதனால் சித்தத்தை சுத்திப் படுத்திக் கொண்டு ஸித்தாந்தத்தின் அந்தத்துக்குப் போ. அப்புறமும் கூடப் பூர்வாசாரத்தை விடாதே. சித்த சுத்தி ஸித்தித்து, ஸித்தாந்தமும் அநுபவமாகிவிட்ட பின் உன்னளவில் பூர்வாசாரமோ, பிற ஆசாரமோ எதுவுமே வேண்டாந்தான் என்றாலும் லோகத்திலுள்ள மற்றவர்களுக்கு வழிகாட்டுவதற்காக முன்னோர் கைக்கொண்ட ஆசார, அநுஷ்டானங்களை விடாமல் பண்ணிக்கொண்டிரு. இதுதான் பகவான் போட்டிருக்கும் (கீதைக்)கட்டளை.

ஜன்மாப்படி வாய்த்த ஒரு ஸமயாசாரத்தில் இருந்துகொண்டே வேறொரு ஸித்தாந்தில்

முன்னேற முடியும் என்பது வெறும் ஜீஷீஉவீதீவீறீவீமீ ஹ்தானா?யதார்த்தத்தில் அப்படிக் காட்ட முடியுமா?காட்டினால்தானே நம்பிக்கை வரும்?காட்டமுடியும். ஏ.வி. கோபாலாசாரியார் என்று ஒருவர் இருக்கிறார்*5. வைஷ்ணவ ஸம்ப்ரதாயப்படிதான் எல்லாம் செய்து வருகிறார். வைஷ்ணவ ஸித்தாந்தத்துக்குமேகூட நிறையத் தொண்டு செய்து வருகிறார். நல்ல பாண்டித்யம் உள்ளவர். வித்வத் ஸதஸுகள் நடத்துகிறார். ஆனாலும் நம்முடைய (சங்கர) ஆசார்ய பாஷ்யங்களிலும் அத்வைதத்திலும் அபாரமான பற்று வைத்திருக்கிறார். ராமகிருஷ்ணா மிஷனோடு நெருங்கி ஸம்பந்தப்பட்டிருந்தாலும் 'அண்ணா'என்கிறவர் வைதிகாசாரங்களின்படியே அநுஷ்டானம் செய்து வருகிறார். இங்கே வர ஆரம்பித்திருக்கிற வெள்ளைக்காரர்களையே பார்த்தால், சர்ச்சுக்குப் போய்க்கொண்டுதான் இருக்கிறார்கள், க்றைஸ்டிடம்தான் நிறைந்த பக்தி வைத்திருக்கிறார்கள். ஆனாலும் (அத்வைத) வேதாந்தத்திலேயே விச்வாஸமுடையவர்களாக இருக்கிறார்கள். சிஷீஸீஸ்மீக்ஷீஉமீ-ஆக இந்த ஸ்மார்த்த மடத்தில் விதிக்கப்பட்டிருக்கிறபடி ஆசார, அநுஷ்டானங்களை நன்றாகச் செய்துகொண்டே, என்னிடம் அபிமானம் மரியாதையும், ஆசார்யாளிடம் பக்தியும் செலுத்திக்கொண்டே, ஆனாலும் என்னிடமே "நீங்கள் என்னதான் சொன்னாலும் எங்களுக்கு அத்வைதத்தைவிட பக்திதான் பிடிச்சிருக்கு; அம்பாள் பூஜைதான் பிடிச்சிருக்கு;அவளே 'அத்வைதமாக ஐக்யம் பண்ணிக்கொண்டு விடுகிறேன்'என்று சொன்னால்கூட, 'வேண்டாம்!உன் பக்திதான் வேண்டும்'என்றுதான் சொல்ல வேண்டும் போலிருக்கிறது என்று சொல்கிறவர்களும் இருக்கிறார்கள். இதுவும் எந்த ஒரு ஸமயாசாரமும் ஒரு தனி மநுஷ்யரின் ஸித்தாந்தத்துக்கு பாதகமாகச் செய்து விடவில்லை என்பதற்கு நிரூபணமாகிறது.

இன்னொரு கேள்விக்கு நான் பதில் சொல்லியாக வேண்டும். இது வரையில் நான் தத்வம் என்பதை தனிப்பட்ட தெய்வ உபாஸனையோடு சேர்க்காமல் பிரித்தே பேசி வந்திருக்கிறேன். நம்முடைய மதத்திலோ ஜீலீவீறீஷீஉஷீஜீலீவீநீணீறீ-ஆக இருக்கிற தத்வ ஸித்தாந்தத்தோடேயே மீலீமீஷீறீஷீரீவீநீணீறீ-ஆக வருகிற விஷயமான மூர்த்தி உபாஸனையும் சேர்ந்திருக்கிறதது. இங்கேயும் பூர்வாசாரப்படியே ஒருவன் ஜன்மாவை பொருத்துச் செய்ய வேண்டுமென்றால் ஜாஸ்தி மோதல் ஏற்படும் போலிருக்கிறது. அதாவது:விசிஷ்டாத்வைதி என்கிறவன் வெறும் ஃபிலாஸஃபியாக, 'எல்லாருக்கும் பொதுவான ஒரு பரமாத்மாதான் ஜீவாத்மாவின் அந்தர்யாமியாக உள்ளே புகுந்து ஆட்டிக் கொண்டும் இருக்கிறது. ஜீவனானவன் முக்தியிலும்கூட அதோடு ஒன்றாகப் போய்விடாமல், தான் அதன் ஒரு அம்சமே என்பதைப் புரிந்துகொண்டு, பக்தியோடு அதன் ஆளுகைக்குக் கீழே தனியாகத்தானிருக்க வேண்டும்'என்று சொல்லிப் பொதுப்படையான ஒரு பரமாத்மாவோடு நிறுத்திவிடவில்லை. 'அந்தப் பரமாத்மா விஷ்ணுதான்;சிவன் இல்லை. அவனுக்கு இன்ன நிறம், இத்தனை கை, அவனுக்கு நிறைய அலங்காரம் பண்ணி ஆராதிக்க வேண்டும்'என்றெல்லாமும் சொல்கிறான். இப்படியே சைவ ஸித்தாந்தியும் இன்னொரு தத்வ சாஸ்திரத்தைச் சொல்கிறான். அது விசிஷ்டாத்வைதத்தைவிட அத்வைதத்துக்குக் கிட்டே போகிறது. என்றாலும் இதிலும் அத்வைத ஐக்யம் இல்லை. இவனும், பெயரே சைவ ஸித்தாந்தம் என்றிருப்பதற்கேற்க, பொதுவாக ஏதோ ஒரு பரமாத்மா என்று சொல்லாமல், 'அவர் சிவன் என்ற மூர்த்திதான்;விஷ்ணு இல்லை. அவர் 'இப்படியிப்படியிருக்கிறார். அவருக்கு ஆராதனையாக ஓயாமல் அபிஷேகம் செய்யவேண்டும்'என்றெல்லாம் சொல்கிறான். அத்வைதி அந்தப் பரமாத்மாவை வித்யாஸமில்லாமல் எல்லா மூர்த்திகளிலும் உபாஸிக்க வேண்டுமென்றிருந்தாலும், நடைமுறையில் (அத்வைதிகளான) ஸ்மார்த்தர் குடும்பங்களில் எத்தனையோ தலைமுறையாக சிபூஜைதான் பண்ணுவது, (விஷ்ணுவுக்கான) ஸாளக்ராம பூஜைதான் பண்ணுவது, (அம்பாளுக்கான) ஸ்ரீ வித்யா பூஜைதான் பண்ணுவது

என்றெல்லாம் வந்திருக்கிறது.

கேள்வி என்னவென்றால்:"எந்த ஸித்தாந்தமானாலும் உன் நம்பிக்கைப்படி வைத்துக்கொள்ளு, அதற்காகக் குலாசாரத்தை மாற்றாதே என்று சொன்னீர்கள். ஸரி. ஆனால் நமக்கு மூர்த்தி உபாஸனை, இஷ்ட தெய்வம் என்பதும் முக்கியமாயிருக்கிறதே!நம்முடைய மதத்தில் இத்தனை தெய்வங்களைச் சொல்லி, ஒவ்வொன்றுக்கும் புராணம், ஸ்தோத்ரம், க்ஷேத்ரம் என்று வைத்திருப்பதால் அவற்றில் ஒவ்வொருவனுக்கும் ஏதாவது ஒன்றில் விசேஷப் பிடிப்பு ஏற்படுகிறதே!இப்படியிருப்பதில், நான் விசிஷ்டாத்வைத வைஷ்ணவாகப் பிறந்தாலும் எனக்கு அத்வைதத்திலும்

சிவனிடத்திலுமே பிடிப்பு இருக்கிதென்றால், உங்கள் உபதேசப்படி அத்வைதத்துக்காக விசிஷ்டாத்வைத பூர்வாசாரத்தை விட வேண்டியதில்லைதான் என்று பார்த்தால், இதுவே என் பக்தி உபாஸனையில் குறுக்கே வந்து மோதுகிறதே!எனக்கு சிவனிடம்தான் ஸ்வாபாவிகமாக பக்தி என்றாலும் விஷ்ணுவை அல்லவா பூஜை பண்ணியாச வேண்டியிருக்கிறது?எந்தக் கர்மாவானாலும் ஸித்தாந்த அநுபவத்துக்குப் பூர்வாங்மான சித்த சுத்திக்குப் பிரயோஜனமாகிறது என்று மனஸை ஸரிப்படுத்திக் கொண்டு செய்கிறது போல, விஷ்ணுவை வைத்துப் பூஜை பண்ணினால் அது சிவபூஜைதான் என்று மனஸை எப்படி ஸமாதானப்படுத்திக் கொள்வது?"-என்று கேட்டால் என்ன பதில்?

Ü™ô¶ ¬êõó£èŠ Hø‰î å¼õ¼,° MwµMì‹î£¡ ð,F â¡Á Üõ˜ Þ«î «ð£ô, «è†ì£™ â¡ù ªê£™õ¶?vñ£˜˜î˜ å¼õ˜, "Cõ Ì¬üî£¡ Üè˜F™ Þ¼‰¶ õ‰F¼,Aø¶. âù,°(Ü‹ð£O¡) ÿê,ó Ì¬üJ™î£¡ ß´ð£´ Þ¼,Aø¶;Ü™ô¶ º¼èQì‰î£¡ î¡ù£™ ð,F õ¼Aø¶. ï£¡ â¡ù?"ð‡í â¡Á «è†ì£™ â¡ù ªêŒõ¶?

பூர்விகர் ஆசாரப்படிதான் செய்ய வேண்டும் என்பதை மாற்றிச் சொல்லலாமா?இல்லாவிட்டால் இவர்கள் ரொம்பவும் மனஸு நொந்து கஷ்டப்படுவார்கள் போலிருக்கிறதே!இவர்கள் நாஸ்திகர்களாகப் போகவில்லை. பூஜை பண்ணமாட்டோமென்று சொல்லவில்லை. நம் மதத்திலேயே சொல்லியிருக்கிற ஸ்வாமிகளில் ஒன்றைத் தான் பூஜிக்க ஆசைப்படுவதாகச் சொல்கிறார்கள். இவர்களை இன்ன குலத்தில் ஈஸ்வரன் பிறப்பித்ததால் இவர்கள் அதில் முன்னே இருந்தவர்கள் எப்படிச் செய்தார்களோ அப்படித்தான் செய்ய வேண்டும் என்று கட்டாயப்படுத்திச் சொல்லலாமென்றால், அதே ஈஸ்வரன் தானே இவர்களுக்குத் தன்னுடைய வேறு ஒரு மூர்த்தியில் விசேஷ பக்தியை உண்டு பண்ணியிருக்கிறான்?ஆகையால், "கர்மா-பக்தி-ஞானம் என்று வருகிற மூன்றில் மற்ற சாஸ்திர கர்மாக்களைப் பூர்வாசாரப்படி பண்ணு!பக்தி மட்டும், பக்தி கர்மாவான பூஜையை மட்டும் உன் இஷ்ட தேவதைக்கே பண்ணப்பா!ஞானம் என்ற ஸித்தாந்த ஸமாசாரத்தைத்தான் முன்னேயே சொல்லியாச்சு"என்று பதில் சொல்லி விடலாமா?

இதுவும் ஸமாதானப்பட மாட்டேன் என்கிறது. மற்ற சாஸ்திர கர்மா, பக்தி கர்மா என்று பிரிக்க முடியாமல் சேர்த்துப் பிசைந்தல்லவா வைத்திருக்கிறது? எல்லாருக்கும் பொதுவான ஸந்தியாவந்தனத்தில் கூட ஒருத்தர் "பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம்" என்றால் இன்னொருத்தர் "ஈஸ்வர"சப்தம் சிவனை ஞாபகமூட்டுகிறதேயென்பதால் ("ஈஸ்வரன்", "பகவான்"என்ற இரண்டும் ஒரே பரமாதாமாவைத்தான் சொல்கிறதென்றாலும்), மஹா விஷ்ணுவின் ப்ரீத்க்காகவே என்று ஸங்கல்பம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்து "ஈஸ்வர"என்கிற இடத்தில் "பகவத்"என்கிறார்!சைவனாகப் பிறந்து விஷ்ணு பக்தி பண்ண வேண்டுமென்றிருக்கிற ஒருவனுக்கு, "கேசவ, நாராயண"என்று சொல்லிக் கொண்டு நாமத்தைக் குழைத்துப் போட்டுக் கொண்டால் தான் மனநிறைவு இருக்கலாம்.

இவனை விபூதிதான் இட்டுக் கொள்ள வேண்டுமென்றால் அவன் (சிவ) பஞ்சாக்ரம் சொல்லித் தானே அதைக் குழைத்து இட்டுக் கொள்ளவேண்டியிருக்கும்?சிகை, ஸூத்ரம் ஆகியவற்றோடு 'புண்ட்ரம்'என்று நெற்றிக்கிட்டுக் கொள்வதிலும் பூர்வாசாரப்படிதான் பண்ண வேண்டும் என்றிருப்பதால், தெய்வத்தையும் மாற்றிக் கொள்ளக் கூடாது என்று வைத்துக்கொண்டால், அது ஸ்வபாவமான பக்திக்கு இடையூறாக ஆகிறதே!இப்படியாக வெளிச் சின்னம், நேராக பக்தி பூஜையில்லாத வைதிக கார்யம் இவற்றிலெல்லாங்கூட பூர்விகர்களின் ஸம்பிரதாயத்தில் நிலை நாட்டப்பட்டுள்ள ஏதோ ஒரு தெய்வத்தை ஸம்பந்தப்படுத்தியிருக்கிறதே!

அதனால், "நான் இவ்வளவு நேரம் சொன்னதை வாபஸ் பண்ணிவிடுகிறேன். பூர்வாசாரமும் வேண்டாம்;ஒன்றும் வேண்டாம். நீ எப்படியும் பகவானை நம்புகிறாய், அவனை மனஸார ஒரு ரூபத்தில் உபாஸிக்க வேண்டும் என்று தாபப்படுகிறாய் அதனால் உன்னை அவனே பார்த்துக்கொள்வான். பூர்விகர் ஆசாரத்தைப் பற்றிக் கவலைப்படாதேயப்பா"என்று சொல்லி விடலாமா?

இதுவும் நிம்மதிப்படமாட்டேனென்கிறது. எங்கே கட்டறுத்துக்கொண்டு போகலாமென்று ஜனங்கள் ஒரே இந்திரிய ஆட்டத்திலும் நாஸ்திகத்திலும் போய்க் கொண்டிருக்கிற இந்த

ஸமயத்திலே ஏதோ கொஞ்சம் தர்மம், பக்தி, ஆத்மார்த்தமான தத்வம் என்று நாட்டம் உள்ளவர்களையும் குல வழக்கத்திலிருந்து அவிழ்த்து ஸ்வதந்திரமாக விடுவதென்றால், இப்போது நல்ல லக்ஷ்யத்துக்காகவே இவர்கள் ஸ்வந்திரம் கேட்டாலும், அப்புறம் அதன் பழக்த்தாலாயே மற்றவற்றிலும் ஸ்வதந்த்ரமாகத் தெறிகெட்டுப்போக ஆரம்பித்துவிட்டால் என்ன பண்ணுவது என்று இருக்கிறது.

அநேக இடங்களில் இப்படி நடந்துமிருக்கிறது. பக்தி, தர்மம், தத்வம் என்ற அபிலாஷைகளிருக்கும் மற்ற ஜனங்களும் இவர்களைப் பார்த்து இவர்கள் குலாசாரத்தை விடுகிறார்களென்பதால் தாங்களும் விடலாம் என்பதற்குத் தானே ஊக்கம் பெறுவார்கள்?இதையெல்லாம் பார்த்தால், பகவானே என்ன சொன்னார், ரொம்ப நிர்தாக்ஷிண்யமாகத்தானே சொன்னார், அப்படித்தான் நாமும் குலாசாரத்தை ஒரு நாளும் விடப்படாது என்று சொல்லிவிடுவோமென்று தோன்றுகிறது.

குலதர்மம் என்பதற்காக யுத்தம் பண்ணிப் பிதாமஹர், பந்து, மித்ரர்களையெல்லாம் கொல்லுவதாவது என்று வில்லைப் போட்டுவிட்டு உட்கார்ந்த அர்ஜுனனிடம் பகவான் இப்படித்தானே சொன்னார் "உனக்கு சாஸ்திரம் இந்த ஸ்வதர்மத்தைத்தானே கொடுத்திருக்கிறது?ஒரு பிராம்மணனிடம் போய் நான் 'சண்டை போடு'என்று சொல்வேனா?உன்னை ஈஸ்வரன் க்ஷத்திரியனாகப் படைத்திருக்கிறானோ இல்லையோ?அப்படியானால் அந்தக் குலாசாரப்படிதான் நீபண்ண வேண்டுமென்றே அர்த்தம். 'அதன்படி பண்ணினால் குலமே போயிடும்; குலஸ்த்ரீகள் பாழாய்ப் போவார்கள்'என்றெல்லாம் நீ அழுது அடம் பண்ணிப் பிரயோஜனமில்லை. பலனைப் பார்க்காதே. ஈஸ்வரன் இப்படி ஜன்மா கொடுத்தானென்றால் அதற்கு சாஸ்திரம் எந்த வழியைக் காட்டுகிறதோ அப்படித்தான் போகணும். மற்றவர்களுக்குக் கஷ்டத்தை உண்டாக்குகிறோமே என்று பார்க்காதே. அல்லது உனக்கே இதனால் கஷ்டம், மனவேதனை, ரீ�ஹுவீறீமீ'ஹ் நீஷீஸீவநீவீமீஸீநீமீ இருந்தாலும் இதுகளையும் பார்க்காதே'என்று இப்படிச் சொல்லிக்கொண்டே போய், "இதற்கெல்லாம் மேலாக உன் பிராணனே போகிறதா?போகட்டும்!ஸ்வதர்மத்தின்படியே இருந்து கொண்டிருந்தால், அதற்காகச் செத்தாலும் மேல்.

ஸ்வதர்மே நிதனம் ச்ரேய :"

என்று ஒரே முடிவாகச் சொல்லிவிட்டார்!

"உன்னுடைய ஸ்வதர்மம் அதாவது பிறப்பாலேற்பட்ட குலதர்மம் குணமில்லாததாக, நல்ல அம்சங்களில்லாததாக இருந்து, இன்னொரு குலதர்மம் உசத்தியான அநுஷ்டானங்களுள்ளதாக இருந்தாலுங்கூட, நீ அதை எடுத்துக் கொள்ளப்படாது. ஸ்வதர்மந்தான் ச்ரேயஸ்"என்று பகவான் தீர்மானிக்கச் சொல்லி,

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண : பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத்

என்று அடித்துச் சொல்லி, அதற்கும் மேலே கடுமையாக

ஸ்வதர்மே நிதநம் ச்ரேய :

"î¡ °ôî˜ñˆF«ô Þ¼‰¶ ªè£‡´ ê£«õ ãŸð†ì£½‹ C«óòv":

பரதர்மோ பயாவஹ:

"HøˆFò£¡ î˜ñ‹ ñý£ ðòƒèóñ£Œ º®»‹ â¡Aø£˜*6.

ஸரி, பகவானே சொன்ன இந்த முடிவை அது எத்தனை கடுமையாய்த் தோன்றினாலும் பகவான் சொன்னதென்பதால் அதற்கு மேல் க்ஷேமமில்லையென்று நாமும் முடிவாகச் சொல்லிவிடலாமென்றால், முடியவில்லை.

ஏன்?பூர்வாசாரத்தை விடலாமா என்று கேட்கிறவர்களின் இன்னொரு கேள்விக்குப் பதில் சொல்லியாக வேண்டியிருப்பதால் முடியவில்லை. இதுவும் நானே சொல்லிக்கொடுத்ததை வைத்துக்கொண்டு என்னையே வளைக்கிற கேள்விதான்!

நம்முடைய பூர்விகர்கள் என்று எட்டு, பத்து, இருபது தலைமுறைகளாகச் செய்து வருவதை

இப்போது நாம் பூர்வாசாரமென்று சொல்லி அதைத்தான் அநுஸரிக்க வேண்டுமென்கிறோம். அவர்களுக்கு முந்தி இன்னம் அநேகத் தலைமுறைகளுக்கு முன்னாலிருந்த 'பூர்விகப் பூர்விகர்'கள் செய்து வந்ததையும் இவர்கள் செய்து வந்ததையும் பார்த்தாலோ அதற்கு இது கொஞ்சம் மாறுதலாகவும், சிலதைக் கூட்டியும் குறைத்தும் காணப்படுகிறது. நானே சொன்ன விஷயந்தான்;அதாவது ஆயிரம் வருஷத்துக்கு முந்தி வரையில் ஸ்மார்த்த ஆசாரம் என்பதுதான் பொதுவாயிருந்து வந்திருக்கிறது. அப்புறம் தான் பல ஸம்ப்ரதாயங்கள் ஏற்பட்டு, ஆசார அநுஷ்டானங்களில் மாறுதல், கூடுதல், குறைதல் பண்ணியிருக்கிறது. அதற்கு அப்புறம் இந்தப் பிரிவுகளுக்கென்று அதனதன் ஆசார்ய புருஷர்கள் செய்த இந்தப் புதிய ஆசாரங்கள் (புதுசு என்றால் முழுக்கப் புதுசு இல்லை. முக்கால்வாசி பழைய வைதிகாசாரமாக இருப்பதுதான்;கால்வாசி வித்யாஸமாயிருக்கும் - இப்படிப்பட்ட ஆசாரங்கள்) தலைமுறை தலைமுறையாக வந்து இதுகளும் உறுதிப்பட்டுவிட்ட ஸமயாசாரங்தகளாக இப்போது ஆகிவிட்டிருக்கின்றன."இப்போது இந்த ஸமயாசாரங்களையும் யாரும் மீறக் கூடாது என்கிறீர்கள். அது ஸரி. ஆனால் பொதுவான ஸ்மார்த்த ஸம்பிரதாயத்திலிருந்து ஒரு பிரிவாக ஒன்றை வைத்தபோது அந்தந்த ஆசார்ய புருஷர்களே அதுவரையிருந்த பூர்வாசாரத்தில் மாறுதல்கள் பண்ணித்தானேயிருக்கிறார்கள்?அப்போது அவர்களே பூர்வாசாரப்படி 'ஸ்ட்ரிக்ட்'டாகப் பண்ணவில்லை என்றுதானே ஆகிறது?"இதற்கு மேலே இன்னொன்று என்னை நன்றாக மடக்குகிறதாகக் கேட்கலாம்:"நாங்கள் பூர்விகர் ஆசாரத்தை மாற்றிக்கொள்ளவேண்டுமென்று எதற்காகச்?சொல்கிறோம் இஷ்ட தேவதா உபாஸனைக்காகத்தான். நாங்கள் நாஸ்திகமாகப் போகவில்லை. ஸித்தாந்தத்துக்காகவோ இஷ்ட தெய்வத்துக்காகவோ மாறலமா என்றுதான் கேட்டோம். ஸித்தாந்தத்துக்காக ஆசாரத்தை மாற்றவேண்டாமென்று காரணம் சொல்லி விட்டீர்கள். இப்போது இஷ்ட தெய்வ விஷயம் மட்டும் நிற்கிறது. இதிலும் பூர்வாசாரப்படிதான் போகவேண்டும் என்று சொல்லி விடலாமென்று நீங்கள் பார்க்கிறீர்கள்.

ஆனால் நமக்கு நேராகப் பூர்விர்களாக இருக்கிறவர்கள், அவர்களுக்கும் பூர்விகர்களாக இருக்கிறவர்கள் என்று பாகுபாடு செய்து ஆராய்ந்து பார்த்தால், நம் நேர் பூர்விகர்களே ஆதி பூர்விகர்களுக்கு வித்யாஸமாகப் போயிருக்கிறார்களென்றும், இந்த இஷ்ட தெய்வ ஸமசாரத்தில் வேத காலத்திலிருந்து ஆயிரம் வருஷத்துக்கு முன்வரை வந்த நெடுங்காலப் பூர்வாசாரம் எங்களுக்கு ஆதரவாகத்தானிருக்கிறதென்றும் தெளிவாகத் தெரிகிறது. வேதத்திலோ, ஸ்மிருதிகளிலோ, இந்த ஸ்வாமிதான் உசத்தி என்று எந்த ஒன்றையும் பரதெய்வம் என்று நிர்தாரணம் பண்ணி வைத்திருக்கவில்லை. எல்லாவற்றையும் ஒரே பரமாத்மாவாகச் சொல்லி, ஆனாலும் எவரெவருக்கு எந்த மூர்த்தியில் அபிருசியோ, மனஸு லயிக்கிறதோ அதை இஷ்ட தெய்வமென்று வழிபட இடம் கொடுத்திருக்கிறது;தனக்கு ஒன்றில்தான் கவர்ச்சியிருக்கிறது என்பதற்காக அதை பக்தி செய்தாலும், மற்ற தெய்வங்களை நிந்திக்கக் கூடாது என்று வைத்திருக்கிறது; இதற்காகவே பஞ்சாயதன பூஜை*7 என்று ஏற்படுத்தி, இஷ்ட தெய்வத்தை அதில் பிரதானமாக வைத்தாலும் மற்றவற்றையும் பரிவாரங்களாக வைத்துப் பூஜை செய்து ஸமரஸ பாவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லியிருக்கிறது -இதையெல்லாம் நீங்களே உபந்யாஸம் செய்திருக்கிறீர்கள். ஆகையால் அதற்கப்புறம் நடுவாந்தரத்தில் வந்த ஆசார்ய புருஷர்கள் சிவன்தான் உசத்தி, விஷ்ணுதான் உசத்தி என்று ஏதோ ஒன்றை வைத்து அது எங்கள் குலாசாரமாக வந்திருக்கிறபோது, பிராசீனமான வைதிக தர்மத்துக்கு வித்யாஸமாகப் போய்விட்ட இந்தக் குலாசாரத்தை நாங்கள் மாற்றி, பிராசீன வழிப்படியே உபாஸனா விஷயத்தில் போனால் அது எப்படித் தப்பு?நாங்கள் சீர்திருத்தகாரர்களைப் போல வேதத்தின் கர்ம காண்டம், ச்ரௌத-ஸ்மார்த்த ஸூத்ரங்கள், தர்ம சாஸ்திரங்கள் இவற்றையெல்லாம் தூக்கிப் போட்டுவிட்டு, வேதாந்தந்தான் ஸாரம், பாக்கியெல்லாம் சக்கை என்று சொன்னால் தப்பு. இவை எல்லாவற்றையும் ஒப்புக்கொண்டே, 'இஷ்ட தெய்வ உபாஸனை இவற்றுக்கு ஸம்மதமானதுதான். இன்னும் சொல்லப் போனால் ஒரு தெய்வத்துக்கு மட்டுமே பரத்வம் சொல்வதுதான் ஒரிஜினலான சாஸ்திரங்களுக்கு சம்மதமாயிருக்காது'என்றே, இப்போது கட்டாயமாக ஏதோ ஒரு ஸ்வாமியிடம்தான் பக்தியாயிருக்க வேண்டும் என்கிற குலாசார ஏற்பாட்டிலிருந்து ஸ்வதந்திரம் கேட்கிறோம். கொஞ்சங்கூட வைதிக சாஸ்திரத்துக்கு விரோதமாக இல்லாத இந்த ஆசையை எப்படி நிராகரிக்கலாம்?"என்று கேட்கலாம்.

" 'ஸ்வதர்மே நிதனம் ச்ரேய:"என்றால், 'ஸ்வதர்மம்'என்று இப்போது வந்திருக்கிற குலதர்மமே

ஆதியிலிருந்த ஸ்வதர்மத்துக்கு இந்த அம்சத்தில் வித்யாஸமானதாகத்தானே இருக்கிறது?ஆகையால் அதைப் பழையபடியே - அதாவது ஒரிஜினலான ஸ்வதர்மமாக - மாற்றிக் கொண்டால் இது எப்படி தோஷமாகும்?க்ஷத்ரியன் தர்மத்துக்காக யுத்தம் பண்ணத்தான் வேண்டுமென்று ஆதியிலிருந்து அன்றைக்கு வரையில் இருந்த ஸ்வதர்மத்தைப் பற்றி பகவான் சொன்னதை, ஆதியிலிருந்து ஒரு விதமாகவும் பிற்பாடு வேறு விதமாகவும் குலாசாரம் மாறியிருக்கிற நிலையில் எப்படிப் பொருத்தலாம்?"என்று கேட்டுவிட்டால் என்ன பண்ணுவேன்?பகவான் சொன்ன பதிலை (மரணமே ஸம்பவித்தாலும் குலாசாரத்தைத்தான் பின்பற்ற வேண்டும் என்ற பதிலை) வற்புறுத்த முடியாமல் என் வாயைக் கட்டித்தான் போடுகிறது.

ஏற்கனவே கட்டு விட்டுக் கெட்டுப்போனது போதாது என்று புதிதாக எந்தக் கட்டுப்பாட்டையும் தளர்த்தி விடக்கூடாது என்கிற நியாயமும் இன்னொரு பக்கம் என்னைக் கட்டுப்படுத்துகிறது.

அதனால் ஒரு 'காம்ப்ரமைஸ்'பண்ணி வைக்கத் தோன்றுகிறது. இதைவிட்டால் வழியில்லையென்று, இரண்டையும் ராஜி பண்ணி ஒரு யோசனை சொல்கிறேன்:

இப்போது குலாசாரமாக எது வந்திருக்கிறதோ அதன்படியே பண்ணு;அதோடு கூட உனக்கு இஷ்டமானதாகவும் ஆதி வைதிகாசாரத்துக்கு விரோதமில்லாமல் எது இருக்கிறதோ அதையும் சேர்த்துக் கொள். அப்பா, தாத்தா பண்ணின மாதிரியே சிவ பூஜையோ, விஷ்ணு பூஜையோ பண்ணு. அதோடுகூட உன் இஷ்டதேவதை எதுவோ அதையும் சேர்த்துக் கொள்ளு. முடியுமானால் பஞ்சாயதன பூஜையாகவே பண்ணு. உன் இஷ்ட தேவதைக்குக் கொஞ்சம் ஜாஸ்தி அர்ச்சனை, அபிஷேகம், அலங்காரம் வேண்டுமானால் பண்ணிக் கொண்டு போ. எப்படியானாலும் இப்போது உனக்கு வாய்த்திருக்கிற குலாசாரத்தை விடாதேயப்பா!அதற்கு கௌரவம் கொடுத்து ரக்ஷிக்காமலிருக்காதேயப்பா!இந்த ஸம்பிரதாயத்துக்கு ஆசார்ய புருஷர்களாக வந்தவர்கள் தங்களுக்கு முன்னேயிருந்த பதினாயிரங்கால ஏற்பாட்டில் வித்யாஸங்களைக் கொண்டு வந்திருக்கிறார்களேயென்று அவர்களைக் கண்டனம் செய்யாதே, மரியாதைக் குறைச்சலாகப் பேசாதே, அவர்களை இந்தக் கால ரிஃபார்மர்களோடு சேர்த்து வைத்துவிடாதே. புதுச் சீர்திருத்தக்காரர்கள் பழசில் நூற்றுக்குத் தொண்ணூறைத் தூக்கிப் போட்டுவிட வேண்டுமென்கிறார்கள். ஆனால் ஸமீப நூற்றுண்டுகளுக்கு முன் வந்த வெவ்வேறு ஸம்பிரதாய ஆசார்யர்களும் கொஞ்சம் மாறுபாடாகப் போயிருந்தாலும் ஆதியிலிருந்தில் நூற்றுக்குத் தொண்ணூறை ஒப்புக் கொண்டு, தங்களை அநுஸரிப்பவர்கள் தொடர்ந்து அநுஷ்டிக்கும்படிச் செய்திருக்கிறார்கள். முக்யமாக, வைதிகமான நித்ய கர்மாநுஷ்டானங்களை அப்படியே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஸநாதன தர்மத்துக்கு முதுகெலும்பாக உள்ள வர்ணாச்ரம விபாகங்களை, அதனால் ஏற்பட்ட அதிகார பேதத்தை இவர்களெல்லாரும் ஒப்புக் கொண்டேயிருக்கிறார்கள். இதிலேகூடச் சிலபேர் சற்று 'ரிஃபார்ம்'மனப்போக்கு காட்டியிருக்கிறார்களென்றாலுங்கூட, தனி மநுஷ்யன் ஒருத்தன் பிரேமையினாலும் நைச்யத்தாலும் ஸம பாவனையாலும் வித்யாஸம் பார்க்காமலிருப்பதைத் தான் ஆதரித்திருக்கிறார்களே தவிர, ஸமூஹத்திலேயே இப்படிப்பட்ட பிரிவுகள் இருக்கக்கூடாது என்று எடுத்துப் போட்டுவிடவில்லை என்பதை கவனிக்க வேண்டும். தங்களுக்கு முற்பட்ட சாஸ்திரத்தில் ஏன் கூடுதல் குறைச்சல் பண்ணினார்களென்றால், அந்தந்தக் காலத்தில் வேறே சிலபேர் இதற்கு எதிர்த்திசையில் ரொம்ப தூரம் பூர்வ சாஸ்திரத்திரத்துக்கு விரோதமாக இன்னொரு விதமாகப் போயிருக்கலாம். அந்தச் சூழ்நிலையில் மறுதிசையில் கொஞ்சம் கூடுதலாகவே போனால்தான் தாக்குப் பிடித்து நிற்க முடியும் என்று (இந்த ஆசார்யர்கள்) இப்படிச் செய்திருக்கலாம். விஷ்ணுதான் நிஜமான ஸ்வாமி என்று ஒருத்தர் ஸித்தாந்தம் செய்தாரென்றால், அந்தக் காலத்தில் வேறே யாரோ விஷ்ணுவை ரொம்ப மட்டந்தட்டியிருக்கலாம்.அப்பைய தீக்ஷிதர் இருக்கிறார். பரம அத்வைதி, அதாவது அத்வைத லெக்சர் மட்டும் பண்ணுபவரில்லை, அநுபூதிமான். ஈஸ்வரன், அம்பாள், மஹாவிஷ்ணு ஒவ்வொருவருமே ஸாக்ஷாத் பரமாத்ம ஸ்வரூபம்தான் - இவர்கள் ரத்ன த்ரயம் - மும்மணிகள் -என்று எழுதியிருப்பவர். அப்படிப்பட்டவரே பரமேஸ்வரனைப் பற்றி மற்ற தெய்வங்களைவிட ரொம்ப அதிகமாக எழுதி, சிவ மஹிமையையே விசேஷமாக நிலைநாட்டியிருக்கிறார். காரணம் என்னவென்றால் அந்தக் காலத்தில் வீர வைஷ்ணவர்களின் செல்வாக்கு மித மிஞ்சிப் போயிருந்தது.

சிஷ்ஸ்ஷேஸீமீ மீக்ஷீஸீமீ பண்ணுவதற்காகவே இவர் சிவபரமாக அதிகம் செய்ய வேண்டியிருந்தது. இப்படி ஒவ்வொரு ஆசாரியரின் காலத்தில் பூர்வாசாரத்துக்கு ரொம்பவும் விரோமாக ஒரு போக்கு ஏற்பட்டிருந்தது என்பதாலேயே அதற்கு ஷீஜீஜீஷீஉவீமீ மீ பீவீக்ஷீமீநீமீ வீஷீஸீ-ல் இவர்களும் அதற்கு கொஞ்சம் வித்யாஸமாகப் போகும்படி ஏற்பட்டிருக்கலாம்.

தன் தெய்வம் உசந்தது என்பதனால் அவர்கள் இன்னொன்றை மட்டம் தட்டினார்கள், நிந்தித்தார்கள் என்பதற்காக நீ அப்படிப் பண்ணாதே. நிந்திக்கிறார்களே என்று அவர்களையும் நிந்திக்காதேயப்பா!பயமோ விநயமோ இல்லாமல் சாஸ்திரக் கட்டுப்பாடுகளை மீறுகிற நம் காலத்தவரைப் போலில்லாமல், பழைய ஏற்பாடுகளில் நிரம்ப ச்ரத்தா பக்திகளுடன் ஜனங்கள் அடங்கியேயிருந்த அந்த நாளிலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சற்று வித்யாஸமாகப் போன இந்த ஆசார்ய புருஷர்களை அநுஸரித்துப் போயிருக்கிறார்களென்பதிலிருந்தே அவர்களிடத்தலே ஒரு ஸத்யத்தின் சக்தி இருந்திருக்கிற தென்று தெரிகிறது. இப்போதைய ரிஃபார்மர்களைவிட நிச்சயமாக ஸொந்த வாழ்க்கையில் அவர்கள் ரொம்பப் பெரியவர்களாகவும் சீலமுடையவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். அது மட்டுமில்லை. இப்போது சில ரிஃபார்ம்களின் காரண புருஷர்கள் சீலமுள்ளவர்களாயிருந்தாலும், அப்புறம் அந்த மூவ்மெண்டில் அப்படிப்பட்டவர்களை அபூர்வமாகத்தான் பார்க்க முடிகிறது. நம் மதத்துக்குப் பெருமையே ஆதியிலிருந்து இங்கேதான் கூட்டங் கூட்டமாக மஹான்களும், ஸாதுக்களும் தோன்றி வந்திருக்கிறார்களென்பதுதான். லோகத்தில் வேறெங்கும் இல்லாத விதத்தில் நம் தேசத்தில் தான் ஆசார அநுஷ்டானங்கள் வெகு கட்டுப்பாட்டுடன் அநுஷ்டிக்கப்பட்டிருக்கின்றன;இங்கேயேதான் லோகத்தில் வேறெங்கேயும் பார்க்க முடியாத அளவுக்கு மஹான்களும் தோன்றியிருக்கிறார்கள் என்பதிலிருந்தே இந்த ஆசார அநுஷ்டானம்தான் சீலத்தின் உயர்வுக்குக் காரணம் என்று தெளிவாகத்தெரிகிறது, இந்த அபிப்ராயத்துக்கு பலமூட்டுவதாகவே பூர்வாசாரங்களை விட்டுவிட்ட சீர்திருத்த இயக்கங்களில் உத்தமர்கள் பெருவாரியாக வரவில்லை என்று பார்க்கிறோம். வைதீக சாஸ்திரங்களில் பெரும்பாலானவற்றை அநுஸரித்து. மற்றவற்றை மட்டும் மாற்றியிருக்கிற ஸம்பிரதாயங்களைப் பார்த்தாலோ இவற்றில் முதல் ஆசார்ய புருஷருக்குப் பிற்பாடும் ஏகப்பட்ட பெரியவர்கள், நிரம்ப யோக்யதையுள்ளவர்களாகவும். பகவானின் அநுக்ரகத்தைப் பிரத்யக்ஷமாகப் பெற்றவர்களாகவும், தங்களை ஆச்ரயித்தவர்களுக்கு அநுக்ரஹம் செய்யச் சக்தி வாய்ந்தவர்களாகவும் தோன்றியிருப்பதைப் பார்க்கிறோம். இன்றைக்கும் அவற்றில் நிறைய வாய்ப்பேச்சு என்றில்லாமல் நல்ல கண்டிப்பான அநுஷ்டானம் செய்த ஆயிரக்கணக்கானவர்களின் அநுபவபலம் என்பது,. ஒவ்வொரு ஸம்பிரதாயத்திலும் அதன் ஆசாரியரின் நாளிலிருந்து இன்றுவரை தலைமுறை தலைமுறையாக வந்து அவை ஒவ்வொன்றுக்கும் உரமூட்டியிருக்கிறது. தாய்மரத்திலிரந்து கொஞ்சம் பிரிந்தே வந்த விழுதும் அப்புறம் மரமாகி வஜ்ரம் பாய்ந்து உறுதிப்பட்டுவிட்டதைப்போல, இப்போது இந்த ஸம்பிரதாயங்கள் எல்லாவற்றிலுமே அதற்கான ஸமயாசாரமென்பது நன்றாக ஸாரத்துடன் கெட்டிப்பட்டிருக்கிறது. ஸொந்த கன்விக்ஷன் இருக்கிறதா இல்லையா என்பதையே நினைக்காமல், 'அப்படி நினைக்கிறதே பாபம்;நமக்கென்று ஏற்பட்ட ஸமயாசாரம் இதுதான்;ஒரு அப்பா அம்மாவுக்குப் பிறந்தோமென்றால் அவர்கள் எப்படியிருந்தாலும் அவர்களையே தெய்வமாகக் கொள்வதுபோல, நாம் இந்த ஸம்பிரதாயத்தில் பிறந்து விட்டதால் இதுதான் நமக்கு தெய்வம் மாதிரி'என்கிற விஸ்வாஸத்துடன், தியாக புத்தியுடன் இவ்வழிகளைப் பின்பற்றினால் முன்னோர்களின் அநுஷ்டான பலம் இன்றைக்கும் இவற்றில் போகிறவர்களைத் காப்பாற்றும்.

ஆனபடியால் ஸமீபத்தில் ஏற்பட்டிருக்கிற சீர்திருத்த மதங்களோடு இவற்றைச் சேர்த்து விடாமல், சீர்திருத்த மதங்கள் மாதிரியில்லாமல் ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம் எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளும் ஸம்பிரதாயங்களில் பிறந்தவர்கள் அவற்றின் ஆசரணைகளை விடுவது விரும்பத்தக்கதல்ல. அவற்றுக்கு அதிகமாக, ஆதி வைதிக மரபுக்கு ஸம்மதமானதாகத் தாங்கள் இஷ்டப்படுகின்றவைகளையும் சேர்த்துக்கொண்டு செய்யவேண்டும். இதில் முடிந்த மட்டும் ஸொந்த இஷ்டத்தை விட்டுக் கொடுத்து, தியாகம் பண்ணி, அந்தந்த ஸமயாசாரத்தையே பின்பற்ற வேண்டும்.

இந்தத் தியாக பலனாகவே ஈஸ்வரன் நாம் விரும்புகிற நிறைவை அநுக்ரஹித்து விடுவான்.

'என்ன கர்மா பண்ணினோமோ, அதனாலேயே பகவான் இப்படி மனஸ் பூர்ணமாக ஏற்றுக் கொள்ள முடியாத குலாசாரத்திலே பிறக்கப் பண்ணியிருக்கிறான் ஆனதால் அப்படியே அநுபவித்துத் தீர்த்து விடுவோம்'என்ற புத்தியை முடிந்த மட்டும் வளர்த்துக் கொள்ள வேண்டும். கட்டு விட்டுப் போன பிறகு தேசத்தில் ஏற்பட்டிருக்கிற அனர்த்தைதைப் பார்த்து, இதற்கு நாமும் பலம் கொடுத்து விடக்கூடாது என்ற தீர்மானத்தின்மேலே, நம் ஸொந்த அபிலாக்ஷகளையும் லக்ஷ்யங்களையுங்கூட முடிந்த மட்டும் ஒதுக்கிவிட்டு, ஒரு கட்டுப்பாட்டிலே ஒட்டிக் கொண்டிருப்பதைத்தான் இப்போது ஆஸ்திகர்கள் என்று சொல்லிக் கொள்கிற எல்லாரும் தலையான கடனாகக் கொள்ள வேண்டும்.

பழைய வழிக்கு ரொம்பவும் விரோதமில்லாமலே நடுவில் உண்டான குல ஸம்பிரதாயங்களுக்கு மாறாக பக்தி பண்ண விரும்புகிறவர்கள் இஷ்ட தெய்வக் கொள்கைக்கு வைதிகாசாரம் இடம் தருகிறது என்பதோடு, தெய்வ பேதமில்லாத ஸமரஸ மனப்பான்மையே நம் ஸநாதன மதத்தின் தாத்பரியம் என்பதையும் நன்றாக மனஸில் வாங்கிக் கொண்டுவிட்டால் எல்லாம் ஸரியாகிவிடும். இப்படிச் செய்துவிட்டால் சிவ பக்தியுள்ள ஒரு வைஷ்ணவனுக்குத் திருமண்ணுக்குப் பதில் விபூதி இட்டுக் கொள்ளத் தோன்றாது. அந்தச் சாம்பலிலே வருகிற பரமேஸ்வரன் இந்த மண்ணிலும் வருவான் என்ற பக்குவம் வந்துவிடும். "கேசவ நாராயண"என்று நாமத்தைப் போட்டுக் கொள்ளும்போது சிவ நாமாவைச் சொல்வதில் இவனுக்கு உண்டாகக் கூடிய ஆனந்தம் இல்லாவிட்டாலுங்கூட, இந்த நாமங்களைச் சொல்வதிலும் வெறுப்பு இருக்காது. வைஷ்ணவனாகப் பண்ணவேண்டியதையெல்லாம் பண்ணிக்கொண்டே அதிலேயே ஓரளவுக்குத் தன் ஈஸ்வரனை பாவித்துக்கொண்டு, அதற்கு அதிகாமாகவும் தனியாக சிவனை பக்தி செய்வான். இவன் இப்படி விசால மனஸோடு இருந்தாலே குடும்பத்தாரும் பூஜையில் ஸாளக்ராமத்தோடு இவன் ஒரு சிவலிங்கத்தையும் சேர்த்துக் கொண்டால் ஆக்ஷேபிக்காமல் இருப்பார்கள். ஆக்ஷேபிக்கிறார்கள் என்றே வைத்துக் கொண்டாலும், அவர்களுடைய நம்பிக்கையை எதிர்த்து சண்டை போட வேண்டாம். பாவம், அவர்களுக்கு சிவனையும், தெரியாது, விஷ்ணுவையும் தெரியாது. அதனால் சிவனிடம் விரோத பாவம் என்றால்கூட அது தானாக இவர்கள் ஏற்படுத்திக் கொண்டதல்ல. இதுதான் நம் குலாசாரம் என்று நினைத்து (அது தப்போ, ரைட்டோ, அது வேறே விஷயம்;இப்படி நினைத்து) அந்த மரபுக்கு வித்யாஸமாகப் போகக்கூடாது என்ற பயபக்தியில்தான் விரோதம் கொண்டாடுகிறார்கள். அதை நாம் குலைக்க வேண்டியதில்லை. அவர்களுக்கு நல்லபடியாக வேண்டுமானால் எடுத்துச் சொல்லிப் பார்ப்போம். அந்த ஈஸ்வரனிடமே இதற்காகப் பிரார்த்தனை செய்வோம். நாம் சொல்லி அவர்கள் கன்வின்ஸ் ஆனபின்னுங்கூட, "ஆனாலும் நம் அகத்தில், நம் ஜாதியில் இப்படி லிங்க பூஜை பண்ணுவதில்லையே"என்றால், இந்த ஸமூஹக் கட்டுப்பாட்டுணர்ச்சியை நாம் மதித்து ஒப்புக்கொள்வோம். வீட்டுப் பூஜையில், இல்லாததைச் சேர்க்கக்கூட வேண்டாம். மானஸிகமாக சிவ ஸ்தோத்ரங்களைச் சொல்லிக்கொண்டு உபாஸனை செய்வோம்;சிவன் கோவிலுக்குப் போவோம்;அங்கு மனஸார சிவ தர்சனம் பண்ணி நமஸ்காரம் செய்வோம்;சிவ ஸம்பந்தமான உபந்யாஸம், பாராயணம் இவற்றில் மனஸைக் கொடுத்து ஈடுபடுவோம். இதுவுங்கூடக் கூடாது என்று அகத்துப் பெரியவர்கள், ஜாதிப் பெரியவர்கள் சொன்னால் கேட்கவேண்டுமென்பதில்லை. ஆனால் சண்டையும் போட வேண்டாம்.

வீட்டில் முருகன் உபாஸனை, உனக்கு அம்பாளிடம் பக்தி, அதனால் யாரோ பெரியவரை அழைத்து ஸ்ரீசக்ர பூஜை நடத்தவேண்டுமென்று ஆசையிருந்தால் முதலில் வீட்டிலே ஸுப்ரம்மண்யருக்கு ஷஷ்டி பூஜையோ கிருத்திகை விரதமோ மாவிளக்கோ காவடியோ என்ன செய்வார்களோ அதை செய்து விட்டு அப்புறம் ஸ்ரீசக்ர பூஜைக்கு ஏற்பாடு பண்ணு.

நீ வைஷ்ணவன்;உனக்கு அத்வைதத்தில் பற்று இருக்கிறது;ஆசார்யாளுக்குக் கைங்கர்யம் பண்ண வேண்டுமென்றிருக்கிறது;அதனால் எனக்கு பிக்ஷ செய்து வைக்க வருகிறேனென்றால் வா. தாராளமாக வா. ஆனால் அத்வைத மடத்துக்கு பிக் பண்ணுவதற்கு முன்னாடி உனக்கென்று ஜன்மாப்படி ஏற்பட்டிருக்கிற ஜீயர் யாரோ அவருக்கு பிக் நடத்திவிட்டு அப்புறம் இங்கே வா.

குலாசாரத்தை 'மாக்ஸிமம்'அநுஸரி. அதற்கு அதிகமாக உன் ஸொந்த உள்ளநுபவத்துக்கும் மனப்பான்மைக்கும் அநுகூலமாக உள்ளதைச் செய். இப்படி அதிகமாகச் செய்வது

குலாசாரத்தையும்விட, மூல வைதிக ஆசாரத்துக்கு ஸம்மதமானதாயிருக்க வேண்டுமேயன்றி குலாசாரத்தை விடவும் ஆதிவழியிலிருந்து விலகிப்போய் விட்ட ஸமீபகாலச் சீர்திருத்தங்களைச் சேர்ந்ததாயிருக்கக் கூடாது என்பது முக்கியம்

"நடுவாந்தரத்தில் ஏற்பட்ட குலாசாரங்களைவிட இன்னும் க்ளோஸாக மூலமான ஸ்ம்ருதிகளின்படிச் செய்யத்தானே நாங்கள் ஆசைப்படுகிறோம்?இது எப்படித் தப்பு?"என்கிற வாதத்தில் ஒரு குறை இருக்கிறது மூலமான ஸ்ம்ருதியிலேயேதான் " சிகாம் புண்ட்ரம் ச ஸூத்ரம் ச ஸமயாசாரமேவ ச * பூர்வை : ஆசரிதம் குர்யாத் அந்யதா பதிதோ பவேத் "என்றும் சொல்லியிருக்கிறது. அதாவது அந்த மூல ஸ்ம்ருதிகளே, "நாங்கள் ஜெனரலாகத்தான் ரூல்களைக் கொடுத்திருக்கிறோம். இந்த அமைப்புக்குள்ளே அவரவரும் பர்டிகுலராக அவர்களுடைய குலாசாரப்படியுள்ள ரூல்களைத்தான் சிகை, ஸூத்ரம், நெற்றிக்கிடுவது, மதத்தின் மற்ற ஆசரணை ஆகியவற்றில் பின்பற்றவேண்டும்'என்று சொல்வதாக அர்த்தமாகிறது. எனவே குலாசாரத்துக்கு வித்யாஸமாகப் போயும் மூல ஸ்ம்ருதிக்கு க்ளோஸாகப் போவது என்பதை ஸ்ம்ருதியே ஒப்புக் கொள்வதாகத் தோன்றவில்லை. ஸ்ம்ருதி வாழ்க்கையே பூர்ணமாகப் புத்துயிர் தந்து நிலைப்படுத்திய பகவத்பாதாளும், 'ப்ரச்நோத்தர ரத்ந மாலிகாவி'ல் "உயிரைவிடப் பிரியமானதாக எதை ரக்ஷிக்க வேண்டும்?"என்ற கேள்விக்கு, "குல தர்மத்தை"என்றே பதில் சொல்லியிருக்கிறார். வேத தர்மம், ஸ்ம்ருதி வழியான ஸ்மார்த்த தர்மம் என்காமல் அவரவருடைய குலதர்மத்தையே சொல்லியிருக்கிறார்:" ப்ராணாத் அபி கோ ரம்ய ?"" குல தர்ம :".

---

1. இது முந்தைய உரையோடு தொடர்ந்து பெரியவர்கள் அருளியது. எனினும் அனைவரும் முன்னோர் வழி செல்ல இறைவனைப் பிரார்த்தித்தவுடன் அதோடு உரை பூர்த்தியானது போல நிறுத்திவிட்டு, மீண்டும் ஏதோ தோன்றியது போலவே தொடர்ந்தார்கள். முதலில் நிறுத்திய இடத்திலேயே உரை வடிவத்துக்கு ஒரு நிறைவு ஏற்பட்டுவிட்டதால் அதோடு முந்தைய கட்டுரையை முடித்துத் தொடர்ச்சியை இங்கே தனியாகத் தருகிறோம்.

2. முந்தைய உரையில் 'பிறந்த குலாசாரமே உய்நெறி'என்ற பிரிவில்.

*1. º¬ø«ò Aøv¶õ‹, Þvô£‹, ªð÷¨î‹, ð£˜R ñî‹, n‚Aò˜ ñî‹, Îî˜ ñî‹ ºîLòõŸP¡ Ýî£ó ê£vFóƒèœ.

*2. „¼F¬òˆ î¿¾õ¶ „ªó÷î‹;v‹¼F¬òˆ î¿¾õ¶ vñ£˜˜î‹.

*3"ªîŒõˆF¡ °ó™"Þó‡ì£‹ ð°FJ½œ÷ "êƒèó ú‹Hóî£ò"ˆF™ ÞšMûòƒèœ ðôõŸ¬ø, è£íô£‹.

* 4 Ì˜õè˜ñ õ£ú¬ù„ ²¬ñò£ù Cˆîñô‹.

* 5 îŸ«ð£¶ ñ¬ø‰¶M†ì£˜

*6 W¬î 3.35

*7 ªîŒõˆF¡ °ó™ ºîŸ ð°FJ™, ªð£¶õ£ù î˜ñƒèœ â¡ø HKM½œ÷ â¡ø ð£˜‚è¾‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

விதி விலக்கான மஹான்கள்

அ தீத நிலையில் குலாசாரத்தை மீறிப்போன மஹான்களை நமக்கு மாடலாக நினைத்துக்கொண்டு விடக்கூடாது. அவர்களுடைய அஸாதாரண உள்ளநுபவத்தின் 'அதாரிடி'யிலேயே அவர்கள் எந்த எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் இப்படிச் செய்தார்கள். அப்படிப்பட்ட அநுபவம் நமக்கு வந்துவிட்டதாக பிரமை கொண்டு

விடக்கூடாது.

ஸித்தாந்தம் பண்ணி வாதித்து ஜயிக்கத் தெரியாதவர்களும் இப்படி அதீத அநுபவத்தின்மேல் குலாசாரத்துக்கு வித்யாஸமாக பண்ணினதுண்டு. ரண சண்டிகையை உபாஸிக்கிற ராஜபுத்ரர்களில் இப்படித்தான் மீராபாய் கிருஷ்ணபக்தி என்று, அதுவும் பாதிவ்ரயத்துக்குக்கூட வித்யாஸம் மாதிரித் தெரியும் நாயிகா பாவத்தில் பண்ணிக் கொண்டிருந்தாள். இவள் பண்ணினது பக்தி வழியிலேயும் குலாசாரத்துக்கு வித்யாஸம்;பொது ஸமூஹத்தின் ஸ்திரீ தர்மத்துக்கும் வித்யாஸம். பாரத தேசம் பூராவுக்குமே பாதிவ்ரத்யம் முக்யமென்றாலும், ராஜபுத்ர ஸ்திரீகள் அதிலே ரொம்பத் தீவிரமாகப் போனவர்கள் துருக்கர்களோடு யுத்தம் பண்ணி ராஜபுத்ர வீரர்கள் ரணபூமியில் மரணமடைந்த ஸமயங்களில் அவர்களுடைய பத்னிமார் கூட்டங் கூட்டமாக அப்படியே நெருப்பை மூட்டிக் கொண்டு அக்னிப் பிரவேசம் செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட தேசத்தில்தான் மீராபாய் புருஷன் அபிப்ராயத்துக்கு வித்யாஸமாகப் போனது மட்டுமில்லாமல், கிரிதரகோபாலனுக்கே தான் பத்னி என்ற பாவத்தில் பரவசமாகப் பாடியிருக்கிறாள். அவளை விஷங்கூட ஒன்றும் பண்ணவில்லை;அவள் பாட்டுக்கு அதையும் சிரித்துக்கொண்டே சாப்பிட்டாள் என்று கேட்கிறோம். அப்படி நாமும் விஷத்தைச் சாப்பிட்டு அது நம்மையும் ஒன்றும் செய்யாது என்றால் நாமும் அவள் மாதிரிப் பண்ணலாம்!'விஷங்கூட என்னை ஒன்றும் செய்யாதக்கும்'என்று சாலெஞ்சாக அவள் அதைப் பானம் பண்ணவுமில்லை!தன்னை அது பாதிக்காமல் கிரிதரகோபாலன் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்திக்கவுமில்லை!தனக்கே தெரியாத ஒரு ஆவேசத்தின் மேலே இப்படி மீராபாயைப்போல ஆசாரத்துக்கு வேறேயாகப் போனவர்கள் நமக்கு மாடல் இல்லை.

நன்றாக ஸித்தாந்தங்களை அறிந்து தர்க்கம் பண்ணி நிலைநாட்டுகிற ஸாமர்த்தியத்தையும் இப்பேர்ப்பட்ட அதீத அநுபவத்தோடு பெற்றிருந்த சில மஹான்களும் குலாசாரத்துக்கு வேறேயாகப் போயிருக்கிறார்கள். பிற்காலத்தில் ஹரதத்த சிவாசாரியார் என்று சைவத்தில் உயர்ந்த ஸ்தானம் பெற்ற ஒருவர் கஞ்சனூர் என்ற ஊரில் வைஷ்ணவராகப் பிறந்தவர்தான். ஆனால் அவர் கொதிக்கிற மழுவைக் கையில் பிடித்துக் கொண்டு சிவ உத்கர்ஷத்தை (மேன்மையை) ஸ்தாபித்து, சைவராக மாறியிருக்கிறார். திருமழிசையாழ்வார் என்கிறவர் சிவ வாக்கியர் என்றே பெயர் வைத்துக்கொண்டு, சிவபரமாகப் பாடின ஸித்தர்தான் என்றும், அப்புறம் பன்னிரண்டு ஆழ்வார்களிலேயே ஒருத்தராகிவிடுகிற அளவுக்குப் பெரிய விஷ்ணுபக்தராய்ப் போய்விட்டார் என்றும் கதை இருக்கிறது. இதெல்லாம் ஜெனரல் ரூல் இல்லை எக்ஸெப்ஷன்தான். அது ரொம்பவும் அபூர்வமாகத்தான் ஏற்பட்டிருக்கிறது. இப்போது அதை நமக்கு எக்ஸாம்பிள் என்று எடுத்துக் கொண்டால் எக்ஸெப்ஷன்தான் ரூல் என்றாகிவிடும்!

குமாரிலபட்டர் இருந்தார்*. அவர் ஒரு ஸந்தர்ப்பத்தில் பௌத்தர்களோடேயே இருந்து அவர்கள் மாதிரியே வாழ வேண்டியிருந்தபோதுகூட அத்யாவசியமான (வைதிக) நித்ய கர்மாக்களை மட்டும் ரஹஸ்யமாகப் பண்ணிக் கொண்டிருந்தாராம் கூன் பாண்டியன் சமணனாகி விட்டபோது அவனுடைய பத்னி மங்கையர்க்கரசி ரஹஸ்யமாகவே வஸ்திரத்துக்குள்ளே விபூதி இட்டுக் கொள்வாளாம் முழுக்க நம்முடைய மதத்திலேயே அவர்கள் கன்விக்ஷன் உள்ளவர்களாயிருந்தாலும் force of circumstance-ல் (சூழ்நிலையின் நெரிசலில்) மதாந்தரத்தை அநுஸரிப்பவர்களைப்போல வெளியில் காட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் பிற்காலத்தில் இவர்களே ஹிந்து மதம் புது ஜீவனோடு எழும்புவதற்குக் காரணமாயிந்திருக்கிறார்கள். நம் தேசத்தில் வடக்கே பௌத்தம் தலைசாய்வதற்கு முக்கிய காரணமாயிருந்தவர் குமாரிலப்பட்டர். அவர் குமாரஸ்வாமியின் அம்சம். அதேபோலத் தென்தேசத்தில் ஜைனம் நலிந்து வைதிக மதம் புத்துயிர் பெறக் காரணமாயிருந்த ஸுப்ரம்மண்ய அவதாரந்தான் ஞானஸம்பந்தரென்றால், அந்த ஞானஸம்பந்தர் இப்படிப்பட்ட பெருமையை கொள்வதற்குக் காரணமாக அவரை மதுரைக்கு வரவழைத்தது மங்கையர்க்கரசிதான். அவளை அறுபத்துமூன்று நாயன்மார்களிலேயே ஒன்றாகச் சேர்த்திருக்கிறது. அதாவது குமாரிலபட்டர், மங்கையர்க்கரசி ஆகியவர்களும் நம் லெவலுக்கு ரொம்பவும் மேலேயிருந்தவர்கள். ஆனாலும் குமாரிலபட்டர் குலாசாரத்தை விட்டு பௌத்தர்களின் ஆசாரத்தைக் கொஞ்சகாலம் அநுஸரித்தாரென்றால் அது அவர்களுடைய ஸித்தாந்தங்களை ஒன்றுவிடாமல் தெரிந்து கொண்டு, அப்புறம் அதற்குப்

பதிலுக்குப் பதில் சொல்லி, ஹிந்து மதத்தை - அதாவது குலாசாரத்தை - இன்னும் நன்றாக நிலைநாட்ட வேண்டுமென்பதற்காகவே நல்ல உத்தேசத்தோடேயே இப்படிச் செய்ததுங்கூடப் பாபம் என்று நினைத்து, ஸுப்பரம்மண்ய அம்சமேயான அவ்வளவு பெரியவர் பிற்காலத்தில் பிராயச்சித்தமாக தம்மைச் சுற்றி உமியைக் கருக்கிக்கொண்டு அதிலேயே கொஞ்சங் கொஞ்சமாகப் பிராணத் தியாகம் செய்தார். குலாசாரத்தை விட்டதால் பதிதனாவதற்குப் பதில் இப்படி கோர மரணம் ஏற்படுத்திக் கொள்வதே மேல் என்று அவர் காட்டினது தான் நமக்குப் படிப்பினையே தவிர, நடுவிலே அதை விட்டது அல்ல மங்கையர்க்கரசி புருஷன் வழியைப் பத்னி மீறவே கூடாது என்பதற்காகத்தான் அவன் ஜைனனாகி விட்டபோது, தானும் நம்முடைய குலாசாரத்தைத் தைரியமாக வெளிப்பட அநுஸரிக்காமலிருந்தது;தன் இஷ்டப்படி நடக்கவேண்டும் என்று அல்ல.

---

* "தெய்வத்தின் குரல்"முதற்பகுதியிலுள்ள 'முருகனின் வடநாட்டு அவதாரம்'என்ற உரை பார்க்க.

---

### தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

#### மதாபிமானிகளின் கடமை

இ ப்போது நாம் என்ன பண்ணவேண்டுமென்றால், ஹிந்து மதத்திலேயே உள்ள பிரிவுகளில் ஏற்பட்டிருக்கிற குலாசாரங்களில் நமக்குப் பிறப்பினால் எது அமைந்திருக்கிறதோ அதில் நிறைவு ஏற்படாமல் இதே வைதிக மரபில் இன்னொரு விதமான ஆசாரத்தில்தான் நிறைவடைகிறோம் என்றாலுங்கூட, எப்படிக் குமாரிலபட்டரும் மங்கையர்க்கரசியும் வெளிப்பட அன்ய மதங்களை அநுஸரித்தாற்போலிருந்துகொண்டு, உள்ளுக்குள் ஸொந்த மதத்திலேயே பற்றோடிருந்தார்களோ, அப்படி, வெளிப்பட குலாசாரத்தையே பின்பற்றிக் கொண்டு மனஸுக்குள் மட்டும் நமக்கு இஷ்டமான உபாஸனையை வைத்துக்கொள்ளவே பிரயத்னம் செய்ய வேண்டும். நம்முடைய உள்மனஸின் பற்றுதல் ஆழமானதாக, உண்மையானதாக இருந்தால் நிச்சயம் அந்த இரண்டு பேரையும் போல நாமே ஜயசாலிகளாகி தைரியமாய் நம் 'கன்விக்ஷன்'படி நடக்கிற நாள் வரும்.

"அதுவரை கன்விக்ஷன்படி தைரியமாய் நடக்கக் கூடாதா?இப்படி உள்ளொன்றும் புறமொன்றுமாக நடக்கும்படி உபதேசிப்பதற்கா நீங்கள் ஆசார்யன் என்று பேர் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?இது மட்டும் மித்யாசாரமில்லையா?"என்றால்-

ஒன்றைத் தப்பு என்பது எதற்காக?ஸ்வய நலனுக்காப் பண்ணினால்தானே அல்லது ஒருத்தனைக் கெடுத்து இன்னொருத்தனுக்கு நன்மை பண்ணுவதுதானே தப்பு?இதிலே அந்த மாதரித் தப்புகள் ஒன்றும் இல்லையே!'ஒருத்தனையும் கெடுத்து விடக் கூடாது;ஏற்கனவே ஸ்வாதந்திரியம் என்று சொல்லிக் கொண்டு குலாசாரங்களை விட்டுக் கெட்டுப் போய்க்கொண்டிருப்பவர்களுக்கு மதாபிமானம் உள்ள நாமும் வலுத் தந்து விடக் கூடாது. எவனையும் நாம் கெடுத்துவிடக் கூடாது. நமக்குப் பிரியமானது போனாலும் போகட்டு ம்'என்கிற தியாகத்தின் மேல் தானே இப்படிச் செய்யச் சொல்கிறேன்?அதனால் தப்பு இல்லை.

அதனால், வைதிகாசாரங்களையே விட்டு மதாந்தரங்களுக்கு மாறினால்தான் தப்பு என்றும், வைதிகாசாரங்களிலேயே ஒரு ஸம்பிரதாயத்திலிருந்து இன்னொன்றுக்குப் போனால் தப்பில்லை என்றும் நினைக்காமல், முடிந்த மட்டும் அவரவரும் குலாசாரப்படியே நடக்கத்தான் பாடுபடவேண்டும். '(பிறப்பால் ஏற்பட்ட மதத்தை) விட்டவன் பதிதனாகிறான் என்பது இவனுக்குப் பொருந்துமா, விட்டதோடு நாஸ்திகனாகவோ இதர மதமொன்றுக்கோ போகாமல் வைதிகாசாரத்திலேயே இன்னொன்றுக்குத்தானே போகிறான்?'என்றால், இவனளவில் ஒன்றை விட்டு விட்டு நல்ல வழியில் இன்னொன்றைப் பிடித்துக்

கொள்கிறானென்றாலும், இந்த ஸ்வதந்திர யுகத்திலே மற்றவர்கள் இவனைப் பார்த்து (குலாசாரத்தை) விடுவதில் மட்டும் துணிச்சலடைந்து, இன்னொரு ஆசாரத்தில் போகாமல், த்பபு வழியிலல்லவா போவார்கள்?அதாவது இவன் மற்றவர்கள் பதிதர்களாகப் போகத் தூண்டுதல் கொடுத்து விடுகிறானல்லவா?இப்படிப் பண்ணினவனை மட்டும் பதிதனாகிற தோஷம் விடுமா?

'உலகத்தில் ஏற்கெனவே கட்டு விட்டுப்போச்சு;அதனால் கெட்டுப் போச்சு;இதற்கு நாமும் உடந்தையாகவோ, ஊக்கம் தருபவராகவோ இருந்துவிடக் கூடாது'என்பதைத்தான் இன்றைக்கு மதாபிமானமுள்ளவர்களெல்லாரும் எல்லாவற்றுக்கும் மேலான தர்மமாக, கடமையாக நினைக்க வேண்டும். அப்படி நினைத்து, நம் அந்தரங்கத்திலே இப்படிக் குலாசாரத்துக்கு வித்தியாஸமான ஒரு விச்வாஸத்தை உண்டாக்கியிருக்கும் பகவானே அதை எப்படியாவது பூர்த்தி பண்ணி விடுவான் என்ற நம்பிக்கையோடுகூட, அவரவரும் தங்கள் குலாசாரப்படியே செய்து வந்தால் பகவான் நம் மூலம் உலகுக்கு க்ஷேமம் உண்டாக்கி, முடிவில் நமக்கும் நம் மனஸ் எப்படி நிறையுமோ அப்படிப்பட்ட நிறைவு உண்டாகும்படி அநுக்ரஹம் பண்ணுவான்.

---

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**ஆசாரம் என்பதன் இலக்கணம்**

ஸமயாசாரம், மதாசாரம் என்று சொல்லும்போது ஒரு மதத்தின் நெறி முழுவதையும் "ஆசாரம்"என்பது குறிப்பிடுகிறது. ஆனால் பொதுவிலே ஒருத்தர் ஆசாரமாயிருக்கிறார். என்றால், மடி-விழுப்பு என்று இரண்டு சொல்லிக் கொண்டிருக்கிறோமே (வார்த்தையிலாவது இன்றைக்கு வரையில் இருக்கிற 'மடி'அடியோடு மறந்து போய்விடக் கூடாதென்றுதான் இந்த உபந்நியாஸமெல்லாம் பண்ணுவது) அதிலே மடியாயிருப்பது என்றுதான் வைத்துக் கொண்டிருக்கிறோம். மடி, விழுப்பு பார்க்கிறதுதான் ஆசாரம்;சாஸ்திரத்தில் சொன்ன பிரகாரம் ஒருத்தர் சிகை வைத்துக் கொண்டிருக்கிறார். கச்சம் போட்டு வேஷ்டி கட்டிக் கொண்டிருக்கிறார். புண்ட்ர தாரணம் (நெற்றிக்கிடுதல்) பண்ணிக் கொண்டிருக்கிறார், நாள் நக்ஷத்ரம் பார்த்துக் காரியம் பண்ணுகிறார், க்ளப்புக்கு (ஹோட்டலுக்கு)ப் போவதில்லை, எவர்ஸில்வரில் சாப்பிடுவதில்லை என்றால் அவரை ஆசாரமாயிருக்கிறார், orthodox என்கிறோம்.

இப்படியாக ஒரு மதத்தின் எல்லா நெறிகளுமே அதன் ஆசாரந்தானென்றாலும், வெளி வாழ்க்கையில் அதன் கட்டுப்பாட்டுபடி நடந்து கொண்டு, அதில் சொல்லியிருக்கிற வெளியடையாளங்களான சின்னங்கள் முதலியவற்றை மேற்கொண்டு நடந்து காட்டுவதே குறிப்பாக ஆசாரம், ஆசாரம் என்று வழங்குகிறது.

ஆனால் ஆசாரம் என்பது முழுக்க வெளி விஷயந்தான் என்று நினைத்து விட்டால் அது தப்பு. வெளி ஸமாசாரங்களாலேயே உள் ஸமாசாரங்களை, உள்ளத்தை உயர்த்திக் கொள்ள உதவுகிறதுதான் ஆசாரம்*. அதோடுகூட நேராக உள்ளத்தின் ஸமாசாரங்களையும், வாழ்க்கை நெறிகளையுங்கூட ஆசார சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிறது.

'ஆசாரம்'என்பதைத் தமிழிலே நேராக 'ஒழுக்கம்'என்று சொல்லிவிடலாம். "உயிரினும் ஓம்பப்படும்"என்று திருவள்ளுவர் எதைச் சொல்லியிருக்கிறாரோ, அப்படி நம் பிராணனைவிட உசந்ததாகக் கருதி எதை ரக்ஷிக்க வேண்டுமோ அந்த தர்ம வழியே ஆசாரம். தர்மம் என்கிறது அகம், புறம் எல்லாவற்றிலும் எல்லா அம்சங்களையும் தழுவுகிற விஷயமல்லவா?

இங்கிலீஷில் 'character' என்பதாக ஒருத்தனின் உள் ஸமாசாரமான குணத்தையும்,

'conduct' என்று அவனுடைய வெளி ஸமாசாரமான நடத்தையையும் சொல்கிறார்கள். ஆசாரம் என்பதும் ஒழுக்கம் என்பதும் காரெக்டர், காண்டக்ட் ஆகிய இரண்டையும் ஒன்றாக்கிச் சேர்த்துக் கொடுப்பது. இது வெறுமனே morality,ethics என்று சொல்கிற இஹ வாழ்க்கைக்கான நன்னெறிகளாக மட்டுமில்லாமல் பர லோகத்துக்கும் உதவுவதான காரியங்களை ஸம்ஸ்காரங்களை, சினனங்களை, விதி நிஷேதங்களை (இன்ன செய்யலாம், இன்ன செய்யக்கூடாது என்பவற்றை)யும் சொல்கிறது.

புற விஷயம் மாதிரியிருந்தாலும் அக விஷயத்துக்கும் உபகாரம் பண்ணும்படியாகவும், இம்மைக்கு மட்டுமில்லாமல் மறுமைக்கும் உதவுவதாகவும் நம்முடைய ஆன்றோர்கள் வகுத்துத் தந்திருக்கிற முறையே 'ஆசாரம்'.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### புறத்திலிருந்து அகத்துக்கு

புறம் என்று எடுத்துக்கொண்டால், ரொம்பவும் ஃபிலஸாஃபிகலாக, வேதாந்தமாகப் போகிறபோது எல்லாவற்றுக்கும் புறத்தில், வெளியில் இருப்பது சரீரம். அன்னமயகோசம் என்று ஐந்து கோசங்களில் அதைத்தான் ஆத்மாவுக்கு ரொம்ப தூரத்தில் வைத்துச் சொல்லியிருக்கிறது. அது எப்படிப் போனால் என்ன என்று ரொம்பவும் உதாஸீனமாகத்தான் மஹா ஞானிகள் இருந்திருக்கிறார்கள். அநேக மஹான்களைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். மல மூத்ராதிகளைப் பூசிக்கொண்டு, புழுத்துப் போனதைத் தின்றுகொண்டு, ஸ்நானம் கிடையாது, பல் தேய்க்கிறதில்லை என்று, எங்கேயோ குப்பை கூளத்திலே கிடந்தார்கள் என்று. இதற்கெல்லாம் மாறாக ஒருத்தன் சரீர சுத்தியை இப்படியிப்படி உண்டாக்கிக் கொள்ள வேண்டும், ஆஹாரம் இப்படியிப்படி சுத்தமாயிருக்கணும், அவன் வஸிக்கின்ற இடத்தில் இப்படியாகப்பட்ட சுத்தமான அம்சங்களெல்லாம் இருக்க வேண்டும் என்பதையெல்லாம், ரொம்பவும் 'புற'த்திலேயிருந்து கொண்டு ஆசார சாஸ்திரங்களில் நிறையச் சொல்லியிருக்கிறது. நாம் இருக்கிற நிலையில் இப்படிப் புறசுத்தியில் கண்டிப்பும் கறாருமாக இருந்து ஆரம்பித்தால்தான், அப்புறம் என்றைக்கோ ஒருநாள் அந்த ஞானிகளுடைய நிலைக்குப் போகலாம். என்பதற்காகவே, அதாவது முடிவிலே முழுக்க ஆத்ம லோகம் என்கிற அகவாழ்விலே சேர்கிறதை லக்ஷ்யமாகக் கொண்டே சரீரம், வீடு, சுற்றுப்புறம் முதலான புற விஷயங்களின் சுத்தத்திலிருந்து ஆரம்பித்து ஆசாரங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்த வெளிவிஷயங்களில் என்ன கட்டுப்பாடு வேண்டிக் கிடந்தது என்று நாம் இஷ்டப்படி பண்ணினால், எல்லாம் மனஸ் இழுத்துக்கொண்டு போகிறபடிஸ போய், அதுவும் இல்லை, இதுவும் இல்லை என்றுதான் முடியும். ஆசாரம் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை உண்டாக்கி விடவில்லை என்று இந்த நாள் வேதாந்திகள் சொல்கிறது நிஜந்தான். அதாவது, உடனே, நேர்பலனாக உண்டாக்கவில்லை என்பது நிஜந்தான். ஆனால் என்றைக்கோ ஒரு நாளாவது நாம் நிஜமான வேதாந்திகளாக ஆக வேண்டுமானால், அதற்கு இப்போது நமக்கு இருக்கிற சரீர-குடும்ப-ஸமூஹ அபிமானங்களில் ஆரம்பித்துஸ இவற்றை எப்படி ஆசார ரீதியில் சுத்தப்படுத்திக் கொள்வது என்பதில் கவனம் செலுத்தி அப்படி பண்ணிக்கொண்டு போனால்தான் முடியும். ஆசாரமேயில்லாமல் ஆத்ம ஸம்பத்தை ஸம்பாதித்துக் கொள்வது என்பது எந்த ஒரு நாளுமே அந்த 'ஐடியல்'நிலைக்குப் போக முடியாமல், நம்மைக் கெடுப்பதில்தான் முடியும்.

" ஆசார ஹீநம் ந புநந்தி வேதா :"- அதாவது, ஆசாரமில்லாமல் எத்தனைதான் வேதத்தைப் படித்தாலும் அதனால் ஒருத்தனை வேதம் சுத்தனாக்கி விடாது என்று சொல்லியிருக்கிறது. எப்பேர்ப்பட்ட புண்ய தீர்த்தமானாலும் மண்டையோட்டிலே கொண்டு வந்தால் எப்படிப் பிரயோஜனப்படாதோ, எத்தனை நல்ல பசும் பாலானாலும் நாய்த்தோற் பையில் வைத்திருந்தால் எப்படிப் பானயோக்யமாகாதோ அப்படியே ஆசாரஹீனன் எவ்வளவு வேத

சாஸ்திரங்களெல்லாம் படித்தவனாயிருந்தாலும் அவனிடமுள்ள வித்யை அவனுக்கும் உதவாமல் லோகத்துக்கும் உதவாமலே போகும் என்று சாஸ்திரத்திலிருக்கிறது. வேதத்தைப்பற்றி, உபநிஷத்தைப் பற்றி நன்றாகப் பிரஸங்கம் பண்ணுகிறார்கள், ரொம்ப ஆராய்ச்சி பண்ணிப் புஸ்தகங்கள் எழுதுகிறார்கள் என்பதால் அப்படிப்பட்டவர்கள் சுத்தர்கள் என்று ஆகிவிடாது. தாங்கள் ஆசாரங்களை விட்டு விட்டதால் மற்றவர்களும் விடவேண்டும் என்று இவர்கள் சொல்வதற்கும் 'வால்யூ'கிடையாது.

சுத்தர்கள் எப்படி வாழ்கிறார்களோ, தங்கள் வாழ்க்கை யுதாரணத்தாலேயே என்ன உபதேசிக்கிறார்களோ அதற்குத்தான் மதிப்பு உண்டு. தலைமுறை தலைமுறையாக அநேக சுத்தர்கள் ஆசாரங்களை அநுஷ்டித்து வந்திருப்பதால்தான் அதற்கு ஸதாசாரம், சிஷ்டாசாரம் என்ற பெயர்கள் வந்திருக்கின்றன. ஸத்துக்கள் அநுஷ்டிப்பது ஸதாசாரம். ஸத்துக்கள் என்றால் நல்லவர்கள், உத்தமர்கள். சிஷ்டர்கள் என்றால் உசந்த குணமும் தோஷமில்லாத வாழ்க்கையும் உள்ளவர்கள்;'சான்றோர்', 'மேலோர்'எனப்படுகிறவர்கள். அப்படிப்பட்டவர்கள் சாஸ்திரப்படியான ஆசாரங்களை நன்றாக அநுஸரித்துத்தான் வந்திருக்கிறார்கள். ஞானத்திலே போய் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுவது, பக்தியினாலே ஈஸ்வரானுபவம் அடைவது என்ற இரண்டும் ஜீவனின் உள் குணத்தை மாற்றிக் கொள்வதாகவேயிருக்க, ஆசாரமெல்லாம் சர்மா, சின்னங்கள் முதலிய வெளி விஷயம் பற்றினதாயிருக்கிறது என்று சொல்பவர்கள் சொன்னாலும் இதை விட்டால் அதற்குப் போக வழியில்லை*.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

## ஆசார விஷயங்கள்

### ஆசாரத்தில் ஸாமாயன்ய தர்மங்கள்

வெளித்தூய்மையான 'சௌச'த்தையே ஆசாரம் என்பது முக்கியமாகக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. மடி-விழுப்புதான் ஆசாரத்தில் முக்கியமாயிருக்கிறது என்பதால் சௌசம் இதில் பிரதானம் என்பது வாஸ்தவந்தான். இந்த சௌசம் ஐந்து ஸாமானிய தர்மங்களில் நாலாவதாக வருகிறது. எல்லா ஜாதியாருக்கும், ஸகல ஜனங்களுக்குமான பொது அறங்களை மநுஸ்மிருதி 'ஸாமான்ய தர்மங்கள்'என்ற ஐந்தாகச் சொல்லி, இவற்றில் முதலில் அஹிம்ஸை, அப்புறம் ஸத்யம், மூன்றாவதாக அஸ்தேயம் (திருடாமலிருப்பது, அதாவது பொருளாசை பிடித்தலையாமலிருப்பது) என்பவற்றையும், அப்புறம் 'சௌசம்'என்கிற தூய்மையையும் சொல்லிவிட்டு, ஐந்தாவதாக இந்திரிய நிக்ரஹத்தை (புலனடக்கத்தை) விதித்திருக்கிறது*. ஆசாரம் என்பது பெரும்பாலும் இதில் 'சௌச'த்தின் கீழ் வருவதாகவே தோன்றினாலும், சாஸ்திரங்களை ஆராய்ந்து ஆலோசித்துப் பார்த்தால் ஐந்து தர்மங்களையுமே ஆசாரம் என்பது தழுவுகிறது என்று தெரியும். எப்படியென்று பார்க்கலாம்.

ஆஹார சுத்தியைப் பற்றி ஆசாரத்தில் சொல்கிற போது மாம்ஸ போஜனம் கூடாது என்கிறது. இதனால் ஸாமான்ய தர்மங்களில் முதலாவதான அஹிம்ஸையை ஆசாரமும் சொல்வதாக ஆகிறது. " ஸத்யான் நாஸ்தி பரோ தர்ம :"என்று தர்மங்களின் உச்சியில் ஸத்யத்தை வைத்திருப்பதால் ஸத்யமும் ஆசாரமாய் விடுகிறது ஆசாரத்திலேயே ஸத்யமும் இருக்கிறது என்பதற்கு இன்னொன்றும் சொல்கிறேன். ராஜதண்டனைக்கு ஆளாகி ஒருத்தன் ஜெயிலுக்குப் போனால் அவன் தோஷியாகி விடுகிறான் (தோஷமுள்ளவனாகி விடுகிறான்);பிராயசித்தம் பண்ணிக்கொண்டாலொழிய அவனை ஸமூஹ ப்ரஷ்டம் செய்துவிட வேண்டுமென்பது ஒரு ஆசாரவிதி. தர்மராஜ்யம் நடந்துவரும் காலத்தில் - சாஸ்திர காலங்களில் அப்படித்தான் நடந்து வந்தது - வாஸ்தவமாகவே குற்றம் பண்ணினவன்தான் தண்டனை பெற்று ஜெயிலுக்குப் போவான். குற்றம் இரண்டு தினுஸு - ஸிவில், கிரிமினல் என்று. ஸிவில் வியாஜ்யங்கள் என்பவை அநேகமாக ஏமாற்று, மோசடி முதலானவற்றைச் சேர்ந்தவைதான். அதாவது அஸத்யத்துக்காத்தான் ஸிவில் வியாஜ்யங்களின் பேரில் ஒருத்தன் ஜெயிலுக்குப் போவது. இதனாலேயே, ஒருத்தன் ஆசார சாஸ்திரப்படி ஜெயிலுக்குப் போகாமலிருக்க வேண்டுமென்றால் அவன் ஸாமானிய தர்மங்களில் இன்னொன்றான ஸத்யத்தைக் கடைப்பிடித்துத்தான் ஆகவேண்டும்.

அநேகமாக இப்படி அஸத்யமாக ஏமாற்றுப் பண்ணுவது இன்னொருத்தனுடைய சொத்தை ஏப்பம் விடுவதற்காகத்தானிருக்கும். வாங்கின கடனைத் திருப்பித் தரமாலிருப்பது, பொய்பத்திரம் எழுதி இன்னொருத்தன் பணத்துக்கு பாத்யதை கொண்டாடுவது, குத்தகைப் பணம் கட்டாமலிருப்பது ஆகிய இதெல்லாம் ஸாமானிய தர்மங்களில் மூன்றாவதாயிருக்கிற அஸ்தேயத்தின் கீழ் வந்து விடுகின்றன. கிரிமினல் கேஸ்கள் அடிதடி பண்ணிக் கொலை-கொள்ளை பண்ணுவதற்காக ஜெயில் தண்டனை கொடுக்கின்றன. அடிதடி, கொலை கூடாது என்பதால் அஹிம்ஸையையும் ஆசாரத்தில் implied-ஆக (உட்கிடையாக)க் கொண்டு வந்தாகி விடுகிறது. கொள்ளை, திருட்டு எல்லாமதான் ஸ்தேயம். இவற்றைச் செய்யாதிருப்பது அஸ்தேயம். பெண்களை மானபங்கப்படுத்துவது, வியபசாரம் முதலானவையும் ஸிவிலாகவோ, கிரிமினலாகவோ குற்றங்களில் வருவதால், ஜெயிலுக்குப் போகக் கூடாது என்ற ஆசாரவிதியே ஐந்தாவது ஸாமான்ய தர்மமான இந்திரிய நிக்ரஹத்தையும் வலியுறுத்துவதாக ஆகிவிடுகிறது.

இதுவும் தவிர (இந்திரிய) ஒழுக்கங்கெட்டவர் எந்த சாஸ்திர கர்மாவுக்குமே அனர்ஹர் (தகுதியில்லாதவர்) என்று வியக்தமாகவே அவர்களை ஆசார முறையானது ஒதுக்கி வைத்திருக்கிறது. இதேமாதிரி சௌச விதிகளோடு கூடவே ஸத்யம், தயை, தியாகம், லோப குணமில்லாமை, அஹிம்ஸை முதலானவற்றையும் நேரடியகாவே ஆசார நூல்கள் சிறப்பித்துப் பேசுகிற இடங்களுண்டு இன்னம் அநேக இடங்களில், 'இன்ன ஆசாரத்தை அநுஷ்டிக்காதவன் வாக்குப் பிரமாணம் தவறினால் என்ன பாபமோ, ஆயிரம் பொய் சொன்னால் என்ன பாபமோ, ஜீவஹிம்ஸை பண்ணினால் என்ன பாபமோ, ஸ்வர்ணஸ்தேயம் (பொன்னைத் திருடுவது) பண்ணினால் என்ன பாபமோ, பரதார கமனம் பண்ணினால் என்ன பாபமோ அப்பேர்ப்பட்ட பாபத்தை அநுபவிப்பான்'என்று சொல்லியிருக்கும். இங்கே சொன்ன பாப லிஸ்டைப் பார்த்தால் சௌசத்தின் கீழ் வருவதாகவே பெரும்பாலும் தோன்றுகிற ஆசாரமானது அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், இந்திரிய நிக்ரஹம் ஆகிய மற்ற நாலு ஸாமானிய தர்மங்களையும் அவலம்பித்து விடுகிறது (நிலைநாட்டி விடுகிறது) என்பது தெரிகிறது.

வித்யாப்யாஸம் செய்கிறவனுக்கு அந்தக் காலம் பூராவும் பிரம்மசர்யத்தை விதித்து (அந்த ஆச்ரமத்துக்கே 'பிரம்மசர்ய ஆச்ரமம்'என்றுதான் பெயர் வைத்திருக்கிறது) அப்புறம் கல்யாணமான பின்னால் இன்னின்ன நாளில்தான் தம்பதிகள் ஸங்கமனம் செய்யலாம், பித்ருதிமனம், விரதகாலம் போன்றவற்றில் கூடாது என்றெல்லாம் ஆசார நூல்கள் விதிப்பதால் இந்திரிய நிக்ரஹ விஷயத்தில் அவை ஸ்பெஷல் எம்ஃபஸிஸ் (தனியான அழுத்தம்) கொடுப்பது தெரியும்.

முடிவிலே இந்த ஆசாரம் எல்லாமே சித்த சுத்தியைத்தான் லக்ஷ்யமாகக் கொண்டவை சித்தமலம் நீங்க வழி இந்திரியங்களை அழுக்கு எடுத்து ஒழுக்கத்தில் கொண்டு வருவதன்றி வேறில்லை. தன்னிஷ்டப்படி திரிகிற இந்திரியங்களை ஒரு நெறியில் அடக்கிக் கொண்டு வரவே ஆசாரம் என்பதால் இந்திரிய நிக்ரஹமும் அதுவும் ஒன்றேதான்.

இப்படியாக எல்லா தர்மங்களும் ஆசாரத்துக்குள் வந்து விடுகின்றன.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### தர்மத்துக்கும் ஆசாரத்துக்கும் தொடர்பு

இன்னொரு தினுஸாயும் சொல்வதுண்டு அதாவது தர்மம் என்ற மருந்துக்கு ஆசாரம் பத்தியம் என்பார்கள். வியாதி தீர மருந்து மட்டும் சாப்பிட்டால் போதுமா?பத்தியமும் இருக்கணுமல்லவா?நல்ல ஜ்வரம் என்றால் மருந்து சாப்பிட்டுக் கொண்டே இன்னொரு பக்கம் பழையது சாப்பிட்டால் என்னவாகும் மருந்தின் எஃபெக்ட் போய்விடுமல்லவா?அப்படித்தான் குணத்தையும் நடத்தையையும் பொறுத்த தர்ம

மருந்தானது வெளித் தூய்மை, சின்னம் முதலானதைக் கொண்ட ஆசாரம் என்ற பத்தியமில்லாமல் பலிக்காது ..... வாஸ்தவத்தில் ஆசாரத்தின் சௌசம் வெளித்தூய்மை மட்டுமில்லாமல் உள்தூய்மைக்குமானதுதான். ஆனாலும் 'பாபுலர் கன்ஸெப்ஷ'னை (பஹுஜன அபிப்ராயத்தை) யொட்டி இப்படிச் சொன்னேன் ...... தர்ம மருந்துக்கு ஆசாரம் எப்படிப் பத்தியம் என்று ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன்:பித்ரு தர்ப்பணம் பண்ணவேண்டியது எல்லா ஜாதியாருக்குமான தர்மம். மூதாதையரை ஸ்மரித்து வேதமந்திரங்களையோ, ஸ்லோக ரூபமான மந்திரங்களையோ சொல்லி எள்ளும் தண்ணீரும் இறைக்க வேண்டுமென்பது நம்முடைய பித்ருகடன் தீருவதற்கு மருந்து. இதைப் பண்ணும்போது ஸ்நானம் செய்து, வேஷ்டியைக் கச்சமாய் உடுத்துக் கொண்டு, தெற்கு முகமாகச் செய்ய வேண்டும் என்றெல்லாம் சொல்கிற ஆசார விதிகள் பத்தியம். குளிக்காமல் உபவீதமாகப் பூணூலைப் போட்டுக்கொண்டு வடக்கு முகமாகத் தர்ப்பணம் பண்ணினால் பலனே கிடைக்காது.

'தர்மத்துக்கு ஆசாரம் அங்கம்', 'தர்மமே ஆசாரம்', ஆசரத்திலிருந்துதான் தர்மம் பிறக்கிறது ( ஆசார : ப்ரபவோ தர்ம :*) என்றெல்லாம் சொல்லும்படியாக தர்மமும் ஆசாரமும் ஒன்றேடொன்று பின்னிக் கொண்டிருக்கின்றன.

தர்மத்தை அநுஸரிப்பவர்களே ஸத்புருஷர்கள் சிஷ்டர்கள் எனப்படுகிறவர்கள், அதனால் ஆசாரத்தை ஸதாசாரம், சிஷ்டாசாரம் என்று சொல்கிறோம். ஆசாரமில்லாமலிருப்பது அநாசாரம்;ஆசாரத்துக்கு விரோதமாகப் பண்ணுவது துராசாரம். ஸஜ்ஜனங்கள் அநுஷ்டிப்பது ஸதாசாரம் என்கிறாற்போல் துர்ஜனங்கள் போகிற வழி துராசாரம் என்றும் சொல்லலாம்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**அனைத்தும் அடங்குவது**

ஆசாரம் என்பதில் எல்லா ஸாமான்ய தர்மங்களும் அடக்கம் என்கிற மாதிரியே இன்னம் அநேக ஸமாசாரங்களும் அதில் அடங்கியிருக்கின்றன. 'ஹெல்த்'துக்காக, 'ஹைஜீனு'க்காக ஆன ஸுகாதார விஷயங்கள், வைத்ய சாஸ்திர ஸம்பந்தமான விஷயங்கள், ஸைகலாஜிகலான விஷயங்கள், 'மொராலிடி', அன்பு முதலானவற்றின் மீதான ஸமாசாரங்கள் எல்லாமே நம் ஆசாரங்களில் வந்து விடுகின்றன. இது அத்தனையையும் ஆத்ம ஸம்பந்தமாக உசத்திக் கொடுப்பதுதான் அதன் சிறப்பு.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**த்ருஷ்ட-அத்ருஷ்ட பலன்கள்**

நமக்குப் புரிகிற ஸயன்ஸ், நமக்குப் பிடிக்கிற 'எதிக்ஸ்'(நன்னெறிக் கோட்பாடு) இவற்றுக்கு அநுஸரணையாயிருக்கிற ஆசாரங்களை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவற்றை 'ஸுபர்ஸ்டிஷன்'(மூட நம்பிக்கை) என்று தள்ளுவது தப்பு. நமக்குப் புரிகிறதும் பிடிக்கிறதும் நேருக்கு நேர் பலன் தருகிறவை. பல தேய்க்காவிட்டால் துர்கந்தமாயிருக்கிறது. பல்லில் வியாதி வருகிறது என்று பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. மது பானம் பண்ணினால் புத்தி கெட்டுப் போகிறது, குடி மோஹத்தில் குடும்ப வாழ்க்கையிலே அநேக அனர்த்தங்கள் ஏற்படுகின்றன என்றெல்லாம் நமக்குப் பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. அதனால் பல் தேய்க்கணும், மதுபானம் பண்ணக்கூடாது என்றெல்லாம் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் ஆசாரங்களை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் எல்லா ஆசாரமே இப்படிக் நம் ப்ராக்டிகல்

லைஃபில் (நடைமுறை வாழ்க்கையில்) ப்ரூவ் ஆவதாக இருந்தால்தான் ஒப்புக் கொள்வோம் என்றால் அது தப்பு.

ஏனென்றால் த்ருஷ்ட பலன் என்பதாகப் பிரத்யக்ஷத்தில் பலனைக் கொடுக்கிறவற்றோடு, நேராகத் தெரியாமல் ஒவ்வொரு கார்யமும் அத்ருஷ்டமாகவும் புண்ய-பாபங்கள் என்றாகிப் பலன் தருகின்றன. அத்ருஷ்டம் என்றால் இங்கே luck என்று அர்த்தமில்லை. அத்ருஷ்டம் என்றால் கண்ணுக்குத் தெரியாதது, அதாவது சிற்றறிவுக்குப் புரியாதது என்று அர்த்தம். ஒரு கார்யம் இந்த ஜன்மத்திலோ, ஜன்மாந்தரத்திலோ, அல்லது ஜன்மா இல்லாமலாக்கிப் பராமாத்மாவிடம் சேர்ப்பதிலோ கொடுக்கிற பலன்களையும் ஆசாரங்கள் சொல்கின்றன. இதற்கு 'அத்ருஷ்ட பலன்'என்று பெயர்.

' ப்ராத : ஸ்நானம் ப்ரசம்ஸந்தி த்ருஷ்டாத்ருஷ்ட பலம் ஹி தத் 'என்று சாஸ்திர வசனம். இங்கே இரண்டுவிதமான பலன்களும் ப்ராத ஸ்நானத்தினால் விளைவதாகச் சேர்த்துச் சொல்லியிருக்கிறது. "த்ருஷ்டபலன், அத்ருஷ்டபலன் இரண்டையும் ப்ராத ஸ்நானம் கொடுக்கிறது என்று அதைப் புகழ்கிறார்கள்"என்று அர்த்தம்.

ஸூர்யோதயத்துக்கு முந்தைய மூன்றே முக்கால் நாழிகை (ஒரு நாழிகை என்பது 24மினிட்)க்குப் பிராதக்காலம் என்று பேர். அருணோதயம் என்றும் சொல்வதுண்டு. அந்தக் காலத்தில் பச்சை ஜலத்தில் குளிப்பதற்கு பிராதஸ்நானம் என்று பெயர். ஆற்றில், குளத்தில் செய்தாலும் சரி, அகத்தில் மொண்டுவிட்டுக் கொண்டு செய்தாலும் சரி, தலைக்கும் ஜலம் விட்டுக் கொள்ள வேண்டும். (தலைக்கு தினமும் ஜலம் விட்டுக் கொள்வது ஸ்திரீகளுக்கு அவசியமில்லை. விரததினம், பித்ருதினம் தவிர மற்ற நாட்களில் அவர்கள் தலைக்கு மஞ்சள் ஜலம் புரோக்ஷித்துக் கொண்டாலே போதும்) பொதுவாகத் தலையோடு கால் பச்சை ஜலத்தில் காலங்கார்த்தாலேயே குளித்துவிட வேண்டும். இதன் த்ருஷ்ட பலன், அதாவது ப்ரத்யக் விளைவு முதலாவதாக தேஹ சுத்தி, உடம்பின் அழுக்கு போகிறதென்று நேரே தெரிகிறது. அதோடு அந்த வேளையில் குளித்து விடுவதால் தூங்குமூஞ்சித்தனம், சோம்பல் எல்லாம் போய், உத்ஸாஹமும் சுருசுருப்பும் உண்டாகின்றன. புத்தித் தெளிவும் ஏற்படுகிறது. இன்னம் மெடிகல் ஸயன்ஸ்படி சொல்லும்போது, இந்தப் பிராத ஸ்நானத்தினால் நரம்பு மண்டலமே உறுதியடைந்து, இப்போது 'நெர்வஸ் டிஸீஸ்'என்று பல ரூபத்தில் பரவிவருதெல்லாம் க்ஷீணித்துவிடும் என்கிறார்கள். அந்த வேளையில் ஸ்நானம் செய்வது உணர்ச்சிகளையும் குளிரப்பண்ணி சமனமாக்குகிறதென்பது இதன் ஸைகலாஜிகல் எஃபெக்ட்.

ஆனால் இந்த ஹைஜீன், மெடிகல் வால்யூ ஸைகாலஜி எல்லாவற்றையும் விட முக்யம் இந்தப் பிராதஸ்நானம் சாஸ்திரவத்தாக மந்திரடத்துடனோ, கோவிந்த நாம பூர்வமாகவோ பண்ணப் பட்டால் அது வெளி அழுக்கைப் போக்குவதோடு ஆத்மாவையும் சுத்தி செய்யப் பிரயோஜனப்படுகிறதென்பதுதான். சரீர அழுக்கு போகிறதும், மனஸிலே அப்போதைக்கு ஒரு குளிர்ச்சி ஏற்படுவதும் உடனே த்ருஷ்டமாகத் தெரிகிறது. 'நெர்வஸ் ஸிஸ்டம் ஸ்ட்ரெங்க்தன்'ஆவது போகப் போகத் தெரியும் ஆத்ம சுத்தி ரொம்ப நிதானமாகத்தான் தெரியும். பிராத ஸ்நானமே மந்திர பூர்வமாக, அல்லது பகவந் நாம பூர்வமாக விதிப்படி பண்ணப்படும்போது அதனால் நமக்கு ஏற்படுகிற புண்யத்தின் விளைவுகள், இதனால்தான் அது (பிராத ஸ்நானத்தின் புண்யத்தினால்தான் இந்த பலன் நமக்கு வாய்க்கிறது) என்று டைரக்டாகத் தெரியாமல் என்றைக்கோதான் உண்டாகும். இந்த ஜன்மாவிலோ இந்த லோகத்திலோகூட இல்லாமல் அது உண்டாகலாம். அந்த அத்ருஷ்ட பலன்தான் ஆசாரங்களின் லக்ஷ்யம். த்ருஷ்டத்தில் எத்தனை நன்மைகள் உண்டானாலும் அதெல்லாம் இரண்டாம் பக்ஷந்தான்.

இந்தக் காரியத்துக்கு இந்த விளைவு என்று டைரக்டாக நாம் கண்டுகொள்ள முடியாமலிருப்பவை அத்ருஷ்ட பலன்கள். அவை ஸாக்ஷாத் பரமேஸ்வரனின் சித்தப்படி நடக்கிற விளைவுகள். அவன் எல்லாவற்றையும் மூடி மறைத்து ஆட்டம் போடுகிறவன். இப்படி மாயை பண்ணுவதுதான் அவன் தொழில். அந்த மாயாவியே மஹா கருணையோடு மஹான்களாக, ரிஷிகளாக இருக்கப்பட்டவர்களுக்குத் தன்னுடைய திவ்ய சித்தத்தைக் கொஞ்சம் திறந்து காட்டுகிறான். அதனால்தான் நமக்கு ரஹஸ்யமாக இருக்கிற உண்மைகள் அவர்களுக்குத் தெரிகின்றன. பரம கருணையோடு அவற்றை லோகமும் உஜ்ஜீவித்துவிட்டுப் போகட்டும் என்று அவர்கள் சாஸ்திரங்களில் எழுதி

வைத்திருக்கிறார்கள். இப்படித்தான் அத்ருஷ்ட பலனைத் தருகிற ஸமாசாரங்களைப் பற்றி நமக்கு ஆசார விதிகள் செய்து கொடுத்திருக்கிறார்கள். இதில் நமக்குப் பிரத்யக்ஷ நிரூபணம் (practical proof) இல்லை, அல்லது இதற்கு scientific basis (விஞ்ஞான ரீதி அடிப்படை) இல்லை, அல்லது இது நம்முடைய social ideology-க்கு (ஸமூஹ வாழ்க்கைக் கொள்கைக்கு) ஒத்து வரவில்லை என்று சொல்லி அலக்ஷ்யம் செய்வது கொஞ்சங்கூட புத்திசாலித்தனமாகாது. நம் புத்தியின் நேர் proof-க்கு வராத விஷயங்களும் ஈஸ்வரனுடைய மஹா புத்தியில் இருக்க முடியும்;அவற்றை அவனோடு அவனாகக் கலந்திருந்த மஹான்கள் அறிந்து நமக்குச் சொல்ல முடியும் என்பதில் பக்தியும் சிரத்தையும் இருக்க வேண்டியது அவசியம். ஆசாரமென்பது மெகானிகலாக ஏதோ ஒரு ரொடீனை அநுஸரிப்பது மட்டுமில்லை. சரீர காரியத்தோடு இதில் மனஸின் பக்தி சிரத்தையும் கலக்க வேண்டியது ரொம்ப அவசியம். இல்லாது போனால் பலன் ஏற்படாது.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### செயல்களை ஈஸ்வரபரமாக்குவது

இப்படி மனஸையும் காரியத்தின்போதே ஈஸ்வரனிடம், நேராகவே அவனிடம், அல்லது அவனது சிப்பந்திகளாக, அம்சங்களாக இருக்கிற அநேக தேவதைகளிடம் கலக்கும்படிப் பண்ணத்தான் மந்த்ரங்களைக் கொடுத்திருக்கிறது.

பிராத ஸ்நானத்தை இப்படி தேஹத்துக்காக மாத்திரமில்லாமல் ஆத்மார்த்தமானதாக ஆக்கிக் கொடுக்கும்போது, முதலில் அருகம் புல்லையும் கொஞ்சம் சுத்தமான ம்ருத்திகையையும் (மண்ணையும்) தலையில் வைத்துக் கொள்ள வேண்டும். அப்போது அந்த அருகம் புல்லையும் ஈஸ்வரசக்தியின் ஒரு அம்சமான தேவதை என்று பக்தியோடு புரிந்துகொண்டு, அதை ஸ்துதித்து 'தூர்வா ஸூக்தம்'என்கிற மந்த்ரங்களைச் சொல்ல வேண்டும். 'அல்பப் புல்'என்கிறோமே அதைக்கூட ஈஸ்வராம்சம் என்று வேதமே ஸ்தோத்திரிக்கும் ஸூக்தத்தைச் சொல்ல வேண்டும். 'மண்ணாங்கட்டி'என்று ரொம்ப மட்டமாகச் சொல்கிறோமே, அந்த மண்ணையும் இப்படியே ஸாக்ஷாத் நாராயண பத்னியான பூப்பிராட்டியாகப் புரிந்து கொண்டு 'ம்ருத்திகா ஸூக்தம்'சொல்லிப் புல்லோடு தலையில் வைத்துக்கொண்டு குளிக்க ஆரம்பிக்க வேண்டும். ஸ்நானம் செய்யும்போது சொல்ல 'அகமர்ஷண ஸூக்தம்'என்று ஒன்று இருக்கிறது. இங்கே தேஹத்தின் ஸ்நானமே ஆத்மாவின் அழுக்கையும் அலம்பிவிட மந்திரங்கள் இருக்கின்றன. ஆத்மாவின் அழுக்கு என்பது அதன்மேல் படிந்திருக்கிற நம் பாபங்கள். 'அகம்'என்றால் பாபம். தேய்த்து அப்புறப்படுத்துவது 'மர்ஷணம்'. உடம்பைத் தேய்த்து ஸ்நானம் பண்ணும்போதே இப்படிப் பாபத்தையும் தேய்த்துக் கழுவி விடுவதற்கு 'அக மர்ஷண ஸூக்தம்'.வேத மந்திரங்கள் சொல்ல அதிகாரமில்லாதவர்கள் "கோவிந்தா கோவிந்தா!"என்று ஸ்நானம் செய்யவேண்டும். " கோவிந்தேதி ஸதா ஸ்நானம் "என்று இருக்கிறது. கோவிந்த நாமாவே ஆத்மாவுக்குப் புண்ய தீர்த்த ஸ்நானம்தான்.

கோவிந்த நாமாவே புண்ய தீர்த்தம் என்றதால் ஸ்நானமே பண்ணாமல் கோவிந்தா கோவிந்தா என்று சொல்லிவிட்டு, விழுப்போடேயே சாப்பிட்டுவிடலாம் என்று குதர்க்கம் பண்ணிக் கொள்ளக்கூடாது. வாஸ்தவத்தில் ஒரு ஜீவன் பண்ணியிருக்கிற ஏகப்பட்ட கர்மாக்களிலிருந்து அவன் தப்பித்து, தன் பாப மூட்டை பூராவையும் கரைக்க வேண்டுமானால் அதற்கு சரீரத்தை சக்கையாகப் பிழிந்து ஸத்காரியங்களை ஏராளமாகப் பண்ணித்தான் ஆகவேண்டும். இதனால்தான் சாஸ்திரங்களில் நூறாயிரம் காரியங்களை, விதிகளைக் கொடுத்து இவனைக் கட்டிப் போட்டிருக்கிறது. இருந்தாலும் அதே பகவான் ஒரு ஜட்ஜாக மட்டும் ஸ்ட்ரிக்டாக இல்லாமல், நமக்கு அம்மையும் அப்பனுமாக உள்ள காருணிகன் ஆனதால், நாம் சாஸ்திரப்படியே செய்ய மனப்பூர்வமாக ஸர்வப் பிரயத்தனமும் பண்ணி அப்படியே கண்டிப்போடு ஆசார அநுஷ்டானங்களை விதி வழுவாமல் அப்யாஸம் செய்து வரும்போது, எங்கேயாவது நம்மால் கொஞ்சம் முடியாமல்

போய்விட்டால் அப்போது - அப்போது மட்டுந்தான் - இத்தனை கண்டிப்பான விதிமுறையோ கடினமான காரியமோ இல்லாமல், மனஸார அவனை ஸ்மரித்தாலே போதும், அவன் நாமாவைச் சொன்னாலே போதும், அவன் இவ்வளவு தூரம் பண்ணின குழந்தைகளை மன்னித்து என்று ஆசார, அநுஷ்டானங்களையும் தளர்த்தி அநுக்ரஹம் பண்ணுகிறான் என்று வழிகாட்டியிருக்கிறார்கள். இதை ஒரு சாக்காகக் காட்டி, "எந்த ஆசாரமும் இல்லாமலிருப்பேன். 'ஹரே ராமா'என்று பஜனை பண்ணினால் போதும்"என்று இருந்தால் அப்படிப்பட்ட கட்டுப்படாத சோம்பேறிக்கு பகவான் ஏமாந்து போய் அநுக்ஹம் பண்ணிவிட மாட்டான்.

நிஜமாகவே "ஹரே ராமா"என்று அவனிடமே ஹ்ருதயத்தை அர்ப்பணம் பண்ணி, உருகத் தெரிந்து விட்டால் அப்படிப்பட்டவனுக்கு எந்த ஆசாரமும், எந்த சாஸ்திரமும் வேண்டாந்தான். அப்படிப்பட்டவர்கள் ஒரு நாமாவைச் சொல்லியே எத்தனையோ அற்புதங்களைப் பண்ணியிருப்பதும் வாஸ்தவம். ஆனால் அந்த ஸ்திதியில் நாம் இருக்கிறோமா என்பது நமக்கே தெரியும்.

வேத மந்திரங்களின் வீர்யம் குறையாமல் அவற்றை ரக்ஷித்துத் தருகிற பொறுப்புப் பெற்றவர்களும், புத்திவேலை அதிகமுள்ளவர்களுமான ஜாதியாருக்குக் காரியமும் வேண்டும். ஆசாரக் கட்டுப்பாடும் அதிகம் வேண்டுமென்றுதான் சாஸ்திரத்தில் அவர்களுக்கு மந்திர பூர்வமாக இத்தனை அநுஷ்டானங்களை வைத்திருக்கிறது. மற்ற விதத்தில் தேஹத்தில் அநேக காரியங்களைச் செய்து ஸமூஹத்துக்கு உபகரித்து, இதன் மூலமே தங்கள் கர்மாவை அநுபவித்துத் தீர்த்துச் சித்த சுத்தி பெறுகிற இதர ஜாதிக்காரர்களுக்கு இத்தனை கடுமையான ஆசாரமில்லை மந்திரங்களுக்குப் பதில் அவர்கள் பகவந் நாமாவை அல்லது ஸ்தோத்ரங்களை, துதிப்பாடல்களைச் சொன்னாலே போதுமானது.

என்ன சொல்லிக் கொண்டிருந்தேனென்றால், த்ருஷ்டமான லௌகிக பலனோடு, அத்ருஷ்டமான ஆத்மார்த்த பலனையும் பெறவே சாஸ்திர ஆசாரங்கள். அவற்றில் த்ருஷ்டமாகத் தெரிவதை மட்டும் எடுத்துக் கொண்டு, அத்ருஷ்டத்தைத் தள்ளுவது பிசகு.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

## ஆசார விஷயங்கள்

### ஆசார சாஸ்திரங்களில் விஞ்ஞான நுணக்கம்

ஸமீப காலமாக நம் ஆசாரங்களைப் பற்றி இதற்கு முந்திய தலைமுறைக்கு இருந்ததைவிடக் கொஞ்சம் கௌரவ புத்தி உண்டாயிருப்பதைப் பார்க்கிறேன். முன்னே இங்கிலீஷ் படித்தவர்களென்றால் நம் ஆசாரம் அவ்வளவுமே பேத்தல் என்று நினைப்பவர்கள ளயிருந்தார்கள். ஆனால் நான் கொஞ்ச நாளாக ஒரு வேடிக்கை பார்க்கிறேன் - ஸயன்ஸூம் ஸ்பிரிசுவாலிடியும் (ஆத்மிகமும்) ஒன்றுகொன்று விரோதமானதுபோல் தோன்றினாலும் ஸயனஸ் அபிவிருத்தியாகிக் கொண்டு வருவதாலேயே, புதிசு புதிசாக டிஸ்கவரி செய்யும்போது, "இதென்னடா ஆச்சர்யமாயிருக்கிறது!நாம் ரொம்பவும் அறிவிலே பின் தள்ளி நின்றவர்கள் என்று நினைத்த ஆதிகால இந்தியர்கள் இந்த விஞ்ஞான உண்மைகளை, நமக்கு இருக்கிற லாபரட்டரியும் இன்ஸ்ட்ருமெண்டுகளும் இல்லாமலே எப்படியோ கண்டுபிடித்து அவர்களுடைய சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதாகத் தெரிகிறதே!"என்று அதிசயப்படுகிறார்கள். கொஞ்சநாள் முந்தி (பத்திரிகைகளில்) பார்த்திருப்பீர்கள். ரஷ்யாக்காரன் கம்யூனிஸ்ட், நிரீச்வரவாதி. ஆனால் இங்கே நாம், "இதென்ன ஹோமம் என்று சொல்லிக்கொண்டு வீட்டையெல்லாம் புகையாக்கிக் கொண்டு, கண்ணும் கரிக்கக் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது?"என்றால், ரஷ்யா தேச ஸயன்டிஸ்ட்கள் வறட்டிப் புகையினால் அடாமிக் ரேடியேஷன் (அணுச் சிதைவின் கதிரியக்கம்) உள்படப் பலவித பொல்யூஷன்களைப் போக்கிக்கொண்டு விடலாமென்று சொல்லி, நம்முடைய ஹோமத்தைப் புகழ்ந்திருக்கிறார்கள். இதேபோல ஹோமத்தில் போடப்படும் பலவிதமான ஸமித்துக்களின் புகை பரவுவதும் க்ருமி நாசினியாக (antiseptic) உதவுகிறது என்று முன்னே டாக்டர்கள்

சொன்னதுண்டு. தர்ப்பை, துளஸி, வில்வம் என்றிப்படி நம் சாஸ்திர காரியம், பூஜை இவற்றில் பிரயோஜனமாகின்றவற்றுக்கெல்லாம் வைத்ய ரீதியிலோ, மற்ற ஸயன்ஸ்களின் ரீதியிலோ sound basis (அழுத்தமான அடிப்படை) இருக்கிறது எனகிறார்கள். க்ரஹண காலத்தில் எல்லாவற்றிலும் தர்ப்பையைப் போட்டு வைக்க வேண்டுமென்றால் முன்னே பரிஹாஸம் செய்தார்கள். "ஸூரியனைப் பாம்பு தின்கிறதாம். அதன் நாக்கை அறுப்பதற்கு தர்ப்பை போட்டிருக்கிறார்களாம்!"என்று கேலி பண்ணினார்கள். ஆனால் இப்போதோ க்ரஹண காலத்தில் அட்மாஸ்ஃபியரிலும், அதற்கும் மேலே இருக்கிற ஸ்ஃபியர்களிலும் அநேக contamination (அசுத்தம்), radiation ஆகியன உண்டாவதாகவும், கர்ப்பத்திலிருக்கிற சிசுவைக் கூட அது பாதிப்பதாகவும், அதனால் 'க்ரஹணத் தீட்டு'என்று அந்தக் காலத்தில் சாப்பிடாமல் இருக்கணும் என்று வைத்ததில் ரொம்ப அர்த்தமிருப்பதாகவும், இந்த பாதிப்பை counteract பண்ணும் (எதிர்த்துப் போக்கும்) சக்தி தர்ப்பைக்கு இருக்கிறதென்றும் எழுதுகிறார்கள்.

எல்லாருக்கும் எல்லா ஸயன்ஸையும் சொல்லிக் கொடுத்துவிட்டால் ஒவ்வொருத்தனும் 'ஆடம் பாம்(ப்)'பண்ணி வைத்துக் கொள்வதில்தான் முடியும் என்றுதான், கெடுதல் வராமலிருப்பதற்கு நாம் பண்ணவேண்டியதை மட்டும் சொல்லி, அதன் காரணத்தை, "ராஹுப் பாம்பு ஸூர்யனை முழுங்கிற்று"என்பது போலக் கதா ரூபமாகப் பாமர ஜனங்களுக்குச் சொன்னார்கள் என்று ஒரு கட்சி. இதைக்கூட நான் முழுக்க ஸரி என்று சொல்லமாட்டேன். எல்லாருக்கும் விஞ்ஞான மர்மம் தெரிந்துவிட்டால் அனர்த்தமாகும் என்று நினைத்தது வாஸ்தவம். ஆனால் அதற்காகத்தான் விஞ்ஞான உண்மைகளுக்குப் பதில் கதைகளை இட்டுக்கட்டிச் சொன்னார்களென்பது ஸரியில்லை. இம்மாதிரிக் கதைகளும் நிஜம் என்றுதான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். பகவானின் லீலையில், நமக்கு ஸாத்யமாகத் தோன்றாத என்னென்னவெல்லாம் நடக்குமோ?நமக்கு எப்படித் தெரியும்?

தங்களுடைய லிமிடெட் ஸர்க்கிளைத் தாண்டி நாலெட்ஜ் (அறிவு) வெளியே பரவக் கூடாதென்ற (சுயநலக் கும்பலின் கொள்கை) தான் நம் பூர்விகர்கள் இம்மாதிரி ஸயன்ஸ் உண்மைகளைக் கூறாமல், கதையிலே போர்த்தி மூடி வைத்ததற்குக் காரணம் என்றும் சிலர் குற்றம் சொல்கிறார்கள். இது ரொம்பத் தப்பாகும். மனஸ் கட்டுப் படாதவர்களுக்கு அறிவை மட்டும் கொடுப்பது அனர்த்தத்தில்தான் முடியும். பெரும்பாலான ஜனங்கள் மனஸ் கட்டுப்படாதவர்களாகத்தான் இருப்பார்கள். ஸயன்ஸ் ஸகல ஜனங்களுக்கும் பரவி முன்னேறிக் கொண்டேயிருக்கும்போது, அந்த முன்னேற்றத்துக்கு எதிர் ratio-வில் (விகிதாசாரத்தில்) லோகத்திலே தர்மம் பின்னே போய்க்கொண்டேயிருப்பதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்த்துக்கொண்டுதானே இருக்கிறோம்?இதை அநேக நூற்றாண்டுகளுக்கு முன்பே போஜன் 'ஸமராங்கண ஸூத்ர'த்தில் சொல்லியிருக்கிறார். அதிலே ஏரோப்ளேனைப் பற்றிக்கூட 'வ்யோமயானம்'என்று சொல்லி, ஆனாலும் அதன் theory-ஐ மாத்திரம் கொஞ்சம் கொடுத்துவிட்டு, "இதைச் செய்யும் procedure-ஐ இங்கே விஸ்தாரம் பண்ணாததால் அது தெரியாதாக்கும் என்று நினைக்க வேண்டாம். நன்றாகத் தெரியும். ஆனாலும் புஸ்தகத்தில் எல்லாருக்கும் தெரியும்படியாக எழுதி வைத்து விட்டால், அதனால் லோகத்துக்கு நன்மையைவிடக் கெடுதியே ஜாஸ்தி உண்டாகும் என்றுதான் இங்கே சொல்லவில்லை"என்று காரணம் காட்டியிருக்கிறார். அவர் சொன்னதிலுள்ள உண்மையை நாம் கண்கூடாகப் பார்த்து விட்டோம்!ரண பூமியில் மட்டும் யுத்தம் என்றில்லாமல் நாடு நகரமெல்லாம் குண்டு பொட்டு World War நடந்ததற்குக் காரணம் விமானப் படையெடுப்புத் தானே? ஹ்ருதயம் சுத்தியாவதற்கு முந்தி புத்திமட்டும் விருத்தியானால் அனர்த்தந்தான் என்பதை ஸமயாசாரங்கள் எடுபட்டுப்போய் ஸயன்ஸ் மட்டும் அபிவிருத்தியாதிக் கொண்டிருக்கிற இக்காலத்தில் நன்றாகப் பார்க்கிறோம். இதனால்தான் சுத்தர்களான நல்ல கல்ச்சருள்ளவர்களுக்கென்று மாத்திரம் நம் பூர்விகர்கள் அநேக விஷயங்களை வைத்துவிட்டனர்.

ஸமீப காலமாக நம் சாஸ்திர விஷயங்களில் பல ஸயன்ஸுக்கு ஒத்து வருகின்றனவென்று கண்டு கொண்டதில் படிப்பாளிகள் கொஞ்சம் அதனிடம் கௌரவ புத்தி காட்டத் தொடங்கியிருக்கிறார்களென்று சொன்னேன். ஸயன்ஸ் கொஞ்சம் விருத்தியாயிருந்தபோது கேலி செய்தார்கள். இப்போது அதிக வளர்ச்சி அடைந்தபின் சில அம்சங்களைக் கொண்டாட ஆரம்பித்திருக்கிறார்கள். இன்னம் ஸயன்ஸ் விருத்தியாக ஆக இன்னம் பல

சாஸ்தீரிய ஸமாசாரங்களுக்கும் scientific basis இருப்பதாகக் கண்டுபிடிப்பார்கள்.



**விஞ்ஞானத்துக்குக் கட்டுப்பட்டதல்ல**

ஆனால் நான் என்ன சொல்கிறேனென்றால், இந்தவரைக்கும் இது ஸந்தோஷக்குரியதுதான் என்றாலும், நம் ஆசார அநுஷ்டானங்கள் பூராவையும் ஸயன்ஸின் எல்லைக்குள் கொண்டு வந்து, அந்த அடிப்படையில் நிரூபித்துக் கொள்ள வேண்டும் என்று நினைப்பது ஸரியில்லை என்கிறேன். ஸயன்ஸுக்கோ, நம்முடைய ஸோஷல் ஐடியாலஜிக்கோ, வேறெதற்கோ சாஸ்திரம் agree-ஆக வேண்டும் (ஒத்துப்போக வேண்டும்) என்கிற எண்ணமே தப்பு என்பது என் அபிப்ராயம். சாஸ்திரத்தின் ஸத்யம் அதன் சொந்தப் பிரமாணத்திலேயே இருக்கிறது. அது ரிஷிகள் கொடுத்த super-science (நம் விஞ்ஞானத்துக்கு அதீதமான உயர் விஞ்ஞானம்). பாக்கி எல்லாவற்றுக்கும் இது பிரமாணமே தவிர, அவற்றின் basis-ல் (அடிப்படையில்) இதை ஒப்புக் கொள்வதென்பது தலைகீழ்ப் பாடம். நம்முடைய சிற்றறிவில் தோன்றும் social concept-களை (ஸமூஹக் கருத்துகளை) நாம் சாஸ்திரப்படி மாற்றிக்கொள்ள வேண்டுமேயன்றி, சாஸ்திரம் நம்முடைய 'கான்ஸெப்ட்டு'க்கு வளைந்து கொடுக்க வேண்டுமென்று நினைப்பது தப்பு.

சாஸ்திரத்திலே நிறைய ஸயன்ஸ் இருக்கிறது வாஸ்தவம். அதனாலேயே அது முழுக்க ஸயன்ஸுக்கு உடன்பட்டாகிவிட வேண்டும் என்று ஆகாது. முன்னே கேலி செய்த விஷயங்களில் பல இப்போது விஞ்ஞான ரீதியில் அர்த்தமுள்ளவை என்று அறிகிற அடக்கம் நமக்கு வரவேண்டும். "நமக்குத் தெரிந்த 'த்ருஷ்ட'த்தோடு, தெரியாத, தெரிய முடியாத 'அத்ருஷ்ட'மும் இருக்கிறது;அதிலேதான் நம் நிறைவிருக்கிறது;இந்த 'அத்ருஷ்ட'த்தைச் சொல்லும் சாஸ்திரங்களை அநுஸரித்து நடந்துதான் நம் பூர்விகர்கள் பக்தியிலும் ஞானத்திலும் நிறைந்து லோகமெல்லாம் புகழும்படியாக இருந்தார்கள்;அதை விட்டதிலிருந்துதான் நாம் விஞ்ஞானத்திலும் பொருளாதாரத்திலும் எத்தனையோ முன்னேறியுங்கூடக் கொஞ்சமும் நிறைவேயில்லாமல் திரிந்துகொண்டு, லோகமும் நம்மை மட்டந்தட்டும்படியாக ஆகிக்கொண்டு வருகிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற எல்லாமே நிஜம் என்ற நம்பிக்கை பெற வேண்டும்.

நமக்குத் தெரிகிற ஸயன்ஸ், வைத்ய சாஸ்திரம் முதலானற்றுக்காகத்தான் ஆசாரம் என்றால் சாஸ்திர விதிகளை இவற்றின்படி மாற்றிக் கொண்டால் என்ன என்ற எண்ணம் வரும். சாணி போட்டு மெழுகுவது அது anti-septic என்பதற்காக மட்டுந்தான் என்று வைத்துக் கொண்டுவிட்டால், அப்புறம் நம் பூஜை மாடத்தையோ அல்லது யாகசாலையையோ ஏன் சாணிக்குப் பதில் ஃபினாயில் அல்லது கார்பாலிக் ஆஸிட் போட்டு அலம்பக் கூடாது என்று கேட்கத் தோன்றும். மணையில் உட்கார்ந்து கொண்டுதான் வைதிக கர்மா பண்ணணும் என்பது மந்திரத்தின் எலக்ட்ரிஸிடி நம்மை விட்டுப் போகப்படாது என்பதற்காக மட்டுமே என்று வைத்துக் கொண்டால் அப்புறம் மணைக்குப் பதில் ரப்பர் குஷனில் உட்கார்ந்து கொள்ளலாம், பவித்ரத்துக்குப் பதில் glovesபோட்டுக் கொள்ளலாம் என்றெல்லாம் 'லாஜிக'லாக ஒப்புக் கொள்ள வேண்டிவரும்.

இதைச் சொல்லும்போது எலக்ட்ரோ-மாக்னடிஸ தியரி உள்பட எல்லாம் நம் முன்னோர்களுக்குத் தெரிந்திருந்ததை நினைத்து ஆச்சர்யமாயிருக்கிறது. லோகம் முழுக்க எலக்ட்ரிஸிடி நிறைந்திருக்கிறது;மநுஷ்ய சரீரம் எண்ணம் இதுகளில்கூட எலக்ட்ரிக் கரெண்ட் ஓடிக் கொண்டிருக்கிறது என்று இப்போதுதான் நம் ஸயன்டிஸ்ட்கள் கண்டுபிடித்திருக்கிறார்களென்றால் இதை எத்தனையோ ஆயிரம் வருஷம் முந்தியே நம் சாஸ்திரக்காரர்கள் தெரிந்து வைத்துக் கொண்டுதான் நம்மிடம் சேர்கிற மின்ஸார சக்தி வெளியே போகாமல் bad conductor-களாலான (மின்சாரத்தைக் கடத்தாதவையான) வஸ்துக்கள், உபகரணங்கள் முதலியவற்றையும், மின்ஸார சக்தியை கிரஹித்துக் கொள்ளும்

good conductor-களாலான (மின்சாரக் கடத்துவிகளாலான) உபகரணங்கள், பாத்திரங்கள் முதலியவற்றையும் சொல்லியிருக்கிறார்கள். உட்காருகிற மணை மாதிரியே யாகத்தில் ஹோமத்துக்குப் பிரயோஜனப்படுகிற கரண்டி bad conductor-ஆன மரத்தாலானதாகத்தான் இருக்க வேண்டும். மறு திசையில் செப்புப் பாத்திரம், செப்பு விக்ரஹம், பட்டு வஸ்திரம் முதலியன good conductor-கள்.

'வாழாது வாழ்ந்தாலும் வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது'என்பார்கள். 'இதெல்லாம் சுத்த மூட நம்பிக்கை'என்று இருபது, முப்பது வருஷம் முந்தி சொல்லி வந்தார்கள். இப்போதோ, 'மநுஷ்ய சரீரத்தில் எலெக்ட்ரோ-மாக்னடிஸ் வேவ்'களுக்கு மூலஸ்தானம் brain (மூளை)தான். உலகத்தை எடுத்துக்கொண்டால் அதன் 'மாக்னடிக் ஃபீல்டி'ன் மூலஸ்தானம் North Pole (வட துருவம்). ஆகையால் நம் தலையை வடக்குப் பக்கம் வைத்துப் படுத்துக்கொண்டால் மூளையின் சின்ன காந்த சக்தியும் ஒன்றுக்கொன்று 'க்ளாஷ்'ஆகி, மூளை பாதிப்புக்கு ஆளாகிவிடும் என்று ஸயன்டிஸ்ட்கள் சொல்கிறார்கள். அதே ஸமயம் ஜபம், தியானம் பண்ண வடக்குப் பார்த்து உட்காருவது நல்லதென்று சொல்லியிருக்கிறது. தூக்கத்தில் புத்தியும் மனஸும் நமக்கு வசப்படாமல், தன்னையும் மீறித் தூக்கம் நம்மை வசப்படுத்தி ஓய்ச்சலில் அடித்துப் போடுகிறது; அப்போது புத்தி களைத்துக் கிடக்கிறது;அல்லது நம் வசத்திலில்லாததால் கன்னா பின்னா என்று கனவுகளைக் கல்பித்துக் கொள்கிறது. இம்மாதிரி ஸமயத்தில் இந்தச் சின்ன மாக்னட்டை, லோகத்தின் பெரிய மாக்னட்டுக்கு நேரே பிடித்தால் தாறுமாறாய்விடும். ஆனால், ஜப, த்யான காலத்தில் நாம் மனஸை அப்படியே அடக்கி வசப்படுத்த முடியாதவர்களாயிருந்தாலுங்கூட, அப்படிப் பண்ண வேண்டும் என்ற லக்ஷ்யமாவது நமக்கு இருக்கிறது. ஈச்வரன் விஞ்ஞானக் கருவிகளுக்கு த்ருஷ்டமாயுள்ள மின்ஸார காந்த சக்தியாய் மட்டுமில்லாமல், நம் லக்ஷ்யத்தைத் தெரிந்துகொண்டு அதற்கு அருள் செய்கிறவனாயும் இருப்பதால் த்யான காலத்தில் அதே காந்த சக்தி நமக்கு நல்ல 'பவரை'க் கொடுக்கும்படிப் பண்ணுகிறான். ஷாக் அடிக்கிற எலெக்ட்ரிஸிடியைக்கொண்டே நாம் எத்தனையோ நல்லதைப் பெறவில்லையா?அந்த மாதிரி பிராணசக்தி நம் தேஹத்திலுள்ள சக்கரங்கள் வழியே போகிறதிலும் சயனநிலை, த்யானத்தில் உட்காரும் நிலை ஆகியவற்றுக்குள் ரொம்ப வித்யாஸமுண்டு. அதுவும் தவிர, வடக்கே மேருவில் இருக்கிற யோகிகள், ஞானிகள் ஆகியோரின் அநுக்ரஹ wave-ஐயும் அந்தப் பக்கம் பார்த்து ஜபம் பண்ணும்போது சற்று ஸுலபமாக கிரஹிக்கலாம். இப்படி ஒருத்தரின் உள்தன்மை, அன்பு முதலானவை வெளியே பரவுவது, தந்தியும் ஃபோனும் இல்லாமலே மனஸுக்கு மனஸ் தொடர்பு கொள்கிற 'டெலிபதி'இவற்றையும் விஞ்ஞான பூர்வமாக ஒப்புக் கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்.

வடக்குப் பார்த்து ஒன்றைப் பண்ணுவது, இன்னொன்றைப் பண்ணாததற்கு இத்தனை அர்த்தமிருக்கிறது!

ஆனால் சாஸ்திரத்தில் எலெக்ட்ரோ மாக்னெடிஸத்தைப் பற்றிச் சொல்லாமல்தான் விட்டிருப்பார்கள். புராணத்தில் பார்த்தால், இதற்குக் கதையும் சொல்லியிருக்கும். வாழாது வாழ்ந்த எவனோ ஒருத்தன் வடக்கே தலை வைத்துக்கொண்டு படுத்திருந்தான், அதனால் அவனுடையே மேன்மையே படுத்துப் போச்சு என்றுதான் கதையில் இருக்குமே தவிர விஞ்ஞான தத்வம் சொல்லியிருக்காது. முன்னேயே சொன்ன மாதிரி ஒரு சுத்தி எத்தனையோ நல்லதற்கு பிரயோஜனப்படுகிறது என்றாலும் அதைக் குழந்தை கையில் கொடுக்கக்கூடாது என்கிறமாதிரி, விஞ்ஞான தத்வங்களையும் அதைப் பிரயோஜனப்படுத்தும் கார்யக் கிரமங்களையும் பொது ஜனங்களுக்குச் சொல்லக்கூடாது என்றேதான் இப்படிப் பண்ணியிருக்கிறது.

அந்தப் புராணக் கதையும் நிஜம் என்றே வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் ஆஸ்திகர் கட்சி. லோகத்துக்குத் தெரிகிற ஸயன்ஸும், அதோடு தத்வமும் கதை புராணங்களும் ஸ்தாபிக்கிற (ஸயன்ஸுக்குத் தெரியாத) ஸத்யமும் சேர்ந்துதான் சாஸ்திரம்.

முன்னே தெரியாதிருந்த உண்மைகள் ஸயன்ஸுக்கு இப்போது தினந்தினம் புதிசு புதிசுகாத் தெரிகிறபோது, முன்னே பரிஹாஸம் பண்ணின அநேக ஆசாரங்களை அதுவே சிலாகிக்க ஆரம்பிக்கிறது. பல் தேய்க்காமல் bed-coffee;வெள்ளைக்காரன் மாதிரி நித்ய

ஸ்நானமில்லாமலிருப்பது;எப்போது பார்த்தாலும் உடம்பை மூடி thick துணியில் ஸூட்டும், கோட்டும் போட்டுக் கொண்டிருப்பது இதெல்லாம் நம் நாட்டு சீதோஷ்ணம், அதையொட்டி ஏற்படும் ஜீர்ணசக்தி முதலியவற்றுக்குப் பொருந்தாதவை என்று படிப்பாளிகள் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். இப்படியெல்லாம் பண்ணினால் அழுக்கு, வியர்வை இத்யாதிகளால் வியாதிகள் வரும் என்கிறார்கள்.

ஆனால் வியாதி வராமலிருப்பதற்கு மட்டுமில்லை சாஸ்திரம்;கர்ம வியாதியைப் போகப் பண்ணுவதற்காகப் புண்ய மருந்தைத் தரவே அது இருக்கிறது என்பதை மறக்கவே கூடாது. ஆரோக்யம் முதலான காரணங்களுக்காகத்தான் ஆசாரம் என்றால், ஒரு ஆசாரம் அநாரோக்யத்தை உண்டு பண்ண ஹேது இருப்பதாகத் தோன்றினால் அதை விட்டுவிடத் தோன்றும். தொத்து நோயுள்ளவர் உள்படப் பலர் கசகசவென்று கூடும் இடங்களுக்குப் போய்விட்டு வந்தால் ஸ்நானம் செய்வது ஆரோக்ய ரீதியில் நல்லது என்பதை நினைத்தோ ஸ்நான ஆசாரத்தை நாம் ஏற்றுக் கொள்கிறோமென்றால், இதற்கு விலக்காக ரதோத்ஸவத்தில் எத்தனை கூட்டத்தோடு இடித்துக் கொண்டு தேரிழுத்து விட்டுத் திரும்பினாலும் ஸ்நானம் பண்ணக்கூடாது என்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பது நம் ஹைஜீன் ஸயன்யோடு உதைத்துக் கொள்ளும். எத்தனைஸ பாசி பிடித்திருந்தாலும் திருக்குளத்தில் ஸ்நானம் பண்ணணும், எத்தனை அழுக்கானாலும் ஒரு மஹானின் பாத தீர்த்தத்தைப் புரோக்ஷணம் பண்ணிக்கணும், பாகவதர்கள் சாப்பிட்டு எழுந்த எச்சில் இலையில் விழுந்து புரளணும் என்பது போன்ற ஆசாரங்களை ஆரோக்யத்துக்காகவே ஆசாரம்) என்றால் விட்டு விடும்படி ஆகும். அதனால், 'புண்யத்துக்குத்தான் ஆசாகம், அந்தப் புண்யம் நம் புத்திக்கும் ஸயன்ஸுக்கும் பிடிபடாது'என்பதை நன்றாக மனஸில் வாங்கிக் கொள்ள வேண்டும்.

பிறத்தியாரை ரொம்பவும் தொட்டுக் கொள்ளாமலிருப்பது, செத்த வீட்டில் சாவுத்தீட்டு என்று எதுவுமே சாப்பிடாமலிருப்பது, தீட்டுக்காக ஸ்நானம் செய்து, துணிமணிகளைத் தோய்த்துப் போடுவது முதலியனவெல்லாம் வியாதித் தடுப்புக்கு எத்தனை உபகாரமானவை என்று டாக்டர் கிங், ஐ.எம்.எஸ் (ஐ.ஏ.எஸ். மாதிரி, ஐ.எம்.எஸ் என்று ஆல் இண்டியா மெடிகல் ஸர்வீஸ் இருந்தது. அதைச் சேர்ந்தவர் இவர்), ஸானிடரி கமிஷனராயிருந்தவர், ஏகமாகக் கொண்டாடி எழுதியதுண்டு.

அவர் நாளில் பௌதிகமான ஜீன்ஸ் (ஜீவ நுண்ணணு) பாக்டீரியா, வைரஸ் (விஷக்கிருமி) இதுகளைப் பற்றி மாத்திரம் தெரிந்ததைக்கொண்டே அவர் இப்படிக் கொண்டாடியிருக்கிறார். ஆனால் அதற்கப்புறம் ஸைகலாஜி, பாராஸைகாலஜியெல்லாம் ரொம்பவும் 'டெவலப்'ஆகி மநுஷனுக்கு மநுஷன் எண்ணம், குணம் இவற்றை பொருத்துக்கூட வித்யாஸமான waves(அதிர்வலைகள்), arura(ஒளி வளையம்) ஆகியன இருப்பதாக ஏற்பட்டிருப்பதிலிருந்து, மைத்வம் என்ற பெயரில் எல்லாரையும் தொட்டுக் கொண்டும் தீட்டுப் பார்க்காமலும் பல பட்டடையாகக் குழப்பினால் அவரவர்களுடைய பிரத்யேகமான வளர்ச்சிக் கிரமம் பாதிக்கப்படும் என்று இன்னம் நன்றாகத் தெரிகிறது. ஒருத்தன் படுக்கையில் இன்னொருத்தன் படுத்துக் கொள்ளக் கூடாது, ஒருத்தன் வேஷ்டியை இன்னொருத்தன் கட்டிக் கொள்ளக் கூடாது, ஒருத்தனுடைய தீர்த்த பாத்திரத்தில் இன்னொருத்தன் குடிக்கக்கூடாது என்கிறதெல்லாம் இப்படி 'பெர்ஸனல் மாக்னடினஸ'த்தை (மனோசக்தியை)க் காப்பாற்றிக் கொள்வதற்குத்தான்.

மாதவிடாய் என்கிறோமே, அதில் பெண்களைத் தனித்து வைத்துச் தீட்டுச் சொல்வதில் பௌதிக அசுசி (தூய்மைக்குறைவு) ஒரு பங்கு என்றால், பௌதிகத்துக்குத் தெரியாத அசுசி இன்னொரு பங்கு. இது பாப-புண்ய விஷயம். இந்திரனின் பிரம்மஹத்திப் பாபத்தில் ஒரு பங்கு ஸ்திரீகளிடம் ரஜஸ்ஸாகப் போகிறது என்று சொல்லியிருக்கிறது. இது 'ஆரா', 'வேவ்'களில் கூடத் தெரியாது.

அவரவர் மனோசக்தியை வெளியே விடாமல் ரக்ஷித்துக் கொள்வது பற்றிய நவீன ஸயன்ஸ் கொள்கையைச் சொல்லும்போது ஒன்று நினைவு வருகிறது. கச்சம் போட்டுக் கட்டிக் கொள்வது என்று வைத்திருக்கிறதல்லவா?இதைப்பற்றி ஒருத்தர் எழுதியிருந்தார். வஸ்திரத்தின் நுனி வெளியே பார்க்க இருந்தால் இதை உடுத்திக் கொண்டிப்பவரின் மனோசக்தி வேவ்கள் வெளியே போய்விடுகிறதாம். கச்சமாக மடித்து உள்ளே சொருகிக் கொண்டுவிட்டால் இப்படி விரயமாவதில்லை என்று சொல்லியிருந்தார். இதைத் தெரிந்து

கொண்டுதான் துருக்கர்கள்கூட லுங்கியை ஓரம் தைத்துக் கட்டிக் கெள்கிறார்கள் போலிருக்கிறது என்றும் குறிப்பிட்டிருந்தார்.

நாளுக்கு நாள் நமக்கு அநேக ஆசாரங்களின் உள்ளர்த்தம் ஸயன்ஸ்படி புரிந்துகொண்டு வருவதாலேயே இப்போது நமக்குப் புரியாத, இனி என்றைக்குமே ஸயன்ஸினால் புரிந்துகொள்ள முடியாத மற்ற எல்லா சாஸ்திர விதிகளையுங்கூட ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

"கங்கா, கங்கா என்று இந்த ஹிந்துக்கள் நமஸ்காரம் பண்ணுகிறார்களே, அப்படி இதில் என்னதான் இருக்கிறதென்று ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் எங்களுக்கு ஆச்சர்யமாயிருந்தது. காலராக்காரன் ஒருத்தன் பிணத்தை கங்கையில் எங்கே இழுத்து விட்டிருந்ததோ அந்த இடத்திலிருந்தே ஜலத்தை எடுத்துப் பரிசோதனைப் பண்ணிப் பார்த்தோம். மாய மந்திரம் மாதிரி அந்த ஜலத்தில் ஒரு காலராக் கிருமி கூட இல்லை"என்று ரிஸர்ச் செய்தவர்கள் ரொமப வருஷம் முந்தி ரிபோர்ட் கொடுத்திருந்தார்கள். ஸந்தோஷமான விஷயந்தான். ஆனாலும் நாம் 'கங்கா, கங்கா'என்று நமஸ்காரம் பண்ணுவது அவள் வியாதிநாசினி என்பதற்காக இல்லை. பாபநாசினி, ஸம்ஸார நாசினி என்பதற்காகத்தான் பாக்டீரியா-வைரஸ் மாதிரி பாப-புண்யமோ, ஸம்ஸாரம்-மோக்ஷம்-நரகம் இவையோ ஸயன்டிஸ்டின் 'தியரி'க்குள்ளும் 'டெஸ்ட் ட்யூபு'க்குள்ளும் என்றைக்குமே வராது.

இதைப் புரிந்து கொண்டால், விஞ்ஞான ரீதியில் பரிஹாரம் பண்ணிவிட்டதால் ஒரு வஸ்துவுக்கு தோஷம் போய்விட்டது என்று நினைக்க மாட்டோம். இதை எதற்குச் சொல்கிறேனென்றால் இப்போது எவர்ஸில்வர் என்று ஒன்று ரொம்ப நடமாடுகிறது. ஸ்வாமி தீபம் உள்பட கலசமாக வைக்கிற குடம் உள்பட எல்லாம் அதில் வந்தவிட்டது. இத்தனை காலம், இரும்புப் பாத்திரம் உதவாது என்ற சாஸ்திர விதியை அநுஸரித்து வந்தவர்களும் இப்போது எவர்ஸில்வரை உபயோகிக்கிறார்கள். "இரும்பு கூடாது என்றதற்குக் காரணம் அது ஒரு பிடிக்கக்கூடும் என்பதுதான்;அதனால் அதில் ஆரோக்கிய ஹானி உண்டாக்குகிற ஹேது உள்ளது என்கிறதுதான். ஆனால் அந்த இரும்பை இப்படி எவர்ஸில்வராக 'ப்ராஸஸ்'பண்ணிவிட்டபின், அதில் துரு பிடிப்பதற்கேயில்லை. அது health hazard ஆகாது. இரும்பின் தோஷத்திற்குப் பரிஹாரம் பண்ணிவிட்டதால் அதை உபயோகிக்கலாம்"என்று சொல்கிறார்கள். துருவுக்காகத்தான் இரும்பு கூடாது என்று இவர்களாகவே அநுமானம் பண்ணிக்கொண்டு இப்படி எவர்ஸில்வரை சாஸ்திரோக்தமானதாக ஆக்கிவிட நினைக்கிறார்கள். ஆனால் சாஸ்திரம் இரும்பு கூடாது என்றது துருவுக்காக அல்ல;அல்லது துருவுக்காக மாத்திரம் அல்ல. அது பாபகரமானது, ஆஸுர (அசுரத்தனமான) சக்திகளையும், சனைச்சரன் மாதிரி உக்ர க்ரஹங்களின் சக்தியையும் நம்மிடம் இழுத்து வரும் என்பதால்தான் கூடாது என்று சாஸ்திரம் வைத்திருக்கிறது. எவர்ஸில்வரிலும் இந்த தோஷம் போய்விடாது.

இதேமாதிரி, ஹோமத் திரவியங்கள் அட்மாஸ் ஃபியரிக் பொல்யூஷனைப் போக்குவதைவிட முக்யமாக, ஆஸுர சக்திகளைத் துரத்தி திவ்ய சக்திகளைக் கொண்டு வருவதற்கே ஏற்பட்டவை. அதனால் வறட்டிக்கும், ஸமித்துக்கும் பதிலாக அவற்றைவிட வீரியத்தோடு ஏதாவது anti-pollutionகெமிகலைக் கண்டுபிடித்தாலும் இவற்றைக் கொண்டு ஹோமம் பண்ணுவதற்கில்லை!

ஸைகலாஜிகலாக அநேக சாஸ்திர விதிகளை 'அப்ரீஷியேட்'பண்ணலாம் என்கிறார்கள். பால், நெய், தயிர், சாணம், மூத்திரம் எல்லாவற்றாலும் நலன் விளைவிக்கும் பசுவை மாதாவாக பாவிப்பது psychologically satisfving (மனோதத்வப்படி திருப்தி தருவது) என்கிறார்கள். அதுவும் வாஸ்தவந்தான். ஆனால் பசுவின் divinity (தெய்வத்தன்மை) 'ஸைகாலஜி'க்கு அப்பாற்பட்ட விஷயம். இந்த 'டிவினிடி'க்காகத்தான் அதற்கு முக்யமாகப் பூஜை. மற்ற தேசங்களில் உள்ளவர்கள் மாதிரி பால், நெய், தயிர் இவற்றின் பிரயோஜனத்தைத் தெரிந்துகொண்டது மட்டுமின்றி நம் பூர்விகர்கள் சாணி, பசு மூத்திரம் இவற்றின் சுத்தி செய்யும் சக்தியையும் தெரிந்துகொண்ட பெருமை ஒரு பக்கமிருக்கட்டும். ஆனால் இந்த ஐந்தையும் 'பஞ்சகவ்யம்'('கோ'என்றால் பசு. 'கவ்யம்'என்றால் பசு

ஸம்பந்தமுள்ளது. 'பஞ்ச கவ்யம்'என்பது பசு ஸம்பந்தப்பட்ட ஐந்து) என்று சேர்த்து ஒருத்தரைச் சாப்பிடச் சொல்லி அவரை சாப்பிடச் சொல்லி அவரை சுத்தி பண்ணுகிறபோது அது சரீர சுத்திக்காக (physical purity-க்காக) மட்டுமில்லை;ஆத்மசுத்திக்காகவே!பாபத்தைப் போக்கிப் புண்யத்தை உண்டுபண்ணுகிற சக்தியும் பஞ்ச கவ்யத்துக்கு இருக்கிறது. மந்த்ர பூர்வமாக அதை ப்ராசனம் பண்ணுவதால் (உட்கொள்வதால்) இந்த சக்தி இன்னம் விருத்தியாகிறது. " புண்யாஹ வாசனம் "என்று புண்ய ஸம்பந்தப்படுத்தித் தான் பஞ்சகவ்யத்தை வைத்திருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, மெடிகல் ஸயன்ஸ், ஸைகாலஜி எல்லாவற்றிலும் அதிஸூக்ஷ்மமான விஷயங்களைத் தெரிந்துகொண்டிருந்த அந்தப் பூர்வ காலப் பெரியவர்கள் எந்த லாபரட்டரியும், இன்ஸ்ட்ருமென்டும் இல்லாமல் இத்தனை ஞானமும் பெற்றார்கள் என்றால் அது எதனால்?ஈஸ்வரப் பிரஸாதமாக அவர்கள் பெற்ற மனோசக்தியால்தான். அவர்களுடைய தபஸையும், நியமத்தையும் பார்த்து பகவானே ஸயன்ஸுகளுக்குள் வராத அநேக விஷயங்களை அவர்களுக்குத் தெரியப்பண்ணியிருக்கிறார்கள். அவனே அவர்கள் முன் பிரஸன்னமாகி தெரியப்படுத்தியிருக்கலாம்;அல்லது அவர்களுக்கு instinctive-ஆக (உள்ளுணர்ச்சியாக), அல்லது அதற்கும் மேலே intuitive-ஆக (உள்ளார்ந்த ஸத்யதர்சன சக்தியே intuition என்பது) இந்த உண்மைகள் தெரியும்படிப் பண்ணியிருக்கலாம். இவற்றையும் பிரயோஜனப்படுத்தி அவர்கள் மேலே மேலே தபோ நியமங்களை அநுஷ்டித்து ஸித்தி பெற்றிருக்கிறார்கள். அவர்கள் ஸகல ஞானமும் பெற்றுச் சொன்னவற்றில் நவீன விஞ்ஞானம் ஆச்சரியப்படுகிற கருத்துக்கள், அதனால் ஒப்புக்கொள்ள முடியாத கருத்துக்கள் இரண்டுமே இருக்கின்றன;நம் அறிவுக்கு ஏற்றவை, ஏற்காமல் மூடக் கொள்கையாய்த் தோன்றுகிறவை இரண்டும் இருக்கின்றன. நம்முடைய அறிவு எத்தனையோ ஆராய்ச்சி பண்ணி எவ்வளவோ உபகாரங்களை வைத்துக்கொண்டு கண்டுபிடிப்பதை அந்தப் பெரியவர்கள் அநாயஸமாகத் தெரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தே, நம் அறிவுச் சக்தியோடு ஈஸ்வர மர்மங்கள் முடிந்து விடவில்லை என்று அறிவு பெற வேண்டும். அந்த மர்மங்களைத் தெரிந்துகொண்டவர்கள் சொல்வதில் பலதை மூடநம்பிக்கை என்பதுதான் மூடத்தனம், இது நம்முடைய அல்ப அறிவிடம் நமக்கிருக்கிற மூடநம்பிக்கைதான் என்று தெளிவு பெற வேண்டும்.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

## ஆத்ம திருப்திக்கே ஆசாரம்

பசுவைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். பசுவின் முகத்தில் மஞ்சள் குங்குமமிட்டு கொம்பிலே குஞ்சலம் கட்டி, கழுத்திலே மாலைகள் போட்டு மணிகள் கட்டினால் பார்க்க ரொம்ப அழகாகத்தானிருக்கிறது. நமக்குப் பல தினுஸில் உபகாரம் பண்ணும் பசுவைப் போற்றுவதில் psychological satisfaction இருப்பது போல இப்படி அந்த கோமாதாவை அலங்காரம் பண்ணிப் பார்ப்பதில் artistic satisfaction (கலையுணர்வுத் திருப்தி)-ம் உண்டாகிறது. ஆனாலும் பசுவுக்கு அர்ச்சனை பண்ணுவது என்றால் அப்போது அதன் முகத்திலே பண்ணாமல் பிருஷ்ட பாகத்திலே (வால் புறத்திலே) தான் அர்ச்சிக்க வேண்டும். நமக்கு அது பிடிக்கிறதா, பிடிக்கவில்லையா, இப்படிப் பண்ணுவதற்குக் காரணம் உண்டா, இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை. இப்போது நமக்கு ஒவ்வொன்றாகக் காரணம் தெரிகிற அநேக ஆசார விதிகளை ஏற்படுத்தின ரிஷிகள், காரணமில்லாமலா, 'பசுவின் முகத்தில் பூஜை பண்ணாதே, பின்பக்கம் பண்ணு;அங்கேதான் லக்ஷ்மி வாஸம் பண்ணுகிறாள்'என்று சொல்வார்கள்?நம்பிப் பண்ண வேண்டும். அப்போது அங்கே வாஸம் பண்ணும் லக்ஷ்மி தெரிவாள். ஸைகலாஜிகலாவோ, வேறு விதங்களிலோ நம்மை 'ஸாடிஸ்ஃபை'பண்ணாவிட்டாலும் ஸரி, நாம் சாஸ்திரங்களுக்கு அடங்கி, அடி பணிந்து,

அதன் பிரகாரம்தான் செய்ய வேண்டும். இந்த எல்லா ஸாடிஸ்ஃபாக்ஷன்களையும்விட ஆத்ம-ஸாடிஸ்ஃபாக்னுக்ஷகாகத்தான் சாஸ்திராசாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன அதுதான் எக்காலத்துக்குமான 'ஸாடிஸ்ஃபாக்ஷன்'. மற்ற 'ஸாடிஸ்ஃபாக்ஷ'னெல்லாம் அடுத்த நிமிஷமே பறந்து போய் 'டிஸ்ஸாடிஸிஃபாக்ஷனில்'கொண்டு விடுபவை தான். ஆத்மா நிறைந்து, திருப்தியாய், ஸாடிஸ்ஃபை ஆகவேண்டுமென்றால் பாபத்தைப் போக்கிக் கொண்டு புண்யத்தை ஸம்பாதித்துக் கொண்டால்தான் முடியும். இதற்காக நம்முடைய மற்ற ஸாடிஸ்பாக்ஷன்களைத் தியாகம் பண்ணிக் கஷ்டப்படவும் தயாராகத்தான் இருக்க வேண்டும்.

கோவிலுக்குப் போகிறோம். வழியிலே பிரஸவ ஆஸ்பத்திரியில் ஸஹோதரிக்குப் பிள்ளை பிறந்திருக்கிறது. குழந்தையைப் பார்க்க ஆசையாய்த்தானிருக்கும். ஸஹோதரியும் ரொம்ப ஸந்தோஷப்படுவாள். ஸைகலாஜிகல் ஸாடிஸ்ஃபாக்ஷன், மநுஷ்யாபிமானம் இவற்றைக் கொண்டு பார்த்தால் பிரஸவ ஆஸ்பத்திரிக்குள் போகத்தான் வேண்டும் ஆனால் அங்கே போய்வந்தபின் ஸ்நானம் பண்ண முடிந்தால்தான் கோவிலுக்குப் போகலாம். ஸ்நானம் பண்ணாமல் பிரஸவத் தீட்டோடு கோவிலுக்குப் போகப்படாது. 'கோவிலில் விசேஷமாச்சே, போகத்தான் வேணும்'என்றால், இப்போது நமக்கு ஸ்நானம் பண்ண வசதி இல்லாவிட்டால், பிரஸவித்த ஸஹோதரியைப் பார்க்காமலேதான் போக வேண்டும். அந்தத் தியாகம் பண்ணத்தான் வேண்டும். சாஸ்திரம் மநுஷ்யாபிமானமில்லாதது என்று குற்றம் சொல்வது நியாயமில்லை. அப்படிச் சொன்னால் அந்த ஆஸ்பத்திரியில் அமலாகிற வைத்ய சாஸ்திரத்தையும் குறை சொல்லத்தான் வேண்டும். ஏன்?அங்கே ஆபரேஷன் தியேட்டரில் நம்மை உள்ளே விடுவார்களா?நமக்கு ரொம்பவும் பிரியமான பந்துவுக்குப் பிராணாபத்தான ஆபரேஷன், அப்போது பக்கத்திலிருக்க வேண்டும்.

இரண்டு மணி-மூன்று மணி பெரிய ஆபரேஷன் நடக்கிற வரை இன்னது நடக்கிறது என்று தெரியாமல் வெளியிலே திக்கு திக்கென்று உட்கார்ந்திருக்க முடியாது என்றால் டாக்டர் ஒப்புக் கொள்வாரா?உடலின் க்ஷேமத்தைக் குறித்து டாக்டர் சொல்வதை ஒப்புக்கொண்டு, அவர் சொல்வது கடுமையாக இருந்தாலும் அவருடைய நல்லெண்ணத்தை மதித்து, அவரைத் திட்டாமல் தியேட்டருக்குள் போகாமலிருக்கிறோமென்றால் (நம் ஸைகலாஜிகல் ஸாடிஸ்ஃபாக்ஷனை ஸாக்ரிஃபைஸ் பண்ணுகிறோமென்றால்) அதே ஆஸ்பத்திரிக்கு, பிற்பாடு ஸ்நானம் பண்ணும் இருந்தாலொழியப் போகக்கூடாது என்று உயிரின் க்ஷேமத்தைக் கருதி சாஸ்திரகாரர் சொல்வதையும் திட்டாமல் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

'மற்ற தேசங்களில் பிரஸவத் தீட்டு பார்க்கிறார்களா, பஹிஷ்டா (மாதவிடாய்) விதிகளை அநுஸரிக்கிறார்களா?இன்னம் நம்முடைய மற்ற ஆசாரங்கள், ஸம்ஸ்காரங்கள் இதுகளைப் பின்பற்றுகிறார்களா?'என்று கேட்பதில் அர்த்தமில்லை. இந்தக் கேள்விகளுக்கெல்லாம் ஒரே பதில் இப்படியிருக்கிற மற்ற எல்லா தேசங்களும் ஆத்ம ஸம்பந்தமான ஞானத்திலும், அப்படிப்பட்ட ஞானத்தை ஸம்பாதித்துக் கொண்டவர்களிலும் நம் தேசத்தைவிட ரொம்பவும் பின்தங்கியிருந்து வந்திருக்கின்றன என்று அவர்களே ஒப்புக்கொள்வதுதான். நித்ய சிரேயஸ் வேண்டும், ஈஸ்வரனை அடைய வேண்டும், ஆத்மஞானம் பெற வேண்டும் என்றால், அந்த தேசம்-இந்த தேசம், அந்தக் காலம்-இந்தக் காலம் என்று கால, தேசங்களைச் சொல்லிக் கொண்டிருக்காமல் சாஸ்திரப்படி செய்தால்தான் ஸித்தி கிடைக்கும்.

அதுவும் தவிர லோகத்திலேயே இந்த பாரத தேசத்தைத்தான் ஈஸ்வரன் கர்மபூமியாக வைத்திருக்கிறான். ஒரு வீடு என்றால் அதில் சமையலறை, பூஜையறை, படுக்கையறை என்று வெவ்வேறாக இல்லையா? ஒரு ஃபாக்டரி என்றால் அதில் யந்திரசாலை, நிர்வாஹஸ்தர் ஆஃபீஸ், கான்டீன் என்று தனித்தனியாக இல்லையா?இவற்றில் ஒன்றில் செய்வதை இன்னொன்றில் செய்வார்களா?அப்படி பகவான் லோகத்தில் வைதிக கர்மாநுஷ்டானத்துக்காக பாரத பூமியைத்தான் வைத்திருப்பதால் இங்கே மாத்திரம் இத்தனை சாஸ்திரங்களும் ஆசாரங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

இதிலே கடுமையாகத் தோன்றுவதும் நம்முடைய நித்ய ஸௌக்யத்தை உத்தேசித்துக் கருணையினால் சொன்னதுதான்.

நித்ய ஸௌக்யமான மறுமையின்பத்தோடு இம்மையின்பத்தையும் அது மறுமைக்கு பாதகமாக இல்லாதவரையில் சாஸ்திரங்கள் அளிக்கத்தான் செய்கின்றன. நோய்

நொடியில்லாமலிருக்க வேண்டும்;ஜனங்களெல்லாம் ஸௌஜன்யமாகக் கூடி வாழ வேண்டும்;தப்பு தண்டாக்களில் மாட்டிக்கொண்டு கஷ்டப்படக் கூடாது என்று இம்மைப் பயன்களைக் கருதியும் அநேக ஆசாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பலர் நினைக்கிறபடி ஒரே நிர்தாக்ஷிண்யமாயில்லாமல், ஸைகலாஜிகலாகவும், மற்ற ரீதியிலும் அநேக இடங்களில் விட்டுக் கொடுத்தும் விதிமுறைகள் செய்யப்பட்டிருக்கின்றன.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

## ஆசார விஷயங்கள்

### ஆசாரங்களில் பாகுபாடு : குறள் தீர்ப்பு

எல்லோருக்கும் இத்தனை ஆசாரங்களை வைக்காமல் பிராம்மண ஜாதிக்கு மாத்திரம் வைத்ததே இந்த ரீதியில்தான். இதைத்தான் புரிந்து கொள்ளாமல் பக்ஷபாதமென்று சிலர் சொல்கிறார்கள். சாஸ்திரங்களைச் செய்தவர்கள் பக்ஷபாதிகளாக இருந்திருந்தால் தங்கள் ஜாதிக்கு மட்டும் விதிகளைக் குறைத்து 'லைஸென்ஸ்'தான் கொடுத்துக் கொண்டிருப்பார்களே தவிர, ஜாஸ்தியாக்கிக் கட்டிப் போட்டிருப்பார்களா?

தமிழ்நாட்டுக்கு தர்மத்தைச் சொன்னவர்களில் மூலபுருஷராகச் சீர்திருத்தக்காரர்கள், பகுத்தறிவுக்காரர்கள் உள்பட ஸகலராலும் ஒப்புக்கொள்ளப்படும திருவள்ளுவர் என்ன அபிப்பராயப்படுகிறார்?எல்லாருக்கும் ஒரே ஆசாரம் என்றில்லாமல், தனித்தனிக் குலாசாரம் என்பது உண்டு;அது பிராம்மணனுக்கே அதிகம்;பிராம்மணனின் பிரம்மயண்யமே அவனுடைய பிரத்யேகமான குலாசாரத்தால் ஏற்படுவதுதான் என்று அவர் தீர்மானமாக அபிப்ராயப்படுகிறார்.

ஒழுக்கம் என்பதே ஆசாரம்;அது உள்குணம், வெளிநடத்தை, வெளிச் சின்னம் எல்லாம் அடங்கியது என்று சொன்னேனல்லவா?இந்த ஆசாரத்தைப் பற்றி யொழுகுவது பற்றி "ஒழுக்கம் உடைமை"என்று திருக்குறளில் ஒரு அதிகாரம் (பத்துக் குறள்கள்) பண்ணியிருக்கிறார், அதை ஜெனரலாக, எல்லாருக்கும் 'அப்ளை'ஆவதாகத்தான் ஆரம்பித்துக்கொண்டு போகிறார். ஒழுக்கந்தான் மநுஷ்யனுக்கு உயர்வைத் தருவது;அதனால் பிராணனைவிட முக்யமானதாக ஒழுக்கத்தை, ஆசாரத்தை, ரக்ஷிக்க வேண்டும் என்று முதல் குறளில் சொல்கிறார்1. அப்புறம் (மூன்றாவது குறளில்) உயர்ந்த ஒழுக்கமுள்ளவனே உயர்குடி, அதாவது உயர் ஜாதிக்காரன்;ஒழுக்கம் கெட்டவன் தாழ்பிறப்புக்காரன் 2 என்று அவர் சொல்வதைப் பார்த்தால் ஒருவனுடைய குணத்தையும் நடத்தையையும் வைத்துத்தான் ஜாதியே தவிர, பிறப்பினாலே அல்ல என்ற இக்கால அபேத வாதம் மாதிரித் தோன்றுகிறது. ஆனால் இப்படியில்லை என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகிற மாதிரியே அடுத்த குறளைப் பண்ணியிருக்கிறார்கள்.

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

'பார்ப்பான்'என்றால் பிராம்மணன். ஞானதிருஷ்டியால் ஸத்யத்தை தரிசனம் பண்ணுவதால் அவன் "பார்க்கிறவன்"- "பார்ப்பான்". ரிஷிகளை seer (see-r) என்று இங்கிலீஷில் சொல்வதும் இதே அர்த்தம்தான். "ஓத்து"என்று இங்கே சொல்லப்படுவது வேதம். ஓதப்படுவது - அத்யயனம் பண்ணப்படுவது - எதுவோ அது ஓத்து.

இந்த (இப்போது சொன்ன) குறளுக்கு என்ன அர்த்தமென்றால் ஒரு பிராம்மணன் வேதத்தை மறந்துபோய் விட்டால்கூடப் பரவாயில்லை;மறுபடியும் அத்யயனம் பண்ணிக் கற்றுக்கொண்டு விடலாம் - "பார்ப்பான் ஓத்து மறப்பினும் மறுபடியும் ('மறுபடியும்'என்பது 'அண்டர்ஸ்டுட்') கொளல் ஆகும்"என்று prose-order பண்ணிக்கொள்ள வேண்டும். அதாவது, வேதம் மறந்துபோனாலும் மறுபடி கற்றுக் கொண்டு விடலாம்;கற்றுக்

கொளலாகும். ஆனால் அவன் ஒழுக்கத்திலிருந்து, அதாவது ஆசாரத்திலிருந்து வழுவிவிட்டால் அவனது பிராம்மண ஜன்மாவே கெட்டுப்போய்விடும், அதாவது வீணாகிவிடும்.

"ஒழுக்கம் குன்றப் பிறப்பு (அதாவது 'த்விஜன்ம விசேஷம்'என்கிற பிராம்மண குடிப்பெருமை) கெடும்"என்பது prose-order நவீனர்கள், 'ஆசாரமே இருக்க வேண்டியதில்லை;Vedas, Upanishads என்று லெக்சர் பண்ணிவிட்டால் போதும்;அப்படிப் பண்ணும் எல்லாரும் பிராம்மணர்தான்'என்கிறார்களென்றால், திருவள்ளுவரோ, "பிராம்மணனுக்கு வேதமே மறந்து போய்விட்டால் கூட பாதகமில்லை;மறுபடி கற்றுகொண்டு விடலாம். ஆனால் அவன் மாத்திரம் ஆசாரஹீனனமாக ஆனானோ, அதோடு அவனுடைய பிரம்மண்யமே போச்சு"என்கிறார். " ஆசார ஹீநம் ந புநந்தி வேதா :"என்ற சாஸ்திர அபிப்ராயத்தை அப்படியே echo பண்ணுகிறார் தமிழ்மறை என்ற குறளைக் கொடுத்த பெரியவர். எத்தனை வேதம் படித்திருந்தாலும் ஆசாரத்தை விட்டவன் வேதத்தினால் பலனடையமாட்டான். ஒரு பக்ஷிக் குஞ்சுக்கு இறக்கை முளைத்தவுடன் அது அந்த நிமிஷம் வரை இருந்த கூட்டைத் திரும்பிகூடப் பார்க்காமல் பறந்து விடுவதைப்போல, ஆசார ஹீனன் படித்த வேத வேதாந்தமெல்லாம் அவன் சாகிறபோது அவனைப் புண்ய லோகத்தில் சேர்க்காமல் அவனைத் திரும்பிகூடப் பார்க்காமல் போய்விடும் - என்றெல்லாம் தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதைத்தான் திருவள்ளுவரும் ரத்னச் சுருக்கமாய்ச் சொல்லியிருக்கிறார்.

ஒழுக்கத்தால்தான் ஒருத்தனுக்கு உயர்வு என்று ஜெனரலாகச் சொல்லிவிட்டு, உடனேயே இப்படி பிராம்மணனின் ஒழுக்கத்தை ஸ்பெஷலாகச் சொன்னதால் அவர் நம் கால அபேதவாதிகளில் ஒருத்தரில்லை என்று காட்டிக் கொண்டு விடுகிறார். மற்ற எல்லாரையும் விடப் பிராம்மணனுக்கு ஆசாரம் விசேஷமானது என்பதை ஒப்புக் கொண்டுதான் இங்கே தனியாக அவனைப் பற்றி மட்டும் சொல்கிறார்.

"பிறப்பொழுக்கம் குன்றக்கெடும்"என்பதை இன்னொரு தினுஸிலும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அதாவது, பிராம்மணன் தன்னுடைய பிறப்பொழுக்கமான, அதாவது பிராம்மணர்களுக்கு மாத்திரம் உரியனவான ஆசாரங்களில் குன்றிப்போனால் உலகமே கெட்டுப் போகும். கெடும் என்று அர்த்தம் பண்ணலாம். இன்னோரிடத்தில்*1 இவரே ஒரு தனி மநுஷ்யனுக்கு உண்டாகிற கெடுதலாயில்லாமல், ஒரு தேசத்துக்கே ஏற்படும் க்ஷாமங்களைச் சொல்லும்போது "அறுதொழிலோர் நூல் மறப்பர்"என்கிறார். அதாவது 'ஷட்கர்ம நிரதர் எனும் பிராம்மணர் வேதத்தை மறந்து போவார்கள்'என்கிறார். ஆனதால் பிராம்மணன் வேதாத்யயனத்தை விடுவதாலோ, வேறு தப்புப் பண்ணுவதாலோ அவனும், அவனுடைய ஜாதியும் மட்டுமின்றி லோகமே கெட்டுப்போகும் என்ற கருத்து உடையவர் திருவள்ளுவர் என்று தெரிகிறது. எனவே இங்கேயும் "கெடும்"என்பதை "அவன் தன் அந்தணப் பிறப்புக்குரிய ஆசாரவொழுக்கத்தில் குன்றினால் உலகமே கெடும்"என்று அர்த்தம் செய்து கொள்ளலாம். அங்கே அறுதொழிலோர் மறைநூல் மறப்பதே உலகுக்குத் தீமை என்றவர் இங்கே, மறையை மறந்தால் கூடப் பரவாயில்லை, அந்தத் தீமையை விடப் பெரிய ஹானி என்னவென்றால் அவன் குலாசாரத்தை, பிறப்பொழுக்கத்தை, விடுவதுதான் என்கிறார். வேதமே வேண்டாம், ஒழுக்கம் போதும் என்று சொல்கிற கோஷ்டியில் அவர் இல்லை. வேதம் போனால் லோகத்துக்குக் கஷ்டம் ஏற்படும் என்றே அபிப்ராயப்படுகிறவர். வேதத்தை memoriseபண்ணி (மனப்பாடம் செய்து), புஸ்தகம் எழுதி, பிரஸங்கம் பண்ணிவிட்டால் போதும், ஆசாரம் வேண்டாம் என்ற கோஷ்டியிலும் இல்லை. இரண்டும் வேண்டாம் என்ற கோஷ்டியிலும் இல்லை. இரண்டும் வேண்டும் என்கிறார். இரண்டில் அத்யயனத்தை விடுவதைவிட ஆசாரத்தை விடுவதே பெரிய கஷ்டத்தைக் கொடுக்கும் என்கிறார். ஸரியாகப் பார்த்தால், அத்யயனத்தை அடியோடு விட்டு விடுவதை அவர் கொஞ்சங்கூட ஒப்புக்கொள்ளாதவர் என்று தெரியும். தாற்காலிகமாக மறந்துபோவதைத்தான் சொல்கிறார். 'மறப்பினும்'என்கிறாரே தவிர 'இழப்பினும்', 'விடினும்'என்று சொல்லவில்லை. வேதத்தை விட்டே விட்டால் லோகத்துக்கு அனர்த்தம்தான்.

மறந்துபோன நிலையில்கூட, 'அது மறந்ததால் பரவாயில்லை, அந்த மறந்த நிலை அப்படியே நீடித்துவிட்டுப் போகட்டும்;பிராம்மணன் ஆசாரத்தோடே இருந்து விட்டால் அதுவே போதும்'என்கிறாரா?இல்லை. வேதத்தை மறந்தவன் அதை மறுபடியும்

கற்றுக்கொள்ள வேண்டும் என்றே சொல்கிறார். 'மறப்பினும் ஓத்துக் கொளல் ஆகும் ', அதாவது, மறுபடி கற்றுக்கொள்ள முடியும் என்கிறார். முடிகிற விஷயமென்றால் அப்படிப் பண்ணவேண்டுமென்பதே உள்ளர்த்தம். மறையை மறந்தவன் மறையை மறந்தாலும் குலாசாரத்தை மறவாமல் பின்பற்றிக்கொண்டு, பிறகு மறந்துபோன மறையையும் மீண்டும் கற்றுக்கொள்ள வேண்டும் பரம சாஸ்திரீயமாக, ஸநாதன நெறிப்படி திருவள்ளுவர் நினைத்து உபதேசம் பண்ணியிருக்கிறார்.

இதிலிருந்து முதலில் சொன்னாரே, ஒருவனின் உயர்ந்த ஒழுக்கத்தை வைத்தே ஒருத்தனுக்குக் குடிமை - உயர்குடித் தன்மை-என்றாரே, அதற்கும் ஸோஷலிஸமாக இல்லாமல் சாஸ்திரபூர்வமான அர்த்தத்தைப் புரிந்து கொள்ளலாம். எந்தக் குலமும், ஜாதியும் தனியாக உயர்ந்தது, தாழ்ந்தது என்று சாஸ்திரத்திலில்லை. பல லோக கார்யங்கள் ஸமூஹத்தில் வித்ரணையாகப் பங்கீடாக வேண்டும் என்ற உசந்த அபிப்ராயத்தில் உண்டான வர்ணாச்ரம ஏற்பாட்டில் எந்த ஜாதியும் எந்தக் குலமும் அதற்கான தொழிலை அநுஸரித்து அதற்கென்று ஏற்பட்ட ஒழுக்கத்தைப் பின்பற்றினால் உசத்திதான். அப்படிப் பண்ணுகிறவன் உசந்தவன்தான். இதே அபிப்ராயத்தில் தான் திருவள்ளுவரும் இந்த (ஸோஷலிஸ ஸமத்வம் மாதிரித் தெரிகிற) குறளைப் பண்ணியிருக்கிறார், உண்மையில் அவர் என்ன meanபண்ணுகிறாரென்றால் 'ஒருவன் தன்குலத்துக்கான ஒழுக்கத்தோடு இருப்பதுதான் அந்தக் குலத்தில் உயர்வை அவனுக்குத் தருகிறது. அந்த ஒழுக்கம் கெட்டவனானால் இழி பிறவியனாகி விடுகிறான்'என்பதே. இப்படி அர்த்தம் புரிந்துகொண்டால்தான் இதற்கு logical sequence-ஆக (தர்க்கரீதியில் தொடரிழையாக) எல்லாருக்குமே அவரவர் ஆசாரம் முக்யமானாலும், பார்ப்பனனுக்கு அது மிகமிக முக்கியமானது, அவனுக்கே சிறப்பாக ஆசாரங்கள் அதிகம் அமைந்துள்ளன என்ற அடிப்படையை ஒப்புக் கொண்டு,

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

என்று குறள் பண்ணிக்கொண்டு போயிருப்பதன் பொருத்தத்தைப் புரிந்து கொண்டு ரஸிக்க முடியும்.

இப்படியே சொல்லிக்கொண்டுபோய், ஒழுக்கம் என்பது பிரத்யக்மான த்ருஷ்ட பலனைத் தருவது மட்டுமில்லை;அத்ருஷ்டமாக நல்லொழுக்கமே புண்யம் என்பதாகி, என்றோ ஒரு காலத்தில் நல்லதைத் தரும்;தீய ஒழுக்கம் பாபம் என்பதாகி எந்நாளும் கஷ்டத்தைத் தரும் என்ற வைதிகக் கருத்தை வெளியிடுகிறார்*2.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**ஆசாரமும் வர்ணாச்ரமங்களும்**

ஸகல ஜனங்களும் இதுகள்தான் ரூல் என்று ஒரே விதமான ஆசாரங்களை வைக்காமல், அவரவருக்கும் ஜன்மாப்படி குல வழக்காக வந்துள்ள தொழிலையொட்டியும், அவன் படிக்கிற பால்ய தசையிலிருக்கிறானா கல்யாணம் பண்ணிக்கொண்டு குழந்தை குட்டி பெற்றுக் கொண்டு குடித்தனம் பண்ணும் ஸ்டேஜில் இருக்கிறானா, இதுகளை விட்டுப்விடப் பக்குவமாகிற நிலையிலிருக்கிறானா, அதற்கும் மேலே பரமாத்ம தியானம் தவிர வேறு வேண்டாம் என்கிற ஸ்திதிக்குப் போயிருக்கிறானா என்பதையொட்டியுமே ஒவ்வொரு தொழில், ஒவ்வொரு ஸ்டேஜுக்கும் ஏற்றதாக ஆசாரங்களை நம் சாஸ்திரங்கள் வித்யாஸப் படுத்திக் கொடுத்திருக்கின்றன. தொழிலையொட்டி ஏற்பட்டது வர்ண தர்மம்;ஒருத்தர் எந்த தசையிலிருக்கிறாரென்பதையொட்டி ஏற்பட்டது ஆச்ரம தர்மம். இரண்டையும் சேர்த்து "வர்ணாச்ரம"ங்களைப் பொருத்து ஆசாரங்கள் ஏற்பட்டிருப்பதாகச் சொல்கிறோம். இது invidious discrimination-ஆக (பக்ஷபாதமாக)ப் பண்ணினதே அல்ல. அவனவனையும்

அவனுடைய நிலையிலிருந்தே உயர்த்திக் கொண்டு போகவும், அதே சமயம் ஸமூஹம் பூராவையும் சீராக அபிவிருத்தி பண்ணிக்கொண்டு போகவுமே இப்படி, யாரைவிட அறிவிலும் பூததயையிலும் பெரியவர்கள் இல்லையா அப்படிப்பட்ட ரிஷிகள் சாஸ்திரங்கள் மூலமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். நம் மதத்தின் யுகாந்தரமான ஜீவசக்திக்கும் இதுவே உயிர் நிலையாயிருந்திருக்கிறது*.

உடம்பால் கடுமையாக உழைக்க வேண்டியவர்களுக்கு ஆசாரக் கட்டுப்பாடுகளையும் அதிகம் போட்டு இறுக்காமல், கொஞ்சம் ஸ்வதந்திரமாக விட்டு, பிராம்மணன் மாத்திரம் ஸௌக்யங்களைத் தியாகம் பண்ணி நிரம்ப ஆசாரக் கட்டுப்பாடுகளை அநுஸரித்து 'ஐடியல்'நிலையை முடிந்த மட்டும் வாழ்ந்து காட்ட வேண்டுமென்று சாஸ்திரங்கள் வைத்திருக்கின்றன.

*தெய்வத்தின் கு+ரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**ஆதர்ச நிலையும் நடைமுறை ஸாத்தியமும்**

ஸமூஹத்தில் ஸகல வர்க்கத்தினருக்கும் 'ஐடியல்'தர்மங்களை வைத்தால் ஒருவரும் அதைப் பின்பற்றாத நிலைதான் ஏற்படும் என்பதைப் புரிந்துகொண்டு நம் சாஸ்திரம் 'ரூல்'களை வித்தியாஸப்படுத்திக் கொடுத்திருக்கிறது. இதைக் கண்கூடாக மற்ற மதங்களின் விஷயத்தில் பார்க்கிறோம்.

யுத்தம் க்ஷத்ரிய தர்மமென்றும், அஹிம்ஸை பிராம்மண தர்மம் என்றும் வைத்த நம் மதஸ்தரைவிட, 'ஒரு கன்னத்தில் அடித்தால் இன்னொரு கன்னத்தையும் காட்டு'என்று எல்லாருக்கும் பொதுவாக வைத்தவரின் மதத்தைச் சேர்ந்தவர்கள்தான் ஜாஸ்தி யுத்தம் செய்து, தேசம் தேசமாக, கண்டம் கண்டமாகத் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்பி, அணுகுண்டு வரையில் கொண்டுபோய் விட்டிருக்கிறார்கள்!'க்ரைஸ்ட், புத்தர் மாதிரி பிரேமையை, அஹிம்ஸையை நம் மூல புருஷர்கள் எங்கே சொன்னார்கள்?'என்று நாமே சொல்லிக் கொண்டிருந்தாலும் historical fact (சரித்ர உண்மை) நாம்தான் பரம ஸாத்விகர்களாக, சாந்தர்களாக, எல்லா மதஸ்தரையும் அரவணைத்துக் கொண்டு போகிறவர்களாக இருந்திருக்கிறோமென்பது. இப்போதும் அந்த அணுகுண்டுக்காரர்களையே நாம் அஹிம்ஸா மார்க்கத்தால்தான் வெளியேறி ஸ்வதந்திரம் பெற்றதாகவும் பெருமையடித்துக் கொள்கிறோம். ஐடியலை எல்லோருக்கும் ரூலாக வைக்காமல், குறிப்பிட்டவர்களுக்கு மட்டும் வைப்பதாலேயே அதை அவர்கள் தனிப் பெருமிதத்தோடு, கவனத்தோடு ரக்ஷிக்கிறார்கள். இப்படிச் சிலர் இருப்பதைப் பார்த்து இந்த உத்தம உதாரணத்தாலேயே அந்த ஐடியலைத் தங்களுக்கு ரூலாகக் கொள்ளாதவர்களுங்கூட ஓரளவுக்கு அதைத் தாமாகவே எடுத்துக் கொண்டு பின்பற்றி, ஸமூஹம் முழுவதிலுமே அதன் 'ஸ்பிரிட்'பிரகாசிக்கும்படிப் பண்ணுகிறார்கள். இதனால்தான் மற்ற மத ஸமூஹங்களைவிட நம் ஸமூஹமே ஆதியிலிருந்து தர்ம வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாய் இருந்து வந்திருக்கிறது.

திருஷ்டாந்தமாக, ஐடியல் அஹிம்ஸையை ஸகலருக்கும் வைத்த புத்தரின் மதத்தில்தான் இன்றைக்கு ஹிந்துக்களைவிட ஜாஸ்தி 'நான்-வெஜிடேரியன்'கள் இருக்கிறார்கள்! ஹிந்து மதத்தில் பிராம்மணனைத் தவிர மற்றவர்களுக்கு மாம்ஸ போஜனம் கூடாதென்று ரூலே இல்லாமலிருந்தும் இங்கேதான் ஜாஸ்தி வெஜிடேரியன்கள் என்பதாகயிருக்கிறது! பௌத்த மதஸ்தர்களிலோ இன்று பிக்ஷுக்கள் உள்பட எல்லோருமே மாம்ஸம் சாப்பிடுபவர்களாக இருப்பதை அந்நிய தேசங்களில் பார்க்கிறோம்.

பலவிதமான தொழில்களில் ஈடுபட்டுள்ள எல்லாருக்கும் ஏகப்பட்ட ஆசாரங்களைக் கொடுத்துக் கஷ்டப்படுத்தக்கூடாது என்ற தாக்ஷிண்யத்தினாலேயே ஜாதி ஆசாரங்கள் என்று வித்யாஸமாகப் பண்ணிக் கொடுத்திருக்கிறார்கள் என்று ஆரம்பித்தேன். அது திருக்குறளில் கொண்டு விட்டு விட்டது. நல்ல விஷயந்தான். திருவள்ளுவர் பரம வைதிகர் என்று தெரிந்து

கொள்ள முடிந்தது.

நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழவு முதலான தொழிலைச் செய்கிறவனிடம், 'இத்தனை கவளத்துக்கு மேல் சாப்பிடாதே; அதுவும் இத்தனை நேரத்துக்கு முந்தியும் சாப்பிடாதே, இன்ன நேரத்துக்குப் பிந்தியும் சாப்பிடாதே; ஏகாதசியில் காயக் காயக் கிட; மூன்று வேளையும் குளி' என்றெல்லாம் பிராம்மண ஆசாரத்தைச் சொன்னால் அவன் எத்தனை கஷ்டப்படுவான்? இப்படி நல்லெண்ணத்தின் பேரில் சொன்னதையே, 'பிராம்மணனுக்கு மாத்திரம் நிறைய ஆசாரமென்றால், அவன் மட்டும்தான் புண்யலேகம் போகும்படியாகப் பக்ஷபாதம் பண்ணியிருப்பதாகவே அர்த்தம்' என்கிறார்கள்.

'அஹிம்ஸையானது சித்த சுத்திக்கு ரொம்பவும் உபகாரம் பண்ணுகிறது என்கிறீர்கள். ஆனால் பிராம்மணனுக்கு மட்டும் அஹிம்ஸை விதி கட்டாயமானது, மற்றவர்களுக்கு இல்லை என்கிறீர்கள். அப்படியானால் பிராம்மணன் மாத்திரம் சித்த சுத்தி பெற்றால் போதும் என்று பக்ஷபாதம் பண்ணினதாகத்தானே ஆகிறது? 'எருவுக்குத் தகுந்த பயிர்; உணவுக்குத் தகுந்த உயிர்' என்று சொல்லிவிட்டு, பிராம்மணனுக்கு மட்டும் அஹிம்ஸா மரக்கறி போஜனம், மற்றவர்களுக்கு மாம்ஸம் பரவாயில்லை என்றால் இது 'டிஸ்க்ரிமினேஷன்' இல்லாமல் வேறென்ன?' என்று கேட்கலாம்.

அஹிம்ஸா போஜனத்தால் ஸத்வ குண அபிவிருத்தி ஏற்படுவதைக்கொண்டு அதைச் சித்த சுத்திக்காகப் பொதுவில் விதிதித்திருக்கிறது. ஆனால் பகவானின் லீலையில் இந்த லோகத்திலேயே தர்ம ரக்ஷணார்த்தம் ராஜஸ, தாமஸ காரியங்கள்கூட நடக்க வேண்டியிருக்கிறது தப்பு செய்கிறவனைத் தண்டிக்க வேண்டியிருக்கிறது. தர்மத்துக்காக யுத்தம் பண்ணிகொன்று குவிக்கவும் வேண்டுமென்று தானே பகவான் அர்ஜுனனுக்கு உபதேசம் பண்ணினார்? இது ராஜஸ குணம்தான். உழுவது, கொத்துவது, வெட்டுவது முதலான கார்யங்களை ஸமூஹ க்ஷேமத்துக்காகப் பண்ண வேண்டியிருக்கிறது. இப்படிக் கடுமையாக உழைப்பவர்கள் அடித்துப் போட்டாற்போல தூங்கவேண்டும். இது தாமஸம்தான். ஆனாலும் லோக க்ஷேமார்த்தமாக ஏற்பட்ட இந்தக் கார்யங்களைச் செய்யும்படிப் பிறப்பினாலேயே ஈஸ்வராக்ஞை பெற்றிருப்பவர்கள் இந்த ராஜஸ தாமஸங்களை மேற்கொள்வதால் அது அவர்களுக்கு தோஷமாகாது.

ஸமூஹத்துக்காகச் செய்வதால் அந்தத் தியாகத்தினாலேயே, செய்கிற கார்யம் புண்யமாகிறது. இவர்கள் ராஜஸ, தாமஸ குணத்துக்கு அநுகூலமான அசைவ போஜனம், பழையது மாதிரி ஆசார விரோதமான சாப்பாட்டு தினுசு முதலியவற்றைச் சாப்பிடுவதிலுள்ள தோஷங்கூட அவர்களால் ஸமூஹத்துக்கு ஏற்படுகிற உபகார புண்யத்தில் அடிபட்டுப் போய்விடும்.

"எருவுக்கு தகுந்த பயிர். உயிரும் பயிர் மாதிரிதான். அதனால் ஆஹார விஷயத்தில் ரொம்ப கவனம் வேண்டும். உயிர் என்றால் சரீரம் மூச்சு விடுவது மட்டுமில்லை. மநுஷ்யனுக்கு மனஸில் உயர்வு இல்லாவிட்டால் அவன் உயிருந்தும் பிணம்தான். மனஸில் உயர்வுதான் ஜீவனுக்கு உயிர்நாடி" என்பெதல்லாம் ஸரிதான். ஆனால் மனஸின் உயர்வை சரீரத்தில் செலுத்தி ஸமூஹத்துக்கான பலதரப்பட்ட கார்யங்களையும் பண்ணவேண்டியிருக்கிறதே! ஒருத்தன் தர்ம ரக்ஷணத்துக்காகக் கத்தியைப் பிடித்துக் கொண்டு சண்டை போட வேண்டியிருக்கிறது. தர்மரக்ஷணை என்பது மனஸின் உயர்த்தி. அதுவே இவனுடைய கார்யத்தில் வருகிறபோது யுத்தம் என்று ஹிம்ஸை மாதிரி ஆகவேண்டியிருக்கிறது. ஆனால் இவன் ஜன ஸமூஹம் தர்மத்தில் அழிவடையாமல் காப்பாற்றுகிற உயர்ந்த நோக்கம் கொண்டவன். "க்ஷதாத் கில த்ராயதே"* - ஜன ஸமூஹம் துஷ்டர்களால் அழியாமல் காப்பாற்றுகிறான் அல்லவா? -அதனாலேயே க்ஷத்ரியன் என்று இவனுக்குப் பெயர். இந்த உயர்ந்த நோக்கம் இவனுக்குப் பெயர். இந்த உயர்ந்த நோக்கம் இவனுக்கு இருப்பதால், இவனுக்கு யுத்தத்தில் உத்ஸாஹமும் நல்ல சரீரக் கட்டும் ஏற்படுவதற்காக மது மாம்ஸாதிகளை ஓரளவு சாப்பிட்டுவிட்டுப்போகட்டும் அது அவன் சூழ்நிலையில் அவனுக்குரிய தொழிலால் அவன் பெறுகிற ஆத்ம வளர்ச்சியைக் கெடுக்காது என்றிப்படி சாஸ்திரம் வைத்திருக்கிறது.

ஆனால் இப்படிப்பட்ட க்ஷத்ரியர்களிலும் ராஜரிஷிகள் என்று கொண்டும்படியாக அஹிம்ஸா தர்மம் முதலான எல்லாவற்றிலும் சிரேஷ்டர்களாகப் பலர் இருந்திருக்கிறார்கள்.

அஹிம்ஸை என்றவுடனேயே நினைவுக்கு வருகிற புத்தர், மஹாவீரர் இரண்டு பேருமே க்ஷத்தரியர்கள்தானே? புராண இதிஹாஸங்களைப் பார்க்கும்போது அநேக ராஜாக்கள் விருத்தாப்பியத்தின் போது ராஜ்யத்தைப் புத்திரனிடம் ஒப்படைத்துவிட்டு, காட்டுக்குப் போய் தபஸ் பண்ணினார்களென்று தெரிகிறது. அப்போது இவர்கள் சாக போஜனம்தான் பண்ணியிருக்க வேண்டும். 'ஐடியல்' ஒன்று எல்லாருக்கும் விதியாயில்லாமல் ஒரு பிரிவுக்கு மட்டும் ரூலாக இருந்ததால், தானாகவே மற்றவர்களுக்கும் அதில் பற்றுதல் ஏற்பட்டு அவர்களும் அதை எடுத்துக்கொண்டு, அந்த ஐடியல் ரூல் மற்றவர்களிடமும் பிரகாசித்ததுதான் இதற்குக் காரணம்.

தேசத்தில் பொருளாதார ஸுபிக்ஷ ஏற்பட வேண்டாமா? இதற்குச் சிலபேர் வியாபாரம், வியவஸாயம், கோரக் (பசு வளர்ப்பு) செய்ய வேண்டும். வியாபாரத்துக்காகக் கடல் கடந்தும் போக வேண்டியிருக்கும். அப்போதுதான் பொருளாதார மேம்பாடு தேசத்துக்குக் கிடைக்கும். அருளை முக்யமாகச் சொன்னாலும் பொருளையும் வேதமதம் மறக்கவில்லை. அதற்கு எவ்வளவு இடமோ அதைக் கொடுத்துத் தானிருக்கிறது, நாலு புருஷார்த்தத்திலேயே 'அர்த்தம்' இருக்கிறது; அறம், பொருள் என்கிறது அதுதான். லோக வாழ்க்கையை ஹிந்துமதம் அலக்ஷ்யப்படுத்துகிறது என்று சொல்வது நியாயமே யில்லாத குற்றச்சாட்டு. நம் மதத்தில் பொருள் வளர்ச்சிக்கென்றே நாலு வர்ணத்தில் ஒன்றை வைத்திருக்கிறது. ஸமூஹத்தில் பொருள் வளர்ச்சியை உண்டாக்குவதான தர்மத்தைப் பண்ணும் இவனுக்கு வைச்யன் என்று பெயர். 'விச்', 'விச்வம்', 'வைச்யன்' எல்லாவற்றுக்கும் 'ரூட்' ஒன்றுதான். இவன் லோகம் பூராவும் போய்ப் பொருள் தேடி வரவேண்டியவன். 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது இவனுக்கு வைத்த தர்மம். இவனுக்காகக் கடல் வாணிப்பத்தைப் பெருக்கித் தந்தத்தில் க்ஷத்ரியர்களான ராஜாக்களுக்கும் பெருமை ஏற்பட்டது. ஸமுத்ரத்தில் பல நாட்கள் போக வேண்டியவனை, பல தேசங்களுக்குப் போக வேண்டியவனை வெஜிடேரியனாகத்தான் இருக்க வேண்டுமென்றால் முடியமா? இவனுடைய சூழ்நிலை, காரியம் இவற்றைப் பொருத்து இவனுக்கும் சாக போஜனந்தான் என்று வைக்காமல் இவனால் ஸமூஹம் பெறுகிற உதவியினாலே இவனுடைய மாம்ஸ போஜன தோஷம் போகட்டுமென்று generous-ஆக இவனுக்கு 'ரூல்' போட்டிருக்கிறது. ஆனாலும் என்ன பார்க்கிறோம்? வைச்யர்களில் வடக்கே அநேக ராஜ்யங்களின் பனியாக்கள், தெலுங்கர்களான கோமுட்டிகள், தமிழ் நாட்டுச் செட்டிமார்களில் சுத்தசைவர்கள் ஆகியோர் வெஜிடேரியன்களாகவே இருக்கிறார்கள். இதிலிருந்து என்ன தெரிகிறது? ஆதியில் பல தேசங்களுக்குப் போய் நன்றாகச் செல்வம் ஸம்பாதித்து வந்தபின் வைச்யர்களும் வயஸுக்காலத்தில் ஊரோடு ஸெட்டில் ஆனபோது, தாங்களாகப் பிரியப்பட்டு இங்கே ஐடியலாக பிராம்மணன் பின்பற்றிய அஹிம்ஸா போஜனத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் ராஜாக்களைப் போல வ்ருத்தாப்யத்தில் காட்டுக்குப் போய்விடவில்லை. வீட்டிலேயேதான் இருந்து கொண்டிருந்தார்கள். அதனால் இவர்களுடனேயே வஸித்து வந்த இவர்களுடைய பின்தலைமுறையினருக்கும் இவர்களுடைய ஆஹார நியமம் இளவயஸ தொட்டே வந்திருக்கிறது. அதனால் அப்புறம் இவர்களுக்கு சைவபோஜனமே பிறந்தநாள் தொட்டுக் குலவழக்காகியிருக்கிறது.

இப்படியேதான் நாலாம் வர்ணத்திலும் உடல் வருந்தி உழைத்து ஸமூஹத்துக்கு உபகாரம் பண்ண வேண்டிய அவனுக்கு அவனுடைய சூழ்நிலையில் வெஜிடேரியனிஸத்தை வைக்காமல் விட்டிருக்கிறது. ஆனால் காலப்போக்கில் அந்த வர்ணத்தாரிலேயே பலர் உடம்பு வேலைசெய்கிறவர்களாக இல்லாமல், வியாபாரம் வியவஸாயம் முதலியவற்றில் ஈடுபட்டு வளர்ச்சி அடைந்தபோது, தாங்களாகவே சைவ ஆஹாரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். வடக்கேயும் சரி, தெற்கேயும் தஞ்சாவூர் ஜில்லாவில் அநேக வேளாளர்கள், திருநெல்வேலியில் பிள்ளைமார் போன்றவர்களும் சரி, பிராம்மணன்கூடத் தோற்றுப்போய் விடுவான் என்கிற அளவுக்குப் பரம சுத்தமான மரக்கறி போஜனம், வ்ரதாநுஷ்டானம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் 'ஆப்ஷன'லாகச் சிலருக்கு வெஜிடேரியனிஸத்தில் பிடித்தம் ஏற்படுவதற்குக் காரணம் நாலு வர்ணங்களில் பாக்கியுள்ள பிராம்மணனுக்கு அதைக் 'கம்பல்ஸரி'யாக வைத்திருப்பதுதான். இவன் வேதத்தை ஓதியும் ஓதவித்தும் ரக்ஷிக்க வேண்டியவனாதலால் மந்திர சுத்தியை முன்னிட்டுப் புலால் உண்ணக்கூடாது என்று வைத்தார்கள். இதன் திரை கடல் ஓடியும் திரவியம் சேர்க்கவும் கூடாது என்று ரூல்.

இவனுக்கு தரித்ரந்தான் சாஸ்திரம் விதித்திருப்பது இவன் அந்நிய தேசங்களுக்குப் போகப்படாது. போனால் பிரஷ்டனாகி விடுவான். ஏன்? வேதரக்ஷணத்தின் purity கெட்டுப்போய் விடுகிற ஹேது உண்டாகிவிடும் என்பதால்தான். வெளிநாடுகளுக்குப் போனால் அவற்றின் பழக்கவழக்கங்கள் இவனுக்கு ஏற்பட்டுவிடும். ஸ்வதர்மமான பழக்கவழக்கம் போய்விடும். வெளி தேசத்துக்குப் போய்விட்டுத் திரும்பிவந்து, இப்படிப்பட்ட விதேசப் பழக்கங்களை ஸ்வஜாதி பந்துக்களிடம் கலந்து, அவர்களால் ஆகிற வேத ரக்ஷணையைக் கெடுத்துவிடப் போகிறானே என்றுதான் பிரஷ்டம் பண்ணச் சொன்னது.

இவனுக்குக் கம்பல்ஸரியாக வைத்த அநேக ஆசாரங்களும் வ்ரதாநுஷ்டானங்களும் மற்றவர்களையும் ஆகர்ஷித்து அவர்கள் ஒரு ஸ்டேஜுக்குப் பிற்பாடு ப்ரியப்பட்டு தாங்களும் அவற்றை adopt பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

இப்படியே (அதாவது வர்ணப் பாகுபாடு போலவே)தான் பிராம்மணனுக்கான ஆச்ரம விபாகமும் பால்ய தசையில் இருக்கிறவனைப் பட்டினி கிடக்கச் சொல்லலாமா என்று பிரம்மச்சாரிக்கு ஆஹாரத்தின் அளவில் கட்டுப்பாடு பண்ணாமல் விட்டிருக்கிறது. அளவில்தான், quantity-யில்தா¡; quality-யில் இல்லை. அவனும் சுத்த வெஜிடேரியன் ஆஹாரந்தான் சாப்பிட வேண்டும். ஆனாலும் வ்ரதம், உபவாஸம் என்றில்லாமல் நிறையச் சாப்பிடலாம். இவன் செய்யவேண்டிய வித்யாப்யாஸத்தையும் குருகுலவாஸத்தையும் பொருத்து இவனக்கென்று தர்மங்கள். கிருஹஸ்தனக்கென்று பல தர்மங்கள். அதற்கு வேறாக ஸந்நியாஸிக்கு ரூல்கள் குழந்தை குட்டிகளைக் காப்பாற்றுவது, பத்தினியின் கற்பை ரக்ஷிப்பது, குடும்பத்தின் மானத்தைக் காப்பாற்றுவது எல்லாமும் க்ருஹஸ்தனின் கடமையில் வரும். ஸமூஹத்துக்கு ஆற்றவேண்டியதாகவும் இவனுக்குப் பல பொறுப்புகள் இருக்கின்றன. உத்யோகம், சொத்து முதலியன இல்லாத ஸந்நியாஸிகளையும் இவன்தான் ஆதரிக்கிறான். இப்படி மற்றவர்களின் ரக்ஷணையைச் செய்யும்போது அவர்களுக்காக பண்ணவும் fight (போராடவும்) ஸந்தர்ப்பங்கள் ஏற்படலாம். அதனால்தான் இவனுக்கு அஹிம்ஸையை 'ஸ்டரிக்ட்' ஆக வைக்கவில்லை. அஹிம்ஸா போஜனத்தைச் சொல்லியிரு ந்தாலும், துஷ்டர்களை தண்டிப்பது, பூச்சி பொட்டுகளை அடிப்பது ஆகியவையெல்லாம் கிருஹஸ்தனுக்கு அநுமதித்திருக்கிறது. லோகம் நன்றாக இருக்க இவன் யாகம் பண்ண வேண்டியவனாயிருப்பதால் அதில் பலியையும் அநுமதித்திருக்கிறது.

ஸந்நியாஸி விஷயம் வேறு. அவனுக்குப் பெண்டாட்டி, பிள்ளைகுட்டி இல்லை. ஸமூஹ விசாரமும் இல்லை. லோகம் எப்படிப் போனாலும் அதைப் பற்றி அவனுக்குப் பொறுப்பு ஒன்றுமில்லை. பரமாத்ம சிந்தனையாகவே இவன் இருப்பதால், பிரேம ஸ்வரூபமான அந்தப் பரமாத்மாவின் அருள் தன்னால் இவன் வழியே ஸர்வஜனங்களுக்கும் பாய்ந்து நல்லது செய்ய வேண்டுமே தவிர, இவனாகக் கார்யத்தில் இறங்கி ஸமூஹத்துக்கு எதுவும் செய்ய வேண்டுமென்பதில்லை. இவன் பரமாத்மாவை அடைகிறதேதான் ஸமூஹத்துக்கும் செய்கிற உபகாரம். அதனால் இவனுக்கு துஷ்ட சிக்ஷணம், யாகம் ஆகிய எதையும் கடமையாகக் கொடுக்கவில்லை. பரிபூர்ண அஹிம்ஸா தர்மமே இவனுடைய தர்மம் என்று வைத்திருக்கிறது. ஹிந்து மதத்தின்படி ஒரு தினுஸிலும் ஹிம்ஸைக்குக் காரணமாக இல்லாமல், 'ஒரு இலையைக் கூடக் கிள்ளக்கூடாது' என்கிற அளவுக்குத் தீவிரமான அஹிம்ஸைக்கு அதிகாரியாக வைத்திருப்பது ஸந்நியாஸியைத்தான்.

இப்படி வர்ணமென்றும் ஆச்ரமமென்றும் தர்மங்களைரப் பிரித்துக் கொண்டதால்தான் மற்ற எந்த மதஸ்தர்களாலும் முடியாத மிக மிக உயர்ந்த கொள்கைகளை நம் மதஸ்தர்களில் ஏராளமானவர்கள் அநாதிகாலம் தொட்டு அழியாமல் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். மற்ற மத புருஷர்களின் உபதேசத்தையே இன்றைக்கு இருக்கிற நம்மவர்கள் எடுத்துக் கொண்டு, ஆனால் அவர்களைப்போல் ஆத்ம ஸம்பந்தமாகவும் இல்லாமல், பெரும்பாலும் அரசியல் நோக்கத்திலேயே, "எல்லாரும் ஒன்றுதான், எல்லாரும் எல்லாக் காரியங்களையும் செய்யலாம்" என்று ஆரம்பித்து ஒவ்வொரு உயர்ந்த கொள்கையாக விட்டுவிடும்படிப் பண்ணி, தர்மத்தில் குழப்பம் உண்டாகி வருகிறார்கள்.

'நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்பதிலே இப்படி அதிகார பேதம் பண்ணி எவனோ ஒருத்தனுக்கு பரம உத்தம தர்மத்தை விதியாக

வைக்கிற தாத்பரியம் அடங்கியிருக்கிறது. அத்தனை பேரும் நல்லவனாகத்தானிருக்க வேண்டுமென்றால் முடியாது; ஒரு நல்லவன் இருந்தாலே அவனை உத்தேசித்து அத்தனை பேரும் மழை பெய்துவிடுகிறது என்று பழமொழி சொன்னார்கள். ஸமூஹத்தில் ஒரு பிரிவு உத்தம தர்மத்தை அநுஷ்டித்தாலே போதும், அதன் பலன் அத்தனை பிரிவுகளையும் சேர்ந்துவிடும். சிலருடைய அநுஷ்டானத்தாலேயே ஸகலருக்கும் தர்ம மழை, அன்பு மழை, ஆண்டவனுடைய அருள் மழை கிடைத்து விடும்படியாக வர்ணாச்ரம விபாகம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

அவனவன் எந்தக் கர்மத்திலிருக்கிறானோ அதற்கேற்க அவனவன் தர்மம், ஆசரணைகள் இருக்கும். ஒவ்வொருதனுக்கும் தன்னுடைய கர்மத்தை மனஸில் காமம், க்ரோதம் அதிகம் இல்லாமல், அதாவது ஆசை-த்வேஷம் அதிகமில்லாமல், செய்யவேண்டும். இப்படிச் செய்தால் முதலில் வெளிப்பார்வைக்கு ஹிம்ஸை முதலானவை ஸ்வதர்மமாக இருக்கிறவனுக்குக்கூடப் போகப்போக அஹிம்ஸை முதலான தர்மங்களில், உயர்ந்த பண்புகளில், உயர்ந்த கொள்கைகளில் தானாகப் பிடிப்பு உண்டாகி அவற்றை அநுஸரிக்கத் தொடங்கி விடுவான். பிரத்யக்ஷமாக நம் தேசத்தில் இப்படி நடந்து வந்திருப்பதைப் பார்க்கிறோம்.

கீதாதி சாஸ்திரங்களில், "மநுஷ்யனாய்ப் பிறந்தவர்கள் தத்தமது கர்மாவில் கண்ணும் கருத்துமாயிருந்தே உயர்ந்த ஸித்தியை அடைகிறார்கள். தன்னியல்பாகப் பக்குவமாகி இதைவிட உயர்ந்த தர்மத்துக்கு போக வேண்டுமேயொழிய, பிறரது தர்மம் எத்தனை உசத்தியானதாய்த் தோன்றினாலும் அபக்குவ நிலையில் அதற்கப் போவதால் ச்ரேயஸ் வந்துவிடாது. ஸ்வதர்மத்தில்தான் ச்ரேயஸ். ஸ்வதர்மத்தைப் பண்ணியே செத்துப்போனாலும்கூட அதுதான் ச்ரேயஸ்" என்றெல்லாந்தான் சொல்லியிருக்கிறது.

ஸ்வே ஸ்வே கர்மண்பிரத: ஸம்ஸித்திம் லபதே நர: *

(கீதை 18.45)

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத் :*

(கீதை 18.47 ; 3.35)

ஸ்வதர்மே நிதநம் ச்ரேய: (கீதை 3.35)

இப்படியாக அதிகார பேதப்படி நாலு வர்ணத்தையும் நாலு ஆச்ரமத்தையும் ஒட்டி ஏற்பட்டிருக்கும் வித்யாஸமான தர்மங்களைத்தான் பின்பற்ற வேண்டுமே தவிர, எல்லாருக்கும் ஒன்றுதான் தர்மம் என்று பண்ணப்படாது என்பதிலேயே நம் சாஸ்திரங்கள் உறுதியாயிருக்கின்றன.

மேல் பார்வைக்கு இப்படி பண்ணின ஹிந்து சாஸ்திரகாரர்கள் கருணையில்லாதவர்கள் என்றும், எல்லோருக்கும் ஒரே தர்மத்தைச் சொன்ன புத்தர், ஜீஸஸ் போன்றவர்கள்தான் கருணையுள்ளவர்கள் என்றும் தோன்றினாலும், நடைமுறையில் பார்த்தால், அவர்கள் அத்தனை பேருக்கும் வைத்த உத்தம தர்மங்களைப் பண்ணுகிறவர்கள் நம்முடைய ஹிந்து மதத்தில்தான் கணிசமாக இருக்கிறார்களே தவிர, அவர்களுடைய சொந்த மதஸ்தர்களில் மிகப் பெரும்பாலோர் இவற்றைக் கழித்துக் கட்டியிருப்பதையே பார்க்கிறோம். பலனைப் பார்த்தால், லோகத்துக்கு உண்டான நலனைப் பார்த்தால், நம்முடைய சாஸ்திரங்களைச் செய்த ரிஷிகளையும் மநு முதலான பெரியவர்களையுந்தான் கருணையுள்ளவர்களென்று சொல்ல வேண்டும்.

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### அதிகாரபேதமின்மையின் தோஷங்கள்

அதிகாரபேதம் பண்ணி வைக்காதவர்கள்தான் தங்கள் மதஸ்தர்களுக்கு அநேக தோஷம் ஏற்படுவதற்கு இடம் கொடுத்து விட்டிருக்கிறார்கள். எப்படியென்று சொல்கிறேன். முதலாவது தோஷம், ஸகல ஸாமானிய ஜனங்களாலும் இந்தக் கடுமையான நெறிகளைப் பின்பற்ற முடியாததில் அவர்கள் இவற்றிலிருந்து விலகிப் போவதால் தங்களுடைய மதக் கொள்கையை விட்ட தோஷத்துக்கு ஆளாகிறார்கள்.

இப்போது அஹிமாஸையை உதாரணம் சொன்னேனே, அதுமாதிரி இன்னொன்றும் சொல்கிறேன். ஸத்யத்துக்குக்கூட (அதிகாரி பேதமில்லாவிட்டாலும்) ஸந்தர்ப பேதம் இருப்பதை நம் சாஸ்திரங்கள் அங்கீகரிக்கின்றன. ஸத்யத்தைச் சொல்வதே ஒரு நிரபராதிக்குக் கெடுதலை உண்டாக்குமானால் அப்போது வாக்கு ஸத்தயத்தைவிட, பூதஹிதத்தைச் செய்யும் பிரமைதான் பெரிய ஸத்யம் என்பது நம் சாஸ்திரம். திருஷ்டாந்தமாக, பத்துப் போக்கிகள் ஒரு பெண்ணைத் துரத்திக்கொண்டு வந்து, அவர்கள் நம்மிடம், "அந்தப்பெண் எங்கே போனாள் தெரியுமா?"என்று கேட்டால், அந்த ஸந்தர்ப்பத்தில் "தெரியாது"என்று சொல்வதுதான் ஸரி என்பது நம் மதக் கோட்பாடு. எல்லாரும் எப்போதும் நிஜமே பேசவேண்டும் என்று சொல்லும் மதங்களிலிருப்பவர்கள் இம்மாதிரி ஸமயத்தில் அந்தப் பெண்ணைக் காட்டிக் கொடுத்துவிடும்படியாகவே ஆகும். இல்லாவிட்டால் மதக் கொள்கையை மீறின பாவம் வந்துவிடும்!

டிப்ளமஸி'என்பதற்காக ராஜாங்கத்தார் அநேக உண்மைகளை மறைக்கும்படியாகவும், மாற்றிச்சொல்லும்படியாகவும் ஏற்படுவதுண்டு. இப்படிச் செய்யவிட்டால் தேசத்துக்கு ஹானி உண்டாகும்;அல்லது சட்டத்தை நடத்துவதற்கு அவசியமான ஸர்க்கார் என்ற அமைப்பிலேயே விரிசல் ஏற்பட்டுவிடும். காந்தி மாதிரியானவர்கள் இதெல்லாம்கூடத் தப்பு என்று சொன்னாலும், அப்புறம் நமக்கு ஸ்வதந்திரம் வந்த பிற்பாடு, சில விஷயங்களிலாவது 'காந்தீயன் ஸத்யம்'ஒப்புக் கொள்ளாத 'டிப்ளமஸி'யை அநுஸரிக்கும்படிதான் ஆகியிருக்கிறது. மத புருஷர்களுக்கெல்லாம் மேலேதான் இப்போதும் காந்தியைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் செய்கிறது அவர் கொள்கைக்கு வேறாய் இருக்கிறது என்னும்போது 'ஹிபாக்ரிஸி'என்ற தோஷம் ஏற்படுகிறது. டிப்ளமஸியில் ரொம்பவும் கீழ் லெவல்களுக்கு War-time-ன் (உலக யுத்தத்தின்) போது போன அநேக அந்நிய தேச ராஜாகங்கள் அவர்களுடைய மதங்கள் சொன்ன ஸத்யக் கொள்கையை மீறியே போயிருக்கின்றன. நம் தேசத்திலோ 'அர்த்த சாஸ்திரம்'என்றுள்ள ராஜரீதியில் முதலிலேயே ராஜதந்திரம் என்பதாக அவசியமான ஸந்தர்ப்பத்தில் இப்போது சொல்கிற 'டிப்ளமஸி'யை அநுமதித்திருப்பதால், நம்முடைய ராஜாக்களுக்கு ஸந்தர்ப நெரிசலில் ஸத்யத்தை ஒளிக்க வேண்டியிருந்தபோது சாஸ்திர விரோதமாகப் போகிற தோஷமோ, ஹிபாக்ரிஸி தோஷமோ ஏற்படவில்லை. இன்னின்ன ஸந்தர்ப்பத்தில் ஸத்யத்துக்கு விலக்கு தரலாம் என்று வகைப்படுத்தி வரம்புகட்டி சாஸ்திரத்தில் வைத்துவிட்டதாலேயே அவற்றில் மட்டுமே அப்படிச் செய்வது, மற்றவற்றில் பரம ஸத்யமாக நடந்து கொள்வது என்று நம் ராஜாக்கள் ஆட்சி செய்திருக்கிறார்கள். இப்படி விதிவிலக்காகச் சிலதைச் சொல்லாமல், விதிவிலக்கே கிடையாது என்று வைத்த தேசங்களிலோ, ஏதோ சிலதில் என்றில்லாமல், அநேக விஷயங்களில் ஸத்ய விரோதமாகப்போன ராஜாக்களும் ராஜாகங்களும் தோன்றுவதும், - கிளர்ச்சி, புரட்சி என்று ஏற்படுவதுமாய் இருந்திருக்கிறது. ஹிஸ்டரியைப் பார்த்தால் தெரியும். ஆனால் இந்த அம்சத்தைக் கவனிக்காமலே அர்த்த சாஸ்திரம் பண்ணின சாணக்கியனைக் கபடி, தந்திரசாலி unscrupulous என்றுகூட விமர்சிப்பதைப் பார்க்கிறோம்!

லக்ஷ்ய நிலையை எல்லோருக்கும் நடைமுறையாக வைப்பதில் இரண்டாவது தோஷம் என்னவென்றால், தாங்கள் மதத்தின் கொள்கைக்கு விரோதமாகப் பண்ணுகிறோமென்று இருக்கக்கூடாது என்பதற்காக, இப்படி விரோதமாகப் போகிறவர்கள் மூலக்கொள்கையையே தங்களுக்கு ஸாதகமாகத் திரித்து அர்த்தம் பண்ணுவது! "நீங்கள் எப்படி மாம்ஸம் சாப்பிடலாம்?"என்று பௌத்தர்களிடம் ஹிந்துக்கள் கேட்டபோது அவர்கள் தங்களுடைய மதக்கொள்கையையே திரித்து, "பிராணிக்கு நாங்கள் நேராக ஹானி செய்யக்கூடாது என்பதுதான் எங்களுடைய புத்தர் சொல்லும் அஹிம்ஸா தர்மம். நாங்கள் ஹானி உண்டாக்காமலே வேறெவனோ கசாப்புக்கடைக்காரன் விற்பதை நாங்கள் சாப்பிடுவதில் அஹிம்ஸைக்கு தோஷமில்லை"என்று சொல்வதுண்டாம். இப்படிப் பலபேர் சொல்லிச் சொல்லி ஒரு மதத்தின் மூலக் கொள்கைக்கு விரோதமாகப் பண்ணுவதே அதன் கொள்கையாகப் பிற்பாடு ஆகிவிடுகிறது; அதாவது மதத்தின் ரூபமே திரிந்து போகிறது. இது எல்லாவற்றையும்விடப் பெரிய தோஷம்.

இத்தனை தோஷங்களும் நமக்கு வராமல், அதிகாரி பேதம் செய்து தர்மங்களை வித்யாஸப்படுத்திக் கொடுத்திருக்கும் நம் மத சாஸ்திரங்கள் நம்மையும் ரக்ஷித்து, உத்தம தர்மங்களையும் திரியாமல் ரக்ஷித்து வந்திருக்கின்றன. நாமோ அதிகாரி பேதமே வேண்டாம் எல்லாம் ஸமம் என்கிறோம். அதோடு நமக்குப் பிடித்த இந்த அபேத வாதம் தான் நம் மதத்தின் மூலக் கொள்கையே;அதில் ஜாதி வித்யாஸமே கிடையாது என்று சொல்லி, அதற்கு 'நல்ல பெயர்'உண்டாக்குகிறோம்! இதுவும் மூல மதத்துக்கு விரோதமாகப் போவதோடு நிற்காமல், இந்தப் போக்குத் தான் மதத்தின் ஒரிஜினல் ரூபமே என்று திரித்துக் காட்டும் தோஷத்தில் சேர்ந்ததுதான்.

எடுத்துச் சொல்வதற்கு எவருமில்லை!சொன்னால் புரிந்து கொள்வார்கள்;ஆயிரத்தில் ஒருவராவது ஒப்புக் கொள்வார்கள்;சற்று முன் நான் சொன்ன 'நல்லார் ஒருவர் உளரேல்' கொள்கைப்படி இந்த அளவுக்காவது நான் திருப்திப்படலாம் என்றுதான் இவ்வளவும் சொல்வது.

"அவனவன் தனக்கான கர்மாவைக் கண்ணும் கருத்துமாய்ப் பண்ணினாலே உயர்ந்த ஸித்தியை அடைகிறான். என்னும் ஸ்வதர்மப்படி பண்ணும் கர்மா தருகிறது" என்று பகவான் தீர்மானமாக சொல்லியிருப்பதை (கீதை 18.45-46) மறந்து இப்போது மதாபிமான முள்ளவர்களே சீர்திருத்தம் பேசுகிறார்கள். அவரவர் கர்மாவைப் பொருத்தே ஆசாரம் மாறுவதால் இங்கே கர்மா என்கிறபோது அதிலேயே அதைச் செய்பவனுக்கான ஆசாரமும் அடங்கி விடுகிறது.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## விதி விலக்கில்லாமையின் விளைவுகள்

**சா**ஸ்திர விதிகள் சிலவற்றுக்கு சாஸ்திரத்திலேயே விலக்குத் தந்திருப்பதும் மநுஷ்ய மனோபாவத்தைப் புரிந்து கொண்டு, நீக்குப்போக்கோடு அதை அபிவிருத்தி அடையப்பண்ணுவதற்குத்தான். ஸத்யம், அஹிம்ஸை மாதிரியான பெரிய தர்மங்களை, கொள்கைகளைக்கூட அதைவிடப் பெரிய ஸத்யமான ஒன்றுக்காக, ஒரு நிர்ப்பந்தத்தில் கொஞ்சம் விட்டுக் கொடுக்கவும் நம் சாஸ்திரம் இடம் தருகிறது. 'விட்டு கொடுப்பது'என்று வெளியிலே தோன்றினாலும், உள்ளே பார்த்தால் இதுதான் உண்மையில் தர்மத்தின் 'லெட்டரை'மட்டுமில்லாமல் 'ஸ்பிரிட்'டைக் காப்பாற்றிக் கொடுப்பது என்று தெரியும். திருஷ்டாந்தமாக ஒரு அபலை ஸ்த்ரீயைப் போக்கிரிகளிடமிருந்து ரக்ஷிக்க வேண்டியபோது

'வாய் ஸத்ய'த்துக்கு ஒரு 'அமென்ட்மென்ட்'போட்டு

**" ஸத்யம் பூதஹிதம் "**

-எது ஜீவ ஜந்துக்களுக்கு நல்லது பண்ணுமோ அதுதான் ஸத்யம் - என்று அதன் ஸ்பிரிட்டைக் காட்டி சாஸ்திரமாக எழுதி வைத்தார்கள்.

எதற்கும் 'எக்ஸெப்ஷன்'உண்டு. இதைப் பார்க்காமல் ரொம்பவும் தீவிரமாக ஒரு ரூலை ஒருவர் சொன்னால் அப்புறம் அவரே அதற்கு மாறாகப் பண்ண வேண்டிய எக்ஸெப்ஷனலான ஸந்தர்ப்பம் வருகிறபோது என்னவோ போலாகிறது.

காந்தி ஒரேயடியாக அஹிம்ஸை, அஹிம்ஸை என்றார். அவரே ஒரு ஸமயம் ஒரு கன்றுக்குட்டி உயிர் போகாமல் ரொம்பவும் அவஸ்தைப்பட்டபோது அதற்கு ஒரு 'பாய்ஸன்'மருந்தைக் கொடுத்து உயிர் போகும்படிப் பண்ணினார். அவர் ஏற்கெனவே தீவிர அஹிம்ஸாவாதம் பண்ணியதாலேயே அப்போது பல பேர், "அப்பேர்ப்பட்டவர் இப்படி கோஹத்தி பண்ணிவிட்டாரே!"என்று கண்டனம் தெரிவத்தார்கள்.

இன்னொன்று கூடப் பண்ணினார். ஒரு ஸமயம் தேசத்திலே பெரிய பஞ்சம் வந்தது. அப்போது எல்லா மாகாணத்துப் பிரதிநிதிகளும் அப்போதிருந்த டில்லி ராஜாங்கத்திடம் ஜாஸ்தி உணவுப்பண்ட உதவி வேண்டுமென்று ஒரு ஆலோசனைக் கூட்டத்தில் கேட்டுக் கொண்டார்கள். காந்தியும் அங்கே 'அட்வைஸ்'பண்ணுவதற்காக இருந்தார். அப்போது அவர் சென்னை மாகாணத்திலிருந்தவர்களும் இப்படிக் கேட்கிறதைப் பார்த்து, "சுற்றி ஸமுத்ரம் இல்லாத யு.பி.க்காரர்கள், எம்.பி.க்காரர்கள்தான் அழுகிறார்களென்றால், மூன்று ஸமுத்ரங்களும் மூன்று பக்கம் சுற்றிக் கொண்டிருக்கிற, மெட்ராஸ் ஸ்டேட்டைச் சேர்ந்த நீங்களும் கூடச்சேர்ந்து அழுவதாவது?"என்றாராம்!என்ன அர்த்தமென்றால், "ஸமுத்ரத்தில்தான் நிறைய மத்ஸ்யம் கிடைக்குமே பிடித்துத் தின்னுங்களேன்!"என்று அர்த்தம்.

அவர் போனவிட்டு (காலமான பிறகு) நேருவானால் "பாகிஸ்தான் 'அக்ரஷன்'(ஆக்கிரமிப்பு) செய்தால் நாம் படையடுப்பதற்கு பாபுவிடமிருந்தே அநுமதி வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறேன்"என்று சொல்லியிருக்கிறார்!

சாஸ்திர ரூல் டிஸ்க்ரிமினேஷன் செய்கிறது என்று சொல்லிக்கொண்டு எல்லாருக்கும் பொது ரூல் பண்ணினவர்கள் தங்கள் ரூலில் சாஸ்திரம் காட்டுகிற நீக்குப் போக்குக்கூட இல்லாமல் ரொம்பவும் தீவிரமாக ஆரம்பிப்பதையும் கடைசியில் சாஸ்திரம் சொல்கிறபடியே அதிகாரபேதம், ஸந்தர்ப பேதம் பார்த்து அதை இளக்கிக் கொள்ளும்படியாவதையும் பார்க்கிறோம். அல்லது இளக்கிக் கொள்ளாதபோது அந்த ரூலை அவர்களுடைய 'ஃபாலோயர்'கள் காலக்கிரமத்தில் அடியோடு விட்டுவிடும் படியாகிறது. இவற்றைக் காட்டுவதற்காகவே புத்தரையும் காந்தியையும் சொன்னேன். புத்தர் அவதாரந்தான் காந்தி என்றுகூடச் சொல்கிறார்களே!

எதையும் எல்லாருக்கும் பொதுவாய் வைப்பதற்கில்லை என்பதால் வர்ணாச்ரமப்படி தர்மாசாரங்களை வித்யாஸமாய் வைத்திருக்கிறது. எதையும் எல்லா ஸந்தர்பத்துக்கும் பொதுவாக வைப்பதற்கில்லை என்பதால் அதற்கு விலக்குத் தந்து 'ஆபத்(து) தர்மம்', 'யாத்ரா தர்மம்'என்றெல்லாமும் சாஸ்திரங்கள் 'ரிலாக்ஸ்'பண்ணியிருக்கின்றன. இதெல்லாம் கூடாது என்று நல்ல எண்ணத்தோடேயே மாற்றினாலும் அது நடைமுறையில் ஸரியாய் வருவதில்லையென்பதற்கு திருஷ்டாந்தமாகத் தான் இந்த இரண்டு பேரையும் சொன்னேன். அவர்களைக் குற்றம் சொன்னதாக அர்த்தமில்லை. தனி வாழ்க்கையில் ரொம்ப சுத்தர்களாக இருந்துகொண்டு, நல்ல தியாகிகளாக ஸர்வ ஜன க்ஷேமத்தையே நினைப்பவர்களாக இருந்த இந்த இரண்டுபேர்கூட நம் வைதிக வழிக்கு வித்யாஸமாகச் செய்தபோது அவர்கள் நினைத்தபடி நல்லது நடக்கவில்லை, அவர்களாலேயே அந்தக் கொள்கைகளைத் தீவிரமாக நடத்திக் காட்ட முடியவில்லை என்று நான் எடுத்துக் காட்டினது, இவர்கள் பண்ணினது தப்பா ஸரியா என்று இவர்களை 'இன்டிவிஜுவலாக'(தனி மநுஷ்யர்களாக) வைத்து முடிவு

செய்வதற்காக இல்லை;அப்படியானால் நான் செய்கிறவை ஸரியா, தப்பா என்றும் சர்ச்சை செய்ய வேண்டிவரும். அதனாலே இங்கே இன்டிவிஜுவலைப் பற்றிப் பேச்சில்லை. அந்த வாதம் வேண்டாம். 'சாஸ்திரம்'என்கிறதில் சொல்லியிருக்கிற அதிகார பேதமும், அதையொட்டி ஏற்படுகிற ஆசார அநுஷ்டான பேதமும் ஸரியா தப்பா என்று எடைபோட்டு, அதை மாற்றி வேறு விதமாய் பண்ணப்போனால் கடைசியில் இப்படிப் புதிசாகப் பண்ணினது பூர்ணமாக நடைமுறைக்கு ஸாத்யப்படாமல் போவதைத்தான் பார்க்கிறோம் என்று நிதர்சனமாகக் காட்டவே இந்த இரண்டு பேர் செய்யததை ஒரு எக்ஸாம்பிளாகக் காட்டினேன். நல்ல அறிவும், அன்பு மனஸும், ஸ்வய நல நோக்கமில்லாத குணமும் கொண்ட இரண்டு பேர் செய்ததே ஸரிப்பட்டு வரவில்லை என்பது சாஸ்திரத்தின் பெருமையை 'அன்டர்லைன்'பண்ணிக் காட்டுவதற்காகச் சொன்னதேயன்றி, அவர்களுக்குக் குறைவு சொல்வதற்காக அல்ல. வேறு யாரைச் சொல்லியிருந்தாலும் இவர்களைப் போல எல்லாருக்கும் தெரிந்தவர்களாக இருக்க முடியாது என்பதால் இந்த இரணடு பேரைச் சொன்னேன்.

பார்ஸிகளையும், ஜைனர்களையும் போலச் சின்ன கம்யூனிடிகளாக இருந்தால் ஒரே ரூலை அதைச் சேர்ந்த எல்லாருக்கும் பொதுவாக வைத்தாலும் அதை அத்தனை பேரும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நடக்க முடிவதைப் பார்க்கிறோம். பௌத்தத்தை விட ஜைனர்களுக்கு அஹிம்ஸையில் இன்னும் 'ஸ்ட்ரிக்ட்'ரூல் இருந்தாலும் அவர்கள் அதிலிருந்து விலவில்லையென்று பார்க்கிறோம். இதற்கு வித்யாஸமாக, ஏராளமான ஜன ஸமூஹத்தைப் பெற்றிருந்தும் எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக மற்ற எந்த மதஸ்தரையும் விட உயர்ந்த பண்புகளைக் கொண்டவர்களாக நம்முடைய மதஸ்தர்கள் இருந்து வந்திருக்கிறார்களென்றால் அதற்குக் காரணம் அதில் ஐடியல் ரூல், ஸாமான்ய ஜனங்களுக்கு ஸாத்யமான நடைமுறை வழி ஆகிய இரண்டிற்கும் இடம் கொடுத்து, ஐடியலைச் சிலருக்கு மட்டும் 'கம்பல்ஸரி'யாக்கி அதன் மூலமே அது மற்றவர்களையும் 'இன்ஃப்ளுயென்ஸ்'பண்ணி அவர்களிடமும் கணிசமான அளவு 'ஆப்ஷன'லாகப் பரவும்படி நம் சாஸ்திரங்கள் வசதி பண்ணிக் கொடுத்திருப்பதுதான்.

---



### ஆசாரத்தில் நீக்குப்போக்கு

**வ**ர்ணதர்மம், ஆச்ரம தர்மம், ஆபத் தர்மம், யாத்ரா தர்மம் என்று வித்யாஸமாக இருப்பதைப் போலவே பிரதேசத்தைப் பொருத்தும் கொஞ்சம் கொஞ்சம் வித்யாஸமாகப் போக சாஸ்திரம் இடம் கொடுத்திருக்கிறது. சீதோஷ்ணத்தில் இருக்கும் வித்யாஸத்துக்கும் ('ஹிமாலயன் ரீஜ'னுக்கும் ராஜஸ்தான் பாலைவனத்துக்கும் எத்தனை வித்யாஸம்?), இந்தப் பெரிய தேசத்தில் ஒவ்வொரு பிரதேசத்தில் வெவ்வேறு நூற்றாண்டுகளில் வந்து மோதின அந்நிய தேசக் கலாசாரத்தின் செல்வாக்குக்குக் கொஞ்சம் இடம் கொடுத்தும் பிராந்திய ரீதியில் ஆசார அநுஷ்டானங்களில் சில வித்யாஸங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதை தேசாசாரம் என்கிறோம். Basic-ஆக (அடிப்படையில்) ஒரே சாஸ்திரந்தான் என்றாலும், சில விஷங்களில் பிரதேச ஆசாரங்கள் என்று மாறுபட்டு அங்கங்கே இருக்கின்றன. அங்கங்கே உள்ளவர்களில் பரம சிஷ்டர்களும் அந்த 'ரீஜனல்' ஆசாரப்படிதான் செய்கிறார்கள்.

புருஷர்கள் எல்லாருக்கும் தேசம் பூராவும் பஞ்ச கச்சம்தான். பெங்காலி பாபு அதைச் சொருகாமல் அப்படியே விட்டாலும் இது ஒரு சின்ன 'டிஃபரன்ஸ்'தான். ஆனால் ஸ்திரீகளைப் பார்த்தால் நம் ஊரிலேயே அய்யருக்கும் ஐயங்காருக்கும் கட்டு வித்யாஸம். கன்னட தேசத்தில் ஒரு மாதிரி. மஹாராஷ்டிரத்தில் வேறே ஒரு தினுஸு. இதிலெல்லாமே கச்சம் உண்டு. வடக்கேயோ ஸ்திரீகள் உடுத்துவதில் கச்சம் போடுவதில்லை. அங்கே குஜராத், யு.பி., காஷ்மீர், பெங்கால் ஒவ்வொன்றிலும் ஸ்திரீகளுக்கு வெவ்வேறு கட்டு இருக்கிறது. இங்கேயே மலையாளத்தில் கச்சமில்லாமல் 'முண்டு'என்று உடுத்துகிறார்கள். இதெல்லாம் அந்தந்த தேசாசாரமாக மதிக்கப்படுகின்றன. ஸமீப காலத்தில் உண்டாக்காமல் நெடுங்காலமாக ஒரு 'ட்ரெடிஷனாக' வந்து அங்கங்கேயுள்ள சாஸ்திரஜ்ஞர்களும் அநுஸரித்த எதற்குமே சாஸ்திர ஸம்மதமுண்டு.

இப்படியே குலாசாரம் என்று ஒன்று. இதில் குடும்பங்களுக்கிடையில் வித்யாஸமான வழக்கங்களைப் பார்க்கிறோம். ஸாதாரணமாக ஒரு கல்யாணத்தில் இது நன்றாகத் தெரியும். 'பிள்ளையாத்தில்'இப்படி இப்படி வழக்கமாம். அப்படித்தான் செய்யணும்'என்பார்கள். நாந்தி, விரதம், கன்யாதானம், பாணிக்ரஹணம், மாங்கல்யதாரணம், ஸப்தபதி, பிரவேச ஹோமம், ஔபாஸனம் முதலியன எல்லாருக்கும் ஒரே மாதிரிதான் பெரும்பாலும் இருக்கும். இதிலேயுங்கூட யாரார் எந்த ஸூத்ரமோ அதன்படி வித்யாஸம் இருந்தாலும் இந்தப் பெயருள்ள சடங்குகள் எல்லாருக்கும் 'காமன்' தான். ஆனால் இது தவிரப் பல விஷங்களில் வித்யாஸம் இருக்கும். திவஸச் சமையலில் கூட இன்ன இன்ன சேர்க்கலாம், சேர்க்கக்கூடாது என்பதற்கு குலாசாரப்படி வித்யாஸம் இருக்கிறது.

ஒரே ரூலில் எல்லாரையும் கட்டிப் போடுவதில் ஏற்படும் சிரமங்கள் இல்லாமலிருக்கவே இப்படி தேசம், காலம், இடம் போன்றவற்றிக்கு நெகிழ்ந்து கொடுத்து ஆபத் தர்மம், யாத்ரா தர்மம், தேசாசாரம், குலாசாரம் ஆகியன ஏற்பட்டிருக்கின்றன.

ஆபத் தர்மம், யாத்ரா தர்மம் என்று நடு நடுவே சொன்னேனே இவை தாக்ஷிண்யத்தின் பேரில் ஏற்படுத்தினவை. சிலவிதமான ஸந்தர்ப்பங்களில் ரொம்ப 'ஸ்ட்ரிக்'டாக சாஸ்திர ரூல்படி செய்ய முடியாமலிருக்கும் போது ரூல்களை 'ரிலாக்ஸ்'செய்து கொடுத்து இந்த ஆபத் தர்மம், யாத்ரா தர்மம் முதலியவற்றை சாஸ்திரமே அநுமதித்திருக்கிறது.

வெளியூர்களுக்குப் போகிறபோது எல்லா ஆசாரங்களையும் அநுஷ்டிக்க முடியாவிட்டாலும், முடிந்த மட்டும் பண்ணுவதே போதும் என்று யாத்ரா தர்மத்தில் இருக்கிறது. ஸ்வக்ஷேத்ரத்தில் (தன் ஊரில்) ஸ்வக்ருஹத்தில் (சொந்த வீட்டில்) அத்தனை ஆசாரங்களையும் பின்பற்றத் தான் வேண்டுமென்றாலும், வெளியூரில் அவற்றில் பாதி பண்ணினாலும் போதுமானது என்றுகூட இருக்கிறது. செங்கல்பட்டில் வீடு, மெட்றாஸில் ஆஃபீஸ்;இல்லாவிட்டால் எப்போதும் டூரில் போகிற வேலை என்று இருக்கும் இக்காலத்தில் இம்மாதிரி 'லீனியன்ட் ரூல்'களைச் சொல்வதற்கே பயமாயிருக்கிறது!இருக்கிற ஆசாரத்தையும் ஜனங்கள் விட்டு விடுவதற்கு நானே வழி சொல்லிக் கொடுத்த மாதிரி ஆகிவிடக் கூடாதே! யாத்திரையையும், வெளியூர் வாஸத்தையும் சாஸ்திரம் நினைத்தது உத்யோக நிமித்தமாக, உதர நிமித்தமாக அல்ல. ஏதோ க்ஷேத்ராடனம், அல்லது ஒரு கல்யாணம், இல்லாவிட்டால் பந்துக்களின் மரணம் இம்மாதிரி காரணத்துக்காக எப்போதாவது பிரயாணம் பண்ணுவதைத்தான் சாஸ்திரகாரர்கள் நினைத்தார்களே தவிர ஜீவனோபாயத்துக்காக நித்யப்படி யாத்திரை செய்வதையல்ல.

பூர்ண உபவாஸம் முடியாவிட்டால் பழம், பால் சாப்பிடலாம்;பக்வான்னத்துக்கு (நன்றாக ஜலத்தில் வெந்த உணவு வகைகளுக்கு) உள்ள சேஷ தோஷம் தைலபாகத்துக்கு (எண்ணெய் அல்லது நெய்யில் வறுத்த பக்ஷணம், வறுவல் முதலானவற்றுக்கு) இல்லை;மடிக்கு றைவானவர்களிடம் தீர்த்தம் வாங்கிச் சாப்பிடும்படி நிர்பந்தம் ஏற்பட்டால் அதில் கொஞ்சம் மோரைத் தெளித்துக் கொண்டால் தோஷ பரிஹாரம் - என்றெல்லாம் பல exemption கொடுத்திருப்பது தாக்ஷிண்ய நோக்கில்தான். பலஹீனர்களிடமுள்ள கருணையாலேயே அவர்களுக்கு விரத உபவாஸங்கள் வேண்டாம், "நாளும் கிழமையும் நலிந்தோர்க்கில்லை" என்று வைத்திருக்கிறது.

இதேமாதிரி ஆபத்துக் காலத்தில் அநேக ஆசாரக் கட்டுப்பாடுகளைத் தளர்த்திக் கொடுத்து ஆபத் தர்மம் என்பதாக ஏற்படுத்தியிருக்கிறது. அப்போதுங்கூட எங்கே அடியோடு முடியவில்லையோ அங்கேதான் ஆசாரத்தைத் தளர்த்தலாம். முடிந்த இடத்தில் பின்பற்றத்தான் வேண்டும். திருஷ்டாந்தமாக உபநிஷத்திலேயே*ஒரு கதை வருகிறது.

---

* சாந்தோக்யாபநிஷத 1.10

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## முடிந்தவரை பூர்ண ஆசாரம்

இடியும் மழையுமாகக் குருதேசம் ஒரு ஸமயத்தில் பாழாய்ப் போயிருந்தது. அன்ன ஆஹாரம் கிடைக்காமல் எல்லாரும் கஷ்டப்பட்டார்கள். சாக்ராயண உஷஸ்தர் என்று ஒரு ரிஷி. அவரும் அவருடைய இளம் மனைவியும் அலைந்து திரிந்துகொண்டு போய் யானைப் பாகர்கள் வசிக்கிற ஒரு கிராமத்தை அடைந்தார்கள். யானைகளுக்கென்று பூர்வத்தில் தான்யம் சேமித்து வைத்திருப்பார்களல்லவா?யானையின் தீனியில் துளிப் பாகம் மநுஷ்யனுக்குப் போதுமே!அதனால் அங்கே கொஞ்சம் தான்ய நடமாட்டம் இருந்தது. எவனோ ஒரு யானைப்பாகன் 'குல்மாஷம்'என்கிற தான்யத்தை (கொள்ளு என்று நினைக்கிறேன்) தின்று கொண்டிருந்தான். பிராணனை ரக்ஷித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக ஆபத்-கால தர்மப்படி அவனிடம் உஷஸ்தர் அந்தக் கொள்ளில் கொஞ்சம் யாசித்துப் பெற்றார். யானைப்பாகன் அதை அவர் சாப்பிட்டவுடன் குடிப்பதற்காகத் தான் குடித்துக்கொண்டிருந்த ஜலத்திலிருந்தே கொஞ்சத்தைக் கொடுத்தான். "உச்சிஷ்டத்தை (ஒருவர் உண்டு மிகுந்ததை) வாங்கிக்கொள்ள மாட்டேன்"என்று ஆசார விதியைக் காட்டி உஷஸ்தர் ஜலம் வாங்கிக்கொள்ள மறுத்து விட்டார். "கொள்ளு மாத்திரம் உச்சிஷ்டமில்லையா?அதை வாங்கிக் கொண்டீரே!"என்று யானைப்பாகன் கேட்டான். அதற்கு அவர், "அதை வாங்கிச் சாப்பிட்டிராவிட்டால் என் பிராணனே தேஹத்தில் தங்கியிருக்காது. பிராண ரக்ஷணை அவச்யம் என்ற பெரிய தர்மத்துக்காக, அதைவிடச் சிறிய உச்சிஷ்ட தர்மத்தை விட்டேன். இப்போது தீர்த்தமில்லாமல் என் பிராணன் போய்விடாது. சாப்பிட்ட வாய்க்குத் தீர்த்த பானம் இன்பமாகத்தானிருக்குமென்றாலும் இப்போது நான் உன்னிடம் ஜலம் வாங்கிக் குடித்தேனானால் அது எனக்கு இன்பம் தருகிற காமத்துக்காகத்தான் ஆகுமேயன்றி சாஸ்திரோக்தமான ப்ராண ரக்ஷணை என்ற தர்மத்துக்கு ஆகாது. ஆகையால் வேண்டாம்" என்றார்.

தர்ம-அர்த்த-காம-மோக்ஷம் என்று நாலு சொல்கிறோம். ஆசாரத்தில் அர்த்த-காமங்கள், இம்மை நலன்கள் யாவும் அடக்கமானாலும், இவற்றை விடவும் அது தர்மத்தையே முக்யமாகக் கொண்டு மோக்ஷத்தை லக்ஷ்யமாகக் கொடுக்கிறது என்பதையும் இது புரிய வைக்கிறது.

பெண்கள் தினமும் ஸ்நானம் செய்து ஈரத் தலையோடு கஷ்டப்பட வேண்டாம் என்ற தாக்ஷிண்யத்தினால்தான் விசேஷ தினங்களைத் தவிர மற்ற அவர்கள் தலையில் மஞ்சள் ஜலம் புரோக்ஷித்துக் கொண்டாலே போதும் என்று சாஸ்திரம் சொல்கிறது. கர்ப்பம் நன்றாக வளர்ந்தபின் ஒரு கர்ப்ப ஸ்திரீ எந்த விரதம் இருந்தாலும் பலிக்காது என்பதுகூட அவள் அந்த ஸ்திதியில் விரதோபவாஸங்களால் காயக்லேசம் பண்ணிக் கொள்ள வேண்டாமென்ற கருணையால்தான் குழந்தைப் பிராயத்திலும், வாலிபப் பிராயத்திலும் ஒருவனைப் புஷ்யாக வளரவிட வேண்டுமென்றுதான் பிரம்மசாரிக்கு விரத உபவாஸங்கள் சொல்லாமல், ஸாத்விக உணவாக எவ்வளவு

வேண்டுமானாலும் சாப்பிடலாமென்று வைத்திருக்கிறது. வியாதியஸ்தருக்கும் அநேக விதிகளிலிருந்து விலக்குக் கொடுத்திருக்கிறது.

தாக்ஷிண்யத்துக்காக principle-ஐ (கொள்கையை) விட்டுவிட்டார்கள் என்று அர்த்தமில்லை. ஆசார அநுஷ்டானத்தில் நாம் எத்தனை நம்பிக்கை வைத்திருந்தாலும் இம்மாதிரி அவை ரொம்ப சிரம ஸாத்யமாகிற போது மாத்திரம் பகவானே கருணையினால் அவற்றை 'ஓவர்லுக்'பண்ணிவிடுவான்;சிரமதசை முடிந்த பிற்பாடு நாம் அவற்றை உரியபடி அநுஷ்டிக்கத்தான் வேண்டும் என்பதே தாத்பரியம். குறிப்பிட்ட சில ஸமயங்களில் சில ஆசாரங்களைத் தளர்த்திக் கொடுத்திருக்கிறது என்பதனால் அதையே எக்காலத்துக்கும் நடைமுறையாக்கிக் கொண்டு விடக்கூடாது. ஒன்று முடியாதபோது அதற்குப் பதிலாக (substitute-ஆக), இரண்டாம் பக்ஷமாக (secondary-யாக) இன்னொன்றைச் சொல்லியிருக்கும். இதற்கு 'கௌணம்'என்று பெயர். 'கௌண'ஆசாரத்தையே மூலமான 'முக்ய'அல்லது 'ப்ரதான'விதிக்குப் பதில் எப்போதும் அநுஷ்டிப்பதென்பது முறையாகாது. 'முக்ய விதி', 'பிரதான விதி'என்பது ஜெனரல் ரூல். 'கௌண விதி' என்பது Subsidiary Rule.

சில ஸமயங்களில் 'முக்ய'த்தையும் பண்ணிவிட்டு 'கௌண'த்தையும் அதோடு பண்ணுவது விசேஷிக்கப்படுகிறது. உதாரணமாக ஸ்நானம் என்றால் ஜலத்துக்குள் முழுகி அழுக்குப்போகக் குளிப்பதுதான். ஆனால் உடம்பு ஸரியில்லாத போது அப்படிப் பண்ண வேண்டாமென்று 'கௌண'மாகத் தலைக்கு விட்டுக் கொள்ளாமல் கழுத்துவரை குளித்தால் போதும், 'டெம்பரேச்சர்'இருந்தால் இடுப்புவரை குளித்தாலே போதும், அதுவும் முடியாவிட்டால் ஈரத்துணியால் துடைத்துக் கொண்டாலும் ஸரி, ரொம்பவும் தாபஜ்வரமானால் இது கூட வேண்டாம், தலையோடு கால் விபூதியைப் பூசிக்கொண்டாலே ஸ்நானம்தான் என்றெல்லாம் சாஸ்திரங்களில் flexible-ஆக (நெகிழ்ந்து கொடுத்து) விதி செய்திருக்கிறது. நன்றாகத் தலைக்கு ஸ்நானம் பண்ணின பிறபாடும், அதாவது 'ப்ராதன'அல்லது 'முக்ய'விதியை அநுஸரித்த பின்னும் இப்படி ('முழு நீறு பூசிய'என்று பெரிய புராணத்தில் சொல்லியிருக்கிற மாதிரி) தலையோடு கால் விபூதி பூசிக் கொண்டு 'கௌண'ஸ்நானமும் பண்ணலாம். ஆனால் நல்ல ஆரோக்ய ஸ்திதியிலிருக்கும் போது குளிக்காமல் விபூதி ஸ்நானம் மட்டும் பண்ணினால் போதுமென்று இருக்கப்படாது.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## ஸ்நான வகைகள்

**ஸ்**நானத்தில் ஐந்து தினுஸு சொல்லியிருக்கிறது. இவற்றில் 'ஸ்நானம்'என்றவுடன் நாம் நினைக்கிறபடி ஜலத்தை மட்டும் கொண்டு குளிப்பது 'வாருணம்'- வருண பகவான் ஸம்பந்தமுள்ளது. இதை 'அவகாஹ'மாக, அதாவது நாம் ஜலத்திக்குள் இறங்கி, முழுகிப் பண்ணினால் தான் 'முக்ய'ஸ்நானம் பண்ணினதாக ஆகும். பாத்திரத்தில் வைத்துக்கொண்டு மொண்டு தலையில் விட்டுக் கொள்வது கூட இரண்டாம் பக்ஷம்தான். அதற்கப்புறந்தான் 'கௌண' மாக கழுத்துவரை, இடுப்புவரை என்பதெல்லாம். ஆக ஐந்து ஸ்நானங்களில் ஜலத்தால் செய்கிற வாருணம் ஒன்று.

விபூதி ஸ்நானம் என்று இப்போது சொன்னதற்கு 'ஆக்நேயம்'என்று பேர். அக்னி ஸம்பந்தமுடையது என்று அர்த்தம். அக்னியில் பஸ்மமாக்கித்தான் விபூதி கிடைப்பதால் அதற்கு பஸ்மா என்றே பெயரிருக்கிறது. ஜலம் விட்டுக் குழைக்காமல் விபூதியை வாரிப் பூசிக் கொள்வதை 'பஸ்மோத்தூளனம்' என்றே சொல்கிறோம்.

பசுக்கள் செல்கிறபோது கிளம்புகிற அவற்றின் குளம்படி மண்ணை ரொம்பவும் புனிதமாகச் சொல்லியிருக்கிறது. அதற்கு 'கோ தூளி'என்று பெயர். பாலக்ருஷ்ணனே இப்படித்தான் நீல மேக ச்யாமள காத்ரத்தில் பசுக்களின் தூள் சந்தனப் பொடி தூவினாற் போலப் படிந்து "கோதூளீ தூஸரித"னாக இருந்தானாம். ஒரு பசு மந்தை போகிற போது, அவை கூட்டமாகப் போவதாலேயே காற்றின் சலனம் அங்கே ஜாஸ்தியாகி, குளம்படி மண் நிறையக் கிளம்பும். இந்த கோதூளி நம்மை அபிஷேகம் பண்ணும்படியாக அங்கேஸ போய் நின்று கொண்டால் அதுவும் ஐந்தில் ஒருவகை ஸ்நானமாகும். இதற்கு 'வாயவ்யம்'என்று பெயர் - வாயு என்கிற காற்றின் ஸம்பந்தமுடையது என்று அர்த்தம். காற்றால்தானே தூளி பறக்கிறது?

அபூர்வமாக வெய்யில் அடிக்கும்போதே மழையும் பெய்வதுண்டல்லவா?அந்த மழை ஜலம் தேவலோகத்திலிருந்து வருகிற தீர்த்தத்துக்கே ஸமானம். அதனால் அந்த ஜலத்தில் குளிப்பதற்கு 'திவ்யஸ்நானம்' என்று பெயர். எப்போதாவது இப்படி வெய்யிலோடு மழை பெய்துவிட்டால் உடனே நாம் அதில் போய் நின்றுவிட வேண்டும்.

மந்திர ஜலத்தைப் ப்ரோக்ஷித்துக் கொள்கிறோம். தலையோடு கால் விட்டுக் கொள்ளாமல் அதை விரலால்தான் தெளித்துக் கொள்கிறோம். "ஆபோ ஹிஷ்டா"என்று ஸந்த்யா வந்தனத்தின்போது, அதாவது முக்கிய ஸ்நானமாக நன்றாகக் குளித்துவிட்டே செய்கிற ஸந்த்யாவ ந்தனத்தின்போது, இப்படி மந்திரஜல ப்ரரோக்ஷணமும் செய்து கொள்கிறோம். பூஜை, ஹோமம், யாகம் முதலானவற்றிலும் கலசம் வைத்து அதிலுள்ள ஜலத்தை அபிமந்திரித்துக் கடைசியில் வாத்தியார் (புரோஹிதர்) தர்ப்பைக் கட்டால் அதை எல்லாருக்கும் தெளிக்கிறார். இதுவும் ஐந்து ஸ்நானங்களில் ஒன்று. இதற்கு 'ப்ராஹ்மம்'என்று பெயர். "ப்ரம்மம்"என்றால் வேதம், வேத மந்திரம் என்பது ஒரு அர்த்தம். அதனால் அபிமந்திரிக்கப்பட்ட தீர்த்தப் ப்ரோக்ஷணத்துக்கு "ப்ராஹ்ம ஸ்நானம்"என்று பெயர் கொடுத்திருக்கிறது. மந்திரம் சொல்லக் கூடாதவர்களுக்கு பகவந்நாமா இருக்கிறது என்று முன்னேயே சொன்னேன். நாமமெல்லாமே மந்திரந்தான்.பார்க்கப்போனால் எல்லா ஸ்நானமுமே ப்ராஹ்மம்தான்!எந்தக் காரியமானாலும் அந்தக் காரியத்தை மட்டும் பண்ணாமல் அதோடு மந்திரத்தையும் சேர்த்து ஈஸ்வர ஸ்மரணையோடு, ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணுவதாகத்தானே அத்தனை ஆசாரங்களும் ஏற்பட்டிருக்கின்றன?அவற்றிலே சிறப்பாக வருணனையோ, வேறு ஒரு தேவதையையோ மந்திரபூர்வமாக ஒரு கும்பத்தில் ஆவாஹனம் பண்ணிப் பிறகு அந்த ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்வது 'ப்ராஹ்மம்'என்று பெயர் பெற்றிருக்கிறது.

உடம்பு அசக்தமாய் எந்த விதத்திலும் வாருண ஸ்நானம் செய்ய முடியாதவர்களுக்கு இந்த மந்திர தீர்த்த ப்ரோக்ஷணமே அதனிடத்தில் 'கௌண' ஸ்நானமாகிறது.

பஞ்சபூதங்கள் என்னும் ஐம்பூதங்கள் - ஐந்து ஸ்நானங்கள் என்று பார்க்கிறபோது, வாருணம்தான் அப்பு;ஆக்நேயம் (விபூதி) என்பது தேயு;கோதூளி என்கிற வாயவ்யம் வாயு. இவை தவிர ப்ராஹமம், திவ்யம் என்று இரண்டு சொன்னேன். பஞ்ச பூதங்களில் ப்ருத்வியும் ஆகாசமும் விட்டுப் போயிருக்கின்றன. மந்தரங்களெல்லாம் ஆகாசத்தில்தான் சப்த தன்மாத்ரையாக வியாபித்திருக்கின்றன;அவற்றையே ரிஷிகள், யோக சக்தியால் நமக்குப் பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள். சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தங்களை பஞ்சபூதங்களில் ஒவ்வொன்று ஆச்ரயித்திருப்பதாகச் சொல்லும்போது சப்தத்துக்குத்தான் ஆகாசம். இங்கே சப்தம் என்பது வேத மந்திரமே. ஆனதால் மந்திர தீர்த்தப் புரோக்ஷணமான 'ப்ராஹ்ம ஸ்நானம்'ஆகாச ஸம்பந்தமானது எனலாம். வெய்யிலின்போது பெய்யும் மழையான 'திவ்ய'மும் வானுலகிலிருந்து - தேவலோகத்திலிருந்து - வருவதாகக் கருதப்படுவதால் ஒருவகையில் ஆகாச பூதத்தின் ஸம்பந்தமுடையதே. ப்ருத்வி பாக்கி இருக்கிறது. 'வாயவ்யம்'என்று சொன்னதில் கோதூளியில் தானே நிற்கிறோம்?காற்றினால் எழுப்பப்பட்டு அந்தத் தூளி நம்மேல் படிவதால் அதற்கு 'வாயவ்யம்'என்று பேர் இருந்தாலும். வாஸ்தவத்தில் நம்மை அபிஷேகிக்கிற வாஸ்துவான குளம்படி மண் என்பது ப்ருத்விதான். ஜெனரல் ரூலான வாருண ஸ்நானத்திலும் சுத்திக்காகத் தேய்த்துக் கொள்ளும் ம்ருத்திகை (புற்றுமண்) ப்ருத்விதான். இப்படியாக ஐம் பூதங்களுக்காக ஐந்து ஸ்நான வகைகள். முடிவில் எதுவானாலும் ஆத்மாவைப் பாபம் போகக் குளிப்பாட்டுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

ஸ்நானம் ஐந்துவகை என்பது மட்டுமில்லை. அவற்றில் 'முக்ய' ஸ்நானமான நீராடலுக்கே ஐந்து அங்கங்கள் சொல்லியிருக்கிறது.

**ஸங்கல்பஸ்-ஸூக்தபடநம் ச(அ)நமர்ஷணம் ***

**தேவதா தர்ப்பணம் சைவ ஸ்நானம் பஞ்சாங்க உச்யதே **** முதலில் 'ஸங்கல்பம்'எந்தக் கர்மாவானாலும் பாபப் பிராயச் சித்தமாகவும் பரமேஸ்வரப் ப்ரீதிக்காகவும் இதைப் பண்ணுகிறேன் என்று ஸங்கல்பம் பண்ணிக் கொண்டு ஆரம்பிக்க வேண்டும். முன்னேயே சொன்னபடி வேத ஸூக்தங்களைச் சொல்வது 'ஸூக்த படனம்'. 'மார்ஜனம்'என்பது 'ஆபோ ஹி ஷ்டா'முதலிய மந்திரத்தால் முதலில் ஜலத்தைப் புரோக்ஷணம் கொள்வது. அப்புறம்தான் உள்ளே முழுகி ஸ்நானம் செய்ய வேண்டும். அப்போது மூன்று தடவை அகமர்ஷண ஸூக்தத்தை ஜலத்துக்குள்ளிருந்து ஜபிக்க வேண்டும். இதுதான் ஸ்லோகத்தில் கூறப்படும் 'அகமர்ஷணம்'அதற்குப் பொழுதில்லாமல் இக்கட்டு ஏற்பட்டால், காயத்ரியை முதலில் பாதம் பாதமாகவும், அப்புறம் முழுக்கச் சேர்த்தும், அதாவது, மொத்தம் மூன்று தடவை ஜபிக்க வேண்டும். ரொம்பவும் அவஸரம், தவிர்க்கவே முடியாது என்றால் பிரணவத்தை மூன்றுமுறை சொன்னாலும் போதும். இதையே தினப்படி ஆக்கிக்கொண்டுவிடக் கூடாது!இது சோம்பேறித்தனத்திலும், அடங்காமையிலுந்தான் சேர்க்கும்.

அவஸர ஸமயத்திலும், ஆபத்து காலத்திலும் "ஐயோ பூர்ணமாக ஆசாரப்படி பண்ண முடியவில்லையே!"என்கிற நிஜமான தாபத்தோடு கௌணமாக ஆசாரத்தைக் குறைத்துக் கொண்டு பண்ணினால்தான், பகவான் அந்தத் தாபத்தையே மெச்சிப் பூர்ண பலன் தருவானாதலால், மற்றக் காலங்களில் இப்படிப் பண்ணினால் அதை மன்னிக்க மாட்டான். ஸ்நானம் முடித்தவுடன் ஜலத்திலிருந்து கொண்டே தேவ, ரிஷி, பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். இதுதான் ஐந்தாவது அங்கமான தர்ப்பணம்.

**குளியல் என்று ஸாமான்யமாகத் தோன்றுகிற காரியத்துக்கு இத்தனை லக்ஷணங்களும் விதிகளும்! இப்படியே ஒவ்வொன்றுக்கும்.**

வாழ்க்கையம்சங்களில் இண்டு இக்கு விடாமல் பல் தேய்ப்பதிலிருந்து ஆரம்பித்து, புத்ரோத்பத்தி பண்ணுவது, ஒரு பிரேதத்தை

டிஸ்போஸ் பண்ணுவது உள்பட - இது சின்னது, இது பெரிசு, இதுதான் ஆத்மார்த்தமானது, இது லோக ஸம்பந்தமானது என்று பிரிக்காமல் எல்லாவற்றையும் ஆத்ம ஸம்பந்தமாக்கிக் கணக்கில்லாமல் ஆசார விதிகளைக் கொடுத்திருக்கிறது.

'ஸ்நானம்'என்று ஒன்றை எடுத்துக் கொண்டால் அதில் இவ்வளவு வகை சொன்னேன். அதற்கு முதலில் தூர்வை, மிருத்திகை முதலியவற்றைத் தரித்துக் கொள்ள வேண்டுமென்று முன்னே சொன்னேன். ஸ்நானம் செய்வதற்கு இன்னம் அநேக ரூல்கள் இருக்கின்றன. வெளி சுத்தத்துக்கு மாத்திரமென்றால் அழுக்குப் போக நன்றாகத் தேய்த்துக் குளித்தால் மட்டும் போதுமென்று விட்டு விடலாம். உள் சுத்தத்துக்குமானதால் நமக்குத் தெரியாத, புரியாத (பிடிக்காத கூடத்தான்!) ரூல்களையும் இப்படி சுத்தியான ரிஷிகள் கொடுத்துள்ள சாஸ்திரப்பிரகாரம் follow பண்ண வேண்டும். உதாரணமாக ஒரு ஆற்றிலே ஸ்நானம் செய்யும்போது பிரவாஹத்துக்கு அபிமுகமாக, அதாவது ஸூரியனைப் பார்க்க நின்று கொண்டு குளிக்கணும். க்ரஹணம், ஆசௌசம் (சாவுத் தீட்டு), ஸூதகம் (பிரஸவத் தீட்டு) முதலியவற்றில் அஸ்தமனத்துக்கு அப்புறம் குளத்தில் ஸ்நானம் செய்ய நேர்ந்தால் எப்படி ஸூர்யனுக்கு அபிமுகமாகப் பண்ணுவது? இம்மாதிரி விஷயங்களைக் கூட சாஸ்திரகாரர்கள் யோசித்து ராத்திரியில் தடாக ஸ்நானம் செய்கிறவர்கள் கிழக்கு அல்லது வடக்குப் பார்த்துச் செய்ய வேண்டுமென்று வைத்திருக்கிறார்கள். அகத்தில் கிணற்றடியில், பாத்ரூமில் மொண்டு விட்டுக் கொண்டு ஸ்நானம் பண்ணுகிறவர்களும் கிழக்குப் பார்க்கவே பண்ண வேண்டும். பொதுவாக எந்தக் கர்மாவுக்குமே எடுத்தது கிழக்கு. பித்ரு கர்மாவுக்கு மட்டும் தெற்கு.

எந்தத் திக்கைப் பார்த்துப் பண்ணணும், எப்படி உட்காரணும் (பத்மாஸனத்திலே தியானம்;சப்பளாம் பொட்டிக்கொண்டு மற்ற காரியங்கள்;ஆசமனம் பண்ணும் போது, குந்திக்கொண்டு);கையை எப்படி வைத்துக் கொள்ளணும் (ஸங்கல்பத்தின் போது தொடையில் வலது உள்ளங்கையை இடது உள்ளங்கைக்கு மேலே;பிராணாயாமத்தில் மூக்கின் இன்ன பக்கத்தை இன்ன விரலால் பிடித்துக் கொள்ளணும் என்பது ஆசமனத்தில் எந்த விரலை மடக்கி, எந்த விரலை நீட்டணும் என்கிறது) - இப்படி அநேகம். ஒவ்வொன்றுக்கும் அளவு (ஆசமனத்துக்கு உளுந்து முழுகுகிற அளவு ஜலம். தர்ப்பணத்துக்கு ஒரு மாட்டுக் கொம்பு பிடிக்கிற அளவு ஜலம் - 'கோச்ருங்க ப்ரமாணம்') என்று இருக்கிறது. கையில் இடுக்கிக் கொள்ள, கீழே போட்டுக் கொள்ள எத்தனை தர்ப்பை, தர்ப்பணத்துக்கு எத்தனை எள்ளு, ஹோமத்துக்கு ஆஜ்யமோ (நெய்யோ), ஹவிஸோ என்ன அளவு;எந்தெந்த வஸ்துவை எந்தெந்தப் பக்கம் பார்த்து வைக்கணும் என்று ரொம்ப ரொம்ப detailed-ஆக, minute-ஆக, elaborate-ஆக (அம்சம் அம்சமாக, நுணுக்கமாக, விஸ்தாரமாக) ஆசார விதிகளை சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

பழகினால், இத்தனையும் ஸுலபத்தில் வந்து விடும். முடியுமா என்று மலைத்தால்தான் மலைத்துக் கொண்டே நிற்கும்படியாகும்!ஒரு காரை ஓட்டுவது என்றால் எத்தனை தினுஸு ஸ்விட்ச், ப்ரேக், கியரைப் பழக்கத்திலே ஸரளமாகக் கையாள முடிகிறது? அநுபவஸ்தர்களான ச்ரௌதிகள் ஒரு யஜ்ஞத்தைப் பண்ணும்போது எப்படி டக், டக்கென்று அத்தனை விதிகளின்படியும் அநாயாஸமாகப் பண்ணிக் கொண்டு போகிறார்களென்று பார்த்தால் தெரியும். ஈடுபாடு இருந்து விட்டால் எதுவும் முடியும்.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ஆசார விதிகளில் சில

**இ**ன்னதான் ஆசாரத்தில் வருகிறது, இன்னது இல்லை என்று சொல்ல முடியாமல், ஸகல விஷயங்களையும் பற்றி இதில் (கையிலுள்ள புஸ்தகத்தில்) போட்டிருக்கிறது. சிலதைப் பார்த்தால் நவீன நாகரிக்காரர்களுக்குச் சிரிப்பாக வரும்!(புஸ்தகத்தை முன்னும் பின்னுமாகப் புரட்டிப் படித்த படியே:) நெருப்பை வாயால் ஊதப்படாது.

புருஷன் தீபத்தை அணைக்கக் கூடாது. பொம்மனாட்டி பூசணிக்காயை உடைக்கக் கூடாது -நெருப்பை வாயால் ஊதினால் சாம்பலோ, கெரஸின் புகையோ லங்க்ஸுக்குள் போய்விடும் என்று முதல் ரூலுக்குக் காரணம் சொன்னால், மற்ற இரண்டுக்கும் இப்படிப்பட்ட காரணம் ஒன்றும் தெரியவில்லை. நெருப்பை வாயாலே ஊதப்படாது என்பதற்குக்கூட சாஸ்திரம் சொல்கிற காரணம், வாயால் ஊதுவதால் எச்சில் காற்று அக்கினி பகவான் மேலே பட்டு அபசாரமாகி விடும் என்பதுதான்.

(புஸ்தகத்தைப் பார்த்தபடி) இன்ன நாட்களில் தான் க்ஷௌரம் (க்ஷவரம்) பண்ணிக்கலாம்;

இன்னின்ன நாளில்தான் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம் -இதற்கெல்லாம் "காரணம்" என்று தேடினால் ஒன்றும் கிடைக்காது.

(புஸ்தகத்தைப் படித்தவாறு:) நகத்தைக் கிள்ளப்படாது. எச்சில் பண்ணக் கூடாது - இதெல்லாம் 'பெர்ஸனல் ஹைஜீன்'. (மீண்டும் புஸ்தகம்:) சூதாடக் கூடாது;

மதுபானம் கூடாது - இவற்றில் ethics (நன்னெறி), ஆரோக்யம், குடும்ப வாழ்க்கையின் நன்மை எல்லாமே ஆசாரம் என்ற ரூபத்தில் வந்து விடுகின்றன. (புஸ்தகம்:) விவாஹ காலம், யாத்ரா காலம் தவிர மற்ற ஸமயங்களில் பெண்டாட்டியோடு சேர்ந்து சாப்பிடக் கூடாது. மத்யான்ன வேளையில் பால் சாப்பிடக்கூடாது. ராத்திரியில் தயிர் கூடாது; மோருக்கு தோஷமில்லை - இது டாக்டர்களும் ஒப்புக் கொள்வதுதான் என்று இதிலேயே போட்டிருக்கிறது. (புஸ்தகத்தைப் பார்த்து:) நார்மடி, பட்டு, சால்வை முதலானவற்றைத் தோய்க்காவிட்டாலும் (துவைக்கா விட்டாலும்) எப்போதும் அவை மடிக்கு உதவும். ஆனாலும் பல தடவை கட்டிக்கொண்டு அவை வியர்வையாய், அழுக்காய் ஆகிவிட்டால் அமாவாஸ்யை அல்லது த்வாதசி தினத்தில் பயற்றம் கஞ்சி சேர்த்த ஜலத்தில் துவைக்கலாம். இதனால் மடி போகாது.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

**பட்டுத் துணி** இங்கே பட்டைப்பற்றி என் அபிப்ராயத்தைச் சொல்ல வேண்டும். (அது) உங்களுக்கே தெரிந்திருக்கும். ஒரு முழப் பட்டுக்காக நூற்றுக்கணக்கில் பட்டுப் பூச்சிகளைக் கொல்ல வேண்டியிருக்கிறது. இதனாலே "அஹிம்ஸா பரமோ தர்ம":என்கிற பெரிய ஆசாரத்துக்கு பங்கம் வந்து விடுகிறது. அதுவும் தவிர, பட்டு விலையும் ரொம்ப ஜாஸ்தியிருப்பதால் பட்டுப் புடவை மோஹத்தால் குடும்பப் பொருளாதாரமே சீர் கெடுகிறது. இதிலே வசதியிருக்கிறவர்களைப் பார்த்து வசதியில்லாதவர்களும் 'காப்பி'பண்ணப் பார்ப்பதால் ரொம்பவும் கஷ்டம், கடன், கஸ்தி உண்டாகிறது. இந்தக் காரணங்களை உத்தேசித்துத் தான் பட்டு கூடாது என்று நான் சொல்லிக் கொண்டு வருகிறேன். ரொம்ப அத்யாவசியமானால், வெளியூரிலோ, மழைக் காலத்தில் நாள் கணக்காகப் பெய்து கொண்டிருப்பதால் வஸ்திரம் காயாது என்பதாலோ, மடி வஸ்திரம் எப்போதும் ரெடியாய் இருந்தால் நல்லது என்றால் அப்போது 'அஹிம்ஸாப் பட்டு'என்பதாகப் பூச்சியைக் கொல்லாமலே நெய்கிற பட்டு வஸ்திரங்களை உபயோகப் படுத்தலாம். வழக்கமான பட்டின் 'நைஸ்', "ஷைனிங்' எல்லாம் அஹிம்ஸாப் பட்டுக்கு இல்லைதான். என்றாலும் ஜீவகாருண்யத்தை உத்தேசித்து இதைத்தான் உபயோகப்படுத்த வேண்டும்.

(மறுபடியும் புஸ்கத்தைப் படித்த வண்ணம்:)

அதிதிக்குப் போடாமல் சாப்பிடக் கூடாது; வாசலில் நின்றுகொண்டு தெருக்கோடி வரையில் யாராவது வெளி மனுஷ்யர்கள் சாப்பாட்டுக்கு வருவார்களா என்று பார்த்து விட்டுத்தான் போஜனம் பண்ண உட்கார வேண்டும்.

அதிதி, அப்யாகதர் என்று இரண்டு வகை உண்டு. அதிதி என்பது நமக்குத் தெரியாதவர்;தானாகவே வந்தவர். அப்யாகதர் தெரிந்தவர்;நாம் கூப்பிட்டு வந்தவர் இரண்டு பேருக்கும் அன்னம் போட வேண்டும் -இதிலே மநுஷ்யாபிமானமே ஆசாரமாக ஆகியிருக்கிறது. ஈகையில்லாமலிருப்பது நன்னெறிப்படி தப்பு என்பது மட்டுமில்லை. அது அநாசாரமும் கூட.

(புஸ்தகம் பார்த்து:) கால் அலும்பித் துடைத்துக் கொண்டுதான் படுத்துக்கொள்ள வேண்டும்.

கார்த்தாலே பல் தேய்த்துவிட்டு இத்தனை தடவை கொப்பளிக்கணும் போஜனம் முடிந்தபின் இத்தனை தடவை கொப்பளிக்கணும்; என்றெல்லாம் கணக்கு -

இப்படிக் கொப்பளிப்பதே நம்முடைய தொண்டை கழுத்து முதலிய ரீறீணீஸீபீ -களின் சுரப்பு எழுந்தவுடனும் சாப்பிட்டவுடனும் ஆரோக்ய ரீதியில் எப்படியிருந்தால் ஹிதமோ அப்படி இருப்பதற்கு உதவுகிறது என்று குறிப்புப் போட்டிருக்கிறது.

பல் தேய்க்காமல் தீமீபீ-நீஷீயீயீமீமீ குடிப்பது அநாசாரத்துக்கு அநாசாரம்;அநாரோக்யத்துக்கு அநாரோக்யமும் ஒரே எச்சில் ப்ரஷ்ஷை பல நாளுக்கு வைத்துக் கொள்ளாமல் அன்றன்றும் ஒரு குச்சியால் தேய்த்துவிட்டு அதைப் போட்டு விட வேண்டும். ஆலங்குச்சி, வேலங்குச்சி இதற்கு எடுத்தது என்பதால்தான் 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி' என்பது.

இப்படியெல்லாம் நன்றாகப் பல் தேய்க்கணும் ஏப்பம் வரும் வரை கொப்பளிக்கணும் என்று போட்டிருக்கிற சாஸ்திரத்திலேயே சிராத்தம் முதலான தினங்களில் குச்சி போட்டுப் பல் தேய்க்காமல் வாயைக் குழப்பிக்கொண்டு கொஞ்சம் கொப்பளிப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று இருக்கிறது. ஆசாரமென்றாலே சௌசமென்று சொல்லிவிட்டு இதென்ன அசுசியாயிருக்கிறதே என்று நினைக்கக் கூடாது. சிராத்தத்தில் ஸ்நானம், மற்ற மடி ஸமாசாரங்களை ஏகமாகச் சொல்லியுள்ள அதே சாஸ்திரத்தில்தான் இப்படிச் சொல்லியிருக்கிறது என்பதாலேயே இதற்கு நமக்குத் தெரியாத காரணமிருக்க வேண்டுமென்று புரிந்து கொள்ள வேண்டும். நமக்குத் தெரியும்படியாகவும் ஒரு காரணம் இந்தப் புஸ்தகம் போட்டவர் சொல்லியிருக்கிறார். அதாவது நன்றாகப் பல் தேய்த்து, நாக்கை வழித்துக் கொண்டு, அப்புறம் கொப்பளித்தால் பித்த நீரெல்லாம் வெளியே வந்துவிடும்;மற்ற நாட்களில் அப்படி வர வேண்டியது தான்;ஆனால் இப்படிப் பித்தநீர் வந்தவுடன் பசி எடுத்து விடும்;மற்ற தினங்களில் அப்போது பாலோ, மோரோ, கஞ்சியோ பானம் பண்ணிக் கொள்ளலாம். ஆனால் சிராத்த தினத்தில் ஒட்ட ஒட்டக் கிடக்க வேண்டும். அன்றைக்கு ரொம்பவும் லேட்டாக அதாவது மத்யான்னம் ஒரு மணிக்கு மேலே அபரான்ன காலத்தில் தான் சிராத்த கர்மா ஆரம்பித்து, அப்புறம் அதை முடித்து போஜனம் பண்ண வேண்டுமாதலால் அதுவரை பசி எடுக்காமலிருக்கவே பித்த ஜலமும் வெளியே போக வேண்டாமென்று பல் தேய்க்கிறதை இப்படி relax செய்திருக்கிறது என்று எழுதியிருக்கிறார். அதாவது இதுவும் தாக்ஷிண்யத்தோடு ஆசாரம் பண்ணிக் கொடுத்திருப்பதில் சேரும்.

(புஸ்தகத்தைப் புரட்டி:) எந்தெந்த உறவுக்காரர்கள் செத்துப்போனால் எத்தனையெத்தனை நாள், அல்லது நாழி தீட்டு;செத்துப் போய் எத்தனையோ நாழி அல்லது நாள் கழித்துத்தான் தகவலே கிடைக்கிறதென்றால் அதுவரை தீட்டு காக்காததற்கு என்ன பிராயசித்தம் என்கிற ஆசௌச விதிகளும்; இதே மாதிரி குழந்தை பிறந்தால் இன்னின்ன பந்துக்களுக்கு இத்தனை நாள் தீட்டு என்கிற ஸூதக விதிகளும் பக்கம் பக்கமாகப் போட்டிருக்கிறது.

இந்த இரண்டு தீட்டுக்கும் இடையே வித்யாஸங்கள் இருக்கின்றன. இந்த இரண்டுக்குமே வித்யாஸமாக க்ரஹண காலத் தீட்டைப் பற்றிப் போட்டிருக்கிறது. மற்ற தீட்டுகளில் ஜபம் கூடாது என்றால், க்ரஹண காலத்தில் ஜபம் பண்ணுவதற்கு வீர்யம் அதிகம்; அது அபரிமிதமாகப் பலன் தரும்.

எந்த தேசத்திலும் இல்லாதபடி ரொம்பக் கடுமையாக தீட்டுக்களை, அதிலும் சாவுத் தீட்டைச் சொன்ன அதே சாஸ்திரம், ஒரு பிள்ளை விவாஹ காலத்தில் ஸங்கல்பம் செய்து கொண்டு கங்கணம் கட்டிக் கொண்டு விட்டபின் அந்தச் சடங்கு சேஷ ஹோமத்தோடு முடிகிற வரையில் அவனுக்கு சொந்த மாதா பிதாக்கள் மரணமடைந்தால் கூடத் தீட்டுக் கிடையாது என்றும் சொல்கிறது.

இப்படியெல்லாம் விசித்ரமாக ஏகப்பட்டவை போட்டிருக்கிறது.

(புஸ்தகத்தைப் புரட்டி)இளநீரை வெண்கலப் பாத்திரத்தில் வைத்தால் அது கள்ளுக்கு ஸமமாகிவிடும் -

இதற்கு 'கெமிகல் ரியாக்ஷன்'ஏதாவது காரணமாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்லலாம். ஆனால் அது மட்டும் காரணமாயிருக்க வேண்டுமென்பதில்லை.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### சாஸ்திர கர்மாவும் ஸிந்தெடிக் வஸ்துக்களும்

'கெமிகல்'என்றதால் மனஸில் தோன்றுகிற ஒன்றைச் சொல்கிறேன். இந்த நாளில் இயற்கையான வஸ்துக்களுக்குப் பதில் அதே பலனைத் தருகிற பொருள்களைக் கெமிஸ்ட்ரி மூலம் 'ஸிந்தெடிக்'காகப் பண்ணுகிறார்கள். இம்மாதிரி இப்போது சாஸ்திர கர்மாக்களில் பிரயோஜனப்படுகிற திரவியங்களின் பலனைத் தருகிற கெமிகல்களையும் பண்ணலாம். அதனால் அந்த கெமிகலைக் கர்மாவில் பிரயோஜனம் பண்ணிவிடக் கூடாது. ஏனென்றால் இரண்டும் ஒரே பலனைத் தருவதுதான் என்று இவர்கள் சொல்லும்போது த்ருஷ்ட பலனைத்தான் சொல்கிறார்கள். அதைவிட முக்யமான அத்ருஷ்ட பலன் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற த்ரவியத்துக்குத்தான் உண்டே தவிர, த்ருஷ்டமாக அதே பலனுள்ள மற்ற எதற்கும் கிடையாது. 'ஸிந்தெடிக்'காக (செயற்கையாக)ச் செய்ததுதான் என்றில்லை;இயற்கையாகவே உண்டாகிறவற்றில் கூட சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற ஒன்றுக்குப் பதிலாக இன்னொன்றை 'ஸப்ஸ்டிட்யூட்'பண்ணக்கூடாது. சாஸ்திரத்திலேயே 'ஸப்ஸ்டிட்யூட்' சொல்லியிருக்கிற அம்சங்களில் மாத்திரம் ஒன்றுக்குப் பதில் அதிலேயே சொல்லியிருக்கும் இன்னொன்றை உபயோகப்படுத்தலாம்.

வெளியிலே நமக்குத் தெரிகிற பலன் ஒன்று என்பதால் வஸ்து ஒன்றாகிவிடுமா?கல்கண்டும் படிக்காரமும் பார்வைக்கு ஒரே மாதிரியிருந்தாலும் ஒன்றாய்விடுமா?ருசி, பௌதிகமான குணங்கள் இவற்றைக் கொண்டு இவை இரண்டும் வேறே வேறே என்று தெரிந்து கொள்கிறோம். இந்த பௌதிக விஷயங்கள் எல்லாவற்றிலும் ஒரே மாதிரியிருக்கிறவைகளும்கூட, பௌதிகாதீதமான ரீதியில் வேறே வேறேதான் என்றும் சாஸ்திரகாரர்கள் கண்டுபிடித்து, இது மாதிரி வஸ்துவில் கூட இதைத்தான் சேர்க்கலாம், இது கூடாது என்கிறார்கள். ஒரே மாதிரிக் காய்கறிதான் என்றாலும் சிராத்தத்தில் பீன்ஸ் சேர்க்காதே, அவரைக்காய் சேர் என்கிறார்கள்; மிளகாயும் உறைப்பு, மிளகும் உறைப்பு என்றாலும் மிளகாய் சேர்க்காதே, மிளகு சேர் என்கிறார்கள்.

(புஸ்தகத்தைப் பார்த்து) தீட்டுக் காலத்தில் எந்த விரதமும் இருந்து பலனில்லைதானென்றாலும், அப்போதுங்கூட ஏகாதசி வந்தால் உபவாஸம் இருக்கத் தான் வேண்டும்.

ஒரு நாளில் த்வாதசி எத்தனை நாழிகையிருக்கிறதோ அதில் எட்டில் ஒரு பாகத்துக்கு 'ஹரிவாஸரம்'என்று பெயர். இதற்குள்ளேயே பாரணை (முதல் நாள் இருந்த ஏகாதசி உபவாஸத்தை முடித்து போஜனம் பண்ணுவது) செய்து விடவேண்டும். இதற்காக, வழக்கமாக மாத்யான்ஹிக காலத்திலேயே (காலை ஆறு மணிக்கு ஸூர்யோதயமானால் காலை 10-48 லிருந்து பகல் 1-12 வரை மாத்யான்ஹிகமாகும்) பண்ண வேண்டிய மாத்யான்ஹிகம், வைச்வதேவம் முதலானவற்றை த்வாதசியன்று மாத்திரம் முன்னாலேயே பண்ணி விடலாம் என்று relax செய்திருக்கிறது. ஆனால் த்வாதசியன்று திவஸம் வந்தால் அதை அபரான்னம் என்பதாக (பிற்பகல் 1-12 லிருந்து 3-36 வரை) மாத்யான்ஹிகத்துக்கு அப்புறம் வருகிற காலத்தில்தான் பண்ண வேண்டும். அதன் பிறகே பாரணை.

ரொம்பவும் சிரத்தையோடு செய்வதால் சிராத்தம் என்றே பெயருள்ள திவஸத்துக்கு இப்படி முக்யத்வம் கொடுத்திருக்கிறது. தீட்டுக் காலத்தில்கூட ஏகாதசிப் பட்டினி இருக்கணுமென்று சொன்னேனல்லவா?ஆனால் ஏகாதசியன்று திவஸம் வந்தால் அன்று பித்ருசேஷமாக அன்னம் பலவித காய்கறிகளுடன், எள்ளுருண்டை அதிரஸம் முதலிய பக்ஷணங்களுடனும் சாப்பிடத்தான் வேண்டுமென்று வைத்திருக்கிறது. மாத்வர்கள் ஏகாதசிக்கு ரொம்பவும் உயர்வு தந்திருப்பதால் அன்றைக்கு திவஸம் செய்வதில்லை. (புஸ்தகத்தைப் பார்த்தவாறு) த்வாதசிப் பாரணையில் ஆத்திக் கீரை, சுண்டைக்காய், புளிக்குப் பதில் எலுமிச்சை, நெல்லி முள்ளி அவசியம் போஜனம் செய்ய வேண்டும். ஒரு நாள் பட்டினிக்குப் பின் உடம்பில் ஜீர்ண நீர்கள் நல்லபடி சுரப்பதற்கு இந்த ஆஹாரமே உதவுகிறதென்று dieticians (சமையல் விஞ்ஞானிகள்) சொல்வதாகவும் இதில் போட்டிருக்கிறது.

(புஸ்தகம் பார்த்து:) பிராம்மணர்கள் என்றுமே வெங்காயம், உள்ளிப்பூண்டு சாப்பிடக்கூடாது. மற்றவர்களும் விரத தினங்களில் சாப்பிடக்கூடாது. மந்திர ரக்ஷணையை முன்னிட்டே பிராம்மணருக்கு இங்கே கூடுதல் நியமம். பிரத்யக்ஷத்திலேயே வெங்காயத்தால் காம உணர்ச்சி ஜாஸ்தியாவதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுவதாகப் (புஸ்தகத்தில்) போட்டிருக்கிறது. இதே மாதிரி சாஸ்திரத்தில் சிறப்பித்துக் கூறப்படும் தூதுவளையைச் சாப்பிடுபவர்களுக்கு இந்திரிய நிக்ரஹம் சற்று ஸுலபமாக ஏற்படுவதும் பிரத்யக்ஷத்தில் தெரிகிறது.

நோய் வந்த காலத்தில் பூண்டு சேர்த்த மருந்து மற்றும் ஆசார விருத்தமான (முரணான) சரக்குகளைச் சாப்பிட சாஸ்திரமே தாக்ஷிண்யத்தோடு அநுமதிக்கிறது. ஆனால் பிற்பாடு பஞ்சகவ்யாதி புண்யாஹவாசனம் பிராயசித்தமாகச் செய்து கொள்ளச் சொல்கிறது.

(புஸ்தகத்தைப் புரட்டி:) ரொம்பவும் ஜீவதயை போடு இங்கே ஒரு ஆசாரம்!வாசலில் ஒருத்தன் பசி என்று நிற்கிறபோது, அவனுக்குப் போடாமல் உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருந்தால் அந்த சாதம் மாம்ஸத்துக்கு ஸமம்; அப்போது குடிக்கிற தீர்த்தம் கள்ளுக்கு ஸமம்.

ரிது காலத்தில் ஒரு ஸ்திரீ எப்படியிருக்க வேண்டும் என்பது முதலான மாதவிடாய்த் தீட்டுக்களைப் பற்றி நிறையப் போட்டிருக்கிறது.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## தீட்டால் விளையும் தீமை

**தீ** ட்டும் மடியும் கண்ணுக்குத் தெரியவில்லை என்பதால் 'ஸூபர்ஸ்டிஷன்'என்கிறார்கள். ஆனால் தீட்டுக் கலப்பதால் என்னென்ன உத்பாதங்கள் உண்டாகுமென்று சாஸ்திரத்தில் போட்டிருக்கிறதோ அதெல்லாம் கண்ணுக்குத் தெரியும்படியாக இப்போது உண்டாகி வருவதைப் பார்க்கிறோம். தனி மனிதனின் வியாதி வக்கை, மஹாக்ஷேத்திரங்களிலும் விபத்து, natural calamities - இயற்கையின் சீற்றம் - என்கிற வெள்ளம், வறட்சி, பூகம்பம் எல்லாமே மடித் தப்பான காரியங்கள் அதிகமானபின் விருத்தியாகிக் கொண்டிருப்பதைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறோம். அப்படியும் அந்த effect-க்கு (விளைவுக்கு) இந்த cause(காரணம்) என்று ஒப்புக் கொள்ளமாட்டோமென்றால், இதுதான் எனக்குப் பெரிய ஸூப்ர்ஸ்டிஷனாகத் தெரிகிறது.

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## உணர்ச்சிப் பூர்வமான விஷயங்கள்

' **ஸெ**ன்டிமென்ட' லாக (உணர்ச்சிப் பூர்வமாக) மனஸை உறுத்துகிற விஷயங்களையும் ஆசாரங்களில் சொல்லியிருக்கிறது. இன்னொருத்தர்மேலே நம் கால்பட்டுவிட்டால், புஸ்தகத்தை மிதித்துவிட்டால் நமக்கே என்னமோ குற்றம் பண்ணினாற்போலத் தோன்றுகிறது. பெரியவர்களாக இருக்கிறவர்கள் வருகிறபோது நாம் உட்கார்ந்திருந்தாலோ, படுத்திருந்தாலோ, அவர்களுக்கு எதிரே காலை நீட்டிக் கொண்டிருந்தாலோ, நமக்காகவே உள்ளே ஏதோ அபசாரம் பண்ணிவிட்டது போலத் தோன்றுகிறது. நல்ல லக்ஷ்மீகரமாக ஒரு ஸுமங்கலி நாம் காரியத்தை ஆரம்பிக்கும்போது வந்தாலோ, வெளியே கிளம்பும்போது எதிர்ப்பட்டாலோ ஒரு மனநிறைவு உண்டாகிறது. இதெல்லாமே சாஸ்திரமாகவும் வந்து விடுகின்றன.

இதே ஸமயத்தில் அமங்கலியானவர்கள் ரொம்பவும் வருத்தப்படும்படியாகவும் அவர்களை ஒதுக்கி வைத்து விதிகள் (புஸ்தகத்தில்) போட்டிருக்கிறது. தாங்கள் நல்ல வைராக்யத்தோடு, ஈஸ்வர ஸ்மரணை தவிர வேறே பந்த பாசம் இல்லாமல் ஜீவித்துக் கடைத்தேற வேண்டுமென்ற நல்லெண்ணத்தில்தான் இப்படி ஒதுக்கி வைத்திருக்கிறார்களென்று அவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டும். அதே சாஸ்திரத்தில் ஒற்றைப் பிராமணன் எதிரே வந்தால் அபசகுனம் என்றுந்தானே சொல்லியிருக்கிறது?இதன்படி ஒரு பெரிய வேத கனபாடிகள் தனியாக எதிரே வந்தாலும் அபசகுனம் என்றுதானே ஆகிறது?அதனால் இதெல்லாம் நம் புத்தி பூர்வமாக ஸமாதானம் சொல்கிற ஸர்க்கிளுக்குள் இல்லை.

---

# *தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

### மூல சாஸ்திரமும், மாறான ஸம்பிரதாயமும்

பொதுவான சாஸ்திராசாரம் இருக்கும்போதே, அதற்குள் வித்யாஸமாகச் சில குலாசாரங்கள், ஸம்பிரதாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மூல சாஸ்திரத்தில் இருப்பதற்குக் கூடுதலாகவும், சில சின்ன அம்சங்களில் அதற்கு மாறாகவும்கூட நீண்ட காலமாகவே நல்ல சிஷ்டர்ககள் உள்பட பலரும் அநுஸரிக்கிற அநேக ஸம்பிரதாயங்கள் எப்படியோ ஏற்பட்டிருக்கின்றன.

ஒன்றுக்கொன்று வித்யாஸமான இந்தப் பல ஆசரணைகளைக் குலாசாரம், தேசாசாரம் என்ற பெயர்களில் பிற்கால தர்ம சாஸ்திரங்களே ஒப்புக் கொண்டிருக்கின்றன என்றும், சாஸ்திரத்தில் நிரம்ப பயபக்தியுள்ள பூர்விகர்கள் காலத்திலிருந்தே இப்படிப்பட்ட மாறுதல்களும் செய்யப்பட்டிருப்பதால், அவர்களுக்கு இப்படிப் பண்ணாலமென்று ஏதோ ஒரு திவ்யாக்ஞை கிடைத்துத்தான் மாறுதல் செய்திருப்பார்களென்று வைத்துக் கொண்டு, அந்தப்படியே நாமும் பண்ணிக்கொண்டு போகலாம் என்றும் சொன்னேன். இதனால் இப்போது நாமும் தலைக்குத் தலை தோன்றின மாதிரியெல்லாம் மாற்றிக்கொண்டு போகலாம் என்று அர்த்தமாகாது. நாம் பண்ணுகிற மாறுதல், இப்போதெல்லாம் 'கான்ஷன்ஸ்', 'மனஸ்ஸாக்ஷி'என்று பெரிசாகச் சொல்கிறார்களே அதன்படி நமக்குத் திருப்தியாயிருந்து விட்டால் மட்டும் போதாது. அதற்குப் பரமேஸ்வரனின் அங்கீகாரம் இருக்கிறது என்று நமக்கு நிச்சயமாகத் தெரிய வேண்டும்.

குலாசாரம், தேசாசாரம் என்று நமக்குத் தெரிந்து அநேக தலைமுறைகளாக வந்திருப்பவை மூல சாஸ்திரங்களுக்குக் கொஞ்சம் வித்யாஸமாகப் போகிற இடங்களில் கூட அவற்றின் வழியிலேயே நாமும் போவதில் தப்பில்லை என்று நான் சொன்னாலும், இப்போது ரொம்பவும் சாஸ்திரக்ஞர்களாக இருக்கப்பட்ட சிலபேர், "ஸித்தாந்தம், அதை வைத்து உண்டான ஆத்மார்த்தமான அநுஷ்டானங்கள், சின்னங்கள் ஆகியவற்றில் குலாசாரப்படியே பண்ணவேண்டுமென்றாலும், இவ்வளவு ஆதாமார்த்தமாக இல்லாத விஷயங்களுக்காக தேசாசாரம், குலாசாரம் என்ற பெயர்களில் ஆதி வைதிகாசாரத்துக்கு வித்யாஸமாகப் போவது ஸரியில்லைதான். மூலத்தைத் தான் ஸ்ட்ரிக்டாக ஃபாலோ பண்ணணும்"என்று தைரியமாக ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறதிலும் ஸாரம் இல்லாமலில்லை. தேசாசாரம், குலாசாரம் முதலியவற்றைப் பற்றிச் சற்றுமுன் நான் சொன்னதற்கு ஒரு sub-clauseபோட்டால் தேவலையென்று இப்போது தோன்றுகிறது:அதாவது, ஒரு ஸித்தாந்தத்தோடு சேராமலே மூல சாஸ்திரத்துக்கு மிகவும் வித்யாஸப் பட்டிருக்கிற சில பழக்கங்கள் பல தலைமுறைகளாகவே ஏதோ காரணங்களுக்காக ஒரு ஸம்பிரதாயமாக வளர்ந்து வந்திருந்தால்கூட இவற்றை ஒரிஜனல் சாஸ்திரப் பிரகாரமே திருத்தினால்தான் தேவலை என்று தோன்றுகிறது உதாரணமாக:

மூன்று தலைமுறைகளுக்குப் பொதுவான மூதாதையில்லாவிட்டால்தான் உறவுக்காரர்களுக்குள் கல்யாணம் பண்ணலாம் என்று சாஸ்திரத்திலிருக்கிறது. ஆரோக்யத்தின்படி consanguinous marriage (ரத்த பந்துக்களுக்குள் விவாஹம்) பற்றிச் சொல்கிறவர்களும் சாஸ்திரம் சொல்வது ஸரியே என்கிறார்கள். ஆனாலும் நம் தக்ஷிண தேசத்தில் நீண்ட காலமாகவே பரம வைதிகக் குடும்பங்களில் கூட அத்தான்-அம்மங்காள், அம்மாஞ்சி-அத்தங்காள் என்று அத்தை, மாமா ஸந்ததிகளுக்கிடையே, - அதாவது இரண்டாவது மூதாதையான தாத்தாவே பொதுவாயிருக்கிற உறவு முறையில் - சாஸ்திரத்துக்கு முரணாகக் கல்யாணம் பண்ணிக்கொண்டுதான் வருகிறார்கள்.

இன்னம் ஒரு படி மேலே போய் மாமா-மருமாளே பண்ணிக் கொள்வதையும் சில இடங்களில் பார்க்கிறோம். 'இதென்ன அநியாயம்?'என்று வடக்கத்திக்காரர்கள் கேட்கிறார்கள். வடக்கே குளிர்காலத்தில் குளிர் மிகவும் அதிகமாயிருப்பதாலும், அநேக துருக்கர் ஆட்சியின் இன்ஃப்ளுயென்ஸ் எத்தனையோ நூற்றாண்டுகளாக அதிகமாக இருந்திருப்பதாலும் நம்மை விட அவர்கள்தான் ரொம்ப ஆசார ஹீனமாக, பூஜாரிகூட சட்டை போட்டுக்கொண்டும் இருந்தாலும், இந்தக் கல்யாணக் கொள்வினை-கொடுப்பனையில் அவர்கள்தான் நம்மை விட சாஸ்திரோக்தமாக இருக்கிறார்கள்.

வேறு சில விஷயங்களிலும் அவர்கள் நம்மைவிட வைதிகம். எனக்கே ஆசாரம் சொல்லிக் கொடுக்கிற வடக்கத்திக்காரர்கள் இன்றைக்கும் இருக்கிறார்கள். ஸமீபத்தில்*2 நடந்த ஒன்று சொல்கிறேன். கோரக்பூரில் 'கல்யாண கல்பதரு'பத்திரிகை நடத்துகிறார்கள். அந்த கீதா ப்ரெஸ்காரர்கள் பக்த கோஷ்டியோடு தக்ஷிணத்துக்கு யாத்ரை வந்திருந்தார்கள். நானூறு, ஐநூறுபேர் இருக்கும். காஞ்சீபுரத்துக்கும் வந்தார்கள். அன்றைக்கு எனக்கு மௌன தினம். மா மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். தர்சனத்துக்கு வந்தார்கள். பிரஸாதமாகக் கல்கண்டு தந்தேன். அப்போது பல பேர் என்னவோ தயங்கி தயங்கி வாங்கிக்கொள்கிற மாதிரி இருந்தது. நான் பாட்டுக்குக் கொடுத்துக்கொண்டே போனேன். ஒரு பெண் மட்டும் இப்படித் தயக்கதோடு வாங்கிக் கொள்வது என்றில்லாமல், அதை வாங்கிக் கொள்ளவே இல்லை. பளிச்சென்று, "யஹ் காம் மேம் நஹி ஆதா;கோயி தூஸ்ரா ப்ரஸாத் தீஜியே"என்று சொல்லிவிட்டாள். அதாவது, "இது ஒரு காரியத்துக்கும் பிரயோஜனப்படாது;வேறே ஏதாவது பிரஸாதம் தாருங்கள்"என்றாள். உடனே எனக்கு மற்றவர்கள் ஏன் தயங்கினார்கள் என்று காரணம் புரிந்துவிட்டது. முன்னெல்லாம் சர்க்கரை ஆலைகளில் கரும்பைச் சுத்தமாக்கிக் கல்கண்டு பண்ணுவதற்கு மாட்டு எலும்புகளை உபயோகப்படுத்தி வந்தார்கள். அதனால் அது ஸ்வாமி நைவேத்யமாகவும் பிரஸாதமாகவும் இருப்பதற்கில்லை என்று வடக்கே வைத்திருக்கிறார்கள். (1934-36ல்) நான் வடக்கே யாத்ரை பண்ணினபோது இதைத் தெரிந்து கொண்டு சேர்க்கக் கூடாது என்று வைத்திருந்தேன். அப்புறம் கொஞ்சம் வருஷத்துக்குப் பிற்பாடு ஆலைக்காரர்கள் சிலர் இப்போதெல்லாம் எலும்பை உபயோகபடுத்தாமலே வேறு தினுஸில் ப்ராஸெஸ் பண்ணுவதாகத் தெரிவித்தார்கள். அதிலிருந்து மறுபடி கல்கண்டு சேர்ப்பது என்று ஆரம்பித்தேன். ஃபாக்டரிகளின் பழைய முறையை நினைத்துத்தான் இப்போதும் இந்த வடக்கத்தி கோஷ்டி கல்கண்டை 'அக்ஸெப்ட்'பண்ணிக்கொள்ள முடியவில்லை;ஆனாலும் 'ரிஃப்யூஸ்'பண்ணினால் ஸ்வாமிஜிக்கு மரியாதைக் குறைச்சலாச்சே என்று 'ரிலக்டன்ட்'டாக வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பெண்ணானால் ஆசார்யனைவிட ஆசாரந்தான் முக்கியம் என்று (ஆசார்யர்கள் ஒருத்தர் போய் இன்னொருத்தர் என்று வந்து கொண்டேயிருக்கிறார்கள்;ஆசாரம்தானே என்றைக்கும் சாச்வதமாக, இத்தனை ஆசார்யர்களுக்கும் தீணீவீநீ-ஆக இருக்கிறது என்று) தைரியமாக: 'இது வேண்டாம்;வேறே கொடுங்கோ'என்று சொல்லி விட்டாளென்று புரிந்து கொண்டேன். மௌனமானதால் அப்போது ஒன்றும் எக்ஸ்ப்ளைன் பண்ணவில்லை. நம்மைவிடச் சிலதில் வடதேசக்காரர்கள் சாஸ்திரோக்தமாயிருக்கிறார்களென்பதற்காகச் சொன்னேன்.

இப்படியேதான் பிரம்மசர்ய காலத்திலிருந்து அங்கேதான் கச்சம் போட்டு வேஷ்டி உடுத்துகிறார்கள். குருகுலத்தில் ஸமாவர்த்தனம் ஆனதும் - அதாவது படிப்பு பூர்த்தியானதுமே - கல்யாணம் ஆனாலும் ஆகாவிட்டாலும் பஞ்சகச்சமும் மேல் வேஷ்டியும் ஒருத்தனுக்கு உண்டு என்பதுதான் சாஸ்திரம். இப்போது குருகுலவாஸமென்பதே போய்விட்டதென்றாலும் எங்கேயாவது நாலு பசங்கள் பாடசாலைகளில் அத்யயனம் பண்ணுவதாவது இருக்கிறதல்வா?தக்ஷிண தேசத்தில் இப்படிப்பட்ட பாடசாலைப் பசங்கள் கூடப் படிப்பு முடித்தபின், கல்யாணமாகும் வரையில் முன்தலைமுறைகளிலும் இப்படித்தானிருந்திருக்கிறது. மற்றப் பிராந்தியங்களிலெல்லாம் ஸகல வர்ணத்தாருமே கச்சமில்லாமல் வேஷ்டி கட்டுவதில்லை என்று வைத்துக் கொண்டிருக்க, தமிழ் நாட்டிலும் மலையாளத்திலும் மாத்திரம் பிராம்மணன் உள்படத் 'தட்டுச்சுற்று'என்று ஒன்றுக் கட்டிக் கொள்வதாயிருக்கிறது. இதுவும் அசாஸ்திரீயமே;அநாசரமே.

சாஸ்திரங்களில் சொன்னதற்கு மாறாகச் 'அச்சான்யம்'என்ற பேரில் சிலவற்றைப் பின்பற்றுவதாக ரொம்ப காலமாகவே ஏற்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. உதாரணமாக:தாயார் தகப்பனார் உள்ளவர்கள் பூணூலைத் தோள் மாற்றிப் போட்டுக்கொண்டால் பார்க்க அச்சான்யமாயிருக்கிறது. இதனால் பிரம்மயஜ்ஞத்தில் மாதா-பிதா உள்ளவர்கள்கூட, தங்கள் வம்சத்தின் நேர் மூன்று மூதாதைகளைத் தவிர்த்து, வேத சாகா-ஸூத்ர முன்னோர்களுக்கு பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு தர்ப்பணம் பண்ணத்தான் வேண்டுமென்று சாஸ்திரத்தில் இருந்தாலும், அப்படிச் செய்யாமலிருக்கிறார்கள்.

கல்யாணமாகாத அக்கா இருக்கிறபோது தம்பிக்குப் பூணூல் போடக்கூடாது;ஒரு வீட்டில் மூன்று பிரம்மச்சாரி இருக்கக்கூடாது என்கிற மாதிரி வெறும் ஸென்டிமென்டில் தோன்றிய

வழக்குகளை ஏதோ பெரிய சாஸ்திர விதி மாதிரி ஃபாலோ பண்ணிக்கொண்டு, வாஸ்தவத்திலே சாஸ்திரத்தில் கண்டிப்பாக உபநயனத்துக்குச் சொல்லியுள்ள வயசு வரம்பை மீறுகிறார்கள். இம்மாதிரி ஸநாதன வைதிக மதத்தின் 'ஸ்பிரிட்'டுக்கே வித்யாஸமாகச் செய்வதையெல்லாம் மாற்றினால்தான் தேவலை.

'ஸதாசாரம்'என்பதற்கு லக்ஷணம் சொல்கிற போதே அது ச்ருதி-ஸ்மிருதிகளின் மூல நூல்களுக்கு விரோதமில்லாமலிருக்க வேண்டுமென்று தெளிவாகச் சொல்லியிருக்கிறது.

யஸ்மிந் தேசே யத் ஆசார : பாரம்பர்ய : க்ரமாகத : *

ச்ருதி-ஸம்ருத்-யவிரோதேந ஸதாசாரஸ்-ஸ உத்யதே **

பரம்பரையாக, வழி வழி, அநேக ஸத்துக்கள் வெவ்வேறு தேசங்களிலோ, ஒரு தேசத்தின் வெவ்வேறு சீமைகளிலோ எப்படி வாழ்ந்திருக்கிறார்களோ அந்த முறைக்கு 'ஸதா சாரம்'என்று பெயர் என்று broad-minded-ஆக (விசால மனஸோடு) இங்கே லக்ஷணம் கொடுக்கிறபோதே ஆனாலும் நம் தேசத்தில் எந்தச் சீமையானாலும் இந்த ஆசாரங்கள் ச்ருதி ஸ்மிருதிகளுக்கு அவிரோதமாக அதாவது பொதுவான வேதத்திற்கும், மூல தர்ம சாஸ்திரங்களுக்கும் விரோதமாகப் போகாதவையாக இருக்க வேண்டுமென்றும் நிபந்தனை போட்டிருக்கிறது ச்ருதி-ஸ்ம்ருத்-யவிரோதேந.

சாஸ்திரங்களில் அது போடுகிற விதிக்கு மாறாக அதுவே விலக்கு தருகிற இடத்தில் மட்டுந்தான் நாமும் விலகிப் போகலாம்;மற்றபடி, மூலப்படிதான் செய்ய வேண்டும். செய்வது என்பது தற்போதைய வாழ்க்கை முறையில் ஸாத்யமோ ஸாத்யமில்லையோ;மனஸிலாவது மூல சாஸ்திர நூல்தான் 'அதாரிடி'என்ற எண்ணம் வேண்டும், அந்தப்படி பண்ணத்தான் நம்மால் முடிந்த அளவு முயலவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### கேள்வி கேட்காமல்

விவாஹத்தில் கங்கணம் கட்டிக்கொண்டு தீக்ஷை பண்ணிக்கொண்டுவிட்ட வதூவரர்களுக்கு (மண மக்களுக்கு) சாவுத் தீட்டு கூட கிடையாது என்று சாஸ்திரமே சொல்கிறது. யஜ்ஞ தீக்ஷினுக்கும் ஏறக்குறைய இப்படியே அது தான் போட்ட கண்டிப்பான ஆசௌச நூலுக்குத் தானே 'எக்ஸம்ப்ஷன்'தருகிறது. ரதோத்ஸவத்திலே எந்த ஜாதியார், எந்த வியாதிஸ்தர் மேலே இடித்து மோதிக்கொண்டு தேர் இழுத்தாலும் விழுப்பாகாது வீட்டுக்கு வந்தபின் ஸ்நானம் செய்யக் கூடாது என்று சாஸ்திரத்தில் இருக்கிறது. வடக்கே 'ஹோலி'யிலும் இப்படியே தீட்டுக் கிடையாதென்று வைத்திருக்கிறார்கள். 'க்ளீன்லினென்ஸ்'ஸுக்காகத்தான் சாஸ்திரம் நூல்களைக் கொடுத்திருக்கிறது என்று வைத்துக்கொண்டுவிட்டால், "தேர்த் திருவிழாவுக்குப் போய்விட்டு வந்த பின்பு கசகசவென்று இருக்கிறதே, குளித்தால்தான் க்ளீன்லினெஸ்"என்று தோன்றி ஸ்நானம் செய்யப் போவாம். அது தப்பு. சுகத்துக்கும் அநேக ஆசாரங்கள் உதவியாயிருக்கிறதென்பதால் சுத்தத்துக்காகவே எல்லா ஆசாரமும் என்று ஆக்கிக் கொள்வது சரியில்லை. 'Cleanliness next to godliness' என்று தான் அவர்களும் (மேல் நாட்டினரும்) சொல்கிறார்கள்:தெய்வாம்சமாக இருக்கிறதற்கு அடுத்தபடி - ஒரு படி கீழேதான் - சுத்தமாயிருப்பதென்பது என்கிறார்கள். அதனால் தெய்வ ஸம்பந்தமாக நம்மைச் சேர்க்கிறதையே முக்ய நோக்கமாய்ஆசாரங்கள் கொண்டிருப்பதால், இதற்காக 'க்ளீன்லினெஸ்'ஸை அதுவிடச் சொல்கிற இடங்களில் விடவேண்டியதுதான். நமக்குத் தெரிகிறபடி சுத்தமோ இல்லையோ, ஆத்ம பரிசுத்தியை 'அல்டிமேட்'டாக (இறுதியாக) உத்தேசித்தே ஆசாரங்கள் ஏற்பட்டிருப்பதால் அந்த லக்ஷ்யத்தை அடைய அது விதிக்கிற விதத்தில் தான் நடக்க வேண்டும். அதனால் அசுத்தம், அநாரோக்யம் ஏற்பட்டாலும் சரி, அது நவீனக் கொள்கைகளுக்கு அநாகரிகமாக இருந்தாலும் சரி, ஸயன்ஸுக்கும் பகுத்தறிவுக்கும் ஒத்துவராவிட்டாலும் சரி, கேள்வி கேட்காமல் அதற்கு அடங்கித்தான்

நடக்கணும்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### இம்மை நலன்களும் தருவது

பொதுவாக ஆசாரங்கள் வெளிச் சுத்தம், ஆரோக்யம், ஸமூஹத்தின் ஸௌஜன்யம், குடும்ப வாழ்வின் ஒழுங்கு எல்லாவற்றையுங்கூடத் தருவதாக - அதாவது இம்மையிலும் ஸௌக்யம் தருவதாகவேதான் உள்ளன. அதனால் தான், " சாஸ்த்ராய ச ஸுகாய ச "என்பது. ஆசார வாழ்க்கை நடத்துவது சாஸ்த்ரத்துக்கு சாஸ்த்ரமும்;ஸௌக்யத்துக்கு ஸௌக்யமும்'என்று அர்த்தம். இம்மை நலன்கள் எல்லாம் ஆசாரமாயிருப்பவர்களுக்குக் கிட்டும் என்பதற்கு சாஸ்திர வாக்யமே இருக்கிறது:

ஆசாராத் லபதே ஹ்யாயு : ஆசாராத் ஈப்ஸிதாம் ப்ரஜா : *

ஆசாராத் தனம் அக்ஷய்யம் ஆசாரோ ஹந்த்-யலக்ஷணம் **

-'ஆசாரத்தினால் தீர்க்காயுஸ் லபிக்கிறது;ஆசாரத்தினால் நமக்கு எப்படி இஷ்டமோ அப்படிப்பட்ட ஸந்ததி உண்டாகிறது;ஆசாரமாயிருப்பதால் குறையாத செல்வச் செழிப்பு ஏற்படுகிறது;ஆசாரம் குரூபத்தையும் போக்குகிறது'. இப்படி 'மெடீரியல் பெனிஃபிட்'களைக்கூட ஆசாரத்துக்குப் பலனாகச் சொல்லியிருக்கிறது. சரீர லாவண்யங்கூட ஆசாரத்தால் உண்டாகிறதாம். ஆசார அநுஷ்டானங்களை அப்யஸிப்பவர்களின் தேஹத்திலேயே ஒரு காந்தியும் தேஜஸும் 'ஆசாரக்களை'என்று ஏற்பட்டு விடுவதால், காது, மூக்கு எப்படியிருந்தாலும் அந்த ரூபத்தைப் பார்த்தவுடன் மதிப்பும், பிரியமும் உண்டாகி விடுவதையே இப்படிச் சொல்லியிருக்கிறது.

'ஆசாராத் தனம் அக்ஷய்யம் - குறையாத செல்வம் ஆசாரத்தால் உண்டாகிறதென்றால் இரண்டு விதமாய் அர்த்தம் செய்து கொள்ளலாம். பக்தி, ஞானம், விவேகம், வைராக்யம் முதலான ஆத்மார்த்தமான செல்வம் தான் என்றைக்கும் குறைவுபடாத 'அக்ஷய்யம் தனம்'என்று சொல்லலாம். அல்லது 'மெடீரியலாக'வே கூடப் பணப் பற்றாக்குறை எந்நாளும் இல்லாமலிருக்க ஆசாரம் உதவுகிறது என்று சொல்லலாம்.

இதற்கு நிரம்பப் பணம் கொழுந்திருப்பது என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளாமல் இன்னொரு விதத்தில் அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம். வரவு ஜாஸ்தியாகிவிட்டால் மாத்திரம் ஸுபிக்ஷமாகிவிடுமா?நிறையப் பணம் இருப்பதாலேயே நிறையத் தப்பு வழிகளில் போய்க் கஷ்டப்படுவதாக ஆவதையும் பார்க்கிறோமே!இரண்டு கையாலும் ஸம்பாதனை செய்தாலும் அதைவிட ஜாஸ்தி செலவுகளில் மாட்டிக்கொண்டு, கடன், கஸ்தி, ஓவர் டிராஃப்ட் என்று அவஸ்தைப்படுபவர்களைப் பார்க்கிறோமே!குடி, ரேஸ் என்று உடம்பும் கெட்டு குடும்ப வாழ்க்கையும் கெட்டுப் போகிறதும் பணக்காரர்களில்தான் அதிகம் பார்க்கிறோம். அதனால் நமக்கு வேண்டும் ஸுபிக்ஷம் வரவு ஜாஸ்தியாவதால் கிடைக்காது;செலவு குறைந்து வரவுக்கு அடங்கியிருப்பதுதான் ஸுபிக்ஷம். "ஆன முதலுக்கதிகம் செலவானால் "எத்தனை வரும்படி இருந்தாலும் " மானமழிந்து மதிகெட்டு "என்று எல்லா அனர்த்தமும் ஏற்படத்தான் செய்யும்.

ஆசாரமாயிருப்பதால் வேறென்ன பிரயோஜனம் ஏற்படுமோ ஏற்படாதோ செலவிலே சிக்கனம் உண்டாவது நிச்சயம். காஃபி அநாசாரம்;கிளப் (ஹோட்டல்) அநாசார ம்;ஸினிமாவும் கூத்தும் சாஸ்திர ஸம்மதமானதில்லை;குடிக்கக்கூடாது;சூதாடக் கூடாது (ரேஸ், சீட்டு எல்லாம் சூதுதான்);என்ன 'மொஸெய்க்'போட்டாலும் சாணி போட்டு மெழுகக்கூடிய ஸாதாத் தரைக்கு ஸமதையாகாது;ஆசார அநுஷ்டானங்களுக்கு ஹானியாக இருப்பதால் வெளியூர்களுக்குப் போய்வருவதை 'மினிமைஸ்'பண்ணிக் கொள்ள வேண்டும் - என்றெல்லாம் சாஸ்திரோக்தமாக வாழ்கிறபோது, இந்த இனங்களில் ஏற்படுகிற அத்தனை செலவும் மிச்சம். ஆசாரமாயிருக்கிற ஒருவனுக்கு இந்த அநாசாரங்களில் ஆசை வந்து

இவனே ஒரு க்ளப்புக்கோ ஸினிமாவுக்கோ போனால்கூட, பஞ்சகச்சமும் குடுமியுமாய் இவன் வருவதைப் பார்த்து அங்கேயிருக்கிறவர்களே இவனைக் கேலி செய்து திரும்பிப் போகும்படிப் பண்ணிவிடுவார்கள். ட்ரெஸ் ஒன்றை எடுத்துக்கொண்டால் இப்போது இங்கிலீஷ் மோஸ்தர்களுக்காக, அப்புறம் லான்டிரிக்காக எத்தனை செலவு?ஏதோ ஒரு வேஷ்டி, துண்டு என்று வைத்துக்கொண்டுவிட்டால் எத்தனை மிச்சம்?

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

**ஆசாரமும் அலுவலக நடைமுறையும்**

ஆ ஃபீஸுக்குக்கூடச் சட்டை போட்டுக் கொள்ளாமல்தான் வருவோம் என்று அத்தனை பேரும் உறுதியாய் இருந்தால் இந்தக் குடியரசு யுகத்தில் ஸர்க்கார் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஷர்ட்டிங், டெய்லர், லான்ட்ரி - எல்லாச் செலவும் மிச்சம். காந்தி நாலு முழ வேஷ்டியும், தூண்டுமாகவே 'கிங் எம்பரர்'வரைக்கும் போகவில்லை?ஸ்வதேசி உடுப்பு வந்து, இதில் நான் ஆசைப்படுகிற மாதிரி பட்டு மோஹமும் போய்விட்டால், செலவு ரொம்ப மட்டுப்படும். தோய்க்காவிட்டால் மடியில்லை. ஸூட் தினமும் தோய்க்க முடியுமா?பார்வைக்கு அது எத்தனை சுத்தமாக இருந்தாலும் அநாசார ம்தானே?வேர்வைதானே?(அருகிலிருப்பவர் ஏதோ குறுக்கிட்டுக் கூற அதைக் கேட்டு அவரிடம் சிறிது விசாரணை செய்துவிட்டுப் பெரியவர்கள் தொடர்கிறார்கள்:) இப்போது ஏதேதோ செயற்கைத் துணி தினுஸுகள் கண்டுபிடித்திருக்கிறார்கள்;அதனால் கால் சராய்கூட தினமும் நாமே தோய்த்துப் போட்டு விடலாம். உடனேயே காய்ந்து விடும், பிழிந்தால் கூட அதிலே மடிப்பு விழுவதில்லை, அதனால் லான்ட்ரிக்கும் போட வேண்டியதில்லை என்று இவர் சொல்கிறார். ஆனால் இம்மாதிரி (artificial) செயற்கை வஸ்திரமே சாஸ்திர ஸம்மதமானதில்லை. பருத்தியாகவோ, பட்டாகவோதான் இருக்க வேண்டும். நானோ பட்டும் வேண்டாமென்று சொல்லி அந்தச் செலவும் இல்லாமல் பண்ணுகிறேன். இப்போது கோல்-தாரிலிருந்து பண்ணுகிற அநேக அநாசார வஸ்துக்கள்தான் - ப்ளாஸ்டிக் இதில் சேர்ந்ததுதான் - ஸர்வ வியாபகமாயிருக்கின்றன. நம் சரீரத்தின் மேலேயே இம்மாதிரி உடுப்புப் போட்டுக் கொள்வது ஆசாரத்துக்கு தோஷம்தான். (முதலில் குறுக்கிட்டவர் மீண்டும் ஏதோ கூறியதன் மீது) இவரே சொல்கிறார், இம்மாதிரி துணி வழியாகக் காற்று உள்ளே போகிறதில்லை, நம் சீதோஷ்ணத்தில் இது ஆரோக்யத்துக்கு உகந்ததில்லை என்று சில டாக்டர்கள் சொல்கிறார்கள் என்று.

அநேக மாஸங்கள் வெய்யிலும் புழுக்கமுமாகவே உள்ள தக்ஷிணத்தில் சட்டை அவசியமேயில்லை. குளிர் காலத்திலுங்கூட நன்றாகத் துண்டைப் போர்த்திக் கொண்டுவிட்டால் போதும். சால்வைக்கு விழுப்பு தோஷமே கிடையாது;போர்த்திக் கொள்ளலாம். இப்படி (ஷர்ட் போட்டுக் கொள்வதென்று) வழக்கமாய் விட்டதேயென்றால், அந்த வழக்கமும் புதிதாக ஒன்றரை நூற்றாண்டில் ஏற்பட்டதுதானே?ஜனங்கள் ஏகோபித்து மனஸ் வைத்து விட்டால் எந்த வழக்கத்தையும் மாற்றி விடலாம் ராஜாங்கம், அல்லது கம்பெனிகளில் அதிகார ஸ்தானத்திலிருப்பவர்கள் ரூலை மாற்றும்படிப் பண்ணி விடலாம்.

ட்ரெஸ் விஷயம் மாத்திரமில்லை. சாஸ்த்ரீயமான வேறு சில விஷயங்களிலும், ஆஃபீஸ் அநுமதிக்காதே, 'ஆஃபீஸ் நடைமுறை இதற்கு இடம் கொடுக்காதே'என்று சொல்கிறார்கள். 'ஏகாதசியில் வ்ரதம் இரு என்கிறீர்களே!ஆஃபீஸில் லீவு தருவார்களா?எப்படிப் பட்டினிக் கிடந்து கொண்டே வேலை பார்ப்பது?அமாவாஸ்யைக்கு யதோக்தமான காலத்தில்தான் தர்ப்பணம் பண்ணுவது என்றால் ஆஃபீஸுக்கு லேட்டாகி விடுமே'என்றெல்லாம் கேட்கிறார்கள். நான் சொல்கிறேன்:ஸகல ஜனங்களும் ஏகாதசி உபவாஸமிருப்பது, சாஸ்திர காலப்படி அமாவாஸயை தர்ப்பணம் பண்ணுவது என்று தீர்மானமாகச் செய்து காட்டினால், தன்னால் ராஜாங்கத்தில் லீவு விட்டுவிடுவார்கள். ஜனங்கள் கிளம்பினால் எல்லாம் ஸரியாய்விடும்.

அநாவசியத்துக்கெல்லாம் கிளம்பி, தாங்கள் சொல்கிற மாதிரி ஸர்க்காரோ கம்பெனி

முதலாளிகளோ செய்யும்படிப் பண்ணவில்லையா?அந்த ரைட், இந்த ரைட், ஸ்ட்ரைக், டெமான்ஸ்ட்ரேஷன் என்று - அந்த டே, இந்த டே என்று கொடியைப் பிடித்துக்கொண்டு சுத்தப் போகிறோம், சத்தம் போடப் போகிறோம் என்றால் லீவ் விடவில்லையா?நமக்கு நிஜமாக சிரத்தையும் தைரியமுமிருந்தால் எதையும் நடத்திக்கொண்டு விடலாம். வெள்ளைக்காரன் நாளிலேயே ஸர். டி. முத்துஸ்வாமி அய்யர் மாதிரிப் பரம ஆசாரமாயிருந்துகொண்டே ஜட்ஜ் பதவி வரை வஹித்தவர்களில்லையா என்ன?

நம்பிக்கையோடு சுத்தராக, சிஷ்டராக ஒருத்தர் இருக்கிறாரென்றால் இன்றைக்கும் லோகம், தான் எத்தனை கெட்டுப் போனாலும் அவருக்கு ஒரு ரெஸ்பெக்ட் கொடுக்கத்தான் செய்கிறது. மற்ற ட்ரெஸ், உடுப்புகளில் எத்தனை வசீகரமிருந்தாலும் அதிலே ஜனங்களுக்கு இல்லாத பக்தியும் மரியாதையும் நல்ல ஆசாரசீலராயிருக்கிற ஒருவர் ஸ்நானம் பண்ணிவிட்டு பட்டை பட்டையாக விபூதியோ நாமமோ போட்டுக்கொண்டு எதிரே வந்தால் ஏற்படுகிறது. ஆசாரத்துக்கொன்று ஒரு காந்தி உண்டாகிறது. அது யாரையும் (அப்படிப்பட்டவர்களுக்கு) நமஸ்காரம் பண்ண வைக்கிறது.



**அனைவரும் வைதிகராகுக !**

எல்லா ஜனங்களும் ஆசாரமாயிருப்பதென்றால் தான் ஆசாரம் நிற்குமே தவிர, யாரோ வைதிகர்கள் என்று சிலர் ஆசாரமாயிருப்பதென்றால் அவர்களைத் தனி ஜாதி என்று பிரித்து அவர்களுக்கு மாத்திரமே சாஸ்திரம் என்கிற மாதிரி ஆகிவிடும். எனவே அனைவரும் அவரவருக்கான ஆசாரப்படி நடக்கப் பிரயாஸைப்படவேண்டும். முக்கியமாக, பிராம்மணனுக்குத்தானே நிறைய ஆசாரங்கள் வைத்திருக்கிறது?அதனால் அந்த ஜாதியில் பிறந்த எல்லாரும் ஆசாரங்களை நன்றாக அநுஷ்டிக்கப் பிரயத்தனம் செய்ய வேண்டும். தக்ஷிணை வாங்கிக் கொண்டு கர்மாக்களைப் பண்ணி வைக்கிறவர்கள்தான் வைதிகர்கள் என்று வைக்கிறபோது, தக்ஷிணையை உத்தேசித்துத்தான் வைதிகமாக இருக்கிறது என்று ஏற்படுகிறது!இப்படி ஒரு ஜீவனோபாயத்துக்காகவே அவர்கள் ஆசாரமாயிருக்கவேண்டி ஆகும்போது அதில் அநுஷ்டான சுத்தத்தையோ, சக்தியையோ, தன்னால் ஒரு ரெஸ்பெக்ட் கமான்ட் பண்ணும் (மரியாதையை ஈர்க்கும்) தேஜஸையோ எதிர்பார்ப்பதற்கில்லை. அதனால்தான் 'வைதிகப் பிச்சு'என்று கேலி பண்ணுகிற மாதிரி ஆகிறது. நான் அவர்களைக் குறை சொல்கிறேனென்று நினைக்கக் கூடாது - வேறே எந்தத் தொழிலுக்கும், க்ளப்பில் தட்டுத் தூக்குவதற்குக்கூட, இன்னம் ஜாஸ்தி வரும்படி கிடைக்கிற போது, இவர்களாவது க்ருஹஸ்தர்கள் தங்களுடைய செலவினங்களில் கடைசி 'அயிட்ட'மாகமூக்கால் அழுது கொண்டு தருகிற தக்ஷிணையில் ஜீவனம் நடத்தத் துணிந்து, ஊர்ப் பரிஹாஸத்தையும் தாங்கிக்கொண்டு, யாதாயாதம் அலைந்து கொண்டு பௌரோஹித்யம் (புரோஹிதத் தொழில்) செய்து, வேதகர்மா இந்த தேசத்தை விட்டுப் போயே விடாமல் காப்பாற்றித் தருகிறார்களேயென்று அவர்களுக்கு நன்றி சொலல்வே வேண்டும்.ஆனாலும் எந்தத் துறையானாலும் அது ஆத்மார்த்தமாக இல்லாமல் உதர போஷணார்த்தமாக நடத்தப்படும்போது அதனுடைய ஜீவசக்தி குன்றிப்போய் விடுகிறது. அதனால் தான் இப்போது (கர்மாக்களைப்) பண்ணி வைக்கும் சாஸ்திரிகளையே வைதிகர்கள் என்று வைக்கிறபோது, நான் முன்னே சொன்ன மாதிரி ஆசார சீலர்களுக்கு உள்ள காந்தியால் மற்றவர்கள் மதிப்பைப் பெறுவது என்பது இல்லாமல் போகிறது. நேர்மாறாக ஆகிறது, நான் எல்லா சாஸ்திரிகளையும் சொல்லவில்லை. ஸமூஹத்தின் மதிப்பைப் பெறுவது என்பது இல்லாமல் போகிறது. நேர்மாறாக ஆகிறது. நான் எல்லா சாஸ்திரிகளையும் சொல்லவில்லை. ஸமூஹத்தின் மதிப்பைப் பெற்று நல்ல சிஷ்டர்களாகவும், தேஜஸ்விகளாகவும், சுத்தமான அநுஷ்டாதாக்களாகவும் அங்கங்கே சாஸ்திரிகள் இல்லாமல் போகவில்லை. ஆனால் மொத்தத்தில், பண்ணி வைக்கும் வாத்தியார்களும், வெறுமனே தக்ஷிணை மட்டும் வாங்கிக்கொள்பவர்களும் அல்லது திவஸம் திங்களில் ஹோஜனத்துக்கு மாத்திரம் போகிறவர்களுமே வைதிகர்கள் என்றாகியிருக்கிற இன்றைய - துர்த்தசையில்

'வைதிகன்'என்றாலே 'இன்பீரியாரிடி காம்ப்ளெக்ஸ்'(தாழ்வுணர்ச்சி) ஏற்படுதாகத்தானிருக்கிறது.

ஆகையால் ஸம்பாத்யம் முதலான இதர நோக்கங்கள் தெரிந்தோ தெரியாமலோ இல்லாமல், சாஸ்திரத்துக்காகவே சாஸ்திரம், ஆசாரத்துக்காகவே ஆசாரம், வைதிகத்துக்காகவே வைதிகம் என்று எல்லாரும் ஆகவேண்டும். நான் சாஸ்திரப் பிரகாரம் நடக்கிறேனென்றால் இது காரணார்த்தம். இல்லாவிட்டால் எனக்கு பிழைப்பு நடக்காது. உபாத்யாயம் பண்ணுகிறவர்களும் இதே மாதிரிதான். இதையெல்லாம் genuine என்று சொல்ல முடியாது. இப்படி வேறு காரணங்களுக்காக என்றில்லாமல் எல்லாரும் ஆத்ம சுத்தி ஒன்றுக்காகவே சாஸ்த்ரோக்தமாயிருந்தால்தான் அது நிஜமானதாக இருக்கும். பூர்வத்தில் நமக்கு லோகம் முழுவதிலுமே எல்லாத் துறைகளிலும் பெருமை வாங்கித்தந்தஅதன் நிஜ சக்தி அப்போதுதான் இன்றைக்கும் பேசும்!நம்முடைய தேசத்தின் ஜன ஸமூஹம் முழுக்கவுமே வைதிக ஸமூஹம் என்று ஆகவேண்டும். அதில் குறிப்பாக வேத ரக்ஷணத்துக்கென்றே ஏற்பட்ட ஜாதியில் அத்தனை பேரும் வைதிகர்களாக வேண்டும். இப்படி எல்லாருக்கும் ஸதாசாரமும் அநுஷ்டானமும் வேத சாஸ்திரப்படி யார் யாருக்கு எவையோ அவை இருந்துவிட்டால் உசத்தி-தாழ்த்தியும் கோப-தாபமும் ஓடியே போய்விடும். இப்போது emotional integration (உணர்ச்சி பூர்வ ஒருமைப்பாடு) என்று பேச்சில் பிரமாதமாகச் சொல்லிக்கொண்டே, எலெக்னுக்கு நிறுத்தி வைப்பதானாலும், காலேஜ் அட்மிஷனானாலும், உத்யோகமானாலும் எதிலுமே ஜாதியையேதான் பார்த்து, இன்டெக்ரேஷனுக்கு நேர்மாறாகப் பண்ணி வருகிறார்கள். நான் சொல்கிறேன்:இந்த 'இமோஷனல்', 'கிமோஷனல்'என்பதெல்லாமே ஏதோ இமோஷனல் ஜோடனையாகத் தான் நிற்குமே தவிர ஸ்திரமாக நின்று பலன் தராது. உணர்ச்சியால் 'இன்டெக்ரேஷன்' என்பது நடக்காத காரியம். ஸதாசாரத்தால்தான் 'இன்டெக்ரேஷன்' ஏற்பட வேண்டும். எல்லாரும் ஸதாசாரம் என்ற தர்ம நெறிக்குள் கட்டுப்பட்டு வரும்போதுதான் தன்னால் கட்டுக் கோப்பான ஒரு ஸமூஹமாக இறுகுவார்கள்.

*தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)*

ஆசார விஷயங்கள்

### உடனே செய்யவேண்டியது

'எல்லாரையும் வைதிகமாயிரு என்றால் இந்தக் காலத்தின் போக்கில் நடக்கிற காரியமா?நடக்காததைச் சொல்லிப் பிரயோஜனம் என்ன?'என்று கேட்டால் நடக்கிற அளவுக்கு ஒன்று சொல்கிறேன். இதையாவது உடனேயே செய்ய ஆரம்பித்து விடவேண்டும்.

ஸமூஹத்தில் ஒட்டாமல் தனியாக வைதிகர்கள் ஒரு சின்ன கோஷ்டியிருப்பதாகவும், அவர்களும் இன்ஃபீரியாரிடி கமாப்ளெக்ஸோடு அப்படியிருப்பதாகவும் இருக்கிற ஸ்திதி மாறுவதற்கு இந்த ஒன்றைச் சொல்கிறேன். அதாவது மற்றவர்கள் முழுக்க வைதிகமாகப் போகாமல் லௌகிகமான ஸ்கூல், காலேஜ் என்றே பசங்களை விடட்டும். தாங்களும் ஆஃபீஸோ, கம்பெனியோ, சொந்தோ பிஸினெஸ்ஸோ (அது ரொம்பவும் துராசாரமாக இல்லாத வரையில்) என்ன தொழில் பண்ணுகிறார்களோ அபபடியே பண்ணட்டும். ஆனாலும் பசங்களை தினம் ஸாயந்திரம் ஒரு மணி, ஸ்நானம் பண்ணி மடி கட்டிக் கொண்டு, நெற்றிக்கு இட்டுக்கொண்டு ஒரு பொது இடத்தில் ஒன்றாகக் கூடி கொஞ்சமாவது வேதாப்யைஸம் பண்ணுவதற்கும் ஸ்தோத்திரங்கள் கற்றுகொள்வதறகும் ஒவ்வொரு பேட்டையிலும் ஏற்பாடு செய்யவேண்டும். பிராம்மணரல்லாதாருக்கும் வேதாப்யாஸம் தவிர மற்ற தினுஸில் மதாபிமானம், தெய்வ பக்தி உண்டாகும் படியான ஏற்பாடுகளைப் பண்ணவேண்டும் நீராடுவது, நீறு பூசுவது (அல்லது திருமண் இடுவது), தேவார திருவாசக திவ்ய பிரபந்தங்களை ஓதுவது என்று வைத்துக் கொள்ளாலம். சின்ன வயஸிலிருந்தே இப்படி நம் மதாநுஷ்டானங்களில் பிடிப்பை உண்டாக்கிவிட வேண்டியது அவசியம். ஸகல ஜாதிக் குழந்தைகளுக்கும் ஸம்ஸ்கிருதமும் கற்றுக்கொடுத்துவிடவேண்டும். அத்தனை

சாஸ்திரங்களும் அந்த பாஷையில்தானே இருக்கின்றன?ஆனபடியால், நம் சாஸ்திரங்களைப் பார்த்து அதில் என்ன இருக்கிறது என்று தெரிந்துகொள்ளக்கூடிய பாஷா ஞானத்தை நம் மதத்துக் குழந்தைகள் எல்லோருக்கும் உண்டாக்கிவிட வேண்டும்.

இப்படி இளவயசுக்காரர்கள் முழுக்க வைதிகாசாரப்படிதான் நடப்பது என்றில்லாவிட்டாலும், அதை மட்டமாக நினைக்காமல் அதில் மரியாதை வைத்து முடிந்த மட்டும் சில ஆசரணைகளைப் பின்பற்றும்படிப் பண்ணினால்தான் அடுத்த தலைமுறையில் முழு வைதிகர்களாகப் போவதற்கு வெட்கப்படாமல் சில பசங்களாவது வருவார்கள்;பௌரோஹித்யம் தங்களோடு போகட்டும் என்று நினைக்கிற இன்றைய சாஸ்திரிமார்கள் பிள்ளைகளை அந்தத் தொழிலில் விட முன்வருவார்கள்.

இப்படி ஒரு ஸ்நானம், மடி, அத்யயனம், ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் ஸ்தோத்ரங்கள் படிப்பது, எல்லோருமாகக் கோவிலுக்குப் போய் தரிசனம் பண்ணுவது, பஜனை பண்ணுவது என்று ஆரம்பித்து விட்டால், தானே கெட்ட ஆசாரங்கள் குறைய ஆரம்பித்து விடும். நாம், 'இங்கே போகாதே, இதைத் தின்னாதே'என்று கண்டிப்புப் பண்ணினால்தான் அங்கேயே போவது, அதையே தின்பது என்று முரண்டிக்கொண்டு தப்பிலேயே புத்தி போகும். இப்படிக் கண்டிப்பதற்குப் பதில் வைதிகமான, தெய்வ ஸம்பந்தமான சில காரியங்களில் பழக்கிவிட்டால், அப்புறம், "நாம் அந்த இடங்களுக்குப் போனால், அந்த வஸ்துக்களைத் தின்றால், 'நீ கூடவா இங்கே வந்திருக்கே?இப்படிச் செய்யறே?'என்று அந்த இடத்துக்காரர்களே கேட்பார்களே!"என்ற லஜ்ஜையால் பசங்கள் தாங்களாகவே ஸரியாயிருப்பார்கள். டிஸிப்ளின் பழக்கத்தால் வரவேண்டுமேயொழிய, உபதேத்தால் அல்ல.

பசங்களுக்குச் சொன்னது வயசு வந்தவர்களுக்குந் தான். அவர்களும் டென்னிஸ் கோர்ட், ஸினிமா. கச்சேரி என்று போவதைக் குறைத்துக்கொண்டு இதே மாதிரி வைதிகமான, தெய்வ ஸம்பந்தமான விஷயங்களைத் தெரிந்துகொண்டு, இயன்ற மட்டும் ஆசாரங்களை அநுஷ்டிக்க வேண்டும். ரிடையர் ஆன பிற்பாடாவது, எக்ஸ்டென்ஷன், ரி-எம்ப்ள ாய்மென்ட், சொந்த பிஸினஸ் என்று போகாமல் நம்முடைய ஆசாரங்களை அநுஷ்டித்துக் கொண்டு சாஸ்திரோக்தமாக வாழப் பார்க்க வேண்டும்.

### உடனே செய்யவேண்டியது

எல்லாரையும் வைதிகமாயிரு என்றால் இந்தக் காலத்தின் போக்கில் நடக்கிற காரியமா?நடக்காததைச் சொல்லிப் பிரயோஜனம் என்ன?'என்று கேட்டால் நடக்கிற அளவுக்கு ஒன்று சொல்கிறேன். இதையாவது உடனேயே செய்ய ஆரம்பித்து விடவேண்டும்.

ஸமூஹத்தில் ஒட்டாமல் தனியாக வைதிகர்கள் ஒரு சின்ன கோஷ்டியிருப்பதாகவும், அவர்களும் இன்ஃபீரியாரிடி கமாப்ளெக்ஸோடு அப்படியிருப்பதாகவும் இருக்கிற ஸ்திதி மாறுவதற்கு இந்த ஒன்றைச் சொல்கிறேன். அதாவது மற்றவர்கள் முழுக்க வைதிகமாகப் போகாமல் லௌகிகமான ஸ்கூல், காலேஜ் என்றே பசங்களை விடட்டும். தாங்களும் ஆஃபீஸோ, கம்பெனியோ, சொந்தோ பிஸினெஸ்ஸோ (அது ரொம்பவும் துராசாரமாக இல்லாத வரையில்) என்ன தொழில் பண்ணுகிறார்களோ அபபடியே பண்ணட்டும். ஆனாலும் பசங்களை தினம் ஸாயந்திரம் ஒரு மணி, ஸ்நானம் பண்ணி மடி கட்டிக் கொண்டு, நெற்றிக்கு இட்டுக்கொண்டு ஒரு பொது இடத்தில் ஒன்றாகக் கூடி கொஞ்சமாவது வேதாப்யஸம் பண்ணுவதற்கும் ஸ்தோத்திரங்கள் கற்றுகொள்வதறகும் ஒவ்வொரு பேட்டையிலும் ஏற்பாடு செய்யவேண்டும். பிராம்மணரல்லாதாருக்கும் வேதாப்யாஸம் தவிர மற்ற தினுஸில் மதாபிமானம், தெய்வ பக்தி உண்டாகும் படியான ஏற்பாடுகளைப் பண்ணவேண்டும் நீராடுவது, நீறு பூசுவது (அல்லது திருமண் இடுவது), தேவார திருவாசக திவ்ய பிரபந்தங்களை ஓதுவது என்று வைத்துக் கொள்ளாலம். சின்ன வயஸிலிருந்தே இப்படி நம் மதாநுஷ்டானங்களில் பிடிப்பை உண்டாக்கிவிட வேண்டியது அவசியம். ஸகல ஜாதிக் குழந்தைகளுக்கும் ஸம்ஸ்கிருதமும் கற்றுக்கொடுத்துவிடவேண்டும். அத்தனை சாஸ்திரங்களும் அந்த பாஷையில்தானே இருக்கின்றன? ஆனபடியால், நம் சாஸ்திரங்களைப் பார்த்து அதில் என்ன இருக்கிறது என்று தெரிந்துகொள்ளக்கூடிய பாஷா ஞானத்தை நம் மதத்துக் குழந்தைகள் எல்லோருக்கும் உண்டாக்கிவிட வேண்டும்.

இப்படி இளவயசுக்காரர்கள் முழுக்க வைதிகாசாரப்படிதான் நடப்பது என்றில்லாவிட்டாலும், அதை மட்டமாக நினைக்காமல் அதில் மரியாதை வைத்து முடிந்த மட்டும் சில ஆசரணைகளைப் பின்பற்றும்படிப் பண்ணினால்தான் அடுத்த தலைமுறையில் முழு வைதிகர்களாகப் போவதற்கு வெட்கப்படாமல் சில பசங்களாவது வருவார்கள்;பௌரோஹித்யம் தங்களோடு போகட்டும் என்று நினைக்கிற இன்றைய சாஸ்திரிமார்கள் பிள்ளைகளை அந்தத் தொழிலில் விட முன்வருவார்கள்.

இப்படி ஒரு ஸ்நானம், மடி, அத்யயனம், ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் ஸ்தோத்ரங்கள் படிப்பது, எல்லோருமாகக் கோவிலுக்குப் போய் தரிசனம் பண்ணுவது, பஜனை பண்ணுவது என்று ஆரம்பித்து விட்டால், தானே கெட்ட ஆசாரங்கள் குறைய ஆரம்பித்து விடும். நாம், 'இங்கே போகாதே, இதைத் தின்னாதே'என்று கண்டிப்புப் பண்ணினால்தான் அங்கேயே போவது, அதையே தின்பது என்று முரண்டிக்கொண்டு தப்பிலேயே புத்தி போகும். இப்படிக் கண்டிப்பதற்குப் பதில் வைதிகமான, தெய்வ ஸம்பந்தமான சில காரியங்களில் பழக்கிவிட்டால், அப்புறம், "நாம் அந்த இடங்களுக்குப் போனால், அந்த வஸ்துக்களைத் தின்றால், 'நீ கூடவா இங்கே வந்திருக்கே?இப்படிச் செய்யறே?'என்று அந்த இடத்துக்காரர்களே கேட்பார்களே!"என்ற லஜ்ஜையால் பசங்கள் தாங்களாகவே ஸரியாயிருப்பார்கள். டிஸிப்ளின் பழக்கத்தால் வரவேண்டுமேயொழிய, உபதேத்தால் அல்ல.

பசங்களுக்குச் சொன்னது வயசு வந்தவர்களுக்குந் தான். அவர்களும் டென்னிஸ் கோர்ட், ஸினிமா. கச்சேரி என்று போவதைக் குறைத்துக்கொண்டு இதே மாதிரி வைதிகமான, தெய்வ ஸம்பந்தமான விஷயங்களைத் தெரிந்துகொண்டு, இயன்ற மட்டும் ஆசாரங்களை அநுஷ்டிக்க வேண்டும். ரிடையர் ஆன பிற்பாடாவது, எக்ஸ்டென்ஷன், ரி-எம்ப்ளாய்மென்ட், சொந்த பிஸினஸ் என்று போகாமல் நம்முடைய ஆசாரங்களை அநுஷ்டித்துக் கொண்டு சாஸ்திரோக்தமாக வாழப் பார்க்க வேண்டும்.

## கட்டுப்படுவதன் பயன்

**சா** ஸ்திரமென்றால் ஒரே கட்டுப்பாடாயிருக்குமே என்று பயப்படக்கூடாது. "ஸ்வதந்திர யுகம் என்று சொல்லிக்கொண்டு ஸ்வயேச்சைப்படி கட்டையறுத்துக் கொண்டுபோய் என்ன கண்டோம்?ஏதோ அவ்வப்போது, ஒரு பெரிய மரக்கிளை காற்றில் ஆடுகிறபோது, அதன் விஸ்தாரமான நிழலில் துளிப்போல, இரண்டு இலை இடுக்கால் ஸூர்ய வெளிச்சம் விழுகிற மாதிரி, எப்போது பார்த்தாலும் இனம் தெரியாமல் பாரமாக மனஸை அழுத்திக் கொண்டிருக்கிற துக்க இருட்டில் இந்த ஸ்வாதந்திரியப் போக்கினால் இரண்டு கீற்று ஸந்தோஷ ரச்மி துளி நேரம் ஆட்டம் போட்டுவிட்டுப் போவதைத் தவிர சாச்வத ஸௌக்யத்துக்கு, நிரந்தர நிம்மதிக்கு இந்த ஸ்வதந்திரத்தாலோ, ஸயன்ஸ் டிஸ்கவரிகளாலோ, பொருளாதார அபிவிருத்தியாலோ நம்மால் என்ன ஸாதித்துக்கொள்ள முடிந்திருக்கிறது?துக்கத்தின் மூலத்தைக் கண்டுபிடித்து நிவிருத்தி பண்ணிவைக்க ஸ்வதந்திரத்துக்கும் ஸயன்ஸுக்கும் ஸாமர்த்யம் உண்டா?பாபத்துக்குப் பரிஹாரம் செய்ய இவற்றால் முடியுமா?பாபத்தையும் துக்கத்தையும் போக்கிக்கொண்டு நிம்மதியாக நிறைவாக வாழ்ந்த நம் பெரியவர்களெல்லாம் சாஸ்திராசாரங்களை நன்றாக அநுஷ்டித்துத்தானே அந்த நிலையை அடைந்திருக்கிறார்கள்?"என்று யோசித்துப் பார்த்தால், வாஸ்தவத்தில் எதை இப்போது ஸ்வந்திரமென்று நினைத்துக் கொண்டிருக்கிறோமோ அதுதான் கட்டு என்று தெரியும். இதுதானே நம்மை நித்ய ஸுகத்தின் பக்கம் போகவிடாமல், புண்யத்தின் பக்கம் போகவிடாமல் துக்கத்திலும் பாபத்திலுமே கட்டி வைத்திருக்கிறது?

இதேமாதிரி, கட்டாகத் தெரிகிற சாஸ்திரங்கள் வாஸ்தவத்தில் கட்டுமில்லை. நிஜ ஸ்வதந்திரமான மோக்ஷத்துக்கு வழி பண்ணுவது அதுதான். 'தொம்பங் கூத்தாடி'என்பார்கள். 'ஸ்தம்பக் கூத்தாடி'என்பதுதான் அப்படித் திரிந்து வந்திருக்கிறது. ஸ்தம்பம் என்பது தூண். மாஜிக் ஷோவில் தொம்பங் கூத்தாடி வருவான். அநேகத் தூண்களில் ஒன்றில் அவனை ஏகப்பட்ட கட்டுப் போட்டுக் கட்டி வைத்திருக்கும். ஒரு திரையால் சொடக்குப் போடுகிற நாழி அவனை மறைத்துவிட்டுத் திரையை எடுப்பார்கள் அந்த க்ஷண காலத்துக்குள் அவன் எப்படியோ அத்தனை கட்டுக்களையும் அவிழ்த்துவிட்டு அந்தத் தூணிலிருந்து விடுபட்டு, அதோடு மட்டுமில்லாமல் இன்னொரு தூணில் அதே மாதிரி அவ்வளவு கட்டுக்களையும் போட்டுக் கொண்டு காணப்படுவான். அவனுக்கு அப்படி ஒரு தந்திரம் தெரியும். முதலில் கட்டினபோது கை, கால்களை ஒரு மாதிரி அகட்டி (அகற்றி) வைத்துக்கொண்டிருப்பான் திரை போட்டவுடன் அவற்றை குறுக்கிக் கொள்வான் உடனே கட்டுத் தளர்ந்து விடும். அது கீழே விழுவதற்குள் மறுபடியும் அதே மாதிரி அகட்டிக்கொண்டு இன்னொரு தூணுக்குப் போய்விடுவான். இப்படித் தன் அங்கங்களைக் குறுக்கிக் கொள்வதாலேயே, அவற்றுக்கு மேலே போட்ட கட்டு விரிகிற மாதிரிதான் சாஸ்திரக் கட்டுக்குள்ளும். அஹங்காரத்தை மேலேயிருந்து கட்டுவது சாஸ்திரம். நாமே உள்ளுக்குள்ளிருந்து நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்காக நம்மைப் பக்குவப்படுத்துவதற்கே இந்தக் கட்டு. மணி முடிச்சாக ஒரு கட்டு விழுந்து அதை அவிழ்க்க முடியாமல் ஆகிறபோது என்ன செய்வார்களென்றால் அந்தக் கட்டை விட இறுக்கமாக இன்னொரு கயிற்றால் சுற்றுவார்கள். சுற்றுவார்களே தவிர இதை (இரண்டாவது கயிற்றை) முடிச்சாகப் போட மாட்டார்கள். இப்படி இறுக்குகிற போது கட்டுப்படுகிற வஸ்து முன்னைவிடக் குறுகுமாதலால், முதலில் மணி முடிச்சு விழுந்த கயிறு இப்போது அதற்குத் தொளதொள என்று ஆகிவிடும். அதனால் முடிச்சை அவிழ்க்காமலே அந்தக் கயிற்றை அப்படியே எடுத்துப் போட்டு விடலாம். அப்புறம், முடிச்சுப் போடாமல் இப்போது இறுக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிற கயிற்றையும் விட்டுவிடலாம். அப்போது வஸ்து ஒரு கட்டுமில்லாமல் ஸ்வதந்திரமாய்விடும் அஹங்கார மனஸ் நம்மைக் கட்டிப் போட்டுப் படுத்துகிற பாட்டில் ஸம்ஸார பந்தம் மணி முடிச்சாய் விழுந்திருக்கிறது. இப்போது, இதைவிட இறுக்கம் மாதிரித் தெரிகிற ஆசாரக் கட்டுக்களைப் போட்டுக் கொண்டால் அப்புறம் இரண்டு கட்டும் போய் நிஜமான ஆத்ம ஸ்வதந்திரத்தை அடையலாம்.

கர்மா என்றாலும், பக்தி என்றாலும், ஞானம், யோகம் என்று எந்தப் பெயரைச் சொன்னாலும் ஸாதனா மார்க்கங்களெல்லாம் மனஸைக் கட்டுப்படுத்துகிற ஒரே லக்ஷ்யத்துக்காக ஏற்பட்டதுதான். வாழ்க்கையில் ஒவ்வொன்றும் சாஸ்திரத்தைப் பார்த்து ஆசாரமாய்ப் பண்ண வேண்டும் பூஜை புரஸ்காரந்தானென்றில்லை - பல் தேய்ப்பதிலிருந்து ஆரம்பித்து எல்லாவற்றுக்கும் சாஸ்திர ரூல்படி செய்ய வேண்டும் என்று ஆரம்பித்தால், நமக்குத் தெரியாமலே, நம் மனஸ் போகிறபடிப் பண்ணாமல் அதைக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவந்து விடுவோம்.

ஆசாரம் சிக்கனத்துக்கு ரொம்ப உதவுகிறது என்ற பாயின்ட் இங்கேயும் வருகிறது. இப்போது மனஸில் எழும்புகிற பலதரப்பட்ட ஆசைகளுக்காகத்தானே செலவெல்லாம் செய்கிறோம் கண்டதைத் தின்னத் தோன்றுகிறது, ஸினிமா ஆசை, டிரஸ் ஆசை என்று இவற்றுக்காகத்தானே செலவு செய்கிறோம் இந்தச் செலவுக்கெல்லாம் நிறைய ஸம்பாத்யம் இருந்தால்தான் முடிகிறது என்பதால்தானே எத்தனை துராசாரமான தொழிலானாலும் எந்த அநாசார தேசத்தில் வேண்டுமானாலும் போய்ப் பண்ணுவது என்று ஆகியிருக்கிறோம் ஐயோ இதைத் தின்பது பாபம் இதைப் பண்ணுவது பாபம் என்று சாஸ்திரங்களைப் பார்த்துப் பார்த்து மனஸின் ஆசைகளையெல்லாம் குறைத்துக்கொண்டு விட்டால் இத்தனை செலவுக்கு அவசியமில்லை. உள்ளூரோடு எத்தனை எளிய வாழ்க்கை வாழலாமோ அதற்குரிய ஸம்பாத்தியம் தருகிற ஒரு தொழிலைப் பார்த்துக்கொண்டு, நிம்மதியாக இருந்து கொண்டிருக்கலாம். வேண்டாத பொழுதுபோக்குகள், அலைச்சல்கள் இல்லாததால் தெய்வ சிந்தனையும் ஆத்ம விசாரமும் பண்ண நிறைய டயமும் கிடைக்கும். ஒரு சேஞ்ஜ் பண்ண வேண்டும். வெளி லோகத்தைப் பார்க்க வேண்டுமென்றால் க்ஷேத்ராடனம், தீர்த்தாடனம் செய்யலாம். கோஷ்டியாக பல பேர் சேர்ந்து யாத்ரை போனால் அதிலே வேறெந்தப் பொழுதுபோக்குக் கேளிக்கையிலும் கிடைக்காத ஆனந்தம் கிடைக்கும். பஜனை ஹரிகதா ச்ரவணம், உத்ஸவம் இவற்றின் ஆனந்தம் ஸினிமாவிலும் நாவலிலும் கிடைக்கிற ஸந்தோஷத்துக்கு எத்தனையோ மேலானதாகத் தெரியும்.

## ஆசாரம் குறித்த நூல்கள்

**இ** ரண்டு தலைமுறையாகவே ஆசாரங்கள் எடுபட்டு வருகின்றன. அதனால் இப்போது சாஸ்திரப் படிப் பண்ணுவதென்றால் எங்கள் அகத்துப் பெரியவர்களுக்கும் சொல்லிக் கொடுக்கத் தெரியவில்லையே என்பீர்கள். உங்களுக்கு யார் உபாத்யாயமோ அல்லது நல்ல ச்ரௌதிகளாக ஊரில் யார் இருக்கிறாரோ (ஒவ்வொரு ஜாதிக்கும் அததன் தர்மாசாரங்கள் தெரிந்த பெரியவர் இல்லாமல் போகமாட்டார்) அவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். புஸ்தகங்கள் இருக்கின்றன. எல்லாம் ரொம்ப -ஆகப் போட்டு வைத்யநாத தீக்ஷியம் என்று இருக்கிறது. அத்தனை பெரிசாக வேண்டாமென்றால் ஸோமதேவ சர்மாவின் புஸ்தகம் இருக்கிறது. முத்துஸ்வாமி அய்யர் என்றும் ஒருத்தர் தர்ம சாஸ்திரச் சுருக்கம் எழுதியிருக்கிறார்.

பழந்தமிழ் நூல்களும் நம்முடைய வைதிக ஸமயாசாரங்களைப்பற்றி நிறையச் சொல்லியிருக்கின்றன. ஆசாரக்கோவை என்றே ஒன்று இருக்கிறது. திருக்குறள் தொடங்கி அவ்வை பாடல்கள், நன்னெறி, அறநெறிச் சாரம் முதலான நூல்கள் நீதிகளையும் தர்மங்களையும் பொதுவாகச் சொல்லிக் கொண்டு போகும்போதே, அன்றாட வாழ்க்கையில் அநுஷ்டிக்க வேண்டிய வைதிகாசாரங்களுக்கும் அங்கங்கே குறிப்புக் காட்டிக்கொண்டு போகும். நீதி சாஸ்திரக் கருத்துக்களை அப்படியே மொழி பெயர்த்து நீதி வெண்பா என்றும் இப்படியொரு புஸ்தகமிருக்கிறது. பழந்ததமிழ் நாட்டில் எந்த அரசனைப் பற்றியும் புராணத்திலோ, இலக்கியத்திலோ, சாஸனங்களிலோ சொல்லும்போது அவன் மநுநீதிப்படி மறைவழி வருணாச்சிரமங்களை முறை பிறழாமல் நன்றாகப் பரிபாலனம் செய்து வந்தானென்று தப்பாமல் சொல்லியிருப்பதைப் பார்க்கிறோம். இப்படிப் பொதுப்படையாக வைதிகாசாரங்களைச் சொல்வதோடு நிற்காமல் நித்யப்படி வாழ்க்கையில் ஒவ்வொரு கார்யமும் எப்படி சாஸ்திராசாரப்படிப் பண்ணவேண்டும் என்று விளக்கிச் சொல்வதற்கே ஏற்பட்டதுதான் நான் சொன்ன

ஆசாரக்கோவை தமிழிலே உயர்ந்த இலக்கிய ஸ்தானம் கொடுத்துப் போற்றும் நூல்களில் பதினெண் கீழ்க் கணக்கு என்று பதினெட்டு புஸ்தகங்கள் உண்டு. இந்தப் பதினெட்டில் ஒன்றுதான் திருக்குறள். இன்னொன்று ஆசாரக் கோவை. தமிழ் மக்கள் அதைப் பார்த்தால் ஆசாரங்கள் அத்தனையும் தெரிந்துகொண்டுவிடலாம்.

---

## ஹிந்து ஸமய ஆசார வழக்குகளைப் பற்றித் தற்போது கீழ்க்கண்ட தமிழ்ப் புத்தகங்கள் கிடைப்பதாகத் தெரிகிறது

### 1. ஸ்ம்ருதி முக்தாபலம் என்னும் வைத்யநாத தீக்ஷீயம் (ஆறு பகுதிகள்)

### 2. கௌதம தர்ம ஸூத்ரம்

3. போதாயன தர்ம ஸூத்ரம்

இவற்றின் பதிப்பாளர் வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை கும்பகோணம்.

4. தர்ம சாஸ்திரச் சுருக்கம் ஆர். முத்துஸ்வாமி அய்யர் பதிப்பாளர் கே. எம். நாகராஜ அய்யர், கீழ்விடையல், கருப்பூர், கொடவாசல் போஸ்ட், தஞ்சை மாவட்டம்.

5. ஸதாசாரம் - ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா, பதிப்பாளர் பவானி புக் ஸெண்டர், 19, ஸ்டேஷன் ரோட், சென்னை-600 033.

6. (சைவமானது) நித்யகன்ம நெறி - கிடைக்குமிடம் தருமபுரம் ஆதீனம், தருமபுரம், மயிலாடுதுறை.

7. (வைஷ்ணவமானது) ஸ்ரீவைஷ்ணவ நித்யானுஷ்டானக் கிரமம் - பதிப்பாளர் லிஃப்கோ பதிப்பகம், தி.நகர், சென்னை-600 017.

---

# அந்நாள் பெருமையும் இந்நாள் சிறுமையும்

**ந** ம்முடைய முன்னோர்கள் எப்படி ஆரோக்யமாகவும், தேஜஸோடும், புத்திப் பிரகாசத்துடனும், மந்திர சக்தியுடனும், ஆத்ம சாந்தியுடனும் எல்லாரும் கொண்டாடும் படியாக இருந்திருக்கிறார்கள் இப்போதுள்ள நாமோ எத்தனை வியாதி வக்கையோடு, ஒரு பவிஷுமில்லாமல், புத்தி மங்கி, மந்திர சக்தி என்கிறவரை போகாமல் ஸாதாரண புருஷ சக்திகூட இல்லாமல் எப்போதும் அசாந்தியோடு இருந்து வருகிறோம் என்பதைப் பார்த்து, அவர்கள் பின்பற்றி வந்த சாஸ்த்ராசரணைகள் கஷ்டமாயிருக்கிறதென்று நாம் விட்டு விட்டதுதான் நமக்கு அதைவிட எவ்வளவோ பெரிய நித்ய கஷ்டத்தைத் தந்திருக்கிறதென்று புரிந்து கொண்டு, அவற்றை இப்போதிலிருந்தாவது அநுஸரிக்க ஆரம்பிக்க வேண்டும். முதலில் கொஞ்சம் சிரமமாயிருந்தாலும் பழக்கிக்கொண்டு ஆசாரமாக வாழ ஆரம்பித்து விட்டால், கொஞ்ச நாளிலேயே நம் சாஸ்திரங்கள் க்ஷமத்துக்கும் ஸௌக்யத்துக்கும் ஏற்பட்டனவேயன்றிக் கஷ்டம் உண்டு பண்ணுவதற்கல்லவென்று தெரிய ஆரம்பித்துவிடும். விடிய ஐந்து நாழிகைக்கு முன்னாலே எழுந்து, ஸ்நானம் பண்ணி அருணோதய காலத்தில் அர்க்யம் கொடுத்து, ஸூர்யோதயம் வரை காயத்ரீ ஜபம் செய்து, அதன்பின் ஔபாஸனம், பூஜை, மாத்யான்ஹிகம், வைச்வதேவம், அதிதி ஸத்காரம் பண்ணி ஸாத்விகமான ஆஹாரத்தைச் சாப்பிட்டு, இப்படியே ஸாயங்காலமும் ஸ்நானம் செய்து ஸந்தியா வந்தன அர்க்யம் ஸூரியன் மேலைவாயில் விழும் போது கொடுத்து அப்புறம் நக்ஷத்ரம் தெரிகிறவரை காயத்ரீ பண்ணி, அக்னி ஹோத்ரம், தேவாலய தர்சனம் அல்லது ஸத்கதா சிரவணம் எல்லாம் செய்தால் எப்படி வாழ்க்கையிலேயே ஒரு நிறைவு இருக்கிறது;இப்போது அழுக்குப் பிடித்து அழுமூஞ்சியாயிருப்பது போய் எத்தனை சுசி ருசியுடன் ப்ரஸன்னமாயிருக்க முடிகிறது - என்று தெரியும். வேண்டாத காரியங்களைப் பண்ணி அலுத்து அப்படியும் அதில் குறையே இருப்பதால் நிம்மதியாகத் தூங்கக்கூட இல்லாமல் துஸ்-ஸ்வப்னம் கண்டுகொண்டு, ஏழு எட்டு மணிவரை எழுந்திருக்க முடியாமல் படுத்துக் கொண்டிருப்பது என்றில்லாமல் வேண்டிய கர்மாக்களையே பண்ணுவதால் தெளிவோடும் திருப்தியோடும் ஸுகமாக நித்ரை செய்து, மறுநாள் பஞ்ச பஞ்ச உஷத்காலத்திலேயே பளிச்சென்று எழுந்திருந்து அன்றைய 'ரொடீனை'ச் சுருசுருப்பாகக் கவனிக்க முடிகிறது என்று தெரியும். ஆத்மாவும் நிறைந்து, ஆரோக்ய த்ருடகாத்ரமும் பெற்று சாந்தியாக ஸந்துஷ்டியாக நம் பூர்விகர்கள் வாழ்ந்து இந்த ஆசார அநுஷ்டான பலத்தால்தான்.

அவருவரும் எத்தனைக்கெத்தனை தீட்டுக் கலக்காமல் personal purity-ஐக் காத்துக்கொண்டு அதனாலேயே ஸொஸைட்டியையும் 'ப்யூராக'இருக்கப் பண்ணினார்களோ அத்தனைக்கத்தனை நாம் விழுப்பும் தீட்டுமாயிருந்து கொண்டு, நமக்குத்தான் ஸமூஹ உணர்ச்சியும் ஸஹோதரத்வமும் இருக்கின்றன என்று சொல்லிக் கொண்டே நாளுக்கு நாள் நம்மையும் அசுசியாக்கிக் கொண்டு ஸமூஹத்தையும் கெடுத்துக் கொண்டு வருகிறோம். லான்டரித் துணியை நாள் கணக்கில் தோய்க்காமல் போட்டுக்கொண்டு, ரயில், பஸ் என்று போவதில் ஒருவிதமான தீட்டு பாக்கியில்லாமல் சேர்த்துக்கொண்டு, க்ரமமாய் ஸ்நானம் கிடையாது என்று ஆக்கிக்கொண்டு, நினைத்த ஹோட்டலில் கண்ட ஆஹாரத்தைத் தின்று கொண்டு, தர்ம விருத்தமான ஸினிமாவிலும் நாவலிலும் பொழுதைப் போக்கிக் கொண்டிருக்கிறோம். இப்படியிருப்பதில் நம்மைப் பற்றி நாமே, 'மாடர்னாக இருக்கிறோம். மூட சாஸ்திரங்களை விட்டுவிட்டு புத்திமான்களாக முன்னேற்றம் கண்டு வருகிறோம்'என்று பெருமைப்பட்டுக் கொண்டாலும், கொஞ்சம் யோசித்தால் நமக்கு யதார்த்தம் புரியாமல் போகாது.

யதார்த்தம் என்ன?தேஹ ஆரோக்யம், திரவிய ஸுபிக்ஷம், திருப்தி, மேதை, காந்தி, கௌரவம், தெய்விகமான அநுபவம் எல்லாவற்றிலுமே நாம் நம் பூர்விகர்களைவிட ரொம்பவும் கீழே போய்க் கொண்டிருக்கிறோமென்பதுதான். பாழுங் கிணற்றில் நன்றாக விழுமுன் இப்போதாவது நாம் கண் விழித்து நம்முடைய சாஸ்திர வழியிலே போக ஆரம்பிக்க வேண்டும். நாம் சிரமப்பட்டு புதுசாகப் பண்ணிக்கணும் என்றில்லாமல் பூர்விர்களே நமக்கு ரெடி-மேடாக, கல்லையும் கான்க்ரீட்டையும் விட உறுதியான, குண்டு குழி விழாத பாதையாகப் போட்டுக் கொடுத்திருக்கிறார்கள். "நாமாகப் புதுசாகப் பண்ணுகிறோம்"என்ற பெருமைக்காக அழிவுப் பாதையில் போகாமல், இந்த ஆசாரப் பாதையில் போய் நம்மை ரக்ஷித்துக் கொள்வோம். நம் 'கைங்கரியம்'நம்மோடு நிற்கவில்லை. நாம் கெட்டதோடு வரப்போகிற ஸந்ததிகளையும் கெடுத்து வைத்திருக்கிறோம். நாம் தந்த துணிச்சலில் அவர்கள் நாம் எப்படி பூர்விகர்களை உதாஸீனம் செய்தோமோ அதைவிட உக்ரமாக நம்மையும் தூக்கியெறிந்துவிட்டு, நம்மைவிடவும் ஸ்வயேச்சைப்படி வெறியாட்டம் நடந்த வழிகோலிவிட்டோம். கண் கெட்டபின் ஸூர்ய நமஸ்காரம் என்கிற நிலைக்குக் கிட்டதட்டப் போயாச்சு;இன்னும் போயோயாகிவிடவில்லை என்பதால் - ச்வாஸம் வாங்கும்போதுகூட 'ஆக்ஸிஜன்'கொடுத்துப் பிழைத்த கேஸ்கள் இருக்கின்றவே;அப்படி ஆக்ஸிஜன்கொடுத்துப் பார்க்க நாம் ஆரம்பிக்க வேண்டும். இத்தனை கேவல ஸ்திதியை, கஷ்ட தசையை அடைந்ததிலிருந்தே, விடுபட்டாக வேண்டுமென்ற நல்லறிவு பெற்று, அதற்காக ஊக்கமாக முயற்சி தொடங்க வேண்டும். மற்ற தேசங்கள் திண்டாடுவதைவிட, அவர்களைப் பார்த்து அவர்களைப் போலவே பண்ணி நாமும் திண்டாடுவது அவர்களைவிட நமக்குத்தான் பெரிய அவமானம். ஏனென்றால் அவர்களுடைய முன்னோர்கள் நம்முடைய பூர்விகர்கள் நமக்குக் கொடுத்திருப்பதுபோல் இப்படிப்பட்ட ஆசாரங்களைக் கொடுத்திருக்கவில்லை. ஆசாரங்களைப் புஸ்தகத்தில் எழுதிக் கொடுத்திருப்பது பெரிசில்லை;அதை அவர்களே எத்தனையோ ஆயிரம்

தலைமுறை வாழ்ந்துகாட்டி, இது நடைமுறை ஸாத்யந்தான் என்று நன்றாக நிரூபித்துவிட்டுப் போயிருக்கிறார்களே, அதுதான் பெரிசு.

---

* "தெய்வத்தின் குரல்"இரண்டாம் பகுதயில் "கிருஹஸ்தாச்ரமம்"என்ற உரையில் "அந்தணனின் அன்றாடம்"என்ற உட்பிரிவும் பார்க்க.

---

## உயிருதாரணத்தால் உண்டான சாஸ்திரம்

இ ப்போது நான் சொன்ன விஷயத்தை இன்னம் கொஞ்சம் எக்ஸ்ப்ளெயின் பண்ண வேண்டும். வாழ்ந்து காட்டுவது, புஸ்தகம் எழுதுவது என்று இரண்டு சொன்னேன். நம் ஆசார, அநுஷ்டானங்களுக்கு ஏகப்பட்ட சாஸ்திர புஸ்தகங்கள் இருக்கின்றன. ஆனாலும் இதிலே நன்றாகத் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், அந்த கிரந்த கர்த்தாக்கள் அந்தப் புஸ்தகங்களில் இது இது ரூல் என்று எழுதிவைத்ததற்குப் பிறகே அதைப் பார்த்து அப்படியப்படி ஜனங்கள் பண்ணினார்களா, வாழ்ந்து காட்டினார்களா என்றால் அதுதான் இல்லை. அந்த கிரந்த கர்த்தாக்களுக்கும் முன்னாலிருந்தே இந்த ஆசார அநுஷ்டானங்களை அவர்களுடைய பூர்விகர்களும் வாழ்க்கையில் அநுஸரித்துத்தான் வந்திருக்கிறார்கள். அதைத்தான் பின் ஸந்ததியாரை உத்தேசித்துப் புஸ்தகத்தில் எழுதி வைத்தார்கள். அதாவது சாஸ்திதைப் பார்த்து வாழ்க்கை நடத்தவில்லை. வாழ்க்கையில் நடத்தப்பட்டதையே சாஸ்திரத்தில் எழுதினார்கள். மநுஸ்மிருதி முதலான எந்த ஸ்மிருதியைப் பார்த்தாலும் ஸரி, ஆபஸ்தம்ப-ஆச்வலாயன ஸூத்ரங்களைப் பார்த்தாலும் ஸரி, அநேக தர்ம சாஸ்திரங்களில் சிதறிக் கிடக்கும் ரூல்களைத் திரட்டிக் கொடுக்கும் நிபந்தன க்ரந்தங்களைப் பார்த்தாலும் ஸரி அந்த மநுவோ, ஆபஸ்தம்பரோ, ஆச்வலாயனரோ, நிபந்தன க்ரந்தம் பண்ணினவரோ தாங்களாக ஒரு சின்ன 'ரூல்'கூடப் பண்ணினதாகச் சொல்லிக் கொள்ளவில்லை;ஏற்கனவே இருக்கிற ரூல்களைத் திரும்பச் சொல்கிறதாகவே ஸ்பஷ்டமாக ஏற்படும்.

இது ஒரு பெரிய ஆச்சர்யம். "ஸநாதன தர்மம்"என்ற வார்த்தைக்கு முற்றிலும் பொருத்தமாக, புஸ்தகங்கள் தோன்றுகிறதற்கு முன்பே நம்முடைய தர்மாசார வாழ்க்கை தோன்றிவிட்டது!முதல் முதலில் யார் இப்படி பஞ்ச கச்சத்தை ஏற்படுத்தினது?நெற்றிக்கு இப்படி இப்படி இட்டுக்கொள்ள வேண்டும் என்று 'இனாகுரேட்'பண்ணினது யார்?எந்தக் காரியமானாலும் ஆசமனம் பண்ணுவதற்கு, நெற்றியில் குட்டிக் கொள்வதற்கு 'ஆரம்ப விழா'என்று என்றைக்காவது யாராவது செய்தார்களா?ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. ஆதிக்கும் ஆதிக்கும் ஆதியிலிருந்தே இப்படியெல்லாம் பண்ணியிருக்கிறார்கள். இந்த லோகத்தையெல்லாம் ஸ்ருஷ்டித்திருக்கிற ஒரு மஹாசக்தியை எப்போதும் தொட்டுக்கொண்டவர்களாக அந்த ஆதி புருஷர்கள் இருந்ததால், இந்த லோக வாழ்க்கைக்கு எது நல்லது, இதற்கும் நல்லதாக இருந்து கொண்டே இதிலிருந்து விடுவித்து நித்யானந்தத்தில் சேர்க்கக் கூடியதாக உள்ளது எது என்பதை அவர்கள் தெரிந்துகொண்டு, அப்படியே வாழ்ந்து காட்டியதுதான் நம்முடைய தர்மங்களாகவும், நீதிகளாகவும், ஆசாரங்களாகவும், அநுஷ்டானங்களாகவும் ஆகி சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஸநாதன தர்ம மார்க்கத்தை, ஆசார அநுஷ்டானப் பாதையைப் போட்டவர் யார்? பேர் சொல்லத் தெரியாது. குறிப்பாக யாரையும் காட்ட முடியாது. ஆனால் பாதை மட்டும் இருப்பது தெரிகிறது. இதனால்தான் நான் ஹிந்து தர்மத்தை, "ஒற்றையடிப் பாதை"என்று சொல்வது*ஒற்றையடிப்பாதை பிரத்யக்மாகத் தெரிகிறது. ஆனால் யார் போட்டார் என்று கேட்டால் சொல்லத் தெரியுமா?தார் ரோடு, கப்பி ரோடுக்கெல்லாம் சொல்லலாம். இந்த கவுன்சிலர் திட்டம் போட்டார்;இந்தக் கமிஷனர் ஸாங்க்ஷன் பண்ணினார்;இந்தக் கன்ட்ராக்டர் வேலை எடுத்துக் கொண்டார்; இந்தத் இந்தத் தொழிலாளிகள் வேலை செய்தார்கள் என்று மற்ற ரோட்களுக்கெல்லாம் காரணமான ஆளைக் காட்டலாம். ஒற்றையடிப்பாதைக்கு மட்டும் முடியாது. அது 'ப்ளான்'பண்ணி, 'மெஷர்மென்ட்'பார்த்து, சம்பளம் கொடுத்துப் போட்டதல்ல. யார் என்று குறிப்பாகச் சொல்லத் தெரியாமல் அநேக ஜனங்கள் நடந்து நடந்தே உண்டானது அது. ரோட் போட்ட பிறகு அதில் ஜனங்கள் நடக்கிறார்களென்றால் இதுவோ ஜனங்கள் நடந்ததாலேயே ஏற்பட்ட பாதை! புஸ்தக ரூலால் ஏற்படுத்தும் வாழ்க்கை முறை இல்லை; வாழ்க்கை முறையால் ஏற்பட்ட புஸ்தக ரூல்!மற்ற மதாசாரங்கள், ஸ்தாபனங்களின் சட்ட திட்டங்கள் சிலரால் உத்தேசிக்கப்பட்டு, ப்ளான் பண்ணிப் போட்டவை. அதுதான் தார் ரோடு மாதிரி நன்றாயிருக்கிறது என்று தோன்றலாம். 'அதிலேதான் வேகமாக கார் ஸவாரி முடிகிறது, உம்முடைய ஒற்றையடிப் பாதையில் முடியுமா?'என்று கேட்கலாம். ஆனால் நன்றாயிருக்கிற அதற்குத்தான் வருஷா வருஷம் ரிப்பேர் பார்த்தாக வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் குண்டும் குழியும் விழுகிறது. ஒற்றையடிப் பாதையோ ரிப்பேராகிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?ஜனங்கள் நடக்க நடக்கத் தார் ரோட் தேய்கிறது என்றால், ஒற்றையடிப் பாதையோ அவர்கள் நடக்க நடக்க இன்னம் உறுதியாகவும் பளிச்சென்றும் ஆகிறது. அதாவது ஜனங்கள் வாழ்ந்து காட்டும்போது, எவரோ சிலர் 'ப்ளான்' பண்ணினதாக உள்ள வழிமுறைகள் அதற்கு ஈடு கொடுக்க முடியாமல் நசித்துப் போகின்றன. இப்படித்தான் பழங்கால கிரேக்கர் மதம், ஹீப்ரு மதம், கன்ஃபூஷியஸ் மதமெல்லாம் எடுபட்டுப்போய்விட்டன. ஆனால் நம்முடைய சாஸ்திர ஆசரணைகளோ வழி வழியாக ஜனங்கள் அநுஷ்டிக்க அநுஷ்டிக்க மேலும் மேலும் பிரகாசம் பெற்றிருக்கின்றன. கார் ஸவாரி மாதிரி இங்கே சேரவேண்டிய இடத்துக்கு வேகமாகப் போய்ச் சேர முடியாமலிருக்கலாம் நின்று நிதானமாக, படிப்படியாகத்தான் எவல்யூஷன் ஆகி golவரும் ஆனால் நிச்சயமாக வரும். தார் ரோடில் போகிற கார் வேகமாகப் போனாலும் goal-ஐ அடையுமா என்பதே ஸந்தேகம். வேகமாகப் போவதாலேயே அதற்கு விபத்து வந்துவிடுகிறது. அதோடு கூட ரோடும் குண்டு குழி விழுந்து ரிப்பேராகிறது!ரோட் இப்படி ஆவதால் கார் ஸவாரியிலும் பெரிய ஆபத்துக்கே இடமிருக்கிறது. ஒற்றையடிப் பாதையில் ஒரு நாளும் ஆக்ஸிடென்ட் ஏற்படாது.

இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். தார் ரோடு மேடு பள்ளம், குறுகல் வழி முதலானதுகளில் சுற்றிச் சுற்றித்தான் போகும். ஒற்றையடிப்பாதையோ குறுக்கு வழி அதனால், தார் ரோடில் சுற்றி வளைத்துக் கொண்டு காரில் போய் ஒரு இடத்தை அடைகிறதற்குள், ஒற்றையடிப் பாதையில் நடந்து போயே அந்த இடத்தை அடைந்து விடலாம். நவீன ஆராய்ச்சிக்காரர்கள் சொல்கிறதையே ஒப்புக் கொண்டாலும் குறைந்த பக்ஷம் ஐயாயிரம் வருஷமாக (3000 B.C. - Vedic Civilisation என்கிறார்கள்), நூற்றுக்கணக்கான தலைமுறையினர் நடந்த வழியை நாம் விட்டு விட்டு, நாம் கெட்டது போதாதென்று பின் ஸந்ததியினருக்கும் கெடுதலை உண்டாக்கியிருக்கிறோம். ஜனங்கள் நடக்காமலேயிருந்தால் ஒற்றையடிப்பாதை மூடிப்போய் விடுமல்லவா? இந்தத் தலைமுறையினரான நாம் நம்முடைய சாஸ்திர மார்க்கம் வருங்காலத்தவருக்குத் தெரியாமலே மூடிப் போகிற மாதிரிப் பண்ணும் பெரிய தோஷம் நமக்கு ஏற்படாமல் கருணாமூர்த்தியான பகவான் தான் காப்பாற்ற வேண்டும். இப்போதாவது நாம் இந்த விஷயங்களை ஆலோசித்து, நம் முன்னோர்கள் சென்ற வழியிலே திரும்பி, ஆசார அநுஷ்டானங்களை நடத்தி மேன்மை அடைய ஈசன் நமக்கு நல்லறிவைக் கொடுப்பானாக!

---

* 'ஆசாரம்'என்ற முந்தைய உரையில் "ஒற்றையடிப் பாதை"என்ற பிரிவும் பார்க்க.

---

## உணவும், அதனுடன் தொடர்பு கொண்டோரும்

இ ப்படித் கதை போகிறது. இதிலே நாம் கவனிக்க வேண்டியது என்னவென்றால் சாப்பாட்டோடு ஸம்பந்தப்பட்டவர்களின்

குண-தோஷங்கள் சாப்பிடுகிறவனை பாதிக்கின்றன என்பதே. அந்த குரு மாதிரியே நாமும் தெரியாத்தனத்தால்தான் தோஷமுள்ளவர்களின் ஸம்பந்தம் கொண்டதைச் சாப்பிடுகிறவர்களாயிருப்போம். உங்களை ஒருத்தர் சாப்பிடக் கூப்பிடுகிறார்;அல்லது க்ளப் (ஹோட்டல்), கான்டீன் எதிலாவது எவனோ சமைத்து, எவனோ 'ஸர்வ்' பண்ணுவதை நீங்கள் சாப்பிடுகிறீர்களென்றால், இவர்களுடைய குணமென்ன, தோஷமென்ன என்று உங்களுக்குத் தெரிந்திருக்க முடியாதுதான். ஆனால் இப்படிப்பட்ட நிலையில் நாம் சாப்பிடுவதால், அந்த மஹானை பகவான் மன்னித்து நல்ல புத்தியைத் தந்தது போல் நமக்கும் பண்ணி விடுவான் என்று நினைத்து விடக் கூடாது!அப்படிப்பட்ட மஹானையுங்கூட ஒரு நாளெல்லாம் அன்ன தோஷம் சறுக்கித்தான் விட்டது. அவரே சிஷ்யன் ஸொத்தை அபஹரிக்கிற பாபத்தை முதலில் செய்யத்தான் செய்தாரென்றால், அவர் மாதிரியில்லாமல் ஸாதாரண ஆஸாமிகளாக உள்ள நம் கதி இதைவிட எவ்வளவோ மோசமாகுமென்றுதான் அறிவு பெற வேண்டும்.

தெரியாமல்தான் அநேகத் தப்புப் பண்ணுகிறோம்; வாஸ்தவம். ஆனால் தெரிவிக்கிறதற்குத்தான் சாஸ்திரங்கள் இருக்கின்றனவே, அவற்றை ஏன் பார்க்கக் கூடாது?நமக்கு அநேக விஷயங்கள் ஸ்வயமாகத் தெரியாதபடி ஈஸ்வரன் நம் கண்ணை மூடித்தான் வைத்திருக்கிறானென்றாலும், அவனே கண்ணைத் திறக்கப் பண்ணுவதற்காக அநேக மஹான்கள் மூலம் சாஸ்திரங்களையும் கொடுத்திருக்கிறான் அல்லவா?வேறே எத்தனையோ கார்யங்களைச் செய்யும் நாம், கண்ட கண்ட விஷயங்களைப் படிக்கும் நாம், நாம் செய்ய வேண்டியது என்ன, செய்யவேண்டாதது என்ன என்று ஈஸ்வராக்ஞையாகப் பெரியவர்கள் கொடுத்திருக்கிற தர்ம சாஸ்திரங்களைப் பார்க்க மாட்டேன் என்று இருந்து கொண்டே, "தர்மாதர்மம் தெரியாமல் தப்புப் பண்ணினதற்காக பகவான் தண்டிப்பானா?"என்று கேட்டால் அது நியாயமேயில்லை.

இதுவரையில் உங்களுக்கு தெரியாவிட்டாலும் இதோ இப்போது உங்களுக்குத் நான் சொன்னதலிருந்து ஆஹாரத்தினால் எப்படி குண-தோஷங்கள் உண்டாகின்றன என்று தெரிந்து விட்டதல்லவா?அதனால் (விடாமல் சிரித்தவாறு சொல்கிறார்) இதுவரை ஆஹார சுத்தத்தைப் பார்க்காததற்காக உங்களை பகவான் மன்னித்திருந்தாலும் இனிமேலே மன்னிக்க மாட்டான்!

இன்னொரு ஆர்க்யுமென்ட் கூட தொற்று நோய்க்காரன் என்று தெரியாமல் ஒருத்தனுடன் பழகினாலும், 'தெரியாதவனாச்சே' என்று நோய்க்கிருமி இவனை விட்டு விடுகிறதா?அந்தக் கிருமி நம் கண்ணுக்குத் தெரியாமல் 'மைக்ரோஸ்கோப்'புக்குத் தெரிகிறதென்றால். 'மைக்ரோஸ்கோப்'புக்கும் தெரியாமல் ஞானிகளுக்கே தெரிகிறவைதான் மானஸிகப் பரமாணுக்கள் - நல்ல, கெட்ட எண்ணங்களின் வெளி ரூபங்கள். இதுகளும் கிருமி மாதிரிதான் தெரிந்தவனா, தெரியாதவனா என்று பார்க்காமல் பரவுகின்றன என்று ஆர்க்யுமென்ட். சுத்தமான ஆஹாரம் என்பது இரண்டு விஷயங்களைப் பொருத்தது. ஒன்று, ஆஹாரமாக ஆகிற வஸ்துக்கள் - தானியம், காய்கறி முதலான பதார்த்தங்கள் - ஸ்வயமாக சுத்தமானவையாயிருக்க வேண்டுமென்பது. அதாவது வெங்காயம், முள்ளங்கி மாதிரி மனஸைக் கெடுக்கிறவையாக அவை இருக்கப்படாது. இதைப் பற்றி அப்பறம் சொல்கிறேன். இரண்டாவது, அந்த ஆஹாரம் நம் இலையில் வந்து விழுகிற வரையில் அதில் ஸம்பந்தப்பட்டவர்கள் சுத்தர்களாயிருக்கவேண்டும்.

இந்த இரண்டாவது அம்சத்தை emphasize செய்வதற்காகத்தான் ராஜா-குரு கதை சொன்னேன். ஏற்கனவே உள்ள கதைதான். ஒரு விஷயத்தை 'ஓவ'ராகவே மிகைப்படுத்தி சொன்னால்தான் அதில் உரிய அளவுக்காவது கவனம் செலுத்துவார்கள் என்கிற ரீதியில்தான் இந்தக் கதை உண்டாகியிருக்கிறதென்று தோன்றாலாம். கதையில் குருவுக்குப் போட்ட போஜனத்தோடு முதல் ஸம்பந்தமுள்ளவர்கள் அதைச் சமைத்துப் பறிமாறின அரண்மனை சிப்பந்திகள்;இரண்டாம் ஸம்பந்தம், குருவுக்கு பிக்ஷை பண்ண நினைத்த ராஜாவுடையது;மூன்றாவதாகத்தான் திருடனின் ஸம்பந்தம் அதற்கு வருகிறது. அவனுடைய எண்ணம் அதில் ஒட்டிக்கொண்டிரு ந்ததென்றால், அதோடு இன்னம் நாலாம் ஐந்தாம் ஸம்பந்தங்களுள்ள மளிகைக் கடைக்காரன், விவஸாயி ஆகியவர்களின் குண-தோஷமும் அதிலே ஒட்டிக்கொண்டுதானே இருக்கும்?இதையெல்லாம் ஆராய்ச்சி பண்ணிச் சாப்பிடுவதென்றால் பட்டினிதான் கிடக்க வேண்டும் போலத் தோன்றுகிறது!ரிஷிமூலம், நதிமூலம் என்கிறமாதிரி நாம் சாப்பிடுகிற அரிசியை, கடுகை, வெண்டக்காயை எவன் எப்படிப் பயிர் பண்ணி, எவன் எப்படி மார்க்கெட்டுக்குக் கொண்டு வந்தானென்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்க முடியுமா?முடியாதுதான். இதனால்தான் சாஸ்திரத்திலேயே வஸ்துவுக்கே உள்ள நேர்த் தோஷத்தைக் கவனிக்கச் சொல்லிவிட்டு அதில் ஸம்பந்தப்பட்டவர்களில் மற்றவர்களை ஓரளவு தள்ளிவிட்டுக் கடைசியில் அதோடு ஸம்பந்தப்படுகிற இரண்டு பேரை மட்டும் முக்யமாகக் கவனிக்கச் சொல்லியிருக்கிறது. 'ஃபினீஷ்-ஆக (கச்சாப் பொருளாக) அரிசி, மற்ற தான்யங்கள், காய்கள் முதலானவை எங்கேயிருந்து வேண்டுமானாலும் வந்துவிட்டுப் போகட்டும். நாம் காசு கொடுத்து அதை வாங்குகிறபோது, இப்படி அதற்காக நாம் ஒரு தியாகத்தைப் பண்ணிவிடுவதால், அதில் படிந்திருக்கிற மானஸிகப் பரமாணுக்கள் நம்மைத் தொடாது. அல்லது நம் சொந்த வயலிலோ, நாம் இருக்கிற வீட்டுத் தோட்டத்திலோ அவை விளைந்து வருகிறபோது அதன் பொருட்டு நாமே செலவழிக்கிறோம், உழைக்கிறோம், நம் எண்ணத்தையும் கவனத்தையும் கொடுக்கிறோம் என்பதால் அவை raw-ஆக உள்ள போது நம்மைப் பாதிக்காது என்று வைத்துக் கொள்ளலாம். ஆனாலும், "பச்சைத் தானியத்தையும் கறிகாயையும் நாம் புஜிப்பதற்கு யோக்யதையாக வேக வைத்தோ, பொறித்தோ, அரைத்தோ சாப்பாடாக ஆக்கும் சமையல்காரன் யார், அப்புறம் அதை எடுத்து நமக்குப் பரிமாறுவது யார் என்று பார்த்துக்கொள். இந்த இரண்டு பேர் ஸாத்விகமாக இருந்தால்தான் அந்த ஆஹாரம் நம் சித்தத்துக்கு நல்லது செய்யும்"என்று சாஸ்திரம் சொல்கிறது. கெட்டியாக இருக்கிற தானியத்திலும் பச்சைக் கறிகாயிலும் வியவஸாயி, வியாபாரி ஆகியவர்களுடைய எண்ணம் 'இம்ப்ரெஸ்'ஆவதைவிடச் சமையற்கார், பரிசாரகர் ஆகியவர்களின் எண்ணம் வெந்து குழைந்த ஆஹாரத்தில் நன்றாகப் பதிந்துவிடும் என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம்! கெட்டதைப் போலவே நல்லதும் ஆஹாரத்தில் ஸம்பந்தப்பட்டவர்களைப் பொருத்து உண்டாகிறதும் உண்மைதான். பழங்காலத்தில், அதாவது பிராம்மணர்கள் உத்யோகத்துக்குப் போக ஆரம்பித்ததற்கு முந்தி, அவர்கள் தானமாகத்தான் எல்லாம் பெற்று வந்தார்கள். அரிசி வாங்கக்கூட அவர்களுக்கு 'ஐவேஜி'கிடையாது. ஆனாலும் அவர்களுக்கு தானம் பண்ணினவர்கள் மரியாதையோடும் பிரித்தோடும் அர்ப்பணம் பண்ணினதால் அந்த நல்ல எண்ணத்தின் சக்தியில், வஸ்துக்களுக்கு ஏற்கெனவே ஏற்பட்டிருக்கக் கூடிய தோஷம் 'ந்யூட்ரலைஸ்'ஆகியிருக்கிறது. கதை ராஜாவும் பக்தியோடுதான் அர்ப்பணம் செய்தான்;ஆனால் அந்த ஆஹாரம் ஏன் மஹானின் புத்தியைக் கெடுத்தது? ஏனென்றால், ராஜதர்மப்படி யாரும் உரிமை கோராதது விலைகொடுத்து வாங்காவிட்டாலும் ராஜாவைச் சேரலாமாயினும், உரிமை உடைமை இதுகளே இல்லாத ஸத் புருஷர்களின் தர்மத்தோடு அது ஒட்டாது. இதிலே இன்னொன்று:நிலச் சொந்தக்காரன், உழவன் ஆகியவர்களிலிருந்து ஆரம்பித்து ஆஹாரத்தைப் பரிமாறுகிறவர் வரையில் பொதுவாக எல்லாரும் ஸாமான்ய ஜனங்களுக்குள்ள ஸாமான்ய குணதோஷங்களுள்ளவர்களாகவே இருப்பார்கள். சற்றுமுன் சொன்னாற்போல இதில் நல்லதும் கெட்டதும் ஒன்றையொன்று ந்யூட்ரலைஸ் செய்து கொண்டுவிடும் என்றே வைத்துக் கொள்ளலாம். ஆனால் கதையிலே ஸாதாரணமாக எவரும் செய்யக்கூடிய தோஷமாக இல்லாமல், எங்கேயோ எவனோ மட்டும் செய்கிற பெரிய குற்றமாகவே உள்ள திருட்டு என்கிற மஹாதோஷமும் சேர்ந்திருக்கிறதல்லவா? அதை ராஜாவின் நல்லெண்ணம் கூட ந்யூட்ரலைஸ் செய்ய முடியாதுதான். குருவின் தபஸும் அதற்கு அரை நாளாவது அடங்கித்தான் போயாக வேண்டியிருக்கிறது.

பழைய காலத்தில் ஸாதாரணமாக பொது ஜனங்களின் குணத்தில் நல்லது ஜாஸ்தியிருந்தது. அப்படியிருந்தபோதே அதில் எங்கே கெடுதல் இருந்து விடுமோ என்பதால் ஆஹார சுத்தியில் அதில் ஸம்பந்தப்பட்டவர்களின் சுத்தத்தையும் கவனி என்று ரூல் போட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.

இப்போது, நம் நாளில் - சொல்ல வருத்தமாகத் தான் இருக்கிறது - சாஸ்திரங்களை விட்டு, மனம் போனபடி பண்ணுவது என்று நாம் எதற்கும் துணிந்து காரியங்களைச் செய்து வருவதில், நல்லது-கெட்டதுகளை நிறுத்துப் பார்த்தால் ஒன்றுக்கொன்று ந்யூட்ரலைஸ் ஆகாமல், கெட்டதுதான் தூக்கலாக நிற்கும் என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. அதனால் நல்லதில் போகவேண்டும் என்ற எண்ணம் நமக்கு இருந்தால் ஆஹார விஷயத்தில் ஜாக்ரதையாகத்தான் இருக்க வேண்டும்.

பக்வம் பண்ணாத பச்சை வஸ்துக்களைக்கூட சராசரித் தப்புத் தண்டாக்களைவிட ஜாஸ்தியாகப் பண்ணினவர்களிடமிருந்து வாங்காமலிருக்கப் பார்க்க வேண்டும் Sumggle பண்ணினது, ப்ளாக் மார்க்கெட்காரனுடையது இவையெல்லாம் கூடாது.சமைக்கிறவர், பரிமாறுகிறவர் இரண்டு பேரும் யாரென்று பார்த்துக்கொள்ள வேண்டியது ரொம்ப அவசியமாகும். பொதுவாகச் சொல்கிறது என்னவென்றால் ஒரு தாயாரோ, பத்தினியோ சமைத்துப் பரிமாறுகிறாளென்றால் அதை போஜனத்துக்கு யோக்யமான ஸாத்விக ஆஹாரம்

என்று வைத்துக் கொள்ளலாம் என்பதே. அவளுடைய பொதுக்குணம் பொல்லாததாக இருந்தாலுங்கூட புத்ரனிடம், பதியிடம் மட்டும் பிரியமே வைத்து அவன் நன்றாக இருக்கவேண்டுமென்று நினைக்கிறவளாகத் தான் இருப்பாளாதலால் அவள் கை அன்னம் ஸாத்விகமானது என்று வைத்துக் கொள்ளலாம் என்று ஏற்பட்டிருக்கிறது.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### முக்குணங்களும் உணவும்

**ஸா** த்விகம் என்று ஒரு வார்த்தை சொன்னேன். போஜனம் என்பது உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமல்ல. உள்ளத்தை வளர்த்துகொள்வதற்கும் உதவும்படியாக அதைப் பண்ணிக்கொள்ள வேண்டும் என்பதாலேயே சாஸ்திரங்களில் ஆஹாரத்தைப்பற்றி அநேக நியமங்கள் சொல்லியிருக்கிறது. ஆசாரங்களில் மிகவும் முக்யமானவையாக ஆஹாரத்தைப் பற்றிய விஷயங்களே வைக்கப்பட்டிருக்கின்றன. இதிலே ஸாரமான தாத்பர்யம் ஸத்வ குணத்தை விருத்தி செய்யும்படியாக ஆஹாரம் இருக்க வேண்டும் என்பதுதான். கோப தாபமில்லாமல், காம மோஹங்களில்லாமல், பதட்டப்படாமல், அதற்காக ஒரேயடியாக மந்தமாகிச் சோம்பியும் வழியாமல், சாந்தமாகவும் பிரியமாகவும் இருந்துகொண்டே நல்ல சிந்தனா சக்தியுடனும் க்ரியா சக்தியுடனும் இருப்பது தான் ஸாத்வகுணம், ஸாத்விகம் என்பது. ஒரே பதட்டம் காம க்ரோதாதி உணர்ச்சி வசப்படுவது இவை எல்லாம் ரஜஸ் - ரஜோ குணம் அல்லது ராஜஸ குணம் என்பது. ஒரே ஸோம்பல், தாமஸ குணம். இப்படி மூன்று குணங்கள். உணர்ச்சியமயமாக, ஓவர்-இமோஷனலாக, தடாபுடா என்று தாறுமாறாகக் காரியம் பண்ணுவது ரஜஸ். அது ஒரு 'எக்ஸ்ட்ரீம்'(கோடி). ஒரே 'டல்'லாக, எதற்கும் பிரயோஜனமில்லாமல் புத்தியில்லாமல் கார்ய சக்தியுமில்லாமலிருப்பது தமஸ் - இன்னொரு 'எக்ஸ்ட்ரீம்'. இரண்டுக்கும் நடுவே ஸமநிலையில் 'பாலன்ஸ்டாக' இருப்பது ஸத்வம். மனஸின் எழுச்சி ரஜஸ்; தாழ்ச்சி தமஸ்;ஸம நிலை ஸத்வம். எண்ணம் காரியம் இதுகளைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிற லத்வத்தையும்விட உசந்த ஒரு நிலை உண்டு. அங்கே மனஸ் (எண்ணம்), சரீரம் (காரியம்) இதுகளை ஒருத்தன் அடியோடு கடந்துவிடுவான். தமஸ் மனஸின் தாழ்ச்சி என்றால், இது மனஸின் வீழ்ச்சி! தமஸிலே தூங்குவான்;இதிலே ஸமாதி நிலைமை அநுபவிப்பான்!என்ன வித்யாஸமென்றால், தூங்குகிறவனுக்குத் தன்னைத் தெரியாது; ஸமாதியிலிருக்கிறவனும் வெளியில் பார்த்தால் தூங்குகிறாற்போலத் தானிருந்தாலும் அவனுக்குத் தன்னை நன்றாகத் தெரியும்; தான் ஒன்றுதான் இருக்கிற எல்லாமும் என்று தெரியும். இப்படியிருக்கிறவன், நாமெல்லாம் சின்னதாக 'நான்', 'நான்' என்று எதையோ சொல்லிக்கொண்டு அதற்காக இத்தனை ஹிம்ஸையும் பட்டுக்கொண்டிருக்கிறோமே, அந்த 'நானை'ப் பற்றின நினைப்போ, அரிப்போ கொஞ்சங்கூட இல்லாமல், ஈஸ்வரன் கைக்கருவியாக, லோக கல்யாணத்துக்காக ரஜோகுணக்காரனைவிட நிறையச் சிந்தித்து, நிறையக் காரியமும் பண்ணுவான். நாம் பட்டுக்கொண்டு, அடிப்பட்டுக்கொண்டு பண்ணுவதை விட ஜாஸ்தியாகவும் சவரணையாகவும் இவன் பட்டுக் கொள்ளாமலே பண்ணிவிடுவான். ஸத்வ-ரஜஸ்-தமஸ்களை முக்குணமென்றும், இப்போது சொன்ன மூன்றும் கடந்த நிலையை குணாதீத ஸ்திதி என்றும் சொல்லியிருக்கிறது. கீதையில் பகவானும் த்ரிகுணங்களைப் பற்றி விஸ்தாரமாகச் சொல்லி அர்ஜுனனிடம் " **நிஸ்த்ரைகுண்யோ பவ** " - "மூன்று குணங்களும் இல்லாதவனாக, அவற்றுக்கும் மேலே போ"என்கிறார் (2.45). "குண த்ரய விபாக யோகம்"என்றே (கீதையில்) ஒரு அத்யாயம். அதிலே ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் ஒவ்வொன்றின் நேச்சரும் என்ன என்று சொல்கிறார். அப்புறம் "தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்"என்று வருகிற அத்யாயத்தில் தெய்வ குணம் என்பதற்கு விளக்கமாக அவர் சொல்வதெல்லாம் ஸத்வமாயும் குணாதீதமாயும், அஸுர குணம் என்பது ரஜோ-தமோ குண இயற்கைகள ாகவுந்தான் இருக்கிறது. இதற்கப்புறம் சிரத்தையிலும் மூன்று தினுஸு உண்டு என்று விஸ்தரிக்கிற "ச்ரத்தா த்ரய விபாக யோக"த்திலும் ச்ரத்தையில் மநுஷ்யர்கள் மூன்று விதமாகப் பிரிந்திருப்பது முக்குணங்களில் அவர்களிடம் எது தூக்கலாக இருக்கிறது என்பதைப் பொருத்ததுதான் என்கிறார். அவர்கள் பண்ணும் பூஜை, யஜ்ஞம், தபஸ், தானம் எல்லாவற்றிலுமே இதிது ஸத்வம், இதிது ரஜஸ், இதிது தமஸ் என்று சொல்லிக் கொண்டு

வரும்போது நடுவில் அவர்கள் போஜனம் பண்ணும் ஆஹாரத்துக்கும் வருகிறார்.

இங்கே ஸத்வ குணத்தவரால் ஸத்வகுண அபிவிருத்திக்காகச் சாப்பிடப்படும் ஆஹாரம் எப்படியிருக்கும் இதே மாதிரி ரஜோ, தமோ ஆஹாராதிகளின் லக்ஷணமென்ன என்றெல்லாம் சொல்கிறார். பகவான் கீதையில் சொல்கிறதில் போஜனத்தின் இரண்டாவது அம்சமான, அதில் ஸம்பந்தப்பட்ட மநுஷ்யர்களைப் பற்றிய பேச்சு இல்லை. போஜன வஸ்துவின் லக்ஷணத்தை, அது எப்படிப்பட்ட பதார்த்தமாயிருக்க வேண்டுமென்பதைத் தான் சொல்கிறார்.

'ஸாத்விகம்'என்றதை உங்களுக்குப் புரிய வைப்பதற்காக த்ரி-குணங்களைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தேன். அவற்றிலே உசந்தது ஸத்வம். மனஸ் கொந்தளிக்காமல் கட்டுப்பட்டு, அமைதியாகவும் அன்பாயும் இருக்கிற உசந்த நிலை. இதைவிட உசந்தது குணாதீத, மனோதீத ஸ்திதி என்றாலும் அது நமக்கு எட்டாக் கை. நாம் முதலில் ஸத்வகுணிகளாக ஆகித்தான், அப்புறம் அது பழுத்து குணாதீத நிலைக்குப் போகணும்.

'ஸத்வ'த்தைக் குறித்த எல்லாவற்றுக்கும் 'ஸாத்விகம்'என்று பெயர். சுத்த ஆஹாரம், சுத்த ஆஹாரம் என்று பல தடவை சொன்னேனே, அது '¬ýp¡'ð® ú§è£î£óñ£èŠ ð‡E, ,kù£ù èŠ, ú£úK™ ðKñ£Áõ¶ ñ†´I™¬ô; ²ˆî Ýý£óªñ¡ø£™ úˆõ Ýý£ó‹ â¡«ø Ü˜ˆî‹. úˆõ °íˆ¬îˆ î¼‹ð®ò£ù ú£ˆMè Ýý£óñ£è Ü¶ Þ¼,è «õ‡´‹.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### சமைப்பவர், பரிமாறுபவர்

**ச** மைக்கிறவர், பரிமாறுகிறவர் ஆகியவர்களுடைய சுத்தமான பிரேமையால் ஆஹாரம்

ஸாத்விகமாகிறது. தாயார், பத்தினி இவர்களுடைய கைச் சாப்பாடு இந்தக் காரணத்தால் உசந்தது என்று பொதுவாகச் சொல்லப்பட்டாலும் இதிலே அநேக கேள்வி வருகிறது. ஜெனரலாக அவர்களுக்குப் பதி, புத்ராளிடம் இதிலே அநேக கேள்வி வருகிறது. ஜெனரலாக அவர்களுக்குப் பதி, புத்ராளிடம் பிரேமை உண்டு என்றாலும் சமைக்கிறபோதும், பரிமாறுகிறபோதும் இந்தப் பிரியந்தான் அவர்கள் மனஸில் ரொம்பயிருக்கிறதா என்ன?எதையாவது நினைத்துக்கொண்டு, யாரையாவது திட்டிக்கொண்டு, எரிச்சல் பட்டுக்கொண்டு, அலுத்துக் கொண்டு அவர்கள் சமைத்திருக்கலாம். அப்போது அதன் 'எஃபெக்ட்'சும்மா விடுமா?கதையிலே ராஜாவும், அவனுடைய மடப்பள்ளிக்காரர்களும் பிரியத்துடனும், பக்தியுடனும் பண்ணிப் போட்டுங்கூட, சாப்பிட்டவரோ மஹானாயிருந்த போதிலும் அரிசி எவனிடமிருந்து ஆர்ஜிதம் செய்யப்பட்டதோ அவனுடைய திருட்டுக்குணம் தான் போஜனத்தில் 'ரிஃப்ளெக்ட்'ஆயிற்று என்பதிலிருந்து நாம் இன்னும் டைரக்டாக ஸம்பந்தப்பட்ட சமையல்கார, பரிசாரகர் விஷயத்தில் - அவர்கள் அம்மாவாகவோ, அகத்துக்காரியாகவோ இருந்தால்கூட - ஜாக்கிரதை பண்ணிக்கொள்ள வேண்டுமென்றாகிறது.

ஸ்தோத்ரங்களையோ பகவன் நாமாவையோ சொல்லிக்கொண்டுதான் ஒரு ஸ்திரீ அரிசி பொறுக்குவதிலிருந்து, காய்கறி நறுக்குவதிலிருந்து ஆரம்பித்து அரிசி களைந்து உலையில் போட்டு, அது பக்குவமாகிப் பரிமாறுகிற வரையில் இதைத் தொடர்ந்து செய்யணும்;சாப்பிடுகிறவனும் "கோவிந்த கோவிந்த"என்று சொல்லிக் கொண்டே சாப்பிடணும்;இப்படிச் செய்தால் போஜனத்தின் ஷட்ரஸத்தோடு - அறுசுவையோடு - நாமரஸமும் சேர்ந்து அதன் தோஷத்தையெல்லாம் யோக்கிவிடுமென்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

வாஸ்தவந்தான், நாமாவுக்கு இல்லாத சக்தி எதற்கும் இல்லை. அது ஸர்வ பாப பரிஹாரம், ஸகல தோஷ நிவ்ருத்திகரம் என்பதெல்லாம் வாஸ்தவந்தான். ஆனாலும் சொல்கிறவர் எந்த அளவு 'கான்ஸென்ட்ரேஷ'னோடு சொல்கிறாரென்பது முக்யமாச்சே!தினந்தினமும்

சொல்வதில் மனஸ் கலக்கமால் மெகானிகலாக ஆகிவிடக் கூடாதே!

இப்படியெல்லாம் நினைத்துப் பார்த்தால் குழப்பமாயிருக்கிறது. 'ஸாத்விக ஆஹாரமென்றால் கிளப் (ஹோட்டல்) கூடாது, கான்டீன் கூடாது என்று ஸ்வாமிகள் சொல்வாரென்று எதிர்பார்த்தோமானால், அவர் இன்னும் ஒரு படி மேலே போய் அகத்து மநுஷ்யர்கள் சமைத்துப் போடுவதற்கும் தோஷம் கொண்டு வந்து விட்டாரே!'என்று தோன்றும்.

க்ளப், கான்டீன், ஹாஸ்டல், மெஸ் இதுகள் எதையும் நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. நானென்றால் என்ன? சாஸ்திரம் சொல்கிறதை, சாஸ்திரஜ்ஞர் சொல்கிறதைத்தான் நான் ஒப்பிக்கிறேன். சாஸ்திரம் ஒப்புக்கொள்கிறதை நான் ஒப்பிக்கிறேன்!க்ளப்பிலும் ஹாஸ்டலிலும் ஹைஜீன் சுத்தமே இருக்குமா என்பது ஸந்தேஹந்தான். வெளியிலே எல்லாம் 'நீட்'டாக இருந்தாலும் உள்ளே எத்தனை அசுத்தமிருக்குமோ? இதிலே சுத்தமாயிருக்கிறதென்றே வைத்துக் கொண்டாலும் ஆசார சுத்தி, பண்ணுகிறவர்களின் மனஸ் சுத்தி என்பது இங்கெல்லாம் கொஞ்சங்கூட இருக்காது. பகவத் ஸ்மரணையோ, நாம் நன்றாயிருக்க வேண்டுமென்ற பிரேமையான எண்ணமோ, ஆசார அநுஷ்டானமோ துளிகூட இல்லாத எவனோ சமைத்துப் போடுகிறதைச் சாப்பிடுவதில் ஒரு நல்லதும் வராது. வேறே எந்தத் தொழிலும் கிடைக்காமல்தான் அநேகமாக இதற்கு வருவானாதலால் அவனுக்குப் புத்தியும் அதிகமிருக்காது.

இந்த நாளில் எல்லாரையும் பிடித்து ஆட்டுகிற பொருளாசை, ஸினிமா (காமம்), பாலிடிக்ஸ் (க்ரோதம்) இவற்றில்தான் அவன் தோய்ந்து போனவனாயிருப்பான். அதனால் அவன் தோய்ந்து போனவனாயிருப்பான். அதனால் இவன் கைச் சாப்பாடு நல்லது பண்ணாதது மட்டுமில்லாமல் கெடுதலே பண்ணும்.

மனஸ் சுத்தம், வெளி சுத்தம் இரண்டையும் இணைக்கிற ஆசாரத்துக்கு க்ளப்பிலும், மெஸ்ஸிலும் ஏது இடம்?ஒரே எச்சில், துப்பல்தான். தினம் ஒரு தட்டில் - பல பேர் சாப்பிட்ட தட்டில் - தின்னணும். கோமயம் (சாணி) போட்டு எச்சில் இடுவதைப் பற்றி நினைத்துப் பார்க்க முடியுமா?டேபிள், நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு பரிஷேசனம், ப்ரணாஹுதி1 பண்ணலாமா?ப்ராணாஹுதிக்கு 'ஸெர்வர்'கவனமாக அபிகாரம்2 பண்ணுவானா?'ஏதோ தின்றோம்; இந்த மாம்ஸ பிண்டத்தை வளர்த்தோம்; ஜிஹ்வா சாபல்யத்தை (நாக்கின் சபலங்களை) அதனால் தீர்த்துக் கொண்டோம்' என்றால் (சாஸ்திர விதி) எதுவும் வேண்டாம். ஆனால் இதற்காகவா ஈஸ்வரன் ஆறறிவுள்ள மநுஷ்யனாக நம்மைப் படைத்திருப்பது?இப்படித்தானென்றால் மிருக ஸ்ருஷ்டியோடேயே நிறுத்திக் கொண்டிருக்கலாமே!

---

1. உண்ணு முன் அன்னத்தைத் தீர்த்தத்தால் அபிமந்திரித்து, பிராண தேவதையர் ஐவருக்கும் அர்ப்பணம் செய்வது.

2. அன்னத்தின் மீது நெய் விடுதல்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### பதார்த்த சுத்தம்

ஆ ஹாரத்தை தயாரிப்பவர்களின் சுத்தத்தைப் பற்றித்தான் இத்தனையும் சொன்னேன். இதற்குமுன் ஆஹாரம் எதனால் ஆக்கப்படுகிறதோ, அந்தப் பதார்த்த சுத்தம் ரொம்ப அவசியமாயிற்றே!இன்ன பதார்த்தங்களைத்தான் சாப்பிடலாம், இன்னது கூடாது என்ற பொது விதி;அதற்கப்புறம், பித்ரு தினத்தில் இன்னின்ன தான் சமைக்கலாம் சாப்பிடலாம், விரத தினத்தில் இப்படியிப்படி உபவாஸமிருக்க வேண்டும், இது தவிர இன்ன மாஸத்தில்

இது சாப்பிடக்கூடாது என்றெல்லாம் வேறு விதிகள் இருக்கின்றன. இந்த பதார்த்த சுத்தி க்ளப்பிலும் மெஸ்ஸிலும் நினைத்துக்கூடப் பார்க்க முடியாததாகவேயிருக்கும்.

வீட்டிலே நாம் பதார்த்த சுத்தியை அமல் பண்ணுவது அவ்வளவு கஷ்டமில்லை. நம் நாக்கை கட்டி விட்டால் ஈஸியாக இதைப் பண்ணிவிடலாம். அப்படியொன்றும் நம் சாஸ்திரத்தில் ஒன்றையுமே தின்காமல் காயக் காயக் கிடக்கும்படியாகவும் நிர்ப்பந்தப்படுத்தி விடவில்லை. ஒரு வேளைச் சாப்பாடு, ஒரு வேளை பலகாரம் என்றால்கூட ருசியாகப் பல வகைகள் இருக்கின்றன. தள்ளுபடியில்லாத கறிகாய்களே எத்தனையோ இருக்கின்றன. தேஹ புஷ்டி, ஸத்வபுத்தி இரண்டும் தருபவையாக இவை இருக்கின்றன. ஸாம்பார், ரஸம், கறி, கூட்டு, பச்சடி, துகையல் என்று எத்தனையோ வகைகள் சாஸ்திர ஸம்மதமாகவே இருக்கின்றன. இட்லி, தோசை, பொங்கல், அடை, உப்புமா, ஸேவை என்று பலகார தினுஸுகளும் ஏராளமாக இருக்கின்றன. இது ஒவ்வொன்றிலும் எத்தனையோ 'வெரெய்டி'. இட்லியில் குடலை இட்லி, ரவா இட்லி என்றெல்லாம் தினுஸுகள் இருக்கின்றன, பஜ்ஜி, வடை, வடாம், அப்பளாம் மாதிரியானவை வேறு. பக்ஷணங்களோ கேட்கவே வேண்டாம். ஒவ்வொரு பண்டிகைக்கும் ஒரு பக்ஷணம். வெறும் சீடை, வெல்லச் சீடை, முறுக்கு, என்று கோகுலாஷ்டமிக்கு. பிள்ளையார் சதுர்த்தியா?- அதிலே பிள்ளையார் அளவுக்கு முக்யம் மோதகம்!ஸங்க்ராந்திக்குச் சர்க்கரைப் பொங்கலை வைத்தே 'பொங்கல்'என்றே பேர். தீபாவளிக்கு எத்தனை 'ஸ்வீட்'உண்டோ, உப்பு தினுஸு உண்டோ தின்றுதான் ஆகவேண்டுமென்று நரகாஸுரன் கிருஷ்ணபரமாத்மாவிடம் வரமே வாங்கிக் கொடுத்திருக்கிறான்! நவராத்திரி என்றால் சுண்டல். அம்பாளுக்குப் பௌர்ணமி பூஜையா? சர்க்கரைப் பொங்கல், வடை, சித்ரானங்கள். ஸுப்ரமண்யருக்குத் தேனும் தினைமாவும். தினைப்பாயஸங்கூட உண்டு. ராம நவமிக்குப் பாயஸம், பானகம், வடைப்பருப்பு. வைகுண்ட ஏகாதசி, சிவராத்திரி, ஷஷ்டி மாதிரி உபவாஸமிருக்கிற வ்ரத தினங்களை விட சுசி ருசியாக, தினுஸு தினுஸாகச் சாப்பிடுகிற பண்டிகைகள் தான் ஏராளமாக இருக்கின்றன. சாஸ்திரம் சொல்கிறபடி உஷத் காலத்திலிருந்து மாத்யான்ஹிகம் வரையில் நன்றாகக் கர்மாக்களை உழைத்துச் செய்துவிட்டு அப்புறம் இப்படிப் புஷ்டியாகச் சாப்பிடுவதால் அது நன்றாக உடம்பில் ஒட்டவும் ஒட்டும். சாஸ்திரோக்தமாக மூன்று மணிக்கு மேலே சிராத்தம் முடிந்தால்கூட அப்புறம் ஆரோக்யமாகவும், ருசியாகவும் மிளகு சேர்த்த அநேக வியஞ்ஜனாதிகளோடு, எள்ளுருண்டை அதிரஸம் என்று நல்ல போஜனம் இருக்கிறது. மற்ற தினங்களில் மத்யான்னம் வரையில் ஒட்ட ஒட்டக் கிடக்கணும் என்றில்லை. மோர், பால், பழங்கள் எடுத்துக் கொள்ளலாம். இதை ரொடீனுக்குக் கொண்டு வந்து விட்டால் பகலில் மட்டும் ஒரு போஜனம், ராத்ரியில் பலகாரம் என்று ஸுலபமாகப் பழக்கிக்கொண்டு விடலாம். சும்மா சும்மா சாப்பிடுவது உடம்புக்கும் நல்லதில்லை, ஆத்மாவுக்கும் நல்லதில்லை. பஞ்ச கோசங்களில் அன்னமயம்தான் முதல். அதிலிருந்து பேரின்பம் என்கிற ஐந்தாவதான ஆனந்தமய கோசத்துக்குப் போக வேண்டுமே தவிர அதோடேயே நின்று விடக் கூடாது*1.

அதுவும் ஒரு கோசமாக இருப்பதால் அதை அடியோடு அலக்ஷ்யம் பண்ணி நிந்திக்கவும் கூடாது. "அன்னத்தை நிந்திக்கப் படாது;நிறைய அன்னத்தை விருத்தி பண்ணு"என்றெல்லாம் உபநிஷத்தே சொல்கிறது. அதற்காகக் கண்ட வேளைகளில், கண்டதை, கண்ட பேர் கையிலிருந்து வாங்கித் திண்ணவேண்டுமென்று அர்த்தமில்லை. வசனமே இருக்கிறது, ஒரு வேளை சாப்பிடுபவன் யோகி, இரண்டு வேளை சாப்பிடுபவன் போகி, மூன்று வேளை சாப்பிடுபவன் ரோகி என்று. இப்போது இத்தனை வேளைதான் என்று கணக்கேயில்லாமல் ஹோட்டலைக் கண்ட இடத்தில் காஃபி, டிபன் என்று போகிறதற்கு ஏற்க எல்லாருக்கும் இத்தனைதான் வியாதி என்று கணக்கில்லாமல் ஆயிருக்கிறது!

குடியரசு யுகம் என்பதற்கு ஸரியாக எல்லாவற்றிலுமே 'க்வாலிடி'யைவிட 'க்வான்டிடி'தான் முக்யமென்றாகியிருப்பது ஆஹார விஷயத்திலும் நடந்திருக்கிறது! எங்கே பார்த்தாலும் ஹோட்டல் வைத்து எதையாவது தின்னச் சபலம் ஏற்படுத்தியிருக்கிறதே தவிர, அந்த வஸ்துவின் தரத்தைப் பற்றிக் கவலையேயில்லை.

இந்தத் தரம் 'க்வாலிடி',ருசியில் மட்டுமில்லை. பதார்த்தம், சமைத்துப் போடுகிறவர்கள் என்ற இரண்டின் ஸாத்விகம்தான் ஆஹாரத்தின் 'க்வாலிடி'யை நிர்ணயிப்பவை. இதில் சமைத்துப் போடுகிறவர்களைச் சொல்லும்போது தாயாரும், பத்தினியும் பண்ணினதானால் பரவாயில்லை என்று வழக்கிலிருப்பதைச் சொல்லிவிட்டு, உடனே அவர்களும் நல்ல தெய்வ நினைப்போடு பண்ணிப் போடா விட்டால் பிரயோஜனமில்லை என்று Veto (எதிர்வோட்டு) மாதிரியும் ஒன்று போட்டு விட்டேன்!சாப்பிடுகிற நாம் வேண்டுமானால் "கோவிந்தா கோவிந்தா" என்று சாப்பிடலாம். சமைத்துப் பரிமாறுகிற பெண்டுகள் தெய்வ நினைப்போடுதான் அப்படிப் பண்ணும்படியாக நாம் எப்படிக் 'கம்பெல்'செய்ய முடியும்?இப்படித்தான் சொல்லிக் கொண்டுபோய் உங்களையெல்லாம் 'அப்போ ஸ்வாமிகள் என்னதான் பண்ணணும் என்கிறார்?பட்டினி கிடக்கச் சொல்கிறாரா?"என்று நினைக்கும்படிப் பண்ணினேன்.

"க்ளப்பும் கூடாது, அகத்து மநுஷ்யர்களும் கூடாது என்றால்?"என்பதுதானே 'கொஸ்ச்சின்ம மார்க்'(கேள்விக் குறி)?

ÞîŸ° ðF™ ªê£™õ¶î£¡ â¡ º,Aò à˜«îê‹. 'võò‹ ð£è‹'- ÜõùõÂ‹ î¡ Ýý£ó˜¬î˜ î£«ù ê¬ñˆ¶,ªè£œ÷µ‹ - â¡ð¶ î£¡ ðF™. Þ¬îŠ ðŸP ÜŠ¹ø‹ ªê£™A«ø¡. ÞŠ«ð£¶, ãŸèù«õ Þ¶õ¬ó ªî£†´‹ ªî£ì£ñ½‹ M†ì ºî™ Ü‹êñ£ù ðî£˜˜î ²˜î˜¬î Þ¡Â‹ ªè£…ê‹ ªê£™L M´A«ø¡. Ýý£ó˜F™ â¶ ú£ˆMè‹, â¶ ó£üú‹, â¶ î£ñú‹ â¡Á W¬îJ™ ðî£˜˜î˜¬î ¬õˆ¶ ðèõ£¡ ªê£™LJ¼Šð¬î„ ªê£™A«ø¡.

ஆயுஸ்-ஸத்வ-பலாரோக்ய-ஸுக-ப்ரீதி-விவர்தநா : *

ரஸ்யாஸ்-ஸ்நிக்தாஸ்-ஸ்திரா-ஹ்ருத்யா ஆஹாராஸ்-ஸாத்விக ப்ரியா : **

ú£ˆMè˜èÀ,°Š HKòñ£ù úˆõ Ýý£ó‹ Ý»v, ¹ˆF, ðô‹, Ý«ó£,ò‹, ªú÷,ò‹, ú‰«î£û‹ ÞõŸ¬ø»‹ M¼ˆF ð‡µõî£è Þ¼,°‹. ÜF«ô ï™ô óúº‹, ð¬ê»‹ Þ¼,°‹. õø†´ õø†´ â¡P™ô£ñ™ I¼¶õ£è Þ¼,°‹ â¡Á Ü˜˜î‹. ÜîŸè£è å«ó ªè£÷ ªè£÷£ â¡Á c˜ˆ¶ æì£ñ™ vFóñ£»‹ Þ¼,°‹. ð£˜,AøîŸ°‹ ê£ŠH´AøîŸ°‹ ó‹òñ£J¼,°‹.

ó£üú àí¾ âŠð®J¼,°‹?

கட்-வம்ல-லவணாத்யுஷ்ண-தீக்ஷ்ண-ரூக்ஷ-விதாஹிந : *

ஆஹாரா ரா,ஸஸ்யேஷ்டா து : க-சோகாமய ப்ரதா : ** (17.9)

துக்கத்தையும் சோகத்தையும் வியாதியையும் ராஜஸ ஆஹாரம் உண்டாக்கிவிடும். அது எப்படியிருக்குமென்றால் கசப்பாக (கடு), புளிப்பாக (அம்ல), உப்பாக (லவண), உறைப்பாக (தீக்ஷ்ண), துவர்ப்பாக (ரூக்ஷஇருக்கும் ருசியிலே இப்படி இருப்பது மாத்ரமில்லாமல் 'அத்யுஷ்ண'என்று பகவான் சொல்லியிருக்கும்படி (ரொம்பக் கொதிக்கக் கொதிக்கச்) சாப்பிட்டாலும் ராஜஸ குணந்தான் வளரும். வயிற்றிலே எரிச்சல் எடுத்து 'அல்ஸர்'என்கிறார்களே, இதையும் ராஜஸ ஆஹாரம் உண்டாக்குகிறது என்பதால் "விதாஹிந:"என்கிறார்.

'அறுசுவை என்று சொல்வதில் தித்திப்பு நீங்கலாகப் பாக்கி ஐந்தையும் பகவான் இங்கே ராஜஸம் என்று சொல்லி விட்டாரே!உப்பு, புளி, மிளகாய் இல்லாமலே சாப்பிட முடியுமா?துவர்ப்பு உடம்புக்கு நல்லது கசப்பு ஞான விருத்தி என்றும் சொல்வதுண்டே!' என்றால் இந்த ஐந்திலே எதையும் அதியாகச் சேர்த்துக் கொள்ளாமல் மிதமாகப் பிரயோஜனப்படுத்த வேண்டுமென்றே பகவான் சொல்வதாக வைத்துக் கொள்ளணும். ரொமப்வும் ஞான வைராக்யமாகப் போகும்போது உப்பு, புளி, மிளகாயை அடியோடு தள்ளி விடுவதுதான் நல்லதென்றாலும், கீதை ஸாமான்ய மநுஷ்யனையும் அவன் இருக்கிற இடத்திலிருந்தே கொஞ்சங் கொஞ்சமாக உசத்திக்கொண்டு போவதால், உப்பு, புளிப்பு, உறைப்பு, துவர்ப்பு, கசப்பு முதலானதுகளை அளவாக, மிதாமகச் சேர்த்துக் கொள்வது

என்று வைத்துக் கொள்ளணும். எந்த 'எக்ஸ்டரீ'முக்கும் - போகாமல் மத்தியில், மிதமாக போவதைத்தான் பகவான் எல்லா விஷயத்திலுமே விதித்து இதே கீதையில் பேசியிருக்கிறார். ஒரேயடியாகத் தின்னக்கூடாது. முழுப்பட்டினியும் போடக் கூடாது; ஒரே தூக்கமாய்த் தூங்கப்படாது, கொட்டு கொட்டென்று ராப்பூரா முழித்துக் கொண்டும் இருக்கப்படாது; எல்லாக் காரியத்திலேயும் மிதமாயிருக்கணும்;அப்படிப் பட்டவன்தான் யோகியாக முடியும் என்று அங்கே சொல்கிறார்*2. அதையே இங்கேயும் 'அப்ளை'பண்ணி, (ஆஹாரத்தின்) அளவில் மிதமாயிருக்கணும் என்ற மாதிரியே, அதன் ருசியிலும் மிதமான உறைப்பு, புளிப்பு முதலானவை உள்ளதாக போஜனம் செய்ய வேண்டும் என்று வைத்துக் கொள்ளணும்.

ராஜஸ ஆஹாரத்திலே திதிப்பைச் சொல்லவில்லை. ஸாத்விகத்திலும் திதிப்பு என்று நேராகச் சொல்லாவிட்டாலும் ரஸம் நிறைந்தது (ரஸ்யா:) என்றதால் தித்திப்புத்தான் நாக்கில் வைத்தவுடன் உமிழ்நீர் சுரக்கப் பண்ணுவதால், அதையே குறிப்பதாகக் கொள்ளலாம். அதற்காக தித்திப்பு மட்டுமே சாப்பிட்டுக் கொண்டிருந்தால் ஸாத்விகம் என்று நினைத்துவிடக் கூடாது. ஏனென்றால், ஸாத்விக ஆஹாரத்தின் மற்ற லக்ஷணங்களைச் சொல்கிறபோது அது ஆயுஸ், ஆரோக்யம், பலம் எல்லாம் தருவது என்கிறார். வெறும் தித்திப்பு மட்டும் சாப்பிட்டுக் கொண்டிருந்தாலோ 'டயாபெடிஸ்',எலும்புருக்கி முதலான வியாதிகள் வருவது பிரத்யக்ஷமாயிருக்கிறது. அதோடு கூட எல்லாவற்றிலும் மிதம் வேண்டும் என்பதே கீதையின் உபதேசமாயிருப்பதாலும் தித்திப்பு மட்டுமே சாப்பிட வேண்டும் என்று அது சொல்லியிருக்க முடியாது. அப்படியானால் ராஜஸ ஆஹாரத்திலே தித்திப்பு நீங்கலாக ஏன் மற்ற ஐந்தை மாத்திரம் சொன்னாரென்றால், ஒன்று (ஒரு காரணம்) தோன்றுகிறது. பண்டிகை நாட்களில்தான் பாயஸம், மற்ற தித்திப்பு பக்ஷ்யம் சாப்பிடுகிறோமே தவிர, பெரும்பாலான ஏனைய நாட்களில் தித்திப்பு நீங்கலாக மற்ற ஐந்தையும்தானே நாம் போஜனத்தில் சேர்த்துக் கொள்கிறோம்?அதனால் இந்த ஐந்தை மட்டும் அவர் குறிப்பிட்டிருக்கலாம். அதோடு, உப்பு, உறைப்பு புளிப்பு பிடித்தவர்கள் அப்படிப்பட்ட ஆஹார தினுஸுகளை மிதமிஞ்சிச் சாப்பிடுவதுபோல் தித்திப்பை புஜிக்க முடியாமல், தானே அது திகட்டிப் போய் விடுகிறது.

கொஞ்சமாக சாப்பிட்டாலே புஷ்டியும் சித்த சுத்தியும் தருகிற பால், மோர், வெண்ணெய், பழங்கள் முதலியவையும் ஸாத்விகமானவையே.

எந்தப் பதார்த்தமானாலும் அதி உஷ்ணமாகச் சாப்பிட்டால் ராஜஸம் என்கிறார். உடம்பிலே படபடப்பு, நரம்பு ஆடிப்போவது, அதேபோல உணர்ச்சியும் ஜாஸ்தியாவது இதற்கெல்லாம் ரொம்பவும் சூடான ஆஹாரம் காரணமாகிறது.

அதி உஷ்ணம் ராஜஸத்தை அதிகரிக்கிறதென்றால் ஆறிக் குளிர்ந்தது தாமஸத்தை வளர்க்கிறது என்கிறார். தாமஸ ஆஹாரத்துக்கு அவர் தருகிற லக்ஷணங்கள்:

யாத-யாமம் கத-ரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் *

உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம் தாமஸ ப்ரியம் ** (17.10)

யாமம் என்றால் ஜாமம், அதாவது மூன்று மணி. சமைத்து மூன்று மணிக்கு மேல் ஆன ஆஹாரம் "யாத யாமம்"- காலம் கடந்தது. அது தாமஸம். ஜலம் விடாததானால் இது 'டேஸ்ட்'போய் 'கத-ரஸ'மாகிவிடும். காய்ந்துபோன பழங்களும் 'கத-ரஸ'த்தைச் சேர்ந்ததுதான். ஜலம் விட்டதனால், பழையது மாதிரி, இட்லி மாவு மாதிரி இது புளித்துப் போயிருக்கும். இதுதான் 'பூதி'என்று ச்லோகத்தில் சொல்லியிருப்பது. ஊசிப்போன வியஞ்ஜனம், அழுகிப்போன பழம் எல்லாம் 'பூதி'. தீய்ந்து போனது, சிக்குப் பிடித்தது ஆகியனவெல்லாம் 'பர்யுஷிதம்'. நம்மை விட வயஸிலும் வர்ண-ஆசிரமங்களிலும் குறைவாக இருப்பவர்கள் சாப்பிட்டபின் மீந்தது 'உச்சிஷ்டம்'. இந்த நாளில் ஃபாஷன் என்று எச்சில் பண்ணிச் சாப்பிடுவதும் 'உச்சிஷ்டம்'தான். இதெல்லாம் தாமஸப் போக்கை உண்டாக்குவதே.

உச்சிஷ்டமபி சாமேத்யம். 'அமேத்யம்'என்றால் மலம் என்றே அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். நேர் அர்த்தம் யஜ்ஞத்துக்கு, அதாவது ஈஸ்வர ஆராதனத்தில் நிவேதனமாக வைப்பதற்கு லாயக்கில்லாதது என்று அர்த்தம். பழையதை, கள்ளை - ஏன் ஸோடா,

ஐஸ்க்ரீம், பிஸ்கெட், ஓவல்டின் முதலானதுகளைகூட - நைவேத்யமாக வைப்போமா?எதுவோ ஒன்று இதெல்லாம் பகவானுக்கு அர்ப்பணிக்கத் தகுந்ததல்ல என்று நம் மனஸில் தடுக்குகிறதே!அப்படிப்பட்ட எல்லாம் அமேத்யம்தான். புளியும் காரமும் சேர்ந்த புளியஞ்சாதம் முதலான ராஜஸ ஆஹார தினுஸுகளைவிட மனஸ் உறுத்தாமல் நைவேத்யம் பண்ணுகிறோம் என்பதை இங்கே நினைத்துப் பார்க்கத் தோன்றுகின்றது. தாமஸம் அதற்கும் ஒரு படி கீழே.

---

1. *Ü¡ùñò‹, Šó£íñò‹, ñ«ù£ñò‹, M…ë£ùñò‹, Ýù‰î ñò‹ â¡ð¬õ ¬î˜Fg«ò£ðGû˜¶ ÃÁ‹ ä‰¶ «è£êƒè÷£°‹.

2. * கீதை அத் 6, ச்லோ. 16-17. மேலே மேற்கோள் காட்டிள்ள 'கட்-வம்ல' ச்லோகத்தில் உஷ்ணமான உணவுக்கு மட்டுமே 'அதி'சேர்த்து, அத்யுஷ்ணம் ஸாத்விகமாகாது எனக் கண்ணன் கூறும் போதிலும் அதற்கு ஆதி சங்கரர் பாஷ்யம் செய்கையில், ச்லோகம் கூறும் மற்ற சுவைகளும் 'அதி'யாக ஆகாத உணவினை உட்கொள்ள வேண்டுமென்பதே உட்பொருள் எனக் கூறியுள்ளார். இதுவேதான் இங்கு நமது ஸ்ரீபெரியவர்கள் கூறுவதும்.

---



## நியமத்தில் வேறுபாடுகள்

**பொ** துவாக இப்படிச் சொன்னாலும், பழையது, நீராஹாரம் முதலானவை தாமஸமாகச் சொல்லப்பட்டாலும், உழைக்கிற குடியான ஜனங்களுக்கு விலக்கு இல்லை. வியாதியஸ்தர்களுக்கும் சில நிஷேத வஸ்துக்களை (தள்ளும்படியான வஸ்துக்களை)ப் பரவாயில்லையென்று அநுமதித்திருக்கிறது. உடம்பு ஸரியானவிட்டு இதற்காகப் பஞ்சகவ்யம் சாப்பிட்டு ப்ராயசித்தம் செய்து கொள்ளும் படியும் சொல்லியிருக்கிறது. எட்டு வயஸுக்குக் கீழேயும் எண்பது மேலேயும் போனவர்களுக்கு ரொம்பவும் ஆஹாரக் கட்டுப்பாடு வேண்டுமென்பதில்லை என்றே கூட சாஸ்திரம் சொல்வதுண்டு. நியாயமாகப் பார்த்தால் எண்பது வயஸுக்கு மேலே ஜீர்ண சக்தியும் குறைந்து, இச்சைகளும் குறைந்து அவர்கள் தாங்களாகவே ரொம்ப நியமமாக இருக்கத்தான் பிரியப்பட வேண்டும். அப்படியில்லாதபோது 'நப்பாசையும் நாக்கு ருசியும் போகாத இப்படிப்பட்டவர்கள் எப்படியும் ஜன்மாவைக் கழித்துக்கொள்ளப் போவதில்லை;அதனால் இந்தக் கிழ ஜீவன்களை கடைசிக் காலத்தில் ஏன் கட்டுப்படுத்திக் கஷ்டம் கொடுக்க வேண்டும்?'என்றே 'ஸிம்பதி'யில் விட்டு விட்டதாகத் தோன்றுகிறது.

எல்லாருக்கும் எல்லா நியமமும் என்று வைக்காமல் நீக்குப் போககோடு வர்ணாச்ரமங்களையொட்டி வெவ்வேறு விதமாகவும், வெவ்வேறு டிகிரியிலும் வைத்துதிருப்பதுதான் நம் மதம் உலகத்திலேயே மிகவும் பழங்காலத்திலிருந்து இன்றுவரை அமரமாக இருந்து வருவதற்கு காரணம். ஆஹாரத்திலும் இதைப் பொருத்து பிராம்மணனுக்குச் சொன்ன அளவு கட்டுப்பாடு மற்றவர்களுக்குச் சொல்லவில்லை. மது, மாம்ஸாதிகள், பழையது எல்லாங்கூட க்ஷத்ரியர், நாலாம் வர்ணத்தவர் ஆகியவர்களுக்கு அளவோடு அநுமதிக்கப்பட்டிருக்கிறது. அளவோடு நிறுத்திக்கொள்ள வேண்டியது முக்யம்.

உடம்பால் கடுமையாக உழைக்கிறவனுக்கு ஆசாரக் கட்டுப்பாடுகளையும் கடுமையாக வைத்துக் கஷ்டப்படுத்தாமல் கொஞ்சம் ஸ்வதந்திரமாக விட்டு, பிராம்மணன் மாத்திரம் ஆசாரக் கட்டுப்பாட்டில் கடுமையாக இருந்துகொண்டு ஸௌக்யங்களைத் தியாகம் பண்ணி, 'ஐடியல்'நிலையைக் காட்ட வேண்டுமென்று சாஸ்திரங்கள் வைத்திருக்கின்றன.

சிலர் மாத்திரம் பூரணமாக 'வெஜிடேரியனிஸம்'முதலான நியமங்களைப் பின்பற்றுவதாலேயே, நம் நாட்டில் மற்றவர்களும் அவர்களைப் பார்த்துப் பித்ரு தினம், விரத தினம் முதலான நாட்களிலாவது மாம்ஸம் சேர்ப்பதில்லை, மதுபானம்

பண்ணுவதில்லை என்றெல்லாம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அநேக ஜாதிக்காரர்கள் அறுபது, எழுபது வயஸு ஆன பிற்பாடு சுத்த சைவமாகிறார்கள்.

---



## யதார்த்தத்துடன் லக்ஷ்யத்தின் இசைவு

' ஐ டியல்'விடமால் 'ப்ராக்டிக்'லில் போனால்தான் இரண்டும் நிற்கும்;முடிவாக நல்ல பக்குவம் ஏற்பட்டு எல்லாரும் ஐடியலுக்குப் போவார்கள். ஐடியலையே ஸர்வத்ர ஜனங்களுக்கும் ப்ராக்டிகலாக்கப் பார்த்தால் ஐடியல் அடியோடு போய்விடுவதாகத்தான் ஆகும்.

'ஸாத்விக ஆஹாரந்தான் ஐடியல்;மது மாம்ஸம் வேண்டாமென்றுதான் இப்போதில்லா விட்டாலும் முடிவிலாவது ஆக்கிக் கொள்ள வேண்டும்'என்று இதர ஜாதியினரும் உணரும்படியாக நம் தேசத்தில் ஆசாரங்கள் அமைந்து, நடத்தப்பட்டிருக்கின்றன.

வெஜிடேரியனிஸம் என்ற ஐடியல் நம் தேசத்தில் ஒரு குறிப்பிட்ட குலாசாரமாக மாத்திரம் இருப்பதாலேயே, அதைப் பார்த்து, சாஸ்திரத்தின் 'கம்பல்ஷன்'இல்லாமல், தாங்களாகப் பிரியப்பட்டு வேறுவித குலாசாரமுள்ளவர்களும் அதை எடுத்துக்கொண்டு, ஐடியல் மேலும் மேலும் ப்ராக்டிஸில் பரவுவதைப் பார்க்கிறோம். "நாங்கள் இரண்டு தலைமுறையாக சுத்த சைவமாயிருக்கிறோம்"என்று இதரர்கள் பெருமையோடு சொல்லிக்கொள்வதைக் கேட்கிறோமென்றால், அதற்கு முந்தி அசைவமாயிருந்தவர்கள் தாங்களாகவே சைவ ஆஹார நியமத்தில் மதிப்பு வைத்து மாறியிருக்கிறார்களென்று தானே அர்த்தம்? இன்னும் சிலபேர், "வீட்டில் அன்னிய பதார்த்தம் சாப்பிடுவார்கள்;ஆனால் நம்ம கிட்டயே அந்த வாடை வரக் கூடாது"என்று பெருமைபட்டுக் கொள்ளும்போது, எப்படி ஒரு ஐடியலைச் சிலருக்கு மட்டும் விதியாக வைக்கிறபோது, அது மற்றவர்களில் சிலரையும் அந்தப்படி தாங்களாக இஷ்டப்பட்டுச் செய்ய 'என்கரேஜ்'பண்ணுகிறது என்று தெரிகிறது.

எதைப்பற்றியுமே, சொல்வது ஜாஸ்தியாகி விட்டால் அப்புறம் செய்வது அந்த அளவுக்குக் குறைந்து கொண்டுதான் வருகிறது. செய்யாததற்குப் பதில் சொல்லித் தீர்த்து விடுகிறமாதிரி வெறும் பேச்சாயும், எழுத்தாயும் மட்டுமே, எது காரியத்தில் நடக்க வேண்டுமோ அது நின்று விடுகிறது!காந்தி யுகத்திலிருந்து அஹிம்ஸை, non-violence என்று ஓயாமல் பேச்சாயிருந்தாலும் இப்போதுதான் எல்லாவித ஹிம்ஸைகளும் தேசத்தில் ஜாஸ்தியாகிக் கொண்டு வந்திருக்கிறது;தலைமுறை தலைமுறையாக வெஜிடேரியனிஸமே பின்பற்றி வந்த பிராம்மணப் பசங்கள் கூட இதர பதார்த்தம் சாப்பிடுவதான அநியாயம் இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது.

பௌத்தத்தில் ஆதியில் இப்படித்தான் மனஸ், வாக்கு, காயம் மூன்றாலும் யாரும் எந்த உயிருக்கும் ஹிம்ஸை விளைவிக்கக் கூடாது என்று பொது ஜனங்கள் எல்லோருக்கும் நிறையச் சொல்லிவந்தார்கள். அஹிம்ஸைக் கொள்கை (doctrine of non-violence) சொல்லிக் கேட்க நன்றாகத்தான் இருக்கும். ஆனால் ஸர்வ ஜன ஸாத்யமாக நடைமுறைக்கு வருமா என்பதுதான் கேள்வி. பிற்பாடு பௌத்தம் விரிவாயும் ஆழமாயும் பரவின சீனா, ஜப்பான் முதலான தேசங்களில்தான் நம் தேசத்து மாம்ஸ போஜனக்காரர்கள் கூட நிஷித்தம் என்று ஒதுக்குகிற தவளை, பாம்பு முதலானது உள்பட எல்லாப் பிராணிகளையும் ஜனங்கள் பிடித்துத் தின்று கொண்டிருக்கிறார்கள். கசாப்புக் கடைக்குப் போவதில் ஏதோ நூற்றில் ஒரு பங்கு யாகத்தில் பலியானதற்கு "ஐயையோ அக்ரமம் பண்ணுகிறார்களே!"என்று புத்தர் அழுதார், வைதார். 'லோக க்ஷேமார்த்தமாகச் சில சக்திகளைப் பிரீதி பண்ணவே யஜ்ஞம்'என்று அவருக்குப் புரிய வைக்க அந்த நாளில் யாருமில்லை போலிருக்கிறது. அவர் கண்டனம் செய்த யஜ்ஞப் பிராம்மணாள் வம்ச பரம்பரையாக வெஜிடேரியன்களாக இருந்து வருவது பிரத்யக்ஷம்;அவருடைய followers-ல் (பின்பற்றுபவர்களில்) வெளிதேச பிக்ஷுக்கள் உள்பட மாம்ஸத்திலும் ரொம்பவும் நிக்ருஷ்டத்தை (கீழானதை) போஜனம்

பண்ணுவதும் பிரத்யக்ஷம்!

இதிலே ஒரு வேடிக்கை சொல்கிறேன். வெளிதேசத்தில் பௌத்தம் பரவின பிறகுதான் என்றில்லை;நம் தேசத்திலேயே எல்லாருக்கும் ஸ்ட்ரிக்ட் அஹிம்ஸா தர்மம் என்று புத்தர் பண்ணியதில் அந்த மதஸ்தர்கள் எல்லோரும் நேர்மாறாகத்தான் அசைவ போஜனம் செய்ய ஆரம்பித்தார்கள். பிராம்மணனைத் தவிர இதரர்களுக்கெல்லாம் மாம்ஸ போஜனத்தை அநுமதித்திருக்கிற நமது மதத்தில் ஸந்நியாஸிகள் கண்டிப்பாக வெஜிடேரியன்களாகத்தான் இருக்க வேண்டும் என்று விதித்து, அப்படியே ஸ்ட்ரிக்டாகப் பின்பற்றப் படுவதாயிருக்க, ஸர்வ ஜனங்களுமே பரிபூர்ண அஹிம்ஸா தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும் என்ற பௌத்தத்திலோ அந்த மதத்தைச் சேர்ந்த ஸந்நியாஸிகளான பிக்ஷுக்கள் கூட மாம்ஸ போஜனம் செய்வதாக ஆகிவிட்டது. இது இன்றைக்கு ஏற்பட்ட விஷயமில்லை. ஆயிரத்து முந்நூறு வருஷத்துக்கு முந்தி மஹேந்திரப் பல்லவன் எழுதின "மத்த விலாஸ ப்ரஹஸனம்"என்ற ஹாஸ்ய நாடகத்திலேயே ('ப்ரஹஸனம்' என்பதை farce, satireஎன்று சொல்லலாம்) இதைக் கேலியாகச் சொல்லியிருக்கிறான் ஆனால் ரொம்ப ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறான். அந்த ட்ராமாவிலே ஒரு காபாலிகன் பிச்சை வாங்குகிற கபாலம் காணாமல் போய் விடுகிறது, அது எங்கே போயிருக்கும் என்று யோசிக்கிற போது, "அந்தக் கபாலத்திலே பக்குவம் பண்ணின மாம்ஸம் இருந்ததல்லவா?அதனால் அதை ஒன்று, ஏதாவது நாய் இழுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும்;இல்லாவிட்டால் எவனாவது புத்த பிக்ஷு அமுக்கிக் கொண்டு போயிருப்பான்!"என்று காபாலிகன் சொல்வதாக வருகிறது. அப்புறம் அந்த நாடகத்தில் ஒரு புத்த பிக்ஷுவே வருகிறார். அவரும் தனக்குத் தானே ஸந்தோஷமாகப் பேசிக்கொள்கிறபோது, "தனதாஸன் என்கிற வியாபாரிதான் எனக்கு எவ்வளவு நல்ல பிக்ஷை செய்து வைத்தான்!எத்தனை ருசியும், வாஸனையும், வர்ண விசித்திரமுமான மத்ஸ்ய மாம்ஸங்களை ஆஹாரமாகப் போட்டான்!"என்று சொல்லிக் கொள்வதாக வருகிறது.

பௌத்தர்கள் காஞ்சிபுரத்தில் நிறைய வாஸம் பண்ணிய காலத்திலேயே அங்கேயிருந்த ஆண்டு கொண்டிருந்த ராஜா இப்படி ஒரு ட்ராமாவில் எழுதுகிறான் என்பதிலிருந்து அது அப்போதிருந்த வழக்கத்தையே படம் பிடித்துக் காட்டுகிறது என்றுதானே அர்த்தம்?

ÜU‹¬ú¬ò ªð÷ˆî˜èœ «ð£ôŠ ªðKê£è Hóèìù‹ ð‡í£î ï‹ ñîˆF™ ú‰Gò£Rèœ ªú£Šðù¨F™Ãì ñ£‹ú¨¬î G¬ù,è ºò£î «ð£¶, "â™«ô£¼,°‹ ÜU‹ú£ î˜ñ‹"â¡Á õ£ù÷£õ„ ªê£¡ù Ü%î ñî,è£ó˜èO™ ú‰Gò£RèœÃì ÞŠð®J¼%î£™ U‰¶,èœ ²‹ñ£J¼Šð£˜è÷£?Þ¬îŠðŸP Üõ˜è¬÷, «è†´Š ðKý£ú‹ ð‡í£ñL¼Šð£˜è÷£?"ÜU‹¬ú â¡Al˜èœ, Ýù£™ ÞŠð®Š ð‡µAl˜è«÷!"â¡Á «è†ì«ð£¶ Üõ˜èœ, "âƒèœ ¹ˆî˜ Hó£Eõ¬î Ãì£¶ â¡Áî£¡ ªê£™LJ¼,Aø£˜. Ýý£ó¬îŠ ðŸP å¡Á‹ ªê£™ôM™¬ô. ï£ƒèœ Üõ˜ ªê£¡ùð®î£¡ ªêŒA«ø£‹. ï£ƒè÷£è â‰îŠ Hó£E¬ò»‹ ªè£™õF™¬ô. âõ«ù£ º¼M,è£ó¡, «õì¡, èê£Š¹, è¬ì,è£ó¡ ªè£¡Á MŸð¬î¨î£¡ õ£ƒA¨ F¡A«ø£‹. Üîù£™ âƒèÀ,° põU‹¬ú «î£û‹ Þ™¬ô!"â¡Á ú£ñ˜¨Fòñ£è„ ªê£™õ£˜è÷£‹.

இவர்களை நினைத்துக் கொண்டுதான் திருவள்ளுவர் ஒரு குறள் பண்ணியிருக்கிறாரென்று தோன்றுகிறது.

தினற் பொருட்டால் கொல்லா(து) உலகு எனின் யாரும்

விலைப் பொருட்டால் ஊன் தருவார் இல் (-குறள் : 256

'ஏதோ கசாப்புக் கடைக்காரன் மாம்ஸத்தை விற்கிறானே, அவன் பிழைப்பு நடந்துவிட்டுப் போகட்டும்'என்றுதான் தாங்கள் அதை வாங்கிச் சாப்பிடுகிற மாதிரிச் சொல்லி அல்லவா இந்த பௌத்தர்கள் தப்பித்துக் கொள்கிறார்கள்?இதுவா நிஜம்?அவன் கொன்று விட்டானே என்கிறதற்காகவா இவர்கள் தின்கிறார்கள்?இவர்கள் தின்கிறார்கள் என்பதற்காகத்தானே அவன் கொல்கிறான்?"என்று திருவள்ளுவர் நினைத்திருப்பார் போலிருக்கிறது. "ஊன் தின்னுபவர்கள் இருப்பதால்தான் அதற்காக ஒருத்தன் பிராணிகளை அடித்து விலைக்கு விற்பது என்று ஏற்பட்டிருக்கிறது. ஊன் தின்னாதவர் இருந்தால் கசாப்புக் கடையே

தோன்றியிருக்காது"என்ற கருத்தை வைத்தே ஒரு குறளைச் செய்து தம்முடைய உயர்ந்த நூலில் அதைச் சேர்த்து விட்டார். இவர்கள் அடித்துத் தின்னாவிட்டாலும், இவர்கள் தின்னுகிறார்கள் என்றேதான் இன்னொருத்தன் அடிப்பதால் அவன் பண்ணுகிற ஜீவஹிம்ஸை தோஷம் இவர்களைத்தான் சேரும் என்று சொல்லாமல் சொல்லி விட்டார்.

வள்ளுவர் மாதிரியான பெரியவர்கள் என்ன சொன்னாலும் அவர்கள் (பௌத்தர்கள்) அப்படியேதான், தாங்களாக அடிப்பதில்லை, ஆனால் இன்னொருத்தன் அடித்ததைத் தின்னுவது என்று தொடர்ந்தும் செய்து வந்தார்கள். இதனால் பிற்பாடு புத்தமதம் இங்கே (இந்தியாவில்) மறைந்து பர்மா, ஸிலோன் (ஸ்ரீலங்கா), மலேயா முதலிய தேசங்களில் நிலைப்பட்டபோது ஒரு விசித்ரமான 'டெவலப்மென்ட்'உண்டாயிற்று. இந்த தேசங்களோடு நமக்கு ரொம்ப காலமாக ஸமுத்ர மார்க்கமாகத் தொடர்பு வந்திருக்கிறதல்லவா?இதனால் பிற்காலத்தில் தஞ்சாவூர் நாகப்பட்டினத்திலிருந்து ராமநாதபுரம் கீழ்க்கரை வரையில் கடற்கரை ஓரமாகத் துருக்கர்கள் நிறையக் குடியேறி வஸிக்க ஆரம்பித்தபோது, "இந்த பர்மா, ஸிலோன் பௌத்தர்கள் தாங்களே பிராணிவதை செய்கிறதற்கில்லையென்பதால், 'எவன் அடித்துக் கொண்டு வந்து நிற்பான்'?என்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நாம்தான் இதைத் தொழிலாக நடத்த ஆரம்பித்து விட்டால் என்ன?"என்று யோசனை பண்ணி அந்தத் தேசங்களுக்குப் போய்க் கசாப்புக் கடைகள் வைத்தார்கள். நிறையப் பணம் பண்ணிக் கொண்டு திரும்பி வந்தார்கள். இவர்கள் அந்த தேசங்களைப் பற்றிச் சொல்லிக் கேட்டதன் மேலேதான் ராமநாதபுரம் கீழ்க் கரைக்குப் பக்கத்திலுள்ள நகரத்தார்கள் அங்கே முதலில் வட்டிக்கடை வைக்கப்போனார்கள் என்று சொல்வதுண்டு. "வட்டி வாங்கக்கூடாது"என்று குரானில் இருப்பதால் துருக்கர்கள் அங்கே வட்டிக்கடை வைக்கவில்லை.

நம் தேசத்திலேயுங்கூட புத்தர், அசோகன் முதலானவர்களே வாழந்து, பௌத்தமதம் ரொம்பவும் அநுஷ்டானத்திலிருந்த பிஹாரிலும், உ.பி.யின் சில பகுதிகளிலுந்தான் இன்றைக்கு ரொம்பவும் அதிகமாக 'நான்-வெஜிடேரியன்'கள் இருப்பது. பெங்காலில் வருஷத்தில் ஆறு மாஸம் கங்காதி நதிகள் பிரவாஹமாய் உடைப்பெடுத்துக் கொண்டு, காய்கறித் தோட்டங்கள் அழுகிப்போய் விடுமாதலால், ஒரு நீஷீஜீமீறீவீஸீ ஸீமீநீமீஹவீமீ ஹ்-யின் (நிர்ப்பந்த தேவையின்) மீது அங்கே ஸகல ஜாதியாரும் பிரவாஹத்தில் யதேஷ்டமாகக் கிடைக்கும் மத்ஸ்யத்தை 'ஜலபுஷ்பம்'என்று மறக்கறிப் பெயரைச் சொல்லிக் கொண்டு சாப்பிட்டாலும், மற்ற தினுஸான மாம்ஸங்களை பெங்காலி பிராமணர்களும், அவர்களுடைய ஆசாரத்தைத் தாங்களாக யீஷீறீஷீஷ் பண்ணும் மற்றவர்களும் தொடமாட்டார்கள். பிஹார், அதைச் சுற்றியிருக்கிற பிரதேசங்களில் இப்படியில்லை. பெங்காலில் பிராமணர்கூட மத்ஸ்யம் சாப்பிடுவதை நான் 'ஜஸ்டிஃபை'பண்ணுகிறேனென்று அர்த்தமில்லை. ஆனால் சிலதை 'ஜஸ்டிஃபை'பண்ண முடியாவிட்டாலும், 'ஏதோ தொலைகிறது'என்று கொஞ்சம் விட்டுக் கொடுக்கலாமல்லவா?இதற்குக்கூட இடமில்லாமல், ஸீமீநீமீஹவீமீ ஹ்-யின் நீஷீஜீஸ்ரீஹவீஷீஸ்-ஏ இல்லாமல் சில இடத்தில் பூர்வத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த பௌத்தத்தில் அஹிம்ஸா நியமத்தை எல்லோருக்கும் பொதுவாக விதி செய்திருந் ததேதான்!எதிலுமே 'எக்ஸ்ட்ரீ'முக்குப் போனால் அப்புறம் நேர்மாறாகத்தான் நடக்க ஆரம்பித்துவிடும்.

இப்போது நடைமுறை ஸாத்யம் எதுவோ அதிலே ஆரம்பித்துக் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறி ஐடியலை ஸாத்யமாகப் பண்ணிக் கொள்வதுதான் நடக்கக் கூடியது;அதுதான் புத்திசாலித்தனம். அப்படித்தான் நம் சாஸ்திரம் வழி பண்ணிக் கொடுக்கிறது. பதார்த்தம், அதை நமக்கு ஆஹாரமாகப் பண்ணிப் போடுகிறவர்கள், ஆகிய இரண்டும், ஸாத்விகமாக இருக்க வேண்டும் என்பதே ஐடியல். அதை ஸர்வ ஜனங்களும் ரீக்ஷீணீபீஸ்ரீணீறீ-ஆக ஸாதித்துக் கொள்ள வேண்டும். ஸகலருக்கும் இதிலே இப்படியொரு ஆர்வமும், ஊக்கமும் பிறப்பதற்காக பிராம்மண ஜாதியார் மட்டும் பிறந்ததிலிருந்தே எப்பொழுதும் இந்த லக்ஷ்ய நிலையை யதார்த்தத்தில் அநுஷ்டித்துக் காட்ட வேண்டும். பிராம்மணனின் ஸ்வதர்மத்தில் அத்யாபனம், அதாவது பிறத்தியாருக்குப் போதனை பண்ணுவது ஒன்றோ இல்லையோ?இப்படி டீச்சிங் பண்ணுவது என்பது இவன் ஸகல வித்யைகளையும் தான் கற்று மற்ற ஜாதியினருக்கும் 'டீச்'பண்ணுவதோடு நின்றுவிடவில்லை; சிரம ஸாத்யமான ஐடியல் நிலையைத் தான் பரமத் தியாகியாகப் பிரத்யக்ஷத்தில் நடத்திக் காட்டி இந்த வாழ்க்கை உதாரணத்தாலும், வாயால் சொல்லாமலே மற்றவர்களுக்கு உயர்ந்த லக்ஷியங்களை

'டீச்'பண்ணுவதுதான் மற்ற 'டீச்சிங்'கை விடவும் முக்யமானது. சாஸ்திரங்கள் இப்பேர்ப்பட்ட பளுவான ஸமூஹப் பொறுப்பை பிராமணனுக்கே தந்திருக்கிறது என்று புரிந்து கொள்ளாமல், அது அவனுக்குத்தான் ரொம்ப சலுகை, ஸௌகர்யம் எல்லாம் தந்து உசத்தி வைத்திருப்பதாகக் குற்றம் சொல்கிறார்கள்.

பரம பவித்ரமான வேத மந்த்ரங்களை பிராம்மணன் ரக்ஷிதித்துத் தர வேண்டியிருக்கிறது என்பதால் அப்படிப்பட்ட சரீரத்துக்குள் மது, மாம்ஸாதிகள் போகப்படாது என்று விதி பண்ணி வைத்திருக்கிறது.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ' சைவ ' உணவு

**ஆ** ஹார விஷயத்தில் பதார்த்த சுத்தியைப் பார்க்கும் போது ஐடியல் என்பது அஹிம்ஸா போஜனம் சாக உணவு, மரக்கறி உணவு என்கிற வெஜிடேரியனிஸம், 'புலால் மறுத்தல்'என்று திருக்குறள் முதலானவற்றில் வலியுறுத்தியிருப்பது இதைத்தான்.

'சைவம்', என்று வெஜிடேரியனுக்கு ஏன் பேர் என்றால், தமிழ் தேசத்தைப் பொருத்தவரை பெரும்பாலும் அப்பிராமணர்களாக இருக்கப்பட்டவர்களில் சைவர்களே வெஜிடேரியன்களாக இருந்ததுதான். மாம்ஸம் மட்டுந்தான் என்றில்லை;வெஜிடேரியன் ஆஹாரத்திலுங்கூட சித்தசுத்திக்கு உதவாததாக இருப்பதை நல்ல ஆசார சீலர்களான சைவர்கள் சேர்த்துக் கொள்ளமாட்டார்கள். 'முக்காயம் தள்ளியவர்கள்'என்று அவர்களைச் சொல்வதுண்டு காயம் என்றால் உடம்பு அல்லவா?உடம்பு ஊன்தானே?முக்காயம் என்கிற மூன்றுவித ஊன் என்ன?இல்லை;இங்கே அப்படி அர்த்தமில்லை. ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்கிற மூன்றுதான் முக்காயமா?- என்றால் அப்படி அர்த்தமில்லை. முக்காயம் என்று இங்கே சொன்னது வெங்காயம், உள்ளிக்காயம் (அதாவது பூண்டு), பெருங்காயம் என்ற மூன்றுதான். மாம்ஸமாயில்லாவிட்டாலும் இதுகளுங்கூட ராஜஸ, தாமஸ குணத்தைக் கொடுப்பவை என்பதால் இவற்றையும் சைவர்கள் தள்ளிவிடுவார்கள். காயம் என்பது ஊனை, மாம்ஸத்தைக் குறிப்பதால் இங்கே 'முக்காயம்'என்பது சிலேடையாகவுமிருக்கிறது!

ஒரு வேடிக்கை!தக்ஷிணத்தில் 'சைவம்'என்றால் வெஜிடேரியனிஸம். வடக்கிலோ 'வைஷ்ணவம்'என்றால்தான் வெஜிடேரியனிஸம் தெற்கேதான் சிவன், அம்பாள் இவர்களை ஸௌம்யமாக, சாந்த ஸ்வரூபமாக வழிபடுவது. வடக்கே ருத்ரனாக 'கால பைரவ்'என்றும், காளி, துர்கை, இப்படியும்தான் ஆராதிக்கிறார்கள். அது மட்டுமில்லாமல் அங்கே வல்லபாசார்யார், ராமாநந்தர், சைதன்யர் என்றெல்லாம் செல்வாக்கோடு தோன்றியிருக்கிற பெரியவர்களும் முழுக்க ராமாநுஜ ஸித்தாந்தத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்ல முடியாவிட்டாலும், பெரும்பாலும் ஃபிலாஸஃபியில் அதைத் தொட்டுக் கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். பரம அஹிம்ஸாவாதிகளான வடக்கத்திக்கார ஜைனர்களும் இந்த மதாசாரியர்களால் தாய் மதத்துக்குத் திரும்பியபோது வைஷ்ணவர்களாகவே ஆகி, அஹிம்ஸா போஜனத்தைத் தொடர்ந்து வந்திருப்பதால் அங்கே வைஷ்ணவ ஆஹாரம் என்பதே 'வெஜிடேரியனிஸம்'என்று ஆகிவிட்டிருக்கிறது.

தெற்கே 'அன்பே சிவம்'என்பது கொள்கை. அதோடு இங்கே ஜைனர்களைப் பெருவாரியாக ஹிந்து மதத்துக்குத் திருப்பினவர் சைவ ஸமயசாரியாரான ஞான ஸம்பந்தமூர்த்திகள். இங்கே வெஜிடேரியனிஸமே சைவம் என்றிருப்பது நியாயம்தான்.

வடக்கே வல்லபாசாரியார் காலத்தில்தான் ஜைனர்கள் ஹிந்துக்களாக மாஸ்-கன்வெர்ஷன் ஆனது ஜாஸ்தி. (கன்னட தேசத்தில் ராமாநுஜாசாரியாரின் செல்வாக்கால் இப்படியே ஜைன ராஜா உள்பட அந்த மதஸ்தர்கள் ஹிந்துக்களாக, வைஷ்ணவர்களாக ஆகியிருக்கிறார்கள்.)

வல்லபாசாரியாரின் ஸித்தாந்தத்தைச் சேர்ந்தவர்களுக்குப் 'புஷ்டி மார்க்கிகள்'என்று பெயர். குஜராத்தைச் சுற்றி இப்படி அவருடைய ஸித்தாந்தத்தைத் தழுவிய, அதுவரை ஜைனர்கள ாயிருந்த, வைசியர்களுக்குப் 'புஷ்டி மார்க்கி பனியா'என்று பெயர். வாணிஜ்யன், வாணியன் என்பதே 'பனியா'என்பது. இவர்கள் குங்குமப் பூவால் நாமம் போட்டுக் கொள்பவர்கள்;துளஸிமணி மாலை தவறாமல் போட்டுக் கொண்டிருப்பவர்கள். காந்தி அவர்களில் ஒருவர்தான். பூர்வ கால ஜைன பாரம்பரியத்தால்தான் அவர் ஒரேயடியாய் அஹிம்ஸை, அஹிம்ஸை என்றது.

"தன் உடம்பு கொழுக்க வேண்டும் என்பதற்காக இன்னொரு உயிரின் உடம்பைக் கொலை பண்ணித் தின்கிறவனிடம் அருள் எப்படி உண்டாகும்?"என்று திருவள்ளுவர் "புலால் மறுத்தல்"ÜFè£óˆF™ «è†Aø£˜.

தன்ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊனுண்பான்

எங்ஙனம் ஆளும் அருள் ?

இவனிடம் அருள்தன்மை இல்லாவிட்டால் இவனுக்கு மட்டும் எப்படி ஈஸ்வரன் அருள் பண்ணுவான்?அருள், அன்பு என்று சொல்லிக்கொண்டு மாம்ஸ போஜனமும் பண்ணுவதென்றால் அது ஒன்றுக்கொன்று பொருந்தாததாகத்தான் தோன்றுகிறது. ஒரே ஒரு ஈஸ்வரன்தான் அம்மையும் அப்பனுமாக இருக்கிறான். அவனுக்கே நாம் இத்தனைபேரும் (மநுஷ்யர்கள் மட்டுமில்லை. மிருகம், பக்ஷி எல்லாமும்தான்) குழந்தைகள் என்றால் அப்புறம் ஒரு மநுஷ்யன் மிருகம், பக்ஷி இவற்றை ஆஹாரம் பண்ணுவது ப்ராத்ரு ஹத்திதான் (உடன் பிறப்பைக் கொலை செய்வதுதான்). 'நான்-வெஜிடேரியனிஸ'த்தை ஆதரித்தால் ஸர்வஜீவ ஸஹோதரத்வம் என்பதற்கு அர்த்தமில்லாமல் போகிறது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)**

**மரக்கறியில் ஹிம்ஸை இல்லையா ?**

**இ** ப்படிச் சொன்னால் உடனே திருப்பிக் கொள்கிறார்கள். "மிருகம் பக்ஷி மட்டும்தானா?மரம், செடி, கொடி, பயிர் இவையும் ஈசன் குழந்தைகள்தான். அவற்றுக்கும்தான் உயிரும், உணர்ச்சிகளும் இருக்கின்றன. ஜகதீஷ்சந்திர போஸ் முதலியவர்கள் சொல்லியிருக்கிறார்களே!அதனால் சாக உணவு என்பதும் ஜீவஹத்திதான்"என்கிறார்கள்.

இதற்கு நான் ஸமாதானம் சொல்லியாக வேண்டும். ஜே.ஸி. போஸுக்கு எத்தனையோ யுகம் முந்தியே வேதாதி சாஸ்திரங்கள் பயிர், பச்சை, மரம், மட்டை எல்லாம் உயிருள்ளவை என்று சொல்லித்தான் வந்திருக்கின்றன. ஆனாலும் ஈஸ்வர நியதியில் நல்லது போலவே கெட்டது, ஸௌக்யம் போலவே கஷ்டம் எல்லாமும் சேர்ந்து சேர்ந்துதான் இருக்கிறது. 'இன்ஸ்டிங்க்டிவ்'ஆகவும் (உள்ளுணர்ச்சிப் பிரகாரமும்), தேஹத்தின் இயற்கையான தன்மையைப் பொருத்தும் சிங்கம், புலி முதலான பிராணிகள் ஜீவஹிம்ஸை பண்ணித்தான் ஜீவிக்க வேண்டும் என்று ஈஸ்வர நியதியே இருக்கிறது. மநுஷ்யன் விஷயத்தில் மாத்திரம் இவன் எதையும் ஆலோசித்துத் தெளிந்து முடிவு எடுக்கும்படியாக அறிவு விசேஷத்தை (ஈசன்) கொடுத்திருக்கிறான். அதனால், இந்த பிரபஞ்ச நாடகத்தில் இவன் முழுக்கவும் நல்லதுதான் வேண்டும், ஸௌக்யம்தான் வேண்டும் என்று பண்ணிக்கொள்ள முடியாமல் 'நேச்சர்'என்ற பெயரில் ஈஸ்வரன் கட்டிப் போட்டாலும், இப்படிக் கட்டிப்போட்ட கயிறு நீளுகிற எல்லைக்குள்ளாவது இவன் கூடியமட்டும் கெட்டதைத் தள்ளி நல்லதையும், கூடியமட்டும் கஷ்டத்தைத் தள்ளி ஸௌக்யத்தையும் தேடி அடைய வேண்டியவனாக இருக்கிறான். எதையோ தின்று தானாக வேண்டும். இல்லாவிட்டால் சாக வேண்டியதுதான் என்ற necessity இவனுக்கு இருக்கிறது - இயற்கை அப்படிக் கட்டி வைத்துருக்கிறது. எங்கேயோ லக்ஷத்தில் ஒருத்தனாக லோக வாழ்க்கையைப் பொருட்படுத்தாமலே உதறி

விட்டுப் போகிறவனைத் தவிர மற்ற எல்லாரும் இந்த யதார்த்தத்தை அநுஸரித்துத்தான் போகணுமே தவிர, 'சாலஞ்ஜ்'பண்ணி முடியாது. 'ஸரி, எதையோ தின்னத்தான் வேண்டுமென்றால், கூடியவரை கெடுதலை, கஷ்டத்தை உண்டாக்காமல் அமைத்துக்கொள்ளக்கூடிய ஆஹார முறை என்ன?'என்று பார்ப்பதே இவன் செய்ய வேண்டியது. இருப்பதில் குறைச்சலான ஹிம்ஸை தருவது பயிர் பச்சைகளையும் காய்கறிகளையும் சாப்பிடுவதுதான்.

பயிர்கள் நன்றாக முற்றிச் சாய்ந்த பிற்பாடுதான், அதாவது தாமே ஜீவனத்தை முடித்துக்கொண்ட பின்தான், தானியம் அடித்து எடுத்துக் கொள்கிறோம். காய்கறிகளைப் பறிப்பதால் செடியையே நாம் கொன்றுவிடவில்லை. கத்தரிக்காய், வெண்டைக்காய் போன்றவற்றை நாம் ஒரு கொடி செடியிலிருந்து எடுப்பதால் அந்தச் செடிக்கு நம் நகத்தைக் கிள்ளினால், அல்லது ரோமத்தைப் பிடுங்கினால் வலிக்கிற அளவுக்குத்தான் வலி உண்டாகும். அதோடுகூட மநுஷ்யனுக்கும் மிருகங்களுக்கும் pain (வலியுணர்ச்சி) என்று உண்டாவதைவிட, தாவர வர்க்கத்துக்கு 'ஸென்ஸிடிவிடி'(உணர்ச்சி நுட்பம்) குறைச்சலானதால் pain-உம் குறைச்சல் தான் என்றோ 'ரிஸர்ச்'பண்ணிச் சொல்கிறார்கள். அப்படியே ஸமூலம் கீரை மாதிரியானவற்றையும், கிழங்கு ஹதமே பண்ணிச் சாப்பிடும்போது கூட, நாம் அவற்றைப் பிடுங்காவிட்டாலும் எப்படியும் அவையே அதற்குப் பிறகுச் சில நாளில் வாடிவிடப் போகிறவைதான். ஆகவே இந்த அம்சங்களையும் நம் necessity-ஐயும் கருத்தில் கொண்டு பார்த்தால் சாக போஜனம்தான் comparative-ஆக மினிமம் ஹிம்ஸை உள்ளது என்று தெரிகிறது. அதனால் இதையே மநுஷ்யர்களாகப் பிறந்த நாம் ஏற்க வேண்டியவர்களாயிருக்கிறோம்.

ஸந்நியாசிகளுக்குப் பூர்ண அஹிம்ஸை விதிக்கப்பட்டிருப்பதால் அவர்கள் நிமித்தமாகக் கறிகாயைப் பறித்து எடுக்கிற சின்ன வலிகூட தாவரங்களுக்கு உண்டாகக் கூடாது என்றும், அவர்கள் தாங்களாகவேதான் சாப்பிட வேண்டும் என்றும் விதித்திருக்கிறது. ' **ஜீர்ண பர்ணாசிந : க்வசித்** 'என்பது இதைத்தான். 'ஜீர்ணபர்ணம்'என்றால் சருகு. 'ஆசிந:'என்றால் ஆஹாரம் செய்கிறவர்கள். தானியங்கள் கூட முளைக்கிறதோ இல்லையோ?அதனால் அவற்றுக்குக் கரு இருப்பதாக அர்த்தம். அதை ஒரு ஸந்நியாஸி சாப்பிட்டால் கர்ப்பச் சேதந்தான், ஜீவஹத்திதான் என்று அதையும் தள்ளச் சொல்லி இங்கே 'ஐடியலை'ரொம்பவும் கடுமையாக வைத்திருக்கிறது. ஸந்நியாஸி ஒரு சாத்துக்குடியோ, கொய்யாப்பழமோ, விளாம்பழமோ சாப்பிடும்போதுகூட ஸர்வ ஜாக்கிரதையாக ஒரு விதையைக்கூடத் தின்றுவிடாமல் நீக்கிவிட்டுத் தான் சாப்பிடணும். இப்படி மஹரிஷிகள் சுத்தமான பழ ஆஹாரம் சாப்பிட்டதுதான் நிஜமான 'பலஹாரம்'. 'பலம்'என்றால் 'பழம்'. இப்போது அன்னத்தை மட்டும் நீக்கி, தோசை, இட்லி, ஸேவையில் பல தினுஸு, 'தொட்டுக் கொள்ள'சட்டினி, ஸாம்பார், கொத்ஸு, மிளகாய்ப் பொடி என்று பல விதங்கள் என்பதாகச் சாப்பிடுவதைப் 'பலஹாரம்'என்று ஆக்கி கொண்டு அவஸ்தைப் படுகிறோம்!நிஜமான பலஹாரம் பண்ணினால் ஸத்வமும் சாந்தமும் உண்டாகும். காமம் (ஸெக்ஸ் என்கிறார்களே அது) ரொம்பவும் கட்டுப்பட்டுவிடும். குடும்பக் கட்டுப்பாடு என்று தனியாக ஒன்று பண்ணவேண்டிய அவசியமே இராது.

'தாவரத்தை மட்டும் ஹிம்ஸிக்கலாமா?'என்பதற்கு இன்னொரு ஜஸ்டிஃபிகேஷன் இதில்தானிருக்கிறது. ஒரு பிராணியைக் கொலை பண்ணிவிடுவதுபோல ஆஹாரத்துக்காகத் தாவர வர்க்கத்தை நாம் அநேகமாகக் கொலை பண்ணுவதில்லை என்றும் அப்படியே அவற்றை ஹிம்ஸிக்க நேர்ந்தாலும், அப்போது கூட பிராணிகளுக்கு உள்ள அளவுக்கு வலியுணர்ச்சி அவற்றுக்கு ஏற்படுவதில்லை என்றும் சொன்ன ஸமாதானம் நாம் அவற்றை எப்படி ஊீயீமீநீமீ பண்ணுகிறோம் (பார்க்கிறோம்)?'என்பது வைத்துச் சொன்னது. இப்போது மாம்ஸ போஜனமும் சாக போஜனமும் நம்மை எப்படி ஊீயீமீநீமீ பண்ணுகின்றன என்பதை வைத்தும் ஸமாதானம் சொல்கிறேன். நமக்குச் சித்தசுத்தியும், ஸத்வ குணமும் உண்டாவதற்கு மாம்ஸ போஜனம் உதவுவதில்லை. சரீரம் வேண்டுமானால் ஸ்ட்ராங்காக ஆகலாமே ஒழிய, தியானாதி அப்யாஸங்களுக்கு நான்-வெஜிடேரியன் ஆஹாரம் அநுகூலம் செய்வதில்லை;அதோடு 'கம்பேர்'பண்ணினால் சாக போஜனம்தான் ஆத்மாபிவிருத்திக்கு அநுகூலமாயிருப்பது. சாக போஜனத்திலும் ஆத்மாபிவிருத்தியை

முன்னிட்டு தள்ளவேண்டிய பல பதார்த்தங்கள் இருந்தபோதிலும் மாம்ஸத்தைவிட இதுதான் மேலானதாக இருக்கிறது.

மனஸுக்கு ஸம்மதமாயிருக்கிறதா என்றுதான் யோசித்துப் பார்க்கலாமே!ஒரு ஆட்டையோ மாட்டையோ அது கதறக் கதற வெட்டுகிற மாதிரிதான் கீரையைப் பிடுங்கி நறுக்குவது நம் மனஸுக்குத் தோன்றுகிறதா?இந்த 'ஸைகாலஜிகல் ஃபாக்ட'ருக்கு ஒரு முக்கியத்வம் உண்டு. மாம்ஸத்திலேயே ஒரு பிராணியின் ஊனைத் தின்னலாம், இன்னொரு பிராணியின் ஊனைத் தின்றால் நிஷித்தம் என்று வைப்பதற்கு (ஸைகாலஜிகல் தவிர) வேறே காரணம் இல்லை. 'அய்யய்யே!பன்றி மாம்ஸமா?'என்று ஹிந்துக்களில் மாம்ஸ போஜனிகள் முகத்தைச் சுளிப்பார்கள். ஆனால் அந்நிய தேசங்களில் அதையும் தின்னுகிறார்கள். இப்படியே 'நண்டையும், நத்தையும் கூடச் சீனாக்காரன் தின்னுகிறானே!என்று நம்மூர் நான்வெஜிடேரியன்களே அருவருப்புடன் சொல்கிறார்கள். அப்புறம், மாம்ஸம் தின்பதிலேயே 'ரீக்ஷீணீபீணீமீ வீஷீஸீ' வேறு. 'ஸைபருக்குச் சொல்கிறது*தான் சாப்பிடுவோம், மத்ஸ்யம் மட்டும்தான் சாப்பிடுவோம், மற்றபடி அசைவ வஸ்து எங்களிடம் வரக்கூடாது'என்பவர்கள் உண்டு.

எதெதையோ பிடித்துத் தின்றாலும் எதனாலோ குதிரை மாம்ஸம் தின்றால் மட்டமம் என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

'வார்'(உலக யுத்தம்) நடந்தபோது எல்லாவற்றுக்கும் 'ஸ்கார்ஸிடி'உண்டான ஸமயத்தில் ஜெர்மனி தேசத்துக்காரர்கள் குதிரை மாம்ஸம் சாப்பிட ஆரம்பித்தார்கள். இதற்காக அவர்களை மாம்ஸ போஜனிகளேயான மற்ற எல்லா மேல்நாட்டுக்காரர்களும் மட்டம் தட்டிப் பரிஹாஸம் செய்தார்கள்.

இதே ரீதியில் சைவ உணவுக்காரர்கள் பொதுவாக அத்தனை அசைவ உணவுக்காரர்களையும் கேள்வி கேட்டு மடக்கலாம் என்று தோன்றுகிறது. நம் ஊர்க்காரர்களான அசைவர்கள் 'பருப்புத் தின்னி பார்ப்பான்'என்று ஸ்வாதீனமாகக் கேலி செய்கிறபோது, சைவமாகச் சாப்பிடுபவர்கள். என்னதான் பருப்பும், கிருப்பும் சாப்பிட்டாலும் ஏதோ பார்த்தால் வேண்டுமானால் 'கஷுக், முஷுக்'என்று தொந்தியும் தொப்பையுமாக ஆக முடியுமே தவிர, இது ஊளைச் சதைதானேயொழிய நல்ல கட்டுமஸ்தாக தேஹ பலம் பெற்றதாகாது என்ற அர்த்தத்தில் சொல்கிறார்கள். வெளி தேசத்துக்காரர்களோ இப்படி ஸ்வாதீனத்தின் மேல் இல்லாமல் இளக்காரமாகவே நம்மில் அங்கே போகிறவர்களிடம், "நீங்கள் என்ன காய்கறிகளையே தின்று கொண்டிருக்கிறீர்களே!உங்கள் தேசத்தில் எவ்வளவு மாம்ஸம் கிடைக்கும்?அத்தனையும் 'வேஸ்ட்'பண்ணிவிட்டு, நீங்களும் நோஞ்சான் பட்டாளங்களாக ஆகியிருக்கிறீர்களே!'என்று மட்டந்தட்டிக் கேட்கிறார்கள். மற்றவர்களைவிட ஹிந்துக்களிலேயே அதிகம் வெஜிடேரியன்கள் இருப்பதால் தான் இவர்கள் வலுவிழந்து துருக்கர்கள், வெள்ளைக்காரர்கள் ஆகியவர்களிடம் தேசத்தைப் பறிகொடுத்தார்கள் என்று சொல்பவர்கள்கூட உண்டு. இந்த விஷயத்துக்கு அப்புறம் வருகிறேன். இப்போது மாம்ஸம் சாப்பிடாததற்காக நம்மைப் பரிஹாஸம் செய்கிற நான்வெஜிடேரியன்களிடம் நாம் எப்படித் திருப்பிக் கொள்ளலாம் என்று சொல்லிக் கொடுக்கிறேன். "மாம்ஸம் சாப்பிடுகிற நீங்களே சில மாம்ஸ தினுஸுகளைச் சாப்பிடுகிறவர்களைப் பரிஹாஸமும் செய்கிறீர்கள் அதுமட்டுமில்லை. மாம்ஸத்திலேயே உசத்தி, தாழ்த்தி ஆகிய இத்தனை வகைகளைச் சாப்பிடுகிறவர்களும் ஒரு முகமாகச் சேர்ந்துகொண்டு, இப்போதும் இந்த உலகத்தில் எங்கேயோ வனாந்தரங்களில் இருக்கிற ஆதிவாஸிகளில் சிலபேர் நரமாம்ஸம் தின்னுகிறார்களே, அவர்களை ரொம்ப ரொம்ப மட்டமாக நினைத்து 'நரமாம்ஸ பக்ஷிணி (சிணீஸீஸீவீதீணீறீ) என்று தூற்றுகிறீர்கள். நரமாம்ஸத்தை விட்டு மற்ற மாம்ஸங்களைச் சாப்பிடுகிற நீங்கள் அந்த 'கானிபாலை'விட ரொமபவும் உயர்ந்தவர்கள் என்று பெருமை கொண்டாடிக் கொண்டால், எந்தப் பிராணியின் மாம்ஸத்தையுமே சாப்பிடாத நாங்கள் உங்களையும்விட உசந்தவர்கள்தானே?நீங்கள் எப்படி ஒரு பக்கம் நரமாம்ஸ போஜனத்தையும் கேலி பண்ணிக்கொண்டு இன்னொரு பக்கம் எங்களுடைய சாக போஜனத்தையும் மட்டந் தட்டுவது பொருத்தம்?"என்று அவர்களைக் கேட்க வேண்டும். "இந்தியர்கள் எல்லாரும் மட்டும் மாம்ஸம் சாப்பிட ஆரம்பித்தால், அங்கே உணவுப் பிரச்னையே வராது என்கிறீர்கள்;உங்கள் தேசங்களிலுந்தானே 'ஸ்கார்ஸிடி'சில ஸமயங்களில் வருகிறது?அதனால் - உங்களுக்குத்தான் எதையும் கெட்டுப்

போகாமல் பாடம் பண்ணி வைக்க முடிகிறதே செத்த மனிதர்களையும், உபயோகமில்லாத கிழங்களையும் ஸரிப்படுத்திப் பக்குவம் பண்ணி .....?"என்று சொன்னாலென்ன என்றுகூடத் தோன்றுகிறது (சிரிக்கிறார்).

இன்னொன்று பழம் அழுகிறது;காய்கறிகள் கெட்டுப்போகின்றன என்றால் இவை

துர்நாற்றமடிக்கத் தான் செய்யும். கழிநீரைக் கொட்டினால் அதுவும் துர்கந்தம் அடிக்கத்தான் செய்கிறது. ஆனாலும் இந்த நாற்றமெல்லாம் ஒன்றுமே இல்லை என்கிற மாதிரி அல்லவா அந்நிய பதார்த்தங்களைச் சமைக்கிறபோது வயிற்றைப் புரட்டி எடுக்கிறது?அதுகள் அழுகி கிழுகிக் கெட்டுப் போனாலோ குடலையே பிடுங்கியெடுக்கிற மாதிரி காத தூரத்துக்குத் துர்வாடை!(இங்கே இன்னொன்றும் சொல்லணும். முட்டைகோஸ், பீட்ரூட் மாதிரியான இங்கிலீஷ் வெஜிடபிள்கள் கூடாது என்பதற்கும் இதிலேயே காரணம் தெரிகிறது. அந்தக் காய்கறிகளை வேக வைக்கிறபோதும், அந்தக் கழிவு நீரைக் கொட்டிய இடத்திலும் அந்நிய பதார்த்தம் போலவே வாடை வருவதைப் பார்க்கலாம்.)

------------------------------------------------------------------------------------------------------------------------

* º†¬ì

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

மரக்கறி உணவின் சிறப்புகள்

ம நுஷ்யனின் மூக்குக்கு ஒத்துக்கொள்ளாதது மட்டுந்தானென்றில்லை. அவனுடைய வயிற்றுக்கு, ஜீர்ணக் கருவிகளுக்கு (digestive organs)க்கூட மாம்ஸ போஜனம் ஒத்துக்கொள்ளாததுதான் என்று இப்போது (1957 நவம்பரில் சென்னையில்) நடந்த World Vegetarian Congress-ல் பேசிய பலர் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். 'கான்ஸ்டிட்யூஷனை', தேஹ வாகை வைத்து மாம்ஸத்தைத் தின்றால்தான் ஜீவிக்க முடியும் என்றிருக்கிற புலி, சிங்கம் மாதிரியான மிருகங்களின் இரைப்பை, குடல் முதலிய உறுப்புகளோடு மநுஷ்யனின் ஜீர்ண இந்திரியங்களை ஒப்பிட்டு, மநுஷ்ய தேஹவாகு மாம்ஸ போஜனத்துக்கு ஏற்பட்டதே இல்லை என்று இவர்கள் நிறையக் காரணம் காட்டியிருக்கிறார்கள்.

கான்ஸ்டிட்யூஷனலாக மாம்ஸம் சாப்பிடக் கூடாத மிருகங்களும் உண்டு. அவற்றுக்கு நமக்குள்ள 'புத்திசாலித்தனம்'இல்லாததால் அவை மாம்ஸத்தின் இல்லாததால் அவை மாம்ஸத்தின் கிட்டேயே போவதில்லை. ஆடும், மாடும், மானும், குதிரையும், யானையும் தப்பித் தவறியாவது மாம்ஸம் தின்னுமா ஆனால் மிருகங்களுக்கு இல்லாத ஆறாவது அறிவும் இருக்கிற மநுஷ்யன் எதை விலக்கி எதைக் கொள்ள வேண்டும் என்ற வியவஸ்தயைப் புரிந்து கொள்ளாமல் மாம்ஸமானாலும் ஸரி, மற்ற ஆஹாரமானாலும் ஸரி, இரண்டையும் தின்னுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறான். மிருகங்களில் பூர்ணமாக மாம்ஸத்தைத் தள்ளியவையாகச் சிலது இருப்பதுபோலவே, மாம்ஸத்தைத் தவிர வேறே எதுவுமே தின்னாதவையாகச் சிலது இருக்கின்றன. நாய், பூனை, காக்காய், குருவி மாதிரிச் சிலதான் இரண்டு தினுஸையும் தின்பவை. மநுஷ்யன் இவற்றின் லெவலில்தான் இருப்பதா இதிலே பகவானும் கொஞ்சம் வேடிக்கை பார்க்கத்தான் செய்கிறான். மநுஷ்யக் குடலுக்கு மாம்ஸம் எடுத்ததில்லை என்று இப்போது வெஜிடேரியன் ஸயன்ஸ் நிபுணர்கள் சொன்னாலும், மாம்ஸம் இவனுக்கு அடியோடு ஜெரிக்காமலே இருக்கும்படி மாம்ஸ போஜனம் பண்ணவே மாட்டானல்லவா இப்போது கல்லைத் தின்கிறானா? இரும்பைத் தின்கிறானா? இப்படியே மாம்ஸத்தையும் தள்ளியிருப்பானல்லவா?இவனுக்குக் கொஞ்சம் சிரமப்பட்டாவது ஜெரிக்கும்படியாகவும் பண்ணி, அதே ஸமயத்தில் அஹிம்ஸா ரீதியிலும், தன்னுடைய ஸத்வகுண அபிவிருத்தியையும் உத்தேசித்து எந்த ஆஹாரம் நல்லது என்று ஆராய்கிற அறிவையும் கொடுத்து, ஒன்றோடொன்று மோதவிட்டு வேடிக்கை பார்க்கிறான். இதிலே நாக்குதான் ஜயித்து, புத்தி தோற்றது என்று மநுஷ்யன் பண்ணிக் கொண்டால் இவனைவிட அசடு இல்லை.

மாம்ஸம் தின்றால்தான் பலம் என்கிற பாயின்ட்டுக்கு வருகிறேன். இப்போது ரொம்பவும் பலத்தைக் குறிப்பிட வேண்டுமானால் என்ன சொல்கிறோம்? 'சிங்க பலம்', 'புலி பலம்' என்றுதான் சொல்கிறோம். மற்றப் பிராணிகளுக்கு இல்லாத பலம் யானைக்கே இருக்கிறது. இந்த சக்தி மாம்ஸம் சாப்பிட்டா அதற்கு வந்திருக்கிறது?யானை அப்படிப்பட்ட பதார்த்தத்தைத் திரும்பிக்கூடப் பார்க்காதே!' **கஷுகைஸ் த்ருணைர் வநகஜா பலிநோ பவந்தி** 'என்று பர்த்ருஹரி வசனம் இருக்கிறது. 'சுஷ்கம்'தமிழில் 'சுக்கம்'ஆகும். நெஞ்சில் ஈரம் இல்லாமல் பணத்தைக் கெட்டியாய் வைத்துக் கொள்பவனை 'ஆசாமி ரொம்ப சுஷ்கம்'என்கிறோம். இங்கே 'சுஷ்கை:த்ருணை:'என்றது காய்ந்த புல்லை. புல்லையும் தேங்காய் மட்டையையும் தின்றுவிட்டே யானை ஸகல மிருகங்களையும்விட பலமுள்ளதாயிருப்பதை இங்கே சொல்லியிருக்கிறது. இதிலே விசேஷம், இத்தனை பலம் இருந்தும் அது புலி, சிங்கம் மாதிரிப் பாய்ந்து ஹிம்ஸை பண்ணாமல் சாந்தமாயிருக்கிறது. அதற்குத் தேஹபலத்தோடு புத்தி பலம், ஞாபக சக்தி எல்லாமும் நிறைய இருக்கிறது. மநுஷ்யனுக்கு அடங்கி ஒத்துழைக்கிற பவ்ய குணமும் இருக்கிறது.

மலையாளம், பர்மா முதலான இடங்களில் பெரிய பெரிய மரங்களைத் தூக்கிக் கொண்டுபோய் வேலை செய்வதெல்லாம் யானைதான். ஆனதால் வெஜிடேரியன் ஆஹாரத்தினாலேயே நல்ல பலமும், அதுமட்டுமின்றி புத்தி, பணிவு, ஸஹாய குணம் முதலான ஸத்வ அம்சங்களும் பெறலாமென்று தெரிகிறது.

**ஸர்ப்பா : பிபந்தி பவநம் ந ச துர்பலாஸ்தே**

**சுஷ்கைஸ்-த்ருணைர் வநகஜா பலிநோ பவந்தி ***

**கந்தை : பலைர் முநிவரா : க்ஷபயந்தி காலம்**

**ஸந்தோஷ ஏவ புருஷஸ்ய பரம் நிதாநம் ***

"வெறும் காற்றையே உட்கொள்கிற பாம்பு அதனால் துர்ப்பலமாக இல்லை. வற்றின புல்லைத் தின்கிற காட்டு யானை மிகவும் பலமுள்ளதாயிருக்கிறது. கிழங்கையும் பழத்தையுமே சாப்பிட்ட முனிவர்கள் மரணத்தை ஜயித்து சிரஞ்ஜீவிகளாயிருக்கிறார்கள். ஆகையால் மனஸின் நிறைந்த திருப்திதான் ஒரு ஜீவனுடைய ஆயுராரோக்யாதிகளுக்கு மூலதனம்;சாப்பாடு இல்லை"என்று அர்த்தம். 'சாப்பாடு இல்லை'என்று ஸ்லோகத்தில் நேராகச் சொல்லாமல் தொக்கி நிற்கிறது.

எனக்கு அப்போது இளவயஸு. ப்ரொஃபஸர் ராமமூர்த்தி என்று ஒருத்தர் இருந்தார். ராமமூர்த்தி ஸாண்டோ என்றே சொல்வார்கள். தெலுங்கர். ஸர்க்கஸ் கம்பெனி நடத்திவந்தார். நடத்தினது மட்டுமில்லை, அவரே ஸாண்டோவானதால் ஆச்சரியமான feats பண்ணிக் காட்டுவார். ஒன்று சொல்கிறேன்:தன் இடுப்பைச் சுற்றிப் பக்கத்துக்கு ஒன்றாக Ford å¼ ¬ó, èJŸø£™ è†®, ªè£‡´, Þó‡®¡ â¡T¬ù»‹ vì£˜† ð‡EM´õ£˜. ÜŠð®«ò Þó‡´ñ£è Üõ¬ó ï²,Aˆ ªî£¬èò™ ð‡EM´«ñ£ â¡Á üùƒèœ HóIˆ¶Š ð£˜Šð£˜è÷£‹. ñ¸wòó£ù£™ ªè£…êƒ Ãì Üô†®, ªè£œ÷£ñ™, Ü‰î Þó‡´ è£¬ó»‹ Þó‡´ àœ÷ƒ¬èò£«ô«ò ñPˆ¶, ªè£‡´ Ü¬õ æì º®ò£îð® GÁˆF ¬õˆF¼Šð£ó£‹. Üõ¼¬ìò è‹ªðQ °‹ð«è£íˆF™ 'è£‹Š'ð‡EJ¼‰î«ð£¶ ï£¡ õ‰¶ ú˜,èv ð£˜,è«õ‡´ªñ¡Á ªó£‹ð¾‹ «è†´, ªè£‡ì£˜. ñìˆF™ ÜŠð® ú‹Hóî£òI™¬ôªò¡Á ªê£¡ù¶‹, ñìˆ¶,°Š H¡ù£® Mvî£óñ£è ÌI à‡´, Üƒ«è î¡ «è£w®J™ Cô «ð«ó£´ õ‰¶ Cô 'ú˜,èv ÜJ†ìƒ'è¬÷Š ð‡E, è£†®ù£˜. ÞŠð®»‹ å¼ «îý ðôº‡ì£ â¡Á Ý„êKòñ£J¼‰î¶. Üõ˜ è¬î âîŸ°„ ªê£™A«øªù¡ø£™ ÞŠð®Šð†ì ðLwì˜ ²ˆî ªõT«ìKòù£è Þ¼‰îõ˜ â¡ðîŸè£èˆî£¡. ñý£ ðLwìó£ù Ý…ü«ïò«ó ê£è«ð£üQò£ù õ£ùó‹î£«ù?

ஏதோ டி.பி. மாதிரிச் சில உடம்பு (வியாதி)களுக்கு மாம்ஸாதிகளை டாக்டர்கள் ப்ரிஸ்க்ரைப் பண்ணினாலும் வயிற்று வியாதிகள், ப்ரஷர், ஹ்ருதய ரோகங்கள் என்றெல்லாம் ஏற்பட்டால்

மாம்ஸத்தில் யீணீமீ ஜாஸ்தி, அது கூடாது என்று நிறுத்தித்தான் விடுகிறார்கள். நான்வெஜிடேரியன்களுக்கு எந்த உடம்பு வந்தாலுமே சீக்கரத்தில் குணமாவதில்லை என்றுகூடச் சொல்வதுண்டு.

சாக போஜனத்துக்குப் பலம் இல்லாமலில்லை என்பதற்கு இன்னொன்றும் சொல்கிறேன். சிங்கம், புலி மாதிரி ரொம்பவும் பலமுள்ள எந்த 'கார்னிவோரஸ் அனிம'லை (மாம்ஸம் சாப்பிடுகிற மிருகத்தை) எடுத்துக் கொண்டாலும் அது ஆஹாரமாகச் சாப்பிடுகிற பிராணி எப்படியிருக்கிறது என்று பாருங்கள். இது (சாப்பிடப்படும் பிராணி) சாக பக்ஷிணியாகத்தானிருக்கும். மாம்ஸ பக்ஷிணிகளான சிங்கமும் புலியும் சாக பக்ஷிணிகளான ஆடு, மாடு, மான் போன்றவற்றைத்தான் தின்னும்;இன்னொரு மாம்ஸ பக்ஷிணியைத் தின்னாது. சிங்கமும் புலியும் ஒன்றை யொன்று அடித்துக்கொண்டு சாகலாம்;ஆனாலும் இவற்றில் ஒன்றின் மாம்ஸத்தை இன்னொன்று தின்னாது. இதிலிருந்து மாம்ஸ பக்ஷிணிகளின் பலத்துக்கும் (அவை தின்கிற சாக பக்ஷிணிகளின் த்வாரா) காரணமாயிருப்பது புல்லும், தான்யமும், மட்டையுந்தான் என்று தெரிகிறதல்லவா?

வெஜிடேரியனுக்கு ஆதரவாக இத்தனை சொன்னாலும் லோக ரீதியில் நாக்கு ருசி, தேஹபுஷ்டி என்று எதையோ நினைத்து நீண்டகாலமாக நான்-வெஜிடேரியனிஸமும் இருந்துதான் வந்திருக்கிறது. ஆதியில் இதையெல்லாம்விடப் பெரிய காரணம் ஒன்று இருந்ததாகப் படிப்பாளிகள் சொல்கிறார்கள். 'அப்போதெல்லாம் ஓரிடத்தில் நிலையாக இல்லாமல் ஜன ஸமூஹங்கள் கூட்டங் கூட்டமாக இடத்தை விட்டு இடம் மாறிக் கொண்டேயிருந்தார்கள். ஆறு மாஸம், ஒரு வருஷம் என்று ஒரே இடத்தில் இருந்தால்தானே சாகுபடி செய்து அறுவடை பண்ணிச் சாப்பிட முடியும்?அந்தக் காலத்தில் 'அக்ரிகல்ச்ச'ரே (வ்யவஸாயமே) தெரியவும் தெரியாது. அதனால் வில்லையும் அம்பையும் வைத்துக் கொண்டு வேட்டையாடி மாம்ஸ போஜனம் செய்ய வேண்டியதாகவே இருந்தது. பாரம்பரியமாக அது மநுஷ்யனின் இயற்கையில் ஊறிப்போய்த்தான் பிற்காலத்தில் ஓரிடத்தில் 'ஸெட்டில்'ஆகி, 'அக்ரிகல்ச்சர்'தெரிய ஆரம்பித்த பின்பும், கூடவே மாம்ஸ போஜனமும் தங்கி விட்டது'என்கிறார்கள். இது ஸரியோ, தப்போ, அவ்வளவு எனக்கு ஆராய்ச்சி தெரியாது. ஆனாலும் லோகம் பூராவும் மாம்ஸ போஜனம் விடாமல் இருந்து தான் வருகிறது. இதைத்தான் ஒப்புக்கொண்டு, - மனஸுக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் யதார்த்த நிலைமையென்றிருக்கிறதே அதை ஒப்புக்கொண்டு - அதிலிருந்துதான் லக்ஷ்யமான ஆதர்ச நிலைமைக்குப் போக வேண்டுமென்று நம் சாஸ்த்ரகாரர்கள் வர்ணாச்ரம விபாகத்திலே இன்னின்னார் மாம்ஸ போஜனம் பண்ணலாம், இன்னின்னார் பண்ணக்கூடாது என்று வைத்தார்கள். சிலர் பண்ணலாம் என்று வைத்ததால் அப்படியேதான் அவர்கள் சாச்வதமாக பண்ணிக் கொண்டிருக்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்டதாக அர்த்தமில்லை. இவர்களும் போகப்போக, வயஸு ஏற ஏற இதை விட்டு விட்டு ஸாத்விகமான சைவ ஆஹாரத்தை மேற்கொள்ள வேண்டுமென்பதற்கு வழி வகுத்திருக்கிறார்கள்.

---

### தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### பூர்வ வழக்கும் கூலி கால நடப்பும்

'**ஆ** தியில் பிராம்மணர்கள் நான்-வெஜிடேரியன் களாகத்தான் இருந்தார்கள்;ரிஷிகள் அந்நிய பதார்த்தம் சாப்பிட்டிருக்கிறார்கள்'என்றெல்லாம் சொல்லக் கேட்கிறோம். இப்படிச் சொல்கிறவர்கள் சாஸ்திரங்களைப் பார்த்து அந்நிய பதார்த்தம் என்று எந்தெந்தப் பெயர்களைச் சொல்கிறார்களோ அதெல்லாமே அநேக காய்கறிகள், மூலிகைகள், தான்யங்கள் ஆகியவற்றின் பெயர்தான் என்று நம்மில் சாஸ்திராபிமானமுள்ள ஆசார சீலர்கள் காட்டுகிறார்கள். 'கல்யாண்', 'கல்யாண் கல்பதரு'என்று கோரக்பூரிலிருந்து பத்திரிகை போடுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இந்த விஷயமாக நிறைய எழுதி, எந்தக் காலத்திலும் எவருக்கும் நம் சாஸ்திரங்கள் மாம்ஸ போஜனத்தை அங்கீகரிக்கவேயில்லையென்று வாதம் பண்ணி வருகிறார்கள். அச்வமேதத்தில் ஒரு குதிரையை அங்க அங்கமாக ஆஹுதி பண்ணியதாக நாம் நினைப்பது கூட வாஸ்தவத்தில்

அந்தந்தப் பெயருள்ள மூலிகையின் இன்னின்ன பாகத்தைப் போடுவதுதான் என்று எழுதியிருக்கிறார்கள்.

அப்படியே ஆதியில் ஸர்வஜனங்களும் நான்-வெஜிடேரியன்களாக இருந்ததாக வைத்துக்கொண்டாலும் கூட, சாஸ்திரத்திலேயே பூர்வயுகங்களிலிருந்த சில வழக்கங்கள், மநுஷ்யர்கள் அல்பசக்தர்களாகிவிட்ட இந்தக் கலிக்கு வர்ஜம் (தள்ளுபடி) என்று வைத்து, கலியில் வர்ணத்தில் பிராமணர்கள் சாக போஜனம்தான் பண்ண வேண்டும் ஆச்ரமத்தில் ஸந்நியாஸிகள் சாப்பாட்டிலே மாத்திர மில்லாமல் ஸகல விஷயங்களிலும் பூர்ண அஹிம்ஸை அநுஷ்டிக்க வேண்டும் என்று வைத்திருப்பதைத்தான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

உபநிஷத் பாஷ்யத்தில் ஓரிடத்தில் ஆசார்யாள் சொல்லியிருக்கிறதிலிருந்து பூர்வ யுக புருஷர்களுக்கும் நமக்கும் சக்தியிலே ரொம்ப வித்யாஸமுண்டு என்று தெரிகிறது. பிருஹதாரண்யக(உபநிஷ)த்திலே, "அஹம் ப்ரஹ்மாஸ்மி - நானே பிரம்மம்தான் - என்று தேவர்களில் பலபேர் கண்டு கொண்டு அப்படியே ஆனார்கள். ரிஷிகளிலேயும் அப்படி ஆனவர்கள் உண்டு. உதாரணமாக வாமதேவர், 'நானே மநுவாயிருந்தவன்;நானே ஸூர்யனாயிருந்தவன்'என்று சொன்னதெல்லாம் இப்படிப்பட்ட ப்ரம்மாநுபவத்திலேதான். ஆதிகாலத்திலிருந்த அந்த தேவர்களும், ரிஷிகளும் மட்டுந்தானென்றில்லை;இப்போதும் இந்தக் காலத்தில் நம்மிலிருக்கிற மநுஷ்யர்களில் கூட 'அஹம் ப்ரஹ்மாஸ்மி'என்று ஒருவன் அறிந்து கொள்ள முடியும். இப்படிப்பட்டவனும் அவர்களைப் போலவே ஸர்வமும் ஆகிறான். இவனுடைய மஹிமையை குறைக்கத் தேவர்களாலும் முடியாது"என்ற அர்த்தத்தில் மந்திரங்கள் வருகின்றன*. 'இப்போதும்'என்று உபநிஷத் நாளில் சொன்னது ஆசார்யாள் இருந்த காலத்துக்கும் பொருந்துவதாக ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்தில் காட்டி, எனவே வீர்யம் குறைந்த தற்கால ஜனங்களுக்குக்கூட ப்ரம்ம ஞானமும், அதனால் பெறுகிற மஹிமையும் ஸாத்தியந்தானென்று சொல்கிறார். அப்படிச் சொல்லும்போது, "நம் யுக்த்தில் உள்ள மநுஷ்யர்கள் வீர்யத்தில் ரொம்பவும் குறைந்தவகளானதால் இவர்கள் ப்ரம்ம வித்தியோபாஸனையால் ஸர்வ பாவ ஸித்தி பெறுவதென்பது ஸாத்தியமில்லையென்று நினைத்துவிடப் போகிறார்களேயென்றுதான் இந்த மந்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

ப்ரம்ம ஞானத்தைப் பற்றிய வரையில் மஹாவீர்யவான்களான வாமதேவாதிகளுக்கும் ஹீனவீர்யர்களான இக்கால ஜனங்களுக்குமிடையில் வித்யாஸமே இல்லை"என்கிறார்.

இப்படியாக, ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுவதில் வித்யாஸமில்லையென்று அவர் சொல்லும் போதே பூர்வ யுகத்துக்காரர்களை "மஹாவீர்யர்கள்"என்றும் தன் காலத்தவர்களை "அல்ப வீர்யர்""ஹீன வீர்யர்"என்றும் சொல்வதால், மற்ற சக்தி ஸாமர்த்தியங்களில் இப்போதிருப்பவர்கள் முன் காலத்தவரை விடக் குறைந்தவர்கள்தான் என்பதை ஆதரித்திருப்பதும் தெரிகிறது. அதனால்தான் அந்த யுகத்துகாரர்களுக்கு உண்டான சில பழக்கங்களை நாம் அநுஷ்டிக்கக் கூடாது என்பது. ஆரோக்கியசாலி ஒருத்தன் விருந்து சாப்பிடுகிறான் என்பதால் வியாதியஸ்தனும் சாப்பிட்டால் ஜீர்ணமாகுமா?பூர்வத்தில் ரிஷிகள் மாம்ஸ போஜனம் பண்ணினதாகவே வைத்துக் கொண்டலும் (நான் வெறும் assumption-க்குத்தான் இப்படிச் சொல்கிறேன்) அவர்களுக்கு மாம்ஸத்தால் கூட ராஜஸ, தாமஸ மனோவிகாரம் ஏற்பட முடியாதபடி அதை ஜீர்ணம் பண்ணிக் கொள்ளும் சக்தியும் (வயிற்றிலே ஜீர்ணம் பண்ணிக் கொள்வது மட்டுமில்லை;மனஸிலேயும் ஜெரித்துக் கொள்கிற சக்தி) இருந்தது;அப்படிப்பட்ட சக்தி இல்லாத நாம் அந்த மாதிரி பண்ணகூடாது என்று புரிந்து கொள்ள வேண்டும். அந்த யுகத்தில் ஆயிரும் வருஷம், பதினாயிரம் வருஷம் இருந்தார்கள்;லோகாந்தரங்களுக்கு சரீரத்தோடேயே போய்விட்டு வந்தார்கள்;மனோ சக்தியாலேயே என்னவோ ஆச்சர்யங்கள் பண்ணினார்கள் என்று படிக்கிறோமே!அதெல்லாம் செய்ய நமக்கும் சக்தி இருந்தால் அவர்கள் மாதிரியே நாமும் போஜனம் முதலானதுகளையும் வைத்துக் கொள்ளலாம்.

ஒரு த்ருஷ்டாந்தம் சொல்வதுண்டு. ஒரு காடு இருந்ததாம். அதன் பக்கத்தில் ஒரு பெரிய நதி, ஒரு பெரிய நதி, ஒரு சின்ன குட்டை இரண்டும் இருந்தனவாம். காட்டிலே தீப்பிடித்துக்

கொண்டதாம். அப்போது பலமான காற்று சேர்ந்து கொள்ளவே எரிகிற சருகுகள், விறகுத் துண்டுகள், மண் எல்லாம் அடித்துக் கொண்டு வந்து குட்டையிலும் விழுந்ததாம்;நதியிலும் விழுந்ததாம். குட்டையை மண்ணும் செத்தையும் பாதி அடைத்தது என்றால் பாக்கி பாதி அப்படியே அந்த உஷ்ணத்தில் வற்றி, மொத்தத்தில் குட்டை இருந்த இடம் தெரியாமல் ஆகிவிட்டது. மஹா நதியில் விழுந்த குப்பைக் கூளங்களை, அவை பற்றி எரிந்து கொண்டிருந்தாலும் அதன் பிரவாஹமே அணைத்து அடித்துக் கொண்டுபோய் ஸமுத்ரத்தில் விட்டு இருந்த இடம் தெரியாமல் பண்ணிவிட்டது. குப்பை குட்டையை இல்லாமல் பண்ணிற்று;நதியோ குப்பையை இல்லாமல் பண்ணிவிட்டது. இந்த மாதிரியான தோஷமாகத் தெரிகிற சில பழக்க வழக்கங்கள் பூர்வ காலத்தில் வீர்யத்தோடிருந்தவர்களைச் சேர்ந்தபோது அந்த தோஷம் அவர்கள் சக்தியில் அடிபட்டுப் போயிற்று;பலஹீனர்களான நாம் அந்த வழக்கங்களை கைக்கொண்டாலோ தோஷம் நம்மை அடித்துப் போட்டுவிடும். அவர்களுடைய சக்தி நமக்கு இல்லாததால், கலியுகத்தில் எப்படி இருக்கணுமென்று அவர்கள் சட்டம் போட்டுக் கொடுத்திருக்கிறார்களோ அதற்கு அடங்கித்தான் நாம் நடக்கணும். 'அல்டிமேட்'ì£è ÜU‹ú£ «ð£üù˜¶,°Š «ð£è˜î£¡ â™ô£¼‹ ºòŸC ªêŒòµ‹ â¡ð«î ïñ,è£ù î˜ñ‹.

------------------------------------------------------------------------

*Š¼ýî£ó‡ò«è£ðGû˜ 1.4.10

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## மரக்கறி உணவு முன்னிலும் தேவை

மு ன் காலங்களில் ஸர்வ ஜனங்களுக்கும் சாஸ்த்ராபிமானம், தெய்வத்திடம் பய பக்தி, அதனால் தப்புப் பண்ணுவதிலே பயம், அடக்க குணம் முதலியன இருந்தன. அதனால் ஸகல ஜாதியாருமே இன்றைக்கு இருப்பதைவிடக் கட்டுப்பாட்டுடன் (இந்திரிய நிக்ரஹத்தில் கூட இன்றைவிடக் கட்டுப்பாட்டுடன்) இருந்து வந்தார்கள். இப்போது ஸினிமா, ட்ராமா, நாவல் எல்லாம் ஸ்வதந்திரப் போக்கு என்று சொல்லி ஜனங்களைத் தறிகெட்டு அலையப் பண்ணியிருக்கிற மாதிரி அப்போதில்லை. இந்திரிய சாபல்யத்துக்கு இப்போது திரும்பின இடமெல்லாம் தீனி போட்டு வளர்ப்பது போல அப்போது இல்லை அதனால் மது மாம்ஸாதிகள் சாப்பிடுபவர்கள் கூட அதிலே ஓர் அளவு, ஒழுங்கு வைத்துக் கொண்டிரு ந்தார்கள். அவர்கள் இன்றைய ஜனங்கள் மாதிரி இல்லாமல் சரீரத்தால் நன்றாக உழைக்கவும் உழைத்தபடியால் அந்த ஸாமான்கள் அவர்களுக்கு தேஹ ரீதியிலோ, மனோ ரீதியிலோ கெடுதல் பண்ணவில்லை. ஆனால் இப்போதுள்ள பொது ஜனங்களின் ஸ்வபாவம், வேலை முறை எல்லாமே மாறி, சூழ்நிலையும் கெட்டுப் போயிருப்பதால் அந்தக் காலத்தைவிட இந்தக் காலத்தில் ஸகல ஜாதியாருமே மரக்கறி உணவுப் பழக்கத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக வளர்த்துக் கொள்வது;நல்லது கள்ளு குடி முதலியவற்றை விடுவதும் நல்லது.

அதோடு இப்போது ஆபீஸ், குடியிருப்பு எல்லாவற்றிலும் எல்லா ஜாதியாரும் முன்னைவிட நெருங்கி வாழும்படியாகியிருக்கிறது. பிராம்மணாசாரங்களை மற்றவர்கள் முடிந்தமட்டும் எடுத்துக் கொள்வதே இதுவரை வழக்கமாயிருந்திருக்க, இப்போது பிராம்மணன் மற்றவர்கள் பண்ணுகிற மாதிரித் தானும் செய்வதாக ஏற்பட்டிருக்கிறது!புலால் உணவுக்காரர்களுடன் நெருக்கமாக வாழ்வதால் மரக்கறி உணவுக்காரர்கள் அந்த வழக்கத்தை எடுத்துக்கொண்டு விடப் போகிறார்களே என்று பயமாக இருக்கிறது. அவ்வப்போது ஒவ்வோரிடத்தில் இப்படிக் கேள்வியும் படுகிறோம். ஆனால் இன்னமும் நிலைமை கை மீறி விடவில்லை. இந்தியாவில் மட்டும் எல்லா ஜாதி ஜனங்களும் .... நினைத்துப் பார்க்கவே கஷ்டமாயிருக்கிறது .... நான்-வெஜிடேரியன்களாகி விட்டார்களென்றால் லோகத்துக்கே ஒரு பெரிய 'ஐடியல்'நஷ்டமாகிவிடும். அப்புறம் அதை ஒரு காலத்திலும் ஈடு செய்யவோ அதற்குப் பரிஹாரம் காணவோ முடியாது. இன்றைக்கும் நமக்கு ஏதாவது துளிப் பெருமை ஒட்டிக் கொண்டிருக்கிறதென்றால், அது லோகத்திலேயே மிகப்பெரிய ஜனஸமூஹம்

வெஜிடேரியன்களாக உள்ள தேசம் நம்முடையதுதான் என்பதே. ஹிந்து என்றால் அஹிமாஸாவாதி என்றே லோகத்தில் இன்னமும் பரவலாக நல்லபிப்ராயம் இருக்கிறது.

'ஹிந்து'என்ற வார்த்தை அந்நிய தேசத்தார் நமக்கு வைத்த பெயர்தான்*நம்முடைய சாஸ்திரங்களில் அந்தப் பேரைப் பார்க்கவே முடியாது. ஆனால் பிற்காலத்தில், வெளிதேசத்தார் வைத்த 'ஹிந்து'என்ற பெயரையே ஸம்ஸ்கிருத 'ரூட்'டிலிருந்து வந்த மாதிரி நம்மவர்கள் அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள் - அதாவது " **ஹிம்ஸாயாம் தூயதே ய : ஸ ஹிந்தூ(இ)த்யபிதீயதே :**என்று!ஹிம்ஸையில் எவன் ரொம்பவும் துக்கப்படுகிறானோ அவனே ஹிந்து என்று இதற்கு அர்த்தம். இது சமத்காரமாகப் பண்ணியது என்றாலும் ஹிந்து மதஸ்தர்கள் அஹிம்ஸைக்காரர்கள் என்பதால்தானே இப்படி ஒரு 'டெஃபனிஷன்'கொடுக்க முடிந்திருக்கிறது?இந்தப் பெரிய கௌரவம் நமக்குப் போகப்படாது என்றால், முன்னைவிட எல்லா ஜாதியாரும் கலந்து கொண்டு வாழும்படியாக இருக்கிற இந்தக் காலத்தில் புலால் உணவுக்குப் பழக்கப்பட்டவர்களும் முன்னைவிட மரக்கறி உணவில் அதிக நாட்டம் கொள்வது நல்லதென்று தோன்றுகிறது.

---

* "தெய்வத்தின் குரல்"முதற்பகுதியில் "வைதிக மதம்"என்ற பிரிவில் 'பெயரில்லாத மதம்'என்ற உரை பார்க்க.

---



## மதுவிலக்கு

**சா** ஸ்திரப்படி விலக்க வேண்டியவற்றில் மற்ற ஆஹார வகைகள் நாளாவட்டத்தில்தான் சித்தத்தைக் கெடுக்கின்றனவென்றால், குடியோ உடனேயே ஒருத்தனின் புத்தியைக் கெடுத்துக் கேவலப்படுத்துவதைப் பார்க்கிறோம். அதனால் இதை முதலில் விட்டுத் தொலைக்க வேண்டும்.

இப்படி ஒரு வஸ்து உள்ளே போவதால் உடனே சித்தம் கெட்டுப் போவதாலேயே, விலக்க வேண்டிய மற்ற வஸ்துக்களும் கொஞ்சங் கொஞ்சமாக உள்ளே போய் காலக்ரமத்தில் சித்தத்தை பாதிக்கும் என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டியதாகிறது. அதாவது சாஸ்திரம் சொல்கிறபடி ஆஹாரத்துக்கும் மனஸுக்கும் ஸம்பந்தமுண்டு என்று நிச்சயமாகிறது.

குடி கூடாது, அது புத்தியைக் கெடுக்கும், குடியையும் கெடுக்கும். முற்காலத்தில் குடிப்பதற்கு அநுமதி பெற்ற ஜாதியாரும் இப்போதைய 'ஸெட்-அப்'பில் அந்தப் பழக்கத்தை விடுவதுதான் நல்லதாகிறது. இதனால், காந்தீயவாதிகள் சொல்கிற மதுவிலக்கை ஆதரித்து ஸ்ரீமட தர்மத்தொண்டு ஸபையும் அறிக்கைகூட விட்டிருக்கிறது.

நாம் வேதத்தையும் அதை அநுஸரித்து ஏற்பட்டுள்ள தெய்வ வழிபாட்டு நூல்களான ஆகமத்தையும் பின்பற்றுகிற தமிழ் மதஸ்தர்கள். இந்த வேதம், ஆகமம் இரண்டுமே மதுவிலக்கை விதித்திருக்கின்றன. ஆதலால் மத ரீதிப்படி நாம் குடிக்காமலிருக்கவே கடமைப்பட்டிருக்கிறோம் என்று எடுத்துக்காட்டி இப்படி அறிக்கை விட்டு, துண்டு பிரசுரமாக விநியோகித்தோம். ஸமூஹப் பிரச்னையாகவும் குடும்ப வாழ்க்கை விஷயமாகவும் காந்தீயவாதிகள் சொல்லும் மதுவிலக்குக்கே, அந்தக் காரணங்களையும் ஒப்புக்கொள்வதோடு, மத உணர்ச்சியை முக்யமாக வைத்து இன்னம் weightகொடுத்து இப்படிச் செய்தோம். இதன்படி நடப்பதாக ஜனங்கள் ஸம்மதச் சீட்டு அனுப்ப வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டோம். அப்படிச் செய்கிறவர்களுக்கு மடத்துப் பிரஸாதம் அனுப்பவும் ஏற்பாடு செய்தோம்.

(ஸ்ரீ பெரியவர்கள் குறிப்பிடும் அறிக்கையின் வாசகம் பின்வருமாறு:

"வேதங்கள் 'கள்ளுண்ணாதே'என்று முரசறைகின்றன. ஆகமங்கள் தீக்ஷையைப் பற்றிச் சொல்லுமிடத்துக் கள்ளை விலக்குவதையே முதல் அறமாக உபதேசிக்கின்றன. ஆதலால், 'வேதமோடாகமம் மெய்யாம் இறைவ நூல்'என்னும் திருமூலர் வாக்குப்படி, வேதாகம மரபில் வந்த தமிழன் ஒவ்வொருவனும் கள்ளுண்ணாமைப் பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும். அவ்விதம் பிரமாணமெடுத்துக் கொண்டு கீழ்க்காணும் பிரமாணப் பத்திரிகையை ஆதீனத்துக்கு அனுப்புகிறவர்களுக்கு திருநீறு பிரசாதமோ, துளஸி பிரசாதமோ அனுப்பப்படும். திருநீறு அல்லது திருமண் இவைகளைத் தரிக்கும் அநுஷ்டான முறையை விளக்கும் உபதேச நூலும் அனுப்பப்படும்".

இதைக் கண்ணுறுபவர் அனுப்ப வேண்டிய பத்திரிகையின் வாசகம்:"நான் நமது வேதாகம விதிப்படி இன்று முதல் கள்ளைத் தொடுவதில்லை. இங்ஙனம் ஆதி சங்கராச்சாரியார் அவர்களுக்கு உறுதிமொழி கூறுகிறேன்.")

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## புகைத்தல் ஸமூஹ விரோதச் செயல்

பு கையிலையைப் பச்சையாய் சாப்பிடுவது, 'புகை'யிலை என்றே அதற்குப் பெயர் இருப்பதற்கேற்க அதை நெருப்பில் புகைத்து இழுப்பது ஆகியவையும் அநாசாரம் என்று சாஸ்திரம் தள்ளியிருக்கிறது. உடம்புக்குக் கெடுதல், அதாவது அநாரோக்யம் என்று வைத்ய சாஸ்திரப்படி தள்ளினதையே சித்தத்துக்குக் கெடுதலைச் செய்யும் அநாசாரம் என்று தர்ம சாஸ்திரம் ஒதுக்கி வைக்கிறது. மாம்ஸத்தில் ஒருவிதமான கெடுதல், மதுவில் இன்னொருவிதமான கெடுதல் என்றால், புகை பிடிக்கிறதிலும் தனியாக ஒரு பெரிய கெடுதல் இருக்கிறது. அதாவது ஒருத்தன் இந்தக் கெட்ட காற்றை விடுகிற போது பக்கத்திலிருப்பவனுக்கு உள்ளேயும் போய் அது கெடுதல் பண்ணுகிறது. "நான் எப்படி வேண்டுமானாலும் கெட்டுப் போவேன்;என்னை யார் தடுக்கிறது?"என்று ஒருத்தன் சொன்னாலும் சொல்லலாம். ஆனால் "பிறத்தியானைக் கெடுப்பேன். அவன் இழுக்கிற காற்றை விஷமாக்குவேன். என்னை யாரும் கேட்கப்படாது"என்று எவனும் சொல்ல முடியாது. அதனால் ஸமூஹ நலனை உத்தேசித்து, பீடி, ஸிகரெட்தான் பெரிய விரோதி என்று அதைத் தடை செய்ய வேண்டும். ஆனாலும் எதனாலோ 'ப்ரொஹிபிஷன்'என்று மது விலக்கை மட்டும் விசேஷமாகச் சொல்லிவிட்டு, இதை (புகைப்பதை)த் தடுக்காமலிருக்கிறார்கள். ப்ரொஹிபிஷன் பிரசாரம் பண்ணுகிறவர்களில் சிலருக்கே இந்தப் (புகைக்கும்) பழக்கம் இருப்பதாகச் சொல்கிறார்கள். குடிப்பதற்கு ஒரு stigma (அவப்பெயர் அடையாளம்) இருக்கிறாற்போல புகைபிடிப்பதற்கு இல்லாமல் இது ஒரு ஃபாஷன் அடையாளமாகவே நினைக்கப்படுகிறது.

புகையிலை, பீடி, ஸிகரெட் சாஸ்திர ஸம்மதமல்ல. ஸத்வ ஆஹாரம் என்பதாக சாப்பாட்டிலே மட்டும் பண்ணிக்கொண்டுவிட்டு, புகைப்பழக்கம் வைத்துக் கொண்டால் பிரயோஜனமில்லை. ஸாத்விகாஹாரம் என்னும்போது மதுவையும் புகையிலையையும் தள்ளியே ஆக வேண்டும்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## காபி முதலிய பானங்கள்

ஸா தரணமாக இப்படிப்பட்ட தள்ளுபடி வஸ்துக்களுக்குத்தான் புத்தியைப் பிடித்து வசப்படுத்தி வைத்துக் கொள்கிற சக்தி இருக்கிறது. "அது இல்லாட்டா முடியாது"என்று என்னமோ பைத்தியம் பிடித்த மாதிரிப் பண்ணி, எந்த வேலையுமே ஓடாமல், இந்த

மனோபலுவினாலேயே தலைவலி, அஜீர்ணம் என்றெல்லாம் இந்த வஸ்துக்கள்தான் உண்டாக்குகின்றன. அந்த வஸ்துவுக்கு இவன் அடிமை ஆகிவிடுகிறான். 'Addict' என்று சொல்கிறார்கள். ஏதோ ஒரு அளவு என்று நிறுத்திக் கொள்ள முடியாமல் எப்போது பார்த்தாலும் அந்த ஸாமானுக்கே ஆசை ஏற்படுகிறது. குடிப் பழக்கமுள்ளவன், புகையிலை மெல்லுகிறவன், அதையே 'ஊதுகிறவன்'எல்லாரும் இப்படித்தான். அபின், கஞ்சா முதலான லாஹிரி வஸ்துக்கள் எல்லாம் இப்படி மநுஷ்யனை அதே பைத்தியமாக அடிக்கிறவைதான்.

புத்தியைக் கெடுப்பதில் கள்ளு கஞ்சா அளவுக்குப் போகாவிட்டாலும், 'அடிக்ட்'-ஆக அடிமைப்படுத்துகிற சக்தி காபி, டீக்கும் இருப்பதால்தான் அவை உதவாது என்பது. போதையை உண்டுபண்ணுவது - intoxicant - என்று இவற்றைச் சொல்ல முடியாவிட்டாலும், நரம்பை ஊக்குவிக்கிறவை - stimulant - என்பதால் தள்ளத்தான் வேண்டும். 'ஸ்டிமுலேட்'பண்ணுவது அப்போதைக்குக் கிளுகிளுப்பைத் தந்து உத்ஸாஹப் படுத்தலாமானாலும், முடிவிலே இப்படி செயற்கையாகத் தூண்டப்பட்ட நரம்பு மண்டலம் பலஹீனம்தான் அடையும். காபியில் இருக்கிற 'கஃபைன்'விஷ வஸ்துவே என்று ஸகலரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

டீயும் அநாசாரம்தான். என்றாலும் காபி போல அவ்வளவு மோசமில்லையாதலால், சுறுசுறுப்புக்கு ஏதாவது பானம் வேண்டத்தான் வேண்டும் என்கிறவர்கள் டீ வேண்டுமானாலும் கொஞ்சம் சாப்பிடலாம். இப்படிச் சொன்னதால், "பெரியவா டீ சாப்பிடச் சொல்றா"என்று அர்த்தம் பண்ணிக்கொண்டு விடக்கூடாது. காபி, டீ மாதிரி எதுவாவது இல்லாமல் முடியவே முடியாது என்று இருக்கிறவர்கள் டீ வேண்டுமானால் கொஞ்சம் சாப்பிட்டுக் கொண்டு, அதையும் படிப்படியாக விட வேண்டும்.

நல்ல வஸ்துவான பாலில் இந்த ஸாமான்களைக் கலந்து கெடுக்க வேண்டியதே இல்லை. அதிகாலையில் வெறும் பாலே சாப்பிடலாம். பகலில் மோராக்கிக் குடிக்கலாம். மோர்க் கஞ்சியாகவும் சாப்பிடலாம்.

வெறுமனே சொன்னால் போதாது என்று சந்திரமௌளீஸ்வரர் ஸாக்ஷியாக காபி, ஸினிமா, பட்டு மூன்றையும் விட்டுவிடுவதாக ஸத்யம் பண்ணிக் கொடுங்கள் என்று கேட்கிறேன். ஏன்?எத்தனை ஏழைக் குடும்பமானாலும் சோற்றுச் செலவைவிட ஜாஸ்தியாகக் காபி அல்லவா இழுக்கிறது?அகத்தில் சாப்பிடுவதோடு கண்ணில் படுகிற ஹோட்டலில் புகுந்தும் மூன்று வேளை, நாலு வேளை என்று குடிக்கப் பண்ணுகிறதே!எழுந்தவுடனேயே, பல் தேய்க்காமல்கூட பெட்-காபி, இல்லாவிட்டால் அந்தக் காபிப் பொடி வண்டாலேயே பல் தேய்த்துவிட்டு அதை உள்ளேயும் தள்ளுவது என்பதாக, 'இதில்லாமல் ஜீவனில்லை'என்கிற அளவுக்கு இதற்கு நம் புத்திக்கு மேல் ஆதிக்யம் கொடுத்திருப்பது தப்புத்தானே?இந்த ஆதிக்யத்தினால்தான் இக்கால ஸந்நியாஸிகளுக்கு தண்ட, கமண்டலம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை, ஆனால் 'ஸ்டவ்'இருந்தாக வேண்டுமென்று ஆகியிருக்கிறது!

நெருப்பு கிட்டேயே போகப்படாது, சமைக்கவே கூடாது என்று விதிக்கப் பட்டிருக்கும் ஸந்நியாஸிகள் கூட, பிராம்ம முஹுர்த்தத்தில் எழுந்து தியானம் செய்வதானால் அதற்கு முந்தி காபி இல்லாமல் முடியவில்லை என்று தாங்களே 'ஸ்டவ்'வில் போட்டுக் குடிக்கிறதாக அல்லவா பார்க்கிறோம்?இதுதான் இன்றைக்கு நடக்கிற ஸ்வயம்பாக நியமம்!இப்படி ஒரு வழக்கத்துக்கு அடிமைப்பட்டிருப்பது தப்பு என்பதால்தான் நான் காபியை பலமாகவே கண்டிப்பது.

டின்னில் அடைத்து, பார்க்க 'நீட்'டாக என்னென்னவோ பான வகைகள் வந்திருக்கின்றனவே, அதிலெல்லாம் என்னென்ன வஸ்துக்கள் சேர்ந்திருக்குமோ?இவற்றிலும் சரி, இதே மாதிரி பார்க்க சுத்தமாக, அழகாக pack பண்ணி வருகிற பிஸ்கோத்து, பன், கேக் முதலானவற்றிலும் சரி, ஒரு வஸ்து இல்லாமலிருக்காது என்றுதான் ஸந்தேஹம்1. ஆனாலும் இதைக் கண்டுகொள்ள வேண்டாமென்று ஆசாரக் குலவழக்குள்ளவர்களும் இவற்றை சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'அப்படியே அந்த

வஸ்து இருந்தாலும் பரவாயில்லை. அது முழுக்க உயிர் வந்துவிட்ட ஜீவனில்லை'என்று துணிந்து ஸமாதானம் சொல்கிறவர்களும் இருக்கிறார்கள். அதற்கு உயிர் இருந்தாலும் இல்லாவிட்டாலும், அது நமக்குக் கெடுதி செய்யும் ஊன்தான். இவர்கள் சொல்லும் நியாயப்படி எந்தப் பிராணிக்குமே தானாக உயிர் போனபின் அதன் ஊனைத் தின்றால் தப்பில்லை என்றும் ஆகும். நீலகண்ட தீக்ஷிதர் என்ற மஹான்2 மந்திரி பதவியை விட்டு வரும்போது திருமலை நாயகரிடம், "குக்குட சப்தமில்லாத ஒரு பிராந்தியத்தில் கொஞ்சம் பூமி கொடுத்தால் போதும்"என்று கேட்டு வாங்கிக் கொண்டு தாம்ரபர்ணிக் கரையில் பாலாமடை என்கிற அக்ரஹாரத்தை ஏற்படுத்தினாராம்!அந்த அஹிம்ஸா பாரம்பர்யத்துக்கு நாம் களங்கமுண்டாக்கக் கூடாது. நம் கண்ணுக்குத் தெரியாமல் எங்கேயோ ஃபாக்டரியில், பேக்கரியில் பண்ணுகிறவற்றில் என்னென்ன கலந்திருக்கிமோ!கைபடாமல் மிஷினேதான் பண்ணி 'பாக்கிங்'கும் செய்கிறது என்பதால் அது ஆசாரமானதாகி விடாது. நாமே அகத்தில் பார்த்து அரைத்து வைத்துக் கொள்கிற மாவுகளைப் போட்டுக் கஞ்சியாகக் குடிப்பதுதான் ஆசாரம். வியாதியஸ்தர்கள், வியாதிக்கப்புறம் தேற்றிக் கொள்ள வேண்டியவர்கள் மட்டும் சொஸ்தமாகி உடம்பு தெம்பு பிடிக்கிற வரையில் பாக்டரியிலிருந்து வருகிற மற்ற ஆரோக்யம் தரும் பான வகைகளை கரைத்துக் குடிக்கலாம். மருந்து மாதிரி இதற்கும் அந்தக் காலத்தில் மாத்திரம் விலக்கு தரலாம். அப்புறம் இதை நிறுத்தி விட்டு பஞ்சகவ்யம் சாப்பிட்டு சுத்தி பண்ணிக்கொள்ள வேண்டும்.

---

1. முட்டையைத்தான் ஸ்ரீ பெரியவர்கள் குறிக்கிறார்கள்.

2. பின்னால் வரும் 'மீநாக்ஷி'என்ற உரையில் நீலகண்ட தீக்ஷிதரைப் பற்றிய சில விவரம் காணலாம்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### பால் வஸ்துக்கள்

'**பா** ல் ரத்த ஸமானமல்லவா?அதனால் பால், அதிலிருந்து வருகிற தயிர், மோர், வெண்ணெய், நெய் எல்லாமே புலால் வகையைச் சேர்ந்ததுதான்'என்று சொல்லி இவற்றைத் தள்ளிவிடுகிற தீவிரவாதிகள் இருக்கிறார்கள். ஆனால் நமக்குப் பிரமாணம் சாஸ்திரந்தான் என்பதைப் பார்க்கும்போது, பாலையும் அதிலிருந்து உண்டாகும் வஸ்துக்களையும் ஸத்வாஹாரமாகவே சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதால் தள்ள வேண்டியதில்லை. ஒரு பதார்த்தத்தைத் தள்ளுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, அதிலே ஜீவஹிம்ஸை இருக்கக்கூடாது. இரண்டு, அது நம் சித்தத்தைக் கெடுக்கப்படாது. பாலைக் கறப்பதால் நாம் பசுவுக்கு ஹிம்ஸை பண்ணவில்லை. ஈஸ்வர ஸ்ருஷ்டியிலேயே, தான் ஈனுகிற குழந்தைகளுக்கு வேண்டிய அளவு பால் கொடுக்க மட்டுமில்லாமல் உபரியாகவும் மற்றவர்களுக்குக் கொடுக்கிற அளவுக்குப் பசுவுக்கே பால் சுரக்கிறது. அதன் பால் முழுவதையும் கன்றுக்குட்டியே குடித்தால் வயிறு முட்டிச் செத்துப்போய்விடும். யஜ்ஞாதிகளுக்காகவும் புஷ்டி வேண்டிய மற்ற ஜனங்களுக்காகவும் சேர்த்துத்தான் அது இத்தனை பாலைக் கொடுக்கும்படியாக பகவான் அதைப் படைத்திருக்கிறான். பால் தருவதால் நமக்கும் பசு தாய். அதனால்தான் "கோமாதா"என்பது. அச்வமாதா, கஜமாதா என்பதில்லை. அன்னையின் க்ஷீரத்தைச் சாப்பிடுவது மாம்ஸ போஜனமாகாது. கன்றுக்கு வயிறு நிரம்ப ஊட்டுக் கொடுத்தபின், பசு கஷ்டமில்லாமல் சுரப்பு விடுகிற வரையில் எஞ்சியுள்ள பாலைக் கறந்து நாம் எடுத்துக் கொள்வதில் தப்பேயில்லை. இதிலே பசுவுக்கு ஹிம்ஸை இல்லை. கறக்காவிட்டால்தான் பால் கட்டிக் கொண்டு மடி கனத்துக் கத்தும். இரண்டாவதாகச் சொன்ன சித்த விகாரம் க்ஷீரத்தால் உண்டாவதில்லை. பாலையும் அதிலிருந்து உண்டாகிற மற்ற பதார்த்தங்களையும் ஸாத்விகம் என்றே சொல்லியிருக்கிறது. சொல்லியிருப்பது மட்டுமில்லை. பரம ஸாத்விகர்கள் பல பேர் இவற்றைச் சேர்த்துக் கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். முக்குண ஆஹாரங்களைச் சொன்ன பகவானே

பாலையும் வெண்ணெயையும் திருடிச் சாப்பிட்ட நவநீத சோரனாகத்தானிருக்கிறான். ஈஸ்வரவனுக்குப் படிப் படியாய், குடம் குடமாய் பாலபிஷேகம் பண்ணிப் பார்த்து ஆனந்தப்படும்படி சாஸ்திரம் சொல்கிறது. தப்பான பதார்த்தமானால் சொல்லியிருக்குமா?

ஆகையால் க்ஷீரத்தையும் அதிலிருந்து உண்டாகிறவற்றையும் தள்ள வேண்டியதில்லை. அளவாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். Fat ஏறும்படியாகவோ, மந்தம் தட்டும் படியாகவோ சேர்த்துக் கொள்ளக்கூடாது.

பால் சேர வேண்டியவர்களுக்குச் சேரவிடாதது தான் தப்பு. எத்தனையோ ஏழைக் குழந்தைகள், துர்பலர்கள், நோயாளிகள் பாலுக்குப் பரிதவிக்கிறார்கள். அவர்களுக்கு கிடைக்கவேண்டிய பாலைக் காபி விஷமாக்கி மற்றவர்கள் மூன்று நாலு வேளை சாப்பிடுகிறார்கள். இதுதான் தப்பு. காபியால் குடிப்பவர்களுக்குச் சித்தவிகாரம் ஏற்படுவதோடு நியாயமாகப் பால் தேவைப்படுகிறவர்களுக்கு அதை இல்லாமல் செய்வது ஜீவ ஹிம்ஸையுமாகிறது. காபியை நிறுத்தவிட்டு அந்தப் பாலை ஏழைக் குழந்தைகளுக்கோ, பலஹீனமருக்கோ விநியோகம் பண்ணுவதென்று வைத்துக் கொண்டால் பெரிய புண்யமாகும்.

---



## தாம்பூல தாரணம்

**எ** ப்போது பார்த்தாலும் குடிக்கணும், 'ஊதணும்'என்று இருப்பதுபோல வெற்றிலை போட்டுக் கொள்வதும் ஒரு 'ஹாபிட்'ஆகி, அதற்கு அநேகம் பேர் 'அடிக்ட்'ஆகிறார்கள். இதனால் நாக்குத் தடித்து, பசி மந்தித்துப் போய்விடுகிறது. இப்படி விடக்கூடாது. பார்க்கவே பிடிக்காமல், வாய் நிறைய வெற்றிலைச் சாற்றை வைத்துக் கொண்டு பேசுவது, நம் மேலே அது தெறிப்பது, தங்கள் மேலேயே ஒழுவது என்றெல்லாம் பண்ணுவது கௌரவமும் இல்லை;ஆசாரமும் பொடியும் இப்படித்தான். போகிற இடமெல்லாம் (வெற்றிலை) துப்புவதும், (பொடி) சிந்துவதும் ஸிவிக் ஸென்ஸுக்கே (நாகரிகக் குடிமை உணர்வுக்கே) விரோதம்.

கிருஹஸ்தர்கள், முக்யமாக ஸுமங்கலிகள் அளவாக வெற்றிலை போட்டுக் கொள்வதில் தப்பேயில்லை. தாம்பூலம் கொடுத்து உபசரிப்பதே மங்களம் என்று இருக்கிறது. பூஜையிலும் தாம்பூலம் அர்ப்பணம் பண்ண வேண்டும். அது ஸௌபாக்ய சின்னம்;அதோடு ஜீர்ணகாரி, ரத்த சுத்தி. சுண்ணாம்பில் கால்ஷிய ஸத்து இருக்கிறது. இத்தனையிருந்தாலும் அது ஸாத்விகம் இல்லை. அதனால்தான் பிரம்மச்சாரி, ஸந்நியாஸி இருவருக்கும் அது கூடாது என்று வைத்திருக்கிறது. லோக வியவஹாரங்களைக் கவனிக்க வேண்டிய க்ருஹஸ்தர்களுக்கு ராஜஸ குணமும் இருக்கலாமென்றே தாம்பூல தாரணம் அநுமதித்திருக்கிறது. அதற்காக ராஜஸ குணம் மட்டுமே இருக்கும்படியாக ஓயாமல் தாம்பூல சர்வணம் பண்ணக்கூடாது. நல்ல பதார்த்தம், கெட்ட பதார்த்தம் எதுவானாலும் ஓயாமல் தின்னும் பழக்கமாகப் பண்ணிக் கொள்ளக்கூடாது. நம்மை நம் கன்ட்ரோலில் இல்லாமல் பண்ணித் தன் வசப்படுத்திக் கொள்வதாக எந்தப் பதார்த்தத்தையும் விட்டு விடக்கூடாது.

ஸாத்விக ஆஹாரத்தைச் சேர்ந்த தித்திப்புப் பதார்த்தங்கள், நெய் முதலானவை தாமாகவே ஓரளவுக்கு மேல் தின்ன முடியாமல் திகட்டிப் போய்விடுவதாலேயே நமக்கு நன்மை செய்கின்றன!

---



## சாந்த லக்ஷ்யம் கெடலாகாது

ப தார்த்த சுத்தியின் முக்யம் தெரிவதற்காக நிறையச் சொல்லிக்கொண்டு போனேன். மரக்கறி உணவின் விசேஷம் அது நமக்கு ஸத்வகுணம் அபிவிருத்தியாக உதவுவதோடு இன்னொரு ஜீவனுக்கு ஹிம்ஸை ஏற்படாமலும் செய்கிறது. லோகத்தில் இந்த லக்ஷ்யம் பரவப் பரவக் கொலை குறையும். சாந்த குணம் விருத்தியாகும். கொலைக் கேஸ்கள் வருகின்றனவே, இவற்றில் அபூர்வமாக எவனோ ஒருத்தன்தான் சாகபோஜனம் பண்ணுபவனாக இருப்பான்.

ஆக, லோகத்தில் சாந்தம் பரவ வேண்டுமென்றால் நாம் சாந்தர்களாக வேண்டும். இதற்கு நம் வாழ்க்கை முறைகள் நம்மை ஸத்வ குணமுள்ளவர்களாகப் பண்ண வேண்டும். சாப்பாட்டை வைத்துத்தான் ஜீவனம் என்றிருப்பதால் இப்படிப்பட்ட பழக்கங்களில் ஆஹார விஷயத்துக்கு ரொம்பவும் முக்கியத்வம் இருக்கிறது என்று புரிந்து கொண்டு பார்த்தால், உடம்பை மட்டுமின்றி உள்ளத்தையும் வளர்ப்பதாக உணவை அமைத்துக் கொள்ள நம் சாஸ்திரங்கள் போஜன விதிகளை ஏற்படுத்தித் தரும்போது அதிலே பிரயோஜனமாகும் பதார்த்தங்கள், அதோடு ஸம்பந்தப்பட்ட மநுஷ்யர்கள் என்ற இரண்டுக்கும் சொல்லி இருக்கும் லக்ஷணங்களின்படி, பதார்த்தம் இல்லாமல் மரக்கறி உணவாக இருக்க வேண்டுமென்று முடிவாகிறது. தங்களுடைய அஹிம்ஸா அநுஷ்டானத்தினாலேயே அநேக மஹான்கள் தாங்களிருக்கிற சுற்றுப்புறம் முழுதையும் அன்பு மயமாக்கியிருக்கிறார்கள்;அவர்களுடைய ஆச்ரமத்திலே பார்த்தால் 'பெண் சிங்கம் யானைகுட்டிக்குப் பால் கொடுத்துக் கொண்டிருக்கும்;கன்று குட்டிக்குப் புலி வழிகாட்டி அழைத்துக் கொண்டு போகும். எலிக் குஞ்சை பூனை ரக்ஷித்துக் கொண்டிருக்கும். பாம்புக்குட்டி மேலே வெயில் படாமல் மயில் தோகையை விரித்துக் குடை பிடித்துக் கொண்டிருக்கும்'என்றெல்லாம் காவ்ய, நாடகங்களில் படிக்கிறோம். இப்படிப் பிறத்தியாரின் பரஸ்பர விரோதத்தையும் போக்கடிக்கிற அளவுக்கு சாந்தத்தைப் பரப்பின பாரம்பர்யத்தை நாம் பாழாக்கி விடாமல் காப்பாற்றிக் கொடுக்க வேண்டுமானால் மரக்கறி உணவில் நம் பற்றை வளர்த்துக் கொண்டால்தான் முடியும். மரக்கறி உணவிலுங்கூட காரம், புளிப்பு முதலியன ராஜஸம்தான்;பழையது போன்றவை தாமஸம். இப்படியே பூண்டு, வெங்காயம், முள்ளங்கி, முருங்கை போல் பல ஸத்வத்துக்கு விரோதமானவை.

---



## அளவு முக்கியம்

ப ரம ஸாத்விக உணவானாலுங்கூட அளவு முக்கியம். ஒரு நாளைக்கு ஒரு சாப்பாடு, ஒரு பலகாரம் என்றிருப்பது நல்லது. இல்லாவிட்டால் இரண்டு சாப்பாடு, ஒரு டிஃபன் என்று இப்போது பெரும்பாலோர் வைத்துக் கொண்டிருக்கிற மாதிரியே இருந்தாலும் ஒவ்வொரு வேளையும் மிதமாகச் சாப்பிட வேண்டும். வைத்ய சாஸ்திரம், தர்ம சாஸ்திரம் இரண்டின் பிரகாரமும் அரை வயிற்றுக்குத்தான் சாப்பிடணும்;கால் வயிற்றுக்குத் தீர்த்தம் குடிக்கணும்;மற்ற கால் வயிறு வாயுவுக்கு விட்டுவிடணும். தினசரி இரண்டு சாப்பாடு, ஒரு சிற்றுண்டி என்று வைத்துக் கொண்டாலும், சனிக்கிழமை, குருவாரம், ஸோமவாரம், (மாதா, பிதா இல்லாதவரானால்) அமாவாஸ்யை, இன்னம் அவரவர் குல தெய்வத்தைப் பொருத்து ஷஷ்டி, கிருத்திகை, சதுர்த்தி, பிரதோஷம் ஆகிய தினங்களில் ஒரு வேளை சாப்பாடு ஒரு வேளை பலகாரம் என்று வைத்துக் கொள்ள வேண்டும். ஞாயிற்றுக் கிழமையில் அஸ்தமனத்துக்கு அப்புறம் சாப்பிடக் கூடாது. அதனால் மத்யானம் சாப்பிட்டுவிட்டு, அஸ்தமனத்துக்கு முந்தியே பலஹாரம் பண்ணிவிட வேண்டும். பதினைந்து நாளுக்கு ஒருமுறை 'லங்கனம்', அதாவது முழுப் பட்டினி போடணும். அதுதான் ஏகாதசி உபவாஸம். அதைப் பற்றி அப்புறம் சொல்கிறேன்1. மற்ற நாட்களிலும் மித போஜனமே பண்ண வேண்டும்.

பசி என்கிறது ஒரு வியாதி மாதிரி. வியாதிக்கு மருந்து 'டோஸேஜ்'பிரகாரம்தானே சாப்பிடுவோம்?கொஞ்சங்கூட அதிகம் சாப்பிடமாட்டோமல்லவா?அதே மாதிரி பசி என்கிற வியாதிக்குச் சிகித்ஸையாக மருந்து மாதிரி உணவு உட்கொள்ள வேண்டும். இப்படித்தான்

ஆசார்யாள் உபதேசம் பண்ணியிருக்கிறார்2. **க்ஷுத் வ்யாதிச்ச சிகித்ஸ்யதாம்** - அதாவது, பசி நோய்க்கு மருந்தே சாப்பாடு என்று ஆக்கிக்கொள்ளு. நாக்குக்காகத் தின்னாதே!ருசிருசியான அன்னமாகத் தேடாதே - **ஸ்வாத் - வன்னம் ந து யாச்யதாம் !**விதி வசமாக எது கிடைக்கிறதோ அதிலே த்ருப்தியாயிரு - **விதிவசாத் ப்ராப்தேந ஸந்துஷ்யதாம்** என்று நல்வழி காட்டுகிறார்.

ருசிக்காகச் சாப்பிடும்போதுதான் அமித போஜனம் ஆகிறது. பசி என்று ஒன்றை வைத்து விட்டான்;அதைத் தீர்த்துத் தொலைத்துக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது என்பதற்காகவே சாப்பிடும்போது அளவு மீற மாட்டோம். அஜீர்ணம், மனஸுக்கு அசுத்தி இரண்டையும் வரவழைத்துக் கொள்ளாமலிருப்போம்.

---

1. ''உபவாஸம்''என்ற உரை பார்க்க.

2. ''ஸாதன பஞ்சகம்''என்றும் ''ஸோபான பஞ்சகம்''என்றும் வழங்கும் உபதேசப் பாடலில்.

---



## காலத்தைப் பொறுத்து நியமம்

**ப** தார்த்த சுத்தியில் இன்னொரு விஷயம். இன்னொரு விஷயம். காலத்தைப் பொருத்து ஸாத்விக பதார்த்தங்களில் சிலதையே சில காலங்களில் தள்ளச் சொல்லி விதித்திருக்கிறது. பால், தயிர் இரண்டும் ஸாத்விகம்தான். ஆனாலும் ராத்திரி வேளையில் தயிர் போட்டுக் கொள்ளக்கூடாது;மோராகப் பண்ணிச் சேர்த்துக் கொள்ளலாம். மத்யான்னத்தில் வெறும் பால் சாப்பிடக்கூடாது.

மற்ற நாட்களில், சேர்த்துக்கொள்ளும் அநேக பதார்த்தங்களை, கடலைப் பருப்பு, துவரம் பருப்பு, வெண்டைக்காய், பூசணிக்காய் போன்ற தப்பில்லாத வஸ்துக்களையே சிராத்த போஜனத்தில் தள்ளுபடியாக வைத்திருக்கிறது. அன்று பாகற்காயிலேயே நீளப் பாகல்தான் சேர்க்கலாமே தவிர மிதி பாகல் உதவாது.

இப்படியே சாதுர்மாஸ்யத்துக்கென்று சில போஜன நியமங்கள்

---



## சாதுர்மாஸ்யமும் அதில் போஜன விதியும்

**சா** துர்மாஸ்யம் என்று நாலு மாஸங்கள். அந்த நாலு மாஸத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் 'ஸெளரமானம்', 'சாந்த்ரமானம்' என்ற இரண்டுவிதப் பஞ்சாங்கங்களைப் பற்றியும் சொல்ல வேண்டும். ஸூர்ய கதியைப் பொருத்தது, ஸெளரமான மாஸம். தமிழ் நாட்டில் அநுஷ்டிக்கப்படுவது இதுதான். இதன்படி, ஸூர்யன் மேஷம், ரிஷபம் முதலான பன்னிரெண்டு ராசிகளில் என்றைக்கு பிரவேசிக்கிறானோ அன்றைக்கு சித்திரை, வைகாசி முதலான பன்னிரெண்டு மாஸங்கள் பிறக்கும். மறுபடியும் ஸூர்யன் மேஷப் பிரவேசம் பண்ணுவதே அடுத்த வருஷப் பிறப்பு. தேசத்தின் மற்ற பெரும்பாலான பகுதிகளில் சந்திரனின் கதியைப் பொருத்த 'சாந்த்ரமான' மாஸம் பின்பற்றபடுகிறது. அமாவாஸ்யை ஆனவுடன் வரும் பிரதமையிலிருந்து அடுத்த அமாவாஸ்யை வரையிலான காலம் ஒரு சாந்த்ரமான மாஸம். இதன்படி நம்முடைய (தமிழ்நாட்டினரின்) பங்குனி அமாவாஸ்யை ஆகி மறுநாள் பிரதமையன்று அவர்களுக்கு புதுவருஷத்தின் சித்திரை பிறந்துவிடும். 'யுகாதி' என்று அன்று தெலுங்கர், கன்னடஸ்தர் ஆகியோர் கொண்டாடுவார்கள். மலையாளத்தில் தமிழ் வழக்குத்தான். நம்முடையதான ஸூர்யனின் மேஷ ராசிப்

பிரவேசத்தைத்தான் அவர்களும் 'விஷு' என்று கொண்டாடுகிறார்கள். ஆனால் அந்த மாதத்துக்குச் சித்திரை என்று அவர்கள் பேர் சொல்லாமல் 'மேடம்' என்றே சொல்வார்கள். இப்படியே வைகாசியை 'எடவம்' (ரிஷபம்), ஆனியை 'மிதுனம்' என்றெல்லாம் அந்தந்த ராசிப் பெயராலேயே சொல்வார்கள். நாம் சித்திரை, வைகாசி என்றெல்லாம் சொல்வது, நம்முடையது ஸௌரமான மாஸமானாலும் எதனாலோ பேர் மட்டும் சாந்திரமானக்காரர்களுடையதையே நாமும் எடுத்துக் கொண்டிருப்பதால்தான். அந்தப் பேர் - சித்திரை, வைகாசி முதலியன - அந்தந்த மாஸங்களில் பௌர்ணமியன்று சந்திரன் பெரும்பாலும் எந்த நக்ஷத்ரத்தில் உதிக்கிறதோ அதை வைத்தேயாகும்*. மலையாளத்தில்தான் ஸௌரமானத்திற்கு ஏற்க, ஒவ்வொரு மாஸமும் ஸூர்யன் எந்த ராசியில் ப்ரவேசிக்கிறானோ, அந்தப் பெயரையே மாஸப் பெயராக வைத்திருக்கிறது. ஆனால் அங்கே மேடம் (நம்முடைய சித்திரை) வருஷப் பிறப்பு இல்லை. 'சிங்கம்' என்கிற (நம் ஆவணி) மாஸம்தான் வருஷப் பிறப்பு.

நமக்குச் சித்திரை அமாவாஸ்யை ஆனவுடனேயே சாந்திரமானப்படி வைகாசி பிறந்துவிடும். இப்படியே நம் ஒவ்வொரு அமாவாஸ்யையும் ஆனவுடன் வரும் பிரதமையில் சாந்திரமானத்தின் அடுத்த மாஸம் பிறந்துவிடும். அந்தக் கணக்கின்படி ஒரு வளர்பிறையும், ஒரு தேய்பிறையும் சேர்ந்தால் ஒரு மாஸம். இது வாஸ்தவத்தில் முப்பது நாட்களுக்குக் கொஞ்சம் குறைச்சல். அதனால் சாந்திரமானப்படி பன்னிரண்டு மாஸமும் சேர்ந்து 360 நாள் வராது. ஆனால் நியாயமாக 3651/4 நாள் சேர்ந்ததுதானே ஒரு வருஷம்? - அதாவது பூமி ஸூர்யனைச் சுற்றி வருவதற்கான காலம்? இந்த வித்யாஸத்தை ஸரிகட்டுவதற்காக மூன்று வருஷத்துக்கு ஒரு தரம் சாந்திரமானத்தில் 'மலமாஸம்' அல்லது 'அதிக மாஸம்' என்பதாக, பன்னிரண்டுடன் பதின்மூன்றாக இன்னொரு மாஸத்தைச் சேர்த்துக் கொள்வார்கள். அதில் சுப கார்யம் பண்ண மாட்டார்கள்.

'சாதுர்மாஸ்ய'த்தைப் பற்றிச் சொல்வதற்காக இந்த(ஸௌரமான, சாந்த்ரமான)ப் பேச்சு வந்தது. நம்முடைய ஆனி அமாவாஸ்யை ஆனவுடன் சாந்திரமானப்படியான ஆஷாட மாஸம் (ஆடி மாஸம்) பிறந்துவிடுகிறது. இந்த ஆஷாட மாஸ சுக்ல பக்ஷஏகாதசியன்று க்ஷீராப்திநாதனான பகவான் தூங்க ஆரம்பிக்கிறார். அதைத் தொடர்ந்து வருகிற ச்ராவண (ஆவணி), பாத்ரபத (புரட்டாசி), ஆச்வின (ஐப்பசி) மாஸங்களிலும் தூங்கியபடியே இருந்துவிட்டு, கார்த்திகை சுக்லபக்ஷ ஏகாதசியன்று விழித்துக் கொள்கிறார். ஆஷாட ஏகாதசியிலிருந்து கார்த்திக ஏகாதசி வரையிலான இந்த 'பீரியட்டி'ல் அடங்குகிற நாலு மாஸ காலத்துக்கே சாதுர்மாஸ்யம் என்று பெயர். (ஆஷாட பௌர்ணமாஸ்யைக்குத்தான் வியாஸ பூர்ணிமை என்றும் குரு பூர்ணிமை என்றும் பெயர். பொதுவாக, இந்த வியாஸ பூர்ணிமையிலிருந்தான் சாதுர்மாஸ்ய விரதம் ஆரம்பிப்பதாக அபிப்ராயமிருக்கிறது. ஸரியாகச் சொன்னால் பூர்ணிமைக்கு முந்திவரும் த்வாதசியன்றே அது ஆரம்பித்து விடுகிறது.)

இந்த சாதுர்மாஸ்ய காலத்தில்தான் அநேகமாக முக்யமான பண்டிகைகள் எல்லாம் வருகின்றன. கோகுலாஷ்டமி, பிள்ளையார் சதுர்த்தி, நவராத்ரி, தீபாவளி, மஹாஷஷ்டி, கார்த்திகை எல்லாம் இந்த 'பீரியட்'டில் வருபவைதான். ஆனாலும் தக்ஷிணாயனத்தைச் சேர்ந்த இந்த நாலு மாஸத்தில் கல்யாணம், உபநயனம், கும்பாபிஷேகம் முதலான சுபகார்யங்களைப் பண்ணினால் பலனில்லை. எல்லா ஜனங்களுக்குமான பண்டிகைகள் சாதுர்மாஸ்யத்தில் வந்தாலும் தனி மநுஷ்யர்கள் அல்லது ஆலயம் போலக் குறிப்பிட்ட ஒரு இடம் ஆகியவற்றுக்கான விழாக்களுக்கு இந்தக் காலம ஏற்றதில்லை. இக்காலத்தில் அவரவர்களும் நியமமாகப் பூஜை முதலானவற்றைச் செய்து கொண்டு சாதுர்மாஸ்ய வ்ரதம் அநுஷ்டிக்க வேண்டும். இதிலே ஆஹார நியமம் முக்கியம்.

மற்ற காலங்களில் சுத்தமானதாக ஒத்துக் கொள்ளப்படும் ஆஹார பதார்த்தங்களிலும் இந்த நாலு மாஸங்களில் ஒவ்வொரு மாஸமும் ஒவ்வொரு வகையானது தள்ளப்பட்டிருக்கிறது. இதை ஆஷாட த்வாதசியிலிருந்து கார்த்திகை த்வாதசி வரையிலான நாலு மாஸமாக வைத்துக் கொள்வது ஒரு வழக்கம். இன்னொரு வழக்கப்படி ஆஷாடத்தை அடுத்து வரும் ச்ராவண மாஸத்தில் ஆரம்பித்து கார்த்திகை முடிய இருக்கும் நாலு மாஸத்தில் அநுஷ்டிப்பதாக இருக்கிறது. ச்ராவண மாஸம் பூராவும் காய்கறிகளே சாப்பிடக்கூடாது. குழம்பில்கூடத் 'தான்' (காய்கறி) போடக்கூடாது. அப்பளாம், வடாம், சுண்டல்

மாதிரியானவற்றைத் 'தொட்டுக்கொண்டே' அந்த மாஸத்தைத் தள்ள வேண்டும். குழம்பேகூட புளியும் காய், மிளகாயும் காய் என்பதால் அவை இல்லாமல் மோரையும் இஞ்சியையும் போட்டே செய்ய வேண்டும். பாத்ரபத மாஸம் பூராவும் தயிரும் மோரும் சேர்த்துக் கொள்ளக்கூடாது. ஆச்வின மாஸம் முழுதும் பால் தள்ளுபடி. கார்த்திகை மாஸத்தில் நெய்யும், உளுந்து, துவரை, கடலை முதலான எந்தப் பருப்பு தினுஸூம் சாப்பிடக் கூடாது. சாதம் அல்லது சப்பாத்தியுடன் வெறுமனே கறிகாய்களை மட்டும் வேக வைத்துச் சாப்பிடலாம்.

மாத்வர்கள்தான் தற்போது ஓரளவு இந்த சாதுர்மாஸ்ய ஆஹார நியமத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தினப்படி அகத்துச் சமையல் இதன்படி செய்யாவிட்டாலும் சாதுர்மாஸ்யத்தில் சிராத்தம் வந்தால் அந்த சிராத்த போஜனத்தில் அவர்கள் சாதுர்மாஸ்ய நியாயப்படி தள்ள வேண்டியதைத் தள்ளிவிடுகிறார்கள். மற்றவர்கள் எதையும் கவனிப்பதில்லை. ஆசார ஸம்பிரதாயத்தில் வந்துள்ள ஸந்நியாஸிகள் மட்டும் நியமத்தை அநுஸரிக்கிறோம். ஆனால் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதும் வர வர சாஸ்த்ரப் பிரகாரம் இல்லாமல் எப்படியோ போய்க் கொண்டிருக்கிறது.

--------------------------------------------------------------------------------------------

* "தெய்வத்தின் குரல்"இரண்டாம் பகுதியில் "சிக்ஷை:வேதத்தின் மூக்கு"என்று உரையில் 'மாதப் பெயர்கள்'என்ற உட்பிரிவு பார்க்க

---

### தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### உப்பை விலக்குவது

**எ** தெது அவசியம் என்று இருக்கின்றனவோ அவற்றையே ஒவ்வொரு ஸமயத்தில் தள்ள வேண்டியதாயிருக்கிறது. க்ருஹஸ்தன் பண்ணியே தீரவேண்டுமென்றிருக்கிற அத்தனை வைதிக கர்மாக்களையுமே ஒரு காலத்தில் தள்ளி விட்டு ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளச் சொல்லியிருக்கிறது!ஜீவிப்பதற்கு அவசியமான ஆஹாரத்தை மந்த்ரபூர்வமாக புஜிப்பதற்கு வழி சொன்ன சாஸ்திரங்களே ஆஹாரத்தைத் தள்ளிவிட்டு உபவாஸமிருக்க வேண்டிய காலங்களையும் சொல்கிறது. முழுக்க ஆஹாரத்தைத் தள்ளாவிட்டாலும் அதில் இன்னின்ன காலத்தில் இன்னின்ன பதார்த்தங்களைத் தள்ள வேண்டுமென்று அநேக விதிகளைச் சொல்லுகிறது. அதில் சில சொன்னேன். இதில் 'அலவணம்'என்று ஒன்று. சாப்பாட்டில் உப்புச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்பதே அலவணம். "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே"என்று ஒரு பக்கம் சொல்லிவிட்டு, சில காலத்தில் உப்பு கூடாது என்றும் வைத்திருக்கிறது. உணர்ச்சி வேகத்துக்கு உப்பு காரணம். "மானம், ரோஷம் இல்லே?நீ உப்புப் போட்டுண்டு தின்றதில்லே?"என்று கேட்கிறோமல்லவா?ரொம்பவும் ஆத்ம மார்க்கத்தில் போகும்போது இந்த மானம், ரோஷம், மற்ற உணர்ச்சி வேகமெல்லாம் போகத்தான் வேண்டும். அதனால் ஸந்நியாஸி முதலியவர்கள் அலவணமாகச் சாப்பிட வேண்டும். டாக்டர்கள் ஒரு காரணத்துக்காக உப்பு கூடாது என்றால், சாஸ்த்ரமும் ஒரு காரணதுக்காக தள்ளுகிறது. 'வருண ஜபம்'முதலான வேத மந்த்ர ஜபங்களின்போது ஜபிக்கிறவர்கள் உப்புச் சேர்த்துக் கொண்டால் நிச்சயமாகப் பலன் கிடைக்காமலிருப்பதையும், அதுவே அவர்கள் அலவணமாய் இருந்தால் மழை பெய்கிறதையும் இந்தக் காலத்திலும் நிதர்சணமாகப் பார்க்கலாம். முருகன் சம்பந்தப்பட்ட செவ்வாய்க்கிழமை, ஷஷ்டி, கிருத்திகை முதலானவற்றில் குறிப்பாக அலவண நியமம் அநுஷ்டிக்கப்படுகிறது.

பதார்த்த சுத்தியில் ஜெனரலாக இருப்பதைத் தவிர குறிப்பிட்ட காலங்களில் மட்டும் குறிப்பிட்ட பதார்த்தங்கள் விலக்கப்பட்டிருக்கின்றன என்பதற்கு இதெல்லாம் திருஷ்டாந்தம்.

---

## தன் உணவைத் தானே செய்துகொள்வது

**ஆ** ஹாரத்தோடு ஸம்பந்தப்படுபவர்களின் சுத்தத்தைப் பற்றியும் சொன்னேன். ஸம்பந்தப்பட்ட வியவஸாயி, வியாபாரி ஆகியவர்களின் பரிசுத்தத்தை நாம் கவனிக்க முடியாவிட்டாலும், பண்ணிப் போடுபவர்களின் தன்மையை அவசியம் கவனிக்க வேண்டுமென்றேன். இதனால்தான் ஹோட்டல் கூடாது, ஹாஸ்டல் கூடாது என்கிறேன். அகத்திலுங்கூட தாயாரோ ஸம்ஸாரமோ பண்ணிப் பரிமாறினால் தோஷமில்லை என்று வழக்கமிருந்தாலும், நமக்கு நல்ல ஆத்மாபிவிருத்தி ஏற்பட வேண்டுமானால் சாப்பிடுகிற ஆஹாரம் நன்றாக தெய்வ ஸம்பந்தமுள்ளதாக யிருக்கவேண்டுமாதலால், மற்றவர்கள் எவரும் அப்படி தெய்வ நினைப்போடுதான் சமைத்துப் போடுவர்கள் என்று நிச்சயமாக வைத்துக்கொள்ள முடியாததை முன்னிட்டு, வேறே யாரையும் எதிர் பார்க்காமல் அவருவரும் தன் சாப்பாட்டைத் தானே தயாரித்துச் சாப்பிட வேண்டுமென்று முடிவாக உத்தரவு போடத்தான் இத்தனையும் சொன்னேன். 'ஸ்வயம் பாகம்'என்பதாக இதை விசேஷித்துச் சொல்லியிருக்கிறது. இந்த ஸ்வயம்பாகத்தைத் தான் இப்போது முக்யமான topicஆக எடுத்துக் கொள்ளப் போகிறேன்.

---



## ஸ்வயம்பாகம் புதுப்பாட்டு

**' ஸ்** வயம்பாகம்'என்றால் தானே சமைத்துக் கொள்வது என்று அர்த்தம். பாகம் என்றால் சமையல், Paakam என்று உச்சரிக்க வேண்டும்;bhaagam இல்லை.

ஸ்வயம்பாகத்தை விஷயமாக எடுத்துக் கொண்டதில் நான் வழக்கமாகப் பாடும் பாட்டுக்கு வித்யாஸமாகப் பாடப் போகிறேன். வழக்கமான பாட்டு பொம்மனாட்டிகள் காலேஜ், ஆபீஃஸ் என்று போகாமல் அகத்திலேயே இருந்து சமைத்துப் போட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்பது. இப்போது பாடப்போகிற புதுப் பாட்டு, புருஷர்களும் சமைக்கக் கற்றுக்கொண்டு, எல்லாருமே 'ஸ்வயம்பாகி'களாக வேண்டுமென்பது.

---



## அன்னரஸத்தில் திவ்ய ரஸம்

**ஸ்** வயம்பாகத்தை நான் சொல்கிறதற்குக் காரணங்கள் பல காரணங்கள் பல இருக்கின்றன. நாமே சமைத்துக் கொள்ளும்போதுதான் சமைகத்கிற நேரம் பூராவும் நாம் தெய்வ ஸம்பந்தமாகவே நாமாவைச் சொல்வது அல்லது ஸ்தோத்திரமோ ஸூக்தமோ சொல்வது என்று வைத்துக் கொண்டு, பதார்த்தத்தினால் ஸாத்விகமாக உள்ள ஒரு ஆஹாரம் அதோடு ஸம்பந்தப்படும் மநுஷ்யாளின் தப்பான எண்ணத்தால் கெட்டுப்போகாமல், மேலும் ஸாத்விகமாக ஆகும்படிச் செய்து கொள்ள முடியும்.

அடுப்பிலே உலை வைத்துவிட்டு அன்னம் பக்வமாகிறவரை அதன் பக்கத்திலேயே நின்று பார்த்துக் கொண்டுதான் இப்படி நாமாவோ ச்லோகமோ சொல்லிக் கொண்டிருக்கணும் என்பதில்லை!அரிசியைக் களைந்து போட்டுவிட்டு நாம் பாட்டுக்கு ஜபமோ பாராயணமோ பண்ணிக் கொணடிருக்கலாம். இந்த ரஸம் தானே அன்னரஸத்தில் சேரும். அப்புறம் கால்மணியோ, அரைமணியோ எப்போது அது பக்குவமாகுமோ அப்போது போய் இறக்கி வைத்துக் கொள்ளலாம். ஆனால் 'வெந்திருக்குமோ, வெந்திருக்குமோ?'என்று அதுவே ஜபமாக உட்கார்ந்திருக்கக் கூடாது!ஆரம்பத்தில் அந்த எண்ணம் வந்து கொண்டுதானிரு

ந்தாலும், நாளாவட்டத்தில் தானாக ஒரு 'டயம் ஸென்ஸ்'உண்டாகி, அந்த நினைவு இல்லாமல் கால்மணியோ அரைமணியோ ஐபத்திலேயே கான்ஸென்ட்ரேஷனோடு இருக்க முடியும்.

பதார்த்த சுத்தியும், சமைக்கும்போது பகவத் ஸ்மரணத்தால் உண்டான சுத்தியும் சேர்ந்த ஆஹாரத்தை அப்புறம் பகவானுக்கு நைவேத்யம் பண்ணி இன்னம் சுத்தமானதாக ஆக்க வேண்டும். கடைசியில், சாப்பிடும் போது "கோவிந்த, கோவிந்த"என்று சொல்லிக்கொண்டே சாப்பிடணும். "மௌனேன போக்தவ்யம்"- பேசாமலே சாப்பிட வேண்டும் என்பது விதி. 'பேசாமல்'என்றால் 'அதைப்போடு இதைப்போடு'என்காமல், எது இலையில் விழுகிறதோ அதைச் சாப்பிட வேண்டுமென்று அர்த்தம். மனஸுக்குள் கோவிந்த நாமோச்சாரணத்துடன் இப்படி போஜனம் பண்ண வேண்டும். கோவிந்த ரஸமாக உள்ளே போகிற அன்னத்தை, அங்கே ஜாடராக்னியாக இருக்கும் அவனே ஜீர்ணித்து தேஹ புஷ்டியோடு சித்த சுத்தியும் அருள்வான். கீதையில் (15.14) இப்படித்தான் சொல்லியிருக்கிறான்.

**அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹ-மாச்ரித :***

**ப்ராணாபாந-ஸமாயுக்த : பசாம்-யந்நம் சதுர்விதும் ****

ஆஹாரம் நாலு விதமானது ('அன்னம் சதுர்விதம்'). சாதம்போல மென்று சாப்பிடுவது 'காத்யம்'. 'கறுக் முறுக்'கென்று வறுவல் மாதிரிச் சாப்பிடுவது 'சோஷ்யம்'. அப்படியே பஞ்சாமிர்தம்போல, பல்லால் கடிக்க அவச்யமில்லாமல் விழுங்குவது 'லேஹ்யம்'. குடிக்கிறது 'பேயம்'. இந்த நாலையும் வயிற்றிலே உள்ள வைச்வாநர அக்னிதான் ஜீர்ணம் பண்ணுகிறது. ஐந்து பிராணன்களைக் கொண்டு ஜீர்ணித்த ஆஹாரத்தை வைச்வாநர சக்தியானது தேஹம் பூராவுக்கும் அனுப்புகிறது. அந்த ஐந்தில் பொதுவான ச்வாஸமான 'ப்ராண'னையும் கீழே நோக்கிப் போகிற வாயுவான 'அபான'னையும் இங்கே 'ப்ராணாபான'என்கிறார். "இப்படிப் பிராணகளின் தேஹத்தில் வைச்வாநரனாக இருப்பது நான்தாண்டா!"என்கிறார்.

ப்ராணாஹுதி என்று வேத மந்திர அதிகாரமுள்ள எல்லோரும் சாப்பிடுவதற்கு முந்தி, அன்னத்தைச் சுற்றியும் அதன் மேலேயும் தீர்த்தத்தைத் தெளித்து, வ்யாஹ்ருதிகளாலும் காயத்ரீயாலும் அதைச் சுத்தி செய்த பிறகு, இந்தப் பஞ்சப் பிராணன்களுக்குத் தான் ஆஹுதி பண்ணுகிறார்கள். வெளியிலே அக்னி மூட்டி ஹவிஸ்ஸை ஆஹுதி கொடுப்பது மாதிரி சாப்பிடுவதையும் உள்ளேயிருக்கிற அக்னிக்கு ஒரு குட்டி யஜ்ஞமாகவே வேதம் கொடுத்திருக்கிறது.

நமக்கு உள்ளேயிருக்கிற ஈஸ்வர சக்திதான் இந்த வேளை இந்த ஆஹாரம் நமக்கு லபிக்கும்படியாக அநுக்ரஹம் பண்ணியிருக்கிறது என்ற நினைப்போடு, இது நம் உடம்பில் ஒட்டும்படியாகவும் சித்தத்தை சுத்தம் பண்ணும்படியாகவும் அதுதான் அருள்புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கணும் என்பதே தாத்பர்யம்.

நைவேத்யமானது ஈஸ்வரனுக்கு ;Ü‰î Ü¡ùº‹ ßvõó¡î£¡;Ü¶ M¿‹ Ü,Q»‹ Üõ«ù;Þ‰î Ýý§F ð‡µAø£«ù, Üî£õ¶ ê£ŠH´Aø£«ù, ÞõÂ‹ ßvõó¡î£¡;Þîù£™ Ü¬ìAø ôzòº‹ Üõ«ùî£¡ - ' Šóyñ£˜ðí‹ Šóyñ ýM˜ Šóyñ£,ªï÷ Šóyñí£ ý§î‹ * Šóy¬ñõ «î¡ è‰îšò‹ '* â¡Á ê£Šð£†´ Mûò^¬îŠ Ìó£ Ìó£ Fšò óú^F™ è¬ó^¶Mì «õ‡´‹.

தானே சமைத்துக் கொள்வது என்கிறபோது வேலையைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று இருக்குமாதலால் பல தினுஸு வ்யஞ்ஜனங்களைப் பண்ணிக் கொள்ளத் தோன்றாது. அதாவது நாக்கு ருசிக்காக அமித போஜனம் பண்ணிச் சித்தசுத்தியைக் கெடுத்துக் கொள்ளாமலிருப்போம்.

பகவத் ஸம்பந்தப்படுத்தி நாமாவோடு சமைப்பது, நிவேதனம் பண்ணுவது என்கிறபோது மாம்ஸாதிகளையும், மற்ற ராஜஸ தாமஸ ஆஹாராதிகளையும் பண்ணவே தோன்றாது. அதாவது தன்னால் வெஜிடேரியனிஸமும் இதில் வந்துவிடும். அந்நிய பதார்த்தங்கள் பக்குவமாவதற்கு நிறைய 'டயம்'பிடிக்குமாதலாலும், தானே சமைத்துக் கொள்கிறவனுக்கு

அது வேண்டாமென்று தோன்றிவிடும். தர்ம சாஸ்திரத்தில் அஹிம்ஸை சொல்லியிருக்கிறது, யோக சாஸ்திரத்திலும் அதையே சொல்லியிருக்கிறது என்பதற்காகவெல்லாங்கூட அதைப் பின்பற்ற முடியாவிட்டாலும், 'தனக்கு டயம் ஸேவ் ஆகிறதே, வேலை ஸேவ் ஆகிறதே'என்பதனாலேயே ஸ்வயம்பாக நியமத்தில் வெஜிடேரியனியஸம் அநுஷ்டானத்துக்கு வந்துவிடும்!எப்படி வந்தாலென்ன?அப்புறம் இதவே தர்மசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற புண்ணியத்தையும், யோக சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற சித்த சுத்தியையும் கொடுத்துவிடும்.

ஆஹார தினுஸுகள் (ஸ்வயம்பாகத்தில்) குறைத்து விடுகின்றன என்பதாலேயே செலவும் குறைந்து விடும். அதாவது எகானமிக்கு எகானமி.

இன்னொன்று :இன்னொருத்தர் சமைத்துப் போடுகிறபோது, நாக்கைத் தீட்டி வைத்துக்கொண்டு, 'இது உப்பு, அது உறைப்பு'என்று நோணாவட்டம் சொல்லத் தோன்றுகிறது. இதில் நமக்கும் அதிருப்தி;பண்ணினவர்களுக்கும் மனக்கிலேசம். நாமே செய்து கொண்டால் அந்தச் சமையல் எப்படி இருந்தாலும் தேவாம்ருதமாகத் தோன்றும். சாப்பிடுகிற வேளையில் 'எரி பிரி'என்றில்லாமல் ஸந்தோஷமாக, திருப்தியாக இருக்கும். ஆஹாரம் இதனாலேயே உடம்பில் ஒட்டி சித்தத்திலும் நல்லதைப் பண்ணும்.

பிறத்தியாருடைய மனோபாவம், 'பெர்ஸனல் மாக்னடிஸம்', 'ஆரா'என்றெல்லாம் பாரா-ஸைகாலஜிக்காரர்களும் சொல்கிற சக்தி சாப்பாட்டின் வழியாகப் பாய்ந்து ஒருத்தனுடைய 'ஆரா'வை பாதிக்காமல் அவனவனும் தன் கையாலேயே பொங்கிப் போட்டுக் கொண்டு தன் உள்பான்மையைக் காப்பாற்றிக் கொள்ள ஸ்வயம்பாகமே உதவி செய்கிறது.

இப்படி பல விதத்தில் நன்மை ஏற்படுகிறது.

'மேல்ஜாதி - கீழ்ஜாதி;என்ன ஜாதியார் யார் சமைத்ததைச் சாப்பிடலாம், சாப்பிடக்கூடாது'என்கிற பேச்சுக்கும் இடமில்லாமல் ஆகிவிடும். எந்த ஜாதிக்காரனானாலும் அவனுவனும் தன் கையாலேயே பொங்கிப் போட்டுக் கொள்வது;சொந்த மநுஷ்யாள், பத்தினியோ மாதாவோ சமைத்தால்கூட சாப்பிடுவதில்லை என்று நியமம் வைத்துக்கொண்டு விட்ட பின் மற்றவர்களில் யார் பண்ணிப் போட்டால் சாப்பிடலாம் அல்லது சாப்பிடக்கூடாது என்ற கேள்விக்கே இடமில்லையோல்லியோ?

---

* W¬î 4.24. Þ„ ²«ô£è˜F™ ÿªðKòõ˜èœ Ãø£ñ™ M†ì è¬ìCŠ ð£î‹ "Šóyñ è˜ñ úñ£Fï£"â¡ðî£°‹.

---



## உடன் உண்பவர்கள்

**இ** தைப்பற்றிச் சொல்லும்போது ஒரு விஷயம் சொல்ல மறந்து விட்டேனென்று ஞாபகம் வருகிறது. ஆஹாரத்தோடு ஸம்பந்தப்பட்டவர்களைப்பற்றிச் சொல்லும்போது அதைச் சமைத்தவர்கள், பரிமாறுகிறவர்கள் ஆகிய இரண்டு பேரோடுகூட, கூடச் சாப்பிடுகிறவர்களையும் சொல்லியிருக்க வேண்டும்.

போஜனம் பண்ணும்போது நம்மோடு சாப்பிடுகிறவர்களுடைய குண தோஷங்களின் பரமாணுக்களும் நாம் சாப்பிடும் அன்னத்தில் ஓரளவுக்குச் சேர்கிறது. பரம சுத்தமாக இருக்கப்பட்டவர்களைப் பங்க்தி பாவனர்கள் என்று சொல்லியிருக்கிறது - அதாவது அவர்கள் உட்கார்ந்திருப்பதாலேயே அந்தப் பந்தி(பங்க்தி)யைச் சுத்தப்படுபடுத்தி விடுகிறார்களாம். அவர்களோடு நாம் போஜனம் பண்ணினால் அந்த ஆஹாரம் உள்ளே போய் நம் மனஸைத் தூயதாக்கும். இதே மாதிரி 'பங்க்தி தூஷக'ர்களைப் பற்றியும் சொல்லியிருக்கிறது. ரொம்பவும் தோஷமுள்ள இவர்கள் உட்கார்ந்திருப்பதாலேயே பந்தி

முழுதும் அசுத்தி ஆகிவிடுகிறதாம்.

இது மட்டுமில்லை. சைவ போஜனமே பண்ண வேண்டிய ஜாதிக்காரன் அசைவ போஜனம் அநுமதிக்கப்பட்ட ஜாதியாருடன் சேர்ந்து சாப்பிட்டால் என்ன ஆகும்?அந்நிய பதார்த்தத்தில் இவனுக்கு ஒரு ஆசை உண்டானாலும் உண்டாகக் கூடுமல்லவா?நியமம் தப்ப இடமுண்டாகிவிடும் அல்லவா?'ஸம பங்க்தி'யினால் ஸமத்வம் கொண்டு வருவதாகச் சொல்லிக்கொண்டு, கிழங்கையும், பழத்தையும் தின்றுகொண்டு கிடக்க வேண்டிய ஒரு ஸந்நியாசியை, முள்ளங்கி வெங்காய வாஸனை சபலப்படுத்துகிற பொதுப் பங்க்தியில் கொண்டு உட்கார்த்தி வைத்தால் அவனுடைய பெரிய லக்ஷ்யத்துக்கே அல்லவா ஹானி வந்துவிடும்?இம்மாதிரி ஒரு ஜாதிக்காரன், அல்லது ஆச்ரமக்காரனின் தர்மம் கெட்டுப் போவதால் பாதிக்கப்படுவது அவன் மட்டுமில்லை;இதனால் அவன் செய்கிற கார்யம் கெட்டு அவனால் ஸமூஹத்துக்கு கிடைக்கிற நன்மையே போய்விடுகிறது என்பதைச் சீர்திருத்தக்காரர்கள் கொஞ்சம் யோசிக்க வேண்டும்.

ஸம பங்க்தி, ஹாஸ்டல்களின் காமன் மெஸ், கான்டீனில் ஒரே சமையற்கட்டிலேயே சைவ பதார்த்தம், அசைவ பதார்த்தம் இரண்டையும் சமைத்து அந்தப் பரமாணுக்கள் கலப்பது என்றெல்லாம் பண்ணியிருப்பது எல்லாரையும் பக்குவ ஸ்திதியில் ஒரேபோல் இறக்குகிற ஸமத்வத்தை சாதித்திருக்கிற அநேக சீர்திருத்தங்களில் ஒன்றாகத்தான் ஆகும்!

கேட்டால் இப்படியெல்லாம் சீர்திருத்தம் பண்ணினால்தான் ஒற்றுமை உண்டாகுமென்கிறார்கள். எனக்குச் சிரிப்புதான் வருகிறது - எல்லாரையும் சேர உட்கார வைத்து, நியமமில்லாத ஆஹாரதிகளைப் போட்டுவிட்டால், ஒற்றுமை உண்டாகிவிடும் என்பதைக் கேட்க!உலகத்தின் எல்லா தேசங்களையும் யுத்தத்தில் இழுத்துவிட்டு ஜன ஸமுதாயத்துக்கே பெரிய சேதம் விளைவித்த World War-க்குக் காரணமாயிருந்த ராஜாங்கங்களெல்லாம் யுத்தப் பிரகடனம் செய்ததற்கு முதல் நாள் வரையில் பரஸ்பரம் விருந்து கொடுத்துக் கொண்டு, இவருக்கு அவர் 'டோஸ்ட்', அவருக்கு இவர் 'டோஸ்ட்'என்று சேர்ந்து சாப்பிட்டுவிட்டுத்தான் மறுநாளே ஒருத்தர் தேசத்தை இன்னொருத்தர் நாசம் பண்ண ஆரம்பித்தார்கள் - ராணுவம், ஸிவிலியன் பாபுலேஷன் என்ற வியவஸ்தை இல்லாமலே!அப்படியும் 'ஒற்றுமை'ஸஹபோஜனத்தால் வந்துவிடும் என்று உபதேசம் செய்கிறார்கள்!

ஏதோ தாற்காலிகமாக ஏற்படக்கூடிய அல்ப திருப்திக்காகவே இப்போது நடக்கும் இந்த தேக் கச்சேரிகளும், சிற்றுண்டி விருந்துகளும், கலப்பு போஜனங்களும் பிரயோஜனப்படுகின்றனவே தவிர இதனால் ஒற்றுமையோ, ஸௌஜன்யமோ உண்டாகி விடவில்லை என்பது இந்தப் புதுப் பழக்கங்கள் நம் தேசத்தில் ஏற்பட்டு பல வருஷங்களாகி, இன்னமும் தினந்தினம் ஸமூஹச் சண்டைகள் ஜாஸ்தியாகிக் கொண்டு தானிருக்கின்றன என்பதிலிருந்தே தெரிகிறது. பட்டம் பெறுவது மாதிரி ஸ்வய லாபத்தை உத்தேசித்து ஒரு ஏமாற்று வித்தையாகத்தான் இந்த விருந்து உபசாரங்கள் நடக்கின்றன. இதோடு போனால் கூடப் பரவாயில்லை. இந்த நவ நாகரிக விருந்துகள் தர்ம நூல்களிலிருந்தும் வெகுதூரம் எட்டிப் போய்க் கொண்டிருப்பதால் ஆத்மார்த்தமாகவும் பெரிய நஷ்டத்தை உண்டாக்குகின்றன.

சாச்வத ஒற்றுமைக்கு வழி, சேர்ந்து உண்டு காட்டுவதல்ல;சேர்ந்து தொண்டு காட்டுவதேயாகும். நான் பல ஸமயங்களில் சொன்னதுபோல ஜாதி என்கிற பேச்சுக்கே இடமில்லாமல், ஸகல ஜனங்களும் சேர்ந்து ஸகல ஜனங்களுக்குமான தொண்டுகளைச் செய்வதால் தான் ஒற்றுமை வளரும். இந்தப் பொது ஸேவை பரிசுத்தமாக நடக்க முடியாதபடி அதிலும் அரசியலைக் கொண்டுவந்து விட்டு விட்டு, ஆசார சாஸ்திரத்தைச் சேர்ந்த ஆஹாராதி விஷயங்களில் அரசியல் அபேத வாதங்களைக் கலந்து தர்மங்கள் கெடும்படிச் செய்து வருகிறார்கள்.

அவனவன் தானே சமைத்துக் கொள்வதோடு, சாப்பிடும்போதும் பிறரின் பரமாணு எதுவும் சேராமல் தனியாகவே சாப்பிடுவது ச்லாக்கியம். ஸ்வயம்பாகம் பண்ணிக் கொள்கிறவர்களே சாப்பிடும்போது ஒருத்தருக்கு மேல் சேர்ந்தால், 'நீ என்ன பண்ணிக்

கொண்டிருக்கிறாய்?'என்று ஒருத்தரையொருத்தர் கேட்டுக் கொண்டு நாக்குச் சபலத்துக்கு இடங்கொடுக்க வேண்டிவரும். ஆகையால் தனித்தனியாய்ப் பண்ணிக்கொள்வதைத் தனித்தனியாகவே சாப்பிட்டுக் கொள்ள வேண்டும். ஸமத்வமும் ஸோஷலிஸமும் வேறு துறைகளினால் ஏற்பட்டால் போதும்.

பொதுச் சமையல், ஸமபந்தி என்று 'சீர்திருத்தம்'பண்ணியதால் பிராணி ஹிம்ஸைதான் ஜாஸ்தியாயிருக்கிறது. தலைமுறை தத்வமாக மரக்கறி உணவையே கடைப்பிடித்த பலர் நான்-வெஜிடேரியன்கள் ஆகியிருக்கிறார்களென்றால் அதற்கு இந்த 'சீர்திருத்தம்'தான் காரணம்.

பஹுகாலமாக நான்-வெஜிடேரியன்களாகவே இருந்து வருகிற தேசங்களிலும் அங்கங்கே ஏதோ பத்து இருபது பேர் கஷ்டப்பட்டு வெஜிடேரியன்கஸாக இருந்து கொண்டு வெஜிடேரியனிஸத்தைப் பிரசாரப்படுத்தப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் புதிசாக எதை ஏற்படுத்த முயல்கிறார்களோ அது ஏற்கெனவே நம்மிலே எத்தனையோ கோடிப் பேருக்குப் பாரம்பர்யமாக வந்திருந்தும், நாம் இருக்கிறதையும் அழித்துவிட்டு, லோகத்துக்கே வழிகாட்டியாகச் செய்கிற லாபத்தை நஷ்டப்படுத்தி, 'சீர்திருத்த ம்'செய்கிறோம்!மநுஷ்யர்களாகப் பிறந்தவர்கள் தங்களுடைய status (அந்தஸ்து) என்கிறதை அதற்கு ஸம்பந்தமேயில்லாமல் சாப்பாட்டில் கொண்டு வந்து அதற்காக ஏற்படுத்துகிற ஸமத்வத்துக்காகப் பசு பக்ஷிளாகப் பிறந்த அநேக ஜந்துக்கள் உயிரையே இழக்கும்படிப் பண்ணி வருகிறார்கள். காந்தீயத்தில் இந்த ஸமத்வம், அந்த அஹிம்ஸை இரண்டுமே இருக்கின்றன என்கிறார்கள்!

தானே தன் சாப்பாட்டைத் தயாரித்துக் கொள்வதிலுள்ள அநேக நல்ல பலன்களைச் சொல்லிக் கொண்டிருந்தேன். அதிலே எதிர்பார்க்க முடியாத இன்னொரு பிரயோஜனத்தைச் சொல்கிறேன்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

## வேத வித்தை வளரவும் வழி

**வே** த வித்யாப்யாஸமே ஸ்வயம்பாகத்தால் வளரும். இதற்கும் அதற்கும் என்ன ஸம்பந்தம் என்று தோன்றலாம். சொல்கிறேன்:வடக்கே நான் போயிருக்கும் போது பார்த்திருக்கிறேன். ஒரிஸ்ஸா, பெங்கால், யு.பி. முதலிய இடங்களில் நம்மூர் மாதிரி வேத பாடசாலை என்றில்லாவிட்டாலும் ஸம்ஸ்க்ருத பாடசாலை என்று இருக்கும். நம்மூரில், தமிழ்நாட்டில் மொத்தம் ஏதாவது முப்பது நாற்பது பாடசாலைகள் நல்ல 'ஸ்ட்ரெங்க்த்'தோடு இருக்குமா என்கிறதே ஸந்தேஹமாயிருக்க, அங்கேயெல்லாம் இப்படிப்பட்ட ஸம்ஸ்க்ருத பாட சாலைகள் நூற்றுக்கணக்கில் இருந்தன. பாடசாலை என்பதே அங்கே 'டோல்'என்பார்கள். இந்த விஷயத்தில் ரொம்ப backward-ஆக இருக்கும் என்று நாம் நினைக்கிற அஸ்ஸாமிலேயே சுமார் இருநூறு டோல் இருக்கிறதென்று கவர்னர் சொன்னார். இதிலே இன்னும் வேடிக்கை என்னவென்றால் நம் பாடசாலைகளுக்கு நிறைய மூலதனம் இருக்கிறாற்போலவும் வடக்கத்திப் பாடசாலைகளுக்குக் கிடையாது.

ஆசாரம், ஸம்பிரதாயம் என்பதிலெல்லாம் நாம்தான் ரொம்ப மேல் என்று நாம் நினைத்துக் கொண்டிருந்த போதிலும், நம் பக்கத்தில் நிறைய மூலதனமிருந்தும் வேதபாடசாலைகள் தினக்ரமேண க்ஷீணித்துப் போகிறதேன், வடக்கே இத்தனை 'டோல்'கள் இப்படி நல்ல 'ஸ்ட்ரெங்கத்'தோடு இருப்பதேன் என்று எனக்கு ரொம்ப நாள் புரியாமலிருந்தது. அப்புறம்தான் அவர்களையே கேட்டதில் புரிந்தது.

"மூலதனம் இல்லை என்கிறீர்கள். இத்தனை மாணவர்கள் எப்படியிருக்கிறார்கள்?"என்று கேட்டேன்.

"மாணவர்கள் இருப்பதற்கு மூலதனம் என்னத்துக்கு?"என்று எதிர்கேள்வி கேட்டார்கள்.

"ஃப்ரீயாக சாப்பாடாவது போட்டால்தானே வித்யார்த்திகள் சேர்வார்கள்?"என்றேன்.

"ஆமாம், சாப்பாடு போடவேண்டியதுதான். அதற்கு மூலதனம் வைப்பானேன்?கிரானாக்கார பனியாவோ, மார்வாரியோ இருக்கிறான். (கிரானா என்றால் பலசரக்குக் கடை.) ஸம்ஸ்க்ருதம் படிக்கிறோம் என்று சொல்லிக்கொண்டு பசங்கள் போய்க் கேட்டால் அவன் ஆட்டமாவும் மக்கனும் கொடுத்து விடுகிறான். (மக்கன் என்றால் வெண்ணெய்.) அந்தந்த மாணவனே அந்த மாவைப் பிசைந்து தவ்வாவிலே போட்டு சுட்டு ரொட்டி பண்ணித் தின்று கொள்கிறான். அவ்வளவுதானே?'மக்கன்'கிடைக்காவிட்டால் கூடச் சரி. அப்படியே நெய்யுமில்லாமல் சுக்கான் ரொட்டியாக வாட்டித் தின்று விடுவது எங்களுக்குப் பழக்கந்தான். தவ்வா கூட வேண்டுமென்பதில்லை. ரொட்டி மாவுருண்டையையே கொஞ்சம் தட்டி அப்படியே சுள்ளியிலே போட்டுவிட்டால் அது உப்பிக்கொண்டு வெந்துவிடும். அதைத் எடுத்துத் தின்பதும் வழக்கம்தான். கொஞ்சம் ஜாஸ்தி வசதியிருந்தால் பருப்பை வேகவைத்து ஒரு டாலும் பண்ணிக்கொண்டு விடுவோம். எத்தனையோ கிரானாக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கடைக்காரனும் ஒரு பையனுக்கு மாவு முதலானது கொடுக்க யோசிப்பதில்லை"என்று ரொம்பவும் ஸிம்பிளாகச் சொல்லி விட்டார்கள்.

இங்கே நம்மூரிலானால் பாடசாலை வைக்கிறோம் என்றாலே உக்ராணம், வெங்கலப் பானை, வாணலி, அண்டா, குண்டான், அரிசி மூட்டை, புளிப்பானை, அப்புறம் அஞ்சறைப் பெட்டி இத்யாதி வேண்டியிருக்கின்றன. நிர்வாஹம் பண்ண மணியக்காரன், காவலுக்கு ஆள் இதெல்லாம் வேறே. எத்தனைதான் மூலதனமிருந்தாலும் இப்போதிருக்கிற இன்ஃப்ளேஷனிலும் விலைவாசி நாளுக்கு நாள் ஏறிக்கொண்டிருப்பதிலும், சாப்பாட்டுக் செலவுக்கே கட்ட மாட்டேனென்று ஆகிறது. அப்புறம்தானே வாத்தியார் சம்பளம், பசங்களுக்கு 'ஸ்டைபென்ட் இதெல்லாம்?இந்தக் காரணத்தால்தான் பாடசாலைகளையே மூட வேண்டியிருக்கிறது.

அவர்கள் சொன்னதிலிருந்துதான், 'ஓஹோ!தக்ஷிணத்தில் வேதவித்யை க்ஷீணித்துப் போகிறதற்கே நம்முடைய அஞ்சறைபெட்டிச் சமையல்தான் காரணமா?நாக்கு ருசிக்காகவா நம் மதத்தின் வேரான வேதத்தை அறுத்திருக்கிறோம்?'என்று தெரிந்தது.

இத்தனை தினுஸு, காரமும் புளிப்புமாகச் சாப்பிட்டாலே பிரம்மசாரியாக இருக்கவேண்டியவனுக்கு நல்லதில்லை. "நீயே சமைத்துச் சாப்பிட்டுக்கொள்"என்று விட்டுவிட்டால் அவன் இந்த 'அஞ்சறை பெட்டி ஆஃபீஸ்'நடத்தவே மாட்டான். படிக்கணும், அநுஷ்டானம் பண்ணணும் என்பதால் அவனாகவே வடக்கே செய்கிற மாதிரி ஏதோ ஒரு தினுஸு, இரண்டு தினுஸு லேசான ஆஹாரமாக, ஸத்வப் பிரதானமானதாக, பண்ணிச் சாப்பிட்டுவிட்டுத் திருப்தியாயிருந்து விடுவான். பாடசாலைக்குப் பெரிய மூலதனம் வேண்டாம் என்றால், வேத வித்யையும் தன்னால் இப்போதிருப்பதைவிட நன்றாக வளரும்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### பிக்ஷையும் ஸ்வயம்பாகமும்

**பி** ரம்மசாரிகள் பிக்ஷாசர்யம் பண்ண வேண்டும் (பிக்ஷை எடுத்துச் சாப்பிட வேண்டும்) என்று நான் சொல்லி வருவதற்கு1*இது (மாணவன் ஸ்வயம்பாகம் செய்து சாப்பிட வேண்டுமென்பது) விரோதமாயிருக்கிறதே என்று தோன்றலாம். வித்யாப்யாஸ காலம் பூராவும் ஒரு பையன் பிக்ஷை எடுத்துச் சாப்பிடுவான், சாப்பிட வேண்டும் என்று நான் இந்தக் கால நிலைமையில் எதிர் பார்க்கவுமில்லை, நிர்பந்திக்கவுமில்லை. அப்படி ஒருத்தன் பண்ணினால் அது எனக்கு ரொம்ப ஸந்தோஷந்தான். ஆனால் அபூர்வமாய் எவனோதான் அப்படிப் பண்ண முடியும். பொதுவில் எல்லா மாணவர்களும் ஒரு வருஷமாவது

நிலையில் உள்ள வேலைக்காரன்கூட உயரந்த நிலையிலுள்ள முதலாளி வீட்டில் சாப்பிடுவதில்லை என்றிருக்கிறான்!இப்படி ஜாதிக்காக இல்லாமல் 'ஸ்வயம்பாகம்'என்ற நியமத்துக்காக என்று வைத்துக் கொள்ளும்போது, சண்டையும் இல்லாமலிருக்கிறது.

வடக்கே ஸம்பந்திகள் வீட்டில்கூட ஜன்மத்திலேயே ஒரு நாளாகக் கல்யாண தினத்தன்று மட்டுந்தான் சாப்பிடுவார்கள்.

அவனவனும் தன்னை pure-ஆக வைத்துக் கொள்ளப் பாடுபட்டுக் கொண்டிருந்தாலே எல்லாருக்கும் க்ஷேமம். இதிலே ஒரு அங்கம்தான் பிறத்தியாரால் அந்த purity-க்கு கெடுதல் வந்துவிடப் போகிறதே என்று ஜாக்கிரதையாக, அவர்களுடைய 'ரேடியேஷன்'ஆஹாரத்தில் ஏற்படாமல், தன் சாப்பாட்டைத் தானே பண்ணிக் கொள்வது. சாப்பாட்டு விஷயத்திலே ஜாதி முதலான அம்சங்களுக்கு இடமேயில்லை. இந்த ஸமத்வத்துக்காக யார் சமைத்தாலும் எல்லாரும் சாப்பிட்டாக வேண்டுமென்று பண்ணி ஜனங்களின் personal purity-ஐ பாதிக்க வேண்டாம். "ஜாதி கூடாது"என்று ஆரம்பத்திலிருந்து இப்படி ஸம்பந்தமில்லாத விஷயங்களிலெல்லாங்கூட ஜாதியைக் கொண்டு வந்து அதில் அபேத வாதத்தை நிலை நாட்டுவதே எல்லாவற்றையும்விட முக்யம் என்பதாக விஷயம் தெரிந்துகொள்ளாமல் செய்து வருகிறார்கள்.

ஒருத்தர் சமைத்து இன்னொருத்தர் சாப்பிடுவது என்கிறபோது சாஸ்திரத்தைப் பார்த்தால் ஒரு விதமாயிருக்கிறது;சீர்திருத்தக்காரர்கள் சொல்வது இன்னொரு விதமாயிருக்கிறது. மேல்ஜாதி, கீழ்ஜாதி என்று தப்பாக நினைத்துக்கொண்டு, "நீ சாப்பிடலாம், நீ சாப்பிடக்கூடாது"என்று வித்யாஸம் பார்த்தால் சிலருக்குக் கஷ்டமாயிருக்கிறது. "இதிலே மேலும் இல்லை;கீழும் இல்லை அவரவர் காரியம் ஒழுங்காக நடப்பதற்காக அந்தந்தக் காரியத்துக்கு அநுகூலமாக நியமங்களை வித்யாஸம் செய்திருக்கிறது. வித்யாஸத்தை எடுத்தால் எல்லாம் கலந்து குழம்பிப் போய்விடும்"என்று நினைக்கிறவர்களுக்கோ 'ஸமத்வம்'என்று சொல்லப்படுகிறதைப் பின்பற்றினால் கஷ்டமாயிருக்கிறது. அதாவது எவர் பண்ணிப் போட்டாலும் எல்லாரும் சாப்பிடலாம் என்றால் சிலருக்குக் கஷ்டமாயிருக்கிறது. சாப்பிடக் கூடாது என்றால் சிலருக்குக் கஷ்டமாயிருக்கிறது. கஷ்டம் என்கிறது சண்டையாக ஆகிறது.

காயத்துக்குத்தான் ஜாதியே தவிர சண்டைக்கா வைத்திருக்கிறது?அதுவும் சாப்பாட்டிலே சண்டை என்றால் வேதனையாயிருக்கிறது. இதற்கெல்லாம் ஒரே ஸொல்யூஷன் ஸ்வயம்பாகம்தான் என்று தெரிகிறது. மேல் ஜாதியா, கீழ் ஜாதியா என்ற கேள்விக்கே இடமில்லாமல், "The question does not arise" என்கிறாற்போல், இந்த விஷயங்கள் எழும்புவதற்கே இடமே தராமல், அந்தந்த ஜாதிக்காரனே சமைத்தாலும் சாப்பிடுவதில்லை, அம்மாவோ, அகமுடையாளோ பண்ணினால்கூடத் தொடுவதில்லை, அவனவனும் தன் கையால்தான் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று வைத்து விடுகிற நியமமே ஸொஸ்யூஷன்.

எவன் தொட்டுச் சாப்பிடலாம், எவன் பார்த்துச் சாப்பிடலாம், எவனோடு சாப்பிடலாம் என்கிற கேள்விகள் இருக்கிறவரையில் சாஸ்திரம் ஒன்றாகவும் சீர்திருத்தம் இன்னொன்றாகவும் இருந்துகொண்டு சண்டைதான் வரும். அதனால் எவனுமே தொடாமல் அவனவனே சமைத்துக் கொண்டு, எவனுமே பார்க்காமல், எவனோடும் சேர்ந்து உட்காராமல் தனித்தனியாகப் போஜனம் பண்ணி விடுவது உத்தமம். ' **காகம் கரைந்துண்ணக் கண்டீர்** 'என்கிறாற்போல் சேர்ந்து சாப்பிட வேண்டுமென்றிருந்தால் பழங்கள், பானங்களைச் சேர்ந்து சாப்பிடலாம். மற்றவர்கள் சமைத்துக் கொள்ள உணவுப் பண்டங்களாகக் கொடுப்பதே விருந்துபசாரந்தான்;அப்படிப் பண்ணலாம்.

இதுவரை தக்ஷிணத்தில் நம்மைவிடக் கடும் குலாசாரமுள்ளவர்களின் கையில், அல்லது பெர்ஸனலாக நம்மைவிட சுத்தமானவர்களின் கையிலிருந்து வாங்கிச் சாப்பிடலாம் என்று இருந்து வந்திருக்கிறது. வடக்கேயோ இதுவும் கூடாது. கிஸான் (குடியானவன்) ஆனாலும் பண்டிட் ஆனாலும் அவனவனே சமைத்துக்கொள்ள வேண்டுமென்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதிலேயும் ஒரு நல்ல அம்சம் இருக்கிறது. நம்மைவிட சுத்தர்கள்

கையில் சாப்பிடலாம் என்பதனாலேயே நாம் அவ்வளவு சுத்தியாவதற்கு பிரயத்தனப்படாமலே இருந்து கொண்டிருக்கலாம் என்பதற்கும் இடம் கொடுத்துப் போகிறது. ஸ்வயம்பாகம் என்று வைத்து, நம்முடைய அசுத்தி நாமே பண்ணிக் கொள்கிற சாப்பாட்டினால் நமக்குள் மேலே மேலே போய்க்கொண்டேயிருக்கிறபோது தான், இப்படி நம்மைக் கெடுத்துக்கொள்ளக் கூடாது என்று நினைத்து நம்மை சுத்தப்படுத்திக் கொள்வதற்குப் பிரயத்னம் செய்வோம். "சாப்பாடு பண்ணிப் போடுகிறவனின் சுத்தம் சாப்பிடுகிறவனுக்குள் போகிறது;நாம் சுத்தனாக வேண்டும்;அதே ஸமயத்திலே நம் சாப்பாட்டை நாமே பண்ணிக்கொள்ள வேண்டும்"என்றால் அப்போது நாம் சுத்தமாக ஆவதற்கு முயற்சி பண்ணத்தானே செய்வோம்?

ஸ்வாமி பிரஸாதம், குருப் பிரஸாதம் தவிர ஸ்வயம்பாகம்தான் என்று ஆக்கிக் கொண்டுவிட வேண்டும்.

இதனால் ஒரு டிஸிப்ளினும் உண்டாகிறது. சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கவோ, அரட்டை, சீட்டு, ஸினிமா என்று போகவோ விடாமல் சமையல் வேலை என்று ஒன்று ஒருத்தனைக் கட்டிப் போடுகிறதல்லவா?இதில் தானே பண்ணிக் கொள்வதால் நிறைய தினுசு வேண்டாம் என்று நாக்கு டிஸிப்ளினும் வருகிறது. சமைத்ததில் ஸத்வ ரஸம் இருக்க வேண்டுமென்பதை உத்தேசித்து அப்போது நாமஜபம் செய்கிற டிஸிப்ளின் வேறு. தானே பொங்கிப் போட்டுக் கொள்வது என்கிற, அல்பமாகத் தோன்றுகிற தர்மாசாரத்துக்கு இத்தனை நல்ல பலன்கள்!

"எப்படிக் கற்றுக் கொள்வது?"என்று புருஷர்களாய் பிறந்தவர்கள் பிரமிக்க வேண்டியதில்லை. "இப்படித்தான் இருக்கணும்"என்ற எண்ணம் வந்துவிட்டால், ஈஸியாக கற்றுக் கொண்டு விடலாம். பொம்மனாட்டிக் குழந்தைகள் சூட்டிகையாயிருந்தால், அரைத்துக் கரைத்து இத்தனை தினுஸோடும் சமைப்பதற்குப் பன்னிரண்டு வயஸுக்குள் கற்றுக் கொண்டு விடவில்லையா? 'வெரைய்டி'இல்லாமல் ஸிம்பிளாக ஒரு சப்பாத்தி அல்லது ஒரு பொங்கல், ஒரு தயிர் என்று ஆஹாரத்தை ஆக்கிக் கொண்டு விட்டால், நாலே நாளில் கற்றுக்கொண்டு விடலாம். என் அபிப்ராயம், பதினைந்தே நிமிஷத்தில் தயாரிக்கக்கூடியதாக ஏதாவது ஒரு ஸிம்பிள் ஆஹாரத்தைப் புருஷர்கள் அத்தனை பேரும் தெரிந்து கொண்டு தாங்களே அதைப் பண்ணிப் போட்டுக் கொண்டு சாப்பிட வேண்டுமென்பது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)**

**கல்வித் திட்டத்தில் சமையற் படிப்பு**

ஜீ விக்கிறதற்கு basic-ஆக இருப்பது சாப்பாடு தானே?அதனால் இந்த ஸ்வயம்பாகத்துக்குத்தான் basic education -லேயே (அடிப்படைக் கல்விலேயே) முதலிடம் கொடுத்து ஆண், பெண் அனைவருக்கும் சமையல் அறிவைக் கொடுத்துவிட வேண்டும். ஆமாம் "சமய அறிவைக் கொடுக்கும்படியாக இப்போதிருக்கிற ஸெக்யூலர் எஜுகேஷனை மாற்ற வேண்டும்"என்கிற நான்தான் இப்போது எல்லாவற்றுக்கும் "முந்தி சமையல் அறிவைக் கொடுக்கணும். எல்லாரையும் சாப்பாட்டு ராமன் ஆக்கணும்"என்கிறேன். ஆஹாரத்தைப் பொறுத்துத்தான் குணங்களும் மனப்பான்மையும் உண்டாகிறதால், சமய ஞானத்தில் பிடிப்பு உண்டாவதற்கே சமையல் ஞானத்தை உண்டாக்க வேண்டியாதாகிறது!

படிப்பிலே அடிப்படை Three R's என்பார்கள். 'ரீடிங்'முதல் 'ஆர்', 'ரைட்டிங்'இரண்டாவது 'ஆர்', 'ரித்மெடிக்'('அரித்மெடிக்'என்பது பேச்சில் 'ரித்மெடிக்'என்றாகும்) மூன்றாவது 'ஆர்'. நான் இதற்கெல்லாமும் அடிப்படையாக அடிப்படைக் கல்வியில் ஸ்வயம் பாகத்தைச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்கிறேன்.

நேரு "Kitchen religion" - "அடுப்பங்கரை மதம்"- என்று ஹிந்து மதத்தைப் பற்றி அடிக்கடி சொல்கிறார். அப்படிச் சொல்கிறபோது தாம் ஹிந்து மதத்தை ரொம்ப நன்றாகப் பரிஹாஸம் செய்கிறோம் என்று நினைக்கிறார். வாஸ்தவத்தில் அவர்தான் ஹிந்து மதத்தின் ஸாரத்தைப்

புரிந்துகொண்டு அதற்கு ஸர்ட்டிஃபிகேட் தருகிறார்!நம் மதம் Kitchen religion -தான்;அடுப்பங்கரை மதம்தான்!

வேதம்தான் நம் மதத்துக்கு ப்ராமண நூல். வேதத்துக்கும் சிரஸில் இருப்பது உபநிஷத். அதிலே ஒரு உபநிஷத்திலே, ஆத்மா, பிரம்மம் என்று நமக்குப் புரியாத தத்வங்களைச் சொல்கின்றனவே, அந்த உபநிஷத்துக்களில் ஒன்றிலேயே*நம் மதத்தை அடுப்பங்கரையாகத்தான் ஆக்கி வைத்திருக்கிறது.

நாரதர் ஸநத்குமாரரிடம் போய் ஆத்ம வித்தையை உபதேசிக்கச் சொல்கிறார். அப்போது ஸநத் குமாரர், " **ஆஹார சுத்தௌ ஸத்வ சுத்தி :**"என்றுதான். முடிக்கிறார். உபநிஷத்திலேயே இந்த விஷயம் இருக்கிறது. "தூய உணவில் ஆரம்பி;அதுதான் குணம் தூய்மையாவதற்கு வழி. இப்படி சித்த சுத்தி ஏற்பட்ட பின்தான் படிப்படியாக ஈஸ்வர ஸ்மரணம், கட்டுக்கள் விடுபட்ட மோக்ஷம் எல்லாம் ஸித்திக்கும்"â¡Á úï˜ °ñ£ó«ó Kitchen religion-™î£¡ àð«îê˜¬î, ªè£‡´«ð£Œ º®‚Aø£˜. Ü‰î º®¾î£¡ - Ýý£ó ²ˆFî£¡ - ú£î¬ù‚° Ýó‹ð‹ Ü®Šð¬ì.

அதனால், அடிப்படைக் கல்வி, ஆதாரக் கல்வி என்று பெரிசாகச் சொல்லிக்கொண்டு இப்போது செய்வதில் ஜீவாதாரமாக, எல்லாப் பண்புகளுக்கும் ஆதாரமாக இருக்கிற ஸ்வயம்பாக போதனையைச் சேர்த்து விட வேண்டும் என்கிறேன். அரசியல் தலைவர்களாகவும் ஸமூஹத் தலைவர்களாகவும் இருக்கப்பட்டவர்களும் ஆதாரக் கல்வியில் சமையல் திட்டத்தைச் சேர்க்க வேண்டுமென்கிறார்கள். ஆனால் எல்லாப் பசங்களுமாகச் சேர்ந்து எல்லாப் பசங்களுக்குமாகச் சமையல் பண்ணி, எல்லாருமாகச் சேர்ந்து சாப்பிட வேண்டும் என்கிறார்கள். இதிலே குணத்தின் அபிவிருத்திக்கு ஒன்றுமில்லை. ஒருவேளை கெடுதலே உண்டாகவும் இடமுண்டு என்பதால் நான் ஒவ்வொரு பையனும் தன் சாப்பாட்டைத் தானே பண்ணிச் சாப்பிட்டுக்கொள்ள வேண்டும் என்கிறேன். இது பெர்ஸனல் ப்யூரிடியால் ஸொஸைட்டியைக் காப்பாற்றுவதற்காகச் செய்ய வேண்டிய தர்மம்.

ஆதாரக் கல்வி மட்டுமில்லை, முதியோர் கல்வி என்று இன்னொரு பக்கம் நிறையச் சொல்லிக் கொண்டிருக்கிறார்களே அதிலும் சரி, ரொம்ப ஸிம்பளிஃபை பண்ணி பாக சாஸ்திரம் (சமையற்கலை) சொல்லிக் கொடுத்துவிட வேண்டும்.

பிறர் உதவியின்றி அவரவர் கார்யத்தை அவரவர் செய்து கொள்ளும்படியாக் கல்வித் திட்டத்தில் கொண்டு வந்துவிட வேண்டும் என்றுதானே ஸமூஹத் தலைவர்கள் சொல்கிறார்கள்?ஆதலால் வாழ்க்கைக்கு முதலில் வேண்டிய அன்னத்தை அவனவனும் தயாரித்துக்கொள்ளும்படிச் சொல்லிக் கொடுக்க வேண்டும். எல்லோருக்கும் சேர்த்து ஒரே சமையல், ஜாதி வித்யாஸமில்லாமல் சமைத்து, எல்லாரையும் சேர்த்து உட்காரவைத்துப் போடுவதுதான் சீர்திருத்தம் என்று இவர்கள் சொன்னால், அதைவிட அவசியமான, முக்யமான சீர்திருத்தம் ஒவ்வொருவனும் தன் உணவைத் தானே தயாரித்துக் கொள்வதுதான். இவர்கள் ஸமூஹச் சீர்திருத்தம் என்று எதையோ நினைத்துப் போகிறார்கள். அந்த ஸமூஹம் என்பது பல தனி மநுஷ்யர்கள் கொண்டதுதானே?எனவே இந்தத் தனி மநுஷ்யர்களின் குணம் சீர்திருந்துவதுதானே எல்லாவற்றுக்கும் தீணீவீஸீ- ஆதாரம்?அதனால் ஆதாரக் கல்விலேயே ஸ்வயம்பாகம் சொல்லிக் கொடுத்துத்தான் ஆகவேண்டும்.

ஆண்களில் முதியவர்களுக்கும் சமையல் தெரிந்திருக்க வேண்டுமென்பதற்கு சாஸ்திரமே ஆதரவாயிருக்கிறது. சாஸ்திர வாக்கியம் ஒன்று இருக்கிறது:" பஞ்சாத் வத்ஸராத் ஊர்த்வம் ந குர்யாத் பாணி பீடநம் " 'பாணி பீடநம்'என்றால் பாணிக்ரஹணம்;அதாவது கல்யாணம். 'பஞ்சாசத்'என்றால் ஐம்பது. ஐம்பது வயஸுக்கு வயஸுக்கு மேலே கல்யாணம் பண்ணிக் கொள்ளக்கூடாது என்பது இந்த வாக்கியத்தின் அர்த்தம். முதல் பெண்டாட்டி தவறி விட்டால் ஐம்பது வயஸுக்கு அப்புறம்கூட இரண்டாம் கல்யாணம் செய்து கொள்கிறவர்கள், சமையலுக்கு ஆளில்லை என்ற காரணத்துக்காகவே அப்படிச் செய்வதுண்டு. ஸ்வயம்பாகம் தெரிந்து விட்டால் வானப்ரஸ்தத்துக்குத் போக வேண்டிய தசையில், சமையலை ஒரு காரணமாகச் சொல்லிக்கொண்டு, மறுபடி தாம்பத்தியத்துக்குத் திரும்புகிற ஆபாஸம்

நடக்காமலிருக்கும். சாஸ்திரத்தை மீறின தோஷம் ஸம்பவிக்காமலிருக்கும். இப்படியேதான் பிரம்மச்சாரியாகவே இருக்க வேண்டுமென்று நினைக்கிறவர்களிலும் சிலபேர் ஓடி ஆடி அலைகிற மத்யம வயஸுவரை வீட்டில் அம்மா சமைத்துப் போட்டோ, ஹோட்டலிலோ சாப்பிட்டுக் கொண்டிருந்து விட்டு ஓய்ந்து உட்காருகிறபோது, 'அம்மா போயிட்டாளே, இப்போ முன்மாதிரி ஹோட்டல் சாப்பாடு ஒத்துக்கமாட்டேனென்கிறதே'என்று சமையலுக்காகவே ('ஸஹ தர்ம'இல்லை;தர்மத்துக்காக இல்லை;வயிற்றுக்காக, நாக்குக்காக) பிரம்மசர்யத்தை விட்டு விட்டுப் பெண் தேடிப் போகிற அஸங்கியமும் ஸ்வயம்பாக அநுஷ்டானம் இருந்துவிட்டால் ஏற்படாது.

முன்னெப்போதையும்விட, இப்போது அவனவன் ஊரோடு கிராமத்தோடு வேலை என்றில்லாமல், பக்ஷிகள் மாதிரி பூலோகத்திலே எங்கெங்கே வேலை உண்டோ அங்கேயெல்லாம் போகிறதென்று ஆகியிருக்கும் நிலையில் ஸ்வயம்பாகம் அத்யாவசியமாகிறது. சுத்தத்துக்குச் சுத்தம், ஸத்வத்துக்கு ஸத்வம்;அதோடு வெந்ததும் வேகாததுமாக ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுச் சின்ன வயஸிலேயே அல்ஸர், அது, இது என்று அவஸ்தைப் படாமலும் இருக்கலாம். பொங்கல், சின்னதாக ரொட்டி, இதைவிட லேசாக அடுப்புத் தணலிலே கோதுமை மாவுருண்டையைக் காய்ச்சி அதை அப்படியே வேகப் பண்ணுவது - என்று அவனவனும் பண்ணிக் கொண்டால் வியாதியே வராது. இப்போது கணக்கு வழக்கில்லாமல் வியாதிகள்தான் ஸர்வ வியாபகமாக இருக்கின்றன.

---

*ê£‰«î£,ò àðGû^ - 7.26.2.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

**உணவு முறையில் உண்மைச் சீர்திருத்தம்**

ப த்து, இருபது ஸாமான் வைத்துக் கொண்டால் தான் சமையல் என்று நம் சீமையில் ஆகியிருப்பதை மாற்ற வேண்டும். இதுதான் சீர்திருத்தம். ஏதோ நிர்பந்தம் மாதிரி, ரஸம், கறி, கூட்டு, குழம்பு என்று பிரதிவேளையும் சாப்பிட்டாக வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். இத்தனை வஸ்து இருப்பதால்தான் புளி ஜாஸ்தியாகிவிடுமோ, உப்பு ஜாஸ்தியாகிவிடுமோ ஸரியாகக் கொதி வந்துவிட்டதா என்றெல்லாம் ஸந்தேஹம்!வறுக்கிறதை எப்போது நிறுத்த வேண்டும், மாவு எப்போது கரைத்து விடணும், எவ்வளவு கரைத்து விடணும் என்றெல்லாம் யோஜனை!இந்த வேண்டாத சிரமங்கள் இல்லாமல் லேசான ரீதியில், 'லைட்'டாக ஆஹாரத்தை ஆக்கிக்கொள்ள வேண்டும். பூரியைத் தட்டிப்போட்டு பாலை விட்டுக்கொண்டு சாப்பிடுவதானால் அதைப் பத்து நாட்களுக்குக்கூடக் கெடாமல் வைத்துக்கொண்டு வயிற்றுப் பாட்டைத் தீர்த்துக் கொள்ளலாம். வயிறு நன்றாக ரொம்பும். வியாதி வராது. சரீரத்துக்கே ஸௌகர்யம். நாள் கணக்கில் பிரயாணம் பண்ணும்போதுகூட, கண்ட இடத்தில் கண்டதைத் தின்னாமல், இந்த மாதிரிப் பற்றுப் படாத பூரி, ஸத்துமா இதுகளைக் கொண்டே காலம் தள்ளி விடலாம். அரிசியைக் களைந்து உலர்த்தி, சிவக்க வறுத்தெடுத்து அரைத்து வைத்துக் கொள்வதே ஸத்துமா. 'ஸக்து'என்பதே அதன் ஸரியான பெயர். ஆனால் உடம்புக்கு நல்ல ஸத்து தருவதாலும், ஸத்வகுணம் ஊட்டுவதாலும் அந்தப் பேரை ஸத்து(மா) என்று ஆக்கியிருப்பதிலும் அர்த்தம் இருக்கிறது!அதிலே மோரை விட்டோ, பாலை சாப்பிடலாம், கொஞ்சம் சாப்பிட்டால்கூட புஸ் என்று ஊறிக்கொண்டு பசியடங்கிப் புஷ்டியாயிருக்கும்.

'குக்கர்', 'கிக்கர்'கூட வேண்டாம். ஸுலபமாக, சீக்ரமாக அதில் நாலைந்து தினுஸைப் பண்ணிக் கொள்ள முடியலாம். ஆனால் நாக்கைக் கட்டுவதற்கு, ஸத்வ ஆஹாரத்தைத் தவிர மற்றவற்றுக்குப் போகாமலிருப்பதற்கு அது பிரயோஜனமில்லை. குக்கர் வந்தால் அப்புறம் அஞ்சறைப்பெட்டி, ரொம்பப் புளி, ரொம்பக் காரம் எல்லாம் கூடவே வரும். இது சித்தத்துக்குச் செய்கிற கெடுதலோடு உடம்புக்கும் கெடுதல் வந்து, பரிஹாரமாக மருந்து, அந்த மருந்திலே அநாசாரம், இந்த அநாசாரத்துக்குப் பரிஹாரம் என்று

போய்க்கொண்டேயிருக்கும். செலவையும் சொல்ல வேண்டும். நிறைய வியஞ்ஜனம் என்றால் நிறையச் செலவாவதோடு, அப்புறம் டாக்டருக்காகவும் மருந்துக்காகவும் ஆகிற செலவு வேறே.

அதனால் ஒரு ஸாமான், இரண்டு ஸாமானை வைத்துக்கொண்டு, ஸாத்விகமாக, பெரியவர்கள் சொல்கிற மாதிரி 'மதுர'மாக 'ஸ்நிக்த'மாக லேசான ஆஹாரத்தைத் தானே தயார் பண்ணிச் சாப்பிட வேண்டுமென்பதை ஜன்ம விரதமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

'ஸ்நிக்தம்'(பசையுள்ளது) என்பதற்காக நெய் சொட்ட வேண்டுமென்று அர்த்தமில்லை. வறட்டு வறட்டு என்றில்லாமல் பாலிலோ மோரிலோ ஊறினதாக, அல்லது நெய்ப்பசை உள்ளதாக இருக்க வேண்டும் என்றே அர்த்தம். 'மதுரம்'என்றாலும் ஒரே தித்திப்பு என்று அர்த்தமில்லை. அரிசி, கோதுமை முதலான எந்தப் பதார்த்தமானாலும் அதற்கென்றே ஒரு தித்திப்பு உண்டு. இப்போதைய புளி, கார சமையலில் பதார்த்தத்தை ஓவராக வேகவைத்து, அதன் இயற்கையான ஸத்து க்ஷீணக்கும்படிப் பண்ணுவதில் தித்திப்பு போய்விடுகிறது. பண்டத்தை விட்டு இயற்கையான தித்திப்பு போகாதபடியான ஆஹாரமாகச் சாப்பிட வேண்டுமென்று அர்த்தம்.

---



## விருந்துபசாரம் எப்படி ?

" அ வனவனும் ஸ்வயம்பாகம் என்றால் அதிதி ஸத்காரம் (விருந்தோம்பல்) எப்படிப் பண்ணுவது?அதையும் பெரிய தர்மமாகச் சொல்லியிருக்கே!"என்றால் வருகிறவனுக்கும் அவனே சமைத்துக் கொள்வதற்கான பண்டங்களைச் கொடுத்துவிட்டாலே அது ஸத்காரம்தான். இப்போது துர்லபமாக எங்கேயோ இருக்கப்பட்ட ஸ்வயம்பாகிகள் இப்படித்தானே தாங்களே சமைத்துக் கொள்கிறார்கள்?இதையும் அதிதி பூஜையாகத்தான் சொல்லியிருக்கிறது. இப்படி யாத்ரிகர்களுக்குச் சமைத்த அன்னமாகப் போடாமல் மாவு, சர்க்கரை முதலான சரக்குகளை மட்டும் தருவதை வடக்கே 'ஸதாவ்ருத்தி'என்றே சொல்வார்கள். அவர்கள் சமைத்துப் போட்டாலும் ஏற்றுக் கொள்ளாமலே இப்படி 'ஸதாவ்ருத்தி'தான் வாங்கிக் கொள்வார்கள். நம் மடத்திலுங்கூடச் சாப்பிடுவதில்லை. ஆட்டா மாவு, நெய் முதலியன கொடுத்தால் மட்டும் வாங்கிக் கொண்டுபோய்த் தாங்களே சமைத்துக் கொள்வது என்று அநேக தேசாந்தரிகள் இருக்கிறார்கள். ஆகையால் ஸ்வயம்பாகத்தால் விருந்தோம்பல் போய்விடுகிறதென்று நினைக்க வேண்டாம்.

அப்படி, 'நம் கையால் கொடுத்து நேரே அவர்கள் குக்ஷியில் போகணும், அதுதான் உபசாரம்'என்று ஸென்டிமென்ட் இருந்தால் பால் அல்லது மோரும், பழமும் கொடுக்கலாம். பழைய நாளில் திருடனுக்குக்கூட பால் சாதம் போட்டுவிட்டால் அப்புறம் அவன் திருடமாட்டான். நல்லெண்ணத்தை வளர்ப்பது பால். இப்போது பால் சாதமாக இல்லாமல் பாலோடு பழமாகக் கொடுக்கச் சொல்கிறேன்.

ஸ்கூலுக்குப் போகிறவர்கள், ஆஃபீஸ் போகிறவர்கள், ரிடையர் ஆனவர்கள் ஆகிய எல்லாருமே - புருஷர்களைச் சொல்கிறேன் - இப்படிக் கால்மணியில் தயாரிக்கும்படியான சமையல் தெரிந்துகொண்டு அவரவர் பண்ணிச் சாப்பிட்டுக் கொள்ள வேண்டும்.

---



## நிவேதனம்

ப கவானுக்குக் காட்டிவிட்டுச் சாப்பிட வேண்டுமென்பது முக்கியம். வேறே பூஜை என்று

பெரிசாகப் பண்ணாவிட்டாலும், நமக்குக் கையைக் கொடுத்து, அந்தக் கையாலேயே சமைத்துக் கொள்ளணும் என்ற புத்தியைக் கொடுத்து ஸ்வயம்பாகம் பண்ணிக் கொள்ள வைத்தவனுக்கு அதைக் காட்டி, நிவேதனமாக்கி அதில் இருக்கக் கூடிய கொஞ் நஞ்சம் தோஷத்தையும் போக்கவிட வேண்டும்.

தெலுங்கு தேசத்தில் ஆயிரம் பேர் ஸமாராதனை என்று உட்கார்ந்தாலும், ப்ராணாஹுதி பண்ணுவதற்கு முன்னாடி ஒவ்வொருத்தனும் இஷ்ட தெய்வத்தை நினைத்து ஸ்வாமி நைவேத்யம் பண்ணித்தான் சாப்பிடுவான்.

வேறே மூர்த்தி, விக்ரஹம் இல்லாவிட்டாலும் பிரத்யக்ஷ பகவானாயிருக்கிற ஸூர்யனுக்காவது நைவேத்தியம் செய்யணும்.

அம்மா சமைக்கிறாள், ஸம்ஸாரம் சமைக்கிறாள் என்பதால் (புருஷர்கள் சமைக்கத்) தெரிந்து கொள்ளாமலிருந்தால் அப்புறம் எங்கேயாவது தனியாக வெளியே போய் இருக்கும்போது, அல்லது வீட்டிலேயே அவர்களுக்கு அஸந்தர்ப்பமாகிறபோது, கண்டதைத் திண்பதான கெட்ட பழக்கம் வந்துவிடுகிறது. ஸ்வயம்பாகம் தெரிந்து, தானே பண்ணிக் கொள்வது என்று கொஞ்சநாள் பழகி விட்டால் அப்புறம் பிறத்தியார் சாப்பாடு பிடிக்கவே பிடிக்காது. கெடுதலான சாப்பாட்டுக் கிட்டேயே போகத் தோன்றாது. நாமே பண்ணிச் சாப்பிடுவதில் ஒரு pride-ஏ (பெருமிதமே) உண்டாகிவிடும். இப்போது நாக்கு எப்படி கண்டதற்குப் பறக்கிறதோ, அத்தனைக்கத்தனை ஸத்வ பதார்த்தங்களைத் தவிர மற்றதை நினைக்கவே நினைக்காது.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

### ஸாரமான பலன்கள்

**இ** த்தனை நேரம் தொண தொணவென்று நான் சொன்னதன் ஸாரம் என்னவென்றால் ஸ்வயம்பாகம் என்ற ஒரு சின்ன நியமத்தால் அநேக நன்மைகள் உண்டாகின்றன. ஒன்று - சித்த சுத்தி. இரண்டு தேஹ ஆரோக்கியம். மூன்று - செலவு மட்டுப்படுவது. நாலு - ஜாதிச்சண்டைக்கு இடமில்லாமல் பண்ணுவது. ஐந்து - ஐம்பது வயஸுக்கு மேல் கல்யாணம் கூடாது என்பது போன்ற சாஸ்திர விதிகளை அநுஸரிக்க முடிவது. ஆறு - நம்முடைய மஹா பெரிய தர்மத்துக்கே மூலமான வேத வித்யை வளர எட்டு - லோகத்தில் மற்றவர்களுக்கும் ஸாத்விக ஆஹார ஐடியலைக் காட்டிக் கொடுப்பது. லோகத்தில் சாந்தத்தைப் பரப்புவதற்குச் செய்கிற காரியத்தைவிடப் பெரிய நன்மையில்லை. இத்தனை பலன்கள்!எல்லாவற்றுக்கும் மேலே, 'இந்தக் குழந்தை சாஸ்திரப்படி பண்ணுகிறான். நாக்கைக் கட்டுகிறான்'என்று பகவானே கிருபை செய்வது. இப்படி ஈஸ்வராநுக்ரஹம் பெற்று, ஸகல ஜனங்களும் சிரேயஸ் பெறுவதற்காக அவரவரும் ஸ்வயம்பாக நியமம் வைத்துக் கொள்ள வேண்டியது. இதற்கு ஒரு ஆரம்பமாக இப்போதிலிருந்தே ஆஃபீஸோ ஸ்கூலோ அதில் அன்றைக்கு, வாரத்தில் ஞாயிறு ஒரு நாளாவது ஸகலமான பேரும் ஸ்வயம்பாக வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

இத்தனை நான் சொன்னதிலிருந்து ஸ்வயம்பாகம் நல்லதுதான் என்று உங்களில் கொஞ்சம் பேருக்காவது நம்பிக்கை வந்திருக்கலாம். ஒன்றில் நம்பிக்கை வந்து, அது ஸாத்யமாகவும் இருந்துவிட்டால், அதைப் பண்ணிக் காட்ட வேண்டும். அதுதான் பெருமை.

---

### புலன் நுகர்ச்சிகளும் உணவின் முக்யம்

**ஆ** ஹாரம் என்றால் நாக்கால் சாப்பிடுவது மட்டுமில்லை. பஞ்ச இந்திரியங்களுக்கும் ஒவ்வொரு ஆஹாரம் உண்டு. பல காட்சிகளைப் பார்க்கிறோம். இது கண்ணுக்கு ஆஹாரம். பலவிதமான பாட்டு, பேச்சுகளைக் கேட்கிறோம். இது காதுக்கு ஆஹாரம். இப்படியே நாம்

அநுபோகம் பண்ணுகிறதெல்லாம் நமக்கு ஆஹாரம்தான். இதில் எல்லாமே சுத்தமானதாய் இருக்க வேண்டும். மனஸைக் கெடுக்கிற காட்சிகளைப் பார்க்கப்படாது; மனஸைக் கெடுக்கிற பேச்சுகளைக் கேழ்க்கக் கூடாது;அநுபவிக்கிறதெல்லாம் ஈஸ்வர ஸாக்ஷாத்காரத்துக்கு உதவுகிறவையாகவே இருக்க வேண்டும்.

இப்படி பொதுப்படையாகச் சொன்னாலும், இந்தப் பலவிதப் புலன்-நுகர்ச்சிக்கான ஆஹாரங்களிலும் வாயால் நுகர்கிற ஆஹாரந்தான் முக்யமாக இருப்பதால் அதைப்பற்றி இவ்வளவு ஆசார விதிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதுதான் ஸ்தூலமாக நமக்கு உள்ளே போய், தேஹம் முழுக்க ரத்தமாக வியாபிக்கிறது;இதுவே சித்தத்தையும் பாதிக்கிறது. ஒரு பக்கம் ஆஹாரமில்லாவிட்டால் மநுஷ்யன் ஜீவிக்கவே முடியவில்லையென்றால் இன்னொரு பக்கமோ அது மித ஆஹாரமாக இல்லாவிட்டால் தேஹத்துக்கும் ச்ரமம், மனஸுக்கும் அசாந்தி என்றாகிறது. வயிற்றிலே திணித்துக்கொண்டே போவதால் சாப்பாட்டுப் பொருளுக்கும் நஷ்டம், கார்யம் செய்ய முடியாமலும் நஷ்டம், இவற்றைவிட த்யானத்தில் மனஸ் ஈடுபடாமல் போவது பெரிய நஷ்டம். ஆகையால் "சோற்றால் அடித்த பாண்டம்"என்றே மநுஷ்யனுக்குப் பேர் இருப்பதால் இந்தப் பாண்டமும், இதற்கு உள்ளேயிருக்கிற மனஸும் நல்லபடியாக வளர்வதற்காக ரிஷிகள் காட்டிக் கொடுத்திருக்கும் போஜன விதிகளை மேற்கொண்டு நடத்திக்காட்ட வேண்டும். இதன் முக்யத்வமும் அவசயமும் எல்லோருக்கும் புரிவதற்குப் பரமேஸ்வரனைப் பிரார்த்தனை பண்ணிக் கொள்கிறேன்.

"Give us this day our daily bread" - "இன்றைக்கு எங்களுக்கு உன் அருளால் சோறு கிடைக்கட்டுமப்பா!"என்று கிறிஸ்துவ மதத்திலும் பிரார்த்திக்கச் சொல்லியிருக்கிறது. அதே சமயத்தில் "Man shall not live by bread alone" - "சோற்றைத் தின்று மட்டும் மநுஷன் வாழவில்லை"என்றும் பைபிள் சொல்கிறது. பக்தி, ஞானம், உயர்ந்த குணங்கள், உத்தமப் பண்புகள் ஆகியவற்றால்தான் மநுஷன் மநுஷனாக வாழ்கிறான் என்பது அர்த்தம். இந்த குண விசேஷங்கள் விருத்தியாகவும் ஆஹார நியமமே உதவுகிறது என்று நம் சாஸ்திரங்கள் காட்டுகின்றன.

தேஹ புஷ்டியை மட்டுமின்றி, ஞான வைராக்யங்களையும் அநுக்ரஹிக்கும் அன்னத்தை ஸாக்ஷாத் அம்பாளிடமிருந்து ஆசார்யாள் யாசித்ததைச் சொல்லி உங்கள் எல்லாருக்காகவும் பிரார்த்திக்கிறேன்.

**அன்னபூர்ணே ! ஸதாபூர்ணே ! சங்கர ப்ராண வல்லபே ***

**ஞாந வைராக்ய ஸித்த்யர்த்தம் பிக்ஷாம் தேஹி ச பார்வதி ****

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (உபவாஸம்)

**உபவாஸம்**

**ஏகாதசிக்கு இரட்டை போஜனமா ?**

**ஏ காதச்யாம் து கர்தவ்யம் ஸர்வேஷாம் போஜன த்வயம்**

-இது ஒரு ச்லோகத்தின் முதல் பாதி. இதற்கு என்ன அர்த்தம்?"ஏகாதச்யாம் து கர்தவ்யம் ஸர்வேஷாம்" என்றால் "ஸகல ஜனங்களாலும் ஏகாதசியன்று இன்னவாறு செய்யப்பட வேண்டும்"என்று அர்த்தம்.

என்ன செய்யப்பட வேண்டும்?

"போஜன த்வயம்"என்று 'ஆன்ஸர்'வருகிறது.

அர்த்தம் புரிகிறதோல்லியோ?'த்வயம்'என்றால் இரண்டு. 'போஜன த்வயம்'- இரண்டு தரம் சாப்பாடு.

"எல்லாரும் ஏகாதசியன்று இரண்டு தடவை போஜனம் செய்ய வேண்டியது"என்று அர்த்தமாகிறது.

இதென்ன?ஏகாதசி என்றால் பட்டினி, தண்ணீர்கூட இல்லாமல் நிர்ஜலமாயிருக்க வேண்டும் என்பார்கள். இங்கேயானால் ஒரு தடவை மட்டுமில்லை, இரண்டு தடவை - போஜன த்வயமாக - சாப்பிட்டாக வேண்டுமென்று சொல்லியிருக்கிறது?

இது விசித்ரமாக வார்த்தை விளையாட்டுப் பண்ணியிருக்கும் ச்லோகம். இதில் "போஜன"என்று வருகிறதே அதை "போ", "ஜன"என்று இரண்டு வார்த்தைகளாகப் பிரித்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் ஸரியான அர்த்தம் கிடைக்கும்.

"போ"என்றால் "ஓய்!"என்று கூப்பிடுவதாக அர்த்தம்.

"போ!ஜன!"என்றால் "ஓ, ஜனங்களே!"என்று எல்லா மக்களையும் கூப்பிடுவது.

இப்போது நான் சொன்ன ச்லோகத்துக்கு (பாதி ச்லோகத்துக்கு) என்ன அர்த்தமாகிறதென்றால்

"ஹே ஜனங்களே!ஏகாதசியில் எல்லாராலும் இரண்டு செய்யத் தக்கன - அதாவது இரண்டு கார்யம் செய்யத் தக்கன".

இரண்டு போஜனம் என்று அர்த்தம் இல்லை. இரண்டு காரியம் என்று ஆகிறது.

ஏகாதசியில் ஸகல ஜனங்களும் செய்யவேண்டிய தான அந்த இரண்டு காரியங்கள் என்ன?

அதைச் ச்லோகத்தின் பின் பாதி சொல்கிறது:

கத்தோபவாஸ : ப்ரதம : ஸக்கதா ச்ரவணம் தத :

முதல் காரியம் உபவாஸம். இரண்டாவது காரியம் பகவத் கதைகளைக் கேட்பது.

ஏகாதச்யாம் து காத்வ்யம் ஸர்வேஷாம் போஜந த்வயம்

கத்தோபவாஸ : ப்ரதம : ஸக்கதா ச்ரவணம் தத :

சகல ஜனங்களும் ஏகாதசியன்று சுத்த உபவாஸமிருக்க வேண்டும்;ஈஸ்வர மஹிமைகளைக் கேட்க வேண்டும்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** (உபவாஸம்)

**உபவாஸம் எதற்காக ?**

**சு** த்த உபவாஸம் என்றால் முழுப் பட்டினி என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். 'உபவாஸ ம்'என்றால் 'கூட வஸிப்பது'. பகவனோடுகூட, அவனுக்குப் பக்கத்தில் ஒட்டிக்கொண்டு வஸிப்பதுதான் உபவாஸம். அன்றைக்கு வயிற்றில் ஒன்றையும் தள்ளாவிட்டால்தான் அப்படி அவனோடுகூட, கிட்டக்க வஸிக்க முடியும். மனஸ் அவன் கிட்டக்கவே கிடக்க வேண்டுமானால் அதற்கு முதலில் வயிறு வெறுமனே கிடக்கணும். சாப்பிட்டால் வயிற்றிலே 'கடாபுடா', வேலைசெய்ய முடிவதில்லை. வயிறு அடைசலில்லாமலிருந்தால்தான் நன்றாகப் பிராணாயாமம் பண்ணி, மனஸை சுத்தி செய்துகொண்டு ஒருமுகமாக நிறுத்த முடியும். பெரிசாக மூச்சடக்கிக் கும்பகம் பண்ணவேண்டுமென்றில்லா விட்டாலும், தடைப்படாமல் தீர்க்கமாக ச்வாஸம் விடும்படியிருந்தால்தான் மனஸ் தியானத்தில் நிற்கும். வயிற்றில் கனம்

இருந்தால் இப்படி ஃப்ரீயாக ச்வாஸிக்க முடியவில்லை. இதற்காகத்தான் உடம்பை நெற்றுப்போல ஆக்கிக்கொண்டு அதனால் ச்வாஸத்தை ஃப்ரீயாகவும் மனஸை லைட்டாகவும் பண்ணிக் கொண்டு நன்றாக ஈஸ்வர தியானத்தில் ஈடுபடும் பொருட்டு எப்போதுமே ஆஹாரத்தை லகுவாக வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், பக்ஷத்துக்கு ஒருநாள் சுத்தோபவாஸம் அநுஷ்டிக்க வேண்டுமென்றும் சாஸ்திரம் விதிக்கிறது.

இந்த உடம்புதான் 'நான்'என்று நினைத்துக் கொண்டிருப்பதால்தான் ஸதா இதற்கு ஸவரக்ஷணை பண்ணுவதையே கார்யமாக வைத்துக்கொண்டு, ஆத்மாவைக் கோட்டை விட்டுக் கொண்டிருக்கிறோம். இந்த தேஹாத்ம புத்தி போகணும். இதற்காகத்தான் சரீரத்துக்கு சிரமத்தை தருகிற உபவாஸங்களை சாஸ்திரம் விதித்திருக்கிறது. உபவாஸங்களால் சரீரத்துக்கு ஏற்படுகிற சிரமங்களைச் சிரமமாகத் தெரியாமல் பழக்கிக் கொள்கிறோமென்றால், அப்போது தேஹத்தையே பிரதானமாக மதித்து அதன் ஸௌகர்யத்தையே கவனிக்கும் அபிமானத்தை விடுகிறோம் என்றுதானே அர்த்தம்?

'பசி எடுத்தாலும் பட்டினி கிடந்து பழகு வம்பும் வீணும் பேசுவதில் ஸுகமிருந்தாலும் மௌனம் அநுஷ்டி கண்ணை இழுத்துக் கொண்டு போனாலும் தூங்குவதில்லை என்று ராத்திரி பூரா விழித்துக்கொண்டு ஈஸ்வர ஸம்பந்தமாக ஏதாவது பண்ணிக்கொண்டிரு. இப்படியெல்லாம் பழகப் பழக தேஹாத்ம புத்தி போகும். சரீரம் எப்படியானாலும் சித்தம் பரமாத்மாவிடம் நிற்கும். இப்போது பிடித்தே பழக்கிக் கொள்ளாவிட்டால் மரண யாதனை என்று சொல்லுகிறார்களே, அந்தப் பெரிய ஹிம்ஸை சரீரத்துக்கு வரும்போது மனஸை எப்படிப் பரமாத்மாவிடம் செலுத்த முடியும்?'என்றுதான் சாஸ்த்ரங்கள் வ்ரத உபவாஸங்களை வைத்திருப்பது.

ஜீவிப்பதற்கு சாப்பாடு அவசியம்தான். இல்லாவிட்டால் உயிர் போய்விடும். ஆனால் சாப்பாடு கொஞ்சம் ஜாஸ்தியாகிவிட்டால்கூட உடம்புக்கு வியாதி வக்கைகள்தான். ஆரோக்கியத்துக்குக் காரணமான ஆஹாரமே லிமிட் தாண்டிவிட்டால் நோய்க்குக் காரணமாகிவிடும்.

மெஷின்கள்கூட விடாமல் வேலை செய்தால் கெட்டுப் போய் விடுகின்றன என்று அவ்வப்போது ரெஸ்ட் கொடுக்கிறார்கள். இப்படி வயிற்றுக்கும் ரெஸ்ட் கொடுத்தால் ஆரோக்யத்துக்கு ரொம்ப நல்லது.

உடம்பு என்று முழுசாக ஒன்றை எடுத்துக் கொண்டால் அதற்கு ஆறு நாள் வேலை கொடுத்தால் ஒருநாள் லீவ் தருவது என்று ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த உடம்புக்கு உள்ளே வயிறு முதலான உறுப்புக்கள் தனியாக வேலை பண்ணிக்கொண்டேயிருக்கின்றனவே!இவற்றில் ஹ்ருதயத்தையும் லங்க்ஸையும் கொஞ்சங்கூட 'ரெஸ்ட்'கொடுத்து வைக்க முடியாது. வயிற்றுக்குக் கொடுக்க முடியும்;கொடுக்கவும் வேண்டும். ஏனென்றால் ஸ்தூலமாக வெளியிலிருந்து வஸ்துக்களை வாங்கிக் கொண்டு அரைத்துக் கரைத்து ரொம்பவும் உழைப்பது அதுதான். எப்போது பார்த்தாலும் வேலை செய்யும் கருவி அதுதான். எப்போது பார்த்தாலும் வேலை செய்யும் கருவி கெட்டு விடுவதுபோல் ஒரு வேளை மாற்றி இன்னொரு வேளை என்று ஓயாமல் வேலை பண்ணினால் ஜீர்ணக் கருவிகள் கெட்டுவிடும். ஆஹாரம்தான் ரத்தமாகி, பம்ப் ஆகும் போது மூளைக்குப் பாய்கிறது. அந்த மூளை ரொம்ப நுட்பமான அவயம். அதனால், அதற்கு இந்த ரத்த ஓட்ட 'வெய்ட்'டை அவ்வப்போது குறைக்க வேண்டும். இதற்கெல்லாம் உபவாஸம் உறுதுணை செய்கிறது.

ஆகவே உபவாஸமிருந்தால் ஆரோக்யம் போய்விடும் என்று தோன்றினாலும் உண்மையில் இதுதான் இருக்கிற ரோகங்களையும் போக்கும் பெரிய மருந்து; **லங்கனம் பரம ஔஷதம்** என்றே வைத்ய சாஸ்த்ர வசனம்.

லங்கனம் என்றால் பட்டினி என்று ஏன் அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம் தெரியுமா?அந்த வார்த்தைக்கு நேர் அர்த்தம் "தாண்டுவது"என்பதாகும். ஒரு வேளை சாப்பாடு இல்லாமல் அதைத் தாண்டிப் போய்விட்டால், skipping a meal என்று சொல்கிறது இதுதான், அதுவே

லங்கனம்.

வைத்ய சாஸ்த்ரம் சொல்கிற லங்கனத்தையே மத நூல்களும் சொல்கின்றன திருவள்ளுவரும் இதைச் சொல்லியிருக்கிறார். அவ்வப்போது ஒரு வேளை, இரண்டு வேளை சாப்பிடாமலிரு ந்தால்தான் வயிற்றிலே ஏற்கனவே போட்டதில் துளிக்கூட ஜீரணமாகாமலில்லை என்று நிச்சயப்படுத்திக்கொள்ளலாம். இப்படி ஏற்கனவே சாப்பிட்டது முழுதும் ஜெரித்துப்போனதை ('அற்றதை')த் தெளிவாகத் தெரிந்துகொண்ட பிறகே ஒருவன் மறுபடி உண்பானானால் அப்படிப்பட்டவனுடைய உடம்புக்கு மருந்து எதுவும் வேண்டாம் என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

**மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**

**அற்றது போற்றி உணின்.**

சாப்பாட்டினால்தான் ஆரோக்யம் என்று நாம் நினைத்தாலும் வியாதிக்கும் அதுதான் முதல் தோழன் என்பதற்கு ஒன்று சொல்கிறேன். ஜ்வரம் வந்தால் டாக்டர் முதல் கார்யமாக என்ன பண்ணச் சொல்கிறார்?'சாப்பாட்டை நிறுத்து;கஞ்சி குடி;இல்லாவிட்டால் இன்னபானம் சாப்பிடு'என்றுதானே சொல்கிறார்?எந்த நோயானாலும் அதற்குப் பத்தியமாக என்னென்ன சாப்பிடக் கூடாது என்றுதான் முக்யமாகக் கண்டிப்புப் பண்ணுவதிலிருந்தே வியாதிக்கு ஆதாரம் ஆஹாரம்தானென்று தெரிகிறது.

இப்படி சரீர ரீதியில் ஆரோக்யத்துக்கு நன்மை செய்கிற பட்டினியே அதைவிட ஆத்ம ஸம்பந்தமாக நல்லது செய்கிறது.

ஆஹாரங்களில் பல வகைகள் உடம்புக்குப் புஷ்டி தந்தாலும் மனஸைக் கெடுப்பவையாயிருக்கின்றன. ஸத்வ பதார்த்தமே சாப்பிட்டு வந்தாலுங்கூட உடம்புக்குள்ளே கெட்டியான சாப்பாடு ஒன்று போய் விழுந்தால் அது மனசை லேசாக்கி மேலே கிளம்ப விடாமல் கனமாகக் கீழே இழுத்துக்கொண்டுதானிருக்கும். இதனால்தான் நடு நடுவே சுத்தப் பட்டினி விதித்திருக்கிறது.

பட்டினி கிடக்கிறபோது மனசுக்குப் பரமார்த்திகமாகவும், பகவத் விஷயமாகவும் போய்த் தோய்ந்து நிற்கிற தன்மை உண்டாகிறது. இதனால்தான் பகவத் ஸ்மரணம் விசேஷமாக இருக்கவேண்டிய தினங்களில் பூர்ண உபவாஸமோ, ஒருபொழுதோ வைத்திருக்கிறது.

காந்திகூட ஆத்ம சுத்திக்காகவேதான் உண்ணாவிரதம் இருப்பதாகச் சொல்லி அடிக்கடி பட்டினி கிடந்தார். அந்தச் சமயங்களில் தமக்குப் புத்தியிலே ஒரு தெளிவு ஏற்பட்டதாகவும் மனஸில் சுத்தி உண்டானதாகவும் சொல்லியிருக்கிறார்.

இப்படியாக உடல் நலத்தோடு உயிர் நலத்தையும் இம்மையோடு மறுமையையும் சேர்த்து ஆன்றோர்கள் உபவாஸ விதிகளைத் தந்திருக்கிறார்கள்.

அதோடு இப்படிப்பட்ட உபவாஸங்கள் எல்லா ஜனங்களாலும் அநுஷ்டிக்கப்பட்டால் உணவுத் கட்டுப்பாடு என்ற பிரச்னையே வராது.

முதலில் கஷ்டமாயிருந்தாலும் அப்யாஸத்தினால் சமாளித்து விடலாம். பக்தி பலத்தோடு, சங்கல்ப பலத்தோடு ஆரம்பித்தால் அதிலே தெரிகிற நல்ல பலனைப் பார்த்தே நாளுக்கு நாள் உபவாஸ நியமத்தில் ஈடுபாடு வலுக்கும்.

ஆரம்பத்தில் உடம்பை வாட்டுவது சிரமமாயிருந்தாலும் பிற்பாடு ஏற்படுகிற பெரிய இன்பத்துக்காக இதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

**வ்ரதோபவாஸ நியமை : க்லேசித : ஸுகம் அச்நுதே** *

**இக்ஷு க்லேசாத் யதா (ஆ)நந்தம் ததா ப்ராப்நோதி தத் ஸுகம்** **

அதாவது, கரும்பைக் கசக்கிக் கிலேசப்படுத்துவதால்தான் கருப்பஞ்சாற்றை எடுத்துப் பானம் பண்ணுகிற இன்பம் கிடைப்பது போல, உடம்பைக் கிலேசப்படுத்துவதால்தான் உள்ளத்துக்கு

ஸுக ரஸம் கிடைக்கிறது.

வியாபாரி முதலில் கையிலிருப்பதைச் செலவழித்துத்தான் பண்டங்கள் வாங்குகிறான். அப்புறம் அதை விற்று அதிகப் பொருள் சம்பாதிக்கிறான். அப்படியே உடம்பை முதலில் செலவழித்து, அப்புறம் அந்தச் செலவுக்கு மேல் பெரிய வரவு ஆத்மாவுக்கு சம்பாதித்துக் கொள்வதற்கே உபவாஸமிருப்பது.

சாப்பிடுகிற நாட்களிலும் பகவத் த்யானம் பண்ணுங்கள்;àðõ£ú ï£O™ ê£ŠHì£ñL¼‰¶‹ ˆò£ù‹ ð‡EŠ ð£¼ƒèœ. îù,«è Mˆò£ú‹ ªîK»‹. Ü‰î ô£ðˆ¶,è£è Þ‰î ïwìŠ ðìô£‹ â¡Á ªîK‰¶ªè£œi˜èœ. ï£¡ G¬øò„ ªê£™õ¬îMìŠ Hóˆòþñ£èŠ ð‡EŠ ð£˜ˆ¶ M†ì£«ô àðõ£úˆF¡ Üõ„òº‹ ªð¼¬ñ»‹ M÷ƒAM´‹.

வயிற்றை வற்றப் போடுகிற நாட்களில் மனசுக்கு த்யானம்ருத போஜனத்தைக் கொடுத்துக் கொண்டால் எது பெரிய இன்பம் என்று தெரியும்.

சாப்பாடு இல்லாத வாய்க்கு அதைவிட ரஸம் சொட்டுகிற அவனுடைய நாமாமிருதத்தை, லீலாமிருதத்தை ஜபமாக, பஜனையாக, ஸ்தோத்ரமாக, பாராயணமாகக் கொடுத்துக் கொள்ள வேண்டும். காதுக்கு அம்ருத போஜனமாகக் கீர்த்தனையும், ஹரிகதையும் கிடைக்கப் பண்ணணும். ஏகாதசி புராண படநம்-ச்ரவணம் (படிப்பதும் கேட்பதும்) ரொம்ப விசேஷம்.

இதற்கெல்லாம் தீணீஉவீநீ-ஆக, ஜீகூஷீமீறீவீனீவீஸீணீகூஷீஹ்-யாகப் பண்ணவேண்டியது பட்டினி. அதைப் பண்ணினால்தான் இவற்றின் மீயீயீமீநீமீ பூர்ணமாய்க் கிடைக்கும். அதனால்தான், ஆரம்பத்தில் சொன்ன ச்லோகத்தில் முதலில் 'சுத்தோபவாஸ'த்தை 'ப்ரதமம்'என்று சொல்லிவிட்டு அதற்கப்புறமே 'தத:'என்று இரண்டாவதாக 'ஸத்கதா ச்ரவண'த்தைச் சொல்லியிருக்கிறது.

---

## **தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (உபவாஸம்)

### **உபநிஷத்தில் உபவாஸம்**

**உ** பநிஷத்திலேயே பட்டினி போட்டு வ்ரதம் இருப்பதைச் சொல்லியிருக்கிறது*. ஆத்மாவை அடைவதற்கு பிராம்மணன் அத்யயனம், யஜ்ஞம், தானம், தபஸ், உபவாஸம் முதலியவற்றை அநுஷ்டிக்கிறான் என்கிற இடத்தில் அது உபவாஸமிருப்பதைச் சொல்லியிருக்கிறது. " **அநாசகேந** "என்று உபநிஷத்தில் உபவாஸத்தைக் குறித்திருக்கிறது. 'அசனம்'என்றால் சாப்பாடு. 'ஆச'என்றால் சாப்பிடுவது. 'அநாசகேந'என்றால் 'சாப்பிடாமலிருப்பதால்'. 'சாப்பிடாமல் உபவாஸம் இருப்பதால் ஆத்மாவை முயல்கிறார்கள்'என்று உபநிஷத் சொல்கிறது.

---

* ப்ருஹதாரண்கம் - 4.4.22

---

## **தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (உபவாஸம்)

### **ஆசார்யாள், கண்ணனின் மிதவாதம்**

**இ** தற்கு ஆசார்யாள் ரொம்பவும் ஃபிலஸா ஃபிகலாக பாஷ்யம் செய்துவிட்டார். "சாப்பாடு இல்லாமலிருப்பதென்றால் போஜன நிவ்ருத்தி என்று அர்த்தமில்லை. வெறுமே போஜனத்தை விட்டால் பிராணன்தான் போகுமே தவிர ஆத்ம ஞானம் வந்தவிடாது. அதனால் இங்கே 'அசனம்'(சாப்பாடு) என்று சொன்னது ஆசையநுபோகங்களைத்தான். காம

நுகர்ச்சியை விடுமாறே இந்த மந்திரம் சொல்கிறது"என்று பாஷ்யம் பண்ணியிருக்கிறார்.

ஆனால் இம்மாதிரி ஆசை அற்று போவதற்கும் பட்டினி கிட்டினி கிடந்து வ்ரத உபவாஸமிருப்பது உதவத்தான் செய்கிறது. அதுவும் ஆசார்யாளுக்குத் தெரியாததில்லை. நம் மதத்தை மற்ற மதங்கள் அடித்துக் கொண்டுபோக இருந்தபோது மீட்டுக் கொடுத்தது அவர்தான். ஞான மார்க்கம் என்று த்யான விசாராதிகள் பண்ணுவதை மட்டுந்தான் அவர் மீட்டு ரக்ஷித்துத் தந்தார் என்றில்லை. நம்முடைய பூஜா பத்ததிகள், கோயில், குளம், உத்ஸவம், பண்டிகை, வ்ரதம் எல்லாவற்றுக்குமே புனர்ஜீவன் தந்தவர் அவர்தான். அதனால் இன்றைக்கு நாம் ஏகாதசி வ்ரதம் என்று ஒன்று இருக்கிறோமென்றால் அதற்குக் காரணமே அவர்தான். புராணானாம் ஆலயம் என்பதாக ஸகல புராணங்களுக்குமே உறைவிடமாக இருந்த ஆசார்யாள், புராணங்கள் தலைமேல் வைத்துக் கொண்டாடும் ஏகாதசி வ்ரதத்தை அவசியமில்லாதது என்று சொல்லவே மாட்டார்.

இங்கே அவர் சொல்வது என்னவென்றால், ஏகாதசி மாதிரி பக்ஷத்துக்கு ஒருநாள் சுத்தப் பட்டினி போடுவதையல்ல. "இனிமேலே சாப்பிடுவதேயில்லை"என்று உண்ணாவிரதம் இருந்து ஸாதனை பண்ணுவதைத் தான் சொல்கிறார். அந்த மாதிரி ஒரே தீவிரமாகப் போகிறதில் ஒன்றும் பிரயோஜனமில்லை. அவ்வப்போது ஒருவேளை, அல்லது ஒரே ஒரு நாள் பட்டினி போடுவது என்பது 'நேச்ச'ருக்கே அநுகூலமாக இருப்பது. ஒரேயடியாக 'சாகிற மட்டும் உண்ணாவிரதம்'என்றால் அது 'நேச்ச'ரை எதிர்த்துக்கொண்டு போவதாகும். அப்போது 'நேச்ச'ரும் பழி வாங்கும். உடம்பைச் சித்ரவதை பண்ணும். அந்த வதையை நினைத்துக்கொண்டு அதைச் சமாளிக்க யத்தனிப்பதிலேயேதான் மனஸ் போகுமே தவிர, ஸாதனா லக்ஷ்யத்தில் ஈடுபட்டு நிற்காது. இம்மாதிரி தன்னைத்தானே க்ரூரமாக வ்ருத்திக் கொள்கிற வழிகளை ஆசார்யாள் ஒப்புக் கொள்ளாததால்தான் இப்படிச் சொல்கிறார்.

கிருஷ்ண பரமாத்மாவும் எக்ஸ்ட்ரீம்களை வேண்டாம் என்றுதான் சொல்கிறார். ' **நாத்யச்நதஸ்து யோகோஸ்தி ந சைகாந்தம் அநச்நத : ... யுக்தாஹார ... ஸ்ய யோகோ பவதி து : கஹா** - பெருந்தீனி தின்கிறவனுக்கும் யோகம் வராது, ஒரேயடியாகப் பட்டினி கிடக்கிறவனுக்கும் யோகம் வராது, யுக்தமான அளவு மிதமாய் சாப்பிடுகிறவனுக்கே யோகம் ஸித்தித்துத் துக்கத்தைப் போக்கும்"என்கிறார்*.

ஒரேயடியாகப் பல நாள் சேர்ந்தாற்போல் உண்ணாவிரதம் கிடப்பது நம் சாஸ்த்ர ஸம்மதமல்ல. அது ஒரே ஓய்ச்சலில் கொண்டுவிட்டு, மனஸையும் சுத்தி பண்ணுவதற்குப் பதில் ஒரேயடியாகப் பலஹீனமாக்கிப் பைத்தியத்திலோ ஸ்மரணை தப்புவதிலோதான் கொண்டுவிடும். பகவத் ஸ்மரணையில் ஸ்டெடியாக நிற்கப் பண்ணாது. ஆனால் சாஸ்த்ரங்களில் சொன்னாற்போல் அவ்வப்போது ஒருபொழுதும், பதினைந்து நாளுக்கு ஒருமுறை சுத்தோபவாஸமும் இருப்பது மனஸை சுத்தமாக்கி, திவ்ய ஸ்மரணத்தில் பலப்படுத்தி நிறுத்தி வைக்கும்.

ரொம்பவும் தீவிரமாகவும், 'forced' ஆகவும் (வலுக்கட்டாயமாகவும்) உபவாஸாதிகளை அநுஷ்டித்தால் எல்லாம் சிதறிப் பிரயோஜனமில்லாமல் போய்விடும்;அதனால் gradual-ஆக (படிப்படியாக)ப் போக வேண்டும் என்பதுதான் நம் ஆசார்யாள், கீதாசார்யனான பகவான் இவர்களின் அபிப்ராயம். அவர்கள் சொன்ன context-ல் அடியோடு நிராகரிப்பது போல அழுத்திச் சொல்லும்படியாகிவிட்டது.

அதியாகப் போகக்கூடாது என்பதாலேயே போஜன நிவ்ருத்தியால் ப்ரயோஜனமில்லை என்று கொஞ்சம் அடித்தே ஆசார்யாள் சொல்லிவிட்டார்.

'பூணூல் ஒருத்தனை பிராம்மணனாக்கி விடவில்லை;ஒழுக்கம்தான் அப்படி ஆக்குகிறது'என்று சொன்னால், உடனே உபநயன ஸம்ஸ்காரத்தை நிறுத்தி விட வேண்டும் என்று அர்த்தம் பண்ணிக்கொள்வதா?ஒன்று சிலாக்யமானது, ஆனால் அதைவிட சிலாக்யமாக இன்னொன்று இருக்கிறது என்றால் அப்போது இரண்டாவதை வலியுறுத்துவதற்காக முதலாவதைக் கழித்துக் கட்டுவது போல exaggerate பண்ணியே

பேசுவது வழக்கம். 'பாயின்ட்'நன்றாக நம் மனஸில் தைப்பதற்காக இப்படிச் சொல்கிறது. பிராம்மணனுக்குப் பூணூல் முக்யமானாலும், அதைவிட ஒழுக்கம் முக்யம் என்பதை வலியுறுத்துவதற்காகத்தான் பூணூலே வேண்டாம், ஒழுக்கம் போதும் என்பது. திருக்குறளில் ஆயிரம் யாகத்தைவிட ஒரு பிராணிக்குக்கூட ஹிம்ஸை செய்யாமலிருப்பது உசத்தி என்று சொல்லியிருப்பதும் இப்படித்தான்1. கீதையில் இனனோரிடத்திலும் ஒரு ஆசாரத்தின் முக்யத்வத்தை வலியுறுத்துவதற்காகவே இன்னொரு ஆசாரத்தை மட்டம் தட்டிக் கழித்துக் கட்டிப் பேசியிருக்கிறார். 'அக்னியை விட்டு விட்டதால் ஒருத்தன் ஸந்நியாஸி இல்லை;கர்மாவை விட்டுவிட்டதால் ஒருத்தன் ஸந்நியாஸி இல்லை;என்று அங்கே (பகவான்) சொல்கிறார்:

**ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நிர் ந சாக்ரிய :**2

ஸந்நியாஸிக்கு அக்னி ஹோத்ரம், ஒளபாஸனம், யஜ்ஞம் முதலான அக்னிகார்யம் எதுவும் கிடையாது. அவனுக்கு மற்ற பூஜை முதலான கர்மாக்களும், ஸமூஹக் கடமைகளுங்கூடக் கிடையாது. இது ஸகல சாஸ்திரங்களாலும் ஏற்படுத்தப்பட்ட ஸந்நியாஸாச்ரம தர்மமாகும். அப்படியிருக்க 'நிரக்னி'(அக்னியை விட்டவன், 'அக்ரியன்'(கர்மா இல்லாதவன்)) என்பதால் ஒருத்தன் ஸந்நியாஸி ஆகிவிடமாட்டானென்றால் எப்படி ஸரியாகும்?

இதற்கு ச்லோகத்தின் இன்னொரு வரியை, இதற்கு முந்தி வருகிற முதல் வரியைப் பார்க்க வேண்டும். அதிலே, " அநாச்ரித கர்ம பலம் கார்யம் கர்ம கரோதி ய :"என்கிறார். தானாக எந்தக் கார்யம் வந்து வாய்த்தாலும் அதைத் 'தான் பண்ணுகிறோம்'என்ற உணர்ச்சியில்லாமல் பண்ணிக் கொண்டு, அந்தக் கர்மாவின் பலனைக் கொஞ்சங்கூடக் கருதாமல் இருப்பதுதான் உண்மையான ஸந்நியாஸ லக்ஷணம் என்பது பகவான் அபிப்ராயம். அதைத்தான் இந்த வரியில் சொல்லியிருக்கிறார். இப்படிக் கர்ம பலனில் அனாச்ரிதனாக இருந்துகொண்டு, எவன் வாய்த்த கர்மாவைப் பண்ணுகிறானோ 'அப்படிப் பட்டவனே ஸந்நியாஸி அவனே யோகி - " ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச "என்று முத்தாய்ப்பு வைத்துவிட்டு, அப்புறந்தான் அதற்கு இன்னம் வலுக்கொடுப்பதற்காக, " ந நிரக்நிர் ந சாக்ரிய :"- நெருப்பை விட்டவனோ கர்மாவை விட்டவனோ இல்லை"என்கிறார்.

இதற்கு சரியாக அர்த்தம் பண்ணிக் கொண்டால், "ஸந்நியாஸ ஆச்ரமத்திலிருக்கிற ஒருவன் வெறுமே 'நெருப்பை விட்டேன், கர்மாவை விட்டேன்'என்று சொல்லிக்கொண்டே சொந்தப் பலனை உத்தேசித்து வேலைகள் பண்ணிக் கொண்டிருந்தால் அது ஸந்நியாஸமே இல்லை"என்று பகவான் சொல்வதாகவே ஆகும். இவன் அக்னியை விடத்தான் வேண்டும். தான் கர்த்தா என்ற எண்ணத்தோடு கர்மா செய்வதை விடத்தான் வேண்டும்;ஆனாலும் இதைவிட முக்யம் பலனை எதிர்பார்க்காமல் பட்டுக் கொள்ளாமல் வாய்த்த கர்மாவைப் பண்ண வேண்டும் என்பதே அர்த்தம்.

உபநிஷத்திலே சொல்லியிருக்கிற "அநாசகேன"என்பதற்கு "போஜனத்தை விட்டு விட்டு"என்றும் அர்த்தந்தான். ஆனால் அதைவிட முக்யமான அர்த்தம் "இந்த்ரிய இச்சைகளைப் பூர்த்தி பண்ணிக் கொள்வதை விட்டுவிட்டு"என்பதேயாகும். இந்த அபிப்ராயத்துக்கு அழுத்தங் கொடுப்பதற்காகவே ஆசார்யாள், "போஜனத்தை விடுவது இங்கே தாத்பரியமில்லை"என்கிறார்.

அவ்வப்போது ஆஹாரத்தை நிறுத்துவது சரீரத்துக்கும் நல்லது. மனஸுக்கும் நல்லது.

ஆஹார நியமங்களில் இதனால்தான் ஸத்வ போஜனம் என்று சாப்பிடத்தக்கதான உணவு முறையை வைத்ததோடு, அந்த ஸத்வ போஜனமுமில்லாத பட்டினி தினங்களாக வ்ரத உபவாஸங்களையும் சொல்லியிருக்கிறது.

---

* ðèõˆW¬î - 6.16-17

1. "தெய்வத்தின் குரல்"முதல் பகுதியில் "பரோபகாரம்"என்ற உரையும், இரண்டாம் பகுதியில் "வேதம்"என்ற உரையில் "ஜீவஹிம்ஸை செய்யலாமா?"என்ற உட்பிரிவும் பார்க்க.

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (உபவாஸம்)

**பண்டிகை, வ்ரதம் ; ஏகாதசிச் சிறப்பு**

ப கவத் பரமாகவே பண்டிகைகள் என்று சிலதை வைத்திருப்பதோடு வ்ரதங்கள் என்றும் சிலவற்றை வைத்திருக்கிறது. பண்டிகை என்பது நாம் ஆடை ஆபரணங்களுடன் அலங்காரம் பண்ணிக்கொண்டு, பகவானுக்கு அலங்காரம் பண்ணிப் பூஜை செய்து, அவன் ப்ரஸாதமாக அறுசுவை உணவு சாப்பிட்டு ஆனந்தமாயிருப்பது - போகிப்பண்டிகை, தீபாவளிப் பண்டிகை மாதிரி. புது வஸ்த்ராதிகள், அலங்காரம், பஞ்சபக்ஷ்ய போஜனம் முதலியன இல்லாமல், வழக்கமாகச் சாப்பிடுகிற மாதிரிக்கூட இல்லாமல், நியமத்தோடு உபவாஸமிருந்து பூஜை பண்ணுவது வ்ரதம். க்ருத்திகை வ்ரதம், ஷஷ்டி வ்ரதம், சதுர்த்தி வ்ரதம், ரிஷிபஞ்சமி வ்ரதம், ப்ரதோஷ வ்ரதம், ஸோமவார வ்ரதம், ச்ரவண வ்ரதம், பயோவ்ரதம், இது எல்லாவற்றையும்விட ஸர்வஜன அநுஷ்டானமாக ஏகாதசி வ்ரதம் என்று பல ஏற்பட்டிருக்கின்றன. எல்லா மதங்களிலுமே feasting, fasting என்று இந்த இரண்டும் இருக்கின்றன.

மற்ற வ்ரத தினங்களிலோ பூஜைக்கு அப்புறம் ஒரு பொழுதாவது பலஹாரம் பண்ணலாமென்றிருக்கிறது. ஏகாதசியில்தான் பூர்ண உபவாஸம்.

மற்ற வ்ரதங்களைப் புராண, ஆகமங்கள் சொல்கின்றன. அதில் சிவபரமான புராணாகமங்கள் சொல்பவைகளை வைஷ்ணவர்கள் அநுஷ்டிக்க மாட்டார்கள்;வைஷ்ணவ கிரந்தங்களில் சொல்லியுள்ளதை சைவர்கள் செய்ய மாட்டார்கள். ஏகாதசியோவென்றால் ஒவ்வொரு sect மட்டும் எடுத்துக்கொள்ளும் புராண ஆகமங்களில் மட்டுமின்றி ஹிந்து என்று பெயர் இருக்கிற அத்தனை பேருக்கும் பொதுவான தர்ம சாஸ்திரங்களிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதனால்தான் இதை ஸர்வஜன அநுஷ்டானமான வ்ரதம் என்று சொன்னேன்.

விஷ்ணு நித்ரை செய்து கொண்டிருந்தபோது லோகத்தை ஹிம்ஸை பண்ணிய ஒரு அஸுரனைக் கோல்வதற்காக அவருடைய சரீரத்திலிருந்தே ஸ்த்ரீ ரூபமாக ஒரு சக்தி வெளியே போய் ஸம்ஹாரம் செய்துவிட்டு வந்ததாகவும், விழித்துக் கொண்ட பகவான் அவளுக்கே ஏகாதசி என்று பேர் கொடுத்து இந்த ஏகாதசி வ்ரதத்தை ஏற்படுத்தினாரென்றும் பாத்ம புராணத்தில் கதை வருகிறது. மஹாவிஷ்ணு கூர்மமாகவும், தன்வந்திரியாகவும், மோஹினியாகவும் அவதாரங்கள் எடுத்து, க்ஷீராப்தியில் அம்ருதம் கடையப் பண்ணி அதை எடுத்துக் கொடுத்த நாளே ஏகாதசி என்பதாலும் அதைப் பொதுவில் விஷ்ணு ஸம்பந்தமுள்ளதாக நினைக்கிறோம். ஆனால் இந்த அம்ருத மதன ஸமயத்தில் முதலில் உண்டான காலகூட விஷத்தைப் பரமேச்வரன் புஜித்ததை முன்னிட்டுத்தான் அன்று எவரும் சாப்பிடக் கூடாது என்று ஏற்பட்டிருப்பதாக சைவர்கள் சொல்வதுண்டு.

இப்படி சைவம், வைஷ்ணவம் இரண்டுக்கும் ஏற்கத் தக்கதாயிருப்பதோடு ஹிந்துவாகப் பிறந்தவனில் எந்த இஷ்ட தெய்வத்தைக் கொண்டவனாயினும், எந்த ஜாதியைச் சேர்ந்தவாயினும் ஸகலருக்குமான வாழ்க்கை விதிகளைப் போடுகின்ற தர்மசாஸ்த்ரமும் ஏகாதசி உபவாஸத்தை விதித்திருப்பது அதன் விசேஷத்தைக் காட்டுகிறது.

தர்ம சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் உபவாஸ நாட்களைச் சொல்கிறேன். ஒவ்வொரு பக்ஷத்திலும் வரும் ஏகாதசியன்று முழுப்பட்டினி கிடக்க வேண்டும். ஞாயிற்றுக் கிழமை, அமாவாஸ்யை, பௌணர்மி ஆகிய நாட்களில் பகலில் மட்டும் போஜனம் செய்து இரவில் உபவாஸமிருக்க வேண்டும். ஒவ்வொரு பக்ஷத்திலும் அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் பகலில் சாப்பிடாமல், ராத்திரி மட்டும் ஆஹாரம் பண்ண வேண்டும்.

ராமநவமி, கோகுலாஷ்டமி, சிவராத்திரி ஆகியனவும் பூர்ண உபவாஸ தினங்களாகச்

சொல்லப்ப்ட்டிருக்கின்றன. ஆனால் சிவராத்திரியில்தான் இதை ஓரளவுக்கு விதிப்படிச் செய்வதாகவும் மற்ற இரண்டு தினங்களில் பூஜைக்கு அப்புறம் சாப்பிடுவதாகவும் (கிருஷ்ண ஜயந்தி பூஜை ராத்ரியில் செய்யப்படுவதால் பலஹாரம் செய்வதாகவும் -இதில் ஏகப்பட்ட பக்ஷண தினுஸுகள் சேர்ந்துவிடும்) நடந்து விடுகிறது.

குருவார வ்ரதம் என்பது நடைமுறையில் பரவியிருக்கிறது.

தக்ஷிணத்தில் எல்லாவற்றையும்விட அதிக வழக்கிலிருப்பது சனிக்கிழமை வ்ரதம்தான். ரொம்பப் பேர் அன்று ராத்ரி போஜனம் பண்ணுவதில்லையென்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வேங்கடரமண ஸ்வாமியை உத்தேசித்து இந்த வ்ரதம் ஏற்பட்டிருக்கிறது. " **கலௌ வேங்கடநாயக :**"(கலியுகக் கடவுள் ஏழுமலை யானே) என்பதற்கேற்க, அவரது வ்ரதமே வெகுவாக அநுஷ்டானத்திலிருக்கிறது - சாஸ்த்ரத்தில் அது இல்லாவிட்டாலும்.

இதேபோல ஸோமவார வ்ரதமும் இங்கே சைவர்களிடையேயும், ஸ்மார்த்தகளிடையேயும் ஓரளவு நிறையவே வழக்கிலிருக்கிறது. வடக்கேயோ சைவ வைஷ்ணவ வித்யாஸமில்லாமல் எல்லோருமே ஸோமவார விரதமிருக்கிறார்கள். அதனால்தான் லால்பஹாதூர் சாஸ்திரிகூட ரொம்பவும் உணவு நெருக்கடி ஏற்பட்டபோது எல்லாரும் திங்கட்கிழமை உபவாஸமிருப்பது என்று வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னார். திங்கட்கிழமை ராத்ரி ராஜாங்க விருந்துகள் நடத்துவதில்லை என்றேகூட நிறுத்தி வைக்கப்பட்டது.

இப்படி ராஜாங்க ரீதியிலேயே ஸோமவார 'ஒரு பொழுது'விதிக்கப்பட்டதிலிருந்து, உபவாஸங்களுக்கு சாஸ்த்ரத்தில் சொன்ன பலன்களோடு உணவுப் பிரச்னையை குறைப்பதில் பங்கு இருக்கிறதென்பதும் புதிதாகத் தெரிய வந்திருக்கிறது. சாஸ்த்ரப் பிரகாரம் எல்லோரும் உபவாஸாதிகளை அநுஷ்டித்தால் உணவிலே நமக்கு எப்போதும் 'ஸர்ப்ளஸ்', ஏற்பட்டு, 'எக்ஸ்போர்ட்'பண்ணி 'எக்ஸ்சேஞ்ச்'கூட நிறைய ஸம்பாதித்து விடலாம்!

சாந்த்ராயணம் என்னும் ஒரு வ்ரதம் உண்டு. உடம்பைப் போட்டு ரொம்ப வருத்திக் கொள்ளப்படாது தான் என்பது நம் மதக் கொள்கையானாலும், எத்தனை ஸாதனைகள் பண்ணியும் சித்த சுத்தி வராதவர்கள், தங்களுக்கு மற்றவர்களைவிட ஜாஸ்தியாயிருக்கிற பூர்வ பாப கர்மாதான் இப்படிப் பழி வாங்குகிறதென்று புரிந்து கொண்டு அதைக் கழிப்பதற்காக உடம்பை வருத்திக் கொண்டு சில அநுஷ்டானங்களைப் பண்ணும்படி சாஸ்த்ரம் விதிக்கிறது. இதற்கு 'க்ருச்ரம்'என்று பெயர். இப்படிப் பண்ணினால் தாங்கிக் கொள்ள முடியாதவர்கள் அதற்குப் பதில் 'க்ருச்ர ப்ரதிநிதி'யாக இத்தனை ஆயிரம் காயத்ரி பண்ண வேண்டும் என்றும் இருக்கிறது. இப்படி 'ஸ்ப்ஸ்டிட்யூட்'டைச் சொல்லிவிட்டதால், இந்த 'ஸப்ஸ்டியூட்'டுக்கும் 'ஸப்ஸ்டிட்யூட்', அதற்கும் 'ஸப்ஸ்டியூட்'என்று போய், ஒரு கோதானம் பண்ணிவிட்டால் அது க்ருச்ரத்துக்கு ஸமானம் என்று ஆகி பசுவுக்குப் பதில் அதன் விலையைத் தக்ஷிணையாகத் தருவதாக ஆரம்பித்து, இந்தத் தக்ஷிணையையும் குறைத்துக் கொண்டே போய், தற்போது பரிஹாஸத்துக்கு இடமாக, ஒரு பிராம்மணனுக்கு ஆறே காலணா தக்ஷிணை கொடுத்துவிட்டால் க்ருச்ரம் அநுஷ்டித்தாகி விட்டது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம்!பாப பரிஹாரமாக உடம்பை வருத்திக் கொள்வதற்காகவே சாந்த்ராயண விரதம் ஏற்பட்டிருக்கிறது. சந்திரகலை வளர்வது தேய்வதைப் பொறுத்து போஜனம் செய்யும் அன்ன கவளத்தின் எண்ணிக்கையை அமைத்துக் கொள்வதுதான் சாந்த்ராயணம்.

இதை ஆரம்பிக்கிற திதியையொட்டி இரண்டு தினுஸுகள். ஒன்றை 'கட்டெறும்பு சாந்த்ராயணம்'என்றும், மற்றதை 'கோதுமை சாந்த்ராயணம்'என்றும் வேடிக்கையாகச் சொல்லலாம். கட்டெறும்பு எப்படியிருக்கிறது?தலை பெருத்து ஆரம்பிக்கிறது;அப்புறம் நடுவில் சிறுத்துத் தேய்ந்துவிடுகிறது;மறுபடி பின்பாதி பெருத்துக் கொண்டு போகிறது. இதே மாதிரி ஒரு தினுஸு சாந்த்ராயணத்தைப் பௌர்ணமியன்று ஆரம்பித்து, அன்று பதினைந்து கவளம் சாப்பிடவேண்டும். மறுநாளான க்ருஷ்ணபக்ஷப் பிரதமையன்று பதினாலு கவளம், அதற்கு மறுதினமான த்விதியை பதின்மூன்று கவளம் என்று இப்படியே குறைத்துக்கொண்டே போய் அமாவாஸ்யையன்று முழுப்பட்டினி கிடக்க

வேண்டும்;அப்புறம் மறுதினமான சுக்லபக்ஷப் பிரதமையன்று ஒரு கவளம், த்விதியைக்கு இரண்டு கவளம் என்று ஏற்றிக் கொண்டே போய் பௌர்ணமியில் பதினைந்து கவளம் என்று முடிக்க வேண்டும்.

கோதுமை எப்படியிருக்கிறது?ஊசுமுள் மாதிரி சிறுத்து ஆரம்பிக்கிறது. நடுவிலே பெருத்து மறுபடி சிறுத்து முடிகிறது. இதேபோல் சாந்த்ராயண நியமத்தை சுக்லபக்ஷப் பிரதமையில் ஆரம்பித்து, அன்றைக்கு ஒரே ஒரு கவளம் போஜனம் செய்யவேண்டும். அப்புறம் ஒவ்வொரு திதிக்கும் ஒவ்வொரு கவளம் கூட்டிக்கொண்டே போக வேண்டும்.பௌர்ணமியன்று பதினைந்து கவளமாகும். அதற்கு மறுநாளிலிருந்து கிருஷ்ணபக்ஷம் பூராவும் ஒவ்வொரு கவளமாகக் குறைத்துக் கொண்டே வந்து அமாவாஸ்யையன்று சுத்த உபவாஸத்துடன் முடிக்க வேண்டும்.

சாந்த்ராயணத்தில் முழுப்பட்டினி கிடக்கும் நாள் தவிர மற்ற தினங்களில் ஒரே வேளைதான் சாப்பிட வேண்டும் - அன்றைக்கு எத்தனைக் கவளமோ அந்தக் கணக்குப்படி.

விரதங்களைப் பொதுஜனங்கள் 'å¼ ªð£¿¶'â¡ð£˜èœ. Ü«ïèñ£è ðèL™, Ü¡ù‹ «ê˜ˆ¶, ªè£‡´ ê£ŠH´õ¬î»‹ ÞóM™ Þ†L, «î£¬ê «ð£¡õŸ¬ø„ ê£ŠH´õ¬î»‹ šóî£¸wì£ùñ£è G¬ù,Aø£˜èœ. ê£vFóŠ Hóè£ó‹, Ü¡ùˆ¶,° ðF™ ÞŠð® õJÁ G¬øò, ï™ô ¹w®»œ÷ Þ†L, «î£¬ê Þˆò£Fè¬÷„ ê£ŠH´õ¶ àðõ£úñ£è£¶. "ðô(Ý)ý£ó‹"â¡Á ÜF™ ªê£™LJ¼,Aøð® ªõÁ‹ ðöƒè¬÷ ñ†´‹ ê£ŠH´õ¶î£¡ Güñ£ù àðõ£ú‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (உபவாஸம்)

**ஏகாதசியின் ஏற்றம்**

வ் ரதோபவாஸங்களில் உச்ச ஸ்தானத்தில் இருப்பது ஏகாதசி.

**ந காயத்ர்யா : பரம் மந்த்ரம் ந மாது : பர தைவதம்** *

**ந காச்யா : பரமம் தீர்த்தம் நைகாதச்யா : ஸமம் வ்ரதம்** **

'காயத்ரிக்கு மேலே மந்தரமில்லை;அம்மாவுக்கு மேலே தெய்வமில்லை (தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை);காசிக்கு மேலே தீர்த்தமில்லை'என்று சொல்லிக் கடைசியில் 'ஏகாதசிக்கு ஸமானமாக வ்ரதுமெதுவுமில்லை'என்று முடிகிறது. மற்றதற்கெல்லாம் 'மேலே'ஒன்றுமில்லை என்பதால் அவற்றுக்கு 'ஸமமாக'ஏதாவது இருந்தாலும் இருக்கலாம் என்று ஆகிறது. ஆனால் வ்ரதங்களை எடுத்துக்கொண்டால், அவற்றில் ஏகாதசிக்கு 'மேலே'மட்டுமில்லாமல், அதற்கு 'ஸமமாக'க் கூட எதுவுமில்லையென்று ரொம்பவும் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறது.

**அஷ்ட வர்ஷாதிக : மர்த்ய : அபூர்ணாசீதி வத்ஸர :***

**ஏகாதச்யாம் உபவஸேத் பக்ஷயோ : உபயோ அபி** **

என்று தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது. அதாவது மநுஷ்யராகப் பிறந்தவர்களில் எட்டு வயஸுக்கு மேல் எண்பது வயகுக்கு உட்பட்ட எல்லோரும் இரு பக்ஷங்களிலும் வரும் ஏகாதசிகளில் உபவாஸம் இருக்க வேண்டும் என்று அர்த்தம். எந்த ஸம்ப்ரதாயக்காரன், எந்த ஜாதிக்காரன், ஆணா பெண்ணா என்ற வித்யாஸமில்லாமல், 'மர்த்ய', அதாவது மநுஷ்யராகப் பிறந்த எல்லோரும் ஏகாதசி உபவாஸம் அநுஷ்டிக்க வேண்டும் என்று இது சொல்கிறது. ரொம்பவும் கருணையோடு குழந்தைகளையும், தள்ளாத கிழவர்களையும் சிரமப்படுத்த வேண்டாமென்றுதான் எட்டு வயஸுக்குக் கீழே இருப்பவர்களுக்கும், எண்பது வயஸுக்கு மேலே போனவர்களுக்கும் விதிவிலக்குக் கொடுத்திருக்கிறது. அவர்கள் உபவாஸம் இருக்கக் கூடாது. என்று கண்டிப்புச் செய்ததாக அர்த்தமில்லை. முடிந்தால் அவர்களும்

இருக்கலாம். முடியவில்லை என்பதால் இல்லாவிட்டாலும் பாதகமில்லை என்று அர்த்தம். மஹாராஷ்டிரம் முதலிய இடங்களில் ஏகாதசியன்று பச்சைக் குழந்தைக்குக்கூட பால் கொடுக்காத தாய்மார்கள் இருந்திருக்கிறார்கள்;அந்தக் குழந்தைகளும் அவர்களுடைய நம்பிக்கையிலேயே நன்றாக இருந்திருக்கின்றன என்று சொல்வார்கள். இத்தனை 'எக்ஸ்ட்ரீம் டிஸிப்ளி'னை தர்ம சாஸ்திரகாரகர்களே எதிர்பார்க்கவுமில்லை;ரூலாகப் போடவுமில்லை.

பகவான் கை கொடுப்பான் என்று நம்பி தைர்யமாகப் பூர்ண நியமத்தோடுதான் ஆரம்பிக்க வேண்டும். அப்படியும் முடியாவிட்டால் வீம்பாகப் பட்டினி கிடந்து தேஹ ச்ரமத்தையும் மனஸ் கஷ்டங்களையும் வரவழைத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஏகாதசி தவிர மற்ற உபவாஸ தினங்களில் ஒரே பொழுது பலஹாரம் (சாஸ்த்ரீய பலஹாரத்தைச் சொல்லாமல், தோசை-இட்லி பலஹாரத்தைத்தான் சொல்கிறேன்) செய்யலாம். இன்னொரு பொழுது சாஸ்தீரிய பலஹாரமான பழம், பால் மட்டும் சாப்பிடலாம். முடியாதவர்கள் ஒருபொழுது அன்னம், ஒருபொழுது தோசை-இட்லி மாதிரி பலஹாரம் பண்ணலாம். ஆனால் முழு நியமப்படி மாற்றிக் கொள்ள முயற்சி பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும்.

ஏகாதசியில் நிர்ஜலமாயிருந்தால் ரொம்பவும் ச்ரேஷ்டம். அது ரொம்பவும் கஷ்டமும். ஸாத்விகமான பானங்கள் மட்டும் பண்ணுவது அடுத்தபடி. அதற்கும் அடுத்தப்படி நிஜப் பலஹாரமாகப் பழத்தோடு பால் சாப்பிடுவது. அப்புறம் ஒருவேளை மட்டும் பற்றுப்படாத ஸத்துமா, பூரி மாதிரியானவற்றைச் சாப்பிட்டு இன்னொரு வேளை பழம், பால் ஆஹாரம் செய்வது. இன்னம் ஒருபடி கீழே, ஒருவேளை பக்வமான, புஷ்டியான இட்லி, தோசை, பொங்கல், உப்புமா இத்யாதியும் இன்னொரு வேளை பால் பழமும சாப்பிடுவது.

இதற்கும் கீழே போகப்படாது. அதாவது ஒரு வேளைகூட அன்னம் சாப்பிடுவதாக இருக்கப்படாது. மற்ற உபவாஸங்களில் அதமபக்ஷமாக ஒரு வேளை அன்னம், ஒரு வேளை இட்லி தோசை என்று வைத்துக் கொள்ளும் அளவுக்கு ஏகாதசியைக் கொண்டு வந்துவிடக் கூடாது. ஏகாதசியில் அன்னத்தைச் சாப்பிட்டால் பிராயச்சித்தமே கிடையாது என்றிருக்கிறது. சிலவிதமான நோயாளிகள், பலஹீனர்கள், அன்னம் தவிர எதுவுமே ஜெரித்துக் கொள்ள முடியவில்லையென்று நிர்பந்தம் ஏற்பட்டால் சாத்தைக் கஞ்சி வடிக்காமல் ஹவிஸ்ஸாகப் பண்ணி அதில் உப்பு, புளி, காரம் எதுவுமே சேர்க்காமல் ஒருவேளை மட்டும் ஸ்வல்பம் ஏகாதசியன்று சாப்பிடலாம். ரொம்பவும் அசக்தமானவர்களுக்குத்தான் இந்த relaxation. மற்றவர்களுக்கில்லை. அன்று ஒருவன் சாப்பிட்டால் அதில் ஒவ்வொரு பிடியிலும் நாயின் அமேத்யத்துக்கு ஸமமான பாவத்தைச் சாப்பிடுகிறான் என்று மிகவும் கடுமையாகவே சொல்லியிருக்கிறது: ப்ரதிக்ராஸம் அலெள புங்க்தே கிஷ்பிஷம் ச்வாந விட் ஸமம் .

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (உபவாஸம்)

**உபவாஸமும் உழைப்பும்**

" ஏ காதசிக்கு லீவில்லையே!சாப்பிடாமல் எப்படி வேலை பண்ணுவது?"என்றால், இதற்கு இரண்டு விதமாகப் பதில் சொல்கிறேன். ஒன்று:எல்லாரும் ஏகாதசி விரதம் இருப்பதென்று வைத்துக்கொண்டு சர்க்காரிடம் வலியுறுத்திக் கோரிக்கை விட்டால் அன்றைக்கு லீவே விட்டு விடுவார்கள். இரண்டு:இப்படிப் பதினைந்து நாளுக்கு ஒரு நாள் சாப்பிடாததால் வாஸ்தவத்தில் தெம்பு நாளுக்கு ஒரு நாள் சாப்பிடாததால் வாஸ்தவத்தில் தெம்பு குறையவே குறையாது. ஏதோ 'ஸெண்டிமெண்டலா'கத்தான் 'நாம் சாப்பிடவில்லையே, நமக்கு சக்தி இருக்காது', என்று பயப்பட்டு அந்த பயத்தினாலேயே பலஹீனத்தை வரவழைத்துக் கொள்வதாயிருக்குமே தவிர வாஸ்தவத்தில் அன்றைக்கு நாம் மனஸைக் கொஞ்சம் உடம்பிலிருந்து விடுவித்துக் கொண்டு ஒதுங்கியிருந்தால், அன்றுதான் கூடுதலாக சக்தி, உத்ஸாஹம் எல்லாம் இருப்பதாகத் தெரியும். மற்ற தினங்களை விடவும் அன்று நறுவிசாக நிறைய வேலை செய்ய முடியும். மனமிருந்தால் வழியுண்டு. உடம்புக்குப் பல தோஷங்களிருந்தாலும் அதற்கு ஒரு பெரிய குணமுண்டு. அதாவது நாம் பழக்குகிறபடி கேட்கும். அதனால் ஆபீஸ் கார்யம் பண்ண முடியாதபடி ஏகாதசி உபவாஸம் எவரையும்

அசக்தமாக்கி விடாமல் பழக்கிக் கொண்டு விடலாம். ஆனாலும் அன்று முழுக்க பகவத் பரமாகவே செலவழிக்க வேண்டுமென்பதற்காக வேண்டுமானாலும் எல்லாரும் சேர்ந்து டிமான்ட் பண்ணி லீவ் விடும்படியாகச் செய்யலாம்.

வருஷத்தில் எல்லா ஏகாதசியிலும் பூர்ண உபவாஸமிருக்க முடியாமல் ஒருவேளை பலஹாரம் பண்ணினாலும் ஒரே ஒரு ஏகாதசியாவது பூர்ண உபவாஸமாக முழுப் பட்டினி இருக்க வேண்டும். பீமனுக்குப் பசியே தாங்காதாம். அதனால் அவன் எல்லா ஏகாதசிகளிலும் சுத்த உபவாஸமிருக்க முடியாமல், வியாஸரைக் கேட்டு, இப்படி ஒரு ஏகாதசியில் பூர்ண உபவாஸம் இருப்பதற்கே பலன் உண்டு என்று வரம் வாங்கிக் கொண்டானாம். ஆனால் அந்த ஏகாதசி வைகுண்ட ஏகாதசி அல்ல.

இந்த தேசத்தில் எது எப்படியானாலும் வ்ரதோபவாஸங்களில் தலைசிறந்ததான ஏகாதசியை அநுஷ்டானத்தில் இருக்கப் பண்ண வேண்டும். ரொம்பவும் போற்றிப் பின்பற்றப்பட்டு வந்த இந்த மஹா தர்மம் இரண்டு மூன்று தலைமுறைகளில் கொள்ளை போயிருக்கிறது. இன்றைக்கும் எங்கேயோ இரண்டு மாத்வப் பாட்டிகள் ஏகாதசி சுத்தோபவாஸம் பண்ணுவதால்தான் இந்த மட்டுமாவது மழை கிழை பெய்து கொண்டிருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** (உபவாஸம்)

**மற்றவர்களின் தீவிர அநுஷ்டானம்**

**த** ர்ம சாஸ்த்ரமே விதித்த வ்ரதமாக ஏகாதசி இருப்பதால் மாத்வர், வைஷ்ணவர், ஸ்மார்த்தர் ஆகிய எல்லாருமே அதை அநுஷ்டித்தாலும் ரொம்பவும் தீவிரமாகக் கடைப்பிடிப்பது மாத்வர்தான்.

ஸாதாரணமாக வேத மந்திரங்களையே நேராகப் பிரயோஜனப்படுத்திச் செய்கிற கர்மாக்களுக்குத்தான் மதாநுஷ்டானங்களில் ப்ராதான்யம் (முதலிடம்) கொடுப்பது வழக்கம். நம் மதத்துக்கு மூல நூல் வேதம்தானே?அதோடு பித்ரு கர்மா, தேவ கர்மா என்ற இரண்டுக்குள் பித்ரு கர்மாவுக்குப் ப்ராதான்யம் கொடுத்து விட்டு அப்புறம்தான் தேவ கர்மாவைச் செய்ய வேண்டும். சிராத்தம் என்பது வேத மந்திரங்களாலேயே ஆகிற கர்மா. அதோடு அது பித்ரு கர்மாவும் ஆகும். ஏகாதசி உபவாஸத்தில் வேத மந்திரங்களுக்கு இடமில்லை. நாமஜபம், பஜனை ஆகியன பௌராணிகமும் தாந்த்ரிகமுமே ஆனவை. பூஜை பண்ணுவதில் மட்டுமே வேத மந்த்ரங்கள் கொஞ்சம் சேரும். ஏகாதசியை ஒரு உபவாஸமாக தர்ம சாஸ்த்ரம் சொன்னாலும் ச்ராத்தத்தைப் போல ஸ்மார்த்த கர்மாவாக விதிக்கவில்லை. அதோடு ஏகாதசி என்பது பித்ரு ஆராதனைக்கு அப்புறமே வருகிற தேவ ஆராதனைதான்.

ச்ராத்தம் என்பது ரொம்பவும் வைதிகமான ஸ்மார்த்த கர்மா. அதிலே பித்ரு சேஷமாக போஜனம் பண்ண வேண்டியதும் ஒரு அங்கம். ச்ராத்தம் பண்ணி விட்டுப் பித்ரு சேஷம் சாப்பிடாவிட்டால் தப்பு.

ஏகாதசியில் ச்ராத்தம் வந்தால் என்ன செய்வது?'ச்ராத்தம் பண்ணிப் பித்ரு சேஷம் சாப்பிடத்தான் வேண்டும். ஏனென்றால் ஏகாதசி எவ்வளவு முக்கியமான தாயிருந்தாலும், அதைவிட வைதிகமான ச்ராத்தத்துக்குத் தான் இன்னமும் அதிக முக்யத்வம் தரவேண்டும்'என்று ஸ்மார்த்தர்களும், வைஷ்ணவர்களும் நினைக்கிறோம். அன்று ஏகாதசி உபவாஸ நியமத்தை விடுவதால் தோஷமில்லை;வேதக் கட்டளைப்படி பண்ணுவதால் நமக்குத் தப்பு வராது என்று நினைத்து ச்ராத்தம் பண்ணி போஜனம் செய்கிறோம்.

ஆனால் மாத்வர்கள் ஏகாதசியன்று ச்ராத்தம் செய்வதில்லை. இந்த வ்ரதாநுஷ்டானந்தான் முக்கியமென்று நினைத்து உபவாஸமிருக்கிறார்கள். ஆனால் அதற்காக சிராத்தத்தை விட்டுவிடுவதில்லை. ஏகாதசியன்று வருகிற சிராத்தத்தை மறுநாள் த்வாதசியன்று செய்கிறார்கள். அதிலும் த்வாதசி ப்ராரணை காலம்பறவே (இளங் காலையிலேயே) பண்ணிவிட வேண்டுமென்கிற புராண விதிக்காக, மத்யான்ன காலத்துக்கு அப்புறமே பண்ண வேண்டிய சிராத்தத்தை அன்று ரொம்ப முன்னதாகவே பண்ணி விடுகிறார்கள்.

தீட்டுக் காலத்தில்கூட ஏகாதசி உபவாஸமிருக்க வேண்டும் என்பதில் எல்லா ஸம்பிரதாயக்காரர்களும் ஒத்துப் போகிறார்கள். மற்ற எந்த உபவாஸத்துக்கும் இம்மாதிரி ஸூதக ஆசௌச*காலங்களில் பலனில்லாததால், அவற்றை அப்போது அநுஷ்டிக்க வேண்டியதில்லை என்றே விதி இருக்கிறது. ஏகாதசிக்கு மட்டும் விலக்கு.

---

* பிரஸவத் தீட்டு ஸூதகம், மரணத் தீட்டு ஆசௌசம்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** (உபவாஸம்)

**எல்லா வகுப்பாரும் ஏற்றம் பெற்றது**

**ரா** ஜபோகம் என்றே சொல்வது வழக்கம். ராஜாக்கள் மது, மாம்ஸாதிகள் உள்பட ஓரளவுக்குச் சாப்பிடுவதற்கு அதிகாரம் பெற்றவர்கள். ஆனால் அவர்களும் ஏகாதசி உபவாஸத்தை நியமத்தோடு அநுஷ்டித்திருக்கிறார்கள். ஏகாதசி என்றவுடனே நாம் நினைக்கிற அம்பரீஷன், ருக்மாங்கதன் இரண்டு பேருமே க்ஷத்ரிய ராஜாக்கள்தான்.

கார்த்தாலே எழுந்தவுடன் குளிர்ந்த வேளையில், குளிர்ந்த மனஸோடு நினைத்து நமஸ்காரம் பண்ண வேண்டிய பரம பாகவதர்களைப் பற்றி ஒரு ச்லோகம் உண்டு.

**ப்ரஹ்லாத நாரத பராசர புண்டரீக**

**வ்யாஸ (அ)ம்பரீஷ சுக சௌநக பீஷ்ம தால்ப்யான் ***

**ருக்மாங்கத (அ)ர்ஜுந வஸிஷ்ட விபீஷணாதீன்**

**புண்யான் இமான் பரம பாகவதான் ஸ்மராமி ****

இதிலே அம்பரீஷனும், ருக்மாங்கதனும் இடம் பெற்றதற்குக் காரணமே அவர்களுடைய ஏகாதசி அநுஷ்டானந்தான்.

ருக்மாங்கதன் தன் ராஜ்யத்தில் அத்தனை பேரையும் ஏகாதசி விரதம் இருக்கும்படியாகப் பண்ணினான். அதனால் ப்ரஜைகள் எல்லோரும் பக்தி ஞானங்களில் முன்னேறியதோடு நல்ல ஆயுர்-ஆரோக்யங்களுடனும் இருந்தார்கள் என்று நாரத புராணத்தில் இருக்கிறது.

ரொம்பவும் உச்சத்திலுள்ள ராஜாக்கள் மட்டுமில்லை. கைசிகன் என்று தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்த பக்தர். இவரும் ஏகாதசி உபவாஸ நியமத்தால் உயர்வு பெற்றிருக்கிறார். 'கைசிக ஏகாதசி'என்றே ஒரு ஏகாதசிக்கு வைஷ்ணவர்கள் பெயர் சொல்வார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்,** உபவாஸம் **)**

**நிறைவு பெறுவோம்**

**வை** குண்ட ஏகாதசி, மஹா சிவராத்ரி, கோகுலாஷ்டமி, ராமநவமி முதலிய விசேஷ நாட்களில் கூட நாம் வாயைக் கட்டாமல், வயிற்றைச் கட்டாமலிருந்தால் அது இந்த தேசத்தில் பிறந்த நமக்கு ரொம்பக் குறைவாகும். வயிறு குறைந்தாலும் மனஸ் நிறையும்படிப் பண்ணிக் கொள்வதே நமக்கு நிறைவு. அப்படிப் பண்ணிக் கொள்வதற்கான ஸங்கல்ப பலத்தை பகவான் எல்லாருக்கும் அநுக்ரஹிக்க வேண்டும்.

வியாதிக்கு மருந்து மாதிரி பசிக்குச் சாப்பாடு ரொம்பவும் அளவாகத்தான் போட வேண்டும். அதாவது பசியைத் தீர்த்துக்கொள்ளத்தான் ஆஹாரமே தவிர ருசியைத் தீர்த்துக்கொள்ள

அல்ல என்று ஆசார்யாள் சொல்லியிருப்பதாகச் சொன்னேன். மற்ற வியாதிகளுக்கும் இந்த 'க்ஷுத் வியாதி'க்கும் ஒரு வித்யாஸம், தலைவலிக்கு மருந்து போட்டால் அது போய் விடுகிறது;மறுபடி என்றைக்கோ ஒரு நாள்தான் வருகிறது. ஜ்வரமும் இப்படித்தான். ஆனால் இந்தப் பசி வியாதி மட்டும் இப்போது மருந்து போட்டு ஸ்வஸ்தப்படுத்தி விட்டாலும், வேளை தப்பாமல் மறுபடி மறுபடி 'அட்டென்டன்ஸ்'கொடுத்துக்கொண்டேயிருக்கிறது!இப்படி இயற்கையை ஏவிவிட்டு ஈச்வரன் வேடிக்கை பார்க்கிறான். நமக்குப் பரீக்ஷை வைக்கிறான். நாம் பாஸ் பண்ணினால்தான் பெருமை. அவனுடைய அருள் துணையை நம்பி, நாம் ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு உறுதியாயிருந்தால், அவன் கைகொடுத்துப் பாஸ் பண்ண வைத்து, நல்லாரோக்யம், நல்ல ஆத்மாபிவிருத்தி முதலான ப்ரைஸ்களையும் கொடுப்பான்.

நம்முடைய த்ருட சித்தம் முக்யம். எங்கேயோ ஒரு இடத்துக்குப் போகிறோம். அவர்கள் விலக்கப்பட்ட பதார்த்தம் எதையோ உபசாரம் பண்ணிச் சாப்பிடச் சொல்கிறார்கள். அந்த ஸமயத்தில் தாக்ஷிண்யத்தாலோ, அவர்கள் தப்பாக நினைக்கப் போகிறார்களே என்றோ அதைச் சாப்பிட்டுவிடக் கூடாது. ப்ரின்ஸிபிளை விடக் கூடாது.

பெங்காலில் விதவைகள் எத்தனை கடுமையாக ஏகாதசி வ்ரதாநுஷ்டானம் பண்ணுகிறார்கள் என்பதைப் பார்த்து அதை நாமும் கொஞ்சமாவது 'எமுலேட்'பண்ண முயலவேண்டும். பெங்கால்காரர்கள் மத்ஸ்ய ப்ராம்மணர்கள்தான்;ஆனால் விதவைகளை அந்த ஸாமானைத் தொடமாட்டார்கள். அதோடு ஏகாதசியை அவர்களே மற்ற எவரையும் விடத் தீவிரப் பற்றுடன் அநுஷ்டிக்கிறார்கள். வாயில் சொட்டுப் பச்சைத் தண்ணி கூட விடாமல் அன்று வ்ரதமிருக்கிறார்கள். அங்கே கோடையில் கோட்டையடுப்பு மாதிரி ஊர் முழுக்க நெருப்புக் காற்று அடிக்கிற போதுகூட, வாய் அப்படியே உலர்ந்து வறண்டு ஒட்டிக் கொண்டாலும் அந்த விதந்துக்கள் சொட்டுத் தீர்த்தங்கூட விட்டுக் கொள்வதில்லை என்று பிடிவாதமாயிருப்பது வழக்கம். இதில் உஷ்ணம் தாங்காமல் அநேகம் பேர் செத்தே போனார்கள். இந்த மாதிரி விடக்கூடாது என்று பண்டிதர்களையெல்லாம் கூட்டி ஒரு ஸதஸ் நடத்தி சாஸ்த்ர ப்ரகாரமே கடுமையான உபவாஸ விதியைக் கொஞ்சம் இளக்கித் தர வழி இருக்கிறதா என்று பார்க்க முடிவு செய்தார்கள். 'மிஞ்சிப் போனால் ஏதாவது பானம், கீனம் பண்ணாலமென்று சாஸ்திரத்திலேயே இருந்தால்கூட நாங்கள் அன்று வாயில் எதையும் விட்டுக்கொண்டு முழுங்க மாட்டோம்;செத்தாலும் சாவோம்'என்று அந்த விதவைகள் சொல்லிவிட்டார்களாம். இதன்மேல் அந்தப் பண்டிதர்கள் சாஸ்திரங்களைப் பார்த்து, 'ஸரி, ஏகாதசியன்று வாயில் தீர்த்தம் விட்டுக்கொள்ள வேண்டாம்;காதில் விட்டுக் கொள்ளட்டும். அதனால் பிழைக்கிறவர் பிழைக்கட்டும்'என்று தீர்மானம் செய்தார்களாம். அத்தனை கடுமையான அநுஷ்டானம் அங்கே இருந்திருக்கிறது.

நாக்கை அடக்க முடியவில்லை என்று விடவே கூடாது. ஆப்பிளைச் சாப்பிட்டுத்தான் ஆடம் அடிமட்டத்துக்கு விழுந்துவிட்டான் என்கிறார்கள். Forbidden fruit மாதிரி நம் சாஸ்திரப்படி forbidden food எதையுமே சாப்பிடக் கூடாது. மீறினால் அது நம்மைக் கீழேதான் இறக்கும். இம்மாதிரி ஒரு 'டெம்ப்டேஷன்'உண்டாகிற சமயங்களில், 'இப்போது இது உசந்த ருசி என்று சாப்பிட்டாலும், சாப்பிடுகிற இந்த ஐந்து, பத்து நிமிஷங்களுக்கு அப்புறம் ருசி நாக்கில் நிற்கிறதா என்ன?இது உசந்த பதார்த்தம் என்று சாப்பிட்டாலும் இது என்ன சாச்வதமாக வயிற்றிலே இருந்துகொண்டு மறுபடி பசிக்காமலே பண்ணப் போகிறதா என்ன?'என்று நம்மை நாமே கேட்டுக்கொண்டு, கண்ட்ரோல் பண்ணிக் கொள்ள வேண்டும்.

இப்படி ஒரு நல்லறிவு உண்டாவதற்கு மறுபடியும் பகவானையேதான் வேண்டிக் கொள்கிறேன்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (உபவாஸம்)

**ஏகாதசிகளின் பெயர்கள்**

ஒ ரு வருஷத்துக்கு 365 நாளல்லவா?இதனால் இருபத்தநாலு பக்ஷத்துக்குமேல் சில நாட்கள் வருஷத்தில் எஞ்சி நிற்கும். இது காரணமாகச் சில வருஷங்களில் இருபத்தைந்து ஏகாதசிகள் வந்துவிடும். பாத்ம புராணத்தில் உத்தர காண்டத்தில் இந்த இருபத்தைந்துக்கும் தனித்தனிப் பெயர் சொல்லி, அதை அநுஷ்டிக்க வேண்டிய முறை, அதனால் பயனடைந்தவர்களின் கதை, ஆகியவற்றை விவரமாகச் சொல்லியிருக்கிறது.

தநுர்மாஸ (மார்கழி மாத) க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியன்று ஆரம்பித்திருக்கிறது. இதற்கு 'உத்பத்தி ஏகாதசி'என்று பெயர். அடுத்ததுதான் அந்த மாஸ சுக்லபக்ஷத்தில் வரும் பிரஸித்தமான வைகுண்ட ஏகாதசி. 'மோக் ஏகாதசி'என்று இதற்குப் பாத்ம புராணத்தில் பேர் கொடுத்திருக்கிறது. அம்ருதம் கடைந்தெடுத்தது அன்றுதான். க்ருஷ்ண பரமாத்மா கீதோபதேசம் என்று உபநிஷத்துக்களைக் கடைந்தெடுத்து ஞானாம்ருதமாகக் கொடுத்ததும் அன்றுதான் என்பதாலேயே அன்றைக்கு 'கீதா ஜயந்தி'என்று கொண்டாடுகிறார்கள். மூன்றாவது ஏகாதசி தை க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'ஸபலா'. நாலாவது அம் மாஸ சுக்ல பக்ஷத்தில் வருகிற 'புத்ரதா'. ஐந்தாவது மாசி க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'ஷட்திலா'. ஆறாவது அம்மாஸம் சுக்லபக்ஷத்தில் வரும் 'ஜயா'. இப்படியே வரிசையாக பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாஸங்களில் 'விஜயா', 'ஆமலகீ', 'பாப மோசனிகா', 'காமதா', 'வரூதினீ', 'மோஹினி', 'அபரா', 'நிர்ஜலா'என்று எட்டு ஏகாதசிகள் வருகின்றன. பீமன் வருஷத்தில் ஒரே ஒரு தரம் சுத்தோபவாஸமிருந்தது 'நிர்ஜலா'என்ற இந்த ஆனி மாஸ சுக்லபக் ஏகாதசியன்றுதான். இதோடு பதினாலு ஏகாதசிகள் ஆகிவிட்டன. பதினைந்தாவதாக ஆடி க்ருஷ்ண பக்ஷத்தில், 'யோகினி'என்பது. அடுத்தது ஆடி சுக்ல பக்ஷத்தில் மஹாவிஷ்ணு சயனிக்க ஆரம்பிக்கிற சாதுர்மாஸ்ய ஆரம்பத்தில் வருகிற ஏகாதசி*. அதற்கு 'சாயினி'என்று பெயர். அப்புறம் ஆவணி, புரட்டாசி. ஐப்பசி மாஸங்களில் வரும் 'சாமிகா' 'புத்ரதா'(முன்னையே தையில் ஒரு 'புத்ரதா'வந்து விட்டது. இங்கே மறுபடியும் அதே பெயர்தான் போட்டிருக்கிறது), 'அஜா', 'பத்மநாபா', 'இந்திரா', 'பாபாங்குசா'என்ற ஆறு ஏகாதசிகளின் போதும், கார்த்திகையில் க்ருஷ்ண பக்ஷத்திலே வரும் 'ரமா'என்ற ஏகாதசியின் போதும் பகவான் நித்திரை பண்ணிக் கொண்டேயிருக்கிறார். இருபத்து நாலாவதாக வருகிற கார்த்திகை சுக்லபக் ஏகாதசியன்று அவர் விழித்துக் கொள்கிறார். அதனால் அதற்தகு 'ப்ரபோதினி'என்றே பெயர் மறுநாளோடு சாதுர்மாஸ்யம் பூர்த்தி.

அதிகப்படியாக வரும் இருபத்தைந்தாவது ஏகாதசிக்கு 'கமலா'என்று பெயர்.

இப்படி நம் மதத்தில் சிறப்பித்துச் சொல்லியிருக்கும் ஏகாதசியில் எல்லாரும் வ்ரதாநுஷ்டானம் பண்ண வேண்டும். சாப்பிடாமல் இருப்பது வெறும் 'அநாசக'மாக இல்லாமல், பகவானோடு சேர்ந்து வாழும் 'உப-வாஸ'மாக ஆகவேண்டும். இதற்கு ஏகாதசியன்று நம்மால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு பகவன் நாமத்தை ஜபமாகவோ, பஜனையாகவோ உச்சரிக்க வேண்டும்;எவ்வளவு அதிக நாழிகை பகவத் த்யானம் செய்ய முடியுமோ அவ்வளவு செய்யவேண்டும்;அன்றைக்கு ஸத்கதா ச்ரவணமோ, பாராயணமோ, இரண்டுமோ அவசியம் செய்யவேண்டும். பகவான் அல்லது பாகவதோத்தமர்களின் புண்ய சரித்ராம்ருதம் அன்று காது வழியாகக் கொஞ்சமாவது உள்ளே இறங்க வேண்டும். இப்படிச் செய்து நல்லாரோக்யத்திலிருந்து பக்தி, ஞான, வைராக்யங்கள் வரையில் எல்லா நன்மைகளையும் அடைய வேண்டும்.

---

*ÜîŸ° ñÁï£÷£ù ˆõ£Cò¡«ø ê£¶˜ñ£vò Móî˜ ªî£ì‚èè‹.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்)**

**மௌனம் ***

## வாய் வேலை குறைய

**வெ** ளியிலே உள்ள விஷயங்களை நமக்குத் தெரிவிப்பவை ஞானேந்திரியங்கள். வெளியிலே உள்ள வஸ்துவைக் கண் பார்க்கிறது;சப்தத்தைக் காது கேட்கிறது;வாஸனையை மூக்கு மோந்து பார்க்கிறது;அனேக வஸ்துக்களை த்வக் (சர்மம்) ஸ்பர்சித்து அது கெட்டியா, கொள கொளவா, சொர சொரப்பா, வழவழப்பா என்றெல்லாம் தெரிவிக்கிறது;ருசியை வாய் (நாக்கு) அறிவிக்கிறது. இப்படி ஐந்து. இவ்வாறு வெளியில் உள்ள வஸ்துக்களின் ஒவ்வொரு தன்மையை அறிவிப்பதாக இல்லாமல், புதுக் காரியமாகத் தானே செய்கிற ஐந்து இந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் என்று இருக்கின்றன. கை அநேக கார்யத்தைப் பண்ணுகிறது. கால் நடக்கிறது. பாயுவும், உபஸ்தமும் மலம், சிறுநீர் ஆகியவற்றை விஸர்ஜனம் பண்ணுகின்றன. வாய் பேசுகிறது.

இதிலே என்ன பார்க்கிறோம்?வாய் ஒன்றுதான் கர்மேந்திரியமாகவும் இருக்கிறது, ஞானேந்திரியமாகவும் இருக்கிறது. ருசி பார்த்துப் பதார்த்தங்களின் சுவையை அறிவிக்கிற காரியம், பேசிப் பாடிச் சிரிக்கிற காரியம் இப்படி இரண்டு வேலைகள் இந்த இந்திரியம் ஒன்றுக்குத்தான் இருக்கிறது. ஞானேந்திரியமாக இருக்கிறபோதேகூட அதற்கு மற்ற ஞானேந்திரியங்களைவிட வேலை ஜாஸ்தி. பார்ப்பது, கேட்பது முதலான கார்யங்களுக்குக் கண், காது முதாலன இந்திரியங்கள் ரொம்ப ஸ்ட்ரைன் பண்ணிக்கொண்டு வேலை செய்வதில்லை. வாய் ருசி பார்ப்பது மட்டும் அதோடு நிறுன்விடாமல், பார்த்த வஸ்துவைக் கடித்து மென்று உமிழ் நீரைச் சுரந்து முழுங்குகிற வேலையையும் செய்கிறது. (ருசி பார்க்கிற ஜிஹ்வாவை (நாக்கை) மட்டும் எடுத்துக் கொள்ளாமல், அதோடு பல், உதடப எல்லாம் சேர்ந்த வாயையே ஞானேந்திரியமாகச் சொல்லிக் கொண்டு போகிறேன்.)

ஆக, மற்ற எந்த அவயத்தையும்விட வாய்க்குத் தான் வேலை ஜாஸ்தி. ருசி பார்ப்பது, அதாவது சாப்பிடுவது, பேசுவது என்று அதற்கு இரண்டு காரியம் இருப்பதாலேயே, இரண்டையும் பாதியாகக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் பரமேஸ்வரன் அபிப்ராயமாக இருக்க வேண்டும். 'வயிற்றைக் கட்டி, வாயைக்கட்டி'என்கிறபோது சாப்பாடு, பேச்சு இரண்டையும் கட்டுப்படுத்துவதுதான் தாத்பர்யம். ஆனால் நேர்மாறாகப் பண்ணுகிறோம். இரண்டு வேலையும் தேவைக்கு அதிகமாகக் கொடுக்கிறோம். வாய்தான் ரொம்ப over-worked! அமித போஜனமாக ஓயாமல் ஏதாவது சாப்பாடு, நொறுக்குத் தீனி, பானம் என்று உள்ளே தள்ளிக் கொண்டேயிருக்கிறோம். எப்போது பார்த்தாலும் வெட்டியாக ஏதாவது பேசிக்கொண்டேயிருக்கிறோம்.

இந்த இரண்டையும் ரொமபக் குறைத்துக் கொள்ள வேண்டும். 'கண்டதைத் தின்று கெடுதலை வரவழைத்துக் கொள்ளாதே;ஸாத்விக ஆஹாரம் மட்டும் மிதமாகச் சாப்பிடு;அதுவுங்கூட இல்லாமல் அவ்வப்போது உபவாஸமிரு'என்கிறது சாஸ்திரம். இதேபோல, 'வாயில் வந்ததைப் பேசிக்கொண்டே போகாதே;அதனால் பிறத்தியானையும் கெடுக்காதே, பகவத் விஷயமாகப் பேசு, பாடு, பஜனை பண்ணு'என்று சொல்லிவிட்டு, உபவாஸத்தில் ஸாத்விகாஹாரம் கூடப் பண்ணப்படாது என்று வைத்திருக்கிற மாதிரியே, 'பகவத் பரமான பேச்சும் கீர்த்தனமுங்கூட இல்லாமல் அவ்வப்போது வாயை மூடிக் கொண்டு மௌனமாக இரு'என்று பெரியோர்கள் உபதேசித்திருக்கிறார்கள்.

இப்போது எங்கே பார்த்தாலும் பேச்சுத்தான். 'பேச்சாளார்கள்'என்றே பலர்.

ஒலிபெருக்கி வைத்து மீட்டிங்குகள். கல்யாணம், கார்த்திகை, வேறே விழாக்கள் என்று எங்கே பார்த்தாலும் 'லௌட் ஸ்பீக்கர்'வைத்து சத்தம். இந்த அவஸ்தையைப் பார்க்கிறபோது, மௌனம் அதை அநுஷ்டிக்கிறவனுக்குச் செய்கிற நல்லது ஒரு பக்கம் இருக்கட்டும், இது ஸமூஹத்துக்கே செய்கிற தொண்டு என்று தோன்றுகிறது.

இத்தனை வாதப் பிரதிவாதச் சண்டையும் பேச்சால் தானே?மௌனம் அநுஷ்டித்தால் அன்றைக்காவது சண்டை சச்சரவு இராது. " **மௌனம் கலஹம் நாஸ்தி** "இதுவும் ஒரு ஸமூஹ ஸேவைதான்.

சண்டை வராது என்பதாக ஒரு கெடுதலை இல்லாமல் பண்ணுவது மட்டுமில்லை;நல்லதுகளையும் உண்டாக்கிக் கொடுக்கிற சக்தி மௌனத்துக்கு உண்டு. ஸகல புருஷார்த்தங்களையும் பெற்றுத்தர அது உபாயம் என்பதால்தான் " **மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்** "என்று சொல்வது.

மனஸைக் கட்டுப்படுத்துவதற்கு வழியாக ஒவ்வோர் இந்த்ரியத்தையும் கட்டுப்படுத்தி வைக்கப் பழக வேண்டும். வாயைக் கட்டவேண்டும். அதாவது சாப்பாட்டிலும் கட்ட வேண்டும்;பேச்சிலும் கட்ட வேண்டும். ஏதாவது சொல்லி, நம்மை 'எக்ஸ்ப்ரெஸ்'பண்ணிக்கொண்டேயிருக்கவேண்டுமென்று இருக்கும் அரிப்பைக் கட்டுப்படுத்துகிற நெறிதான் மௌனம். இதை ஸாதித்தால் மனஸை அடக்குகிறதும் கொஞ்சங் கொஞ்சமாக ஸுலபமாகிவிடும்.

-----------------------------------------------------------------------------------------------------------------------------------

* இவ்விஷயமாக "தெய்வத்தின் குரல்" :முதற்பகுதியில் "கணக்காயிருக்கணும்"என்ற உரையும் பார்க்க.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**முனிவன் இயல்பு மௌனம்**

**ம** னஸை அடக்கினவன்தான் முனி. 'முனிவனின் குணம் எதுவோ அதுதான் மௌனம்'என்பதே அந்த வார்த்தைக்கு அர்த்தம். முனிவனின் குணத்தில் பேசாமலிருப்பதுதான் தலை சிறந்தது என்று பொதுக் கருத்து இருந்திருப்பதால்தான் 'மௌனம்'என்றால் 'பேசாமலிருக்கிறது'என்று ஆகிவிட்டிருக்கிறது. மனஸை அடக்கினவனின் தன்மை என்றாலும், அதுவே நம் மாதிரி மனஸ் அடங்காதவர்கள் அந்த நிலையை அடைவதற்க்கு உதவுவதாகவுமிருக்கிறது.

பிரம்மஞானியான முனிவன் மௌனம், மௌனமாயில்லாமலிருப்பது என்ற இரண்டையும் விட்டு விடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது*. முதலில் படித்துப் பண்டிதனாகி, ரொம்பவும் வாதங்கள் சர்ச்சைகள் பண்ணி ஸத்ய தத்வத்தைத் தெரிந்து கொள்கிறான். அப்புறம் பாண்டித்யம், பேச்சு எல்லாவற்றையும் விட்டு விட்டு ஒரே நிஷ்டையில் போய்விடுகிறான். அப்புறம் பிரம்ம ஞானியாகிறபோது மௌனத்தையும் விட்டு விடுகிறான், மௌனமில்லாமையையும் விட்டுவிடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. இப்படிச் சொன்னால் அது எப்படி ஸாத்யம்?ஒன்று பேச்சை விட்டு மௌனமாக வேண்டும்;அல்லது மௌனத்தை விட்டுப் பேச வேண்டும். இரண்டையுமே விடுவது என்றால் எப்படி முடியும்?அந்த ஞானியின் நிலைக்குப் போனால்தான் இது புரியும். அவனுக்குப் பேச வேண்டும் என்றோ, பேச வேண்டாமென்றோ எந்த சொந்த அபிப்ராயமும் ஆசையும் இருக்காது. லோகாநுக்ரஹத்துக்காக அவன் மூலம் உபதேசமாகப் பேச்சு வந்தாலும் அவன் தான் பேசுவதாக நினைக்க மாட்டான். அதைவிடப் பெரிய மௌன உபதேசத்தில் தக்ஷிணாமூர்த்தி மாதிரி அவனைப் பராசக்தி உட்கார்த்தி வைத்திருந்தாலும் 'நாம் மௌன வ்ரதம் என்று ஒன்று அநுஷ்டிக்கிறோம்'என்று அவன் நினைக்க மாட்டான். இதைத்தான் மௌனம், அமௌனம் இரண்டையும் விட்ட நிலை என்பது.

அது நமக்கு ரொம்ப தூரத்தில் இருக்கிற லக்ஷ்யம்.

நடைமுறையில் நாம் கொஞ்சம் மௌன உபவாஸத்தை அநுஷ்டிக்க ஆரம்பிக்க வேண்டும்.

---

## மௌனத்துக்குரிய நாட்கள்

**வ** யிற்று உபவாஸம் மாதிரியே இதற்கும் தர்ம சாஸ்திரத்தில் அநேக காலங்களை விதித்திருக்கிறது. " **மௌநேந போக்தவ்யம்** "என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். சாப்பிடுகிற காலங்களில் பேசப்படாது என்று அர்த்தம். வாய்க்கு உள்ள இரண்டு வேலைகளில் ஒன்றாகச் சாப்பிடும் போது, இன்னொரு வேலையான பேச்சையும் தரப்படாது. இப்படி விதித்தபோதே ருசியையும் கட்டுப்படுத்தியதாக ஆகிறது. மௌனமாக போஜனம் செய்யும் போது, 'இது வேண்டும், அது வேண்டாம். இதற்கு உப்புப் போடு, அதற்கு நெய் விடு'என்றெல்லாம் சொல்ல முடியாதல்லவா?

ஸோம வாரம், குருவாரம், ஏகாதசி முதலிய நாட்களில் ஒன்றில் மௌனம் அநுஷ்டிக்கலாம்.

ஸோமவாரம், குருவாரம் ஆஃபீஸ் இருப்பதால் ஞாயிற்றுகிழமைகளில் மௌனமிருக்கலாம். பாதி நாளாவது இருக்கலாம்.

எத்தனையோ கார்யங்களை வைத்துக் கொண்டிருந்தார் காந்தி. ஒரு வீட்டிலே அப்பா என்றாலே எவ்வளவோ கார்யம் இருக்கும். அவரை தேசபிதா, Father of the Nation என்கிறார்கள். அப்படியிருந்தும் வாரத்தில் ஒருநாள் மௌனம் வைத்துக் கொண்டிருந்தார். 'மௌனமாயிருக்கக் கட்டுப்படி ஆகாது'என்று எவரும் சொல்ல முடியாதபடி அவர் ஒரு எக்ஸாம்பிள்.

மௌனமும், பட்டினியும் சேர்ந்தால், அதாவது வாய்க்கு இரண்டு காரியமுமே இல்லாமலிருந்தால் அன்று மனஸ் பாரமார்த்திகத்திலே நன்றாக ஈடுபடுவதை அநுபவத்தில் தெரிந்துகொள்ளலாம். அதனால் அவரவர் இஷ்ட தெய்வத்துக்காக சிவராத்ரியோ, ஷஷ்டியோ, ஏகாதசியோ பட்டினி கிடக்கிறபோது மௌனமாகவும் இருக்கலாம். அம்பாளை உபாஸிக்கிறவர்கள் நவராத்ரி பூராவும் மௌனமிருப்பார்கள்.

நாம் பலவிதமான பேச்சுகளைப் பேசி கெட்ட விஷயங்களை விஸ்தாரம் பண்ணியும், பல பேரைத் திட்டியும் வாக்தேவியான ஸரஸ்வதிக்கு அபசாரம் பண்ணுகிறோம். இதற்குப் பிராயசித்தமாக ஸரஸ்வதியின் நக்த்ரமான மூலத்தில் மௌனம் இருப்பதுண்டு*.

தினமுமே அரைமணியாவது மௌனமாக த்யானம் பண்ண வேண்டும்.

---

ஸ்ரீசரணர்களே இவ்வாறு மூல நக்ஷத்ரம் தோறும் மௌனம் அநுஷ்டிப்பவர்கள்தாம்.

---



## கண் விழிப்பது

**வ** யிற்றுக்காக வாயைத் திறக்காத உபவாஸ நாட்களில் பேச்சுக்காகவும் வாயைத் திறக்கப்படாது என்பதோடு இன்னொரு நியமத்தையும் சேர்த்துக் கொள்வதுண்டு. வாயைத் திறக்கக்கூடாத அந்த நாளில் கண்ணை மட்டும் மூடக்கூடாது என்று நியமம்!இராப்பூராவும் கண் விழித்துக்கொண்டு, பகவத் சிந்தனை, கதை, கீர்த்தனை, பாராயணம் இதுகளிலேயே செலவழிக்க வேண்டும். வாயை மூடுவதாலேயே இப்படிக் கண்ணை மூடாமலிருக்கிற தெம்பு மன ஈடுபாடு இரண்டும் உண்டாகும். ('கண்ணை மூடக்கூடாது'என்பது 'தூங்கக் கூடாது'என்ற அர்த்தத்தில். நாள் முழுதும் கண்ணைத் திறந்துகொண்டே இருக்கணும் என்ற அர்த்தத்தில் இல்லை), சிவராத்திரிக்கும் வைகுண்ட ஏகாதசிக்கும் ராக்கண் விழிப்பதை முக்யமாக வைத்துக் கொண்டிருக்கிறோம். விடிய விடிய ஸினிமா பார்த்து புண்யத்துக்கு

('புண்யத்தை'இல்லை) மூட்டை கட்டுவதாக வழக்கம் ஏற்பட்டிருக்கிறது!பிரதி ஏகாதசிக்குமே இந்த நியமம் சொல்வதுண்டு. ஏகாதசியில் செய்யவேண்டியது "போஜன த்வயம்"இல்லை, "போஜன த்ரயம்";அதாவது உபவாஸம், பஜனை என்ற இரண்டோடு 'ஜாகரணம்'என்று மூன்றாவதாக ராக்கண் முழிப்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதுண்டு.

கீதையில் 'பட்டினி கிடக்கிறவனுக்கு யோகம் வராது'. தூங்காமலே இருக்கிறவனுக்கு யோகம் வராது ( **நாத்யச்னதஸ்து யோகோஸ்தி ... ஜாக்ரதோ நைவ சார்ஜுந** ) என்று இருந்தாலும் அந்த ஜெனரல் ரூலுக்கு அநுகூலம் பண்ணுவதற்காகவே அதற்கு மாறாக ஒவ்வொரு புண்ய தினங்களில் பட்டினி கிடந்து கொண்டு, கண்ணைக் கொட்டாமல் விழித்துக்கொண்டு ஈச்வர ஸ்மரணம் பண்ண வேண்டும் என்று சாஸ்திரம் வைத்திருக்கிறது. கிருஷ்ண பரமாத்மாவும் சாஸ்திரந்தான் ப்ரமாணம் ( **தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே** ) என்றவர்தான்.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் **)**

## தொடக்க நிலையும் முடிவு நிலையும்

**மௌ** னம் என்றால் எந்த விதத்திலும் அபிப்ராயம் தெரிவிக்காமலிருக்க வேண்டும். வாயை மட்டும் மூடிக் கொண்டு ஏதாவது ஜாடை காட்டித் தெரிவித்துக் கொண்டிருந்தால் பிரயோஜனமில்லை. அவசியமானதற்கு மட்டும் எழுதி வேண்டுமானால் காட்டலாம். 'காஷ்ட மௌனம்'என்று மரக்கட்டை மாதிரி இருப்பதாக ஸங்கல்பித்துக் கொண்ட ஸமங்களில் ஜாடை காட்டுவது, எழுதிக் காட்டுவது எதுவுமே நிச்சயமாகக் கூடாது.

ஆரம்பத்தில் எல்லாக் காரியத்தையும், எண்ண ஓட்டத்தையும் விட்டு மௌனமாயிருப்பதென்றால் முடியாதுதான். அந்த நிலையில் சைகை, எழுதிக் காட்டுவது இவற்றோடாவது மௌனம் இருக்க ஆரம்பித்துவிட வேண்டியதுதான். என்ன ஜாடை காட்டினாலும், எழுதினாலும் பேசுகிற அளவுக்கு வளவளப்பும் வ்ருதாவும் இருக்காதல்லவா?ஸதா அரித்துக் கொண்டிருக்கிற நாக்கை எப்படியும் அன்றைக்குக் கட்டிப் போடுகிறோமல்லவா?அந்த மட்டுக்கும் நல்லதுதான். இப்படி ஆரம்பித்து, அப்புறம் கொஞ்சங் கொஞ்சமாகச் சித்த ஆட்டங்களை விட்டு விட்டு, மௌனம் என்றால் மனஸுக்குப் பரம சாந்தி என்று ஆக்கிக் கொண்டு, அப்படியே அலையில்லாத ஸமுத்ரம் மாதிரி ஆகிவிட வேண்டும். குறைபாட்டுடனாவது ஏதோ ஒரு இடத்தில் ஆரம்பித்து விட வேண்டும். அப்யாஸத்தினால் குறைகள் குறைத்து கொண்டேபோய் பூர்ண நிலை வரும்;நிஜ மௌனம் ஸித்திக்கும்.

இப்போது ஆரம்பிக்கிற மௌனம் ஈச்வர ஆராதனைக்கு ஒரு ஸாதனம். பிற்பாடு பூர்த்திஸ்தானத்தில் அந்த மௌனமே, 'ஈச்வரன் வேறேயாக இல்லை. அவனுக்குத் தனியாக ஆராதனை என்று பண்ணவேண்டியதில்லை'என்ற ஸாத்ய லக்ஷ்யமாக நிஜ ரூபத்தில் பிரகாசிக்கும். வாய் பேசவில்லை என்பது மட்டுமின்றி, கண் பார்க்கவில்லை, காது கேட்கவில்லை, எல்லாவற்றுக்கும் மேலே மனஸில் ஒரு எண்ணங்கூட எழும்பவில்லை என்று ஆகிவிடுவதுதான் அந்த லக்ஷ்ய ஸ்திதியான நிஜ மௌனம்.

நாம் அசந்து தூங்கிக் கொண்டிருக்கும்போதுகூட ஒரு எறும்பு மேலே ஊறினால் அதை அப்படியே தேய்த்து விடுகிறோம்;கொஞ்சம் குளிர்காற்று அடித்தால் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்கிறோம்;பக்கம் மாறிப் படுக்கிறோம். காலமே (காலையில்) எழுந்திருக்கிற போது நமக்கே இது எதுவும் ஞாபகமிருப்பதில்லை. அதாவது இந்த விஷயங்கள் பூர்ணமாக நம் ப்ரக்ஞைக்கு எட்டாமலே இப்படியெல்லாம் பண்ணியிருப்போம். ஆனாலும் அந்தத் தூக்க நிலையில்கூட சரீராபிமானம் போகாததால்தான் சரீர ரக்ஷணைக்காக இந்தக் கார்யங்களைப் பண்ணியிருக்கிறோம். எந்தக் கார்யமானாலும் அதை மூளையின் டைரக்ஷனின் கீழே நரம்பு மண்டலம்தான் பண்ணுகிறது. அது உள்ளே இத்தனை சரீராபிமானம் ஊறியதாக இருக்கிறது. நம் இச்சையின் பேரில்

'வாலன்டரி'யாக இல்லாமல், தன்பாட்டுக்கு நரம்புகள் அநேக கார்யங்களைப் பண்ணுகின்றன. கழுத்து, இடுப்புப் பக்கங்களில் ஏதாவது நிமிண்டுகிற மாதிரிப்பட்டால் 'குறு குறு'என்று பண்ணிச் சிரிப்பாக வருகிறது. பயமாயிருந்தால் 'அல்ப ஸங்க்யை'வருகிறது;பெரிய கஷ்டம் வந்தாலோ வயிற்றையே கலக்குகிறது. ஒருத்தன் கொட்டாவி விட்டால் மற்ற பேரும் கொட்டாவி விடுகிறோம். இதெல்லாம் நரம்புகளின் 'இன்வாலன்டரி'க் கார்யங்கள்.

நிஜ மௌனத்தில் எப்படியிருக்கும்?உடம்பின் மேல் மலைப் பாம்பே போனாலும் தெரியாது. ஒரு reflex-ம் இருக்காது. குளிரோ, வெயிலோ எதுவானாலும் தெரியாமல் அடித்த சிலையாக நிஷ்டையில் இருப்பான். தேஹாத்ம புத்தி அடியோடு போய்விட்டதால், தேஹரக்ஷணை பண்ணிக்கொள்ள வேண்டுமென்று உள்ளூர இருக்கும் அபிமானம் இன்வாலன்ட்ரியாகக்கூட இல்லாமற்போய், அவனுடைய நரம்பு சலிக்கவே சலிக்காது. அவன்தான் எல்லாப் புலன்களையும் அடக்கி வெற்றி கண்ட 'ஜிதேந்திரியன்'.

நிஜ மௌனத்துக்கு நம்மைப் பழக்கிக் கொண்டோமானால், அப்படிச் செய்யும்போது நம்முடைய மநுஷ்ய வேகங்கள், பாவங்கள் எல்லாம் போய்விடும். உள்ளுக்குள்ளே இருக்கிற பொறி, பரமாத்ம ஜ்யோதிஸ்ஸின் பொறி, இப்போது நம்முடைய இந்திரிய ஜீவனத்திலே சாம்பலில் மூடிப்போனதுபோல் மங்கி இருக்கிற பொறி, மௌன ஸாதனையில் கண கண வென்று ஜ்வலிக்க ஆரம்பிக்கும். எந்தப் பரமாத்ம ஜ்யோதிஸ்ஸிலிருந்து இந்தப் பொறி வந்ததோ அதை நோக்கிப் போய் அதிலே கலந்து அதுவாகவே ஆகிவிடுவதற்காக அது மேலே மேலே ப்ராகசித்துக்கொண்டு போகும். இப்படி நடக்க நடக்க இப்போது நம்மிடம் பற்றியெரிகிற இந்திரிய வேகங்கள் தணிந்து மங்கி அணைந்து கொண்டே வரும். கடைசியில் ஏக ஜ்யோதிஸ்ஸாக, 'நிவாத தீபம்'என்கிறபடி, காற்றடிக்காத இடத்தில் உள்ள தீபமாக ஆத்மா மட்டுமே ப்ரகாசிக்கும். ஜீவாத்மா, பரமாத்மா என்ற பேதமில்லாத ஏக ஜ்யோதிஸ். அதுதான் மௌனத்தின் பூர்த்தி ஸ்தானம்.

ஜலத்தை கலக்குக் கலக்கு என்று கலக்கிக் கொண்டிருந்தால் அதற்குள்ளே இருக்கிற ஒரு முத்து எப்படித் தெரியும்?நாம் அநேக எண்ணங்களால் மனஸைக் கலக்கிக் கொண்டிருப்பதால்தான் உள்ளேயிருக்கும் ஆத்மா என்ற முத்து தெரியவில்லை. எண்ண அலைகளையெல்லாம் நிறுத்திவிடுவதுதான் நிஜ மௌனம். அதற்கு உபாயமாயிருப்பது இப்போது நாம் அநுஷ்டிக்க வேண்டிய வாய் மௌனம். யோக ஸாம்ராஜ்யத்துக்குள்ளே பிரவேசிப்பதற்கு முதல் வாசலே மௌனம்தான் என்று ஆசார்யாள் ''விவேக சூடாமணி''யில் சொல்லியிருக்கிறார்: **யோகஸ்ய ப்ரதமம் த்வாரம் வாங்நிரோத :** (ச்லோ.367).

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**சிந்தனையை நிறுத்துவது**

**வா** ய் மௌனத்தோடு, தினமும் கொஞ்ச நேரமாவது எதையும் நினைக்காமல், சிந்தனை தாரையை அடக்கி வைக்க வேண்டும். என்று சாஸ்திரம் சொல்கிறது '' **துர்ஷ்ணீம் கிஞ்சித் அசிந்தயேத்** ''. ஸாதிப்பது கஷ்டந்தான். இதற்கென்றே உட்கார்ந்தாலும், ''எப்படி ஒன்றையும் நினைக்காமலிருப்பது?'ஒன்றையும் நினைக்காமலிருக்க வேண்டும்'என்ற நினைவுதானே இப்போதும் வந்து கொண்டிருக்கிறது?''என்று தோன்றும். மனஸ் எதையும் நினைக்காமலிருக்க வேண்டுமென்று பிரயாஸைப்படுவதும் மனஸின் ஒரு காரியம்தான். ' **சிந்தையை அடக்கியே சும்மா இருக்கும் திறம் அரிது** 'என்று சொன்னது இதனால்தான். ஆனாலும் இப்படிப் பண்ண வேண்டும் என்ற பூர்ண ஈடுபாட்டோடு விடாமுயற்சியுடன் இதற்காக உட்கார்வது என்று ஆரம்பித்தால், ஈச்வர க்ருபையில் அந்த லக்ஷ்யம் கொஞ்சங் கொஞ்சமாகக் கைகூட ஆரம்பிக்கும். நாம் பண்ணக்கூடியது யத்தனம்தான். பலன்

ஈச்வரன்தான் தரவேண்டும். அதனால் 'சும்மா'என்று தாயுமானவர் சொன்னபடி ஒரு சிந்தையும் இல்லாமல் உட்கார வேண்டும் என்ற தாபத்தோடு முயற்சியைத் தொடர்ந்து கொண்டே போனால், என்றைக்கோ ஒருநாள் அவன் ஸித்தியை அநுக்ரஹிப்பான்.

ஒன்றையும் நினைக்காமலிருக்க வேண்டும் என்பதற்காக ஸாதனை பண்ணும்போது ஒரு ஸ்டேஜில் சிலபேருக்கு மனஸ் சிறிது நேரம் காலியாகப் போய்விடுவதுண்டு. அதாவது அதில் எண்ணம் எழும்பாதுதான். ஆனாலும் அது ஆத்மாநுபவமாக இல்லாமல், வெறும் சூன்யமாக இருக்கும். மனஸின் ஓட்டம் நின்று விட்டாலும் ஆத்ம ஜ்யோதிஸ்ஸின் ப்ரகாசம் தெரியாத நிலையாயிருக்கும். இது ஞானம் இல்லாத நிலை. ஆத்மாநுபவம் என்பதோ பூர்ண ஞான நிலை. ஆத்ம 'ஜ்யோதிஸ்'என்றேனே, அப்படியானால் அது அக்கினி மாதிரி ஒரு ரூபத்தில் இருக்கும் என்றா அர்த்தம்?இல்லை. ஞானத்தைத்தான் இங்கே 'ஜ்யோதிஸ்'என்பது. அறிவொளி என்பது இதுதான். இங்கிலீஷிலும் ஞானம் வருவதை enlightenment, illumination என்றே சொல்கிறார்கள். இந்த அறிவு இன்னொன்றை ஆராய்ச்சி பண்ணித் தெரிந்து கொள்ளும் அறிவில்லை. இது இன்னொன்றாக எதுவுமே இல்லாத தன்னைத் தானே தெரிந்து கொள்வதுதான். இப்படிப்பட்ட ஞானாநுபவம் இல்லாமலே, நல்ல தூக்கத்தில் ஒரு தினுஸு மாதிரி, ஒரு எண்ணமும் இல்லாமல் புத்தி வெறிச்சாகிவிடுகிற நிலை கொஞ்சம் நாழி ஏற்படலாம். அதற்காக பயப்படக் கூடாது. இது தாற்காலிகமாயிருப்பதுதான். ஆத்மாவோ, ஈச்வரனோ, அந்த எதுவோ ஒன்று தெரிய வேண்டும். என்ற தாபத்தை விடாமல், பிரார்த்தனை பண்ணிக்கொண்டு, தொடர்ந்து இந்தப் பிரயாஸையில் உட்கார்ந்து வந்தால் இந்த சூன்ய நிலையிலிருந்தே ஈஸ்வர பரமாக, ஆத்ம ஸம்பந்தமாக மாத்திரம் நினைக்கிற நிலைக்குப் போய் விடுவோம். From no-thought to God-thought. நினைப்பு இருக்கும்;ஆனால் இப்போதுள்ளதுபோல் இந்திரியப் பிடுங்கல் உள்ள நினைப்பாக இல்லாமல் துன்பக் கலப்பே இல்லாத பேரின்பமான ஈச்வர நினைப்பாக இருக்கும். அதற்கப்புறம் அந்த ஈச்வரனும் வேறேயாயில்லாத பரம ஞான நிலையில் எல்லா நினைப்புகளும், அவற்றுக்கு மூலமான மனஸும் கரைந்துபோய், நிறைந்த நிறைவான மௌனம் ஸித்திக்கும்.

பரப்பிரம்மத்தை மனஸாலும் வாக்காலும் பிடிக்க முடியாது. மனஸும் வாக்கும் அற்றுப்போன மௌனம் தான் அதை விளக்குவது!

**மௌந வ்யாக்யா ப்ரகடித பரப்ரஹ்ம தத்வம்** *

பாஷா வ்யாக்யானத்தால் நெருங்க முடியாத பிரம்ம தத்துவத்துக்கு மௌனமேதான் பாஷையாகி வியாக்யானம் செய்கிறதாம்!

இப்போது நானா தினுஸான நினைப்பு, இப்படியில்லாமல் ஆக்கிக்கொள்ள மௌன அப்பியாஸம், அதிலே ஒரு நினைப்பும் இல்லாமல் சூன்யமாகப் போகிற நிலை, அப்புறம் ஈச்வரன் ஒருத்தனைப் பற்றியே நினைப்பு, முடிவிலே அவனையும் வெளியேயிருந்து நினைப்பதாக இல்லாமல் அவனாகவே ஆகிவிடுகிற நினைப்பற்ற பூர்ணத்வம்.

முதலிலிருந்தே அந்த சூன்யநிலை அதோடு முடிந்துவிடக் கூடாது என்பதில் கவனமாயிருந்து விட்டால் எல்லாம் ஸரியாகிவிடும். பூர்ண நிலைக்குப் போய்விடலாம். முதலில் உண்டாகும் சூன்யத்தை 'லயம்'என்றும் முடிவில் உண்டாகும் பூர்ணத்தை 'ஸமாதி'என்றும் சொல்வார்கள்.

---

* ஆசார்யாளின் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**ஈஸ்வர சிந்தனை**

இது இரண்டுக்கும் நடுவே ஈச்வரனைக் கொண்டு வந்து விட்டேன். மனஸ் தன் ஆட்டத்தை நிறுத்திக் கொண்டு காலியாகிறபோது இப்படி ஈச்வர ஸ்மரணம் என்பதாகச் செய்வது மறுபடி எண்ணங்களை உண்டாக்கிக் கொள்வதுதானே?'ஒன்றையும் நினைக்க வேண்டாமென்று ஸாதனை செய்ய ஆரம்பித்து, அப்படி நினைக்காமலிருக்கிற நிலை வரும்போது, இது சூனியமாகத்தானிருக்கிறதே தவிர ஸுகாநுபவமாக இல்லை என்பதால், இதை மாற்றி ஈச்வரனை நினைக்க ஆரம்பிப்பதில், மறுபடி தப்பு நினைப்புகளும் வருமாறு மனஸ் இழுத்துக்கொண்டு போய்விட்டால் என்ன பண்ணுவது?பூர்ணத்வம், நித்ய ஸுகாநுபவம் வராவிட்டால் போகட்டும். சூன்யமாகவே இருந்தாலும் இருந்து விட்டுப் போகட்டும். சூன்யமாகவே இருந்தாலும் இருந்து விட்டுப் போகட்டும். இந்த மனஸின் கன்னா பின்னா இழுப்பும், கெட்ட நினைப்புகளும் உண்டாக இடங்கொடுக்காமலிருந்தாலே போதும்'என்று தோன்றலாம்.

ஓரளவுக்கு மைன்ட் ஸ்டெடியாகி, நினைப்பில்லாமலிருக்கிற பக்குவம் பெற்றபின் அப்பியஸிக்க வேண்டிய ஈச்வர ஸ்மரணையைப் பற்றி இப்படிக் கவலைப்படவே வேண்டாம். அந்த ஸ்டேஜுக்கு அப்புறம் மனஸ் கெட்ட எண்ணங்களில் போகவே போகாது. ஒரு ஜீவன் ரொம்பவும் பிரயத்தனப்பட்டு எண்ணங்களை நிறுத்தித் தன்னிடம் மனஸைக் கொடுத்தபின் ஈச்வரன் அவனைக் கெட்டுப் போகும்படி விடமாட்டான். ஈச்வர பக்தியும் பிரேமையுங்கூட மனஸின் காரியந்தான் என்றாலும் இதற்கப்புறம் ஒருநாளும் மனஸ் கெட்டதற்குப் போகாது;தன்னை அடியோடு கரைத்துக் கொள்கிற மௌனத்துக்கே போகும்.

துஷ்டர்களால் நமக்கு வழியில் ஆபத்து உண்டாகிறதென்று போலீஸ்காரனைக் கூப்பிடுகிறோம். அந்தப் போலீஸ்காரன் துஷ்டனை விரட்டிவிட்டு நம்மை ஆபத்திலிருந்து காப்பாற்றியபின் நம்மையும் பயமுறுத்திக் தண்டிப்பானா என்ன?அல்லது தானும் நம்மோடோயே வீட்டுக்குள் வந்து இருந்து விடுவானா?நம்மை ஆபத்திலிருந்து ரக்ஷித்து வீட்டில் சேர்த்தபின் அவன் போய்விடுவான் அல்லவா?இம்மாதிரிதான் கெட்ட எண்ணம் போக ஈச்வரனை எண்ணுகிறோம். இந்த ஸ்மரணையாவது கெட்டதை விரட்டிவிட்டு, நம்மை அறம், பொருள் இன்பம், வீடு என்பதில் 'வீடு'என்கிறார்களே அதில் சேர்த்துவிட்டுத் தானும் போய்விடும். மனஸை வைத்துக்கொண்டு ஆரம்பிக்கும் பக்தி மனஸ் அற்றுப் போகும் ஞானத்தில் கொண்டு விட்டுவிடும்.

ஸஜ்ஜனங்களின் கூட்டுறவும் இப்படித்தான் எல்லா உறவும் அற்றுப்போகிற நிலைக்குக் கொண்டு விட்டு விடும். ஒரு விதமான பற்றும் இல்லாமலிருக்க வேண்டும் என்றால் அது உடனே ஸாத்யமாயில்லை. அதனால் கெட்ட ஸஹவாஸத்தை விட்டு ஸத்ஸங்கம் சேரவேண்டும். இதுவும் உறவுதான். ஆனால் ஒரு பழம் நன்றாகக் கனிந்தபின் தானாக இற்று விழுந்து விடுகிறமாதிரி , இது ஒருநாள் முடிந்துவிடும். இதைவிட உயர்ந்த ஏகாந்த அநுபவத்தில் சேர்த்துவிடும். " **ஸத் ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்** "என்று ஆசார்யாள் ('பஜகோவிந்த'த்தில்) சொல்கிறார்.

இப்படியே God-thoughtலிருந்து no-thought உண்டாகும். ஆனால் இது முதலிலிருந்த சூன்ய no-thought இல்லை;பரிபூர்ண ஸ்திதி; 'தாட்'எழுப்புகிறதற்கு இடமேயில்லாமல் ஞானம் பூர்ணமாக ரொம்பிய நிலை.

'ஸத்ஸங்கம்'என்பதற்கு இன்னொரு அர்த்தம் சொல்லலாம். ஸத்வஸ்து என்பது எக்காலும் மெய்ப் பொருளாயிருக்கும் ஆத்மா ஒன்றுதான். தேஹாத்ம புத்தியை நீக்கி அந்த 'ஸத்'தான நிஜ ஆத்மாவில் சேர்வதுதான் 'ஸத்ஸங்கம்'. ஸத்புருஷர்களின் ஸங்கத்தினால் ஏற்படும் நிஸ்ஸங்கத்வம் கடைசியில் இந்தப் பெரிய 'ஸத்'தின் ஸங்கத்தைத்தான் உண்டாக்கித் தரவேண்டும். அப்போது "நான், நான்"என்று இப்போது நினைத்துக் கொண்டிருப்பது எதுவோ, நம்முடைய இத்தனை உபத்ரவங்களுக்கும் காரணம் எதுவோ, அது ஏக பரமாத்ம ஞானத்தில் அடிபட்டுப் போய், அந்த ஞான வஸ்துவின் பூர்ணானந்த ரூபமாகவே நாம் ஆகிவிடலாம். அது வேறே, நாம் வேறே என்று நினைக்கிறவரை 'நான்', 'எனது'â¡Aø

â‡íƒèœ (Üýƒè£ó-ññè£óƒèœ â¡ð¬õ) Þ¼‰¶ ªè£‡«ìî£¡ Þ¼‚°‹. ºîL™ ú¨õv¶¬õ ß„õó¡ â¡Á «õ«øò£è ¬õˆ«î Üõ¡ ¬èJ™ Þ‰î Üýƒè£ó ññè£ó 'ï£¬ù'Š H®ˆ¶, ªè£´ˆî£™ Þ¶ àð¨óõ‹ ð‡µõ¬î M†´M´‹. ÜŠ¹ø‹ Üõ¡ «õ«øò£è Þ¼‚è «õ‡ì£‹ â¡Á Þ¬î ï£ù£è«õ àò˜ˆF, àí˜ˆF, è£†® M´õ£¡.

அதனால் ஒன்றையும் நினைக்காமல் மௌனமாயிருப்பதென்று முதலில் வாயின் மௌத்துடன் ஈச்வர ஸ்மரணை பண்ணுவதாக ஆரம்பிக்கப்பட வேண்டும். பரமாத்மாவை நம்முடைய இஷ்ட தேவதை எதுவோ அதுவாக பாவித்து இப்படி ஸ்மரிக்க வேண்டும். ஸாக்த் பராசக்தியாகவோ, உமாமஹேச்வரனாகவோ, லக்ஷ்மி நாராயணனாகவோ பாவித்து மௌனமாக த்யானம் பண்ண வேண்டும். அதற்கப்புறம் இந்த நினைப்பும் போவது அந்தப் பராசக்தியின் அநுக்ரஹத்தால் நடக்க வேண்டியபோது நடக்கட்டும். மௌனமாக ஈச்வர ஸ்வரூப த்யானமும், மனஸுக்குள்ளேயே நாம ஜபமும்தான் நாம் செய்ய வேண்டியது.

கண்டதை நினைத்துக் கொண்டிருப்பதிலிருந்து நேரே இப்படி ஈச்வர நினைப்புக்குப் போனாலும் போகலாம். அல்லது எந்த நினைப்பும் வராமலிருக்கும் படியாகக் கொஞ்சம் பழகிக் கொண்டுவிட்டு, அப்புறம் அது வெறும் ஜடஸ்திதியாக நின்று விடாமலிருப்பதற்காக அந்த கட்டத்தில் ஈச்வர பரமாக நினைக்க ஆரம்பிக்கலாம். இந்த கட்டத்தில் அது கொஞ்சம் பலமாகவே ஈச்வரனிடம் ஒட்டிக் கொள்ள ஆரம்பிக்கும்.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**ஸமூஹ நலனுக்கும் உதவுவது**

**இ** த்தனை நாள்*நீங்கள் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றியே சொல்லிக் கொண்டிருந்தேன். என்ன வைதிக கார்யங்கள் செய்ய வேண்டும், தர்மரக்ஷணத்துக்காக என்ன கர்மாநுஷ்டானங்கள் செய்ய வேண்டும், ஸமூஹத்துக்கு என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றியெல்லாமே சொல்லிவந்தேன். இன்றைக்கு ஒரு மாற்றாக ஒன்றையுமே செய்யாமல் மௌனமாக இருக்கச் சொன்னாலென்ன என்று தோன்றிற்று. இதுவும் ஜீவனதர்மம்தான். கார்யங்களால் உண்டாகிற நன்மைகளைவிட இதுதான் பெரிய நன்மை. ஆத்மசாந்தி இதில்தானே கிடைக்கிறது?ஸமூஹத்துக்கும் இது பெரிய உபகாரந்தான். கெட்டதைப் பேசியும், பண்ணியும் ஸமூஹத்தைக் கெடுக்கமலிருக்கிறோமென்பதால் மட்டுமில்லை. இம்மாதிரி இந்திரியத்தைக் கட்டுப்படுத்துவதால் உண்டாகிற ஆத்மசக்திதான் ஸமூஹத்துக்கு மிகப்பெரிய க்ஷேமத்தை உண்டாக்குவது. அதனால், மக்களின் வாழ்க்கை முறையில் மௌனமாக, ஒரு கார்யமுமில்லாமல் அன்றன்றும் கொஞ்ச நாழி - அரைமணியாவது - உட்கார்ந்திருப்பதையும் சேர்த்துக் கொள்ளச் சொல்ல வேண்மென்று தோன்றியது.

---

* அதாவது 1957 அக்டோபரிலிருந்து 1958 ஏப்ரல் வரை சென்னையில் ஆற்றிய உரைகளில்.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**மௌனப் பிரார்த்தனை**

**இ** ன்றைக்கு இதை விஷயமாக எடுத்துக்கொள்ள அரசாங்கத்தாருடைய ஒரு அபிப்ராயம்தான் 'ப்ராவகேஷ'னாக (தூண்டுதலாக) இருந்தது. ஸமீபகாலமாக, பள்ளிக் கூடம் ஆரம்பிக்கும்போது மாணவர்களுக்கு 'ப்ரேயர்'இருக்க வேண்டுமா, வேண்டாமா என்பதில் இரண்டுவித கருத்துக்கள் இருந்து வந்திருக்கின்றன. தலைவர்களில் சில பேர் தெய்வபக்தி உள்ளவர்களாகவும், சில பேர் அப்படியில்லாதவர்களாகவும் இருக்கிறார்கள். அதனால்தான்

அபிப்ராய பேதம். அப்புறம் தெய்வபக்தியில்லாதவர்களும் 'ஸ்கூல் ஆரம்பத்தில் 'ப்ரேயர்'என்பது நீண்டகால வழக்கமாக இருந்து வந்துவிட்டதே;இதை எடுத்துவிட்டால் நான் ரொம்பப் பேரின் அதிருப்திக்குப் பாத்திரமாக வேண்டிவருமே!'என்பதால், ப்ரேயர் இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும், இஷ்டப்பட்ட பசங்கள் பண்ணட்டும், இஷ்டமில்லாதவர்களுக்குக் கட்டாயமாக்க வேண்டாம் என்று சொல்ல ஆரம்பித்தார்கள். ஆனால் இதோடு பிரச்னை தீர்ந்து விடவில்லை. 'ப்ரேயர்'என்றால் எதை வைப்பது?இதுவோ மதச்சார்பில்லாத ஸெக்யூலர் அரசாங்கம். அநேக மதங்களைச் சேர்ந்த பசங்கள் சேர்ந்து படிக்கும்போது எந்த ஒரு மதத்தின் பிரார்த்தனையை மட்டும் வைத்தாலும் தப்பாகிவிடுமே என்று யோசித்தார்கள். முடிவாக இப்போது பசங்கள் எல்லாரும் பாடங்கள் ஆரம்பிப்பதற்கு முன்னால் இரண்டு நிமிஷமோ மூன்று நிமிஷமோ மௌனமாகப் பிரார்த்தனை பண்ணிக்

கொள்ளட்டும் என்று தீர்மானம் பண்ணியிருக்கிறார்கள்.

சின்னக் குழந்தைகளுக்கே இப்படி மௌனத்தை அவர்கள் சொல்வதால், நாமுந்தான்

பெரிய குழந்தைகளுக்கும் மௌனத்தைப் பற்றிச் சொல்லாமே என்று தோன்றிற்று.

அவர்கள் மட்டும்தான் மாணவர்களா என்ன?நீங்கள், நான் எல்லோரும் மாணவர்கள்தான். லோகம் என்கிற இந்த பெரிய ஸ்கூலில் வாழ்நாள் பூராவும் விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டிய வித்யார்த்திகளாகத்தான் நாம் எல்லாருமே இருக்கிறோம்.

இன்றைக்கு நீங்கள் கற்றுக்கொண்டது மௌன வித்யை. ' **மோனம் என்பது ஞான வரம்பு** 'என்று பிரம்ம வித்யையாகவே அதைச் சொல்லியிருக்கிறது. ஜன்மா எடுத்ததற்கு இந்த ஜன்மாவில் நாம் என்னென்ன செய்ய வேண்டுமென்று தெரிந்து கொள்ள வேண்டியது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் ஒன்றுமே செய்யாமல், பேசாமல், நினைக்காமல் இருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்வதுமாகும். மனஸ் போகிறபடியெல்லாம் நினைப்பது, வாயில் வந்தபடியெல்லாம் பேசுவது என்றால், பிற்பாடு ஜன்மாவின் பலனையே அடையவில்லை என்று துக்கப்படும்படியாகும். அதனால்தான் மனஸை அடக்கி மௌனமாயிருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்வதே (அப்படிச் செய்வது அப்புறம் இருக்கட்டும்) உங்களுக்கு ஒரு வித்யா லாபம் என்று நினைத்துச் சொன்னேன்.

---

**தெய்வத்தின்குரல் (மூன்றாம் பாகம்** மௌனம் )

**நான் கற்ற பாடம்**

**மெ** ட்ராஸுக்கு வந்ததில் நானும் ஒரு பாடம் கற்றுக் கொண்டேன். மௌனத்தால் கிடைக்கிற சாந்த ஸௌக்யம் சாச்வதமாக நிலைத்து நிற்பது;அதாவது எத்தனை கஷ்டத்துக்கு நடுவிலும் கஷ்டம் தெரியாமல் ஆனந்தமாக இருக்கும்படிப் பண்ணுவது என்று சொல்கிறார்கள். கஷ்டமே இல்லாமலிருக்க வேண்டுமென்றால் முடியாது. கஷ்டம் இருக்கத்தான் வேண்டும். அப்போதுதான் கர்மா கழியும். ஆனாலும் அது கஷ்டமாகத் தெரியக்கூடாது. ஒரே ஒரு 'அயிட்டத்'திலாவது இதை நான் தெரிந்து கொண்டதற்கு மெட்றாஸ் வாஸம் ஸஹாயம் பண்ணியிருக்கிறது. இங்கே பூஜை பார்க்க வேண்டும் என்பதற்காக நீங்களெல்லாம் பக்தியோடு கும்பலில் தெரிந்து கஷ்டப்பட்டுக்கொண்டு மணிக் கணக்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். பூஜை பார்க்கிறபோது இத்தனை கஷ்டமும் மறந்து உத்ஸாஹம் உண்டாகி பாராயணம், பஜனை என்று ஆனந்தமாக ஆரம்பித்து விடுகிறீர்கள். மற்றவர்களுக்கும் இது நல்லதுதானே என்ற நல்லெண்ணத்தில்தான் இப்படிச் செய்கிறீர்கள். ஆனால் இதனாலேயே ரொம்பவும் சப்தமும், distraction-ம் (கவனச்சிதறலும்) ஏற்பட்டு விடுகிறது என்று சில பேருக்குத் தோன்றவே, "Silence Please!" என்று அட்டைகள் எழுதி மாட்ட ஆரம்பித்தார்கள். நான் அவற்றைக் கழற்றிவிடச் சொன்னேன் ஏன்?'இப்போதுதான் நமக்கு ஒரு பாடம் படித்துப் பாஸ் பண்ண ஸந்தர்ப்பம் வந்திருக்கிறது.

இதை நழுவவிடக் கூடாது'என்று நினைத்துத்தான் கழற்றச் சொன்னேன். ஈஸ்வராநுக்ரஹத்தில், இப்போது எத்தனை சப்தமிருந்தாலும் நான் பாட்டுக்குப் பூஜையைப் பண்ணிக் கொண்டிருக்கப் பழகி விட்டேன்.

அதனால் இன்று மௌனத்தைப் பற்றிப் பேசினது எனக்கு ஸௌகர்யமாகப் பூஜையின்போது நீங்கள் பேசாமலிருக்கும்படிப் பண்ண வேண்டும் என்ற உத்தேசத்திலல்ல. உங்களுக்கே அதன் பிரயோஜனம் ஏற்படவேண்டுமென்றுதான் சொன்னேன். இத்தனை நாள் உங்கள் இஷ்டப்படி பாடி, பேசி, பஜனை செய்தாகிவிட்டபடியால், இப்போது உங்களைப் பூஜையின்போது மௌனமாக மானஸிகமாகப் பிரார்த்தனை பண்ணிக் கொள்ளச் செய்வதில் நியாயமிருக்கிறதென்று தோன்றிற்று. சும்மாயிருக்கும் ஸுகத்தின் லேசமாவது உங்களுக்கெல்லாம் தெரிய வேண்டும் என்ற ஆசையில் சொன்னேன்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)**

**அளவறிந்து செயற்படுக !*** (1)

**மிதத்துக்காகவே மிகைகள்**

" **வி** தவிதமாகப் பண்ணி மூக்கைப் பிடிக்கத் தின்னு"என்று ஒரு சாஸ்திரம்!பூஜா கல்பங்கள் என்று வழிபாட்டு முறைகளைக் கூறும் புஸ்தகங்கள் இப்படிச் சொல்வதாகத்தான் அர்த்தம்!அவற்றில் நைவேத்யம் பண்ணும்போது, "நைவேத்யம் ஷட்ரஸோபேதம்"என்று போட்டிருக்கும். "ஷ்டரஸோபேதம்"என்றால் அறுசுவையுடன் கூடிய போஜன தினுஸுகள். அத்தனை வித அன்னங்களையும், வியஞ்ஜனங்களையும், பக்ஷ்யங்களையும் ஸ்வாமிக்குக் காட்ட வேண்டும். அவனுக்கு வெறுமனே காட்டுவதுதான். "நிவேதயாமி"என்றாலே, "தெரிவிக்கிறேன்", அதாவது "இந்த ஆஹாரமெல்லாம் உனக்கு முன்னால் வைத்திருப்பதை உனக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்"என்றுதான் அர்த்தமே தவிர, "உன்னைச் சாப்பிடப் பண்ணுகிறேன்"என்று அர்த்தமில்லை. எங்கேயோ நாமதேவர் மாதிரி ஒருத்தரால்தான் அவனைச் சாப்பிடப் பண்ண முடியும்;நாமெல்லாம் அவனுக்குக் காட்டிவிட்டு, தெரிவிக்கிறதோடு ஸரி. அவன் பார்வை பட்டதாலேயே அந்த நைவேத்யம் பிரஸாதமாகிவிடுகிறது. அதை நாம்தான் சாப்பிடுகிறோம். ஆனதால் சுசி ருசியாய் பல தினுஸு பண்ணி நாம் நன்றாகச் சாப்பிட வேண்டும் என்று சாஸ்திரமே சொல்வதாக ஆகிறது!

இன்னொரு பக்கம் சாஸ்திரத்திலேயே அநேக உபவாஸங்கள், பழம் மட்டுந்தான் சாப்பிடலாம், ஜலங்கூடக் கூடாது என்றெல்லாம் கண்டிப்பு.

ஒரு பக்கம் வேத கோஷம், ராமாயண நவாஹம், பாகவத ஸப்தாஹம், ஹரிகதை, பஜனை, ஜால்ரா, சிப்ளா மிருதங்கம், " **கதயந்தச்ச மாம் நித்யம்** "என்று பகவானே சொன்னபடி*அவன் கதைகளையே ஓயாமல் பேசுவது பாடுவது, இன்னும் மிஞ்சினால் ஆனந்தக் கூத்தே ஆடுவது என்று அமர்ககளம் மேளதாளம், சேகண்டி, அதிர்வேட்டு.

இன்னொரு பக்கம் லோகமே போனாலும் போகட்டுமென்று மௌனமாக மூக்கைப் பிடித்தக் கொண்டு உட்கார்ந்து விடுவது.

ஒரு பக்கம் பலி, கிலி;யஜ்ஞத்தில் பசுவைக் கொடுப்பது.

இன்னொரு பக்கம் ரொம்பப் பிஞ்சாகப் புடலங்காயைப் பறித்துவிட்டால்கூடப் பாபமென்று பிராயசித்தம்.

ஒரு பக்கம் முனி, காட்டேரி என்று ஏகப்பட்டவை. அப்புறம் ஸௌம்யமாக தேவதா ரூபங்கள். பலவிதமான கலர். நாலு கை, எட்டு கை, பத்துக் கை, பதினெட்டுக் என்று அநேக மூர்த்திகள். மூஞ்சூரிலிருந்து யானை, சிங்கம் வரை வாஹனங்கள்.

இன்னொரு பக்கம் நிர்குணம், நாமம் ரூபம் இல்லை, பகவானுமில்லை, பக்தனுமில்லை என்று வேதாந்தம்.

ஒரே சாஸ்திரங்களே இப்படி ஒன்றுக்கொன்று வித்யாஸமாகச் சொன்னால் என்ன அர்த்தம்?

நமக்குத் தெரிந்த இடத்தில் ஆரம்பித்துத் தெரியாததற்குப் போகவேண்டுமென்று அர்த்தம். அப்படிக் கொண்டு போவதற்காகவே நமக்குத் தெரிந்தது, தெரியாதது என்று ரொம்ப வித்யாஸமுள்ளதாயிருக்கிற இரண்டையும் சொல்கிறது.

நமக்கு என்ன தெரிகிறது?த்வைத ப்ரபஞ்சந்தான். ஏகப்பட்ட ரூப வித்யாஸங்கள், குண வித்யாஸங்கள், மற்ற வித்யாஸங்கள் கொண்டதான த்வைதந்தான் நாம் இருக்கிற நிலை. பலவித ருசிகள், பலவிதக் காட்சிகள், பலவிதக் கேள்விகள், கோபம், தாபம், பிரேமை, சாந்தி, உக்ரம், ஸௌம்யம் என்று பலவித உணர்ச்சி வேகங்கள், குண வித்யாஸங்கள், நாமம் ரூபம் இவைதான் நாம் இருக்கிற நிலையில் தெரிவது.

'நாம் இருக்கவேண்டிய நிலை என்ன?இப்போது நமக்குத் தெரியாததாக இனிமேல் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன?'என்றால் அதுதான் இந்த த்வைதத் தோற்றத்துக்கெல்லாம் ஆதாரமாயிருக்கிற ஒன்றே ஒன்று - 'அத்வைதம்'என்று என்னமோ ஒன்று சொல்கிறார்களே அது. அங்கே ருசியில்லை, சப்தமில்லை, ரூபமில்லை, நாமமில்லை, குணமில்லை. ஆனால் இதற்கெல்லாம் காரணமானது இருக்கிறது.

தெரிந்ததையே தெய்வ ஸம்பந்தமுள்ளதாக்கித் தரவேண்டுமென்றுதான் 'நைவேத்யம் ஷட்ரஸோபதேசம்', ஹரிகதையும் பஜனை சத்தமும், உக்ர-ஸௌம்ய தேவதைகள், அவற்றுக்கு அநுகுணமான ஹிம்ஸை-அஹிம்ஸைக் கார்யங்கள்.

ஆனால் தெரிந்ததோடு மட்டும் நிற்கப்படாது, தெரியாததையும் கொஞ்சங் கொஞ்சமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றுதான் பட்டினி - ருசி இல்லாத ஸமாசாரம்;மௌனம் - சத்தமில்லை;நிர்குணப் பிரம்மம் - நாம ரூபமில்லாத ஸமாசாரம்.

இப்படி இரண்டு எக்ஸ்ட்ரீம்களைச் சொல்லிவிட்டால் மட்டும் ஸரிப்பட்டு வராது. இரண்டையும் link பண்ணுவதற்கு (இணைப்பதற்கு) ஒன்று செய்யவேண்டும். நாம் வாழ்கிற முறையில் எல்லா aspect-ம் இந்த link-ஐ reflect பண்ணும்படியாக (இந்த இணைப்பைப் பிரதிபலிக்கும்படியாக) வாழவேண்டும்.

இந்த 'Lƒ,'â¡ù?Ü¶î£¡ Iîñ£è Þ¼Šð¶. ñ£ì«óû¡ â¡Aø£˜è«÷, Ü¶. 'Iîõ£F'èœâ¡Á «èœMŠð†®¼Šd˜èœ. ''àì«ù Ì˜í võó£xò‹ «õ‡´ªñ¡Á ÜõúóŠðì,Ãì£¶. Ü«î úñò˜F™ ªõœ¬÷,è£ó ó£ü£ƒè˜¶,° Þ˜î¬ù ÝF,òº‹ Þ¼,èMì, Ãì£¶''â¡ð¶ Üõ˜èœ è†C. Üõ˜èœ ªê£¡ùF™ àœ÷ Gò£ò‹ ÞŠ«ð£¶ võî‰Fó‹ õ‰¶M†´ ïñ,«è ªîKAø¶!

எதிலும் மிகையாகப் போகாமல் நடுநிலைமையில் இருப்பதுதான் மிதம். 'மிதம்'என்றால் 'அளக்கப்பட்ட', 'அளவறிந்த'என்று அர்த்தம். விமீணீஉஞுகூஷீமீபீ தீமீலீணீஸ்வீஷீஞுகூஷீ என்று சொல்லும்போதும் எதிலும் தீவிரமாகப் பறக்காமல், நிதானமாக, கவனமாகச் செய்வதைத்தானே என்பது னீமீணீஉஞுகூஷீமீபீகுறிக்கிறது?விமீணீஉஞுகூஷீமீபீ-தான் மிதம். 'ஜ்யாமெட்ரி'என்கிறோமே அது 'ஜ்யா-மிதி'என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தைதான். 'ஜ்யா'என்றால் பூமி. 'மிதி'என்பது 'மிதம்'தான் - அதாவது அளக்கிற விதிமுறை. யஜ்ஞத்தில் வேதிகை நிர்மாணம் முலானதுகளுக்கு பூமியை அளப்பதிலிருந்தே 'ஜ்யாமெட்ரி'உண்டாயிற்று. 'க்ஷேத்ரம்'என்றாலும் பூமிதான். அதனால்தான் இதற்கு 'க்ஷேத்ர கணிதம்'என்று பெயர் இருக்கிறது.

செய்கிற காரியம், பேசுகிற பேச்சு ஸம்பாதிப்பது, செலவழிப்பது, புத்தியை ஓடவிட்டு நினைப்பது, அலைவது, சாப்பிடுவது, ட்ரெஸ் பண்ணிக் கொள்வது, பொழுது போக்கு எல்லாவற்றிலுமே, ஒவ்வொன்றிலுமே 'ஓவராக'ப் போய்விடாமல், மனஸ் எதற்கும் வசப்பட்டு விடாதபடி, அளவறிந்து னீமீணீஉஞுகூஷீமீபீ-ஆக வைத்துக் கொள்வதுதான்

மிதம். எல்லாவற்றிலும் இப்படிப் பண்ணுகிற பழக்கம் வந்துவிட்டால் சித்தம் ஸமநிலையில் பரம சாந்தமாக ஆவவதற்கு உதவும்.

பழக்கம் எப்படி வரும்?ஈஸ்வர க்ருபையில்தான் வரும். 'அந்த க்ருபை எப்படி வரும்?'என்றால், அதற்காகத் தான், அதை வருவித்துக் கொள்வதற்காகத்தான், இரண்டு 'எக்ஸ்ட்ரீம்'களாக அநுஷ்டானங்களை சாஸ்த்ரங்கள் ஏற்படுத்திக் கொடுப்பது. நமக்குத் தெரிந்த நிலையில் ஒரு எக்ஸ்ட்ரீமாக பண்டிகை போஜனம், பாட்டு, கூத்து ஆகியவற்றையும், தினுசு தினுசுகளில் அபிருசி கண்ட நம் மனஸுக்கு ஏற்றபடி அநேக தெய்வங்கள் ஆகியவற்றையும் ஒரு பக்கம் சொல்லிக்கொண்டே, அதே ஸமயத்தில் இன்னொரு எக்ஸ்ட்ரீமான, உண்ணாத உறங்காத பேசா நிலையையும், நிர்குண ஏக பரமாத்மாவையும் ஞாபகப்படுத்திக்கொண்டேயிருப்பது. இப்படி இரண்டு எக்ஸ்ட்ரீம்களையும் மாறி மாறி அப்யாஸம் செய்கிறதாலேயே, தராசின் இரண்டு தட்டுகளிலும் 'வெயிட்'களைப் போடுவதால் அது ஸம நிலைக்கு வருகிற மாதிரி மனஸு ஸமத்துக்கு வந்து, அதோடு வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் மாடரேஷன் வந்துவிடும்.

ஒரு கயிற்றை 'தொய்யாமல் நில்லு'என்று வெறுமனே விட்டால் அது நிற்குமா?அதை இரண்டு பக்கம் இரண்டு கழியை நட்டு இரண்டு கோடிக்குமாக இழுத்துக் கட்டினால்தானே ஸம நிலையில் தொய்யாமல் நிற்கும்?அப்படித்தான் தானாக ஸம நிலைக்கு வராத நம் வாழ்க்கை முறையை அப்படி வரப் பண்ணவே இரண்டு கோடியாக இரண்டு வித எக்ஸ்ட்ரீம்களில் அநுஷ்டானங்களைக் கொடுத்துக் கட்டிப் போட்டிருக்கிறது. நேராக மாடரேஷனுக்குப் போகத் தெரியாததால், எக்ஸ்ட்ரீம்களை ஸமயாநுஷ்டானத்தில் கொடுத்து, அதன் வழியாக, நாம் வாழ்கின்ற முறை மாடரேஷனில் போகும்படிப் பண்ணியிருக்கிறது.

இதர மதங்களில் அஹிம்ஸை, அரூப த்யானம் என்று ஏதாவது ஒரு எக்ஸ்ட்ரீமை மட்டும் வைக்கிறபோது ஜனங்களால் அந்த பிகு தாங்காமல் யீணீவீறீ ஆகிறார்கள். அப்படியில்லாமல் மாறுபட்ட இரண்டு எக்ஸ்ட்ரீம்களை நம் மதம் மாற்றிச் சொல்வதால், நீலீணீஸீரீமீ-ல் ஆசை கொண்ட ஜீவ மனஸ் இஷ்டத்தோடு இப்படி மாற்றி மாற்றிப் பண்ணுகிறது.

ஸமயாநுஷ்டானம் என்று இப்படி ஒவ்வொரு ஸமயத்தில் பண்ணுவதாக மட்டுமில்லாமல், ஸதா கால வாழ்க்கைப்போக்காகவும் நெறியாகவும் பின்பற்ற வேண்டிய அஹிம்ஸை, பிக்ஷுத்வம் முதலானவற்றிலும் நம் மதம் மற்றவற்றைப்போல் ஒரே கண்டிப்பாக எல்லாருக்கும் லக்யத்தை விதிக்காமல் பிரித்துக் கொடுத்திருப்பதைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறேன். இதனாலெல்லாந்தான் நம் மதம், இத்தனை ஆசார சாஸ்த்ரமிருந்த போதிலும், மற்ற எல்லா மதங்களையும்விட யீறீமீஜ்வீதீறீமீ-ஆக (நெகிழ்ந்து கொடுப்பதாக) ஆகி, இதற்கு ஒரு சிரஞ்ஜீவித்வம் ஏற்பட்டிருக்கிறது.

ஸமயாநுஷ்டானங்களில் இப்போது நாம் இருக்கிற தசையில் நம் மதம் காட்டும் இரண்டு எக்ஸ்ட்ரீம்களில் பண்டிகைச் சாப்பாடு, பஜனைக் கூத்து, உருவ வழிபாடு இவற்றில் கிடைக்கிற ஆனந்தம் பட்டினியிலும், மௌனத்திலும், ஆத்ம த்யானத்திலும் கிடைப்பதில்லை. ஏதோ ஒரு பார்வையின் பேரிலும், 'இது பெரியவர்கள் காட்டும் வழியாச்சே'என்ற நம்பிக்கையின் பேரிலுந்தான் இப்போது நமக்குத் தெரியாதவையாக இருப்பவற்றுக்கான அநுஷ்டானத்தைப் பண்ண முடிகிறது. ஆனாலும் விடாமல் போனால் வாழ்க்கையில் மாடரேஷன் வரும்.

இப்படி மாடரேஷனில் நன்றாக் பழக்கப்பட்டு முதிர்ந்த நிலைமை, கனிந்த நிலைமை உண்டாகிறபோது, இப்போது எது நமக்குத் தெரியாததாக இருக்கிறதோ, இன்னொரு 'எக்ஸ்ட்ரீம்'ஆகத் தோன்றுகிறதோ, எதை நாம் ஏதோ ஒரு பாவனையின் பேரில்தான் கொஞ்சம் ஊகித்துப் பார்க்க மாத்திரமே முடிகிறதோ, அது - அதாவது பரமாத்வோடு ஏகமாக ஒன்றியிருக்கிற நிலை - எக்ஸ்ட்ரீமாக இல்லாமல், ஸஹஜமான எக்ஸ்பீரியன்ஸாக ஆகிவிடும்.

அளவறிந்து, எதிலும் ஓவராகப் போகாமல், மிதமாக மத்யமாகப் போகிறதைத்தான் பகவான் கீதையில் உபதேசித்திருக்கிறார்:

நாச்யச்நதஸ்து யோகோ (அ)ஸ்தி ந சைகாந்த-மநச்நத :*

ந சாதி ஸ்வப்ந-சீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுந **

யுக்தாஹார-விஹாரஸ்ய யுக்த-சேஷ்டஸ்ய கர்மஸு *

யுக்த-ஸ்வப்நாவாபோதஸ்ய யோகோ பவதி துக : ஹா ** (6-16,17)

"பெருந்தீனி தின்கின்றவனுக்கும் யோகம் ஸித்திக்காது;ஒரே பட்டினி கிடக்கிறவனுக்கும் ஸித்திக்காது. எப்போது பார்த்தாலும் தூங்குகிறவனுக்கும் யோகம் வராது;தூக்கமேயில்லாதவனுக்கும் வராது. சாப்பாடு ஸஞ்சாரம், மற்ற காரியம் எல்லாவற்றிலுமே மிதமாக இருக்கிறவனுக்குத்தான் யோகம் ஸித்திக்கும்;ஸம்ஸார துக்கத்தைப் போக்கும்"என்கிறார். மிதமாக இருப்பதற்கு இங்கே பகவான் சொல்லும் வார்த்தை 'யுக்தம்'என்பதாகும். 'எப்படி யுக்தமோ அப்படிப் பண்ணுங்கள்'என்று நாம் கூடப் பேச்சில் சொல்கிறோம். 'யுக்தம்', 'யோகம்'என்ற இரண்டு வார்த்தையும் 'யுஜ்'என்னும் ஒரே தாதுவிலிருந்து வந்தவைதான். 'யுஜ்'என்றால் இணைப்பது. ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு இணைப்பது யோகம். அப்படி இணைக்க வழியாக உள்ள மிதமான போக்கே 'யுக்தம்'.

எக்ஸ்ட்ரீமுக்குப் போவதுதான் மனஸின் நேச்சர். 'மிதமாயிரு'என்றால் அதனால் முடிவதில்லை. இதற்காகத் தான் சாஸ்திரங்கள், "இரண்டு எக்ஸ்ட்ரீம்களுக்கு மாறி மாறிப் போ"என்கிறது. "மிதமாகச் சாப்பிடு என்றால் நாக்கு கேட்கமாட்டேன் என்கிறதா?ஸரி, இதோ பண்டிகைகளைக் கொடுக்கிறோம்;இந்த நாட்களில் ஷட்ரஸோபேதமாகச் சாப்பிடு"என்கிறது. ஆனால் இதோடு விடாமல், ஈடுகட்டுகிறதற்கு வ்ரத உபவாஸ தினங்களையும் விதிக்கிறது. இப்படியே சில நாட்களில் "வாய் கொண்ட மட்டும் கத்து;ஆடு;பாடு"என்று விட்டுவிட்டு வேறே சில நாட்களில் "வாயைத் திறக்கவே திறக்காதே"என்று மௌனத்தை அநுஷ்டிக்கச் சொல்கிறது. இந்த எல்லாவற்றையுமே தெய்வ ஸம்பந்தப்படுத்திக் கொடுக்கிறது. பித்ரு கார்யம், பஞ்சாயதனம், வைச்வதேவ பலி, அது இது என்று பலதுகளுக்கு (பலவற்றுக்கு) வழிபாட்டைச் சொல்லும்போதே, 'காம்பன்ஸேட்'பண்ண "ப்ரஹ்மைவாஹமஸ்மி"*3 என்று மூக்கைப் பிடித்துக் கொள்ளவும் சொல்கிறது.

வாழ்க்கையம்சங்களில் தானாக மிதமாக இருக்க முடியாத மநுஷ்ய ஸ்வபாவததுக்கு இப்படி ஸமயாநுஷ்டானத்தில் இரண்டு எக்ஸ்ட்ரீம்களையும் அப்யாஸம் பண்ணுவதே மிதப்படுத்துவதற்கு வழியாக ஆகிறது. உபவாஸத்தால் விருந்தை 'பாலன்ஸ்'பண்ணுவது, மௌனத்தால் உத்ஸாஹக் கூத்தை 'பாலன்ஸ்'பண்ணுவது என்றிப்படி சாஸ்திரப் பிரகாரம் ஒரு எக்ஸ்ட்ரீமால் இன்னொன்றை 'பாலன்ஸ்' பண்ணுகிற பழக்கத்தால், வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் தராசு ஸமமாக நிற்கிற மிதமான நிலைமை, 'யுக்த'மான நிலைமை கைவரும். இரண்டு விதத்தில் மிகையாக மாறி மாறிப் பண்ணுவதாலேயே மிதம் வந்துவிடும்!

---

*1Þš¾¬ó¬ò ªîŒõ¨F¡ °ó™ ºîŸð°FJ™ êÍè Mûòƒèœ â¡P HKM½œ÷ èí‚è£J¼‚èµ‹ â¡ø à¬ó»ì¡ Þ¬í¨¶, ªè£œ÷ô£‹.

*2W¬î10.9.

*3ï£¡ Hó‹ñ£è«õ Þ¼‚A«ø¡ â¡ø Ü˜¬õî õ£‚Aò‹. ú‰Fò£õ‰îù¨F™ Þ‰î Ü¸ú‰î£ù º‹ Üƒèñ£°‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் அளவறிந்து செயற்படுக )

## அளவறிந்து செய்தல்

எ ந்த சக்தியையும், திரவியத்தையும் விரயமாகச் செலவழிக்காமலும், அதே ஸமயம்

ஒரேயடியாகப் பூட்டி வைத்துக்கொண்டு விடாமலும், தானும் ஸமூஹமும் பயனடையும்படி அளவறிந்து செலவழிக்கவும், காத்து வைத்துக் கொள்ளவும் வேண்டும். பயன்களில் பெரியதான ஈச்வர ஸாக்ஷாத்காரத்துக்குங்கூட அளவறிந்த இந்தப் போக்கு வழி செய்யும். ஸமநிலைக்கு வரவேண்டும். லெவலுக்கு வரவேண்டும். Water finds its level.ஜீவத்மா லெவலுக்கும வந்தால்தான் பரமாத்ம ஸமுத்திரத்தில் கலக்க முடியும். இதற்கு எதிலும் அளவு, மிதம் வேண்டும்.

அளவறிந்து எதையும் செய்பவரால்தான் பரம ஸத்யத்தை அறிய முடியும் என்பதைத்தான் திருமூலர்,

**கணக்கறிந்தார்க்கன்றிக் காணவொண்ணாதது**

**கணக்கறிந்தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி (1.316)**

என்று சொல்லியிருக்கிறார். அவர் பண்ணின நூலுக்குத் 'திருமந்திரம்'என்று பெயர். அதனால் இந்த வார்த்தைகள் மந்திரம் மாதிரியானவையாகும்.

அதிகமாகப் போகாமல் எல்லாவற்றிலும் கணக்காய் இருக்க வேண்டும். பேச்சு, எண்ணம், செய்கை, உணவு, உடை, செலவு எதிலானாலும் வாழ்க்கைக்கு எவ்வளவுதான் அத்யாவசியமோ அதோடு கணக்காய் நிறுத்திக் கொள்ள வேண்டும். இப்போது பண்ணுகிறமாதிரி விரயம் செய்யக்கூடாது. கணக்காயிருப்பதுதான் இஹம் பரம் இரண்டுக்கும் நன்மை செய்வது. மனநெறி இல்லாவிட்டால் பரம் எப்படி லபிக்கும்?அந்த மனநெறி, mental discipline வருவதற்கு வாழ்க்கையம்சங்கள் எல்லாவற்றிலும் கணக்காயிருந்து கட்டுப்படுத்திக் கொள்வதே உதவும்.

இப்போதைய நிலையில் ஸமயாநுஷ்டானங்களில் இரண்டு எக்ஸ்ட்ரீம்களிலும் போவதாலேயே இப்படிப்பட்ட அளவு, 'கணக்காயிருக்கிற'தன்மை உண்டாகிறது என்று சொன்னேன். ஆரம்ப நிலையில் நம்முடைய மதாநுஷ்டானம், 'கணக்கு'இரண்டுமே பக்வமாகாதவையாகத்தான் இருக்கும். ஆனால் நாளாவட்டத்தில் இவை ஒன்றுக்கொன்று போஷித்துக்கொண்டு, ஒன்றை மற்றது பக்வப்படுத்திக்கொண்டு போகும். அப்படிப் பக்வ ஸ்திதிக்குப் போகப்போக கணக்கறிந்து செய்வதே மனஸின் ஸமநிலை என்கிற உயர்ந்த பிரசாந்த ஸ்திதிக்கு கொண்டு விடும். பூர்ண பக்வநிலையிலோ தன்னியல்பாக நாம் செய்கிறதெல்லாமே அளவறிந்து, கணக்காக அமைந்து மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கும்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** அளவறிந்து செயற்படுக )

**பலவித வரவு-செலவுகளில் கணக்கு**

**க** ல்வியில் கணக்குக்கு எவ்வளவு முக்யத்வம் தந்திருக்கிறோம்?வாழ்க்கையிலும் தரவேண்டும். இப்போது ரூபாய்க் கணக்கு மட்டும்தான் முக்யமாயிருக்கிறது. எல்லா ஆபிஸிலும் அக்கவுன்ட் ஸெக்ஷன், அது தவிர அக்கவுன்டன்ட்-ஜெனரல் ஆபீஸ்கள் என்றே நிறைய இருக்கின்றன. பழைய காலத்திலிருந்து இப்படி ராஜாங்க ரீதாயாக வரவு செல்வுகளைக் கணக்குப் பார்க்கும் ஏற்பாடு இருந்து வந்திருக்கிறது. 'பெருங்கணக்கு'என்று பழைய நாளில் ஒரு உத்யோகஸ்தர் - அவர்தான் இந்நாளில் அக்கவுன்டன்ட்-ஜெனரல் என்கிறவர். இது உச்சத்திலுள்ள உத்யோகம். அடிநிலையில் இருந்தது, 'பெருங் கணக்கு'என்ற மாதிரி 'சிறுகணக்கு'இல்லை;இந்ச் சின்ன உத்யோகத்துக்குத்தான் 'கணக்குப்பிள்ளை'என்று பெயர். 'பிள்ளை'என்பது இங்கே 'சிறிய', 'சின்னது'என்பதைக் குறிக்கும்;பிள்ளை ஜாதி இல்லை. தென்னம்பிள்ளை, அணிற் பிள்ளை என்றெல்லாம் சொல்கிறபோது 'பிள்ளை'என்பது சின்னதைத் தானே குறிக்கும்?அப்படியே கணக்குப்பிள்ளை என்கிறவர் ராஜாங்க வரவு-செலவு பார்ப்பவர்களில் சிறிய ஊழியர்.

ஆனால் அவருக்கு எல்லா நுணுக்கமும் தெரிந்திருக்கும். அதனால்தான் முன்னெல்லாம் ஜில்லா கலெக்டராக ட்ரெயினிங் பண்ணுகிறவன் கூடக் கணக்குப் பிள்ளையிடம்தான் வேலை கற்றுக் கொள்ள ஆரம்பிக்க வேண்டுமென்று வைத்திருந்தார்கள்.

'இப்போது இதெல்லாமே பேப்பரில் (வரவுக்குச் செலவு) ஸரிகட்டுவதாகக் காட்டிவிட்டால் போதமென்று ஆகிவிட்டது;ஃபைனான்ஸ் மினிஸ்டரைப் பார்த்தால், அப்படி ஸரிகட்டாவிட்டால்கூடப் பரவாயில்லை;டெஃபிஸிட் ஃபைனான்ஸிங், (ரூபாய்) நோட்டுப் போட்டும், ஊரெல்லாம் உலகமெல்லாம் கடன் வாங்கியும் ஸரிக்கட்டினதாகக் காட்டினால் போதும் என்றாகி விட்டது'என்று சொல்லிக்கொள்கிறார்கள். மொத்தத்தில் இப்போது நவீன முறை என்று சொல்லி, கணக்கில்லாமல் ஆசைகளையும் தேவகளையும் பெருக்கி, அதற்காகச் செலவையும் பெருக்கி, மக்களையெல்லாம் கடனாளிகளாகவும், நிம்மதியில்லாதவர்களாகவும் செய்திருப்பதாகவே தெரிகிறது.

தேவை, வரவு, செலவு எல்லாவற்றிலுமே இப்படியில்லாமல், நாம் அவற்றை ஒரு கணக்குக்குக் கீழே கொண்டுவரவேண்டும்.

வரவு-செலவு என்பது பணம் ஒன்றில் மட்டுமில்லை. எல்லாவற்றிலும் உண்டு. நாம் வார்த்தையை அதிகம் விட்டால் எதிராளியிடம் வாங்கிக் கட்டிக்கொள்கிறோமே இதுகூட வரவு-செலவுதான். நாம் வாயால் விட்டது செலவு;வாங்கி கட்டிக்கொண்டது வரவு!நாம் அனவரதமும், தூங்கும்போதுகூடப் பண்ணுகிற காரியம் என்ன?மூச்சுவிடுவது. அதுகூட வரவு செலவுதான்!காற்றை உள்ளே வாங்கிக்கொண்டு வெளியே விடுவது வரவும் செலவுந்தான்!அதில் கூடக் கணக்கு வேண்டுமென்றுதான் ப்ராணாயாமம், மந்த்ர ஜபம், ஸோஹம் த்யானமென்று பல யோகங்களை வைத்திருப்பது. புசுக் புசுக்கென்று வேகமாக ச்வாஸித்தால் ஆயுசும் குறையும்;ஆத்மா சுத்தப்பட்டு சாந்த நிலைக்கு வருவதற்கான நாடி சமனமும் ஏற்படாது. அதனால் மூச்சுக்கூடக் கணக்காக விடணும் என்று வைத்திருக்கிறார்கள். ஒரு நாளைக்கு 21,600 ச்வாஸமே விடணும் என்று கணக்கு.

அதாவது ஒரு ச்வாஸத்துக்கு நாலு ஸெகன்ட் ஆகவேண்டும். நாம் அவசரமாகக் காரியம் செய்யும் போதும், கோபதாபத்திலும் காமம் முதலான உணர்ச்சி வேகங்களிலும், புஸ் புஸ்ஸென்று ஒரு ஸெகன்ட், இரண்டு ஸெகன்டிலேயே ஒரு ச்வாஸம் முடிந்துவிடும். அதற்காகத் தான், ஈடுகட்ட இன்னொரு எக்ஸ்ட்ரீமில் ரொம்ப நேரம் தீர்க்கமாக மூச்சையிழுத்து அடக்கி வைத்து, நிதானமாக விட்டுப் பிராணாயாமம் பண்ணச் சொல்லியிருப்பது. ஆக இந்த சரீரத்துக்கான ஆயுஸ், சரீரத்துக்குள்ளே இருக்கிற ஆத்மாவின் நிறைந்த ஸமநிலையான ஸமாதிநிலை இரண்டுமே மூச்சு ஒரு கணக்காயிருப்பதில்தான் அடங்கியிருக்கிறதென்று தெரிகிறது.

வெளியில் காட்டுகிற அக்கவுன்டஸில் ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு ஸரிகட்டினதாகக் காட்டி விடலாம். ஆனால் "நமக்கு நாமே accountable-ஆக இருக்க வேண்டும்"என்கிறார்களே, அதில் எந்த தகிடுதத்தமும் செய்து ஜயிக்க முடியாது!நாம் செய்கிற அத்தனையையும் கர்ம ஸாக்ஷியாக ஒருத்தன் பார்த்துக் கொண்டிருக்கிறான்!அவனை ஏமாற்றவே முடியாது!பண்ணிய பாபத்துக்கெல்லாம் ஈடாக எதிர்த் தட்டில் புண்ய கர்மங்களை ஏற்றியாக வேண்டும். அந்தக் கணக்குப் புஸ்தகம் அவன் கையில் இருக்கிறது. நாம் நல்லது செய்வதில் கணக்கு வழக்கில்லாமலிருந்தால்தான் அவன் பாலன்ஸ்-ஷீட்டை ஸரி செய்ய முடியும். இப்படிக் கணக்கு வழக்கு இல்லாமல் புண்யம் பண்ணுவதற்கு மனநெறி முதலில் ஏற்பட வேண்டும். அது ஏற்படுவதுற்கு நம்முடைய பேச்சு, எண்ணம், நமக்கென்று பண்ணிக்கொள்ளும் காரியம், சொந்தச் செலவு. சாப்பாடு, ட்ரெஸ் எல்லாவற்றிலும் கணக்காயிருந்தால்தான் முடியும். இவை யாவற்றிலும் நாம் கணக்காயிருப்பது சாச்வத 'ô£ð'ˆ¬î àˆ«îCˆ«î â¡ð¬î ñø‰¶ Mì,Ãì£¶. ÞŠ«ð£¶ ï‹ ðˆú§‚°œ Þ¼Šðî¡ ôì£ð ïwìˆ¬î«ò G¬ùˆ¶, ªè£‡®¼‚°‹ ï£‹ ÞQ«ñô£õ¶ ¹‡ò ôì£ð‹ - ð£ð ïwì‹ ðŸP G¬ùˆ¶, Ü‰î, èí‚°Š ¹vîè‹ úK è†´õîŸè£ùõŸ¬ø,, ªêŒò «õ‡´‹.

---

## அபரிக்ரஹம்

நமக்காக ஸம்பாதனம் செய்துகொள்வது, செலவழித்துக் கொள்வது இரண்டிலுமே ரொம்பவும் கணக்காயிருப்பதுதான் இதற்கு அடிப்படை. இதைத்தான் 'அபரிக்ரஹம்'என்று பெரிய தர்மமாக சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. 'பரிக்ரஹம்'என்றால் உடைமை சேர்த்துக் கொள்வது;அப்படிச் சேர்த்துக் கொள்ளாமலிருப்பதே 'அபரிக்ரஹம்'நீ ஜீவிப்பதற்கு எது அத்யாவச்யமோ அதற்கு அதிகமாக ஒரு துரும்புகூடச் சேர்த்துக் கொள்ளாதே'என்பதுதான் அபரிக்ரஹ தர்மம். இதை யோக சாஸ்திரத்தில் ஸாதகன் அடிப்படையாகக் கொள்ள வேண்டிய ஐந்து 'யம'ங்களிலேயே ஒன்றாகப் பதஞ்ஜலி (யோக ஸூத்ரத்தில்) சொல்லியிருக்கிறார். 'யமம்'என்றால் அடங்கி வைப்பது. மஹா பாபிகளையும் அடக்கி வைத்துத் தண்டிப்பதால் யமனுக்கு அப்படிப் பெயர். மனஸை அடக்குகிறதற்குப் பதஞ்ஜலி யோகஸூத்ரம் எழுதினார். அதிலே ஐந்து யமங்களாக அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம் (திருடாமை), பிரம்மசர்யம் ஆகியவற்றோடு அபரிக்ரஹத்தையும் சொல்லியிருக்கிறது. 'அது வேணும், இது வேணும்'என்று பொருளைச் சேர்த்துக் கொள்கிற ஆசை அடங்கணும் என்றே இதைச் சொல்லியிருக்கிறார். இந்த ஆசை அடங்கினால், பணத்தாசை, அதற்காக எந்த தேசத்துக்கு வேண்டுமானாலும் போய் என்ன தொழில் வேண்டுமானாலும் செய்யலாம் என்ற பறப்பு, எந்தப் பொய் புரளி வேண்டுமானாலும் பண்ணிப் பணம் பண்ணலாம் என்ற அரிப்பு எல்லாமே போய்விடும்.

மநு தர்மசாஸ்திரத்தில் ஐந்து தர்மங்களை அடிப்படையாகச் சொல்லுமிடத்தில் அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம் இந்த மூன்றையும் சொல்லிவிட்டு நாலாவதாக 'செளசம்'என்னும் சுத்தத்தையும், கடைசியில் இந்த்ரிய நிக்ரஹத்தையும் கூறியிருக்கிறார். 'பிரம்மசர்யம்'என்று பதஞ்ஜலி சொன்னதைக் கொஞ்சம் விஸ்தாரம் பண்ணினால் அதுவே இந்திரிய நிக்ரஹம். பதஞ்ஜலி சொன்ன அபரிக்ரஹத்துக்குப் பதில் மநு செளசத்தைச் சொல்லியிருக்கிறார். தனக்கு அத்யாவச்யமானதற்கு அதிகமாக ஒன்றைச் சேர்த்துக் கொண்டால் அதுவே திருட்டுதான் என்று மநு நினைத்திருப்பார் போலிருக்கிறது. அதனால் 'அஸ்தேயம்'என்று (திருடாமையைச்) சொன்னதிலேயே அபரிக்ரஹமும் அடக்கம் என்று அவர் அபிப்ராயப்பட்டிருக்கலாம்.

திருட்டுக்குப் பல டெஃபனிஷன்! " **உள்ளங்கவர் கள்வன்** ", " **சித்த சோர்** "என்றெல்லாம் பகவானுக்கே திருட்டுப் பட்டங்கள்!வரவு சிறுத்து செலவு பெருகினால் அதுவே ஒரு திருடு என்று வசனமிருக்கிறது. கீதையில் பகவான் லோக வாழ்க்கைக்கானவற்றை தேவ சக்திகளிடமிருந்தே பெறுகிற மனிதனானவன் அவற்றை அவர்களுக்கு அர்ப்பணிக்காமல் அநுபவித்தால் அதுவே ஒரு திருட்டு தான் என்கிறார்*.

ஜீவாதாரத் தேவைக்கு ஜாஸ்தியாக எதைச் சேர்த்துக் கொண்டாலும் அது கொள்ளையடித்து வைத்துக் கொள்கிற தோஷம்தான் என்று கருதி, அபரிக்ரஹ தர்மத்தைப் பின்பற்ற முயலவேண்டும்.

நம்முடைய ஆசார்யாளும் "விவேக சூடாமணியி"ல் இதைச் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார். யோகத்தின் முதல் வாசல் மௌனம் என்று சொல்லிவிட்டு அடுத்ததாக அபரிக்ரஹத்தையே கூறுகிறார்:

**யோகஸ்ய ப்ரதமம் த்வாரம் வாங்நிரோதோ அபரிக்ரஹ :***

ரூபாய் என்று ஒன்று ஏற்பட்ட நாளாகத்தான் சொந்தத்துக்கு ஜாஸ்தி சேர்த்து மூட்டை கட்டிவைத்துக் கொள்வது, தன்னுடைய துராசைகளுக்கே கன்னா பின்னா என்று செலவழிப்பது இதெல்லாம் அதிகமாகி, தானதர்மங்கள் பண்ணுவதற்கும், அபரிக்ரஹ தர்மத்துக்கும் ஹானி உண்டாகி வந்திருக்கிறது. ரூபாய் என்று ஒன்று இல்லாத நாள் உண்டா என்று தோன்றலாம். அப்படி ஒரு நாள் இருந்திருக்கிறது. ஆதியில் எல்லா இடத்திலும்

barter என்று ஒரு பொருளுக்குப் பதில் இன்னொரு பொருளை 'எக்ஸ்சேஞ்ஜ்'(பரிவர்த்தனை) பண்ணிக்கொள்வதுதான் இருந்ததே தவிர ரூபாயோ ஸ்டெர்லிங்கோ டாலரோ இல்லை. அப்புறந்தான் ஒவ்வொரு சீமையிலும் ஸமுதாயங்கள் ஒரு அமைப்பாகக் கெட்டிப்பட்டு, அங்கங்கே ராஜாங்கம் தோன்றி ஒரு ஆட்சி முறையின் கீழே வந்த பிற்பாடு நாணயம், கரென்ஸி என்பது தோனறிற்று. எந்தப் பொருளானாலும் இதைக் கொண்டு மதிப்பை நிர்ணயம் பண்ணுவது ஸுலபமாயிருந்தது. கையடக்கமாக எடுத்துப் போகும்படியாகவும், வைத்துக் காக்கும்படியாகவும் இப்படி ஒன்றை ஏற்படுத்திக்கொண்டார்கள். ஆனாலும் ஈஸ்ட் இண்டியா கம்பெனி ஆட்சி வருகிறவரை கூட நம் நாட்டில் எல்லா ஜனங்களிடையேயும் விசேஷமாக நாணயப் பழக்கம் இருந்துவிடவில்லை. மேல்மட்டங்களில் சில கார்யங்களுக்கு மட்டுந்தான் நாணய மாற்றத்தில் கொடுக்கல் வாங்கல் நடந்தது. ஒரு நாணயத்துக்கு நிஜமாகவே அதன் மதிப்பு இருக்கும்படியாகத் தங்கம், வெள்ளி இவற்றிலேயே காசு இருந்தால், அதிமாகக் கிடைக்காத இந்த லோஹங்களில் அளவாகவே நாணயம் போடுவார்கள். அப்புறமதான் நாணயத்துக்கும் அதன் மதிப்புக்கும் ஸம்பந்தமேயில்லாமல் நிக்கல், செம்பு, வெறும் காகிதம் என்று ஏற்பட்டபின் இஷ்டத்துக்கு அச்சடித்து எல்லோருக்கும் எல்லாவற்றுக்கும் விநியோகிப்பதாக ஆகிவிட்டது. இதற்கு முன்னாடி, ஸமீப நூற்றாண்டுகளில் கூட பொதுஜனங்களுக்கிடையே பண்ட மாற்று முறையில் தான் பெரும்பாலும் வியாபாரம் நடந்தது. அரசாங்கத்திற்குக்கூட விளைச்சலில் ஆறில் ஒரு பங்கு தான்யமாகவே தான் கொடுக்கப் பட்டு வந்தது. பாக்கி தான்யத்தைப் பணமாக்க முடியாது. வியவஸாய நாடு அல்லவா இது?இங்கே உற்பத்தியாகிற பண்டங்களில் தான்யம்தான் மிகவும் அதிகம். அநேகமாக ஒவ்வொருவனுக்கும் சொந்தமாகத் துண்டு நிலமாவது இருக்கும்;அல்லது வர்ணாச்ரம பரிபாலனம் ராஜாங்கக் கடமையாக இருந்ததால் தன் குலத்தொழிலைச் செய்கிற அநேகத் துறையினருக்கு ராஜமான்யமாக நிலமோ, தான்யமோ கிடைத்து வந்தது. தவிர பாக்கியை விற்றுப் பணம் பண்ணுவதற்குப் பெரும்பாலும் இடமில்லாமலே இருந்தது. அதனால் வருகிற போகிற யாத்ரிகர்களுக்கெல்லாம் அன்ன சத்திரம், கோயிலில் முக்குறுணி நாலுகுறுணி என்று நிவேதனம் பண்ணிப் பிரஸாதமாக விநியோகிப்பது, லக்ஷ பிராம்மண போஜனம் என்கிற மாதிரி தானதர்மம் என்றெல்லாம் செய்தே தீரவேண்டியிருந்தது. அப்புறம் பணமாய்ப் பண்ணிப் பாங்கில் போட்டுக் கொள்ளலாம் என்று ஏற்பட்ட பின்தான் தனக்கென்று எத்தனை வேண்டுமானாலும் சேர்த்துக் கொள்ளலாம் என்பதாக பரிக்ரஹத்தின் உச்சிக்குப் போய், தான தர்மம் என்பதையே அடைத்து விட்டதாக ஏற்பட்டிருக்கிறது.

அபரிக்ரஹத்துக்கு எங்கேயோ போகவேண்டியதில்லை. நாலைந்து தலைமுறைக்கு முன்னால் எப்படியிருந்தார்கள் என்று பார்த்தால் போதும். மண்பானை, கல்சட்டி, ஓலை, பாக்குப்பட்டை இதுகள்தான் அவர்களுடைய சொத்து. கருகமணிதான் நகை. நாலு கீற்றை வேய்ந்து கொண்டால் அந்தப் பர்ணசாலைதான் அரண்மனைக்கு மேலே. அரண்மனைக்காரனான திலீபன் முதலான சக்ரவர்த்திகள் இப்படிப் பர்ணசாலைகளில் வசித்து வந்த வஸிஷ்டர் முதலானவர்களின் காலில்தான் வந்து விழுந்தார்கள்.

நம் ஸமீபகால முன்னோர்கள்கூட இப்படி எளிமையாயிருந்து கொண்டே நிம்மதியாகக் காலக்ஷேபம் நடத்தியிருக்கிறார்கள். இப்போது நாம் பணத்தாலும் உடைமைகளாலும் லக்ஷுரிகளாலுந்தான் அந்தஸ்து என்று ஆக்கிக்கொண்டு, இதைத் தேடிக் கொண்டே போவதில் சீலங்களை இழந்து, சீலத்தாலேயே நம் முன்னோர்கள் எந்தச் சொத்துமில்லாமலும் பெற்றிருந்த ஸமூஹ கௌரவத்தையும் அடியோடு இழந்து, ரொம்பக் குறைந்தவர்களாக நிற்கிறோம்.

உடைமைகளைச் சேர்த்துக்கொள்ளக் கொள்ள பயந்தான் ஜாஸ்தியாகிறது. அபரிக்ரஹத்தின் நிம்மதி இங்கே ஒருகாலும் கிடைக்காது.

இதிலே நானே ஒன்று பண்ணிக்காட்ட வேண்டியதாயிருக்கிறது. எனக்குப் பட்டுப் பொன்னாடை போர்த்தி மரியாதை பண்ணுவது என்று ஒரு வழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். பக்திக்கு ஸ்தூலமாக அடையாளம் காட்டணுமென்ற எண்ணத்தில் பஹு காலமாகவே இப்படிப் பெரியவர்களுக்குப் பண்ணுவது என்று நடந்து வந்திருக்கிறது. அதெல்லாம் தேசம் ஸுபிக்ஷமாக ஸம்ருத்தியாக இருந்த காலம். பொன்னாடை மரியாதைக்குப் பாத்திரமான அந்தக் கால பூர்வாசார்யார்களுக்கும் நிரம்ப யோக்தை

இருந்தது. அதைப் பார்த்து நானும் இந்த ரேஷன-நாள், ஸ்கார்ஸிடி-காலத்தில் பொன்னாடை அலங்காரம் பண்ணிக்கொள்வது ஸரியேயில்லை. ரொம்ப நாளாக எனக்கு இந்த அபிப்ராயமிருந்தபோதிலும், பிரியமாக ''மரியாதை பண்ணுகிறோம்''என்று வருகிறவர்களைத் தடுத்தால் மனோ வ்யாகுலப்படுவார்களே என்று பேசாமலிந்து வந்திருக்கிறேன். ஆனால் இப்போது 'அபரிக்ரஹம்'என்று உங்களுக்கு நீட்டி முழக்கி உபதேசிக்கிறபோது, 'நாம் ஸந்நியாஸி;இப்படி ஐந்நூறு, ஆயிரம் விலைக்குச் சாதரா போர்த்திக்கலாமா?'என்று மனஸை உறுத்துவதால், குறிப்பாக இப்போது யாரும் சாதரா கொண்டு வராததால், இனிமேலே எனக்குப் பொன்னாடை போர்த்த வேண்டாமென்று எல்லாரையும் கேட்டுக்கொள்கிறேன். அபரிக்ரஹத்தில் எனக்கும் ஒன்று செய்யணும் என்ற ஆசையிருக்காதா?அதற்காக இதை ஆரம்பிக்கிறேன்.

ஒன்று ஞாபகம் வருகிறது. இங்கே (ஸ்ரீ மடத்தில்) நாங்களும் வித்வான்கள், புலவர்களுக்குப் பொன்னாடையோ சால்வையோ போர்த்தி ஸம்மானிப்பது என்று வழக்கிமிருக்கிறதல்லவா?அதன்படி உ.வே. ஸ்வாமி நாதய்யர் அழைத்துக்கொண்டு வந்திருந்த ஒரு தமிழ்ப் புலவருக்குப் போர்த்துவதற்காக சால்வை கொண்டு வரச் சொல்லி, ஸ்வாமிநாதய்யர் கையாலேயே அதை அவருக்குப் போடச் சொன்னேன். அந்தப் புலவரின் கொள்கைகள் சிலது எனக்குப் பிடிக்காது. இது அவருக்கும் தெரிந்திருக்கிறது. ஸ்வாமிநாதய்யர்தான் எங்கள் இரண்டு பேருக்கும் இருக்கிற மனோ வித்யாஸத்தைப் போக்கணும் என்று அக்கறை எடுத்துக்கொண்டு இரண்டு பக்கமும் பேசி அவரை அழைத்துக் கொண்டு வந்திருந்தார். இப்போது நான் அவருக்கு சால்வை போர்த்த வேண்டும் என்றவுடன் அவர், "பெரியவங்க என்னை இரண்டு விதமாகவும் போத்தணும், போத்தணும்"என்று பெரிசாக விஞ்ஞாபனம் பண்ணிவிட்டார்!போர்த்துவது, போற்றுவது இரண்டையுமே பேச்சிலே 'போத்துவது'என்றுதானே சொல்கிறோம்?அந்த அர்த்தத்தில்தான் அவர் சிலேடையாக, நான் சால்வை போர்த்தினால் மட்டும் போதாது மனஸில் பேதம் போய் அவரைப் போற்றவும் வேண்டும் என்று சொல்லிவிட்டார்!

என்னைப் போத்தறதுக்கு (போற்றுவதற்கு) இனிமேல் எவரும் பொன்னாடை போத்த (போர்த்த) வேண்டாம் என்று சொல்கிறேன்!

சொந்தச் சொத்து, சொந்தச் செலவு ஆகியவற்றில் கணக்காய் இருப்பதற்காக (இதவ்வளவும்) சொன்னேன். காந்தியும் இந்த அபரிக்ரஹத்தை ரொம்பவும் சொல்லி, அநுஷ்டானம் பண்ணியும் வந்தார். அப்புறம் இப்போது (1958ல்) விநோபாவும் சொல்லிக்கொண்டிருக்கிறார். தலைவர்கள் எனப்பட்டவர்கள் இந்த இரண்டு பேருக்கும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டே 'ஆப்போஸிட் டைரக்ஷனில்'தேசத்தை வேகமாக இழுத்து விட்டுக்கொண்டிருக்கிறார்கள். மேல் நாடுகளுக்கு நாம் பிற்பட்டு நிற்கவில்லை என்று 'ப்ராக்ரஸ்'காட்ட வேண்டாமா?

ராஜாங்கங்கள், அவற்றின் ஐடியாலஜிகள் எதுவும் சாச்வதமில்லை. ஸநாதன தர்மந்தான் சாச்வதம். சாச்வத ஸௌக்யத்துக்கு வழி காட்டுவதும் அதுதான். அதனால் அதைப் பார்த்து ஜனங்கள் வாழ்க்கையின் அம்சங்கள் எல்லாவற்றிலும் ஒரு அளவுக்கு, கணக்குக்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்டு இங்கே இந்த உலகத்திலேயே நிம்மதியும், அதோடு பாரமார்த்திகமான ச்ரேயஸும் அடைய வேண்டும்.

இதைப்பற்றி இன்னமும் பேசிக்கொண்டே போனால் நானே, சொல்கிறமாதிரி அளவறிந்து நிறுத்திக் கொள்கிறேனோ என்று ஸந்தேஹம் வந்துவிடும்!

---

* W¬î 3.12

---

## உபவேதங்கள் எதற்கு ?*1

'**ஸா** ங்கோபாங்கமாக'ச் செய்வது என்று ஒரு வார்த்தை அடிபடுகிறது. ஒரு அம்சமும் விடமாமல், பூராவாக எந்த ஒன்றைச் செய்வதையும் 'ஸாங்கோபாங்கம்'என்கிறோம். 'ஸ அங்க உப அங்க'என்பதே ஸாங்கோபாங்கம். எல்லா அங்கங்களுடனும் துணை உறுப்புக்களுடனும் கூடியது என்று அர்த்தம். நம் மதத்துக்கு மூலமான வேத வித்யையை வைத்தே இந்த 'ஸாங்கோபாங்கம்'என்பது எல்லா விஷயங்களுக்கும் பரவியிருக்கிறது. வேத மதம் ஒரு வேதாமூர்த்தி என்று வைத்துக் கொண்டால் அதற்கு ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்னும் நாலு வேதங்களின் ஸம்ஹிதைகள், ப்ராம்மணங்கள், ஆரண்யகங்கள், இவற்றில் முடிவாய் வரும் உபநிஷத்துக்கள் ஆகியவைதான் முக்யமான உடம்பு மாதிரியும் அதற்குள் எங்கும் பரவியிருக்கிற உயிர் மாதிரி, ரத்தம் மாதிரியும். ஆக நாலு வேதமே முக்யமான ரூபம். இந்த ரூபத்துக்கு ஆறு அங்கங்கள். சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பன இந்த ஆறு அங்கங்களோடு கூடின நான்மறையை 'ஸாங்கமானது'எனலாம். 'ஸாங்க உபாங்கத்தில்'உப அங்கமாக, துணை உறுப்பாக இன்னம் நாலு இருக்கின்றன - அவற்றுக்கு மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்ம சாஸ்த்ரம் என்று பெயர். நாலு வேதம் ப்ளஸ் ஆறு அங்கம் ப்ளஸ் நாலு உபாங்கங்களைச் சேர்த்து வேதமத தேவதையின் ஸாங்கோபாங்கமான பூர்ண வடிவமாகக் கொண்டிருக்கிறோம். இப்படி மொத்தம் வருகிற பதினாலையும் 'சதுர்தச வித்யா', 'பதினாலு வித்யை'என்று சொல்வது வழக்கம்*.

உப அங்கமாக இருப்பதோடு உபவேதமாகவே மேலும் நாலைக் கூட்டிப் ''பதினெட்டு வித்யைகள், அஷ்டாதச வித்யா ஸ்தானங்கள்''என்று சொல்வார்கள் இந்த நான்கு உபவேதங்கள் ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வ வேதம், அர்த்த சாஸ்திரம் என்பவையாகும்.

இந்த நாலு ஸமய ஸம்பந்தமாக (ரிலிஜியஸாக), தத்வ விசாரணையாக (ஃபிலஸாபிகலாக) தெரியாமல் நடைமுறை வாழ்க்கை (ப்ராக்டிகல் லைஃப்) தப்பு தண்டா இல்லாமல் தனி மநுஷ்ய ரீதியிலும் ஸமூஹ, தேச, லோக ரீதியிலும் நடப்பதற்கு உதவுவதாகவே உள்ளன. அதனால் தான் பதினாலு தர்ம ஸ்தானங்களில் இவற்றைச் சேர்க்காமல் - அதாவது ஆத்மார்த்தமாக நேரே ஈடுபடுத்தும் தர்ம நூல்களில் சேர்க்காமல் - அறிவைத் தரும் பதினெட்டு வித்யா ஸ்தானங்களில் மட்டுமே சேர்ந்திருக்கிறார்கள். இவற்றுக்கு நீதிகளைச் சொல்லும் சட்ட நூல்களான தர்ம சாஸ்த்ரங்களுக்குள்ள அதாரிடி (அதிகாரத்தன்மை) கிடையாது. பலவிதமான விஷயங்களை மட்டும் தெரிவிப்பதால் வித்யா ஸ்தானமாக மாத்திரம் மதிக்கப்படுகின்றன.

ஆனாலும் இவற்றுக்கு வேதத்தின் அங்கம், உபாங்கம் என்று பெயர் கொடுப்பதைவிட உசத்தியாக, இதில் ஒவ்வொன்றுமே ஒரு துணை வேதம், supplementary வேதம் என்று பொருள்பட ''உப வேதம்''என்று தெரிய பெயர் கொடுத்திருக்கிறது. ஏனென்றால் தர்மத்தின் அடிப்படையில் நின்றுகொண்டு இந்த நாலையும் 'ப்ராக்டிகல் லைஃபி'ல் நடத்தினால் அதனால் ப்ராக்டிகல் லைஃபே ஐடியல் லைஃபாக மலர வழி ஏற்படும். அதாவது நாம் வாழ்கிற முறை எப்படி வாழ்ந்தால் உசந்த மநுஷ்ய லக்ஷணத்துக்கு உரிய உத்தமமான உபாயமாகுமோ அப்படி ஆகிவிடும். அப்படி ஆனால் அப்போது இந்த நடைமுறை வாழ்க்கையே, இம்மை என்பதே மறுமை என்கிற சாச்வத ஸௌக்யத்தை ஸம்பாதித்துத் தர வழி பண்ணுவதாகிவிடும். முடிவிலே பரமாத்மாவிடமே கொண்டு போய்ச் சேர்க்கும் படியாக வாழ்க்கைப் பாதையை ராஜ மார்க்கமாகப் போட்டுக் கொடுத்தவிடும்.

உங்களுக்கே இந்த நாலு என்ன என்பது புரிந்திருக்கும். ஆயுர்வேதம் என்பது வைத்ய சாஸ்திரம். தநுர்வேதம் யுத்த சாஸ்திரம். காந்தர்வ வேதம் என்பது ஸங்கீதம், நாட்டியம், நாடகம் முதலிய லளித கலைகள். அர்த்த சாஸ்திரம் என்பது பொருளாதாரத்தை அங்கமாகக் கொண்ட அரசியல்.

இந்த நாலில் ஒவ்வொன்றாலும் ஆத்மாவுக்கு எத்தனை ஹானி பண்ணிக் கொள்ளலாமோ அத்தனையும் பண்ணிக் கொள்வதுதான் நமக்குக் கண்கூடாகத் தெரிவது. வைத்ய சாஸ்திரத்தில் உடம்பைப் பேணிப் பேணித்தான் தேஹாத்ம புத்தியை விட்டுக் கொஞ்சங்கூட மேலே போகாமல் நிற்கிறோம்!யுத்தத்தால் ஆடம் பாம்(ப்), ஹைட்ரஜன் பாம்(ப்) இவற்றைப் போட்டுப் பண்ணின அக்ரமம் போதாது என்று ஒவ்வொரு Power Block-க்கும் இவற்றைக் காட்டிக் காட்டியே Cold War என்று அத்தனை ஜனங்களையும் கிலியிலும், பரஸ்பர ஸந்தேஹத்திலும், த்வேஷத்திலும் பிடித்து வைத்திருக்கிற அக்ரமத்தைப் பார்த்து வருகிறோம். பாட்டும் கூத்தும் மநுஷ்யனை மிருகத்தின் மட்டத்துக்குக் கொண்டு விடுவதாக எத்தனை cheap-ஆகியிருக்கிறதென்பதையும் அநுபவித்து வருகிறோம். அரசியலா?அதைப்பற்றி நான் வாய் திறக்க வேண்டாம்.

இப்படி எதெல்லாம் பாரமார்த்திகத்துக்கு ரொம்பவும் விக்னம் உண்டாக்கும் ஹேது உள்ளதாக இருக்கிறதோ அதையெல்லாம் விட்டு ஓடு என்று சொல்லாமல், "அதுகளையும் சுத்தப்படுத்து,அதுகளையும் தர்மத்தில் ஊறப்போடு!எத்தனை களிம்பையும் பாசியையும் புளியிலும் எலுமிச்சைச் சாற்றிலும் ஊறப் போட்டு அகற்றிவிடுகிற மாதிரி இவற்றையும் தர்ம வழியால் சுத்தப்படுத்திப் பளிச்சென்றாக்கி, தர்மத்துக்காகவே பிரயோஜனப்படுத்து, அழுக்குக் கண்ணாடி படத்தை மறைக்கிறதென்று கண்ணாடியை எடுத்தவிட்டால் படம் கெட்டுத்தானே போகும்?அதனால் அழுக்கை மட்டும் துடை. கண்ணாடியை எடுத்துவிட்டால் படம் கெட்டுத்தானே போகும் அதனால், அழுக்கை மட்டும் துடை. கண்ணாடியை எடுத்துவிடாதே. சரீரமும் அதற்கான வைத்யமும், யுத்தமும், பொழுது போக்குகளும், ராஜ நீதியும் ஆத்மாவை மறைக்கிற அழுக்குக் கண்ணாடியாக இருக்கிற நிலையை மாற்றி அவற்றையே ஆத்மாவை நன்றாக ரக்ஷித்து, பிரகாசமாகக் காட்டுகிற கண்ணாடியாக மாற்று"என்றே இதற்கு உபாயமாக நம் முன்னோர்கள் நாலு உபவேதங்களையும் கொடுத்திருக்கிறார்கள்.

'அத்வைதா, மாயா'என்று சொல்லிக்கொண்டு ஹிந்து மதம் நடைமுறை வாழ்க்கையையே கவனிக்காமல், பேடி மாதிரி அதிலிருந்து தப்பி ஓடச் சொல்கிறது என்று இதர மதஸ்தர்கள் சொல்வதுண்டு. இதைவிடத் தப்பான அபிப்ராயம் இருக்க முடியாது. அவர்களுடைய மதங்களையெல்லாமும்விட மிக மிக விரிவாகவும் ஆழமாகவும் நடைமுறை வாழ்க்கையின் ஸகல அம்சங்களையும் அலசி அது ஒவ்வொன்றிலும் ஒரு ஜீவன் எப்படிப் புகுந்து புறப்பட்டு தீரனாக ஜயசாலியாக வரவேண்டும் என்று விஸ்தாரமாக வழிகாட்டுவது நம் மதம்தான். அவதாரத்தின் உச்சியிலேயே ராமனையும் கிருஷ்ணனையும் வைத்துக் கொண்டு இன்றைக்கும் நாம் கொண்டாடுவது அவர்களுக்கே (இதர மதஸ்தர்களுக்கே) தெரியும். ராமனும் கிருஷ்ணனும் நடைமுறை வாழ்க்கையை விட்டு ஓடவில்லை;ÜF™ Ìó£ Ìó£ ß´ð†´ ïì˜Fùõ˜èœ î£¡ â¡Á ªîK»‹;'Þ¬î M†´M†´ æ®Š«ð£Œ Í,¬èŠ H®ˆ¶,ªè£œA«ø¡'â¡Á H®õ£î‹ ð‡Eù Ü˜ü§ù¬ù ðèõ£¡ Þ¿ˆ¶Š H®ˆ¶ à†è£ó ¬õˆ¶, è£‡¯õˆ¬î, ¬èJ™ ªè£´ˆ¶, "‹, «ð£´ ê‡¬ì"â¡Á W¬îJ™ ªê£¡ù¶‹ ªîK»‹. Ýù£½‹ criticise ð‡µAø£˜èœ. ï£º‹ «è†´, ªè£‡®¼‚A«ø£‹!

தர்மத்துக்காக, தர்மத்தோடு இங்கே தநுர் வேதத்தை அப்யஸிக்கும்படி பகவான் அர்ஜுனனைத் தூண்டியிருக்கிறார். இப்படித்தான் ஒவ்வொரு உபவேதமும் தர்மார்த்தமாகப் பிரயோஜனப்படுத்தப்பட வேண்டியதாகும்.

மற்ற மதங்களில்தான் ஈச்வர ஸம்பந்தமானது என்று சிலதை மட்டும் சொல்லிவிட்டு மநுஷ்யனின் ராஜாங்கம், வாழ்க்கையம்சங்கள், ராணுவம், வைத்யம் முதலானவற்றைப் பற்றி எதுவுமே சொல்லாமல் விட்டு விட்டதால் நடைமுறையில்பெரிய கோளாறு உண்டாகி விட்டது. நடைமுறை வாழக்கைக்கு அவசியமான தொழில், சாப்பாடு, ஜாகை, கல்யாணம், படிப்பு முதலானவற்றுக்கும் கலைகளுக்கும் மத ஸம்பந்தமான தர்ம ஆதாரம் இல்லாததனாலேயே அந்த மதங்களைச் சேர்ந்தவர்கள் இவற்றில் ரொம்பவும் கோளாறாகப் போக இடம் ஏற்பட்டுவிட்டது. 'ஆத்ம ஸம்பந்தமானது'என்று தனியாகச் சிலதை வைத்துவிட்டதாலேயே அதற்குப் பெரும்பாலோர் போகாமல் நடைமுறை வாழ்க்கையோடு

நிற்பதாகவும் இந்த நடைமுறையிலே சாஸ்திர ஒழுங்கு இல்லாததால் மனஸு போனபடி செய்ய இடமேற்படுவதாகவும்தான் ஆகியிருக்கிறது.

லோக வியாபாரத்தில் எல்லாத் துறைகளையும் நெறிப்படுத்தித் தரும் நம் மதத்தில் நாலு உபவேதங்களில் முதலாவதாக வருவது ஆயுர்வேதம்.

---

* 1. àð«õîƒè¬÷, ºP^¶ ªîŒõ^F¡ ºó™ Þó‡ì£‹ ð°FJ™ M^ò£vî£ù‹ º®¾¬ó â¡ø à¬óJ½‹ ð£˜,è.

* 2. ÞŠðFù£¡A™ åšªõ£¡¬ø»‹ ºP^î MK¾¬óèœ ªîŒõ^F¡ ºó™ Þó‡ì£‹ ð°FJ™ è£‡è.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ஆயுர்வேதம் )

## ' உப ' வும், ' மூல ' மும்

**உ** பவேதங்களில் ஒவ்வொன்றையும் மூலவேதம் ஒவ்வொன்றிலிருந்து வந்ததாகச் ஸசொல்வதுண்டு. இதன்படி முதலாவதான ஆயுர்வேதம் ரிக்வேதத்தைச் சேர்ந்தது*. ரிக் வேதத்துக்குப் 'புஷ்டியைத் தரவல்லது'என்று பொருள்படுவதான 'பௌஷ்டிகம்'என்றே ஒரு பெயர் உள்ளது. இரண்டாவதான தநுர்வேதம் யஜுர் வேதத்தையும், மூன்றாவதான காந்தர்வ வேதம் ஸாம வேதத்தையும், நான்காவதான அர்த்தசாஸ்திரம் அதர்வ வேதத்தையும் சேர்ந்தவை.

தநுர்வேதத்தில் அஸ்திரப் பிரயோகம் செய்யும் போது வாருணாஸ்த்ரம், ஆக்நேயாஸ்தரம், ப்ரஹ்மாஸ்த்ரம் போன்றவற்றை வருணன், அக்னி, பிரம்மா முதலிய அந்தந்த தேவதைகளுக்குரிய மந்திரத்தோடுதான் விட (எய்ய) வேண்டும். மந்த்ர சக்திதான் இங்கே ஆயுதத்தைவிட முக்யம். இந்த மந்த்ர ப்ரயோகங்களை அதர்வவேதம்தான் கூறுகிறது. ஆகையால் தநுர் வேதத்துக்கு அதர்வ ஸம்பந்தமும் இருப்பதாக ஆகிறது.

---

* ஆயுர்வேதத்தில் முக்யமான ஒரு சாஸ்திரகர்த்தரான ஸுச்ருதர் இதனை அதர்வ வேதத்தைச் சேர்ந்ததாகக் கருதுகிறார்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ஆயுர்வேதம் )

## வாஸ்து சாஸ்திரம்

**ஸ** ங்கீதம் ஸாமவேதம் என்கிற மாதிரியே சிற்பம், கட்டிட நிர்மாணம் (sculpture,architecture) என்கிறவை, இவற்றை அங்கமாகக் கொண்ட வாஸ்து சாஸ்த்ரம் ஆகியவையெல்லாம் சேர்ந்து ஒரு உபவேதமென்றும், இது அதர்வ வேதத்துக்கு ஸம்பந்தமுடையதென்றும் சுக்லா என்கிறவர், பஞ்சாபைச் சேர்ந்தவர் (ஸ்ரீமடம் நடத்திய) இளையாத்தங்குடி ஸதஸில் சொன்னார். ப்ருகு மாதிரியான வேதரிஷிகளே வாஸ்து சாஸ்த்ரம் பண்ணாயிருப்பதை அவர் காரணம் காட்டி, மற்ற எந்த உபவேதத்துக்கும் இப்படி வேதரிஷிகளின் நூல் இல்லை என்று சொன்னார்*. வாஸ்து சாஸ்திரம் என்பதுதான் எப்படி நகர நிர்மாணமும், அதிலுள்ள ஆலயம், அரண்மனை, தனி மநுஷ்யனின் வீடு ஆகியவற்றின் நிர்மாணமும் அமைய வேண்டுமென்று சொல்வது. வீடு கட்டும்போது மனை முஹூர்த்தம் என்று பண்ணும்போது வாஸ்து புருஷனுக்குத்தான் பூஜை பண்ணப்படுகிறது. ஒரு ஊர் அல்லது ஆலயம், அரண்மனை வீடு, மண்டபங்கள், சத்திரம், வித்யாசாலை எதுவானாலும் அதை வாஸ்து புருஷன் என்று ஒரு நராகாரமாக வர்ணித்து அதில்

தலைப்பாகம், உடம்பு, கால், கை என்றெல்லாம் அந்தந்தக் கட்டுமானத்திலுள்ள ஸந்நிதிகள், மண்டபங்கள், ரூம்கள் முதலியவற்றை வர்ணித்திருக்கும். வாஸ்து சாஸ்திரப் பிரகாரம் ஒரு ஊரில் கோயில்கள், குடியிருப்புக்கள், பொதுஸ்தலங்கள் முதலியவை அமையாவிட்டாலும், இப்படியே ஒவ்வொரு வீட்டிலும் அதன்படி அறைகள், கூடம், தாழ்வாரம் முதலியவை அமையாவிட்டாலும் துர்பிக்ஷம், வியாதி, சித்தவிகாரம் முதலியன ஏற்படும் என்று சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது. இப்போது நாம் வாஸ்து சாஸ்த்ரப்படி எதுவும் செய்யாமல் இங்கிலீஷ் ஃபாஷனில் town planning, காலனி, வீட்டு நிர்மாணம் எல்லாம் செய்கிறோம். சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற அனர்த்தங்களையும் அநுபவித்து வருகிறோம்!

சிற்பக் கலை, கட்டிடக் கலை எல்லாமே வாஸ்து சாஸ்திரத்தில் வந்து விடுகிறது.

ஆனாலும் பொதுவான அபிப்ராயத்தில் அர்த்தசாஸ்திரம்தான் நான்காவதான உபவேதமாக நினைக்கப்படுகிறது.

---------------------------------------------------------------------------------------------------------------------------

* உபவேதங்களில் அர்த்தசாஸ்திரத்துக்குப் பதிலாக ஸ்தாபத்யசஸ்த்ர வேதம் என்ற சாஸ்திரத்தைச் சொல்வாருமுண்டு. இது அதர்வ வேதத்திலிருந்து கிளைத்ததாகச் சொல்வர். ஸ்தபதி எனும் கட்டிட, சிற்ப நிர்மாணிகரின் கருவிகளைக் குறித்ததே 'ஸ்தாபத்யசஸ்த்ர'மாதலால் இதுவே ஸ்ரீ B.N. சுக்லாவின் கூற்றுக்கு அடிப்படை எனத் தோன்றுகிறது. கட்டிடச் சிற்பம் மட்டுமின்றி அனைத்துக் கருவிகளையும் Mechanics பற்றிய என்பதே பொதுவில் ஸ்தாபத்யசஸ்த்ர சாஸ்த்ரமாகக் கொள்ளப்படுகிறது.

---

## உடம்பைப் பேணுவது எதற்காக ?

**ஆ** யுர்வேதம் என்பது ஆயுஸ் விருத்திக்கு வழி சொல்லும் சாஸ்த்ரம். ஆயுஸ் குறைவது அநேகமாக வியாதியால்தானே?ஆகையினால், வியாதி வராமல் தடுக்கவும், வந்தால் குணப்படுத்தவும் வழி சொல்லும் வைத்ய சாஸ்த்ரமே ஆயுர்வேதம் எனப்படுகிறது.

ஆயுர்வேதம் தீர்க்காயுஸோடும், அப்படி இருக்கிற வரையில் சரீர ஸௌக்யத்தோடும் இருக்கும் வழிகளைச் சொல்லும் வைத்ய சாஸ்த்ரமாகும். அதாவது நம் ஆயுஸை தீர்க்கமாக்கிக் கொள்வதற்கும் சரீரத்துக்கு வரும் வியாதிக் கஷ்டங்களை குறைத்துக் கொள்வதற்கும் மார்க்கத்தைச் சொல்ல இது ஏற்பட்டிருக்கிறது.

எதற்காகச் இப்படிச் செய்ய வேண்டும்?உடம்பைப் பேணி வளர்ப்பானேன்?எவ்வளவு பேணிவைத்துக் கொள்ளப்பார்த்தாலும் அது நிரந்தரமாயிருக்கப் போவதில்லையே?ஒருநாள் அழியத்தானே போகிறது?அழிவது, அழியவேண்டியது, என்ன பண்ணினாலும் அழிவை நிறுத்த முடியாதது, என்றைக்குப் போனால் என்ன?ஞானிகளாக இருப்பவர்கள் இந்த உடம்பு என்றைக்குப் போனாலென்ன என்றுதானே சொல்கிறார்கள்?இது இருக்கிற மட்டும் இந்திரிய இழுப்புத்தான், கர்மாவில் நுழைப்புத்தானென்பதால் இது போகாதா என்றே காத்துக் கொண்டிருந்தவர்களாகத் தானே மஹான்கள் இருந்திருக்கிறார்கள்?

அது இருக்கட்டும். மஹான்களின் கதையும், நிறுத்தி வைக்க முடியாமல் சாவு ஒன்று இருக்கும்போது சரீர ரக்ஷணை எதற்கு என்று நாம் 'இன்டெலச்சுவலாக'க் கேட்பதும் இருக்கட்டும். நடைமுறையில் என்ன செய்கிறோம்?மஹான்களின் வைராக்ய உணர்ச்சியும், நம் 'இன்டெலெக்டு'மா கை கொடுக்கின்றன?நம்முடைய ஸாமானிய உணர்ச்சியின்படிதானே செய்கிறோம்?அப்போது என்ன நினைக்கிறோம்?தேஹத்துக்குக் கொஞ்சம் அஸௌக்யமென்றால்கூட தேஹத்துக்குக் கொஞ்சம் அஸௌக்யமென்றால்கூட அதைத்தானே பெரிதாக நினைத்து 'ஐயோ, அப்பா'என்கிறோம்?லக்ஷ ரூபாய் லாட்டரி விழுந்த ஸந்தோஷத்தைக்கூட ஒரு வயிற்று வலியோ, ஜலதோஷமோ

விரட்டிவிடுகிறதே!இந்த அந்த வரவைவிடப் பெரிசாக நினைக்கிறோம்?உடம்பெல்லாம் அழுகி, ஜீவனோபாயமே இல்லாமல் தெருவிலே நாற்றமடித்துக் கிடக்கிற ஒரு குஷ்டரோகி கூட, 'போகாதா இந்த உயிர்?"என்று புலம்பிக் கொண்டிருந்தாலும், அந்தப் பக்கம் ஏதாவது ஒரு லாரி, பஸ் ஏதாவது ஓரமாக வந்துவிட்டால், "நல்லது;அரை பட்டுச் சாவோம்"என்று கிடக்கிறானா?எப்படியோ அந்தண்டைதானே புரள்கிறான்?தோஹாத்ம புத்தி என்பது அவ்வளவு ஆழமாக நமக்குள் ஊறியிருக்கிறது!தொண்ணூறு தொண்ணூற்றைந்து வயஸு ஆகி நடைப்பிணமாகக் கிடக்கிறபோதும் மருந்து சாப்பிட்டு மரணத்தை ஒத்திப் போடப் பார்க்கவேண்டும், ஆயுஸை விருத்தி பண்ணிக்கொள்ள வேண்டும் என்றுதான் தோன்றுகிறது.

இது தன் சரீரத்தை ரக்ஷித்துக் கொள்வது. இன்னொன்று இருக்கிறது. நமக்கு ரொம்பவும் பிரியமாக பதி அல்லது பத்தினி, புத்ரர்கள் இருந்தால், நாம் போனாலும் நமக்கு வேண்டிவர்களான அவர்கள் தீர்க்காயுஸுடன் இருக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறோம். "நம் கண்முன் அவர்கள் போகப்படாது"என்று வேண்டிக்கொள்கிறோம். அவர்களுக்கு உடம்புக்கு வந்து விட்டால் ராக்கண் முழித்து, எத்தனை வைத்யம் முடியுமோ அத்தனையும் பார்த்து, அதற்காக என்ன செலவானாலும் செய்கிறோம். பாபர் அல்லாவுக்கு வேண்டிக்கொண்டு தன் உயிரைக் கொடுத்தே ஹுமாயூனை சாவிலிருந்து மீட்டார் என்று படித்திருப்பீர்கள்.

இப்படியாகத் தன்னுடையவும், தனக்கு வேண்டியவர்களுடையவுமான சரீரத்தை ரக்ஷிப்பதும், ஆயுஸை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முயல்வதும் ஸகலப் பிராணிகளுக்கும் ஆழமாக வேரோடிப்போன இயற்கையாயிருக்கிறது. மநுஷ்யன் மட்டுமல்ல;எந்தப் பிராணியுமே, ஒரு சின்ன புழுவும் எறும்புங்கூட ஜீவனை ரக்ஷித்து வைத்துக் கொள்ள எந்தப் பாடும் படத் தயாராயிருக்கிறது.

இயற்கையை முறித்துக் கொண்டுபோய் இசகு பிசகாக்கிக் கொள்ளாமல், இயற்கையை அநுஸரித்தே போய் அதை ஆத்மாவின் வழிக்குக் கொஞ்சம் கொஞ்சமாக வளைத்துக் கொள்ளுவதுதானே நம் ஆன்றோர்கள் நமக்குத் தந்துள்ள ஏற்பாடு?கல்யாணம், குழந்தை குட்டி பெறுவது, உத்யோகம் எல்லாவற்றையும் இயற்கை, நடைமுறை என்ற இரண்டுக்காகவும் ஒப்புக்கொண்டு இவற்றையும் சாஸ்த்ரோக்தமாகப் பண்ணிப் பக்வமாக்குவதுதானே அவர்கள் வகுத்துள்ள வழி?இதற்கேற்கவே வியாதிகளைப் போக்கிக்கொண்டு தீர்க்காயுஸுடன் வாழ்வதற்கான ஆயுர்வேதத்தைக் கொடுத்திருக்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** ஆயுர்வேதம் )

**வைத்தியத்திலும் ஆன்மிக லக்ஷ்யம்**

**இ** து மட்டுமில்லை. இதுதான் முக்யமாக மேல் பார்வைக்குத் தெரிந்தாலும் உள்ளுக்குள்ளே இதிலும் பாரமார்த்திகமான லக்யத்தில் சேர்க்கிற ஒரு நோக்கம் இருக்கிறது.

எவ்வளவோ பாபம் பண்ணித்தான் இந்த ஜன்மாவை அடைந்து அலையாக அலைந்துகொண்டு, சாச்வத ஸௌக்யத்தை தெரிந்து கொள்ளாமல் உழன்று கொண்டிருக்கிறோம். இப்போதாவது புண்யங்களைப் பண்ணிப் பண்ணிப் பாபத்தைக் கரைக்க ஆரம்பிக்க வேண்டாமா?புண்ய கார்யங்களை, அநேக தர்மங்களைப் பண்ணியாக வேண்டும். அவற்றை இந்த உடம்பு இருக்கும்பொழுதுதான் செய்ய முடியும். சரீரம் இருந்தால் தான் பலவித பரோபகாரப் பணிகளைச் செய்யமுடியும். இருந்தால் மட்டும் போதாது. பலமுள்ளதாகவும் இருக்க வேண்டும். அப்போதுதான் பிறருக்காக நிறைய 'ச்ரம் தான்'பண்ணிப் பாபத்தைக் கரைத்துக் கொள்ள முடியும். கர்மாவைக் கழிப்பதற்காக இடுப்பொடிய யாகம் பண்ணுவது, அல்லது நவாவரண பூஜை பண்ணுவது, நடந்தே திருப்பதி மலை ஏறுவது, நூற்றியெட்டு ஆயிரத்தெட்டு பிராணாயாமம் செய்வது, தியானம்

செய்வது என்றால் இதற்கெல்லாம் வியாதியும் வக்கையும் இல்லாத சரீரமிருந்தால்தானே முடியும்?நாம் நோயும் நொடியுமாயிருந்தால் பிறத்தியாருக்கு வேறு எத்தனை கவலை?அவர்களை மெனக்கிட வைத்து எவ்வளவு சிரமம் கொடுக்கிறோம்?

நமக்கு தேஹ உபாதையிருக்கிறபோது ஈச்வர த்யானம் எப்படி ஒருமுகப்பட்டுப் பண்ணுவது?ஜ்வரம், பல் வலி என்று வந்தால் எப்படிப் பூஜை பண்ணுவது?

சரீரத்தில் சக்தி இல்லாவிட்டால், 'சார்தாம்'என்று ஒவ்வொரு திக்கின கோடியிலும் ஒரு க்ஷேத்ரமாக ஏகப்பட்ட புண்ய ஸ்தலங்களையும் புண்ய நதிகளையும் கொண்ட இந்த தேசத்தில் எப்படி க்ஷேத்ராடன தீர்த்தாடனங்கள் செய்வது?உடம்பிலே வலி அசக்தமென்றால் ஜபம் செய்ய முடியுமா?யோகம் முடியுமா? நிஷ்டை எங்கே?ஞானம் எங்கே?

இப்படியாக, பரமாத்ம ஸ்மரணைக்காகவே சரீரத்துக்கு வியாதி - வராமல் preventive-ஆகவும், வியாதி வந்தால் ஸ்வஸ்தப்படுத்திக் கொள்வதற்காகவும் மருந்துகளையும், பத்யங்களையும், ஆஹார விஹார முறைகளையும், மற்ற ஸுகாதார விதிகளையும் சொல்லிக் கொடுப்பதற்கு ஒரு சாஸ்திரம் தேவைப்படத்தான் செய்கிறது. அதுதான் ஆயுர்வேதம். தர்ம சாஸ்திர விதிகளின்படி ஒருத்தன் சுத்தமான வாழ்க்கை நடத்தி விட்டாலே preventive; எந்த வியாதியும் வராது. ஆனாலும் வைத்ய சாஸ்த்ரமும் இதில் கொஞ்சம் செய்ய வேண்டியதாயிருக்கிறது.

வியாதியின் கஷ்டம் தீர்கிறது மட்டும் போதாது. வியாதியில்லாமல் தீர்க்க ஆயுஸுடனும் இருக்க வேண்டும். அதற்கு இந்த வைத்ய முறை வழி காட்டுகிறது என்பதால் தான் இதற்கு 'ஆயுர்வேதம்'என்று பெயர். 'எப்படியும் முடியப்போகிற ஆயுளை எதற்கு விருத்தி பண்ணிக் கொள்ள யத்தனம் பண்ண வேண்டும்?'என்றால் இதற்கும் காரணம் சொன்னேன். உடம்பை வைத்துக்கொண்டுதான் புண்யம் பண்ணிப் பாபத்தைப் போக்கிக்கணும், தர்ம அநுஷ்டானம் பண்ணிக் கர்ம சேஷத்தைக் கழிச்சுக்கணும் என்று சொன்னேன். இப்போது நமக்கு வாய்த்திருக்கிற இந்த உடம்பு நசிக்கிறதற்கு முந்தியே அப்படி "இருவினையொப்பு, மல பரிபாகம்"என்று (சைவ ஸித்தாந்திகள்) சொல்கிறபடி கர்மாவை ஈடுகட்டி மும்மலங்களை*அகற்றிக் கொள்ள வேண்டும்.

"ஏன் இந்த உடம்பு உள்ளபோதே, இன்னொரு ஜன்மா எடுத்து இன்னொரு உடம்பு வந்தால் அதை வைத்துக்கொண்டுதான் பண்ணுவோமே!"என்றால், அடுத்த ஜன்மாவில் வருகிற உடம்பு எப்படிப்பட்டதாயிருக்குமோ?"இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?"என்று மஹான்களே கதறியிருக்கிறார்களே?புண்ய கர்மாக்களைச் செய்ய எல்லா ஸௌகரியமும் பெற்றுள்ள மநுஷ்ய சரீரமாகத்தான் அடுத்த ஜன்மாவில் வாய்க்கும் என்று எப்படிச் சொல்ல முடியும்?மநுஷ்யப் பிறவியே லபித்தாலும் ஸத்கர்மா பண்ணுவதற்கு இப்போதிருக்கிற சக்தியும் புத்தியும் ஸௌகர்யமும் ஸந்தர்ப்பமும் surrounding-உம் அப்போது இருக்கும் என்று எப்படி எதிர்பார்க்கலாம்?இப்போது கர்மபூமியான இந்த தேசத்தில் பிறந்து, இத்தனை சாஸ்திரம், க்த்திரம், ஸ்தோத்திரம், அநேக ஸாதனா மார்க்கங்கள், ஆசார்யன், மஹான்களின் உதாரணம் எல்லாம் கிடைத்திருக்கிற மாதிரியே மறுபடியும் கிடைக்குமென்று சொல்லமுடியுமோ ஆனபடியால் இந்த ஜன்மத்திலேயே, இப்போது வாய்த்திருக்கிற இந்த தேஹத்தை வைத்துக் கொண்டே சித்த சுத்தியைப் பெற்று ஜீவன் முக்திய அடையப் பிரயத்னம் பண்ணவேண்டும்.

**சக்நோதீஹைவ ய : ஸோடும் ப்ராக்-சரீர-விமோக்ஷணாத் ***

**காம-க்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த : ஸ ஸுகீ நர ****

**(கீதை 5.23)**

என்றே பகவானும் சொல்லியிருக்கிறார். "சக்நோதி இஹைவ"என்று ஆரம்பிக்கிறார். 'Þý

ãõ'â¡ð«î 'Þ¬ýõ'â¡ø£J¼'Aø¶. 'Þý ãõ'â¡ø£™ "Þƒ«è Þ¼'Aø«ð£«î"â¡Á Ü˜î‹. ÜŠ¹ø‹ "Šó£‚-êgó-M«ñ£þí£ˆ"â¡Aø£«ó, ÜîŸ° "Þ‰î àì‹¹ «ð£õîŸ° º¡ù£®«ò"â¡Á Ü˜î‹. "Þƒ«è«ò Þ‰î àì‹¹ «ð£AøîŸ° º‰F«ò âõ¡ è£ñ-‚«ó£îƒè÷£™ à‡ì£°‹ êôù ˆ¬î ̂ î£ƒ°õîŸ°, Üî£õ¶ Ü¶è÷£™ î£¡ ð£F‚èŠðì£ñ™ ÜõŸ¬ø Üì‚A ÝœõîŸ° õLòõù£è ÝAø£«ù£ Üõ¡î£¡ «ò£è R ˆF ªðŸøõ¡;Üõ¡î£¡ Gü ú§è ˆ¬î, è‡ìõ¡"â¡ø è¼ˆ¬î«ò Þ‰î „«ô£è ˆF™ ªê£™LJ¼'Aø£˜.

காமமும் க்ரோதமும் போகத்தான், அதாவது சித்தம் சுத்தியாகிறதற்குத்தான் இத்தனை புண்ய கர்மாக்கள், மதாநுஷ்டானங்கள். இந்த சரீரம் விழுகிறதற்கு முந்தியே, இதைக் கருவியாக வைத்துக் கொண்டே, இவற்றைப் பண்ணிப் பண்ணி, உயிரும் உடலும் பிரிவதற்கு முன் காமமில்லை, க்ரோதமில்லை என்று ஆக்கிக்கொண்டு விட்டால் அப்புறம் உயிர் பிரிகிறபோது பேருயிர் என்கிறார்களே, அதில் போய்க் கலந்துவிடலாம். மறுபடி உடம்பு எடுக்க வேண்டாம். அப்படிச் செய்யாமல் உயிரை விட்டால் மறுபடி அது மாட்டு உடம்பில் புகுந்து கொள்ளுமோ, ஆட்டு உடம்பில் புகுந்து கொள்ளுமோ நமக்குத் தெரியாது. ஆகையால் காம க்ரோதாதிகளைப் போக்கிக் கொண்டுவிட்டோம், மன மாசுகளை முழுவதும் துடைத்துதெடுத்துவிட்டோம் என்று தெரிகறவரை இந்த சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்வதற்கான பிரயத்தனத்தைப் பண்ணத்தான் வேண்டும். நாம் பிரயத்தனம் பண்ணியும் அவன் ஆயுசை முடித்துவிட்டால் வேறு விஷயம். நம் கர்மா, அவன் லீலை அப்படி நடந்தால் நடந்துவிட்டுப் போகட்டும். அதில் நாம் பண்ணிக் கொள்கிறதற்கு எதுவுமில்லை.

'சாவு அவன் கையில்தானிருக்கிறது என்றால் அப்புறம் நம் அளவில் நாம் ஆயுசை நீடித்துக்கொள்ளப் பார்ப்பதில் என்ன அர்த்தமிருக்கிறது?'என்று கேட்பவர்களுக்கு ஒன்று சொல்கிறேன். அப்படிப் பார்த்தால், சாவு மட்டுந்தானா?நம்முடைய ஸகல விஷயங்களுமே, கல்யாணம், கார்த்திகை, உத்யோகம், ஸாதனை பண்ணுவது, நல்லது செய்வது, கெட்டது செய்வது எல்லாமே அவன் கையில்தானிருக்கிறது.

அந்த ஸூத்ரதாரி ஆட்டுவிக்காமல் நாம் என்னதான் பண்ண முடியும்?ஆனாலும் ஏதோ ஒரு விநோதமாக இதில் நமக்கே கொஞ்சம் ஸ்வயேச்சை, ஸ்வாதந்திரியம் இருந்து நாமாகப் புருஷ யத்தனம் பண்ணி இந்த மற்ற எல்லா விஷயங்களையும் நடத்திக் கொள்கிற மாதிரிதானே இந்த நாடகம் நடக்கிறது?அதனால் இதில், அவன் கையிலேயே இருக்கிற மற்ற எல்லா விஷயங்களிலும் நம் இஷ்டம், நம் பிரயாஸை இவற்றைக் கொண்டு நாமே செய்து கொள்கிற மாதிரிதான், மரணம் அவன் கையிலேயே இருந்தாலும் இந்தப் பிறவி நீங்குமுன் ஜனன மரணத்தைத் தாண்டுவதற்கான யோக்யதையை நாமே ஸம்பாதித்துக் கொண்டுவிட வேண்டும் என்ற நோக்கத்தில் ஆயுஸ் ரக்ஷணை செய்து கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். இதற்காகவே உடம்பை ஜாக்ரதையாகக் காப்பாற்ற வேண்டும்.

இதற்கு உதவும்படியாகத்தான் அநேக ரிஷிகள் ஆயுர்வேத சாஸ்திரங்களைச் செய்து கொடுத்திருக்கிறார்கள்.

ஆயுர்வேதத்தில் இந்த விஷயம் தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கிறது. "நாஸ்திகனுக்கு வைத்யம் செய்யாதே"என்று அதில் சொல்லியிருக்கிறது. அது இந்த உள்ளர்த்தத்தில்தான். கேட்கிறபோது, 'இதென்ன?கருணையில்லாமல் இப்படிச் சொல்லியிருக்கே!'என்று தோன்றலாம். ஆனால் உண்மையில் இப்படிச் சொன்னதே கருணையில்தான். வியாதியில்தான் கஷ்டம் தெரிகிறது. கஷ்டம் என்று வரும்போதுதான் எப்படியாவது மீள வேண்டுமென்ற தவிப்பில், 'கடவுள் இருப்பது நிஜமானால், வேத சாஸ்திரம் நிஜமானால் என்னை அவன் காப்பாற்றட்டும்;நான் அப்புறம் சாஸ்திரப்படி பண்ணுகிறேன்'என்று ஒரு நாஸ்திகன் பகவான் பக்கம் திரும்பத் தான் செய்வான். பகவானும் அவனை சொஸ்தப்படுத்தினாலும் படுத்துவான். அப்பர், கூன்பாண்டியன் மாதிரியானவர்கள் நாஸ்திகர்களானபோது, ஈச்வர ஸங்கல்பத்திலேயே அவர்களுக்கு வியாதி வந்து அப்புறம் ஈச்வர சக்தியிலேயே அவர்கள் குணமானதையும், அதனால் அநேகம் பேர் வேதத்துக்குத் திரும்பி ஆஸ்திகர்களாக ஆனதையும் பற்றிப் படிக்கிறோம். அந்தக் காலத்தில்தான் அப்படி நடந்தது என்றில்லை. இப்போதும் அநேக நாஸ்திகர்கள் வேங்கடாசலபதி, குருவாயூரப்பன், இல்லாவிட்டால் யாரோ ஒரு மஹான் அல்லது ஸித்த புருஷரின் அநுக்ரஹத்தால்

ரொம்பவும் உக்ரமான ஏதோ ஒரு பிணி தீர்ந்ததில்தான் தெய்வநம்பிக்கை உள்ளவர்களாக மாறியிருக்கிறார்கள் என்று அவர்களே எழுதிப் படிக்கிறோம். வைத்தியமே இல்லை என்றால்தான் ஒரு நாஸ்திகன் பகவான் பக்கம் திரும்ப அதிகம் 'சான்ஸ்'உண்டு. பகவானுக்கும் இவனைக் காப்பாற்றுவதன் மூலம் இன்னம் அநேகரைத் திருப்பிக் கொள்ளும் 'சான்ஸ்'கிடைக்கும்!காப்பாற்றாவிட்டாலும் கடைசி காலத்தில் இந்த நாஸ்திகன் அவனை நினைத்தற்காக அடுத்த ஜன்மாவில் ஆஸ்திக்ய புத்தி உள்ளவனாகப் பிறப்பிப்பான்.

வைத்தியம் செய்து வியாதியைப் போக்காததால் ஒரு நாஸ்திகன் கஷ்டப்பட்டுக்கொண்டே இருக்கவேண்டியதாகும் அல்லவா?இந்தக் கஷ்ட அநுபவத்தால் அவனுடைய பாபம் குறையும். இது ஒரு உபகாரந்தானே?பாபத்தைப் போக்கிக்கொள்ள அவன் வேறு எந்த அநுஷ்டானமும் பண்ணாதவனாச்சே!

நாஸ்திகனுக்கு வைத்யம் பண்ணி ஆயுஸை விருத்தி பண்ணுவதால் அவன் நாஸ்திக்ய பாபத்தையும் விருத்தி செய்து கொள்வதாகவே ஆகும். அவனால் ஊர் கெடுவதற்கும் ஜாஸ்தி வாய்ப்புத் தந்ததாகும். இந்த மஹா தோஷமெல்லாம் அவனுக்குச் சேர வேண்டாமென்ற கருணையால்தான் அப்படிச் சொன்னது. இந்த விஷயம் இருக்கட்டும்.

நான் சொன்னவற்றிலிருந்து என்ன ஏற்படுகிறதென்றால் மத ரீதியாகவும், வேதாந்த த்ருஷ்டியாகவும் பார்த்தால்கூட சரீர ஸம்ரக்ஷணம் அவசியந்தான். "தர்மத்தை ஸாதிப்பதற்குரிய கருவியாக இருப்பது இந்த சரீரமே அல்லவா? சரீரம் ஆத்யம் கலு தர்ம ஸாதநம் ?"என்றே காளிதாஸன் எழுதிவைத்துவிட்டுப் போயிருக்கிறான்1. "சுவரை வைத்தே சித்ரமெழுதணும்"என்பது இதுவே. ஹோமத்துக்கு தர்ப்பையும் ஸமித்தும் நெய்யும் மற்ற ஆஹுதி திரவியங்களும் எப்படி ஸாதனமோ அப்படியே ஹோமம் பண்ணுகிற யஜமானனின் உடம்பு ஒரு ஸாதனம். இது இல்லாவிட்டால் எப்படி லோக க்ஷேமார்த்தம் வேத வேள்விகள் நடக்க முடியும்?இந்த வாழ்க்கையே ஒரு ஹோமமாகிறபோது அதிலே ஆஹுதிவாவதற்கே ரக்ஷித்துக்கொள்ள வேண்டிய ஸாதனமாக சரீரம் ஆகிறது.

'நெல்லுதான் முக்யம், உமியை உதறிவிட வேண்டும்;ஆத்மாதான் நெல்லுமணி, சரீரம் உமி மாத்திந்தான்'என்று ரொம்பவும் வேதாந்தமாகச் சொல்வதுண்டு. ஆனால் இந்த உமியையும் உதறிவிடாமல் ஹோமத்துக்கு என்று சேகரித்து வைக்கிறோம்!நெல்லை ஹவிஸ்ஸாக்கி ஆஹுதி பண்ணுகிறோமென்றால், அந்த ஆஹுதியை ஏற்றுக்கொள்கிற அக்னி விருத்தியாவதற்காக உமியையே பிரயோஜனப்படுத்துகிறோம்!அந்த உமியைப் போலவே இந்த சரீரத்தையும் ரக்ஷிக்க வேண்டும்.

மொத்தத்தில் இதுவரை நான் சொன்னதில் என்ன ஏற்படுகிறதென்றால், சரீரம் எக் கேடு கெட்டாலும் பொருட்டில்லை என்று ஆத்மாவிலே ஆணி அடித்த மாதிரி நிற்கிற பக்வம் வருகிறவரை, அல்லது அடுத்த பக்ஷமாக எத்தனை உடம்புக்கு வந்தாலும் அதை கவனிக்காமல் ஈச்வர த்யானம் பண்ணுகிற 'ஸ்டெடினெஸ்'வருகிற வரை, உடம்பை வியாதி வக்கையில்லாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டியவர்களாகவே இருக்கிறோம்.

மீமாம்ஸை என்று ஒரு சாஸ்திரம். அதிலே பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை என்று இரண்டு பிரிவு2. பூர்வ மீமாம்ஸை கர்ம மார்க்கத்தையும் அதைச் சேர்ந்த தர்மாநுஷ்டானங்களையும், உத்தர மீமாம்ஸை ஞான மார்க்கத்தையும் சொல்பவையாகும். இந்த இரண்டுக்கும் சரீர ரக்ஷணை செய்துகொள்ள வேண்டியதாயிருக்கிறது. ஸமாதியில் நிஷ்டை கூடுகிற ஸ்திதி உண்டாகிறவரை ஞானமார்க்கக்காரனும் அநேக ஞான நூல்களைப் படித்து ஆத்ம விசாரம் பண்ணுவதற்காக ஆரோக்யத்தைப் பேணிக் கொள்ள வேண்டியிருக்கிறது.

யோகத்தில் ராஜயோகம் பண்ணும்போது ஆஸனம், பிராணாயாமம் ஆகியவை நல்ல ஆரோக்யத்தையும் தருபவைதாம். ஹடயோகத்திலோ உடம்பை ஆச்சர்யமான சக்தி உள்ளதாக ஆக்கிக் கொள்கிறார்கள்.

---

â¡Á Í¡Á ¬êõ R˜î£‰î˜F™ ÃøŠð´Aø¶.

1. 'குமாரஸம்பவம்'5.33

2. "தெய்வத்தின் குரல்"இரண்டாவது பகுதியில் "மீமாம்ஸை :கர்ம மார்க்கம்"என்ற உரை பார்க்க.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** ஆயுர்வேதம் **)**

**மணி, மந்திரம், ஔஷதம்**

**ச** ரீர ரக்ஷைக்கு மூன்று வழி சொல்வார்கள் - மணி, மந்திரம், ஔஷதம் என்று. நவரத்தினங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வித வியாதிகளைப் போக்கும் குணமுண்டு. நவரத்தினங்களில் ஒவ்வொன்றும் நவக்ரஹங்களில் ஒவ்வொன்றுக்குப் பிரீதியானவையாகும். வியாதி என்பது கர்மாவால் ஏற்படுவதே என்றாலும் அந்தக் கர்மா ஒவ்வொரு கிரஹக் கோளாறாக ரூபம் எடுத்து உண்டாகிறது. ஆகையால் அதற்கு சாந்தியாக நவரத்தினங்களில் அந்த கிரஹத்துக்குரியதை மோதிரமாக, மாலையாகப் பண்ணிப் போட்டுக் கொள்வது, அந்த மணியால் மூர்த்தி பண்ணி அதற்கு அபிஷேகித்த தீர்த்தத்தைப் பானம் பண்ணுவது என்றெல்லாம் ஒரு வழி. இதுதான் 'மணி, மந்திர, ஔஷதம்'என்பதில் 'மணி'. நவரத்தினத்தை நவமணி என்றும் சொல்கிறோமல்லவா?மணிகளைப் போலவே ஸ்வர்ணம் ரஜதம் (வெள்ளி), தாம்ரம், பாதரஸம் முதலான லோஹங்களைக் கொண்டும் சிகித்ஸை செய்து கொள்வதுண்டு.

மந்த்ர ஜபம், ஜ்வரஹரேச்வரர் கம்பஹரேச்வரர் என்றெல்லாம் வியாதிகளைப் போக்கவே உள்ள மூர்த்திகளுக்குரிய மந்த்ரங்களை ஜபிப்பது, ஸூர்ய நமஸ்காரம் கந்தரநுபூதி பாராயணம் முதலியவற்றால் நோயை குணப்படுத்திக் கொள்வது - ஆகியனதான் (மணி, மந்திரம் என்பதில்) இரண்டாவதான 'மந்த்ரம்'.

'ஔஷதம்'என்பது மருந்து மூலம் குணம் செய்து கொள்ளும் மருத்துவ சாஸ்திரம். வைத்தியம் என்பது இதைத்தான். ஓஷதி என்றால் மூலிகை. அதன் அடியாகப் பிறந்த சொல்தான் ஔஷதம். முக்யமாக மூலீகைகளை அதாவது பச்சிலைகளைக் கொண்டே மருந்துகளைச் செய்வதுதான் ஆயுர்வேதம். பவள பஸ்மம், முத்து பஸ்மம், தங்க பஸ்மம் ('பஸ்பம்'என்றே பொதுவில் சொல்கிறார்கள்) என்பது போல மணி, லோஹங்களை எப்போதாவது பிரயோஜனப்படுத்தினாலும் ஆயுர்வேதத்தில் முக்யமான மூலச்சரக்கு மூலிகைகள்தான்.

ஸித்த வைத்தியத்தில்தான் மணி, லோஹம், பாஷாணம், மற்ற தாதுப் பொருட்களைக் கொண்ட மருந்துகள் ஜாஸ்தி. ஸித்த வைத்யமும் நம் சாஸ்திர ரீதியானதுதான். ஆனால் வீர்யம் ஜாஸ்தி. தப்பினால் ரொம்பக் கெடுதல் உண்டாய்விடும். துளிப்போல சூர்ணம்தான் டோஸேஜ் ஆனாலும் potency (உள் சக்தி) மிகவும் அதிகம். அதனால் ஜாக்ரதையாக சிகித்ஸை செய்ய வேண்டும். அகஸ்தியர், தேரையர் முதலான ஸித்த புருஷர்கள் நமக்குப் புரியாத பரிபாஷையில் ஸித்த வைத்ய சாஸ்திரங்களைக் கொடுத்திருக்கிறார்கள். 'பவர்'ஜாஸ்தி என்பதாலேயே இப்படி எல்லாருக்கும் புரியாதபடி ஜாக்ரதை பண்ணி எழுதி வைத்திருக்கிறார்கள்.

ஸித்த வைத்தியம், ஆயுர்வேதம் இரண்டிலுமே மணி ஸம்பந்தமும் இருக்கிற மாதிரி, மந்திர ஸம்பந்தத்தையும் சேர்த்து மருந்தை மேலும் effective-ஆகப் பண்ணுவதுண்டு. நல்ல ஸம்பிரதாயத்திலே வந்த வைத்யர்கள் அநேக மந்த்ரங்களை ஜபித்தபடியே ஔஷதங்களைப் பண்ணி ஜபித்துத் தருவார்கள். த்ரயம்பக மந்த்ரம், அச்யுத-அநந்த-கோவிந்த என்ற நாமத்ரயம் (மூன்று திருநாமங்கள்) தன்வந்தரி, அச்வினி தேவர்கள், ஸூர்யன் முதலான மூர்த்திகளுக்கான மந்திரம், கவசம் முதலியவற்றை மருந்தோடு சேர்த்துக் கொள்வதுண்டு. அகஸ்தியர் ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு உபதேசித்த "ஆதித்ய ஹ்ருதயம்"பிரஸித்தமாயிருக்கிறது. விஷக் கடிகளுக்கு என்ன மூலிகை, சிந்தூரம் (சித்த வைத்ய சூர்ண்த்தை சிந்தூரம், செந்தூரம் என்று சொல்வார்கள்) கொடுத்தாலும் மந்திர

ஜபம்தான் முக்யமாயிருக்கிறது. ஸர்ப்பங்கள் பயந்து நடுங்குகிற கருட பகவானைக் குறித்த மந்திரத்துக்கு விஷம் இறங்குவதில் ஆச்சர்யமான சக்தி இருக்கிறது.

நம்முடைய ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஒரு ச்லோகத்தில்*1 அம்பாளை ஸகல அவயங்களிலிருந்தும் அம்ருத ரஸ கிரணங்கள் பெருகுகிற சந்திர காந்த சிலா வர்ண மூர்த்தியாக த்யானம் செய்வதால் ஒருத்தன் கருடனைப் போலப் பாம்பு விஷத்தை சமனம் செய்கிற சக்தி பெற்று விடுகிறானென்றும், இப்படிப்பட்டவனுக்கு அம்ருத நாடி என்று உண்டாகி அதன்பின் இவனுடைய த்ருஷ்டிபட்டாலே பிறரின் ஜ்வரதாபம் இறங்கிவிடுமென்றும் சொல்லியிருக்கிறார். இந்த ச்லோக ஜபத்தாலேயே விஷம், ஜ்வரம் முதலியவைகளை நிவ்ருத்தி செய்துவிட முடிகிறது. 'ஸௌந்தர்ய லஹரி'யின் வேறு பல ச்லோகங்களை ஜபிப்பதற்கும் இவ்வாறு பலவிதமான வியாதி நிவிருத்தி சக்தி இருக்கிறது. நாராயண பட்டத்திரி 'நாராயணீயம்'பண்ணியே அவருடைய வயிற்று உபாதை நீங்கியதால் அதையும் நோய் தீருவதற்காகப் பாராயணம் பண்ணுகிறார்கள். " **இருமலுரோக முயலகன் வாத** "என்று ஒரு திருப்புகழ உண்டு. அதுவும் ஸர்வ வியாதி நிவ்ருத்திக்காக ஜபிக்கப்படுகிறது. ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் கூன்பாண்டியனை ஸ்வஸ்தப்படுத்துவதற்காகச் சொன்ன திருநீற்றுப்பதிகத்தையும் பல ஆவிருத்தி ஜபித்து விபூதி இடுவதுதுண்டு. வியாதியஸ்தரே விபூதியில், அல்லது ஜலம், தேன், பால் போன்ற ஒன்றில் ஜபித்து அதை இட்டுக் கொள்வதோ பானம் பண்ணுவதோ உண்டு. அல்லது அவருக்கு ரொம்ப அசக்தமானால் அவருக்காக இன்னொருத்தர் பண்ணி, விபூதியானால் இட்டு விட்டு வாயில் போடலாம்;தேன், பால் போன்றவற்றை நோயாளி குடிக்கப் பண்ணலாம். 'மந்த்ர ராஜா'என்கிற காயத்ரியையும் இப்படி வியாதிகள் ஸ்வஸ்தமாவதற்கு ஜபிப்பதுண்டு.

விபூதிக்கு இதிலே தனியான சக்தி. நாட்டு ஜனங்களுகளுங்கூட என்ன உடம்பானாலும் "துண்ணூறு"என்று திருநீறு வாங்கி இட்டுக் கொள்வதையும் வாயில் போட்டுக் கொள்வதையும் பார்க்கிறோம். விஷயம் தெரிந்தவர்கள் பஞ்சாக்ஷர, ஷடக்ஷரங்களைச் சொல்லி தாரணம் பண்ணிக் கொள்வார்கள். திருச்செந்தூர் விபூதி ஸர்வரோக ஹரணமென்று ஆசார்யாளே ஸ்தோத்திரித்திருக்கிறார்*2. "பன்னீர் இலையில் வைத்துத் தரும் அந்த விபூதியை முழுங்கணும், இட்டுக்கணும் என்பதெல்லாங் கூட வேண்டாம். வெறுமே க்ஷணம் பார்த்தாலே போதும் - " **விலோக்ய க்ஷணாத்** "- fits, குஷ்டம், துர்வியாதிகள், ஜ்வரம், பைத்தியம், குன்மம், ஆவிசேஷ்டை எல்லாமே ஓடிப்போய்விடும் என்கிறார். பழநியாண்டவரின் மூர்த்தம் மூலிகைச் சாறுகளை இறுக்கிப் பண்ணியதே என்பார்கள். அதனால் அவருக்கு அபிஷேகமாகிற தீர்த்தம் முதலானவற்றையும் வியாதி நிவ்ருத்திக்குக் கொடுப்பதுண்டு. குருவாயூர் தைலம், திருச்சூர் நெய், இன்னம் அநேக க்ஷேத்ரங்களில் இப்படியே மருத்துவ சக்தி உள்ளதாகப் பிரஸாதம் கொடுக்கிறார்கள். பிரஸாதமென்று ஸ்தூலமாகத் தராமல், 'ïì‰«î ñ¬ô ãÁA«ø¡', 'ÜƒèŠ Hóîÿí‹ ð‡µA«ø¡', 'ñ£ƒè™ò‹ ê£ˆ¶A«ø¡'â¡ªø™ô£‹ «õ‡®, ªè£‡ì£«ô «õƒèìóñí võ£I bó£î Mò£Fªò™ô£‹ b˜ˆ¶ ¬õ,Aø£˜. ðó«ñ„õóÂ‹ ðõ«ó£è‹ â¡Â‹ ú‹ú£ó Mò£F¬ò ñ†´I¡P, Ü‰î ú‹ñú£óˆF«ô õ¼Aø Ü«ïè «ó£èƒè¬÷ˆ b˜Šðî Ÿè£è '¬õˆòï£î võ£I'â¡«ø ªðò˜ ¬õˆ¶,ªè£‡´ ¬õˆb„õó¡ «è£JL™ M÷ƒ°Aø£˜. àŠ¹, ªõ™ô‹ è¬óAø ñ£FK Mò£F è¬óõî£™ Üƒ«è Þõÿ¬ø, è¬óŠðî£è «õ‡®, ªè£œõ£˜èœ.

பரமேச்வரனுக்குரிய பில்வ பத்ரம், பெருமாளுக்குரிய துளசி, அம்பாளுக்கு (முக்யமாக மாரியம்மனுக்கு) விசேஷமான வேம்பு - இந்த மூன்று இலைகளை ஒரே அளவு சேர்த்து தினந்தோறும் ஒரு பிடி தின்றுவிட்டால் போதும்;எந்த வியாதியும் வராது என்று ஒரு நாட்டு வைத்தியர் எழுதியிருக்கிறார்.

வேப்பங்காற்றே ரத்த சுத்தி உண்டாக்குவதென்றும் அதோடு கர்ப்பக் கோளாறுகளைப் போக்குவதென்றும், அரசமரக் காற்றுக்கும் கர்ப்பப் பை நோய்களை நிவ்ருத்தி செய்கிற சக்தி இருக்கிறதென்றும், அரசுக்கும் வேம்புக்கும் கல்யாணம் பண்ணி வைத்து, புத்ர ஸந்தானமில்லாதவர்கள் அதைப் பிரதக்ஷிணம் பண்ண வேண்டுமென்று வைத்திருப்பதில் இப்படி வைத்ய சாஸ்திரப் பிரகாரமே ஸந்ததி உண்டாவதற்குக் காரணம் தெரிகிறதென்றும் அவர் சொல்லியிருக்கிறார்.

பூஜையில் தூபம் போடுவது, கர்ப்பூரம் கொளுத்துவது ஆகியனகூட பீவீஷவீஸீயீமீநீமீ'ணீஸீமீ'-ஆக (க்ருமி நாசினியாக) அநேக வியாதிகளைத் தடுக்கிறது என்று எழுதியிருக்கிறார்கள்.

அசையாத நம்பிக்கையாக பக்தி இருந்தால் அதனாலேயே ரோக நிவ்ருத்தி முதலான எதையும் ஸாதித்துக் கொண்டுவிடலாம்;அல்லது ரோகம், ஆரோக்யம் எதுவானாலும் வித்யாஸமில்லை என்கிற உசந்த நிலையை ஸம்பாதித்துக் கொள்ளலாம். இதிலே வைத்ய சாஸ்திரத்துக்குப் பிடிபடாத மந்திரம், பிடிபடுகிற மூலிகைகள், வேம்பு துளஸி மாதிரியான மருந்துச் சரக்குகள் எல்லாமே கலந்து வரலாம்.

------------------------------------------------------------------------------------------------------------------------**

கிரந்தீம் அங்கேப்ய எனத் தொடங்கும் இருபதாவது ச்லோகம்

*2 ú§Šóyñ‡ò ¹üƒè^F™ Üðvñ£ó â¡Á ªî£ìƒ°‹ 25-õ¶ „«ô£è‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ஆயுர்வேதம் )

## ஆயுர்வேதமும் மத ஆசரணையும்

**ஆ** யுர்வேதம் என்று மெடிகல் ஸயன்ஸாகத் தனியே ஒன்றைப் பார்க்கும்போது அதற்கு இவ்வளவு தெய்வ ஸம்பந்தம் கிடையாது. ஆனாலும் அல்லோபதி (இங்கிலீஷ் வைத்தியமுறை), யுனானி மாதிரி அடியோடு தெய்வ ஸம்பந்தமே இல்லாமலும் இல்லை. நாஸ்திகனுக்கு வைத்யம் பண்ணவேண்டாம் என்று இந்த சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதே அதற்கு ஒரு proof.

ஈச்வர த்யானத்தோடுதான், குறிப்பாக, பகவான் மஹாவிஷ்ணு அம்ருத கலசத்தைப் பாற்கடலிலிருந்து கொண்டு வந்தபோது எடுத்த தன்வந்திரி என்ற அவதாரத்தை ஆராதித்துத்தான் ஆயுர்வேதம் அப்யஸிப்பது வழக்கம்.

அதோடுகூட நம் மத சாஸ்திரங்களுக்கு மிகப் பெரும்பாலும் விரோதமில்லாமலே இருக்கிற வைத்ய முறை ஆயுர்வேதந்தான். இங்கிலீஷ் மருந்துகள், சிகித்ஸை முறை முதலியவற்றில் சாஸ்திரம் ஒப்புக்கொள்ளாத அநாசாரங்கள் ஏகப்பட்டவையாக வந்து சேரும். ஆயுர்வேதத்தில் இப்படி இல்லை. பூண்டு, கீண்டு மாதிரி ஏதோ ஒன்றிரண்டு தவிர அநாசார வஸ்துகள் பெரும்பாலும் ஆயுர்வேதத்தில் கலப்பதில்லை. இவற்றுக்கும் பிற்பாடு பிராயசித்தம், புண்யாஹவாசனம் சொல்லிப் பரிஹாரம் வைத்திருக்கிறது. ஆஸ்திகர்கள் இங்கிலீஷ் வைத்யத்துக்கு கூடியமட்டும் போகாமலிருப்பதுதான் சிலாக்யம். ஆயுர்வேதம் உடம்பில் பிடிக்க நாள் பிடிக்கிறது, இங்கிலீஷ் மருந்தானால் உடனே ரிஸல்ட் தெரிகிறது என்கிறார்கள். நாளானாலும் மூலம் வரைக்கும் போய் ரோகத்தைப் போக்குவது ஆயுர்வேத ம்;இங்கிலீஷ் வைத்யம் இப்படி இல்லை என்றும் விஷயம் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். அநேகமாக தற்கால சாந்தியாகவே அல்லோபதி ஸரிப்படுத்துகிறது என்கிறார்கள். அதோடு இங்கிலீஷ் மருந்திலே ஒன்றை ஸரி செய்து கொள்ளப் போவதில், அது ஸரியானாலும், after-effect,side-effect என்றெல்லாம் வேறு பல உபத்ரவங்கள் உண்டாவது போல ஆயுர்வேதத்தில் உண்டாவதில்லை. வைத்தியம் ஆரம்பிக்கும்போது சில உபாதைகளைக் கிளறி விட்டாலும் அது நீண்டகாலக் கோளாறாகிவிட்டால் சீக்கிரத்திலேயே தணிந்து போய்விடும்.

வேத சாஸ்திரங்களுக்கு ஒத்துப் போவதாகவே நம்முடைய வைத்ய சாஸ்திரம் இருக்க வேண்டுமென்பது முக்யம். உடம்பைக் காப்பாற்றிக் கொள்வது முக்யம் என்பதற்காக வேத சாஸ்திர விருத்தமாக (விரோதமாக)ப் போகக்கூடாது. ஏனென்றால் இப்படி விருத்தமாகப் போனால் அதுதான் நாஸ்திக்யம்*1. நாஸ்திகனுக்குத்தான் வைத்யமே பண்ணக்கூடாதே!

ஸமய சாஸ்திரமும் ஆயுர்வேத சாஸ்திரமும் மிகப் பெரும்பாலும் ஒத்துப்

போகின்றவையாகும். ஸமய சாஸ்திரம் முக்யமாக மநுஷ்யனின் மூன்று குணங்களான ஸத்வ, ரஜோ, தமோ குணங்களில் எதுவும் ஏறிப் போகாமல் ஒன்றையொன்று ஈடுகட்டிக் கொண்டு 'ந்யூட்ரலைஸ்'பண்ணி மனஸை ஆடாமல் ஸமநிலைப்படுத்துவதற்காகத் தான் ஏற்பட்டது 'ஸாங்க்யம்'என்னும் தர்சனத்தில் (தர்சனம் என்றால், சுருக்கமாக, ஆத்ம சாஸ்த்ரம் என்று வைத்துக்கொள்ளுங்கள்) இதைப்பற்றி விரிவாகச் சொல்லியிருப்பது அடிப்படையில் வைதிக தர்மத்துக்கும் ஏற்புடையதுதான். க்ருஷ்ண பரமாத்மா கீதையில் இந்த முக்குணங்களைப் பற்றிப் பல அத்யயாங்களில் சொல்லியிருக்கிறார். ஸாங்க்யமும் யோகமும் கைகோத்துக் கொண்டு போகிற தர்சனங்களாதலால் யோக சாஸ்திரத்திலும் த்ரி குணங்களுக்கு 'இம்பார்டன்ஸ்'கொடுத்திருக்கிறது. இப்படி ஆத்ம வித்தைக்கு வேதோக்தமாக இருக்கிற ஸத்வ-ரஜோ-தமோ குண 'பாலன்ஸிங்'கேதான் (ஸமநிலைப்படுத்துவதேதான்) நம்முடைய வைத்ய சாஸ்த்ரத்தில் சுப-வாத-பித்த தாதுக்களின் 'பாலன்ஸிங்'ககா ஆகிறது!

ப்ரக்ருதி, மாயை, அவித்யை என்றெல்லாம் சொல்கிற ஜீவ-ஜகத் கோளாறுகளுக்கெல்லாம் முக்குணம் தான் காரணமாதலால் இதுகளை பாலன்ஸ் பண்ணி மனஸை ஸம நிலைக்குக் கொண்டு வந்துவிட்டால் எல்லாம் சாந்தமாக அடங்கிப் போகும் என்று வேதாந்தம் சொல்கிறதென்றால், அதையே ஆயுர்வேதம், 'சரீரக் கோளாறுக்கெல்லாம் கப-வாத-பித்தம் என்று மூன்று தாதுக்கள்தான் காரணம். இவற்றை ஒன்றுக்கொன்று ஈடுகட்டிவிட்டால் சரீரம் ஸௌக்யமாயிருக்கும்'என்கிறது. சித்தத்தை வைத்து வேதாந்தம் பேசுவதையே சரீரத்துக்குப் பொருத்தி ஆயுர்வேதம் பேசுகிறது. பிரகிருதியிலுள்ள இத்தனை ஆயிரம் க்ருத்ரிமத்துக்கும் மூலம் மூணே குணங்களில் அடங்கிவிடுகிறது என்கிறாற்போலவே சரீரத்துக்கு வருகிற இத்தனை ஆயிரம் நோய் நொடிகளுக்கம் மூலம் மூன்று தாதுக்கள்தான் என்று ஆயுர்வேதம் நிர்ணயம் பண்ணிவிடுகிறது.

கபம் என்பது உங்களுக்குத் தெரியும். சளி, க்யம், ப்ளூரிஸி, நிமோனியா எல்லாம் அதனால் வருவதுதான். முக்யமாக ச்வாஸ கோசத்தைப் பற்றியது இது. ஆனால் ரக்த ரூபத்தில் சரீரம் முழுதும் வியாபிப்பது. வாதம் என்றாலும் வாயு என்றாலும் ஒன்றேதான். காற்று என்று அர்த்தம். பிடிப்பு, எலும்புகளில் வலி, முடக்கு, உடம்பு கனத்துப் போகிறது ஆகியவை எல்லாம் இதிலிருந்து உண்டாகிறவை. ரூமேடிஸம், ஆர்த்ரைடிஸ், அது, அது, இது என்று ஏதேதோ பேர் சொல்கிற வியாதிகளுக்கு வாதம்தான் காரணம். காற்று என்றவுடன் மூச்சு, அதனால் ச்வாஸ கோச ஸம்பந்தம் என்று தோன்றிவிடலாமாயினும், சரீரம் பூராவுமே நாடி சலனத்தில் வாயுவின் வியாப்தி (பரவுதல்) தான் ஏற்படுவதால் இதுவும் தேஹம் முழுவதையும் குறித்த தாதுதான். பித்தம் என்பது பித்த நீரை முக்கியமாகவும், ஜீர்ணத்தில் சுரக்கிற எல்லா நீர்களையுமே பித்த நீர் பாதிப்பதால் அவை அனைத்தையும் பற்றியதாகவும் கருதப்படுகிறது. அதனால் இது ஜீர்ண உறுப்புகளோடு நின்றுவிடுவது என்று அர்த்தமில்லை. ஜீர்ணித்த அன்ன ஸாரம் ரத்தமாகத்தானே ஆகி சரீரம் பூராவும் ஓடுகிறது?அதனால் பித்தத்தினால் ஏற்படுகிற கோளாறுகளும் தேஹம் முழுவதையும் பாதிப்பதுதான். நாடி பார்த்தே மூன்றில் எந்த தாதுவின் கோளாறு என்று கண்டுபிடித்து ஸரி செய்ய ஆயுர்வேதம் வழி சொல்கிறது.

நமக்குக் குறிப்பாக சரீரத்தின் ஒவ்வொரு பாகத்தில் மட்டுமே இந்த ஒவ்வொரு தாதுவும் ஸம்பந்தப்படுவதாக தோன்றினாலும், இவை வாஸ்தவத்தில் தேஹம் முழுதிலும் வியாபித்திருப்பதால் தான் ஹ்ருதயம், மூளை, கண், காது, மூக்கு, வாய் உள்பட எந்தக் கோளாறானாலும் முதலில் தாது பார்த்தே ஆயுர்வேதத்தில் ட்ரீட்மெண்ட் ஆரம்பிக்கிறார்கள்.

நம்முடை வைத்ய சாஸ்திரம், வேதாந்த சாஸ்திரம் எல்லாம் வெளி நாடுகளுக்குப் பரவியபோது இதையே க்ரீஸ் முதலான தேசங்களில் நாலு தாதுக்களாக நாலு humour-கள் என்று ஆக்கினார்கள். முக்குணம், மூன்று தாது என்பதோடு பஞ்ச பூதக் கொள்கையையும் சேர்த்து அவர்கள் நாலு ஹ்யூமர் என்று வைத்துக் கொண்டார்கள். ஸூக்ஷ்ம அநுபவமுள்ளவர்களுக்கே புரியக்கூடிய ஆகாச பூதத்தை அவர்கள் விட்டு விட்டு மற்ற நாலு பூதங்களை மட்டும் எடுத்துக் கொண்டார்கள். நாலு ஹ்யூமர்களாக சரீரத்திலுள்ள தாதுக்களே ஒருவனின் குணத்தை நிர்ணயம் பண்ணுவதாகவும் அவர்கள் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். phlegm - கபம், choler - பித்தம், melancholy -இதுவும் இன்னொரு

தினுஸான பித்தம்தான், blood - அதாவது ரத்தம் என்பவை நாலு ஹ்யூமர்கள். ரத்த சுத்திகரிப்பு ச்வாஸத்தாலேயே நடப்பதால் ரத்தத்தை 'வாதம்'என்று வைத்துக் கொள்ளலாம். இவற்றைக் குணங்களோடு பொருத்தி ஒருத்தனுக்கு 'ஃப்ளெம்'(கபம்) ஜாஸ்தியிருக்கிறபோது அவன் எல்லாவற்றிலும் அசட்டையாக, மந்தமாக அடங்கியிருப்பானென்றும் (இதை 'ஸத்வம்'மாதிரி என்று வைத்துக் கொள்ளலாம்), 'காலர்'அதிகமானால் ரொம்பக் கோபிஷ்டனாயிருப்பானென்றும் (இதுதான் ரஜோகுணம்) 'மெலங்கலி'அதிகமானால் அழுமூஞ்சியாக, சிந்தா க்ராந்தனாக இருப்பானென்றும் (இதைத் தமஸில் ஒருவிதம் எனலாம்), ப்ளட் ஜாஸ்தியானாலும் ரொம்ப உணர்ச்சி வசப்பட்டவனாயிருப்பானென்றும் (இதுவும் ரஜஸ்தான்) அவர்கள் வைத்துக் கொண்டார்கள்*2....

முக்குணம், மூன்று தாது என்பதில் நம்முடைய புராதனமான வைத்ய சாஸ்திரம் வைதிக சாஸ்திரத்தோடு ஒத்துப் போகிறதென்று சொல்லிக் கொண்டிருந்தேன். இப்படியேதான் தர்ம சாஸ்த்ரோக்தமான பஞ்ச கவ்யமே வைத்ய சாஸ்த்ரோக்தமாகவும் விதிக்கப்பட்டிருக்கிறது. பாப பரிஹாரத்துக்காக தர்ம சாஸ்த்ரம் பசுவின் பால், தயிர், நெய், சாணம், மூத்ரம் ஆகிய ஐந்தையும் சேர்த்த பஞ்ச கவ்யத்தை உட்கொள்ளச் சொல்கிறது. அதையே வியாதிக்குப் பின் பலஹீன ஸ்திதியில் புதிதாக நோய்க் கிருமிகள் தாக்காதபடித் தடுப்பதற்காக வைத்ய சாஸ்திரத்திலும் சாப்பிடச் சொல்லியிருக்கிறது.

நம்முடைய வைதிக சாஸ்திரங்களில் பாபம் - புண்ணியம் என்று சொல்லியிருக்கிற இப்படிப்பட்ட பலவற்றையே ஆயுர்வேதத்தில் ஹிதம்-அஹிதம், அதாவது சரீரத்துக்கு நல்லது செய்வது-கெட்டது செய்வது என்பதாகச் சொல்லியிருக்கும். ஆசாரம் புண்யத்திலும் அநாசாரம் பாபத்திலும் சேர்ப்பதல்லவா?அதனால் நம்முடைய வைத்ய சாஸ்திரத்தில் பெரும்பாலும் அநாசாரம் அஹிதமானதாகத் தள்ளப்பட்டுத்தானிருக்கும். இதனால்தான், தவிர்க்க முடியாமல் அல்லோபதிக்குத்தான் போகவேண்டுமென்று இருந்தாலொழிய மற்ற உடம்புகளுக்கு ஆயுர்வேதப் பிரகாரமே நம்முடைய தர்மாசாரங்களில் நம்பிக்கையுள்ளவர்கள் சிகித்ஸை செய்துகொள்ள வேண்டுமென்கிறேன். காட் லிவர், லிவர் எக்ஸ்ட்ராக்ட் என்று எடுத்ததெற்கெல்லாம் அநாசாரத்துக்குப் போக வேண்டாமென்கிறேன்.

-------------------------------------------------------------------------------------------------------------------------------

* 1. ï£vFè‹ â¡ð¶ Þ¬øõ¬ù ï‹ð£¬ñ â¡ð¬îMì «õî î˜ñ º¬øè¬÷ ï‹ð£¬ñ â¡ð«î âÂ‹ Mûò‹ °P˜¶ "ªîŒõˆF¡ °ó™"Þó‡ì£‹ ð°FJ™ "«õî‹"â¡ø à¬óJ™ "«õîº‹ îI›ï£´‹"â¡Â‹ à†HKM™ ð£˜,è.

* 2. Þ‰îŠ ð£ó£ ªð¼‹ð£½‹ Ü®ò£˜ å¼õ˜ ªñ£N‰î¬î ÿêóí˜èœ Hø¼,° â´ˆ¶¬óˆîî£°‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ஆயுர்வேதம் )

### சஸ்த்ர சிகித்ஸை

ஆ பரேஷன்-ஸர்ஜரி என்பது-செய்துகொள்ள வேண்டிய வியாதி என்றால் இப்போது இங்கிலீஷ் வைத்தியத்துக்குத்தான் போகவேண்டுமென்றாகி விட்டது. இது இப்போதைய நிலையில் தவிர்க்க முடியாததுதான். ரொம்பவும் ஆசாரம் பார்க்கிறவர்கள்கூட 'காடராக்ட்'மாதிரி ஏற்பட்டால் இங்கிலீஷ் வைத்ய முறையில் ஆபரேஷன்தான் பண்ணிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதிலே இப்போது நாம் ஒன்றும் பண்ணிக்கொள்வதற்கில்லையென்றாலும் முன்காலத்திலேயே நம்முடைய ஜாக்ரதைக் குறைவால் ஒரு தப்பு ஏற்பட்டுவிட்டதென்பது என் அபிப்ராயம்.

'ஸர்ஜரி'நம்முடைய வைத்ய முறையில் இல்லை என்று நாம் நினைக்கும்படி ஆக்கியிருப்பதுதான் தப்பு. வாஸ்தவத்தில் நம்மிடதான் ஆதியிலேயே, ஆயுர்வேத சாஸ்திரம் ஏற்பட்ட புராதன காலந்தொட்டே 'ஸர்ஜரி'என்பதான சஸ்த்ர சிகித்ஸை இருந்திருக்கிறது. ஆயுர் வேதத்துக்கு இரண்டு பெரியவர்கள் மூல புருஷர்கள். ஒருத்தர்

சரகர், இன்னொருவர் ஸுச்ருதர். இவர்கள் எழுதிய ஸம்ஹிதைகள்தான் ஆயுர்வேதத்துக்கு மூல க்ரந்தங்களாக இருப்பவை. சரக ரிஷி என்பது பதஞ்சலியே எனத் தெரிகிறது. அக்னிவேச்ய ரிஷி எழுதியதைச் சரகர் விஸ்தாரம் செய்திருக்கிறார். வாக்படர் எழுதிய 'அஷ்டாங்க ஹ்ருதய'மும் ஆயுர்வேதத்துக்கு ஒரு அதாரிடி. தமிழ் பாஷையிலும் அநேக பிராசீன நூல்கள் ஸம்பிரதாயமாக வந்திருக்கின்றன. சரகர், ஸுச்ருதர் என்ற இருவரில் சரகர் மருந்து கொடுத்துக் குணப்படுத்துவது பற்றிச் சொல்கிறார். ஸுச்ருதர் சஸ்த்ர சிகித்ஸை செய்து குணப்படுத்துவது பற்றிச் சொல்கிறார். Physician, surgeon என்று இப்போது இரண்டு பேரை சொல்கிறோம். மருந்து கொடுப்பவன் ஃபிஸீஷியன்;சஸ்த்ர சிகித்ஸை செய்பவன் ஸர்ஜன். எம்.பி.,பி.எஸ். என்பதில் இரண்டும் அடக்கம். 'எம்.பி.'என்றால் மருந்து கொடுக்கிறவன்;MedicineBachelor*1. 'பி.எஸ்.'என்றால் ஆபரேஷன் பண்ணுகிறவன்:Bachelor of Surgery. ஆயுர்வேதத்தை நாம் ஜாக்கிரதையாகப் பூர்ண ரூபத்தில் காப்பாற்றி வந்திருந்தால் ஆயுர்வேத வைத்தியர்களும் M.B.,B.S. காரர்கள் மாதிரி மருந்து கொடுப்பதோடுகூட சஸ்த்ர சிகித்ஸை செய்வதிலும் திறமை படைத்தவர்கள ாயிருந்திருப்பார்கள். ஆனால் சரக ஸம்ஹிதை பிரசாரத்தில் வந்திருக்கிறமாதிரி, ஸுச்ருதருடைய 'ஸர்ஜரி'நூல் வராததால் நஷ்டமடைந்திருக்கிறோம்.

இதிலே என்ன பரிதாபம் என்று சொல்கிறேன். 'என்ஸைக்ளோபீடியா ப்ரிட்டானிகா'என்ற வால்யூம்கள் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். அதிலே ஒவ்வொரு ஸயன்ஸ், சாஸ்த்ரம், கலை பற்றியும் விவரமாகச் சொல்லியிருக்கும். இருபது, முப்பது வருஷத்துக்கு ஒரு தடவை புதிசு புதிசாகத் தெரிய வருகிறவைகளையும் சேர்த்துத் திருத்தி அந்தப் புஸ்தகங்களின் புது எடிஷன்கள் போடுவார்கள். அதிலே எந்த ஸயன்ஸானாலும், சாஸ்திரமானாலும் அதைப் பற்றின சரித்திரமும் போட்டிருக்கும். அது எங்கே முதலில் தோன்றிற்று, எந்தக் காலத்தில் தோன்றிற்று, எந்தக் காலத்தில் எவர் அதை எந்தெந்தப் பிற தேசங்களுக்குக் கொண்டு போனார்கள் என்று விவரம் கொடுத்திருக்கும். அதிலே என்ன போட்டிருக்கிறதென்றால் ஸர்ஜரி என்ற ரணசிகித்ஸை வித்யை இந்தியாவிலேயே முதலில் தோன்றிற்று என்று இருக்கிறது. இங்கேயிருந்து அது அரேபியா வழியாக க்ரீஸ் தேசத்துக்குப் போனதாகவும், அங்கேயிருந்து இத்தாலிக்குப் பரவி, பிறகு ஐரோப்பா பூரா பிரசாரமானதாகவும் போட்டிருக்கிறது.

இது 'ஸுச்ருதம்'என்கிற சாஸ்திரத்தில் நவீன காலத்தில் ஆஸ்பத்திரிகளில் எத்தனை விதமான ரண சிகித்ஸை ஆயுதங்கள் உபயோகத்திலிருக்கின்றனவோ அத்தனையைப் பற்றியும் சொல்லபட்டிருக்கிறதாம். புதிதாகக் கண்டெடுத்த சுவடிகளைப் பரீக்ஷித்தும், ரிக் வேதத்திலிருந்து ஆரம்பித்து புராணம், காவியங்கள் முதலியவற்றிலுள்ள கதைகளில் ரோக நிவ்ருத்தி பற்றி, இருப்பவற்றை இதோடு பொருத்தியும் பல அறிஞர்கள் 'அநேக ஆச்சர்யமான ஸர்ஜரி நுணுக்கங்களெல்லாம் நம் பூர்விகர்களுக்கு நன்றாகத் தெரியும்'என்று காரணம் காட்டி எழுதி வருகிறார்கள். ரிக்வேதத்தில் வீராங்கனையாக இருந்த ஒரு ராணிக்கு*2 யுத்தத்தில் கால் போய், அதற்குப் பதில் அச்விநி தேவர்கள் என்ற தேவ வைத்யர்கள் இரும்புக் கால் வைத்ததாக வருகிறது. வால்மீகி ராமாயணத்தில் அஹல்யையிடம் தப்பாக நடந்து கொண்ட இந்திரனுக்கு இந்திரியம் போய்விட்டதாகவும் அதற்குப் பதில் ஆட்டின் இந்திரியத்தைப் பொருத்தினார்களென்றும் வருகிறது. சயவனர், யயாதி முதலியவர்கள் வயோதிகம் போய் யௌவனம் அடைந்ததாக மஹாபாரதத்தில் இருக்கிறது. இப்படியிருக்கும் அநேகம் கதைகளை வைத்ய சாஸ்திரங்களில் சொல்லியிருப்பவற்றோடு சேர்த்து நன்றாக ஆராய்ச்சி பண்ணிப் பார்த்ததில், இவையெல்லாம் கற்பனை இல்லை. நிஜமாகவே நடந்திருக்க வேண்டும். ஏனென்றால் வைத்ய சாஸ்திரங்களில் நமக்குக் கிடைத்திருப்பதில் தெளிவாகவும் நுட்பமாகவும் சொல்லியிருக்கிறவற்றிலிருந்து அந்தக் காலத்திலேயே artifical limb surgery (செயற்கை உறுப்புகளைப் பொருத்தும் சஸ்த்ர முறை), transplanation (ஒருவர் உறுப்பை இன்னொருவருக்குப் பொருத்துவது), 'காயகல்பம்'â¡ø ªðòK™ rejuvenation(å¼õ¼¬ìò ê¬î ºîLòõŸ¬ø«ò â´ˆ¶Š ªð£¼ˆF «î£Ÿø ˆ¬î Üöè£°‹ð® ñ£ŸP Ü¬ñŠð¶) â™ô£‹ ªêŒòŠð†®¼‚,è «õ‡´‹ â¡Á Kú˜„ vè£ô£˜èœ â¿¶Aø£˜èœ.

ஸெப்டிக் ஆகாமல் தடுப்பது ஸர்ஜரியில் முக்யம். ஆபரேஷன்போது வலி தெரியாமல் மயக்க நிலை மாதிரி இருப்பதும் முக்யம். இந்த இரண்டுங்கூடப் பூர்வ காலத்திலேயே தக்கபடி செய்யப்பட்டு வந்தன என்று காட்டியிருக்கிறார்கள். 'வாளால் அறுத்துச் சுடினும்'வைத்யனிடம் நோயாளி மனஸ்தாபப்படாத மாதிரி பகவான் எத்தனை சோதித்துக் கஷ்டப்படுத்தினாலும் அவனிடம் தனக்குப் பிரேமை போகமாட்டேனென்கிறது என்று (குலசேகர) ஆழ்வார் பாடியிருக்கிறார். இங்கே 'வாளால் அறுப்பது'தான் ஸர்ஜரி. அப்புறம் அதைச் 'சுடுவது'என்பது அது ஸெப்டிக் ஆகாமல் 'காடரைஸ்'பண்ணுவது.

இத்தனை இருந்தும், ஏதோ கட்டி, ராஜபிளவை என்றால் அறுப்பது தவிர பிற்காலத்தில் ஆயுர்வேதத்தில் சஸ்த்ர சிகித்ஸை ஏன் நஷ்டமாய் விட்டதென்றால் இரண்டு காரணம் தோன்றுகிறது. என்ன இருந்தாலும் ஆபரேஷன் என்பது ஆபத்துதான். அதனால் பின்னால் பாதகமான விளைவுகள், ணீயீமீ மீக்ஷீ-மீயீயீமீநீமீ ஷ ஏற்படுவதும் அதிகம். எனவே கற்றுக்குட்டிகள் கையில் கத்தியைக் கொடுப்பதாகவும், எடுத்ததற்கெல்லாம் இந்தக் காலத்தில் இங்கிலீஷ் வைத்தியத்தில் நடப்பதுபோல் அறுப்பது கிழிப்பதாகவும் ஆகிவிடக் கூடாதென்று மிகவும் ஜாக்ரதை பண்ணிச் சிலபேருக்கு மட்டும் கற்றுக் கொடுத்ததிலேயே நாளாவட்டத்தில் இதை வெகுவாக இழக்கும்படியாகியிருக்கலாம். இன்னொரு காரணம்:அப்போது வைத்யர்கள் நல்ல அநுஷ்டாதாக்களாக இருந்து நல்ல தபோபலம் பெற்றவர்களாயிருந்ததால் அவர்களுக்கு ஹிமாசலம், பொதிகை மாதிரி எந்த மலையில் எந்தப் பொந்தில் என்ன மூலிகை இருந்தாலும் தெரிந்திருக்கிறது. எத்தனை கொடிய வியாதியானாலும், ஆழமான வ்ரணமானாலும் அதை குணம் செய்யவும் மூலிகையே போதுமானது என்று அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது. ஸைன்யமெல்லாம் பிரக்ஞை போய்க் கிடந்தபோது ஆஞ்ஜநேய ஸ்வாமி ஸஞ்ஜீவி பர்வதத்தைக் கொண்டு வந்தார்;அந்த மூலிகையின் காற்றுப் பட்ட மாத்திரத்திலேயே ஸேனை புது பலத்தோடு எழுந்துவிட்டதென்று படிக்கிறோமல்லவா?

இப்படி மூலிகை வைத்தியத்தால் ஸௌக்யமாகவே எதையும் ஸ்வஸ்தம் செய்துவிடத் தெரிந்திருந்ததால்ன், ஆயுதத்தைப் போட்டு வெட்டிக் குடைந்து சஸ்த்ர சிகித்ஸை செய்வதை அவ்வளவாக மேற்கொள்ளாமல் இருந்து, இதனால் நாளா வட்டத்தில் அதை மறந்து விடும்படியாகியிருக்கலாமென்றும் தோன்றுகிறது.

மருந்து சாப்பிடுவது, ஆபரேஷன் என்ற இரண்டு மாத்திரமின்றி இன்னம் அநேக சிகித்ஸை முறைகளும் ஆயுர்வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. 'லோபம்'என்று ஒன்று. ஆயின்மென்ட் பூசுவது. ப்ளாஸ்டர் போடுவது எல்லாம் 'லேபம்'தான். மலையாள வைத்யத்தில் இவை பின்பற்றப்படுகின்றன. 'வமனம்'என்பது வாந்தி பண்ண வைத்து குணம் செய்வது. 'விரேசனம்'என்பது இதே மாதிரி பேதியாக வைப்பது. 'ஸ்வேதனம்'என்பது வியர்த்துக் கொட்டப்பண்ணி அதன்மூலம் துர்நீர் வெளியே போகச் செய்வது. 'ஸ்நேஹன ம்'என்பது எண்ணெய் தேய்த்து மயிர்க்கால் வழியே உள்ளுக்குள் மருந்தை இறக்குவது. இதுவும் மலையாள வைத்தயத்தில் நிறையக் காணப்படுகிறது. உள்ளே இருக்கும் கெடுதலை வெளியிலே கொண்டு வருவதற்காக ஆயுர்வேதத்தில் உள்ள பஞ்சகர்மம் என்ற ஐந்து சிகித்ஸை முறைகளில் வமனம், விரேசனம் தவிர 'நஸ்யம்'என்பது மூக்காலே தும்ம வைத்து தோஷத்தை வெளிவரச் செய்வது;'அநுவாஸனம்', 'நிரூஹம்'என்ற இரண்டும் இருவிதமான எனிமா.

கண்ணுக்குத் தெரிகிற ரோகம் மாத்திரமின்றி குடல், மூளை இவற்றின் உள்ளுக்குள்ளேயிருப்பது, தோல் - எலும்பு -ரத்தம் (தீரீஷ்ஷ்பீ ஜீக்ஷீமீஃஷஷூமக்ஷீமீ), டயாபெடீஸ், மனோவியாதி என்று கணக்கில்லாமலுள்ள அத்தனையையும் 'டயாக்னோஸ்'பண்ணி மருந்து தருவதற்கும் ஆயுர்வேதத்தில் வழி சொல்லியிருக்கிறது. இப்போது 'ஆயுர் வேதம்'என்றால் முக்யமாக 'ஓஷதி'என்கிற மூலிகை அடுத்தபடியாக 'ரஸ வர்க்கம்'என்கிற தாதுக்கள் (மினெரல் என்பவை) ஆகியவற்றால் செய்யும் மருந்துதான் என்றே நினைக்கிறோம். மரம், செடி, கொடி எல்லாமே ஓஷதி வர்க்கத்தில் வந்துவிடும். கந்தகம், பாஷாணம், லோஹங்கள் முதலியவை ரஸவர்க்கம்.

'காயகல்பம்'என்றால் சரீரத்தை அழியாமல் பண்ணிக் கொள்வது என்று கேள்விப்படுகிறோம். இப்படி சிரஞ்ஜீவியானவர்கள் எவருமில்லை என்பது ப்ரத்யக்ஷம். ஆனாலும் இப்படி

காயஸித்தி பண்ணிக்கொண்டு பிற்பாடு இந்திரிய விரயம் ஏற்படாமல் சுத்தர்களாக, சாந்தர்களாக இருந்தவர்கள் மற்றவர்களைவிட வெகு நீண்ட காலம் நோய் நொடி இல்லாமலிருந்தார்களென்று தெரிகிறது. யோகம், தபஸ், ஞானாப்யாஸம் முதலியவை செய்வதற்கே உடம்பை த்ருடமாகவும், தீர்க்க காலமுள்ளதாகவும் வைத்துக் கொள்ள வேண்டுமென்று காரியஸித்தி பண்ணிக் கொண்டாலே ஜாஸ்தி பலன் தருவதாகவும், போக போக்யங்களைஅநுபவிப்பதற்காகப் பண்ணிக் கொண்டால் அவ்வளவு பலிக்கவில்லை என்றும் தோன்றுகிறது. காயகல்ப முறையில் ரஸாயன சாஸ்திரம் நிறைய வந்துவிடும். பசு மந்தையில் இருந்துகொண்டு செய்கிற ரஸாயன ஸேவைகள் வைத்ய ரீதியில் பயனுள்ளவையாகக் கொண்டு வந்துவிடுகின்றன.

மொத்தத்தில் காயஸித்தி முறைகள் தேஹத்தில் புது மாம்ஸம், ரத்தம் இவற்றை உண்டாக்கி, ஆயுஸை விருத்தி பண்ணுபவையாகும்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

*1. M.B. â¡ð¶ Bachelor of Medicine â¡Á ªð£¼œð´‹ â¡ðî¡ Medicinae Baccalaureus ºî™ â¿ˆ¶,è÷£°‹.

*2. «èô¡ â¡ø ñ¡ùQ¡ ñ¬ùMò£ù M„ðô£.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ஆயுர்வேதம் )

## ஆயுர்வேதத்தில் இதர ஸயன்ஸ்கள்

**மி** னரல் தாதுக்களைக் கலந்தும் மருந்து செய்வதால் 'கெமிஸ்ட்ரி'என்ற ரஸாயன சாஸ்த்ரமும் நம் வைத்ய சாஸ்திரத்தில் வந்து விடுகிறது. 'கெமிஸ்ட்ரி'மட்டுமில்லை - இன்னம் ஏழெட்டு ஸயன்களும் Medical Science என்ற இது ஒன்றிலேயே அடங்கி விடுகிறதைப் பார்த்தால் ஆச்சர்யமாயிருக்கும். மூலிகைகளின் நேச்சரை தெரிந்து கொண்டே மருந்து பண்ண வேண்டும் என்பதால் தாவர தத்வ சாஸ்திரமான Botany-யையும் நன்றாகத் தெரிந்து சொல்லியிருக்கிறார்கள். மருந்துகளின் இன்னொரு மூலச் சரக்கான ரஸ வர்க்கங்களை பற்றி அறியப் போவதிலும் ரஸாயனம் (கெமிஸ்ட்ரி) வந்துவிடுகிறது. என்ன மருந்து கொடுக்க வேண்டும், அதில் என்ன ஸாமான்கள் சேர்க்க வேண்டும் என்று தெரிந்தால் போதுமா இது செலுத்தப்படுகிற தேஹத்தின் அமைப்பைப் பற்றி நன்றாகத் தெரியவேண்டுமல்லவா?நோயாளியின் தேஹ தத்துவத்தைத் தெரிந்து கொள்ளாமல் சிகித்ஸை எப்படி?இவ்வாறு Physiology-யும் சாஸ்திரத்தில் வந்து விட்டது. Veterinary என்கிற பிராணி வைத்தியமும் புராதனமாகவே நம்மிடமுண்டு. வீட்டுக்கு வீடு பசு, வியவஸாயத்துக்கு எருது, ஸைன்யத்தில் ரத கஜ துரகம் என்பதில் என்பதில் ஆனை குதிரை - இப்படிப் பல மிருகங்களை ஆரோக்யமாக காப்பாற்ற வேண்டியதை முன்னிட்டு ப்ராணி தத்வ சாஸ்திரமான Zoology-யையும் நம் பூர்விகர்கள் ஆயுர் வேதத்திலேயே சேர்த்துக் கொடுத்திருக்கிறார்கள். எந்த ஸத்யத்தையும் துளைத்துக்கொண்டு பார்க்கிற அதீந்திரிய சக்தியால் ரிஷிகள் இந்த எல்லா ஸயன்ஸ்களையும் தெரிந்து கொண்டு ஆயுர்வேதம் முதலான சாஸ்திரங்களில் தெரிவித்திருக்கிறார்கள். கருணை மிகுந்த ரிஷிகள், பிராணிகளுக்கு மட்டுமில்லாமல், மரம் செடி கொடிகளுக்கு வருகிற நோய்களைக் கூடப் போக்க வேண்டுமென்று "வ்ருக்ஷாயுர் வேதம்"என்றே ஒரு சாஸ்திரம் செய்திருக்கிறார்கள். சரக்குகளை இன்ன விகிதத்தில் கலக்கணும், ஒவ்வொன்றும் இன்ன எடை இருக்கணும், நோயாளி இன்ன அளவு அதைச் சாப்பிடணும் என்று துல்யமாய் கணிப்பதில் கணிதமும் வந்துவிடுகிறது. இப்படி, பௌதிக சாஸ்திரம் என்கிற Physics-ஐத் தவிர பாக்கி முக்கியமான ஸயன்ஸ்களையெல்லாம் ஆயுர்வேதம் ஒன்றிலேயே அகப்படும்படியாகக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்கள். வேறு சாஸ்திரங்களிலும் தனியாகவும் ஃபிஸிக்ஸையும் அலசி ஆராய்ந்து கொடுத்திருக்கிறார்கள். ஸர் P.C.ரே என்பவர் நம்முடைய பிராசீன சாஸ்திரங்களில் நவீன ஸயன்ஸ்கள் எல்லாவற்றுக்கும் மூலம் இருக்கிறதென்று ஆராய்ச்சி

செய்து நிரூபித்திருக்கிறார். வெள்ளைக்காரர்களே ஒப்புக் கொள்கிறபடி குறைந்த பக்ஷம் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட சரகம், ஸுச்ருதம் முதலிய க்ரந்தங்களில், 'இந்த இருநூறு, முன்னூறு வருஷங்களில் நாங்கள் கண்டுபிடிக்கிறதற்கு முந்தி எவருக்குமே இந்த உண்மைகள் தெரிந்திருக்கவில்லை'என்று அவர்கள் சொல்லிக் கொள்ளும் நவீன ஸயன்ஸ்களெல்லாம் அடங்கியிருக்கின்றன.

---



**ஆயுர்வேதத்தைப் பின்பற்றக் காரணங்கள்**

**இ** ந்தியாவிலுள்ள நாம் நம் தேசத்திலேயே ஏற்பட்ட ஆயுர்வேத முறைகளைத்தான் பின்பற்ற வேண்டுமென்பதற்கு ஒரு காரணம், அப்போதுதான் கூடியமட்டும் சாஸ்த்ர விரோதமான அநாசாரங்கள் சேராமலிருக்கின்றன என்பது. இன்னொரு காரணமும் உண்டு. அது இயற்கையாக அமைந்திருப்பது. அதாவது இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்கி நடத்துகிற ஈஸ்வரனே ஸஹஜமாக ஏற்படுத்தி வைத்திருக்கிற அமைப்புகளைச் சேர்ந்தது. ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு விதமான சீதோஷ்ணமிருக்கிறது. ஒவ்வொரு விதமான பயிர் பச்சைகள் விளைந்து அவற்றை அங்கே உள்ளவர்கள் அவர்களுடைய ஆரோக்யம், வியாதி இரண்டும் ஏற்படுகின்றன. அந்தந்த தேச சீதோஷ்ணமும் அங்கே கிடைக்கிற ஆஹார பதார்த்தங்களுந்தான் ஒவ்வொரு தேசத்தவருக்கும் 'ஸூட்'ஆகிறது என்பதைப் பார்க்கிறோம் அல்லவா?இப்படியே, அங்கங்கேயும் இந்த சீதோஷ்ணம், ஆஹாரம் முதலியவற்றை அநுஸரித்து அநாரோக்கியத்தைப் போக்கிக் கொள்ளவும் அங்கே உள்ளவர்களுக்கு ஒவ்வொரு வைத்யமுறை தோன்றுமாறு பகவான் புத்தி கொடுக்கிறான்;அந்த வைத்யத்துக்கு வேண்டிய சரக்குகள் அந்தந்த தேசத்தில் கிடைக்கும்படியாகவும் வைத்திருக்கிறான். ஸாத்விகர்களாக வாழ வேண்டிய நம் தேச ஜனங்களுக்கு நம்முடைய சீதோஷ்ணம் ஆஹாரம் முதலியவற்றுக்கு அநுஸரணையாக பச்சிலை, ரஸ வர்க்கம் என்றிப்படி ஸாத்விகமான மருந்துகளாலேயே வியாதி நிவ்ருத்தி ஏற்படுமாறு அவன் ஏற்படுத்தியிருக்கும் ஸஹஜமான அமைப்பிலே இருக்கிறது. 'கர்ம பூமியிலுள்ளவர்கள் கர்மாநுஷ்டானத்துக்கு முதுகெலும்பாக இருக்கிற தர்மசாஸ்திரத்தை மீறாமலே சரீர ரக்ஷை, வியாதி, நிவ்ருத்தி, ஆயுர்விருத்தி முதலியவற்றைப் பெறட்டும்'என்றே நம் ரிஷிகளுக்கு ஆயுர்வேதம் ஸ்புரிக்கும்படியாக அநுக்ரஹித்திருக்கிறான். அந்தந்த தேசத்திலுள்ள ஜனங்களின் பக்வநிலைக்கு ஏற்க அவர்களுக்கு தேசாசார, மதாசாரங்களைக் கொடுத்து இவற்றுக்கு அநுஸரணையாகவே வைத்யமுறை முதலியவை அங்கங்கும் தோன்றும்படி செய்திருக்கிறான்.

வைத்யம் மட்டுமில்லை, 'சில்பம்'என்று வீடு வாசல் கட்டிக் கொள்கிற முறை, 'க்ருஷி'என்பதான வியவஸாய முறை எல்லாவற்றிலும் இப்படி ஒவ்வொரு தேசத்துக்கும் 'ஸூட்'ஆகிற ஒன்று உண்டு. நாம் அநுஷ்டானங்களையே பண்ண முடியாமல் விட வேண்டியதாகிறது. Japanese method of agrcultureபண்ணி நாலு மடங்கு மாசூல் காட்டுவேன் என்று போனால் நம் கையை மீறி அதிவ்ருஷ்டி, அநாவ்ருஷ்டி (பெருமழை அல்லது வறட்சி) என்று ஏற்பட்டு பஞ்ச நிலைமை உண்டாகிறது. நேச்சரை டிஸ்டர்ப் பண்ணக்கூடாது அதுவே ஏற்றத்தாழ்வுகளை பாலன்ஸ் பண்ண விட வேண்டும் என்று அறிவாளிகள் ஒரு பக்கம் சொல்கிறார்கள். இது மெடிகல் ஸயன்ஸ் உள்பட எல்லாவற்றிலும் ஆலோசனைக்குக் கொண்டுவர வேண்டிய விஷயம்.

ஆயுர் வேதத்தின் ப்ரமாண நூலான 'சரக ஸம்ஹிதை'யிலேயே இந்த விஷயத்தைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறது.

**யஸ்மிந் தேசே ஹி யோ ஜாத :**

**தஸ்மை தஜ்ஜெளஷதம் ஹிதம்**

ஒரு தேசம் என்றால் அதில் பல மநுஷ்யர்கள் உண்டாகிறார்கள். மநுஷ்யர்களைப் போலவே ஒவ்வொரு தேசத்திலும் மூலிகை முதலான மருந்துச் சரக்குகளும் உண்டாகின்றன. ஈஸ்வர நியதியில் இது ஏதோ குருட்டாம்போக்காக நடப்பதல்ல. இந்த தேசத்துக்காரனுக்கு இந்தச் சரக்கால் பண்ணின ஔஷதம்தான் எடுத்தது என்று இது காட்டுகிறது. இதைத்தான், "எந்த தேசத்தில் ஒருவன் பிறந்திருந்தாலும் அவனுக்கு அங்கேயே உண்டான சரக்குகளால் ஏற்பட்டதுதான் மருந்து"என்று சரகத்தில் சொல்லியிருக்கிறது.

---



## ஆயுர்வேதம் ஆயுள் பெறட்டும் !

**இ**ப்போது நம் நிலைமை எப்படி ஹீனமாயிருக்கிறதென்றால், நான் சொல்கிறேனே என்று நீங்கள் இத்தனை பேரும் ஆயுர்வேத வைத்யம் பார்த்துக் கொள்வது என்று ஆரம்பித்தால் இத்தனை பேரையும் 'ட்ரீட்'பண்ண வைத்தியர்களே கிடைக்கமாட்டார்கள்!'மெடிகல் டிகிரி'என்றாலே இங்கிலீஷ் வைத்தியப் படிப்புத்தான் என்று வைத்துப் பாடத் திட்டத்தில் ஆயுர்வேதத்துக்கு இடமே தராமல் நெடுங்காலம் நடந்துவிட்டதுதான் இதற்குக் காரணம். சுமார் ஐம்பது வருஷத்துக்கு முன் நிலைமை கொஞ்சம் மாறும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அப்போது சென்னை மாகாணத்தில் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி உண்டாயிற்று. அவர்கள் ஒரு பக்கம் காங்கிரஸின் ஸ்வந்திரப் போராட்டத்தை ஆதரிக்காமலிருந்தார்கள்;இன்னொரு பக்கம், 'எல்லாத் துறைகளிலும் Brahmin domination(பிராம்மணனின் ஆதிக்கம்) ஏற்பட்டு விட்டது;இதைக் குறைக்க வேண்டும்'என்ற கொள்கையுடையவர்களாக இருந்தார்கள். இப்படியிருந்தாலும் அவர்களிலும் புத்திமான்கள், விஷயங்களைச் சீர்தூக்கிப் பார்த்து நிதானமாகக் காரியம் செய்கிறவர்கள் இருந்தார்கள். அவர்களில் பனகால் ராஜா ஒருத்தர். மாம்பலத்தில் இருக்கிற பார்க் அவர் பேரில் ஏற்பட்டதுதான். (தியாகராஜ நகர் என்று மாம்பலத்தைச் சொல்கிறதுகூட ஜஸ்டிஸ் பார்ட்டியைச் சேர்ந்த பிட்டி தியாகராஜ செட்டி என்பவர் பெயரில்தான்.) பனகல் ராஜா மந்திரியானவுடன் மற்ற விஷயங்கள் ஒரு பக்கமிருந்தாலும், 'வெள்ளைக்காரனிடமிருந்து ஸ்வதேச ஜனங்களான நம்மிடம் கொஞ்சம் அரசாங்கப் பொறுப்பு வந்திருக்கிறது;எனவே ஸ்வதேசியமாக ஏதாவது பண்ண வேண்டும்'என்று நினைத்தார். அவர் ஸம்ஸ்க்ருதத்தில் நல்ல படிப்புள்ளவராதலால் நம்முடைய பழைய சாஸ்திரங்களை (சாஸ்திரமென்றால் தர்ம சாஸ்திரமில்லை;பழைய ஸயன்ஸ்கள், கலைகள் ஆகியவை பற்றிய சாஸ்திரங்களைத் தான்) ஆதரிக்க வேண்டுமென்ற அபிப்ராயமுள்ளவராயிருந்தார். நமது தேச ஔஷதிகள்தான் நமக்கு ஒத்துக்கொள்வதென்றும் இதர முறைகள் விபரீதம் பண்ணுவதென்றும் அவர் அபிப்ராயப்பட்டு, 'இப்படி ஆயுர்வேதம் க்ஷீணித்து வருகிறதே!'என்று அதற்கு உயிர் கொடுப்பதற்காக மெட்றாஸில் ஆயுர்வேத வித்யாசாலை ஆரம்பித்தார். இன்னம் சிறிது காலம் அவர் ஆட்சி இருந்திருந்தால் நம்முடைய கணிதம், பௌதிகம், ஜ்யோதிஷம் முதலான சாஸ்திரங்களுக்கு ஏற்றம் கிடைக்கப்பண்ணியிருப்பார். நான் இப்படிச் சொல்வதால் எனக்கு patriotic spirit (தேச விச்வாஸ உணர்ச்சி) இல்லை என்று வேண்டுமானாலும் நினைத்துவிட்டுப் போங்கள். patriotism, ஸ்வதேசியம் என்றே சொல்லிக் கொண்டிரு ந்தவர்கள் ஆட்சிக்கு வந்தபின் ஸ்வதேச வித்யைகள், அறிவு (அறிவியல்) சாஸ்திரங்களை உயிர்ப்பிக்க என்ன செய்திருக்கிறார்கள்?இங்கிலீஷ்காரர் காலத்தில் இருந்ததைவிட இப்போதுதான் ட்ரெஸ், நடைமுறைகள், out-look என்கிறார்களே அந்த மனோபாவம் ஆகிய எல்லாவற்றிலும் ரொம்பவும் இங்கீலீஷ்காரன் மாதிரியே பண்ணிக்கொண்டு வருகிறார்கள்!ஆயுர்வேதம் ஏதோ ஜஸ்டிஸ் ஆட்சியிலாவது கொஞ்சம் கடாக்ஷம் பெற்று விட்டதால் அதை முன்னுக்குக்கொண்டு வருவதாக ஆமை வேகத்தில் என்னவோ செய்து, அல்லோபதியோடு ஆயுர்வேதத்தையும் சேர்த்து என்று G.C.I.M. பட்டம் கொடுக்கிற வரை கொண்டு வந்திருக்கிறார்கள்*1. ஆனாலும் மற்ற அநேக சின்ன விஷயங்களைத் தடபுடல்

படுத்துவது போலன்றி அரை மனஸாகப் பண்ணுவதால் இது ஒன்றும் விசேஷமாகப் பிரசாரமாகவில்லை.

ஜனங்களுக்கும் நிஜமான ஸ்வதேசப் பற்று இல்லாததில் பனகால் ராஜா ஸ்வல்பமாக ஆரம்பித்தது, நாமே ராஜாங்க உரிமை பெற்றவுடனே எவ்விதம் பிரகாசமடைந்திருக்க வேண்டுமோ அப்படி ஆகவில்லை. இருந்தாலும் வெகு ஸமீப காலமாக அறிவாளிகளிடையே கொஞ்சம் விழிப்பு ஏற்பட்டிருப்பதால் இப்போது நிலைமை சற்று நல்ல திருப்பமடையலாமென்று தோன்றுகிறது. மூன்று காரணங்களுக்காக ஆயுர்வேதத்தை ஆதரிக்கலாம். ஒன்று, இதில் அநாசாரம் ரொம்பக் குறைவு. இரண்டு, நம் தேச சீதோஷ்ணம், நம் ஜனங்களின் தேஹவாகு ஆகியவற்றுக்கு என்றே ஏற்பட்டதாதலால் வேண்டாத விளைவுகளை உண்டாக்கமலிருப்பது. மூன்று, செலவும் குறைச்சல் - இது முக்கியமான காரணம். இன்னொன்று கூட வாய்க்கே ஆரோக்கியமாயிருக்கும். ஓமம், திப்பிலி மாதிரி சரக்குகளுக்கும் அநேக மூலிகைகளுக்கும் ஒரு தனி ருசி, மணம், விளக்கெண்ணெய் மாதிரி வயிற்றைப் புரட்டுவது, நிலவேம்பு மாதிரிக் கசப்பாகக் கசப்பதிலெல்லாங்கூட அநேக அந்நிய பதார்த்தங்களிலிருக்கிற துர்வாடை கிடையாது.

ஆதியில் ரணசிகித்ஸை தெரியாமலிருந்த வெளிதேசங்களுக்கு நம்மிடருந்தே அது போயிருக்க அப்புறம், 'ஆயுர்வேதத்தில் ரணசிகித்ஸை கூட உண்டா?'என்று நாமே கேட்கிற அளவுக்குப் போனது போல எல்லாப் பழைய அறிவு சாஸ்திரங்களையும் நாம் கோட்டை விட்டால் ஸ்வதேசி ராஜாங்கம் என்று ஸந்தோஷப்படுவதற்கு எதுவுமில்லாமல் போகும். Tribal Dance-ஐ (ஆதிவாஸிகளின் நடனத்தை) அந்நிய தேசப் பிரமுகர்கள் வரும்போது ஆடிக்காட்டி விட்டால் இதுதான் ஸ்வதேசிய கலாசாரத்தைக் காப்பாற்றிக் கொடுப்பது என்று ஆகியிருக்கிறது!

மெடிகல் ஸயன்யுக்கு உரிய பூர்ண லக்ணத்தோடு தேஹத்தின் தன்மை, வியாதிகளின் தன்மை, அவை எப்படி ஏற்படுகின்றன, ஏற்படாமலே எப்படி தடுப்பது ஏற்பட்டுவிட்டால் அப்புறம் எப்படி குணப்படுத்துவது, மருந்துச் சரக்குகளின் தன்மை என்ன என்றெல்லாம் தீர்க்கமாய் அலசி உண்டான நம் ஆயுர்வேதம் அவசியம் ரக்ஷிக்கப்பட வேண்டியதாகும். தேஹ ரக்ஷையைத் தருகிற அந்த சாஸ்திரத்துக்கே வியாதி பிடித்து மெலிய வைக்ககூடாது!மெடிகல் ஸயன்ஸாகப் பூர்ண ரூபத்தில் இருப்பதோடு மட்டுமின்றி, மற்ற ஸயன்ஸ்களும் இதில் கலந்திருப்பதை உத்தேசித்தும், இத்தனை ஸயன்ஸ்கள் இருந்த போதிலும், ஸயன்ஸ் என்றால் ஸமயாசாரத்துக்கு விரோதமாகத்தான் போக வேண்டுமென்றில்லாமல் நம் ஆசாரத்துக்கு ஏற்றதாகவும் ஆயுர்வேதம் இருப்பதால் அதற்கே ஆயுர் விருத்தியை நாம் உண்டாக்கித் தரவேண்டும்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்", "சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுத வேண்டும்"என்ற பழமொழிகள் ஆரோக்யமாயிருக்க வேண்டியதன் அவசியத்தைச் சொல்கிறவையே. கிராம வாழ்க்கையின் ஸுகாதாரமான காற்றோட்டமும், எளிமையும் அநுஷ்டானங்களும் போய் நகர வாழ்க்கையின் பலவித நெரிசல்கள் ஏற்பட்டபின் வியாதிகள் அபரிமிதமாகப் பெருகி வருகின்றன. வைத்யத்தோடு ஈஸ்வரனைப் பிரார்த்தித்துத்தான் ஸரி செய்யணும். தெய்வ ஸம்பந்தமான பாராயண நூல்கள் பலவற்றிலும் 'பலச்ருதி'J™ "«ó£è£˜ˆb º„ò«î «ó£è£ˆ"*2 â¡ð¶ «ð£ô «ó£è Gš¼ˆF¬ò å¼ ðôù£è„ ªê£™LJ¼Šðî£™ ñî óþ¬í,è£è«õ «îý óþ¬í»‹ ï‹ G¬ôJ™ ÜõCò‰î£¡ â¡Á ªîKAø¶. ï‹º¬ìò èô£ê£óˆ«î£´ å†®Š«ð£Aø ï‹º¬ìò Hó£Yù ¬õˆò ê£vFóŠð®«ò Þ‰î óþ¬í¬òŠ ªðŸÁ â™«ô£¼‹ ªú÷,òñ£Œ õ£ö«õ‡´‹.

---

1. * 1958-ல் இருந்த நிலையைக் கூறியது.

2.* 'விஷ்ணு ஸஹஸ்ரநாம'பலச்ருதி. பலச்ருதி என்பது நூற்பயன்களைக் கூறும் பகுதியாகும்.

---

தயாராயிருப்பது ஒன்று அப்படியில்லாவிட்டாலும் எதிரிக்கு தைர்யம் கொடுத்துப் போகக்கூடாதென்பதற்காகவும், நம் ஜனங்களே demoralise ஆகிவிடக்கூடாதென்பதற்காகவும் தயாராயிருப்பதாகச் சொல்லிக் கொள்வது இன்னொன்று. இது diplomacy என்ற ராஜ தந்திரத்தின் கீழ் வந்துவிடும். இரண்டு விஷயங்கள்:நாம் ஸேனைகளையும், ஆயுத 'ஸ்டாக்'கையும் ரொம்ப ஜாஸ்தி ஆக்கிக் கொண்டாலும் அப்படிச் சொல்லிக் கொள்ளக் கூடாது. அப்படி நமக்கு யுத்த வெறி அதிகம் என்று மற்றவர்கள் நினைக்கும்படி ஆகும். அதேமாதிரி, நமக்கு ஸேனாபலம், ஆயுதக் கையிருப்பு போதாவிட்டால் இதையும் சொல்லிக் கொள்ளக்கூடாது. சொன்னால் இது மற்றவர்களைப் படையெடுக்கத் தூண்டி விடுவதாகும். இந்த 'டிப்ளமஸி'ஸமாசாரங்கள் உபவேதத்தில் இன்னொன்றான அர்த்த சாஸ்த்ரத்தில் வருபவை.

தநுர்வேதப்படி ஒரு ராஜாவானவன் எப்போதும் யுத்தத்துக்குத் தயாராக இருக்க வேண்டும். துஷ்ட ராஜாக்கள் தன்னுடைய தேசத்தில் புகுந்து அலங்கோலம் பண்ணாமலிருப்பதற்காக அவன் அப்படி இருக்க வேண்டும். க்ஷத்ரியனான ராஜன் க்ஷத்ரிய வீரர்களைக் கொண்டே தேசத்தை இப்படி ரக்ஷிக்க கடமைப்பட்டிருக்கிறான்

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

## ' தநுர் ' என்பது ஏன் ?

**ஆ** யுதங்கள் என்னென்ன. அவற்றை எப்படிப் பிரயோகம் பண்ணுவது என்பதே தநுர்வேதத்தில் முக்யமான விஷயம். இதற்கு 'ஆயுர்வேதம்'என்று பேர் இல்லாமல் 'தநுர்வேதம்'என்று ஏன் பேர் என்றால், தநுஸ்தான் ஆயுதங்களுக்குள் முக்யமானது. தநுஸ் என்றால் வில் என்று எல்லோருக்கும் தெரிந்திருக்கும்.

சுத்தி, கதை, சூலம் முதலியவற்றைக் கையிலே பிடித்துக் கொண்டு எதிரே கிட்டக்க இருப்பவனிடம் மட்டுமே யுத்தம் செய்யலாம். ஈட்டியைத் தூரத்திலிப்பவனிடமும் எய்து தாக்கலாமாயினும் அதோடு அந்த ஈட்டியே கைக்குத் திரும்பி வராமல் போனாலும் போய் விடும். தநுஸ் அப்படி இல்லை. அது கையைவிட்டுப் போகிறதில்லை. அதில் எத்தனை அம்பை வேண்டுமானாலும் பூட்டி, எய்து எத்தனையோ தூரத்தில் இருப்பவனையும் அடித்துத் தள்ளலாம். ஈட்டி நஷ்டம் மாதிரி இல்லை. அம்பு போவது. அம்பு ஈட்டிபோல அத்தனை பெரிசோ, கனமானதோ இல்லை. அது போகிறது பெரிய நஷ்டமில்லை. பலசாலியாக இருக்கிற ஒரு க்த்தரியன் நூற்றுக்கணக்கான அம்புகளைக் கொண்ட அம்பறாத்தூணியை ஈஸியாகத் தோளில் தாங்கிக் கொண்டிருப்பான். 'சரமாரி'என்றே வார்த்தை இருக்கிறது - ஸுலபமாக, ஒரு அம்பு போனால் இன்னொன்று என்று மழை பெய்கிறமாதிரி விட்டுக் கொண்டேயிருக்கலாம். அத்தனை அம்புகளுக்கும் ஆதாரமாகப் பூட்டப்படும் தநுஸ் மாறாது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

## அஸ்த்ரம், சஸ்த்ரம்

**அ** ஸ்த்ரம், சஸ்த்ரம் என்று ஆயுதங்கள் இரண்டு வகைப்படும். ஆயுதத்தின் சக்தி, அதைப் பிரயோகிக்கிறவனின் ஸாமர்த்யம் ஆகியவற்றைக் கொண்டு மட்டுமே சத்ருவை அடிப்பது சஸ்த்ரம். "எல்லா ஆயுதங்களுமே இப்படிப்பட்டவைதானே?"என்று தோன்றலாம். வாஸ்தவந்தான். தற்காலத்தில் ஆயுத சக்தி, அதைப் போடுகிறவனின் யுத்த தந்த்ரம் இந்த இரண்டு மாத்திரந்தான் யுத்தத்தில் வெளியாகிறது. ஆனால் முற்காலத்தில் இதோடு மந்த்ர சக்தியும் யுத்தத்தில் பிரயோஜனப்பட்டு வந்தது. மந்த்ர சக்தியோடு பிரயோகிக்கப்படும் ஆயுதமே அஸ்த்ரம். பெரிய ரிஷிகளாக அவதாரங்களாக, உத்தம புருஷர்களாக

இருக்கப்பட்டவர்கள் மந்த்ரத்தைச் சொல்லி ஒரு தர்ப்பையை, புல்லைப் பிரயோகித்தால்கூட அது சத்ருவை ஸைன்யத்தோட கூண்டோடு அழிந்திருக்கிறது. ஆனாலும் பொதுவில் ஆயுதங்களிலேயே மந்த்ரங்களையும் சேர்த்து, அதாவது சஸ்த்ரங்களையே அஸ்த்ரங்தள ாக்கித்தான் யுத்தம் செய்திருக்கிறார்கள். இந்த சஸ்த்ரங்களில் முக்கியமாயிருப்பதும் தநுஸ்தான். பிரம்மாவைக் குறித்த மந்திரசக்தி கொண்ட பிரம்மாஸ்த்ரம், விஷ்ணுவைக் குறித்த மந்த்ர சக்தியுடன் கூடிய நாராயணாஸ்த்ரம், பரமசிவனைக் குறித்த பாசுபதாஸ்த்ரம், இப்படியே தேவதைகளைக் குறித்த வருணாஸ்த்ரம், ஆக்நேயாஸ்த்ரம், கருடாஸ்த்ரம், நாகாஸ்தரம் என்கிறவைகளைப் புராண கதாபாத்ரங்கள் இந்த அஸ்த்ரங்களாக்கி விட்டதாகப் போட்டிருக்கிறது. இப்போது 'ஆட்டம் பாம்(ப்)'போட்டவுடன் எத்தனை உத்பாதம் உண்டாயிற்றோ அதைவிட அதிகமாக இந்த அஸ்த்ர ப்ரயோகங்களின் போது உண்டானதாகப் புராணங்களிலிருந்து தெரிகிறது. "ஒரு ஆயுதத்தை வீசினானாம், உடனே ஆகாசம் வரை புகை எழும்பிற்றாம்! அக்னி ப்ரவாஹம் வந்து ஜலாசயங்கள் வற்றிற்றாம்!பட்சிகளே முதற்கொண்டு செத்து விழுந்ததாம்!கர்ப்பத்திலிருந்த பிண்டங்கூட சேதமாயிற்றாம்!இதெல்லாம் வெறும் புரளி"என்று புராண வர்ணனைகளை நம்பாமலிரு ந்தவர்களுக்கும் 'ஆட்டம் பாமி'ன் பவரும், ரேடியேஷனும் புராணத்தில் சொல்லியிருப்பது வாஸ்தவமாகவே இருந்திருக்கணும் என்ற நம்பிக்கையை உண்டாக்கியிருக்கின்றன. ஒரு சின்னஞ்சிறிய அணுவைப் பிளப்பதால் பிறக்கும் சக்தியைவிட ஸகல ஸ்ருஷ்டிக்கும் பீஜமான மந்த்ர சப்தங்களைப் பிளப்பதில் உண்டாகும் சக்தி எவ்வளவோ அதிகமாகும்*.

ஒரு அஸ்த்ரத்துக்கு எதிராக இன்னொரு மந்திரத்தால் எதிர் அஸ்த்ரம் விடுவதுண்டு. இப்படி நாகாஸ்த்ரம் 'பவ'ரைக் காட்டாமல் நியூட்ரலைஸ் செய்வது கருடாஸ்த்ரம்;பாம்பை ஜயிப்பது கருடனில்லையா?அதனால் ஆக்நேயாஸ்தரத்துக்கு எதிர் வாருணாஸ்த்ரம்.

மந்த்ரசக்தி ஆயுத சக்தியைவிட எவ்வளவோ பெரிது என்பதாகக் காளிதாஸன் 'ரகுவம்ச'த்தில் திலீபன் வாய்மொழியாக அழகாகத் தெரிவிக்கிறான். குலகுருவான வஸிஷ்டரின் ஆச்ரமத்துக்கு ஸூர்யகுல ராஜனான திலீபன் போகிறான். அவர் அவனிடம் ராஜ்யத்தின் க்ஷேமத்தைப் பற்றி விசாரித்திக்கிறார். அதற்கு அவன், "தாங்கள் குல குருவாக இருந்து ஆசீர்வாதம் பண்ணிக் கொண்டிருக்கும் போது ராஜ்யத்தின் க்ஷேமம் எப்படிக் குறைவுபடும்?என்னுடைய அம்பு ஏதோ நேரே இருக்கிற சில பேரை அடிக்கிறது என்றால் தங்களுடைய மந்திரமோ எங்கெங்கேயோ இருக்கிற கெட்ட சக்திகளையெல்லாம் அடித்து, என் அம்பையே பிரயோஜனமில்லாமல் பண்ணி விடுகிறது. ராஜ்யம் நன்றாயிருக்கிறதென்றால் அதற்குக் காரணம் என் க்ஷத்ர பலமில்லை. அந்த பலத்துக்கும் ஆதாரமாயிருக்கிற தங்களுடைய பிரம்ம தேஜஸ்தான்"என்கிறான்.

அஸ்த்ரத்தில் சஸ்த்ரம், மந்த்ரம் இரண்டும் சேர்ந்திருக்கிறது. க்ஷத்ரிய பலம், பிரம்மரிஷிகள் கண்டுபிடித்த மந்திரத்தின் சக்தி இரண்டும் சேர்ந்திருப்பதை நினைக்கும்பொழுது ஒன்று நினைவுக்கு வருகிறது. ஒரு ராஜாவும், பிராம்மணோத்தமர் ஒருவரும் சேர்ந்தாற்போல் ஒரே ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து கொண்டு ஆட்சி பண்ணினார்கள். அந்த ராஜாவின் பேர் அச்சுதப்ப நாயக். தஞ்சாவூரை ஆண்ட நாயக் வம்ச ராஜாக்களில் இரண்டாவதாக வந்தவன் அவன். அவனுடைய பிதா ஸேவப்ப நாயக். ஸேவப்பன் இந்த வம்சத்துக்கு முதல் ராஜாவாகத் தஞ்சாவூரில் புது ராஜ்யம் ஸ்தாபிப்பதற்குக் காரணமாயிருந்தவர் கோவிந்த தீக்ஷிதர் என்ற மஹான். அந்த பிராம்மணோத்தமர் சொன்ன ப்ரகாரமே செய்துதான் ஸாமான்ய தசையில் இருந்த ஸேவப்பன் தஞ்சாவூரில் ராஜ்யம் ஸ்தாபித்து ராஜாவானது. ஸேவப்பனின் ஆயுஸ் முடிந்த பிற்பாடும் கோவிந்த தீக்ஷிதர் ஜீவ்யவந்தராயிருந்தார். ஸேவப்னின் புத்ரனான அச்யுதப்பன் அவரைப் பிரதம மந்திரியாக மட்டுமின்றி. 'குல கூடஸ்த புரோஹிதர்'என்று கௌரவம் கொடுத்து, உயர்ந்த ஸ்தானத்தில் வைத்திருந்தான். எத்தனை உயர்ந்த ஸ்தானம் என்றால், 'அர்த்தாஸனர்'என்பதாக அவரை ஸிம்ஹாஸனத்திலேயே தன் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டிருந்தான். இந்தக் காட்சியைப் பார்த்து விட்டு ஒரு கவி சொன்னார்:

**த்ரிநாமாத்யந்த நாமாநௌ மஹீக்ஷித் தீக்ஷிதாவுபௌ ****

**சஸ்த்ரே சாஸ்த்ரே ச குசலௌ ஆஹவேஷு ஹவேஷு ச ***

பகவானுக்கு த்ரிநாமா - நாம த்ரயம் என்ற மூன்று பெயர்கள் - முக்யம். அவற்றைச் சொல்லித்தான் ஆசமனம் பண்ணுவது, அச்யுத, அனந்த, கோவிந்த என்பதே அந்த நாமத்ரயம். இதில் முதல் ('ஆதி') நாமா 'அச்யுத'. முடிவு ('அந்த') நாமா 'கோவிந்த'. ஒரே ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிற இரண்டுபேரில் 'ñqV^'Üî£õ¶ Ìð£ôù‹ ð‡µ‹ ó£ü£¾,° 'ÝF'ï£ñ‹ - Ü„»îŠð ï£ò, ; Þ¡ªù£¼^îó£ù bVî¼,° 'Ü‰î'ï£ñ‹ - «è£M‰î bVî˜. ÞF«ô ºîô£ñõ¡ êv^ó^F™ ªè†®,è£ó¡;Þó‡ì£ñõ˜ ê£v^ó^F™ ªè†®,è£ó˜. Üõ¡ 'Ýýõ‹'â¡ø »˜î î‰^ó^F™ ªðò˜ õ£ƒAùõ¡;Þõ˜ 'ýõ‹'â¡Â‹ òxë Ü¸wì£ù^F™ Cø‰îõ˜:

சஸ்த்ரே சாஸ்த்ரே ச குசலௌ ஆஹவேஷு ஹவேஷு ச *

சஸ்த்ர சக்தி வெறும் முரட்டுத் தேஹபலமாய் மட்டுமில்லாமல் த்வேஷ குணத்தையும் கோபத்தையும் மட்டும் காட்டுவதாயில்லாமல், சாஸ்த்ரத்தோடு, தர்ம நெறிகளோடு சேர்ந்திருக்க வேண்டும். தெய்வ சக்தியும், ஞான சக்தியும் கூடிய பிரம்ம தேஜஸையே க்ஷத்ரிய பலம் ஆதாரமாக கொள்ள வேண்டும். இதெல்லாம் அர்த்த சாஸ்திரத்தில் வரும் விஷயங்கள். ராஜாவின் புரோஹிதரையும் மந்திரிகளையும் பற்றி சொல்லும்போது இந்த விஷயங்கள் கூறப்பட்டிருக்கும்.

சஸ்த்ரம் என்பது தெய்வபலம் பெற்ற அஸ்த்ரமாவது பெரும்பாலும் தநுர்பாணங்களை வைத்துத்தான் என்று சொன்னேன். எத்தனையோ ஆயுதங்கள் இருக்கிறபோது யுத்த அப்யாஸ வித்யைக்கு ஏன் தநுர்வேதம் என்று பேர் இருக்கிறது என்பதற்குக் காரணம் தநுஸுக்கு உள்ள இப்படிப்பட்ட சிறப்புகள்தான்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

* êŠî‹-v¼w® ºP^î M÷,è‹ ''ªîŒõ^F¡ ºó™''Þó‡ì£‹ ð°FJ™ ''«õî‹''â¡ø à¬óJ™ ''åL»‹ ð¬ìŠ¹‹''â¡ø à†HKM™ àœ÷¶.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

**தெய்வங்களின் வில்கள்**

**எ** ல்லா ஸ்வாமிக்கும் தநுஸ் உண்டு. அந்த தநுஸுக்கு என்று ஒரு தனிப்பெயரும் உண்டு. பரமசிவன் கையில் வைத்திருக்கிற தநுஸுக்குப் 'பிநாகம்'என்று பெயர். அதனால் அவருக்கே 'பிநாகபாணி'என்று ஒரு பேர். த்ரிபுர ஸம்ஹாரத்தில் அவர் மேருவையே தநுஸாக வளைத்தார். மஹாவிஷ்ணுவுக்கு 'சார்ங்கபாணி'என்று ஒரு பேர் சொல்கிறார்கள். பலர் இப்படிப் பேர் வைத்துக் கொள்கிறார்கள். 'ஸ்ரீரங்கம்'மாதிரி 'சாரங்கம்'என்று நினைத்துக் கொண்டு 'சாரங்க பாணி'என்கிறார்கள். அது தப்பு. இதிலே 'ரங்கம்'எதுவுமில்லை. 'சார்ங்க ம்'என்பதே சரி;சாரங்கம் அல்ல. சார்ங்கம் என்பது மஹாவிஷ்ணுவின் கையில் இருக்கப்பட்ட வில். பொதுவிலே சங்க-சக்ர-கதா-பத்ம ஆயுதங்களைச் சதுர்புஜங்களில் தரித்தவர் என்று சொன்னாலும், இதுகளைப் சார்ங்கம் என்ற வில்லும் அவருக்கு முக்யம். 'பஞ்சாயுத ஸ்தோத்ரம்'என்று அந்த நாலோடு இந்த ஐந்தாகவும் சேர்த்தே ஸ்தோத்ரம் இருக்கிறது*1. விஷ்ணுஸஹஸ்ரநாமக் கடைசி ஸ்லோகத்திலும் சார்ங்கத்தைச் சேர்த்து ஐந்து ஆயுதங்களே சொல்லியிருக்கிறது. '' **தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்** ''நன்றாக வர்ஷிக்கட்டுமென்று ஆண்டாள் திருப்பாவையில் பாடியிருக்கிறாள்.

தேவர்கள் மஹாவிஷ்ணுவுக்கும் பரமேஸ்வரனுக்கும் பலப் பரீக்ஷை பார்க்க நினைத்தார்கள். அவர்களும் சரியென்று விளையாட்டாக உடன்பட்டு தநுர்யுத்தம் பண்ணிக் கொண்டார்கள். அப்போது மஹாவிஷ்ணு சிவனுடைய வில்லைக் கொஞ்சம் பண்ணிவிட்டார். கொஞ்சம்

பின்னமாய்ப் போன இந்த சிவ தநுஸ் விதேஹ ராஜாக்கள் வம்சத்திலே வந்து கடைசியாக ஜனகரிடம் இருந்தது. இதைத்தான் 'தநுர்பங்கம்'என்று ராமர் உடைத்து சீதையைக் கல்யாணம் பண்ணிக் கொண்டார். (தநுர்பங்கம்) பண்ணின இடம் பீஹாரில் 'தர்பங்கா'என்று இருக்கிறது);அப்புறம் அவர்கள் அயோத்திக்குத் திரும்புகிற வழியில் பரசுராமர் ஆக்ரோசமாக எதிர்ப்பட்டு ஒரு வில்லை ராமர் முன்னாடி நீட்டி, "நீ ஏதோ சொத்தை வில்லை மிதிலையில் உடைத்துப் பெரிய பேர் வாங்கிவிட்டாயே!இப்போது இந்த தநுஸை நாண் பூட்ட முடிகிறதா பார். சிவ விஷ்ணுக்களின் தநுர் யுத்தத்தில் பழுதாகாமலிருந்த நாராயண தநுஸ் இதுதான்"என்றார். ராமர் அந்த தநுஸையும் அலாக்காக நாண் பூட்டி பரசுராமருடைய அவதார சக்தியையே அதற்கு லக்ஷ்யமாய் வைத்து க்ரஹித்துக் கொண்டுவிட்டார் - என்று ராமாயணத்தில் வருகிறது.

ராமச்சந்திரமூர்த்தி என்று நினைத்த மாத்ரத்தில் கோதண்டபாணியாகத்தான் தோன்றுகிறது. க்ருஷ்ணாவதாரத்தில் வில் வைத்துக்கொள்ளாவிட்டாலும் தன்னுடைய ஆத்ம ஸகாவான அர்ஜுனனுக்கு வில்லாளி என்பதாகவே ஏற்றம் கிடைக்கும்படி அநுக்ரஹித்திருந்தார். 'காண்டீவம்'என்பது அவனுடைய வில்லின் பெயர். 'காண்டீபம்'என்று சொல்வது தப்பு.

ஸாக்ஷாத் பராசக்தியும் ராஜராஜேச்வரியாக இருக்கும்போது இக் தநுஸ் என்பதாகக் கரும்பு வில் வைத்துக் கொண்டிருக்கிறாள். மன்மதனுக்கும் இதுவேதான் ஆயுதம்.

தநுஸுக்கு இப்படி விசேஷமிருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலே, இத்தனை தெய்வங்களாயும் ஆகியிருக்கிற நிர்குணப் பிரம்ம வஸ்துவை அடைவதற்கும் உபநிஷத்திலேயே தநுர்வித்தை அப்யாஸத்தைத்தான் உபமானமாய் சொல்லியிருக்கிறது. சிஷ்யனைப் பார்த்து குரு, "ஸௌம்யா!உபநிஷத்திலேயிருக்கிற மிகப்பெரிய அஸ்திரமான, மஹாஸ்த்ரமான வில்லை எடுத்துக் கொண்டு அதிலே உபாஸனையாலே நன்றாகச் சாணை தீட்டி கூராயிருக்கிற அம்பைப் பூட்டி, அக்ஷரமான குறியை நோக்கி அதுவாகவே ஆகிவிடும் பாவனையோடு விடு"â¡ðî£è„ ªê£™LJ¼‚Aø¶*2. Þƒ«è àðGû˜FL¼‚Aø ñý£ Üv˜ó‹ â¡ð¶ æƒè£ó‹. Ü‹¹ â¡Aø¶ põ¬ù«òî£¡. ºPò£è„ ªê£¡ù 'Üþó‹'â¡ðîŸ° 'ÜNM™ô£î¶'â¡Á Ü˜ˆî‹:ðóŠHó‹ñ‹ î£¡ Ü¶. põ¡ ú£î¬ùò£™ î¡ C˜î¢¬î å¼ ºèñ£è, Ø ð‡E æƒè£ó˜F™ Ü¬îŠ Ì†®, Üî£õ¶ æƒè£ó ˜ò£ù˜F«ô ß´ð†´ ÜŠð®«ò Hó‹ñ˜F™ «ê˜‰¶, Ü‹¹ ôzò˜F™ ÜŠð®«ò å¡ø£ŒŠ ðF‰¶ M´Aø ñ£FK Ü˜¬õîñ£AMì «õ‡´ª¡Á Ü˜ˆî‹. Þƒ«è æƒè£ó‹ î¸ú£è«õ àõI‚èŠð´Aø¶.

---

*1. 'ð…ê£»î v«î£˜ó'˜F™ ð˜ñ˜¶‚°Š ðF™ 'ï‰îA'âùŠð´‹ è˜F ÃøŠð´Aø¶. Mwµ úývóï£ñ, è¬ìC v«ô£è˜F½‹ êƒ°, ï‰îA âÂ‹ õ£œ, ê‚ó‹, ê£˜ƒèM™, è¬î ÝAòù«õ ÃøŠð´A¡øù.

*2. º‡ì«è£ðGû˜:2.2.3

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் தநுர்வேதம் )

### மூவகை ஆயுதங்கள்

**ச** ஸ்த்ரம் மூன்று வகைப்படும். முக்தம், அமுக்தம், முக்தாமுக்தம் என்பது அந்த மூன்று. விட்டுப் போவது முக்தம். 'முச்'என்ற தாதுவுக்கு விடுதல் என்று அர்த்தம்;அதிலிருந்து வந்தது முக்தம். ஸம்ஸாரத்தை நிரந்தரமாக விட்டுப் போவதுதான் 'முக்தி'. 'மோக்ஷம்'என்பதும் 'முச்'என்பதின் இன்னொரு ரூபமான 'மோச்'என்பதிலிருந்து derive ஆனதுதான். விடுதல் என்பதைச் சொல்வதாலேயே விடுதலை, வீடு என்ற பெயர்கள் தமிழில் முக்தியைச் சொல்கின்றன. சிப்பியிலிருந்து தெறித்து விடுபடுவதாலேயே 'முக்தம்'என்று நவமணிகளில் ஒன்றுக்குப் பேர். முத்து என்கிறோம். முக்தியைத் தமிழ்

நூல்களில் முத்தி என்றே சொல்லியிருக்கும். ஆயுதங்களில் கையை விட்டுப் போகிறவை, அதாவது கையிலிருந்து எறிகிறவை முக்தம். கல்லை வீசி அடித்தால் அது முக்தம்தான். பாணங்கள் முக்தமே. அமுக்தம் என்பது கையை விட்டுப் போகாமல் பிடித்துக்கொண்டே அடிப்பது - கத்தி, சூலம், வேல், ஈட்டி இவை இப்படித்தான். ரொம்பவும் உக்ரமான யுத்தத்தில் வேலையும் ஈட்டியையும்கூட அப்படியே தூக்கி எறிந்து தாக்குவதுண்டு. தநுர் பாணங்களில் தநுஸ் எப்போதும் அமுக்தமாகவே இருந்தகொண்டு பாணங்கள் முக்தமாயிருக்கின்றன. பாசம் முதலிய ஆயுதங்கள் உண்டு. பாசம் என்பது நுனியில் சுருக்குப் போட்ட கயிறு. அம்பாள் விக்ரஹங்களிலெல்லாம் பாசம், அங்குசம் என்பதில் இது இடது மேல் கையிலிருக்கும் பிள்ளையாரின் மேல் பக்க இடக்கையிலும் இருக்கும். இதிலே ஒரு நுனியைக் கையிலே அழுத்தமாக வைத்துக்கொண்டே இன்னொரு நுனியை ரொம்ப தூரத்துக்கு முக்தமாக வீசி சத்ருவின் குரல் வளையில் சுருக்குப் போட்டு இழுத்துவர முடியும். இது முக்தாமுக்தம். சில சக்ரங்கள் பண்ணப்பட்டிருக்கும் 'டெக்னிக்'கினாலும் அவற்றை ஒருத்தன் எய்கிற ஸாமர்த்யத்தாலும் சத்ருவை 'அட்டாக்'பண்ணிவிட்டு, போன டைரக்ஷனிலேயே திரும்பி, எய்தவனின் கைக்கே திரும்பி வந்துவிடும். இதுவும் முக்தாமுக்தம்தான். முதலில் விட்டுவிட்டான்;ஆனால் அப்புறம் கைக்கு வந்து விடுகிறது. Boomerang என்ற ஆயுதம் இப்படித்தான் குறியை அடித்தபின் விட்ட இடத்துக்கே திரும்பிவிடும் என்கிறார்கள்.

மஹா மந்திரங்களை எந்த பாணத்தில் வேண்டுமானாலும் சேர்த்து அஸ்திரமாக்குவது என்றில்லாமல் அதற்கென்றே ஒரு பாணத்தை அஸ்திரமாக அந்த மந்த்ர தேவதையிடமே பெற்ற புராண புருஷர்கள் உண்டு. இவர்கள் இப்படிப்பட்ட திவ்யாஸ்தரத்தைப் பிரயோகம் பண்ணும்போது அது லக்ஷ்யத்தை அடைந்து அடித்த பிறகு திரும்பவும் தங்கள் கைக்கே திரும்பி வருவதற்கும் மந்திர உச்சாரணம் பண்ணி வரவழைத்துக் கொண்டு விடுவார்கள். இல்லாவிட்டால் இன்னொரு தரம் அந்த அஸ்த்ரத்தை ப்ரயோகம் பண்ணுவதற்கு இடமில்லாமல் போய்விடுமல்லவா?விட்ட அஸ்த்ரத்தைத் திரும்ப வாங்கிக் கொள்வதற்கு 'உபஸம்ஹாரம்'என்று பெயர். அது தெரியாதவன் திவ்யாஸ்த்ரங்களை விடப்படாது என்று ரூல். அஸ்த்ரத்தின் மஹா வீர்யம் தெரியாமல் ஒருத்தன் விட்டுவிட்டு, அது எதிர்பார்த்ததற்கு மேல் உத்பாதம் பண்ணுகிறதென்றால் அப்போது அவன் அதைத் திரும்ப வாங்கிக் கொண்டுவிட வேண்டும் என்றே லோக க்ஷேமத்தை உத்தேசித்து இப்படி ரூல் செய்திருக்கிறது. தற்காலத்தில்தான் இப்படி தர்மக் கட்டுபாடுகளே இல்லாமல், 'கண்டத்துக்குக் கண்டம்'ஏவுவோம். Inter Continental என்று பயங்கரமான அணுசக்தி குண்டுகளைக் கண்டுபிடித்து ஸ்டாக் பண்ணி வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

**படை வகைகள்**

ர ஜ-கஜ-துரக-பதாதி என்று ஸைன்யத்தில் நாலு வகை. இப்படிப் படையானது நாலு அங்கம் கொண்ட தாயிருப்பதால்தான் 'சதுரங்க ஸைன்யம்'என்பது. விளையாட்டுக்களில் ஒன்றுக்கும் சதுரங்கம் என்று பேர் இருக்கிறது. சொக்கட்டான், Chess என்பதெல்லாம் அதுதான், இதிலும் நால்வகைப் படை மாதிரியே காய்களை வைத்துக்கொண்டு அவற்றை இந்த ரீதியில்தான் நகர்த்தலாம் என்று விளையாட்டு போவதால் சதுரங்கம் என்று பேர் ஏற்பட்டிருக்கிறது.

ரத-கஜ-துரக-பதாதி என்பதில் ரதம் தேர்ப்படை, கஜம் யானைப்படை, துரகம் குதிரைப்படை, பதாதி காலாட்படை. ரதத்திலிருப்பவன் ரதத்திலிருப்பவனோடு, இப்படியே ஒவ்வொருவிதப் படையிலுமிருப்பவன் அதையே சேர்ந்த எதிராளியோடுதான் யுத்தம் பண்ண வேண்டுமென்று விதி.

இந்த நாளில் 'ஆர்மி'க்கு'டிவிஷன்'என்று பிரிவு இருக்கிற மாதிரி அந்த நாளிலும் கணக்கு இருந்தது. இத்தனை அக்ஷௌஹிணி கொண்ட ஸேனை என்பார்கள். ஒரு

அக்ஷௌஹிணி*என்றால் நால்வகைப் படையிலும் எத்தனை யெத்தனை இருக்கணுமென்று கணக்கு உண்டு.

மஹாவீரர்கள்தான் ரதத்தில் இருந்துகொண்டு யுத்தம் செய்வார்கள். இப்படிபட்டவர்களில் ஒருத்தனாகவே இருந்துகொண்டு பதினாயிரம் பேரோடு யுத்தம் பண்ணும் திறமை பெற்றவனே 'மஹாரதன்'எனப்படுபவன். இந்த விஷயங்கள் மஹாபாரதத்தில் நிறைய வரும்.

யுத்த பூமியில் ஸைன்யத்தை அணிவகுத்து நிறுத்துகிறதில் பலவித டிஸைன்களின்படிச் செய்வார்கள். இவற்றுக்கு 'வ்யூஹம்'என்று பேர். கருட வ்யூஹம், பத்ம வ்யூஹம் என்றெல்லாம் கருடன், பத்மம் மாதிரியான ரூபம் வரும்படி ஸைன்யத்தை அமைத்திருப்பார்கள். உள்ளே போகப் போக ரொம்பச் சிக்கலான அமைப்பாக இருக்கும். இந்த வ்யூஹங்களைப் பிளந்து கொண்டு உள்ளே போய் யுத்தம் பண்ணி ஜயசாலியாகத் திரும்ப முடியும். அபிமன்யு க்ருஷ்ண பரமாத்மாவிடமிருந்து பத்ம வ்யூஹத்துக்குள்ளே பிரவேசிக்கிற முறையை மட்டும் தெரிந்து கொண்டு, அதிலிருந்து எப்படித் திரும்புகிறது என்று தெரிந்து கொள்ளாமலே கௌரவ ஸைன்யத்துக்குள் போய்த்தான் சத்ருக்களிடம் ஜீவனை இழந்தானென்று பாரதத்தில் இருக்கிறது.

நால்வகைப் படை தவிர கடற்படையும், கடல் யுத்த முறைகளும் உண்டு. இது Navy. Air Force என்கிற விமானப்படைதான் நவீன காலத்தைச் சேர்ந்தது. விமானங்கள் முற்காலங்களில் அபூர்வமாக தெய்வீக புருஷர்களாலும் அஸுரர்களாலும் மட்டுமே உபயோகிக்கப்பட்டு வந்தன. த்ரிபுராஸுரர்கள் ஒரு மாதிரி விமானப்படையெடுப்பு செய்தவர்கள்தான்.

---

* ஓர் அக்ஷௌஹிணி என்பது 21870 தேர்களும், அதே அளவு யானைகளும், அதைப்போல் மும்மடங்கான 65610 குதிரைகளும், ஐந்து மடங்கான 109350 காலாட்களும் கொண்டது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

**கோட்டை**

**இ** தெல்லாம் யுத்த பூமியைச் சேர்ந்த விஷயம். நாடு, நகரம் முழுவதையுமே படையெடுப்பதிலிருந்து ரக்ஷிப்பதற்காக செய்த முக்யமான ஏற்பாடே கோட்டை கட்டுவது. ரொம்பப் பெரிசாக பலமாகச் செய்வது இது. அதனால்தான் 'என்ன கோட்டை கட்டிண்டிருக்கே?'என்று கேட்கிற வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. ராஜஸ்தான் ராணாக்கள் சித்தோரில் விசேஷமாகக் கோட்டைகள் கட்டினார்கள். சிவாஜியும் மஹாராஷ்டிராவில் நிறையக் கட்டியிருக்கிறார். அரண் என்று கோட்டை, அகழ் என்று அதைச் சுற்றி ஜலம் இருக்கும்படி வெட்டுவது முதலானவற்றில் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் சிறப்புப் பெற்றிருந் தார்கள். திருக்குறளில் 'அரண்'என்றே பத்துச் செய்யுள் கொண்ட ஒரு அதிகாரமிருக்கிறது. பொதுஜனங்களுக்கு யுத்த அபாயமில்லாமல் பெரிய காப்பாயிருந்தது அரண்தான். அதனால்தான் தர்மத்துக்கு அரண், ஸத்யத்துக்கு அரண் என்றெல்லாம் பெரியவர்களைக் கொண்டாடும்போது சொல்கிறோம்.

கோட்டைக்கு ஸம்ஸ்க்ருதத்தில் 'துர்கம்'என்று பெயர். 'ஸுலபத்தில் பிரவேசிக்க முடியாதது'என்று அர்த்தம். இஹத்திலும் பரத்திலும் பெரிய ரக்ஷையாக இருக்கிற அம்பிகையை 'துர்கா'என்கிறோம். வடக்கே 'துர்க்'என்று முடிகிற அநேக ஊர்கள் அங்கேயெல்லாம் பூர்வத்தில் கோட்டைகள் இருந்ததைக் காட்டுகின்றன. 'கட்'(gad), 'காடா'(gada) என்று முடிகிற ஊர்களும் இப்படியேதான். தமிழ்தேசத்திலும் ஊத்துக்கோட்டை, புதுக்கோட்டை, செங்கோட்டை, பாளையங்கோட்டை என்று அநேக

ஊர்கள் இருக்கின்றன. செஞ்சிக் கோட்டையும் வேலூர்க் கோட்டையும் 'டூரிஸிட் ஸென்டர்'களாக இருக்கின்றன. இவற்றிலே எத்தனையோ மர்மங்கள்;பண்டங்களும் மநுஷ்யர்களும் (முக்யமாகக் ஸ்த்ரீகள்) எதிரிகள் கையில் சிக்காமலிருப்பதற்காக நிலவறை என்று அண்டர்-க்ரவுண்டில் வைத்திருப்பது முதலான பல ஏற்பாடுகள்.

வ்யூஹம் மாதிரியே கோட்டையிலும் பல அமைப்பு முறைகள் உண்டு. கோட்டை நிர்மாணத்தாலேயே நாடு நகரத்துக்கு க்ஷேமம் உண்டாகும்படியாக அவற்றை சாஸ்த்ரவத்தாக, மந்த்ர பூர்வமாகப் பண்ணவும் வழி இருக்கிறது. 'சயனம்'என்பதாக வேதத்தில் யஜ்ஞங்களில் செய்த கட்டுமானங்களுக்கான ரூல்களின் அடிப்படையிலேயே கோட்டை நிர்மாணம் செய்யப்பட்டதாகச் சொல்கிறார்கள். மநுஷ்ய ஸாமர்த்யத்தோடு மந்த்ரங்களாலும், வைதிகமான வடிவமைப்புகளாலும் ஏற்படுகிற தெய்வ சக்தியும் கோட்டை அமைப்பதில் பிரயோஜனமாயிருந்திருக்கிறது. ஸ்ரீ சக்ரம், ஷட்கோணம், ஸுதர்சன சக்ரம் என்றெல்லாம் சொல்பவை கூடச் சிலவித வடிவமைப்பினாலேயே திவ்ய சக்தியைப் பெறுவதுதானே?இப்படி காஞ்சிபுர நகரத்தையே ஸ்ரீ சக்ர ரூபத்தில் ஆசார்யாள் புனர் நிர்மாணம் பண்ணித் தந்தாராம். கோட்டையிலும் இப்படி சக்ராகாரம், பத்மாகாரம் என்று பல டிஸைன்கள். கோவிந்த தீக்ஷதர் தஞ்சாவூரில் புதிதாக காருடமாக (கருட ரூபத்தில்) கோட்டைக் கட்டச் செய்தாரம்.

கோட்டை பற்றிய இப்படிப்பட்ட அருமையான தத்வங்கள், செய்முறை எல்லாவற்றையும் இப்போது நாம் கோட்டை விட்டுவிட்டு நிற்கிறோம்!பழைய கோட்டை அத்தனையும் relic-ஆக (இடிபாடாக) நிற்க விட்டிருப்பது தான் நம் பெருமையாயிருக்கிறது!

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

**மல்யுத்தம்**

**ஜீ** வனத்துக்குப் பணமும் அவசியந்தான்;வைராக்யம், ஸந்நியாஸம் என்று உபதேசித்தால் நடைமுறைக்கும் பிரயோஜனமில்லையென்றே அர்த்த சாஸ்த்ரத்தைக் கொடுத்தாற்போலவே, சரீர பலத்தாலும் ஆயுத பலத்தாலும் ரக்ஷித்திக் கொள்ள வேண்டியதும் அவசியந்தான் என்றே தநுர்வேதத்தைக் கொடுத்திருக்கிறார்கள். ஆயுதமில்லாமலே குத்துச் சண்டை, மல் யுத்தம் முதலியனவும் தன்னுடைய சரீர பலம் ஒன்றை மாத்திரமே கொண்டு செய்வதுண்டு. 'மல்லர்'கள் என்று மல் யுத்த வீரர்களைச் சொல்லுவார்கள். மஹாமல்லன், மாமல்லன் என்றே நரஸிம்ஹ வர்மா என்கிற பல்லவ ராஜா பட்டப் வைத்துக் கொண்டிருந்தான் "என்ன மல்லுக்கு நிற்கிறே?"என்று கேட்பதிலிருந்து இத பெரிய யுத்த தந்திரமாயிருந்தது தெரிகிறது. க்ருஷ்ண பரமாத்மா சாணூரன், முஷ்டிகன் என்பவர்களோடு மல் யுத்தம் பண்ணிக் கம்ஸ ஸபையில் ஜயித்திருக்கிறார். ஜராஸந்தனோடு பீமஸேனன் மல் யுத்தந்தான் பண்ணி அவனைக் கொன்றான்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்** தநுர்வேதம் )

**தர்மயுத்தம்**

**த** ர்ம ரக்காகவே இப்படிப் பல தினுஸில் சரீரத்தைக் கொண்டும், ஆயுதத்தைக் கொண்டும் தன்னுடைய சரீரத்தையும், தன் நாட்டு மக்களின் சரீரத்தையும் ரக்ஷித்துக் கொள்வதற்கு தநுர்வேதம் வழி சொல்லிக் கொடுக்கிறது.

எந்தப் போர் முறையானாலும் இன்னின்ன ஒழுங்கு முறைகளின்படிச் செய்ய வேண்டும் என்று அதற்கு வ்யவஸ்தை பண்ணி 'தர்ம யுத்தம்'என்று வைத்திருக்கிறது. இதிலே பெரிய தர்மம், 'ஸேனைக்கும் ஸேனைக்கும்தான் சண்டை, யுத்த பூமியிலேதான் அந்த சண்டை

நடக்க வேண்டும், மற்றப் பொது ஜனங்கள் எவரையும் தாக்கப்படாது, நாடு நகரங்களை பாதிக்கப்படாது'என்று வைத்ததுதான். தற்காலத்திலோ ஸிவிலியன் பாபுலேஷன், குழந்தைகள், ஸ்திரீகள் எவரானாலும் க்ரூரமாகக் கொன்று குவிக்கிற விமானப் படையெடுப்பும், குண்டு போடுவதுந்தான் போர்முறை என்றாயிருக்கிறது.

அத்து மீறிப் பண்ணினவர்கள்தான் முற்காலங்களில் நாடு நகரத்தில் புகுந்து நாசம் பண்ணியும், தீ வைத்தும், ஜலாசயங்களில் (நீர் நிலைகளில்) விஷம் கலந்தும், ஸ்திரீகளை மானபங்கம் செய்தும் யுத்தம் செய்தது. இவர்கள் ரொம்பவும் குறைச்சலே. துருக்கர்கள், முதலான அந்நிய தேசத்தவர்கள் இந்த மாதிரிம முறைகெட்ட கார்யங்களைச் செய்ய ஆரம்பித்த பின்தான் இங்கே இவை சற்றுப் பரவின. அவர்கள் இப்படி அக்ரமம் பண்ணின போதுகூட சிவாஜி முதலான ஹிந்து ராஜாக்கள் சத்ருக்களைச் சேர்ந்த ஸ்திரீகளுக்குக் கெடுதல் பண்ணாமல், காப்பாகப் பல்லக்கிலே ஏற்றிப் போக வேண்டிய இடத்துக்கு அனுப்பி வைத்துபக்கிறார்கள்.

பாபங்களிலும் பிராயச்சித்தமேயில்லாத சில மஹா பாபங்களுண்டு. இவற்றைப் பண்ணினவர்களுக்கு 'ஆததாயி'என்றுபேர். தர்ம யுத்தமாக சரீர-ஆயுத பலங்களை மட்டும் காட்டி ஜயிக்காமல் நெருப்பு வைக்கிறவன், விஷம் வைக்கிறவன், நிராயுதபாணியாக இருப்பவனை ஆயுதத்தால் கொல்பவன், கொள்ளையடிக்கிறவன், நிலத்தைப் பிடுங்கிக் கொள்கிறவன், பரஸ்திரீயை அபஹரிக்கிறவன் ஆகியவர்களை ஆததாயிக்களின் லிஸ்டிலேயே சேர்ந்திருக்கிறது. இதிலிருந்தே தர்ம வியவஸ்தை நம் யுத்த முறையை எப்படிக் கட்டுப்படுத்தியிருக்கிறதென்று தெரிந்துகொள்ளலாம்.

முன்னேயே இன்னார்தான் இன்னாருடன் யுத்தம் செய்யலாம் என்ற கட்டுப்பாட்டைச் சொன்னேன். ஸம பலமுள்ளவர்களே யுத்தம் செய்துகொள்ள வேண்டும். சரணாகதி பண்ணுகிறவனை அடிக்கக் கூடாது. பயங்களியை விட்டுவிடணும். ஒரு font-ல் யுத்தத்தில் கலந்து கொள்ளாமல் தேவையின்போது சேர்ந்து கொள்வதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறவன் (stand-by) திடீரென்று புகுந்து ஒருத்தனை தாக்கக்கூடாது. ரொம்ப முடியாமல் சத்ரு கொஞ்சம் ச்ரம பரிஹாரம் செய்து கொள்கிறேனென்றால் அவனுக்கு அநுமதி தரவேண்டும். 'தீர்த்தம் குடிக்கிறேன்;கவசத்தை ஸரி செய்து கொள்கிறேன்;குதிரையை மாற்றிக் கொள்கிறேன்;புதுசாக ஆயுதம் கொண்டுவரச் செய்கிறேன்'என்றெல்லாம் சத்ரு சொல்லும்போது, அவன் அப்படிச் செய்கிறவரையில் தாக்கக் கூடாது. ஆயுதம் இழந்தவன், கவசம் உடைந்தவன் கவனக் குறைவாய் இருப்பவன், புறமுதுகு காட்டி ஓடுகிறவன் முதலியவர்களை ஒருபோதும் அடிக்கக் கூடாது.

சாரணர்கள் என்று ஒற்றர்கள், வேவுகாரர்கள் இருப்பார்கள்;ஸமாசாரம் கொண்டு வரும் தூதர்கள் இருப்பார்கள்;ஆயுதங்களைக் கொண்டுவந்து தருவதற்காகச் சிலபேர் இருப்பார்கள் உத்ஸாஹமூட்டுவதற்காக சங்கம், பேரி முதலான வாத்யங்களை வாசிப்பவர்கள் இருப்பார்கள். இவர்களையெல்லாம் தப்பித் தவறியும் தாக்கிவிடக் கூடாது. ராவணனுடைய சாரணர்கள், தூதர்கள் ஆகியவர்களை வானரங்கள் ஹிம்ஸிக்காதபடி ராமர் யுத்த தர்மத்தை அவர்களுக்குச் சொன்னதாக ராமாயணத்தில் இருக்கிறது.

யுத்த பூமியில்தான் சண்டையே தவிர, யுத்தம் முடிந்து திரும்பிப் பாசறைக்கும் போகிறபோது இரண்டு தரப்புக்காரர்களும் அன்போடுதான் பழக வேண்டுமென்று கூடச் சொல்வார்கள்.

இப்போது ஒரே அதர்ம யுத்தந்தான் Chemical Warfare என்று ஜலத்திலும் அட்மாஸ்ஃபியரிலும் விஷத்தைச் சேர்ப்பது, scorch-earth என்று நிலத்தை சாகுபடிக்குப் பிரயோஜனமில்லாமல் எரித்துவிடுவது எல்லாமே ஸஹஜமாகச் செய்யப்படுகின்றன.

நமக்கு அர்த்தம், காமம் எல்லாமே அநுமதிக்கப்பட்டிருந்தாலும் தர்மம், மோக்ஷம் என்ற இரண்டாலும் இவற்றுக்கு இரண்டு பக்கமும் வரம்பு கட்டி தர்ம-அதர்ம-காம-மோக்ஷம் என்று வைத்துவிட்டதால் யுத்தம் உள்பட எல்லாமே அததுவும் லக்ஷ்யமாய் விடாமல், தர்ம வாழ்க்கை, வீட்டுப் பேறு என்ற லக்ஷ்யங்களுக்கு அநுகூலம் செய்யும் ஸாதனங்களாகவே ஒழுங்கு செய்யப்பட்டன. இப்படி தர்மத்தோடு இசைந்து செய்யும்படியாகவே ரிஷிகள் அமைத்துத் தந்த போர்க் கலைதான் தநுர்வேதம். பாரத யுத்தத்தின்போது, ஸந்த்யா

வந்தனத்தில் அர்க்யம் தருகிற வேளை தப்பிப் போகிறதேயென்று ஸேநா வீரர்கள், ஜலத்தைத் தேடிக்கொண்டு போக அவகாசமில்லாததால் புழுதியையே எடுத்து அர்க்யம் தந்தார்கள் என்று வியாஸர் சொல்வதிலிருந்தே யுத்தம் எப்படி தர்மாசாரங்களோடு சேர்ந்திருந்தது என்று தெரிகிறது.

தமிழிலே அர்த்த புஷ்டியுடன் 'மறக் கருணை'என்று சொல்வார்கள். லோகத்தில் தர்மம் தழைக்க வேண்டும் என்ற உசந்த லக்ஷ்யத்துக்காவே கடுமையாக நடந்து கொள்வதுதான் மறக் கருணை. இந்த அடிப்படையில் அநுஷ்டிக்க வேண்டியதே தநுர்வேதம்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )

காந்தர்வ வேதம் *

உபயோகமில்லாததன் உபயோகம்

அ ர்த்த சாஸ்திரம் இருக்கிறது. அது ஸமூஹத்தில் நாம் இருக்க வேண்டிய ஸ்தானத்தையும், பழக வேண்டிய முறைகளையும் தெரிவித்து daily life-க்கு (அன்றாட வாழ்க்கைக்கு) உபகாரம் செய்கிறது. வயிற்றைக் கழுவிக் கொள்ள வழிகாட்டுவதும் அதுதான். க்ருஷி சாஸ்த்ரம் என்பதாக உழவுத் தொழிலைச் சொல்லும் ஒன்று இருக்கிறது. பாக சாஸ்த்ரம் என்று சமையற் கலையைச் சொல்லிக் கொடுக்கவும் ஒரு சாஸ்த்ரம் இருக்கிறது. இவற்றால் நம் வயிறு நிரம்புகிறது. பகையைத் தீர்த்துக் கொள்ள யுத்த சாஸ்த்ரமான தநுர்வேதம் இருக்கிறது. சரீரத்துக்கு வரும் கஷ்டத்தை நிவ்ருத்தி செய்துகொள்ள ஆயுர்வேதம் உபகரிக்கிறது. இப்படியெல்லாம் வயிற்றுக்கும் ஆயுர்வேதம் உபகரிக்கிறது. இப்படியெல்லாம் வயிற்றுக்கும் உபயோகமில்லாமல், பகை, கஷ்டம் முதலியவற்றை நிவ்ருத்தி செய்து கொள்ளவும் ப்ரயோஜனப்படாமல் இருக்கிற ஒரு சாஸ்த்ரந்தான் இப்போது ஸப்ஜெக்டாக எடுத்துக் கொண்டிருக்கிற காந்தர்வ வேதம்.

நன்றாயிருக்கிறதல்லவா 'இன்ட்ரொடக்ஷன்'(விஷய அறிமுகம்)?

(இப்படிக் கேட்டபின் ஸ்ரீ பெரியவர்கள் சிறிது பொழுது பேசாமலே உட்கார்ந்திருக்கிறார்கள். பிறகு சிரித்துக் கொண்டு தொடங்குகிறார்கள்:)

ஒரு 'யுடிலிடி'யும் இல்லாத ஒன்றைத்தான விஷமாய் எடுத்துக் கொண்டிருக்கிறேன் என்று நான் சொல்லிவிட்டு, உங்கள் reaction-காகத்தான் கொஞ்ச நேரம் பேசாமல் உட்கார்ந் திருந்தேன். இப்படி நான் சொன்ன விட்டும், 'இந்த மாதிரி உதவாக்கரை ஸமாசாரத்தைச் சொல்லவா உங்கள் பொழுதை வீணாக்குகிறீர்கள்?இதற்கு நாங்களும் எங்கள் 'டய'த்தை 'வேஸ்ட்'செய்து கொண்டு உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்கணுமா?'என்று உங்களில் யாரும் கேட்கவில்லை;எழுந்திருந்து போகவுமில்லை. ரொம்பவும் ஆர்வத்தோடு, 'அப்படிப்பட்ட யூஸ்லெஸ் ஸமாசாரம் என்னதான் தெரிந்து கொள்ளலாமே?'என்று நீங்கள் உட்கார்ந்திருப்பது உங்கள் முகத்திலிருந்தே தெரிகிறது. 'யூஸ்லெஸ்ஸான ஒன்றுக்கும் ஒரு சாஸ்த்ரம், அதைப்பற்றிச் சொல்லப் போகிறார்'என்பதாலேயே, ரொம்ப இன்டரெஸ்டிங்காகப் பொழுது போகும் என்று ஆவலாய் உட்கார்ந்திருக்கிறீர்கள். என்னைக் கேள்விக் கேட்டோ, எழுந்திருந்து போயோ உங்களுடைய உண்மையான ரியாக்ஷனைக் காட்டினால் அது மரியாதைக் குறைச்சலாகுமே என்பதற்காக நீங்கள் உட்கார்ந்திருக்கவில்லையென்று நன்றாகத் தெரிகிறது. அப்போது பல்லைக் கடித்துக்கொண்டு வேண்டா வெறுப்பாய் உட்கார்ந்திருப்பீர்கள். இப்போதோ உங்கள் முகத்திலேயே 'க்யூரியாஸிடி'எழுதி ஒட்டியிருக்கிறது.

இதிலேதான் 'காந்தர்வ வேதம்'என்ற யுடிலிடி இல்லாத விஷயம் எப்படி ஒரு சாஸ்த்ரமாக, உபவேதமென்றே பெத்தப் பெயரிருப்பதாக ஏற்பட முடியும் என்பதற்கு ஆன்ஸர் இருக்கிறது.

'யுடிலிடி'என்பதாக நடைமுறை வாழ்க்கையில் ப்ரயோஜனம் உள்ளதாக இல்லாமலிருப்பதற்கும் மநுஷ்யனைக் கவர்கிற ஏதோ ஒன்று இருப்பது 'இது உபயோகமில்லாத ஸப்ஜெக்ட்'என்று நான் சொன்ன பிற்பாடும் நீங்கள் இதில் ஆர்வம் காட்டுவதிலிருந்தே 'ப்ரூவ்'ஆகிறது. இதைப்பற்றிக் கேட்பதால் உங்களுக்குப் பசி ரொம்பப் போகிறதில்லை, ரூபாய் வரப்போகிறதில்லை, பகையோ வியாதியோ தீரப்போகிறதில்லை. ஆனாலும் "ஸ்வாரஸ்யமாகப் பொழுது போகும்"என்பதற்காக உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

இதிலிருந்து 'யுடிலிடி'இல்லாததிருந்தும் மநுஷ்யனின் அறிவும் மனஸூம் எதையோ ஒன்றைப் பெற்று ஒரு நிறைவை, ஸந்தோஷத்தை அடைய முடியுமென்று தெரிகிறது. ப்ரத்யக்ஷமாக இதோ இத்தனை பேர், இந்த ராத்திரி வேளையில் எத்தனையோ கார்யத்தை விட்டுவிட்டு இதைப் பற்றி அறிகிறதற்காக உட்கார்ந்திருப்பதில் நிரூபித்துக் காட்டிக் கொண்டிருக்கிறீர்கள்.

இரண்டாவது, இன்னொன்று தெரிவது, ஸ்வாரஸ்யமான பொழுதுபோக்கு மநுஷ்யனுக்கு அவச்யமாக, அத்யாவச்யமாக இருக்கிறதென்ற உண்மை, 'இது பணத்தைக் கொடுக்க வேண்டாம், வயிற்றை ரொப்ப வேண்டாம்;பொழுபோக உபயோகமாகிறதோ இல்லையோ?Ü¶«ð£¶‹'â¡ø â‡í‹ ãŸð´õ¶ Þîù£™î£¡.

இப்படிப் பொழுதுபோக்காக, மனஸூக்கு ஒரு நிறைவையும் உத்ஸாஹத்தையும் தருவதாக உள்ள ஸங்கீதத்தைத்தான் காந்தர்வவேதம் என்று பேர் கொடுத்துத் தந்திருக்கிறார்கள்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

* "ªîŒõˆF¡ °ó™"ºîŸð°FJ™ "ð‡ð£´"âÂ‹ HKM½œ÷ "úƒWî ô‚ò‹ ê£‰î«ñ", "Þ¬ê õN«ò ß„õó£¸ðõ‹", "è£‰î˜õ «õî‹"â¡Â‹ à¬óèÀ‹ ð£˜‚è.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ) (காந்தர்வ வேதம்)

**ஸங்கீதம், நாட்டியம், நாடகம்**

**ஸ** ங்கீதம் என்றால் பாட்டு என்று மட்டும் அர்த்தம் பண்ணிக் கொள்ளாமல், பாட்டு, டான்ஸ், ட்ராமா என்ற மூன்றும் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். கீத வித்யை, ந்ருத்யம், நாடகம் என்று இந்த மூன்றுமே ஆதிகாலத்திலிருந்து அப்யஸிக்கப்பட்டு வந்திருக்கின்றன. ஸினிமாவும் நாடகம் என்பதன் கீழ் வந்துவிடும். காந்தர்வ வேதத்தில் பெரிய 'அதாரிடி'யாக இருக்கப்பட்ட பரத சாஸ்த்ரத்தில் ஸங்கீதம், நாட்டியம் இரண்டையும் சேர்த்துத்தான் விவரித்திருக்கிறது. ஸங்கீதம் என்று இப்போது சொல்கிற பாட்டுக்கு பரதர்தான் ஆதியில் பூர்ணமாக விவரணம் கொடுத்தவர் என்று சொல்லி ம்யூஸிக் கான்ஃபரன்ஸ்களிலெல்லாம் அவரை நிறைய quote பண்ணுகிறார்கள். தியாகராஜ ஸ்வாமிகள்கூட தம் கீர்த்தனையில் அவர் பேரைச் சொல்லி நமஸ்காரம் பண்ணியிருப்பதாகச் சொல்கிறார்கள். அதே ஸமயத்தில் டான்ஸூக்கு 'பரத நாட்டியம்'என்றே பேர் போடுகிறார்கள். நடனக் கலைக்கான ரூல்களை பரத சாஸ்திரத்திலிருந்தே காட்டுகிறார்கள். கொஞ்ச காலத்துக்கு முந்தி பார்த்தோம். " 'ஸங்கீத நாடக அகாடெமி'என்று பேர் வைத்துக்கொண்டு அதெப்படி நாட்டியக்காரர்களையும் கௌரவிக்கிறீர்கள்? 'ஸங்கீத-நாட்ய-நாடக அகாடெமி'என்று பெயரை மாற்ற வேண்டாமா?"என்று சில பேர் கேட்டார்கள். அதற்கு அந்த ஸ்தாபனத்தார் கொடுத்த பதிலில் "ஸங்கீதம் என்றாலே வாய்ப்பாட்டு, வாத்யம், நாட்டியம் மூன்றும் என்றுதான் பிராசீனமான 'டெஃபனிஷன்'இருக்கிறது"*என்று காட்டியிருந்தார்கள்.

நாடகம் என்பதையும் இதே மாதிரி நாட்டியத்திலிருந்து பிரிக்க முடியாது. 'நட'என்ற வேர்ச் சொல்லிலிருந்துதான் நடனம், நாட்யம் என்ற இரண்டு வார்த்தைகளும், நாடகம் என்ற வார்த்தையும் வந்திருக்கின்றன. மூவ்மென்டைக் குறிக்கிற வார்த்தை அது. தமிழில் நடப்பது என்கிறோம். நடப்பதும், நடிப்பதும், ஆடுவதும், பாடுவதும் எல்லாம் கிட்டக் கிட்ட, ஒன்றையொன்று தழுவி இருப்பவைதான். தமிழில் 'கூத்து'என்பது டான்ஸ், ட்ராமா இரண்டையும் குறிப்பதுதான். அம்பலக்கூத்தன், கூத்தப்பிரான் என்கிறபோது நடராஜா பண்ணுகிற நடனத்தைக் கூத்து என்கிறோம். தெருக்கூத்து என்கிறபோது நாடகம் என்பதைக் கூத்து என்கிறோம். நடிகன், நடிகை என்றால் தமிழில் ஸினிமா, ட்ராமாவில் ஆக்ட் பண்ணுகிறவர்கள் என்று மாத்திரம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். இதற்கு மூலமாக ஸம்ஸ்க்ருதத்தில் உள்ள 'நடன்', 'நடீ'என்ற வார்த்தைக்கு டான்ஸ் பண்ணுகிறவர்கள், ஆக்ட் பண்ணுகிறவர்கள் என்று இரண்டு அர்த்தமும் இருக்கிறது. டான்ஸில் ஸங்கீதத்தோடு சேர்த்து நவரஸங்களை நடித்துக் காட்டுகிறார்கள். ஸீன், ட்ரெஸ், வேஷம் இல்லாமலே அப்படிச் செய்கிறார்கள். நாடகத்தில் அதே நவரஸங்களை வசனத்தில் நடித்துக் காட்டுவார்கள். இது யதார்த்தத்துக்கு இன்னம் கிட்டேயிருப்பது. அதனால் ஸீன், தத்ரூபமாக அந்தந்த பாத்ரத்துக்கான வேஷம் எல்லாம் போட்டுக்கொண்டு செய்கிறார்கள். இதெல்லாம் டான்ஸில் ரஸிகர்களே பூர்த்தி செய்து கொள்ளும்படி விட்டிருப்பதே அதன் விசேஷம். கால் கையால் 'மூவ்மென்ட்', 'இமோஷனல் மூவ்மென்ட்'(உணர்ச்சி அசைவு) ஒரு கதை அங்க அங்கமாய் 'மூவ்'ஆவது என்று நாட்டிய, நாடகங்களில் பலவித மூவ்மென்ட்கள் இருக்கின்றன. பாடுவதை இசை என்றும் வசனமாகப் பேசுவதை இயல் என்றும் சொல்கிறார்கள். 'இயல்'என்றால் இயல்பாக, அதாவது யதார்த்தமாக இருப்பது. இது எத்தனை நன்றாகயிருந்தாலும் ஸூக்ஷ்மமான கலா ரஸத்தால் இதைப் பூர்த்தி பண்ணிக் கொண்டால்தான் ரஸிக ஹ்ருதயத்துக்கு நிறைவு ஏற்படுகிறது. அதனால்தான் நாடகத்திலும் நடுநடுவே பாட்டு, டான்ஸ் எல்லாம் வருகிறது. டான்ஸிலே பாட்டு வந்தாலும் பேச்சு வருவதேயில்லை.

பாட்டிலோ அங்க அசைவான டான்ஸ், பேச்சு இரண்டும் வராமலே அது பூர்ண ரஸத்தைக் கொடுத்து விடுகிறது. ஆலாபனை பண்ணுகிறபோது வார்த்தை, அதற்கான நவரஸ உணர்ச்சி பாவங்கள் இவைகூட இல்லாமலே உள்ளத்தை நிறைவு பண்ணிவிடுகிறது. அதனால் அதற்கு ரொம்பவும் விசேஷமிருப்பதாகத் தெரிகிறது.

கானம் பண்ணுவது, நடனம், நாடகம் மூன்றும் சேர்ந்து காந்தர்வ வேதம். இதனால் நமக்குப் பணம் வராது. வயிறு ரொம்பாது. இவற்றைக் கச்சேரி, ஸதிர் என்று பண்ணுகிறவர்களுக்கு, நடிகத்கிறவர்களுக்கு, நடத்துகிறவர்களுக்குத்தான் வயிறு ரொம்புகிறது. பர்ஸ் ரொம்புகிறது. பார்க்கப்போகிற நாம் நம் வயிற்றுக்காக வைத்துக் கொண்டிருப்பதை அங்கே கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருகிறோம். 'யுடிலிடி'என்ற பாயின்டில் இப்படி நஷ்டப்பட்டாலும் மனஸுக்கு மகிழ்ச்சி, உல்லாஸம், உத்ஸாஹம், பொழுதுபோக்கு என்ற லாபம் கிடைப்பதால் இப்படிச் செய்கிறோம். இது மட்டும் 'யுடிலிடி'இல்லையா?கொத்தவரக்காய் வாங்கினால் சாப்பிடலாம். அதே காசுக்குப் பூ வாங்கி flower vase-ல் வைத்தால் சாப்பிட முடியாதுதான். இருந்தாலும் இதைப் பார்த்தால் நேத்ரானந்தமாயிருக்கிறது, மனம் குளிர்கிறது என்பதால் கொத்தவரக்காய் வேண்டாமென்று இந்த பொக்கேயை வாங்குகிறான் என்றால் இதற்கு '»®L®'Þ™¬ô â¡Á âŠð®„ ªê£™õ¶?

அன்றாட அலுவல்களில், பொறுப்புகளில் அநுஷ்டானங்களில் அலுத்துக் களைத்துப் போகாமல் மனஸுக்கு உத்ஸாஹம் தரவேண்டியதுதான் என்றே உபயோகமில்லாததாகத் தோன்றுகிற பாட்டையும், கூத்தையும் பெரியவர்கள் 'காந்தர்வ வேதம்'என்று வைத்திருக்கிறார்கள். மற்றவற்றின் உபயோகத்தை நாம் உணர்வதற்கான உத்ஸாஹத்தைத் தரும் பெரிய உபயோகம் இவற்றுக்குத்தான் இருக்கின்றன. வாழ்க்கைப் போராட்டத்தில் நமக்கு ஏற்படுகிற பாரத்தை மறந்து கொஞ்ச நேரமாவது இறக்கிவைப்பது காந்தர்வ வேதம் செய்யும் பெரிய உபகாரம்.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ) (காந்தர்வ வேதம்)

**பெயர்க் காரணம்**

'**கா** ந்தர்வ வேதம்'என்று ஏன் பெயர் என்றால் கந்தவர்கள்தான் உத்ஸாஹம் கொடுக்கும் விஷயங்களிலேயே பொழுதைப் போக்கிக் கொண்டு, ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கிறவர்கள். நம் கண்ணுக்குத் தேவஜாதிகளில் ஒன்றாக கந்தர்வர்கள் இருக்கிறார்கள். நம் கண்ணுக்குத் தெரியாமல் மைகராஸ்கோப்புக்குத் தெரிகிற சின்னஞ்சிறிய க்ருமிகள் பல இருக்கின்றன. மைக்ராஸ்கோப்புக்கும் தெரியாமல் எலெக்ட்ரிஸிடி இருக்கிறது. நம் கண்ணுக்குத் தெரியாமல் உள்ளேயிருப்பதெல்லாம் எக்ஸ் ரேயில் தெரிகிறது. அதீந்த்ரிய த்ருஷ்டி, திவ்ய சக்ஷுஸ், ஞானப்பார்வை என்றெல்லாம் சொல்கிற உயர்ந்த பார்வையை உடைய ரிஷிகளுக்கும், யோகிகளுக்கும், ஸித்தர்களுக்கும் நம் கண், மைக்ராஸ்கோப், எக்ஸ்-ரே ஆகிய எதற்கும் தெரியாத கந்தர்வாதி ஜாதிகள் புலனாவார்கள்.

சித்ரங்களில் கந்தர்வர்களைப் போடும்போது அவர்கள் வீணாகானம் பண்ணிக்கொண்டும், புஷ்பம் சித்தரித்திருக்கும். இந்திரிய ஸௌக்யங்களைத் தரும் விஷங்களுக்கு கந்தர்வர்களையே அதிஷ்டான தேவதைகளாகச் சொல்லியிருக்கிறது. ஆனதால் இப்படிப்பட்ட இன்பத்தைத் தருகிற சித்ரக் கலை, கவித்வம், பல பாஷா ஞானம், செஸ் மாதிரி வீட்டுக்குள்ளே விளையாடுகிற விளையாட்டு (in-door games), பந்து பாட்மின்டன் மாதிரி வெளியிலே ஆடுகிறவை (out-door games), நாட்டிய நாடகங்களிலேயே ஒரு அம்சமான பொம்மலாட்டம், நிழலாட்டம், கரகாட்டம் இவை எல்லாவற்றையுங்கூட காந்தர்வ வேதத்தைச் சேர்ந்ததாகவே சொல்வதுண்டு.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் ) (காந்தர்வ வேதம்)

**அறுபத்துநாலு கலைகள்**

**ச** துஷ்-ஷஷ்டி கலா அதாவது அறுபத்துநாலு கலைகள் என்று ஒரு கணக்குச் சொல்வதுண்டு. இந்தக் கலைகளாகக் கூட அம்பாள்தான் இருக்கிறாளென்பதால் அவளுக்கு ஸஹஸ்ர நாமத்தில் " **சதுஷ்-ஷஷ்டி கலாமயி** " என்று ஒரு நாமா இருக்கிறது. இந்த அறுபத்துநாலில் மேலே சொன்ன எல்லாம் வந்துவிடும்.

லலிதா ஸஹஸ்ர நாமத்துக்கு பாஸ்கர ராயர் என்கிறவர் பண்ணின பாஷ்யம் ரொம்பவும் முக்யமானது. அம்பாளுடைய அநுக்ரஹத்தால் எல்லாத் துறைகளிலும் ஆச்சர்யப்படு ம்படியான வித்வத் உள்ளவராக இருந்தவர் இந்த பாஸ்கர ராயர். இவர் அறுபத்துநாலு கலைகள் என்னென்ன என்று பல புராதன நூல்களை ஒப்பிட்டுப் பார்த்துத் தம்முடைய பாஷ்யத்தில் இன்னவென்று வரையறுத்துச் சொல்லியிருக்கிறார். வைதிக மதத்துக்கு ஆதாரமாயிருக்கிற வேதம், வேதாங்கம், உபாங்கம், உபவேதம் என்கிற பதினெட்டு வித்யாஸ்தானமுமே இந்தக் கலைகளில் வந்து விடுகின்றன. ஷட்தர்சனங்கள் என்பதைச் சேர்ந்த ஸாங்கியம், யோகம் முதலான ஆத்மார்த்தமான மற்ற சாஸ்திரங்களும் வந்துவிடுகின்றன. ஆனையேற்றம், குதிரையேற்றம் இவையும் வருகின்றன. மந்த்ர சக்தியால் பண்ணுகிற ஆகர்ஷணம், வச்யம், திரஸ்கரிணி என்ற கண்கட்டு வித்தை, இந்த்ர ஜாலம் என்னும் மாஜிக், பித்தளையைப் பொன்னாக்குகிற ரஸவாதம், வைத்யத்தை சேர்ந்த நாடி சாஸ்திரம், விஷத்தை இறக்கும் 'காருட சாஸ்திரம்', ரூப லக்ஷணத்தைக் கொண்டே ஒருத்தனின் குணத்தையும் வாழ்க்கைப் போக்கையும் நிர்ணயம் செய்யும் 'ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரம்', ரத்னப் பரீக்ஷை முதலான பலவற்றை அறுபத்துநாலில் காட்டுகிறார்.

இதில் அழகுணர்ச்சி, ரஸிக மனஸ், இந்திரிய இன்பம் முதலியவைகளைப் பூர்த்தி பண்ணுவதாகவும் பல இருக்கின்றன. மாலை, வாஸனைப் பொடி, நகை நட்டு முதலியவை செய்வது, பின்னுவது எண்ணெய் தேய்ப்பது, பக்ஷிகளுக்குப் பேச்சுச் சொல்லித் தருவது, யௌவனம் உண்டாக்குவது, புதிர் போடுவது, ஒருத்தர் முடிக்கிற வார்த்தையையே இன்னொருத்தர் ஆரம்ப வார்த்தையாய் வைத்து 'அந்தாதி'பாடுவது (அந்த - ஆதி என்பதே அந்தாதி 'அந்த'- முடிவு;'ஆதி'- ஆரம்பம்), ஒருத்தர் ஒரு 'ஐடியா'வை ஒளித்துப் பாதி மாத்திரம் சொல்லி விட்டுவிடுவதை இன்னொருத்தர் புரிந்து கொண்டு பாக்கியையும் சொல்லிக் கவிதையைப் பூர்த்தி செய்வதுதான் 'ஸமஸ்யா பூர்ணம்' - என்று இந்தக் கலைகளில் பல இருக்கின்றன. இவையும் காந்தர்வ வேதத்தில் வருவதாகவே வைத்துக் கொள்ளலாம். இப்படிப் பார்த்தால் 'ஜர்னலிஸம்'என்று தற்போது பஹுஜன வசீகரத்தோடு இருக்கிற பத்திரிகைத் தொழிலும் இதைச் சேர்ந்ததாக ஆகும். மொத்தத்தில் விசித்ரத்தைக் காட்டுவதெல்லாம் காந்தர்வ வித்தைகள் எனலாம். மாஜிக்தான் விசித்ரம் என்றில்லை. வார்த்தை விசித்ரமாய் பேசுவது, எழுதுவது, ஸ்வர தாள விசித்ரமாய் பாடுவதும் ஆடுவதும், ரஸ விசித்ரங்களைக் காட்டி நடிப்பது எல்லாமே விசித்ரந்தான்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

பொழுது போக்கும் புலன் கட்டுப்பாடும்

பிரத்யக்ஷத்தில் நாம் பார்ப்பதில் இப்படிப் பொழுது போக்கு, உத்ஸாஹம், pleasures of the senses என்று இருப்பவை எல்லாமே மநுஷ்யனை ரொம்பவும் இழுத்துக் கொண்டு போகிற சக்தி உள்ளவையாயிருக்கின்றன. 'இழுத்துக் கொண்டு'என்றால் மேலேயா என்றால் அப்படியுமில்லை. பாட்டு, கூத்து, ஸினிமா, ஸ்போர்ட்ஸ் நாவல், பத்திரிகைகள் எல்லாம் சாப்பாடு திகட்டிப் போகாமல் ஊறுகாய் மாதிரி, கர்மாநுஷ்டானங்களில் ஸ்ட்ரெயின் ஆகாமல் ரிலாக்ஸ் செய்யவே இருக்க வேண்டும் என்று மட்டுந்தான் சாஸ்திரங்களில் அநுமதித்திருப்பது. கடைசி பக்ஷமாகத்தான் இவற்றுக்கு நம் மனஸையும் பொழுதையும் பொருளையும் கொடுக்க வேண்டும். ஆனாலும் ஈஸ்வர மாயையில் எப்படியிருக்கிறதென்றால் கொஞ்சம் இதுகளில் இறங்கினாலும் இவை சுழலாக நம்மை ஒரேயடியாக இழுத்துக் கொண்டு போய் இவற்றுக்காகவே நாம் ஸகலத்தையும் அர்ப்பணம் பண்ணுகிற நிலைக்குக் கொண்டு நிறுத்துகின்றன.

இப்படியிருப்பதற்குக் காரணம் தற்போது நமக்குக் கர்மாநுஷ்டானம் ரொம்பவும் குறைந்து போயிருப்பதுதான். அநுஷ்டானம் நிறையச் செய்தோமானால் தன்னால் நல்லறிவு, சுத்தமான மனஸ், கட்டுப்பாடு, sense of proportion (எதற்கு என்ன அளவு என்ற நிர்ணயமான அறிவு) எல்லாம் உண்டாகிவிடும். அதனால் பொழுது போக்கையே வாழ்க்கைப் போக்காக, அதிலும் வழுக்கி விடுகிற போக்காக ஆக்கிக் கொள்ளாமல் எந்த அளவோடு ருசித்து விட்டு நிறுத்திக் கொள்ள வேண்டுமோ அப்படி நிறுத்திக் கொள்வோம். இல்லாமலா இந்த தேசம் ஒரே ஸமயத்தில் ஆசார சீலங்களுக்கும் பெயர் எடுத்து அதே ஸமயத்தில் இத்தனை கலைகளுக்கும் களஞ்சியம் என்ற பெயரையும் பெற முடிந்திருக்கிறது?

விவேகத்தோடு அளவறிந்து இந்தக் கலைகளை அநுபவிக்காமல் அதியாகப் போனால் இவையே நம்மை ரொம்பவும் இறக்கி விடுகின்றன. ஜனரஞ்ஜகம் என்பதில் ஆடல், பாடல், எழுத்து எல்லாமே ரொம்பவும் கீழ்த்தரமாகி விடுகின்றன. விளையாட்டு மோஹம் மனிதனைப் பைத்தியமே ஆக்கி விடுகிறது. ஸினிமா ஸ்டார்கள் வந்து விட்டால் பகவானே தர்சனம் கொடுப்பதுபோல் ஆவேசமாகி விடுகிறார்கள். 'கூத்தாடி'என்பது திட்டு வார்த்தையாகத் தானிருக்கிறது என்பதிலிருந்தே இந்தக் கலைகளை எப்படித் தப்பாகப் பிரயோஜனப்படுத்திக் கொண்டிருக்கிறோம் என்று தெரிகிறது.

அநுஷ்டானமில்லாதபோது இந்திரியம் ஓடுகிறபடி ஓடவேண்டுமென்று தோன்றுகிறது. 'ஜனங்கள் இப்படிப்பட்ட சரக்குதான் கேட்கிறார்கள்'என்று அவர்கள் தலையில் பழியைப் போட்டுவிட்டு, கன்னா பின்னாப் பாட்டுப் பாடுகிறார்கள், புலன் வெறியைத் தூண்டிவிடுகிற

ரீதியிலேயே எழுதுகிறார்கள், ஸினிமா எடுக்கிறார்கள், சித்திரம் போடுகிறார்கள். ஜனங்களும் அவர்கள் தலையில் பழியைத் திருப்பிப் போட்டு அவர்கள் இப்படிப்பட்ட சரக்குகளைத்தான் தருவதால் தாங்கள் அதையே எடுத்துக் கொள்ளும்படி இருக்கிறது என்கிறார்கள். இதிலே ஜனங்களைவிடக் கலைஞர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களாக இந்தக் கலைகளை அப்யஸித்துக் கொண்டிருக்கிறவர்களுக்குத்தான் அதிகம் பொறுப்பிருக்கிறது. இப்போது கண்டதை எழுதியும், பாடியும், நடித்தும், படம் பிடித்தும் கீர்த்தி, தனம் எல்லாம் ஸம்பாதித்து விடலாம். ஆனால், 'இத்தனை ஜனங்களைக் கெடுத்ததற்கான தோஷத்தையும் கண்ணுக்குத் தெரியாமல் ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறோம். நாளைக்கு இதற்காக நாம் ஒருத்தனுக்குப் பதில் சொல்லியாக வேண்டும்'என்ற நினைப்பு அவர்களுக்கு இருக்க வேண்டும்.

மளிகை ஸாமானில் கலப்படம் பண்ணினால் குற்றம்;குடி தண்ணீரைக் கெடுத்தால் குற்றம் என்றால் நேரே மநுஷ்யனின் ஆத்மாவையே கெடுப்பது இவற்றைவிடக் குற்றம்தானே?கலப்படத்துக்காக தண்டிக்கிறவன் நம் மாதிரி ஒருத்தன்தான். அவனிடமிருந்து தப்பியும் விடலாம். அல்லது லஞ்சம் கொடுத்து ஸரிப்படுத்திடலாம். ஆனால் தன் ஆத்மாவையும் கெடுத்துக் கொண்டு, மற்றவர்களையும் கெடுத்ததற்காக ஒருத்தனைச் சிக்ஷிக்கிறானே, அவனிடமிருந்து தப்பவே முடியாது! அவனை நாம் வசியம் பண்ணிக் கொள்ளவும் முடியாது!இந்த நினைப்பு இருந்து விட்டால் கலைகளில் ஈடுபட்டவர்கள் தப்பு வழிக்குப் போக மாட்டார்கள். தெய்வ நினைப்பு, பய பக்தி அநுஷ்டானம் இவை போனதில்தான் அடக்கம் போய்விட்டது; இந்திரியங்களின் வேகம் குறைவதால் ஏற்படுகிற பக்வம் வராமலே போகிறது. இதோடுகூடக் 'கலைஞர்கள்'என்று தாங்களாகவே தங்களுக்குக் கௌரவம் கொடுத்துக் கொண்டு பொதுஜனங்களும் அதில் மயங்கி இவர்களைக் கொண்டாடி முகஸ்துதி பண்ணுவதில் அஹம்பாவம் ஜாஸ்தியாகிவிடுகிறது. பழைய காலத்தில் போல, வித்வான்களைக் கூட்டி 'அரங்கேற்றம்'என்று செய்து, அவர்கள் ஒப்புக் கொண்டால்தான் ஒரு புஸ்தகத்தையோ, நாடகத்தையோ பிரசாரம் பண்ணலாம் என்றுமில்லாமல், 'கருத்து ஸ்வதந்திரம், எழுத்து ஸ்வதந்திரம், பேச்சு ஸ்வதந்திரம்'என்று வேறு ஏற்பட்டிருப்பதால், எதை வேண்டுமானாலும் ஆடிப் பாடி ஊரை வளைக்கலாமென்று நடந்து வருகிறது. சின்ன வயதிலிருந்தே மதக் கல்வி, மதாநுஷ்டானங்கள் இருந்தால் தான் ஸாத்விகம் ஏற்படும். அப்போதுதான் எத்தனை ஆட்டம், பாட்டம் இருந்தாலும் அதுகளும் முடிவில் உயர்ந்த ஸாத்விக லக்ஷ்யத்தில் சேர்ப்பதாக இருக்கும். முற்காலங்களில் இப்படித்தானிருந்தது. அநுஷ்டான ஸம்பந்தம் துண்டித்துப் போனபின்தான் ராஜஸ, தாமஸப் போக்குகளையே தூண்டிவிடுவதாக இந்தக் காந்தர்வ கலைகள் ஆகியிருக்கின்றன.

'Fine' art, 'லலித' கலை என்றே இவற்றுக்குப் பெயர் சொல்கிறார்கள். இவை முரட்டுத்தனமான வேகங்களில் கொண்டுவிடுமானால் அந்தப் பேரே பொருந்தாது. நிஜமான fine art ஆனால் அது மனுஷ்யனை refine பண்ணுவதாகத்தான் இருக்க வேண்டும்............

ஸங்கீதம் என்கிற இசையும், நிருத்யம் என்கிற ஆடலும், நாடகமும் காந்தர்வ வேதத்தைச் சேர்ந்த முக்யமான கலைகள்

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**அழகுணர்ச்சி : ஆன்மாநுபவம்**

நிருத்யம் என்பது உணர்ச்சிகளை அபிநயமாக நடித்துக் காட்டாமல் ஒரு தாளத்துக்கும் சொல்லுக் கட்டுக்கும் ஏற்பக் காலால் ஜதிகளைப் போட்டுக் கொண்டு, கைகளால் பல விசித்திரங்களைச் செய்து காட்டுவதே*என்றும், நாட்டியம் என்பது ஒரு பாடலுக்கு அர்த்தத்தை விளக்கி அபிநயம் செய்து நடித்துக் காட்டுவது என்றும் பாகுபாடு சொல்வதுண்டு.

வெறும் அங்கசர்யையால், அதாவது சரீர சேஷ்டையால் எப்படி நிருத்யத்தில் ஸந்தோஷம் ஏற்படுகிறது?அதில் ரஸபாவ வெளியீடு எதுவும் இல்லையே!- என்றால் இதுதான் மநுஷ்யனின் ஸௌந்தர்ய ரஸனையில் உண்டாகிற ஸௌக்யம். Aesthetic sense என்று சொல்வார்கள். அழகை உணர்ந்து கொள்வதிலேயே ஒருவிதமான ஆத்மானந்தம் உண்டாகிறது. இது அழகு, இது அழகில்லை என்று அந்தராத்மாவுக்குள் எதுவோ ஒன்று. எடை போட்டுச் சொல்லி, அழகாயிருப்பதில் நம்மைச் சொக்க வைக்கிறது. ஒரு நாய் குடுகுடு என்று ஓடினால் அது அழகாயிருக்கிறதென்று நமக்கு உள்ளே தோன்றவில்லை. அதுவே ஒரு யானை திம் திம் என்று ஆடி அசக்கிக் கொண்டு, தும்பிக்கையையும் காதுகளையும் அதற்கேற்க அசைத்துக் கொண்டு வருவதைப் பார்த்தால் பார்த்துக் கொண்டேயிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஒரு காக்கா தவ்வித் தவ்வி நடந்தால் அதிலே ஒரு மகிழ்ச்சியும் நமக்கு ஏற்படுவதில்லை. ஒரு ஹம்ஸம் ஒய்யாரமாகப் போனால் மனஸ் அதிலேயே ஈடுபட்டு நிற்கிறது. வெறும் அசைவுக்கு இப்படி ஒரு பவர். இப்படித்தான் ஜதிகள் என்று சுத்த நிருத்யத்தில் வெறுமே காலால் அடிப்பதும், கையை அசைப்பதும், இடுப்பை ஒடிப்பதும் அதிலுள்ள defineபண்ணமுடியாததான அழகு என்ற அம்சத்தால் நமக்கு ஆனந்தத்தை உண்டாக்குகின்றன. இந்த ஆனந்தத்தில் தூய்மையுமிருக்கிறது. அதுவே ஒரு கோமாளி கையையும் காலையும் ஆட்டி, ஒடித்துக் காட்டினால் அது ஹாஸ்யமாகத் தானிருக்கிறது. சில ஸமயத்தில் விரஸம் என்பதாகச் சித்தவிகாரம் ஏற்படுத்துவதாகவும் இருக்கிறது. ஆகக்கூடி அங்கசர்யைக்கே பலவித உணர்ச்சிகளை உண்டாக்குகிற சக்தி இருக்கிறது. மலையாளக் 'கதகளி'யில்ஒரு தினுஸு பார்க்கிறோம். அதில் வாயால் எதுவும் பேசாமல் எல்லாரும் ஊமை போலவே ஆடுவார்கள். ஆனாலும் பலவிதமான மனோபாவங்களை கை, கால், புருவம், உதடு இவற்றின் அசைப்பினாலேயே தெரிந்து கொண்டுவிடுவோம்.

'கதைகளி'என்பதுதான் 'கதகளி' என்று நாம் சொல்வது. களி என்றால் தமிழில் களிப்பு;ஆனந்தம். களிப்பிலே டான்ஸ் ஆடத்தோன்றுகிறது. 'களிக் கூத்தாடுவது'என்கிறார்கள். அதனால்தான் அம்பலக் கூத்தனுக்குத் திருவாதிரை உத்ஸவம் பண்ணி ஸமர்ப்பிக்கிற நைவேத்யத்தைக் 'களி'என்கிறோம். மலையாளத்தில் களி என்றாலே கூத்து என்று அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள். ஒரு கதையைக் கூத்தாக ஆடிக் காட்டுவதற்கு 'கதைகளி'என்று பேர் வைத்தார்கள்.

மனோபாவத்தை வாயால் சொல்வது, அங்கத்தால் அபிநயித்துக் காட்டுவது, மனோபாவம் இன்னதென்று சொல்ல முடியாமலே போனாலும் வெறும் ராக ஆலாபனையாலும், தில்லானாவிலும் ஆனந்தத்தை உண்டாக்குவது என்று பலவிதம் இருந்தாலும் எல்லாம் 'அழகு' என்ற ஒன்றினால் ஆத்மாவுக்கு நிறைவு ஏற்படுத்துவதைச் சேர்ந்ததுதான்.

வெறும் தாள கதியை லயம் என்கிறார்கள் - ஏன்?அதற்கு நம் மனஸை அப்படியே லயித்திருக்கும்படிச் செய்கிற சக்தி இருக்கிறது. ம்ருதங்கம் வாசிக்கிறபடி வாசித்தால் அந்த ரஸாஸ்வாதத்தில் ஆத்ம லயிப்பு உண்டாகிவிடுகிறது. ச்ருதி, ராகம் எல்லாம் இப்படித்தான். வெறும் சப்தம் அதன் பலவிதமான அழகுகளால் ஹ்ருதயத்தில் ஆத்மானந்தத்தை உண்டாக்குகிறது. இப்படிச் சொன்னால் என்ன அர்த்தமாகிறது?ஆத்மானந்தத்தைப் பரமாத்மா தவிர யார் தர முடியும்?அதனால் இந்தக் கலா ஸௌந்தரியமெல்லாம் கடைசியில் ஈஸ்வராம்சம்தான் என்று தெரிகிறது.

அத்தனை அழகுக்கும் ஆதாரம் ஈஸ்வரன்தானே?'ஸௌந்தர்ய லஹரி'என்றே ஆசார்யாள் அம்பாளின் அழகுப் பிரவாஹத்தைச் சொல்கிறார். இதனால்தான் ஸந்தியா வானத்தைப் பார்த்தால் மனஸில் ஒரு தெய்விகமான இன்பம் உண்டாகிறது. காரணம் கேட்டால் என்ன சொல்வது?புஷ்பத்தைப் பார்த்தால், ஒரு வார்த்தையும் அர்த்தமுமில்லாமல் குயிலும் கிளியும் கூவுகிறதைக் கேட்டால், சற்றுமுன் சொன்னது போல ஒரு மநுஷ்யனே இப்படி ஒரு வார்த்தையும் அர்த்தமுமில்லாமல் ஒரு ராகத்தை ஆலாபனைப் பண்ணிக் கேட்டால் அது நெஞ்சைத் தொட்டு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறது. ஆனந்தம் என்றால் சிரிக்கிறது என்று அர்த்தமில்லை. கண்ணிலே ஜலங்கூட வந்தாலும் வந்துவிடும். கண்ணன் குழலோசை

என்று நினைத்துக் கொண்டாலே ஒரு உருக்கம் உண்டாகிறது. அழுகையானாலும் உருக்கமானாலும் அதிலே சுத்தமாக, சாந்தமாக, பவித்ரமாக எதுவோ ஒன்று ஆத்மாவைக் கவ்விக் கொள்கிறது. அது ஈஸ்வராம்சம்!அழகு என்பது அதுதான்!ஒரே அடுக்காய் ஹிமாலயத்தில் பனி மூடியிருப்பதைப் படத்தில் பார்த்தால்கூட ஆனந்தம் நமக்கு உள்ளேயும் அப்படி ஐஸ் மாதிரி ஜிலுஜிலுப்பு ஏற்படுகிறது. தாஜ்மஹாலைப் பூர்ணிமை நிலாவில் பார்க்கணுமென்றே தேசம் விட்டு தேசம் வருகிறான் - அழகுக்கு ஆத்மாநந்தத்தை உண்டுபண்ணும் சக்தி இருப்பதால்தான். இந்த சக்தி அதற்கு எப்படி இருக்கிறதென்றால் அதிலே உள்ள ஈஸ்வர ஸாந்நித்யத்தால்தான்.

(கீதையில்) விபூதியோக முடிவிலே பகவான் இதைத்தான் சொல்லியிருக்கிறார். 'விபூதி'என்றால் விபுவின் லக்ஷணம். 'விபு'என்றால் ஸர்வ வியாபி. ஸர்வ வியாபியாகவுள்ளவன் என்றால் எல்லாம் அவனே என்று அர்த்தம். " **ந ததஸ்தி விநா யத் ஸ்யாந்-மயா பூதம் சராசரம்** - என்னைத் தவிர சராசரத்தில் எதுவாவது ஒன்று உண்டோ என்றால் கிடையவே கிடையாது"â¡Aø£˜. ÞŠð® â™ô£ñ£J¼Šð¶ Üõ¡î£¡ â¡Á ªó£‹ð¾‹ ë£QèÀ‚°ˆî£¡ ªîK»‹. è™½ ñ‡µ, ï™ô¶ ñ£FK«ò ªè†ì¶, Üöè£ù¶ ñ£FK«ò Üõôþíñ£ù¶ â™ô£‹ Üõ¡ î£ªù¡Á ÜÌ˜õñ£Œ âƒ«è«ò£ å¼ ë£Q‚°ˆî£¡ ªîK»‹. ñŸøõ˜èœ âŠð® ªîK‰¶ ªè£œõ¶?ÜîŸè£èˆî£¡, î£¡ ú˜õ Mò£Hò£ù M¹õ£ù «ð£F½‹ êó£êK ñ¸wòÂ‚° î¡Â¬ìò ñU¬ñ â ªî¶, ò£ó£˜ v¼w®J™ ªó£‹ð àò˜‰î¬õò£è, àò˜‰îõ˜è÷£è Þ¼‚A¡øù«õ£, Þ¼‚Aø£˜è«÷£ Üƒ«èî£¡ Hóè£êñ£èˆ ªîK»‹ â¡Á ªê£™L ÞŠð®Šð†ì õv¶‚è¬÷»‹ Ýú£Iè¬÷»‹ å¼ ªðKò Lvì£è 'MÌF «ò£è‹' â¡Á Üˆò£ò‹ Ìó£ ªè£´ˆ¶, ªè£‡´ «ð£Aø£˜. â™ô£ñ£ù Üõ˜ Þ¡Q¡ùF™ î£‹ M«êûñ£èŠ Hóè£CŠðî£è Lv† ªè£´‚Aø£˜. â™ô£õŸP½‹ Üõ¼¬ìò ú£‰Gˆòˆ¬îˆ ªîK‰¶ ªè£œ÷ º®ò£ñ™, " «èû§ ê ð£õû§ C‰ˆ«ò£ (Ü)R ðèõ‰ ñò£ ?- ã ðèõ£«ù!â¡ù£™ c â‰ªî‰î õv¶‚èO™ C‰F‚èˆ î‚èõù£è Þ¼‚Aø£Œ?"â¡Á Ü˜ü§ù¡ «è†ì¬î»‹ å†®, ÞŠð®ˆ î¡ MÌF vðwìñ£è ªõOŠð´AøõŸ¬ø å¼ Lv† «ð£†´ ªè£´‚Aø£˜.

"ð¡Qó‡´ ÝFˆò˜èÀ‚°œ ï£¡ Mwµ:x«ò£Fvú§èÀ‚°œ ú¨˜ò¡;ïþˆóƒèÀ‚°œ ê‰Fó¡;«õîƒèÀ‚°œ ú£ñ‹;ðF«ù£¼ ¼ˆó˜èÀ‚°œ êƒèó¡;ñ¬ôèÀ‚°œ «ñ¼;«úï£FðFèÀ‚°œ vè‰î¡;õ£˜ˆ¬îèÀ‚°œ æ‹è£ó‹;ñóƒèO™ Ü„õˆî‹ (Üóêñó‹);«îõKSèO™ ï£óî˜;I¼èƒèO™ R‹ý‹;ðVèO™ è¼ì¡;Ý»îð£EèÀ‚°œ ó£ñ¡;ïFèO™ èƒ¬è;ñ£úƒèO™ ñ£˜èN;K¶‚èO™ õú‰î‹;M¼wE (â¡Aø ò¶ °ô‚A¬÷) õ‹êˆFùK™ A¼ûí¡;ð£‡ìõK™ Ü˜ü§ù¡"â¡Á Ü‰î‚ A¼wí«ù Ü˜ü§ùQì‹ ªê£™Aø£˜. Þ¡Â‹ Ü«ïèˆ¬î»‹ ªê£™LM†´ º®õ£è å¡Á ªê£™Aø£˜.

யத்யத் விபூதிமத் ஸத்-த்வம் ஸ்ரீமத் ஊர்ஜித் ஏவ வா *

தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ச ஸம்பவம் **

அதாவது, "எதெது ஸ்ரீ உள்ளதாக, அதாவது லக்ஷ்மீகரமாக இருக்கிறதோ, எதெது மிகவும் சக்தி வாய்ந்ததாக இருக்கிறதோ அதெல்லாம் என்னுடைய தேஜஸின் அம்சமாக உத்பவித்தது என்று தெரிந்துகொள்"என்று முடிக்கிறார்.

"ஸ்ரீ உள்ளது', லக்ஷ்மீகரமானது என்றால் அழகானது, மங்களமானது, நல்லது, மனஸுக்குத் தூய்மையான இன்பம் கொடுப்பது என்று அர்த்தம். இங்கே பகவான் தன்னுடைய விபூதி என்கின்ற மஹிமையானது மிகவும் சக்தி வாய்ந்த 'ஊர்ஜித'வஸ்துக்களில் இருப்பதாக மட்டும் சொல்லாமல், அழகு வாய்ந்த 'ஸ்ரீமத்'தான வஸ்துக்களிலும் இருப்பதாகச் சொல்லியிருப்பதே கவனிக்க வேண்டியது. பகவத் விபூதியான இந்த அழகுணர்ச்சியை வைத்துத்தான் காந்தர்வ வேதமானது உபவேதம் என்கிற பெருமைக்கு உரியதாக உண்டாயிருக்கிறது.

கண்ணுக்கு டான்ஸ், காதுக்குப் பாட்டு, மனஸுக்கு நவரஸங்கள் என்பதாக இந்த்ரிய ஸௌக்யங்களைத் தருவதாகத் தோன்றினாலும் இந்த வித்தைகள் ஸாமவேதத்தை அடிப்படையாகக் கொண்டு உண்டானவை என்பதனாலேயே இவற்றுக்குப் பெருமை ஏற்படுகிறது. வேதங்களுக்குள்ளே தாம் ஸாமமாயிருப்பதாகவும் பகவானே

சொல்லியிருப்பதால் இன்னும் பெருமை!மற்ற உபவேதங்களுக்கு அவற்றுக்கு மூலமாயுள்ள வேதத்தோடு உள்ள ஸம்பந்தத்தைவிட காந்தர்வ வேதத்துக்கு ஸாம வேதத்தோடுள்ள ஸம்பந்தம் இன்னும் நெருக்கமாக எல்லோருக்குமே தெரிகிறது. ஸாமகானத்தின் ஸ்வரங்களிலிருந்துதான் ஸ்பத ஸ்வரமும் உண்டாயிருக்க வேண்டுமென்று ஸாமகானத்தைக் கேட்கிற எவருக்கும் தெரிகிறது. 'ஸாமகானம்'என்று பெயர் இருப்பதிலிருந்து அதுவே. ஸங்கீத வித்யையுடன் சேர்ந்தது தானென்று தெரிகிறது. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் " ஸாம கான ப்ரியாய நம :" என்று ஒரு பெயரைச் சொல்லிவிட்டு, உடனே இது அதன் கான விசேஷத்துக்காகத்தான் என்று தெரிவிக்கிறாற்போல் அடுத்ததாக "ஸ்வரமயாய நம:"என்ற நாமாவைக் கொடுத்திருக்கிறது. மஹாவிஷ்ணுவான ஸ்ரீக்ருஷ்ணன் தம்மை வேதங்களில் ஸாமம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாகவும் பார்த்தோம்.

இதிலிருந்தே ஸங்கீதம் முதலான காந்தர்வக் கலைகளுக்குள்ள தெய்விகத்தன்மை தெரியவரும். உபவேதங்களுக்குள் மநுஷ்யனை ரொம்பக் கீழான கேளிக்கைகளுக்கு இழுத்துச் செல்லக்கூடியது என்று தோன்றுகிற காந்தர்வ வித்யையேதான் அவனை ரொம்ப மேலே இழுத்துக்கொண்டு போய் அப்படியே ஈஸ்வரனோடு ஐக்யமாக்குவதற்கும் உதவுகிறது.

ஆக, அது தப்புக்குக் கொண்டு போகிறது என்றால் இதற்கான தப்பு அதனுடையதில்லை. நாம் அதைத் தப்பாகக் கொண்டு போகிறோம் என்றுதான் அர்த்தம். அதைப் பிரயோஜனப்படுத்திக் கொள்கிறபடிப் பிரயோஜனப்படுத்தாதது நம் தப்புதான். நெருப்பு இருக்கிறது. அதிலே ஆஹாரம் உண்டாக்கிக் கொண்டு சாப்பிடுவதற்காக வீட்டில் உண்டாக்குகிறோம்;ஹவிஸ்களை அர்ப்பணம் செய்வதற்காக மூட்டுகிறோம்;தீபாராதனை பண்ணி பகவானின் மூர்த்தி அழகில் ஈடுபடுவதற்கும் அது பிரயோஜனமாகிறது. நம் ஜாக்ரதைக் குறைவாலோ, புத்திக் குறைவாலோ, துணி மணி நெருப்புப் பிடிக்கவிட்டால் அல்லது நாமே நெருப்பிலே மாட்டிக் கொண்டால், அல்லது கோவிலில் தீ விபத்து உண்டாக்கி விட்டால் தப்பு நெருப்புடையதா என்ன?

------------------------------------------------------------------------------------------------------------------------------------

* '‰¼ˆî‹' â¡ð«î ÞŠð®Šð†ì ªõÁ‹ Ýì™ â¡Á‹, Ýì½ì¡ ð£õ ÜHïòº‹ «ê˜‰î«î '‰¼ˆò‹'â¡Á ñŸªø£¼ ð£°ð£´ ªîKòõ¼Aø¶.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**ஆழப் பதியும் ஆற்றல்**

நவரஸங்களை ஈஸ்வரபரமாகச் சேர்த்து, தர்மத்தோடு சேர்த்து ராமாயணம், மஹாபாரதம், புராணங்களையும், மஹான்களுடைய சரித்ரங்களையும் நாடகமாகப் போட்டால் அதற்கு மனஸிலே புகுந்து வேலை செய்யும் சக்தி அதிகம். 'ஸோஷல் தீம்', அது, இது என்று கெட்டதற்கு நாடகக் கலையைப் பிரயோஜனப்படுத்துவது நம் தப்புத்தான். காந்தி சொல்லியிருக்கிறார், "ச்ரவண பித்ருபக்தி நாடகம்"என்று சின்ன வயஸில் அவர் பார்த்த ட்ராமா அவர் மனஸில் ஆழப் பதிந்துவிட்டதாக. பித்ரு பக்தி பற்றி எத்தனை வியாஸம் படித்தாலும், உபதேசம் கேட்டாலும் இப்படி ஜீவனுள்ள பாத்ரங்கள் அதை நடித்துக் காட்டுவதில் ஏற்படுகிற மாதிரி deep impression உண்டாக்க முடியுமா?

பாரதக் கதை சொல்வதையும் பாரதக் கூத்தாடுவதையும்தான் பொது ஜனங்களின் தர்மாபி விருத்திக்கான மிகப் பெரிய பணியாகப் பழைய கால ராஜாக்கள் கருதி அதற்கு ஸகல வசதிகளும், மான்யங்களும் கொடுத்துப் பேணியிருக்கிறார்கள் - பல்வேறு இடங்களை, பல நூற்றாண்டுகளைச் சேர்ந்த கல்வெட்டுகளைப் பார்த்தாலே தெரியும். காதால் கானத்தோடு கேட்கிறதற்குப் பேச்சையும் எழுத்தையும்விட அதிகம் சக்தி உண்டு. இதைவிடவும் 'visual art' என்பதாகக் கண்ணாலும் பார்ப்பதற்கு இன்னும் ஜாஸ்தி சக்தி இருக்கிறது. பேச்சு, பாட்டு ஆகியவற்றோடு சேர்ந்த நாடகம், பாட்டோடு மட்டும் சேர்ந்த நாட்டியம் ஆகிய இரண்டு

காட்சிக் கலைகளுக்கு இப்படி விசேஷமான சக்தி இருக்கிறது.

"க்ருஷ்ண கர்ணாம்ருத"த்தில் ஒரு ஸ்லோகம்,

கஸ்தூரீதிலகம் லலாட பலகே வக்ஷஸ்தலே கௌஸ்துபம்

நாஸாக்ரே நவ மௌக்திகம் கரதலே வேணும் கரே கங்கணம்*

ஸர்வாங்கே ஹரிசந்தநம் ச கலயன் கண்டே ச முக்தாவளிம்

கோபஸ்த்ரீ-பரிவேஷ்டிதோ விஜயதே கோபாலசூடாமணி:**

என்று இருக்கிறது. பாலக்ருஷ்ணன் நெற்றியிலே கஸ்தூரிப் பொட்டும், மார்பிலே கௌஸ்துப மணியும், மூக்கு நுனியில் முத்துப் புல்லாக்கும், உள்ளங் கையிலே புல்லாங்குழலும், மணிக்கட்டிலே கங்கணமும், கழுத்தில் முக்தாஹாரமும், ஸர்வாங்கங்களிலும் சந்தனப் பூச்சும் தரித்துக்கொண்டு, இடையர் குலத்துக்கே முடிமணியாக கோபிகா ஸ்த்ரீகள் புடைசூழப் பிரகாசிக்கிறான் என்று இது வர்ணிக்கிறது. இதை வாயால் சொல்லி, காதால் கேட்டு மனக்கண்ணிலே சித்ரமாகக் கொண்டு வந்தால் ஏற்படுகிற ஆனந்தத்தை விடப் பன்மடங்காக ஒரு தேர்ந்த நடீயானவள் பக்தியுள்ளத்தோடு அபிநயம் பிடித்து ஆடிக் காட்டினால் உண்டாய்விடும். ராதையோ யசோதையோ கிருஷ்ணனுக்கு இப்படித் திலகமிட்டு, சந்தனம் பூசி, கங்கணம் ஹாரம் புல்லாக்கு முதலானவற்றைப் போட்டுவிடுவதாக பக்திக் கல்பனையில் அபிநயித்துக் காட்டினால் பரவசமாயிருக்கும்.

புல்லாக்கைப் பற்றிச் சொல்கிறேன். ஸ்திரீ ரூபங்களில் ரொம்ப அழகு லலிதாம்பிகை;புருஷர்களில் ரொம்ப அழகு ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி;இந்த இரண்டு பேரின் அழகும் சேர்ந்து, ஸ்த்ரீ புருஷ ஸௌந்தர்யம் முழுக்க வாய்ந்தவர் கிருஷ்ணர் என்று ஒரு ஸ்லோகமிருக்கிறது. இப்படி ஸ்திரீ லக்ஷணமும் அவரிடம் இருப்பதால்தான் நகைகளில் புல்லாக்கையும் சொல்லியிருக்கிறது.

இந்த நகைகளையும், இன்னும் இதில் சொல்லாமல் விட்ட மயில்பீலி, மகரகுண்டலம், பீதாம்பரம், தண்டை, கொலுஸு எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்டு ஆடிக் காட்டினால், இவற்றைச் சூட்டுகிற ராதையின் ப்ரேமை அல்லது யசோதையின் வாத்ஸல்யம், அதற்குப் பாத்திரமாகிற க்ருஷ்ணனின் குறும்பு, கருணை முதலான பாவங்கள் ஆகியவற்றையும் அபிநயித்துக் காட்டினால் நாம் அந்த க்ருஷ்ண லோகத்துக்கே போய்விட்ட உணர்ச்சியை உண்டாக்கி விடலாம். கோபிகா ஸ்திரீகள் மாத்திரமின்றி நாமும் புடைசூழ நமக்கு நடுவிலேயே பகவான் இருக்கிறாற் போன்ற அநுபவத்தை அடைந்துவிடலாம். க்ருஷ்ண கர்ணாம்ருதம் நேத்ராம்ருதமாகக் கண்ணுக்கும், ஹ்ருதயாம்ருதமாக உள்ளத்துக்கும் தித்திக்கும்.

நல்லது, கெட்டது இரண்டையும் மனஸில் ஆழப் பதிப்பதற்கு காந்தர்வ வித்யைகளுக்கு சக்தி இருக்கிறது. நாம்தான் புத்திசாலிகளாக இவற்றில் நல்லதை மட்டும் பெறும்படியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஆபாஸமாகச் சித்திரம் போடலாம்;சிலை பண்ணி வைக்கலாம். அது மனஸைத் தீவிரமாகக் கலக்கத்தான் செய்யும். இதற்குப் பதில் ஒரு தெய்வ ரூபத்தைச் சித்திரமாகப் போட்டுப் பார்த்தால், ஸாக்ஷாத் அம்பாளுக்கு ஒரு விக்ரஹம் பண்ணிப் பார்த்தால் எவ்வளவு பாராயணம், தியானத்திலும் உண்டாகாத பக்தியும் ஆனந்தமும் இதன் தர்சனத்திலேயே பெறலாம்.

ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகமிருக்கிறது;தேவராம், ஆழ்வார் பாசுரம், தாயுமானவர் பாடல் இப்படித் தமிழில் கணக்கு வழக்கில்லாமல் தெய்வ ஸம்பந்தமான அநுபவ வாக்குகள் இருக்கின்றன. இவற்றை வெறுமே படித்தாலே மனஸைத் தொடுகின்றன. ஆனால் பாவமறிந்து, அதற்குப் பொருத்தமாக ராகம் போட்டு கானம் செய்துவிட்டாலோ நம் கல் நெஞ்சுகூடக் கரைந்து போகிறது.

---

### தேவார, திவ்யப் பிரபந்த மரபுகள்

இதனால்தான் தேவாரகர்த்தாக்களான அப்பர், ஸுந்தரர், ஸம்பந்தர் முதலானவர்களே அவற்றை பண் என்கிற ராகங்களில் அமைத்து ஈஸ்வரார்ப்பணம் செய்திருக்கிறார்கள். இசையே வடிவானவன் என்று ஈஸ்வரனையே பல விதத்தில் ஸங்கீதத்தில் ஈடுபட்டவனாக வர்ணித்துமிருக்கிறார்கள். ஒரு பெரிய ட்ரெடிஷன் வேதங்களை ஸ்வரம் மாறாமல் எத்தனையோ யுகங்களாகக் காத்துக்கொடுத்து வந்திருக்கிறது என்றால், தமிழ்நாட்டுக்கு ஒரு பெருமையாக இன்னொரு ட்ரெடிஷனில் ஓதுவாமூர்த்திகள் சுமார் 1,400 வருஷங்களாகத் தேவராப் பண்களை மூல ரூபத்தில் காப்பாற்றிக் கொடுத்து வந்திருக்கிறார்கள். பூஜையிலேயே நீராஜனத்துக்குப் பிறகு ஓர் அங்கமாகப் பிரதேச பாஷைப் பாட்டுக்கள் பாட வேண்டுமென்றிருக்கிறது. அந்தப்படிக் கோவில்கள் தோறும் தேவாரம் ஓதும்படியாக சோழ ராஜாக்கள் மான்யம் கொடுத்து இந்த இசை மரபை வளர்த்து விட்டிருக்கிறார்கள்.

திவ்யப் பிரபந்தங்களும் பண்களில் பாடப்பட்டு வந்தவைதாம்;ஆனால் பிற்பாடு இப்போது சொல்கிற மாதிரி ராகமில்லாமல் ஏதோ ஒரு பிராஸத்தில் சொல்வதாக ஆகிவிட்டது என்று சொல்லி ஆராய்ச்சியாளர்கள் சான்றுகள் காட்டுகிறார்கள். வைஷ்ணவ ஆசார்யர்கள், 'இந்தப் பிரபந்தங்களைத் தமிழ் வேதம் என்று கொண்டாடினால் மட்டும் போதாது; எப்படி வேதமானது முழுக்கப் பாட்டாக இல்லாமல் இரண்டு மூன்று ஸ்வரங்களில் மட்டுமே ஏறி இறங்குகிற மாதிரி ஓதப்படுகின்றனவோ கிட்டத்தட்ட அப்படித்தான் இந்தத் தமிழ் மறையையும் ஓதவேண்டும்'என்றே இப்படி மாற்றி ஏற்பாடு பண்ணியிருப்பார்களோ என்னவோ?

---



### பக்தி உபசாரமாக

அதெப்படியானாலும் பூஜா பத்ததியிலேயே பகவானுக்குச் செய்கிற அறுபத்துநாலு உபசாரங்களில் ந்ருத்த-கீத-வாத்யங்கள் இவற்றை ஸமர்ப்பிக்கச் சொல்லியிருப்பதாலேயே இவையெல்லாம் தெய்விகமானவை என்று தெரிகிறது. வேத ஸ்வரங்களின் அடிப்படையிலேயே ஸங்கீத ஸப்த ஸ்வரங்களை ஏற்படுத்தியிருப்பதும், மந்த்ர சாஸ்த்ரத்திலுள்ள முத்ரைகளையே பரதநாட்டியத்திலும் வைத்திருப்பதுமே போதும், நம்முடைய காந்தர்வக் கலைகளுக்குள்ள உயர்ந்த தெய்விக ஸ்தானத்தைக் காட்டுவதற்கு.

நம் மனஸ் ரொம்பவும் சஞ்சல ஸ்வபாவமுள்ள தாகையால் தெய்வ ஸம்பந்தமான நூல்களை, ஸ்தோத்ரங்களை நாமே படிக்கும்போதும், சொல்லும் போதுங்கூட மனஸ் கொஞ்ச நாழிக்கு அப்புறம் வேறெங்கேயோ ஓட ஆரம்பிக்கிறது. ஆனால் இந்தச் சலன மனஸையும் இழுத்து அதிக நாழி தன்னில் தோய்த்து வைத்துக்கொள்ளும் சக்தி சில்ப, கீதக் கலைகளுக்கு இருக்கிறது. ஒரு அழகான சிற்பம், சித்ரம் என்றால் நீண்ட நாழி அதையே நாம் பார்த்துக் கொண்டிருக்கும்படிப் பண்ணுகிறது. "பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து", "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்", "பொன்னார் மேனியனே"போன்ற பக்தி பரவசத்தில் பிறந்த அம்ருதவாக்குகளை நாமாகச் சொல்லும்போது அந்த அம்ருதத்தை அரை நிமிஷம் ஒரு நிமிஷந்தான் ருசி பார்க்க முடிகிறது என்றால் இவற்றையே அததன் பாவத்திற்கேற்க உருக்கமான ரக்தி ராகங்களிலோ, கம்பீரமாயிருக்கிற கன ராகங்களிலோ, இழைத்து இழைத்து, பலுக்கிப் பலுக்கி கானம் செய்தால் கால்மணி அரைமணி கூட ஒரு விருத்தத்தையே விந்யாஸம் செய்தாலும் அவ்வளவு நேரம் மனம் அதிலே தோய்ந்திருந்து தெய்வ ஸ்மரணத்தில் விலகாமலிருக்கிறது. அம்ருதத்திலேயே ஒரு தேவஜாதி மாம்பழத்தை ஊறப்போட்டு விட்டால் எப்படி அதை ரொம்ப நாழி கொஞ்சம் கொஞ்சமாக ஆஸ்வாதம் பண்ணலாமோ அப்படி அம்ருத வாக்கு

ஸங்கீதப் பழத்தில் ஊறும்போது ஆகிறது. அதனால் நாம் தப்பாகப் பிரயோஜனப்படுத்திக் கொள்வதால் கீதமும் நிருத்யமும் சித்த விகாரத்தை உண்டாக்குவதாயிருந்தாலும் வாஸ்தவத்தில் இவை நம்முடைய சலன சித்தத்தை ஈஸ்வரனிடம் நன்றாக நிறுத்தி, அப்புறம் அந்த லயப்பில் ஈஸ்வரன் என்றுகூட ஒன்று தெரியாமல் சித்தமே ஸமாதியில் நிறுத்தப்படுவதற்கு உபயோகமாகிறது. அலை பாயும் சித்தத்தை நிலை பாவ வைக்கக் கலை உதவுகிறது. அதனால்தான் பூஜையின் உபசாரங்களில் சேர்த்தார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

## ஜாதி தர்மம்

ஈஸ்வரனுக்கு நாட்ய உபசாரம் நடக்க வேண்டுமென்பதில்தான் தேவதாஸிகள் என்று ஏற்பட்டது. 'தேவ தாஸி'என்பதற்கு நேர் தமிழ் 'தேவு அடியாள்'. ஈஸ்வரனின் அடிமை என்று அர்த்தம். அவனையே கல்யாணம் பண்ணிக் கொண்டதாகப் பொட்டு கட்டிக் கொண்டு அவனுக்கு ந்ருத்யோபசாரம் பண்ண வேண்டியவள். நடைமுறையில் இது வேறு எப்படியோ போய்விட்டது. தேவதாஸி தடுப்புச் சட்டம் என்றே ஸமீபத்தில் ஸர்க்கார் செய்ய வேண்டியதாகி விட்டது. தேசத்தின் ஒழுக்கத்தைக் காப்பாற்ற இப்படிச் சில கார்யம் பண்ண வேண்டியிருக்கிறது. ஆனாலும் சாஸ்த்ர பூர்வமாக விதித்த ஒரு உபசாரம் ஸ்வாமிக்கு நடப்பதற்கில்லாமல் ஆகிவிட்டதே என்றும் இருக்கிறது. தேச ஒழுக்கத்தைக் காப்பாற்றவோ வளர்க்கவோ வேறே செய்ய வேண்டியவைகளைச் செய்ததாகவும் காணோம். 'இழுக்கத்'தைத்தான் தினமும் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

தேவதாஸி ஒழிப்பு ஒரு பக்கம் பண்ணிக் கொண்டு, இன்னொரு பக்கம் கலை அபிவிருத்தி என்று குல ஸ்த்ரீகளையெல்லாம் மேடைக்கு ஏற்றி டான்ஸ் பண்ண வைத்துக் கொண்டிருக்கிறார்கள். பெரிய மநுஷ்யர்கள் வீட்டுப் பெண் குழந்தைகளுக்கு அக்ஷராப்யாஸம் மாதிரி பரத நாட்டிய அப்யாயமும் ஏற்பட்டு விட்டது. ஸ்திரீ ரூபத்திலே ஒரு ஸதஸிலே மேடை ஏறி, ஆடை அலங்காரங்களோடு நவரஸங்களைக் காட்டி ஆடுகிறதென்றால் அதனால் ஸாதாரண மநுஷ்யர்கள் இருக்கிற ஸ்திதியில்....... நான் சொல்ல வேண்டாம். 'நமக்கு ரூபமிருக்கிறது, ஆடத் தெரிகிறது. ஸபையை வசீகரித்து அப்ளாஸ் வாங்க முடிகிறது என்றால் அப்புறம் 'ஏன் ஸினிமாவில் சேர்ந்து இன்னம் ஜாஸ்தி புகழ் வாங்கக் கூடாது?'என்று ஆசை உண்டாகிறது. குல ஸ்திரீகளுக்கு இப்படிப்பட்ட எண்ணங்கள் உண்டாகிப் பல பேரோடு நடிப்பது, ஜனரஞ்ஜகம் என்பதற்காக இறங்கிக் கொண்டே போவது என்றெல்லாம் ஆகின்றன. கலையை வளர்க்க வேண்டியதுதான். அதற்காக அதைவிட இந்த தேசப் பெருமைக்கு மூச்சாக இருக்கிற ஸ்த்ரீ தர்மத்தைப் பலி கொடுக்க வேண்டியதில்லை. இதையெல்லாம் யோசிக்காமல் ஸமூஹ சீர்திருத்தம், கலை வளர்ச்சி என்று செய்கிற கார்யங்கள் தேவதாஸிகள் என்று ஒரு ஜாதி மட்டும் தனியாயிருப்பானேன் என்று ....... இப்போது எல்லாவற்றையும் 'டெமாக்ரடைஸ்'பண்ணிப் பார்ப்பதாகத் தானே இருக்கிறது?இப்படித்தான் சொல்லத் தோன்றுகிறது.

எல்லாக் கலைகளையும், தொழில்களையும் ஒழுங்காக வளர்ப்பதற்குத்தான் வர்ண வியவஸ்தை, ஜாதி வியவஸ்தை ஏற்படுத்தப்பட்டது. ஏதாவது ஒரு ஜாதியில் வியவஸ்தை கெட்டிருந்தாலும் அதைச் சீர்படுத்தி அதற்கான தொழிலை அதனிடமே விட்டு வைப்பதுதான் பொது தர்மம் கெடமாலிருப்பதற்கு வழி. ஒரு ஜாதியில் தப்பு இருக்கிறது என்று ஜாதியை எடுத்து விடுகிறோம் என்றால் அந்தத் தப்பு ஸர்வ ஜன வியாபகமாக ஆவதில்தான் முடியும். இந்தக் காலத்தில் எதற் கெடுத்தாலும் ஜாதி போக வேண்டுமென்பதே முழக்கமாயிருந்தாலும், வாஸ்தவத்தில் ஸமூஹத்துக்கு அவசியமான ஒவ்வொரு தொழிலுக்கும் என்றே ஒவ்வொரு ஜாதி என்ற 'ஏற்பாட்டைப்போல் பொது ஸமுதாய கார்யம் சீராக நடைபெற ஒரு alternative-உம் இல்லை. தப்பு நடந்தாலும் அதுவும் ஒரு சின்ன வரம்புக்குள் localise ஆகிவிடும்;அதை ஸரி செய்து விடலாம். ஜாதியில்லை என்று எடுத்தால், கட்டியிலே பிடிக்கிற சீழ் இருந்த இடத்தோடு நிற்கும்படித் தடுத்து

ஆபரேட் பண்ணாமல் அதை தேஹம் பூராவும் ரத்த ஓட்டத்தோடு சேர்த்துவிடப் பண்ணுகிற மாதிரிதான் ஆகிறது.

சாஸ்திரப்படி ஆயுர்வேதத்தை அப்யஸிக்க வேண்டிய வைத்யனுக்கு அம்பஷ்ட ஜாதி என்று பேர். இது எப்படியோ நாவிதனுக்கு ஸம்பந்தப்பட்ட பேராகப் பின்னாளில் வந்திருக்கிறது. இரண்டு தலைமுறைக்கு முன்கூட நாவிதர்கள் கையில் பட்டுப் போட்டு நாடி பார்த்து மருந்து சொல்லியும் வந்தார்கள். இப்படியே காந்தர்வ வேதத்தை அப்யஸிக்க வேண்டியவர்கள் பரத ஜாதியினர், பரத புத்ரர்கள் என்பவர்கள்.

பரத சாஸ்திரம் எழுதின பரத ரிஷியின் பெயரிலே ஏற்படுத்தப்பட்ட ஜாதி. இதிலே எத்தனையோ தர்ம வியவஸ்தைகள். நாடகத்தில் தம்பதிகளாகவோ பரஸ்பரம் பிரேமை கொண்டவர்களாகவோ இரண்டு பாத்திரங்கள் வருகிறார்களென்றால் அவர்கள் நிஜ வாழ்க்கையிலும் தம்பதியாகவே இருக்க வேண்டும். எவன் வேண்டுமானாலும் எவளோடு வேண்டுமானாலும் நடிக்கலாம் என்ற அநியாயம் கிடையாது. நாடகம் ஆரம்பிக்கும்போது அதை அறிமுகம் பண்ணுபவனும், நடத்தி வைப்பவனுமான ஸூத்ரதாரன் வருவான். இவனுக்குப் பெண்டாட்டியாக வருகிற 'நடீ'யைக் கூப்பிடுவான். நிஜ வாழ்க்கையில் இவனுக்கு ஸம்ஸாரமாயிருப்பவளேதான் உடனே ட்ராமாவிலும் வருவாள். இவனுக்கு அஸிஸ்டென்டாக 'பாரிபார்ச்வகன்'என்று ஒருவன் வந்தால், அப்போது 'பாரிபார்ச்விகா'வாக அவனுடைய பெண்டாட்டியேதான் வருவாள். நடன், நடி என்ற actor, actressஇருவரும் வாஸ்தவத்திலேயே ஸதி பதிகளாக இருக்க வேண்டுமென்பது நாடக சாஸ்த்ர ரூல்.

ஒரு நாடகத்தில் ச்ருங்கார ரஸம் பிரதானமாக இருந்தாலுங்கூட அதிலே விகாரத்தை உண்டு பண்ணும் சேஷ்டைகளை ஸ்திரீயும் புருஷனும் மேடைமேல் நடித்துக் காட்டக்கூடாது என்பதே விதி. இம்மாதிரி ஸம்பவங்களை கதாநாயகி ஸகியிடம் சொல்வதாகவோ, ஸகி வேறு யாரிடமோ சொல்வதாகவோ, அல்லது கதாநாயகனின் தோழனான விதூஷகன் சொல்வதாகவோ வருமே ஒழிய, நடித்துக் காட்டுவதாக வராது.

தார்மிகமான இந்த அம்சங்களை எடுத்துக்காட்டி இந்தப்படிதான் இப்போதும் ஸினிமா, ட்ராமாவிலே செய்ய வேண்டுமென்று இளையாற்றங்குடி ஸதஸில் ஒரு தீர்மானம் போட்டோம். ஏதோ என் திருப்திக்குப் போட்டதோடு ஸரி!

புருஷனே பெண் வேஷமும் போட்டால் தப்பில்லை என்று ஐம்பது அறுபது வருஷத்துக்கு முந்தி நினைத்து அநேகமாக அப்படித்தான் ட்ராமா நடந்து வந்தது. பிராம்மண ஜாதியில் பிறந்த பலர் பிரமாதமாகப் பாடி, பேசி ட்ராமாவில் பிராபல்யமாக விளங்கி வந்தார்கள். ஆனால் தர்ம சாஸ்திரத்திலே பெண் வேஷம் போட்ட புருஷன், புருஷன் வேஷம் போட்ட பெண் இரண்டு பேரையும் பார்த்தாலே தோஷம் என்று சொல்லியிருக்கிறது. வாஸ்தவமாகவே ஸதிபதியாயுள்ள ஆணும் பெண்ணும் ட்ராமாவிலே ஜோடியாக வந்தால்தான் அவர்களை ரொம்பவும் ச்ருங்கார சேஷ்டிதமாக நடித்துக் காட்டப் பண்ணுவது பண்புக் குறைவான காரியமென்று கட்டுப்பாட்டில் வைத்திருக்கத் தோன்றும். ஆணே ஆணோடு நடிக்கிறான், அல்லது பெண்ணே பெண்ணோடு நடிக்கிறாள் என்றால் அவர்கள் தொட்டுக் கொள்ளும்படி விட்டால் கூடத் தப்பு ஒன்றுமில்லையே என்று நினைத்து, அப்படி விடத்தோன்றும். இது அவர்களுக்குத் தப்பில்லையானாலும், பார்க்கிற அத்தனை பேருக்கும் மனோவிகாரமுண்டாகத்தானே செய்யும்?இதனால்தான் ஆணே பெண் வேஷம் போடுவது, அல்லது பெண் ஆணாக நடிப்பது இரண்டுக்கும் இடம் கொடுக்கக் கூடாதென்று தர்ம சாஸ்த்ரம் வைத்து விட்டது. அதற்கு ஒரு ஜாதி என்று தொழில்களையெல்லாம் முறைகெட்டுப் போகாதபடி வரம்புக் கட்டிக் காப்பாற்றியிருக்கிறது.

இதன்படி பிராம்மணனாகப் பிறந்தவன் உள்பட மற்ற எந்த ஜாதியாரும் பாட்டு, நடனம், நடிப்பு முதலியவற்றைத் தொழிலாக நடத்தப்படாது. தன் ஆத்க்ஷேமத்துக்காக எவன் வேண்டுமானாலும் நாதோபாஸனை, மற்ற கலைகளின் உபாஸனை பண்ணிக் கொள்ளலாம். பக்த ஜனங்களுக்காக நாமகீர்த்தனம் பண்ணலாம். உஞ்சவிருத்தி பஜனை பண்ணலாம். மற்றபடி தொழிலாக வைத்துக்கொண்டு கச்சேரி பண்ணிப் பணம் வாங்குவது கூடாது. இதை ஜீவனோபாயத் தொழிலாகவே பண்ணிப் பணம், பரிசு, பட்டம் எல்லாம் வாங்க அதிகாரமுள்ளவர்கள் பரத ஜாதியினர்தான். நம் சீமையில் மேளக்கார ஜாதி என்று

சொல்வார்கள். இப்போது 'இசை வேளாளர்கள்'என்ற வார்த்தை பத்திரிகைகளில் அடிபடுகிறது. அந்த ஜாதிப் பெண்டுகள் கோயில்களில் ஆடினாற்போல, புருஷர்கள் தெய்வ ஸந்நிதானத்தில், உத்ஸவ பவனியில் மேளம் வாசிப்பது முக்யமாய் கருதப்பட்டது. ஸதிர் கோஷ்டிக்கே சின்ன மேளம் என்றுதான் பேர். நாயனம், தவில், ஒத்து, ஜால்ரா கொண்ட கோஷ்டி பெரிய மேளம் என்றும், நாட்யம் பண்ணுபவர்கள், நட்டுவனார், பாட்டுப் பாடுகிறவர், பக்க வாத்தியம் வாசிப்பவர்கள் ஆகியோரைக் கொண்ட ஸதிர் கோஷ்டி சின்ன மேளம் என்றும் சொல்லப் பட்டு வந்தன. இப்படிக் குறிப்பாக இரண்டு மேளத்தில் அந்தக் குறிப்பிட்ட ஜாதி அடங்கி விட்டதால்தான் போலிருக்கிறது, பிராம்மணன் வாய்ப்பாட்டு, வாத்யங்கள் முதலிய எல்லாம் கற்றுக்கொண்டு தொழில் செய்தாலும், இது தவிர ராஜாங்கம், கம்பெனி, மிலிடரி என்று ஒரு வேலை பாக்கியில்லாமல் எல்லாவற்றுக்கும் போனாலும் மேளம், நாயனம் மட்டும் வாசிப்பதென்று போகவில்லை போலிருக்கிறது!எனக்கே இவன் எப்படி இது ஒன்றை மட்டும் விட்டு வைத்திருக்கிறான் என்று புரியாமல் தானிருந்தது. இப்போது பேசிக்கொண்டு போகிறபோது தான் இப்படி ஒரு காரணம் இருக்குமோ என்று தோன்றுகிறது.

வாழ்க்கைத் தொழிலாக இன்னார் எடுத்துக் கொள்ளலாம் என்று வைத்தது ஸமூஹத்தில் போட்டா போட்டி இல்லாமலிருப்பதற்காகத்தான். அதனால் ஒன்று தாழ்ந்தது என்று ஆகிவிடாது. வயிற்று ஸம்பந்தமான 'தொழில்' என்பதோடு சேர்க்கமால் ஆத்ம ஸம்பந்தமாகப் பார்த்தால் கீத, வாத்ய, நிருத்யங்களுக்கு ரொம்ப உயர்ந்த ஸ்தானமுண்டு.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**நாத மஹிமை**

பரமேஸ்வரனையேதான் ஸங்கீதத்துக்கு மூலமாகச் சொல்லியிருக்கிறது. மௌன தக்ஷிணாமூர்த்தி மாதிரியே வீணாதர தக்ஷிணாமூர்த்தி என்று உண்டு;விக்ரஹங்களில் பார்த்திருக்கலாம். ' **நாததநும் அநிசம் சங்கரம்** 'என்று தியாகராஜ ஸ்வாமிகள் செய்திருக்கிற க்ருதியில் பரமேஸ்வரனுக்கு நாதமே சரீரம் என்கிறார். 'தநு' என்றால் சரீரம். இதிலே ஈஸ்வரனின் ஸத்யோஜாதம் முதலான ஐந்து முகங்களிலிருந்தே ஸப்த ஸ்வரங்களும் வந்திருக்கின்றன என்று சரணத்தில் சொல்லியிருக்கிறார்*1. ஐந்து முகத்திலிருந்து ஏழு ஸ்வரமென்றால் எப்படி என்று புரியாமலிருந்தது. வாஸுதேவாச்சார், (காரைக்குடி) ஸாம்பசிவய்யர், மஹாராஜபுரம், செம்மங்குடி முதலிய இத்தனை பேரையும் விசாரித்துப் பார்த்தேன். முதலில் அவர்களுககும் புரியாமல் தானிருந்தது. அப்புறம் ஸங்கீத சாஸ்திரங்களைப் புரட்டிப் பார்த்ததில், ஷட்ஜமும் பஞ்சமும் ('ஸ'வும் 'ப'வும்) பிரக்ருதி ஸ்வரங்கள் என்பதாக ஈஸ்வரனைப் போலவே ஸ்வயம்புவாக இருப்பவை என்றும், விக்ருதி என்ற செயற்கை ஸ்வரங்களான மற்ற ஐந்துமே பரமேஸ்வரனின் ஐந்து முகங்களில் ஒவ்வொன்றிலிருந்து ஒவ்வொன்றாகத் தோன்றின என்றும் அர்த்தம் த்வனிக்கும் படிப் பிரமாணங்கள் அகப்பட்டன.

விக்ருதிகளான ரி, க, ம, த, நி-களில் ஒவ்வொரு ஸ்வரத்திலும் இரண்டு திருஸு இருக்க ப்ரக்ருதியான ஸ, ப-வில் ஒவ்வொன்றேதான் இருக்கிறது.

ஷடஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பனவற்றின் முதல் எழுத்துக்களை வைத்தே ஸ-ரி-க-ம-ப-த-நி என்பது. ஏழு ஜந்துக்கள் இயற்கையாகப் போடும் சத்தத்தை வைத்தே இந்த ஏழு ஸ்வரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஷட்ஜம் என்பது மயிலின் நாதம். இந்த 'ஸ'வுக்கு அடுத்த 'ரி'யாக வருவது ரிஷபத்தின் கர்ஜனை. 'க' - ஆடு போடும் சத்தம். 'ம'-க்ரௌஞ்ச பக்ஷியின் கூவல். 'ப'-குயிலின் ஒலி. 'த' - குதிரைக் கணைப்பு. 'நி' -யானையின் பிளிறல்.

சீக்ஷா சாஸ்த்ரத்தில் மூச்சு எந்தெந்த அவயவங்களில் பட்டு வேத அக்ஷரங்கள் உண்டாக வேண்டுமென்று சொல்லியிருப்பது போலவே, ஸங்கீத சாஸ்த்ரங்களில் ஒவ்வொரு

ஸ்வரமும் அடி வயிற்றிலிருந்து உச்சந்தலைவரை எப்படியெப்படி ச்வாஸ சலனத்தால் உண்டாக வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. இப்படி ஆறு அவயவங்கள் ஸம்பந்தத்தில் பிறப்பதே 'ஷட்-ஜம்'. நாபி, ஹ்ருதயம், கண்டம், ரஸனம் (நாக்கு), நாஸி ஆகிய ஐந்திலே ஸப்த ஸ்வரத்தின் ஸுந்தர தேவதைகள் பிரகாசிப்பதாக தியாகையர் 'சோபில்லு'க்ருதியில் சொல்கிறார்.

நாதோபாஸனை என்பது ஒரு பெரிய மந்த்ர சாஸ்த்ர, யோக சாஸ்த்ர ஸாதனை. ஸ்வச்சமான நாதோபாஸனை என்பது ஓம்கார உபாஸனையேயாதலால் இது பரம வேதாந்த ஸாதனையுந்தான். நாதம், பிந்து, கலை என்று மூன்று பெரிய தத்வங்கள், " **நாத விந்து கலாதீ நமோ நம** "என்று திருப்புகழ் பாடுகிறோம். அந்தப் பெரிய விஷயங்களுக்கு நாம் இப்போது போகவேண்டாம். இதிலே நாதம் சிவ ஸ்வரூபம், பிந்து சக்தி ஸ்வரூபம், சப்தத்துக்கு மூலம் நாதம், ரூபங்களுக்கு மூலம் பிந்து - அதாவது ஒலி, ஒளி என்பதில் ஒலிக்கு மூலம் நாதம், ஒளிக்கு மூலம் பிந்து என்ற அளவுக்குத் தெரிந்து கொண்டால் போதும். முடிவில் ரூபங்களும் சப்தங்களிலிருந்து உண்டாகிறவைதான்*2. நாதம், சப்தம் என்கிறவற்றுக்கிடையே வித்யாஸமுண்டு. சப்தம் என்பது வெளியிலே வருகிற ஒலிகள் அவற்றிலே பல உண்டு. நாதம் என்பது எந்த சப்தமானாலும் அதற்கு ஆதாரமாயிருப்பது;அதுவே சப்தம் ஒடுங்கிறபோதும் சேர்கிற ஸ்தானம்.

வியாகரண சாஸ்த்ரத்தில் சப்தத்தையே ப்ரம்மமாக நிலைநாட்டியிருக்கிறது. இதற்கு சப்த ப்ராம்மமாக நிலைநாட்டியிருக்கிறது. இதற்கு சப்த ப்ரம்மவாதம் என்று பேர். பாஷை இலக்கணத்தைச் சொல்லும்போது இப்படி வையாகரணிகள் (வியாகரண சாஸ்திரக்காரர்கள்) அதை பிரம்ம ஸ்வரூபமாகச் சொல்லியிருப்பதையே இன்னொரு விதத்தில் ஸங்கீத சாஸ்திரக்காரர்களும் ஸ்தாபித்திருக்கிறார்கள். ஸங்கீதத்திலே நாதப்பிரம்ம உபாஸனை, நாதோபாஸனை என்கிற இடத்திலும் நாதம் என்பது வெறும் ஆதார சப்தம் மட்டுமில்லை. பாடுகிறவன் ஒரு ஸ்வர ஸ்தானத்தை ச்ருதியோடு சுத்தமாக தீர்க்கமாகப் பிடித்து அது பூர்ணமாக ஓங்கி முடிந்து விழுந்து லயிக்கிற இடத்தில் அது ச்ருதியோடு கவ்வி அத்வைதமாகக் கரைந்து, நிறைந்து போகிறதே அதைத்தான் நாதம் என்பது. இந்த இடத்திலே பாடுகிறவனும் அதோடு கரைந்து நிறைந்து விடுவான். அவன் மட்டுமில்லை. கேட்கிற ஸஹ்ருதயர்களானவர்களும் அப்படியே சொக்கித் தன்னை மறந்து அந்த நாதத்தில் ஐக்யமாயிருப்பார்கள். இதிலே பெறுகிற ஆனந்தந்தான் ஆத்மானந்தம், பிரம்மாநந்தம் என்று மத சாஸ்திரங்களின் உச்ச லக்ஷ்யமாய் சொல்லியிருப்பது. நாதம் பிரம்மத்துக்குக் கொண்டுபோகிறது, சப்தம் நாதத்துக்குக் கொண்டுபோகிறதென்றால் இதில் ஒன்றின் தன்மை இன்னொன்றுக்கு இல்லாவிட்டால் எப்படி முடியும்?அதனால்தான் சப்தமே பிரம்மம் என்று சொல்வதாக சாஸ்த்ரம் ஏற்பட்டிருக்கிறது. சப்த பிரம்ம வாதத்தில் சப்தம் நித்யமானது, பூர்ணமானது என்று இரண்டு லக்ஷணங்கள் சொல்லியிருக்கிறது. Time என்கிற காலத்துக்குக் கட்டுப்படாமல் இருப்பதுதான் 'நித்யம்'. Space என்னும் இடக் கட்டுப்பாடு இல்லாமல் எங்கும் பரவியிருப்பதுதான் 'பூர்ணம்'. இப்படி எக்காலத்திலும் எவ்விடத்திலுமாக நிறைந்திருப்பது சப்தம் என்று நம் பூர்விகர்கள் சொன்னதை இப்போதுதான் ஸயன்ஸ் நிரூபித்துக் காட்டியிருக்கிறது. பதினாயிரம் மைலுக்கு அந்தண்டை பாடுவதை இங்கே நாம் ரேடியோவில் கேட்கிறோமென்பதால், சப்தம் ஒஜீணீநீமீ-ல் எங்கும் வியாபகமாயிருப்பது ஜீகூஷீஷீஸ்மீ ஆகிறது. இதோ இப்போது நான் பேசுவதை ஒருத்தர் டேப்-ரிக்கார்ட் பண்ணுகிறார்;க்ராமஃபோன் என்று ரிகார்ட் பண்ணுகிறார்கள். எத்தனையோ வருஷத்துக்கு அப்புறம் இந்த ரிகார்ட்களைப் போட்டாலும் சப்தங்கள் மாறாமலே ஒலித்துக் கொண்டிருக்கிறது. என்ன ஜீகூஷீஷீஸ்மீ ஆகிறது?சப்தம் காலத்தால் நசிக்காமல் நித்யமாய் இருக்கிறது என்று நிரூபணமாய் விடுகிறதோல்லியோ?

பூர்விகர்களின் அதீந்த்ரிய சக்தியும் போய், நவீன ஸயன்ஸும் வராத காலத்திலே, 'சப்தம் நித்யமானது, பூர்ணமானது'என்றால் "இதென்ன பேத்தல்?நாம் எழுப்புகிற ஒலி இதோடு தீர்ந்துபோனதுதான். இதெப்படி நித்யம்?மிஞ்சினால் அது நூறு, இருநூறு கஜம் போகட்டும். பெரிய இடி இடித்தால்கூட நாலைந்து மைலுக்கு மேல் ஓசை போகிறதில்லை. இதை பூர்ணம் என்றால் எப்படி?" என்றுதான் தோன்றியிருக்கும். இப்போது ஸயன்ஸ் வந்து நம் சாஸ்த்ர அபிப்ராயத்தைக் காப்பாற்றிக் கொடுக்கிறது!

ஜிவீனீமீ-ஷஜீணீநீமீ நீஷ்ஸீநீமீஜீமீ`களுக்கு அதீதமாக இப்படி நித்யமாயும் பூர்ணமாயும் இருப்பதுதான் விபுத்வம்.

---

*1. úˆ«ò£ü£F ð…êõ‚ˆóü úKèñðîc õóúŠîvõó.

*2. "ªîŒõˆF¡ °ó™"Þó‡ì£‹ ð°FJ™ "«õî‹"â¡ø è†´¬óJ™ "åL»‹ ð¬ìŠ¹‹"â¡ø à†HK¾ ð£˜‚è.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**அகண்ட சப்தமும், கண்ட சப்தமும்**

ஆதியாய், அநாதியாய், ஸர்வ வியாபகமாய் இருந்து வருவது சப்தமே. நம்முடைய காது என்கிற இந்த்ரியத்தின் குறைபாட்டால்தான் நமக்கு அது புரியாமலிருப்பது. அதீந்த்ரிய சக்தி உள்ளவர்களுக்கு அகண்ட ஆகாசம் பூராவும் வியாபித்துள்ள சப்தம் அநுபவ ஸித்தியாகும். இப்போது நமக்குள்ள காதுக்குக் கேட்டாலே சப்தமிருப்பதாகவும், கேட்காவிட்டால் சப்தமில்லை என்றும் நாம் நினைக்கிறோம். நம் பார்வை, நம் கேள்வி இவற்றால்தான் அகண்டமாயுள்ள விஷயங்கள் கண்டிதமாக, குறுக்கப்பட்டதாக ஆவது. நம் பார்வையை வைத்துத்தான் ஸூர்யன் உதயமானான், அஸ்தமித்தான் என்று சொல்வதுகூட. வாஸ்தவத்தில் ஸூர்யன் இருக்கிற படியேதான் இருக்கிறான். பூமி அவனைச் சுற்றி வருவதால் நம் த்ருஷ்டியில்தான் உதயாஸ்தமனங்கள் ஏற்படுவது. இந்தப் பந்தலில் ஒரு த்வாரத்தின் வழியாக ஸூர்ய வெளிச்சம் வந்தால்தான் அது நமக்கு எடுப்பாகத் தெரிகிறது. பந்தலுக்கு வெளியிலே இந்த சின்ன beam (ஒளிக்கற்றை) தானே விஸ்தாரமாகப் பிரகாசிக்கிறது?அங்கே நமக்கு இத்தனை ஸ்பஷ்டமாகத் தெரிவதில்லையே!அப்படித்தான் அகண்ட சப்தம் நமக்குப் பிடிபடுவதில்லை;அதைக் கண்டம் பண்ணினால் பிடிபடுகிறது.

இன்னொன்றுகூட. பந்தலிலே த்வாரம் வட்டமாயிருந்தால் உள்ளே விழுகிற வெளிச்சமும் வட்டமாயிருக்கிறது. த்வாரம் சதுரமாய், முக்கோணமாய் இருந்தால் வெளிச்சமும் அந்தந்த வடிவங்களையே எடுத்துக் கொள்கிறது. இதனால் ஒரு குழந்தை என்ன நினைக்குமென்றால், ஒளி என்பதே வட்டமாயோ, சதுரமாயோ, முக்கோணமாயோ தானிருக்கிறது என்று நினைக்கும். வாஸ்தவத்தில் ஒளிக்கு ஏது ரூபம்?ரூபம் என்றால் space-ல் கட்டுப்படுவது. ஒலியும் ஒளி மாதிரி இந்தக் கட்டுப்பாட்டைத் தாண்டி பூர்ணமாயிருப்பது.

த்வாரத்தின் வழியே 45 டிகிரியில் ஸூர்ய வெளிச்சம் வருகிறதென்று வைத்துக்கொள்ளுங்கள் - அப்போது நாமும் அந்த டிகிரியில் பார்வையைச் சாய்த்துப் பார்த்தால்தான் ஓட்டை வழியாக ஸூர்யனைப் பார்க்க முடியும். வேறே டிகிரிக்களில் பார்த்தால் ஸூர்யன் தெரியாது;நீல ஆகாசம்தான் தெரியும். ஆனால் அப்போது நம் பார்வையெல்லையிலுள்ள ஆகாசப் பகுதியில் ஒரு கழுகு பறந்தால் அப்போது அதன்மேல் ஸூர்ய வெளிச்சம் தடுக்கப்பட்டுப் பிரதிபலிப்பதைப் பார்த்து, 'ஓஹோ, அங்கே ஒளி பரவியிருக்கிறது'என்று புரிந்து கொள்வோம். அதாவது அகண்டமாயிருப்பதைப் புரிந்து கொள்ள முடியாத நமக்கு அது புரிகிற மாதிரி குறுக்கித் தரவும் இன்னொரு உபகரணம் (agency) தேவைப்படுகிறது. உதாரணமாக, ரொம்பவும் புழுங்குகிறது என்று நாம் சொல்லும்போதுகூட நம்மைச் சுற்றி அகண்டமான வாயு இருக்கத்தான் செய்கிறது. ஆனால் விசிறி என்கிற ஒரு உபகரணத்தை 'ஏஜென்ஸி'யைக் கொண்டு அதைக் குறுக்கிக் கண்டமாக்கினால்தான் காற்று இருப்பது நமக்கு அநுபவத்தில் தெரிகிறது. இப்படி அகண்ட ஒளியில் அல்லது காற்றில் கழுகு, விசிறிபோல் ஏதோ ஒரு 'ஆப்ஜெக்ட்'குறுக்கிட்டு அதைத் துண்டித்தே நமக்குப் புரிய வைப்பதற்கு 'அபிகாதம்'என்று பெயர். 'அபிகாதம்'என்றால் அடிப்பது. அகண்டத்தை disturb பண்ணி நாம் புரிந்து கொள்ள வைப்பது அபிகாதம்.

சப்தமும் இப்படியேதான், அதன் அகண்ட ஸ்வரூபம் நமக்குப் புரிவதில்லை. கையை ஒன்றோடொன்று அடித்து 'அபிகாதம்'பண்ணினால் அப்போது நமக்கு சப்தம் கேட்கிறது. இப்படியே நம் தொண்டையிலுள்ள உறுப்புக்கள் பல தினுஸாக அசைந்து காற்றை அடிக்கிறபோது அகண்டக் காற்று கண்டமான சின்ன அலைகளாகி நாம் போடுகிற எல்லா சப்தங்களாகவும் வெளிப்படுகிறது. அகண்ட ரூபத்தில் சாந்த ஸமுத்ரமாக அடங்கியிருக்கிற நித்யமான சப்தத்தில் நம்முடைய தொண்டைக்குள் உள்ள உறுப்புக்களாலும், நாக்கு, பல், உதடு ஆகியவற்றாலும் 'அபிகாதம்'உண்டாக்கிப் பலவித ஒலிகளை ஏற்படுத்துவது ஸமுத்ரத்திலே பல குமிழ்களை உண்டாக்குகிற மாதிரியாகும். இதற்கு 'ஸ்போடம்'என்று பெயர் சொல்லியிருக்கிறது. 'ஸ்போடம்'என்பதற்குள்ள பல அர்த்தங்களில் ஒன்று கொப்புளம் உண்டாக்குவது. சாந்த சப்த ஸமுத்ரத்தில் பலவித ஒலிக் குமிழ்களை உண்டுபண்ணுவதால் இது ஸ்போடம்.

அபிகாதத்தால் உண்டாகிற சப்தத்துக்கு 'ஆஹத சப்தம்'என்று பெயர். 'ஆஹத'என்றாலும் 'அடிக்கப்பட்ட' என்றே அர்த்தம். இங்கே அடிப்பது, அடிக்கப்படுவது என்று இரண்டு இருந்தாக வேண்டும். அகண்ட சப்தமென்பது இப்படியில்லாமல், தன்னை அடித்து எழுப்ப இன்னொன்று இல்லாமலிருந்தால்தான் 'அகண்டம்', 'பூர்ணம்' என்ற லக்ஷணங்களுக்குப் பொருந்தியதாக இருக்க முடியும். இப்படி, அடித்து எழுப்பாமல், தன்னில் தானேயாய் உண்டாகி இருக்கிற அகண்ட சப்தம் வெளி ஆகாசத்தில் இருப்பது போலவே ஜீவனின் ஹ்ருதயாகாசத்திலும் இருக்கிறது. இங்கே நிலவுகிற பிராண சப்தத்தை 'அநாஹத த்வனி', அதாவது 'அடிக்காமலே உண்டாகிற ஒலி' என்று சொல்லியிருக்கிறது. பேச்சு, வாய்ப்பாட்டு, வாத்ய ஸங்கீதம் என்று எதுவானாலும் நாம் ஆஹதமாக ஸ்போடத்தின் மூலமே சப்தம் உண்டாக்குகிறோம்.

க, ங, ச, ஞ என்கிற மாதிரி அக்ஷரங்களாக இருக்கிற பல சப்தங்கள் உண்டாக்குவது ஒருவித ஸ்போடம். ஸப்த ஸ்வரங்கள் என்னும் சப்தங்களை உண்டு பண்ணுவது இன்னொரு வித ஸ்போடம். நாம் பேசும்போது ஸப்த ஸ்வரங்களோடு சேர்க்காமலே க, ங, ச, ஞ முதலான அக்ஷர ஒலிகளையும் உண்டு பண்ணுகிறோம். வீணை, ஃப்ளூட், ஃபிடில், நாயனம் முதலிய வாத்யங்களில் அக்ஷர சப்தமில்லாமல் ஸ்வர ஸ்தானத்தில் வெவ்வேறு ஒலிகளை மாத்திரம் உண்டாக்குகிறோம். அக்ஷர சப்தங்கள் கொண்ட பேச்சு மநுஷ்ய வர்க்கம் ஒன்றுக்கே உரித்தானது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**ஒலி விஞ்ஞானத்தில் பூர்விகரின் ஞானம்**

மேலே சொன்ன வாத்யங்களையும் இன்னும் தாள வாத்யங்களான ம்ருதங்கம், கஞ்ஜிரா, கடம், தவில், ஜாலரா போன்றவற்றையும் எப்படிப் பண்ணுவதென்று ஸங்கீத சாஸ்த்ர புஸ்தகங்கள் விவரமாகச் சொல்கின்றன. இதற்கு என்ன அர்த்தம்? அதைப் பண்ணினவர்களுக்கு எப்படியெப்படி அபிகாதங்கள், ஸ்போடங்கள் உண்டாகின்றன என்ற ஸயன்ஸ் நுணுக்கம் நன்றாகத் தெரியுமென்று அர்த்தம். வீணைத் தந்திகளின் நீளம், அவற்றின் பருமன், அதிலே உள்ள மெட்டுகளுக்கிடையே இருக்க வேண்டிய தூரம், ஒரு நாயனம் அல்லது புல்லாங்குழலின் துவாரங்கள் இருக்க வேண்டிய பரிமாணம், துவாரங்களுக்கு நடுப்பற (நடுவில்) இருக்க வேண்டிய தூரம் முதலியன 'ஸயன்டிஃபிக்'காக இல்லாவிட்டால் அதில் ஸங்கீதத்துக்கான ஸ்வரங்கள் உண்டாக முடியாது. தாள வாத்யங்களில் ஸ்வர பேதங்களைக் காட்டும் சப்தமுமில்லை;க, ங, ச, ஞ மாதிரி சப்தமுமில்லை;ஆனால் லய வித்யாஸங்களைப் பரிமளிக்கக் காட்டுகிறதாகச் சில விதமான ஸங்கீதாம்சமுள்ள (musical value உள்ள) சப்தங்கள் அவற்றில் எழுப்பப்படுகின்றன. ஒரு ம்ருதங்கம் என்றால் அதில் வலது பக்கத்தில் ஒரு விதமான ஒலி. இடது பக்கம் வேறு ஒரு விதமானது. அதற்கு எப்படியெப்படித் தோல்கள் இருக்க வேண்டும், மருந்து இருக்க

வேண்டும் என்றெல்லாம் ரூல்கள் இருக்கின்றன. ம்ருதங்கத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் மொத்தமான வாத்யத்துக்கும் எவ்வளவு நீள அகலங்கள் இருக்கவேண்டுமென்றும் திட்டமான கணக்கு இருக்கிறது. இப்படியே ஒவ்வொரு வாத்யத்துக்கும் இருக்கிறது. நாயனத்தில் இப்போதெல்லாம் ரொம்பவும் வழக்கத்திலிருப்பது இரண்டடிக்கு மேலே நீளமாக இருக்கிறதல்லவா?இதற்கு 'பாரி'நாயனம் என்று பெயர். இன்னொரு தினுஸூம் உண்டு. அது சுமார் ஒரு முழத்துக்கு உட்பட்ட நீளமுள்ளதாகவே இருக்கும். அதற்கு 'திமிரி'நாயனமென்று பெயர். அதிலே ச்ருதி தூக்கலாக இருக்கும். நம் மடத்திலே வாசிப்பது திமிரிதான். 'திமிரி'க்கும் 'பாரி'க்கும் நடுபட்டதாக ஒரு தினுசும் (இடை பாரி என்று) உண்டு. இந்தப் பரிமாண நுணுக்கமெல்லாம் நன்றாகத் தெரிந்து ஸங்கீத நூல்களில் சொல்லியிருக்கிறது. எந்தெந்த வாத்யத்துக்கு என்னென்ன மரம், என்னென்ன தோல், என்னென்ன தந்தி என்றெல்லாம் வரையறை இருக்கிறது. அப்போதுதான் அதற்குரிய ஸூநாதம் உண்டாகும். வீணை, தம்புரா போன்ற வாத்யங்களில் குடமும் (தண்டி என்னும்) மற்ற பாகமும் ஒரே தாய் மரத்திலிருந்தே எடுத்துச் செய்ததாயிருக்க வேண்டும். ஏனென்றால் அப்போதுதான் வாத்யம் முழுவதன் மர மெடீரியலும் ஒரே வயசுள்ளதாயிருந்து ஒரே சீரான ஸூக்ஷ்மமான விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. யாழைப் பற்றி இத்தனை விவரம் தானென்றில்லாமல் பழந்தமிழ் நூல்களில் இருக்கிறது. அந்த யாழிலும் அடக்க முடியாத ஸங்கீத அம்சங்களைக் கொண்ட 'யாழ்மூரிப் பதிகம்' என்பதைத் திருஞான ஸம்பந்தர் பாடியிருக்கிறார். அவருக்கு அத்தனை ஸங்கீத சாஸ்திர ஞானமிருந்திருக்கிறது. ஆசாரியாளுக்கு எத்தனை ஆழமான ஸங்கீத ஞானமிருந்தது என்பது 'ஸௌந்தர்ய லஹரி'யிலுள்ள 'கலே ரேகாஸ்-திஸ்ரோ' என்ற ஸ்லோகத்திலிருந்து தெரிகிறது*1.

அக்ஷரங்களோடு சேராத சப்த ஸ்போடங்கள், அவற்றை உண்டாக்கக்கூடிய அபிகாதங்கள் ஆகியவற்றைப் பற்றிய பூரா அறிவும் இருந்தே ஸங்கீத சாஸ்த்ரகாரர்கள் இந்த வாத்யங்களைப் பண்ணுகிற முறைகளைத் தந்திருக்கிறார்கள். நாம் பேசும்போது அக்ஷரங்களோடு சேர்ந்த ஸ்போடங்களுக்குரிய அபிகாதங்களை இயற்கையாகவே (நாச்சுரலாக) அதன் டெக்னிக் என்ன என்று தெரியுமால் u0nconscious ஆக நம் தொண்டை, வாய் முதலானவற்றில் உண்டு பண்ணிவிடுகிறோம். ஆனாலும் மந்த்ரங்களைச் சொல்லும்போது பரிபூர்ண அக்ஷர சுத்தமிருக்க வேண்டும் ஏனென்றால் கண்டம் போல் தோன்றினாலும் இந்த மந்திரங்கள் அகண்ட ஆகாச சப்தத்திலிருந்தே ரிஷிகளின் திவ்ய ச்ரோத்ரத்தில் கேட்கப்பட்டு அவர்களால் நமக்குத் தரப்பட்டிருப்பவையாகும். அவற்றை உள்ளபடி perfect-ஆக உச்சரித்தால்தான் அந்த அகண்ட சக்தியின் பலனை அடையமுடியும். இப்படி சுத்தமாக அக்ஷரங்களை வரையறுத்துச் சொல்ல வேண்டுமென்பதற்காக இதைப்பற்றிய டெக்னிக்கை ரொம்பவும் ஸயன்டிஃபிக்காகச் சொல்வதற்காகவே வேதத்தின் அங்கங்களில் ஒன்றான சிக்ஷா சாஸ்த்ரம் என்பது ஏற்பட்டிருக்கிறது*2. அந்த சாஸ்த்ரம் அடிவயிற்றிலிருந்து ஆரம்பித்து இன்னின்ன மாதிரிக் காற்றுப் புரளும்படிப் பண்ணி, அது இன்னின்ன இடத்திலே பட்டு வாய் வழியாக இப்படியிப்படி வரவேண்டும் என்று அக்ஷரங்களை அப்பழுக்கில்லாமல் அக்யூரேட்டாக நிர்ணயம் பண்ணிக் கொடுத்திருக்கிறது. ஆக வைதிக மதத்தின் ஆதாரமான பதினெட்டு வித்யாஸ்தானங்களில் வேதாங்கமான சிக்ஷா சாஸ்த்ரம் அக்ஷர சப்தங்களையும், உபவேதமான காந்தர்வ சாஸ்த்ரம் அக்ஷரம் கலக்காத ஸங்கீத ஸ்வரங்களையும் பற்றிய லக்ஷணங்களைத் தெரிவிக்கின்றன.

---

1. * "தெய்வத்தின் குரல்"முதற் பகுதியிலுள்ள "ஸங்கீத லட்சியம் சாந்தமே"என்ற உரை பார்க்க.

2. * பார்க்க :"தெய்வத்தின் குரல்"இரண்டாம் பகுதியில் "சிக்ஷை: வேதத்தின் மூக்கு"என்ற உரை.

---

## புலன் வழியே புலனுக்கு அப்பால்

மந்த்ர சப்தங்களுக்கு எப்படிக் கண்டமாயிருந்து கொண்டே அகண்டத்தில் சேர்க்கிற சக்தியிருக்கிறதோ, அப்படியே ஸங்கீத சப்தங்களுக்கும் (சக்தி) இருக்கிறது. ஸ்வரஸ்தானம் ஒன்றை தீர்க்கமாக (கார்வையாக) ச்ருதி சேர நீட்டியோ, அல்லது கமகமாக நன்றாக இழைத்தோ மூர்ச்சனையின் உச்ச நிலையை ஸ்வச்சமாகத் தொட்டு விடுகிறபோது கண்டமே அகண்டாநுபவத்தில் சேர்த்து விடுகிறது.

இந்த அகண்டாநுபவம்தான் அத்தனை வேத, வேதாந்த, யோக, மந்திர, தந்திர சாஸ்திரங்களுக்கும் லக்ஷ்யமாயிருப்பது. இதை ஸாதித்துத் தரும் ஸ்தானத்தில் தான் ஓசையை, ஒலியை நாதப் பிரம்மம், சப்தப் பிரம்மம் என்று ஸாக்ஷாத் பரமாத்மாவாகச் சொல்வது. அதை goal-ஆக நினைத்து, அதாவது காது என்ற இந்திரியத்தின் மூலம் மனஸின் இந்திரிய ஸுகத்துக்காக இன்றி, ஆத்ம ஸௌக்யத்தை goal-ஆகக் கருதி ஸங்கீத அப்யாஸம் பண்ணும்போது அது 'நாதோபாஸனை', 'நாத யோகம்'என்ற உசந்த பெயரைப் பெறுகிறது.

அர்த்தத்தோடு, அக்ஷரத்தோடு கலந்து மனமுருகிப் பாடும்போது பாடுகிறவருக்கும் கேட்கிற ஸதஸ் முழுதற்கும் பரமாத்மாவிடம் தோய்ந்து நிற்கிற பெரியதான இன்பம் கிட்டுகிறது. ஜபம், தபம், அஷ்டாங்க யோகம், தியானம் முதலானவை இந்திரிய ஸம்பந்தமில்லாதவையாகவும் ஸுலபத்தில் அப்யஸிக்க முடியாதவையாகவும் இருப்பவை. ஆனால் அவற்றின் பலனான அதே ஈஸ்வராநுபவம் இந்திரியத்துக்கு ஸௌக்கியமளிப்பதாகவும், ஸுலப ஸாதகமாகவும் உள்ள ஸங்கீதத்தால் கிடைத்துவிடுகிறது.

இந்திரிய விஷயங்கள் போல இருப்பவற்றாலேயே இந்திரியத்துக்கு அப்பாற்பட்ட ஆத்மானந்தத்தை, ஈஸ்வர ஸாக்ஷாத்காரத்தை ஏற்படுத்தித் தருவது நம் மதத்தின் ஒரு சிறப்பு அம்சம். பூஜையில் செய்கிற பஞ்சோபசாரம் என்கிற கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்யங்கள் பஞ்சேந்திரிய ஸௌக்யத்தைத் தரக்கூடியவைகளால் ஆனதுதான். உபநிஷத்துக்களிலே பரமாத்மாவை ஓம்கார ஸ்வரூபமாக, ரஸ ஸ்வரூபமாக, ஜ்யோதி ஸ்வரூபமாகவெல்லாம் சொல்லியிருக்கிறது ஓம்காரம் கேட்கிற இந்திரியத்துக்கானது; ரஸம் ருசி பார்க்கிற இந்திரியக்கானது; ஜ்யோதிஸ பார்க்கிற இந்திரியத்துக்கானது. இந்திரிய ஸௌக்யங்களைச் சிற்றின்பம் என்கிறோமானாலும் பரமாத்ம ஸம்பந்தத்தோடு அநுபவிக்கும்போது இவையே பேரின்பம் தருகின்றன என்பதை உபநிஷத்துக்கள் பரமாத்மாவையே இன்பவடிவமாக,, ஆனந்த ஸ்வரூபமாகச் சொல்லும்போது நிலைநாட்டி விடுகின்றன. இந்திரிய நுகர்ச்சி வஸ்துக்களாகத் தோன்றுகிறவைகளிலும் ஈஸ்வர ஸாந்நித்யமிருப்பதை பகவானும் விபூதி யோகத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறார். ஈஸ்வரன் இல்லாத இடமில்லை என்றால், இவற்றிலும் அவனுடைய ஸாந்நித்யம் இருந்துதானே ஆகவேண்டும்?பகவான் தன் விபூதிகளைச் சொல்லும்போது, "ஜ்யோதிஸ்களில் நான் ஸூர்யன்" என்னும்போது ஒளியாக இருப்பதைச் சொல்லிக் கொள்கிறார். இங்கே உஷ்ணமும் அவர்தானென்றாகிறது. அவரே "மாஸத்தில் நான் மார்கழி" என்கிறபோது பனியாகவும் குளிராகவும் இருக்கிறார். தான் ரிதுக்களுக்குள் இயற்கை இன்பம், இந்த்ரிய ஸௌக்யம் முழுவதும் தரும் வஸந்தமாக இருப்பதாகச் சொல்கிறார். இங்கே 'வஸந்தம்'என்பதற்கு 'குஸுமாகர' என்ற பெயரை பகவான் சொல்கிறார். அதாவது 'புஷ்பித்துக் குலுங்கச் செய்கிற ரிது' என்கிறார். புஷ்பத்தைச் சொன்னதால் ஸ்பர்சானந்தம், நேத்ரானந்தம், க்ராணானந்தம் என்னும் மூக்கின் இன்பம் மூன்றையும் சொன்னதாகிவிடுகிறது. பூர்ணத்தை பின்னப்படுத்திப் பார்க்கும்போது நமக்கு எதெல்லாம் சிற்றின்பத்தை மாத்திரம் தந்து பேரின்பத்தைத் தடுக்கின்றனவோ அவற்றாலேயே ஈஸ்வர உபாஸனை செய்யும் போது அவை பூர்ணார்த்தில் நம்மைச் சேர்க்கும் பேரின்பத்துக்கு ஸாதனமாகும் என்பதே தாத்பரியம்.

சப்தமே பிரம்மம், ரூபமே பிரம்மம், ரஸமே பிரம்மம், கந்தமே பிரம்மம், ஸ்பரிசமே பிரம்மம் என்று இப்போதே நம்மால் முழுதும் தெரிந்துகொள்ள முடியாவிட்டாலும் இதைக் கொஞ்சம் ஞாபகமாவது படுத்திக் கொண்டேயிருந்தால் ஒருநாள் பலன் தெரியாமல் போகாது.

இவற்றிலே ஸங்கீதத்தில் மெய்மறந்து போய் துளித்துளியாவது சப்த ப்ரம்ம அநுபவத்தைப் பெறுவது மற்றதைவிட நமக்கே சற்று நன்றாகத் தெரிவதாயிருக்கிறது.

ஸங்கீத கலை என்பது கொஞ்சங்கூட கஷ்டமில்லாமல் மோக்ஷத்தையே வாங்கிக் கொடுக்கக் கூடியது. வீணா வாத்யம் ஒன்றை வைத்துக்கொண்டு ஸ்வரசுத்தியோடு கலந்து வாசித்து ஆனந்தமயமாக இருக்கக் கற்றுக்கொண்டு விட்டால் யோகம் பண்ண வேண்டாம், தபஸ் பண்ண வேண்டாம். ஸுலபமாக மோக்ஷத்தையே அடைந்து விடலாம். அதோடு யோகி யோகம் செய்தால், தபஸ்வி தபஸ் செய்தால் அவர்களுக்கு மட்டுமே ஆத்மானந்தம் உண்டாகிறது. ஸங்கீதம் ஒன்றில்தான், அதை அப்யஸிக்கிறவர் மட்டுமின்றி கேட்கிற எல்லோருக்குமே அதே அளவு ஆத்மானந்தம் உண்டாகிறது.

வாய்ப்பாட்டு, வீணை மாதிரி ஸ்வரங்களோடு சேர்ந்த ஸங்கீதம்தானென்பதில்லை; ம்ருதங்கம், ஜால்ராவில்கூட நல்ல லயசுத்தத்தோடு ஸுநாதம் கலந்து வந்து விட்டால் அது தெய்விக ஆனந்தத்தில் நம்மைச் செருகிவிடுகிறது.

---



### வாத்திய, நாட்டிய வகைகள

வாத்தியங்களில் தந்த்ரீ வாத்யம், ரந்த்ர வாத்யம், சர்ம வாத்யம், லோஹ வாத்யம் என்று நாலு வகைகள். தந்த்ரீ என்றால் தந்தி. வீணை, தம்பூர், யாழ், வடக்கத்தி ஸிதார், ஸாரங்கி, மேல் நாட்டிலிருந்து வந்துள்ள பிடில் முதலியவை தந்த்ரீ வாத்யங்கள். ரந்த்ரம் என்றால் த்வாரம். புல்லாங்குழல், நாயனம், வடக்கத்தி ஷெனாய், மேல்நாட்டு க்ளாரினெட் முதலியன ரந்த்ர வாத்யங்கள். மற்ற வித வாத்யங்களில் கைவிரலால் மீட்டுவது, கையால் bow போடுவது, தட்டுவது முதலியவற்றால் ஸங்கீத ஒலி உண்டாகிறதென்றால் இந்த ரந்த்ர வாத்யங்களில் மட்டும் வாயினால் காற்றைச் செலுத்தி ஸங்கீதத்தை உண்டுபண்ண வேண்டியிருக்கிறது. ஹார்மோனியம்தான் கையால் இயக்கப்பட்டும் ஒருவித ரந்த்ர வாத்யமாக இருப்பது. அதிலே வாய்க்குப் பதில் காற்றைக் கொடுக்க bellows (துருத்தி) இருக்கிறது. ஃப்ளூட்டிலும், நாதஸ்வரத்திலும் த்வாரங்களைக் கை விரலால் மூடித் திறக்கிறோமென்றால், ஹார்மோனியத்தில் பில்லைகளை விரலால் அழுத்துவதும் எடுப்பதுமாக இருக்கிறது. 'ப்ரின்ஸிபிள்'ஒன்றுதான். சர்ம வாத்யம் என்பவை தோலைக் கட்டி அடித்து சப்தம் உண்டாக்குபவை. ம்ருதங்கம், தவில், நகரா, பேரிகை, கஞ்ஜிரா முதலியன சர்ம வாத்யங்கள். லோஹ வாத்யம் என்பதில் அதைச் செய்வதற்கு உபயோகப்படும் லோஹம் தான் முக்யம். மோர்ஸிங், ஜால்ரா, சேமக்கலம், மணி முதலானவை இதில் சேர்ந்தவை. இவை ஒரே ஒரு லோஹத்தால் மட்டும் ஆனவையாயிருக்கும். தந்தி, த்வாரம் எதுவும் இராது. மண்ணால் மட்டுமே ஆனது. கடம் பானைதான் அது. களிமண்ணிலேயே ஒரு தினுஸான china clay என்கிற பீங்கானால் ஆன கிண்ணங்களுக்கு ஜலதரங்கம் என்று பெயர். கிண்ணங்களில் ஜலத்தை விட்டு அவற்றின் ஓரத்தில் இரண்டு மெல்லிசான மூங்கில் குச்சியால் தட்டி ஸப்தஸ்வரங்களை உண்டாக்குகிறார்கள்.

வாத்யங்கள் பலவகை இருப்பதுபோல நாட்டியத்திலும் பல உண்டு. முக்யமாக தாண்டவம், லாஸ்யம் என்ற இரண்டு, புருஷர்கள் செய்வது, பௌருஷ கம்பீரம் நிறைந்தது தாண்டவம். ஸ்திரீகள் செய்வது, லலிதமாக இருப்பது லாஸ்யம். பரமேஸ்வரன் செய்வது தாண்டவம், சிவ தாண்டவம், நடராஜ தாண்டவம், ப்ரளய தாண்டவம், ஊழித் தாண்டவம் என்றெல்லாம் சொல்கிறோம். அம்பிகை ஆடுவது லாஸ்யம். 'லாஸ்ய ப்ரியா', 'லயகரி' என்று 'லலிதா ஸஹஸ்ர நாம'த்தில் பெயர்கள் வருகின்றன.

---

## தெய்வங்களின் தொடர்பு

ஸங்கீத, நாட்யக் கலைகளுக்கு தெய்வங்களோடோயே இப்படி ஸம்பந்தம் ஏற்படுத்தியிருக்கிறது. நடராஜமூர்த்தி போல லோகத்திலே எதுவும் கிடையாது என்று இன்று லோகத்திலிருக்கிற அறிஞர்களெல்லாரும் சொல்கிறார்கள். நம் தேசத்துக்கு ரொம்ப உசந்த 'ஸிம்ப'லாக வெளி தேசத்திலிருக்கிறவர்களுக்கு ஏதாவது 'ப்ரெஸன்ட்'பண்ணுவதென்றால் ராஜாகங்த்தினரே நடராஜ விக்ரஹம்தான் கொடுக்கிறார்கள். அந்நிய தேச ம்யுஸீயங்களுக்கு மில்லியன், இரண்டு மில்லியன் டாலர் விலைக்குப் போவது நம் கோவில்களிலிருந்து திருடின நடராஜாதானென்றால், அந்த நடராஜாவின் சிறப்பு முழுவதும் நடனத்தால் ஏற்படுவதுதான். நர்த்தன கணபதி, காளிங்க நர்த்தன மூர்த்தி, நடன ஸரஸ்வதி என்றெல்லாமும் நாட்டியமூர்த்திகளிருக்கின்றன.

வாத்யங்களை எடுத்துக் கொண்டாலும் ஒரே தெய்வ ஸம்பந்தந்தான். கலைத் தெய்வம் என்றே சொல்கிற ஸரஸ்வதி கையில் வீணை இருக்கிறது. வீணைதான் நம் ஸங்கீதத்துக்கே ஜீவநாடி என்பார்கள். அதனால் ஒவ்வொரு தெய்வத்துக்கும் உள்ள வீணைக்கென்று ஒரு பெயர் உண்டு. 'கச்சபி' என்பது ஸரஸ்வதியின் வீணை. 'விபஞ்ச்யா காயந்தீ' என்ற 'ஸௌந்தர்ய லஹரி'ஸ்லோகத்தில், ஸரஸ்வதியானவள் அம்பிகையின் ஸந்நிதியிலே சிவலீலைகளை வாயால் பாடிக்கொண்டே 'விபஞ்சி'வாசிக்கிறாள் என்று ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார். 'விபஞ்சி'என்பது வீணைக்கு ஒரு பொதுப் பெயர்.

நாரத கானம் என்பதாக ஸங்கீதத்தில் பரம உத்க்ருஷ்டமானதைச் சொல்கிறோம். த்யாகராஜ ஸ்வாமிகளுக்கு ஸங்கீத சாஸ்த்ர புஸ்தகத்தைக் கொடுத்து அநுக்ரஹித்தவர் நாரதர்தான். "நாரத குருஸாமி"என்று அவர் மேலேயே தியாகையர்வாள் பாடியிருக்கிறார். நாரதர் கையிலும் வீணை இருக்கிறது. அந்த வீணைக்கு 'மகதி' என்று பேர். " **எம் இறை நல் வீணை வாசிக்கும்மே** " என்பதாக அப்பர் ஸ்வாமிகள் பரமசிவன் வீணாகானம் செய்து கொண்டிருப்பதைச் சொல்கிறார். கைலாஸத்துக்கு அடியிலே மாட்டிக் கொண்ட ராவணேச்வரன் அதிலிருந்து விடுபடுவதற்காகத் தன் சிரஸுகள், நரம்புகள் ஆகியவற்றை அறுத்து வீணை பண்ணி, அதில் ஸாமகானத்தை வாசித்தே ஈஸ்வரனைப் பிரீதி பண்ணி மீண்டானென்று கதை. கிருஷ்ண பரமாத்மா என்றாலே அவரோடு இணை பிரிக்க முடியாததாகப் புல்லாங்குழல் வந்து விடுகிறது. வேணுகோபாலன், முரளீதரன் என்றெல்லாம் அவருக்குப் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன.

ப்ரதோஷ ஸ்தோத்ரம் என்று ஒன்று உண்டு. அதிலே அத்தனை தெய்வங்களையும், கீத வாத்யங்களோடு ஸம்பந்தப்படுத்திச் சொல்லியிருக்கிறது. ஸாக்ஷாத் பரமேஸ்வரன் ப்ரதோஷ காலத்தில் அம்பாளை ரத்ன பீடத்தில் உட்கார்த்தி வைத்துவிட்டு அவளுக்கெதிரே, கைலாஸ மலையிலே நடனம் செய்கிறானாம். அவனுடைய டான்ஸுக்குத்தான் ஆர்க்கெஸ்ட்ராவாக அத்தனை தேவர்களும் வாத்யம் வாசிக்க வந்திருக்கிறார்களாம். வாக்தேவியான ஸரஸ்வதி வீணை வாசிக்கிறாளாம், வீணைக்கு 'வல்லகி'என்று ஒரு பேர். அந்தப் பேரைதான் இங்கே சொல்லியிருக்கிறது. இந்த்ரன் புல்லாங்குழல் ஊதுகிறானாம். பிரம்மா ஜால்ரா போடுகிறாராம். லக்ஷ்மி வாய்ப்பாட்டுப் பாடுகிறாளாம். விஷ்ணு ம்ருதங்கம் வாசிக்கிறாராம். நந்திகேச்வரைத்தான் பொதுவில் ம்ருதங்கத்துக்கு சொல்வது வழக்கம்.

ஆனால் ப்ரதோஷ தாண்டவத்தின் போது நந்திகேச்வரர் யஜமானனின் லாவண்யத்தில் தன்னையே மறந்து போய்விட்டார் போலிருக்கிறது*1. அதனால் மஹாவிஷ்ணு ம்ருதங்கம் வாசித்திருக்கிறார். பரமேஸ்வரனோடு மஹாவிஷ்ணுவுக்கு எத்தனை விதமான உறவுகளிருக்கின்றன என்று நம் ஆசார்யாள் 'சிவாநந்தலஹரி'யில் "பாணத்வம் ரிஷபத்வம்" என்ற ஸ்லோகத்தில் அடுக்கிக் கொண்டு போகிறபோதும் அவர் சிவ தாண்டவத்துக்கு மத்தளம் கொட்டுவதை " **ம்ருதங்க வஹதா** "என்று குறிப்பிடுகிறார்.

ப்ரதோஷ நாட்யத்தில் அம்பிகையை சிவ தாண்டவத்தை வெறுமே பார்த்துக்கொண்டு ரஸிப்பவளாக மாத்திரம் சொல்லியிருக்கிறது. இந்த ஆனந்த தாண்டவத்தை மட்டுமின்றிக் கல்பப் பிரளயத்தில் எல்லாவற்றையும் தன்னில் ஒடுக்கிக் கொண்டு ஈஸ்வரன் ஸம்ஹார

தாண்டம் செய்யும்போதும் அம்பாள் ஒருத்தி மட்டும் அழிந்து போகாமல் அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியிருக்கிறது:

**மஹேச்வர மஹா கல்ப மஹா தாண்டவ ஸாக்ஷிணீ.**

அந்தப் பரதேவதையையே ஸங்கீத தேவதையாகச் சொல்லும்போது ராஜ மாதங்கி, ராஜ ச்யாமளா என்று பெயர். " **மீநாக்ஷி மே முதம் தேஹி ... ராஜ மாதங்கி** "என்று தீக்ஷிதர் பாடியிருக்கிறபடி மதுரையிலே நித்ய வாஸம் பண்ணுகிற மீநாக்ஷியானவள் பராசக்தி ஸங்கீதத்தின் அதி தெய்வமாக இருக்கப்பட்ட அவஸரம் (கோலம்) தான். காஞ்சீபுரத்தில் காமாக்ஷி கோயிலிலும் இவளுக்குத் தனி ஸந்நதி இருக்கிறது. 'ச்யாமளா தண்டகம்'இப்படி ஸங்கீதமூர்த்தியாக இருக்கப்பட்ட பராசக்தியைப் பற்றியதே. ' **நவரத்னமாலா** 'என்பதாக ' ஓம்கார பஞ்ஜர சுகீம் ' என்று ஆரம்பிக்கிற - ஸ்துதி ஒன்றைக் காளிதாஸன் செய்திருக்கிறான். அதுவும் இந்த ச்யாமளா தேவியைப் பற்றியதுதான். அதிலே இவளும் ஸரஸ்வதியைப் போலவே கையில் வீணை வைத்துக் கொண்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறது. "வீணா ஸங்க்ராந்த காந்த ஹஸ்தாம்". நிறத்தில் மட்டும் அவளுக்கும் இவளுக்கும் நேர் வித்யாஸம். ஸரஸ்வதி நல்ல வெளுப்பு. இவளே சாம்பல் கறுப்பு. அதனால்தான் 'ச்யாமளா'என்று பெயர். இவளுடைய லாவண்யம் நிறைந்த கையின் நுனிவிரல் வீணையின் தந்திகளில் எப்போதும் ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டிருக்கிறது. அவள் இப்படி இருக்கிறாளென்றால் நாமும் ஸங்கீத உபாஸனையால் அவளைப் பிடித்துவிடலாம் என்று அர்த்தம். நிறைய சாஸ்த்ராப்யாஸம் பண்ணி, யோகாதிகளால் சித்தத்தை நிறுத்தி வசப்படுத்த முடியாத நாமும் ஸ்வரங்களில் லயிப்பதால் மனஸை நிறுத்தி அவளுடைய சரணார விந்தத்தில் அதைக் கிடத்திவிடலாம். ஸுலபமாக அவள் கடாக்ஷத்தைப் பெற்றுவிடலாம்.

'ப்ரதோஷ ஸ்தோத்ர'த்தைப் போல அந்த ப்ரதோஷ கால நடராஜ தாண்டவத்தை வர்ணிப்பதாக 'சம்பு நடன அஷ்டகம்'என்று ஒன்று உண்டு. இது பதஞ்ஜலி பண்ணின ஸ்தோத்ரம். அவர் ஆதிசேஷன் அவதாரம். அவரைப் போலவே நடராஜாவோடு ஸதா இருக்கும் வ்யாக்ர பாதர் புலிக்கால் பெற்றவர். பாம்பு, புலி முதலான க்ரூர ஜந்துக்களையும் ஸங்கீத நாட்யங்கள் ப்ரேமையாய், சாந்தமாய் பண்ணிவிடுகிறதென்று அர்த்தம். இந்த 'அஷ்டக'ஸ்லோகங்களின் சொல்லமைப்பாலும், கதியாலும், சொல்கிறபோதே எதிரே நாட்டியம் நடக்கிறது போன்ற ப்ரமை தட்டும். இதை ப்ரதோஷ பூஜையில் ந்ருத்யோபசாரம் பண்ண வேண்டிய இடத்தில் வாஸ்தவமாகவே சந்த்ர மௌளீச்வரருக்கு நாட்டியமாக அர்ப்பணிக்க வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருந்தது. மடத்திலே ஸ்த்ரீகள் ஆடுவதற்கு இடமில்லை. அதனால், த்ரவியத்தையோ கீர்த்தியையோ முன்னிட்டதாயில்லாமல் பூஜாங்கமாக ஈஸ்வரனுக்கு ஸமர்ப்பணமாவதுதானே என்பதால் நம்முடைய ஆஸ்தான (ஸங்கீத) வித்வானையே*2 இந்த ஸ்தோத்திரத்துக்கு அபிநயம் பிடிக்கும்படி சொன்னேன். அவர் முதலில் பயந்தேபோய்விட்டார். 'எத்தனையோ வருஷம் நாட்ய சிக்ஷை சொல்லிக் கொண்டால்தானே இது வரும்?தமக்குப் பாட்டில் உள்ளது போல டான்ஸில் பரிசயமில்லையே'என்பதால் பயப்பட்டார்.

நான்தான் "ஒன்றும் பயப்பட வேண்டாம்!நடராஜாவை நினைத்துக் கொண்டு, குயவன் களிமண்ணைத் துவைக்கிற மாதிரி காலாலே பண்ணிக்கொண்டு, சொல்போகிற போக்கில் கையைக் காட்டிக்கொண்டு போ. ஸரியாய் வந்துவிடும்"என்று தைரியம் கொடுத்தேன். அப்படியே நன்றாக அமைந்தது. சிதம்பரத்திலே சுத்த மத்தளம் என்கிற 'ஸ்பெஷல் டைப்'மத்தளம் நடராஜாவுக்கு வாசிக்கப்படுகிறது. அதனால் இந்த சம்பு நடன அபிநயத்தின் போதும் இங்கே சுத்தமத்தளம் வாசிக்குமாறு ஏற்பாடு செய்தது. சங்க நாதத்தையும் சேர்த்துக் கொண்டது. இதனால் பூஜையிலேயே ஸாந்நித்யம் கூடுதலாகி விட்டாற்போல இருந்தது.

இதற்கெல்லாம் என்ன அர்த்தமென்றால் ச்ருதி-லய சங்கீதம், ந்ருத்யம் எல்லாமே உபஸனையாக அப்யஸிக்கப்பட்டால் நம்மை ஈஸ்வர ஸந்நிதானத்திலேயே கொண்டுபோய் நிறுத்திவிடும். முடிவிலே அந்த ஸந்நிதானம் எங்கே இருக்கிறது?நம் ஹ்ருதயத்துக்குள்ளேயேதான். அதற்குள்ளே அடங்கி ஆத்மானந்தத்தை அடைய ஸங்கீதம் ஒரு வழி.

*1. ï‰F«è„õóK¡ Þ¼ ªè£‹¹èÀ‚A¬ì«òî£¡ ßê¡ Šó«î£û ˆ î£‡ìõ‹ ªêŒõ¶.

*2. ÿõ£…Cò‹ ó£ñê‰FóŒò˜.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**இசையால் அன்பும் அமைதியும்**

வேதாந்தத்திலே எல்லாம் உள்ளத்துக்குள்ளே ஹ்ருதய குஹையில் சாந்தத்தில் ஒடுங்கிவிடுவதாகச் சொல்லியிருக்கிறது. அந்த சாந்தத்திலே சேர்க்கத்தான் ஸங்கீதம் ஏற்பட்டிருக்கிறது*. சியாமளா என்று ஸங்கீத மூர்த்தியாகப் பராசக்தி இருக்கிறபோது அவளுடைய உள்ளம் அப்படியே குழைந்திருக்கிறது (ம்ருதுள ஸ்வாந்தாம்);அவள் பரம சாந்தையாக இருக்கிறாள் (சாந்தாம்) என்று காளிதாஸன் 'நவரத்னமாலா'வில் சொல்கிறார். உள்ளக் குழைவு என்பது ப்ரேமை, கருணை ஸங்கீதத்தினாலே ஆத்ம சாந்தம் உண்டான பிறகு, ஸகலமும் அந்த ஆத்மாவே என்பதால் எல்லாவற்றிடமும் அன்பு. பொங்குவதைத்தான் சாந்தாம், ம்ருதுள ஸ்வாந்தாம் என்று கவி சொல்கிறார். இந்த்ரிய இன்பமாயில்லாமல் ஆத்மானந்தத்தில் சேர்ப்பதாலேயே ஸங்கீதம் இப்படிப்பட்ட ப்ரேமையுள்ளத்தை உண்டாக்குகிறது. நினைத்துப் பார்த்தாலே மனம் குளிர்கிறது. அம்பிகை வீணையில் சப்த ஸ்வரங்களையும் மீட்டியபடி, அந்த ரீங்காரத்திலேயே சொக்கிப் பரம சாந்தையாக இருக்கிறாள்;அவளுடைய ஹ்ருதயம் புஷ்பம் மாதிரி மிருதுளமாக ஆகி கருணை மதுவைப் பொழிகிறது. இதை நினைக்கும்போது பக்தர்களுக்கும் மனம் குழைகிறது. பக்தியும், அன்பும், சாந்தமும் தன்னால் ஏற்படுகின்றன. வர்ணானதீதமான சாந்தத்தில், ஆனந்தத்தில் முழுகியிருக்கிற ஸங்கீத அம்பிகை நமக்கும் சாந்தம், ஆனந்தம், அன்பினால் குழைந்த மனம் முதலியவற்றை அநுக்ரஹிக்கிறாள். 'ஸங்கீத மூர்த்தி' என்கிறபோது அவள் உத்தேசம் பண்ணி, அதாவது deliberate-ஆக இப்படிச் செய்கிறாளென்று தோன்றவில்லை. ஸப்த ஸ்வரங்களில் ரமிக்கவேண்டுமென்பதற்காகத்தான் அவள் வீணையை மீட்டுவதாகத் தெரிகிறது. " **ஸரிகமபதநி ரதாம்** "என்று ஸப்த ஸ்ப்தஸ்வரானந்தப்படுபவளாகவே ஸ்லோகத்தில் ஆரம்பித்திருக்கிறது. அவள் அப்படி ஆனந்தப்பட்டால், லோகம் பூரா அவளுக்குள் இருப்பதால் லோகமும் ஆனந்தப்படுகிறது. இப்படி லோகம் ஆனந்தப்படுவதற்காகத்தான், லோகத்தில் ஆனந்தத்தை ஊட்டும் ஸங்கீதக் கலைக்கு அநுக்ரஹம் செய்வதற்காகத் தான் ஸப்த ஸ்வரங்களில் ரஸித்து அவளும் ஆனந்திக்கிறாள். இங்கே 'ஸரிகமபதநி'யில் களிப்பவள் என்று காளிதாஸன் சொல்லியிருக்கிறாற்போலவே தியாகையர்வாளும் ஈஸ்வரனை 'நாத தநும் அநிசம்'கீர்த்தனத்தில் 'ஸரிகமபதநி வர ஸப்த ஸ்வரவித்யாலோலம்'என்கிறார். நாம் உத்தேசிக்காவிட்டாலும் ஸப்தஸ்வரத்தில் ஹ்ருதயம் லயித்து இருந்துவிட்டால் சாந்த ரஸம் தானாக உண்டாகிவிடும். 'சாந்தாம்' என்று காளிதாஸன் சொன்னதையேதான் தியாகையர் க்ருதியில் 'விமல ஹ்ருதய' என்று சொல்லியிருக்கிறது. விமல ஹ்ருதயம் என்பது அதில் சாந்தி, ப்ரேமை இரண்டும் அடங்கியிருப்பதைக் குறிக்கிறது. அதாவது காளிதாஸன் 'ம்ருதுள ஸ்வாந்த' என்பதில், சொன்ன அன்பும் 'விமல ஹ்ருதய என்பதில் வந்துவிடுகிறது. 'ஸ்வாந்த ம்'என்றால் 'ஹ்ருதயம்'தான். ஸங்கீதத்தால் சாந்தம் வரும். அதேபோல சாந்த ரஸத்திலே ஸங்கீதம் தானாக நிறைந்துவிடும். இதனால்தான் ஸதாசிவ ப்ரம்மேந்திராள் போன்ற மஹாஞானிகள் கூடப் பாடியிருக்கிறார்கள். ஸங்கீதத்துக்காகவே ஸங்கீதம், அல்லது ஆத்மாவுக்காக ஸங்கீதம் என்று பாடிக் கொண்டிருந்தால்தான் நிறைந்த சாந்தம் அதிலேயே ஏற்படும். 'ஸங்கீதம் அப்யஸித்தும் அசாந்தமாயிருக்கிறதே'என்றால் மனஸ் வேறு எதையோ ஆசைப்படுகிறது என்று அர்த்தம்.ஸங்கீதத்தைக் கொண்டு திரவியமோ புகழோ வேண்டும் என்ற ஆசையிருந்தால் பூர்ணபலன், அதாவது நிறைந்த சாந்தம் ஏற்படாது. அப்போதுங்கூட

சில சில ஸமயங்களில் சாந்தம் உண்டாகும் - தேன் எடுத்தவன் புறங்கையை நக்கிக்கொண்டு ஏதோ கொஞ்சம் ருசி பார்ப்பது மாதிரி. பாக்கி தேனை அவன் ரஸாஸ்வாதம் பண்ணுவதில்லை. அது கடைக்குப் விலைக்குப் போகிறது.

இப்படி ஸங்கீதத்தை விலை பண்ணுவது, அதனால் புகழ் எடுப்பது என்கிறபோதுகூட வித்வான்கள் அவ்வப்போது தன்னை மறந்து பாடுகிறார்கள்; நம்மையும் 'தன்னை மறக்க'ப் பண்ணுகிறார்கள். இதிலே கொஞ்சம் சாந்தம், ஸந்தோஷம் அடைகிறோம். தியாகையர் மாதிரி ஹ்ருதய பூர்வமாக அதிலேயே ஈடுபட்டு வேறு பிரயோஜனம் வேண்டாமென்று இருந்துவிட்டால் நிறைந்த சாந்தம், பேரானந்தம் எல்லையில்லாமல் கிடைத்துவிடும். நல்ல நாதோபாஸகர்களானால் ஹ்ருதயம் புஷ்பம் போல் ம்ருதுவாகிவிடும். தியாகையர், கோபாலகிருஷ்ண பாரதி போன்றவர்களிடம் பழகினவர்கள், அவர்களுடைய ஹ்ருதயம் கருணையோடு மிருதுவாக இருந்தது என்று எழுதியிருக்கிறார்கள். இன்றைக்கும் உத்தமமான பாகவதர்களிடம் பழகுகிறவர்கள் அவர்களுடைய மென்மையான மனஸைப் பற்றிச் சொல்கிறார்கள்.

---

* "தெய்வத்தின் குரல்"முதற் பகுதியில் 'ஸங்கீத லக்ஷியம் சாந்தமே'எனும் உரை பார்க்க.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**நாத நாட்டியங்களிலிருந்தே ஸ்ருஷ்டியும் முக்தியும்**

சக்தி, சக்தி என்று சொல்லப்படுகிறவளே இப்படி அடங்கின ஸமுத்ரமாக சாந்தமாயிருக்கிறாற்போல, வேதாந்த சாந்த விசாரமாக இல்லாமல் ப்ராணசக்தியின் விழிப்பையும் எழுச்சியையும் நமக்குள் பூர்ணமாக ஏற்படுத்திக் கொண்டு அதன் மூலமே முடிவில் அத்வைத சாந்தத்தில் சேர்க்கிற ஒரு மார்க்கம் உண்டு. குண்டலிநீ யோகம் என்று பெயர். அதைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்வதானால்:முகெலும்பின் அடியிலுள்ள மூலாதாரம் என்பதிலிருந்து உச்சந்தலை வரையில் ஒரு முக்யமான நாடி இருக்கிறது. மூலாதாரத்தில் இருக்கிற பிராண சக்தியை இந்த நாடி மூலம் உச்சந் தலையில் சேர்த்து விட்டால் அத்வைத முக்தி ஸித்திக்கும். இந்த நாடியில் ஆறு சக்ரங்கள் இருக்கின்றன. பிராணாயாமம், மந்த்ரம், தியானம் முதலானவற்றால், எல்லாவற்றுக்கும் கீழேயுள்ள மூலாதார சக்ரத்திலிருந்து மேலே உள்ள ஒவ்வொரு சக்ரமாகக் 'குண்டலிநீ'என்கிற ப்ராண சக்தியை ஏற்றிக்கொண்டு போக வேண்டும். இவற்றில் ஹ்ருதயத்துக்கு நேரே இருக்கிற சக்ரத்தில் பிராணனையும் மனஸையும் நிறுத்தும்போது அங்கே தானாகவே 'அநாஹதமாக'ஒலிக்கிற பிரணவ சப்தத்தைக் கேட்க முடியும். அதனால் இதற்கு அநாஹத சக்கரம் என்றே பெயர். ஒவ்வொரு சக்கரத்திலும் சிவ-சக்தி தம்பதி ஒவ்வொரு ரூபத்திலிருப்பார்கள். அந்தந்த சக்கரத்தில் அதற்கான ரூபத்தில் பரமேஸ்வர பராசக்திகளை த்யானம் செய்ய வேண்டும். இந்த விஷயங்களை 'ஸௌந்தர்யலஹரி'யில் நம் ஆசார்யாள் சொல்லிக்கொண்டு வரும்போது மூலாதார சக்ரத்தில் அம்பாள் ஈஸ்வரன் இரண்டு பேருமே நடனம் செய்பவர்களாக விளங்குகிறார்கள் என்று சொல்கிறார்*. வாஸ்யம் என்ற பெண்களுக்கான நடனத்தைச் செய்யும் 'ஸமயா'என்னும் ரூபத்தில் அம்பாள் இருக்கிறாளாம். நவரஸ மஹா தாண்டவம் - தாண்டவம் தான் புருஷர்களின் நடனம் என்று முன்னேயே சொன்னேன் அதைச் செய்கிற ஆனந்த பைரவர் என்ற மூர்த்தியாக ஈஸ்வரன் இருக்கிறாராம். இங்கே அவர் ஆடுவது ஊழிக்கூத்து என்ற ஸம்ஹார நடனமல்ல. ஊழியில் அழிந்த லோகத்தை மறுபடி ஸ்ருஷ்டி செய்வதற்காகவேதான், ஜனக-ஜனனியாக, அம்மா-அப்பாக்களாகத் தாங்களிருவரும் ஸகல லோகங்களையும் பெற்றெக்க வேண்டுமென்றேதான் இங்கே பரமேஸ்வரனும் பராசக்தியும் நர்த்தனம் செய்கிறார்களாம். தாயின் அன்பு மிளிர்கிற லாஸ்யத்தை அம்பிகையும், தகப்பனாக உலகை அடக்கியாளுவதற்குரிய காம்பீர்யம் நிறைந்த தாண்டவத்தை சிவபெருமானும் மூலாதார சக்ரத்தில் ஆடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனந்த பைரவி என்று ஒரு ராகத்தின் பேர் சொல்கிறோமே, இங்கே ஆனந்த பைரவரின் சக்தியாக இருக்கப்பட்ட

ஸமயா தேவியின் இன்னொரு பெயர்தான் அது.

நாதம், நடனம் இவற்றிலிருந்தே ஸ்ருஷ்டி என்று சொல்வதிலிருந்து இந்த காந்தர்வ வித்யைகளின் பெருமை தெரிகிறது. Vibration-களிலிருந்தே creation (அதிரிவுகளிலிருந்தே படைப்பு) என்கிற ஸயன்ஸ் கொள்கையும் இதுவும் ஒன்றுதான். வைப்ரேஷன் (அதிர்வு) என்பதே ஆட்டம் தானே?சப்தத்தின் பலவிதமான ஆட்டம் ஸங்கீதம்; ரூபத்தின் பலவிதமான ஆட்டம் நாட்டியம். பூமி, ஸூர்யன், சந்திரன், நக்ஷத்ரம், கிரஹம் எல்லாம் சுற்றிச் சுற்றி ஆடிக்கொண்டுதானிருக்கின்றன. சின்னதற்கெல்லாம் சின்னதான அணுவுக்குள்ளும் எலெக்ட்ரானும், ப்ரோடானும் நம்ப முடியாத வேகத்தில் நாட்டியம் பண்ணிக் கொண்டிருக்கின்றன. இந்த நாட்டியம் நடக்காவிட்டால் அவை அணு என்ற ரூபமே பெறமுடியாது.

ஸ்ருஷ்டி இதிலிருந்துதான் பிறக்கிறது என்பதாலேயே ஸ்ருஷ்டியிலிருந்து விடுபடுவதற்கும் இதன் மூலத்துக்குப் போக வேண்டும் என்றுதானே ஆகிறது? அதனால்தான் கீத, வாத்ய, ந்ருத்யங்களையே மோக்ஷமார்க்கமாக அப்யஸிக்கச் சொல்லியருக்கிறது.

---

* த்வாதாரே மூலே என்று தொடங்கும் 41-வது ஸ்லோகம்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

**கலைப் பெரியார்கள்**

இதில் ஸித்தியடைந்தவர்கள் காந்தர்வ வித்யை குறித்து அநேக சாஸ்திரங்களைத் தந்திருக்கிறார்கள்;அநேகம் ஸாஹித்யங்களையும் மற்றவர்கள் பாடுவதற்குத் தந்திருக்கிறார்கள். பரத ரிஷியை முக்யமாகச் சொன்னாலும் வேறு அநேக ரிஷிகள் தெய்விக புருஷர்களும் இவர்களில் இருக்கிறார்கள். நாரதர், அகஸ்த்யர், மதங்கர், ஆஞ்சநேயர், நந்திகேச்வரர் போன்றவர்களை ஸங்கீத உபாஸகர்களாகவும், சாஸ்த்ரகாரகர்களாகவும் சொல்லியிருக்கிறது. 'ஹநும் தோடி'என்றே தோடி ராகத்துக்குப் பெயர். (கல்யாணி, சங்கராபரணம், பைரவி, ஷண்முகப்ரியா, ராமப்ரியா. கரஹரப்ரியா*என்றே தெய்வ ஸம்பந்தமாக அநேக ராகப் பெயர்கள் இருக்கின்றன.) நமக்குக் கிடைத்திருக்கிற சுவடிகளிலிருந்து சார்ங்க தேவர், ஸோமதேவர், ராமாமாத்யர், மந்திரியாகவும் அத்வைத சாஸ்த்ரத்தில் கரைகண்டவராகவுமிருந்த கோவிந்த தீக்ஷிதர், அவருடைய புத்ரரான வேங்கடமகி முதலியவர்கள் சங்கீத சாஸ்த்ரத்துக்கு லக்ஷணங்கள், விவரணங்கள் கொடுத்து உபகரித்திருப்பது தெரிகிறது. மஹேந்த்ர வர்மா, ரகுநாத நாயக் போன்ற ராஜாக்களும் இப்படி உபகரித்திருக்கிறார்கள். குடுமியா மலையில் (புதுக்கோட்டைக்குப் பக்கம்) சங்கீத சாஸ்த்ரம் பற்றி மஹேந்த்ர பல்லவனின் ஸம்ஸ்க்ருதக் கல்வெட்டு இருக்கிறது. தற்போது நடைமுறையிலுள்ள வீணைக்கு 'ரகுநாத வீணை'என்று நாயக் ராஜாவை வைத்துத்தான் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இப்படிப் பல பேர் சங்கீதத்தில் நிறைந்த ஞானம், அநுபவம் பெற்றவர்கள்.

பூர்வத்தில் தேசம் பூராவுக்கும் ஒரே ஸங்கீத முறைதான் இருந்ததென்றும், முகாலய ஆட்சியில் வடக்கே எல்லாத் துறைகளிலும் foreign influences (விதேச அளாவல்கள்) அதிகமானபின் அங்கே ஹிந்துஸ்தானி ஸங்கீதமென்றும், தக்ஷிணத்தில் கர்நாடக ஸங்கீதமென்றும் பிரிந்ததாகவும் தெரிகிறது.

மெட்டமைத்து ஸாஹித்யம் செய்திருப்பவர்களில் சரித்ர காலத்திலே எண்ணூறு வருஷத்துக்குமுன் 'கீத கோவிந்தம்'இயற்றிய ஜயதேவரை முதலாவதாகச் சொல்கிறார்கள். அப்புறம் முக்யமாகச் சொல்வது புரந்தரதாஸ். 'கர்நாடக'சங்கீதம் என்றே அவரால்தான் பெயர் உண்டானதாக ஒரு அபிப்ராயம். இவர்கள் இருவரும் க்ருஷ்ண பரமாத்மாவைப்

பாடியவர்கள். நாராயண தீர்த்தரும் 'க்ருஷ்ண லீலா தரங்கிணி'என்றே பாடியிருக்கிறார். ஊத்துக்காடு வேங்கடசுப்பையர் தமிழில் பண்ணியுள்ள 'க்ருஷ்ண கானம்'இப்போது பிரபலமாகி வருகிறது. பத்ராசல ராமதாஸ் முழுக்க ராமபரமாகவே கீர்த்தனைகள் செய்திருக்கிறார். நம் சங்கீதத்துக்கே முக்ய புருஷர்களாக 'த்ரிமூர்த்திகள்'எனப்படுகிறவர்களில் தியாகையரும் விசேஷமாக ராமார்ப்பணமாகவே பாடியிருக்கிறார். சிவன், அம்பாள் முதலானவர்கள் மீதும் சிற்சில க்ருதிகள் செய்திருக்கிறார். முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஐயனார், மாரியம்மனிலிருந்து ஆரம்பித்து ஒரு ஸ்வாமி விடாமல் அத்தனை தெய்வங்களையும் பாடியிருக்கிறார். சியாமா சாஸ்திரிகள் அம்பாள் ஒருத்தியையே பாடியிருக்கிறார். கோபாலக்ருஷ்ண பாரதியாரும், முத்துத்தாண்டவர், மாரிமுத்தாப்பிள்ளை முதலியவர்களும் சிவனையே, அதிலும் முக்யமாக நடராஜாவையே பாடினவர்கள். அருணாசலக் கவிராயர் 'ராம நாடகம்'என்று செய்திருக்கிறார். கிறிஸ்துவரான மாயவரம் வேதநாயகம் பிள்ளை ஸர்வமத ஸமரஸமாக ஏக பரமாத்மாவைக் குறிப்பிடும்படியான வேதாந்தப் பாடல்கள் பாடி வைத்திருக்கிறார். நம் காலத்திலும் பாண்டித்யம், பக்தி உள்ள ஸாஹித்யகர்த்தாக்கள் இல்லாமலில்லை.

அன்றிலிருந்து இன்றுவரை யாராயிருந்தாலும் தெய்வத்தைக் குறித்துத்தான் பாடல் இயற்றுவதென்றும், 'ஸெக்யூலர் தீம்'என்னும் லௌகிக விஷயமாக இயற்றுவதில்லையென்றும் இந்திய மரபு வளர்ந்து வந்திருக்கிறது.

---

X* கரஹரன் :கரன் என்ற அரக்கனை வதைத்த ஸ்ரீராமன்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம் )** (காந்தர்வ வேதம்)

## நாட்டு-தொழில்-வாழ்க்கைப் பாடல்கள்

நாட்டுப் பாடல்கள் என்று என்று ஒரு பிரிவு. இப்படியே நாட்டு மக்களுக்கென்று கூத்தும், பலவிதமான நடனங்களும் இருக்கின்றன - கரகம், காவடியாட்டம், பொய்க்கால் குதிரை. எதுவானாலும் ஈஸ்வர சம்பந்தம் எப்படியாவது வந்து சேர்ந்துவிடும். தெம்மாங்கு, காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து முதலானவை நாட்டுப் பாடல் வகைகள். உழுகிறவன், ஏற்றம் இறைக்கிறவன், படகு ஓட்டுகிறவன், பாரம் இழுக்கிறவன், தயிர் சிலுப்புகிறவள், நெல்லு குத்துகிறவள் எல்லாருமே பாடிக்கொண்டே தொழில் பண்ணுகிறார்கள், வேலையின் பளு நெரிக்காமல் வேலையை மனசுக்குப் பிடித்த மாதிரி மாற்றித் தருகிற மருந்தாகப் பாட்டு இருக்கிறது. பல பேர் பாடி ஆடிக்கொண்டு வேலை செய்கிறபோது ஜாஸ்தி வேலையும் நடக்கிறது. இந்தப் பாட்டுகளிலும் கொஞ்சமாவது தெய்வ ஸம்பந்தம் தொட்டுக் கொள்ளாமலிராது.

மனசுக்கு உத்ஸாஹத்தைக் கொடுத்து அதனாலேயே சிரமமான சரீர உழைப்பையும் சுலபமாக்கித் தருகிற ஆற்றல் இசைக்கு இருப்பது போலவே, எந்த உணர்ச்சியானாலும் அதை நன்றாக கிளறிவிட்டு நம் மனஸை விட்டுக் கொட்டும்படிப் பண்ணி, இதனால் அப்புறம் சாந்தியை உண்டாக்கும் ஆற்றலும் அதற்கு இருக்கிறது. சாந்தம் தரும் சக்திக்குத் தாலாட்டை த்ருஷ்டாந்தம் காட்டினால் போதும். எத்தனை துஷ்டத்தனம் பண்ணுகிற குழந்தையானாலும் காலில் போட்டுக் கொண்டோ தூளியில் போட்டோ தாலாட்ட ஆரம்பித்து விட்டால் அப்படியே மயங்கித் தூங்கிப் போய் விடுகிறது. ஸர்ப்பம்கூட ஸங்கீதத்தில் கட்டுப்பட்டு லயித்து நின்று விடுகிறது. ஆரம்பத்தில் தாலாட்டிலிருந்து அந்திமத்தில் பிலாக்கணம் வரையில் பலவிதமான பாட்டுக்கள். அநேகமாக இதெல்லாம் ஸ்திரீகளின் சொத்தாகவே இருக்கிறது. பாட்டிலேயே புராணக் கதைகளைச் சொல்லித்தான் தாயார்க்காரி குழந்தைகளை நல்வழியில் கொண்டுபோவது முன் கால வழக்கம். குழந்தை எழுந்திருக்கிறதற்கு முந்தியே அம்மாக்காரி 'ஷிஃப்ட்டு'க்குப் போய் விடுவதுதான் புது நாடகம்!கல்யாணம் கார்த்திகை என்றால் ஊஞ்சல் நலங்கு என்று பாட்டுக்கள். மங்கள

காரியம் எதுவானாலும் மேளம் நாயனமில்லாமல் இல்லை. அதற்கு மங்கள வாத்யம் என்றே பேர் ஏற்பட்டிருக்கிறது. யுத்தத்துக்கும் ரணபேரி, துந்துபி, 'மார்ச்'பண்ணுவதற்கென்று பாட்டுக்கள். National Song, தேசிய கீதம் என்று ரொம்பவும் மரியாதை கொடுத்து வைத்துக் கொண்டிருக்கிறோம். ஸ்வதந்த்ரப் போராட்டத்தில் ஜனங்களுக்கு ஸ்வதேச உணர்ச்சி மூட்டுவதற்கே தேசிய கவிகள் என்கிறவர்களின் பாட்டுக்களைத்தான் முக்யமாகப் பாடிப் பிரசாரம் பண்ணினார்கள். சந்தோஷம், துக்கம், வீரம் என்று எந்த உணர்ச்சியானாலும் பாட்டில் வெளிப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் முடிவாக சாந்தத்தில் சேர்க்கவே ஸங்கீதம். பரம ஸௌக்யத்தை ஸங்கீதத்தின் மூலம் அடைவதற்கே வழிகாட்டிய தியாகையர்வாள் 'சாந்தமுலேக ஸௌக்யமு லேது'என்று பாடினதால் சாந்தம்தான் சங்கீதத்தின் நிறைவான குறிக்கோள் என்று தெரிகிறது. ஈஸ்வர ஸ்மரணம்தான் அப்படிப்பட்ட நித்யமான சாந்தத்தைக் கொடுக்க வல்லதாகையால் சங்கீதம் பரமாத்மாவை மையமாகக் கொண்டதாகவே நம்முடைய உயர்ந்த சம்பிரதாயத்தில் நெடுங்காலமாக வந்திருக்கிறது.

---



**தேச கௌரவத்தை உயர்த்தும் கலை**

இந்த லக்ஷ்யம் நமக்கு எந்நாளும் மறந்து போகக் கூடாது. இப்போது வெளி தேசங்களிலெல்லாம் நம்முடைய ஸங்கீதமும் நாட்டியமும் பரவி வருகிறது. அங்கே யுனிவர்ஸிடிகளில் இவற்றைச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். பெரிய பெரிய உலக ஸ்தாபனங்களில் நம்முடைய ஸங்கீதக் கச்சேரி வைத்துப் புகழ்மாலை சூட்டுகிறார்கள். இதிலே நமக்கு ஒரு ஆறுதல். என்ன ஆறுதலென்றால், ஆதியில் நமக்கு லோகத்தில் எதனால் பெரிய கௌரவம் இருந்ததோ அந்தப் பாரமார்த்திகமான பெருமை இப்போது ரொம்பவும் எடுபட்டுப்போய், மற்ற தினுஸிலும் பெருமை இல்லாமல் எல்லா தேசங்களிடமும் நாம் கப்பரை நீட்டுவதாகவும், அதிலே போட்டு உபகரிப்பவர்களிடமும் நம் ஸ்தானத்துக்கு மீறி 'உபதேசம்'பண்ணி அவர்கள் நம்மை நன்றியில்லாதவர்கள் என்று மட்டமாய் நினைக்கும்படியாகவும் காரியங்கள் நடந்து வருகின்றன. இப்படியிருக்கிறபோது நம்முடைய ஸங்கீத, நாட்டியக்காரர்களை அவர்கள் ரொம்பவும் கொண்டாடி, 'இந்தியாவில் உள்ள இந்தக் கலைகளைப் போல எங்கேயுமில்லை'என்று கற்றுக் கொள்வதற்கு முன்வருவதைப் பார்க்கும்போது, "நாம் பிக்ஷாபாத்ரம் நீட்டுபவர்களாக மட்டுமில்லாமல் அவர்களுக்குப் போடுபவர்களாக இருக்கிற கௌரவம் இது ஒன்றால் தானே நமக்குக் கிடைத்திருக்கிறது?"என்று ஆறுதல் ஏற்படுகிறது.

---



**லக்ஷ்யம் மறக்கலாகாது**

கலை என்பதற்காகவே பரவட்டும், பரப்பட்டும்;சந்தோஷம்தான். ஆனாலும் ஆதியிலிருந்து இந்தக் கலைகளுக்கு எது லக்ஷ்யமாயிருந்ததோ அது மறந்து போகுமாறு விட்டுவிடக் கூடாது. ஈஸ்வரனிடம் கொண்டு நிறுத்துவதற்காகத்தான் இ ஏற்பட்டிருக்கின்றன என்ற நினைப்பு போகக்கூடாது. சரபோஜி போன்ற ராஜாக்கள் கேட்டுக் கொண்டால்கூட, ராஜஸதஸில் போய்ப் பாடுவதில்லை, 'நிதி வேண்டாம்;ஈஸ்வர ஸந்நிதிதான் வேண்டும்'என்று வைராக்யமாயிருந்த தியாகையர்வாள் போன்ற மஹான்களின் 'ஐடியல்'எப்போதும் நினைவில் இருக்க வேண்டும். சாந்த ஸௌக்யத்தைத் தானும் அடைந்து, மற்றவர்களும் அடைவிக்கப் பண்ணுவதாகவே காந்தர்வ வேதத்தை அதற்கான உயர்ந்த ஸ்தானத்திலே வைத்துக் காத்துக் கொடுக்க வேண்டும்.

---

## அர்த்த சாஸ்திரம்

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நாலில் தர்மத்துக்கு அடுத்தது அர்த்தம். 'அர்த்தம்' என்பதற்கு இங்கே அர்த்தம், 'நடைமுறை வாழ்க்கை நடத்துவதற்குப் பிரயோஜனமாகிற பொருட்கள்'என்பதே. வாழ்க்கை நடப்பதற்கு வீடு, வஸ்திரம், ஆஹாரம் தானியம் முதலிய என்னவெல்லாம் வாங்குகிறோமோ அவையெல்லாம் 'அர்த்த'த்தில் சேர்ந்தவைதான். இப்படி வாங்குவதற்காக நாம் சம்பாதிக்கிற பணத்துக்கும் 'அர்த்தம்' என்று பெயர். நடைமுறை வாழ்க்கை வாழ்ந்து என்றைக்கோ ஒருநாள் செத்துப்போய்விட்டு, மறுபடி இதே மாதிரி பிறந்து கொண்டிருப்பதற்கே இந்த 'அர்த்தம்'என்று ஆக்கிக் கொண்டுவிட்டோமானால் அப்போது அது அனர்த்தந்தான். "அர்த்தம் அநர்த்தம் பாவய நித்யம்" என்பதாக இந்த உண்மையைத்தான் எப்போதும் நினைவூட்டிக் கொள்ளும்படி ஆசார்யாள் உபதேசிக்கிறார்*1. 'இதில்லாவிட்டால் வாழ முடியவில்லை;ஆத்மாவை, பரமாத்மாவைத் தெரிந்துகொள்வதற்காக எல்லாரும் ஸந்நியாஸியாகப் போய்விட்டால் யார் அவர்களுக்கு பிக்ஷை பண்ணுவது?அதனால் சம்பாதித்துத்தான் ஆகவேண்டு ம்'என்பதற்காகவே 'அர்த்த'த்தில் ஈடுபட வேண்டும். சாதாரண மநுஷ்யர்களாக இருக்கப்பட்ட எல்லாருக்கும் இருக்கக்கூடிய நியாயமான ஆசைகளை மிஞ்சி அதியில் போகும்படி விடாமல் அளவோடு அந்த ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவும் 'அர்த்த'த்தை நாடி சேர்த்துக் கொள்ளத்தான் வேண்டும். இங்கே 'அர்த்தம்'என்பது அதற்கு அடுத்ததாக வரும் 'காம'த்துடன் சேர்கிறது. ஆனால் அதோடோயே நின்றுவிடக் கூடாது. முடிவாக உள்ள புருஷார்த்தமான 'மோக்ஷ'த்தை மறந்து 'அர்த்த-காமம்'என்பதிலேயே தலை தெறிக்கப்போய் விழிப்படாது. இதற்கெல்லாம் அடிப்படையாக முதலில் வரும் 'தர்ம'த்தில் ஆரம்பத்திலிருந்தே பிடிப்பு இருக்க வேண்டும்.

முதலில் தர்மத்தைச் சொன்னதற்குக் காரணம், இந்த லோகமாகிற மாயா நாடகத்தில் அர்த்த-காமங்கள் இல்லாமலிருக்க முடியாதென்றாலும், இந்த மாயை என்றைக்காவது ஒரு நாளாவது விலகிப்போய் ஞானமும் மோக்ஷமும் ஏற்பட வேண்டுமென்றால் அப்போது அர்த்த-காமங்களிலும்கூட அதர்மத்தைச் சேர்த்துவிடக்கூடாது என்பதற்காகத்தான். (அப்பர்) "பல பல காமத்தராகி" என்கிறாற்போல எத்தனையோ காமங்களிருந்தாலும் இப்படி ஏதோ ஒரு பொருளிடம் ஆசை இருக்கிறதென்றால், அந்த ஆசையையே தீய்த்துக் கொள்கிற வைராக்யமில்லாவிட்டாலும் பரவாயில்லை, ஆனால் அந்தப் பொருளைத் திருடிப் பெறக்கூடாது; இன்னொருத்தனை வஞ்சித்துப் பெறக்கூடாது. ரதி ஸுகம் தர்மபத்னியுடன் அநுபவிக்கலாமாயினும் நிஷேத தினங்களில் (சாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட நாட்களில்) கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும்; பர ஸ்திரீகளை மனஸாலும் நினைக்கூடாது. பண ஸம்பாத்யம் பண்ணலாமாயினும் அதற்காக லஞ்சம் வாங்க்கூடாது; இன்னொருத்தன் வயிற்றில் அடிக்கக் கூடாது இப்படியெல்லாம் அர்த்த காமங்களுக்கும் தர்ம வேலி போட்டால்தான் என்றைக்கோ ஒரு நாளாவது ஞானப் பழம், மோக்ஷப் பழம் பழுக்க முடியும்.

'அர்த்தம்' îIN™ ªð£¼œ'âùŠð´Aø¶. î˜ñ-Ü˜î-è£ñ-«ñ£þƒèœ Üø‹-ªð£¼œ-Þ¡ð‹-i´ âùŠð´A¡øù F¼õœÀõ˜ F¼,°øO™ Üø˜¶Šð£™, ªð£¼†ð£™, è£ñ˜¶Šð£™ Í¡Á‹ Í¡Á ð°FèO™ ªê£™LJ¼,Aø£˜. «ñ£þ˜¬îŠ ðŸP˜ îQò£è ÞŠð®Š ªðKò ð°F Þ™ô£M†ì£½‹, Üø˜¶Š ð£L«ô«ò 'Þ™ôø Þò™'â¡ðîŸ° ÜŠ¹ø‹ '¶øõø Þò™'â¡Á Cô ÜFè£óƒèœ ð‡E, ÜF™ ËŸÁ‚° «ñŸð†ì °ø™èO™*2 «ñ£þ‹ R˜FŠðîŸè£ù õNè¬÷„ ªê£™LJ¼,Aø£˜. ÜF«ô, "«ñ£þ «ô£è‹ «ð£õîŸ° Ü¼œ ªó£‹ð ÜõCò‹; âšõ÷¾ ÜõCòªñ¡ø£™ Þ‰î Ì«ô£è˜F™ õ£›õîŸ°Š ªð£¼œ âšõ÷¾ ÜõCò«ñ£, Üšõ÷¾"â¡Á ªê£™L, «ô£è ò£˜¬ó,° Ü˜î‹ âŠð® Þ¡Pò¬ñò£î¶ â¡ð¬î ¹Kò ¬õ,Aø£˜:

அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை -பொருளில்லார்க்கு

இவ்வுலகம் இல்லாங்கி யாங்கு.

வெயில், மழையால் உபத்ரவப்படாமலிருக்க வீடு வேணத்தான் வேண்டும். சரீரத்துக்குப் பசி முதலிய துன்பம் ஏற்படாமலிருக்க ஆஹாரம் வேணத்தான் வேண்டும். மானத்தை ரக்ஷித்துக்கொள்ள வஸ்திரம் வேணத்தான் வேண்டும். இப்படிப்பட்ட தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள பணம் வேணத்தான் வேண்டும். அதனால் மநுஷ்யாளுக்கு இதற்கான வழிகளைச் சொல்லித் தரத்தான் வேண்டும். அதுதான் 'அர்த்த சாஸ்திர' என்கிற நான்காவதான உபவேதம்.

ஆனால் அர்த்த சாஸ்திரத்தைப் பார்த்தால் அதில் பொருளாதாரத்தை, எகனாமிக்ஸைவிட அதிகமாக ராஜ நீதியை, ஸ்டேட்-க்ராஃப்ட், பாலிடிக்ஸ் ஆகியவற்றையே சொல்லியிருக்கும். திருக்குறளிலும் பொருட்பாலில் எடுத்தவுடனேயே அரசாட்சியைப் பற்றித்தான் வருகிறது. அப்புறம் பல அதிகாரங்களில் செங்கோல் ஆட்சியின் தன்மை, கொடுங்கோன்மை, நீதியோடு கூடிய தண்டனை முறை, அமைச்சர்கள்-ஒற்றர்கள்-தூதர்கள் பின்பற்ற வேண்டிய முறைகள், படை மாட்சி, கோட்டை கொத்தளங்களின் அவசியம், யுத்த தந்திரங்கள், வரி போட வேண்டிய நீதிகள் என்று ராஜாங்க விஷயங்களைப் பற்றியே நிறையச் சொல்லியிருக்கிறார்.

ஏனிப்படி என்றால், ஒரு மநுஷ்யன் ஆஹாரம், வஸ்திரம், வீடு, வயல், பணம் முதலிய 'அர்த்த'ங்களால் வாழ்க்கை நடத்த வேண்டுமென்னும்போது அவனுக்கு இந்தப் பொருள்களை எல்லாம் தானே ரக்ஷித்துக் கொள்ள முடியாததால், ரக்ஷித்துத் தருவதற்கென்றே ஒரு பெரிய ஸ்தாபனம் தேவையாயிருக்கிறது. தேசமென்றிருந்தால் துஷ்டர்கள் இருக்கத்தான் இருப்பார்கள். அவர்கள் தாங்களாகப் பாடுபட்டு ஸம்பாதனம் பண்ணாமல் இன்னொருத்தனை அடித்துப் பிடித்து, கொலைகூடப் பண்ணி அவனுடைய உடைமையைக் கவரப் பார்ப்பார்கள். அப்படி விடக்கூடாது. அவனவனுக்கும் உடைமையைக் காப்பாற்றிக் கொடுக்க சக்தி வாய்ந்த ஒரு ஸ்தாபனம் தேவை. பலிஷ்டர்கள் பலஹீனர்களை இப்படியெல்லாம் கஷ்டப்படுத்தாமல், ஸாதுக்கள் நிம்மதியாக வாழ்க்கை நடத்த முடியாதபடி கொலை, கொள்ளை, பெண்களை மானபங்கம் செய்வது என்றெல்லாம் செய்யாமல் தடுப்பதற்கு ஒரு அமைப்பு வேண்டும். அந்நிய தேசத்தினர் ஒரு தேசத்துக்குக் கூட்டமாக வந்து அதன் ஜனங்களைக் கஷ்ப்படுத்தி, அவர்களுடைய 'அர்த்தம்', மதம், கலாசாரத்தைச் சிதைத்துச் சேதம் பண்ணாமலும் தடுக்க வேண்டும். தடுத்தும், இந்த உள்நாட்டு-வெளிநாட்டு துஷ்டர்கள் கைவரிசையைக் காட்டிவிட்டால் அவர்களைத் தண்டித்து சிக்ஷை பண்ணுவதற்கும் அந்த அமைப்புக்கு அதிகாரமும், செல்வாக்கும், ஆள் பலமும் இருக்க வேண்டும். ஜனங்களுக்கு அர்த்தத்தை சேகரம் பண்ணிக் கொள்வதற்கும், லௌகிக ரீதியில் ஜீவனம் நடத்துவதற்கும் அதிகம் சொல்லித் தரவேண்டியதில்லை. வமீரீயீ-வீஸீமீ மீக்ஷீமீவமீ-ல் அவர்களே கொஞ்சம் சொல்லிக் கொடுத்தாலும் இந்த விஷயங்களில் விருக்தி பண்ணிக்கொண்டு விடுவார்கள்.

பிறன் வீஸீமீ மீக்ஷீமீவமீ-ஐக் கெடுக்காமல், தங்களுடைய சாச்வதமான வீஸீமீ மீக்ஷீமீவமீ-ஐயும் கெடுத்துக் கொள்ளாமல் அவர்களை இவ்விஷயங்களில் கட்டுப்படுத்தவே சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அது தர்ம சாஸ்திரத்தின் காரியம். அர்த்த சாஸ்த்ரம் என்று வருகிறபோது, இப்படி தனித்தனிப் பிரஜைகள் அர்த்தத்தைச் சேர்த்துக் கொள்விதைவிட, அத்தனை பிரஜைகளுமாகச் சேர்த்ததை ரக்ஷித்துக் கொடுப்பதற்கான ஸ்தாபனத்தைப் பற்றித்தான் நிறையச் சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதோடு, அவர்களுடைய லௌகிக வாழ்க்கையைக் காப்பாற்றித் தருவதோடு அவர்களுடைய அத்யாத்ம வாழ்க்கை, கலாசாரம் இவற்றையும் பேணிக் காத்துத் தரும் ஸ்தாபனமாயும் இதுவே இருந்துவிட்டால், அது இத்தானை பெரிய கார்யங்களை, ஒரு பெரிய தேச ரீதியில் இதற்காக நடத்த வேண்டிய நிர்வாஹங்களை எப்படிச் செய்ய வேண்டும் என்பதைப் பற்றித்தானே விஸ்தாரமாகச் சொல்ல வேண்டியதாயிருக்கும்?ராஜாங்கம் என்பது இப்படிப்பட்ட ஸ்தாபனம் தானே? ஒவ்வொரு தேசத்திலும் இப்படித்தானே எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முந்தியே ராஜாங்கம் என்பதை ஏற்படுத்தி, ஜனங்கள் முறையான வழியில் தாங்கள் 'அர்த்தம்' தேடுவதற்குக்

குந்தகம் இல்லாமலிருப்பதற்காகவும், தேடிப் பெற்ற அர்த்தத்தையும் அதோடு தங்கள் ஜீவனையும் உள் சத்துருக்களிடமிருந்தும் வெளி சத்துருக்களிடமிருந்தும் ரக்ஷித்துக் கொள்வதற்காகவும், தங்களுடைய தேசிய கலாசாரம், மதம் முதலியவற்றைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும் வழி கண்டிருக்கிறார்கள் பின்னாடி பல ஸித்தாந்தங்கள் வந்து ஜனநாயகம் என்று சொல்லிக்கொண்டு ராஜாங்கமே மெஜாரிட்டியாயிருக்கிற பலிஷ்டர்களின் பக்கம் இருந்துகொண்டு துர்பலர்களாயிருக்கிற மைனாரிட்டிகளின் உடைமைகளை நியாயா நியாயம் அவ்வளவாகப் பார்க்காமல் பறிப்பதாகவும், தேசாசாரங்களைச் சிதைப்பதாகவும் ஆனாலுங்கூட வாயளவில், எழுத்தளவில் இப்படிப்பட்ட ராஜாங்கமும் ஸர்வஜனங்களையும் தர்மப்படி ரக்ஷிப்பதற்காகவும், தேச தர்மத்தையும் இப்படியே போஷித்துத் தருவதற்காகவும் தான் இருப்பதாகப் பிரகடனம் பண்ணிக் கொள்வது வழக்கமாயிருக்கிறது. இங்கே ஐடியாலஜி, கொள்கை என்பவை வந்து மோதுகிறபடியால் ஜெனரலாகச் சொல்கிறேன். அர்த்த சாஸ்திரத்தில் ராஜாங்கத்துக்கு, ஆட்சி முறைக்கு முக்யமான இடம் கொடுத்ததற்குக் காரணம் ராஜாங்கந்தான் தேச ஜனங்களின் 'அர்த்த'த்தை தர்மப்படி ரக்ஷித்துத் தருவதற்காக ஏற்பட்ட அமைப்பு என்பதால்தான்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

*1. "ðü«è£M‰î"ˆF™

*2. Üøˆ¶Šð£™ 25-37 ÜFè£óƒèO½œ÷ 130 °ø†ð£‚èœ

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**அர்த்த சாஸ்திரமும் தர்ம சாஸ்திரமும்**

இந்தப் பெரிய ரக்ஷணையச் செய்வதற்குத்தான் அது அநேக சட்டங்களைப் போட்டுக் கொடுத்திருக்கிறது. இப்படி அர்த்த சாஸ்த்ரம் சட்டம் போடுவதற்கு முந்தியே உபவேதத்தைவிட உயர்ந்த ஸ்தானத்தில் கருதப்படும் வேத உபாங்கங்களிலேயே உள்ள தர்ம சாஸ்திரத்திலும் ராஜநீதியைப் பற்றி நிறையைச் சொல்லப்பட்டிருக்கிறது. மநு, யாஜ்ஞ்யவல்கியர் மாதிரியானவர்களின் ஸ்ம்ருதிகளில் வர்ணாச்ரம தர்மங்களை விவரிக்கும்போது க்ஷத்ரிய தர்மம், ராஜ தர்மம என்கிறவற்றில் தேச பரிபாலனத்துக்கான சட்டங்களும் வந்துவிடுகின்றன. மநு தர்மப்படி ஆட்சி நடத்துவதாகத்தான் எந்த ராஜாவும் - ஆதிகாலத்திலிருந்து தமிழ் நாட்டு அரசர்களும் - சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பின்னாடி வந்த அர்த்த சாஸ்திரத்தைவிட முன்னாடி வந்த தர்ம சாஸ்திரப்படி போவதைத்தான் முக்யமாகக் கருதி ஆட்சி முறை நடந்து வந்திருக்கிறது. ஏனென்றால் உபவேதங்கள் எல்லாமே கண்ணுக்குத் தெரிகிற இந்த லோக வாழ்க்கைக்கு எது லாபம் என்பதைத்தான் கருத்தில் கொண்டவை. பரலோக சிரேயஸ் என்ற நித்ய ஸௌக்யத்தைக் கருத்தில் கொண்டு ஆத்மாவின் மேம்பாட்டுக்கு வழி சொல்வது வேத உபாங்கங்களில் உள்ள ஸ்மிருதிகளும் மற்ற தர்ம சாஸ்திரங்களும்தான்.

அர்த்த சாஸ்திரம் முதலான உபவேதங்களும் வேத தர்மத்தின் ஆதாரத்தில் எழுந்தவைதான். ஆனாலும் பூராவும் அந்தத் தர்மப் பிரகாரமே போகும் என்று சொல்ல முடியாது. வைத்யம், அர்த்தம், பொழுதுபோக்குகள் என்று ஏதோ ஒரு ஸப்ஜெக்டை 'ஸ்பெஷலைஸ்' பண்ணுவதாக இவை அமைந்திருக்கின்றன. அதனால் இந்தக் கால இங்கிலீஷ் வைத்யத்தில் ஸ்பெஷலைஸேஷனைப் பற்றிச் சொல்கிற டிஃபெக்ட் உபவேதங்களுக்கும் வந்து விடுகிறது. காதுக்கு ஒரு வைத்தியர்;தொண்டைக்கு ஒரு வைத்தியர்;மூக்குக்கு ஒருவர்;'ஹார்ட்'டை மட்டும் பார்க்க ஒரு டாக்டர்;லங்க்ஸை மாத்திரம் பார்க்க இன்னொரு ஸ்பெஷலிஸ்ட் என்று இருப்பதால் மொத்த கான்ஸ்டிட்யூஷனைப் பார்க்காமல் இப்படி ஒரே பிரிவில் ஸ்பெஷலைஸ் பண்ணி வைத்தியம் பண்ணுகிறபோது அந்தப் பிரிவிலுள்ள வியாதிக்கு மட்டும் மருந்து கொடுத்து குணம் பண்ணும் போதே வேறொரு பிரிவில் புது வியாதி வருகிறது;மொத்தத்தில் கான்ஸ்டிடயூஷன் பாதிக்கப்படுகிறது - என்கிறார்கள். இது மாதிரிதான் அர்த்தத்தை மாத்திரம் அபிவிருத்தி

பண்ணுவது, ஆட்டம் - ஆட்டு முதலியவற்றை மட்டும் வளர்ப்பது என்று உபவேதங்கள் செய்கிறபோது இந்த எல்லாம் எதற்கு அங்கமாயிருக்க வேண்டுமோ அந்த தர்ம வாழ்க்கை என்ற பூரண விஷயத்தில் கவனக் குறைவு ஏற்பட்டு அதற்குப் பாதகமாகக்கூடப் போகும்படியான ஹேதுக்கள் உண்டாகிவிடுகின்றன.

அதனால்தான் ராஜாக்கள் அர்த்த சாஸ்திரத்தைப் பின்பற்றுவதைவிட மநு தர்ம சாஸ்த்ராதிகளை அநுஸரிப்பதையே விஷயமாகச் சொல்லிக் கொண்டார்கள். முடிவில் பார்க்கப் போனால் அர்த்த சாஸ்த்ரத்திலும் அது வேத தர்மத்தை அஸ்திவாரமாகக் கொண்டு, அதை நிலைநாட்டவே ஏற்பட்டிருக்கிறது என்றுதான் சொல்லியிருக்கும்.

தர்ம சாஸ்திரங்கள் மட்டுமின்றி உபாங்கங்களில் வருகிற புராண இதிஹாஸங்களிலும் ராஜநீதியைப் பற்றி நிறைய இருக்கிறது. இங்கெல்லாமும் தாற்காலிகமான 'அர்த்த'த்தைவிட, சாச்வதமான தர்மத்துக்குப் பிராதான்யம் கொடுத்தே அரசாட்சி முறை சொல்லப்பட்டிருக்கும்.

தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவே வியாஸ மஹரிஷி அநுக்ரஹித்த மஹாபாரதத்திலும், 'தர்ம விக்ரஹவான்'என்றே கியாதி பெற்ற ராமசந்திரமூர்த்தியின் கதையான ராமாயணத்திலும் ராஜநீதிகள் கொட்டிக் கிடக்கின்றன. மஹாபாரதத்தில் யுத்தத்துக்கு அப்புறம் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்ட தர்மபுத்ரருக்கு பீஷ்ம பிதாமஹர் சாந்தி பர்வா, ஆநுசாஸனிக பர்வா என்ற இரண்டு பெரிய பர்வங்களில் பண்ணுகிற உபதேசங்களில் ராஜ தர்மத்தைப் பற்றி ஏராளமாக வந்துவிடுகிறது. காட்டுக்குப் போன ராமரைத் திரும்ப அழைத்து வருவதற்காக பரதன் சித்ரகூடத்துக்குப் போனபோது, எப்படி ராஜாங்கம் நடத்த வேண்டும் என்று ராமர் அவனுக்கு நிறைய உபதேசித்த விஷயம் ராமாயணத்தில் வருகிறது. 'ராமராஜ்யம்'என்ற தர்ம ராஜ்யத்தின் விதிகளையே இங்கே ராமர் சொல்லியிருக்க வேண்டும்.

இப்படி தர்மத்துக்காக ஏற்பட்ட நூல்களில் சொல்லியுள்ள ஆட்சிமுறைக்கு அப்புறம்தான் 'அர்த்த சாஸ்த்ரம்'என்றே உள்ளதை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். இப்போது அர்த்த சாஸ்த்ரம் என்றால் சாணக்யன் எழுதின ஒரு புஸ்தகந்தானென்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். அர்த்த சாஸ்த்ர புஸ்தகங்கள் பலவற்றில் ஒன்றுதான் அது. அதற்கு 'சாணக்ய நீதி'அல்லது 'சாணக்ய தந்த்ரம்' என்றே பெயர். இப்படியே 'சுக்ர நீதி'என்று சுக்ராசாரியார் செய்த அர்த்தசாஸ்த்ர நூல் ஒன்றும் இருக்கிறது. தர்மத்துக்கென்றே ஏற்பட்ட நூல்களின் அளவுக்கு அர்த்தசாஸ்திர புஸ்தங்களில் ஸத்யம், தர்மம், நியாயம், நேர்மை ஆகியவைகளை எதிர் பார்க்க முடியாது. ராஜ தந்த்ரம், ஸமயோசிதம் - diplomacy, expediency என்றெல்லாம் சொல்கிறார்களே, இவற்றைத் தவிர்க்க முடியாத கட்டங்களில் தர்ம நூல்களிலேயே கொஞ்சம் அநுமதித்துத்தானிருக்கும். அர்த்த சாஸ்திரத்திலோ இவற்றுக்கு இன்னும் அதிக இடம் கொடுத்திருக்கும். சில ஸந்தர்ப்பங்களில் அரசாங்கம் உள்ளதைச் சொல்லாமல் மறைக்கலாம் என்ற அளவுக்கு தர்ம நூல்கள் போகுமென்றால், அர்த்த சாஸ்திரமோ உள்ளதை இல்லையென்றே மறுக்கலாம், இல்லாததை உள்ளதாகச் சொல்லலாம் என்றுகூடச் சொல்லிவிடும். இப்படி அஸத்ய ஸம்பந்தம் வருவதால்தான், பாக்கி மூன்று உபவேதங்களுக்கு ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம் என்று பெயரிருக்க இதற்கு அர்த்தவேதம் என்றில்லாமல் இது ஒரு சாஸ்த்ரம் என்றே பெயர் இருக்கிறது. 'சாஸ்த்ரம்'என்றால் எந்த ஸப்ஜெக்டைப் பற்றியும் விதிகள் கொடுப்பதுதான்.

தர்ம சாஸ்திரத்தோடு உபவேதங்களில் வரும் ஸப்ஜெக்ட்கள் எது மாறுபட்டாலும் நாம் இதைத் தள்ளிவிட்டு தர்ம சாஸ்திரத்தைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆயுர்வேத வைத்யர் எவராவது தம் சுவடியிலிருந்து மேற்கொள் காட்டி சிராத்த தினத்தில்கூட ஒரு வியாதிக்கார பிராம்மணன் பூண்டு லேஹ்யம் சாப்பிடலாம் என்று சொன்னால், அதைக் கேட்காமல், உயிர் போனாலும் போகட்டும் என்று தர்ம சாஸ்த்ரப்படி அதை அன்று ஒதுக்கத்தான் வேண்டும். இப்படியே அர்த்த சாஸ்த்ரக்காரர் தர்மத்தை விட்டு ஒரு ராஜா தன்னை ஸ்திரப்படுத்திக் கொள்ளச் சிலது செய்யலாமென்றால், இவற்றை 'டிப்ளமஸி'என்ற பெயரில்கூட தர்ம சாஸ்திரம் சொல்கிற ராஜதர்மம் ஒப்புக் கொள்ளாத இடத்தில் நாம் அர்த்த சாஸ்திரத்தைத் தள்ளி தர்ம சாஸ்த்ரத்தைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆரோக்யம், யுத்த ஜயம், கண்ணுக்குக் காதுக்கு இன்பம், அதிகாரம் என்று இந்த உபவேதங்களின் பலன்

பிரத்யக்ஷத்தில் உடனே தெரிந்தால் தெரிந்துவிட்டுப் போகட்டும். தர்மாதர்மங்ளின் பலன் அப்படித் தெரியாமல் அத்க்ருஷ்டமாக இருந்தாலும் இருந்துவிட்டுப் போகட்டும். அதற்காக நிரந்தரமானதை விட்டுத் தற்காலிகமானதைப் பிடித்துக் கொள்வார்களா?சரீரத்தைப் பல விதங்களில் ரக்ஷித்து ஸந்தோஷப்படுவதற்கு உபவேதங்கள் வழிசொன்னாலும், இந்த சரீரத்தைப் இப்படியே என்றைக்கும் ஸந்தோஷமாகக் காப்பாற்றித் தர அவற்றால் முடியுமா?சரீரம் போனவிட்டு தர்மா தர்மங்களுக்குத் தானே நாம் பதில் சொல்லியாக வேண்டும்?

உபவேதங்கள் தருகிற த்ருஷ்ட லாபங்களைவிட தர்ம சாஸ்திரங்கள் தரும் அத்ருஷ்ட லாபம்தான் உயர்ந்தது என்பதற்குப் பொது ஜன வசனமே அத்தாட்சியாயிருக்கிறது. நடைமுறை வாழ்க்கையில் த்ருஷ்டமாகவே அதாவது, கண்ணால் பார்க்கும்படியாகவே ஒரு பெரிய லாபம் கிடைத்துவிட்டால் "அத்ருஷ்டம் அடிச்சுது" என்றுதானே சொல்கிறோம்?ஆகையால் த்ருஷ்டத்தைத் தரும் அர்த்த சாஸ்த்ரம் முதலானதுகளும் அத்ருஷ்டத்தைத் தரும் தர்ம சாஸ்திரத்தின் காலில் விழ வேண்டியவைதான். 'தர்மார்த்த காம மோக்ஷம்'என்பதில் அர்த்தம் பெரும்பாலும் காமம் என்ற தற்கால ஸுகத்தைத் தருவதோடு முடிவதே. தர்மம்தான் நித்ய ஸுகமாயுள்ள மோக்ஷத்துக்கு உபாயம். அந்த தர்மத்தில் போவதற்கு அநுகூலமாகவே அர்த்தத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நான் இப்படிச் சொல்வதால், தற்காலத்தில் சிலர் நினைக்கிற மாதிரி சாணக்ய தந்திரம் முதலானவற்றில் ஜனங்களின் நன்மையையும், ஸத்யம் தர்மம் ஆகியவற்றையும் புறகணித்து ராஜாங்கத்துக்கு யதேச்சாதிகாரம் கொடுத்திருக்கிறது என்று தப்பாக நினைத்து விடக்கூடாது. தற்போது உலகத்தில் 'மானார்க்கி' (º®òó²) àœ÷ ï£´èœ àœðì â™ô£ «îê𝑓èO½‹ ò«î„ê£Fè£ó‹ Þ™ô£ñ™ ú˜õ üù ÜHŠó£òŠð®, ú˜õ üù «þñˆ¶,è£è˜î£¡ Üóê£†C ïì˜îŠð´õî£è üùï£òè, ªè£œ¬è â¡ðî£è å¡Á «ðêŠð´Aø¶. Ýù£½‹ Fùº‹ å¼ coup õ¼õî£è¾‹, ªè£…ê è£ôˆF«ô«ò Þ‰î ó£µõ Ý†C»‹ «ð£Œ Þ¡ªù£¼ ILìK ú˜,è£˜ õ¼õî£è¾‹ î£Q¼,Aø¶. üù𝑓èœ ïô¬ù º‰F Þ¼‰î ó£ü£𝑓è‹ èõQ,è«õJ™¬ôªò¡Á‹, üùŠ HóFGFèœ â¡Á ªê£™ôŠð´ðõ˜èœ ú^ò î˜ñ𝑓è¬÷ Ü®«ò£´ M†´ M†´ ô…ê‹, ¬èò£ô£è£ˆîù‹ ÞõŸø£™ «îê õ£›,¬è¬ò, ªè´ˆ¶ M†ìî£è¾‹ ¹¶ Ý†C ãŸð´ˆ¶ðõ˜èœ ªê£™Aø£˜èœ. ÞŠ«ð£¶ ïì,Aø Þˆî¬ù ò«î„ê£Fè£ó«ñ£, ÞŠ«ð£¶ ð£˜,Aø Þˆî¬ù inefficiency-«ò£ Üˆî ê£vFó𝑓èO™ Ü¸ñF,èŠ ðì«õJ™¬ô. ÞŠ«ð£¶ õ£Jù£™ àê‰î ŠK¡RHœè¬÷,, ªê£™L,ªè£‡«ì è£˜òˆF™ ªó£‹ð¾‹ «õÁ Mîñ£è,, ªêŒõî£è Þ¼,Aø¶. Üˆî ê£vˆó𝑓èO™ ÞŠð® õ£Jù£™ å«óò®ò£è îˆñ «ü£ì¬ù ð‡í£ñ™, å¼ ó£ü£𝑓è ïìˆ¶õªî¡ø£™ ÜF™ å¼ ó£xòˆ¬î«ò «ñŒˆ¶, è†ì «õ‡®J¼Šð¬î º¡Q†´‹, «ñ½‹ Ü‰Gò ó£xò𝑓èO™ «ñ£î™è¬÷,, êñ£O,è «õ‡®J¼Šð¬î º¡Q†´‹, 'Ü«ïè Mûò𝑓è¬÷ óývòñ£èˆî£¡ ¬õˆF¼,è «õ‡´‹. Cô Mûò𝑓è¬÷, ªè£…ê‹ «õ«ø ñ£FKˆ ªîKAø Mîˆ F™î£¡ è£†ì «õ‡´‹' â¡ø practical necessity-ò£™ ªó£‹¾‹ ú^ò î˜ñ‹ ð£˜ˆ¶ º®ò£¶ â¡«ø Cô Ü‹ê𝑓èO™ è£‹Šó¬ñv ð‡E,ªè£‡´ «ð£º‹ð®ò£è,, ªê£™LJ¼,º‹. õ£˜ˆ¬îJ™ ªó£‹ð¾‹ î˜ñ «ü£ì¬ù ð‡í£M†ì£½‹, è£˜òˆF™ ÜF™ ªê£™LJ¼,Aø Ü÷¾,«è ó£ü£,èœ M†´,ªè£´ˆ¶ ó£xò ð£ó‹ ð‡Eùî£™, Þ,è£ôˆF™ è£˜òˆF™ ïì,Aø Üî˜ñº‹ ò«î„ê£Fè£óº‹ ÜŠ«ð£ªî™ô£‹ ïì‰î«îJ™¬ô.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (அர்த்த சாஸ்திரம்)

## சாச்வதச் சட்டமும் தாற்காலிக மாறுதல்களும்

எடுத்ததற்கெல்லாம் தன்னிஷ்டப்படிச் சட்டம் செய்ய இடமுள்ளபோதுதான் யதேச்சசாதிகாரத்துக்கு இடம் கொடுத்துப் போகும். பழைய காலத்தில் 'மானார்க்கி'தான் நடந்ததென்றாலுங்கூட ராஜாக்களுக்கு இப்படி நினைத்த மாதிரியெல்லாம் சட்டம் செய்ய

'அதாரிடி'இருக்கவில்லை என்பது தெரியாததால்தான் 'க்ரிடிஸைஸ்'செய்கிறார்கள். க்ரிடிஸைஸ் செய்பவர்கள் கவனிக்க வேண்டிய விஷயமென்னவென்றால், அடிப்படைச் சட்டங்கள் யாவும் தர்ம சாஸ்திரத்திலும் அர்த்த சாஸ்திரத்திலும் எழுதி வைக்கப்பட்டவையாகவே இருந்துவிட்டன. சாச்வத வாழ்க்கைக்கு ஒரு துணை உபாயமாக இந்த தார்மிகச் சட்டங்கள் இருப்பதால் இவையும் சாச்வதம்தான் என்ற நம்பிக்கையும் பிடிப்பும் எல்லா ராஜாக்களுக்கும் இருந்தன. வைதிகத்தையும், ஆஸ்திக்யத்தையும், தர்மத்தையும் விருத்தி செய்வதே ராஜாவின் பொறுப்பு என்று சின்ன வயஸில் குருகுல வாஸத்திலேயே அரச குமாரர்களுக்கு ஆழமாக போதிக்கப்பட்டிருந்தது. 'இந்த சாச்வத ஸத்யங்களைப் பழைய சாஸ்திரங்களின் சட்டங்களையே சாச்வதமாகப் பின்பற்றினால்தான் அடைய முடியும்;கொஞ்சமும் ஸ்வயநலம் கலக்காமல், லோகத்தின் நிரந்தர க்ஷேமத்திற்கென்றே ரிஷிகள் கொடுத்துள்ள விதிகளை அவர்களுடைய நிலைக்கு எவ்வளவோ கீழே உள்ள நாம் மாற்றப்படாது'என்று ஒரு ராஜா வித்யாப்யாஸத்தின் போதே 'கன்வின்ஸ்'பண்ணப்பட்டிருப்பான். அதனால், இந்த சாஸ்திரங்கள், நடைமுறைத் தேவைகள் ஆகிய இரண்டையும் நன்றாயறிந்த மந்திரிகளின் துணையுடன் அவன் ஆட்சி பண்ணும்போது கால, தேச, வர்த்தமானங்களின் நிர்ப்பந்தத்தினால் சாஸ்திரச் சட்டங்களில் எங்கே மாறுதல் தேவைப்படுகிறதோ அங்கே மட்டும் கொஞ்சம் பண்ணிப் புது 'ரூல்' போடுவான். மாறுதல் என்றால் முழுக்க change பண்ண மாட்டான்; கொஞ்சம் modify மட்டும் பண்ணுவான். சாஸ்திரத்திலேயே அவ்வப்போது வருகிற ராஜாவின் discretion-க்கு (ஸமயோசித புத்திக்கு) என்று விட்டிருக்கிற இனங்களில்தான் சட்டம் போடுவான். 'தேர்ச் சக்கரம் பாதையை விட்டுக் கொஞ்சங்கூட விலகாத மாதிரி மநு தாமத்தை விட்டு விலகாமலே திலீபன் ஆட்சி பண்ணினான்'என்று காளிதாஸன் சொல்வது*அக்காலத்தில் பொதுவாக எல்லா ராஜாங்கத்தின் நடைமுறையையும் reflect பண்ணுவதுதான்.

'ஸெக்யூலரிஸம்' என்பதை இப்போது நடத்துகிற மாதிரி நடத்துகிறபோது சாச்வத தர்மத்தைப் பற்றி நினைக்க இடமேயில்லை. மாறிக்கொண்டேயிருக்கிற நடைமுறை வாழ்க்கை நலனை, மாறி மாறிப் பலவிதமாக நினைக்கிறவர்கள் ரக்ஷித்துக் கொடுப்பதே ராஜாங்கம் என்று ஆகிறபோது, சட்டங்களும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. தார்மிகச் சட்டங்கள் எத்தனையோ ஆயிரம் வருஷங்கள் இந்த தேசத்தில் மாறாமல் பின்பற்றப்பட்டிருக்க, 'அர்த்தம்' என்கிற தற்காலிக விஷயத்தையே லக்ஷ்யமாகக் கொண்ட இன்றைய ஜனநாயக அரசாங்கங்களின் சட்டங்கள் அவ்வப்போது ஆட்சிக்கு வருகிறவர்களின் இஷ்டப்படி தினம் தினம் மாறுகின்றன.

புரோஹிதர், குலகுரு, மந்திரி-அமாத்யர்-ஸசிவர் என்கிற பலவிதமான ஆலோசகர்களைக் கலந்து கொண்டும், ஒவ்வொரு ஸமுதாயத்துக்குமான பிரதிநிதிகளைக் கொண்ட ஸபைகளின் அபிப்ராயங்களைக் கருத்தில் கொண்டும், ஏற்கனவே ஏற்பட்டுள்ள ராஜநீதி சாஸ்திரச் சட்டங்களை ஆதாரமாகக் கொண்டும்தான் ராஜாக்கள் ஆண்டார்களே தவிர, யதேச்சாதிகாரம் பண்ணவேயில்லை. ஸ்தல ஸ்தாபன ஆட்சி என்று இப்போது வார்த்தையில் சொல்கிறபடி நிஜமாக அங்கங்கே பஞ்சாயத்து ராஜ்யம் நடந்தது பழங்காலத்தில்தான். ஸூபர்வைஸர் மாதிரிதான் ராஜா மேற்பார்வை பார்த்து வந்தான். யுத்தம், ராணுவ ஸமாசாரத்தில்தான் மத்ய ராஜாங்கத்துக்கு அதிகாரம் நிறைய இருந்தது. கோயில் குளம் கட்டுவது, சிஷ்டர்களையும் வேத வ்யுத்பன்னர்களையும், பல கலைகளைச் சேர்ந்தவர்களையும் மானியம் தந்து ஆதரிப்பது முதலானவையே 'ஸிவில்' விஷயங்களில் ராஜாவின் முக்ய கார்யமாயிருந்தது. மற்ற 'ஸ்வில்' விஷயங்கள் ஸ்தல ஸ்தாபானங்களின் ஆலோசனைகளை முக்யமாகக் கொண்டே கவனிக்கப்பட்டன.

அவ்வப்போது ஆட்சி செய்யும் ராஜாக்கள் பழைய ஆதாரச் சட்டத்தை அநுஸரித்தே அவசியமான இடத்தில் புது ரூல் போடலாம் என்பது அக்காலத்தில் பின்பற்றியமுறை. அவ்வப்போது ஆட்சியதிகாரத்திலிருப்பவர்கள், தங்களுக்கு இஷ்டமானபடி, தங்களுக்கு அநுகூலமானபடி எப்படியெல்லாம் அபிப்ராயப்படுகிறார்களோ, அப்புறம் இந்த ஐடியாலஜியையும் எப்படியெல்லாம் மாற்றிக் கொள்கிறார்களோ அதன்படி 'லா'க்கள் பண்ண வேண்டும் என்பதற்காக, இதற்கு அநுகூலமாக ஆதாரச் சட்டத்தையே மாற்றிவிட

வேண்டுமென்பது இப்போதைய நடைமுறை! வருஷா வருஷம் கான்ஸ்டிட்யூஷனுக்கு அமென்ட்மென்ட்! இது ஜனநாயகம்! பழைய முறை யதேச்சாதிகாரம்!

------------------------------------------------------------------------------------------------------------------------

*"ரகுவம்சம்"1.17

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**அரசனுக்கிருந்த கட்டுப்பாடுகள்**

விஷயம் தெரியாமலே குற்றம் சாட்டுகிறார்கள். அப்பனுக்குப் பின் பிள்ளைக்குப் பட்டம், அதிலும் தலைப் பிள்ளைக்குப் பட்டம் என்று law of primogeniture-படி ராஜ்யாதிகாரம் போனதால் தகுதிக்கோ, பிரஜைகளின் ஸம்மதத்துக்கோ இடமில்லாமலே அக்கால முடியரசு நடந்தது என்று இப்போதைய குடியரசுவாதிகள் சொல்வதும் இப்படிப்பட்ட குற்றச்சாட்டுதான். இப்போது தான் வயஸு ஒன்றைத் தவிர ஜனநாயகப் பிரதிநிதிளுக்கு எந்தத் தகுதியும் வைக்காமல் விட்டிருக்கிறது. நம்முடைய கான்ஸ்டிட்யூஷனை (அரசியல் நிர்ணயச் சட்டத்தை) நிறைவேற்றிய ஸபைக்கு அக்ராஸனராயிருந்த ராஜேந்திரப்பிரஸாதே இதை ஆக்ஷேபித்துப் பார்த்தார். "சட்டத்தைப் பற்றி விவாதிக்க வேண்டிய வக்கீல்களுக்கும் தீர்ப்புக் கொடுக்க வேண்டிய ஜட்ஜ்களுக்கும் அநேக க்வாலிஃபிகேஷன்கள் வைத்திருக்கிறோம். ஆனால் அந்தச் சட்டங்களைப் போட்டு நிறைவேற்றுகிற எம்.எல்.ஏக்களுக்கும் எம்.பிகளுக்கும் ஒன்றும் வேண்டாமென்றால் கொஞ்சங்கூட ஸரியாயில்லையே"என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். ஆனாலும் அவர் சொன்னதற்கு கான்ஸ்டிட்யூவென்ட் அஸெம்ப்ளி ஒத்துக்கொள்ளவில்லை.

பழைய நாளில் ராஜாக்களுக்கு நிரம்ப யோக்யதைகளை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டியது அவசியமாயிருந்தது. குருகுலவாஸம் பண்ணி ஸகல சாஸ்திரங்களையும் தெரிந்து கொள்வார்கள்;தநுர்வேத அப்யாஸம் பண்ணுவார்கள்.

தர்மத்திலும், பண்பிலும் உயர்ந்தவர்களாகவும் அவர்கள் இருக்க வேண்டும். ராஜாவாகி வெளி சத்ருக்களை ஜயிப்பதற்கு முந்தி அவன் காமம், க்ரோதம் முதலான ஆறு உள் சத்ருக்களையும் ஜயிருத்திருக்க வேண்டுமென்பது சாஸ்திரம்.

தகுதி எதுவும் போதாமல் துன்மார்க்கத்தில் போன அஸமஞ்ஜன் மாதிரியான ராஜகுமாரர்களையும், ராஜாவான பிறகும் யதேச்சாதிகாரமாகத் தன் மனஸுப்படி பண்ணின வேனன் போன்றவர்களையும் ஜனப் பிரதிநிதி ஸபையினர் ஒழித்தே கட்டியிருக்கிறார்கள்.

Primogeniture (தலைப் பிள்ளைக்குப் பட்டம்) என்பதால் அவனுக்கு யோக்யதாம்சமில்லாவிட்டாலும் அப்படிக் கட்டலாமென்று அர்த்தமில்லை. எவனைவிட யோக்யதையுள்ளவர் இருக்க முடியாதோ அப்படிப்பட்ட ராமசந்திர மூர்த்திக்கே பட்டம் கட்டுவதற்கு முன்னால் தசரதன் ஸபையைக் கூட்டி அப்படிப் பண்ணலாமா என்று அபிப்ராயம் கேட்டிருக்கிறான்!

சூரபத்மன், மஹிஷாஸுரன், ராவணன், துர்யோதனன் மாதிரியானவர்கள் கூடப் பேருக்காவது மந்த்ராலோசனை என்று ஒன்று நடத்தித் தானிருக்கிறார்களென்று புராணங்களிலிருந்து தெரிகிறது. ஸாக்ஷாத் ராமர் வானரங்களைக் கலந்தாலோசித்து விட்டுத்தான், சரணாகதி என்று வந்த விபீஷணனை அங்கீகாரம் பண்ணியிருக்கிறார்.

ரகுவம்சம் ஒன்றைப் பார்த்து விட்டால் போதும். வரிசையாக ஸூர்ய வம்ச ராஜாக்களைப் பற்றிச் சொல்கிற அந்தக் காவியம் தர்ம சாஸ்திரம் மட்டுமின்றி அர்த்த சாஸ்திரக் கொள்கைகளும் பெருமளவுக்கு அமலுக்கு வந்துவிட்ட காலத்தில் எழுதப்பட்டதுதான். அதனால் அதில் சொல்லியிருப்பவை பிற்கால ராஜ தர்மக் கருத்துக்களே எனலாம். சிலது இப்போது நினைவுக்கு வருவது சொல்கிறேன்.

வண்டானது எப்படிப் புஷ்பத்துக்கு வலி தெரியாமல் தேனை எடுத்துக் கொள்கிறதோ, அப்படித்தான் ராஜை பிரஜைகளுக்குக் கொஞ்சங்கூட சிரமம் தெரியாமல், அவர்களுடைய மலர்ச்சி குன்றாமலே வரி வசூலித்து எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது சாஸ்திரம். இதை இன்னொரு உவமையால் இன்னும் அழகுபடுத்திச் சொல்லியிருக்கிறான் உவமைக்கே பெயர் பெற்ற காளிதாஸன். 'ஸூர்யன் எப்படி முதலில் பூமியிலிருந்து ஜலத்தை உறிஞ்சிக்கொண்டு அப்புறம் அதை பூமிக்கே மழையாகப் பொழிகிறானோ அப்படி திலீபன் பிரஜைகளிடமிருந்து வசூலித்ததைப் பிறகு அவர்களுடைய நலனுக்கேயான காரியங்களில் செலவிட்டான்' என்கிறான் (1.18). லோகத்துக்கு ஒரு ப்ரயோஜனமுமில்லாமல் எங்கேயோ ஸமுத்திரத்தில் இருக்கிற உப்பு ஜலத்தை ஸூர்யன் இழுத்து, அப்புறம் உலகுக்கு பயனாகிற சுத்த ஜலமாக அதை வர்ஷிக்கிறானல்லவா?இப்படித்தான் ஸமுதாய க்ஷேமத்துக்கு வராத செல்வத்தை ராஜா வரியாய் வசூல் செய்து பிறகு அதன் க்ஷேமத்துக்கே செலவிட்டான் என்று அர்த்தம்.

தங்களுக்கெல்லாம் ரக்ஷகனாக இருக்கப்பட்ட ராஜாவிடம் எல்லா ஜனங்களுக்கும் ஒரு மரியாதை இருந்தால்தான் அவனுடைய சட்டத்துக்குக் கட்டுப்படுவார்களென்றே அவனுக்குப் பொதுக் கண்ணோட்டத்தில் அந்தஸ்தை ஏற்படுத்தித் தருவதற்காக அரண்மனையும், 'ராஜபோகம்'என்கிற ஸௌகர்யங்களும், ஆனை குதிரைகளும், ஆபரணங்களும் கொடுத்திருப்பது. ஆனால் இப்படிச் சொந்தச் சொத்தை விருத்தி செய்து கொள்வதற்காகவே அவன் வரி போட்டான் என்று நினைத்தால் அது தப்பு. 'Welfare State-கருத்து'அப்போதும் உண்டு என்று மேலே சொன்னதலிருந்து தெளிவாகிறது.

'ரகு'வம்சம் என்றே பெயர் ஏற்படச் செய்த ரகுவைப் பற்றிக் காளிதாஸன் (4, 5 ஸர்கங்களில்) சொல்கிறான்: உள்நாடு, வெளி நாடுகளையெல்லாம் ஜயித்து ஏராளமான செல்வக் குவியலோடு திரும்பிய ரகு 'விச்வஜித்' என்ற யாகம் செய்து அத்தனை செல்வத்தையும் தக்ஷிணையாகவும் தானமாகவும் கொடுத்து விடுகிறான். ஏராளமாக ஈட்டிய நிதிகளால் தன் சொந்தச் சொத்தை அவன் ஜாஸ்தி பண்ணிக் கொள்ளாதது மட்டுமில்லை; ஏற்கனவேயிருந்த சொத்துக்களைக்கூட தானம் பண்ணி விடுகிறான்!கௌத்ஸர் என்ற பிராம்மணர் வருகிறபோது அவனிடம் அதிதிக்கு அர்க்யம் கொடுக்கக்கூடாத் தங்கத்திலோ வெள்ளியிலோ கிண்ணம், உத்தரிணி முதலானவைகள் இல்லாமல் மண்ணாலான பாத்திரங்களை எடுத்துக்கொண்டு போனானாம்!இப்போதானால் தினமும் ஏதாவது மந்திரி, எம்.எல்.ஏக்கு எப்படிப் புதிசு புதிசாக பங்களாக்கள் முளைக்கின்றன என்று யாராவது கேள்வி எழுப்புவதாகப் பார்க்கிறோம்!

'ராஜா'என்ற வார்த்தைக்குக் காளிதாஸன் (4.12-ல்) கொடுக்கிற டெஃபனிஷனே அவன் ஜனங்கள் மீது யதேச்சாதிகாரம் பண்ணாமல் ஸர்வ ஜனங்களுக்கும் பரமப் பிரியனாக இருந்தானென்பதுதான். ' **ராஜா ப்ரக்ருதி ரஞ்ஞநாத்** 'என்பதுதான் அந்த டெஃபனிஷன். 'ப்ரக்ருதி'என்றால் 'பொது ஜனங்கள்'. 'ரஞ்ஞநாத்' என்றால் 'மகிழப் பண்ணுவதால்'. பொது மக்களை மகிழப் பண்ணுவதாலேயே, 'ரஞ்ஜ்'என்ற 'ரூட்'டியிலிருந்து 'ராஜ்'என்ற வார்த்தை உண்டானதாகக் காட்டியிருக்கிறான்.

பவபூதி என்று இன்னொரு மஹாகவி. அவர் எழுதின 'உத்தர ராம சரித' நாடகத்தில் ராமர், "நான் பொது ஜனங்களைப் பிரீதி பண்ணுவதாக எதையும் தியாகம் பண்ணத் தயார். என்னுடைய ஸ்நேஹம், தயை ஸௌக்யம் எதையும், ஏன் ஸாக்ஷாத் ஸீதையையுங்கூட ஜனங்களுக்காக நான் பரித்யாகம் பண்ணும்போது அதனால் எனக்கு வ்யஸனம் உண்டாகாது"என்று சொல்வதாக வருகிறது*1. இதிலே கவிநயம் என்னவென்றால், இதைத் தொடர்ந்தே, ஜனங்கள் ஸீதையைப் பற்றி ஸந்தேஹப்பட்டார்கள் என்பதற்காக அவளுடைய பரிசுத்தத்தைப் பற்றி த்ருடமாகத் தெரிந்திருந்தும் ராமர் அவளைப் பரித்யாகம் செய்கிறார்.

இதற்கு முன்னாடியும் லங்கையில் ராவண வதமானவுடன் ஸீதை எத்தனையோ ஆர்வத்தோடு அவரைச் சேர வந்தபோது, அவருக்கும் அவளிடம் எத்தனையோ ப்ரியமும் நம்பிக்கையும் இருந்தபோதிலும், ராஜா என்றால் யார் அபிப்ராயத்தையும்

பொருட்படுத்தாமல் மனஸு போனபடி இருக்கலாம் என்றில்லாமல் அவன்தான் லோகத்தின் அபிப்ராயத்துக்கு ரொம்பவும் மதிப்புக் கொடுக்க வேண்டுமென்று காட்டுவதற்காக, வானரங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் எதிரே அவளைத் திரஸ்காரம் பண்ணினார். அப்புறம் அவள் அக்னிப் பிரவேசம் பண்ணி, அக்னியே அவளது பதிவ்ரத்யத்தைப் பற்றி அத்தனை ஸேனைகளும் அறியச் சொன்ன பின்தான் ஏற்றுக் கொண்டார். அதற்கப்புறமும் அயோத்திக்கு வந்தபின் அங்கே ஏதோ கசமுச என்ற பேச்சு எழுந்தது என்பதற்காக ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியான ஸீதையை அவர் வனத்துக்கு அனுப்பினாரென்றால், 'மானார்க்கி'என்பது யதேச்சாதிகாரமோ ஸர்வாதிகாரமோ இல்லவே இல்லை என்றுதானே தெரிகிறது?

ராமசந்திரமூர்த்தி ஸீதா தேவியிடம் வைத்திருந்த ப்ரியத்துக்கு அளவேயில்லை. அவர் ஏகப் பத்னி வ்ரதர். ஆனால் ராஜாக்கள் ஏக பத்னி வ்ரதர்களாகத்தானிருக்க வேண்டுமென்று கட்டுப்பாடில்லை. யுத்தம், வேட்டை, தீர்ப்பு சொல்வது, மந்திராலோசனை, கோவில் திருப்பணி என்று அவனுக்கு ரொம்ப வேலை இருந்ததால் அவனைக் கொஞ்சம் ஸுகபுருஷனாக விட்டு வேலை நெரிசல் மனஸில் இல்லாமல் பண்ண ஸம்பிரதாயம் அநுமதித்திருக்கிறது. அதனால்தான் நாட்டியம், அந்தஃபுரம், கேளிக்ருஹம் என்றெல்லாம் அவனுக்கு உல்லாஸ விஷயங்களை அநுமதித்திருப்பது. மற்ற ராஜ்யங்களிடம் நல்லுறவை உண்டாக்கிக் கொள்வதற்கு ஒரு வழியாயும் ஒரு ராஜா அந்த ராஜ்யங்களின் ராஜகுமாரிகளைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதுண்டு. இப்படியெல்லாமிருந்தாலும் இந்தச் சின்ன இன்பங்களிலேயே அவர்கள் முழுகிவிடவில்லை; இதற்காக தேசக் கடமையையோ, தங்களுடைய ஆத்மாபிவிருத்தியையோ விட்டுவிடவில்லை. அர்த்த சாஸ்த்ரத்தில் சாணக்யன் ஒரு ராஜாவின் பீணீவீறீஹ் கூஷீஷ்ஸ்ரூமீ´வீஸீமீ-ஐ (அன்றாட அலுவலை) வகுத்துக் கொடுத்திருக்கிறான். அதிலே ஒரு நாளைப் பதினாறாகப் பிரித்து ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு ட்யூட்டியைச் சொல்லிய்ருக்கிறான். இந்தப் பதினாறிலே ஏதோ மூணு நாலுதான் நித்ரை, கேளிக்கை முதலானவற்றுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. பாக்கியெல்லாம் ராஜ்யபாரக் கடமைகள்தான். ராத்ரியும் பகலும் இந்த டயம்-டேபிள்படியேதான் ராஜாக்கள் தங்கள் தர்மத்தைச் செய்ததாக 'ரகுவம்சத்'திலும் அங்கங்கே வருகிறது. ராத்ரியிலும் கூடத் தூங்காமல் ராஜாக்கள் மாறுவேஷத்தில் ரோந்து போனதாக எவ்வளவு கதைகளில் கேட்கிறோம்? நடைமுறையில் இல்லாத ஒன்று இப்படி அநேகக் கதைகளில் அரசனின் ஒரு அவசியமான அலுவலாக வரமுடியுமா?

கேளிக்கைகள் அநுமதிக்கப்பட்டிருந்தாலும் ஜெனரலாக ராஜாக்களுக்குச் சிறு வயஸிலிருந்து ஏற்பட்டிருந்த சாஸ்திர அப்யாஸத்தால் அவர்கள் அதற்குக் கொடுத்திருந்த அளவுக்கு மேலே போகாமல் சிறந்த ஒழுக்கக் கட்டுப்பாட்டுடனேயே இருந்திருக்கிறார்கள். ராமர் அயோத்யாவாஸிகள் அவ்வளவு பேரையும் தம்மோடு வைகுண்டத்துக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டாரல்லவா?இதற்கு முந்தி அவர் தம் பிள்ளைகளில் குசனைக் குசாவதி என்ற நகரத்தைத் தலைநகராகக் கொண்ட ராஜ்யப் பகுதிக்கும், லவனை சராவதி என்ற ஊரைத் தலைநகராகக் கொண்ட பகுதிக்கும் ராஜாக்களாக நியமித்திருந்தார். அவரோடு அயோத்யா புரியே சூன்யமாய் விட்டதல்லவா? அதனால் அதன் அதிதேவதை குசனால் அயோத்திக்கு புதுக் களை ஊட்டச் செய்யவேண்டுமென்று நினைக்கிறாள். அவனிடம் வேண்டுகோள் விடுப்பதற்காக ஒரு நடு ராத்ரியில் குசாவதியிலிருந்த அவனுடய சயன க்ருஹத்துக்குள்ளேயே ஆவிர்பவிக்கிறாள்.

தீடீரென்று தன் அறைக்குள்ளே யாரோ முன்பின் தெரியாத ஸ்த்ரீ வந்திருப்பதைப் பார்த்தவுடன் குசன், "நீ யார்? எவருடைய பத்னி?இப்படிப் பாதி ராத்ரியில் இங்கே வந்திருப்பது என்ன உத்தேசத்தில்?ரகுவம்சத்தவர்களான நாங்கள் இந்திரியக் கட்டுப்பாடு பண்ணிய 'வசி'க்கள்; பரஸ்திரீகளிடம் எங்கள் நோக்கம் போகவே போகாது என்று தெரிந்துகொள்"என்கிறான் (16.8) குசன் வாய்மொழியாக ராஜா எப்படியிருக்க வேண்டுமென்ற ஐடியலையே இங்கே கவி சொல்லியிருக்கிறாரென்பது தெளிவு.

சாணக்யரும் அர்த்தசாஸ்திரத்தில் ஸ்தரீ மோஹம், தன மோஹம், அதிகக் கோபம் முதலிய குணங்களைக் கொண்டிருந்த அரசர்கள் அதோகதியே அடைந்திருக்கிறார்களென்பதற்கு உதாரணங்களைக் காட்டி, ராஜாக்களுக்கு நல்ல சாஸ்த்ரப்யாஸமும், தங்களுடைய கடுமையான ட்யூட்டிகளைத் தளராமல் ஆற்றுவதற்கான ஒழுக்கக் கட்டுப்பாடும்

இருக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

ராஜா தன் ஸௌகர்யத்தை மட்டும் கவனித்துக் கொண்டானே தவிர ஜனங்களுக்கு ஸௌகர்யங்களைப் பண்ணித் தரும் கீமீறீயீணீக்ஷீமீ ஷிமீ்ணீமீ்மீ-கொள்கை அக்காலத்தில் இல்லை என்று நினைப்பது ஸரியே இல்லை. சாலை போடுவது, அணை கட்டுவது (கல்லணை ஆயிரம் வருஷத்துக்கு மேலாக இன்றும் ஒரு என்ஜினீயரிங் அதிசயமாக இருக்கிறது!) நிஞூபதீறீவீநீ கீஷீக்ஷீளீஉ என்ற மற்றப் பொது மராமத்துக்கள், ஆதுரசாலை என்று ஆஸ்பத்திரி வைப்பது இப்படியாக ஸமூஹ நலக் காரியங்களுக்கு ஆதிகாலத்திலிருந்தே தனித்தனி டிபார்ட்மென்ட்களும் அதிகாரிகளும் இருந்திருக்கிறார்கள். வாஸ்தவத்தில் அப்போதுதான் பிரஜைகளின் நிஜமான க்ஷேமத்துக்கானதை ராஜாங்கம் செய்தது. ஏனென்றால் தற்கால ராஜாங்கங்கள் மாதிரி மேலே சொன்னவற்றோடு முற்கால ராஜா நின்றுவிடாமல் பிரஜைகளை தர்மத்தில் கொண்டு போவதற்கும் பொறுப்பெடுத்துக்கொண்டு அதற்கானவற்றைச் செய்தான். ஜனங்களின் சாச்வத க்ஷேமத்துக்காக யாகாதிகள் பண்ணினான், கோயில்கள் கட்டினான், உத்ஸவாதிகள் நடத்தினான், மஹாபாரதம் முதலிய கதைகளை எல்லா ஜனங்களுக்கும் பிரகடனம் பண்ணினான். ஸத்துக்களான சிஷ்டர்களுக்கு கௌரவம் கொடுத்து அவர்களுடைய ஜீவ்ய உதாரணம் எல்லா மக்களிடமும் பிரகாசித்து அவர்களுக்கும் அந்த வழியில் தூண்டுதலாக இருக்கும்படிப் பண்ணினான்.

இங்கே நான் ஸத்துக்கள், சிஷ்டர்கள் என்று யாரைச் சொல்கிறேனோ அவர்கள்தான் ராஜாக்களைக் கையில் போட்டுக்கொண்டு, தாங்கள் ஸௌகர்ய வாழ்க்கை நடத்துவதற்காகவே அவனை ஆட்டி வைத்தார்கள் என்றும் ஒரு குற்றச்சாட்டு கொஞ்ச காலமாக அடிபடுகிறது. அதாவது பிரம்ம தேஜஸ் என்பதைச் சொல்லிக்கொண்டு க்ஷத்ரிய ராஜாவுக்கு மேலே பிராம்மணன்தான் உட்கார்ந்து ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்தான் என்று வாதம். உண்மையில் அந்தக் கால பிராம்மணன் எத்தனை எளிமையாக, ஒதுங்கி வாழ்ந்து கொண்டிருந்தான் என்று தெரியாததால் இப்படிச் சொல்கிறார்கள். 'மஹா தந்த்ர சாலி எதையும் செய்யத் துணிந்தவன்'என்று நினைக்கப் படுகிற சாணக்யனே, சந்திரகுப்த மௌரியனைச் சக்கரவர்த்தி ஸ்தானத்துக்குக் கொண்டுவந்து அவனுடைய பூர்ண விச்வாஸத்தையும் பெற்றிருந்த போதிலும், பாடலிபுரத்தில் அரண்மனைக்குப் பக்கத்திலே தனக்கு மாளிகை கட்டிக்கொண்டு போக்யத்தில் மிதிக்கவில்லை. ஊருக்கு வெளியிலே ஒரு குடிசை போட்டுக்கொண்டு, கந்தையைக் கட்டிக்கொண்டு, கஞ்சி காய்ச்சிக் குடித்துக் கொண்டுதான் கிடந்தான். இப்படியே புரோஹிதர்களான வஸிஷ்டர் போன்றவர்களும் நகரத்துக்கு வெளியிலே பர்ணசாலையில் வெகு எளிமையான வாழ்க்கைதான் நடத்தி வந்தார்கள். அவர்களாக ராஜீய விஷயங்களில் தலையிட்டு அபிப்ராயம் சொல்லி 'ஆட்டி வைத்ததாக' ஸாக்ஷியே இல்லை. ராஜாக்கள்தான் ஏதாவது 'ப்ராப்ளம்' என்றால் அரண்மனையை விட்டு அவர்களிடம் போய் அவர்களுடைய புத்திமதியையும் அநுக்ரஹத்தையும் கோரியிருக்கிறார்கள்.

ராஜாவுக்கு எத்தனை பொறுப்போ அதைவிடக் கடுமையாகத்தான் பிராம்மணன் தனக்கும் அன்றாடக் காரியங்களை வைத்துக்கொண்டு லோக க்ஷேமார்த்தம் தன்னைச் சக்கையாகப் பிழிந்து கொண்டானே ஒழிய, தனி சலுகை, வசதி எதுவும் பெறவில்லை*2.

ராஜாவுக்கும் சட்டத்துக்கு முன்னாடி எந்தச் சலுகையும் இல்லை. கன்றின் மேலே தெரியாமல் தேரை ஏற்றி அதை ராஜகுமாரன் கொன்று விட்டானென்பதற்காக அவனுடைய தகப்பனாரான மநுநீதிச் சோழன் அவனையே பதிலுக்குத் தேர்க்காலில் பலி கொடுக்கப் போயிருக்கிறான்!

ó£ü£¾,° ÜŠ«ð£¶ Þ¼‰î ªð£ÁŠ¹‹ Ü¬îŠðŸP Üõ¡ ªè£‡®¼‰î Mê£óº‹ ÞŠ«ð£¶ ó£ü£ƒè‹ ïì˜¶Aøõ˜èÀ,° Þ¡ùªî¡«ø ªîKò£¶. ãªù¡ø£™ ð¬öò ï£œ ó£ü£ Hó¬üèO¡ î˜ñ õ£›,¬è,°‹ ðF™ ªê£™ô«õ‡®òõù£J¼‰î£¡. 'Üõ˜èÀ¬ìò ð£ð‹ Üõ˜è¬÷ ï™õNŠ ð´ˆî ¾õPò î¡¬ù«ò õ‰¶ «ê¼‹'â¡Á ÜõÂ,° «ð£F,èŠð†®¼‰î¶ - " ó£ü£ ó£w†ó ,¼î‹ ð£ð‹ "â¡ð¶ ê£vFó‹. Üî£õ¶ å¼ «îêˆFL¼,èŠð†ì Hó¬üèœ ð‡µ‹ ð£õªñ™ô£‹ Üõ˜è¬÷ ÝÀ‹ ó£¬ü¬õˆî£¡ «ê¼‹ â¡Á Üˆî‹. ÞîŸ° Converse-Ýè å¼ ó£ü£ îŠ¹Š ð‡Eù£™ Ü¶ «îê‹ º¿õ¬î»‹ î£,°‹, ÞòŸ¬è¬ò«ò Yø ¬õˆ¶Š ªðKò àˆð£îƒè¬÷ à‡ì£,AM´‹ â¡Á‹ ªê£™L Üõ¬ù

திருக்குறளில் இதையெல்லாம் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறது. கொடுங்கோல் ஆட்சியில் ஜனங்கள் விடுகிற கண்ணீரே ராஜாவின் செல்வத்தையெல்லாம் அழித்துவிடும் ஸைன்யம் மாதிரி; ஆட்சிமுறை தப்பினால் பருவ மழை தப்பிப் பஞ்சம் வந்துவிடும்;பால் வளம் போய்விடும்;பிராம்மணர்களுக்கு வேதம் மறந்துபோய், வேத வேள்விகளால் நடக்கும் அத்தனை லோக க்ஷேமமும் போய்விடும் என்றெல்லாம் திருவள்ளுவர் எச்சரித்திருக்கிறார்*3.

ராஜா ஒரு தேசத்தில் எப்படி சீலத்தைக் கட்டி ஆளவேண்டும் என்பதற்கு ஐடியலைக் காளிதாஸன் திலீபனுடைய ராஜ்யத்தில் காட்டுகிறான். திலீபனுடைய ராஜதானியில் உத்யானவனத்துக்குப் போகிற வழியிலேயே பெண்கள் ராத்திரி வேளையில் அவர்கள் பாட்டுக்கு மயங்கித் தூங்கிக் கொண்டிருப்பார்களாம். "அந்தப் பெண்களுடைய வஸ்திரங்களை த்லீபனுடைய ஆட்சியிலே வீசிய காற்றுகூட அசைத்ததில்லை. அப்படியிருக்க மநுஷ்யனாகப் பிறந்த எவனாவது அவர்கள் பக்கம் கை நீட்டி இருக்க முடியுமா?" என்று கவி கேட்கிறான் (6.75).

மக்கள் மட்டுமின்றி மாக்கள் என்கிற விலங்குகள், செடி கொடிகள், பயிர் பச்சை எல்லாவற்றிடமும் ராஜாக்களுக்கு மிகுந்த பரிவு இருக்க வேண்டுமென்பது சாஸ்திரம். வேட்டையாடுவதில்கூட வரம்பு உண்டு. க்ரூரமான பிராணிகளைத்தான் வேட்டையாடலாம் என்று அநேக ராஜாக்கள் வைத்துக் கொண்டிருந்தார்கள். யாகம் என்று சொல்லிக்கொண்டுகூட அதில் ஏராளமாகப் பிராணி வதை பண்ணினால் பாபம்தான் என்று பாகவத்தில் பிராசீனபர்ஹிஸின் கதையில் சொல்லியிருக்கிறது. புறாவுக்காக சிபி தன்னுடைய உடம்பையே அறுத்துக் கொடுத்தான், பாரி வள்ளல் முல்லைக்கொடி படருவதற்காகத் தன்னுடைய தேரைத் தொடுத்தான் என்று படிக்கிறோம்.

'சாகுந்தல'த்தில் ஒரு அரசன் ஸகல உயிரிகளிடமும் எவ்வளவு பிரியத்துடனும், 'ஸிம்பதி'யுடனும் இருக்க வேண்டுமென்பது தெரிகிறது.

கண்வருடைய ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள் துஷ்யந்தனைப் பார்க்க வந்திருப்பதாக அவனுக்குத் தெரிவிக்கப்பட்டவுடன் அவன், ஏதாவது பெரிய தப்பு நடந்திருந்தாலோ, அல்லது கஷ்டம் ஏற்பட்டிருந்தாலோ அன்றி ஆச்ரமவாஸிகள் ராஜ ஸமூஹத்துக்கு வரமாட்டார்களே என்று நினைக்கிறான். அப்போது அவன் தனக்கு தானே, 'ரிஷிகளின் தபஸூக்குக் குந்தகமாக ஏதாவது அஸம்பாவிதம் நடந்திருக்குமா?அவர்களுடைய வனத்திலே ஸ்வயேச்சையாய் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிற ஸாது மிருகங்களை யாராவது ஹிம்ஸை பண்ணியிருப்பார்களா?அல்லது என்னுடைய தவறு எதனாலாவது செடி, கொடிகள் புஷ்பிக்காமலும், பழுக்காமலும் போயிருக்குமா?'என்று சொல்லிக் கொள்வதாக வருகிறது (5-வது அங்கம்).

ராமர் தன்னுடைய ராஜ்யத்தில் ஒருவனுக்குப் புத்ர சோகம் ஏற்பட்டுபோது, அது வர்ணாச்ரம தர்மங்களைத் தான் ஸரியாகப் பரிபாலனம் பண்ணாததன் விளைவே என்று காரணத்தைக் கண்டுபிடித்து அப்படி தர்மம் மீறினவனை சிக்ஷித்திருக்கிறார்.

சாகுந்தலத்தின் ஆரம்பத்திலும் ராஜாக்களுக்கு வர்ணாச்ரம அநுஷ்டானத்திலிருந்த நம்பிக்கையைக் காட்டுவதாக ஒரு கட்டம் வருகிறது. சகுந்தலையைப் பார்த்தவுடன் துஷ்யந்தன் மனஸில் பிரேமை உண்டாகி விடுகிறது. அவளுடைய ஸகிகள் அவளைப் பரிஹாஸம் செய்ததிலிருந்து அவள் கல்யாணமாகாதவள்தான் என்று அவனுக்குத் தெரிகிறது. அதனால் தனக்குப் பிரேமை உண்டானதில் தப்பு இல்லை என்று நினைக்கிறான். ஆனால் உடனேயே, 'இவள் கண்வ மஹரிஷியின் புத்ரி என்றல்லவா தெரிகிறது?அப்படியானால் பிராம்மணப் பெண்ணாக அல்லவா இருக்க வேண்டும்?அவளிடம் க்ஷத்ரியனான என் மனஸ் போகப்படாதே?ஆனாலும் என் மனஸ் அவளிடம் போகிறதே!ஸத்துக்களின் (அந்தஃகரணம்) தப்பு செய்யவே செய்யாது. அதனால் இவள் பிராம்மணப் பெண்ணாக இருக்க முடியாது'என்று முடிவு பண்ணுகிறான். அவன் சகுந்தலையின் பிறப்பைப் பற்றி ஒரு விதமாக அநுமானம் பண்ணி, தான் அவளைப் பிரியப்படுவது வர்ண தர்மத்துக்கு விரோதமாக இராது என்று தீர்மானிக்கிறான். அவன்

பண்ணின அந்த அநுமானம் தப்பாகப் போனாலும், வாஸ்தவத்தில் சகுந்தலை கண்வரின் வளர்ப்புப் பெண்தானே?க்ஷத்ரியராய்ப் பிறந்த விச்வாமித்ரருக்கும் அப்ஸர ஸ்த்ரீயான மேனகைக்கும் பிறந்தவள்தானே சகுந்தலை?இங்கே ஸத்துக்கள் எனத் தக்கவர்களாகவே ராஜாக்கள் இருக்க வேண்டுமென்றும், அவர்களின் அந்தஃகரணம் தன்னையறியாமல்கூட வைதிகமான வர்ண விபாகங்களுக்கு வித்யாஸமாகப் போகாது என்றும் கவி உணர்த்துகிறார்.

ராஜாக்களுக்கு இவ்வளவு பொறுப்பும், பொறுப்புத் தவறுவதால் பாபத்துக்கு ஆளாகிவிடக் கூடாது என்ற பயமும் கவலையும், இதனாலேயே தர்மராஜ்ய பரிபாலனத்தில் ஆழ்ந்த கவனமும் ஈடுபாடும் இருக்கும் படியாகத்தான் தர்ம சாஸ்திரம் மட்டுமின்றி அர்த்த சாஸ்திரமும் ராஜநீதிகளை வகுத்துக் கொடுத்திருக்கிறது.

கஜானவை எப்படியாவது ரொப்பிக் கொண்டு விடுவதில் அக்கால ராஜக்கள் குறியாக இருக்கவேயில்லை. இதற்கு நிரூபணமாகக் காளிதாஸன் சாகுந்தலத்தில் ஒரு ஸீன் எழுதியிருக்கிறான் (6-வது அங்கம்)

கடல் வாணிபம் செய்கிற ஒருவன் கப்பல் உடைந்து முழுகிப் போய்விட்டதாயும், அவனுக்கு ஸந்ததியில்லாததால் அவனுடைய சொத்து பூராவும் கஜானவைச் சேர்ந்து விடுவதாயும் துஷ்யந்தனுக்கு நிதி மாதிரி ஒரு 'நோட்'அனுப்புகிறார். உடனே துஷ்யந்தன் அத்தனை செல்வத்தையும் ஆர்ஜிதம் செய்துகொண்டு விடலாமென்று பறக்காமல், 'பெரிய வியாபாரி என்றால் பல கல்யாணங்கள் பண்ணிக் கொண்டிருப்பானே அப்படியிருந்தால் அவனுடைய பெண்டாட்டிகளில் எவளாவது கர்ப்பமாயிருக்கிறாளா என்று விசாரிக்க வேண்டும்'என்கிறான். அவன் நினைத்ததுபோலவே செத்துப்போன வியாபாரியின் ஒரு ஸம்ஸாரம் கர்ப்பவதியாயிருக்கிறாளென்று தெரிகிறது. "அப்படியானால் சொத்து கஜானாவைச் சேராது;கர்ப்பத்திலிருக்கிற குழந்தையைத்தான் சேரும்"என்று துஷ்யந்தன் தீர்ப்புப் பண்ணுகிறான்.

பொருளாசையில்லாத தர்ம நியாயத்தோடு ராஜாக்களின் ஆழ்ந்த மநுஷ்யாபிமானத்தைக் காட்டுவதாகவும், அதோடுகூட தர்மத்தை மீறாமலிக்கிற பண்பைப் பிரதிபலிப்பதாகவும் அப்போது துஷ்யந்தன் ஒரு கார்யம் பண்ணுகிறான். பதியை இழந்தவர்கள், புத்ரனில்லாதவர்கள் யாவருக்கும் ராஜாவே ஆதரவாயிருர்ரவேண்டுமென்று நினைத்து ஒரு பிரகடனம் பண்ணுகிறான். அதிலே 'எந்த பந்து காலமானவருக்கும் அந்த பந்துவாக நானேயிருப்பேன்'என்கிறான். பதியை இழந்தவர்களிடம் இப்படிச் சொல்வது அஸம்பாவிதம் என்பதால் உடனேயே, 'தர்மத்துக்கு மாறாக இல்லாத உறவு முறைகளில் மாத்திரமே"என்று ஒரு கண்டிஷன் சேர்க்கிறான். சாணக்யனும் இக்கால கீமீறீயீணீக்ஷீமீ ஷிமீ`ணீமீ-ன் லக்ஷணங்களாகச் சொல்லப்படும் அநாதைகளின் ரக்ஷணையை ராஜாவின் கடமையாகச் சொல்லியிருக்கிறார். ஏழைகள், கர்ப்பிணிகள், அநாதைகள், வயஸானவர்கள், வியாதியஸ்தர்கள் ஆகியவர்களை ராஜாங்கம் ரக்ஷித்தாக வேண்டுமென்கிறார்.

---

* 1. àˆîó ó£ñ êKî‹:2.12

* 2. ÞšMûòñ£è ªîŒõˆF¡ °ó™ Þó‡ì£‹ ð°FJ™ "A¼ývî£„óñ‹" â¡ø à¬óJ™ "Ü‰îíQ¡ Ü¡ø£ì‹" â¡ø HK¾‹, "ü£Fº¬ø" â¡ø à¬óJ™ "å¼ ªðKò îŠðHŠó£ò‹" â¡ø HK¾‹ ð£˜‚è.

* 3. F¼‚°øœ ªð£¼†ð£L™ ºè£´ƒ«è£¡¬ñ'â¡ø ÜFè£ó‹

---

# தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (அர்த்த சாஸ்திரம்)

## முக்யமான இரு அரசக் கடமைகள்

இப்படி ராஜாவுக்கு, ராஜாங்கத்துக்குப் பல கார்யங்களையும் கௌரவமான பண்புகளையும் கொடுத்திருந்தாலும் அர்த்த சாஸ்த்ரமானது இவற்றில் இரண்டை மிகவும்

முக்யமானவையாகச் சொல்லியிருக்கின்றன. இதுவரை சொன்னவையெல்லாம் அநேகமாக ரக்ஷணையில் வருகிறவை. இப்போது சொல்லப்போகிற இரண்டும் சிக்ஷணையில் வருபவை. ரக்ஷிப்பதற்கு அங்கமேதான் தார்மிகமாக சிக்ஷிப்பது. பயிரை வளர்க்க வேண்டுமானால் களையைப் பிடுங்கி எறியத்தான் வேண்டும். உள்நாட்டில் குற்றம் பண்ணுகிறவர்களுக்குத் தண்டனை கொடுத்து சிக்ஷிப்பது, வெளிநாட்டு எதிரி ராஜாவையும் ஸைன்யத்தையும் யுத்தத்திலே சிக்ஷிப்பது என்ற இரண்டும் ராஜாவின் கார்யங்களில் தலையான இடம் பெறுகின்றன.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**உள்நாட்டு தண்டநீதி**

ஆனாலும் சிக்ஷிப்பதை, அதாவது தண்டிப்பதை எடுத்த எடுப்பில் சொல்லியிருக்கவில்லை.

உள்நாட்டுப் பிரஜைகளை பொறுத்தமட்டில் ராஜா அவர்களை ஸன்மார்க்கத்தில் செலுத்துவதற்காக எதுவுமே பண்ணாமல் அவர்கள் தப்புப் பண்ணினால் மாத்திரம் தண்டிப்பது என்று வைத்துக்கொள்ளவில்லை. இந்த நாளில் அரசாட்சி முறைக்கும் பிரஜைகளின் நன்னெறிகளை அபிவிருத்தி செய்வதற்கும் நேர் ஸம்பந்தமில்லாதது போல அக்காலத்தில் இல்லை. ஜனங்கள் அவரவர் தர்மத்தை அநுஸரிப்பதற்கு ராஜா எல்லா விதத்திலும் ஊக்க, உத்ஸாஹங்களைக் கொடுத்து வந்தான். ஸத்துக்களைக் கொண்டு நிறைய தர்மப் பிரசாரம் செய்தான். அந்தந்த ஜாதி நாட்டாண்மை அதிலுள்ளவர்களை ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டிருக்கும்படியாகப் பண்ணினான். ஆலயத்தை ஸமூஹத்துக்கு மத்ய ஸ்தானமாக ஆக்கி, ஜனங்கள் ஈஸ்வர பக்தியால் தர்மிஷ்டர்களாக இருக்கும்படிப் பண்ணினான். இப்படி நேராக தர்ம ரக்ஷணை பண்ணினதாலேயே, அப்படியும் அவர்கள் கெட்டுப் போகிறபோது அவர்களை இந்த நாள் 'ஸ்டான்டர்ட்'படிக் கடுமையாகவே சிக்ஷித்தான்.

குற்றவாளிகளிடம் கூடுதலாக தயா தாக்ஷிண்யம் காட்டுவது குற்றங்களுக்கு ஊக்கம் தருவதே ஆகும் என்பதுதான் சாஸ்திர அபிப்ராயம். இப்போதுதான் 'பெர்ஸுவேஷன்'என்பதால் நயமான முறையிலே அவர்களாக மனம் மாறித் திருந்தப் பண்ணணுமென்று நிறைப் பேசுகிறார்கள். ஸாதாரண மநுஷ்ய நேச்சர் இருக்கிற லக்ஷணத்தில் இப்படி எவராவது திருந்தினதாக இவர்களால் காட்ட முடியுமா என்பதே கேள்வி!ஜெயிலில் ஸௌகர்யமெல்லாம் பண்ணிக் கொடுப்பது என்றால், வெளியிலே வேலை வெட்டி இல்லாமல் திண்டாடுகிறவர்களுக்கு, 'அங்கே (ஜெயிலுக்கு) போய் நாம் பாட்டுக்குத் தின்று கொண்டு, தூங்கிக்கொண்டு இருக்கலாமே!'என்று தான் தோன்றும். தர்ம ரக்ஷணைக்கென்று டைரக்டாக ஸர்க்கார் எதுவும் செய்யாமல், அதே ஸமயத்தில் அரசியல்வாதிகள் தங்களுக்கும் தங்களுடைய கொள்கைகளுக்கும் ஸமூஹத்தில் முக்யத்வத்தை உண்டாக்கிக் கொண்டுவிட்டதால் தர்ம பீடங்களின் செல்வாக்கும் தர்ம சாஸ்திரங்களின் அதாரிடியும் மங்கிப்போய் ஜனங்கள் தர்மத்துக்குப் பயப்பட வேண்டும் என்ற உணர்ச்சியை இப்போது ரொம்பவும் இழந்துவிட்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் இவர்கள் குற்றம் செய்வது நாச்சுரல்தான் என்று வேண்டுமானால் இந்தக் காலக் குற்றவாளிகளை ரொம்பவும் தண்டிக்காமல் விடுவதற்கு நியாயம் சொல்லலாம்!ஆனால் முற்காலத்தில் பிரஜைகள் தர்மத்தை அநுஸரிப்பதற்கு ராஜாங்கம் ரொம்பவும் ஆதரவாயிருந்தது, அதற்கானவற்றைப் பண்ணிக் கொடுத்த போதும் அவர்களில் சிலர் தப்பான வழியில் போனால் அங்கே தாக்ஷிண்யம் காட்ட இடமில்லைதானே?அதனால்தான் கடுமையான தண்டனைகளைச் சொல்லியிருக்கிறது. இப்படியிருந்தால்தான் அப்போது மொத்த ஸமுதாயம் நல்லபடி இருந்தது;நல்ல ஜனங்கள் துஷ்டர்களினால் கஷ்டத்துக்கு ஆளாகாமல் நிம்மதியாக வாழ்க்கை நடத்தினார்கள்;மொத்தத்தில் நம் தேசம் லோகத்திலேயே நன்னெறிக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது என்பதைக் கவனித்தோமானால் ராஜதண்டம் சாஸ்திரப்படிதான் செயல்பட வேண்டும் என்பதை ஒப்புக் கொள்வோம்.

மெகஸ்தனிஸிலிருந்து ஆரம்பித்து நம் தேச நிலைமையைப் பற்றி அவ்வப்போது இங்கே வந்து எழுதி வைத்திருக்கிற அயல் நாட்டவர்கள் எல்லோரும் ஒருமுகமாக இங்கே ஜன ஸமூஹத்தில் காணப்பட்ட ஒழுக்கத்தையும் நல்ல குணத்தையும் ஸ்தோத்திரிக்கிறார்களென்றால் அதற்கு ராஜசிக்ஷை முறையும் ஒரு காரணமாகும். இப்போது நம் ஜன ஸமுதாயம் எப்படி இருக்கிறது என்றும் நமக்குத் தெரியும். ஆனாலும் தண்டநீதி சாஸ்த்ரத்தைக் குறை சொல்லிக் கொண்டிருக்கிறோம்!

பெர்ஸுவேஷன் ஸாத்விகமாகத் திருத்துவது என்றெல்லாம் இக்காலத்தில் பேசினாலும், யுத்தம் வந்தால், அல்லது பொருளாதாரத்திலோ பொலிடிகலாகவோ நெருக்கடி வந்தால் அப்போது 'எமர்ஜென்ஸி'என்று பிரகடனம் செய்கிறபோது முதல் கார்யமாகத் தண்டனை விதிப்பதைத்தானே கடுமையாக்குகிறார்கள்?ஆக எடுத்துச் சொல்லித் திருத்துவதைவிட தண்டிப்பதுதான் தேசத்தில் ஒழுக்கமும் கட்டுப்பாடும் ஏற்பட உதவும் என்று ஒப்புக் கொண்டதாகத்தானே ஆகிறது?

அநேக உயர்ந்த நோக்கங்களுக்காகவே தர்ம, அர்த்த சாஸ்திரக்காரர்கள் தண்டனையைக் கடுமையாக வைத்திருந்தார்கள். ஒன்று குற்றம் என்பது ஒருவனால் இன்னொருவனுக்கு அல்லது ஸமூஹத்துக்கே ஏதோ ஒரு விதத்தில் ஏற்படும் கஷ்டந்தானே?இப்படித் தான் கஷ்டத்தைக் கொடுத்தால் அப்போது ராஜா அதைவிடப் பெரிய கஷ்டத்தைத் தனக்குத் தண்டனையாகக் கொடுப்பானென்ற பயமிருந்தால்தான் ஒரு பிரஜை ஒழுங்காயிருப்பான். பத்து ரூபாய் திருடுவதால் ஒருத்தனுக்குத் தான் கொடுத்த கஷ்டத்துக்குப் பதிலாக நாலு மாஸம் ஜெயிலில் கஷ்டப்படணும் என்றால்தான் திருடமாட்டான். இரண்டாவது நோக்கம், கடுமையான தண்டனையாது குற்றம் பண்ணுகிற ஒருவன் இனிமேல் அப்படிப் பண்ணாமலிருக்கும்படி செய்வதோடு மற்றவர்களும் இவனைப் பார்த்து அந்த மாதிரிப் பண்ணாமலிருக்கச் செய்து ஒரு ஸமூஹ ரக்ஷையாகிறது. மூன்றாவது நோக்கம் ஆத்ம ஸம்பந்தமானது. அதாவது பாபம், பாப பரிஹாரம் என்ற விஷயங்கள் வந்து விடுகின்றன. குற்றம் பண்ணுவது பாபம், அது குற்றவாளியை நரகத்துக்குத் தள்ளும். என்னென்ன குற்றத்துக்கு நரகத்தில் என்னென்ன மஹா பயங்கரமான தண்டனைகள் என்று சாஸ்திர, புராணங்களில் விவரமாகச் சொல்லியிருக்கிறது. ராஜ தண்டனை பெறுவதனால் ஒரு குற்றவாளி இந்தப் பாபத்திலிருந்தும், நரகாவஸ்தையிலிருந்தும் விடுபடுகிறான். அந்த (நரக லோக) சித்ரவதையுடன் 'கம்பேர்'பண்ணினால் ராஜா தரும் தண்டனை ரொம்ப லேசானதுதான். இப்படி அரசன் தரும் சிக்ஷையே குற்றவாளிக்கு ஆத்ம க்ஷேமத்தைக் கொடுக்கும் பாபப் பிராயசித்தமாகிறது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

### பிராம்மணனுக்குப் பக்ஷபாதமா ?

இங்கே ஒரு விஷயம் சொல்ல வேண்டும். ராஜாவுக்கு பிராம்மணனைத் தண்டிக்க மட்டும் அதிக 'ஜூரிஸ்டிக்ஷன்'(ஆணையெல்லை) கொடுக்கப்படவில்லை. பிராம்மணனுக்குத் தரும் தண்டனை கடுமைக் குறைவாகவே இருக்கும். இதைப் பார்க்கிறபோது, 'equality before law' - சட்டத்துக்கு முன் ஸமத்வம் - இல்லாமல், சலுகையே தரக்கூடாத ஒரு விஷயத்தில் சலுகை தந்து அநியாயம் செய்திருப்பதாகத் தோன்றலாம். அப்படித் தோன்றினால் அது நியாயந்தான். ஆனாலும் இதன் காரணத்தைப் புரிந்து கொண்டால் இதிலே அநியாயப் பக்ஷபாதமில்லை என்று தெரியும். இப்போது 'பிராயச்சித்தம்'என்று சொன்னேனே, அதுதான் காரணம்.

குற்றவாளிக்கு ராஜ தண்டனையே பிராயச்சித்த கர்மா ஆகிறது என்றேன். பிராம்மணன் வேத மந்த்ர ரக்ஷணையையே வாழ்க்கையாகக் கொண்டவன் ஒருநாள்கூட அவனை விட்டு இந்த வாழ்க்கை ஆசாரம் போகப்படாது. அப்படிப் போனால் அது தேச க்ஷேமத்துக்கே கெடுதல். ஜெயிலில் போட்டால் அவன் எப்படித் தன் ஆசாரங்களுக்குப் பங்கமில்லாமல்

மந்திர ரக்ஷணை பண்ண முடியும்?அல்லது கண்ணை வாங்கி, காலை வாங்கி அவனைத் தண்டித்தால் அப்போதும் அவனால் ஆகிற வேத ரக்ஷணம் அல்லவா கெட்டுப் போகும்?வேத தர்மம் இருக்க வேண்டும் என்பதற்குத் தான் ராஜாங்கம் இருப்பதே. அதுவே தன் லக்ஷ்யத்துக்கு ஹானி செய்யலாமா?அதனால்தான் ராஜசிக்ஷையை பிராம்மணனுக்கு ரொம்பவும் குறைத்துச் சொல்லியிருப்பது. ஆனால் அதற்காக அவனை வெறுமே விட்டு வைத்துவிடவில்லை. மந்த்ர ரக்ஷணைக்காக ஏற்பட்ட அவனுக்கு ஒவ்வொரு குற்றத்துக்கும் தண்டனையாக மந்திர பூர்வமாக ரொம்பவும் கடுமையான பிராயச்சித்த கர்மாக்களை சாஸ்த்ரமே கொடுத்திருக்கிறது. ராஜ தண்டனை இல்லாவிட்டாலும் அவனுடைய ஸமூஹத்துக்கான ஸபை அவனை விசாரித்து இப்படிப்பட்ட பிராயச்சித்தங்களை ரொம்பவும் ஸ்ட்ரிக்ட்டாக விதித்து, பலவிதக் குற்றங்களுக்கு ஜாதி ப்ரஷ்டமே பண்ணிவிடுவதென்று வைத்து அவனை அப்படிப்பட்ட குற்றங்களை மனஸாலும் நினைத்துப் பார்க்க முடியாமல் தடுத்தது. ராஜதண்டனையிலிருந்து பெருமளவுக்கு பிராம்மணர்கள் விலக்குப் பெற்றிருந்தால் அவர்கள் ஒழுங்கு தப்பிக் குடிகாரர்களாகவும், காமுகர்களாகவும், கொள்ளை லாபக் கூட்டமாகவும் போய்விடாமல் ஸமீப காலம்வரை மற்ற எல்லா ஸமூஹங்களாலும் ரொம்பவும் மரியாதைக்குரியவர்களாகவும், உதாரணமாகப் பிறருக்கு வழிகாட்டுபவர்களாகவுந்தானே கருதப்பட்டிருந்திருக்கிறார்கள்?இதிலிருந்தே அவர்களை அர்த்த சாஸ்திரம் நடத்திய விதம் ஜஸ்டிஃபை ஆகிவிடுகிறதல்லவா?இந்த விஷயம் இருக்கட்டும்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

## தர்ம அபிவிருத்தியே அஸ்திவாரம் வர்ண தர்ம பரிபாலனம்

ஜெனரலாக ஜனஸமூஹத்தைப் பார்க்கிறபோது ராஜதண்டனையே குற்றவாளிக்குப் பிராயச்சித்த கர்மாவாகி, அவனுடைய பாபத்தைப் போக்கும் உபகாரத்தைச் செய்கிறது. இதோடு இன்னொன்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். குற்றவாளி ஒருவன் தண்டனை பெறாமல் தப்புவதற்கு விட்டுவிட்டால் அது ராஜாவுக்கே பாபமாகும் என்றும் சொல்லியிருக்கிறது; **ராஜா ராஷ்ட்ர க்ருதம் பாபம் :**குடிகளின் பாவம் மன்னனைச் சேரும். **யதா ராஜா ததா ப்ரஜா :**'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி'என்று சொல்லி ஒரு பக்கம் அவனை தர்மிஷ்டனாக இருக்கப் பண்ணுவதோடு இன்னொரு பக்கம் குடிகள் தீய வழிபோனால் அந்தத் தீமை அரசனையே சேரும் என்று சொல்லி, இதனாலும் அவனைத் தேசத்தில் தர்மம் நிலைக்கப் பண்ணவேண்டும் என்பதில் விசாரத்துடன் ஈடுபடுமாறு பண்ணியிருக்கிறது.

ராஜ தண்டனையால் குற்றவாளிக்குப் பாபம் போகிறது என்பது போல இன்னொன்றைச் சொல்லி விடுகிறேன். யுத்த பூமியில் பிராணத் தியாகம் பண்ணுவதால் ராஜாவுக்கும், ஸேனா வீரர்களுக்கும் புண்ணியம் உண்டாகிறது என்று சொல்லியிருக்கிறது. போரில் உயிரிழந்தவர்கள் வீர ஸ்வர்க்கமடைவார்கள் என்று சொல்லியிருக்கிறது. ராஜாவுக்கு அநேக ஸெளக்ய போகங்களைக் கொடுத்திருப்பதற்குக் காரணமே அவன் இப்படித் தன் உயிரைப் பணயமாக வைத்து தேசத்தை ரக்ஷிக்கிறானென்பதுதான். இந்த விஷயம் இருக்கட்டும். தண்ட நீதியையும் தர்மத்தையும் பற்றிப் பார்ப்போம்.

குற்றம் செய்கிற எண்ணமே மநுஷ்யனை விட்டுத் தானாகப் போகும்படிச் செய்ய ஸமயாசாரம், பக்தி, ஞான மார்க்கம், காம மார்க்கம், யோகம் முதலியவை இருக்கின்றன. அவற்றின் கட்டுப்பாடுகளில் ஜனங்கள் வராதபோது பயத்தின் மூலம்தான் குற்றம் ஏற்படாமல் தடுக்க வேண்டும் என்றாகிறது. ஸமயாசாரியர்கள், ஞானிகள், பக்திமான்கள், யோகஸித்தர்கள் முதலியவர்கள் முதலில் சொன்ன வழியில் ஸாத்விகமாக மக்களை நல்வழி நடக்கச் செய்கிறவர்கள். அந்த ஸாத்விகம் உறைக்காதவர்கள் குற்றம் பண்ணும்போது ராஜா ராஜஸிகமாகத் தண்டனை தர வேண்டியதாகிறது. தேசத்தில் நல்ல நிலைமை, தர்மம், புண்ணியமிருக்க வேண்டுமானால் குற்றம் போனால்தானே முடியும்?அதோடு ஸாது ஜனங்களுக்கச் சோரபயம், கொலைகாரர்களிடம் பயம் முதலியன இல்லாமல் நிம்மதியாக

வாழும்படியான நிலையையும் ராஜாதானே அளிக்க வேண்டும்?அதனால்தான் அவனுக்கு தண்ட அதிகாரத்தைக் கொடுத்திருப்பது.

இதற்குள்ள முக்யத்வத்தால் அர்த்த சாஸ்த்ரத்துக்கே 'தண்டநீதி'என்று ஒரு பெயர் வழங்குகிறது. அர்த்த சாஸ்திரம் என்பதற்கு நீதி சாஸ்திரம், ராஜநீதி சாஸ்திரம், நயசாஸ்திரம் என்றெல்லாமும் பெயர்கள் உண்டு. 'நயம்'என்றால் 'பாலிஸி'என்று அர்த்தம். தண்டநீதி என்பதே ஜாஸ்தி வழங்குகிற பெயர்.

ஒரு பக்கம் தர்மஜ்ஞர்களை அரசனானவன் போஷித்து அவர்கள் மூலம் தர்மங்களை உபதேசமாகவும், புராணப் பிரவசனங்களாகவும், அவர்கள் நடத்திய சீலமான வாழ்க்கையுதாரணத்தாலும் 'பெர்ஸுவேஷன் மெத'டில் பிரசாரம் பண்ணிக்கொண்டுதானிருந்தான். இந்த நாளில் இந்த அம்சங்களை அரசாங்கப் பொறுப்பிலிருந்து அடியோடு துண்டித்து விட்டிருப்பது போல அப்போது இல்லை. இப்படி சாந்தமாகச் சொல்லி தர்மம் பதியாத போது, அதர்ம காரியங்கள் நடந்தபோது தண்டோபாயத்தை ப்ரயோகித்தான். இப்போது தண்டோபாயத்தை லீனியன்டாகப் பண்ண வேண்டும் என்று ஒரு பக்கத்தில் சொல்லிக் கொண்டிருந்தாலும், இன்னொரு பக்கம் போலீஸும் கோர்ட்டும்தான் நாளுக்கு நாள் விருத்தியாகி வருகின்றன. முற்காலத்தில் தர்மக்ஞர்களைப் போஷித்து ராஜா விருத்திபண்ணினதால் போலீஸும் கோர்ட்டும் மினிமமாகவே இருந்தன;கோயில் கட்டுவதே ராஜாவின் முக்ய காரியமாய் இருந்தது. சாஸ்திர மார்க்கப்படி நடந்து சிஷ்டர்களாக, தர்மிஷ்டர்களாக இருக்கிறவர்கள் அந்த நல்ல வழியில் போய் ஞானம் அடைவதற்கு அநுகூலமாக அவர்களுக்கு வேண்டியதையெல்லாம் செய்து கொடுப்பதுதான் அர்த்த சாஸ்திரத்தில் அஸ்திவாரமாகச் சொல்லியிருப்பது. அஸ்திவாரம் பலமாய் இருந்து, மேலே போகும் கட்டிடத்தில் பழுது ஏற்பட்டால் ஸுலபமாய் அதை ஸரி செய்து விடலாம். இந்தக் காரியத்தைத்தான் அன்றைக்கு தண்டோபாயம் செய்து வந்தது. இதனால்தான் காவல் நிலையங்களும், நியாய ஸ்தலங்களும் அப்போது குறைவாக இருந்து கோவில்களும், அன்ன சத்திரங்களும், யஜ்ஞசாலைகளும் நிறைய எழும்பின. இப்போது அஸ்திவாரம் போடாமல் கட்டிடம் எழுப்புவதில், இத்தனை ஆயிரம் போலீஸ் ஸ்டேஷன்கள் இருந்தும் இவற்றுக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டு ஏராளமானவர்கள் நூதன நூதன ஸாமர்த்தியத் திருட்டுகள், மோசடிகள், கொலைகள், வியபசாரக் குற்றங்கள் முதலியன பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இத்தனை ஆயிரம் கோர்ட்டுகள் இருந்தும், ஆயிரக் கணக்கில் 'கேஸ்'கள் 'பென்டிங்'காக இருக்கின்றன என்று 'பெஞ்சு'க்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே போயும் பைஸலாகாத வழக்குகளின் எண்ணிக்கையும் ஏறிக்கொண்டே போகிறது. பொது ஜனங்களுக்கோ பயம் போகவில்லை;'ஸெக்யூரிடி'இல்லை. தர்ம பரிபாலனம் என்ற அஸ்திவாரத்துக்கு எதுவும் பண்ணாமலே அதர்மத்துக்கு மட்டும் சிக்ஷை, அதுவும் ரொம்ப தாக்ஷிண்யத்தோடு சிக்ஷை என்றால் வேறே எப்படி இருக்கும்?

ஜாதி நாட்டாண்மை என்பதும் அக்காலங்களில் ராஜாவின் தண்ட ப்ரயோகத்தை ரொம்ப தூரம் குறைத்து உதவிற்று. ஒவ்வோரு ஜாதியாரும் பண்ணும் அநேக தப்புக்கள் அந்தந்த ஸமூஹ நாட்டாண்மைக்காரர்களாலேயே விசாரிக்கப்பட்டு வந்ததால், அந்த அளவுக்குக் கோர்ட்டின் வேலை குறைந்தது. போலீஸ் மாதிரி இல்லாமல் ஜாதி நாட்டண்மையிடம் அந்தந்த ஸமூஹத்தாரும் 'நம்முடையது'என்ற அந்நியோந்நிய பாவம் கொண்டிருந்தார்கள். அதனால் அதன் கட்டுப்பாடுகளுக்கு அவர்கள் இஷ்டபூர்வமாகவே அடங்கி நடந்ததில், தாங்களாகவே அநேகம் தப்பு தண்டாக்களைப் பண்ணாமல் ஒழுங்காயிருந்தார்கள்.

வர்ணாச்ரம தர்மங்களைப் பரிபாலிப்பது ராஜாவின் கடமையாக இருந்ததற்கு இதுவும் ஒரு துணைக் காரணம். ஒவ்வொரு தனி மநுஷ்யனுக்கும் தன் தொழிலைப் பற்றிய நிம்மதி, தன் வாழ்க்கை முறையைப் பற்றிய நிர்ணயமான அமைப்பு ஆகியன வர்ண விபாகத்திலே இருந்து, அதே ஸமயத்தில் அவன் தெய்வ பக்தியுள்ளவனாகவும் ஸாதுக்களிடம் விச்வாஸமுள்ளவனாகவும் இருந்தபடியால், தனக்குரிய மதாநுஷ்டானங்களைப் பண்ணிக்கொண்டு, ஸௌகிகத்தில் திருப்தியாயிருந்ததோடு (அப்படி இருந்ததாலேயே) ஆத்மாபிவிருத்தியும் அடைந்து வந்தான்.

இப்படி எல்லாத் தொழில்களும் சீராகப் பங்கீடு பண்ணப்பட்டிருந்தால் மொத்த ஸமுதாயத்திலும், அதாவது தேசம் பூராவுக்குமாக நடக்க வேண்டிய அநேக கார்யங்களிலும் ஏறுமாறு இல்லாமல், போட்டி பொறாமை இல்லாமல், குழப்பமில்லாமல் எல்லாம் சீராக நடந்து நாடு முழுதும் பொருளாதாரத்தில் நல்ல நிலையிலும்;மனநிலையில் ஸர்வஜன ஸௌஜன்யத்துடனும், இந்த ஸௌஜன்யத்தில் உண்டான நிம்மதியில் கலைகள், பண்பாடு இவற்றில் மேன்மையுள்ளதாகவும், எல்லாவற்றுக்கும் மேலே ஆத்ம லக்ஷ்யத்தில் சிறந்த சிறந்த அபிவிருத்தி கொண்டதாகவும் இருந்து வந்திருக்கிறது. இப்படி எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக, மற்ற உலக நாடுகள் எதையும்விட நம் தேசமானது ஸமூஹ ஸௌஜன்யம், பொருளாதாரம், கலாசாரம், ஆத்மிகம் எல்லாவற்றிலும் ரொம்ப உன்னத ஸ்தானத்திலிருந்ததை அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள். மற்ற நாடுகளிலில்லாததாக இங்கே என்ன இருந்து இப்படிப்பட்ட உயர்வை ஏற்படுத்தியிருக்கக்கூடும் என்று பார்த்தால், இங்கே நாகரிக ஸமுதாய வாழ்க்கையும் ராஜாங்கமும் ஏற்பட்ட நாளாக ஜனங்களாகவே ப்ரியப்பட்டும், ராஜாங்கத்தின் தலைமையான கடமையாகப் பரிபாலிக்கப்பட்டும் அநுஸரித்த வர்ணாச்ரம தர்மங்களைத் தவிர வேறெதுவும் தெரியவில்லை.

ஆனாலும் முன்பு வர்ண தர்மத்தைப் போஷிப்பதிலேயே ராஜா பெருமைப்பட்டானென்றால், இப்போது அரசியலிலோ ஸமூஹ வாழ்விலோ ஆனா ஆவன்னாவே casteless society - "ஜாதியில்லாத ஸமூஹம்"என்பதாகத் தானிருக்கிறது!அந்தந்த ஜாதிக்குண்டான தொழிலை அவரவர் செய்யாமலும், அதற்குரிய ஆசார அநுஷ்டானங்களைக் கடைபிடிக்காமலும் ஜாதிகளை மட்டும் விடாமல் வைத்துக் கொண்டிருப்பது மஹா தப்புதான் - ப்ராணன் போனபின் பிணத்தைக் கட்டிக் காக்கப் பார்க்கிறது போலத்தான்!இதில் நாம் சீர்திருத்தக்காரரோடு பெர்ஸன்ட்டும் ஒதுப்போவோம். ஆனால் இந்தத் தொழில் பாகுபாடே தப்பு, ஆசார அநுஷ்டானங்களையே இதற்காக வித்யாஸமாய் வைப்பது தப்பு என்று அவர்கள் வாதிப்பதை நாம் கொஞ்சங்கூட ஒப்புக் கொள்வதற்கில்லை. தொழில் பாகுபாடும், ஆசாரங்களை சாஸ்த்ரப்படி அவாளவாள் பின்பற்றுவதும் மாறி இப்போதுள்ள நிலைமை ஏற்படவிட்டதுதான் தப்பு என்று விவேகத்தோடு புரிந்துகொள்ள வேண்டும். 'இப்போது எல்லாம் அடியோடு குன்றிப் போய்விட்ட ஸ்திதியில் பழையபடி பண்ணுவது ஸாத்யமா?'என்றால், எனக்குத் தெரியாது. ஸாத்யமில்லை என்று விடாமல் இப்போதாவது எங்கே எவ்வளவு முடிகிறது என்று பார்த்து அங்கே அந்த அளவுக்குப் பழைய வழிக்குத் திருப்பத்தான் பாடுபடணும்.

ஹிஸ்டரியைப் பார்த்தால் தெரியும் - 2500 வருஷத்துக்கு முன் புத்தர் வந்தபோதும், அப்புறம் 1300 வருஷத்துக்கு முன் சமணமே பல்லவ ராஜ்யம் பாண்டிய ராஜ்யம் எல்லாவற்றிலும் மஹேந்திரவர்மா, நெடுமாற பாண்டியன் ஆகிய ராஜாக்களின் போஷணையில் செல்வாக்குடன் இருந்தபோதும் உதயனாசார்யார், குமாரிலபட்டர், ஆசார்யாள், அப்பர், ஞானஸம்பந்தர் முதாலனவர்கள் தோன்றியதால் மறுபடி வர்ணாச்ரம வேத மதமே வந்துவிட்டது. நான் அடிக்கடி சொல்கிற மாதிரி, பொது ஜனங்கள் பெரிசாக மதக் கொள்கை என்று ஆராய்ந்து கொண்டிருக்காமல் தங்கள் பக்தியைப் பெறத்தக்க மஹான்கள் தோன்றும்போது, 'இவர் சொல்கிற ஸித்தாந்தம்தான் ஸரியாயிருக்கும்'என்று அவர் வழிக்குப் போயிருக்கிறார்கள் என்பதும் வாஸ்தவந்தான். ஆனாலும், ஏற்கெனவே தாங்கள் இருந்த வழியில் ஏதோ அதிருப்தி இருந்தாலொழிய, புதிதாகப் போவதில் அது நிவ்ருத்தி ஆகிறதாகத் தெரிந்தாலொழிய இப்படி மாறியிருக்கமாட்டார்கள் என்பதும் வாஸ்தவம். நுணுக்கமாக மதக் கொள்கைகள் தெரியாவிட்டாலும் அதன் விளைவாகப் பரவலாக ஏற்படுகிற பலனைத் தெரிந்து கொண்டே மாறியிருக்கிறார்கள்.

அதனால் புத்தரும் ஜினரும் (மஹாவீரரும்) ஜாதிகளை எடுத்துப் போட்டுவிட்டு எல்லாரையும் ஒன்றாகப் பண்ணினதில் பொது ஜனங்கள் 'ஆஹா'என்று அப்போதைக்கு திருப்திப்பட்டு அந்த வழிகளில் கொஞ்சம் போனாலும், நாளாவட்டத்தில் இந்த ஏற்பாட்டில் தங்களுக்கு 'ஸ்டேட்டஸ்'இருப்பதாகத் தெரிந்திருந்துங்கூட, அதிலே தனி வாழ்க்கை, ஸமூஹ வாழ்க்கை இரண்டுமே சீராக அபிவிருத்தியாவதற்கு இடமில்லையென்று கண்டு கொண்டுதான் மனப்பூர்வமாக, எந்த கம்பல்ஷனும் இல்லாமலே வைதிக வழிக்குத் திரும்பி வந்திருக்கிறார்கள். இப்படி இரண்டு மூன்று முறை 'பட்டு'க் கொண்டதை நினைத்துப்

பார்த்தாவது இப்போதுள்ள அறிவாளிகள் அந்தப் பூர்வ வழியை எப்படி மறுபடி அதன் உண்மை ஸ்பிரிட்டுடன் ஏற்படுத்தலாம் என்பதற்கு ஆலோசனை செய்ய வேண்டும். அதம பக்ஷமாக, எல்லா தர்மத்துக்கும் வாழ்க்கை ஐடியல்களுக்கும் பிராம்மண ஜாதியைப் பொறுப்பாக்கியிருப்பதால் அதொன்றையாவது சாஸ்த்ர ப்ரகாரம் இருக்கப் பண்ணப் பிரயத்தனம் ஆரம்பிக்க வேண்டும்*.

இந்த ஏற்பாடு பண்ணினாலும் பண்ணாவிட்டாலும் நாம் 'இண்டியன் கல்ச்சர்'என்று பெருமைப்படும் நாகரிகத்தைக் கொடுத்துள்ள ரிஷிகள், ஞானிகள், பக்தர்கள், மதத் தலைவர்கள், கவிகள், சில்பிகள், நம்முடைய விஞ்ஞான சாஸ்திரங்களைக் கொடுத்தவர்கள் ஆகிய எல்லாருமே வர்ணாச்ரமத்தைப் போற்றியவர்கள் தான் என்பதிலிருந்து அது தப்பான வழியாயிருக்க முடியாது என்று அறிவு பெறவேண்டும். இவர்களில் பிராம்மணர்கள் மாத்திரமில்லாமல் மற்றவர்களும் இருக்கிறார்கள். இவர்களும் வர்ணாச்ரம ஏற்பாட்டைக் கொண்டாடித்தானிருக்கிறார்கள். அப்பிராமணபராயிருந்து, சோழ ராஜாவுக்கு மந்திரியுமாக இருந்த சேக்கிழார் ஒருத்தர் போதும் - அவர் சொல்ல வந்தது பக்தர்கள் கதையைத்தான். அதிலே எத்தனையோ பேர் அப்பிராம்மணர்கள். இவர்களைப் பிராம்மணர்களும் போற்றுகிறார்கள். ஆனாலும் சேக்கிழாரோ எப்படியாவது இடம் ஏற்படுத்திக் கொண்டு வைதிக மரபுகளைச் சொல்லிச் சொல்லி எந்த ராஜாவானாலும் அவன் வர்ணாச்ரம பரிபாலனம் செய்ததைச் சொல்லாமலிருப்பதில்லை.

ராஜாவுக்கு இதிலே நிரம்ப முக்யமுண்டு - நாடு முழுவதற்கும் பொறுப்பு அவன்தானே?

ராஜா வர்ணதர்ம பரிபாலனப் பொறுப்பை எடுத்துக் கொண்டான். அதே ஸமயத்தில் வர்ணதர்மம் தேசத்தில் குற்றங்களைப் பெருமளவுக்குக் குறைத்து, அதனால் அவனுடைய நீதி தண்டப் பொறுப்பையும் வேலையையும் ரொம்ப தூரம் குறைத்து உதவியது. நிச்சயமாகத் தனக்கு ஒரு தொழில் உண்டு, நிர்ணயமான ஒரு வாழ்க்கை முறை உண்டு என்று வர்ண விபாகத்தில் ஏற்பட்டிருந்தால் இப்போது உண்டாயிருக்கிற போட்டிகளுக்கு அப்போது இடமில்லை. போட்டி இருக்கிற போதுதான் பொறாமை உண்டாகிறது. பகை ஏற்படுகிறது. மோதல், அடிதடி, கிளர்ச்சி ஏமாற்றுவது, லஞ்சம், திருட்டு, கொலையே பண்ணுவது என்றெல்லாம் குற்றங்கள் பெருகவும் இடம் ஏற்படுகிறது. இதெல்லாமில்லாததால் பழைய நாள் ராஜாவுக்குக் காவல் செய்கிற போலீஸ் பொறுப்பும், நியாயம் வழங்கி தண்டனை விதிக்கிற ஜுடிஷியல் பொறுப்பும் நிரம்பக் குறைந்தன.

வர்ணாச்ரம பரிபாலனம் என்பது அவனுடைய முக்யமான பொறுப்பாயிருந்த போதிலும் அது அவனுக்குப் பெரிய ப்ரயாஸையோ வேலையோ தருகிற பொறுப்பாயில்லை. ஏனென்றால் ஜனங்கள் தாங்களாகவே இந்த நியதிக்குக் கட்டுப்பட்டுத்தானிருந்தார்கள். அபூர்வமாக எங்கேயாவது யாராவதுதான் மீறிப் பண்ணுவதாயிருந்தது. நேரே பொது ஜனங்களிடம் தொடர்பு வைத்துக் கொண்டு, ரொம்பவும் வசீகரணமுள்ளவராயிருந்த புத்தர் மாதிரியான ஒருவர் வர்ணாச்ரம அதிகார பேதங்கள் கூடாது என்றபோதுகூட, இதற்காக ஜீஷீஜீ஢ஹீணீக்ஷீ ஢ஜீக்ஷீஷீஷீ (வெகுஜனக் கிளர்ச்சி) எதுவும் நடந்ததாக (நம் சரித்ரத்தை எவ்வளவோ திரித்து எழுதியிருக்கும்) வெள்ளைக்காரர்கள் கூடச் சொல்லக் காணோம்!நம்முடைய பொதுஜனங்கள் நல்ல புத்திசாலிகளாக இருந்தும் இத்தனை ஆயிரம் வருஷத்தில் இந்த ஏற்பாட்டை எதிர்த்ததாகவோ, அப்புறம் ராஜா அவர்களை அடக்கினதாகவோ ஒரு திருஷ்டாந்தங்கூட இல்லை.

தங்களுக்கு எத்தனையோ ஸாதகமாயிருந்த புத்தமதத்தை மூட்டை கட்டி அனுப்பி விட்டு, இப்போது கொடுமையானவர்களாக வர்ணிக்கப்படுகிற ஸநாதனிகளின் மதத்துக்குத்தான் ஜனங்கள் திரும்பியிருக்கிறார்கள். வர்ண விபாகத்தில் தங்களுக்குப் பெர்ஸனலாக ஒரு நிம்மதியும், ஸமூஹ வாழ்வுக்கு ஒரு ஸ்டெபிலிடியும் இருப்பதாக அவர்கள் கண்டிருந்தாலன்றி இப்படிப் பண்ணியிருப்பார்களா?

வர்ணாச்சரம ஏற்பாட்டினால் அக்கால ராஜாக்களுக்கு, இப்போதுள்ள ராஜாக்களுக்கு முக்கியாமாயிருக்கிற போலீஸ், ஜுடீஷியரி வேலைகள் பெருமளவுக்கு இல்லாமலிருந்ததால், இப்போது இதற்காக ஆகிற செலவும் கால விரயமும் அவர்களுக்கு இல்லை. அதனால் ராஜாக்கள் தங்கள் பொழுதையும் பொருளையும் வேறே நல்ல இனங்களில் ஈடுபடுத்த முடிந்தது. கோர்ட்டுக்குப் பதில் கோவில் கட்டினார்கள்;கோரக்ஷணம் செய்தார்கள்;அன்ன

சத்திரம் கட்டினார்கள்;தான தர்மம் செய்தார்கள்;கனபாடிகளுக்கு ச்ரோத்ரியம் கொடுத்து, வேதத்தில் அதிகாரமுள்ளவர்கள் இவர்களிடமிருந்து தர்மங்களைத் தெரிந்துகொள்ளப் பண்ணினார்கள்;உடுக்கு அடித்து பாரதம் சொல்கிற பூசாரிக்கு மானியம் விட்டு அதே தர்மத்தை இவனிடமிருந்து பாமர ஜனங்களும் தெரிந்து கொள்ளப் பண்ணினார்கள். ப்ரஜைகளின் வயிற்றுக் குறையைப் போக்குவதும், தர்ம அபிவ்ருத்தியுமே அரசனுடைய கார்யங்களாயிருந்தன.

ஜனங்கள் கோவிலுக்கும் தர்மோபதேசம் நடக்குமிடங்களுக்கும் போய்ப் போய் சாந்தர்கள ஆனார்கள். சட்டத்தை மீறாமல், ஸாத்விகர்களாக, எல்லோருடனும் ஸமாதானமாக வாழ் ந்தார்கள். இந்த ஸமாதானத்தை ஜாதி தர்மம் காப்பாற்றி வந்தது.

இக்காலத்தில் கோவிலுக்கும், தர்மம் தெரிந்து கொள்வதற்கும் போவது குறைந்து ஜனங்கள் கோர்ட்டுக்குப் போவது அதிகமாயிருக்கிறது. எங்கும் இடிந்த கோயில்களும் இடியாத கோர்ட்டுகளும் காணப்படுகின்றன.

இப்போது 'வெல்ஃபேர் ஸ்டேட்'வைக்கிற கோர்ட்களுக்கும் ஆஸ்பத்திரிகளுக்கும் போவதற்கு முதல்படியாக, தினந்தோறும் வளர்ந்து வருகிற ஸினிமாக் கொட்டாய் (கொட்டகை)க்குப் போய் அநேக தினுஸான தப்புகளைத் தெரிந்துகொண்டும், இந்திரிய சபலத்தால் உடல் கெட்டும் வருகிறார்கள். அக்ரமத்துக்கு ஏற்பட்ட ரேஸ் கோர்ஸ் மாதிரியானவற்றிலும் கூட்டம் வழிகிறது. அபக்ஷ்ய பக்ஷணம் செய்வதற்காக க்ளப்களும் (ஹோட்டல்களும்) ஜனங்களை இழுக்கின்றன. எல்லாம் போதாது என்று உரிமை, ஸமத்வம் என்று சொல்லிக்கொண்டு ஜனங்களை த்வேஷத்திலும், போட்டியிலும், சோம்பேறித் தனத்திலும் தூண்டிவிடுவதற்கு அரசியல் கூட்டங்களின் ஆகர்ஷணமும் சேர்ந்திருக்கிறது. மொத்தத்தில் உடம்பும், மனஸூம் கெட்டு, சித்த சாந்தி போய். ஸமூஹ ஸமாதானம் போய் - இவற்றின் மீஷீமீணீறீ மீயீயீமீநீமீ ஆக - குற்றங்கள் பெருக எத்தனை வாய்ப்பு உண்டோ அத்தனையும் விருத்தியாகி வருகின்றன.

தர்ம அஸ்திவாரத்தைப் பற்றிக் கவலைப்படாமல் 'வெல்ஃபேர்'மாளிகை எழுப்பினால் இப்படித்தான் ஆகும்!தர்மசாரமில்லாதபோது எங்கே பார்த்தாலும் கிளப் என்றால் நியமமில்லாமல் சாப்பிட்டு தேஹம், புத்தி இரண்டையும் கெடுத்துக் கொள்வார்களே தவிர, நிஜமான வெல்ஃபேரை அடையமாட்டார்கள். தார்மிகக் கட்டுப்பாடு இல்லாதபோது எழுத்து ஸ்வதந்திரம், கருத்து ஸ்வதந்திரம் என்கிறவற்றால் பத்திரிகைகளும், ஸினிமாக்களும் கெட்டதில்தான் சேர்க்கும். ஆஸ்பத்திரிகள் தினந்தினம் வைத்து, புதுப்புது ட்ரீட்மென்ட் தருகிறார்களென்றால், துன்மார்க்கத்தில் போனாலும் கெட்ட வியாதி வராமல் தடுத்துக்கொண்டு விடலாம் என்றுதான், தர்மத்துக்குப் பயப்படுவதற்குப் பழக்கப்படாத ஸமூஹம் நினைக்கும். 'கிராமம் விடாமல் பாங்கு வைத்து கடன் தருகிறோம்'என்றால் எத்தனை லஞ்சமும், பித்தலாட்டமும் உண்டோ அத்தனையும் செய்து கடன் வாங்கி, இப்போது தர்ம விரோதமாக வந்திருக்கிற பலவற்றுக்காகச் செலவு செய்வதற்கு ஊக்கம் தந்ததாகவே ஆகும். பெரிய வெல்ஃபேர் எதுவென்றால் தர்மந்தான்.

அந்த தர்மம் தெய்வ பக்தியாலும், மதப் பற்றாலுந்தான் ஜனங்களிடையே நன்றாய் வேர் பிடித்து வளரும். இந்த ஆதாரக் கொள்கையின் மேலே வகுத்த அர்த்த, தர்ம சாஸ்திரங்கள் நம் நாட்டுக்குச் செய்து வந்த நிஜமான நன்மையை அந்த ஆதாரத்தை வெட்டிவிட்ட எந்தப் புது அரசியல் முறையும் ஐடியாலஜியும் உண்டாக்கித் தர முடியாது. ஆனாலும் இப்போது தினந்தினம் லோகத்தில் ஏற்பட்டு வருகிற சீரழிவையும் ஒழுக்கக் குறைவையும் பிரத்யக்ஷமாகப் பார்த்துக் கொண்டிருந்தும், 'பழைய ஏற்பாட்டில் தாக்ஷிண்யமில்லை, மநுஷ்யாபிமானமில்லை'என்று குறை சொல்கிறார்கள்!

திருக்குறள், திருவள்ளுவர் என்று ஓயாமல் சொல்வதாயிருக்கிறது. திருவள்ளுவர் பொருட்பாலில் ராஜ தர்மத்தைச் சொல்கிற இடத்தில் 'பெரியாரைப் பிழையாமை'என்றே ஒரு அதிகாரம் பண்ணியிருக்கிறார். ராஜாக்கள் மஹான்களை ஆச்ரயித்து அவர்களுடைய மனம் குளிரும்படியாகப் பண்ண வேண்டும். இல்லாவிட்டால் அகஸ்தியரிடம் அபசாரப்பட்டுக் கொண்ட இந்த்ரனே பதவி போய்த் திண்டாடியது போல ஆகிவிடும் என்று எச்சரித்திருக்கிறார்:

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து

வேந்தனும் வேந்து கெடும்.

தர்ம சாஸ்திரங்களைக் கேட்காவிட்டால் ராஜா கேடுதான் அடைவான் என்பதை நேராக அப்படிச் சொல்லாமல் ஸ்வாரஸ்யமாக மாற்றி, அரசனைப் பார்த்து, "கேடுதான் அடையவேண்டுமென்று ஆசையாயிருந்தால் சாஸ்திரப்படி கேட்காமல் பண்ணு"என்கிறார்.

" கெடல் வேண்டின் கேளாது செய்க. "

ஆக, தர்ம அஸ்திவாரத்தின் மேலே மஹான்கள் காட்டுகிற வழியிலேயே அரசாட்சியை நடத்த வேண்டுமென்பதுதான் திருவள்ளுவர் காட்டும் நெறி.

எது நிஜமான தாக்ஷிண்யம், எது நிஜமான மநுஷ்யாபிமானம் என்று யோசித்துப் பார்ப்போமானால், எது தேசத்தில் தர்மத்தை நிலைக்கப் பண்ணி, நல்ல ஜனங்களுக்கு துஷ்டர்களிடம் பயமில்லாமல் ஸெக்யூரிடியைக் கொடுக்கிறதோ, அதோடு எதுதான் குற்றம் பண்ணினவனையும் இனிமேல் அப்படிப் பண்ணாமல் கட்டுப்படுத்துகிறதோ அதுதான் நிஜமான தாக்ஷிண்யமும் மனிதாபிமானமுமாகும்.

ஒருத்தன் ஏதோ ஹிம்ஸை பண்ணினானென்றால் ஜனங்களிலேயே இன்னொருத்தன் அப்போது அவனை பதிலுக்கு ஹிம்ஸை பண்ணி ஹிம்ஸையை இரண்டாக்குகிறானென்றால் அதுதான் தப்பு. இங்கே பெர்ஸனலாக த்வேஷம், கோபதாபம் உண்டாகின்றன. ஆனால் ராஜாங்கம் என்ற ஸ்தாபனம் ஹிம்ஸை செய்த ஒருவனை பெர்ஸனல் காரணமில்லாமல், தர்மத்தின் பொருட்டு சிக்ஷித்து அவனுக்கு ஹிம்ஸை தருவது இப்படியல்ல. அவனால் இனிமேல் ஜனங்களுக்கு ஏற்படக்கூடிய ஹிம்ஸையைப் போக்கவே இந்த சிக்ஷை. சிக்ஷை என்பது முன்பு அவன் குற்றம் பண்ணினான் என்பற்காக மாத்திரமின்றி, இனிமேல் அவனைக் குற்றம் பண்ணாமலிருக்கச் செய்வதற்குமாகும். ஒரு பைத்தியம் கல்லை எறிந்தால், அது நம் குழந்தையாகவே இருந்தாலும் ரூமில் தள்ளிப் பூட்டவில்லையா?அப்படியே திருட வேண்டும் என்ற பைத்தியம் பிடித்திருப்பவனை, ஃபோர்ஜரி பண்ணுகிற பைத்தியமுள்ளவனை, இப்படி அநேகப் பைத்தியம் உள்ளவர்களை ராஜாங்கம் ஜெயிலில் போட வேண்டியதாகிறது. ஹிம்ஸையைக் குறைக்கவே ஹிம்ஸிக்க வேண்டியதாகிறது.

----------------------------------------------------------------------------------------------------* இவ்விஷயமாக "தெய்வத்தின் குரல்"முதற்பகுதியில் "வர்ண தர்மம்"என்ற உரையும் தொடர்ந்து வரும் சில உரைகளும், இரண்டாம் பகுதியில் "ஜாதி முறை"என்ற உரையும், குறிப்பாக அதில் "நான் சொல்வதன் நோக்கம்"என்ற உட்பிரிவும் பார்க்க.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

## வெளிநாட்டு விஷயத்தில் தண்ட நீதி

வெளிநாட்டு ராஜாவால் ஜனங்களுக்கு ஹிம்ஸை உண்டாகாமல் ரக்ப்பதும் ராஜநீதியில் முக்யமான அம்சம். லோகத்தில் எந்த தேசமானாலும் ஆதிகாலத்திலிருந்தே ராஜாக்கள் மற்ற நாடுகளைத் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வருவதற்காகப் படையெடுத்து யுத்தம் செய்வது என்று ஏற்பட்டிருக்கிறது. இதற்கு நான் ந்யாயாந்யாயங்கள் சொல்லப் போவதில்லை.

ஒரு வெள்ளைக்காரர்*என்னிடம், அர்த்த சாஸ்த்ரத்தில் ஒரு காரணமும் இல்லாமல் ஒரு அரசன் பிற அரசர்கள் மேல் படையெடுத்து ராஜ்ய விஸ்தாரம் பண்ண வேண்டுமென்று சொல்லியிருப்பதை இப்போதுள்ளவர்கள் பின்பற்றலாமா என்று கேட்டார். அது ஏதோ அந்த நாள் நடைமுறை. அதுவும் இது தர்ம ஸம்பந்தமாயிருப்பதைவிட அர்த்த ஸம்பந்தமாகவே சொல்லப்பட்ட வழி. அதற்கு சாச்வத validity (செல்லுபடித்தன்மை) இருப்பதாகக் கொள்ளவேண்டியதில்லை என்று பதில் சொன்னேன்.

எப்படியோ, ராஜா என்றால் ஏக சக்ராதிபத்யத்துக்கு முயற்சி செய்ய வேண்டுமென்பது ஸ்திரப்பட்டுவிட்ட fact -ஆக எல்லா நாட்டிலும் பின்பற்றப்பட்டதை மட்டுமே கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். வேதாந்தத்தில் இது மண்ணாசை, பென்னாசைகளின் கீழேதான் வருமானாலும், அந்த வேதாந்தம் ராஜாவைப் பொருத்த மட்டில் அவனுடைய முதுமையில் வானப்ரஸ்த ஆச்ரமம் போக வேண்டியபோதுதான் இந்த ஆசைகளை விட வேண்டும் என்று அவனுக்குச் சொல்கிறது. தர்ம சாஸ்திரம் ராஜாவை யுத்தத்துக்குப் போகாமல் கட்டுப்படுத்தி வைக்கவில்லையானாலும் அவனை யுத்தத்தில் தூண்டிவிடவுமில்லை. அர்த்த சாஸ்திரங்களோ, வெளி ராஜாவால் தன் நாட்டுக்கு ஹிம்ஸை ஏற்படும்போது மாத்திரம் டிஃபென்ஸில் (தற்காப்புக்காக) யுத்தம் செய்வது, அல்லது அந்நிய தேசங்களில் அதர்மம் அதிகம் இருக்கிறது என்பதற்காக அங்கே தர்மத்தை நிலைநாட்ட மாத்திரம் படையெடுத்துப் போய் யுத்தம் செய்து தர்ம ஆட்சியை ஏற்படுத்துவது என்றெல்லாமில்லாமல், பொதுவாகவே ராஜாவானவன் தன் ராஜ்யத்தை விஸ்தாரம் பண்ணிக் கொண்டு ஸார்வ பௌமனாக, சக்ரவர்த்தியாகப் பிரகாசிக்க வேண்டும் என்பதற்குத் தூண்டுதல் தருவதாக இருக்கின்றன.

ஆனாலும் ராஜ்ய விஸ்தரிப்பு என்பதற்காக எடுத்தவுடனேயே யுத்தத்துக்குப் போகும்படி அர்த்த - தர்ம சாஸ்திரங்கள் சொல்லவில்லை. உபாய சதுஷ்டயம் என்பதாக நாலு வழிகளைச் சொல்லி, நாலாவதாகவே யுத்தத்தை வைத்திருக்கிறது. மற்ற தேசங்களின் போக்கோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இது நமக்குப் பெருமை தருகிற விஷயமாகும். கேள்விமுறை இல்லாமல் அரசர்கள் ரத்தக் களரி பண்ணுவது பிற தேசத்தவர்களின் வழக்கம்.

உபாய சதஷ்டயம் என்பவை ஸாமம், தானம், பேதம், தண்டம், என்னும் நாலாகும்.

ஒரு ராஜா தானாக ராஜ்யத்தை விஸ்தாரம் பண்ணும்போதும், இன்னொரு ராஜா இவன்மேல் படையெடுக்க உத்தேசிக்கிறபோதும், இரண்டு ஸமயத்திலும் இந்த நாலு உபாயங்களை ஒன்றபின் ஒன்றாகத் கடைபிடிக்க வேண்டும்.

முதலில் அன்போடு பழகி அதனால் ஒரு ராஜாவை அடங்கி வரும்படிப் பண்ணமுடியுமாவென்று பார்க்க வேண்டும். வேண்டியவர்களைக் கொண்டு அவனுக்கு நல்ல வார்த்தை சொல்லச் செய்ய வேண்டும். மனஸில் சாந்தியோடு பிரயத்னம் செய்ய வேண்டும். இதுதான் ஸாமம்.

இரண்டாவது தானம். அதாவது நமக்குப் பிரியமான பொருளை அவனுக்குக் கொடுத்து, என் ராஜ்யத்தோடு சேர்ந்துவிடுகிறாயா என்று கேட்பது. அல்லது அவன் படை எடுத்து வந்தால் இப்படிக் கொடுத்து, திருப்தி பண்ணி அவனைத் திரும்பிப் போகப் பண்ணுவது. ராஜ்யத்தில் ஒரு சின்னப் பகுதியைச் சண்டையில்லாமலே கொடுப்பது, அல்லது தன தான்யங்களைக் கொடுப்பது, இல்லாவிட்டால் ராஜகுமாரியை எதிராளி ராஜாவுக்கோ, ராஜகுமாரனுக்கோ கன்யாதானம் செய்து கொடுத்து அவனோடு சண்டையில்லாமல் நல்லுறவு ஏற்படுத்திக் கொள்வது - இதெல்லாமல் தானோபாயத்தில் வரும். உள்ளன்பின் சக்தியால் மனஸை மாற்றுவதைவிட, பொருளைத் தந்து விரோதத்தைப் போக்கிக் கொள்வது கீழ்தான் என்பதால் ஸாமத்துக்கு அப்புறம் தானத்தைச் சொல்லியிருக்கிறது. நிஜமான பிரியம் இருக்குமானால், நம்முடையதெல்லாம் அவனுடையது அவனுடையதெல்லாம் நம்முடையது என்ற எண்ணம் வந்துவிடுமாதலால், என்னுடையதில் கொஞ்சம் உனக்குத் தருகிறேன் என்ற பேச்சு வராது. தானம் என்கிறபோது ஒற்றுமை போய் வேறுபாடு வந்துவிட்டதாகவே அர்த்தம்.

பேதம் என்பது இன்னம் கீழே. ஸாதாரணமாக நம் வாழ்க்கை விஷயங்களில் பேதோபாயத்தைப் பின்பற்றவே கூடாது. பேதமும் தண்டமும் ராஜாங்கத்துக்கு மட்டும் அநுமதிக்கப்பட்டிருக்கும் வழி தனி மநுஷ்யர்களுக்கல்ல. எதிராளியைச் சேர்ந்திருப்பவர்களிடம் பிளவு உண்டாகும்படிப் பண்ணி, இதனால் அவனுக்கு ஆதரவு குறையுமாறு செய்து, சக்தி குன்றிப்போன ஸ்திதிக்கு அவனைக் கொண்டு வந்து, இப்போது எனக்கு அடங்குகிறாயா என்று கேட்டுக் கப்பம் கட்ட வைப்பது பேதோபாயம். Divide and rule (பிரித்து ஆளுவது) என்பதில் divide பண்ணுவது (பிரிப்பது) பேதம். இது கெடுதலான உபாயந்தானென்றாலுங்கூட, அர்த்த சாஸ்திரத்தில் இதிலும் ஒரு தார்மிகக் கட்டுப்பாடு

வைத்திருப்பதைக் கவனிக்க வேண்டும். அதாவது எதிராளியின் சக்தியைப் பேதோபாயத்தால் குறைத்தவுடனேயே அவன் மேல் படையெடுத்து ஹதாஹதம் பண்ணி ஜயித்துவிட முடியும்தான் என்றாலும், அப்படிச் சண்டைக்குப் போகாமல், பலம் குறைந்த அந்த ஸ்திதியில் அவனாகப் பணிந்து வருகிறானா என்று பார்த்துவிட்டே, வராவிட்டால் யுத்தம் செய்ய வேண்டும் என்று வைத்திருக்கிறது.

யுத்தந்தான் நாலாவதான தண்டம். உள்நாட்டுக் குற்றவாளிகளுக்குப் பலவிதமான தண்டனைகள் மூலம் தண்டம். வெளி ராஜாவுக்கு யுத்தத்தின் மூலம் தண்டம். இரண்டுக்கும் இடையில் அநேக வித்யாஸங்களிருந்தாலும் ஹிம்ஸிப்பது, சிக்ஷிப்பது பொது அம்சம். ஃபிஸிகலாக பலத்தைக் காட்டுவது இரண்டுக்கும் பொது.

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் உள்நாட்டு விஷயத்தில் கூட இந்த நாலு உபாயமும் இருப்பதாகத் தெரிகிறது. ஸத்துக்களைக் கொண்டு வாழ்க்கை உதாரணத்தாலும், உபதேசத்தாலும் தர்மங்களை ஸாத்விகமாகப் பரப்புவது ஸாமம். மான்யம், டைட்டில், சலுகைகள் தருவது தானம். ப்ராஸிக்யூஷன் (அதாவது ராஜாங்கம்) குற்றவாளியைச் சேர்ந்த ஒருவனையே அப்ரூவராக ஆக்கிக்கொண்டு குற்றத்தை நிரூபணம் செய்வது பேதம். தண்டனைதான் தண்டம்.

---

* ஜே. டபிள்யூ. எல்டர்

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**தோற்ற ராஜ்யத்திடம் உதாரம்**

தண்டோபாயத்திலும் அநேக தர்மங்கள் உண்டு.*

ஜயித்த ராஜ்யம் ஜயிக்கப்பட்ட ராஜ்யத்தை நடத்தும் விதத்திலும் அர்த்த சாஸ்த்ரம் மிகவும் கௌரவமான பண்புகளை விதித்திருக்கிறது. ஒரு ராஜா வெளி ராஜ்யத்தை ஜயித்த பின் அதை முழுக்கவும் தன் ராஜ்யத்திலேயே ஜெரித்துக்கொண்டு விடக்கூடாது. அதன் 'இன்டிவிஜுவாலிடி'குன்றிவிடாதபடி அதைத் தனியாகவே விட்டிருக்க வேண்டும். 'அந்த ராஜ்ய ஜனங்களின் அன்புக்கும், மரியாதைக்கும் பாத்திரமாயிருப்பவர்களிடமே அதன் நிர்வாஹத்தை விடவேண்டும். அவர்களுடைய ஸமயாசாரம் என்னவோ, கலாசாரம் என்னவோ, வாழ்க்கை முறையும் ஸம்பிரதாயங்களும் என்னவோ அவற்றுக்கெல்லாம் மாறுதலாக எதையும் திணிக்கவே கூடாது'என்ற இப்பேர்ப்பட்ட உத்தமமான கொள்கைகளைத் தர்ம சாஸ்திரம் மட்டுமின்றி, ரொம்பவும் பொல்லதவராக வர்ணிக்கப்படுகிற சாணக்யருங்கூடத் தம்முடைய அர்த்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறார்.

ராஜ்ய விஸ்தரிப்பின் மூலம் பலாத்காரமாகவோ, அதைவிட நீசமான வசியங்களாலோ ஜயிக்கப்பட்ட ஜனங்களுக்குள் சாதுர்யமாக பேதங்களை உண்டு பண்ணுவதாலேயே அவர்களைத் தங்கள் மதத்துக்கு இழுப்பது மற்ற நாட்டவரின் வழக்கம். இப்படி ஒரு ஜயித்த ராஜா ஜயிக்கப்பட்டவர்களை மத மாற்றம் செய்வதை நம் சாஸ்த்ரம் கொஞ்சங்கூட ஆதரிக்கவில்லை. யாஜ்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதி

**யஸ்மிந்தேசே ய ஆசாரோ வ்யவஹார குல ஸ்திதி : ***

**ததைவ பரிபால்யோ (அ)ஸௌ யதாவசம் உபாகத : ****

என்றகிறது. அதாவது ஜயித்த ராஜா வசப்படுத்திக் கொண்ட தேசத்தில் என்னென்ன ஆசார-வ்யவஹாரங்களும் குல வழக்குகளும் இருக்கின்றனவோ அவற்றை அப்படியேதான் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும் என்று தீர்மானமாகச் சொல்லியிருக்கிறது.

அர்த்த சாஸ்த்ரத்திலும் அந்தந்த தேசாசாரமே தழைக்கும்படியாக அதை ஜயிக்கும் ராஜா

செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. ஜயித்த ராஜா அந்த ராஜ்யத்தின் முடிவான நிர்வாஹத்தைத் தன் கையில் வைத்துக் கொண்ட போதிலும், 'டொமினியன் ஸ்டேடஸ்'போல அதற்கும் ஓரளவு ஸ்வதந்த்ரம் தந்து, அந்த நாட்டவரின் அன்பையும் மதிப்பையும் பெற்ற அத் தேசத்தவன் ஒருவனின் பொறுப்பிலேயே விட வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. மநு இன்னம் ஒரு படி மேலே போய் பழைய ராஜாவின் பந்துக்களிடமே இந்தப் பொறுப்பைத் தரவேண்டுமென்கிறார். அநேக ஸந்தர்ப்பங்களில், தோற்ற ராஜாவிடமேயோ அல்லது அவன் யுத்தத்தில் செத்துப் போயிருந்தால் அவனுடைய பிள்ளையிடமேயோ இந்தப் பரிபாலனப் பொறுப்பு கொடுக்கப்பட்டதுண்டு. ராமர் வாலியைக் கொன்றபின் ஸுக்ரீவனை ராஜாவாக்கினாலும், வாலியின் பிள்ளையான அங்கதனுக்கு யுவராஜ அந்தஸ்து தந்திருக்கிறார்;லங்கையை ஜயித்தவுடனோ அதைத் தான் ஆளாமல் விபீஷணனுக்குப் பட்டம் கட்டியிருக்கிறார்.

தோல்வியடைந்த ராஜ்யம் ஜயித்த ராஜாவுக்குக் கப்பம் என்று வருஷா வருஷம் ஒரு தொகை செலுத்த வேண்டும். தன் ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொள்வதற்காக அது யுத்தத்துக்குப் போகப்படாது. Defence, Foreign Affairs (பாதுகாப்பு, வெளி வியவஹாரம்) என்ற இரண்டிலும் அது ஜயித்த ராஜ்யத்துக்கு முற்றிலும் அடங்கியே நடக்க வேண்டும். மற்றபடி internal administration என்கிற உள்நாட்டு நிர்வாஹத்தில் அநேக விஷயங்களில் அது ஸ்வதந்திரமாக நடக்கலாம்;பெரிய, முக்யமான ஸமாசாரங்களில் மாத்திரம் ஜயித்த ராஜாவுக்குச் சொல்லி விட்டு அவனுடைய அங்கீகாரம் பெற்றே நடவடிக்கை எடுக்கணும். நம் தேசம் தவிர மற்ற தேசங்களில் ஜயித்தவர்கள் தோற்றவர்களிடம் இவ்வளவு 'ஜெனர'லாக நடப்பதை எதிர்பார்க்க முடியாது.

---

* யுத்தம் செய்வதில் ஏற்பட்டுள்ள இந்த தார்மிக வரம்புகளைப் பற்றி "தநுர்வேதம்"என்ற உரையில் காண்க.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**அந்நியக் கொள்கைகள் ஆறு**

அந்நிய ராஜ்யங்களிடம் ஒரு ராஜா கடைப்பிடிக்க வேண்டிய ஆறு கொள்கைகளை 'ஷாட்குண்யம்'என்று அர்த்த சாஸ்திரங்கள் வகுத்துக் கொடுத்திருக்கின்றன. ஸந்தி, விக்ரஹம், யானம், ஸ்தானம் (அல்லது ஆஸனம்), ஸம்ச்ரயம், த்வைதீபாவம் என்பனவே இந்த ஷட்குணங்கள். 'ஸந்தி'என்பது ஸ்நேஹ உடன்படிக்கை, ஸமாதான உடன்படிக்கை செய்துகொண்டு ஒற்றுமையாயிருப்பது. ஸந்தி செய்துகொண்டுள்ள ராஜ்யங்களைத் தற்காலத்தில் allies (நேச நாடுகள்) என்கிறோம். 'விக்ரஹம்'என்பது விரோத நாடாகவே கருதி யுத்தம் செய்வது. 'ஸ்தானம்'அல்லது 'ஆஸனம்'என்பது இந்தக் காலத்தில் சொல்கிற neutrality (நடுநிலைமை), non-alignment (கூட்டுச்சேராமை) என்று சொல்லலாம். 'யானம்'என்பது Cold-war மாதிரி - அதாவது, ஆக்சுவலாக யுத்தப் முஸ்தீபுகள் மட்டும் பண்ணிக் காண்பித்துக் கொண்டிருப்பது, 'ஸம்ச்ரயம்'என்பது நம்மைவிட பலிஷ்டனான இன்னொரு ராஜாவிடம் ஸ்நேஹ பாவத்துடன் போய், அவனை ரக்ஷையாகக் கொண்டு வேறொரு சத்ரு ராஜாவை எதிர்ப்பது. First World War-ல் இப்படித்தான் ஆஸ்ட்ரியா ஜெர்மனியையும், வேறேதோ ஒரு சின்ன தேசம்*ரஷ்யாவையும் ஸம்ச்ரயமாக அடைய அந்த இரண்டு சிறிய ராஜ்யங்களின் சண்டை பெரிய உலக யுத்தமாகவே ரூபமெடுத்து விட்டது. ' **த்வைதீபாவம்** ' என்பது ஒரு ராஜ்யத்தோடு யுத்தம் போடுவதற்காகவே, அதற்குப் பக்கத்திலுள்ள ராஜ்யம் அதோடு சேர்ந்துவிடாமல், முன்கூட்டி அதைத் தனக்கே ஸ்நேஹிதமாக ஆக்கிக் கொண்டு ஸமாதான உடன்படிக்கை செய்து கொள்வது. ஸ்நேஹத்துக்காக ஸ்நேஹமில்லாமல் காரியத்துக்காக ஸ்நேஹம். டிப்ளமஸி (ராஜதந்த்ரம்)

என்பது டூப்ளிஸிடியாகவே (இரண்டு விதமான ஸ்டான்டர்டுகளில் ஏமாற்றுதலாகச் செய்வதாகவே) ஆகிவிடுவதற்குத்தான் ' **த்வைதீபாவம்** ' என்று பெயர் கொடுத்திருக்கிறது என்றும் சொல்கிறார்கள். முன்னேயே சொன்னாற்போல டூப்ளஸிடி என்பது தர்ம சாஸ்திரத்துக்கு ஸம்மதமில்லாமல் அர்த்த சாஸ்திரம் மட்டுமே சற்று அநுமதித்துள்ள விஷயந்தான். அதனால் இதற்கு நாம் மதிப்புக் கொடுக்க வேண்டியதில்லை.

---

* ஸெர்பியா

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**அரசாங்கத்தின் அங்கங்கள்**

'ஷாட்குண்யம்'என்று 'ஃபாரின் பாலிஸி'யின் ஆறு அம்சங்களைச் சொல்கிறபோது இதெல்லாவற்றுக்கும் அடிப்படையான ராஜ்யம் என்பதற்கே உள்ள 'ஸப்தாங்கம் (அல்லது 'ஸ்ப்த ப்ரக்ருதி') என்கிற ஏழு அம்சங்களைப் பற்றி நினைவு வருகிறது. ஸ்வாமி, அமாத்ய, ஸுஹ்ருத், கோச, ராஷ்ட்ர, துர்க, பல - என்பவையே இந்த ஏழு. 'ஸ்வாமி'என்றால் ராஜா. உடைமையாளன் என்பதுதான் ஸ்வாமி என்பதற்கு நேர் அர்த்தம். ராஜ்யத்தை தனதாக உடையவனாதலால் ராஜா ஸ்வாமி எனப்படுகிறான். 'அமாத்யா'என்றால் மந்திரி. 'ஸுஹ்ருத்'என்றால் நண்பர்;அதாவது நேச நாடுகள். 'கோச'என்பது கஜானா;பொன், மணி மட்டுமின்றி தேசத்தின் விளைச்சலையும் இதில் சேர்த்துக் கொள்ளலாம். 'ராஷ்ட்ர ம்'என்பதுதான் நாடு - அதாவது குடிமகள். 'துர்க'என்றால் கோட்டை. 'பல'என்பது ராணுவம்.

திருவள்ளுவர் இதில் ஸ்வாமி எனப்படும் ராஜாவை மத்தியில் வைத்து, அவனுக்கு இருக்க வேண்டிய ஆறு அங்கங்களாகப் பாக்கி ஆறையும் 'பொருட்பால்'முதல் குறளிலேயே சொல்லியிருக்கிறார்.

**படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்**

**உடையான் அரசருள் ஏறு.**

'உடையான்'என்பதுதான் உடைமையாளனான ஸ்வாமி. ஸரியாக இப்படிப் பதப் பிரயோகம் செய்திருக்கிறார். 'படை'என்பது பலம் என்கிற ஸைன்யம். 'படை பலம்'என்று சேர்த்தே சொல்கிறோம். 'குடி'என்பதே 'ராஷ்ட்ரம்'என்னும் மக்கள். 'கூழ்'என்பது விளை பொருள் அதாவது கோசம். 'அமைச்சு'தான் அமாத்யர். 'நட்பு'என்பது ஸுஹ்ருத். 'அரண்'தான் துர்கம். பாரத நாகரிகமாக தர்ம அர்த்த சாஸ்த்ரங்களில் சொல்லியிருப்பதைத்தான் தமிழ் மறை தந்தவரும் அக்ஷரத்துக்கு அக்ஷரம் எதிரொலித்துச் சொல்லியிருக்கிறார்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (அர்த்த சாஸ்திரம்)

**ஸாரம் இதுவே**

அர்த்த சாஸ்திரத்தைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வதென்றால் அது மேலெழப் பார்க்கிறபோது 'அர்த்தந்தான் எல்லாவற்றுக்கும் மேலே'என்று சொல்வதாகத் தோன்றினாலும் ஆழப் போகும் போது தர்மத்தை மீறி அர்த்தத்துக்குப் போகப்படாது என்று சொல்வதாகவே தெரியும்.

எடுத்துக்கொண்ட விஷயத்துக்குக் கூடுதலாகவே சிறப்புத் தருவது என்ற வழக்கத்தில்தான் அர்த்தத்தை அர்த்த சாஸ்த்ரத்தில் விசேஷிப்பது. ராஜாவின் போஷணையில்லாவிட்டால்,

தர்மிஷ்டர்களையும் ஞானிகளையும் துஷ்டர்களிடமிருந்து அவன் ரக்ஷிக்காவிட்டால் ஒரு தேசத்தில் தர்மம் ஏது, ஞானம் ஏது?இதைக் காட்டியே, 'பொதுவாக நாலு புருஷார்த்தங்களில் அர்த்தமானது காமத்துக்கு மட்டுமே அநுகூலம் என்று நினைக்கப்பட்டாலும், அதுதான் மற்ற இரண்டான தர்மம், மோக்ஷம் இவற்றுக்கும் ஆதாரம்'என்று சாணக்யன் கூறுகிறார். மஹாபாரதத்தில் கூட க்ருஹஸ்தன் பிக்ஷை போட்டுத்தான் ப்ரம்மசாரியும், ஸந்நியாஸியும் வாழவேண்டியிருப்பதால் நாலு ஆச்ரமங்களில் க்ருஹஸ்தாச்ரமந்தான் பிரதானம் என்று இருக்கிறது. ஆனால் இப்படிச் சொன்னதாலேயே பிரம்மசர்யமும் ஸந்நியாஸமும் நிச்சயம் இருக்க வேண்டும் என்று அது அபிப்ராயப்படுவது போல், சாணக்யனும் தர்மம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களை வேண்டுபவரே என்று தெரிகிறது.

அர்த்த சாஸ்த்ரத்தைச் சார்ந்துதான் மற்ற மூன்று புருஷார்த்தங்களும் நிற்க முடிகிறது என்பதைப் போலவே இன்னொன்றும் சொல்லலாம். வேத ரக்ஷணத்திலிருந்து ஆரம்பித்து எல்லா வித்யைகளையும், அவற்றை அப்யஸிப்பவர்களையும் போதிக்கிறவர்களையும் ராஜாங்கம்தான் ரக்ஷித்து வளர்த்துத் தந்ததால் நம் ஸநாதன ஸமயத்தின் ஆதாரமான பதிநாலு தர்மப் பிராமணங்களுக்கும் அர்த்த சாஸ்திரம்தான் கவசம் என்றாகிறது.

பதினெட்டு வித்யா ஸ்தானங்கள் என்கிறபோது, நாலு உபவேதங்களில் இதைத் தவிர உள்ள ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வ வேதம் ஆகியவற்றுக்கும் ராஜாங்க ஆதரவு அவசியமென்பது மட்டுமின்றி ராஜாவோடேயே இந்த மூன்றுக்கும் நெருங்கின ஸம்பந்தமிருக்கிறது. யுத்தத்திலே அம்படி, விஷக் காயங்கள் முதலியன ஏற்படுமாதலால் இவற்றை குணப்படுத்துவதற்காக ராஜாவுக்கு ஆயுர்வேத ஞானம் இருக்க வேண்டும். மூலிகை வைத்யம், ஸர்ஜரி ஆகியன ராஜாவுக்குத் தெரிய வேண்டும். உள்ளே போய் உடைந்துபோன ஆயுத முனைகளை எடுப்பதற்கென்றே 'சல்ய சாஸ்த்ரம்'என்று ஆயுர்வேதத்தில் ஒரு பிரிவு இருக்கிறது. தநுர்வேதம் அவனுக்காகவேதான் முக்யமாய் ஏற்பட்டது. Parton of Arts-ஆக (கலைகளின் போஷனாக) இருக்க வேண்டியதும் ராஜாவின் கடமை. இதனால் காந்தர்வ வித்யையில் அவனுக்கு ஸம்பந்தம் வந்து விடுகிறது. போஜன், விக்ரமாதித்யன், மஹேந்திரவர்ம பல்லவன், கிருஷ்ணதேவராயர், ஸமீப காலத்துச் சின்ன ஸம்ஸ்தானாதிபதிகளான எட்டையபுரம் ராஜா போன்றவர்கள் உள்பட எல்லா ராஜாக்களும் கவிகளையும், சில்பிகளையும் ஸங்கீத-நாட்ய வித்வான்கள் விதுஷிகளையும் நிரம்ப ஆதரித்தவர்களாகவே இருந்திருக்கிறார்கள். தாங்களும்கூட அவர்களில் ஒருவராக இருந்திருக்கிறார்கள்.

அர்ஜுனன் விராட தேசத்தில் நருத்யாசாரியனாக இருந்திருக்கிறான். உதயனன் வீணை வாசித்து மதயானையை அடக்கியிருக்கிறான். இதிஹாஸ, புராண, காவ்யங்களில் இப்படி எத்தனையோ!ராமருடைய கல்யாண குணங்களை (அயோத்யா காண்ட ஆரம்பத்தில்) விவரித்துக்கொண்டே வரும்போது, ஸங்கீதம் முதலான காந்தர்வ வித்யைகளில் அவர் லோகத்திலேயே முதல்வராக நிற்கிறவர் என்று சொல்லியிருக்கிறது: **காந்தர்வே ச புவி ச்ரேஷ்ட :**

சரித்ர காலத்துக்கு வந்தாலும் மஹேந்திரவர்மா 'சித்திரக்காரப் புலி'என்றே ஒரு பட்டப் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறான். 'மத்த விலாஸ ப்ரஹஸனம்'என்று அவன் ஹாஸ்ய நாடகமும் எழுதியிருக்கிறான். குடுமியாமலையில் ஸங்கீதத்தைப் பற்றிய சாஸ்த்ரத்தைக் கல்வெட்டில் பொறித்திருக்கிறான். ராஜ ராஜ சோழன் 'ராஜவித்யாதரன்'என்று ஒரு பட்டம் சூட்டிக் கொண்டிருக்கிறான். (வித்யாதரர்களும் காந்தர்வ ஜாதி போலத்தான்.) தஞ்சாவூர் பெரிய கோவிலில் ஆரியக் கூத்து, தமிழ்க் கூத்து முதலியன நடக்கச் செய்திருக்கிறான். ஸமீப நூற்றாண்டுகளில் காந்தர்வ வித்யை தஞ்சாவூர் சீமையில் பெரிய மறுமலர்சசி பெற்றதற்குக் காரணமே நாயக் ராஜாக்களும் சரபோஜி முதலான மஹாராஷ்டிர ராஜாக்களும் கொடுத்த ஆதரவுதான்.

ராஜாவானவன் ஸகல சாஸ்த்ர பாராங்கதனாக (பாராங்கதன் என்பதற்குக் 'கரை கடந்தவன்'என்று நேர் அர்த்தம்) இருக்கவேண்டுமென்பதில் அவன் காந்தர்வக் கலைகளை நன்றாக அப்யஸித்து, ஆதரித்து வளர்க்க வேண்டுமென்றும் ஏற்பட்டிருந்தது.

அம்பாளும் ஈஸ்வரனும் ஜீவனின் உள்ளே இருக்கும் ஆறு சக்கரங்களில் ஒன்றில் இரட்டை ஹம்ஸங்களாக உள்ளபோது அந்த ஹம்ஸங்கள் ஸம்பாஷிப்பதிலிருந்துதான் பதினெட்டு வித்யா ஸ்தானங்களும் உண்டாயின என்று ஆசார்யாள் "ஸௌந்தர்ய லஹரி"யில் சொல்கிறார்: **யதாலாபாத் அஷ்டாதச குணித வித்யா பரிணதி :***- இது அத்தனையிலும் வல்லவனாக அரசன் இருக்க வேண்டும்.

இப்படியாக அநேக சாஸ்திரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியவனாகவும் அத்தனை சாஸ்திரங்களையும் ரக்ஷித்துத் தர வேண்டியவனாகவும் இருக்கிற அரசனை முக்யமாக உருவாக்குவது அர்த்த சாஸ்திரம்தான் என்பது அதற்குப் பெருமை.

அஸுர குரு சுக்ரர் மட்டுமின்றி தேவகுரு ப்ருஹஸ்பதியும் ஆட்சிமுறை பற்றி சாஸ்த்ரம் செய்திருக்கிறார். நாலு புருஷார்த்தங்களையும் பற்றி பிரம்மாவின் பேரிலேயே உள்ள ரொம்பப் பெரிய நூலில் ராஜநீதியை மட்டும் விசாலாக்ஷர் "வைசாலாக்ஷம்"என்று சுருக்கி, அப்புறம் இதை ப்ருஹஸ்பதி மேலும் சின்ன தாக்கினார் என்று தெரிகிறது. ஸ்ம்ருதிகளில் வரும் ராஜநீதியை மேதாதிதி (மநுஸ்ம்ருதிக்கு விளக்கம் எழுதியவர்), விஜ்ஞானேச்வரர் ('மிதாக்ஷரி'எழுதியவர்) ஆகியவர்கள் மேலும் தெளிவு செய்து இன்றைக்கும் 'லா'வில் மதிக்கப்படுவதாகச் செய்திருக்கிறார்கள்.

முதலில் சொன்னதை மறந்துவிடக் கூடாது. இந்த அர்த்த சாஸ்திரம் தர்ம சாஸ்திரத்துக்கு ஏற்கத்தக்கதாக உள்ளபோதுதான் அதற்குப் பிராமாண்யம் (அதாவது 'அதாரிடி') உண்டு. இதை சாணக்யன் வாயாலேயே கேட்கிறோம். "எங்கேயாவது தர்ம சாஸ்திரத்துக்கும் நடைமுறை வழக்குகளுக்கும் வியவஹாரங்களுக்கும் இடையிலே வேறுபாடு இருந்தால் அரசனானவன் தர்மத்தின் ஆதாரத்தைக் கொண்டே அதன்படி முடிவெடுக்க வேண்டும்"என்று அவர் சொல்கிறார். **தர்மோ ரக்ஷதி ரக்ஷித :**- தர்மத்தை ரக்ஷித்தால், அது அப்படி ரக்ஷிக்கிறவனை ரக்ஷிக்கும். ராஜா தர்மத்தைத் தான் பரிபாலித்து, தர்மத்தினால் தன்னைப் பரிபாலித்துக் கொள்ள வேண்டும் என்பதே முடிவாக அரசனுக்கு ஏற்பட்ட விதி.

---

* ச்லோகம் 38

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**பண்பாடு** *

**கவி சாதுர்யம்**

**வார்த்தை விளையாட்டு**

நாம் தினந்தினமும் உபயோகப்படுத்துகிற வார்த்தைகளையே கவிகளும் உபயோகப்படுத்துகிறார்கள். ஆனாலும் நம்முடைய பேச்சிலே கிடைக்காத அலாதியான நயம் அவர்களுடைய எழுத்திலே உண்டாகிவிடுகிறது. நவ ரஸங்களிலும், உயர்ந்த பக்தி பாவங்களிலும் உத்தமமான எண்ணங்களிலும் நம்மைக் கொண்டுபோய்ச் சொருகி ஆனந்தத்தை உண்டாக்குகிற சக்தி கவிகளுக்கு இருக்கிறது. அலங்காரம் (இதைத் தமிழில் அணி என்று சொல்வார்கள்;அப்படி அலங்காரம்) பண்ணினால் எப்படி ஸுமாராக இருக்கிற பெண் கூட அழகாக ஆகிவிடுகிறாளோ அதே மாதிரி இந்தக் கவிகள் நாம் ஸாதாரணமாக உப்புச் சப்பில்லாமல் உபயோகிக்கிற வார்த்தைகளையும் கருத்துக்களையும் தங்களுடைய சாதுர்யத்தால் அலங்காரம் பண்ணி அழகான கவிதைகளாக, காவியங்களாக ஆக்கிவிடுகிறார்கள். உவமை, உள்ளார்த்தம் த்வனிக்கச் சொல்லாமல் சொல்வது, இரண்டு அர்த்தத்தில் ச்லேஷை (சிலேடை) பண்ணுவது என்பதாகப் பல நகைகளைப் போட்டு, லளிதமான சப்தங்களை உடைய வார்த்தைகளால் தலை வாரி, புடவை கட்டி கவிதைக்

கன்னிகையை நல்ல ஸௌந்தர்யவதியாகச் செய்துவிடுகிறார்கள்!அதனால் கவிதையை அழகுபடுத்தும் விதிகளைத் தரும் சாஸ்த்ரத்துக்கு 'அலங்கார சாஸ்த்ரம்'என்றே பெயர். தமிழிலும் உவமை அணி, சிலேடை அணி என்றெல்லாம் 'அணி'என்றே சொல்கிறோம்!தமிழில் உள்ள அணிநூலுக்கு "தண்டியலங்காரம்"என்றே பேர். தண்டி என்பவர் ஆயிரத்து இருநூறு வருஷத்துக்கு முந்தி காஞ்சீபுரத்தில் இருந்த ஸம்ஸ்கருதக் கவி;கவிதா சாஸ்த்ரத்தைப்பற்றி ஸம்ஸ்க்ருதத்தில் "காவ்யாதர்சம்"என்ற புஸ்தகம் எழுதியிருக்கிறார். அந்தப் புஸ்தகத்தை base பண்ணி, பெரும்பாலும் அதையே தழுவி எண்ணூறு வருஷத்துக்கு முன்பு தமிழ் நாட்டில் ஒருவர் எழுதியதுதான் தண்டியலங்காரம்.

கவிகள் அழகுபடுத்துவதில் இரண்டு தினுஸு. அபிப்ராயங்களின் உயர்வினால், அவற்றை வெளியிடும் வார்த்தை நயத்தால் நம் நெஞ்சைத் தொடும்படி, உள்ளத்தை உருக்கும்படி கவிதை பண்ணி அதனால் படிக்கிறவனும் உத்தமமான உணர்ச்சிகளைப் பெறும்படியாகவும், உயர்ந்த கருத்துக்களைச் சிந்திக்கும்படியாகவும் செய்வது ஒன்று. இன்னொன்று வார்த்தைகளை, சப்தங்களை விசித்ரமாகவும் விநோதமாகவும் சொல்லி விளையாட்டுப் பண்ணி நாம் அதில் பிரமித்து, குதூஹலித்து, ஸந்தோஷப்படும்படி செய்வது. இதிலே மனஸை உருக்கும்படியாகவோ அறிவில் நமக்கு சாச்வதமாக உயர்வு தரும்படியாகவோ எதுவும் இருக்காது. ஆனாலும் ஒரு அபிப்ராயம் நம் மனஸில் நன்றாகப் பதிவதற்கு இது உதவுகிறது. அதோடுகூட, வார்த்தையை வைத்துக்கொண்டு கவிகள் என்ன வித்தை பண்ணியிருக்கிறார்கள் என்று பார்த்து ரஸிக்கிறபோது, அநேக வேடிக்கை வித்தைகளைப் பார்த்து நம்முடைய வாழ்க்கைக் கஷ்டங்களை மறந்து ஆனந்தப்படுவது போன்ற ஒரு இன்பம் ஏற்படுகிறது.

அதனால் மஹாகவிகளும்கூட அபூர்வமாக அங்கங்கே இப்படிப்பட்ட வார்த்தை விளையாட்டுகளை - Word Play என்றே இங்கிலீஷிலும் சொல்வதைச் - செய்திருக்கிறார்கள். ஒரு அர்த்தமும் ஸரியாகத் தெரிவிக்கத் தெரியாமல் கன்னாபின்னா என்று நாம் வார்த்தைகளைச் சொல்கிறோமென்றால், அதே வார்த்தைகளை அவர்கள் நூதன நூதனமாக அர்த்தம் கொடுக்கும்படிச் சொல்வதைப் பாராட்டத்தானே வேண்டியிருக்கிறது?அதனால் இவற்றுக்குச் 'சித்ரகவிதை'என்று பேர் கொடுத்து வைத்திருக்கிறது. சித்ர கவிதையில் வார்த்தை விளையாட்டால் அர்த்தத்தில் சாதுர்யம் செய்வதை அர்த்த-சித்ரமென்றும், சப்தஜாலம் மட்டும் செய்வதை சப்த-சித்ரமென்றும் சொல்வார்கள்.

---

* பண்பாட்டைக் குறித்த விஷயங்கள் அநேக உரைகளில் விரவி வந்துள்ளன. குறிப்பாக "காந்தர்வ வேதம்"எனும் உரையை இப்பகுதியிலும் கொள்ளலாம்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**கன்னா பின்னா**

'கன்னா பின்னா'என்பதையே ஒரு புலவர் நூதன அர்த்தம் கொடுத்து அழகு பண்ணியிருக்கிறார்.

அவர் ராஜஸபையில் இருந்தவராம். கவிவாணர்களுக்கு ராஜா யதேஷ்டமாகப் பொன்னும் பொருளும் கொடுப்பானாம். அதைப் பார்த்து ஒரு பாமரனுக்கு நாமும் ஒரு கவி பண்ணி ராஜாவுக்கு அர்ப்பணம் செய்து ஸம்பாவனை வாங்க மாட்டோமா என்று இருந்ததாம். நான் சொன்ன அந்தப் புலவரிடம் போய், "எனக்காக நீங்கள் ஒரு கவிதை எழுதிக் கொடுங்கள், அதை ராஜாவுக்கு என்னுடையதாக நான் அர்ப்பணம் செய்து பிழைத்துப் போகிறேன்"என்று கேட்டுக்கொண்டானாம்.

போனால் போகிறது என்று பல கவிகள் இம்மாதிரிப் பாமர ஜனங்களுக்காகவும் எழுதிக் கொடுத்திருக்கிறார்கள். காளிதாஸன்கூட இப்படி உபகரித்ததாகக் கதைகள் உண்டு.

இந்தக் கவியும் அப்படி நல்ல மனஸுள்ளவர். ஆனாலும் இவர் அந்த ஆளுக்குக் கவிதை எழுதித் தராமல், என்ன செய்தாரென்றால், "நீ உன் வாயில் என்ன வந்தாலும் அதை ராஜாவுக்கு முன்னாடி சொல்லு. கன்னா பின்னா என்று உளறிக் கொட்டினாலும் பரவாயில்லை, நான் அதற்கு மிகவும் உயர்ந்த அர்த்தம் இருப்பதாக வியாக்யானம் செய்து, உனக்கு ராஜா நல்ல ஸம்பாவனை கொடுக்கும்படிப் பண்ணுகிறேன்"என்றாராம்.

ராஜஸபைக்கு அந்த ஆள் வந்தான். "கன்னா பின்னா"என்ற இரண்டு வார்த்தைகளையே கிளிப்பிள்ளை போலச் சொன்னான்.

ஸதஸிலே இப்படி ஒருத்தன் பேத்துகிறானே என்று ராஜாவுக்கு மஹாகோபம் வந்துவிட்டது.

அவனைப் புலவர் சட்டென்று ஸமாதானம் பண்ணினார். "இவர் மஹா பெரிய வித்வான். உங்களை எத்தனை உயர்த்தி ஸ்தோத்ரம் செய்திருக்கிறார் தெரியுமா?'கன்னா'என்றால் 'கர்ணா'என்று உங்களைக் கூப்பிடுவதாக அர்த்தம். ('கர்ணன்'என்பது 'கன்னன்'என்றும் ஆகும். கர்நாடகம் என்பதைக் கன்னடம் என்கிறோமல்லவா?அந்த மாதிரி) தான தர்மம் செய்வதில் நீங்கள் கர்ணனுக்கு ஸமமான வள்ளல் என்பதாலேயே 'கன்னா'என்று கூப்பிடுகிறார். 'பின்னா'என்றால் 'பின்னால் வந்தவரே'என்று அர்த்தம். கர்ணனுக்குப் பின்னால் பிறந்தது யார்?தர்மங்களுக்கெல்லாம் உறைவிடமாக, ஸத்வ ஸம்பன்னராக இருந்த தர்மபுத்ரர் அல்லவா?அந்த தர்மபுத்ரனுக்கு நீங்கள் நிகரானவர் என்று சொல்கிறார்"என்று வியாக்யானம் பண்ணினாராம்.

ராஜா ஸந்தோஷப்பட்டு அந்த ஆளுக்கு அக்ஷரலக்ஷம் கொடுத்தானாம்.

உயர்ந்ததான ஒரு ரஸானுபவத்தின் பேரில் இல்லாமல் வெறும் புத்திசாதுர்யத்தில் பிறப்பதுதான் இது மாதிரியான வார்த்தை விளையாட்டுக்கள் என்றாலும், இவற்றுக்கு உள்ள ஆகர்ஷணத்தால் காளிதாஸன், மாகன், காளமேகம் போன்ற மஹாகவிகள் மட்டுமின்றி, மஹர்ஷிகளாக மஹாஞானிகளாக பக்த சிகாமணிகளாக இருந்து கொண்டே காவ்யங்களை, ஸ்தோத்ரங்களை அநுக்ரஹித்திருக்கும் வியாஸாசார்யாள், நம்முடைய (சங்கர) ஆசார்யாள், அப்பைய தீக்ஷிதர், ஞானஸம்பந்தர் முதலியவர்களும் எப்போதாவது கொஞ்சம் இப்படி விளையாடியிருக்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**பாரத குட்டுகளில் ஒன்று**

வியாஸாசார்யாளில் ஆரம்பிக்கிறேன். பிள்ளை யாரில்தானே ஆரம்பிக்க வேண்டும்?அதனால், "மஹா பாரதம்"பண்ணும்போது பிள்ளையாரையே கொஞ்சம் பிரமித்து யோசிக்குமாறு பண்ணுவதற்காக வ்யாஸர் செய்த 'பாரத குட்டு' ஸ்லோகமொன்றில் ஆரம்பிக்கிறேன்*.

பாரத ஸ்லோகங்களைப் பண்ணி வ்யாஸர் சொல்லிக் கொண்டே போகப் பிள்ளையார் மேருமலைச் சிகரத்தில் அதைத் தம் தந்தத்தால் எழுதிக்கொண்டே போனார். 'டிக்டேட்'பண்ணின வியாஸருக்குத்தான் அலுப்பும் சலுப்புமாகிவிட்டது - பிள்ளையார் எழுதுகிற ஸ்பீடுக்கு ஈடு கொடுக்க முடியாமல்!ஸாதாரணமாக ஒருத்தர் வாயால் சொல்லிக்கொண்டு போகிற அதே வேகத்தில் அதை எழுத முடியாது. அதற்காகத்தான் இப்போது பேசினது பேசினபடி verbatim report கொடுப்பதற்காக 'ஷார்ட் ஹான்ட்'கண்டுபிடித்திருக்கிறார்கள். இதற்கு நேர்மாறாக விக்னேஸ்வருடைய பிரபாவம்

இருக்கிறது!அவர் எழுதுகிற ஸ்பீடுக்குச் சரியாக ஸாக்ஷாத் வியாஸ மஹரிஷியாலேயே ஸ்லோகங்களைக் கவனம் பண்ண முடியவில்லை. முதலில் அவர் பிள்ளையாரிடம் பெரிசாகக் 'கண்டிஷன்'போட்டார். "நான் பாட்டுக்கு கிறு கிறு என்று ஸ்லோகங்களைப் பண்ணிக்கொண்டே போவேன். நீ மெதுவாக எழுதினால் நான் நிறுத்தி நிதானமாகச் சொல்லும்படி ஆகிவிடும். அப்படிச் சொன்னால் என் impiration flow (பிரதிபா சக்தியின் பொழிவு) கெட்டுப் போய்விடும். ஆகையால் நான் சொல்கிற வேகத்துக்கு ஸமமான வேகத்தில் உன்னால் எழுத முடிந்தாலே சொல்லுவேன்"என்றார். இப்படி அவர் சொன்னவுடன் பிள்ளையாரும் பதிலுக்குச் 'சாலஞ்ஜ்'பண்ணுகிற மாதிரி, "நான் எழுத ஆரம்பித்தேனானால் என் கை நிற்காமல் அது பாட்டுக்கு விரு விரு என்று ஓடிக்கொண்டே இருக்கும். நான் இப்படி எழுதுவது க்ஷணங்கூட நிற்காதபடி நீர் ஸ்லோகத்தை மடமட என்று பண்ணிக்கொண்டே போவீரா?"என்றார். "முடியும்"என்று வியாஸர் சொன்னார்.

இப்படி இவர்கள் பரஸ்பரம் 'சாலஞ்ஜ்'பண்ணிக் கொண்டு, வியாஸர் மடை திறந்த மாதிரி மஹாபாரத ஸ்லோகங்களைப் பண்ணிச் சொல்லிக்கொண்டே போக, மஹா கணபதி அதே வேகத்தில் அவற்றை எழுதிக்கொண்டு போனார். ஒரு ஆயிரம் ஸ்லோகம் ஆனவுடன் வியாஸருக்குத்தான் மூச்சு முட்டியது. ஓட்டப் பந்தயத்தில் மெதுவாகப் பார்வதி பரமேஸ்வராளைப் பிரதக்ஷிணம் பண்ணியே ஸுப்ரம்மண்ய ஸ்வாமியை ஜயித்த பிள்ளையார், இந்தப் பந்தயத்திலே எழுத்தை வேக வேகமாய் ஓட்டி வியாஸரை ஜயித்துவிடுகிற கட்டத்துக்கு வந்துவிட்டார். பிள்ளையார் ஜயித்து விட்டால் அப்புறம் எழுதமாட்டார். அவரைத் தவிர யார் வியாஸருக்கு ஈடு கொடுத்து எழுத முடியும்?அதனால் அவரையே தமக்கு 'ரைட்டர்'ஆக இருத்திக் கொள்ள வியாஸர் ஒரு யுக்தி பண்ணினார். "நீ வெறுமே மெகானிகலாக எழுதிக் கொண்டு போனால் போதாது. ஸ்லோகங்களின் அர்த்தத்தை நன்றாக மனஸில் வாங்கிக் கொண்டு, நான் கேட்கிறபோது 'எக்ஸ்ப்ளெயின்'பண்ண வேண்டும்"என்றார். ஞான ஸ்வரூபமான பிள்ளையாரும், "ஆஹா, அப்படியே"என்றார். இதைப் பிரயோஜனப்படுத்திக் கொண்டு வியாஸர் என்ன பண்ணினாரென்றால் ஒவ்வொரு ஆயிரம் ஸ்லோகம் ஆகி அவருக்கு ஆயாஸமாகிக் கொஞ்சம் ஆச்வாஸம் பண்ணிக்கொள்ள வேண்டி வரும்போதெல்லாம், ரொம்பவும் சிக்கலாகப் பதங்களைப் போட்டு பின்னி ஒரு ஸ்லோகத்தைப் பண்ணிவிடுவார்.

அந்த ஸ்லோகத்தை மேலெழுந்தவாரியாகப் பார்க்கிறபோது, பதம் பதமாக அர்த்தம் புரிந்தாலும், சேர்த்துப் பார்த்தால் ஒன்றும் அர்த்தமே ஆகாமல் ஒரே குழப்பமாயிருக்கும். வியாஸர் அந்தப் பதங்களை எப்படி ஸந்தி பிரித்துச் சொல்லுகிறாரோ, அப்படியே வைத்துக் கொள்ளாமல் எழுத்துக்களை முன் பின்னாக மாற்றி வேறு விதத்தில் பதங்களை அமைத்துக் கொண்டால்தான் அர்த்தம் புரியும். இந்த மாதிரி ஆயிரம் ஸ்லோகத்துக்கு ஒன்றை அவர் கடினமாக, 'காம்ப்ளிகேடட்'-ஆக ரொம்பவும் வார்த்தை வார்த்தை விளையாட்டுடன் சொன்னவுடன் கணபதி அரை க்ஷணம் யோசித்துப் பார்த்து புரிந்து கொள்வார் அந்த அரை க்ஷணத்தில் வேத வியாஸ பகவானும் ஆச்வாஸமடைந்து மேற்கொண்டு கவனம் பண்ணச் சக்தி பெற்றுவிடுவார்.

இதனால் மஹாபாரதத்தில் ஆயிரத்துக்கு ஒரு ஸ்லோகம் நமக்கெல்லாம் லேசில் அர்த்தம் புரியாமல் மண்டையை உடைக்கும். இவற்றுக்கு 'பாரத குட்டு'என்றே பேர்!லக்ஷம் கிரந்தம் (ஸ்லோகம்) கொண்ட பாரதத்தில் இப்படி நூறு 'குட்டுக்கள்'இருக்கின்றன. அதில் ஒன்றே ஒன்று - ஸாம்பிளுக்கு சொல்கிறேன்.

பஞ்ச பாண்டவர்கள் விராட தேசத்தில் மாறு வேஷம் போட்டுக்கொண்டு அஜ்ஞாதவாஸம் செய்கிற ஸமயம். ஒரு வருஷம் இப்படித் தங்கள் அடையாளம் தெரியாதபடி அவர்கள் பூர்த்தி செய்துவிட்டால், கௌரவர்கள் அவர்களுடைய ராஜ்யத்தை (முன்பு சூதாட்டத்தின் போது பாண்டவர்கள் இழந்த ராஜ்யத்தை) திருப்பிக் கொடுத்து விடவேண்டும் என்பது ஒப்பந்தம். இப்போது பன்னிரண்டு வருஷ வனவாஸம் முடிந்து, அப்புறம் ஒரு வருஷ அஜ்ஞாத வாஸமும் பூர்த்தியாகிற கட்டம் வந்துவிட்டது. எப்படியாவது அவர்களை அதற்குள் அடையாள கண்டு பிடித்து மீண்டும் அவர்கள் ராஜ்யம் பெறமுடியாதபடிப் பண்ணி விடவேண்டும் என்று துர்யோதனன் நினைத்தான். நாலா திசைகளிலும் அவன்

வேவுகாரர்களை அனுப்பி 'ஸ்பை'பண்ணினதில், விராட நகரத்தில்தான் பஞ்ச பாண்டவர்கள் இருக்கக் கூடும் என்று தடயம் கிடைத்தது. ஒளிந்து கொண்டிருப்பவர்களை எப்படி அம்பலப்படுத்துவது என்று யோசித்து ஒரு சூழ்ச்சி பண்ணினான். பஞ்ச பாண்டவர்களுடைய விச்வாஸ குணம் துரியோதனனுக்கு நன்றாகத் தெரியும். அதனால் விராட ராஜாவுக்குத் தாங்கள் ஏதாவது ஹிம்ஸை கொடுத்தால், அங்கே அஜ்ஞாதவாஸம் செய்யும் பாண்டவர்கள் ராஜாவை ரக்ஷிக்க வருவார்கள்;அப்போது அம்பலப்படுத்தி, மறுபடி அவர்களுக்கு ராஜ்யமில்லாமல் செய்து விடலாம் என்று நினைத்தான். இதன் மேல் கௌரவ ஸேனை விராட ராஜ்ய எல்லைக்குள் வந்து அங்கே இருந்த பசு மந்தைகளையெல்லாம் பிடித்து ஓட்டிக்கொண்டு போக ஆரம்பித்தது. பாரதத்தில் இந்த கட்டத்துக்கு 'கோஷ யாத்ரா'என்று பெயர். 'கோஷம்'என்றால் இடைச்சேரி. இது விராட பர்வத்தில் வருகிறது.

இப்படி துர்யோதனாதியர் மாடு பிடித்தபோது அவர்களோடு யுத்தம் செய்வதற்காக விராட ராஜ குமாரனான உத்தர குமாரனை பிருஹந்நளை என்ற ஸ்திரீ வேஷத்திலிருந்த அர்ஜுனன் தேரோட்டி அழைத்துக் கொண்டு வருகிறான். யுத்த பூமிக்கு வருவதற்கு முன் பெரிசாக வீரப் பிரதாபம் பேசிய உத்தரகுமாரன் பீஷ்ம-த்ரோணாதியரை பார்த்தவுடனேயே தொடை நடுங்கிக் கொண்டு, "யுத்தமே வேண்டாம்;திரும்பிப் போய் விடலாம்"என்று ஆரம்பித்துவிட்டான். அப்போது அர்ஜுனன் வேஷத்திலேயே, பாணங்களைப் போட ஆரம்பித்தான்.

"இத்தனை ஆச்சர்யமாக சர வர்ஷம் பொழிகிற இந்தப் பெண் யார்?"என்று பீஷ்மர் அதிசயப்படுகிறார். அப்போது அவரிடம் அந்தப் பெண் யார் என்பதைப் பற்றி த்ரோணர் பதில் சொல்கிறார். இந்த பதில் 'பாரத குட்டு'க்களில் ஒன்றாகும்.

அர்ஜுனன் எப்படி வெளிப்படத் தெரியாமல் அஜ்ஞாதமாக இருந்தானோ, அப்படியே அவனைப் பற்றிச் சொல்லும் த்ரோண வசனமான ஸ்லோகத்துக்கும் அர்த்தம் வெளிப்படத்தெரியாமல் புதிர் மாதிரி இருக்கிறது அந்த ஸ்லோகம்:

நதீஜலம் கேசவநாரி கேது : நகாஹ்வயோ நாம நகாரிஸூநு :*

ஏஷாங்கநா வேஷதர : கிரீடி ஜித்வா வயம் நேஷ்யதி சாத்ய காவ :**

'நதீ ஜலம்'என்றால் 'ஆற்றுத்தண்ணீர்'. 'கேசவநாரி கேது'என்றால் 'கேசவனுடைய ஸ்த்ரீயின் அடையாளம்'. 'நகம்'என்றால் 'மலை'அல்லது 'மரம்'. 'நகாஹ்வயோ நாம'என்பதற்கு 'நகம் என்று பேர் உள்ளவன்'என்று அர்த்தம். 'நகாரிஸூநு:'என்றால் 'நகத்தின் விரோதிக்குப் பிள்ளை'. 'ஏஷாங்கனா வேஷதர:கிரீடி'என்பதில் 'ஏஷ அங்கனா'என்பது 'ஏஷாங்கனா'ஆகியிருக்கிறது. 'ஏஷ அங்கனா வேஷதர:கிரீடி'என்றால் 'கிரீடம் வைத்துக் கொண்டிருக்கிற இந்தப் பெண் வேஷக்காரன்'என்று அர்த்தம். 'ஜித்வா என்றால் ஜயித்து. 'வயம்'என்றால் 'நாங்கள்'. 'நேஷ்யதி'என்றால் 'கொண்டு போகிறான்'. 'ச அத்ய'என்பது 'சாத்ய'என்றாயிருக்கிறது. 'ச'என்றால் 'மேலும்'. 'அத்ய'என்றால் 'இப்போது'. 'காவ':என்றால் 'பசுக்கள்'.

இப்படித் தனித்தனியாக வார்த்தைகளுக்கு அர்த்தம் இருந்தாலும், எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் ஒரு அர்த்தமும் ஏற்படமாட்டேன் என்கிறதே!எல்லா வார்த்தைகளையும் சேர்த்தால் என்ன ஆகிறது?"கிரீடம் வைத்துக் கொண்டிருக்கிற இந்தப் பெண் வேஷக்காரன் ஆற்றுத் தண்ணீர்;கேசவனுடைய ஸ்திரீயின் அடையாளம்;மலை அல்லது மரம் என்று பேர் உள்ளவன்;மலை அல்லது மரத்துக்கு சத்ருவின் பிள்ளை;நாங்கள் ஜயித்து, மேலும் பசுக்கள் கொண்டு போகிறான்"என்று ஒரே அபத்தமாக இருக்கிறது. நாட்டியம் சொல்லிக் கொடுக்கும் பெண்ணான பிருஹந்நளை கிரீடமே வைத்துக் கொள்ளததால் 'கிரீடி'என்பது தப்பு. அதுவுமில்லாமல் 'கிரீடி'என்பது ஆண்பால். 'கிரீடினி'என்றிருந்தால்தான் பெண்ணைக் குறிக்கும். அர்த்த ரீதியிலும் தப்பாக, வியாகரண ரீதியிலும் தப்பாகக் கன்னா பின்னா என்று ஸ்லோகம் இருக்கிறது.

இப்படிச் சொன்ன பின்னலாக இருக்கிற ஸ்லோகத்தை நன்றாக யோசித்து அக்கு வேறு ஆணிவேறாக அக்ஷரங்களைப் பிரித்து, வேறு தினுஸில் பதச் சேர்க்கை செய்தால் அர்த்தம் ஏற்பட்டுவிடும். மஹாபுத்திமான்கள் மட்டுமே ரொம்பப் பிரயாஸைப்பட்டு கண்டுபிடிக்க முடியும். பிள்ளையாருக்கு அரை நொடியில் அர்த்தமாகி விட்டது.

அந்த அர்த்தம் என்ன?

அதை அறிந்துகொள்வதற்கு ஸ்லோகத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் உள்ள பதங்களை வேறு விதமாகப் பிரித்துக்கொள்ளவேண்டும்.

முதலில் வருகிற 'நதீ-ஜலம் கேசவ-நாரி-கேது'என்பதை, 'நதீஜ-லங்கேச ('லம்கே'என்பது ஸம்ஸ்கிருதத்தில் 'லங்கே'என்று ஆகும்) -வநாரி-கேது'என்று பிரித்துக் கொள்ள வேண்டும். 'சுக்கு, மிளகு, திப்பிலி'என்பதை 'சுக்குமி, ளகுதி, பிலி'என்று பிரித்து எவனோ மருந்துக் கடையில் கேட்டு அடிவாங்கிக் கொண்ட கதையாக நாம் தப்பாக ஸந்தி பிரித்ததில்தான் ஒரு அர்த்தமும் ஏற்படாமல் போயிற்று. வேண்டுமென்றே வியாஸர் பதங்களைத் தப்பாகப் பிரித்துச் சொன்னாலும் விக்னேஸ்வரர் ஸரி செய்து கொண்டார்.

இதற்கு என்ன அர்த்தம்?

'நதீஜ'என்றால் 'நதிக்குப் பிறந்தவரே!'என்று அர்த்தம். கங்காதேவியின் புத்ரரான பீஷ்மரை, 'நதீஜ'என்று த்ரோணர் கூப்பிடுகிறார்.

'நதீஜ'என்று பீஷ்மரை த்ரோணர் கூப்பிட்டு மேலே என்ன சொல்கிறார்?'லங்கேச வநாரி கேது:'- 'லங்கேச'என்றால் 'லங்கேச்வரனான ராவணனுடைய';'வந அரி'- வநாரி'. 'வநாரி என்றால் வனத்தின் சத்ரு, அல்லது வனத்தை அழித்தவர். லங்கேச்வரனுடைய அசோகவனத்தை அழித்த ஆஞ்ஜநேய ஸ்வாமியைக் குறிப்பிடுகிறார். "கேது:"என்றால் இங்கே 'கொடி'என்று அர்த்தம். ஆஞ்ஜநேயரைத் தன் கொடியாகக் கொண்டவன் என்பதே 'லங்கேச வநாரி கேது:'என்பதன் அர்த்தம். அர்ஜுனனுடைய கொடியில் ஆஞ்ஜநேய ஸ்வாமியின் ரூபம் போட்டிருக்கும். ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியிடம் யுத்தத்தில் கிருஷ்ண பரமாத்மா பண்ணப்போகிற கீதோபதேசத்தைக் கேட்பதற்காக முன்கூட்டியே அர்ஜுனனின் த்வஜத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு விட்டார்!

"நகாஹ்வயோ நாம"என்றால் மரம் அல்லது மலை என்ற பெயருள்ளவன் என்றேனல்லவா? யோசித்துப் பார்த்தால் 'லங்கேச வநாரி கேது'என்பது அர்ஜுனனைக் குறிப்பிடுவதுபோல் இதுவும் அவனை அடையாளம் காட்டுவதுதான் என்று தெரியும். இங்கே 'நகம்'என்றால் மரம் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளவேண்டும். 'அர்ஜுனன்'என்றால் வெள்ளை வெளேர் என்று இருக்கிறவன் என்பது பொது அர்த்தம். 'அர்ஜுனம்'என்று மருத மரத்துக்கும் பேர். மருத மரத்தை ஸ்தல விருக்ஷமாகக் கொண்ட ஸ்ரீசைலம், திருவிடைமருதூர், திருப்புடைமருதூர் ஆகிய க்ஷேத்ரங்களுக்கு மல்லிகார்ஜுனம், மத்யார்ஜுனம், புடார்ஜுனம் என்றே ஸம்ஸ்கிருதத்தில் பேர். "நகாஹ்வயோ நாம"என்றதால் 'அர்ஜுன என்ற மரத்தின் பெயருள்ளவன்'என்று ஸூசனை பண்ணினதாகிறது.

அப்புறம் 'நகாரிஸூநு என்றால் மரம் அல்லது மலையின் விரோதியுடைய பிள்ளை என்று சொன்னேனல்லவா? இங்கே 'நகம்'என்றால் மரம் என்று இல்லாமல், மலை என்று அர்த்தம் செய்து கொள்ள வேண்டும். மலைக்கு சத்ரு யார் என்றால் இந்திரன். ஆதி காலத்தில் மலைகள் இறக்கைகளோடு பறந்து கொண்டிருந்தனவாம். இந்திரன்தான் வஜ்ராயுதத்தால் அந்த இறக்கைகளை வெட்டி மலைகளை இருந்த இடத்தோடு கிடக்கும்படிச் செய்தானாம். இப்படி நகரமுடியாமல் ஆனபிறகுதான் மலைக்கு அசலம், அகம், நகம் என்றெல்லாம் பேர் ஏற்பட்டது. 'சலம்'அல்லது 'கம்'என்றால் அசைவது, போவது. ஒரு வார்த்தைக்கு முன் 'அ'அல்லது 'ந'போட்டால் ஷீஜீஜீஷீஉவீமீ மீ னீமீணீஸீவீஸீரீ தரும் எதிர்சொல்லாகி விடும். அதனால் அசலம், அகம், நகம் என்றால் அசையாதது என்று பொருள் பட்டு மலையைக் குறிப்பதாகிறது. மலைகளின் இறக்கையை வெட்டின சத்ருவான இந்திரனுடைய குமாரன்தான் 'நகாரிஸூநு:'. குந்திக்கு இந்திரப் பிரஸாதத்தால் பிறந்தவனே அர்ஜுனன்.

"ஏஷ அங்கனா வேஷதர:கிரீடி"என்பதற்கு மேலெழுந்தவாரியாகப் பார்த்து, 'கிரீடம் வைத்துக் கொண்டிருக்கிற இந்தப் பெண் வேஷதாரி'என்று அர்த்தம் சொன்னது சரியில்லை. 'கிரீடி'என்றால் பொதுப் படையாகக் கிரீடம் வைத்துக்கொண்டிருக்கும் எவரையும் குறிக்கும் நீஷீனீனீஷீஸீ ஸீஷீ�்ஸீ-ஆகக் கொள்ளக்கூடாது. அப்படிக் கொண்டால்தான் 'பிருஹந்நளை கிரீடமே வைத்துக் கொள்ளவில்லையே. எப்படி கிரீடி என்று சொல்லலாம்?'என்ற கேள்வி வருகிறது. அதனால் இங்கே 'கிரீடி'என்பதை ஒரு ஆசாமியை

மட்டும் குறிப்பிடும் ஜீகூஷீஷீஜீமீகூஷீ ஸீஷீஞூஸீ-ஆகக் கொள்ளவேண்டும். அர்ஜுனனக்குத்தான் 'கிரீடி'என்றே ஒரு சிறப்புப் பெயர் உண்டு. அவனுடைய வீரத்தை மெச்சி இந்திரனே முடிசூட்டிக் 'கிரீடி'என்ற டைட்டிலையும் கொடுத்தான்.

'கிரீடி'என்பதை அர்ஜுனன் என்று புரிந்து கொண்டுவிட்டால், அவன்தான் பெண்வேஷம் போட்டுக் கொண்டு விராட ராஜ குமாரனுக்கு ஸாரத்யம் செய்கிறவன், ஹநுமாரைக் கொடியாகக் கொண்டவன், அர்ஜுன விருக்ஷத்தின் பேர் படைத்தவன் பேர் படைத்தவன், மலைகளின் சிறகை வெட்டின இந்திரனுடைய புத்திரன் என்றெல்லாம் தெளிவாகி விடுகிறது.

கடைசியில் மட்டும் இன்னம் தெளிவாகவில்லை. 'ஜித்வா வயம் நேஷ்யதி சாத்ய காவ:'என்றுதானே கடைசியில் ஸ்லோகம் முடிகிறது?இதற்கு 'நாம் ஜயித்து, மேலும் இப்போது பசுக்கள் கொண்டு போகிறான்'என்று தாறுமாறாக அர்த்தம் ஏற்படுகிறது. இதையும் நன்றாக ஆலோசனை பண்ணி, ஸ்லோகத்தின் ஆரம்பத்தில் செய்தது போலவே வேறு தினுஸில் பத விபாகம் பண்ண வேண்டும். அதாவது 'ஜித்வா-வயம்-நேஷ்யதி-சாத்ய-காவ:' என்று வியாஸர் சொன்னதை, "ஜித்வா-(அ)-வ-யம்-நேஷ்யதி சாத்யகா-வ:" என்று வேறு வேறு தினுஸாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இப்படிப் பண்ணிக்கொண்டால் ஏற்படுகிற அர்த்தம்:(கிரீடியான இந்த அர்ஜுனன்) 'ச அத்ய'- மேலும், இப்போது 'யம்'-எவனை, அதாவது துர்யோதனனை; 'ஜித்வா'- ஜயித்து;'வ:'- உங்களுடைய;"கா:"- பசுக்களை;'நேஷ்யதி'- ஒட்டிப் போகப் போகிறானோ;'தம்'- அவனை, அதாவது அந்த துர்யோதனனை ('யம்'- 'எவனை'என்று முதலில் வந்தால், பிற்பாடு 'தம்'- 'அவனை'என்று நாமாக வருவித்துக் கொள்ள இலக்கணம் இடம் கொடுக்கிறது.) 'அவ'- காப்பாற்றுங்கள்.

அதாவது ஸ்லோகத்தின் முழு ரூபத்துக்கும் ஏற்படுகிற அர்த்தம் என்னவென்றால் - த்ரோணாசாரியார் பீஷ்மாசார்யாரிடம் சொல்கிறார்:"கங்கா நதியின் புத்திரரே!ராவணனின் அசோகவனத்தை அழித்த ஆஞ்ஜநேய ஸ்வாமியைக் கொடியில் கொண்டவனும், அர்ஜுனமரப் பெயருள்ளவனும், மலையின் சத்ருவான இந்திரனுக்குப் புத்திரனும், ஸ்திரீ வேஷதாரியுமான இந்தக் கிரீடியாகிய அர்ஜுனன் இப்போது எந்த துர்யோதனனை மேலும் ஜயித்து நீங்கள் பிடித்துள்ள பசுக்களை மீட்டு ஓட்டிக் கொண்டு போக வந்திருக்கிறானோ, அந்த துரியோதனனை ரக்ஷியுங்கள்"- என்பதாகும்.

நாம் இத்தனை நாழி மண்டையை உடைத்துக் கொண்டாலே புரிகிற அர்த்தம் பீஷ்மருக்கு உடனே புரிந்து விட்டது. ஏனென்றால் அவர் புத்திமான். நைஷ்டிக பிரம்ம சர்யத்தால் அவருக்கு அபார புத்தி தீக்ஷண்யம் இருந்தது. (பிள்ளையார், ஆஞ்ஜநேயர், பீஷ்மாசாரியார் என்று மூன்று சுத்த பிரம்மசாரிகளை நினைக்கிற புண்யம் இப்போது நமக்குக் கிடைத்திருக்கிறது.)

இந்த மாதிரி அநேக 'குட்டு'க்களை அநாயாஸமாக உடைத்துக்கொண்டே பாரதத்தை எழுதி பாரத தேசத்துக்கு உபகரித்தவர் விநாயகர். குட்டை உடைத்தவருக்கு நெற்றியில் குட்டிக்கொள்கிறோம்!

------------------------------------------------------------------------------------------------------------------------------------

*'º†´' â¡ø ðî˜F¡ M÷,è‹ ÞŠð°F ºî™ à¬óò£ù "Hœ¬÷ò£˜ ²N"J™ "â¿ˆ¶ŠðEJ™ Mï£òè˜ ªî£ì˜¹"â¡ø à†HKM™ è£‡è

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**சிவ சக்தியரே சிவ-விஷ்ணுக்களாக**

இவ்வாறு பதம் பிரிப்பதில் எழுத்துக்களை வேறு தினுஸாகச் சேர்ப்பதிலேயே அர்த்தம் மாறுவதாக ஒன்று காளிதாஸன் ஸ்லோகத்தில் சொல்வதுண்டு. பிரஸித்தி பெற்ற "வாகர்த்தாவிவ"ஸ்லோகத்திலேயே இரண்டாவது அடியில் வேறு விதமாக ஸந்தி பிரித்துப் புது அர்த்தம் சொல்லப்படுகிறது.

'ரகு வம்ச'த்தில் மங்கள ஸ்லோகமாக (நூல் தொடக்கத்தில் கூறப்படும் கடவுள் வணக்கமாக) வருகிற இந்த ஸ்லோகம் போன தலைமுறையில் நூற்றில் தொண்ணூறு பேருக்குத் தெரிந்திருக்கும்.

வாகர்தாவிவ ஸம்ப்ருக்தௌ வாகர்த - ப்ரதிபத்தயே *

ஜகத : பிதரௌ வந்தே பார்வதீ - பரமேச்வரௌ **

'சொல்லும் பொருளும் போல் இணைந்திருப்பவர்களும், உலகங்களுக்கெல்லாம் தாய் தந்தையருமான பார்வதி-பரமேஸ்வரர்களைச் சொல் பொருள் ஆகியவை பற்றிய அறிவு உண்டாகும் பொருட்டு வணங்குகிறேன்'என்பது அர்த்தம்.

இதிலே முடிவில் வரும் 'பார்வதீ-பரமேஸ்வரௌ'என்பதைப் 'பார்வதீப-ரமேச்வரௌ'என்று வேறு விதமாகவும் பிரிப்பதுண்டு. இப்படிச்சொன்னால் 'பார்வதீ-பரமேஸ்வரர்களை வணங்குகிறேன்'என்பதற்குப் பதில் 'பார்வதீபதியான பரமேஸ்வரனையும் ரமாபதியான மஹா விஷ்ணுவையும் வணங்குகிறேன்'என்று அர்த்தம் மாறிவிடும். 'மாறிவிடும்'என்றால் முதலில் சொன்னது இல்லை என்று அர்த்தமில்லை. பார்வதி பரமேஸ்வரர்களையும் சொல்லி அதோடு மஹாலக்ஷ்மி-மஹாவிஷ்ணுக்களையும் சேர்த்துக் கொண்டதாகிவிடும். அதனால் அர்த்தம் 'மாறிவிட்டது'என்பதைவிடக் 'கூடிவிட்டது'என்பதே பொருத்தம்.

'ப'என்று சொன்னாலே 'பதி'தான். 'அதிபதி'என்பதை 'அதிப'(தமிழில் 'அதிபன்') என்றாலே போதும். 'ந்ருப'(நிருபன்) என்று ராஜாவைச் சொல்கிறோம். 'ந்ரு'என்றால் 'நர'. நரஸிம்ஹம் என்பதை ந்ருஸிம்ஹம் என்றும் சொல்வதுண்டு. நரபதிதான் 'ந்ருப'என்பவன். 'பார்வதீப'என்றால் பார்வதீபதியான ஈஸ்வரன். 'ரமேஸ்வர'என்றால் ரமைக்கு ஈசனாக, நாயகனாக இருக்கப்பட்ட விஷ்ணு. 'பார்வதீப-ரமேஸ்வரௌ'என்றால் 'சிவ-விஷ்ணுக்களை'என்று அர்த்தம்.

'பார்வதீ-பரமேஸ்வரௌ'என்று வைத்துக் கொண்டால் சிவ-சக்திகளைச் சொன்னதாகிறது. 'பார்வதீப-ரமேஸ்வரௌ'என்று அதையே ஒரு எழுத்து பின்னே தள்ளிப் பிரித்துக்கொண்டால் சிவ-விஷ்ணுக்களாகிவிடுகிறது.

இதிலே பெரிய தத்வம் இருக்கிறது. சக்தியேதான் புருஷ ரூபத்தில் இருக்கிற போது விஷ்ணு சிவம் எப்போதும் புருஷனாகச் சொல்லப்படும் நிர்குண வஸ்து. லோக வ்யவஹாரத்துக்காக அவர் ஸகுணமான சக்தியோடு சேர்ந்திருக்கும்போது சக்தி ஸ்திரீ ரூபத்தில் அம்பாளாக இருந்தால் அவளை இடது பாதியில் வைத்துக் கொண்டு அர்த்தநாரீஸ்வராக இருப்பார். அந்த ஸகுண சக்தியே புருஷ ரூபத்தில் விஷ்ணுவாயிருந்தாலும் அவரை அதே இடது பாதியாக வைத்துக்கொண்டு சங்கரநாராயணராக இருப்பார். விஷ்ணு அம்பாள் ஸ்தானத்தில் ஈஸ்வரனுக்குப் பத்தினியாக இருப்பவர். " அரி அலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே " என்று அப்பர் ஸ்வாமிகள் சொல்கிறார். ஆகையால் 'உலகத்தின் தாய் தந்தையான் சிவ-விஷ்ணுக்களை'என்று அர்த்தம் செய்து கொண்டால் அதில் தப்பேயில்லை. இவர்களைத் தாய் தந்தையாகக் கொண்டு பிறந்தவர்தான் சாஸ்தா*.

இதிலே இன்னொரு விசேஷம், மஹாவிஷ்ணு என்ன இருந்தாலும் புருஷ ரூபத்திலிருப்பதால் மஹாலக்ஷ்மியோடு சேர்த்து நினைத்தாலே மனஸுக்கு நிறைவு. ராமாநுஜ மதத்துக்கு "ஸ்ரீ வைஷ்ணவம்"என்று தாயாரான ஸ்ரீயை முதலிலும் அப்புறம் விஷ்ணுவையும் சொல்லியே பெயர் வைத்திருக்கிறது. ஈஸ்வரனையும் அம்பாளோடு சேர்த்து ஸாம்பமூர்த்தியாக நினைத்தால் தான் நிறைவு ஏற்படுகிறது. 'பார்வதீப-ரமேச்வரௌ'என்கிறபோது பார்வதி, ரமா இருவரும் வந்துவிடுகிறார்கள். ஆக ஆரம்பத்தில் நல்ல வாக்கு, நல்ல அர்த்தம் இவற்றைப் பெற வேண்டும் என்று வேண்டிக் கொள்ளும்போதே பார்வதி ஸமேதரான ஈஸ்வரன், லக்ஷ்மி ஸமேதரான விஷ்ணு என்று இரண்டு ஜோடி திவ்ய தம்பதிகளையும் ஸ்மரித்து, நமஸ்கரிப்பதான பெரிய மங்களம் உண்டாகிறது. ஒரு எழுத்துக்கூட மாறாமல், பதச் சேர்க்கையில் மட்டும் ஒரு எழுத்தை இடம் தள்ளியதால் அர்த்தத்தில் இவ்வளவு பெரிய மாறுதல்;அல்லது கூடுதல்;அதாவது லாபம்!

பெரிய லாபம் சைவம், வைஷ்ணவம் என்று பேதமில்லாமல் அவை இரண்டையும் சொல்லையும் பொருளையும் போலப் பிரிக்க முடியாமல் சேர்த்து விடுவது!

---

* 'Hî<sup>a</sup>ó÷'â¡ð¶ Þó‡´ î‰¬îò˜ â¡Á‹ ªð£¼œð´õî£îô£™ Cõ¡, Mwµ Þ¼õ¬ó»‹ «ô£è Hî£,èœ â¡ðî£è¾‹ ªè£œ÷ô£‹.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (பண்பாடு)

### " அறியாதவன் ": வார்த்தை விளையாடல்

சைவ-வைஷ்ணவ ஸமரஸ பாவத்தில் தமிழ் தேசத்தில் சொல்கிற பாபுலர் வசனத்தில்கூட இப்படிச் சின்ன வார்த்தை விளையாட்டு செய்து பெரிய அர்த்த லாபத்தை உண்டாக்குவதுண்டு.

"அரியும் சிவனும் ஒண்ணு;அறியாதவன் வாயிலே மண்ணு;என்பது நம் எல்லோருக்கும் தெரிந்தது. இதிலே 'அறியாதவன்'என்பதில் வல்லின 'றி'யை இடையினமாக மாற்றி, 'அரியாதவன்'என்று சொல்வார்கள். 'ஹரி'யாகிய 'யாதவ'குலக் கண்ணன் என்று அர்த்தம். அவன் வாயிலே மண்ணைப் போட்டுக்கொண்டுவிட்டு யசோதைக்கு லோகம் முழுவதையும் காட்டினான் அல்லவா?அதைத்தான் "அரி யாதவன் வாயில் மண்ணு"என்பது.

"ஸரி. அரியும் சிவனும் ஒன்று என்று சொல்லிவிட்டு, இப்படி ஒன்று - இவர்களிலே ஹரி லோகம் முழுவதையும் காட்டினவன் என்று - எதற்காகச் சொல்லவேண்டும்?"

எதற்காகவா?இதிலேயும் பெரிய தத்வம் இருக்கிறது. ஒரே பிரம்மம்தான் ஹரி, சிவன் இரண்டு பேரும். அதனாலே அவர்கள் ஒன்றேதான். ஆனால் அந்த ஒரே பிரம்மத்தை நிர்குணம், ஸகுணம் என்று இரண்டு நிலைகளில் நாம் பாவிக்க வேண்டியதாயிருக்கிறது. இந்த இரண்டில் லோக வ்யவஹாரம் அடிப்பட்டுப்போன நிர்குணம்தான் சிவன். லோக வ்யவஹாரத்தை நடத்தும் ஸகுணமே ஹரி. மண்ணைத் தின்று லோகம் முழுவதையும் தன் வாயில் அடங்கியிருப்பதாக அவன் காட்டினபோது இந்த உண்மையைத்தான் உருவகப்படுத்தியிருக்கிறான். 'அரி யாதவன் வாயில் மண்ணு'என்று சொல்லி இதை ஞாபகப்படுத்திவிட்டால், முதல் வரியில் சொன்ன 'அரியும் சிவனும்'என்பதில் விட்டுப்போன சிவன் நிர்குணம் என்பதையும் சொன்னதாகி விடுகிறது.

'றி'யை 'ரி'யாகக் கூட மாற்றாமல் 'அறியாதவன்'என்ற ஒற்றை வார்த்தையை 'அறி யாதவன்'என்று இரண்டாகப் பண்ணிக்கொண்டாலே போதும்!'அறி, யாதவன் வாயிலே மண்ணு'என்றாலே, 'அரியும் சிவனும் ஒண்ணானாலும் இவர்களில் யாதவனாக வந்து மண்ணைத் தின்னவன் ஸகுண ப்ரமம் என்று அறி;அதனால் இன்னொருவன் நிர்குணம் என்றும் அறி'என்று அர்த்தமாகிவிடும்.

---

## தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (பண்பாடு)

### ஓர் எழுத்தை எடுப்பதில் அர்த்த விநோதம்

ஒரே ஒரு எழுத்தை ஒரு ஸ்லோகத்தில் அது வருகிற இடங்களிலெல்லாம் எடுத்துவிடுவதால், நிந்தா ஸ்லோகமாக இருப்பது பெரிசாகப் புகழும் ஸ்தோத்ரமாக மாறி விடுகிறது.

"ஸீதா-ராவண ஸம்வாத ஜரீ"என்று சாமராஜ நகர் ராம சாஸ்த்ரி என்பவர் எழுதியிருக்கிறார். காசி சௌகம்பா ப்ரசுரத்தார் அச்சுப் போட்டிருக்கிறார்கள். அதில் பதினெட்டாவது ஸ்லோகம், ஸீதையும் ராவணனும் பேசிக் கொள்வதாக அமைந்திருக்கிறது ஸ்லோகம்.

ராவணன் ஸீதையிடம் ராமனை ஒரேயடியாக நிந்தித்து ஸ்லோக ரூபத்தில் திட்டுக்கிறான். அதற்கு பதிலாக ஸீதை,

**" கல ! தம் அஸக்ருந்-மா ஸ்ப்ருச கிரா "**

என்கிறாள். "போக்கிரியே!இப்படி அவரை உன் வார்த்தையால் திருப்பித் திருப்பித் தொடாதே!என்று அர்த்தம்;மேம்போக்கான அர்த்தம்.

'கல'- போக்கிரியே!'தம்'- அவரை;'கிரா'- வார்த்தையால்;'அஸக்ருத்'- திருப்பித் திருப்பி;'மா ஸ்ப்ருச'- தொடாதே!

ராவணன் வாயால் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியைப் பற்றி பேசுவது அவரை எச்சிலால் தொடுகிறாற்போல் ஸீதாதேவிக்கு அபசாரமாகப்பட்டது போலிருக்கிறது!

இது மேம்போக்கான அர்த்தம் என்றால், உள்ளே பூந்து (புகுந்து) பார்த்தால் என்ன அர்த்தம்?அப்போது, 'தம்'என்றால் 'அவரை'என்று அர்த்தமில்லை. 'தம் கிரா'என்றால் 'த என்ற எழுத்துள்ள வார்த்தையால்'என்று அர்த்தம் ஏற்படும். "போக்கிரியே!"என்று ராவணனைக் கூப்பிட்டு, "திருப்பித் திருப்பி 'த'காரம் உள்ள வார்த்தையால் (ராமரைத்) தொடாதே"â¡ðî£èŠ ªð£¼œ à‡ì£°‹*.

அவன் ராமனை என்னென்னவோ நிந்தித்தானே, அந்த வார்த்தைகளில் 'த'நிறைய வருகிறது. "அந்த 'த'வை யெல்லாம் எடுத்துப்போட்டு விடு. போட்டுவிட்டுப் படித்துப் பார்த்தாயானால் தெரியும்"என்று உள்ளார்த்தம்.

அவன் சொன்ன நிந்தா ஸ்லோகம் என்ன?அதில் வருகிற 'த'காரத்தையெல்லாம் நீக்கிவிட்டால் அதன் அர்த்தம் என்னவாகும்?

அதல்பம் நித்ராளு : ரஜநிஷு குவாக் துர்கததம :

மஹா காதர்யாட்யோ மநஸி விதுத-ப்ரோஜ்வலயசா

வதாந் மாம்ஸாதாநாம் பஹு விமதலாபௌ ஜனகஜே

கதம் ஸ்லோக்யோ ராம :

என்பது ராவணன் சொன்னது.

இதில் கடைசி வரியிலேயே ஸீதை சொன்ன பதிலும் சேர்ந்து, அது முழு வரியாகி ஸ்லோகம் பூர்த்தி அடைகிறது.

கதம் ஸ்லோக்யோ ராம : கல தம் அஸக்ருந் மா ஸ்ப்ருச கிரா **

ராவணன் சொன்னதற்கு என்ன அர்த்தமென்றால்:"ஏ ஜனக புத்ரியே!ராமன் ராத்ரியில் படுத்துக் கொள்கிறானே, அவனுக்கென்று ஒரு படுக்கை உண்டா?(பெரிய திண்டுகள் போட்டுக்கொண்டு ஏக போக்யங்களோடு காமுகனான ராவணன் சயனம் செய்ததை ஸுந்தர காண்டத்தில் வர்ணித்திருக்கிறது. ஸ்ரீராமரோ இந்த ஸமயத்தில் தபஸ்வியைப் போல ஜடாமுகடதாரியாக காட்டில் கட்டாந்தரையில் சயனம் செய்து வந்தார். அதைத்தான், 'ஒரு படுக்கைக்குக்கூட வக்கில்லாதவன்'என்று இடித்துக் காட்டுகிறான்.) ராமனுக்கு நல்ல வார்த்தை பேசவராது. (இவனிடம் சரணாகதி பண்ணி ஸமாதானமாகப் பேசி தூது அனுப்பாததால் இப்படிச் சொன்னான் போலிருக்கிறது!அல்லது இவனுக்கு நல்ல வார்த்தை பேசத் தெரியாததால் தர்மங்களையே ஸதாவும் பரம அன்போடு பேசிக்கொண்டிருப்பவரை இப்படித் தூற்றியிருப்பான்.) ராமன் தீன நிலையில் ரொம்ப ரொம்பக் கீழே போய்விட்டான்.

(பரதன் அர்ப்பணம் செய்த ஸாம்ராஜ்யத்தை வேண்டாமென்று தள்ளிவிட்டு, தானாகவே ஸத்யத்துக்காக வனவாஸத்தை மேற்கொண்டவரை, மனநிலையில் எப்போதும் ராஜாவாக இருந்தவரை இப்படிச் சொன்னான்.) ராமன் மஹா பயந்தாங்கொள்ளி. (இது முழுப் பொய்.) என்றைக்கோ ராஜ குமாரனாயிருந்தபோது அவனுக்குக் கொழுந்து விட்டெரிந்த கீர்த்தியெல்லாம் இப்போது போயே போய்விட்டது. ஏதோ சில ராக்ஷஸர்களை அசட்டுத்தனமாகக் கொன்று ஏகப்பட்ட விரோதிகளை ஸம்பாதித்துக் கொண்டுவிட்டான். இவன் எப்படி உயர்ந்தவனாவான்?"

'ராம:'- ராமன் ('ராம:'என்பது நாலாம் வரியில் வருகிறது.) 'ரஜநிஷு - இரவில்;'அதல்பம்'-படுக்கை (கூட) இல்லாமல்;'நித்ராளு:'- தூங்குகிறவன். 'குவாக்'- கெட்ட வாக்கே உள்ளவன். 'துர்கத தம:'- துர்த்தசையில் ஸூபர்லேடிவ் டிகிரிக்குப் போனவன்!'மநஸி'- மனஸிலே;'மஹா காதர்யாட்ய:'- ரொம்பவும் கோழைத்தனம் மண்டிக்கிடக்கிறவன். 'விதுத ப்ரோஜ்வல யசா:'- பெரிசாகப் பிரகாசித்த புகழெல்லாம் போய் விட்டவன். 'மாம்ஸாதானாம்'- மாம்ஸ பக்ஷிணிகளான ராக்ஷஸர்களை;'வதான்'- கொன்றதால்;'பஹு விமத லாபௌ'- மாறுபட்ட மனமுடையவர்களை (சத்ருக்களை) மிகவும் அதிகமாக்கிக் கொண்டுவிட்டவன். (இப்படிப்பட்டவன்) 'கதம்'- எப்படி;'ச்லாக்ய:'- சிலாகிக்கத் தக்கவனாவான்?'ஜனகஜே'- ஜனக புத்ரியே!(என்று ஸீதையைக் கூப்பிடுகிறான்.)

இந்த ஸ்லோகத்தில் ராமனைப் பற்றி அவன் சொல்லும் முதல் மூன்று வரிகளில் வரும் 'த'வை எல்லாம் எடுத்துவிட்டுப் பார்க்கலாம். ஆரம்ப 'அதல்பம்'என்பது 'அல்பம்'என்றாகும், இப்படியே 'துர்கததம'வில் இரண்டு 'த'காரமும் போய் 'துர்கம'என்றாகும்.

அல்பம் நித்ராளு : ரஜநிஷு குவாக் துர்கம :

மஹாகார்யாட்யோ மநஸி விது ப்ரோஜ்வல யசா :

வதான் மாம்ஸாதாநாம் பஹுவிமலபௌ.....

இதற்கு என்ன அர்த்தம்?"ராமர் ராத்ரியில் ரொம்பவும் ஸ்வல்பமாகவே தூங்குகிறவர். (லோகத்தில் திருட்டுப் புரட்டு இல்லாமல் ரக்ஷிக்க வேண்டிய ராஜ வம்சத்தினர் மிகவும் குறைவாகவே தூங்க வேண்டும் என்பது சாஸ்த்ர லக்ஷணம். தூக்கத்தை ஜயித்தாலேயே அர்ஜுனனுக்கு 'குடாகேசன்'என்று ஒரு பேர். 'குடாகம்'என்றால் தூக்கம், சோம்பேறித்தனம்.) கெட்டவார்த்தையால் அண்டவே முடியாதவர். ("நீ சொன்ன நிந்தை மொழிக்கு அவர் எட்டாதவர்"என்று ஸீதை சொல்லாமல் சொல்கிறாள். அவன் 'குவாக்','துர்கதம' என்று இரண்டு வசவுகளைச் சொன்னான். இப்போது அது 'குவாக்-துர்கம'என்பதாக ஒரே பாராட்டு வார்த்தையாகிறது. 'கெட்ட வாக்கால் எட்ட முடியாதவர்'என்று அர்த்தம்.) பெரிய கார்யங்களைப் பற்றிய ஸங்கல்பங்கள் நிறைந்த மனமுள்ளவர். (இன்னாருக்கு சிக்ஷை,, இன்னாருக்கு ரக்ஷை, இப்படியிப்படி தர்மங்களை நிலை நிறுத்திக் காட்டணும் என்று லோகத்தையே தழுவுவதாக பகவதவதாரத்துக்கு உரிய பெரிய ஸங்கல்பங்களைக் கொண்டவர்.)

சந்திரன் எப்படி ஸகலர் மனஸையும் கண்ணையும் குளிரப் பண்ணிக் கொண்டு எங்கேயும் கீர்த்தியோடு இருக்கிறானோ அப்படியிருப்பவர். ராக்ஷஸர்களைக் கொன்றதால் ரொம்பவும் தூய்மையான பிரகாசத்தைப் பெற்றுவிட்டவர்"- இப்படி அர்த்தம் ஒரே ஸ்தோத்ரமாய் மாறிவிடுகிறது.

'ரஜநிஷு அல்பம் நித்ராளு:'- இரவில் ஸ்வல்பமே தூங்குபவர். 'குவாக் துர்கம:'- கெட்ட வாக்கால் அண்டுதற்கரியவர். 'மநஸி மஹா கார்யாட்ய:'- மனஸில் பெரிய கார்யங்கள் நிரம்பியிருப்பவர். 'விது ப்ரோஜ்வல யசா:'- சந்திரன்போல ஜ்வலிக்கின்ற புகழை உடையவர். 'மாம்ஸாதாநாம் வதாந்'- ராக்ஷஸர்களை வதம் செய்ததால்;'பஹு விமலாபௌ (பஹுவிமல ஆபௌ)'- மிகவும் நிர்மலமான ப்ரகாசம் பெற்று விட்டவர். ('ஆபா'என்றால் ப்ரகாசம்.)

---

* ú‹v,¼î ̂F™ ̄ïM«ô«ò ï£¡° Mî åLèœ Þ¼ŠðF™ ̄ºîô£ù ̄ï ̄ ñ†´‹ Þƒ° ºPŠHìŠð ́Aø¶.

---

## " கன்னம் அதிகம் "

ஒரு ஸ்லோகத்தில் வருகிற அத்தனை 'த'வையும் தட்டிவிடும்படி ஸீதை சொன்னாள். காளிதாஸனோ ஒரே ஒரு புள்ளியைத் தட்டிவிட்டே ஒரு ஸ்லோகத்தின் ரஸத்தை ஒரே தூக்காகத் தூக்கிவிட்டான்.

பவபூதி என்று ஏறக்குறைய காளிதாஸனுக்கு ஸமதையாக ஒரு மஹாகவி. அவனுடைய காலத்திலேயே இவரும் இருந்தார் என்றும், இந்த இரண்டு பேருக்கும் போட்டி, மூக்கறுபட்டது என்றெல்லாமும் கதைகள் இருக்கின்றன. நான் சொல்லப் போகிற கதை அப்படிப்பட்டதில்லை. ஒருவர் அபிப்ராயத்தை இன்னொருவர் கலந்தாலோசித்துத் தாம் எழுதியதைத் திருத்திக் கொண்டதாக இந்தக் கதை.

உத்தர ராமாயணத்தை "உத்தர ராம சரிதம்"என்று ஹ்ருதயத்தை கவ்விக்கொள்ளுகிற மாதிரி பவபூதி நாடகமாக எழுதி அந்தச் சுவடியைக் காளிதாஸனுடைய 'அப்ரூவ'லுக்காக எடுத்துக்கொண்டு போய்ப் படித்தார். காளிதாஸன் தனக்கு ப்ரியமான ஸ்த்ரீ தாம்பூலம் மடித்துக் கொடுக்க கொடுக்க அதை ருசி பார்த்துக்கொண்டே உத்தரராம சரிதத்தையும் ருசித்துக்கொண்டு போனான்.

அதிலே முதல் ஸீனில் ராமர் தண்டகாரண்யத்தில் ஸீதையோடு தாம் கழித்த ஆனந்தமான நாட்களைப் பற்றிய நினைவுகளைச் சொல்கிறார். அதனிடையில், "எப்படிப் பொழுது போச்சு என்றே எங்களுக்குத் தெரியாமல் ராத்ரி நேரம் இவ்வாறு பேச்சில் போய்விடும்"என்று வருகிறது.

## " அவிதித-கத-யாமா ராத்ரிரேவம் வ்யரம்ஸீத் "

இந்த வரியை பவபூதி படித்தவுடன் காளிதாஸன் "சுன்னம் ஜாஸ்தி"என்றான். அவனுக்குத் தாம்பூலம் கொடுத்துக் கொண்டிருந்தவள், 'ஜாஸ்தி சுண்ணாம்பு வைத்துக் கொடுத்துவிட்டோம்;அதைத்தான் சொல்கிறார்'என்று நினைத்துக்கொண்டுவிட்டாள். அவளுக்கெதிரே தான் பவபூதிக்கு அட்வைஸ் பண்ணுவது மரியாதை இல்லை என்பதால் வேண்டுமென்றேதான் காளிதாஸன் இப்படி பூடகமாகச் சொன்னது. மேதையானதால் பவபூதிக்குப் புரிந்துவிட்டது. ஸுன்னம் என்றால் ஸைஃபர், அல்லது புள்ளி. 'ராத்ரிரேவ ம்'என்பதில் 'ம்'என்று உள்ள புள்ளியைத்தான் காளிதாஸன் ஜாஸ்தி என்று சொல்வதை அவர் புரிந்துகொண்டு*இந்த நுட்பமான கரெக்ஷனை ரொம்பவும் கொண்டாடி, ஸுன்னத்தை எடுத்தவிட்டு 'ராத்ரிரேவ'என்று மாறிவிட்டார். 'ராத்ரிரேவம் வ்யரம்ஸீத்'என்றால் 'ராத்திரி இவ்வாறு போச்சு'. 'ராத்ரி ரேவ வ்யரம்ஸீத்'என்றால் 'ராத்ரிதான் முடிந்தது'என்று அர்த்தம். அதாவது 'ஸீதையும் தானும் பேசுகிற பேச்சு அப்போதும் முடிந்திருக்காது;ராத்ரி மட்டுமே முடிந்திருக்கும்'என்று வ்யங்கியமாக (உள்ளுறை பொருளாக) ராமர் சொன்னதாக ஆகிவிடும்!

பவபூதியிடம் காளிதாஸன் 'அநுஸ்வாரம் ஜாஸ்தி'என்று சொன்னதாகப் பொதுவிலே சொல்வார்கள். அநுஸ்வராம் என்றால் 'ம்'. Ýù£™ ÞŠð® ªõOŠð¬ìò£è„ ªê£¡ù£ªù¡ð¬îMì Þó‡´ Ü˜ˆî‹ î¼ñ£Á 'ú§¡ù‹ ü£vF'â¡Á Côˆ ªê£™½Aø è¬î Ü‰î Þ¼õ¼¬ìò ú¨zñ óú¬ù‚°‹ ªð£¼ˆîñ£J¼‚Aø¶.

இப்படிக் காளிதாஸன் சொல்லியிருந்தால் அவன் ஆந்திர தேசத்தைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டும். ஏனென்றால் தெலுங்கு பாஷையில்தான் 'ஸுன்னம்'என்று இந்த இரண்டு அர்த்தமும் கொடுக்கும்படியான வார்த்தை இருக்கிறது. இது ஒன்றை மாத்திரம் கொண்டு தெலுங்கன் என்று சொல்லக்கூடாதென்றால் இன்னொன்று சொல்கிறேன். 'ராமகிரி'என்ற இடத்திலிருந்துதான் காளிதாஸனின் 'மேக ஸந்தேச'காவ்யத்தில் வரும் யக்ஷன் மேகத்தை

தூது அனுப்பினானென்று இருக்கிறது. மத்ய ப்ரதேஷில் நாக்பூருக்குப் பக்கத்திலிருக்கிற ராம்டேக்தான் ராமகிரி என்று அபிப்ராயப்படுகிறார்கள். ஆனால் ஆந்திராவிலும் நாகலாபுரம் தாண்டி ஒரு ராமகிரி இருக்கிறது.

---

* 'õ‹'â¡ð¶ «ïõï£èK LHJ™ 'õ'â¡ø â¿ˆ¶,°«ñ™ ¹œO ¬õŠðî£°‹. ,ó‰î LHJ™ '‹'â¡ð¶ ¬úçð¬óŠ «ð£ô«õ õ†ìñ£J¼Šðî£°‹.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**மாலை மாற்றம்**

'விகடகவி', 'குடகு'முதலிய வார்த்தைகளை திருப்பிப் படித்தாலும், 'விகடகவி', 'குடகு'என்றே இருக்கும். 'மலையாளம்'என்பதை இங்கிலீஷில் Malayalam என்று எழுதினால் திருப்பிப் படித்தாலும் அதே ஸ்பெல்லிங் வரும். இப்படிப்பட்ட வார்த்தைகளை Palindrome என்கிறார்கள்.

காசியாத்திரை ஹிந்துவாகப் பிறந்தவர்களுக்கு முக்யமாக விதிக்கப்பட்டிருக்கிறது. அதோடு கயா ச்ராத்தம், த்ரிவேணி என்கிற ப்ரயாகையில் ஸ்நானம், பித்ரு கார்யம் எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறது. இதையும் பாலின்ட்ரோமாகச் சொல்வதுண்டு. காசிக்கு காசிகா என்றும் பெயர். இது பின்னிருந்து முன்னாகவும் 'காசிகா'தான். 'கயா ப்ரயாக'என்பதும் இப்படியே*1.

இப்படி ஒரு வார்த்தையைத் தலைகீழாகப் படிப்பதைப் பெரிய விளையாட்டாகப் பண்ணி காவ்ய ரஸத்தைப் பற்றியே ரஸமாக ஒரு ஸ்லோகம் இருப்பதாக ஒரு பண்டிதர் சொன்னார். 'ஸாக்ஷரா'என்றால் வெறுமே படிப்பறிவு மட்டுமுள்ளவர்கள் என்று அர்த்தம். அதாவது வறட்டு வறட்டு என்று நிறையப் படித்திருப்பார்கள். இலக்கியச் சுவையில் ஊறியிருக்க மாட்டார்கள். 'ஸரஸ'என்றால் இலக்கியச் சுவையில், காவ்ய ரஸத்தில் ஊறியவன் என்று அர்த்தம். ரஸம் அறிகிற பக்வ மனஸ் இல்லாமலிருக்கிறவன் அந்தப் படிப்பு நெறியிலிருந்து மாறினால் குணம்கெட்ட ராக்ஷஸனாகி விடுவான்;ஆனால் ரஸிகனோ எப்படி வெளியிலே மாறினாலும் அவனுடைய உயர்ந்த ரஸிகத்தன்மை போகவே போகாது என்பது அந்த ஸ்லோகத்தின் தாத்பர்யம்

ஸாக்ஷரா, ஸரஸ என்ற வார்த்தைகளைத் திருப்பிப் போட்டே இந்த தாத்பர்யத்தை ஸ்லோகம் நிலைநாட்டிவிடுகிறது. 'ஸாக்ஷரா'வைத் திருப்பிப் படித்தால் 'ராக்ஷஸா'!'ஸரஸ'வோ திருப்பிப் படித்தாலும் 'ஸரஸ'வேதானே?

இப்படி இரண்டு பக்கமாகப் படித்தாலும் ஒரே போல வருவதை "கத ப்ரத்யாகத ம்"என்கிறார்கள். மாகன் என்ற மஹாகவி ஒரு வார்த்தை, இரண்டு வார்த்தையாயில்லாமல் ஒரு பெரிய வாக்யமே இப்படிச் செய்திருக்கிறான். மஹாலக்ஷ்மி பகவானைப் பரம அன்போடு ஆலிங்கனம் செய்து கொள்வதைத் தெரிவிக்கும்படியான வாக்யம்: **தம் ச்ரியா கநயாநஸ்தருசா ஸாரதயாதயா யாதயா தரஸா ஸாரு ஸ்தநயாநகயா ச்ரிதம்** *2 ('சிசுபாலவதம்'- 19.88).

திருஞானஸம்பந்தர் ஸாக்ஷாத் பரதேவதையின் க்ஷீரத்தைப் பானம் பண்ணியதால் குழந்தையாக இருந்து கொண்டே எத்தனை விதமான செய்யுள் வகை உண்டோ அத்தனையிலும் வர்ஷிக்கிறாற்போலக் கொட்டினவர். பாலின்ட்ரோமாகவே முழுச் செய்யுள் செய்வதற்கு 'மாலை மாற்று'என்று பேர். மிகவும் கஷ்டமான இந்த 'மாலை மாற்று'வகையில் பதினோரு இரட்டை வரிச் செய்யுள்களை ஞான ஸம்பந்தர் அனுக்ரஹித்திருக்கிறார்.

படித்தால் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி இருக்கும். முதல் அடி இப்படி இருக்கிறது.

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா

காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா

கடைசியிலிருந்து திருப்பிப் படியுங்கள்;அதுவே வரும்.

ஏதோ துளி அர்த்தம் பண்ணிப் பார்க்கலாம். முதலில் பதங்களைப் புரிகிறபடி பிரித்துக்கொள்ளலாம்.

யாம் ஆமா ? நீ ஆம் ஆம். மாயாழீ ! காமா ! காண்நாகா !

காணாகாமா ! காழீயா ! மாமாயா ! நீ மாமாயா !

'யாம் ஆமா?'என்றால் அற்ப மநுஷ்யர்களான எங்களால் எது பண்ணவும் முடியுமா என்று அர்த்தம். 'நீ ஆம், ஆம்'என்றால் மஹாசக்தனான நீ எதுவும் பண்ண முடியும், நிச்சயமாய் முடியும் என்று அர்த்தம். 'மாயாழீ'என்று பரமேஸ்வரனைக் கூப்பிடுகிறார். பெரிய யாழைக் கையிலே வைத்து வீணாதர தக்ஷிணாமூர்த்தியாக ஈஸ்வரன் மீட்டிக்கொண்டிருப்பதால் 'மாயாழீ'என்கிறார். அப்பரும் 'எம் இறை நல்வீணை வாசிக்கும்மே'என்று சொல்லியிருக்கிறார். 'காமா'என்பது 'பேரழகனே'என்று கூப்பிடுவது. 'காணாகா'அதாவது 'காண்நாகா'என்றால், 'காணும்படியாக நாகாபரணம் போட்டுக்கொண்டிருப்பவனே'என்று அர்த்தம். 'காணாகாமா'என்றால் 'காமனைக் கண் காணமுடியாதபடி எரித்துவிட்டவனே!''காழீயா'அதாவது 'சீர்காழியில் கோயில் கொண்டிருப்பவனே!'- அதுதான் ஸம்பந்தமூர்த்திகள் அவதாரம் பண்ணின ஸ்தலம். 'மாமாயா'என்றால் 'மஹாலக்ஷ்மீபதியான மாயா ஸ்வரூபமான விஷ்ணுவே'என்று அர்த்தம். தெய்வக் குழந்தையின் வாயாலேயே இங்கே சிவ-விஷ்ணு அபேதம் வருகிறது. அப்பர் ஸ்வாமிகளின் திருத்தாண்டகத்திலும் சிவபெருமானையே த்ரிமூர்த்தி ஸ்வரூபமாக " நாரணன் காண் நான்முகன் காண் "என்று வர்ணித்திருக்கிறது. கடைசியில் 'நீ மாமாயா'என்று முடிகிறதே. இங்கே நீ என்றால் 'ஹ்வஷீஞூப' இல்லை. 'நீ'என்றால் 'நீக்கு'என்று அர்த்தம். எதை?'மாமாயா'- 'மா'என்றால் 'பெரிய';'கனாந்த காரமான'என்றும் சொல்கிறார்கள். "ஒரே இருட்டாயுள்ள மாயையை நீக்கு"என்று பிரார்த்திக்கிறார்.

---

*1. «îõï£èK, ,ó‰î LH ÝAò õìªñ£N,è£ù â¿ˆ¶,èO™ 'Šó'â¡ð¶ å«ó â¿ˆî£îô£™ ÞŠð® õ¼‹.

*2. 'î‹', ',,K', 'vî'â¡ð¬õ å«ó Üþóñ£è õìªñ£NJL¼Šðî£™, Þ¬î F¼ŠHŠ ð®ˆî£½‹ «ïó£èŠ ð®,°‹ õ£êè«ñ õ¼‹.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**ஒரே எழுத்தாலான ஸ்லோகம்**

இங்கே யா, மா, நீ, ழீ, கா, ணா என்ற ஆறே எழுத்துக்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லிச் செய்யுள் செய்திருக்கிறது.

'சப்த சித்ர காவ்யம்'என்பதாக இப்படி சில அக்ஷரங்களை வைத்துக்கொண்டே சப்த ஜாலம் பண்ணுவதில் ஒன்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்கிறேன்.

**மித்ராத்ரிபுத்ர நேத்ராய த்ரயீசாத்ரவ சத்ரவே -**

**கோத்ராரி காத்ர-ஜத்ராய கோத்ராத்ரே தே நமோ நம : ****

இது ஈஸ்வரன், விஷ்ணு இருவருக்கும் பொருந்துமாறு செய்த ஸ்லோகம்.

'மித்ர அத்ரி புத்ர நேத்ர'என்றால் மித்ரன் என்ற ஸூர்யனையும், அத்ரி புத்ரனான சந்திரனையும் இரு கண்களாகக் கொண்டவன். சிவன், விஷ்ணு இரண்டு பேரையுமே இவ்விதம் ஸூர்ய-சந்திரர்களை நேத்ரமாகக் கொண்டவர்களென்று சொல்வதுண்டு. 'த்ரயீ சாத்ரவ சத்ரு'என்றால் வேத சத்ருக்களான அஸுரர்களின் சத்ரு. இதுவும் இருவருக்கும் பொருந்துவதே. 'கோத்ராரி கோத்ரஜ த்ர'என்றால் மலைகளுக்கு சத்ருவான இந்திரனுடைய குலத்தில் பிறந்த தேவர்களை ரக்ஷிப்பவர். சிவன் விஷ்ணு இருவரும் இந்த டெஃபனிஷனுக்கும் ஆன்ஸர் பண்ணுகிறார்கள். "கோத்ராத்ரே தே நமோ நம:"என்றால் "பசுவைப் பாலிக்கிற உனக்கு மறுபடி மறுபடி நமஸ்காரம்"என்று அர்த்தம். பசுபதியான பரமேஸ்வரன், கோபாலனான மஹாவிஷ்ணு இருவருந்தான் இவ்வாறு நமஸ்காரத்துக்குப் பாத்திரமாகிறார்கள்!

இதையெல்லாம் விட அர்த்தம் சொல்ல ரொம்பக் கடினமாக, ஒரே ஒரு எழுத்தை வைத்தே ஒரு ஸ்லோகம் 'சிசுபால வத'த்தில் மாகன் பண்ணியிருக்கிறான். ஸீதை 'த'(ta)வை எடுக்கச் சொன்னாளென்றால், இவன் 'த'(da) ஒன்றை வைத்தே முழு ஸ்லோகம் செய்திருக்கிறான். சொல்வதற்கே சிரிப்பாக இருக்கிறது!

**தாததோ துத்ததுத்தாதீ தாதாதோ துததீததோ :***

**துத்தாதம் ததத்தே துத்தே ததாத ததத்தோதத :****

கொடுக்கிறவர்களுக்குக் கிருஷ்ண பரமாத்மா தானும் அருளைக் கொடுக்கிறார்;கொடுக்கமால் கெடுக்கிறவர்களுக்குத் தானும் கொடுக்காமல் கெடுதலே செய்கிறார் என்பது தாத்பர்யம்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**கூட்டுவதும் குறைப்பதும்**

பசுவின் வால் குச்சத்தில் நடுவிலிருந்து ஒவ்வொரு ரோமமாக எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாகச் சிறுத்துக் கொண்டு வருகிறதோ அப்படி ஒரு வார்த்தை ஒவ்வொரு எழுத்தாகக் குறைந்துகொண்டே வருமாறு சித்ர கவிதை எழுதுவதுண்டு. பசு வாலை வைத்து இதற்கு 'கோபுச்ச யதி'என்று பெயர்.

முத்துஸ்வாமி தீக்ஷிதரும் கவிகளைப் போல இரண்டு மூன்று கீர்த்தனங்களில் இந்த முறையைக் கையாண்டிருக்கிறார். 'மாயே'என்ற தரங்கிணி ராக க்ருதியில் 'ஸரஸகாயே, ரஸகாயே, ஸகாயே, அயே'என்று பிரயோகம் பண்ணியிருக்கிறார். 'ஸரஸகாயே'என்றால் 'அன்பும் அழகும் கொண்ட மேனியாளே'. 'ரஸகாயே'என்றால் (உபநிஷத் வாக்யப்படி) ரஸ ஸ்வ்ரூபமாயிருப்பவுள். 'ஸகாயே'என்றால் அரூபமாய் மட்டுமில்லாமல் ரூபமும் கொண்டிருப்பவள். 'அயே'என்றால் குழந்தை அம்மாவைக் கூப்பிடுகிற மாதிரி பராசக்தியைச் செல்லமாகக் கூப்பிடுவது.

இதேபோல ஆனந்த பைரவியில் 'த்யாகராஜ யோக வைபவம்'என்று ஆரம்பித்து, அடுத்ததாக இதிலே 'த்ய'வை த்யாகம் பண்ணி, 'அகராஜ யோக வைபவம்'(அகராஜன் என்றால் மலையரசனான ஹிமோத்கிரி), அதற்கப்புறம் 'ராஜயோக வைபவம்', 'யோக வைபவம்', 'வைபவம்', 'பவம்'(பவஸகாரத்திலிருந்து கடத்துவிக்கிறவனுக்கே 'பவன்'என்றும்

ஒரு முக்யமான நாமா உண்டு), 'வம்'என்று முடிக்கிறார். 'வம்'என்றால் அம்ருத மயமாயிருப்பவன்.

இந்தப் பாட்டிலேயே அநுபல்லவியில் இதற்கு எதிர்வெட்டாக, ஒரு சின்ன வார்த்தையில் ஆரம்பித்து ஒவ்வொரு எழுத்தாகச் சேர்த்துக்கொண்டே போகிறார். இதற்கு 'ஸ்ரோதோவாஹம்'என்று பேர். சின்னதாக ஒரு ஓடை ஆரம்பித்து அதிலே ஒவ்வொன்றாகப் பல சின்னச் சின்ன நதிகள் சேர்ந்து அது பெரிசாகப் போவதுதான் 'ஸ்ரோதோவாஹம்'. தீக்ஷிதர் இப்படிச் செய்திருக்கிறார். 'சம்' (மங்களம் என்று அர்த்தம்) என்பதில் ஆரம்பித்து, 'ப்ரகாசம்', 'ஸ்வரூப ப்ரகாசம்'என்றிப்படியே 'சிவ சக்த்யாதி ஸகலதத்வ ஸ்வரூப ப்ரகாசம்'என்கிற வரைக்கும் போயிருக்கிறார்*1.

பாமரன் ஒருவன்கூட "கவயாமி, வயாமி, யாமி"என்று கோபுச்ச யதியில் கவி பண்ணினதாகக் கதை இருக்கிறது.

போஜராஜா மஹாரஸிகனாக, கவிதை ஆர்வமுள்ளவனாக இருந்தான். அதனால் தன் ராஜதானியான தாரா (இப்போதைய தார்) நகரத்தில் கவி பண்ணத் தெரியாத ஒருத்தரும் இருக்கப்படாது, அவர்கள் கிராமத்துக்குப் போய்விட வேண்டும் என்று உத்தரவு போட்டான். ஸேவகர்களை விட்டு, தலைநகரிலே கவி பாடத் தெரியாமல் யார் இருந்தாலும் ராஜ ஸபைக்கு இழுத்துக்கொண்டு வரும்படி சொன்னான். அவர்கள் ஊர் பூரா தேடினதில் அத்தனை பேரும் கவி பாடிக் கொண்டிருந்தார்களாம். போஜனக்கிருந்த ஸரஸ்வதி ப்ரஸாதத்தால் அவனுடைய ராஜதானியில் இப்படி அவளுடைய விலாஸம் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. எனவே கொடுமையாகத் தோன்றுவதான அப்படிப்பட்ட உத்தரவைப் போடவும் அவனுக்கு 'ரைட்'இருந்தது, ந்யாயம் இருந்தது என்று தெரிகிறது.

கடைசியில் தேடிப் பிடித்து, கவி பாடத் தெரியாமலிருந்த ஒருத்தனே ஒருத்தனான ஒரு சேணியனை - துணி நெய்கிறவனை - ஸபைக்கு இழுத்துக்கொண்டு போனார்கள்.

"உனக்குக் கவி பாட வராதா?"என்று போஜராஜன் அவனைக் கேட்டான்.

ராஜாவைப் பார்த்தான் சேணியன். ஸரஸ்வதி கடாக்ஷம் நர்த்தனம் பண்ணுகிற அந்த முகத்தைப் பார்த்தவுடனேயே சேணியனுக்குள்ளே கவித்வ சக்தி பாய்கிற மாதிரி இருந்தது. உடனே தன்னையறிமால்,

" காவ்யம் கரோமி நஹி சாருதரம் கரோமி

யத்நாத் கரோமி யதி சாருதரம் கரோமி "

என்று கவிதையாகவே பதில் சொல்ல ஆரம்பித்தான். அதாவது, "ஓ, கவி கட்டுகிறேனே!ஆனாலும் ரொம்ப நன்றாகக் கட்டுவேன் என்று சொல்ல முடியாது. ப்ரயத்தனம் பண்ணிப் பார்த்தேனேயானால் ரொம்ப அழகாகவே கூடக் கட்டினாலும் கட்டிவிடுவேன்"என்று சொன்னான்.

கவித்வ தாரை உள்ளே சுரக்க ஆரம்பித்துவிட்ட தென்றாலுங்கூட, முதல் முதலாகக் கவி பண்ணும்போது மிக உயர்வாகப் பண்ண முடியும். என்று சொல்லிக் கொண்டுவிடக்கூடாது. அதே ஸமயத்தில் எப்போதுமே ஏதோ ஸுமாராகத்தான் பண்ண முடியும் என்றும் விட்டுக் கொடுத்துவிடாமல் கான்ஃபிடன்ஸோடு, ராஜாவுக்கும் உத்ஸாஹம் தரும்படிச் சொல்ல வேண்டும் என்று இப்படி இரண்டு அடி சொன்னான். இதை நாலடி ஸ்லோகமாக முடிக்கவேண்டுமென்று அடுத்த இரண்டடியை ஆரம்பித்தவுடனேயே ப்ரதிபா சக்தி பொங்கிக் கொண்டு வந்தது. 'ஹை க்ளாஸ் பொயட்ரி'என்னும்படியாகவே அந்தப் பின்பாதி அமைந்துவிட்டது.

பூபால-மௌலி மணிரஞ்ஜித-பாதபீட

ஹே ஸாஹஸாங்க கவயாமி வயாமி யாமி **

என்று ப்ராஸம், கீஸம் போட்டுத் தடதடவென்று முடித்து விட்டான். "அநேக ராஜாக்களின் கிரீடங்களிலுள்ள ரத்னங்களின் ஒளியால் சிவப்பாகச் செய்யப்பட்ட பாத உடையவனே!

(அதாவது இதர ராஜாக்கள் போஜனின் அடியில் தங்கள் முடி படக் கிடக்கிறார்களாம்!அந்த முடிகளிலுள்ள கிரீட ரத்னங்களால் அவனுடைய பாதபீடம் சிவப்பாகிவிட்டதாம்!) "ஸாஹஸச் செயல்களே ஸஹஜமாகிவிட்டவனே!நான் ' கவயாமி :' கவி பாடுகிறேன் ' வயாமி ':நெசவு பண்ணுகிறேன். ('வயனம்'என்றால் நெய்வது;ஷ்மீணீஸ்வீஸீ என்பது இதே தாதுவில் உண்டானது தான்.) 'யாமி' :போய்விட்டு வருகிறேன்", என்று கிளம்பி விட்டான்.

'கவி பாடாவிட்டால் ராஜ தண்டனை கிடைத்திருக்கும். நல்லவேளை, ஏதோ அத்ருஷ்ட வசத்தால் பாடியாய்விட்டது. தண்டனைக்குத் தப்பினோம். இன்னம் பாடச் சொன்னால் வருமோ வராதோ?அதனால் ஸம்மானத்துக்குக் காத்துக்கொண்டிருக்காமல் முதலில் திரும்பிப் போய்ச் சேருவோம்'என்றுதான் " யாமி - போறோம்பா"*2 என்று கிளம்பிவிட்டான்.

இங்கே 'கவயாமி வயாமி யாமி'என்பது கோபுச்சம்.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

*1. 'ÿõóôzI'â¡Â‹ ÿó£è ,¼FJ½‹ 'ÿ ú£óúð«î, óúð«î, úð«î, ð«î'â¡Á «è£¹„ê òF¬ò, ¬èò£‡®¼‚Aø£˜.

*2. ÜœO˜î¼‹ «ð£üQ¡ ú‹ñ£ùI¡P«ò ªê™ô «õ‡®J¼ŠðF™ Ü‰î‚ «êEòÂ‚° Þ¼‰F¼‚è‚Ã®ò î£ð‹ Üšõ÷¾‹ ˆõQ‚è ÿ ªðKòõ˜èœ Þ‰î "«ð£«ø‹ð£" ªê£¡ù¬î Þƒ«è ªîKM‚è º®ò£M†ì£½‹ õ£˜ˆ¬îJô£õ¶ "«ð£A«øùŠð£"¬õŠ "«ð£«ø‹ð£"õ£èˆ î¼A«ø£‹.

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (பண்பாடு)

## இரு பொருளில் ஒரே சொல்

ஒரே வார்த்தைக்கு ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தமிருப்பதை வைத்துப் பலவிதமான ச்லேஷை (சிலேடை) கவிதைகள் பண்ணப்பட்டிருக்கின்றன.

நம்முடைய ஆசார்யாளே இப்படி ஒன்று செய்திருக்கிறார். பவானி என்ற வார்த்தை பெயர்ச் சொல்லாயிருக்கிறபோது அம்பாளின் பேர். அதே 'பவானி'என்பது வினைச்சொல்லாயும் இருக்கிறது. இங்கே 'பவானி'என்பதற்கு 'ஆகிறேன்'என்று அர்த்தம். இந்த இரண்டு அர்த்தங்களையும் வைத்து விளையாடி ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் "பவானி த்வம் தாஸே"என்று ஸ்லோகம் சொல்லியிருக்கிறார்*.

ஆசார்யாளையே அவருடை சிஷ்யரான தோடகர் "பவ ஏவ பவான்"என்று ஸ்துதிக்கிறார். இங்கே "பவான்"என்றால் "தாங்கள்", "பவ"என்றால் சிவபெருமான். "தாங்கள் சிவபெருமானே"என்று அர்த்தம்.

புதுக்கோட்டையில் பவாநி நாய்க் என்று ஒரு திவான் இருந்தார். மஹாராஷ்டிர ப்ராம்மணர். மிகவும் தர்ம சீலர். முக்யமாக வித்வான்களை விசேஷேமாக ஆதரித்தவர். அவர் நடத்தின வித்வத் ஸதஸில் 'மன்னார்குடிப் பெரியவாள்'என்றே மரியாதையாகச் சொல்லப்பட்ட ராஜு சாஸ்த்ரிகள்கூடக் கலந்து கொண்டிருக்கிறார். 'சாடு'என்பதாகத் தனி மநுஷ்யர்களின் குணங்களைச் சிறப்பித்து ஸ்லோகங்கள் சொல்வதுண்டு. இம்மாதிரி பவாநி நாய்க்கை ஸ்தோத்ரிக்கும் ஒரு ஸ்லோகத்திலும் 'பவாநி'என்பதை noun-ஆகவும் verb-ஆகவும் இரண்டு அர்த்தத்தில் சொல்லியிருக்கிறது. "பவாநி உத்தம என்பதற்குப் பெரிதாக வ்யாகரண விதி செய்து ஸ்தாபிக்க வேண்டியதில்லை. இந்த பவாநியைப் பார்த்தாலே போதும்"என்று பொருள் தரும்படி அந்த ஸ்லோகம் இருக்கிறது.

தன்மை first person என்று ஒருத்தன் தன்னையே 'நான்'என்று சொல்வதை ஸம்ஸ்க்ருதத்தில் 'உத்தமபுருஷன்'என்பார்கள். 'நீ'â¡Aø º¡Q¬ô, second person â¡ð¬î 'ñ˜òñ ¹¼û¡'â¡ð£˜èœ.

'Üõ¡'â¡Aø ðì˜,¬è, third person-ä 'Šóîñ ¹¼û¡'â¡ð¶. à˜îñ ¹¼û¡ â¡ø£™ àê‰î °íƒèÀœ÷õªù¡Á‹, ñˆòñ ¹¼û¡ â¡ø£™ ú£ñ£¡ò Ýú£Iªò¡Á‹ Þ¡ªù£¼ Ü˜˜î‹ Þ¼,Aøî™ôõ£?Þ¬î ¬õˆ¶ ð‡EJ¼,Aø¶!"ðõ£G"(ÝA«ø¡) â¡ð¶ 'à˜îñ ¹¼û'ù£ù first person î£«ù?

இதேபோல இன்னொரு ஸ்லோகம்:வேங்கடராம சாஸ்த்ரி என்று நூற்றைம்பது வருஷத்துக்கு முந்தி வித்வான் இருந்தார். ஸாதாரணமாக (நான் சொல்வதைத் தப்பாக நினைக்கக் கூடாது) வித்வான்களென்றால் வாங்கிக் கொள்பவர்களாகத்தான் இருப்பார்களே தவிர கொடுப்பவர்களாக இருப்பதில்லை!பல பேரைப் பற்றிக் கேள்வியும் படுகிறோம்:"என்னவோ தான தர்மம் என்று ப்ரமாதமாக உபந்நியாஸம் செய்கிறார்!இப்படிப் பண்ணியே எவ்வளவோ பங்களா, டெபாஸிட் எல்லாம் சேர்த்துக் கொண்ட பிறகும், பிறத்தியாருக்குத்தான் உபதேசம் செய்கிறாரே தவிர, தான் ஒரு காசுகூட ஒரு தர்மத்துக்கும் கொசுக்கமாட்டேன் என்கிறாரே"என்று சொல்லுகிறார்கள். நம் காலத்தில் இதற்கு விதி விலக்காக இருந்த ஒரு சில பேர்களில் தேதியூர் (ஸுப்ரஹ்மண்ய) சாஸ்திரிகளை முதலில் சொல்ல வேண்டும். இவர் மாதிரியே ஒரு எக்ஸெப்ஷனாக அந்த நாளில் வேங்கடராம சாஸ்திரிகள் இருந்திருக்கிறார்.

அவர் இருந்தது இருக்கட்டும். இப்போது கொஞ்சம் ரீக்ஷீணீனீனீணீக்ஷீ சொல்லித் தருகிறேன். ' தேஹி ' என்ற வார்த்தை அநேகமாக எல்லாருக்கும் தெரிந்திருக்கும். 'கொடு'என்று யாசிக்கிற வார்த்தை. ஸெகன்ட் பெர்ஸனாக உள்ள ஒருத்தரைப் பார்த்துக் கேட்பது 'தேஹி'. அதாவது இது மத்யம புருஷன். 'தத்', 'தா'என்பது இதற்கு 'ரூட்'. 'ஜிஷீ ரீவீஸ்மீ' என்று அர்த்தம். 'நீ கொடு'என்பதற்கு 'தேஹி'. 'நான் கொடுக்கிறேன்'என்பதற்கு இதே ரூட்டிலிருந்து 'தத்யாம்'என்று சொல்ல வேண்டும். இது ஃபர்ஸ்ட் பெர்ஸன் என்கிற உத்தம புருஷன்.

வேங்கடராம சாஸ்திரிகள் மற்ற வித்வான்களுக்கும் பண்டிதர்களுக்கும் நிறைய ஸம்மானம் செய்து ஆதரித்தவர். அதனால் அவர்களில் ஒருவர் அவரைப் பற்றிப் புகழ்ந்து ஒரு ஸ்லோகம் செய்தார். அதிலே நான் மேலே சொன்ன 'க்ராமர்'ஸமாசாரங்களை ரஸமாகச் சேர்த்திருக்கிறார். என்ன சொல்கிறாரென்றால்:ஸரஸ்வதி இதுவரை ரொம்பவும் வ்யாகுலப்பட்டுக் கொண்டிருந்தாள் எதற்காக?'தான் வெறும் ஸாதாரண மநுஷ்யர்களான மத்யம புருஷர்களையே ஆச்சரயிக்க வேண்டியிருக்கிறதே!'என்றுதான் வியாகுலப்பட்டுக் கொண்டிருந்தாளாம். வித்வான்களை ஸரஸ்வதி ஆச்ரயிப்பதாகவும், தனிகர்களை லக்ஷ்மி ஆச்ரயிப்பதாகவும் சொல்வது வழக்கம். " 'நடுத்தரப் பேர்வழிகளையே நாம் அடைய வேண்டியதாயிருக்கிறதே"என்று இதுமட்டும் கவலைப்பட்டுக் கொண்டிருந்த ஸரஸ்வதி இப்போதுதான் கவலை போய் ஸந்தோஷம் அடைந்திருக்கிறாள். ஏனென்றால் இப்போது அவள் ஆச்சரயிருப்பவர்களில் வேங்கடராம சாஸ்த்ரிகள் என்ற உத்தம புருஷர் ஒருத்தர் இருக்கிறாரல்லவா?"என்று சொல்கிறார்.

'தேஹி, தேஹி, தேஹி'என்றே போய்க் கொண்டிருந்தவர்கள் மத்யம புருஷ வாக்யத்தைச் சொன்னவர்கள்; அப்படிப் போய்க்கொண்டிருந்த பண்டித ஸமூஹத்திலே வாரிக்கொடுப்பவராக, "நான் கொடுக்கிறேன்;வாங்கிக்கொள்ள வாருங்கள்"என்று 'தத்யாம்'சொன்னவர் வேங்கடராம சாஸ்த்ரி. உத்தம புருஷ வாக்யத்தைச் சொன்னவர் இவர்தான்!

அவரவர் சொன்ன வார்த்தைக்கு 'க்ராமர்'படி இருக்கிற பேரே அவரவருடைய குணத்தையும் காட்டுவதாக இருக்கிறதென்பதை வைத்து இந்த ஸ்லோகம் சமத்காரமாகச் செய்யப்பட்டிருக்கிறது.

ஏதாவந்தமநேஹஸம் பகவதீ பாரத்யநைஷீதஹோ

யா தேஹீதி ஹி மத்யமேந புருஷேணாத்யந்தகிந்நா ஸதீ *

ஸ்ரீமத் வேங்கடராம நாமக ஸுதீ தௌரேய-மாஸாத்யஸா

தத்யாமித்யதுநோத்தமேந புருஷேணாநந்தமாவிந்ததி **

(ஏதாவந்தம் அநேஹஸம் பகவதீ பாரதி அநைஷீத் அஹோ

யா தேஹி இஹி மத்யமேந புருஷேண அத்யந்த கிந்நா ஸதீ*

ஸ்ரீமத் வேங்கட்ராம நாமக ஸூதீ தௌரேயம் ஆஸாத்யஸா

தத்யாம் இதி அதுநா உத்தமேந புருஷேண ஆநந்தம் ஆவிந்ததி**)

அஹோ - அய்யோ பாவம்! ஏதாவந்தம் அநேஹஸம் - இந்தக் காலம் வரையில்; தேஹி இதி - 'தேஹி'என்கிற; மத்யமேந புருஷேண - மத்யம புருஷர்களால்; அத்யந்த கிந்நா ஸதீ - ரொம்பவும் மனக்லேசம் கொண்டவளாகி; பகவதீ பாரதி - ஸரஸ்வதி தேவி; அனைஷீத் - தளர்ந்து பீமீஜீக்ஷீமீவுமீபீ ஆகியிருந்தாள். ( ஹி - என்பது ஒரு அபிப்ராயத்திற்கு அழுத்தம் கொடுக்கிற ஒற்றையெழுத்து வார்த்தை.) அதுநா - இப்போது; ஸ்ரீமத் வேங்கடராம - மரியாதைக்குகந்த வேங்கடராமர் என்னும்; நாமக - பெயர் கொண்ட; ஸூதீ - ஸத்வித்வானை; தௌரேயம் - (ஸரஸ்வதியானவள்) தன்னைத் தாங்கும் ஆச்ரயமாக; ஆஸாத்யஸா - அடைந்து; தத்யாம் இதி - 'தத்யாம்'என்கின்ற; உத்தமேந புருஷேண - உத்தம புருஷனால், ஆநந்தம் - ஆனந்தத்தை; ஆவிந்ததி - அநுபவிக்கிறாள்.

---

* Mõó‹ "ªîŒõˆF¡ °ó™"ºîŸð°FJ™ "ðõ£Q¨õ‹"â¡ø à¬óJ™ è£‡è

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**த்ரிபுர ஸம்ஹார ஸ்லோகம்**

**நாலீகாஸநம் ஈஸ்வர : சிகரிணாம் தத்-கந்தரோத்தாயிநோ**

**கந்தர்வா : புநர்-ஏதத்-அத்வ-பதிகௌ சக்ரே ச தத்-தாரக :***

**பத்ரீ-தத்-ப்ரபு-வைரிணாம் பரிப்ரூடோ ஜீவா ச யஸ்யாபவத்**

**ஜீவாந்தேவஸதாம் ரிபு-க்ஷய-விதௌ தேவாய தஸ்மை நம :****

இப்படியாகப் பரமேஸ்வராம்சமான அப்பைய தீக்ஷிதர் பரமேஸ்வரனின் த்ரிபுர ஸம்ஹாரத்தைப் பற்றி ஸ்லோகம் செய்திருக்கிறார்.

என்ன அர்த்தமென்றால்: "ஜீவாவின் சிஷ்யர்களுடைய விரோதிகளின் ஸம்ஹாரத்தின்போது எந்த தேவனுக்கு சிகரங்களின் ஈஸ்வரன் நாலீகாஸனமாகவும், அதன் (நாலீகாஸனத்தின்) கண்டத்திலிருந்து வெளிவந்தவை கந்தர்வர்களாகவும், அவர்களுடைய (கந்தர்வர்களுடைய) மார்க்கத்தில் செல்லும் இரண்டு யாத்ரிகர்கள் சக்ரமாகவும், அதை (சக்ரத்தை) தரிக்கிறவர் பத்ரீயாகவும், அந்த பத்ரீக்கு ப்ரபுவின் சத்ருக்களுடைய தலைவன் ஜீவாவாகவும் பயனாயிற்றோ அந்த தேவனுக்கு நமஸ்காரம்"இப்படி அர்த்தம்.

அர்த்தமாவது?ஒரு அர்த்தமும் ஆகவில்லையே?ஜீவாவாவது, நாலீகாஸனமாவது, பத்ரீயாவது!ஒன்றுக்கொன்று என்ன ஸம்பந்தம்?ஜீவா சிஷ்யர் ஸம்ஹாரத்தில் பத்ரீ சத்ருத் தலைவன் ஜீவாவாக ஆவதாவது?மஹாபெரியவராகச் சொல்லப்படும் அப்பைய தீக்ஷிதரா இப்படித் தலைகால் புரியாமல் பண்ணியிருக்கிறார்?

இரண்டு அர்த்தமுள்ளதாகப் பல வார்த்தைகள் இருக்கின்றன அல்லவா?இவற்றை உபயோகித்து வார்த்தை விளையாட்டுப் பண்ணுவதில் அப்பைய தீக்ஷிதர் ரொம்ப நெருடலாகச் செய்த ஸ்லோகமே இது. வேதாந்தத்துக்கு மூலப்ரமாணமாக இருக்கப்பட்ட 'ப்ரஹ்ம ஸூத்ர'த்தின் ஆரம்ப பாகத்துக்கு அவர் 'ந்யாய ரக்ஷாமணி'என்று வ்யாக்யானம் செய்திருக்கிறார். அதிலே ' **தத்-ஹேது வ்யபதேசாச்ச** ' **(1.1.14)** என்று வரும் ஸூத்ர விரிவுரையிலே இந்த ஸ்லோகம் வருகிறது. எதற்காக என்பதைப் புரியவைப்பது இப்போது

அவசியமில்லை. 'ஏதோ ஒரு intellectual exercise இதிலும் குஷி இருக்கிறது'என்றுதானே சமத்கார ஸ்லோகங்களைப் பார்க்கிறோம்?அப்படிப்பட்டதான ஸ்லோகத்தைப் பற்றி மாத்திரம் சொல்கிறேன்.

இதில் ஒரு வார்த்தையை முதலில் பெயர்ச் சொல்லாகச் சொல்லியிருக்கும். உடனே 'அதன்', 'அதற்கு', என்கிறாற்போல relative pronoun, adjectival pronoun என்பதாகவெல்லாம் அதே வார்த்தையைப் பற்றி 'தத்', 'ஏதத்'என்று மறுபடி வரும். இப்படி மறுபடி அந்த வார்த்தை வரும்போது, வார்த்தை அதுவேதான் என்றாலும் அர்த்தம் வேறாக இருக்கும்.

இப்படி ஐந்து வார்த்தைகளை இரண்டு அர்த்தத்தில் இந்த ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறது. 'நாலீகாஸநம்'என்பது ஒன்று. நாலீகம் என்றால் பாணம், தாமரை என்று இரண்டு அர்த்தம். அதனால் பாணத்தை வைத்து இழுக்கிற ஆஸனமாயுள்ள தநுஸுக்கு நாலீகாஸநம் என்று பேர். தாமரையில் உட்கார்ந்திருக்கும் பிரம்மாவுக்கும் நாலீகாஸநர் என்று பேர். 'கந்தர்வ'என்பது இரண்டாவது வார்த்தை. அதற்கு தேவ ஜாதியான கந்தர்வர் என்பதோடு, குதிரை என்றும் ஒரு அர்த்தம். 'சக்கரம்'என்பது மூன்றாவது வார்த்தை. அது தேர்ச் சக்கரத்தையும், இன்னொரு அர்த்தத்தில் விஷ்ணுவின் கையிலுள்ள சக்ராயுதத்தையும் குறிக்கும். நாலாவது வார்த்தை 'பத்ரீ'என்பது. இதற்கு பாணம் என்றும் பக்ஷி என்றும் இரண்டு அர்த்தம். இரண்டு அர்த்தமுள்ள ஐந்தாவது வார்த்தை 'ஜீவா'என்பது - நாண்கயிற்றுக்கு ஜீவா என்று பெயர்;தேவகுருவான ப்ருஹஸ்பதிக்கும் 'ஜீவ'என்று ஒரு பெயர்.

இரட்டை அர்த்த வார்த்தைகளைத் தவிர ஒற்றை அர்த்தமுள்ளதிலேயே புரியாததாயிருக்கிறவற்றைப் பார்ப்போம். சிகரங்களின் ஈஸ்வரன் என்பது மேரு பர்வதம். நர்லீகாஸனத்தின் கண்டத்திலிருந்து வெளிவந்தவை என்பது பிரம்மாவின் வாக்கிலிருந்து வந்த வேதங்கள். கந்தர்வர்களுடைய மார்க்கம் என்பது ஆகாச வீதி. அதிலே யாத்ரை பண்ணும் இருவர் ஸூர்ய சந்திரர்கள். சக்ரத்தை தரிப்பவர் மஹா விஷ்ணு. பத்ரீக்கு ப்ரபு பக்ஷிகளின் ராஜனான கருடன். அந்த ப்ரபுவின் சத்ருக்கள் ஸர்ப்பங்கள். ஆகையால் சத்ருக்களின் தலைவன் என்பது ஆதிசேஷனை, தமிழில் அர்த்தம் சொல்லும்போது முதலில் 'ஜீவாவின் சிஷ்யர்கள்'என்று சொன்னது ஸ்லோகத்தில் கடைசியில் வருகிறது. இது ப்ருஹஸ்பதியின் சீடர்களான தேவகணத்தைக் குறிக்கும். இவர்களுடைய விரோதிகளின் ஸம்ஹாரம் என்பது த்ரிபுரா ஸுரர்களின் ஸம்ஹாரத்தைத் தான்.

இந்த அர்த்தங்களை ஞாபகமாக மனஸில் வைத்துக்கொண்டு, இரண்டு அர்த்தமுள்ள ஐந்து வார்த்தைகளில் ஒவ்வொன்றும் இரண்டு இடங்களில் வரும்போது முதலில் ஒரு அர்த்தத்தையும், மறுபடி வருகையில் இன்னொரு அர்த்தத்தையும் எடுத்துக் கொண்டால், இந்த ஜீஹூக்ஷ்க்ஷ்ரீமீ பண்ணுகிற ஸ்லோகத்துக்கு 'மீனிங்'வரும். "ஜீவா என்கிற பிருஹஸ்பதியின் சீடர்களான தேவர்களின் சத்ருக்களான த்ரிபுரரின் ஸம்ஹாரத்திலே எந்த தேவனுக்கு (மஹாதேவன் என்கப்பட்ட பரமேஸ்வரனுக்கு) மேரு பர்வதம் நாலீகாஸனம் என்னும் வில்லாகவும், நாலீகாஸனர் என்ற பெயரையே கொண்ட பத்மாஸனரான பிரம்மாவின் கண்டத்திலிருந்து வந்த வேதங்கள் 'கந்தர்வ'என்று பொருள்படும் குதிரைகளாகவும், கந்தர்வ ஜாதியின் மார்க்கமான ஆகாசத்தில் செல்லும் இரு யாத்ரிகர்களான சந்த்ர-ஸூர்யர்கள் தேர்ச் சக்ரமாகவும் சக்ராயுதபாணியான மஹாவிஷ்ணு பத்ரீ என்னும் பாணமாகவும், பத்ரீ என்றே பெயர் கொண்ட பக்ஷிகளின் ராஜாவான கருடனின் சத்ருக்களுக்குத் தலைவனான ஆதிசேஷன் ஜீவா என்னும் நாண்கயிறாகவும் பயனாயினவோ அந்த மஹாதேவனுக்கு நமஸ்காரம்."

அர்த்தமாகிவிட்டதல்லவா?த்ரிபுர ஸம்ஹாரத்திலே ஈஸ்வரனுடைய ரத சக்கரங்கள் ஸூர்யனும் சந்தரனுமே!அந்த ரதத்தில் வேதங்களையே அச்வ ரூபத்தில் பூட்டியிருந்தது. ஈஸ்வரன் அப்போது மேரு பர்வதத்தை தநுஸாக்கி அதற்கு நாண்காயிறாக ஆதிசேஷனைப் பிடித்துக் கட்டி, ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவையே அம்பாகத் தொடுத்திருந்தார்.

இந்தப் புராண விஷயங்களை வேதாந்த வ்யாக்யான புஸ்தகத்தில் தர்க்க வ்யாகரண ரீதியாக தத்வத்தையும் வார்த்தையையும் விளக்கும் பொருட்டுச் சமத்கார கவிதையாக தீக்ஷிதர் கொடுத்திருக்கிறார். கவிதை என்பது இத்தனை சாஸ்திரங்களையும் இணைத்து, அவற்றுக்குக் கைகொடுக்கிறது!

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (பண்பாடு)

**வேற்று பாஷைகளில் ஒரே சொற்றொடர்**

ஒரு பாஷையில் இரண்டர்த்தம் த்வனிக்க ஒரு வார்த்தையைச் சொல்வதே 'இருசொல்லங்காரம்'என்கிறோம். மந்த்ர, தந்த்ர சாஸ்திரங்களில் மிகுந்த வ்யுத்பத்தியுடன் விளங்கியவரும், அம்பாளை நினைத்த மாத்திரத்தில் தர்சிக்கும் சக்தி பெற்றவரும், 'லலிதா ஸஹஸ்ர நாம'த்துக்கு அந்த ஸஹஸ்ர நாமம் உள்ளளவும் ப்ரகாசிக்கக் கூடிய பாஷ்யத்தை எழுதியவருமான பாஸ்கரராயர் இரண்டு வேறு பாஷைகளில் ஒரே சொற்றொடர் வெவ்வேறு பொருள் கொடுப்பதை வைத்து ஹாஸ்யமாக ஒரு கவிதை செய்திருக்கிறார். புதிர் போடுகிற மாதிரி நம்மையே விடை கேட்டிருக்கிறார்.

**ந ஸ்யாத் சேத் இதி வாக்யஸ்ய**

**கோ (அ)ர்த்த : கஸ்மிந் பிக : ப்ரம :***

**ஆந்துரீ கீர்வாண பாஷாப்யாம்**

**ஏகமேவோத்தரம் வத** **

"தெலுங்கு பாஷையில் 'இல்லையானால்'என்று அர்த்தம் கொடுக்கவேண்டு ம்;ஸம்ஸ்கிருதத்தில், 'எதனிடத்தில் குயில் என்ற பிரமை உண்டாகுமோ அது'என்று அர்த்தம் கொடுக்க வேண்டும்;இவ்வாறு இரண்டு பாஷைகளில் இரண்டு அர்த்தம் கொடுக்கக்கூடியதாகவுள்ள ஒரே வார்த்தையைச் சொல்லு"என்று ஸ்லோக ரூபமாகக் கேள்வி கேட்கிறார்.

நீங்களே யோசித்து பதில் சொல்லுங்கள் என்று நான் quiz நடத்தப் போவதில்லை!அதனால் நானே அவர் சொன்ன பதிலையும் சொல்லி விடுகிறேன்.

" **காகபோதே** "என்பதே பதில்

'இல்லாவிட்டால்', 'இல்லையானால்'என்பதற்குத் தெலுங்கிலே 'லேகபோதே', 'காகபோதே'என்று சொல்வார்கள்.

குயில் காக்காய்க் கூட்டிலே கொண்டு போய்த் தன் முட்டையை வைத்துவிடும்;காக்காய் அதைத் தன் முட்டை என்றே நினைத்துக் குஞ்சு பொரித்துவிடும். அந்தக் குஞ்சும் காக்காய்க் குஞ்சு போலத்தான் இருக்கும். அது சத்தம் போட ஆரம்பிக்கிறபோதுதான் வித்யாஸம் தெரியும். முட்டையை வைத்துவிட்டு வந்த குயில் அது பொரிந்ததா என்று பார்ப்பதற்காக அப்புறம் போய்ப் பார்க்கும். கூட்டிலே காக்காய் முட்டை, குயில் முட்டை இரண்டுந் தான் கலந்து பொரிந்து குஞ்சுகள் வெளிவந்திருக்கும். அதிலே எது காக்காய், எது குயில் என்று வித்யாஸமே தெரியாது. அதனால் குயில் காக்காய் குஞ்சையே தன்னுடையது என்று தப்பாக நினைத்துவிடும். இப்படித் தப்பாக நினைப்பதுதான் ப்ரமை என்பது.

'காக போதே'என்று ஸம்ஸ்க்ருதத்தில் சொன்னால் 'காக்காயின் குஞ்சிடத்தில்'என்று அர்த்தம். 'காகம்'என்றால் காகம், 'போதம்'â¡ø£™ °…².

"குயில் என்ற ப்ரமை எதனிடத்தில் உண்டாகும்?"என்று கேட்டால் இதற்குப் பதில் என்ன?"காக்காய்க் குஞ்சிடத்தில்"என்பதுதான். அதை ஸம்ஸ்க்ருதத்தில் சொன்னால் 'காகபோதே'. அந்த 'காகபோதே'என்ற வார்த்தைக்கே ஆந்த்ரா பாஷையில் 'இல்லாவிட்டால்'என்று அர்த்தம்.

**ஏகாம்ரர் - எண்களில்**

ரொம்ப விசித்ரமாய் கவி பாடுவதில் காளமேகப் புலவரைத் தமிழில் தலைமை ஸ்தானத்தில் வைத்திருக்கிறார்கள். "இம் என்பதற்கு முன்னே எழுநூறு எண்ணூறு என்று கவிதைகளைக் கொட்டிவிடுவேனாக்கும். நிறைய ஜலம் முட்டிக்கொண்டு கறுப்பாயிருக்கிற ஒரு காளமேகம் மழையைக் கொட்டுவதுபோலக் கவிதைகளை கொட்டுகிற காளமேகமாக்கும் நான்"என்று அவரே சொல்லிக் கொண்டிருக்கிறார்.

நினைத்தே பார்க்கமுடியாதபடி நூதன நூதனமாக எதையாவது சொல்லி அந்தக் கருத்துக்கு இசைய இவர் கவிபாட வேண்டும் என்று மற்ற கவிகள் பந்தயம் வைத்திருக்கிறார்கள். கொஞ்சங்கூடச் சளைக்காமல் அத்தனை பந்தயத்திலும் அவர் ஜயித்திருக்கிறார்.

நமக்குக் இந்தக் காஞ்சீபுரம், இதிலே 'ஒரு மா'என்பதாக ஒரே ஒரு மாம்பழத்தைப் பழுக்கவிட்டுக் கொண்டிருக்கும் ஏகாம்ரம் ( **ஏக** - ஒரு; **ஆம்ரம்** - மா) என்றால் கிட்டின உறவு மாதிரி. அதனால் அது ஸம்பந்தமாக ஒரு காளமேகக் கவிதை பார்க்கலாம்.

'ஒரே ஒரு மா'என்கிற போது அதைவிடக் குறைச்சலில்லை என்று ரொம்பச் சின்னதாக ஒரு நம்பரைச் சொன்னாற்போலிருக்கிறது. நான் சொல்லப் போகிற கவிதையிலோ எல்லாமே ஒன்றுக்கும் சின்ன நம்பர்களாக வரும்.

"ஒன்றைவிடச் சின்ன பின்னங்களாக முக்கால், அரை, கால், அரைக்கால், இருமா, மாகாணி, ஒருமா, கீழரை என்று இருக்கிற எண்ணிக்கைகளையெல்லாம் குறிப்பிட்டு ஏகாம்ரநாதர் ஸம்பந்தமாக ஒரு வெண்பா பண்ணிக் காட்டும்"என்று மற்ற கவிகள் சாலஞ்ஜ் செய்தார்கள்.

'ஆசு கவித்வம்'என்பதாக உடனுக்குடன், கவி பாடும் வல்லமையை அகிலாண்டேச்வரியின் அநுக்ரஹத்தால் பெற்றருந்த காளமேகம் கொஞ்சங்கூட யோசிக்காமல் பாடிவிட்டார்

**முக்காலும் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்**

**அக்கால ரைக்கால்கண்(டு) அஞ்சாமுன் - விக்கி**

**இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி**

**ஒருமாவின் கீழரைஇன் றோது** .

இதிலே முக்காலிருந்து, கீழரை வரை உள்ள எல்லா எண்களும் வந்துவிடுகின்றன. ஆனால் எல்லாம் வேறே அர்த்தத்தில்!

வ்ருத்தாப்யமும், யமபயமும், வியாதியும், சாவும் வருவதற்கு முன்பு, கச்சி ஏகம்பனை இப்போதிலிருந்தே ஸ்தோத்ரம் பண்ணு;'இன்று ஓது'என்பது வெண்பாவின் தாத்பர்யம்.

'முக்கலுக்கு ஏகா முன்'என்றால் இரண்டு காலோடு மூன்றாவது காலாகக் கழியைப் பிடித்துக் கொள்ளும் காலம் வருவதற்கு முந்தி என்று அர்த்தம். 'முன்னரையில் வீழா முன்'என்றால் 'முன்னுச்சி மயிரில் நரை ஏற்புவதற்கு முந்தி'. 'முன்னுரை'என்பதில் 'நரை', 'அரை'இரண்டும் வந்து விடுகின்றன. 'அக்காலரைக்கால் கண்டு'என்பதில் கால், அரைக்கால் இரண்டும் வருகின்றன. 'அந்தப் பொல்லாத காலனின் அடிச் சுவடியைக் கண்டு' என்பது இதற்கு அர்த்தம். 'யமன் வருகிற தடயத்தைப் பார்த்து பயப்படுவதற்கு முன்'என்று தொடர்ந்து போகிறது. வயோதிகத்தில் கபம், ச்லேஷ்மம் என்று விக்கலும் இருமலும் ஏற்படும். 'அதற்கு முன்'â¡Aø£˜ - 'M,A Þ¼ñ£º¡'. Þƒ«è 'Þ¼ñ£'â¡ø â‡E,¬è õ‰¶ M´Aø¶. ñ£è£E â¡ð¶‹ å¼ â‡. è£EŠ ðóŠ¹,º‹ ªðKê£è á¼,º ªõOJ«ô ¼ˆóÌI (ñò£ù‹) â¡Á M†®¼Šð£˜èœ. Ü¬î"î£¡ 'ñ£è£E'â¡Á èM ªê£™Aø£˜.

'ñ£è£E‚«èè£ º¡'¼ˆó ÌI‚ºŠ «ð£Œ„ «ê¼õîŸº º¡ù£«ô. 'å¼ñ£'â¡ø Þô‚èˆ¬î«ò ãè Ý‹óñ£ù å¼ñ£ Ý‚A‚ ªè£‡´ M´Aø£˜. è£…Y¹óˆF™ Þ%oî å¼ ñ£M¡ W«ö õR‚Aøõ¬óˆî£¡ 'è„C å¼ ñ£M¡ Wö¬ó'â¡Aø£˜. Üõ¬ó‚ ÞŠð«õ H®ˆ¶ v«î£ˆó‹ ªêŒ:

"Þù«ø£¶".

ஏகத்துக்குக் கீழ்ப்பட்ட நம்பர்களால் ஏகாம்ரரைப் பற்றிய நினைப்பில் கொண்டு சேர்த்து விடுகிறார்!

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**கஞ்சி வரதர்**

காஞ்சீபுரத்தில் வரதராஜா 'பேரருளாளப் பெருமாள்'என்று விசேஷமாக, விளங்கிக்கொண்டிருக்கிறார். அவரைப் பற்றி ப்ரஸித்தமாக இருசொல்லலங்கார ஹாஸ்யத் துணக்கு இருக்கிறது.

"கஞ்சி வரதப்பா!"என்று காஞ்சீபுர வரதராஜாவை நினைத்து, வியாதியில் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒருத்தர் வாய்விட்டு அரற்றினாராம்.

பக்கத்திலே ஒரு சாப்பாட்டு ராமன் இருந்தான். அவனுக்குக் கொஞ்ச நாளாக ஜ்வரம். டாக்டர், 'சாதம் சாப்பிடக்கூடாது. கஞ்சி வேண்டுமானால் கொஞ்சம் குடிக்கலாம்'என்று கண்டிப்புப் பண்ணியிருந்தார். "கஞ்சி எப்போ வரும்?எப்போ வரும்?"என்று அவன் தவித்துக் கொண்டிருந்தான்.

அதனாலே, பக்கத்திலே இருந்தவர், "கஞ்சி வரதப்பா"என்று சொன்னதை, "கஞ்சி வருகிறது அப்பா"என்று அவர் சொல்லுகிறாரென்று நினைத்து விட்டான். ஆள் யாரும் வரக்காணோமே என்பதால், "எங்கே வரதப்பா?"என்றானாம்!

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (பண்பாடு)

**கஞ்சி குடிக்காத காமாக்ஷி !**

காஞ்சீபுர மத்தியில் ராணியாக இருக்கிற அம்பாளையும் கஞ்சி ஸம்பந்தப்படுத்தி ஒரு இருசொல்லங்காரக் கவிதை இருக்கிறது.

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது அதற்கு அர்த்தம் என்னவென்றால்:காமாக்ஷியம்பிகை கஞ்சி குடிக்க மாட்டாள். ஏதோ கம்பைப் பொங்கிச் சோறாகப் போட்டாலும் சாப்பிடமாட்டாள். காய்கறி, அவியல், கூட்டு, ஊறுகாய் என்று ஏதாவது வியஞ்ஜனங்களையாவது இஷ்டப்பட்டு சாப்பிடுவாளா என்றால் அதுவும் மாட்டாள். அஞ்சு தலை பாம்புக்கு (பாம்புக்கு மரியாதை கொடுத்து 'பாம்பார்'என்று சொல்ல வேண்டும். ஏனென்றால் செய்யுளில் 'அரவம்'என்றில்லாமல் 'அரவார்'என்று வருகிறது. இப்படிப்பட்ட ஐந்துதலைப் பாம்புக்கு அம்பாள்) ஆறாவது தலையாக மானஸிகமாக ஆகிறாளாம்!

**கஞ்சி குடியாளே கம்பஞ்சோ றுண்ணாளே**

**வெஞ்சினங்க ளொன்றும் விரும்பாளே - நெஞ்சுதனில்**

**அஞ்சுதலை யரவாருக்(கு) ஆறுதலை யாவாளே**

**கஞ்சமுகக் காமாட்சி காண்**

கஞ்ச முகம் என்றால் தாமரைப் பூப்போலவுள்ள முகம். அம்பாள் முகம் அப்படி இருக்கிறது. கஞ்சி குடிக்காதவள், எதுவும் சாப்பிடாமல் கஞ்சத்தனமாயிருக்கிறாள் என்கிற மாதிரியும் த்வனிக்கிறது!

ஸரி, அம்பாளைப் பற்றி இப்படி ஏதோ அல்ப விஷயங்களைச் சொல்லி அப்புறம் ஆறுதலைப் பாம்பு என்று விஷமாக முடித்தால் என்ன அர்த்தம்?

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் உங்களுக்கே புரிந்து விடும் - சிலதாவது.

'கஞ்சி குடியாள்'என்றால் காஞ்சீபுரத்தில் குடி கொண்டிருப்பவள் என்று அர்த்தம். 'கம்பஞ்சோறு உண்ணாள்'என்றால் ஏகம்பன் என்றும் கம்பன் என்றும் சொல்லப்படும் ஏகாம்ரநாதனுக்கு நைவேத்யமாகிற சோற்றை உண்ணாதவள் என்று அர்த்தம். சிவாலயங்களில் முதலில் ஈஸ்வரனுக்கு நைவேத்யம் பண்ணிவிட்டு அப்புறம் அதையேதான் அவன் பிரஸாதமாக அம்பாள் முதலான மற்ற எல்லா தெய்வங்களுக்கும் நைவேத்யம் செய்வார்கள். மதுரையிலே மட்டும் மீனாக்ஷிக்கு முதலில் செய்துவிட்டு அப்புறந்தான் ஸுந்தரேஸ்வரர் உள்பட மற்ற எல்லோருக்கும்! காஞ்சிபுரத்திலே நூற்றெட்டு சிவலாயங்கள் இருந்தபோதிலும் ஒன்றிலாவது அம்பாள் ஸந்நதியில்லாமல், அந்தப் பராசக்தி எல்லா மூர்த்திகளுக்கும் மேற்பட்ட பரப்ரஹ்ம ஸ்வரூபிணியாக காமாக்ஷி என்று தனிக்கோயிலில் வாஸம் செய்கிறாள்*. அங்கே அவளுக்கென்றே தயார் செய்கிற நைவேத்யம்தான் அவளுக்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது. ஏகாம்ரேச்வரர் நைவேத்யம் அவளுக்கு வருவதில்லை. இதனாலே அவள் "கம்பஞ்சோறுண்ணாளே!"

அவள் பரம ப்ரேமையே ஒரு ரூபமாக ஆனவள். நாம் பண்ணுகின்ற தப்புகளுக்கு, அபசாரங்களுக்கு நம் மேல் அவளுக்கு எத்தனையோ கோபம் கோபமாக வர வேண்டும். ஆனால் அவளுக்குக் கோபித்துக் கொள்வது என்றால் கொஞ்சங்கூடப் பிடிப்பதில்லை. 'வெஞ்சினங்கள் ஒன்றும் விரும்பாளே'என்றது இப்படி வெம்மையாக, அதாவது ரொம்ப உஷ்ணமாக, சினம் கொள்வதில் அவளுக்கு இஷ்டமே இல்லை என்று, அவளுடைய தயையை, க்ஷமையை (மன்னித்தருளும் மனப்பான்மையை) தெரிவிக்கிற வாசகமாக ஆகிறது. ' **வ்யஞ்ஜனம்** 'என்பதை தமிழ்ப் பாட்டில் 'வெஞ்சினம்'என்று சொல்லலாம்.

அப்படிச் சொல்லும்போது, கஞ்சி காமாக்ஷிக்கு வியஞ்ஜனமில்லாமல் சுத்தான்னம் மட்டும் நிவேதிக்க வேண்டுமென்று இருக்கிற அபிப்பிராயத்தை இந்தப் பாட்டு சொல்லுவதாகவும் ஆகும். அரவார் என்றால் ஹரனான சிவனைச் சேர்ந்த அடியார் என்று அர்த்தம். சிவபெருமானுக்குத் ஐந்து முகங்கள் உண்டு. அதனால் அவர் 'அஞ்சுதலை அரன்'ஆகிறார். அவரை மனஸிலே வைத்து உபாஸிக்கிறவர்கள் 'நெஞ்சுதனில் அஞ்சுதலை யரவார்'. 'ஆறுதலையாவாள்'என்றால் 'ஆறுதலை அளிக்கிறவள்', "ஆறுதலாக இருப்பவள்"என்று அர்த்தம். நெஞ்சத்தில் ஈஸ்வரனை உபாஸிக்கிறவர்களுக்கு ஸம்ஸாரக் கஷ்டம் தெரியாமல் ஆறுதலாக இருப்பவள் அம்பாள்.

'நெஞ்சுதனில் அஞ்சுதலை அறிவார்க்கு'என்கிற பாடத்தை வைத்துக்கொண்டால் 'மனஸிலே பயத்தை உடையவருக்கு'அம்பாள் அதைப் போக்கி ஆறுதல் தருகிறாள் என்று ஆகும். "அஞ்சுதலை"- அஞ்சுதல், அச்சப்படுதல் என்பதை.

---

* ÞîŸè£ù M¼ˆî£‰î¬î "ªîŒõˆF¡ °ó™" ºîŸð°FJ½œ÷ "è£ñ£VJ¡ êK¬î" â¡ø à¬óJ™ è£‡è.

---

## தாளும் கோளும்

காமாக்ஷி ஸகல கஷ்டத்தையும் நிவ்ருத்தி பண்ணிப் பரமானந்தத்தை அளிக்கிறவள். நமக்கு ஏற்படும் கஷ்டங்களுக்கு ஜ்யோதிஷ ரீதியில் நவக்ரஹங்களைத் தானே காரணமாகச் சொல்கிறார்கள்?இந்த நவக்ரஹ பாதிப்பு எதுவும் அவள் பாதத்தை ஸ்மரிக்கிறவருக்கு ஏற்படாது என்று பொருள் படுமாறு 'மூக பஞ்சசதி'யில் வார்த்தை விளையாட்டுப் பண்ணி ஒரு ஸ்லோகம் இருக்கிறது.

"மூக பஞ்சசதி"என்பது ஞானம், பக்தி, சாக்த சாஸ்த்ர தத்வங்கள், காவ்ய ரஸம் எல்லாம் சேர்ந்ததாகக் காமாக்ஷியைப் பற்றி மூகர் என்பவர் அநுக்ரஹித்துள்ள ஐநூறு ஸ்லோகம் கொண்ட ஸ்தோத்ரம். இவற்றிலொன்று தான் நவக்ரஹங்களில் ஒவ்வொன்றின் தன்மையும் அம்பாளின் சரணாவிந்தத்தில் இருப்பதாகச் சொல்லும் ஸ்லோகம்.

**ததாநோ பாஸ்வத்தாம் அம்ருதநிலயோ லோஹிதவபு :**

**விநம்ராணாம் ஸௌம்யோ குருரபி கவித்வம் ச கலயந் ***

**கதௌ மந்தோ கங்காதர-மஹிஷி காமாக்ஷி பஜதாம்**

**தம : கேதுர்-மாத : ஸ்தவ சரணபத்மோ விஜயதே ****

(பாதாரவிந்த சதகம்-59)

ப்ரகாசிப்பதாலே 'பாஸ்வத்தாம்'என்று அந்தப் பாதத்தைச் சொல்கிறார். நவக்ரஹங்களில் முதலில் வரும் ஸூர்யனின் தன்மை இதுதானே?'பாஸ்கரன்'என்றே அவனுக்கு ஒரு பேர். அம்பாள் சரணத்திலிருந்து அம்ருதம் கொட்டுகிறது. இதை 'அம்ருத நிலய:'- என்கிறார். யோகிகள் சிரஸின் உச்சியில் அவளுடைய பாத பத்மத்தின் அம்ருதம் பெருகுவதில் அப்படியே 'உச்சி குளிர்ந்து'இருப்பார்க்ள். 'சரணாம்ருதம்'என்றே சொல்வது வழக்கம். இதேபோல அம்ருதம் பெருக்குகிற தன்மை சந்த்ரனுக்கு உண்டு. அதனால்தான் 'ஸுதாகரன்'என்று பெயர். 'லோஹிதவபு:'என்று ஸ்லோகத் இருப்பதற்கு 'சிவந்த ரூபமுள்ளது'என்று அர்த்தம். சிவப்பாயிருப்பதுதான் செவ்வாய். 'விநம்ராமாணாம் ஸௌம்ய:'- அந்தப் பாதத்திலே போய் நமஸ்காரம் பண்ணுகிறவர்களுக்கு அது ஸௌம்யமாயிருக்கிறது. மனஸுக்குப் பரமஹிதமாக, ம்ருதுவாக, சாந்தமாக இருப்பதெல்லாம் ஸௌம்யம். உக்ர தேவதை என்பதற்கு ஆப்போஸிட்டாக ஸௌம்ய தேவதை என்கிறோம். நேர் அர்த்தம் என்ன?'ஸோம'என்ற சந்திரனிலிருந்து உண்டானதே 'ஸௌம்யம்'. நிலவு போலக் கோமளமாக, சாந்தமும் ஹிதமும் தருவதாக இருப்பதையெல்லாம் இதனால் ஸௌம்யம் என்கிறோம். ஸோமனுக்குப் புத்ரனாக உண்டானவன் புதன். அதனால் அவனுக்கு ஸௌம்யன் என்று பேர். அம்பாள் பாதம் 'குருரபி'- 'குரு:ÜH'â¡Aø£˜. 'º¼õ£ù¶‹Ãì'â¡Aø£˜. º¼ â¡ø£™ ºíM«êû˜î£™ ªðKò¶ â¡Á Ü˜˜î‹. Ü«î£´Ãì Ü‰îŠ ð£î‹ þíè£ô‹ ð†´M†ì£™ F¼õ® b¬þJù£«ô Šóyñë£ù«ñ R˜F˜¶M´‹. ÞŠð® ë£ù‹ î¼õî£½‹ Ü¶ º¼õ£J¼‚Aø¶. º¼ â¡ø£™ Mò£ö¡, º¼õ£ó‹ â¡«ø Ü‰î, Aö¬ñ‚°Š «ð˜. 'èM˜õ‹ ê èôò‰'- èM˜õˆ¬î»‹ Ü¸óU˜¶M´Aø¶ Ü‹ð£œ ð£î‹. Ü‹ð£À¬ìò ð£î b˜˜î‹ Íè¬ù»‹ (á¬ñ¬ò»‹) Ãì ñý£èMò£‚AM´AøªîÁ Ýê£˜ò£«÷ ªê£™LJ¼‚Aø£˜*. ÞŠð® Üõ÷¼÷£™ Ü¼†èMò£A, å¼ è£ô˜F™ î£‹ Íèù£J¼‰î¬î «ô£èªñ™ô£‹ ÜPò «õ‡´ªñ¡ðî£™ 'Íè˜'â¡«ø ªðò˜ ¬õ˜¶, ªè£‡ìõ˜î£¡ Þ‰î v«ô£è˜¬îŠ ð‡EJ¼Šðõ«ó! ïõ‚óýƒèO™ èM˜õè£óè¡ ªõœO‚Aö¬ñ, ÅKò ²‚ó¡.

குரு என்று வெறுமே சொன்னால் எப்படி அது தேவகுருவான ப்ருஹஸ்பதியைத்தான் குறிக்குமோ அப்படியே 'கவி'என்று வெறுமே சொன்னால் அது அஸுர குருவான சுக்ராசாரியாரைத்தான் குறிப்பிடும். கவித்வ சக்தி அருளுவதால் அம்பாளின் பாதம்

சுக்ரனாக இருக்கிறது. 'கதௌ மந்த:'மிக மெதுவான நடை உள்ளது அம்பாள் பாதம். 'மந்தன்'என்று சனிக்கு பேர். அது ரொம்ப மெதுவாக ஸஞ்சாரம் செய்யும் க்ரஹம். 'சனீச்வரன்'என்று சொல்வது தப்பு. மற்ற க்ரஹம் எதற்கும் இல்லாத 'ஈஸ்வர'ப் பட்டம் இதற்கு மட்டும் வருவதற்கு நியாயமில்லை. 'சனைச்சரன்'என்பதே சரியான வார்த்தை. 'சனை:'- மெதுவாக, 'சர'- ஸஞ்சரிப்பவன். அதைச் சுருக்கி சனி என்கிறோம். 'பஜதாம் தம:கேது:'- அம்பாள் பாதம் தன்னை பஜிக்கிறவர்களின் தமஸுக்கு உலை வைக்கும் தூமகேதுவாக இருக்கிறது. தமஸ் என்றால் இருட்டு. துக்கம், அஞ்ஞானமெல்லாம்தான் பெரிய இருட்டு. தமஸ் என்று ராஹுவுக்கும் பெயர். கேது என்பது ஒன்பதாவது க்ரஹமென்று எல்லோருக்கும் தெரியும்.

ஸ்லோகத்தில் ராஹுவின் தன்மை மாத்திரம் நேரே அம்பாள் பாதத்துக்கிருப்பதாகச் சொல்லாமல், ஆனாலும் 'தமஸ்'என்ற வார்த்தையை வைத்து, மற்ற எட்டு க்ரஹங்களையும் நேரே அந்தச் சரண ஸம்பந்தப் படுத்திச் சொல்லியிருக்கிறது.

---

* "ªú÷‰î˜ò ôýK"-v«ô£ 98

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (பண்பாடு)

**கொசுவும் கேசவனும்**

லோகத்திலே ஒரு விஷயம் பாக்கியில்லாமல் எல்லாவற்றையும் பற்றி இப்படி அநேக கவிதைகள் சமத்காரமாக இருக்கின்றன. பரமாத்மாவிலிருந்து ஆரம்பித்து ஒரு சின்னக் கொசுவரையில் எதைப்பற்றியும் அர்த்த சித்ரமாகவும் சப்த சித்ரமாகவும் கவிகள் விநோத விநோதமாகப் பண்ணியிருக்கிறார்கள்.

பரமாத்மா, கொசு இரண்டையும் குறிப்பிடுவதாகச் சிலேடை செய்துகூடக் கவி இருக்கிறது. ஒரு அர்த்தப்படி ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவைக் குறிக்கும்;இன்னொரு அர்த்தப்படி கொசுவைக் குறிப்பிடும்:

**சக்ர-ப்ரமண-கரத்வாத்**

**குத்ருஷ்டிபிர்-தூரவர்ஜ்யமாநத்வாத்** *

**ச்ருத்யந்த-கேலநத்வாத்**

**மசக த்வாமேவ மாதவம் மந்யே** **

**' சக்ர ப்ரமண கரத்வாத் '**- சுற்றிக்கொண்டேயுள்ள சக்ரத்தைக் கொண்ட கரத்தை உடையவர் மஹாவிஷ்ணு. சக்கரவட்டமாகச் சுற்றும் காரியத்தை ஓயாமல் செய்வது கொசு. 'கர'என்பது விஷ்ணுவைக் குறிக்கும் போது 'கை'என்று பொருள்படும். கொசுவைக் குறிப்பிடும் 'செய்வது'என்று பொருள்படும்.

**' குத்ருஷ்டிபி : தூர வர்ஜ்யமாநத்வாத் '**- கெட்ட நோக்குடையவர்களால் நெருங்க முடியாமல் தூரத்தில் விலகியிருப்பவர் பகவான். 'குத்ருஷ்டிபி:'என்றால் 'கண் வலிக்காரர்கள ால்'என்றும் இன்னொரு அர்த்தம். கொசு என்றாலே கண்நோவுள்ளவர்கள் தூர ஓடி விடுவார்கள்.

**' ச்ருத்யந்த கேலநத்வாத் '**- 'ச்ருதி'என்றால் வேதம். 'ச்ருத்யந்தம்'என்றால் வேதாந்தமாகிற உபநிஷத். உபநிஷத்திலே பகவான் ஆனந்தமாக விளையாடுகிறார். கொசுவைக் குறிப்பதாகக் கொள்ளும்போது, 'ச்ருதி'என்றால் காது. காதுநுனி 'ச்ருத்யந்தம்'. கொசு நம்முடைய காதோரத்தில் வந்து 'ஒய்ங்'என்று சப்தம் பண்ணிக் கொண்டு விளையாடி

ஹிம்ஸை பண்ணுகிறது!

'மசக!த்வாம் ஏவ மாதவம் மந்யே'- 'ஏ கொசுவே!உன்னையே நான் மாதவனாக நினைக்கிறேன்'என்று முடிக்கிறார்.

'சக்ர ப்ரமணம் பண்ணுவது, குத்ருஷ்டிக்காரர்களை தூரப்போகப் பண்ணுவது, ச்ருச்யந்தத்தில் விளையாடுவது என்ற காரியங்களை நீ செய்கிறபடியால், ஏ கொசுவே!உன்னையே மஹாவிஷ்ணுவாக நினைக்கிறேன் - மசக ! த்வாமேவ மாதவம் மந்யே !'

இப்போது இங்கேயும் கொசு பாட ஆரம்பித்து விட்டது. எல்லாருக்கும் தூக்கமும் வந்துவிட்டது. இது வரையில் வேடிக்கை கேட்டதில் இரண்டும் தெரியவில்லை. இப்போது தூங்க வேண்டும் என்று படுத்துக் கொண்டால் கொசு ஹிம்ஸைதான் தெரிய ஆரம்பிக்கும். அனந்த சயனமாகப் படுத்துக்கொண்டு தூங்குகிற பகவான்தான் அந்த கொசு ரூபத்தில் வந்து காதிலே ரீங்காரம் பண்ணுகிறார் என்று நினைத்துக்கொண்டால் கொஞ்சம் ஹிம்ஸையை மறக்கலாம். கொசுத் தொல்லையில் தூக்கம் வராவிட்டால் இந்த கவித்வ விசித்ரங்களை நினைத்துக் கொண்டு கொஞ்சம் நிம்மதி பண்ணிக் கொள்ளலாம்.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**ஈசனின்றி இயற்கை இயங்குமா ?**

இதோ நான் உட்கார்ந்து கொம்டிருக்கிற மணையைப் பார்ததவுடன் இதைப் பண்ணின ஒருத்தன் இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறீர்கள். அதோ அங்கே, இதோ மரத்தால் ஆனதுதான் - 'ஆனது'என்ன? மரத்திலிருந்தே விழுந்ததுதான் - ஒரு கிளை கிடக்கிறது. அதைப் பார்த்தவுடன் ஒரு தச்சன் பண்ணியிருப்பதாக யாரும் நினைப்பதில்லை. ஏன்? இந்த மணையை ஒரு சீராக, ரெக்டாங்கிளாக (நீள் சதுரமாக) இழைத்திருக்கிறது. பூமியின் தூசு தும்பு படாதபடி, பூச்சி பொட்டு ஏறாதபடி இதிலே கீழே கட்டைகள் அடித்திருக்கிறது. இம்மாதிரி இதிலே ஒரு ஒழுங்கு ஏற்பட்டிருப்பதாலும், உட்கார உபயோகமாகணும் என்ற பர்பஸில் (நோக்கத்தில்) இந்த மணையில் இந்த ஒழுங்கை உண்டாக்கியிருப்பதாலும் இதற்கு ஒரு கர்த்தா இருக்கணும் என்று முடிவு செய்கிறோம். ஜடமான ஒரு மரப் பீஸ் தானாகத் தன்னை ரெக்டாங்கிளாக இழைத்துக் கொண்டு, கட்டை அடித்துக் கொண்டு மநுஷ்யாள் உட்காரணும் என்ற பர்பஸை ஃபுல்ஃபில் பண்ணும்படியாக (நோக்கத்தை நிறைவேற்றுவதாக) ரூபம் கொள்ள முடியாது என்பதால் புத்தியுள்ள ஒரு ஜீவன்தான் இதைச் செய்திருக்கணும் என்று தீர்மானிக்கிறோம்.

அங்கே கிடக்கிற கிளையோ முண்டும் முடிச்சுமாக இருக்கிறது. இந்த மணையில் இருக்கிற 'ஆர்டர்'அதில் இல்லை;அது எந்த பர்பஸையும் ஃபுல்ஃபில் பண்ணவுமில்லை. ஆகையால் அதிலே ஒரு ஜீவனின் புத்தி விலாஸத்தை நாம் நினைப்பதில்லை.

அந்த மரத்துக்கு அடியிலே மாவடு அது பாட்டுக்கு ஆர்டருமில்லாமல், பர்பஸுமில்லாமல் உதிர்ந்து கிடந்தால், யாரோ அதைக் கொட்டினதாக நாம் நினைப்பதில்லை. தானே விழுந்திருக்கிறது என்றே புரிந்து கொள்கிறோம். அதுவே, அந்த மாவடுவையந்யெல்லாம் அங்கே குவித்து வைத்திருந்தால், குவிப்பு என்ற ஆர்டரில் மாவடுக்களை அமைத்த ஒருவன் இருந்தாகணும்;அவன் அதை வீட்டுக்குக் கொண்டு போவது, அல்லது விலைக்கு விற்பது, அல்லது ஃப்ரீயாக விநியோகிப்பது என்ற ஏதோ ஒரு பர்பஸுக்காக குவித்திருக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறோம்.

ஆர்டர் இல்லாமலேகூட பர்பஸ் இருப்பதுண்டு. ஒரு வீட்டில் துணிமணி, பாத்திரம், பண்டம், புஸ்தகம், கிஸ்தகம் எல்லாவற்றையும் வாரி இறைத்து ஒரே டிஸ்-ஆர்டராக இருந்தாலும் திருடி விட்டு ஓட்டம் பிடிக்க வேண்டும் என்ற பர்பஸுக்காகத் திருடர்கள் இப்படிப் பண்ணியிருக்கிறார்கள் என்று புரிந்து கொள்கிறோம்.

மொத்தத்தில் ஆர்டரோ, பர்பஸோ, இரண்டுமோ இருந்துவிட்டால் அது புத்தியுள்ள ஒரு ஜீவ சக்தி பண்ணின காரியம்;ஜடமே பண்ணிக் கொண்டதில்லை என்று 'இன்ஃபர்'(அநுமானம்) செய்கிறோம்.

இப்போது யாரும் பண்ணினதாகத் தோன்றாத அந்தக் கிளை, அதற்கு மூலமான தாவர வர்க்கம் பற்றிக் கொஞ்சம் ஆலோசிக்கலாம். முண்டும் முடிச்சுமாயிருக்கிற அந்தக் கிளைக்குள், நமக்குள் ரத்தக் குழாய் ஓடுகிற மாதிரி பூமிக்குள்ளிருந்து ஜலத்தை உறிந்து எடுத்துக்கொண்டு போகிற அதி நுட்பமான குழாய்கள் ஆச்சரியமான ஒழுங்கோடு, அதாவது ஆர்டரோடு, நேற்றைக்கு அது மரத்தில் அங்கமாயிருந்த வரையில் வேலை பண்ணிக் கொண்டிருந்தன - மரம் வளர வேண்டும் என்ற பர்பஸுக்காக! இந்த இரண்டு முடிச்சிலே ஸில்க் மாதிரி துளர் உண்டாகிறது. இலையில் ஓடுகிற நரம்புகளில் எத்தனையோ ஆர்டர்;அது 'க்ளோரோஃபில்' என்கிற பச்சையான ஜீவஸத்தை உண்டுபண்ணும் பர்பஸையும் ஸெர்வ் பண்ணுகிறது. முண்டு முடிச்சிலேதான் பரம மிருதுவான புஷ்பம் உண்டாகிறது.

தாவர வர்க்கத்தில் பூச்செடி, பழமரம் என்று இரண்டு சொல்கிறோம். பூச்செடி பழம் கொடுக்கமலிருக்கலாம். ஆனால் பழ மரத்துக்குப் பூ இல்லாமலில்லை - அத்தி, பலா மாதிரி அபூர்வமான வனஸ்பதி ஜாதி தவிர.

இந்த பூச்செடி, பழமரம் என்ற இரண்டும் எத்தனை ஸாமர்த்தியமாக தங்கள் தங்கள் இனத்தை விருத்தி பண்ணிக் கொள்கின்றன என்று பார்த்தால் ஆச்சர்யமாயிருக்கிறது. பூச்செடியில் அழகாகப் புஷ்பம் உண்டாகிறது. அதன் டிஸைன்களில் அலாதி ஆர்டர். அதுமட்டுமில்லை. பர்பஸும் இருக்கிறது. மநுஷ்யனின் ரஸிக உணர்ச்சியைப் பூர்த்தி செய்வதோடு செடிக்கே பயன் தருகிற பெரிய பர்பஸ்!இந்த அழகிலேதான் தேனீ வசீகரமாகி வந்து தேன் குடிக்கிறது. அதற்கு ஆஹாரம் கொடுக்கிற பர்பஸுக்குள்ளேயே ரஹஸ்யமாக, அதைவிடப் பெரியதான சொந்த பர்பஸும் ஃபுல்ஃபில் ஆகிறது. தேனீ செய்கிற மகரந்த பரிவர்த்தனையினால்தான் இந்தச் செடி இனவிருத்தி பெறுகிறது. இப்படி இதிலே ஜட வஸ்து பண்ணவே முடியாததான, ரொம்பவும் புத்திபூர்வமான 'ட்ரிக்' இருக்கிறது!

இன்னொரு வேடிக்கை கூட: ரொம்புவும் வர்ண விசித்திரமில்லாத பூவாகச் சிலது உண்டாகின்றன;அவை தேனீயை ஆகர்ஷணம் பண்ணுவதற்காக ஏகப்பட்ட வாஸனையை வைத்துக் கொண்டிருக்கின்றன. ஸுகந்தம் நிறைய இருக்கிற மல்லிகை, மகிழ், சம்பங்கி, மனோரஞ்சிதம் மாதிரிப் புஷ்பங்களில் கலர் விசித்திரம் இல்லை. கலர் விசித்திரம் நிறைய இருக்கும் கனகாம்பரம், துலுக்க சாமந்தி, காகிதப்பூ வகைகள் முதலியவற்றில் வாஸனை இல்லை. தேனீயை இழுக்க ஏதோ ஒரு ட்ரிக் போதும், இரண்டும் வேண்டாம் என்று இதிலே ஒரு எகானமி (சிக்கனம்) வேறே!(ரோஜா மட்டும் விதி விலக்கு.) ஜடவஸ்து இப்படியெல்லாம் கெட்டிக்கார ப்ளான் போட்டு அதன் பிரகாரம் பண்ண முடியுமா?

இன்னொரு வேடிக்கை கூட!நேச்சர், இயற்கை என்று சொல்வதில் நிறைய 'வெரைய்டி', தினுசு தினுசாகப் பார்க்க வேண்டும் என்கிற காவிய புத்தி யதேஷ்டமாகத் தெரிகிறது. வாஸனைப் பூ கலர்ப்பூ வித்யாஸம் போலவே கார்த்தாலே பூக்கிறது, ராத்திரி பூ என்று ஒரு வித்யாஸம். இதிலே ராத்திரி பூக்கிறதுதான் அந்த வேளையில் கண்ணுக்குத் தெரியவேண்டுமே என்பதால் வெள்ளை வெளேரென்று மல்லிகை ஜாதிகள், பன்னீர்ப் பூ ராமபாணம் என்கிற நில சம்பங்கி இப்படி இருக்கின்றன!

ஒரு அணுவுக்குள் மத்ய ந்யூக்ளியஸைச் சுற்றிப் பரமாணுக்கள் பஹு வேகத்தில் ஓடிக் கொண்டிருப்பதிலிருந்து ஸூர்யனைச் சுற்றி க்ரஹங்கள் ஓடுகிறவரை ஒவ்வொன்றும் மாறுதலில்லாமல் விதி ப்ரகாரம் நடப்பதைப் பார்க்கும்போது வெறும் ஜட சக்தியான ஒரு இயற்கையால்தான் இதெல்லாம் ஆகிறதென்று தோன்றிவிடுகிறது. ஆனால் இப்படி அணுவிலிருந்து அண்ட கோளங்கள் வரை ஒவ்வொன்றுக்கும் தனித் தனியாக, வெவ்வேறாகத்தானே விதிகள் ஏற்பட்டிருக்கின்றன? இப்படி எத்தனை வெரையட்டியான விதிகள்? அது மாத்திரமில்லை. ஒவ்வொரு வர்க்கத்திற்கும் ஒரே விதி என்று

இருக்கும்போது கூட, அதற்குள்ளேயே விதி விலக்கு என்று ஒவ்வொன்று மாறுதலாகவும் இருந்து விடுகிறதே! த்ருஷ்டாந்தமாக இப்போது சொன்ன வ்ருக்ஷவர்க்கத்திலேயே ஒரு மாறுதலாகப் பூ இல்லாமல் காய்க்கிற வனஸ்பதி வகையும் இருக்கிறதே! இதையெல்லாம் ஆலோசிக்கும்போது இயற்கை என்பது ஏதோ ஜட சக்தி இல்லையென்றும், ரஸ வைசித்ரியத்தில் குதூஹலிக்கிற ஜீவனுள்ள ஒரு மஹா பெரிய புத்தி சக்திதான் என்றும் தெரிகிற தோல்லியோ?.........

பழமரம், பூச்செடி என்று இரண்டு சொல்லி, பூச்செடி எத்தனை ஸாமர்த்தியமாக ஸந்ததியை விருத்தி பண்ணிக் கொள்கிறதென்று சொன்னேன். பழமரத்தில் மநுஷ்யனுக்கு ருசியான பழம் கிடைக்கிறது. இது ஒரு பர்பஸ். இதற்குள் திரிசமனாக இன்னொரு பர்பஸ். இதே மாதிரிப் பழம் பின் ஸந்ததிக்கும் கிடைக்க வேண்டும் என்ற நம்முடைய ஸ்வய ஸம்பந்த லாபத்துக்காகப் பழத்துக்குள் இருக்கிற கொட்டையை நடுகிறோம்; இதிலேயே அந்த மரம் தன் ஸந்ததியை விருத்தி பண்ணிக் கொள்கிற அதன் ஸ்வய லாபமான பெரிய பர்பஸும் ஃபுல்ஃபில் ஆகிறது.

இப்படி ஆலோசித்துப் பார்த்ததில் என்ன தெரிகிறது? "ஜடவஸ்து தானாக order-ஐ (ஒழுங்கை) purpose-ஐ (நோக்கத்தை) ஏற்படுத்திக்கொள்ள முடியாது; அதனால் மரத்தை மணையாகப் பண்ண ஒரு தச்சன் இருக்க வேண்டும்"â¡ø ï‹º¬ìò premises-¡ (Ü®Šð¬ì, ªè£œ¬èJ¡) ð®«ò, Ü‰î ñó˜¬îŠ ð‡í¾‹ å¼ ñý£ ªðKò î„ê¡ Þ¼‰î£è «õ‡´‹ â¡Á ªîKAø¶!ï£‹ð‡µõ¬îMì Þ¡Â‹ ªðKò Ý˜ì«ó£´, Þ¡ù‹ ªðKò ð˜ðvèÀ,è£è Þ‰î ñó‹ Þ¼,Aøî£™, ï‹¬ñMì ñý£ ªè†®,è£óù£ù î„ê¡ Üõ¡ â¡Á‹ ªîKAø¶!ï£‹ ªêŒAø¬îªò™ô£‹ ÜŠð†ìñ£è, è£†®, ªìñ£¡v†«ó† ð‡µA«ø£ªñ¡ø£™ ï‹¬ñMìŠ ðóñ£ˆ¹îƒè¬÷Š ð‡µ‹ Üõ«ù£ Þˆî¬ù¬ò»‹ ðóñ óývòñ£èŠ ð‡Eˆ î¡Â¬ìò ú¨zññ£ù óú£¸ðõˆ¬î, è£†´õ«î£´, ð‡µAø î¡¬ù«ò åOˆ¶, ªè£‡´ ï‹º¬ìò ªè†®,è£óˆîùˆ¬îªò™ô£‹ Üê†´ˆîùñ£,A M´Aø£¡!

மநுஷ்யன் தின்னாத வேப்பம் பழம் என்றால் அதைத் தின்ன ஒரு காக்கா ஜாதியை அதோடு பிணைக்கிறான். அந்த காக்கா மநுஷ்யனைப் போலக் கொட்டையை நட்டு அந்த விருக்ஷத்தின் இன விருத்தியை செய்யாது என்பதால் அது எச்சமிட்டே கொட்டை வேறே இடத்தில் (இந்த மரத்தின் நிழலில் வாடாமலிருப்பதற்காக வேறே இடத்தில்) முளைக்கும்படிப் பண்ணுகிறான்.

நாம் வெளியே விடுகிற கார்பன்-டை-ஆக்ஸைடை மரம் உள்ளே இழுத்துக் கொள்வது; அது பதிலுக்குத் தருகிற தித்திப்புப் பழத்தை நாம் சாப்பிடுவது;அதையே நாம் எருவாக மாற்றி மறுபடி அதற்குத் தருவது என்றிப்படி பல இனங்களை, ஜீவ-சடங்களை, ஒன்றுக் கொன்று உபயோகமாகக் கோத்துக் கோத்து வைத்திருக்கிறான்.

இப்படியே எண்ணி முடியாத மர வர்க்கங்கள், மலைகள், ஸமுத்ரங்கள், லோகங்கள், நக்ஷத்ரங்கள், க்ரஹங்கள் எல்லாமும் அத்யாச்சரியமான ஒழுங்கோடு ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்து ஏராளமான உத்தேசங்களைப் பூர்த்தி பண்ணிக் கொண்டிருப்பதை நினைத்துப் பார்த்தால், இயற்கை, இயற்கை என்று ஜடமாகச் சொல்லப்படுவது ஜீவ சைதன்யமான ஈஸ்வர லீலைதான் என்று எப்படித் தெரியமால் போகும்?

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**நவநீத க்ருஷ்ணன்; வடபத்ரசாயி**

'நவநீதம்' என்றால் புதுசாக எடுத்தது என்று அர்த்தம். 'நவ'-புதுசாக; 'நீதம்'- எடுக்கப்பட்டது. புத்தம் புதுசாகக் கார்த்தால வேளையில் பசும் பாலில் உறை குத்தி ஸாயங்காலமே அந்தத் தயிரைச் சிலுப்பி எடுக்கிற வெண்ணெய்தான் நவநீதம். முதல் நாள் ராத்ரி உறைகுத்தி மறுநாள் வெண்ணெய் எடுக்கிறது 'பழம் பற்று' என்கிற மாதிரிதான். ரா வேளையில் ஸூர்யனுடைய பரிசுத்தி செய்கிற வெளிச்சம் இல்லாததாலேயே ராத் தங்கின பண்டம்

அவ்வளவு ச்லாக்யமில்லை என்பது.

நாமெல்லாம் பசுக்கள். நம் மனஸு வெள்ளை வெளேரென்று பாலாக இருக்கணும். அப்போதுதான் கன்னங்கரேலென்று இருக்கிறதால் கிருஷ்ணன் என்றே பேர் வைத்துக்கொண்டவன் நம்மிடம் வருவான். அது வெறுப்பைத் தருகிற கறுப்பு அல்ல; மோஹத்தை உண்டாக்குகிற மேகத்தின் கறுப்பு. கனச்யாம், கனச்யாம் என்கிற போது 'கன' என்றால் 'மேகம்' என்றே அர்த்தம். 'கார்வண்ணன்' என்று சொல்வார்கள். மேகம் எத்தனைக்கெத்தனை கறுப்போ அத்தனைக்கத்தனை அதிக ஜலத்தைக் கொட்டும். அந்த ஜலம் கறுப்பாகவா இருக்கிறது? இப்படிப் பரம ப்ரேம தாரையைப் பிரவாஹமாகக் கொட்டுகிறவனே கிருஷ்ணன். அடர்ந்த மேகத்திலிருந்தே மஹா ஜ்யோதிஸ்ஸான மின்னல்கள் தோன்றுகிற மாதிரி, ஞானப் பிரகாசம் பளிச்சுப் பளிச்சென்று வெட்ட கீதாசாரியனாக இருக்கிறான் அந்தக் கொண்டல் வண்ணன். இப்படியே அவன் வெளியிலே கபடும் சூதும் மாயமுமாகத் தெரிந்தாலும் நாம் மனஸைப் பால் வெளுப்பாக்கிக் கொண்டால் பரம சுத்தமான ப்ரேமையோடு நம்மைப் பாலிக்க, கோபாலனாக வருவான்.

அப்படியே அந்தப் பாலை எடுத்துக் குடிப்பதில்லை அவன். அது தயிராகி அதிலிருந்து புத்தம் புது வெண்ணெய் எடுத்தாகணும். அந்த நவநீதத்தை உண்ணத்தான் வருவான்; அதுவும் திருட்டுத்தனமாக!

பக்தி தாபத்திலே வெள்ளை மனஸைக் காய்ச்சினால் அது பொங்கும். அப்புறம் இந்த உணர்ச்சி வேகம் அடங்க அதைக் கொஞ்சம் ஆற்றி சாந்தத்தை உறை குத்தணும். பால் ஓடுகிறதுபோல, ஆடுகிறதுபோலத் தயிர் ஓடுவதில்லை, ஆடுவதில்லை. அப்படியே கெட்டியாக, சாந்தமாக இருந்து விடுகிறது. அவனுக்கு சாந்தமும் வேணும்; லீலையின் சலனமும் வேண்டும். அப்போதுதான் முடிவிலே சாந்தத்திலேயே எல்லா சலனமும் அடங்கியிருப்பதும், அத்தனை சலனத்துக்கும் அடிப்படையாக சாந்தமே இருந்து கொண்டிருப்பதும் தெரியும். உபநிஷத்தே "ச்யாமாத் சபளம் சபளாத் ச்யாமம்" என்று இரண்டையும் சேர்த்துச் சொல்கிறது*.

அதனால் ஓடாமல் ஆடாமல் சாந்தமாக இருக்கிற தயிரைப் போட்டுக் கடை கடை என்று கடைய வேண்டியிருக்கிறது. ஹ்ருதயப் பானைக்குள் இருக்கிற தயிரில் ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை (இதை ஞான விசாரம், ஆத்ம விசாரம் என்பார்கள்) மத்தாகப் போட்டு, ஒருமுக சிந்தனை என்ற கயிற்றால் கடைந்தால் பூர்ணத்வம் என்ற வெண்ணெய் வரும். அதைத் துளிக்கூடப்

பழகாகவிடாமல், அது நவநீதமாக இருக்கிறபோதே வந்து எடுத்துக்கொண்டு விடுவான். பூர்ணத்வம் இந்த நம்முடைய சரீரப் பானைக்குள் எப்படி இருக்க முடியும்? அதனால் பூர்ணனான அவனிடமே போய்விடும். தனியாக நாம் என்று இல்லாமல் அவனுக்குள் அவனாகவே போய்விடுவோம் என்று அர்த்தம்.

திருட்டுத்தனமாக எடுத்துக் கொள்கிறான் என்று ஏன் சொல்ல வேண்டும்? பகவான் ஸாதாரண அதிதி மாதிரி வந்தால் அவனை வேறாயாக வைத்து ராஜோபசாரம் பண்ணி conscious-ஆகத்தானே (புத்தி பூர்வமாகத்தானே) வெண்ணெயைத் தருவோம்? அப்படி புத்தி பூர்வமாக நம்மை அவனிடம் சரணாகதி பண்ணிக் கொள்ள நமக்கு அப்போது புத்தி வருமோ, வராதோ? 'சரணாகதி பண்ணுகிறேன்' என்கிறபோதே அப்படிச் சொல்கிற ஒரு 'நான்' தனியாக வந்துவிடுகிறதே! இதனால்தான் நமக்குத் தெரியாமல் நாம் unconscious-ஆக இருக்கிற போதே நம்மை எடுத்துக் கொண்டால்தான் உண்டு என்று திருடனாக வருகிறான்.

வெண்ணெய் பரப்பிரம்மம் மாதிரி. சுத்த ஸத்வ வெளுப்பாக இருப்பது. துளி உருக்கினால், அந்த வெளுப்பும் போய் ஸ்படிகம் மாதிரி colourless ஆகிவிடுகிறது. 'வெண்ணெய்' என்பதில் 'வெண்' என்கிற அடையாளமும் போய் 'நெய்' மாத்திரம் நிற்கிற நிலை. எந்தக் கலரிலும் அது சேராது. அதன் ருசியும் இப்படித் தான். மதுரம், மதுரம் என்று சொன்னாலும் வெண்ணெய் வாஸ்தவத்தில் தித்திப்பு இல்லை - சர்க்கரை, தேன் மாதிரி இல்லை. ஷட்-ரஸம் என்கிற ஆறு சுவைகளில் அது எதுவும் இல்லை. அதன் கலர், ருசி எல்லாம் சாந்தம் என்றுதான் சொல்ல வேண்டும். ஸம்ஸார ஆட்டம் போக, எதிர்த் திசையில் பலவிதமான

ஸாதனைகளில் அழுகை, மயிர்க்கூச்சு, பாட்டு, நர்த்தனம் என்று ஒரே ஆட்டமாக ஆட்டிச் சிலுப்பிய பின் உண்டாகிற இந்தப் பரம சாந்தத்தை நாம் அடைகிறபோது நம்மை நாமறியாமலே தனக்குள்ளேயே கொண்டுபோய் வைத்துக்கொள்கிற பரமாத்மாதான் கிருஷ்ணன்.

வெண்ணெய் ஜலத்திலிருந்து கொண்டே அதில் ஒட்டாமலிருக்கிற மாதிரி - பால் ஜலத்தோடு அப்படியே கலந்துவிடும்; அப்படியில்லாமல் வெண்ணெய் தனியாக மிதக்கிறதே, அந்த மாதிரி - நாம் லோகத்திலிருந்து கொண்டே அதில் ஒட்டாமலிருந்தால் நம்மை அவன் எடுத்து அப்படியே முழுங்கித் தனக்குள் வைத்துக் கொண்டு விடுவான். ஆக நம் உள்ளம்தான் அவனுக்கு வேண்டிய வெண்ணெய். 'நவநீத சோர்', சித்த சோர் என்று இரண்டு விதமாயும் அவனையே சொல்வதால் என்ன ஏற்படுகிறது? நம் சித்தம்தான் அவன் அபஹரிக்கக்கூடிய நவநீதமாக மாறவேண்டும் என்றே ஏற்படுகிறது.

இப்படி ஒரே திருட்டு விளையாட்டு, பரக்கப் பரக்க ஒவ்வொரு இடைச்சி வீட்டுக்குள்ளும் ஓடி, உறியிலே ஏறி தாழி உடைத்து நிர்தூளி பண்ணுகிற விளையாட்டு செய்கிறவனே ஸா ... துக் குழந்தையாக ஆலிலை மேலே படுத்துக்

கொண்டிருக்கிறது! கோகுலத்திலா இப்படி ஆலிலைப் படுக்கைப் போட்டு வைத்திருந்தது? இல்லை. க்ருஷ்ணனாக மதுராவிலே அவதாரம் பண்ணி நடத்தின கதையில் அவன் ஆலிலைப் படுக்கையில் படுத்துக் கொள்ளவில்லை. வேறே எப்போதோ மார்க்கண்டேயருக்குத் தன் மாயா விலாஸத்தைக் காட்டுவதற்காக ப்ரளயத்தைக் காட்டினான். அந்த ப்ரளய வெள்ளத்திலே தான் ஒரு ஆலிலை மேலே படுத்துக்கொண்டு குழந்தையாக தர்சனம் தந்தான்.

ஆல மரத்தின் கீழே உட்கார்ந்து கொண்டு ஞானோபதேசம் பண்ணுகிறவர் பரமேஸ்வரன்; வட வ்ருக்ஷ மூல நிவாஸி.மஹாவிஷ்ணு ஆலிலை மேலே படுத்துக் கொண்டு ஞான உபதேசக்கு நேர் ஆப்போஸிட்டாகத் தோன்றும் மாயா விலாஸத்தைக் காட்டுகிற வட பத்ரசாயி. மாயா விலாஸத்தைக் காட்டியே ஞானம் கொடுத்து விடுகிறார்! ப்ர-லயம் என்பதாக அத்தனை மாயா லோகமும் ஸ்ருஷ்டியும் தன்னிலே லயித்துப் போய் விடுவதைத் தானே காட்டுகிறார். மாயையிலிருந்து நம்மை விடுவித்து முக்தி தரவே இப்படி தர்சனம் தருகிறார். அதனால்தான் இந்த அவஸரத்திலே (ரூப பேதத்திலே) அவரை 'முகுந்தன்' என்பது 'முகுந்தன்' என்றால் 'முக்தி தருகிறவன்' என்று அர்த்தம்.

**கராரவிந்தேந பதாரவிந்தம் முகாரவிந்தே விநிவேசயந்தம்.**

**வடஸ்ய பத்ரஸ்ய புடே சயாநம் பாலம் முகுந்தம் மநஸா ஸ்மராமி..**

'தாமரைப் பூ மாதிரி இருக்கிற கால் கட்டை விரலைத் தாமரைப் பூ மாதிரியே இருக்கிற கையினால் பிடித்திழுத்து தாமரைப் பூ மாதிரி இருக்கிற வாய்க்குள்ளே போட்டுக் கொண்டு ஆலிலை மேல் சயனித்திருக்கும் குழந்தை முகுந்தனை முழு மனஸோடு ஸ்மரிக்கிறேன்' என்று அர்த்தம்.

கால் கட்டை விரலை எதற்காக வாயில் போட்டு கொண்டு சப்ப வேண்டும்?

மாந்தாதா என்று ஸூர்ய வம்சத்தில் ராமருக்கு ரொம்பவும் முந்தி ஒரு ராஜா இருந்தார். அவர் நேராக அவருடைய தகப்பனாரிடமிருந்து பிறந்து விட்டார். அதனால் அவருக்கு பால் கொடுப்பதற்கு அம்மா இல்லை. அந்த ஸமயத்தில் இந்த்ரனே, "நான் கொடுக்கிறேன் - மாம் தாதா" என்று சொல்லிக் குழந்தையின் கைக் கட்டை விரலை எடுத்து அதன் வாய்க்குள் வைத்தான். மநுஷ்ய சரீரத்தில் ஒவ்வொரு அங்கத்திலும் ஒரு தேவதை வஸிப்பதில், கைக்கு உரிய தேவதை இந்த்ரன்தான். தான் சாப்பிட்டிருக்கிற அம்ருதம் இந்தக் கையின் கட்டை விரலால் குழந்தையின் வாய்க்குப் போகும்படி இந்த்ரன் அநுக்ரகித்தான். அநேகக் குழந்தைகள் வாயில் விரல் போட்டுக் கொள்வது அதனால்தான்.

ஆனால் இங்கே பகவான் வாயில் போட்டுக் கொண்டிருப்பது கைக் கட்டை விரல் அல்ல; கால் கட்டை விரல். அவர் சரீரத்தில் இன்ன இடமென்றில்லாமல் தலையோடு கால் அம்ருத மயமானவர். 'அம்ருதவபு:' என்றே (விஷ்ணு) ஸஹஸ்ரநாமத்தில் பெயரிருக்கிறது. அதனால்

இந்திராதி தேவர்கள் கையால் செய்வதைத் தாம் காலால் செய்ய முடியும் என்று காட்டுகிறாற்போலக் கால் விரலைச் சப்பிக் கொண்டிருக்கிறார். "சாப்பிடுவது ப்ரம்மம், சாப்பிடப்படுவது ப்ரம்மம், சாப்பாடு போடுவதும் ப்ரம்மம்" என்பது மந்த்ரம். அந்த உண்மையையும் நிரூபித்துக் காட்டுகிறார். தன் விரலைத் தானே வாயில் எடுத்து வைத்துக்கொண்டு சாப்பிட்டும் கொள்கிறார். அப்படியே சாப்பிடவில்லை; சப்புகிறார்; சப்பிடுகிறார்!

இடது கால் கட்டை விரல்தான் அவர் சப்புவது. நடராஜாவின் தூக்கிய திருவடியும் இடதுதான்.

பகவானைப் போல சரீரம் பூரா அம்ருதமயமாக நாம் இல்லாவிட்டாலும் நமக்கும் இடது பக்கத்தில் சந்த்ரநாடி என்று ஒன்றை அவர் அநுக்ரஹித்திருக்கிறார். சந்த்ரன் அமிருதம் பெருக்குகிறவன். அநுஷ்டானம், யோகஸாதனை செய்தால் சந்த்ர நாடியிலே அம்ருதம் ஓடுவது தெரியும். அதைக் காட்டவுந்தான் இடக்கால் கட்டை விரலை ருசி பார்க்கிறார்.

கால் மட்டமானது, இடது பக்கம் மட்டமானது என்றெல்லாமில்லாமல் எல்லாம் உசத்தி, எல்லாம் அம்ருதம் என்று காட்டுகிறார்.

இப்படித் அவருக்குள்ளேயே அம்ருதம், அவரே அம்ருதமாயிருந்தும் வெளியேயிருந்து வெண்ணெயைத் திருடிச் சாப்பிட்டுவிட்டு அடி வாங்கிக்கொண்டு அதற்காகப் பொய் சொல்லிக்கொண்டு இருந்திருக்கிறாரென்றால், இது மட்டத்திலும் மட்டமான நம்முடன் விளையாடி லீலாம்ருதமும் ப்ரேமாம்ருதமும் கொடுக்க வேண்டும் என்ற க்ருபாம்ருத ஸாகரமாக அவர் இருப்பதால்தான்!

எப்போதோ ப்ரளயத்தில் வடபத்ரசாயியாக வந்தவனை நவநீத க்ருஷ்ணனாக எப்படிச் சொல்லலாம்? யோசித்தால் இதற்குக் காரணம் தெரிகிறது. மஹா விஷ்ணுவுக்கும் க்ருஷ்ண பரமாத்மாவுக்கும் துளிக்கூட வித்யாஸமே சொல்லப்படாது. 'அவதாரம்' என்று சும்மாவுக்காகத்தான் சொல்லுகிறது; அவர் அசல் மஹாவிஷ்ணுவேதான்: "க்ருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம்"1.இன்னம் சொல்லப் போனால், மஹாவிஷ்ணு என்று சொல்வதுங்கூட அவரைக் குறுக்குவதுதான்! அவரே தம்மை2 "ஆதித்யானாம் அஹம் விஷ்ணு:" -'ஆதித்யர்களுக்குள் நான் விஷ்ணு' என்கிற மாதிரி "ருத்ராணாம் சங்கரச்சாஸ்மி"-'ருத்ரர்களில் நான் சங்கரன்' என்று சிவ ரூபமாகவுந்தான் சொல்லிக் கொள்கிறார். "ராமன், ஸ்கந்தன் எல்லாமே நான்தாண்டா" என்கிறார். 'நான் நான்' என்று எல்லோர் ஹ்ருதயத்தில் இருப்பதும் தான் தான் என்றே ஆரம்பிக்கிறார். "என்னையன்றி சராசரம் எதுவும் கிடையாது" என்று ஸாக்ஷாத் பரப்ரஹ்ம ஸ்வரூபமாகவேதான் தம்மை தெரிவித்துக் கொள்கிறார். அதனால்தான் கிருஷ்ண பரமாத்மா என்றே அவரைச் சொல்வதும், "பூர்ணம் ப்ரஹ்ம ஸநாதநம்" என்பதும்.

ஆகையால் பால ரூபத்திலே வந்து மனஸைக் கொள்ளை கொள்வது முக்கியமாக க்ருஷ்ணருடைய கார்யமாயிருப்பதால், இப்படிப் பச்சைக் குழந்தையாய் அவர் பச்சையிலை மேலே மனமோஹனமாக மிதக்கிறபோது அவரை க்ருஷ்ணனாகவே நினைக்கிறோம்.

அம்ருதத்தை உண்டு காட்டுவதாலேயே நமக்குள்ளே அவர் அம்ருதத்தை ஊட்டி விடுவதால் நாம் சாவிலிருந்து விடுபட்டு அமரத்தன்மை பெறுகிறோம். அதனாலேயே அவரை இந்த ரூபத்திலே அமரமான முக்தி நிலையைத் தரும் முகுந்தனாகச் சொல்லுவது. இந்த முகுந்த நாமாவும் முக்யமாக க்ருஷ்ணனுக்குத்தானுண்டு.

"பீஷ்ம முக்தி ப்ரதாயகாய நம" என்று அவருக்கு அஷ்டோத்தர (சத)த்தில் அர்ச்சனை பண்ணுகிறோம். ராமர் கூடத்தான் ஜடாயுவுக்கு மோக்ஷம் தந்தார்.

ஆனாலும் முகுந்தன் என்றாலே க்ருஷ்ணன் என்று ஏன் ஆக வேண்டும்? ஏன் அப்படி என்றால், க்ருஷ்ண பரமாத்மாதான் அதி பால்யத்திலே அவரை மனஸறிந்து கொல்லணும் என்று வந்த பூதனை; அப்புறம் கடைசியிலே, அவருடைய அவதார காரியம் பூர்த்தியான முடிவு கட்டத்திலே, அவர் மேலே அறியாத்தனத்தால் அம்பு போட்டு அவர் சரீர

யாத்ரையை முடிக்கும்படிப் பண்ணின ஜரா என்கிற வேடன்; இரண்டுக்கும் நடுவிலே அவரை பொது ஸபையில் வாயில் வந்தபடியெல்லாம் தூஷித்த சிசுபாலன் ஆகியவர்களுக்குக்கூட முக்தி அளித்த பரம க்ருபாமூர்த்தி.

ஒரு அவஸரத்திலே வெண்ணெய் தின்கிறார் - ம்ருக வர்க்கத்திலே மிக உயர்ந்த பசு தருகிற பால் காய்ந்து (அதாவது முதிர்ந்து) தயிராகி அப்புறமும் கனிந்து முதிர்ந்து கடைசியில் நவநீதமாகிறது. இதை ஆஹாரம் பண்ணுகிறார். ஆஹாரம் மாதிரியே சயனமும் ஒரு ஆதாரத் தேவை. இவற்றை அசனம், சயனம் என்பார்கள். அசனம் நவநீதம். சயனம் ஆலிலை. (இப்போதும் அசனத்தை விடாமல் கால் கட்டை விரலால் ருசி பார்க்கிறான்!)

ம்ருக வ்ர்க்கத்தில் பசுபோல தாவர வர்க்கத்தில் ஆல் உயர்ந்தது. 'ந்யக்ரோதம்' என்பதும் 'வட வ்ருக்ஷம்' என்பது போல அதற்குப் பெயர். ஸஹஸ்ரநாமத்தில் 'நயக்ரோதன்' என்பது மஹாவிஷ்ணுவின் பெயராக வருகிறது. கயா ச்ராத்தம் என்று முக்யமாகச் சொல்லி 'அக்ஷய வடம்' என்று ஆலமரத்துக்குக் கீழே பிண்டம் போடுவதையே விசேஷித்திருக்கிறது. இது கர்ம காண்டம். மௌனத்தினால் ஆத்மாவை அநுபவிக்கும்படி அநுக்கரஹிக்கின்ற தக்ஷிணாமூர்த்தியும் அந்த மரத்தின் கீழேதான் இருக்கிறார். இது ஞான காண்டம். இப்படி ஆல் இரண்டிலும் முக்யமுள்ளதாயிருக்கிறது. கர்மா எத்தனை உசத்தியானாலும் மாயா ஸம்பந்தமானது. அதனால்தான் மார்க்கண்டேயருக்கு மாயா தர்சனமும் பண்ணுவித்து, பரம ஞானத்தையும் கொடுக்கிற போது பகவான் இரண்டுக்கும் பொதுவான வட வ்ருக்ஷத்தின் பத்ரத்திலே வந்து படுத்துக் கொண்டார். ஆதிசேஷனின் மேலே லக்ஷ்மிநாயகனாக, பிரம்மாவின் பிதாவாக சயனிப்பவர் ஆலிலை மேல் பாலனைப் போல வந்தார்.

பசுவின் முதிர்ந்த ஸாரத்தை இவனுடைய ஆஹாரமான வெண்ணெய் காட்டுகிறதென்றால், ஆல விருக்ஷத்தின் ஆரம்ப ஸ்தானத்தை இலை காட்டுகிறது. முதலில் இலை. அப்புறம்தான் பூப்பது காய்ப்பது பழுப்பது எல்லாம்.

ஸாரஸாரமாக முதிர்ந்த நவநீதத்திலிருந்து இளசான வடபத்ரம் வரை எல்லாம்

அவருடை ரேஞ்ஜில் இருப்பவைதான் - தான் நிறைந்திராத லெவலே இல்லை - என்று காட்டுகிறார்.

ஆலிலைக்கு ஒரு விசேஷமுண்டு. அதிலே ஜீவஸாரம் ரொம்ப அதிகம். அதனால்தான் அது எத்தனை வாடினாலும் மற்ற இலைகள் மாதிரி வற்றிப்போய் நெறுங்குவதில்லை. சரகாகிறபோதுகூட மெத்தென்றே இருக்கும். அதனாலேயே பகவான் குழந்தையாக வருகிறபோது அதி ஸொகஸாக உள்ள தனக்கு மெத்தையாக அதை 'சூஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறான். மரத்திலிருந்து வாடி உதிர்ந்த ஒரு ஆலிலையின் மேல் கொஞ்சம் ஜலத்தைத் தெளித்தால் போதும், மறுபடி அது பசுமை பெற்றுவிடுவதைப் பார்க்கலாம். அவன் எப்போதும் வாடாத வதங்காத ஆத்மா. 'ப்ரணவம்' என்றாலும் எப்பவும் 'நவம்'; சாப்பிடுவது 'நவநீதம்'! பகவான் ஜரா மரணம் கடக்கப்பண்ணி எப்பவும் யௌவனமாக வைத்திருக்கும் அம்ருத நிலையைக் கட்டைவிரலைச் சப்பிக் காட்டுவதால் மாத்திரமின்றி, ஸூக்ஷ்மமாய் இந்த வட பத்ர சயனத்தாலேயே சூசிப்பித்து விடுகிறான். வட வ்ருக்ஷ மூலத்தில் உட்கார்ந்திருக்கும் தக்ஷிணாமூர்த்தியின் மாறாத யௌவனமும் அஜர, அமரத் தன்மையைக் காட்டுவதுதான். அதைவிட இளைய குழந்தையாகவே, ஆலங் கொழுந்தைப் போலவே தானும் கொழுந்துப் பிராயமாக, 'ஆயர்தம் கொழுந்தே!' என்று (தொண்டரடிப் பொடி ஆழ்வாரால்) பாடப்பட்டவன் இருக்கிறான். வேர் ஆடாமல்

அசையாமலிருப்பதுபோல, 'வ்ருட்ச இவ ஸ்தப்த:' என்று ச்ருதி சொன்னபடி*2ஞான காம்பீர்யத்தோடு தக்ஷிணாமூர்த்தி இருக்கிறார். இவனோ ஒரு இலை கொஞ்சம் காற்றானால்கூட சலசல என்று ஆகிறதுபோல ஒரே விளையாட்டாய் விளையாடிக் கொண்டு ப்ரேம ஸௌகுமார்யத்தோடு இருக்கிறான்.

ஆல விருக்ஷத்துக்கு எத்தனையோ உபயோகங்கள். ஒரு பெரிய ஸைன்யமே அதன் கீழே தண்டு இறங்கலாம். பரோபகாரத்துக்கு அது ஒரு ரூபகம். அத்தனாம் பெரிய மரத்துக்கு இத்தனூண்டு விதை. இந்த அணு மாத்ர விதையில் அந்தப் பெரிய மரமே இருப்பது, அணுவில் அணுவாயுள்ள பரமாத்மாவே அகண்ட ப்ரம்மாண்டமாயும் இருக்கிறார் என்பதை நினைப்பூட்டுகிறது. எல்லா மரத்துக்குந்தானே இப்படி என்றாலும் மற்ற மரங்களைவிடவும்

விஸ்தாரமாக வளர்கிற ஆலுக்குத்தான் அவற்றின் விதைகளைவிடவும் சின்ன விதையாயிருக்கிறது. மற்ற மரம் போல ஆலுக்கு எவரும் விதை ஊன்றுவதில்லை. அதுவாகவே எப்படியோ முளைத்துக் கொள்கிறது. இது ஈஸ்வரன் ஸ்வயம்பு, தான்தோன்றி என்ற தத்வ விளக்கமாய் இருக்கிறது. தானே விழுதுவிட்டுத் தன்னைத் தாங்கிக் கொண்டு, அந்த பலத்தில் மேலும் மேலும் விஸ்தாரமாகிக் கொண்டே போகிறது. அடையாற்றில் ஆல மரத்தைப் பார்க்கவே கூட்டம் கூட்டமாகப் போகிறது. ஈஸ்வரன் பிறர் தாங்குதல் வேண்டாத நிராலம்பன் என்பதற்கு இது எடுத்துக்காட்டுப் போல இருக்கிறது. ஒரு பாகம் பட்டுப் போனாலும் மற்ற விழுதுகள், விழுதிலிருந்து தோன்றும் விழுதுகள் என்ற பிற பாகங்கள் பசுமையாக இருந்து கொண்டே இருப்பதால் ஈஸ்வரனின் நித்யத்வத்தையும் காட்டியதாகிறது. ஒரே தாயும் தந்தையுமான அவனிடமிருந்தே ஸகல ஜீவ ஜகத்துக்களும் விஸ்தாரமாயிருப்பதற்கு த்ருஷ்டாந்தம் போல வட வ்ருக்ஷமானது ஒரே தாய் மரத்திலிருந்து விஸ்தாரமாகிக் கொண்டே போகிறது.

இப்படியாக, ஸம்ஸார ஸாகரத்தில் அலை பாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான நித்யத்வத்தை, நிராலம்ப தத்வத்தை உணர்த்துகிறான் வடபத்ரசாயி.

மரத்தைவிட எத்தனையோ அகன்ற அகண்ட தத்வம் அவன். அந்த மரம் எத்தனை பெரிசாயிருந்தாலும், எத்தனை காலமிருந்தாலும் அதன் பரப்புக்கு எல்லை உண்டு. அதன் காலத்துக்கும் முடிவு உண்டு. அவனோ முடிவேயில்லாத அகண்டன், அனந்தன். ஆனாலும் இந்த மஹா ப்ரபாவத்தை மறைத்துக்கொண்டு, நாம் அவனை எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சுகிற விதத்தில் ஸரள

ஸ்வபாவத்துடன் கூடிய குழந்தையாக இருக்கிறான். "ஒண்ணும் கவலைப்படாதேயப்பா! என் மாதிரி குழந்தை உள்ளத்தோடு இரு. ஸம்ஸார வெள்ளத்திலேயே அப்போது நீ அலையில் அடி படாமல் உன் பாட்டுக்கு ஆனந்தமாக, அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டு மிதந்து கொண்டிருக்கலாம்" என்று சொல்லாமல் சொல்கிறான். சிலுப்புவதாலே கொந்தளிக்கிற மோரிலே வெண்ணெய் பட்டுக் கொள்ளாமல் மிதப்பதுபோல ஸம்ஸார ஸாகரத்தில் அவனே வெண்ணெய்க் கட்டியாக மிதப்பது, நாமும் அப்படி ஆக வேண்டும் என்று நம்மை நினைக்கச் செய்வதற்குத்தான்.

நாம் ஏதோ இருக்கிற அசட்டு ஸ்திதியில் நமக்குத் தெரிந்த அளவில், ஆனால் பக்தி ச்ரத்தா விச்வாஸங்களோடு, அந்தக் குழந்தையை சவுடால் பண்ணும் திருட்டுக் குழந்தையாகவும், சாந்தமாகச் சயனித்துக் கொண்டிருக்கிற ஆலிலைக் குழந்தையாகவும் ஸ்மரிக்க ஆரம்பித்துவிட்டால், ஸ்மரிக்க ஸ்மரிக்க நம் மனஸின் சொர சொரப்பு, வாடல், வதங்கல் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் போய் வட பத்ரம் மாதிரி எப்போதும் பசுமையாய், எப்போதும் மிருதுவாய் ஆகும். அப்போது அவனே வந்து இந்த மனஸிலும் சயனித்துக் கொண்டு விடுவான். 'வட பத்ர சாயி, க்ஷீராப்தி சாயி, ஸ்ரீரங்கசாயி' என்றெல்லாம் கூப்பிட்டு, "ரமதாம் மநோ மே" என்று பிரார்த்தனை செய்கிறபோது அவனை நம் மனஸிலே வந்து சயனித்துக் களிக்கும் படியாகத்தான் வேண்டுகிறோம்.

அதனால்தான் (அந்த ப்ராத்தனை ஸ்லோகம்) ஸத்-சித்த சாயி - 'ஸாது ஜனங்களில் சித்தத்தில் சயனிப்பவன்' - என்று ஆரம்பித்திருக்கிறது*3அந்தக் குழந்தையின் மெத்து உடம்பு, மாறாத பால்ய சரீரம் நம் மனஸிலே பட்டால் இதுவும் அப்படி ஆகிவிடும். இதன் அழுக்கும், கெட்ட ருசி எல்லாமும் போய் வெள்ளை வெளேரென்று சாந்த மதுரமான வெண்ணெயாகிவிடும். இப்படி நம்மைத் தன்னுடைய ஸ்மரணையால் குழைத்துக் குழைத்து ("குழைத்த பத்து" என்றே மாணிக்கவாசகர் பண்ணியிருக்கிறார்) தொண்டைக்குக் கொஞ்சங்கூட ச்ரமம் தராமல் விழுங்கக்கூடிய வெண்ணெயாக ஆக்கினபின் அவன் அப்படியே உட்கொண்டு விடுவான். அவனுக்குள்ளேயே போய் ஸ்வஸ்தமாய் இருந்துவிடலாம்.

முதலிலே பண்ண வேண்டியது அவன் ஸ்மரணை. அதனால் நம்முடைய உள்ளத்தை வெளுப்பான பாலாக்கிக் கொண்டால், பால் ஸமுத்ரத்தில் படுத்துக் கொண்டிருப்பவனே நம்முடைய பிரேமை அலை மோதும் உள்ளத்தில் தானே வெண்ணெய்க் கட்டியாக வந்து மிதப்பான். அப்புறம் நம்மையும் வெண்ணெயாக்கித் தனக்குள் வைத்துக் கொண்டு

விடுவான்.

---

*1.சாந்தோக்யம் 8.13.1.

1. பாகவதம் 1.3.28

2. அடுத்து வரும் கண்ணனின் கூற்றுகள் கீதையில் விபூதியோகம் எனும் பத்தாம் அத்யாயத்தில் வருவன.

*2.ñý£ï£ó£ò«í£ðGû˜ 12.3.3

*3.ú„C˜î ê£f ¹ü«è‰˜ó ê£f ï‰î£ƒè ê£f èñô£ƒè ê£f*

க்ஷீராப்தி சாயீ வடபத்ர சாயீ ஸ்ரீரங்க சாயீ ரமதாம் மநோ மே**

(ஆசார்யாள் அருளியதாகக் கருதப்படும் ஸ்ரீரங்கநாதஷ்டகம் கடைசி ஸ்லோகம்:)

---



**சிவ நாம மஹிமை**

**சிவன் தரும் மஹிமை**

சிவ நாமாவைச் சிறப்பித்து சைவமான புராண ஆகமங்களிலோ, தேவார திருவாசகங்களிலோ சொல்லியிருந்தால் அதில் பெரிய விசேஷமில்லை. வைஷ்ணவ நூலில் சொல்லியிருந்தாலே விசேஷம். சிவ மஹிமையைத் தீவ்ர வைஷ்ணவர் சொல்லியிரு ந்தால்தான் விசேஷம்.

இந்த இரண்டு விசேஷங்களும் சிவனுக்கும் சிவ நாமத்துக்கும் இருக்கின்றன.

விஷ்ணுவின் மஹிமைகளை, சரித்ரங்களை எல்லாவற்றுக்கும் மேலானவை என்று ஸ்தாபிக்க ஏற்பட்டது பாகவதம். அதில் நடுவிலே தாக்ஷாயணியின் கதை வருகிறது. அந்தக் கதைக்கு நடுவிலேதான் தாக்ஷாயணியின் வாக்கிலேயே சிவ நாமாவின் மஹிமையைச் சொல்லியிருக்கிறார், பாகவதத்தை அநுக்ரஹித்துள்ள சுகாசார்யாள். அவர் ப்ரஹ்ம ஸ்வரூபம். சுகப்ரஹ்மம் எனப்படுபவர். அவர் சொல்வதற்கு தனி மதிப்பு உண்டு. அவர் இப்படி எடுத்துச் சொல்வதற்கு மூலமாக இந்த மஹிமையைச் **சொன்னவளோ தாக்ஷாயணியாக வந்த ஸாக்ஷாத் பராசக்தி !**அதுவும் எப்படிப்பட்ட ஸந்தர்பத்தில் சொன்னாள்?

தகப்பனார் தக்ஷன் யஜ்ஞம் செய்கிறான் என்ற அபிமானத்தால் அவன் அழைக்காமலே அதற்கு வந்தாள், அவனுடைய புத்ரியானதால் தாக்ஷாயணி என்று அழைக்கப்பட்ட தேவி. ஸதி என்பதுதான் அவளுடைய (இயற்) பெயர். ஹிமவானின் புத்ரியான பார்வதியாக வருவதற்கு முன்னால் அம்பாள் எடுத்த அவதாரம் இது. பரமேஸ்வரன், "அழையா விருந்தாளியாகப் போக வேண்டாம்"என்று நல்ல வார்த்தை சொல்லியும் கேட்காமல் தாக்ஷாயணி தகப்பனாரின் யாகத்துக்கு வந்தாள்.

பரமேஸ்வரன் யாரையும் மதிப்பதுமில்லை, அவமதிப்பதுமில்லை என்று தன்பாட்டில் ஞானியாக விலகியிருந்தவர். 'ப்ரஜாபதி'என்று ஜனங்களுக்கு நாயகர்களாக ப்ரம்மா ஸ்ருஷ்டித்த ப்ரம்ம புத்ரர்களில் தக்ஷன் ஒருவன். அவனுக்கு எப்போதும் தன் ஆஃபீஸ், அதாரிடிகளைப் பற்றிய கர்வமுண்டு. எல்லோரும் தனக்கு நமஸ்காரம் பண்ணவேண்டும் என்று எதிர்பார்ப்பான். மற்றவர்கள் பண்ணவும் பண்ணினார்கள் ஈஸ்வரன் பண்ணவில்லை. அதனால் அவரை இவனுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் ப்ரம்மாவின் வாக்குக்குக் கட்டுப்பட்டு ஸதியை அவருக்குக் கல்யாணம் செய்து கொடுத்து அவளைக் கைலாஸத்துக்கு

அனுப்பி வைத்தான். அதோடு பெண்-மாப்பிள்ளை உறவைக் கத்தரித்து விட்டான். பெரிய யாகம் செய்தபோதுகூட ஒரு தேவர் பாக்கியில்லாமல் முப்பத்து முக்கோடி பேரையும் கூப்பிட்டவன் பெண்ணையும் மாப்பிள்ளையையும் இன்வைட் பண்ணவில்லை.

யஜ்ஞவாடத்தில் ஈஸ்வரனைத் தவிர அத்தனை பேரையும் கூப்பிட்டு உட்கார்த்தி வைத்திருப்பதைப் பார்த்தவுடனேயே மஹா பதிவ்ரதையான தாக்ஷாயணிக்கு "ஏண்டா வந்தோம்?"என்று பொங்கிப் பொங்கிக் கொண்டு வந்தது. அதற்கப்புறம் தக்ஷன் அவளை ப்ரியமாய் வரவேற்காததோடு, சிவ த்வேஷமாகவே நிந்தை பண்ணிப் பேச ஆரம்பித்தவுடன் அவளால் துக்கத்தையும் கோபத்தையும் தாங்கவே முடியவில்லை.

இங்கேயிருந்து போய்விடலாமா?போவது என்றால் எங்கே?பதியின் க்ருஹத்தைத் தவிர பத்னிக்கு வேறே இடம் ஏது?அங்கே போகலாமா?ஏன், என்ன யோசனை?போகவேண்டியதுதானே?போனால், 'நான் சொல்லச் சொல்லப் போய் உனக்கும் அவமானத்தை தேடிக் கொண்டு எனக்கும் அவமானம் வாங்கி வைத்து விட்டு இங்கே ஏன் திரும்பி வந்தாய்?'என்று பரமேஸ்வரர் கோபிப்பாரோ என்பதால் யோசனையா?இல்லை. அவர் அன்பே ஒரு ஸ்வரூபமாக வந்திருப்பவர். என்னிடம் பரிவு தவிர எந்த உணர்ச்சியும் காட்டத் தெரியாதவர். அவர் இப்படிக் கேட்கமாட்டார். ஆனால் என் மனஸே கேட்கும்;குத்திக் குத்திக் கேட்கும். இன்னொன்று:அவர் எதுவும் நடக்காதது போல ஹாஸ்யமாக, பரிஹாஸமாக, என்னிடம் ஸல்லாபம் செய்யும் போதே நடுவில் 'தாக்ஷாயணி'என்று என்னைக் கூப்பிட்டுவிட்டால்?அதைவிட ஒரு தண்டனை வேண்டுமா?சிவநிந்தை செய்யும் பாபியின் பெண்ணாயிருப்பதால் ஏற்பட்ட பேரல்லவா அது?அவருடைய நாமம் எத்தனை உத்க்ருஷ்டமானதோ அத்தனை நிக்ருஷ்டமான இவனுடைய பேரைச் சொல்லி, இவனுக்குப் பெண்ணாய் நான் பிறந்தேனென்பதை ஞாபகப்படுத்தும் இந்தப் பேரை நான் வைத்துக் கொள்ள வேண்டியிருப்பதை விடப் பெரிய தண்டனை இல்லை. அதைவிட, இவனால் ஏற்பட்ட இந்த சரீரமே போய்விடட்டும்!எங்கே போவது என்று யோசித்தோமே!இந்த சரீரத்தையே விட்டுவிட்டுப் போய் ஆத்மாவாகிய அவரிடம் கலந்து விடுவோம்!'என்று தியாக ஸங்கல்பம் பண்ணிக் கொண்டு விட்டாள்.

யஜ்ஞ குண்டத்துக்குப் பக்கத்திலேயே அம்பாள் ஈஸ்வர த்யானம் பண்ணிக்கொண்டு யோகாக்னியில் சரீரத்தை அர்ப்பணம் செய்து முடிந்து போய்விட்டாள் என்பது பாகவதக் கதை. சைவ புராணங்களில் யஜ்ஞ குண்டத்திலே விழுந்து பஸ்மீகரமாக்கிக்கொண்டு விட்டாளென்று இருக்கிறது.

இப்படி பாதிவ்ரத்யத்துக்காக, அம்பாள் ப்ராணத் தியாகம் செய்கிறதற்கு முந்தி கோபாக்னி கொழுந்து விட்டெரிய தக்ஷனைப் பார்த்துக் கொஞ்சம் பேசினதாக பாகவதத்தில் வருகிறது. அதன் நடுவில்தான், 'சிவன் என்றாலே இவன் கரிக்கிறானே!'என்று நினைத்து அவனிடம் அந்த நாம மஹிமையை அம்பாள் சொல்வது வருகிறது.

அம்பாள் வாக்கு என்பதாலேயே அதற்கு மிகுந்த ஏற்றம் உண்டு. அதுவும் இந்த ஸந்தர்ப்பத்திலே சொன்னது என்பதால் இன்னமும் மேலே, இதற்குமேல் ஒன்றில்லை என்ற உச்சிக்கு அந்த வாக்கு போய்விடுகிறது.

முன்காலத்தில் யாராவது உடன்கட்டை ஏறினால் அவளுடைய வஸ்த்ரம் எரியாமலே இருக்கும். ப்ரத்யக்ஷத்தில் பார்த்துப் பலபேர் சொல்லியிருக்கிறார்கள். அந்த வஸ்த்ரத்தை வைத்து ஆராதனை செய்வார்கள். இப்படிப் பல வீடுகளில் தலைமுறைகளாக அந்த வஸ்த்ரம் வந்திருக்கிறது. தன்னையே த்யாகம் பண்ணிக் கொள்வதால் அந்த ஸ்திரீகள் ஆத்ம ஞானியின் நிலையிலிருப்பவர்கள், அம்பாளின் அம்சம் பெற்றவர்கள் என்று பூஜிக்கப்படுகிறார்கள். அப்படியானால் அந்த அம்சங்களுக்கெல்லாம் மூலமான அம்பிகையே பதியை நிந்தை செய்தவனுடைய புத்ரியாக ஏற்பட்ட பெயரும் தேஹமும் இருக்கப்படாது என்ற தீவ்ரமான பதிவ்ரதா பாவத்தில் தன் தேஹத்தை பரித்யாகம் பண்ணிக் கொள்கிற நிலையில் சொன்ன வாக்கு ஸஹகமனம் செய்கிறவர்களின் வஸ்திரத்தைவிட எத்தனை மேலானது?

அம்பாள் இங்கே ஸஹகமனம் செய்யாவிட்டாலும் அப்படிச் செய்வதற்கே 'ஸதி'- இங்கிலீஷிலே suttee - என்றுதான் அவள் பேரை வைத்திருக்கிறது. 'பாதிவ்ரத்யத்துக்காக சரீரத்தைப் பொசுக்கிக் கொண்டு விடுவது'என்ற கொள்கை இரண்டுக்கும் பொதுவாயிருப்பதால் இவ்வாறு பேர் ஏற்பட்டிருக்கிறது.

ஸதி-பதி என்பதாகவே தம்பதியைச் சொல்வதும் 'ஸதி'என்றாலே ஐடியல் பத்னி என்ற அபிப்ராயத்தில் தான். ஆசார்யாள் " ஸதி ஸதீநாம் அசரமே " என்கிறார்1. "பதிவ்ரதைகளுக்குள் முதன்மை ஸ்தானம் கொண்ட ஸதியே!"என்று அர்த்தம்.

அப்படிப்பட்டவள் ப்ரணாத்யாகம் பண்ணுகிற ஸந்தர்ப்பத்தில் சொன்னதைவிடப் பெரிய ஸத்யமில்லை. அந்த ஸத்யத்துக்கு விலையே இல்லை என்ன சொன்னாள்?

யத்-த்வயக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணாம்

ஸக்ருத் ப்ரஸங்காத் அகம் ஆக ஹந்தி தத் *

பவித்ர கீர்த்திம் தம் அலங்க்ய-சாஸநம்

பாவந்-அஹோ த்வேஷ்டி சிவம் சிவேதர :**2

கடைசி வார்த்தை ' சிவேதர :'- 'சிவனுக்கு இதரமானவர்'. அதாவது சிவனாக இல்லாமல் அதற்கு மாறுபட்டவராக இருக்கிறவர். இப்படி 'சிவேதரன்'என்று அம்பாள் சொல்வது தக்ஷனைத்தான். ' பவாந் ' - 'தாங்கள்'என்று ரொம்ப மரியாதை த்வனிக்கிறாற்போலவே அவனைக் கூப்பிடுகிறாள். ஈஸ்வரனே தனக்கு மரியாதை பண்ணவேண்டுமென்று எதிர்பார்ப்பவனாதலால் பரிஹாஸமாக 'பவாந்'என்று சொல்லி அவனை 'சிவேதரன்'என்கிறாள். இதில் நிரம்ப அர்த்த புஷ்டியிருக்கிறது.

சிவ என்பதற்கு மங்களமாக, சுபமாக இருக்கிற அத்தனையையும் அர்த்தமாக, ஒஹ்ஸீஷீஸீஹ்னீ-ளாக (ஸம்ஸ்க்ருத நிகண்டுவான) அமர (கோச)த்தில் சொல்லியிருக்கிறது " ச்வ : ச்ரேயஸம், சிவம், பத்ரம், கல்யாணம், மங்களம், சுபம் ."அந்த சிவத்துக்கு இதரனாக ஒருத்தன் இருக்கிறானென்றால் அவன் ஒரு ச்ரேயஸுமில்லாதவன், அமங்கள, அசுப ஸ்வரூபம் என்றுதானே அர்த்தம்?

அப்பைய தீக்ஷிதர் எழுதியுள்ள அத்வைத க்ரந்தமொன்றுக்குப் 'பரிமளம்'என்று பேர். அத்வைதத்தை ஆக்ஷேபிக்கிற ஒருவர் இதற்குக் கண்டனம் பண்ணி எழுதினார். இந்த விஷயத்தை அப்பைய தீக்ஷிதர் கேட்டவுடன் மூக்கைப் பிடித்துக் கொண்டாராம். பரிமளம் என்றால் அதற்கு மூக்கைப் பிடித்துக் கொள்ளத்தானே வேண்டும்?

சிவம் - அதாவது பரம மங்களம் - பிடிக்காது என்று தக்ஷன் பெருமைப்பட்டுக் கொண்டால் அவன் ஒரே அமங்களன், அகல்யாணன், அசுபமானவன் என்றுதானே அர்த்தம்?தாக்ஷாயணி என்ற பேரே தண்டனை என்று நினைத்தவள் தக்ஷனுக்கு 'சிவேதரன்'என்று பேர் வைத்தே தண்டிக்கிறாள்!

"ஐயையோ ('அஹோ')!இப்படி சிவனை த்வேஷிக்கிற சிவேதரனாயிருக்கிறாயே!ஒரு தப்புக் கண்டுபிடிக்க முடியாமல் பரம பவித்ரமாயுள்ள கீர்த்தி பொருந்தியவரல்லவா அவர் ( பவித்ர கீர்த்திம் )?அவருடைய கட்டளையாலல்லவா ஸகல தேவதைகளும் தங்கள் தங்கள் காரியத்தைச் செய்கிறார்கள்?யாரும் அவர் கட்டளையை மீறினதில்லையே ( அலங்க்ய சாஸனம் )!நீதான் அதிசயமாக அவரை மீறிப் போகப் பார்க்கிறவன்"இப்படியெல்லாம் அம்பாள் சொல்கிறாள். இது ஸ்லோகத்தின் பின்பாதி. முன்பாதியில்தான் சிவ நாமாவின் பெரிய பெருமையைச் சொல்கிறாள்

யத்-த்வயக்ஷரம் நாம கிரேரிதம் த்ருணாம்

ஸக்ருத் ப்ரஸங்காத் அகம் ஆக ஹந்தி ...

' த்வயக்ஷரம் நாம '- 'இரண்டே இரண்டு அக்ஷரம் உள்ள சிவ நாமா'. பஞ்சாக்ஷரமாக அதற்கு

முன்னாடிப் ப்ரணவம், பின்னாடி 'நம':சொல்லணுமென்றுகூட இல்லை. அவ்வளவு ச்ரமம் வேண்டாம். இரண்டெழுத்தைச் சொன்னாலே போதும். ' சிவ சிவ எனகிலர் தீவினையாளர் 'என்றுதான் 'திருமந்திர'த்தில் கூட இருக்கிறது;பஞ்சாக்ஷரமாகச் சொல்லவில்லை. "த்வயக்ஷரம் நாம கிரா"என்றால் 'இரண்டே அக்ஷரமுள்ள நாமமான வார்த்தை'. இந்த வார்த்தையானது மனிதர்களால் சொல்லப்பட்டால் ('ந்ருணாம் ஈரிதம்'- மநுஷ்யர்களால் சொல்லப்பட்டால்).

எப்படிச் சொல்ல வேண்டும்?ஸ்நானம் பண்ணி, மடி பண்ணிக் கொண்டு, மூச்சை கீச்சை அடக்கி ரொம்பவும் நியமமாகச் சொல்ல வேண்டுமா?

ஊஹூம், அதெல்லாம் வேண்டியதில்லை. ' ஸக்ருத் ப்ரஸங்காத் '- ஏதோ ஒரு தடவை பேச்சுக்கு நடுப்பற, எத்தனையோ அரட்டை அடிக்கிறபோது .......

சிவனை நினைத்து, மனஸைச் செலுத்தி புத்தி பூர்வமாக, 'அவன் பேர்'என்று சொல்ல வேண்டியதுகூட இல்லை. அகஸ்மாத்தாக ஏதோ பேச்சுக்கு நடுப்பற அந்த இரண்டெழுத்து வந்துவிட்டால்கூடப் போதும்!'சிவப்பு''அரிசி வடாம்'என்கிற மாதிரி எதையோ சொல்லிக் கொண்டு போகும்போது இந்த இரண்டெழுத்து வந்து விட்டால் கூடப் போதும் ...

இவ்வாறு அது அகஸ்மாத்தாக ஒருதரம் சொல்லப்பட்டால்கூட என்ன பண்ணிவிடுகிறது?

அகம் ஆசு ஹந்தி

' அகம் ' - பாபத்தை;' ஆசு '- உடனே, தத்க்ஷணமே;' ஹந்தி '- அழித்துவிடுகிறது.

பேச்சுக்கிடையே ஏதோ ஒரு தரம் 'சிவ'என்ற இரண்டு அக்ஷரத்தை அகஸ்மாத்தாகச் சொல்லிவிட்டாலும் அதுவே ஸமஸ்த பாபத்தையும் போக்கிவிடும்.

ஸத்தியங்களுக்கெல்லாம் மேலான ஸத்யமாக, ப்ராண த்யாக ஸமயத்திலே ஸாக்ஷாத் பரதேவதை சொன்னதாக சுகாசார்யாள் வாயினால் வந்திருக்கிற வாக்யம் இது.

'சிவசிவ என்று சொல்லாதவன் தீவினையாளன்'என்றால் துஷ்கர்மா பண்ணினவன், அதாவது பாபி என்று அர்த்தம். அப்படியானால், சிவ நாமா சொல்லிவிட்டால் பாபம் போய்விடும் என்றுதானே அர்த்தம்?

தெரிந்தும் தெரியாமலும் எவ்வளவோ பாபம் பண்ணி விட்டோம். அதுதான் மேலே போக முடியாதபடி பெரிசாகத் தடை செய்கிறது. சிவநாமா சொல்லி விட்டால் அந்தத் தடை போய்விடும் அப்புறம் மோக்ஷ பர்யந்தம் எல்லாம் ஸித்தியாகிவிடும்.

மற்ற மதஸ்தர்களில் சிலர், "உங்கள் மதத்தில் பாபத்தைப் பரிஹரிக்க வழி இல்லை. எங்களிடம் இருக்கிறது. கொஞ்சம் தீர்த்தம் தெளிக்கிறோம். பாபமெல்லாம் போய்விடும். ஆகையால் எங்களிடம் வாருங்கள்"என்கிறார்கள்.

நம் மதத்தில் பாப பரிஹாரத்துக்கு வழி சொல்லாதது மாதிரி இவர்கள் கூப்பிடுகிறார்கள். நமக்கும் ஒன்றும் மத விஷயம் தெரியாததால் இங்கேயிருந்து அங்கே போகிறவர்களும் இருக்கிறார்கள். வாஸ்தவத்திலோ, நம்முடைய மதத்தில் இத்தனை கர்மாநுஷ்டானம் விதித்திருப்பது பாபம் போகத்தான். " மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா " என்றுதான் எந்தக் கர்மாவுக்கும் முதலில் ஸங்கல்பம் பண்ணுகிறோம். 'துரிதம்'என்றால் பாபம்தான். பக்தி மார்க்கம் பாபத்தைப் போக்கத்தான். பக்தி முதிர்ந்து ப்ரபத்தி (சரணாகதி) ஆகும். பகவான் கீதையைப் பூர்த்தி பண்ணும்போது, "சரணாகதி பண்ணு. உன்னை ஸகல பாபங்களிலிருந்து விடுவித்து விடுகிறேன். ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி "என்று ஸத்யம் பண்ணித் தந்திருக்கிறார். அவரை நம்பாமல் நாம் இன்னொருத்தரிடம் போக வேண்டியதில்லை.

தர்மம், ஞானம் எதுவானாலும் பாபத்தைப் போக்குவதே. தர்மேண பாபம் அபநுததி என்று (மஹா நாராயண) உபநிஷத்தே சொல்கிறது (79.7). அந்த உபநிஷத்திலுள்ள ஸூக்தங்களில் அநேகம் பாப நிவிருத்தியைத்தான் திருமபத் திரும்ப ப்ரார்த்திக்கின்றன. "பாபிகளில் நீ மஹா பாபியானாலும் ஞான ஓடத்தினால் அந்தப் பாபத்தைக் கடந்து விடுவாய்"என்று கீதையில் (4.36) பகவான் சொல்கிறார்.

கர்மாநுஷ்டானம், தர்மாநுஷ்டானம் ப்ரபத்தி, ஞான ஸாதனை எல்லாவற்றையும்விடப் பரம

ஸுலபமாக, நாம் தெரிந்தும் தெரியாமலும் ஜனமாந்தரங்களாகப் பண்ணியுள்ள பாபத்தைப் போக்கிக் கொள்ள இங்கே பாகவதம் வழி சொல்லிவிட்டது. சிவ நாமோச்சாரணம்தான் அது.

அதனால் இனிமேல் "உங்கள் பாபத்தைக் கழுவி விடுகிறோம்"என்று நம்மைக் கூப்பிடுபவர்களிடம் "எங்களிடம் பாப பரிஹாரத்துக்கு இருக்கிறது போன்ற ஸுலபமான உபாயம் யாரிடமுமே இல்லை. அதனால் முதலில் நீங்கள் எங்களைக் கூப்பிடும் பாபத்தைப் பரிஹாரம் பண்ணிக்கொண்டுவிட்டு அப்புறம் வாருங்கள்"என்று சொல்லுவோம்!

---

1. 'ஸௌந்தர்ய லஹரி'ஸ்லோ 96

2. பாகவதம் 4.4.14

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**வேதத்தில் சிவநாமத்தின் ஸ்தானம்**

விலையுயர்ந்த ரத்னமொன்று நம்மிடமிருந்தால் வீட்டிலே எங்கே வைப்போம்?வாசல் புற ரூமில் வைப்போமா?தோட்டத்தைச் சேர உள்ள ரூமில் வைப்போமா?ரொம்பவும் காபந்தமாக மத்தியில் இருக்கிற ரூமில் இரும்புப் பெட்டியில்தான் வைப்போம். அப்படியே வேதத்தில் ஜீவரத்னமான சிவநாமத்தை ரொம்பவும் ஜாக்ரதைப்படுத்தி வைத்திருக்கிறது. நாலில் மத்தி இரண்டாவது. நாலு வேதங்களில் இரண்டாவது யஜுஸ். அதர்வவேதத்தைச் சேர்க்காமல் ரிக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்றை மட்டும் 'த்ரயீ'என்பதுண்டு. அப்போதும் ரிக்குக்கும் ஸாமத்துக்கும் நடுவில் வருது யஜுஸே. யஜுஸிலேயே சுக்ல யஜுஸ், க்ருஷ்ண யஜுஸ், என்று இரண்டு இருப்பதால் நாலு வேதத்தை நாலு வேதத்தை ஐந்து என்று ஆக்கினாலும் ரிக், சுக்ல யஜுஸ், க்ருஷ்ண யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற ஐந்தில் நட்ட நடுவாக வருவது மூன்றாவதான க்ருஷ்ண யஜுஸ்தான் இந்த க்ருஷ்ண யஜுர் வேதத்தில் மத்ய பாகம் அதன் நாலாவது காண்டம். அந்தக் காண்டத்தின் மத்யம் ஐந்தாவது ப்ரச்னம். இதிலேதான் நடுவில் ஸ்ரீ ருத்ர ஸூக்தம் என்படுவதில் நடுநாயகமாக பஞ்சாக்ஷரம் வருகிறது. அந்த பஞ்சாக்ஷரத்துக்கும் மையமாக 'சிவ'என்ற த்வயக்ஷரம் இருக்கிறது.

உடம்பை மெய் என்கிறோம். அதிலே இருக்கிற பரமாத்மாவை மெய்ப்பொருள் என்பார்கள். ஸத்வஸ்து என்று வேதாந்தத்தில் சொல்வதைத் திருவள்ளுவர் அப்படியே தமிழில் 'மெய்ப்பொருள்'என்கிறார். வேதங்களையெல்லாம் ஒரு சரீரமாக - மெய்யாக - வைத்துக் கொண்டால் அதில் உயிராக, மெய்ப்பொருளாக இருப்பது சிவநாமா. உயிர் என்னும் பரமாத்மா இருக்கும் ஸ்தானம் ஹ்ருதயம் என்றால், அந்த ஹ்ருதயம் சரீர மத்தியில்தான் இருக்கிறது. இதைத்தான் ஞானஸம்பந்தரும் சொல்கிறார்.

**வேத நான்கினும் மெய்ப்பொருளாவது**

**நாத(ன்) நாமம் நமச்சிவாயவே**

வீட்டுக்கு நடுவே காபந்தாக இருக்கும் ரத்னம் போல வேத சரீரத்தின் நடுவே அதன் ஜீவரத்னமாக உயிர் கொடுத்துக்கொண்டு சிவ நாமாவாகவே பரமாத்மா இருக்கிறார். இந்த அபிப்ராயத்தையே அப்பைய தீக்ஷிதர் ப்ரஹ்ம தர்க்க ஸ்தவத்தில் (ஸ்லோ. 27) " **யஜ்-ஜீவ ரத்நம் அகிலாகம லாலநீயம்** "என்கிறார்

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**அனைவருக்குமான நாமம்**

அவ்வைப் பாட்டி செய்திருக்கிற நூல்களில் 'நல்வழி'என்பது ஒன்று. என்ன ஜாதி, என்ன மதம் என்றெல்லாம் கேட்காமல் மநுஷ்யராகப் பிறந்த எல்லாருக்குமான நீதிகளை அதில் சொல்லியிருக்கிறது. இப்படி நூலில், " **சிவாய நம என்று சிந்தித்திருப்போர்க்(கு) அவாயம் (அபாயம்) ஒரு நாளுமில்லை** " என்று வருகிறது. அதனால் சிவநாமம் ஸகல ஜனங்களுக்கும் ஏற்பட்டது என்று தெரிகிறது. ஜாதி ப்ரஷ்டம் பண்ணி வைக்கப்பட்ட சண்டாளன்கூட சிவநாமம் சொல்ல வேண்டுமென்றிருக்கிறது. ஸ்ரீருத்ரத்தில் பரமேஸ்வரனை நாய், நாய் தின்னுகிறவன் உள்பட எல்லாமாகச் சொல்லியிருப்பதாலேயே அவனுடைய நாமா எல்லோருக்கும் ஸொத்து என்று தெரிகிறது.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**வைஷ்ணவர் கூறும் பெருமை**

ஸ்ரீமத் விஷ்ணு பாகவத்தில் சிவ நாமாவின் பெருமை வந்திருப்பது போலவே ஸ்ரீவைஷ்ணவர்கள் ரொம்பவும் போற்றி மரியாதை செய்கிற ஒருவரும் அந்த நாமாவுக்கு உரியவரான பரமேஸ்வரனின் உயர்வைச் சொல்லியிருப்பதாக எனக்கு ஒரு அபிப்ராயம். அவர் என்னமோ சிவனை மட்டந் தட்டினதாகத்தான் கதை சொல்கிறவர்கள் சொன்னாலும் எனக்கு அப்படித் தோன்றவில்லை.

அவர் ராமாநுஜாசார்யாருக்கு மிகவும் முக்யமாக இருக்கப்பட்ட சிஷ்யர்களில் ஒருவர். கூரத்தாழ்வார் என்று பேர். பேர் என்றால் அப்பா அம்மா வைத்தது இல்லை. ஸ்ரீவத்ஸாங்கர் என்பதே அவர் பேர். தமிழில் திருமறுமார்பன் என்பார்கள். காஞ்சீபுரத்துக்குப் பக்கத்திலுள்ள கூரத்தைச் சேர்ந்தவராதலால் கூரத்தாழ்வார் என்று பெயர் வந்தது.

ராமாநுஜர் காலம் வரையில் அநேகர் சிவன், விஷ்ணு இருவரையும் உபாஸிப்பவர்களாக இருந்தார்கள். ஒரு ஊர் என்றாலே அதில் 'ஈசான்யம்'என்கிற வடகிழக்கில் என்கிற வடகிழக்கில் ஈஸ்வரன் கோவிலும் மேற்கில் பெருமாள் கோவிலும் இருக்க வேண்டுமென்று விதி. அப்படியிருப்பதில் அநேகமாக எல்லாரும் கார்த்தாலே பெருமாள் கோவில், ஸாயரக்ஷை சிவன் கோவில் என்று போவார்கள். கொஞ்சம் கொஞ்சம் தீவ்ரமாக சிவனையே சொல்கிறவர்கள், விஷ்ணுவையே சொல்கிறவர்கள் என்று இருந்தாலுங்கூட ஒன்றை இழிவு பண்ணி ஒதுக்கி இன்னொன்றை மாத்திரம் உயர்த்தி வைக்க வேண்டும் என்கிற அபிப்ராயம் இல்லாமல் இருந்தது. இப்படி இருக்கிறபோது ராமாநுஜர், 'விஷ்ணுவைத் தவிரக் கடவுள் இல்லை;தேவதாந்தரமே கூடாது'என்பதை ஒரு மதமாகவே பண்ணி, சிவன் கோவிலுக்குப் போகப்படாது என்று பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்.

அப்போது ஆட்சி பண்ணிய சோழராஜாவும் வித்வான்களும் இதைப்பற்றி ஆலோசித்தார்கள். ராமாநுஜர் சொல்வதற்கு என்ன சாஸ்த்ர ஆதாரம் என்று அவரையே கூப்பிட்டுக் கேட்போம் என்று முடிவு பண்ணினார்கள். இதற்காக வித்வத் ஸதஸ் கூட்ட ஏற்பாடாயிற்று. அப்போது தலைநகராயிருந்தது கங்கைகொண்ட சோழபுரம். கும்பகோணத்துக்கு வடக்கே பத்து மைலில் இருப்பது. ராமாநுஜாசாரியார் ஸ்ரீரங்கத்தில் இருந்தார். இங்கிருந்து அங்கே ராஜா ஆள் அனுப்பினான்.

ஆள் போய் விஷயத்தைச் சொன்னான். அப்போது ராமாநுஜரோடு கூட இருந்த கூரத்தாழ்வார், "ஸ்வாமி!ராஜாவோ சைவன்;சிவாலயங்கள் கட்டியிருப்பவன். தாங்களானால் சிவன் கோவிலுக்குப் போகப்படாது என்கிறீர்கள். அதனால் உங்களை அழைத்து தண்டனை கொடுப்பதற்கே 'வித்வத் ஸதஸ்'என்று சொல்லி ஆள் அனுப்பியிருக்கிறான். வருகிற ஆபத்து எனக்கு வரட்டும்;தங்களுக்கு வேண்டாம். தாங்கள் என்னுடைய வெள்ளை வேஷ்யைக் கட்டிக்கொண்டு சோழராஜ்யத்தை விட்டே போய்விடுங்கள். தங்களுக்காக நான் தங்களுடைய காஷாயத்தைப் போட்டுக்கொண்டு, நான்தான் தாங்கள் என்று சொல்லிக்கொண்டு ராஜாவிடம் போகிறேன்"என்றார்.

அப்படியே செய்தார்கள். ராமானுஜர் ராத்திரியோடு ராத்ரியாக முதலில் ஸ்ரீரங்கத்துக்கு இருபத்தெட்டு மைலிலுள்ள திருநாராயணபுரத்துக்கும், அப்புறம் அங்கிருந்து ரொம்ப தூரத்துக்கு அப்பாலுள்ள மைஸூர் திருநாராயணபுரத்துக்கும் போனார். கூரத்தாழ்வார் கங்கைகொண்ட சோழபுர ஸதஸ்ஸுக்கு வந்து சேர்ந்தார்.

அங்கே கூடியிருந்த வித்வான்கள், 'சிவன் மாதிரி, சிவனுக்கு ஸமமாக விஷ்ணுவோ, இன்னொரு தெய்வமோ இருக்கிறது'என்று வேண்டுமானால் மற்ற தெய்வங்களை இஷ்ட தெய்வமாகக் கொண்டவர்கள் சொல்லிவிட்டுப் போகட்டும்;ஆனால் தெய்வங்களுக்குள் உசத்தி-தாழ்த்தி சொல்வதாவது?சிவனைவிட விஷ்ணு உசத்தி என்றால் எப்படி?அப்படித்தான் என்றால் சாஸ்த்ரங்களைக் காட்டி நிரூபிக்கட்டும் என்று தீர்மானித்தார்கள். அதனால் " **சிவாத் பரதரம் நாஸ்தி** ", அதாவது 'சிவனுக்கு மேலே உயர்ந்த பொருள் இல்லை'என்று ஓலையில் எழுதினார்கள். வித்வான்களுக்கு ஓலையை அனுப்புவது;இந்த அபிப்ராயத்தை ஒப்புக்கொண்டால் அவர்கள் கையெழுத்துப் போடட்டு ம்;ஆக்ஷேபித்தால் சாஸ்த்ரம் காட்டி விளக்கட்டும் என்று முடிவு செய்தார்கள்.

கூரத்தாழ்வாரிடம் ஓலை காட்டப்பட்டது.

அவர் அதிலே என்னவோ எழுதித் திருப்பிக் கொடுத்தார். என்ன எழுதினார் என்றால், கையெழுத்துப் போடவில்லை " **அஸ்தி த்ரோணம் அத : பரம்** "என்று எழுதியிருந்தார்.

"சிவனுக்கு மேல் உசத்தியான ஒன்று இல்லை"என்றுதானே ஓலையில் முதலில் எழுதப்பட்டிருந்தது?அதற்கு மேல் த்ரோணம் இருக்கிறது"என்று இவர் இப்போது எழுதினதிற்கு அர்த்தம். "அஸ்தி த்ரோணம் அத:பரம்"என்றால் "அதற்கு (சிவனுக்கு) மேலானதாக த்ரோணம் இருக்கிறது"என்று அர்த்தம்.

'சிவ'â¡ø£™ ßvõó ï£ñ£ â¡ð¶ ñ†´I™¬ô. ÜîŸ° Þ¡ªù£¼ Ü˜ˆî‹, 'ñó,è£™'â¡ð¶. ñó,è£™ - ð® - Ýö£,° â¡ðF™ ñó,è£½,° ú‹v,¼îˆF™ 'Cõ‹'â¡Á ªðò˜. ñó,è£¬ôŠMìŠ ªðKò Ü÷¾ å¡Á à‡´. îIN™ ÜîŸ°Š ðî,° â¡Á «ð˜. ú‹v,¼îˆF™ Þ¶ 'ˆ«ó£í‹'âùŠð´‹.

'சிவ'என்பதற்குப் இரண்டு அர்த்தமிருப்பதில் இவர் சிலேடையாக 'சிவபெருமான்'என்பதைத் தள்ளிவிட்டு, 'மரக்கால்'என்பதாக எடுத்துக்கொண்டு, 'ஏன் மரக்காலும் மேலே எதுவும் இல்லாமல்?பதக்கு இருக்கே!'என்று எடுத்துக்காட்டி எழுதிவிட்டார்.

"ராஜ ஸமூஹம்;அநேக வித்வான்கள் கூடியிருக்கிற கௌரவமான ஸதஸ்;அதிலே ஸீரியஸாக சாஸ்த்ரார்த்தங்களைக் கட்டாமல் குறும்பாக, 'மரக்காலை விடப் பதக்கு பெரிசு'என்று இவர் எழுதியிருக்கிறாரே!"என்று எல்லாருக்குமே இருந்தது. ராஜாவுக்குக் கோபம் வந்து, கடுமையாக சிக்ஷை பண்ணினான் என்று கதை போகிறது.

எனக்கென்ன தோன்றுகின்றதென்றால் கூரத்தாழ்வார் குறும்பு பண்ணவில்லை;சிவனே கதி என்று உபாஸிக்க கூடியவர்களும், வேதத்திலுள்ள ருத்ர ஸூக்தமுமே ஒப்புக்கொள்ளு ம்படியான ஒரு உண்மையைத் தான் "அஸ்தி த்ரோணம் அத:பரம்"என்பதில் உள்ளார்த்தமாக வைத்திருக்கிறார் என்று தோன்றுகிறது.

'சிவ'என்பதற்கு அவர் இரண்டர்த்தம் பண்ணிக் கொண்டதாகத்தான் இதுவரை நினைக்கப்பட்டிருக்கிறது. மரக்கால் என்று அர்த்தம் பண்ணினார் என்று நினைத்தே ராஜா சிக்ஷித்தான். எனக்கோ, 'அஸ்தி த்ரோணம் அத:பரம்'என்பதில் 'சிவ'என்பதற்குப் பரமசிவனுக்கு வேறாக இன்னொன்றை (மரக்காலை) அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டாம்;'த்ரோணம்'என்பதற்குத்தான் பதக்கு என்றில்லாமல் வேறே அர்த்தம் செய்து கொள்ளணும் என்று தோன்றுகிறது.

என்ன அர்த்தம்?

த்ரோணம் என்றால் தும்பை என்றும் அர்த்தம். பரமேஸ்வரனுக்கு மிகவும் ப்ரீதியான பூ

அது. பத்ரங்களில் பில்வம் மாதிரி, புஷ்பங்களில் எந்தக் கடையிலும் விலைக்கு விற்காததான ஊமத்தை, எருக்கு, தும்பை இதுகள்தான் சிவபெருமானுக்கு ரொம்பவும் உகந்தவை. அப்பைய தீக்ஷிதரைவிட ஒரு சிவபக்தர் கிடையாது. அவர் 'ஆத்மார்ப்பண ஸ்துதி'என்று செய்திருக்கிறார். இதற்கு 'உன்மத்த பஞ்சாசத்'என்றும் காரணப்பெயர் உண்டு*.

அர்க்க-த்ரோண-ப்ரப்ருதி குஸுமை : அர்ச்சநம் தே விதேயம்

ப்ரப்யம் தேந ஸ்மரஹர பலம் மோட்ச ஸாம்ராஜ்ய லக்ஷ்மி :*

என்கிறார். "பரமேஸ்வரா!உன்மேலே எருக்கையும் த்ரோணத்தையும் (தும்பையையும்) அர்ச்சனை பண்ணி விட்டால் போதும், அது ஒருத்தனுக்கு மோட்ச ஸாம்ராஜ்யம் என்ற பரம ச்ரேயஸைப் பலனாகக் கொடுத்து விடுகிறது"என்கிறார்.

சிவனுக்கு மேலே தும்பைப் பூ அர்ச்சனை செய்த பூ விழுகிறது. அவனுக்கு மேலே போய் அது உட்கார்ந்திருக்கிறது. சிவலிங்கத்தின் உச்சியில் ஒரு தும்பைப்பூவை வைத்து விட்டால், அப்போது அது அவனுக்கு மேலே, அவனைவிட உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கிறது!ஆகையால் "சிவனுக்கு மேலே உயர்வாக எதுவுமில்லை;சிவாத் பரதரம் நாஸ்தி"என்றால் எப்படி ஸரியாகும்?அதுதான் மேலே த்ரோண புஷ்பம், இத்தனூண்டு பூ வெள்ளை வெளேரென்று பரம நிர்மலமாக, அத்தனை பெரியவனுக்கும் மேலே இருக்கிறதே!"இருக்கிறது"என்பதை அடித்துச் சொல்லவே "அஸ்தி"என்று ஆரம்பித்து, "அஸ்தி த்ரோணம் அத:பரம்"என்றதாகத் தோன்றுகிறது.

'தரம்'என்றால் ஒன்றைவிட இன்னொன்று நீஷீனீஜீணீக்ஷீணீமீ´வீஸ்மீ பீமீரீக்ஷீமீமீ-ல் உயர்ந்தது என்று அர்த்தம். 'சிவாத் பரதரம் நாஸ்தி'என்றால் சிவனைவிடப் பரமாக (உயர்ந்ததாக) கம்பேரடிவ் டிக்ரியில் சொல்ல எதுவும் கிடையைது என்று அர்த்தம்.

சிவனுக்கு 'மேலே'தும்பை இருக்கிறது என்று வேண்டுமானால் அது இருக்கும் பொஸிஷனைக் கொண்டு சொல்லலாமே தவிர, சிவனோடு கம்பேர் பண்ணி அதாவது அவருடைய குணத்தோடும் மஹிமையோடும் ஒப்பிட்டுப் பார்த்துத் தும்பை அவரைவிட உசத்தி என்று எப்படிச் சொல்லமுடியும்?

அதுவும் முடியும். வேதமந்த்ரமான ஸ்ரீருத்ர வாக்யமே இதற்கு ஆதரவாயிருக்கிறது. அதிலே முடிகிற இடத்திலே இப்படி வருகிறது:"இதோ என்னுடைய இந்தக் கை இருக்கிறதே, இதுவுமே பகவான்தான், பரமசிவன்தான். இல்லை, பகவானுக்கும் மேலே - ' பகவத் தர :'என்று கம்பரேடிவ் 'தர'த்தையே சொல்லியிருக்கிறது!

எப்படி இந்தக் கை பகவானைவிட உசத்தி?

எப்படியா?"இது அவனை அபிமர்சனம் பண்ணுகிறதோ இல்லையோ, அதனால்தான்"என்று ச்ருதியே சொல்கிறது.

'அபிமர்சனம்'என்றால் நன்றாகத் தொடுவது. பூஜையின் போது அவனை நன்றாகத் தொட்டுத் துடைத்து, சந்தனமிட்டு, அர்ச்சனை பண்ணுவது இந்தக் கைதானே?இப்படி அவனைத் தொட்டுவிட்டால் போதும், அவன்மேலே போய் விழுந்துவிட்டால்போதும், அவன் காலிலே சித்தே (சிறிதே) கிடந்தால் போதும் - அவனுடைய ஸ்பரிசம் படுகிறதே, அப்போது அவன் தன்னுடைய குணம், மஹிமை எல்லாவற்றையும் தானாக இருந்துகொண்டு எவ்வளவு காட்டுகிறானோ அதைவிட ஜாஸ்தியாகவே தன்னை ஸ்பரித்துக் கொண்டிருப்பவனுக்குக் கொடுத்துவிடுவான்;தான் பகவான் என்றால் தன்னை ஸ்பர்சிப்பது 'பகவத்தரம்'என்று ஆக்கிவிடுவான்!

அதனால் ஒரு தும்பைப்பூ அவனுடைய தலை மேல் ஏறி உட்காரணும் என்று கூட இல்லை, அவனுடைய காலிலே அர்ச்சிக்கப்பட்டுக் கிடந்தாலுங்கூட சிவத்தன்மையிலே அது சிவனைவிட 'மேல்':' சிவாத் பரதரம் 'தான்.

இந்த அபிப்ராயங்களை மனஸில் வைத்துக் கொண்டே, ஆனாலும் தன்னுடைய ஆசார்யனுடைய அபிப்ராயத்துக்கு வேறேயாக வெளிப்படச் சொல்லக் கூடாது;சொல்லாமல் அவருக்காக என்ன தண்டனையானாலும் வாங்கிக் கொள்வது என்றே கூரத்தாழ்வார்

இரண்டு அர்த்தத்தில் "அஸ்தி த்ரோணம் அத:பரம்"என்று சொன்னதாக வைத்துக் கொள்ளலாம்.

ஒரு சின்னஞ்சிறிய பூவாக இருந்தால்கூட ஸரி, தன்னிடம் அது வந்துவிட்டது என்றால் அதைத் தன்னிலும் உசத்தியான மஹிமையுள்ளதாகப் பண்ணிவிடுகிற ஔதார்யம் (உதார குணம்) உடையவர் பரமசிவன் என்பது அந்த வைஷ்ணவர் வார்த்தையால் தெரிவதாக எடுத்துக் கொள்ளலாம்.

ஆனால் இப்படி அவனை எப்போ பார்த்தாலும் தொட்டுப் பூஜை பண்ணிக்கொண்டிருக்க முடியுமா?எல்லோருக்கும் அந்த ஸௌகர்யம் கிடைக்குமா?இந்த ஸாதாரணத் தும்பை கூட எல்லா மாஸத்திலும் கிடைக்காதே?அதனாலே அவனை ஸ்பரிசித்து, ஒட்டிக் கொண்டு, கட்டிக்கொண்டு இருப்பதெல்லாம் வாக்கால்தான் பண்ணியாகணும். இந்த நாக்கிலேதான் அவன் நாமாவை வைத்துக் கட்டிக்கொண்டு அதன் மூலம் அவனை ஹ்ருதயத்தில் இறக்கிக்கொண்டு அங்கே அவனோடு ஒட்டிக்கொண்டு இருக்கவேண்டும். நாமா சொல்ல எந்த ஸௌகர்யமும் வேண்டாம், உபகரணமும் வேண்டாம், நியமமும் வேண்டாம்.

அதனால் இத்தனை பாபம் பண்ணிவிட்டோமே என்று அழவே வேண்டாம். பாபத்தை ஒரே க்ஷணத்தில் த்வம்ஸம் பண்ணும் வஸ்து இருக்கிறது. அதை எங்கேயோ போய்த் தேடிப் பெற வேண்டியதில்லை. நாமே உண்டு பண்ணிக்கொண்டு விடலாம். கஷ்டமே இல்லை. இரண்டே எழுத்து. தேஹத்தில் உயிர் போலவும், கோயிலில் மஹா லிங்கம் போலவும், வேதங்களின் மத்தியில் ஜீவரத்னமாயிருக்கும் அதை நாம் என்ன பண்ணவேண்டு ம்?பெரிசாக த்ரவ்யம் சேர்த்து அபிஷேகம் பண்ணணுமா?தினுஸு தினுஸயாய் நைவேத்யம் செய்யணுமா?மாலைகள், நகைகள் சாத்தணுமா?ஒன்றும் வேண்டாம். ஓயாமல் வேண்டாத விஷயங்களில் புரண்டு கொண்டிருக்கிற நாக்கைக் கொஞ்சம் அதற்காகப் புரட்டினால் போதும்!

மநுஷ்யனுக்கு மட்டும் இது தீவீக்ஷீமீ லீ க்ஷீவீரீலீமீ (பிறப்புரிமை)!வேறு எது எதற்கோ பர்த்-ரைட் சொல்கிறோம்!இதுதான் எல்லாவற்றுக்கும் மேலே!வாக்கு என்று ஒன்றை மநுஷ்யனுக்கு மாத்திரம் தந்திருப்பது இதற்காகத்தான்!இதைச் செய்யாவிட்டால், 'வாக்கால் செய்யக் கூடியதை இவன் செய்யவில்லை;இவனுக்குப் இதைக் கொடுத்துப் பிரயோஜனமில்லை'என்று பரமேஸ்வரன் அதைத் திரும்ப வாங்கிக் கொண்டு அடுத்த ஜன்மாவில் வேறே மாதிரி உருட்டி விடுவார்!இதைச் சொல்லிவிட்டாலோ ஜன்மாவே இல்லை. பாவம் எல்லாம் பறந்து போய்விடும். மோக்ஷச ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை இந்த நாமா கொடுத்துவிடும்.

பரமேஸ்வர ஸ்வரூபத்தை நாம் பார்க்க முடியுமா?விக்ரஹமாக வைத்தால்கூட எப்போதும் பார்க்க முடியுமா?இந்த நாமா இருக்கிறதே, இதுவும் ஸாக்ஷாத் அவனேதான். இதை நினைத்த மாத்திரத்தில் நம்மிடம் வரும்படிப் பண்ணிக் கொண்டுவிடலாம்.

அதனால் எப்பொழுதெப்பொழுது முடிந்தாலும் 'சிவ'என்று இரண்டு அக்ஷரங்களைச் சொல்லி லோகமெல்லாம் சிவம், மங்களம், கல்யாணம் தழைக்கச் செய்ய வேண்டும்.

---------------------------------------------------------------------------------------------------------------------------

* è£óí‹ â¡ù â¡ø ²¬õò£ù M÷,è‹ HŸð°FèOªô£¡P™ ªõOò£èô£‹.

---

**தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)** (தெய்வ தத்வம் தெய்வங்கள்)

**மீனாக்ஷி**

அம்பாள் ஸ்தோத்திரங்கள் என்று சொன்னால் உடனே இரண்டு நினைவுக்கு வருகின்றன. ஒன்று 'லலிதா ஸஹஸ்ரநாமம்', மற்றது 'ஸௌந்தர்ய லஹரி'.

அம்பாள் ரூபங்களில் பிரஸித்தமாகக் காஞ்சி காமாக்ஷி, மதுரை மீனாக்ஷி , காசி விசாலாக்ஷி

என்ற மூன்றைச் சொல்கிறோம்.

' **காமாக்ஷி, காம தாயினீ** ' என்று ஸஹஸ்ர நாமத்தில் வருகிறது. ஸௌந்தர்ய லஹரியில் காமாக்ஷியின் பெயர் வராவிட்டாலும், அதில் த்யான ஸ்லோகம் மாதிரி அம்பாளை வர்ணிக்கிற 'க்வணத் காஞ்சீ தாமா'என்ற ஸ்லோகத்தில் காமாக்ஷியின் ஸ்வரூபத்தைத்தான் - தநுர், பாண, பாச, அங்குசங்களுடன் சதுர் புஜையாகக் காமாக்ஷி எப்படியிருக்கிறாளோ அப்படிப்பட்ட ஸ்வரூபத்தைத்தான் - சொல்லியிருக்கிறது. பேர் சொல்லாவிட்டாலும் சிலேடையாக ஊரைச் சொன்ன மாதிரி, 'காஞ்சீ தாமா'என்று வருகிறது. 'காஞ்சீ தாமா'என்றால் ஒட்டியாணப் பட்டை என்று அர்த்தமானாலும் காஞ்சீபுரத்தின் நினைவும் வருகிறது.

மீனாக்ஷியின் பெயர் ஸஹஸ்ரநாமத்தில் வருகிறதா என்று பார்த்தால் வரவில்லை. 'ஸௌந்தர்ய லஹரி'யில் நம் ஆசார்யாள் அவளை வர்ணனை பண்ணியிருக்கிறாரா என்று பார்த்தால், இங்கேயும் காணோம்!

ஏன் இப்படி இருக்கிறது என்று ஆச்சரியமாக இருக்கிறது.

லோகத்துக்கெல்லாம் பிரஸித்தமாக, வர ப்ரஸாதினியாக இருக்கப்பட்டவள் மீனாம்பிகை. காருண்யத்தோடு ஆதிபத்ய சக்தியும் சேர்ந்திருக்கிறவள் மீனாக்ஷி. ஆறு மாஸம் தன்னிடம் செங்கோல், ஆறு மாஸம் ஸுந்தரேச்வரரிடம் செங்கோல் என்றிப்படி லோக முழுவதற்கும் ராஜ்யபாரம் பண்ணுகிறவள். நித்தியப்படி பூஜை, நைவேத்யம் முதலியவற்றைப் பார்த்தாலோ, ஈஸ்வரனுக்கு அவள் ஸரி ஸமானம் மட்டுமில்லை, அவனைவிட ஒருபடி மேலே என்று தோன்றுகிறது. பூஜை, நைவேத்யம் எல்லாம் முதலில் அவளுக்குப் பண்ணிவிட்டு அப்புறம்தான் ஈஸ்வரனுக்குப் பண்ணுவது என்று மதுரையில் மட்டும் மாறுதலாக வழக்கம் இருக்கிறது.

த்வாதசாந்தம் என்று சாக்த தந்த்ரம் சிறப்பிக்கும் தத்வ ஸ்வரூபமாயிருப்பது மதுரை..... இங்கே ஒன்று நினைவு வருகிறது.

நான் ராமேச்வரத்திலிருந்தபோது, "த்வாதசாந்தம்"என்று ஒருவர் வந்திருந்தார். அவருடைய தகப்பனார் பிள்ளை பிறக்கணுமென்று மதுரையில் ப்ரார்த்தனை பண்ணி அவர் பிறந்திருந் தாராம். அதனால் அவருக்கு ஊர்ப் பேரே வைத்துவிட்டார்கள் - சிதம்பரம், பழநி, திருமலை என்றெல்லாம் வைக்கிற மாதிரி. நான் பக்கத்திலிருந்த பண்டிதரிடம் 'த்வாதசாந்தம்'என்றால் என்ன என்று கேட்டேன். ராமேச்வர சங்கர மண்டபத்தில் ஆசார்யாள் ஸ்தோத்திரித்துள்ள த்வாதச (பன்னிரண்டு) ஜ்யோதிர் லிங்கங்களைச் செதுக்கியிருக்கிறது. பண்டிதர் அதை நினைத்துக்கொண்டோ என்னவோ, "த்வாசத லிங்கங்களில் தெற்குக் கோடியில் இருக்கும் ராமேச்வர ராமநாதர்தான் த்வாதசாந்தம்"என்றார். அது ஸரியில்லை. மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திரம் வரை ஷட்-சக்ரம் (ஆறு சக்ரம்) என்று பொதுவில் சொல்கிறோம். இன்னும் ஸூக்ஷ்மமாக அலசிக்கொண்டு போகிறபோது, கடைசியில் வரும் ஆஜ்ஞா சக்ரத்திற்கும் ஸஹஸ்ரார சக்ரத்திற்கும் நடுவிலேயே பன்னிரண்டு ஸ்தானங்கள் சொல்லியிருக்கிறது. அவற்றில் உச்சியில் ஜீவ-ப்ரம்ம ஐக்கிய ஸ்தானமாக இருப்பதுதான் த்வாதசாந்தம்.

'த்வாதசாந்தம்'என்று தந்திர சாஸ்திரங்களில், யோக சாஸ்திரங்களில் உச்சி நிலையாகச் சொல்லியிருப்பது மதுரைதான் என்று சொல்லி, மதுரை "த்வாதசாந்தக்ஷேத்ரம்"என்பார்கள். இங்கே லோகத்தின் ப்ரம்மரந்திரத்தில் ப்ரம்மானந்த ஸ்வரூபிணியாக மீனாக்ஷி இருக்கிறாள்.

பெரிய பெரிய கோபுரங்கள், பிராகாரங்களுடன் வெள்ளைக்காரர்களும் பார்த்துப் பிரமித்துக் கொண்டாடும்படியான ஆலயம் மீனாக்ஷிக்கே ஏற்பட்டிருக்கிறது. அங்கே இருக்கிற சிற்பச் செல்வங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. மற்ற க்ஷேத்ரங்களில் ஈஸ்வரன் பேரிலேயே கோவிலைச் சொல்லி அதில் இன்ன அம்பாள் ஸந்நிதி இருக்கிறது என்பார்கள். ரொம்பவும் சக்தியோடு, ஜீவகளையோடு பாலாம்பாள், கல்பகாம்பாள், மங்களாம்பாள் முதலிய தேவீ மூர்த்தங்கள் இருக்கிற கோயில்களைக்கூட வைத்யநாத ஸ்வாமி கோவில் (அல்லது முத்துக் குமார ஸ்வாமி கோவில்), கபாலீச்வரர் கோவில், கும்பேச்வர ஸ்வாமி கோவில் என்றுதான் சொல்கிறோம். ஆனால் மதுரையில் மட்டும் ஸுந்தரேச்வரர் கோவில் என்று சொல்வதில்லை. மீனாக்ஷியம்மன் கோவில் என்றுதான் சொல்கிறோம். அங்கேதான்

ஸுந்தரேச்வரர் அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் பண்ணியிருக்கிறார். ஸுந்தரேச்வரரை ஸ்தோத்திரம் பண்ணி, விபூதி மஹிமையாலேயே ஞான ஸம்பந்தர் பாண்டிய ராஜாவின் வெப்பு நோயைத் தீர்த்து, அதுவரை ஜைனனாக இருந்த அவனை சைவனாக்கினார். இப்படி நம் தேசத்தில் மறுபடி வைதிக மதம் நன்றாக ஸ்தாபிதமாவதற்கே ஸுந்தரேச்வரர் தான் காரணமாயிருந்திருக்கிறார். ஆனாலும் அவர் பெருமையை எல்லாம் ஒன்றுமில்லை என்று பண்ணிக்கொண்டு அம்பாள் மீனாக்ஷியே அங்கே முக்யமாயிருக்கிறாள். மீனாக்ஷியம்மன் கோயில் என்றே சொல்கிறோம்.

காஞ்சீ மண்டலத்தில் ஈஸ்வரன் கோவில்கள் எதிலும் அம்பாள் ஸந்நதியே இல்லாமல் இருக்கிறது. அதற்கு எதிர்வெட்டாக அம்பாள் மட்டும் ஈஸ்வரன் இல்லாமல் காமாக்ஷி கோவிலில் இருக்கிறாள்!அதனால் அதைக் காமாக்ஷியம்மன் கோவில் என்பதில் ஆச்சரியமில்லை. சைவாகமங்களின்படி ஈஸ்வரனின் ஆலயமாகவே உள்ள மதுரையில் 'மீனாக்ஷியம்மன் கோவில்'என்று பெயர் ஏற்பட்டிருப்பதுதான் விசேஷம்!ஜம்புகேச்வரத்தில் அகிலேண்டச்வரி ஆலயம் என்று சொல்கிற வழக்கம் இருந்தாலும், ஊருக்கே 'ஜம்புகேச்வரம்'என்பதாக ஸ்வாமி பெயர்தான் ஏற்பட்டிருக்கிறது!

மீனாக்ஷியை ஆதி காலத்திலிருந்து அநேக மஹான்களும் கவிகளும் ஸ்தோத்திரம் செய்திருக்கிறார்கள்.

'ச்யாமளா தண்டகம்'என்று காளிதாஸன் செய்திருக்கிற பிரஸித்த ஸ்துதியில் சொன்ன ச்யாமளர்தான் மீனாக்ஷி. ச்யாமளா, மாதங்கி, மந்த்ரிணி என்றெல்லாமே மந்திர தந்திர சாஸ்த்ரங்களில் மீனாக்ஷிக்குப் பேர். ஸங்கீதத்துக்கு அதிதேவதையாக எப்போதும் மாணிக்க வீணையை மீட்டிக் கொண்டிருக்கிறவள் அவள். கானாம்ருதத்தாலேயே மோக்ஷாம்ருதத்தை ஸாதித்துத் தருகிறவள்.

குறிப்பாக "ச்யாமளா தண்டக"த்தில்

**மாதா மரகத ச்யாமா மாதங்கீ மதசாலிநி** *

**குர்யாத் கடாக்ஷம் கல்யாணீ கதம்பவநவாஸிநீ** **

என்று வருவது, மரகதப் பச்சையாக ஜ்வலிக்கிற மீனாக்ஷியைச் சொல்வதாகவே இருக்கிறது. 'கதம்ப வனம்'என்பதுதான் மதுரை. 'கடப்ப வனம்'என்று தமிழில் சொல்வார்கள்.

" ஓங்கார பஞ்ஜர சுகீம் "என்று ஆரம்பிக்கிற 'நவரத்ன மாலிகை'யிலும் அம்பிகையை ஸங்கீத தேவதையாகத்தான் காளிதாஸன் வர்ணித்திருக்கிறான். "ஓங்காரம் என்ற கூட்டிலிருக்கும் கிளி"என்று அம்பிகையை வர்ணிக்க ஆரம்பிக்கிறான். மதுராபுரியில் மீனாக்ஷி வீணாதாரிணியாக இல்லாமல், கிளியைத்தான் கையில் வைத்துக்கொண்டிருக்கிறாள்!

'மீனாக்ஷி பஞ்சரத்னம்'என்று ஆசார்யாளும் பண்ணியிருக்கிறார்.

பாதி மாதுட னாய பரமனே

ஞால நின்புக ழேமிக வேண்டும் - தென்

ஆல வாயில் உறையும் எம் ஆதியே

என்ற ஞானஸம்பந்தர் ஈஸ்வரனைப் பாடுகிறபோதுகூட 'பாதிமாது'என்று முதலில் ஈஸ்ரவனுடைய அர்த்தாங்கனாவாக இருக்கிற அவளைத்தான் சொல்லியிருக்கிறார்.

இப்படிப் பல கவிவாணர்கள் அம்பாளைப் பாடியிருக்கிறார்கள். குமரகுருபரர் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'என்று, ஸாக்ஷாத் ஜகன்மாதாவைக் குழந்தையாக வைத்து ஸ்தோத்திரித்திருக்கிறார். அதைக் கோவிலிலேயே அரங்கேற்றம் பண்ணினார்கள். அப்போது ஆட்சி செய்து கொண்டிருந்த திருமலை நாயகரின் அக்ராஸனத்தில் அரங்கேற்றம் நடந்தது. குமரகுருபரர் பாட்டுகளைச் சொல்லிக் கொண்டு வரும்போதே திடீரென்று அங்கே அர்ச்சகருடைய பெண் குழந்தை வந்து, திருமலை நாயகரின் கழுத்தில்

போட்டுக்கொண்டிருந்த முத்துமாலையைக் கழற்றிக் குமரகுருபரரின் கழுத்திலே போட்டுவிட்டதாம். 'இதென்னடா, இந்தப் பெண் இப்படிப் பண்ணுகிறது?'என்று எல்லோரும் பிரமித்துப் போயிருக்கும்போது அந்தப் பெண் அப்படியே கர்ப்பக்ருஹத்துக்குள் போய் அந்தர்தானமாகி விட்டதாம்!அப்போதுதான் எல்லோருக்கும் மீனாக்ஷியே இந்த ரூபத்தில் வந்து குமரகுருபரருக்கு பஹுமானம் பண்ணிவிட்டுப் போயிருக்கிறாள் என்று தெரிந்தது.

தமிழில் 'அங்கயற் கண்ணி'என்று அம்பாளைச் சொல்வார்கள். 'அம்'என்றால் அழகிய, 'கயல்'என்றால் மீன். மீன் போன்ற அழகிய கண்ணுள்ளவள், மீனாக்ஷி என்று அர்த்தம். 'அங்கச்சி, அங்கச்சி'என்றே மதுரையில் எந்தப் பெண்ணையும் கூப்பிடுவது இதானால்தான்.

இதே திருமலை நாயகரிடத்தில் பிரதம மந்திரியாக இருந்த நீலகண்ட தீக்ஷிதர் என்ற பெரியவரும் அம்பாளைப் பற்றி 'ஆனந்த ஸாகர ஸ்தவம்'என்று செய்திருக்கிறார். பரமசிவ அம்ச பூதரான அப்பைய தீக்ஷிதரின் தம்பி பேரர் இந்த நீலகண்ட தீக்ஷிதர். பக்தி, பாண்டித்யம், குணம், சீலம் எல்லாவற்றிலும் பெரியவர். அவர் இந்த ஸ்தோத்திரம் பண்ணினதைப் பற்றி ஒரு விருத்தாந்தம் உண்டு.

பாண்டிய ராஜாக்களின் காலாத்திலிருந்து மீனாக்ஷி கோவிலுக்குத் திருப்பணிகளும், ஏராளமான திருவாபரண ஸமர்ப்பணங்களும் நடந்து வந்திருப்பதைப் போலவே திருமலை நாயகரும் நிறையச் செய்தார். நீலகண்ட தீக்ஷிதரின் மேற்பார்வையில் அப்போது 'புதுமண்டப'நிர்மாணம் நடந்து வந்தது. அதில் வைப்பதற்காக ஸுமந்திரமூர்த்தி ஆசாரி என்ற சில்பி, பத்னிகள் ஸமேதமாக நாயகருடைய சிலையையும் பண்ணினார். பட்டத்து ராணியின் சிற்பத்தைப் பண்ணும்போது வலது முழங்காலுக்கு மேலே ஒரு சில்லு தெறித்துப்போய்விட்டது. என்ன பண்ணினாலும் அந்த மூளி தெரியாமல் மறைக்க முடியாத தினுஸில் இது நடந்துவிட்டது. ரொம்பவும் அழகாக உருவான சிற்பத்தில் இப்படி ஏற்பட்டுவிட்டதே என்று துக்கப்பட்டுக்கொண்டு ஆசாரி (நீலகண்ட) தீக்ஷிதரிடம் போய் அழுதார்.

தீக்ஷிதர் ஏதோ கொஞ்சம் தீர்க்கமாக யோசனை பண்ணினார். அப்புறம் "அப்பா அழாதே!நீ பண்ணின சிலை தத்ரூபமாக இருக்க வேண்டுமென்றுதான் இம்மாதிரி சில்லு தெறித்துப் போகும்படி அம்பாள் பண்ணியிருக்கிறாள். அதனால் அது இருக்கிறபடியே இருக்கட்டும். அப்படியே மண்டபத்தில் வைத்துவிடலாம்"என்று சொல்லிவிட்டார்.

ராணிக்கு அந்த இடத்தில் மச்சம் இருந்திருக்கிறது. தீக்ஷிதருக்கு இது ஸ்புரித்ததால்தான், யீறீணீஉலீ ஆனதால்தான் அப்படிச் சொன்னார். ஸாமுத்ரிகா லக்ஷணப்படி உத்தம ஸ்திரீகளுக்கு இம்மாதிரி மச்சம் இருக்கவேண்டும் என்பதன் படியே ராணிக்கும் இருப்பதைத் தெரிந்து கொண்டார்.

ஆசாரியும் அதேபோலச் சிலையை மண்டபத்தில் வைத்துவிட்டார். இப்போதும் ஏழு பத்தினிகளோடு இருக்கிற திருமலை நாயகர் சிலையில் பட்டமஹிஷியின் சிற்பத்தில் இந்த பின்னம் இருக்கிறது.

வேலைகளை மேற்பார்வையிட நாயகர் வந்தார். ராணியின் சிலையைப் பார்த்துவிட்டு ஆசாரியிடம், "ஏன் இந்த மூளியைச் சரி பண்ணாமலே வைத்திருக்கிறீர்?"என்று கேட்டார்.

"அந்த இடத்தில் அம்மாதிரி இருப்பதுதான் சரியென்று ஐயா தீக்ஷிதர் சொன்னதால்தான் அப்படியே விட்டுவிட்டேன்"என்று ஆசாரி சொன்னார்.

நீலகண்ட தீக்ஷிதரை 'ஐயா தீக்ஷிதர்'என்றே ஸகலரும் சொல்வார்கள். தஞ்சாவூரில் நாயக் ராஜாக்களுக்குப் பிரதம மந்திரியாயிருந்த கோவிந்த தீக்ஷிதருக்கு 'ஐயன்'என்கிற பெயர் வழங்கினதுபோல், மதுரையில் மந்திரியாக இருந்த நீலகண்ட தீக்ஷிதருக்கு 'ஐயா'என்ற பெயர் இருந்தது.

ராணிக்கு இப்படி மச்சம் இருப்பது தீக்ஷிதருக்கு எப்படித் தெரிந்தது என்று நாயகருக்கு ஸந்தேஹம் வந்துவிட்டது. மஹா கோபமும் வந்துவிட்டது. உடனே அவரைக் கைது பண்ணி அழைத்துக்கொண்டு வரும்படி அவருடைய கிருஹத்துக்கு ஸேவகர்களை அனுப்பினார்.

அப்போது தீக்ஷிதர் கிருஹத்தில் மீனாக்ஷியைத் தான் பூஜை பண்ணிக்கொண்டிருந்தார். வேளை கெட்ட வேளையில் ஸேவகர்கள் வந்திருக்கிறார்கள் என்ற உடனேயே அவருக்கு அம்பாள் கிருபையால் என்ன காரணம் என்று புரிந்துவிட்டது.

தீபாராதனைக் கர்ப்பூரத்தை, அப்படியே ஐஸை வைத்துக்கொள்கிற மாதிரித் தம் கண்களில் அழுத்திக் கொண்டுவிட்டார்.

ஈஸ்வரானுக்ரஹத்தில் அப்பர் ஸ்வாமிகளுக்குச் சுண்ணாம்புக் காளவாயே 'மாசில் வீணையும் மாலை மதியமு'மாக இருந்சாற்போல, மீனாக்ஷியின் கருணா கடாக்ஷத்தால் தீக்ஷிதருக்குக் கண்ணைச் சுட்டெரித்துக் கொண்டதும் ஜில்லென்றுதான் இருந்தது!

அப்படியே வாசலுக்கு வந்து, "ராஜா எனக்கு என்ன தண்டனை தர வேண்டுமென்று நினைத்தாரோ அதை அவருக்குச் சிரமம் இல்லாமல் நானே பண்ணிக் கொண்டு விட்டேன் என்று சொல்லுங்கள்"என்று ஸேவகர்களிடம் சொன்னார்.

அவர்கள் அப்படியே போய்ச் சொன்னவுடன் நாயகர், "இத்தனை பெரிய மஹானைத் தப்பாக நினைத்து அபசாரம் பண்ணி விட்டாமே!"என்று ரொம்பவும் பச்சாத்தாபம் கொண்டார். மாணிக்கவாசகரைத் தண்டித்ததற்காக இதே மதுரையில் அரிமர்த்தன பாண்டிய ராஜா எத்தனை துக்கப்பட்டாரோ அத்தனை துக்கப்பட்டார் திருமலை நாயகர்.

உடனே தீக்ஷிதரின் வீட்டுக்கு ஓடோடி வந்தார். தாம் பண்ணின அபசாரத்துக்கு மன்னிப்பு வேண்டினார்.

உத்தம குணமுள்ள தீக்ஷிதர், "நீ ஸந்தேஹப்பட்டது நியாயம்தானே?எவருக்கும் ஏற்படக் கூடிய ஸம்சயம் தானே இது?"என்று பெரும்போக்காகச் சொல்லி மன்னித்து விட்டார்.

"என்னை நீங்கள் மன்னித்தது பெரிதில்லை. ஆனால் நீங்கள் இப்படிக் குருடராக இருக்குமளவும் என் மனஸ் எப்படி ஸமாதானப்படும்?அது என்னை உறுத்திக் கொண்டேதான் இருக்கும். எப்படியாவது நீங்கள் மறுபடியும் கண்பார்வை பெற்றால்தான் எனக்கு நிம்மதியாகும்"என்று நாயகர் ரொம்ப மன்றாடினார்

அப்போதுதான் தீக்ஷிதர் இந்த 'ஆனந்த ஸாகர ஸ்தவ'த்தைப் பாட ஆரம்பித்தார். பரம துக்கமான ஒரு ஸந்தர்ப்பத்தில் லோக ஜனங்களின் ப்ரதிநிதியாக துக்கத்தோடு ப்ரலாபிக்கு ம்போதே உள்ளூர அம்பாளுடைய அருள் என்கிற ஆனந்த ஸாகரத்தில் மிதந்துகொண்டு பாடினார். கர்மம், பக்தி, ஞானம் முதலான எல்லாவற்றுக்கும் மேலாக 'அவள் விட்ட வழி'என்று பிரபத்தி (சரணாகதி) பண்ணுவதையே அதிலே விசேஷமாகச் சொல்லியிருக்கும். அம்பாளை எதிரே வைத்துக்கொண்டு பேசுகிற மாதிரி இருக்கும். திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கலாம் போல ஒரு இடத்தில், " சரணம் ப்ரபத்யே மீனாக்ஷி விச்வ ஜநநீம் ; ஜநநீம் மமைவ "என்று வரும் (ஸ்லோ 32) 'ஸகல லோக மாதா எனக்குங்கூட மாதா'என்று விநயமாகச் சொல்கிறார். 'அவளே கதி என்று சரண் அடைகிறேன்'என்கிறார்.

நூறுக்கு மேல் ஸ்லோகமுள்ள இந்த ஸ்துதியில் முதல் பாதியில் இப்படி பிரபத்தி தர்மத்தை விளக்கவிட்டு, 'ஸௌந்தர்ய லஹரி'யில் முதல் பாதியில் சாக்த தத்வங்களைச் சொல்லிவிட்டு இரண்டாம் பாதியில் தேவியைக் கேசாதிபாதம் வர்ணிக்கிறமாதிரி, தீக்ஷிதரும் இரண்டாம் பாதியில் அம்பாளைப் பாதாதி கேசம் வர்ணிக்கிறார். இந்த வர்ணனை ஆரம்பத்தில்தான், 'ஸௌந்தர்ய லஹரி'யில் அதன் தலைப்பு வருகிறது போலவே 'ஆனந்த ஸாகர'என்ற இந்தத் தலைப்பும் வருகிறது.

இதிலே ஒரு இடத்தில், " த்ரஷ்டாஸ்மி கேந ததஹம் து விலோசநேந ?"- "(உன் சரணங்களை எனக்குக் காட்டினாலும் கூட) அதை நான் எந்தக் கண் கொண்டு பார்ப்பேன்?"என்று வருகிறது (ஸ்லோ 61) மேலே சொன்ன விருத்தாந்தம் நிஜம் என்பதற்கு இது வீஸீமீ மீக்ஷீஸீணீறீ மீஸ்வீபீமீஸீநீமீ (உட்சான்று).

இப்படி பாடி முடித்ததும் அம்பாள் அவருக்குப் பார்வை கொடுத்துவிட்டாள். திருஷ்டி விசேஷத்தினாலேயே 'மீனாக்ஷி'என்று பெயர் பெற்றிருப்பவள் தீக்ஷிதருக்கு மீளவும் திருஷ்டியை அநுக்ரஹம் பண்ணிவிட்டாள்.

ஆனாலும் அதோடு ராஜ ஸேவகம் போதுமென்று அவர் ராஜிநாமா பண்ணிவிட்டுத் தாம்ரபரணி தீரத்தில் பாலாமடைக்குப் போய்ச் சிறிது காலம் வாஸம் செய்து விட்ட ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ஸித்தாயாகி விட்டார். அதனால் அவ்வூருக்கு 'நீலகண்ட ஸமுத்ரம்'என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. அந்த நீலகண்டரே அநுபவித்த ஸமுத்ரம், ஸாகரம், ஆனந்த ஸாகரம் எதுவென்றால் மீனாக்ஷியின் அநுக்ரஹம்தான்.

இப்படி இருக்கிறது மீனாக்ஷியின் பெருமை. மிகவும் உயர்ந்தவர்களாக இருக்கிற குமர குருபரர், நீலகண்ட தீக்ஷிதர் ஆகியவர்களுக்கு மட்டுமில்லாமல், 'இந்த அம்பாளுக்கு என்ன சக்தி இருக்கிறது?'என்று கேலி பண்ணின ஒரு வெள்ளைக்கார கலெக்டருக்கு*1 கூடப் பரம கருணையோடு அநுக்ரஹம் பண்ணியிருக்கிறாள். அந்த துரை படுத்துக் கொண்டிருந்த பங்களாவின் மீது இடி விழ இருந்த போது தூக்கத்திலிருந்தவனை எழுப்பி வெளியேறும்படி எச்சரிக்கைப் பண்ணிக் காப்பாற்றியிருக்கிறாள். அப்புறம் அவன் பரம பக்தனாகி அம்பாளுக்குத் திருவாபரணம் - வமீவீக்ஷீக்ஷீஞூஜீ என்பதான குதிரை மீது ஏற உதவும் அங்கவடி - பண்ணி அர்ப்பணம் செய்திருக்கிறான்.

இப்படி ஆதியிலிருந்து இன்று வரை மஹிமையோடு இருந்து கொண்டிருக்கிற மீனாக்ஷியை, கண்ணழகை வைத்தே பெயர் பெற்றிருப்பவளை, தேவி ஸ்தோத்திரங்களுக்குள் இரண்டு கண்கள் மாதிரி இருக்கும் ஸஹஸ்ரநாமத்திலும் ஸௌந்தர்ய லஹரியிலும் சொல்லவில்லை என்றால், குறையாக, ஏமாற்றமாக இருக்கிறது.

ஆனால் நன்றாக கவனித்துப் பார்த்தால் குறை நிறையாகிறது. இரண்டிலுமே மீனாக்ஷியை நேராகச் சொல்லாவிட்டாலும் ஸூசனையாகச் சொல்லித்தான் இருக்கிறது. உடைத்துச் சொல்லாமல் ஸூசனையாகச் சொன்னதாலேயே அவளுக்கு ஜாஸ்தி விசேஷம் என்று தோன்றுகிறது

அது எப்படி?

எப்போதுமே ஸ்தூலத்தைவிட ஸூக்ஷ்மத்துக்குத் தானே மதிப்பு ஜாஸ்தி?அதனால் வெளிப்படையாகச் சொல்வதைவிட மறைத்துச் சொல்லுவதில்தான் மஹிமை ஜாஸ்தி.

விலை உயர்ந்த ரத்தினம் இருந்தால் அதை எல்லார் கண்ணும் படும்படியாகப் போட்டு வைப்பார்களா?பெட்டிக்குள் வைத்து, அதை இன்னொரு பெட்டியில் போட்டு, வீட்டின் உள்ளறையில்தானே பத்திரப்படுத்தி வைப்பார்கள்?அப்படித்தான் மீனாக்ஷியை ஸஹஸ்ர நாமத்திலும் ஸௌந்தர்யலஹரியிலும் ரஹஸ்யமாகச் சொல்லியிருப்பதாலேயே அவளுக்கு விசேஷ மதிப்புக் கொடுத்ததாகிறது.

ரொம்பவும் ப்ரியமானவர்கள், ரொம்பவும் மரியாதைப்பட்டவர்கள் ஆகியோரின் பெயரைச் சொல்வதில்லையல்லவா?இப்படித்தான் பாகவத்தில் கூட ராதையின் பெயரைச் சொல்லாமலே ஒரு இடத்தில் மட்டும் ஸூசனையாகக் கோடி காட்டியிருக்கிறது என்று சொல்வதுண்டு. ராதாகிருஷ்ண பக்திக்காரர்கள் கிருஷ்ணனைவிட ராதை ஒரு படி உசத்தி என்பார்கள். கிருஷ்ணனே அவள் காலில் விழுந்து பிரணய கலஹத்தை (ஊடலை)த் தீர்த்திருப்பதை எடுத்துக் காட்டுவார்கள். அத்தனை உசந்தவள் பேரை மண்டையிலடித்த மாதிரி சொல்லக்கூடாதென்றுதான் பாகவத்தில் ஒரு இடத்தில் மட்டும் மறைமுகமாகச் சொல்லி அதோடு விட்டிருக்கிறது என்கிறார்கள்*2.

இம்மாதிரி மீனாக்ஷியை ஸஹஸ்ரநாமம், ஸௌந்தரியலஹரி இரண்டிலும் நேராகச் சொல்லாமல் மறைமுகமாகச் சொல்லியிருப்பதாலேயே அவளுக்கு ஏற்றம் கொடுப்பதாகத்தான் ஏற்படுகிறது

சரி, 'லலிதா ஸஹஸ்ரநாமம்'மீனாக்ஷியை எங்கே சொல்கிறது?என்ன சொல்கிறது?

ஆரம்பத்தில் அம்பாளை வர்ணித்துக் கொண்டு வரும்போது வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலன் மீநாபலோசநா என்று ஒரு நாமாவைச் சொல்கிறது. " வக்த்ர லக்ஷ்மீ " என்றால் (அம்பாளுடைய) முககாந்தி. அது ஒரு பெரிய பிஹவாஹமாக இருக்கிறது, 'பரீவாஹ ம்'என்றால் பிரவாஹம். இப்படி முக தேஜஸ் பெருக்கெடுத்து ஓடுகிறது என்றால் நீர்பெருக்கில் மீன் இருக்க வேண்டுமே!இந்த காந்தி ஸமுத்திரத்தில் எங்கே மீன்?

நீண்டு நீண்டு விளங்கும் அம்பாளுடைய நேத்திரம் இருக்கிறதே அதுதான் மீன். லோசனம் என்றால் கண். (லோகனம் என்றால் பார்ப்பது. பார்க்கப்படுவதால் தான் 'லோகம்'என்றே பேர். தமிழிலும் 'பார்'என்றால் நோக்குவது, உலகம் என்ற இரண்டு அர்த்தமும் ஏற்படுகிறது. இங்கிலீஷ் ஜீஷ்ஷீளீ என்பதும் 'லோக'ஸம்பந்தமுள்ளதுதான்.) மீன் மாதிரி வடிவத்தில் இருக்கிற லோசனம் - மீநாப லோசநம் . ரூபத்தில் மீன் மாதிரி இருப்பது மட்டுமின்றி, பிரவாஹத்தில் மீன் இருக்க வேண்டும் என்ற நியாயத்தின்படியும் ஸௌந்தர்ய ப்ரவாஹமான அம்பாள் இப்படிப்பட்ட கண்ணை உடையவளாயிருக்கிறாள். 'மீனாக்ஷி'என்று அப்பட்டமாகச் சொல்லாமல் 'மீநாப லோசநா'என்று சொல்லியிருக்கிறது.

ஆகக்கூடி ஒரு குறை தீர்ந்தது.

'ஸௌந்தர்யலஹரி'யில் என்ன வருகிறது?அதில் அம்பாளின் கண்களை அநேக ஸ்லோகங்களில் ஒன்றில் (56) முதலிரண்டு வரிகள்:

தவாபர்ணே கர்ணே ஜபநயன பைசுன்ய சகிதா :

நிலீயந்தே தோயே நியதம் அநிமேஷா : சபரிகா :

அபர்ணே - அபர்ணா என்ற பெயருடைய அம்பிகையே! தவ - உன்; கர்ணே - காதில் (காதிடம்); ஜபநயன - பேசுவது போன்ற கண்கள்; பைசுன்ய சகிதா : - (தங்களைப் பற்றிக்) கோள் சொல்கின்றன என்று பயமடைந்தவையான; சபரிகா :- பெண் மீன்கள்; அநிமேஷா :- கண் மூடாதவையாக; தோயே - ஆற்றுக்குள்; நிலீயந்தே - முழுகி விடுகின்றன (என்பது), நியதம் - நிச்சயம்.

மீன் ஏன் எப்போதும் ஆற்றின் மேல் மட்டத்தில் நீந்தாமல் உள்ளுக்குள்ளேயே நீந்திக்கொண்டிருக்கிறது?இதற்கு இங்கே ஆசார்யாள் ஒரு காரணம் கல்பிக்கிறார். காதளவோடும் அம்பாளின் கண்களை மீன்கள் பார்த்தன. லோகத்தில் ஒரு புல் பூண்டு புழு பூச்சிகூட விட்டுப் போகாமல் ஜகன்மாதா விழிகளை ஸகல திக்குகளிலும் திருப்பிக்கொண்டிருக்கிறாள். அப்போது ஒவ்வொரு சமயம் அவை கண்கோடிக்கு வரும்போது காதைத் தொட்டுவிடும் போலிருக்கிறது. அப்போது அவை காதிடம் ரஹஸ்யம் பேசுகிற மாதிரி மீன்களுக்குத் தோன்றுகிறது என்ன ரஹஸ்யம்?உருவத்தில் இந்த மீன்கள் அம்பாளுடைய அந்தக் கண் மாதிரித்தான் இருக்கின்றன. ஸமஸ்த லோகாநுக்ரஹத்துக்காக எந்த ஜீவனும் விட்டுப் போய் விடக் கூடாது என்று, அந்தக் கண்கள் ஓயாமல் சஞ்சரிப்பதைப் பார்த்துக் 'காப்பி'அடிக்கிறது போலத்தான் இந்த மீன்களும் ஓயாமல் ஒழியாமல் சஞ்சரித்துக் கொண்டேயிருக்கின்றன. இதனால்தான் மீன்களுக்கு பயம் வந்து விடுகிறது. அம்பாளுடைய கண்கள் அவளுடைய காதிடம், "மீன்கள் என்னோடு போட்டி போடுகின்றன"என்று ரஹஸ்யமாகக் கோள் சொல்கின்றனவோ என்று பயம்!கண்களுடைய பெடிஷனைக் கேட்டு மஹா பராசக்தியானவள் இந்த அல்ப ஜந்துவான மீன்கள் மேல் ஆன் எடுக்க வந்து விட்டால்?இந்த பயனத்தில்தான் நீர் மட்டத்தின் மேல் பரப்பில் நீந்தாமல் அவை உள்ளுக்குள் மறைவாக முழுகிவிடுகின்றன!

தோற்றுப்போன துரியோதனன் மடுவுக்குள் போய் ஒளிந்து கொண்ட மாதிரி, அம்பாளின் கண்ணழகுக்குத் தோற்றுப் போன மீன்கள் ஜலத்தின் உள்மட்டத்துக்குப் போய்விடுகின்றன!

'சபரிகா':என்றால் பெண் மீன்கள் என்று அர்த்தம். 'பைசுன்ய'என்றால் கோள் சொல்லுவது;'கோழி மூட்டுவது'என்கிறோமே அது!'சகிதா':என்றால் பயத்தில் நடுங்கிக்கொண்டிருக்கிறவை என்று அர்த்தம். 'பைசுன்ய'என்பதற்கு அஸூயை என்று பொருள்கொண்டால், காதளவோடும் கண்களைப் பார்த்து மீன்களே அஸூயை, பயம் இரண்டும் அடைந்தன என்றாகும். அம்பாளின் கண்ணோடு யுத்தம் செய்தால் வடிவழகு, சஞ்சரிக்கும் ஸாமர்த்தியம் இரண்டிலுமே தோற்றுப் போய் விடுவோம் என்றே மத்ஸ்யங்கள் ஜலத்துக்குள் அஜ்ஞாத வாஸம் ஆகி விடுகின்றன. மதுரையில் மீனாக்ஷி ஆலயப் பொற்றாமரைக் குளத்தில் மீனே இருப்பதில்லை. காரணம் 'அவளுடைய கண்ணழகில் வெட்கி அது அங்கே தலைகாட்டுவதே இல்லை'என்று வழக்கு ஏற்பட்டிருக்கிறது.

அம்பிகையின் நேத்ரங்களுக்கு மத்ஸ்யத்தை ஒப்புவமை சொல்லி, அது ஒளிந்து கொண்டதாகவும் கூறுகிற 'ஸௌந்தர்ய லஹரி'ஸ்லோகத்தில் ஆசார்யாள் மீனாக்ஷியைத்தான்

ஔிந்து ஸூசனையாகக் குறிப்பிடுகிறார்!

இரண்டாவது குறையும் தீர்ந்தது. மீனாக்ஷி என்ற அவஸரத்தை பரமோத்தமான இரண்டு தேவீ ஸ்தோத்ரங்களும் அறிவிக்கின்றன என்று ஆகிவிட்டது.

ரூபம், சாஞ்சல்யம் (சஞ்சல ஸ்வபாவம்) இவற்றில் கண்ணுக்கும் மீனுக்கும் ஒற்றுமை இருப்பது மட்டுமின்றி அம்பாளின் கண்ணை மீனாகச் சொல்வதில் ஒரு தத்வ விசேஷமும் இருக்கிறது.

ஆடு, மாடு, மனிதர்கள் முதலிய இனங்கள் குட்டிகளை, குழந்தைகளைப் பாலூட்டி வளர்க்கின்றன. விணீனீணீ என்ற இவற்றைச் சொல்கிறார்கள். பக்ஷிகள் குஞ்சுக்குப் பால் கொடுப்பதில்லை. 'மம்மல்'மாதிரியில்லாமல் இவை முட்டையிட்டு, அடைகாத்து, குஞ்சு பொரிக்கின்றன. அப்புறம் பால் கொடுக்காமல் புழு பூச்சிகளைக் கொண்டு வந்து ஊட்டி வளர்க்கின்றன. மீன் என்ன பண்ணுகிறது?முட்டைதான் போடுகிறது. ஆனால் அடைகாக்கிறதில்லை. அப்புறம் குஞ்சுக்குப் பால் கொடுப்பதில்லை;வேறு ஆஹாராதிகளைக் கொண்டு வந்து ஊட்டுகிறதுமில்லை. பின்னே என்ன பண்ணுகிறது என்றால்:இதைப்பற்றி ஞீஷீஷீறீஷீரீஹ் (பிராணி இயல்), ஙிவீஷீறீஷீரீஹ் (உயிரியல்)-காரர்கள் என்ன சொல்லுவார்களோ சொல்லிவிட்டுப் போகட்டும் - நீண்ட கால பொது நம்பிக்கைப்படி, கவி மரபுப்படி ( ஜீஷீமீ'வீநீ மீ'க்ஷீணீபீவீமீ'வீஷீஸீ படி) - தாய் மீன் தன் கண்ணால் முட்டையைப் பார்த்துப் பார்த்தே குஞ்சு பொரித்துவிடும். அப்புறமும் தன் கண் பார்வையாலேயே அதற்குப் பசியாற்றிப் போஷித்துவிடும் தாய் மீனானது இப்படித் திருஷ்டியாலேயே சிசு ரக்ஷணை பண்ணிவிடுகிறது என்பது ஐதிஹ்யம் (ஐதீகம்).

ரூபத்தில் மட்டுமில்லாமல், திருஷ்டி மாத்திரத்தால் குழந்தைகளை ரக்ஷிக்கிற குணத்தாலும் அம்பாளின் நேத்திரம் மீனாக இருக்கிறது. அம்பாளின் குழந்தைகள் யார்?எல்லாருந்தான்; எல்லாமுந்தான். ஈஸ்வரனையேகூட அவள் குழந்தைதான என்று ஒரு பாவத்தில், தத்வார்த்தமாகச் சொல்லியிருக்கிறது. புல் பூண்டிலிருந்து ஆரம்பித்து பிரம்மாதிகள் வரை எல்லாரையும் தன் கடாக்ஷஅம்ருதத்தால் நனைத்து நனைத்தே உய்விக்கிற பரம கருணையுள்ள லோக ஜனனிதான் மீனாக்ஷி. மீன் போல் ரூபமுள்ள அவளுடைய கண்ணின் திருஷ்டி பட்ட மாத்திரத்தில், மீன் குஞ்சுக்குத் தாயாரின் திருஷ்டியாலேயே வயிறு நிறைந்துவிடுகிற மாதிரி நம் மனஸ் நிறைந்து விடுகிறது. அவளுடைய கடாக்ஷமே ஞானப் பாலாக உயிரை, அறிவை வளர்த்து உய்வித்துவிடுகிறது.

" அநிமேஷா :"- 'கண்ணைக் கொட்டாமல்'என்று 'ஸௌந்தர்ய லஹரி'ஸ்லோகத்தில் மீனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. (கண் கொட்டுகிற நாழி தான் 'நிமிஷம்'என்பது. அதுதான் மதுரை மருதையாகிறது போல் 'மினிட்'ஆயிற்று.) மீன் தூங்குவதில்லை என்று மீ'க்ஷீணீபீவீமீ'வீஷீஸீணீறீ தீமீறீவீமீயீ (மரபு வழி நம்பிக்கை) அதற்கே ஆசார்யாள், கண்களின் கோழிப் பெடிஷனைக் கேட்டு அம்பாள் எங்கே தன்னோடு சண்டை போட ஜலத்தின் அடி மட்டத்திற்கும் வந்து விடுவாளோ என்றுதான் அங்கேயும் மீன் கண் கொட்டாமலே ணீறீமீக்ஷீமீ'-ஆக (உஷாராக) இருந்து கொண்டிருக்கிறதென்று காரணம் கல்பிக்கிறார்!மீனாக்ஷியும் கண்ணைக் கொட்டுவதில்லை. கொட்டினால் அந்த யீக்ஷீணீநீமீ'வீஷீஸீ ஷீயீ ணீ வமீநீஷீஸீபீ-ல் (விநாடித் துகளில்) தன் கடாக்ஷாம்ருதம் குழந்தைகளுக்கு இல்லாமல் போய்விடுமோ என்பதால் எப்போதும் விழிப்போடு லோகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.

மீனாக்ஷிக்கும் மீனுக்கும் இன்னொரு ஸம்பந்தம். வைகைக்குப் பூர்வத்தில் க்ருதமாலா என்று ஸம்ஸ்க்ருதப் பேர் இருந்திருக்கிறது. இங்கே இருந்த வைவஸ்வத மநுவுக்காகத்தான் பகவான் மத்ஸ்யாவதாரம் பண்ணினார். இதைச் சொல்லி நீலகண்ட தீக்ஷிதர் 'சிவலீலார்ணவ'த்தில் வேடிக்கை பண்ணியிருக்கிறார். "பிரளயத்தில் மாட்டிக் கொண்ட வேதத்தை மீட்பதற்காக மஹா விஷ்ணு மீனாய் அவதரித்துத் தேடித் தேடிப் பாடுபட்டார். மீனாக்ஷியான உன் சரணாரவிந்தத்தையோ அந்த வேதமே தேடிக் கொண்டிருக்கிறது"என்கிறார்!

ஆவிஷ்ய கிந்நம் நிகமாந் அசேஷாந்

அமீ ந மீநம் ப்ரதமம் ஸ்மராம :*

ஆவிஷ்யமானம் நிகமை-ரசேஷை :

அம்ப ஸ்நுமஸ்தே வயமாக்ஷி மீநம் **

மதுரையிலே வேதம் நிரம்பியிருக்கிறது. "சேரர் தலைநகரான வஞ்சியில் உள்ளவர்களும், சோழர் தலைநகரான உறையூரில் உள்ளவர்களும் கோழி கூவி எழுந்திருப்பார்களென்றால், பாண்டியர் தலைநகரான மதுரையிலுள்ள நாங்கள் வேத ஒலி கேட்டே எழுந்திருப்போம்" என்று 'பரிபாடலி'ல் இருக்கிறது.

நான் மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப

ஏம வின்றுயில் எழுதல் அல்லதை

வாழிய வஞ்சியும் கோழியும் போலக்

கோழியின் எழாதெம் பேரூர் துயிலே.

அம்பாள் இங்கே பெரிய கோபுரம் கட்டிக் கொண்டிருக்கிறாள். கோபுரம் என்பதென்ன?ஸநாதன தர்ம விருஷத்தின் பழம். அதற்கு வேர் எது?வேதம்தான். இத்தனை உயர கோபுரப் பழமென்றால் அதற்கேற்க அத்தனை ஆழமாக வேத வேரும் போயிருக்கிறது மதுரையில்!அம்பாள் அங்கே வேத ஸ்வரூபிணியாக ஜ்வலிக்கிறாள், நாத ஸ்வரூபிணியாக, ஸங்கீத ஸ்வருபிணியாக இருப்பதோடு.

மீனாக்ஷியின் அம்ருத கடாக்ஷம் படுகிற இடமெல்லாம் மதுரமாகிறது. மதுரத்துக்கு, இனிமைச் சுவைக்கு பெயர் போனது அமருதம்தானே?ஜீவஜந்துகள் மதுரம் ஆவது என்றால் என்ன?அன்பு மயமாவது என்றுதான் அர்த்தம். பரிபூர்ணத்வம் அடைவதே ஜீவனுக்கு மதுரம். கட்டைக் கசங்காய் கடைசியில் பக்குவமாகிற போது கனிந்து மதுரமாவதுபோல், அநேக துர்குணங்கள் கொண்ட நாம் கனிந்து மாறிக்கொண்டேபோய்ப் பக்குவமாகிப் பெறுகிற பூர்ண நிலைதான் நமக்கு மதுரம். அப்படிப்பட்ட பூர்ணத்வ மதுரத்தை நமக்குத் தருவது மீனாம்பிகையின் கடைக்கண். லோகத்தில் இருக்கிறபோதே நிறைவைத் தந்து, அப்புறம் இந்த லோகம், ஸம்ஸார பாசம் இல்லாமல் மோக்ஷானந்தம் தருகிறது.

முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு அப்பேர்ப்பட்ட அநுக்ரஹத்தை மீனாம்பிகை செய்தாள். தீபாவளி அமாவாஸ்யை அன்று அம்பாளுக்குப் பூஜை பண்ணிவிட்டு ' மீனாக்ஷி 'என்று அவர் மனமுருகிப் பாடிக் கொண்டே போனார். பச்சைப் பசேல் என்று பரம குளிர்ச்சியாகப் பிரகாசிக்கிற அம்பாளின் ஸ்வரூபத்தை 'மரகதச் சாயே'என்று சொல்லி, ' மீனலோசனீ , பாசமோசனீ 'என்ற வார்த்தைகளை அவர் கானம் பண்ணிக் கொண்டிருக்கிறபோதே அவருடைய ஸம்ஸார பாசத்தை அம்பாள் நீக்கித் தன் பாதாரவிந்தத்தில் சாச்வதமாகச் சேர்த்துக் கொண்டு விட்டாள். ஸங்கீதத்துக்கே அதிதேவதையாக இருக்கப்பட்ட மீனாக்ஷி தீக்ஷிதரின் நாதோபாஸனைக்குப் பலன் தந்துவிட்டாள்.

இப்படிப் ஜீவனுக்குப் பூர்ணத்வம் என்ற மதுரத்தைத் தரும் மீனாக்ஷியின் மதுரகடாக்ஷம் விசேஷமாகப் பரவியிருப்பதால்தான் அவளுடைய க்ஷேத்ரத்துக்கே மதுரை என்று பெயர் இருக்கிறது. அம்பாளின் கடைக்கண் அமுது அலை அலையாகப் பரவியிருப்பதால் அது மதுரையாகிறது. அலையடித்துப் பரவுகிறதென்றால் அப்போது அவளுடைய காடக்ஷத்தை அநுக்ரஹ ஸமுத்ரம் என்று சொல்லவேண்டும். முதலில், ஸமுத்ரத்தில் மீன் இருக்கிற மாதிரி அம்பிகையின் முக காந்திக் கடலில் கண் மீன்கள் துள்ளுகின்றன என்று பார்த்தோம். இப்போது பார்த்தால் முகலாவண்ய ஸமுத்ரத்துக்குள் இருக்கிற இந்த நேத்திர மீனுக்குள்ளும் ஒரு ஸமுத்ரம் - அருட்கடல் - இருக்கிறதென்று தெரிகிறது!

அவள் எங்கேயோ இருக்கிறாள், கடாக்ஷம் மட்டும் நம் மேலே படுகிறது என்று இல்லை. தாய் தன் மடியில் குழந்தையை அன்பாகப் போட்டுக் தாலாட்டிக் கொண்டிருப்பதுபோல அவளுடைய கடாக்ஷத்திலேயே அவளுடைய மடியில் கிடப்பதான ஆறுதலும் அவளுடைய வாத்ஸல்யம் நிறைந்த வாக் அமுதத்தை கேட்பதான தாபசாந்தியும் குழந்தைகளான நம் இத்தனை பேருக்கும் கிடைக்கிறது. மீனின் கடாக்ஷமே மீன்

முட்டைக்குத் தன்னை அடைகாக்கிற அணைப்பு ஸ்பரிசமாகவும், தாயார் ஊட்டும் க்ஷீரமாகவும் இருக்கிறமாதிரி மீனாக்ஷியின் கடாக்ஷமே நம்மை அணைத்து ரக்ஷித்து ஞானப்பால் ஊட்டிவிடுகிறது. அவள் ஒரு மூர்த்தியாக நின்று, அவளுக்குக் கிட்டே ஸ்தூலமாக இருக்கும் மதுரை வாஸிகள் பாக்யசாலிகள்.

என்னை 'தர்சனம்'என்று எதுவோ ஒன்று பணணுவதற்காக மீனாக்ஷி நகரவாஸிகளான நீங்கள் இவ்வளவு பேர் வந்து ஸந்தோஷப்படுகிறீர்களென்றால், அவளுக்குக் கிட்டவே வாழ்கிற உங்கள் இத்தனை பேரையும் தர்சனம் பண்ணுவது எனக்கும் ஆனந்தமாக இருக்கிறது*3. இப்படி நாம் பரஸ்பரம் மனம் கனிந்து பிரீதியோடு இருப்பது ஸாக்ஷாத் மீனாம்பிகை வர்ஷிக்கும் பேரானந்தத்தில் ஒரு துளிதான். இது லோகம் முழுக்க, எல்லையில்லாத அவளுடைய மாத்ருத்வத்தில் அடங்கியுள்ள அத்தனை உயிர்களுக்கும் பரவி, லோகம் முழுவதம் அவளுடைய கடாக்ஷாம்ருதம் பூர்ணமாகப் பொழிந்து, அதனால் எங்கேயும் பேரானந்தம் நிரம்பியிருக்கும்படியாக அவளுடைய சரணாவிந்தங்களிலேயே பிரார்த்தனை செய்வோம்.

மதுராபுரி நாயிகே நமஸ்தே

மதுராலாப சுகாபிராம ஹஸ்தே *

மலயத்வஜ பாண்ட்ய-ராஜகந்யே

மயி மீனாக்ஷி க்ருபாம் விதேஹி தந்யே **

(மதுராபுரிக்கு நாயகியே!மதுரமாகக் கூவும் கிளியை ஏந்தி எழிலுற்ற கரத்தை உடையவளே!மலயத்வஜ பாண்டிய மன்னன் மகளே!ஸகல ஐச்வர்யமும் நிறைந்தவளே!உனக்கு நமஸ்காரம். எனக்கு உன் க்ருபையை அருளுவாய்!)

மீனாக்ஷியின் புகழை இப்படிப் பாடிப் பாடியே, லோகம் முழுவதும் அவள் குழந்தைகள் என்பதில் ஒரு பேதம், ஒரு த்வேஷம் இல்லாமல், அத்தனை பேரும் சிந்தனையிலும் செயலிலும் ஒற்றுமையுடன் வாழ்க்கையை ஆனந்தமாய் நடத்துவோம்.

---

*1. «ó£v d†ì˜

*2. «è£Hò«ó£´ Ý®,èO˜î è‡í¡ F¯ªóù ñ¬ø‰î «ð£¶ «è£Hèœ Üõ¬ù «î®„ ªê™¬èJ™ Üõ¡ å«ó «è£H¬è¬ò ñ†´‹ àì¡ Ü¬ö˜¶„ ªê¡øîŸè£ù îìò˜¬î, è£‡Aø£˜èœ. Þõ«÷ ó£¬î. ÝJÂ‹ «ïó£èŠ ªðò˜ ªê£™ôî£ñ™ Üõ˜èœ "Þõ÷£™ è‡í¡ M«êûñ£è Ýó£F‚èŠð´Aø£¡"("Üïò£ (Ý)ó£F«î£ Ëï‹") â¡Â‹«ð£«î ó£î£ ï£ñ˜¬î, ºPŠð£½í˜˜F M´Aø£˜èœ (10.30.28).

*3.1961 ãŠóL™ ñ¶¬ó Müò˜F¡«ð£¶ Ü‰î ïèó õ£Rè¬÷Š ðŸP Ü¼Oò õ£êè‹

---

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்) (மங்களாரத்தி)

**ஸீதாராமருக்கு பக்கபலம் !**

பலமில்லாதவருக்கு பலம் ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி தான்: " **நிர்பல் கே பல் ராம்** ". ஆபத்து வந்து சாய்கிற ஸமயத்தில் யார் வந்து தாங்கிக்கொண்டு பலம் தர முடியும்?ராமன்தான்!" **ஆபதாம் அபஹர்த்தாரம்** "1 என்கிறோம். " **அக்ரத ப்ருஷ்டதச்சைவ பார்ச்வதச்ச மஹாபலௌ** "2 - அதாவது, நமக்கு முன்னேயும் பின்னேயும் இரண்டு பக்கங்களிலும் நம்மைச் சூழ்ந்து கொண்டு ஸதாவும் நம்மை ரக்ஷிக்கிற மஹாபலவான் யார்? அந்த ராமன்தான். நமக்குத் துளி ஆபத்து வருகிறதென்றாலும், அம்பை விடுவதற்கு ஸித்தமாகக் கோதண்டத்தின் நாண்கயிற்றைக் காதுவரை இழுத்தபடி நம்மைச் சூழ்ந்திருக்கிறான்.

அவனை விட்டு விலகாத லக்ஷ்மணனும் அவனோடேயே இருந்து கொண்டிருப்பான். - " **ஆகர்ண பூர்ண தந்வாநௌ ரக்ஷேதாம் ராம லக்ஷ்மணௌ** "3. ஆனால் இப்படிப்பட்ட புருஷ ச்ரேஷ்டர், வீரராகவன், விஜயராகவன் என்றே பேர் பெற்ற மஹா வீரர் ஆஞ்ஜநேயரைத் தமக்குப் பக்கபலமாகக் கொண்டதால் தான் அவதார கார்யத்தைப் பண்ண முடிந்ததாகக் காட்டியிருக்கிறார்!

மநுஷ வேஷம் ப்ரமாதமாய்ப் போட்டவர் அவர். ஸீதையை ராவணன் கொண்டு போய் எங்கே வைத்திருக்கிறான் என்று தெரியாத மாதிரியே நடித்தார். சொல்லி முடியாத துக்கப்பட்டார். அப்போது அவள் இருக்கிற இடத்தைக் கண்டுபிடித்துச் சொல்லி அவருக்கு உத்ஸாஹமும், தெம்பும், பலமும் தந்தது யார் என்றால் ஆஞ்ஜநேய ஸ்வாமிதான்.

ஸீதையைப் பிரிந்து இவர் பட்ட துக்கத்தைவிட இவரைப் பிரிந்து ஸீதை பட்ட துக்கம் கோடி மடங்கு. ப்ரிய பத்னி பக்கத்தில் இல்லையே, தன்னைப் பிரிந்து அவள் கஷ்டப்படுவாளே என்ற கஷ்டம் மட்டுந்தான் ராமருக்கு. ஆனால் அவளுக்கோ இதோடு ராக்ஷஸ ராஜ்யத்தில் மஹா காமுகனால் சிறை வைக்கப்பட்டிருப்பதான மஹா கஷ்டமும் சேர்ந்திருந்தது. 'அபலா'என்றே ஸ்திரீக்குப் பெயர் ஸாக்ஷாத் ஜகன்மாதாவான மஹாலக்ஷ்மி ஸீதையாக வந்து அபலையிலும் அபலையாக அசோகவனத்தில் படாத கஷ்டப்பட்டு, அந்தக் கஷ்டத்துக்கு முடிவு ப்ராணனை விடுவதுதான் என்று சுருக்குப் போட்டுக்கொள்ள இருந்தபோது அவளுக்கு உத்ஸாஹத்தை, தெம்பை, பலத்தைத் தந்தது - ஆஞ்ஜநேயர்தான்.

அவர் செய்த அரும் செயல்கள் ஒன்றில்லை, இரண்டில்லை. ஆனால் இதற்கெல்லாம் சிகரமாக எதைச் சொல்லலாமென்றால் இந்த லோகம் முழுவதற்கும் ஸ்ரீயைக் கொடுத்து, ஸௌபாக்யத்தைக் கொடுத்து அநுக்ரஹிக்கும் தாயார் மனம் குலைந்து மட்கிக் கிடந்தபோது ஆஞ்ஜநேய ஸ்வாமி காய்ந்த பயிருக்கு மழையாகப் போய் அவளுக்கு உயிரும் உத்ஸாஹமும் தந்தாரே அதுதான். " **ஜானகீ சோக நாசநம்** " என்று இதைத்தான் சிறப்பித்துச் சொல்கிறோம்.

**அஞ்ஜாநாநந்தனம் வீரம் ஜானகீ சோக நாசநம்**

அஞ்ஜனை என்று யாரோ ஒரு வாநர ஸ்த்ரீக்குப் புத்ரராய் அவதாரம் பண்ணி அவளுக்கு ஆனந்தம் கொடுத்தார். இது பெரிதில்லை. எந்தப் பிள்ளை, அவன் என்ன துஷ்டத்தனம் செய்பவனாயிருந்தாலும், அம்மாவுக்கு மாத்திரம் ஆனந்தம் தருகிறவனாகத்தான் தோன்றுவான். அதனால்தான் பிள்ளையை 'நந்தனன்'என்பது. தசரத நந்தனன், தேவகி நந்தனன் மாதிரி அஞ்ஜநா நந்தனன். இது பெரிசில்லை. அந்த அம்மாவுக்கு மாத்திரமில்லாமல் லோகஜனனிக்கு, லோகமுள்ளளவும் வரப்போகிற அத்தனை அம்மாகளுக்கும் ஐடியலாக இருக்கும் ஸீதம்மாவுக்கு மகத்தான சோகம் ஏற்பட்டபோது அதைப் போக்கினாரே, அதற்குத்தான் நாம் அவருக்கு நமஸ்காரம் பண்ணிக் கொண்டேயிருக்கணும்.

ஸீதைக்குள் சோகாக்னி ஜ்வாலை விட்டுக் கொண்டிருந்தது. அவளுடைய ஜீவனை வற்றப் பண்ணிக் கொண்டிருந்தது. ராவணன் ஹநுமார் வாலில் நெருப்பு வைத்ததாகச் சொல்கிறார்களே, உண்மையில் அந்த நெருப்பாலா அவர் லங்கா தஹனம் செய்தார்?இல்லவே இல்லை. அந்த நெருப்புக்குள்ளேயே இன்னொரு நெருப்பை அவர் சேர்த்துக்கொண்டு இதனால்தான் ஊரை எரித்தார். ஸீதையின் சோகாக்னிதான் அது.

**ய : சோக வந்ஹிம் ஜநாகாத்மஜாயா :**

**ஆதாய தேநைவ ததாஹ லங்காம்** *1

"ஜநாகாத்மஜா"என்றால் ஜானகி. "சோக வந்ஹி"என்றால் துயரமாகிற அக்னி. அவள் இருந்தது அசோக வனம்;அவளுக்குள் இருந்தது சோக வந்ஹி!"தேநைவ"- அதனாலேயே, இந்த சோகாக்னியாலேயே;"லங்காம் ததாஹ"- லங்கையை எரித்தார்.

'ஆஞ்ஜநேயருக்கு வாலில் நெருப்பை வைத்தும் கொஞ்சங்கூட அவரை அது சுடவில்லை.

ஸீதையின் அநுக்ரஹத்தால் அப்படியிருந்தது'â¡Á ñ£ˆFó‹ ïñ,°ˆ ªîK»‹. Ýù£™ á¬óªò™ô£‹ âK,Aø ªðKò ê,F ÜîŸ° õ‰î«î ÜõÀ¬ìò «ê£èˆ¬îˆ î£¡ ó£õí¡ ªï¼Š¹ â¡ø Ïðˆ F™ ¬õˆîî£™ î£¡!Ý…ü«ïò˜ õ£L™ ªï¼Š¹ ¬õ,èµ‹ â¡ø â‡í‹ ÜõÂ,° ã¡ õ‰î¶?ÜõÂ,° Ü‰î â‡í‹ õ¼Aø úñòˆF™ n¬î ÜîŸ° «ñ½‹ «ê£è£,QJ™ õ£®ù£™ Šóð…ê«ñ î£ƒè£¶ â¡ø è†ì‹ õ‰î¶. Ü¶ âŠð®ò£õ¶ ªõO«ò õ‰¶ ªêôõ£°‹ð®„ ªêŒò «õ‡´‹. Ü¬î ò£ó£õ¶ î£ƒA, ªè£‡´ ªõOJ«ô M†´Mì «õ‡´‹. ò£ó£™ î£ƒèº®»‹?Ý…ü«ïò võ£I¬òˆ îMó ò£ó£½‹ º®ò£¶. Þîù£™î£¡ Üõ¬óˆ î‡®,èµ‹ â¡Á ó£õíÂ,°ˆ «î£¡Pù«ð£¶ ß„õó úƒè™ðˆîî£™, 'õ£L™ ªï¼Š¹ ¬õˆî£ªô¡ù?'â¡Á «î£¡PŸÁ. ÞŠð® Ý…ü«ïò˜ üïè£ˆñü£M¡ «ê£è õ‰U¬ò õ£ƒA, ªè£‡«ì ôƒ¬è¬ò Üîù£™ îýù‹ ªêŒî£˜. Ü¶ ú£¶,è¬÷, úxüùƒè¬÷, èwìŠð´ˆîî£ñ™ ¶wì˜è¬÷ ñ†´‹ î‡®,°‹ð®„ ªêŒî£˜.

அந்த அக்னி அவளுடைய சோகமாயிருந்ததால் தான் அவளுடைய பதிக்குப் பரம் ப்ரியராக, பக்கபலமாக இருந்தவரைச் சுடாமல் அவருக்கு மாத்திரம் ஜில்லென்று இருந்தது.

ராமருக்கு ஆஞ்ஜநேயர் செய்த மஹா உபகாரம் ஸீதை இருக்குமிடத்தைக் கண்டு பிடித்துச் சொன்னது. ஸீதைக்கு அவர் செய்த மஹா உபகாரம் ராமர் எப்படியும் வந்து அவளை மீட்டுக்கொண்டு போவார் என்று அவள் உயிரைவிட இருந்த ஸமயத்தில் சொன்னது. இவ்வாறு இரண்டு பேரும் பலமே போனாற்போல இருந்தபோது பலம் தந்திருக்கிறார்.

ஆனால் இந்த இரண்டையும் அவர் எதைக்கொண்டு, எதன் பலத்தில் பண்ணினார்?

ராமநாம பலத்தினால்தான் பண்ணினார்!

அவர் ஸமுத்ரத்தைத் தாண்டிப் போனதால்தான் ஸீதையைக் கண்டுபிடிக்க முடிந்தது.

எப்படித் தாண்டினார்?

"ராம ராம"என்று சொல்லிக்கொண்டு அந்த நாமத்தின் சக்தியில்தான் தாண்டினார்.

ஸீதை ப்ராணனை விட இருந்த பொழுது அவளை எப்படிக் காப்பாற்றினார்?"அம்மா தாயே, உயிரை விடாதே!"என்று காலில் விழுந்தால்கூட அவளைத் தடுத்திருக்க முடியாதே! 'இதுவும் ராக்ஷஸ மாயை;ராவணன் செய்கிற சூது'என்றுதானே நினைத்திருப்பாள்?மாரீச மான் அநுபவத்துக்கு அப்புறம் அவளுக்கு எல்லாமே ராக்ஷஸ மாயையாய்த்தான் தெரிந்தது. அவளுக்கு அப்படித் தெரிந்தது என்பது ஆஞ்ஜநேயருக்கும் தெரிந்தது. (பரம சுத்த ப்ரம்மசர்யத்தால் ஸ்படிகம் மாதிரியாக ஆன அவருடைய மனஸில் யார் நினைப்பதும் பளிச்சென்று தெரிந்துவிடும்.) ஸீதை ப்ராண ஹானி செய்துகொள்ள இருந்த கட்டத்தில் என்ன செய்தார்? "ராம ராம"என்று நாமாவைத்தான் சொல்ல ஆரம்பித்தார். "ராம"என்றால், அதுவும் ஆஞ்ஜநேய ஸ்வாமியின் வாயால் சொன்னால், எந்த மாயையும் ஓடி விடாதா?அவளுடைய சோக வந்ஹியை நாமாம்ருதத்தைத் தெளித்துக் கொஞ்சம் சமனம் செய்தார். இப்படி அம்ருதத்தைத் தந்தவருக்கு அக்னியே ஜில்லென்றிருக்க அவள் அநுக்ரஹித்தாள்!

ஆஞ்ஜநேயரால்தான் தாங்கள் காப்பாற்றப் பட்டது போல் ராமரும் சீதையும் சொல்லிக் கொண்டார்கள். ஸீதையின் ப்ராணனை ரக்ஷித்துக் கொடுத்தது, ஸீதைக்கும் மேல் தமக்கு ப்ரியமான லக்ஷ்மணன் மூர்ச்சையாய் விழுந்தபோது ஸஞ்ஜீவி கொண்டுவந்து அவனை எழுப்பினது முதலானவற்றுக்காகத் தாம் ஆஞ்ஜநேயருக்குத் தீர்க்கமுடியாத நன்றிக்கடன் பட்டிருப்பதாகவே ராமர் எப்போதும் சொல்வார். "ஆஞ்ஜநேயருக்கு எப்படி என்ன ப்ரத்யுபகாரம் பண்ணுவோம், பண்ணுவோம்?" என்றே ஸீதைக்கும் ஸதா இருந்தது.

இரண்டு பேருமாகச் சேர்ந்து என்ன பண்ணினார்களென்றால்;

அயோத்திலே கோலாஹலமாகப் பட்டாபிஷேகம் ஆனவுடன், ராமர் பல பேருக்குப் பல பரிசு தரும்போது ஒரு முக்தாஹாரத்தை ஸீதைக்குப் போட்டார். அவள் அதைக் கழற்றிக் கையில் வைத்துக்கொண்டு, சுற்றியிருந்த அத்தனை பரிவாரங்களையும் பார்த்துவிட்டு ராமரையும் அர்த்த புஷ்டியோடு பார்த்தாள். இரண்டு பேரும் பரிபூர்ண ஐகமத்யம் (ஒரே

சித்தம்) கொண்ட தம்பதி. அதனால் அவர்கள் மனஸுக்கு மாத்திரம் தெரிகிற மாதிரி ஆஞ்ஜநேயரை அந்தப் பெரிய ஸதஸிலே கொண்டாடுவதற்கு ஒரு ப்ளான் போட்டுக் கொண்டார்கள்.

ஸீதை ராமரைப் பார்த்த பார்வையாலேயே முக்தாஹாரத்தை அந்தப் பரிவாரத்திலே யாருக்குக் கொடுக்கலாம் என்பதற்கு அவருடைய அபிப்ராயத்தைக் கேட்டுவிட்டாள். உடனே ராமர், "பராக்ரமம், புத்தி, பணி எல்லாம் எவனுக்குப் பூர்ணமாக இருக்கிறதோ, அவனுக்கே கொடு"என்றார். பாராட்டிதழ் ('ஸைடேஷன்') படித்தவுடன் 'அவார்ட்'கொடுக்கிற மாதிரி, பேரைச் சொல்லாமலே ராமர் இப்படிச் சொன்னவுடன் ஸீதை மாலையை ஆஞ்ஜநேயருக்குக் கொடுத்துவிட்டாள்!

"ஹநுமானுக்குக் கொடு"என்று ராமர் நேராகச் சொல்லவில்லை. அப்படிச் சொல்லியிருந்தால் 'அவருக்கு மட்டுமென்ன ஸ்பெஷல் அவார்ட்?'என்று மற்றவர்களுக்குத் தோன்றலாம். ஆனால் இன்னார் என்று பெர்ஸனலாகப் போகாமல், ஆப்ஜெக்டிவ்-ஆகப் பல உசந்த யோக்யதாம்சங்களைச் சொல்லி அவற்றை உடையவனுக்கு அவார்ட் கொடுத்தால் யாரும் கேள்வி கேட்க முடியாது. அதனால்தான் உத்தமமான யோக்யதை எல்லாம் ஹநுமாரொருத்தரிடமே பூர்ணமாக ரொம்பியிருந்ததால் ராமர் இப்படி ஸாமர்த்யமாகச் சொன்னது.

பட்டாபிஷேக கட்டத்திலே இப்படி ஆஞ்ஜநேயருக்கு இரண்டு பேருமாகச் செய்ததற்கு ஈடு எதுவும் இல்லை.

ஒரு பெரிய மலைக்கு மேலே சந்திரிகையில் தாவள்யமாயிருக்கும் ஒரு மேகம் படிந்தால் எப்படியிருக்குமோ அப்படி அந்த முத்து மாலை ஆஞ்ஜநேய ஸ்வாமியின் பெரிய சரீரத்திலே புரண்டது.

முதல் முதலாக அவரை ரிச்யமுக பர்வதத்தில் பார்த்தவுடனேயே ராமசந்திரமூர்த்தி, இவரால்தான் இனி ராமாயணம் நடந்தாக வேண்டும் என்று தீர்மானம் பண்ணி விட்டார். அப்போது ஹநுமாரை ஸஹாயமாகப் பெற்றிருந்து ஸுக்ரீவன் பெண்டாட்டியை இழந்து வாலியிடம் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். ராமர் இன்னார் என்று வேவு பார்த்து, அவர் நல்லவர், சக்தி உள்ளவர் என்று தெரிந்ததால் அவரைத் துணையாகக் கொண்டு வாலியை ஜயிக்க வேண்டும் என்பதற்குத்தான் ஹநுமாரை அவரிடம் அனுப்பியிருந்தான். இப்படிப்பட்ட நிலையில் ஸந்தித்தபோதிலும் ராமருக்கோ தனக்கே பலமாக இருக்கப் போவது இந்த ஹநுமார்தான் என்று தெரிந்துவிட்டது. அவரே ஈஸ்வரனாகயிருந்து பூர்வத்தில் பண்ணின ஸங்கல்பம்தானே இப்படியிப்படி இந்த ராமாயண நாடகம் நடக்க வேண்டுமென்று?

அதனால் இவர்களை யார் என்ன என்று ஆஞ்ஜேநேயர் விசாரித்த தினுஸிலேயே அவர் இவர் பெருமையை எடை போட்டு, "நவ வ்யாகரண பண்டிதன், சொல்லின செல்வன்" என்றெல்லாம் லக்ஷ்மணனிடம் ஏகமாகப் புகழ்கிறார். "ஏதோ வாக்குவன்மை படைத்தவன் தான் என்று நினைத்துவிடாதே!இவன் ஸர்வ வல்லமையும் படைத்தவன். இந்த லோகம் ஒரு தேர் என்றால் அதற்கு அச்சாக இருக்கிற ஆணி இவன்தான். இப்போது தெரியாவிட்டாலும் உனக்கே இதன் உண்மை நாள் தெரியும் பார்"என்கிறார்.

" ஆணியிவ்வுலகுக் கெல்லாம்..... பின்னர்க்

காணுதி மெய்ம்மை "*2

என்கிறார்.

அது ரிஷி சாபத்தால் ஹநுமார் தம் பலத்தை மறந்திருந்த ஸமயம். அதனால்தான் இவரைத் துணையாகக் கொண்டிருந்தும் ஸுக்ரீவன் ராஜ்யம், தாரம் எல்லாம் இழந்திருந்தது. 'சீக்கிரமே ஜாம்பவான் இவர் பலத்தை இவருக்கு நினைவுப்படுத்தி ரிஷி சாபம் போகும்படி செய்யப் போகிறார். அப்புறம் ஹநுமார் ஸாகர தரணம், லங்கா தஹனம் முதலான பெரிய காரியங்களைச் செய்யப் போகிறார்'என்பது ராமருக்குத் தெரியுமாதலால் "பின்னர் காணுதி மெய்ம்மை"- 'இவனுடைய மஹா ப்ரபாவத்தால் லோகமாகிய தேரையே நடத்திக்கொண்டு போகக் கூடியவன் என்கிற உண்மையை நீயே பின்னால் பார்ப்பாய்'என்று லக்ஷ்மணனுக்குச்

சொல்கிறார்.

ராமாயணமே ஒரு லோகம் - ஸப்த காண்டமுடைய ஸப்த லோகமும்!இந்த ராமாயணத் தேர் ஓடாமல் நின்று போகிற ஸந்தர்பம் - ஸீதை காணாமல் போய், அவள் எங்கே இருக்கிறாள் என்றே ராமருக்குத் தெரியாமல் திரிந்து கொண்டிருக்கிற ஸந்தர்பம். அப்போது ஆஞ்ஜநேயரைப் பார்த்தவுடன் அவரை ராமர் தேருக்கு அச்சாணியாக முடுக்கிக் கொண்டுவிட்டார்!உடனே சர சர வென்று தேர் ஓட ஆரம்பிக்கிறது!பஹுகாலம் ஓய்ந்து கிடந்த ஸுக்ரீவன் வாலியிடம் சண்டைக்குக் கிளம்புவது, ராமர் வாலிவதம் செய்வது, வானரர்கள் சீதையைத் தேடுவது, கண்டு பிடிப்பது, ஸேதுபந்தனம், ராம ராவண யுத்தம், பட்டாபிஷேகம் என்று கிடுகிடுவென்று ஓட ஆரம்பித்துவிடுகிறது!இத்தனையிலும் பெரிய பங்கு ஹநுமாருக்குத்தான்!

அதுவரை, அதாவது ராமாயணத்தில் பேர் பாதி ஆகிறவரை, இவர் யாரென்றே தெரியாது. கிஷ்கிந்தா காண்டத்தில்தான் வருகிறார். உடனே இவர்தான் கதாநாயகருக்கும் மேலே என்பது போல் முக்யமாய் விடுகிறார்!அடுத்ததான ஸுந்தர காண்டம் முழுக்க இவர் பிரதாபமும், இவருடைய லீலையுமே!ராமாயணத்தில் ஸர்வ கார்ய ஸித்தி என்று ஸகலராலும் பாராயணம் செய்யப்படுவது எது என்றால் ராமருடைய பெருமைகள் தெரிகிற பாக்கி ஆறு காண்டமில்லை;ஆஞ்ஜநேய ப்ராபவமே விஷயமாயுள்ள ஸுந்தர காண்டம்தான்!அப்படி இவரைப் பார்த்தவுடனேயே "ராமாயணத் தேரை இனிமேல் நீயே கொண்டுபோ"என்று ராமர் கொடுத்து விட்டார். தம்முடைய நாமாவை அவர் மூலம் வெளியிட்டே ஸீதை உயிரை விடாமல் காப்பாற்றினார். தம்முடைய நாமாவினாலேயே அவர் பரம ஸுலபமாக ஸமுத்ரத்தைத் தாண்டச் செய்தார். தாமே லங்கைக்குப் போகிற போதோ கஷ்டப்பட்டு அணை கட்டிக்கொண்டு அதன்மேல் நடந்துதான் போனார்!

"தாம் செய்வதெல்லாம் ராமர் போட்ட பிச்சையே!ஸீதாதேவியின் அநுக்ரஹ லேசமே!"என்றுதான் ஆஞ்ஜநேயர் நினைத்தார். 'ஸாகர தரணமும், லங்கா தஹனமும் தன் காரியமென்று லோகம் கொண்டாடுகிறதே!நிஜத்தில் அவருடைய நாமம் - தாரக நாமமல்லவா தரணம் பண்ணுவித்தது?அவளுடைய சோகமே அல்லவா தஹனம் பண்ணிற்று?"என்றே நினைத்தார். தங்கள் கார்யத்துக்கு நம்மையும் ப்ரயோஜனப்படுத்திக் கொண்டார்களே என்று ஸீதாராமர்களிடம் ஒரே நன்றி தீர்க்க முடியாத நன்றிக்கடன் பட்டிருப்பதாகவே நினைத்தார்.

நமக்கானால், நன்றி வாங்கிக் கொள்வதில் போட்டி!'நாம் பல பேருக்கு உபகரித்தோம். யாரும் ஸரியாக நமக்குத் திருப்பவில்லை'என்று அபிப்ராயம்!ஸீதா-ராமர்களுக்கும் ஆஞ்ஜநேயருக்குமோ பரஸ்பரம் மற்றவரால்தான் தங்களுக்கு பலம், அவருக்குத் தாங்கள் ப்ரத்யுபகாரமே பண்ணி முடியாது என்று அபிப்ராயம்.

இது ராமாயணத்திலே நமக்கு ஒரு பெரிய பாடம்.

மஹாபலம் பொருந்தின ஆஞ்ஜநேயர் அந்த பலத்துக்கெல்லாம் மூலம் ராமசந்திரமூர்த்தியே என்று, தமக்கு எத்தனை பலமோ அதைவிட அதிகம் பணிவுடன், விநயத்துடன் இருந்தார். பலமும் பணிவும் ஸாதாரணமாக நேரெதிராக இருப்பவை. இவரிடமோ இரண்டும் மாக்ஸிமமாக இருந்தன. நமக்கு பலமும் இல்லை;பணிவும் இல்லை. அவரைப் போல நல்ல கார்யங்களை ஸாதிப்பதற்கான பலத்தை நமக்குத் தந்து, ஆனால் அந்த பலத்தினால் அஹங்காரப்படாமல் அது ராமனின் பிரஸாதமே என்று உணர்ந்து அதை ராமார்ப்பணமே செய்யும் புத்தியை நமக்கெல்லாம் அவர் அநுக்ரஹிக்க வேண்டும்.

மங்களம்

---

1,2,3 :'த்வாதச நாம பஞ்ஜரம்'உத்தர பாகம்.

*1. "à™ôƒ‚ò R‰«î£ : úLô‹"âÂ‹ ý¸ñ£˜ ºP˜î v«ô£è‹.

*2. è‹ð ó£ñ£òí‹, A†A%«î£ è£‡ì‹, 'Ü¸ñŠ ðìô'ˆF™ 'ñ£E Ý‹ ð®õ‹'âÂ‹ ð£ì™.

---

### டிக்ரி ' இல்லாமலே மதிப்புப் பெற

ரிடையரானவர்கள் தங்களை மட்கப் பண்ணிக் கொண்டு உட்காராமல், கிளுகிளுவென்று கல்பக வ்ருக்ஷங்களாகி, ஸமூஹத்துக்கு நிழலும் பழமும் கொடுத்து ஆதரிக்க முடியும், ஆதரிக்க வேண்டும் என்று சொல்ல வந்தேன். ஒரு ரிடையர்ட் என்ஜீனியர் இரண்டு பையன்களுக்கு ஓவர்ஸீயர் படிப்புக்கு ஸமமாக வீட்டிலேயே (முடிந்தால் அன்னமும் போட்டு) படிக்கக் கற்றுக் கொடுத்தால், அவர்கள் டிக்ரி வாங்க வேண்டுமென்பதுகூட இல்லை;இன்ன பெரியவரிடம் படித்தார்கள் என்பதாலேயே அவருடைய ஸர்டிஃபிகேட்டைப் பார்த்தே, ப்ரைவேட் கான்ட்ராக்டர்கள் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்வார்கள். என்ஜீனியரிங் காலேஜில் தனக்கு இடம் கிடைக்கவில்லையே என்று forward communityமாணவன் அழ இடமிருக்காது. இப்போது ஸங்கீதத்தில் ஒருத்தனின் டிக்ரியையோ டிப்ளோமாவையோ பார்க்காமல், இன்னார் சிஷ்யன் என்றுதானே கச்சேரிக்கு ஸபாக்காரர்கள் கூப்பிடுகிறார்கள்?அப்படியே forward community-ஐச் சேர்ந்த வாலிபர்கள் மற்றத் துறைகளிலும் காலேஜ் படிப்பை எதிர்பார்க்காமல் இன்னாருடைய சிக்ஷையில் கற்றுக்கொண்டான் என்பதாலேயே ப்ரைவேட் ஃபாக்டரிகள், கம்பெனிகள் ஆகியவற்றில் உத்யோகம் பெறக்கூடிய மஹா உபகாரம் நன்மதிப்பு பெற்ற அநுபவஸ்தர்களான பென்ஷனர்கள் ஒன்றுகூடி வித்யாதானம் செய்வதால் ஏற்படும். இப்போது ஸீ.ஏ., அந்த 'டெக்', இந்த 'டெக்'என்று எத்தனை படிப்புகள் தனியார் ஸ்தாபனங்களால் நடத்தப்பட்ட போதிலும் யூனிவர்ஸிடி டிக்ரிகளைவிட உசத்தியாக ஸர்க்கார் உள்பட எல்லாராலும் நினைக்கப்படுகின்றன?அம்மாதிரி இதுவும் வ்ருத்தியாக முடியும்.



### பெண்களுக்கான பணிகள்

பெண்கள் பகலில் ஒழிவு இருக்கிறபோது சேர்ந்து நல்ல மத நூல்களைப் படித்து மற்ற ஸ்திரீகளுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் நமக்கு இருக்கிற ஸ்தோத்ரங்கள் யதேஷ்டம். பெண்கள் ஒன்று சேர்ந்து இவற்றைப் பாடம் பண்ணலாம். மடம், கோயில் மாதிரியானவற்றுக்கு சுத்தமான மஞ்சள் குங்குமம் பண்ணிக் கொடுக்கலாம்.

(குங்குமம் எப்படிச் செய்வது என்பதற்கு ஒருமுறை ஸ்ரீ பெரியவர்களே கொடுத்த குறிப்பு:முப்பது தோலா கெட்டியான உருண்டை மஞ்சள் எடுத்துச் சிறு துண்டங்களாக நறுக்கிக் கொள்க. இதற்கு ஸம எடை எலுமிச்சம் பழச்சாறு விதையில்லாமல் வடிகட்டி எடுத்துக் கொள்க. (மஞ்சள் முதலியன கடையில் தோலாக் கணக்கில் எடைபோட்டு வாங்குவதுபோல், எலுமிச்சஞ் சாற்றுக்கு வீட்டில் எடை பார்ப்பது முடியாது. அதனால் முகத்தல் அளவையில் வீட்டில் இருக்கக்கூடிய அவுன்ஸ் க்ளாஸில் அளந்து போடுகிற விதத்தில் சொன்னால், பதினாறு அவுன்ஸ் எலுமிச்சம் பழச்சாறு எடுத்துக் கொள்ள வேண்டும்.) இந்தப் பழச்சாற்றில் நன்றாகப் பொடித்த வெங்காரமும் படிக்காரமும் ஒவ்வொன்றும் மூன்று தோலா போட்டுக் கரைக்கவும். மஞ்சள் துண்டங்களை இதில் போட்டுக் கலக்கிக் கொள்ளவும். வாயகன்ற, ஈயம் பூசிய பாத்திரத்தில் வைப்பது உத்தமம். இதை ஒருநாளில் மூன்று தடவை நன்றாகக் கிளறவும். பழச்சாறு மஞ்சளில் சேர்ந்து சுண்டியபிறகு நிழலிலேயே நன்றாகக் காய வைக்கவும். அப்பறம் உரலில் இடித்து வஸ்திராயணம் செய்யவும். (மெல்லிய துணியில் பொடி.யை வடிக்கட்டுவதே வஸ்திராயணம் அல்லது வஸ்திரகாயம்.) இப்படி விழுகிற சுத்தமான மஞ்சட் குங்குமத்தை வாயகன்ற ஜாடியில் பத்திரப்படுத்தவும். குங்குமத்தில் ஒன்று அல்லது இரண்டு தேக்கரண்டி(tea-spoon) சுத்த பசு நெய்விட்டு, கட்டி தட்டாமல், நன்றாகக் கலக்கச் செய்து வைத்தால் காப்பும் (preservative) ஆகும்;புனிதமும் ஆகும். சுத்தமான பசுநெய் கிடைத்தால் மட்டுமே சேர்க்கவும். சரக்கைப்பற்றிக் கொஞ்சம் ஸந்தேஹமிருந்தால்கூட நெய்யே

சேர்க்காவிட்டாலும் பாதகமில்லை.)

ஸ்வாமி தீபத்துக்கு அகத்திலேயே சுத்தமாக வெண்ணெய் காய்ச்சி, பசும் நெய் எடுத்துத் தரலாம். முனைமுறியாத அக்ஷதைகள் பொறுக்கி அனுப்பி வைக்கலாம். "அக்ஷதை"என்றாலே "முறியாதது"என்று அர்த்தம். ஆனால் இப்போது மந்த்ராக்ஷதை என்று போடுவதில் பாதி நொய் மாதிரி தூளாகத்தானே இருக்கிறது?மந்த்ராக்ஷதை முழுசாக இருந்தால்தான் அதனால் மங்களம் கிடைக்கும். எங்கிருந்தோ. 'டின்'னில் அடைத்து வருகிற நெய்யில் ஏதாவது கொழுப்புக் கலந்திருந்தால், அதை ஸ்வாமி தீபத்துக்குப் போடும் போது உத்தேசித்த க்ஷேமம் உண்டாகாமலே போய்விடும். நான் கேள்விப்படடிருக்கிறேன்:முன்பெல்லாம் யாராவது ஒரு ஹோமம், யஜ்ஞம் என்று செய்தால் விரோதிகள் அதை நிஷ்பலனாக்குவதற்கு ஒரு தந்திரம் பண்ணுவார்களாம். அதாவது ஹோமம் பண்ணுகிறவனிடம் ரொம்பவும் ஸ்நேஹம் வந்துவிட்டது போல் நடிப்பார்களாம்.

'ஹோமத்துக்கு நாங்கள் நெய் கைங்கர்யம் செய்கிறோம்'என்று சொல்லிக்கொண்டு நெய்யில் கொஞ்சம் பன்றிக் கொழுப்பைக் கலந்து கொடுத்துவிடுவார்களாம். அவ்வளவுதான்!இந்த மாதிரி அசுத்த நெய்யினால் ஹோமம் பண்ணினால் பண்ணுகிறவர்களுக்கு நல்ல பலன் கிடைக்காமல் போய்விடும் என்பதோடு, விபரீத பலன் வேறு உண்டாகும். ஹோமம் அல்லது ஸ்வாமி தீபத்துக்கான நெய், மந்த்ராக்ஷதை, குங்குமம் முதலியவை சுத்தமாக இருக்கவேண்டும். இவற்றில் கடைச் சரக்குகளை நம்புவதைவிடப் பெண்கள் சேர்ந்து கைங்கர்யமாகச் செய்தால் ச்லாக்யமாக இருக்கும்.

மற்ற ஸோஷல் ஸர்வீஸ்களைவிட தெய்வ ஸம்பந்தமான, மத ஸம்பந்தமான இப்படிப்பட்ட பணிகளைப் பெண்கள் முக்யமாகச் செய்யலாம்.

பட்டுப்புடவை, வைரம் இன்னும் வேறு 'தாம்தூம்'செலவுகள் செய்யாமலிருப்பதற்கு ஸ்திரீகள் ஒரு ப்ரதிக்ஞை பண்ணிக் கொண்டால் அதுவே பெரிய உபகாரமாகும். பட்டுத்துணி வேண்டாம் என்று வைப்பதால், லக்ஷக்கணக்கான பட்டுப்பூச்சிகளைச் சாகாமல் காப்பாற்றிய புண்யம் கிடைக்கும். அதோடு, 'இருக்கிறவர்'கள் இப்படிச் செலவு செய்வதைப் பார்த்து, 'இல்லாதவர்'களுக்கும் ஆசை உண்டாகிறதே;கடன் கஸ்தி வாங்கியாவது அவர்கள் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்கிறார்களே, இப்படி அவர்களுக்குத் தப்பான வழிகாட்டி அபகாரம் பண்ணாமலிருப்பதே உபகாரந்தான். இந்த ஆடம்பரங்கள் போய், காப்பிக்குப் பதில் மோர்க்கஞ்சி சாப்பிடுவது என்றாகிவிட்டால் எல்லாக் குடும்பத்திலும் பாதிச் செலவு மிஞ்சும். கடன் வாங்கிக் குடித்தனம் செய்பவர்கள் கடன் வாங்காமல் காலம் தள்ளலாம்.



## பெண்களுக்கான பணிகள்

பெண்கள் பகலில் ஒழிவு இருக்கிறபோது சேர்ந்து நல்ல மத நூல்களைப் படித்து மற்ற ஸ்திரீகளுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் நமக்கு இருக்கிற ஸ்தோத்ரங்கள் யதேஷ்டம். பெண்கள் ஒன்று சேர்ந்து இவற்றைப் பாடம் பண்ணலாம். மடம், கோயில் மாதிரியானவற்றுக்கு சுத்தமான மஞ்சள் குங்குமம் பண்ணிக் கொடுக்கலாம்.

(குங்குமம் எப்படிச் செய்வது என்பதற்கு ஒருமுறை ஸ்ரீ பெரியவர்களே கொடுத்த குறிப்பு:முப்பது தோலா கெட்டியான உருண்டை மஞ்சள் எடுத்துச் சிறு துண்டங்களாக நறுக்கிக் கொள்க. இதற்கு ஸம எடை எலுமிச்சம் பழச்சாறு விதையில்லாமல் வடிகட்டி எடுத்துக் கொள்க. (மஞ்சள் முதலியன கடையில் தோலாக் கணக்கில் எடைபோட்டு வாங்குவதுபோல், எலுமிச்சஞ் சாற்றுக்கு வீட்டில் எடை பார்ப்பது முடியாது. அதனால் முகத்தல் அளவையில் வீட்டில் இருக்கக்கூடிய அவுன்ஸ் க்ளாஸில் அளந்து போடுகிற விதத்தில் சொன்னால், பதினாறு அவுன்ஸ் எலுமிச்சம் பழச்சாறு எடுத்துக் கொள்ள வேண்டும்.) இந்தப் பழச்சாற்றில் நன்றாகப் பொடித்த வெங்காரமும் படிக்காரமும் ஒவ்வொன்றும் மூன்று தோலா போட்டுக் கரைக்கவும். மஞ்சள் துண்டங்களை இதில் போட்டுக் கலக்கிக் கொள்ளவும். வாயகன்ற, ஈயம் பூசிய பாத்திரத்தில் வைப்பது உத்தமம்.

இதை ஒருநாளில் மூன்று தடவை நன்றாகக் கிளறவும். பழச்சாறு மஞ்சளில் சேர்ந்து சுண்டியபிறகு நிழலிலேயே நன்றாகக் காய வைக்கவும். அப்பறம் உரலில் இடித்து வஸ்திராயணம் செய்யவும். (மெல்லிய துணியில் பொடி.யை வடிக்கட்டுவதே வஸ்திராயணம் அல்லது வஸ்திரகாயம்.) இப்படி விழுகிற சுத்தமான மஞ்சட் குங்குமத்தை வாயகன்ற ஜாடியில் பத்திரப்படுத்தவும். குங்குமத்தில் ஒன்று அல்லது இரண்டு தேக்கரண்டி(tea-spoon) சுத்த பசு நெய்விட்டு, கட்டி தட்டாமல், நன்றாகக் கலக்கச் செய்து வைத்தால் காப்பும் (preservative) ஆகும்;புனிதமும் ஆகும். சுத்தமான பசுநெய் கிடைத்தால் மட்டுமே சேர்க்கவும். சரக்கைப்பற்றிக் கொஞ்சம் ஸந்தேஹமிருந்தால்கூட நெய்யே சேர்க்காவிட்டாலும் பாதகமில்லை.)

ஸ்வாமி தீபத்துக்கு அகத்திலேயே சுத்தமாக வெண்ணெய் காய்ச்சி, பசும் நெய் எடுத்துத் தரலாம். முனைமுறியாத அக்ஷதைகள் பொறுக்கி அனுப்பி வைக்கலாம். "அக்ஷதை"என்றாலே "முறியாதது"என்று அர்த்தம். ஆனால் இப்போது மந்த்ராக்ஷதை என்று போடுவதில் பாதி நொய் மாதிரி தூளாகத்தானே இருக்கிறது?மந்த்ராக்ஷதை முழுசாக இருந்தால்தான் அதனால் மங்களம் கிடைக்கும். எங்கிருந்தோ. 'டின்'னில் அடைத்து வருகிற நெய்யில் ஏதாவது கொழுப்புக் கலந்திருந்தால், அதை ஸ்வாமி தீபத்துக்குப் போடும் போது உத்தேசித்த க்ஷேமம் உண்டாகாமலே போய்விடும். நான் கேள்விப்பட்டிருக்கிறேன்:முன்பெல்லாம் யாராவது ஒரு ஹோமம், யஜ்ஞம் என்று செய்தால் விரோதிகள் அதை நிஷ்பலனாக்குவதற்கு ஒரு தந்திரம் பண்ணுவார்களாம். அதாவது ஹோமம் பண்ணுகிறவனிடம் ரொம்பவும் ஸ்நேஹம் வந்துவிட்டது போல் நடிப்பார்களாம்.

'ஹோமத்துக்கு நாங்கள் நெய் கைங்கர்யம் செய்கிறோம்'என்று சொல்லிக்கொண்டு நெய்யில் கொஞ்சம் பன்றிக் கொழுப்பைக் கலந்து கொடுத்துவிடுவார்களாம். அவ்வளவுதான்!இந்த மாதிரி அசுத்த நெய்யினால் ஹோமம் பண்ணினால் பண்ணுகிறவர்களுக்கு நல்ல பலன் கிடைக்காமல் போய்விடும் என்பதோடு, விபரீத பலன் வேறு உண்டாகும். ஹோமம் அல்லது ஸ்வாமி தீபத்துக்கான நெய், மந்த்ராக்ஷதை, குங்குமம் முதலியவை சுத்தமாக இருக்கவேண்டும். இவற்றில் கடைச் சரக்குகளை நம்புவதைவிடப் பெண்கள் சேர்ந்து கைங்கர்யமாகச் செய்தால் ச்லாக்யமாக இருக்கும்.

மற்ற ஸோஷல் ஸர்வீஸ்களைவிட தெய்வ ஸம்பந்தமான, மத ஸம்பந்தமான இப்படிப்பட்ட பணிகளைப் பெண்கள் முக்யமாகச் செய்யலாம்.

பட்டுப்புடவை, வைரம் இன்னும் வேறு 'தாம்தூம்'செலவுகள் செய்யாமலிருப்பதற்கு ஸ்திரீகள் ஒரு ப்ரதிக்ஞை பண்ணிக் கொண்டால் அதுவே பெரிய உபகாரமாகும். பட்டுத்துணி வேண்டாம் என்று வைப்பதால், லக்ஷக்கணக்கான பட்டுப்பூச்சிகளைச் சாகாமல் காப்பாற்றிய புண்யம் கிடைக்கும். அதோடு, 'இருக்கிறவர்'கள் இப்படிச் செலவு செய்வதைப் பார்த்து, 'இல்லாதவர்'களுக்கும் ஆசை உண்டாகிறதே;கடன் கஸ்தி வாங்கியாவது அவர்கள் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்கிறார்களே, இப்படி அவர்களுக்குத் தப்பான வழிகாட்டி அபகாரம் பண்ணாமலிருப்பதே உபகாரந்தான். இந்த ஆடம்பரங்கள் போய், காப்பிக்குப் பதில் மோர்க்கஞ்சி சாப்பிடுவது என்றாகிவிட்டால் எல்லாக் குடும்பத்திலும் பாதிச் செலவு மிஞ்சும். கடன் வாங்கிக் குடித்தனம் செய்பவர்கள் கடன் வாங்காமல் காலம் தள்ளலாம்.

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

**சரீர உழைப்பும் ஸந்ததியும்**

புருஷர்கள் சரீர உழைப்பைக் குறைத்துக் கொண்டதிலிருந்துதான் ஆண் பிரஜைகள் பிறப்பது குறைந்து வருகிறது. இப்படிக் குறைந்தால்தான், சரக்கு அதிகம் கிடைக்காவிட்டால் விலை கூடிவிடும் என்ற பொருளாதார விதிப்படி, வரதக்ஷிணை, சீர் என்று பிள்ளை வீட்டுக்காரன் ஏகமாக வாங்குவதாகவும், அதனால் நம் ஸமூஹ தர்மமே குளறிப் போவதாகவும் ஸம்பவித்திருக்கிறது. எக்னாமிக்ஸ்படி 'கிராக்கி'யாகிவிட்ட ஆணுக்கு dowry கொடுப்பதென்பது நம் மதத்துக்கே ஹானியில் கொண்டு விட்டிருக்கிறது.

முன்னெல்லாம், பிராம்மணனின் நித்யகர்மாநுஷ்டானங்களும், மற்ற ஜாதியார்களின் பாரம்பர்யத் தொழில்களும் நன்றாக அவர்கள் இடுப்பை முறித்துவிடும். 'முறித்துவிடும்'என்று தோன்றினாலும் அதுவே உண்மையில் பலம் தந்தது!அந்த நாள் ஆஹாரத்திலும் ஸத்து ஜாஸ்தி.

பிற்பாடுதான், முதலில் பிராம்மணனும் அப்புறம் இவனைப் பார்த்து மற்றவர்களும் white-collared job, sedentary job என்கிறார்களே, அப்படி அழுக்குப்பட்டுக் கொள்ளாமல் ஆபீஸில் பங்காவுக்குக் கீழே உட்கார்ந்து கொண்டு வேலை பார்ப்பதுதான் பெருமை என்று ஆனது. இதனால் ஏற்பட்ட மற்ற அனர்த்தங்கள் இருக்கட்டும். வேதவித்யையும் வைதிகாநுஷ்டானமும் வர்ணாச்ரமமும் போய், ஏகப்பட்ட போட்டி, பொறாமை, ஜாதி த்வேஷம், இன த்வேஷம் எல்லாம் வந்ததற்கே இப்படி ஸர்க்கார் உத்யோக மோஹத்தில் பிராம்மணன் கிராமத்தை விட்டு ஓடி வந்தது தான் விதை போட்டது அந்தப் பெரிய அனர்த்தம் ஒரு பக்கம் இருக்கட்டும் - இப்படி சரீரத்தால் செய்யும் வேலையைக் குறைத்துக் கொண்டதன் இன்னொரு அனர்த்தம் பௌருஷம் நஷ்டமானது. இப்போது ஆஹாரமும் புஷ்டிக்கானதாக இல்லை. கெமிகல் ஃபெர்டிலைஸர் விளைச்சலை ஜாஸ்தியாக்கலாம்;ஆனால் விளைபொருளின் ஸத்து இதில் ரொம்பக் குறைந்து விடுகிறது. போதாததற்கு ஆரோக்யத்துக்கு ஹானி பண்ணி, நரம்புத் தளர்ச்சியை உண்டுபண்ணுகிற காபி முதலிய பானங்கள் வேறு வந்து சேர்ந்திருக்கின்றன. மூளைக்கு வேலை ஜாஸ்தியாகியிருக்கிறது;'பேனா உழவு'ஜாஸ்தியாகியிருக்கிறது. இது ஸரியாய் நடக்க வேண்டுமானால் புத்தி சுத்தமாகவும், ஸத்வமாகவும், சாந்தமாகவும் இருந்தாக வேண்டும். ஆனால் சூழ்நிலையோ ஸினிமாக்கள், நாவல்கள், பத்திரிகைகள் ஆகியவற்றால் மநுஷ்யனைக் காம வேகத்திலும்;பாலிடிக்ஸாலும் பலவித வர்க்கப் போராட்டங்களாலும் க்ரோத வேகத்திலும் தள்ளி இவனுடைய புத்தியையும் நரம்பையும் ரொம்ப பலஹீனப்படுத்துவதாயிருக்கின்றன. பதினைந்து வயஸாகிவிட்டால் மூக்குக் கண்ணாடி வேண்டும், நாற்பது வயஸு ஆனால் blood pressure-குத் தப்பிக்கிறவன் எவனோ ஒருத்தன்தான் என்கிற மாதிரி அநாரோக்யம் ஸர்வ்வியாபகமாக ஏற்பட்டிருக்கிறது. மொத்தத்தில், ஓடியாடி உழைக்காமல் உட்கார்ந்து வேலை செய்ததில் பௌருஷம் போய்விட்டது. அதனால், பிறக்கிற குழந்தைகளிலும் புருஷ ப்ரஜைகள் குறைந்துவிட்டன.



### உடலுழைப்பாலேயே ஆண்மை

சரீர உழைப்பால் தேஹ சக்தியை விருத்தி செய்து கொண்டு பௌருஷம் பெறுவதே மனஸின் பௌருஷத்துக்கும் காரணமாக ஆகும். இப்போது பேப்பரைப் படித்து விட்டுக் காரஸாரமாக வாய் வார்த்தையில் அக்ரமங்களைக் கண்டிக்கிறோமே தவிர, நிஜமான ஆண்மையோடு நம் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக உயிரை வேண்டுமானாலும் கொடுப்பது என்று கார்யத்தில் இறங்குகிற தீரம் போய் விட்டிருக்கிறது. இப்படி, ஒரு பக்கம் ஸ்த்ரீகள் புருஷர்களாகிக் கொண்டு வரும்போதே இன்னொரு பக்கம் புருஷர்களுக்கு ஸ்த்ரீத்வம் விருத்தியாகி வருகிறது!

நல்ல ஸத் விஷயங்களில் பிடிமானம், படிப்பு, பயிறசி, பக்தி, பூஜை, த்யானம் உள்ளவர்களைத் தவிர மற்ற பெரும்பாலாரின் மனஸு கெட்டதுகளில் போகாமல் தடுப்பதற்குச் சரீர உழைப்புதான் ஸாதனமாகிறது. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ எழுதுகிறோம், யோசனை பண்ணுகிறோமென்றால் அப்போதும் மனஸ் அது பாட்டுக்கு அவ்வப்போது இதை விட்டுவிட்டு ஓடிக் கொண்டுதானிருக்கும். அதுவே சரீரத்தால் கார்யம் செய்கிறோமென்றால் அப்போது அப்படிப்பட்ட கார்யத்திலேயே மனஸ் அதிகம் ஈடுபட்டுவிடுகிறது. அதனால் கண்ட கண்ட நினைப்புகளுக்கு ஓடாமலிருக்கிறது. அதாவது சரீர உழைப்பால் சித்தம் கெட்டதில் போகவில்லையே தவிர, நல்லதில் ஈடுபட்டு உத்தம அநுபவங்களைப் 'பாஸிடிவ்'-ஆகப் பெறவில்லைதான். ஆனால் முதலில் இந்த நெகடிவ் ஸ்டெப்பில் அடி வைத்துத் தான் பாஸிடிக்குப் போயாகவேண்டியிருக்கிறது. ஆசார்யாள்

அதனால்தான் முதலில் கர்மாநுஷ்டானம், அப்புறம் இதனால் ஏற்படும் சித்தசுத்தியினால் மனஸ் உத்தமமாகவே போகிற பக்தி, அதற்கப்புறம் மனஸே போய்விடுகிற ஞானம் என்று படிவரிசை போட்டுக் கொடுத்தார்.



### சரீர ஸாதனை, ஆத்ம ஸாதனை இரண்டும் வேண்டும்

ஜன்மா பூரா ஒருத்தன் ஏதோ மாடுமாதிரி தேஹத்தால் அலைந்து திரிந்து, கையையும் காலையும் ஆட்டிக் கொண்டிருந்துவிட்டு, சாந்தமாக ஸௌக்கியமாக ஈஸ்வர பரமான, ஆத்மார்த்தமான விஷயங்களைத் தெரிந்து கொள்ளாமலும் பக்தி, தியானம் எதுவுமே இல்லாமலும் ஜீவனை விட்டானென்றால் அவன் மநுஷ்ய ஜன்மா எடுத்தே ப்ரயோஜனமில்லைதான். ஆனால் செய்ய வேண்டிய நிலையில் சரீர உழைப்புப் பண்ணியேயாக வேண்டும். பொதுவாக இப்பபோது ஜனங்கள் இருக்கிற லோகாயதமான, அபக்வமான ஸ்திதியில் அவர்களில் பெரும்பாலார் நீண்ட காலத்துக்கு சரீரத்தால் உழைத்து உழைத்தே சித்தசுத்தி பெற வேண்டியவர்களாக்காதான் இருக்கிறார்கள்.

மூளையால் மட்டும் வேலை செய்கிறவனுக்கும், பேனா வேலைகாரனுக்கும் சரீரத்தால் உழைப்பவனைப் போல அசந்து தூக்கம் வருகிறதோ?தூக்கம் வராவிட்டால் மனஸ் எங்கேயாவது திரிந்துகொண்டே அழுக்கைச் சேர்த்துக்கொள்கிறது. நன்றாக உழைத்துவிட்டு வந்தவன் இப்படியெல்லாம் கெட்ட சிந்தனைகளில் போகாமல் நன்றாகத் தூங்குகிறான். அதனால் தேஹ பலம், புத்தி பலம் இரண்டும் உண்டாகிறது. தேஹத்தையும் புத்தியையும் 'கனெக்ட்'பண்ணுகிற nervous system-ஐ அவன் பாழ் பண்ணிக்கொள்கிறதில்லை.

சரீர உழைப்பில்தான் ஆரம்பித்தாக வேண்டியிருக்கிறது. ஆனால் சரீரத்தோடு நின்றுவிடாமல் அந்த ஆரம்ப நாளிலிருந்தே ஈஸ்வரபரமான விஷயகங்ளிலும் 'டச்'வைத்துக் கொண்டேயாக வேண்டும். போகப் போக 'டச்'பண்ணினால் மட்டும் போதாது, 'டச்'பண்ணுவதை கையில் பிடித்து வைத்துக்கொள்ளவும் ப்ரயத்னப்பட வேண்டும். அத்யாத்ம ஸமாசாரங்களில் அதிகம் ஈடுபட வேண்டும். ஆனால் இப்போதும், இவன் ஆத்மாபிவிருத்தியில் உச்சாணிக் கொம்புக்கே போய்விட்டாலும் அப்போதுங்கூட, சரீரப் பணியில் இவன் 'டச்'சை அடியோடு விட்டுவிடக் கூடாது. ஜீவன்முக்தன் என்று என்னவோ சொல்கிறார்களே, நமக்கெல்லாம் அப்படிப்பட்ட ஸ்திதி புரிவதுகூடக் கஷ்டமாயிருக்கிறதே, அந்த ஸ்திதி வந்து நமக்கென்று மனஸில்லை, எண்ணமில்லை, 'ப்ளான்'இல்லை என்று ஆகிறமட்டும், நாமாக உடற்தொண்டை அடியோடு விட்டோமென்று இருக்கவே கூடாது. அதனால்தான் பெரியோர்கள், "ஒரு கையால் ஈஸ்வரனைப் பிடித்துக்கொண்டே இன்னொரு கையால் லோக கார்யங்களைப் பண்ணு"எண்ணுகிறார்கள்.

முதலில் சரீர வேலை ஜாஸ்தி, ஆத்மார்த்த சிந்தனை குறைச்சல் பிறகு இரண்டும் ஸமம்;அப்புறம் ஆத்மார்த்தம் ஜாஸ்தி, சரீர வேலை குறைச்சல் என்று அதாவது எல்லா ஸ்டேஜிலும் இரண்டில் எந்த ஒன்றுமே இல்லை என்று இல்லாமல் இருக்க வேண்டும். இதற்கும் அப்புறம் ஈஸ்வரனே நம்மை நடத்தி வைப்பது தெரியும். அந்த ஸ்திதியில் பரமஞானிகளாக இருந்து கொண்டே ஓயாமல் ஒழியாமல் காரியம் பண்ணினவர்களும் உண்டு. லோகமே தெரியாமல் கல்லு மாதிரிக் கிடந்தவர்களும் உண்டு. அங்கே போகிற மட்டும் மெய் வருந்திப் பரோபகார மாக எல்லாரும் உழைக்கத்தான் வேண்டும். பலஹீனர்கள் தவிர மற்ற எல்லாரும் சரீர கைங்கர்யம் நிறையப் பண்ணத் தான் வேண்டும். பலஹீனர்கள் இதற்கு ஈடாக மற்ற தினுசுகளில் பொதுப்பணி செய்ய வேண்டும்.



### பதி-பத்தினி ஒத்துழைப்பு

ச்ரமதானம் மாதிரியே எல்லாரும் 'ஸம்பத்தி தான்'என்கிற பண தானமும் துளியாவது பண்ண வேண்டும். எத்தனை குறைச்சல் வருமானமானாலும் அதிலும் ஒரு காலணாவாவது தனக்கென்று இல்லாமல் தர்மத்துக்குப் போகணும். இதிலே ஸ்திரீகளால் ஆகக்கூடியது நிறைய இருக்கிறது. நகை, துணி, ஸினிமாச் செலவு, வரதக்ஷிணை சீர் செனத்தி ஆசை இவற்றால் ஸ்த்ரீகள்தான் புருஷர்களை விட தான தர்மம் முடியாத ஸ்திதியை ஏற்படுத்தி விடுகிறார்கள். ரேஸ், சீட்டு, குடி, ஸிகரெட் முதலான துன்மார்க்கச் செலவுகள் புருஷர்கள்தான் செய்கிறார்களென்று எனக்குத் தெரியுமானாலும், அவர்களை விடவும் பெண் ஜன்மா எடுத்தவர்கள்தான் எல்லா உயிர்களுக்கும் தாயாக, தியாகிகளாக உபகரிப்பதில் உதாரணமாக இருக்க வேண்டும் என்பதால் சொல்கிறேன் அகமுடையான், பெண்டாட்டி இருவரும் ஒத்துழைத்து, தர்மம் செய்வதற்கென்றே மற்றச் செலவுகளைக் குறைத்துக்கொண்டு கொஞ்சமாவது மிச்சம் பிடிக்க வேண்டும். 'இருக்கிறவர்'களும் இதற்கெல்லாம் ஆகிற செலவைச் சேமித்துப் பரோபகாரத்துக்குப் பயனாக்க வேண்டும்.



## தனக்குத் மிஞ்சித் தர்மம்

" த னக்குத் மிஞ்சித் தர்மம்"என்பதற்கு நான் புது வியாக்யானம் செய்கிறேன் :எது உயிர் வாழ்வதற்கு அத்யாவச்யமோ, எதெல்லாம் இல்லாவிட்டால் உயிர் வாழ முடியாதோ, அந்த bare necessities-க்குத் தேவயானதைத் தான் 'தனக்கு'என்று இங்கே சொல்லியிருப்பதாகப் புரிந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால், 'தனக்கு'என்று சொல்லிக்கொண்டு, ஆடம்பரச் செலவுகள் பண்ணிக் கொண்டே போய் எத்தனை வருமானம் வந்தாலும் தானம் பண்ண ஒன்றுமே இல்லாமல் ஆக்கிக் கொள்வதாகத்தான் முடியும். ஸொந்தச் செலவுகளை அவசியத்திற்கு அதிகமாக எவரும் வைத்துக்கொள்ளாவிட்டால்தான் தனக்கு மிஞ்சிக் கையில் தர்மத்துக்குப் பணமே இருக்கும். முடிவில்லாமல் தனக்கென்று ஆடம்பர போக்யங்களை (லக்ஷுரிகளை)ப் பெருக்கிக் கொண்டே போய்விட்டு, "தனக்கு மிஞ்சித் தர்மம் பண்ண எதுவுமே இல்லை"என்று கைவிரித்தால் அது நியாயமில்லை. ஆனதால், தனக்கென்று எவ்வளவு குறைவாகச் செலவழிக்க முடியுமோ, அப்படி எளிமையாக வாழ்ந்து, மிச்சம் பிடித்து, அதைத் தர்மத்துக்குச் செலவழிப்பதுதான் "தனக்கு மிஞ்சித் தர்மம்". "தர்மம் பண்ணியே ஆகவேண்டுமே!வேதத்தில் 'தர்மம் சர'என்றும், படிப்பு ஆரம்பத்திலேயே அவ்வை 'அறம் செய விரும்பு'என்றும் சொல்லியிருப்பதைச் செய்தேயாக வேண்டுமே!ஆனதால், நமக்கு வரும்படி எவ்வளவு குறைச்சலாயிருந்தாலும் அதற்குள் தர்மம் பண்ணும்படியாகவும் செலவைக் கட்டுப்படுத்திக்கொண்டு 'தனக்கு மிச்சும்'படிப் பண்ண வேண்டும்"என்றே இந்த வசனத்தை அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும்*அப்படிச் செய்தால் எவனுமே தர்மத்துக்காகச் சேமித்துத்தான் ஆகவேண்டும் என்றாகும். அதாவது, எவனுமே கடன்படமாட்டான்!இது ஒரு பெரிய ஸ்வய உபகாரம்!

இப்போது ஸர்க்காரே கடன் வாங்குவதாக ஆகிவிட்டிருக்கிறது!அதே வழியில் வேண்டாத வஸ்துக்களையெல்லாம் ஜனங்களும் அத்யாவச்யமாக்கிக் கொண்டால் எல்லாரும் கடனாளியாக வேண்டியதுதான். கடன் வாங்காமலிருப்பதே பெரிய உபகாரம். ஏனென்றால் நாம் கடன் வாங்கிச் செலவழிக்கிறபோது, நாம் தர்மம் பண்ண முடியாது என்பதோடு மற்றவர்களையும் கடன் வாங்கி டாம்பீகம் செய்யத் தூண்டுகிறோம். பிறத்தியாருக்கும் ஸாத்யமில்லாத ஆசைகளைக் கிளப்பிவிடுகிற விதத்தில் எவனொருத்தனும் டாம்பீகமாக வாழ்கிறதுதான் பெரிய ஸமூஹ த்ரோஹமான கார்யம். அநாதியான நம் சாஸ்த்ரங்களிலிருந்து நேற்று காந்தி வரையில் சொல்லி வந்த எளிய வாழ்க்கையை (simple living) வசதியுள்ளவர்களும் மேற்கொண்டால் எந்தக் கம்யூனிஸமும், வர்க்கப் போராட்டமும் வரவே வராது. எளிய வாழ்க்கையால் இவன் நிறைய மிச்சம் பிடித்து தர்மமும் பரோபகாரமும் செய்வது ஒரு பக்கம்;இதைவிட முக்யமாக மற்றவர்களுக்கு ஆசை,

அஸூயை, கடன் இவற்றை ஏற்படுத்தாமல் இருக்கிறானே, இதுதான் பெரிய உபகாரம். 'வரவே சிறுத்து, செலவே பெருகினால் அது திருடு'என்றே ஆன்றோர் மொழி இருக்கிறது.

கடன் வாங்கின பணம் இன்னொருத்தனுடையதுதானே?அந்தப் பணம் தனக்கு வருமா, வருமா என்று இவன் திருப்பிக் கொடுக்கிற வரையில் அவன் திருட்டுக் கொடுத்துவிட்டது போல அவஸ்தைப் பட்டுக் கொண்டுதானே இருப்பான்?அதனால்தான் இதைத் திருடு என்றே சொல்லியிருக்கிறது. "கடன் பட்டார் நெஞ்சம்"மட்டுமில்லாமல் "கடன் கொடுத்தார் நெஞ்ச"மும் கலங்கும்படியாக இப்படி இரண்டு சாராருக்கும் அபகாரம் பண்ணுகிற இரவல் பழக்கத்தை விடுவதே பெரிய உபகாரந்தான்.



**வரதக்ஷிணை பெரும் கொடுமை**

நாம் ஊதாரித்தனமாக செலவு செய்து பிறரையும் இந்த வழியில் போவதற்குச் சபலப்படுத்திக் கடனாளியாக்குவது தப்பு என்றால், நாம் எந்தச் செலவும் செய்யமால், இன்னொருத்தனை நம் பொருட்டாகவே பெரிய செலவுக்கு ஆட்படுத்திக் கடனாளியாக்குவதோ அதை விடத் தப்பு;பாபம் என்றே சொல்லணும். வரதக்ஷிணையாலும் படாடோபக் கல்யாணத்தாலும் எத்தனையோ குடும்பங்களைக் கடனாளியாகப் பண்ணியிருப்பது நம் ஸமுதாயத்துக்கே பெரிய அவமானம். வைதிக அம்சங்களுக்கு மாத்திரமே முக்கியத்துவம் தந்து கல்யாணச் செலவை எவ்வளவுக்கெவ்வளவு குறைக்க முடியுமோ அப்படிப் பண்ணி, டாம்பீகமே இல்லாமல் ஸிம்ப்ளிஃபை செய்ய வேண்டும் என்று நானும் ஓயாமல் சொல்லிக் கொண்டேதானிருக்கிறேன். கேட்கிறவர்கள்தான் அபூர்வமாயிருக்கிறார்கள் வரதக்ஷிணையும் சீர் செனத்தியும் கேட்பது பாபம் என்கிற உணர்ச்சி பிள்ளையைப் பெற்றவர்களுக்கு உண்டாக வேண்டும். ஒரு பெண்ணின் கல்யாணம் என்றால் இப்படிப் பதினாயிரக் கணக்கில் செலவழிக்க வேண்டியிருப்பதால்தான், அந்தப் பெண்களையே வேலைக்கு விடுவது என்று ஆரம்பித்து, அப்புறம் இதுவே ஃபாஷனாகி, நம்முடைய ஸ்திரீ தர்மத்துக்கே ரொம்பவும் கெடுதல் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு ஆயுஸ்கால ஸேமிப்பும் போதாமல் கடன் கஸ்தி வாங்கித்தான் கல்யாணம் பண்ண வேண்டும் என்ற நிலையில் அநேகக் குடும்பங்களை வைத்திருக்கிற வரையில் நமக்கு மற்ற பரோபகாரத் தொண்டுகள், ஜீவாத்ம கைங்கர்யங்களைப் பற்றிப் பேசவே லாயக்கில்லை என்று தோன்றுகிறது.

வெயில் காலத்தில் விசிறி, குடை தானம்;குளிர் காலத்தில் கம்பளிதானம்;பஞ்சகாலத்தில் அன்னதானம் என்றெல்லாம் சாஸ்திரங்களில் சிறப்பித்துச் சொல்லியிருக்கிற எல்லா தானங்களயும்விட, 'வரதக்ஷிணை'என்று அதிகாரப் பிச்சையாக தானம் வாங்குவதை நிறுத்துவதுதான் பெரிய தானம் என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றதெல்லாம் ஒரு பீரியடுக்கு (கால கட்டத்துக்கு) மட்டும்தான் பயனாவது. வரதக்ஷிணையோ இன்றைக்கு ஒருத்தனுடைய வாழ்நாள் முழுவதையும் (பெண்ணைப் பெற்றவனைத்தான் சொல்கிறேன்) பாதிப்பதோடு, எதிர்காலம் பூராவுக்கும் நம்முடைய சாஸ்திரீயமான வாழ்க்கை முறையையும், சாச்வதமான ஸ்த்ரீ தர்மத்தையும் பாதிப்பதாக இருக்கிறது. ஆனபடியால் வரதக்ஷிணை வாங்காமலிருப்பது நிரந்தர தர்மதானம் என்று சொல்லலாம்.

ஒரு பக்கம் ஆடம்பரக் கல்யாணம், இன்னொரு பக்கம் கல்யாணத்துக்கு பணமில்லை என்பதால் பெண்களை வேலைக்கு விடுவது, கடன்படுவது என்கிற மாதிரிக் கஷ்டம் ஏற்படவிட்டிப்பது கொஞ்சங்கூட நியாயமில்லை.

இதற்காகத்தான் சற்றுமுன் கன்யாதான ட்ரஸ்ட் என்று ஒன்றைச் சொல்லி, அதில் தங்கள் இன்ஷுரன்ஸ் mature ஆகும்போது பாதித்தொகை சேரும்படியாகப் பாலிஸி எடுத்துக் கொள்ளலாமென்று சொன்னேன். அந்தத் தொகையை ஒரு ஏழைப் பெண்ணைக் கூடியமட்டில் எந்த சின்ன வயஸில் கல்யாணம் செய்து கொடுக்க முடியுமோ அப்படிக் கொடுக்கிற பெற்றோர் அல்லது கார்டியனிடம் விவாஹச் செலவுக்காக ட்ரஸ்டிக்கள் கொடுப்பார்கள். Marriageable age (திருமணத்துக்குரிய வயது) என்று ஸர்க்கார் நிர்ணயம் செய்யும் வயசு வந்தபின்தான் வரனே தேட ஆரம்பிப்பது என்று வைத்துக்கொண்டால், வரன் திகையவே அதற்கப்புறம் ஒரு வருஷம், இரண்டு வருஷம் என்று ஆகிறது. இதற்குள்

அவள் வெறுமனே இருப்பானேன் என்று காலேஜில் படிக்க வைப்பதில், அவளுக்கு மேலே போஸ்ட் க்ராஜுவேட், அல்லது பிஹெச்.டி பண்ணின வரனாகத் தேடுவது, அதற்காக மேலும் ஒரு வருஷம், இரண்டு வருஷம் ஆவதற்குள் இவளைச் சும்மா அகத்தில் உட்கார்த்தி வைப்பானேன் என்று உத்யோகத்துக்கு அனுப்புவது;அதனால் அந்த பிஹெச்.டிக்காரன் இவளுக்கு மேலே பெரிய ஆபீஸராகவும் இருக்க வேண்டுமென்று மறுபடியும் வரன் தேடுவது என்றிப்படிப் போவதில் 'கன்னிகை'என்பவள் மாமியே ஆகிவிடுகிறாள்! இப்படியெல்லாமில்லாமல் சட்டப்படி நிர்ணயிக்கப்படும் மினிமம் வயஸுக்கு இரண்டு வருஷம் முன்னாலிருந்தே வரன்தேட ஆரம்பித்தால் அந்த லிமிட்டைப் பெண் க்ராஸ் பண்ணினவுடனேயாவது கல்யாணத்தைச் செய்து விடலாம்.

ரொம்பவும் வயஸேறிப் போன பெண்ணுக்குக் கல்யாணமாவதே சிரமமாகிறது;இப்படி விடுவதால்தான் எனக்கு சொல்லவே கஷ்டமாயிருக்கிறது ... இந்த தேசத்திலே, நடு ஸபையிலே, ஆசார்யபீடம் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கும் நான் சொல்லவா என்று இருக்கிறது ... delinquent, வழுக்கி விழுந்தவா, சறுக்கி விழுந்தவா என்று என்னென்னவோ சொல்கிறார்களே, அப்படியெல்லாம் ஏற்பட்டு நம்முடைய புராதன தர்மத்துக்குப் பெரிய களங்கம் உண்டாகிறது. வசதியில்லாதவர்கள் முடிந்தமட்டும் ஸரியான வயஸில் கல்யாணம் செய்வதற்காக grant, இன்ஷூரன்ஸ் என்றெல்லாம் கொஞ்சம் கணிசமாகவே நான் கேட்கிறேன் என்று தோன்றலாம். ஆனால் இந்தச் செலவு செய்தால் மேலே சொன்னேனே, அப்படிப்பட்டவர்களுக்காக அநேக ஸேவாஸதனங்கள் வைத்துப் பராமரிக்கிற செலவு பெருமளவு குறைந்துவிடும் என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். தப்பு வழியிலே போகிறவர்களிடமும் தயவு காட்டத்தான் வேண்டும். பகவானுக்கே பதித பாவனன் என்பதுதான் பெருமை. ஆனாலும் ரொம்பவும் தட்டிக் கொடுத்து, ஸௌகர்யம் செய்து தந்து ஸேவா ஸதனங்களில் வைத்து போஷணை பண்ணுவது;நவயுக எழுத்தாளர்கள் என்று சொல்லிக்கொண்டு தப்பிப் போவதற்கே ஸைகாலஜி, ஹ்யூமனிஸம் என்கிற பெயர்களில் நியாயம் கற்பித்து எழுதுவது - இதனாலெல்லாம் தப்பு பண்ணுவதற்கே 'இன்ஸென்டிவ்'கொடுத்த மாதிரி இப்போது முறைகெட்டு நடக்கிறது. இதுகளுக்கு எதிராக இந்தக் கன்யாதன விஷயத்தில் மடத்தை ஆச்ரயித்தவர்கள் தீவிரமாக ஈடுபட வேண்டும்.

இதிலேயும் ஸரி, மற்ற பல விஷயங்களிலும் ஸரி, 'மிடில் க்ளாஸ்'(மத்யதர வகுப்பு) ஜனங்கள்தான் கஷ்டப்படுகிறார்கள். பணக்காரர்கள் கல்யாணத்தில் ஆடம்பரம் செய்தால் ஹானி அடைவதில்லை. அவர்கள் "நாங்கள் ஸிம்பிள் மாரேஜ் செய்கிறோம்"என்று ஆரம்பித்தாலும் ஸமூஹம் அவர்களைக் கொண்டாடுகிறது. ரொம்பவும் ஏழைக்கு எவனோ உதவி பண்ணிவிட்டுப் போகிறான். அவன் எத்தனை ஸிம்பிளாகப் பண்ணினாலும், "ஐயோ பாவம், அவனால் முடிந்தது அதுதான்"என்று லோகம் அநுதாபப்படுகிறது. மிடில் க்ளாஸ்காரன்தான் இரண்டுங்கெட்டானாக, ஆடம்பரம் செய்யவும் வசதியில்லாமல், ஸிம்பிளாகச் செய்தாலும் மற்றவர்களின் திட்டை வாங்கிக்கொண்டு அவஸ்தைப்படுகிறான். இவன் மட்டும், "திட்டினால் திட்டட்டும்"என்று பொய் அந்தஸ்து கொண்டாடிக் கொள்ளாமல், எளிமையாகத்தான் இருப்பது என்று ஆரம்பித்துவிட்டால் எல்லாம் ஸரியாய்விடும்.



## எளிய வாழ்க்கை

' நாம் எப்படி வாழ்கிறோமோ அப்படியே மற்றவர்களும் வாழ வேண்டும்'என்று நினைப்பது உத்தமமான எண்ணம். ஆனால் எண்ணம் உத்தமமாயிருந்து விட்டால் போதுமா?நாம் டாம்பீகமாக வாழ்க்கை நடத்திக் கொண்டு மற்றவர்களும் அப்படி இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் அது நடக்குமா?அப்படியே நடந்து, அமெரிக்கா மாதிரி எல்லாரும் 'லக்ஷுரியஸாக'வாழ முடிந்தாலும் அது நல்லதுதானா?லௌகிகமான ஸௌக்யங்கள் ஜாஸ்தியாக ஆக ஆத்மாபிவிருத்திக்கே வழியில்லாமல்தானே ஆகியிருக்கிறது எத்தனை போட்டாலும் த்ருப்தியில்லாமல் கபளீகரம் பண்ணுகிற நெருப்பு மாதிரித்தான் இந்த ஆசை என்பது. அது எவ்வளவு ஸௌகர்யம் இருந்தாலும் த்ருப்திப்படாமல் இன்னும் புதிசு புதிசாக

ஸௌக்ய ஸாதனங்களைத் தேடிக் கொண்டுதான் இருக்கும். அத்ருப்தி, குற்றங்கள் இத்யாதியைத்தான் அமெரிக்காவில் பார்க்கிறோம். ஸௌக்ய ஸாதனங்கள் என்று நினைக்கிறவைகளை விட்டால்தான் சாந்தி கிடைக்கும் என்று அங்கே புத்திசாலிகளாக இருக்கப்பட்டவர்கள் புரிந்துகொண்டுதான் த்யானம், யோகம், பஜனை என்று கிளம்பியிருக்கிறார்கள்.

மநுஷ்யனின் ஆத்மாபிவிருத்திக்கு ப்ரதிகூலமாக வெறும் லௌகிக ரீதியில் செய்கிற எந்த உபகாரமும் உபகாரமேயில்லை, அபகாரம்தான். எத்தனைக்கெத்தனை எளிமையாக வாழ்கிறோமோ அத்தனைக்கத்தனை ஆத்க்ஷேமம். ஆனதால் மற்றவர்கள் எளிய வாழ்க்கையில் இருக்கும்படியாகப் பண்ணுவதுதான் நிஜமான உபகாரம். இதை எப்படிப் பண்ணுவது?நாம் டாம்பீகமாக வாழ்ந்து கொண்டு அவர்களுக்கு உபதேசம் செய்தால் நடக்குமா?ஆகையால் நாமே எளிமையாக வாழ்ந்துகாட்ட வேண்டும். அதாவது, 'நாம் எப்படி வாழ்கிறோமோ, அப்படியே பிறரும் வாழவேண்டும்'என்று நினைப்பதற்கு முந்தி, நாம் எப்படி வாழவேண்டும் என்பதையும் தீர்மானம் பண்ணிக் கொள்ள வேண்டும். 'ஏழைகள் உள்பட மற்றவர்கள் எல்லோரும் எப்படி வாழ முடியுமோ, எப்படி வாழ்ந்தால்தான் ஆத்மாபிவிருத்திக்கு நல்லதோ, அப்படித்தான் நாமும் வாழவேண்டும்;அதாவது ரொம்ப ஸிம்பிளாக வாழவேண்டும்'என்று முதலில் தீர்மானம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

வயிறு ரொம்பச் சாப்பாடு, மானத்தைக் காப்பாற்றத் துணி, இருப்பதற்கு ஒரு குச்சு வீடு - இம்மாதிரியான அடிப்படை (basic) தேவைகள் எல்லோருக்கும் பூர்த்தியாக வேண்டும். இதற்குமேல் ஆசைக்குமேல் ஆசை, தேவைக்குமேல் தேவை என்று பறக்க வேண்டியதில்லை. அப்படி மற்றவர்களைப் பறக்காமல் இருக்கச் செய்வதற்காக நாமும் எளிமையாக வாழவேண்டும்.



## உற்றமும் சுற்றமும்

ஏழையோ, பணக்காரனோ எல்லார் குடும்பத்திலும் கல்யாணம் மாதிரியான சுப காரியங்கள், சாவு மாதிரியான அசுப காரியங்கள் வருகின்றன. இவற்றுக்காக எவனும் கடன்படுகிற மாதிரி நாம் விட்டால் அது நமக்குப் பெரிய தோஷம். அவரவரும் தன்னாலானதை ஐந்தோ, பத்தோ ஏழைப்பட்ட பந்துக்களின் சுபாசுப கார்யங்களுக்கு உதவ வேண்டியது ஒரு பெரிய கடமை. இதை முன்காலங்களிலெல்லாம் ஸஹஜமாகச் செய்து வந்தார்கள். 'பரோபகாரம்'என்று யாரோ மூன்றாம் மனிதர்களுக்குச் செய்வதற்கு முன்னால், 'பந்துத்வ'த்தோடு நம்முடைய ஏழைப்பட்ட உறவினர்களுக்கு உதவி செய்ய வேண்டும். இரண்டு தலைமுறைக்கு முந்தி இதைச் சொல்ல வேண்டிய அவச்யமே இருக்கவில்லை.

அப்போது 'கிழவர் பராமரிப்பு இல்லம்''விதவை விடுதி'என்றெல்லாம் வைக்க வேண்டிய அவச்யமே இல்லாதிருந்ததற்கு என்ன காரணம்?பந்துக்களே இவர்களைப் பராமரித்து வந்ததுதான். அநேகமாக எல்லா வீடுகளிலும் ஒரு அத்தைப் பாட்டி, மூன்று தலைமுறை விட்டு ஒரு மாமா தாத்தா என்கிற மாதிரி கிழங்கள் இருக்கும்!தற்காலத்தில் ரொம்பவும் பணக்காரர்களும்கூட வெறும் 'ஷோ'வாக பார்ட்டியும் ஃபீஸ்டும் கொடுக்கிறார்கள் அல்லது பேப்பரில் போடுகிற மாதிரி டொனேஷன் கொடுக்கிறார்கள்;ஆனால் பந்துத்வத்தோடு தங்கள் குடும்பத்திலேயே வசதி இல்லாதவர்களை ஸம்ரக்ஷிப்பது என்பது இப்போது அநேகமாகப் போயே போய்விட்டது.

அவிபக்த குடும்பமுறை (Joint-family system) போனபின் அண்ணன் தம்பி என்பதே போய்விட்டது. முன்பெல்லாம் இப்படி ஜாயின்ட்-ஃபாமிலியாக இருக்கும்போது, தாயார்-தகப்பனார், சிற்றப்பா பெரியப்பாமார்கள், அவர்களுடைய பத்னிகள், பிள்ளைகள், மாட்டுப்பெண்கள், பேரக்குழந்தைகள் என்று ஒரு வீட்டிலேயே 20, 25 பேர் இருப்பார்கள். இவ்வளவு பேர் இருக்கிறபோது, அநாதரவான தூர பந்துக்கள் நாலைந்து பேரைக் கூட வைத்துக்கொண்டு சோறு போடுவது ஒரு பாரமாகவே தெரியவில்லை. இப்போதோ

அவனவனும் பெண்டாட்டியோடு கத்திரித்துக்கொண்டு தனிக்குடித்தனம் என்று போவதால் கூட ஒருத்தரை வைத்துக்கொள்வது என்றால்கூடச் சுமையாகத் தெரிகிறது. எத்தனையோ ஆயிரம், பதினாயிரம் வருஷங்களாக இருந்து வந்த ஏற்பாடுகள் இந்த இரண்டு, மூன்று தலைமுறைகளில் வீணாகப்போய், இங்கிலீஷ் ஃபாஷன் வந்ததில், உயர்ந்த தர்மங்கள் எல்லாம் நசித்துப் போய்விட்டன.

முதலில் ஏழையான பந்துக்களைக் கவனிக்க வேண்டும். சுபாசுப கார்யங்களுக்கு நாம் செலவழித்துக்கொண்டு நேரில் போகவேண்டும் என்பது கூட இல்லை. இந்தச் செலவையும் சேர்த்து அந்த வசதி இல்லாத உறவுக்காரனுக்கு அனுப்பி வைத்தால் அவனுக்கு எத்தனையோ உதவியாக இருக்கும்.

கல்யாணத்தில் நாம் பண்ணுகிற ஆடம்பரங்களையெல்லாம், 'வேஸ்ட்'களையெல்லாம் குறைக்க வேண்டும். இப்போது ஒரு கல்யாணம் என்றால் அதற்கு அவச்யமான வைதிக தக்ஷிணைகளுக்குக் கொடுப்பதில்தான் சுஷ்கம் பிடிக்கிறோம்!பாட்டுக் கச்சேரி, டான்ஸ் கச்சேரி, நாயனம், பான்ட் ஊர்வலம் என்று வேண்டாத விஷயங்களுக்கு வாரிவிடுகிறோம்.



### வைதிக முறைகள் வளர உபகாரம்

கல்யாணம், உபநயனம் முதலியவற்றில் குறைவில்லாமல் தக்ஷிணை தருவது மட்டுமின்றிப் பொதுவாகவே வைதிகர்களுக்கு உபகாரம் செய்கிற எண்ணம் வளர வேண்டும். இது இல்லாததால்தான் அடுத்த தலைமுறைக்கு வைதிக கார்யம் செய்து வைக்கவே ஆள் கிடைக்காத மாதிரிச் செய்திருக்கிறோம். வேத ஸம்பந்தமான கார்யங்கள் லோகத்தில் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது இருந்து கொண்டிருக்கும்படி பண்ணுவதைவிட ஜன ஸமூஹத்துக்குப் பெரிய பரோபகாரம் எதுவும் இல்லை. இப்போது விநோபா 'பூதான்'என்று சொல்வதற்கு முன்னோடி பழைய காலத்தில் ராஜாக்களும், பிரபுக்களும் வேத வித்துக்களுக்கு நிலம் மானியம் பண்ணினதுதான்.

பரம தரித்ரர்களும் சாஸ்தரப் பிரகாரம் சுபாசுபங்களைச் செய்ய நாம் உபகரிக்க வேண்டும். 'ஷோ'இல்லாமல் சாஸ்த்ரப்படி மட்டும் செய்வதற்கு நிறையச் செலவே இராது.

என் பரோபகார லிஸ்ட் நீண்டுக்கொண்டே வருகிறது. அதிலே ஒவ்வொரு 'லொகாலிடி'யிலும் பரம ஏழைகளும் சொற்ப வாடகையில் பெறுமாறு ஒரு கல்யாண மண்டபம், ஒரு அபர காரிய ஸ்தலம் (உத்ர க்ரியைகள் செய்யுமிடம்) ஏற்படுத்துவதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.



### நீத்தார் கடன்

திவஸம், தர்ப்பணம் முதலான பித்ரு காரியங்களும் பரோபகாரத்தைச் சேர்ந்தவைதான் என்று நிறையச் சொல்லியாயிற்று. சிராத்தம் முதலானவை பித்ருக்கள் எங்கே, எப்படிப்பட்ட ஜன்மா எடுத்திருந்தாலும் அங்கே அவர்களுக்கு த்ருப்தி உண்டாக்கும் என்று சொன்னேன்.

ஒருத்தர் செத்துப் போனவுடனேயே பித்ரு லோகம்போய் விடுவதில்லை;இன்னொரு ஜன்மா எடுத்து விடுவதில்லை;இறந்து போனவனின் ஜீவன் ஒரு வருஷம் பிரயாணம் பண்ணித்தான் பித்ரு ஸ்தானத்தை அடைகிறது. இதை நம் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிற மாதிரியே க்ரீக் மைதாலஜி முதலான மதாந்தரங்களிலும் சொல்லியிருக்கிறது. ஜீவன் வைதரணி நதியைக் கடந்து யம பட்டணம் போகவேண்டும் என்று நாம் சொல்கிற மாதிரியே அவர்களும் ஒரு நதியை (ஷிமீ ஹ்ஜ்) சொல்லி அதைத் தாண்டி மறுலோகத்துக்கு(Hades)

போக வேண்டும் என்கிறார்கள். நாம் சொல்கிற மாதிரியே யம பட்டணத்தில் இருக்கிற காவல் நாய்போல அவர்களும் ஒன்றை (Cerberus) சொல்கிறார்கள். ஒரு ஜீவன் பரலோகம் செல்வதற்குப் பிடிக்கிற இந்த ஒரு வருஷத்தில்தான் அதன் த்ருப்திக்காக மாஸா மாஸம் சில சடங்குகளைச் செய்வது. இம்மாதிரி பரலோக யாத்திரையில் வழிக்குணவு தருவதைக்கூட இதர மதங்களிலும் சொல்லியிருப்பதாகக் கேட்டிருக்கிறேன். என்று Viaticum கிறிஸ்துவர்கள் சொல்வது இதுதான் போலிருக்கிறது. பிள்ளை குட்டி இல்லாதவர்களுக்கும் நாம் கயை, பதரி போன்ற இடங்களில் பிண்டம் போடுவது போலவே, கிறிஸ்துவர்கள் All-Souls' Day என்று ஒரு நாளில் எல்லா ஆத்மாக்களின் த்ருப்திக்காகவும் வழிபாடு நடத்துகிறார்கள். லோகம் பூராவும் இப்படி ஒரு நம்பிக்கை, அபிப்ராயம் இருக்கிறது என்றால் அது ஸத்யமாகத்தான் இருக்க வேண்டும்.

பித்ரு காரியங்கள், 'உத்தரக்ரியை'என்ற பேரில் எல்லா ஜாதிக்காரர்களும் செய்யும் அபர காரியங்கள் ஆகியன யதோக்தமாக நடக்க ஸௌகர்யம் செய்து தரவேண்டும் இதிலே முதலில் வருவது ப்ரேத ஸம்ஸ்காரம். அதாவது இறந்து போனவரின் உடலை அவரவர் குலாசாரப்படி தஹனமோ, அடக்கமோ செய்வது. இது ரொம்பவும் அவச்யமான கர்மா.



**ப்ரேத ஸம்ஸ்காரம் : சரீரத்தின் சிறப்பு**

ஒரு கேள்வி தோன்றும், உடம்பை விட்டுப் போன ஜீவனின் த்ருப்திக்காக ச்ராத்தம் முதலானவை செய்வது பரோபகாரம் என்றால் ஸரிதான். ஆனால் ஜீவன் (உயிர்) போன இந்த வெறும் உடம்புக்கு எதற்கு ஸம்ஸ்காரம் என்று தோன்றலாம்.

"உயிரோடு இருக்கிறவர்களுக்கே உபகாரம் பண்ணமுடியாமலிருக்கிறது. செத்துப்போனபின் பிணத்துக்கு என்ன ஸேவை வேண்டிக் கிடக்கிறது?ஏதோ ஸம்பிரதாயம் என்று வந்தவிட்டதால், அதை விடுவதற்கு பயமாயிருப்பதால் அவாளவாள் வீட்டில் மரணம் நடந்தால் ப்ரேத ஸம்ஸ்காரம் பண்ணத்தான் வேண்டியிருக்கிறது. இது போதாதென்று, யாரோ அநாதை போய்விட்டானென்றால், அவன் உடம்பை முனிஸிபாலிடிக்காரர்கள் அடக்கம் செய்யப் போகும்போது, நாமெதற்கு வலுவிலே தடுத்து, 'ஸம்ஸ்காரம்'பண்ணுகிறேன் என்று இழுத்து விட்டுக்கொள்ள வேண்டும்? பிரேதமென்றாலே ஒரு பயம், கூச்சம் இருக்கிறது. இதில் ஸம்பந்தமில்லாததை எதற்காக நாமாக எடுத்துப்போட்டுக் கொள்ளவேண்டும்? உயிர்போன வெறும் கட்டையான உடம்புக்கு என்ன பரோபகாரம் வேண்டியிருக்கிறது?"என்று கேட்கலாம்.

சாஸ்திரங்களைக் கூர்ந்து பார்த்தால் ஒரு ஜீவன் சரீரத்தை விட்டுப் போய்விட்டாலும், அதன் அங்கங்களில் கண்ணில் ஸூர்யன், வாயில் அக்னி, கையில் இந்திரன் என்றெல்லாம்மிருக்கும் தேவாம்சங்கள் உடனே அதனதன் மூலஸ்தானத்துக்குப் போய்விடவில்லை என்று தெரிகிறது. பிரேத ஸம்ஸ்காரத்தின் மூலம்தான் அவற்றை அதனதன் ஸ்தானத்துக்கு அனுப்பி வைக்கிறோம். அபர மந்த்ரங்களைப் பார்த்தால் தெரியும்.

ஜீவாத்மா என்கிற புருஷன் பதினாறு கலை உள்ளவன் என்பார்கள். இதில் பதினைந்து கலைகள் மட்டுமே உயிராக இருப்பது என்றும், உடம்பும் ஒரு கலை என்றும், எனவே உயிர் போன பின்னும் ஒரு கலை உள்ள அந்த உடலை ஈஸ்வரார்ப்பணமாக்கவே பிரேத ஸம்ஸ்காரம் தேவைப்படுகிறது என்றும் ஒரு அபிப்ராயம் உண்டு.

சாஸ்த்ரங்களில் தஹனம் பண்ணுவதை 'அந்த்யேஷ்டி'- அந்திய இஷ்டி - அதாவது 'இறுதியான வேள்வி'என்றே ரொம்பவும் உயர்த்திச் சொல்லியிருக்கிறது. கர்ப்பம் தரிப்பிலிருந்து ஒரு ஜீவனை ஒவ்வொரு பருவத்திலும் எப்படி சுத்தி பண்ண வேண்டும் என்பதற்காக சாஸ்த்ரங்களில் நாற்பது ஸம்ஸ்காரங்களைச் சொல்லியிருக்கிறது*1. 'ஸம்ஸ்காரம்'என்றால் 'நன்றாக ஆக்குவது'என்று அர்த்தம். ('நன்றாக ஆக்கப்பட்ட'பாஷைதான் 'ஸம்ஸ்க்ருதம்'.) உபநயனம், விவாஹம் ஆகிய எல்லாமே ஜீவனை அந்தந்த நிலையில் பக்குவப்படுத்துவதற்காக ஏற்பட்ட ஸம்ஸ்காரங்கள்தான். வாழ்நாள் கர்மா முழுவதையும்

வேள்வியாக ஈஸ்வரனிடம் ஆஹுதி செய்துகொண்டே இருக்கிற ரீதியில் இந்த நாற்பது ஸம்ஸ்காரங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்படி வாழ்க்கையையே யாகமாகச் செய்த ஒருத்தனுக்கு, வாழ்க்கை முடிந்தபிறகு கடைசியில் மற்றவர்கள் செய்கிற யாகம்தான் - அதாவது அந்திய இஷ்டியே ப்ரேத ஸம்ஸ்காரமாகும். எந்த உடம்பை வைத்துக்கொண்டு பாக்கி யஜ்ஞங்களை ஒருத்தன் பண்ணினானோ, அந்த உடம்பையே சிதாக்னி (சிதைத் தீ)யில் ஹோமம் பண்ணிவிடுவதுதான் இது. ப்ரேத ஸம்ஸ்கார மந்த்ரங்களில் அப்படித்தான் சொல்லியிருக்கிறது. ஹோமத்துக்குரிய மற்ற வஸ்துக்களை நெய்யினால் சுத்தி செய்து அக்னியில் போடுகிற மாதிரித்தான் ப்ரேதத்தையும் சுத்தம் பண்ணி, தஹனம் செய்யச் சொல்லியிருக்கிறது. உடம்பு ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது. மண்ணில் அடக்கம் பண்ணுவதானாலும் ஈஸ்வரார்ப்பணமே ஆகிறது.

இதைப்பற்றி இன்னும் கொஞ்சம் சொல்கிறேன்.

'தேஹம் ரொம்ப இழிவானது. இதிலிருந்து விடுபடவேண்டும்'என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேஹம் என்பது ஒரு மஹா அத்புதமான மெஷினாக இருக்கிறது. ஒரே மெஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுஸான கார்யத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும், வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா - இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன்தான் இருக்கிறது என்றாலும், கண்ணும், காதும் கிட்டக்கிட்ட இருந்துங்கூட கண்ணால் கேட்க முடிவதில்லை;காதால் பார்க்க முடிவதில்லை!பக்கத்திலேயே வாய் என்று ஒன்று அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும் அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுஸாகக் காற்றைப் புரட்டி அழகாக கானம் செய்ய முடிகிறது. பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்றமாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன. இந்த அமைப்பு கொஞ்சம் வேறுவிதமாக இருந்தாலும் இப்போது நாம் பண்ணுகிற கார்யங்களைப் பண்ண முடியாது. அடி எடுத்து வைத்து மேலே போவதற்கு வசதியாகக் காலின் அமைப்பு இருக்கிறது. நடக்கிறபோது கூடியமட்டும் ஜீவராசிகள் நசுங்காதபடி, பூரான் மாதிரியானவற்றின் மேலேயே நாம் பாதத்தை வைத்தால்கூட அவை நெளிந்துகொண்டு ஓட வசதியாக உள்ளங்கால்களில் குழித்தாற்போன்ற ஏற்பாடு, சப்பணம் கூட்டி உட்கார வசதியாக முழங்காலில் எலும்பு நரம்புகளின் அமைப்பு - என்று இப்படி ஒவ்வொன்றைப் பார்த்தாலும் பராசக்தி எத்தனை ஸூக்ஷ்மமான கல்பனையோடு ஒரு சரீரத்தைப் பண்ணியிருக்கிறாள் என்று ஆச்சரியமாக இருக்கிறது!ஆஹாரத்தை ஜெரிக்க ஒரு அங்கம், ஜெரித்ததை ரத்தமாக்க ஒரு அங்கம். மூச்சுவிட ஒன்று, ரத்தத்தை 'பம்ப்'பண்ண ஒன்று-எல்லாவற்றுக்கும் மேலே ஸகல கார்யங்களையும் டைரக்ட் பண்ணி கன்ட்ரோல் பண்ணும் மூளை - என்றெல்லாம் விசித்ர விசித்ரமாக பகவான் சரீரத்தைக் கல்பித்திருக்கிறான். சதை, ரத்தம், மஸில்ஸ், நரம்பு, எலும்பு என்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு 'பர்பஸ்'இருக்கிறது. எலும்புக்குள்ளேகூட மஜ்ஜை என்ற ஜீவஸத்து ஓடுவது ஒரு அதிசயம். மனித சரீரத்தில் இருக்கும் கோடிக்கணக்கான ஸெல்களில் ஒவ்வொன்றும் ஒரு அத்புத லோகம். இப்படித் தனித்தனியாக ஒவ்வொரு பாகமும் ஒரு அத்புதமான மெஷினாக இருப்பதோடு மட்டுமல்லாமல், எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக ஸஹாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மஹா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால், எவனோ லக்ஷத்தில் ஒருவன் தேஹம் பொய், மனஸ் பொய் என்று புரிந்துகொள்ளும் ஞானியாக ஆனாலும், பாக்கி எல்லாரும் பகவான் தந்திருக்கிற இந்த அத்புதமான மெஷினை வைத்துக்கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறோம். இந்த தர்ம வாழ்க்கையிலிருந்துதான் அப்புறம் ஞானத்துக்குப்போக வேண்டியவர்களாயிருக்கிறோம்.

யோசித்துப்பார்த்தால், சரீரத்தை ஏன் மட்டம் என்று திட்டவேண்டும்?அது என்ன பண்ணுகிறது?அது மனஸின் கருவி மட்டும்தானே?கையையும் காலையும் கண்ணையும் வாயையும் மனஸ் நல்லபடி ஏவினால் சரீரம் நல்லதே செய்யும். கை பரோபகாரம் பண்ணும்;அல்லது அர்ச்சனை பண்ணும். கால் கோயிலுக்குப் போகும். கண் ஸ்வாமி தர்சனம் பண்ணும், வாய் ஸ்தோத்ரம் சொல்லும், அல்லது எல்லோருக்கும் ப்ரிய வசனம் சொல்லும். ஆனதால் 'நிஷித்தம்'என்று சரீரத்தைக் திட்டுவதுகூட தப்புத்தான். "தர்மத்தைச்

செய்ய சரீரம்தானே ஸாதனமாயிருக்கிறது?"- சரீரம் ஆத்யம் கலு தர்ம ஸாதனம் - என்று வசனமே இருக்கிறது. " தேஹோ தேவாலய : ப்ரோக்தா " - உள்ளே இருக்கிற பரமாத்மாவுக்கு இந்த உடம்பே ஆலயம் என்கிறோம். ' காயமே கோயிலாக ' என்று அப்பரும் சொன்னார். திருமூலரும் இப்படியே, "முன்னே உடம்பு ரொம்ப நிஷித்தம் என்று மட்டமாக நினைத்தேன். அப்புறம் அதற்குள்தான் ஈஸ்வரன் குடிகொண்டிருக்கிறான் என்று தெரிந்துகொண்டதும், உடம்பை ஓம்பலானேன்"என்று திருமந்திரத்தில் சொல்கிறார்*2.

ஆனாதல் இப்படிப்பட்ட அத்பதமான, பகவான் கொடுத்த மெஷினை விட்டு உயிர் போனதும் அதைக் கன்னாபின்னா என்று 'டிஸ்போஸ்'பண்ணக்கூடாதுதான். மஹா ச்மாசானவாஸியான பரமேஸ்வரனுக்குத்தான் அதை ஆஹுதி பண்ண வேண்டும். எவன் இந்த உடம்பைக் கொடுத்தானோ அவனுக்கே அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். உலகத்தில் எந்த தேசத்திலுமுள்ள காட்டுக்குடிகள் உள்பட எல்லோரும் ஏதோ ஒரு தினுஸில் இதைத்தெரிந்து கொண்டிருப்பதால்தான் எங்கே பார்த்தாலும் ப்ரேத ஸம்ஸ்காரம் என்பது ஒரு பெரிய ஸமயச் சடங்காக இருக்கிறது.

செத்துப்போனபின் ஒரு உடம்புக்குள் தேவதாம்சங்கள் ஒட்டிக்கொண்டிருப்பதாக நம்பாவிட்டாலுங்கூட ஒன்றை நினைத்துப் பார்க்க வேண்டும். இத்தனை நாள் அதற்குள் இருந்த ஜீவன் ஈஸ்வர சைதன்யத்தின் ஒரு திவலையல்லவா?எப்போதோ ஸ்வாமி விக்ரஹம் வைத்த புறை என்றால்கூட, இப்போதும் அதில் கண்ட கண்டதுகளை வைக்காமல் ஒரு அகலை ஏற்றிவைக்க வேண்டும் என்று தானே தோன்றுகிறது?அப்படியிருக்க ஈஸ்வர சைதன்யத்தின் அம்சம் இருந்த body-ஐ மரியாதை தந்து மந்த்ரபூர்வமாகதானே dispose செய்ய வேண்டும்?

ஒருத்தன் தன்னுடைய சரீரத்தால் அநேக நன்மைகளைச் செய்தானென்றால், உயிர்போன பின்னும் அந்த சரீரத்துக்கு மரியாதை பண்ணத்தான் வேண்டும். நாஸ்திகர்கள்கூடத் தங்கள் தலைவர்களின் ம்ருத சரீரத்துக்கு மலர்வளையம் வைக்கிறார்களே!ஒருவன் சரீரத்தைக் கெட்டதிற்கே பயன்படுத்தினான் என்றாலும்கூட, அவனுக்கு அந்த சரீரத்தை இயக்கியது ஈஸ்வர சக்தி என்று தெரியாவிட்டாலும் நமக்குத் தெரிவதால் அதற்குரிய ஸம்ஸ்கார மரியாதையைப் பண்ணத்தான் வேண்டும். "அவனாக இந்த சரீரத்தைக் கொண்டு ஈஸ்வரார்ப்பணமாக எந்த நல்லதும் செய்யாமல் போய்விட்டாலும், அதற்கும் ஈடாக, ப்ராயச்சித்தமாக இப்போது நாமாவது இதையே ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்வோம்"என்ற எண்ணத்துடன் ஸம்ஸ்காரம் பண்ணவேண்டும்.

சைவ ஸித்தாந்தத்தில் ஈஸ்வரன்தான் ஜீவனுக்குத் தநு, கரண, புவன, போகங்களைத் தருகிறான் என்பார்கள். லோகத்தை (புவனத்தை) படைத்து, அதிலுள்ள போகங்களை அநுபவிப்பதற்காகவே மநுஷ்ய சரீரத்தை (தநுவை) ஸ்ருஷ்டிசெய்து அதில் கரணங்கள் என்ற இந்திரியங்களை அவன் வைத்திருக்கிறான். கர்மாவைத் தீர்த்துக்கொள்ளும்வரை போகங்களை அநுபவித்துத்தான் ஆகவேண்டும் என்று இப்படி வைத்திருக்கிறான். எனவே அவனுடைய பிரஸாதமான தநுவைக் கரணங்கள் ஓய்ந்த பிற்பாடும் அதற்குரிய கௌரவத்தைக் கொடுத்து ஸம்ஸ்கரித்துத்தான் அவனிடம் வேள்விப்பொருளாகத் திரும்பக்கொடுக்க வேண்டும்.

இதிலே ஒரு வித்யாஸம். மற்ற வேள்விகளை, இஷ்டிகளை ஒரு ஜீவன், தானே பண்ணுகிறான். ஆனால் செத்துப்போன பிறகு உடம்பை பகவானுக்குக் கொடுக்கிற இந்த அந்திய 'இஷ்டி'யை அவன் பண்ணமுடியாது. மற்ற ஸம்ஸ்காரங்களைப் பண்ணுவதும், பண்ணாததும், அதனால் புண்ய பாபங்களை ஸம்பாதிப்பதும் அந்தந்த ஜீவனுடைய கார்யந்தான். இவற்றில் மற்றவர்களுக்கு பொறுப்பு இல்லை. ஆனால் ப்ரேத ஸம்ஸ்காரம் மற்றவர்களே செய்ய வேண்டியது அல்லவா?அதனால் அதில் பொறுப்பு மற்றவர்களுக்குத்தான். எனவே இதை ஸரியாகச் செய்யாவிட்டால் நமக்குத்தான் பாபம்.

'உயிரோடு இருக்கிறவரையில் உபகாரம் பண்ண வேண்டியதுதான்;போன உயிரும் வேறு எங்கோ இருக்குமாதலால் அதற்கு ச்ராத்தாதிகள் பண்ண வேண்டியதுதான்;ஆனால் உயிர்போன உடலுக்கு எதற்கு ஸம்ஸ்காரம்?'என்று முதலில் கேட்டுக்கொண்டோம். இப்போது அலசிப் பார்த்துக் கொண்டதிலோ பகவானின் பராமத்புத ஸ்ருஷ்டியான சரீரம் உயிரற்ற பிறகுங்கூட அதற்கான மரியாதையைப் பெற்று பகவானிடமே சேர்பிப்பிக்கப்பட

வேண்டும்;உடம்புக்குச் செய்கிற இந்த ஸம்ஸ்காரந்தான் முழுக்க நம் பொறுப்பில் இருப்பது;அதனால் இதைச் செய்யாவிட்டாலே நமக்குப் பெரிய தோஷம் என்று தெரிகிறது!



## அநாதைப் பிரேதம்

உறவுக்காரர்கள் என்றால் அபர கார்யம் ஏதோ ஒரு தினுஸில் செய்துவிடுகிறோம். செய்வதில் குறையிருக்கலாம். ஆனால் அடியோடு செய்யாமலே விடுவதில்லை அமாவாஸைத் தர்ப்பணம், ச்ராத்தம் முதலியவற்றை நிறுத்திவிட்டவர்களாக இருந்தாலும், ஹிந்துக்களாகப் பிறந்தவர்களில் நாஸ்திகர்களைத் தவிர எவரும் பந்துக்களுக்கு ப்ரேத ஸம்ஸ்காரம் (அவரவர் குலாசாரப்படி தஹனமோ, அடக்கமோ) செய்ய மட்டும் தவறுவதில்லை.

ஸரி, உறவுக்காரர்கள் இல்லாமல் நிராதரவாக இருக்கிறவர்களின், இறக்கிறவர்களின் கதி என்ன?அநாதைகள் செத்துப்போகும்போது, அவர்களுடைய சரீரம் என்கிற பகவான் படைத்த மெஷினின் கதி என்னவாகிறது?ஸமூஹமேதான் இவர்களுடைய ப்ரேத ஸம்ஸ்காரத்துக்கு ஏற்பாடு பண்ணவேண்டும் என்பது சாஸ்த்ரம்.

இவ்விஷயத்தில் நம் ஹிந்து மதத்தின் அவல நிலைமை எனக்கு வேதனையாக இருக்கிறது. இப்போது நான் சொல்லிச் சொல்லிக் கொஞ்சம் வேதனை தணியும்படியான ஏற்பாடுகள் அங்கங்கே நடந்தாலும், இது போதாது. முன்னெல்லாம் எனக்கு இன்னமும் ரொம்ப வேதனையாக இருந்திருக்கிறது. அப்போதெல்லாம் ஆஸ்பத்திரியிலோ, ஜெயிலிலோ அல்லது நடுத்தெரு ஒன்றிலோ ஒரு ஹிந்து அநாதை செத்துப்போனான் என்றால், எடுத்து ஸம்ஸ்காரம் செய்ய எந்த ஏற்பாடும் இல்லாமல் இருந்தது. இப்போதுகூட அநேக ஊர்களில் இப்படித்தான் இருக்கிறது. ஆஸ்பத்திரிக்காரர்களே போஸ்ட் மார்டம் பண்ணி, ஆராய்ச்சிக்காகப் பண்ண வேண்டியதைப் பண்ணிப் புதைத்துவிடுவது, முனிஸிபாலிடி அல்லது பஞ்சாயத்துக்காரர்கள் கொண்டுபோய்ப் புதைத்துவிடுவது என்றுதான் நடந்துவருகிறது. சாஸ்த்ர ப்ரகாரமான ஸம்ஸ்கார மில்லாமல் இப்படி ஒரு சரீரத்தை விடுவது நம் ஸமூஹத்துக்கே களங்கம், பாபம்.

இதர மதஸ்தர்கள் இந்த விஷயத்தில் தக்க ஏற்பாடுகள் பண்ணியிருக்கிறார்கள். அவர்களுடைய சாஸ்த்ரப்படி பகவானிடம் ஒரு சரீரத்தை ஒப்பிக்காமல் விடுகிற தோஷம் அந்த ஸமூஹங்களுக்கு வருவதேயில்லை.



## ஹிந்து ஸமூஹத்தின் தோஷம்

எந்த கட்டுப்பாடும் இல்லாத ஹிந்து ஸமூஹந்தான் இந்தப்பெரிய தோஷத்துக்குப் பாத்திரமாகிக் கொண்டிருக்கிறது. மற்ற மதஸ்தருக்கு சக்தி வாய்ந்த ஆர்கனைஸேஷன்கள் இருக்கிறமாதிரி நம் ஸமூஹத்தை கவனிக்க யார் இருக்கிறார்கள்?மடம் என்று வைத்துக் கொண்டு உங்கள் பணத்தையெல்லாம் வாங்கிக்கொண்டு, குரு ஸ்தானம் கொண்டாடிக் கொண்டிருக்கிற என்னால்தான் என்ன ப்ரயோஜனம்?ஆஸேது ஹிமாசலம், இந்த தேசத்தில் எங்கே ஒரு அநாதை ஹிந்து செத்துப்போனாலும் அவன் சரீரத்தை சாஸ்த்ரப்படி ஸம்ஸ்காரம் பண்ணுவதற்கு ஒரு ஏற்பாடு செய்ய எனக்குக் கையாலாகவில்லை. ஆனாலும், இதில் குரு ஸ்தானம் என்ற பெத்த பேர் எனக்கு இருப்பதால், பொறுப்பு எனக்குத்தான் ஜாஸ்தி என்றாவது தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறேன். என்னால் முடிந்தது, நம் ஸமூஹத்தின் நிலைமை இப்படி இருக்கிறதே என்று நிஜமாக துக்கப்படுகிறேன். என் வார்த்தையைக் கேட்கக்கூடியவர்கள் என்று தோன்றுகிற உங்களிடம் என்னால்

முடிந்தமட்டும் சொல்கிறேன்.

நீங்கள் பாடம் பண்ணினால், அது உங்களைத் திருத்தாமலே 'குரு'என்று பேர் மட்டும் வைத்துக் கொண்டிருக்கிற என்னைத்தான் சேரும். எனக்கு நீங்கள் நமஸ்காரம் பண்ணுகிறீர்கள் அல்லவா?அதனால் உங்கள் பாபத்தைப் போக்குகிற பொறுப்பையும் என்னிடந்தான் ஒப்படைக்கிறீர்கள்.

'அநாதை ப்ரேதம்'ஒரு பக்கம் இருக்கட்டும் ஹிந்து அநாதையாக இருக்கிற இப்போது, இந்த ஸமூஹத்தை நாதனுள்ளதாக்கி, அது சாஸ்த்ரப்படி புனிதமாக விளங்கும்படிப் பண்ணவேண்டிய கடமையை நான்தான் கண்ணும் கருத்துமாக ஆற்றியாக வேண்டும்.

இந்த அநாதை ப்ரேத ஸம்ஸ்காரத்துக்காகத்தான் ஒவ்வோர் ஊரிலும் 'ஹிந்துமத ஜீவாத்ம கைங்கர்ய ஸங்கம்'என்று ஆரம்பிக்கச் சொல்லி வந்தேன். அநேக ஊர்களில் அப்படி ஏற்பாடு பண்ணி நன்றாக உருவாகியும் இருக்கிறது. முக்யமாக கும்பகோணத்தில் இந்த ஸங்கம் ரொம்பவும் நன்றாக நடந்து வருகிறது. ஆஸ்பத்திரிக்காரர்களும் முனிஸிபாலிடிகாரர்களும், ஜெயில் அதிகாரிகளுமே இந்த ஸங்கத்துகாரர்களைக் கூப்பிட்டுத் தங்களிடம் சேரும் அநாதை ப்ரேதத்தை ஒப்பிக்கிற அளவுக்கு அங்கே இந்த உத்தமமான தொண்டு வேர் பிடித்துவிட்டது.

இதற்காகத் தனி ஸங்கம் இல்லாவிட்டாலும், அந்தந்த ஊர் பஜனை கோஷ்டிகளே வாரவழிபாடும், மற்ற பொதுநலப்பணிகளும் பண்ணுவதோடு அநாதை ப்ரேத ஸம்ஸ்காரத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். நூறோடு நூற்றியொன்று என்று இல்லாமல், தாங்கள் செய்கிற மற்ற எல்லாப் பணிகளையும்விட இதவே உத்க்ருஷ்டமானது என்ற உணர்வோடு செய்ய வேண்டும்.



## இது தான் அஸ்வமேதம்

பரோபகாரத்தைப் பற்றி லெக்சர் அடிக்க ஆரம்பித்தபோது, 'நம் எல்லோராலும் அஸ்வமேத யாகம் பண்ணமுடியுமா?'என்று ஒரு கேள்வி கேட்டேன். அப்புறம் 'எதற்காக அஸ்வமேத ம்?'என்று கேட்டேன். " ஹயமேத ஸமர்ச்சிதா " - "அஸ்வமேதத்தால் விசேஷமாக வழிபடப்படுபவள்"என்று அம்பாளுக்கு ஒரு பெயர் இருக்கிறது. ஆன அம்பிகையின் பூர்ண அநுக்ரஹத்தைப் பெறுவதற்காகவே அஸ்வமேதம் செய்யவேண்டும் என்று பதில் சொன்னேன்.ஆனால் இந்தக் கலிகாலத்தில், ரொம்பவும் நியமங்கள் தேவைப்படும் அஸ்வமேதம் செய்வது அஸாத்யமாயிற்றே, இதற்கு என்ன பண்ணவது என்று கேட்டேன். பரோபகாரங்களில் ஒன்றை பண்ணினால் அதுவே அஸ்வமேதத்துக்கு ஸமானம் என்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது என்றும் ஆகையால் இந்தப் பரோபகாரத்தைப் பண்ணிவிட்டால் நாம் அம்பாளின் பூர்ணாநுக்ரஹத்தைப் பெற்றுவிட முடியும் என்று இதற்கு பதில் சொன்னேன். அப்புறம் பரோபகாரங்கள், ஜீவகாருண்யப் பணிகள் பலவற்றைப் பற்றிக் கதை அளந்துகொண்டே போனேன். ஆனால் இதுவரை அஸ்வமேதத்துக்கு ஸமமான பலனைத் தருகிற அந்த ஒரு பணியைச் சொல்லவில்லை. மற்ற எல்லாவற்றையும்விட உயர்ந்ததான அந்தப் பணி எல்லாவற்றையும்விட உயர்ந்ததான அந்தப் பணி என்னவென்றால் அதுதான் அநாதை ப்ரேத ஸம்ஸ்காரம்.

அநாத ப்ரேத ஸம்ஸ்காராத்

அஸ்வமேத பலம் லபேத்

என்பது சாஸ்த்ர வசனம்.

பர-உபகாரமாக, செத்துப்போன இன்னொரு ஜீவனுக்கு இதனால் உதவி பண்ணும்போதே, நமக்குப் பாபம் வராமல், கடமையைச் செய்து, நமக்கும் உபகாரம் பண்ணிக்கொள்கிறோம்.

டாக்டர் ஒருத்தர் கேட்டார், "Unclaimed bodies ஆகச் சில அநாதைப் பிரேதங்கள் கிடைப்பதிலும் ஒரு உபகாரம் இருக்கிறது. இந்தமாதிரிப் பிணங்களைத்தான் நாங்கள் போஸ்ட்-மார்ட்டம் பண்ணி, பரிசோதனைக்காக உறுப்புக்களை எடுத்துக்கொள்ள முடிகிறது. மெடிகல் காலேஜ், மெடிகல் எக்ஸிபிஷன் முதலானவற்றில் anatomy(தேக இயல்)-ஐ விளக்க இந்தப் பிரேதங்கள்தான் உதவுகின்றன. இவற்றையும் உங்கள் ஜீவாத்ம கைங்கர்யக்காரர்கள் வாங்கிக்கொண்டு போய்விட்டால் மெடிகல் லயன்ஸ் அபிவிருத்தி என்ன ஆவது?"என்று கேட்டார். அப்படியானால் டாக்டர்கள் வேண்டுமானால் தாங்கள் போன பிற்பாடு தங்கள் சரீரத்தைப் போஸ்ட் மார்டத்துக்குக் கொடுத்துவிடலாம் என்று பதில் சொன்னேன். சாஸ்த்ரோக்தமாக இதில் கொஞ்சம் தோஷமிருந்தாலும், இதிலே ஒருத்தன் மனமறிந்து, மனப்பூர்வமாகச் செய்கிற தியாகம் இருப்பதால் தோஷ நிவ்ருத்தி என்று வைத்துக்கொள்ளலாம். அதோடுகூட, முன்னே, அவனவன் தன் தொழிலில் ஏற்படுகிற தோஷம் போக அந்தத் தொழிலாலேயே தியாக ரூபமாக உதவி செய்ய வேண்டுமென்றேனே, அதில் மேலும் ஒருபடியாக, தொழிலால் பிறருக்கு உபகரித்து மட்டுமில்லாமல், சாவிலும் தன் தொழிலுக்கு மூலமான வித்யைக்கே உபகரித்ததாகவும் இது இருக்கும்.

'இதர மதஸ்தர்கள் ஜெயிலிலும், ஆஸ்பத்திரியிலும், நடுத்தெருவிலும் ஸம்பவிக்கும் அநாதை மரணங்களில் ஒன்றுகூட விட்டுப்போகாமல், தங்கள் தங்கள் மதப்படி ஸம்ஸ்காரம் செய்கிறார்கள்;இப்படிப்பட்ட ஹிந்து ப்ரேதங்கள் மாத்திரம் பெரும்பாலும் ஸர்க்கார் சிப்பந்திகளாலேயே ஒருவிதமான சடங்கும் இல்லாமல் புதைக்கப்படுகின்றன'என்கிற பாபமும், அவமானமும் நம்மைச் சேராமலிருக்க இப்போதாவது எல்லா ஊர்களிலும் தகுந்த ஏற்பாடு பண்ணியாக வேண்டும்.



### ராமனும் கண்ணனும் காட்டிய வழி

தர்மத்தை நமக்கெல்லாம் நடத்திக்காட்ட வந்த ஸ்ரீராமசந்த்ரமூர்த்தியே இந்த ப்ரேத ஸம்ஸ்காரத்தை விசேஷமாகச் செய்து காட்டியிருக்கிறார். ஜடாயு மாதிரியான ஒரு பக்ஷிக்குக்கூட அவரே ஸம்ஸ்காரம் செய்திருக்கிறார். அதுமட்டுமில்லை, வாலியையும் பரம வைரியான ராவணனையுங்கூட அவர் வதைத்தவுடன் அங்கதனையும் விபீஷணனையும் கொண்டு அவர்களுக்கு ஒரு குறைவுமில்லாமல் தஹனம் பண்ணச் செய்திருக்கிறார். ஏனென்றால் அந்த சரீரங்களுக்குள் இருந்த மனஸ்தான் அவற்றை துஷ்டத்தனமாக நடத்திற்று. உயிரோடுகூட அந்த மனஸ் வெளியேறிய அப்புறம் ஸ்வயமாகக் கெடுதல் இல்லாத, பகவானுடைய அத்புத ஸ்ருஷ்டியான அந்த உடம்புகளுக்கும் உரிய மரியாதையைச் செய்வதில் ராமரே கண்ணும் கருத்துமாக இருந்து, யதோக்தமாக ஸம்ஸ்காரம் பண்ணுவித்திருக்கிறார். க்ருஷ்ண பரமாத்மாவும் கௌரவர்கள் உள்பட எல்லாருக்கும் குருக்ஷேத்ரத்தில் அந்திம ஸம்ஸ்காரம் பண்ணுவித்து, அப்புறம் த்ருதராஷ்ட்ரனையும் பாண்டவர்களையும் கங்காதீரத்துக்கு அழைத்துக் கொண்டு போய் தர்ப்பணாதிகள் செய்வித்திருக்கிறார்.

ஆனதால், அநாதை ப்ரேத ஸம்ஸ்கார விஷயத்தில் கவனக்குறைவாக இருப்பது நம்முடைய ஹிந்து ஸமூஹத்துக்கு உள்ள பெரிய தோஷம் - மன்னிக்க முடியாத தோஷம். இனிமேலாவது இதற்கு ஒரு ஏற்பாடு பண்ணிப் பிராயச்சித்தம் தேடிக்கொள்ள வேண்டும்.

அநாதையாக ஒருவன் செத்துப்போனதாகத் தெரிந்தால், அவன் என்ன ஜாதியாக இருந்தாலும், தீண்டாதவனாக இருந்தாலும், அவனுடைய குலாசாரப்படி, அவனுடைய குலத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்டு, யதோக்தமாக ஸம்ஸ்காரம் செய்வதற்குப் பொருளுதவி பண்ண வேண்டும். இதற்காகப் பலர் சேர்ந்து பணம் போட்டு மனஸாரப் பணி புரிய வேண்டும். ஏகதேசமாகச் செய்ய சக்தியுள்ள தனிகர்கள் இதைப் பெரிய தர்மம் என்று புரிந்துகொண்டு விசேஷமாக உதவி செய்ய வேண்டும். அநேக தர்ம ஸ்தாபனங்கள், ட்ரஸ்ட்டுகள் நம் ஹிந்து ஸமூஹத்தாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவர்களும்

அநாதை ப்ரேத ஸம்ஸ்காரம் உத்தமமான கைங்கர்யம் என்று 'ஸ்பெஷல் இன்டரெஸ்ட்'எடுத்துக்கொண்டு, இதற்காக தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டும்.

தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்)

**சிலரது கஷ்டம் பலருக்குப் பரீக்ஷை**

லோகத்தில் சிலபேர் ஏன் ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள் என்றால், மற்றவர்கள் அவர்களுக்குப் பரோபகாரம் செய்கிறார்களா என்று பார்ப்பதற்காகத்தான் ஈஸ்வரன் இப்படிப் பரீக்ஷை பண்ணுகிறான் என்று சொல்வதுண்டு. 'அவனவன் தன் கர்மாவுக்காகக் கஷ்டப்படுகிறான்;நாம் உதவி பண்ணினாலுங்கூட அவன் பலன் அடைய முடியாதபடி கர்மா குறுக்கே நிற்கலாம்'என்பதும் வாஸ்தவம்தான். ஆனால், நம் உபகாரத்தால் அவர் கர்மா தீருகிறதோ, தீரவில்லையோ, நம்மாலான ப்ரயாஸையை நாம் பண்ணுவதுதான் மநுஷ்ய தர்மம். ஒருத்தனைக் கர்மாவுக்காக தண்டிக்கிறபோதே ஈஸ்வரன் மற்றவர்களுடைய பரோபகார சித்தத்துக்கும் அதை ஒரு 'டெஸ்ட்'டாக வைக்கிறான் என்றுதான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் உபகாரம் பண்ணியும் அது அவனுக்கு ப்ரயோஜனமாகாவிட்டால்தான், கஷ்டம் என்பது அவன் கர்மாவுக்குத் தண்டனை என்று சொல்லலாம். அநேக ஸமயங்களில் பரோபகாரத்தினால் பிறத்தியார் கஷ்டத்தைப் போக்கவும் முடிகிறதே!இப்படியானால் என்ன அர்த்தம்?நாம் பரோபகாரம் பண்ணி அவன் கஷ்டத்தைப் போக்குகிறோமா என்று பகவான் 'டெஸ்ட்'பண்ணியதாகத்தானே அர்த்தம்?

இதே மாதிரிதான், தனி மனிதனுக்குக் கஷ்டம் வருகிறதுபோலவே, ஒரு ஜன ஸமுதாயத்துக்கே பஞ்சம், வெள்ளம், எரிமலை, பூகம்பம், தீவிபத்து முதலான உத்பாதங்கள் ஏற்படுவதிலும் மற்றவர்களுடைய பரோபகார சிந்தனைக்கு பகவான் வைக்கிற பரீக்ஷையும் சேர்ந்திருக்கும். இம்மாதிரி நிவாரணப் பணிகளைப்பற்றி நான் இதுவரை சொல்லவில்லை. விசேஷமாக இதைபற்றிச் சொல்லி வற்புறுத்த வேண்டியதுமில்லை. இப்படி ஒரு பெரிய கஷ்டம் பலபேருக்கு ஏற்பகிறது என்றால், யாரும் சொல்லாமலே பணத்தாலோ, சரீரத்தாலோ உதவிபண்ண வேண்டும். என்ற எண்ணம் அவரவர்க்கும் பொங்கிக்கொண்டு வரவேண்டும். ஸர்க்கார், ரெட் க்ராஸ், ராமக்ருஷ்ணா மிஷன் முதலானவர்களோடோ, அல்லது தாங்களாகவே ஸங்கமாகச் சேர்ந்தோ, அல்லது தனிப்பட்ட முறையிலோ, எப்படியானாலும் இந்த மாதிரியான calamity-களில் ஒவ்வொருவரும் பணிசெய்ய வேண்டியது அவசியம்*. தனி மனிதனின் கஷ்டத்துக்கு மூலகாரணம் அவனுடைய பூர்வ கர்மா என்கிறாற்போலவே, இப்படிப்பட்ட விபத்துக்களையும் Natural calamity", "இயற்கையின் சீற்றம்"என்று இந்த நாளில் எழுதினாலும், இதெல்லாம் பொதுவாக மநுஷ்ய ஸமூஹம் முழுதுமே பண்ணும் பாபத்துக்காக பகவான் தருகிற தண்டனைதான் என்று சாஸ்த்ரம் சொல்லும். தண்டனையாகப் பெற்று வருத்தப்பட்டுக்கொண்டேதான் அந்தப் பாபத்தை நாம் தீர்க்க வேண்டும் என்றில்லை. இம்மாதிரி ஸமயங்களில் நாம் பண்ணுகிற மனப்பூர்வமான கஷ்ட நிவாரணத் தொண்டாலும் பாபத்தில் பாக்கியிருப்பதைப் போக்கிக்கொண்டு விடலாம். இப்படித் தொண்டு செய்யாமல் கருங்கல் மாதிரி இருந்தால் அதுவே ஒரு பாபம். இன்றைக்கு ஜன ஸமூஹத்தின் பிரதிநிதியாக இன்னொருத்தன் வாங்கிக்கொண்ட தண்டனை, கல்மாதிரி இருக்கிற நமக்கே நாளைக்கு வரும்.

ஒருத்தனுடைய கஷ்டத்தில் இப்படி இன்னொருத்தனுக்கு டெஸ்ட்இருக்கிறது. அதிலே பாஸ் பண்ணினால் ப்ரைஸ் கிடைக்கும். சிலபேர் ரொம்பவும் பரிதாபகரமாக. கேட்பார் யாருமின்றி அநாதையாகச் சாவதிலேயே மற்றவர்களுக்கு ஒரு பரீக்ஷை வைக்கிறான் பகவான். "இவர்கள் தன்னால் படைக்கப்பட்ட அந்த அத்புதமான சரீர மெஷினை அதற்குள்ள மரியாதை கொடுத்து, ஸம்ஸ்காரம் பண்ணித் தன்னிடம் சேர்க்கிறார்களா?"என்று பரமேஸ்வரன் பார்க்கிறான். பரீக்ஷைக்குப் பரிசு என்னவென்றால் பரதேவதையின் கடாக்ஷம்.

அநாத ப்ரேத ஸம்ஸ்காராத்

அஸ்வமேத பலம் லபேத்

என்கிறபோது, ஓர் அநாதை ப்ரேதத்துக்கு ஸம்ஸ்காரம் பண்ணுவிக்கிறவனுக்கு ஈஸ்வரன் ஓர் அஸ்வமேதம் பண்ணினால் எவ்வளவு புண்ணியமோ அவ்வளவு புண்யத்தை ப்ரைஸாகக் கொடுத்துவிடுகிறார் என்று நேர் அர்த்தமானாலும் இந்த அஸ்வமேதமே அம்பாளுக்கு ஆராதனை என்று 'த்ரிசதி'சொல்லுவதால் அவளுடைய பரமகிருபையே பலனாகக் கிடைக்கிறது என்றும் அர்த்தமாகிறது.

நமக்கு வேண்டிய பெரிய ப்ரைஸ் ஸாக்ஷாத் அம்பாளின் அநுக்ரஹம்தான். அஸ்வமேத புண்யபலனாக தேவலோகத்துக்கோ ப்ரம்மலோகத்துக்கோ போய் நமக்கு ஒன்றும் ஆகவேண்டாம். அங்கெல்லாம் போனாலும் புண்யம் தீர்ந்த பின் - ரூபாய் செலவழிகிற மாதிரி, செலவழித்த பின் - பூலோகத்துக்குத் திரும்பி வந்துதான் ஆகவேண்டும். ஆனால் அம்பாளின் சரணார விந்தங்களுக்குப் போனோமானால் திரும்பவே வேண்டாம். நித்யானந்தம் என்ற சாஸ்வத ஸௌக்யம் அதுதான்.

அந்த அம்பாள் எப்படி இருக்கிறாள்?'த்ரிசதி'வாக்கியபடி ' ஹயமேத ஸமர்ச்சிதா ' வாக இருக்கிறாள். அதாவது அஸ்வமேதம் செய்தால் அதையே தனக்குப் பெரிய ஆராதனையாக எடுத்துக்கொண்டு அநுக்ரஹம் பண்ணுகிறவளாக இருக்கிறாள். நமக்குத்தான் ஸுலபமான அஸ்வமேதமாக அநாத ப்ரேத ஸம்ஸ்காரம் இருக்கிறதே!இதனால் கிடைக்கிற பலனை அம்பாளின் அநுக்ரஹமாக எக்ஸேசேஞ்ச் பண்ணிக்கொண்டால் அது ஒருநாளும் செலவழியாத புண்யக் கரன்ஸியாக, அக்ஷயமாக இருந்துகொண்டு நம்மை இந்த லோகத்துக்கு மறுபடியும் அனுப்பாமல் காப்பாற்றும். இன்னொருத்தனுக்குச் செய்கிற மரண ஸம்ஸ்காரமே நம்மை ஜனன மரணங்களிலிருந்து விடுவிக்கக் கை கொடுக்கும்.

ஆனதால், அநாத ப்ரேத ஸம்ஸ்காரத்தில் நாம் அலக்ஷ்யமாக இருக்கிறோமென்றால் நாம் அசடு என்று அர்த்தம். பரமாத்மா ரொம்ப ஸுலபமாக ஒரு பரீக்ஷை வைத்து அஸ்வமேத பலனை, அம்பாளின் ப்ரீதியை நாம் அடைவோமா என்று பார்க்கிறபோது, நாம் இதைக் கோட்டை விட்டுவிட்டு நின்றால் அசடு என்றுதானே அர்த்தம்?

ஆகையால் எந்த ஜாதியானாலும் அநாதை ப்ரேதங்களைப் பற்றி நமக்குத் தெரிய வந்தால், "இந்தக் கைங்கர்யம் நமக்குக் கிடைத்ததே!"என்று அதற்குரிய ஸம்ஸ்காரத்தைப் பண்ணுவித்து, ஒரு பெரிய அஸ்வமேத யாக பலனை அடையும் ஸந்தர்ப்பத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இனிமேல் ஒரு ஹிந்து ப்ரேதத்தை ராஜாங்க ஸேவகர்கள் ஒரு சடங்குமில்லாமல் புதைத்தார்கள் என்ற அபக்யாதி நமக்கு இருக்கக்கூடாது. செத்துப்போன உடம்புக்கு என்ன முக்யம் என்றில்லாமல், இந்த ஸம்ஸ்காரமே எல்லாப் பரோபகாரத்துக்கும் அஸ்திவாரம் என்ற உணர்வோடு இதிலே அக்கறை காட்ட வேண்டும்.

' ஹயமேத ஸமர்ச்சிதா ' என்று 'த்ரிசதி'யில் அம்பாளுக்குப் பெயர் இருப்பதுபோல் 'ஸஹஸ்ர நாம'த்தில் " வர்ணாச்ரம விதாயினீ " என்று ஒரு பேர் இருக்கிறது. இதன்படி அந்தந்த ஜீவனின் குலதர்மப்படி அதன் சரீரம் ஸம்ஸ்காரம் ஆகும்படி செய்தாலே அம்பாளின் ப்ரீதிக்குப் பாத்திரமாவோம். ஸ்ரீமாதாவின் க்ருபையால் அவளுடைய குழந்தைகளான எல்லா ஜாதி, வர்ண, குல, ஆச்ரமங்களைச் சேர்ந்த ஜீவகோடிகள் எல்லோருக்கும் பரஸ்பரம் உண்மையான ஸஹோதர மனப்பான்மை ஏற்பட்டு அதன் மூலம் உலகத்தில் அன்பும், பொருளும், அருளும் குறையாது வளரவேண்டும்.

# தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

*குழந்தை வழியே உலகப் பெற்றோரிடம்*

ஒரு சின்னக் குழந்தையானால் கூட, அது ரொம்பவும் பெரிய மநுஷ்யாள் விட்டுக் குழந்தையாயிருந்து விட்டால் அதனிடம் எல்லோரும் அன்பு காட்டிக் கொஞ்சுவார்கள். அதற்குப் பயப்படக்கூடச் செய்வார்கள். பழைய நாளில் 'ராஜாப்பயல்'என்று அன்போடும் பயத்தோடும் சொன்னார்கள் . அப்புறம் 'கலெக்டர் அகத்துப் பிள்ளையாக்கும்'என்று சொல்லி வந்தார்கள். இப்போது 'மந்திரி-எம். எல். ஏ. வீட்டுப் பிள்ளை'என்று சொல்கிறார்களோ என்னவோ? பெரிய மநுஷ்யாள் குழந்தை என்றால் அது ஏதாவது சண்டித்தனம் பண்ணினால்கூட, மற்ற குழந்தைகளை அதட்டுகிற மாதிரி அதட்டாமல் அது கேட்பதைக் கொடுத்து விடுவார்கள். ஏன் என்றால், இந்தக் குழந்தை போய், ரொம்பவும் செல்வாக்குள்ள அதன் தகப்பனாரிடம் ஒருத்தரைப் பற்றி ஏதாவது புகார் பண்ணிவிட்டால், அவ்வளவுதான், அந்த ஆசாமிக்கு இந்தத் தகப்பனர்காரரிடமிருந்து பெரிய உபத்ரவங்கள் வந்து சேரும் எவரும் தங்களையே திட்டினால் கூடப் பொறுத்துக் கொள்ள கூடும் போனால் போகிறதென்று விட்டுவிடலாம். ஆனால், காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்கிறார்களே, அப்படி ரொம்பவும் அருமையாக இருக்கப்பட்ட தங்கள் குழந்தையை யாராவது ஏதாவது சொல்லிவிட்டார்களானால் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிடும். இப்படி ஒரு பெரிய மநுஷ்யர் கோபித்துக்கொண்டு கிளம்பினால் ரொம்ப ஆபத்து அல்லவா?

அதனால்தான் " இது பெரிய இடத்துப் பிள்ளை அப்பா இதனிடம் வம்புக்குப் போகப்படாது" என்று சொல்வது.

இதற்கு நேர் எதிராக, ஒரு குழந்தையை மெச்சி விட்டால் அதன் தகப்பனாருக்கு அவரையே மெச்சுவதைவிட ஸந்தோஷமாய்விடும் உச்சி குளிர்ந்துவிடும். இப்படி ஒரு

பெரிய மநுஷ்யரை ப்ரீதி செய்து விட்டால் ஸுலபமாக அவரிடமிருந்து பெரிய பெரிய லாபங்களைப் பெற்றுவிடலாம். பெரியவர்களை நேராக த்ருப்தி செய்வது கஷ்டம். குழந்தைகளையோ ரொம்பவும் எளிதில் த்ருப்தி படுத்தி விடலாம். ஒரு சின்னச் சொப்பையோ சாக்லேட்டையோ காட்டிவிட்டால் போதும். இல்லாவிட்டால் ஏதோ கொஞ்சம் கோணங்கி விளையாட்டுக் காட்டினால் அதிலேயே ஒரு குழந்தைக்குக் குஷி பிறந்துவிடும். அந்தக் குழந்தையின் ஸந்தோத்தில் அதன் அப்பாவுக்கும் ஏக ஸந்தோஷம் உண்டாகிவிடும். தன் குழந்தையை ஸந்தோஷப்படுத்தினவருக்குத் தன்னாலன எல்லா நன்மையும் பண்ணிவிடுவார். அதாவது, ஸுலபத்தில் திருப்திப்படுத்த முடியாத ஒரு பெரியவரால் நமக்கு ஒரு காரியம் ஆகவேண்டுமானால் அதற்கு வழி ஈஸியாக த்ருப்தியாகிவிடும். அவருடைய குழந்தையை ஸந்தோஷப்படுத்துவதுதான்.

இதனால் என்ன ஏற்படுகிறது? நமக்கு எல்லாவிதமான நன்மைகளையும் ஒன்றுகூடப் பாக்கியில்லாமல் செய்வதற்கு சக்தி படைத்த பெரிய மநுஷ்யராக ஒருத்தர் இருந்து, அவருக்கு ஒரு குழந்தையும் இருந்து விட்டதானல் போதும், நமக்கு ஒரு கஷ்டமே இல்லை. அந்த குழந்தையைப் பிடித்து நாம் ஸுலபத்திலே குஷிப்படுத்தி விட்டாலே போதும், அந்த மஹா பெரிய மநுஷ்யரிடமிருந்து நாம் கொஞ்சங்கூட ச்ரமமேயில்லாமல் பெரிய பெரிய லாபங்களைப் பெற்றுவிடலாமென்று ஏற்படுகிறது.

இப்படியிருக்கூடிய மஹா பெரிய இடத்துப் பிள்ளையார் என்று பார்த்துக் கொண்டே போனால் ஊர்ப் பெரிய மநுஷ்யருக்கு மேலே ஜில்லாவின் பெரிய மநுஷ்யர், அவருக்கு மேலே மாகாணத்தின் (மாநிலத்தின்) பெரிய மநுஷ்யர் என்று போய்க் கொண்டேயிருக்கும். முடிவாக ஸமஸ்த லோகத்துக்கும் எவன் ராஜாவோ அந்தப் பரமேச்வரனிடம் போய் நிற்கும். ராஜராஜேச்வரி என்றே பெயரிருக்கிற அம்பாள் - ஈஸ்வரன் என்ற தம்பதிதான் எல்லாருக்கும் உச்சியில் இருப்பார்கள். அப்போது நாம் முடிவாக நிற்கும் " பெரிய இடத்துப் பிள்ளை " யார் என்று பார்த்தால், பிள்ளையார்தான் என்று தெரியும்.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

### பயத்தோடு, ப்ரியத்தோடு

ராஜாக்கள் ப்ரஸிடென்ட்கள் எல்லோருக்கும் மேலே த்ரிலோகங்களுக்கும் ராஜாவாக இருக்கப்பட்ட ஈசனுடைய குழந்தை அவர். மூத்த குழந்தை. மூத்தது ஸாது என்று வசனம். அதனால் இவரை த்ருப்தி செய்வது ரொம்பவும் ஸுலபம். அதற்காக இஷ்டப்படி இருந்துவிட முடியாது. நமக்கு ரொம்பவும் இடம் கொடுத்துப் போய்விடப் போகிறதேயென்றுதான் கம்பிரமான யானை ஸ்வருபமாயிருக்கிறர் அதனால் கொஞ்சம் ஜாக்கிரதையாகவுந்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் விக்னங்கள் பண்ணுவார் இவருடைய மஹா பெரிய தகப்பனார், தாயார் சொன்னேனே, அவர்களுக்கே விக்னம் பண்ணி, "உம் ஜாக்ரதை" என்று அதன் மூலம் நமக்கும் 'வார்ன்' பண்ணுகிறர்.

'சின்ன எசமான்' என்று ப்ருயத்தோடேயே கொஞ்சம் பயமும் சேர்த்து

இவரைப் பூஜை பண்ணிவிட்டால் அப்படியே ப்ரீதியாகி விடுவார். அதிலேயே பார்வதி பரமேச்வராளும் உச்சி குளிர்ந்து விடுவார்கள். இவருடைய மாதா பிதாக்களான அந்த அம்பிகையும் ஈச்வரனுந்தானே இத்தனை லோகங்களையும் , அவற்றில் உள்ள நம் போன்ற ஸமஸ்த ப்ராணிகளையும் ஸ்ருஷ்டித்து, ரக்ஷித்து வருகிற ஸர்வ சக்தர்கள்? அவர்களுடைய அநுக்ரஹத்தைப் பெற்று விட்டால் நாம் இஹம் பரம் இரண்டிலும் எந்த நன்மையும் பெற்றுவிடாலாம். ஆனால் அநேக நியமங்கள் உண்டு. அதையெல்லாம் நாம் க்ரமமாக அநுஸரிப்பது ச்ரமம்.'ஆசுதோஷி' , ' க்ஷப்ர ப்ரஸாதினி என்றெல்லாம் ('எளிதில் த்ருப்தியாகி அநுக்ரஹிக்கிறவர்கள்' என்று அர்த்தம் கொடுக்கும்) பெயர்கள் அவர்களுக்கு இருக்கிறதென்றாலும்

சிவன் கோயில், அம்பாள் கோயில் என்று போனால், இங்கேதான் நிற்கணும், இங்கேதான் நமஸ்காரம் பண்ணணும், இன்ன புஷ்பம், இன்ன நைவேத்யம்தான் அர்ப்பணம் பண்ணணும் என்றெல்லாம் எத்தனை கட்டுப்பாடு இருக்கிறது? ஸ்ரீ சக்ர பூஜையில் கொஞ்சம் தப்பு ஏற்பட்டுவிட்டால்கூட என்னென்னவோ (கெடுதல்) ஏற்பட்டுவிடுகிறது என்கிறார்கள் சிவ ஸொத்து குல நாசம் என்கிற மாதிரி வசனங்களை கேட்டாலே பயமாயிருக்கிறது.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

### எளிதில் கிடைப்பவர்

இப்படியெல்லாம் பயமாக, கஷ்டமாக இருப்பவைகளை எளிதாக ஆக்கித் தருவதற்குத்தான் நமக்குப் பிள்ளையார் இருக்கவே இருக்கிறார். எங்கே பார்த்தாலும் படர்ந்து கிடக்கும் அருகம்புல்லைப் பிய்த்துப் அவர்மேலே போட்டுவிட்டால் போதும். அதிலேயே த்ருப்தியாகி விடுவார். மநுஷ்யர்கள் எவரும் வைத்துக் கொள்ளாத பூ, அதனால் கடையில் விலைக்கு வராத பூ, செடியிலே யதேஷ்டமாகப் பூத்துக் கிடக்கிற அந்த எருக்கம்பூவில் நாலு, கைக்காசுக்குச் செலவில்லாமல் பறித்து வந்து பிள்ளையார் பாதத்தில் போட்டுவிட்டால் அப்படியே பரம ஸந்தோஷம் அடைந்து விடுவார். ஏதோ பிரப்பம் பழமோ, கொய்யாப் பழமோ, பரம ஏழைக்குக்கூட கிடைக்கக் கூடியது, அதைக் கண்ணில் காட்டினால் குளிர்ந்து போய்விடுவார். இன்னும் கொஞ்சம் வசதி இருந்தால் ஒரு தேங்காய் அர்ப்பணம் பண்ணலாம். அதைக்கூட மந்த்ரம், கிந்த்ரம் சொல்லி நைவேத்யமென்று பண்ண வேண்டுமென்பதில்லை. "சிதறு காய்" என்று அவருக்கு முன்னால் போட்டு உடைத்தாலே போதும். அந்தக் துண்டத்தை நாலு ஏழை குழந்தைகள் பொறுக்கித் தின்றுவிட்டால் அந்தக் குழந்தைகளின் ஸந்தோஷத்திலேயே ஸாக்ஷாத் ஈசனின் மூத்த குழந்தையும் பரமானந்தம் அடைந்துவிடும். இதை விடவும் சௌகர்யம்

இருந்தால் இந்தக் குழந்தைக்குச் சாக்லேட்டுக்குப் பதில் மோதகம் நிவேதனம் செய்யலாம். இதையும் அவர் கண்ணில் காட்டிவிட்டு, மற்ற குழந்தைகளுக்குத் தந்து நாமும் சாப்பிட்டே அவரை ஸந்தோஷப்படுத்திவிடலாம். 'மோதகம்' என்றால் ஆனந்தம் என்று அர்த்தம். பொங்கும் ஆனந்தமே உருவான ஆனைக்குட்டியாக அவர் இருப்பதால் அவரைப் புதிதாக நாம் ஸந்தோஷப்படுத்துவது என்பது கூட இல்லை. அவரிடம் போய் நின்று விட்டாலே போதும், ப்ரீத்தியடைந்து விடுவார். நாமும் அவர் ப்ரீதியை ஸம்பாதித்துக் கொண்டு விடலாம். தத் த்வாரா (அதன் வழியே) ஈஸ்வரன் அம்பாள் ஆகியோரின் ப்ரிதியையும் பெற்றுவிடலாம்.

அவரிடம் போய் நிற்பதிலும் கஷ்டமில்லை. அவர் கோயிலுக்கு என்று நாம்

ச்ரமப்பட்டுக்கொண்டு, எங்கேயோ அலைந்து திரிந்துகொண்டு போகணும் என்பதே இல்லை. எந்த சந்து பொந்துப் பக்கமாக, அரசமரப் பக்கமாக நாம் போனாலும் அரை மைலுக்குள் நாலு பிள்ளையார் கோவிலாவது கண்ணில் பட்டுவிடும், கொடிக்கம்பத்துக்கு அந்தண்டை நமஸ்காரம்; கர்ப்ப க்ருஹத்துக்குள்ளே போகப் படாது; நந்திக்குக் குறுக்காலே போகப்படாது - இந்த மாதிரிக் கட்டுப்பாட்டுக்கெல்லாம் இடமில்லை. அவர் இருக்கிறதே ஒரே உள்தான். அல்லது அதுகூட இல்லாமல், ஆகாசம் பார்க்க அவர் பாட்டுக்குக் காற்றாட மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருப்பார். தீண்டாதாரா, இதர மதஸ்தர்கள ா-பார்க்கலாமா, கூடாதா என்ற கேள்விக்கெல்லாம் இடமில்லாமல் ஸகல ஜனங்களின் கண்ணிலும் படும்படி உட்கார்ந்திருப்பார்.

தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

பாட்டனார் பெருமை

ஒரு குழந்தையிடம் நாம் மரியாதை காட்டும்படி இருக்குமானால், "அது யாரகத்துக் குழந்தை தெரியுமா? இன்னர் அதற்கு அப்பா, இன்னார் தாத்தா "என்று'ப்ரவரம்' ªê£™õ£˜èœ. ÞŠð®Š Hœ¬÷ò£¼‚° Šóõó‹ ªê£™L å¼ „«ô£è‹ à‡´.

மாதமஹ மஹாசைலம்

மஹஸ்தத் அபிதாமஹம்மி

காரணம் ஜகதாம் வந்தே

கண்டாதுபரி வாரணம்மிமி

ப்ரவத்தில் கொள்ளுத்தாத்தா பேரும் சொல்லணும். இங்கே அப்படி இல்லை.

தாத்தாவோடு நின்றுவிடுகிறது.

"விஷ்ணு ஸஹஸ்ர நாமம்" பூர்வ பாகத்தில் வ்யாஸரைப் பற்றி வரும் ஒரு ச்லோகத்தில் தான் அவருடைய கொள்ளுத் தாத்தாவான வஸிஷ்டரில் ஆரம்பித்து, பிள்ளை சுகாரசார்யாள்வரையில் வரிசையாய் எல்லார் பேரும் சொல்லியிருக்கிறது. சுகர் ப்ரம்மசாரி. இல்லாவிட்டால் அவருடைய பிள்ளை, பேரன் என்றெல்லாமும் சொல்லிக்கொண்டே போயிருக்குமோ என்னவோ? சுகரிலிருந்து புத்ர பரம்பரையாயில்லாமல், சிஷ்ய பரம்பரையாக, சுகருடைய சிஷ்யர் கௌடபாதர், கௌடபாதரின் சிஷ்யர் கோவிந்த பகவத் பாதர் என்று போய், அந்த கோவிந்தரின் சிஷ்யராகத்தான் நம்முடைய ஆசார்யாளான சங்கர பகவத் பாதாள் வந்தார். எல்லாவற்றிற்கும் முதல், குரு வணக்கம் முதலில் பூஜை பண்ண வேண்டிய விக்னேச்வரர் ஸமாசாரத்தில் குரு பரம்பரையின் ஸ்மரணை சேர்ந்தது பாக்கியம். அதுவும் தவிர விக்னேச்வரருக்கு வ்யாஸ ஸம்பந்தமுண்டு. 'வ்யாஸ கணபதி' என்றே அவருக்கு ஒரு ருப பேதமுண்டு. வ்யாஸருக்காக மஹா பாரதம் எழுதினவர் அவர்தானே? இதனாலும் வ்யாஸர் பேச்சு வந்ததில் ஸந்தோஷந்தான்.

பிள்ளையாரைப் பற்றிய உறவுமுறை ச்லோகத்தில்

அவருடைய அம்மா வழிமாத்திரம் சொல்வார்கள். தர்ப்பணத்தில் மட்டுந்தான் அம்மா வழியிலும் முன் மூன்று தலைமுறைகளைச் சொல்வார்கள். நம் பிள்ளையாருடைய பிதாவுக்கோ பிதாவே கிடையாது. சிவனுக்கு யார் அப்பா?அவர் ஸ்வயம்பு. அம்மாவான

பராசக்தியும் அநாதியானவள் தான் ஆனாலும் தன் குழந்தைகளோடு குழந்தைகளாகத்தானும் லோக ஜனங்கள் மாதிரி இருக்கவேண்டுமென்று அவதாரங்களும் அவற்றிலே ஒன்றின் தகப்பனாரைப் பிள்ளையாரின் தாத்தாவாகச் சொல்லி ச்லோகத்தை ஆரம்பித்திருக்கிறது.

மாதாமஹ மஹாசைலம்: மஹா பெரிய பர்வதமான ஹிமோத்கிரியைத் தாயார் வழிப் பாட்டனாராகப் பெற்றவர், மதாமஹர் என்றால் அம்மாவின் அப்பா. பிதாமஹர் என்றால் அப்பாவின் அப்பா.

அம்பாளுக்கு வாஸ்தவத்தில் பிறப்பு கிடையாது. அப்பா அம்மா கிடையாது. அவள்தான் ஆதிகாரணி, அகிலாண்ட ஜனனி. ஆனாலும் லீலா நிமித்தமாக தக்ஷன் குமாரி தாக்ஷாயணி, ஹிமவான் குமாரி பார்வதி, மலயத்வஜ குமாரி மீநாக்ஷி, காத்யாயனரின் குமாரி காத்யாயனி என்பது போல் பலருக்குப் பெண்ணாகவும் தோன்றியிருக்கிறாள்.

பரமசிவன் என்ற மாத்திரத்தில் பார்வதி என்றுதான் அவரோடு சேர்த்துக் கொள்கிறோம். பார்வதி என்றால் பர்வதத்தின் புத்ரி என்று அர்த்தம். ஹிமயபர்வதத்துக்கு பெண்ணாக அவள் அவதரித்து, அப்புறம் தபஸிருந்து, காமாரியான பரமேச்சுவரன் மனசை இளக்கி அவரைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு க்ருஹஸ்தராகும்படிப் பண்ணியது பார்வதியாக வந்தபோதுதான். அந்தப் பார்வதியை வைத்துத்துதான் "மாதாமஹ மஹாசைலம்" என்று சொல்லப்படுகிறது.

'â¡ù Ü‹ñ£ õNJ™ Ýó‹H,Al˜è«÷, Þ¶ ,óñI™¬ô«ò, Hî£ õN¬ò ªê£™½ƒèœ 'â¡ø£™ ÜîŸ° ðF™ àì«ù õ¼Aø¶ ñýv î˜ Ü¹î£ñý‹. ÞF«ô ñýv î˜ â¡ð¶ Hœ¬÷ò£¬óŠ °PŠð¶. x«ò£Fvõ¼ðñ£è Þ¼,èŠð†ì Üõ˜ â¡Á Ü˜˜î‹ ÜHî£ñý‹ â¡ø£™ Hî£ õNJ™ î£˜î£«õ Þ™ô£îõªó¡Á Ü˜˜î‹.

"அது எத்தனை பெரிய இடத்துப் பிள்ளை தெரியுமா? இதன் அம்மா, அப்பா பெருமை தெரிய வேண்டுமானால் நேரே அவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்பதில்லை. அவர்களுடைய பிதா யார் யாரென்று பார்த்தாலே போதும். அம்மாவின் தகப்பனார்தான் இந்த லோகத்திலேயே பெரிசாக இருக்கப்பட்ட மஹா பர்வதமான ஹிமோத்கிரி. அப்பேர்ப்பட்ட ஹிமவானே தபஸ் இருந்து பெண்ணாகப் பெற்றவள் இவருடைய தாயார். பிதாவின் பிதா யாரென்றால்'அப்படியொருத்தரே கிடையாது. தனக்கு தகப்பனாரென்று எவரும் இல்லாமல் தானே தோன்றிய பெருமை இவருடைய தகப்பனாருடையது என்று இதிலிருந்து தெரிகிறதல்லவா?" என்று ச்லோகம் சொல்லாமல் சொல்கிறது.

மாதாமஹ மஹாசைலம் மஹாஸ்ததபிதாமஹம்

இப்படி ச்லோகத்தின் முதல் பாதியில் சொல்லிவிட்டு இரண்டாம் பாதியில், 'இவர் மாத்திரம் நிஜமாகவே தாயார் தகப்பனார் மூலம் பிறந்த பிள்ளைதானாக்கும் என்று நினைக்க வேண்டாம். இவரும் பிறப்பில்லாத பரப்ரஹ்ம ஸ்வருபந்தான். லோகத்துக்கெல்லாம் காரணப்பொருள் இவர்தான்: காரணம் ஜகத்காரணமான மூலவஸ்துதான் சிவ-சக்தி குமாரராக வந்தது. அவரை நமஸ்காரம் பண்ணுகிறேன்:

வந்தே, 'காரணம் ஜகதாம் வந்தே' சொல்லியிருக்கிறது.

ஜகத்காரணப் பொருள் நாமெல்லாம் பார்த்துப் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமென்பதற்காக, நராகாரமாக மட்டுமின்றி, மநுஷ்ய சரீரத்திலேயே கழுத்துக்கு மேலே யானையாக ரூபம் கொண்டுடிருக்கிறது; திரும்பத் திரும்ப ஆராத ஆசையோடு பார்க்கச் செய்கிற யானை முகத்தை வைத்துக் கொண்டு தோன்றியிருக்கிறது: கண்டாதுபரி வாரணம். 'கண்டாத் உபரி' என்றால் 'கழுத்துக்கு மேலே '; வாரணம் என்பது யானை என்று தெரிந்திருக்கும்.

ñ£ñ£ ñU¬ñ

ஹிமோத்கிரியே மாதாமஹர் என்ற பெருமை, பிதா மஹர் என்றே ஒருத்தரில்லாத பெருமை இரண்டையும் பெற்ற விக்நேச்வருக்கு மாமாவை வைத்தும் பெருமை சொல்லியிருக்கிரது இன்னொரு ச்லோகத்தில்

ஸ்ரீகாந்தோ மாதுலோ யஸ்ய ஜநநீ ஸர்வமங்களா

ஜநக: சங்கரோ தேவ: தம் வந்தே குஞ்ஜராந்தம்

வழக்கத்துக்கு வித்யாஸமாக முதலில் சொன்ன ச்லோகத்தில் தாயார்வழித் தாத்தாவில் ஆரம்பித்திருக்கிறது என்றேன். அதற்கும் ஸமாதனம் இருக்கிறது. பெற்றோரைப் பிரித்துச் சொல்லும் போது மாதா-பிதா, தாய்-தந்தை என்று அம்மாவை முன் வைத்தே சொல்வது தானே வழக்கமாயிருக்கிறது? வேதத்திலேயே 'மாதாவை தெய்வமாகக் கொள்ளு' என்ற அப்புறந்தான், 'பிதாவை தெய்வமாகக் கொள்ளு' என்று வருகிறது. அவ்வை வசனமும் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதாக இந்த இரண்டு தெய்வங்களில் முதலிடத்தை அன்னைக்கே தந்திருக்கிறது. ஆனதால் இரண்டு தாத்தாக்களைச் சொல்லும் போது முதலில் மாதா மஹரைத்தான் சொல்லவேண்டுமென்று நியாயம் சொல்லலாம்.

அதையும்விட விநோதமாக, இந்த இன்னோரு ச்லோகத்தில் பெற்றோருக்கும் முந்தி மாமாக்காரரைச் சொல்லியிருக்கிறது. ஸ்ரீகாந்தோ மாதுலோ யஸ்ய - " எவருக்கு மாமா மஹா விஷ்ணுவோ." மாதுலருக்கு ப்ரியமானவர்! ஸ்ரீகாந்தன் என்றால் லக்ஷ்மிபதியாக இருக்கப் பட்ட மஹாவிஷ்ணு. இந்தப் பேரைச் சொன்னதால் ச்லோகத்தை மங்களமாக ஸ்ரீ என்று ஆரம்பிப்பதோடு, மாமாவை மட்டுமில்லாமல் மாமியான மஹாலக்ஷ்மியையும் சொன்னதாக ஆகிறது. லோகங்களையெல்லாம் பரிபாலிக்கிற மஹாவிஷ்ணு, லோகம் நடப்பதற்கு முக்கிய

காரணமாக இருக்கிற செல்வத்துக்கு அதிதேவதையான மஹாலக்ஷ்மி ஆகியவர்களின் மருமானாக இருக்கும் 'பெரிய

இடத்துப் பிள்ளை' இது என்று காட்டியதாக ஆகிறது.

ஸுப்ரஹ்மண்யருக்கு மாமா உறவு ஜாஸ்திஎன்று தெரிந்திருக்கலாம்.'முருகன்' என்றவுடனேயே'மால்மருகன்' என்று சேர்த்துச் சொல்கிறோம். எத்தனையோ திருப்புகழ் பாடல்களில் ' முருகோனே - மருகோனே' சேர்ந்து சேர்ந்து வரும் மருகன் என்பது மருமகன். பிராம்மணர்கள் மாப்பிள்ளை என்று சொல்வதை மற்றவர்கள் மருமகப் பிள்ளையென்றுதான் சொல்வர்கள். மாமாவுக்கு ம்,அத்தைக்கும் ஒருவன் ஆக வேண்டிய உறவுதான் மருமகன் என்பது ;

'ñ¼ñè¡' â¡Á (Hó£‹ñí˜èœ) ªê£™õ¶. Ü«ïèñ£è îVí^F™ ñ£ñ¡ ªð‡¬í«ò£, Ü^¬î ªð‡¬í«ò£î£¡ º¬øŠªð‡' â¡Á è™ò£í‹ ªêŒ¶ªè£œõî£J¼Šðî£™ ñ¼ñ£«ù ñ£ŠHœ¬÷»ñ£AM´Aø£¡.

தெய்வத்தின் குரல் ( நா¡காம் பாகம்)

மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

F¼ñ£½‹ Ü‹H¬è»‹

மஹாவிஷ்ணு அம்பாளுக்கு உடன்பிறப்பு. 'நாராயண ஸஹோதரி' என்றே அம்பாளுக்குப் பெயர். தாக்ஷாயணி, பார்வதி, மீநாக்ஷி என்ற மாதிரி அம்பாள் அவதாரம் செய்ததில் எதிலும் மஹாவிஷ்ணு இப்படி ஸஹோதரராகப் பிறக்கவில்லை. க்ருஷ்ணாவதாரத்தின் போது மட்டுமே அவர்கள் கொஞ்சம் ஸஹோதர - ஸஹோதரிகள் மாதிரிப் பிறந்தது. அதாவது க்ருஷ்ண பரமாத்மா தேவகீ வஸு தேவர்களுக்குப் புத்திரராக அவதாரம் செய்த அதே சமயத்தில், பிற்பாடு க்ருஷ்ணருக்கு வளர்ப்புப் பெற்றோராகவிருந்த நந்தகோபர் - யசோதா தம்பதிக்குப் புத்திரியாக அம்பிகை அவதாரம் பண்ணினாள். "அவதரித்தவுடன் லோகமெல்லாம் மயங்கிக் கிடந்தபோது

வஸுதேவர் அவரைத் தூக்கிக் கொண்டுபோய், யசோதை பக்கத்தில் விட்டுவிட்டு அவளுக்குப் பிறந்திருந்த அம்பாளான குழந்தையை எடுத்துக் கொண்டு வந்துவிட்டார். பகவான் உத்திரவுப்படி இப்படிச் செய்தார். அப்புறம் கம்ஸன் நந்தகோபர் பெண்ணான அந்த அம்பாளவதாரத்தையே தன்னைக் கொல்லப் பிறந்த வஸுதேவரின் குழந்தை என்று நினைத்து, வதம் செய்யப் போனான். குழந்தையை அவன் கல் தரையில் அடிக்க ஓங்கியபோது அது சடக்கென்று ஆகாசத்திலே போய் அம்பாளாய் நின்றுகொண்டு, 'அட முட்டாளே! உன்னைக் கொல்ல வந்திருக்கிறது வேறு ஆஸாமிடா!' என்று சொல்லி அந்தர் தானமாகிவிட்டதாக பாகவதக் கதை போகிறது.

இதற்கெல்லாம் முன்னாலிருந்தே, அவதாரங்களுக்கெல்லாம் மூலமாக இருக்கப்பட்ட நாராயணன், பராசக்தி இவர்களையே ஸஹோதரர்களாகச் சொல்கிற வழக்கமிருந்திருக்கிறது. நாராயணனுக்கும் ஸரி, பராசக்திக்கும் ஸரி மாதா பிதாக்கள் கிடையாது. அவர்கள் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம ஸ்வருபமேதான். ஆனால் பொதுவிலே சிவன் லோக வியவஹாரம் முடிந்துபோன சாந்த நிலைக்கு மூர்த்தியாக இருக்கிறாரென்றால் இவர்களோ லோக வியவஹாரத்தைத் தங்களுடைய மாயா சக்தியால் நடத்தி லீலையில் ரமிப்பவர்களாக இருக்கிறார்கள். இரண்டுமில்லை, மூன்றுமில்லை, ஒன்றுதான். அதையே வ்யாவஹாரிகம் (விவகார நிலை) தொடர்பாக பரமசாந்த பாவத்தில் சொல்லும் போது சிவன் என்றும், வ்யவஹாரக் கூத்திலே கொண்டாட்டம் போடும்போது புருஷ ரூபத்தில் பாவித்தால் நாரயணன் என்றும் ஸ்திரி ரூபத்தில் பாவித்தால் பராசக்தி என்றும் சொல்கிறோம். ஒரே மாதிரியான கார்யத்தையும், ரூபம், குணம் முதலானதுகளையும் கொண்டிருப்பதால் விஷ்ணுவையும் அம்பாளையும் உடன் பிறந்தவர்களாகச் சொல்கிறோம். ஸஹோதரர்கள்தானே ஒரு மாதிரி இருப்பார்கள்? அதனால்.

மருமகனே மாப்பிள்ளையுமாக, அதாவது ஒருத்தனே இரண்டு அர்த்தத்திலும் "மருமவப் பிள்ளை"யாக இருப்பதைச் சொல்லிக்கொண்டிருந்தேன். ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி மஹாவிஷ்ணுவுக்கு ஸஹோதரியின் பிள்ளையாதலால்

மருகனாக இருப்பது மட்டுமில்லை; அவர் கல்யாணம் பண்ணிக்கொண்ட வல்லீ தேவஸேனைகளும் பூர்வத்தில் மஹாவிஷ்ணுவின் புத்திரிகளாக உத்பவுத்து அப்புறந்தான் ஒருத்தி வேடராஜாவிடமும் இன்னொருத்தி தேவராஜாவிடமும் போய்ச் சேர்ந்து வளர்ந்தார்களென்று கதை. அதாவது முருகன் மஹாவிஷ்ணுக்கு இரண்டு அர்த்தத்திலும் மருமகன். அதாவது இவருக்கு அவர் மாமா, மாமனார் இரண்டுமாக வேண்டும்.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

### மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

*திருமால் செய்த கோணங்கி*

இப்படி விவாஹ ஸம்பந்தமில்லாவிட்டாலும், பிள்ளையாருக்கு மாமா மஹாவிஷ்ணுவிடம் ரொம்ப நெருக்கமுண்டு. குழந்தைகளுக்குக் கோணங்கி காட்டினால் போதும், அதனிடம் எதையும் ஸாதித்துக்கொண்டு விடலாமென்றேன் அல்லவா? இப்படி மாமாக்காரரான மஹாவிஷ்ணு செய்த கோணங்கியாட்டம்தான் இப்போது விக்னேச்வர வழி பாட்டில் ரொம்பவும் முக்யமாயிருக்கிறது. பிள்ளையாரென்றால் உடனே தோப்புக்கரணத்தைத்தான் நினைத்துக்கொள்கிறோம். மற்ற ஸ்வாமிகள் மாதிரி இவர் ரொம்பச்ரமம் தருகிற ஸ்வாமி இல்லை என்று சொன்னேன். பெருமாளென்றால் அங்க ப்ரதக்ஷிணம்; 'முழங்கால் முறிச்சான்' மலை ஏறிப்போகணும்; அலகு செடில் குத்திக் கொள்வது என்றெல்லாம் கூட உண்டு. ஈஸிவரனுக்கோ ஒரே பசியும் பட்டினியுமாய் உபவாஸமிருக்க வேண்டும். இப்படியெல்லாமில்லாமல், ஸ்வல்ப ,ச்ரமமே தருகிறவர் பிள்ளையார்தான். அதுவுங்கூட வேடிக்கையாக, குழந்தை விளையாட்டு மாதிரி, அல்லது குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுகிற மாதிரித்தானிருக்கும். நெற்றியில் குட்டிக் கொள்வது, தோப்புக் கரணம் போடுவது இரண்டையுந்தான் சொல்கிறேன். ஒருத்தர் தோப்புக்கரணம் போட்டால்

குழந்தையே முதற்கொண்டு அதை வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டு, தன் ஸ்வபாவப்படி தானும் அப்படி 'இமிடேட்' பண்ணும்.

இந்தத் தோப்புக்கரணத்தை ஆதியில் உண்டாக்கியவர் மஹாவிஷ்ணுதான். அவர் ஒரு ஸமயம் ஸஹோதரியைப் பார்ப்பதற்காகவும், தமக்கு ரொம்பவும் ஆபத்மான பரமேச்வரனோடு ஸல்லாபிப்பதற்காகவும், மருமான் கணேசரைக் கொஞ்சி விளையாடுவதற்காகவும் கைலாஸத்துக்கி வந்திருந்தார். அப்போது தம்முடைய சக்கரத்தைச் சுட்டிக் குழந்தைக்கு வேடிக்கை காட்டினார். உடனே குழந்தை தும்பிக்கையை நீட்டிச் சக்கரத்தைப் பிடிங்கிக்கொண்டு லபக்கென்று வாய்க்குள் போட்டு நன்றாக அடக்கிக் கொண்டுவிட்டது. மஹாவிஷ்ணு நயமாகவும் பயமாகவும் எத்தனை பண்ணியும் அது சக்கரத்தை வெளியே போடமாட்டேனென்று அடம் பண்ணி விளையாடிற்று. அப்போது தான் மஹாவிஷ்ணு யுக்தி பண்ணி, இப்படிக் காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக் கரணம் போட்டார். அதைப் பார்த்ததும், எப்போதுமே சிரித்த முகமாயிருக்கும். 'ப்ரஸன்னவதன'க் குழந்தை விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பிக்கிறது. சிரிக்கிறபோது வாயில் அடக்கிக் கொண்ட சக்ரமும் குபுக்கென்று வெளியிலே வந்து விழந்தது. சடக்கென்று அதை மஹாவிஷ்ணு எடுத்து வைத்துக் கொண்டுவிட்டார்.

மஹாவிஷ்ணு கைகளால் காதைப் பிடித்துக் கொண்டது ஸம்ஸ்கிருதத்தில் "தோர்ப்பி:" என்றால் "கைகளால்." "கர்ணம்" என்பது காது என்று தெர்ந்ததே. கையால் கைதைப் பிடித்துக் கொள்ளும் 'தோர்பி(ஹ்) கர்ண'மே தோப்பிக்கரண ம்,என்றெல்லாம் ஆகிவிட்டது. குட்டிக்கரணம் என்கிற மாதிரி இங்கே கரணம் இல்லை கர்ணம் என்று சொல்லவேண்டும்

முதலில் யாரோ மநுஷாள் இதை ஆரம்பிக்காமல் மஹாவிஷ்ணுவே ஆரம்பித்தார் என்பதற்கும் 'தோர்பி(ஹ்) கர்ணம்' என்ற வார்த்தையிலேயே 'எவிடென்ஸ்' (சானறு)இருக்கிறது. அதைப் புரிய வைப்பதற்கு கொஞ்சம் ஸ்ம்ஸ்க்ருத இலக்கணம் சொல்லித் தரணும்.

தமிழ், இங்கிலீஷ் முதலான பாஷைகளில் ஒருமை, பன்மை, ஸிங்குலர்-ப்ளூரல் என்று இரண்டுதான் இருக்கின்றன.

ஒன்றுக்கு மேற்பட்ட எல்லாம் பன்மை, ப்ளூரல் என்று வைத்துவிடுகிறோம். ஸ்ம்ஸ்க்ருதத்தில் மட்டும் ஏகவசனம், த்வி வசனம், பஹுவசனம் என்று மூன்று இருக்கின்றன. ஏகவசனம் என்பது ஒருமை. த்விவசனம் என்பது தமிழிலும் இங்கிலீஷிலும் இல்லாதது. அதை 'இருமை'என்று வேண்டுமானால் சொல்லலாம். இரண்டு பேர் அல்லது இரண்டு வஸ்துவை மட்டும் அது குறிக்கும். இரண்டுக்கு மேலே போகிற எல்லாம் பஹு வசனம். சிவம்-சக்தி, பரமாத்மா-ஜீவாத்மா, பகவான்-பக்தன், ஸதி-பதி, குரு-சிஷ்யன் என்றிப்படியும், ஒரு மநுஷ்ய ஜீவனை எடுத்துக்கொண்டால் அவனுக்கு இரண்டு கண், இரண்டு காது, இரண்டு கை, இரண்டு கால் என்றெல்லாமும் இருப்பதாலோ என்னவோ இரண்டு என்பதற்குத் தனி ஸ்தானம் தந்து 'த்வி வசனம்' என்ற ஒன்றை வைத்திருக்கிறது.

மநுஷ்யர்களால் தோப்புக்கரணம் ஆரம்பிக்கப்பட்டிரு ந்தால்,'கைகளால் காதைப் பிடிப்பது' என்பதில் 'கைகளால்'என்பதற்கு த்வி வசன வார்த்தைதான் இருக்கவேண்டும். ஏனென்றால் மநுஷ்யனுக்கு இருப்பது இரண்டு கைதானே? 'தோஸ்' என்பது கை. முதல் வேற்றுமை ஒருமையில் ஒரு கையை 'தோ' என வேண்டும். 'கைகளால் ' என்பது மூன்றாம் வேற்றுமை 'ஒரு கையால்'என்பதற்கு தோஷா என்று சொல்லவேண்டும்.'இரண்டு கைகளால்'என்பதற்க்கு தோர்ப்யாம் . மநுஷ்யர்களான நாம் 'இரண்டு கைகளால் போடும் தோப்புக்கரணத்தை 'தோர்ப்யாம் கர்ணம்' என்று தான் சொல்ல வேண்டும். இது பேச்சு வழக்கில் திரிந்தால்கூட 'தோப்பாங்கரணம்' என்றுதான் ஆகியிருக்காது. "தோர்பி:" என்பதோ இரண்டுக்கும் மேற்பட்ட பல கைகளைக் குறிக்கும் பஹுவசனமாயிருக்கிறது. தோஷா ஒரு கையால்; தோர்ப்யாம் - இரண்டு கைகளால்; தோர்பி (ஹ்)-இரண்டு மேற்பட்ட கைகளால் விஷ்ணுவுக்கு எத்தனை கை? நாலு கை. இரண்டுக்கு மேற்பட்ட நாலு கைகளால் அவர் காதைப் பிடித்துக் கொண்டதால் தான் தெளிவாக பஹுவசனத்தில் "தோர்பி(ஹ்) - என்று சொல்லி, அது 'தோப்பி' என்று ஆகிவிட்டிருக்கிறது.

மாமா-மருமான் உறவைச் சொல்ல வந்தேன். பிள்ளையாருக்குப் பிடித்த, எல்லாப் பிள்ளைகளுக்குமே

பிடித்த, தோப்பிக்கரணத்தை அவரது மாமா மஹாவிஷ்ணுதான் 'இனாகுரேட்' பண்ணியிருக்கிறார்!

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

*" சுக்லாம் பரதரம் "*

"சுக்லாம்பரதரம்" ச்லோகம் எதற்கும் ஆரம்பத்தில் சொல்கிறோமே, அதிலே ஒரு வேடிக்கை! என்ன வென்றால், அதில் பிள்ளையாருடைய பெயர் எதுவுமே வரவில்லை! கணபதி, கணேசர், விநாயகர், விக்நேச்வரர் என்ற மாதரி அவருக்கே ஏற்பட்ட பெயரோ பெற்றோரைவைத்து ஏற்பட்ட சிவாத்மஜன், கௌரீஸுதன் என்ற மாதிரிப் பெயரோ, அவருடைய வாஹனம், ஆயுதம், இஷ்டமான வஸ்து ஆகியவைகளை வைத்து ஏற்பட்ட மூஷிக வாஹனர், பாசஹஸ்தர், மோதக ப்ரியர் முதலான ஏதாவதொரு பெயரோ, அவரது ரூப லக்ஷணங்களைக் குறிக்கிற பெயர்களான கஜமுகர், ஏகதந்தர், லம்போதரர்(தொங்கும் தொந்திக்காரர்) முதலானதுகளில் ஏதாவதொன்றோ, அல்லது அவரது லீலைகளை வைத்து ஏற்பட்ட ஏராளமான பெயர்களில் எது ஒன்றுமோ ' சுக்லாம் பரதர' ச்லோகத்தில் வரவில்லை.

சொல்லிப்பாருங்கள்.

சுக்லாம்பரதரம், விஷ்ணும், சசிவர்ணம், சதுர்புஜம் !

ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோபசாந்தயே!!

"சுக்லாம்பரதர": வெள்ளை வஸ்த்திரம் கட்டிக் கொண்டிருப்பவர். ஸரஸ்வதியும் ஈச்வரனும்கூடத்தான் வெள்ளை கட்டிக்கொள்வார்கள். வித்யாஸமாக மஞ்சள், சிவப்பு கட்டிக்கொள்கிற ஸ்வாமிகளைப் பீதாம்பரதாரி, ரக்தாம்பரதாரி என்றெல்லாம் சொன்னால் அது

அவர்களைத்தான் ஸ்பெஷலாகக் குறிக்கிறது என்பதுபோல, 'சுக்லாம்பரதரர்' என்பது பிள்ளையாரை மாத்திரம் குறிப்பிட்டுவிடவில்லை.

அடுத்ததாக, "விஷ்ணு." இதற்காகத்தான் நான் இந்த ச்லோகத்தைச் சொல்லவந்தேன். மாமா பேரையே மருமகனுக்குச் சொல்லியிருக்கிறது. அத்தனை அந்நியோந்நியம்! 'விஷ்ணு' என்றால் எல்லா இடத்திலேயும் பரவியிருப்பவர், ஸர்வ வ்யாபி என்று அர்த்தம். பிள்ளையார் எங்கேயும் இருக்கிறாரென்பதால் 'விஷ்ணு' என்று சொல்லியிருந்தாலும்; அந்த வார்த்தையைக் கேட்டவுடனேயே நமக்கு அவருடைய மாமா நினைவுதானே வருகிறது?

"சசிவர்ண" நிலா மாதிரி நிறமுடையவர். ஈச்வரனும், ஸரஸ்வதியும்கூடத்தான் அப்படிப் பால்நிலா மாதிரி இருப்பவர்கள்."சதுர்புஜ": நாலு கை உள்ளவர். அநேகமாக எல்லா ஸ்வாமிக்குமே நாலு கைதானிருக்கிறது. அதனால் இதிலும் இவருக்கென்று ஸ்பெஷலாக அடையாளம் கிடைத்துவிடவில்லை.

"ப்ரஸந்ந வதந": நல்ல மலர்ந்த முகமுள்ளவர் பின்னே, எந்த ஸ்வாமியாவது அழுமூஞ்சியாக இருக்குமா என்ன? காளி, வீரபத்ரர், நரஸிம்ஹ மூர்த்தி மாதிரி உக்ரமாக இருக்கப்பட்ட சில ஸ்வாமிகளைத் தவிர மற்ற எல்லா ஸ்வாமியும் பக்தர்களிடம் அநுக்ரஹத்தோடு ஆனந்தம் நிறைந்த முகத்தோடு இருப்பதைதான் இத்தனை ஆயிரம் விக்ரஹங்களிலும் பார்க்கிறோம். அவர்களை எல்லம்விட இன்னம் ஆனந்தம் சொட்டிக் கொண்டிருக்கும்படியாகப் பரந்த, விசாலமான ஆனைமுகத்தோடு இவர் இருக்கிறார் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

இப்படி சுக்லாம்பரதரம், விஷ்ணும், சசிவர்ணம்,சதுர்புஜம், ப்ரஸந்ந வதநம்

என்று வருகின்ற ஐந்து வார்த்தைகளில் எதுவுமே பிள்ளையாரொருவரை மட்டுந்தான் குறிக்கிறது என்று சொல்வதற்கு இடமில்லாமலிருக்கிறது. (இந்த ஐந்து

வார்த்தைகளில் ஒவ்வொன்றுக்கும் ஒரு குட்டாக ஐந்து தரம் நெற்றிப் பொட்டில் குட்டிக்கொள்ள வேண்டும்)

அப்புறம், 'த்யாயேத்' என்பதற்கு 'த்யானிக்க வேண்டும்'என்று அர்த்தம்.

எதற்காக த்யானிக்க வேண்டும்? "ஸர்வ விக்ந உப சாந்தயே"- எல்லா விக்னங்களும், தடைகளும் இடையூறுகளும் அடங்கி மறைந்து போவதற்காகவே, இங்கே தான், ஒரு நாமாவாகசி சொல்லாவிடிடாலும், பிள்ளையாருக்கென்றே ஏற்பட்ட விசேஷ லக்ஷணம் தெரிகிறது. எடுத்த கார்யம் விக்னமில்லாமல் நடக்க வேண்டுமென்றால் அதற்கென்று பிரார்த்திக்கப்பட்டவேண்டிய ஸ்வாமி பிள்ளையார்தான். அதனால்தான் எந்தக் கார்யத்திலும் ஆரம்பிக்கிறபோதே அவருக்குப் பூஜை பண்ணிவிடுவது; இந்த ஒரு ச்லோகமாவது சொல்லி நெற்றியில் குட்டிக் கொண்டுவிடுவது.

ச்லோகம் சொல்லிக் கொள்ளக்கூடிய வயஸுக்கு முந்தியே ஒரு சின்னக் குழந்தையிடம்கூட, 'அப்பா!பிள்ளையாரை நினைச்சுக்கோ! அப்போதான் எந்தக் கஷ்டமும் வராமலிருக்கும்' என்று சொல்லிக் கொடுத்துவிடுவார்கள். அதனால், ச்லோகம் கற்றுக் கொள்கிற வயஸு வந்தபோது, இப்படி 'ஸர்வ விக்நோபசாந்தயே'என்று சொல்லிக் கொடுத்துவிட்டாலே போதும், 'இடைஞ்சல் வராமலிருப்பதற்காக இந்த ஸ்வாமிக்கு ஸ்தோத்ரம் சொல்லணுமா? அப்படியானல் அவர் பிள்ளையாரகத் தானிருப்பார்' என்று அந்தக் குழந்தைகூடப் புரிந்துகொண்டுவிடும்.

'விஷ்ணு' என்றே இந்த ச்லோகத்தில் இருப்பதிலிருந்து பிள்ளையாருடைய உறவு முறைகளில் மாமாவின் அருமை தெரிகிறது. அதை வைத்துத்தான், சற்றுமுன் சொன்ன ச்லோகத்தில் "ஸ்ரீ காந்தோ மாதுலோ யஸ்ய"-எவருக்கு மாமா லக்ஷ்மிபதியான மஹாவிஷ்ணுவோ- என்று ஆரம்பிக்கிறது. (மலையாளத்தில் 'மருமக்கத்தாயம்' என்று மருமான் வழியாக

ஸொத்து போகும் முறை ஞாபகம் வருகிறது.)

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

### மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

*பெற்றோர் பெருமை*

மாமாவுக்கு முதல் இடம் கொடுத்துச் சொல்லிவிட்டு, அவருடைய ஸஹோதரியாக, இவருடைய தாயாக இருக்கப்பட்ட அம்பாளைச் சொல்லியிருக்கிறது.

ஜநநீ ஸர்வமங்களா (பிள்ளையாருடைய ) அம்மா, ஜனனி, யார்? ஸர்வ மங்களா. ரூபம், குணம், கார்யம் முதலான ஸர்வமும் பரம மங்களமாக இருக்கப்பட்ட பராசக்திதான் இவருக்கு அம்மா, அம்பாளை பற்றி எல்லோருக்கும் தெரிந்திருக்கக்கூடிய ச்லோகம் அவளை ஸர்வமங்களா என்று சொல்லித்தான் ஆரம்பிக்கிறது.

ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வார்த்த ஸாதிகே!

சரண்யே த்ர்யம்பகே கௌரி நாராயணி நமோஸ்து தே!!

மஹாவிஷ்ணுவின் அநேகம் பெயர்களில் ஸ்ரீகாந்தன் என்றதில் 'ஸ்ரீ'

என்பதால் ஸகல ஸௌபாக்கியங்களையும் சொன்னதற்கேற்ப அம்பாளின் பல பெயர்களில் ஸர்வ மங்களா என்று சொல்லிவிட்டு, அப்புறம் அப்பாவைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறது. அன்னைக்குப் பிறகே பிதா என்ற நியாயப்படி, அம்பாளை முதலில் சொன்னபின் "ஜநக:சங்கரோ தேவ:"

என்று இவருடைய தகப்பனார் யாரென்றால் பரமசிவன் என்பதாகச் சொல்லியிருக்கிறது.

பரமேச்வரனுக்கு எத்தனையோ பெயர்களிருந்தும், பரம

மங்களமாக 'ஸ்ரீகாந்தன்' ,ஸர்வமங்களா' என்ற பெயர்களைச் சொன்னாற்போல, இங்கேயும் 'சங்கரன்' என்று சொல்லியிருக்கிறது.'சங்கர' என்றால் நல்லதையே செய்கிறவர், பரம ஸுகத்தை உண்டாக்குபவர் என்று அர்த்தம். ஸ்ரீ,மங்களம், ஸுகம் எல்லாம் தருபவர் விக்நேச்வரர் என்று காண்பிக்கும் வகையில் அவருக்குள்ள மாமா, அம்மா, அப்பாவின் ' பெரிய இடத்து' ஸம்பந்தத்தைச் சொல்வதாக ச்லோகம் இருக்கிறது.

ஸ்ரீ காந்தோ மாதுலோ யஸ்ய ஜநநீ ஸர்வமங்களா !

ஜமக :சங்கரோ தேவ : தம் வந்தே குஞ்ஜராநநம் !!

"தம் குஞ்ஜராநநம வந்தே" - இப்படிப்பட்ட அந்த யானை முகனை நமஸ்கரிக்கிறேன்.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பெரிய இடத்துப் பிள்ளை

º¼èÂ‹ Í¨«î£Â‹

தாத்தா, அப்பா, அம்மா, மாமா எல்லாரும் ரொம்பவும் பெரியவர்களாக இருக்கிறார்கள்.அது மட்டுமில்லை. கூடப் பிறந்தவரும் ரொம்ப மஹிமையுள்ளவர். கூடப் பிறந்தவரென்றால் இவருக்கு அண்ணா கிடையாது. இவர்தான் "மூத்த பிள்ளையார் மும்மணிக்கோவை" என்றே இவர்மேல் ஒரு ஸ்தோத்ரம் இருக்கிறது. ப்ரபஞ்சத்துக்கே முதல் குழந்தை அவர்."ஜயேஷ்ட ராஜா" என்பது வேதமே அவருக்குக் கொடுத்திருக்கிற பெயர். கணபதிதான் எல்லாருக்கும் அண்ணா. அவருக்குத் தம்பிதான் உண்டு.

தமையன் பெரிய ஆஸாமியாயிருந்தால் அவன் பெயரை வைத்துக்கொண்டே தம்பி தடபுடல் பண்ணுவதுண்டு இப்படியே தம்பிக்காரன் பிரமுகனாயிருந்தாலும், தனக்காக யோக்யதையில்லாத அண்ணன்காரன் அதைக்காட்டி

அதிகாரம் பண்ணவதுண்டு. இங்கேயோ ஈச்வர புத்ரர்கள் இரண்டு பேருமே சக்தி, ஸாமர்த்யங்களிலும் அநுக்ரஹத்திலும் ரொம்பவும் உயர்ந்தவர்களாக இருக்கிறார்கள். அதனால் பிள்ளையாருக்கு உறவுகளைச் சொல்லிப் பெருமை காட்டும்போது தம்பியையும் சொல்ல வேண்டியிருக்கிறது.

பிள்ளையாருக்கு விசேஷமாகப் பதினாறு பெயர்கள் உண்டு. ஷோடச நாமாக்கள் என்று சொல்வார்கள். (ஷோடசம் என்றால் பதினாறு) அஷ்டோத்தர (சத)ம் சொல்லிப் பூஜை பண்ண முடியாவிட்டாலும் இந்தப் பதினாறு நாமாக்களையாவது சொல்ல வேண்டும்.

ஸுமுகச்ச ஏகதந்தச்ச கபிலோ கஜகர்மக :!

ஸம்போதரச்ச விகடோ விக்நராஜோ விநாயக:!!

தூமகேதுர் கணாத்யஷோ பாலசந்த்ரோ கஜாநந:!

வக்ரதுண்ட: சூர்ப்பகர்ணோ ஹேரம்ப: ஸகந்தபூர்வஜ:!!

கடைசிப் பெயர் 'ஸ்கந்தபூர்வஜர்'-அதாவது 'ஸ்கந்தனுக்கு முன்னாடிப் பிறந்தவர்.' தம்பியை வைத்துத் தமையனாருக்குப் பெருமை கொடுக்கும் பெயர்!இப்படி இவருடைய பல உறவுக்காரர்களைப் பார்த்தாலும் இவர் ரொம்ப பெரிய இடத்துப் பிள்ளை என்று தெரியும். அதனால் அந்தப் பிள்ளையை நாம் மனங் குளிர்ந்திருக்கும் படியாகப் பண்ணவேண்டும். அதற்குக் கோபம் உண்டாகும்படியாக எதுவும் பண்ணாமல் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். மூவுலகத்தின் மூத்த குழந்தையுடைய ப்ரீதியை நாம் முக்யமாக ஸம்பாதித்துவிட வேண்டும். நல்ல மனஸ், அருள் உள்ளம், இரக்க குணம் உள்ள அவர் எளிதிலே த்ருப்தி கொண்டுவிடுவார். எப்போதுமே ஆனந்தமாயிருக்கும் அவரை நாமும் கொஞ்சம் குஷிப்படுத்தி விட்டால், அவருடைய மாதா பிதாக்களான பார்வதீ பரமேச்வரர்களின் மனஸையும் குளிரப்பண்ணி அவர்களிடமிருந்து ஸகல நலன்களையும் பெற்றுவிடலாம்.

## பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

### மரியாதைக்குரிய குழந்தை

பெரிய இடத்துப் பிள்ளை என்பதாலேயே, 'நாம் நமக்கென்று ஒரு யோக்யதையும் ஸம்பாதிக்கொள்ள வேண்டியதில்லை. நம்முடைய பெரிய ஸம்பந்தத்தைக் காட்டியே ஊரை ஆட்டி வைத்துக்கொண்டிருக்கலாம்' என்று இருப்பவர்கள் உண்டு. அநேகம் பெரிய மநுஷ்யரகத்துப் பசங்கள் தறுதலைகள ாகவோ, அசட்டுப் பிசட்டென்றோ இருப்பதைப் பார்க்கலாம். ஆனால் இந்தப் பெரிய இடங்களுக்கெல்லாம் உச்சியிலுள்ள மஹா பெரிய இடத்துப் பிள்ளை, 'உச்சிப்பிள்ளையார்' என்கிறோமே, அவர் எப்படியிருக்கிறார்? தேஹபலமா, புத்திக் கூர்மையா, கார்ய சக்தியா, அன்புள்ளமா எல்லாவற்றிலும் தமக்கு மேல் யாருமில்லை என்று இருக்கிறார். பெரிய இடத்துப் பிள்ளை என்பதால் மாத்திரம் அவருக்குப் பெருமையில்லை. அவருக்காகவே அவருக்குப் பெருமை என்பது "பிளளை" க்கு "யார்" போட்டு அவரைப் "பிளளையார்" என்று மிகவும் மரியாதையாகச் சொல்வதிலிருந்தே தெரியும்.

பொதுவாகச் தாய், தகப்பன், பாட்டன், பாட்டி, தமையன், தமக்கை ஆகிய பெரியவர்களைத்தான் மரியாதையாகத் தாயார், தகப்பனார், பாட்டனார், பாட்டியார், தமையனார், தமக்கையார் என்றெல்லாம் சொல்வது வழக்கம். பிள்ளைக்கு அப்படி மரியாதை விகுதி சேர்த்துச் சொல்கிற வழக்கம் எங்கேயும் கிடையாது. இதற்கு மாறுதலாக இவர் ஒருவர் விஷயத்தில் மட்டும் "பிள்ளை" என்காமல் "பிள்ளையார்" என்றே சொல்கிறோம்

### முழுமுதற் கடவுளாக

பிள்ளையார் ப்ரிதியை நாம் பெற்றுவிட்டால் அவரிடம் மிகவும்

அன்புகொண்ட பார்வதி பரமேச்வரர்களின். அநுக்ரஹத்தைப் பெற்று விடலாமென்றேன். நாம் பொதுவாக ஈச்வரனையும் அம்பாளையும் முக்யமாகக் கொண்டு வழிபடுபவர்கள ாதலால், அவர்களுடைய செல்லப் பிள்ளையை நாம் ஸந்தோஷப்படுத்துவதாலேயே அவர்களிடமிருந்து எல்லா

அநுக்ரஹமும் பெற்விடலாமென்பதற்காச் சொன்னேன். இதனால் அநுக்ரஹ சக்தி அவர்களுக்குத்தான் உண்டு, பிள்ளையாருக்குக் கிடையாது என்றதாக ஆகாது. அப்பாவும் அம்மாவுந்தான் அருள் செய்யவேண்டும் என்றில்லாமல் அவரே எதையும் அருள் வல்லவர்தான்.

ஈச்வரனுக்கும் அம்பாளுக்கும் புத்ரர் என்பதற்காக இல்லாமல், அவரே முழுமுதற் கடவுள் என்று உபாஸிக்கிறவர்கள் இம்மை மறுமை நலன்கள் எல்லாவற்றையும் அவரே அநுக்ரஹிப்பாரென்று கொண்டிருக்கிறார்கள். கணபதியே பரதெய்வம் என்று உபாஸிக்கிற இவர்களுக்கு 'காணபத்யர்கள்' என்று பெயர். தங்களுடைய உபாஸனா மூர்த்தியின் உத்கர்ஷம் (உயர்வு) பற்றி அவர்கள் பிற உபாஸகர்களிடம் சொல்லும் ஒன்றை எவரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். "சிவனையோ, அம்பாளையோ, முருகனையோ, விஷ்ணுவையோ பரதெய்வமாகப் பூஜிக்கிற நீங்களும் உங்கள் ஸ்வாமியைப் பூஜை பண்ண ஆரம்பிக்கும்போது முதலில் 'சுக்கலாம்பரதரம்' குட்டிக் கொணடு, மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைத்து

எங்கள் ஸ்வாமியை வேண்டிக் கொள்ளத்தானே வேண்டியிருக்கிறது? பிள்ளையாரையே பரமாத்மாவாகப் பூஜை பண்ணும் நாங்கள் உங்கள் ஸ்வாமிகளில் எவரையும் இப்படி வேண்டிக் கொள்வதில்லையே!" என்று அவர்கள் சொல்வார்கள்.

விஷ்வக்ஸேனர், தும்பிக்கையாழ்வார் என்ற பெயர்களில் வைஷ்ணவர்கள் முதல் பூஜை செய்வதும் விக்நேச்வரரின் ஒரு அவஸரத்துக்குத்தான் (கோலத்துக்குத்தான்) என்று சொல்லலாம்.தாமே அக்ர (முதல்) பூஜை பெறுகிற உயர்வோடு விளங்குபவர் பிள்ளையார். "இவரை பற்றிய ச்லோகங்களில் ஈச்வரன், அம்பாள், விஷ்ணு, முருகன் முதலியவர்களைப்பற்றி வருவதால், அந்த ஸ்வாமிகளாலேயே இவருக்குப் பெருமை என்று நினைத்தால் அது ஸரியே இல்லை.அந்த ஸ்வாமிகள் எல்லாருங்கூட ஏதாவது ஒரு ஸந்தர்பத்தில் இவர் தயவை நாடித்தான் கார்ய ஸித்தி அடைந்திருக்கிறார்கள்" என்று கணபதி உபாஸகர்கள்

புராணங்களைக் காட்டுவார்கள்.

தெய்வங்களில் உசத்தி தாழ்த்தி இல்லை; இல்லவே இல்லைதான். ஆனாலும் ஒரே பரமாத்மா லீலானந்தத்துக்காகவும், ஜனங்களின் விதவிதமான மனப்போக்குகளில் ஒவ்வொனறுக்கும் பிடித்த மாதிரியும், பல ரூபங்களில் வருகிறபோது, அவரவருக்கும் தங்கள் மூர்த்தியும் பக்தி ஒருமுகப்படுவதற்காக ஒவ்வொரு மூர்த்தியும் மற்றவற்றைச் சில ஸந்தர்பங்களில் ஜயித்ததாகப் புராணங்களில் பார்க்கிறோம். ஒவ்வொரு மூர்த்தியும் இப்படி மற்றவற்றை ஜயித்தது என்பதாலேயே ஒவ்வொன்றும் மற்றவற்றிடம் தோற்றும்தான் இருக்க வேண்டுமென்றாகிறதல்லவா? இப்படி ஒவ்வொரு தெய்வமும் சில ஸந்தர்பத்தில் ஜயித்து, சில ஸந்தர்பத்தில் தோற்றுப் போவதில் ஜயித்தவைகளை மட்டுமே அந்தந்த தெய்வத்தின் பக்தர்களும் எடுத்துக் கொண்டு அதனிடம் தங்கள் பக்தியை

வலுவாக்கிக் கொள்கிறார்கள். இதில் பிள்ளையார் தோற்றுப் போனதாக மட்டும் ஒரு

கதையும் ப்ரஸித்தமாயிருக்கவில்லை. ஆனால் மற்ற ஸ்வாமிகள் இவரைப் பூஜித்ததற்கு நிறையக் கதைகள் இருக்கின்றன.

**தந்தை பூஜித்த தனயர்**

தகப்பனாரான ஈச்வரனையே எடுத்துக்கொள்ளலாம். அவர் த்ரபுர ஸம்ஹாரத்துக்காகப் புறப்படுகிறபோது பிள்ளையை - அவர் மரியாதை கொடுக்கப்பட்ட வேண்டிய பிள்ளையார் என்பதை மறந்து - ஸ்மரிக்காமலே கிளம்பினார். பிள்ளையார் தமக்கு வேண்டிய due-வைப் பெறாமல் விடமாட்டார்! 'பிள்ளையாருக்கு முதல் பூஜை' என்பது தேவதைகள் எல்லோருமாகத் தீர்மானித்தது.அப்படியிருக்க, ஒரு ரெஸொல்யூஷன் ஏகமனதாகப் பாஸ் ஆகிச் சட்டமாய் விட்டதென்றால் அதைத் தகப்பனாராகத்தான் இருக்கட்டும், அந்தத் தகப்பனார் ஸர்வ ஜ்கத்துக்கும் ஈச்வரராகத்தான் இருக்கட்டும், மீறினால் குற்றம் தானே? தப்புச் செய்தவரைப் பிளளையார் சும்மா விடமாட்டார்.

ஆகையால் த்ரிபுராஸுரர்களை நோக்கி ஈச்வரனின் ரதம்

போய்க்கொண்டிருக்கும் வழியில் அதன் அச்சு முறிந்து போகும்படியாகப் பிள்ளையார் பண்ணிவிட்டார். ரதம் நின்றுபோய்விட்டது. உடனே ஈச்வரனுக்குப் புரிந்துவிட்டது. 'ரொம்பவும் பெரியவனாகையால் நமக்குச் சட்டம் இல்லை என்று இருப்பது தப்பு. ரொம்பப் பெரியவனாயிருப்பதாலேயே நாம் தான் லோகத்துக்கெல்லாம் உதாரணமாக நடந்து காட்ட வேண்டும். அதன் படி சட்டத்துக்கு ரொம்பவும் அடங்கிப்போக வேண்டும். சட்டம் என்று வருகிறபோது அப்பா பிள்ளை முதலான உறவுகளுக்கு இடமில்லை, என்று பரமேஸ்வரன் நினைத்தார்.

உடனே, கொஞ்சங்கூட ஸ்தானம் பார்க்காமல் பிள்ளையாருக்குப் பூஜை பண்ணினார். (இன்னொரு ஸந்தர்ப்பத்தில் இளைய பிள்ளையிடமும் கீழ்ப்படிந்து ப்ரணவோபதேசம் வாங்கிக் கொண்டிருக்கிறார்!) பிள்ளையாரும் அப்பா கொஞ்சம் நினைத்தவுடனேயே ஓடிவந்து விக்னத்தை அகற்றிவிட்டார். அதற்கப்புறம் ரதம் ஓடி, முடிவில் 'த்ரிபுராந்தகர்' என்று பெரிய பெயர் வாங்கும்படியாக ஈச்வரன் அந்த அஸுரர்களை ஜ்யித்தார். செங்கல்பட்டுக்கும் திண்டிவனத்துக்கும் நடுவில் "அச்சரப்பாக்கம்" என்று இருக்கிறதே, அந்த ஊர்தான் ஈச்வரனுடைய ரதத்தின் அச்சு இற்றுப்போன "அச்சிறுப்பாக்கம்"என்று சொல்வார்கள்.

## ஸமீபகால ஸம்பவத்தில் புராண நிருபணம்

அப்படிச் சொல்வது நிஜந்தானென்று நிரூப்பிக்கிறதாக ஸமீபத்தில் ஒன்று நடந்தது. ராமேச்வரத்தில் சங்கர மண்டபம் கட்டிக்கொண்டிருந்தோம். அதில் ப்ரதிஷ்டை செய்யவேண்டிய ஆசார்யாள் பிம்பத்தை லாரியில் எடுத்துக் கொண்டு போயிற்று. ஜெய்ப்பூரிலிருந்து ஸலவைக்கல் தருவித்து காஞ்சிபுரத்தில் ஆசார்யாளுக்கும், அவருடைய நாலு சிஷ்யர்களுக்கும் பெரிசு பெரிசாக பிம்பம் பண்ணி அங்கேயிருந்து ராமேச்வரத்துக்கு லாரியில் எடுத்துக் கொண்டு போயிற்று. அப்போது வழியில் ஸரியாக இந்த அச்சிறுப்பாக்கத்திலேயே லாரி Break down ஆகி நின்று விட்டது! அப்புறம் பிள்ளையாரக்கு நூற்றியெட்டுத் தேங்காய் உடைத்து விட்டே, லாரியைப் பழுதுபார்த்துக் கிளப்பிற்று.

அதற்குப் பிற்பாடு எந்த

விக்னமுமில்லாமல் கும்பாபிஷேகம், ப்ரதிஷ்டை எல்லாம் ஜாம்ஜாமென்று நடந்தது. இந்த விக்னமும்கூட அநுக்ரஹம் என்று தான் தோன்றிற்று. தாம் கைலாஸ சங்கரனேதான் என்று நமக்கு உறுதிப்படுத்துவதற்காகவே நம்முடைய சங்கரபகவவத் பாதாள் இங்கே தம்முடைய நவீனகால ரத அச்சான லாரி ஆக்ஸிலை முறித்துக்கொண்டிருக்கிறரென்று தோன்றிற்று.

**அன்னைக்கு உதவிய ஐங்கரன்**

அம்பாளும் விக்நேச்வரரை உத்பவிக்கப்பண்ணி அவர் ஸஹாயத்திலே ஜயம் பெற்றாளென்று லலிதோபாக்யானத்தில் வருகிறது. லலிதாம்பிகை பண்டாஸுரனோடு யுத்தம் செய்த போது சக்திஸேனை என்பதாக முழுக்கவும் தேவஸ்த்ரீகளையே கொண்ட படையோடு போனாள். போய்ப் படைவீடாக ஒரு அக்னிக்கோட்டை கட்டப்பண்ணி அதற்குள் ஸேனா ஸமூஹத்தோடுகூட முகாம் போட்டிருந்தாள். பண்டா ஸுரனுக்கு மந்த்ரபலம் நிறைய உள்ள விசுக்ரன் என்ற ஒரு அஸிஸ்டன்ட் இருந்தான். அவன் என்ன பண்ணினானென்றால் விக்ன யந்த்ரம் என்ற ஒன்றைப் பண்ணி அதை அக்னிக் கோட்டைக்குள்ளேபோய் அம்பாளின் கூடாரத்தில் விழும் படியாக விசிறி எறிந்தான். அந்த யந்திரத்தின் தன்மை என்னவென்றால், இந்த நாளில் Psychological warfare என்கிறார்களே, அப்படி அது எதிராளியை பௌதிகமாகத் தாக்காமல் அவர்களுடைய மனஸையே சத்ருபக்ஷமாக மாற்றிவிடும், இப்போது propagandaவினால் (பிரசாரத்தினால்) கொஞ்சம் கொஞ்சமாக மனஸை மாற்றுகிற மாதிரியில்லாமல். மந்திரசக்தி வாய்ந்த யந்த்ரமாதலால் அது உடனேயே மன மாறுதலை உண்டாக்கிவிடும்,

விக்ன யந்த்ரம் வந்து விழுந்தவுடன் அதன் மயக்கும் சக்தியால் சக்திஸேனைகளின் புத்தியே மாறிவிட்டது."எதற்காக அஸுரர்களை நாம் கொல்லணும்? இது ஜீவ ஹிம்ஸைதானே? அம்பாளுக்கு அவர்களிடம் விரோதமென்றால் நமக்கென்ன வந்தது? இன்னம் அடி அஸ்திவாரத்துக்கே போனால் எதற்காக இந்த

அம்பாளுக்கு அடங்கி நாம் வேலைக்காரப் பிழைப்புப் பிழைக்கணும்? நம்மால்தான் அவளுக்கு பலம் என்பதால்தானே நம்மைச் சேர்த்துத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாள்? இத்தனை நாளாக நாம் என்னவோ புத்தியில்லாமல் அவள்தான் நமக்கெல்லாம் மேலே, அவளுக்கே நம்மை அடக்கி ஆள்கிற பலம் இருக்கிறது என்றெல்லாம் நினைத்துக்கொண்டு ஏவல் செய்து விட்டோம். இப்போது நாம் என்ன செய்ய வேண்டுமென்றால் ஆயுதங்களைப் போட்டு விட்டு அப்படியே ஸ்ட்ரைக் பண்ணிவிடவேண்டும் யஜமானி-பணியாளி என்கிற கதை இனிமே பலிக்காது. எல்லாரும் ஸமம்தான்" என்றெல்லாம் அந்த ஸேனைகள் ட்ரேட் யூனியனிஸம், கம்யூனிஸம் எல்லாம் பேச ஆரம்பித்து விட்டன.

"வேர்க்க விருவிருத்துக்கொண்டு, அடியும் குத்தும் பட்டுக் கொண்டு இனிமேலே இவளுக்காக யுத்தம் செய்ய வேண்டியதில்லை. நாம் பாட்டுக்கு நிர்விசாரமாகத் தூங்கலாம். அக்னிக் கோட்டைதான் இருக்கவே இருக்கிறது. அதைத் தாண்டி யாரும் வந்து நம் தூக்கத்தைக் கெடுக்க முடியாது" என்று சொல்லிக்கொண்டு ஸேனா ஸமூஹம் முழுக்கப்படுத்திக்கொண்டு 'கொர் கொர்' என்று குறட்டை விட

ஆரம்பித்துவிட்டன. புத்தியை முதலில் மாறாட்டமாகக் கலக்கிவிட்டு, அப்புறம் அது ஸ்தம்பித்துச் செயலிழந்து தூங்கும்படிச் செய்யும் சக்தி விக்ன யந்த்ரத்துக்கு இருந்தால் இப்படி நடந்தது. ஜ்ரும்பணாஸ்த்ரம் என்று ஒன்று உண்டு. அதை போட்டுவிட்டால் அதற்கு ஆளாகிறவர்கள் கொட்டாவி கொட்டாவியாக விட்டுக்கொண்டு அசந்து விழுந்துவிடுவார்கள். 'ஜ்ரும்பணம்' என்றால் 'கொட்டாவி விடுவது'

நவீன கால ஆயுதங்களைவிட பயங்கரமான விசித்ரமான ஆயுதங்தளை மந்த்ர சக்தியாலேயே ஆதிகாலத்தில் செய்திருக்கிறார்கள்ளென்று புராணத்திலுள்ள விவரங்களைப் பார்த்தால் தெரியும். ப்ரஹ்மாஸ்த்ரம், நாரயணாஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம் முதலியவற்றின் சக்தியைப் பற்றிப் படிக்கும்போது ஆடம் பாம்(ப்),ஹைட்ரஜன் பாம்(ப்) எல்லாம்

ஒன்றுமேயில்லை என்று தோன்றும். இப்போது இந்த பாம்(ப்)களின் ரேடியேஷனால் கர்ப்பசேசேத மேற்படுகிறது என்கிறார்களென்றால், அந்தக் காலத்தில் அச்வத்தாமா போட்ட அபாண்டவாஸ்த்ரம் உத்தரையின் கர்பபத்திலிருந்த சிசுவைப் பாதித்திருக்கிறது! கிருஷ்ண பரமாத்மாதான் அதை ரக்ஷித்துக் கொடுத்தார். அம்பாள் தன்னுடைய படைகள் ஸ்ட்ரைக் பண்ணிவிட்டு ஆனாலும் நல்லவேளையாக sabbotage (நாசவேலை) செய்யாமல், அமர்க்களமாய் டெமான்ட்ரேஷன்கூடச் செய்யாமல் அததுகளும் நன்றாகத் தூங்கிக்கொண்டு கிடப்பதைப் பார்த்தாள். ஞானஸ்வரூபிணியாக இருக்கப்பட்ட அவளுக்குத் தெரியாததா? இதெல்லாமும் அவள் லீலைதான்!

விக்நேச்வரரின் ப்ரபாவம் வெளிப்படவேண்டுமென்றுதான் அவளே இப்படி ஒரு விக்னத்தை விசுக்ரன் என்ற வ்யாஜத்தில் உண்டாக்கிக் கொண்டிருந்தாள். சிவ - சக்திகளாக எப்போதும் இருப்பவர்களில் சக்தியே பண்டாஸுரனை வதைப்பதற்காக இப்போது லலிதாம்பிகையாக ஞானாக்னி குண்டத்திலிருந்து தோன்றியிருந்தாள். கல்யாணமாகாதா கன்னியாக இவள் யுத்தத்துக்குப் போகக் கூடாது என்பதனால் இவளை விவாஹம் செய்துகொள்வதற் கூடாது என்பதனால் இவளை விவாஹம் செய்துகொள்வதற்காக சிவனும் காமேச்வரர் என்ற ரூபத்தில் வந்தார். கல்யாணம் ஆயிற்று. காமச்வர - காமேச்வரி என்று அந்த தம்பதியைச் சொல்வது வழக்கம். அந்த காமேச்வரிதான் நம்முடைய காமாக்ஷியாக இருப்பது. அவளுடைய ஸ்தானம்தான் காமகோடி பீடம்.

கல்யாணமானவுடன் பண்டாஸுர வதத்துக்காகப் புறப்பட்ட அம்பாள் ஈச்வரனைக் காமேச்வரனாக வரவழைத்தது மட்டும் போதாது, தன்னுடைய அருமைக் குழந்தை கணபதியையும் இந்த லலிதாம்பிகை ஆவிர்பாவத்தில் வரவழைத்து அவன் பெருமையை ப்ரகடனப்படுத்த வேண்டுமென்று நினைத்தாள். அதற்கு வாய்ப்பாகவே இப்போது சக்தி ஸேனை விக்ன யந்த்ரத்தால் தூங்கிக்கொண்டு கிடந்தது. உடனே காமேச்வரன் மேல் தன் ப்ரேம கடாக்ஷத்தைச் செலுத்தி மந்தஸ்மிதம் (புன்னகை) செய்தாள் அம்பாள். அவர் முகத்திலும் மந்தஹாஸம் படர்ந்தது. இப்படி ஆதி தம்பதியின் பரஸ்பர

அன்பில் உண்டான சிரிப்பின் காந்திஸமூஹம் ஒன்று சேர்ந்ததோ இல்லையோ, அதிலிருந்தே மஹா கணபதி உத்பவித்துவிட்டார்! ஆனந்த ஸ்வருபமாக, எப்போழுதும் ப்ரஸன்ன முகமாக, ஸுமுகராக இருக்கிற அவர் ரொம்பவும் பொருத்தமாக, ஸாக்ஷாத்

அம்பாள் ஈச்வரன் ஆகியவர்களின் முகத்திலிருந்து பெருகுகிர சிரிப்பு ஒன்று சேர்ந்ததிலிருநது உத்பவித்துவிட்டார்.

பிள்ளையாரின் பல ஆவிர்பாவங்களில் இது லலிதோபாக்யானத்தில் வருவது. லலிதோபாக்யானம் என்பது பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான ப்ரஹ்மாண்ட புராணத்தில் வருகிறது. ஈச்வரனின் முகத்தைப் பார்த்துச் சிரித்தே அம்பாள் பிள்ளையாரை அவதரிக்கச் செய்ததை லலிதா ஸஹஸ்ர நாமத்தில் "காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வரா" என்று சொல்லியிருக்கிறதது. எந்த தேவவதையானாலும் ՝தன் சக்தியெல்லாம் எவளொருத்தியின் அம்சலேசம்தானே அப்பேர்ப்பட்ட பராசக்தி, தானே விக்ன யந்திரத்தைச் சக்தியற்றதாகச் செய்திருக்கலாமாயினும், விக்ன நிவாரணத்துக்காகவே ஒரு விக்நேச்வரனை ஏற்படுத்தியிருக்கும்போது ՝வர் ஸஹாயத்தினால்தான் இதைச் செய்ததாக இருக்கவேண்டுமென்பதத்காக இப்படி லீலை செய்தாள். அவள் இப்படி ஒரு சட்டத்துக்கு அடங்கியிரு ந்ததற்கேற்ப, அவளுடைய கடாக்ஷத்திலிருந்து உண்டான விக்நேச்வரரும், 'ஸஹாயத்தைத்தானே ஆனானப்பட்ட பராசக்தியும் நாடவேண்டியிருக்கிறது? என்று கர்வப்படாமல் அவளை நமஸ்காரம் பண்ணினார். பணிவோடு அவளோடு ஆசிர்வாதத்தை வாங்கிக்கொண்டே விக்ன யந்த்ரத்தை அழிப்பதற்காகப் புறப்பட்டார். அக்னிக் கோட்டையின் ஒரு மூலையில் யந்த்ரம் புதைந்து கிடந்தது. பிள்ளையார் அதைக் கண்டுபிடித்து, தந்தத்தால் குத்தித் தவிடு பொடியாக்கினார். உடனே தேவி கணங்கள் தூக்கம் கலைந்து எழுந்தன. அவற்றுக்கு ஏற்பட்டிருந்த மனோ பேதமும் மாறி, அம்பிகையிடம் பழையபடி பக்தி விச்வாஸம் கொண்டன. முன்னைவிட உத்ஸாஹமாக யுத்தம் செய்தன. முடிவில் பண்டாஸுரன் போனான்.

---

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

*மரியாதைக்குரிய குழந்தை*

பெரிய இடத்துப் பிள்ளை என்பதாலேயே, 'நாம் நமக்கென்று ஒரு யோக்யதையும் ஸம்பாதிக்கொள்ள வேண்டியதில்லை. நம்முடைய பெரிய ஸம்பந்தத்தைக் காட்டியே ஊரை ஆட்டி வைத்துக்கொண்டிருக்கலாம்' என்று இருப்பவர்கள் உண்டு. அநேகம் பெரிய மநுஷ்யரகத்துப் பசங்கள் தறுதலைகள ாகவோ, அசட்டுப் பிசட்டென்றோ இருப்பதைப் பார்க்கலாம். ஆனால் இந்தப் பெரிய இடங்களுக்கெல்லாம் உச்சியிலுள்ள மஹா பெரிய இடத்துப் பிள்ளை, 'உச்சிப்பிள்ளையார்' என்கிறோமே, அவர் எப்படியிருக்கிறார்? தேஹபலமா, புத்திக் கூர்மையா, கார்ய சக்தியா, அன்புள்ளமா எல்லாவற்றிலும் தமக்கு மேல் யாருமில்லை என்று இருக்கிறார். பெரிய இடத்துப் பிள்ளை என்பதால் மாத்திரம் அவருக்குப் பெருமையில்லை. அவருக்காகவே அவருக்குப் பெருமை என்பது "பிளளை" க்கு "யார்" போட்டு அவரைப் "பிளளையார்" என்று மிகவும் மரியாதையாகச் சொல்வதிலிருந்தே தெரியும்.

பொதுவாகச் தாய், தகப்பன், பாட்டன், பாட்டி, தமையன், தமக்கை ஆகிய பெரியவர்களைத்தான் மரியாதையாகத் தாயார், தகப்பனார், பாட்டனார், பாட்டியார், தமையனார், தமக்கையார் என்றெல்லாம் சொல்வது வழக்கம். பிள்ளைக்கு அப்படி மரியாதை விகுதி சேர்த்துச் சொல்கிற வழக்கம் எங்கேயும் கிடையாது. இதற்கு மாறுதலாக இவர் ஒருவர் விஷயத்தில் மட்டும் "பிள்ளை" என்காமல் "பிள்ளையார்" என்றே சொல்கிறோம்.

## மங்களாரம்பம் - பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

### முழுமுதற் கடவுளாக

பிள்ளையார் ப்ரிதியை நாம் பெற்றுவிட்டால் அவரிடம் மிகவும் அன்புகொண்ட பார்வதி பரமேச்வரர்களின். அநுக்ரஹத்தைப் பெற்று விடலாமென்றேன். நாம் பொதுவாக ஈச்வரனையும் அம்பாளையும் முக்யமாகக் கொண்டு வழிபடுபவர்களாதலால், அவர்களுடைய செல்லப் பிள்ளையை நாம் ஸந்தோஷப்படுத்துவதாலேயே அவர்களிடமிருந்து எல்லா அநுக்ரஹமும் பெற்விடலாமென்பதற்காச் சொன்னேன். இதனால் அநுக்ரஹ சக்தி அவர்களுக்குத்தான் உண்டு, பிள்ளையாருக்குக் கிடையாது என்றதாக ஆகாது. அப்பாவும் அம்மாவுந்தான் அருள் செய்யவேண்டும் என்றில்லாமல் அவரே எதையும் அருள் வல்லவர்தான்.

ஈச்வரனுக்கும் அம்பாளுக்கும் புத்ரர் என்பதற்காக இல்லாமல், அவரே முழுமுதற் கடவுள் என்று உபாஸிக்கிறவர்கள் இம்மை மறுமை நலன்கள் எல்லாவற்றையும் அவரே அநுக்ரஹிப்பாரென்று கொண்டிருக்கிறார்கள். கணபதியே பரதெய்வம் என்று உபாஸிக்கிற இவர்களுக்கு 'காணபத்யர்கள்' என்று பெயர். தங்களுடைய உபாஸனா மூர்த்தியின் உத்கர்ஷம் (உயர்வு) பற்றி அவர்கள் பிற உபாஸகர்களிடம் சொல்லும் ஒன்றை எவரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். "சிவனையோ, அம்பாளையோ, முருகனையோ, விஷ்ணுவையோ பரதெய்வமாகப் பூஜிக்கிற நீங்களும் உங்கள் ஸ்வாமியைப் பூஜை பண்ண ஆரம்பிக்கும்போது முதலில் 'சுக்கலாம்பரதரம்' குட்டிக் கொணடு, மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைத்து

எங்கள் ஸ்வாமியை வேண்டிக் கொள்ளத்தானே வேண்டியிருக்கிறது? பிள்ளையாரையே பரமாத்மாவாகப்

பூஜை பண்ணும் நாங்கள் உங்கள் ஸ்வாமிகளில் எவரையும் இப்படி வேண்டிக் கொள்வதில்லையே!" என்று அவர்கள் சொல்வார்கள்.

விஷ்வக்ஸேனர், தும்பிக்கையாழ்வார் என்ற பெயர்களில் வைஷ்ணவர்கள் முதல் பூஜை செய்வதும் விக்நேச்வரரின் ஒரு அவஸரத்துக்குத்தான் (கோலத்துக்குத்தான்) என்று சொல்லலாம்.தாமே அக்ர (முதல்) பூஜை பெறுகிற உயர்வோடு விளங்குபவர் பிள்ளையார். "இவரை பற்றிய ச்லோகங்களில் ஈச்வரன், அம்பாள், விஷ்ணு, முருகன் முதலியவர்களைப்பற்றி வருவதால், அந்த ஸ்வாமிகளாலேயே இவருக்குப் பெருமை என்று நினைத்தால் அது ஸரியே இல்லை.அந்த ஸ்வாமிகள் எல்லாருங்கூட ஏதாவது ஒரு ஸந்தர்பத்தில் இவர் தயவை நாடித்தான் கார்ய ஸித்தி அடைந்திருக்கிறார்கள்" என்று கணபதி உபாஸகர்கள் புராணங்களைக் காட்டுவார்கள்.

தெய்வங்களில் உசத்தி தாழ்த்தி இல்லை; இல்லவே இல்லைதான். ஆனாலும் ஒரே பரமாத்மா லீலானந்தத்துக்காகவும், ஜனங்களின் விதவிதமான மனப்போக்குகளில் ஒவ்வொனறுக்கும் பிடித்த மாதிரியும், பல ரூபங்களில் வருகிறபோது, அவரவருக்கும் தங்கள் மூர்த்தியும் பக்தி ஒருமுகப்படுவதற்காக ஒவ்வொரு மூர்த்தியும் மற்றவற்றைச் சில ஸந்தர்பங்களில் ஜயித்ததாகப் புராணங்களில் பார்க்கிறோம். ஒவ்வொரு மூர்த்தியும் இப்படி மற்றவற்றை ஜயித்தது என்பதாலேயே ஒவ்வொன்றும் மற்றவற்றிடம் தோற்றும்தான் இருக்க வேண்டுமென்றாகிறதல்லவா? இப்படி ஒவ்வொரு தெய்வமும் சில ஸந்தர்பத்தில் ஜயித்து, சில ஸந்தர்பத்தில் தோற்றுப் போவதில் ஜயித்தவைகளை மட்டுமே அந்தந்த தெய்வத்தின் பக்தர்களும் எடுத்துக் கொண்டு அதனிடம் தங்கள் பக்தியை

வலுவாக்கிக் கொள்கிறார்கள். இதில் பிள்ளையார் தோற்றுப் போனதாக மட்டும் ஒரு கதையும் ப்ரஸித்தமாயிருக்கவில்லை. ஆனால் மற்ற ஸ்வாமிகள் இவரைப் பூஜித்ததற்கு நிறையக் கதைகள் இருக்கின்றன.

## மங்களாரம்பம் - பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

### *தந்தை பூஜித்த தனயர்*

தகப்பனாரான ஈச்வரனையே எடுத்துக்கொள்ளலாம். அவர் த்ரபுர ஸம்ஹாரத்துக்காகப் புறப்படுகிறபோது பிள்ளையை - அவர் மரியாதை கொடுக்கப்பட்ட வேண்டிய பிள்ளையார் என்பதை மறந்து - ஸ்மரிக்காமலே கிளம்பினார். பிள்ளையார் தமக்கு வேண்டிய due-வைப் பெறாமல் விடமாட்டார்! 'பிள்ளையாருக்கு முதல் பூஜை' என்பது தேவதைகள் எல்லோருமாகத் தீர்மானித்தது.அப்படியிருக்க, ஒரு ரெஸொல்யூஷன் ஏகமனதாகப் பாஸ் ஆகிச் சட்டமாய் விட்டதென்றால் அதைத் தகப்பனாராகத்தான் இருக்கட்டும், அந்தத் தகப்பனார் ஸர்வ ஜ்கத்துக்கும் ஈச்வரராகத்தான் இருக்கட்டும், மீறினால் குற்றம் தானே? தப்புச் செய்தவரைப் பிளளையார் சும்மா விடமாட்டார்.

ஆகையால் த்ரிபுராஸுரர்களை நோக்கி ஈச்வரனின் ரதம் போய்க்கொண்டிருக்கும் வழியில் அதன் அச்சு முறிந்து போகும்படியாகப் பிள்ளையார் பண்ணிவிட்டார். ரதம் நின்றுபோய்விட்டது. உடனே ஈச்வரனுக்குப் புரிந்துவிட்டது. 'ரொம்பவும் பெரியவனாகையால் நமக்குச் சட்டம் இல்லை என்று இருப்பது தப்பு. ரொம்பப் பெரியவனாயிருப்பதாலேயே நாம் தான் லோகத்துக்கெல்லாம் உதாரணமாக நடந்து காட்ட வேண்டும். அதன் படி சட்டத்துக்கு ரொம்பவும் அடங்கிப்போக வேண்டும். சட்டம் என்று வருகிறபோது அப்பா பிள்ளை முதலான உறவுகளுக்கு இடமில்லை, என்று பரமேஸ்வரன் நினைத்தார்.

உடனே, கொஞ்சங்கூட ஸ்தானம் பார்க்காமல் பிள்ளையாருக்குப் பூஜை பண்ணினார். (இன்னொரு ஸந்தர்ப்பத்தில் இளைய பிள்ளையிடமும் கீழ்ப்படிந்து ப்ரணவோபதேசம் வாங்கிக் கொண்டிருக்கிறார்!) பிள்ளையாரும் அப்பா கொஞ்சம் நினைத்தவுடனேயே ஒடிவந்து விக்னத்தை அகற்றிவிட்டார். அதற்கப்புறம் ரதம்

ஓடி, முடிவில் 'த்ரிபுராந்தகர்' என்று பெரிய பெயர் வாங்கும்படியாக ஈச்வரன் அந்த அஸுரர்களை ஜ்யித்தார். செங்கல்பட்டுக்கும் திண்டிவனத்துக்கும் நடுவில் "அச்சரப்பாக்கம்" என்று இருக்கிறதே, அந்த ஊர்தான் ஈச்வரனுடைய ரதத்தின் அச்சு இற்றுப்போன "அச்சிறுப்பாக்கம்"என்று சொல்வார்கள்.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

úeðè£ô ú‹ðõˆF™ ¹ó£í G¼ðí‹

அப்படிச் சொல்வது நிஜந்தானென்று நிரூப்பிக்கிறதாக ஸமீபத்தில் ஒன்று நடந்தது. ராமேச்வரத்தில் சங்கர மண்டபம் கட்டிக்கொண்டிருந்தோம். அதில் ப்ரதிஷ்டை செய்யவேண்டிய ஆசார்யாள் பிம்பத்தை லாரியில் எடுத்துக் கொண்டு போயிற்று. ஜெய்ப்பூரிலிருந்து ஸலவைக்கல் தருவித்து காஞ்சிபுரத்தில் ஆசார்யாளுக்கும், அவருடைய நாலு சிஷ்யர்களுக்கும் பெரிசு பெரிசாக பிம்பம் பண்ணி அங்கேயிருந்து ராமேச்வரத்துக்கு லாரியில் எடுத்துக் கொண்டு போயிற்று. அப்போது வழியில் ஸரியாக இந்த அச்சிறுப்பாக்கத்திலேயே லாரி Break down ஆகி நின்று விட்டது! அப்புறம் பிள்ளையாரக்கு நூற்றியெட்டுத் தேங்காய் உடைத்து விட்டே, லாரியைப் பழுதுபார்த்துக் கிளப்பிற்று. அதற்குப் பிற்பாடு எந்த

விக்னமுமில்லாமல் கும்பாபிஷேகம், ப்ரதிஷ்டை எல்லாம் ஜாம்ஜாமென்று நடந்தது. இந்த விக்னமும்கூட அநுக்ரஹம் என்று தான் தோன்றிற்று. தாம் கைலாஸ சங்கரனேதான் என்று நமக்கு உறுதிப்படுத்துவதற்காகவே நம்முடைய சங்கரபகவவத் பாதாள் இங்கே தம்முடைய நவீனகால ரத அச்சான லாரி ஆக்ஸிலை முறித்துக்கொண்டிருக்கிறரென்று தோன்றிற்று.

## தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)

## மங்களாரம்பம் - பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்

அன்னைக்கு உதவிய ஐங்கரன்

அம்பாளும் விக்நேச்வரரை உத்பவிக்கப்பண்ணி அவர் ஸஹாயத்திலே ஜயம் பெற்றாளென்று லலிதோபாக்யானத்தில் வருகிறது. லலிதாம்பிகை பண்டாஸுரனோடு யுத்தம் செய்த போது சக்திஸேனை என்பதாக முழுக்கவும் தேவஸ்த்ரீகளையே கொண்ட படையோடு போனாள். போய்ப் படைவீடாக ஒரு அக்னிக்கோட்டை கட்டப்பண்ணி அதற்குள் ஸேனா ஸமூஹத்தோடுகூட முகாம் போட்டிருந்தாள். பண்டா ஸுரனுக்கு மந்த்ரபலம் நிறைய உள்ள விசுக்ரன் என்ற ஒரு அஸிஸ்டன்ட் இருந்தான். அவன் என்ன பண்ணினானென்றால் விக்ன யந்த்ரம் என்ற ஒன்றைப் பண்ணி அதை அக்னிக் கோட்டைக்குள்ளேபோய் அம்பாளின் கூடாரத்தில் விழும் படியாக விசிறி எறிந்தான். அந்த யந்திரத்தின் தன்மை என்னவென்றால், இந்த நாளில் Psychological warfare என்கிறார்களே, அப்படி அது எதிராளியை பௌதிகமாகத் தாக்காமல் அவர்களுடைய மனஸையே சத்ருபக்ஷமாக மாற்றிவிடும், இப்போது propagandaவினால் (பிரசாரத்தினால்) கொஞ்சம் கொஞ்சமாக மனஸை மாற்றுகிற மாதிரியில்லாமல். மந்திரசக்தி வாய்ந்த யந்த்ரமாதலால் அது உடனேயே மன மாறுதலை உண்டாக்கிவிடும்,

விக்ன யந்த்ரம் வந்து விழுந்தவுடன் அதன் மயக்கும் சக்தியால் சக்திஸேனைகளின் புத்தியே மாறிவிட்டது."எதற்காக அஸுரர்களை நாம் கொல்லணும்? இது ஜீவ ஹிம்ஸைதானே? அம்பாளுக்கு அவர்களிடம் விரோதமென்றால் நமக்கென்ன வந்தது? இன்னம் அடி அஸ்திவாரத்துக்கே போனால் எதற்காக இந்த அம்பாளுக்கு அடங்கி நாம் வேலைக்காரப் பிழைப்புப்

பிழைக்கணும்? நம்மால்தான் அவளுக்கு பலம் என்பதால்தானே நம்மைச் சேர்த்துத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாள்? இத்தனை நாளாக நாம் என்னவோ புத்தியில்லாமல் அவள்தான் நமக்கெல்லாம் மேலே, அவளுக்கே நம்மை அடக்கி ஆள்கிற பலம் இருக்கிறது என்றெல்லாம் நினைத்துக்கொண்டு ஏவல் செய்து விட்டோம். இப்போது நாம் என்ன செய்ய வேண்டுமென்றால் ஆயுதங்களைப் போட்டு விட்டு அப்படியே ஸ்ட்ரைக் பண்ணிவிடவேண்டும் யஜமானி-பணியாளி என்கிற கதை இனிமே பலிக்காது. எல்லாரும் ஸமம்தான்" என்றெல்லாம் அந்த ஸேனைகள் ட்ரேட் யூணியனிஸம், கம்யூனிஸம் எல்லாம் பேச ஆரம்பித்து விட்டன.

"வேர்க்க விருவிருத்துக்கொண்டு, அடியும் குத்தும் பட்டுக் கொண்டு இனிமேலே இவளுக்காக யுத்தம் செய்ய வேண்டியதில்லை. நாம் பாட்டுக்கு நிர்விசாரமாகத் தூங்கலாம். அக்னிக் கோட்டைதான் இருக்கவே இருக்கிறது. அதைத் தாண்டி யாரும் வந்து நம் தூக்கத்தைக் கெடுக்க முடியாது" என்று சொல்லிக்கொண்டு ஸேனா ஸமூஹம் முழுக்கப்படுத்திக்கொண்டு 'கொர் கொர்' என்று குறட்டை விட

ஆரம்பித்துவிட்டன. புத்தியை முதலில் மாறாட்டமாகக் கலக்கிவிட்டு, அப்புறம் அது ஸ்தம்பித்துச் செயலிழந்து தூங்கும்படிச் செய்யும் சக்தி விக்ன யந்த்ரத்துக்கு இருந்தால் இப்படி நடந்தது. ஜ்ரும்பணாஸ்த்ரம் என்று ஒன்று உண்டு. அதை போட்டுவிட்டால் அதற்கு ஆளாகிறவர்கள் கொட்டாவி கொட்டாவியாக விட்டுக்கொண்டு அசந்து விழுந்துவிடுவார்கள். 'ஜ்ரும்பணம்' என்றால் 'கொட்டாவி விடுவது'

நவீன கால ஆயுதங்களைவிட பயங்கரமான விசித்ரமான ஆயுதங்தளை மந்த்ர சக்தியாலேயே ஆதிகாலத்தில் செய்திருக்கிறார்களென்று புராணத்திலுள்ள விவரங்களைப் பார்த்தால் தெரியும். ப்ரஹ்மாஸ்த்ரம், நாரயணாஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம் முதலியவற்றின் சக்தியைப் பற்றிப் படிக்கும்போது ஆடம் பாம்(ப்),ஹைட்ரஜன் பாம்(ப்) எல்லாம் ஒன்றுமேயில்லை என்று தோன்றும். இப்போது இந்த

பாம்(ப்)களின் ரேடியேஷனால் கர்ப்பசேசேத மேற்படுகிறது என்கிறார்களென்றால், அந்தக் காலத்தில் அச்வத்தாமா போட்ட அபாண்டவாஸ்த்ரம் உத்தரையின் கர்பபத்திலிருந்த சிசுவைப் பாதித்திருக்கிறது! கிருஷ்ண பரமாத்மாதான் அதை ரக்ஷித்துக் கொடுத்தார். அம்பாள் தன்னுடைய படைகள் ஸ்ட்ரைக் பண்ணிவிட்டு ஆனாலும் நல்லவேளையாக sabbotage (நாசவேலை) செய்யாமல், அமர்க்களமாய் டெமான்ட்ரேஷன்கூடச் செய்யாமல் அததுகளும் நன்றாகத் தூங்கிக்கொண்டு கிடப்பதைப் பார்த்தாள். ஞானஸ்வரூபிணியாக இருக்கப்பட்ட அவளுக்குத் தெரியாததா? இதெல்லாமும் அவள் லீலைதான்!

விக்நேச்வரரின் ப்ரபாவம் வெளிப்படவேண்டுமென்றுதான் அவளே இப்படி ஒரு விக்னத்தை விசுக்ரன் என்ற வ்யாஜத்தில் உண்டாக்கிக் கொண்டிருந்தாள். சிவ - சக்திகளாக எப்போதும் இருப்பவர்களில் சக்தியே பண்டாஸுரனை வதைப்பதற்காக இப்போது லலிதாம்பிகையாக ஞானாக்னி குண்டத்திலிருந்து தோன்றியிருந்தாள். கல்யாணமாகாதா கன்னியாக இவள் யுத்தத்துக்குப் போகக் கூடாது என்பதனால் இவளை விவாஹம் செய்துகொள்வதற் கூடாது என்பதனால் இவளை விவாஹம் செய்துகொள்வதற்காக சிவனும் காமேச்வரர் என்ற ரூபத்தில் வந்தார். கல்யாணம் ஆயிற்று. காமச்வர - காமேச்வரி என்று அந்த தம்பதியைச் சொல்வது வழக்கம். அந்த காமேச்வரிதான் நம்முடைய காமாக்ஷியாக இருப்பது. அவளுடைய ஸ்தானம்தான் காமகோடி பீடம்.

கல்யாணமானவுடன் பண்டாஸுர வதத்துக்காகப் புறப்பட்ட அம்பாள் ஈச்வரனைக் காமேச்வரனாக வரவழைத்தது மட்டும் போதாது, தன்னுடைய அருமைக் குழந்தை கணபதியையும் இந்த லலிதாம்பிகை ஆவிர்பாவத்தில் வரவழைத்து அவன் பெருமையை ப்ரகடனப்படுத்த வேண்டுமென்று நினைத்தாள். அதற்கு வாய்ப்பாகவே இப்போது சக்தி ஸேனை விக்ன யந்த்ரத்தால் தூங்கிக்கொண்டு கிடந்தது. உடனே காமேச்வரன் மேல் தன் ப்ரேம கடாக்ஷத்தைச் செலுத்தி மந்தஸ்மிதம் (புன்னகை) செய்தாள் அம்பாள். அவர் முகத்திலும்

மந்தஹாஸம் படர்ந்தது. இப்படி ஆதி தம்பதியின் பரஸ்பர அன்பில் உண்டான சிரிப்பின் காந்திஸமூஹம் ஒன்று

சேர்ந்ததோ இல்லையோ, அதிலிருந்தே மஹா கணபதி உத்பவித்துவிட்டார்! ஆனந்த ஸ்வருபமாக, எப்போழுதும் ப்ரஸன்ன முகமாக, ஸுமுகராக இருக்கிற அவர் ரொம்பவும் பொருத்தமாக, ஸாக்ஷாத்

அம்பாள் ஈச்வரன் ஆகியவர்களின் முகத்திலிருந்து பெருகுகிர சிரிப்பு ஒன்று சேர்ந்ததிலிருநது உத்பவித்துவிட்டார்.

பிள்ளையாரின் பல ஆவிர்பாவங்களில் இது லலிதோபாக்யானத்தில் வருவது. லலிதோபாக்யானம் என்பது பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான ப்ரஹ்மாண்ட புராணத்தில் வருகிறது. ஈச்வரனின் முகத்தைப் பார்த்துச் சிரித்தே அம்பாள் பிள்ளையாரை அவதரிக்கச் செய்ததை லலிதா ஸஹஸ்ர நாமத்தில் "காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வரா" என்று சொல்லியிருக்கிறதது. எந்த தேவவதையானாலும் `தன் சக்தியெல்லாம் எவளொருத்தியின் அம்சலேசம்தானே அப்பேர்ப்பட்ட பராசக்தி, தானே விக்ன யந்திரத்தைச் சக்தியற்றதாகச் செய்திருக்கலாமாயினும், விக்ன நிவாரணத்துக்காகவே ஒரு விக்நேச்வரனை ஏற்படுத்தியிருக்கும்போது `வர் ஸஹாயத்தினால்தான் இதைச் செய்ததாக இருக்கவேண்டுமென்பதத்காக இப்படி லீலை செய்தாள். அவள் இப்படி ஒரு சட்டத்துக்கு அடங்கியிரு ந்ததற்கேற்ப, அவளுடைய கடாக்ஷத்திலிருந்து உண்டான விக்நேச்வரரும், 'ஸஹாயத்தைத்தானே ஆனானப்பட்ட பராசக்தியும் நாடவேண்டியிருக்கிறது? என்று கர்வப்படாமல் அவளை நமஸ்காரம் பண்ணினார். பணிவோடு அவளோடு ஆசிர்வாதத்தை வாங்கிக்கொண்டே விக்ன யந்த்ரத்தை அழிப்பதற்காகப் புறப்பட்டார். அக்னிக் கோட்டையின் ஒரு மூலையில் யந்த்ரம் புதைந்து கிடந்தது. பிள்ளையார் அதைக் கண்டுபிடித்து, தந்தத்தால் குத்தித் தவிடு பொடியாக்கினார். உடனே தேவி கணங்கள் தூக்கம் கலைந்து எழுந்தன. அவற்றுக்கு ஏற்பட்டிருந்த மனோ பேதமும் மாறி, அம்பிகையிடம் பழையபடி பக்தி விச்வாஸம் கொண்டன. முன்னைவிட உத்ஸாஹமாக யுத்தம் செய்தன. முடிவில் பண்டாஸுரன் போனான்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்*

*முருகனுக்குதவிய முன்னவன்*

தாயார், தகப்பனாரே இப்படித் தங்கள் வெற்றிக்கான 'க்ரேடிட்'டைப் பிள்ளையாருக்குக் கொடுத்திருக்கிறார்கள். அப்படியிருக்கத் தம்பிக்கு மட்டும் இவர் ஸஹாயமில்லாமல் நடக்குமா? ஆனால் இது சத்ரு ஜயம் அல்ல. ஸபு் ரஹ்மண்ய ஸ்வாமி தன்னுடைய ச்ருங்கார ஜயத்துக்காகவே அண்ணாவின் ஸஹாயத்தை நாட வேண்டியிருந்தது.

குழந்தையாயிருந்தபோது அவர் ஸந்நியாஸியானதற்கு, தண்டாயுதபாணி என்று ஆண்டிப்பண்டாரமாகப் போனதற்கும் இதே அண்ணாதான் காரணம். பழத்துக்காக உலகத்தை ப்ரதக்ஷிணம் பண்ணவேண்டும் என்று அண்ணா - தம்பி ஓட்டப் பந்தயம் போனது தெரிந்த கதைதானே? அப்போது ஆண்டியாகப்போன ஸுப்ரஹ்மண்யரை அப்புறம் ஈச்வரனும் அம்பாளும் நல்லவார்த்தை சொல்லி அழைத்துக் கொண்டு வந்தார்கள். எதற்காக அவருடைய அவதாரம் ஏற்பட்டதோ அந்த சூர ஸம்ஹாரமும் அப்புறம் பண்ணினார். அதற்கப்புறம் இவருக்காகவே உருகிக்கொண்டிருந்த வள்ளியிடம் மாறு வேஷத்தில் வேடனாக, விருத்தனாகப் போய் விளையாட்டுப் பண்ணினார். அவள் இவர் யார் என்று புரிந்து கொள்ளாமல் உதாஸீனம் செய்தாள். அப்போது அவர் ஸுப்ரஹ்மண்யராகக் காட்சி கொடுத்திருந்தாலே போதும், அவள் உடனே அவரிடம் ப்ரேமை கொண்டிருப்பாள். ஆனால் அவர் அப்படிப் பண்ணாமல் தமையனின் பெருமையை உலகத்துக்குத் தெரிவிக்கப் பண்ண இது ஒரு நல்ல ஸந்தர்ப்பம் என்று நினைத்தார். எடுத்த

காரியத்துக்கு இடைஞ்சல் ஏற்பட்டால் பிள்ளையாரைப் பூஜித்தே அதை நிவ்ருத்தி செய்துகொள்ளவேண்டும் என்று ஜனங்கள் உணரும்படிப் பண்ணவேண்டுமென்று நினைத்தார். அதனால் உடனே மஹா கணபதியை த்யானம் பண்ணினார்.

தம்பி கூப்பிட்டவுடனே தமையனார் பெரிய மதயானை ரூபத்தில் ஓடி வந்து வள்ளியைத் துரத்து துரத்து என்று துரத்தினார். திக்குத் திசை புரியாமல் "முருகா முருகா" என்று ஓடின வள்ளி விருத்த ரூபத்தில் எதிர்ப்பட்ட அந்த முருகனையே - முருகன் என்று தெரிந்துகொள்ளாவிட்டாலும் - பயத்தினால் ஒரு குழந்தை அதன் தாத்தாவைக் கட்டிக் கொள்கிறமாதிரி, அப்படியே இறுகப்பிடித்துக் கொண்டு விட்டாள். 'இதற்கு மேலும் விளையாடப்படாது, விநாயக ப்ரபாவத்தை வெளிப்படுத்தியாச்சு' என்று ஸுப்ரஹ்மண்யரும் அப்போது தம்முடைய ஸ்வய ரூபத்தை எடுத்துக் கொண்டு வள்ளியை ஸந்தோஷத்தில் ஆழ்த்தினார்.

அப்புறம் வள்ளி கல்யாணம் நடந்தது. கட்டைப் பிரம்மசாரியான கணேச மூர்த்தியே தம்பியின் காதல் கல்யாணத்துக்கு உதவி பண்ணியிருக்கிறார்.

அருணகிரிநாதர் திருப்புகழில் பாடியிருக்கிற விக்நேச்வர ஸ்துதியில் ஈச்வரனின் த்ரிபுர ஸம்ஹாரம், ஸுப்ரஹ்மண்யரின் வள்ளித் திருமணம் இரண்டிலும் மஹாகணபதிக்கு உள்ள பங்கைச் சொல்லியிருக்கிறார்.

முப்பு மெரிசெய்த அச்சிவ னுறைரதம்

அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்

அப்புன மதனிடை யிபமாகி

அக்குற மகளுட னச்சிறு முருகனை

அக்கண மணமருள் பெருமாளே

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*பிற தெய்வங்களும் போற்றும் பிள்ளையார்*

*ராமபிரானும் விநாயகரும்*

மாமாக்காரர் மஹாவிஷ்ணு மருமானுக்கு மரியாதை பண்ணி அவர் மஹிமை தெரியும்படியாகச் செய்ததைச் சொல்லவேண்டும்.

மஹாவிஷ்ணு என்ற மூலரூபத்தில் அவர் இவரிடமிருந்து சக்ரத்தை வாங்க முடியாமல் தோப்பிக்கரணம் போட்டது மட்டுமில்லை ராம க்ருஷ்ணாதி அவதாரங்களிலும் பிள்ளையாருக்கு சாஸ்த்ரோக்தமாகப் பூஜை பண்ணியிருக்கிறார்.

ராமாவதாரத்தில் ராவண ஸம்ஹாரம் ஆன பிற்பாடு அவர் ராமலிங்க ப்ரதிஷ்டை செய்து சிவாராதனம் பண்ணியது எல்லாருக்கும் தெரிந்திருக்கும். ராவண ஸம்ஹாரத்துக்கு முன்னாடி, கிஷ்கிந்தையிலிருந்து போகிற போதே ஸேது பந்தம் நிர்விக்னமாக நடக்க வேண்டுமென்பதற்காக அவர் ராமநாதபுரம் ஸமுத்ரக்கரையில் நவ பாஷாணம் என்ற இடத்தில் நவக்ரஸ ப்ரதிஷ்டை செய்து பூஜை பண்ணினாரென்பதும் சில பேருக்காவது தெரிந்திருக்கும். தேவி பட்டணம் என்பது அந்த நவபாஷாணந்தான். இப்போதும் ராமேச்வர யத்திரை போகிறவர்கள், சுற்றுப்பட்ட க்ஷேத்ரங்கள் பலவற்றுக்குப் போகும்போது நவ பாஷாணத்துக்கு நிச்சயமாகப் போகிறார்கள். மிகவும் க்ரமமாக இந்த யாத்திரை பண்ணினால் முதலில் போக வேண்டிய ஊர் ஒன்று இருக்கிறது. விஷயம் தெரிந்தவர்கள் ஸேது யாத்ரா என்றால் அங்கேயிருந்துதான் ஆரம்பிப்பார்கள்.

ஆரம்ப ஸ்வாமியான விக்நேச்வரரை ராமசந்த்ரமூர்த்தி பூஜை பண்ணிய ஊர்தான் அது. உப்பூர் என்று பெயர். ராமர் மாதிரி வடக்கேயிருந்து வந்தால் நவபாஷாணத்துக்கு முன்னால் அது வந்துவிடும். அதுதானே பொருத்தம்? நவக்ரஹங்களைப் பூஜிப்பதற்கும் முதலில் 'சுக்லாம்பரதரம்' குட்டிக்கொண்டுதானேஆகவேண்டும்?எல்லாம் மநுஷ்ய

ரீதியில் சாஸ்த்ரோக்தமாக, ஸம்ப்ரதாய பூர்வமாகப் பண்ணி வழிகாட்டியவர் ராமர். அவர் ஸேதுபந்தத்தூககு முன் நவக்ரஹங்களை ப்ரீதி செய்தாரென்றால், அதற்கும் முந்தி ஸர்வ விக்ன ஹர்த்தாவான பிள்ளையாரையும் பூஜை பண்ணித்தானிருப்பார். அப்படி அவரால் பூஜிக்கப்பட்டவர்தான் நவபாஷாணத்துக்குப் பக்கத்தில இருக்கும் உப்பூர்ப் பிள்ளையார். வரப்ரஸாதி என்று அந்த வட்டாரத்திலுள்ளவர்களெல்லாம் கொண்டாடும் மூர்த்தி. மற்றவர்களுக்கு வரம் கொடுப்பாரே தவிர தமக்கு ஒரு கூரைகூட இல்லாதவர். தமக்கு மேலே விமானம் கட்ட அவர் விடுவதேயில்லை. எதையாவது விக்னத்தை உண்டுபண்ணி அதை தடுத்துவிட்டு, எளியவர்களில் எளியவராக, வெய்யில் மழை எல்லாம் தம்மேலேயே விழும்படி உட்கார்ந் திருக்கிறார். "வெயிலுகந்த விநாயகர்"என்றே அவருக்குப் பெயர்.

தொந்தி கணபதிக்கு "டுண்டி" என்று ஸம்ஸ்க்ருதத்தில ஒரு பெயருண்டு. டூண்டிராஜ கணபதி காசியில் பிரக்யாதியோடு இருக்கிறார். அதன் ஸம்பந்தமாகத் தானிருக்க வேண்டும், தமிழ் தேசத்திலும் "தொண்டி" என்று விநாயக க்ஷேத்ரம் இருக்கிறது. இதுவும் ராமர் பூஜித்த க்ஷேத்ரமாகத்தான் சொல்லப்படுகிறது. வேதாரண்யத்திலிருந்து ஸமுத்ரக்கரை ஓரமாகவே தெற்காக வந்தால், ஏறக்குறைய வேதாரண்யத்துக்கும் உப்பூருக்கும் நடுபாதியில் தொண்டி இருக்கிறது. முதலில் ராமல் இங்கேயிருந்துதான் லங்கைக்கு அணைகட்ட நினைத்தாராம். இங்கே அதற்காக அவர் பிள்ளையார் பூஜை பண்ணப் பிள்ளையாரும் ப்ரஸன்னமானார். ராமருக்கு வெற்றி நிச்சயம் என்று வரம் கொடுத்துவிட்டு, ஆனால் 'இங்கேயிருந்து அணைகட்டாமல் இன்னம் தெற்காகப் போய்க் கட்டினால் வேலை குறையும். தள்ளிப்போய்க் கட்டினால்தான் சுற்றி வளைக்காமல் லங்கைக் கோட்டையின் வாசல் பக்கத்துக்கே போய்விடலாம்' என்று பிள்ளையார் யோசனை சொன்னாராம்.

இந்தத் தொண்டி விநாயகரும் தமக்கு மேலே விமானமில்லாமல்தான் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். மாமாக்காரர் மழையிலும் வெய்யிலும் அலைந்து கொண்டு லங்கைக்கு அணைகட்டிக்கொண்டு கொண்டாட்டம் அடிக்கக் கூடாதென்றுதான் இப்படி இரண்டு இடத்திலுமே இருக்கிறார்

போலிருக்கிறது. ஆசார்யாள் "கணேச பஞ்சரத்ந" ஸ்தோத்ரம் செய்திருப்பது தொண்டி கணபதி மேல்தான்.

ஈச்வரஸூதனை ஸ்ரீராமர் ஆராதனை பண்ணி அநுக்ரஹம் பெற்ற பலன்தான், கடைசியில் அவர் ராவண ஸம்ஹாரம் பண்ணி விஜய ராகவனாக, அதோடுகூட இப்போது பறி கொடுத்திருந்த பத்னியைத் திரும்பவும் பெற்ற ஸீதா ராமனாகத் திரும்பிவந்து அந்த ஈச்வரனையே ராமலிங்கமாக ப்ரதிஷ்டை செய்தது.

ஆசார்யாள் பிம்பம் லாரியில் ராமேச்வரத்துக்குப் போயிற்று என்று சொன்னேனே, அப்போது அச்சரப்பாக்கத்தில் செய்த மாதிரியே உப்பூரிலும் நூற்றியெட்டுத் தேங்காய் உடைத்தது. ஈச்வரனக்குப் பிள்ளையார் இடைஞ்சலைப் போக்கினது முதல் ஊரில் என்றால், பின் ஊரில் அவரை ராமல் பூஜித்த விசேஷம்தானே, ஈச்வரனின் ஜ்யோதிர்லிங்க மஹாக்ஷேத்ரமான ராமேச்வரம் ஸாக்ஷாத் ஸ்ரீராம ப்ரஸாதமாக நமக்கு கிடைத்திருப்பது. ராமர், ஈச்வரன் இரண்டு பேருடனும் இப்படித் தம் ஸம்பந்தத்தை ராமேச்வரத்துக்கு போன ஆசார்யாள் காட்டிக்கொண்டு விட்டார்.க்ருஷ்ணாவதாரத்தில் மஹாவிஷ்ணு மருமானைப் பூஜித்தது ஸ்வாரஸ்யமான பெரிய கதை.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஸ்யமந்தகத்தின் கதை*

' ஸ்யமந்தகமணி னபாக்யானம்' என்று பாகவதத்தில் ஒரு கதை இருப்பதாகத் தெரிந்திருக்கலாம். அந்தக் கதை என்ன என்று தெரியாவிட்டாலும், 'ஸ்யமந்தகமணி உபாக்யானம்' என்ற பெயரையாவது கேட்டிருக்கலாம்.

ஆக்யானம் என்றால் கதை என்று அர்த்தம். உபஆக்யானம் - உபாக்யானம் என்றால் கிளைக்கதை. பெரிசாக ஒரு கதையை

ஒரு இதிஹாசமோ, புராணமோ சொல்லிக் கொண்டு போகும்போது அதில் கிளைக்கதையாக வருவதே உபாக்யானம். 'மெயின்' கதையின் பாத்ரங்கள் ஸம்பந்தப்படாமல் முழுக்க வேறு பாத்ரங்களைப் பற்றியே உபாக்யானங்கள் வருவதுமுண்டு. மஹாபாரதத்தில் இப்படித்தான் பஞ்சபாண்டவர் ஸம்பந்தமேயில்லத நளோபாக்யானம் முதலான பல கிளைக்கதைகள் வருகின்றன. இப்படியில்லாமல் 'மெயின்' கதையின் பாத்ரங்களுடைய ஸம்பந்தமுடையதாக மெயின் கதையிலிருந்து எடுக்கமுடியாத அதன் ஒரு பிரிவாகவே, அங்கமாகவே, ஆனாலும் ஒரு தனிக் கதாம்சமுள்ளதாக, அதாவது கழித்துக் கட்டமுடியாத கிளைகளாக உள்ள உபாக்யானங்களும் உண்டு.

ஸ்யமந்தகமணி உபாக்யானம் பாகவதத்தில் இப்படித்தான் பார்ட் மற்றும் பார்சல் - ஆக இருக்கிறது. ஸ்யமந்தகம் என்ற தெய்வீகமான மணியை மையமாக வைத்து ஸாக்ஷாத் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவுக்கே ஏற்பட்ட பெரிய அபவாதம், அதைப் போக்கிக்கொள்ள அவர் பாடுபட்டது இவற்றை இந்தக் கதை சொல்கிறது.

இதே கதை விஷ்ணு புராணத்திலும் வருகிறது. கொஞ்சம் மாறுதலோடு ஸ்காந்தத்திலும் வருகிறது. அதில் நந்திகேச்வரருக்கும் ஸநத்குமாரருக்கும் நடந்த ஸம்வாத ரூபமாக (ஸம்பாஷணை உருவில்) வருகிறது. இந்த ஸ்காந்தக் கதையில்தான் விக்நேச்வரர் ஸமாசாரம் வருகிறது. நான் சொல்லப் போவது ஸநத்கமாரருக்கு நந்திகேச்வரர் சொன்ன இந்தக் கதைதான். அங்கங்கே பாகவதம், விஷ்ணு புராணம் ஆகியவற்றின் க்ஷிமீக்ஷீஉவீஷீஸீ களையும் கொஞ்சம் அவியல் பண்ணிக் கெ ாள்வேன்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஸூர்யனும் விநாயகரும்*

ருக்மிணி கல்யாணம் ஆகி பகவான் த்வாரகையில் வாஸம் பண்ணிக்கொண்டிருந்த ஸமயம். த்வாரகையில் யாதவ குலத்தின் முக்ய புருஷர்களில் இருவராக ஸத்ராஜித்,

ப்ரஸேனன் என்று ஒரு அண்ணன் - தம்பி இருந்தனர்.

அண்ணாவான ஸத்ராஜித்துக்கு ஸூர்ய பகவானிடம் பக்தி.

தற்காலத்தில் ஸூர்யனைப் பரிவார தெய்வங்களில் ஒன்றாக மட்டும் வைத்து, ஏதோ சிறிது ஸூர்ய நமஸ்காரம் பண்ணுவது, ஆதித்ய ஹ்ருதயம் சொல்வது என்பதோடு மாதபிமானமுள்ளவர்கள்கூட நின்றுவிட்டாலும் பூர்வத்தில் ஸூர்ய பகவானையே முழு முதற் தெய்வமாக உபாஸித்தவர்கள் நிறைய இருந்திருக்கிறார்கள். நம்முடைய மதத்தில் ஆறு பிரிவுகள் - ஆறு உபாஸனா மூர்த்திகளைக் குறித்ததாக ஷண்மதம் என்று உண்டு. பிள்ளையார், ஸுப்ரஹ்மண்யர், அம்பாள், ஈச்வரன், மஹாவிஷ்ணு என்று இப்போதும் ஸுப்ரஸித்தமாக இருக்கிற ஐந்து மூர்த்திகளோடு ஆறாவதாக ஸூர்ய பகவானம் இவர்களில் இருக்கிறார். அவரையே பரமாத்ம ஸ்வரூபமாக வழிபடும் மதப்பிரிவுக்கு 'ஸௌரம்' என்று பெயர். வெளிநாட்டுக்காரர்கள் கூடப் பார்த்துப் பிரமிப்பதாக கோனார்க்கில் உள்ள ஆலயம் ஸூர்ய பகவானுக்கானதுதான். கோண- அர்க்கம் தான் கோனார்க். 'ஸூர்யனடைய பகுதி' என்று அதற்க அர்த்தம். 'அர்க்கன்' என்றால் ஸூர்யன். அர்க்கனுக்கான கோணம் 'கோனார்க்'

'அர்க்கன்' என்றதும் ஒன்று ஞாபகம் வருகிறது. பிள்ளையார் தொடர்பாகத்தான். பேசிக்கொண்டே போவதில் இப்படித்தான், கேட்பவர்களுக்கு ப்ரயோஜனமிருக்கிறதோ இல்லையோ, அவர்களுக்கு ஸ்வாரஸ்யமாயிருக்கிறதோ இல்லையோ, ஒன்றிலிருந்து ஒன்றாகப் பல ஸப்ஜெக்ட்களுக்கு போகும்போது பேசுபவருக்கே புதிதாகச் சில 'லிங்க்'கள் அகப்பட்டு ஆத்ம த்ருப்தியும், நூதனமாக ஒரு விஷய ஞானமும் உண்டாகின்றன. ஷண்மதம் என்று சொல்லி அதில் ஸுப்ரஸித்தமாயுள்ள ஐந்து மூர்த்திகள் என்று சொல்லும்போதே, 'இந்த ஐந்திலே பிள்ளையார் போக, பாக்கியுள்ள ஈச்வரன். அம்பாள், ஸுப்ரஹ்மண்யர், விஷ்ணு ஆகிய நாலு பேருக்கும் பிள்ளையார் ஸம்பந்தம் காட்டிவிட்டோம். ஆறாவதாக இருக்கிற ஸூர்யனுக்கும்

அவருக்கும் ஸம்பந்தம் உண்டா?' என்று உள்மனஸ் யோசிக்க ஆரம்பித்தது. ஏதோ தற்செயலாய் பேச்சு கோனார்க், அர்க்கன் என்று போனவுடன், 'தேவலையே ஸம்பந்தம் கிடைத்து விட்டதே' எனறு எனக்கே ஒரு ஸந்தோஷம், த்ருப்தி ஏற்பட்டிருக்கிறது.

'அர்க்க' ஸம்பந்தம் பிள்ளையாருக்கு இருக்கிறது. அவருக்கு அர்ச்சனை செய்ய, ஹாரம் சார்த்தி அலங்கரித்து அழகு பார்க்க எந்தப் புஷ்பம் ரொம்பவும் உகந்தது? எருக்கம் பூதானே? எருக்கம்பூவுக்கு அர்க்க புஷ்பம் என்றே பெயர். 'அர்க்க'தான் 'எருக்கு' என்றாகியிருக்கிறது. ஸூர்யன், எருக்கு இரண்டுமே அர்க்க நாமமுடையவையாயிருக்கின்றன. ஸூர்யனார் கோயிலில் எருக்குதான் ஸ்தலவிருக்ஷம். ராத்ரியில் மலரும் சில பூக்களைத் தவிர பாக்கி எல்லாப் புஷ்பங்களையும் மலர்த்துவிக்கிற ஸூர்யனேதான் எருக்கம்பூவில் விசேஷ ஸாந்நியத்தோடு இருந்து கொண்டு. பக்தர்கள் பிள்ளையாருக்கு அந்தப் பூவால் பண்ணும் ஒவ்வொரு அர்ச்சனையிலும் அவர் பாதத்தில் போய் விழுந்து நமஸ்காரம் பண்ணுகிறானென்று வைத்துக் கொள்ளலாம்.

இதனால் ஷண்மத தெய்வங்களில் பிள்ளையார் நீங்கலாக உள்ள ஐந்து பேருமே அவருடைய உத்கர்ஷத்தை ஒப்புக் கொண்டதாக ஏற்பட்டு விடுகிறது. இந்த விஷயம் இருக்கட்டும்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*தவத்தால் பெற்ற திவ்யமணி*

ஸத்ராஜித் ஸூர்ய பகவானிடம் பக்தியுள்ளவனென்று சொல்லிக் கொண்டருந்தேன். அவன் ஸமுத்ரக் கரையில் தன் இஷ்டமூர்த்தியைக் குறித்துக் கடுமையான தபஸ் பண்ணினான். ஸூர்ய பகவான் ப்ரஸன்னமானார். "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

அவர் கழுத்தில் பளபளவென்று ஒரு மணி போட்டுக் கொண்டிருந்தார். அதற்குத்தான் 'ஸ்யமந்தகம்' என்று பெயர். அது பார்க்க ஒரே ஜ்வலிப்பாயிருப்பதோடு, பரம ச்ரேயஸ்கரமானது. ஐச்வர்ய ப்ரதமானது (ஐச்வர்யத்தைக் கொடுக்கவல்லது) என்று ஸத்ராஜித்துக்குத் தெரியும்.

அதனால், என்ன வரம் வேணும் என்று கேட்டவுடன் அவன், "நீங்கள் போட்டுக்கொண்டிருக்கிற ஸ்யமந்தக மணியை எனக்கு அநுக்ரஹிக்கனம்" என்று ப்ரார்த்தித்துக் கொண்டான்.

தெய்வங்கள் 'வரம் தருகிறேன்' என்று சொல்லிவிட்டால், அப்புறம் பக்தன் எதைக் கேட்டாலும், 'ஆஹா' என்று கொடுத்துவிடும். ஸூர்ய பகவான் தன் கழுத்திலிருந்த ஸ்யமந்தக மணியை உடனே கழற்றித் தாமே ஸத்ராஜித்தின் கழுத்தில் போட்டுவிட்டார்.

"என்னுடைய இன்னொரு ஜபம் மாதிரியே ப்ரகாசமாயிருக்கும் இந்த மணி இருக்கிற இடத்தில் வ்யாதி, வ்யஸனம் எதுவும் இருக்காது. அதோடு, இது இருக்கும் க்ருஹத்தில் எட்டு பாரம் ஸ்வர்ணம் உண்டாகும். ஆனால் இத்தனை ஸம்பத்துக்களைப் பெறுவதற்குப் பாத்ரனாக இதை தரித்துக் கொண்டிருப்பவன் உள்ளும் புறமும் பரிசுத்தமாயிருக்க வேண்டும். ஆசௌசம் (மடித்தடிப்பு) ஏற்பட விடக்கூடாது. சுத்தம் தப்பினால் பெரிய ஹானி உண்டாகும்" என்று எச்சரிக்கை செய்துவிட்டு, மறைந்துபோய் விட்டார்.

பளபளவென்று ஜ்வலிக்கிற ஸ்யமந்தக மணியைப் போட்டுக்கொண்டு ஸத்ராஜித் ஊருக்குத் திரும்பி வந்தான். த்வாரகை ஜனங்களக்கு அதனுடைய பெரிய Glare -ல் அதைப் போட்டுக்கொண்டிருக்கிற ஆசாமியே கண்ணுக்குத் தெரியவில்லை. ஜ்யோதி ப்ரகாசம் மட்டுந்தான் தெரிந்தது. தெருவோடு இப்படி ஒரு ஜ்யோதிஸ் போகிறதை ஆச்சர்யத்துடன் பார்த்து, ஸூர்ய ப்ரஸாதமாக அவனுக்கு ஸ்யமந்தக மணி கிடைத்திருப்பதைத் தெரிந்து கொண்டார்கள்.

க்ருஷ்ணர் ரஸிகரானதால் அந்த மணியின் அழகை ரொம்பவும் ச்லாகித்தார். அவர் புகழ்ந்ததைக் கேட்ட

ஸத்ராஜித்துக்கு, அந்த மணி தனக்கே வேண்டுமென்று பகவானுக்கு ஆசை வந்துவிட்டது என்று தோன்றிவிட்டது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*கண்ணனின் வைராக்யம்*

வெளியிலே எத்தனை கூத்தடித்தாலும், ஜார சோர சிகாமணி என்னும்படியாக வெண்ணெயைத் திருடுவது, கோபஸ்த்ரீகளோடு ராஸலீலை பண்ணுவது, பதினாறாயிரம் பத்னிகளோடு குடும்பம் நடத்துவது என்றெல்லாம் பண்ணினாலும், உள்ளூர ஒன்றிலும் ஒட்டாமல், ஆசாபாசமேயில்லாமலிருந்த பரமஞானி, பரப்ரஹ்ம வஸ்து கிருஷ்ண பரமாத்மா, கம்ஸனை வதம் பண்ணினவுடன் அவர் தமக்கே ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து கொண்டிருக்க எல்லா நியாயமும் உண்டு. அவரிடம் அப்படியே மோஹித்துப் போயிருந்த மதுரா ஜனங்களும் அவர் தங்களுக்கு ராஜாவாகிறாரென்றால் ரொம்ப ஆனந்தப்பட்டுத் தானிருப்பார்கள். ஆனாலும் ராஜ்யாதிகாரத்தில் ஆசையில்லாத அவர் கம்ஸனின் தகப்பனாரான உக்ரஸேனனைத்தான் ராஜாவாகக்கினார். உக்ரஸேனன் இவருக்கும் தாய்வழிப் பாட்டனார். சொந்தப் பாட்டனார் இல்லை. அம்மா தேவகிக்குச் சிற்றப்பா. கம்ஸவதம் ஆன அப்புறம் பகவான் மதுராவை விட்டுவந்து சின்ன ராஜ்யமாக த்வாரகா நிர்மாணம் பண்ணிக்கொண்டு 'த்வாரகாதீசன்' என்னம் படியாக வாழ்ந்தபோதும்ங்கூட, தம்மை அதற்கு 'ஸாவரின்' என்னும் தனி ராஜாவாக ப்ரகடனம் பண்ணிக்கொள்ளவில்லை. அண்ணா பலராமருக்கு த்வாரகையில் உயர்ந்த ஸ்தானம் கொடுத்துத் தாம் இரண்டாவதாகவே இடம் எடுத்துக் கொண்டார். பூர்ணாவதாரமாயிருந்தும் இப்படி அடக்கமாகவும், பொருளாசையற்ற வைராக்யத்துடனம் க்ருஷ்ணர் வாழ்ந்து காட்டினார்.

அம்ருதம் கடைந்து மஹாலக்ஷ்மி உத்பவித்து மஹாவிஷ்ணுவைப் பதியாக வரித்து இடத்திலேயே இப்படித்தான் (பாகவதத்தில்) மஹாவிஷ்ணுவைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. அவர் மண்ணாசை பொண்ணாசை மாதிரியே பெண்ணாசையும் கொஞ்சங்கூட இல்லாதவர். பாக்கி எல்லா தேவர்களும் லக்ஷ்மி தனக்கு மாலைபோட மாட்டாளா, தனக்கு மாலை போடமாட்டாளா என்று தவித்துக் கொண்டிருந்தபோது மஹாவிஷ்ணு மட்டும் பரம வைராக்யமாக அவர் பாட்டுக்கு ஒதுங்கி உட்கார்ந்து கொண்டிருந்தாராம். அதனாலேயே 'இத்தனை த்ருடமனஸ் உள்ளவரைப் பதியாய் அடைந்து அவருடைய ப்ரேமையையும் பெறும்படியாக நாம் வாழ்ந்து காட்டினால்தானே நமக்குப் பெருமை? என்று லக்ஷ்மி நினைத்து அவருக்கே மாலை போட்டாளாம். அவருக்கு எத்தனைக்கெத்தனை வைராக்யமுண்டோ அத்தனைக்கத்தனை கருணையும் உண்டாதலால் உடனே அவளைத் தூக்கி மார்பிலேயே வைத்துக் கொண்டுவிட்டார்.

க்ருஷ்ணர் ஆசையேயில்லாதவரென்று சொல்லவந்தேன். தானாகவே அவரைத் தேடிக்கொண்டு எல்லா ஐச்வர்யங்களும் வந்தன. மஹாவிஷ்ணுவின் சங்கு சக்ரம் கருடன் எல்லாம்கூட அவரிடம் அவ்வப்போது வந்ததாகப் பார்க்கிறோம். ராமர்கிட்டே இப்படி எதாவது வந்ததோ? இதேபோல மஹாவிஷ்ணு தரித்துக் கொண்டிருக்கும் கௌஸ்துப மணியும் க்ருஷ்ணர்கிட்டேதான் வந்தது. 'கஸ்தூரி திலகம் லலாட பலகே வக்ஷஸ்தலே கௌஸ்துபம்' என்று பாடுகிறோம். அப்பேர்ப்பட்ட திவ்ய கௌஸ்துபத்தைப் போட்டுக் கொண்டிருப்பவருக்கு ஸ்யமந்தகத்திடம் எதற்கு ஆசை வரப்போகிறது?

ஸ்யமந்தகத்தை ஸத்ராஜித் தந்தால் தரட்டுமே என்று த்வனிக்கும்படியாக அவர் கொஞ்சம் பேசியிருந்தால் கூட, உக்ரஸேன மஹாராஜாவுக்கு அதை அவன் தரலாமே என்ற அபிப்ராயத்தில்தான் சொன்னாரே தவிர, தமக்காகச் சொல்லிக் கொள்ளவில்லை. அதுவுங்கூட தேசம் முழுவதுன் க்ஷேமத்தை உத்தேசித்துத்தான் இப்படி Hintபண்ணிணாரே தவிர, பாட்டனாரிடமிருந்த ப்ரியத்துக்காக அல்ல. ஸத்ராஜித் ஒரு தனி ப்ரஜை. ஆனபடியால், ஸ்யமந்தகம்

அவனிடமிருந்தால் அது அளிக்கக்கூடிய மங்களங்கள், ஆரோக்யம், எட்டு பாரம் தங்கம் முதலானதுகள் - அவன் குடும்பத்துக்கு மட்டுந்தான் போகும். அதுவே ராஜாவிடமிருந்தால் இந்த நன்மைகள் தேசம் பூராவுக்கும் சேருமே என்பதால்தான் சொன்னார்.

அர்த்த சாஸ்த்ரபடி, ஒரு தனி ஆஸாமியிடம் ராஜாவுக்கு இல்லாத ஒரு பெரிய ஸொத்து இருந்தால் அவன் ராஜாவுக்கு மேற்பட்டவன் என்கிற எண்ணத்தை ஜனங்களுக்குக் கொடுத்து அவர்களை அராஜகத்தில் தூண்டக்கூடுமென்பதால் இதை அநுமதிக்கவில்லை. விலைமதிப்பிட முடியாத ரத்னங்கள் ராஜாவை சேர்ந்தவைதான் என்பது அர்த்தசாஸ்த்ரத்தின் முடிவு. "ராஜா ரத்நஹாரி" என்று வசனம்.

இந்த அபிப்ராயத்தில் பகவான் ஏதோ ஸூசனையாகச் சொல்லப் போகத்தான் ஸத்ராஜித், "ராஜாவுமாச்சு, மந்த்ரியுமாச்சு? இவன் பார்த்து வைத்த ராஜாதானே? தாத்தா வேறே அவன் பேரைச் சொல்லி இவனே தட்டிக் கொண்டுபோகப் பார்க்கிறான் என்று நினைத்துவிட்டான்.

பொருளாசை எப்படியெல்லாம் புத்தியை பேதகமாக நினைக்க வைக்கும் என்பதுதான் இந்த உபாக்யானத்தின் 'மாரல்' (நீதி)

க்ருஷ்ணரைத் தப்பாக நினைத்ததோடு மட்டுமில்லாமல் அவரிடம் ஸத்ராஜித் பயப்படவும் செய்தான். 'மஹாமல்லர்களான சாணூரன், முஷ்டிகன் முதலானவர்களை பால்யத்திலேயே கொன்றவன், கம்ஸனை த்வம்ஸம் பண்ணினவன், மஹாபராக்ரமசாலியான ஜராசந்தனை பதினேழு தடவை அடித்துத் துரத்தியவன். அதோடு எல்லாக் கபடமும் செய்யக்கூடிய மாயாவி. இப்படிப்பட்டவனின் விரோதத்தை ஸம்பாதித்துக்கொண்டால் எப்படி ஈடுகொடுக்க முடியும்?" என்று பயப்பட்டான்.

ஸ்யமந்தகத்தை விடவும் மனஸில்லாமல், வைத்துக் கொள்ளவும் தைர்யமில்லாமல் அவஸ்தைப்பட்டான்.

பொருள் என்ன பாடுபடுத்தும் என்று நமக்கெல்லாம் காட்டும் கதை.

அப்போதைக்கு மணியைத் தம்பி ப்ரஸேனனிடம் கொடுத்து வைத்துக் கொஞ்சம் நிம்மதிப்படுத்திக் கொண்டான். அவன் இவனைவிட புத்திசாலி, பலிஷ்டனுங்கூட, அதனால் உபத்ரவத்தை அவனிடந்தான் கொஞ்சம் தள்ளி விடுவோமே என்று தள்ளிவிட்டான்.

தம்பி ப்ரஸேனன் ஸந்தோ'மாக அந்த ஸ்யமந்தகத்தைப் போட்டு கொண்டு வேட்டைக்குப் புறப்பட்டான். (க்ருஷ்ணனோடேயேதான் அவன் வேட்டைக்குப் போனானென்று ஸ்காந்தக் கதை. இங்கே சொல்வது பாகவதத்தையும், விஷ்ணு புராணத்தையும் அநுஸரித்தது.)

ஸ்யமந்தகத்தைப் போட்டுக் கொண்டிருப்பவன் உள்ளும் புறமும் சுத்தமாயிருக்கவேண்டுமென்று நிபந்தனை அல்லவா? ஆனால் இவன் காட்டுக்குப் ே பான இடத்தில் ஒரு அசுசி ஏற்பட்டது. அப்புறம், பக்கத்தில் எங்கேயும் ஜலாசயம் இல்லாததால், இவன் கை, கால் அலம்பிக்கொள்ள முடியவில்லை. இப்படி சரீர பரிசுத்தி கெட்டுப்போயிருந்த ஸமயம் பார்த்து ஒரு சிங்கம் வந்து அவனை அடித்துப் போட்டுத் தின்று விட்டது. குட்டி ஸூர்யனைப்போல இருந்த ஸ்யமந்தகம் சிங்கத்தையும் வசீகரப்படுத்தியது.

இருட்டு மூடின காட்டைப் பட்டப் பகலாக்குகிற அந்த ரத்னத்தை கவ்விக்கொண்டு சிங்கம் போய்க் கொண்டிருந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஜாம்பவான்*

அந்தக் காட்டிலுள்ள ஒரு மலைக்குகையில் ஜாம்பவான் வாஸம் பண்ணிக் கொண்டிருந்தார். ராமாவதாரத்தின் போது ராவண யுத்தத்தில வானர ஸேனையோடுகூட ராமருக்கு ஸஹாயமாயிருந்த கரடித் தலைவரான அதே

ஜாம்பவான்தான்.

கடைசியில் ராமர் ஸரயுவில் தம் சரீரத்தை விட்டு வைகுண்டத்துக்கு ஆரோஹணம் செய்தபோது, அத்தனை பேரையும் தம்மோடு பரமபதத்துக்கு அழைத்துக்கொண்ட போனாரென்றாலும் ஆஞ்ஜநேயர், ஜாம்பவான் ஆகிய இரண்டு பேரை மட்டும் விட்டுவிட்டுப் போய்விட்டார். ராம ஸ்மரணம் மாத்திரம் ஒருவனுக்கு ஸதாவும் இருந்து விட்டால் அவனுக்கு இந்த பாபமயமான, துக்கமயமான பூலோகமே பரமபதமாக தானிருக்கும் என்று ரூபித்துக் காட்டக்கூடிய யோக்யதை இவர்களுக்கு இருந்தது. ஆகையால், இந்த உண்மையை உலகத்துக்குக் காட்டுவதற்காக இவர்கள் இங்கேயே சிரஞ்ஜீவியாக இருந்து கொண்டிருக்கட்டும்' என்று நினைத்தார் . அதனால் அவர்களை பூலோகத்திலேயே இருக்கும்படியாக ஆக்ஞாபித்து விட்டுப் போய்விட்டார். இதே மாதிரி விபீஷணனையும் லங்கையில் சிரஞ்சீவியாக இருந்து கொண்டருக்கும்படிப் பண்ணிவிட்டார்.

மநுஷ்ய ஜாதியை ரொம்பவும் உயர்வாகச் சொல்லிக் கொள்கிறோம். ஆனால் ராமசந்த்ரமூர்த்தி மநுஷ்ய ஜாதியைச் சேர்ந்த எவருக்கும் இப்படிச் சிரஞ்ஜீவித்வம் வஹிக்கும்படியான யோக்யதாம்சம் (யோகயதாம்சம் என்றால் வேறென்ன? ஸதா ஸர்வதா அவரையே ஸ்மரித்துக் கொண்டிருக்கும் த்ருட பக்திதான். அப்படிப்பட்ட யோக்யதாம்சம்) இருப்பதாக நினைக்கவில்லை. அஸுர ஜன்மா, ஒருத்தன் குரங்கு ஒன்று, கரடி ஒன்று என்று மூன்று பேரைத்தான் தம் பக்திக்கு சாச்வதச் சின்னங்களாக விட்டுப் போயிருக்கிறார்.

அச்வத்தாமா பலிர் வ்யாஸோ ஹநூமாம்ச்ச விபீஷண 1

க்ருப பரசுராமச்ச ஸப்தைதே சிரஜீவிந 11

என்று ஏழு சிரஞ்ஜீவிகள் இருப்பதாக ச்லோகம். அச்வத்தாமன், மஹாபலி, வ்யாஸர், ஹநுமார், விபீஷணன், க்ருபர், பரசுராமர் என்ற இந்த ஏழு பேரில் ஜாம்பவான் இல்லாவிட்டால் அவரும் சிரஞ்ஜீவியாக இருந்து கொண்டிருப்பவர்தான். எந்த ஃபீல்டிலுமே (துறையிலுமே) பழம் தின்று கொட்டை போட்டவர்களை "ஜாம்பவானாச்சே" என்கிறோமல்லவா?

அகஸ்த்யர், என்றும் பதினாறாயிருக்கும் மார்க்கண்டேயர் ஆகியவர்களும் (மேலே சொன்ன ச்லோகத்தில் குறிப்பிடப்படாவிட்டாலும்) சிரஞ்ஜீவிகள்தான்.த்ரேதா யுகத்து ராமர் காலத்திலிருந்து, த்வாபர முடிவில் இந்தக் கதை நடக்கும்போதும் இருந்த ஜாம்பவான் மணியைக் கவ்விக்கொண்டு வரும் சிங்கத்தைப் பார்த்தார். அவருக்கு அப்போது ஸுகுமாரன் என்று பெயர் கொண்ட ஒரு பிள்ளை குழந்தை இருந்தது. அத்தனை வயஸுகக்கா என்றால் கரடி, அதிலும் சிரஞ்ஜீவி - அதைப் பற்றி எது, எப்படியென்று நமக்கென்ன தெரியும்? ஜ்வலித்துக் கொண்டிருக்கும் மணி தம் குழந்தைக்கு நல்ல விளையாட்டுப் பொருளாயிருக்கும் என்று நினைத்தார்.

உடனே மஹா பலசாலியான அவர் சிங்கத்தோடு சண்டை போட்டு அதைக் கொன்று விட்டார். மணியை எடுத்துக்கொண்டு போய்க் குழந்தையின் தொட்டிலுக்கு மேலே பொம்மையும் கிளிச்சட்டமும் கட்டித் தொங்கவிடுகிறது போல ஸ்யமந்தகத்தைக் கட்டி வைத்தார். (வாலி தன் பிள்ளை அங்கதனடைய தொட்டிலுக்கு மேலே ராவணனையே 'பத்து தலைப் பூச்சி' என்று சொல்லி கட்டி வைத்தானாம்.)

கண்ணைப் பறிக்கிற ஸ்யமந்தகத்தின் ஜொலிப்பும் கரடிக்குழ்தையானதால் அதற்கு கூசவில்லை. நம்மகத்துக் குழந்தைக்கு டார்ச்லைட் அடித்துக் காட்டினால் வேடிக்கையாயிருக்கிற மாதிரித்தான் கரடிக் குழந்தைக்கு மணி இருந்தது போலிருக்கிறது.

**கண்ணன் கண்ட நாலாம் பிறை**

(பிள்ளையார் ஸமாசாரம் ஸ்யமந்தக உபாக்யனத்தில் சேர்கிற) ஸ்காந்தக் கதையில் இங்கே ஒரு புது விஷயம் வருகிறது. இந்த 'வெர்ஷன்'படி ப்ரஸேனன், க்ருஷ்ணன் இரண்டு பேரும் சேர்ந்து வேட்டைக்குப் போனார்கள் என்று முன்னேயே சொன்னேன்.

அப்புறம் ப்ரஸேனன் தனியாக எங்கேயோ பிரிந்து போய் சிங்கத்தினால் அறையப்பட்டுச் செத்துப் போனான். மணி ஜாம்பவானிடம் முடிவாகப் போய்ச் சேர்ந்தது.

ப்ரஸேனனைக் காணோமே, காணோமே என்று பகவான் ரொம்ப நாழி தேடிப் பார்த்தார். ஸூர்யாஸ்தமனம் ஆனது கூடத் தெரியாமல் தேடிக்கொண்டேயிருந்தார். அஸ்தமனத்துக்குக் கொஞ்ச நாழி கழித்து, அகஸ்மாத்தாக அவர் ஆகாசத்தைப் பார்த்த போது அங்கே பளிச்சென்று நாலாம் பிறைச் சந்திரன் தெரிந்தது.

அமாவாஸ்யைக்கு அப்புறம் குறிப்பாகப் பளிச்சென்று தெரிவது நாலாம் பிறைதான். மூன்றாம் பிறை என்பது காலை சுமார் எட்டு மணிக்கு உதித்து ராத்திரி எட்டு மணிக்குள் அஸ்தமித்துவிடும். ஸாயங்காலம் ஆறு மணி ஸுமாருக்கு ஸூர்யாஸ்தமனம் ஏற்படும்வரை, ஸூர்ய வெளிச்சத்திலே பிறை தெரியவே தெரியாது. ஸந்த்யா வர்ணஜாலம் அடங்கும் ஆறரை ஏழு மணி ஸுமாருக்கு மூன்றாம் பிறை மேற்கே ரொம்பவும் கீழே சாய்ந்திருக்கும். அதனால் கவனமாகப் பார்த்தாலே தெரியும். நாலாம் பிறை இப்படியில்லை. அது கார்த்தாலே ஒன்பது மணி ஸுமாருக்கு உதித்து ராத்ரி ஒன்பதுக்கு அஸ்தமிப்பது. அதனால் ராத்ரி ஏழு, ஏழரை மணிக்குத் தலையை 'நாச்சுரலாக' ஒரு 30,40 டிகிரி உசத்திப் பார்க்கிறபோது அது டக்கென்று கண்ணில் பட்டுவிடும். இப்படித்தான் க்ருஷ்ணர் பார்த்தார்.

உடனே, "ஸரி, இருட்டி விட்டதே இன்னம் காட்டிலே தேடிக்கொண்டிருக்க வேண்டாம்" என்று நினைத்து, கூட வந்தவர்களோடு த்வாரகைக்குத் திரும்பி விட்டார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஐயத்துக்கு ஆளான ஐயன்*

ப்ரஸேனன் வேட்டையிலிருந்து திரும்பி வராததைப் பார்த்தவுடன் ஸத்ராஜித்துக்கு க்ருஷ்ணரிடம்தான் ஸந்தேஹம் உண்டாயிற்று. ஸந்தேஹமென்று சொன்னால் போதாது. நன்றாக கன்பார்ம் ஆகவே, 'க்ருஷ்ணன்தான் காட்டிலே

தம்பியை மடக்கிக் கொன்று போட்டிருக்கிறான்' என்று தோன்றிவிட்டது. பாகவதத்தின்படி, க்ருஷ்ணன் ப்ரஸேனனோடு போகாவிட்டாலும் ஆளைவிட்டு அவனைக் கொன்றதாக நினைத்தான். 'ஏற்கனவே ஸ்யமந்தகத்தின் மேலே ஒரு கண் வைத்திருந்தான் ப்ரஸேனன் அதைப் போட்டுக் கொண்டு காட்டுக்கு போனது நல்ல வாய்ப்புக் கொடுத்துவிட்டது. வேட்டைக்குப் போனவன் திரும்பி வராவிட்டால் ஏதோ துஷ்ட மிருகம் அடித்துப் போட்டு விட்டது என்று ஊரார் நினைத்துக் கொள்வது ஸஹஜம்தானே? அப்படி இதையும் நினைத்துக் கொண்ட போகட்டுமென்று க்ருஷ்ணனேதான் ஆட்களை அனப்பி அவனைத் தீர்த்துக் கட்டிவிட்டு, மணியைத் தன்னிடம் அவர்கள் சேர்ப்பிக்கும்படி ஏற்பாடு பண்ணியிருக்கிறான்' என்று முடிவு செய்துவிட்டான்.

ஸாஷாத் பரமாத்மாவே நராகாரமாக அவதாரம் பண்ணினால் மநுஷ்யர்களுக்கு ஏற்படுகிற எல்லாக் கஷ்டங்களும் அவருக்கும் வருகின்றன. அபவாதம்கூட வருகிறது. மநுஷ்யர்களோடு மநுஷ்யனாகக் கஷ்டங்களுக்கு ஆளாகிற மாதிரி இருந்து கொண்டே அதன்மூலம் அவர்களுக்கு அநேக பாடங்களை போதிக்கவேண்டுமென்பதுதான் அவதார ரஹஸ்யம்.

"க்ருஷ்ணன் ப்ரஸேனனைக் கொலை பண்ணியிருக்கிறான், மணியைத் திருடிக்கொண்டு எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிறான்" என்று நிரபராதியான பகவான் மேல் ஸத்ராஜித் இரண்டு க்ரிமினல் குற்றங்களைச் சுமத்தினான். எங்கே பார்த்தாலும் இந்த மித்யாபவதாத்தை (பொய்யான நிந்தையை)ப் பரப்பினான்.

ஊர்வாய் பொல்லாதது. ஜனங்கள் மனஸ் சாஞ்சல்யம் (சஞ்சலத்தன்மை) வாய்ந்தது. ஒருநாள் 'ஹாஹூ என்று தலைக்கு மேலே தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடுகிற தலைவர்களை இன்னொரு நாள் சீந்தாமலே தூக்கி எறிவதை ப்ரக்ருதத்திலே (நடைமுறையில்) பார்க்கிறோமல்லவா? என்றைக்குமே கொஞ்சம் இப்படித்தான் இருந்திருக்கிறது. எந்த க்ருஷ்ணனால்தான் கம்ஸாதிகளின் கொடுமையிலிருந்து தப்பி யதுகுலம் ஸகல ஸந்துஷ்டியும் ஐச்வர்யமும் அடைந்ததோ, எவனுடைய கருணைதான் எந்த ஆபத்திலும்

அவர்களை ரக்ஷித்ததோ, அந்த க்ருஷ்ணனையே, அவனுடைய அந்த ஸொந்த ஜனங்களிலேயே பல பேர் இப்போது ஸத்ராஜித்தோடு சேர்ந்து கொண்டு அபாண்டமாகப் பேச ஆரம்பித்தார்கள். "குழந்தை நாளிலேயே வெண்ணெய் திருடினவன்தானே? திருடும், கபடும் அவன் தேஹத்தோடு பிறந்தவை. இதுவும் பண்ணியிருப்பான், இன்னமும் பண்ணியிருப்பான்" என்று வாய்கூசாமல் நிந்தித்தார்கள். காளிங்கனிடமிருந்து காப்பாற்றியது, கோவர்தனத்தைத் தூக்கிப் பிடித்து ப்ரளய வர்ஷத்தைத் தடுத்தது எல்லாம் மறந்தே போய்விட்டது.

தான் மனஸாலும் நினைக்காத குற்றத்தைத் தன்மேல் தன்னைச் சேர்ந்தவர்களே சுமத்துகிறார்களே என்று பகவான் மனக்லேசம் அடைந்தார் - அதாவது அப்படி நடித்தார. மநுஷ்யனைப் போல மனக்லேசம் அடைந்ததற்குப் பொருத்தமாக, தமது ஐச்வர்யமான (ஈச்வரத் தன்மைக்குரிய) ஸர்வஜ்ஞத்தையும் விட்டமாதிரி நடித்தார். (எதையும் தன்னால் அறியும்) ஸர்வஜ்ஞத்வத்தைக் காட்டாமல் மநுஷ்யர்கள் மாதிரியே 'இன்வெஸ்டிகேட்' செய்து ப்ரஸேனன் எப்படிச் செத்துப் போனான் என்று எல்லாருக்கும் 'ப்ருவ்' பண்ணிக் காட்டுவது என்று முடிவு செய்தார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*மணியும் பெண்மணியும்*

அந்த பெண் யாரென்றால் ஜாம்பவானுடைய புத்ரிதான். அப்பாவின் பெயரையொட்டி அவளுக்கு ஜாம்பதி என்று பெயர். 'யாருமே வரமுடியாததாக அப்பா அமைந்திருக்கிற குஹை வீட்டுக்குள் இந்த லாவண்யமூர்த்தி வந்து விட்டாரே. அப்பா கோபித்துக்கொண்டு இவரை என்ன பண்ணிவிடுவாரோ?' என்று பயப்பட்டாள்.

அந்த ஸமயத்தில் ஜாம்பவான் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார். அதனால் ஜாம்பதி ரஹஸ்யக் குரலில் க்ருஷ்ணரிடம், அவர் யார், என்ன கார்யமாக வந்திருக்கிறாரென்று சுருக்கமாகப் பதில் சொல்லும்படிக் கேட்டாள்.

பகவான் அப்படியே சொன்னார்.

உடனே அவள், "இங்கே நீங்கள் வந்ததற்கே என் பிதா கோபப்படுவார். ஸ்யமந்தகத்தை வேறே நீங்கள் யாரோ ஒருத்தருக்காக எடுத்துக் கொண்டுபோக நினைக்கிறீர்களென்று அவருக்குத் தெரிந்தால் எரிகிற கொள்ளியில் எண்ணெய் விட்ட மாதிரி ஆகும். அதனால் இப்போதே நீங்கள் சத்தம் செய்யாமல் அதைக் கழற்றி எடுத்துக் கொண்டு ஓடிப்போய்விடுங்கள்" என்றாள்.

அவரைப் போகச் சொல்வதற்கு அவளுக்கு மனஸ் இல்லைதான். இருந்தாலும் அப்பாவால் அவருக்கு ஹானி உண்டாகிவிடப்போகிறதே என்பதால், அவரிடம் கொண்ட ப்ரேமையாலேயே உண்டான த்யாக எண்ணத்தில் இப்படிச் சொன்னாள்.

பகவானிடம் ப்ரேமை கொண்ட ஒரு பெண் - ருக்மிணி - தன்னையே அவர் எடுத்துக் கொண்டு ஓடிப்போய்விட வேண்டுமென்று தூது அனுப்பினாள். இந்தப் பெண்ணோ ஸ்திரீகளுக்கு இருக்கிற நகை ஆசையைக்கூட விட்டு, லேசிலே கிடைக்காத திவ்யமணியை அவர் எடுத்துக்கொண்டு ஓடிவிட வேண்டுமென்று ப்ரார்த்தித்துக் கொண்டாள்.

பகவானானால் ரஹஸ்யத்தைக் காப்பாற்றாமல் கலகலவென்று சிரித்தார். "போதும் போதும், எனக்கு ஏற்கனவே ஏற்பட்டிருக்கிற திருட்டுப் பட்டங்கள். ஸத்ராஜித்தின் வாயிலிருந்து தப்ப வழிகிடைத்ததே என்று நான் இப்போது தான் ஸந்தோஷப்பட்டேன். நீயானால் உன் அப்பாவின் வாயில் விழச் சொல்கிறாய். ஒன்று அவரே ஸ்யமந்தகத்தை இஷ்டப்பட்டுத் தரட்டும். அல்லது அவருடன் நேரே யுததம் பண்ணி ஜயித்து அதை எடுத்துக்கொண்டு போகிறேன் என்றார்.

"அப்பா குணம் எனக்குத் தெரியும். 'கரடிப்பிடி' என்று அவர் தமக்குக் கிடைத்த பண்டத்தைக் கொடுக்கவே மாட்டார். அதுவும் வயஸுக்காலத்தில் பிறந்த செல்லக் குழந்தைக்காக அவர் ஸம்பாதித்து வந்திருக்கும் அபூர்வமான மணியை ஒருநாளும் இஷ்டப்பட்டுக் கொடுக்க மாட்டார். ஆனதினால், நீங்கள் நேர்வழியில்தான் வாங்கிக் கொள்வீர்களென்றால், அவருக்கு முன்னால் கைநீட்டி யாசித்துத் தோற்றுப்போக வேண்டாம். யுத்தத்திலேயே ஆரம்பியுங்கள்" என்றாள் ஜாம்பவதி. அவருடைய மானவமானங்களில் தனக்கும் பங்கு இருப்பதாக நினைக்கிற அளவுக்கு அவரிடம் சுத்தமான ப்ரேமை உண்டாகியிருந்தது.

உடனே இதுவரையில் இந்தக் கதையில் ஊர் அபவாதத்தை வாங்கிக் கட்டிக்கொண்டு சோப்ளாங்கி மாதிரியிருந்த பரமாத்மா மஹா கம்பீரமாகச் சங்கையெடுத்து 'பூம் பூம்' என்று கோஷம் பண்ணினார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*சண்டையில் ஸ்பரிச இன்பம்*

ஜாம்பவான் விழித்துக் கொண்டார். க்ருஷ்ணரின் உத்தேசத்தைத் தெரிந்து கொண்டவுடன், "அப்படியா ஸமாசாரம்? என்னை என்னவோ, 'கிழட்டுக் கரடி, ஸுலபமாய் ஜயித்து விடலாம்' என்று நினைத்துச் சண்டைக்கா அழைக்கிறாய்? பார் இந்தக் கிழட்டுக் கரடியின் பராக்ரமத்தை" என்று தோளைத் தட்டிக்கொண்டு பாய்ந்தார்.

வாஸ்தவமாகவே ரொம்பவும் வலுவாகத்தான் அவர் பகவானைத் தாக்கினார். பகவான் அதை அநாயஸமாகப் பொறுத்துக் கொண்டு பதிலடி கொடுத்தார். ஜாம்பவானின் வீரமும் பலமும் லோகத்துக்கெல்லாம் தெரியவேண்டுமென்ற கருணையில் பகவான் தம்முடைய பூர்ணசக்தியை

வெளிப்படுத்தாமலே அவரைத் தாக்கி, அவர் எதிர்தாக்குதல் பண்ணவைத்தார்.

தம்முடைய ஆராதணா மூர்த்தியான ராமசந்த்ர மூர்த்தியேதான் எதிரே நிற்பவரென்று தெரியாமல் ஜாம்பவான் ஸாஹஸ யுத்தம் செய்கிறார். விஷயம் நன்றாகத் தெரிந்தும் அவரை மிஞ்சாமல் அவருக்கு ஸமபலத்திலேயே தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு பகவானம் யுத்த விளையாட்டு விளையாடுகிறார். இவர் யுவராகவும் அவர் கிழவராகவுமிருந்தாலும், 'நம் குழந்தையின் சூரத்தனம் எப்படிப்பட்டது என்று நாமே அடி வாங்கிக் கொண்டு அநுபவ ஞானத்தோடு ரஸிக்கலாமே' என்று நினைக்கிற தகப்பனாராக விளையாடுகிறார்.

கைகலந்தும், கட்டிப் புரண்டும் சண்டை போட்டார்கள். இப்படித் தம்முடைய திவ்ய சரீர ஸ்பர்சம் அந்தப் பரம பக்தருக்குக் கிடைக்கும்படியாகப் பண்ண் வேண்டுமென்பதுதான் பகவானின் உத்தேசமே ராமாவதார காலத்தில் ஜாம்பவானக்கு ரொம்ப ஆசை, பகவானை ஆலிங்கனம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று. ஆனால் அதை வெளியே சொல்லிக் கொள்ளக் கூச்சம். ராமருடைய சரீரம் எப்படியிருக்கும்? ஸில்க்குக்கு மேலே ம்ருதுவாயிருக்கும். பரம ம்ருதுவான அவருடைய கருனை உள்ளமேதான் அப்படி பச்சை வெல்வெட் மாதிரியான சரீரமாக ஆகியிருந்தது. 'அப்படிப்பட்ட உடம்பை இந்தக் கரடி உடம்பை வைத்துக் கொண்டிருந்தார். அப்படியே இவர் ஆசைப்பட்டிருந்தால்கூட ராமர், எத்தனைதான் கருணாமூர்த்தி என்றாலும் அதற்கு ஒப்புக் கொண்டிருக்கமாட்டார். ஏனென்றால் தம் சரீரத்தை மாத்திரம் அவர் ஸீதை ஒருத்திக்கே ஸொத்து என்று கொடுத்து விட்டவர். அவரைப் போல ஏகபத்னி வ்ரதாநுஷ்டானத்தில் தீவிரமாயிருந்தவர் யாருமில்லை. ஜாம்பவான மட்டுந்தானென்றில்லை, எல்லா ஆசைகளையும் விட்ட தண்டகாரண்ய ரிஷிகளக்கே ராமருடைய திவ்ய மங்கள மூர்த்தியைப் பார்த்தவுடன் அப்படியே சேர்த்துப்பிடித்து - 'சிக்கென்ப் பிடித்தேன்' என்கிறதுபோல - கட்டிக் கொள்ளணும் போலத்தான் இருந்ததாம். அவர்கள் நல்ல யோக்யதையுள்ளவர்களாதலால், ஜாம்பவான் மாதிரி தயங்காமல், ராமரிடமே போய்த் தங்களுடைய ஆசையை

விஞ்ஞாபித்துக் கொண்டார்களாம். அப்போது ராமர், "இந்த அவதாரத்திலே இந்த சரீரத்தில் ஸீதை ஒருத்திக்குத்தான் பாத்யதை. அதனால் அடுத்த அவதாரத்திலே உங்கள் ஆசையைத் தீர்த்து வைக்கிறேன்" என்று சொல்லிவிட்டாராம். அந்த ரிஷிகள்தான் க்ருஷ்ணாவதாரத்தில் கோபிகா ஸ்த்கீளாகப் பிறந்தார்கள் என்று சொல்வதுண்டு.

ரிஷிகள் ஸமாசாரம் இது. கரடி ஸமாசாரம் என்ன ஆவது? கரடியைத்தான் ராமர் சிரஞ்ஜீவியாக்கிவிட்டாரே. அது எப்படி ரிஷிகள் மாதிரி இன்னொரு ஜன்மா எடுத்து க்ருஷ்ணாவதாரத்தில் தன் ஆசையைப் பூர்த்தி பண்ணிக் கொள்ள முடியும்? இப்போதும் அது, ராமர்தான் க்ருஷ்ணராக வந்திருப்பது என்று தெரிந்து கொண்டால்கூட, 'இந்தக் கம்பளி உடம்பை வைத்துக்கொண்டு அந்தப் புஷ்ப சரீரத்தை ஆலிங்கன்ம செய்துகொள்வதாவது?' என்று ஆசையை அமுக்கித்தானே வைத்துக்கொள்ளும்? அதனால் அதன் இஷ்ட பூர்த்திக்கு ஒரே வழி சண்டையில் கட்டிக்கொண்டு புரளும்படிப் பண்ணுவதுதான் என்று பகவான் 'ப்ளான்' பண்ணி வைத்திருந்தார். மநுஷ்ய லீலைக்குள்ளேயே இப்படி ரஹஸ்யமாக அநேக திவ்ய உத்தேசங்கள்.

இப்படியேதான் அர்ஜுனன் உபாஸித்து வந்த பரமேச்வரனும் கிராத (வேட) வேஷத்தில் அவனோடு கட்டிப்புரண்டு சண்டை பிடிக்கும் வியாஜத்தில் அங்கஸங்க பாக்யத்தைக் கொடுத்தார்.

நாள் பாட்டுக்கு ஒன்று, இரண்டு என்று ஓடிக்கொண்டிருந்தது. வெற்றி தோல்வி இல்லாமல் க்ருஷ்ணரும் ஜாம்பவானம் யுத்தம் செய்துகொண்டிருந்தார்கள்.சொஞ்சநாள் வரையில் வெளியில் காத்துக்கொண்டிருந்த யாதவ ஜனங்கள், 'இன்னம் எத்தனை நாள் வீடு வாசலை விட்டுவிட்டுக் காட்டிலே காத்துக்கொண்டு கிடப்பது. உள்ளே போன க்ருஷ்ணன் கதை முடிந்து போயிருக்கும். நாம் ஆபத்தில் சிக்கிக் கொள்ளவேண்டாம்' என்று த்வாரகைக்குத் திரும்பிவிட்டார்கள். மநுஷ்ய ஜாதியின் நன்றி விச்வாஸம் அவ்வளவுதான்.

குகைக்குள்ளே இருபத்தோரு நாள் த்வந்த்வ யுத்தம் நடந்தது. அத்தனை நாளக்குள்ளேயே ஜாம்பவானக்கு அசக்தம் வந்துதான் விட்டதென்றாலும், அந்த நீலமேக ச்யாமள

காத்ரம் தம்மேல் படுவதில் தமக்கே காரணம் தெரியாத ஒரு பெரிய ஸௌக்யத்தை அவர் அநுபவித்ததால்தான் ஒருமாதிரி ஈடுகொடுத்து வந்தார். இப்போது, முழுசாக மூன்று வாரம் ஆன பிறகு ஜாம்பவனானல் அதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ராமசந்த்ர மூர்த்தியின் அநுக்ரஹ பலமே தம் பலம் என்று நன்றாகத் தெரிந்து கொண்டவர் அவர். 'ராமா, ராமா' என்று சொல்லிக் கொண்டேதான் அவனுடைய அடுத்த அவதாரத்தை அடித்துக் கொண்டிருந்தார்.

'அந்த அநுக்ரஹ பலத்தையும், நாமாவின் சக்தியையும் மிஞ்சித் தம்முடைய வலுவை எதிரேயிருக்கிற ஆஸாமி குன்ற வைக்கிறானென்றால், அவன் யார்? யாராயிருக்க முடியும்? அவனுடைய ஸ்பர்சம் ஏன் இத்தனை இன்பமாயிருக்கிறது?' என்று கொஞ்சம் யோசித்தார்.

பளிச்சென்று புரிந்துவிட்டது.

'இந்த விளையாட்டையே இன்னம் இத்தனை நாள் விளையாடுவது? இன்னம் எத்தனையோ விளையாட்டெல்லாம் விளையாடியாகணுமே' என்று பகவானேதான் ஜாம்பவானுக்கு உண்மையைப் புரியவைத்தாரென்று சொல்லலாம்.

'அடாடா என்ன அபசாரம் பண்ணிவிட்டோம்? தேடிக்கொண்டு இந்தக் காட்டுக்குஹைக்கு வந்திருக்கிற நம்முடைய உபாஸனா மூர்த்தியையே இப்படி அநியாயமாக அடித்துப் புடைத்துவிட்டோமே' எனறு ரொம்பவும் பச்சாதாபத்தில் மனஸ் உருகினார் ஜாம்பவான். பகவானின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

அடிப்பதை 'பூசை கொடுப்பது' என்கிற வழக்கமிருக்கிறது. யாரைப் பூஜிக்கவேண்டுமென்று ஜாம்பவான் நினைத்துக்கொண்டிருந்தாரோ அவரையே சாத்து சாத்து என்று சாத்தியதில்தான் இந்த வசனம் பிறந்ததோ என்னவோ?

காலில் விழுந்த பக்தரை பகவான் தட்டிக்கொடுத்து அன்போடு க்ஷமித்து ஆச்வாஸம் பண்ணினார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*மணியில் விளைந்த திருமணங்கள்*

ஜாம்பவான் அவரிடம், "நானே உங்கள் உடைமைதான். ஆனதால், உங்களக்கில்லாமல் எனக்கென்று எந்த உடைமையும் கிடையாது. உங்களுடையதேயான ஸ்யமந்தக மணியை உங்களுக்கே திரும்பவும் அர்ப்பணம் பண்ணுகிறேன். அதோடு கன்யாமணியான இந்த ஜாம்பவதியையும் தாங்கள் அங்கீகாரம் செய்துசொள்ளவேணும்" என்று விஞ்ஞாபித்துக் கொண்டார்.

பெண்மணி, நாரீமணி என்பதாக ஸ்திரீகளை ரத்னத்தோடு வைத்து உயர்த்திச் சொல்கிற வழக்கமிருக்கிறதல்லவா?

ஜாம்பவதியின் அபிலாஷையும் பூர்த்தியாயிற்று. பகவான் ஸ்யமந்தகத்தோ?, அவளையும் ப்ரீதியுடன் பத்னியாக ஏற்றார்.

த்வாரகைக்குப் புது பத்னியோடும், தம் மீதான பழி தீரும்படி ஸ்யமந்தகத்தோடும் திரும்பி வந்தார் பகவான்.

முதல் கார்யமாக அந்த மணியை ஸத்ராஜித்திடம் சேர்ப்பித்துவிட்டார்.

ப்ரஸேனம்ன சிங்கத்திடம் தன் உயிரோடு சேர்த்துப் பறி கொடுத்த மணியை, அப்புறம் அந்த சிங்கத்திடமிருந்து இன்னொருவர் அடைய, அந்த ஒருவரை இவர் யுத்தத்தில் ஜயித்தே மணியைப் பெற்றதால் சட்டப்படி அதை இவரே வைத்துக் கொள்ள நியாயமிருந்தது. ஆனால் பொருள் பற்று பகவானக்கு எள்ளளவும் இல்லாததால், தாம் குற்றவாளி அல்ல என்ற ஸமஸ்த ஜனங்களுக்கும் இப்போது நிரூபித்துக் காட்டியதோடு த்ருப்தியடைந்து விட்டார். உதாரமனஸோடு மணியை ஸத்ராஜித்துக்கே கொடுத்துவிட்டார். அவன்தானே அதை ரொம்பவும் பெரிசாக எண்ணித் தபஸிலிருந்து அடைந்தவன்?

இப்போது பகவான் கையிலிருந்து அதைப் பெற்றுக் கொண்ட பிறகோ அவனுக்கு அது அபூர்வ வஸ்துவாக ஆனந்தம் கொடுக்கவில்லை. அவன் மனஸை அது உறுத்துதாதான் செய்தது. 'ஒரு பாபமுமறியாத க்ருஷ்ணனைப் பற்றி மித்யாபவாதம் செய்த தோஷத்துக்கு ஆளாகிவிட்டோமே' எனறு ரொம்பவும் வ்யாகுலப்பட்டான். என்ன ப்ராயசித்தம் பண்ணலாம் என்று யோசித்தான்.

ஜாம்பவான் செய்ததையே தானும் செய்வதுதான் ப்ராயச்சித்தம் என்று முடிவு செய்து. தன்னுடைய குமாரியான ஸத்யபாமாவை பகவானுக்குக் கன்யாதானம் பண்ணிக் கொடுத்தான். ஜாம்பவானக்குப் பிள்ளைக் குழந்தையும் இருந்தது. ஸத்ராஜித்துக்கோ ஸத்யபாமா ஏகபுத்ரி. அவள் பூதேவியின் அவதாரம். ருக்மிணிதான் ஸ்ரீதேவி.

ஸ்யமந்தகத்தினால் முதலில் பகவானுக்குப் பழி கிடைத்தது. அப்புறம் ஒட்டிக்கு இரட்டியாகப் பத்னிகள் கிடைத்தார்கள்.

ஜாம்பவானைப் போலவே ஸத்ராஜித்தும் கன்யாரத்னத்தோடு ஸ்யமந்தக ரத்னத்தையும் பகவானக்கு - 'கோபால ரத்னம்' எனப்படுபவருக்கு - அர்ப்பணம் செய்தான். ஆனால் அவர் பாமாவை மட்டும் அங்கீகாரம் பண்ணிக்கொண்டு, பிடிவாதமாக ஸ்யமந்தகத்தை, ஸத்ராஜித்திடமே திருப்பிவிட்டார். "உங்களிடமிருந்தாலும் என்னிடம் இருக்கிற மாதிரிதானே?" என்று அழகாகச் சொல்லிச் சமாளித்து விட்டார். அவனுக்கு இருந்தது ஒரே பெண்ணானதால் அவன் ஸொத்து பூராவும் அப்புறம் இந்த தம்பதிக்குத்தானே வரவேண்டுமென்பதால் அவனும் அதற்குமேல் 'ப்ரெஸ்' பண்ணாமல் ஸ்யமந்தகத்தைத் தானே வைத்துக்கொண்டான்.

கதை முடியவில்லை. இன்னும் பிள்ளையார் ப்ரஸ்தாவமே வரவில்லையே

ஸத்ராஜித் நினைத்தது தன் ஆயுஸ் முழுக்க மணி தன்னிடமிருந்து விட்டு அப்புறம் பெண் - மாப்பிள்ளையை அடையும் என்று. ஆனால் அந்த மணியோ அவனுடைய ஆயுஸையே குடித்துவிட்டு இன்னம் எத்தனையோ கஷ்டங்களையும் உண்டாக்கவிருந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*பெண்ணால் விளைந்த பகைமை*

பாமா பரிணயமாகிக் கொஞ்ச நாளுக்கு அப்புறம் க்ருஷ்ண பரமாத்மாவின் அத்தையான குந்தியும், பஞ்ச பாண்டவர்களும் அரக்கு மாளிகையில் எரிந்தபோய் விட்டதாக ஸமாசாரம் வந்தது. அவர்கள் எரிந்து போகாமல் மறைவாக வஸித்து வருகிறார்களென்பது பகவானுக்குத் தெரிந்தாலும் தெரியாததுபோல அந்தக் குடும்பத்து மூத்தவரான த்ருதராஷ்ட்டரனை துக்கம் விசாரித்துவிட்டு வருவதற்காக ஹஸ்தினாபுரத்துக்குப் போனார். அவதாரபருஷர் இப்படி எல்லாம் மநுஷ்ரீதியில் பண்ணிக்காட்டினார். அப்படி அவர் துக்கம் கேட்கப் போனதனாலேயே த்வாரகையில் அவருடைய புதிய பத்னி பாமாவுக்குப் பெரிய துக்கம் ஸம்பவித்தது.

சததன்வா என்று யாதவர்களில் ஒரு முரட்டுப் பேர்வழி. க்ருதவர்மா, அக்ரூரர் என்றும் அவர்களில் இரண்டு முக்யபுருஷர்கள் உண்டு. இந்த இருவர் கிருஷ்ணருக்கு ரொம்பவும் பக்ஷமாக இருக்கப்பட்டவர்கள். அதிலும் அக்ரூரர் பரம பாகவதர். க்ருஷ்ணரையும் பலராமரையும் ப்ருந்தாவனத்திலிருந்து மதுராவுக்கு அழைத்துக்கொண்டு போனவர் அவர்தான். இந்த மூன்று பேருமே (சததன்வா, க்ருதவர்மா, அக்ரூரர் ஆகிய மூவருமே) ஸத்யபாமாவைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள ஆசைப்பட்டு ஸத்ராஜித்திடம் பெண் கேட்டிருந்தவர்கள். இவர்களில் யாருக்குக் கொடுப்பது என்று தெரியாத ஸத்ராஜித் ஒவ்வொருவரிடமும். 'உங்களக்கே கொடுக்கிறேன், கொஞ்ச நாள் போகட்டும்' என்று தள்ளிப்போட்டுக் கொண்டே போனான். அதற்குள் ஸ்யமந்தக மணி ஒரு புதுக் கதையை உண்டாக்க, முடிவில் பெண்ணை பகவானுக்குக் கொடுத்துவிட்டான்.

இதனால் விசித்திரமான விளைவுகள் ஏற்பட்டன. இங்கே

மநுஷ்ய மனஸின் க்ருத்ரிமங்களைப் புராணம் நன்றாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. என்ன ஆச்சு பார்க்கலாம்.

பெண்ணைக் கொடுக்காமல் என்னவோ ஸால்ஜாப்பு சொல்லிக்கொண்டே போகிறானே என்று அந்த மூன்று பேருக்கும் ஸத்ராஜித்தின்மேல் வெறுப்புத்தட்ட ஆரம்பித்தது. இந்த ஸமயத்தில்தான் க்ருஷ்ணர்மீது அவன் ஸந்தேஹப்பட்டு அபவாதம் சொல்ல ஆரம்பித்தது. அவரிடம் ப்ரியம் கொண்ட அக்ரூரரும் க்ருதவர்மாவும் அப்போது ஸத்ராஜித்திடம் வெளிப்படையாகவே த்வேஷம் காட்டி, க்ருஷ்ணன் பக்ஷத்தில் பேசினார்கள். கடைசியில், க்ருஷ்ணரே இவர்கள் ஆசைப்பட்ட பெண்ணைத் தட்டிக் கொண்டுபோய்விட்டார். ஸத்ராஜித் அவருக்கு மாமனாராகிவிட்டான். அவனக்கே அவர் ஸ்யமந்தகத்தையும் கொடுத்துவிட்டார். என்று ஆனதும் நல்ல அக்ரூரக்கும், க்ருதவர்மாவுக்குமே புத்தி மாறிவிட்டது. க்ருஷ்ணரிடம் பக்தி போய்விட்டது. பெண்ணாசை, த்வேஷம், (இதெல்லாவற்றுக்கும் மூல்மாகத்) தான் நினைத்த மாதிரி நடக்காமல் போவதா என்ற அஹங்காரம் முதலானதுகள் வந்து விட்டால் எத்தனை பக்தியையும் அடித்துக்கொண்டு போய்விடும் என்று நமக்கு எச்சரிக்கிறது கதை.

இப்போது க்ருஷ்ணர் ஹஸ்தினாபுரம் போனது அவர்களுக்கு சதி செய்ய வாய்ப்புக் கொடுத்துவிட்டது. பெண்தான் கிடைக்கவில்லை, மணியையாவது அபஹரித்தாலென்ன, அந்த மணியின் சொந்தக்காரனை ஒழித்துவிட்டாலென்ன என்று தோன்றியது. ஆனாலும் இவர்களுக்குத் தாங்களே அப்படிச் செய்ய தைர்யமில்லாததால் போக்கிரியான சததன்வாவிடம் போனார்கள்.

ஒரே பெண்ணுக்காகப் போட்டி போட்டவர்களென்ற முறையில் இந்த மூன்று பேரும் பரஸ்பரம் விரோதம் பாராட்டிக் கொள்ளவேண்டியவர்கள். ஆனாலும் 'எனிமி'யின் 'எனிமி' ஒருத்தனுக்கு 'ஃப்ரெண்டா'கி விடுவானென்று வேடிக்கையாகச் சொல்வதுபோல, ஸத்ராஜித்திடம் மூன்று பேருமே த்வேஷம் கொண்டிருந்ததால் இப்போது தங்களுக்குள் ஒத்துப்போய் ஒன்று சேர்ந்தார்கள்.

"க்ருஷ்ணனின் பக்கபலம் இப்போது ஸத்ராஜித்துக்கு இல்லை. ஆகையால் இப்போதே போய் அவனைத் தீர்த்துக்

கட்டிவிட்டு ஸ்யமந்தக மணியை எடுத்துக்கொண்டு வந்துவிடு" என்று க்ருதவர்மாவும் அக்ரூரரும் சததன்வாவுக்கு யோசனை சொல்லிக்கொடுத்தார்கள்.

அந்த துஷ்டனும் அப்படியே போய் ஸத்ராஜித்தை அக்ரமமாகக் கொலைசெய்துவிட்டு, மணியை அபஹரித்துக் கொண்டு வந்தான். ஸத்ராஜித்தோடு அவன் நேராக யுத்தம் பண்ணி ஜயித்து அதைக் கவரவில்லை. நீசத்தனமாகக் கொலை பண்ணிவிட்டு அபஹரித்துக்கொண்டான்.

ஸத்யபாமா ஒரேடியாக ப்ரலாபித்துக்கொண்ட, 'எப்போது பதி ஹஸ்தினாபுரத்திலிருந்து திரும்புவார்? அவரிடம சொல்லிப் பாபி சததன்வாவை தண்டிக்கலாம்? என்று காத்துக் கொண்டிருந்தாள்.

ஸ்யமந்தகம் இருக்குமிடத்தில் வியாதி வராது, வேதனை இருக்காது. தினமும் பவுனாக குவியுமென்று சொல்லப்பட்டாலும் நாம் பார்க்கிறதோ அதனால் அணர்த்தத்துக்கு மேல் அனர்த்தமாக வந்திருக்கிறது என்பதைத்தான். எதற்கும் உரிய கூலி கொடுக்கவேண்டும். பலவிதப்பட்ட நன்மைகள் செய்யக்கூடிய திவ்யமணியிடமிருந்து பயன்பெற வேண்டுமானால், அதற்குக் கூலியாக அகச் சுத்தியையும் ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமென்று முதலிலேயே ஸுர்ய பகவான் சொன்னது இதனால்தான். ஆனால் ஸத்ராஜித்துக்கோ ஸாக்ஷாத் பரமாத்மா உள்பட யாரை பார்த்தாலும் அந்த மணியின் நிமித்தமாகவே தப்பெண்ணம்தான உண்டாயிற்று. ஹ்ருதயத்துக்குள்ளே இப்படித் தப்பெண்ணமும் ஸந்தேஹமும் இருப்பதே ஒரு மநுஷ்யனக்குப் பெரிய அசுசிதானே? சரீர அசுத்தத்துக்காக ப்ரஸேனன் உடனே உயிரைவிட வேண்டியிருந்ததென்றால் நீண்டகாலம் மன அசுத்தத்தை வளர்த்துக்கொண்டுவிட்ட ஸத்ராஜித்தும் கடைசியில் அதற்காக ப்ராணணையே கொடுத்துப் பதில் சொல்லும்படியாயிற்று.

துஷ்ட மிருகத்தைக் கொன்று மணியை எடுத்துக் கொண்ட சிரஞ்ஜீவியான ஜாம்பவானிடங்கூட அது சிரஞ்சீவியாக நிலைத்து இருக்கவில்லைதான்.

இப்படியெல்லாமிருக்க க்ரூர ஸ்வபாவமுள்ளவனம்,

ஜீவஹத்தி மூலம் அதை அபஹரித்தவனுமான சததன்யாவிடம் மட்டும் அது நீடித்து நிற்குமா? அவன் உயிரைத்தான் அது நீடித்து விட்டு வைக்குமா?

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*மீண்டும் வெற்றி, மீண்டும் பழி*

க்ருஷ்ணர் த்வாரகைக்கு வந்தவுடனே ப்ரியபத்னி பாமா புலம்பினாள். மாமனாரைக் கொன்றவனைப் பழி தீர்த்துக்கொள்ள பகவானம் ஸங்கல்பித்துவிட்டார்.

க்ருஷ்ணருக்குக் கோபம் உண்டாகிவிட்டதென்று தெரிந்தவுடனேயே சததன்வா நடுங்க ஆரம்பித்துவிட்டான். ஸமீபத்தில்தானே அதி பலிஷ்டரான ஜாம்பவானையே அவர் தோற்கடித்திருந்தார்? அப்படிப்பட்ட மஹா பராக்ரமசாலி தன்னிடடம் கோபத்தைத் திருப்பியிருக்கிறாரென்று தெரிந்தும் சததன்வாவின் சூரத்தனமெல்லாம் ஓட்டம் பிடித்துவிட்டது. அவன் த்வாரகையை விட்டு ஓட்டம் பிடித்தான்.

ஓட்டம் பிடிப்பதற்கு முந்தி என்ன பண்ணினானென்றால் ஸ்யமந்தகத்தை அக்ரூரரிடம் போட்டு விட்டான். அதற்குப் பதில் பகவானிடமே போட்டுவிட்டு அவர் காலிலே விழுந்து மனனிப்புக் கேட்டுக் கொண்டு பிழைத்துப் போயிருக்கலாமேயென்றால் இதுதான் துர்புத்தியின் சேஷ்டை தான் ஒடிப்போவதால் க்ருஷ்ணருக்கு ஏற்படும் வெற்றிப்பெருமை போததென்று, ஸ்யமந்தகமும் அவரை அடைகிறதா என்ற கெட்ட எண்ணம்தான். சததன்வாவே அதை வைத்துக் கொண்டிருக்கலாமேயென்றால், 'அது முன்னே அதை வைத்துக் கொண்டிருந்தவர்களுக்குப் பண்ணினதுபோல என்ன அனர்த்தத்தைத் தனக்கும் பண்ணிவிடுமோ? அந்த அனர்த்தம் அக்ரூரைத்தான் அடையட்டுமே' என்பது ஒரு காரணம். இன்னொரு காரணம், 'க்ருஷ்ணன் ஒரு வேளை தன்னைத் துரத்திக்கொண்டு வந்து பிடித்துவிட்டால் அப்போது அதை எடுத்துக்கொண்டு

விடுவானே. இந்த வெற்றியை மட்டும் அவனுக்குத் தரவே கூடாது, தன் உயிரை எடுத்தாலும் எடுக்கட்டும், ஆனால் ஸ்யமந்தகத்தை அவன் எடுத்துக்கொள்ள விடப்படாது' என்ற துர் எண்ணம். துஷ்டர்களுக்கு வீம்பும் விரோதமும் கடைசிவரை போகாது. அதனால், அணர்த்தம் தரக்கூடிய மணியை விரோதியான க்ருஷ்ணருக்குச் சேரவிடாமல், தன்னிடம் ஸ்நேஹிதமாக வந்த அக்ரூரரிடமே சேர்ப்பித்தான். அக்ரூரர் நல்ல பக்தர், விவேகி என்று பெயரெடுத்திருந்ததால் அவரிடம் மணி இருந்தால்தான் க்ருஷ்ணர் அதற்காக சண்டைக்குப் போகாமலிருப்பாரென்றும் நினைத்து இப்படிச் செய்தான் போலிருக்கிறது.

சததன்வா ஊரைவிட்டு ஓடுகிறானென்று ஸ்வாமிக்குத் தெரிந்தது. வாஸ்தவத்தில் அவருக்குக் கோபமுமில்லை, ஒன்றுமில்லை. கோர க்ருத்யம் பண்ணிய சததனவாவைத் தண்டிக்க வேண்டியது தர்ம ஸமஸ்தாபனத்துக்காக வந்துள்ள தம்முடைய கடமை என்பதால் கோபம் வந்த மாதிரி காட்டிக்கொண்டார்.இப்போது அவன் அதிவேகமாக ஒடுகிற குதிரையிலேறித் தப்பியோடப் பார்க்கிறானென்றதும், பகவான் பலராமரையும் அழைத்துக்கொண்டு ரதாரூடராக அவனைப் பிடிக்கப் புறப்பட்டார்.

தேர்க்குதிரைகள் காற்றாகப் பறந்தன. கண்ணுக்கெட்டிய தூரத்தில் அதிவேகமாக ஓடும் சததன்வாவின் குதிரையும் தெரிந்தது. பாவம், அந்தக் குதிரையால் அதற்கு மேல் ஒடிமுடியவில்லை. களைத்துப்போய் மேலே ஓட முடியாமல் அப்படியே விழுந்து நுரை தள்ளிவிட்டுச் செத்துப் போயிற்று.

சததன்வா கால்நடையாக ஓட ஆரம்பித்தான். அவன் காலால் ஓடும்போது தாம் ரதத்தில் போய் அவனைப் பிடிப்பது தர்மயுத்தமில்லை என்று ஸ்வாமியும் ரதத்திலிருந்து குதித்துத் தாமும் காலால் ஓடியே அவனை துரத்தினார்.

பலராமர் தேரிலேயே உட்கார்ந்திருந்தார் - களைத்துப் போய்விட்ட ஒரு ஒற்றை எதிராளியை இரண்டு பேர் தாக்குவது தர்மமில்லை என்ற எண்ணத்தில்.

பகவான் சததன்வாவைப் பிடித்து விட்டார். அப்புறம் இரண்டு பேருக்கும் யுத்தம் நடந்தது. பகவானை யார் எதிர்த்து நிற்க

முடியும்? சததன்வா அவர் கையால் ஸம்ஹரிக்கப்பட்டான். அதனால் மஹாபாபியான அவனுக்கும் புண்யலோகம் கிட்டச் செய்யணுமென்றுதான் அவர் இப்படித் தேராலேயும் காலாலேயும் ஓடி ஓடி வந்தது.

ஜாம்பவானிடம்போலவே சததன்வாவிடமும் பகவானக்கு ஜயசாலி என்ற பெருமை ஸ்யமந்தகத்தினால் ஏற்பட்டது. ஆனால் அது எடுபடாமல் மறுபடி பழியும் வந்தது. செத்துப் போனவனிடம் ஸ்யமந்தகம் இருக்கிறதா என்று தேடிப் பார்த்தார். கிடைக்கவில்லை. அவன்தான் அக்ரூரரிடம் அதைப் போட்டுவிட்டானே

கீதையில் பகவான் தம்மைப் பற்றி

வேதாஹம் ஸமீ தானி வர்த்தமாநாநி சார்ஜுன

பவிஷ்யாணி ச பூதாநி மாம் து வேத ந கச்சன

என்று சொல்லிக்கொள்கிறார். அதாவது, "அர்ஜுனா இறந்த காலம், நிகழ்கால்ம், எதிர்காலம் எல்லாவற்றிலும் நடக்கும் ஸமாசாரங்கள் எனக்குத் தெரியும், ஆனால் என்னைத்தான் எவராலும் தெரிந்துகொள்ள முடியாது" என்று சொல்லிக் கொள்கிறார். அப்படிப்பட்ட ஸர்வஜ்ஞர் தான் சததன்வாவிடம் மணி இருப்பதாக நினைத்துத் துரத்திய மாதிரியே ஆட்டம் போட்டிருக்கிறார். அண்ணாவையும் இந்த அபிப்ராயத்தைச் சொல்லித்தான் அழைத்து வந்தார். இன்னொரு அவதாரமான அவரும் தம்பிக்கு ஏற்கவே தமக்கும் ஞானத்ருஷ்டியில்லாத மாதிரி காட்டிக் கொண்டு அத்தனை தூரம் கூடவந்தார்.

ஊராரிடம் மித்யாபவாதப்பட்டது போதாது, ஸொந்தத் தமையனாரிடமும் அபவாதப்பட்டு, மநுஷ்ய வாழ்க்கையின் அடி உதைகளை நன்றாக வாங்கிக்கொள்ள வேண்டுமென்றே ஸ்வாமி மாய விளையாட்டுப் பண்ணினாற் போல இருக்கிறது.

சததன்வாவை வதம் செய்தவிட்டு ரதத்துக்குத் திரும்பியவர். "அண்ணா அவனைக் கொன்றுவிட்டேன். ஆனால் மணியை அவனிடம் காணவில்லை" என்றார்.இவருடைய மாயா நாடகத்துக்குத் தாமும் அநுஸரணையாகப் போக வேண்டுமென்பதாலேயே பலராமர் இவரிடம் விரோதமாக நடக்க வேண்டியிருந்தது. அதனார், க்ருஷ்ணர் இப்படிச்

சொன்னாரோ இல்லையோ, பலராமருக்கு ரௌத்ரகோபம் உண்டாக்கிவிட்டது. "டேய் க்ருஷ்ணா நீ எப்போதுமே கபடியாகத்தான் இருந்திருக்கிறாய். இப்போதும் மணியை நான் எங்கே கேட்டு விடுவேனோ என்றுதான் கபடம் பண்ணுகிறாய். அதை எங்கேயோ ஒளித்து வைத்துக்கொண்டே நீ கதை அளக்கிறாய் என்பதில் எனக்குக் கொஞ்சங்வட ஸம்சயமில்லை. உன்னை பந்து என்று சொல்லிக் கொண்டு ஸஹவாஸம் பண்ணுவதே யோக்யர்களுக்கு முடியாத கார்யம்" என்றெல்லாம் வாயில் வந்தபடித் திட்ட ஆரம்பித்துவிட்டார்.

பூர்ணவதாரமாக வந்த பரமபுருஷன் ஸொந்த ப்ராதாவிடம் இப்படிப்பட்ட நிந்தனையை வாங்கிக் கொண்டும் பொறுமை இழக்காமல், பணிவு குறையாமல், "அண்ணா நீங்கள் என்னை இப்படி ஸந்தேஹிக்கக் கூடாது. நான் சொல்வது ஸத்யம். வேண்டுமானால் நீங்களே என்னை சோதித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று தழைந்து கேட்டுக்கொண்டார்.

பலராமருக்கோ கோபம் வந்துவிட்டார் லேசில் தணியாது. எதிர்வாதமே அவருடைய மனஸில் அப்போது ஏறாது. ஆனபடியால் க்ருஷ்ணர் எத்தனை சொல்லியும் அவர் 'கன்வின்ஸ்' ஆகவில்லை. "உன்னை சோதனை போட்டு என்ன ப்ரயோஜனம்? நீ எந்த இந்த்ரஜாலமும் செய்யக்கூடியவன். திரஸ்கரிரணி (கண்கட்டு) வித்தையால் மணியை மறைத்து விடுவாய். போடா போ இனிமேல் உன் மூஞ்சியில் நான் முழிக்கமாட்டேன்" என்று சத்தம் போட்டுவிட்டு, க்ருஷ்ணரோடு த்வாரகைக்கு திரும்பாமல் அங்கிருந்தே விதேஹ ராஜ்யத்ததுக்குப் போய்விட்டார்.

க்ருஷ்ணர் ஒரே விசாரமாக த்வாரகைக்குத் திரும்பனரிர். பட்டதெல்லாம் போதாது என்று மறுபடி ஊர் ஜனங்களின் மொத்துப் பேச்சுக்கு ஆளானார். "மணியிடம் பேராசையால் தமையனையும் பகைத்துக்கொண்டு ஊரை விட்டே விரட்டி விட்டானே" என்று ஜனங்கள் பழி சொல்வதைக் கேட்டு மனஸ் நொந்து கஷ்டப்பட்டார்.

ஸாதாரணமாகவே ஜனங்களின் குணம், ஒருத்தரிடமுள்ள நல்லதற்காகக் கொண்டாவடுவதைவிட, அவர் என்ன தப்பு பண்ணியிருக்கிறார், பண்ணியிருக்கக்கூடும் என்று பார்த்து அதற்காகக் கண்டனம் பண்ணுவதுதான். நம்மிலே பேப்பர்

படிக்கிறவர்கள், பொது விஷயம் பேசுபவர்கள்கூட அவரவருடைய அபிமானத் தலைவர்களைப் புகழ்வதைவிட, பிடிக்காத மற்ற கட்சிக்காரர்களைக் காரஸாரமாக விமர்சிப்பதில்தானே அதிக ருசி காட்டுகிறோம்? திட்டிப் பேசுவதில் இன்றைய ஜனங்களுக்குள்ள ஈடுபாடு என்றைக்குமே இருந்திருக்கிறது என்று இந்தப் புராணக் கதையிலிருந்து தெரிகிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*அக்ரூரம் மணியும்*

க்ருஷ்ணர் த்வாரகைக்கு வந்து விட்டாரென்றதும் ஸ்யமந்தகத்தை வத்துக்கொண்டிருந்த அக்ரூரருக்கு பயம் பிடித்துக் கொண்டது. 'அபயம் தருகிறவன் இவன்தான்' என்று இந்த க்ருஷ்ணரின் ஸாமீப்யத்துக்கு (அணுக்கத்துக்கு) இத்தனை நாளாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாரோ, அவரிடமே இப்போது பயப்பட்டுக் கொண்டு, அவர் பக்கத்திலேயே இருக்கவேண்டாமென்று அக்ரூரர் நினைத்தார். த்வாரகையை விட்டு வெளியேறி விட்டார். 'அர்த்தம் அனர்த்தம்' என்ற ஆசார்யாள் சொன்னாற் போல, பொருள் படுத்தும் பாடு.

க்ருஷ்ணர் விஷயத்தில் அக்ரூரருக்கு ஏதோ இப்படி அசட்டுத்தனமான பயமும் ஸம்சயமும் ஏற்பட்டாலும் மற்றபடி அவருடைய ஸ்வாபாவிகமான ஈச்வர பக்தி, நல்ல எண்ணங்கள் எல்லாம் போய்விடவில்லை. ஆனபடியால் த்வாரகையை விட்டுப் புறப்பட்டவர் எங்கேயோ ஊர் சுற்றாமல் க்ஷேத்ராடனம் பண்ணிக் கொண்டே போய்க் காசியை அடைந்தார்.

அங்கே போனபின் அவர் மனஸ் எந்தக் கெடுதலும் இல்லாமல் தூய்மையாக ஆயிற்று. மணியினால் ஸ்வயலாபம் அடைய வேண்டுமென்ற எண்ணமும் அவருக்கு இல்லை. ஆனதால் ஸ்யமந்தகம் தினமும் எட்டு பாரத் தங்கம்

கொடுக்க ஆரம்பித்துவிட்டது. அக்ரூரர் அதைக் கொண்டு தனக்கோ தன் குடும்பத்துக்கோ எதுவும் பண்ணிக் கொள்ளும் எண்ணமில்லாமல் காசியில் அநேக தேவாலயங்களை நிர்மாணித்துத் திருப்பணிகள் பண்ணி இறை தொண்டு செய்து கொண்டிருந்தார்.

திவ்யமணி அவரை பாஹ்யாந்தர சௌசமுள்ளவராகவே (உள்ளும் புறமும் சுத்தமானவராகவே) கருதி தினமும் ஸ்வர்ண பாரம் கொடுத்ததோடு, அவர் இருக்கிற இடத்தைச் சுற்றி ரோகம், துக்கம், அதிவ்ருஷ்டி (பேய் மழை) அநாவ்ருஷ்டி (வறட்சி) முதலான ஈதிபாதைகள் இல்லாமல் நல்ல ஸுபிக்ஷத்தை உண்டாக்கி வந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*அபவாதத்துக்குக் காரணம்*

இங்கே த்வாரகையில் பகவான் பல தினஸாக எண்ணி துக்கப்பட்டுக் கொண்டிருந்தார். "இந்த ஸ்யமந்தகத்தால் எத்தனை கஷ்டம் வந்துவிட்டது? ப்ரஸேனன், ஸத்ராஜித், சததன்வா என்று மூன்று பேரை அது பலி வாங்கிவிட்டது. முதலில் அது ஸத்ராஜித்திடமிருந்து நமக்கு அபவாதம் வாங்கி வைத்தது, இப்போது அண்ணாவே நம்மை விகல்பமாக எடுத்துக்கொண்டு தேசாந்தரம் போகும்படிச் செய்திருக்கிறது. அக்ரூரர் ஊரிலில்லை யென்பதால் அவர்தான் அதோடு போய்விட்டாரென்று ஊஹிக்கவேண்டியிருக்கிறது. அதாவது ஸத்தான அந்த ஆத்மாவை இங்கேயில்லாதபடி பண்ணியிருப்பதும் ஸ்யமந்தகம்தான். ஸத்யபாமாவுக்கோ பிதாவின் மரணத்தினால் அது பெரிய சோகத்தை இழைத்திருக்கிறது. ஊரே நம்மை ஸந்தேஹப்படுகிறது. எதனால் இப்படிப் பல கஷ்டங்கள்? எதனால் இப்படி மறுபடி மறுபடி மித்யாபவதாத்துக்கு ஆளாகிறோம்?" என்று யோசித்துக் கொண்டிருந்தார்.

அப்போது நாரத மஹர்ஷி வந்தார். எப்போது வரணும், எப்போது வந்தால் கதையில் ஸ்வாரஸ்யமான திருப்பம் உண்டாக்கமுடியும் என்று அவருக்குத் தெரியும்.

"ஸ்வாமீ தாங்கள் ஏதோ விசாரத்தில் ஆழ்ந்திருப்பதாகத் தெரிகிறதே, என்ன காரணம்?" என்று பகவானைக் கேட்டார்.

பகவான் ஸ்யமந்தகத்தினால் உண்டான அனர்த்த பரம்பரையை அவருக்குச் சொன்னார். "எனக்கு ஏன் இப்படி மித்யாபவாதம் திரும்ப திரும்ப ஏற்படுகிறது? தேவர்ஷியான தங்களுக்குத் தெரியாததில்லை, தாங்கள் தான் காரணம் சொல்லவேண்டும்" என்று ஸாக்ஷாத் பரமாத்மா தம்மைக் குறைத்துக்கொண்டு விநயத்தோடு கேட்டார்.

"ஓ அதுவா? இதோ சொல்கிறேன். நீங்கள் ஒரு பாத்ரபத சுக்ல சதுர்த்தியின் போது சந்த்ரனைப் பார்த்து விட்டீர்கள். அதனால்தான் விக்நேச்வர சாபத்தினால் வீண் அபவாதத்துக்குப் பாத்ரமாகிவிட்டீர்கள்" என்று நாரதர் சொன்னார். "பிள்ளையாரென்று ஆரம்பித்துவிட்டு என்னவோ க்ருஷ்ணர் கதையே சொல்லிக்கொண்டு போகிறாரே" என்று நினைத்தவர்களுக்கு இப்போதுதான் விஷயம் வர ஆரம்பித்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*பாத்ரபதம் பஞ்சாங்க வித்யாஸம்*

பாத்ரபதம் என்பது ஒரு இரட்டை நஷத்ரம். பூர்வ பாத்ரபதம், உத்தர பாத்ரபதம் என்று அந்த இரண்டு நஷத்ரங்களக்கும் போர். ப்ரோஷ்ட பதம் என்றும் சொல்வார்கள். பொதுவாக, மாஸத்தைக் குறிக்கும் போது - அதாவதது இந்த நட்சத்திரங்களில் ஒன்றில் பௌர்ணமி வருகிற மாஸத்தைக் குறிப்பிடும்போது - பாத்ரபதமென்றும், நட்சத்திரத்தையே

குறிப்பிடும்போது - பாத்ரபதமென்றும், நட்சத்திரத்தையே குறிப்பிடும்போது ப்ரோஷ்டபதம் என்றும் சொல்வது வழக்கம். பூர்வ ப்ரோஷ்டபதீ. உத்தர ப்ரோஷ்டபதீ என்று இருப்பதைத்தான் திரித்துப் பூரட்டாதி, உத்திரட்டாதி என்கிறோம். பௌர்ணமியன்று ப்ரோஷ்டபதி நட்சத்திரத்தைக் கொண்ட மாஸமாகிய ப்ரோஷ்டபதியைத் தான் இன்னொரு விதத்தில் திரித்துப் புரட்டாசி என்கிறோம்.

ஆனால் நம்முடைய புரட்டாசியும் ஸரி, இதே மாதிரி நட்சத்திரங்களின் பேர்களையுடைய மற்றப் பதினொரு மாஸங்களும் ஸரி, கரெக்டாக அந்தப் பௌர்ணமியில் அந்த நட்சத்திரம் வருவதாகத்தானிருக்க வேண்டுமென்றில்லாமல் ஒரு மாஸம் முன் பின் தள்ளியும் போய்விடுவதுண்டு, காரணம், நாம் மாஸப் பேரை பௌர்ணமி நட்சத்திரத்தைக் கொண்டு சித்ரா, விசாகம், கார்த்திகம் என்கிறதுபோல நட்சத்திரத்தின் பேரில் வைத்துக்கொண்டாலும், வாஸ்தவத்தில் இதற்கு ஸம்பந்தமில்லாமல் மாஸப் பிறப்பை ஸூர்யன் பன்னிரண்டு ராசிகளில் ஒவ்வொன்றாகப் பிரவேசிக்கும் தினமாகத்தான் வைத்துக் கொண்டிருக்கிறோம். தமிழ்தேசத்திலுள்ள நாம் பின்பற்றும் இந்த விதமான மாஸத்துக்கு 'ஸௌரமானம்' என்று பேர்.

தெலுங்கர், கன்னடஸ்தர் முதலானவர்களும், வடக்கத்தியர்களில் பெரும்பாலாரும் அநுஸரிக்கும் 'சாந்த்ரமானம்' என்ற பஞ்சாங்கத்தின்படி அமாவாஸ்யையை அடுத்து வரும் வளர்பிறைப் பிரதமையில் ஒவ்வொரு மாஸமும் பிறக்கும். அந்த விதமான மாஸத்தில்தான் அந்த மாஸத்தின் பெயர் எந்த நட்சத்திரத்தை வைத்து இருக்கிறதோ அதுவும், வாஸ்தவமாகவே அந்தப் பௌர்ணமியில் அல்லது பௌர்ணமிக்கு நெருக்கமான திதியில் வருகிற நட்சத்திரம் எதுவோ அதுவும் முன்னே பின்னே தள்ளிப்போகாமல் கரெக்டாக ஒத்துப் போகும்.

பண்டிகைகளெல்லாம் இந்த சாந்தமான மாஸப்படியே நிர்ணயமானவை. ஆகையால் பிள்ளையார் சதுர்த்தி பாத்ரபத மாஸத்தில் சுக்ல பட்சச் சதுர்த்தியன்று என்றால், அது எப்போதும் தெலுங்கர், கன்னடஸ்தர் ஆகியவர்களுக்கு அவர்களுடைய பாத்ரபத மாஸத்திலேயேதான் வரும் நமக்கு (ஸௌரமானத்தைப் பின்பற்றும் தமிழ் தேசத்தவர்களுக்கு)

இப்படியில்லாமல், பிள்ளையார் சதுர்த்தி புரட்டாசியாகவுமிருக்கலாம், அல்லது ஆவணியிலேயே வந்தாலும் வந்துவிடலாம். காரணம் என்னவென்றால் நம்முடைய பங்குனி அமாவாஸ்யை ஆன மறுதினமே

அவர்களுடைய சித்திரை பிறந்து, இதேபோல ஒவ்வொரு மாஸத்திலும் நடந்து, நம்முடைய ஆவணி அமாவாஸ்யையான மறுதினமே அவர்களுடைய புரட்டாசி (அதாவது பாத்ரபத மாஸம்) பிறந்துவிடுமே. அதிலே நாலு நாளக்கப்புறம் சதுர்த்தி வருகிற போது ஸூர்யன் கன்யா ப்ரவேசத்தன்றுதான் நம் புரட்டாசி பிறப்பதால், இம் மாதிரி வருஷங்களில் நமக்கு ஆவணியிலேயே பிள்ளையார் சதுர்த்தி வந்துவிடுகிறது.

இதே மாதிரிதான் ஸ்ரீராம நவமி என்றால், அது எப்போதம் சாந்த்ரமானக்காரர்களுக்கு சித்திரை மாஸ நவமியாகவே இருக்க, நமக்கோ சில ஸமயம் பங்குனி, சில ஸமயம் சித்திரை என்று இருக்கிறது. இப்படியே கோகலாஷ்டமி, நவராத்திரி முதலான எல்லாப் பண்டிகை இருக்கலாம், புரட்டாசியாகவோ ஐப்பசியாகவோ இருக்கலாமென்றிருக்க, அவர்களுக்கு கோகுலாஷ்டமி என்றால் ச்ராவண (அவர்களுடைய ஆவணி) க்ருஷ்ண பட்ச அஷ்டமிதான், நவராத்திரி எனறால் ஆச்வின (ஐப்பசி) சுக்லபட்ஷத்தின் முதல் ஒன்பது தினங்கள்தான் என்று தீர்மானமாக இருக்கிறது.

சாந்த்ரமான பாத்ரபத மாஸத்தில் அதாவது நம்முடைய ஆவணி அல்லது புரட்டாசி மாஸத்தில் வரும் வளர் பிறைச் சதுர்த்தினான் நாரத பகவான் குறிப்பிட்ட 'பாத்ரபத சுக்ல சதுர்த்தி' என்று சொல்ல வந்தேன்.

அதுதான் பிள்ளையார் சதுர்த்தி தினம்.

அப்படிப்பட்ட ஒரு தினத்தில் க்ருஷ்ணர் ஆகாசத்தில் தெரியும் சந்த்ரனைப் பார்த்துவிட்டார். அது எந்த தினம் என்று உங்களுக்கு நினைவிருக்கலாம். ப்ரஸேனனோடு வேட்டைக்குப் போய், அங்கே அவன் பிரிந்துபோய், பகவான் ரொம்ப நாழி காத்திருந்து, அப்புறம் ஆகாசத்தைப் பார்த்து, 'அடேடே, நாலாம் பிறைகூட உதித்து விட்டது' என்று ஊருக்குத் திரும்பினாரே, அந்த தினம்தான்.

இப்படிச் சதுர்த்திச் சந்தரனை அவர் பார்த்தால்தான்

அவர்மீது விக்நேச்வரரின் சாபம் பலித்துத் தப்பன அபவாதம் ஏற்பட்டுவிட்டது என்று நாரதர் தெரிவித்தார். அவர் இப்படி சொன்னவுடன் பகவான், "சுக்லபட்ச சதுர்த்தியில் சந்த்ரனைப் பார்ப்பதால் இப்படி தோஷம் ஸம்பவிக்கவேண்டுமென்று விக்நேச்வரர் ஏன் சபித்தார்?" என்று கேட்டார்.

நாரதர் அவருக்கு ஸவிஸ்தாரமாகக் கதை சொல்ல ஆரம்பித்தார்.

**கேள்வி பதில், கதைக்குள் கதை**

புராணங்களில் இப்படித்தான் ஒருத்தர் கேள்விகேட்டு இன்னொருத்தர் பதில் சொல்வதாகவே வ்ருத்தாந்தங்கள் வரும். எல்லாப் புராணங்களுமே ஜெனரலாக நைமீசாரண்ய முனிவர்களின் கேள்விகளுக்கு ஸூதர் பதிலாகச் சொன்னவைதான். அது தவிர ஒவ்வொரு புராணமும் 'பர்ட்டிகுலராக' ஒருத்தர் கேள்விக்கு பதிலாக இன்னொருத்தர் சொன்னதாகும். த்ருஷ்டாந்தமான, பாகவதமும் ஸூதர் நைமிச ரிஷிகளுக்க உபதேசித்தது தானென்றாலும், அதைக் குறிப்பாக பரீஷத்துக்கு உபதேசித்த சுகாசார்யாளின் வாக்கிலேயே நாம் பெற்றிருக்கிறோம். இதிஹாஸங்களான ராமாயண, மஹாபாரதங்கைளப் பார்த்தால் - வால்மீகி மஹர்ஷி.

'ஸகல உத்தம குணங்களும் நிறைந்து இருக்கிறவன் யார்?' என்று கேட்க, அதற்குப் பதிலாக நாரதர் ராமசரித்ரத்தைச் சொன்னதாகவும், அப்புறம் அதை வால்மீகி ஸ்ரீமத் ராமாயண காவ்யமாக்கி லவ குசர்களக்குக் கற்றக்கொடுத்தபடி அந்த இரண்டு குழந்தைகளும் ராமருக்கு முன்னேயே அச்வமேத மஹா மண்டபத்தில் பாடினதாகவும் இருக்கிறது. பாரதமும் நைமிச ரிஷிகளுக்கு ஸூதர் சொன்னதுதான். ஆதி காவ்யம் என்கப்பட்ட ராமாயணத்துக்கு மட்டும் ஸூதர் - நைமிசாரண்ய ரிஷிகள் ஸம்பந்தமில்லை. பர்ட்டிகுலராக பாரதக் கதையைப் பாண்டவர்களுடைய கெள்ளப் பேரனான ஜனமேஜயனுக்கு வைசம்பாயனர் சொன்னதாகவும், இதையே வ்யாஸர் காவ்யமாக்கிச் சொல்ல விக்நேச்வரர் எழுதிவைத்தாகவும் கதை. இப்படி ஒருத்தர் இன்னொருத்தருக்குச் சொல்லும் ஒவ்வொரு புராண - இதிஹாசத்தின் நடுநடுவிலேயும் கதாபாத்ரங்கள் கேள்வி

கேட்க, நாரதர், அகஸ்த்யர், மார்க்கண்டேயர் முதலான ரிஷிகள் பதிலுக்கு உபாக்யானங்கள் சொன்னதாக வரும். ராமாயணத்தின் உத்தரகாண்டத்தில ராவணாதியர் சரித்ரமெல்லாம் அகஸ்த்யர் ராமருக்குச் சொன்னதாகவே வருகிறது. இந்த அகஸ்த்யரே கேள்வி கேட்க அவருக்கு ஹயக்ரீவர் சொன்னதுதான் ப்ரஹ்மாண்ட புராணத்தில் வரும் லலிதோபாக்யானம். மஹாபாரதத்தில இப்படி அநேக ரிஷிகள் அநேக உபாக்யானங்களைப் பாண்டவர்களுக்குச் சொன்னதாக - குறிப்பாக அவர்களுடைய வனவாஸ காலத்தில் சொன்னதாக - வருகிறது. அப்படித்தான் இங்கே ஸ்காநத்த்தில் க்ருஷ்ண பரமாத்மா 'வளர்பிறையில் சதுர்த்திச் சந்த்ரனை ஏன் பார்க்கக்கூடாது?' என்று கேள்வி கேட்டதற்கு நாரதர் பதிலாகச் சொன்ன கதை வருகிறது. அப்புறம் இப்படி க்ருஷ்ணர் நாரதரைக் கேட்ட விவரத்தையும் சேர்த்து இந்தக் கதையை நந்திகேச்வரர் ஸநத்குமாரருக்குச் சொன்ன பைனல் ஷேப்பி-ல் கொடுத்திருக்கிறது

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*சந்திரனின் கர்வ பங்கம்*

மஹா கணபதி மூஷிகத்தின் மேல் ஏறிக்கொண்டு ஸர்வ லோகங்களிலும் ஆனந்தமாக ஸஞ்சாரம் செய்து கொண்டிருப்பார். இப்படி ஸஞ்சாரம் செய்யும்போது ஒரு ஸமயம் சந்த்ரலோகத்துக்குப் போனார். 'சசிவர்ணர்' எனப்படுபவர் சசியின் உலகத்துக்குப் போனார். குழந்தைக்கு அம்புலி பிடிக்குமல்லவா?

சந்த்ரனுக்குத் தன்னுடைய அழகைப் பற்றி ரொம்ப கர்வம். கவிகள் பகவானை வர்ணிப்பத னால்கூட 'பூர்ண சந்த்ரன் மாதிரி முகமுள்ளவர்" என்று தானே சொல்கிறார்கள்? இதனால் அவனக்கு கர்வம் தலைக்கேறி விட்டது. தன்னைத்தானே மெச்சிக்கொள்ள ஆரம்பித்துவிட்டால் அப்புறம் மெச்சத் தகுந்ததாக இருக்கிற மற்றதெல்லாம்

மட்டமாகத்தான் தெரியும். இப்படித்தான் பிள்ளையாரின் அழகு சொட்டுகிற குழந்தை ரூபத்தைப் பார்த்ததும் சந்த்ரனுக்கு இளக்காரமாகத் தோன்றியது.

சாந்தமும் அன்பும் ஞானமும் ததும்பும் அவருடைய ஆனைமுகம். விசிறி மாதிரி ஆடிக்கொண்டிருக்கும் அவருடைய விஸ்தாரமான காது, நல்ல த்ருப்தியையும் குழந்தையின் கொழு கொழுப்பையும் காட்டும் அவருடைய தொப்பை, குட்டிக்கால் என்று எதைப் பார்த்தாலும் நமக்கு, "இப்படியும் ஒரு அழகு உண்டா, உண்டா?" என்று தெவிட்டாத ஆனந்தமாக இருக்க, சந்த்ரனுக்கோ, "இதென்ன, அசிங்கமாகத் தும்பிச்சுக்கையும், முறம் மாதிரிக் காதும், பானையாட்டம் வயிறும், கூழைக்காலும்?" என்று பரிஹாஸமாக இருந்தது. பக்தியுள்ளவர்களுக்கு எதெல்லாம் ரொம்பவும் கொண்டாடத் தக்கதாக இருக்குமோ அதுவே பக்தியில்லாதவர்களுக்கு நிக்ருஷ்டமாக (தாழ்வானதாக), கேலியாக இருக்கும்.

பிள்ளையாரைப் பார்த்ததும் சந்த்ரன் கேலியாகச் சிரித்தான்.

உடனே அவருக்குக் கோபம் வந்துவிட்டது. துஷ்டத்தனத்தைச் சிஷித்துத் திருத்த வேண்டியது தெய்வங்களின் பொறுப்பானதால் கோபம் வந்தது, தன்னை அவமதித்து விட்டானே என்பதற்காக அல்ல.

சந்த்ரனிடம் பிள்ளையார் மஹாகோபமாகப் பேச ஆரம்பித்தார்.

"அடேய், சந்த்ரா நீ வெள்ளை வெளேரென்று கண்ணுக்குக் குளிர்ச்சியா யிருக்கிறாய், உன்னைக் கவிகளெல்லாம் ஸ்தோத்ரம் பண்ணுகிறார்கள் என்பதில்தானே உனக்கு கர்வம் தலைக்கேறியிருக்கிறத? நீ வெளுகப்பாயிருந்தாலும் அந்த வெளிச்சம் உன் ஸொந்தச் சரக்கா என்ன? ஸூர்ய வெளிச்சத்தை இரவல் வாங்கிக்கொண்ட அந்தக் கடன் சரக்கில் அல்லவா நீ பளபளக்கிறாய்? அந்த வெளிச்சம் படாத உன்னுடைய அங்கங்கள் சந்த்ர மண்டலத்திலேயே அசிங்கமாக, திட்டுதிட்டாகக் கரேலென்றுதான் இருக்கின்றன என்பதை மறந்துவிட்டாய் போலிருக்கிறது.

"அதுதான் போகட்டும், ரூபத்தைவிட குணம்தான் முக்யமெனறால், அதிலும் உன் லட்சணம் என்ன?

ரூபத்திலுள்ள களங்கம் போலவே குணத்திலும் உனக்குள்ள களங்கத்தினால்தான் பத்னிகளுக்குள்ளேயே பாரபட்சம் பண்ணி, மாமனார் சாபத்தை வாங்கிக் கட்டிக்கொண்டு தினம் கொஞ்சமாகத் தேய ஆரம்பித்தாய். (இருபத்தியேழு நட்சத்திர கன்னிகளையும் கல்யாணம் செய்துகொண்டிருந்த சந்திரன் ரோஹிணி ஒருத்தியிடம் மட்டும் ப்ரியம் காட்டி மற்ற பத்னிகளை உதாஸீனம் செய்தான். இதனால் அவர்களுடைய தகப்பனாரான தட்சன் அவனைச் சபித்துவிட்டார்.) அப்புறம் என் தகப்பனார்தான், தேய்ஞ்சு மாய்ஞ்சு கிடந்த உன்னை அந்த மூன்றாம்பிறை ரூபத்திலேயே தூக்கித் தன் தலைமேலே வைத்துக்கொண்டு உனக்கு மறுபடி அந்தஸ்து ஏற்படுத்திக் கொடுத்தார். அதோடு நீ ஒரேயடியாகத் தேய்ந்து மறைந்து போய்விடாமல் உன்னைக் கொஞ்ச கொஞ்சமாக வளருமாறு பண்ணினார். ஆனால் அப்போதுகூட உன்னையே தெய்வமாக நம்பிவந்த பத்னிகளுக்கு நீ செய்த த்ரோஹத்தை முழுக்க மன்னிக்கக்கூடாது. நீ இப்பேர்பட்ட தப்பு பண்ணினவனென்று லோகம் மறந்து போகக் கூடாது என்றுதான், நீ பூர்ணமாக வளர்ந்தவுடனேயே மறுபடி தேய ஆரம்பிக்கவேண்டும், மாறிமாறி அவருடைய கருணையைக் காட்டுவதற்காக வளர்வதாகவும் உன்னுடைய குணஹீனத்தைக் காட்டுவதறகர்க்த் தேய்வதாகவுமிருக்க வேண்டுமென்று ஏற்படுத்திவிட்டார். இதையோ, குரு பத்னியிடமே நீ தப்பாக நடந்துகொண்டதையோ எவரும் மறந்துவிடவில்லை. குண ஸம்பத்துக்காக உன்னை யாரும் பார்க்கவில்லை. கண்ணுக்குக் குளுத்தியாக வெள்ளை பூசிக் கொண்டிருக்கிறாயே என்றுதான் பார்க்கிறார்கள்.

"இனிமேல் உன் ரூப ஸம்பத்துக்காகவும் உன்னை யாரும் பார்க்க மாட்டார்கள். அப்படி நான் சாபம் கொடுக்கிறேன். இனிமேல் எவரொருத்தர் உன்னைப் பார்த்தாலும், களங்கமுள்ள உன்னைப் பார்த்தற்குப் பலனாக, அவர்களுக்கும் லோகத்தில் களங்கம் கற்பிக்கப் படட்டும், உன்னைப் பார்க்கிறவர் மித்யாபவாதத்துக்கு ஆளாகட்டும்" என்று சபித்துவிட்டார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*சாபத்தின் உட்கிடை*

'ரொம்பவும் அழகாக இருக்கிறோம், ப்ரமாதமாக அலங்காரம் பண்ணிக்கொண்டிருக்கிறோம்' என்று அஹம்பாவப்படுபவர்களுக்குப் பெரிய 'பனிஷ்மென்ட்' அவர்களை யாரும் ஏறெடுத்தும் பார்க்காமல் அலட்சியப்படுத்துவதுதான். அதனால்தான் பிள்ளையார் இப்படிச் சாபம் கொடுத்தார். சந்திரனுக்கே நேரே ஹானி உண்டாகும்படியாக, "உன் கண் அவியணும்", "நீ கல்லாகப் போகணும்" என்ற மாதிரிச் சாபம் தராமல் அவனைப் பார்க்கிறவர்களுக்கு அபவாதம் உண்டாகும்படியாகச் சபித்தார். இவர் அவனை சபிக்காவிட்டாலும், அவனைப் பார்த்துவிட்டு அபவாதப்படும் அத்தனைபேரும், "இந்த பாழாய்ப் போகிற சந்திரனை பார்த்துத்தான் நமக்கு இந்தக் கஷ்டம் வந்தது" என்று வயிறெரிந்து சபிப்பார்களல்லவா?

இன்றொன்றுகூடச் சொல்லலாம். ஒருத்தன் எத்தனைதான் குணஹீனனாக இருந்தாலும், அவனுக்கு அழகோ, அதிகாரமோ இருந்துவிட்டால் அவனை மெச்சி ஸலாம் போடும் லோக வழக்கத்தைக் கண்டிக்கவும் பிள்ளையார் இப்படிச் செய்திருக்கலாம்.

ரூபத்தினால் கர்வப்படுபவருக்குத் தான் 'இக்னோர்' செய்யப்படுபவதுதான் ஸரியான தண்டனை. குணத்தைப் பார்க்காமல் ஒருத்தனுடைய ரூபத்தை மாத்திரம் பார்த்து ஸ்தோத்ரம் செய்பவர்களுக்கு, அவர்களுடைய குணத்துக்கே தோஷம் கற்பித்து உண்டாக்கும் அபவாதம்தான் ஸரியான தண்டனை.

தன்னை இனிமேல் யாரும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டார்களே என்பதில் அவமானம், தப்பித் தவறிப் பார்த்து விட்டால் அப்புறம் அபவாதத்துக்கு ஆளாகிக் கரித்து கொட்டுவார்களே என்பதில் பயம்-இரண்டும் சேர சந்த்ரன் தான் உதித்த ஸமுத்ரத்துக்குள்ளேயே போய் ஒளிந்து கொண்டுவிட்டா¡.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*சாப விமோசனம்*

ராவேளைகளில் சந்த்ரனில்லாமல் லோகம் பலவிதமாகக் கஷ்டப்பட்டது. ஓஷதிகள் (மூலிகைகள்) சந்த்ரிகையாலேயே வளர்ப்பவையாதலால், இப்போது நிலா இல்லாமல் அவை வாடிப்போனதில் எங்கே பார்ததாலும் வியாதிகள் உண்டாயின. எத்தனை பார்த்தாலும் போதுமென்ற த்ருப்தியைத் தராத பால் நிலவு இல்லாமல் ரஸிகஜனங்கள் வருத்தப்பட்டார்கள்.

அதனால் தேவர்கள், ரிஷிகள் எல்லோரும் லோகத்திடம் பரிவு கொண்டு ப்ரம்மாவிடம் போய் முறையிட்டார்கள்.

எப்போதுமே மும்மூர்த்திகளில் முதல்வரான ப்ரம்மாவிடம்தான் முதலில் போய் வேண்டிக்கொள்வார்கள். அப்போது சில ஸமயங்களில் அவரே குறை தீர்த்துவைப்பார், சில சமயங்களில், ரொம்பப் பெரிய அநுக்ரஹமாகச் செய்ய வேண்டியிருந்தால் அப்போது, தம்மிடம் பிரார்த்திப்பவர்களை விஷ்ணுவிடமோ ஈச்வரனிடமோ அம்பாளிடமோ அழைத்துக்கொண்டு போய், தாமும் சேர்ந்து முறையிடுவார். இப்படித்தான் புராணங்களில் இருக்கிறது.

சந்த்ரனை மறுபடி ஆகாசத்தில் ஸஞ்ஜாரம் பண்ணும்படிச் செய்யவேண்டுமென்று தேவ, ரிஷிகள் ப்ரம்மாவிடம் பிரார்த்தித்ததும் அவர், "மஹா பணபதி கொடுத்த சாபத்துக்கு நான் எப்படி விமோசனம் சொல்வது? பரமேச்வரனாலும் முடியாததாச்சே அது ஆனபடியால் சாபம் கொடுத்தவரையே உபாஸியுங்கள். அவர் காலிலேயே விழுந்து பிரார்த்தனை செய்யுங்கள். அவருக்கு உகந்த திதியான சதுர்த்தியில் நக்த வ்ரதமிருந்து, விசேஷ பூஜை பண்ணுங்கள். மோதகம், அப்பம், பழம், தேங்காய் எல்லாம் நிறைய நிவேதனம்

பண்ணி, மனஸ் உருக வேண்டிக்கொண்டு அவர் மனஸையும் உருக்கி அநுக்ரஹத்தை ஸம்பாதித்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டார்.

பொதுவாக வ்ரதமென்றால் பகலில் மட்டும் போஜனம் பண்ணிவிட்டு, ராத்தி உபவாஸமிருப்பது வழக்கமென்றாலும் சில வ்ரதங்களுக்கு பகலில் உபவாஸமிருந்துவிட்டு ராத்ரி போஜனம் பண்ணவேண்டும். இப்படி மத்யான்னமெல்லாம் உபவாஸம், பூஜை, பாராயணம் என்று இருந்துவிட்டு ராத்ரி ஆஹாரம் பண்ணுவதுதான் நக்த வ்ரதம் என்பது. நக்தம் என்றால் ராத்ரி என்று சொல்வது இதிலிருந்து தான்.

ஒவ்வொரு தெய்வத்துக்கு ஒவ்வொன்று முக்யம். சிவனுக்கு அபிஷேகம். விஷ்ணுவுக்கு அலங்காரம், பிள்ளையாருக்கு நைவேத்யம். ஒரு குழந்தையென்றால் அது எப்போது பார்த்தாலும் "ஹாவு ஹாவு" என்று எதையாவது தின்னத்தான் பறக்கும். கத்தியா,கபடாவா, வாயில் கொள்ளுமா கொள்ளாதா என்றில்லாமல் எதைப் பார்த்தாலும் வாயிலே அடைத்துக் கொள்ளத்தான் குழந்தை பறக்கும். அது என்ன விஷமம் பண்ணினாலும், "அப்பச்சி தரேன்" என்று தான் ஸமாதானம் படுத்துகிறோம். குழந்தைஸ்வாமியான் பிள்ளையாருக்குக் குறைவில்லாமல் கொழுக்கட்டை, அப்பம், பொங்கல், தேங்காய், பழ வகைகளெல்லாம் நைவேத்யம் பண்ணவேண்டும். அவ்வையாரும் அவரை ஸ்ததிக்க ஆரம்பிக்கும்போதே "பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்" என்று சாப்பாட்டில்தான் ஆரம்பிக்கிறாள் இப்படியே, திருப்புகழிலும் எடுத்த எடுப்பில் "கைத்தலம் நிறைகனின அப்பமொ(டு) அவல் பொரி" என்று சாப்பாட்டு தினுஸுகளைத்தான் அடுக்கியிருக்கிறது.

தேவர்களெல்லோரும் ப்ரம்மா சொன்னபடியே பிள்ளையாரை மனோ வாக் காயங்கள் ஒன்றுபட்டுப் பூஜை பண்ணி வந்தார்கள். ஸமுத்ரத்துக்குள்ளே போய் சந்திரனைக் கண்டு பிடித்து, "நாங்கள் வேண்டிக்கொள்வது பெரிசில்லை. நீ தப்பை உணர்ந்து க்ஷமாபனம் (மன்னிப்பு) கேட்டுக் கொள்வதுதான் முக்யம். விக்நேச்வரரும் அப்போது சடக்கென்று மனஸ் இறங்கி அநுக்ரஹம் செய்துவிடுவார்" என்றார்கள்.

அவமானம், கஷ்டம ஆகியவை வந்தால் அவையே

அஹம்பாவம் பிடித்தவர்களுக்குக் கொஞ்சம் நல்ல புத்தியை உண்டாக்கிவிடுவது வழக்கம். சந்த்ரனுக்கும் இப்படி கொஞ்சம் நல்லறிவு உண்டாயிருந்தது. தேவர்கள் சொன்னபடி அவர்களோடு சேர்ந்து விக்நேச்வரரைப் பணிவோடு வழிபடிஆரம்பித்தான்.

கருணாமூர்த்தியான கணேசர் ப்ரஸன்னமானார். ப்ரார்த்தனைக்குச் செவி சாய்த்தார் - பெரிய செவி. 'சூர்ப்ப கர்ணம்' என்று சொல்லப்படுவது. (சூர்ப்பம் என்றால் முறம்.) சந்த்ரன் பச்சாதபத்தோடு மன்னிக்கச் சொல்லி ப்ரார்த்தித்தான். பெரிய மனஸோடு பிள்ளையாரும் மன்னித்தார்.

சந்த்ரனைப் பார்க்கிறவர் அபவாதத்துக்கு ஆளாக வேண்டுமென்ற சாபத்தை ரத்து பண்ணினார் - ஒரு சின்ன கண்டிஷனோடு. "ஏன் அப்படியே ரத்து பண்ணாமல் ஒரு கண்டிஷன் போடுகிறேனென்றால், என் வாயிலிருந்து ஒரு தரம் வந்துவிட்ட வார்த்தை எதுவும் அடியோடு வீணாகப் போகப்படாது. அதோடுகூட, எந்தக் காரணத்துக்காகவும் கர்வப்படக்கூடாது. இவன் அழகுக்கு கர்வப்பட்டாற்போல் வித்யை, செல்வம், அதிகாரம் முதலான எதற்கு கர்வப்பட்டாலும் உலகம் ஏறெடுத்தே பார்க்காத அவமானநிலைக்குத்தான் ஆளாக வேண்டிவரும் என்று ஜனங்களுக்கு என்றென்றைக்கும் ஞாபகம் இருப்பதற்காக இவனுக்கு 'துளிப்போற'வாவது தண்டனை இருக்கத்தான் வேண்டும். ஆகையினால் என் ஆவிர்பாவ தினமான சுக்ல பக்ஷச் சதுர்த்திகளில் மட்டும் எவரும் சந்த்ரனைப் பார்க்கக் கூடாது என்றும், மீறினால் மித்யாபவாதத்துக்கு ஆளாக வேண்டுமென்றும் ஆக்ஞை செய்கிறேன்" என்றார்.

எப்போதுமே சந்த்ரனைப் பார்க்கப்படாதென்பதைப் பரம க்ருபையோடு மாற்றி மாஸத்தில் ஒருநாள் மாத்திரம் பார்க்கப்படாது என்று செய்தார். அதை சுக்ல சதுர்த்தியாக வைத்தால் தம்முடைய ஸம்பந்தம் நினைவு வரும்படியாகப் பண்ணினார்.

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*"பால சந்த்ரன்"*

'பனிஷ்மென்டை' இவ்வளவு 'கண்டோன்' பண்ணினது (குறைத்தது) போதாதென்று, மிகவும் அருள் நெஞ்சோடு சந்த்ரனுக்குச் சில 'ப்ரிவிலேஜ்'களும் கொடுத்தார். பெரிய 'ப்ரிவிலேஜ்' என்னவென்றால் பிறைச் சந்திரனைத் தூக்கிப் பிள்ளையார் தம் கிரீடத்திலேயே சூட்டிக்கொண்டதுதான்

பரமேச்வரனைப் போலவே, அம்பாள் விக்நேச்வரர் ஆகிய இரண்டு பேருக்கும் தலையில் சந்த்ரகலை உண்டு.

இதனால் பிள்ளையாருக்கு "பாலசந்த்ரன்" என்றே ஒரு பெயரிருக்கிறது. அவருடைய ஷோடச நாமாக்களிலேயே இது ஒரு பெயர். Baala-Chandran, அதாவது 'குழந்தை சந்த்ரன்' என்று ரொம்பப் பேர் இதைத் தப்பாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். Baa இல்லை. அது தப்பு Bhaa என்பதே ஸரி. pa, pha, ba, bha என்று ஸம்ஸ்க்ருதத்தில் நாலு இருப்பதில் நாலாவதான dha - காரம் போட்டு Bhaala - Chandran என்று சொல்ல வேண்டும். Bhaalam என்றால் நெற்றி அல்லது

முன்தலை. முன்னந்தலையில் எவர் சந்த்ரனை தரித்துக் கொண்டிருக்கிறாரோ அவர் Bhaala chandran. அல்லது இரண்டாவது 'ப' -வாக Phaalaஎன்று சொல்லாம். அப்படிச் சொன்னால் கேசத்தில் இரண்டு பக்கங்களில் ஒன்று. ஈச்வரன்

ஜடாபாரத்தில் நேராகச் சந்த்ரனை வைத்துக் கொள்ளாமல் இடது பக்கமாகச் சாய்த்து வைத்துக் கொண்டிருப்பதாக அநேக சில்ப சித்ரங்களில் பார்க்கிறோமல்லாவ? அங்கே பரமசிவன் Phaala Chandran -ணாகவே இருக்கிறார். ஆனால் பாலசந்த்ரன் என்ற பேர் முக்யமாகப் பிள்ளையாரு டையதுதான்.

ஏனென்றால் பரமேச்வரன் சந்த்ரன் பண்ணின தப்பை க்ஷமித்தது பெரிசில்லை. சந்த்ரன் ஈச்வரனிடமே நேராகத் தப்புப் பண்ணவில்லை. பத்னிகளுக்குத்தான் தப்புப் பண்ணினான். அவர் தண்டித்தார். அவன் மன்னிப்புக்

கேட்டுக்கொண்டான். அவரும் மன்னித்துவிட்டார்.

பிள்ளையாரிடமோ சந்த்ரன் நேராகவே அபசாரப்பட்டு விட்டான். அவரையே தான் அவன் பரிஹாஸம் பண்ணினது. அப்படிப் பண்ணினவனை அவர் ஷமித்ததுதான் பெரிசு.

ஒருத்தரை ரொம்பவும் ஸ்தோத்திரித்தால், "என்ன தலைக்கு மேலே தூக்கி வெச்சுண்டு கூத்தாடறே?" என்று கேட்கிற வழக்கமிருக்கிறது. தன்னைப் பரிஹாசம் செய்த சந்த்ரனிடம் பரிவு கொண்ட கணபதி அவனை நிஜமாகவே தூக்கித் தலை மேல் வைத்துக்கொண்டு ஆனந்தமாகக் கூத்தாடினார். 'ந்ருத்த கணபதி', 'கூத்தாடும் பிள்ளையார்' என்று அவருக்குப் பெயர்.

'எத்தனை பார்த்தாலும் தெவிட்டாதது' என்ற பெருமை யானை, சந்த்ரன் இரண்டுக்கும் உண்டு. இப்போது இவற்றில் ஒன்று மற்றொன்றின் தலையில் போய் உட்கார்ந்துவிட்டது, பரஸ்பரம் அழகுக்கு அழகு செய்துகொள்கிற மாதிரி.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஸங்கடஹர சதுர்த்தி*

சந்த்ரனுக்கு இன்னொரு பெருமையும் கொடுத்தார் பிள்ளையார்.

ஸாதாரணமாக ஒவ்வொரு தெய்வத்துக்கும் ஒரு குறிப்பிட்ட திதி விசேஷமானதாகும். அது வளர்பிறை, தேய்பிறை என்கிற இரண்டில் ஏதோ ஒன்றில் வருவதாகத் தானிருக்கும். முருகனுக்கு ஷஷ்டி என்றால் அது சுக்ல ஷஷ்டிதான், க்ருஷ்ண பட்சச் ஷஷ்டியில்லை. பரமேச்வரனக்குச் சதுர்தசி என்றால் அது க்ருஷ்ண பட்சச் சதுர்தசிதான். அதற்கு மாஸ சிவராத்ரி என்று பெயர். ராமருக்கு நவமீ பூஜை என்றால் சுக்ல நவமிதான். க்ருஷ்ணருக்கு அஷ்டமீ பஜனை என்றால் க்ருஷ்ண பட்ச அஷ்டமிதான். (கறுப்பன் க்ருஷ்ணன்,

வெள்ளை சிவன் இரண்டு பேருக்கும் க்ருஷ்ண பட்சம்) அம்பாளுக்குப் பௌர்ணமி - அது சுக்லபட்சத்தில் மட்டுந்தான் உண்டு. ஆனால் பிள்ளையாருக்கு மட்டும் சதுர்த்தி விசேஷமென்றால், சுக்லபட்ச சதுர்த்தி, க்ருஷ்ண பட்ச சதுர்த்தி இரண்டுமே அநத் விசேஷத்துக்கு உரியனவாக இருக்கின்றன.

அவர் ஆவிர்பவித்தது சுக்ல சதுர்த்தியில்தான். அதனால் அவருக்கு ரொம்பப் பெரிய உத்ஸவமான பிள்ளையார் சதுர்த்தி சுக்ல பட்சத்தில்தானிருக்கிறது.

அதே மாதிரி மாஸாமாஸமும் சுக்ல சதுர்த்தியில் வ்ரதம் இருப்பதுண்டு. அதோடுகூட 'ஸங்கடஹர சதுர்த்தி வ்ரதம்' என்றும் இன்னொன்று கேள்விப்பட்டிருக்கலாம். ('ஸங்கடஹர' என்றால் 'உபத்ரவங்களைப் போக்குகிற' என்று அர்த்தம். ஆனால் 'ஹர' என்ற இந்த முக்யமான வார்த்தையை விட்டுவிட்டு 'ஸங்கட சதுர்த்தி' என்றே சொல்கிறார்கள்.) இதுவும் விக்நேச்வரருக்கு (வேண்டுதாலாக) இருக்கும் வ்ரதம்தான். இது சுக்ல சதுர்த்தியல்ல க்ருஷ்ண பட்ச சதுர்த்தியேயாகும்.

இந்த ஸங்கட ஹர சதுர்த்தியைப் பிள்ளையாரேதான் ஏற்படுத்திகொண்டார். அது இந்த ஸமயத்தில்தான். தண்டனையை ரொம்பவும் குறைத்து, யாரும் சந்த்ரனை சுக்ல சதுர்த்தியில் பார்க்கப்டாது என்று சொன்னதுகூட அவருடைய கருணையுள்ளத்துக்குக் கஷ்டமாயிருந்தது. அதனால், அதைக் 'காம்பன்ஸேட்' செய்கிறாதாக, க்ருஷ்ண பட்ச சதுர்த்தியில் அவனை எல்லோரும் கொஞ்சம் பஹுமரினிக்கும்படிப் பண்ண வேண்டுமென்று நினைத்துச் சொன்னார். "க்ருஷ்ண பட்சச் சதுர்த்தியில் வ்ரதமிருந்து எனக்குப் பூஜை பண்ணினால் நான் விசேஷமாக ப்ரீதியடைந்து எல்லா ஸங்கடங்களையும் போகக்டிப்பேன். இந்தப் பூஜை முடியும் போது ரோஹிணீ ஸமேதனான சந்த்ரனையும் பூஜை பண்ண வேண்டும்" என்றார்.

சந்த்ரன் ரோஹிணியிடம் மட்டும் அதீத ப்ரியம் வைத்திருந் ததைக்கூட மன்னிக்கிற அளவுக்குப் பிள்ளையாரின் அருள் உள்ளம் இளகியிருந்திருக்கிறது.

## கண்ணன் பூஜித்த கணநாதன்

### கண்ணனும் சந்த்ரனும்

கோகுலாஷ்டமியில் க்ருஷ்ண பரமாத்மாவைப் பூஜிக்கும் போதும் கடைசியில் சந்த்ரனுக்கு அர்க்யம் கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. பின்னாலே நம் கதையின் போக்கைப் பார்த்தால் விக்நேச்வரர் மனஸை அநுஸரித்தே க்ருஷ்ணர் தம் பூஜையிலும் இப்படி சந்த்ரனை பஹுமானிக்கும்படி ஆக்ஞை செய்திருப்பாரோ என்று தோன்றுகிறது.

இன்னொரு கதைகூடச் சொல்வதுண்டு. ராமர் ஸூர்ய வம்சத்தில் அவதாரம் பண்ணி ரவிகுல திலகன், இனகுல திலகன் என்றெல்லாம் பேர் வாங்கினதைப் பார்த்து சந்த்ரனுக்கு துக்கம் துக்கமாக வந்ததாம். அவர்கிட்டே போய், 'என்னைமட்டும் அலட்சியபடுத்திவிட்டீர்களே' என்று அழுதானாம். உடனே அவர், 'அழாதே உன் பேரை என் பேரோடேயே சேர்த்துக் கொண்டுவிடுகிறேன். இனி மேலே என் பேர் ராமசந்த்ரன் தானென்று கெஜட்டிலேயே போட்டு விடுகிறேன். இதுமட்டும் போதாது என்றால் அடுத்த அவதாரம் உன் வம்சத்திலேயே பண்ணுகிறேன்' என்று வாக்குக் கொடுத்தாராம். அதனால்தான் க்ருஷ்ணாவதாரம் சந்த்ரவம்சத்தில் பண்ணினாராம். அதோடுகூட தமக்கு ஜனனோத்ஸவ பூஜை பண்ணும்போதே சந்த்ரனை நினைத்து அர்க்யம் தரவேண்டும் என்று ஆக்ஞையிட்டு விட்டாராம்.



## கண்ணன் பூஜித்த கணநாதன்

### அபவாதம் நீங்க வரம்

தேய்பிறைச் சதுர்த்தியில் இப்படி சந்த்ரனக்கு ஒரு கௌரவம் தேடித் தந்ததோடு, வளர்பிறையிலேயே, அவனைப் பார்க்கப்படாது என்று மட்டம் தட்டிவைத்த சதுர்த்திக்கு முந்தி ஒரு தினத்தில் அவனைப் பார்த்தால் ரொம்ப புணய்ம் ஏற்படும் என்ற உயர்வையும் பிள்ளையார் அநுக்ரஹித்தார். "அமாவாஸ்யைக்கு அப்புறம் சந்த்ரன் நன்றாகத் தெரிய ஆரம்பிக்கிற முதல் திதியில் அவனைப் பார்த்தால் புண்யம் ஏற்படும், இதனால் சதுர்த்தியில் அவனைப் பார்க்கும் தோஷம்கூட நிவ்ருத்தியாகிவிடும்" என்றார்.

அப்படித் தெரிவதுதான் மூன்றாம் பிறை என்பது. அதைத்தான் ஈச்வரன், பிள்ளையார், அம்பாள் முதலானவர்கள் சிரஸில் தரித்திருக்கிறார்கள். ப்ரதமையில் சந்த்ரன் தெளிவாக அடையாளம் கண்டு கொள்ளும்படித் தெரியாது. த்விதீயையில்தான் தெரியும். அதைத்தான் "பிறை பார்க்கிறது" என்று சொல்லிப் பார்ப்பது. அந்த நாளை 'சந்த்ர தர்சனம்' என்றே பஞ்சாங்கத்தில் போட்டிருக்கும். சதுர்த்திச் சந்திரனைப் பார்க்கப்படாது என்பதைச் சதுர்த்தித் திதிக்கு அநேகமாக ஒரு நாள் முந்தி வருகிற நாலாம் பிறையாகவே அநுஷ்டானத்தில் வைத்துக் கொண்டிருக்கிறோம். "நாலாம் பிறை பார்த்தால் நாய் பட்ட பாடு" என்று வசனமே இருக்கிறது. இப்படிப் பிள்ளையார் சாபவிமோசனம் தந்தபின் சந்த்ரன் மறுபடி ஆகாசத்தில் ஸஞ்சாரம் செய்ய ஆரம்பித்தான். அவனுக்கும், ஸகலருக்குமே ஸந்தோஷமாயிற்று.

சந்த்ரன் விக்நேச்வரரிடம் பரிபவப்பட்ட கதையை நாரதர் க்ருஷ்ணருக்குச் சொல்லிவிட்டு, "நீங்கள் சதுர்த்திகளிலேயும் ரொம்ப விசேஷமுள்ளதான பாத்ரபத சுக்ல சதுர்த்தியிலேயே ஒரு தரம் சந்த்ரனைப் பார்த்துவிட்டீர்கள். 'லோகத்தில் மநுஷாளுக்கு ஏற்படுவதெல்லாம் நமக்கும் ஏற்படட்டும்' என்று நீங்களே ஸங்கல்பித்துக்கொண்டு இப்போது நரலீலை செய்துகொண்டிருப்பதால் விக்நேச்வர சாபம் உங்களை பாதித்துவிட்டது. அதுதான் இப்படி ஊர் வாயிலெல்லாம் விழுந்து புறப்பட்டுக்கொண்டிருக்கிறீர்கள். பரிஹாரமாக சதுர்த்தி வ்ரதமிருந்து மஹாகணபதியைப் பூஜை பண்ணுங்கள்" என்று சொன்னார்.

க்ருஷ்ணரும் பிள்ளையார் தன்னுடைய மருமான்தானே

என்று நினைக்காமல், அப்படியே விதிவத்தாகப் பூஜை பண்ணினார். க்ருஷ்ண பட்ச சதுர்த்தி, சுக்ல பட்ச சதுர்த்தி இரண்டிலுமே பண்ணினாரென்று வைத்துக்கொள்ளலாம். இல்லாவிட்டால் இதில் எது உசத்தி, எது தாழ்த்தி, ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு இன்னொன்றை விட்டு விடலாமா என்றெல்லாம் தோன்றும்.

க்ருஷ்ண, சுக்ல பட்ச சதுர்த்திகளில் பூஜித்த க்ருஷ்ணருக்கு சுக்லாம்பரதரரான விக்நேச்வரர் தரிசனம் கொடுத்தார். "நீங்கள் மநுஷ்ய ரூபத்தில் வந்து மநுஷ்யர்களைப் போலவே நடந்துகொண்டு அவர்களுக்கு வழி காட்டுகிறீர்களென்பதால்தான் என்னுடைய சாபம் உங்களையும் பாதிக்கும்படியாக ஏற்பட்டது. சீக்ரத்திலேயே உங்களுக்கு மித்யாபவாதம் நீங்கி, மேகத்திலிருந்து வெளிப்பட்ட சந்த்ரனைப் போல ப்ரகாசமாக விளங்குவீர்கள்" என்று மருமான மாமாவுக்கு வரம் கொடுத்தார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*லீலையின் பயன் லோகக்ஷேமம்*

உடனே க்ருஷ்ணர் பிள்ளையாரை இன்னொன்று கேட்டுக் கொண்டார். லோகக்ஷேமந்தான் க்ருஷ்ணருக்கு எப்போதும் மனஸில் இருப்பது. நடுவாந்தரத்தில் ஏதோ கொஞ்சம் ஒரு திவ்ய தீர்த்தத்தைப் பாசி மூடுவதுபோல, அபவாதத்தால் வந்த ஸொந்தக் கஷ்டம் அவருடைய உயர்ந்த மனஸை மூடுவதற்கு அவர் அநுமதித்தாலும் இப்போது அது தீர்ந்தவுடனேயே அவருக்கு லோகத்தின் நினைப்புத்தான் வந்தது. அதனால் விக்நேச்வரரிடம், "நீங்கள் நேரே வந்து என் க்லேசம் தீர்த்தது உங்களுடைய உதார மனஸைக் காட்டுகிறது. ஆனாலும் நீங்கள் வந்திருப்பது என் ஒரே ஒருத்தனுக்கு க்ஷேமம் கொடுப்பதோடு முடிந்தால் போதாது. உங்கள் விஜயத்தில் ஜனங்களுக்கெல்லாம் நல்லது உண்டாவதாக ஏதாவது மங்களமாகச் சொல்லிவிட்டுப்

போகவேண்டும்" என்றார்.

பிள்ளையாருக்கு அதுதான் பிடித்தது. முன்னே சந்த்ரனை முன்னிட்டு லோகத்திலுள்ளவர்களையெல்லாம் சபித்தோமே, அதற்கு எதிர்வெட்டாக இப்போது க்ருஷ்ணரை முன்னிட்டு லோக ஜனங்களுக்கெல்லாம் ஒரு வரம் கொடுக்க வேண்டுமென்றுதான் அவரும் நினைத்துக் கொண்டிருந்தார்.

அதனால், "சுக்ல சதுர்த்தியன்று சந்த்ரனைப் பார்த்தால் மட்டும் அபவாதம் வரத்தான் செய்யுமென்று, ஏறக்குறைய ஒரு மாஸத்துக்கு அப்புறம் வரும பிறை தர்ச்னத்தால்தான் அது நீங்குமென்றும் முன்னே சொல்லியிருந்தேனல்லவா. இப்போது அவ்வளவு இடைவெளி இல்லாமல் அபவாதம் உடனே நீங்க இன்னொரு உபாயம் சொல்கிறேன். உங்களை (க்ருஷ்ணரை) ஞாபகப்படுத்திக் கொள்கிறதாகவும் இருக்கும் உபாயம் சொல்கிறேன். அதாவது என்னை நீங்கள் பெருமைப்படுத்தியிருக்கிற இந்த ஸ்யமந்தக மணி வ்ருத்தாந்தத்தைப் படித்தாலோ, கேட்டாலோ போதும், உடனேயே மித்யாபவாதம் போய்விடும். சதுர்த்திச் சந்த்ரனைப் பார்த்து விட்டு அப்போதே இப்படிப் பாராயணமோ ச்ரவணமோ பண்ணினால்கூட அந்த க்ஷணமே தோஷம் நிவ்ருத்தியாகிவிடும், அபவாதம் உண்டாகாது. ஸாக்ஷாத் என்னுடைய ஆவிர்பாவ தினமான (பிள்ளையார் சதுர்த்தியான) பாத்ரபதத்தில் வரும் மஹா சதுர்த்தியில் சந்த்ரனைப் பார்த்திருந்தால்கூட ஸரி, அந்த தோஷத்தையும் இந்த உபாக்யானம் போக்கிவிடும். இது மட்டுமில்லை. பொதுவாகவே என்ன மனோ சஞ்சலம் ஏற்பட்டாலும் இந்தக் கதையின் படனம் அல்லது ச்ரவணம் - அதாவது இதைப் படிப்பது, அல்லது கேட்பது - அதைப் போக்கி நல்ல சாந்தியையும் தெளிவையும் கொடுத்துவிடும்" என்று அநுக்ரஹித்தார்.

அவதார புருஷர்களுக்கு உண்டாகும் கஷ்டங்கள்கூட முடிவில் லோகோபகாரமாகவே ஆகும். அவதார லீலை எதுவானாலும் முடிவிலே லோகக்ஷேமத்துக்கே காரணமாகும்

## ஒரு ச்லோகம் போதும்

மித்யாபவாதம் போகவும், நாலாம் பிறை பார்த்த தோஷம் போகவும் ஸ்யமந்தக மணி சரித்ரத்தை முழுக்கப் பாராயணம்

பண்ணமுடியாவிட்டாலும் அந்தக் கதையை மனஸிலாவது நினைத்துப் பார்க்கவேண்டும். அதோடு இதிலே ஒரு ச்லோகத்தை மட்டும் சொல்லிவிடவேண்டும். ஸ்யமந்தகம் என்ன ஆச்சு என்று தெரியாத மாதிரி நரலீலையில் பகவான் துப்பு துலக்கிக் கொண்டிருந்தபோது நடந்ததையெல்லாம் அவருக்கு வெட்ட வெளிச்சமாக்குவதாக ஜாம்பவதி ஒரு ச்லோகம் பாடினாளே, அந்த Keyலோகத்தைத்தான் சொல்லவேண்டும்.

ஸிம்ஹ ப்ரஸேநம் அவதீத் ஸிம்ஹோ ஜாம்பவதா ஹத I

ஸுகுமாரக மா ரோதீ தவ ஹ்யேஷ ஸ்யமந்தக II

இந்த ஒரு ச்லோகத்தைச் சொல்லும்போதே தன்னால் முன்னும் பின்னுமாக இந்த உபாக்யானம் முழுக்க நினைவு வந்துவிடும். இரண்டாம் வரி நமக்கே சொல்கிற மாதிரி ஆறுதலாக இருக்கிறது. "ஸுகுமாரக மா ரோதீ - அழாதேடா குழந்தே "ஸுகுமார" என்று ஜாம்பவானின் பிள்ளையுடைய பேரைச் சொல்லிக் கூப்பிட்டாலும், 'ஸுகுமாரன்' என்றால் 'நல்ல பிள்ளை' என்று அர்த்தமானதால், அது நமக்கும் பொருந்தும். தவ ஹ்யேஷ ஸ்யமந்தக - மணி உனக்கேதான்" பிள்ளையார் என்கிற மணி, கண்ணன் என்கிற மணி, இரண்டு மணியும் நமக்கே நமக்குத்தான். அவர்களுடைய அருள் இருக்கும்போது நாம் எதற்கும் அழவேண்டாம்.

பூஜையிலேயே இந்த ச்லோகத்தைச் சொல்ல வேண்டுமென்று வ்ரத முறைகளை விவரிக்கும் "வ்ரத சூடாமணி கல்ப"த்தில் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*அபவாத நீக்கம்*

பிள்ளையார் வாழ்த்தி வரம் கொடுத்தாற்போலவே க்ருஷ்ண

பரமாத்மாவின் மேலே சுமத்தின அபவாதம் சிறிது காலத்தில் விலகிற்று. எப்படியென்றால் -த்வாரகையில் துர்பிக்ஷம் உண்டாயிற்று. அந்த ஸமயத்தில் காசியிலே ஸகல ஸுபிக்ஷங்களும் நாளுக்கு நாள் வ்ருத்தியாகிக் கொண்டு வருவதாக த்வாரகைக்குத் தகவல்கள் வந்தன. அங்கேதான் அக்ரூரர் இருக்கிறார். அபரிமிதமாக ஆலய கைங்கர்யங்கள் பண்ணிக் கொண்டிருக்கிறாரென்ரம் ஸமாசாரம் வந்தது. அதிலிருந்து 'இரண்டும் இரண்டும் நாலு' என்பதுபோல விஷயம் புரிந்துவிட்டது. "அக்ரூரரிடம்தான் ஸ்யமந்தகம் இருக்கவேண்டும். அதன் ப்ரபாவந்தான் இந்த ஸுபிக்ஷம்' என்று புரிந்து விட்டது.

ஸர்வஜ்ஞரான பகவானுக்கு வெளியிலிருந்து ஒரு ந்யூஸும் வரவேண்டாம், 'ராய்ட்டர்' வேண்டாம் 'பி.டி.ஐ' வேண்டாம் என்றாலும் இப்போது எல்லாம் நரலீலையாகத்தானே பண்ணிக்கொண்டிருந்தார்? அதனால் இப்பை ந்யூஸ் வந்தததால்தான் தமக்குத் தெரிந்ததுபோல அக்ரூரருக்கு ஆளனப்பினார்.

ஆள் மூலம் ஸந்தேசம் (சேதி) அனுப்பினார். "ஸத்தான தாங்களில்லாமல் த்வாரகை த்வாரகையாக இல்லை. அதனாலே தாங்கள் உடனேயே திரும்பி வந்து யதுகுலத்துக்குப் பெரியவராக இருந்துகொண்டிருக்கவேண்டும், ஸ்யமந்தகம் உங்களிடம் இருந்தால்கூடப் பரவாயில்லை. ஸத்ராஜித்தோ போய்விட்டார். அவருக்கு ஆண் ஸந்ததியுமில்லை. ஸத்யபாமாவுக்குத் தகப்பனார் போய்விட்டதில்தான் துக்கமே தவிர ஸ்யமந்தகம் இருப்பதிலோ போவதிலோ அவளுக்குக் கருத்து இல்லை. எனவே, வேறு யாரிடமும் இருப்பதைவிட நல்ல அனுஷ்டானமும், சீலமும் உள்ள உங்களிடம் அது இருப்பதே நல்லது. (தனக்கு அதை வைத்துக்கொள்ள ஸகல உரிமையும், யோக்யதையும் இருந்துங்கூட பகவான் இதைக் கொஞ்சங்கூடக் காட்டிக் கொள்ளாமல் ஸந்தேசம் அனுப்புகிறார்.) ஆனாலும் என் தமையனாருக்கு ஸ்யமந்தகம் விஷயமாக என்னிடம் ஸந்தேஹம் ஏற்பட்டிருக்கிறது. அவருக்கே ஏற்பட்டிருக்கும் போது நாளைக்கு ஜாம்பவதிக்கும் கூட இல்லாத பொல்லாத ஸந்தேஹங்கள் ஏற்படலாம். ஒருவேளை மணி என்னிடம் தான் இருக்குமோ, ஸத்ராஜித்துத்தான் அதைத் தபஸினால்

முதலில் பெற்றவராகையால் அவருடைய பெண்ணுக்குப் பிற்பாடு தந்து கொள்ளலாமென்று அதை ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறேனோ என்று ஜாம்பவதி ஸந்தேஹப்படலாம். சிங்கத்துடன் சண்டை போட்டு வதம் செய்து மணியை அடைந்த ஜாம்பவானக்குத்தான் அது ஸொந்தம் என்று நான் நினைத்து, பிற்காலத்தில் அவர் பெண்ணான ஜாம்பவதிக்கு அதைக் கொடுக்கவேண்டுமென்றே ஒளித்து வைத்துக்கொண்டிருக்கிறேனோ என்று பாமா நினைக்கலாம். அதனால் இவர்கள் ஸந்தேஹமும், த்வாரகா ஜனங்கள் எல்லோருடைய ஸந்தேஹமும் தீர்கிற முறையில் நீங்கள் மணி உங்களிடம்தான் இருக்கிறது என்று பஹிரங்கமாகக் காட்டி, இங்கே நம் ஊரிலேயே அதை வைத்துக்கொண்டு நிம்மதியாக வாஸம் பணணவேணும். அதனால், தற்போது துர்பிக்ஷம் கண்டுள்ள நம் ராஜ்யமும் ஸுபிக்ஷமடைய உபகாரம் பண்ணவேணும்" என்று சேதி அனுப்பினார்.

சேதியில் நிஜமான அன்பும் அபிமானமும் இருக்கும்போதே 'டிப்ளமஸி'யும் இருக்கிறது.

நடுவிலே ஏதோ அக்ரூரர் மனஸ் குழம்பிப் போயிருந்தாலும் உள்ளூர அவர் பரம பகாவதரானபடியால் இப்போது பகவானே தன்னைக் கூப்பிட்டனப்புகிறாரென்றதும், பழைய பக்தி கரை புரண்டுவர அப்படியே த்வாரகைக்கு ஓடோடி வந்தார். பகவானின் காலில் விழுந்தார்.

"நீ வெச்சுக்கோ" என்று பகவான் சொல்லியிருந்த போதிலும், 'ஸகல செல்வமும், அந்த லக்ஷ்மீபதி ஒருத்தனைத்தான் சேர்ந்தது. இத்தனை நாள் அவனுக்குத் தெரியாமல் மணியை நாம் வைத்திருந்து ராஜ்யத்தைவிட்டே கடத்திக் கொண்டு போனது மஹா தப்பு. அபசாரம் என்றுதான் அக்ரூரர் நினைத்தார்.

அதனால் ஸ்யமந்தகத்தை பகவானுக்கே அர்ப்பணம் செய்தார்.

பகவான் அவரைவிடப் பிடிவாதமாக, "நானேதான் இதை உங்களுக்குக் கொடுக்கிறேனென்று வைத்தக் கொள்ளுங்கள். நான் ப்ரியமாகக் கொடுக்கிற ஒன்றை நீங்கள் வேண்டாமென்று மறுக்கலாமா? எனக்கு வேண்டியதெல்லாம் என் மீதுள்ள அபவாதம் போகவேண்டும், மணியின்

மிஹிமையால் த்வாரகை துர்பிக்ஷம் நீங்கி ஸுபிக்ஷமாக இருக்க வேண்டும் என்பதுதான்" என்று சொல்லி, ஸ்யமந்தகத்தை அக்ரூரரே வைத்துக்கொள்ளுமாறு செய்துவிட்டார்.

த்வாரகையை நிர்மாணித்தவர், உக்ரஸேன ராஜாவையே ராஜாவாக்கியவர், யதுகுலத்தின் ச்ரேஷ்டமான தலைவர் என்ற முறைகளில் பகவானுக்குப் பொது வாழ்க்கையின் முக்யமான ஸ்தானமிருந்தது. இப்படிப்பட்டவர்கள் ஏதோ தங்கள் ஸொந்த கௌரதைக்காக மட்டுமின்றி, ஸமூஹம் இவர்களைப் பற்றிய வம்பு தும்புகளினால் கெட்டுப்போகக்கூடாது என்பதை உத்தேசித்தும் ஸந்தேஹத்துக்கு இடமில்லாதவர்களாக வாழவேண்டும், தாங்கள் அப்படி வாழ்கிறோமென்று நிருபித்தும் காட்டவேண்டும். வெள்ளைக்காரர்களுங்கூட, "ஸீஸரின் பெண்டாட்டியானால் 'ஸஸ்பிஷ'னுக்கு இடம் தராமல்தான் இருக்கணம்" என்று சொல்கிறார்கள். இந்த ரீதியில்தான் பகவான் தம் மீதான மித்யாபவாதத்தைப் போக்கிக்கொள்ளப் பாடுபட்டது வாஸ்தவமாகவே தம்முடைய ட்ராமா நாடக ரஸத்தோடு இருக்கவேண்டுமென்றே தாம் நிஜமாக இதற்காக வ்யஸனித்ததாக வேஷம் போட்டார்.

இந்த ட்ராமாவைச் சேர்ந்ததுதான் மணி போனதால் த்வாரகையில் துர்பிக்ஷம்

என்று காட்டியதும், இப்போது அது வந்து ஸுபிக்ஷம் ஏற்பட வேண்டுமென்றதும், மங்களங்களுக்கெல்லாம் நிலயமான பகவானே த்வாரகையில் இருக்கும்போது மணியால்தானா அதற்கு மேன்மையும் தாழ்மையும் ஏற்படவேண்டும்? ஏதோ கர்மாவுக்காக த்வாரகா ஜனங்களுக்கு துர்பிக்ஷத்தைக் கொடுத்தார். இப்போது அநுக்ரஹிக்க வேண்டுமென்று எண்ணம் கொண்டார். இதையே லீலையாக ஸ்யமந்தகத்தோடு பொருத்திவிட்டார்.

அவர் சொன்னபடியே அக்ரூரர் த்வாரகையில் ஸ்யமந்தகத்தோடு தங்கினார்.

ஜனங்களுக்கு உண்மை தெரிந்தது. பகவான்மேல் சுமத்தப்பட்ட அபவாதம் நீங்கிற்று.

மணியை க்ருஷ்ணர் அபஹரிக்கவில்லை, அக்ரூரரிடம்தான்

அது இருக்கிறது, அதை வைத்துக்கொண்டு அவர் த்வாரகையிலேயே இருக்கிறார். ஊரும் செழிப்பாகிவிட்டது என்று தெரிந்ததும் பலராமர் விதேஹ ராஜ்யத்திலிருந்து திரும்பி வந்துவிட்டார். க்ருஷ்ணரை ஸந்தேஹித்ததற்காக ரொம்பவும் பச்சாத்தாபப்பட்டு வருத்தம் தெரிவித்துக் கொண்டார்.

க்ருஷ்ண பரமாத்மா, "இது உங்கள் யாருடைய தப்புமில்லை. நான் சதுர்த்திச் சந்த்ரனைப் பார்த்த தப்புத்தான் எல்லாவற்றுக்கும் காரணம். முடிவில் எல்லாம் நல்லதற்குத்தான் - இது அத்தனையும் விக்நேச்வரர் ப்ரபாவத்தைத் தானே வெளிப்படுத்தியிருக்கிறது?" என்றார்.

க்ருஷ்ண பரமாத்மாவுக்கும் விக்நேச்வரர் பூஜிக்கப்படும் தெய்வமாக இருந்து அநுக்ரஹம் செய்த கதை இதுதான்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*கண்ணன் பூஜித்த கணநாதன்*

*ஜயந்திகளின் விசேஷம்*

ஸௌரமானப் பஞ்சாங்கத்தைப் பின்பற்றும் தமிழ் தேசத்தவர்களுக்கு ஒரு பெரிய அதிர்ஷ்டம் நம்முடைய ஆவணி மாஸமொன்றிலேயே பெரும்பாலும இந்த இருவரின் அவதார தினங்களான கோகுலாஷ்டமியும் பிள்ளையார் சதுர்த்தியும் வந்துவிடுகின்றன. மற்றவர்களக்கு கோகுலாஷ்டமி ச்ராவண மாஸத்தில், விநாயக சதுர்த்தி பாத்ரபத மாஸத்தில் என்று இருக்கிறது.

ஆவணி மாஸத்தில்தான் வெள்ளரிக்காய் யதேஷ்டமாகக் காய்ப்பது. வெள்ளரிக்காயின் விசேஷம் என்ன என்றால் இது ஒன்றுதான் பழுக்காமல் காயாய் இருக்கும் போதே அப்படியே சமைக்காமல் ருசித்துச் சாப்பிடக்கூடய ஸாத்விகமான ஸ்வதேசக் காய்கறி. பிஞ்சுப் பிராய லீலைகளாலேயே மனஸைக் கொள்ளை கொள்ளும் க்ருஷ்ணர், பிள்ளையார் இரண்டு பேருக்கும் பொருத்தமாகப்

பிஞ்சாகச் சாப்பிடக்கூடய வெள்ளரி இவர்களுடைய ஜயந்தியில் நிறையக் காய்க்கிறது. நாமோ மனஸில் பழுத்துப் பக்வமாகாத காயாக இருப்பவர்கள். வெள்ளரிக்காய்களை இவர்களுடைய ஜனனோத்ஸவ பூஜையில் அர்ப்பணம் பண்ணி ப்ரஸாதமாகச் சாப்பிடவேண்டும். "நீங்கள் காயாக இருந்தாலும் உங்களையும் இந்த வெள்ளரிப்பிஞ்சு மாதிரி ருசியாக, குளிர்ச்சியாகச் செய்கிறோம்" என்று அந்த இரண்டு பேரும் அநுக்ரஹம் செய்வார்கள்.

### முடிவுரை

இப்படியாகப் பிள்ளையார் தாம் பெரிய இடத்துப்பிள்ளையாக இருப்பது மட்டுமில்லாமல், தம் குடும்பத்துப் பெரியவர்களான அப்பா, அம்மா, மாமா எல்லோருக்கும் ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தில் தாமே பெரியவராக இருந்திருக்கிறார்.

விக்னங்கள் தீர்ந்து வெற்றி கிடைப்பதாற்காகப் பரமேச்வரன், லலிதாம்பிகை, ராமர் ஆகியவர்களும், விவாஹமாவதற்காக ஸுப்ரஹ்மண்யரும், லோகாபவாதம் நீங்குவதற்காக க்ருஷ்ண பரமாத்மாவும் பூஜை பண்ணின அந்தப் பெரியவரை - குழந்தையிலும் குழந்தையாக இருந்து கொண்டே பெரிய பெரிய தெய்வங்களும் பெரியவராயிருந்தவரை - நாமும் நம்முடைய வாழ்க்கைப் போராட்டத்தில் ஏற்படும் அநேக இடையூறுகள் நீங்கி வெற்றி கிடைப்பதற்காகவும், குறைகள் - தோஷங்கள் - அபக்யாதிகள் விலகுவதற்காகவும் பயபக்தியோடு, அன்போடு வழிபடுவோம்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*குரு, ஆசார்யார் வாத்தியார்*

குரு, ஆசார்யார் என்ற வார்த்தைகடிள உசந்த மட்டத்தில்தான் உபயோகிக்கிறோம். ஸாதாரண லெவலில், ஒன்றைச் சொல்லிக் கொடுக்கிறவருக்கு "வாத்தியார்" என்றே

பெயர் சொல்கிறோம். பெரிதாக தீக்ஷை கொடுத்து மந்த்ரம், பூஜை எடுத்து வைப்பவரையும், யஜ்ஞம், ஹோமம் விஸ்தாரமாக நடத்திக் கொடுப்பவரையும் ஆசார்யார் என்கிறோம். சின்னதாக திவஸம், திங்கள் பண்ணி வைப்பவரையும், சதுர்த்தி பூஜை, த்வாதசி பூஜை நடத்தித் தருபவரையும் வாத்தியார் என்கிறோம். தத்வ சாஸ்த்ரமோ, வேறே சாஸ்த்ரமோ, ஸங்கீதம் முதலானதோ ஒருத்தரையே ஆச்ரயித்து அவரிடம் பல வருஷம் கற்றுக்கொண்டால், அவரை குரு என்கிறோம். ஸ்கூலில், காலேஜில் பல பேரில் ஒருத்தராகப் பாடம் சொல்லிக் கொடுப்பவரை வாத்தியார் என்று சொல்கிறோம். பள்ளி 'ஆசிரியர்', கல்லூரி 'ஆசிரியர்' என்பதாக எழுதும்போதும், ப்ரஸங்கத்திலும் மட்டும் ஆசிரியர் என்கிறோம். பேச்சு வழக்கிலே ஆசிரியர் என்று சொல்வதில்லை, வாத்யார்தான். "ஆசார்யார்" என்பதுதான் ஆசிரியராயிருக்கிறது.

தமிழ் நாட்டில் மட்டும் எப்படியோ எழுத்தாளர்களையும் எடிடர்களையும் கதாசிரியர், பத்ரிகாசிரியர் என்றெல்லாம் 'ஆசிரியர்' பேர் கொடுத்துச் சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது. கல்விச் சாலையில் எழுத்தறிவிப்பவன் ஆசிரியன் எனப்படுபதிலிருந்தே எழுத்தைத் தொழிலாகக்கொண்ட ரைட்டர்கள். எடிடர்கள் ஆகியவர்களையும் ஆசிரியரென்று சொல்லும் வழக்கம் வந்துவிட்டது போலிருக்கிறது. அல்லது, நடைமுறை எப்படி இருந்தாலும், கதை எழுதுகிறவர்களும் பத்ரிகை நடத்துகிறவர்களும் ஆசார்ய ஸ்தானத்திலிரு ந்துகொண்டு நல்லறிவை வளர்ப்பவர்களாக இருக்க வேண்டுமென்ற அபிப்ராயத்தில் அவர்களை ஆசிரியர்களாகச் சொல்லும் வழக்கம் உண்டாயிருக்கலாம்.

பேச்சு வழக்கில் சொல்லும்போது ஸமய ஸம்பந்தமானாலும் ஸரி, மற்ற கலைகள் சாஸ்த்ரங்கள் ஸம்பந்தமானாலும் ஸரி, நமக்கு ஒன்றைச் சொல்லிக் கொடுப்பவரை 'வாத்தியார்' என்றே சொல்கிறோம், ஆசிரியர், ஆசார்யர் என்றெல்லாம் அல்ல.

'உபாத்யாயர்' என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தைதான் வாத்யார் என்றாகியிருக்கிறது.

உபாத்யாயர் என்றால் என்ன?

உப அத்யாயர்தான் உபாத்யாயர்.

அத்யாயர் என்றவுடன் "அத்யாயம்" நினைவு வரும்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## *குரு*

### *வேதத் தொடர்பு*

'அத்யாயம்' என்றால் தொடர்கதையில் ஒவ்வொரு வாரமும் வருகிற பாகம் என்று சொல்விர்கள். இது தற்காலத்தில் ஏற்பட்ட பேர். ஒரு புஸ்தகத்தின் ஒரு ஸெக்ஷனுக்கு அத்யாயம்' என்ற பேர் பிற்காலத்தில் வந்தது. ஆதியில், எழுதவே கூடாத புஸ்தகமாக. காதால் கேட்டுக் கேட்டே பாடம் பண்ண வேண்டிய புஸ்தகமாக உள்ள வேதத்தைப் படிப்பதற்குதர்ன் அத்யயம், அத்யயனம், அத்யாயம் என்றெல்லாம் பேர் இருந்தது. வேதத்தை வைத்துத்தான் நம் வாழ்க்கையில் ஸகலமுமே. ஆதலால், பிற்பாடு கதை, காவ்யம், ஸெக்யுலர் ஸயன்ஸ், ஆத்மார்த்தமான சாஸ்த்ரம் எதுவானாலும் அதில் படிக்க வேண்டியவற்றைப் பகுதி பகுதியாக வரையறை செய்தபோது அவற்றுக்கும் அத்யாயம் என்று பெயர் கொடுத்தார்கள். புஸ்தகத்தின் ஸெக் ஷன் (பகுதி), ஸப் ஸெக் ஷனுக்கு (உட்பிரிவு) அநேகப் பெயர்கள் இருப்பதில் அத்யாயம் என்பதும் ஒன்றாயிற்று. காண்டம், கண்டம், ஸர்கம், படலம், பர்வம், பரிச்சேதம், உச்சவாஸம், உல்லாஸம், அங்கம், ப்ரகரணம், ஸ்கந்தம் என்றிப்படி அநேகப் பெயர்களில் ஒரு புஸ்தகத்தின் பகுதிகளைச் சின்னதும் பெரிசுமாகப் பிரிப்பதுண்டு. அவற்றிலே வேத அடிப்படை கொண்ட வார்த்தையாக அத்யாயம் என்பது இருக்கிறது.

எப்படி ஸகலத்திலும் வேத ஸம்பந்தமிருக்கிறது என்பதற்கு இன்னொன்று சொல்கிறேன். Lesson என்பதைப் பாடம்

என்கிறோம். அது ஜாக்ரஃபியானாலும், "வேதம் பொய்" என்று சொல்கிற நம்முடைய ஆராய்ச்சியாளர்களின் ஹிஸ்டரியானாலும், எந்த லெஸனும் 'பாடம்'தான். இதே போலப் பள்ளிக்கூடத்தைப் 'பாடசாலை' என்கிறபோதும் அதிலே 'பாடம்' வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது. நாஸ்திகம் சொல்லிக் கொடுப்பதற்கே ஒரு ஸ்கூல் வைத்தால் அதுவும் பாடசாலைதான். ஆனால் 'பாடம்' என்பதற்கு ஒரிஜினல் அர்த்தம் என்னவென்றால் வேதம் ஓதுவதுதான். நித்ய கர்மாக்களில் ஒன்றாக ப்ரஹ்ம யஜ்ஞம் என்று வேத அத்யயனம் செய்வதற்கே பாடம் என்று பெயர். "பாட(tha)" என்று அழுத்திச் சொல்லவேண்டும்.

வேத வாக்யங்களைக் கற்று ஒப்பிப்பவன் 'பாடி', உதாரணமாக 'கனம்' என்ற முறையில் வேதத்தின் பதங்களைக் கோத்து வாங்கிச் சொல்வதற்கு அறிந்தவர் கனபாடி. ஒருத்தரோடு சேர்ந்து வேத அத்யயனம் பண்ணுகிற மாணவனை ('மாணவன்' என்ற வார்த்தைக்கு அப்புறம் வருகிறேன்) ஸஹபாடி என்பார்கள். நடைமுறையிலோ, வேதஸம்பந்தம் இருக்கவேண்டுமென்றில்லாமல் எந்தத் துறையிலும் நம்முடன்கூட வேலை செய்பவரை 'சகபாடி' என்கிறோம். தமிழ் தேசத்தில் வேத வழக்கு எப்படி ஆழ ஊறியிருக்கிறது என்பதற்காகச் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### உபாத்யாயரும் ஆசார்யரும்

வாத்யார் - உபாத்யாயர் - அத்யாயம் என்பதிலிருந்ததோம். அத்யாயம் என்கிற வேதக் கல்வியைச் சொல்லிக் கொடுப்பவர் எவரோ அவர் அத்யாபகர். வேதம் கற்றுக் கொடுப்பதற்கு 'அத்யாபனம்' என்றும், கற்றுக்கொள்வதற்கு 'அத்யயனம்' என்றும் பெயர். கற்றுக் கொடுப்பவர் அத்யாபகர். உப-அத்யாபகர்தான் உபாத்யாயர். உபாத்யாபகர் என்றில்லாமல் 'உபாத்யாயர்' என்றே இருக்கிறது.

'உப' என்று ஒரு வார்த்தைக்கு முன்னே சேர்க்கிற Prefix-குப் பல அர்த்தங்கள். அதில் நமக்கு குறிப்பாகத் தெரிவது, மூலமாக முக்யமாக இருக்கப்பட்ட ஒன்றுக்குக் கீழே, அதற்குத் துணையாக, அதன் கார்யத்தையே சின்ன அளவில் செய்வதாக இருப்பதை 'உப' போடாமல் வரும் மூலத்துக்கு subordinate (கீழ் ஸ்தானத்தில் அடங்கியிருப்பது). முக்யமாயிருப்பதற்கு இது கீழ் லெவல். 'உப' போடாதது ஸபீரியர், 'உப' போட்டது இன்ஃபீரியர் என்ற அர்த்தத்திலேயே பொதுவாக வருகிறது.

'உபாத்யாயர்' என்பவர் அத்யாபகருக்கு உதவியாக துணையாக, அவருக்கு அடுத்த ஸ்தானத்தில் இருப்பவர் அத்யாபகருக்கு உள்ள பெருமை இவருக்கு இல்லாமல் கொஞ்சம் இன்ஃபீரியராக நினைக்கும்படியும் சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது. அது என்னவென்று சொல்கிறேன்.

வேதம் கற்றுக் கொடுப்பவரான அத்யாபகர் என்பவரில் இரண்டு தினுஸு உண்டு, ஒன்று ஆசார்யர், இன்னொன்று உபாத்யாயர் என்று ஸ்ம்ருதிகளில் சொல்லியிருக்கிறது. ஆசார்யருக்கும் உபாத்யாயருக்கும் என்ன வித்யாஸமென்று ஸ்ம்ருதிகளில் ரொம்பவும் சிறப்பாகக் கருதப்படும் மநுஸ்ம்ருதியிலிருந்து தெரிகிறது.

ஆசார்யரென்பவர் வயிற்றுப் பிழைப்புக்காகப் பாடம் சொல்லிக் கொடுப்பவரல்ல. பிராம்மணனின் கடமை தனக்குத் தெரிந்த வித்யை தன்னோடு அழியாமல் என்றும் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும்படிச் செய்வது என்று ஒன்றுக்காகவே அவர் குருகுலம் அமைத்துப் பாடம் சொல்லித் தருவார். சேர்கிற சீஷ(சிஷ்ய)ப் பிள்ளைகளிடம் அவர் ஃபீஸ் (தக்ஷிணை) பேசிக்கொள்ள மாட்டார். பாடமெல்லாம் கற்றுக் கொடுத்து முடித்த பிறகுதான் - ஸாதாரணமாக இதற்குப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகும் - சிஷ்யனே விஞ்ஞாபித்துக் கொண்டதன் மேல் அவர் ஏதாவது தக்ஷிணை கேட்பார். பொன்னை வைக்கிற இடத்தில் பூவை வைத்தாலும் த்ருப்தியாயிருந்து விடுவார். ஸத்வித்யை ஸத்பாத்ரத்தில் போய்ச் சேரவேண்டுமென்ற ஒன்றுக்காகவே தொண்டை தண்ணி வற்றப் பாடம் சொல்லிக் கொடுத்து அதோடு 'ஸ்கூல் பீரியட் முடிந்தபின் மாணவன் தொல்லையில்லை'

என்றில்லாமல் அவனைத் தன்னுடனேயே வருஷக்கணக்கில் சேர்ந்து வஸிக்கும்படியாக குருகுலம் உருவாவதற்கும் பொறுப்பு எடுத்துக்கொள்பவரே ஆசார்யார்.

இப்படி அநேக குருகுலங்கள் அங்கங்கேயும் இருந்த தேசம் இது என்று நினைத்தாலே பெருமையாயிருக்கிறது. பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பதாக இது முடிந்து போகக் கூடாது என்பதற்காகத்தான் இதையெல்லாம் 'ஆசார்ய'ப் பெயர் போட்டுக் கொண்டிருக்கும் நாங்கள் தொண்டைதண்ணி வற்றச் சொல்லிக் கொண்டிருப்பது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*போதனை ஜீவனோபாயமாக*

இம்மாதிரி, வருங்காலத்தில் வித்யை வாழ வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்துக்காக இல்லாமல் வயிற்றுப் பிழைப்புக்காகப் பாடம் சொல்லித் தருபவர்தான் உபாத்யாயர் என்று அவரை 'ஆசார்ய'ரிலிருந்து வித்யாஸப்படுத்தி மநுஸ்ம்ருதி சொல்லியிருக்கிறது. வேத வித்யையில் ஏதாவது ஒரு பகுதியை மட்டும் போதித்து அதற்காக இவர் சம்பளம் பெறுவார். ("ஏகதேசம் து வேதஸ்ய வேதாங்காந்யபிவா புந யோ (அ)த்யாபயதி வ்ருத்யர்த்தம் உபாத்யாய ஸ உச்யதே")

பழைய நாட்களில் இப்படி வ்ருத்யர்த்தம் (ஜீவனோபாயத்துக்காகவென்றே), வயிற்றுப் பிழைப்புக்கென்றே பாடம் சொல்லிக் கொடுத்தவர்கள் மிகவும் குறைவு. குருகுலங்கள் இந்தக் கொடுக்கல் வாங்கல் அசுத்தி படியாமல் நல்ல ஆசார்யர்களாலேயே நடத்தப்பட்டு வந்தன. ஆனாலும் இப்படிக் கூலிக்காக வேலை செய்கிறவர்களும் சில பேர் அப்போதே இருந்திருப்பதால்தான் தர்ம சாஸ்த்ரங்களிலேயே இவர்களைப் பற்றிய ப்ரஸ்தாபவம் வந்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

# குரு

## *குரு - ஆசார்ய ஒற்றுமை - வேற்றுமை*

குரு யார், ஆசார்யர் யார், உபாத்யாயர் யார் என்றெல்லாம் தர்ம சாஸ்திரங்களில் இலக்கணம் கொடுத்திருக்கிறது.

உபநயனத்தில் ப்ரஹ்மோபதேசத்தில் (காயத்ரியை உபதேசிப்பதில்) ஆரம்பித்து முடிவான வேதாந்த தர்சனம் வரையில் எவர் கற்பிக்கிறாரோ அவரே குரு என்றும், ப்ரஹ்மோபதேசத்தில் சாஸ்த்ரங்களை மட்டும் எல்லாவற்றிலுமோ, அல்லது சிலவற்றையோ போதிப்பவர் ஆசார்யர் என்றும் ஒரு பாகுபாடு உண்டு. த்ருஷ்டாந்தமாக, க்ருஷ்ணருக்கு உபநயணம் பண்ணியவர் கர்காசார்யர், வித்யாப்யாஸம் கொடுத்தவர் ஸாந்தீபனி என்ற வேறொருவர்.

பொதுவாக 'குரு' என்ற பதம் ஸம்ப்ரதாயக் கட்டில் அதிகம் வராமல் அருளினால் எவருக்கும் எதையும் சொல்லிக் கொடுப்பவரைக் குறிப்பதாகவும், 'ஆசார்ய' பதம் குறிப்பிட்டவர்களுக்கு மட்டும் கட்டுத்திட்டமுள்ளதான போதனையை வித்வத்தினால் கொடுப்பவரைக் குறிப்பதாகவும் நினைக்கும் வழக்கமிருக்கிறது. இதற்குப் பொருந்துவதாக, தர்மசாஸ்த்ரங்களிலேயே ஒன்றில், எந்த பாஷையில் வேண்டுமானாலும் உபதேசம் தருபவர் குரு என்றும், வேத அத்யாபனம் மட்டும் பண்ணிவைப்பவர் ஆசார்கயர் என்றும் சொல்லியிருப்பதாக

**ஞாபகம்**

குரு என்பவர் தத்தாத்ரேயரைப் போல, எந்தக் கட்டுப்பாடான ஸம்ப்ரதாயத்திலும் வராமல் அருள் சக்தியாலேயே ஆத்மாபிவ்ருத்தி அளிப்பவரென்றும், ஆசார்யர் என்பவர் கட்டுப்பாடான ஒரு ஸம்ப்ரதாயப்படி வரையறுக்கப்பட்ட

ஸித்தாந்தத்தை விஸ்தாரமாக, நம் பகவத்பாதாளைப்போல போதிப்பவரென்றும் பொதுவாய் சொல்கிறோம். இதனால்தான் தத்தகுரு என்கிறோமே தவிர தத்தாசார்யர் என்பதில்லை. அறிவு வழியில் ஸிஸ்டமாடிக்காக உபதேசித்த பகவர்பாதாள் போன்றவர்களுக்கு அருள் சக்தியும் இருந்தபோது சங்கராசார்யர், சங்கர குரு என்று இருவிதமாகவும் சொல்வதாக ஏற்பட்டது. ஆனால் மேலே காட்டினாற்போல், சாஸ்த்ரங்களைப் பார்த்தால் defenition-கள் வேறு விதமாய் இருக்கின்றன. தர்ம ப்ரமாணங்களில் எல்லோரும் குறிப்பிட்டுச் சொல்லும் மநு ஸ்ம்ருதியில் மேலே குருவுக்குச் சொன்ன இலக்கணத்தையேதான் ஆசார்யனுக்கும் சொல்லியிருக்கிறது. அதாவது, அவன் சிஷ்யனுக்குப் பூணூல் போட்டு காயத்ரி உபதேசிப்பதில் ஆரம்பித்து வேத சாஸ்த்ரங்கள் முடிய ஸகலமும் பாக்கியில்லாமல் கற்பிக்கணும் என்று சொல்லியிருக்கிறது.

உபநீய து ய சிஷ்யம் வேதம் அத்யாபயேத் த்விஜ 1

ஸகல்பம் ஸரஹஸ்யம் ச தம் ஆசார்ய ப்ரசக்ஷதே 11

'குரு' என்பதற்கு ரொம்பவும் தெய்வத்தன்மை கொடுத்து இன்னொரு அர்த்தம் சொல்வதுண்டு. பரப்ரஹ்மம் என்பது குணமும் ரூபமும் இல்லாத வஸ்து. அப்படிப்பட்ட ஒன்றை எப்படி நாம் குண -ரூபங்களையே அறியக்கூடிய மனஸில்

கொண்டு வருவதற்காகத்தான், 'பரப்ரஹ்மே கருணையோடு குணத்தையும் ரூபத்தையும் தரித்துக் கொண்டு மநுஷ்யர் மாதிரி வருகிறது. அவரைத்தான் குணத்தைக் குறிப்பிடும் 'கு', ரூபத்தைக் குறிப்பிடும் 'ரு' ஆகிய இரண்டையும் சேர்ந்து 'குரு' என்று சொல்வது' என்பதாக அர்த்தம் சொல்வதுண்டு.

ரொம்பவும் பூர்வத்திலே ஒவ்வொரு தகப்பனார்காரருமேதான் தன் பிள்ளைக்கு ப்ரஹ்மோபதேசம் செய்து வைத்துத் தனக்குத் தெரிந்த வித்யைகள் ரொம்பவும் குறைச்சல். ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு வித்யை குலதனம் மாதிரிப் பாரம்பர்யமாகப் போயிற்று. அப்போது அப்பாவேதான் குரு. ராமாயணம் மாதிரியான ரொம்பப் பழைய புஸ்தகங்களில் குரு என்று தகப்பனாரைத்தான் சொல்லியிருக்கும். பிற்காலத்திலும் காவ்யங்களில் அப்படிச் சொல்லியிருப்பதைப் பார்க்கிறோம்.

அப்புறம் வித்யைகள் அதிகமாகி, 'ஏனிப்படி ஒவ்வொரு வித்யை ஒவ்வொரு குடும்பத்தோடு போகவேண்டும், கலந்து பரிவர்த்தனை பண்ணிக்கொள்வோமே' என்ற அபிப்ராயம் வளர்ந்தபின், இதர வித்யைகளைக் கற்றுக்கொள்வதற்காக அப்பாவை விட்டுப் பிள்ளை வேறே பெரியவர்களிடம் போகும் பழக்கம் ஏற்பட்டது. ஒரு வித்யை மாத்ரமின்றி அநேக வித்யைகளிலும் படுவான (தேர்ச்சி பெற்ற) பலர் உண்டானார்கள். அப்போது ஒரு வித்யை அல்லது ஒரு சில வித்யை மட்டும் தெரிந்த தகப்பனாரிடம் படிப்பதைவிட, முதலிலிருந்தே இப்படி அநேக வித்யைகளும் தெரிந்தவர்களிடம் பையனைப் படிக்க விடுவது நல்லது என்று தெரிந்தது. அப்படிப்பட்டவர்களிடமே பையனைப் படிக்க விடுவது நல்லது என்று தெரிந்தது. அப்படிப்பட்டவர்களிடமே பையன் ப்ரஹ்மோபதேசம் பெற்று அப்புறம் அவர்களுடைய ஆச்ரமத்துக்கே போய் குருகுல முறையில் படிப்பதாக ஏற்பட்டது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *வீட்டில் இல்லாத குருகுலச் சிறப்பம்சம்*

பிறகு தகப்பனாரே மஹா வித்வானாக இருக்கும்போது கூட இன்னொரு வித்வானிடம் பையனை சிக்ஷைக்கு விடுவதுதான் அவனைச் செல்லம் கொடுத்துக் கெடுக்காமல், நல்ல ஒழுக்கங்களோடு வளரும்படியாகக் கண்டிப்புச் செய்கிறது என்று தெரிந்ததால், யாரானாலும் குரு என்று வித்யாப்யாஸத்துக்கே ஒருத்தரை வரித்து அவரிடம் போய் குருகுலவாஸம் செய்து கல்வி கற்பது, அப்போது பிக்ஷை எடுத்து எளிமையையும் விநயத்தையும் கைக்கொள்வது என்ற வழக்கம் ஏற்பட்டது. இந்த வழக்கம் வந்தபோதுதான் அடியிலிருந்து நுனிவரை சொல்லிக் கொடுக்கும் குருவே பையனுக்கு ப்ரஹ்மோபதேசமும் பண்ணி வைப்பது என்று வந்தது.

வீட்டிலே படிக்கும்போது ஸ்வாதீனம், உறவுப் பாசம் ஆகியன கல்வி கற்பது, ஒழுக்கத்துடன் உருவாகவது ஆகிய இரண்டுக்கும் ஊறு உண்டாக்கக்கூடும். ஆகவே குருகுல வாஸம்தான் வித்தையின் வளர்ச்சி, வித்யார்த்தியின் வளர்ச்சி ஆகிய இரண்டுக்கும் ரொம்ப உகந்தது என்று புரிந்துகொண்டு அதையே நடைமுறையாக்கினார்கள்.

ஆனாலும் மஹான்களான பிதாமார்கள் குருகுலம் நடத்தியபோது அவர்களுடைய புத்ரர்களும் அதில் படித்ததாகவும் த்ருஷ்டாந்தங்கள் அங்கங்கே பார்க்கிறோம் இப்படிப்பட்ட ஒரு பிதா தாமும் கற்றுக் கொடுத்து, மற்ற குருமார்களிடம் புத்ரன் கற்று வருவதற்காக அனுப்பிவைப்பதையும் உபநிஷத்துக்களில் பார்க்கிறோம். தங்கள் ஸந்ததியின் அறிவு வ்ருத்தியாவதிலும், ஆத்மா சுத்மாவதிலும் அவர்களுக்கு எத்தனை அக்கறையிரு ந்திருக்கிறது என்பதை நினைத்தால் ஆச்சர்யமாயிருக்கிறது.

இப்போது பெரும்பாலான தகப்பனார்களுக்கு இந்த இரண்டைப் பற்றியும் கவலையே இல்லை. எப்படியோ ஓரப்படிபிள்ளை பர்ஸ் நிறையக் கத்தை கொண்டுவ ந்துவிட்டால் போதுமென்ற எண்ணந்தானிருக்கிறது. எந்த தேசத்துக்குப் போய் எப்படிக் குட்டிச்சுவரானாலும் பரவாயில்லை, எந்தப் படிப்புப் படித்தாலும், எந்தத் தொழில் செய்தாலும் பரவாயில்லை என்று அனுப்பிவிடுகிறார்கள். அல்லது அவர்கள் அனுப்பவேண்டும் என்றில்லாமல் பிள்ளையே கத்தரித்துக் கொண்டு போய்விடுகிறான், பர்ஸில் சேரும் கத்தையிலும் ஒரு நோட்டுகூட அப்பனிடம் காட்டாமல் அவனே வைத்துக் கொள்கிறான்.

ஆதியிலோ மகன் சான்றோன் என்று புகழ்பெற்றுக் கேட்கவேண்டும் என்று, சின்னக் குழந்தையை த்யாகமாக ப்ரஹ்மோபதேசத்தின்போதே குருவிடம் அர்ப்பணம் செய்தார்கள்.

பிற்காலத்தில் எப்படியோ மறுபடியும் தகப்பனாரே ப்ரஹ்மோபதேசம் செய்வதாய் வந்து, தற்போது பழைய வித்யாப்யாஸம் செய்வதாய் வந்து, தற்போது பழைய வித்யாப்யாஸம் அடியோடு போய்விட்டாலும், பூணூல் போடுவது என்று ஏதோ ஒரு ஸாங்கியம் "பேருக்கு" நடக்கிற

போது அப்பாவே ப்ரஹ்மோபதேசம் செய்வதாக நடைமுறையில் இருக்கிறது.

பூர்வ காலத்தில் தன்னுடைய தகப்பனாரையும் வீட்டையும் விட்டுவிட்டு குருகுலவாஸம் என்று இன்னொரு பெரியவரிடம் போய்ப் படிப்பது பையனை நல்லமுறையில் உருவாக்குவதற்கு ரொம்பவும் ப்ரயோஜனப்படுகிறதென்று தெரிந்த போது, ஸத்வித்வானாக இருக்கப்பட்ட பிதாமார்கள்கூடத் தங்களுடைய தந்தையுரிமை, வித்வத்தில் யோக்யதை இரண்டையும் த்யாகம் செய்து இன்னொரு வித்வத் ச்ரேஷ்டரைக் கொண்டு பிள்ளைக்கு ப்ரஹ்மோபதேசம் செய்வித்து அவரிட்மே வித்யாப்யாஸத்துக்கு விட ஆரம்பித்தார்கள். இதனால்தான் ப்ரஹ்மோபதேசச் சடங்குக்கே 'உபநயனம்' என்ற பேர் ஏற்பட்டது. 'உபநயனம்' என்றால் 'ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பது' என்று அர்த்தம். இந்தச் சடங்கானது ஒரு பையனை குருகுலம் நடத்தும் ஆசார்யரிடம் கொண்டு சேர்த்தது என்பதாலேயே இப்படிப் பெயர். அகத்தில் அப்பாவிடமே பாடம் சொல்லிக்கொள்வதற்குக் கொண்டு போய்ச் சேர்ப்பது' என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

(முதலில் பையனை அவனுடைய பிதா ஆசார்யரின் ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறான். அப்புறம் ஆசார்யர் அவனை ஈச்வரனின் ஸமீபத்தில் கொண்டு சேர்க்கிறார். அது இரண்டாவது 'உபநயனம்' என்று சொல்லலாம். நேராக இப்படி பரதத்வ ஸமீபத்துக்கே கொண்டு சேர்ப்பது கடைசி ஆச்ரமத்தில் ஸந்நியாஸம் தரும் குரு அந்த 'உபநயன'த்தின்போது முதல் உபநயனத்தில் போட்ட பூணூல் போய்விடுகிறது.)

கர்ப்பாதானம் செய்து ஒரு ஜீவனை உண்டுபண்ணி, அது பிறந்த பின் ஜாதகர்மம், நாமகர்மம், சௌளம் (குடுமி வைப்பது) முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்யும் பிதாவே குரு, உபநயனம் செய்து அப்புறம் அத்யாபனம் செய்விக்கிறவன் ஆசார்யன் என்பதாக மநுஸ்ம்ருதி, யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி ஆகியவற்றில் சொல்லியிருக்கிறது. அதாவது இங்கே "குரு" என்பதோடு நின்று, "ஆசார்ய" ராகாத அப்பாவுக்கு உபதேசம், வித்யா போதனை

என்பவற்றின் ஸம்பந்தமேயில்லை. அவர் இக்காலத்து "வெறும் அப்பா" போலவே இருக்கிறார், இப்படிச் சொல்வதுகூட ஸரியில்லை இக்கால அப்பாக்கள் ஸம்ஸ்காரபூர்வமான கர்ப்பாதானத்திலிருந்து சௌளம் வரையிலான ஸம்ஸ்காரங்களையும் புத்ரருக்குப் பண்ணுவதாகக் காணோமே.

ஒரு குழந்தையைப் பூணூல் போட்டு ஆசார்யரோடு அனுப்பும்போது அதற்கு எங்கேயோ, யார் அகத்துக்கோ போகிறோமென்ற துக்கம் ஏற்படக்கூடுமல்லவா? இப்படிக் கூடாது என்றே ஆசார்யரை, "இவரும் உன் அப்பாதான்" என்று நினைக்கும்படியாக அவருக்கும் பிதாவுக்குள்ளதான குரு என்ற பெயரையே கொடுத்து, அவருடைய ஆச்ரமத்துக்கும் குரு குலம் என்று பெயர் சொல்வதாக ஏற்பட்டிருக்கலாமோ என்னவோ?

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *தாய் - தந்தையர் பெருமை*

வித்யாப்யாஸம் கொடுக்காவிட்டாலும்கூட பிதா என்கிறவன் ஆசார்யனுக்கு மேலே என்று மநுஸ்ம்ருதியில் உயர்ந்த ஸ்தானம் கொடுத்திருக்கிறது. (சம்பளத்துக்குச் சொல்லிக் கொடுக்கும்) பத்து உபாத்யாயர்களைக் காட்டிலும் ஆசார்யர் உயர்ந்தவர், நூறு ஆசார்யர்களைக் காட்டிலும் பிதா உயர்ந்தவர் என்று சொல்லியிருக்கிறது. இந்த இடத்திலேயே எல்லாரைவிடவும் உயர்ந்த சிறப்பிடத்தை அம்மாவுக்குக் கொடுத்து, "ஆயிரம் பிதாக்களைக் காட்டிலும் மாதா உயர்ந்தவள்" என்று சொல்லியிருக்கிறது.

யாஜ்ஞவல்க்யர் காலத்தில் பிதாவோ, அவனை விட்டால் அடுத்தபடியாகத் தமையனாரோதான் உபநயனம் செய்விப்பதாகவும், இவர்கள் இருவரும் இல்லாவிட்டால்தான்

வெளி மநுஷ்யர் செய்வித்திருக்கிறாரென்றும் தெரிகிறது. 'இல்லாவிட்டால்' என்றால், 'உயிரோடு இல்லாவிட்டால்' மட்டுமில்லை, யோக்யதை இல்லாவிட்டாலும் இவர்கள் உபநயனம் செய்விக்கப்படாது என்று சொல்லியிருக்கிறது. என்ன யோக்யதை? அவன் தனக்கான வேத சாகையைப் பூர்ணமாய் அத்யயனம் செய்திருக்கவேண்டும், அதோடு, மற்றவர்களுக்கு அதைச் (சொல்லி கொடுத்து) அத்யாபனமும் செய்பவனாயிருக்க வேண்டும், ப்ராம்மணனுக்குத் தகாத எந்தத் தொழிலம் செய்பவனாக இருக்கப்படாது. (இந்த 'ஸ்டான்டார்ட்'படி தற்காலத்தில் எந்த அப்பன்காரனக்காவது பிள்ளைக்குப் பூணூல் போட 'க்வாலிஃபிகேஷன்' இருக்குமா என்பது ஸந்தேஹந்தான்)

சில ஸ்ம்ருதிகளில் 'குரு' என்பது 'பெரியவர்கள்' என்று இருக்ற எல்லோருக்கும் கொடுக்கப்பட்ட பொதுப் பெயராகத் தெரிகிறது. அப்பா, அண்ணா, தாத்தாகக்ள், அப்பா - அம்மாவுடன் பிறந்தவர்கள், மாமனார், தேசத்துக்கு ராஜா யாரோ அவர், ஸகல ஸத் ப்ராம்மணர்கள் - இவர்கள் மாத்ரமில்லாமல், அம்மா, பாட்டிகள், ஆசார்ய பத்னி, அத்தை, சித்தி, பெரியம்மா, மாமியார், அக்கா, ஸபத்னீ மாதா (மாற்றாந் தாய்) ஆகிய ஸ்திரீகளையும்கூட குருக்கள் என்றே அவற்றில் சொல்லியிருக்கிறது.

இப்படிப் பல குருமார்களைச் சொன்னாலும், ஜன்மாவைக் கொடுத்து பிள்ளையை வளர்த்து ஆளாக்கிவிடும் பிதாவையே குறிப்பாக "குரு" சப்தத்தால் சொல்கின்ற மநு, ஆசார்யனும் அறிவைத் தந்து பிதாவுக்கு ஸமதையான ஸ்தானம் பெறுவதால் குரு என்று கௌரவிக்கப்பட வேண்டியவனாகிறான் என்கிறார்.('கௌரவம்' என்ற வார்த்தைக்கே 'குருவுக்கு உரியது' என்றுதான் அர்த்தம்.)தர்ம சாஸ்த்ரங்களையோ, அத்யாத்ம சாஸ்த்ரங்களையோதான் என்றில்லாமல் அறிவுக்கு எந்த ஒரு வித்யையைக் கொடுத்து உபகரிப்பவனையுமே குரு என்று சொல்ல வேண்டுமென்று சொல்லும் மநு, இப்படிச் செய்கிறவர்களுக்குள்ளே ஸத்வித்யையை ஸம்பூர்த்தியாகக் கற்றுக்கொடுக்கும் ஆசார்யன் பெருமையை என்ன சொல்வது என்று வியந்து கேட்கிறார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*வயதில் சிறிய குரு*

வயஸில் சிறியவனாயிருந்தாலும் தனக்குக் கற்பிப்பவனைப் பெரியவனாக மதிக்க வேண்டும் என்ற கருத்திலிருந்தே ஆசிரியரை (பெரியவர் என்று பொருள்படும்) 'குரு' என்று சொல்வதாக ஏற்பட்டது என்று தர்ம சாஸ்த்ரங்களிலிருந்து தெரிகிறது. இதிலிருந்து தன்னைவிட வயஸில் சிறியவரிடமும் போதனை பெறலாமென்று தெரிகிறது. அறிவையும், ஆத்மாபிவ்ருத்திக்கானதையும் பெறுவதில் வயஸில் பெரியவர் சின்னவர் பார்க்கப்படாது என்ற உசந்த கொள்கை வெளிப்படுகிறது.இதற்கு மநு ஒரு கதையே சொல்லியிருக்கிறார்.

அங்கிரஸ் மஹர்ஷியின் புத்ரன் அவருடைய (அங்கிரஸுடைய) ஸஹோதரர்களுக்கே வித்யோபதேசம் செய்தார், அப்போது அவர்களை அவர், "பிள்ளைகளே" என்று கூப்பிட்டாராம். உடனே அவர்களுக்குக் கோபம் வந்து விட்டதாம். தேவர்களிடம் போய் 'கம்ப்ளெய்ண்ட்' கொடுத்தார்களாம். தேவர்கள், "நீங்கள் கம்ப்ளெய்ன்ட் பண்ணுவது ஸரியில்லை. உங்களுக்கு ஒரு வித்யை தெரியவில்லை. அதை உங்களுக்குப் பிள்ளை முறையாகறிவனிடம் சொல்லிக் கொள்கிறீர்கள் என்றால், அப்போது நீங்கள்தான் பாலர், அவர் வ்ருத்தர். வயஸு நிறைய ஆச்சு, தலை நரைத்துப்போச்சு என்பதால் வ்ருத்தராகிவிட முடியாது. நன்றாக வேதத்தை அப்யாஸம் பண்ணியிருப்பவனே நமக்கு 'வ்ருத்தன்' என்று சொல்லி அனுப்பிவிட்டார்களாம்.

எலும்போடு சதை ஒட்டிப்போன மஹா கிழங்களான யோகி ச்ரேஷ்டர்கள் நித்ய யுவாவான ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தியிடம் மௌனப் பாடம் கேட்கிறார்கள் "ஆலமரத்தின் அடியிலே ஆச்சர்யத்தைப் பாருங்கள் சிஷ்யர்கள் கிழவர்கள், குருவோ யுவா. அந்த வாலிப

ப்ரொபஃஸர் எப்படி லெக்சர் கொடுக்கிறாரென்றால், மௌன பாஷையிலாக்கும் அப்படியிருந்தும் அந்த சிஷ்யர்களுடைய ஸந்தேஹங்களெல்லாம் பொடியாகித் தீர்ந்து போய்விடுகின்றன" என்று ச்லோகமே இருக்கிறது.

சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா சிஷ்யா குரூர்யுவா ।

குரோஸ்து மௌநம் வ்யாக்யாநம் சிஷ்யாஸ்து சிந்ந ஸம்சயா ॥

ஒருவரைப் பெரியவராக நினைப்பதில் ஐந்து விதம் இருக்கிறது. தனத்தை வைத்துப் பெரியவராகச் சிலரை மதிக்கிறோம். பெரிய ப்ரபு என்றால் உடனே ஒரு மரியாதை தோன்றிவிடுகிறதல்லவா? இது ஒன்று. வயஸில் சின்னவர்களா யிருந்தாலும் மதனி, மாமா முறை, சித்தப்பா முறை ஆகிறவர்களென்று பந்துத்வத்தில் உள்ள ஸ்தானத்தினால் சிலரைப் பெரியவர்களாக மதிப்பது இரண்டு. ரொம்ப வயஸானவரென்றால் யாராயிருந்தாலும் பெரியவர் என்று மரியாதை பண்ணுவது மூன்று. நாலாவதாக, மஹா யஜ்ஞங்களைச் செய்தவர், பெரிய அநுஷ்டாதா என்றால் வயஸைப் பார்க்காமலே பெருமைப் படுத்துவது. ஐந்தாவதாக வித்யையிலே சிறந்த மஹா வித்வான் என்பதால் மரியாதை செய்வது. இதை தர்ம சாஸ்த்ரத்தில் சொல்லி இப்படி ஒன்று, இரண்டு, மூன்று போட்டதில் முதலில் வருவதைவிட அடுத்து வருவதே உசந்தது என்று கூறியிருக்கிறது. அதாவது ஐந்தாவதாக வித்யையை வைத்து ஒருத்தரைப் பெரிய வராகக் கருதி கௌரவிப்பதுதான் எல்லாவற்றிலும் உத்தமமானது என்று சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*அன்னை தந்தை ஆசான்*

ஆசார்யான், (குரு என்கிற) பிதா, மாதா என்று இவர்களுக்குள்ளேயே முந்தியவரைவிடப் பிந்தியவர் உசத்தி என்று சில இடங்களில் சொல்லியிருந்தாலும், பொதுவான கருத்து என்ன என்றால், இந்த மூன்று பேரையுமே ஈச்வராம்சமாக பாவித்து மரியாதை செய்யவேண்டுமென்பதுதான். இதிலே மாதா பிதாக்களைவிட ஆசார்யனை உசத்திச் சொல்வதையும் சில தர்ம சாஸ்த்ர புஸ்தகங்களில் பார்க்கிறோம். மநுவேகூட, "ஒருத்தன் மாத்ரு பக்தியால் இந்த லோகத்தையும், பித்ரு பக்தியால் அந்தரிக்ஷ லோகத்தையும், ஆசார்ய பக்தியால் ப்ரஹ்ம லோகத்தயும் அடைகிறான்" என்று சொல்லும்போது ஆசார்யனைத்தான் ரொம்பவும் சிறப்பித்திருக்கிறார்.

இவர்களுக்கு சுச்ரூஷை செய்யும் பலனை இப்படி உயர்த்தச் சொல்லியிருப்பது போலவே, இவர்களுக்குக் கொஞ்சம் த்ரோஹம் செய்துவிட்டாலுங்கூட மஹாபாபம் ஸம்பவிக்குமென்று எச்சரித்திருக்கிறது.

**அத்யாபகர்**

சொல்லிக் கொடுத்துத் திருத்துவது, அருள் சக்தியால் திருத்துவது, மந்த்ர சக்தியால் சிஷ்யனை வேதஸம்ஸ்காரம் கொண்டு சுத்தி செய்து தத் -த்வாரா (அதன் வழியே) திருத்துவது என்று மூன்று தினுஸு. அருள் சக்தியை சாஸ்த்ரத்துக்குள் கொண்டுவர

முடியாததலால் ஸ்ம்ருதிகளில் அதைப்பற்றிய ப்ரஸ்தாவம் இல்லை. மற்ற இரண்டை எடுத்துக்கொண்டால், 'மந்த்ரோபதேசத்தால் ஸம்ஸ்கார பூர்வமாக (வேதச் சடங்கினால்) சிஷ்யனைப் பரிசுத்தி பண்ணி அப்புறம் பரிபூர்ணமாக வித்யையும் போதிக்கிறவரே குரு, ஸம்ஸ்கார க்ரியை இல்லாமல் முழுக்கவோ, ஒரு பகுதியோ வித்யை மாத்திரம் போதிப்பவர் ஆசார்யர்' என்பது ஒரு அபிப்ராயம். இன்னொரு அபிப்ராயம் ஆசார்யரே மந்த்ர பூர்வ ஸம்ஸ்காரத்திலிருந்து வேதாந்த போதனை முடிய எல்லாம் செய்பவர் என்பது. இந்த இரண்டு வித ஆசார்யருக்கும் "அத்யாபகர்" என்ற பெயர் உண்டு. இவரில் கீழ்ப்பட்டவரே சம்பளத்துக்கு போதிக்கும் உபாத்யாயர்.

# குரு

## "உபாத்யாயர்" பெற்ற உயர்வு

ரொம்பவும் பொருத்தமாக, வேத ஸம்பந்தத்தில் உண்டான உபாத்யாயர் (வாத்யார்) என்ற பெயரையே பிற்கால டீச்சர்களுக்கு வைத்துவிட்டார்கள். இந்த டீச்சர்கள் சம்பளத்துக்குச் சொல்லிக் கொடுக்கிறவர்கள்தானே?

ஜீவனோபாயத்துக்காக போதிக்காமல், "போதிப்பதுதான் நம் ஜீவாதர்மம்" என்று இருந்த நிஜமான ஆசார்யர்கள் குறைந்து குறைந்து, உபாத்யாயர்கள் வளர வளர, உபாத்யாயர் (வாத்யார்) என்ற பெயர் இன்ஃஃபீரியாரிடியைக் குறிப்பதாக இல்லாமல் மதிப்புள்ளதாகவே ஆகி விட்டது. 'ஒரிஜினல் மீனிங்' போய், வித்யை போதிக்கும் எவரும் உபாத்யாயர் என்றாகிவிட்டது. ஆசார்யராக இருப்பவரைக்கூட

உபாத்யாயர் என்று குறிப்பிடுவதாக ஆகிவிட்டது. இதனால்தான் வேத போதனையே பரம்பரையாகச் செய்துவந்த பல வடக்கத்திக்காரர்கள் 'இன் ஃஃபீரியாரிடி எதுவுமில்லாமல் தங்கள் பேரோடேயே 'உபாத்யாயா' என்று சேர்த்துப் போட்டுக்கொள்கிறார்கள்.வங்காளத்தில் முகர்ஜி, சட்டர்ஜி, பானர்ஜி என்று பலர் இருக்கிறார்களல்லவா? இதையே இன்னும் விரித்து சுத்தமாக முகோபாத்யாயா, சதுரோபாத்யாயா, வந்த்யோ பாத்யாயா என்று போட்டுக்கொள்கிறவர்களும் இருக்கிறார்கள். 'முக உபாத்யாயா' என்பதில் 'முகம்' என்றாலே வேதம். முகம் என்றால் ஸம்ஸ்க்ருதத்தில் வாயையும் குறிக்குமென்று தெரிவித்திருக்கெல்லாம். வாய் என்பது வார்த்தையைக் குறிப்பது. வார்த்தையென்றாலே வேத வாக்குத்தான் என்று கருதி வேதத்துக்கும் 'முகம்' என்று பெயர் வைத்திருக்கிறது. வேதத்தைக் கற்பிக்கும் உபாத்யாயரே முக உபாத்யாயாவான முகர்ஜி. சதுரோபாத்யாயா என்பதில் வரும் 'சதுர்' - சட்டர்ஜியில் 'சட்டர்' என்றாகியிருக்கும்' 'சதுர்' -

சதுர்வேதங்களைக் குறிப்பதுதான். ராமக்ருஷ்ண பரமஹம்ஸா ஒரு சட்டோபாத்யாயா குடும்பத்தில் பிறந்தவர்தான். அவருடைய பத்னி, "ஹோலிமதர்" என்கிறார்களே. அந்த அம்மாளுடைய பிறந்தகத்தினர் முகோபாத்யாயர்கள். வந்த்ய உபாத்யாயா என்றால் வணக்கத்துக்குரிய வாத்யாரென்று அர்த்தம். 'வந்த்ய' என்பது 'பந்த்ய' என்று பெங்காலி வழக்கப்படி ஆகி, அதுவும் மாறி மாறி, கடைசியில் 'ஜி' போட்டுக் கொண்டு பானர்ஜி ஆகியிருக்கிறது.

ஆக உபாத்யாயர் என்பது 'ரெஸ்பக்டபிள்' (மதிப்புக்குரிய) வார்த்தையாகி விட்டது. பிற்காலத்தில் பிரிட்டிஷ் ராஜ்யத்தில்கூட மஹாபண்டிதர்களக்கு 'மஹாமஹோபாத்யாய' என்று பெரிய கௌரவமாகப் பட்டம் கொடுத்தார்களல்லவா? இந்தப் பட்டம் வாங்கினவர்களில் பலபேர் மிக உயர்ந்த ஆசார்ய லட்சணத்தோடு, வருமானத்தைப் பற்றிய எண்ணமே இல்லாமல், தங்கள் கைக்காசையும் ஸொத்தையுமே செலவழித்துங்கூட குருகுலம் நடத்தியவர்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## *குரு*

### *ஈச்வர ஆராதனையாக*

எத்தனையோ தொழில்கள் இருக்கின்றன. ஜனங்கள் அவற்றில் எதையோ ஒன்றை மேற்கொண்டு ஊழியம் செய்வது ஊதியத்துக்காகத்தான். இதில் தப்பாகவோ, கௌரவக் குறைச்சலாகவோ எதுவும் இருப்பதாக யாரும் நினைக்கவில்லை. ஆனாலும் காசுக்காக ஈச்வர பூஜை பண்ணுவதையும், கல்வி போதிப்பதையும் மாத்திரம் பழைய காலத்தில் ரொம்பவும் நிக்ருஷ்டமாக (தாழ்வானதாக) நினைத்திருக்கிறார்கள். ஆத்ம நிறைவையே தரக்கூடயவற்றைக் கேவலம் வயிற்றை நிரப்பிக் கொள்வதோடு ஸம்பந்தப்படுத்துவது தகாது என்ற எண்ணமே காரணம் இதிலிருந்து வித்யோபாஸனைணை

ஈச்வர ஆராதனைக்கு ஸமமாக நினைத்திருக்கிறார்களென்று தெரிகிறது.

அவரவரும் தமது ஜாதிக்கான தொழிலைச் செய்து ஸம்பாதிக்க வேண்டுமென்பது சாஸ்த்ரம். பிராம்மணனின் தொழிலென்ன என்றால், பழந்தமிழ் நூல்களைப் பார்த்து விட்டால் தெரியும். அவர்களுக்கு 'அறுதொழிலோர்' என்று பெயர். அந்தணர்கள் ஆறு தொழில்கள் செய்யவேண்டும். அவர்களை 'ஷட்கர்ம நிரதர்' என்பார்கள். என்னென்ன? ஒன்று, அத்யயனம் - அவன் வேதங்களைக் கற்க வேண்டும். இதில் ஸம்பாதனத்துக்கு இடமில்லை. இரண்டு, அத்யாபனம் - பிறருக்கு இவன் கற்பிக்க வேண்டும். வேதங்களை மட்டுமில்லை, எல்லாத் தொழில்களையும் இவன் தெரிந்து கொண்டு அததற்கு ஏற்பட்ட ஜாதியாருககுக் கற்றுக் கொடுக்க வேண்டும். இப்படிச் சொன்னதால் ஒவ்வொரு ப்ராம்மணனும் அத்தனை தொழிலையும்

கற்றறிந்திருக்க வேண்டும் என்று நினைக்கக்கூடாது. அது ஸாத்யமில்லை. இவனால் லோக ஷேமத்துக்காக நடக்கவேண்டிய வேத போதனைக்கும் கர்மாநுஷ்டானத்துக்கும் குந்தகமன்னியில், அவை போக மிச்சமுள்ள நேரத்தில் இவன் வேறு ஒன்றிரண்டு தொழில்களைப் பற்றியும் அறிந்துகொண்டு அத்தொழிலுக்குரியவர்களுக்குச் சொல்லித்தர வேண்டுமென்றே அர்த்தம். இப்படித்தான் ஆயுர்வேதம், அர்த்த சாஸ்த்ரம், நாட்டிய சாஸ்த்ரம், தநுர்வேதம் போன்றவற்றில் ஒவ்வொன்றிலும் ஒரு சில ப்ராம்மணர்கள் 'ஸ்பெஷலைஸ்' பண்ணி அவற்றை உரிய வகுப்பாருக்கு போதித்ததாகப் புராண இதிஹாஸங்களிலிருந்து தெரியவருகிறது. மற்ற வகுப்பினருக்கான தொழில்களை ப்ராம்மணன் அவர்களுக்கு போதிக்க மட்டுந்தான் வேண்டும், அந்தத் தொழில் எத்தனை ஸம்பாத்யத்தைத் தருவதாயிரு ந்தாலும், ஜீவனோபாயமாகத் தானே அதைச் செய்து தொழில் நடத்திவிடக்கூடாது. கற்றுக்கொள்பவர்கள் இஷ்டப்பட்டுத் தரும் தட்சினையிலேயே இவன் த்ருப்தனாயிருக்கவேண்டும். அதாவது மற்றத் தொழிலார்கள் தத்தம் தொழிலைச் செய்து நன்றாய் ஸம்பாதிக்க உதவுபவனாக மட்டும் இருந்துகொண்டு, அந்தத் தொழிலைத் தான் "மூட்டை கட்ட" ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளாமலிருக்கவேண்டும். இது

மாத்திரமில்லை - இவனுக்கே குலத்தொழிலாக உள்ள இந்த 'டீச்சிங்,கையுங்கூட இவன் ஸம்பாத்ய நோக்கமில்லாமல், வித்யையைப் ப்ரசாரம் செய்யவேண்டுமென்பதே நோக்கமாகக் கொண்டுதான் ஈச்வர ப்ரீதியாகச் செய்யவேண்டுமென்று விதித்திருக்கிறது.

இதையெல்லாம் கவனிக்காத குறைதான், ப்ராம்மணன் தன்னலமாக சாஸ்த்ரங்களை எழுதி வைத்துக்கொண்டிருப்பதாகக் குறை சொல்வது. திறந்த மனஸோடு பார்த்தால் ப்ராம்மணன் ஸொந்த நலனுக்காகத் தனக்கு சலுகை எதுவும் வைத்துக்கொள்ளவில்லை அது மட்டுமில்லாமல் தனக்கே அநேக ப்ரதிகூலங்களையும் வைத்துக்கொண்டு ஆத்மாபிவ்ருத்திக்காகவும் லோக க்ஷேமார்த்தமாகவும் தன்னை உலக வாழ்க்கையில் ரொம்பவும் வாடப்போட்டு வருத்திக்கொண்டானென்று தெரியும்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

"ஏற்பது இகழ்ச்சி"

அறுதொழிலில் அத்யயனமும் அத்யாபனமும் போக பாக்கி நாலு யஜனம் (இவன்) ஸொந்தமாக யாகம் செய்வது, யாஜனம் (பிறத்தியாருக்கு யாகம் பண்ணி வைப்பது), தானம் (தானம் கொடுப்பது), ப்ரதிக்ரஹம் (தானம் வாங்கிக்கொள்வது). யஜனத்திலும் தானத்திலும் செலவுதானே தவிர ஸம்பாத்யமில்லை. பிறருக்கு யாகம்

பண்ணிவைப்பதில் தட்சிணை கிடைக்கும், ப்ரதிக்ரஹத்திலும் மான்யங்கள் பெறலாம். ஆனாலும், இங்கேயும் ஒரு முக்யமான விஷயம் கவனிக்க வேண்டும். பொதுவாக "ஏற்பது இகழ்ச்சி" என்று வைத்ததோடு, தானம் வாங்கும்போது கொடுக்கிறவனுடைய பாபமும் வாங்குகிறவனுக்கு வந்து விடும் என்று ம்பயமுறுத்தி வைத்திருக்கிறது. இன்ன தானம் இன்னானிடம் வாங்கினால்

இன்ன ப்ரயாச்சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்றும் பெரிய லிஸ்ட் கொடுத்து பயமுறுத்தியிருக்கிறது. வேறே யாரோ பயமுறுத்தவில்லை. ப்ராம்மணனேதான்

தன்னைத்தானே பயமுறுத்திக்கொண்டு சாஸ்த்ரத்தில் எழுதி வைத்திருக்கிறான். பெரிய ச்ரௌதிகளாக இருப்பவர்கள் தாங்களே யாகம் செய்யும் யஜமானராக இருந்து யஜ்ஞ பலனைத் தான் பெற விரும்புவார்களேயன்றி, இன்னொருத்தருக்குப்

பண்ணிவைத்து இந்தப் பலனை விட மிகக் குறைந்ததான தட்சிணை என்பதைப் பெற விரும்ப மாட்டார்கள். 'யாஜனம்' பிராம்மணனின் கடமையாச்சே என்பதற்காகவே பண்ணிவைத்து, அதில் கிடைக்கும் தட்சிணையை ஏதாவது புண்யத்துக்குச் செலவழித்துவிடுவார்கள்.

ஆக ஆறு தொழிலென்று சொன்னாலும் ஸம்பாத்யத்தைப் பார்த்தோமானால் அத்யயனம், யஜனம், தானம் என்ற மூன்றிலும் வரவுக்கு இடமேயில்லை. யாஜனத்திலும், ப்ரதிக்ரஹத்திலும் ஸம்பாதிப்பதற்கும் ஏகப்பட்ட கட்டுப்பாடு. பாக்கியுள்ள ஒன்றே ஒன்றான டீச்சிங் (அத்யாபனம்) நியாயமான வருமானம் நிறையக் கொடுக்கக் கூடியதென்றாலும் அதையும் வித்யாதானமாகத்தான் செய்து அதன் தெய்வாம்சத்தை ரக்ஷிக்கவேண்டுமேயன்றி அதை வருமானக் கண்ணோட்டத்தோடு மேற்கொள்ளக்கூடாது என்று வைத்துக் கொண்டுவிட்டார்கள்.

கேட்காமலே சிஷ்யனாகக் கொடுக்கிறபோது, அதை ஆசூர்யர் ஏற்றுக்கொண்டாலும், இங்கேயுங்கூட உசந்த ஆசார்யர்கள், 'கற்றுக் கொண்டாச்சு' என்று சிஷ்யன் த்ருப்திப்பட்டு தட்சிணை கொடுப்பதை விஷயமாக நினைக்காமல், 'கற்றுக் கொடுத்தாச்சு' என்று தாங்களே த்ருப்தி அடைந்தால்தான் தட்சிணையை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். "ப்ருஹதாரண்யக" (உபநிஷ)த்தில் (நாலாவது அத்யாயம், முதல் ப்ராஹ்மணத்தில்) வருகிறது. யாஜ்ஞவல்க்யர் ஒவ்வொரு உபதேசமாகப் பண்ணப் பண்ண, ஜனகர் ஒவ்வொரு தரமும் அவருக்கு ஸம்பாவனை பண்ண ஆரம்பிக்கிறார், ஆனால் யாஜ்ஞவல்க்யரோ, "பூர்ணமாக உபதேசம் பண்ணாமல் தட்சிணை வாங்கிக் கொள்ளக்கூடாது என்பது என் பிதாவின்

அபிப்ராயம்" என்று சொல்லி, திரும்பத் திரும்ப தட்சிணையை ஏற்க மறுக்கிறார்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *உலகியல் படிப்பிலும் உத்தம ஆசார்யர்கள்*

வேதம் சொல்லக்கொடுத்தவர்தானென்றில்லை, மற்ற ஸெக்யுலர் ஸப்ஜெக்ட்கள் (உலகியல் படிப்புகள்) சொல்லிக் கொடுத்தவர்கள்கூட இப்படிப்பட்ட உத்தமமான யோக்யதாம்சங்களைப் பெற்றவர்களாக இருந்திருக்கிறார்கள். ஆத்மாநுபவம், திவ்யாநுபவங்கள் வேண்டுமானால் அவர்களிடம் இல்லாதிருந்திருக்கலாம். ஆனால் மிகவும் உயர்ந்ததான மநுஷ்ய குணங்கள் அவர்களுக்கு இருந்திருக்கின்றன பொதுவாக இப்படியிருந்தால்தான் அவர்களிலேயே கோபிஷ்டராக, பட்சபாதமுள்வராகச் சில ஆசார்யர்கள் வந்தபோதுங்கூட இவர்களிடமும் சரணாகதி பண்ணிவிட்டு பக்தி விச்வாஸத்தோடு இவர்களுக்கு ஸேவகம் செய்யும் சிஷ்யர்கள் சேர்ந்திருக்கிறார்கள். இல்லாவிட்டால் சண்டை போடச் சொல்லிக் கொடுக்கும் தநுர்வேத ஆசார்யராகவே இருந்த த்ரோணரிடம் ஏகல்வ்யன் (ஏகலைவன்) எப்படி சரணாகதி பண்ணியிருப்பான்? பரசுராமருக்கு எப்படிக் கர்ணன் அடிமை மாதிரிப் பணிவிடை பண்ணியிருப்பான்?

டான்ஸ் கற்றுக் கொடுப்பவனக்குக்கூட 'ஆசார்ய' பட்டம் கொடுத்து "ந்ருத்யாசார்யன்" என்னும்படியாக, நம் தேசத்து டீச்சர்கள் தங்களுடைய வித்தையில் தேர்ச்சி பெற்றிருந்தது

மட்டுமல்லாமல் ஒப்பற்ற ஒழுக்கமான வாழ்க்கை வாழ்ந்திருக்கிறார்கள். ஸங்கீதத்திலே பெரிய ஸிம்ஹம், தான் ஸேன் என்ற உஸ்தாத் அக்பர் ஸபையில் இருந்திருக்கிறான். அவனுடைய ஸங்கீத ஆசார்யர் ஹரிதாஸைப் பற்றிப் படிக்கும்போது அவர் ரிஷி மாதிரியான மஹானாக இருந்திருக்கிறாரென்று தெரிகிறது. ஹரிதாஸ் ஸ்வாமி என்றே சொல்கிறார்கள்.

இங்கேயே திருவையாற்றிலே நூறு வருஷத்துக்குள்ளே மஹா வைத்யநாத சிவன் என்று ஸங்கீத வித்வான் இருந்திருக்கிறார். பெயரையே சொல்லாமல் 'சிவன்வாள்' என்றே சொல்லும்படியாக அத்தனை உயர்ந்த வாழ்க்கை நடத்தியிருக்கிறார். ஒருநாள் சிவபூஜை தப்பினது கிடையாது, ஒருவேளை ஸந்த்யாவந்தனம் தப்பினது கிடையாது. வெளியூர்களில் கச்சேரிக்குப் போகிறபோது பூஜைப் பெட்டி வந்துசேராவிட்டால் அன்றைக்குப் பட்டினிதான். ஸழயம் ஸந்த்யோபாஸனைக்குக் குந்தகமில்லாமல் கச்சேரியை மூன்று மணிக்கே ஆரம்பித்து ஆறு மணிக்குள்ளே முடித்து விடுவாராம். அப்படிச் செய்ய முடியாவிட்டால் ஸந்த்யாவந்தனம் ஆனவிட்டு ஆறரை மணிக்கு மேலேதான் கச்சேரி ஆரம்பிப்பாராம். நிர்பந்தமாக எங்கேயாவது நாலு மணி, அஞ்சு மணிக்கு ஆரம்பிக்க நேர்ந்தாலும் ஸரியாக ஸந்த்யா காலத்திலே கச்சேரியை நிறுத்திவிட்டுப் போய் ஸந்த்யாவந்தனம் பண்ணிவிட்டுத் திரும்பிவந்துதான் கச்சேரியை விட்ட இடத்தில் ஆரம்பிப்பது என்று வைத்துக் கொண்டிருந்தாராம்.

பணம், காசு, வழக்கு எல்லாம் முழுக்க அவருடைய அண்ணா நாமஸ்வாமி சிவன்தான் கவனித்துக் கொண்டிருக்கிறார். அவரும் நல்ல பக்தி, ஸாஹித்ய

வ்யுதபத்தி எல்லாம் உள்ளவர். அறுபத்தி மூன்று நாயன்மார்களைப் பற்றிப் பெரிய புராணக் கீர்த்தனைகள் என்று பண்ணியிருக்கிறார். அவர் பொறுப்பிலேயே எல்லாம் விட்டுவிட்டுத் தம்பி ஸங்கீதம், சிவபூஜை, காயத்ரி இதுவே வாழ்க்கை என்று இருந்திருக்கிறார். சிஷ்ய பரம்பரை உண்டாக்கிக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம்கூட அவருக்கு இல்லை. ஆனாலும் அவருடைய சீலத்தினால் அவரை தெய்வமாக மதித்துத் தாங்களாகவே ஒரு இருபது

முப்பது சிஷ்யர்கள் எப்போது பார்த்தாலும் அவருடைய க்ருஹத்திலே இருந்து கொண்டு, அவர் இவர்களை உட்கார்த்தி வைத்து சிட்க்ஷை என்று சொல்லிக் கொடுக்காவிட்டாலும்கூட இவர் பாட்டுக்கு ஆத்மார்த்தமாகப் பாடிக்கொண்டிருப்பதைக் கேட்டுக் கேட்டே பாடம் பண்ணிவிடுவார்களாம். அந்த இருபது முப்பது பேருக்கும் இவரே சாப்பாடு போட்டிருக்கிறார், குரு தட்சிணை என்று எதுவும் வாங்கிக் கொள்ளாமலே.

ஆடல் பாடல் கற்றுக் கொடுத்தவர்கள், கத்தியைச் சுழற்றி யுத்தம் போடச் சொல்லிக்கொடுத்தவர்கள் ஆகியவர்கள்கூட 'ஆசார்யன்' என்ற மரியாதைக்குகந்த பெயரைப் பெறும் யோக்யதை ஸம்பாதித்துக் கொண்டிருந்தார்களென்றால், வேத சாஸ்த்ரம் சொல்லிக் கொடுக்கிறவர்கள், 'இவனே ஈச்வரன்' என்று சிஷ்யர்கள் சரணாகதி பண்ணக் கூடியவர்கள ாகத்தான் இருந்திருப்பார்கள் என்பதில் ஸந்தேஹமென்ன?

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*"குலபதி"*

அபூர்வமாகச் சில இடங்களில் சதுர்தச வித்யைகளிலும் உள்ள ஸகல சாஸ்த்ரங்களையும் ஸாங்கோபாங்கமாக ஆராய்ந்து கற்றுக்கொடுப்பதற்கா பல ஆசிரியர்களைத் தம் கீழே வைத்துக்கொண்டும், ஸீனியர் ஸ்டூடன்ட்களைக் கொண்டு ஜூனியர்களுக்குக் கற்றுக் கொடுத்தும் ஏராளமான மாணவர்களுக்குக் கல்வி அளித்த குருமார்கள் இருந்திருக்கிறார்கள். இவர்களுக்குத்தான் "குலபதி" என்று பெயர். குலபதி முன்ஷி என்கிறோம். மெட்றாசில் குலபதி (பாலக்ருஷ்ண) ஜோஷி என்று இருக்கிறார். இரண்டு பேரும் குஜராத்காரர்கள். இருவர் பேரும் 'ஷி'யில் முடிகிறது. ஆனால் இவர்கள் நான் இப்போது சொன்ன ஒரிஜினல் அர்த்தப்படி 'குலபதி'கள் இல்லை. காலப்போக்கில், கல்வி

ப்ரசாரத்தில் மிகவும் சிறப்பாகத் தொண்டு செய்யும் ஒரு பெரியவரைக் 'குலபதி' என்று சொல்வதாக ஏற்பட்டதிலேயே இவர்களைக் குலபதி என்கிறோம். முன்ஷி அநேக வித்யாசாலைகளும், நம்முடைய கலாசார ப்ரசாரத்துக்காக வித்யாபவனமும் வைத்தவர். ஜோஷி அநேக வருஷங்கள் உசந்த முறையில் ரொம்பவும் நல்ல பெயருடன் தியாலஜிகல் ஹைஸ்கூலில் ஆசிரியராக இருந்தவர். அதனால் இவர்களைக் 'குலபதி' என்று சிறப்பித்துச் சொல்கிறோம். வஸிஷ்டர் மாதிரி மஹா பெரியவராக ஒரு குரு இருக்கிறபோது அவரிடம் நாலு வார்த்தையாவது நேரே கற்றுக்கொண்டு "வஸிஷ்ட சிஷ்யன்" என்று பெயர் வாங்க வேண்டுமென்று ஏராளமானவர்களுக்கு ஆசையாய் இருந்திருக்கமல்லவா? இவர்களுடைய ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அந்த மஹா பெரியவர்களும் ஆசையோடு வருகிற அத்தனை வித்யார்த்திகளையும் குருகுலத்தில் சேர்த்துக் கொண்டு, நிறைய ஆசிரியர்களைத் தங்களுக்குக் கீழே அமர்த்திக் கொண்டு இவர்கள் மூலம் அவர்களுக்குப் பாடம் சொல்லித் தருவது, ஆரம்ப கட்டங்களில் ஏதோ ஒன்றிரண்டு விஷயங்கள் மட்டும் தாங்களே சொல்லிக் கொடுத்து, "அட்வான்ஸ்ட்" கட்டம் வரும்போது ஸவிஸ் தாரமாக க்ளாஸ் எடுப்பது என்று வைத்துக் கொண்டிரு ந்திருக்கிறார்கள்.போன (பத்தொன்பதாம்) நூற்றாண்டில் மன்னார்குடி ராஜு சாஸ்த்ரிகள் என்று வித்யா பாரங்கதராக ஒருவர் இருந்தார். பாரங்கதர் என்றால் கரை கடந்தவர். 'பாரம்' (paaram)என்றால் அக்கரை. அவருடைய சிஷ்யர்கள் என்று ரொம்பப் பேர் அடுத்த தலைமுறையில் வந்தார்கள் அவவ்ளவு பேரும் முழு வித்யாப்யாஸமும் அவரிடம் பாடம் கேட்டது. அதற்கு முன் அநேகமாக ஸீனியர் மாணவர்களிடம்தான் இவர்கள் படித்ததெல்லாம்.

"ரகுவம்ச"த்தில் (முதல் ஸர்க முடிவில்) வஸிஷ்டரைக் "குலபதி" என்று சொல்லியிருக்கிறது. "சாகுந்தல"த்தில் கண்வ மஹர்ஷியைக் குலபதி என்று சொல்லியிருக்கிறது. சிறிது காலம் கழித்து ஏராளமாக சாஸ்த்ரங்களும் காவ்யங்களும் இம்மாதிரி குருகுலும் நடத்துகிறவருக்குத்தான் "குலபதி" என்ற பெயர் கொடுக்கப்பட்டது. பத்தாயிரம் என்பது அதிசயோக்தியாய் (மிகைபடக் கூறலாய்) இருக்கலாம் என்கிறார்கள். எப்படியானாலும் நூற்றுக் கணக்கிலாவது மாணவர்கள் இவற்றில் இருந்திருக்கத்தான் வேண்டும். இதில்

கவனிக்க வேண்டியது என்ன என்றால் இத்தனை மாணவர்கள் இருந்தபோதிலும் குருவானவர், அதாவது அந்தக் குலபதியானவர், ஃபீஸையோ தட்சிணையையோ நினைக்காமல், அவ்வளவு மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் தாமே சாப்பாடு போட்டு ரட்சிக்கும் நிஜ ஆசார்யராக இருந்திருக்கிறார். 'யோ அன்ன தானாதி போஷணாத் அத்யா பயதி' - 'எவன் சாதம் போட்டுப் பாடம் சொல்லித் தருகிறானோ' அவனே குலபதி என்று லட்சணம் சொல்லியிருக்கிறது. 'நல்ல கார்யம் செய்கிறார். தன் ராஜ்யத்தில் நிறைய வித்வான்களை உருவாக்குகிறார்' என்று ராஜா பாட்டுக்கு இவருக்கு ஸம்பாவனை பண்ணிக் கொண்டிருப்பான். இவரும் ஏராளமான சீஷப்பிள்ளைகளைக் கல்விமான்களாக்குவார். "வ்ருத்யர்த்தம்" (பணத்துக்காக) என்ற வாடையே இராது.

ஆனாலும் மொத்தத்தில் பார்த்தால் பெரிய வித்யாசாலைகள் நடத்திய குலபதிகள் அபூர்வமாகத்தான் இருந்தார்கள். தனியாக ஒரு ஆசார்யன் சிறிதாக குருகுலம் நடத்துவதே பொது விதியாக இருந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## *குரு*

### *பூர்வகால போதனையமைப்பின் வளர்ச்சி*

வேதகாலம் என்கிற ஆதி காலத்தில் நம்முடைய தேசத்தில் (நம்முடைய தேசத்தில் மாத்திரமில்லை, உலகத்திலேயே) முதல் முதலில் கல்வி போதிப்பது எப்படி ஆரம்பித்தது என்றால்.

ஒவ்வொரு ரிஷியும் அவருக்கு ஈச்வராநுக்ரஹத்தில் ஸ்புரித்த (அதாவது, revealஆன) மந்த்ரங்களையும் வித்யைகளையும் தன்னுடைய புத்ரன், புத்ரன் மாதிரியாக இருக்கப்பட்ட நெருக்கமான பந்துமித்ரர்களின் குழந்தைகள்

ஆகியவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதில்தான் ஆதி 'ஸ்கூல்' பிறந்தது. வித்யைகள் என்று இங்கே சொன்னது, பிற்காலத்தில் அந்த வார்த்தையில் உள்ளடங்கி 'ஆர்ட்'களையும் (கலைகளையும்) ஸயன்ஸ்களையும் அந்த ஆரம்பகாலத்தில் அவ்வளவாகக் குறிக்கவில்லை. அக்காலத்தில் ஒவ்வொரு உபாஸனாமார்க்கமும் மட்டுமே ஒரு வித்யை எனபப்ட்டது.

நல்ல த்யான லயத்திலே ஒரு ரிஷியின் அந்தஃகரணம் பரமாத்மாவிடம் சொருகிக்கொண்டு கிடக்கும்போது அந்தப் பரமாத்ம ஸ்வரூபமான ஆகாசத்திலேயிருந்து அவர்களுக்குள் மந்த்ரங்கள் ஸ்புரிக்கும், அந்தப் பரமாத்மாவின் அநுக்ரஹத்தில் அதை அடைவதற்கு உபாயமான ஏதாவதொரு உபாஸனா மார்க்கமும் தானாக 'ரிவீல்' ஆகும் (வெளிப்படும்). யமதர்ம ராஜா நசிகேதஸுக்கு உபதேசித்தமாதிரி, ஸநத்குமாரர் நாரதருக்கு உபதேசித்த மாதிரி ஒரு தேவதை அல்லது தெய்வத்தன்மை அடைந்த ஒரு மஹா புருஷர் ஒரு ரிஷிக்கு, அல்லது வேறொரு ஸத்பாத்ரத்துக்கு இப்படிப்பட்ட வித்யையை உபதேசிப்பார். ஸ்வர்க்க லோக ஸம்பந்தமுள்ள அக்னி வித்யையை நசிகேதஸுக்கு யமதர்மராஜா உபதேசித்தார். அந்த வித்யை அதற்கப்புறம் அதைப் பெற்ற சிஷ்யனான நசிகேதஸின் பெயரிலேயே வழங்கப்பட்டுமென்றும் வரம் கொடுத்தார்.

இதே போலத்தான் இன்னம் சில வித்யைகளும் அவற்றில் உபதேசம் பெற்ற சிஷ்யர் பெயரில் இருக்கின்றன. உபகோஸல வித்யா, ஸத்யகாம வித்யா, மைத்ரேயி வித்யா என்று உபநிஷத்தில் வருகிறவை, அவை யாரைக் குறித்து உபதேசிக்கப்பட்டனவோ அவர்கள் பெயரை வைத்துத்தான். உபதேசிக்கிற குருவின் பேரிலோ, அல்லது உபாஸனா மூர்த்தி அல்லது தத்வத்தின் பேரிலோ இல்லாமல் இப்படிச் சில வித்யைகள் சிஷ்யர் பேரிலிருப்பதிலிருந்து, ச்ரத்தாபக்திகளுடன் வித்யையைக் கற்றறிய விரும்புகிற மாணவனுக்கு ஆதியில் எவ்வளவு சிறப்புக் கொடுத்திருக்கிறார்களென்று தெரிகிறது. இது ஒரு பக்கம் இருக்கட்டும்.ஆதிக்கும் ஆதிகால ஸ்கூல் பற்றிச் சொல்லிக்கொண்ருடிந்தேன். வித்யைகள் என்பது பற்றிப் பேச்சு வந்தது.

"ப்ரஹ்மவித்யா" என்று எல்லா வித்யைகளுக்கும் முடிவான ஸத்ய தத்வத்தைச் சொல்லும் வேதாந்தமான உபநிஷத்துக்களை ஒரு மொத்தமாகச் சேர்த்துக் குறிப்பிடுவது வழக்கம். "என்ன, பெரிய ப்ரம்ம வித்தையோ?" என்று இதைத்தான் பேச்சு வழக்கில் சொல்வது. இந்த ப்ரஹ்மவித்யையான உபநிஷத்துக்களில் அநேக வித்யைகள் - பஞ்சாக்னி வித்யா, தஹரவித்யா, அந்தர்யாமி வித்யா என்றெல்லாம் குறிப்பிடப்படுகிறவை - வருகின்றன. Ritual (சடங்கு) நிறைய இருக்கப்பட்ட வித்யைகள், அப்படியில்லாமல் த்யானாதி அப்யாஸங்களால் க்ரிஹிக்கக்கூடிய தத்வ ரூபமான வித்யைகள் ஆகிய எல்லாம் நிறைய இருந்திருக்கின்றன. இவற்றை முதலில் ஈச்வர ப்ரஸாதத்தால் பெற்ற ரிஷிகளும், இதே மாதிரி மந்த்ரங்களையும், பல மந்த்ரங்கள் அடக்கிய ஸூக்தங்களையும் ஆகாசத்திலிருந்து அபௌருஷேயமாகப் பெற்ற ரிஷிகளும் இவற்றைத் தங்கள் தங்கள் வாரிசுகளுக்கும், ரொம்பவும் நெருக்கமாக இருக்கப்பட்ட மற்ற பசங்களுக்கும் தங்கள் தங்கள் அகத்திலேயே சொல்லிக் கொடுக்க ஆரம்பித்ததில்தான் ஆதிகால ஸ்கூல் உண்டாயிற்று. ரிஷிகளின் பர்ணசாலைகளைப் பொதுவாக ஆச்ரமம் என்பார்கள். அவற்றில் இந்தமாதிரி போதனை நடைபெற்ற ஆச்ரமங்களை 'ரிஷிகுலம்தான் நம்முடைய, அல்லது மனித குலத்துடைய, முதல் பள்ளிக்கூடம்.

இப்படி ரொம்பவும் ஆரம்பத்தில் ஒரு குடும்பப் பாரம்பர்யமாகவேதான் வித்யைகளும், வித்யாசாலைகளும் இருந்திருக்கின்றன. அப்புறம் இந்த ரிஷிகுலக்காரர்களில் ஒருவருக்கொருவர் தொடர்பு, பரிவர்த்தனை ஏற்பட்டு, கல்விமுறை வ்ருத்தியாகி அவரவரும் தங்கள் தங்கள் குடும்ப வித்யையை மட்டுமின்றி மற்ற வித்யைகளையும் மந்த்ர ஸூக்ரங்களையும் மற்ற ரிஷிகுலங்களுக்குப் போய்க் கற்றுக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

## குரு

### மொழி, ஒலி ஒழுங்கு

கற்றுக் கொடுப்பதில் பாஷைதானே முக்யமாக உபகரணம்? உலகத்தின் ஆதி நூலாகிய ரிக்வேதத்திலேயே பாஷா ரூபத்தை நிர்ணயிப்பதான வ்யாகரணம் (இலக்கணம்) எவ்வளவு நன்றாக வரையறை செய்யப்பட்டிருந்திருக்கிறது என்பதைப் பார்த்து மேல்நாட்டுக்காரர்கள் ஆச்சர்யப்படுகிறார்கள். வ்யாகரண விதிகள் என்று மற்ற எல்லா பாஷைகளுக்கும் இருப்பவற்றோடு மட்டுமில்லாமல், ஸ்வரங்கள் என்பதாக மந்த்ரங்களின் ஒவ்வொரு அக்ஷரத்தையும் எப்படி ஏற்றியோ, இறக்கியோ, ஸமமாகவோ உச்சரிக்க வேண்டுமென்பதையும் கற்றுக் கொடுத்தார்கள். ஆதியில் அந்த மந்த்ர சப்தங்கள் ரிஷிகளுக்கு எப்படி அநுக்ரஹமாயிற்றோ அதே ரூபத்தில் சொல்லிக் கொடுத்தார்கள். கால வரையறை செய்யமுடியாத அந்த ஆதி ஸ்கூலிலிருந்து ஆரம்பித்து எத்தனையோ யுகங்களுக்கு அப்புறம் இன்றைக்கு ஒரு கனபாடிகள் ஒரு சிஷ்யனுக்குச் சொல்லிக் கொடுப்பது வரையில், இந்த தேசம் பூராவும் கொஞ்சங்கூட வித்யாஸமில்லாமல் அதே ஸ்வரங்களில்தான் வேதங்களின் அப்யாஸம் இருந்து வந்திருக்கிறது.



## குரு

### எழுத்தில்லாத போதனை

இப்படிச் சொல்லிக் கொடுத்தது எழுத்தின் மூலம் இல்லை. எழுத்துக்கு முக்யத்வம் வந்தது ரொம்பக் காலத்துக்குப் பிற்பாடுதான். இப்போது பள்ளிக்கூடம் என்றவுடன் நினைக்கப்படுகிற கரும்பலகை, சாக்பீஸ், ஸ்லேட், பலப்பம், நோட்டு, பென்ஸில், பேனா என்கிற எதுவும், புஸ்தகம் சுவடி முதலான எதுவுமே இல்லாதது ஆதிகால ஸ்கூல். 'படிப்பு'

என்று கல்வியைச் சொல்வதே புஸ்தகத்தைப் பார்த்துப் படிப்பதிலிருந்து ஏற்பட்டதுதான். அட்சராப்யாஸம் என்று வித்யாரம்பத்தைச் சொல்வதிலும் 'அட்சரம்' என்பது எழுத்தைச் சொல்வதாகவே இப்போது பல காலமாக வைத்துக்கொண்டு, குழந்தைக்கு அன்று 'ஆனா' எழுதச் சொல்லிக் கொடுக்கிறோம். இரண்டாயிரம் வருஷத்துக்கு முந்தியே படிப்பில் எழுத்து பிரதானமாக வந்துவிட்டது என்பது திருவள்ளுவர், ஔவை முதலானவர்கள் எண், எழுத்து என்ற இரண்டையும் இரண்டு கண்களாகச் சொல்வதிலிருந்து தெரிகிறது.

ஆனால் நான் சொல்லும் மிகப் பழமையான வேதகாலத்தில் ஆரம்பித்து, அப்புறம் வெகுகாலம் வரையில் கூட எழுத்து, படிப்பது என்பது அதிகம் இல்லாமல்தான் விஸ்தாரமான வித்யாப்யாஸம் பூராவும் நடந்திருக்கிறது. என்ன செய்தார்களென்றால், வாய்மொழியாகவே சொல்லிக்கொடுத்து அதை மாணவன் காதால் கேட்டு மறுபடி வாயால் ஒப்பிக்கும்படிச் செய்தே பாடம் நடத்தினார்கள். வேதமந்த்ரங்களை எழுதி வைக்க கூடாது என்று பண்ணியிருந்தார்கள். ஏனென்றால் தெய்விகமான அந்த மந்த்ர சப்தங்கள் என்றைக்கும் லோகத்தில் இருந்துகொண்டு, அதன்மூலம் லோக க்ஷேமத்தை உண்டாக்க வேண்டுமென்பதற்காகத்தான். இதற்கும் எழுதி வைக்காமலிருப்பதற்கும் என்ன ஸம்பந்தம்?

லோகத்தில் மந்த்ர சப்தங்களைப் பரப்பிக்கொண்டிருக்கு ம்படியாக ஜனங்களில் ஒரு பிரிவை உறுதியாக ஏற்படுத்தித் தரவேண்டுமானால் அதற்கு என்ன வழி? அவர்கள் எப்போது பார்த்தாலும் இதைச் சொல்லிக்கொண்டிருக்கப் பண்ணி, அப்படிப் பண்ணினால்தான் அவர்களுக்குப் பிழைப்பு உண்டு. தக்ஷிணையோ மான்யமோ கிடைக்கும் என்று வைத்து, வேறே எந்தத் தொழிலுக்கும் அவர்கள் போகப்படாது என்று விதி செய்துவிடுவதுதான். இதற்கு அவர்கள் வேதத்தை ஏதோ அவ்வப்போது புஸ்தகங்களில் பார்த்துப் படிப்பது என்று இருந்தால் ஸரிப்பட்டு வராது. வேதத்தில் வரும் அநகே சப்தங்களை எழுத்தில் கொண்டுவர முடியாது. அதன் ஏற்றல் -இறக்கல் ஸ்வரங்களையும் எழுதிக் காட்ட முடியாது. ஏதாவது பங்க்சுவேஷன் மார்க் போடலாமே என்றால், அச்சுப்பிழை

எழுத்துப்பிழை மாதிரி ஏற்பட்டுவிட்டார் மந்த்ர ரூபம் மாறிப்போய் அதன் பலனே விபரீதமாகிவிட இடமுண்டு. இதெல்லாவற்றோடுங் கூட ரொம்ப முக்யமான காரணம், ஏதோ அவ்வப்போது படிப்பது என்பதாக ஒருத்தனுடைய மனஸின் வெளி லெவலோடு மந்த்ரங்களை நிறுத்தி விட்டால் அவற்றின் பூர்ண ப்ரயோஜனம் உண்டாகவே உண்டாகாது. மந்த்ரங்கள் ஒருவனுடைய மனஸ் பூராவையும் வ்யாபித்து அவனடைய உயிரிலேயே இறங்கி ஊறியிருக்க வேண்டும்.

அப்போதுதான் அவன் சொல்லும் மந்த்ரம் பூர்ணமாக வீர்யவத்தாக இருக்கும். 'எழுதிவைத்துப் படிக்கலாம்' என்று இருந்துவிட்டால் ஒருவன், அதை மனப்பாடம் செய்துகொள்ளாமலே, 'அதுதான் சுவடி இருக்கே ஸமயம் நேரும்போது பார்த்துண்டா போச்சு' என்று இருந்துவிடக்கூடம். அதாவது மந்த்ரம் இவனுக்குள்ளே, அல்லது இவன் மந்த்ரத்துக்குள்ளே ஊறாமல் மேலெழுந் தவாரியாக முடிந்துவிடும். இப்படி விடக்கூடாது என்றுதான் எழுத்தில்லாமல் வாய்மொழியாலேயே ஆதிகால ஸ்கூலில் பாடம் நடத்தி எல்லாவற்றையும் மனப்பாடமாகப் பண்ணிக்கொள்ள வைத்தது.

மந்த்ரம் மாணவனுக்குள் ஊறுவதற்காகத்தான் அவனை புத்திசாலியாக மட்டுமில்லாமல் குணசாலியாகவும் இருக்கப் பண்ணினார்கள். ஏனென்றால் சுத்தமான ஜீவனக்குள்தான் வேத மந்த்ரம் இறங்கி ப்ரகாசிக்கும், அவனையும் ப்ரகாசிக்க வைக்கும். இதனாலேயே வித்யார்த்திக்கு - ஸ்டூடன்டுக்கு - ப்ரம்மசர்ய நியமத்தை வைத்தார்கள். 'தபஸ்' என்றே சிக்ஷை முறையை வைத்தார்கள். வித்யாப்யாஸம் என்பது ஒரு வ்ரதமாக ஆரம்பத்திலே தீக்ஷையுடன் நடந்தது.

பிறக்கும்போது ப்ராம்மணனும் நாலாம் வர்ணத்தவன்தான். உபநயன ஸம்ஸ்காரத்தால்தான் அவன் 'த்விஜன்' என்னும் இருபிறப்பளனாகிறான், அப்புறம் வித்யாப்யாஸத்தால் அவனுக்கு 'விப்ரன்' என்ற பெயர் உண்டாகிறது. இந்த மூன்றும் சேர்ந்து ஒருத்தனை 'ச்ரோத்ரியன்' ஆக்குகிறது. இப்படி சாஸ்த்ரத்தில் இருக்கிறது.

ஜந்மோ ஜாயதே சூத்ர

ஸம்ஸ்காரேர் - த்விஜ உச்யதே

வித்யயா யாதி விப்ரத்வம்

த்ரிபி ச்ரோத்ரிய உச்யதே

இவன் 'ப்ரஹ்ம' எனப்படும் வேதத்தில் ஊறி, அதே ப்ரஹ்ம பதத்தால் குறிப்பிடப்படும் பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தில் ஸித்தி அடையும்போதே 'ப்ராஹ்மணன்' ஆகிறான்.

அதாவது, கல்வி என்பது ஸம்பாதிப்பதற்கு ஸாதனம் என்று நாம் வைத்துள்ள நிலைக்கு ரொம்ப ரொம்ப உச்சத்தில் அது ஒருவனுக்கு அறிவையும், ஆத்ம ஞானத்தையும் கொடுத்து அவனுடைய ஜன்மாவையே கடைத்தேற்றி வைப்பதற்காகவே ஏற்பட்டது என்ற உயர்ந்த லக்ஷியத்தை நம்முடைய ஆதி மூதாதையர் கொண்டிருந்தார்கள்.

வாயால் சொல்லி மாணவனைத் திரும்ப ஒப்பிக்க வைப்பதில் வாத்யார் ஒவ்வொரு மந்த்ரத்தையும் ஐந்து தடவை திரும்பத் திரும்பச் சொல்வார். அவர் ஒரு தடவை சொன்னதுமே அதைப் பிடித்துக்கொண்டு ஒப்பித்துவிடும் புத்திசாலிப் பையனைத்தான் "ஏக ஸந்த க்ராஹி" என்பது.

.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*குலம், சாகை, சாத்ரன், சரணம் முதலியன*

"குலம், கோத்ரம் பார்க்கணும்" என்ற ஒரு வாக்யம் நம்மிடையே அடிபடுகிறது. (இந்தக் கொள்கையையே அடித்துப் போட்டுவிட வேண்டுமென்பதுதான் நம்முடைய நவீன நாகரிக்காரர்களின் அபிப்ராயம்.) ஒரே ரிஷியின் வம்சத்தினுடைய பல கிளைப் பரம்பரைகளைச் சேர்ந்த எல்லோரும் ஒரு 'கோத்ரம்'. 'குலம்' என்றால் இப்படி ஒரே கோத்ரமாக இருக்கிறவர்களில் கிட்டின உறவாக ஒன்று

சேர்ந்திருக்கிறவர்கள். இந்தக் 'குல'த்தில்தான் ஆதிகால ஸ்கூல் ஏற்பட்டதாக நான் சொன்னது. அப்போது 'குருகுலம்' என்ற பெயரைவிட 'ரிஷிகுலம்' என்ற பெயரிலேயே அது அதிகம் பேசப்பட்டது. குரு - சிஷ்யன் என்கிற போது ரக்தபாந்தவ்யம் (ரத்த உறவு) அதில் தெரியாமல், உறவுக்காரராக இல்லாத இருவர்களில் ஒருவர் சொல்லிக்கொடுப்பதாகவும், இன்னொருவர் கற்றுக் கொள்வதாகவுந்தான் தோன்றுகிறது. ஆரம்பகால ஸ்கூலோ ரக்தபாந்தவ்யமுள்ளவர்களிடையே அமைந்த ஒன்றாக இருந்தது. ஆதியில் பிதாதான் குரு என்று சொன்னேனல்லவா? தங்கள் மூதாதையான ஒரு ரிஷி கண்டுபிடித்த - அல்லது கண்டு கொண்ட ஒரு வித்யையைத் தங்களுக்குள் அவர்கள் பரப்பிக் கொண்டதால் அது ரிஷிகுலம் என்று பேர் பெற்றது.

அப்புறம் இப்படி அநேக ரிஷிகள் கண்டு கொண்ட வித்யைகளையும் மந்த்ரங்களையும் ரிஷிகுலங்கள் பல ஒன்றொடொன்று தொடர்பு கொண்டு பரஸ்பரம் பரிமாறிக்கொள்ளும் காலம் வந்தது. இப்படிக் கூட்டுச் சேர்ந்த அநேக குல கோத்ரர்கள் ஒரே விதமான ஆசரணைகளை மேற்கொண்டனர். அங்கங்கேயும் இப்படி வேறு வேறாகப் பல வேறு ரிஷிகளுடைய மந்த்ரங்களை ஒன்றாகத் திரட்டி ஒவ்வொரு பிரிவினர் அதை அத்யயனம் செய்வதாக ஏற்பட்டது. இப்படிக் கொஞ்சம் கொஞ்சம் வித்யாஸத்துடன் ஒரே வேதத்தில் ஏற்பட்ட பிரிவுகளைத்தான் சாகை (கிளை) என்பது. சரித்ர ரீதியாக வித்யாசாலை என்பது வளர்ச்சி கண்டதைப் பார்க்கும்போது, ரிஷிகுலங்களுக்கு அப்புறம் வருவது ஒவ்வொரு சாகையைச் சொல்லிக் கொடுத்த குருகுலங்களேயாகும். இங்கே ரக்த பந்துக்களிடமிருந்து கல்வி ப்ரசாரம் விரிவடைந்து, ஒரே வேதப் பிரிவைச் சேர்ந்த, ஒரே ஆசரணைகளைக் கொண்ட எல்லாரிடமும் பரவலாயிற்று. அப்புறந்தான் ஒரு வேதத்தின் ஒரு சாகை மாத்திரமில்லாமல் பல வேதங்கள், மற்றும் பல வித்யைகள் ஆகியவற்றையும் கற்றுக்கொடுப்பதாக குருகுலம் விரிவு பெற்றது.

மாணவன், வித்யார்த்தி, சிஷ்யன் என்றெல்லாம் நாம் சொல்லும் பையனுக்கு 'சாத்ரன்' என்று அக் காலத்தில் பேர் இருந்திருப்பதாகப் பாணினியின் வ்யாகரணத்திலிருந்து

தெரிகிறது. 'சத்ரம்' என்றால் 'குடை' என்று தெரிந்திருக்கலாம்.

ஒரு குடை ஒருத்தன் தலைக்கு மேலே கவிந்துகொண்டு அவனை வெயில், மழைகளிலிருந்து காப்பாற்றுகிறமாதிரி, குரு என்பவரால் நன்றாக அரவணைக்கப்பட்டுக் கெடுதல்களிலிருந்து காப்பாற்றப்படுவதாலேயே சிஷ்யனக்கு 'சாத்ரன்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இதிலிருந்து குருவுடைய உத்தமமான குணமும் அவருடைய அன்புப் பணியும் தெரிகின்றன. அதாவது கல்வி என்பது அறிவு ஸம்பந்தப்பட்டதாக மட்டும் இன்றைக்குப் போலில்லாமல், நல்ல குணத்தின் ஸம்பந்தமுள்ளதாகவும் இருந்தது என்பதறகாகச் சொல்கிறேன்.

வித்யாசாலைக்கு அப்போது சரணம் என்ற பேர் இருந்ததாகவும் பாணினீயத்திலிருந்து தெரிகிறது. 'சரணம்' என்றால் கால். பாதம், பதம் என்று காலைச் சொல்கிறோம். 'பரமபதம்' என்று மிகவும் உயர்ந்த ஸ்தானத்தைச் சொல்லும்போதும் 'பதம்' என்ற வார்த்தை வருகிறது. கால் நம் உடம்பைத் தாங்கி நிற்கச் செய்வதுபோல, நம் உயிரைத் தாங்கி நிலைத்து நிற்கும்படி செய்யும் பெரிய 'ஸப்போர்ட்'தான் பதம். 'சரணம்' என்று இதே அர்த்தத்தில்தான் குருகுலத்துக்குப் பெயர் கொடுத்திருக்கிறது.

அத்யாபகர் என்று பொதுவாகச் சொல்லப்பட்ட டீச்சர் வேத அத்தயயன -

அத்யாபனங்களில், அதாவது வேத text-களைச் சொல்வதிலும் சொல்லிக் கொடுப்பதிலும் 'கனம்' என்னும் முடிவு வரை போனவராக இருந்தால் அவரை "ச்ரோத்ரியர்" என்பதாகவும் இப்படி மூலநூலான text - இல் தேர்ச்சி பெற்றிருப்பது மட்டுமில்லாமல் அதன் அர்த்தங்கள், தாத்பர்யங்கள் ஆகியவற்றை நன்றாக விளங்ககிக் கூறவும் வல்லவராயிருந்தால் 'ப்ரவக்தா' என்பதாகவும் குறிப்பிட்டதாகத் தெரிகிறது. 'ப்ரவசனம்' பண்ணுபவர் யாரோ அவர் 'ப்ரவக்தர்'

கொஞ்ச காலத்துக்குப் பிற்பாடு முதலிலே சொன்ன ஆசார்யர், உபாத்யாயர் என்ற இரண்டு விதமான டீச்சர்கள் உண்டானார்கள்.

ஒரே குருகுலத்தில் படிப்பவர்களை "ஸப்ரஹ்மசாரிகள்" என்றும் "ஸதீர்த்யர்கள்" என்றும் பாணினி சொல்லியிருக்கிறார். இதே பேர்கள் பிற்காலத்திலும் நீடித்தன இங்கிலீஷில் class - mates என்கிறோம். வடக்கே "குருபாயிக்கள்" என்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *குருதக்ஷிணை*

படிப்பு முடிந்து சிஷ்யன் தருகிற தக்ஷிணை என்னவென்று மநு சொல்லியிருக்கிறார். பசு, பூமி, ஸ்வர்ணம், வஸ்த்ரம், தான்யம், காய்கறி, குடை, பாதரக்ஷை முதலியவற்றில் ஒரு சிஷ்யனால் எது முடியுமோ அதைத் தரலாம் என்கிறார்.

முதலிலேயே பேசிக்கொண்டு கொடுக்கல் - வாங்கல் பிஸினஸாக மாணவன் இரண்டு பேரையுமே ச்ராத்தம் முதலான கர்மாக்களில் ப்ராஹ்மணர்களாக வரிக்கக்கூடாது என்றே மநு தீர்ப்புக் கொடுத்திருக்கிறார். இப்படிக் கற்றுக் கொடுப்பவர்தான் "உபாத்யாயர்" என்று ஞாபகமிருக்கலாம்.

ரக்த பந்துக்கள் மட்டுமேயான ஒரு குலத்திலிருந்து வேதத்தில் அதிகாரமுள்ள எல்லாருக்கும் பொதுவான சாகைக்கு கல்வி போதனை வளர்ச்சி கண்டபோது ப்ராம்மணர்களோடு க்ஷத்ரிய, வைச்யர்களுக்கும் சேர்த்து போதிக்கும் பெரிய குருகுலங்கள் ஏற்படலாயின என்று தெரிகிறது.

# குரு

## பூர்வகாலக் கலைகளும் ஸயன்ஸ்களும்

இப்படிப் போகப் போக, உபாஸனா மார்க்கம்தான் வித்யை என்பதும் விரிவடைந்து, இப்போது நாம் சொல்கிற அர்த்தத்தில் அநேக 'ஆர்ட'களும் ஸயன்ஸ்களும் ஏற்பட்டு, இவையும் வித்யை என்று பெயர் பெற்று குருகுலங்களில் கற்பிக்கப்படலாயின. சாந்தோக்ய உபநிஷதிலேயே இப்படிப்பட்ட வித்யைகளுக்கு ஒரு பெரிய லிஸ்ட் கொடுத்திருப்பதைப் பார்க்கும்போது, 'எத்தனை காலத்துக்கு முன்னேயே நம் பூர்விகர்கள் இத்தனை துறைகளில் தேர்ச்சி கண்டு, அவற்றை முறையாகக் கற்றுக் கொடுத்தும் வந்திருக்கிறார்கள்.' என்பதாக நமக்கு ஆச்சர்யமே உண்டாகிறது.

அநேக வித்யைகளைக் கற்றும் ஆத்ம ஞானத்துக்கு அப்யாஸம் பண்ணாததால் நிறைவு காணாமல் ஏதோ ஒரு ஏக்கம் பிடித்து க்லேசப்பட்டுக் கொண்டிருந்த நாரதம், தாம் படித்த வித்யைகளின் பேர்களை ஸநத்குமாரரிடம் சொல்வதாக அந்த உபநிஷத்தில் வருகிறது. நாலு வேதங்கள், ஐந்தாவது வேதமாக

நாரதங் சொல்கிற இதிஹாஸ புராணங்கள் ஆகியவற்றோடு "வேதங்களின் வேதம்" என்று அவர் குறிப்பிடும் வ்யாகரணம், "பித்ர்யம்" என்பதான பித்ரு கர்மாக்களைப் பற்றிய கல்பம், "ராசி" என்பதான கணித சாஸ்த்ரம், "தைவம்" என்னும் சகுன சாஸ்த்ரம், "நிதி" என்கிற பொருளாதார சாஸ்த்ரம் , "வாகோ வாக்யம்" என்கிற தர்க்க சாஸ்த்ரம், "ஏகாயனம்" என்கிற ராஜநீதி, "தேவ வித்யா" என்பதான நிருக்தம் (அதாவது வேதத்தின் அக்ஷரங்களுக்கு அர்த்தம் சொல்கிற Etumology), "ப்ரஹ்ம வித்யா" (வேதாந்தம் பூராவுக்கும் ஏற்பட்டுள்ள ப்ரஹ்ம வித்யா என்ற பேர் இந்த இடத்தில் வேதமந்த்ர சப்தங்களை வழுவற நிர்ணயித்துத் தரும் சிக்ஷா சாஸ்த்ரம் என்ற phonetics -ஐ மட்டும் குறிக்கும்) "பூதவித்யா" என்னும் ஜீவஜந்துக்களைப்

பற்றியதான Biology "க்ஷத்ரவித்யா என்பதான க்ஷத்ரியர்களுக்குரிய யுத்த சாஸ்த்ரம், அஸ்டரானமி அஸ்ட்ராலஜீ ஆகிய இரண்டும் சேர்ந்த "நக்ஷத்ர வித்யா", விஷங்களை முறிக்க வழி சொல்லித்தரும் "ஸர்ப்ப வித்யா", "தேவஜன வித்யா" (அதாவது உச்சாணி தேவர்களுக்கும் நம்மைப் போன்ற மநுஷ்ய ஜாதிக்கும் இடையிலேயுள்ள 'தேவஜன"ங்களான கந்தர்வர்களுக்குரிய ஸங்கீத நாட்ய நாடக சில்ப சித்ரக் கலைகள்) என்றிப்படி அநேக "கோர்ஸ்"கள் படித்ததாக நாரதர் சொல்கிறார்.

நாரதர் மஹாமேதை பொருந்தியவர். அதனால் அவரால் இத்தனை படிக்க முடிந்தது. அதோடு இத்தனை படிப்பாலும் ஆத்மானந்த நிறைவைப் பெற முடியவில்லை என்று தெரிந்துகொள்கிற விவேக விநயங்களும் அவருக்கு இருந்தது. அதனால்தான் ஸநத்குமாரரை ஆச்ரயித்து அவரிடமிருந்து ஆத்ம வித்யோபதேசம் பெற்றிருக்கிறார். ஈச்வர தத்வத்தைக் காட்டிக் கொடுக்கவே கல்வி ப்ரயோஜனப்படவேண்டும் என்பதும் இதிலேயே தெரிகிறது. அது இருக்கட்டும். 'நான்' சொல்ல வந்தது - இத்தனை கோர்ஸ்கள், இத்தனை ஸப்ஜெக்ட்கள் ஏற்பட்டுவிட்டனவென்றால் அப்போது குருகுலமும் விஸ்தாரமாகிக் கொண்டே போய் பல டீச்சர்கள் இருந்திருக்க வேண்டும். நாரதரைப் போல இல்லாமல் இவற்றிலே ஒரு சில ஸப்ஜெக்ட்களை மட்டும் படிக்கும் மாணவர்களைக் கொண்ட தனித்தனியான பல க்ளாஸ்கள் அமைந்த பெரிய வித்யாசாலைகள் உண்டாயிருக்கவேண்டும். காட்டிலே ரிஷிகள் நடத்திய இப்படிப்பட்ட Forest University - களின் அடிப்படையிலேதான் டாகூர் சாந்தி நிகேதனம் அமைத்தது நாரதருக்கு ஏற்பட்ட குறை பொதுவாக அந்தக் கால வித்யார்த்திகள் எல்லோருக்கும் ஏற்பட்டிருக்காது. ஈச்வர ஸம்பந்தம், ஆத்ம ஸம்பந்தம் உள்ளதாகவே அந்நாள் கல்வி இருந்தாலும் ஒரு ஸாமான்ய ஜீவனை வித்யாப்யாஸ காலத்திலேயே ஒரேடியாக அவனுக்கு எட்டாத ஞானமார்க்கத்தில் பிடித்துத் தள்ளிவிடவில்லை. அறிவு ரீதியில் ப்ரம்ம வித்யையையும் சொல்லிக்கொடுத்தாலும் அதை அப்பொழுதே அவன் அநுபவத்துக்குக் கொண்டுவரவேண்டும் என்று நிர்பந்தப் படுத்தவில்லை. படிப்பு முடிந்த பிறகு அவன் கல்யாணம் கார்த்திகை

பண்ணிக்கொண்டு குழந்தை குட்டிகளைப் பெற்று இல்லற வாழ்க்கையை நன்றாய் நடத்திப் பழைய கர்மாக்களைத் தீர்த்துக்கொண்டும் தனக்கான கர்மாவைப் பண்ணியும் சித்த பரிபாகம் (பரிபக்குவம்) அடைந்து, அப்புறம்தான் ஸந்நியாஸி ஆகி ஆத்மவிசாரம் செய்ய வேண்டுமென்பதே வேத சாஸ்த்ர வழி. இதற்கு அநுகூலம் பண்ணும்படியாகவே கல்விமுறை இருந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *தர்மம் - ப்ரஹ்மம்*

தர்மம், ப்ரஹ்மம் என்று இரண்டு. தர்மம் இஹலோகத்தில் ஒழுங்காக வாழப்பண்ணுவது. ப்ரஹ்மம் பரலோக விஷயம். தர்மத்தின் வழியாக, தர்மத்துக்கான தர்மத்தின் வழியாகத்தான் ஒரு ஸாமான்ய ஜீவன் ப்ரஹ்மவிசாரத்துக்கும் போகமுடியும். தர்மம் என்ன என்று விசாரித்து, அறிந்து, அநுஷ்டிக்கவே பூர்வ மீமாம்ஸையாகிற தர்மமார்க்க சாஸ்த்ரமும், ப்ரம்மத்தைப் பற்றி விசாரித்தறிந்து அநுபவிக்கவே உத்தர மீமாம்ஸையாகிற வேதாந்தமும் உள்ளன. அக்கால வித்யாசாலைகளில் வேதாந்தம் நிறையச் சொல்லிக் கொடுப்பதாகவே பெரும்பாலாருக்கு வைக்கப்பட்டது. அதிலேயே அப்போதே ஈடுபட்டுவிட வேண்டுமென்று வைக்கவில்லை. இஹலோக வாழ்க்கையை நன்றாக நடத்தி - அதாவது தர்மத்தின் வழியிலே நடத்தி - உரிய பக்குவம் பெற்றபின்னரே ஒருத்தன் பூர்வத்தில் அறிவு ரீதியில் தெரிந்துகொண்ட ஆத்ம சாஸ்த்ரத்தில் பூர்ணமாக ப்ரவேசிக்கும்படியாகத்தான் ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்தின் வித்யாப்யாஸமும், பிறகு க்ருஹஸ்தாச்ரமத்தின் வாழ்க்கை க்ரமமும் உருவாக்கப்பட்டன. நாரதர் ஸாமான்ய ஜீவனாக இல்லாமல் அஸாதாரணமர்க இருந்தவராதலால் அவருக்கு தார்மிகமான வாழ்க்கையோடு நின்றுவிடுவதில் வித்யாப்யாஸம் முடித்தபோதே குறை ஏற்பட்டு,

ப்ரஹ்மஞானத்துக்கான ஏக்கம் உண்டாயிற்று. க்ருஹஸ்தாச்ரமத்துக்குப் போகாமல் ப்ரஹ்மசர்யத்திலிருந்தே ப்ரஹ்மஞான நிலைக்குப் போய்விட்டார்.

நாரதர் கதை இருக்கட்டும். ஸாதாரணமான ஒரு மநுஷ்யனை அதர்மத்தில் போக விடாமல் விஷயங்களில் அடிப்படையாக ஒரு பற்றும் கொள்ளும்படி ஆதிகாலக்கல்வி முறை அமைக்கப்பட்டது. அது எப்படி காலக்ரமத்தில் விஸ்தாரமாக வளர்ந்தது என்று சொன்னேன்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *வைதிகமாகவே ஸகல வித்யைகளும்*

இன்னொரு முக்யமான விஷயம் சொல்ல வேண்டும். வித்யை என்றால் வைதிகமான வித்யையாகவே இருந்த காலம் அது. அதனால் எந்த ஆர்ட், ஸயன்ஸானாலும் அதுவும் கூட வேத அத்யயனத்தோடும், வேத வித்யைகளான பதிநாலோடும் சேர்த்துத்தான் வைதிகமான வாழ்முறைக்குப் பயன்படுவதாகவே போதிக்கப்படும்.

இதிலே வேடிக்கை என்னவென்றால் வேதம் முழுவதையும் ஒப்புக்கொள்ளாமல் அதில் ஒரு பகுதியை மட்டும் ஒப்புக் கொள்ளும் பூர்வ மீமாம்ஸை முதலான வித்யைகளையும், அடியோடு வேதத்தையே ஒப்புக்கொள்ளாத சார்வாகம் முதலிய வித்யைகளையும், வேதத்தை ஆதரிப்பதாகவும் சொல்லமுடியாமல் ஆக்ஷேபிப்பதாகவும் சொல்லமுடியாமல் அதற்கு நேர் ஸம்பந்தமில்லாமல் இன்டிபென்டென்ட் - ஆக ஏற்பட்டட ஸாங்க்யம், யோகம் முதலான வித்யைகளையுங்கூட வேத அத்யயனத்தோடு சேர்த்தேதான் சொல்லிக் கொடுத்தார்கள். பிற்பாடு வேத ப்ராமாண்யத்தை ஆக்ஷேபித்து அவைதிகமான பௌத்த மதம் தோன்றி, பௌத்தர்கள் யுனிவர்ஸிடிகள் நடத்தியபோதுகூட அவற்றிலே சதுர்தச (பதிநான்கு) வேதவித்யைகளையும் சொல்லிக் கொடுத்தார்கள்.

## குரு

*எல்லா ஜாதியாரும்*

பல தொழில்களுக்கான பல வித்யைகள் ஏற்பட்ட போது வேத அத்யயனத்துக்குத் தகுதி பெற்ற த்ரைவர்ணிகர்களும் (ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்யர்களான மூன்று வர்ணத்தினரும்) குருகுலங்களில் சேர்ந்து படித்தார்கள். நான்காம் வர்ணத்தவர்கள் குருகுலத்தின் ஆசார்யமார்கள் போஜனம் முடித்தபின் அவர்களிடம் வந்து தங்களுடைய தொழிலுக்கான சாஸ்த்ரங்களைத் தெரிந்துகொண்டு போவார்கள். ஒவ்வொரு வர்ணத்தாருக்கும் குருகுலத்தின் மூலமாக எந்தெந்த அளவுக்கு கல்வி பெறவேண்டிய அவசியமிருந்தது என்பதை அப்புறம் சொல்கிறேன். அப்போது இந்த முறையில் பராபக்ஷம் எதுவுமில்லை என்பது புரியும்.

மொத்தத்தில் குருகுலவாஸமாகவே குருவோடுகூட இருந்து படித்த த்ரைவர்ணிகர்களும்கூட ஒரே மாதிரியான கோர்ஸ் படிக்கவில்லை. குருகுலவாஸம் எத்தனை வருஷம் என்பதிலும்கூட அவர்களுக்குள் வித்யாஸமிருந்தது. மூன்று வர்ணத்தினரும் வெவ்வேறு வயஸுகளில்தான் உபநயன ஸம்ஸ்காரம் பெற்று குருகுலத்துக்கு அனுப்பபட்டார்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*கட்டாய கல்வி*

இந்த வித்யாஸங்கள் இருக்கட்டும். நான் சொல்ல வந்த முக்யமான விஷயம் என்னவென்றால், வித்யாப்யாஸத்துக்கு அர்ஹதை உள்ள மூன்று வர்ணத்தாரில் ஸகலரும் கட்டாயமாக ப்ரஹ்மோபதேசம் பெற்று, குருவிடம் கல்வி கற்றே ஆகவேண்டுமென்று சாஸ்த்ரங்களில் விதித்திருக்கிறது. இஷ்டமிருந்தால் படிக்கலாம், இல்லாவிட்டால் போகட்டும் என்று விடாமல் கம்பல்ஸரி எஜுகேஷனாக நடத்தியிருக்கிறார்கள். இப்படிச் செய்யாவிட்டால் கடுமையான தண்டனை விதித்திருக்கிறது. அக் காலத்தில் யாரும் ரொம்பப் பெரிய தண்டனையாக நினைத்து அவமானப்பட்டது ஜாதிப்ரஷ்டம்தான். வித்யாப்யாஸத்தூகக்கு வராத ப்ரஹ்ம, க்ஷத்ர, வைச்யர்களை இப்படி ஜாதி ப்ரஷ்டம் செய்யும்படியாகவே சாஸ்த்ரம் சொல்கிறது. இவர்களுடைய ஸந்ததியையும் 'வ்ராத்யர்கள்' என்பதாக ஸமூஹத்திலிருந்து ஒதுக்கிவைத்துவிட வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. வேத ஞானமும் கல்வியறிவும் அவற்றுக்குத் தகுதிபெற்ற எல்லாரிடமும் பரவுவதை கருதி வலியுறுத்தியிருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*பாத்திரமறிந்து*

கட்டாய பாடம் என்பதால், ஏதோ அரை மனஸாக வந்து, கற்றுக்கொண்டதாகப் பேர் பண்ணிவிட்டுப் போய்விடமுடியாது. முழுமனஸுடன் முழு 'கோர்ஸை'யும் நல்ல ப்ரஹ்மசர்ய நியமங்களோடு படிக்கக்கூடிய ஸத்பாத்ரத்துக்கே கற்றுக்கொடுக்க வேண்டுமென்று தர்ம சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

சுத்தனாகவும், க்ரஹண - தாரண சக்தியுள்ளவனாகவும்

வித்யார்த்தி இருக்க வேண்டுமென்கின்றன. சொல்லிக்கொடுப்பதை நன்றாக க்ரஹித்துக் கொள்வதே ச்ரஹண சக்தி. அப்புறம் அதை மறக்காமல் புத்தியில் இருத்திக் கொள்வது தாரணசக்தி.

கம்பல்ஸரி என்றும் வைத்துவிட்டு, இப்படித் தகுதியும் வைத்தால் என்ன அர்த்தம்? இயற்கையாகவே க்ரஹண - தாரண சக்தி போதாதவன் என்ன பண்ணுவது? இதற்காகத்தான் முதலில் ப்ரஹ்மோபதேசம் என்று காயத்ரியை உபதேசித்து, அப்புறம் வித்யாப்யாஸத்தில் விடுவது என்று வைத்தார்கள். காயத்ரியை ஒழுங்காக ஜபித்து வந்தால் எவனுக்கும் க்ரஹண - தாரண சக்திகள் உண்டாகிவிடும்.

முறையாக காயத்ரீ அநுஸந்தானம் செய்யாததால் க்ரஹண - தாரண சக்திகளைப் பெறாதவன், அஸத்தாக இருக்கிறவன் ஆகியோருக்கு வித்யையைக் கொடுக்கக்கூடாது என்றும், அப்படிப்பட்டவர்களை ஸமூஹத்திலிருந்து ஒதுக்கிவிட வேண்டுமென்றும் வைத்தார்கள்.

நல்ல விதையானாலும் ஊஷர பூமியில் (உவர் நிலத்தில் விதைத்தால் வீணாகப் போவதுபோல் ஸத்வித்யையும் அஸத்துக்கு உபதேசிக்கப்பட்டால் வீணாகும் என்று சாஸ்த்ரம் எச்சரிக்கிறது.

இப்படிச் சொல்லியிருக்கிறது. யோக்யதையுள்ள சிஷ்யன் கிடைக்கவேயில்லை என்றாலும்கூட ஒரு வித்வான் தன் வித்யையோடேயே செத்தாலும் சாகட்டும், ஆனால் என்ன ஆபத்து வந்தாலும் அபாத்ரத்துக்கு மட்டும் அதைக் (கற்றுக்) கொடுத்துவிடக்கூடாது. ஒரு கதை மாதிரிக்வடச் சொல்லியிருக்கிறது. வித்யா தேவதை ஒரு ப்ராம்மணனிடம், எப்படி கவனமாகக் காப்பாற்றி, கருத்தாகச் செலவழித்து, தக்காருக்கே விநியோகம் பண்ணுவாயோ அப்படித்தான் என்னையும் நீ பண்ண வேண்டும். சுத்தனாய், ஜிதேந்த்ரியனாய், ச்ரத்தையோடு வித்யாப்யாஸம் செய்கிறவனாய், 'இதை நிதியாக ஸம்ரக்ஷிக்க வேண்டும்' என்று நினைக்கிறவனாய் உள்ளவனுக்குத்தான் என்னை நீ உபதேசிக்க வேண்டும்" என்று சொல்வதாக (தர்ம சாஸ்த்ரம்) தெரிவிக்கிறது.

அக்கறையோடும், பக்தியோடும் கேட்காதவனுக்கும், தர்ம விரோதமாக வித்யையை ப்ரயோஜனப்படுத்தக் கூடியவனுக்கும் சொல்லிக் கொடுக்கவேகூடாது என்று மநு தர்ம சாஸ்த்ரத்தில் இருக்கிறது.

எல்லா தர்ம சாஸ்த்ர க்ரந்தங்களுமே பாத்ரம் பார்க்காமல் பணத்துக்ககாக வித்யையைக் கற்றுக் கொடுப்பவன் நரகத்துக்குப் போவான் என்று ரொம்பவும் பயப்படும்படியாகச் சொல்லியிருக்கின்றன.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*பிற்கால மாறுதலும் தற்கால விபரீதமும்*

அறிவு குணம் இரண்டாலும் வித்யார்த்தி யோக்யதாம்சமுள்ளவனாக இருக்கவேண்டுமென்பது பூர்விகர் ஏற்பாடு. பிற்பாடு ஸ்கூல் என்று வைத்துவிட்டபின், 'க்ளாஸில் ரொம்ப ரௌடித்தனம் பண்ணாமலிருக்கிறானா?' என்று பார்ப்பதற்கு மேல் குணத்தைப் பற்றிப் பார்க்க வேண்டியதில்லையென்றும், அறிவுக்குறைவை வைத்தே ஃபெயில் பண்ணுவதென்றும் அல்லது முதலிலேயே அட்மிஷன் கொடுக்காமலிருப்பதென்றும் ஆயிற்று. அதுவும் தற்காலத்தில் மாறிப்போய் ரௌடித்தனம் பண்ணுகிறவனின் இஷ்டப்படியே அவனுக்கு மார்க் போட்டு விடுவது என்று பயப்படுகிற ஸ்திதிக்கு வந்திருக்கிறது.

குணத்தையும் பார்க்கவேண்டாம், அறிவையும் பார்க்க வேண்டாம், எலெக்ஷனில் வோட் வாங்க யாருடைய ஆதரவு தேவையாயிருக்கிறதோ அந்த வர்க்கத்தைச் சேர்ந்த பசங்களாயிருந்துவிட்டால் போதும், அது ஒன்றுதான்

யோக்யதாம்சம் என்று ஆகியிருக்கிறது. ஆனால் அப்படிச் சொல்லிக்கொள்ளாமல், 'பிற்பட்டவரை முன்னுக்கு கொண்டுவருகிறோம், தாழ்த்தப்பட்டவரை உசத்துகிறோம்' என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

(இவை) அவச்யம் செய்யவேண்டிய கார்யங்கள்தான். ஆனால் எதையுமே அளவறிந்தும் முறையுடனும் செய்ய வேண்டும். பொது க்ஷேமத்தையும், ஸகல ஜனங்களுக்கும் கிடைக்கவேண்டிய நீதி ந்யாயத்தையும் கவனிக்காமல் செய்தால் அனர்த்தம்தான் ஏற்படும்.

இன்றைக்கு உள்ள சில ஸமூஹங்களைச் சேர்ந்த பசங்களின் தாத்தாவும் கொள்ளுத்தாத்தாவும் ஆதிகாலப் பூர்விகர்களும் நிறையக் கல்வி கற்றபோது, வேறு சில ஸமூஹத்தினர் அப்படிச் செய்யவில்லை அல்லது செய்யமுடியவில்லை என்பதற்காக, "என்றைக்கோ உங்கள் தாத்தாவும், அவருக்குத் தாத்தாவுடைய தாத்தாவும் படிப்பிலே கொடிகட்டிப் பறந்து விட்டார்களோல்லியோ? அதனாலே இன்றைக்கு நீங்கள் எத்தனை புத்திசாலிகளாயிருந்தாலும் உங்களை இரண்டாம் பக்ஷமாகத்தான் கருதிக் கலாசாலைகளில் இடம் கொடுப்போம். உங்களைவிடத் தகுதியிலே குறைந்திருந்தாலும் யாருடைய தாத்தா, முத்தாத்தா படிக்கவில்லையோ அவர்களுக்குத்தான் இடம் ரிஸர்வ் பண்ணி வைப்போம்" என்கிறார்கள்.

இப்படிச் சொல்வது வேறு எதற்குப் பொருந்தினாலும் பொருந்தும் - ஆனால் பகுத்தறிவுக்கு எப்படிப் பொருந்துகிறது என்பது புரியவில்லை. ஆனாலும் தங்களைப் பகுத்தறிவாளிகளாகச் சொல்லிக் கொள்கிறவர்கள்தான் இப்படிச் செய்து வருகிறார்கள். ஆதியிலே நிஜமாகவே ஜனஸமூஹம் தொழில்களால் ஜாதியாகப் பிரிந்திருந் தபோது, அந்தப் பிரிவனைக்கு ஒத்தாசையாகவே செய்திருந்த கல்வி முறையின் ஏற்பாட்டிட ஜாதிக் கொடுமை என்கிறார்கள். இன்றைக்குத் தாங்கள் அறிவுத் தகுதியைவிட ஜாதிதான் முக்யம் என்று ஏகத்தாறாக ரிஸர்வ் செய்வது அதைவிட ஜாதிக்கொடுமையாக இருந்தவோதிலும் இதை முற்போக்கு, ஸமநீதி, பகுத்தறிவாளர் கொள்கை என்றெல்லாம் சொல்வது ஆச்சர்யமாயிருக்கிறது.

பின்னாலிருப்பவரை முன்னால் கொண்டு போவதை யாரும்

ஆக்ஷேபிக்கவில்லை. அதற்காக முன்னால் இருப்பவர்களில் தாங்களாகவே முன்னேறக் கூடியவர்களையும் பின்னாலே தள்ளிவைப்போம் என்பதற்குத்தான் ஆக்ஷேபம், பசிக்கிறவனக்குச் சாதம் போடட்டும். அதற்காக, சாப்பிட்டுக் கொண்டிருக்கிறவனின் வயிற்றிலடிக்க வேண்டியதில்லை.

ஸம தர்மம், அபேதம் என்ற பரம உத்தமமான தத்வங்கள் இப்போது விபரீதமாக நடைமுறைக்கு வந்து கொண்டிருப்பதில் ஒரு அம்சம்தான் இதுவும். ஜாதிகள் போகவேண்டுமென்பவர்களே தங்களுடைய கல்வி உத்யோகக் கொள்கைகளால் ஜாதிகளை ஆழமாக, அழுத்தமாக முத்ரை போட்டுக் கெட்டிப்பது

இந்த வீபரீதத்தில் பெரிய விசித்ரம்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*"யாரார் வாய் கேட்பினும்"*

ஆதி காலத்தில் எப்படிப் படிப்பை ஜாதி ஸம்பந்தமில்லாமல் வைத்திருக்கிறார்கள் என்பது ஒரு கொள்கையிலிருந்து தெரிகிறது. கல்வியை, அதாவது விஷய ஞானம் பெறுவதை அந்தப் பூர்வ காலத்தில் எவ்வளவு பெரிதாக மதித்திருக்கிறார்களென்பதும் இதிலிருந்து தெரிகிறது. அதாவது ஒரு ஜாதியார் தங்களிடம் இல்லாத, அல்லது முற்காலத்தில் இருந்து பிறகு நஷ்டப்பட்டுப் போன வித்யைகளை எந்த ஜாதியாரிடமிருந்தும் கற்றுக் கொள்ளலாமென்று தர்ம சாஸ்த்ரங்கள் தாராளமாக

அநுமதித்திருக்கின்றன.

நல்ல வித்யை ஒன்றையோ, அல்லது உயர்ந்த தர்மப் பண்பு ஒன்றையோ, அல்லது ரொம்பவும் உத்தமமான கன்னிகை ஒருத்தியையோ எந்த ஜாதியாரிடமிருந்தும் பெற்றுக் கொள்ளலாமென்று மநுவே சொல்லியிருக்கிறார். ஆனால் இதில் கன்னிகை விஷயம் மாத்திரம் இந்த்ரிய ஸம்பந்தமாகக் காதல் கீதல் என்று போய், அப்புறம் அதற்குச் சப்பைக் கட்டு கட்டவதற்காக அந்தக் கன்னிகைக்கு உத்தமமான ஸம்பத்தைக் கல்பித்து க்ருத்ரிமங்கள் செய்ய இடங்கொடுத்து விடுமென்பதால் பிற்பாடு தர்ம சாஸ்த்ரத்தில் இவ்விஷயத்தில் வர்ண தர்மத்துக்கு விரோதமாகப் போகவே கூடாது என்று வைத்துவிட்டார்கள். ஆனால், தர்மம், வித்யை - அதாவது அறம், அறிவு - இரண்டையும் ப்ராம்மணன்கூட அப்ராம்மணரிடமிருந்து கேட்டுப் பெற்றுக் கொள்ளலாமென்று சொல்லியிருக்கிறார்கள்.

அறமும் அறிவு நூலால் வருவதே, அறிவு நூலின் பயனும் அறத்துக்கு உதவ வேண்டுவதே. ஆகையால் இவற்றைப் பிரித்தூககூடச் சொல்லக்கூடாது. அந்நிய தேசத்தினரோ, காட்டுமிராண்டகளோ ஒரு பிரதேசத்திலுள்ள ப்ராம்மண வித்வான்களையெல்லாம் ஒழித்துவிட்டால், அல்லது வேறே ஏதோ காரணத்தால் ஒரு ப்ரதேசத்தில் ப்ராம்மணர்களுடைய வேதாப்யாஸம் நின்று போய்விட்டதென்றால், இப்படிப்பட்ட ஆபத்துக்காலத்தில் ப்ராம்மணனாகப் பிறந்தவன் அங்கேயுள்ள க்ஷத்ரியர்களிடமோ வைச்யர்களிடமோ வேதத்தையேக்கூடக் கற்றுக் கொள்ளலாம் என்கறி அளவுக்கு மநு போயிருக்கிறார்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு.

என்று திருக்குறளில் சொல்லியிருக்கிறது.

எந்த விஷயமாகட்டும், அதை யார்தான் எடுத்துச் சொல்லட்டும், அதன் ஸரியான தாத்பர்யம் என்னவென்று பார்த்து ஏற்றுக்கொள்வதே புத்திசாலித்தனம் என்று அர்த்தம். இப்படிச் சொன்னதால் முதலிலேயே எந்த ஒரு வித்யையும் தப்பு என்று ஒதுக்கி வைத்துவிடாமல் அதிலும் ஏதாவது உசந்த கருத்து இருக்குமோ என்று ஆலோசிக்க

வேண்டுமென்று ஏற்படுகிறது. அதேபோல, "போயும் போயும் இவர்களிடமா கற்றுக்கொள்வது? இவர்கள் சொல்லியா கேட்டுக் கொள்வது" என்றெல்லாம் நினைக்காமல், "சொல்வதில் தாத்பர்யம் இருந்தால் எடுத்துக் கொள்வோம்" என்று நினைக்க வேண்டுமென்றும் ஏற்படுகிறது. இந்த இரண்டு பண்புகளையும் தர்ம சாஸ்த்ரங்களில் வெகுவாக ஆதரித்து வற்புறுத்தியிருக்கிறது.

"விஷயமிருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்று பொய் ஸமாதானம் சொல்லிக்கொண்டு, கன்னாபின்னா ஸமாசாரங்களைக்கூட ஒருத்தன் படிக்கலாம். அதாவது "எப்பொருளை"யும் படிக்கலாம். ஆனால் உசத்தி தாழ்த்தி பார்க்காமல் "யாரார் வாய் கேட்பது" லேசில் முடியாது. அதனால் இந்த அம்சத்தை சாஸ்த்ரம் நன்றாக அழுத்தம் கொடுத்து எடுத்துச் சொல்லியிருக்கிறது.

கோபத்திலே கொக்கை எரித்த கொங்கண ரிஷி ஒரு ஸ்த்ரீயிடமிருந்து அநேக தர்மங்களைத் தெரிந்துகொண்டு, அப்புறம் அவள் வார்த்தைப்படி பாக்கியிருந்த தர்மங்களை ஒரு கசாப்புக் கடைக்காரனிடம் கேட்டறிந்ததாக மஹா பாரதத்தில் இருக்கிறது. அந்தக் கதையைவிட நம் பூர்விகர்கள் அறிவுக்காக "யாரார் வாய் கேட்க"வும் தயாராயிருந்ததற்குப் பெரிய சான்று வேண்டாம்.

## இன்னொர் உண்மை

இவ்வாறு ப்ராம்மணர்களுக்கும் போதிக்கக் கூடிய அளவுக்கு விஷயமறிந்த நாலாம் வர்ணத்தினர் இருந்திருக்கிறார்கள், "அவர்களிடம் போய் நீங்கள் கற்றுக் கொள்ளலாம்" என்று தர்ம சாஸ்த்ரங்களே குறிப்பிட்டுச் சொல்கிற அளவுக்கு இருந்திருக்கிறார்கள் என்பதிலிருந்து இன்னொரு உண்மையும் தெரிகிறது. தற்காலத்தில் நினைப்பதுபோல ப்ராம்மணர்கள் அவர்களை ஒரேயடியாக அறிவில் இருட்டு நிலையிலேயே ஒதுக்கி வைத்திருக்கவில்லை என்று தெரிகிறது. நேராக அவர்களுக்கு வேத பாடம் சொல்லித் தராவிட்டாலும், அவர்கள் தங்கள் தொழிலிலி சாஸ்தரக் கல்வி பெறுவதற்காக வரும்போது, அவர்களுக்கு ப்ராம்மணர்கள் தொழிற்கல்வியோடு நிறைய தர்மோபதேசமும், ஞானோபதேசமும் செ சய்திருக்கிறார்கள். முக்யமாகப் புராணங்களின் மூலமே இந்த உபதேசங்களைச் செய்திருக்கிறார்கள். இப்படியாக அவர்களில் நல்ல தார்மிக, ஆத்மிக வித்யா ஸம்பத்தைப் பெற்றுக் கொண்டவர்களாகப் பல பேர் ஏற்பட்டதால்தான், அப்புறம் ப்ராம்மணர்களிலேயே அவ்வளவு அறிவு பெறாதவர்கள் அவர்களிடம் போய்க் கேட்டுக்கொள்ள இடமேற்பட்டிருக்கிறது

இதிலே ரொம்பவும் ஆச்சர்யப்படத்தக்க த்ருஷ்டாந்தம் முதல் முதலில் அந்தப் புராணங்கள் உபதேசமாகி ப்ரசாரம் செய்யப்பட்டதிலேயே இருக்கிறது. வேதங்களை ப்ராம்மண சிஷ்யர்கள் மூலம் ப்ரசாரம் செய்த வ்யாஸ பகவான் புராணங்களைச் செய்து அப்ராம்மணராகிய ரோமஹர்ஷண ஸூதர் என்பவருக்கே அவற்றை உபதேசித்து ப்ரசாரம் பண்ண அனுப்பினார். ஸத்பிராமணர்களாகிய நைமிசாரண்யத்து ரிஷிகள் அந்த ஸூதருக்கு ரொம்பவும் மரியாதை செய்து, அவரைப் பீடம்போட்டு உட்கார்த்தி வைத்து, அவரிடம் புராணங்களைக் கேட்டுக் கொண்டார்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

வித்யாதானத்தின் உயர்வு

லோகோபகாரமாகச் செய்யக்கூடிய அநேகப் பணிகளில் ஸத்பாத்ரதுக்கு வித்யையை போதிப்பதற்கு ஸமமாக எதையும் சொல்ல முடியாது என்று நம் முன்னோர் அபிப்ராயப்பட்டனர். 'வித்யாதானம்', 'வித்யாதானம்' என்று இதை மிகவும் விசேஷித்துச் சொல்லியிருக்கிறது. 'தானம்' என்ற பதத்தைப் போட்டதாலேயே, கற்றுக் கொடுக்கிற ஆசார்யர் வித்யார்த்தியிடமிருந்து எந்த த்ரவ்ய லாபமும் எதிர்பார்க்கக்கூடாது என்று ஏற்படுகிறது.

மநுஸ்ம்ருதியில் இதைப் பற்றிச் சொல்லும்போது, "தானங்களிலேயே சிறப்பு வாய்ந்தவற்றுக்கு அதிதானம் என்று பேர். கோதானம், பூதானம், வித்யாதானம் ஆகிய மூன்றும் அதிதானங்கள். அன்னதானமும் உயர்வானது. வயிற்றுக்கு அன்னம் போடுவதைவிட அறிவுக்கு அன்னமாக வித்யாதானம் செய்வது சிறப்புடையது. வித்யைகளில் பல இருக்கின்றன. இவற்றில் எதை தானம் செய்வதுமே விசேஷந்தானென்றாலும், வித்யைகளுக்குள்ளேயே தலை சிறந்ததாக உள்ள ஆத்ம வித்யையான ப்ரஹ்ம வித்யையை வித்யாதானம் செய்பவனுக்கு தேவலோகமான ஸ்வர்க்கம் மட்டுமின்றி, ஸம்ஸார பந்தமே தீர்ந்து பரமாத்மாவோடு ஐக்யப்பட்டிருப்பதான மோக்ஷமும் கிட்டிவிடுகிறது" என்றெல்லாம் புகழ்ந்து சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## *குரு*

### *கல்வித் திட்டத்தில் கால அளவைகள்*

தற்காலத்தில் வேத பாடசாலைகளில் பன்னிரண்டு வருஷ கோர்ஸ் வைப்பது வழக்கமாயிருந்தது. பாஷ்யங்களையும் நன்றாகப் படித்து நல்ல அர்த்த ஞானம் பெறுவதற்கு இதற்கப்புறம் எட்டு வருஷம் படிக்கவேண்டியிருக்கிறது. பூர்வகாலத்தில் மாணவனின் புத்தியைப் பொறுத்ததும், அவன் எந்த வித்யைகளை எவ்வளவு தூரம் அப்யஸிக்க விரும்புகிறான் என்பதைப் பொறுத்தும் வித்யாப்யாஸ காலம் நிர்ணயிக்கப்பட்டிருந்தது. பன்னிரண்டு வருஷமே பொதுவாக ஏற்பட்டது. அதம பக்ஷம் ஒன்பது வருஷம். பதினெட்டு வருஷ, முப்பத்தாறு வருஷக் கோர்ஸ்களும் இருந்திருக்கின்றன. வாழ்நாள் முழுதும் நன்றாக ஸ்பெஷலைஸ் பண்ணிக்கொண்டே போவதற்கு வசதியாக, 'இத்தனை வருஷம்' என்று கட்டுப்படுத்தாமல் கோர்ஸ்களும் இருந்திருக்கின்றன. வாழ்நாள் முழுதும் நன்றாக ஸ்பெஷலைஸ் பண்ணிக்கொண்டே போவதற்கு வசதியாக, 'இத்தனை வருஷம்' என்று கட்டுப்படுத்தாமல் கோர்ஸ்கள் வைத்திருந்ததாகக்கூட மநுஸ்ம்ருதியிலிருந்து தெரிகிறது. அறிவுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, கல்யாணம் க்ருஹஸ்தாச்ரமம் இல்லாமல் கல்வியிலேயே ஒருவன்

ப்ரஹ்மசாரியாக வாழ்நாள் முழுதும் ஈடுபட்டிருக்க தர்ம சாஸ்த்ரம் அநுமதி தருகிறது. சுத்த ப்ரஹ்மசாரியாக இருக்கக்கூடியவன், விசேஷமான புத்தி ப்ரகாசமுள்ளவன் என்பதாக குரு நன்றாகப் பரீக்ஷித்து நிச்சயப்படுத்திக் கொள்ளக்கூடியவனுக்கு மாத்திரமே இப்படி ஆச்ரம விதிகளிலிருந்து விலக்கு தந்திருக்கிறது. அவனைத்தான் நைஷ்டிகன், நைஷ்டிக ப்ரம்மசாரி என்பது.

கல்வித் திட்டத்தில் ஒவ்வொரு வருஷத்தையும் இரண்டு டெர்ம்களாகப் பிரித்திருந்தார்கள். முதல் டெர்ம் சுமார் ஐந்து மாஸம் கொண்டது. இரண்டாவது டெர்ம் சுமார் ஏழு மாஸ காலம். முதல் டெர்முக்கு 'உபாகர்மம்' என்றும் இரண்டாவது டெர்முக்கு 'உத்ஸர்ஜனம்' அல்லது 'உத்ஸாகம்' என்றும் பெயர்.

உபாகர்மம் என்றவுடன் சில பேருக்காவது 'ஆவணியாவட்டம்' - அதவாது வருஷா வருஷம் புதுப்பூணூல் போட்டுக் கொள்ளும் நாள் - என்று நினைவுக்கு வரலாம்.

இது ரிக் வேதிகளுக்கு ச்ராவண மாஸத்தில் ச்ரவண நக்ஷத்ரம் வரும் நாள். ச்ராவண மாஸம் என்பது ஆடி அமாவாஸ்யையிலிருந்து ஆவணி அமாவாஸ்யை வரையுள்ள காலம். ச்ராவணி என்பதன் திரிபுதான் ஆவணி.

யஜுர் வேதிகளுக்கு உபாகர்மம் என்பது ச்ராவண மாஸப் பௌர்ணமியன்றாகும்

ரிக் வேதிகள் ச்ரவண நக்ஷத்ரத்தை வைத்து நாளை நிர்ணயிக்கிறார்கள். யஜுர் வேதிகள் பௌர்ணமித் திதியை வைத்து நிர்ணயம் செய்கிறார்கள்.

மிகவும் பூர்வ காலத்தில் ச்ராவண மாஸப் பூர்ணிமை தப்பாமல் ச்ரவண நக்ஷத்ரத்தன்றேதான் வந்து கொண்டிருந்தது, அதனால்தான் அந்த மாஸத்துக்கே அப்படிப் பேர். தப்பாமல் ச்ரவண நக்ஷத்ரமும் பௌர்ணமியும் ஒன்றாகவே இருந்த காலத்தில் அந்த நாளில்தான் ரிக் வேதிகள் யஜுர்வேதிகள் ஆகிய இருவரும் உபாகர்ம டெர்மை ஆரம்பித்தார்கள். அப்புறம் க்ரஹக் கோளாறில் அம்மாஸப் பௌர்ணமியன்று ச்ரவண நக்ஷத்ரத்துக்கு அடுத்ததான அவிட்டம் வந்தபோதும் யஜுர்

வேதிகள் பௌர்ணமித் திதியிலேயே உபாகர்மாவை வைத்துக் கொண்டார்கள். தர்ம சாஸ்த்ரங்களில் குறிப்பாக 'ச்ராவண பூர்ணிமையில் உபாகர்மம் செய்யவேண்டும்' என்றே சொல்லியிருப்பதால் (பூர்ணிமைத்) திதியை யஜுர் வேதிகள் முக்யமாக எடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அதனால் அவிட்டத்தில் அந்தப் பூர்ணிமை வந்தாலும் அன்றைக்கே உபாகர்மா செய்தார்கள்.

இதுதான் "ஆவணி அவிட்டம்" - அதாவது "ஆவணியாவட்டம்" என்று நாம் சொல்வது.

ரிக்வேதிகள் இப்போதும் திதியைப் பார்க்காமல் சரவண நக்ஷத்திரத்திலேயே உபாகர்மாவை "ச்ராவணம்" என்றே சொல்வது இதனால்தான். இப்படியாக, ரிக்வேதிகளுடைய உபாகர்மாவுக்கு அவிட்ட ஸம்பந்தமேயில்லை. ஆனாலும் தக்ஷிணத்தில் யஜுர்வேதிகளே பெரும்பாலாராயிருப்பதால் அவர்கள் கொடுத்த "ஆவணியாவட்ட"ப் பெயரையே ரிக் வேதிகளும் தங்களுடைய உபாகர்மாவுக்கும் சொல்கிறார்கள்.

இப்போதும் சில வருஷங்களில் ச்ராவண மாஸப் பௌர்ணமி ச்ரவண நக்ஷத்ரத்திலேயே வருகிறது. அப்போது ரிக் வேதிகள் யஜுர்வேதிகள் ஆகிய இரண்டு பேருக்கும் ஒரே நாளில் உபாகர்மா வருகிறது.

ஸாமவேதிகள் இதற்கு ஒரு மாஸம் தள்ளி(ஆவணி அமாவாஸ்யையிலிருந்து புரட்டாசி அமாவாஸ்யை வரையுள்ள ஒரு மாத காலமாகிய) பாத்ரபத மாஸத்தில் ஹஸ்த நக்ஷத்ரத்தில் உபாகர்மா செய்கிறார்கள். அநேகமாக அது பிள்ளையார் சதுர்ததியாகவோ அல்லது அதற்கு ஒரு நாள் முன்னே பின்னேயோ இருக்கும். ஹஸ்தமும் பஞ்சமியும் ஒன்று சேர்ந்திருந்தால் விசேஷமென்று சாஸ்த்ரங்களிலிருந்து தெரிகிறது. ச்ராவண மாஸப்பூர்ணிமையும் ச்ரவணமும் தப்பாமல் சேர்ந்தே வந்த அக்காலத்து பாத்ரபதமாஸத்தில் ஹஸ்தம் பஞ்மியிலேயே வந்திருப்பதாகத் தோன்றுகிறது. தற்போது அது அநேகமாகப் பிள்ளையார் சதுர்த்தியன்றோ, அல்லது அதற்கு முதல் தினமான த்ரிதீயையாகவோ வருகிறது.

உபாகர்மம் என்பதே இப்போது பல பேருக்குத் தெரியாத வார்த்தை. (தாங்கள் என்ன வேதம் என்பதுகூட அநேகம்

பேருக்குத் தெரியாமலிருக்கலாம்) தெரிந்தவர்களில் பெரும்பாலாரும் அது பழைய பூணூல் சிக்குப்பிடித்து அழுக்காவி விட்டதே என்று புதும் பூணூல் மாற்றிக் கொள்கிற ஒரு நாள் என்றுதான் நினைக்கிறார்கள். உண்மையில் பூணூல் மாற்றிக்கொள்வதென்பது உபாகர்மாவிலே ஒரு சின்ன அங்கம்தான்.

உபாகர்மா என்பது அந்த ஒரு நாளோடு போகாமல் அடுத்த ஐந்தாறு மாஸங்களான ஒரு டெர்முக்கு ஆரம்ப நாளாக இருப்பதாகும்.

இந்த முதல் டெர்மில் மூலமான வேதத்தை மட்டும ஆசார்யர் கற்றுக் கொடுத்துச் சிஷ்யர்கள் சொல்லிக் கொள்வார்கள். அதாவது 'ச்ருதி' என்றே சொல்லப்படுவனவான தேவதஸம்ஹிதை, ப்ராஹ்மணம், ஆரண்யகம், உபநிஷத்துக்கள் ஆகியவற்றில் பாடம் நடக்குமூ. புஷ்யமாஸம் என்கிற நம் தை பிறக்கும்வரையில் இந்தப் பாடம் தொடரும். (புஷ்யத்துக்குத் 'தைஷம்' என்றும் பெயர் உண்டு. 'தைஷம்'தான் 'தை' ஆயிற்று.)

அப்போது 'உத்ஸர்ஜனம்' என்கிற கர்மாவைச் செய்து ச்ருதி பாடத்தை முடிப்பார்கள். புஷ்யமாஸம் பூர்ணிமையிலாவது அதற்கு முன்வரும் ரோஹிணியிலாவது உத்ஸர்ஜனகர்மா செய்யவேண்டும். ஸாமகர்கள் (அதாவது ஸாமவேதிகள்) புரட்டாசியில்தான் உபாகர்மம் செய்வதால், அத்யயன டெர்ம் ஐந்து மாஸமோ அல்லது குறைந்த பக்ஷம் நாலரை மாஸமோ இருக்கவேண்டும் என்ற விதிப்படி, அவர்கள் மாக பூர்ணிமையில் உத்ஸர்ஜனம் செய்யவேண்டும். தை அமாவாஸ்யைக்குப் பதினைந்து நாட்கள் கழித்துவரும் பௌர்ணமியே மாக பூர்ணிமை.

உத்ஸர்ஜனம் என்றாலும் விஸர்ஜனம் என்றுதான் அர்த்தம் - அதாவது "விட்டு விடுவது". வேத அத்யயன - அத்யாபனங்களை ஒரு கட்டத்தில் விட்டுவிடுவதற்காகச் செய்யும் வைதிக கர்மா உத்ஸர்ஜனம். மறுபடி ஏழு மாஸம் கழித்து அடுத்த "ஆவணியாட்ட"த்தில், விட்ட கட்டத்திலிருந்து வேத பாடத்தைத் தொடங்கவேண்டும். 'உபக்ரமணம், என்றால் தொடங்குவது என்று அர்த்தம், அதனால்தான் அன்று செய்கிற கர்மாவுக்கு 'உபாகர்மா' என்று பெயர்.

வேதத்தில் புதுப்பாடங்கள் இல்லாத இந்த ஏழு மாஸந்தான் இரண்டாவது "டெர்ம்". இதில் வேதாங்கம் எனப்படும் வேதத்தின் ஆறு அங்கங்களான் சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் ஆகியவற்றில் பாடம் நடத்துவார்கள். ஏனைய எல்லா வித்யைகளைக் கற்றுக் கொடுப்பதும் இந்த டெர்மில்தான். உபாகர்மாவுக்கான நாள் வந்தவுடன் இதை நிறுத்திவிட்டு, வேத பாடங்களுக்குப் போவார்கள். அதை உத்ஸர்ஜனம் பண்ணினவுடன் மறுபடி இந்த வேதாங்கங்களிலும் காவ்யம் முதலான இதர வித்யைகளிலும் விட்ட இடத்திலிருந்து ஆரம்பிப்பார்கள், இந்த உத்ஸர்ஜனம்தான் வடக்கே "ஸரஸ்வதி பூஜா" என்று சொல்லும் வஸந்த பஞ்சமி.

தற்போது "ஆவணியாவட்டம்" என்று பண்ணுவதில் போளியும் வடையும்தான் முக்யமாயிருக்கின்றன. ஒரு டெர்ம் முழுதும் கற்க வேண்டிய வேத பாடங்களில் ஆரம்ப ஸூக்தத்தை மட்டும் உபாகர்மாவன்று வாத்யார் சொல்ல, மற்றவர்கள்

தப்பும் தவறுமாகத் திருப்பிச் சொல்லி விடுகிறார்கள். அதுமட்டுமில்லை. 'விட்டு விடும்' உத்ஸர்ஜன கர்மாவையும் அன்றே பண்ணி (இப்படி ஒன்று வாத்யார் பண்ணி வைப்பதாகக்கூடப் பல பேருக்குத் தெரிவதில்லை), வேதாங்கங்களிலும் ஒவ்வொன்றில் ஒவ்வொரு ஸூத்ரத்தை மாத்ரம், வாத்யார் சொல்வதைத் திரும்பவும் உளறிக் கொட்டிவிட்டு முடிப்பதாக ஏற்பட்டிருக்கிறது. ஒரேயடியாக இந்த ஆவணியாவட்டத்துக்கே 'உத்ஸர்ஜனம்' செய்யாமல் எதனாலோ விட்டு வைத்திருக்கிறார்கள். வடை, போளிக்காக இருக்கலாம் இப்படி நாமே நம்மைப் பரிஹஸித்துக் கொள்ளும்படியான துர்த்திசையில் இருக்கிறோம்.

வித்யாப்யாஸ காலத்தில் ஒரு ப்ரஹ்மசாரியானவன் இப்படி மாறி மாறி வேதம், வேதாங்காதி இதர வித்யைகள் என்று இரண்டு டெர்ம்களில் படித்தப் பன்னிரண்டு வருஷங்களில் பூர்த்தி பண்ணவேண்டும். தன் வேத சாகையையும் தன் வேதத்தையும் மட்டுமின்றி மற்ற வேதங்களையும் படிப்பது, இரண்டு வேதம் தெரிந்த த்விவேதி, மூன்று வேதம் தெரிந்த த்ரிவேதி, நாலுவேதம் தெரிந்த சதுர்வேதி என்றெல்லாம் ஆவது. வேதாந்கம் மட்டுமில்லாமல் மற்ற வித்யைகளையும்

படிப்பது, இதர ஜாதியாருக்கான வித்யைகளையும் கற்பது. ஸ்பெஷலைஸ் செய்வது என்றெல்லாம் போகும்போதுதான் பதினெட்டு வருஷம், முப்பத்தாறு வருஷம்கூட குருகுலவாஸம் செய்வார்கள்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*க்ருஹஸ்தர்களுக்கு ஏன்?*

உபாகர்மாவும் உத்ஸர்ஜனமும் கல்வி ஸம்பந்தமானவை என்றால், இவை வித்யாப்யாஸம் செய்யும் ப்ரஹ்மசாரிக்கு மாத்திரம்தானே இருக்கவேண்டும். இதை எப்படி க்ருஹஸ்தர்களுக்கும் சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது?

(இக்கேள்விக்குப் பதில்) ப்ராம்மணனுக்கு சாஸ்த்ரபடியான கடமை அத்யயனம் செய்தபின் (தான் படித்தபின்) அத்யாபனம் செய்வதாகும் (தான் படித்ததைப் பிறத்தியாருக்குச் சொல்லிக் கொடுப்பதாகும்). ஒவ்வொரு ப்ராம்மணனும் இப்படி ஒரு சிஷ்யனுக்காவது சொல்லக் கொடுக்கும்போது, ஒவ்வொரு டெர்மையும் வேதோக்தமான உபக்ரமண, உத்ஸர்ஜன கர்மாக்களோடு செய்து பரிசுத்தி செய்யவேண்டியதாகிறது. க்ருஹஸ்தனான பின் இவன்

யாருக்கும் அத்யாபனம் பண்ணவில்லை என்றாலுங்கூட இவனுக்கே படித்தது மறந்துவிடாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமல்லவா? அதற்காக அவற்றை இப்படி இரண்டு டெர்மாகப் பிரித்து ஆதியில் கற்றுக்கொண்டது போலவே மறுபடி மறுபடி நெட்டுரு போட்டுக் கொண்டிருக்கவேண்டும். இதற்காகவும் உபாகர்மாவும் உத்ஸர்ஜனமும் ஒரு க்ருஹஸ்தன் பண்ண வேண்டியதுதான்.

தர்ம சாஸ்த்ரங்களில் க்ருஹஸ்த தர்மங்களை விவரிக்கிற பகுதியில்தான் உபாகர்மா (உத்ஸர்ஜனம் ஆகியவை) பற்றிச் சொல்லியிருக்கிறது ப்ரஹ்மசர்ய தர்மங்களைப் பற்றிய பகுதியில் அல்ல.

கல்வி என்பதை ஈச்வர ப்ரீதியான ஒரு தபஸாகவே நினைத்த காலமானதால் - ப்ரஹ்மோபதேசத்துடன் ஆரம்பித்து, அநேக வ்ரதங்களை அவ்வப்போது அநுஷ்டித்தே அதைப் பூர்த்தி செய்தார்கள். பூர்த்தி செய்வதற்கு ஸமாவர்த்தனம் என்று ஒரு சடங்கு உண்டு. அது ஆனபின்தான் ப்ரஹ்மசாரி கல்யாணம்

செய்துகொண்டு க்ருஹஸ்தாச்ரமம் ஏற்பது. "உபாகர்மாவை ஸமாவர்த்தனமானவன் இன்ன முறையில் செய்யணும், ஆகாதவன் இன்ன முறையில் செய்யணும்" என்று சில ஸ்ம்ருதிகளில் பிரித்துச் சொல்வதாலேயே இது ஸமாவர்த்தனம் செய்துவிட்ட க்ருஹஸ்தனுக்கும் உரியது என்று தெரிகிறது. கற்றுக் கொண்டது மறந்து போகாமலிருப்பதறகர்க - இதை "தாரணம்" என்று சொல்லியிருக்கிறது -க்ருஹஸ்தனும் ஒரு ஸ்டூடன்டாகவே அத்யயனாதிகளைப் பண்ணிக் கொண்டேயிருக்கவேண்டும் என்று (ஸ்ம்ருதிகளை இயற்றியுள்ள) ரிஷிகளில் சிலர் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

## குரு

### *விடுமுறை நாட்கள்*

இப்படி வைதிக வித்தையின் "அகாடெமிக் இயரி"ல் இரண்டு டெர்ம்கள். லீவுநாளே கிடையாதா என்றால், உண்டு. குழந்தைகளை எப்போது பார்த்தாலும் படிப்பு என்று கெடுபிடி பண்ணாமல் ரெஸ்ட் கொடுக்கும் அருள் உள்ளம் நம் பூர்விகர்களுக்கு இல்லாமலில்லை. அத்யயனமில்லாத இந்த லீவுநாட்களுக்கு அநத்யயன தினங்களென்று பெயர். ஒவ்வொரு மாஸமும் அமாவாஸ்யை, பௌர்ணமி, இரண்டு பட்ச அஷ்டமி - சதுர்ததசிகள் என்று ஆறு நாள் அநத்யயனம். இது தவிர ஒவ்வொரு கோர்ஸூம் முடிந்தபின் மூன்று மூன்று நாட்கள் அநத்யயனம். இதோடு 'சாதுர்மாஸீ என்றும் வருஷத்தில் நாலு நாள் லீவ்.

இதெல்லாம் பஞ்சாங்கக் கணக்குப்படி வருஷம் தவறாமல் வரும் லீவு நாட்கள். அதனால் இவற்றுக்கு "நித்ய" அநத்யயனம் என்று பெயர். இது தவிர நாம் கணிக்க முடியாமல் எப்போது வேண்டுமானாலும் ஒரு "நிமித்த"மாக லீவ் விடவேண்டிய "நைமித்திக" அநத்யயனங்களும் உண்டு. மழை அடிக்கிறது, புயல் அடிக்கிறது என்றால், காட்டிலே நெருப்புப் பிடித்துக் கொண்டுவிட்டது என்றால், நாட்டுக்குத் தலை மறைவாக ஒளிந்துகொண்ட கொள்ளைக் கூட்டத்துக்காரர்கள் இங்கே காட்டிலேயும் குருகுலங்களை ஹிம்ஸிக்க வருகிறார்கள் என்றால் - அப்போதெல்லாம் லீவ் விட்டுவிடுவார்கள். இச்சமயங்களில் பாடத்தை நிறுத்திவிட வேண்டுமென்று மநுதர்ம சாஸ்த்ரத்தில் மநுஷ்ய மனஸை

அநுதாபத்தோடு அறிந்துகொண்டு சொல்லியிருக்கிறது க்ரஹணம் என்பதும் வருஷத்தில் ஒரு குறிப்பிட்ட நாளில் வருவதில்லை. அதுவும் "நைமித்திக" லீவ் நாளாகக் கருதப்பட்டது. (க்ரஹணத்தில் பாடம் சொல்லிக் கொடுக்கப்படாதே தவிர ஏற்கனவே பாடம் பண்ணிய மந்த்ரங்களை ஜபிக்கவேண்டும். மற்ற காலத்தில் செய்யும் ஜபத்தைவிட் க்ரஹண காலத்தில் செய்யும் ஜபத்துக்கு வீர்யம் ரொம்பவும் அதிகமாகும்.)

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*மாணவனை அடிக்கலாமா?*

ரொம்பவும் நெரிப்பு இல்லாமலிருப்பதற்கே அவ்வப்போது அநத்யயனம் என்று லீவ் கொடத்ததைச் சொல்லும்போது, வித்யார்த்தியிடம் பொதுவாக ஆசார்யர் எப்படி நடக்கவேண்டுமென்பது பற்றிய தர்மசாஸ்த்ரக் கருத்துகளையும் தெரிவிக்கத் தோன்றுகிறது.

ப்ரியம் என்று சொல்லிக்கொண்டு ரொம்பவும் செல்லம்

கொடுத்துக் குட்டிச் சுவராக்கிவிடக்கூடாது என்பதுதான் பொதுக் கொள்கை. அதற்காகத்தான் வீட்டிலேயே படிப்பதென்றில்லாமல் குருகுலத்தில் சேர்த்ததே. சிஷ்யன் ஸ்வயேச்சைப்படிப் போகவிடாமல் அவனை ஆசார்யரின் வார்த்தைப்படியே நடக்குமாறுதான் சாஸ்த்ரம் கட்டுப்படுத்துகிறது. இதனால் ஆசார்யர் எப்பபோதும் உர்ரென்று மிரட்டி உருட்டிக் கொண்டிருக்கவேண்டுமென்று ஒரு இடத்தில்கூடச் சொல்லவில்லை. ப்ரியத்தோடு நடத்தும் போதே பையன் ஸ்வாதீனமாகப் போகாதபடியும் அவனை ஒழுங்குபடுத்தவேண்டுமென்பதே சாஸ்த்ரக் கருத்து. உபநிஷத்துக்களில் ஆரம்பித்துப் புராண - இதிஹாஸங்களைப் பார்த்தால் குரு - சிஷ்யாள் பரஸ்பரம் ஆழ்ந்த ப்ரியத்திலேயே கட்டுப்பட்டிருந்ததற்கு நிறைய த்ருஷ்டாந்தம் கிடைக்கும்.

மதுரமாகப் பேசியும், ப்ரியமாக நடத்தியுமே சிஷ்யனை முன்னேற்றப் பார்ப்பதுதான் வழி என்று சொல்லியிருக்கிறது. "ஸௌம்யா" என்று சிஷ்யனைக் குளிரக் குளிரக் கூப்பிடுவதிலிருந்து இந்த மாதுர்யம் தெரிகிறது.

சிஷ்யனை அடிக்காமலே சிக்ஷை சொல்லித்தர வேண்டும் என்று கௌதம ஸ்ம்ருதியில் இருக்கிறது. சிக்ஷை தருவது என்றாலே தண்டனை தருவது என்று பிறபட்டு அர்த்தம் ஏற்பட்டிருந்தாலும், ஆதியில் போட்ட 'ரூல்' இப்படித்தான் இருக்கிறது.

ஆனாலும் தவிர்க்கமுடியாமல் சில ஸமயங்களில் அடிக்கவும் வேண்டியிருக்கலாம். அதனால்தான் "அடியாத மாடு படியாது", "அடி உதவுகிற மாததிரி அண்ணன் தம்பி உதவுகிறதில்லை" என்றெல்லாம் வசனம் இருக்கிறது. "Spare the rod and spoil the child" ('பிரப்பம்பழம்' போடாவிட்டால் பிள்ளை குட்டிச் சுவர்தான்) என்று வெள்ளைககர்ரர்களும் சொல்கிறார்கள்.

இம்மாதிரி, அடிக்கும்படியாக நிர்பந்தம் ஏற்பட்டால் கூட, சின்னதாக ஒரு கயிறு அல்லது மூங்கில் சிம்பால் தட்டலாமேயொழிய, சவுக்கு, புளியங்க கொட்புகளால் வீறுவது என்பது கூடாது என்று மநுஸ்ம்ருதி சொல்கிறது. முதுகில் மட்டும்தான் அடிக்கலாம், வேறே எங்கேயும்

அடிக்கப்படாது, தலையில் ஒருகாலும்

அடிக்கப்படாது என்று கட்டுப்பாடு செய்திருக்கிறது. தலையில் அடித்தால் பொறி கலங்கிவிடக் கூடுமல்லவா?

இப்படி ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் சாஸ்த்ரங்கள் கூர்மையாக கவனித்துப் பயனுள்ள உபதேசங்களைத் தந்திருக்கின்றன.

மொத்தத்தில் மாணவன் அந்தப் பருவத்தில் கட்டுப் பாட்டின் கீழ்தான் இருக்கவேண்டும். இதில் அவனே இந்த்ரியத்தைக் கட்டிக்கொள்வது முக்யம்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*மாணவன் லட்சணம்*

மாணவனுக்கு ப்ரஹ்மசர்ய நியமத்தை மநு விசேஷித்துச் சொல்லியிருக்கிறார். "இந்த்ரிய ஸம்யமம்" (அதாவது புலனடக்கம்) என்பது அவர் சொல்லும் இன்னொரு பேர். இந்த நியமம் எதற்காகவென்று காரணம் சொல்லும்போது,

கல்வியின் நோக்கம் அறிவைப் பெறுவதான "வேத க்ரஹணம்" மாத்திரமில்லை, ஆத்மாபிவ்ருத்தியாகிய "வ்ரதா தேசனமே" படிப்பின் லக்ஷ்யம் என்கிறார். இதனால்தான் வித்யாப்யாஸத்தை வ்ரதமாயும் தபஸாயும் சொல்லியிருப்பது.

மாணவனின் அன்றாடக் கடமைகடிளயும் மநு தெளிவாகச் சொல்லியிருக்கிறார். ஸந்த்யா வந்தனம், அக்னிஹோத்ரம் (அதாவது ப்ரஹ்மசாரிக்கான ஸமிதா தானம்), தனக்கான பாடத்தை முறைப்படி கற்று மனப்பாடம் செய்வதான "ஸ்வாத்யாயம்", பிக்ஷை எடுப்பது (பிக்ஷாசர்யம்), ஆசார்யனுக்காக ஜலம் கொண்டுவருவது, விறகு வெட்டிக்கொண்டு வருவது, சுத்திக்கான ம்ருத்திகை (குழைமண்) கொண்டுவருவது, அவருடைய பூஜைக்குப் புஷ்பம் கொண்டுவருவது முதலான எடுபிடிப் பணிகள், பாடத்தை நன்றாக விளக்கி "ப்ரவசனம்" பண்ணும்படி ஆசார்யரை ப்ரார்ததித்துக் கொண்டு செவ்வனே கேட்டறிதல் - என்றிப்படி சிஷ்ய தர்மத்தைச் சொல்லியிருக்கிறது. "ஸ்வாத்யாயம், ப்ரவசனம் ஆகிய இரண்டையும் கொஞ்சங்கூட விட்டுவிடப் படாது" என்று தைத்திரீய (உபநிஷ)த்திலும் சொல்லியிருக்கிறது.

## குரு

ஆரோக்ய வளர்ச்சிக்கும் உதவி

இதிலே அறிவு வளர்ச்சி, குண வளர்ச்சி மாத்திரமில்லாமல் தேஹாரோக்ய அபிவ்ருத்தியும் கலந்திருப்பதை கவனிக்கவேண்டும். காலங்கார்தாலே எழுந்து குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து, ப்ராணாயாமம், ஸூர்ய நமஸ்காரம் பண்ணுவதில் புத்தி சுத்தியும் வ்ருத்தியாவதோடு தேஹ ஆரோக்யமும் நல்ல வளர்ச்சி பெறும். குருவுக்காக விறகு வெட்டிக்கொண்டு வருவது போன்ற வேலைகளில் இதேபோல, ஒரு பக்கம் மனஸில் எளிமை உண்டாவதோடு மறுபக்கம் சரீரத்திலும் வலிவு ஏற்படும்.

ஒரு மனுஷ்ய ஜீவனென்றால் அவனுக்கு தேஹம், புத்தி, ஆத்மா என்று மூன்று இருக்கிறது. மூன்றையும் நல்ல முறையில் வளர்ப்பதாகப் பழங்காலக் கல்வி முறை இருந்திருக்கிறது.

மிகவும் பூர்வகாலத்தில் நம்மிடம் இருந்த 'எஜுகேஷன் ஸிஸ்டம்' பற்றி இவ்வளவும் சொன்னேன். இன்னம் அநேக விஷயங்களும் இருக்கின்றன. எனக்கே தெரியாமல் எவ்வளவோ இருக்கும்.

### தனிமனிதரையே மையமாக

இதற்கப்புறம்தான் பௌத்த - ஜைனர்கள் ஆதரவில், இதற்கு முன்னிருந்ததை விட அதிகமாகவும் பெரிய அளவிலும் வித்யாசாலைகள் ஏற்பட ஆரம்பித்தது. அதற்கு முந்தியும், சாந்தோக்ய உபநிஷத்படியே, பல வித்யைகள் இருந்து, அதனால் பெரிய வித்யாசாலைகளும் ஏற்பட்டிருந்தன என்றாலும், ஒரு 'ஸென்ட்ரல் கவர்ன்மென்ட்' கீழேயே ஒன்றொன்றும் நிறைய ஸ்வதந்த்ரமுள்ளதாக அநேக 'ஸ்டேட் கவர்ன்மென்ட்கள்' உள்ள "ஃபெடரல் ஸெட்-அப்' மாதிரி, தனித்தனி வாத்யார்கள் ஒவ்வொரு க்ரூப் மாணவர்களுக்குப்

பொறுப்பேற்றுக்கொண்டு, அவர்கள் வாழ்க்கையைத் தங்கள் வாழ்க்கையோடு கோத்துக்கொண்டு, அவர்களுக்கு 'இன்டிவிஜுவல் அட்டென்ஷன்' கொடுத்து, அவர்களுடைய அறிவோடு குணத்தையும் வ்ருத்தி செய்வதாகவே நம்முடைய வித்யாப்யாஸ அமைப்பு இருந்தது. அந்த வாத்யார்கள் எல்லோரும், மாணாக்கார்கள் எல்லோரும் குலபதிக்குக் கட்டுப் பட்டிருந்தார்கள். அந்தக் குலபதியின் மிகவும் உயர்ந்த சீலங்கள் தன்னால் இந்த எல்லோரையும் கட்டுப்படுத்தி நன்னெறிப்படுத்தியது. அவருடைய ஸாந்நித்ய மாத்ரத்தின் சக்தியினால் மட்டுமின்றி, அவர் நடைமுறையிலும் 'ஸுபர்வைஸ்' செய்து கண்காணித்துக் கொண்டிருந்ததால் கல்வி என்பது அறிவு, ஸம்பாத்யம் என்பவற்றோடு நிற்காமல் ஒரு ஜீவனின் ஆத்மா பூர்ணத்வம் பெறுவதற்கு வழி போட்டுக் கொடுப்பதாகவே அமைந்தது.

குலபதி என்ற தனி ஆஸாமி உச்சியிலே இருப்பது, அப்புறம் அவர் கீழே ஒவ்வொரு வாத்யாரும் ஒவ்வொரு batch -க்கு தனி ஆஸாமியாக நின்று பொறுப்பேற்றுப் பாடம் சொல்லிக் கொடுப்பதென்பது பெரிய குருகுலங்களில் (நடந்த ஸமாசாரம்). பொதுவாகத் தனித்தனி ஆசார்யர்களே நடத்திய சிறிய குருகுலங்கள்தான் அதிக அளவில் இருந்தன. 'இன்ஸ்டிட்யூஷன்' போதனை குறைவாகவும், 'இன்டிவிஜுவல்' போதிப்பது அதிகமாகவும் இருந்தது.

ஒவ்வொரு இன்டிவிஜுவலாகப் பலபேரிடம் போய்ப் பல குருகுலங்களில் படித்து வித்யையை அபிவிருத்தி செய்து கொள்வதென்பது ஆதியிலிருந்து ஸஹஜமாக இருந்திருக்கிறது. ஸமீப காலத்திருங்கூட மீமாம்ஸை ஒருவரிடம், ந்யாயம் இன்னொருவரிடம், வேதாந்தம் இன்னொருவரிடம் என்று பலபேரிடம் குருகுல வாஸம் செய்தவர்கள் இருந்திருக்கிறார்கள், இன்றைக்கும்கூட இப்படிச் சிலராவது இல்லாமலில்லை. ஒரே சாஸ்த்ரத்திலேயே ஒரு கட்டம் வரை ஒரு குருவிடம், அப்புறம் இன்னொருவரிடம் என்று சிக்ஷை பெறுவதுமுண்டு.

இதிலே கவனிக்க வேண்டிய அம்சம், ஒரே குருகுலத்தில் இத்தனை ஆசார்யர்களும் சேர்ந்து இருந்து கற்றுக்கொடுக்கவில்லை, ஒவ்வொருவதும் தனியாகத் தன்னுடைய குருகுலத்திலேயே சொல்லிக்கொடுக்கிறார்

என்பதுதான். அதாவது இன்ஸ்டிட்யூஷன் என்ற ஒன்று உயிருள்ள பல குருமார்களைத் தன் அங்கமாக ஆக்கிக்கொண்டு போதிக்கும் முறையல்ல இது தனி குருமார்கள் ஒவ்வொருவரும் இன்டிவிஜுவலாகத் தங்களுடைய வித்யா பலத்தையும், அநுஷ்டான சக்தியையும், குணநலத்தையும் ஆதாரமாகக் கொண்டு கற்றுக்கொடுக்கும் போதிப்பு முறையே இது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## ***குரு***

### *தனிப்பட்ட ஆசான் பெருமை*

இப்படி இன்டிவிஜுவலாக நிற்கும்போதுதான் ஒருத்தன் சிஷ்யர்களை ஆகர்ஷிப்பதற்கு நிச்சயமாக சுத்தனாக இருந்தாக வேண்டும். சுத்தமான சரித்ரமும், நல்ல கனிந்த மனஸும் இல்லாத ஒருவனிடம் அவன் என்னதான் மஹா வித்வானென்றாலும், எந்தத் தகப்பனாராவது தன் சின்னப்

பிள்ளையை, அந்தப் பிள்ளை தேஹரீதியிலும் புத்தியிலும் மனஸிலும் எல்லாவற்றிலுமே வாழ்க்கை முழுவதற்கும் அஸ்திவாரமான நல்ல வளர்ச்சியைப் பெற வேண்டிய ஸமயத்தில் பத்துப் பன்னிரண்டு வருஷம் குருகுலவாஸம் செய்யும்படியாக அனுப்பிவைப்பாரா?

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*ஸ்தாபனத்தின் குறைபாடு*

இன்ஸ்டிட்யூஷன் (ஸ்தாபனம்) என்று பலபேர் சேர்கிற போது அது கலந்தாங்கட்டியாகத் தானிருக்கும், அப்படியிருந்தாலும் அது இன்டிவிஜுவலிடம் (தனி மனிதனிடம்) தெரிவதுபோல தோஷமாகத் தெரியாது. தனியாக ஏதாவது ஒரு பூவை மட்டும் வைத்து மாலை கட்டினால் அதிலே நடுவிலே எங்கேயாவது ஒரு தழை, அல்லது துர்நாற்றமெடுக்கும்

துருக்க ஜாமந்திப் பூ மாதிரி ஒன்றே ஒன்று சேர்ந்திருந்தால்கூட உடனே காட்டிக் கொடுத்து விடும். அதைத் தூக்கிப் போட்டுவிடுவோம். இதுவே பலவித புஷ்பங்களும் சேர்ந்த கதம்ப மாலையாக இருந்தால் அதிலே இந்த வாஸனைப் புஷ்பங்களுக்கு ஸமமாகத் தழையும் துருக்க ஜாமந்தியும் இருந்தாலும் தெரியாது. கத்திரிக்காய் ஒரே விதையாயிருக்கிறது. அவரைக்காய் ஒரே முற்றலாயிருக்கிறது என்றால், "தனியாகச் சமைக்க வேண்டாம், அவியலிலே போட்டுவிடுங்கள்" என்பார்கள். தனியாக ஒரு பண்டமிருந்து அது கொஞ்சம் மூளியாகிவிட்டார்கூட ப்ரயோஜனமில்லையென்று தூக்கிப்போட்டு விடுகிறோம். ஆனால் இந்தமாதிரி ஒட்டை உடைசல், கண்ணாடிச் சில்லுகள், வீணாய்போன ப்ளாஸ்டிக் துண்டுகள் துணிக் கிழிசல்கள் முதலியவற்றை வைத்தே கண்ணைக் கவருகிறமாதிரி டிஸைன்கள், பொம்மைத்தோர் முதலானதுகள் கூடப் பண்ணுவதாக அவ்வப்போது பேப்பரில் பார்க்கிறோமல்லவா?

இப்படித்தான் நம்மிலும் ஆகாதது போகாததுகளை எல்லாம் வைத்தே ஆர்கனைஸேஷன், இன்ஸ்டிட்யூஷன் என்று ஏற்படுத்தி ப்ரமிக்கப் பண்ணிவிடலாம். நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை - உங்களுக்கே தெரியும், இப்போது ப்ரமாதமாக எத்தனையோ ஸங்கங்கள் இருக்கின்றனவே, அவற்றிலே தனியாக ஆள் ஆளாக் எடுத்துப் பார்த்தால் எத்தனை பேரை சுத்தம் என்று சொல்லமுடியும் என்பது ஸந்தேஹந்தான். பலபோர் சேர்ந்து இருக்கும் போது தோஷங்களைப் பூசி மெழுகிவிட முடியும்.

பசங்களுக்கு புத்தி மட்டும் வளர வேண்டுமென்றில்லாமல் காரேக்டரும் (குணநலனும்) வளரணும் என்றால் அது சுத்தமான இன்டிவிஜுவல் குருமார்களால் நடக்கிற அளவுக்கு இன்ஸ்டிட்யூஷனில் ஒருநாளும் முடியாது. இன்ஸ்டிட்யூஷனில் அறிவைத்தான் பரீக்ஷித்து வளர்க்க முடியும். குணத்தை முடியாது. சிஷ்யனைக் கூடவே வைத்துக் கொண்டு, அவனைப் பணிவிடை செய்ய வைத்து, அவனுக்கு ஆஹாரம் போட்டு வளர்க்கும்போதுதான், கூடவே குணத்தையும் வளர்க்க முடியும்.

ஸ்கூலில் அட்மிஷன்போது முடிவது வெறுமே புத்தியைப்

பரீக்ஷித்து, அதை எப்படி அபிவ்ருத்தி பண்ணணும் என்று பார்க்கவும், திருத்த முடியாத சரக்கு என்றால் பாடம் கிடையாது என்று தள்ளிவிடவும் இதில் இடமில்லை. நம் பண்டைய முறையிலோ குணத்தோடு சேராத கல்வி கல்வியே இல்லை. கீதையை முடிக்கும்போது பகவான், "ந அதபஸ்காய, ந அபக்தாய, ந அசுச்ரூஷவே" என்பதாக, அதாவது தீவிர தாபமில்லாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும், பணிவிடை செய்யாதவனுக்கும் போதிக்கவே கூடாது என்கிறார். ஒரு வருஷமாவது கூட வைத்துக்கொண்டு வா1ம் பண்ணி சிஷ்யன் குணத்தைப் பற்றி த்ருப்தி அடைந்தாலொழிய பெரிய விஷயங்களைக் கற்பிக்கக்கூடாதென்று சாஸ்த்ரம் ("நாஸம் வத்ஸர வாஸிநே ப்ரப்ரூயாத்"). இதுகளுக்கெல்லாம் ஸ்கூலில் இடமில்லை. அதனாலேதான் அறிவை மட்டும் வளர்ப்பதாகவும், புத்தி ஸாமார்த்தியத்தை மாத்திரம் கொண்டு நல்லதற்கில்லாதவைகளையே தினந்தினம்

வ்ருத்தி செய்து லோகத்தைக் கெடுப்பதாகவும் ஏற்பட்டிருக்கிறது.

(ஒரு வருஷம் டெஸ்ட் பண்ணிவிட்டுப் பாடம் ஆரம்பிக்கணுமென்று சொன்னதில் இன்னொன்று ஞாபகம் வருகிறது. ஒரு வருஷம் ஆனபிற்பாடு பையனைத் திருப்பியும் அனுப்பாமல், வித்யாப்யாஸமும் ஆரம்பிக்காமல், "படிப்புக்கு யோக்யதையில்லாவிட்டாலும் நன்றாக மாடு மாதிரி உழைக்கிறான். அதனால் வேலை வாங்கலாம்" என்றே ஒரு ஆசாரியன் தன்கூட வைத்துக் கொள்ளலாமல்லவா? இப்படி வித்யாதானத்துக்காக இல்லாமல், ஸ்வய காரியத்துக்காகவோ அல்லது வேறு ஏதேனும் காரணத்தை உத்தேசித்தோ ஒருவர் தன்னிடம் படிக்கவந்த பையனுக்கு ஒரு வருஷமாகியும் வித்யோபதேசம் பண்ணாமலிருந்தால் அந்தப் பையனின் பாபமெல்லாம் இவரைச் சேர்ந்துவிடும் என்று சாஸ்த்ரத்தில் இருக்கிறது. சிஷ்யனாக ஆன பிற்பாடு ஒருவன் பண்ணும் பாபம் (அவனை நல்வழிப்படுத்தத் தவறிய) குருவைச் சேரும் என்று சொல்லியிருப்பது மட்டுமின்றி, இப்படிச் சில ஸந்தர்ப்பங்களில் ஒருத்தனை சிஷ்யனாக எடுத்துக்கொள்ள ாமலிருப்பதாலேயும் அந்தப் பாபம் ஸம்பவிக்கும் என்று சொல்லியிருக்கிறது. குருவாக இருப்பதில் இத்தனை

பொறுப்புக்கள்.

சில பெரிய ரிஷிகள் ரொம்பவும் உத்தமமான மாணவனின் பக்தியை வெளிப்படுத்துவதற்காகவே பல வருஷங்கள் போதிக்காமலிருந்ததாகவும் அபூர்வமாகச் சில கதைகள் இருக்கின்றன.)

இன்ஸ்டிட்யூஷனாக இல்லாமல் இன்டிவிஜுவல் லெவலிலேயே வித்யாப்யாஸம் நடப்பதென்பதுதான் மாணவனுக்கு மட்டுமில்லாமல் வாத்யாருக்கும் நல்லது. அவர் தனியாக நின்றே சோபிக்க வேண்டுமென்னும் போதுதான் அன்னை அப்பழுக்கற்றவராக்கிக் கொள்ளவேண்டுமென்பது அத்யாவச்யமாய்விடுகிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

உள்ளம் திறந்து குரு - சிஷ்யர்கள் உபநிஷத உதாரணங்கள்

நம்முடைய பண்டைய நூல்களைப் பார்த்தால் இப்படி குருகுலம் நடத்திய குருமார்கள் எத்தனை உசந்த குணவான்களாக, அன்புள்ளம் கொண்டவர்களாக இருந்திருக்கிறார்களென்று தெரிகிறத.

ஒரு லாபத்தையும் எதிர்பார்க்காமல், வேத வித்யை எதிர் காலத்துக்குப் போய் லோகம் க்ஷேமமடைய வேண்டுமென்பதற்காகவே, யாரோ ஊரான் வீட்டுப் பிள்ளையைத் தன்னோடு வருஷக்கணக்காக வைத்துக்கொண்டு, அவனிடம் தொண்டை தண்ணி வற்ற "மாரடித்த" குருமார்கள் இப்படி வம்ச பரம்பரையாக நம் தேசத்திலிருந்து வந்திருப்பதுதான் நமக்குள்ள எத்தனையோ பெருமைகளில் சிகரமாகவுள்ள பெருமையாக தெரிகிறது.

தனக்கு என்ன லாபம் கிடைக்கும் என்ற எண்ணமேயில்லாமல், "நான் தங்கள் சிஷ்யனாக வந்துவிட்டேன்" என்று மனஸார ஒருத்தன் வந்துவிட்டால் அவனுக்குத் தாங்கள் கற்றறிந்த ஸகலத்தையும் கற்பித்திருக்கிறார்கள். ப்ருஹதாரண்யக (உபநிஷ)த்திலே (6-2) கௌதமருக்கு ப்ரவாஹணன் என்ற ராஜா உபதேசம் செய்யுமிடத்தில் இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

இதே மாதிரி சிஷ்யனும், 'வித்யைதான் வேண்டும், அதற்குப் பதில் எத்தனை பொருள் கொடுத்தாலும் வேண்டாம்' என்று உதறித் தள்ளியதையும் இதே கதையின் இன்னொரு version வரும் சாந்தோக்ய (உபநிஷ)த்தில்(5-3)பார்க்கிறோம். "கௌதம பகவானே பூலோகச் செல்வம் எவ்வளவு வேண்டுமானாலும் கேளுங்கள், தருகிறேன்" என்கிறான் ராஜா ர்வாஹணன். "அதொன்றும் எனக்கு வேண்டாம். எனக்குத் தெரியாததாக உனக்குத் தெரிந்துள்ள வித்யைதான் வேண்டும்" என்கிறார் கௌதம ரிஷி. 'பகவான்' என்றே அழைக்கப்பட்ட ஒரு ரிஷி, வர்ணத்தில் தனக்குப் பின்னே வருகிற ஒரு க்ஷத்ரியனிடம் வித்யை வேண்டுகிறாரென்பதிலிருந்து உண்மையை அறிவதில் அக்கால ப்ராம்மணர்கள் எப்படி அஹங்காரமில்லாமல், அடக்கத்தோடு ஆர்வமாயிருந்தார்களென்பதும் தெரிகிறது.

"நிறைகுடம் தளும்பாது" என்பது இங்கே இன்னொரு விதத்திலும் தெரிகிறது.

கௌதமருடைய பிள்ளை ச்வேதகேது கொஞ்சம் தலைகனம் உள்ளவன். தலைகனத்துப் போனால் உள்ளே எப்படி வித்யை இறங்கும்? இவனுடைய அறியாமையை இவனே உணர்கிற மாதிரி தகப்பனாராகப்பட்டவர் இவனைக் கேள்வி கேட்டுப் பரீக்ஷித்து, இவனுடைய அஹங்காரம் அடிபட்டுப் போன பின், இன்றைக்கும் லோகம் பூரா கொண்டாடும் ஜீவ ப்ரம்ம அபேதத்தைச் சொல்வதான மஹாவாக்யத்தை இவனுக்கு உபதேசிக்கிறார். இது பின்னாடி வரும் கதை. இதற்கு முன்னாடி இவன்தான் முதலில் ப்ரவாஹணனிடம் போகிறான். அந்த ராஜா கேட்ட கேள்விகளுக்குப் பதில் தெரியாமல் போனவுடன் இவனுக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வருகிறது. தகப்பனாரிடம் வந்து, "எவனோ க்ஷத்ரியன் என்று தன்னைச் சொல்லிக் கொள்கிற நீசன் என்னை இப்படியெல்லாம் கேள்வி கேட்டுவிட்டான்" என்று படபடக்கிறான். இதுதான் குறைகுடத்தின் லக்ஷணம் - "ரொம்ப லக்ஷணம்" என்கிறோமே அப்படிப்பட்ட "லக்ஷணம்" இதைக் கேட்ட நிறைகுடமான தகப்பனாரோ, "அடடா, இந்த விஷயங்களை நாம தெரிஞ்சுக்கணுமே" என்ற ஆர்வத்தோடும், அடக்கத்தோடும் போய் ராஜாவிடம் உபதேசம் கேட்கிறார்.

இதே கௌதமரிடம் இன்னொரு ஸந்தர்பத்தில் ஐந்து பெரிய வைதிக அநுஷ்டான சீலர்கள் "வைச்வாநர ஆத்மா" என்பது பற்றிக் கேட்டுக் கொள்வதற்காக வருகிறார்கள். (இதிலிருந்து பெரிய பெரிய ச்ரௌதிகளும் எப்படி வித்யைக்காகத் தேடித்தோடிப் போனார்கள் என்பது தெரிகிறது.) அப்போது அவர், "இவர்கள் கேட்பது நமக்குத் தெரிந்த மாதிரி எதையாவது கதைக்கப்படாது" என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு, திறந்த வெள்ளை மனஸோடு தமக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டு, கேகய ராஜாவான அச்வபதியிடம் அவர்களை அனுப்பி வைக்கிறார். இப்போது நம் நாளிலோ வேடிக்கையாகச் சொல்கிறார்கள் - "ப்ரொஃபஸர் என்றாலே, வாஸ்தவத்தில் 'ஸப்ஜெக்ட்' தெரிந்தவரல்ல, அப்படி 'ப்ரொஃபஸ்' பண்ணிக் கொள்பவர், அதாவது தெரிந்ததாகச் சொல்லிக் கொள்கிறவர்தான்", என்று இன்னொரு உபநிஷத்திலும், இப்படியே வருகிறது. அதோடு வேறு பல உசந்த உண்மைகளும் தெரியவருகிறது. ஸுகேசர், ஸத்யகாமர் முதலான ஐந்து பெரியவர்கள்

இருக்கிறார்கள். இவர்கள் ப்ரம்மத்தையே தேடித்தேடி அதிலேயே ஊறிவிடுகிற "ப்ரஹ்ம பரர்கள், ப்ரஹ்ம நிஷ்டர்கள்" என்று சொல்லியிருக்கிறது. இந்த மஹா பெரியவர்களும் சில தத்வங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற நிஜமான வித்யாபிமானத்தோடு, ரொம்பவும் பணிவாக ஸமித்துக்களை எடுத்துக்கொண்டு பிப்பலாதர் என்கிற மஹானிடம் வந்து, அந்த உபஹாரத்தை (ஸமித்து என்னும் கையுறையை) ஸமர்ப்பணம் பண்ணி, தங்களுக்கு உபதேசிக்கும்படியாக விஞ்ஞாபித்துக் கொள்கிறார்கள். இப்பேர்ப்பட்டவர்களையுங்கூட இன்னும் பரிசோதித்துப் பார்க்கணம், அதனால் எல்லா ஜனங்களுக்கும் பாடம் புகட்டணும் (வேத வித்யா பாடம் ஒருபக்கம் இருக்கட்டும், அதோடு வாழ்க்கையுதாரணப் பாடமும் புகட்டணும்) என்று பிப்பலாதர் நினைக்கிறார். "இன்னமும் ஒரு வருஷம் சுத்த ப்ரஹ்மசர்யத்தோடு தபஸ் பண்ணிவிட்டு நல்ல ச்ரத்தையோடு திரும்பி வாருங்கள். நீங்கள் கேட்பதற்கு பதில் சொல்கிறேன். தயங்காமல் என்ன கேள்வி வேணுமானாலும் கேளுங்கள் ("யதா காமம்" "இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும்" என்று உபநிஷத்திலிருக்கிறது). எனக்குத் தெரிந்தவரை பதில் சொல்கிறேன்" என்கிறார். இது இவருடைய விநயம்.

முதலில் ஒரு வருஷ தபஸ் விதித்தது அவர்களுடைய விநயத்துக்கு டெஸ்ட்.

குரு என்று ஒருவரிடம் போனால் அவர் எது சொன்னாலும் நல்லதுதான், சரிதான் என்று நம்பி அப்படி செய்யவேண்டும் இந்த நம்பிக்கைக்குத்தான் ச்ரத்தை என்று பெயர்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

ச்ரத்தை; பரிப்ரச்னம்

கீதையிலும் பகவான், தத்வதர்சிகளான ஞானிகளிடம் உபதேசம் பெற வேண்டுமென்று சொல்லிவிட்டு (4-34), நாலைந்து ச்லோகங்களுக்கு அப்புறம் (4-39) "ச்ரத்தாவாந் லபதே ஜ்ஞானம்" - "ச்ரத்தை நிரம்பியவனுக்குத்தான் ஞானம் லபிக்கும்" என்கிறார். அங்கே அவரும், சிஷ்யன் குருவை நன்றாகத் தோண்டித் தோண்டித் கேள்வி கேட்க வேண்டுமென்கிறார். "பரிப்ரச்நம்" என்ற வார்த்தையைப் போட்டிருக்கிறார். "ப்ரச்நம்" என்று மாத்திரம் சொன்னால், கேள்வி கேட்டறிவது என்று அர்த்தம். "பரி" என்று இதற்கு அடைமொழி போட்டதால் நன்றாகக் குடைந்து கேட்கணும் என்றாகிறது. இது இந்த நாளில், "வாத்தியாருக்குத் தெரிகிறதா?" என்று அவரைக் குடைந்து பார்த்து அவமானப்படுத்த ஆசைப்படுவதுபோல் அல்ல. விஷயத்தைக் குடைந்து பரிபூர்ணமாக அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதே தார்பர்யம். அதனால்தான் இந்தக் கால மாணவரின் போக்குக்கு மாறான இரண்டு வார்த்தைகள் "பரிப்ரச்நம்" என்பதை இரண்டு பக்கமும் அணைத்துக்கொண்டு வரும்படியாக பகவான் பதப்ரயோகம் செய்திருக்கிறார். "ப்ரணிபாதம்" என்பதை இரண்டு பக்கமும் அணைத்துக்கொண்டு வரும்படியாக பகவான் பதப்ரயோகம் செய்திருக்கிறார். "ப்ரணிபாதம்" என்பது "ப்ரிப்ரச்ந"த்துக்குப் பிந்தி "ஸேவா" என்ற வார்த்தையைப் போட்டிருக்கிறார்.

அதாவது சிஷ்யன் குருவுக்குப் பணிவிடை புரியணம். முதலில் பணியவேண்டும். அப்புறம் அவருக்கு எல்லாப் பணிவிடையும் செய்யவேண்டும். இதெல்லாவற்றுக்கும் "பேஸிக்"காக (அடிப்படையாக) குரு வார்த்தை, குரு உத்தரவு, குரு உபதேசம் எதுவானாலும் அது நல்லதுதான் என்ற அசைக்கமுடியாத ச்ரத்தை இருக்க வேண்டும். இவற்றோடு கூடிய சிஷ்யனைத்தான் குருவிடம் நன்றாக ஆழ்ந்து கேள்விகள் கேட்டுத் தெரிந்துகொள்ளச் சொல்லியிருக்கிறது.

இப்படிப்பட்ட நம்பிக்கைக்கு உரியவராக ஒருத்தர் வாஸ்தவமாகவே இருந்தாகவேண்டும் என்பது தனி மநுஷ்யர் குருகுலம் நடத்தும்போதுதான் யதார்த்தத்தில் நடக்கும். அவரோடேயே ஸதா ஸர்வகாலமும் இருந்தால்தானே அவருக்கு வாஸ்தவமாக உள்ள அறிவு என்ன, அவருடைய குணம் என்ன என்பது தெரியும்? ஸ்தாபன ரீதியில் படிக்கும்போது இதெல்லாம் எப்படி ஸாத்யம்? ஏதோ கொஞ் நேரம்தான் ஸ்கூல் அல்லது காலேஜ், அதிலேயும் வெவ்வேறே ஸப்ஜெக்டுக்கு வெவ்வேறே வாத்தியார் என்றிக்கிற தற்கால அமைப்பில் வாத்தியார் ஏதோ கொஞ்சம் நோட்ஸை உருப் போட்டுவிட்டு வந்து ஒப்பித்தே ரொம்பவும் விஷயஜ்ஞர் மாதிரிக் காட்டிக்கொண்டு விடுவதற்கு இடம் கொடுத்துப் போகிறது. "தெரிந்தமட்டும் பதில் சொல்கிறேன்" என்று உபநிஷத் ரிஷி சொன்னாரே, அந்த உண்மை உள்ளம், அதோடு குரு ஸ்தானத்திலிருந்து போதிலும் அவருக்கு இருந்த humility (விநய ஸம்பத்) இந்த நாளில் பார்க்க முடியுமா? சிஷ்யன் என்றாலே விநீதன், அவன் விநயரூபமாக இருக்கவேண்டும் என்பதோடு நிற்காமல் இப்படி குருவும் விநயமாயிருந்திருக்கிறார்.

இப்படியெல்லாம் குரு, சிஷ்யன் இருவருமே உண்மையோடு எளிமையோடு ஒழுகியதற்குக் காரணம், குருகுலம் என்று ஒன்று சேர்ந்து ஒரு அகத்து மநுஷ்யர்களாக குரு - சிஷ்யாள் ஹ்ருதயம் ஒட்டி உறவோடு வஸித்ததுதான். பரஸ்பரம் ஒளிவு மறைவில்லாமல் இருந்திருக்கிறார்கள். அந்த ஹ்ருதய ஒட்டுறவு ஒரு ஸ்தாபனத்தில் எப்படி வரும்? இந்த பாந்தவ்யத்தாலேயே குரு மனஸைத் திறந்து காட்டினார். தன் புத்தியையும் திறந்து, பாத்ரர்களான சிஷ்யர்களிடம் தனக்குத் தெரிந்த ஸகலத்தையும் கொட்டினார். "தெரிந்தவரை

சொல்கிறேன்" என்று சொன்ன அதே வாயோடு பிப்பலாதர், "தெரிந்ததில் ஸர்வத்தையும் சொல்கிறேன்" என்று பரிபூர்ணமாக வித்யாதானம் செய்ய முன் வருகிறார். சிஷ்யன் தன்னை மிஞ்சி விடுவானோ என்று பயப்படுவது, சிஷ்யன் எழுதியதையே தன் "தீஸிஸ்" என்று வெளியிடுவது - இப்படியெல்லாம் தற்காலம் கேட்கிறோம்.

இதெல்லாவற்றுக்கும் மேலே குருகுலத்தின் பாந்தவ்யத்தில் குரு சிஷ்யனிடம் காட்டிய அன்பும், கரிசனமும் இன்ஸ்டிட்யூஷனில் உண்டாகவே முடியாது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

*சோதித்துத் துலக்குவது*

பிரகாசம் ஜாஸ்தியாவதற்கே ஒரு மணியைக் கடைசல் பிடிக்கிற மாதிரி, மாணாக்கன் சோபிக்கவேண்டுமென்றே அந்நாள் குரு அவனை எவ்வளவோ சோதித்தார். பாடமே சொல்லித் தராமல் நீண்டகாலம் வேலை மட்டும் வாங்கி அவனைப் பணிவில் புடம் போட்ட ரிஷிகளும் உண்டு.

உதாரணமாக உபகோஸலன் என்று ஒரு சிஷ்யன். குருவின் பேர் ஜாபால ஸத்யகாமர். இவர் அந்தக்கால 'ஸிலிபஸ்', 'கர்ரிகுலம்' இதுகளின்படி பன்னிரண்டு வருஷங்களில் அநகே சிஷ்யர்களுக்கு வேத சாஸ்த்ர சிக்ஷை கொடுத்தார். ஆனால் இந்த உபகோஸலன் என்கிற பையனை மட்டும் பாடம் கேட்க அநுமதிக்கவில்லை. பன்னிரண்டு வருஷமும் தம்முடைய அக்னிகளைக் கவனித்துக் கொள்கிற பொறுப்பிலேயே அவனை ஈடுபடுத்தியிருந்தார். அந்தப் பிள்ளையும் முணமுணக்கவில்லை. குருகுலத்தில் பன்னிரண்டு வருஷம் வஸித்தும் ஒரு பாடம்கூடக் கேட்காமல், அவர் சொன்ன கார்யத்தையே பண்ணிக் கொண்டிருந்தது.

அத்யயனம் பூர்த்தியானவுடன் ஸமாவர்த்தனம் என்று பிரம்மசாரிக்கு (சிஷ்யனுக்கு) ஒரு ஸம்ஸ்காரம் பண்ணி குருகுலத்திலிருந்து அகத்துக்குத் திருப்பி அனுப்புவார்களௌன்றும் அதற்கப்புறம் அவன் கல்யாணம் செய்து கொய்டு க்ருஹஸ் தாச்ரமம் ஏற்க வேண்டுமென்றும் சொன்னனேல்லவா? இந்த மாதிரி மற்றப் பசங்களுக்கு ஸத்யகாமர் ஸமாவர்த்தனமும் பண்ணிவிட்டார். உபகோஸலனை மட்டும் அப்படியே ignore (அலக்ஷ்யம்) பண்ணிவிட்டு - அல்லது பண்ணின மாதிரி.

அப்போதும் அந்தப் பிள்ளை பாட்டுக்குப் பொறுமையாகவே இருந்தது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## குரு

### *குரு பத்னி*

ஆனால் ஸத்யாகமருடைய பத்னிக்குத்தான் அதற்கு மேல் பொறுக்கமுடியவில்லை. அவள் அவரிடம் போய், "இந்தப் பிள்ளை நல்ல ப்ரம்மசார்யத்தோடு, தபஸ்ஸோடு இத்தனை வருஷம் உம்முடைய அக்னிகளைப் போஷித்து வந்திருக்கிறான். நீரானால் அவனுக்குப் பாடமே சொல்லித் தரக் காணோம். இந்த அக்னிகள் உம்மை சபிக்காமலிருக்க வேண்டுமானால் இந்த ஸாதுப் பிள்ளைக்கு இப்போதிலிருந்தாவது பாடம் ஆரம்பியும்" என்று சண்டைக்கு வந்துவிட்டாள்.

சண்டை என்றாலும் அதிலேயும் ரஸம் இருக்கிறது. அவள் சொன்னதிலிருந்து அநேக ரஸமான விஷயங்களைத் தெரிந்து கொள்கிறோம். முதலில், குரு பத்னி என்பவள் எப்படி குருவைவிடவும் சீஷ்யப்பிள்ளைகளிடம் வாஞ்சையோடு இருந்தாள், அகத்தைவிட்டு வந்த குழந்தைகளுக்கு எப்படி அம்மாவாக இருந்தாள் என்று தெரிகிறது.

தர்ம பத்னிகளில் உள்ள இரண்டு தினுஸில் ஒன்றும் இங்கே தெரிகிறது. பத்னியின் தர்மம் புருஷன் சொல்வது தர்மமா அதர்மமா என்றே பார்க்காமல் அதன்படி செய்ய வேண்டுமென்று கருதும் பதிவ்ரதைகள் ஒரு தினுஸு. நளாயினி இப்படித்தான் அழுகிச் சொட்டும் புருஷனை அவனுடைய இச்சா பூர்த்திக்காகத் தகாத இடத்துக்குத் தூக்கிக்கொண்டு போனாள். இன்னொரு தினுஸு, பதியானவள் தர்மத்திலிருந்து தப்பிவிடக்கூடாதே என்ற விசாரத்தில் அவனுக்கே தர்மங்களை நினைப்பூட்டுவதுதான் பத்னியின் கடமை என்று கருதும் பதிவ்ரகைள். இப்படித்தான் ஸீதை ராமரிடம், அவர் அவளை விட்டுக் காட்டுக்குப் புறப்பட நினைத்தபோது, "எந்தக் கஷ்ட நஷ்டத்திலும் பதியை விட்டுப் பிரியாமலிருப்பதுதானே ஸ்த்ரீ தர்மம்? இந்த தர்மத்தை உங்களுடைய தாயாருக்கு எடுத்துக் காட்டித்தானே அவர் உங்களோடு காட்டுக்கு வராமல் உங்கள் அப்பாவின் பக்கத்தில் இருக்கும்படிப் பண்ணியிருக்கிறீர்கள்? அப்படியிருக்க எனக்கு மட்டும் அந்த தர்மம் இல்லையா என்ன? என்னைக் காட்டுக்கு வராமல் இங்கேயே இருக்க வேண்டுமென்று நீங்கள் சொல்வது எப்படி நியாயம்?" என்று நிரம்ப வாதம் பண்ணிமுடிவில் ராமரையும் ஸம்மதிக்கச் செய்தாள்.

"அக்னி கோபித்துக் கொண்டுவிடும்" என்று ஸத்யாகாம ரிஷியின் பத்னி அவரிடம் சொன்னது, "உம்மாச்சி கண்ணைக் குத்திவிடும்" என்று குழந்தைகளை நாம் பயமுறுத்துகிற மாதிரி இல்லை. வாஸ்தவமாகவே ரிஷிகளின் க்ருஹங்களில் திவ்ய சக்திகள் உயிருள்ள வாந்நித்யத்தோடு இருந்ததால் அவர்கள் தர்ம விருத்தமாகப் போனால் அவை அவர்களிடம் கோபம் கொள்ளத்தான் செய்ய்ம். 'உபகோஸலன் உபதேசமாகாமல் இப்படிப் பல வருஷங்களாக இருக்கிறானே' என்று அவனுக்காகக் கவரைப்பட்டாற்போலவே, 'இப்படிப் பதி உபதேசிக்காமலிருக்கிறாரே இவரை அந்தப் பிள்ளை காத்து வளர்க்கிற இவருடைய அக்னியே சபித்துவிடாமலிருக்க வேண்டுமே' என்றும் வாஸ்தவமாகவே அந்த அம்மாள் கவலைப்பட்டிருக்கிறாள்.

அக்னிகள் அந்த ஆச்ரமத்தில் ரொம்பவும் ஜீவசக்தியோடு

ஸாந்நித்யமாகத்தான் இருந்தன என்பதும் மேலே போகிற கதையில் தெரிகிறது.

அவள் அப்படிச் சொல்லியும் ரிஷி பாட்டுக்கு, இன்னும் சோதித்துப் பார்ப்போமென்கிறார்போல், வெளியே போய் விட்டார்.

'குரு பத்னி சொல்லியும் குரு கேட்கவில்லையே இப்படி நம் நிமித்தமாக அவர்களுக்குள் அபிப்ராய பேதம் வேறே ஏற்பட்டுவிட்டதே' என்றெல்லாம் உபகோஸலனுக்கு வேதனையாகிவிட்டது. அவனுக்குச் சாப்பாடே இறங்கவில்லை.

"ஏண்டா கொழந்தே, சாப்பிடாமலிருக்கே?" என்று குருபத்னி விசாரமாகக் கேட்டாள்.

"மனோ வ்யாதிதான். சாப்பாடு கேட்கமாட்டேன் என்கிறது" என்றான் பையன்.

## *குரு*

### *தெய்வசக்திகள் போதித்தாலும் குருபக்தி குறையாதது*

அப்போதுதான், அவன் பார்த்துப் பார்த்துப் போஷித்துக்கொண்டு வந்த மூன்று அக்னிகள் தங்கள் ஸாந்நித்யத்தை வெளிக் காட்டின. "பாவம், நமக்கு இத்தனை பண்ணின பிள்ளை சாப்பாடு கொள்ளாத அளவுக்கு வேதனைப் படுகிறானே. இனியும் காலஹரணம் பண்ணாமல் நாமே இவனுக்கு உபதேசம் பண்ணிவிடுவோம்" என்று அதுகள் தங்களுக்குள்ளே முடிவு செய்தன. அந்தப்படியே அவனுக்கு உபதேசமும் பண்ணிவிட்டன. முதலில் அவை மூன்றும் சேர்ந்தும், அப்புறம் ஒவ்வொன்றும் தனித்தனியாயும் அக்னி வித்யையையும் ஆத்மவித்யையையும் உபதேசித்தன.

ஆனாலும் அவனுக்கு குருவின் தேவையில்லாமல் தாங்களே எல்லா உபதேசமும் கொடுத்துவிட்டால் அவர் மரியாதையைக் குறைத்ததாகிவிடும் என்பதால் அக்னிவித்யை ஆத்ம வித்யை இவற்றின் (philosophy -ஐ) தத்வத்தை மட்டும் சொல்லிக் கொடுத்துவிட்டு, "ஸௌம்யா, இனிமேல் ஆசார்யர்தான் உனக்கு இந்த தத்வங்களை அநுபவமாக்கிக் கொள்வதற்குச் செய்யவேண்டிய கார்ய க்ரமங்களை (procedure-ஐ),(technique-ஐயும்) சொல்லிக் கொடுக்கணும்" என்று முடித்துவிட்டன.

ஆசார்யார் திரும்பிவந்தார். "உபகோஸலா" என்று அவனைக் கூப்பிட்டு கொண்டேதான் உள்ளே நுழைந்தார்.

"பகவானே" என்று குரல் கொடுத்துக்கொண்டு அவனும் அவர் முன்னே போய் நின்றான்.

அவர் ஒரு பக்கம் சோதனை பண்ணினாலும், இவன் ஒரு பக்கம் வேதனைப்பட்டாலும் பரஸ்பரம் அன்பு மட்டும் போய் விடவில்லை என்று இங்கே உபநிஷத் ஸூக்ஷ்மமாகக் காட்டுகிறது.

பிள்ளையாண்டானைப் பார்த்தார். அவன் முகம் ஒரே தேஜஸாகப் பிரகாசித்தது. 'ஓஹோ, இப்படியா ஸமாசாரம்' என்று ஊஹித்துவிட்டார். "ஸௌம்யா, யார் உனக்கு உபதேசம் பண்ணினார்கள்?" என்று அவனையே கேட்டார்.

பையனை பயம் பிடித்துக் கொண்டது. அவரன்னியில் அவருடைய குருகுலுத்திலிருந்துகொண்டே உபதேசம் வாங்கிக்கொண்டது தப்போ என்று பயம். கருணையோடு உபதேசித்த அக்னிகளைக் காட்டிக் கொடுப்பதா என்ற தயக்கம் வேறே குருவிடம் ஒளிக்கவும் கூடாது, நடந்ததை அப்பட்டமாகப் போட்டு உடைக்கவும் கூடாது என்று நினைத்தான். ஜாடை மாடையாய்ப் புரிய வைத்துவிட எண்ணி, "வேறே யார் உபதேசிப்பார்கள் ஸ்வாமி? இந்த அக்னிகள்தான் இப்போது இருக்கிற மாதிரி இல்லாமல் கொஞ்சம் வேறே மாதிரியாக இருந்தன" என்றான்.

அவர் வைத்த கடைசி டெஸ்டிலும் அவன் ஜயித்து விட்டான். 'இனியும் தாங்காமல் அக்னிகள் உபதேசம் பண்ணிவிடும்' என்று அவர் மனஸுக்கே தெரிந்த ஒரு ஸ்டேஜில்தான் அவர் வேண்டுமென்றே அகத்தை விட்டுப் போனார். ஏனென்றால் அவர் வாழ்க்கையிலேயே பூர்வத்தில் இப்படி நடந்திருக்கிறது.

ஹாரித்ரும கௌதம ரிஷி என்பவர் பூர்வத்தில் இந்த ஸத்யகாமருக்கு உபநயனம் செய்துவைத்துநானூறு சோனிப் பசுக்களை அவரிடம் மேய்த்துவரச் சொன்னார். அந்த சோனிப் பசுக்களை நன்றாகப் போஷித்துப் புஷ்டி பண்ணி, கன்று போடவைத்து, நானூறை ஆயிரமாக வ்ருத்தி பண்ணிக் கொண்டுதான் குருவிடம் திரும்பி வந்து உபதேசம் வாங்கிக் கொள்வது என்று ஸத்மகாமர் தீர்மானம் செய்து கொண்டு கிளம்பினார். அந்தத் தீர்மானம் கார்யமாக நிறைவேறுவதற்கு அநேக வருஷங்கள் பிடித்தன. பசுமந்தையை ஆயிரமாக்கி ஸத்யகாமப் பிரம்மசாரி குருகுலத்துக்குத் திரும்பி வருகிற வழியிலேயே அதிலிருந்த ஒரு ரிஷபம் அவருக்கு ஒரு உபதேசம் பண்ணிற்று. அதற்கடுத்த இரண்டு நாட்களில் ஒரு ஹம்ஸ பக்ஷியும், மத்கு என்கிற ஒரு (நீர்வாழ்) பக்ஷியும் உபதேசம் பண்ணின. இப்போது உபகோஸலனுக்கு உபதேசம் கேட்டதால் தேஜஸ் உண்டானாற்போலவே அப்போது ஸத்யகாமருக்கும் உண்டாயிற்று. இப்போது இவர்

உபகோஸலனைக் கேட்டாற் போலவே அப்போது ஹாரித்ருமர் இவரிடம், "உனக்கு யார் உபதேசித்தது" என்று கேட்டார். இப்போது உபகோஸலன் நாசூக்காக பதில் சொன்னதுபோலவே அப்போது அவர், "மநுஷ்யாள் யாரும் உபதேசிகக்வில்லை" என்று சொன்னால். அதோ?, தம்மைப் பொறுத்தமட்டில் ஹாரித்ருமரேதான் தம்முடைய உபதேச குருவாக இருக்க வேண்டுமென்று தமக்கு ஆசை என்றும் விஜ்ஞாபித்துக்கொண்டார்.

இந்த இடத்திலே அவர் ஆசாரியன் அத்யாவச்யம் என்கிற கருத்தையும் வெளியிட்டிருக்கிறார். 'ஆசார்ய முகமாகக் கற்கின்ற வித்யைதான் உத்தமமான பலன் தரும்' என்று அவர் சொல்வதாக இருக்கிறது. சிஷ்யனாக உள்ள தாம் இப்படி முடிவு பண்ணி அபிப்ராயம் சொல்வதுகூட அதிக ப்ரஸங்கித்தனம் என்று நினைத்து அவர், "தங்களை போன்ற பெரியவர்கள் சொல்லி நான் கேட்டிருப்பது

என்னவெனில், ஆசார்யமுகமாக அறிகிற வித்யைதான் உத்தம பலன் தரும் என்பது" என்கிறார்.

இப்படி ஒவ்வொரு எழுத்திலும் குரு - சிஷ்ய பாவங்கள் எப்படியிருக்க வேண்டுமென்பதை உபநிஷத்துக்கள் நுட்பமாகக் காட்டுகின்றன.

ஸத்யகாமர் சிஷ்யராயிருந்த கதையிலிருந்து ஆசார்யராகியிருக்கிற கதைக்கு வரலாம். உபகோஸலனுக்குத் தாம் உபதேசிக்காவிட்டாலும் திவ்ய சக்திகள் எதன் மூலமாகவாவது உபதேசம் பண்ணும் என்று ஸொந்த அநுபவத்திலிருந்தே அவருக்குத் தெரியும். "இம்மாதிரி உபதேசம் வாங்கிக்கொண்ட பிறகு பையன் எப்படி ஆவான்? 'இனிமேலே இந்த குருவின் உதாஸீனத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டியதில்லை. இதே போல திவ்ய சக்திகளிடமிருந்தே எல்லா உபதேசங்களும் வாங்கிக்கலாம்' என்று அஹம்வாவப்படுகிறானா என்று பார்க்கலாம். அப்படியில்லாமல் நம்மிடமே பூர்த்தியாக அத்யயனம் பண்ணுவதென்று இவன் இங்கேயே இருந்தால், (அக்னிகளிடம்) உபதேசம் வாங்கிக்கொண்டதைத் திமிராகச் சொல்லாமல் பயத்தோடு தெரிவிக்கிறானோ, பார்ப்போம்" என்றெல்லாம் அவர் டெஸ்ட் பண்ண உத்தேசித்திருந்தார்.

அதிலே அவன் ரொம்ப நன்றாகப் பாஸ் பண்ணினதில் அவருக்குப் பரம த்ருப்தி ஏற்பட்டுவிட்டது.

"அக்னிகள் என்ன உபதேசம் பண்ணின?" என்று கேட்டார்.

சொன்னான்.

"அரைகுறையாக அதுகள் சொன்னதை இதோ நான் புஷ்களமாக உபதேசிக்கிறேன்" என்று சொல்லி இத்தனை காலம் ஏமாற்றியதற்கும் சேர்த்து அநுக்ரஹம் பண்ணி உபதேசம் கொடுத்தார் ஸத்யகாமர்.

# குரு

## *பரீக்ஷை செய்து, படிப்படியாக உபதேசம்*

### மாணவனின் ஸ்வய சிந்தனைக்கு ஊக்கம்

குரு என்பவர் தாம் பாட்டுக்குக் கடமை என்று ஏதோ லெக்சர்கள் கொடுத்து 'போர்ஷன் எல்லாம் கவர் பண்ணியாச்சு' என்று நிம்மதியாகப் போய்விடாமல், மாணவனை சோதித்துச் சோதித்துச் சுத்தம் செய்து குணவானாக்கி அதன் பின்பே வித்யையைக் கற்றுக் கொடுத்து அவனை புத்திமானாக ஆக்கினார். குணமில்லாத புத்திசாலித்தனத்தைவிடப் பெரிய ஆபத்து எதுவுமில்லை.

எந்தப் பக்வ ஸ்திதியில் இருப்பவனுக்கு என்ன உபதேசம் தரவேண்டும், அவனை அடுத்த ஸ்டேஜுக்கு எப்படி உயர்த்தி இதற்கு மேலான தத்வங்களை உபதேசிக்க வேண்டும் என்றெல்லாம் நன்றாக யோசித்துத் தீர்மானம் பண்ணிக் கொண்டு படிப்படியாக அவனை டெவலப் பண்ணிக் கொண்டே போய் மேலும் மேலும் உயர்ந்த வித்யகைளைக் கற்பித்துக்கொண்டு போயிருக்கிறார்கள். ப்ருகு தம்முடைய பிதாவான வருணரிடமேதான் சிக்ஷை பெற்றார். ஆனாலும் முதலில் அவர் இருந்த அதிகப் பக்வமில்லாத நிலையில் பிதாவானவர் அன்னமய கோசமான இந்த உடம்பே ஸத்யம் என்ற பேஸிஸில் (அடிப்படையில்)தான் ஆரம்பித்தார். அப்புறம் அவரைத் தபஸ் பண்ண வைத்து, அவராகவே உடம்பின் அஸத்யத்வத்தை (மெய்யின் மெய்யின்மையை) உணரும்படியாகப் பண்ணி,

அதன்பின் ப்ராணமய கோசம்தான் ஸத்யம் என்று நினைக்கும்படி உயர்த்திவிட்டார். இப்படியே மறுபடி மறுபடி தபஸ் பண்ணவைத்து, அதாவது மேலும் மேலும் ப்ருகுவைப் பக்வப்படுத்திக் கொண்டே போய், "ப்ராணனுமில்லை, மனஸ்தான் ஸத்யம், மனஸும் இல்லை, விஞ்ஞானம்தான் (அறிவு என்று வைத்துக்கொள்ளலாம்) ஸத்யம், இல்லை, இதெல்லாம் கடந்தும் இதற்கெல்லாம் அடிப்படையாய், தன்னியல்பான ஆனந்த ஸ்வரூபமாய் இருக்கும் ஆத்மாதான் ஸத்யம்" என்று கடைசியில் தெரியவைத்தார்.

இப்படியெல்லாம் ஒரு வித்யார்த்தியை (மாணவனை)ப் படிப்படியாகப் பக்குவப்படுத்தி அந்தந்த ஸ்டேஜுக்கு உரிய வித்யையைப் புகட்டுவதென்பது இன்ஸ்டிட்யூஷனில் எந்த அளவுக்கு ஸாத்யம்?

இதிலே இன்னொரு முக்யமான அம்சமும் இருக்கிறது. "குழந்தைகளை அவர்களே அநேக விஷயங்களைக் கார்யத்தில் செய்து பார்க்குமாறு விடவேண்டும். இதே மாதிரி, விஷயங்களை அவர்களே யோசித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளும்படியும் விடவேண்டும். எல்லாவற்றையும் புஸ்தகத்திலே போட்டு, வாத்தியார் அதைப் பார்த்து ஒப்பித்து அப்புறம் மாணவனும் பொட்டை நெட்ருப் போடும்படியாக விடப்படாது" என்று மான்டிஸோரி முதலானவர்கள் சொல்கிறார்கள். தம்முடைய யஜ்ஞாநுஷ்டானத்துக்கான சுற்றுக் கார்யங்களை ஆசாரியரானவர் சிஷ்யனிடம் விடும்போது அவனுக்குத் தானே ஒன்றைச் செய்து பார்த்து தெரிந்துகொள்ள இடமேற்படுகிறது. இதர ஜாதியாரின் குழந்தைகள் தங்களுடைய தொழிலையே முக்யமாக அப்பன், பாட்டன் செய்வதைப் பார்த்துத் தெரிந்துகொண்டு தாங்களும் அம்மாதிரிக் கார்யத்தில் செய்தே அவற்றில் அறிவைப் பெருக்கிக் கொள்ளும்படிதான் நம்முடைய சாஸ்த்ரீயக் கல்வி முறையில் இடம் அளித்திருக்கிறது. இவ்வாறு மாணவர்களை நேராகக் கார்யத்தில் விட்டு அதன் மூலம் "ப்ராக்டிகல் நாலெட்ஜ்" (நடைமுறை அறிவு) பெற வழி வகுத்திருப்பது போலவே அவர்களை ஸொந்தமாகச் சிந்திக்கவிட்டு உண்மைகளைப் பற்றிய அறிவைப் பெறவும் அக்காலக் கல்வி முறையில் இடம் கொடுத்தற்கு ப்ருகு கதை சான்று. யோசித்து, யோசித்து ப்ருகுவே ப்ருகு கதை சான்று. யோசித்து, யோசித்து ப்ருகுவே ஸத்யத்தைப்பற்றி அறியும்படி அவருக்குப் பிதாவும் ஆசார்யருமாக இருந்த வருணன் ஊக்கம் தந்திருக்கிறார்.

இன்னும் அநேக கதைகளிலும், "குரு உபதேசம் செய்தார். அப்புறம் 'இதைப்பற்றி ஒரு வருஷம் தபஸ் பண்ணிவிட்டு (அதாவது ஆழச் சிந்தித்துவிட்டு) திரும்பி வந்து என்ன தெரிந்து கொண்டாயென்று சொல்லு' என்று சொன்னார் என்று வருகிறது.

இன்னொரு உபநிஷத் கதையில் வருகிறது சரீரம்தான் ஸத்யம்

என்பதற்கு மேலே போகமுடியாதவனாக அஸுரனான விரோசனன் இருக்கிறான். ஆனால் அவனையும்கூட. இப்போது நம்மில் பெரும்பாலோர் இருக்கிறதுபோல எந்த வித்த் தத்வ சிந்தனையுமில்லாமல், வெறும் அரட்டையிலும் சோம்பேறித்தனத்திலும் பொழுதைப் போக்கும் வ்ருதா ஆஸாமியாக இல்லாமல், எது ஸத்யம் என்று கொஞ்சமாவது ஆராய்ந்து, அது சரீரம்தான் என்று தப்பாகவாவது ஒரு கொள்கைக்கு வருவதற்கு குருவான ப்ரஜாபதி உதவி செய்திருக்கிறார். எதையுமே

கழித்துக்கட்டிவிடாமல் சொஞ்சமாவது அபிவிருத்தி செய்து பார்க்கலாம் என்ற நோக்கத்திலேயே அக்கால குருமார்கள் சிஷ்யர்களை ஏற்றுக் கொண்டதற்கு இது proof.

சிஷ்யன் என்று வரும்போது ரொம்பவும் உதவாக்கரை கூட யோக்யதை ஸம்பாதித்துக் கொள்வதற்காக அந்நாளில் பரிச்ரமப்பட்டிருக்கிறானென்பதும் இங்கே தெரிகிறது - அஸுரன் விரோசனனும் கூட ப்ரஜாபதியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, தத்வத்தை ஆராய்வதற்கான யோக்யதையை ஸம்பாதித்துக் கொள்வதற்காக முப்பத்திரண்டு வருஷம் ப்ரம்மசர்யம் அநுஷ்டித்தான் என்று உபநிஷத் சொல்கிறது.

தேவராஜன் இந்த்ரனும் தத்வம் தெரிந்துகொள்வதற்காக விரோசனனுடனேயே ப்ரஜாபதியிடம் போனவன்தான் .ஆனால் விரோசனன் மாதிரி சரீரத்தோடு இவன் நின்றுவிடாமல், ப்ருகு கதையில் பார்த்தோமே, அப்படி சரீர ஸௌக்யத்தோடு நிறைவு பெற்றுவிட முடியாமல் மறுபடி ப்ரஜாபதியிடம் வருகிறான். இதற்கு மேற்பட்ட உண்மைக்கு அதன் அர்ஹனாவதற்காக (தகுதியுள்ளவனாவதற்காக) அவர் அவனை மறுபடி முப்பத்திரண்டு வருஷம் அவரோடேயே வஸித்து ப்ரம்மசர்யம் காக்கச் சொல்கிறார். மஹா பெரிய தேவ ராஜாவானாலும் ஸரி, இப்படி கடுமையாக விதிக்கு உட்படுத்தி, அதனாலேயே பெறக்கூடிய பரிசுத்தியை சிஷ்யன் பெறுமாறு பண்ணி அப்புறம்தான் உசந்த தத்வங்களை உபதேசிப்பார்கள். இந்த மாதிரி மொத்தம் நூற்றியொரு வருஷம் இந்த்ரன் இந்த்ரியக் கட்டுப்பாட்டோடு இருந்த பிற்பாடுதான் ப்ரஜாபதி அவனுக்கு முடிவான ஆத்ம தத்வத்தை போதிக்கிறார்.

தகுதி பார்க்காமல் வித்யையைக் கொடுப்பதால்தான்

ஸயன்டிஸ்ட்கள் ஆத்ம ஹானிக்கான நூதன நூதனக் கண்டுபிடிப்புகளைப் பண்ணுவது, டாக்டர்கள் ம= ா பாபங்களுக்கு ஆதரவு தந்து ஊக்குவதான சிகித்ஸைகள் தருவது என்பதெல்லாம் ஸஹஜமாகி வருகின்றன. இதற்கான அநேக காரணங்களில் ஒன்று, ஸ்தாபன ரீதியில் பல மாணவர்களக்குக் கல்வி புகட்டும்போது, ஒவ்வொருத்தருக்கும் தனிப்பட்ட கவனம் (Individual attention)செலுத்த முடியாமலிருப்பதுமாகும்.

இப்படிக் கண்குத்திப் பாம்பாகக் கவனிப்பது எத்தனையோ ச்ரமம். இதில் எத்தனையோ பொறுப்பு. "இவன் யாருடா ஓயாமல் நம்மைப் பரீக்ஷை பண்ணி ஹிம்சித்துக் கொண்டிருக்கிறான்." என்று சிஷ்யனின் எரிச்சலை வேறு வாங்கிக்கொள்ளவேண்டும். எந்த விதமான ப்ரதிப்ரயோஜனத்தையும் கருதாமலே, 'வித்யை பரவ வேண்டும், பரவ வேண்டுமென்றாலும் (இப்போது எல்லவற்றையும் எல்லாருக்குமூ அவிழ்த்துக்கொட்டி மதிப்பைக் குறைப்பது போலவும் இல்லாமல்) தக்கவர்களுக்குத்தான் வித்யையைத் தரவேண்டும். அதற்காக, நிர்தாக்ஷிண்யமாகத் தகுதியைச் சோதித்துப் பார்க்கவேண்டும். அந்தத் தகுதி என்பது புத்தியைக் குறித்ததாக மட்டுமில்லாமல், மாணவனின் காரெக்டரை, குணத்தைக் குறித்ததாகவுமிருக்கவேண்டம். முடிந்த மட்டும் தகுதியைப் படிப்படியாக அபிவ்ருத்தி பண்ண ப்ரயாஸைப் படவேண்டும்' என்று ஆதிகால குருமார்கள் இருந்திருக்கிறார்கள்.

இந்தக் கண்டிப்புக்கு மஹா பெரிய தேவராஜனும் உடன்பட்டான், ஏன்,அஸுர ராஜன் விரோசனன்கூட உடன்பட்டான் என்பது இக் காலத்தில் மாணவர்களுக்கு வித்யையில் இருந்த ஆர்வத்தைக் காட்டுகிறது. அதோடு நிற்கவில்லை. 'இவ்வளவு கண்டிப்புச் செய்ய இவர் யோக்யதாம்சமுள்ளவர்தான். இத்தனை யோக்யதாம்சமுள்ளவருக்கு நாம் கீழ்ப்படிந்து போவதில் நமக்கு ச்ரேயஸ்தானே தவிர குறைவு இல்லை' என்று சீடர்கள் நினைக்கும்படியான உத்தம புருஷர்களாக ஆசார்யர்கள் இருந்ததும் இதிலிருந்து தெரிகிறது. இதிலே இன்னொரு முக்யமான அம்சமும் இருக்கிறது. 'உத்தம் புருஷர்' என்றால் அப்பழுக்கில்லாத சுத்த வாழ்க்கை, நேர்மை, தபஸ்,

வைராக்யம் ஆகியவை மட்டும் இருந்தால் போதுமா என்ன? இவை பிறத்தியாரிடம் மரியாதையையும் பக்தியையும் தான் தூண்டும், ஆனால் அவரோடேயே கூட இருந்து வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று மாணவன் விரும்பும்படியாக இவை மாத்திரம் அவனை அவரிடம் ஆகர்ஷித்துவிடுமா என்ன? தபஸ்வி, மஹாபுத்திமான, கடும் நேர்மையாளர் என்றார் தூர இருந்து நமஸ்காரம் பண்ணத் தோன்றுமே ஒழிய, கூட இருந்து வாஸம் பண்ணுகிற ஆசை ஏற்படாதே. இந்த விருப்பத்தை உண்டாக்குவதற்கு குருவானவர் மற்ற எல்லா யோக்யதாம்சங்களுக்கும் மேலாக அன்பு உள்ளத்தவராக, அருள் ஸ்வபாவமுள்ளவராக இருந்தாக வேண்டும். உத்தம புருஷ லக்ஷணங்களில் முதலாக வருவது இந்த அன்புதான், அருள்தான். அன்பேதான் திவ்ய சக்தியைப் பெற்றுப் பிறரை ரக்ஷிக்க வலிமை பெறுகிற போது அதை அருள் என்றும் அநுக்ரஹம் என்றும் சொல்கிறோம்.

# குரு

## கண்ணன் கதையில் ஆசானின் அன்புடைமை

நம்முடைய சாஸ்த்ர, புராணங்களிலிருந்து இந்த அன்புடைமையில், அருளுடைமையில் அந்நாள் ஆசார்யர்கள் ஆதர்ச புருஷர்களாக இருந்திருப்பது தெரிகிறது. குரு சிஷ்யர்களக்கிடையிலே பரஸ்பர ப்ரியம் போகவே கூடாது என்றுதான் பாடம் ஆரம்பிக்கும்போதே மந்த்ர பூர்வமாக வேண்டிக்கொண்டிருக்கிறார்கள். "(குரு - சிஷ்யர்களான) நாங்கள் ஒருத்தருக்கொருத்தர் பகைத்துக் கொள்ளாமல் இருக்கவேண்டும்" என்பது பாட ஆரம்பத்திலும், முடிவிலும் வருகிற உபநிஷத் பிரார்த்தனை.

"அடிக்கிற கைதான் அணைக்கும்" என்பதற்கு அப்படியே ரூபகமாக அந்த ஆசார்யர்கள் இருந்திருக்கிறார்கள். கண்டிப்புச் செய்ய வேண்டிய இடத்தில் எப்படி நிர்தாக்ஷிண்யமாகக் கண்டித்தார்களோ அப்படியே அன்பைக் கொட்ட வேண்டிய ஸமயத்தில் கொட்டினார்கள். பாகவதத்தைப் பார்த்தால் போதும் - இரண்டும் தெரியும். பகவானே குசேலரிடம் தாங்களிருவரும் சேர்ந்து குருகுலவாஸம் செய்த நாட்களைப்பற்றி ஞாபகப்படுத்துகிறார்.

கம்ஸவதமான பின் பகவானுக்கும் பலராமருக்கும் உபநயனமாகி அவர்கள் ஸாந்தீபனி என்ற பிராம்மணரிடம் குருகுலவாஸம் செய்கிறார்கள். ஸர்வ வித்யைகளும் அவனிடமிருந்துதான் என்றாலும் லோகத்துக்கு குரு பக்தியை உதாரணம் காட்டவே பகவானும் இப்படி ஒரு ஆசார்யனிடம் போய்ப் படித்தான் என்று பாகவதம் சொல்கிறது. ஆனாலும் பகவானுக்கு அவதார கார்யங்கள் நிறையக் காத்துக் கொண்டிருந்ததால் பன்னிரண்டு வருஷம் வித்யாப்யாஸம் செய்வது என்று வைத்துக்கொள்ளாமல், தன் திவ்ய சக்தியையும் கொஞ்சம் கைக்கொண்டு, ஒரு நாளுக்கு
திவ்ய சக்தியையும் கொஞ்சம் கைக்கொண்டு, ஒரு நாளுக்கு

ஒரு சாஸ்த்ரம் வீதம் அறுபத்துநாலே நாளில் அத்தனை சாஸ்த்ரமும் கற்றுக்கொணட்டு விடுகிறார். (பலராமரும்தான். அவரும் அவதாரம்தானே?) இதிலிருந்தே க்ருஷ்ணருடைய தெய்விக ப்ரபாவத்தை குரு ஸாந்தீபனி தெரிந்துகொண்டு விடுகிறார். அதனால் பிற்பாடு சிக்ஷை பூர்த்தியாகி, "என்ன தக்ஷிணை தரணும்?" என்று பகவான் கேட்டபோது, ரொம்ப நாள் முந்தி ஸமுத்ரம் அடித்துக்கொண்டு போய்விட்ட தன்னுடைய பிள்ளையை அவர் யமாலயத்திலிருந்து மீட்டுக்கொண்டு வந்து தரவேண்டும், அதுதான் தமக்குவேண்டிய தக்ஷிணை என்கிறார். பகவானும் அப்படியே பண்ணுகிறார். அது இப்போது நமக்கு விஷயமில்லை.

பின்னே எது விஷயம் என்றால், இப்படி தெய்வசக்தி பொருந்தியவராக க்ருஷ்ணரை அவருடைய ஆசார்யர் தெரிந்துகொண்டிருந்தபோதிலும், 'சீஷப்பிள்ளை என்று வந்த ஒருத்தனை ஆசார்யர் நன்றாக வேலை வாங்கி, பணியினாலும் பணிவினாலும் கட்டுப்படுத்தி சுத்தி செய்வார்' என்று லோகத்துக்குக் காட்டவே அவர் இந்த சிஷ்ய வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறார் என்றும் தெரிந்து கொண்டார். எனவே வேலை வாங்குவதை இவர் விஷயத்திலும் விட்டு விடக் கூடாது என்று இருந்திருக்கிறார்.

அருமையிலும் அருமையான குழந்தை க்ருஷ்ணன், அதே ஸமயத்தில் அறிதற்கரியவராக இருந்த பகவான், குருவின் ஆக்ஞைப்படி காட்டுக்குப் போய் விறகு வெட்டிக் கொண்டு வந்துகூடக் கைங்கர்யம் பண்ணியிருக்கிறார். அந்த நாட்களில் ஒன்றைப் பற்றித்தான் அப்போது தம் 'க்ளாஸ்மேட்'டாக இருந்த குசேலரிடம் நீண்ட காலத்துக்குப் பின்னால் பகவான் நினைவு படுத்துகிறார்.

க்ருஷ்ணரும் குசேலரும் ஒருநாள் இப்படி விறகுக்காக அடர்ந்த காட்டுக்குப் போனபோது இருட்டிவிட்டது. அதோடு பேய் மழையும் பிடித்துக்கொண்டுவிட்டது. மேடு பள்ளம் தெரியாமல் ஒரே ப்ரளயமாயிற்று. திக்கு திசை புரியாமல் கும்மிருட்டு வேறே. நரலீலையிலே பகவான் நிஜமாகவே தமக்குத் திக்கு திசை புரியாத மாதிரிதான் நடித்தார். "நானும் நீங்களும் பயந்துண்டு, துக்கப்பட்டுண்டு ஒத்தர் கையை ஒத்தர் கோத்துண்டு ரத்ரியெல்லாம் சுத்தி சுத்தி

வந்தோமே ஞாபகமிருக்கோல்லியோ?" என்று அவரே குசேலரைக் கேட்கிறார். குருவின் வேலை வாங்கும் கண்டிப்பால் வந்தது இது.

இனிமேல் குருவின் அன்பையும் பாசத்தையும் பகவான் வாய் வார்த்தையாகத் தெரிந்து கொள்கிறோம். "குழந்தைகளைக் காணோமே - ன்னு அங்கலாச்சுண்டு குருநாதரும் நம்மைத் தேடிண்டு வந்து, ஸூர்யோதய ஸமயத்தில் கண்டு பிடிச்சாரே 'ஐயோ பாவம் எனக்காக எத்தனை கஷ்டப்பட்டுட்டேள்?' என்று நம்மிடம் எப்படி உருகிப் போயிட்டார்? அதற்குப் பரிஹாரமாக நமக்கு எப்படி மனஸழர அநுக்ரஹம் பண்ணி, 'உங்களுடைய நல்ல நினைப்பெல்லாம் பூர்த்தியாகட்டும். நீங்க படிச்ச வேதம் எந்நாளும் பூர்ணசக்தியோடு உங்களை ரக்ஷிச்சுண்டு இருக்கட்டும்' என்றெல்லாம் வரம் கொடுத்தாரே' என்று ஞாபகப்படுத்துகிறார்.

மொத்தத்தில் குரு என்பவர் வித்யாஸம்பத்து மட்டுமில்லாமல் குண ஸம்பத்து, அநுஷ்டான ஸம்பத்து, ஆத்ம ஸம்பத்து எல்லாம் ஒருங்கே கூடியவராக இருந்தார்.

இப்படி அவர் இருக்கும்படியாகச் செய்தது அந்தப் பழைய நாளின் குருகுல முறையேதான். சில சிஷ்யர்கள் மட்டும் ஒரு குருவின் ஆதரவில் அவருடைய க்ருஹத்திலேயே இருந்து படிப்பது என்ற கல்வி முறையில் குரு சிஷ்யன் ஆகிய இருவருமே சுத்தர்களாகத்தான் இருந்தாக வேண்டுமென்றிருந்தது. அந்த முறையே அவர்களை அப்படி சுத்தர்களாக உருவாக்கவும் செய்தது.

சிஷ்யர்கள் கூடவே வஸித்தும் அன்பு, மரியாதைகள் செலுத்த வேண்டுமென்றால் குரு நல்லொழுக்கமுள்ளவராகவும், அநுக்ரஹ சக்தி பெற்றவராகவும் இருந்தால்தானே முடியும்? அதேபோல் புத்தி மட்டத்திலும்கூட சிஷ்யன் கூடவே இருந்து, 'பரிப்ரச்நம்' என்று பகவான் சொன்னபடி அவரைக் குடைந்து குடைந்து கேள்வி கேட்கிறானென்றால் அப்போது அவர் தாம் போதிக்கிற சாஸ்த்ரத்தில் நல்ல ஆழ்ந்த அறிவை உண்டாக்கிக் கொண்டேயாக வேண்டியிருந்திருக்கிறது.

## கேள்வி கேட்டுக் கற்பது

"பரிப்ரச்நம்" என்பதாக இப்படிக் கேள்வி கேட்டு கேட்டுக் கற்றுக்கொள்வதில் ஒரு விசேஷம் இருக்கிறது. உபநிஷத்தில் இப்படித்தான் கேள்வி கேட்டுக்கேட்டு ஸமாசாரங்களைக் கறந்து கொள்வதாகப் பல இடங்களில் வருகிறது. கீதையில் அர்ஜுனன் குறுக்கே குறுக்கே எத்தனை 'கொஸ்ச்சின்' பண்ணுகிறான்? சிஷ்யன் கவனமாக குரு உபதேசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்பதற்கு இந்தக் குறுக்குக் கேள்வி பெரிய ஸாக்ஷி.

'லெக்சர்' என்று முழுக்க 'ப்ரிபேர்' பண்ணிக்கொண்டு போய் அதை ஒப்பித்துவிட்டு வந்துவிடலாம் என்று ஒரு ப்ரொஃபஸர் இருக்கிறவரையில் அவர் ஸப்ஜெக்டை ஸாங்கோபாங்கமாகப் பார்க்க வேண்டிய கட்டாயமில்லை. தம்முடைய அபூர்ண ஞானத்தைக் கொண்டே எல்லாம் தெரிந்த மாதிரி லெக்சர் கட்டி ஏமாற்றிவிட முடியும். பரிப்ரச்நம் என்று நடுநடுவே தோண்டித் தோண்டிக் கேள்வி கேட்குமாறு மாணவனை விடும்போதுதான் லெக்சரரும் ஸப்ஜெக்டைப் பூர்ணமாகப் பார்த்துப் புரிந்துகொள்ள வேண்டியதாகும். அவர் 'மிஸ்' பண்ணிவிட்ட விஷயம் ஏதாவது இருந்தால் அது சிஷ்யனின் பரிப்ரச்நத்தில் வெளிப்பட்டுவிடும். அவர் அதற்கு மேலே அதற்கான புஸ்தகங்களைப் பார்க்க இடமேற்படும்.

குரு - சிஷ்யாள் இரண்டு பேருமே விஷயங்களை நன்றாகத் தெரிந்துகொள்ள 'பரிப்ரச்நம்' பெரிய தூண்டுகோல். வாத்யார் ஸ்டூடன்டைக் கேட்கிறாற்போலவே இவனும் அவரைக் கேட்கணும். இதிலேதான் புதுசு புதுசாக, இன்டரெஸ்டிங்காக விஷயங்கள் வரும். (ஜே.) க்ருஷ்ணமூர்த்தி இப்படித்தான் கேள்வி கேட்டு பதில் சொல்கிற ஸெஷன்ஸ் நடத்துகிறார், ஸ்வாரஸ்யமாயிருக்கிறது என்கிறார்கள். நாங்களும் பாஷ்ய பாடம், வாக்யார்த்தம் என்று நடத்தும் போது, கேட்கிறவர்கள் புத்திசாலித்தனமாகக் கேள்வி கேட்கிறபோதுதான் ரஸமூ கூடுகிறது. 'அடடா, இது நமக்குத் தெரியலையே இப்படி நமக்குத் தோணலையே இதுக்கு பதில் தெரிஞ்சுக்கணும்' என்ற ஆர்வம் பிறக்கிறது.

ஆசார்யாளே இந்த விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். எந்த ஒரு ஸமாசாரத்தை ஆசார்யாள் சொல்லும்போதும் அதற்கு ஏகப்பட்ட எதிர்க் கேள்வி, குறுக்குக் கேள்விகளை தாமே

போட்டுக்கொண்டு ஒவ்வொன்றுக்கும் ஆணித்தரமாகப் பதில் கொடுத்துக்கொண்டு போவது அவருடைய பாஷ்யங்களில் நாம் பார்க்கும் மிகவும் ரஸமான ஒரு அம்சம். "பூர்வபக்ஷம்" என்பதாக எதிர்க்கேள்வி போட்டுவிட்டு, அப்புறமே "ஸித்தாந்தம்" என்பதான தம்முடைய முடிவைச் சொல்வார். ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில், அதன் இரண்டாம் அத்யாய உபக்ரமத்தில் (உபக்ரமம் என்பதும் உபோத்காதத்தைப் போல இன்ட்ரொடக்ஷன்தான்) இவ்வாறு செய்வதன் சிறப்பை எடுத்துக்காட்டியிருக்கிறார். "எதிர்க் கேள்வியும் பதிலுமாக விஷயத்தைச் சொன்னால் தான் கேட்கிறவருடைய சித்தத்தை அது வசீகரணம் செய்கிறது, இப்படியில்லாமல் தர்க்க சாஸ்த்ரத்தைப்போல சுருக்கமான வாக்யங்களில் ரொம்ப அர்த்தபுஷ்டியாகச் சொன்னால் ஸூக்ஷ்மமான உண்மைகளைப் புரிந்துகொள்வது ச்ரமமாக இருக்கும்" என்கிறார்.

இன்னொன்றுகூட. சில பேருக்கு ரொம்ப விஷயம் தெரிந்திருக்கும். ஆனால் லெக்சர் மாதிரி ரூபம் தந்து அந்த விஷயங்களை எடுத்துச் சொல்ல வராது. கேள்வியாகக் கேட்டுக் கொண்டுபோனால் நன்றாகப் பதில் சொல்லிக்கொண்டு போவார்கள். இப்படியே முழு ஸமாசாரத்தையும் அவரிடமிருந்து கறந்துகொண்டு விடலாம்.

மாலைகண்டான் ஸோமஸுந்தர ஆச்சாரி என்று ஒரு ஸ்தபதி. அவருக்கு எழுதப் படிக்கவோ ப்ரஸங்கம் பண்ணவோ தெரியாது. ஆனால் ரத நிர்மாணத்தில் (தேர் கட்டுவதில்) ஸகல விஷயமும் தெரிந்தவர். தெரிந்தவர் மட்டுமில்லை, அவரே இருபது இருபத்தைந்து க்ஷேத்ரங்களில் ரதங்கள் நிர்மாணித்துக் கொடுத்துப் பெயர் வாங்கியவர். ஆனாலும் பேச வராது. இளையாத்தங்குடி ஸதஸுக்கு அவர் வந்திருந்தார். 'இவரிடம் ரொம்ப விஷயம் இருந்தும் ஸதஸுக்கு அதை ப்ரயோஜனப்படுத்த முடியாதவராயிருக்கிறாரே' என்று அந்த ஸதஸில் ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்ட (சா.) கணேசன் ரொம்பவும் வருத்தப்பட்டுக் கொண்டார். அப்போது இந்தப் பரப்ரச்ன யுக்திதான் எனக்குப் பளிச்சென்று தோன்றிற்று. "உனக்குத்தான் ரத அமைப்பு ஒரு மாதிரி ஜெனரலாகத் தெரியுமே. அதை வைத்துக்கொண்டு கேள்வி கேட்டுக்கொண்டே போ. எல்லா விஷயமும் வந்து விடும்"

என்றேன். அதே மாதிரி அவரும் ரொம்ப புத்திசாலித்தனமாகக் கேள்வி கேட்டுக் கொண்டே போனார். ஆச்சாரியும் ரொம்ப நன்றாக ஆன்ஸர் பண்ணிக்கொண்டு வந்தார். ஒரு அழகான ரதம் நிர்மாணமாகிற மாதிரியே அதன் நிர்மாணத்தைப் பற்றிய விஷயங்களும் நிர்மாணமாயிற்று. ஸதஸிலேயே ரொம்ப விஷயமுள்ளதாகவும், ரஸமாகவும் இருந்த அயிட்டங்களில் அது ஒன்று என்று எல்லாரும் கொண்டாடிச் சொன்னார்கள். ஆச்சாரிக்குத் தங்கத்தோடா போட்டு "ரத சக்ரவர்த்தி" என்றே பட்டம் கொடுத்தது. ரதத்துக்கு சக்ரம் உண்டே.

"பரிப்ரச்ன"த்துக்காகச் சொன்னேன்.

# குரு

## குருலக்ஷணம் குருவை சிஷ்யன் உரு செய்வது

உபநிஷத்தில் பரமாத்ம தத்வத்தை அறிவதற்காக "குருவையே தஞ்சமாக அடையவேண்டும்" என்று சொல்கிற இடத்தில் அவருக்கு இரண்டு லக்ஷணங்கள் சொல்லியிருக்கின்றன. ஒன்று, அவர் "ச்ரோத்ரியராக" இருக்கவேண்டுமென்பது. ச்ரோத்ரியர் என்றால் வேதத்தை கரைத்துக் குடித்திருக்க வேண்டும். இது அவருடைய கல்விச் சிறப்பை, அதாவது அறிவுச் சிறப்பைக்காட்டுவது. இன்னொரு லக்ஷணம் அவர் "ப்ரஹ்ம நிஷ்டராக" இருக்கவேண்டுமென்பது. அதாவது பரமாத்மாவைப் பற்றி அறிவினால் படித்துக் கரை கண்டதை அநுபவமாக, ஸ்வாநுபூதியாகத் தம்முடைய ஹ்ருதயத்தில் உணர்ந்து அதில் நிலைத்து நிற்பவராயிருக்க வேண்டும். அன்பு, த்யாகம், பரோபகாரம், ஸத்யசீலம் முதலான உத்தம குணங்களைப் பெற்றிருந்தாலொழிய இந்த ஸ்வாநுபூதி கிட்டாது. அதாவது, உபநிஷத் காட்டுகிற ஆசார்யன் தற்கால ப்ரொஃபஸர்களைப் போல அறிவாளியாயிருந்தால் மட்டும் போதாது. ஆத்மாநுபவத்திலேயே கொண்டு சேர்க்கிற அளவுக்கு உசந்தகுண ஸம்பத் வாய்ந்தவனாகவும் இருக்கவேண்டும். Qualities of head and heart என்று சொல்கிறார்களே அப்படி மூளை, ஹ்ருதயம் இரண்டிலும் பெரியவனாக இருக்க வேண்டும். சிஷ்யன் கூடவே வஸிப்பதான குருகுல முறையே அவனை இப்படி ஆக்குவதற்கு ஸாதகமாக இருந்தது.

அதாவது சிஷ்யனை குரு உருவாக்குகிற மாதிரியே சிஷ்யர்களும்தான் குருவை உருவாக்குகிறார்கள்.

# குரு

## குரு பீடத்துக்கும் பொருந்தும்

இப்படிச் சொல்லும்போது பாடம் சொல்லிக் கொடுக்கிற குருவை மட்டும் நினைத்துக்கொண்டு நான் சொல்லவில்லை. ஜனங்களுக்கெல்லாம் நல்லது செய்வதற்காக, நல்ல வழியைக் காட்டிக் கொடுப்பதற்காக, இந்த ஸம்ஸாரவனாந்தரத்திலிருந்து ஸாக்ஷாத் ஈச்வரனிடமே கொண்டு சேர்க்கும் வழியைக் காட்டவதற்காக ஏற்படுத்தி வழிவழியாக வந்துள்ள குரு பீடங்களில் உட்கார்ந்துகொண்டு, குரு பட்டம் கட்டிக்கொண்டிருக்கிற என் மாதிரியானவர்களையும் நினைத்தே சொல்கிறேன்.

சிஷ்யர்கள் நல்ல சிஷ்டர்களாக, அதாவது அவர்களுக்கு ஏற்பட்ட சாஸ்த்ரக் கட்டுப்பாடுகளை வழுவாமல் பின்பற்றுபவர்களாக இருந்தால்தான் நாங்களும் அவர்களுடைய ஆதரவையும் மரியாதையையும் பெறும் விதத்தில் எங்களுக்காக ஏற்பட்ட, அதைவிடக் கடுமையான சாஸ்த்ரக் கட்டுப்பாடுகளைப் பூர்ணமாக அநுஸரித்து நல்ல ஒழுக்கத்தோடும் ஆசார அநுஷ்டானத்துடனும் இருப்போம். அப்படியில்லாமல், சிஷ்யர்கள் அவர்களுக்கான நியமங்களின்படி இல்லாமல் தற்போதுள்ள மாதிரி இருந்தால் என்ன ஆகிறது? இந்த சிஷ்யர்கள் சந்நியாஸியான ஒரு குரு அவனுக்கென்று போட்டிருக்கிற ரூல்களைப் பின்பற்ற முயல்வதையே பெரிசாகப் புகழ்கிறார்கள். ஆஹாரம், வாஸ ஸ்தானம், வஸ்த்ரம் முதலானதுகளில் யதியான ஒரு குரு பரம எளிமையானவற்றைத்தான் கைக்கொள்ள வேண்டும். அது அவனுக்கான Imperative (கண்டிப்பான விதி). கொஞ்சம் விழுப்புப் பட்டார்கூட அவன் ஸ்நாநம் பண்ணணும், உபவாஸம் இருக்கணும். நிரம்பத் தபஸ் பண்ணிக்கொண்டு,

கொஞ்சம்கூடப் பிறழாமல் ஆசார நியமங்களை

அநுஷ்டித்துக்கொண்டு அவன் இருந்தால்தான் அவன் தன்னளவில் நிஜமான யதியாக ஆகி ஸித்தி பெற முடியும், பிறருக்கும் நிஜமாகவே குருவாகி அவர்களை ஸம்ஸாரத்திலிருந்து ஸர்வேச்வரனிடம் கொண்டு சேர்க்கும் பாதையில் அழைத்துப் போக முடியும். அணுசக்தி நிலையத்தில் வேலை செய்பவர்கள் எப்படி 'ரேடியேஷ'னால் பாதிக்கப்படாமலிருப்பதற்காக அநேக 'ப்ரிகாஷன்'களை கவனமாக மேற்கொண்டு, இன்ன மாதிரி ட்ரஸ், இந்த (உ)லோஹம்தான் கிட்டே வரலாம் என்பதையெல்லாம் நுணுக்கமாகப் பின்பற்றுகிறார்களோ அப்படியேதான் நாங்களும் அநாசார ரேடியேஷனைக் குறித்து ஜாக்ரதையாக நடந்து கொள்ளவேண்டும்.

அடாமிக் ரியாக்டரில் வேலை செய்கிறவன் அந்த ரூல்களின்படிச் செய்யாவிட்டால் கெடுதல் - அவனுக்கும் கெடுதல், ரியாக்டருக்கும் ஹானி ஏற்பட்டு 'பெனிஃபீஷியரி' (ரியாக்டரால் பயன்பெற வேண்டியவர்)களும் பயன்பெறாமல் போவார்கள். அதனால் அவன் ரூல்படிச் செய்யாவிட்டால்தான் அவன் மேல் ஆக்ஷன் எடுத்துத் தண்டிப்பார்களே ஒழிய, ரூல்படிப் பண்ணினால் அதற்காக யாரும் மெச்சிப் பாராட்டு விழா நடத்துவதில்லை. இப்படியே நாங்கள் எங்களுக்கான யதி தர்மங்களைக் கொஞ்சம்விட்டால்கூட அதற்காக எங்களைக் கண்டிக்க வேண்டுமே தவிர, பின்பற்றினால் அதற்காக ஸ்தோத்ரம் செய்ய வேண்டியதில்லை. பூர்ணமாகப் பின்பற்றுகிறோமா, பின்பற்றமுடியுமா என்றே கவலையாகத்தான் இருக்கறிது. இந்த லக்ஷணத்திலேயே, "ஐயோ, எத்தனை வ்ரதம்? எவ்வளவு நியமம்? எப்படி நமக்காகத் தம்மையே தண்டித்துக் கொள்கிறார்? என்ன தியாகம்?" என்றெல்லாம் ஸ்தோத்ரம் செய்தீர்களானால், நாளாவட்டத்தில் அது மண்டைக்குள் ஊறி, இப்போது அறைகுறையாகப் பின்பற்றும் நியமங்களையும் மேலும் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக்கொண்டு போனால் என்ன என்று தோன்ற ஆரம்பித்து விடலாம். அதோடு மடமும் போச்சு, அதனால் லோகம் பெறவேண்டிய அத்தனை நல்லதும் போச்சு என்றாகிவிடும்.

சிஷ்யர்களும் அவர்களுக்கான வ்ரத உபவாஸங்கள், மற்ற ஆசார நெறிகள், அநுஷ்டானங்கள் ஆகியவற்றைப் பின்பற்றுபவர்களாக இருந்தால் ஆசார்யன் அவனுக்கான விதிகளைக் கண்டிப்புடன் அநுஸரிப்பதை இப்படி 'ஒஹோ' என்று புகழ மாட்டார்கள். அதனால் அவனுக்குத் தலைக்கனம் ஏறுவது, அல்லது அவன் நியமங்களைக் குறைத்தூக கொள்வது போன்ற ஆபத்துக்களுக்கும் சில சிஷ்யர்களாவது நமக்குக் கிடைக்கு வேண்டம். நாமே நியம லோபமாக (குறைவாக) ஏதாவது பண்ணினால்கூட நம்மையே, 'என்ன ஸ்வாமிகளே, இப்படிப் பண்ணலாமா?' என்று தட்டிக் கேட்டு ஸரிப்படுத்த வேண்டும் என்பதுதான் என் ஆசை.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

## *குரு*

### *தனித்துறவியும், பீடகுருவும்*

படிப்பு விஷயத்திலும் இது - அதாவது சிஷ்யர்களின் தரமே குருவின் தரத்தையும் நிர்ணயிக்கிறது என்ற உண்மை - குரு பீடங்களுக்கும் பொருந்தத்தான் செய்கிறது. வெறுமே ஒரு ஸந்நியாஸி இருந்தால் அவனுக்கு அவனுடைய ஸமயதத்வ ஸம்ப்ரதாயத்தைப் பற்றிய அறிவு மட்டும் இருந்தால் போதும். அப்புறம்

இதையும் கடந்து அவன் ஆத்மாவே ஆத்மா என்று ஞானியாகவோ, ஈச்வரன் விட்ட வழி என்று

பக்திமானாகவோ ஆகிவிடவேண்டும். ஆனால் குருபீடம், மடாலயம் என்பதில் உட்கார்ந்திருக்கும் ஸந்நியாஸியின் விஷயம் இப்படி இல்லை. சாஸ்த்ர விஷயமாக அவர்களைக் கேள்வி கேட்கிற சிஷ்யர்களுக்கு பதில் சொல்லி விளக்க வேண்டிய கடமை, வித்வஸ் ஸதஸ்கள் நடத்திச் சிக்கலான சாஸ்த்ர ஸமாசாரங்களுக்கு தீர்வு காணவேண்டிய கடமை ஆகியன மடாலயத் தலைவர்களுக்கு இருக்கிறது. ஆனபடியால் இவர்களே சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த கல்வி பெற்றவளாயிருக்க வேண்டும்.

சாஸ்த்ர விஷயமாக ஆலோசனையும் புத்திமதியும் கேட்கிற சிஷ்யர்கள் நிறைய இருக்கிறபோதுதான் இப்படிப் பட்ட மடாதிபதிகளுக்கு, 'நாம் நல்ல சர்ஸ்த்ர ஞானம் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். பண்டித ஸதஸ்கள் நடத்தி சாஸ்த்ரங்களை அலசி முடிவுகள் காணவேண்டும்' என்ற ஆர்வமிருக்கும். இப்படி ஆலோசனை கேட்பதற்கு சிஷ்யர்களுக்கும் சாஸ்த்ரக் கல்வி இருந்தால்தான் முடியும் சாஸ்த்ர அறிவு இல்லாத சிஷ்யர்களுக்கு அதில் தெளிவு படுததிக்கொள்ள வேண்டியதான ஸந்தேஹங்களே ஏற்படுவதற்கில்லையே இப்படி ஸந்தேஹம் ஏற்படும்போதுதானே சிஷ்யர்கள் தங்கள் குருவாக இருக்கிற மடாலயத் தலைவரிடம் யோசனை கேட்கப் போவது. வரவர சிஷ்யர்களிடம், அதாவது பொதுவாகவே நமது ஹிந்து ஜன ஸமூஹத்திடம் சாஸ்த்ர ஞானம் குறைந்து கொண்டே வருகிறது. மக்கள் எவ்வளவுக்கு வித்யையில் ஞானமுள்ளவர்களாக இருக்கிறார்களோ அந்த அளவுக்கே குருபீடங்களும் ஞானமுள்ளதாயிருக்கும்.

இதை நினைக்க ரொம்ப வருத்தமாயிருக்கிறது, தற்போது மக்கள் சாஸ்த்ரியப் படிப்பில் குறைந்துகொண்டே வருவதால் அநத் நிலைக்கு குருபீடங்களும் இறங்கிவிடுகிற ஆபத்தான ஸ்திதியில் இருக்கிறோம். தற்காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் சாஸ்த்ரங்களைக் காப்பாற்றித் தர வேண்டிய குருபீடங்களே அதில் தரம் குறைந்துபோகுமானால் அதைவிட நம் மதத்துக்குப் பெரிய ஆபத்து என்ன? அதனால் உங்களுகுக்காகவே நீங்கள் சாஸ்த்ர அறிவு பெற வேண்டுமென்பதோடு, எங்களை நாங்கள் வாஸ்தவமாக இருக்க வேண்டியபடி உருவாக்குவதற்காகவும், நீங்கள் முடிந்த மட்டும் சாஸ்திரங்களை அப்யாஸம் செய்ய

வேண்டும். அதாவது, 'குரு பீடங்களிலுள்ள குருமார்களை சாஸ்த்ர ரக்ஷணத்தில் ஊக்கமுள்ளவர்களாக விளங்கச் செய்வது நம் பொறுப்பு' என்ற உணர்வோடு, அதை முன்னிட்டும் நீங்கள் உங்கள் சாஸ்த்ர ஞானத்தை வ்ருத்தி செய்துகொள்ள வேண்டும்.

இப்படி இல்லாதபோது என்ன ஆகிறது? "ஆலை இல்லாத ஊருக்கு இலுப்பப்பூ சர்க்கரை" என்கிறாற்போல நான் ஏதோ இரண்டு விஷயம் சொல்லிவிட்டால் என்னைத் தலைக்குமேல் தூக்கி வைத்துக் கொள்கிறீர்கள். ஒரு என்ஜினீயருக்கு தெரிந்திருக்க வேண்டும், ஒரு டாக்டருக்கு வைத்ய சாஸ்த்ரம் தெரிந்திருக்கவேண்டும் என்கிற மாதிரி ஒரு குருபீடத் தலைவருக்கு சாஸ்த்ரங்கள் தெரிந்துதான் இருக்கவேண்டும். தெரியாவிட்டால்தான் தோஷம். ஏதோ கொஞ்சம் தெரிந்ததற்காகத் தலைக்குமேல் தூக்கிவைத்துக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை.

பழைய சாஸ்த்ர விஷயங்களோடு பல புது ஸயன்ஸ் விஷயங்கள், ஹிஸ்டரி, கல்வெட்டு, பாஷா சாஸ்த்ரம் என்று சிலதும் சொல்கிறேன். என்னிடம் இந்த எல்லாத் துறைகளைச் சேர்ந்தவர்களும் வருகிறார்களல்லவா? அவர்கள் ஏதோ தங்கள் குறைகளைச் சொல்லிக்கொள்ள வருகிறார்கள். அப்போது நடுவிலே அவர்கள் வாயைக் கிளறி அவர்களுக்கு நிறைவாகத் தெரிந்த அவர்களுடைய ஸப்ஜெக்ட்களைப் பற்றிக் கொஞ்சம் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன். இப்படியாக அநேக ஸப்ஜெக்ட்களில் கி,ஙி,சி தெரிந்து வைத்துக் கொண்டுதான் லெக்சர் அடிக்கிறேன். இதையே பார்த்து ப்ரமித்து "ஞான த்ருஷ்டி", "ஸர்வஜ்ஞதை", "கலைக்களஞ்சியம்" என்றெல்லாம் ஸ்தோத்ரம் செய்வதாக இருக்கிறது.

சிஷ்யர் கூட்டம் சிறந்த அளிவாளிகளாயிருந்தால்தான் அதற்குத் தகுந்தாற்போல் குருவும் தன் வித்யா வ்யுத்பத்தியை (கல்வித் தேர்ச்சியை) உயர்த்திக் கொள்ள வேண்டிய நிர்பந்தமுண்டு என்று காட்ட வந்தேன்.

சின்ன ஸ்கேலில் ஒரு குருகுலமாக ஆசார்யனும் மாணாக்கர்களும் மனஸ் ஒட்டி வாழ்கிறபோதுதான் சிறந்த ஆசார்யர்கள், சிறந்த மாணாக்கர்கள் இருவருமே தோன்றுவதற்கு அதிக இடமுண்டு என்பதுதான் மொத்தத்தில்

நான் காட்ட வந்த விஷயம்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

*"அவச்யத் தீமை"க்கு ஆசார்யாள் பணி*

ஒரு இன்ஸ்டிட்யூஷனுக்குத் தலைவன் என்ற பெயரை வைத்துக்கொண்டு, ஆசார்யன் என்ற பட்டத்தையும் சூட்டிக்கொண்டிருக்கிற நானேதான் சொல்கிறேன். இன்ஸ்டிட்யூஷன் பலமில்லாமல் இன்டிவிஜுவலாக நிற்கிறபோதுதான் ஒருத்தன் சுத்தனாக இருப்பதற்கும், ஆவதற்கும் அதிக அவச்யமும் ஹேதுவும் உள்ளன. ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்கள்தான் நம் மதத்தியிலேயே இன்ஸ்டிட்யூஷன் என்பதை வலுவாக ஏற்படுத்தி, ஸ்தாபன ரீதியில் நம் மதஸ்தர்கள் ஒரு கட்டுக்கோப்பில் வந்து அதனால் மதம் எந்நாளும் ஜீவசக்தி குன்றாமலிருக்க வழிசெய்தாரென்று ஸ்தோத்ரம் செய்யும் நானேதான் இதையும் சொல்கிறேன்.

ஸ்தோத்ரமும் நியாயம்தான். ஏனென்றால் இன்டிவிஜுவலின் ஆச்ரமம், அவற்றில் கையடக்கமான சிஷ்யர்கள் என்று சிலர் மாத்திரம் பரம சுத்தர்களாக இருந்துவிட்டால் பாக்கி ஏராளமான ஜனஸமூஹம் என்ன ஆவது.

ஜனஸங்கியை குறைச்சலாக இருந்து, அவரவரும் தங்கள்

சாஸ்த்ர வழிகளைப் பின்பற்றிக்கொண்டு, அந்தச் சில சுத்தர்களை ஐடியலாகக்கொண்டு அடக்கத்துடன் வாழ்ந்த மட்டும் எல்லாம் ஸரியாகவே இருந்தது. ஆனால் காலக்ரமத்தில் ஜனஸங்கியை ஜாஸ்தியாக ஆக, 'க்வான்டிடி' அதிகமானால் 'க்வாலிடி' குறைய வேண்டியதுதான் என்ற முறைப்படி 'ஐடியலாக' இருக்கவேண்டிய வகுப்பாரின் தரம் நீர்த்துப்போக ஆரம்பித்தது.

இதைப் பயன்படுத்திக்கொண்டு புறச் சமயங்களான பௌத்த - ஜைன மதங்கள் ஸமூஹத்தில் ஒரு விரிசலையே ஏற்படுத்தின. தங்கள் ஆர்ககனைஸேஷனலாக (ஸ்தாபன ரீதியில்) நன்றாகக் கட்டுக்கோப்பு பண்ணிக் கொண்டால்தான் தங்களுடைய எதிர்ப்புக் கார்யம், வளர்ச்சி இரண்டையுமே சக்திகரமாக ஸாதித்துக் கொள்ள முடியும் என்று புரிந்து கொண்டு, அப்படியே க்ரியாம்சையிலும் அந்த மதஸ்தர்கள் காட்ட ஆரம்பித்தனர். ராஜாக்கள் ஆதரவையும் பெற்று அந்த மதங்கள் வ்ருத்தி அடைந்தன.

அப்படிப்பட்ட காலத்தில் - இந்தப் போக்கை எதிர்த்துச் சமாளிப்பதற்காக நம் மதத்தில் இருந்தவர்களை நெல்லிக்காய மூட்டையாகச் சிதறிப் போகாமல் புளிப்பானையாக நன்றாகக் கிட்டித்து, ஒட்டிக்கொண்டு இருக்குமாறு செய்தேயாக வேண்டியிருந்தது. இதற்காகத்தான் அவர்கள ஸ்தாபன ரீதியில் ஒரு கட்டுக்கோப்பில் கொண்டுவரும் ஸாதிப்பை நம் ஆசார்யாள் மேற்கொள்ள வேண்டியிருந்தது. அதை இன்றைக்கும் லோகமே ஆச்சர்யப்படுமாறு தேசம் பூராவுக்குமான அடிப்படையில் பண்ணினார். அதனால் எத்தனை ஸ்தோத்ரம் பண்ணினாலும் ந்யாயந்தான்.

ஆனால் இதுவும் "necessary evil" என்ற வகையைச் சேர்ந்ததுதான் - அதாவது ஒரு பெரிய தீமையை விலக்குவதற்கு அத்யாவச்யமாகச் செய்ய வேண்டியிருக்கிற சின்ன தீமை என்றுதான் சொல்லவேண்டும். ஸ்தாபன பலம் இருக்கிறது என்றால் பாடசாலையாகத் தானிருக்கட்டும், மடாலயமாகத் தானிருக்கட்டும், அதிலே ஆசார்ய புருஷனாக இருப்பவன் தன்னுடைய ஆத்மபலம் நன்றாக உறுதி வாய்ந்ததாக இருக்க வேண்டுமென்பதில் அவ்வளவு விழிப்பாக இல்லாமல் ஊக்கம் குன்றிப்போக இடமுண்டு. ஆள்பலம், பணபலம், நிறைய ஸொத்து பலம் எல்லாமே

ஆத்மபலத்தை வ்ருத்தி செய்து கொள்வதற்கு disincentiveகள்தான் (ஊக்கக்குலைவு செய்பவைதான்). இதனால்தான் ஆதியில் தனித்தனியாக இருந்து கொண்டு ஆசார்யர்கள் குருகுலம் நடத்தி வந்தார்கள்.

பௌத்த - ஜைனர்கள் தோன்றிய பிறகுதான் வித்யாசாலை என்பதாகப் பல ஆசிரியர்கள் சேர்ந்து ஒரே ஸ்தாபனத்தில் இருந்துகொண்டு பலதரப்பட்ட மாணவர்களுக்கும் பாடம் சொல்லித் தருவது என்ற வழக்கம் விசேஷமாக, விஸ்தாரமாக ஏற்பட்டது. நாலந்தா, தக்ஷசிலா யுனிவர்ஸிடிகள் அப்போது ஏற்பட்டவைதான்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

*"பழங்காலக் கல்விப் பெருநிலையங்கள் "*

தக்ஷசிலா பஞ்சாபில் இருப்பது. புத்தர் காலத்துக்கு மிகவும் முந்தி உபநிஷத நாட்களிலிருந்தே புகழ்பெற்ற க்ஷேத்ரமாக அது இருந்திருக்கிறது. அக்காலத்தில் அந்த ப்ரதேசத்துக்கு காந்தார தேசம் என்று பெயர். காந்தாரி அந்த நாட்டு ராஜகுமாரியாகப் பிறந்தவள். பாண்டவர்களின் கொள்ளுப் பேரனான ஜனமேஜயன்

ஸர்ப்பயாகம் பண்ணினதும், அவனுக்கு முன்னால் மஹாபாரதம் முதல் முதலாக "அரங்கேற்ற"மானதும் இங்கேதான். இது அந்த ஊருக்கு உள்ள மஹாபாரத ஸம்பந்தம். ராமாயண ஸம்பந்தம் இதைவிட அதிகமாக அதற்கு உண்டு. பரதனின் பிள்ளையாக தக்ஷன் ஸ்தாபித்த ஊரானதாதலால்தான் அதற்குத் தக்ஷசிலம் என்ற பெயரே ஏற்பட்டது. இப்படி வைதிக மத ஸம்பந்தமுள்ளதாயிருந்த அந்த ஊர், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஃபாஹியன் இந்தியாவிலே சுற்றுப் பிரயாணம் செய்து குறிப்புகள் எழுதியபோது பௌத்தர்களின் சைத்ய, விஹாரங்கள் நிறைந்த இடமாக இருந்திருக்கிறது. அப்புறம் ஹூணர் என்ற அந்நிய நாட்டு ம்லேச்சர்கள் அந்த

ஊரைச் சூறையாடிச் சிதைத்து விட்டனர். ஃபாஹியனுக்கு இருநூறு வருஷத்துக்கு அப்புறம் ஹுவான் த்ஸாங் வந்து சுற்றுப்பிரயாணம் செய்தபோது தக்ஷசிலம் ஒரே 'ரூயின்ஸ்' (இடிபாடுகள்) மயமாயிருந்ததாக எழுதி வைத்திருக்கிறார்.

பௌத்தர்களின் பெரிய வித்யா ஸ்தானமாக அது இருந்தபோது ஒரே ஸர்வகலாசாலையின் கீழ் பல துறைகளாக மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் 'ஸெட்அப்'பில் இல்லை என்றும், அநேகச் சின்னச் சின்ன வித்யாசாலைகள் ஒரே இடத்தில் சேர்ந்திருந்ததாக மட்டுமே இருந்தது என்று தெரியவருகிறது.

ஒரு ஸென்ட்ரல் 'ஸெட்அப்'பில் இல்லாவிட்டாலும் இங்கே வேதவித்யை உள்படப் பதினாறு சப்ஜெக்ட்களில் பாடம் நடத்தியிருக்கிறார்கள். சாணக்யர் போனற்வர்கள் கூட அங்கே வித்யாப்யாஸம் செய்ததாகச் சொல்லப்படுகிறது.

தற்கால யுனிவர்ஸிடி ஸெட்-அப்பிலேயே இருந்தது நாலந்தா வித்யாசாலைதான். அங்கேதான் 'ரூயின்'ஸைப் பார்க்கும்போது பெரிய பெரிய லெக்சர் ஹால்கள், ஹாஸ்டல்கள் ஆகியன இருந்தது தெரியவருகிறது. இது பழைய காலத்தில் மகதம் எனப்பட்ட இன்றைய பீஹாரில் இருக்கிறது. புத்த விஹாரங்கள் நிறைய ஏற்பட்டது மகத தேசத்தில்தான். விஹாரம், விஹார் என்பதே பிஹார் என்றாயிற்று. அதைத் தப்பாக பீஹார் என்கிறோம். பட்னா என்கிற பாடலிபுத்ரத்துக்கு ஸமீபத்தில் புத்தர்

வாழ்க்கையோடு ஸம்பந்தப்பட்ட ராஜக்ருஹம் (ராஜ்கிர்) இருக்கிறது, அதற்குப் பக்கத்தில் நாலந்தா இருக்கிறது. பௌத்த தத்வதர்சிகளில் முக்யம் வாய்ந்த ஒருவரான நாகார்ஜுனர் இந்த இடத்தை ஸர்வகலாசாலை, அல்லது விச்வ வித்யாலயம், அல்லது தமிழில் பல்கலைக் கழகம் என்கிற ரீதியில் பெரிய கல்விச்சாலை அமைக்கத் தேர்ந்தெடுத்தார். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஆட்சி செய்த நரஸிம்ஹ பாலாதித்யரின் காலத்தில் நாலந்தா விச்வ வித்யாலயம் பூர்ண வளர்ச்சியைப் பெற்றதாகத் தெரிகிறது. பௌத்த சாஸ்த்ரங்கள் மட்டுமின்றி, ஓரளவு வேத வித்யையும் மற்றும் விஸ்தாரமாகவே கணிதம், ஜ்யோதிஷம், தர்க்கம், ஸங்கீதம், வைத்யாசாஸ்த்ரம் ஆகியனவும் இங்கே சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இங்கே பத்தாயிரம் பேர் ரெஸிடென்ஷியலாகத் தங்கிப் படித்தார்களென்று தெரிகிறது. ஆசியாவிலுள்ள வெளி தேசங்களிலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் கூட நல்ல அறிவுள்ள மாணவர்கள் கல்வி கற்பதற்காக இங்கே வந்தார்கள் என்று தெரிந்து கொள்ள நமக்கு மிகவும் பெருமையாயிருக்கிறது. ஆனாலும், தக்ஷசிலத்தில் அக்கால இன்ஜீனீயரிங் முதலான டெக்னிகல் ஸப்ஜெக்ட்களை போதித்ததுபோல இங்கே செய்யவில்லை என்று சொல்கிறார்கள். எல்லோருக்கும் அட்மிஷன் இருந்தாலும், குறிப்பாக பிக்ஷுமார்களை உண்டாக்குவதே நாலந்தா கலாசாலையின் நோக்கமாயிருந்ததால் காரிய ரீதியில் மிகவும் லௌகீக ஸம்பந்தமுண்டாகக் ூவதான டெக்னிகல் ஸப்ஜெக்ட்களை இங்கே பாடதிட்டத்தில் சேர்க்கவில்லை என்று ஊகிக்கப்படுகிறது. ஆனால் ஜ்யோதிஷம் ஒரு ஸப்ஜெக்டாக இருந்ததால் இங்கே வான மண்டலத்தை தீர்க்க த்ருஷ்டிக் கருவிகளால் ஆராய்வதற்கே ஒரு சிறந்த 'ஆப்ஸர்வேடரி' இருந்திருக்கிறது. ஒன்பது மாடிகளுள்ள ஒரு பெரிய லைப்ரரியும் இருந்திருக்கிறது.

கஜனி முஹமது, கோரி முஹமது முதலானவர்கள் படையெடுத்து நம் கலாசாரத்துக்குப் பெரிய ஹானி உண்டாக்கி, அப்புறம் துருக்கர்களின் Slave Dynesty (அடிமைவம்ச) ஆட்சி பதின்மூனறாம் நூற்றாண்டீன் ஆரம்பத்தில் ஏற்பட்டபோது நாலந்தா யுனிவர்சிடி, அதற்குமேல் தாக்குப் பிடிக்க முடியாமல் நசித்துப் போய்விட்டது. எட்டு நூற்றாண்டுகள் இப்படி ஒரு யுனிவர்ஸிடி நடைபெற்றதென்பதே மிகவும் பெருமைக்குகந்த

விஷயம். நாலந்தா யுனிவர்ஸிடி பூர்ணரூபம் பெற்ற ஐந்தாம் நூற்றாண்டுக்கு முன்னூறு வருஷங்கள் அப்புறம், வங்காளத்தில் பால வம்சத்தவர் ஆட்சியில் ஏற்பட்டது விக்ரமசிலம். கங்கைக்கரையில் ஒரு குன்றின்மேல் தர்மபாலன் என்ற அரசின் பௌத்த மடாலயமும் அதைச் சேர்ந்ததாக இந்த வித்யாசாலையும் ஸ்தாபித்தான் .திபெத்திலிருந்தே பிக்ஷுக்கள் நிறைய வந்து இங்கே கல்வி கற்றிருக்கிறார்கள். இங்கிருந்து பிக்ஷுக்கள் திபெத்துக்குப் போயும் பௌத்தமதப் பிரசாரம் செய்திருக்கிறார்கள். அநேக பௌத்த நூல்கள், குறிப்பாக தாந்த்ரிகமானவை (தந்த்ர சாஸ்த்ரத்தைக் குறித்தவை) பிற்காலத்தில் இந்தியாவில் கிடைக்காமல் திபெத்திலிருந்தே நாம் பெறும்படியாக இருந்தது. இப்போதுங்கூட இப்படிப் பல பழைய புஸ்தகங்கள் திபெத் மடாலயங்களிலேயே கண்டுபிடிக்கப்படுகின்றன. இவை அங்கே போய்ச் சேர்ந்ததற்கு நாலந்தா - விக்ரமசிலா யுனிவர்ஸிடிகளால் ஏற்பட்ட பரிவர்த்தனைதான் காரணம்.

ஹிந்து சாஸ்த்ரங்களிலும், ஹிந்து மதப் பூர்விகர்களின் இதர கலைகள் ஸயன்ஸ்கள் ஆகியவற்றிலும் விஸ்தாரமாக போதனை தரும் இடங்களாகவும் பல ஆதி காலத்திலிருந்து இருந்திருக்கின்றன. இவற்றில் வடக்கே காசியும், தெற்கே காஞ்சியும் முக்யமானவை. மேற்கே காந்தி பிறந்த கத்தியவாரில் வலபீ சிறந்த வித்யா பூமியாக இருந்திருக்கிறது. விக்ரமாதித்யனின் உஜ்ஜயினி மத்ய பாரதத்திலே பெரிய centre of learning -ஆக இருந்திருக்கிறது. வடக்கு, தெற்கு, மேற்கு, மத்தியம் சொன்னேன். கிழக்கு, பாக்கி. அங்கே ஹிந்து தர்சனங்கள் எல்லாமே அங்கே கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அப்புறம் பதின்மூன்றாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் துருக்கர் செய்த உத்பாதத்தில் நாலந்தாவையும் விக்ரம சிலாவையும் போல நவத்வீபமும் நசித்ததென்றாலும், மறுபடியும் அது பதினைந்தாம் நூற்றாண்டின் தலைதூக்கிற்று. ஆனால் பூர்வத்தில் ஸகல வித்யைகளுக்கும் அது இருப்பிடமாயிருந்திருக்க, மறுபடி அது புத்துயிர் பெற்றபோது தர்க்க சாஸ்த்ரத்துக்கு மாத்திரமே ப்ரஸித்தி அடைந்தது.

ஆனால் வைதிகத்தோடு சேர்த்து வித்யை சொல்லிக் கொடுத்த இந்த எல்லா இடங்களிலுமே யுனிவர்ஸிடி

அமைப்பில் இந்த எல்லா இடங்களிலுமே யுனிவர்ஸிடி அமைப்பில் கல்வி அளிக்காமல் அநேக தனித்னி குருகுலங்கள் ஒரு இடத்தில் சேர்ந்து கற்றுக்கொடுப்பதாகத்தான் இருந்தது.

இப்படிச் சொல்வதால், இந்த அமைப்பு ஹிந்து மதத்தோடு சேர்ந்த கல்வியில் அடியோடு இருந்ததில்லை என்று அர்த்தமாகாது. பௌத்த - ஜைன மதங்கள் ஏற்படுவதற்கு முன்னுங்கூட அங்கங்கே சில பெரிய குருகுலங்கள் இருந்திருக்கத்தான் செய்தன. வேதமத ஆதாரமான பதிநாலு வித்யைகளில் புதுப்புது வ்யாக்யான நூல்கள், ஆராய்ச்சி நூல்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் சேர்ந்துகொண்டே போயிருந்திருக்கும், காவ்ய நாடகாதிகளும் ஏராளமாக விருத்தியாகிக் கொண்டே இருந்திருக்கும், புதுப்புது சாஸ்த்ரங்கள், ஸயன்ஸ்கள், அலெக்ஸாண்டர் படையெடுப்பிலிருந்து அந்நிய தேசஸ்தர் தொடர்பால் புதிசு புதிசாகத் தெரிய வந்த விஷயங்கள் எல்லாமும் ஜெனரேஷனக்கு ஜெனரேஷன் அதிகமாகிக் கொண்டேதான் போயிருக்கும். எனவே ஒரே குரு, அல்லது ஒரிரண்டு அஸிஸ்டென்ட்கள் மட்டும் வைத்துக் கொண்டிருக்கும் குரு போதாமல், இந்நாளில் உள்ள யுனிவர்ஸிடி மாதிரியான பெரிய அமைப்பில் அநேக குருக்கள் அநேக சிஷ்யர்களுக்கு ஒரே இடத்தில் சேர்ந்து சொல்லிக் கொடுப்பதென்பது பௌத்த, ஜைன மதஸ்தர்களிடம் மட்டுமின்றி வைதிக வழியிலிருந்தவர்களிடமும் கொஞ்சம் இருந்ததுதான். ஸப்ஜெக்ட்கள் விரிவடைந்தபோது எல்லாவற்றையும் ஒரே மாணவன் படிப்பதென்பதும் ஸாத்யமில்லாததால் 'பேஸிக்'காக (அடிப்படையாகச்) சிலது மட்டும் எல்லா மாணவர்களுக்கும் எனவும், பாக்கியில் ஒவ்வொருத்தனுக்கு ஒவ்வொன்று இஷ்டபாடம் (ஆப்ஷனல்) என்றும் பூர்வத்திலேயே கொஞ்சம் ஆகியிருக்க வேண்டும். இப்படித்தான் சிதம்பரத்தில் பதஞ்ஜலி மஹர்ஷியிடம் பாடம் கேட்க ஆயிரம் பேர் வந்து, பல தினுஸூப் பாடங்களைக் கேட்டபோது, அவர் ஆதிசேஷ அவதாரமாதலால், ஒரு திரையைப் போட்டுக் கொண்டு அதன் பின்னாடி சேஷஸ்வரூபத்தில் ஆயிரம் மாணவனக்கும் ஒவ்வொரு வாயால் பாடம் சொல்லிக் கொடுத்தாரென்று கதை இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

புது மதங்களும் பெரிய கல்வி நிலையங்களும்

ஆனாலும் புத்த, ஜின மதங்கள் வந்ததிலிருந்துதான் புது ஸித்தாந்த ப்ரசாரம் மாத்திரமின்றி மற்ற எல்லாக் கலைகளும் விஞ்ஞானங்களும் ஜாஸ்தியானதால் பெரிய ஸ்கேலில் வித்யாசாலைகள் நடத்துவது ரொம்பவும் குறிப்பிடும் அளவுக்கு வ்ருத்தியானது. அதற்கு முந்தி, மிகப் பெரும்பாலும் தனி மநுஷ்யராக உள்ள குருவிடம் ஒருசில வித்யார்த்திகளே சிக்ஷைபெறும் குருகுலவாஸ முறைதான்.

புது மதங்களோடு பெரிய ஸ்கேல் வித்யாசாலை வந்ததற்கு இன்னொரு முக்யமான காரணமும் உண்டு. இந்தப் புது மதங்களுக்கு ஹிந்துக்களைத் திருப்பியவர்களுக்கு நிஜமாகவே எல்லா ஜனங்களுக்கும் அறிவை வ்ருத்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம் இருந்திருக்கலாம். இருந்தாலும் கன்வர்ஷன் (மதமாற்றம்) என்று வரும்போது வேறு உள்நோக்கமும் இருந்திருக்கக்கூடும் என்பது நம்முடைய ஸமீபகால சரித்ரத்தைப் பார்க்கும்போது தெரிகிறது.

ஸமீப காலத்தில் என்ன பார்த்தோம்? இலவசமாகப் படிப்புச் சொல்லித் தருவதற்காக எங்கே பார்த்தாலும் ஸ்கூல் வைத்து, நைஸாக அதன் மூலமே மதப் பிரசாரம், மதமாற்றம் எல்லாம் பண்ணுவதை நிறையப் பார்த்திருக்கிறோமல்லவா? அதனால் ஆதியில் இந்த தேசத்திலேயே அவைதிகமான புது மதங்கள் உண்டானபோதும் ஆள் பிடிப்பதற்கு உபாயமாக வித்யாசாலைகள் பெரிய அளவில் ஏற்படுத்தியிருகக்லாமென்று தோன்றுகிறது. இதைக் காட்டி பொதுஜனங்களை வசீகரிப்பதற்கு நம்முடைய ப்ரத்யகேச் சூழ்நிலை நல்ல வாய்ப்பு தருவதாக இருந்ததையும் சொல்லவேண்டும்.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

"*ப்ரத்யேகச் சூழ்நிலை*"

"அதென்ன ப்ரத்யேகச் சூழ்நிலை?" என்றால்,

ப்ராம்மணன்தான் எல்லா ஜாதியாருக்கும் அவரவருக்கான

தொழிலைக் கற்பிக்க வேண்டியவன் என்பது நம் பூர்விகர்களுடைய ஏற்பாடு. தொரில் மாத்திரமின்றி தர்மம், ஆத்ம க்ஷேமத்துக்கான விஷயம் முதலியவற்றையும் ப்ராம்மணர்கள் பிறருக்கு போதிப்பார்கள். ஆனாலும் இப்படி போதிக்கும்போது நாலாம் வர்ணத்தாராகிய ஜன ஸமூஹத்துக்கு வேதத்தை மட்டும் நேராக சொல்லிக் கொடுக்க மாட்டார்கள். ஜனங்களிடையே பலவேறு தொழில்களையும் பாரம்பர்யமாகப் பங்கீடு செய்து வைத்த நம்முடையவர்ண தர்மத்தின்படி வேதக் கல்வியும் அதன்படியபன அநுஷ்டானங்களும் ப்ராம்மணன் ஒருத்தனுக்குத்தான் ஆயுள் காலத் தொழில் என்று பங்கீடு பண்ணி வைத்து விட்டதால் இவற்றை ஒரோர் அளவுக்கு மாத்திரம் க்ஷத்ரியர்களுக்கும் வைச்யர்களுக்கும் சொல்லிக்கொடுப்பது, நாலாம் வர்ணத்துக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை என்று வைத்துக் கொண்டிருந்தார்கள். நேராக வேதத்தைச் சொல்லிக் கொடுக்காவிட்டாலும் அதன் அபிப்ராயங்களையும், தத்வார்த்தங்களையும் புராண இதிஹாஸங்களாகவும் நீதி நூல்களாகவும் எல்லாருக்கும் சொல்லிக் கொடுத்தார்கள்.

ஆனாலும் இந்த ஆத்மார்த்தமான போதனை என்பது பொது ஜனக்ஙளுக்கு குரு - சிஷ்யரென்று க்ளாஸில் பாடம் நடத்துவதுபோல அதிகம் நடக்கவில்லை. குருகுலத்தில் முக்யமாக வேத அத்யாபனமே நடந்தது. அத்யாபனம் முடித்து, ஆசார்யர்கள் போஜனம் பண்ணிவந்த பிற்பாடே மற்றவர்கள் வந்து அவர்களிடம் போதனை பெறுவதாக இருந்தது. இநத் ஆசார்யர்களை விடப் பௌராணிகர்கள், உபந்யாஸகர்கள் ஆகியவர்கள்தான் புராண இதிஹாஸம், நீதி நூல்கள் ஆகியவற்றைப் பொது ஜனங்களுக்கு அதிகமாக ப்ரசாரம் செய்து தத்- த்வாரா அவர்களுக்கு ஆத்ம முன்னேற்றத்துக்கான விஷயங்களைப் பரப்பினார்கள்.

இதரர்கள் (நாலாம் வர்ணத்தார்) அவர்களுடைய ஜாதித் தொழில்களை வெகு நன்றாகச் செய்து கொண்டிருக்கும்போது அதை விட்டுவிட்டுத் தொழில் கற்றுக்கொள்வதற்காக எங்கோ ஒதுக்குப்புறத்திலிருந்த குருகுலத்துக்கு அவர்களுடைய குழந்தைகள் போகவேண்டிய அவச்யமிருக்கவில்லை. வீடே அவர்களுக்குப் பள்ளிக்கூடமாகவும் இருந்தது.

வேதத்தைத்தான் ப்ராம்மணனிடமிருந்தே கற்க வேண்டுமென்றும், மற்ற தொழில்களுக்கான சாஸ்த்ரங்களை அந்தந்த ஜாதியாரே தங்களுக்குள் கற்றுக் கொடுத்துக் கொள்ளலாம் என்றும் ஸ்ம்ருதிகள் அநுமதிக்கின்றன. நடைமுறை ஸௌகர்யத்தை உத்தேசித்தே இவ்வாறு அநுமதித்திருப்பது. தொழிலாளி ஸமூஹப் பசங்கள் ஒரு காலத்தில் படித்துவிட்டு, அப்புறம் பிற்காலத்தில் அதை 'அப்ளை' பண்ணித் தொழில் செய்து, அப்போதே கற்றுக் கொள்ளவும் செய்தார்கள். ஏதாவது ஸந்தேஹம் வந்தாலோ, ஏதோ ஒரு நுணுக்கம் தெரியவேண்டுமென்றாலோ மட்டுமே அந்தத் தொழிலைப் பற்றிய சாஸ்த்ர அபிப்ராயம் தெரிவதற்காக ப்ராம்மண ஆசார்யனிடம் போய்க் கேட்டுக்கொண்டால் போதும் என்று இருந்தது. இப்படிப்பட்ட நுணுக்கங்கள் தெரிந்த அநுபவஸ்தர்களுங்கூட இந்த ஜாதிகளிலேயே இருந்ததால் இதற்குங்கூட "அய்ய"ரிடந்தான் போகணுமென்று கட்டாயம் இருக்கவில்லை. தட்டாரகளை, சில்பிகளை, தச்சர்களையெல்லாங்கூட "ஆச்சாரி" என்று சொல்வதிலிருந்து அந்தந்த ஜாதியிலும் அவர்களைச் சேர்ந்தவர்களே நிரம்ப விஷயஜ்ஞர்களாகி ஆசார்யஸ்தானத்தில் இருந்துகொண்டு கற்றுக் கொடுத்திருக்கிறார்களென்று தெரிகிறது.

வேத வித்யையில் அதிகாரம் பெற்ற மூன்று வர்ணத்தாருக்கும் பழங்கால வித்யாசாலைகளில் சேரத் தகுதியிருந்தாலும் உபநயன ஸம்ஸ்காரத்தை இந்த வர்ணத்தினர்களுக்கு வேறு வேறு வயஸில் வைத்திருப்பதை இங்கே குறிப்பிடவேண்டும். உபநயனத்துக்கு முந்தியே அக்ஷராப்யாஸம் என்று ஒன்று வந்தது பிற்காலத்தில்தான். நாற்பது ஸம்ஸ்காரங்களில் அக்ஷராப்யாஸம் இல்லை. அக்ஷராப்யாஸத்தில் குழந்தையின் கையைப் பிடித்து எழுதவிப்பதுதான் முக்யமாயிருக்கிறது. ஆதி ஸ்கூலிலோ எழுதுவது, எழுத்து என்பவையே அதிகம் கிடையாது, காதால் கேட்டுத்தான் பாடம் பண்ணணும் என்று சொன்னேனே. அப்போது உபநயனமேதான் வித்யாப்யாஸத்துக்கு ஆரம்பமாக இருந்தது. உபநயனத்தில் செய்யும் காயத்ரி மஹாமந்த்ரோபதேசம்தான் வேதத்தைக் காதால் கேட்டுப் பாடம் பண்ணுவதற்கு அங்குரார்ப்பணம். உபநயனம் பண்ணி குருகுலத்தில் விடுவதே வழக்கம்.

இப்படிப் பண்ணுவதில் ப்ராம்மணப் பிள்ளையானால் எட்டு வயஸுக்கே பூணூல் போட்டு குருவிடம் அனுப்புவது என்றும், க்ஷத்ரியப் பிள்ளைக்குப் பதினோரு வயஸிலும் வைச்யப் பிள்ளைக்குப் பன்னிரண்டு வயஸிலும் இப்படிச் செய்வதென்றும் இருந்திருக்கிறது.

ப்ராம்மணப் பிள்ளையைப் பதினாறு வயஸுக்கு மேல் பூணூல் போடாமல் வைக்கப்படாது. இதேமாதிரி க்ஷத்ரியனுக்கு 'அப்பர் லிமிட்' இருபத்திரண்டு வயஸு. வைச்யனுக்கு இருபத்திநாலு.

ரொம்ப சூட்டிகையாயிருந்தால் ப்ராம்மணப் பிள்ளைக்கு ஐந்து வயஸிலும், க்ஷத்ரியப் பிள்ளைக்கு ஆறு வயஸிலும், வைச்யப் பிள்ளைக்கு எட்டு வயஸிலும் பூணூல் போட்டு வித்யாப்யாஸம் ஆரம்பிக்கலாம்.

ஏன் இப்படி ப்ராம்மணனைவிட மற்ற ஜாதியாருக்கு வித்யாப்யாஸத்தை வித்யாஸப்படுத்தியிருக்கிறது, தள்ளிப் போட்டிருக்கிறது என்றால்... எந்தக் குழந்தையானாலும் அதற்கு அதனுடைய இயற்கையான வீட்டுச் சூழ்நிலையில், அதற்கான வாழ்க்கைத் தொழிலில் இயல்பான ருசி ஏற்படும் என்பதுதான் காரணம். இமிடேட் பண்ணுவது குழந்தையின் குணம். ப்ராம்மணனைத் தவிர மற்றவர்கள் உடம்பாலே நிறையத் தொழில் செய்பவர்கள். ஒருத்தன் கத்தி சுழற்றுவான். இன்னொருத்தன் உழுவான். இன்னொருத்தன் நெசவு செய்வான் இப்படிப் பல. அந்த ஜாதித் தொழில்களை ஸ்வதர்மமாகக் கொண்ட குழந்தைகள் குருகுலத்திலே அந்தத் தொழில்களில் எதுவுமே நடப்பதைப் பார்க்கமுடியாது. தொழில் செய்கிற இடமில்லை குருகுலம். தொழில்முறையை அறிகிற, அறிவைப் பரப்புகிற இடம்தான் அது. இப்போது மாண்டிஸோரி முதலானவர்கள், செய்து தெரிந்துகொள்ள வேண்டியவற்றைப் பாடமாகச் சொல்லிக் கொடுப்பது முறையில்லை, இப்படிச் செய்வது ஒரு குழந்தையை ஸரியாக உருவாக்காது, அந்தக் கார்யமும் இதனால் ஸரியாக உருவாகாது என்று அபிப்ராயப்பட்டு புது தினுஸான கல்விமுறை கொண்டுவந்திருக்கிறார்கள் அல்லவா? இது புது தினுஸே இல்லை. நம் ஆதிகால மூதாலையர் இந்த வழியைத்தான் பின்பற்றினர்.

அதனால்தான் அறிவை வளர்ப்பதையே ஆயுஸ்காலத் தொழிலாகக் கொண்ட ப்ராம்மண ஜாதியில் பிறந்த குழந்தைகளைத் தவிர மற்ற ஜாதிக் குழந்தைகளை ரொம்பவும் சின்ன வயஸில் குருகுலத்தில் அடைக்க வேண்டாம், அந்தக் குழந்தைகள் அகத்திலேயே அப்பன் பாட்டனோடு ஸந்தோஷமாக வஸித்துக்கொண்டும், அவர்களோடேயே ஆயுதசாலைக்கோ கடைக்கோ நிலத்துக்கோ பட்டரைக்கோ போயும் அவர்கள் செய்யும் தொழிலைப் பார்த்துத் தெரிந்துகொண்டு, 'இமிடேஷன்' செய்கிற 'இன்ஸ்டிங்க்டி'ல் அதே மாதிரி செய்துகொள்ளட்டும் என்று விட்டார்கள். இப்படி வேலையில் குழந்தை ஒத்தாசை செய்வது அந்த ஜாதியாருக்கு வேலையையும் குறைத்து வருமான லாபத்தையும் உண்டாக்கிற்று.

இன்னொரு அம்சத்தையும் கவனிக்கவேண்டும். மந்த்ர சக்தியை உண்டாக்கிக்கொள்ள வேண்டியதை முன்னிட்டு ஆஹாரம் முதலானவற்றில் ப்ராம்மணக் குழந்தைக்கு இருக்கிற கட்டுப்பாடு மற்ற ஜாதிக் குழந்தைகளுக்கு இல்லை. ப்ராமமணன் நடத்தும் குருகுலத்தில் அந்த மற்றக் குழந்தைகளுக்குப் பழக்கமான, அவர்களுக்குத் தேவையான ஆஹாராதிகளை எப்படிச் சேர்க்கமுடியும்?

இத்யாதி காரணங்களால் அந்தக் குழந்தைகள் கொஞ்சம் நாக்கைக் கட்டக்கூடிய பருவத்தில் குருகுலத்துக்கு வந்தால் போதும் என்று உபநயன வயஸை உயர்த்தி நிர்ணயித்தார்கள்.

தங்கள் தங்கள் தொழிலை மட்டும் கற்றுக் கொள்வதானால் மற்ற ஜாதிக் குழந்தைகள் தங்களுஐடய குடும்பத்திலிரு ந்துகொண்டே அதைப் பெரிய அளவுக்குச் செய்து விடலாம். எனவே அவர்கள் குருகுலத்துக்கு வந்ததே முக்யமாக வேத சாஸ்த்ர அப்யாஸத்துக்காகத்தான். இதில் அவர்கள் ப்ராம்மணப் பசங்களைப் போல தேர்ச்சி பெற வேண்டிய அவச்யமில்லை. அப்படிச் செய்தால் அப்புறம் அவர்கள் செய்யவேண்டிய ஸ்வதர்மத் தொழிலே பாதிக்கப்பட்டுவிடும். எனவே ஒரளவு வேத சாஸ்த்ர ஞானம் அவர்களுக்குப் போதுமானதாயிருந்தது. இதைப் பெறுவதற்காக அவர்கள் ப்ராம்மணப் பசங்கள் மாதிரி நீண்டகாலப் வித்யாப்யாஸம் செய்ய வேண்டியிருக்கவில்லை.

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

*பாடதிட்டத்தில் வேறுபாடுகள்*

ஆனபடியால் குருகுலம், வித்யாப்யாஸம் முதலான ஸமாசாரங்களே போகப் போக ப்ராம்மணர்களை முக்யமாக கொண்ட விஷயங்கள் மாதிரியாகிவிட்டன. க்ஷத்ரியர்களிலும் ராஜகுமாரர்கள், ராஜ குடும்ப முக்யஸ்தர்களின் பிள்ளைகள் ஆகியோர் நீண்ட காலம் குருகுலவாஸம் செய்து நிரம்பவும் வித்யாப்யாஸம் செய்து தேர்ச்சி பெற்றார்கள்.

ஆனால் ப்ராம்மணப் பசங்களின் பாடதிட்டத்தில் சதுர்ரச வித்யைகளுக்கு ப்ராதான்யம் கொடுத்து, தநுர் வேதம், அர்த்த சாஸ்த்ரம் முதலானவற்றை 'எலிமென்டரி'யாகத்தான் சொல்லிக் கொடுத்திருப்பார்கள். ஏனைய ஜாதியினருக்கும் அவர்களுடைய தொழிலை போதிக்க ப்ராம்மணன் தகுதி பெற்றிருக்கவேண்டுமாதலால், ப்ராம்மணப் பசங்களிலேயே பன்னிரண்டு

வருஷத்துக்குமேல் குருகுலவாஸம் செய்கிறவர்களில் சிலருக்கு தநுர்வேதம், சிலருக்கு அர்த்த சாஸ்த்ரம், சிலருக்குச் சில்பம், சிலருக்கு ஸங்கீதம் என்றிப்படிப் பிரித்து, மற்றவர்களுக்கான தொழிலைக் குறித்த கல்வியும் புகட்டினார்கள். ஆக, இது எல்லா ப்ராம்மணர்களுக்குமான பொதுப் பாடதிட்டமில்லை.

க்ஷத்ரியப் பசங்களிலோ அத்தனை பேருக்குமே தநுர்வேதப்படி நிறைய அஸ்த்ர சிக்ஷை தரவேண்டும். ராஜநீதி, அர்த்த சாஸ்த்ரங்களையும் இவர்களுக்கு

*தெய்வத்தின் குரல் ( நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

***பெயர்க்காரணம்***

இதைவிட எனக்கு ரொம்ப குதூஹலம் (அதாவது curiosity) ஏற்படுத்தி ஆராய்ச்சியில் இறக்கிவிட்ட விஷயம்

என்னவென்றால் "கடிகை" என்று ஏன் பேர் வந்தது என்பது தான்.

"கடிகை" என்றால் சின்னதான பானை என்ற ஒரு அர்த்தம். கடம் : பெரிய பானை. கடிகை - அதைவிடச் சின்ன பானை. கடிகை என்றால் ஒரு நாழிகைப் பொழுது என்று இன்னொரு அர்த்தம். அந்த வார்த்தை எந்த அர்த்தத்தில், அல்லது எந்த விதத்தில் வித்யாசாலைக்குப் பெயராக இடப்பட்டது என்று கண்டுபிடிக்க வேண்டும் என்று ஆர்வம் உண்டாயிற்று. நான் கேட்டுப் பார்த்த யாருக்கும் சொல்லத் தெரியவில்லை. கடைசியில் எத்தனையோ தோண்டித் துருவியதில் என்னுடைய ரிஸர்ச்சில் பாஸ் பண்ணிவிட்டேன். அந்தப் பெருமை அடித்துக் கொள்ளத்தான் இப்போது கதையளந்து கொண்டிருக்கிறேன்.

மெட்றாஸில் இருக்கிற ஓரியன்டல் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரிக்காரர்கள் தங்களிடமுள்ள சுவடிகளில் பலவற்றை அச்சுப்போட்டு வருகிறார்கள். ஸமீபத்தில் அவர்கள் போட்டிருந்து "ஆபோகம்" என்ற புஸ்தகத்தைப் படித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். இது என்ன புஸ்தகம் என்று சொல்லவேண்டுமானால் இதற்கு அப்பாப் புஸ்தகம், தாத்தாப் புஸ்தகம், கொள்ளுத் தாத்தா புஸ்தகம் முதலியவற்றைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். இவையெல்லாம் அத்வைத சாஸ்த்ரங்களானபடியால் உங்களுக்கும் கொஞ்சம் தெரிந்திருப்பது நல்லதுதான். சொல்கிறேன்.

வ்யாஸர் 'ப்ரஹ்ம ஸூத்ரம்' செய்திருக்கிறார். அதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அந்த பாஷ்யத்துக்கு பாஷ்யம் மாதிரி விளக்கவுரை வாசஸ்பதி மிச்ரர் செய்திருக்கிறார். இதற்கு 'பாமதி' என்று பெயர். வாசஸ்பதி மிச்ரருடைய பத்னியின் பெயர் பாமதி. அந்தப் பெயரையே புஸ்தகத்துக்கு வைத்தார். பாஷ்யத்தின் பாஷ்யமான இதற்கும் பாஷ்யம் மாதிரி அமலாநந்தர் என்பவர் 'கல்பதரு' என்று எழுதியிருக்கிறார். அந்தக் 'கல்பதரு'வுக்கும் விளக்கவுரையாக லக்ஷ்மிந்ருஸிம்ஹர் என்பவர் எழுதியதுதான் 'ஆபோகம்'. அதாவது 'ப்ரஹ்ம ஸூத்ர'த்தின் குழந்தை அதற்கு ஆசார்யாள் செய்த பாஷ்யமென்றால், பேரக் குழந்தைக்குப் பேரக் குழந்தை 'ஆபோகம்'!

அந்தப் புஸ்தகத்தைப் பார்த்ததிலிருந்து, ஒரு ரெஃபரன்ஸுக்காக அதன் அப்பாப் புஸ்தகமான "கல்பதரு"வைப் பார்க்கவேண்டி வந்தது. அதிலே ஓரிடத்திலே கடிகா ஸ்தானத்தைப் பற்றி வருகிறது.

எந்த இடத்திலே என்றால், ப்ரஹ்ம ஸூத்ரத்தின் மூன்றாம் அத்யாயம், நாலாம்ட அத்யாயம், நாலாம் பாதம், இருபதாம் ஸூத்ரத்தை விளக்கும் இடத்திலே. ஸந்நியாஸ ஆச்ரமம் என்பது உண்டு என்று ஸூத்ரகாரர் (வ்யாஸர்) அபிப்ராயப்படுகிற இடம். 'க்ருஹஸ்தன் பண்ணும் வைதிக கர்மாவினாலேயே அவனுக்கு நேராக மோக்ஷம். வைதிக கர்மாவைவிட்ட ஸந்நியாஸம் கூடாது' என்கிற ஜைமினியின் பூர்வ மீமாம்ஸைக் கொள்கையை ஆக்ஷேபித்து இங்கே வ்யாஸாசார்யாள் துரீயாச்ரமத்தை (நாலாவது ஆச்ரமமான துறவறத்தை) ஸ்தாபித்திருக்கிறார்.

ஸந்நியாஸியின் லக்ஷணம் என்ன என்று இங்கே 'கல்பதரு'வில் அமலாநந்தர் கொடுத்திருக்கிறார். ஸந்நியாஸி என்பவன் சிகையை எடுத்துவிட்டு முண்டனம் பண்ணிக் கொள்ளவேண்டும் (மொட்டை அடித்துக்கொள்ளவேண்டும்), பூணூலை அறுத்துப் போட்டுவிட வேண்டும் என்றுதான் பொதுவிலே வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆனால் சிகையையும் பூணூலையும் கத்தரிக்காமலே ஸந்நியாஸி இருக்கலாமென்ற வழக்கத்தைச் சிலர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் - பிற்காலத்தில் வந்த ராமாநுஜ ஸித்தாந்தத்தில் இந்த வழக்கம்தான். இதில் எது ஸரி என்று இங்கே 'கல்பதரு'க்காரர் தம் அபிப்ராயத்தைச் சொல்கிறார்.

"யேது சிகா யஜ்ஞோபவீத த்யாக ரூப பாரம

ஹம்ஸ்ய வ்ருத்திம் ந மந்யந்தே தே ந பச்யந்தி

ப்ரத்யக்ஷ கடிகாஸ்தாநேஷு பட்யமாந ஆதர்

வணீம் ச்ருதிம் - ஸசிகம் வபநம் க்ருத்வா பஹிஸ்

ஸூத்ரம் த்யேஜத் புத:" என்கிறார்.

"ஸந்நியாஸிகளில் உச்சமான பரமஹம்ஸ முறைக்குப் போகிறவன் தலையைப் 'பண்ணிக்' கொள்ள வேண்டாமென்றும், பூணூலைக் கத்திரித்துப்போட

வேண்டாமென்றும் சொல்கிறவர்கள், 'ஸந்நியாச்ரமம் எடுத்துக் கொள்ளும் புத்திமான் சிகையை எடுத்துவிட்டு, பூணூலையும் துறந்துவிடவேண்டும்' என்று கடிகாஸ்தானத்திலே அத்யயனம் செய்பவர்கள் சொல்லும் அதர்வ வேத வாக்கைக் கேட்டதில்லை போலிருக்கிறதே!" என்று அர்த்தம்.

இதிலிருந்து தெரிகிற இன்னொரு முக்யமான விஷயம், பிற்காலத்தில் அதர்வ வேத அத்யயனம் அடியோடு மங்கிப் போய்விட்டாலும் அக்காலத்தில் அந்த வேதமும் போதிக்கப்பட்டிருக்கிறது என்பதாகும். அதிருக்கட்டும். இதிலே கடிகாஸ்தானம் என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. ப்ராசீனமான (தொன்மை வாய்ந்த) அத்வைத ப்ரமாண நூல்களிலொன்றிலேயே 'கடிகா ஸ்தானத்துப் பசங்களின் அத்யயனத்தை இவர்கள் கேட்டதில்லையா என்ன?' என்று வருவதால், கடிகாஸ்தானங்கள் வித்வத் ஜனங்களால் மிகவும் மதிக்கப்பட்டது நன்றாகத் தெரிகிறது.

'கல்பதரு' எழுதிய அமலானந்தர் அதன் முடிவில் சொல்லிக்கொள்வதிலிருந்து அவர் தேவகிரியில் க்ருஷ்ணன், மஹாதேவன் என்ற யாதவ வம்சத்து ஸஹோதரர்களின் ஆட்சிக் காலத்திலிருந்தவரென்று தெரிகிறது. இது கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு மத்தியாகும். (அதாவது ராமாநுஜருக்கு நூறு, நூற்றைம்பது வருஷம் அப்புறம்.) இதற்கு முன்னாடியும் பின்னாடியும் எப்போதிலிருந்து எதுவரை கடிகாஸ்தானத்தைப் பற்றி ஆதாரபூர்வமான சாஸனங்களில் பிரஸ்தாவித்திருக்கிறது என்று தேடிப்பார்த்தேன். ஆராய்ச்சி அமலாநந்தர் காலத்துக்குக் கிட்டத்தட்ட ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் கொண்டுவிட்டது!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

***கடிகையின் தொன்மை***

கி.பி. நாலாம்ட நூற்றாண்டு ஆரம்பகாலத்திலேயே ஒரு ராஜா

தன்னுடைய வித்யா குருவோடுகூட ஒரு கடிகாஸ்தானத்தில் வித்யாப்யாஸம் செய்திருக்கிறான்.

அந்த ராஜழ கர்நாடக தேசத்தில் ஷிமோகாப் பகுதியைச் சேர்ந்தவன். அவன் படித்த கடிகாஸ்தானம் இருந்ததோ காஞ்சீபுரத்தில்!ஒரு ராஜாவே எத்தனையோ நூறு மைல் கடந்து வந்து சேர்ந்து படிக்கும்படியாக அத்தனை உயர்வுடன் காஞ்சீபுரத்தில் கல்வி விலாஸம் இருந்திருக்கிறது!அவனுடைய குருவும் அவனோடு வந்தாரென்பதால் மிகவும் உயர்ந்த, ஸூக்ஷ்மமான சாஸ்த்ரங்கள் இந்த கடிகாஸ்தானத்தில் போதிக்கப்பட்டதாக ஊஹிக்கலாம்.

ரயிலும் ரோடும் இல்லாத ஆதி நாளிலிருந்தே வித்யைக்காக நம் தேசத்தவர்கள் ஆயிரம், ஆயிரத்தைந்நூறு மைல் தாண்டிப் போயிருக்கிறார்கள். காஞ்சியிலிருந்து காசிக்கு பாடலிபுரத்துக்கு என்றெல்லாம் போயிருக்கிறார்கள். சிதம்பரத்தில் பதஞ்ஜலி பாடம் சொல்லிக்கொடுத்ததாகச் சொன்னேனே, அதற்கு கௌட தேசம் என்கிற வங்காளத்திலிருந்துகூட சிஷ்யர் வந்திருக்கிறார். கௌடர் என்றே அவரைச் சொல்வது. அவருடைய சிஷ்யருக்கு சிஷ்யர்தான் ஆசார்யாள். ஆசார்யாள் காசியில் வேதாந்தம் போதித்த போது கற்றுக்கொள்வதற்காக சோழதேசத்திலிருந்து ஸநந்தனர் என்பவர் அங்கே போயிருக்கிறார். இவர்தான் பிற்பாடு பத்மபாதர் என்று பெயர் பெற்றவர்.

இம்மாதிரி ஷிமோகாவிலிருந்து காஞ்சீபுரத்திற்கு வந்த ராஜாவின் பெயர் மயூரவர்மா. அவனுடைய குருவின் பெயர் கீ ீர சர்மா.

(சர்மா - பிராம்மணன், வர்மா - க்ஷத்ரியன், குப்தா - வைச்யன், தாஸன் - நாலாம் வர்ணம்.)

"ய : ப்ரயாய பல்லவேந்த்ரபுரீம்"

என்பதாகக் காஞ்சியைப் 'பல்லவேந்த்ரபுரி' என்று சொல்லி 'கடிகாம் விவேச' - கடிகையில் சேர்ந்தான் - என்று முடித்திருக்கிறது.

ஏற்கனவே குருவிடம் படித்துமுடித்துவிட்ட ராஜா, அல்லது ராஜகுமாரன், அந்த குருவையும் அழைத்துக் கொண்டு ஸகல

சாஸ் ூதரத்தையும் ஸாங்கோபாங்கமாகக் கற்க நம் காஞ்சீபுரத்துக்கு வரும்படியான பெருமை அங்கேயிருந்த கடிகைக்கு இருந்திருக்கிறது என்பதிலிருந்து, நாலந்தா, தக்ஷசில யூனிவர்ஸிடிகளைப் போல நம் தமிழ் நாட்டிலும் இருந்திருப்பது தெரிகிறதோல்லியோ?

மயூரவர்மாவின் காலமான அந்த நாலாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் காஞ்சிபுரத்திலிருந்து கொண்டு ஸ்கந்தசிஷ்யன் என்ற பல்லவராஜா ஆண்டிருக்கிறான். இவன் ஸத்யஸேனன் என்ற இன்னொரு ராஜாவிடமிருந்து ஒரு கடிகையை ஜயித்துப் பெற்றான் என்று வேலூர்பாளையத்திலுள்ள மூன்றாவது விஜய நந்திவர்மாவின் சாஸனமொன்றிலிருந்து தெரிகிறது. வேலூர்பாளையம்

என்பது அரக்கோணத்துக்கு வடமேற்கே ஏழு மைலில் இருக்கிற ஊர். இந்த சாஸனம் 'ஸெனத் இண்டியன் இன்ஸ்க்ரிப்க்ஷன்', இரண்டாம் வால்யூம், ஐந்தாம் பார்ட்டில் பிரசுரமாயிருக்கிறது:

"ஸ்கந்த சிஷ்யஸ் ததோ அபவத் - த்விஜாநாம் கடிகாம்

ராஜ்ஞு ஸத்யஸேநாத் ஜஹார ய:"

'த்விஜாநாம் கடிகாம்' அதாவது, 'ப்ராம்மணர்களுடைய கடிகையை' என்று அர்த்தம். இதிலிருந்து வேத சாஸ்த்ர அடிப்படையில் ஏற்பட்ட கல்விசாலையே கடிகை என்று தெரிகிறது. 'கல்பதரு' மேற்கோளிலிருந்தும் அங்கே தற்போது வழக்கொழிந்துவிட்ட அதர்வவேத அத்யயனங்கூட நடந்திருப்பதாகத் தெரிந்ததல்லவா?

எதிரியரசனிடமிருந்து கடிகையைக் கைப்பற்றியதை முக்யமாகச் சொல்லியிருப்பதிலிருந்து அது யூனிவர்ஸிடி போலப் பெரிய ஸ்தாபனமாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது.

கடிகைகளில் வேதவித்யை மட்டுமின்றி, வேதத்தில் அதிகாரமுள்ள ப்ரம்ம - க்ஷத்ரிய - வைச்யர்களுக்கான எல்லா வித்யைகளுமே சொல்லிக்

கொடுக்கப்பட்டிருக்கலாமென்றும், இவற்றில், க்ஷத்ரியர்களுக்கான தநுர்வேத சிக்ஷையினால்

எதிர்காலத்துக்கான வீரர்கள் உருவாக்கப்பட்டார்களென்பதால்தான் குறிப்பாக சத்ரு ராஜாவிடமிருந்து கடிகையைக் கைப்பற்றியிருக்கக் கூடுமென்றும் ஒரு அநுமானம். அல்லது அறிவுக்கோட்டை என்ற காரணத்துக்காகவே அறிவை மதித்த அக்காலத்தில் ஒரு ராஜா இன்னொரு ராஜாவின் வித்யாசாலையைத் தன் வசப்படுத்திக் கொண்டிருக்கலாம்.

'த்விஜர்' என்பதன் நேர் மொழிபெயர்ப்பு, 'இருபிறப்பாளர்' என்பது. உபநயன ஸம்ஸ்காரத்தினால் இரண்டாவது பிறப்பு எடுப்பதாகக் கருதப்படும் முதல் மூன்று வர்ணத்தாருமே த்விஜர்கள்தான். அதனால் 'த்விஜர்களுடையவை' எனப்படும் கடிகைகளில் க்ஷத்ரியர்களும் படித்திருக்க இடமுண்டு. மயூரவர்மா என்று சற்றுமுன் சொல்லப்பட்டவன் க்ஷத்ரியன் தானே?

'ஸத்ய ஸேனன்' என்ற சத்ரு ராஜாவின் பேரிலிருந்து அவன் அசோக சாஸனம் சொல்லும் 'ஸத்ய புத்த' ('புத்ர'தான் 'புத்த' என்றாயிருக்கிறது). அரசர்களில் ஒருவன், இந்த ஸத்யபுத்ரர்கள்தான் தொண்டை மண்டலாதிபதிகள் என்றெல்லாமும் கொஞ்சம் ரிஸர்ச் பண்ணிப் பார்த்திருக்கிறேன்.

வேலூர்பாளைய சாஸனம் இன்னொன்றிலிருந்து நரஸிம்ஹவர்மா காஞ்சீபுரத்தில் கைலாஸநாதர் ஆலயத்தைக் கட்டியதோடு ப்ராம்மணர்களுக்கென (இங்கேயும் 'த்விஜாநாம்' என்று இருக்கிறது) கடிகாஸ்தானமும் மறுபடி கட்டிக்கொடுத்தானென்று தெரிகிறது. 'புநர் வ்யதாத் - மறுபடி கட்டிக்கொடுத்தான்'- என்று இருப்பதால் இவனுக்கு ரொம்ப காலம் முன்பே கடிகை இருந்து அது இவன் நாளில் சிதிலமாயிருக்கவேண்டும், அதை இவன் அதன் முக்யத்வம் உணர்ந்து புனர் நிர்மாணம் செய்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. அழகான ச்லோகமாக இருக்கிறது சாஸனம்:

தத் புத்ர ஸூந : நரஸிம்ஹவர்மா

புநர்வ்யதாத் யோ கடிகாம் த்விஜாநாம்

சிலாமயம் வேச்ம சசாங்கமௌளே!

கைலாஸகல்பம் ச மஹேந்த்ரகல்பம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## கற்கோயிலின் தோற்றம்

'சிலாமயம் வேச்மம்' என்றால் கருங்கல்லால் ஆன க்ருஹம் அடுக்கிக் கட்டியதுதான் என்றாகி விட்டதால் இதை விசேஷமகக் குறிப்பிடுவானேன் என்று தோன்றலாம். ஆனால் காரணத்தோடுதான் இங்கே இப்படிச் சொல்லியிருக்கிறது.

ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்த மஹேந்த்ர வர்மப் பல்லவனுக்கு முன்பெல்லாம் செங்கல், மரம் முதலியவற்றால்தான் கோயில் கட்டினார்கள். மஹேந்த்ரவர்மா தான் முதன்முதலில் கற்கோவில் கட்டினவன். 'கட்டினவன்' என்பது தப்பு;கோவில் 'எடுத்தவன்' என்றே அவனைச் சொல்லவேண்டும். ஏனென்றால் இவன் காலத்தில்கூட, மலைகளிலிருந்து பாறைகளை வெட்டி slabகளாக (துண்டகளாக)ச் செதுக்கிக் கொண்டு வந்து அவற்றை அடுக்கிக் கோவில் கட்டுவது என்ற வழக்கம் ஏற்படவில்லை. பின்னே எப்படி கற்கோவில் எடுத்தானென்றால், குன்றாகப் பெரிய பாறைகளிருக்கும் இடத்துக்குப் போய்,

அங்கே அந்தக் குன்றையே குடைந்து, செதுக்கி அப்படியப்படியே கோவிலாக ஆக்கும்படிச் செய்தான். செங்கல்லாலோ மரத்தாலோ ஆதியில் கோயில் அமைத்ததிலிருந்து இது முதல் டெவலப்மென்ட் (வளர்ச்சி)

இரண்டாவது டெவலப்மெண்ட் மஹேந்த்ரவர்மாவுக்கு நூறு வருஷம் பிற்பாடு வந்த இந்த இரண்டாவது நரஸிம்ஹவர்மாவான ராஜஸிம்ஹ பல்லவனின் காலத்தில் ஏற்பட்டது. அதாவத, இவன்தான் பெரிய பெரிய பாறைகளைக் துண்டகளாக வெட்டிச் செதுக்கி எங்கே வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு வந்து அவற்றை

அடுக்கி நிஜமாகவே கோயில் கட்ட ஆரம்பித்தான். அந்த முதல் கோவில்தான் காஞ்சி கைலாஸநாதர் ஆலயம்;அதைத்தான் குறிப்பாக 'சிலாமயம் வேச்மம்' என்று சொல்லியிருக்கிறது.

குன்றுகளைக் குடைந்து கோவிலாக்கினபோது ("குடை வரைக் கோவில்") என்பது இதைத்தான்) நாம் கல் இருக்கிற இடத்துக்குப் போகவேண்டும். அதாவது ஸ்வாமியைத் தேடிக் கொண்டு நாம் போகவேண்டும். கல் நம்மைத் தேடி வரும்படியாக அதைச் செதுக்கிக்கொண்டு வந்து செங்கல்லைப் போலவே இசைத்துக் கட்டி ஸ்வாமியே நம்மிடம் எழுந்தருளும்படியாகச் செய்த முதல் கற்கோவில் கைலாஸ நாதருடையது. இதைக் "கட்டிடக் கோயில்" என்பார்கள். விஷயம் தெரிந்தவர்கள் "கற்றளி" என்பார்கள். 'கல் தளி' தான் 'கற்றளி'. தளி என்றால் கோவில்.

பூலோக கைலாஸமாக இந்தக் கோவிலைக் கட்டியதைத்தான் 'கைலாஸ கல்பம்' என்று சொல்லியிருக்கிறது. மஹேந்த்ரவர்மா அநுஸரித்த நிர்மாண முறையின் வழியிலேயே இதை நரஸிம்ஹ வர்மா செய்தான் என்பதை 'மஹேந்த்ர கல்ப:' என்று சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறது.

அப்பர் ஸ்வாமிகளால் சமணத்திலிருந்து வைதிக மதத்துக்குத் திருப்பப்பட்ட மஹேந்த்ர வர்மா மாமண்டூர், மண்டகப்பட்டு, பல்லாவரம் (பல்லவர்புரம்), திருச்சி மலைக்கோட்டைக் கோவிலுக்குக் கீழே எல்லாம் குகைகளில் குடைவரைக் கோவில்கள் கட்டினவன். அவன் ஏழாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் இருந்தவன். அவனுடைய பிள்ளையும் ஒரு நரஸிம்ஹ வர்மாதான். வாதாபிவரை போய் ஜெயித்த மாமல்லன் அவன்தான். ஆனால் கைலாஸநாதர்கோயில் கட்டினவன் அவனில்லை. அவன் முதலாவது நரஸிம்ஹன். இவன் அவனுடைய கொள்ளுப்பேரனான இரண்டாவது நரஸிம்ஹன். முதல் நரஸிம்ஹனோடு இவனைக் குழப்பிக் கொள்ளாமலிருப்பதற்காகப் பொதுவாக இவனை இவனுடைய

பட்டப்பெயரான ராஜஸிம்ஹன் என்ற பெயரில் குறிப்பிடுவதே வழக்கம். புகழ்பெற்ற தன் மூதாதையான மஹேந்த்ரவர்மாவின் வழியில் தானும் கோவிலெடுத்தால் 'மஹேந்த்ர கல்ப:' என்று சொல்லிக் கொண்டிருக்கிறான்.

"சசாங்க மௌளி" என்பது சந்த்ர சேகரனாக இருக்கப்பட்ட பரமேச்வரனைக் குறிக்கும் பெயர்.

"சிலாமயம் வேச்ம சசாங்கமௌளே" என்று 'ச'காரம் மோனையாக வருவது காதுக்கு மதுரமாயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**கோயிலும் கடிகையும்**

வேத சாஸ்த்ராப்யாஸத்துக்கு கடிகை, தேவதாராதனத்துக்குக் கோவில் என்று இரண்டையும் நரஸிம்ஹவர்மா நிர்மாணித்ததில் ரொம்பவும் பொருத்தமும் பொருளும் இருக்கின்றன. வேத மந்த்ரங்களைக் கொண்டு செய்யும் ப்ராண ப்ரதிஷ்டையும், கும்பாபிஷேகமும், பூஜைகளுந்தான் தெய்வ ஸாந்நித்யத்தை ஆலயங்களில் உண்டாக்குபவை. வேதம் என்ற வேரிலே ஊன்றி நிற்கும் நம்முடைய ஸநாதன தர்மமென்னும் வ்ருக்ஷத்தில் பழமாகத் தொங்குவதே ஆலயம். எல்லாரும் அநுபவிப்பதற்காக வெளியே தொங்குகிற இந்த ஆலயப் பழம் உண்டாகக் காரணமான வேர் மறைவாக, மறையாக இருப்பதே!

நரஸிம்ஹவர்மா முதலான ராஜாக்களின் வழியிலேயேதான், ராஜாக்கள் எடுபட்டுப் போனபின் நம்முடைய மதத்துக்கு நிரம்பப் போஷணை தந்துள்ள செட்டிப் பிள்ளைகளும் (நகரத்தாரும்) ஒரு கோயிலை ஜீர்ணோத்தாரணம் பண்ணினால் ஒரு பாடசாலை ஏற்படுத்துவது என்று வைத்துக்கொண்டிருந்தார்கள்.

'பாடசாலையில் கற்றதனால் ஆய பயன் இதுதான்' என்று வாலறிவன் நற்றாளை காட்டிக் கொடுக்கும்படியாக ஆலயங்களை எழுப்புவது பூர்விகர் வழக்கமாயிருந்தது.

கல்வி கற்பதைச் சொல்லும் இடத்தில் ஈச்வரனுக்கு "வாலறிவன்" என்ற பெயரைத் திருவள்ளுவர் கொடுத்திருப்பது அர்த்தபுஷ்டி வாய்ந்தது. எல்லாம் அறிந்த ஸர்வஜ்ஞனே "வாலறிவன்". எத்தனை கற்றாலும் அதனால் அஹங்கரிக்காமல் அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தில் அது துளிமாத்திரமே என்ற அடக்கத்தோடு அவனுடைய நற்றாள் தொழ வேண்டுமென்றுதான் இந்த வார்த்தையைப் போட்டிருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**எட்டாம் நூற்றாண்டில்**

கடிகாஸ்தானம் பற்றி உள்ள இன்னொரு கல்வெட்டு எட்டாம் நூற்றாண்டிலும் அது சீர்சிறப்புடன் இருந்ததைக் காட்டுகிறது. 'ஸௌத் இன்டியன் இன்ஸ்க்ரிப்ஷன்ஸ்' நாலாவது வால்யூமில் ப்ரசுரமாயுள்ள கல்வெட்டு.) இந்தக் கல்வெட்டு காஞ்சீபுரம் வைகுண்டப் பெருமாள் கோயிலில் இருப்பது.

ஒரு ஸமயம் பல்லவர்களில் ஸிம்ஹாஸனம் ஏறிய மத்யப் பிரிவினரின் வம்சம் ஸந்ததி இல்லாமல் முடிந்துபோய்விட்டது. காஞ்சீபுரத்தில் ராஜா இல்லாமல் அராஜகம் ஏற்பட்டுவிட இருந்தது. அப்போது கிளை வம்சத்தில் ஹிரண்யவர்மா என்று ஒரு குறுநில மன்னன் இருந்தான். காஞ்சீபுரத்தின் ப்ரமுகர்கள் ஒன்று சேர்ந்து அவனிடம் போய் அவனுடைய பிள்ளை பரமேச்வர வர்மாவைக் காஞ்சியில் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜாவாக இருப்பதற்கு அனுப்பிவைக்க வேண்டுமென்று விஞ்ஞாபித்துக் கொண்டார்கள். அவன் அப்படியே அனுப்பிவைத்தான். அப்புறம் வைதிக ச்ரேஷ்டர்கள் காஞ்சீபுரத்தில் பரமேச்வரவர்மாவுக்கு ராஜ்யாபிஷேகம் செய்துவைத்து நந்திவர்மப் பல்லவன் என்ற பட்டத்தைக் கொடுத்தார்கள். இதைச் சொல்லும் அந்தக் கல்வெட்டு, முதலில் ஹிரண்யவர்மாவிடம் தூதுபோன ப்ரமுகர் கோஷ்டி,

பிற்பாடு பரமேச்வர வர்மாவுக்குப் பட்டாபிஷேகம் செய்த வேத ப்ராம்மண கோஷ்டி ஆகிய இரண்டிலுமே காஞ்சியிலிருந்த கடிகையின் ஆசிரியர்கள் இருந்ததாகச் சொல்கிறது.

இதிலிருந்து கடிகாஸ்தானத்தின் உசந்த ஸ்தானமும் அதன் அத்யாபர்களுக்கு இருந்த மதிப்பும் தெரிகிறது.

'விக்ரமாதித்யன்', 'ஸத்யாச்ரயன்' என்ற பட்டப் பெயர்களை பாதாமி (வாதாபி) யிலிருந்து ஆட்சி செய்த சாளுக்கியர்கள் வைத்துக்கொள்வார்கள். இவர்களுக்கும் பல்லவர்களுக்கும் யுத்தங்கள் நடந்ததுண்டு. ஜயாபஜயங்கள் மாறி மாறி வரும். விக்ரமாதித்ய ஸத்யாச்ரயன் என்ற பெயருடைய ஒருவன் பண்ணிய தர்மத்தைப் பற்றிய கல்வெட்டு காஞ்சி கைலாஸநாதர் கோயில் மஹா மண்டபத்துக்கு மேற்கே உள்ள தூண் வரிசைகளில் வடக்கேயுள்ள ஸ்தம்பத்தில் இருக்கிறது. அதிலே காஞ்சீபுரத்து கடிகையில் இருப்பவர்களை "மஹா" ஜனங்கள் என்று மரியாதையாகச் சொல்லி, "இந்த தர்மத்துக்கு ஹானி செய்கிறவர்கள் கடிகை மஹா ஜனங்களை ஹத்தி செய்யும் பாபத்துக்கு ஆளாவார்கள்" என்று (ஸம்ஸ்க்ருத்தில்) சொல்லியிருக்கிறது.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஸ்தாபனம்*

### சாஸனத்தின் அமைப்பு

பொதுவாக ஒரு ராஜசாஸனமிருந்தால் அதிலே மூன்று பகுதிகள் இருக்கும். முதல் பகுதிக்கு 'ப்ரசஸ்தி' என்று பேர். புகழ்மொழி என்று அர்த்தம். சாஸனத்தின் மூலம் ஏதோ ஒரு தானம் செய்து, அது நிரந்தரமாக இருக்கச் செய்கிற ராஜாவுடைய மூதாதையர்களின் பெருமை, அவனுடைய ஸொந்தப் பெருமை முதலானதுகள் ப்ரசஸ்தியில் கூறப்பட்டிருக்கும். அடுத்ததான மத்யப் பகுதிதான் தான விவரத்தைச் சொல்வது. இன்னாருக்கு, இன்ன ஸமயத்தில், இன்னதானம் செய்யப்படுகிறது என்று அதில்

விவரித்திருக்கும். கடைசியில் 'வ்யாஸ கீத ச்லோகங்கள்' என்ற பகுதி. அதிலே தற்போது ஏற்படுத்தி வைத்த இந்த என்டோன்மென்டை எந்நாளும் தர்மகர்த்தாக்கள் நேர்மையாக நடத்தி வைக்கவேண்டும் என்று உணர்த்துவதற்காக, 'இந்த சாஸன ப்ராகாரம் நடத்திவைப்பவர்கள் இப்படியிப்படியான புண்யங்களை அடைவார்கள் என்றும், அதற்குக் குந்தகம் செய்பவர் இப்படியிப்படியான பாபங்களுக்கு ஆளாவார்கள்' என்றும் சொல்லியிருக்கும். பொதுவாக, "கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவம் ஸம்பவிக்கும்" என்று - இதுதான் பாபங்களுக்கெல்லாம் உச்சம் என்கிற கருத்தில் - சொல்லியிருக்கும். அதற்குப் பதிலாக கடிகை மஹாஜனங்களைக் கொலை செய்வதைச் சொல்லியிருப்பதிலிருந்தே அவர்களுக்கு இருந்த மஹா மதிப்பு மரியாதைகள் தெரிகின்றன.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## ஏழாயிரம் மாணவர்கள்

இன்னொரு கல்வெட்டிலிருந்து ஒரு கடிகை எத்தனாம் பெரிசாக, ஒரு ஊர் மாதிரி, இருந்திருக்கிறது என்று தெரிகிறது. ஆச்சரியமாகக்கூட இருக்கிறது. ஏழாயிரம் பேர் ஒரே கடிகையில் படித்திருக்கிறார்கள் வடார்க்காடு குடீயாத்தத்துக்கு அருகில் திருவல்லம் கிராமத்தில் நீவா என்ற ஆற்றின் மத்தியிலுள்ள பாறையில் இந்தக் கல்வெட்டு இருக்கிறது. அது எட்டாம் நூற்றாண்டின் முன்பாதியைச் சேர்ந்ததென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். 'ஸௌத் இன்டியன் இன்ஸ்க்ரிப்ஷன்ஸ்', முதல் வால்யூம், முதல் பார்ட்டில் இது ப்ரசுரமாயிருக்கிறது. அநேகமாகக் கல்வெட்டுக்கள் எல்லாமே ஒருத்தன் செய்த தான தர்மத்தைத்தான் சொல்வதற்கிணங்க இதுவும் ஒரு தர்மத்தைச் சொல்லி, "இந்த தர்மத்துக்கு ஹானி உண்டாக்குபவன் கடிகையிலுள்ள ஏழாயிரம் பேரையும் கொன்ற பாபத்துக்கு

ஆளாவான்" என்கிறது.

பிரஸித்தி உடையவையாக நந்திவர்மப் பல்லவனின் "காசாகுடிச் செப்பேடுகள்" என்று உண்டு. நான் முன்னே சொன்ன புஸ்தகத்தின் இரண்டாவது வால்யூம், மூன்றாம் பார்ட்டில் போட்டிருக்கிற இந்த சாஸனங்களில் ஒன்றிலிருந்து 'பூதேவர்'கள் எனப்படும் பிராம்மணர்களிடம் எத்தனை பக்தி விச்வாஸத்துடன் 'க்ஷத்ர சூடாமணி'களாயிருந்த ராஜாக்கள் கடிகைகளைக் கட்டிக்கொடுத்திருக்கிறார் -களென்று தெரிகிறது. கடிகா ஸ்தான ஆசார்யர்கள் தனியாக குருகுலம் நடத்தாவிட்டாலும், சதுர்வேத பண்டிதர்களாகவும், தர்ம கர்மங்களில் சிறந்தவர்களாகவும், தேவ த்விஜ' என்று தெய்வத்தோடு சேர்த்துச் சொல்லி ஸத்காரம் செய்யத் தக்கவர்களாகவும் இருந்திருக்கிறார்களென்று இதிலிருந்து தெரிகிறது.

ஏழாயிரம் மாதிரியே, மூவாயிரம் பேர், ஓராயிரம் பேர் படித்த கடிகைகளைப் பற்றியும் தெரியவருகிறது. வடார்க்காடு செய்யாறு தாலூகாவில் ப்ரம்மதேசம் என்ற கிராமமிருக்கிறது. ப்ரம்மதேயம்' என்றாலே பிராம்மணனுக்கு தானம் தந்தது என்றுதான் அர்த்தம். அந்த கிராமத்தில் சந்த்ர மௌளீச்வரர் ஆலயம் இருக்கிறது. அதன் கர்ப்பக்ருஹ வடவண்டைச் சுவரில் உள்ள கல்வெட்டில் "த்ரைராஜ்ய வடவண்டைச் சுவரில் உள்ள கல்வெட்டில், "த்ரைராஜ்ய கடிகாமத்யஸ்த மூவாயிரவர்" என்று வருகிறது. "மூவாயிரவர்" என்ற தமிழ் வார்த்தை, அந்த கடிகையில் தொடர்ச்சியாக மூவாயிரம் பேர் படித்து, இவ்விஷயம் ஸர்வஜனங்களின் கவனத்தையும் கௌரவத்தையும் காட்டுகிறது. இதேபோல் இன்னொரு சாஸனத்தில் "கடிகை ஏழாயிரவர்" என்றம் தமிழில் வருகிறது. ஆயிரம் பேர் படித்த ஒரு கடிகையை "கடிகா ஸஹஸ்ரம்" என்று ஒரு இடத்தில் குறிப்பிட்டிருக்கிறது.

ஏழாயிரம், மூவாயிரம் என்பதெல்லாம் கொஞ்சம் மிகைபடக் கூறியது என்றும் சிலர் அபிப்ராயப்படுகிறார்கள். அப்படியே வைத்துக்கொண்டாலும் இதில் பாதியாவது இருந்திருந் தால்தானே இந்த அளவுக்கு மிகைப்படுத்தியிருக்கமுடியும்? இப்படி நிச்சயமாக ஆயிரம் பேருக்கு மேல் ஒரே இடத்தில் சேர்ந்து முக்யமாக வேத சாஸ்திரங்களைப் படித்தார்களென்றாலே விஷயம்தானே?

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஸ்தாபனம்*

### ஆந்திர, கர்நாடகங்களில்

காஞ்சீபுரத்தில்தான் முக்யமாக கடிகை ரொம்பவும் உன்னதமுறையில் போஷித்து வளர்க்கப்பட்டிருக்கிறது என்றாலும், (கி.பி) ஆறாம் நூற்றாண்டிலேயே வடக்கே, தெலுங்கு தேசத்தில் கோதாவரி ப்ராந்தியங்களிலும் ராஜாக்கள் கடிகைகள் ஸ்தாபித்ததாகத் தெரிகிறது. அங்கே துணி (Tunii)தாலுகாவில் சிக்குள்ள அக்ரஹாரம் என்ற இடத்தில் ஒரு குளம் வெட்டுகிறபோது ஒரு தாம்ர சாஸனம் (செப்பேடு என்பது) அகப்பட்டது. அது விஷ்ணு குண்டின வம்சத்தைச் சேர்ந்த இரண்டாவது விக்ரமேந்த்ர வர்மாவினுடையது, அவன் 'முறைப்படி கடிகை ஸ்தாபித்து புண்யக் குவியலை ஸம்பாதித்துக் கொண்டான்' என்று அதில் இருக்கிறது. யதாவிதி விநிர்மாபித கடிகாவாப்த புண்ய ஸஞ்சயஸ்ய."

கர்நாடக தேசத்தில் பதினொன்றாம் பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களிலே 'கடிகை' என்ற பெயரைச் சொல்லி, அந்தப் பெயருள்ள கல்விசாலைகள் அங்கேயிருந்ததைக் கூறியிருக்கிறது. 'எபிக்ராஃபிகா கர்நாடகா' வால்யூம்களைப் பார்த்தால் தெரியும்.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் பின்பாதியில் ஆட்சி நடத்திய த்ரிபுவன மல்லிதேவ சோள மஹாராஜன் என்பவனுடைய கல்வெட்டு தும்கூர் ஜில்லாவிலுள்ள காமகொண்டன ஹள்ளியில் ஹேமவதி தொட்டப்பா ஆலயத்தில் இருக்கிறது. இதில் ஹெஞ்சாரப்பட்டணம் என்ற இடத்திலிருந்த கடிகா ஸ்தானத்தில் ப்ரதிஷ்டையாகியிருந்த நொணம்பேச்வர ஸ்வாமி ஸந்நிதானத்தில் ஒரு கிராமதானம் நடந்ததாகக் கன்னட பாஷையில் சொல்லியிருக்கிறது. "மீதுஹெஞ்ஜாரப்பட்டணத மஹா கடிகாஸ்தான ஸ்ரீ நொணம்பேச்வர தேவர ஸந்நிதானதல்லி" என்று

சொல்லிக்கொண்டு போயிருக்கிறது.

மைஸூரில் மண்டயம் என்கிறோமே, அந்தப் பகுதியில் ஹளேகெரெ என்ற இடத்தில் சிவமாரமன் என்று பெயருடைய ஒரு ப்ருத்வி கொங்கணி வம்ச மஹாராஜாவின் சாஸனம் கிடைத்திருக்கிறது. அது, ஒரு நிலதானத்தைப் பற்றிச் சொல்லுகிறது. அதில் (தானம் யாரைக் குறித்துச் செய்யப்படுகிறதோ அந்த) doneeயின் பெயர் மாதவ் சர்மன் என்றும், அவன் ஹரிதஸ கோத்ரத்தைச் சேர்ந்தவன் என்றும் சொல்லி, இவற்றைச் சொல்வதற்கு முன்பாகவே அவனைப் பெருமைப்படுத்தும் விதத்தில் அவன் "கடிகையைச் சேர்ந்த ஆயிரம் பேரில் ஒருத்தன்" என்று குறிப்பிட்டிருக்கிறது. கடிகா ஸஹஸ்ராய ஹரிதஸ கோத்ராய மாதவ சர்மணே" (Ep. Kar-Mandya Taluk/ vol 111, p. 108) சென்னராய பட்டணத்தைச் சேர்ந்த 1442-வது வருஷத்திய கல்வெட்டு ஒன்று,

அதாவது பதினைந்தாம் நூற்றாண்டின் மத்திக்கு வந்துவிட்டோம். கி.பி. நாலாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கர்நாடகத்திலிருந்து காஞ்சீபுரம் கடிகைக்கு வந்த மயூரவர்மாவின் காலத்திலிருந்து ஆயிரத்து நூறு வருஷம் தள்ளி வந்துவிட்டோம். இப்போது கர்நாடகத்திலேயே அநேக கடிகைகள் ஏற்பட்டு விட்டன. அவற்றிலொன்று, இந்த சிலாசாஸனத்தின் காலத்தை ஒட்டிய ஒரு துந்துபி வருஷ பாத்ரபத மாஸத்தில் ஸ்தாபிக்கப்பட்டதை அது தெரிவிக்கிறது. "கடிகா ஸ்தானம்" என்பதைவிட இன்னும் பக்தி மரியாதைகளுக்கு உகந்ததாக "கடிகா (ஆ) ச்ரமம்"

என்று சொல்கிறது. அதாவது, ஒரு குரு மட்டும் தன் ஆச்ரமத்தில் ரொம்பவும் தூய்மையுடன் குருகுலம் நடத்திய மாதிரியே இங்கே பலபேர் ஒரு இடத்தில் சேர்ந்து நூற்றுக்கணக்கானவர்களுக்கு சிக்ஷையளித்த போதும் அதை ஆச்ரமமாகப் பரிசுத்தத்தோடு நடத்தியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

## ஸ்தாபனம்

ñý£ó£w®óˆF½‹ ªð¼¬ñ

è®¬è¬òŠðŸP Ýó‹Hˆ«ð£¶ ï£¡ ªê£¡ù Üñô£ù‰î˜ «îõAKJ™ Þ¼‰îõ˜. ªîùôî£ð£ˆ â¡Á õöƒ°Aø Ü‰î á˜ ñý£ó£w®óˆF™ Þ¼Šð¶. Üõ˜ è®¬è¬òŠ ðŸP„ ªê£™õî£™ Üƒ«è»‹ Þ‰îŠ ªðòK™ ú˜õèô£ê£¬ôèœ Þ¼‰îî£è„ ªê£™ôô£‹. Ü™ô¶ Üõ˜ è£ôñ£ù ðF¡Í¡ø£‹ ËŸø£‡´ ñˆFJ™Ãì è£…C, è®¬èò «îõAK õ¬ó â†´‹ ‚ò£F»œ÷î£è Þ¼‰F¼‚èô£‹. Þ‰î è®¬è‚° «îêˆF¡ ï£ù£ð‚èƒèO™L¼‰¶‹ ï£ù£ úŠóî£òvî˜èÀ‹ õ‰îî£™î£¡ Üõ˜ Þƒ«è Üî˜õ «õîŠ ðêƒèœ ú‰Gò£R¬òŠ ðŸP„ ªê£™½‹ ñ‰Fó‹ Þ¡ù£¼‚°ˆ ªîKò£î£ â¡Á «è†Aø£˜ - â¡Á‹ ¬õˆ¶‚ ªè£œ÷ô£‹.

# தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)

## ஸ்தாபனம்

### மஹாராஷ்டிரத்திலும் பெருமை

கடிகையைப்பற்றி ஆரம்பித்போது நான் சொன்ன அமலானந்தர் தேவகிரியில் இருந்தவர். தௌலதாபாத் என்று வழங்குகிற அந்த ஊர் மஹாராஷ்டிரத்தில் இருப்பது. அவர் கடிகையைப் பற்றிச் சொல்வதால் அங்கேயும் இந்தப் பெயரில் ஸர்வகலாசாலைகள் இருந்ததாகச் சொல்லலாம். அல்லது அவர் காலமான பதின்மூன்றாம் நூற்றாண்டு மத்தியில்கூட காஞ்சிக் கடிகைய தேவகிரி வரை எட்டும் க்யாதியுள்ளதாக இருந்திருக்கலாம். இந்த கடிகைக்கு தேசத்தின் நானாபக்கங்களிலிருந்தும் நானா ஸம்ப்ரதாயஸ்தர்களும் வந்ததால்தான் அவர் இங்கே அதர்வ வேதப் பசங்கள் ஸந்நியாஸியைப் பற்றிச் சொல்லும் மந்த்ரம் இன்னாருக்குத் தெரியாதா என்று கேட்கிறார் - என்றும் வைத்துக் கொள்ளலாம்.

# தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)

## ஸ்தாபனம்

## கடிகைக்கு கடிகாரத் தொடர்புண்டா?

கடிகையின் க்யாதி, ப்ரக்யாதிகள் தெரிகிறது. ஆனால் கடிகை என்று ஏன் பெயர் வந்தது? இதற்குப் பதில் சொல்லாமல் "நான் இத்தனை சாஸனங்களைப் பார்த்திருக்கிறேனாக்கும்" என்று பெருமைப் பட்டுக்கொண்டே போகிறேனே!இதை (பெயர் வந்த காரணத்தை)த் தெரிந்துகொண்ட பெருமையைச் சொல்லிக் கொள்ள வேண்டாமா? இந்தப் படலத்தை ஆரம்பிக்கிறேன்.

கடம் என்றால் பானை என்று எல்லாருக்கும் தெரிந்திருக்கும். அதிலேயே ரொம்பப் பெரிசாயில்லாமலிருப்பது கடிகை என்றேன். லதா - லதிகா, பத்ர - பத்ரிகா என்பது போல கட- கடிகா. ஆனால் பானைக்கும் பள்ளிக்கூடத்துக்கும் என்ன சம்பந்தம்?

'கடிகை' என்றால் 'நாழிகை' என்றும் அர்த்தம் சொன்னேன். 'அம்ருத கடிகை' என்பது போன்ற வார்த்தைகளில் இந்த அர்த்தத்தில்தான் அந்த வார்த்தை வருகிறது. ஒரு கடத்திலிருந்து சொட்டுச் சொட்டாக ஜலம் விழுவதைக் கொண்டே அந்தக் காலத்தில் நேரத்தைக் கணக்கிட்டதால் நாழிகைக்கு கடத்தின் பெயரை வைத்து 'கடிகா' என்றே இன்னொரு பெயர் சொன்னார்கள். அதுதான் இப்போது 'கடிகாரம்' என்பதில் வந்திருக்கிறது.

'ஸரி, காலேஜ் மாதிரி இருந்த வித்யாசாலைக்கு ஏன் கடிகா என்று பேர்? எப்போது க்ளாஸ் முடியும் என்று கடிகாவைப் பார்த்துக் கொண்டேயிருந்திருப்பார்களா? அதனால் இந்தப் பேரா?' என்று வேடிக்கையாகத் தோன்றுகிறது. ஆனால் ரொம்பவும் ஸீரியஸான அகாடெமி விஷயத்தில் - வேத சாஸ்த்ர ஸம்பந்தமான விஷயத்தில் - இப்படிக் குறும்புப் பேர் கொடுப்பது பொருந்தாது.

**கடிகாசலம், நான்மணிக்கடிகை**

சோளிங்கர் என்று ஒரு க்ஷேத்ரம் இருக்கிறதே அதற்கு சோளஸிம்ஹபுரம் என்று பூர்வத்தில் பெயர். (சோளலிங்கபுரம் என்றும் சொல்லுவார்கள்.) அதுதான் சோளிங்கராகிவிட்டது. இதற்கே கடிகாசலம் என்று இன்னொரு பெயர். 'கடிகை மலை' என்று அர்த்தம். இந்த இடத்தில் கடிகை என்றால் என்ன அர்த்தம் என்று விசாரித்துப் பார்த்தேன். இந்த மலையில் ஒரு கடிகை - அதாவது ஒரு நாழிகை - தங்கினாலும் போதும், அங்கே கோயில் கொண்டிருக்கும் நரஸிம் ஹ மூர்த்தியின் சக்தியினால் எல்லாத் தீமைகளும், ஆவிக்கோளாறுகளுங்கூட பறந்து போய்விடுமென்பதால் இப்படிப் பெயர் என்று சொன்னார்கள். என் "ரிஸர்ச்"சுக்கு அது ப்ரயோஜனப் படவில்லை.

"நான்மணிக்கடிகை" என்று தமிழில் ஒரு நூல் சொல்கிறார்களே, அதில் "கடிகை" என்பது என்னவென்று கேட்டுப்பார்த்தேன். கடிகை என்றால் சின்ன 'பீஸ்' (துண்டு) என்றும், துண்டு துண்டாக உள்ள நாலு நாலு மணியான உபதேசங்களைக் கோத்து இதில் ஒவ்வொரு செய்யுளையும் செய்திருப்பதால் நூலுக்கு இப்படிப் பெயர் என்றும் தெரிந்தது. இதுவும் ஒரு வித்யாஸ்தானத்துக்கு ஏன் கடிகை என்று பேர் வரவேண்டும் என்பதைப் புரியவைக்கவில்லை.

**பலன் கிடைத்து**

ரொம்பவும் தேடிப் பார்த்தேன். யோசித்துப் பார்த்தேன். விஷயம் தெரிந்தவர்களைக் கேட்டுப்பார்த்தேன். புரிபடாமலே நின்றது. அதனாலேயே புரிந்து கொள்ளத்தான் வேண்டும் என்ற ஆர்வமும் ஜாஸ்தியாயிற்று. கடைசியில் பலன் கிடைத்தது.

எப்படி கடிகையைப்பற்றி உத்தர மீமாம்ஸா சாஸ்த்ரங்களில் ஒன்றாகக் கொள்ளத்தக்க 'கல்பதரு'வில் குறிப்புக் கிடைத்ததோ, அப்படியே அந்த நாமகரத்தைப் பற்றிய விளக்கம் பூர்வ மீமாம்ஸா சாஸ்த்ரங்களில் ஒன்றிலிருந்து கிடைத்தது இப்படி வித்யாசாலை ஸம்பந்தமான அறிவு நம்முடைய சதுர்தச வித்யா ஸ்தானங்களில் ஒன்றான மீமாம்சையிலிருந்தே கிடைப்பதுபற்றி ஸந்தோஷமாக

இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே : ப்ரயாகையிலும்**

பூர்வ மீமாம்ஸகர்களில் ஒரு முக்ய புருஷரான குமாரிலபட்டர் "தந்த்ர வார்த்திகம்" என்று ஒரு க்ரந்தம் செய்திருக்கிறார். அதில் "கல்பஸூத்ராதிகரணம்" என்ற பகுதியில் ஒரு ச்லோகம் வருகிறது (1-3-6). ச்லோகத்தின் விஷயம் நமக்கு அவச்யமில்லை. அதிலே கடிகா மார்க்க வ்ருத்திஷு என்ற வார்த்தை வருவதுதான் நமக்கு முக்யம்.

கி.பி. நாலாம் நூற்றாண்டிலிருந்து அதற்கப்புறம் ஆயிரம் வருஷத்துக்கு மேலாக கடிகைகள் இருந்திருப்பதற்கு 'எவிடென்ஸ்' (சான்று) இருக்கிறது என்று பெருமையாக ராஜ சாஸனங்களை ஸாக்ஷி காட்டினேன் அல்லவா? இப்போதோ ஆசார்யாளுக்கு ஸமகாலத்தவரான குமாரில பட்டரே ராஜ சாஸனத்துக்கு மேலாக, தம்முடைய சாஸ்த்ர வாசகமாக, கடிகையைச் சொல்கிறாரென்பதால் கி.பி. நாலாம் நூற்றாண்டுக்கும் கிட்டத்தட்ட ஆயிரம் வருஷத்துக்கு முந்திய கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே இப்படிப்பட்ட கலாசாலைகள் இருந்ததாகறிது.

அதாவது இரண்டாயிரம் வருஷகாலம் 'கடிகை' என்ற பெயரில் வித்யாசாலைகள் கொடிகட்டிப் பறந்திருக்கின்றன. ஹிந்து மதத்தில் ஆசார்யாள்தான் முதலில் இன்ஸ்டிட்யூஷன் ஏற்படுத்தினாரென்றாலும், மதச் சார்புள்ள அதன் கல்வி முறையில் அவர் காலத்திலேயே இன்ஸ்டிட்யூஷனலைஸ் செய்த கடிகைகள் இருந்திருக்கின்றனவென்று இதிலிருந்து தெரிகிறது. பௌத்தர்கள் புத்திமான்களிடம் செல்வாக்குப் பெறத் தொடங்கியதை எதிர்த்துத் தார்க்கிகர்களம் மீமாம்ஸகர்களும் கண்டனம் ஆரம்பித்தவுடனேனே வைதிக வித்யைகளில் பிடிப்புள்ளவர்கள் பண்டிதர்களை ஒன்று திரட்டி இப்படி கடிகைகளை ஆரம்பித்திருக்க

வேண்டுமென்று தோன்றுகிறது. அப்படி ஆரம்பித்ததுதான் போகப் போக நன்றாக அபிவ்ருத்தியாகி யிருக்கிறது.

காலத்தில் இத்தனை முற்பட்டிருந்ததோடு, குமாரில பட்டர் சொல்வதால் கடிகாஸ்தானத்தின் எல்லை எதுவரை போயிருந் ததென்றும் தெரிகிறது அவர் தற்போது அலாஹாபாத் என்று சொல்லும் ப்ரயாகையில் இருந்தவர். அவர் கல்விமான்களுக்கெல்லாம் ஸஹஜமாகத் தெரிந்த ஒன்றாக, "கடிகா மார்க்க வ்ருத்திஷு" என்பதால் வடக்கே அலாஹாபாத்திலிருந்து தெற்கே சோணாட்டு வேப்பத்தூர் வரை "கடிகாஸ்தானம்" என்ற பெயரிலான வித்யாசாலைகள் இருந்ததாக ஆகிறது.

'ஆரிஜின்' (தோற்றுவாய்), கால ஸமாசாரம், எல்லை எல்லாமிருக்கட்டும். நாமகரணத்துக்குக் காரணமென்ன என்றல்லவா குடைந்து கொண்டிருந்தோம்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## பெயர் விளக்கம்

குமாரிலபட்டரின் தந்த்ர வார்த்திகத்துக்கு பட்டஸோமேச்வரர் என்பவர் செய்திருக்கும் பாஷ்யத்தில்தான் இந்தக் காரணம் புரிந்தது. அதைத்தான்சொல்ல வந்தேன்.

'கடிகாஸ்தானம்' என்பதை அவர் (பட்ட ஸோமேச்வரர்) இப்படி 'எக்ஸ்ப்ளெயின்' பண்ணியிருக்கிறார்.

"வேத கௌசல ஜிஜ்ஞாஸார்த்தம் தத்தத்

வேதபாக சிஹ்ந லேகயாநி கடிகாயாம் கும்பாக்யா

யாம் நிக்ஷிப்ய, தத்தத் வேதபாக பரீக்ஷாகாலே

வேதம் பட இத்-யத்யேதார:அநுயுஜ்யந்தே:இதி

கடிகா மார்க்க வர்த்திநோ அநுயோக:" என்கிறார்.

'அநுயோகேஷு கடிகா மார்க்க வ்ருத்திஷு' என்று குமாரிலபட்டரின் 'தந்த்ரவார்த்திக' மூல ச்லோகத்தில் வருகிறது. அது எதைக் குறிக்கிறது என்று இங்கே பாஷ்யம் செய்தவர் விவரித்துவிட்டு, இதுதான் 'கடிகா மார்க்கவர்த்திநோ அநுயோக:' என்று மூல வாசகத்தைக் காட்டி முடிக்கிறார்.

'கடிகா மார்க்க வ்ருத்தி' என்பது கடிகையின் கல்விமுறைப்போக்கு. அதைப் பின்பற்றுபவர்கள் கடிகா மார்க்கவர்த்திகள். 'அநுயோகம்' என்றால் அவர்கள் விஷயங்களை விசாரணை செய்வது :பரீக்ஷை நடத்துவது.

கடிகா ஸ்தானங்களில் வித்யார்த்திகளுக்கு எப்படிப் பரீக்ஷை வைக்கிறார்களென்பதை இங்கே ஸோமேச்வரர் விளக்குவதில் கடிகை என்ற பெயர் வந்த காரணமும் புரிந்துவிடுகிறது.

"கடிகாயாம் கும்பாக்யாயாம்" என்கிறார். கும்பம் என்றால் குடம், பானை என்று தெரிந்திருக்கும். கடிகை என்பது கும்பமாகிய பானை ஸம்பந்தமுள்ள பெயர்தான் என்று விவரிக்கிறார்.

கடிகைகளில் பானையை வைத்து நடந்த பரீக்ஷை முறையிலிருந்தே அதற்கு அந்தப் பெயர் ஏற்பட்டிருக்கிறது என்று தெளிவுபடுத்துகிறார்.

என்ன பரீக்ஷை முறை? அதிலே பானை எதற்கு வந்தது? வரட்டு நெட்டுருப் போட்டுப் பரீக்ஷை எழுதுவதை 'கடம் அடித்தான்' என்கிறார்களே, அதிலிருந்துதான் கடிகையா? இல்லை. பரிஹாஸப் பெயர் மதிப்புக்குரிய வேத வித்யா ஸ்தானத்துக்கு ஏற்பட்டிருக்கமுடியாது என்று முன்னேயே சொன்னேனே!

வேதத்தில் எந்த மந்த்ரத்தைக் கேட்டாலும் அதை வித்யார்த்தி ஒப்பிக்கவேண்டும். அவன் 'தரோ'வாக அத்யயனம் செய்திருக்கிறானென்று அப்போதுதான் ஏற்படும். இதற்காகவே பரீக்ஷை எப்படி நடத்தினார்களென்றால் -

'அப்ஸ்ட்ராட்' - ஆகச் சொல்லாமல் உதாரணம் காட்டிச் சொன்னால்தான் புரியும்.

உதாரணமாக -

ரிக்வேதத்தில் ஏதாவது ஒரு மந்த்ரம் பையனுக்குத் தெரிகிறதா என்று பார்க்கவேண்டுமென்று வைத்துக் கொள்ளுங்கள். அதன் முதல் வார்த்தையைக்கூட எடுத்துக் கொடுக்காமல் அவனைச் சொல்லப் பண்ணவேண்டும். அத்யயனம் என்பது நெட்டுருப் போடுவதே ஆகையால் முதல் வார்த்தையைச் சொல்லிவிட்டால் அவன் கிடுகிடு என்று சொல்லிக்கொண்டு போய்விடுவான். அதனால், அதைக்கூடச் சொல்லாமல் இன்ன மந்த்ரம் என்று ஒரு ஸங்கேதம் - நம்பர் - கொடுத்தே அவனை ஒப்பிக்கப் பண்ணவேண்டும்.

இந்த நம்பரை எப்படிக் கொடுத்தார்கள்?

ரிக்வேதத்தில் பதினாயிரத்துக்கு மேல் மந்த்ரம் இருக்கிறது. இவற்றுக்கு ஒன்றிலிருந்து பதினாயிரம் வரை நம்பர் கொடுப்பது என்பது பெரிய தலைவலியாயிருக்கும். ஆனால் நல்லவேளையாக அந்த வேதத்தைப் பல

பாகமாக்கி, ஒவ்வொரு பாகத்தையும் பல பிரிவுகளாக்கி, ஒவ்வொரு பிரிவிலும் ஒரு ஸூக்தம், அந்த ஸூக்தத்தில் இத்தனை ரிக்குகள் என்று பிரித்துக் கொடுத்திருக்கிறது. ரிக் என்பது ச்லோகம் மாதிரி. ஒவ்வொரு ரிக்கும் ஒரு மந்த்ரம்.

இப்படிப் பிரித்திருப்பதில் இரண்டு விதம். பத்து மண்டலங்கள், ஒவ்வொரு மண்டலத்திலும் அநுவாகம் என்ற பிரிவுகள், ஒவ்வொரு அநுவாகத்திலும் ஸூக்தம் என்ற உட்பிரிவுகள் - என்பது ஒருவிதமான பிரிவினை. இன்னொன்று எட்டு அஷ்டகம் என்று முதலில் பிரித்து ஒவ்வொரு அஷ்டகத்திலும் அத்யாயம் என்ற உட்பிரிவு, அதிலே ஸூக்தம் என்று மேலும் உட்பிரிவு என்பது.

இப்போது பையனுக்கு ஸங்கேதமாக நம்பர் கொடுத்துப் பரீக்ஷிப்பது ஸுலபமாகி விடுகிறது. அதாவது 2-4-3-5 என்று ஏதோ ஒரு நம்பரை பரீக்ஷாதிகாரி கொடுக்கிறாரென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த கடிகையில் மண்டலப் பிரிவினையைப் பின்பற்றுபவர்களானால், உடனே பையன் இரண்டாவது மண்டலத்தில் நாலாவது அநுவாகத்தில் வரும் மூன்றாவது ஸூக்தத்தின் ஐந்தாம் ரிக்கை 'டக்'கென்ற சொல்ல வேண்டும். அஷ்டகப் பரிவினையை

அநுஸரிப்பவர்களானால், இப்படியே இரண்டாவது அஷ்டகம், நாலாவது அத்யாயத்தில் வரும் மூன்றாம் ஸூக்தத்தின் ஐந்தாவது ரிக்கை ஒப்பிக்க வேண்டும்.

இதற்கும் கடத்துக்கும் என்ன ஸம்பந்தம்?

பரீக்ஷாதிகாரி வாயினால் இப்படி 2-4-3-5 என்று நம்பர்களைச் சொல்வதைவிட எழுத்திலே கொடுப்பதுதான் மாணவனுக்குத் தெளிவாகப் புரியும். நாலு நம்பர்களைச் சேர்ந்தாற்போல் வாயினால் சொல்லிக்கொண்டு போனால் ஸந்தேஹம் வந்துவிடலாம். எனவே இம்மாதிரி ஸங்கேத நம்பர்கள் பலவற்றை ஓலை நறுக்கில் எழுதி ஒரு கடத்தில் போட்டு வைத்தார்கள். இதில் இன்னொரு நன்மை - வாயால் சொன்னால் அது அப்போதே காற்றோடு போய்விடும். எழுத்தில் இருந்தால் எத்தனை பரீக்ஷைகளுக்கு வேண்டுமானாலும் திரும்டப திரும்ப உபயோகித்துக் கொள்ளலாமே!அதனால் ஓலை நறுக்கில் எழுதி கடத்தில் போட்டு வைத்தார்கள். அதோடு எழுத்தில் எழுதினால் அது ஸாக்ஷி ப்ரமாணமுள்ள டாகுமெண்டும் ஆகிவிடுகிறது!.

பரீக்ஷை ஸமயத்தில் பையன் கடத்தில் கையை விட்டு எந்த நறுக்கு கையில் வருகிறதோ அதிலிருக்கிற ஸங்கேத நம்பருக்கான ரிக்கைச் சொல்ல வேண்டும். தனி ரிக்காக இல்லாமல் அவற்றைவிடப் பெரிய ஸூக்தம், யஜுர் வேதமானால் பஞ்சாதி என்றும் இப்படியே நம்பர் கொடுத்து, கடத்திலிருந்து ஓலை நறுக்கு எடுத்துப் பார்த்துச் சொல்ல வைத்துப் பரீக்ஷை நடத்தினார்கள்.

இதைப் பின்பற்றித்தான் பிற்காலத் தமிழரசர்கள் குடவோலைத் தேர்தல் முறை என்று நகராட்சி முறையில் அமலாக்கியருக்கிறார்கள் குடவோலைத் தேர்தலில் ஒன்றும் தெரியாத ஒரு குழந்தை ஓலையை எடுத்ததாகச் சொல்லியிருக்கிறது. கடிகைப் பரீக்ஷையில் மாணவனே எடுத்திருக்கலாம், அல்லது ஆசிரியர் எடுத்திருக்கலாம். இருவருமில்லாமல் எவரேனும் மத்யஸ்தர் எடுத்தாலும் எடுத்திருக்கக்கூடும். சொல்லிக் கொடுத்தவரை பரீக்ஷாதி காரியாகப் போடாமல் வேறு மூன்றாம் மனுஷரைப் போட்டு அவரை விட்டே (ஓலை நறுக்கை) எடுக்கச் செய்துமிருக்கலாம்.

சொல்லிக்கொடுத்த வாத்யாரானாலும்ட ஸரி, அசலார் என்று நினைக்கும் மத்யஸ்தரானாலும் ஸரி எவருமே ஒரு மாணவனுக்கு முன்கூட்டியே கேள்வியைச் சொல்லிக் கொடுப்பது முதலான ஒழுங்குத் தப்புக்குக் கொஞ்சங்கூட இடம் கொடுக்கப்படாதென்றுதான் இப்படி ஏகப்பட்ட கேள்விகளை (ஓலை நறுக்கில் உள்ள நம்பர் ஒவ்வொன்றும் ஒரு கேள்வி மாதிரிதானே?) ஒரு கடத்திலே போட்டு வைத்து, அதிலே தற்செயலாக எதெது வருகிறதோ அததுகளுக்கு 'ஆன்ஸர்' பண்ணவேண்டுமென்று கொஞ்சமும் சங்கைக்கு இடமில்லாத முறையில் பரீக்ஷை நடத்தியிருக்கிறார்கள்.

அந்த கடத்தை வைத்துத்தான் வித்யாசாலைக்கே "கடிகை" என்று பெயர் வந்ததென்று பட்ட ஸோமேச்வரரின் 'எக்ஸ்ப்ளனேஷ்'னிலிருந்த தெரிந்தது. பெயர் புரிய வந்ததில் ஒரு புதையல் கிடைத்த ஸந்தோஷம்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**சிறிது ஸம்ஸ்க்ருத பாடம்**

பாடம் சொல்லிக் கொடுப்பதைப் பற்றியே நிறையச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேனாதலால் உங்களுக்கும் கொஞ்சம் ஸம்ஸ்க்ருத பாடம் சொல்லித் தருகிறேன் - பட்டஸோமேச்வரரின் புஸ்தகத்திலிருந்து 'கோட்' செய்தேனே அதற்கு அர்த்தம் சொல்லித் தருகிறேன்.

"வேத கௌசல ஜிஜ்ஞாஸார்த்தம்" - வேதத்தில் எவ்வளவு தேர்ச்சியிருக்கிறதென்று அறிவதற்காக;"தத்தத் வேதபாக" - அந்தந்த வேத பாகங்களின் "சிஹ்ந லேகயாநி" - ஸங்கேதக் குறிப்புத் துண்டுகளை;"கடிகாயாம் கும்ப (ஆ)க்யாயாம்" - கும்பங்கள் என்று சொல்லும் கடிகைகளில்;"நிக்ஷிப்ய" - போட்டு "தத்தத் வேத பாக பரீக்ஷா காலே" - அந்தந்த வேத பாகத்தில் பரீக்ஷை நடக்கும்போது "தாநி ஆக்ருஷ்ய" -

அவற்றை (அந்த களை) எடுத்து"ஆக்ருஷ்ட லேக்ய சிஹ்நிதம்" - எடுத்ததில் எழுதியிருக்கும் ஸங்கேதப்படி;"வேதம் பட இதி" "வேதம் ஓது" என்று "அத்யேதார:" - அத்யாபகர்கள்;"அநுயுஜ்யந்தே" பரீக்ஷை நடத்துகிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## கும்பத்தின் பொருத்தம்

வேத வித்யைக்கு இப்படிக் கும்பத்தை ஸம்பந்தப்படுத்தியிருப்பதைப் பார்க்கும்போது ஒரு பொருத்தம் தெரிகிறது. சற்று முன் சொன்னாற்போல வேத தர்மம் என்பது ஒரு மஹா வ்ருக்ஷம். அதற்கு வேர்தான் வேத அத்யயனம். இந்த வ்ருக்ஷத்தின் முடிவான பலனாக - "பலம்" என்றால் "பழம்" தான், தெரியுமோல்லியோ? - வேத தர்மத்தின் நிறைவாகப் பழுக்கும் பழமாக இருப்பதுதான் நம்முடைய தேவாலயங்கள். வேத மந்த்ரங்களையேதான் அந்த ஆலயங்களில் கோபுரங்களிலும், விமானங்களிலும், தெய்வ மூர்த்திகளிலும், அப்படியே இறக்கி நிரப்பி வைத்து லோகத்துக்கெல்லாம் க்ஷேமத்தை "ரேடியேட்" பண்ணும்படிச் செய்திருக்கிறது. அப்படி மந்த்ர சக்தியை அவற்றுக்குள் செலுத்தவும் கும்பமேதான் வருகிறது. கும்பம் என்ற கடத்துக்குள் உள்ள மந்த்ர தீர்த்தத்தைக் கும்பாபிஷேகத்தில் கோபுர விமான கலசங்களின் மேலும் (இந்தக் கலசங்களும் கும்பங்கள்தான்)), தெய்வ விக்ரஹங்களின் மேலும் கொட்டித்தான் கோயிலைக்கோயிலாக்ககிறோம். வேதப் பழமான ஆலயத்தில் வரும் கும்பமேதான் வேராக அத்யயனம் சொல்லித்தரும் வித்யாசாலையில் பரீக்ஷை கடமாக வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது.

கடிகாஸ்தானம் என்ற பெயர் இப்படித்தான் உண்டாயிற்று என்று தெரிந்து கொண்டபோது ரொம்பவும் ஸந்தோஷமும் த்ருப்தியும் ஏற்பட்டது. ரிஸர்ச்சில் பாஸ்

பண்ணிவிட்டோமென்ற த்ருப்தி.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**தமிழகத்தின் வேதக் கலாசாலைகள்**

இந்த ஆராய்ச்சி செய்ததில், தொண்டை மண்டலத்தில் "கடிகை" என்ற பெயரில் இருந்த பெரிய வித்யாசாலைகள் போலவே தமிழ்நாட்டில் மற்ற இடங்களிலும் அந்தப் பெயரில்லாமலே இருந்துள்ள பெரிய வேத பாடசாலைகளைப் பற்றியும் தெரிந்துகொள்ள முடிந்தது.

இப்போது நமக்கு அபிப்ராயம் சோழநாடு, பாண்டிய நாடு, தொண்டை நாடு ஆகியவற்றைப்போலத் தென்னார்க்காடு - வடார்க்காடு - செங்கல்பட்டுப் பகுதிகள் கொண்ட நடுநாடு வித்யையில் அவ்வளவு சோபித்திருக்காது என்று. சாஸனங்களைப் பார்த்தால் இந்த அபிப்ராயம் எவ்வளவு தப்பு என்று தெரியும்!'கடிகாஸ்தானம்' என்று பேரில்லாத வேறு பெரிய வித்யாசாலைகள் இந்தப் பகுதியில் இருந்திருக்கின்றன. கடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் நடுவேயுள்ள பாஹூர் என்ற இடத்தில் ஐந்து செப்பேடுகளில் தொடர்ச்சியாக ஒரு சாஸனம் அகப்பட்டு ப்ரஸித்தி பெற்றிருக்கிறது. அதிலே இந்த பாஹூரில் சதுர்தச வித்யைகள் பதிநாலுக்கும் பதிநாலு டிபார்ட்மென்ட்களோடு ஒரு பெரிய வித்யா ஸ்தானம் இருந்ததாகவும், அதன் அபிவ்ருத்திக்காக ஒன்பதாம் நூற்றாண்டின் பின்பாதியில் விஜயந்ருபதுங்கன் என்றும் அரசனின் மந்த்ரி மூன்று கிராமங்களை தானம் பண்ணினதாகவும் சொல்லியிருக்கிறது.

பாஹூருக்குப் பக்கத்திலேயே திரிபுவனம் என்ற ஊர் இருக்கிறது. (தஞ்சாவூர் ஜில்லா திரிபுவனம் அல்ல.) அங்கேயுள்ள வரதராஜப் பெருமாள் கோவிலின் கிழக்கு, மேற்கு, வடக்குச் சுவர்களில் ராஜாதிராஜன் காலத்திய கல்வெட்டுக்கள் இருக்கின்றன. 1048ல் பொறித்த கல்வெட்டுக்கள். இதிலிருந்து திரிபுவனத்தில் ஸுமாராகப்

பெரிசான வித்யாஸ்தானம் இருந்ததாகவும் அதில் 190 பசங்களும் 12 வாத்யார்களும் இருந்ததாகவும் தெரிகிறது. அறுபது பசங்கள் ரிக்வேதமும், இன்னொரு அறுபது பசங்கள் யஜுர் வேதமும், இருபது பசங்கள் ஸாமவேதமும், பாக்கி ஐம்பது பசங்கள் இதர சாஸ்த்ரங்களும் படித்திருக்கிறார்கள். இவர்களில் எழுபதுபேர் வேதாந்தத்திலும், 'ரூபாவதாரம்' என்ற அபூர்வமான வ்யாகரண சாஸ்த்ரத்திலும் ஸ்பெஷலைஸ் பண்ணியதாகத் தெரிகிறது. இவை தவிர ராமாயண, மஹாபாரதங்களும், மநு தர்ம சாஸ்த்ரமும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

வைகாநஸம் என்று ஒரு வைஷ்ணவ ஆகமம். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு பிரதானமாக இருக்கப்பட்ட ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சீபுரம், மேல்கோட்டை என்ற நாலு க்ஷேத்ரங்களில் திருப்பதியில் மட்டும் வைகாநஸ ஆகமப்படி பூஜை நடக்கிறது. மற்ற மூன்றும் பாஞ்ராத்ர ஆகமத்தை அநுஷ்டிப்பவை. திரிபுவனம் பாடசாலையில் இந்த வைகாநஸமும் ஒரு ஸப்ஜெக்ட்.

இந்தக் கல்வெட்டில் குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய ஒரு அம்சம், வாத்யார்கள் பசங்கள் ஆகிய இரண்டு பிரிவினருமே கல்வியைத் தவிர வேறெந்தக் காரியத்திலும் ப்ரவேசிக்கக்கூடாது என்று நிபந்தனை விதிக்கப்பட்டிருக்கிறது.

விழுப்புரத்துக்கும் திண்டிவனத்துக்கும் நடுவில் எண்ணாயிரம் என்று ஒரு ஊர். ராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்று அதற்கு இன்னொரு பெயர் இருப்பதிலிருந்தே நாலுவேதமும் அறிந்த ப்ராம்மணர்களுக்கு அந்த ஊர் ராஜராஜனால் தானமாகக் கொடுக்கப்பட்டிருந்தது என்று தெரிந்துகொள்ளலாம். முதலாம் ராஜேந்த்ர சோழனின் சாஸனம் ஒன்று இருக்கிறது. பதினோராம் நூற்றாண்டுச் சாஸனம். அதிலிருந்து இந்த எண்ணாயிரம் கிராமத்தில் 340 பசங்களும் 14 வாத்யார்களும் கொண்ட ஒரு பெரிய வித்யாஸ்தானம் இருந்ததாகத் தெரிகிறது. இதை இரண்டு பாகமாகப் பரித்து, 270 பசங்கள் கீழ் வகுப்புக்கள் என்றும் 70 பேர் மேல்படிப்புப் படிப்பவர்கள் என்றும் வைத்திருக்கிறார்கள். அந்த 270 பேரில் 75 பேர் யஜுர்வதேம்;75 பேர் ரிக்வேதம்;20 பேர் அதே

ஸாமவேதத்தில் சாந்தோக்ய சாகை;20 பேர் அதே ஸாமவேதத்தில் தலவகாரசாகை;

20 பேர் வாஜஸநேயம் என்னும் சுக்ல யஜுர்வேதம் (முதலில் யஜுர்வேதத்தில் 75 பேர் என்று சொன்னது தமிழ்தேசத்தில் இன்றளவும் மிக அதிகம் பேர் பின்பற்றும் க்ருஷ்ண என்று இரண்டு உண்டு) அதர்வ வேதம் படித்தவர்கள் 10 பேர். வேத அங்கங்களில் ஒன்றான போதாயன க்ருஹ்ய கல்பம் 10 பேர் படித்திருக்கிறார்கள். முன்னேயே சொன்ன ரூபாவதாரம் 40 பேர்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

### அதர்வவேதமும் அநுஷ்டானத்தில்

தற்காலத்தில், ஏன் பல தலைமுறைகளுக்கு முன்பிருந்தே, அநுஷ்டானம் அற்றுப் போய்விட்ட அதர்வவேதத்தைப் பதினோராம் நூற்றாண்டில் இந்தத் தமிழ்நாட்டுப் பாடசாலையில் பத்துப்போர் அத்யயனம் செய்திருக்கிறார்கள். கடிகைக் கதையை நான் ஆரம்பித்தபோதே 'கல்பதரு'வில் அதர்வவேத வித்யார்த்திகளைப் பற்றியிருப்பதைத்தானே சொன்னேன்? இப்படியதோன் பாஹுரிலும்கூட அதர்வ வேத அத்யயனம் நடந்திருக்கவேண்டும். ஏனென்றால், நமது மதத்துக்கு ஆதாரமான பதிநாலு வித்யாஸ்தானங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு டிபார்ட்மென்ட் அந்த வித்யாசாலையில் இருந்ததென்பதால் இந்தப் பதிநாலில் ஒன்றான அதர்வ வேதமும் அங்கே போதிக்கப்பட்டுத்தான் இருக்கவேண்டும். காசாகுடி சாஸனத்திலிருந்தும் அதர்வ வேத அத்யயனம் அங்கே இருந்துவந்ததாகத் தெரிகிறது. எதனாலோ பிற்காலத்தில் அந்த வேதக்காரார்களும். அதைப் படிப்பவர்களும் மறைந்துபோயிருக்கிறார்கள்.

*ஸ்தாபனம்*

## பல சாஸ்த்ரங்களுக்கு ஆதரவு

மேல் க்ளாஸில் இருந்த 70 பேரில் 25 பேர் வ்யாகரணமும், 35 பேர் பூர்வ மீமாம்ஸையிலேயே குமாரில பட்டரின் ஸித்தாந்தத்துக்குச் சற்று வித்யாஸமான உள்ள ப்ரபாகரரின் ப்ரபாகர ஸித்தாந்தமும், 10 பேர் உத்தர மீமாம்ஸை எனப்படும் வேதாந்தமும் படித்திருக்கிறார்கள்.

(கும்பகோணம் நாகேச்வர ஸ்வாமி கோவிலில்கூட ப்ராபாகர மீமாம்ஸைக்கு மான்யம் விட்டதைச் சொல்லும் ஆதித்ய கரிகாலனின் கல்வெட்டு இருப்பது ஞாபகம் வருகிறது.)

இன்னொரு சாஸனத்தின்படி, இதே எண்ணாயிரத்தில் பண்டிதர்களுக்கும், அப்படியில்லாதவர்களான ப்ராம்மணர்களுக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் நல்ல போஜனம் பண்ணுவிக்க மான்யம் விட்டிருந்ததாகத் தெரிகிறது. இப்படி தினமும் 506 ப்ராம்மணர்களுக்கு ஸந்தர்ப்பணை செய்யப்பட்டிருக்கிறது.

காஞ்சீபுரத்துக்குப் பன்னிரண்டு மைலில் பழைய சீவரம் என்ற ஊர் இருக்கிறது. அதற்குக் கிட்டே பாலாற்றங்கரையில் திருமுக்கூடல் என்ற இடத்தில் உள்ள பெருமாள் கோயிலில் வீரராஜேந்திர தேவனின் 1067 ஆம் வருஷத்திய சாஸனம் இருக்கிறது. அதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் இந்தக் கோயிலின் வருமானத்திலிருந்து ஒரு வித்யாசாலையும் ஒரு வைத்யசாலையும் நடத்தப்பட்டிருக்கின்றன. இந்த வித்யாசாலையில் 10 பேர் ரிக்வேதம், 10 பேர் யஜுர் வேதம், 20 பேர் வ்யாகரணம், 10 பேர் பாஞ்சராத்ரம் படித்திருக்கிறார்கள். வைகாநஸத்தைவிடப் பரவலாக இருக்கும் ஸ்ரீ வைஷ்ணவ ஆகமம்மான் பாஞ்சராத்ரம் என்று சொன்னது நினைவிருக்கிறதா? அந்த வைகாநஸ ப்ராம்மணர்களில் ஐந்து பேர், இதேபோல் சிவன் கோவிலில் பூஜை செய்பவர்களான (சிவ யோகிகள் என்றும் இவர்களைச் சில இடங்களில் சொல்லியிருக்கிறது) சிவ ப்ராம்மணர்கள் மூன்று பேர் ஆகியோரும் இந்த வித்யாசாலையில்

இருந்திருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**வேத - ஆகமங்கள்**

இதிலே கவனிக்கவேண்டிய ஒரு விஷயம் என்னவென்றால், இந்த சாஸனங்களில் ப்ராம்மணர்கள் என்று தனியாக மற்ற வேத ஸம்பந்தப்பட்ட பாஞ்சராத்ரிகள், வைகாநஸர்கள், சிவாகமக்காரர்கள் ஆகியோரை அவர்களோடு சேர்க்காமல் பிரித்துச் சொல்லியிருப்பதாகும். வேதங்களை மாத்திரம் அநுஸரிப்பவர்கள், அவற்றோடு முக்யமாக வழிபாட்டு முறைகளான ஆகம தந்த்ரங்களையும் அநுஸரிப்பவர்கள் என்பவர்களை இப்படி ஒருத்தருக்கொருத்தர் வித்யாஸப்படுத்தியிருக்கிறது. ஒரேயடியாக வித்யாஸப்படுத்திப் பிரித்து வைக்கவுமில்லை - ஒரே ஸநாதன தர்மத்தின் இரண்டு கிளைகளாகவே வேத - ஆகமங்களை மதித்து வளர்த்து வந்திருக்கிறார்களென்று தெரிகிறது.

எண்ணாயிரத்துக்குக் கிட்டத்திலேயே உள்ள பணையவரம் என்ற இடத்தைச் சேர்ந்த ஒரு கல்வெட்டிலிருந்தும் இப்படியே ப்ராம்மணர், சிவயோகி என்பதாக வைதிகர்களையும் ஆகம மார்க்கக்காரர்களை வித்யாஸப்படுத்தி, முன்னவர்களில் ஐம்பது பேருக்கும் பின்னவரில் பத்துப் பேருக்குமூ அங்கே நித்யப்படி நன்றாக போஜனம் பண்ணுவித்தது தெரிகிறது. (மலையாள தேசத்தில் இன்றைக்கும் உத்ஸவ காலங்களில் 'அக்ரம்' என்ற பேரில் எல்லா ப்ராம்மணர்களுக்கும் போஜனம் பண்ணுவிப்பதுபோல் அப்போது தமிழ்நாட்டிலும் நடந்திருக்க வேண்டும் என்று எனக்கு ஒரு ஊஹம்.)

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## ஸமரச அம்சம்

பேதத்திலேயே ஒற்றுமை தான் நம் மதத்தின் முக்ய அம்சம் என்பது அநேக சாஸனங்களிலிருந்து தெரிகிறது. முன்னேயே காட்டினமாதிரி ஒரே கூரையின் கீழேயேதான் இப்படி வேதம், ஆகமம் இரண்டும் அப்யஸிக்கப்பட்டிருக்கின்றன. அது மாத்திரமில்லை, வைஷ்ணவத்தில் பாஞ்சராத்ரம், வைகாநஸம் என்று உள்ள இரண்டு ஆகமங்களில் வைகாநஸ ஆகமத்தைப் பல இடங்களில் பாஞ்சராத்ரக் கோயில்களிலேயே போதித்திருக்கிறார்கள். இதையும்விட ஸந்தோஷப்படும்படியாக, சில பெருமாள் கோயில்களில் சைவ ஆகம போதனை நடந்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## ஆலயமும் வித்யையும்

கோயில்களில் போதனை என்று சொன்னேன். இதைக் கொஞ்சம் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணவேண்டும் ஏறக்குறைய ஆயிரம் வருஷத்துக்கு முந்தி பல்லவ பாண்டியர்களுக்கு மேலாகப் பிற்காலச் சோழர்கள் எனப்படுபவர்களின் ஆதிக்கம் பரவிற்று. விஜயாலயன் என்பவன் இப்படி மறுபடி சோழர்களுக்குப் புது எழுச்சி தந்த பிற்பாடுதான் பராந்தகன், ராஜராஜன், ராஜேந்திரன் முதலானோர் அவன் வம்சத்திலே வந்து சோழ ஸாம்ராஜ்யத்தைப் பரப்பினார்கள். ஸாம்ராஜ்யம் என்று நீள அகலங்களில் அது பெருகியதைவிட அதிலே கலாசாரம் அதி உன்னதமாகப் பரவியதுதான் அதிகப் பெருமை. பல்லவர் காலத்தில் சிறிய அளவிலும், நடுத்தர அளவிலும் மட்டுமே கட்டப்பட்ட ஆலயங்கள் பெரிய அளவில் விஸ்தாரமாக்கப்பட்டது இந்தப் பீரியடில்தான். இதே

ஸமயத்தில் கல்வி - கேள்வி, ஸாஹித்யம், ஸங்கீதம், நர்த்தனம் எல்லாமும் வ்ருத்தியாயின. இதிலே அழகு என்னவென்றால் ஆலயம் பாட்டுக்கு ஒரு பக்கத்தில் வ்ருத்தியாச்சு, கலாசாரம் இன்னொரு பக்கத்தில் அதுபாட்டுக்கு வ்ருத்தியாச்சு, என்றில்லாமல் ஆண்டவனை மையமாக வைத்தே - ஸ்தூலமாக ஆலயத்தைக் கேந்திரமாக வைத்தே - கல்வி, கலாசாரங்களும் வளர்ந்தன.

நேராகக் கோயிலுக்குள்ளேயே கல்விக்கூடம் அமைப்பது என்று இப்போது ஏற்பட்டது. "வியாகரணதான மண்டபம்" என்று அநேக சிவாலயங்களில் இருப்பவை இலக்கண வகுப்பு நடத்துவதற்காக ஏற்பட்டவைதான். இப்போது கோயில் பெரிய பரப்பளவில் கட்டப்பட்டதால் அதற்குள்ளேயே காலேஜ் ஸ்தானத்திலிருந்த உயர்கல்வி நிலையங்களை அமைக்க வசதி ஏற்பட்டது. சிதம்பரம், தஞ்சாவூர் முதலான கோயில்களில் இப்போது பார்த்தாலும் தெரியும் - அவற்றை வெளி மதிலை ஒட்டினாற்போல கோயிலுக்கு உட்புறமாகவே இரட்டை மாடிக் கட்டுமானங்கள் நிறைய இருக்கும். இவை பத்தாம் நூற்றாண்டிலிருந்து பண்ணிரண்டாம் நூற்றாண்டுவரையில் சோழ ராஜாக்கள் "திருச்சுற்று மாளிகை" என்ற பெயரில் நிர்மாணித்தவை. இதிலேதான் வித்யாசாலைகள் நடந்தன. அதோடு லைப்ரரி மாதிரியான "ஸரஸ்வதி பாண்டாரம்" என்பவையும் திருச்சுற்று மாளிகையில் இடம் பெற்றன. அவற்றில் நூல் சுவடிகளை எல்லாம் சேகரித்து, ப்ரதிகள் எடுத்து, பத்ரமாகப் பாதுகாத்து, வித்யார்த்திகளுக்கும் ஆசிரியர்களுக்கும் கொடுத்து உபகரித்து வந்தார்கள். பாண்டாரம் என்றால் 'ஸ்டோர்' என்பதுபோல் பண்டங்களைச் சேர்த்து வைக்கிற இடம். தன பாண்டாரம், தான்ய பாண்டாரம் என்றே அக்கால ராஜாங்கத்தில் பதவிகள் உண்டு கஜானாவுக்குப் பொறுப்பானவர் தன பாண்டாரம.

உணவுப் பண்ட ஸப்ளைக்கு (இக்காலம் மாதிரி தினம் ஒரு புகார் கொடுக்க வேண்டியில்லாமல் நடந்த ஸப்ளை) பொறுப்பேற்றவர் தான்ய பாண்டாரட்ம. ஸாக்ஷாத் வித்யைக்கு அதிதேவதையான ஸரஸ்வதிக்கு உரிய பண்டங்கள் நிறைந்த ஸ்டோர் ஒன்று உண்டு என்றால், அது நூல் நிலையமாக இன்றி வேறென்னவாக இருக்கமுடியும்? அதனால்தான் "ஸரஸ்வதி பாண்டாரம்" என்ற அழகான,

தெய்வ ஸம்பந்தமுள்ள பெயர்!

கோயிலுக்குள் நடந்த வித்யாசாலைகள் என்பதால் அவற்றில் ஸமயக் கல்வி மட்டும்தான் போதிக்கப்பட்டதாக நினைக்கவேண்டாம். 'க்ராமரு'க்கு என்றே தனி மண்டபம் கோயிலில் இருந்தது என்று சற்றுமுன் சொன்னேனே!ஸெக்யுலர் (உலகியல் சாஸ்த்ரங்கள் குறித்த) படிப்பு என்றாலும் அதையும்கூட ஈச்வரனையும் ஸமயாசாரங்களையும் மறந்து ப்ரயோஜனப் படுத்துவதற்கில்லையற்றவா? இந்த ப்ரக்ஞையை நன்றாக உண்டாக்குகிற ரீதியில்தான் 'ஜெனரல் எஜுகேஷ'னுக்கு (பொதுக் கல்விக்கு) ஏற்பட்ட கலாசாலைகள் ஆலய எல்லைக்குள்ளேயே நடத்தப்பட்டன. அவற்றில் ஆயுர்வேதம் முதலானவையும் கற்பிக்கப்பட்டதற்குச் சான்றுகள் இருக்கின்றன - அக்கால மெடிகல் காலேஜ்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## பெருமையும் சிறுமையும்

இத்தனை கதையும் நம் பூர்வகிர்களின் மிக உயர்ந்த கல்விப் பெருமையைக் காட்டுகிறது. இந்தக் கதையில் எத்தனையோ விஷயங்கள் நான் தேடிப் பார்த்து, ஆராய்ச்சி செய்து, ஒன்றுக்கொன்று இசைத்து முடிவுகளுக்கு வரமுடிந்திருக்கிறது. புஸ்தகம் படித்தும், சாஸனங்கள் பார்த்தும், வேறு தினுஸிலேயும் ஸமாசாரங்கள் தெரிந்தன. 'நமக்கா தெரிந்தது?' என்று எனக்கே மலைப்புத் தட்டுகிற அவ்வளவு ஸமாசாரங்கள்!

எல்லோராவில் பெரிய குன்றுகளை அப்படியே போட்டுக் குடைந்து ஆச்சர்யப்படும்படி சிற்ப வேலைப்பாடுகளோடு கோவில்கள் கட்டியிருப்பது சிற்ப வேலைப்பாடுகளோடு கோவில்கள் கட்டியிருப்பது எல்லாருக்கும் தெரிந்திருக்கும். அவற்றுக்குள்ளும் ரொம்பவும் சிறப்பு வாய்ந்தது கைலாஸநாதர் ஆலயம். "என்னமாக இப்படிக்

கட்டியிருக்கிறார்கள்?" என்று பார்க்கிறவர்கள் ப்ரமிக்கிறார்கள்.

பார்க்கிறவர் மட்டுமில்லை. இத்தனை வேலைக்கும் ஒரு தலைமைச் சிற்பி இருந்திருக்கிறானே, அவனுக்கே இந்தக் கைலாஸக் கோயிலைக் கட்டின பிற்பாடு அதேமாதிரி இன்னும் கோயில்கள் கட்டவேண்டுமென்று ஆரம்பித்துப் பிரயாஸைப்பட்டபோது இப்படி ப்ரமிப்புத் தட்டிற்று. எத்தனை ப்ரயாஸை எடுத்துக் கொண்டு இந்தத் தரத்துக்கு ஈடாக அவனால் இன்னொன்று கட்ட முடியவில்லை. அப்போதுதான் அவனுக்கே சட்டென்று ஒரு ப்ரமிப்பு ஏற்பட்டு "என்ன ஆச்சர்யம் இப்படி ஒண்ணு என்னாலே எப்படிப் பண்ண முடிஞ்சுது? நான்தான் பண்ணினேனா, எனக்குள்ளே எதுவோ பூந்துண்டு பண்ணுவிச்சுதா?" என்று சொன்னானாம்.

இப்படி அந்தக் கைலாஸநாதர் கோயில் சிற்பி அதே மாதிரி இன்னொன்று நிர்மாணிக்க முடியாமல் போய் அப்புறம், அதை மட்டும் தானா பண்ணினோமென்று ஆச்சரியப்பட்ட விஷயம் ச்லோக ரூபத்திலேயே ஒரு செப்பேட்டில் இருக்கிறது.

(கி.பி.) எட்டாம் நூற்றாண்டில் அந்தக் கோயிலைக் கட்டிய ராஷ்ட்ரகூட அரசனான க்ருஷ்ண ராஜனைப் பற்றியுள்ள "பரோடா காப்பர் பிளேட்"களிலொன்றில் அந்த ச்லோகம்ட இருக்கிறது.

பூயஸ் - ததாவித - க்ருதென வ்யவஸாய ஹாநே:

ஏதந் - மயா கதம் அஹோ க்ருதம் இத் - யகஸ்மாத்

கர்த்தாமி யஸ்ய கலு விஸ்மயம் ஆப சில்பீ

அந்த சில்பி மாதிரிதான் எனக்கும் நாம்தானா இத்தனை ஆராய்ச்சி பண்ணி கடிகா ஸ்தான ஸமாசாரங்கள் கண்டு பிடித்தது என்று இருக்கிறது.

இப்படி நான் பெருமை அடித்துக்கொள்வதிலேயே சிறுமையும் தெரிகிறது. நம் தேசத்தில் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு வரையில்கூட - அதாவது இரண்டாயிர வருஷ காலம் -

விஸ்தாரமாக இருந்து வந்திருக்கிற வேத வித்யா ஸ்தானங்கள் பற்றி இந்த மதத்துக்கு குரு என்றிருக்கிற எனக்கு இத்தனை வருஷம் தெரியாத சிறுமைதான்!அதுமட்டுமில்லாமல் வித்வத் ஸமூஹத்தில் நான் இதைப் பற்றிக் கேட்டு யாருக்கும் எதுவும் சொல்லத் தெரியாதது நமக்கு நம்முடைய புராதன கலாசார விஷயத்தில் உள்ள ஞானக் குறைவையும் அச்ரத்தையையும் காட்டுகிறது. அந்த அளவுக்கு நம்முடைய ஸ்வதேச சாஸ்த்ரக் கல்வி கீழே போயிருக்கிறது பதினைந்தாம் நூற்றாண்டு வரைகொடி கட்டிப் பறந்த கடிகாஸ்தானங்களும் அந்தப் பெயரில்லாமலே நடந்துவந்த வேத சாஸ்த்ர வித்யா ஸ்தானங்களும் அதற்கு அப்புறம் இந்த ஐந்து நூற்றாண்டுகளில் இருந்த இடம் தெரியாமல் பெயரே மறந்து, அர்த்தம் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு நசித்துப் போயிருக்கின்றன என்றால் இது நமக்கு ரொம்பவும் குறைவு.

போக்குவரத்து வசதி இல்லாத காலத்தில் ஆயிரம் இரண்டாயிரம் மைல் ப்ரயாணம் பண்ணி தேசத்தின் நானா பாக வித்யார்த்திகளும் ஆயிரம் இரண்டாயிரம் பேர்கூடி இரண்டயிர வருஷ காலட்ம வளர்த்து வந்திருக்கிற வித்யா ஸ்தானங்களைப்போல, எத்தனையோ வசதி படைத்த நம் காலத்தில் - வேண்டாததற்கெல்லாம் வெளிநாட்டு ட்ரிப், ட்ரெய்னிங் என்று போய்க்கொண்டிருக்கிற இந்தக் காலத்தில் - ஒன்றுகூட இல்லை என்றால் தலைகுனிவாகத்தானிருக்கிறது. தொண்ணூறு தொண்ணூற்றைந்து பேர் வேண்டுமானாலம் நவீன ஸயன்ஸ்கள், பிஸினெஸ் கோர்ஸ்கள் என்றிப்படிப் போனாலும் போகட்டும், ஐந்து பெர்ஸெண்டாவது நமக்கு என்றே ஏற்பட்ட எத்தனையோ ஸ்வதேச சாஸ்த்ரங்கள் ஆத்மிகமாகவும், ஸமய ஸித்தாந்தமாகவும், வர்யகரணமாகவும் தர்க்கமாகவும் வைத்ய விஷயமாகவும், இன்னும் இப்போதுள்ள ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, பயாலஜி, அஸ்ட்ரானமி, எஞ்ஜினீயரிங் ஸம்பந்தமாகவும்கூட இருக்கின்றனவே, இவற்றில் எதையாவது கற்றறிந்து ஆராய்வதில் ஈடுபடக் கூடாதா என்று இருக்கிறது.

## ஸ்வதேச வித்யைகளுக்கு "திட்டம்"

திட்டம் திட்டம் என்று பொருளாதாரத்துக்கே போட்டு ஆயிரம் கோடிக் கணக்கில் செலவழிக்கிற அரசாங்கம் கலாசாரம், கலாசாரம் என்று சொல்வதோடு நிற்காமல் அதில் நூற்றில் ஒரு பங்கு இதற்காகத் திட்டம் போட்டால் கூடப் போதுமே, இம்மாதிரி ஸ்வதேசிய பூர்வ சாஸ்த்ரங்களுக்காக, ஸ்காலர்ஷிப் ஸ்டைபென்ட் எல்லாம் கொடுத்து படிப்பு முடிந்த பின்னும், ரிஸர்ச்சுக்காகவும், ஆயுஸ் பர்யந்தம் இந்தப் படிப்பாளிகளுக்கு 'க்ரான்ட்' ஆகவும் பொருளுதவி செய்து நம்முடைய பெரிய ட்ரெடிஷனைப் போஷித்துவிட முடியும்.

ஆனால் இது சாஸ்த்ரரோக்தமாக நடந்தாலே உண்மையான ப்ரயோஜனத்தைக் கொடுக்கும் என்பதைப் பார்க்கும் போது ராஜாங்கம் இந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்ளாமலிருப்பதே ஒரு விதத்தில் தேவலை என்று நினைக்கும்படியாகவும் இருக்கிறது. "சீர்திருத்தக் கொள்கை" என்று சொல்லப்படுவதையே எல்லா அரசியல் கட்சிகளும் பின்பற்றுகிற சூழ்நிலையில் சாஸ்த்ரோக்தமான விதி நிஷேதங்களின்படி ராஜாங்க ஆதரவில் எதுவாவது நடக்க முடியுமா என்றே இருக்கிறது. ஆனபடியால் ராஜாங்கத்தை எதிர்பார்த்துக்கொண்டோ, குறை சொல்லிக்கொண்டோ இல்லாமல், சாஸ்த்ராபிமானமுள்ள பொதுஜனங்களேதான் ஆனதைச் செய்வதில் நன்றாக ஈடுபடவேண்டும்.



## அதற்குரிய முறைப்படி

ஏனென்றால் நம்முடைய பண்டைய கலைகளுக்கும்

சாஸ்த்ரங்களுக்கும் புதிதாக வித்யாசாலைகள் அமைப்பதில் ஜீவநாடியான அம்சமே. இவை மற்ற நாகரிக ஸ்கூல், காலேஜ் மாதிரியில்லாமல், அவற்றுக்கே உரிய பழைய முறைப்படி கற்றுக்கொடுக்கப்பட வேண்டுமென்பதுதான். ஸப்ஜெக்ட் பழைய சாஸ்த்ரமென்றால், அதைப் படிப்பிக்கும் முறையும் பழசாகவேதான் இருக்கவேண்டும். நம்முடைய கோவிலுக்கோ, மடத்துக்கோ வருவதென்றால் வெள்ளைக் காரிகூடப் புடவை கட்டிக்கொண்டு வருகிறாளோ இல்லையோ? அப்படி அதற்கும் ஏற்பட்ட வழிகளையும் வழக்கங்களையும் பின்பற்றினால்தான் அததற்கு உயிர்களை இருக்கும். அமெரிக்காவில் கட்டின கோயில் என்றால்கூட அங்கே பிஸ்கெட் நைவேத்யம் செய்யாமல் புளியோதரையைத்தானே கொண்டுவர வேண்டியிருக்கிறது? பரதநாட்யம் ஆடுகிறதென்றால் அதற்குக் கோவில் சிற்பத்தில் ஆயிரம் வருஷம் முன்பு காட்டியிருக்கிற ட்ரெஸ்ஸைப் பார்த்துத்தானே இன்றைக்கும் அநுஸரிக்கிறார்கள்? அதே போல ஹிந்து வித்யா - சாஸ்திரங்களுக்கென்று வித்யாசாலை வைத்தால் அதை இப்போதுள்ள யூனிவர்ஸிடிகள் மாதிரிப் பெரிய பெரிய கட்டிடங்களில் இங்கிலீஷ் ட்ரெஸ் போட்டுக் கொண்டு கற்றுக்கொடுப்பதென்றில்லாமல், பழைய ரீதியிலேயே முடிந்துமட்டும் செய்யவேண்டும்.

ஆதியில் குருகுலங்கள் வனத்திலே ரிஷிகளின் பர்ணசாலைகளில் இருந்தாற்போல் இப்போது காட்டுக்குள் கலாசாலை வைப்பதென்றால் முடியாதுதான். அப்புறம் நகரங்களிலேயே பெரிய கடிகாஸ்தானங்கள் ஏற்பட்டன. ஆனால் இப்படி டவுன்களில் நட்டநடுவில் தற்போதுநான் சொல்கிற வித்யாசாலைகளை வைப்பதற்கில்லை. ஏனென்றால், கடிகா ஸ்தானங்கள் நடந்த அந்த இடைக்காலத்தில்கூட டவுன்-லைஃப் என்பது இப்போதுபோல் இத்தனை அநாசாரமும், லௌகிகமும் தலைவிரித்தாடுவதாக இல்லை.

'டைவர்ஷ'னுக்கு இடமேயில்லாமல், பரிபூர்ண ப்ரம்மசர்ய அநுஷ்டானத்துக்கு எதிரான சபலங்கள் கொஞ்சமும் இல்லாமல் படிப்பே குறி என்று ஒருமுகப்படுத்தித்தான் பண்டைய குருகுலங்கள் வனங்களிலேயே நடந்தன. (அப்போது நாடு நகரம் குறைச்சல், காடுதான் அதிகம்

என்பதையும் சொல்ல வேண்டும்) கட்டிடத்துக்குள்ளே கட்டிப்போட்டிருக்காமல் இப்படி இயற்கையோடு இயற்கையாகப் பச்சை மரங்களும் ஆற்றுப் பிரவாஹமும் சூழ்ந்த இடங்களில் மான்களோடு விளையாடிக்கொண்டு, மாடு மேய்த்துக்கொண்டு அந்தப் பசங்கள்வாழ்ந்ததும், பரந்த ஆகாசமே கூரையாக உட்கார்ந்துகொண்டு காயத்ரி அநுஸந்தானம் பண்ணினதுமே அவர்களை இப்போதுபோல் செயற்கையான, 'மெகானிக'லான போக்குகளில் போகவிடாமல் நல்ல ஜீவசக்தியுடன் ஒவ்வொரு நிமிஷத்தையும் நிஜமாக வாழ்ந்து ஸந்தோஷிக்கும்படிச் செய்தது. இதை ரொம்பவும் ச்லாகித்தே டாகூர் ஒரே தோப்பும் துறவுமான இடத்தில் Forest University என்பதாகத் தம்முடைய விச்வபாரதி ஸர்வகலாசாலையை அமைத்தார் என்று சொன்னது நினைவிருக்கலாம் 'யூனிவர்ஸிடி' என்று சொல்லத்தக்க விதத்தில் ஒரே பெரிய வித்யாசாலை அதிகம் ஏற்படாத ஆதிகாலத்தில்கூட பல ரிஷிகள் பர்ணசாலைகள் அமைத்துக் கொண்டிருந்த வனப்பிரதேசங்களில் ஒவ்வொரு பர்ணசாலையும் ஒரு குருகுலமாக இருந்ததால் இயற்கை அழகு நிறைந்த விஸ்தாரமான பகுதிகள் அப்படியே ஒட்டுமொத்தமாக வித்யாபூமியாக விளங்கின.

தற்போது டவுன் - லைஃப் இருக்கும் சீர்கேடான ஸ்திதியில் எவ்வளவுக்கெவ்வளவு ஊருக்கு வெளியே இருக்க முடியுமோ அப்படி, கூடியமட்டும் இயற்கையான சூழ்நிலை பாதிக்கப்படாத விதத்தில், பெரிய கட்டுமானம், நாகரிக உடுப்பு ஆகியன இல்லாமல் நம் ஸ்வதேசிய சாஸ்த்ரங்களுக்கும்,கலைகளுக்கும் வித்யாசாலைகள் ஒருசிலவேனும் அமைக்கவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**கிராமப் புள்ளிவிவரங்கள்**

நாள் ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருப்பதில் பஞ்சாயத்து போர்டு (இப்போது என்னவோ தமிழ்ப் பெயர் சொல்கிறார்கள்) உள்ள கிராமங்களின் எல்லையில் ஒரு போர்ட் போட்டு வைத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன் (பஞ்சாயத்து "போர்ட்" இல்லை!) அதில் இந்த கிராமத்தில் இவ்வளவு 'பாபுலேஷன்', இத்தனை பரப்பு, இன்ன பயிர் விளைகிறது என்பது முதலான விவரங்கள் போட்டிருக்கிறது. அதிலே படித்தவர் எவ்வளவு, படிக்காதவர் எவ்வளவு என்ற விவரமும் இருக்கிறது. அது மாத்திரமில்லை. இங்கிலாண்ட், அமெரிக்கா, ஜப்பான் முதலிய நாடுகளில் படிப்பாளிகள் எத்தனை சதவிகிதம் என்பதைக் காட்டி, நம் படிப்பாளிகள் எத்தனை சதவிகிதம் என்பதைக் காட்டி, நம் நாட்டில் அதையெல்லாம்விட எவ்வளவு குறைச்சல் சதவிகிதமே படிப்பாளிகள் இருக்கிறார்கள் என்றும் போட்டிருக்கிறது. அந்த தேசங்களைப்போல நம் தேசத்தையும் படிப்பிலே முன்னுக்கு கொண்டுவர வேண்டும் என்று ஆட்சியிலிருப்பவர்களுக்கு எண்ணமிருப்பதாலேயே, "இப்படி எழுதி வைத்தாலாவது ஜனங்கள் மனஸில் தைத்து, அவர்கள் பசங்களை ஸ்கூலுக்கு அனுப்பாதவர்களிடம் எடுத்துச் சொல்லி ப்ரசாரம் பண்ணிக் கல்வியைப் பரப்பட்டும்" என்ற உத்தேசத்தில்தான் இதுபோலச் செய்திருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## தேவைப்படும் ஒரு புள்ளிவிவரம்

எனக்குத் தோன்றுகிறது - யோக்யர்களாக எத்தனை சதவிகிதம் இருக்கிறார்கள், அப்படியில்லாமல் எத்தனை இருக்கிறார்கள் என்று எப்படியாவது கண்டுபிடித்து அதை போர்டில் போட்டால் எப்படியிருக்கும் என்று ஒ!வ்வொரு ஊரிலும் தேசத்திலும் படித்தவர் பெர்ஸென்டேஜையும், போட்டு இப்படி அதற்கு நேரேயே யோக்யர்கள்

பெர்ஸென்டேஜையும், போட்டால் என்ன தெரியும்? படித்தவர்கள் நிறைய இருக்கிற இடத்தில்தான் யோக்யர்கள் நிறைய இருக்கிறார்களென்று போர்ட் காட்டுமா?

"யோக்யர்கள் என்று கண்டுபிடிப்பது எப்படி ஸாத்யம்? இது என்ன நடைமுறைக்கு வரமுடியாத யோசனை?" என்று கேட்டால் அது ந்யாயம்தான்.

அடுத்த பக்ஷமாக ஒன்று தோன்றுகிறது. யோக்யர் - அயோக்யர் யார் யார் என்று லிஸ்ட் எடுக்க முடியா விட்டாலும்ட இன்னொரு லிஸ்ட் ஸுலபமாகத் தயாரிக்கலாம். போலீஸ் டிபார்ட்மென்ட்காரர்களும் ஸிவில் கோர்ட்காரர்களும் ஒவ்வொரு ஊரிலும் இத்தனை ஜேபடிக்காரர்கள் இருக்கிறார்கள், வரி தராமல் இத்தனைபோர், ஸொத்துக்களை மோசம் செய்தவர் இத்தனைபோர், பெரிய திருட்டுக்ளில் ஏமாற்றுப் புரட்டுக்களில் இத்னைபேர் பிடிபட்டிருக்கிறார்கள், இன்னுமூ வ்யபசாரம், கொலை முதலான குற்றங்கள் செய்தவர்கள், அப்பட்டமாகவே போய்த் துப்பாக்கியைக் காட்டிக் கொள்ளையடிப்பவர்கள் ஆகியோர் இவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்றெல்லாம் புள்ளி விவரம்ட வைத்திருப்பார்கள். ஆள் இத்தனைபேர் என்று காட்டமுடியாவிட்டாலுமட, இந்த இனங்களில் இத்தனை கேஸ்கள் இருக்கின்றன இத்தனை பேர் என்று - அது முடியாததால் குற்றங்கள் இத்னை நடந்திருக்கின்றன என்று - போட்டு வைத்தால் நமக்கு ப்ரயோஜனமான உண்மைகள் தெரியுமென்று நினைக்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## படிப்பும் குற்றமும்

அதாவது என்ன தெரியுமென்றால், தற்போது பொதுவாக லோகம் முழுகக்ப் படிப்புமுறை இருக்கும் நிலையில் எங்கே படிப்பு ஜாஸ்தியோ அந்த ஊரில், அந்த நாட்டில்தான் கூறறமும் ஜாஸ்தி நடக்கிறதென்று தெரியும். ஹைஸ்கூல்,

டிகிரி தரும காலேஜ், டாக்டரேட் தருகிற உயர்ந்த ஸென்டர்கள் என்று ஒன்றுக்குமேல் ஒன்றாக வளர்ந்துகொண்டிருக்கிற நாடுகளில்தான் குற்றங்களும் வளர்ந்துகொண்டிருப்பது தெரியும். எழுத்தறிவில்லாத காட்டுக்குடிகளும் மலைவாஸிகளும் உள்ள இடங்களில்தான் போலீஸுக்கு ரொம்பவும் வேலை குறைச்சல், வக்கீல்களுக்குத் தேவை இல்லை என்று தெரியும்.

படிப்பு ஜாஸ்தியாக ஆக நூதன நூதனமாக ஏமாற்று வித்தைகள் செய்கிற ஸாமர்த்யங்களும் வளர்கின்றன. தொழில்கள் நடத்துகிறவர்களும் அரசியல்வாதிகளும் செய்கிற பேற்று மாற்று, எங்கே போனாலும் ரஹஸ்யத்தில் நடக்கும் லஞ்சம் முதலான அநேகக் குற்றங்கள் இந்த ஸாமர்த்தியத்தில் கோர்ட்வரை வராமலே போகின்றன. அதனால் போர்ட் போட்டாலும்கூட அதில் கால்வாசிக் குற்றங்களைத்தான் காட்டமுடியும்!முக்கால்வாசிக் குற்றங்கள் நீதி ஸ்தலத்துக்கும், போலீஸுக்கும் வராமலே போயிருக்கு ம்!படிப்பினால் புத்தி ஸாமர்த்யம் அதிகரிப்பதில் ஸிவில் குற்றங்கள் மாத்ரம்தான் அதிகரித்திருக்கின்றன என்றில்லை. பெரிதான பாங்குக்கொள்ளை, ஒர மந்த்ரி ஸபையையே சுட்டுக் கொன்றுவிடுவது, கோஷ்டி கோஷ்டியாகத் தகாத கார்யத்துக்காகப் பெண்களைக் கடத்திப்போவது மாதிரி க்ரிமினல் குற்றங்களும், ராஜாங்கத்தையே வெறும்பௌதிக பலத்தால் புரட்டிவிடும் "கூ" (coup) முதலியனவும், படிப்பு ஸாமர்த்தயத்தாலேயே நன்றாக ஜோடித்துத் திட்டம் போட்டு நடத்தப்படுகின்றன. இதெல்லாம் போக நேராகவே அடிதடி, பிஸ்டலைக் காட்டுவது, சுடுவது முதலானவையும் படிப்பாளிகள் உள்ள நாடுகளில் ஏறிக்கொண்டே போகின்றன. யூனிவர்ஸிடி லெக்சரர்கள்கூட ஸெனட்டில் நடக்கும் மீட்டிங்குகளில் கல்லெறிவது, நாற்காலிகளைத் தூக்கி அடித்துக்கொள்வது என்று போகிற அளவுக்கு நிலைமை முற்றியிருக்கிறது.

படிக்கத் தெரியாத ஆதிவாஸிகள் குடும்பச் சண்டை, கோஷ்டிச் சண்டை என்று எப்போதாவது ஒருத்தர் தலையை ஒருத்தர் சீவிக்கொள்வதாயிருக்கலாம்.

அது ஏதோ ஆத்திர, க்ஷாத்திரத்தில் ஒரு வேகம் வந்த ஸமயத்தில் செய்வதாகத் தான் இருக்கும்.மற்றபடி இத்தனை

தினுஸு தினுஸான குற்றங்கள் அவர்களுக்குத் தெரியாது. ஃபோர்ஜரியில் ஆரம்பித்து ப்ளான் போட்டு செய்யப்படும் எமாற்றுக் குற்றங்களும், Organised-ஆகச் செய்யப்படும் திருட்டுப் புரட்டுக்களும் படிக்கத் தெரியாத பழங்குடி மக்களுக்குத் தெரியாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**முரண்பாடு எதனால்?**

அப்படியானால் கல்வி வேண்டாமா? ரொம்பப் பெரியவர்கள் கல்வி ரொம்ப அவசியம், 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்று சொல்லியிரக்கிறார்களே? ஔவை இன்னொன்றுகூடச் சொல்லியிருக்கிறாளே -

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்

அவையல்ல நல்ல மரங்கள் - சவைநடுவே

நீட்டோலை வாசியா நின்றான், குறிப்பறிய

மாட்ட தவன்நன் மரம்.

என்பதாக எழுத்தறிவற்றவனை மரத்துக்கு ஸமானம் என்கிறாளே!பர்த்ருஹரியோ அவன் மிருகத்துக்கு ஸமானம் - "வித்யாவிஹீந:பசு:" - என்கிறாரே படித்தவர் லக்ஷணம் நாம் ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பது ஒரு விதமாயிருக்கிறது. நேர் மாறாக ரொம்பப் பெரியவர்களோ கல்வியை ஏகமாக ச்லாகிக்கிறார்கள். ஏன் இப்படி முரண்பாடாக இருக்கிறது?

ஆழ்ந்து அலசிப் பார்த்தால் முரண் எதுவும் இல்லை என்று தெரியும். அந்தப் பெரியவர்கள் சொன்ன கல்வி வேறாகவும், இன்று அமலாகிற கல்வி வேறாகவும் இருக்கின்றன. இதுதான் முரண்பாட்டுக்குக் காரணம். அவர்கள் சொன்னபடி கல்வி இருந்தால் குற்றம் வளராது, குறைந்து மறைந்தே போய்விடும்.

என்ன சொன்னார்கள்? அவர்கள் புத்தி வளர்ச்சி தருகிற கல்வியை மட்டும் சொல்லவில்லை. பக்தி வளர்ச்சி அளிப்பதாகவும் உள்ள கல்வியையே சொன்னார்கள்.

கற்றதனால் ஆயபயன் என்கொல்? வாலறிவன்

நற்றாள் தொழ (அர்) எனின்

என்று திருவள்ளுவர் சொன்னதுதான், அவர்கள் எல்லாருடைய அபிப்ராயமும்.

தெய்வ ஸம்பதமில்லாமல் அதாவது தெய்வத்திடம் பயப்படவேண்டும் என்று

பண்ணாமல் படிப்பை மட்டும் கொடுப்பதால்தான் வீபரிதமாகப் போயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## வெள்ளையர் நாடுகளும் இஸ்லாமியர் நாடுகளும்

'அநேக தேசங்களில் ஸமயக் கல்வி இருக்கத்தான் செய்கிறது. அங்கேயும் நீங்கள் சொன்ன ஒழுங்கீனம் இருக்கிறதே!"என்று கேட்கலாம்.

மேல் நாடுகளில் சும்மா ஏதோ 'ப்ரேயர்', பைபிள் கற்றுக் கொடுப்பது என்று வைத்துக்கொண்டிருப்பது போதவில்லைதான் - ஒப்புக்கொள்கிறேன். இதற்குக் காரணம், அநுஷ்டான முறை என்று ஒன்றுக்குக் கட்டுப்பட ஆரம்பித்தாலே, மனம்போனபடி செய்வது குறைகிறது. மனஸை அது போனபடி விடுவதால்தானே பல தினுஸான பசங்களை ஸமய அநுஷ்டானம் என்று கண்டிப்பாக ஒழுங்குமுறைகளில் கட்டுப்படுத்தவதில்லை. அதோடு ஸயன்ஸுக்கு அப்புறம்தான் ஸமயம் என்று ஒரு இரண்டுங்கெட்டான் நிலையில்தான் அங்கே உள்ள அறிஞர்களுக்கு (ஏன், வயஸு வந்தவர்களில்

பெரும்பாலோருக்குமே) மாதபிமானமிருக்கிறது. அதுவே, துருஷ்க மதமுள்ள தேசங்களைப் பாருங்கள். நான் சொன்ன குற்றங்கள் இங்கேயெல்லாம் அவ்வளவு வலுக்கவில்லை ராஜாங்க ரீதியில் பிறநாடுகளை துராக்ரஹம் செய்வது, "கூ" (COUP) செய்வது என்றிருந்தாலும், உள் நாட்டிலே அவர்களில் தனிமனிதர்கள் அவ்வளவாக முறைகெட்டுப் பண்ணுவதில்லை. சுற்றிலும் மற்ற தேசத்துக்காரர்கள் ஒரே தப்பு தண்டாவில் போகும் போது இவர்களும் அந்த வழிக்கு இழுக்கப்படத்தான் செய்கிறார்கள். ஆனாலும் மற்றவர்கள் போகிற அளவுக்கு இவர்கள் போவதில்லை. காரணம், ஸமயானுஷ்டானக் கட்டுப்பாடு அந்நாடுகளில் பலமாயிருப்பதுதான். அதோடு நம்முடைய ஸமய சாஸ்த்ரங்களைச் சேர்ந்த தர்ம நூல்களிலேயே இன்ன குற்றத்துக்கு (பாபத்துக்கு ( இன்ன தண்டனை என்று இருப்பது போலவே அவர்களுக்கும் மத நூலாகவே 'ஷாரியத் என்ற சட்ட புஸ்தகங்கள் இருக்கின்றன. துருஷ்க நாடுகள் பலவற்றின் ராஜாங்கங்கள் புதிதாக சட்டநூல் செய்துகொள்ளாமல் ஷாரியத்தைத்தான் சட்டமாகப் பின்பற்றுகின்றன. மேல் நாட்டினரைப் போல இல்லாமல் துருஷ்கர்களுக்கு இன்றளவும் பொதுவாகத் தங்கள் மதத்தில் ஆழமான அபிமானம் இருக்கிறது. ஆதலால், சட்டவிரோதமாகப் போக மற்றவர்கள் துணிந்த மாதிரி, அல்லது அந்த அளவுக்கு, இவர்கள் மத விரோதமாகப் போகத்துணியாததால் குற்றங்களும் சற்றுக் குறைவாகவே உள்ளன. தினம் ஒரு ஃபாஷன் என்று மேல் நாட்டுக்காரர்கள் கன்னாபின்னா என்று போகிற மாதிரி இல்லாமல் துருஷ்கர்கள் தங்கள் பழைய நடை உடை பாவனைகளையே அதிகம் அநுஸரிப்பதைப் பார்க்கிறோமல்லவா? மொத்தத்தில், ஒரு ஒழுங்குக் கட்டுப்பாட்டின் கீழ் வந்தவர்களாயிருந்தால் குற்றத்தில் ஈடுபட மாட்டார்கள். ஹிந்து மதத்துக்கு ஹானியாக எத்தனையோ செய்தவர்களானாலும் அவர்களுடைய மதாபிமானக் கட்டுப்பாட்டைச் சொல்லாமலிருப்பதில்லை.

## கம்யூனிஸ்ட் நாடுகளில்

இப்படியேதான் மத உணர்ச்சி என்பதற்கே ஹானி செய்யும் கம்யூனிஸ்ட் நாடுகளிலும் பார்க்கிறோம். ஸமய ஸம்பந்தமே ப்ரஜைகளுக்குக் கூடாது என்று வைத்துக் கொண்டிருக்கிற கம்யூனிஸ நாடுகளான ரஷ்யாவிலும் சைனாவிலும் குற்றங்கள் குறைவாக இருக்கின்றன. கம்யூனிஸத்தை ஆஸ்திகர்களான நாம் ஒப்புக் கொள்வதற்கில்லைதான். அதற்காக, கம்யூனிஸ அரசாங்கங்கள் செய்யும் கெடுபிடிக் கண்டிப்பில் அவற்றின் பொதுமக்கள் அதிகமாகக் குற்றங்களும், மனம் போனபடிப் பண்ணும் அநேக ஒழுங்கீனங்களும் செய்யாமலிருப்பதை ஒப்புக் கொள்ளாமலிருப்பதற்கில்லை. "ஸமயக் கட்டுப்பாட்டிலிருந்து அவிழ்த்து உங்கள் எல்லோரையும் ஸமமாக, 'காம்ரேட்'களாக ஆக்குகிறோம்" என்று சொல்லித்தான் கம்யூனிஸ ஆட்சியைக் கொண்டுவந்தார்கள். ஆனால் அப்போதே, அந்தக் கோட்பாடு போய்விட்டால் ஜனங்களை ஒழுங்கில் வைத்திருக்க முடியாது என்பதையும் தெரிந்து கொண்டு, அதைவிடக் கடுமையான ராஜாங்கக் கட்டுப்பாட்டில் மக்களைக் கட்டிப் போட்டுவிட்டார்கள்!

ஆனாலும் இப்படி மநுஷ்யனுக்கும், மநுஷ்யன் போட்ட சட்டத்துக்கும், அவன் கொடுக்கும் தண்டனைக்கும் பயந்தே ஒரு ஸமூஹம் கூடியமட்டும் ஒழுங்காயிருக்கிறதென்றால் அது பெருமை இல்லை. ஈசனுக்கு, ஈசன் சட்டத்துக்கு பயந்து ஒழுங்காயிருப்பதுதான் அழகு. அதை விடவும் அழகு, பெருமை எல்லாம் அவனிடம் ப்ரியத்தாலேயே நம் மனஸ் தன்னால் ப்ரியப்பட்டு அவனுடைய ஸ்வரூபமான தர்மத்தின் வழியிலிருந்து கொஞ்சங்கூட விலகாமல் ஒட்டிக்கொண்டிருப்பதுதான்.

ஆனாலும் அந்த அளவுக்கு எல்லாரும் வரமாட்டார்கள் என்பதால் தெய்வத்தால், அவன் போட்ட சாஸ்த்ர சட்டத்தால் இளம் தலைமுறையைக் கட்டுப்படுத்தி, இந்த சட்டத்தை அமல்படுத்தும் போலிஸ்காரர்களாக 'கெடுபிடியோடு அருளும் நிரம்பிய போலீஸ்காரர்களர்க) குருமார்கள் வித்யாசாலைகள் நடத்தினார்கள். பசங்களை நல்வழியில்

கொண்டுவந்தார்கள். இப்படிச் செய்து கல்வி என்பது கெடுதலில் தூண்டிவிடாமல் ஸத்குண அபிவ்ருத்திக்கு உதவுவதே என்று காட்டினார்கள்.

ஸமயத்தையே வாழ்க்கை மையமாகக் கொண்டுள்ள நம் தேசத்திலும் ஸமய விரோதிகளான கம்யூனிஸ்ட்களைப் போலவே, 'குடியரசு' ஸர்க்கார் மதச் சார்பில்லாத கல்விதான் தருவது என்று வைத்துக்கொண்டிருப்பது நம்முடைய மஹத்தான துரத்ருஷ்டமாயிருக்கிறது. கம்யூனிஸ்ட் நாடுகளில் உள்ள ராஜாங்கக் கண்டிப்புமில்லாமல் எல்லாரையும் அவிழ்த்துவிட்டு இப்படிச் செய்திருப்பது..... வருத்தம் தான் படணும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## விநயத்தோடு இணைந்த வித்யை

கல்வியை உண்மையான கல்வியாக்கும் ஈச்வர பக்தியில் ஒரு அங்கம்தான் குருவிடம் பக்தியில் விநயமாயிருப்பது. விநயப் பத்தியம் இல்லாவிட்டால் வித்யை மருந்து பலிக்கவே பலிக்காது என்பதால்தான் க்ருஷ்ண பரமாத்மாவிலிருந்து ஆரம்பித்து எல்லோரும் "வித்யா விநயஸம்பன்ன" என்று இரண்டையும் பின்னி வைத்தார்கள். சம்பளத்தை நினைக்காமல் சிஷ்யனுக்கு வாத்யார் சோறு போட்டுத் தன் வீட்டில் வைத்து ரக்ஷிக்கிற குருகுலத்தில்தான் இப்படிப்பட்ட விநயம் உண்டாகும். இந்த விநயம் பூர்த்தியாவதற்கே முழுச் சோறும் அவனே போடாமல் சிஷ்யனை வெளி வீடுகளில் போய் பிக்ஷை வாங்கி வரச் சொல்வது - பிச்சைக்காரனாகப் போய் நின்றால் தன்னால் செருக்கு அறுபட்டுப் பணிவு உண்டாகிவிடும்.

ஈச்வர பக்தியாகட்டும், குருவிடம் விநயமாகட்டும் இவை எதற்கு என்றால் படிக்கிறவனின் அஹங்காரத்தை அடக்குவதற்குத்தான். அஹங்காரம் போகாத வெறும் படிப்பு ஆபத்தைத்தான் உண்டாக்கும். மதானுஷ்டானம், ஈச்வர பக்தி,

குருஸேவை ஆகியவற்றுடன் கூடிய ஸரியான கல்வி ஒருத்தனுக்கு இயற்கையாக உள்ள அஹங்காரத்தை தேய்த்து அகற்றி சுத்தப்படுத்தும். மாறாக இவை இல்லாவிட்டாலோ அதே கல்வி, "நான் எவ்வளவு படிச்சிருக்கேன் பார்த்தியா?" என்று அஹங்காரத்தைத் தலைக்கேற்றி விடுகிறது. வித்யாகர்வம் என்றே சொல்வார்கள்.

வெளிப்பார்வைக்கு அநுஷ்டானம், பக்தி, குருஸேவை நன்றாயிருந்தால் போதாது. "பக்திமானாக, அநுஷ்டாதாவாக இருந்தும், 'தான் வித்வான்' என்கிற தாட்பூட் இருக்கிறதே" என்று பிறர் சொல்லும்படி இருப்பவர்களுண்டு. அநேக பண்டிதர்கள் இப்படித்தான் ஆஸ்திகராகப் பார்வைக்கு இருந்துகொண்டும், தான் அறிவாளி, படிப்பாளி என்பதில் அஹங்கரித்தவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் நிலையில் தம்மை வைத்துக்கொண்டுதான் தாயுமான ஸ்வாமிகள்.

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்

என்று ஒரு தரத்துக்கு இரண்டு தரமாகச் சொல்லி,

கற்றும் அறிவில்லாத என் கன்மத்தை என் சொல்கேன்? என்று புலம்பி வைத்துவிட்டுப் போயிருக்கிறார். வெளி மட்டத்தில் மட்டுமில்லாமல் உண்மையான உள்ளூறிய பக்தியோடு, ஸமய ஆசரணையோடு, குரு விச்வாஸத்தோடு கல்வி பயின்றால் இப்படி இருக்காது. கல்லாதபேர் பொதுவாக ஓரளவுக்கு நல்லவர்களாயிருக்கிறார்களென்றால், இப்படி உண்மையான அர்த்ததத்தில் கற்றவர்களோ மஹா உத்தமர்களாகவே இருப்பார்கள்.

கல்லாத காட்டுவாஸியைவிடப் படித்தவர் அதிகம் தப்பில் போவதற்குக் காரணம் படிப்புமுறை அஹங்காரத்தை அதிகமாக்குவதாயிருப்பதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## அஹம் அடிபடவே குருகுலம்

இந்த அஹங்கார நாசத்துக்கு ரொம்பவும் உதவியாயிருப்பது குருகுலவாஸம்தான். "எங்கேயோ இருக்கிற ஈச்வரனிடம் பக்தி பண்ணி, எப்போதோ எழுதிவைத்த சாஸ்த்ர ஒழுக்கத்துக்குக் கட்டுப்பட்டு விநயமாகப் போ" என்றால் இவை உள்ளூர ஏறாமல் மேல்மட்டத்தோடு நிற்பதாகவும், எனவே 'தான்' போகாததாகவுமே இருக்கும். அதனால்தான் ப்ரத்யக்ஷமாக ஒரு பெரியவனை குரு என்று காட்டி, அவன் கிட்டே வஸிக்கும்படியாகக் கொண்டு விட்டு விநயத்தை வளர்க்கவேண்டுமென்பது. கண்ணுக்கு முன்னால் அந்த குரு செய்கிற சுத்தமான ஈச்வர பக்தியும், அவர் அநுஸரிக்கிற தர்ம கர்ம அநுஷ்டானங்களும் தன்னால் சிஷ்யனுக்குள் புகுந்துவிடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**ஏன் சாத்யமில்லை?**

இத்தனை பயனுள்ளதான குருகுலவாஸத்தை 'இந்த நாளில் ஸாத்யமில்லை' என்று சடக்கென்று சொல்லித் தூக்கி எறிந்துவிடக்கூடாது. ஏன் ஸாத்யமில்லாமல்? போன தலைமுறை, ஏன் இந்தத் தலைமுறையின் ஆரம்பம் வரையும் கூட சில சாஸ்த்ரங்களும் கலைகளம் குருகுல வாஸத்தாலேயே வளர்ந்து வந்திருக்கின்றன. அந்த வித்யைகளின் அப்யாஸம் நடக்கவேண்டிய அளவுக்கு ரொம்ப குறைச்சலாகவே நடந்தாலும், எந்த அளவுக்கு நடந்திருக்கிறதோ அது குருகுலக் கல்வியாகத்தான் இருந்திருக்கிறது.

பரத சாஸ்த்ரம், சிலப்பதிகாரம் முதலான நூல்களில் சொன்ன புராதனமான நம் ஸங்கீத மரபில் துருஷ்க ஆட்சியோடு வந்த அவர்களுடைய ஸங்கீத முறைகளும் சேர்ந்து வடக்கே ஹிந்துஸ்தானி ஸங்கீதம் என்றும், தெற்கே நம்முடையதான பூர்வீக பத்ததியே வேறுவிதத்தில் மெருகேறிக் கர்நாடக

ஸங்கீதம் என்றும் ஆகியிருக்கின்றன. நானூறு ஐநூறு வருஷங்களாக இந்த இரண்டு பத்ததிகளுமே நன்றாக அபிவ்ருத்தி அடைந்து இன்றைக்கு நமக்கு லோகம் பூராவும் மதிப்புத் தரும் கலாசாரச் செல்வங்களாகியிருக்கின்றன. தலைமுறைக்குத் தலைமுறை இரண்டு பத்தததியிலும் ஏகப்பட்ட மஹாவித்வான்கள், உஸ்தாத்கள் வந்திருக்கிறார்கள். இத்தனையும் ஸ்கூல் என்று, காலேஜ் என்று பெரிசாக நடத்தாமல் குருகுலக் கல்வியாகவே இருந்து ஏற்பட்ட அபிவ்ருத்திதானே? ஸங்கீதத்துக்கு காலேஜ் என்பது நாற்பது, ஐம்பது வருஷத்துக்குட்பட்ட ஸமாசாரம் தானே?

தஞ்சாவூர்ப் படம், பழுக்கா வேலை, நெட்டிவேலை, பத்தமடைப் பாய் என்றெல்லாம், இங்கிலாண்டில் நடக்கிற ராஜகுடும்பக் கல்யாணம், பட்டாபிஷேகம் ஆகியவற்றில் முதற்கொண்டு நம்முடைய பரிசாகப் பெருமையுடன் கொடுக்கிறோமே, இதெல்லாம் எந்த ஸ்கூலில் காலேஜில் கற்றுக்கொடுத்து இந்தத் தலைமுறை வரைக்கும் வந்திருக்கின்றன? இன்டிவிஜுவல் கலைஞர்கள் தங்கள் வீட்டோடு வைத்துக்கொண்ட சீஷப் பிள்ளைகளுக்கு (சொந்தப் பிள்ளைகளையே சீஷப்பிள்ளையும் ஆக்கிக்கொண்ட) கற்றுக் கொடுத்துத்தானே இவை மறையாமல் வந்திருக்கின்றன?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## பொதுமக்களின் பொறுப்பு

அதனால் ஏதோ கொஞ்சத்தில் கொஞ்சமாவது இப்போதும் குருகுலவாஸக் கல்வி முறையை உயிர்ப்பித்துத் தரவேண்டும். மற்ற விஷயங்களைவிட வேத வித்யைக்கு இம்முறையை அவசியம் ஏற்படுத்தித் தரவேண்டும். பூர்ணமான ஆசார்ய லக்ஷணப்படி, சிஷ்யனுக்காக எல்லாப் பொறுப்பும் ஏற்றுக்கொண்டு, அவனிடமிருந்து கொஞ்சம் கூட த்ரவ்ய லாபம் எதிர்பார்க்காமல், அவனையும் ரக்ஷித்துத்

தன் குடும்பத்தையும் நடத்திக்கொள்ள வசதிபெற்ற வைதிக குருமார் இக்காலத்தில் கிடைப்பதில்லை. முன் காலத்தில் ராஜமான்யம் யதேஷ்டமாக விடப்பட்டதால் இப்படிப்பட்ட குருமார் இருக்க முடிந்தது. அதற்கு பதிலாக இப்போது நாம், அதாவது ஜனநாயகத்தில் ராஜாக்களாக உள்ள பொதமக்களான நீங்கள் எல்லோருமாகச் சேர்ந்துதான் மூலதனம் வைத்து இந்த அவச்யமான முறை நடைமுறையிலிருந்து மறைந்து போகாமல் செய்யவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## வேதவித்யை வளர

உதிரி உதிரியாக இப்படி அங்கங்கே சில பேர் சேர்ந்து செய்கிறது எடுபடாமல், சாச்வதமாய் நிற்காமல் உதிர்ந்து போய்விடக்கூடிய ஆபத்து இருக்கிறது. அதனால் எல்லாரீ உபகரிக்கக்கூடியதையும் 'ஸென்ட்ரலைஸ்' செய்து (மையப்படுத்தி) நிர்வாஹம் பண்ணவேண்டிய அவச்யம் உண்டாகிறது. இதற்காகத்தான் மடத்தின் ஆதரவிலேயே வேத ரக்ஷணத்துக்காகப் பலவித திட்டங்கள் போட்டு ட்ரஸ்ட்கள் வைத்திருக்கின்றன. வேதரக்ஷண நிதிக்காரர்களைக் கேட்டால் விவரங்கள் தருவார்கள். அவற்றுக்கு த்ரவ்ய உபகாரம் செய்து வேத சாஸ்த்ர வித்யை வளர, அதுவும் ப்ராசீன முறையிலேயே வளரச் செய்வது உங்கள் கடமை. இந்த தேசத்தில் பிறந்துவிட்டீர்களே ால்லியோ பிடித்தாலும். பிடிக்காவிட்டாலும் இதன் சீதோஷ்ணாதிகளால் ஒரு ஸமயம் நடுங்கி விரைத்துக்கொண்டும் இன்னொரு ஸமயம் வியர்த்துக் கொட்டிக்கொண்டும் அவதிப்படுகிறீர்களோல்லியோ? அப்படி ஒரு அவதியாக நினைத்துக்கொண்டாவது இதையும் படுங்கள். என்னை குரு என்று சொன்னால் என் மிரட்டல் உருட்டலைக் கேட்டுத்தான் ஆகணும். (பெரிதாகச் சிரிக்கிறார்.)

இந்த 'ஸ்கீம்'களின் பொதுவான நோக்கம், வாத்யார்கள் வயிற்றுப்பாட்டைப் பற்றி நிர்விசாரமாக இருக்கும்படி அவர்களுக்கு நன்றாக ஸம்பாவனை செய்வது. 'நன்றாக' என்றால் அவர்கள் கார் வைத்துக்கொண்டு பங்களா வாஸம் செய்ய வேண்டுமென்று அர்த்தமில்லை. ஆனாலும் அதற்காக சுஷ்கம் பண்ணக்கூடாது. இப்போது நிரந்தர அம்சமாகவே ஆகிவிட்ட 'இன்ஃப்ளேஷ'னில், ப்யூன்கூட (அந்தப் பேரைச் சொன்னாலே கோபித்துக் கொள்வார்களோ, என்னவோ? எனக்கு வேறே பேர் தெரியவில்லை) நானூறு ஐநூறு என்று சம்பளம் வாங்குகிற காலத்தில் வேத பண்டிதர்கள் டாம்பீகமில்லாவிட்டாலும் கௌரவமாக வாழ்க்கை நடத்தும்படி ஸம்பாவனை பண்ணவேண்டும். இரண்டு மணி பாடிவிட்டுப் போகிறவரைக் கலைஞர் என்று கொண்டாடி ஐநூறு, ஆயிரம் கொடுக்கிறீர்களோ இல்லியோ?

சிஷ்யர்கள் இல்லாமல் வாத்யார் ஏது? ஆனதால், நமது வேதம், சாஸ்த்ரம், கலாசாரம் என்றால் அவற்றின் பக்கமே வர பயப்படும் இன்றைய ஹீனஸ்திதியில், இவற்றுக்கும் பசங்களை இழுக்கும்படியாக அவர்கள் படிக்க ஆரம்பிப்பதிலிருந்தே அவர்களக்கு -ஆன கணிசமான ஸ்டைபென்ட்கள் தரவேண்டும். படிப்பு முடிந்து போகிற போதும், ஆயுஸ் பூராவும் ஒரு கஞ்சி காய்ச்சிக் குடிப்பதற்காவது தேவைப்பட்ட ஒரு தொகையை அவன் பேரில் "ஃபிக்ஸ்'டில் போட்டுவிட வேண்டும். மூலத்தை அவன் கையாண்டு அழும் பாழும் செய்ய இடம் தராமல், வட்டி மாத்திரமே அவனுக்குக் கிடைத்துவரும்படிச் செய்ய வேண்டும். இப்படியெல்லாம் இப்போதே கொஞ்சம் நடத்தி வருகிறோம். அவனுடைய காலத்துக்கு அப்புறமும் தொகை ட்ரஸ்டைச் சேர்வது என்றில்லாமல் அவன் தலைமுறைக்கு இந்த வட்டி சேருமாறு ஏற்பாடு பண்ணியிருக்கிறது. அப்போதுதான், இப்படி ஒரு பிதுரார்ஜிதம் கிடைப்பதில் வருங்காலத் தலைமுறைகளை மனஸ்ஸாக்ஷி கொஞ்சம் கிளறிவிட்டு, "நாமும் அப்பா, தாத்தா வழியிலேயே வித்யைக்கு வாழ்க்கையை அர்ப்பணம் பண்ணுவோம்" என்று நினைக்கப்பண்ணும்.

எதிர்காலத்திலும் வேத சாஸ்த்ரக் கல்வி அதற்குரிய முறையில் தொடர்ந்து நடக்கக் கொஞ்சமாவது இடமேற்படும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## வித்யையும் வித்தமும்

வித்யைக்காகவே வித்யை என்று குருமார்கள் கற்றுக் கொடுப்பதும், சிஷ்யர்கள் கற்றுக்கொள்வதும்தான் உத்தமம். வித்தத்துக்காகவும் (பணத்துக்காகவும்) வித்யை என்பது மத்யமம். வித்தத்துக்காகவே வித்யை என்றால் அது அதமம். வித்யையே இல்லாமல் வித்தம் மட்டும் குறிக்கோள் என்று தற்போது அதமாதமமாக உலகம் முழுதும் ஒரு 'அவுட் - லுக்' உண்டாகியிருக்கிறது. இந்நிலையில் நாம் ரொம்பவும் ஐடியலிஸம் வைத்துக்கொண்டால் ப்ரயோஜனப்படாது. அதனால்தான் ஓரளவு கணிசமான த்ரவிய ஸஹாயம் குரு - சிஷ்யர்களுக்குச் செய்தே வித்யையை வளரச் செய்யவேண்டுமென்கிறேன்.

அதே ஸமயத்தில், எங்கேயாவது ஒருசில இடங்களிலாவது பண ஸம்பந்தமேயில்லாத, லக்ஷ்ய நிலையை இன்றைக்கும் நடத்திக் காட்டுவதான குருகுலமும் ஏற்பட வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## பிக்ஷாசார்யம்

ரொம்பவும் உசந்த முறை பண எண்ணமே இல்லாமல் நடக்கிற குருகுலக் கல்விதான். பரம த்யாகிகளாக, வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி வாழத் தயாராக, வித்யை ப்ரசாரம் ஆகவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் போதிக்கிறவர்கள் நடத்தும் குருகுலத்துக்கு எதுவும் ஈடாகாது.

இப்படிப்பட்டவரின் அறிவு விசேஷத்துடன் மனஸ் விசேஷமும் சேர்வதால் அப்போதுதான் சிஷ்யர்களுக்கு மிகவும் உயர்ந்த வித்யாவிலாஸம் உண்டாகும். ஆனால், இவன் வயிற்றை கட்டிக்கொண்டாலும் சிஷ்யனாக இருக்கிற இள வயசுக்காரனின் வயிறு வாடப்படாதே அத்தயயனம் செய்த ப்ராம்மணன் என்றால் நிச்சயமாக அவனுக்கு மான்யமாக ஸொத்து இருக்கும் என்ற பழங்கால நிலை இப்போது இல்லையே தனக்கே 'ததிங்கிணதோம்' போடுகிற வேத பண்டிதர் சிஷ்யனை வேறு எப்படிப் பராமரிப்பார்? இங்கேதான் சிஷ்யனின் பிக்ஷாசார்யம் கைகொடுக்கிறது. அவன் பிக்ஷை எடுத்தே தன்னுடைய பாட்டைக் கவனித்துக் கொண்டுவிடவேண்டும். அதுமட்டுமில்லை. தனக்காக நாலு வீட்டுக்குப்போய் பிக்ஷை கேட்க வேண்டுமென்றால், வாத்யாருக்காக இன்னம் நாலு வீட்டுக்குப் போகவேண்டும். முன்னேயே சொன்னமாதிரி அவருக்குப் பக்வமான (சமைத்த) ஆஹாரம் பிக்ஷையாகக்கிடைக்கக் கூடாதாகையால், அவருக்கானதை அரிசி, பருப்பு, காய்கறி என்று வாங்கி வரவேண்டும்.

கல்வி அளிப்பது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி வாத்யாரைப்போல, கல்வி பெறுவது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி மாணவன்தான் இப்படி பிக்ஷாசார்யம் செய்து குருகுலவாஸம் செய்வான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**வாரச் சாப்பாடு**

ஒவ்வொரு நாளும் பல க்ருஹங்களுக்குப் போய் பிக்ஷை கேட்பது என்றில்லாமல் "வாரம்" என்ற முறைப்படியாவது செய்யலாம். அதாவது, வித்யார்த்தி வாரத்திலுள்ள ஏழு நாட்களில் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு அகத்தில் பிக்ஷை வாங்குவது என்று வைத்துக் கொள்ளலாம். அப்போது, போடுகிறவர்களுக்கு 'தினந்தினம் வருகிறானே' என்று

இல்லாமலிருக்கும். ஆனால் குருவுக்கும் சேர்த்து வாங்க வேண்டுமென்று இருந்தால் அப்போது பல வீடுகளில் கொஞ்சம் கொஞ்சம் வாங்கினால்தான் முடியும். இதெல்லாம் அந்தந்த குருகுலம் உள்ள நிலைமை, ஊர்க்காரர் மனப்பான்மை, மற்ற ஸந்தர்ப்பங்களைப் பொறுத்து முடிவு பண்ணவேண்டிய விஷயம். மொத்தத்தில் பிக்ஷாசார்யமுள்ள குருகுலவாஸத்தை உயிர்ப்பிப்பது ரொம்பவும் ச்ரேஷ்டம்.

### ஓரிருவர் போதும்!

இப்படி ஒரு குரு, ஒரு சிஷ்யன் கிடைத்தாலும் போதும். அந்த குருவின் அத்மசக்தி லோகத்தின் கண்ணுக்குத் தெரியாமலே அதற்கு நல்ல எண்ணங்களைக் கொடுக்கத்தான் செய்யும். அந்த சிஷ்யனுக்கு குணமும் ஆசாரமும் மந்த்ர சக்தியும் ப்ரம்ம தேஜஸும் பூர்ணமாய் உண்டாகி வருங்காலத்தில் அவனும் அந்த குருவைப்போல் ஆகிவிடுவான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

### அவர்கள் தியாகமும் நமது தியாகமும்

இப்படிப்பட்ட த்யாகத்துக்கு நாம் செய்யக் கூடியது எதுவுமில்லை. நாம் ஏதாவது செய்துவிட்டால், அதாவது குரு சிஷ்யர்கள் நாம் செய்கிற உபகாரம் எதையோ ஏற்றுக் கொண்டுவிட்டால் அப்புறம் அவர்கள் எப்படி த்யாகிகளாக முடியும்? ஆகவே இப்படிப்பட்ட ஐடியலை நானோ நீங்களோ சொல்லிச் சொல்லி ஒரு ஊக்கம் உண்டாக்குவதைத் தவிர இதில் நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை.

அடுத்தப்படியாகத்தான் நான் சொன்ன 'ஸ்கீம்'கள், அதாவது மூலதனம் வைத்து ஸம்பாவனை, ஸ்காலர்ஷிப் முதலானதுகள் கொடுத்து போஷிப்பது. இங்கேதான் நாம் ஏதோ கொஞ்சம் த்யாகம் செய்ய இடமேற்படுகிறது. த்ரவ்ய ரூபத்தில்

(பொருளுருவில்) த்யாகம், நம்முடைய நேரத்தை த்யாகம் செய்து இதைப் பற்றிச் சிந்திப்பது, கார்ய ரூப த்யாகம் ஆகியவை கொஞ்சமாவது செய்து, வேதம் மங்கிப் போகாமல் ரக்ஷித்து, ஈச்வரானுக்ரஹத்தைப் பெறுவதற்கான 'ஸ்கீம்'கள்.

பிக்ஷாசார்யம் ஒரு பையனுக்கு அளிக்கிற பணிவையும், அந்தப் பணிவின் வழியாய் அவனுக்கு ஏற்படும் மற்ற பண்புகளையும் நான் ரொம்பவும் முக்யமாய் நினைப்பதால், இந்த ஸ்கீம்களிலேயே 'நியமாத்யயனத் திட்டம்' (பண்டைய ப்ரம்மசர்ய, பிக்ஷாசார்ய நியமங்களோடு மாணவன் கல்வி கற்கிற திட்டம்) என்பது போலவும் சிலது வைத்து, இவ்வழியில் படிக்கிறவனுக்கு அதிகப்படி ஸம்பாவனைகள் செய்கிறோம்.

ஏதோ ஒரு தினுஸிலாவது "குருகுலவாஸம்" என்ற பெயரும், அதன் உசந்த லக்ஷ்யமும் ஒட்டிக் கொண்டிருக்கும் படியாக ஒரு இன்டிவிஜுவல் குருவுடனேயே பத்துப் பசங்கள் சேர்ந்து வாழும்படியாகத் திட்டங்களே போட்டு நடத்தி வருகிறோம். "றோம்" என்று உங்களிடமிருந்து பிரிந்து நாங்கள் யாரோ இருக்கிறாற்போலச் சொன்னது ஸரியில்லை. நீங்கள் எல்லாரும் நடத்தி வைக்கவேண்டிய உங்கள் திட்டம்தான் இவையெல்லாம். ரொம்பவும் 'ஓஹோ' என்று அதரவு கிடைக்காவிட்டாலும், வேதாப்யாஸம் வேர் பிடித்துக் கொள்ளும் என்று நம்பிக்கை தருகிற அளவுக்காவது 'ரெஸ்பான்ஸ்' கிடைத்திருக்கிறது. இதை 'ஓஹோ' என்றே செய்யவேண்டியது உங்கள் பொறுப்பு. இதைவிட ஜன்மா எடுத்ததற்கு ப்ரயோஜனமாக நீங்கள் செய்யக்கூடிய தொண்டு இல்லை.

இப்போது அத்யயனம் செய்த ப்ராம்மணர்கள் எங்கேயோ சில இடங்களில்தான் இருக்கிறார்கள். அவர்களிடம், "யாருக்காவது நீங்கள் சொல்லிவைக்கக்கூடாதா?" என்றால், "யாருக்காவது என்றால் யார் வருகிறார்கள்? 'தட்டு தூக்கினாலும் தூக்குவோம், இதற்கு வரமாட்டோம். இதில் கால் வயிற்றுக் கூழுக்குக்கூட வழியில்லை என்று நன்றாகத் தெரிந்துகொண்டுள்ள நீங்களே எங்களைக் கூப்பிடுகிறீர்களே!' என்று கேட்கிறார்கள். இனிமேல் யாராவது வந்தால் சொல்லிக் கொடுப்பதற்கு எங்களுக்கே

ஞாபகமிருக்குமா என்று ஸந்தேஹம்" என்று பதில் சொல்கிறார்கள்! இவர்கள் தங்கள் வித்யையை அபிவ்ருத்தி செய்துகொள்ள வசதி செய்து தராமல், வாஸ்தவமாகவே அடியோடு மறந்து போகாவிட்டால் அதைக்காட்டிலும் நமக்கு அபகீர்த்தி இல்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

### வேத பாஷ்யம், வேதாங்கம் வேதாந்தம்

எத்தனை வித்யைகள் இருந்தாலும் முடிவாக ப்ரஹ்ம வித்யையில்தான் சேர்க்க வேண்டும். பகவான், "நான் வேதத்தில் ஸாமம், மலைகளில் மேரு, மரங்களில் அரசமரம், மிருகங்களில் சிங்கம், பக்ஷிகளில் கருடன். மாதங்களில் மார்கழி" என்றெல்லாம் கீதையின் விபூதியோகத்தில் சொல்லிக்கொண்டு போகும்போது, "வித்யைகளில் நான் ஆத்ம வித்யையான ப்ரஹ்ம வித்யை" என்று சொல்லியிருக்கிறார்.

"அத்யாத்ம வித்யா வித்யாநாம்".

மடம் ஏற்பட்டிருப்பதும் முடிவாக அதற்குத்தான். அதனால் வேத அத்தயயனம் மட்டுமில்லாமல், அதன் அர்த்தத்தை அறிவதான வேத பாஷ்யம், அதற்கு அவயவமாகச் சேர்ந்து வரும் வேதாங்கங்கள், முடிவான ஆத்மவித்யையேயான உபநிஷத்துக்கள் (அதாவது வேதாந்தம்) ஆகியவற்றின் ப்ரசாரத்திலேயே மடம் குறிப்பாக அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறது. இன்னமும் நிறைய எடுத்துக் கொள்ள வேண்டும். இப்போது செய்திருப்பது போதவே போதாது.

எனக்கு ஆசை, இப்போது பாடசாலைகள் என்பதாக வேத அத்யயனத்துக்கு என்று ஏற்பட்டிருக்கும் எல்லாவற்றிலுமாவது வேதம் ஸம்பந்தப்பட்ட மற்ற வித்யைகளையும் சாஸ்த்ரங்களையும் சொல்லிக்கொடுத்து ப்ரசாரம் செய்ய வேண்டும் என்பது. இப்படி மேலும் அநேக

பாடசாலைகளும் புதிதாக வைக்க வேண்டும்.

சென்ற சில தலைமுறைகளில் வேதவித்யை முழுதுமே மங்கிக்கொண்டு வந்திருப்பதில் ரொம்பவும் மங்கிப் போய் விட்ட ஒரு பிரிவு உண்டு. அதாவது வேதத்தில் அத்யயனம் சொல்லிவைக்காவது (வேத ஸம்ஹிதைகளின் டெக்ஸ்ட்டை மாத்திரம் உருப்போட்டு மனப்பாடம் பண்ணிவைக்கவாவது) ஏதோ சில பாடசாலைகள் இருக்கின்றன, ஆனால் அவற்றின் அர்த்தத்தைச் சொல்லிக்கொடுக்கும் பாடசாலைகள் மிகமிக அபூர்வமாகிவிட்டன. கனபாடிகளிலேயே பலருக்குக்கூட வேதத்தைச் சொல்லத்தான் தெரிகிறதே ஒழிய, அதற்கு அர்த்தம் சொல்லத் தெரியாமலிருக்கிறது. இதற்காகத்தான் வேதம் படித்தபின் வேதபாஷ்யமும் படித்துப் பரீக்ஷை கொடுக்க ஏற்பாடுகள் செய்துவருகிறது. இதில் எல்லாருடைய ஒத்துழைப்பும் தேவை.

இது நேராக வேதத்தைப் பற்றியது. வேத அங்கங்களையும் மறுபடி நல்ல ப்ரசாரத்துக்குக் கொண்டுவர முயல வேண்டும். குறிப்பாக வேதாங்கங்களில் வ்யாகரணம், வேதாங்க ஜ்யோதிஷத்தின் வளர்ச்சியாகப் பிற்பாடு அபிவிருத்தி கண்டவான சாஸ்த்ர, கணித சாஸ்த்ரங்கள் ஆகியவற்றை இப்படி ப்ரகாசப்படுத்தவேண்டும்.

வேத உபாங்கங்களான நாலில் மீமாம்ஸை என்பதில் உத்தரபாகமாக "வேதாந்தம்" என்பது வந்துவிடுகிறது. சங்கர மதம், ராமாநுஜ மதம், மத்வ மதம் எல்லாமே வேதாந்தத்தின்கீழ் வருபவைதான். இந்த மடத்தைப் பொருத்தமட்டில் அத்வைத வேதாந்தத்தைப் போஷிப்பது முக்ய கார்யமாக இருப்பதால் அதற்கென்று ஸதஸ்கள் நடத்துகிறோம். சென்ற நூற்றாண்டுக் கடைசியிலிருந்தே அத்வைத ஸபா என்பது மடத்தால் நடத்தப்பட்டு வருகிறது. இந்த ஸம்ப்ரதாயத்துக்கான புஸ்தகங்கள் போடுவதற்கும் ஆதரவு தருகிறோம். இப்படியே ராமாநுஜ, மத்வ மடத்தினர் விசிஷ்டாத்வைத, த்வைத வேதாந்தங்களை ரக்ஷித்து ப்ரசாரம் செய்துவருகிறார்கள். (நான் உண்மையைச் சொல்லவேண்டுமானால் ஸ்மார்த்தர்களுக்கு அத்வைத ஸம்பரதாயத்திலும் அதையொட்டியுள்ள ஸமயாசாரத்திலும் இருப்பதைவிட மாத்வ, வைஷ்ணவர்களுக்கு அவர்களுடையதில் பிடிமானம் மிகவும் அதிகம்.)

வேதாந்தம் - ஸித்தாந்தம் என்று பிரித்துச் சொல்வது வழக்கமானாலும் சைவஸித்தாந்தமும் வைதிக மதமாக, வேதாந்த அடிப்படையின் மேல் உருவானதுதான். அதை ஆதீனகர்த்தர்கள் போஷித்து வருகிறார்கள். இன்னம் இப்படியே சைதன்யர், நிம்பார்க்கர், வல்லபர் முதலானவர்களின் ஸம்பரதாயங்களும் அவற்றின் மடாலயங்களால் ரக்ஷிக்கப்பட்டு வருகின்றன.

யூனிவர்ஸிடிகளில் "ஃபிலாஸபி" என்று இருப்பது முக்கியமாக வேதாந்த ஸம்ப்ரதாயங்களைப் பற்றியதுதான். லோகம் முழுதிலுமே, ஸமய ஆசரணையைவிட தத்வ விசாரம் முக்யமுள்ளதால் வேதாந்தம்தான் நாளுக்கு நாள் பிரபலமடைந்து வருகின்றது. வேதாந்த ஸம்ப்ரதாயங்களிலுங்கூட 'தீயிஸம்' (தெய்வக் கொள்கை, வழிபாட்டு முறை) முதலியவை இல்லாத சுத்த தத்வ விசாரமாயுள்ள அத்வைதந்தான் அகில உலக ரீதியில் ப்ரஸித்தமாயிருக்கிறது. இப்படி வேதாந்தம் என்றாலே அத்வைதம்தான் என்று நினைக்கப்படுகிறதே என்று மற்ற ஸம்ப்ரதாயக்காரர்கள் வருத்தம், கோபங்கூட, படுகிறார்கள். அது ஒரு பக்கம் இருக்கட்டும். யூனிவர்ஸிடிகளின் புண்யத்தில் மற்ற சாஸ்த்ரங்களைவிட வேதாந்தம் சற்று ஜீவசக்தியோடு இருக்கிறது என்று சொல்ல வந்தேன்.

ஆனால் இதிலும்கூட ஆசார அநுஷ்டானத்துக்கு இடமேயில்லாமலும், ரிஸர்ச் என்ற பெயரில் பூர்விகர்களின் அபிப்ராயத்துக்கும் நம்பிக்கைக்கும் மாறான அநேக அபிப்ராயங்களைச் சொல்வதாகவும், திறந்த மனஸோடு ஸயின்டிஃபிக்காக ஆராய்வதாகச் சொன்னாலும், இந்த ரிஸர்ச்காரர்களிலும் சிலர் bissed-ஆகத்தான் தங்கள் தியரிகளை உருவாக்குவதாகவும் இருப்பதால் யூனிவர்ஸிடிகள் செய்கிற வேதாந்த ப்ரசாரத்தில் பூர்ண த்ருப்திப்படுவதற்கில்லாமலிருக்கிறது.

அத்வைதத்திலும்கூட pure metaphysics-ஐ (சுத்த தத்வத்தை) மற்ற தேசத்துக்காரர்கள் மெச்சி, தங்களால் முடிந்தவரை அப்யஸித்துப் பார்க்கட்டும். இதிலே ஜன்மாந்தர விசேஷமுள்ள அபூர்வமான சிலர் வேண்டுமானால் ஸித்தியும் பெறக்கூடும். ஏனென்றால் ஏதோ ஜன்மாந்தர

விசேஷந்தானே அந்த விதேசிகளை இதிலே இழுத்திருக்கிறது? ஆனால் நம்மவரைப் பொறுத்தமட்டில் வைதிக ஆசாரமில்லாமல், கர்மாநுஷ்டானமில்லாமல் 'அத்வைதா', 'அத்வைதா' என்று ரிஸர்ச்சாகவும், லெக்சரராகவும், புஸ்தக மெழுதுவதாகவும் எத்தனைதான் பண்ணினாலும் வாஸ்தவத்தில் அந்த அநுபவத்தின் கிட்டேயே போகாமல் அறிவுமட்டத்தில் அலசியதாக மாத்திரந்தான் விஷயம் முடியும். அத்வைதத்தை ஸ்தாபித்த ஆசார்யாள் கர்மாநுஷ்டானத்தாலும், ஈச்வரோபாஸனையாலும் (இன்ன மூர்த்திதான் என்று மற்ற ஸம்ப்ரதாயஸ்தர்களைப் போல ஒன்றை மட்டும் கொள்ளாமல், எல்லாவற்றுக்கும் மூலமான பரமாத்மாவை ஏதோ ஒரு ரூபத்தில் செய்கிற உபாஸனையாலும்)தான் ஒருத்தன் சத்தியாகி தத்வ விசாரத்துக்கு வரவேண்டும் என்று தீர்மானமாக விதித்திருக்கிறார். இவற்றுக்கு யூனிவர்ஸிடிப் படிப்பில் எங்கே இடம்? ஆனபடியால் வேதாந்த சாஸ்த்ரங்களிலும் ஸம்ப்ரதாய வித்வான்களை ஆதரித்து, அவர்களிடமிருந்து ஸம்ப்ரதாய பூர்வமாக சிஷ்யர்கள் சிக்ஷை பெற ஏற்பாடு செய்யவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**பல ஸித்தாந்த ஒப்புவுமை**

இதிலே ஒன்றுமட்டும் கொஞ்சம் புதிதாக அபிவ்ருத்தி செய்துகொள்ள வேண்டும். 'கம்பேரடிவ் ஸ்டடீஸ்' என்பதாக யூனிவர்ஸிடிகளில் ஒரு ஃபிலாஸபி ஸிஸ்டத்தை மட்டுமில்லாமல் பலவற்றைப் படித்து ஒன்றுக்கொன்று எப்படி மாறுபட்டுப் போகிறது, எப்படி எத்தனையோ இடங்களில் அவை ஒப்புதலாகவும் போகின்றன என்று அராய்கிறார்கள். இது ச்லாகிக்க வேண்டிய ஆராய்ச்சி. ஸம்ப்ரதாய முறையிலும் இதர ஸம்ப்ரதாய அபிப்ராயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டித்தான் இருக்கிறது. ஏனென்றால் எந்த ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த எந்த சாஸ்த்ரத்தை எடுத்தாலும்

அதிலே மற்றவர்களின் கொள்கைகளைச் சொல்லி அவற்றைக் கண்டித்துத்தான் ஸ்வபக்ஷத்தை (தன் கட்சியை) நிர்த்தாரணம்

செய்திருக்கும். பூர்வபக்ஷத்தில் (எதிராளியின் கட்சியில்) ஆரம்பித்து அவர்கள் கருத்தை டெவலப் செய்தபின்தான் ஸ்வபக்ஷத்தை நாட்டவேண்டுமென்பதே நம் சாஸ்த்ரக்காரகர்கள், முக்யமாக பகவத்பாதாள், கைக் கொண்ட முறை. ஆனால் தற்போது ஸம்ப்ரதாயப்படிப் படிப்பவர்கள், ஏற்கனவே சாஸ்த்ரக்காரர்கள் மறற் ஸித்தாந்தங்களில் என்ன Quote செய்கிறார்களோ அதற்கு மேல் தாங்களாக அந்த சாஸ்த்ரங்களைப் பார்ப்பதில்லை. அவற்றை இன்னமும் ஊன்றிப் பார்க்கவேண்டும்.

பிற ஸித்தாந்தங்களை இன்னம் நன்றாக அறிய வேண்டும்.கொஞ்சங் கூட ஸொந்த அபிப்ராயங்களினாலும் அபிமானங்களினாலும் ஆகாமல் ஸத்ய தத்வத்தை அறிவதற்கு இது உதவும். அவரவருடைய பக்வ ஸ்திதியைப் பொருத்துத்தான் அறிவு வாதமும்கூட ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு முடிவைக் காட்டும், அறிவால் ஒரு விதமான முடிவுக்கு வந்தாலுங்கூட அவரவருக்கும் இதற்கு ஸம்பந்தமில்லாமல்கூட எது மனஸுக்குள்ளே நன்றாகத் தைக்கிறதோ அதைத்தான் ஒருத்தர் பின்பற்றுவார், கடைசியில் பார்த்தால் ஆத்மஸத்யம் என்பது அறிவு வாதங்களுக்கு அப்பாற்பட்டது - என்பதெல்லாம் நிஜந்தான். ஆனாலுங்கூட சாஸ்த்ரப் படிப்பு என்று ஒன்றை மேற்கொள்கிறபோது அதில் நல்ல தேர்ச்சியை ஸம்பாதித்துக் கொள்வதற்கு நான் சொன்னபடி அவரவரும் தங்களுக்குப் பிடித்த ஸம்ப்ரதாயத்தைத் "தரோ"வாகத் தெரிந்து கொள்வதோடு, மற்றவற்றையும் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் ஒரளவு நன்றாகவே தெரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் நாம் முடிவாக ஒப்புக்கொள்ள முடியாத ஸித்தாந்தங்களிலும் அறிவிலே பெரியவர்களாக வந்திருப்பவர்களின் பெருமையைத் தெரிந்துகொள்ள முடியும். "நம்முடையதுதான் அபப்டியே உசத்தி, மற்றது ஒன்றும் இல்லாதது" என்ற குறுகல் பார்வை அறிவுலகத்தில் கூடாதாகையால் சொல்கிறேன்.

பழைய முறையில் அமைக்கிற கலாசாலைகளில், நல்ல

இங்கிலீஷ் ஞானமுள்ள சிலர் நம் தேச ஃபிலாஸஃபிகளை மட்டுமில்லாமல், மற்ற தேச ஃபிலாஸஃபிகளையும்கூட இப்படிச் சேர்த்துப் படித்து ஆராய்ச்சி செய்து, புஸ்தகம் போட்டு, அவற்றின் ஸாரத்தையாவது இக் கலாசாலை வித்யார்த்திகளுக்கு தெரிவிக்கும்படியும் செய்யலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**புராணம்**

வேத உபாங்கங்களில் புராணம் என்பது தற்காலத்தில் உபந்நியாஸங்கள், ப்ரவசனங்கள், ஹரிகதைகள் ஆகியன பரவியிருப்பதால் ஓரளவு நன்றாக ப்ராகாசிப்பதாகத் தோன்றுகிறது. ஆனாலும் இங்கேயும்கூட ஆழ்ந்து பார்த்தால், பதினெட்டுப் புராணங்களில் பல கொஞ்சங்கூட ப்ரசாரத்துக்கு வரவில்லை என்பதும், உப புராணங்களும் ஸ்தல புராணங்களும் ரொம்பவும் மங்கிக்கொண்டே வருகின்றன என்பதும் தெரியும். இவற்றிலும் இருக்கப்பட்ட ஓரிரு பண்டிதர்களை ஆதரித்து, அவர்கள் புதிதாகப் பண்டிதர்களை உண்டாக்கும்படியாக சிஷ்யர்களை ஏற்படுத்திக் கொடுத்து, அதற்கான ஸஹாயங்களைச் செய்யவேண்டும்.

(பூர்வ) மீமாம்ஸை, தர்க்கம் (ந்யாயசாஸ்த்ரம்), தர்ம சாஸ்த்ரம் முதலான மற்ற உபாங்கங்களுக்கும் இப்படியே ஏற்பாடு பண்ணனும். இவற்றில் நம் ஆசார அநுஷ்டானங்களச் சொல்லிக் கொடுக்கும் தர்ம சாஸ்த்ரம் நம்முடைய வாழ்க்கையை நிஜமான பாரதப் பண்பாட்டின்படி வாழும் வாழ்கையாக ஆக்குவதற்கு ரொம்பவும் முக்கியம். ஆனால் அறிவு ரீதியில், வித்யை என்று பார்க்கும்போது மீமாம்ஸா சாஸ்த்ரத்தையும், தர்க்க சாஸ்த்ரத்தையும் ப்ரசாரப் படுத்துவது முக்யமாகிறது.

**ஆகம சாஸ்த்ரம்**

இதெல்லாம் போக, மந்த்ர சாஸ்த்ரம் என்பது அதுபாட்டுக்கு ஒரு ஸமுத்ரமாக விரிந்து கிடக்கிறது. (அதில் 'மந்த்ர மஹோததி, என்றே ஒரு புஸ்தகத்துக்குப் பெயர். மஹோததி என்றால் மஹா ஸமுத்ரம்.)

மந்த்ர சாஸ்திரத்தோடேயே ஆகம சாஸ்த்ரம் வருகிறது. மந்த்ர பூர்வமாக தெய்வ ஸாந்நித்யத்தை உண்டாக்கித் தரவே ஏற்பட்ட ஆலயங்களைப் பற்றிய விஷயங்கள் ஆகம சாஸ்த்ரத்திலிருப்பவைதான். ஆலயம் எப்படிக் கட்டுவது, மூர்த்திகளை எப்படி ப்ரதிஷ்டை செய்வது, பூஜை எப்படி, எந்தெந்த மூர்த்திக்கு எப்படியெப்படி வழிபாடு என்றெல்லாம் நிறைய்...ய ஸமாசாரங்கள் ஏராளமான ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அத்தனை பொதுஜனங்களையும் பரமாத்மாவோடு சேர்த்து வைப்பது ஆலயம்தான். அதனாலேயே இந்த சாஸ்த்ரத்தை விசேஷமாக விளங்கச் செய்யவேண்டுமென்பதில் எனக்கு ரொம்பவும் அக்கறையும் கவலையும் இருக்கின்றன. அதனால்தான் தற்போது இருக்கப்பட்ட விஷயஜ்ஞர்களான சிவாசார்யார்கள், பட்டர்கள் ஆகியவர்களைத் தருவித்து ஆகமத்துக்கு ப்ராதான்யம் கொடுத்துச் சில வருஷங்களாக பெரிய ஸ்தலங்கள் நடத்துவது. அரசாங்கத்திலும் ஆகமக் கலாசாலைகள் வைத்து ஊக்கம் தந்திருக்கிறார்கள். ஆனால் சாஸ்த்ரப்படிப் போக வேண்டுமென்பதைவிட, தற்போது ஸம்பந்தா ஸம்பந்தாமில்லாமல் எதையெடுத்தாலும் அதில் ஜாதி ஸமத்வத்தையும் தாய் பாஷையையும் நிலைநாட்டவேண்டுமென்பதே அரசியல்காரர்களுக்கு முக்யமாயிருப்பதால் இது எந்த அளவுக்கு, எத்தனை காலம் சாஸ்த்ரோக்தமாக நடக்குமென்று சொல்லமுடியவில்லை. இந்த சாஸ்த்ரங்களிலும் குருகுல முறையில் ஒரு பட்டரிடமோ, சிவாசாரியாரிடமோ நாலு பசங்கள் படிக்கும் ரீதியில் ஏற்பாடு செய்தால் ஆகும் சாஸ்த்ரங்கள் அவற்றின் ஒரிஜினல் ஸ்பிரிட்டோடு) (அதுதான் அவற்றின் நிஜ

ஸ்பிரிட்டும்!) ப்ரகாசிக்கும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**வாஸ்து சாஸ்த்ரம்**

ஆகமத்தின் கோயில் கட்டுவது பற்றி வந்தாலும், கோயிலை ஊரிலே எங்கே அமைப்பது, அந்த ஊரையே எப்படி அமைப்பது, அதில் வீடுகளை எப்படி அமைப்பது, அந்த வீடு ஒவ்வொன்றையும் எப்படி அமைப்பது என்பதையெலர்ம் சொல்ல ப்ராசீனமாக வாஸ்து சாஸ்த்ரம் என்று ஒன்று தனியாக இருக்கிறது. காற்றும் வெளிச்சமும் இருக்கிற விதத்தில், குடிதண்ணீர் கிடைக்கும் விதத்தில், கழிவு நீர் ஒடுகிற விதத்தில் வீட்டையும் ஊரையும் நிர்மாணம் செய்தால் மட்டும் போதாது. இதை மட்டுமேதான் இன்று கவனிக்கிறார்கள் - அல்லது கவனிப்பதாகப் பேர். இவற்றையும் சொல்லி, இதைவிட முக்யமாக, எப்படி நிர்மாணித்தால் உத்தமமான திவ்ய சக்திகளின் ரேடியேஷன் ஊருக்கும் வீட்டுக்கும் கிடைக்குமோ, எப்படி நிர்மாணம் பண்ணும்போதுதான் நம் கர்மாநுஷ்டானங்களுக்கு ஸௌகர்யமாயிருக்குமோ அப்படிச் செய்வதற்கு வாஸ்து சாஸ்த்ரம் வழி கூறுகிறது. கூடம், தாழ்வாரம், முற்றம் முதலியவை கூடாது என்று ரூம் ரூமாகக் கட்டினால் ஔபாஸனப் புகை எப்படி வெளியே போகும்? அநுஷ்டானத்துக்கு ஏற்றதாக வீட்டு அமைப்பு இருக்கவேண்டுமானால் வாஸ்து சாஸ்த்ரப்படிதான் செய்யவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**சில்ப சாஸ்த்ரம்**

ஆலய நிர்மாணம் என்றவுடனேயே சில்ப சாஸ்த்ரமும் வந்துவிடுகிறது. லோகமே ப்ரமிக்கும் சில்பங்கள் எண்ணி முடியாமல் கொட்டிக் கிடக்கிற தேசம் இது. சித்தவிகாரத்தை உண்டுபண்ணுவதற்கில்லாமல், சித்தத்தை சுத்தம்

செய்வதற்காக தெய்வ ஸம்பந்தமாக்கப்பட்ட சில்பங்கள். (Cultural heritage பண்பாட்டுப் பிதுரார்ஜிதம்) என்று இவற்றைப் புகழ்ந்துவிட்டால் போதாது. சில்பிக்களுக்கும் ஸ்தபதிகளுக்கும் ஊக்க உத்ஸாகங்களைத் தந்து கௌரவப்படுத்தி, அவர்களிடம் பலபேர் போய் கற்றுக் கொள்ளத் தூண்டுதல் தரவேண்டும். இதைத் தெரிவிக்கவே ஆகம ஸதஸில் இவர்களையும் வரவழைத்து முக்யத்வம் தருகிறோம். நாங்கள் ஆரம்பித்தபின் ஈச்வரனும் கண்ணைத் திறந்து பார்த்ததில் (நாங்கள் ஆரம்பித்ததும் அவனுடைய அநுக்ரஹ பலத்தில்தான்) நிறைய ஜீர்யோத்தாரணப் பணிகள் நடந்து, புதுப்புதுக் கோவில்களும் தினம்தினம் உண்டாகிக் கொண்டிருப்பதால் சில்ப சாஸ்த்ரத்துக்கும், அது தெரிந்த சில்பிகளுக்கும், சில்ப சாஸ்த்ர போதனைக்கும் கொஞ்சம் நல்ல தசை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

இதற்கும் கவர்ண்மென்டில் பள்ளிக்கூடம், பயிற்சிசாலை வைத்திருக்கிறார்கள். நல்லவேளையாக இந்த சாஸ்த்ரம் ஆதியிலேயே ப்ராம்மணர்களால் கற்பிக்கப்பட்டு, தற்பித்துச் செய்யப்பட்ட வேறு ஒரு ஜாதியாரிடம் குலத்தொழில் முறையாகப் போய்விட்டதால் இதிலே இப்போது அதிகமாக சாஸ்த்ர விரோதமான அநாசாரங்களைக் கலக்க இடமில்லை. ஒரு தூணில் வேலைப்பாடு செய்வது, ஒரு மூர்த்தி அடிப்பது என்றால் நாள்கணக்கில், ஒவ்வொரு நாளும் மணிக்கணக்காக உழைத்தால்தானே முடியும்? இதில் ப்ராம்மணன் உட்கார்ந்தால் அவன் ஸகலருடைய க்ஷேமத்துக்காகவும் பண்ணவேண்டிய யக்ஞ கர்மாநுஷ்டானங்கள் என்ன ஆவது? அதனால்தான், வ்யாகரணம், தர்க்கம், மீமாம்ஸை முதலானதுபோல் தினமும் கொஞ்ச நேரம் வாயால் சொல்லிக் காதால் கேட்டு மனஸில் நிறுத்திக்கொள்வதாக இல்லாமல், நாள்பூரா உடம்பால் செய்யவேண்டிய கார்யத்திலேயே தன்னுடைய நோக்கத்தையும் ப்ரயோஜனத்தையும் உடையதான சில்ப சாஸ்த்ரத்தைத் தனியாய் ஒரு வகுப்புக்கு

விடவேண்டியதாயிற்று.

இப்படியேதான் வைத்யம் முதலானவற்றையும் பிராம்மணனானவன் 'தியரி'யை மட்டும் போதித்துக் குலத் தொழிலாக இன்னொரு வகுப்பாருக்குத் தந்தது. அதைப் பெற்றுக்கொண்டவர்களுக்கும் அதனால் ஜீவனோபாயம் கிடைத்தது. இது ஒன்றே தொழில் என்பதால் அவர்கள் நல்ல ஒருமுனைப்பாட்டோடு அதிலே ஈடுபட்டு, சிறந்த செய்நேர்த்தியைப் பெற்றார்கள். அநுபவ மெருகு ஏற ஏற 'தியரி' என்று தெரியாமலேகூட தங்கள் பிள்ளைகளுக்கும், சிஷ்யப் பிள்ளைகளுக்கும் ஒரு பழக்க ஸாமர்த்யத்தாலேயே சில்பம் போன்ற கலைகளைச் சொல்லிக்கொடுக்க முடிந்தது.

ஆனால் தெரியவேண்டிய அளவுக்குத் 'தியரி'யும் தெரிந்துகொண்டு, எப்படி சாஸ்த்ர விரோதம் கொஞ்சமும் இல்லாமல் மூர்த்திகளைப் பண்ணவேண்டும், எப்படி மண்டபம் விமானம் முதலானவை எழுப்பவேண்டும் என்பதற்கெல்லாம் சில்ப சாஸ்த்ரங்களை ஒப்பிக்கிற ஞானமும் இவர்களுக்கு இருந்தது. (இப்போதும் இருந்துவருகிறது.) தெரியாத விஷயத்தில் ஸந்தேஹம் வருகிற விஷயத்தில் மாத்திரம் ப்ராம்மண குருவைக் கேட்டுக்கொண்டால் போதும் என்ற அளவுக்கு விச்வகர்ம வகுப்பு எனப்படும் இவர்களே இந்தக் கலையில் வித்யாப்யாஸம் தர வல்லவர்களாகிவிட்டார்கள்.

ஸமீப காலம் வரையில் நல்ல ஸதாசாரத்துடன் குடுமி, கச்ச வேஷ்டியுடன்தான் இவர்கள் இருந்து வந்திருக்கிறார்கள். இப்போதைய அவநிலையிலும்கூட இவர்களில் ரொம்பப்பேர் இப்படி இருக்கிறதைப் பாராட்டிச் சொல்ல வேண்டும். இவர்களுக்குப் பூணூல் உண்டு. சைவபோஜனம் தான் பண்ணுவார்கள். ஸம்ஸ்க்ருத த்வேஷமும் ப்ரம்மத்வேஷமும் இல்லாமல் சில்ப சாஸ்த்ர ப்ரகாரம் தொழிலைப் பண்ணுவார்கள். அதை நன்றாகப் படித்து விளக்கம் சொல்லும் ஞானமுள்ளவர்களும் இவர்களில் உண்டு. இப்போது "ஸமதர்மம்" என்று எதுவோ ஒன்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களோ அந்த ஐடியாலஜிப்படி சில்பத்துக்கு கவர்ன்மென்ட் ஸ்கூல் அல்லது காலேஜ் என்றால் இதுவெல்லாம் நஷ்டமாக நேரும்தானே என்றால், "ஆமாம்" என்றுதான் வருத்தத்தோடு பதில்சொல்ல வேண்டியதாகிறது.

"பின்னே, 'இதில் அநாசாரம் அதிகமாக வராது' என்றீர்களே!" என்றால், அதிகமாக வராது என்றேனேயொழிய வரவே வராது என்று சொல்லவில்லையே! காரணம், வேத சாஸ்த்ராப்யாஸத்துக்கு உள்ளது போல் அவ்வளவு கடுமையான நெறிகள் இதைக் கற்றுக் கொள்வோருக்கு இல்லை நெறி கடுமையாய் இருக்க இருக்கத்தான், தோஷம் எற்படவும் அதிக சான்ஸ் உண்டு. மேலும் ஆசாரத்திலே கொஞ்சம் முன்னே பின்னே இருப்பவர்கள் சிற்பக்கலை கற்றுக்கொண்டு மூர்த்திகள் அடித்துக் கோயில்கள் கட்டினாலும்கூட அந்தக் கோவில்களுக்குக் கும்பாபிஷேகம் பண்ணி, மூர்த்திகளை பிரதிஷ்டை செய்யும்போது ஸகல அநாசாரங்களும் மந்த்ர பூர்வமாக நிவ்ருத்தி செய்யப்படுவதால், நடுவில் ஏற்பட்ட தோஷங்களும் போய்விடுவதாக த்ருப்திப்படலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**கிராமக் கலைகள்**

வம்ச வாரியாகப் பூசாரி உடுக்கடித்து பாரதம் சொல்லிக்கொண்டு வருகிறானா? அப்படியானால் அதுவும் ஒரு கலை. அதுவும் ஒரு சாஸ்த்ரம். அது இந்தத் தலைமுறையோடு போகாமல் பிள்ளைக்கோ, இன்னொருத்தனக்கோ அவன் சொல்லித் தருவதற்கு சாச்வதமாக திரவிய உதவி ஏற்பாடு பண்ணுங்கள் என்கிறேன் இப்படியே கரகம், பொம்மலாட்டம்ட எதுவானாலும் கோவில், தெய்வம், புராணம் ஸம்பந்தப்பட்டதாக இருக்கிற அந்த கிராமக்கலை (நம் தேசத்தில் கிராமக்கலை, நகரக்கலை எதுவானாலும் ஈச்வரனை மையமாகக் கொண்டதுதான்? நம் காலத்தோடு நசிக்காமல் அடுத்த தலைமுறைக்குப் போகும்படியாகச் செய்யுங்கள் என்று சொல்லிவருகிறேன்.

## ஆசிரியர்களையும் உண்டாக்கவேண்டும்

இன்னம் எத்தனையோ சாஸ்த்ரங்களிருக்கின்றன. இப்போதைய ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, ஜுவாலஜி, ஜியாலஜி, என்ஜினீயரிங் முதலியவற்றுக்கு நம் தேசத்திலேயே மூல சாஸ்த்ரங்கள் இருக்கின்றன. வராஹமிஹிரரின் "ப்ருஹத்ஸம்ஹிதை"யையும், போஜராஜனின் "ஸமராங்கண ஸூத்ரதா"த்தையும் பார்த்தால் இவற்றைப்பற்றி அறியலாம். ஆனால் இவற்றில் மேல்நாட்டு ஸயன்ஸ்களே இங்கேயும் ப்ரசாரமானபின் நம் ஸ்வதேச விஞ்ஞான சாஸ்த்ரம் தெரிந்தவர்களே இல்லாமல் போய்விட்டார்கள். அதனால் இவற்றில் வாத்யார்கள் கிடைப்பதே ஸாத்யமில்லாததாகத் தோன்றுகிறது.

ஆனால் அறிவாளிகளாக, ஆராய்ச்சித் திறன் உள்ளவர்களாக இருப்பவர்கள் பழைய புஸ்தகங்களைப் பார்த்தும், மேலும் பல பழைய சுவடிகளைத் தேடிக் கண்டுபிடித்தும் பழைய வழிமுறைகளையும் அறிய முடியும்.

அறிந்தவர்கள் அப்புறம் வாத்யாராகி சிஷ்யர்களைத் தயாரிக்கவேண்டும்.

இப்படியாகச் சில வித்யைகளை இன்று கற்றுக் கொள்ளச் சிஷ்யர்கள் மட்டுந்தான் இல்லை என்றில்லாமல், அவற்றைக் கற்றுக் கொடுக்க ஆசிரியர்களும் இல்லாமலிருக்கிறது. இப்படிப்பட்டவற்றில், நல்ல புத்தி வன்மை உள்ளவர்களுக்குப் பழைய நூல்களைத் தேடி எடுத்துக்கொடுத்து, அல்லது அவர்களே தேடிப் பெறுவதற்கு எல்லா வசதியும் செய்துகொடுத்து, அவற்றை அவர்கள் படித்து ஆராய்ந்து அறியச் செய்யவேண்டும். இப்படி ஆசிரியரை முதலில் ஸ்ருஷ்டி செய்துவிட்டு, 'அப்புறம் இவரிடம் மாணவர்கள் சேர்ந்து இவர் புதிதாகத் தெரிந்து கொண்ட பழைய வித்யையைக் கற்றுக்கொள்வதற்கு ஏற்பாடு செய்து தரவேண்டும்.

### இயற்கை விதிகளுக்குப் பிடிபடாத வித்யைகள்

நமக்குத் தெரிகிற natural forces-ஐ (இயற்கை சக்திகளை)க் கொண்டே ஏற்பட்ட சாஸ்த்ரங்களைத் தவிர நாம் அறிந்த natural laws-ல் (இயற்கை விதிகளில்) பிடிபடாத பல சாஸ்த்ரங்களும் இருந்திருக்கின்றன. அதெல்லாம் 'ஹம்பக்' என்று இப்போது ஒதுக்குகிறார்கள். அப்படிப் பண்ணாமல் அவற்றையும் படித்து, ப்ராக்டிக்கலாகப் பண்ணிப் பார்த்து, 'ஹம்பக்'கா இல்லையா என்று ரூபிக்கவேண்டும். என் அபிப்ராயம், இந்த சாஸ்த்ரங்களை ப்ராக்டிஸ் செய்யும் மநுஷ்யர்களில் ஹம்பக்குகள் இருக்கலாமே யொழிய, சாஸ்த்ரமே ஹம்பக் இல்லை என்பதுதான். நாடி சாஸ்த்ரம், ப்ரச்னம் என்று கேட்கிறார்களே அந்த சாஸ்த்ரம், சாயாபுருஷ சாஸ்த்ரம் என்று நிழலை வைத்து முடிவுகள் செய்ய ஏற்பட்ட சாஸ்த்ரம் முதலானவை இப்படிப்பட்டனவே.

புது ஸயன்ஸ் நம் பழைய ஸயன்ஸை அடியோடு அடித்துக்கொண்டு போய்விட்டதுபோல் இல்லாமல், "unscientific" என்று தற்போது பரிஹஸிக்கிற, ஆனால் super-sciences ஆக (ஸயன்ஸுக்கு மேற்பட்டனவாக) இருக்கக்கூடிய இந்த நாடி சாஸ்த்ரம் முதலானவற்றைப் பாரம்பர்யமாக அறிந்து ப்ராக்டிஸ் செய்பவர்கள் ஏதோ சிலர் இன்றைக்கும் இருக்கிறார்கள். இவர்களையும் ஆதரித்து, இவர்களுக்கு சிஷ்யப் பிள்ளைகள் சேர்த்துக் கொடுத்து வித்யாரக்ஷணம் செய்யவேண்டும். ரஸவாத சாஸ்த்ரம் ஜ்யோதிஷம் ஆகியன ஸயன்ஸ், ஸயன்ஸில் வராதவை ஆகிய இரண்டும் கலந்தனவாக "ஸெமி-ஸயன்ஸ்" என்னும்படி இருக்கின்றன. இவற்றையும் இதுவரை சொன்னாற்போல் வ்ருத்தி பண்ணவேண்டும். தனியாகப் பல ஜோஸ்யர்கள் இப்போதும் நல்ல செல்வம் செல்வாக்கோடு இருப்பது வேறு விஷயம். நான் சொல்வது ஜ்யோதிஷ வித்யையின் ரக்ஷணம்.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஸ்தாபனம்*

### வைத்ய சாஸ்த்ரம்

இப்படியே ஆயுர்வதே வைத்யர்கள், நாட்டு வைத்யர்கள் ஸித்த வைத்யர்கள் அங்கங்கே இருந்துகொண்டு அவர்களில் சிலபேர் நல்ல ப்ராபல்யத்தோடு இருப்பதால் இவற்றுக்கான சாஸ்த்ரங்கள் அவர்கள்பாடு என்று விட்டுவிடக்கூடாது. நம்முடைய இந்தப் புராதன வித்யைகளை நன்றாகக் காப்பாற்றி, கெட்டிப்படுத்தி, வளர்த்துக் கொடுப்பது நம் எல்லோருடைய பொறுப்புமாகும் என்ற உணர்வோடு புது சிஷ்யர்கள் பழைய படிப்பு முறையில் உருவாவதற்கான கார்யங்களைச் செய்யவேண்டும்.

### யோக சாஸ்த்ரம்

யோக சாஸ்த்ரத்தை விட்டுவிட்டேனே! "யோக சாஸ்த்ரம்" என்று மாத்ரம் சொன்னால் பதஞ்ஜலி செய்துள்ள அஷ்டாங்க யோகம் என்றுதான் பொதுவில் அர்த்தமாகும். அதன் கிளைகளாகவும், டெவலப்மென்ட்களாகவும் அதில் வராததாகவும் இன்னும் அநேக யோகங்களம் இருக்கின்றன. குண்டலிநீ யோகம், ஹட யோகம், க்ரியா யோகம் என்று எத்தனையோ இருக்கின்றன.

இவை ரொம்பவும் ஜாக்ரதையாக, மிகவும் பக்வப்பட்டவர்களே அப்யஸிக்க வேண்டிய வித்யைகள். ஸாதாரணமாக, மனஸூ கொஞ்சம் தெளிந்து சிறிது தெய்வ சிந்தனை செய்வதற்கும் த்யானிப்பதற்குங்கூட சில நிமிஷம் ப்ராணாயாமல் (மூச்சுடக்கல்) செய்யும்படி சாஸ்த்ரம் சொல்கிறது. இது யோகத்தின் அங்கம்தான். ஆனால் இதற்கும் மேலே இதில் தீவ்ரமாக ஈடுபடும்போது ஜாக்ரதை தேவை. முறைப்படிப் பண்ணாவிட்டால், அல்லது ஸாதகன் இருக்கிற ஸ்திதிக்கு 'ஓவராகப் போய்விட்டால் மூளைக்கொதிப்பு, ஏன், மூளைக் கலக்கங்கூட உண்டாய்விடும், தேஹத்தையும் மனஸையும்

ஆரோக்யமாகவும், சுத்தமாகவும் ஆக்கிக் கொள்ளவே ஏற்பட்ட அப்யாஸத்தால் இரண்டுக்கும் ஹானியே உண்டாய்விடும். ஸித்தி, கித்தி என்று போய் அதீத சக்திகளை ஸம்பாதித்துக் கொள்வது, அதைக் கொண்டு பெயர் - புகழ் எடுக்கப் பார்ப்பது, ஒருத்தரை வசியம் பண்ணுவது, வசியத்துக்கு மசியாவிட்டால் யோக சக்தியால் ஹிம்ஸிப்பது என்று ஒரு அனர்த்த பரம்பரைக்கே இடமளிப்பதாகவும் ஆகிவிடும் - யோக சாஸ்த்ர சிக்ஷை பக்வமான பாத்ரத்துக்குப் போய் சேராதபோது.

தேஹாரோக்யத்துக்கேயான அநேக யோகாஸனங்கள் இருக்கின்றன. இவற்றிலும் கொஞ்சம் ஜாக்ரதை தேவைதானென்றாலும் மற்ற யோகஸாதனைகளைப்போல இதில் கஷ்டமோ, ஆபத்துக்கா ஹேதுவோ அவ்வளவு அதிகமாக இல்லை. சிலகாலமாக ஸ்கூல்களிலேயே இவற்றைச் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்றும் ஒரு பேச்சு அடிபடுகிறது. கையை காலை உடம்பை நுட்பமாக வளைந்துப் பண்ணவேண்டிய அப்யாஸத்தை அத்தனை குழந்தைகளுக்கும் கவனமாகச் சொல்லிக் கொடுப்பதற்குப் போதி ஆசிரியர்கள் இருக்கவேண்டும். அதுவுமில்லாமல் யோகாஸனம் போடுவதற்கென்று ஒரு கால் உண்டு. அப்போது வயிற்றிலே ஆஹாரம் இருக்கப்படாது என்று விதி. இவற்றை மீறினால் ஆரோக்யத்துக்குப் பதில் அநாரோக்யந்தான் வரும். ஆகையால் அதற்கான கட்டுதிட்டம் குலையாமல் கற்றுக் கொடுக்க முடியுமா என்று நிச்சயப்படுத்திக் கொண்டு 'மாஸ் - ஸ்கேலி'ல் ஸ்கூல்களில் சொல்லிக் கொடுக்கலாம். நம்முடைய குழந்தைகள் நல்ல தேஹதிடத்துடனிருப்பதற்காக எப்படியும்

யோகாஸனத்தை வ்ருத்தி செய்யத்தான் வேண்டும்.

இதைவிட மற்ற யோகஸாதனைகளின் விஷயத்தில் பலமடங்கு ஜாக்ரதை தேவை. அவை உத்தமமான யோகிகளே ஸத்பாத்ரமான சிஷ்யர்களுக்குக் கற்பித்துப் பயிற்சி தரவேண்டியவையாக இருக்கின்றன. அப்படிப்பட்ட யோகச்ரேஷ்டர்களை நானோ நீங்களோ போய், "இங்கே எங்கள் குருகுலத்தில் குருவாக வாருங்களேன்" என்று கூப்பிட்டு உட்கார்த்தி வைக்கமுடியுமா என்பது ஸந்தேஹந்தான். அவர்களுக்கு சிஷ்யர்களும் நாம் பிடித்துக்

கொடுப்பது அவ்வளவாக ஸாத்யமில்லை. எங்கே, எப்படி, எவருக்கு சிக்ஷை தருவது என்று அவர்களே முடிவுபண்ணுவார்கள், அவர்களுடைய ஆத்மசக்தியாலே நடத்திக் கொள்ளவும் செய்வார்கள். இப்போதுங்கூட இப்படி அநேக யோகாச்ரமங்கள் இருக்கின்றன. கொஞ்சம் ஜாஸ்தியாகவே இருப்பதுதான் கவலையாயிருக்கிறது! "Yoga Yoga" என்ற பேச்சு கூடுதலாகவே இருக்கிறது. அதனால் எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், நான் சொன்ன ரீதியில் யோக அப்யாஸத்துக்காக (அதாவது அதை ப்ராக்டிஸ் செய்வதற்காக) இல்லாமல், அதன் 'தியரி'யை மட்டும் அறிவதற்காக குருகுலம் வைக்கலாம் அப்போது, நிஜமாக 'இதுதான் யோக சாஸ்த்ரக் கருத்து, அது சொல்லும் முறை' என்று தெரிந்தவர்கள் உருவாவார்கள் இப்படி இவர்கள் உண்டாவதாலேயே, யோகம் என்ற பெயரில் எதை வேண்டுமானாலும் சொல்லி ஜனங்களைக் கவருகிறவர்களுக்கு ஒரு பயம் உண்டாக இடமேற்படும். உண்மையான யோகாச்ரமங்கள் மட்டுமே உண்டாகும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**'தியரி' மட்டும், ப்ராக்டிஸ்' இல்லை**

நான் ரஸவாத சாஸ்த்ரம் பற்றிச் சொன்னதைக்கூட இப்படித்தான் எடுத்துக்கொண்டு நடத்தவேண்டும். இல்லாவிட்டால் அதைப் படிக்கிற பலர் பித்தனையை தங்கமாக்குகிறேறெ ன்று புறப்பட்டு அநேக பித்தலாட்டங்களுக்கு இடம் கொடுத்துப்போகும். ('பித்தலாட்டம்' என்ற வார்த்தையே ரஸவாத ஏமாற்றில் உண்டானதுதான். 'பித்தல'வும் 'ஹாடக'மும் சேர்ந்து 'பித்தலாட்டம்' பித்தலம்தான் பித்தளை. ஹாடகம் என்றால் தங்கம்.) "இதுவும் ஸாத்யம், இதற்கு பாஸிபிலிடி இருக்கிறது" என்று அறிவு மட்டத்தில் இம்மாதிரி சாஸ்த்ரங்களைப் போதித்து, ஈச்வரனின் பெரிய வரப்ரஸாதமான மநுஷ்ய அறிவின் ஆற்றல்களைத் தெரிந்துகொள்ளப் பண்ணுவதோடு

நிறுத்த வேண்டுமே தவிர, இந்த வித்யாசாலைகளில் ப்ராக்டிகல் க்ளாஸ் என்று வைக்கக்கூடாது. சாஸ்த்ரம் நிஜம்தான் என்று காட்டுவதற்காகக் கொஞ்சம் டெமான்ஸ்ட்ரேஷன் வேண்டுமானால் குரு செய்துகாட்டலாம். ஆகக்கூடி ஜாக்ரதையுடன் கையாளவேண்டிய விஷயம். அதற்காக, 'அழிந்துபோகட்டும்' என்று விடக்கூடாது வித்யை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## வேதாந்த விஷயத்திலும் இப்படியே

யோக சாஸ்த்ரம்பற்றி நான் சொன்ன ஒரு அம்சம் வேதாந்தத்துக்கும் பொருந்துவதுதான். எப்படி ஒரு யோகியை நாம் குருவாக உட்கார்த்திவைத்து, சிஷ்யன் பிடித்துக்கொடுக்க முடியாதோ அப்படியேதான் வேதாந்தத்தை அப்யஸித்து ஸித்தி பெற்ற ஞானி விஷயமும். பக்திச்சார்புள்ள வேதாந்த ஸம்ப்ரதாயமானால் அதிலே ஸித்திபெற்ற பரம பக்தரையும் இப்படி நாம் குருகுலத்தில் கொண்டுவர முடியாது. இங்கேயும் அறிவு ரீதியில் வேதாந்த சாஸ்த்ர ஞானம் தரத்தான் நாம் குருகுலம் வைக்கவேண்டியதே தவிர, அதை அங்கேயே அநுபவமாகப் பண்ணித் தருவதற்கு அல்ல. பூர்வகால வித்யாப்யாஸத்திலும் இப்படித்தான் வேதாந்த சிக்ஷை நடந்ததென்று சொன்னேனல்லவா? தற்போது வித்யாசாலையில் கற்றதைக் கொண்டு வித்யார்த்தி பிற்பாடு ஒரு உத்தமமான ஞானகுருவை, அல்லது பக்த ச்ரேஷ்டரை, அல்லது யோகீச்வரரை அடைந்து ஸாதனைக்குப் போய்க்கொள்வான். ஆனால் அறிவு ரீதியில் சாஸ்த்ரங்களைக் கற்றுக் கொள்ளும்போதுகூட அதை குணத்தோடும் ஆசாரத்தோடும் ஸம்பந்தப்படுத்தாமல் இப்போது விட்டிருப்பதுபோல் இருக்கக்கூடாது. நல்ல ஒழுக்கக் கட்டுப்பாட்டுனும். பக்தி விச்வாஸம் முதலான பண்புகளுடன் கற்றுக்கொண்டால்தான் மாணவன் நன்றாக

உருவாவான், கல்வியும் பிற்காலத்தில் கொஞ்சங்கூட தப்பு வழியில் ப்ரயோஜனமாகாமல் நல்லதற்கே ஆகும் என்பதைத் தான் திரும்பச் திரும்பச் சொல்லி வந்திருக்கிறேன்.

இப்படி நம் தேசத்துடையதாக வந்துள்ள ஸகல கலைகளுக்கும் சாஸ்த்ரங்களுக்கும் நம் தேச முறைப்படியே தொடர்ந்து வித்யாப்யாஸம் நடக்க நாமெல்லாரும் முனைந்து ஏற்பாடுகள் செய்யவேண்டும். முடிந்தமட்டும் குருகுல அம்சங்கள் இருக்கும்படியாக இந்த வித்யாப்யாஸத்தை அமைக்கவேண்டும். அப்போதுதான் ஆசாரமும் குணமும் வித்யையோடு கைகோத்துக் கொண்டு போகும். ஆசாரம், குணம் இல்லாவிட்டால் வேதமே வேதமில்லை என்று வசனம் ஓதுவதைவிட (அதாவது கற்பதைவிட) ஒழுக்கம்தான் ப்ராம்மணனுக்கு முக்யம் என்று வள்ளுவரே தீர்ப்புச் சொல்லியிருக்கிறாரே!



## செய்யவேண்டிய பணிகள்

இந்தப் பெரிய பணியில் முதல் ஸ்டெப்பாகச் செய்யவேண்டியது தற்போது மிஞ்சியுள்ள சாஸ்த்ரக்ஞர்களையெல்லாம் குருகுலமோ, பாடசாலையோ எதுவா ஒன்றில் பிடித்துப்போட்டு போதிப்பதற்கு ஊக்கம் தரவேண்டும். அங்கே பழைய சாஸ்த்ரங்களின் ஸம்பந்தமான நூல்களை, சுவடிகளையெல்லாம் முடிந்தமட்டும் சேகரித்து வைக்கவேண்டும். இவற்றில் ரிஸர்ச்சுக்கும் தூண்டுதல் அளிக்க வேண்டும். முக்யமான நூல்களையாவது அச்சுப் போடுவதற்கு ஸஹாயம் செய்யவேண்டும்.

## கற்றவனாக கற்பிப்பவனாக வேண்டும்

நன்றாகப் படித்தறிந்த ஒருத்தர் நாலு பேருக்காவது அதைப் படிப்பிக்காமல் போனார் என்று ஏற்படவே கூடாது. நன்றாகக் கற்று வித்வானாகிற எவனும் அப்புறம்தான் கற்றதை மற்றவர்களுக்கும் கற்றுக்கொடுத்து ப்ரசாரம் செய்தேயாக வேண்டுமென்பது ஆன்றோர் விதித்த விதி. தன்மட்டில் கற்றவனாயிருந்து பயனில்லை. கற்பிப்பவனாயிருந்து கல்வியின் பயன் வருங்கால ஸமுதாயத்துக்கும் போகும்படிச் செய்யவேண்டும்.

மநுஷ்யனுடைய வாழ்க்கையில் ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம், ஸந்நயாஸம் என்று நாலு ஆச்ரமம் உள்ளது என்றால், கல்வி கற்பிப்பதிலும், நாலு ஸ்டேஜ்கள் உண்டு. அதீதி, போதம், ஆசரணை, ப்ரசாரணை என்று இந்த நாலுக்குப் பேர். அதீதி என்றால் படிப்பது. முதலில் நன்றாகப் படிக்கவேண்டும். அப்புறம் போதம், அதாவது படித்ததை நன்றாகப் புரிந்துகொண்டு அதிலே மேலும் புது அறிவு பெறுவது. மூன்றாவதாக ஆசரணை. முதலிரண்டும் இப்போதுங்கூடப் பல ஸப்ஜெக்ட்களில் நடந்துவிடுகின்றன. ஆனால் இந்த மூன்றாவது விஷயத்தில் தான் கோளாறாக இருக்கிறது. அது என்ன? ஆசரணை என்றால் அறிவிலே இறக்கிக் கொண்டதை நம்முடைய வாழ்க்கையிலே இழைத்து, நடைமுறையில் நடத்திக் காட்டுவது என்று அர்த்தம். கற்றபின் அதற்குத் தக நிற்பது ஆசரணை.

இந்த மூன்றோடு மட்டும் வித்வானின் லக்ஷணத்தை முடிக்காமல், முடிவாக 'ப்ரசாரணை' என்றும் ஒரு நாலாவது லக்ஷணம் சொல்லியிருக்கிறது. இதுதான் தான் கற்ற கல்வி தன்னோடு போகாமல் அதை நாலுபேருக்குக் கற்றுக் கொடுப்பது. ப்ரசாரம் செய்வது ப்ரசாரணை.

ஸ்ரீ ஹர்ஷர் இந்த விஷயத்தைக் கவி சாதுர்யத்தோடு சொல்லியிருக்கிறார். நளனுடைய கதையை "நைஷதம்" என்ற பெயரில் எழுதியிருப்பவர் அவர். நளன் நிஷததேசத்து ராஜாவானதால் புஸ்தகத்துக்கு "நைஷதம்" என்று பெயர் வைத்தார். வித்வான்கள் விரும்பும்படியான காவ்யம் அது.

"நைஷதம் வித்வத் ஔஷதம்" - நைஷத காவ்யமானது வித்வான்களுக்கு லேஹ்யம் மாதிரி - என்று சொல்வார்கள். அதிலே அவர் நளன் சதுர்தச வித்யைகளைக் கற்றுத் தேர்ந்தான் என்று சொல்லும்போது இந்த ஸமாசாரம் சொல்லியிருக்கிறார். 'சதுர்தச' என்ற வார்த்தையில் சிலேடை செய்து சொல்லியிருக்கிறார்.

'சதுர்தச' என்ற வார்த்தை இரண்டுவிதமாக அர்த்தம் கொடுக்கும். பதிநாலு என்பது ஒரு அர்த்தம். தசம் - பத்து, சதுர்தசம் - நாலு ப்ளஸ் பத்து, அதாவது பதிநாலு நாலு வேதம், அதன் ஆறு அங்கம், நாலு உபாங்கம் என்பவை சேர்ந்து பதிநாறு வித்யைகள்.

'சதுர்தச' என்பதற்கு இன்னொரு அர்த்தம் நாலு தசை, நாலு விதமான ஸ்டேஜ்கள் என்பது.

சதுர்தச வித்யைகளைக் கற்று, அவற்றுக்கு அதீதம், போதம், ஆசரணை, ப்ரசாரணை என்று சதுர்தசைகளை நளன் கொடுத்தான் என்று (கவி ஸ்ரீஹர்ஷர்) வார்த்தை விளையாட்டுப் பண்ணியிருக்கிறார்.

அதீதபோத ஆசரண ப்ரசாரணை:

தசாச் - சதஸ்ர: ப்ரணயந் நுபாதிபி:1

சதுர்தசஸ்த்வம் க்ருதவாந் குதஸ்வயம்

நவேத்மி வித்யாஸு சதுர்தசஸ்வயம் 11

**பிரசாரப் புரளி**

ப்ரசாரணை என்பது இந்த நாளில் எடுத்தற்கெல்லாம் ஆர்ப்பாட்டமாக ப்ரசாரம், propaganda என்று செய்கிற மாதிரியானதல்ல. இப்போது ஏதோ 'ஸ்டாடிஸ்டிக்ஸ்'களை (புள்ளி விவரங்களை)க் காட்டி ஒரு விஷயத்தை 'ஓஹோ' என்று நினைக்கும்படியாகவே 'ப்ராபகாண்டா' இருக்கிறது. இத்தனை பம்ப் ஸெட் போட்டோம், இத்தனை ஊரில் எலெக்ட்ரிக் லைட் போட்டோம், திட்டத்தில் இததற்கு இத்தனை கோடி செலவழித்தோம் என்கிறாற் போல 'ப்ராபகாண்டா' என்பது நடக்கிறது வாஸ்தவத்தில் (இவற்றால் ஜனங்களுக்கு) ஏற்பட்ட ப்ரயோஜனம் குறிப்பிடும்படியாக

இருந்ததா என்று கேள்வி எழுந்தாலுங்கூட ஸ்டாடிஸ்டிக்ஸைப் பார்த்து ப்ரமித்துப் பாராட்டிவிடத் தோன்றிவிடுகிறது.

மதத்தில் கன்வர்ஷன் (மதமாற்றம்) செய்கிறவர்கள்தான் இப்படி ப்ராபகாண்டா செய்வதில் மஹா கெட்டிக்காரர்கள ாயிருக்கிறார்கள். பணத்தை, காசைக் கொடுத்து, இல்லாவிட்டால் வேறே ஏதோ ஸாமர்த்யம் செய்து வளைத்து, ஒன்றுமறியாத பாமர ஜனங்களை அப்படியே சேரி சேரியாகத் தங்கள் மதத்துக்குத் தள்ளிக்கொண்டு விடுவார்கள். அப்புறம் அவர்களைக் கணக்கெடுத்து (அதோடு கொஞ்சம் சேர்த்துக்கொண்டாலும் சேர்த்துக்கொண்டு!) "பார்த்தீர்களா, இத்தனை பேர் ஹிந்து மதம் உபயோகமில்லை என்று எங்கள் மதத்தில் விச்வாஸம் வைத்துச் சேர்ந்துவிட்டார்கள்" என்று ஸ்டாடிஸ்டிக்ஸ் காட்டி ப்ரசாரம் செய்வார்கள்.

அங்கே அப்புறம் நம்மவர்கள் போய் கன்வர்ட் ஆனவர்களை எப்படியாவது பிடித்து, "நம்ப மதத்திலே உங்களுக்கு என்ன பிடிக்கவில்லை? அந்த மதத்திலே என்ன பிடித்து அதிலே சேர்ந்தீர்கள்?" என்று கேட்டால் அவர்கள் முழிமுழி என்று முழிப்பார்கள். ரொம்பவும் கேட்டால், "எங்களுக்கு ஹிந்து மதத்தில் எதுவும் பிடிக்காமலில்லை. அப்படியே இதில் பிடிக்காததாக ஏதாவது இருந்தாலுங்கூட, அந்த மதத்தில் இதைவிடப் பிடித்ததாக எதுவுமில்லை. நிஜத்தைச் சொல்லப்போனால் எங்களுக்கு இந்த மதத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. இதிலே எங்களுக்கு அபிமானமோ, பொதுவாக மதவிஷயம் என்பதிலேயே எங்களுக்கு அக்கறையோ இல்லை. அவர்கள் எங்களுக்கு இது இதுகளைக் கொடுத்தார்கள். இன்னம் என்னென்னவோ செய்வதாக வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள், எங்களுக்கு ஏதேதோ 'ரைட்'கள் வாங்கித் தருவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதற்காகவெல்லாந்தான் அவர்களுடைய மதத்துக்குப் போனோமே தவிர, அந்த மதக் கொள்கை புரிந்தோ, பிடித்தோ போகவில்லை" என்று உண்மையைப் போட்டு உடைத்துவிடுவார்கள்.

"ப்ரசாரணை" என்ற வார்த்தையைப் பார்த்துத் தற்கால ப்ரசாரம் மாதிரியாக்கும் அது என்று நீங்கள் நினைத்துவிடப்

படாதே என்பதற்காகச் சொல்கிறேன். ப்ரசாரம் என்றாலே புரளிப்ரசாரம்தான் என்று எடுத்துக் கொண்டுவிடக்கூடாது என்பதற்காகச் சொல்கிறேன்.

நம்பரைக் காட்டி ப்ரமிக்க வைத்து ப்ரசாரம் செய்வது நம்முடைய தேசாசாரத்தில் கிடையவே கிடையாது. இத்தனை பேர் படிக்கிறார்கள் என்று ஸ்டாடிஸ்டிக்ஸ் காட்டுவதற்காக வித்யா ப்ரசாரம் பண்ணும்படியாக நம் சாஸ்த்ரங்கள் சொல்லவேயில்லை. பாத்ரம் பார்த்து, நிஜமாகவே க்ரஹிக்க கூடியவர்களுக்குத்தான் வித்யையை ப்ரசாரம் செய்யவேண்டுமென்று விதித்திருப்பதை முதலிலேயே சொன்னேன்.

இப்படித்தான் ப்ராபகாண்டா பண்ணாமலே ஒவ்வொரு வித்யார்த்தியும் முதலில் தான் வித்வானாகி, அப்புறம் குருவாக ஆகித் தானும் சில வித்யார்த்திகளுக்கு நிஜமாகவே போதித்து அவர்களை நிஜமான வித்வானாக்க வேண்டும் என்று வைத்திருந்தார்கள். சிஷ்யன் குருவாகி வாழையடி வாழையாக மேலும் சிஷ்யர்களை பயிலுவிக்க வேண்டுமென்பது நம்முடைய மரபு.

ஒருத்தன் தான் ஸம்பாதித்த ஸொத்தை யாருக்கும் ப்ரயோஜனப்படாமல் புதைத்து வைத்துவிட்டுச் செத்துப் போனால் எத்தனை தோஷமோ, அதைவிட தோஷம், தான் கற்ற வித்யையை நாலு பேருக்குக் கொடுக்காமல் செத்துப் போவது என்பது நம் முன்னோர்களின் கருத்தாக இருந்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## திரவிய உதவியும் ஸமூஹ கௌரவமும்

எனவே தற்போது வித்வானாக இருந்துகொண்டும் சிஷ்யர்கள் கிடைக்காம லிருப்பவர்களை முதலில் பிடித்து அவர்களிடம் சில பேராவது சேர்ந்து படிக்கும்படி வசதி

செய்துதரவேண்டும்.

Chair என்று யூனிவர்ஸிடிகளில் வைப்பதுபோல் இந்த வித்வான்களை வைத்து அதே போன்று ஸன்மானம் கிடைக்கச் செய்யவேண்டும். ஸன்மானம் என்பது தாம்பாளத்தில் வைத்து நீட்டுவது மட்டுமல்ல, ஸமூஹத்தில் கௌரவத்தை உண்டாக்குவதும்தான். ராஜாவைவிடப் பண்டிதன் மேல்-இவனக்குத்தான் "சென்று விடமெல்லாம் சிறப்பு" என்று போற்றிய நம் தேசப்பண்பு மறைய விடக்கூடாது.

அபூர்வமான பழைய சாஸ்த்ரங்களில் பண்டிதர்களாகக் கிடைக்கக் கூடியவர்களையெல்லாம் நம் மடத்திலேயே சேர்த்து நிரந்தரமாகப் பராமரிக்க வேண்டும் என்றும், அவர்களைக் கொண்டு சிஷ்ய பரம்பரைகள் உற்பத்தி பண்ணவேண்டுமென்றும் எனக்குப் பேராசை. அம்பாள் ஸங்கல்பம் எப்படியோ?

எவனாவது ஒரு மாணவன் பழைய சாஸ்த்ரங்களில் ஒன்றைப் பற்றிக் கேள்விப்பட்டு, நிஜமான ஆர்வத்துடன் அதைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நினைத்தால், 'உனக்கு வாத்யாரில்லை, நீயே ஏதாவது புஸ்தகம், சுவடியைத் தேடி முட்டிக்கொள்' என்று சொல்லாமல், 'வாப்பா, உனக்காகத்தான் இதோ வாத்யார் தேடிப் பிடித்து வைத்திருக்கிறோம், நீ வருவாயா என்றுதான் அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று நாம் சொல்லும்படியாக ஏற்பாடுகள் செய்து நமக்குப் பெருமை தேடிக்கொள்ள வேண்டும்.

கற்றுக்கொடுக்கத் தெரியாத, அல்லது இஷ்டப்படாத பண்டிதர்களையும் பிரார்த்தித்துக் கொண்டு, "மசித்து", அந்த சாஸ்த்ரம் அவரோடு போகாமல் நாலு சிஷ்யர்களிடம் சேருமாறு செய்யவேண்டும். அவர் இந்த வழிக்கு வரமுடியாதவர் என்றே ஏற்பட்டாலும், அல்லது அவரிடம் படிக்க எவனுமே வரவில்லை என்று ஏற்பட்டாலும்கூட, அவருக்குப் பராமரிப்பு தரத்தான் வேண்டும். என்றைக்கோ உப்புக் காய்ச்சிப் பத்துநாள் ஜெயிலுக்குப் போனவர்களை த்யாகி என்று கௌரவப்படுத்தி ஆயுஸ் பூரா பென்ஷன், அவர்கள் "போயிருந்தால்கூட" அவர்களுடைய குடும்பத்துக்குப் பென்ஷன் என்று கொடுக்கவில்லையா? அம்மாதிரி அறிவுக்கே தங்களைத் தந்துகொண்டு எந்த

சாஸ்த்ரமானாலும் ஸரி, கலையானாலும் ஸரி, அதை ஸாங்கோபாங்கமாகத் தெரிந்துகொண்டிருக்கிறவர்க -ளுக்கும் நாம் வாழ்க்கை வசதிகள் கொடுத்து, மரியாதை பண்ணி வைத்துக் கொள்ளத்தான் வேண்டும். அவர்கள் சிஷ்யர் என்று வைத்துக்கொண்டு பாடம் சொல்லித் தராவிட்டால்கூட அவர்களை அபிமானித்து, உத்ஸாஹப்படுத்தி வைத்துக் கொண்டால் எப்படியோ ஒரு விதத்தில் அவர்களுடைய சரக்கு வெளியிலே போகாது. ஸதஸ்களில் அவர்களைப் பேசப் பண்ணி நோட்ஸ் எடுத்துக்கொள்ளலாம். அறிஞர்களாக உள்ளவர்கள் அவர்களிடம் கேள்விகள் கேட்டு ("பரிப்ரச்னம்" பண்ணி) விஷயங்களைக் கறந்து கொள்ளலாம். அவருடைய சாஸ்த்ரத்தில் குறிப்பாக topic-களைச் சொல்லி வ்யாஸம் (thesis) மாதிரி எழுதப் பண்ணலாம், அல்லது அவருடைய ஸஹாயத்துடன் அறிவாளிகளே எழுதலாம். ஆக, நம் சாஸ்த்ரங்களைக் காக்க நம்மால் என்ன பண்ண முடியுமோ அவ்வளவும் செய்யவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## ஒவ்வொருவரும் வித்வானாக வேண்டும்

ஒரு வாத்யார் எவரோ ஒரு சிஷ்யருக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு பண்ணித் தருவது மட்டுமில்லாமல் - இது ரொம்பவும் அத்யாவச்யமான கார்யம்தான், இதற்கு நீங்கள் கைகொடுக்கத்தான் வேண்டும், தோள் கொடுக்கத்தான் வேண்டும், ஆனால் இப்படி இன்னொருத்தன் படிப்பதற்கு வசதி பண்ணித்தருவதோடு மாத்திரம் நின்று விடாமல் - உங்களில் ஒவ்வொருவருமே நம்முடைய இத்தனை சாஸ்த்ரங்களில், வித்யைகளில், கலைகளில் ஏதாவது ஒன்றிலாவது தேர்ச்சிபெற வேண்டும். 'ஆபீஸுக்குப் போனேன், ஸம்பாதிச்சேன், குடும்பம் நடத்தினேன்' என்பதோடு நின்றுவிடாமல், நூற்றுக்கணக்காக இருக்கப்பட்ட நம்முடைய வித்யைகளில் ஏதாவது

ஒன்றிலாவது ஒவ்வொருத்தரும் நல்ல ஞானம் ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும். நம் வித்யைகள் வளர ஆசார்யர்களும் சிஷ்யர்களும் உண்டாக்கித் தருவதோடு நிற்காமல் நீங்கள் ஒவ்வொருவரும் சிஷ்யராகி ஏதாவது ஒரு வித்யையை அப்யஸித்து அதில் நீங்களே ஆசார்யராகி இன்னொருத்தருக்குச் சொல்லிக்கொடுக்கக்கூடிய அளவுக்குத் திறமை பெற வேண்டும்.

பாஷா சாஸ்த்ரத்தில் இன்டரெஸ்ட் இருந்தால் வ்யாகரணம், நிருக்தம் இப்படி ஏதாவது நன்றாகக் கற்கலாம். அறிவு வாதத்தில் இன்ட்ரெஸ்ட் இருந்தால் தர்க்கம் படிக்கலாம். ஸங்கீதத்தில் இன்ட்ரெஸ்ட் இருக்கிறதா? வீணை, ம்ருதங்கம், ஜலதரங்கம், வாய்ப்பாட்டு ஏதாவது கற்றுக் கொள்ளலாம். இல்லாவிட்டால் ஒரு உளியை வைத்துக் கொண்டு ஒரு சில்பம் பண்ணக் கற்றுக்கொள்ளலாம். இப்படிப் பலபேர் பல உளிகளை வைத்துக்கொண்டு தட்டியதுதான் இன்றைக்கும், 'இந்திய நாகரிகம் என்று ஒன்று வானளாவ இருக்கிறது' என்று உலகத்துக்கெல்லாம் காட்டும் வானளாவும் கோபுரங்களாக உயர்ந்து நிற்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

### அஹம் குறைய "அவனை"த் தொடர்புறுத்துக!

இங்கே அந்த உளி எப்படி ஈச்வர ஸம்பந்தம் பெற்றதோ, சில்பி எப்படி தன் கலைத்திறமையை ஈச்வரார்ப்பணம் பண்ணினானோ அப்படியேதான் எந்தக் கலையானாலும் சாஸ்த்ரமானாலும் ஸயன்ஸானாலும் அதை ஈச்வரார்ப்பணம் பண்ணவேண்டும். இல்லாவிட்டால் 'இதிலே நாம் கெட்டிக்காரன்' என்ற அஹங்காரம்தான் உண்டாகும். ஆச்ரயிப்பவர்களின் அஹங்காரத்தைக் குறைக்கத்தான் மதபீடங்கள் இருக்கின்றன. அதில் ஒன்றில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். நம்முடைய பெரிய பண்பாட்டுப் பாரம்பர்யம் வீணாகப் போகப்படாது என்பதில் எனக்கு

இருக்கிற ஆசையினால் அனைவரும் நம்முடைய வித்யகைளில் ஒன்றையேனும் நன்கு கற்ற அறிவாளிகளாக ஆகவேண்டும், அல்லது கலைஞர்களாகவேண்டுமென்று சொல்லி உங்களைத் தூண்டிக்கொண்டிருப்பதில், பீடத்தின் முக்ய உத்தேசமான அஹங்காரக் குறைப்புக்கு நேர் எதிராகப் பண்ணிவிடக் கூடாதல்லவா? அதனாலே சொல்கிறேன் - அனைவரும் அறிவாளிகளாக வேண்டியதுதான். ஏதாவது ஒரு கலையில் தேர்ச்சிபெற வேண்டியதுதான். ஆனால் அதே ஸமயத்தில் அனைவருக்கும் நல்ல பக்தியும் இருக்கவேண்டும். 'கற்பதெல்லாம் அவன் அருளால், கலைகளெல்லாம் அவன் ப்ரஸாதம்' என்ற எண்ணத்தோடு கற்கவேண்டும். அப்புறம் அதை ப்ரயோஜனப்படுத்துவதும் முடிவாக அவனை நினைவுப்படுத்துகிற விதத்திலேயே இருக்கவேண்டும்.

பாஷா சாஸ்த்ரத்தில் போனாலும் சப்த ப்ரஹ்மத்தைக் காட்டிக் கொடுக்கவேண்டும். ஸங்கீதத்தில் போனால் நாத ப்ரஹ்மத்தில் முடிக்கவேண்டும். வாதம், அறிவாராய்ச்சி என்று போனாலும் இவற்றால் எந்த அளவுக்குப் பரமாத்ம தத்வத்தைக் காட்டிக் கொடுக்க முடியுமோ அந்த அளவுக்கு அதைச் செய்யவேண்டும். கணிதமும் ஸங்க்யை (எண்ணிக்கை)யில் அளவிடமுடியாத ஆத்ம தத்வத்தை நினைப்பூட்ட முடியும் - பாஸ்கர ராயர், ஆர்யபட்டர் முதலியவைகளுடைய கணித நூல்களின் மங்கள ச்லோகங்களைப் பார்த்தால் தெரியும், அவர்கள் எப்படி இதையும் ஈச்வர ஸம்பந்தமாக்கினார்களென்று. தாவர சாஸ்த்ரமா, biology-யா உயிரியல் சாஸ்த்ரமா, எதுவானாலும் ஸ்ருஷ்டிகர்த்தாவின் விசித்ர விசித்ரமான கல்பனா சக்தியை ரஸிக்கவைப்பதில் முடியமுடியும். ஜாகரஃபி அவன் எப்படி ஜகத்ஸ்வரூபமாக மலைகள், பீடபூமிகள், நதிகள், பாலைவனங்கள், க்ளைமேட்டுகளாக விதவித வேடிக்கை பண்ணுகிறான் என்பதைக் காட்டும்படிச் செய்யமுடியும். 'அஸ்ட்ரானமி' அவன் அந்தரத்தில் கோடானு கோடி லோகங்களை அதிசய கதிகளில் ஆட்டி வைப்பதைத் தெரிந்துகொள்ள உதவி புரிய முடியும். ஃபிஸிக்ஸினாலே அவன் ப்ருக்ருதி (இயற்கை) ரூபத்தில் போட்டிருக்கிற சட்டதிட்ட ஒழுங்குகளைப் பார்த்து நம்மையும் மநுஷ்யதர்ம ஒழுங்கிலே கொண்டுவந்து கொள்ளுமாறு அறிவுபெறமுடியும். இப்படி எந்த ஒரு வித்யையைத்

தெரிந்துகொண்டாலும் அதன் மூலம் தானும் பரமாத்ம தத்வத்திலே ஒரு அம்சத்தைப் புரிந்துகொண்டு, மற்றவர்களுக்கும் புரியப்பண்ணவேண்டும். இது ரொம்ப முக்யம். இல்லாவிட்டால் எல்லா அஹங்காரங்களையும்விட மோசமான "வித்யா கர்வ"த்தில் நீங்கள் அழுந்திப்போவதற்கு நான் வழி சொன்னதாக ஆகிவிடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## வீணாகும் நேரம் வித்யைக்கு ஆகட்டும்

"எத்தனையோ வாழ்க்கை ப்ரச்னை எங்களுக்கு. ஆபிஸ் கார்யம், வீட்டுக் கார்யம் என்று அலைகிறோம், அவதிப்படுகிறோம். அது தெரியாமல், எங்கேயோ மடத்தில் உட்கார்ந்து கொண்டு, 'அதக் கத்துக்கோ, இதைக் கத்துக்கோ' என்று நீங்கள் உபதேசம் பண்ணினால் எப்படி?" என்று கேட்கலாம். மனஸிருந்தால் எதையும் செய்துவிடலாம். இத்தனை வாழ்க்கை ப்ரச்னை இருந்தாலும் எத்தனை பொழுது அரட்டை, ந்யூஸ் பேப்பர், ஸினிமா, சீட்டுக்கட்டு இத்யாதியிலே போகிறது? இப்படி வீணாகப்போகிற காலத்தில் பாதிபொது நலப்பணிகளுக்கு என்றும், பாதி ஏதாவது வித்யாப்ஸாஸத்துக்கு என்றும் வைத்துவிட்டால் போதும் - ஸமூஹப்பணிகளும் நடந்துவிடும், நம்முடைய வித்யைகளும் ப்ரகாசம் பெற்றுவிடும், நாமும் ப்ரகாசம் பெற்றுவிடுவோம்.

வேலை - வெட்டி, குடும்பத்தொல்லை என்று மன்றாடுபவர்களுக்கு 'டைவர்ஷன்' வேண்டாமா என்று கேட்கலாம். ஆசையோடு மனஸ் ஈடுபட்டு ஏதாவது ஒரு வித்யை அப்யஸிக்க ஆரம்பித்தீர்களானால் உங்களுக்கே தெரியும்,

இந்த அப்யாஸத்தைவிடப் பெரிய 'டைவர்ஷன்' எதுவும் இல்லையென்று. களைத்துப்போன மனஸுக்கு வேண்டிய உத்ஸாஹத்தை இவையே (வித்யைகளே) ஊட்டிவிடும்.

அப்படியும் ஒரேயடியாக நீங்கள் 'டைவர்ஷன்' என்பதை விட்டுவிடும்படிச் சொல்லவில்லை. அதுவும் கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்களே ஆலோசித்துப் பார்த்து, "இப்படிப் பொழுதை வேஸ்ட் பண்ணுகிறோமே" என்று நினைக்கக் கூடியவைகளை விட்டுவிட்டு - இப்படி நிறைய அகப்படும் - அந்தப் பொழுதை இப்படியொரு pursuit-ல் (தேட்டத்தில்) செலவிட்டால் போதும், ஏதாவதொரு ஸ்வதேச வித்யையில் ஈடுபட்டுத் தேர்ச்சி பெற்றுவிடலாம். நம் முன்னோர்கள் போன வழி அதுதான்.

மநுஷ்யப் பிறவி கிடைத்தும் அதன் அறிவாலே பெறக் கூடியவற்றைப் பெற்று அதன் மூலம் மநுஷ்யத்வத்துக்கு மேலே போக முயற்சி பண்ணாமல் நாம் செத்துப்போனால் அது ஆடு மாடு ஜன்மாவுக்கு ஸமானந்தான். ஒரு ஆடு ஆடாகவோ, மாடு மாடாகவோ இருந்து மடிவதில் அவற்றுக்குக் குறைவு இல்லை. ப்ரக்ருதியில் ஈச்வரன் அவற்றுக்கு ஏற்படுத்திய தர்மப்படி இருந்ததாகவே ஆகும். ஆனால் மனிதப் பிறவி எடுத்தவர்கள் இதற்கு அவன் அநுக்ரஹித்துள்ள உபரி அறிவின் தர்மப்படி அதை ஒரு வித்யையால் சோபித்துக் கொள்ளச் செய்யாமல் விட்டுவிட்டால் அது ரொம்பவும் துர்பாக்யம். அறிவுக்கு மேலே உள்ள ஆண்டவனுக்காக, ஆத்மாவுக்காகத்தான் அறிவை விட்டுவிட்டு, 'இதெல்லாம் எதற்கு?' என்று ஸகல சாஸ்த்ரங்களையும் வித்யைகளையும் தள்ளலாமே தவிர, நம் நிலையில் அப்படிக் கேட்டு விட்டுவிடுவது தகாது. இது ஒன்றுக்கும் உதவாத சோம்பேறியின் வாய் வேதாந்தந்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**அனைவரும் வித்வானாயிருந்த காலம்**

பழைய காலத்தைச் சேர்ந்த க்ராம மஹாஸபைகளின் சாஸனங்கள் இருக்கின்றன அல்லவா? அவற்றிலே ஒரு க்ராமத்தைச் சொல்லும்போது "அசேஷவித்வத் ஜனங்கள்"

அல்லது "அசேஷ வித்வத் மஹாஜனங்கள்" என்று குறிப்பிட்டிருக்கும். நம்முடைய மடத்து ஸ்ரீமுகங்களிலும் இந்த சொற்றொடர் இருக்கிறது. "சேஷம்" என்றால் "மீதி" என்று தெரிந்திருக்கும். "அசேஷ" என்றால் "மீதியில்லாமல்" என்று அர்த்தம். ஒரு க்ராமத்திலே உள்ள பொதுமக்களில் மிச்சம் மீதி இல்லாமல் அனைவரும் வித்வான்களாக இருந்தார்களென்பதையே "அசேஷ ஜனங்கள்" என்பது தெரிவிக்கிறது. அக்காலத்தில் ஸகலருக்கும் வித்வத் - அதாவது ஏதாவதொரு வித்யையில் பாண்டித்யம் - இருந்தது என்பதை இது தெரிவிக்கிறது. இதை அப்படியொன்றும் மிகைப்படுத்திச் சொன்னதாகக் கொள்வதற்கில்லை. ஏனென்றால் ப்ராம்மண இதரர்கள் பள்ளிக்கூடம் போகாவிட்டாலும் தங்கள் தங்கள் தொழிலில், அதற்கான வித்யையில், வித்வான்களாகவே இருந்தார்கள். ப்ராம்மணர்களை எடுத்துக்கொண்டால் இரண்டு வேதம், இரண்டு சாஸ்த்ரத்துக்குக் குறையாமல் வ்யுத்பத்தி (சிறப்பான தேர்ச்சி) உள்ளவர்களாக ஒவ்வொரு க்ராமத்திலும் பலபேர் இருந்திருப்பதாகத் தெரிகிறது. அதற்கேற்றாற்போல் அக் காலத்தில் குரு பீடங்களிலும் நம்முடைய ஆசார்யாள், வித்யாரண்யாள் போன்ற பண்டித ஸிம்ஹங்கள் இருந்திருக்கிறார்கள். இந்தக் காலத்தில் பண்டிதர் என்று இருப்பவரையே, "வேதத்தில் ஒரு பதம் புரியவில்லை, அர்த்தம் சொல்லுங்கள்"

என்று கேட்டால், "பாஷ்யத்தைப் பார்த்துக்கொண்டு வந்து பதில் சொல்கிறேன்" என்கிறார் காலத்திற்கேற்ப குரு பீடத்தில் நான் இருக்கிறேன்.

அதனால் - ஒரு விதத்தில் self-intrest (ஸ்வயநல அக்கறை) என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள் - குருபீடங்கள் நல்ல நிலைமையில் ஸகல சாஸ்த்ரங்களிலும் நல்ல ஞானத்துடன் விளங்கவேண்டுமென்பதற்காகவாவது ஸகல ஜனங்களும் நல்ல வித்வத் உள்ளவர்களாக ஆகவேண்டுமென்கிறேன். முன்னேயே சொன்னாற்போல, சிஷ்யர்களின் தரத்தைப் பொறுத்துத்தான் குரு உருவாகிறார். சிறந்த அறிவாளிகளாக சிஷ்யர் கூட்டம் இருந்துவிட்டால் அதற்குத் தகுந்தாற்போல் குருவும் தம் நிலையை உயர்த்திக் கொள்ளவேண்டுமென்று நிர்பந்தமாகவாவது ஏற்பட்டுவிடுகிறது. அவர்கள் ஒன்றைக் கேட்டு இவர்

முழிக்கப்படாதல்லவா? அதனால்! ஆனபடியால் குரு பீடங்களிலுள்ள குருமார்கள் நன்றாக சாஸ்த்ரார்த்தம் அறிந்தவர்களாய் இருக்கவேண்டுமென்றால் பொறுப்பு சிஷ்யர்களதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**வாழ்க்கை முறையும் வயதும் தடையாகா**

"இத்தனை நாள் ஏதொவொரு தினுஸிலேயே வாழ்க்கை நடத்திவிட்டோம். இப்போது திடீரென்று ஏதாவது சாஸ்த்ராப்யாஸம் செய்வது, கலையைக் கற்பது என்றால் எப்படி முடியும்? அதற்கு ஒரு வயஸ் இல்லையா? ஐந்தில் வளையாதது (ஐம்பதில் வளையாது) என்று பழமொழி இல்லையா?" என்று கேட்கலாம். அததற்கான வயஸில்தான் அததுவும் ஸுலபமாக வரும் என்பதும், வித்யாப்யாஸத்துக்கு ஏற்ற ஒரு பருவம் உண்டு என்பதும் வாஸ்தவந்தான். ஆனாலும், 'இந்த தேசத்திலே பிறந்துவிட்டு இதன் ஏராளமான சாஸ்த்ரங்களில் ஒன்றுகூடத் தெரியாமலிருக்கிறோமே!' என்ற feeling இருந்தால் எந்த வயஸிலும் வித்யை வரும். ஆர்வமே இளவயஸின் துடிப்பையும், க்ராஹ்ய சக்தியையும் (கல்வியைக் க்ரஹித்துக் கொள்ளும் சக்தியையும்) உண்டாக்கிவிடும்.

இதுவரை ஏதொவொரு வாழ்க்கை முறையில் போய் விட்டோமென்றால் அது ந்யாயமாக நாம் போயிருக்கப்படாத "ஏதொவொரு" முறைதான். ஆகையால், "எந்த ஒரு முறை"யில்தான் நாம் போயிருக்க வேண்டுமோ அதிலே இனியாவது போவது என்ற உறுதியும் ஆர்வமும் இருந்தால் ஈஸியாக அப்படி மாற்றிக்கொள்ளலாம்.

ஐம்பதில் வளையுமா என்று கேட்பதையே 'சாலஞ்ஜா'க எடுத்துக்கொண்டு, 'ஓ வளையும்' என்று காட்ட முயல வேண்டும். உரிய வயஸிலே ஒன்றைக் கோட்டை விட்டவர்கள் இப்படி 'சாலன்ஜ்' பண்ணி ஜயித்துக்

காட்டவேதான் அந்தப் பாமொழி ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்க வேண்டும். ப்ரத்யக்ஷத்திலேயே இப்படிப் பலர் இருந்திருக்கிறார்கள்.

த்ருஷ்டாந்தமாக ஸமீப காலத்தில் ப்ரொஃபஸர் ஸுந்தரராமையர் என்பவர் இருந்தார். (அவர்) ஐம்பது வயஸுக்கு மேல்தான் சாஸ்த்ரம் படித்தார். அப்புறம் (கும்பகோணத்தில் ஸ்ரீமட ஸம்பந்தமுள்ளதாக உள்ள) அத்வைத ஸபை மாதிரியான பெரிய வித்வத் ஸதஸ்களில் கூட, இவற்றிலேயே பழம் தின்று கொட்டை போட்ட பெரிய பண்டிதர்களுக்கும் புரிபடாத தத்வ நுட்பங்களை அவர்களே ஆச்சர்யப்படும்படியாக எடுத்து விளக்கியிருக்கிறார். ஆகவே புதிய இளைஞர் தலைமுறையில் சிஷ்ய பரம்பரை உருவாக்குவதோடு, வயதானவர்களும் இது முதல் நம் சாஸ்த்ரங்களிலோ கலைகளிலோ, ஏதாவது ஒன்று அப்யாஸம் செய்து அதன் வழியாய் ப்ரஹ்யவித்யைக்குப் போகும் பாக்யத்தைப் பெற முயலவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## அரசாங்கமல்ல மக்களும் சீடர்களுமே பொறுப்பு

முற்காலத்தில் அரசர்களும் மஹாவித்வான்களாக இருப்பார்கள். ராஜ ஸதஸ்கள் அறிவாளிகள் நிறைந்ததாக இருக்கும். நன்றாக வித்வத் ஸம்பாவனைகள் செய்தும் ராஜமான்யங்கள் விட்டும் வித்வான்களையும், அதன் வழியாக வித்யைகளையும் வ்ருத்தி செய்தார்கள். இப்போது... நான் சொல்வேண்டாம் - எஜுகேஷன் மினிஸ்ட்ரி, கல்ச்சுரல் அஃபேர்ஸ் மினிஸ்ட்ரி என்று இருந்தாலும், கொஞ்சத்தில் கொஞ்சமாவது கலாசார அபிவ்ருத்திக்கு அவர்கள் செய்வதை நாம் பாராட்டத்தான் வேண்டுமென்றாலும், ஏதோ குடியரசு நாளில் இத்தனாம் கோடி ஜனங்கள் உள்ள தேசத்தில் ஒரு பத்துப் பண்டிதருக்கு கௌரவம் பண்ணுவது, 'ஸான்ஸ்க்ரிட் ப்ரமோஷன்' என்று ஏதாவது இரண்டு பழைய

ஓரியண்டல் ஸ்கூல்களுக்கு 'க்ரான்ட்' கொடுப்பது, இரண்டு யூனிவர்ஸிடியில் 'சேர்' வைப்பது, ஒரு சில பேருக்கு ஸ்காலர்ஷிப் தருவது, க்ராமக் கலை உத்ஸவம் என்று ஏதாவது நாலைந்து நாள் பண்ணுவது - என்பதாகச் செய்வதெல்லாவற்றையும் கூட்டிக் கணக்கெடுத்தாலும் பொருளாதாரம், ராணுவம், நீர்ப்பாசனம் முதலியவற்றுக்குச் செலவழிப்பதில் நூறில் ஒரு பங்காவது வித்யாபிவ்ருத்திக்குப் போகும் என்று தோன்றவில்லை. அவற்றிலே காட்டுகிற இன்ட்ரெஸ்ட் இதில் யாருக்கும் இல்லை - எந்தக் கட்சிக்குமே இல்லை. ஆனாலும் வெளிதேசங்களும் நம் இமேஜை ப்ரொஜெக்ட், பண்ணிக் காட்டுவதற்காக மட்டும், நம்முடைய வித்யகைளையும் கலைகளையும் பற்றி நிறையப் பேசுவதாக ஏற்பட்டிருக்கிறது. இவற்றுக்காகச் செய்கிற ஏதோ கொஞ்சமும் ஈச்வர ஸம்பந்தமில்லாமலும் சாஸ்த்ரிய வழியில் இல்லாமலும் செய்யப்படுவதால் அவையும் உரியபடி ப்ரயோஜனப்படாமல் போகின்றன. இன்றைய ராஜாங்க ரீதியில் இதற்கு மேல் ஒன்றும் எதிர்ப்பார்ப்பதற்கில்லை. அவர்களைக் குறைகூடச் சொல்லவேண்டாம்.

ஆகவே பொதுவாக வித்யைகள் என்று எடுத்துக்கொண்டால் பொதுஜனங்களும், சாஸ்திரங்களை வளர்க்க வேண்டிய குருபீடங்கள் என்று எடுத்துக்கொண்டால் சிஷ்ய வர்க்கமும்தான் இப்போது விழிப்புணர்ச்சி பெற்றுப் பொறுப்பு எடுத்துக்கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யணும். ஒரு விதத்தில் ராஜாங்க ரீதியில் நடக்காதது கூட நல்லதற்குத்தான் என்பேன். ஏனென்றால், அப்படி நடந்தால் ஜனங்கள் இவ்விஷயத்தில் அசட்டையாக இருந்துவிட முடியும். அப்படி இல்லாத போதுதான் ஸகல ஜனங்களும், "இவை நம்முடைய மஹத்தான பாரம்பர்ய ஸொத்து. இவற்றை நாம் ரக்ஷிக்க வேண்டும்" என்று ஸொந்த அக்கறையும் விசாரமும் காட்டி ஹ்ருதய பூர்வமாக ஈடுபட அதிக இடம் உண்டாகிறது.



## *ஸ்தாபனம்*

## அரைகுறை ஞானத்துக்கே ஆதரவு

வாஸ்தவ நிலை எப்படி இருக்கிறதென்று பார்த்தால் வ்யஸனம்தான் மிஞ்சுகிறது. வர வர வர வித்யையின் தரம் குறைந்துகொண்டே வருகிறது. ஒவ்வொரு சாஸ்த்ரமாக மறைந்துகொண்டே வருகிறது. எத்தனையோ கலைகள் இருந்த இடம் தெரியாமல் போய்க்கொண்டிருக்கின்றன. ஒரே இருட்டிலே சின்ன மின்மினிப் பூச்சி வெளிச்சம்கூடப் பெரிசாகத் தெரிகிறார்போல, குருபீடங்களிலே ஸ்வல்பவித்வத்தோடு ஒருத்தர் இருந்துவிடடால்கூடு அவரை சிஷ்யலோகம் "ஸர்வஜ்ஞர்" என்று புகழ்ந்து அவரும் தாம். அதற்குமேல் தெரிந்துகொள்ள வேண்டாமென்று நினைக்கிற அளவுக்குக் கொண்டு விட்டுவிடுகிறது.

மின்மினிப் பூச்சியைச் சொல்லும்போது ஒரு கதை நினைவு வருகிறது. கதை என்றால் நிஜமாகவே நடந்த கதை. நீலகண்ட தீக்ஷிதரும், பழமார்நேரி மஹாதேவ சாஸ்திரகள் என்பவரும் ஸம்பந்தப்பட்ட கதை. நீலகண்ட தீக்ஷிதர் மதுரையில் புகழ்வாய்ந்ததாக உள்ள திருமலை நாயகர் மஹாலையும் புது மண்டபத்தையும் கட்டிய நாயக மன்னருக்கு மந்த்ரியாக இருந்தவர். மஹாபக்தர். இவற்றோடு மஹாவித்வானுமாவார். பழமார்நேரி சாஸ்த்ரிகள் இவர் மாதிரி ப்ரஸித்தி பெறாதவர். ஆனாலும் தீக்ஷிதரும் அவரிடம் எப்படித் தோற்றுப் போனமாதிரி ஆனார் என்று அந்தக் கதை தெரிவிக்கிறது. ஞானசூன்ய உலகத்திலே எப்படி மின்மினிப் பூச்சி மாதிரி துளிப்போற ஞானத்தைப் பகட்டாகக் காட்டிக்கொள்பவர்கள் தங்களை ப்ரமாதப் படுத்திக்கொள்ள முடிகிறது என்று மஹாதேவ சாஸ்த்ரி இடித்துக் காட்டி ச்லோகம் இயற்றிச் சொன்னதில்தான் தீக்ஷிதருக்கு அவரிடம் ரொம்பவும் மரியாதை ஏற்பட்டது என்று கதை.

வெறும் அரட்டை ஆஸாமிகளும் மின்மினி அறிவினாலேயே ப்ரகாசிக்கிற இருட்டுச் சூழ்நிலையில்தான் இப்போது இருக்கிறோம். இந்த மின்மினி ஒளியை மங்கச்செய்யும் நக்ஷத்ரக் கூட்டங்களின் ப்ரகாசம், நக்ஷத்ரங்களின் ஒளியையும் மழுங்கப் பண்ணும் சந்த்ரோதயம், அந்த சந்த்ரனும் இருக்கிற இடம் தெரியாமல் அமுங்கிப்போகும் ஸூர்யோதயம் என்னும்படியாக மேலும் மேலும் நாட்டில் வித்யா ப்ரகாசம் ஓங்கும்படியாகச்

செய்யவேண்டும். இப்போது பூர்ண யோக்யதை உள்ள வித்வான்கள், சாஸ்த்ரஜ்ஞர்கள், பழைய கலைகள் தெரிந்தவர்கள். ஆயுர்வேத வைத்யர்கள், சில்பிகள், ரதகாரர்கள், பரத சாஸ்த்ர நிபுணர்கள் என்று ஏதோ கொஞ்சமாவது இல்லாமல் போகவில்லை. ஆனாலும் அரட்டைக்குத்தான் மதிப்புத் தருவது. தடபுடாவுக்குத் தான் மரியாதை செய்வது என்று லோகம் இருப்பதில், - கட்சியபிமானம் ஜாதியபிமானம் முதலியன இதிலும் தலைதூக்கியிருப்பதில் - ஸாதுக்களாக அடங்கியிருந்து கொண்டிருக்கிற, நிஜமான யோக்யதையுள்ள இந்தச் சில வித்வான்களுக்கு ஆதரவு கிடைப்பது ச்ரமமாயிருக்கிறது. சவடால்காரர்கள் ஆர்ப்பாட்டமாகத் தங்களுடைய அரைகுறை ஞானத்தில் வேதாந்த சாஸ்த்ரம் வரையில் நம்முடைய வித்யைகளைப் பற்றி எழுதுவது இன்று ஜகத் ப்ரஸித்தி பெறுகிறது. நல்ல ஞானமுள்ள விஷயஜ்ஞர்கள் ரொம்பவும் பரிச்ரமப்பட்டு ஆராய்ச்சி செய்து எடுத்துச் சொல்கிற விஷயங்களை ப்ரசாரம் செய்வதற்கு, ப்ரசுரம் செய்வதற்கு எவரும் முன்வருவதில்லை. இன்றைய நிலையில் தடபுடல்தான் வேண்டும், பூர்ண யோக்யதை அவச்யமில்லாத விஷயம் என்கிறதுபோல ஆகிக்கொண்டு வருகிறது. இதற்குக் காரணம், பொதுவாக வித்யா ஞானத்தின், சாஸ்த்ர அறிவின் லெவல் ரொம்பவும் இறங்கியிருப்பதுதான். மேற்கத்தியப் படிப்பிலே தேர்ந்தவர்கள் தற்போது நிறைய இருந்தாலும் ஸ்வதேச வித்யகைளில் பரிசயம் ஜனங்களுக்கு இல்லாததால்தான், இதிலே வாஸ்தவமான ஞானத்தை எடைபோட முடியாமல், படாடோபமான அரைகுறை ஞானத்தை ஆதரிப்பதாக இருக்கிறது. இது ஸரியே இல்லை.

ஆதரிப்பவர்கள் இல்லாவிட்டால் நல்ல வித்வத் உள்ளவர்களுக்கு மனஸு தளர்ந்து போய் அவர்கள் தங்கள் வித்வத்தைத் தங்களுடைய ஸந்ததிக்கோ, சிஷ்யர்களுக்கோ கற்றுக்கொடுக்காமலே போய்விடுவார்கள். நமக்கு வித்யைகள் நஷ்டமாகிப்போகும். இப்படித்தான் தற்போதே நேர்ந்திருக்கிறது. இது மேலும் இப்படியே போய்க்கொண்டிருப்பதற்கு விடப்படாது என்பதற்காகத்தான் இவ்வளவு சொல்வதும்.

*ஸ்தாபனம்*

## நேரில் கண்ட ஆதர்ச வித்வான்கள்

இம்மாதிரி, பேர், புகழ், பணம், ஆதரவு எதையும் எதிர்பார்க்காமல் அநேக குடும்பங்களில் வித்யைகளுக்கே தங்களை அர்ப்பணித்துக்கொண்டு வருபவர்களையும் நான் ஒன்று, இரண்டு இடத்தில் பார்த்திருக்கிறேன். நான் எத்தனையோ ஊர் சுற்றி எவ்வளவோ பார்த்திருப்பதில் இப்படியும் பார்த்தது எனக்குச் சொல்லி முடியாத ஸந்தோஷமாயிருந்தது.

இவற்றில் ஒன்று எங்கே எப்போது என்றால் 1927-28 வருஷங்களில் மலையாள தேசத்தில் சுற்றிக் கொண்டிருந்தேன். அங்கே திருவஞ்சிக்களம் என்று ஒரு ஸ்தலம். (திரு அஞ்சைக்களம் என்பதே ஸரியான பெயர்.) பழைய காலத்தில் அதுதான் மலையாள தேசத்துக்குத் தலைநகரமாயிருந்தது. பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவரான குலசேகரப் பெருமாள், அறுபத்தி மூன்று நாயன்மார்களில் ஒருவரான சேரமான் பெருமாள் (இரண்டு பேரிலும் 'பெருமாள்' இருக்கிறது.) ஆகிய ராஜ - பக்தர்கள் இருவரும் திருவஞ்சிக்களத்திலிருந்துதான் ஆட்சி நடத்தியிருக்கிறார்கள். தேவாரத்தால் போற்றப்பட்டுப் 'பாடல் பெற்ற ஸ்தலம்' என்று கூறப்படுகிற க்ஷேத்ரங்களில் "ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு" என்பதாக மலையாளத்திலிருக்கும் க்ஷேத்ரம் இதுதான். இதே மலையாள தேசத்தில் (ஆழ்வார்களின் பாசுரங்களைப் பெற்றவையான) நூற்றியெட்டு திவ்ய தேசங்களில் பதின்மூன்று இருக்கின்றன. திருவஞ்சிக்களத்துக்குப் பக்கத்தில் ப்ரஸித்தமான பகவதி க்ஷேத்ரம் ஒன்று இருக்கிறது. கொடுங்கலூர் என்று பெயர். வெள்ளைக்காரர்கள் அதைத்தான் 'ரோங்கனூர்' என்று ஆக்கியிருக்கிறார்கள் அந்த ஊரிலும் அதைச் சுற்றியுள்ள சில ஊர்களிலுந்தான் நான் சொன்னபடி அநேக வித்வான்கள் வெளியுலகத்தின் ஆதரவைப்பற்றி நினைக்காமல் அநேக சாஸ்த்ரங்களை அப்யஸித்துக் கொண்டிருப்பது.

கொடுங்கலூரிலும், இந்தச் சுற்றுப்புற ஊர்கள்

ஒவ்வொன்றிலும் ராஜா என்று ஒருத்தர் இருக்கிறார்.

மலையாளத்திலேயே பொதுவாக ராஜாக்கள் அதிகம். அங்கே பெரும்பாலும் "மருமக்கத் தாயமுறை" என்ற முறைப்படியே ராஜ்யமோ, மற்ற ஸொத்தோ அடுத்த தலைமுறைக்குப் போய்க் கொண்டிருந்தது. அதாவது அப்பா - பிள்ளை என்று பிதுரார்ஜிதமாக மற்ற இடங்களிலெல்லாம் ஸொத்து, ராஜ்யம் ஆகியவை போகின்றனவென்றால், மலையாளத்தில் மட்டும் அம்மா வழியில் மாதுரார்ஜிதமாகப் போவதாகவும் இருந்தன. ஆனாலும் அம்மா என்றால் அவள் ஸ்த்ரீ. அவள் எப்படி ஸொத்துப் பரிபாலனம் செய்வாள்? அதனால் அவளுடைய அண்ணா - தம்பிக்கு ஸொத்துப் போகும். ஆனால் இந்த அண்ணாவோ தம்பியோ கண்ணை மூடுகிறபோது தங்கள் பிள்ளைக்கு (ஸொத்தை) எழுதிவைக்க முடியாது. அந்த ஸஹோதரியின் பெண்ணுக்குத்தான் ஸொத்துப் போகும். முன்னே சொன்ன மாதிரியே அதை இந்தப் பெண்ணுடைய ஸஹோதரன்தான் பரிபாலனம் செய்வான். இவன் இதற்கு முன் ஸொத்தை நிர்வஹித்தவனுக்கு மருமான் (மருமகன்) தானே? இப்படி மாமா - மருமகன் என்று ஸொத்து நிர்வாஹம் போவதாலேயே இதற்கு "மருமக்கத் தாயமுறை" என்று பெயர். "தாய" என்றால் தாயார் ஸம்பந்தப்பட்டது என்று அர்த்தமில்லை. Taaya இல்லை, Daaya 'தாயம்' என்பது ஸம்ஸ்க்ருத வார்த்தை. அதற்கு 'ஸொத்தின் பாகம்' என்று அர்த்தம். இப்படி பிதுரார்ஜிதத்தில் பங்கு உடையவர்களுக்குத்தான் "தாயாதி" என்று பேர்.

கொடுங்கலூர்ப் பகுதியில் இருந்த அநேக ராஜாக்கள் இவ்வாறு மருமக்கத் தாயமுறையில் ராஜாவாக இருந்தவர்கள். பேர்தான் ராஜா. நாம் 'மிடில் - க்ளாஸ்' (மத்யதர வகுப்பினர்) என்று சொல்பவர்களைவிடவும் அந்த ராஜாக்களின் வருமானம் ஸ்வல்பமாகவே இருக்கும். நம் ஊரில் பரம ஏழைக்குத்தான் கஞ்சி ஆஹாரமென்றால், அங்கே இந்த ராஜாக்களின் முக்ய ஆஹாரமே கஞ்சிதான்! நம் ஊரில் கஞ்சி சாப்பிடுகிற கலயம், கப்பரை என்று ஏழை மண்ணிலோ, சுரைக் குடக்கையிலோ ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறானென்றால், அந்த ராஜாக்களோ இந்தக் கலயம் - கப்பரைகூட வைத்துக்கொள்வதில்லை. அந்த ப்ரதேசங்களில் பலாமரம் செழிப்பாக வளரும். அந்தப் பலா

இலைகள்தான் இந்த ராஜாக்களுக்குப் பாத்திரம் பொருளாதார சூழ்நிலை இப்படியிருந்தாலும் வித்வத்திலே அவர்கள் அத்தனை பேரும், அவர்களைச் சேர்ந்தவர்களுங் கூட, ஆச்சர்யப்படும்படியான தேர்ச்சி பெற்றிருந்தார்கள். புருஷாள் மட்டுமின்றி ஸ்த்ரீகளும் இப்படியே ஏதாவதொரு சாஸ்த்ரத்தில் நல்ல யோக்யதை ஸம்பாதித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். இவர்களாக வெளியிலே ப்ராபல்யத்துக்கு ப்ரயாஸைப் படாவிட்டாலும், தானாகவே இவர்களில் ரொம்பவும் தேர்ச்சி பெற்றவர்களில் சிலர் பெயர் வெளியில் பரவியிருக்கிறது. இப்படி ஒரு ராஜா மஹாமஹோ பாத்யாயா பட்டம்கூட வெள்ளைக்கார ராஜாங்கத்திடமிருந்து பெற்றிருக்கிறார். பெயரளவில் ராஜாக்களாக இருந்துகொண்டு கஞ்சியைக் குடித்துக் காலங்கழிப்பவர்களாக நம்முடைய வேத சாஸ்த்ரங்களையும் மற்ற பூர்விகக் கலைகளையும் வ்ருத்தி பண்ணிக்கொண்டு வந்த இவர்களை வித்வத் ஸமூஹம் முழுதும் 'ஐடியலாக'க் கொள்ளவேண்டும்.

மலையாளத்தில் நான் வித்வத் - ஊரைப் பார்த்தது (ஆயிரத்துத் தொள்ளாயிரத்து) முப்பதுக்கு முந்தி. இதே மாதிரி இன்னொன்று நான் பார்த்து அப்படியும் ஏறக்குறைய நாற்பது வருஷத்துக்கு அப்புறம். அது மலையாளத்தில் இது தெலுங்கு தேசத்தில் அப்போது பார்த்தது வித்வத் - ஊர். இப்போது பார்த்தது அப்படியே ஒரு ஊர் முழுக்க இல்லை, இது வித்வத் - குடும்பம்தான். ஆனாலும் அந்தக் குடும்பமே ரொம்பப் பெரிசாக இருந்ததால், "சாஸ்த்ரங்களிலேயே அத்தனை பேரும் ஈடுபட்டிருப்பதாக இப்படியும் ஒரு குடும்பமா?" என்று ஆச்சர்யப்படும்படியாகவும், ஸந்தோஷப்படும்படியாகவும் இருந்தது.

"ஹரி ஸோதருலு" என்று அவர்களைச் சொல்லுகிறார்கள். தெனாலி கிட்டேயுள்ள ஈப்பூரைச் சேர்ந்த அண்ணா தம்பிகள் ஐந்து பேர். நான் அவர்களைப் பார்த்தது பெஜவாடா (விஜயவாடா)வில் அவர்களுக்கு உள்ள வீட்டில். பெரியவர் பெயர் ஹரி வேங்கடஸுப்பையா. அவருக்கு நாலு தம்பிகள். அஞ்சு பேரும் ப்ராசீனமான முறையில் ஒவ்வொரு சாஸ்த்ரம் படித்து நல்ல வித்வத்தோடு இருக்கிறார்கள். வேதம், வேதபாஷ்யம், ஸ்ம்ருதிகள், புராணம் என்று ஒவ்வொன்றில் ஒருத்தர் ஸ்பெஷலைஸ் பண்ணியிருக்கிறார்.

இதெல்லாவற்றையும் ஒன்றுக்கொன்று சேர்த்துத் தொகுத்துப் புஸ்தகம் போட்டிருக்கிறார்கள். அதுகூடப் பெரிசில்லை. தங்களுக்கு அடுத்த தலைமுறையிலும் இந்த வித்யா ஸம்பத் வீணாகிவிடாமல் தங்களுடைய பசங்களுக்கும் நன்றாக சாஸ்த்ராப்யாஸம் கொடுத்திருக்கிறார்கள். அதைத்தான் நான் பெரிசாக நினைக்கிறேன். தங்களகத்துக் குழந்தைகளுக்கு அஞ்சு வயஸு ஆச்சோ இல்லியோ ஸம்ஸ்க்ருத பாடம் ஆரம்பித்துவிடுகிறார்கள். பாடம் என்று புஸ்தகத்தோடு கட்டிப்போடாமல் ஸரளமாக ஸம்ஸ்க்ருதத்திலேயே பேசுவதற்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். ஏழெட்டு வயஸு வாண்டுகள் பளிச்சுப் பளிச்சென்று ஸம்ஸ்க்ருதத்தில் பதில் சொல்வதைக் கேட்க ஆனந்தமாயிருந்தது.

பூர்வகாலத்தில் 'அசேஷ வித்வத்ஜனங்கள்' என்னும்படியாக ஊர் பூராவும், பெண்டுகள்கூட பாண்டித்யத்தோடு இருந்தார்கள். சாணி தெளிக்கிறவள் ஸம்ஸ்க்ருதத்தில் போடு போடு என்று போடுவதைக் கேட்டே, வாதத்திற்கு வந்த வெளியூர் வித்வான் கம்பி நீட்டிவிட்டார், கிளிப்பிள்ளைகள் கூட தங்களுக்குள் பெரிய தர்க்க சாஸ்த்ரவாதங்கள் பண்ணிக்கொண்டிருந்தன - என்றெல்லாம் கதைகளில் பாக்கிறோம், கேள்விப்படுகிறோம். அதற்கு நம் காலததிலும் ஏதோ ஒன்றிரண்டு இடங்களில் துளியாவது 'ஸாம்பிள்' மாதிரிப் பார்க்க முடிந்தது.

வித்வான்கள் வித்யையை ஈச்வரோபாஸனையாக, அதாவது வேறு ப்ரதிப்ரயோஜனம் எதிர்பாராமல், பேணி வளர்த்துக்கொள்ள ப்ரயத்னம் பட்டால் எப்படியாவது அவை உயிரைப் பிடித்துக்கொண்டு வ்ருத்தியாகிவிடும். அவர்களும் உயிரைப் பிடித்துக்கொண்டு காலம் தள்ள ஈச்வரன் கைகாட்டாமல் போகமாட்டான்.

இப்படி பலர் இருந்துமிருக்கிறார்கள். பரமபக்தரான த்யாகையர்வாள் போன்றவர்கள்தான் ராஜ ஸம்பாவனை, பேர், புகழ் முதலியன வேண்டாம் என்று ஒதுங்கி, ஒதுங்கி அவர்கள் பாட்டுக்கு இருந்தார்களென்றில்லை.

மஹாவித்வான்களிலுங்கூடப் பணவசதி, பாராட்டு, ப்ராபல்யம் வேண்டாம் என்றே இருந்தவர்களுண்டு.

வித்வானாக இருக்கிறவர் பணத்தைத் தள்ளுவதைவிடப்

பாராட்டைத் தள்ளுவது ச்ரமம். தனக்கு நல்லபுத்தி இருக்கிறது, நிறையத் தெரிந்து கொண்டிருக்கிறோம், ஆராய்ச்சி செய்து பெரிசாக எழுதியிருக்கிறோமென்றால் உடனே இதை லோகம் ரெகக்னைஸ்' செய்யவேண்டும், தன்னைப் புகழவேண்டும், மரியாதை பண்ண வேண்டும் என்ற எண்ணங்களும் ஏற்பட்டுவிடுகின்றன. ஒரேயடியாக வித்யா கர்வம் ஏறி, 'இந்த உலகத்துக்கு நம்மைப் புரிந்து கொள்ள சக்தி உண்டா? நம்மைப் பாராட்ட அதற்கு யோக்யதை உண்டா?' என்று நினைக்கிற அளவுக்கும் சில வித்வான்கள் போய்விடுகிறார்கள். ஆதலால் அவர்கள் வித்வத்துக்காகப் பாடுபடுகிறது போலவே, அல்லது அதை விடவும் விநய ஸம்பன்னர்களாவதற்கும் பாடுபட வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**வருங்காலத்துக்காக**

வித்வான்கள் பணத்துக்காகப் பறக்கப்படாது, ப்ராபல்யத்துக்காகப் பறக்கப்படாது என்று நான் சொன்னதால் அவர்களைக் காயப் போடவேண்டும், எந்த ரெகக்னிஷனும் இல்லாமல் மூலையில் தள்ளி வைக்க வேண்டுமென்று மற்ற ஜனங்கள் அர்த்தம் பண்ணிக்கொண்டவிடக் கூடாது. பரம த்யாகிகளாக இருந்தாவது வித்யகைளைப் பேண வேண்டுமென்பது அவர்களுடைய லக்ஷ்யமாக இருக்கவேண்டுமென்பது போலவே, அவரவரும் ஏதோ கொஞ்சமாவது பணம், பொழுது முதலியவற்றை த்யாகம் செய்து நம்முடைய தேசத்தின் இந்த அறிவுப் பிதுரார்ஜிதம் நசித்துப்போகாமல் காப்பாற்ற வேண்டுமென்பது மற்றவர்களுடைய லக்ஷ்யமாயிருக்க வேண்டும். அதாவது, இப்போதுள்ள வித்வான்களையும் மற்ற பண்டைய கலைகளை அறிந்தவர்களையும் தேடிக் கண்டுபிடித்து பொருளாதார ரீதியிலும், ஸமூஹ கௌரவத்திலும் அவர்களுக்கு உயர்வு தந்து, அவர்களுக்கு சிஷ்ய பரம்பரை உண்டாகி இந்த வித்யைகள் வருங்காலத்துக்கும்

போகும்படியாகப் பண்ணவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

## உயிரோடு ஒட்டிவைக்க வேண்டும்

இப்போதும் நம் பண்டைய சாஸ்த்ரங்களில் ரிஸர்ச் என்பது கொஞ்சம் நடக்கத்தான் நடக்கிறது. ஆனால் அது 'அகாடெமிக்'காக, ஸமூஹ வாழ்க்கையோடு ஒட்டாமல் நடக்கிறது. 'பேப்பர்' படிப்பது, 'தீஸிஸ்' எழுதுவது, 'ஸெமினார்' 'ஸிம்போஷியம்' என்று நடத்துவது, ஸ்காலர்கள் என்று பொறுக்கி எடுத்த சிலபேர் மட்டும் 'டிஸ்கஸ்' பண்ணுவது. அப்புறம் நூறு இருநூறு என்று விலை வைத்துப் புஸ்தகமாகப் போட்டு லைப்ரரிகளில் வைத்து அந்தப் புஸ்தகங்களில் சிலந்தி கூடுகூட்டுவது, புஸ்தகம் ரிலீஸ் ஆகிறபோது விழா நடத்தி மந்த்ரிகளும் ஜட்ஜ்களும் நம்முடைய கல்ச்சரைப் பற்றி லெக்சர் செய்வது, பத்ரிகைகளில் பெரிசாக புஸ்தக விமர்சனம் செய்வது, அப்புறம் கொஞ்சம் காலத்தில் பேசியவர்களும் எழுதியவர்களுமே அடியோடு மறந்துபோய் விடுவது - என்பதாகத்தான் இப்போது நடந்துவருகிறது. இப்போதைய 'ஸெட்-அப்'பில் நம்முடைய பண்டைய வித்யைகளுக்காகவும் ச்ரமம் எடுத்துக்கொண்டு இப்படி ஆராய்ச்சி, விவாத மஹாநாடு, நூல் வெளியீடு என்றெல்லாம் நடத்துகிறார்களே என்று அவர்களைப் பாராட்ட வேண்டுமென்றாலும் (அவர்கள்) செய்வது "நிறக்காமல்", ஸமூஹத்தில் வேர் பிடிக்காமல் கொஞ்ச காலத்திலேயே எடுபட்டுப் போய்விடுவதைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. இப்படியில்லாமல் இவற்றை ஸமூஹத்தின் உயிரோடு ஒட்டி வைக்கவேண்டும். அதற்கு இவற்றிலேயே தங்களுடைய உயிரும் வாழ்க்கையும் கலந்து போய்விடும்படியாகப் பண்ணிக்கொள்ளும் குரு - சிஷ்ய பரம்பரை ஏற்பட்டால்தான் முடியும்.

நம்முடைய சாஸ்த்ரங்களை நிஜமாகவே காப்பாற்ற வேண்டுமென்றால் அவற்றிலுள்ள விஷயங்களை மாத்திரம் புஸ்தகம் போட்டு லைப்ரரியில் வைப்பதில் ப்ரயோஜனமில்லை. அப்படியே இந்தப் புஸ்தகங்களை யாராவது படித்துத் தெரிந்துகொண்டு, இப்போது நடக்கிற ரீதியிலேயே மேலும் ரிஸர்ச் பண்ணி, மேலும் புஸ்தகங்கள் போடுவதாக வைத்துக் கொண்டாலும் அதனால் நிலைத்து நிற்கிறதாகப் பயன் எதுவும் விளையாது. புஸ்தகப் படிப்பால் பெறுகிற வெறும் விஷயஞானமென்பது எத்தனையோ தப்புக்களுக்கும், விபரீதத்துக்குமேகூட இடம் தரலாம். அல்லது வீணாகப் போய்விடலாம். நம் தேசாசாரப்படி உருவான இவ்விஷயங்களை நம்முடைய தேசாரத்தின்படியே ஏற்பட்டுள்ள சாஸ்த்ரிய முறைப்படி, மாணவனுக்கு விநயம், புலனடக்கம், மற்ற ஒழுக்கங்கள், உயர்குணங்கள், ஈச்வரபக்தி முதலியவற்றோடு கலந்து கொடுத்தால்தான் அவனுக்கும் ச்ரேயஸ் ஏற்பட்டு, அவனால் உலகுக்கும் க்ஷேமம் உண்டாகும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**எல்லாத் துறையிலும் குருகுல வாஸம்**

இதற்கு ரொம்பவும் தலைசிறந்த வழி குருகுலக் கல்வி. உண்மையான குருகுல முறையைக் கடைப்பிடித்து, குருவுடைய அறிவோடு அருளையும் சேர்த்து வாங்கிக் கொண்டு வித்யாப்யாஸம் பெற்றால் எல்லாக் குறைபாடுகளும் போய்விடும். ஸெக்யுலர் எஜுகேஷன் (லௌகிகக் கல்வி) கூட இம்மாதிரி ரிடயரான ஆசிரியர்களிடமிருந்தும், ப்ரொஃபஸர்களிடமிருந்தும் அவர்களோடேயே வஸித்து அவர்களுக்குத் தொண்டு செய்துகொண்டே கற்று, ப்ரைவேட்டாகப் பரீக்ஷை எழுத இடமிருந்தால் அப்படிச் செய்வது ரொம்பவும் ச்லாக்யம். 'பிள்ளையாண்டான் ஒரு வருஷம் 'கோட்' அடித்துவிட்டதாக நினைத்துக் கொண்டு

ஒரு வருஷமாவது உங்கள் குழந்தைகளை குருகுலவாஸம் செய்யவிட்டு, அதற்கான உதவியை குருவுக்குப் பண்ணுங்கள், அல்லது கோடை விடுமுறை இரண்டு மாஸத்திலாவது இதை நடத்திப் பார்க்க வழி தேடுங்கள், என்றெல்லாம் அடிக்கடி நானும் சங்கு ஊதிக்கொண்டே இருக்கிறேன். விடிகிற போது விடியட்டும்.

குருகுலக் கல்விக்கு அடுத்தபடியாக, next best என்கிறார்களே, அப்படி வருவது சாஸ்த்ரோக்தமான முறையில், குருமார்கள் கட்டுப்பாட்டின்கீழ் பல பசங்கள் ரெஸிடென்ஷியலாக (அங்கேயே வஸித்துக்கொண்டு) படிக்கிற வித்யாசாலைகள்.

இரண்டில் ஒன்று ஏற்பட்டு வ்ருத்தியாவதற்கு உங்களைத் தூண்டி விடுவதற்காகத்தான் இத்தனை நேரம் குருகுலம் பற்றியும், கடிகாஸ்தானம் பற்றியும் சொன்னேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஸ்தாபனம்*

**அம்பாள் அருள்வாளாக**

நான் எத்தனை சொன்னாலும், அதில் கொஞ்சமாவது உங்கள் மனஸிலே பட அம்பாள்தான் அநுக்ரஹம் செய்யவேண்டும்.

ஸர்வஜ்ஞனான ஈச்வரனோடு கலந்திருக்கிற அம்பாள்தான் சோபைகளிலெல்லாம் பரம சோபையோடு ப்ரகாசிப்பதான வித்யையின் ஸ்வரூபம் என்று ஆசார்யாள் கேநோபநிஷத் பாஷ்யத்தில் சொல்கிறார். அவள்தான் நம் எல்லார் மனஸிலும் புகுந்து நம்முடைய புராதன வித்யைகளை ரக்ஷிப்பதில் நம்மைச் செலுத்தவேண்டும். வித்தம்தான் (பணம்தான்) குறி என்று நம்முடைய மனப்பான்மையை மாற்றி வித்யையே லக்ஷ்யம் என்ற ஈடுபாட்டை அவளுடைய அநுக்ரஹம்தான் உண்டாக்கித் தரவேண்டும். இதுவரை யுகாந்தரமாக வித்யா ப்ரகாசம் விளங்கி வந்த இந்த தேசத்தில் இருள் மூடுமாறு விடப்படாது. வித்யைதான் பெரிய ப்ரகாசம்

என்று சொன்ன ஆசார்யாள், 'உமா பரமேச்வரி மாத்ரம்தான் இப்படி வித்யையால் ஜ்வலித்துக்கொண்டு ஹைமவதி என்று பெயர் பெற்றாள் என்று இல்லை, எவன் வித்யையைப் பயின்று வித்வானாலும் அந்த வித்யையே அவனுக்கு ஒரு தேஜஸ் மெருகைக் கொடுத்துவிடும்' என்று முடித்திருக்கிறார்.

"ஹைமவதி" என்று இந்த இடத்தில் உபநிஷத்திலே அம்பாளுக்குப் பெயர் சொல்லியிருப்பதற்கு இரண்டு விதமாக அர்த்தம் பண்ணலாம். ஒன்று, 'ஹிமம்' என்பது 'பனி' ஆதலால் பனி மலையான 'ஹிமவா'னுக்குப் பிறந்த இவள் 'ஹைமவதி' என்பது. 'ஹிம'த்தைக் குறித்தது 'ஹைமம்'- 'சிவ'த்தைக் குறித்தது 'சைவம்' என்கிறாற்போல. இங்கே 'இ'காரம் 'ஐ'காரமாகிறது. இதே மாதிரி ஸம்ஸ்க்ருத இலக்கணத்தில் 'ஏ'காரமாக ஆரம்பிக்கும் வார்த்தையிலிருந்து உண்டாகிற deriative -களும் 'ஐ'ஆகிவிடும். "ஏக"த்திலிருந்து "ஐக்யம்", "கேகயன்" பெண் "கைகேயி". இந்த ரூல்படி 'ஹிமம்' போலவே 'ஹேமம்' என்ற சொல்லின் அடியாகவும் 'ஹைமவதி'ப் பெயர் ஏற்படும். ஹேமம் என்றால் தங்கம். தங்கமாக ஜ்வலிப்பவள் ஹைமவதி. 'பஹுசோபை உள்ளவள்' என்று உபநிஷத்தே இங்கு அம்பாளைக் குறிப்பதால் ஸ்வர்ண காந்தியாய் ஜ்வலிப்பவள் என்று பொருள் கொள்வதும் ரொம்பப் பொருத்தந்தான். ஆசார்யாள் இரண்டு அர்த்தங்களையும் ஒப்புக்கொண்டு, இந்த சோபைக்கு, ஜ்வலிப்புக்கு அவள் வித்யா ரூபிணியாயிருப்பதே காரணம் என்கிறார். அப்புறம் தம் வாக்ய பாஷ்யத்தை முடிக்கிற இடத்தில், "வித்யா வானாக (வித்வானாக) ஒருவன் இருந்தால், அவன் அங்கலக்ஷணப்படி குரூபியாயிருந்தாலும்கூட பஹுசோபையுடனேப்ரகாசிக்கிறான். விரூபோ (அ)பி வித்யாவாந் பஹு சோபதே" என்கிறார். ஸதாசாரத்தோடு படிப்பாளிகளாக இருக்கப்பட்டவர்களைப் பார்த்த மாத்திரத்தில், "முகத்திலேயே என்ன அறிவுக் களை, என்ன தேஜஸ்!" என்று சொல்ல முடிகிறது. அதேபோல், "மூஞ்சியைப் பார்த்தாலே சோதாக் களை" என்றும் சொல்கிறோம். முன்னே சொன்ன ஸைகிள் பெடல் உதாரணப்படி நம் பூர்விகர்களின் வித்யா ப்ரகாசத்தின் பலத்தில் இப்போதும் நம்மில் சிலர் முகத்திலாவது இந்தத் தேஜஸ் இருக்கிறது.

ஸைகிள் நின்று போகாமல் அவள் க்ருபைதான் ஓட்டுவித்து, எல்லோர் முகத்திலும் சோபையை உண்டாக்கி, தேசம் முழுதிலும் அறிவொளி பரவச்செய்ய வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*பொது வாழ்க்கை*

**உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை**

**வேதத்திலும் ஜனநாயக அம்சம்**

பழைய காலத்து ஆட்சி முறையைப் பற்றிப் பொதுவாக நமக்கு என்ன அபிப்ராயமென்றால், அதிலே பொது ஜனங்களுக்குக் கொஞ்சங்கூடப் பங்கே இல்லாமல் ராஜாவுக்கே எல்லா அதிகாரத்தையும் விட்டிருந்தது என்பதுதான். ராஜா என்றால் அந்த ஒரு ஆளைமட்டும் நினைக்காமல் அவனுடைய தர்பாரிலுள்ள ப்ரமுகர்களையும் குறிப்பாகக் கொள்கிறோம். ராஜா முக்யமாகவும் மற்றும் அவனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், மந்திரி - ப்ரதானி ஆகியவர்களும் முடிவுகள் எடுத்து அதிகாரிகள் மூலம் அவற்றை அமல்படுத்தியதுதான் பழங்கால ஆட்சிமுறை என்று நினைக்கிறோம். வெள்ளைக்கார சரித்ர ஆசிரியர்கள் ஆராய்ச்சி என்ற பெயரில் தந்த்ரமாக நம்மை வளைத்துப் பழக்கப்படுத்தியிருப்பதில் சிலபேர் இன்னொன்றும் நினைக்கிறோம். அதாவது இந்த ராஜாக்களைப் பிராம்மணர்கள் தங்கள் கையில் போட்டுக்கொண்டு, தங்கள் இஷ்டப்படி, அதாவது தாங்களே உசத்தி என்று கொட்டம் அடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வசதியாகவே எல்லாம் செய்துகொண்டார்கள் என்பதாகவும் ஒரு எண்ணம் இருந்துவருகிறது.

பொதுஜனங்களுக்கும் ஆட்சியிலே பங்கு தருகிற ஜன நாயகம் என்பது மேல்நாட்டினர் சொல்லிக் கொடுத்துத்தான் நமக்குத் தெரியவந்ததென்று பொது அபிப்ராயம் இருக்கிறது.

ஆனால் வாஸ்தவத்திலோ வேதகாலத்திலிருந்தே ஸகல

ஜனங்களின் அபிப்ராயமும் ப்ரதிபலிப்பதற்கு இடம் தந்துதான் ராஜ்ய நிர்வாஹம் நடந்து வந்திருக்கிறது. வேதத்திலே "ஸபாஸ, "ஸமிதி", "விததா", என்று இரண்டு, மூன்று அமைப்புக்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இவற்றில் அறிஞர்களாக இருக்கப்பட்ட ஜனங்கள் கூடி ஆட்சி விஷயங்களைக் கலந்தாலோசித்து முடிவுகள் எடுத்ததாகவும் அவற்றுக்கு இணங்கவே அரசன் பரிபாலனம் செய்ததாகவும் தெரிகிறது. வெள்ளைக்கார சரித்திர ஆசிரியர்கள்கூட இவை பிராம்மணர்களால் மட்டுமோ, அல்லது பிராம்மண - க்ஷத்ரியர்களால் மட்டுமோ அமைந்ததாகச் சொல்லாமல், ஸகல ஸமூஹங்களுக்கும் ப்ரதிநிதித்வம் தருகிற ரீதியில்தான் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது என்று சொல்கிறார்கள்.

'நமோ நம' என்று திரும்பத் திரும்ப வருவதாக "ருத்ரம்" என்று அபிஷேக காலத்தில் ஒரு ஸ்தோத்ரம் சொல்லப்படுகிறதே, அது வேதத்திலேயே வருவது -யஜுர் வேதத்தின் தைத்திரீய ஸம்ஹிதையில் வருவது. அதிலே இந்த லோகத்திலிருக்கப்பட்ட எல்லா சேதன, அசேதனங்களையும் சொல்லி, அவை ஒவ்வொன்றுக்கும் 'நமோ நம' என்று நமஸ்காரம் பண்ணப்படுகிறது.

எதனாலென்றால் அது ஒவ்வொன்றிலும் விச்வவ்யாபியான பரமாத்மா நிறைந்திருப்பதால். எல்லா சிவஸ்வரூபம் என்று இப்படிச் சொல்லிக்கொண்டே போகிறபோது, "ஸபைகளுக்கெல்லாம் நமஸ்காரம், ஸபாபதிகளுக்கெல்லாம் நமஸ்காரம்" என்று "நமோ நம" சொல்லியிருக்கிறது. ராஜாங்க கார்யங்களுக்காக ஏற்பட்ட மக்களுடைய ஸபையும், அதற்கு அக்ராஸனராக இருந்த ஸபாபதியுந்தான் இங்கே குறிப்பிடப்படுவது.

நம் காலத்தில் அநேக விதமான ஸபைகளைச் சொல்கிறோம் - அவற்றில் ஸங்கீத ஸபை முக்யமாயிருக்கிறது. "ஸபாவுக்குப் போறேன்" என்றால் கச்சேரிக்குப் போகிறான் என்றே அர்த்தம் செய்து கொள்கிறோம். ஆனால் வேத காலத்தில் அடைமொழி கொடுக்காமல் வெறுமே ஸபை என்று சொன்னால், அது இந்தக் காலத்தில் நாம் "சட்ட ஸபை" என்று அடைமொழி கொடுத்துச் சொல்கிறோமே, அந்த மாதிரியான ஒரு அமைப்புத்தான். 'ஸபை' என்பது தமிழில் 'அவை' என்று

ஆயிற்று.

ஜனங்களுக்கு நல்லது பண்ணுவதற்காகப் பல அறிஞர்கள் ஒன்றுகூடி ஒரு ஸபை ஏற்படுத்தினால் அது ஈச்வர ஸ்வரூபமே என்று மதித்து "ருத்ர"த்தில் அதற்கு நமஸ்காரம் தெரிவித்திருக்கிறது.

பரமேச்வரன் அர்ச்சாரூபத்தில் (விக்ரஹ உருவில்) பரிபூர்ணமாக விளங்கிக் கொண்டிருக்கிற சிதம்பரத்தில் அவருடைய ஸந்நிதிக்கு "ஸபை" என்றுதான் பெயர். அது "கனக ஸபை". அது தவிர, தாம் ஆடிக்கொண்டே லோகங்களையெல்லாம் ஆட்டி வைத்துக்கொண்டு ஆட்சி நடத்துகிற அநத் த்ரிபுவன சக்ரவர்த்திக்கு இன்னும் நாலு ஸபை - ரஜத ஸபை என்று வெள்ளியில் ஒன்று, மதுரையில் இருப்பது, ரத்ன ஸபை என்று திருவாலங்காட்டில் இருப்பது, தாம்ர ஸபை என்று திருநெல்வேலியில் இருப்பது, சித்ர ஸபை என்று சிற்பங்களே இல்லாமல் சித்ரங்கள் மட்டும் நிறைந்திருப்பதாகத் திருக்குற்றாலத்தில் இருப்பது - என்றிப்படி மொத்தம் பஞ்ச ஸபைகள். இந்த ஸபைகளுக்கு preside பண்ணும் 'ஸ்பீக்க'ராக, ஸபாபதியாக அவர் இருக்கிறார்! இல்லை, ஸ்பீக்கர் (பேசுபவர்) இல்லை, டான்ஸர் (ஆடுபவர்)! அவரை நாம் 'நடராஜா' என்றே பொதுவில் சொல்கிறோமானாலும், தீக்ஷிதர்கள் சிதம்பர ஆலயத்தைக் குறிப்பிட்டு எழுதும்போது "ஸபாநாயகர் கோயில்" என்றுதான் போடுவது வழக்கம். ஈச்வரன் ஸபாநாயகர் அல்லது ஸபாபதி மட்டுமில்லை, ஸபையுமே அவன்தான் என்று நமக்குக் காண்பித்துக் கொடுக்கவே வேத ஸ்துதியான "ஸ்ரீ ருத்ர"த்தில் ஸபைக்கும் நமஸ்காரம் சொல்லியிருக்கிறது. Will of the people is the will of God", "மக்கள் தீர்ப்பு மஹேசன் தீர்ப்பே" என்பதெல்லாம் நம்மிடம் புதுசாக வந்து சேர்ந்திருக்கும் கொள்கைகள் இல்லை, ஆதிக்கு ஆதியான வேத காலத்திலிருந்து இந்த அபிப்ராயம் இருந்து வந்திருக்கிறது என்பதற்கு இது சான்று.

ராஜீய வ்யவஹாரங்களை ஆலோசித்து விவாதிக்கும் ஸபை அங்கத்தினர்களுக்கு நல்ல அறிவு, அதைப்போலவே உயர்ந்த சீலமான நடத்தை, 'பாயின்ட்'களை நன்றாக எடுத்துச் சொல்வதற்கு அவசியமான வாக்கு வன்மை ஆகிய மூன்றும் இருக்கவேண்டும் என்பதை வேதத்திலிருந்து

தெரிந்துகொள்கிறோம். இந்த மூன்றையும் வேண்டும் ப்ரார்த்தனா ரூபமான அநேக மந்த்ரங்கள் வேதத்தில் இருக்கின்றன. ரிஷிகள் புத்தியிலும் பெரியவர்கள், ஒழுக்கத்திலும் பெரியவர்களென்று நமக்குத் தெரியும். இவற்றோடு நல்லவாக்கிச் சக்தியும் பெற்றுத் தாங்கள் ஸபைகளில் அங்கம் வகிக்கவேண்டும், அதன் வழியாக அரசாட்சிக்கும் மக்கள் நலனுக்கும் உதவவேண்டும் என்று அவர்களில் சிலர் விரும்பியிருக்கிறார்கள். "(விததா என்கிற) ஸபையில் வன்மையாகப் பேசும் சக்தி எங்களுக்கு வேண்டும்" என்று ரிஷிகள் ப்ரார்த்திக்கும் மந்த்ரங்கள் இருக்கின்றன.

"ருத்ரம்" என்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படும் ஸ்துதி - ஸபையையும் ஸபாபதியையும் பற்றிச் சொல்வது - யஜுர் வேதத்தில் வருகிறது. ரிக்வேதத்திலிருந்தும் ஈச்வரபரமான ஐந்து ஸூக்தங்களைச் சேர்த்துப் "பஞ்சருத்ரம்" என்று சொல்வார்கள். அதிலேகூட ஒரு இடத்தில் இந்த ப்ரார்த்தனை வருகிறது. இப்படி புத்தி, குணம், வாக்கு மூன்றிலும் உயர்ந்தவனாக இருக்கப்பட்டவனையே "ஸபேயன்" அதாவது ஸபையில் மெம்பர்ஷிப் வஹிக்கத் தகுதி உள்ளவன் என்று சொல்லியிருக்கிறது. "ஸபேயன்" என்று ஒருத்தனைச் சொல்லிவிட்டால் போதும், அவன் குணஸம்பத்து, புத்திபலம், வாக்சக்தி மூன்றுமே உள்ளவன் என்று ஆகிவிடும். பிறப்பால் ஒருவன் ராஜாவாகிவிட்டால் போதாது, அவன் ஸபேயனாக இருக்கவேண்டும் என்று காட்டும் மந்த்ரங்கள் இருக்கின்றன.

மக்களுடைய நலனை ஆராய்ந்து, விவாதித்து முடிவுகள் எடுக்கவேண்டிய ஸபையைச் சேர்ந்தவர்கள் எப்படி ஒன்றுபட்டு செயலாற்றவேண்டும் என்பதை "ஸபேயர்"களுக்கு உபதேசிக்கும் ஒரு வேத ஸூக்தம் ரிக் வேதத்தின் முடிவிலே, பூர்த்தியாகும் இடத்தில் இருக்கிறது. "உலகத்துக்கே முதல் நூலாக இருக்கப்பட்ட வேதத்தில் இத்தனை அழகாகச் சொல்லியிருக்கிறதே! இதையே ஹி.ழி.-க்கு (ஐ.நா.ஸபைக்கு) motto-வாக (லக்ஷ்ய வாசகமாக) வைத்துவிடலாம்" என்று அறிஞர்கள் புகழ்கிறார்கள். "ஒன்று கூடுங்கள். ஒருவருக்கொருவர் திறந்து பேசி விவாதித்துக் கொள்ளுங்கள். லோக க்ஷேமம், மக்கள் நலன் ஒன்றே லக்ஷ்யம் என்பதில் உங்கள் எல்லாருடைய மனஸும் ஒத்துப் போகட்டும். ஒரே லக்ஷ்யத்துக்காக ஏக மனஸாகப்

பாடுபட்டுப் பரஸ்பரம் ஹ்ருதயம் கலந்து ஒன்றாகுங்கள் ஐகமத்யத்தால் (மன ஒற்றுமையால்) எல்லோரும் இன்புற்றிருக்க வழி காணுங்கள்" என்று அந்த ஸூக்தத்தில் உபதேசிக்கிறது.

பல ஸமூஹத்தினரும் இம்மாதிர ஸபைகளில் ப்ரதிநிதித்வம் வஹித்துத்தான் நாட்டு நிர்வாஹம் நடந்திருக்கிறது. ப்ராம்மணப் புரோஹிதன் வைத்ததே சட்டமாயிருந்தது என்பது கொஞ்சங்கூட ஸரியில்லை. புரோஹிதனைப் போலவே க்ராமணி, ஸேநானி முதலான பலரையும் அரசாங்க கார்யங்களில் முக்யமானவர்களாகச் சொல்லியிருக்கிறது. க்ராமணி என்பவன் க்ராம வாழ்கையையும், அதாவது ஸிவில் வ்யவஹாரங்களையும், ஸேநானி என்பவன் மிலிடரி வ்யவஹாரங்களையும் கவனித்து வந்திருக்கிற அதிகாரிகளாகத் தெரிகிறது. ஸேநானி நிச்சயமாக பிராம்மணனில்லை, க்ஷத்ரியன்தான். 'க்ராமணி' என்று இப்போதும் உள்ள ஸமூஹமும் அப்ராம்மண ஜாதியாகத்தான் இருக்கிறது.

ஆதியிலேயே இப்படி இருப்பதற்கு இடம் இல்லாவிட்டால் பிற்பாடு அப்படி ஆகி இருக்க முடியாது.

('க்ராமணி' என்பதிலிருந்துதான் 'க்ராம மணியம்' என்பது வந்து, அப்புறம் மணியக்காரன் என்றே வார்த்தை ஏற்பட்டிருக்குமோ என்னவோ?) ராஜ பட்டாபிஷேகத்தைப் பற்றிய வேத மந்த்ரங்களைப் பார்த்தால் ஜன ஸமூஹத்தின் ஒவ்வொரு பிரிவினரும் அவனைத் தங்கள் அரசனாக ஏற்று ப்ரகடனம் செய்திருக்கிறார்களென்று தெரிகிறது. இதில் முடியரசோடு குடியரசும் ஒருவிதத்தில் கைகோத்துக் கொண்டு போகிறதென்று சொல்லலாம்.

ஜனநாயகத்தின் அம்சமாக நாம் ஆதிகாலத்திலிருந்தே பார்க்கிற இன்னொன்று, ஸகல ஸமூஹத்தினரும் சேர்ந்து பெரிய அளவில் ராஜ்யம் முழுதற்குமான கார்யங்களை கவனித்ததோடு மட்டுமில்லாமல், அந்தந்த ஜாதியினரும் ஸ்வதந்த்ரமாகத் தங்களுடைய கூட்டு வாழ்க்கையை நாட்டாண்மைகள் மூலம் நிர்வஹித்துக் கொண்டதாகும்.

'குலம்' என்பது ஒரு குடும்பத்தைக் குறித்த ஏற்பாடு, ராஷ்ட்ரம், ஜனபதம் என்கிறவை ஒரு ராஜ்யம் (ஜனபதம் என்றால் டவுனாக இல்லாத 'கன்ட்ரி' - க்ராமப்புறம் - என்றும் சொல்கிறார்கள்), இந்த இரண்டுக்கும் நடுவே 'ச்ரேணி' என்று ஒன்று. அது ஒவ்வொரு தொழில்காரர்கள் ஒன்றாகச்சேர்ந்த அமைப்பு. 'சேணியர்' என்று இப்போது நெசவுத் தொழிலில் உள்ளவர்களைச் சொல்வது 'ச்ரேணியர்' என்பதிலிருந்து வந்ததுதான். அவரவர் தொழிலை வைத்து guild-கள் என்பதுபோல் ஏற்பட்ட ச்ரேணிகளில் நெசவுத் தொழிற்காரர்கள் நன்றாகக் கட்டுக்கோப்புடன் தங்களையும் ஒரு ஸமூஹமாக நெய்துகொண்டு அதனால் ச்ரேணியர், சேணியர் என்றே சிறப்பாகப் பெயர் பெற்றிருக்கிறார்கள் போலிருக்கிறது.

ரொம்பவும் பூர்வகாலத்தில், அதாவது இன்றைக்கு நாகரிக உச்சியிலுள்ள மேல்நாட்டுக்காரர்களுக்கு நாகரிகம் என்றால் என்ன என்று தெரியாத காலத்திலேயே, நம்முடைய தேசத்தில் மக்கள் பலவிதங்களில் குடியரசு, ஜனநாயகம், self government (ஸ்வய ஆட்சி) முதலானவற்றின் அம்சங்களைப் பெற்றிருந்திருக்கிறார்களென்று காட்டுவதற்காக ஏதோ கொஞ்சம் சொன்னேன்.

அந்த நாளிலிருந்தே நம் நாட்டில் ப்ரஜை என்பவன் ஆளப்படுபவனாக மட்டுமில்லாமல் ஆட்சியிலும் தானே ஒரு பங்கு பெற்றிருந்தானென்று தெரிவிக்க நினைத்தேன்.

*பொது வாழ்க்கை*

## தகுதி தேவை

ஆனாலும் ராஜ்ய நிர்வாஹம் என்பது ரொம்பவும் பெரிய விஷயம், சிக்கலான விஷயம். ஒரு ராஜ்யத்தைக் கட்டி ஆளுவது, ஒரு பெரிய ஜனஸமூஹத்துக்குக் காப்புத்தருவது, அவர்களுக்காகச் சட்டம் பண்ணுவது, அந்தச் சட்டங்களை அவர்கள் பின்பற்றும்படியாகப் பண்ணுவது என்பதற்கெல்லாம் நிறையப் படிப்பறிவு, பகுத்தறிவு, கார்ய ஸாமர்த்யம், உலக அநுபவம் ஆகியவை இருந்தால்தான் முடியும். வீட்டை ஒழுங்காக நடத்துவதென்பதே கஷ்டமாயிருக்கிறது. ஒரு ராஜ்யத்தை நடத்துவதென்றால் சும்மாவா? ஆனதால், வீட்டை நடத்தவே ஸாமர்த்யம் போதாதவர்களாகத்தான் ஜனங்களில் ரொம்பப் பேர் இருக்கும்போது, நாட்டு நிர்வாஹத்திலும் அவர்களுக்கு நேராகப் பொறுப்புத் தந்தால்தான் என்ன ஆகும்?

அதனால் எல்லாரும் நேராக ராஜ்யப்பாரம் பண்ணுவது என்று இருக்க முடியாது. அதற்கான தகுதிகள் படைத்த சிலரைக் கொண்டுதான் ஆட்சி நடக்கவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*பொது வாழ்க்கை*

## தேசத் தலைமைக்கு அரசன்

ஆட்சி நடத்துபவர்களிடம் ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டும். எனவே கட்டுப்படுத்த ஒரு தலைவன் வேண்டும். ஆளப்படுகிறவர்களுக்கும், தங்களுடைய நாடு என்பது மண்ணும் மலையும் நதியுமாக முடிந்துபோகாமல், அதனிடம் அன்பு, பக்தி, விச்வாஸம் எல்லாம் உண்டாக்குவதாக அதன் ரூபகமான (உருவகமான) ஒரு உயிருள்ள பிடிப்புவேண்டும். இந்த இரண்டு உத்தேசங்களுக்காகவும் ஆட்சியின் தலைவராக, தேசத்தின் தலைவராக ஒருத்தர் இருக்க வேண்டியதாகிறது. ராஜா என்று ஒருத்தனை அப்படி

வைத்துக் கொண்டார்கள். பாரம்பர்யமாக இப்படிப்பட்ட ராஜாவை வைத்துக்கொண்டால்தான், குழந்தையாக அவன் பிறந்ததிலிருந்தே அந்தத் தலைமைப் பீடத்துக்கு வேண்டிய எல்லா யோக்யதாம்சமும் அவனுக்கு இருக்குமாறு பயிற்சி கொடுக்க முடியும் என்பதால் ராஜபதவியை hereditary-யாக வைத்துக் கொண்டார்கள். கற்றுக் கொடுத்துப் பயிற்சி பண்ணுவது மட்டுமில்லாமல், தன்னுடைய background (வாழ்க்கைப் பின்னணி), சூழ்நிலை, ரத்தத்தோடு வந்த குணம் முதலியவற்றிலிருந்தே ராஜாவுக்கு இருக்கவேண்டிய அநேக அம்சங்களையும் தோரணைகளையும் ஒருவன் பெறுவதும் பாரம்பர்ய முறையில்தான் ஸாத்யமாகிறது.

அவன் மனம்போனபடிச் செய்யவிடாமல், தர்ம சாஸ்த்ரம், அர்த்த சாஸ்த்ரம், நீதி சாஸ்த்ரம் என்று ஏற்கனவே இருக்கப்பட்டவைகளை அநுஸரித்து, அவற்றுக்குக் கட்டுப்பட்டே ஆட்சி பண்ண வேண்டுமென்று வைத்தார்கள். ராஜகுரு, மந்த்ரிகள், புத்திமான்கள் ஆகியோரைக் கொண்ட அநேக விதமான ஆலோசனை ஸபைகளின் அபிப்ராயங்களைக் கேட்டு, அதன்படியே ராஜா ஆட்சி நடத்த வேண்டுமென்று வைத்தார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

### ஊர்த் தலைமை

இது ஒரு ராஜ்யம் பூராவுக்குமாகச் செய்த ஏற்பாடு, அப்புறம் ஒவ்வொரு ஊரிலும் ஊர்க்காரர்களுக்கு வேண்டிய வசதிகளை கவனித்துச் செய்து தருவதற்காக ஸ்தல நிர்வாஹம் என்று தனியாய் ஏற்பாடு செய்தார்கள். ஊருக்கு ஊர் ராஜா வைத்தால் நாடு என்று எல்லாரும் ஐக்யப்பட்டுப் பொதுவாகச் சேர்வதும், அதற்கான ஆட்சி பீடத்துக்கு உரிய மதிப்புத் தருவதும் குலைந்து போகும். அங்கங்கே தங்கள் கார்யங்களைத் தாங்களே நிர்வஹித்துக் கொள்ள ஜனங்களுக்கு ஸ்வதந்த்ரம் இருக்க வேண்டுமானாலும், ஒரு

ஊர்க்காரர்கள் செய்வது இன்னொரு ஊர்க்காரர்களை பாதிக்காதபடி மேற்பார்வை செய்து ஊர் ஸபைகளை ஒற்றுமையாக ஒத்துப்போகும்படிச்செய்யவும், தேசம் பூராவுக்குமான கார்யங்களை கவனிப்பதற்கும், ராணுவத்தைக் கொண்டு சத்ருக்களிடமிருந்து ரக்ஷை தருவதற்கும்,

central authority (மத்ய அதிகார பீடம்) இருக்கத்தான் வேண்டும். ராஜா என்ற அதன் தலைவனும் இருக்கத்தான் வேண்டும். இதற்குக் குந்தகம் பண்ணுவதற்கு இடம் கொடுப்பதாக ஊருக்கு ஊர் ராஜா வைத்துக்கொள்ளக்கூடாது. ராஜாவைக் காட்டியே தேசாபிமானம் உண்டாக்கவேண்டியிருப்பதுபோல ஊர் விஷயத்தில் இல்லை. ஏனென்றால் நாட்டைவிட ஊரூ என்பது ஜனங்களுக்கு நெருக்கமாக இருப்பது. 'தங்கள் நாடு' என்று இருப்பதைவிடத் 'தங்கள் ஊர்' என்பதில் அதிக அபிமானம் இயற்கையாகவே இருக்கும்.

முதலில் தான், அபபுறம் தன் குடும்பம், அதற்கப்புறம் தன் ஊர், பிற்பாடுதான் தன்நாடு என்று இருக்கிறது. 'தன் உலகம்' என்றே மனஸ் விஸ்தாரமாக வேண்டுமென்று பெரியவர்கள் சொல்கிறார்கள். அதிருக்கட்டும். நடைமுறையில் ஊருக்கு அப்புறம்தான் நாடு என்று இருக்கிறது. அதுதான் மநுஷ இயற்கை. தினமும் பார்த்துப் பழகுகிற ஆறு, குளம், கோவில், வயல், கடைவீதி, அன்றன்றும் பழகுகிற ஜனங்கள் ஆகியவர்களைக் கொண்டிருப்பதால், சொந்த ஊர் என்ற பாசம் ஏற்படுகிறது. பார்க்காத இடங்கள், பார்க்காத மநுஷ்யர்கள் உள்ள விஸ்தாரமான பரப்பு - அதாவது தேசம் - என்றால் அதனிடம் இத்தனை பிடிப்பு ஏற்பட முடிவதில்லை. எதற்குச் சொல்கிறேனென்றால், தேசம் என்ற ஒன்றிடம் புதுசாகப் பிடிமானத்தை ஏற்படுத்தித் தருவதற்காக அதற்கு 'ஸிம்ப'லாக உயிருள்ள ஒருத்தனை ராஜா என்று வைக்க வேண்டியிருப்பது போல, இயற்கையாகவே ஜனங்களுக்குப் பிடிமானமுள்ள ஊரில், அதாவது ஸ்தல ஆட்சியில் ஒருத்தனை வைக்க வேண்டிய அவச்யமிருக்கவில்லை. ராஜாக்கள் என்று பலபேரை அந்தந்த ஊர் ஜனங்களின் விசேஷ மரியாதை - விச்வாஸங்களைப் பெறும்படி வைத்துவிட்டாலே தேசம் பூராவுக்கும் இருப்பவனின் அதிகார ஸ்தானத்தையும் 'இமேஜை'யும் அது 'வீக்'காக்கிவிடும். (பலஹீனப்படுத்திவிடும்).

ஆனாலும் எந்த நிர்வாஹமானாலும் அதிலே ஒரு தலைவன் இருக்கவேண்டும். இப்படி ஊர் ஸபைக்கும் இருக்கத்தான் வேண்டும். ஆனாலும் இவனுக்கு விசேஷமாக ஒரு 'இமேஜ்' இருக்கவேண்டியதில்லை. மத்ய பீட ராஜாவுக்குள்ளது போன்ற பெரிய பொறுப்புகளும் இவனுக்கு இல்லை. ஊர்த்தலைமை என்பது ராஜ்யாதிகாரத்தைப் போலப் பிறநததிலிருந்து பழக்கினால்தான் உரிய யோக்யதாம்சங்களைப் பெறமுடியும் என்கிற அளவுக்கு நுட்பமான பொறுப்பு வாய்ந்த ஒன்றில்லை. தேசத்தின் ராஜாவுக்கு அடங்கி, அவன் அதிகாரத்துக்கும் மேற்பார்வைக்கும் கட்டுப்பட்டு ஊர்த் தலைவன் உள்ளூர் ஸமாசாரங்களை மட்டும் கவனிக்க வேண்டியவன்தான். ஆகையால் இதற்குப் பாரம்பர்ய ரைட் அவசியமில்லை. பார்க்கப்போனால், இப்படிச் சின்ன அளவில் அதிகாரமிருக்கும்போது அதைப் பாரம்பர்யமாக்குவதே தான் யோக்யதாம்சம் இல்லாதவர்களிடம் பொறுப்பு போவதற்கு வழி பண்ணிவிடும். 'தனக்குப் பெரிய பொறுப்பு இருக்கிறது, ஒரு பெரிய நிலப்பரப்பையும், பெரிய ஜன ஸமூஹத்தையும் தான் ஆண்டு நிர்வாஹம் செய்து மதிப்புக்குப் பாத்ரமாக வேண்டும், சத்ருக்கள் வந்தால் ஸமாளிக்க வேண்டும்' என்கிறபோது ஒரு ராஜகுமாரன் ரொம்பவும் கவனத்தோடு, கவலையோடு யோக்யதை ஸம்பாதித்துக் கொள்ளப் பாடுபடுவான். "எல்லாம் நம் மநுஷர்கள்தான் - நமக்குத் தெரிந்த சேஷன் சுப்பன்தான்" என்று இருக்கும் போது, பொறுப்பும் குறைவாக இருந்து, "இது எப்படியும் ஹெரிடிடரி, வேறே யாரும் போட்டிக்கு வர முடியாது" என்றும் இருந்துவிட்டால் ஒருத்தன் யோக்யதை ஸம்பாதித்துக்கொள்ளப் பாடுபடவேண்டியதில்லைதானே இம்மாதிரியான பல காரணங்களினால் ஊர் நிர்வாஹத்தைப் பாரம்பர்யமாக வைக்காமல் விட்டார்கள்.

நாடானால் ராஜா என்கிறவன் ஆலோசனை ஸபைகளின் துணையுடன் நிர்வாஹம் செய்யவேண்டும், ஊரானால் ஒரு நிர்வாஹ ஸபை தனக்குத் தலைவனாக ஒருத்தனை வைத்துக் கொண்டு கார்யங்களைச் செய்யவேண்டும் என்று வைத்தார்கள். இரண்டுக்கும் இருக்கிற வித்யாஸத்தை கவனிக்க வேண்டும். நாட்டில் ராஜா என்கிறவன்தான் முடிவான நிர்வாஹ அதிகாரம் உள்ளவன். அவனுக்கு

ஸபைகள் ஆலோசனை சொல்கின்றன. ஆலோசனைதான். முடிவு அவன்தான் எடுப்பான். ஊரிலே இப்படியில்லை. ஸபையேதான் ஆலோசனை சொல்வதோடு நிற்காமல் நேராக நிர்வஹிப்பது, முடிவு எடுப்பது. தலைவன் என்று ஒருத்தன் இல்லாமல் பல பேர் உதிரியாக இருப்பது ஸரியாய் வராது, பலபேரை ஒரு கட்டுக்கோப்பில் வைப்பதற்காகத் தலைவன் இருக்கத்தான் வேண்டும் என்பதற்காக ஸபை ஒரு தலைவனை வைத்துக் கொள்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

### தேர்தல் மூலம் ஊர் ஸபையில் அங்கம்

ராஜா, அவனுக்கு ஆலோசனை சொல்கிறவர்கள், ஊர் ஸபைக்காரர்கள் ஆகியவர்களால் மொத்தத்தில் நிர்வாஹம் நடந்தது.

யார் வேண்டுமானாலும் ராஜாவாக வரமுடியாது. அது ஹெரிடிடரி. மற்ற ஸ்தானங்களுக்கு அதாவது அவனுடைய ஆலோசனை ஸபை, ஊராட்சி ஸபை, முதலியவற்றில் யார் வேண்டுமானாலும் இடம் பெறலாமா? 'கூடாது. ஊர் நிர்வாஹம், நாட்டு நிர்வாஹம் ஆகியன சிக்கலான விஷயம். நாட்டு நிர்வாஹத்தைவிட ஊர் நிர்வாஹம் சிக்கல் குறைந்தது, பொறுப்பு உண்டு. எனே உரிய தகுதி பெற்றிருப்பவர்களிடம்தான் பொறுப்புக் கொடுத்து மேலே சொன்ன ஸபைகளில் அமர்த்தலாம்' என்று ஏற்பாடு செய்தார்கள்.

இப்படி அமர்த்துவதிலேதான் ஜனங்கள் தங்களுக்கும் பங்கு இருக்கிறதென்று ஸந்தோஷப்படும்படியாக ஒரு தேர்தல் முறையை ஊர் விஷயத்தில் கையாண்டார்கள்.

இப்போத இப்படி உங்களையெல்லாம் மெனக்கெடுத்தி உட்காரவைத்து முக்யமாகச் சொல்ல நினைத்து, சோழர்களின் ஆட்சிக் காலத்தில் தற்போது ஜனநாயகத்தின் மூச்சாக

நினைக்கப்படும் "தேர்தல்" என்ற ஏற்பாடுகூட இருந்தது என்பதைப் பற்றித்தான். தேர்தல் இருந்தாலும் இப்போதுள்ள தேர்தல் முறைக்கு எப்படி அந்தக்கால முறை வித்யாஸமாயிருந்தது என்பதைச் சொல்லி, இப்போதிருப்பதைவிட அந்த முறை எப்படி ச்லாக்யமானது என்று கொஞ்சம் காட்ட ஆசை. 'ராஜ்யத்தையோ, ஊரையோ நிர்வாஹம் செய்பவர்களுக்குத் தகுதி இருக்கவேண்டும், எல்லாரையும் அதில்விட முடியாது' என்றால், அப்போது, இப்படிப்பட்ட தகுதிகள் அவர்களுக்கு இருக்கிறதா என்பதை ஆராய்ந்து பார்த்துத் தான் அவர்களுக்கு ஸ்தானம் தரவேண்டும் என்றும் ஆகிவிடுகிறது. ராஜ்யத்தைப் பொறுத்தமட்டில் ஒரு ராஜகுமாரன் பட்டத்துக்கு வரும்போது, அவனுடைய தகப்பனாருக்குத் துணையாயிருந்த ஸதஸ் பெரியவர்களே இவனுக்கும் ஆலோசனை சொல்லி நல்ல வழியிலே போகப் பண்ணுவார்கள். அப்புறம் அவர்கள் வயோதிகத்தில் பதவியை விட்டு விட்டுப் போனாலோ, அல்லது காலமாய் விட்டாலோ, அந்த ராஜாவே அதற்குள் நல்ல ஆட்சி அநுபவமும், விவேகமும் பெற்றிருப்பானாதலால் தனக்கு ஆலோசனை சொல்லக்கூடியவர் யார் என்று பார்த்து அப்படிப்பட்டவர்களை நியமனம் செய்துகொண்டுவிடுவான். இங்கே ராஜாவேதான் 'அப்பாயின்டிங் அதாரிடி'.

ஊர் விஷயத்தைப் பார்க்கலாம். ஊர் நிர்வாஹத்தை ஏற்று நடத்தும் ஸபையினருக்கும் தகுதிகள் இருக்கவேண்டும். ஸபையினருக்கும் தகுதிகள் இருக்கவேண்டும். ஆனாலும் ராஜா அல்லது ராஜாங்க அதிகாரியால் அவர்கள் நியமிக்கப்பட்டதாக இல்லாமல், 'தங்கள் ஊரை நிர்வஹிப்பவர்களின் நியமனம் தங்கள் ஊராராலேயே முடிவாயிற்று' என்று ஜனங்களுக்கு ஒரு த்ருப்தி இருக்கும்படிச் செய்தால் நன்றாய் இருக்கும். எந்த ஊரிலோ இருந்து கொண்டு, யாரோ உத்தரவு போட்டு நம்முடைய இந்த ஸொந்த ஊரை நிர்வஹிக்க ஆஸாமிகள் வரவேண்டுமா என்று அவர்கள் நினைக்காமல், தங்களுக்கே இதில் பங்கு இருக்கிறது, 'பார்ட்டிஸிபேஷன்' இருக்கிறது என்று பெருமையுடன் நினைக்கப் பண்ணவேண்டும். இதற்கான ஒரு தேர்தல் முறையைத்தான் சோழர் ஆட்சியில் பார்க்கிறோம்.

ஸரி, அப்படியானால் பொது ஜனங்களையே, "உங்கள்

ப்ரதிநிதிகளாக ஸபைக்காரர்களை 'எலெக்ட்' செய்யுங்கள்" என்று விட்டுவிட்டார்களா?

## தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)

### பொது வாழ்க்கை

#### குடியரசு, ஜனநாயகம்

தற்போது (1949) இப்படித்தான் நடக்கவேண்டுமென்று ஏற்பாடாகி வருகிறது. ஊர் மட்டுமில்லை, மாகாணம், தேசம் பூராவுக்குமே இப்படி நடத்துவதுதான் உத்தேசமாயிருக்கிறது. குடியரசாக தேசம் ஆகிறபோது ஜனங்கள் எல்லாரும் வோட்டுப் போட்டுப் பார்லிமென்டுக்கும், அஸெம்ப்ளிக்கும் ப்ரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து ஆட்சி நடத்தப் பண்ணவேண்டும் என்பதற்கு ஏற்பாடாகி வருகிறது.

இப்போது முடியரசு ஸாத்யமில்லை. ஈஸ்ட் இன்டியா கம்பெனி கொஞ்சம் கொஞ்சமாகப் பிடித்து அப்புறம் ப்ரிட்டிஷ் ராஜாங்கத்துக்கு தேசம் கை மாறின காலங்களில் இந்தத் தேசம் முழுவதற்கும் ஒரு ராஜா இருக்கவில்லை. பிற்பாடு ஸ்வதேச ஸம்ஸ்தானங்கள் என்று பெயர் பெற்ற ஏராளமான ராஜ்யங்களே அப்போது இருந்தன. நமக்கு ஸ்வதந்த்ரம் வந்தபோது இவற்றில் ஏதோ கொஞ்சம் ஸ்வயாதிக்யம் பெற்றிருந்தவற்றைத்தான் ஸ்வதேச ஸம்ஸ்தானம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம். என்பார்கள்.Native state இப்படி ஐநூற்றுக்கு மேல் இருக்கின்றனவென்றால், இம்மாதிரி கொஞ்சம் ராஜ்யாதிகாரம் கூடக்கொடுக்காமல் ப்ரிட்டிஷ்காரர்கள் முழுங்கியேவிட்ட சின்னச் சின்ன ராஜ்யங்கள் எத்தனையோ இருந்திருக்கும். ஏகப்பட்ட ராஜாக்களின் ஆளுகையில் இருந்த தேசம் அப்புறம் வெள்ளைக்கார, 'கிங் எம்பர'ரிடம் போயிற்று. அதிகாரமில்லாமல் figure-head என்று ராஜாவாக இருப்பவர் அவர். அந்த ஹிஸ்டரி இப்போது வேண்டாம். சொல்ல வந்தது, இப்போது அந்த ஒரே ராஜாவிடமிருந்து தேசம் நமக்கு திரும்பி வருகிறபோது இது முழுதையும்

ஒப்பிப்பதற்கு பாரம்பர்ய ரைட் உள்ளவராக ஒரு ராஜகுடும்ப வாரிசும் இல்லை. ஆனபடியால், மற்ற காரணங்கள் ஒரு பக்கம் இருக்க, இப்போது தேசம் பூராவையும் ஏதோ ஒரு ராஜ வம்சம் வாங்கிக் கொள்வதற்கில்லாமல் ஜனங்கள்தான் வாங்கிக்கொள்ளவேண்டும். குடியரசுதான் இங்கே வரமுடியும். வெள்ளைக்காரர்களோடு ராஜா யாரும் சண்டை போட்டு தேசத்தைத் திரும்பவும் ஜயிக்கவில்லை. ஜனங்களே தான் கூடியமட்டும் அஹிம்ஸை மார்க்கம் என்று சொல்லக்கூடிய முறையில் ஓரளவு ஸாத்விக யுத்தம் செய்து ராஜ்யத்தைத் திரும்பப் பெற்றிருக்கிறார்கள். அதனால் ஜனங்களே இதை ஆண்டுக்கொள்ள உரிமை பெற்றவர்களாக இருக்கிறார்கள். இதைத்தான் குடியரசு என்பது.

குடியரசு என்றாலும் அத்தனை ஜனங்களுக்கும் ஆட்சியில் நேர்ப்பொறுப்பும் பதவியும் கொடுக்க முடியாது. அதனால் அவர்களுக்கு ப்ரதிநிதிகளாக சிலபேர்தான் ராஜாங்கத்தை அமைத்த நடத்தவேண்டும். இதிலே பொதுஜனங்களுக்கு இடம் தராமல், ப்ரபுக்களாக இருக்கப்பட்டவர்களே சேர்ந்து அட்சி நடத்துவதான 'அரிஸ்டாக்ரஸி', மதத்தலைவர்கள் நடத்துவதான 'தியாக்ரஸி' - என்பது போலப் பல இருக்கின்றன. ஒருவரே எல்லா அதிகாரத்தையும் தன் வசமாக்கிக்கொண்டு, ஸர்வாதிகாரி என்றே பெயர் வைத்தக்கொண்டு, ஸர்வாதிகாரி என்றே பெயர் வைத்துக்கொண்டு ஆள்வதை 'ஆடாக்ரஸி' என்கிறார்கள். இம்மாதிரியுள்ள பல ஆட்சி முறைகளில், ஜனங்களில் ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தை மட்டும் சேர்ந்தவர்களாயில்லாமல் ஸகல ஜனங்களுக்கும் ப்ரதிநிதிகளாக இருக்கப்பட்டவர்களிடம் ஆட்சியைக் கொடுப்பதற்கு 'டெமாக்ரஸி' என்று பெயர். ஜனநாயகம் என்று நாம் சொல்கிறோம். இப்படிப் பொதுவான ஜனஸமூஹம் பூராவுக்குமான ப்ரதிநிதிகளைக் கொண்டே நம்முடைய குடியரசில் ஜனநாயகமாக ஆட்சியை ஏற்படுத்த உத்தேசிக்கப் பட்டிருக்கிறது. இது இப்படித்தான் இருக்க முடியும். கால தேச வர்த்தமானத்தில் இதைத் தவிர வேறு விதமாக ஏற்பாடு செய்வதற்கில்லை எனலாம்.

## *பொது வாழ்க்கை*

### அபிப்ராய பேதம்

எல்லா வர்க்கத்தினருக்கும் இடம் தரும்படியாக ராஜாங்கம் அமையட்டும். ஆனால் இப்படிப்பட்ட ப்ரதிநிதிகளை வயஸு வந்த எல்லா ஜனங்களுமே தேர்ந்தெடுக்கும் முறைதான் ஸரியான வழியா என்பதில்தான் கொஞ்சம் அபிப்ராயபேதம் இருக்கிறது. கொஞ்சம் அபிப்ராய பேதம் என்று சொல்வது அவ்வளவு ஸரியில்லை, நிறையவேதான் அபிப்ராய பேதம். ஆனால் இப்படி ரொம்பவும் கொஞ்சம் பேருக்கே இருக்கிறது. இப்படி இருப்பதால், தேசத்தில் பொதுவாயுள்ள அபிப்ராயத்தைக் கவனிக்கும்போது இந்த அபிப்ராயபேதம் கொஞ்சமாகவே தெரிகிறது.

இம்மாதிரி வித்யாஸமாக நினைப்பவர்கள் என்ன சொல்கிறார்களென்றால் நிர்வாஹம் பண்ணுவதற்கு ஒரு தகுதி வேண்டுமென்பது போலவே, ஒருத்தர் அப்படிப்பட்ட தகுதி உள்ளவர்தானா என்று எடை போட்டுப் பார்த்து அவரைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு தகுதி வேண்டும். ஒரு அபேக்ஷகர் (வேட்பாளர்) என்றால் அவர் ஏதோ ஒரு கட்சியில் இருப்பார். அதற்கென்று கொள்கைகள் இருக்கும். ஸ்வயேச்சை அபேக்ஷகர் என்றால் அவருக்கும் ஏதோ கொள்கைகள் இருக்கத்தான் வேண்டும். தேர்ந்தெடுக்கிறவர்கள் இந்தக் கொள்கைகளைப் புரிந்துகொள்ளக் கூடியவர்களாக இருக்கவேண்டும். 'நம் தேசத்தில், தற்போதுள்ள நிலவரங்களில் இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் நிர்வாஹம் செய்வது நல்லதா?' என்று சீர்தூக்கி முடிவு பண்ணக்கூடியவர்களாக வோட்டர்கள் இருக்கவேண்டும். 'அதைச் செய்கிறேன், இதைச் செய்கிறேன்" என்று எதையாவது சொல்லிக்கொண்டு வோட்டு கேட்டால், "அது ஸாத்யந்தானா? ஸாத்யமானாலும் அப்படிச் செய்யலாமா?" என்று யோசித்துப் பார்த்து, பேச்சில் ஏமாந்து போகாமல் வோட்டுப் போடக்கூடியவர்களாக இருக்கவேண்டும். மொத்தத்தில், குடியரசு எல்லாருக்குமானாலும், அதிலே ராஜாங்கம் அமைப்பவர்கள்

எல்லா வர்க்கத்தினருக்கும் ப்ரதிநிதிகளாயிருக்க வேண்டியவர்களானாலும், அவர்களுக்கு நிர்வாஹத்துக்கான யோக்யதாம்சம் இருக்க வேண்டியிருக்கிறது, அப்படிப்பட்ட யோக்யதாம்சம் அவர்களுக்கு இருக்கிறதா என்று பரிசீலனை பண்ணி அவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது. அதாவது அபேக்ஷகர், வோட் போடுபவர் இருவருக்கும் யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது.

ஒரு வேலை கொடுக்கும்போது, மனுப் போட்ட பலபேரிலே யாருக்குக் கொடுக்கலாம் என்று ஸெலக்ட் செய்யவேண்டியிருக்கிறது. ரொம்பவும் விஷயம் தெரிந்தவர்களைத் தான் ஸெலக்ஷன் கமிட்டியில் போட்டு அவர்கள் மூலம், மனுப் போட்ட பல பேரில் ஒருத்தருக்கு வேலை கொடுக்கிறார்கள். அதாவது வேலைக்கு வைக்கிறவனின் யோக்யதாம்சத்தைப் பரீக்ஷித்து அவனை ஸெலக்ட் செய்வதற்கு அவனை விட யோக்யதாம்சம் வாய்ந்தவரை நாட வேண்டியிருக்கிறது. குடியரசுத் தேர்தலில் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும், இன்னாருக்கு இன்ன யோக்யதாம்சம் என்று சீர் தூக்கிப் பார்க்கவேண்டியவர்களான வோட்டர்களுக்கும் ஓரளவுக்கு யோக்யதை வேண்டித்தான் இருக்கும் தேச நிர்வாஹம், அரசியல் கொள்கைகள் முதலியவற்றைப் பற்றி ஓரளவேனும் விஷயஞானமுள்ளவர்கள் ஆலோசனை செய்து வோட் கொடுத்தால்தான் ஆட்சி ஸரியானவர்களிடம் போகும். விஷயம் தெரியாதவர்கள் எலெக்ட் செய்யும்படிவிட்டால் தப்பானவர்கள் அதிகாரத்துக்கு வந்துவிடக் கூடுமே, அதனால் ரொம்பவும் அனர்த்தமாகி விடுமே- என்பதெல்லாந்தான் நான் சொன்ன "கொஞ்சம் பேரின்" கவலை, ஆக்ஷேபனை எல்லாம்.

விஷயம் தெரிந்தவர்களும் ஸ்வயநலக்காரர்கள ாயிருக்கிறார்கள், தேச நலனைக் கருதாமல் தங்கள் ஸொந்த அபிமானங்களின் மீது வோட் போடுபவர்கள் அவர்களிலுந்தான் இருக்கிறார்கள் - என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்.

ஆனாலும் இருப்பதற்குள் நல்லதாக, safeஆக ராஜாங்கம் அமையவேண்டுமானால் அதற்கு, ஒன்றும் தெரியாத பாமர

ஜனங்களிடம் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைத் தருவதைவிடத் தெரிந்தவர்களிடம் தருவதுதான் உசிதமானது. இருப்பதற்குள் இப்படிச் செய்தால்தான் குறைச்சல் அனர்த்தம் என்று வைத்துக்கொள்ளலாம்.

ஆனதினால், படிப்பு, ஸொத்து இம்மாதிரி ஏதோ ஒன்றினால் ராஜீய விஷயங்களில் ஓரளவு ஞானமும் பொறுப்புணர்ச்சியும் பெற்றிருப்பவர்கள் மட்டுமே வோட்டுரிமை பெற்றுத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பின்பற்றுவததுதான் ஸரி என்று இந்தக் "கொஞ்சம் பேரு"க்குத் தோன்றுகிறது. ஜாதி, மதம், பொருளாதார வர்க்கம் முதலானவற்றில் குறிப்பிட்ட ஏதோ ஒன்றை மட்டும் சேர்ந்தவர்களாயில்லாமல் எல்லாவற்றையும் சேர்ந்தவர்களான இப்படிப் பட்ட விஷயமறிந்த எல்லாருக்கும் வோட்டுரிமை தரவேண்டும், அப்படிச்செய்வதால் இது குறிப்பிட்ட ஒரு பிரிவின் ஆட்சியான மற்ற 'க்ரஸி'களில் ஒன்றாக இல்லாமல் 'டெமாக்ரஸி' என்றே மதிக்கப்படவேண்டியதாகும் - என்கிறார்கள். எலெக்ட் ஆகிற அபேக்ஷகரும் இப்படியே ஏதோ ஒரு வர்க்கமாகத்தான் இருக்க வேண்டுமென்று வைக்காததால் டெமாக்ரஸிக் கொள்கை இன்னம் பலப்படுகிறது. இதற்கு மேல்Adult Franchise (வயது வந்தோர் யாவரும் வோட்டளிக்கும் முறை) என்று போனால், விஷயம் தெரியாத எராளமான பாமர ஜனங்களைக் கொண்ட நம் தேசத்தில் ஸரியனாவர்களிடம் நிர்வாஹம் போகாமல் கஷ்டப்பட வேண்டி வரப் போகிறதே என்று நான் சொன்ன "கொஞ்சம் பேர்" நினைக்கிறார்கள். நவீன முன்னேற்றப்போக்கு இல்லாதவர்கள், பழம் பெருச்சாளிகள் என்று முன்னேற்றத் தலைவர்கள் வர்ணிக்கிற "கொஞ்சம் பேர்!" நினைக்கிறார்கள். நவீன முன்னேற்றப்போக்கு இல்லாதவர்கள், பழம் பெருச்சாளிகள் என்று முன்னேற்றத் தலைவர்கள் வர்ணிக்கிற "கொஞ்சம் பேர்!"

இந்தத் தலைவர்கள் ஜனங்கள் அத்தனை பேரையும் ஸ்வதந்த்ரப் போராட்டத்தில் தூண்டிவிட்டுத்தான் வெள்ளைக்காரனைப் போகப் பண்ணியிருக்கிறார்கள். அதனால் இப்போது அத்தனை பேரும் தேச ஆட்சிக்கு உயிர் நாடியாயுள்ள எலெக்க்ஷனில் கலந்து கொள்ளும்படிச் செய்யாமல், வோட்டர்களுக்கு யோக்யதாம்சம் நிர்ணயித்தால், ஜனங்கள் தங்களை என்ன பண்ணுவார்களோ

என்ற எண்ணமும் இருக்கலாம். 'வெள்ளைக்காரர்களை எதிர்த்து என்னென்ன பண்ணுவதற்கு ஜனங்களுக்குக் கற்றுக் கொடுத்தோமோ அதைத் தங்களிடமே அவர்கள் திருப்பிக் கொண்டால் என்ன பண்ணுவது?' என்றும் இருக்கலாம். இப்படி எவனோ அந்நயினுக்குப் பண்ண வேண்டியிருந்ததை நம் தேசத்தின் தலைமையில் இருக்கும் நம்மவர்களுக்கே பண்ணலாமா என்று யோசிக்காமல் செய்யக் கூடிவயவர்கள் என்றாலே விஷயம் தெரியாதவர்கள், அரசியல் அறிவு போதாதவர்கள் என்பதற்காக ஒருத்தருக்கு ஒரு உரிமை கொடுக்கப்பட்டால் அப்படிப்பட்டவர்கள் அந்த உரிமையைத் தப்பாகத்தான் ப்ரயோகிப்பார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

## விசித்ர அம்சம் கொண்ட தேர்தல் முறை

இம்மாதிரி ஸமாசரங்களையெல்லாம் நம்முடைய பழைய கால பெரியவர்கள் - சோழர் காலம் என்று சொன்னேனே, அப்போதிருந்த பெரியவர்கள் - யோசித்துப் பார்த்திருக்கிறார்கள். ஆனதினால், ஊர் ஸபைக்காரர்கள் ராஜாங்க அதிகாரத்தின் கீழ் நியமனமாகாமல், தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவி வஹிக்கும்படி ஏற்பாடு செய்ய எண்ணியபோதே, அது ஸர்வஜன வோட்டெடுப்பாக இருந்தால் ஸரிப்பட்டு வராது என்பதையும் கவனித்திருக்கிறார்கள். தகுதி நிர்ணயம் பண்ணிச் சில பேருக்கு மட்டும் வோட்டுரிமை தரலாமா என்றால், இதனாலே ஊர் ஜனங்களிடம் உயர்வு - தாழ்வு எண்ணங்கள் ஏற்பட்டு ஸமூஹத்தில் விரிசல் கண்டுவிடப் போகிறதே என்று நினைத்திருக்கிறார்கள் போலிருக்கிறது.

ஆகையால், நான் சொல்லப்போவது விசித்ரமாக இருக்கலாம், ராஜாங்க நியமனமாயுமில்லாமல், ஜனங்களில் எல்லோருமோ சிலரோ வோட் போடுவதாகவுமில்லாமலுள்ள

ஒரு தேர்தல் முறையை ஏற்படுத்தினார்கள். விசித்ரம் என்று சொன்னதால் அதைத் தெரிந்துகொள்வதில் ஆர்வம் உண்டாயிருக்கும். உடனேயே விசித்ரத்தைச் சொல்லி ஆர்வத்தைத் தணித்துவிடுவதில் ஸ்வாரஸ்யமில்லை. ஆகையால் இது ஸம்பந்தமான மற்ற விஷயங்களைச் சொல்லிவிட்டு அப்புறம் இதற்கு வருகிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

## சோழ வம்சம்

தமிழ்நாட்டின் சரித்ரம் இக்கால ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொள்ளும்படியாக ஆரம்பிக்கும் கி.மு. மூன்றாம் நான்காம் நூற்றாண்டுகளிலேயே மூவேந்தர்கள் என்று சேர, சோழ, பாண்டிய வம்சங்கள் இருந்திருக்கின்றன. சங்க இலக்கியத்திலேயே பல சோழ ராஜாக்களைச் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறது. புராண ரீதியாக ப்ரஸித்தி பெற்றவர்கள் திருவாரூரிலிருந்துகொண்டு ஆட்சி செய்த முசுகுந்த சக்ரவர்த்தி, மநுநீதிச் சோழன் முதலான ராஜாக்கள், சரித்ர பூர்வமாக ஒப்புக்கொள்ளும் பழைய சோழ அரசர்களில் கரிகாலச் சோழன், கோச்செங்கட் சோழன் முதலானோர் ப்ரஸித்தி பெற்றவர்கள். அவர்களுடைய காலத்தில் கொடிகட்டிப் பறந்த சோழ அரசு அப்புறம் நொடித்துப் போய், கி.பி.ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பல்லவ ஸாம்ராஜ்யம் விஸ்தரிப்புப் பெற்றுப் பெருமை கண்டது. மறுபடியும் ஒன்பதாம் நூற்றாண்டு மத்தியில் விஜயாலய சோழன் காலத்தில் சோழ வம்சம் தலைதூக்கி, தலைமுறைக்குத் தலைமுறை வ்ருத்தியாகி, ராஜராஜன், ராஜேந்திரன் முதலியவர்கள் ஆட்சியில் எல்லாத் துறைகளிலும் மிகவும் அபிவிருத்தியடைந்த மஹாஸாம்ராஜ்யமாக ஆயிற்று. இப்படி சுமார் நானூறு வருஷங்கள் இந்தப் பிற்காலச் சோழ வம்சம் புகழோடு விளங்கிற்று.

*பொது வாழ்க்கை*

## தேர்தல் குறித்த கல்வெட்டு

இவர்களில் விஜயாலயனுக்குப் பின்னால் இரண்டாம் பட்டமாக ஆட்சி நடத்திய பராந்தக சோழன் காலத்தில் நான் சொன்னபடி நடந்த தேர்தலைப் பற்றிய விவரங்கள் தெரியவந்திருக்கின்றன. ஆயிரம் வருஷத்துக்கு முந்திய (கி.பி. 920 - ம் வருஷத்திய) ஒரு கல்வெட்டில் இதைப்பற்றி விரிவாகவும், ஸ்வாரஸ்யமாகவும் விளக்கமாகச் சொல்லியிருக்கிறது. அந்தக் கல்வெட்டு காஞ்சீபுரத்துக்கு அருகே உள்ள உத்தரமேரூரில் இருக்கிறது. பேரூர் என்றும் அந்த ஊருக்கு பேர்வழங்கி வந்திருக்கிறது.

பார்லிமென்ட், ஸ்டேட் அஸெம்ப்ளிகள் மாதிரி ஒரு ராஜ்யம் முழுவதற்குமோ, அல்லது அதன் பெரிய பிரிவான மஹா மண்டலம் ஒன்றுக்கோ சட்டம் போட்டு திட்டம் போட்டு நடத்துவதற்காக ப்ரதிநிதிகளைப் பொறுக்கி எடுப்பதற்காக நடந்த தேர்தல் அல்ல, இந்த சாஸனத்தில் சொல்லப்படும் விஷயம். பல நூற்றாண்டுகளுக்கு முன் சோழ ராஜாக்களின் ஆட்சியில் அந்தந்த ஊர்க் கார்யங்களைக் கவனிப்பதற்காக, இந்த நாளில் ஸ்தல ஸ்தாபனம் (Local Body) என்று நகர ஸபைகளும் பஞ்சாயத்துக்களும் உள்ள மாதிரி ஸபைகள் இருந்திருக்கின்றன. இவற்றின் ப்ரதிநிதிகளுக்கான தேர்தல்தான் இந்த சாஸன விஷயம்.

## ராஜ்யப் பிரிவுகள்

சோழ ராஜ்யத்தைப் பல நிர்வாஹப் பிரிவுகளாகப் பிரித்திருந்தார்கள் தற்போதைய ஜில்லா, தாலுகா, ஃபிர்க்கா முதலானவற்றைப் போல். இப்போதுள்ள பிரிவினைகளின் பெயர்களிலிருந்தே இவை துருக்கர் ஆட்சியில் ஏற்பட்டவை என்று தெரிகிறது. அப்புறம் இவை துருக்கர் ஆட்சியில் ஏற்பட்டவை என்று தெரிகிறது. அப்புறம் வெள்ளைக்காரர் ஆட்சியில் இவை மேலும் திட்டமாக வரையறுக்கப்பட்டன.

ஆனால் இதற்கெல்லாம் ரொம்ப முந்தியும் நம் நாட்டில் இப்படி ராஜ்யத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அதில் சோழராட்சியில் நாட்டின் மிகப் பெரிய பிரிவு 'மண்டலம்' எனப்படும். அப்புறம் ஒரு மண்டலத்துக்குள் ஒவ்வொன்றும் பதினெட்டு ஊர் கொண்டதாக 'வயநாடுகள்' என்ற பிரிவினை வளநாட்டுக்குள்ளே கூற்றம், கோட்டட்ம என்று போய் முடிவிலே ஊர். ஊர் என்பது பெரும்பாலும் க்ராமமே. வர்த்தகத்தைவிட வ்யவஸாயமே (விவசாயமே) அதிகம் நடந்த அக்காலத்தில் நகரங்கள் என்னும் டவுன்கள் குறைச்சல். அவற்றைவிட க்ராமங்களே சிறப்பாக விளங்கின. உத்தரமேரூர்கூட அப்படிப்பட்ட க்ராமம்தான். க்ராமம் என்றால் ரொம்ப சின்னது என்று நினைக்க வேண்டாம். இப்போது நாட்ம ஒரு ஸபைத் தேர்தலில் 'வார்ட்' என்று சொல்கிற பிரிவுபோல் முப்பத்திரண்டு கொண்ட அளவுக்கு உத்தரமேரூர் விஸ்தாரமாக இருந்திருப்பதாக சிலா சாஸனத்திலிருந்து தெரிகிறது. இப்படிப்பட்ட ஒரு ஊர் அல்லது க்ராமத்தில் முன்னே சொன்ன வேதகாலச் ச்ரேணியின் அடிப்படையில் ஒவ்வொரு ஜாதிக்கும், அதாவது தொழிற்பிரிவுக்கும், ஒரு நாட்டாண்டை இருந்தது. இவற்றிலே வ்யாபாரிகளுடைய வ்யவஹாரங்களை அவர்களே கவனித்துக்கொண்ட அமைப்புக்குத்தான் தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் "நகரம்" என்று பெயர். அதனால்தான் ராமநாதபுர ஜில்லாவில் வ்யாபார வைச்ய ஸமூஹமே முன்னணியில் இருப்பதான நாட்டுக்கோட்டைப் பகுதியினால் அவர்களுக்கு "நகரத்தார்" என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. இதேபோல "ஸபை" என்று வெறுமே சொன்னால் அது தமிழ் தேசத்தில் ப்ராம்மணர்கள் தங்கள் ஸமாசாரங்களை விவாதித்து முடிவுசெய்து கொண்ட ஸபைதான். இப்படித் தனிப்பட்ட ஒரு ஜாதிக்காக இல்லாமல் ஊர்முழுவதுன் பொது விஷயங்களையும் கவனித்து, அதன் வ்யவஸாயம், நீர்ப்பாசனம் முதலியவற்றை நிர்வஹித்த ஸ்தலஸ்தாபனத்துக்கே "ஊர்" என்று பெயர் இருந்தது. இதில் எல்லா ஜாதியினரும் அங்கம் வஹிப்பார்கள். இதை ஊர்ச்சபை, க்ராமஸபை, க்ராமமஹாஸபை என்றெல்லாமும் சொல்வதுண்டு. அப்படிப்ட்ட உத்தரமேரூர் க்ராம மஹாசபைக்கு எப்படித் தேர்தல் நடந்தது என்பதைத்தான் இரண்டு சிலா சாஸனங்கள் தெரிவிக்கின்றன.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

### க்ராம ஸபையின் அமைப்பு

இந்த நாளில் ஊரை 'வார்ட்' என்று பல பிரிவுகளாகப் பிரித்திருக்கிறமாதிரி அப்போது ஒவ்வொரு ஊரையும் (கிராமத்தையும்) பல 'குடும்பு'களாகப் பிரித்திருக்கிறார்கள். உத்தரமேரூர் கல்வெட்டுக்குச் சுமார் ஐம்பது வருஷம் முந்தியதும், செந்தலை என்கிற சந்த்ரலேகா சதுர்வேதி மங்கலம் என்ற ஊரிலிருள்ளதுமான முதலாம் ஆதித்ய சோழனின் கல்வெட்டிலேயே அந்த ஊரைக் 'குடும்பு'கள் என்ற வார்டுகளாகப் பிரித்திருந்ததைக் குறிப்பிட்டிருக்கிறது. ஒவ்வொரு குடும்புக்கும் ஒரு ப்ரதிநிதி கொண்டதாக க்ராம மஹாஸபை அமைக்கப்பட்டிருந்தது. மேற்படி ப்ரதிநிதிகள், அதாவது ஊர்ச்சபையின் அங்கத்தினர்கள்தான் ராஜாவாலோ, அல்லது ராஜாங்க அதிகாரியாலோ அல்லது அதிகாரக் குழுவாலோ நியமிக்கப்படாமல், தேர்தல் மூலமாகப் பொறுக்கி எடுக்கப்பட்டுப்பதவிக்கு வந்தனர். அதாவது - இதுதான் முக்யமான அம்சம் - ஊராட்சி ஸபையின் மெம்பர்ஷிப் பாரம்பர்யமாகவோ, அல்லது ராஜாங்க நியமனமாகவோ (கவர்ன்மென்ட் அப்பாயின்ட்மென்டாகவோ) இல்லை. மணியம் மாதிரி அப்பா - பிள்ளை என்று தலைமுறை தத்துவமாக இல்லை. Hereditary appointment இல்லை, nominated appointment-ம் இல்லை, Elected appointment. இதை ஒரு விதத்தில் ஜனங்களே எலெக்ட் செய்வதாக இருந்தது என்றுதான் சொல்லவேண்டும். வோட்டுச் சீட்டு மாதிரியே ஒன்றை அநுஸரித்து இந்தத் தேர்தல் நடந்தது என்பது இதில் இன்னொரு ஸாரமான அம்சம். ஆனாலும் வோட்டர்கள் என்று பல பேர் தலைக்கு ஒரு வோட்டுப் போட்டு நடந்த தேர்தல் அல்ல. பின்னே அது என்ன, எப்படி நடந்தது என்று பின்னால் சொல்கிறேன். காக்க வைத்துச் சொல்வதில்தான் ருசி அதிகம்.

## பொது வாழ்க்கை

### கல்வெட்டைப் பற்றிய விவரம்

இப்படி ஊர் ஸபையின் அங்கத்தினர்களை எப்படித் தேர்ந்தெடுத்தார்கள் என்பதைக் காஞ்சீபுரத்துத்து அருகிலுள்ள உத்தரமேரூரில் உள்ள சாஸனத்தால் மட்டுமின்றி, தெற்கு ஜில்லாகளிலுள்ள வேறே பல செப்பேடுகளிலிருந்தும் கல்வெட்டுக்களிலிருந்தும் தெரிந்து கொள்கிறோம்.

மாயவரம் தாலுகாவின் தலைஞாயிறு என்று (க்ராமம்) இருக்கிறது. அங்கே "குற்றம் பொறுத்தீச்வரர்" என்ற கருணை பெயர் கொண்ட சிவன் கோயில் இருக்கிறது. தனிவாழ்க்கையில் தனி மநுஷன் குற்றத்தைத்தான் பொறுக்கும்படி பகவானிடம் வேண்டலாம். பொதுவாழ்க்கையில் குற்றமில்லாமல் அப்பழுக்காகத்தான் ஒழுகணும்' என்று காட்டுகிற மாதிரி இந்தக் கோவிலிலேயே ஊராட்சி பற்றி ஒரு சோழர் காலக் கல்வெட்டு இருக்கிறது. இத்தனை வயஸுக்கு மேலே ஆனவர்கள், இதற்கு முந்தி இத்தனை வருஷகாலம் ஊர்ஸபையில் அங்கம் வகிக்காதவர்கள், வேறே தன் உறவுக்காரர்கள் யாரும் ஊர்ஸபையில் இத்தனை வருஷத்துக்கு முந்திவரை மெம்பராயில்லாதவர்கள் ஆகியவர்களைத்தான் 'எலெக்ட்' செய்யலாமென்று இந்தக் கல்வெட்டிலிருப்பது, ஏறக்குறைய உத்தரமேரூர் "பாணியிலேயே இருக்கிறது.

சிலாசாஸனமும் (கல்வெட்டும்), தாம்ர சாஸனமுமாக (செப்பேடுமாக) உத்தம சோழன், ஸுந்தர சோழன், முதலாம் ராஜராஜன், முதலாம் ராஜேந்த்ரன், முதலாம் குலோத்துங்கன் என்று பல பேர் காலத்தியதாக ஊராட்சி விஷயங்களைச் சொல்பவை பல இருக்கின்றன. "அன்பில் plates", "Leyden plates" என்று இவற்றில் இருப்பதிலும் இந்த விஷயங்கள் வருகின்றன. ஆனாலும் முக்யமாக, exhaustive ஆக (முழு விவரமும் தருவதாக) இருப்பது உத்தரமேரூர் சாஸனந்தான்.

ஸரியாகச் சொன்னால் உத்தரமேரூரிலேயே இரண்டு சாஸனங்கள் இருக்கின்றன. முதலில் ஒன்றும், அப்புறம் இரண்டு வருஷங்களுக்குப் பின்னால் இன்னொன்றுமாக இரண்டு கல்வெட்டுக்கள் அங்குக் காணப்படுகின்றன. முதல் கல்வெட்டு சுருக்கமாக இருக்கிறது. பிந்தையதுதான் விவரமாக இருப்பது. அதுதான் அதிக ப்ரஸித்தி அடைந்தது. நான் அதிலுள்ள விஷயங்களைத்தான் இப்போது சொல்ல இருக்கிறேன். ஏனைய கல்வெட்டுக்களில் கொஞ்சம் கொஞ்சம் தெரிகிற விஷயங்களைப் பூர்த்தியாகக் கொடுப்பது பராந்தக சோழன் காலத்திய இரண்டாம் கல்வெட்டுத்தான். (கி.பி.920-ம் வருஷத்தியது.)

ஓர் ஊரில் பொதுக் கார்யங்களில் ஏதாவது குறை ஏற்பட்டிருந்தால், முறையின்மை நடந்திருப்பதாகத் தெரிந்தால், அதை விசாரித்து நிவ்ருத்தி செய்வதற்காகச் சோழராஜா (எந்த அரசனுமே) தகுந்த அதிகாரிகளை அனுப்பி வைப்பான். இப்படி ஆயிரம் வருஷத்துக்கு முந்தி 'பராந்தகன்' என்று நாம் சுருக்கமாக சொல்லும் வீர நாராயண பராந்தக தேவ பரகேஸரி வர்ம சோழ மஹாராஜா, தத்தனூர் மூவேந்த வேளாண் என்னும் அதிகாரியை ஒரு தடவையும், அதற்கு இரண்டு வருஷங்களுக்கு அப்புறம் ஸ்ரீ வங்கநகர் ஸோமாசி க்ரமவித்தபட்டன் என்னும் அதிகாரியை இன்னொரு தடவையும் உத்தரமேரூருக்கு அனுப்பித் தேர்தல் முறைகளைச் சீர்ப்படுத்தியிருக்கிறான். இந்த இருவரும் மேற்பார்த்துச் செய்த ஏற்பாடுகளைத்தான் முறையே அந்த இரண்டு உத்தரமேரூர் சாஸனங்கள் தெரிவிக்கின்றன. அந்த ஊர்ப் பரிபாலன ஸபையார் கூடி வகுத்துக் கொண்டே தேர்தல் விதிகளை இந்த அதிகாரிகள் ஸூபர்வைஸ் செய்து அதிகார பூர்வமாக அங்கீகரித்திருக்கிறார்களென்று தெரிகிறது.

## அந்தண - வேளாள அதிகாரிகள்

இந்த இரண்டு அதிகாரிகளில் வேளான் என்பவன் வேளாளர் ஜாதி என்று சொல்லாமலே புரியும். 'ஸோமாசி', 'க்ரமவித்தன்', 'பட்டன்' என்கிற மூன்று வார்த்தையுமே ப்ராம்மண ஜாதியைக் குறிப்பிடுபவைதான். ஸோமாசி என்றால் பக்ஷணம் இல்லை. ஸோமயாகம் செய்த ஸோமயாஜி'தான் தமிழில் 'ஸோமாசி' ஆனது ஸுந்தர மூர்த்தி நாயனார் சரித்ரத்தில் 'சோமாசி மார நாயனார்' என்று ஒருத்தர் வருகிறார். அறுபத்துமூவரில் ஒருத்தர் அவர்.

க்ரமவித்தன் என்றால் என்ன? எழுதி வைக்காமலே காதால் கேட்டுப் பாடம் பண்ணவேண்டியதான வேதத்தின் வாசகங்களில் கொஞ்சங்கூடத் தப்பு வரப்படாது. அப்படி வந்தால் மந்த்ர சக்தியே பாதிக்கப்படும் என்பதால் அவற்றின் பதங்களைப் பலவிதங்களில் ஒன்றோடு ஒன்று கூட்டியும், முன்பின்னாக மாற்றியும் சொல்லிக் கொடுத்து, 'இதுதான் மூலரூபம்' என்று ஆணி அடித்ததுபோல் நிர்ணயம் செய்வதற்கான ஏற்பாடுகளை ரிஷிகள் செய்து கொடுத்திருக்கிறார்கள். இப்படி வேத அக்ஷரங்களைப் பல தினுசாக மாற்றிச் சொல்வதில் வர்ணம், க்ரமம், ஜடை, கனம் என்று பலமுறைகள் உண்டு. 'கணம்'தான் கடைசி ரொம்ப நுணுக்கமாகப் பதங்களைக் கோத்து வாங்கினது. 'கனபாடி' என்று கேள்விப்படுகிறோமே, 'கனம்' வரையில் பாடம் தெரிந்தவர்தான் கனபாடி. 'ஜடாவல்லபர்' என்றால் 'ஜடை'யில் தேர்ச்சி பெற்றவர். இப்படியே க்ரமம்வரை அத்யயனம் பண்ணினவன் 'க்ரமவித்' தமிழில் க்ரமவித்தன்', மூவேந்தர்களின் அநேகக் கல்வெட்டுக்களில் பல க்ரமவித்தர்'களின் பெயர் காணப்படுவதிலிருந்து தமிழ் நாட்டில் அப்போது ஏராளமாக வேத அத்யயனம் பண்ணின ப்ராம்ணர்கள் இருந்ததாகத் தெரிகிறது.

'பட்டர்' என்பதும் 'அய்யர்', 'சாஸ்த்ரி', 'சர்மா' என்ற மாதிரி அக்காலத்தில் ப்ராம்மணன் 'சர்மா' என்றும், க்ஷத்ரியன் 'வர்மா' என்றும், வைச்யன் 'குப்தா' என்றும், நாலாம் வர்ணத்தவன் 'தாஸ' என்றும் போட்டுக் கொள்ளவேண்டும். ஆனாலும் பூர்வகாலத்தில் ப்ராம்மணனை 'பட்டன்' என்று குறிப்பிடுவதே அதிகம் வழக்கத்திலிருந்திருக்கிறது. மஹாராஷ்ட்ர பட்டோஜி, மங்களூர் பட், பெங்காலி

பட்டாசார்யா எல்லாரும் பட்டர்களான ப்ராம்மணர்கள்தாம்.

நாலாம் வர்ணத்தைச் சேர்ந்த வேளான், முதல் வர்ணத்தைச் சேர்ந்த பட்டன் இருவரும் முக்ய அதிகாரிகளாக இருந்திருக்கிறார்கள் என்பதைக் கவனித்துக் கொள்ளவேண்டும்.

## தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)

### பொது வாழ்க்கை

### வேட்பாளரின் யோக்யாதாம்சங்கள்

உத்தரமேரூர் கல்வெட்டுக்களிலிருந்து, ஊர் ஸபைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் அபேக்ஷகருக்கு அநேக யோக்யதாம்சங்கள் நிர்ணயிக்கப் பட்டிருப்பதைத் தெரிந்துகொள்கிறோம். அபேக்ஷகரின் 'க்வாலிஃபிகேஷ'னுக்கு ஒரு லிஸ்டே கொடுத்திருக்கிறது. அந்நாளில் ஊர் ஸபை அங்கத்தினருக்குத் தேவைப்பட்ட அந்தத் தகுதிகள் என்னவென்றால் -

1. அவன் தீர்வை செலுத்தும் கால் வேலி நிலமாவது உடையவனாக இருக்க வேண்டும். ("கானிலத்துக்கு மேல் இறை நிலமுடையான்" என்பது சாஸன வாசகம். இறை என்பதுதான் வரி, அதாவது நிலத்துக்குத் தரும் தீர்வை.)

2. தன்னுடைய ஸொந்த மனையில் வீடு கட்டிக் கொண்டவனாயிருக்க வேண்டும். ("தன் மனையிலே அகமெடுத்துக் கொண்டிருப்பான்.")

3. அறுபது வயஸுக்கு அதிகமானவனாகவும், முப்பது வயஸுக்கு குறைந்தவனாகவும் இருக்கப்படாது என்று முதல் கல்வெட்டு சொல்கிறது. இரண்டு வருஷம் கழித்து அதை 'ரிவைஸ்' செய்த இரண்டாம் கல்வெட்டு, அறுபது என்பதை எழுபது என்றும், முப்பது என்பதை முப்பத்தைந்து என்றும் உயர்த்தி நிர்ணயம் செய்திருக்கிறது. "அறுபது பிராயத்துக் கீழ் முப்பது பிராயத்துக்கு மேற்பட்டார்" என்று முதலில் இருந்ததை "எழுபது பிராயத்தின் கீழ் முப்பத்தைந்து

பிராயத்தின் மேற்பட்டார்" என்று மாற்றி வயஸு நிர்ணயம் செய்திருக்கிறது.

இதிலிருந்து தெரிகிற இன்னொரு விஷயம், ஏதோ ஒரு ரூல் போட்டுவிட்டால் அதையேதான் புனராலோசனை செய்து அதை இன்னும் சீர்படுத்தமுடியுமென்று தெரிகிறபோது 'அமென்ட்மென்ட்'டும் (சட்டத் திருத்தமும்) கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

### திருத்தக் கூடிய விதிகளும்

### திருத்தக் கூடாத விதிகளும்

அமென்ட்மென்டைப் பற்றிச் சொல்லும்போது இன்னொன்று கவனிக்கவேண்டியிருக்கிறது. ஒரு காலத்தில் நல்லவர்களாக, ஸ்வய நலம் அல்லது ஸ்வய ஜாதி அல்லது ஸ்வய கட்சி நலமில்லாமல் தேச நலனையே கருதுபவர்களாக இருக்கப்பட்டவர்கள் போடும் ரூல் (விதி)களையும் 'லா'க்களையும் (சட்டங்களையும்) பிற்பாடு அப்படியில்லாதவர்கள் ஸ்வய நலனுக்காக மாற்றி அமென்ட் செய்கிற ஆபத்தும் இருக்கிறது. இவ்விஷயமாகப் பழைய காலத்தில் இருந்த உத்தமமான அம்சம் என்ன என்றால், அடிப்படையாக நம்முடைய ராஜ்யங்கள் எல்லாவற்றுக்குமே தர்ம சாஸ்த்ரம்தான் கான்ஸ்டிட்யூஷன் (அரசியல் நிர்ணயச் சட்டம்) மாதிரி இருந்ததாகும். இருக்கப்பட்ட அநேக தர்ம சாஸ்த்ரங்களில் எல்லா விஷயங்களையும் மிகவும் தெளிவாகவும் அழகாகவும் விவரிக்கும் மநுதர்ம சாஸ்திரத்தைத்தான் எந்த அரசனும் பின்பற்றியதாக அவனைப் பற்றிய ப்ரசஸ்திகளிலும் (சாஸன வாயிலாக), மற்ற இலக்கியம், காவியம் முதலானவற்றிலும் காணப்படுகிறது. "மநுநீதி வழுவாது" என்று எந்த அரசனின் ஆட்சியையும் பற்றிச் சொல்லப்படுவதால், கொஞ்சங் கூட ஸ்வயச் சார்பே இல்லாமல் ரிஷிகள் வகுத்த தர்ம சாஸ்த்ரங்களின் ஸாரமாக

மநு கொடுத்த அந்த ப்ரமாண நூலில் காண்கிற விதிமுறைகள் பின்னால் வந்த அரசர்களால் மாற்றப்படவேயில்லை என்று தெரிகிறது. இந்த அடிப்படைச் சட்டத்துக்கு 'அமென்டமென்ட்' என்பது கிடையாது. அதன் விதிகள் அவற்றின் ரூபம் சிதையாமலே காக்கப்பட்டு வந்தன.

தர்ம நெறிகளைக் குறித்ததாகவும், அவற்றை அநுஸரிப்பதற்கு ஏற்றவகையில் ஸமூஹத்தைப் பல பிரிவுகளாக்கி அவை ஒன்றுக்கொன்ற இசைந்து செயல்படு ம்படியாகவும் விதிகளைத் தரவே ஏற்பட்டது மநு தர்ம சாஸ்த்ரம். அதற்குப் பேரே தர்ம சாஸ்த்ரமே ஒழிய ராஜீய (அரசியல்) சாஸ்த்ரமல்ல. தேசத்தில் ஒட்டு மொத்தமாகவும், தேச ப்ரஜைகளில் ஒவ்வொருவரின் வாழ்கையில் தனித்தனியாகவும் தர்மம் நிலைநாட்டப்பட வேண்டுமென்பதெற்கே ஏற்பட்டது அந்த நூல். அந்த நூல் ஒரு ராஜாவின், ராஜாங்கத்தின் கடமையே இப்படிப்பட்ட தர்ம ஸ்தாபனம்தான் என்று உணர்த்துவதாகும். அரசியல் என்பது தர்மத்தை நிலைநாட்டுவதன் ஒரு அங்கமாகத்தான் பூர்விகர்களால் கருதப்பட்டது.

அர்த்த சாஸ்த்ரம், சுக்ரநீதி முதலான நூல்கள் பிற்பாடு அரசியலையே ப்ராதானமாக வைத்துச் செய்யப்பட்டன வென்றாலும், அவையும் தர்ம சாஸ்த்ரத்தை அநுஸரித்தேதான் பெரும்பாலும் செய்யப்பட்டன. யதார்த்த ஸௌகர்யங்களையும், தேவைகளையும் முன்னிட்டு தர்ம சாஸ்த்ர விதிகளை அப்படியே பின்பற்றாமல் சிற்சில விஷயங்களில், கொஞ்சம் மாற்றிச் செய்யவும் ராஜநீதி சாஸ்த்ரங்கள் இடம்

தரத்தான் செய்கின்றன. ஆனாலும், இங்கேயுங்கூட அரசியல் சாஸனத்தின் அடிப்படை அமைப்பு - basic structure என்கிறார்களே, - அது போன்ற தர்ம சாஸ்த்ர அஸ்திவாரத்துக்கு ஹானி உண்டாக்காமலே செய்வேண்டுமென்பதுதான் கொள்கையாயிருந்திருக்கிறது. அப்படி எங்கேயாவது அர்த்த சாஸ்த்ரம் தர்மசாஸ்த்ரத்துக்கு வித்யாஸமாகப் போனாலும் சதுர்தச வித்யைகளிலுள்ள நாலு சாஸ்த்ரங்களில் ஒன்றாய் உள்ள தர்ம சாஸ்த்ரத்தைத் தான் ப்ரமாணமாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்றும், அந்த வித்யைகளுக்குப் பிற்பட்டே ஸ்தானம் பெறுகிற நாலு

உபவேதங்களில் ஒன்று மட்டுமேயான அர்த்த சாஸ்த்ரம் முதலான அரசியல் நூல்களின் அபிப்ராயத்தைத் தள்ளிவிடவேண்டுமென்றும் ஆன்றோர் கருதியிருக்கிறார்கள். அந்த உத்தமக் கொள்கையைக் கடைப் பிடித்துத்தான் தமிழ் நாட்டு அரசர்கள் தங்களை மநு நூல் வழி நடப்பவர்களாகவே சொல்லிக் கொண்டார்கள். அர்த்த சாஸ்த்ர வழி நடப்பவர்களாக அல்ல.

எதற்குச் சொல்லவந்தேன் என்றால், தமிழ் வேந்தர்களின் ஆட்சிக்காலத்தில் சட்டத்திருத்தம் பண்ண இடமே இல்லாமலும் இல்லை, ஆனால், அதே ஸமயத்தில் சட்டத் திருத்தம் என்ற பெயரில் அவ்வப்போது ஆட்சியிலிருப்பவர்களின் இஷ்டப்படியும் ஸௌகர்யப்படியும் எந்த விதியை வேண்டுமானாலும் மாற்றலாம் என்றும் இல்லாமல், தர்ம சாஸ்த்ர அடிப்படை விதிகளை, intact-ஆக (கட்டுக் குலையாமல்) ரக்ஷிக்கத்தான் வேண்டும் என்றும் இருந்தது. தர்ம சாஸ்த்ரத்தை வேராகக் கொண்டு ராஜாங்க வ்ருக்ஷம் ரக்ஷிக்கப்பட்டபோது அந்த வேரைக் கொஞ்சம்கூட பாதிக்காமலே, யதார்த்த நடைமுறைகளை யொட்டிக் கிளைகள் மாதிரித்தான் புதுச் சட்டங்கள் போட்டது. அவச்யமேற்படும்போது கிளைகளைக் கொஞ்சம் வெட்டி விடுகிறாற்போல, ஒன்றிரண்டைக் கழித்துக் கட்டியும் விடுகிறாற்போல இந்தப் புதுச் சட்டங்களை 'அமெண்ட்' பண்ணவும் செய்தார்கள்.

சோழராட்சியில் க்ராம மஹா ஸபை அங்கத்தினருக்கான க்வாலிஃபிகேஷன்களில் மூன்றாவதான வயஸு பற்றிய விதியை இப்படித்தான் ரிவைஸ் பண்ணினது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *பொது வாழ்க்கை*

### சாஸ்திர அறிவும், காரியத்திறனும்

நாலாவது யோக்யதாம்சம், அபேக்ஷகர்கள் வைதிக தர்மம் இன்ன என்று தெரிந்தவர்களாக இருக்கவேண்டும்.

நம்முடைய சாஸ்த்ரக் கொள்கைகளை நன்றாக அறிந்தவர்களா ஙயிருக்கவேண்டும். நல்ல படிப்பறிவு உள்ளவர்களாயிருக்க வேண்டும்.

இதைச் சொன்ன கையோடேயே இந்த யோக்யதாம்சத்துடன் சேர்த்தே இன்னொன்றையும் வலியுறுத்தியிருக்கிறது. சாஸ்த்ரக்ஞர்களாகவும் படிப்பாளிகளாகவும் இருக்கப்பட்ட பல பேருக்குக் கார்யத் திறமை இல்லாமலிருப்பதைப் பார்க்கிறோமல்லவா? ஊர் நிர்வாஹத்தில் பொறுப்பு ஏற்பவர்கள் இப்படி இருக்கப்டாது. அவர்கள் வித்வான்களாக இருப்பது மட்டுமில்லாமல் செயல்திறமையுள்ளவர்களாயும் இருக்க வேண்டும் என்று விதி செய்திருக்கிறது. "வேதத்திலும், சாஸ்திரத்திலும் காரியத்திலும் நிபுணர் என்னப்பட்டிருப்பவர்" என்று சாஸன வாசகம் கூறுகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### அர்த்த சுத்தமும் ஆத்ம சுத்தமும்

இவர்கள் ஸொத்து உள்ளவர்களாயிருக்கவேண்டும் என்பதை முதல் இரண்டு விதிகளாலும் தெரிந்து கொண்டோம். இப்போது அது தப்பு வழியில் ஸம்பாதித்ததாக இருக்கப்படாது, ஸபை மெம்பர் ஆன பிற்பாடும் இவர்கள் தப்பு வழியிலே போய் ஸம்பாதிக்கக் கூடாது என்று தர்மத்தால் அர்த்தத்துக்கு - அறத்தினால் பொருளுக்கு - வேலி போட்டுக் கொடுப்பதாக ஒரு ஷரத்து வருகிறது. ஸொத்து விஷயம் மட்டுமில்லை, எல்லா விஷயத்திலுமே சிறந்த ஒழுக்கம் உள்ளவர்களாயும் ஆத்ம ஸம்பத்தை வ்ருத்திசெய்து கொண்டவர்களாயும் அபேக்ஷகர் இருக்க வேண்டும். அபேக்ஷகர் தேர்ந்தெடுக்கப்பட்டு ஸபையின் அங்கத்தினர் ஆன பிற்பாடும் இதைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நியாயமான முறையில் அடைந்த ஸொத்துக்களையும், பரிசுத்தமான நடத்தையும் உள்ளவர்கள்தான் முதலில் அபேக்ஷகராக இருக்கமுடியும்,

பிற்பாடு அங்கத்தினராக நீடிக்கவும் முடியும். "அர்த்த சுத்தமும் ஆத்மசுத்தமும் உடையார்" என்று சாஸனம் சொல்லும். இந்த வாசகந்தான் ஊரின் நிர்வாஹஸ்தர்களுக்கான யோக்யதாம்சங்கள் அத்தனைக்கும் ஜீவஸாரம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

## தொடர்ந்து அங்கம் வகிக்கலாகாது

இந்தத் தேர்தல் வருஷாவருஷம் நடப்பதாகும். இந்த வருஷமெம்பர் அடுத்த வருஷத் தேர்தலிலும் 'காண்டிடேட்'டாக (வேட்பாளராக) இருக்க முடியாது. இப்படி, ஒரு வருஷ 'டெர்மு'க்குப் பிறகு வருகிற மூன்று வருஷங்களுக்கு அங்கம் வஹிக்க முடியாது. மூன்று வருஷதுக்கு அப்புறம் வேண்டுமானால் மறுபடியும் ஸபையில் 'மெம்பர்ஷிப்' வஹிக்கலாம். இதை "மூவாண்டினிப்புறம் வாரியம் செய்திலாதார்" என்று சாஸனம் கூறுகிறது. அதாவது, ஒரு தேர்தல் நடப்பதற்கு முந்தைய மூன்று ஆண்டுகளுக்குள் அபேக்ஷகர் ஸபை மெம்பராக இருந்திருக்கப்படாது.

ஒருத்தர் அங்கத்தினரான பிற்பாடு அதிக நாள் பதவி வஹிப்பதாலேயே இதற்கு முந்திய விதியில் சொன்ன அர்த்த சுத்தமும் ஆத்ம சுத்தமும் கெட்டுப்போக ஹேது ஏற்பட்டுவிடப் போகிறதே என்று ஜாக்ரதை செய்வதாகத் தான் இந்த விதி ஏற்பட்டிருக்கிறது.

"மூவாண்டின் இப்புறம்" என்பதை, முதலில், "மூவாண்டின் அப்புறம்" என்று படித்துவிட்டு, தொடர்ச்சியாக மூன்று வருஷங்கள் மெம்பராக இருந்த எவரும் அதற்குப்புறம் தேர்தலுக்குத் தகுதிபெற மாட்டார்களென்று அர்த்தம் பண்ணிக் கொண்டுவிட்டேன். அப்புறம்தான் "இப்புறம்" என்பதை ஸரியாகத் தெரிந்து கொண்டு, அதற்கு "முந்தைய மூன்றாண்டுகளுக்குள்" என்று பொருள் என்று

புரிந்துகொண்டேன். அதாவது ஒரு வருஷ 'டெர்ம்' வஹித்தபின் மூன்று வருஷ gap (இடைவெளி) கொடுத்து எத்தனை தடவை வேணுமானாலும் ஒருத்தர் தேர்ந்தெடுக்கப்படலாம். ஆனாலும் ஒரு வருஷ பதவி வஹித்தால் அப்புறத் அதைப் போல மூன்று மடங்கு காலம் பதவி இல்லை என்பதால் எவரும் தப்பான முறையில் தங்களுடைய இன்ஃப்ளுயென்ஸை வளர்த்துக் கொள்ளமுடியாதபடி செய்திருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**உறவினர் உதவாது**

கடைசியாய் வரும் ஏழாவது ஷரத்தும் இந்த ஐந்தாம், ஆறாம் ஷரத்துக்களை ஒட்டி அவற்றைக் 'காம்ப்ளிமென்ட்' பண்ணுவதாகவே (இட்டு நிரப்புவதாகவே) இருக்கிறது. அது என்ன சொல்கிறதென்றால் புதிதாக அங்கத்தினர் ஆகிறவர்கள் ஏற்கெனவே அங்கத்தினர்களாக இருந்தவர்களின் நெருங்கிய பந்தக்களாக இருக்கப்படாது என்கிறது. "வாரியம் செய்தொழித்த பெருமக்களுக்கு ஆத்ம பந்துக்களல்லாதார்" என்பது சாஸன வாக்கு.

**ஸொத்து குறித்து நிபந்தனை**

இநத் க்வாலிஃபிகேஷன்களை ஒவ்வொன்றாகப் பார்ப்போம். முதலில் அபேக்ஷகருக்கு கால் வேலியாவது நிலம் ஸொந்தமாக இருக்கவேண்டுமென்றும், ஸொந்தமனையில் வீடு இருக்க வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறது. அதோடு நிலத்துக்கு அவன் தீர்வை கட்டவேண்டுமென்றும் இருக்கிறது. நிலம் இருந்தால் வரி (தீர்வை) கட்டத்தானே வேண்டும் என்று கேட்கலாம். அப்படியில்லை. ராஜமான்யமாக ப்ராம்மண ச்ரௌதியிலிருந்து ஏகாலி மாதிரியான தொழிலாளி வரையிலும் ஸ்வஜாதித் தொழில் செய்கிற எல்லாருக்கும் நிலம் கொடுக்கப்பட்டிருந்தது. இதற்குத் தீர்வை கிடையாது. "இறையிலி" என்றே இவற்றை

சொல்லியிருக்கும். இப்படி தானமாகப் பெறாமல் ஒருவன் தானே உழைத்தோ, அல்லது தன் பித்ருக்கள் உழைத்துப் பெற்றுப் பிதுரார்ஜிதமாகவோ அந்தக் கால்வேலி நிலம் படைத்தவனாக இருக்கவேண்டும் என்பதே விதி.

**லக்ஷ்ய தர்மமும், நடைமுறை ஸாத்யமும்**

'ஸொத்து இருக்க வேண்டும், வரிகட்ட வேண்டும் என்று என் வைத்திருக்கிறது? ஏழைக்கு ப்ரதிநிதித்வம் வஹிக்க ரைட் இல்லையா?' என்று அபேதவாதம் பேசலாம். ஐடியலிஸத்துக்கு (ஆதர்ச வாதத்துக்கு) இந்த வாதம் ஸரியாயிருக்கலாமே தவிர, ஸாதாரண ஜனங்களின் மனப் போக்குகளை வைத்து அன்றாடம் நடக்கிற ப்ராக்டிகலான (யதார்த்த) ராஜீய கார்யங்களுக்கு ஸரிப்பட்டு வராது என்று நம்முடைய மூதாதையர் கண்டிருக்கிறார்கள்.

ஐடியல் நிலையை எடுத்துச் சொன்ன தர்மசாஸ்த்ரங்களே, ப்ரத்யட்ச நடைமுறை முழுக்கவும் அந்தப்படிதான் இருக்கவேண்டும் என்று கண்டிப்புப் பண்ணினால் நிச்சயமாக அப்படிப் பண்ண ஸர்வஜனங்களாலும் முடியாமல் போய், வெறும் வேஷமாகவும் ஹிபாக்ரிஸியாகவும்தான் ஆகும் என்பதைக் கருத்தில் கொண்டு வர்ணம், ஆச்ரமம் என்றெல்லாம் பிரித்துக் கொடுத்து யார் யாருக்கு எந்தெந்த ஸ்டேஜில் எந்தெந்த அளவுக்கு அந்த ஐடியலையே இளக்கியும் இறுக்கியும் கொடுக்கவேண்டுமென்று நன்றாக வகை தொகை செய்து தந்திருக்கிறேன். "ஐடியலை இளக்கி" என்றால் அதர்மத்தை விதித்ததாக அர்த்தமில்லை. ஆனால் தர்ம விதியை ஒரு நிலைவரையில் ரொம்பக் கண்டிப்பு செய்யாமல், அதே ஸமயத்தில் ரொம்பவும் கண்டிப்பான அந்த ஐடியல் நிலைக்கு கொஞ்சம் கொஞ்சமாக ஒருத்தனைக் கொண்டு சேர்க்கும்படியாகப் பாகுபாடு செய்தது என்றே அர்த்தம். வாழ்க்கையின் பல துறைகளிலும் இப்படி என்றாலும் பெரிய ஜன ஸமூஹத்தின் அன்றாட உலகயில் நிலவரத்தைக் குறித்ததான பாலிடிக்ஸில் மற்றத் துறைகளைவிடவும் யதார்த்தத்துக்கும் ஸைகாலஜிக்கும் அதிக இடம் தரவேண்டுமென்பதைக் கருத்தில் கொண்டே அர்த்த சாஸ்த்ரம் உண்டான நாளிலிருந்து சோழர்காலம் வரைக்கும் சட்ட திட்டங்கள் செய்ததாகப் பார்க்கிறோம்.

இப்படிச் சொன்னதால் தற்காலத்தில் தர்ம ஸம்பந்தமே

இல்லாமல், தெய்வ ஸம்பந்தமே இல்லாமல் பாலிடிக்ஸ் நடத்துகிற மாதிரி அப்போது இருந்ததாக அர்த்தம் இல்லை. தர்மம், தெய்வம் என்று நான் இரண்டாகப் பிரித்துச் சொல்வதுகூடத் தப்புத்தான். நம் அத்தனை பேரையும் ஆட்டிப் படைத்து ஆட்சி பண்ணிக் கொண்டிருக்கும் ஈச்வரனிடம் பயபக்தியிலே கட்டுப்படாமல் தனியாக தர்மம் என்னும் நன்னெறிக் கொள்கைகளுக்கு மட்டும் கட்டுப்பட்டு அவற்றைக் கடைபிடிப்பது என்பது வெறும் சவுடால்தான்.

தெய்வம், தெய்வ ஸங்கல்பத்தைப் புரிந்துகொண்ட ரிஷிகள் செய்த தர்ம சாஸ்த்ரம் ஆகியவற்றை "ஸம்பந்தமில்லாதவை" என்று தள்ளிவிட்டு தனியாக அரசியல் கொள்கை, அரசாங்கத் திட்டம் என்றெல்லாம் போனால் அது ஜனங்களின் ஆத்மஹானியில்தான் முடியும். வெள்ளைக்காரர்கள் கொண்டுவந்த அரசியல் ஐடியாலஜிகளிலிருந்துதான் இப்படி தெய்வ ஸம்பந்தத்தையும், சாஸ்த்ர ஸம்மதத்தையும் ஒதுக்கிவிட்டு ராஜ்ய நிர்வாஹம் செய்வதும், அரசியல் என்று தனியாக ஒன்றைப் பெரிசு படுத்துவதும் வழக்கமாயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### துருக்கர், வெள்ளையர் ஆட்சிகளில்

வெள்ளைக்காரர் ஆட்சிக்கு முன் நடைபெற்ற துருக்கர் ஆட்சி ஸமாசாரம் என்னவென்றால், முகாலயர்களும், மற்ற அநேக ஸுல்தான்களும் அவர்களைப் பொறுத்தமட்டில் அவர்களுடைய மதத்தில் நிரம்பப் பற்றுக் கொண்டிரு ந்தவர்கள். நம்மைப்போலவே அவர்களுக்கும் சட்டப் புஸ்தகமே மத ப்ரமாணமுள்ளதுதான். ஷாரியத் என்று அதற்குப் பேர். அதன்படிதான் அவர்கள் தீர்ப்புப் பண்ணியது.

ஆனாலும் அது நம்முடைய தர்மசாஸ்த்ர ஸம்பந்தமில்லாதது. நம்முடைய தர்ம ஆசரணைகளையும்

அநுஷ்டானங்களையும் முடிந்தமட்டும் அழிப்பதுதான் அவர்களுடைய எண்ணமாயிருந்ததால் பெரும்பாலான ஹிந்து ஸமூஹத்தைப் பொறுத்தமட்டில் ராஜாங்க நிர்வாஹம் அவைதிகமாகத்தான் நடந்தது.

இதைச் சொல்லும்போதே இன்னும் இரண்டு விஷயங்களைச் சொல்லவேண்டும். வேத விரோதமான முறை ரொம்பவும் காரமாகப் போய்விடாமல் இரண்டு ஸ்பூன் நெய்விட்டது போன்ற இரண்டு விஷயங்கள், ஒன்று - பலாத்கார மதமாற்றம் நடக்கத்தான் செய்தது என்றாலும், மதம் மாறாமல் இருந்த ஹிந்து ஸமூஹமானது பெரும்பாலான பிரச்னைகளைத் தங்கள் ஜாதி நாட்டாண்மைகளின் மூலமே தீர்த்துக்கொள்ளும்படி அப்போதும் விட்டிருந்தார்கள்.

இந்த அளவுக்கு நம்முடைய பூர்விகர்களின் முறையே தொடர்ந்து அநுஸரிக்கப்பட்டது. அக் காலங்களில் அந்தந்த ஸமூஹ நாட்டாண்மையே அந்தந்த ஜனங்களின் பிரச்னைகளையும் வழக்குகளையும் விசாரித்து முடிவுகள் எடுப்பதுதான் அதிகம். ராஜ ஸமூஹத்தின் விசாரணைக்குமூ ராஜாங்க நீதிஸ்தலங்களுக்கும் போன கேஸ்கள் குறைச்சல். இந்த நாட்டாண்மை எடுபடாமல் பழையபடி நடந்தவரைக்கும் அந்த அளவுக்கு தர்மசாஸ்த்ர விதிகளில் ராஜாங்கச் சட்ட திட்டங்களின் குறுக்கீடு குறைக்கப்பட்டிருந்தது. இன்னொன்று -

விக்ரஹங்களை உடைப்பது, கோவிலை அழிப்பது என்றெல்லாம் அவர்கள் பண்ணினாலும்கூட, ஹிந்து ஸமூஹத்துக்காக சட்டம் போடும்போது பஹிரங்கமாக நம்முடைய சாஸ்த்ரிய வாழ்முறையை பாதிக்கும்படியாகவோ, தர்ம சாஸ்த்ர விதிகளுக்கு விருத்தமாகவோ போட்டதில்லை. பலாத்காரமாகப் பலரைத் தங்கள் மதத்துக்கே மாற்றிக் கொண்டு அப்படி மாறியவர்கள் தங்களுடைய மதக் கொள்கைப்படியே நடக்கவேண்டுமென்று நிர்பந்தித்தாலும், இப்படி மாற்றாமல் விட்டு வைத்திருந்த ஸமூஹம் அதன் தர்மப்படியே நடப்பதை ஆக்ஷேபிக்கவில்லை, அதன் தர்ம விதிகளை அரசாங்கச் சட்டத்தால் மாற்றவுமில்லை. (உதாரணமாக ஹிந்து ஸ்த்ரீகள் விவாஹரத்து செய்துவிட்டு இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ளலாம், ஹிந்து ஸ்த்ரீகளுக்கு ஸொத்தில் பங்கு தரவேண்டும் என்றெல்லாம்

அவர்கள் சட்டம் கொண்டுவரவில்லை.)

அவர்களுடைய உள்ளெண்ணம் எதுவாயிருந்தாலும், மிகப் பெரிய மெஜாரிட்டியான ப்ரஜைகளின் அத்ருப்தியையும் விரோதத்தையும் ஸம்பாதித்துக்கொண்டு ஆட்சி நடத்த முடியாது என்பதை உத்தேசித்தாவது அவர்கள் இந்த இரண்டு அம்சங்களை அநுஸரிக்க வேண்டியதாயிருந்தது.

வெள்ளைக்காரர் ஆட்சியிலும் இந்த இரண்டும் தொடர்ந்தது. ஆனால் முன்னாலே இருந்தவர்கள் அடி, பிடி என்று பலாத்காரமாகவே போவது அதிகமாகவும் தந்த்ரமாக ஏமாற்றிச் செய்வது குறைவாகவும் இருந்தது என்றால், இவர்களோ அதைத் திருப்பி வைத்து வெளியிலே பலாத்காரம் அதிகம் தெரியாமலே நயவஞ்சகமாகப் பண்ணி ஹிந்து தர்மத்தை உள்ளூர உளுத்துப்போகச் செய்தார்கள். ஆகையால் விக்டோரியா ப்ரவேசிக்காதது போலத்தான் சட்டங்கள் செய்தார்களென்றாலும், நேர் அடியைவிடப் பலமாக உள்ளே போய்த் தாக்குகிற தந்த்ர அடியாகத் தங்கள் உத்யோகங்களைக் காட்டி, அதற்குத் தேர்ச்சி பெறுவதற்காக ஒரு கல்விமுறையையும் காட்டி, அந்தக் கல்வி முறையால் ஹிந்துக்களே ஹிந்து தர்ம சாஸ்த்ரவிதிகளில் நம்பிக்கை இழந்துவிடும்படியாகப் பண்ணினார்கள். புதிய அரசியல் கொள்கைகள், ஸமூஹக் கொள்கைகள், சரித்ர ஆராய்ச்சி, பாஷை ஆராய்ச்சி, சாஸ்த்ர ஆராய்ச்சி என்றெல்லாம் ரொம்ப 'இம்பார்ஷிய'லாகச் செய்கிறாற்போலவே பலவற்றைக் கொஞ்சங் கொஞ்சமாக நம்முடைய ஸமூஹ அமைப்பு, சாஸ்த்ராபிமானம் எல்லாம் கலகலத்துக்கொண்டே வரும் படியாகக் 'கைங்கர்யம்' பண்ணினார்கள். ஹிந்து என்பவன் இன்னொரு மதத்துக்கு மாறவேண்டுமென்பதில்லை, ஹிந்துவாக இருப்பது போல இருந்துகொண்டே அந்த மத சாஸ்த்ரங்களில் அடியோடு நம்பிக்கையில்லாதவனாக, அடியோடு, அவைதிகமாக ஆகும்படி பண்ணிகாட்ட முடியுமென்று நிரூபித்துவிட்டார்கள். ஜனங்களில் ஒரு பகுதியை நேராக அவர்களுடைய மதத்துக்குள்ளும் இழுத்துக் கொண்டார்கள்.

இதிலே ஒரு வேடிக்கை! அவர்களுடைய தேசங்களில் மதபீடத்துக்கும் ராஜபீடத்துக்கும் ஓயாமல் பலப் பரீக்ஷை நடந்து, முடிவில் இரண்டையும் தனித்தனியாக எல்லை

வகுத்துப் பிரித்து, ராஜாங்கச் சட்டமுறையைப் பெரும்பாலும் மத ஸம்பந்தமில்லாததாகத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். ரோமன் காதலிக் மதம், லூதரனிஸம் என்கிற மாதிரி ஒன்றை State Religion என்று அநேக

ஐரோப்பிய நாடுகளில் வைத்தக்கொண்டிருந்த போதிலும் இப்படி இருக்கிறது. பிஷப்புகளிலேயே ஒரு பிரிவை இங்க்லாண்டில் ராஜா நியமிப்பது, அவர்களுக்கும் House of Lords-ல் (ப்ரபுக்கள் ஸபையில், நம்தேச 'மேல் ஸபை' மாதிரியானதில்) ஸ்தானம் தருவது, ஆர்ச்பிஷப் ஆஃப் காண்டரிபரிதான் ராஜாவுக்கு 'காரணேஷன்' (பட்டாபிஷேகம்) பண்ணுவது - என்றெல்லாமிருந்தாலும், நேராக ஸமய விஷயமாயில்லாத ஸமூஹச் சட்டம் எல்லாமே அரசியல் கருத்துக்களின் மேலேயே பண்ணுவதாகத்தான் இருக்கிறது. ஷாரியத் மாதிரி கிறிஸ்துவ மதச் சட்ட புஸ்தகம் என்ற ஒன்று எப்போதுமே இருந்ததில்லை. கிறிஸ்துவுக்கு முன்னாலிருந்த ஹீப்ருக்களுக்கு நம் தர்ம சாஸ்த்ரங்களைப் போலவும் ஷாரியத் போலவும் மத ப்ரமாணமுள்ள சட்டமுறை இருந்தாலும் பிற்பாடு ஹீப்ரு ஸமூஹமானது கிறிஸ்துவம், யூத மதம் என்று உடைந்தபோத கிறிஸ்து தம்மை அநுஸரிப்பவர்களுக்கு அநேக ஒழுக்கங்களையும், வாழ்முறை நியமங்களையும் உபதேசித்தாரென்றாலும், சட்ட சாஸ்த்ரம் என்று சொல்லுமூபடியாக codify செய்து ஒன்றும் கொடுக்கவில்லை. அதனால் அப்புறம் போப்புகளுக்கும் ராஜாங்கங்களுக்கும் நித்ய யுத்தமாக இருந்து, முடிவில் மத பீடம் ராஜாங்க பீடம் இரண்டும் தனித்தனி அமைப்புக்களாக ஆகி, ராஜாங்கங்களால் 'ஜூரிஸ்ப்ரூடன்ஸ்' (நீதி சாஸ்த்ரம்) ஏற்படுத்தப்பட்டபோது அவற்றில் மத ப்ராமாணத்துக்கு அதிகமாக இடமே இல்லாமல் 'ஸெக்யுலர்' என்று சொல்லும்படிதான் அமைந்தது. ஸயன்ஸூம் இந்த ஐரோப்பிய நாடுகளில்தான் தோன்றி அபிவ்ருத்தி கண்டது. அதிலே கண்ட உண்மைகள் அவர்களுடைய மதக் கொள்கைகளுக்கு ரொம்பவும் வித்யாஸமாகயிரு ந்தவனவாதலால் அவர்களுக்கு மதாபிமானம், மதாநுஷ்டானம் ஆகியன துருக்கர்களோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது ரொம்பக் குறைவாக ஆயின.

நான் வேடிக்கை என்று சொல்ல வந்தது எதையென்றால்,

இப்படி அவர்களே ஸ்வமத அபிமானம் குன்றி, ஸயன்ஸிலும் நாகரிக இந்த்ரிய ஸுகத்திலும் அதிகமாக விழுந்த போதிலும்கூட, 'நம்முடைய ஆட்சிக்குக் கீழே வந்துவிட்ட இந்த இந்தியா தேசத்துக்கு இப்படி மஹோந்நதமாக ஹிந்துமதம் என்று ஒன்று இருப்பதா?' என்று மட்டும் கரிந்திருக்கிறது அதனால் இங்கே அவர்களுடைய மதத்தை வேர் பிடிக்கப் பண்ணவும், நம்முடைய மதத்தின் வேரை அரிக்கப் பண்ணவும் என்னவெல்லாம் தந்த்ரமாகச் செய்யலாமோ அத்தனையும் செய்தார்கள். இருந்தாலும் சட்டம் என்று செய்யும் போது நம்முடைய மத சாஸ்த்ர விதிகளை நேராக பாதிக்கும்படியாத் துணிந்து எதுவும் செய்யாமலேதான் இருந்தார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### "ஸொந்த" ஸர்க்காரின் அத்துமீறல்!

ஆக, துருக்க - வெள்ளைக்கார ஆட்சிகளில்கூட நம் சாஸ் -த்ர ஸம்மதமாகவோ, சாஸ்த்ர ஸம்பந்தமுள்ளதாகவோ நிர்வாஹம் நடக்காவிட்டாலும் அதை அப்பட்டமாக மீறும்படி ஹிந்து ஸமூஹத்தைக் கட்டாயப் படுத்தி ராஜாங்கச் சட்டம் செய்வதென்பது இல்லை. இந்த மஹா பெரிய அத்துமீறல் தம்முடைய 'ஸொந்த'மான ஸ்வதந்த்ர ஸர்க்காரால்தான் செய்யப்பட்டு வருகிறது! தேச ஸ்வதந்த்ரம் என்று சொல்லிக்கொண்டே தங்களுடைய ஸொந்த வாழ்க்கைமுறை, எண்ணப் போக்கு எல்லாவற்றையும் வெள்ளைக்கார வழிக்குப் பரதந்த்ரமாக்கிவிட்டவர்கள் நடத்தும் குடியரசின் ரூபம் இப்படியிருக்கிறது.

மத ஸம்பந்தமில்லாத ஸெக்யுலர் ராஜாங்கம் என்று பேர். ஆனாலும் கிறிஸ்துவ மதம், துருக்க மதம் ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள் அவர்களுடைய மத ஸம்ப்ரதாயங்களின்படியே செய்யப் பூர்ண ஸ்வதந்திரம் தந்திருக்கிறதே தவிர ஹிந்துக்கள் என்று வரும்போது மட்டும்

அவர்களுடைய மதக் கொள்கைகளை பாதிக்கும்படியாக என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்றே சட்டங்கள் வகுத்து வருகிறார்கள். இப்போது நடக்குமூ 'ஸெக்யூலரிஸம்' என்பது ஹிந்து சாஸ்த்ரங்களை மீறுவது, அவற்றில் மரியாதையைக் கொடுப்பது என்பதுதான். முக்யமாக, சாஸ்த்ரகாரகர்களுக்குத் தெரியாத, அல்லது பிடிக்காத ஸமத்வம் தங்களுக்குத்தான் தெரியும், அவர்கள் பாரபக்ஷமாகப் பண்ணியதையெல்லாம் தாங்கள் சீர்படுத்தவேண்டும்' என்ற அபிப்ராயத்தில் கார்யங்கள் செய்துவருகிறார்கள்.

கோபித்துக்கொண்டு ப்ரயோஜனமில்லை. சாந்தமாக. ஸாத்விகமாக எடுத்துச் சொல்வதுதான் நம் கடமை. ஈச்வரனை நம்பி, அவனை ப்ரார்த்தித்துக்கொண்டு, 'நம்முடைய பெரிய மரபையும் நாகரிகத்தையும் சீர்திருத்தம் என்ற பெயரில் சிதைத்துவிட்டால், அப்புறம் லோகம் பூராவுக்கும் வழிகாட்டியாக இருந்து அதுமாதிரியான ஒன்றை மறுபடி உண்டாக்கவே முடியாது' என்பதைப் புதிதாக நிர்வாஹத்துக்கு வந்திருப்பவர்களுக்கு நன்றாக விளக்கிச் சொல்லவேண்டும். நல்ல வழிக்கு வருவார்கள் என்று நம்பி, கோபதாபமில்லாமல், ஈச்வர ஸ்மரணையோடு சொன்னால் நிஜமாகவே வழிக்கு வருவார்கள். புது நிர்வாஹம் சின்னக் குழந்தையாயிருக்கிறது. ஒரு குழந்தை எப்படி வீட்டுப் பெரியவரிடம், அவர் ஊருக்கே மதிப்பு வாய்ந்த ச்ரௌதிகள் என்றால்கூட, ஸ்வாதீனமாகப் போய் அவருடைய சிகையைப் பிய்த்து, குண்டலத்தை இழுத்து, அவர் மேலேயே அசிங்கம் பண்ணிக்கூட விளையாடுமோ அப்படித்தான் ஸொந்த ஸ்வாதீனத்தின் மேல் நம்முடைய குழந்தை நிர்வாஹஸ்தர்கள் பாரத தர்மத்தைப் பண்ணிக்கொண்டிருக்கிறார்களென்றும், அஞ்சு வயஸாகி ஸ்கூலில் போட்டால் குழந்தை அடங்கி, விஷயங்களைப் புரிந்துகொள்கிறது போல், இன்னும் கொஞ்ச காலம் போனால், நாமும் விடாமல் "வாத்யார்" பண்ணிக்கொண்டு தர்ம ந்யாயங்களைச் சொல்லிக்கொண்டேயிருந்தால் ஸரியாகி விடுவார்களென்றும் நம்புவோம்.

ஆனாலும் தற்போது அவர்கள் பண்ணுவது தப்பான சாஸ்த்ரம் அல்லது ஸம்பரதாயத்தை ஸரி செய்வதாகநினைத்துக்கொண்டு செய்கிற தப்புதான்.

## ஸொத்துத் தகுதி பற்றி

இதில் ஒரு அம்சமாகத்தான், ஸொத்து இருக்கிறவனுக்கு மட்டும்தான் சட்டஸபை, நகரஸபை ஆகியவற்றில் அங்கம் வஹிக்கத் தகுதி உண்டு என்றால் அது ஒரு Vested Interest (ஒரு குறிப்பிட்ட கும்பலின் நலனை மட்டும் நிலைப்படுத்தும் பட்சபாத அக்கறை) என்று கண்டனம் செய்து, ஸகல ஜனங்களுக்கும் தகுதி உண்டு என்று பண்ணியிருப்பது.

ஆனாலும் இப்போதும் அபேக்ஷகர் டெபாஸிட் தொகை என்று ஒன்று கட்டவேண்டும் என்று வைத்திருக்கிறார்கள். பொழுது போகாமல் எவன் வேணுமானாலும் தேர்தலுக்கு நின்றுவிடப் படாதே என்பதற்காக இப்படி வைத்திருப்பதாகச் சொல்லலாமாயினும், ஏழை இந்தியாவில் டெபாஸிட் தொகைக்குக்கூட வக்கில்லாமல் எத்தனையோ பேர் இருப்பார்கள் என்பதைப் பார்க்கும்போது இது இவர்கள் பெரிதாகச் சொல்கிற ஸமத்வத்துக்கு விரோதமானதுதான். பொருளில்லாத ஒரு அபேக்ஷகன் டெபாஸிட்டுக்காகவே ஒருவன் தயவை நாடவேண்டியதாகும். இதுவே 'கரப்ஷ'னுக்கும், பட்சபாதச் சலுகைக்கும் வழி திறப்பதாக ஆகலாம். வரி கட்டும் தன் ஸொந்த நிலம், ஸொந்த மனைக்கட்டில் வீடு முதலிய ஜவேஜி அபேக்ஷகருக்கு இருக்க வேண்டும் என்று விதி செய்தபோது இந்த ஊழலம்சத்துக்கு இடமில்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

*ஜீவாஸாரமான தகுதி*

## குறைவான லஞ்ச ஹேது

மநுஷ்ய ஸ்வபாவத்தைப் பார்த்தால் ஸொத்து, ஸ்வதந்த்ரம் உள்ளவன்தான் லஞ்சம் வாங்குகிற வாய்ப்பு குறைச்சல். இப்படி நான் சொன்னால் நீங்கள் ஒப்புக்கொள்ளாமல் சண்டைக்கு வரலாம். பேர் பேராக ஆஸாமிகளைக் காட்டி, 'லக்ஷம், பத்து லக்ஷம் என்று சேர்ந்த பிற்பாடும் இவர்களெல்லாம் இரண்டு கையாலும் வாங்கிக்கொண்டே இருக்கிறார்களே!' என்று கேட்கலாம். ஆனாலும் இப்படி வாழ்க்கையே பணம்தான் என்று பணத்துக்காகப் பறக்கிற போக்கு நம்மிடையே ஏற்பட்டது ஸமீப காலத்தில்தான். ஆத்ம ஸம்பத்து தேய்ந்துகொண்டே வந்து, அதே ஸமயத்தில் நூதன நூதனமாக போக்யப் பொருள்கள் கடைக்கு வருவதாகவும், பேப்பர் ரூபாயென்றும், அதை லக்ஷம்,கோடி என்று பாங்க் என்பதாக ஒன்றில் எவ்வளவு வேண்டுமானால் போட்டு வைக்கலாம் என்றும் ஏற்பட்ட பிற்பாடுதான் நம் ஜனங்களுக்குப் பணமே குறி, பணம் சேர்ப்பதே வாழ்க்கை லக்ஷ்யம் என்று ஆனது. இதற்கு முந்தி, போக்ய வஸ்த்துக்களுக்கு ஓர் அளவு இருந்தவரையில், இருந்த வஸ்துக்களின் அநுபோகத்தையும் கட்டுப்படுத்தும் சாஸ்த்ரங்களில் பொதுவாக ஜனங்களுக்கு பயம் இருந்தவரையில், பாங்கில் ஸர்வ ஜாக்ரதையாக எத்தனை வேண்டுமானால் போட்டு வைத்துக்கொள்ள இடம் இல்லாத வரையில், நம்முடைய மக்களுக்குப் பணத்தில் இத்தனை ஆசை இருக்கவில்லை. அதனால் பணக்காரர்கள் லஞ்சம் வாங்கும் வாய்ப்பு அப்போது ரொம்பக் குறைவுதான். இப்போதுங்கூட, 'கம்பேரடிவ்'வாக (ஒன்றுக்கொன்று ஒப்பிட்டு)ப் பார்த்தால், பணமே இல்லாதவன் பதவிக்கு வந்தால் 'கண்டது காணாதது மாதிரி' என்கிறபடி, வசதி படைத்தவனைவிட ஜாஸ்தியாகத்தான் பணத்தாசை பிடித்துக் கை நீட்டலாம். ஸமத்வம் என்று சொல்லிக்கொண்டு இம்மாதிரியான நடைமுறை உண்மைகளை மறந்து தர்மத்துக்கும் நீதிக்கும் ஹானி செய்வது உசிதமல்ல.

நம்முடைய ஸமத்வ முறையிலேயே காஷியர் மாதிரியான வேலைகளுக்கு ஸெக்யூரிடி கட்டவேண்டுமென்று வைத்துத்தானே இருக்கிறார்கள்? அப்போது அந்த 'போஸ்ட்'டுக்கு ஏழை 'டிஸ்க்வாலிஃபை' தானே ஆகிறான்?

இது எப்படி ஸமத்வம்? பணத்திலே புழங்குகிறவன் அவற்றைக் கையாடக்கூடும் என்ற நடைமுறை இயற்கையை இங்கே கருத்தில் கொண்டுதான், பொதுப்பணம் கையாடப்படக்கூடாதே என்பதற்காக இங்கே மட்டும் ஸமத்வத்தை விட்டுக்கொடுத்து, கையாடல் நேர்ந்தாலும் ஈடு கட்டும்படியாக ஸெக்யூரிடி டெபாஸிட் என்று ஒன்றை வைத்து ஒழுங்கு செய்திருக்கிறார்கள். பணத்தில் புழங்குகிறவன் கையாடல் செய்யக்கூடும் என்கிற மாதிரியான இன்னொரு யதார்த்த இயற்கைதான், ஜனங்களோடு புழங்குகிற ஒரு ஊர் ஸபைக்காரன் அவர்களிடம் லஞ்சம் வாங்கிக்கொண்டு அவர்களுடைய ஸ்வய நலத்தைப் பேணும்படியான ஸௌகர்யம் ஏதாவது செய்து கொடுக்கக்கூடும் என்பதும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### கையூட்டு

லஞ்சத்தைச் சோழ சாஸனத்தில் "கையூட்டு" என்று சொல்லியிருக்கிறது. ரூபாயிலே கை கொங்சம் ட்ரிக் பண்ணி ட்ராமா ஆடுவதை, விளையாடுவதைக் "கை ஆடல்", கையாடல் என்கிறோம். கையில் ஊட்டிவிடுகிற மாதிரி ரஹஸ்யமாகப் பணத்தை வைத்து லஞ்சம் கொடுப்பதைக் "கை ஊட்டு" என்று அக்காலத்தில் சொல்லி வந்திருக்கிறார்கள். வாயில் சாதத்தை ஊட்டும்போது அது என்ன சாதம், அதற்குள்ளே என்ன "தொட்டுக்கொள்ள" ஒளித்து வைத்திருக்கிறது என்பது எதுவும் வெளியில் தெரியாது. தட்டிலோ, கையிலோ போட்டு அதை ஒருவர் வாயிலே போட்டுக்கொள்ளும்போது பலபேருக்குத் தெரிவதுபோல இல்லாமல், யாருக்கும் தெரியாமல் ஊட்டிவிட்டுப் போய்விடலாம். இதேபோல யாருக்கும் தெரியாமல், எந்தக் கணக்கு வழக்கிலும் வராமல் பணத்தைக் கையிலே ஊட்டுகிற மாதிரி அழுத்திவிட்டுப் போவது கையூட்டு! சாதத்தை வாய் முழுங்குகிற மாதிரி பணத்தைக்

கை முழுங்கிவிடும்!

கையாடல் கூடாது என்பதற்காக ஸெக்யூரிடி கேட்பது போலத்தான், கையூட்டுப் பெறும் வாய்ப்பைக் குறைப்பதற்காகவே ஊர்ஸபைக்காரனாகிறவனுக்கு ஏதோ கொஞ்சம் பூ ஸ்திதி, வீடு என்றெல்லாம் இருக்கவேண்டுமென்று விதி செய்திருப்பது. ஆகவே இது ஸரியானால் அதுவும் ஸரிதான். இங்கே ஸமத்வம் அல்ல நடத்திக் காட்ட வேண்டிய விஷயம் - தூய்மையான நிர்வாஹமே விஷயம். ஸபைக்காரன் பொதுப்பண நிர்வாஹத்திலே தப்பு செய்துவிட்டானென்றால் அதனால் ஏற்படும் நஷ்டத்துக்கு அவனுடைய ஸொத்திலிருந்து 'அட்டாச்' செய்துவிடவேண்டும் என்பதாக வைத்து, இதற்கு ஸெக்யூரிடி மாதிரிதான் ஸொத்துத் தகுதி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இங்கே தனி ஆளின் கௌரவ அகௌரவங்களைக் குறித்த ஸமத்வ வாதத்துக்கு இடமில்லை, ஒரு ஊரின், ஒரு ஜனஸமூஹத்தின் ஸொத்து ந்யாயமாகப் பரிபாலிக்கப்படவேண்டும் என்ற தர்ம நியாயமான தத்வம்தான் இங்கே கவனித்துப் பேணப்படவேண்டிய விஷயம் என்பதைக் கருத்தில் கொண்டு அப்படியே செய்திருக்கிறார்கள்.

அதோடுகூட ஒரு ஊரிலே நிலபுலன், வீடு வாசல் உள்ளவன் என்றால் அவன் பொறுப்பில்லாமல் அதைவிட்டு ஓட மாட்டான். ஆனபடியால் இப்படிப்பட்டவன் ஊரோடு இருந்து, ஊரின் கஷ்ட நஷ்டங்களை எப்போதும் தெரிந்து கொள்ளும்படியிருக்கும்.

உழைத்துப் பணம் போட்டு ஒரு உடைமையைப் பெற்றவன் அதனிடம் வைத்துள்ள பற்றைப்போல, அக்கறையைப்போல, ராஜமான்ய நிலம் பெற்றவனுக்கு அதனிடம் இருக்காது. பிதுரார்ஜிதமாக ஒரு நிலமோ, வீடோ, வந்தால் அதனிடமும் ஒரு தினுஸான வாஞ்சையே இருக்குமூ. அம்மாதிரி grant-ஆக, gift-ஆகப் பெற்றதில் இராது. தனக்காக்கும் பஹு௺மானமாய் வந்தது என்பதில் தற்காலிகமாக ஒரு மோஹம் இருந்தாலும் அது நாள்பட்டு உறுதியான பிடிப்பாக நிற்காது. வெறும் ராஜமான்ய நிலத்திலேயே காலம் கழிக்கிறவன் அதைவிட்டு ஓடவும் இடம் ஏற்படும். இதனால்தான் ஸொந்த அல்லது பிதுரார்ஜித நிலத்தை

உடைமையாகப் பெற்றிருந்து அதற்கு வரி கட்டுகிறவனாக இருக்கவேண்டும் என்ற விதி செய்திருக்கிறது.

வேத வித்யையில் சிறப்புப் பெற்றவர்களாகவும், வேத பாஷ்யம் போதிக்கிறவர்களாகவும் இருக்கப்பட்டவர்கள் மற்றவர்களைவிடவும் த்ரவ்ய சபலத்துக்கு ஆளாகாமல், போதுமென்ற மனஸோடு எளிமையாக வாழ்ந்துவருவதை அந்நாளில் கண்கூடாகப் பார்த்திருக்கிறார்கள். அதனால் அவர்களுடைய நடத்தை சுத்தத்தில் கொண்ட அதிகப்படி நம்பிக்கையின் பேரில் இப்படிப்பட்டவர்களுக்கு மட்டும் மிகக் குறைச்சலான நிலபுலன் இருந்தாலும் போதும் என்று விதியை 'ரிலாக்ஸ்' செய்து, நிபந்தனையைத் தளர்த்திக் கொடுத்திருக்கிறது. பொதுவாகக் "கானிலத்துக்கு மேல் நிலமுடையான்" என்று யோக்யதாம்சம் நிர்ணயித்ததற்கு ஆக (உபஷரத்தாக), அதில் பாதியான "அரைக்கானிலமே உடையானாயினும் ஒரு வேதம் வல்லானாய், நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்காணித்தறிவான்" தேர்ந்தெடுக்கப்படலாம். என்று சேர்த்திருக்கிறது.

இருந்தாலும் இவனுக்கும் கூட ரிலாக்ஸேஷன்தான். எக்ஸெம்ப்ஷன் இல்லை. இவனுக்கும் ஸொத்து கொஞ்சமாவது இருந்தாக வேண்டுமென்றே வைத்திருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## ***ஜீவாஸாரமான தகுதி***

## ஸொத்துப் பரிபாலன அநுபவம் அவசியம்

இப்படி ஊர் நிர்வாஹ ஸபைக்காரர்களுக்கு ஸொத்தினால் தகுதி ஏற்படுத்தியிருப்பதற்கு இன்னொரு காரணம் இருக்கிறது. இவர்கள் பொதுச்சொத்துக்களைப் பராமரிக்கவும், வகையறிந்து செலவழிக்கவும், முறைப்படி கணக்கு வைத்துக்கொள்ளவும் அறிந்திருக்க வேண்டுமல்லவா? எனவேதான் ஸொந்தச் சொத்தின் பரிபாலனத்தில் இவர்களுக்கு அநுபவம் இருந்தால் நல்லது என்று இப்படி

ஷரத்து செய்திருக்கிறார்கள். திடீரென்று ஸொந்தமாக ஒரு ஸொத்தப் பெற்றவன் அதை 'தாம் தூம்' என்று செலவு செய்யும் வாய்ப்பு எப்படி அதிகமோ, அப்படியே ஸொத்தில்லாதவனிடம் ஊர்ப் பொதுச் சொத்தின் நிர்வாஹத்தத் தந்தாலும் 'எக்ஸ்ட்ரீ'மாக ரொம்பவும் யோசனை பண்ணிப் பண்ணி ரொம்பவும் சுஷ்கமாகவே பட்டுவாடா பண்ணி, 'பப்ளிக் வெல்ஃபேர்' (பொது நலப்பணி) அதற்குரிய ஜரூருடன் நடக்கவிடாமல் செய்து விடுவான். இதனாலெல்லாந்தான் ஸொத்துடைமை ஒரு க்வாலிஃபிகேஷனாக வைக்கப்பட்டது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### "தன் மனை" என்றதன் காரணம்

'வரி கட்டும் ஸொத்தின் பரிபாலனத்தில் ஒருத்தனுக்கு உள்ள அக்கறை, அபிமானம், சிக்கனம் முதலியன வரி கட்டாத ஸொத்து விஷயமாக இருக்காது, எனவே இப்படிப் பட்டவனிடம் ஊர்ஸொத்தை ஒப்படைக்கப்படாது' என்பது போலவே இன்னொன்று. ஸொந்த பூமியிலே வீடு கட்டிக் கொள்ளாமல் ஏதோ புறம்போக்கை வளைத்துப் போட்டு தன்னுடையதாய் ஜீர்ணம் செய்துகொண்டு அதிலே வீடு கட்டிக்கொண்டவனென்றால், இப்படி வளைத்துப் போட்டு ஏப்பம் விடுகிற ஸமாசாரத்தை நாளைக்கு ஸபையின் வ்யவஹாரத்திலும் அவன் மேற்கொள்ளக்கூடும். அதனால் தான் க்ராம ஸபைக்கு மெம்பராகிறவன் "தன்மனையிலே அகமெடுத்துக் கொண்டிருப்பவ"னாக இருக்க வேண்டுமென்று விதி செய்திருக்கிறார்கள். பொது வ்யவஹாரத்தின் சுத்திக்காக இப்படியெல்லாம் தர்மவேலி போட்டிருப்பதை ஜனநாயகம் என்ற மயக்கத்தில் கண்டனம்செய்வதும், அவிழ்த்து விடுவதும் ஜன ஸமூஹத்துக்குச் செய்கிற அபகாரமாகவே முடியும்.

## *ஜீவாஸாரமான தகுதி*

### வயதுத் தகுதி

அடுத்தபடியாக வயஸுத் தகுதி. போனால் போகிறதென்ற இதற்குமட்டும் நம் ஜனநாயகக் குடியரசிலும் ஒரு கீழ் வரம்பு, இருபத்தைந்தோ முப்பதோ எதுவோ ஒன்று வைத்துவிட்டு மேல் வரம்பு இல்லாமல் விட்டிருக்கிறார்கள். "இளம் தலைமுறை", "வருங்கால வாரிசு" என்றெல்லாம் பெயரைக் கொடுத்து அநுபவமில்லாத சிறுவர்களையும் தங்கள் தங்கள் கட்சிகளுக்குள் இழுத்துக்கொள்ளும் போக்கு தற்போது உண்டாகி இருக்கிறது. இவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்காகக் கீழ் வரம்பை இன்னம் கீழே கொண்டுபோனாலும் போகலாம்.
தேர்ந்தெடுக்கப்படுபவர்களைப் போலவே தேர்ந்தெடுப்பவர்களான ஒரே தகுதி கீழ்வரம்பு வயஸுதான். இருபத்தொன்றில் 'மேஜர்' என்பதைப் பதினெட்டாக மாற்றி, அப்போதே வோட்டுரிமை தந்து வோட்டர் ஆக்கிவிட வேண்டுமென்று இப்போது ஒரு பேச்சு இருப்பதாகத் தெரிகிறது.

தற்காலக் 'கண்டதே காட்சி'க் கோலத்தில், வாழ்க்கையில் அடிபட்டு, கஷ்ட ஸுகங்களை அலசிப் பார்த்துப் புரிந்துகொள்ளும் அநுபவ ஞானம் சென்றுபோன தலைமுறையினரையும்விட புதுத் தலைமுறையினருக்கு 'லேட்'டாகத்தான் உண்டாவதாகத் தெரிகிறது.

"மடத்துக்குள்ளே முட்டாக்குப் போட்டு உட்கார்த்தி வைத்திருக்கிற உனக்கு அதைப்பற்றி என்ன தெரியும்? அந்த ஸயன்ஸ், இந்த ஸயன்ஸ், புதுப்புது நிர்வாஹ முறைகள், வியாபார முறைகள், டெக்னாலஜிகள், கலை ஆராய்ச்சிகள் என்று நாளுக்கு நாள் நாங்கள் என்ன போடு போடுகிறோம் தெரியுமா? இதனால் ஜெனரல் நாலெட்ஜ் லெவலே (பொது அறிவு மட்டமே) ரொம்பவும் உசந்துவிட்டது. ஸ்கூல் பசங்கள்கூட யூனியன், பார்லிமென்ட் எல்லாம் வைத்துக்கொள்கிற அளவுக்கு எல்லாருக்கும் அறிவு

வெளிச்சம் கொடுத்துவிட்டோமாக்கும்" என்று சொல்லலாம்.

இதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆனால் இது அவ்வளவுமே மூளையும், தாற்காலிக இந்த்ரியஸுகமும் ஸம்பந்தப்பட்ட விஷயம்தான். "வாழ்க்கை என்ன? எதனால் அது ஸாரப்படும்?" என்பதைப் புரிந்துகொள்ள வைக்க இவை ஒன்றும் உதவவில்லை. அதோடு இல்லை. நேர்மாறாக, இந்தக் கண்டுபிடிப்புக்களின் ஜ்வலிப்பில் உண்டான glare-னால் (கண் கூசலினால்) வாழ்க்கையை உள்ளபடிப் புரிந்துகொள்வதில் ஜனங்கள் முன்னைவிட பின்னேதான் போய், அநுபவத்தில் குறைந்தவர்களாக ஆகிவருகிறார்கள். என்னை மடத்துக்குள்ளே முட்டாக்குப் போட்டு உட்கார்த்தி வைத்திருந்தாலும் பலதரப்பட்ட ஜனங்களும் இங்கே வந்து குறைகளைச் சொல்லிக் கொள்கிறார்கள் அல்லவா? இவர்களுடைய பலவிதமான ப்ரார்த்தனைகளைக் கேட்கிறபோது, ப்ரச்னைகள் என்று நினைத்துக் கொண்டு இவர்கள் ஒப்பித்துவிட்டுப் போகிறவற்றைப் பார்க்கிறபோது, போன தலைமுறையைவிட இப்போது எப்படி ஜனங்கள் உலகத்தைப் புரிந்துகொள்ளும் அநுபவ ஞானத்தில் பின்னே போய்க் கொண்டிருக்கிறார்களென்று நன்றாகத் தெரிகிறது. அநேக ஸந்தர்ப்பங்களில், "என்ன இத்தனை வயஸானவர் இப்படி உலகத்தை, வாழ்க்கையைப் புரிந்துகொள்ளாதவராக இந்த மாதிரி கேட்கிறாரே? நாற்பது வருஷம் முந்தி நாம் பட்டத்துக்கு வந்த நாளாக ப்ரார்த்தனைகள் - லௌகிக விஷயமாகவுந்தான் - நிறையக் கேட்டே வந்திருக்கிறோம். ஆனாலும் அந்தக் காலத்தில் இந்த மாதிரி இந்த வயஸுக் கட்டத்திலிருந்தவர்கள் கேட்டிருப்பார்களா?" என்று நினைத்துப் பார்க்கிறேன். இந்த நிலையில் வோட்டர்கள், அபேக்ஷகர்கள் ஆகியோருடைய ஏஜ்- லிமிட்டை மேலும் குறைப்பது யதார்த்தத்துக்குப் பொருந்தாததாகவே படுகிறது.

பொது விஷயங்களில் ஆலோசனை செய்து முடிவு எடுக்க வேண்டுமானால் அதற்கு உலக ஞானமும் வாழ்க்கையநுபவமும் இருக்கவேண்டும்ட. நன்றாக அடிபட்டு இவற்றை அறிவதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு வயஸு முதிர்ச்சி தேவைப்படுகிறது. இவ்விஷயத்தை தீர்க்கமாக அலசிப் பார்த்துத்தான் அக்காலத்தில் ஆயிரம் வருஷத்துக்கு முந்தி, முதல் கல்வெட்டுப்படி அபேக்ஷகருக்கு முப்பது வயஸு என்று கீழ் வரம்பு கட்டினவர்கள் அப்புறம் இரண்டு

வருஷம் மேலும் நடைமுறைகளைப் பார்த்துப் புனராலோசனை செய்ததில் அதுகூடப் போதாது என்று இரண்டாம் கல்வெட்டுப்படி முப்பத்தைந்து என்று உயர்த்தியிருக்கிறார்கள். இப்போது பச்சைக் குழந்தைகளைக்கூடத் தங்கள் தங்களுக்கு ஸாதகமாகப் பாலிட்டிக்ஸில் இழுத்துக்கொள்ள வேண்டுமென்பதே ஒவ்வொரு கட்சியின் தலைவர்கள் என்கப்பட்டவர்களுக்கும் அடிப்படை எண்ணமாக இருப்பதால் தற்போது செய்கிற புனராலோசனைகளோ வயஸைக் குறைப்பதில்தான் நோக்கமாயிருக்கின்றன.

தற்போது வயஸுக்கு மேல்வரம்பே இல்லை. ஆனாலும் அப்போதோ இயற்கையை கவனித்து இவ்விஷயமாகவும் விதி செய்திருக்கிறார்கள். குறிப்பிட்ட ஒரு வயஸுக்குமேல் போய்விட்டால் வ்ருத்தாப்யத்தில் ஓய்ச்சல் வந்துவிடுகிறது.

ஞாபக மறதி ஏற்படுகிறது. இமமாதிரித் தளர்ந்து உடம்பிலும் உள்ளத்திலும் ஆடிப்போவதை "ஸெனிலிடி" என்கிறார்கள். வியாதிகளும் அப்போது அதிகம் பிடுங்கி எடுக்கின்றன. இவற்றோடு பழங்காலத்தில் அந்த வயஸில் ஆரம்பநாளிலிருந்து பின்பற்றி வந்த சாஸ்த்ர அப்யாஸங்களினால் விவேக வைராக்யாதிகளில் புத்தி அதிகம் போகத்தொடங்கியிருக்கும். அதனால் எதிலும் ரொம்பப் பட்டுக்கொள்ளாமல், தப்புத் தண்டா நடந்தால்கூட, 'என்னமோ எல்லாம் ஈச்வர லீலை' என்று விட்டுவிடும் மனோபாவம் தோன்றியிருக்கும். பொது நிர்வாஹத்தில் இப்படிப்பட்ட மனப்பான்மை கூடாதாயிற்றே நல்ல உணர்ச்சி வேகமும் கண்டிப்பும் கார்யச் சுருசுருப்பும் இருக்கவேண்டுமே அதனால்தான் வயஸுக்கு 'லோயர் லிமிட்'டோடு 'அப்பர் லிமிட்'டும் விதித்திருக்கிறது.

முதலில் அறுபது என்று நிர்ணயித்திருக்கிறார்கள். அப்புறம் இன்னம் ஆழமாகச் சிந்தனையைச் செலுத்தி, இரண்டு வருஷம் நடைமுறையையும் பார்த்ததில் எழுபது என்று உயர்த்தியிருக்கிறார்கள். அறுபதுக்கு மேலே ரொம்ப ஓடி ஆட முடியாதே என்று முதலில் அபப்டி நிர்ணயித்திருப்பார்கள் போலிருக்கிறது. அபப் ுறம் பார்த்ததில், ஓடி ஆட முடியாவிட்டாலும் வயஸு ஏற ஏற எழுபதுவரைகூட அநுபவ முதிர்ச்சி நன்றாக வளர்ந்து பொது

விஷயங்களில் புத்திமதி சொல்லவும், திட்டங்கள் சட்டங்கள் வகுக்கவும் திறமை ஜாஸ்தியாகிறது என்று கண்டிருக்கிறார்கள். அறுபது வயஸு ஆகி ஷஷ்ட்யப்த பூர்த்தி பண்ணுகிறார்களே அதோடு அநேகமாக ஓடி ஆடுவது குறைய ஆரட்மபிக்கிறது. அதனால்தான் முதலில் அப்போது 'ரிடயர்மென்ட் ஏஜ்' வந்துவிடுகிறது என்று வரட்மபு வைத்திருக்கிறார்கள். ஆனால் இப்படி ஓடி ஓடி உடம்பால் வேலை செய்வது குறைந்த பிற்பாடுதான், ஒருவேளை இதனாலேயே 'கன்ஸர்வ்' செய்யப்படுட்ம எனர்ஜி (சேமிக்கப்படும் சக்தி)யாலோ என்னவோ, அறிவு நல்ல முதிர்ச்சியுடன் ஆற்றலோடு செயல்படுகிறது. இப்படி ஒரு பத்து வருஷம் இருந்தபின் ஸெனிலிடி - "வயஸான தோஷம்" என்கிறார்களே, அது - உண்டாகிறது, அல்லது புத்தி ஞான வைராக்யத்திலே போய்விடுகிறது. அறுபது வயஸு என்று நிர்ணயம் செய்தபின், ஸபையில் அங்கத்தினர்களாக இல்லாமல் அந்த வயஸுக்கு மேலேபோன ஊர்ப் பெரியவர்கள், ஸபை மூலமாக இல்லாவிட்டாலும் தனிப்பட ஊர் நலனுக்கான நல்ல யோசனைகள் தரமுடிவதை கவனித்திருப்பார்கள் போலிருக்கிறது. அதனால், "அதிகம் ஓடியாடிச் செய்ய வேண்டியதைச் செய்ய முடியாவிட்டாலும் பரவாயில்லை, executive wing-ன் அதிகாரிகள், சிப்பந்திகள் அதற்கென்று இருக்கிறார்கள். ஸபைக்காரர்கள் உட்கார்ந்த இடத்திலேயே ஆர அமர ('அமர' என்றாலே 'உட்கார்ந்து' தானே?) யோசித்துச் சட்ட திட்டங்கள் போடுபவர்களாகவும், அவ்வப்போது மட்டும் ஊரைச் சுற்றிக் கார்யங்களை இன்ஸ்பெக்ட் பண்ணச் சக்தியுடையவர்களாகவும் இருந்தால் போதும்" என்று புனராலோசனை செய்து, இரண்டு வருஷத்துக்கு அப்புறம் அறுபதை எழுபது என்று 'அமென்ட்' செய்திருக்கிறார்கள் போலிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**பதவிநீக்கமும் நிரந்தரத் தடையும்**

இந்த வருஷம் அங்கம் வஹிக்கும் ஒருவன் மூன்று வருஷத்துக்கு அப்புறம் எலெக்ட் செய்யப்படுவதற்குங்கூடு இன்னொரு கட்டுப்பாடு இருக்கிறது. இப்போது பதவிக்காலத்தில் முறைதப்பிநடந்த எவனும் மூன்று வருஷத்துக்கு அப்புறமும்கூட அபேக்ஷகனாக முடியாமல் அது தடுத்து debar செய்கிறது. இவனுடைய தப்பு கண்டுபிடிக்கப்பட்டவுடனேயே இவன் பதவியிலிருந்து விலக்கி வைக்கப்படுவான். அப்புறமும் எலெக்ஷனுக்கு நிரந்தமாக debar ஆகிவிடுவான். ஏதோ ஒரு வருஷத்தில் மெம்பராயிருப்பவன் ஸரிவரக் கணக்குக் காட்டியிராவிட்டாலோ, தப்புக் கையெழுத்துப் போட்டிரு ந்தாலோ, வேறே குற்றம் செய்திருந்தாலோ உடனே டிஸ்மில் ஆகி, அப்புறமும் எலெக்ஷனுக்கு டிஸ்க்வாலிஃபை ஆகிவிடுவான் (அபேக்ஷகனாகும் தகுதி இழந்துவிடுவான்).

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**தகுதி இழக்கும் உறவினர்கள்**

பொது நிர்வாஹத்தில் இப்படிப்பட்ட தப்புக்கள் ஏற்படவேகூடாது என்பதில் எவ்வளவு கருத்தாயிரு ந்திருக்கிறார்களென்பது, தப்புச் செய்த அவனை மட்டுமின்றி, அவனுடைய கீழ்க்கண்ட உறவினர்கள் அத்தனை பேரையும் டிஸ்க்வாலிஃபை செய்திருப்பதிலிருந்து தெரிகிறது. தகப்பனார், பிள்ளை, ஸஹோதரர், மாமனார், மைத்துனர், ஸஹோதரியின் புருஷன், தகப்பனாருடைய ஸஹோதரிகளின் பிள்ளைகள், மாப்பிள்ளை,

தகப்பனாருடைய ஸஹோதரர்கள், அவர்களுடைய பிள்ளைகள், அத்தை பிள்ளை, மாமா, மாமா பிள்ளை, தாயாருடைய ஸஹோதரி பிள்ளை - என்றிப்படி, ஒரு மெம்பர் செய்த குற்றத்துக்காக அவனுடைய பந்து வர்க்கம் முழுவதையுமே ஸபை மெம்பர்ஷிப் பெறமுடியாதபடி அடியோடு ஒதுக்கிவிடுவதென்றால், அப்புறம் நிர்வாஹத்தில் தவறு எப்படி நடக்கும்? இந்த உறவுமுறைக்காரர்கள் எல்லோரையுமே "ஆத்மபந்துக்கள்" என்று சாஸனம் விளக்கியிருக்கிறது.

குற்றம் பண்ணினால் அது முதலுக்கே அபேக்ஷை பெற முடியாதபடி ஒருவனை டிஸ்க்வாலிஃபை செய்ததோடு நிற்கவில்லை, முதலில் க்வாலிஃபிகேஷன் பெற்றிருந்தாலும் பதவிக்கு வந்தபிற்பாடு குற்றம் பண்ணினால் அது அவனை பந்து வர்க்கத்தோடு சேர்த்து டிஸ்க்வாலிஃபை செய்து விட்டது என்கிற அம்சத்தை நன்றாக கவனித்துக்கொள்ள வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### பஞ்சமாபாதகம்

'அர்த்த சுத்தம்', 'ஆத்ம சுத்தம்' என்று சொன்னதோடு சாஸனத்தின் இன்னோரிடத்தில் பஞ்சமாபாதகம் என்கிற ஐந்து பெருங்குற்றங்களில் எதைச் செய்திருப்பவனையும் அவனுடைய பந்துக்களோடு சேர்த்து டிஸ்க்வாலிஃபை செய்திருக்கிறது. ப்ரம்மஹத்தி, ஸுராபானம் என்ற கள்குடி, ஸ்வர்ணஸ்தேயம் என்பதான பொன்னைத் திருடுவது, குரு தல்ப கமனம் என்பதாக குரு பத்னியிடம் தப்பான உறவு கொள்வது - ஆகிய இந்த நாலு பெருங் குற்றங்களும், இந்தக் குற்றங்களில் ஒன்றைச் செய்தவனோடு நெருங்கிய தொடர்புகொண்டிருப்பதான ஐந்தாவது குற்றமும் சேர்ந்து பஞ்ச மஹா பாதகம்' எனப்படும். 'ப்ரஹ்மஸத்தி என்பதாக ப்ராம்மணனைக் கொல்வது மட்டுமே இங்கே

சொல்லப்பட்டாலும், எந்தக் கொலையுமே ஒரு மஹாபாதகமாகத்தான் கருதப்பட்டு அதைச் செய்தவனை ஸமூஹம் ஒதுக்கிவைத்தது. அதேபோல, ஸ்வர்ணத்தைத் திருடுவது மாத்திரமில்லாமல் எல்லாவிதத் திருட்டும், குரு பத்னியிடம் மாத்திரமின்றி எந்த ஸ்த்ரீயிடமுமே தப்பாக நடப்பதும் மஹாபாதகங்களாகக் கருதப்பட்டன. கொலை, திருட்டு, வ்யபசாரம் ஆகியவற்றிலேயே ரொம்பவும் கேவலமானவ எவை என்பதைக் காட்டத்தான், ஸத்தானவனும் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதில் கூட சக்தியோ மனஸோ இல்லாமலிருப்பவனுமான ஒரு ப்ராம்மணனைக் கொல்வது, லக்ஷ்மியின் ஸாந்நித்யம் உள்ளதான ஸ்வர்ணத்தைத் திருடுவது, தாயாருக்கு ஸமமான குரு பத்னியிடம் மனோவிகாரம் கொள்வது இவற்றைக் குறிப்பாகச் சொன்னது. இவற்றுக்குமேல் கொடூரமான - heinous என்கிற - குற்றமில்லை என்று அர்த்தம்.

பஞ்சமாபாதகனைப் போலவே 'ஆததாயி' என்றும் ஒன்று உண்டு. அர்ஜுனன் (கீதையின் ஆரம்பத்தில்) கௌரவர்களை 'ஆததாயி'க்கள் என்று சொல்லி மஹா க்ருரமான அந்த ஆததாயிக்களைக் கொல்வதால்கூடத் தனக்குப் பாபமே வந்துசேரும் என்று பயப்பட்டுச் சொல்லியிருக்கிறான். ஸத்ப்ராம்மணனை மட்டுமில்லாமல் மஹா பாபியையுங்கூடக் கொலை செய்வது பாபம்தான் என்று இங்கே தெரிகிறது.

இப்படிப்பட்ட பாதகங்களைச் செய்தவர்களும், அவர்களுடைய பந்துக்கள் எல்லோரும் ஊர் ஸபை அங்கத்தினராவதற்கு அருஹதை இழந்துவிடுவார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**சாஸ்த்ரமும் சட்டமும்**

அந்தக் காலத்தில் சாஸ்த்ரப்படி எந்த தோஷங்கள் 'பாபங்கள்' என்று சொல்லப்பட்டனவோ அவையேதான் ராஜாங்கத்தின்

சட்டப்படி 'குற்றங்கள்' என்று தீர்மானிக்கப்பட்டன. தற்போது சாஸ்த்ரம் சொல்லும் தோஷங்கள் 'லா'வில் குற்றமாக வரவில்லை. இன்னம் சொல்லப்போனால், சாஸ்த்ரத்தில் தோஷம், பாபம் என்று எதுகளைப் பண்ணக்கூடாது என்று சொல்லியிருக்கின்றனவோ அவற்றைப் பண்ணுவதுதான் முன்னேற்றத்துக்கு அறிகுறி என்றும், சாஸ்த்ரப்படி செய்வதேதான் 'லா'ப்படி குற்றம் என்றுங்கூட செய்துவருகிறார்கள். இதில் பெரிய high jump/ long jump செய்துகாட்டிப் பெருமப்படுவதற்கே ஸ்வதந்த்ரம் ஏற்பட்டபின் ஸாக்ஷாத் நம்மவர்களால் குடியரசுக்கான அரசியல் நிர்ணயச் சட்டம் "முன்னேற்ற", "முற்போக்கு" நோக்கில் செய்யப்பட்டுவருகிறது பாதிவ்ரயத்துக்கு (கற்பு நோன்புக்கு) ஹானியாக விவாஹரத்து, வதூ (மணப்பெண்) பரிசுத்தத்துக்கு ஹானியாக வயஸுவந்த அப்புறம்தான் கல்யாணம், அவிபக்த குடும்ப (கூட்டுக்குடும்ப)த்துக்கு ஹானியாகப் பெண்ணுக்கு ஸொத்துரிமை, வைதிக ஆசார ஸம்ரக்ஷணத்துக்கு ஹானியாகக் கலப்பு போஜனம், கலப்பு மணம் - என்றெல்லாம் சாஸ்த்ரப்படி மஹா பாபமானவற்றையெல்லாம் முன்னேற்றம், முற்போக்கு என்ற பெயர்களில் விசேஷமாக ஆதரித்து வ்ருத்தி செய்யத் துணிந்திருக்கிறார்கள்.

பழைய நாளில் ரிஷிகள் தந்த தர்ம சாஸ்த்ரமும், ராஜாக்களின் சட்டமுறையும் ஒன்றாகவே இருந்தன. "சட்டப்படியும், சாஸ்த்ரப்படியும்" என்று இப்போது இரண்டாகப் பிரித்து, "உம்" போட்டுச் சொல்கிறமாதிரிச் சொல்ல அப்போது அவச்யமில்லாமலிருந்தது. சாஸ்த்ரவிதியே சட்ட விதியாயிருந்தது. சாஸ்த்ரம் எதை தோஷமென்று சொல்கிறதோ அது சட்டப்படி குற்றம். ஒரு தோஷத்தைப் போக்கிக்கொள்ள சாஸ்த்ரத்தில் ப்ராயச்சித்தம் சொல்லியிருந்தால் அங்கே அப்படி ப்ராயச்சித்தம்ட செய்து கொண்டவனைப் பெரும்பாலும் ராஜாங்க நீதி ஸ்தலமும் குற்றவாளி அல்ல என்றே கருதிற்று. ப்ராயச்சித்தம் செய்துகொண்டதில் பாபம் போயிற்று என்பதைச் சட்டமும் ஒப்புக்கொண்டதென்றாலும்ட, சில பாபங்களை, அதாவது குற்றங்களை, செய்தவன் அந்தப் பழக்கத்தில் மறுபடி அதே மாதிரி பண்ணிவிடக்கூடும் என்பதையும் சட்டம் கவனித்தது. சாஸ்த்ரத்திலுங்கூட ப்ராயசித்தமானது ஒருவன் இதற்குமுன் செய்த பாபத்தை கழுவுவதாகத்தான் சொல்லி அவனத்

தடுப்பதாகச் சொல்லவில்லை. ஆகையால், மறுபடி எந்தமாதிரிக் குற்றங்களைச் செய்யும்படிவிட்டால் ரொம்பவும் ஸமூஹ விரோதமாக, ஸமூஹத்துக்கு அபாயமாக ஆகுமோ, அப்படிப்பட்ட பாபங்களைப் பண்ணினவன் சாஸ்த்ர ரீதியாய் ப்ராயச்சித்தம் பண்ணிக்கொண்டிருந்தால்கூட ஸமூஹ நிலையை முன்னிட்டு அவனைச் சட்டப்படி தண்டித்து, மறுபடி அவன் அப்படிச் செய்யாதபடி கட்டுப்படுத்தவேண்டுமென்று கருதப்பட்டது.

இந்த முறையில்தான் அந்த சோழர்கால சாஸனத்திலும், ப்ராயச்சித்தம் செய்துகொண்டால் சில குற்றங்களிலிருந்து விடுபட்டதாகக் கருதி மெம்பர்ஷிப் தரலாமென்றும், வேறு சில குற்றங்களுக்கோ ப்ராயச்சித்தம் செய்துகொண்டாலும் மன்னித்துவிடாமல், ஆயுஸ் பூராவும் அப்படிப்பட்டவர்களை ஸபையிலிருந்து பஹிஷ்காரம் செய்யவேண்டுமென்றும் ஒரு பாகுபாடு செய்திருக்கிறது. இப்படி ப்ராயச்சித்தம் பண்ணிக்கொண்டாலும்ட ஸபையில் ஸ்தானத்துக்கு அருஹதைப் பெறாதவர் யார் யாரென்றால், மாம்ஸம் சாப்பிட்ட ப்ராமணர்கள், மேலே சொன்ன மஹாபாதகங்களைப் பண்ணினவர்கள் - குறிப்பாக, வியபசார தோஷமுள்ளவர்கள், கிராம விரோதியாக இருக்கிறவர்கள்.

பொய்க் கணக்குக் காட்டினவர்களும் பொய் ஸாக்ஷி சொன்னவர்களும் அவர்களுடைய பந்துக்கள் ஸஹிதம் 'டிஸ்க்வாலிஃபை ஆகிவிடுவார்கள். எந்த விதத்தில் தப்பான பண ஆதாயம் பெற்றிருந்தாலும் இதே கதிதான். தப்பான முறையில் எப்படி ஸொத்து சேர்த்திருந்தாலும் அது லஞ்சமாகவே கருதப்பட்டது. "எப்பேர்ப்பட்ட கையூட்டும் கொண்டான்" என்று பண வ்யவாஹரத்தில் சுத்தமில்லாதவனை அந்தக் கல்வெட்டில் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## ***ஜீவாஸாரமான தகுதி***

## **தகுதித் தடைகள் சில**

அந்தக் காலத்தில் ரொம்பவும் நீசத்தனமான ஒரு கார்யத்தைப் பண்ணினவனைக் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக் கழுதைமேல் ஏற்றி ஊர்வலம் விடுவது வழக்கம். தாங்கமுடியாத அவமானத்தில் தப்பு நன்றாக மனஸில்பட்டு மறபடி அம்மாதிரி அவன் பண்ணாமலிருப்பதற்குத்தான் இப்படிச் செய்தார்கள்.

குற்றவாளிகளையும் கௌரவமாக நடத்தவேண்டும், ஜெயிலை 'ட்ராவலர்'ஸ் 'பங்களா' மாதிரி ஸௌக்யமாக்கித் தரவேண்டும் என்று ஆரம்பித்தால் இந்த அன் - எம்ப்ளாய்மென்ட் யுகத்தில் எவருக்கும் அங்கேதான் போய் ஸுகவாஸம் பண்ணலாமே என்று தூண்டிவிடுகிறமாதிரி ஆகிறது! மநுஷ்யாபிமானம் என்பது தப்புப் பண்ணுபவன் நல்ல மநுஷ்யனாக முன்னேறுவதைக் கெடுப்பதற்கே தூண்டு கோலாகிவிடக்கூடாது, எதிலும் பாத்ரமறிந்து செய்ய வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன்.

பழைய நாளில் கழுதைமேல் ஏறினவனக்கும், ஃபோர்ஜரி பண்ணினவனுக்கும் ஸபையில் இடமில்லை. இதை, "கழுதையேறினாரையும் கூடலேகை செய்தானையும் குடவோலை எழுதிப் புக இடம் பெறாததாகவும்" என்று சாஸனத்தில் சொல்லியிருக்கிறது. "கூடலேகை" என்றால் பொய்க் கையெழுத்து. "லேகை" என்றால் எழுதப்படுவது. "கூடம்" என்றால் பொய், மோசடி; fraud என்பது. கூடலேகை என்பது ஃபோர்ஜரி.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### வேட்பாளர் இல்லாத-வாக்காளர் இல்லாத தேர்தல்

இவர்கள் "ஸபைத் தேர்தலுக்குத் தகுதி பெறாதவர்கள்" என்பதைத்தான் "குடவோலை எழுதிப் புக இடம் பெறாத"வர்கள் என்று சொல்லியிருக்க வேண்டுமென்று எவரும் ஊஹித்துவிடலாம். ஆனால் தேர்தலை ஏன்

"குடவோலை எழுதிப் புகுவது" என்று சொல்லியிருக்கிறது என்பது மட்டும் ஊஹிக்க முடியாததாக இருக்கிறது. "குடவோலை" என்ன, அது "எழுதிப் புகுவது" என்ன என்று புரியவில்லை.

புரியாத இதையும் இரண்டாவது சிலா சாஸனம் தெளிவாகப் புரியவைக்கிறது. இப்போதுதான் அந்த நாள் எலெக்க்ஷனில் இருந்த ரொம்பப் புதுமையான (அதாவது நமக்குப் புதுமையாகத் தோன்றுவதான), முக்யமான விஷயத்தைப் பற்றிச் சொல்லப்போகிறேன். இதுவரை தேர்தல் விதிகளைப் பற்றிச் சொன்னேன். இனிமேல்தான் அந்தத் தேர்தல் எப்படி நடந்தது என்று அதன் 'ப்ரொஸீஜரை'ச் சொல்லப்போகிறேன். இதில் நூதனமான விஷயமிருக்கிறது! அபேக்ஷகர்கள் என்பதாகச் சில பேர் போட்டிபோட்டுக்கொண்டு தேர்தலுக்கு நின்று வோட் கேட்பதென்பதே அப்போது கிடையாது வோட்டர்கள் என்று யாரும் போய் வோட்போட்டாலும் கிடையாது! "இதென்ன இப்படி சொல்கிறாரே! இத்தனை நாழி முடியரசுக் காலத்திலேயே ஜனநாயகத் தேர்தல், மெம்பரின் யோக்யதாம்சம் என்றெல்லாம் நீட்டி முழக்கிவிட்டுக் கடைசியில் கான்டிடேட் (அபேக்ஷகர்) என்று யாரும் கன்டெஸ்டே பண்ணவில்லை (போட்டியிடவேயில்லை) என்கிறாரே! வோட்டிங் என்றே ஒன்று நடக்கவில்லை என்கிறாரே!" என்று தோன்றலாம். "கத்தியில்லாமல் ரத்தமில்லாமல் யுத்தம் என்கிறமாதிரி அபேக்ஷகர், வோட்டர் இல்லாத தேர்தலா?" என்று ஆச்சர்யப்படலாம்.

பாரம்பர்ய முறையில்லாமல் ஜனநாயக முறையில் தகுதி பெற்ற எவரானாலும் தேர்ந்தெடுக்கப்படும் வகையில் தேர்தல் நடந்தது வாஸ்தவம்; ஸமூஹ நலத்தில் கண்குத்திப் பாம்பாக இருந்து அபேக்ஷகர்களுக்கு ஏகப்பட்ட யோக்யதாம்சங்கள் நிர்ணயித்திருந்ததும் வாஸ்தவம். ஆனாலும் "நான் நிற்கிறேன்" என்று அபேக்ஷாப் பத்திரம் தாக்கல் செய்து எவரொருத்தரும் அபேக்ஷகராகப் போட்டியிடுவதும், ப்ரசாரம் பண்ணுவதும் கிடையாது. அபேக்ஷகர் என்ற ஒருவர் வோட் கேட்டதும் கிடையாது. அதே மாதிரி வோட்டர் என்ற ஒருவர் வோட் போட்டதும் கிடையாது.

பின்னே எப்படித் தேர்தல் நடந்ததென்றால், சொல்கிறேன். சாஸனத்திலேயே உள்ளதைத்தான் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### அபேக்ஷகர் யார்?

மநு - மாந்தாதாவின் காலத்திலிருந்து வந்திருக்கிற தர்ம சாஸ்த்ரத்தை அநுஸரித்த யோக்யதைகளையே மநுநீதிச் சோழனின் பரம்பரையினரும் ஊர் நிர்வாஹ அங்கத்தினர்களுக்கு உரியனவாக வைத்துவிட்டார்கள். இவற்றைத்தான் மேலே அயிட்டம் அயிட்டமாகப் பார்த்தோம். இந்தத் தகுதிகள் எல்லாம் உள்ள எவனானாலும் அவன் நிர்வாஹத்துக்கு வந்தால் ஸரியாகத்தான் நடப்பான். ஒரு க்ராமத்திலுள்ள ஜனங்களிடம், "நான் இப்படியாகப்பட்ட யோக்யதாம்சங்கள் உள்ளவன்" என்று ஒரு தர்மிஷ்டன் சொல்லிக் கொண்டு 'கன்டெஸ்ட்' பண்ணாவிட்டாலும் (தேர்தலில் போட்டியிடாவிட்டாலும்) அவர்களுக்கே தங்களுக்கு மத்தியில் இப்பேர்ப்பட்டவர்கள் யார் யார் விசேஷமாக இருக்கிறார்கள் என்று தெரியுமல்லவா? "இன்னார் நல்ல யோக்யதை உள்ளவர், யோக்யர், படிப்பாளி, குணத்திலும் நல்லவர், புத்திசாலித்தனம் உள்ளவர், கார்ய ஸாமர்த்யமும் உள்ளவர், இவரிடம் நிர்வாஹப் பொறுப்பு தரலாம்" என்று க்ராமத்தின் ஒவ்வொரு பகுதியிலும் ஜனங்கள் சில பேரைப் பற்றி விசேஷமாக நினைப்பார்கள் அல்லவா?

இம்மாதிரிப் பகுதிகளைத் தற்போது 'வார்ட்' என்கிறோம். அக் காலத்தில் 'குடும்பு' என்று சொல்லியிருக்கிறார்கள். தற்போது ஊர் ஸபைகளில் ஒரு வார்டுக்கு ஒரு மெம்பர் என்று தேர்ந்தெடுப்பதைப் போலவே அப்போதும் குடும்புக்கு ஒருவர் என்று தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். க்ராமத்தை இப்படிப்பட்ட முப்பது குடும்புகளாகப் பிரித்து முப்பது மெம்பர்கள் கொண்ட ஸபையை அமைத்திருக்கிறார்கள்.

மேலே சொன்னவாறு ஜனங்கள் ஸம்மதத்தைப் பெற்ற எவரானாலும் அவர்களைத் தேர்ந்தெடுக்க வகை செய்தார்கள். இது ஜனநாயக அம்சம்தானே? ஜாதியை வைத்தோ, பாரம்பர்யமாகவோ இல்லாமல், அரசன் அல்லது

ஒரு அதிகார நாமிநேஷன் என்றும் இல்லாமல் ஊர் ஸபை மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பட்வர்களென்றால் அது ஜனநாயக தத்வத்தைச் சேர்ந்ததுதான்.

எப்படித் தேர்ந்தெடுத்தார்கள் என்ற 'வைடலா'ன விஷயத்தை இப்போது பார்த்துவிடலாம். 'ராஜாங்க நியமனமும் இல்லை, ஜனங்களில் அனைவருமோ தகுதி பெற்ற சில பேரோ வோட் போட்டுத் தேர்ந்தெடுக்கும் முறையும் இல்லை' என்று மட்டும் சொல்லி ரொம்ப நேரம் உங்களைக் காக்க வைத்துவிட்டேன்.

அப்படியானால் அது என்ன முறை?

மேலே சொன்னபடி ஒவ்வொரு குடும்பிலும் ஜனங்கள் மதிப்பு வைத்திருக்கிற பெரிய மனிதர்கள் யாரென்பது எல்லோருக்கும் தெரிந்துதானே இருக்கும்? இவர்கள் சாஸனத்தில் சொன்னபடி எல்லா யோக்யதாம்சங்களும் பெற்றிருக்கிறார்களா, அதில் டிஸ்க்வாலிஃபை பண்ணுவதாக உள்ள எந்த அம்சமும் இல்லாதவர்களாக இருக்கிறார்களா என்று பரிசீலித்துப் பார்த்து, இந்தத் தகுதிகள் பெற்றிருக்கிற எல்லாரையும் அபேக்ஷகர்கள் என்று வைத்துவிடுவார்கள். இப்படிப்பட்ட அபேக்ஷகர்களுக்குள்தான் ஒவ்வொரு குடும்புக்கும் ஒரு ப்ரதிநிதியைத் தேர்ந்தெடுக்கச் செய்தார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### ஸெலக்க்ஷன், எலெக்க்ஷன் பொறுப்பாளர்கள்

"வைத்தார்கள்", "செய்தார்கள்," என்றால், அப்படிப் பண்ணியது யார்? 'க்ராம மஹாஸபை எப்போதும் நடந்து கொண்டுதானே இருக்கும்? அதுதான் இப்படி யோக்யதை பெற்ற அபேக்ஷகர்களையெல்லாம்ட பொறுக்கியெடுத்துத் தேர்தல் நடத்தியிருக்கும். அதாவது நடப்பு ஸபை அடுத்த ஸபைத் தேர்தலுக்கு அபேக்ஷகர்களை செலக்ட் செய்திருக்கும்' என்று நினைக்கலாம். ஆனால் உண்மையில்

இப்படி நடிக்கவில்லை. நடப்பு ஸபை அடுத்த ஸபைக்கான தேர்தலை நடத்துவது என்பதிலேயே பல ஊழல்கள் நடக்க இடமுண்டு. அக்காலத் தேர்தல் விதிப்படி நடப்பு மெம்பர்கள் அடுத்த ஸபைக்கு மெம்பராக முடியாது, அவர்களுடைய பந்துக்களும் மெம்பராக முடியாது என்பது வாஸ்தவந் தானானாலும் தங்களுக்கு வேண்டப்பட்ட ஸ்நேஹிதர்கள், பவ்யப்பட்டவர்கள் ஆகியோரை அடுத்த ஸபையில் அங்கத்தினராகக் கொண்டுவந்து ஸ்வய லாபம் பெறக்கூடுமல்லவா? இதையும் தடுக்கவேண்டுமென்பதில் நம் முன்னோர் முன்னெச்சரிக்கையாக இருந்திருக்கிறார்கள். அதனால் அடுத்த தேர்தலில் இப்போதுள்ள ஸபையினரின் ஸம்பந்தம் இல்லாதபடி ஒரு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

தற்போது நம் குடியரசில் நடத்தவிருக்கும் முறையில் ஒரு ஸந்தேஹம் வரலாம் - அதாவது ஒரு தேர்தல் நடக்கும் போது அதிகாரத்திலுள்ள ராஜாங்கத்தினர் அந்தத் தேர்தலை நடத்துவதிலேயே, மற்ற கட்சிகளுக்கு இல்லாமல் தங்களுக்கு ஸாதகமாக ஏதேனும் பண்ணிக்கொண்டுவிட முடியுமோ என்று தோன்ற இடமிருக்கிறது. கட்சி ஆட்சி என்று ஏற்பட்டு, ஏதோ ஒரு கட்சியின் நிர்வாஹத்தில் அடுத்த தேர்தல் நடக்கிறதென்றால், கொஞ்சம் ஸந்தேஹாஸ்பதமாக ஏதாவது தோன்ற இடமுண்டுதானே? (தேர்தலுக்குச் சில மாதம் முன்பே ஆளும் கட்சி பதவியிலிருந்து விலகி, ஆலோசனைக் குழுவைக் கொண்டு ராஷ்டரபதியே ஆட்சி நடத்தி, அதன் கீழ் தேர்தல் நடந்தால்தான் தூய்மையாயிருக்கும் என்ற ஒரு கருத்து குடியரசு பிறந்து, பல்லாண்டுகளுக்குப் பின்னர் எழுந்தது. ஆனால் ஸ்ரீ சரணர்களோ குடியரசு பிறப்பதற்கு ஓராண்டு முன்பே இத்திசையில் நம் சிந்தனையைச் செலுத்தும் முறையில் கருத்து தெரிவித்திருக்கிறார்கள்.).

இதற்கு இடமே இல்லாதபடி, நடப்பு ஸபை மெம்பராயிருந்து, 'வாரியம்' என்ற பல கமிட்டிகளில் ஏதாவதொன்றில் பதவி வஹிப்பவர்களான இந்த முப்பது பேருமே பதவி விலகிவிடும் அதற்கப்புறம் "தர்ம க்ருத்ய ஸபைகள்" எனப்படுவனவற்றின் பொறுப்பின் கீழேயே, மத்யஸ்தர்களைக் கொண்டு தேர்தல் நடத்தவேண்டும் என்று சாஸனம் விதிக்கிறது.

இந்த தர்ம க்ருதய ஸபைகள் என்பவை என்னவென்றால் - க்ராம மஹாஸபை தவிர, அதன் முப்பது குடும்பப் பிரிவினை தவிர, அவரவரை ஸ்வதர்மப்படி கர்மா செய்விக்கிற பன்னிரண்டு நாட்டாண்மைகளின் கீழ் க்ராமத்தை பன்னிரண்டு சேரிகளாகப் பிரித்திருந்தது. சேரி என்றால் என்னவோ, ஏதோ என்று நினைக்கவேண்டாம். அக்ரஹாரமும் ஒரு சேரிதான். இவற்றுக்கான பன்னிரண்டு நாட்டாண்மைக்காரர்கள்தான் தர்ம் க்ருத்ய ஸபைகள் என்று ஊஹம் செய்து சொல்கிறார்கள். இவை ஒன்றுசேர்ந்தே தேர்தல் நடத்தியது. "பன்னிரண்டு சேரியிலுட்ம தர்மம் கிருத்தியங் கடைகாணும் வாரியரே மத்தியஸ்தரைக் கொண்டு குறிகூட்டிக் குடுப்பாராகவும்" என்று சாஸனத்தில் இருக்கிறது.

க்ராம மஹாஸபையினர் எல்லாரும் ஒரு வருஷ டெர்ம் முடிந்ததும் வெளியேறிவிடுவார்கள். அப்புறம் மத்யஸ்தர்கள் உதவியோடு அவசியமான காரியங்களுக்காக 'இன்டரீம் அட்மினிஸ்ட்ரேஷன்' (இடைக்கால நிர்வாஹம்) தர்ம க்ருத்ய ஸபைக்காரர்களாலேயே நடத்தப்படும். அடுத்த ஸபைக்கான அபேக்ஷகர்களின் ஸெலக்ஷன், அப்புறம் அதற்கான எலெக்ஷன் ஆகியன இவர்கள் பொறுப்பிலேயே நடக்கும்.

ஒரே ஒரு ஊர் வ்யாவஹாரம்தானாதலால் இந்த 'இன்டரீம் பீரியட்' ஒரு சில நாட்களாகத்தான் இருக்கும். அதற்குள் ஸெலக்ஷன், எலெக்ஷன்எல்லாம் நடந்துவிடும்.

ஊர் ஸபை என்ற ஒரே -ன் (அமைப்பின்) கீழ் ஒன்றாகக்கூடிப் பணி செய்த முப்பது பேர் அடுத்த வருஷ ஸபைக்கான அபேக்ஷகர்கள் ஸெலக்ட் செய்தால், இவர்கள் தங்களுக்குள் கலந்துகொண்டு தங்களுக்கு ஆதாயம் கிடைக்குமாறும், இப்போது தாங்கள் செய்த தப்பு தண்டாக்கள் அடுத்த ஸபையிலே வெளிவராதவாறும் ஸெலக்ஷனைப் பண்ணிவிடலாம். தனித்தனியாய் வெவ்வேறு ஜாதிகளுக்கென்று அமைந்து, ஒவ்வொன்றும் ஸ்வேயச்சையாய் கார்யம் செய்துகொண்டிருக்கும் பன்னிரண்டு தர்ம க்ருத்ய ஸபைகளைச் சேர்ந்தவர்களைக் கொண்டு ஸெலக்ஷன் செய்யும்போது அவர்கள் தங்களுக்குள் தகிடுதத்தம் எதுவும் பண்ணுவதற்கில்லை. ஒவ்வொரு ஜாதிக்கும் தன்னைப் பற்றியிருந்த தன்மான உணர்ச்சியினால், 'நாம் ஏதாவது முறை பிசகிப் பண்ணினால்

மற்ற ஜாதிகளின் நாட்டாண்மைகள் நம்மைப் பற்றி என்ன நினைக்கும்?' என்ற எண்ணம் இந்த நாட்டாண்மை ஒவ்வொன்றுக்கும் இருக்கும். ஆதலால் அவை ஸந்தேஹாஸ்பதமான எந்த யோசனையும் தெரிவிக்கவே முன் வராது.

இதிலே இருக்கும் இன்னொரு ஜனநாயக அம்சம், ஏதோ ஒரு ஜாதியாரின் ஸெலக்‌ஷனாயில்லாமல் ஸகல ஜாதிகளுக்கும் 'தர்ம க்ருத்யம்' காணும் பன்னிரண்டு சேரிகளையும் கொண்டு ஸெலக்ட் பண்ண வைத்ததாகும்.

அந்த நாட்டாண்மைகளும்கூடத் தாங்களாகவே எல்லாம் செய்வது என்றில்லாமல் மத்யஸ்தர்களைக் கொண்டு பண்ணியது கவனிக்கவேண்டிய அம்சம். இதற்கெல்லாம் மேல் ராஜாங்க அதிகாரிகள் கண்காணிப்புச் செய்திருக்கிறார்களென்பது வேளானையும் பட்டனையும் பற்றி முதலில் சொன்னதிலிருந்து தெரியும். இத்தனை தினுஸுகளில் தேர்தல் தூய்மையை உறுதிப்படுத்தித் தந்திருக்கிறார்கள் இப்போது பெரும்பாலும் எவரோ ஒருத்தர் அபேக்ஷகராக நிற்க ஆசைப்பட்டுவிட்டு, அப்புறம் பேருக்கு யாரையோ விட்டு 'நாமினேட்' பண்ணச் சொல்வது, 'ஸெகண்ட்' பண்ணச் சொல்வது என்கிறது போலில்லாமல், எவரொருத்தரும் தானாக அபேக்ஷிக்காமலே க்ராமத்தின் தர்மஸபைகளுடைய நிர்வாஹிகள் ஜனங்களின் அபிப்ராயத்தை அநுஸரித்து அபேக்ஷகர்களை ஸெலக்ட் செய்தார்கள்.

இப்போதுங்கூட மற்ற பேலைகளுக்கு அபேக்ஷகரே மனுப் போடுவது போலில்லாமல் எலெக்‌ஷனில் மட்டும் அபேக்ஷகர் பேரை வேறே ஒருத்தர் பிரேரணை பண்ண வேண்டும், அதை இன்னொருத்தர் ஆமோதிக்க வேண்டுமென்று இருப்பது, பொதுப்பணிக்கு வருபவன் தானே முந்திரிக்கொட்டை மாதிரி தன்னை ப்ரகடனம் பண்ணிக்கொள்வது அத்தனை அழகல்ல, மற்றவர்கள் அவனை நிற்க வைப்பதுதான் கௌரவம் என்ற எண்ணத்தில்தான். பூர்வத்தில் நிஜமாகவே இப்படி நடந்த ஏறபர்டுதான் இப்போது ஒப்புக்காகவாவது இப்படியொரு நடைமுறை ஏற்பட்டிருப்பதற்குக் காரணமாக இருக்கவேண்டும்.

# தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)

## ஜீவாஸாரமான தகுதி

### தேர்தல் நடந்த விதம்

முப்பது குடும்புகளில் ஒவ்வொன்றிலும் ஜனங்களின் பொதுவான மதிப்பீட்டின்படி தகுதிபெற்ற அபேக்ஷகர்களை தர்ம க்ருத்ய ஸபையார் மத்யஸ்தர்களைக் கொண்டு பொறுக்கி எடுத்தபின் அவர்களில் ஒவ்வொருத்தர் பேரையும் ஒரு தனி ஓலையில் எழுதிக்கொள்வார்கள். ஒவ்வொரு குடும்பிலும்ட பொறுக்கி எடுக்கப்பட்ட அத்தனை அபேக்ஷகர்களின் பேர்களைக் கொண்ட தனித்தனி ஓலைகளும் ஒரு கட்டாகக் கட்டப்படும்ட. அதாவது ஒரு குடும்பின் அபேக்ஷகர்கள் எல்லாருக்குமாகச் சேர்த்து ஒரு கட்டு ஓலை. இப்படி முப்பது கட்டுகள் கட்டி வந்துசேர்ந்த பின் க்ராமத்து மஹா ஸபை கூட்டப்படும்.

அப்புறம்தான் "குடவோலை எழுதிப் புகுவது" என்பதான தேர்தல் நடக்கும். அபேக்ஷகர்கள் என்று பல கட்சிகளின் பேரிலும், ஸ்வயேச்சையாகவும் பலபேர் நின்று, ஒருத்தருக்கொருத்தர் பலத்த போட்டி போட்டுக்கொண்டு, ப்ரசாரம் பண்ணிக் கொண்டு (ப்ரசாரம் என்று வரும்போது அதிலே நிஜமே தான் இருக்கமுடியும் என்று எதிர்பார்க்க முடியாது, எத்தனையோ இல்லாதது பொல்லாததுகளை ஜோடிக்கும்படியாகவும் இருக்கும் - இப்படி ப்ரசாரம் பண்ணி ஊரை இரண்டு படுத்திக்கொண்டு) வாய்ச்சண்டை, அது வலுத்து கைச்சண்டை, இவற்றைவிட ஹானிகரமான லஞ்ச ஊழல் என்றெல்லாம் ஏற்படாமல், பொதுவாகப் பொதுஜன மதிப்பைப் பெற்ற எவரும் எலெக்ட் ஆக வசதியாக அமைந்தது இந்தக் "குடவோலை" முறை.

"ஓலை" என்ன என்று பார்த்தோம் - அதுதான் அபேக்ஷகரின் பேர் எழுதிய அந்தக்கால சிட்டு, அபேக்ஷா பத்திரம் மாதிரி என்று தெரிகிறது. அதுவேதான் வோட்டுச் சீட்டு மாதிரியும் என்பது இனிமேல் அந்தக் "குடம்" என்னவென்று நாம் பார்க்கிறபோது தெரியவரும்.

குடம் என்னவென்று பார்ப்போம்.

தேர்தலுக்காக ஊர் ஸபை கூட்டப்படுமென்று சொன்னேனல்லவா? எங்கே கூடுமென்றால் ஈச்வர ஸாக்ஷியாக, பகவானுக்கு பயந்து, தேவாலயங்களின் வெளிமண்டபத்தில் தான்கூடும். அங்கே எல்லோரும் பார்க்க பப்ளிக்காகத் தேர்தல் நடக்கும். குழந்தையிலிருந்து கிழவர்வரை எல்லோரும் அதற்கு வருவார்கள். "ஸபால விருத்தம்" என்று இதை சாஸனத்தில் சொல்லியிருக்கிறது. இதுவும் நிச்சயமாக ஒரு ஜனநாயக அம்சம்தானே? ஊர் நிர்வாஹத்தில் ஊரார் எல்லாருக்கும் "நம்முடையது" என்ற ஸொந்த உணர்ச்சி, ஈடுபாடு உண்டாகவும், இது வழி செய்தது.

ஸபை கூட்டப்படும் இடத்துக்குக் குடும்புக்கு ஒரு கட்டுவீதமான அந்த முப்பது ஓலைக்கட்டுக்களும் கொண்டுவரப்படும். அங்கே மேடை மத்தியிலே குடும்புக்கு ஒரு குடம் வீதம் முப்பது குடம் வைத்திருக்கும். இங்கேதான் "குடவோலை"யின் "குடம்" வருகிறது. இதுதான் வோட்டுப் பெட்டி மாதிரி.

அக்காலத்தில் கோவிலில் பூஜை செய்யும் அர்ச்சகர்கள் ஸகல விதத்திலும் ரொம்ப யோக்யதை வாய்ந்தவர்களாக இருந்தார்கள். இவர்களை "நம்பிமார்" என்று சொல்லியிருக்கிறது. ஊர் ஜனங்கள், ஊர்ப்பெரியவர்கள் எல்லாரும் கூடிய மண்டபத்தில் இந்த நம்பிமார்களுக்கு முக்யமான இடம் கொடுத்து மேடையில் உட்கார்த்தி வைத்திருக்கும். ஜன ப்ரதிநிதிகளை எலெக்ட் செய்யுமிடத்துக்கு ஈசன் ப்ரதிநிதிகளான நம்பிமார் எல்லோரும் தவறாமல் வந்து மேற்பார்வையிடவேண்டும்.

அதாவது அரசியல், ஸமூஹம் முதலான எல்லாவற்றின் கார்யங்களையும் ஈச்வரனுக்குப் பொதுவாக நடத்தினர்.

ரொம்பவும் நேர்மையும் கண்டிப்பும் உள்ளவர்களாக க்ராமத்தில் பெயர் எடுத்தவர்களை மத்யஸ்தர்களாக வைத்துத் தேர்தல் நடக்கும்.

ஒன்றிலிருந்து முப்பதுவரை வரிசையாக ஒவ்வொரு குடும்புக்குமான அங்கத்தினருக்குத் தேர்தல் நடக்கும். முதலில் முதல் குடும்பின் அபேக்ஷகர்களின் பேர்களைக்

கொண்ட ஓலைக்கடடை அப்படியே கட்டுப்பிரிக்காமல் நம்பிமார்களுக்குள் வயஸிலே பெரியவர் அந்தக் குடும்புக்கான குடத்துக்குள் போடுவார். இதுதான் அன்று நடந்த "வோட்டிங்". அதாவது ஜனங்கள் ஒவ்வொருவரும் யாரோ ஒரு நபருக்கு வோட் போடவில்லை. ஆனால் ஜனஸம்மதமான பலருடைய பேரும் கொண்ட கட்டை ரொம்பவும் ஸீனியரான அர்ச்சகர் நன்றாகத் தூக்கிக்காட்டிக் குடத்திலே போடுவார் ஸகல ஜனங்களும் காணுமாற்றல்" என்று சொல்லியிருக்கிறது. இதனால் நிஸ்ஸந்தேஹமான நீதி, ஜனநாயகக் கொள்கை இரண்டும் காப்பாற்றப்படுகிறது.

அப்புறம் அங்கே "ஸபால விருத்தம்" என்றபடி கூடியிருக்கும் கபடமற்ற குழந்தைகளில் ஒரு சின்னக் குழந்தையைக் கூப்பிட்டு, மேடைக்கு வரச்செய்து, குடத்துக்குள்ளே கையைவிட்டு ஓலைக்கட்டிலிருந்து ஏதாவதொரு ஓலையை எடுத்து மத்யஸ்தரிடம் கொடுக்கும்படிச் சொல்வார். குழந்தை அப்படியே பண்ணும். இதுதான் 'தேர்தல்' என்ற முக்ய கார்யம். குழந்தை எடுத்துக்கொடுத்த ஓலையிலுள்ள பேருக்குடையவன் தேர்ந்தெடுக்கப்பட்டுவிடுவான்.

அரசியல், ஸமூஹம் எதுவும் தெரியாத, அதனாலேயே இவற்றில் என்னென்ன கபடம் பண்ணலாம், தந்த்ரம் பண்ணலாம் என்றும் தெரியாத குழந்தைதான் மஹாஸபை ப்ரதிநிதியைத் தேர்ந்தெடுத்தது! எந்தத் தரப்பிலும் சேராத அந்தக் குழந்தையின்மூலம் ஆண்டவனின் சித்தமே வெளியாகி, அவனாலேயே ஒருவன் ஸபை மெம்பராக நியமனம் பெறுகிறான் என்ற உசந்த எண்ணத்தில் இப்படிச் செய்தார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**ஒளிவு மறைவுக்கு இடமில்லை**

குழந்தை தற்செயலாக - அதாவது தற்செயல் என்று நமக்குத்

தோன்றுகிற தெய்வச்செயலாக - குடத்திலிருந்து எடுக்கிற ஓலையை மத்யஸ்தரிடம் கொடுக்கும். அதை அவர் விரிக்கப்பட்ட விரல்களுடன் கூடின கையால் வாங்கி அதிலுள்ள பேரை வாசிப்பார். "அக் குடுத்த வோலை மத்தியஸ்தன் வாங்கும்போது அஞ்சுவிரலும் அகல வைத்த உள்ளங்கையிலே ஏற்றுக்கொள்வானாகவும், அவ்வேற்றுவாங்கின வோலை வாசிப்பானாகவும்" என்று நிஸ்ஸந்தேஹமான ந்யாய வழியை சாஸனம் உறுதிப்படுத்தித் தருகிறது. அவர் ஏற்கெனவே ஒரு ஓலையை ஒளித்துக்கொண்டு, 'ட்ரிக்'காக அதை இப்போத கையில் 'ஸ்லிப்' பண்ணிக் கொள்ளாமலிருக்கவே இப்படியெல்லாம் ஜாக்ரதை செய்திருக்கிறது.

இம்மாதிரி மத்யஸ்தர் 'எலெக்ட்' ஆகிறவரின் பேரைப்படித்தவுடன், 'அவர் ஓலையில் உள்ள பேரைத்தான் படிக்கிறார், தாமாக ஏதோ ஒருத்தர் பேரை அதிலிருப்பது போலப் படித்துவிடவில்லை' என்பதை ஸந்தேஹமற உறுதி செய்யும் பொருட்டு அங்கே இருக்கும் நம்பிமார்கள் எல்லோரும் அந்த ஓலையை ஒவ்வொருவராக வாங்கிப் பார்த்து அந்தப் பேரை ப்ரகடனம் செய்வார்கள். அப்புறம் அது அஃபீஷியலாக எழுத்தில் பதிப்பிக்கப்பட்டு, அன்னார் ஸபையின் அங்கத்தினராகிவிடுவார். இதுதான் சோழர் கால க்ராம ஸபை அங்கத்தினரின் தேர்வு முறை.

எந்தத் தனிமனிதர்கள், அல்லது கட்சியின் ஆதரவும் சாய்காலும் இல்லாமல் ஊருக்குப் பொதுவாக, ஈசனுக்குப் பொதுவாக நல்லவர்கள், யோக்யர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முறை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

***ஜீவாஸாரமான தகுதி***

**தனிமனித கவர்ச்சி அம்சமே இல்லை**

முடியரசு போய்க் குடியரசு வரும்போதே மனிதரைப் பார்க்காமல் கொள்கைகளைப் பார்ப்பதாகப் பெரிசாகப் பறை

சாற்றப்படுகிறது. ஜாதி, ஸ்தானம் முதலிய எதையும் பார்க்காமல் ஐடியாலஜியின் பேரிலேயே ஸமூஹ கார்யங்கள் நடப்பது இப்போதுதான் என்று பெருமை பேசிக்கொள்கிறார்கள். ஆனால் வாஸ்தவத்திலோ இப்போதுதான் தர்மம், நீதி, நேர்மையான நிர்வாஹம், திறமையான ஸமூஹ அமைப்பு என்பதான உண்மைகளைப் பார்க்காமல், தனி மநுஷ்யர்களையும் கட்சிகளையுமே பார்த்து, "காந்தி சொன்னாரா, அதுதான் வேதம். அதற்குக் கொஞ்சம் வேறேயாக அவருக்கு நேற்றுவரை நெருக்கமாக இருந்த ராஜகோபாலாச்சாரி அபிப்ராயப்பட்டால்கூட இவர் தேச விரோதமானவர் என்று அர்த்தம்" இல்லாவிட்டால் வேறு ஒரு அம்பேத்காரோ, டாங்கேயோ ஏதோ சொல்லிவிட்டால் அதுதான் ஸத்யம் என்கிற ரீதியில் ஜனங்கள் கொள்கைகளை விட்டு (தனி) மநுஷ்யர்களையே பிடித்துக்கொண்டு நிற்பது ஜாஸ்தியாகிவருகிறது. முதலில் தனி மநுஷ்யரிடம் மோஹம் மாதிரியான பிடிமானம். அதற்கு அப்புறம் ஏதோ ஒரு பார்ட்டி - வ்யூ (கட்சிக் கண்ணோட்டம்) - இது இரண்டுக்கும் மிஞ்சி உண்மைகளை மனஸ் திறந்து உள்ளபடி பார்ப்பது என்பதே அபூர்வமாகி வருகிறது.

எப்படிப்பட்ட தனி மநுஷ்யர்களின் பின்னே ஜனங்கள் போகிறார்களென்று பார்த்தால் யாருக்குக் கவர்ச்சிச் சக்தி இருக்கிறதோ, அவருக்குப் பின்னேதான்.

ஒருவருக்கு நல்ல அரசியல் ஞானம் இருக்கலாம், தேச நலுனுக்கான கொள்கைகளை வகுத்து அவற்றைத் திறம்பட நடத்திவைக்கிற சக்தி இருக்கலாம், நேர்மையான நடத்தை இருக்கலாம், இதெல்லாம் அவரிடம் இருந்தாலும் இவற்றில் எதுவுமே இல்லாத இன்னொருவருக்கு நன்றாக ஜோடித்துமேடையிலே பேச முடிகிறது, வசீகரமான பெர்ஸானலிடியிருக்கிறது என்றால் இவற்றின் கவர்ச்சியிலேயே இவர் விஷயம் தெரிந்த அந்த இன்னொருவரைவிட ஜனங்களின் பெரிய ஆதரவைப் பெற்று விடுகிறார். இந்த துர்தசையில்தான் இப்போது தேசமிருப்பதாகத் தெரிகிறது. ஸமூஹத்தின் எல்லா நிலைகளில் உள்ளவர்களுமே இப்படிப்பட்ட கவர்ச்சியில் மயங்கத்தான் செய்கிறார்களென்றாலும், இதிலேயும் விஷயம் தெரியாத பாமர ஜனங்களைத்தான் விசேஷமாக வளைத்துவிட முடிகிறது. இதை நினைக்கும்போது,

கவர்ச்சியம்சத்தை உத்தேசித்தேதான் வோட்டர்களுக்கு வேறு தகுதியே வைக்காமல் வயஸு வந்தோருக்கெல்லாம் வாக்குரிமை என்று செய்வதோ என்று கூடத் தோன்ற ஆரம்பித்துவிடுகிறது.

சோழர் காலத்தில் உச்சியில் முடியரசு இருந்தபோதா, கீழே தேர்தலில் பெர்ஸனாலிடி என்பதே இல்லை, கட்சி என்பதும் இல்லவே இல்லை. தர்மம், தகுதி என்பனவற்றின் மேலான அடிப்படையிலேயே முழுக்க முழுக்கத் தேர்தல் நடந்திருக்கிறது. கான்டிடேன் என்பவன் பெர்ஸனலாக யார், அவன் என்ன பார்ட்டி என்ற பேச்சுக்கே இடமில்லை. அவன் தர்மிஷ்டன், தகுதி வாய்ந்தவன் என்பதுதான் கவனத்துக்கு வந்திருக்கிறது. இப்படிப்பட்டவர்கள்தான் தங்களுடைய ஸொந்தக் கவர்ச்சியினால் இல்லாமல், யோக்யதாம்சங்களுக்காக மாத்திரம் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

அப்புறம் ஒரு வருஷம் அவருக்குப் பதவிக் காலம். மறு வருஷம் மறுபடியும் இதே மாதிரித் தேர்தல். ஆனால் இதே நபர் அந்தத் தேர்தலிலோ அதற்கப்புறம் இரண்டு வருஷங்களில் நடக்கும் தேர்தலிலோ எலெக்ட் ஆகமுடியாது. முன்னேயே சொன்ன விஷயம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### பெருன்பான்மை அடிப்படை இல்லை

இந்தத் தேர்தலில் காணும் அநேக முக்யமான அம்சங்களில் இன்னொன்று, ஒரு குடும்பத்திலே ஒருவருக்கு எத்தனை வோட்டுக்கள் என்று எண்ணி மெஜாரிட்டி பேஸிஸில் (பெரும்பான்மையுடன் அடிப்படையில்) ஒருத்தர் ஜயித்ததாக நிர்ணயம் பண்ணாததாகும். ஒருத்தன் மெஜாரிட்டி அடிப்படையில் ஜயிக்கிறான் என்றால், உடனே அவனுக்கும் அவனை ஆதரிப்பர்களுக்கும் தங்களுடைய எதிராளிகளான மைனாரிட்டி யார் யார் என்பதிலேயே புத்தி போக

இடமேற்படுகிறது. தொடர்ந்து, அவர்களை எப்படியெல்லாம் ஹிம்ஸிக்கலாம், 'விக்டிமைஸ்' பண்ணலாம் என்பதில் கவனம் போகலாம். மைனாரிட்டியின் பரம் ந்யாயமான கோரிக்கைகளைக்கூட மெஜாரிட்டி பலத்தினால் திரஸ்காரம் பண்ணி விடுவது என்று இக்காலத்தில் ஏற்பட்டிருக்கிற மாதிரி கூடாது என்று நம் சோழகாலப் பூர்விகர்கள் எண்ணியிருக்கிறார்கள்.

முதலில் ஒரு அபேக்ஷகர் எலெக்ட் ஆவதில் வோட்டர்களை வைத்து மெஜாரிட்டி - மைனாரிட்டி, அப்புறம் இதில் ஜயித்த அபேட்சர்கள் எல்லாரையும் சேர்த்து ஸபைகளை அமைத்து அரசாங்க அதிகாரத்தைக் கொடுப்பதிலும் கட்சிகளை வைத்து மெஜாரிட்டி - மைனாரிடி என்ற அடிப்படைகளில் முடிவு செய்யும்போது ஜன ஸமூஹத்தையே இந்த அடிப்படையில் இரண்டாகப் பிளந்துவிட்டது போலக்கூட ஆகிறது, அதாவது இரண்டு பிரிவுக்காரர்களும் ஏதோ ஒவ்வொரு விதமான கோட்பாடுகளுக்கும், திட்டத்துக்குமே தங்கள் புத்தியைக் குறுக்கிக்கொண்டு, அந்த closed mind - ஓடு இன்னொரு தரப்பை. அது எதிர்த்ரப்பு, எதிரித்தரப்பு, என்றே வைத்துப் பார்க்க ஆரம்பிக்கிறார்கள், இவர்களும் அவர்களுடைய ஆட்சியில் என்ன நல்லது நடந்திருந்தாலும் அதை ஒப்புக்கொள்ள மறுத்து. எப்போது பார்த்தாலும் குற்றம் கண்டுபிடிப்பதும் குறை சொல்வதாகவுமே இருக்கிறார்கள், அதனால்தான் அந்தச் சோழர்காலத்தில் யோக்யதாம்சங்களைத் திட்டவட்டமாக, தீர்மானமாக வைத்துவிட்டபின், அப்படிப்பட்டவன் மெஜாரிட்டி பெற்றானா, மைனாரிட்டி பெற்றானா என்ற வீண் சண்டைகள் கிளம்ப இடமில்லாமல் குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கப் பண்ணினார்கள்.

அப்புறம் எலெக்ட் ஆகிற எவனாவது தப்பாக நடந்தாலும் அவனுடைய அதிக்ரமம் ஆழ ஊன்ற முடியாதபடி பதவிக் காலம் ஒரே வருஷம்தான் என்று வைத்தார்கள். இந்த ஒரு வருஷத்துக்குள்ளேயுங்கூட, ஒரு மெம்பர் குற்றம் பண்ணியதாகத் தெரிந்தால் உடனே அவனுக்குப் பதவி நீக்கந்தான், "வாரியஞ் செய்யா நின்றாரை அபராதங் கண்டபோது அவனை யொழித்துவதாகவும்" என்று கல்வெட்டு சொல்கிறது.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஜீவாஸாரமான தகுதி*

**"சந்திர ஸூரியர் உள்ளவரை"**

தங்கள் ஊர் நிர்வாஹத்தில் தப்பானவர்களின் ஆதிக்யம் போய் நல்லவர்கள் வளருவதற்காக, மேற்படிசாஸனம் உருவான வருஷத்திலிருந்து சந்த்ர ஸூர்யர்கள் உள்ள அளவும் இம்மாதிரி குடவோலை அமைப்போம் என்ற சாஸனம் முடிகிறது, "இப்பரிசே இவ்வாண்டுமுதல் சந்திராதித்தவத்தென்ற நம்கிராமத்துக்கு அப்பியுதமாக 'அப்யுதயம்'என்றால் க்ஷேமாபிவ்ருத்தி) துஷ்டர் கெட்டு விசிஷ்டர் வர்த்திப்பதாக (அதாவது உயர் மக்கள் வளருவதற்காக) வியவஸ்தை செய்தோம் - உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்து சபையோம்" என்று முடிகிறது.

துரத்ருஷ்டவசமாக இம்மாதிரி குடவோலைத்தேர்தல் முறை அவர்கள் ஆசைப்பட்ட மாதிரி சாச்வதமாக நீடிக்காமல் போய்விட்டது.

'சபையோம்' என்றால் 'ஸபையோரான நாங்கள்' என்று அர்த்தம் - அதாவது மேற்படி சாஸன விதிகளை ஃப்ரேம் செய்தவர்கள் முடிவில் கையெழுத்துப் போடுவது போல் தங்களைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஜீவாஸாரமான தகுதி*

**நிர்வாஹப் பிரிவுகள்**

ஊர்ஸபை நிர்வாஹம் பல இலாகாக்களாக - 'வாரியம்' என்ற கமிட்டி அல்லது போர்ட்களாக - பிரிக்கப்பட்டிருந்தன.

தேர்ந்தெடுக்கப்பட்ட முப்பது அங்கத்தினர்கள் இந்த வாரியங்களில் பொறுப்பாளர்களாகப் போடப்பட்டனர். ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒரு வாரியத்தில் ஸ்தானமிருக்கும் அதாவது இந்த வாரியங்களின் மொத்த ஸ்தானங்களும் ஸரியாக முப்பதே. இதில் பன்னிரண்டு ஸ்தானங்கள் எல்லாக் காரியங்களையும் மேற்பார்த்து நிர்வஹித் ஜெனரல் அட்மினிஸ்ட்ரேஷனான 'ஸம்வத்ஸரவாரிய'த்துக்குப் போயிற்று. 'தோட்ட வாரியம்' என்பதாக நிலபுலன், தோப்பு துரவுகளை கவனிப்பதற்குப் பன்னிரண்டு ஸ்தானம். 'ஏரி வாரியம்' என்பதாக ஊரின் நீர்ப்பாசனத்தை கவனிக்கும் கமிட்டியில் ஆறு ஸ்தானங்கள்.

முப்பது மெம்பர்களில் வயஸு, அநுபவம், படிப்பு எல்லாவற்றிலும் முதிர்ச்சி கண்ட பன்னிரண்டு பேர் ஸத்வத்ஸர வாரியத்தில் ஸ்தானம் கொடுக்கப்படுவார்கள். உடம்பால் ஓடி ஆடக்கூடிய மத்யம வயஸினர் மற்ற இரண்டு வாரியங்களில் இடம்பெறுவார்கள்.

இதுதவிர பொன்வாரியம், பங்சவார வாரியம் என்று தலைக்கு ஆறு மெம்பர்களைக் கொண்ட இரண்டு கமிட்டிகள் இருந்திருக்கின்றன. இவற்றுக்கான மெம்பர்களும் முன்னே சொன்னதுபோலவே முப்பது குடும்புகளுக்கும் குடவோலைத் தேர்தல் நடத்தித்தான் எலெக்ட் செய்யப்பட்டார்கள். முதலில் முப்பது பேரை எலெக்ட் செய்தபின் அந்த முப்பதிலிருந்து இந்த இரண்டு வாரியங்களுக்குமான பன்னிரண்டு பேர் ஸெலக்ட் செய்யப்பட்டனர்.

முற்கால ஏற்பாட்டில் பண்ணைக்காரன் தன் பங்கில் ஐந்தில் ஒரு பங்கை ராஜாங்கத்துக்கு வரியாய்க் கொடுக்க வேண்டும். பணமாக இல்லாமல் தான்யமாகத்தான். அதனால் land revenue-வுக்கு பஞ்சவாரம் என்று பெயர்.

தோட்டவாரியம் என்பது விளைச்சல், விதை ஸப்ளை முதலான விஷயங்களை - அதாவது நேரே தான்ய உற்பத்திக்கு ஸம்பந்தப்பட்ட விஷயங்களை - கவனித்துக்கொள்ள, அதன் பஞ்சவார வசூல் குறித்தவற்றைப் பஞ்சவார வாரியம் கவனித்துக்கொண்டது. நில வரி, வியாபார வரி, சுங்கம் முதலானவற்றின் வசூல் ராஜாங்க அதிகாரிகளின்

பொறுப்பிலிருந்தாலும். அது விஷயமாக ஜனங்களின் அபிப்ராயம். குற்றங்குறைகளை எடுத்துச் சொல்லவும், இது போன்ற மற்ற ஸமாசாரங்களை கவனிக்கவுமே க்ராம மஹாஸபையும் பஞ்சவார, பொன் வாரியம் வைத்திருந்தது இதெல்லாம் நம்முடைய ஊஹத்தில் தெரிவது. சாஸனத்தில் உடைத்துச் சொல்லியதல்ல.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### புதுக்கதையும் பழங்கதையும்

இந்தப் பழைய கதையெல்லாம் இப்போது எதற்கு என்றால் புதுக்கதைக்குப் பழைய கதையே புத்துயிர் தந்து சீர்ப்படுத்த முடியும் என்பதால்தான். பழைய கதைகளான ராமாயணமும் பாரதமும் மற்ற புராணங்களுந்தானே அதற்கப்புறம் வந்திருக்கிற எத்தனையோ தலைமுறைகளின் கதைகளை நல்லவழியில் கொண்டுபோயிருக்கின்றன? இக்கால நாவல்கள். ஸினிமாக்கள் பலவற்றுக்கூட அவைதானே மூலமாயிருக்கின்றன?

ஜனநாயகம், ஜனநாயகம் என்று மேல்நாடுகளில் முழங்குவது நம் நாட்டிலும் ஏற்பட்டுவிடுகிறது. க்ராம பஞ்சாயத்து போர்டு முதல் டில்லி பார்லிமென்ட் வரையில் பொதுஜன வோட்டில் எலெக்ட் ஆகும் நபர்களைக் கொண்டு உருவாக்கி, க்ராம கார்யம், ஜில்லா கார்யம், மாகாணக் கார்யம், பாரத தேசம் பூராவுக்குமான கார்யம் ஆகியவற்றை நடத்த ஏற்பாடாகிவருகிறது. பொது ஜனங்களுக்கு நற்குணங்கள் அதிகரிக்கவோ, அவர்கள் தர்ம மார்க்கமான புண்ய மார்க்கத்தில் போய் ஈசனருளை அடையவோ இது உதவுகிறதோ, நிஜமாகவே தேச க்ஷேமத்துக்கும் ஸமூஹ நலனுக்கும் உதவுகிறதா, அல்லது ஜனங்களைக் கெடுத்து சிலருடைய நலனை மட்டும் பேணுவதற்கு ஸஹாயம் செய்கிறதா என்பதைத்தான் கவனிக்க வேண்டுமே தவிர, இது ரொம்ப மாடர்ன் ஆனது, இதில ஈக்வாலிடி (ஸமத்வம்)

இருக்கிறது என்ற காரணங்களுக்காக மாத்திரம் இம் முறையை ஏற்பது ஸரியல்ல. பின்னே சொன்னவை (அதாவது நவீனக் கொள்கை என்பதும் ஸமத்வம் என்பதும்) தேசத்தின் அல்லது க்ராமத்தின் தூய்மையான, தார்மிகமான நிர்வாஹம் என்ற முக்ய நோக்கத்துக்கு நேர் தொடர்பில்லாத புறக் காரணங்கள்தான். இவற்றைப் பெரிசுப்படுத்தி முதலிடம் தருவதனால் முக்ய ப்ரயோஜனத்துக்கு ஹானி உண்டாகுமெனில் அது கொஞ்சமும் புத்திசாலித்தனமாகாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### கவலைக்குரிய அம்சங்கள்

புதிய முறையில், நமக்குத் தெரியவரும் அநேக அம்சங்கள் கவலை உண்டாக்குவனவாகவே உள்ளன. மக்களால் மக்களைக்கொண்டு மக்களுக்காக அமைக்கப்பட்ட மக்கள் ஸர்க்கார் of the people, by the people, for the people- என்றெல்லாம் என்னென்னவோ சொல்கிறார்களே - அதெல்லாம் விஷயம் தெரியாத மக்களால். விஷயம் தெரியாத (ஆனால் ஸ்வய நலன் தெரிந்த) மக்களைக் கொண்டு, அவர்களைச் சேர்ந்த சில மக்களுக்காகவே அமைத்த ஸர்க்கார் என்பதாக முடிந்துவிடுமோ என்றுகூட பயப்படும்படி இருக்கிறது.

புதிதாக ஸ்வதந்த்ரம் வந்துள்ளபோதுதான் கட்டுப்பாடு ரொம்பவும் அவச்யம். அந்த ஸமயம் பார்த்து இப்படிக் கட்டவிழ்த்து விடுகிறார்களே, என்னென்ன விபரீதம் வருமோ என்றிருக்கிறது. வ்யாதி குணமான பிற்பாடு ஓய்வு எடுத்துக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகப் புது ரத்தம் பிடித்துத் தேறவேண்டிய (convalescence)பீரியடில்தான் ரொம்பவும் ஜாக்ரதையாயும், கடும் பத்தியமாயும் இருக்க வேண்டும். அப்படி, பிரிட்டிஷ் ஆட்சி என்ற வ்யாதி போய் ஸ்வதந்த்ர சக்தியில் ஆரோக்யம் பெறுவதற்கு முற்பட்டதான நடுக்கட்டத்தில் இருக்கிறோம். இப்போது கொஞ்சம்

ஏறுமாறாக மக்களின் புத்தியோ மக்கள ப்ரதிநிதிகளின் புத்தியோ போக இடங்கொடுத்தாலும், எழுத்தளவில் கிடைத்த ஸ்வதந்த்ரம் வாஸ்தவமாக நம்மை வளர்க்கிற ஜீவசக்தியுள்ள ஸ்வதந்த்ரமாக ஆகாமல் போய்விடும். இப்போதோ "கொஞ்சம் ஏறுமாறு" என்ன, "ரொம்பத் தாறுமாறாகவே" போகக் கூடுமோ என்று பயப்படும்படியாக, நிர்வாஹத்தில் பொறுப்புத் தந்து அதிகார ஸ்தானத்தில் உட்கார்த்தி வைத்து விடலாம், படிப்பு - ஸொத்து - அநுபவம் - நடத்தை முதலான எந்தத் தகுதிக்கும் அவச்யமில்லை என்று பண்ணிவருகிறார்கள்.

இதில் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிற ஒரு தீமை இப் புது ஜனநாயகத் தேர்தல்கள் ஏற்படுவதற்கு முன், நாட்டில் சில உத்யோகஸ்தர்களிடம் மாத்திரம் லஞ்சம் வாங்கும் பழக்கமும், பொய் வாக்குறுதி கொடுத்து ஏமாற்றும் வழக்கமும் இருந்தன. வோட்டும் எலெக்ஷனும் ஆரம்பித்த பிற்பாடோ, லஞ்சமென்பதையே கேள்விப்பட்டிராத பட்டிக்காட்டில் கூட ஸர்வ ஜனங்களும் லஞ்சம் வாங்குவதற்கு இடம் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. விஷயம் தெரிந்த படிப்பாளிகளை ஏமாற்றுவதைவிடப் படிப்பறியா பாமர ஜனங்களை ஏமாற்றுவது ஸுலபம். அவர்களிடம்தான் காசாகவே துணிந்து லஞ்சம் கொடுக்கவும் அதிக இடமுண்டு. ஆனதால் அபேக்ஷகர்களும் அரசியல் கட்சிகளும் செய்யும் ஏமாற்றும் பொய்யும் அதிகமாகும். இது ஒரு பக்கம் இருக்க, அந்தப் பொது ஜனங்களுமே அபேக்ஷகர்களிடமிருந்தும் அரசியல் கட்சிகளிடமிருந்தும் பலவிதமான ஆதாயங்களைப் பெறுவதற்காக ஏமாற்றுவதற்கும் பொய் சொல்வதற்கும் ஊக்கம் பெற்றுவிடுவார்கள். இப்படிப்பட்ட ஜனநாயகத்தால் நமக்கு க்ஷேமமா, க்ஷாமமா? "எந்தத் தகுதியும் வைக்காததால் இதுவே நிஜமாக ஸர்வ ஜனங்களையும் (தேர்தலில்) நிறத்திவைக்க உதவும் உண்மையான ஜனநாயக முறை" என்கிறார்கள். ஆனால் இதில் இப்படி ஏகத்தாறாகப் பணம் செலவழிக்கும்படிப் பண்ணியிருப்பதால், நடைமுறையில் பணம் கொழுத்தவர்களைத்தான் அதிகம் நிறுத்தி வைப்பதாக ஆகுமென்று தோன்றுகிறது. ஒவ்வொரு ஊரிலும், ஒவ்வொரு கட்சியிலும் த்யாகம், திறமை, தூய்மை நிறைந்தவர்கள் இருந்தாலுங்கூட, அவர்களை விட்டுவிட்டு, பணபலம்ட படைத்தவனைத்தான் நிறுத்துவது என்று ஆனால் அப்புறம்

ஜனநாயக தத்வம், நல்ல நிர்வாஹம் இரண்டுமே என்ன ஆவது?

இப்படி வாரி விட்டுச் செலவழித்தவன் அப்புறம் எலெக்ட் ஆனபின், அதை ஈடுகட்டிக்கொள்வதற்கும், மறுபடி எலெக்ஷன் வரும்போது அதில் இதே மாதிரி செலவு செய்வதற்கும் "வழி" பண்ணிக்கொள்ளப் பார்ப்பதும் இயற்கைதானே? விஸ்தாரமம் பண்ணிக்கொண்டு போகவே வேதனையாயிருக்கிறது. வாஸ்தவத்தில் வரப்போவது ஜன நாயகமோ, "தனநாயக"மா என்று பயமாயிருக்கிறது.

இதெல்லாம் போகட்டும். எலெக்ஷனுக்கு அப்புறம் ஏற்படும் ராஜாங்கம் நிஜமாகவே மக்களைக் கொண்டு மக்களால் ஆன ஜனநாயக அமைப்புத்தானா? பல அபேக்ஷகர்களின் போட்டியிலே வோட்டுகள் சிதறிப்போவதால் மொத்தத்தில் இருபத்தைந்து முப்பது சதவிதமே வோட்டுப் பெற்றவருங்கூட மெம்பராகத் தேர்வு பெற்று விடலாம். அதே போல் மொத்தம் ஒரு ஸபையின் மெம்பர்ஷிப் ஐநூறு என்றால், பல கட்சிகளில் அந்த ஐநூறு ஸ்தானங்கள் பங்கீடாவதில் பாதிக்கு ரொம்பக் குறைவாக நூற்றைம்பது, இருநூறு ஸீட்டுக்குள்ளே பெற்ற கட்சியுங்கூட "இருப்பதற்குள் பெரிய கட்சி" என்ற முறையில் ஸர்க்கார் அமைக்கக்கூடிய சான்ஸ் இருக்கிறது. ஸர்க்கார் அமைக்கும் கட்சிக்கு ஐநூறு ஸீட்டில் இருநூறு ஸீட்தான், சராசரியில் ஒவ்வொரு ஸீட்டிலும் மொத்த வோட்டில் அதுபெற்றது நாற்பது சதவிதம்தான் என்று வைத்துக்கொண்டால் நாற்பது கோடி பேர் உள்ள நம் தேசத்தில் ஏதோ பத்து கோடி பேரின் ஆதரவை மட்டுமே பெற்றாலும் போதும், அத்தனை ஜனங்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸர்க்காரைப்போல் அது தன்னைக் காட்டிக் கொண்டுவிட முடியுமென்று தெரிகிறது. அதாவது நான் ஸரியாகக் கணக்குப் போட்டுச் சொல்லாவிட்டாலும் ஜனத்தொகையில் வோட்டுப் போடாமலே இருப்பவர்கள் போக, போட்டவர்களிலும் அரைவாசிக்கு ரொம்பக் குறைவான ஆதரவை மட்டுமே பெற்ற கட்சிகூட அதிகாரத்தைப் பெற்றுவிடமுடியும். தேசம் அல்லது மாகாணம் முழுதையும் எடுத்துக்கொண்டால் அவற்றிலே ஒவ்வொரு கட்சிக்கும் உள்ள ஆதரவுக்கும், மத்ய - மாகாண சட்ட ஸபைகளில் அந்த கட்சி ஒவ்வொன்றும் ஜயிக்கிற ஸீட்டுக்கும் "ப்ரபோர்ஷன்"

(விகிதாசாரம்) ஒத்துப்போகாமலே இருப்பதற்கு இடமிருக்கிறது. இது எப்படி ஜனநாயகம்? இந்த அம்சத்தைக் கவனித்துத்தான் ஒரு வோட்டர் தன் ஆதரவைப் பெற்ற ஒரே ஒரு அபேக்ஷகருக்கு மட்டும் வோட் போடுவது என்றில்லாமல், ரொம்பவும் ஆதரவு பெற்றவரின் பெயரில் ஆரம்பித்து மற்றவர்கள் பேரையும் தன் preference -படி வரிசை க்ரமமாகக் குறிப்பிடலாமென்றும், அதில் முதல் preference -க்கு இத்தனை மார்க் அடுத்ததுகளுக்கு இத்தனையித்தனை என்றும் வைத்துத் தேர்ந்தெடுக்கிற ஒரு முறையும் இருக்கிறது. இதை Proportional Representation -"விகிதாசார ப்ரதிநிதித்வம்" - என்கிறார்கள். ஆனால் இது 'கௌன்ஸில்"கள் (மேல் ஸபைகள்) மாதிரி சின்ன அளவில்தான் முடியும், ஊர் ஸபை, மாகாண - மத்ய சட்டஸபைகளின் ஜெனரல் எலெக்ஷனில் முடியாது என்று சொல்கிறார்கள். நடைமுறைக்கு ச்ரமமானது என்கிறார்கள். அவர்கள் சொல்வது வாஸ்தவமாயும் இருக்கலாம்.

ஸர்வ ஜனங்களும் கலந்துகொள்ளச் செய்யும் தேர்தல் என்ற ஒரு காரணத்தால் மட்டும் ஒரு நாட்டில் உண்மையான ஜனநாயகம் ஏற்பட்டுவிட்து என்று சொல்லிவிடமுடியாது என்பதற்காகத்தான் இந்த வீதாசாரக் கணக்கெல்லாம் சொல்கிறேன். உண்மை ஜனநாயகமாக இன்றி, போலி ஜனநாயகம் பகட்டுச் செய்துகொண்டு உண்மை போலத் தோன்றவும் இதிலே இடமிருக்கிறது என்று காட்ட வந்தேன்.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஜீவாஸாரமான தகுதி*

### பக்குவம் செய்தபின் பொறுப்புத் தருக !

எந்தக் கக்ஷியின் கையில் அதிகப் பணம் இருக்கிறதோ, பொய்யையோ மெய்யையோ பெரிசுபடுத்தி ப்ரசாரம் செய்து ஜனங்களின் மனஸை வசியப்படுத்தும் ப்ரபலப் பத்திரிகைகள் இருக்கின்றனவோ, 'பேச்சாளர்'கள் என்கப்பட்டவர்கள் இருக்கிறார்களோ, எந்தக் கக்ஷியிடம் குழந்தைப்

பிராயத்திலேயே மனஸில் கல்வி என்ற அம்ருதத்துக்குப் பதில் அரசியல் விஷயத்தை ஏற்றிவிடுகிற வித்யா சாலைகளில் அதிக ஆதிக்யம் இருக்கிறதோ, அதுவே க்ரமமற்ற வழிகளால் தன்னைப் பெரிய கக்ஷியாக மாற்றிக் கொள்கிற நிறைய இடம் இருக்கும்போது ஜனநாயகம் என்பது வெறும் போலியாகவே ஆகிவிடவும் கூடும். அந்த ஸ்திதிக்கூததான் நாம் போகிறோமோ, அந்த ஸ்திதிக்குத் தான் நம்மவரே நம்மைக் கொண்டுவந்து விட்டுக்கொண்டிருக்கிறார்களோ என்று தோன்றுகிறது.

நல்ல எண்ணத்தில்தான் இப்படிச் செய்ய முனைந்திருக்கிறார்கள் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் நல்ல எண்ணம் என்பது யுக்தமான நடைமுறைக்கு ஒத்துவராது என்றால் அதனால் என்ன ப்ரயோஜனம்? நல்ல எண்ணம் கொண்டவர்களானாலும், அவர்களுக்காகவே தாங்கள் செய்வதன் விளைவுகள் புரியாமல் போனாலும், இப்போது பல அறிவாளிகள் - அரசியல் நிர்ணய ஸபை அக்ராஸனரும் கூட - நடைமுறையில் இது இப்படியிப்படியான தவறான விளைவுகளை ஏற்படுத்தக்கூடும் என்று எடுத்துக்காட்டிய பிறகும் காதில் போட்டுக்கொள்ள மாட்டோமென்றால் என்ன பண்ணுவது?

ஒரு வ்யாதிக்காரனை நன்றாகத் தேற்றிவிட்டு அப்புறந்தான் அவனிடம் வீட்டுப் பொறுப்பைத் தரலாம். ஒரு குழந்தையை அறிவு, மனஸ், தேஹபலம் எல்லாவற்றிலும் நன்றாக வளர்த்து அப்புறந்தான் அதனிடம் பொறுப்புத் தரலாம். ப்ரியம் இருக்கிறது என்பதற்காக ஒரு நோயாளியிடமோ, குழந்தையிடமோ வீட்டுப் பொறுப்புக்களைக் கொடுப்பார்களா? சாப்பாட்டு விஷயங்கூட இப்படித்தான். நோயாளியிடம் ப்ரியம், குழந்தையிடம் ப்ரியம் என்பதற்காக அடை, தோசை, பக்ஷணம் என்று திணிப்பார்களா? நம்முடைய பொதுஜனங்களில் பெருவாரியானவர்கள் அரசியல் ஞானத்தில் குழந்தைகளின் ஸ்தானத்திலிருப்பவர்கள். வெள்ளைக்கார ஆட்சி அறிவு ரீதியில் அவர்களை பலஹீனர்களாக, நோயாளிகள் மாதிரி ஆக்கி வைத்திருக்கிறது. இந்த ஸ்திதியில் அவர்களுக்கு தேச நிர்வாஹத்தில் பொறுப்புத் தருவோம், ஜனநாயக விருந்தை வாயாலும் மூக்காலும் திணிப்போம் என்றால் என்ன பண்ணுவது?

குழந்தைதனம் விலகி பக்வ ஸ்திதி பெற்றவர்களாகவும் உருவாக்க வேண்டியதே ஸ்வதந்த்ர இந்தியாவின் தலைவர்களுடைய பணி, கடமை. சில ஆண்டுகளில் இம்மாதிரி நம் மக்களின் அறிவுநிலையை மேம்படுத்திய பின்னர்தான் இப்போது வகுக்கப்படுவது போன்ற ஸர்வ ஜன வோட்டெடுப்பு முறையைப் பற்றிச் சிந்தனை செய்யலாம் என்றே தோன்றுகிறது.

ஆனால் ஒரே பிடிவாதமாக இருப்பவர்களிடம் இதையெல்லாம் சொல்லி எப்படி எடுபடச் செய்வது என்று புரிய வில்லை. அவர்கள் போகிற போக்கைப் பார்த்தால் இப்போது நாம் இருக்கிற ஸ்திதியிலிருந்து மீளப்போகிறோமா என்று இருக்கிறது. மீள்வதா, இன்னம் மோசமாக மாட்டிக்கொண்டு, லஞ்சமும் பொய்யும் கட்சிப் பிரதி கட்சிகளும் வளர்ந்து தேசம் வீணாகப் போகிறதா என்று பயப்படும்படி ஸூசனைகள் காணப்படுகின்றன. ஒருபக்கம் ஜாதி மதமில்லாத ஸமதர்ம ஸமுதாயம் என்று சொன்னாலும், நடைமுறையில் போகிறபோக்கைப் பார்த்தால் ஜாதிக் கக்ஷி, ஊர்க் கக்ஷி, தெருக்க்ஷி, ஒவ்வொரு கக்ஷிக்குள்ளேயும் உள்கக்ஷிகள் என்றெல்லாம் ஏற்பட்டு, பணத்தாலும் மோச ப்ரசாரத்தாலும் ஜனங்கள் கக்ஷிக்காரர்களே ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தாவுவதாகவும் - இப்படி யெல்லாம் எந்த லக்ஷ்யமும் இல்லாமல் ஸ்வய நலனுக்காகவே அநேகம் பண்ணுவதற்கு இப்போது விதை விதைத்தாச்சோ என்றே தோன்றுகிறது.

"ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்களில் மட்டும் கட்சி அடிப்படை கூடாது. ஏதோ ஒரு ஊருக்கான ஸௌகர்யங்களை கவனித்துப் பண்ணித் தருவதில் கட்சி அரசியலுக்கு இடமில்லாததால் இதைக் கட்சி ஸம்பந்தமில்லாமலே செய்ய வேண்டும்" என்று சொல்லி, அப்படியே செய்கிற மாதிரி வெளியிலே காட்டினாலும்கூட, இதிலும் பார்ட்டி-பாலிடிக்ஸ் நன்றாகப் புரையோடித்தானிருக்கிறது என்கிறார்கள். "நகரஸபை, க்ராமப் பஞ்சாயத்து என்ன? வீட்டுக்குள்ளேயே கட்சிகள் வந்துவிட்டது" என்று ஒருத்தர் வ்யஸனத்தையே
கட்சிகள் வந்துவிட்டது" என்று ஒருத்தர் வ்யஸனத்தையே
வேடிக்கை மாதிரிச் சொல்லியிருக்கிறார். தேசிய, மாகாண அடிப்படைகளில் கட்சி அரசியலைப் பெரிசாக தூபம்

போட்டுக் கிளப்பிவிட்டு, அப்புறம் அந்தப் புகை உள்ளூர் நிர்வாஹத்தில் வராது என்றால் எப்படி முடியும்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### பழைய தேர்தல் தரும் தேறுதல்

இந்த ஸமயத்தில் பழைய நாளில் பல யோக்யதாம்சங்களை - முக்யமாக தார்மிகமான போக்கை, அர்த்த சுத்தத்தை, மனத் தூய்மையை வைத்து நடந்த தேர்தலைப் பற்றி நினைப்பதே கொஞ்சம் தேறுதலாக இருக்கிறது. குறிப்பாக கட்சிகள் பலதினுஸில் பணம் பண்ணி அந்த பலத்தில் அபேக்ஷகரை நிறுத்தி வைப்பது, அவர் கட்சியிடம் வாங்கிக் கொண்ட பணத்திலேயே ஏப்பம் விடுவது, அல்லது எப்படியும் ஜயித்தாக வேண்டும் என்பதில் அதற்குமேல் தானும் ஸொந்தச் செலவு ஏகத்தாறாகச் செய்வது (கட்சிக்கே பணம் கொடுத்துத் தங்களை நிறுத்தச்செய்பவர்களும் இருப்பார்கள்), பணத்தை ஸரியான வழியிலும் தப்பு வழியிலும் செலவழித்து வோட்டுப் பிடிப்பது, அப்புறம தான் செலவழித்ததற்கு வட்டியும் முதலுமாகத் தன்னுடைய பதவிக் காலத்துக்குள் ஸம்பாதிப்பது, இப்படி தான் கெட்டது போதாதென்று ஜனங்களையும் ஊரையும் லஞ்சத்தால் கெடுப்பது, ஊருக்கு ஊர் எப்போது பார்த்தாலும் கட்சி அரசியலில் சக்தி விரயமாவது - என்கிற அதர்மப்பட்டாளத்தில் எதுவும் இல்லாத ஒரு முறை அப்போது அநுஸரிக்கப்பட்டது என்பதை அறிய ஆறுதலாக இருக்கிறது. கட்சி, பெர்ஸனாலிடி என்ற வாடைகளே இல்லாமல், இந்தக் குறுகிய எல்லைகளுக்கு அப்பாற்பட்ட தர்மம். நீதி, திறமை, தூய்மை என்கிற பெரிய தத்வங்களை மையமாகக் கொண்டே ஒரு தேர்தல்முறை நம்மிடம் இருந்திருக்கிறது என்று நினைக்கவே பெருமையாயிருக்கிறது.

பெர்ஸனாலிடி என்று வந்துவிட்டால் அப்புறம் அவனவனுக்கும் விருப்பு - வெறுப்பு என்று வரத்தான்

செய்யும். காரணம் தெரிந்ததும், காரணம் தெரியாததுமாக அநேக ஸ்வய அபிமானங்கள், த்வேஷங்கள், bias -கள் ஏற்படத்தான் செய்யும். சிலா சாஸனத் தேர்தல் முறையில் இந்த பெர்ஸனாலிடிக்கே இடமில்லாதது ரொம்பவும் விசேஷம். அபேக்ஷகன் என்ற அக்ஷதை போட்டுக்கொண்டு நிற்கிறவனும் இல்லை. அதே போல வோட்டுப் போடுகிறவன் என்றும் எவனும் இல்லை. இப்படியிருக்கும் போதுதான் கொஞ்சங்கூட நடுநிலைமை தவறாத நியாய

வழியில் ஒரு தேர்தல் முடிவு அமைய முடியும். அவனை இவன் வால் பிடிப்பது, இவனுக்கு அவன் 'இதைச் செய்கிறேன், அதைச் செய்கிறேன்' என்று ஆசை காட்டி, பணத்தைக் காட்டி வோட் பிடிப்பது ஆகியவற்றுக்கு இடமே இல்லையல்லவா?

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### *ஜீவாஸாரமான தகுதி*

### குறையும், குறைக்கு ஸமாதானமும்

இந்த ஏற்பாட்டிலே ஒரு குறை தோன்றலாம். எல்லா அபேக்ஷகரும் ஜன ஆதரவு பெற்றவர்கள்தான் என்றாலும் இப்படிப்பட்ட பல அபேக்ஷகர்களில் மற்றவர்களைவிட அதிக ஆதரவு பெற்றவனே எலெக்ட் ஆகவேண்டுமென்று இல்லாமல் அவனைவிடக் குறைச்சல் ஆதரவு பெற்றவன் எலெக்ட் ஆகவும் இடம் இருந்திருக்கிறதே என்ற குறை தோன்றலாம். குழந்தை ஓலையை யெடுப்பதில் இப்படி நடக்க இடமுண்டுதான். ஆனால் தற்போதுங்கூட மெஜாரிட்டி வோட்டர்களின் ஆதரவப் பெறாமல், முப்பது முப்பத்தைந்து பெர்ஸென்ட் வோட் வாங்கினவன் தேர்தல் பெற இடமிருக்கத்தானே செய்கிறது? எதிலுமே இப்படி ஏதாவது 'வீக் பாணின்ட்' இராமல் போகாது. ஆனால் இப்போது எலெக்ட் ஆகிறவர்களில் மெஜாரிட்டி பெற்றே ஜயித்தவர்கூட உத்தமராகத்தான் இருக்கவேண்டும் என்பதற்குத் தேர்தல் விதிகளில் எந்த உத்தரவாதமும்

இல்லாமலிருக்க, அப்போதோ ஓலைகளில் பெயர் போடப்பட்ட எல்லோரும் உத்தமர்களாகத்தான் இருக்கவேண்டும் என்று தீர்மானமாக விதியிருந்ததை கவனிக்கவேண்டும். எனவே பாபுலாரிடியில் கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாலும், இந்த அபேக்ஷகருமே நிர்வாஹத் திறமையும் தாய்மையும் உள்ள உத்தமமான நபர்தான் என்பதால் இந்த அம்சம் ஒரு பெரிய குறையாக நினைக்கப்படுவதற்கில்லை.

மத்யஸ்தர்களையும் நம்பிமார்களையும் கொண்டு ஒரு குடும்பின் யோக்யதாம்சம் பெற்ற அபேக்ஷகர்களுக்குள் யார் பாபுலாரிடியில் முதல்வர் என்று அறிந்து, அப்பபடிப்பட்டவரைத் தேர்ந்தெடுப்பதற்கு தாராளமாக வசதி இருந்தும், வேண்டுமென்றேதான் அப்படிச் செய்யவில்லையோ என்றுகூடத் தோன்றுகிறது. இந்த முறையில் விளைவான மெஜாரிட்டி - மைனாரிடி மனோபேதமும் த்வேஷமும் ஏற்பட இடம் கொடாமல், எல்லோருக்கும் பொதுவாக ஏகோபித்த உணர்ச்சியோடு கார்யங்கள் நடக்கவேண்டுமென்ற உசந்த அபிப்ராய்ததில்தான் ஜன ஆதரவின் ஏற்ற இறக்கங்களை கணிக்காமல் குழந்தையை விட்டு "வோட்டெடுப்பு" நடத்தியிருப்பார்களோ என்று தோன்றுகிறது.

நவீன கணித சாஸ்த்ரத்திலும் திட்டவட்டமாக இல்லாமல் ஒரு உத்தேசத்தில் செய்வதே ஸரியானதாகவும் அமைந்துவிடுவதாக ஒன்று சொல்கிறார்கள். இதை Probability test-ஹேஸ்ய பரீக்ஷை என்கிறார்கள். பகவானின் உத்தேசந்தான் குழந்தை மூலம் வருகிறது என்று மனஸார நம்பி ஒரு தேர்தலை நடத்துகிறபோது, அதில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்தான் அதிகமான பஹிஜன ஆதரவு பெற்றவராயிருப்பார் என்ற probability (ஸாத்யக்கூறு) பலமாகவே இருப்பதாக கொள்ளலாம்.

எத்தனை நல்ல ஏற்பாடானாலும் எதிலேயும் ஏதாவது குறை இல்லாமலிருக்காது. இதெல்லாமே முடிவிலே மாயா ப்ரப்ஞ்ச ஸமாசாரங்கள் தானே?

அதனாலே, எங்கேயாவது கொஞ்சம் அபூர்ணமாக. மூளியாக, 'ஒன்று இருந்தால் இன்னொன்று இல்லை'

என்னும்படியாகத்தான் இந்த லோக நடப்பு எதுவுமே இருக்கும். அப்படி இந்த (உத்தரமேரூர்) தேர்தல் முறையிலும் சில இருக்கலாம்.

உதாரணமாக எழுபது எண்பது (வயஸு)க்கு மேலே போயும் நல்ல கூரறிவோடு ஆலோசனை சொல்லக் கூடிய சிலரை நாம் தற்போது பார்க்கிறோமே, இப்படிப்பட்டவர்களை ஏஜ் - லிமிட் விதயினால் ஒதுக்கி வைப்பது ஸரியா என்று கேட்கலாம்.

இதே மாதிரி ஒரு மெம்பரின் ஆத்ம பந்துக்களுக்கு இடமில்லை என்பதைப் பார்க்கும்போது, "நிரம்ப யோக்யதாம்சங்களோடு மோதிலால் நேரு(வும்) ஜவாஹர்லால் நேரு(வும்) இருந்திருக்கிறார்களே அப்பா - பிள்ளை என்ற ஒரே காரணத்துக்காக இவர்கள் ஒரே ஸமயத்திலோ அடுத்தடுத்தோ ஸபையில் அங்கம் வஹிக்கப் படாது என்று பண்ணலாமா?" என்று தோன்றலாம். இப்படியே விட்டல்பாய் படேல், வல்லபாய் படேல் (என்ற ஸஹோதரர்கள்) இருந்திருக்கிறார்கள். இப்போது "முதலியார் ப்ரதர்ஸ்" (ஏ. ராமஸ்வாமி முதலியாரும், லக்ஷ்மணஸ்வாமி முதலியாரும்) இருக்கிறார்கள். இவர்களெல்லாம் உறவுமுறை கொண்டு, தேச நலனுக்கு மாறாக ஸ்வயநலமாக எதுவும் பண்ணிக்கொள்வார்கள் என்று நினைப்பது ஸரியில்லைதான்.

ஆனாலும் உள்ளூர் ஸபைக்கும், மத்ய - மாகாண சட்ட ஸபைகளுக்கும் உள்ள வித்யாஸத்தையும் நாம் மறப்பதற்கில்லை. உள்ளூரில் மெம்பர்கள் எல்லாரும் நன்றாகத் தெரிந்தவர்களாயிருப்பதாலும், அது 'ஸ்மால் - ஸ்கேல்' (சிறிய அளவு) நிர்வாஹமானதாலும் எல்லாரையும் ஸரிகட்டி அவர்கள் வாயையும் கட்டி, அநேக தப்பு தண்டாக்களை மூடி மறைத்துவிட முடியும். பெரிய பரப்பளவைப் பொருத்ததாகவும், குற்றம் கண்டு பிடிப்பதற்கே கண்குத்திப் பாம்பாகக் காத்துக்கொண்டிருக்கும் அநேக எதிர்க்கட்சிக்காரர்களைக் கொண்டதாகவும் உள்ள சட்ட ஸபைகளில் இத்தனை ஸுலபமாகத் தப்புப் பண்ணிவிட்டு அதை ஸமாளித்து விடமுடியும் என்று சொல்லமுடியாது. அதனாலேதான் உள்ளூர் நிர்வாஹத்துக்கு விதிகள் பண்ணும்போது கொஞ்சம் over carefull ஆகவே (மிகையான உஷாரோடேயே) பண்ணியிருக்கிறார்கள் என்று

புரிந்துகொண்டு, அதைப் பாராட்டத்தான் வேண்டும். "சில நல்லதுகள் நடக்க முடியாமல் போனாலும் போகட்டும், ஆனால் ஒரு தப்புகூட நடப்பதற்கு இடம் தந்துவிடப்படாது" என்பதாக நிர்வாஹத் தூய்மையில் அப்படியொரு விசேஷ ஈடுபாடு காட்டி, அதற்காக நல்லது சிலதை த்யாகமும் பண்ணினார்கள் என்பதுதான் நாம் கவனிக்க வேண்டியது.

குடும்ப உறவு தேச க்ஷேமத்துக்கு மாறாகவும் ஒருத்தரைச் செய்யத் தூண்டக்கூடும் என்பது நூறில், ஆயிரத்தில் ஒருத்தரைத் தவிர மற்றவர்களுக்குப் பொருந்தக்கூடியதே. இதைக் கவனித்தால் மேற்சொன்ன ஷரத்து நேர்மையான ஆட்சிக்கு முதுகெலும்பு போல தெரிகிறது. ஆனாலும் விதிவிலக்கான பெரிய யோக்யசாலிகளும் இருக்கிறார்களே என்றும் தெரிகிறது.

ஒன்று வேண்டுமானால் யோசித்துப் பார்க்கலாம். எழுபதைத் தாண்டியவர்களைக் கொண்டு அட்வைஸரி கௌன்ஸில் அமைக்கலாமென்றார்போல, மொத்த நிர்வாஹத்துக்குமே இன்னொன்று அமைக்கலாம். நேராக மந்த்ரி பதவி, அதிகாரிகள் மேல் கட்டுப்பாடு, தன் துறை ஸம்பந்தப்பட்ட ஜனங்களுடன் நேர் தொடர்பு - என்று இல்லாமல், ஆனாலும் ராஜாங்கம் ரொம்பவும் மதிப்புத் தந்து கவனித்து, அமல் நடத்துகிற அளவுக்குச் சக்தியுள்ள ஆலோசனைகள் தரும் ஒரு சக்தி வாய்ந்த கௌன்ஸில் அமைக்கலாம். தேர்ந்தெடுக்கப்படுபவர்களில் அப்பா - பிள்ளை, அண்ணா - தம்பி, அகமுடையான் - பெண்டாட்டி என்று உறவுக்காரர்கள் இருந்தால் இவர்களில் ஒருத்தர் மட்டுமே நேராக அதிகார அதாரிடி ஸ்தானத்துக்கு வரலாமென்றும், மற்றவர் ஆலோசனை கௌன்ஸிலில் இடம் பெறலாமென்றும் ஏற்பாடு பண்ணலாம்.

ஏதோ, இப்போது என் மனஸிலே தோன்றுவதைச் சொன்னேன். நல்ல அரசியல் அறிவு உள்ளவர்கள் ஆர அமர யோசித்து முடிவு காணவேண்டிய விஷயம்.

சோழர்காலத்தில், உறவுப் பாசம் ஊர்நலனை பாதிக்க விடப்படாது என்பதை கவனித்ததே நமக்கு முக்யம்.

இப்படி அவர்களுடைய உசந்த உத்தேசத்தை வைத்து விதிகளைப் பார்த்தால் குறைகள் தெரியாது. அவற்றை நாம்

இப்போது அப்படியே adopt பண்ணி (எடுத்துக்கொண்டு) நடக்கத்தான் வேண்டும் என்று சொல்லவில்லை. ஆனாலும் அவற்றிலிருக்கிற அடிப்படை உண்மைகளை நாம் நிச்சயம் கவனித்து, அவற்றை ஸமய ஸந்தர்ப்பங்களைப் பொருந்தும், தேச - கால வர்த்தமானங்களை ஒட்டியும் எப்படிக் கொஞ்சம் மாற்றி adapt பண்ணிக் கொள்ளலாமோ அப்படிப் பண்ணினாலே நாட்டுக்கு நல்லது என்று காட்டத்தான் இத்தனை சொல்வதும்.

அப்படியே எங்கேயாவது ஏதாவது கொஞ்சம் குறை இருந்தாலும் மொத்தத்தில் உத்தரமேரூர் சாஸனத்தை நினைக்கிறபோது, அந்தத் தேர்தல் முறையால் தேசத்துக்கு எத்தனை லஞ்சமும் பொய்யும் கக்ஷிவாதமும் கக்ஷிப் பத்திரிகைகளின் ஸாஹஸங்களும் - முடிவிலே ஏமாற்றமும் ஹிம்ஸையும் - மிச்சம் என்பதை எண்ணி த்ருப்தியே ஏற்படுகிறது.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## *ஜீவாஸாரமான தகுதி*

### ராமராஜ்யம்

ராமராஜ்யம் ஏற்படவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தவரின் வார்ஸுகள் இப்போது ஜனநாயகம் ஸ்ருஷ்டி செய்துகொண்டிருக்கிறார்கள். ராமர் புதுசாக ராஜநீதி எதுவும் செய்து ராஜ்ய பாரம் நடத்தவில்லை. தன் அபிப்ராயம், தன் கார்யம் என்று ஸொந்தமாக எதுவும் இல்லாமல் முழுக்க முழுக்க சாஸ்த்ரத்தைப் பார்த்து, பூர்விகர்களின் வழியைப் பார்த்து அந்தப்படியே பண்ணினவர் ஒருவருண்டு என்றால் அது ராமசந்த்ர மூர்த்திதான் மநு மாந்தாதா காலம் முதலாக தசரத சக்ரவர்த்திவரை எந்த தர்மசாஸ்த்ர ஆட்சி முறை நடந்ததோ அதையேதான் ராமரும் பின்பற்றி, நடத்திக்காட்டினார்.

தசரதர் அவருக்குப் பட்டாபிஷேகப் செய்ய உத்தேசித்த

போது தன் குமாரன் ஸர்வஜன அபிமானத்தையும் பரிபூர்ணமாகப் பெற்றவன், ஸகல யோக்யதாம்சங்களையும் ஸம்பூர்த்தியாகப் பெற்றவன் என்று தெரிந்திருந்த போதிலும், ஸபை கூட்டி ஜனங்களின் பல தரப்புக்களைச் சேர்ந்த எல்லா ப்ரதிநிதிகளின் அபிப்ராயத்தையும் கேட்டார் என்று சொல்லியிருக்கிறது. அதிலே வைதிக தர்மத்துக்கு வேறாக இருந்த ம்லேச்சர்களுடைய ப்ரதிநிதிகளைக்கூட வரவழைத்து ஆலோசனை கேட்டாரென்று இருக்கிறது. அதுதான் நிஜமான ஜனநாயகம். அதாவது அபிப்ராயங்களைக் கேட்பதில் அவர் இவர் என்ற பேதமில்லாமல், யோக்யதாம்சம் பார்க்காமல் எல்லாருடைய ப்ரதிநிதிகளையும் கலந்து கொள்ளத்தான் வேண்டும். இங்கேயும்கூட referendum என்பதாக அத்தனை ஜனங்களையும் அபிப்ராயம் கேட்பது என்றில்லாமல் அவர்களுடைய பல ப்ரதிநிதிகளைத்தான் கேட்டிருக்கிறாரென்பது கவனத்துக்கு உரியது. ஏராளமான பாமர ஜனங்களை நேராக ராஜீய விஷயங்களில் கொண்டு வருவதில் அநேக தப்பு தண்டாக்கள், ஏமாற்று மோசடிகள் நடந்துவிடலாம் என்பதை அலக்ஷ்யம் செய்வதற்கில்லை.

இப்படி ஸகல ஜன ப்ரதிநிதிகளிடமும் அபிப்ராயம் கேட்ட பின், தசரதர், ராமர் முதலான அரசர்கள் எப்படி முடிவு எடுத்தார்கள் என்று பார்க்கவேண்டும். Policy making (கொள்கை வகுப்பது), அநேக திட்டங்களைப் போடுவது என்பதாக முடிவுகள் செய்யும்போது அங்கே ஜனநாயக ஸமத்வத்துக்கு இடம் தரவில்லை. ஞான, சீல, வயோவ்ருத்தர் என்று சொன்னேனே அப்படிப்பட்ட அநேக யோக்யதாம்சங்களைப் பெற்ற பரம தர்மிஷ்டர்களான மந்த்ரிகளையே மூலஸ்தம்பமாகக் கொண்டுதான் தசரதரும், அவருக்கு முன்னாலிருந்த ரகுவம்ச ராஜாக்களும், பின்னால் வந்த ரகுராமனும் முடிவுகள் எடுத்திருக்கிறார்கள்.

பலவகை ஜனங்களின் பலவித அபிப்ராயங்களையும், அவர்களில் யார் வாயையும் அடைக்காமல் உள்ளது உள்ளபடி கேட்டுத் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும். பொது ஜன அபிப்ராயத்தை ராமர் எப்படி வெகு முக்யமான விஷயமாகக் கேட்டறிந்து வரச் செய்தார், அதற்காக எப்படித் தன்னுடைய ப்ரிய பத்னியையே த்யாகம் செய்தாரென்பது நமக்குத் தெரிந்ததுதானே? இப்போதுள்ள ஜனநாயகவாதிகளில் யாராவது அப்படி ஜன

அபிப்ராயத்துக்கு மதிப்புத் தருவார்களா என்று தெரியவில்லை. இதிலிருந்து அக்காலத்தில் ஜனங்களுக்கு ராஜா - ராணியைப் பற்றிக்கூட எவ்வளவு ஸ்வதந்த்ரமாக வாய்விட்டு அபிப்ராயம் சொல்ல உரிமை இருந்திருக்கிறது என்பதும் தெரிகிறது. அதுதான் உண்மை ஜனநாயகம்.

ஒரு நாய்கூட ராமரிடம் ந்யாயம் கேட்க நேராகத் தானே வழக்குக் கொடுத்திருப்பதாக உத்தர காண்டத்தில் வருகிறது. மநு தர்மப்படி பரிபாலனம் செய்த மநுநீதிச் சோழன் திருவாரூரிலிருந்து கொண்டு ஆட்சி நடத்திய போது ஒரு மாடு ஆராய்ச்சி மணியை இழுத்துத் தன் கஷ்டத்தை விண்ணப்பித்துக் கொண்டது என்று கேட்டிருக்கிறோம். இப்படித் தங்கள் மனஸிலிருப்பதை எவரும் ராஜாங்கத்தின் உச்சஸ்தானத்துக்குத் தெரிவிக்க இடம் தருவதுதான் ஜனநாயகம்.

ஆனால் இந்த அபிப்ராய ஸ்வதந்த்ரத்துக்கும், அதைச் சொல்லிக்கொள்ளும் ஸ்வதந்த்ரத்துக்கும் அதிகமாக ஜனங்களுக்கு உரிமை கொடுப்பது தேசநலமல்ல ஆனபடியால் நிஜமான ஜனநாயகமும் அல்ல. ஜனங்களுக்கு வித்யாஸம் பார்க்காமல் நல்லது செய்வதற்குத்தான் ஜனநாயகம், ஜனஸமூஹம் முழுதும் சேர்ந்தே அமைந்த தேசத்துக்கு நன்மை செய்வதுதான் ஜனநாயகம் என்றால், அவர்கள் அபிப்ராயத்தை அறிவதோடு நிற்காமல், அந்த அபிப்ராயங்களின் மேல் முடிவு எடுக்கிற தகாத பாரத்தையும் விஷயம் தெரியாத அவர்கள் மேலோ அல்லது அவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் விஷயம் தெரியாத ப்ரதிநிதிகளின் மேலோ போடுவது ஜனநாயகமே ஆகாது. இதனால்தான் ஸகல ஜனங்களின் அபிப்ராயங்களையும் ஒளிவு மறைவில்லாமல் தெரிந்துகொண்டபின், முடிவு எடுப்பது என்பதற்கு நிரம்டபத் தகுதி வாய்ந்தவர்களை மட்டுமே ராமராஜ்யத்துக்கு, தர்ம ராஜ்யத்துக்கு அடிகோலியவர்கள் துணை கொண்டார்கள்.

முடிவெடுக்கும் நிர்வாஹிகள் உள்பட எவருக்கும் தகுதியே நிர்ணயிக்காமல் அரசியல் நிர்ணயச் சட்டம் என்று ஒன்றைச் செய்து அதில் ஒவ்வொரு விதியாக கான்ஸ்டிட்யுவென்ட் அஸெம்ப்ளியில் பாஸ் செய்துகொண்டிருக்கிற இப்போது நான் செய்யக்கூடியது பழைய முறையை

எடுத்துக்காட்டுவதுதான். 'ராமாயனமா? அந்த த்ரேதாயுகத்து ஸமாசாரம் இப்போது ஸரிப்படாது' என்று ஒதுக்கி விட்டுப் போகாமலிருக்கத்தான், 'இது த்ரேதா யுக ஸமாசாரம் மட்டுமில்லை. ஆயிரம் வருஷம் முந்திகூட சரித்ர ஆசிரியர்களெல்லாம் பாராட்டும்படி சிறந்த அரசியலறிவுடன் ஆட்சி நடத்திய சோழர் காலத்திலும் அந்த மாதிரியே ஜனநாயக தத்வம், திறமையான தூய்மையான நிர்வாஹம் என்ற இரண்டையும் எந்த அளவில், எந்த விதத்தில் இணைக்கலாமோ அப்படிச் செய்திருக்கிறார்கள்' என்று காட்ட ஆசைப்பட்டேன். வெள்ளைகாரர்கள் தங்களுடைய எழுதப்படாத சட்ட சாஸனத்தை (unwritten constitution)ப் பற்றி பெருமைப்படுகிறார்களென்றால், இந்தத் தமிழ் தேசத்தில் பிறந்த நமக்கோ ஆயிரம் வருஷத்துக்கு முன்பே உருவான எழுதப்பட்ட சட்ட சாஸனம்) (written constitution)இருக்கிறது, நன்றாகக் கல்லிலேயே பொறிக்கப்பட்ட சிலா சாஸனமாக இருக்கிறது என்று அதைவிடப் பெருமையாகக் காட்டமுடியும் என்பதற்காகக் கதை சொன்னேன்.

அது பழம் பெருமையாக மட்டும் நின்றுவிடாமல், ஆயிர வருஷத்துக்கு முந்திய சாஸனமே இன்றைய சாஸன கர்த்தர்களுக்கும் வழிகாட்டியாவதற்கு ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி க்ருபை செய்வாராக!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**தேவாஸுரர் யார்?**

"ஒரு காலத்தில் தேவர்களும் அஸுரர்களும் ஒருத்தரோடொருத்தர் சண்டை போட்டுக்கொண்டார்கள்" என்று சாந்தோக்ய உபநிஷத்தில் ஒரு கதை வருகிறது. இதற்கு நம்முடைய ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது

"இங்கே தேவர்கள் என்று சொல்லியிருப்பது கர்மாநுஷ்டானத்தால் பரிசுத்தி செய்யப்பட்ட இந்த்ரிய வ்ருத்திகளை (புலன்களின் ஓட்டங்களை)த்தான். அப்படியே அஸுரர்கள் என்பது வெறும் விஷய போகங்களுடன் (சிற்றின்பங்களுடன்) ஸம்பந்தப்பட்ட இந்த்ரிய வ்ருத்திகளைத்தான்" என்று சொல்கிறார். அப்புறம் இன்னும் ஸ்பஷ்டமாகவே "இங்கே கூறப்படும் தேவாஸுர யுத்தம் அநாதிகாலமாக ஸமஸ்த ப்ராணிகளில் ஒரு ஜீவன் விடாமல் எல்லாருக்குள்ளேயும் நடந்துகொண்டிருக்கிற போராட்டம்தான் (ஸர்வ ப்ராணிஷு ப்ரதிதேஹம் தேவாஸுர ஸங்க்ராமோ (அ)நாதிகால ப்ரவ்ருத்த:)" என்கிறார். அதாவது ஜீவனுடைய இந்த்ரியங்களை வெளி விஷயங்களில் இழுத்துக் கொண்டு போகிற போக்குகளே அஸுரர்கள் என்றும் அவற்றை உள்முகப்படுத்தும் போக்குகள் தேவர்கள் என்றும், ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் இந்த இரண்டுக்குமிடையே உண்டாகும் போராட்டம்தான் இங்கே உபநிஷத் சொல்கிற தேவாஸுரப் போர் என்றும் ஆசார்யாள் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இப்படிச் சொன்னதால் அவர் இந்தக் காலத்தில், 'புராணம் எதுவும் நிஜமாய் நடக்கவில்லை. அவையெல்லாம் உருவகக் கதைகள்தான், Symbolical தான், allergorical தான்' என்று சொல்லும் கோஷ்டியைச் சேர்ந்தவரென்று நினைத்துவிடக் கூடாது. உபநிஷத்துக்களிலேயே இன்னும் பல இடங்களில் தேவாஸுரர்களைப் பற்றி வருகிறது. உதாரணமாக, கேநோபிஷத்தில் பரமாத்மா தேவர்களுக்காக ஜயித்துக் கொடுத்ததாக வருகிறது. அங்கேயெல்லாம் ஆசார்யாள் தேவர்களை வெறும் உருவகமாகச் சொல்லவில்லை. ப்ரஹ்மஸூத்ரத்தில் "தேவாதி கரணம்" என்பதற்கு பாஷ்யம் பண்ணும்போது, 'பூலோகத்தில் நாம் இருக்கிற மாதிரி தேவலோகத்தில் தேவர்கள் இருக்கிறார்கள். இந்த்ரிய ஸுகவாஸிகளான அவர்களுக்கும் அபஜயம், அதனால் கஷ்டம், அஸூயை முதலியன இருக்கின்றன. ஆனபடியால் அவர்களும் நம்மில் சிலர் மாதிரி வைராக்யமடைந்து அதன்பின் ப்ரம்ம விசாரம் செய்துஞானத்தில் அத்வைத முக்திபெற இடமுண்டு' என்று ஸித்தாந்தம் செய்திருக்கிறார்.

ஆனால் வேத, உபநிஷத்துக்களில் சில இடத்தில் ஒரு தத்வத்தைச் சொல்லவும் தேவர், அஸுரர் என்று

உருவகமாகக் கதை கட்டுவது உண்டு. இதை 'அர்த்தவாதம்' என்பார்கள். அதாவது கதைக்காகக் கதை அல்ல. தத்வார்த்தத்தைச் சொல்லவே கதை உபாயமாக்கிக் கொள்ளப்படுகிறது. மேலே சொன்ன சாந்தோக்ய கதை இந்த வகையைச் சேர்ந்ததுதான் என்பது பகவத்பாதாள் அபிப்ராயம். இங்கே 'தேவர்' என்பது இந்திரிய ஸுகவாஸிகளான ஒரு ஜீவ இனத்தைக் குறிக்காமல், இந்த்ரிய ஸுகத்தை விட்டு நித்ய ஸுகத்துக்கு ஜீவனைத் திருப்பிவிடும் நல்ல சக்திகளைக் குறிக்கிறது, personify செய்கிறது. கீதையிலே "தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்" என்று ஒரு அத்யாயம் இருக்கிறது. அதிலே பகவான், க்ருஷ்ண பரமாத்மா, தெய்விக குணங்கள் என்னென்ன, ஆஸுர குணங்கள் என்னென்னவென்று ஜாபிதா போட்ட மாதிரிக் கோ(ர்)வையாகக் கொடுத்திருக்கிறார். பயமற்ற குணம், சுத்தமான ஸாத்விக எண்ணம் என்று ஆரம்பித்து தானம், தபஸ், நேர்மை, அஹிம்ஸை, ஸத்யம், த்யாகம், சாந்தம், பிறத்தியாரிடம் கொஞ்சமும் க்ரோதம் பொறாமை த்ரோஹ சிந்தனை இல்லாமல் அவர்கள் என்ன தப்புப் பண்ணினாலும் க்ஷமித்துக் கொண்டு ஸர்வ பூதங்களிடமும் தயையோடு இருப்பது - என்றிப்படியானவற்றையெல்லாம் தைவீ ஸம்பத் என்கிறார். தைவீ ஸம்பத் என்றால் தெய்வீகமான குணச் செல்வம். இந்த குணங்களைத்தான் சில சமயங்களில் தேவகணம் என்று சொல்லி அஸுர கணங்களோடு சண்டை போடுவதாக "allegory" (ரூபகம், அதாவது உருவகம்) செய்வது. அஸுர கணம் என்பது இதே மாதிரி எந்த ஆஸுர குணங்களுக்கு ரூபகமாயிருக்கின்றன என்பதையும் சொல்கிறார். 'டம்பம், கர்வம், க்ரோதம், சுடுசொல், அஞ்ஞானம் ஆகியவை அஸுரத்தன் மையுள்ளவை. சாஸ்த்ரங்களில் "இப்படிப் பண்ணு" "இப்படிப் பண்ணாதே" என்று சொன்ன ப்ரவ்ருத்தி, நிவ்ருத்திகளுக்கு நேர்மாறாகப் பண்ணுவது, அநாசாரமாக, அஸத்யமாக, ம்ருக ப்ராயமாக இருப்பது' - என்றிப்படி ஆஸுர குணங்களுக்கு ஜாபிதா கொடுத்துக்கொண்டு போகிறார். ஸம்ஸாரக் கட்டிலிருந்து விடுவித்து மோக்ஷத்துக்குச் சேர்க்க உதவுகிற எல்லாம் தைவீ ஸம்பத் என்றும், இன்னும் கெட்டியாகக் கட்டிப் போடுவதெல்லாம் ஆஸுரி ஸம்பத் என்றும் தெளிவாக விளக்கிவிட்டு, "அப்பா அர்ஜுனா 'இதிலே நாம் எதுவோ? எதிலே போய் விழுவோமோ?' என்று

கவலைப்படாதேயப்பா 'தைவி ஸம்பத்துக்குப் பாத்ரனாகத்தான் நீ பிறந்திருக்கிறாய்" என்று ரொம்பக் கருணையோடு தைர்யம் சொல்கிறார். இதிலிருந்து ஒரு ஜீவனை ஆச்ரயித்திருப்பவைதான் தேவாஸுர சக்திகளென்று தெரிகிறது.

நமக்கே இந்த தேவாஸுர யுத்தம் - அதாவது நமக்குள்ளே நடக்கிற போராட்டம் - நன்றாகத் தெரியத்தான் செய்கிறது. ஒரு பக்கம் யாரோ, "நல்ல கார்யம் பண்ணு, காமியாய்த் திரியாதே, கோவிச்சுக்காதே, அஸூயையைப் படாதே, கோவிலுக்குப் போ, த்யானம் பண்ணு, தொண்டு பண்ணு" என்று சொல்லுகிற மாதிரி இருக்கிறது. இன்னொரு பக்கம் இதற்கெல்லாம் நேர் வித்யாஸமாக யாரோ நம்மைத் தூண்டுகிறது போல இருக்கிறது. துரத்ருஷ்டவசமாகப் பின்னாலே சொன்னவர் தூண்டிவிடுகிற வழியில்தான் நாம் முக்காலே மூணு வீசம் போகிறோம். அப்புறம் அழுகிறோம். அவமானப்படுகிறோம். பச்சாத்தாபப்படுகிறோம். அந்தமாதிரி ஸமயங்களில் முதலில் சொன்ன குரலின்படி துளி நடக்கப் பார்க்கிறோம். மறுபடி இரண்டாவது குரல் பெரிசாகக் கேட்கிறது. சறுக்கி விழுகிறோம். மறுபடி அப்போதைக்கு ஒரு ஸத் ஸங்கல்பம் பண்ணிக் கொண்டு சறுக்கு மரத்தில், ஏறுகிறவனும் எண்ணெயைப் பூசிக் கொண்டு, ஏறப்பார்க்கிற மாதிரிதான் நம் சுப யத்னம் இருக்கிறது. ஆனால் எங்கேயோ துளி அது இல்லாமலில்லை. "யத்னம்" என்று செயல் முயற்சியாக அது வராதபோதகூட "இப்படி யத்னம் பண்ணு, இதற்கு வேறேயான வழியில் நீ போறது ஸரியில்லை" என்று உள்ளே யாரோ சொல்வது மட்டும் நடக்கிறது. மாறி மாறி நம்மைத் தப்புக்களிலே தூண்டி விடுகிற சக்தியும் இதுவுமாகக் குஸ்தி போட்டுக் கொண்டிருக்கின்றன. அதாவது கெட்ட வ்ருத்திகளுக்கும் நல்ல வ்ருத்திகளுக்கும் நம் மனஸில் நித்யம் சண்டை நடக்கிறது.

வ்ருத்தி (vritti) என்றால் போக்கு, ஓட்டம். 'சித்த வ்ருத்தி' என்றால் நம் எண்ணங்களின் ஓட்டம். ஒவ்வொரு தினுஸான ஓட்டமும் ஒரு வ்ருத்தி. இப்படி க்ஷணத்துக்கு நூறு வ்ருத்தி நம் சித்தத்தில் அதில் தொண்ணூறு கெட்ட வ்ருத்தி, பத்து நல்லதாக இருக்கலாம். நல்ல வ்ருத்திதான் தேவர்கள். கெட்ட வ்ருத்திகள் அஸுரர்கள்.

## அத்வைதம்

## போர் தீர்ந்து அமைதி காண

## அஸுரப்போக்கு தோன்றுவது ஏன்?

தொண்ணூற்றொன்பது பெர்ஸென்ட் ஜயிப்பது அஸுரர்கள்தான். ஒரு பெர்ஸென்ட் தேவர்கள் ஜயிக்கிறபோது பரம ஆனந்தமாயிருக்கிறது, ஏதோ ஒரு நிறைவு தெரிகிறது. ஹ்ருதயம் அப்போதுதான் ப்ரஸன்னமாக (தெளிவாக) இருக்கிறது. மறுபடி இருட்டு வந்து மூடுகிறது. அஸுரர்கள் ஜயிக்கட்டும் என்று தோன்றுகிறது. அவர்களும் ஜயத்துக்கு மேல் ஜயம் பெற்றுக்கொண்டே போகிறார்கள். கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், இத்தனை ஜயத்திலும் உள்மனஸு நிறையவே இல்லை, தெளியவே இல்லை, மேலும் கலங்கிக் குழம்பி கும்பியாகத்தான் போயிருக்கிறது என்று தெரிகிறது. துக்கம் துக்கமாக வருகிறது. "இப்படி புத்தி பாழாப்போச்சே" என்று அழுகிறோம். "இனிமேலே இப்படிப் பண்ணுவதில்லை" என்று தீர்மானம் செய்து கொள்கிறோம். தீர்மானம் ரொம்ப பலமாக இருக்கிற ஸமயத்தில் மட்டும் அடுத்த தடவை அந்த மாதிரி உணர்ச்சிகள் ஏற்பட்டால் அதன் வேகத்தை மட்டுப் படுத்தித் தட்டிவிடுகிறோம். ஆனாலும் இப்படி ஒரு தடவை, இரண்டு தடவை தட்டிவிட்டாலும் அப்புறம் நமக்கே தெரியாமல் அந்த வேகம் - அது காமமோ, க்ரோதமோ, பொறாமையோ, பொருளாசையோ எதுவோ ஒன்று - அது நம்மை அடித்துக்கொண்டு போகவிட்டுவிடுகிறோம். இப்படி ஆஸுர சக்திகளின் ஆவேசத்தில் செய்கிற எல்லாம் பாபங்களாக நம்முடைய கர்மாக் கணக்குப் புஸ்தகத்தில் ஏறிவிடுகின்றன.

"யாரோ நம்முடைய பிடரியைப் பிடித்துத் தள்ளுகிற மாதிரி நாம் இப்படிப் பாபத்தைப் பண்ணுகிறோமே!இது எதனால்?" என்று இதைப்பற்றித்தான் அர்ஜுனன் (கீதையில்) பகவானைக் கேட்கிறான் (அத்யாயம் 3, ச்லோகம் 36):

அத கேந ப்ரயுக்தோ (அ)யம் பாபம் சரதி பூருஷ : I

அநிச்சநநபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித : II

வ்ருஷ்ணி என்பவர் க்ருஷ்ணரின் மூதாதையரில் ஒருவர். வ்ருஷ்ணியின் குலத்தோன்றலானதால் அவரை "வார்ஷ்ணேய" என்று கூப்பிட்டு அர்ஜுனன் கேட்கிறான். குந்தி பிள்ளை என்பதால் இவனை அவர், "கௌந்தேய", "கௌந்தேய" என்று கூப்பிட்டு உபதேசம் பண்ணுகிறமாதிரி இவன் அவரை, "வார்ஷ்ணேய" என்று கூப்பிட்டுக் கேள்வி கேட்கிறான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**பயத்துக்கு இடம் தரும் த்வைதம்**

இதற்குமுன் அவர் அவனிடம், "ஒவ்வொருத்தனும், அவன் ஞானவானாயிருந்தாலுங்கூட, தன் இயற்கைப்படிதான் நடப்பான். ப்ரக்ருதி என்கிற இயற்கையிலேதான் ஜீவன் தோன்றியிருக்க, ப்ரக்ருதி வேகத்தை ஒருத்தன் நிக்ரஹம் பண்ணுவதென்பது (அடக்குவது) எப்படி முடியும்? அதனால் அவரவர் இயற்கையை அநுஸரித்துப்போயே நாசூக்காக, க்ராஜுவலாக (ஒவ்வொரு படியாக) அதை சீர்திருத்தி உயர்த்துவதற்காக அவரவர் இயற்கைக்கும் ஏற்றபடி பல தொழில்களையும், அதற்குரிய வாழ்முறைகளையும் வர்ண விபாகம் செய்து 'ஸ்வதர்மம்' என்று கொடுத்திருக்கிறது. இதிலே ஒருத்தனின் ஸ்வதர்மம் இன்னொருத்தனுடையதை விட ச்ரேஷ்டமாகத் தோன்றலாம். ஆனாலும் அது நன்றாயிருக்கிறதே என்று இவனுடைய ப்ரக்ருதி அதிலே இவன் ஒழுங்காகச் செயலாற்ற விடாது. விளைவாக அந்தத் தொழிலும் அந்த வாழ்முறையும் கெட்டு, இவன் தன் ஸ்வதர்மப்படி செய்திருக்க வேண்டிய தொழிலின் பலனும்

ஸமூஹத்துக்கு நஷ்டமாகி ஒரே குழறுபடியாகிவிடும். ஆனதினாலே, தனக்காக ஏற்பட்ட தர்மம் அவ்வளவு சிறந்ததாகத் தோன்றாவிட்டாலுங்கூட, சிறந்ததான இன்னொன்றுக்குப் போவதைவிட இதையே அநுஷ்டானம் பண்ணுவதுதான் ச்ரேயஸ்" என்றெல்லாம் சொல்லி, முடிவாக ஒன்று ரொம்ப அழுத்தமாகச் சொன்னார். க்ஷத்ரிய தர்மத்தை விட்டுவிட்டு, "யுத்தம் வேண்டாம், இந்த ஜீவஹிம்ஸையை விடப் பிச்சை வாங்கிச் சாப்பிடுவதே மேல்" என்று ப்ராம்மண ஸந்நியாஸியின் தர்மத்துக்குப் போக நினைத்த அர்ஜுனனுக்கு நன்றாக உறைக்கிற மாதிரி, "ஸ்வதர்மத்தைப் பண்ணிச் செத்தாலும் அதுவே ச்ரேயஸ். பிறனுடைய தர்மத்தில் போவது பெரிய பயத்தில் கொண்டுவிடும்" என்று முடித்தார்.

பயம் என்றால் என்ன? 'நமக்கு என்ன ஆயிடுமோ? ஏதாயிடுமோ?' என்று நிம்மதியில்லாமல் தவிப்பதுதான் பயம். 'நம்மை எதுவும் என்னவும் பண்ணமுடியாது, அசைக்க முடியாது', என்று ஸ்திரமாக ஒரு ஸ்தானத்தில் நம்மை அமர்த்திக் கொள்கிறவரையில் பயம் இருந்து கொண்டே இருக்கும். அப்படி ஜீவனை ஆட்டமில்லாத நிம்மதியான ஒரு ஸ்தானத்தில் சாச்வதமாக இருக்கச் செய்வதுதான் மோக்ஷநிலை என்பது. நமக்கு அந்நியமாக எதுவோ ஒன்று இருக்கிறவரைக்கும், 'அது நம்மை என்ன பண்ணிவிடுமோ? நாம் நிம்மதியின் ஸௌக்யத்திலேயே ஸ்திரமாக இருக்கமுடியாதபடி அதனிடமிருந்து என்ன கெடுதல் வருமோ?' என்ற எண்ணம், அதாவது பயம், இருந்துகொண்டேதான் இருக்கும்.

'நாம் ஒன்று, நமக்கு இரண்டாவது இன்னொரு அந்நிய வஸ்து, அநேக அந்நிய வஸ்துக்கள், உள்ளன' என்ற வேறுபாட்டுக்குத்தான் "த்வைதம்" என்று பெயர். 'த்வி' (dvi) என்றால் இரண்டு. Two என்பது அதிலிருந்து வந்ததுதான். உச்சரிப்பு 'டூ' என்று இருப்பதால், இந்த ஸம்பந்தம் பளிச்சென்று புரியாமலிருக்கலாம், ஸ்பெல்லிங்கைப் பார்த்தால் புரிந்துவிடும். என்பது ஸம்பந்தமுடையதாகத் தெரிகிறதல்லவா?

த்வைதமிருந்தால் அப்போது ஒன்றுக்குத் தனனைவிட வேறாக உள்ள இன்னொன்றால் பயம் ஏற்பட இடமுண்டு.

எப்போது த்வைதம் போய், தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்று தெரிந்து கொள்கிறோமோ, வேறில்லாத தானாகிய ஆத்மாவில் ஆணி அடித்தாற்போல் நம்மை ஸ்திரமாக அமர்த்திக் கொள்கிறோமோ, அப்போதுதான் பயம் போகும். இப்படி த்வைதமில்லாமல் ஆவதுதான் அத்வைதம்.

வேதம் சொல்கிற மோக்ஷம் அந்த அத்வைத அநுபவந்தான் என்று நம்முடைய ஆசார்யாள் ப்ரஹ்ம ஸூத்ரம், உபநிஷத்துக்கள், கீதை ஆகியவற்றுக்குப் பாஷ்யம் செய்து நிலைநாட்டியிருக்கிறார். அத்வைதம்தான் மோக்ஷம். அது பயமில்லாத அபயநிலை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**அத்வைதமே அபயம்**

இந்த விஷயத்தை உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கிறது. ஒன்றேயான ஸத்யவஸ்துவில் - மெய்பொருள், ஆத்மா, ப்ரஹ்மம் என்றெல்லாம் சொல்வது அதைத்தான், அந்த ஸத்ய வஸ்துவில் - எப்போது ஒருவன் அதற்கு அந்நியமாக இன்னொன்றை பேதம் செய்து பார்க்கிறானோ அப்போதே அவனுக்குப் பயம் ஏற்பட்டுவிடுகிறது என்று தைத்திரீய (உபநிஷ)த்தில் சொல்லியிருக்கிறது. ப்ருஹதாரண்யகத்திலும் ஒரு இடத்தில் ப்ரஜாபதியானவர், "எனக்கு அந்நியமாக எதுவும் இல்லாதபோது எனக்கு எதைக் குறித்து பயம் ஏற்படும்?" என்று கேட்டதாகச் சொல்லிவிட்டு, "இன்னொன்று இருந்தால்தான் த்விதீயமான அதனிடமிருந்து பயம் உண்டாகிறது" என்று முடித்திருக்கிறது.

இப்படிச் சொன்னதால் அத்வைதமாகப் போய்விட்டால் பயமே இல்லை என்று ஆகிவிடுகிறது. இப்படி ஒன்றிலிருந்து inference-ஆக (அநுமானமாக) அந்த முடிவை பண்ணிக்கொள்ளும்படி நம்மை விடுவதோடு நிற்காமல்,

டைரக்டாகவே அத்வைதம்தான் அபயநிலை என்றும் உபநிஷத்துக்கள் பல இடங்களில் உபதேசிக்கின்றன. தைத்திரீயத்திலேயே சற்று முன்னாடி சொன்னதற்கு இரண்டு மூன்று மந்திரம் முந்தி, மனோ வாக்குகளால் எட்டமுடியாததான அத்வைதமான. ப்ரஹ்மாநந்த நிலையைச் சொல்லிவிட்டு, அதை அடைந்தவன் ஒருபோதும் பயப்படமாட்டான் என்ற நேரடியாகக் கூறியிருக்கிறது. அப்புறம், 'ஆனந்தவல்லி' என்ற அந்தப் பகுதியை முடிக்கிற இடத்தில் மறுபடியும், மனோவாக்குகளால் எட்டமுடியாத ப்ரஹ்மா நந்த அத்வைத நிலையை அடைந்தவன் ஒரு இடத்திலும் பயப்படமாட்டானென்று சொல்லியிருக்கிறது. முதலில், காலத்தில் ஒருபோதும் ("கதாசன") பயப்படமாட்டான் என்றும், அப்புறம், ஒரு இடத்திலும் ("குதச்சன") பயப்படமாட்டான் என்றும் சொன்னதால், இப்போது ஸயன்ஸில் ஸகல தத்வங்களையும் அடக்கிக்கொண்டு விடும் இரண்டு ஆதார வஸ்துக்கள் என்று சொல்லும், Time, Space இரண்டையும் சொன்னதாகிவிடுகிறது. இதே போல ப்ருஹதாரண்யகத்திலும் (நான்காம் அத்யாயத்தின் நான்காம் பிரிவான) சாரீரக ப்ராஹ்மணம் எனும் ஸெக்க்ஷனின் கடைசி மந்த்ரங்களில் ஆத்ம ஞானியை வர்ணித்துவிட்டு முடிவாக, ப்ரஹ்மமேயான ஆத்மா அஜரமானது (மூப்பில்லாதது), அமரமானது, அம்ருதமானது என்று அடுக்கு மொழியில் சொல்லி, இவற்றோடு அது அபயமானது என்றும் கூறியிருக்கிறது. மறுபடியும் தனியாக எடுத்து, "ஆமாம், ப்ரஹ்மம் என்றால் அபயம்தான். தன் ஆத்மாவை ப்ரஹ்மமாகத் தெரிந்துகொண்டவன் பயமேயில்லாதவனாகிறான்" என்று முத்தாய்ப்பு வைத்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

## அபயம் - மோக்ஷம் ; பயம் - ஸம்ஸாரம்

மோக்ஷ ஸ்தானம் அபயம் என்பதால் பயம் என்பது எந்த ஸ்தானத்தைக் குறிக்கும் என்று கண்டுபிடித்துவிடலாம். பயமும் அபயமும் ஒன்றுக்கொன்று 'ஆப்போஸிட்'. அதனால், பயத்தின் ஸ்தானம் மோக்ஷத்துக்கு 'ஆப்போஸிட்'டாக இருக்கவேண்டும். மோக்ஷம் என்றால் 'விடுபட்ட நிலை'. அதற்கு ஆப்போஸிட் 'கட்டுபட்ட நிலை'. இதை 'பந்த்ம்' என்பார்கள். பந்த - மோக்ஷம் என்று சொல்வது வழக்கம். லோக வாழ்க்கையான ஸம்ஸாரம்தான் பந்தம். ஸம்ஸார பந்தம் என்று சேர்த்தே சொல்கிறோமல்லவா, அதனால் பயம் என்பது ஸம்ஸாரத்தைக் குறித்துத்தான். இந்தத் தடவை ஜன்மா வந்துவிட்டது. இந்த ஜன்மா முடிந்து சரீரம் போய்விட்ட பிறகாவது இன்னொரு ஜன்மா, மறுபடியும் சரீரம் என்று வராமலிருக்க வேண்டும். அதாவது மறுபடி ஸம்ஸார பந்தத்தில் சிக்கிக் கொள்ளாமல் விடுபட்டு மோக்ஷ ஸ்தானம் சேரவேண்டும். செத்தபின் "புனரபி ஜனனம்" வந்துவிடுமோ என்பதுதான் பெரிய பயத்துக்குரிய விஷயம். "பெரிய பயம்" என்று நான் சொன்னதையே பகவான் "மஹத் பயம்" என்று ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறார். கர்மயோகம் என்பதாகப் பலனில் ஆசையில்லாமல் சாஸ்தரம் விதித்த கர்மாக்களை வழுவறப் பண்ணவேண்டும் என்ற உபதேசிக்க வந்த பகவான் இந்த நிஷ்காம்ய கர்ம யோகத்தைக் கொஞ்சம் பின்பற்ற ஆரம்பித்தாலும் போதும், அது பெரிய பயத்திலிருந்து ("மஹதோ பயாத்") காப்பாற்றிவிடும் என்கிறார்:

ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் காம்ய கர்மமாக ஸ்வய ஆசையின்மீதே பண்ணும் கர்மாதான் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிப்போடுவது. நிஷ்காம்ய கர்மமோ இந்தக் கட்டை அவிழ்த்துக்கொள்ள உதவி பண்ணுவது. ஆகையினால் மஹா பயத்திலிருந்து அது காப்பாற்றும் என்று பகவான் சொல்லும் இடத்தில் 'மஹா பயம்' என்பது ஸம்ஸார பயம்தானென்று ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்.

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**நரக பயம்**

கட்டவிழ்த்து விட்டால் மோக்ஷம். கட்டிலேயே இருக்கப் பண்ணுவது என்றால் மறுபடி ஜன்மா எடுத்து ஸம்ஸாரத்தில் உழலம்படிச் செய்வது. செத்த அப்புறம் இப்படி இன்னொரு உடம்பிலே போட்டுக் கட்டிவிடுவானோ என்ற பயம். இதிலேயே கிளை விடுவதாக இன்னொரு பயம், செத்ததற்கு அப்புறம் நரகத்திலே போய் மஹா கஷ்டப்பட வேண்டியிருக்குமோ என்பது. கர்மா மூட்டை ஸாதாரணத் தப்புகள் உள்ளதாயிருந்தால் இந்த பூலோகத்தில் மறு ஜன்மா எடுப்பதோடு போகும். இதுவே பெரிய கஷ்டந்தான், ஸம்ஸார பந்தந்தான். ஆனதால் பயத்துக்குக் காரணமாகிறது. ஆனால் ஸாதாரணத் தப்போடு போகாமல் மஹா பாபங்களைச் செய்து நாம் மூட்டை கட்டிக்கொண்டிரு ந்தாலோ, செத்துவிட்டு, மறுபடி இந்த லோகத்திலேயே இன்னொரு உடம்பு எடுப்பதற்கு முந்தி, இதைவிட ரொம்ப ரொம்பக் கஷ்டம் தருவதான நரக லோகத்துப் போய், சொல்ல முடியாத சித்ரவதைகள் படவேண்டும். மநுஷ உடம்பால் தாங்கமுடியாத சித்ரவதைகளைத் தாங்கி அவதிப்படுவதற்காகவே யாதனா சரீரம் என்ற ஒன்றை எடுத்துக் கொண்டு நரகத்திலே போய் படாதபாடு படவேண்டும்.

ஆகையால் மோக்ஷத்துக்கு 'ஆப்போஸிட்' ஸம்ஸாரம் என்றால், அதிலும் ரொம்ப 'ஆப்போஸிட்'டாக இருப்பது நரகம். ஆகையினால் பூர்வசாஸ்த்ரங்களில், "பயங்கரமானது", "கஷ்டமானது" என்று வருகிற இடங்களில் நரகத்திலே தள்ளுவதையே இவை குறிப்பாக ஆசார்யாள் பாஷ்யம் பண்ணுவதுண்டு.

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**மனமே பந்த காரணம்**

ஏக ஸத்யமாக ஆகாமல் த்வைதமாக இருக்கிறவரையில் இன்னொன்றால் பயம் ஏற்படுகிறது என்று பார்த்தோம்.

ஏக ஸத்யமாக ஆவதுதான் மோக்ஷம் - பரிபூர்ணமாக விடுபட்ட நிலை. வீடு விடுதலை என்பது.

"எதிலிருந்து விடுதலை, ஸ்வாமிகளே?"

ஸம்ஸாரத்திலிருந்து.

"இந்த ஸம்ஸாரத்தில் எதனால் கட்டுப்பட்டோம்?"

கர்மாவினால் இது தெரியவில்லையா அப்பா?

"எதனால் கர்மா பண்ணினோம்?"

ஆசைகளைப் பூர்த்தி பண்ணிக் கொள்வதற்காகத்தான்.

"ஆசை எதனால் உண்டாயிற்று?"

மனஸ் என்று ஒன்று இருப்பதால். மனஸ்தான் இந்த்ரியங்களின் வழியாகத் தன் ஆசைப் பூர்த்திக்கான அநுபவங்களை அநேக கார்யங்களின் மூலம் பெறுகிறது. ஸினிமா பார்ப்பது, வம்பு பேசுவது, கண்ட வஸ்துக்களைத் தின்னுவது என்று அநேக கார்யங்கள்.

"அப்படியானால் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை என்றால் மனஸிலிருந்தே விடுபட வேண்டும் என்றுதானே ஆகும்?" ஆமாம், அப்படித்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

அத்வைதம்

போர் தீர்ந்து அமைதி காண

மனமாற்ற ஆத்மாவின் ஆனந்தம்

"ஆனால் மனஸ் போய்விட்டால் நமக்கு ஒன்றுமே தெரியாதே அது போனால் நாமே போய்விட்ட மாதிரிதானே? அப்புறம் மோக்ஷ ஆனந்தம் என்று ஒன்றை யார் அநுபவிப்பது? இல்லாவிட்டால், மோக்ஷம் என்பது தூக்கம், மூர்ச்சை மாதிரி எதுவும் தெரியாமல் ஜடம் மாதிரி ஆகி விடுவதுதானா?"

இல்லை, இல்லை. அதுவே நிஜமான ஆனந்தம் சாச்வதமான, மாறாத ஆனந்தம். ப்ரஹ்மாநந்தம், ஆத்மானந்தம் என்றே சொல்லப்படும் பேரின்பம். ப்ரக்ருதத்தில் (நடை முறையில்) கூட, நாம் ரொம்பவும் இன்பமான ஒரு அநுபவம் பெற்றால், "ப்ரஹ்மாநந்தமாயிருந்தது" என்றுதானே சொல்கிறோம்? ப்ரஹ்மம் இப்படிப்பட்டதா, இப்படிப் பட்டதா என்று தபஸ் பண்ணிப் பண்ணிப் பார்த்து, ஒவ்வொரு நிலையில் ஒவ்வொன்றை ப்ரஹ்மம் என்று நினைத்த ப்ருகு முடிந்த முடிவான நிலையில் ஆனந்தம்தான் ப்ரஹ்மம் என்று தெரிந்து கொண்டார் என்று தைத்திரீயம் சொல்கிறது. அதனால் இந்த விஷயத்தைச் சொல்லும் ஸெக்ஷனுக்கே "ஆனந்தவல்லி" என்று பெயர்.

"எல்லாம் ஸரி, அநுபவிப்பதற்கு மனஸ் என்று ஒன்று இல்லாவிட்டால் ஆனந்தம் எப்படித் தெரியும், ஸ்வாமிகளே?"

இங்கேதானப்பா த்வைத - அத்வைத ஸமாசாரம் வருகிறது. மனஸூக்கு இன்னொன்றைத்தான் தெரியும். தன்னைத் தெரியாது. மஹா ஸாமர்த்யத்தோடு எதெதையோ தெரிந்துகொள்கிற அது தன்னையே தெரிந்து கொள்ள முடியாத மஹா அசடாக இருக்கிறது நீயே ஆலோசித்துப் பாரப்பா, புரியும். மனஸினால் அதற்குப் புறம்பான விஷயங்களைத்தான் நினைக்கவும், புரிந்து கொள்ளவும், அநுபவிக்கவும் முடிகிறது. நீ எத்தனையோ நினைக்கிறாய், எழுதுகிறாய், தெரிந்துகொள்கிறாய், எக்ஸ்பீரியன்ஸ் பண்ணுகிறாய், ஆனால் இதை எல்லாம் செய்யும் உன் மனஸ் என்னவென்று உனக்குப் புலப்படுகிறதோ? அதை

நிறுத்திவைத்து இன்னவென்று தன்னைத்தானே பார்த்து அறிந்துகொள்ளும்படிப் பண்ணவிடுகிறதோ? இந்த நிமிஷம் நல்லதாய்த் தெரிகிற மனஸ் அடுத்த நிமிஷம் மஹா கெட்டதாய் விடுகிறது. இந்த ஸெகன்ட் ஸந்தோஷமாயிருக்கும் மனஸ் அடுத்த ஸெகன்ட் துக்கம் கொண்டாடுகிறது. இந்த க்ஷணம் ஏதோ கொஞ்சம் சாந்தமாயிருக்கிற மாதிரித் தோன்றுகிற இந்த மனஸு அடுத்த க்ஷணம் அப்படியிருக்குமா என்று தெரியவில்லை. இந்த மனஸ் என்பது என்ன? புரியவே இல்லை. 'இதனால்தான் ஜீவனுக்கு எல்லா அநுபவமும் ஏற்படுகின்றன. இது வேலை செய்யாமல் தூங்கிப்போனால், அல்லது மூர்ச்சை போட்டு விழுந்துவிட்டால் எந்த அநுபவமுமேயில்லை' என்பதால் இதுவேதான் நாம் என்று தோன்றுகிறது. அப்படித் தான் நினைத்து நீ கேள்வி கேட்டாய்.

"ஆமாம் அப்படித்தான் நினைத்தேன். அப்படி இல்லை என்று நீங்கள் இன்னமும் காட்டவில்லை."

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**மனமற்ற நிலையிலும் "நாம்"**

ஸரி. தூக்கத்தின்போது மூர்ச்சையின்போது உனக்கு எந்த அநுபவமும் இல்லை என்பது ஸரி. நாமிருக்கிறோம் என்பது உனக்குத்தான் தெரியத்தான் இல்லை. ஆனால் நீ அப்போது நிஜமாகவே இல்லாமல் போய்விட்டாயா, என்ன? அப்படியானால், தூக்கத்துக்கு அப்புறம் எப்படி முழித்துக் கொண்டாய்? தூக்கம் கலைந்து எழுந்த அப்புறம் அப்படி ஜடமாகக் கிடந்ததற்கும் சேர்த்து வைத்து எப்படிக் காரியம் செய்ய ஆரம்பித்தாய்? மூர்ச்சையைப் பற்றியும் இப்படியே யோசித்துப்பார். தூக்கத்துக்கும், மூர்ச்சை போடுவதற்கும் முந்தி நீயாக இருந்த ஆஸாமியேதான் தூக்கம் கலைந்த பிற்பாடும், மூர்ச்சை தெளிந்த பிற்பாடும் நீயாக இருப்பது

என்பதும் தெரிகிறதோல்லியோ? அப்போது உனக்கிருந்த அபிப்ராயங்கள், அநுபவங்கள் உறவுமுறைகள் எல்லாம் இப்போதும் தொடர்ந்து வருகின்றன அல்லவா? அந்த உடம்பேதானே இப்போதும் உன் உடம்பாயிருக்கிறது? இதெல்லாவற்றுக்கும் மேலாகத் தூங்குகிறபோதும், மூர்ச்சை போட்டுக் கிடந்தபோதும் உன் உயிர் இருக்கத்தானே செய்தது? ரத்த ஓட்டம், தேஹத்தில் உஷ்ணம், ச்வாஸம் எல்லாம் இருக்கத்தானே செய்தன? அதனால் மனஸ் இல்லாதபோது நீ இருக்கத்தான் இருந்தாய். அதாவது "நான் நான்" என்று மனஸ் உள்ள போதுதான் நாம் இருப்பதை நம்மால் தெரிந்து சொல்லிக் கொள்ள முடிகிறதென்றாலும், மனஸ் இல்லாத போதும்கூட நாம் இருந்து கொண்டுதானிருக்கிறோம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**நிஜ "நாம்"**

மனஸை வைத்துத்தான் ஸகல எண்ணமும், உணர்ச்சியும், இவை இல்லாதபோத ஜீவன் ஜடத்துக்கு ஸமானம் தான் என்பதால் மனஸைத்தான் 'நாம்' என்று நினைக்கத்தோன்றுகிறது. ஆனால் இது இல்லாமலும் நம்மை ஜடமாகவோ, கிடமாகவோ எதுவோ ஒன்றாக உயிரோடு இருக்கப் பண்ணுவதாக இன்னொன்று இருக்கிறது என்னும் போது அதுதான் நம்முடைய நிஜமான 'நாம்' என்று ஆகிறது. எப்படியென்றால், மனஸ் இல்லாதபோதும் அது இருக்கிறது, ஆனால் அது இல்லாமல் போனால் மனஸும் இல்லாமல் போய்விடுகிறது. சரீரத்தை விட்டு

உயிர்தத்வம் போய்விட்ட பிறகு அந்த சரீரத்துக்கு உணர்ச்சியும் போய்த்தானே விடுகிறது? பிணத்துக்கு மனஸ் உண்டா? ஸரி, சரீரத்தை விட்டுப்போன உயிர்த் தத்வம் இந்த சரீரத்தில் இல்லாமல் போனாலும், தானே அடியோடு

இல்லாமல் போய்விடுகிறதா என்றால் இல்லை. அதுதான் உயிராயிற்றே, அப்படியிருக்க அதுவே எப்படிச் சாகமுடியும்? இதே மாதிரி, சரீரம் சாவதோடு மனஸும் செத்து விடுவதில்லை. கர்மாக்களை அநுபவிப்பதற்காக ஜீவன் இன்னொரு பிறப்பு எடுக்கும்போது, புதுப்பிறவி உண்டாகிறது என்னும் போதே உயிர்த்தத்வம் மறுபடி ஒரு உடம்பில் வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது என்று ஏற்பட்டு விடுகிறது. ஒரு உடம்பை விட்டுப்போன உயிர் இன்னொரு உடம்பை எடுத்துக் கொள்கிறது. மனஸும் இப்படிப் பண்ணுகிறது. அந்த மனஸையும் இந்த உயிர் தத்வந்தான் தன்னோடு சேர்த்து எடுத்துக்கொண்டு போய் இன்னொரு உடம்பிலிருந்து வேலை செய்ய வைக்கிறது.

மனஸ் வேலை செய்யாத நித்ரை, மூர்ச்சை முதலான ஸமயங்களிலும் உயிர் இருக்கிறது, ஆனால் உயிர் இல்லாத சரீரத்தில் மனஸ் வேலை செய்ய முடியவே இல்லை, அப்போது உடம்பும் அழுகி, கெட்டு, வீணாய்விடுகிறது என்பதிலிருந்து உயிரை ஒட்டிக்கொண்டுதான் மனஸ் வாழ முடியும், உடம்பும் வாழமுடியும், தனியாக அவற்றால் ஜீவிக்க முடியாது என்று தெரிகிறது. உடம்பை நாசம் பண்ணிவிட்டு உயிர் இன்னோர் உடம்பில் பிரவேசித்த பிற்பாடு, ஆனால் பிற்பாடுதான், மனஸ் அந்தப் புதிய உடம்பிலே வேலை தொடங்குகிறது என்பதிலிருந்தும் உயிர்தான் மனஸும் தனக்கு அடிப்படையாகப் பற்றி வாழும் தத்வமென்பது 'கன்ஃபர்ம்' ஆகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**மனக் கலப்பில்லாத உயிர் உணர்வு**

அந்த உயிர் மனஸின் கலப்பு இல்லாமல், மனஸின் எண்ணங்கள், இந்த எண்ணங்களின் விளைவாக ஏற்படும் கர்மா ஆகியவற்றின் பந்தம் இல்லாமல் தனியாக இருப்பதை

உணர்வதுதான் அத்வைத மோக்ஷம், அது ஜட ஸ்திதி அல்லவே அல்ல. 'ஜீவன்' என்பதே 'உயிர்' என்பதாயிருக்க, அந்த உயிர் தத்வம், எப்படி ஜீவனில்லாத ஜடமாக இருக்க முடியும்?

"பின்னே மனஸின் கலப்பு இல்லாமல் அது மாத்ரம் இருந்த ஸ்திதிகளான நித்ரையிலும், மூர்ச்சையிலும் கொஞ்சங்கூட உணர்ச்சியே இல்லாமல் ஜடம் மாதிரித்தானே கிடந்தோம்?"

உணர்ச்சி இல்லாமல் ஜடம் மாதிரிக் கிடந்ததென்பது வாஸ்தவம் அப்பா. ஆனால் இப்படி இருந்தது மனஸ்தான், உயிர் இல்லை. மனஸின் கலப்பில்லாத ஸ்திதி என்று நீயே சொன்னபடி, மனஸ் அப்போது உயிரைவிட்டுப் பிரிந்திருந்தது. அதனால், உயிரின் ஜீவசக்தி மனஸில் இல்லாமலிருந்தது. இக் காரணத்தாலேயே மனஸ்தான் ஜடமாயிற்று. உயிர் அப்போதும் ஜீவசக்தியோடு இருக்கத்தான் செய்திருக்கிறது. அதனால்தான் ஹ்ருதயம், ச்வாஸ கோசம் முதலானவற்றை அது வேலை செய்ய வைத்திருக்கிறது. இப்போது பகவான் செய்கிற பெரிய மாயையிலே நம் எல்லோருக்கும் மனஸின் உணர்ச்சியையே புரிந்துகொள்ள முடிகிறது, மனஸால் எதை உணரமுடியுமோ அதையே நமதாக க்ரஹித்துக் கொள்ள முடிகிறது.

அதனால்தான் மனஸ் நின்றுபோனபின் உயிர் எப்படி இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. நமக்கு எது புரிவிக்கும் கருவியாயிருக்கிறதோ, அது வேலை செய்யாமல் நின்று போன விட்டு அதை எப்படிப் புரிந்துகொள்வது? நாம் கண்ணை மூடிக்கொண்டவுடன் லோகம் தெரியாமல் போகிறாற்போல. நம் மனஸ் வேலை நிறுத்தியவுடன் நம்மால் எந்த அநுபவமும் பெற முடியவில்லை. அதனால் ஜடமாய்விட்டதாக நினைக்கிறோம். ஆனால் நாம் கண்ணை மூடிக்கொண்டவுடன் நிஜமாகவே லோகம் இல்லாமல் போய்விட்டதா என்ன? கடிகாரம் நின்று போய்விட்டால் நமக்கு 'டைம்' தெரியவில்லை. அதனால் காலமே நின்று போனதாகுமா என்ன?

மனஸ் போனபின் உள்ள உயிர்தத்வத்துக்கும் உணர்ச்சி இருக்கிறது. அதுதான் ஸத்யமான, சாச்வதமான உணர்வே, "பேர் உணர்வு" என்று அதைத்தான் சொல்கிறார்கள். சைதன்யம், ஞானம் என்பது அதைத்தான். அதற்கு ஞானம்

இருக்கிறது என்பதுகூட ஸரியில்லை. அதுவே ஞானம், சைதன்யம், சித் ஸ்வரூபம், சின்மாத்ரம் என்றும் சொல்வார்கள். இங்கிலீஷிலும் அழகாகச் சொல்கிறார்கள்: மனஸ் அநேக விஷயங்களை உணருவதை, 'அது conscious -ஆக இருக்கிறது' என்று சின்ன 'நீ' போட்டுச் சொல்கிறார்கள் ஜீவனுடைய ஜீவனான நிஜ தத்வம் தானே உணர்வாக இருப்பதை காபிடல் சி போட்டு Conscious என்கிறார்கள்.

'மனஸில்லாதபோதும், அதற்கும் மேலான நம்முடைய உயிர் தத்வமாயிருப்பதுதான் நிஜத்தில் நாமாக இருக்க வேண்டும். அதை அண்டியே தனக்கு ஜீவகலையைப் பெறுகிற மனஸ் நிஜ நாமாக இருக்கமுடியாது. (உடம்பும் இப்படியே நிஜநாமாக இருக்க முடியாது.) மனஸ் இல்லாமல் இருக்கவே முடியாது என்பதாலேயே உயிர்தான் நாம் என்றாகிறது. ஏனென்றால், மனஸ் நாமென்றால், தூக்கத்தில் அது இல்லாததததால் நாமே இல்லை என்று ஆகிவிட வேண்டுமே!அப்படி ஆகவில்லையே!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**ஆத்ம உணர்வும், மனோ வாழ்க்கையும்**

இப்படியாக வேறே ஒரு நிஜ நான் இருக்கிறது. அது எப்படி ஞானமயமாய், ஆனந்தப் பேருணர்வாயிருக்கிறது என்று நமக்குத் தெரியாதபடி மாயையானது மனஸின் திரையைப் போட்டு, மனஸின் அநுபவங்களை மட்டுமே ஜீவன் தனதாக நினைத்து, பெற்று, அநுபவிக்கும்படியாக வைத்திருக்கிறது.

நிஜ நாமாக இருந்து அதன் உணர்வை அறியவேண்டும், அதுவாகவே ஆகவேண்டும் என்று நாம் ஸதா ஸர்வகாலமும் விரும்பி, தவித்து, பாடுபட்டு ஸாதனை, ஆத்ம விசாரம் பண்ணிக்கொண்டு, மாயைத் திரையைப் போட்டிருக்கும். பகவானிடம் அதை விலக்கும்படி

ப்ரார்த்தனை செய்துகொண்டேயிருந்தால் நிஜமாகவே மனஸ் உருகிக் கரைந்து போய்விடும், எது நம்முடைய நிஜஸ்வரூபமோ அந்த ஆத்மா ப்ராகாசிக்க ஆரம்பித்துவிடும். தூக்கத்தையும் மூர்ச்சையையும் போலில்லாமல், 'மனஸ் போனதால் அறிய முடியவில்லை, உணர முடியவில்லை' என்று இல்லாமல் அப்போதுதான் இதற்கு மேம்பட்டதாகத் தன்னைத்தானே உணரும் ஆனந்த ஸ்வாநுபூதியாகவும் இருக்கலாம். தன்னை உணர்ந்து அறிவதே அங்கே ஆனந்தம்;தானே ஆனந்தம்!

இப்போது நாம் எதோடு நம்மையே ஐடின்டிஃபை பண்ணிக்கொண்டிருக்கிறோமோ (அதுவேதான் நாமாக்கும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமோ) அந்த மனஸுக்குத் தன்னைத் தெரியவே தெரியாது. பிறவற்றைத்தான் தெரிந்து கொள்ளமுடியும் என்பதற்குக் 'கான்வர்ஸா'க (எதிர்வெட்டாக), நம்முடைய நிஜ ஸ்வரூபமான ஆத்மாவாக உள்ளபோது தன்னை மட்டுந்தான் தெரியும், பிற வஸ்து எதுவுமே தெரியாது.

தெரியாதது மட்டுமில்லை, ஆத்மாவுக்கு வேறான பிற வஸ்து என்று ஒன்று இல்லவே இல்லை என்பது ஞானவிசாரம் செய்தால் தெரியும். ஆத்மாநுபவ நிலையில் வேறொரு வஸ்து தெரியவில்லை என்றால், அது ஒருவன் கண்ணை மூடிக்கொள்ளும்போது லோகம் வெளியில் இருந்து கொண்டிருந்தாலும் அவனுக்கு மட்டும் தெரியாமற் போவதுபோல மட்டுமில்லை. ஸத்யமாகவே ஆத்மாவுக்கு வேறாக எதுவும் இல்லை. அதிலிருந்தே மாயையால் ஜீவமனஸ், அதற்கு செயற் களமாயுள்ள ஜகத் முதலியவை கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

கற்பிக்கப்பட்டவை என்பதால் அவை அடிப்படையில் தாமே ஸத்யமானவை அல்ல என்றாகிவிடுகிறது. நம்மிடமிருந்து ஒரு மாயத்தோற்றம் உண்டானால் அந்தத் தோற்றம் நாமில்லைதானே? அதாவது நம்மையே வேறே யாரோ என்று எண்ணிக் கொள்ளும்படியாக நம்மிடம் ஒரு வேஷம் கற்பிக்கப்பட்டால் அந்த வேஷம் நிஜமான நாமல்ல. அல்லவா? ஆனாலும் நாம் இல்லாமல் அந்த வேஷம் உண்டாக முடியாது. அதைக் கல்பிக்க ஒரு அடிப்படை இருந்தால்தான் இதன் மேல் அதை ஏற்றிக்காட்டமுடியும்.

ஆசார்யாள் இதை "அத்யாஸம்" என்று சொல்வார். Super - imposition என்கிறார்கள். Substratum என்கிற அடிப்படை "அதிஷ்டானம்." அதன்மேலே அத்யாஸமாக இன்னொன்று ஏற்றிக்காட்டப்படுகிறது. வேஷம் போட ஒரு ஆஸாமி இல்லாவிட்டால் வேஷமேயில்லை என்கிறதுபோல அதிஷ்டான ஆத்மா இல்லாமல் அதன் மேல் அத்யாஸமாக ஆரோபணம் செய்யப்படுகிற (ஏற்றுவிக்கப்படுகிற, தோற்றுவிக்கப்படுகிற) மாய மனஸும், மாயமான ஜகத்தும் இல்லை. ஆனால் ஆத்மா அவற்றில் இல்லவே இல்லை. வேஷத்துக்குள் நிஜ ஆசாமி கொஞ்சமாவது இருக்கிறானா? வேஷத்தைக் கலைத்தபின் அந்தக் கதாபாத்ரத்துக்கு இருந்த பேர், அதன் கதை எதுவுமே துளிக்கூட இவனுடையதாக இல்லாமல் போய்த்தானே விடுகின்றன? அப்போதும் இவன்பாட்டுக்குச் கொஞ்சங் கூட பாதிக்கப்படாமல்தான் இருந்தபடியேதானே இருக்கிறான்? வேஷத்திலேயே நிஜ ஆஸாமி கொஞ்சமாவது இருந்தால், வேஷம் போன பிற்பாடு அந்தக் கொஞ்சம் போய் இவன் மூளியாகி இருக்கவேண்டுமே அப்படிக் காணோமே!

இதே மாதிரித்தான் ஆத்மாவில் மாயா கல்பிதமாக, அதாவது வேஷமாக ஏற்பட்ட ஜீவ ஜகத்துக்கள் ஆத்மா இன்றி இருக்கவேமுடியாது என்றாலும் ஆத்மா இவற்றிலே இல்லை. இதைத்தான் பகவான்.

மத் - ஸ்தாநி ஸர்வ பூதாநி ந ச(அ)ஹம் தேஷு (அ)வஸ்தித

அதாவது, "ஸர்வ பூதங்களும் என்னிடமே இருப்பு உடையன ஆனால் நான் அவற்றில் இல்லை" என்கிறார்.

"நான் அவற்றில் இல்லை" என்றால் ஆத்மா ஜீவஜகத்துக்களில் இல்லை என்று அர்த்தம். 'ஆத்மா ஜீவனில் இல்லை என்றால் என்ன அர்த்தம்?' என்றால், ஜீவனின் நிஜ ஸ்வரூபமான ஆத்மா மாயா கல்பிதத்தால் அந்த ஆத்மாவை அறியாத தனியான ஜீவத்வம் என்பதோடு, இன்டிவிஜுவாலிடியோடு இருக்கும் ஸ்திதி நிஜம் இல்லை என்று அர்த்தம். கல்பனை என்றாலே நிஜமில்லை என்றுதானே அர்த்தம்? ஸரி, இந்த ஜீவத்வம் (இன்டிவிஜுவாலிடி) என்பதை (ஆத்மாவை அறியாத) நாம் என்னவாக நினைத்து 'ஐடின்டிஃபை'

செய்துகொண்டிருக்கிறோம்? மனஸாகத்தான். இப்போது என்னவோ நாம் தோண்டித் துருவிப் பார்த்து மனஸுக்கு மேலே உயிர் தத்வமாக ஒன்று இருக்கிறது என்று கண்டுபிடித்தாலும், இது நம்முடைய வாழ்க்கை நடைமுறையில் உண்மையாக நிலைக்கவில்லை. நாம் என்பது நம் மனஸ்தான் என்ற எண்ணத்திலேயேதான் நம்முடைய வாழ்க்கை நடக்கிறது.

வாழ்க்கை என்று எதைச் சொல்கிறோம்? சாப்பிடுவது, கல்யாணம் பண்ணிக்கொள்வது, குழந்தை குட்டி பெறுவது, படிப்பது, ஸம்பாதிப்பது, ஊர் ஊராய் ஒடுவது, பாட்டு கேட்பது, ஸினிமா பார்ப்பது, நாவல் படிப்பது என்று இப்படி அநேக கார்யங்களைப் பண்ணுவதைத்தான் வாழ்க்கை என்றும் ஜீவனம் என்றும் சொல்கிறோம். இந்தக் கார்யங்களில் நம்மைச் செலுத்துவதாக அநேக எண்ணங்கள் இருக்கின்றன. இந்த எண்ணங்களை யெல்லாம் பிறப்பிப்பது மனஸ். கார்யங்களில் நம் இந்த்ரியங்களை ஏவுவதும் அதுதான். ஆகையால் தனி ஜீவன் என்கிறவனின் ஸாரமாகத் தோன்றுகிற ஜீவனம் என்பதே மனஸை ஸென்டராக வைத்து நடத்தப்படுவதுதான். எண்ணத்தினாலும் கார்யத்தினாலும் உருவாகிற ஜீவனம் என்பது எண்ணமும் கார்யமுமில்லாத ஆத்மாவைக் குறித்ததாக இருக்க முடியாதுதானே? ஆக, என்ன முடிவுக்கு வருகிறோமென்றால், ஃபிலாஸபி முடிவில் நாம் எந்த முடிவுக்கு வந்தாலும் ஸரி, லோகத்திலே ஜீவனம், ஜீவத்வம் என்றால் அவை மனஸை வைத்துத்தான்!ஆகையால் "நான் ஜீவ ஜகத்தில் இல்லை" என்று பகவான் அடித்துச் சொல்கிறபடி ஆத்மா ஜீவ பாவத்தில் இல்லை என்றால், அது மனஸிலே இல்லை என்றே அர்த்தம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

## ஆத்மாவுக்கு த்விதீயமான மனம்

ஆத்மா மனஸிலே இல்லை என்றால் ஆத்மா வேறே, மனஸ் வேறே. ஆத்மாவுக்கு வேறாக மனஸ் இருக்க வேண்டும். ஆத்மாவுக்கு அந்நியமாக, இரண்டாவதாக, த்விதீயமாக இருப்பதே மனஸ் என்கிறது.

"ஆத்மாவுக்கு அந்நியமாக இன்னொன்றுதான் கிடையாது என்கிறீர்களே!இது எப்படி அப்படி இருக்கமுடியும்?"

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லியாயிற்று, அப்பா!மறுபடி சொல்கிறேன். நிஜ ஆஸாமி ஒருத்தன், அவன் கல்பனையாகப் போட்டுக்கொள்கிற வேஷம் ஒன்ற. இப்போது ஆஸாமியும் வேஷமும் ஒன்றேயா, வேறுவேறா என்றால் ஒன்றும்தான், வேறு வேறுதான். விசித்ரமாக, இப்படி முரணான இரண்டாகவும் இருக்கிறது!எவனோ ஒரு ராமஸ்வாமி ராஜபார்ட் போட்டுக்கொள்கிறானென்றால், அவன்தான் அந்த ராஜா வேஷம். அவனில்லாமல் வேஷம் இல்லை. அவனையன்றி வேறாக வேஷ ராஜா தனித்து இருக்க முடியாது. இதுதான் அத்வைதம். அப்படியானால் ராமஸ்வாமிதான் ராஜாவா என்றால் அப்படி இல்லை. அந்த ராஜாவின் ராஜ்யம் இவனுக்கு ஸொந்தமா? இல்லை. அவனுடைய பத்னி. புத்ரர்கள் இவனுக்கு

ஸொந்தமா? இல்லை. ராஜா என்னவெல்லாமா கஷ்க்ஷடப்பட்டானே, ஸுகப்பட்டானே வேட்டையாடினான், சூதாடினான், தோற்றுப்போனான். அப்புறம் யுத்தத்தில் ஜயித்தான், ஒரு ஸமயம் துக்கத்தில் தலைமயிரைப் பிய்த்துக்கொண்டான். இன்னொரு ஸமயத்தில் ஆனந்தத்தில் ராகமாலிகை பாடினான் - இந்த அநுபவம் எதுவாவது நிஜ ராமஸ்வாமியுடையவை ஆகுமோ? இதிலே ராஜாவுக்கு ஏற்பட்ட லாப நஷ்டம் ஏதாவது ராமஸ்வாமிக்கு உண்டானதாகுமா? வேஷத்தைக்கலைத்தபோது ராமஸ்வாமி கொஞ்சமாவது குறைந்து போகாமல் பழைய ராமஸ்வாமியாக அப்படியேதானே இருந்தான்? அப்போது, நிஜ ஆஸாமிக்கு வேஷம் முற்றிலும் வேறான - த்விதீயமான - விஷயமாகத்தானே ஆகிறது? இப்பபடித்தான் ஆத்மாவுக்கு மனஸு வேறாவதும்.

இன்னொரு உபமானம் சொல்கிறேன் - அத்வைத

சாஸ்த்ரங்களில் அடிக்கடிச் சொல்வது. அந்தி மயக்கத்தில் ஒரு கயிறு பாம்பாகத் தெரிகிறது. மாயா மயக்கத்தில் ஆத்மாவானது தனி ஜீவனாகத் தெரிகிறது - அதாவது ஜீவன் "நான்" என்று ஐடின்டிஃபை செய்துகொள்ளும் மனஸாகத் தெரிகிறது. கயிறு என்ற ஒன்று இல்லாவிட்டால் பாம்பு என்ற தோற்றம் உண்டாயிருக்க முடியாது. கயிற்றிலே ஸூப்பர் - இம்போஸ் பண்ணித்தான் பாம்பு கல்பிக்கப்பட்டிருக்கிறது. அது இன்றி இது இல்லை என்கிறபோது அத்வைதம். ஆனால் கயிறு பாம்பா என்றால் இல்லைதானே? பாம்புத் தோற்றத்துக்கும் கயிற்றுக்கும் கயிற்றின் நிலையிலிருந்து பார்த்தால் கொஞ்சமாவது ஸம்பந்தமுண்டா? பாம்பு என்று நினைத்து உளறி அடித்துக்கொண்டோமே, இப்படி பயமுறுத்தியதில் கயிற்றுக்கு ஏதாவது பங்கு உண்டா? தன்னிலே ஒரு பாம்புத் தோற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதால் அதற்கு அந்த பாம்பின் எடை கூடிற்றா? அப்புறம் வெளிச்சத்தில் பார்த்தபோது பாம்பு இல்லை, கயிறுதான் என்று தெரிந்ததே (மாயை மயக்கைப் போக்கும் ஞான ப்ரகாசத்தில் பார்க்கும்போது மனஸ் மறைந்து ஆத்மா மட்டும் தெரிகிற ஸ்திதிதான் இது.) தன்னிடமிருந்து பாம்புத் தோற்றம் எடுபடுகிறது என்பதால் கயிற்றின் எடை ஏதாவது குறைந்ததா? இப்படியெல்லாம் ஆலோசிக்கும் போது பாம்பிலே கயிற்றின் ஸமாசாரம் கொஞ்சம்கூட இல்லை, அது வேறே இது வேறே என்றுதானே நிற்கிறது?

இப்படித்தான் ஆத்மாவுக்கு வேறேயாக மனஸ் இருப்பது.

ஆகையால் சற்றுமுன் நான் மனஸானது தன்னைத் தவிர இன்னொன்றைத்தான் காட்டிக்கொடுக்கும் என்று சொன்னதோடு விஷயம் நிற்கவில்லை. 'இன்னொன்று இருந்தால் அப்போது பயத்துக்கு இடமேற்பட்டுவிடும், மனஸானது இப்படி பயத்தை உண்டாக்கும் ஹேது உள்ளதான த்வைதத்தை உண்டாக்குவது' என்று முதலில் சொன்னேன். அப்படிச் சொன்னது ஸரிதான். அதற்குக் கூடுதலாக இப்போது சொல்வது, இப்படி மனஸ் தன்னைத் தவிர இன்னொன்றை மட்டுமே காட்டிக் கொடுப்பது மட்டுமில்லை, அதுவே ஆத்மாவின் நிஜமான தானாக இல்லாமல் - ஆத்மா என்கிற நிஜமான தானாக இல்லாமல் - அதற்கு இன்னொன்றாக, த்விதீயமாக இருப்பதுதான். கல்பிதம், வேஷம், அத்யாஸம், அத்யாரோபம் என்று

எப்படிச் சொன்னாலும் சொல்லிவிட்டுப் போங்கள், மனஸை ஸென்டராக வைத்து அதுவே நிஜம் என்று கார்யம் பண்ணும்வரையில் மனஸ் என்ற ஆத்மாவுக்கு வேறாக இருந்துகொண்டு இருக்கிறது என்றே வைத்துக்கொள்ள வேண்டியதாகிறது.

இன்னொன்று இருந்தால் பயம் வந்துவிடும். மனஸுக்கு எப்போதும் இன்னொன்றைத்தான் தெரியுமாதலால் நமக்குத் தெரிந்த த்வைத ப்ரபஞ்சம் நித்ய பயமானதுதான். இப்போது ஏதோ ஸந்தோஷமாக அரட்டையிலேயே வேதாந்த அரட்டையாக அடித்துக்கொண்டிருக்கிறோம். அடுத்த க்ஷணமே பூமி கொஞ்சம் ஆடினால், பூகம்பமென்று வந்தால்? அது வருவது இருக்கட்டும். இப்போது நான் இப்படிச் சொன்னவுடனேயே பயம் கவ்விக்கொள்கிறது. இதுதான் மனஸினுடைய த்விதீய லோகத்தின் தன்மை.

இன்னொன்றையே தெரிவிக்கும் இந்த மனஸ் என்பதே ஆத்மாவுக்கு இன்னொன்றாக இருப்பதுதான் மற்ற எல்லா விதமான பயங்களுக்கும் காரணமான, மூலமான பயம். ஆத்மாவிலிருந்து மனஸ் புறப்படவிடுவதுதான் முதல் த்வைதம், முதல் பயம். அப்புறம் மனஸினால் உண்டாகும் அநேக இரட்டைகள், அநேக விதமான பயங்கள், த்வைத லோகமாகிற ஸம்ஸார பயம், நரகபயம் எல்லாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**ஆத்மானுபவமே அபய மோக்ஷம்**

ஆகையால் மனஸ் போவதுதான் நிஜமான மோக்ஷம். மனஸிருந்து விடுபட்டு ஆத்மா தானாக இருப்பதுதான் அபயமான அத்வைத ஆனந்த மோக்ஷ ஸ்தானம். ஜீவத்வம் என்பதை நாம் மனஸினடையதாகவே கருதினாலும், இந்த வேஷ ஜீவத்வம் என்ற "அத்யோரோபித"க் கல்பனைக்கு

ஆதாரமான "அதிஷ்டான" ஸத்யமாகிய ஆத்மாதான் ஜீவனடைய உண்மை நிலையான பூர்ண வஸ்து. அதை ஸாக்ஷாத்காரம் செய்வது - அதாவது அந்த ஆத்மாவை அறிந்து அதிலேயே நிலைப்பதென்பது - ஜடமான ஸ்திதியாயில்லாமல் பேருயிராய், பேரறிவாய், பேருணர்வாய், பேரானந்தமாய் இருப்பதாகவே இருக்கும். மனஸ் இன்னொன்றை அறிந்தும் உணர்ந்தும் ஸுக துக்கங்களை அநுபவிப்பது போலன்றி, ஆத்மா தன்னைத் தன்னாலேயே உணர்ந்தறியும் அந்நிலை நித்ய ஸுகமாகவே இருக்கும். இன்னொன்றிலிருந்து அவ்வப்போது ஸுகம் வந்தாலும், ஸுகம் வருகிற மாதிரியே, அந்த ஸுகத்தைவிட மிக அதிகமாக துக்கமும் வருகிறது. ஆத்மாவிலே இப்படி இருக்காது. பயத்தை, துக்கத்தைக் கொடுக்கக்கூடியதான இன்னொன்று இல்லாததால்,

ஆத்மாவினுடைய கட்டற்ற நிலையின் தன்னியல்பான ஸுகம் துக்கங்களால் துண்டித்துத் துண்டித்துப் போகாமல் சாச்வதமானதாக இருக்கும்.

பயம் இல்லாமல் ஆகவேண்டுமானால் அதற்கு வழிபய ஹேதுவான இன்னொன்று இல்லாத ஆத்மாவாக ஆவதுதான். அது மோக்ஷம் என்ற விடுபட்ட நிலை. மனஸை வைத்துக்கொண்டு ஜீவனாக இருப்பது கட்டுப்பட்ட நிலை. கட்டு என்பது நேராக மனஸின் எண்ணங்களால் ஏற்படுவதோடு மட்டுமில்லாமல், அவற்றைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக சரீர இந்த்ரியாதிகளைக் கொண்டு செய்யும் கார்யங்களாகவும் இருக்கின்றன. இந்தக் கர்ம பந்தத்தை தர்ம கர்மங்களாலேயே தளர்த்திக் கொள்ளவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**கர்மத்தின் தளர்த்தும் தர்மம்**

ஒரு விறகுக் கட்டு இருந்து, அதைச் சுற்றிப் போட்ட கயிற்றுக்கட்டு முடிச்சு அவிழ்க்க முடியாமல் ஆனால் என்ன செய்வார்கள் தெரியுமா? கட்டு தளர்வதற்கு முதலில் கட்டிய கயிற்றைவிட இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் போட்ட மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வார்கள். 'கட்டுப் போட்ட மாதிரி' தானே ஒழிய முடிச்சுப் போட்டுக் கட்டியே விடமாட்டார்கள். இந்த இறுக்கத்தில் முதலில் முடிச்சு போட்டுக் கட்டின கட்டு லூஸாகிவிடும். அதை எடுத்துப் போட்டுவிடலாம். அப்புறம், கட்டினமாதிரி, ஆனால் கட்டியே விடாமல் சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எடுத்துவிட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டுவிடும். இதே மாதிரி மனஸின் க்ருத்ரிமத்தில் பல தினுஸான கார்யங்களால் மணிமுடிச்சாகக் கட்டுப்போட்டுக்கொண்டு ஸம்ஸார பந்தத்தில் கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, "சாஸ்த்ர கர்மா" என்று கட்டு மாதிரி உள்ளதைப் போட்டுக்கொள்ள வேண்டும். கன்னாபின்னா கட்டாக இல்லாமல் சாஸ்த்ர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்மரூபமான அநேக கார்யங்களை கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈச்வரனே போட்ட ரூல்கள் இவை. நம் ஸ்வந்த ஆசையின்மேலே கன்னாபின்னா என்று காரியங்கள் பண்ணிப் பண்ணி முடிச்சாகப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு இந்த ஸ்வதர்ம கர்மக் கட்டுதான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல. கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்துகொண்டால் சாஸ்த்ர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங்கூடத் தப்பாமல் ஸந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம். இஷ்டமாயிருக்கிறது என்று கண்டதைத் தின்றுகிறோம். வ்யாதி வருகிறதென்றால் அப்போது ஒட்ட ஒட்டக் கிடந்து கசப்பு மருந்து சாப்பிடத்தானே வேண்டும்? இது கஷ்டமாயிருந்தாலுங்கூட, உடம்பு ஸரியாகணும் என்பதால் நாமே டாக்டரிடம் போய் இந்தக் கஷ்டத்தை கேட்டு வாங்கிக் கொள்ளத்தானே செய்கிறோம்?

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

**ப்ரேயஸ், ச்ரேயஸ்**

இஷ்டத்தைத் தருவது ஒன்றாகவும், நல்லதைச் செய்வது வேறொன்றாயும் இருக்கின்றன. (முறையே) ப்ரேயஸ், ச்ரேயஸ் என்று இவற்றை உபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. இஷ்டமாக இருப்பது எதுவோ அதுவே நமக்கு ப்ரியமாக இருக்கிறது. அதைத்தான் 'ப்ரேயஸ்' என்பது. இந்த வார்த்தை நடைமுறையில் அதிகம் இல்லை. 'ச்ரேயஸ்' என்ற வார்த்தை அடிக்கடி கேள்விப்படுகிறோம். "உசந்த நன்மைகள் உண்டாகவேண்டும்" என்று ஆசீர்வாதம் செய்யும்போது "எல்லா ச்ரேயஸூம் உண்டாகட்டும்" என்கிறோம். எது உண்மையில் ஒரு உயிருக்கு நல்லதைத் தருவதோ அதுவே ச்ரேயஸ். 'ப்ரியம்' என்பதிலிருந்து 'ப்ரேயஸ்'. 'ச்ரியம்' என்பதிலிருந்து 'ச்ரேயஸ்'. "ஸ்ரீ" என்பதிலிருந்து "ச்ரியம்" ஸ்ரீ என்றால் லக்ஷ்மி, செல்வத்தின் தேவதை, மங்களதேவதை என்பது எல்லாருக்கும் தெரியும். ஆத்மாவுக்கு நல்லது செய்கிறவைதான் நிஜமான செல்வமும், மங்களமும், நித்ய ஸ்ரீயும்.

(இப்போது 'ஸ்ரீ' வேண்டாம், 'திரு'தான் வேண்டும் என்கிறார்கள். தப்பான பாஷாபிமானத்தினாலே அப்படிச் சொல்கிறார்கள். சில சப்தங்களுக்கே நல்லது செய்யும் சக்தி உண்டு, அதாவது 'ச்ரேயஸ்' உண்டு. ராம நாமாவை "ஜகத் ப்ரதம மங்களம்" என்று காளிதாஸன் கொண்டாடுகிறான். ரா-ம என்கிற சப்தம் அவ்வளவு ச்ரேயஸ்கரமானது. 'ராம ஜபம் பண்ணமாட்டேன். "ராம"வைத் தமிழ்ப்படுத்தி "இன்பமானவன்", "இன்பமானவன்" என்று தான் ஜபம் பண்ணுவேன்' என்றால் மந்த்ர சப்த சக்தி இதிலே வருமா? "சிவ" சப்தமும் அப்படித்தான். அதற்கும் மங்களம் என்றே அர்த்தம். அந்த சப்தமே மங்களத்தை உண்டாக்கக் கூடியது. அஹங்காரம் பிடித்த தக்ஷன் சிவ சப்தத்தை த்வேஷித்தான். "நீ மங்களமான சிவனை த்வேஷிக்கிறாயென்றால் 'சிவ இதரன்' ஆகிறாய், சிவனுக்கு இதரமான அசிவமாக,

அதாவது அமங்களமாக ஆகிறாய்" என்று அவனுடைய பெண்ணாக அவதாரம் பண்ணின அம்பாள் சொன்னாளென்று பாகவதத்தில் வருகிறது. இப்போது இங்கே மங்களமான "ஸ்ரீ" சில பேருக்குப் பிடிக்காததாக இருக்கிறது இது இருக்கட்டும்.) ச்ரேயஸை விட்டு ப்ரேயஸைப் பிடித்துக்கொள்கிறோம். இஷ்டம் என்று ஒன்றில் போய் விழுகிறோம். அப்புறம் அதனால் கஷ்டம் என்று தெரிகிறது. அந்த நிலையில் இஷ்டப் பட முடியாத ஒன்றுதான் - கசப்பு மருந்து, லங்கனம் (பட்டினி) போன்ற ஒன்றுதான் - கஷ்டத்தைப் போக்கி நல்லதைச் செய்ய முடியும் என்று தெரிகிறது. இஷ்டப்பட முடியாத அந்த ஒன்றை ஏற்பது இப்போது கஷ்டமாயிருக்கலாம். ஆனாலும் இது சாச்வதக் கஷ்டமாக நின்றுவிடாது. இஷ்டப்படித் தின்னுவது என்பதை சாச்வதமாகப் பண்ணிக்கொண்டே போக நாம் தயார். டயேரியா, டிஸென்ட்ரி வந்திருக்காவிட்டால் அப்படித்தான் பண்ணிக்கொண்டே போயிருப்போம். ஆனால் இஷ்டம் இப்போது இந்தக் கஷ்டத்தில் கொண்டுவிட்டுவிட்டது. இப்போது மருந்து சாப்பிடுவதும், லங்கனமிருப்பதும் இஷ்டப்பட்டுச் செய்யக்கூடியவையல்லதான். அவை கஷ்டமாகத்தான் இருக்கின்றன. இருந்தாலும் மருந்தும், லங்கனமும் சாச்வதமாய் நிலைத்து விடுகிறவை அல்லவே அதனால் மருந்து சாப்பிடுகிறோம், பட்டினி கிடக்கிறோம், பத்யமாகச் சாப்பிடுகிறோம். உடம்பு ஸரியாகிப்போகிறது. அப்புறம், முன் மாதிரியே மறுபடி இஷ்டப்படி தின்றால் உடம்புக்கு வரத்தான் வரும் என்று ஜாக்ரதையாய் இருக்கிறோம். கண்டபடி தின்னாமல் கட்டுப்படுத்திக் கொள்கிறோம். நாம் இப்படிச் செய்கிறோமோ இல்லையோ புத்திசாலிகளாக இருந்தால் இப்படித்தான் செய்யவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**போர் தீர்ந்து அமைதி காண**

இஷ்டப்படி மனஸை ஓடவிட்டு, அதன் விளைவாகக்

கண்டபடி கார்யம் செய்து நன்றாகக் கர்ம பந்தத்தில் கட்டுண்டு கிடக்கிறபோது, கட்டைத் தளர்த்துவதற்காகவே முதலில் அதிகம் நெரிக்கின்ற தர்ம சாஸ்த்ர கர்மக் கட்டை போட்டுக் கொள்ளவேண்டும். அதிலே போட்டிருக்கிற ரூல்கள் மனஸுக்கு இஷ்டமானதாக இருக்கத்தான் இருக்காது. போட்டு நெரிக்கிற மாதிரிதான் இருக்கும். ஆனாலும் இது சாச்வதக்கட்டு இல்லை. கட்டு மாதிரி நெருக்கிப் பிடித்துக் கொண்டிருப்பதுதானே யொழிய முடிச்சாய் விழுந்த கட்டு இல்லை. பக்வமாகிக் கர்ம பந்தம் முழுக்கப் போகிறபோது, சாஸ்த்ர ரூல் பார்த்துப் பண்ணவேண்டுமென்கிற கட்டுப்பாடும் இல்லாமல் போய்விடுகிறது. ஆத்ம ஞானிக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை, எந்த ரூலும் இல்லை. வர்ணம், ஆச்ரமம் என்பவற்றை வைத்து உண்டான ஸகல சாஸ்த்ர ரூல்களும் போய்விட்டவன் அவன். இவற்றைக் கடந்துவிட்டதால் அவனுக்கு "அதிவர்ணாச்ரமி" என்றே பெயர்.

ஆனால் சற்று முன்னால் சொன்ன வ்யாதி - மருந்து உபமானம் இந்த விஷயத்தில் முழுக்க அப்படியே பொருந்தி விடுகிறதென்று சொல்லமுடியாது. கொஞ்சம் வித்யாஸம் இருக்கத்தான் செய்கிறது. கொஞ்ச நாள் அல்லது இரண்டு மூன்று வேளை மருந்து சாப்பிட்டால் ஜீர்ணக் கோளாறு (வயிற்றுப் போக்கும் ரத்தக் கடுப்பும்) ஸரியாகிப் போய்விடுகிறாற்போல அவ்வளவு சீக்ரத்தில் கர்மா என்ற வ்யாதி தீர்கிறதில்லை. தேஹவாகு என்பதால் சில பேருக்கு எப்போதுமே வயிற்றிலே ஆஸிட் அதிகம் சுரக்கிறது. அப்போது மருந்தும் நிறுத்தாமல் சாப்பிட்டுக்கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. ப்ரஷர், டயாபடீஸ், ஹார்ட் என்று பல பேர் நித்யமும் மருந்து சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். நிறையத் தப்புக்களில் மனஸ் போய் ஸம்பாதித்துக்கொண்டே கர்மா வ்யாதியையும் நீண்ட காலம் ஸ்வதர்ம மருந்து சாப்பிட்டுத்தான் ஸ்வஸ்தம் செய்து கொள்ள முடிகிறது. உங்களுக்கு உத்ஸாஹம் தருவதற்காக நான் பொய்க்காக, "சாஸ்த்ரங்களைப் பார்த்து அதன் எல்லா ரூல்களின் படியும் நடக்கவேண்டியது கொஞ்ச காலத்துக்குத்தான், கொஞ்ச காலமானவுடனேயே அந்தக் கட்டுப்பாடும் போய்விடும்" என்று சொல்லிவிடக்கூடாது. அதனாலேயே இதைச் சொல்கிறேன். பஹுகாலம் சாஸ்த்ரப்படி ஸ்வதர்மாசரணை பண்ணத்தான்

வேண்டியிருக்கும்.

ஆனால் இதில் உத்ஸாஹம் ஊட்டுவதாக ஒரு அம்சமும் இருக்கிறது. அதை உங்களுக்குச் சொல்ல நான் மறந்து விடவும் கூடாது. கசப்பு மருந்து இஷ்டப்பட்டுச் சாப்பிடக்கூடிய ஒன்றாக ஒரு போதுமே ஆவதில்லை. சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும் என்பதால் ஸஹித்துக்கொண்டு சாப்பிட வேண்டியதாகவே சாப்பிட்டுத் தொலைக்க வேண்டியதாகவே - அது எப்போதும் இருக்கும். பழகிப்போனாலுங் கூட முதலில் இருந்த வெறுப்பு, ஓக்காளிப்பு வேண்டுமானால் இல்லாமல் போகுமே தவிர, கசப்பு மருந்தைப் "பிடித்து"ச் சாப்பிடுவது என்பது ஒரு நாளும் இல்லை. சாஸ்த்ர ரூல்கள் இப்படி இல்லை. கொஞ்சகாலம் அவற்றைப் பின்பற்றிச் செய்தோமானால் அப்புறம் அவற்றிலேயே ஒரு பிடிப்பு, ஒரு பிடித்தம் ஏற்பட்டுவிடும். விதியே என்று அந்த விதிகளை அநுஷ்டிக்காமல், "ஸரியான ஒன்றைக் செய்கிறோம்" என்ற ஸந்துஷ்டி நமக்கே ஏற்பட்டு, ப்ரியத்தோடு அப்படிப் பண்ண ஆரம்பிப்போம். பரம அநாசாரமாக க்ளப், குடி, ரேஸ் என்று இஷ்டப்படிப் போனவர்கள் அப்புறம் ஆசாரமாக மாறுகிறபோது எத்தனை இஷ்டத்தோடு ஸ்நானம், மடி, உபவாஸம் என்று அநுஷ்டிக்கிறார்கள் என்பதை அங்கங்கே இன்றைக்கும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். ரொம்பவும் அநாசாரமாக இருந்தவர்கள்தன் அதைவிட்ட பிற்பாடு, மற்றவர்களைவிடவும் ரொம்ப நியமமாக நடக்க ஆரம்பிக்கிறார்கள். ஏதோ ஒரு 'கம்பல்ஷனி'ல், நெரிப்பில் இப்படிச் செய்யாமல் ஸ்வேச்சையோடு ஸந்தோஷமாக இப்படி விரும்பிச் செய்கிறார்கள். சாஸ்த்ர ரூல்களுக்கு உள்ள பெருமை இது. அது கசப்பு மருந்து இல்லை. கூஷ்மாண்ட லேஹ்யம், யுனானி மருந்துகள் மாதிரி தித்திப்பாக இருப்பது. பித்த

சரீரமுள்ளவர்களுக்கும், விஷக்கடிபட்டவர்களுக்கும் அந்த தோஷங்களினால் நல்ல ருசியுள்ள பதார்த்தங்களும் கசக்கிறாற்போல, நம்முடைய மனஸின் தோஷத்தினாலேயேதான் தர்ம சாஸ்த்ர மருந்து கசக்கிறது. இதற்கு இன்னொரு கோடியில் நல்ல பாம்பின் விஷம் ஏறினவனுக்குச் சீயக்காய் தித்திக்கும் என்று சொல்வார்கள். இப்படியே விஷயஸுக விஷத்தில் ஈடுபட்டவனுக்கு,

வாஸ்தவத்தில் விஷமான துஷ்கர்மாவே மதுரமாக இருக்கிறது. எப்படிப்பட்டவனானாலும் "திருந்தணும்" என்ற நிஜமான கவலை இருந்தால் சாஸ்த்ர மருந்து பிடிக்க ஆரம்பித்துவிடும். இரண்டு அர்த்தத்திலும் "பிடிக்க" ஆரம்பித்துவிடும். அதாவது அது பலன் தரவும் ஆரம்பிக்கும், மனஸுக்குப் பிடித்ததாகவும் ஆகிவிடும். ட்ரீட்மென்ட் பஹுகாலம் நடக்கவேண்டியதே என்றாலும், தித்திப்பு மருந்தாக இருப்பதால், அதை இஷ்டப்பட்டுச் சாப்பிடுவது என்று ஏற்படுவதால், சலித்துக்கொள்ளாமல் அத்தனை காலமும் "ட்ரீட்மென்ட்" எடுத்துக்கொள்ளலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தார்மிக கர்மா நேரான மோக்ஷ உபாயமல்ல**

ஆனாலும், இன்னொன்றை இங்கேயே சொல்லி விடணும். ஸ்வதர்ம கர்மா மட்டும் ஆத்மாவை மனஸின் கட்டிலிருந்து விடுவித்து விடாது. அதாவது நிஷ்காம்ய கர்ம யோகம் என்பதே நேராக மோக்ஷத்தை அளித்துவிடாது.

மனஸே அற்றுப்போன நிலை அல்லவா மோக்ஷம்? அப்போது எண்ணம் என்பது இல்லை. எண்ணமே இல்லாத போது கார்யம் நிச்சயமாக இல்லை. எனவே கார்யரூபமான ஒரு யோகம் அதை அடைவிப்பதற்கில்லை.

**மனத்தின் நிறைவுக்கும் தர்ம கர்மா போதாது**

மநுஷ்யனுக்கு முதல் கட்டு கார்யம். அடுத்த கட்டு எண்ணம். கார்யக்கட்டைத் தளர்த்தவேதான் கர்ம யோகம் பெரும்பாலும் ப்ரயோஜனப்படுகிறது. பயனில் பற்றில்லாமல் செய்வது என்ற மனோபாவத்துடனேயே இந்த யோகம் அநுஷ்டிக்கப்படுவதால், இந்த யோகத்துக்கு ஆதாரமே அந்த மனோபாவமாக இருப்பதால் அந்த அளவுக்கு மனஸை, அதாவது எண்ணத்தைப் பரிசுத்தி செய்கிறது. ஆனால் இப்படி பரிசுத்தி செய்வது அழுக்கைத்

துடைக்கிறதோடு ஸரி, அலங்காரம் பண்ணி அழகுபடுத்துவதாகாது. வீட்டைத் துடைத்து கோமயம் தெளித்து விட்டால் (இந்த நாளில் 'டெட்டால்' போடுவார்கள்!) போதுமா? அதிலே மணை, விரிப்பு sofa-என்றே வைத்துக் கொள்ளுங்கள்-போடவேண்டும். ஊதுவர்த்தி ஏற்றி வைக்கவேண்டும். கோலம் போடவேண்டும், இதே

மாதிரி மனஸை அழுக்குப் போக வெறுமே துடைத்துவிட்டால் போதாது. அதை நல்ல எண்ணங்களால் நிரப்பி அழகு செய்ய வேண்டும். இப்படி அழகுபடுத்தக் கர்மாவால் ஆகாது.

கடைசியில் மனஸே போனால்தான் ஆத்மாநுபவம் ஏற்படும் என்பதால் இப்போதே மனஸை வெறுமனே பரிசுத்தி பண்ணி வெறிச்சென்று விட்டுவிட்டால் போதும் என்று நினைத்துவிடக்கூடாது. கெட்ட கர்மாவை நல்ல ஸவதர்ம கர்மாவால் போக்கிக் கொள்ளவேண்டுமென்பது போலவே, இதுவரை ஜன்மாந்தரமாக எவ்வளவோ கெட்டவற்றை எண்ணிவிட்டோமே, அவற்றை நல்ல எண்ணத்தால்தானே போக்கிக்கொள்ள வேண்டும்? ஸயன்ஸ் சட்டப்படியே ஆக்ஷனுக்கு ஸமமாய் ரியாக்ஷன் இருந்தாகணுமே! (செயலுக்கு ஸமமாக எதிர்ச்செயல் பண்ணியாக வேண்டுமே!) இல்லாவிட்டால் விளைவு தீராதே!இம்மாதிரி கெட்ட எண்ணங்களைப் போக்குவதற்கான நல்ல எண்ணங்களை உண்டாக்குவதற்கு கர்மா (கர்மயோகம்) போதாது. இப்போது அதுமனஸை வெறிச்சென்று பண்ணுவதோடு விட்டுவிட்டால், பிஞ்சையே பழுக்கவைக்கப் பார்த்த அது வெம்பிப் போகும்படிச் செய்வது போலத்தான் ஆகும். பிஞ்சைக் காயாக, பழமாக மதுரமான எண்ண ரஸத்தால் முதிரவைத்து அப்புறம்தான் உதிர விடவேண்டும்.

கர்மயோகம் என்று சாஸ்த்ரம் அமைத்துத் தந்துள்ள ஸ்வதர்மாநுஷ்டமானது ஒரு ஜீவமனஸ் இந்த்ரியங்களைக் கொண்டு இஷ்டபூர்த்திக்காக செய்து கொண்டவற்றின் விளைவுகளைத் தேய்த்து அழிப்பதற்கு மட்டுமே முக்யமாக உதவும். இஷ்டப்பட்ட அந்த மனஸையே நிறைவு பண்ண அது போதாது. மனஸின் தப்பான எண்ணங்களைத் திருத்த, அதாவது மனஸ் தப்பாக எண்ணுவதைத் திருத்த, சாஸ்த்ர கர்மா டைரக்டராக உபகாரம் பண்ணாது, பண்ண அதனால்

இயலாது. அதன் நேச்சரே அப்படி. கர்மா கர்மாவோடு தான் ஸம்பந்தப்பட முடியும். கார்ய ரூபத்தில் இஷ்டப்படி செய்ததை, சாஸ்த்ரத்தின் ரூல்படி கார்யரூபமாகச் செய்வது ஸரிப்படுத்த இயலும். மனஸில் நினைப்பையும் நினைக்கிற மனஸையும் கார்யம் எப்படி ஸரி செய்யமுடியும்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அன்பு, பக்தி

துஷ்கார்யத்தை ஸத்கார்யத்தால் ஸரி செய்கிறாற்போல, கெட்ட நினைப்பை நல்ல நினைப்பால்தான் ஸரிசெய்ய முடியும். இங்கேதான் அன்பு வருகிறது. நல்ல எண்ணங்களிலெல்லாம் தலைசிறந்தது அன்புதான். அந்த அன்பை ஸமஸ்த ஜீவாசிகளிடமும் செலுத்தவேண்டும். அத்தனை ஜீவராசிக்கும் மூலாதாரமான பரமாத்மாவிடம் செலுத்தி பக்தி செய்யவேண்டும். மூலத்திடம் அன்பு (பக்தி) செய்யாமல் அதிலிருந்து வந்தவற்றிடம் மட்டும் செய்யப் பார்த்தால் அது ஸரியாய் வராது. அதனால் ஈச்வரபக்தி அத்யாவச்யம். மனஸ் ஜீவனுக்குப் போடுகிற தப்பான எண்ணக்கட்டை எடுத்துப் போடுவதற்கு இதுதான் வழி செய்யும்.

அதாவது மனஸ், தான் பின்னே நின்றுகொண்டு, சரீரத்தை முன்னேவிட்டுச் செய்விக்கிற கர்ம பந்தம் மட்டுமே ஸத்கர்மாவினால் போகும். மனஸின் நேர் பந்தமான எண்ணத்தின் பந்தம் பக்தியினால்தான் போகும். பக்தியும் எண்ணம்தான், மனஸை வைத்துக்கொண்டு அதனால் பண்ணுவதுதானென்றாலும், எப்படி சாஸ்த்ர கர்மா பழைய கர்மக்கட்டை அவிழ்க்கிற கட்டாயிருந்ததோ, அப்படியே இதுவும் எண்ணத்தின் விஷயத்தில் செய்யும். பக்தி செலுத்திக்கொண்டே போனால் அது முற்றிப் பூர்ணமாகு ம்போது, 'மனஸ் என்று தனியாக ஒன்றை வைத்துக்கொண்டு இவன் வேறாக பக்தன் என்று இருக்க வேண்டாம்' என்று

பகவானே நினைப்பார் - இவனை மனஸிலிருந்தே அவிழ்த்து விடுதலை பண்ணித் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தில் ஒன்றாக்கிக் கொண்டுவிடுவார்.

பிடிபடாமல் திமிறிக்கொண்டு நாலாபக்கமும் ஒடுவதையே இயற்கையாகக் கொண்ட மனஸை அதன் நேர் டிபார்ட்மென்டான எண்ணத்தில் ஒரு எல்லைக்குள் கட்டுப்படுத்தி அன்பு முதலான ஸத்சிந்தனைகளில் மாத்திரம் போகப் பண்ணுவது ஸுலபமான கார்யமல்ல. அதனால்தான் முதலில் கர்ம மார்க்கத்துக்கே சாஸ்த்ரங்களில் ப்ராதான்யம் தரப்பட்டிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### சாஸ்த்ர கர்மாவுக்குப் பின்னணியான ஸத்சிந்தனை

இப்படிச் சொன்னால் கர்மா என்பது கார்யத்தோடேயே ஒரேயடியாய் முடிந்துவிடுகிறது என்று அர்த்தமில்லை. மனஸின்மீதும் அதன் பாதிப்பு - கெட்டதான பாதிப்பு, நல்லதான பாதிப்பு இரண்டும் இருக்கத்தான் செய்கின்றன. ஏனென்றால் மனஸினதாகிய எண்ணங்கள் கலக்காமல் ஜடமான மெஷின் மாதிரி நாம் கார்யம் பண்ணுவதில்லை. கார்யம் 'ப்ராமினன்'டாக முன்னுக்குத் தெரிந்தாலும், அந்தக் கார்யத்துக்குப் பின்னே ஒரு எண்ணமுண்டு. பொதுவாகச் சொன்னால் நாம் மனஸ் போனபடி கார்யம் பண்ணுவதெல்லாம் லோக இன்பங்களிலுள்ள ஆசை எண்ணத்தின் மேலேதான். 'இப்படிப் பண்ணிப் பண்ணி அழுக்கேறிப் போன நம்மை சுத்தி செய்துகொண்டு ஞான விசாரதிகள் செய்வதற்குரிய பாத்ரமாக ஆக்கிக்கொள்ளவேண்டும்' என்ற எண்ணமும் 'ஸமூஹத்துக்கான பலதரப்பட்ட கார்யங்களில் குழப்பமேற்படாமல் அவை ஒழுங்காகப் பிரிவினை செய்யப்பட்டு க்ரமப்படி ஆற்றப்படவேண்டும், இதனால் லோகக்ஷேமம் உண்டாக வேண்டும்' என்ற அன்பெண்ணமும்

ஒன்றுகலந்தே சாஸ்த்ரம் விதித்த ஸ்வதர்ம கர்மாக்களுக்குப் பின்னே அடிப்படையாக இருக்கின்றன.

**ஸத்கர்மாவில் சித்தச் சிதறல் குறைவது**

அதோடுகூட எந்தக் கார்யத்திலும், இப்படிப் பொதுவானதாக இல்லாமல், அதைக் குறித்தே ஏற்பட்ட அநேக எண்ணங்கள் கலந்திருக்கின்றன. பூஜை என்ற கார்யம் செய்கிறானென்றால், 'இப்போது துளஸி அர்ச்சனை பண்ணணும்' 'இப்போது பில்வார்ச்சனை பண்ணணும்' , தீபத்தைத் தூண்டிவிடவேண்டும்', பூஜா பாத்ரங்களில் இடறிக் கொள்ளாமல் ப்ரதக்ஷிணம் பண்ணணும்' என்றிப்படி அநேக எண்ணங்கள் தோன்றி, அதன்படியே கார்யம் செய்கிறான். 'பக்தி' என்ற பொதுவான, முக்யமான எண்ணத்தோடு இப்படிப் பல எண்ணங்கள் உள்ளன. இப்படியே ஒவ்வொரு கார்யத்திலும்.

இதிலே கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால், கர்மா இப்படிச் சில எண்ணங்களோடு சேர்ந்ததாக இருப்பதால் இதற்கு ஸம்பந்தமில்லாத வேறு எண்ணங்களில் அப்போது மனஸால் போகமுடிவதில்லை. தனியாக மனஸை விட்டால் அது ஸம்பந்தா ஸம்பந்தமில்லாமல் எல்லாப் பக்கமும் சிதறி ஓடிக்கொண்டிருப்பது போலில்லாமல், கார்யம் செய்கிறபோது அந்தக் கார்யம் ஸம்பந்தப்பட்ட சில எண்ணங்களில் மட்டும்தான் மனஸ் செல்லுகிறது. இந்த அளவுக்குக் கார்யத்தினாலேயே மனஸுக்கும் ஒரு கட்டுப்பாடு வருகிறது. பூர்ணக் கட்டுப்பாடாயில்லாவிட்டாலும், ஏதோ ஒரு வழியில் மட்டுமே மனஸ் போவது என்ற அளவுக்குக் கட்டுப்பாடு ஏற்படுகிறது.

வேலை எதுவும் செய்யாமல் வெறுமனே உட்கார்ந்து கொண்டோ படுத்துக்கொண்டோ இருக்கும்போது எதையாவது ஒன்றையே நினைப்பது, அல்லது அதைக் குறித்த சிலவற்றை மட்டும் நினைப்பது என்றால் முடிவதில்லை. தொடர்பில்லாத ஸமாசாரங்களிலெல்லாம் மனஸ் பிய்த்துக் கொண்டு கிளம்புகிறது. ஆனால் ஒரு வேலையில் ஈடுபட்டு விட்டால் அது ஸம்பந்தப்பட்ட எண்ணங்களுடன் மட்டும் மனஸ் நின்றுவிடுகிறது. 'ஈச்வர த்யானம் செய்யலாம்' என்று கார்யமில்லாமல் உட்கார்கிறபோது, போகப்படாத எண்ணத்திலெல்லாம் மனஸ்

பாய்கிறது. இப்படிப் பலபேர் வந்து சொல்லிக்கொண்டு அழுகிறார்கள். அதுவே ஈச்வரனைப் பூஜை பண்ணுகிறேன் என்று ஆரம்பித்து, அதற்கான கார்யங்களைச் செய்துகொண்டு போகும்போது, அப்போம் பல எண்ணங்கள் உண்டானாலும், ஸம்பந்தமேயில்லாத எண்ணங்கள்கூடக் கொஞ்சம் வந்தாலும், வகை தொகையே இல்லாமல் சித்த வ்ருத்தி சிதறுவது என்று இல்லாமல், அதற்கு ஓரளவில் கட்டுப்பாடு ஏற்படுகிறது.

பூஜைதான் என்றில்லை, ஒருத்தன் சீட்டாடுகிறானென்றால் அப்போது அதைக் குறித்த எண்ணங்களில்தான் அவனுடைய மனஸ் கான்ஸென்ட்ரேட் ஆகிறது. ரொம்பவும் சபல சித்தமுள்ள ஒரு குழந்தை கிட்டிப்புள் விளையாடும்போது அதனுடைய சித்தம் அதிலேயேதான் இருக்கிறது. "பக்ஷணம் தருகிறேன் வா" என்று தாயார்க்காரி கூப்பிட்டால்கூட, "வேண்டாம் போ" என்று சொல்லிவிட்டு, நாக்கைத் துருத்திக்கொண்டு விளையாட்டிலேயே மும்முரமாகப் போகிறது.

சாஸ்த்ர கர்மா என்று மஹான்கள் வகுத்துக் கொடுத்திருப்பவை இரண்டு விதத்தில் நல்லது பண்ணுகின்றன. மற்ற காரியங்கள் அவசியமற்றதிலோ, தப்பானதிலோகூட மனஸை நிறுத்திகின்றனவென்றால், சாஸ்த்ர கர்மாக்கள் எண்ணங்களில் நல்லவையானவற்றிலேயே மனஸ் போகும் படிச் செய்கின்றன. இது ஒன்று, கெட்டவையான எல்லாவற்றிலிருந்தும் அவை மனஸைத் திருப்பி விடுகின்றன. இது இரண்டாவது நன்மை.

கார்யத்திலேயே கண் என்கிறபோது மனஸ் இரண்டாம் பக்ஷமாகிறது. ஆனாலும் மனஸுக்கும் இப்படிக் கார்யத்தினால் நன்மை உண்டாகிறது. நம்மளவிலே நமக்கு என்ன தெரிகிறதென்றால், ஒரு ஸத்கார்யத்திலே நாம் ஈடுபட்டிருக்கிறபோது அது எந்த அளவுக்கு நம்மை ஸச்சிந்தனையில் செலுத்தினாலும் ஸரி, அல்லது செலுத்தாமலே போனாலும் ஸரி, நிச்சயமாக நம்மைக் கெட்ட நினைப்பு நினைக்க வொட்டாமலும், அதைவிட ஸர்வ நிச்சயமாக, கெட்ட கார்யம் செய்ய வொட்டாமலும் தடுத்துப் பெரிய உபகாரம் பண்ணுகின்றன.

## அத்வைதம்

### கார்யமும் த்யானமும்

கோயில் ப்ராகாரத்தை தேய்த்து அலம்பி விடுகிற கார்யத்தைச் செய்வதாக வைத்துக்கொள்வோம். 'ஸாக்ஷாத் ஸர்வேச்வரன், ஸர்வ வியாபி, அவனுடைய ஸர்வ வ்யாபகத்தைப் புரிந்துகொள்ள முடியாத அசடுகளான நமக்காக ஒரு அர்ச்சையில் (விக்ரஹத்தில்) குடிகொண்டிருக்கிற இடம் இது. இதில் அழுக்கு சேராமல் காப்பாறறினால் நம் ஹ்ருதயத்திலும் அழுக்கு சேராது, இதில் ஊர்வாசிகள் எல்லாரும் சேர்ந்து செய்தால் ஸமூஹத்தில் த்வேஷம், பேதம் முதலான அழுக்குகள் சேராது' என்ற எண்ணத்தோடு நல்ல பக்தியோடு, நன்றியோடு தேய்த்து அலம்பினால் விசேஷம். ஆனால் தேய்த்து அலம்புகிற கார்யம் இருப்பதாலேயே இப்படிப்பட்ட ஸத்சிந்தனையில் அப்படியே அமிழ்ந்து போக முடியாது. சிந்தனையின் பூர்ணமான ஐகாக்ரியத்துக்கு (ஒருமுனைப்பாட்டுக்கு) கார்யம் தடைதான். இதை ஒத்துக்கொண்டுதான் ஆகவேண்டும். ஓரளவுக்கு, ஒரு பெரும் அளவுக்கு வேண்டுமானாலும், சிந்தனையை வகை தொகைப் படுத்தத்தான் கார்யம் ஸஹாயம் செய்யுமே தவிர பூர்ணமாக ஒரு எண்ணத்திலேயே ஒருமுகப்பட அது விடாது. சிந்தனையோடு கார்யம் என்று ஒன்று சேர்கிற போதேதான் இருமுகப்பட ஆரம்பித்து விட்டதே!

"ஸரி, அப்படியானால், மேலே சொன்னமாதிரி நன்றி, பக்திகளோடு ஸத்சிந்தனையை ஐகாக்ரியப் படுத்துவதற்காகக் கார்யம்தான் செய்தாகவேண்டுமா என்ன? இதுகளை ஒரு முகமாக்கிக்கொள்ள வசதியாக, வேலையில்லாமல் த்யானம் செய்ய உட்கார்கிறேனே!" என்றால்,

உட்கார்ந்து பார்.

விளக்குமாற்றைப் போட்டுவிட்டு உட்கார்ந்தாயா?

"உட்கார்ந்தேன்."

ஸரி, கொஞ்ச நாழி அப்படியே த்யானம் பண்ணு.

(அற்புத நாடகமாக இரு பாத்ரங்களைத் தாமே தாங்கி நடிக்கு ஸ்ரீசரணர்கள் சிறிதுபோது மௌனமாக இருக்கிறார்கள்.)

"இல்லை ஸ்வாமிகளே, இல்லை. நீங்கள் கலைக்கவும் இல்லை, ஒண்ணும் இல்லை. அதுவே கலைந்து போய்விட்டது. கலைந்து போய்விட்டது என்று சொல்வதுகூடப் பிசகு. முதலுக்கே எண்ணங்கள் ஒருமுகப்பட்டுச் சேரவில்லை. ஆகையினால் கலைவதற்கு என்ன இருக்கிறது? உட்கார்ந்தவுடன் ஏதோ ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம் ஸத்சிந்தனையில் மனஸ் சாந்தமாயிருந்தது. பகவானைக் கவிந்துகொண்டுநின்றது. உடனேயே, 'இதனால் பக்தி, த்யானம்தான் கர்மாவைவிட உசத்தி என்றாகிறது. இதுதான் ஸுபீரியல், கர்மா இன்ஃபீரியர்' என்ற எண்ணம் வந்தது. அப்புறம், ஒளிக்காமல் சொல்கிறேன். எண்ணம் மேலே மேலே சிதறிப்போய் 'அத்வைதம் சொல்ல வேண்டிய பெரியவா ஏன் எப்போ பார்த்தாலும் கர்மா - ன்னு கட்டிண்டு அழச் சொல்றார்?' என்கிறவரைக்கும் ஓட ஆரம்பித்துவிட்டது. ஆதி ஆசார்யாள், க்ருஷ்ண பரமாத்மா முதலானவர்களும் இப்படித்தான் சொன்னாரென்று எடுத்துக்காட்டுகிறாரே என்று நினைப்பு போயிற்று. லக்ஷ்யத்துக்கும் நடைமுறைக்கும் இத்தனை வேறுபாடாக இருக்குமா என்று தோன்றிற்று. அதன் தொடர்ச்சியாக, காந்தீயம்தான் லக்ஷ்யம் என்று சொல்லிக் கொண்டே நடைமுறையில் ஏகப்பட்ட ஃபாக்டரிகளைத் திறந்து வைத்துக்கொண்டும், ராணுவச் செலவை அதிகரித்துக்கொண்டும் போவதைப்பற்றித் 'தாட்' வந்தது. அப்புறம் ஏக பாலிடிக்ஸ், எலெக்க்ஷனில் யாருக்கு வோட் போடலாம் என்கிற வரைக்கும் எங்கெங்கேயோ நினைப்பு ஓடி, பிடிக்காத கட்சியின் லீடர் நாசமாகப் போகணுமென்று சபிக்கிற அளவுக்கு ஆகிவிட்டது. 'ஐயையோ, ப்ராகாரம் அலம்பிவிடணும் என்று வந்துவிட்டு, அது ப்ரயோஜனமில்லை என்றல்லவா த்யானம் என்று உட்கார்ந்தோம்? இப்போது நம் மனஸிலேயே இத்தனை அழுக்கு சேரவிட்டிருக்கிறோமே தேய்த்து அலம்புகிற கார்யமே இதற்கு எத்தனையோ ச்ரேஷ்டம். அது

ஸத்சிந்தனையில் மனஸை ஒருமுகப்படுத்தாவிட்டாலும், மனஸ் கன்னாபின்னா என்று ஓடாமல் நிச்சயமாகக் கட்டுப்படுத்துகிறதல்லவா? போதும். போதும் த்யானம். வேலைக்கு எழுந்திருக்கலாம். ஆனால் பெரியவாகிட்டே ஜம்பமாக த்யானம் செய்கிறேனென்று சொல்லி உட்கார்ந்துவிட்டு இப்போது எழுந்திருக்கிறதென்றாலும் என்னமோ போல இருக்கே!' என்று எப்போது நினைத்தேனோ அப்போதுதான் நீங்களும் குரல் கொடுத்தீர்கள் ஆலய சுத்தி செய்ய வந்த விசேஷத்தால் தான் மனஸில் வைத்துக்கொள்ளாமல் இதைச் சொல்கிறேன் போலிருக்கிறது!"

ப்ராகாரத்தை சுத்தம் செய்வதென்றால் தண்ணீர் இழுப்பது, அதற்கான பாத்ரங்கள் ஸம்பாதனம் செய்வது, கட்டைத் துடைப்பத்தை இறுக்கிக் கட்டி வைத்துக்கொள்வது, பிசுக்குப்பட்ட இடங்களில் ஒரு தரத்துக்கு இரண்டுதரமாக அழுத்தித் தேய்ப்பது, த்வாரம் அடைத்துக்கொண்டிருக்கிற இடத்தில் குத்திவிடுவது என்று எத்தனையோ கார்யம், உபகார்யம் வரத்தான் செய்யும். குத்திவிடும் குச்சியே சில ஸமயத்தில் அடைத்துக்கொண்டு விடுகிறாற்போல, இந்தக் கார்யங்களே ஸத்சிந்தனையைக் கொஞ்சம் அடைக்கத்தான் செய்யும், ஆனாலும் அதற்கான பக்வம் வரும் வரையில் - அந்தப் பக்வமும் ஸத்கர்மாக்களாலேயேதான் வரும், அப்படி வரும்வரையில் - த்யானம் என்று உட்காருவதைவிட ஸத்கர்மாவில் ஈடுபடுவதுதான் சிந்தனையை ஓரளவுக்காவது நல்லதில் செலுத்துவதற்கும், இதைவிட ரொம்பப் பெரிய அளவுக்குக் கெட்டதிலிருந்து திருப்பிவிடுவதற்கும் உபகாரம் செய்வது. 'பாஸிடிவ்' - ஆக அது செய்வதைவிட, 'நெகடிவ்' - ஆகச் செய்யும் உபகாரம் பெரிசு.

அதற்காக ஆரம்ப நிலையிலுங்கூட த்யானம் வேண்டவே வேண்டாம் என்று அர்த்தமில்லை. உத்தமமான விஷயத்திலே மனஸைக் கொஞ்சமாவது நிறுத்தப் பார்க்காமல் ஓயாமல் கார்யம் பண்ணிக்கொண்டே இருப்பதற்கு நாம் மனஸ் உள்ள மநுஷ்யனாகப் பிறந்தேயிருக்க வேண்டாம், மெஷினாக நம்மை ஏதாவது ஃபாக்டரியில் பண்ணிப் போட்டிருக்கலாம். என்றைக்கோ ஒரு நாள் த்யானத்தில் பக்வம் வரவேண்டுமென்றால் அதற்கு ஆரம்ப முயற்சி பண்ணாமல் எப்படி முடியும்? இனிமேலே பக்வம்

வரவேண்டுமென்பதாலேயே இப்போதுள்ள அபக்வ மனஸோடுதான் ஆரம்பித்தாக வேண்டுமென்றாகிறது.

சோனியாயிருக்கிறவன் யோகாஸனம் போட்டால் பலசாலியாகலாம். யோகாஸனம் போடுவதற்கே சோனிக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அதற்காக ப்ரயத்னத்தை விட்டுவிடுவதா? அஞ்சு நிமிஷமாவது பண்ண ஆரம்பித்து, அப்புறம் பத்து நிமிஷம், கால்மணி, அரைமணி என்று பண்ணிக்கொண்டு போய் எத்தனையோ சோனிகள் ஆரோக்யசாலிகளானதைப் பார்க்கிறோம். அப்படித்தான் இதுவும். ஆத்மா என்ற நினைப்பும் அத்வைதத்திலே ப்ரயாஸையும் உங்களுக்கெல்லாம் இன்றிலிருந்தே கொஞ்சம் கொஞ்சமாவது இருக்கவேண்டுமென்று சொல்லத்தான் உபந்யாஸம் செய்கிறேன். இது கொஞ்சம்

இருக்கும்போதே இதற்கான சித்த சுத்தியைப் பெற நிறைய ஸத்கர்மா செய்யச் சொல்கிறேன். முடிந்த முடிவிலே நினைப்பும், அதாவது த்யானமும் போய் ஞான அநுபவமே நிற்கும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**கர்மயோகமும் பற்றின்மையும்**

இம்மாதிரி சித்த சுத்திக்கு உதவி செய்வதால்தான் ஸ்வய லாபம், பற்று இல்லாமல் கார்யம் பண்ணுவதற்கு 'யோகம்' என்று பெரிய பெயர் கொடுத்து, 'கர்ம யோகம், என்பது. மனஸின் இஷ்டப்படி போய்ச் செய்கிறதெல்லாம் ஜன்ம ஜன்மாவாக நம்மைப் பழிவாங்குவதற்கென்று சேர்ந்து விடுகிறது. ஏதாவது கஷ்டம் ஏற்பட்டால், பிடிக்காதது ஒன்று நேரிட்டால் "கர்மா" என்று தலையில் அடித்துக்கொள்வது இதைக் குறிப்பிட்டுத்தான். மனஸை சுத்தப்படுத்தி ஆத்மாவிடம் கரைவதற்கு முதல்படி போட்டுக் கொடுப்பது எதுவென்றால் அதுவும் கர்மாதான். "Path of Karma" என்று இப்போது நிறையப் பேர் லெக்சர் செய்கிறதும்,

இங்க்லாண்டிலும் அமெரிக்காவிலுமுள்ள பப்ளிஷர்களை கொண்டு புஸ்தகம் போடவதம் இதைக்குறித்துத்தான். கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கம் என்ற மூன்று மோக்ஷ ஸாதனங்களில் ஒன்றாக (நேர் ஸாதனமா, உபஸாதனமா என்ற விவாதம் இங்கே வேண்டாம்) இருப்பது இந்த Path of Action இது நம் இஷ்டப்படி, மனம் போனபடி கார்யம் செய்கிறதல்ல. இஷ்டமோ, இஷ்டமில்லையோ, சாஸ்த்ரம் சொல்லிவிட்டது என்பதால் செய்தேயாக வேண்டிய கர்மாக்களை இங்கே செய்கிறோம். மனஸின் பற்று, பாசங்களுக்கு இங்கே இடமில்லை. இது ஸொந்த லாபம், ஜயம் கிடைக்குமா என்று பலனைப் பார்த்துச் செய்கிற கார்யமில்லை. "Disinterested Action" என்கிறார்கள். "Uninterested" இல்லை-அப்படிச்சொன்னால் அக்கறையில்லாமல் கார்யம் பண்ணுவது என்று அர்த்தமாகிவிடும். "Disinterested" என்றால் "ஸ்வயஉணர்ச்சிகளாலே, தன்னுடைய ஸொந்த விருப்பு வெறுப்புக்களாலே பாதிக்கப்படாமல்" என்று அர்த்தம். "தன்னுடைய ஸொந்த லாபா லாபங்களைக் கருதாமல்" என்று அர்த்தம். "நிஷ்காம்யம்" என்பது இதைத்தான்.

இதிலேயும் ஒரு விருப்பு இருக்கத்தான் செய்கிறது!"ஆத்ம காமம்" என்று உபநிஷத்தே சொல்லுகிறபடி தன் நிஜ ஸ்வரூபமான ஆத்மாவை அடைய வேண்டுமென்ற விருப்பம். உடனேயே அந்த நிலையை "அகாமம்" என்றும் உபநிபஷத் சொல்கிறது. அதாவது ஆத்மாவில் ஐக்யப்பட வேண்டுமென்ற ஆசை ஆசையேயில்லாத அகாம நிலை என்கிறது. மனஸ் தன் லாபத்துக்காக ஆசைப்படுவதுதான் தப்பு. ஏனென்றால் இது பெறக்கூடிய லாபமெல்லாம் இந்த்ரியச் சிற்றின்பங்கள்தான். இங்கேயோ ஆத்மாவாவதற்கு அது ஆசைப்படும்போது தன் லாபத்துக்காக இல்லாமல், தான் அப்படியே நஷ்டப்பட்டுப் போவதற்கு ஆசைப்படுகிறது, தான் கர்ப்பூரம் எரிந்து போகிறாற்ப்போலச் சுவடேயில்லாமல் அழிந்துபோய், ஆத்மாவை மாத்திரம் ப்ரகாசிக்க விடவேண்டுமென்று விரும்புகிறது. இந்த விருப்பம் தப்பில்லைதான். இது இருந்தால்தான் நாம் ஸம்ஸார வாழ்க்கையை விட்டு ஸத்ய தத்வத்தின் பக்கமே திரும்புவோம்.

ஸொந்த லாபத்தைக் கருதாத இதில்தான் மஹா பெரிய லாபமிருக்கிறது. "யம் லப்த்வா ச(அ)பரம் லாபம் மந்யதே ந(அ)திகம் தத:", அதாவது, "எதை அடைந்தபின் அதைவிடப் பெரிய லாபமாக வேறெதையும் மதிக்க முடியாததோ அப்படிப்பட்ட லாபம்" என்று பகவான் சொல்கிற ஆத்ம லாபந்தான். முன்னே சொன்னாற்போல் மனஸை அறவே நஷ்டப்படுத்திக்கொண்டு பெறுகிற லாபமாக இது இருப்பதால் இது போற்றுதற்குரியதே. மற்ற லாப எண்ணத்தோடு இதைச் சேர்த்துவிடக் கூடாது.

மனஸுக்கு இஷ்டமாக, ஸந்தோஷமாக இருக்கிறது என்பதற்காக இல்லாமல், மனஸை சுத்திசெய்து ஆத்மாவில் சேர்ப்பிப்பதற்கு உதவுகிறது என்றே சாஸ்த்ரீய விதிமுறைகளின்படி கார்யங்களைச் செய்வதுதான் கர்ம மார்க்கம், அல்லது கர்ம யோகம் என்று சொல்லப்படுவது. 'கர்மா' என்று தலையில் அடித்துக்கொள்கிறதன் 'எஃபெக்ட்'டைத் தணித்து அது போடுகிற பந்தத்தைத் தளர்த்திவிடுவதே கர்மயோகம் சொல்லும் ஸ்வதர்ம கர்மாநுஷ்டானம், அதாவது அவனவனும் தனக்கு சாஸ்த்ரம் விதித்திருக்கிற கடமைகளைக் கொஞ்சங்கூட வழுவாமல் பின்பற்றுவது.

கர்மா செய்வது எப்படி மனஸையும் நல்லதாகவோ கெட்டதாகவோ பாதிக்கிறது என்ற பார்த்தோம். கர்ம பந்தம் என்று சொல்வதிலும் இப்படியே நம்முடைய மனஸின் ஜன்மாந்தர எண்ணங்கள், போக்குகள், அநுபவ நெடிகள் (இவற்றை 'வாஸனை' என்றே சொல்லியிருக்கும்) எல்லாம் கலந்துதானிருக்கின்றன. நாம் செய்யும் நல்ல, கெட்ட கார்யங்களுக்கான பலன்கள் ஸ்டோராகின்றன. இப்படிச் சேர்ந்த கர்மாவை அநுபவிக்வே ஜன்மாக்கள் ஏற்படுகின்றன என்று சொல்லும்போது, இப்படிச் சேரும் கர்மா என்பது கையை, காலை ஆட்டிச்செய்வது மட்டுமில்லை. எந்தெந்த மனோபாவத்துடன் இவற்றைச் செய்தோமோ அதுவும்தான் ஸ்டோராகிறது. நம்முடைய நல்ல, கெட்ட குணங்கள், எண்ணங்கள் ஒவ்வொன்றுக்குமான பலனை நாம் ஜன்மாக்கள் எடுத்து அநுபவிக்கத்தான் வேண்டும். இந்த ஜன்மாவில் சில வஸ்துக்களில் வைக்கும் தீவிரமான ஆசை, வேறு சிலவற்றில் வைக்கும் தீவிரமான த்வேஷம் எல்லாமும்

ஸ்டோராகின்றன. அடுத்த ஜன்மாவில் இவை மறுபடி நம்மைப் பிடித்துக்கொள்கின்றன. வாஸனை, பூர்வ வாஸனை ஜன்மாந்தர வாஸனை என்றெல்லாம் சொல்வது இதுதான். பெருங்காயம், பூண்டு முதலானவற்றின் நெடி லேசில் போகாதது போல இவை உடம்பு போனபிற்பாடும் ஸூக்ஷ்ம சரீரத்தைப் பிடித்துக்கொண்டு, அப்புறம் மறுபடி ஸ்தூலமாகப் பிறக்கும்போது மனஸூக்குள்ளிருந்து தன் நெடியை வீசவிடுவதால் வாஸனை என்று பெயர். விஷய வாஸனை என்றும் சொல்வார்கள். இந்த்ரிய நுகர்ச்சிகளுக்கு விஷயமாக இருப்பவற்றுக்குத்தான் குறிப்பாக 'விஷயம்' என்று பெயர். புலன்களின் பல தினுஸான இன்பங்களைச் சுற்றியேதான் மனஸ் படர்ந்து, அதற்கான காரியங்களில் ஜீவனை ஏவுவதால் விஷய வாஸனைதான் கர்மா மூட்டையைப் பெரிசாக்குவது. ஏதோ ஒரு புலனின் இன்பத்தை அடையவேண்டும் என்ற பலனை எதிர் பார்க்காமல், நிஷ்காம்ய கர்மம் செய்யும்போது, அதாவது கர்மத்தையே யோகமாகச் செய்யும்போது, மூட்டை குறைகிறது. மூட்டை என்பதற்கு பதில் கட்டு என்று சொன்னால், அதன் இறுக்கம் தளர்கிறது. நிஜமான கர்ம யோகத்தில் தன்னுடைய புலனின்பப் பலனை மட்டுமின்றி, உத்தம நோக்கத்தில் உதித்த லோக க்ஷேமம் என்ற பலனைக்கூடக் கருதக்கூடாது.

இதைக் கொஞ்சம் புரியவைக்கப் பார்க்கிறேன். ஆத்மாவைக் கடைத்தேற்றிக் கொள்ளும்போதே லோக க்ஷேமத்தையும் உத்தேசித்ததாகத்தான் சாஸ்த்ரங்கள் தார்மிக கர்மாக்களை வகுத்துக் கொடுத்திருக்கின்றன. இதைப்பற்றி ஸந்தேஹமேயில்லை. தனக்காகப் பண்ணுவது போய் உலகுக்காகப் பண்ணுவது என்று இவன் ஆரம்பித்தால்தான் உலகங்கள், உயிர்கள் எல்லாவற்றுக்கும் மூலமான, தாயும் தந்தையுமாக உள்ள ஈச்வரனின் அருள் இவனுக்குக் கிட்டி விடுபடும் வழிக்கு இவன் போகமுடியும். ஆனாலும் ஒருவன் இப்படி ஸ்வதர்மானுஷ்டானம் பண்ணும் போது, 'நான் இப்படிப் பண்ணினாலும், எந்த நன்மையான பலனை உத்தேசித்து அந்தக் கர்மாவை சாஸ்த்ரம் கொடுத்திருக்கிறதோ அது ஈடேறாமலும் போகலாம். உத்தம லக்ஷ்யங்களுக்காகப் பல பேர் உயிர்தியாகம் பண்ணியுங்கூட அவை நிறைவேறாமல் போவதையும் நாம் அவவ்ப்போது பார்க்கிறோம். அதனால் சாஸ்த்ரம் லோகக்ஷேம பலனை உத்தேசித்துக் கர்மாவைச் சொன்னாலும் நாம் அந்த

உத்தேசத்தையே எப்போது பார்த்தாலும் நினைத்துக் கணக்குப் போடாமல் செய்தால்தான், இம்மாதிரியான ஸந்தர்ப்பங்களில், "நல்லதைச் செய்து என்ன கண்டோம்? இது கலி. கெட்டதற்கே காலம். நல்லது இந்த லோகத்தில் எடுபடப் போவதில்லை. நாம் பாட்டுச் சும்மாக் கிடப்போம்" என்கிற ஆயாஸம், மனக்கசப்பு, தோல்வி மனப்பான்மை முதலானவை ஏற்படாமலிருக்கும். ஆகையினால் இந்தப் பலனைக்கூட எதிர்ப்பார்க்காமல் வெற்றியோ, தோல்வியோ நாம் பாட்டுக்கு, "சாஸ்த்ரம் சொல்லிற்றா? செய்வோம்" என்று, அதன்படி செய்துகொண்டே போக வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### ஸத்கர்மா பலிக்காததேன்?

"அப்படியானால் சாஸ்த்ரம் பொய்யா? லோகக்ஷேமத்துக்காக என்று அது விதித்த ஸ்வதர்ம கர்மாக்களால் எப்படி அந்த பயன் ஏற்படாமல் போகலாம்?" என்று கேட்கலாம்.

அப்படி அர்த்தமில்லை. தனி மநுஷ்யன் பண்ணுகிற தப்புக்களுக்கு அவன் அநுபவித்துக் கஷ்டப்படத்தான் வேண்டும் என்று இருக்கிறமாதிரியே ஸமூஹம் பூராவும் தப்பு வழியில் போகிறபோது அதுவும் க்ஷேமத்தை அடையாமல் கஷ்டத்தைத்தான் அடையவேண்டுமென்று ஒவ்வொரு 'பீரியட்'களில் ஏற்படுவதாக வைத்துக்கொள்ளலாம். அம்மாதிரி ஸமயங்களில் நாம் அதன் நல்லதற்காகப் பண்ணுவது பலிக்காத மாதிரி ஆகிறது. 'மாதிரி'தான்!பலிக்கவேயில்லை என்று சொல்லமுடியாது. க்ஷேமாபிவ்ருத்தி நம் கண்ணுக்கு முன்னே தெரியாதபோதகூட ஜனஸமூஹத்தின் கூட்டுப் பாபம் நாம் செய்கிற ஸத்கர்மாக்களால் குறையத்தான் செய்யும். ஸொந்த வாழ்க்கை போலவே ஜனஸமூஹத்தின் வாழ்க்கையிலும், ஏற்கெனவே பண்ணினதற்கு அநுபவித்தாகணும், அதைப் புதிசாகப் பண்ணுவதால் ஒன்று குறைத்துக்கொள்ளலாம்,

அல்லது பெருக்கிக்கொள்ளலாம் என்று இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டால் 'சாஸ்த்ரம் பொய்யா? ஏன் பலன் கிடைக்கவில்லை?' என்ற கேள்வி வராது.

நாம் செய்த பழைய பாபம் என்ன, ஜன ஸமூஹம் முழுதும் சேர்ந்து பண்ணின பூர்வ பாபம் என்ன, தற்போது நாம் சாஸ்த்ரப்படி பண்ணும் ஸத்கார்யங்களுக்குப் புண்ய 'வால்யூ' என்ன, இது பழைய மூட்டையின் பாரத்தை எவ்வளவு குறைக்கிறது என்பதெல்லாம் எதுவும் தெரியாத படியே ஈச்வரன் நம்மை வைத்திருக்கிறான். ஆனபடியால், பலன் என்று எதையோ எதிர்ப்பார்த்துக்கொண்டு, அது கிடைக்கவில்லையே என்பதில் ஆதங்கப்படாமல் நாம் பாட்டுக்கு, "இந்தக் கணக்கெல்லாம் ரஹஸ்யமாகப் பார்த்து எவன் தீர்த்துக் கொண்டிருக்கிறானோ, அவன் தீர்க்கிறபோது தீர்க்கட்டும். நாம் ஒன்றும் கேள்விகேட்காமல், ஒன்றையும் எதிர்ப் பார்க்காமல் நமக்கான கார்யத்தைச் செய்துகொண்டு போவோம்" என்று செய்து கொண்டேயிருக்கவேண்டும். இப்படிப் பலனை முக்யமாக நினைத்துச் செய்யாமலிருக்கு ம்போதுதான் முழுக்க சாஸ்த்ரம் சொல்லும் தர்ம வழியிலேயே போகமுடியும். பலனைப் பார்க்க ஆரம்பித்துவிட்டோமானால், 'இப்படி தர்மமாகப் போய் பலன் அடையமுடியவில்லையா? ஸரீ, அப்படியானால் வேறு குறுக்கு வழி, தப்புவழி, அதர்ம வழியிலே போய்தான் அடையப் பார்ப்போமே' என்று தோன்றும். தர்ம வழியிலேயே செல்வதற்கு நிஷ்காம்ய கர்மம் எனும் disinterested action தான் உதவும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பய வாய்ப்புக் குறைதல்**

கட்டவிழ்த்துவிடுவதில் இதுவே ஆரம்பம். (சற்றுமுன்) சொன்னமாதிரி, இது மனஸை ஓரளவுக்கு நல்லதில் போகப் பண்ணி, பெரிய அளவுக்குக் கெட்டதில் போகாமல்

தடுக்கிறது. இதிலே நன்றாகப் பழகிப் பழகிச் சித்த சுத்தி ஏற்பட, ஏற்பட கார்யமில்லாமல் தனியாக மனஸை மட்டும் வைத்துக்கொண்டு த்யானம் என்று செய்ய ஆரம்பிக்கும்போது அது சிதறி ஓடாமல் கட்டுப்பட்டு நிற்க ஆரம்பிக்கிறது. இப்படிக் கட்டுப்பட்டு அது ஈச்வரனிடம் எவ்வளவுக்கெவ்வளவு நிற்கிறதோ அவவ்ளவுக்கவ்வளவு ஸம்ஸாரக் கட்டு அவிழ ஆரம்பிக்கிறது. அப்புறம்தான் மனஸ் என்பதாக ஆத்மாவைக் குறுக்கிக் கட்டுப்படுத்தும் கட்டே ஈச்வரானுக்ரஹத்தினால் அவிழ்ந்து, கர்மா செய்வதற்கு ஒரு தனி ஜீவன் என்பதே இல்லாமலாகி, எனவே ஸம்ஸாரக் கட்டை அடியோடு அறுத்துக்கொண்டு அத்விதீயமான ஆத்மாவாக ஜீவன் தன்னை அறிந்து அதிலேயே நிலைப்பதான முக்தி கிட்டுகிறது.

பயத்துக்குக் காரணமான த்வைதம் போவது அப்போதுதான். கர்மா செய்யும்போதும், த்யானம் செய்யும்போதும் த்வைதம் தவிர்க்கவே முடியாதது. ஆனாலும் மனம் போனபடி நினைப்பதிலும், மனம் போனபடி கார்யம் செய்வதிலும் த்வைதம் நம்மை பயமுறுத்திய மாதிரி, ஈச்வரனையோ பரமாத்ம தத்வத்தையோ நினைப்பதான த்யானத்திலும், தர்மமான கர்ம மார்க்கத்திலும் பயமுறுத்துவதில்லை. நாம் ஈச்வரனை நினைக்கிறோம். அல்லது ஈச்வரன் என்று ஒரு ரூபமாக இல்லாமல் பரமாத்ம தத்வம் என்று அவனுடைய ஸாரத்தை நினைக்கிறோமென்றால் அப்போது அந்த ஈச்வரன் அல்லது தத்வம் நினைப்பவனுக்கு வேறான த்விதீய வஸ்துவாகத்தான் இருக்கிறான், இருக்கிறது. ஆனாலும் மற்ற நினைப்புகளுக்கு லக்ஷ்யமாகும் இந்த்ரிய விஷயங்களைப் போலவோ, உலக வஸ்துக்களைப் போலவோ ஈச்வரன் அல்லது ஈச்வர தத்வம் நம்மைக் குழியில் தள்ளிவிடக்கூடுமென்ற பயத்துக்கு இடமேயில்லை.

ஆனாலும் மனஸ் இந்த உத்தம நினைப்பிலே ஒருமுகமாக ஆகி, அற்றே போய்விடுகிறவரை வேறே ஒருவிதத்தில் ஓரளவுக்கு பயம் இருக்கும்தான். ஈச்வரனுமே வெளியிலே வேறு வஸ்துவாயிருக்கிறவரையில், 'என்ன மாயம் செய்வனோ? மஹா பெரிய பக்தர்களுக்கும் பிடிபடாமல் அவ்வப்போது ஓடிப்போய் மறைந்துகொண்டு கதறக்கதற விட்டு வேடிக்கை பார்த்தவனாயிற்றே!ஏதோ இப்போது கொஞ்சம் மனஸுக்குப் பிடிபட்ட மாதிரி இருந்தாலும்

எப்போது நழுவி ஓடுவானோ? இந்தப் பாழும் மனஸூம் என்னென்ன குப்பைத் தொட்டிகளுக்கு ஓடுமா?' என்கிற பயம் இருக்கத்தான் செய்யும். எந்தவிதமான பயமானாலும் பயம் பயம்தானே? ஆதலினால், மனஸ் உள்ள த்வைத நிலையில் எத்தனை உச்சிக்குப் போனாலும் அது பரிபூர்ண அபய நிலையாய் இருக்க முடியாது. ஆனாலும் மனஸை இஷ்டப்படி விடும்போது அது ரொம்பவும் பயத்துக்கு ஹேதுவாக இருக்கிறாற்போல இல்லாமல், பக்தி மார்க்கத்தில் போகும்போது பயம் என்பதற்கு ரொம்பவும் குறைவாகவே இடம் ஏற்படுகிறது.

தர்ம கர்மாவும் இப்படித்தான். கட்டை அவிழ்க்க வேண்டிய அதுவே கட்டைப் போட்டுவிடப் போகிறதே என்றுகூடச் சில ஸமயங்களில் பயப்படவேண்டியதாகிறது. கர்மா என்று வரும்போது, அது எத்தனை ஸத்கர்மாவாக இருந்தாலுங்கூட, எத்தனை வெளி வஸ்துக்களை, மநுஷ்யர்களை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது? அவற்றை, அவர்களை deal பண்ணுவதில் கோபம், எரிச்சல், ஏமாற்றம் (ஏமாறுவது, ஏமாற்றுவது இரண்டும்தான்) - எத்தனையோ ஏற்பட இடமிருக்கிறது. அப்போது, கட்டு தளருமா என்று இருக்கிறது. ஆனாலும் பலனை எதிர்பார்ப்பதில்லை என்பதில் தீவ்ரமாயிருந்துவிட்டால், "நாம் ஸின்ஸியராக நம்மால் முடிந்த மட்டும் ப்ரயாஸை பண்ணுகிறோம். அப்படியும் இந்த வெளி வஸ்தக்கள் ஸரியாயில்லையா? ஏதோ சொத்தை சொள்ளைதான் கிடைக்கிறதா? மநுஷ்யர்கள் ஸாதகமாக இல்லாமல் குந்தகம் பண்ணுகிறார்களா? எல்லாம் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும். இருப்பதைக் கொண்டு நம்மால் என்ன பண்ணமுடியுமோ பண்ணலாம்" என்பதாகக் கோபம் முதலான தப்புணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காமலிருக்கலாம்.

எத்தனை சொன்னாலும், த்வைதத்தைச் சேர்ந்ததேயான கர்மாவிலும் பக்தியிலும் பரிபூர்ண அபயநிலை கைகூடாது. ஆனாலும் க்ஷணத்துக்கு க்ஷணம் பயத்துக்கு இடம் கொடுப்பதாக இருக்கிற ஸம்ஸாரத்திலிருந்து அபய பதமான அத்வைதத்துக்குப் போகவேண்டுமென்றால் அதற்குக் கர்மாவும் பக்தியும்தான் ஆரம்ப ஸாதனங்கள். "எப்போதும் பயம்" என்கிற நம்முடைய நிகழ்கால நிலை, இவற்றிலே "எப்போதாவது பயம்" என்று ஆகிறது. அப்புறம் "ஒரு

போதும் பயமில்லை" என்கிற நிலை.

அந்த நிலை வர ஆரம்பத்தில் உதவி செய்வது ஸ்வதர்ம கர்மாநுஷ்டானந்தான். அதனால்தான், கீதையிலே பகவான், "ஸ்வதர்மத்தைப் பண்ணி அதிலேயே செத்தாலும் அதுவே ச்ரேயஸ். (ச்ரேயஸ், ப்ரேயஸ் என்று இரண்டு சொன்னேனே, நினைவிருக்கிறதோல்லியோ?) பிறன் தர்மத்தை எடுத்துக் கொண்டாயோ அது பயத்தைத்தான் கொண்டுவிடும்" என்பதாக "பயம்" என்ற வார்த்தையைப் போட்டார். பயம் என்றால் ஸம்ஸார பயம்தான்.

ஸ்வதர்மே நிதநம் ச்ரேய : பரதர்மோ பயாவஹ

என்றார். 'நிதனம்' என்றால் சாவு. தன் தர்மத்தையே பண்ணிக் கொண்டு செத்தாலும் அதுவே ச்ரேயஸ்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**உலக நாடகமும் ப்ரளயங்களும்**

எல்லாரும் மோக்ஷத்துக்கு முயற்சி பண்ணி, ஸம்ஸாரத்தைக் கழித்துக்கொண்டு லோக வாழ்க்கை என்ற ஒன்றே இல்லாமல் போவதென்பது ஸாத்யமில்லை. பலவித எண்ணமுள்ள ஜனங்களைப் படைத்து ஆடவிட்டு, ஓடவிட்டு, பரஸ்பரம் மோதிக்கொள்ளவிட்டு இதிலே விசித்ர விசித்ரமாகப் பல ரஸங்கள் ஏற்படும்படியாக லோக நாடகத்தை ஈச்வரன் நடத்திவருகிறான். இப்படி நாடகம் பார்த்து ரஸிப்பதற்குத்தான் அவன் லோக லீலை செய்வதே. எல்லாரும் ஞானிகளாகி பரம பக்தர்களாகி அவன் விட்ட வழி என்று இருந்தால், ப்ரேம ரஸம் என்ற ஒன்றையே பெருக்கிக் கொண்டிருந்தால், அல்லது அதுவும் இல்லாத பரம சாந்தியில் முழுகிவிட்டால் ஈச்வரனுக்கு எப்படி ட்ராமாவின் ரஸபேதங்கள் கிடைக்கும்?

அதே ஸமயம் அவன் கருணை வள்ளலும்தான். அதனால் வேடிக்கையெல்லாம் பார்த்தாலும் அநேக யுகங்கள், கல்ப காலம் ஆகிறபோது, "ஐயோ பாவம் இப்படி ஆட்டமாக

ஆடிவிட்டதுகளே!" என்று பரம கருணையோது தானே அவர்களை எல்லாம் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டு விடுகிறான், அவர்களாக ஸாதனை பண்ணி ஒடுங்குவதில்லை, ஈச்வரனே ஒடுக்கிக் கொண்டுவிடுகிறான்.

உலகமேயில்லாத மஹா ப்ரளயம் என்பது அதுதான். நித்ய ப்ரளயம் என்பதாக தினம் தூக்கத்தில் ஈச்வரனிடம் லயித்திருப்பது, செத்தபின் ஸ்வர்க்க - நரக - புனர் ஜன்மாதிகளுக்கு முன் கொஞ்சகாலம் அவனிடம் லயித்திருப்பது, சுமார் எழுபது சதுர்யுக காலம் கொண்ட ஒவ்வொரு மன்வந்தரத்துக்குப் பிறகும் சிறிது காலம் ஸ்ருஷ்டி முழுக்க ஈச்வரனிடம் லயித்திருப்பதான ஒரு "ப்ரளயம்", இப்படிப் பதிநாலு மன்வந்தரங்கள் அடங்கிய ப்ரம்மாவின் ஒரு பகல் வேளையான ஆயிரம் சதுர்யுகங்கள் கொண்ட அவருடைய ராத்ரி வேளை பூராவும் ஸ்ருஷ்டித் தொழிலில்லாததால் ஜீவர்களெல்லாம் ஈச்வரனிடம் லயித்திருப்பதான "நைமித்திக ப்ரளயம்", (மேலே சொன்னதுபோல) இரண்டாயிரம் யுகங்களை ஒரு தினமாகக் கொண்ட பிரம்மா இம்மாதிரி நூறு வயஸு வாழ்ந்துவிட்டு பரமாத்மாவோடு ஐக்யமான பின், இதேமாதிரி நூறு ப்ரம்ம வருஷத்துக்குப்புறம் அடுத்த ப்ரம்மாவைக்

கொண்டு அடுத்த ஸ்ருஷ்டியைப் பரமாத்மா ஆரம்பிக்கு ம்வரையில் ஒரு ப்ரளயம் ("ப்ராக்ருதிகப்ரளயம்"),முடிவே இல்லாத "ஆத்யந்திக ப்ரளயம்" என்று பலவிதமான ப்ரளயங்களை புராணங்கள் சொல்கின்றன.

இப்படி எத்தனை யுகயுகம் அவனிடம் லயித்திருந்தாலும், அதுவும் அவனோடேயே நிரந்தரமாக, சாச்வதமாகச் சேர்ந்து அவனை அறிந்து ஐக்யப்பட்ட அத்வைத மோக்ஷமில்லை. ப்ரளயத்தில் லயித்த ஜீவர்கள் அத்தனை யுகயுகங்களுக்கு அப்புறம் மறுபடி ஸ்ருஷ்டி ஏற்படும்போது லயம் நீங்கி அவனுக்கு வெளியிலே வந்து மறுபடி பிறக்கத்தான் வேண்டும். அவனுக்கு ட்ராமா பார்த்துத்தான் ஆகணும். லயத்தில் அவனை அறியும் அநுபவமும் இல்லை.

ஐக்யம் என்று அப்படியே அவனேயான அறிவாகி ஏகமாக ஆகிவிடுவதுதான் சாச்வத விடுதலை. லயம் என்பது ஐக்யமில்லை. ஒரு வஸ்து இன்னொன்றிலே ஒன்றாக இழைந்திருக்கும் நிலைதான் லயமே தவிர, அதுவாகவே

ஆகிவிடுவதல்ல. அதனால்தான் ப்ரளயத்தில் லயித்தவர்களை அவன் மறுபடி ஸம்ஸாரத்தில் அவிழ்த்துவிடமுடிகிறது. நித்யப்ரளயமான தூக்கமே எடுத்துக்காட்டு.

சாஸ்த்ரங்கள், இம்மாதிரி ஜீவஸமூஹம் முழுதும் தன் முயற்சியும் ஸாதனையும் இல்லாமல் அவனுடைய க்ருபையாலேயே அவனிடம் லயித்திருப்பதையும் மறுபடி அடுத்த ஸ்ருஷ்டியில் உத்பவிப்பதையும்தான் சொல்கின்றனவே ஒழிய, லோகம் பூராவும் ஞானம் பெற்று அறிவான, ஆனந்தமான மோக்ஷம் அடைவதாகச் சொல்லவில்லை.

அதாவது, 'லோகம் என்று ஒன்று இருந்தால் அதிலே மோக்ஷாதிகாரிகளாக ஆகாத பலபேர் இருந்துகொண்டுதானிருப்பார்கள். விசேஷமாக பக்தி, ஞானங்கள் இல்லாதவர்களாகவே பலர் இருந்துகொண்டிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களுக்கும் தன்னிடம் ஒடுங்கியிருப்பதான சாந்த நிலையைத் தரவேண்டுமென்று ஈச்வரனின் நினைக்கும்போது லோகமே இல்லாமல் பண்ணித்தான் ப்ரளயத்தில் எல்லாவற்றையும் தனக்குள் இழுத்துக்கொள்வான், லோகம் என்று ஒன்று இருந்து அதில் பக்தி, ரஸம், ஞானத்தின் சாந்தி என்ற இரண்டு மட்டுமே இருப்பதாக விடமாட்டான்' என்றே சாஸ்த்ரங்களிலிருந்து ஏற்படுகின்றன.

ஞானத்தின் உண்மையான சாந்திநிலைக்கு லோகம் இருந்தும் ஒன்றுதான், இல்லாவிட்டாலும் ஒன்றுதான். ப்ரேம ரஸத்துக்கும், அது ஒன்றே பெருகுவதற்கென்று வைகுண்ட, கைலாஸாதி லோகங்கள் இருக்கின்றன. ஆகையால் நவரஸ நாடகமாகத்தான் இந்த ஜீவலோகம் இருக்கவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**உலக வாழ்வின் உயர் நலன்களுக்காக**

மஹா ப்ரளயம் என்று அவனே எப்போது எல்லாவற்றையும் உள்ளே இழுத்துக் கொள்கிறானோ அப்போதுதான் நாடகம் முடியுமே தவிர, நாடக பாத்ரமாயுள்ள இந்த கோடி கோடி ஜனங்களும் தாங்களாக ஸாதனை பண்ணி முக்தி மார்க்கத்தில் முழுக்கப்போவது என்பது நடக்காது. ஓரளவு பக்தி மார்க்கத்தில் போவார்கள், அதையும் விடக்குறைவாக அத்வைதமான முக்தியைத் தரும் ஞானத்தில் போவார்கள்.

ஆனாலும் இப்படி ஏதோ ஓரளவுக்காவது அவர்களைப் போகப்பண்ணத்தான் வேண்டும், அதுவே ஸம்ஸார தாபத்துக்கு எவ்வளவோ ஆறுதல். "ஓரளவு" என்பதுதான் அளவு கொஞ்சம் கொஞ்சமாய் ஜாஸ்தியாகி எத்தனையோ ஜன்மாவுக்கு அப்புறமாவது பூர்ண ஈடுபாடாக ஆக வேண்டும்.

அப்படி அவர்களைப் போகப் பண்ணுவதற்கு, முக்திக்கு முயல்பவர்கள் சித்த சுத்திக்காகச் செய்ய வேண்டிய தங்களுடைய கர்மாக்களை 'யுடிலைஸ்' செய்துகொள்ளலாம். கார்யமில்லாத பக்தி முதலில் ஸாத்யமில்லை, கார்யத்தோடு சேர்ந்த பக்திதான் ஸாத்யம் என்று பார்த்தோமல்லவா? அம்மாதிரி இவர்களை ஒரு ஸத்ஸங்கமாகச் சேர்ப்பது, கூட்டமாக ஆலய வழிபாடு பண்ணவைப்பது, பஜனை செய்ய வைப்பது, இவர்களுக்கு ஸதுபதேசங்களை எடுத்துச் சொல்வது - என்று அநேக கார்யங்களைச் செய்ய இவர்களைவிட ஒருபடி மேலே போனவர்கள் தேவைப்படுகிறார்கள். ஸம்ஸார வாழ்க்கை நன்றாக அமைவதற்காகவே ஈச்வரனை பக்தி செய்வது என்ற அளவோட நின்றுவிடுகிற இவர்களைவிட ஸம்ஸாரத்திலிருந்து விடுபட விரும்பி, அதற்கான சித்தசுத்தி பெறவே கர்மாவில் ஈடுபடி வேண்டியிருப்பவர்கள் ஒருபடி மேலே போனவர்கள் அல்லவா? அதனால் அவர்கள் இவர்களை பக்தியில் ஈடுபடுத்துவதற்காக மேலே சொன்ன கார்யங்களைப் பண்ணலாம். இது அவர்களுடைய ஸ்வயசித்தசுத்திக்கு உதவுவதோடு எல்லாருக்கும் பக்தியைப் பரப்புவதான லோகோபகாரத்தையும் பண்ணுவதாகிறது.

## உலக வாழ்விலேயே ஒழுங்கு ஏற்பட

நடந்து கொண்டேயிருக்கவேண்டிய லோக நாடகத்தில்

எல்லாரும் பழுத்த பக்திமான்களாவார்களா என்றால் அப்படி ஆகாது. அப்படிப்பழுத்து பக்தியிலிருந்து முக்திக்குப் போக விரும்புபவர்களாக அபூர்வமாகச் சிலர்தான் இருப்பார்கள். மீதி பேர் இன்னம் எவ்வளவோ ஆட்டம் ஆடித்தான் கொஞ்சம் கொஞ்சமாக மேலே போவதாக இருக்கும். ஆனதால் பக்தியைப் பரப்புவதோடு, இந்த லோக வாழ்க்கை நடக்கும்போதே அதிலே ஒழுங்கு இருக்கும்படியாகவும், அது ஒரே அதர்ம ப்ரவாஹத்தில் அடித்துக் கொண்டுபோகாமல் தர்மத்தின் வழியில் போய் இந்த ஒழுங்கைப் பெறும்படியாகவும், அப்புறம் லோகத்திலிருந்து லோகத்தின் காரண வஸ்துவில் சித்தத்தைத் திருப்பும்படியாகவும் செய்யவேண்டும்.

நடைமுறையில் உள்ள லோக வாழ்க்கையையே தாறுமாறாகப் போகாமல் ஸத்யம், நேர்மை, அன்பு, தானம், தொண்டு முதலியவற்றால் சீர் பண்ணித் தரவேண்டியதுதான் முதல் தேவை. இப்படிச் செய்வதுதான் தர்மம் என்பது. தர்மம் என்பதற்கு எத்தனையோ அர்த்தமிருந்தாலும், மதம் என்ற அர்த்தத்தைக்கூட அது கொடுக்குமென்றாலும், பொதுவாக தர்மமென்றால் லோக வாழ்க்கையை ஸர்வ ஜனங்களின் பரஸ்பர ஸஹாயமும் மன இசைவும் கொண்ட ஒன்றாக ஆக்கி, இந்த வாழ்க்கையையே அன்பாகவும் ஸத்ய சீலமுள்ளதாகவும் ஆத்யாத்மிகத்தின் பக்கம் திருப்பிவிடுவதாகவும் ஒழுங்கு நெறிப்படுத்திக் கொடுப்பதுதான். கர்மாக்களில் பின்னிப் பின்னியே இந்த தர்மத்தை நடத்தவேண்டியதாகிறது. அதனால்தான் கர்மாவுக்கு ப்ராதான்யம் கொடுக்கும் பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரம் "அதாதோ தர்ம ஜிஜ்ஞாஸா" - அதாவது, "தர்மத்தைக் குறித்து விசாரணை செய்வோமாக" என்று ஆரம்பிக்கிறது. தர்மத்திலே தேறி சாஸ்த்ர கர்மாவால் பூர்வ கர்மாவைத் தீர்த்துக்கொண்டு, நிஷ்காம்ய கர்மாவினால் இப்போது செய்வதும் இனி பலன் தராதபடி செய்துகொண்டு, நல்ல சித்தசுத்தி பெறும்போது லோகம், தர்மம், சித்தம் எல்லாவற்றையுமே விட்டுவிட்டு ஆத்மாவைச் சேர்வதில் ஆர்வமுண்டாகிறது. அப்போது நமக்கு உதவுகிற உத்தரமீமாம்ஸையாகிற ஞான சாஸ்த்ரமான ப்ரஹ்மஸூத்ரம், "அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா - ப்ரஹ்மத்தைப் பற்றி விசாரிப்போமாக" என்று ஆரம்பிக்கிறது. லோக வாழ்க்கையின் ஒழுங்கு தர்மத்திலும் கர்மத்திலுமே

இருக்கிறது என்று காட்டவந்தேன்.

யாகம் பண்ணி அதன்மூலம் திவ்ய சக்திகளின் அநுக்ரஹம் உலகத்துக்கு கிட்டுமாறு செய்து நல்ல மழை, விளைச்சல் முதலியவற்றால் ஜனஸமூஹம் ஸந்தோஷப்படும் படிச்செய்வது, திவ்ய சக்திகளால் ஜனஸமூஹத்தின் சித்தத்திலும் நல்ல தன்மைகளை ஏற்படுத்துவது, யுத்தம் செய்து ஜனங்களை சத்ருக்களிடமிருந்து ரக்ஷிப்பது, ஜனங்கள் பயன் பெறுமாறு நானா சீமைகளில் உற்பத்தியாகும் பண்டங்களை ஒரு இடத்தில் சேர்த்து வியாபாரம் செய்வது, உழுவது, உடம்பால் ஸமூஹத்துக்குத் தேவைப்படும் இதர ஊழியங்களைச் செய்வது - என்றிப்படிப் பல கார்யங்களைச் செய்துதான் லோக வாழ்க்கை நன்றாக இருக்குமாறு செய்யமுடியும். இந்தக் கார்யங்கள் யாவும் குழூறுபடி இல்லாமல் நடந்து ஸமூஹ வாழ்வு ஒட்டுமொத்தமாகச் சீருடன் இருக்கும்படிப் பண்ணவேண்டும். இதையெல்லாம் கருத்தில் கொண்டே வர்ணங்கள், ஆச்ரமங்கள், இது ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமானட்யூடிகள், அந்த ட்யூடிகளுக்கு அநுகூலமான ஆஹாரங்கள், ஆசாரங்கள் என்றெல்லாம் சாஸ்த்ரங்கள் அழகாக வரையறை செய்து அமைத்துக் கொடுக்கின்றன. இவ்வாறு ஒவ்வொருவருக்கும் விதிக்கப்பட்டிருப்பதற்குத்தான் ஸ்வதர்மம் என்று பெயர்.

சுருக்கமாகச் சொன்னால், ஸகல ஜனஸமூஹமும் கொஞ்சம் கொஞ்சமாக வேணும் பாரமார்த்திகமாகப் போகும்படிப் பண்ணவேண்டும். ரொம்பவும் 'ஸ்லோ'வாகத் தான் இது நடக்க முடியும். ஈச்வரனுடைய லோக நாடகம் பாட்டுக்கு நடந்து கொண்டேயிருக்குமாதலால் ஏதோ கொஞ்சம்பேர்தான் தலைமுறைக்குத் தலைமுறை அதிலிருந்து தப்புவது என்பது நடக்கும். ஆனாலும் மற்றவர்களையும் ஒரே இந்த்ரிய வெறியில் காரியம் செய்பவர்களாக விட்டு ஏகமாகப் பாப மூட்டையை, கர்ம மூட்டையைச் சேர்த்துக் கொண்டு ஸம்ஸாரத்தில் ஆழப் புதைந்து போகவிடாமல், ஏதோ கொஞ்சமாவது நன்னெறிப்படுத்தி உயர்த்த வேண்டும். இதற்கு ஆரம்பம் - 'ஸம்ஸாரத்தைவிட்டு வெளியிலே வா' என்று அவர்களை இழுப்பதில்லை. இழுத்தாலும் அவர்கள் இருக்கும் ஸ்தீதியில் வெளியில் வரமுடியாது, இழுத்து அவர்களுடைய கையைப் பிய்ப்பதாகத்தான் ஏற்படும். அல்லது இழுக்கிறவனும்

அவனோடு புதைந்து போவதாக ஆகும். 'ப்ரக்ருதியை, அதன் வேகங்களை ஒருத்தன் நிக்ரஹம் செய்வதென்பது லேசில் ஸாத்யமில்லை' என்று பகவானே சொன்னதாகச் சொன்னேனல்லவா? அதனால், இதில் இருந்துகொண்டே, இதையே ஒரு ஒழுங்குக்குக் கொண்டு வருவது தான் முதலில் செய்யவேண்டியது. அப்புறந்தான் இதை விட்டுப் போவதற்கான பக்வம் வருவது. இப்படி லோக வாழ்க்கையைத் தாறுமாறாய்ப் போகாமல் ஒழுங்கு முறையில் கொண்டுவருவதுதான் தர்மம்.

இப்போது சேரி மாதிரி ஒரு இடத்தில் இருக்கிறோம். பங்களாவுக்குப் போய் வாஸம் பண்ண ஆசை!ஆசை இருந்தாலும் அதற்குரிய யோக்யதை, வருமானம் முதலியவை இப்போது இல்லையே!முயற்சி பண்ணி அவற்றை ஸம்பாதித்தக் கொள்ளவேண்டும். அப்படிச் செய்யும் வரையில், (நாம் தற்போது) இருக்கும் சேரியை ஒரே அசுத்தமாக, சாணியும் சகதியுமாக வைத்திருக்காமல் சுத்தப்படுத்தி வைத்துக் கொண்டால்தானே ஸரியாயிருக்கும்? அப்புறம் எப்போதோ இதைவிட்டுப் போகவேண்டுமென்பதால் அப்படிப் போவதற்கான யோக்யதை வருகிற மட்டும் இது எப்படி வேண்டுமானால் இருக்கட்டுமென்று விட்டுவைத்தால், அசுத்தத்திலே நமக்கு வ்யாதி வக்கைகள் ஏற்பட்டு, அதை விட்டுக் கிளம்புவதற்கான யோக்யதையே கிடைக்காமல் திண்டாடுவதாகத் தானே ஆகும்? முதலில் நாம் இருக்கிற இடத்தை சுத்தம் செய்துகொள்ளவேண்டும். இப்படி லோக வாழ்க்கையை ஸரிசெய்து தருவதுதான் தர்மம். தர்மத்தை ஒட்டி ஏற்பட்ட ஸ்வதர்ம கர்மாக்கள்.

பொதுஜனங்கள் இவற்றைப் பண்ணுவதற்கு வழிகாட்டியாக இருக்கவேண்டியவர்கள் யார் என்றால், இதைவிட்டுக் கிளம்பவேண்டுமென்பதில் அவர்களைவிட ஆர்வமாக இருப்பவர்கள்தான். இன்னொரு விஷயம் இங்கே சொல்லவேண்டும். அதாவது, இதர ஜனங்களுக்கு மிகச் சிறந்த ஐடியலாக ஸ்வதர்மாநுஷ்டானம் செய்பவர்கள் யாரென்றால், அது இந்த லோக வாழ்க்கையை விட்டுப் பாராமார்த்திகத்திலேயே நன்றாக ஊன்றிவிட்ட ஞானிகள்தான். இதென்ன இப்படிச் சொல்கிறேனே என்று புரியாமல் இருக்கலாம். ஞானிகள் ஈச்வரனின் கருவியாகவே

ஆகிவிடுவதால் அவன் அவர்களையே ஐடியல் மநுஷ்யர்களாக வாழ்ந்து காட்டப் பண்ணுகிறான். அவர்கள் மாதிரி அத்தனை உத்தமமான உதாரண புருஷர்களாக இல்லாவிட்டாலும், பாரமார்திகத்துக்காக ப்ரயாஸைப்படும் எல்லோருமே அந்த ப்ரயாஸைகூட இல்லாத மற்றவர்களுக்கு வழிகாட்டியாகத் தங்கள் ஸ்வதர்ம கர்மாநுஷ்டானத்தை செவ்வனே செய்யவேண்டும்.

இவர்களைப் பொறுத்தமட்டும் அந்தக் கர்மங்களின் பலனில் இவர்களுக்குக் கருத்தில்லை என்றாலும், கர்மா செய்வது என்பதிலேயே இவர்களுக்குக் கருத்தில்லை என்றாலும், இவர்களுடைய கருத்தெல்லாம் கர்மாவும் சிந்தனையும் போன ஆத்மாவில் சேர்வதில்தானென்றாலும், அதற்கு யோக்யதை பெறுவதற்காகவே இவர்களும் கர்ம யோகம் செய்யவேண்டி ஏற்படுகிறது. அப்போது அந்தக் கர்மாவின் நேர் பலன் லோக க்ஷேமத்தை விளைவிப்பதாக இருக்குமாறு பெரியவர்கள் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்.

கர்மாநுஷ்டானத்தால் நல்ல சித்தசுத்தி, பக்தியால் நல்ல சித்த ஐகாக்ரியம் ஏற்பட்டபின், தானே கர்மா நின்றுவிடும். அப்படி அதுவே நிற்கும் நிலையில் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளவேண்டும். தானாக நிறுத்தப்படாது. கர்மயோகம் தான் பண்ணணும்.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### அத்வைதம்

### பரதர்மம் ஏன் கூடாது?

இதிலே, 'பாரம்பர்யமாக இன்னின்ன பண்ணிக்கொண்டு போ' என்று இருப்பதை மாற்றி, இந்த (பரம்பரை)த் தொழிலைவிட இன்னொன்று உத்தமமாயிருக்கிறதென்று நினைத்து அதற்குப் போகாதே என்று பகவான் சொல்கிறார். ஸ்வதர்மமே பண்ணு, பிறன் தர்மத்துக்குப் போகாதே என்று அவர் இதைத்தான் சொல்கிறார். ஸ்வதர்மத்திலே இருந்தால்தான், இறந்தாலுங்கூடத்தான் அதுவே ச்ரேயஸ், பரதர்மம் பயத்தை

- அதாவது ஸம்ஸாரத்தை - உண்டுபண்ணும் என்கிறார்.

ஏன் இதைவிட நல்லது என்று இன்னொன்றுக்குப் போகப்படாது என்றால், பிறப்புப்படி தனக்கு வாய்த்த கர்மத்தை விட்டு இன்னொன்றை இவன் தேர்ந்தடுக்கிறான் என்னும் போதே இவனுக்கு என்று ஸொந்த அபிப்ராயம், ஸ்வயேச்சைப்படி செய்வது என்பவை ஏற்படுகின்றன என்று அர்த்தம். இப்படிச் சொன்னால் தனி மனஸின் ஆசை வந்துவிட்டதாகத் தானே ஆகிறது? வாய்த்ததைச் செய்வது என்று தன்னிச்சை இல்லாமல் செய்வது போய், இவனாக ஒன்றை விரும்பித் தேர்ந்தெடுக்கிறானென்றால், choice வந்துவிட்டது, option வந்துவிட்டது என்றால், கூடவே கூடாது என்று ஒழித்துக் கட்டவேண்டியதான ஆசைக்கு இடம் கொடுக்கிறானென்றுதான் அர்த்தம். கர்மாவைத் தேர்ந்தெடுப்பதிலேயே இஷ்டம், ஆசை என்பது வந்துவிட்டபோது அது காம்ய கர்மமாகிவிடுகிறது. அப்புறம் அதன் பலனை த்யாகம் செய்வதால் மட்டும் அதை நிஷ்காம்ய கர்மமாக்கிக் கொண்டுவிட முடியாது. எப்போது நம்முடையதைவிட நல்லது என்று ஒன்றை விரும்பித் தேர்ந்தெடுத்தானோ அப்போத அதன் பலனில் ஒரு ஸந்துஷ்டியை மனஸ் தேடிப் பெறத்தான் செய்யும். கர்மாவால் மனஸானது தன்னையறியாமலே சுத்தியாவது என்பது தவிர வேறு எந்த ஸந்துஷ்டியைத் தேடி அறிந்து பெறுவதும் அதை அசுத்தி செய்வதுதான்.

பிறன் தர்மத்துக்குப் போகப்படாது என்பதற்கு ஸாதகனை வைத்துக் காட்டுகிற காரணம் இது. லோகத்தை, ஜன ஸமூஹத்தை வைத்தும் ஒரு காரணம் உண்டு. நல்ல அழுத்தமான காரணம். லோக க்ஷேமத்துக்காகப் பலவிதமான கார்யங்கள் செய்யவேண்டியிருக்கிறது. புத்தியால் பாடம் புகட்டுவதிலிருந்து உடம்பால் உழைத்துக்கொட்டுவது வரை அநேகம் செய்யவேண்டியிருக்கிறது. சுத்தமான நெய்யை மங்களமான மந்த்ரங்களைச் சொல்லிக் கொண்டு ரொம்பவும் பவித்ரமாக ஜ்வலித்துக் கொண்டிருக்கும் அக்னியில் ஆஹுதி செய்வதிலிருந்து, "பிடி!விடாதே!வெட்டு!குத்து!" என்று கத்தியை வைத்துக்கொண்டு சத்ருவோடு யுத்தம் செய்வது, அல்லது திருடனைப் பிடித்து ரத்தக் காயப்படுத்துவதுவரை பலவிதமான தொழில்கள் செய்யவேண்டியிருக்கிறது. இப்படியிருக்கும்போது, இந்த

எல்லா தொழில்களும் சீராக நடப்பதற்காகத்தான் பாரம்பர்யமாக கர்மாக்களைக் கொடுத்து வெவ்வேறு ஸ்வதர்மங்களை வைத்திருக்கிறது. இந்தக் கார்யங்களைப் பார்க்கும்போது ஒன்று உசத்தி, ஒன்று தாழ்த்தி என்று தோன்றினாலும், ஸமூஹ நலனை விளைவிப்பது என்ற பலனைப் பார்த்தோமானால் எல்லாமே ஸமம்தான். உசத்தியுமில்ல தாழ்த்தியுமில்லை என்று தெரியும். எந்த ஜாதிக்ககாரனின் தொழில் நின்று போனாலும் ஜன ஸமூஹத்தின் நல்வாழ்வு பாதிக்கப்படத்தான் செய்யும். அது ஸரிவர நடப்பதற்கு, தாழ்த்தியாகத் தோன்றுகிற கார்யங்களும் நடந்தே தீரவேண்டும். ஒட்டன் ஸ்ட்ரைக் செய்தால் ஊரே நாறிப் போகிறது, காலராவும் வைசூரியும் பரவுகின்றன. இதுகளிலிருந்து ஸமூஹத்தைக் காத்து ரக்ஷிக்கும் கார்யத்தை அவன் செய்கிறானென்னும்போது அவனுடைய அந்த ஸ்வதர்மம் எப்படித் தாழ்ந்ததாக இருக்கமுடியும்? அதனால் வாய்த்ததைச் செய்வது என்றில்லாமல் உசத்தி தாழ்த்தி கல்பிப்பதே பிசகு.

இப்படி ஸொந்த choice-ன்படி (தாமாகத் தேர்ந்தெடுத்து) தொழில்களைச் செய்வது என்றால், எல்லாத் தொழிலிலும் இப்போது பாரம்பர்ய முறையினால் அததற்குத் தேவைப்படும் விகிதாசாரப்படி ஜனங்கள் 'டிஸ்ட்ரிப்யூட்' (பங்கீடு) ஆகியுள்ளது போல இருக்காது. ஏதோ ஒரு தொழிலுக்கு ஜாஸ்திப்பேர் போவார்கள். இன்னொன்றை யாரும் சீந்தாமல் விடுவார்கள். அல்லது எதற்கும் உபயோக மற்றவர்களை அதில் போடுவோம். அந்தக் கார்யங்கள் நன்றாய் நடக்காமல் ஸமூஹம் பாதிக்கப்படும். பாரம்பர்யமாக வரும் குணம், குடும்பச் சூழ்நிலை முதலியவை ஸ்வதர்ம அநுஷ்டானத்தக்குப் 'பெர்ஃபெக்ஷன்' தருவதுபோல அப்போது இருக்காது. புதிதாக ஜனங்கள் இஷ்டப்படி எடுத்துக்கொண்ட தொழில்கள் பெர்ஃபெக்டாக நடக்காமல் போகலாம். அதோடு தொழில்களில் ஜனங்கள் பங்கீடாகும் ப்ரபோர்ஷன் ஏறுமாறாக ஆகி, போட்டி, பொறாமை, ஏமாற்றம் எல்லாம் ஏற்படும். மொத்தத்தில் ஸமூஹ நலனுக்காகக் கார்யங்கள் எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடக்காமல் லோக க்ஷேமமே பாதிக்கப்படும்.

இப்படியாகத் தன் ஸொந்த இஷ்டம் என்று ஒன்றின் மேல் ஸ்வதர்மத்தை விடுகிற தோஷம், அப்படி விட்டதால் லோக

க்ஷேமம் பாதிக்கப்படுவதற்கு இடமேற்படுத்துகிற தோஷம் என்ற இரண்டு பெரிய தப்புக்கள் பரதர்மத்துக்குப் போகிறவனைச் சேர்கின்றன இப்படி தோஷத்தைச் சேர்த்துக் கொண்டபின் இவன் எப்படி சுத்தியாகி ஸம்ஸார நிவ்ருத்தி பெறுவது? அதிலேயே (ஸம்ஸாரத்திலேயே) மேலும் ஆழமாகப் புதைய வேண்டியதாகத்தான் ஆகும். அதனால்தான் (க்ருஷ்ண பரமாத்மா) "பரதர்மம் பயத்தைத் தருவது" என்றார். இதற்கப்புறம்தான் தேவாஸுர யுத்தம் என்று ஆரம்பித்தேனே, அந்த ஸமாசாரம் வருகிறது.

பகவான் இப்படி, "செத்தாலும் ஸ்வதர்மத்தைப் பண்ணு, அதுதான் ச்ரேயஸ், அதாவது ஸம்ஸார நிவ்ருத்திக்கு ஸஹாயம் செய்வது, பரதர்மம் ஸம்ஸார பயத்தை ஜாஸ்தியாக்குவதே" என்று சொன்னவுடன் அர்ஜுனன் யோசித்துப் பார்த்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பாபத்தில் தள்ளும் சக்தி எது?**

"ஆனால் இப்படி, 'நமக்கென்று ஒரு இஷ்டமும் வேண்டாம். எந்தக் குலத்தில் பிறந்தோமோ அதற்கான வர்ண தர்மத்தை, எந்தெந்த வயஸுக் கட்டத்தில் என்னென்ன செய்யவேண்டுமோ அந்த ஆச்ரம தர்மத்தை நாம் பாட்டுக்குக் கேள்வி கேட்காமல் பண்ணிக்கொண்டு போவோம்' என்று இருக்கவொட்டாமல் எதுவோ ஒன்று மென்னியைப் பிடித்துத் தள்ளுகிறாற்போல இருக்கிறதே!இப்படி ஸரியான வழியாகப் போகவிடாமல் வேறு வழியில் போக வைத்து மநுஷ்யனை பாபத்தில் பிடித்துத் தள்ளுகிறதே!இவனுடைய அறிவுக்குப் புரிந்து, அறிவு அங்கீகாரம் கொடுத்து இப்படிப் பண்ணுவதாயில்லாமல், வேறு ஏதோ ஒரு சக்தி பலாத்காரம் செய்தல்லவா இவனை இப்படித் தள்ளுவதாக தெரிகிறது? அது என்ன?" என்று இவனுக்கு யோசனை வருகிறது. இது

வேண்டாம், இன்னொன்று வேண்டும் என்று இவன் நினைக்கும்படியாக இவனை பலவந்தப்படுத்தி வேண்டாததை வேண்டப்பண்ணிப் பாபத்துக்கு ஆளாக்கும் force எதுவோ இருப்பது அவனுக்குத் தெரிகிறது, அது என்னவென்று மட்டும் தெரியவில்லை. 'எதுவோ' என்று விவரம் புரியாததாகத் தெரிகிறதே தவிர, 'இன்னது' என்று அந்த ஃபோர்ஸைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

அது என்னவென்று தெரிவிக்கும்படியாக பகவானிடம் கேட்கிறான் அத கேந ப்ரயுக்தோயம் பாபம் சரதி பூருஷ :l

அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித : 11

"வார்ஷ்ணேய" என்று வ்ருஷ்ணி குலத்தோன்றலான பகவானைக் கூப்பிட்டான் என்று சொன்னேன். மேலே (இந்த ச்லோகத்துக்கு) அர்த்தம் சொல்லத்தான் நினைத்தேன். ஆனால் இதற்கு முன்னாடி கீதையில் என்ன இருக்கிறது, எந்த context-ல் அர்ஜுனன் இப்படி கேட்டான் என்று சுருக்கமாகச் சொல்ல நினைத்து ஆரம்பித்தது வளர்ந்துகொண்டே போய்விட்டது அப்புறம் டெவலப் பண்ணலாம் என்று நான் நினைத்திருந்த சரக்கில் அநேகம் இப்போதே வந்துவிட்டது. ஆகக்கூடி, ஸம்பந்தமில்லாத விஷயமில்லை.

"அத" - ஆனாலும். அதாவது நீ சொல்கிறபடி, மனஸின் இஷ்டம் என்று ஒன்று இல்லாமல் பட்ட கட்டை மாதிரி ஆக்கிக்கொண்டு சாஸ்த்ரப்படி வாய்த்த ஸ்வதர்மாவை பண்ணலாமென்று ஒரு ஜீவன் நினைத்தானானாலும்,

"அயம் பூருஷ:" - இந்த ஜீவனானவன். 'புருஷன்' என்பதே பூருஷன்' என்றும் நீளும். 'விழி', 'நிழல்' முதலான வார்த்தைகள் 'வீழி', 'நீழல்' என்று நீள்கிற மாதிரி.

ஆனாலும் இந்த ஜீவனானவன் -

"அநிச்சந்நபி" - புத்தி பூர்வமாக அப்படி ஆசைப்படாவிட்டாலும், நன்றாக ஆலாசித்துப் பார்த்து, வேண்டும் வேண்டாம் என்று ஒன்றை விட்டு ஒன்றை எடுத்துக் கொள்ளாவிட்டாலும், 'இன்வாலன்டரி'யாகவே;

"கேந" - யாரால்,

"ப்ரயுக்த:" - நன்றாக ஏவப்பட்டு,

பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறாற்போல யாரோ இவனை வேண்டும் வேண்டாம் என்கிறவற்றில் தள்ளுவது தெரிகிறது அது யார் என்று தெரியவில்லை.

('கேந' - யாரால்)

"ப்ரயுக்த:" - வன்மையாக ஏவப்பட்டு, )

"பலாத்" - பலாத்காரமாக,

"நியோஜித இவ" - உந்தித் தள்ளினாற்போல, 'யுஜ்' - 'யோஜ்' என்பது வேர்ச்சொல். இன்னொன்றோடு சேர்ப்பது, பிணைத்துப் பூட்டுவதுதான் 'யுஜ்'. 'யுஜ்' என்பதன் அடியாக 'யுக்தம்' என்று சொல்கிறோம். 'யோஜ்' என்பதன் அடியாகவே 'யோகம்' என்கிறோம். சித்தம் சிதறவிடாமல் சேர்த்துப் பூட்டிப் பிணைப்பதால் அது யோகம். மாட்டைப் பூட்டிப் பிணைக்கிற ஏர்க்காலை 'yoke' என்று சொல்வது இந்த தாதுவிலிருந்துதான். 'யோஜ்' என்பதிலிருந்து 'யோஜித'. பூட்டிப் பிணைப்பது ஏதோ ஒன்றிலே செலுத்துவதற்காகத்தான். மாட்டை ஏர்க்காலில் பிணைப்பது அதை வயலில் செலுத்தத்தான். சித்தத்தைச் சேர்த்துப் பிடிப்பது அதைப் பரமாத்ம தத்வத்தில் செலுத்தத்தான். அதனால் 'சேர்ப்பதான' யோகத்திலேயே

'செலுத்துவதான' சக்தியும், propelling force-ம் தொக்கி நிற்கிறது. "யோஜித". என்பது செலுத்தப்படுகிற நிலையைத் தெரிவிக்கிறது. ஒரு வார்த்தைக்கு முன்னால் 'நி' என்று போட்டால் அது இரண்டுமூன்று தினுஸான புது அர்த்தத்தைக் கொடுக்கும். அவற்றில் ஒன்று, அர்த்தத்துக்கு ஜாஸ்தீ அழுத்தம் கொடுப்பதாகும். பாதம்(paatam)- விழுவது, நிபாதம்(nipattam)- நன்றாக விழுவது. தர்சனம் தெரிவது, நிதர்சனம்- நென்றாகத் தெரிவது. 'யோஜித'வுக்கு 'நி' சேர்த்து 'நியோஜித' என்றால் 'நன்றாகச் செலுத்தப்பட்டு', 'உந்தித் தள்ளுவது மாதிரிசெலுத்தப்பட்டு' - என்று அர்த்தம்.

ஒரு ஜீவனானவன் யாரால் பலாத்காரமாகச் செலுத்தப்பட்டு -

"பாபம் சரதி?" - பாபத்தில் போகிறான்? பாபத்தில் புகுகிறான்? அதாவது, பாபம் பண்ணுகிறான்?

"தானே மனஸாரத் தெரிந்து இஷ்டப்பட்டுச் செய்யாமல், வேறு யாரோ பலவந்தமாகப் பிடித்துத் தள்ளின மாதிரி மநுஷ்யர்கள் பாபத்தில் போய் விழுகிறார்களே இப்படிப் பிடித்துத் தள்ளும் அந்த ஆசாமி யார்?" பகவானை அர்ஜுனன் கேட்கிறான்.

ஸம்ஸாரம் என்பது த்வைதம், அதனால் பயம் என்று சொன்னோம். பயத்தைத் தருவது எதுவோ அது பாபம். ஆகையால் பரதர்மத்தில் போவது பகவான் சொன்னபடி "பயாவஹ:" என்றால் அது பாபத்தை உண்டாக்குவதாகவே இருக்கும். இதனால்தான் அர்ஜுனன் பாபத்தைக் குறிப்பிடுகிறான்.

ஸ்வதர்மத்தைவிட்டுப் பரதர்மம் மேற்கொள்வதுபாபம். இது மட்டுமில்லை. இன்னம் அநேக பாபங்கள். நரக லோகங்களின் வர்ணனையைப் பார்த்தால் தெரியும், 'எத்தனை ஆயிரம் பாபங்கள் இருக்கின்றன? அது ஒவ்வொன்றுக்கும் என்ன தண்டனை?' என்று, இந்தப் பாபங்கள் எல்லாவற்றையும் குறித்துத்தான் அர்ஜுனன் கேட்கிறான். மநுஷ்யர்கள் அநேக பாபங்களைப் பண்ணிவிடுகிறார்கள். எல்லாமே யோசித்து, திட்டம் போட்டு, அவர்கள் பண்ணினார்கள் என்று இல்லை. தங்களையும் மீறிப் பண்ணிவிடுகிற மாதிரிதான் இருக்கிறது. "அநிச்சன்" என்று இதைத்தான் அர்ஜுனன் சொன்னது. இப்படி இவனைப்பண்ணவைப்பது யார் என்று கேட்கிறான்.

இங்கே அர்ஜுனன் ஜீவர்கள் பாபம் பண்ணுவதற்கு எந்த சக்தி காரணம் என்றுதான் கேட்கிறான். பாபத்திலிருந்து ஜீவன் விடுபட வழி என்ன என்று கேட்கவில்லை. அப்படிக் கேட்டிருந்தால், 'எத்தனை சறுக்கி விழுந்தாலும் அத்தனை பாபத்துக்கு இடையிலேயும் விடாமல் ஸ்வதர்மத்தையே பின்பற்றிக் கொண்டு போனால் அதுவே பாபத்தில் இழுத்துவிடும் அஸுர வ்ருத்திகளிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக ஜீவனை விடுவிக்கும்' என்று சொல்லியிருப்பார். ஏற்கெனவே இதை அவர் அவனுக்குச் சொல்லி ஆயிற்று. ஸ்வதர்மப்படி நிஷ்காம்ய கர்மயோகம் செய்வதைக் குறித்து,

"இந்த தர்மத்தை ஸ்வல்பம் அநுஷ்டிக்க ஆரம்பித்து விட்டாயானாலும் மஹா பயமான ஸம்ஸாரத்திலிருந்து ரக்ஷித்துவிடும்" என்று ஏற்கெனவே சொல்லிவிட்டார்.

பயம், பாபம், பந்தம், ஸம்ஸாரம் என்ற எல்லாம் ஒரே விஷயத்தைச் சொல்கிறவைதான். ஆகையால் பயத்திலிருந்து ரக்ஷிப்பது என்றால் பாபத்திலிருந்து மீட்பது என்றே அர்த்தம்.

இப்போது அர்ஜுனன் பாப மோசனத்துக்கு வழி கேட்கவில்லை. ஏற்கெனவே அவர் சொல்லிவிட்டார் என்பதால் இருக்கலாம். பின்னேஎன்ன கேட்கிறானென்றால், "தேவ - அஸுர குணங்களின் சண்டையில் அஸுரர்களான பாப வ்ருத்திகளை உண்டாக்கி, அவற்றில் ஜீவனைத் தூண்டிவிடுகிற சக்தி என்ன? ஒரு மநுஷ்யனை பாபத்திலே கட்டாயப்படுத்தி புகுத்துகிற ஆஸாமி யார்?" என்றே கேட்கிறான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**காம - க்ரோதம்**

"அதுவா, இரண்டு சக்திகள் காரணம்" என்று பகவான் பதில் சொல்கிறார். அவை என்னென்ன என்று பேரைச் சொல்லுகிறார்.

காம ஏஷ க்ரோத ரஜோகுண ஸமுத்பவ : ।

மஹாசநோ மஹா பாப்மா வித்த்யேந - மிஹ வைரிணம் ।।

"ஏஷ" - இது, எது காரணம் என்று கேட்டாயே, அது என்னவென்றால்,

"காம:" - காமம். அதாவது ஆசைதான் மனிதனைப் பாபத்தில் தள்ளுவதான எல்லா கெட்ட வ்ருத்திகளையும் தூண்டிவிடும் மூல காரணம்.

அது மட்டும்தானா? இன்னொன்றும் இருக்கிறது.

"ஏஷ:க்ரோத:" - அந்த இன்னொன்று என்னவென்றால் "க்ரோதம்";அதாவது கோபம்.

இந்த இரண்டும்,

"ரஜோகுண ஸமுத்பவ" மானவை - அதாவது மநுஷ மனஸு சாந்தமாகி ஸாத்விகமாகவுமில்லாமல், ஒய்ந்து மந்தித்துப் போய்த் தாமஸமாகவுமில்லாமல், வேகப்பட்டுக்கொண்டு கொந்தளிப்பிலே இருக்கிற ஒரு நிலை உண்டே, அந்த நிலைக்கு ஆதாரமாயுள்ள குணமான ராஜஸத்தில் உண்டானவை;"ரஜோகுண ஸமுத்பவ:"

"உண்டானவை" என்று நான் சொன்னாலும் பகவான் ஒருமையில் "உண்டானது" என்றுதான் சொல்கிறார் - "ஸமுத்பவ:" என்பது ஒருமைதான். காமம் ஒரு காரணம், இன்னொன்று க்ரோதம் என்பதாக உண்டானவை" என்காமல், "அது ரஜோகுணத்தில் உண்டானது" என்று சொன்னால் இது சொற்குற்றம்தானே என்றால், குற்றம் பகவான் மேலில்லை. என் குற்றம்தான். காமம் தவிர இன்னொன்று க்ரோதம் என்று நான்தான் சொன்னேன். பகவான் அப்படி சொல்லவில்லை.

"எது ஜீவனைப் பாபத்திலே பிடித்துத் தள்ளுகிறது" என்று அர்ஜுனன் கேட்டதற்கு, "எதுவோ? அதுதான் காமம், அதுதான் க்ரோதம், அது ரஜோகுணத்தில் உண்டானது காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ " என்றே சொல்கிறார். அதாவது காமமாக இருக்கிற அதுவேதான் க்ரோதமாகவும் இருக்கிறது என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளும்படிச் சொல்லியிருக்கிறார். காமத்துக்கு இன்னொன்று க்ரோதம் என்று காட்ட இங்கே வார்த்தை இல்லை. "காமமும் க்ரோதமுமாகிய ஒரு கெட்ட சக்தி" என்று வைத்தக்கொள்ளலாம். ஆனாலும் காம - க்ரோதம். அதாவது விருப்பு - வெறுப்பு என்று இரட்டையாக நாம் எப்போதும் சொல்வதாலேயே அந்த பழக்கத்தில் நான் தான் ஒன்று, இன்னொன்று என்று சொல்லிவிட்டேன்.

அப்படியானால் காமமும் க்ரோதமும் ஒன்றா என்ன? காமம் ஆசைப்படுகிற உண்ர்ச்சி, விருப்புணர்ச்சி. க்ரோதம் என்பதோ த்வேஷ உணர்ச்சியில் உண்டாவது. நேர்மாறான விருப்பும் வெறுப்பும் எப்படி ஒன்று? ஸ்லதர்மம் வேண்டாம் என்று விடுவது வெறுப்பிலே. பரதர்மம் வேண்டும் என்று

எடுத்துக்கொள்வது விருப்பத்திலே. இந்த இரண்டும் எப்படி ஒன்று?

ஒன்றுதான். யோசித்துப் பார்த்தால் புரியும். காமமே நிறைவேறாதபோது க்ரோதம் என்ற ரூபத்தை எடுத்துக் கொள்கிறது என்று புரியும். நமக்கு ஒன்றிலே ஆசை இருந்து அது கிடைக்காவிட்டால்தான் கோபம் உண்டாகிறது. நமக்கு ஒருத்தரிடம் வெறுப்பு ஏற்படுகிறதென்றால் அது நமக்கு எது விருப்பமோ அதற்கு மாறாக அவர் நடக்கிறார் என்பதால்தான். நம் விருப்புப் பூர்த்திக்குத் தடை ஏற்பட்டால் அதுவே வெறுப்பாகிறது .நம் ஆசையின் நிறைவேற்றத்துக்கு எதுவோ குறுக்கே வந்தால் அதனிடம் கோபம் உண்டாகிறது. பரதர்மத்திலே ஏற்படுகிற ஆசை அல்லது விருப்பத்துக்கு தடையாக இருக்கிறது என்பதால்தான் ஸ்வதர்மம் வேண்டாம் என்று அதை வெறுத்து விட்டுவிடத் தோன்றுகிறது. ஒவ்வோர் ஆசைக்கும் இப்படியே. ஆசையாலேயே த்வேஷம் ஏற்படுகிறது. பந்தை எறிகிறோம் - இதுவே நம் ஆசையின் ஓட்டம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது குறுக்கே தடையாக சுவர்மாதிரி எதுவோ வருகிறது. உடனே பந்து நம்மிடமே திரும்புகிறதல்லவா? அப்படித் திரும்பும் வேகம்தான் க்ரோதம்.

ஆசார்ய பாஷ்யம் இப்படித்தான் காமம் க்ரோதம் என்ற இரண்டையும் ஒன்றாகவே சொல்கிறது. "காமமே தான் ப்ரதிஹதமாகிறபோது க்ரோதமாகப் பரிணமிக்கிறது" என்று ஆசார்யாள் சொல்கிறார். "ப்ரதிஹதம்" என்றால் ஒன்றிலே போய் மோதிக்கொண்டு திரும்புவது என்று அர்த்தம்.

ஆனால் நடைமுறையில் விருப்பு, வெறுப்பு என்கிறவை எதிரெதிர் உணர்ச்சிகளாகத் தெரிவதால் இரண்டாகச் சொல்றோம்.

பகவானே இன்னோரிடத்தில் (2-62) சொல்லியிருக்கிறார்.

காமாத் க்ரோதோ (அ) பிஜாயதே 1

(ஆசையிலிருந்து கோபம் பிறக்கிறது)

மேலே அர்ஜுனன் கேள்விக்கு பதில் சொன்னபோது காம - க்ரோதம் என்ற இரண்டு மாதிரி சொல்லி, இரண்டு இல்லை என்றும் தெரிவிக்கிற விதத்தில் அப்புறம் ஒருமையில்

சொன்னாரென்று பார்த்தோம்.

இன்னோரிடத்தில் (16-21) ஒன்றில்லை, இரண்டில்லை, மூன்று விஷயங்களைச் சொல்கிறார். பாபத்தில் தூண்டுவது காம - க்ரோதம் என்று மேலே சொன்னாரோல்லியோ? அந்தப் பாபத்தினால் நமக்கு ஸம்பவிப்பது என்ன? ஸம்ஸாரம். ஸம்ஸாரத்திலும் ரொம்ப கோரமான அநுபவம் நரகவாஸம். நரகத்தைப் பற்றித்தான் மூன்று விஷயங்களைச் சொல்கிற இடத்தில் குறிப்பிடுகிறார் :

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசந - மாத்மந : 1

"ஆத்ம நாசம் என்ற நரகத்துக்கு வழி திறந்துவிடுகிற வாசல்கள் மூன்று விதமானவை."

என்னென்ன?

காம : க்ரோதஸ் - ததா லோப :

"காமம், க்ரோதம், லோபம் என்கிறவை."

"லோபம்" என்றால் என்ன? காமத்திலேயே ஒரு அம்சம்தான் அது. புருஷனுக்கு ஸ்த்ரீயிடம், ஸ்த்ரீக்குப் புருஷனிடம் உண்டாகும் ஆசையிலிருந்து, பீச்சுக்குப் போக வேண்டும், அங்கே சுண்டல் வாங்கிச் சாப்பிடவேண்டும் என்றிருக்கிற ஆசை வரை லோகத்தில் எத்தனை ஆயிரம் தினுஸூ ஆசையிருக்குமோ அத்தனையும் காமம்தான். மஹா பெரியவர்களுக்குத் தன்னைத்தானே தெரிந்துகொண்டு தானாக இருக்கவேண்டும் என்ற உசந்த நாட்டமிருக்கிறதே, இதைக்கூட உபநிஷதத்தில் 'ஆத்ம காமம்' என்றுதான் சொல்லியிருக்கிறது என்றேனே!இத்தனை விதமான ஆசைகளுக்குள்ளே பொருளில், ஸொத்தில் இருக்கிற ஆசைக்கு மாத்திரம் லோபம் என்று பெயர். தன் பொருளை விடவே மனஸில்லாமல் இறுகப் பிடித்துக் கொண்டிருப்பவனை லோபி என்கிறோம்.

ஆக லோபமும் காமத்தின் ஒரு 'பார்ட்'டாகவே இருந்தும் பகவானே இங்கே, "த்ரிவிதம் - மூன்று தினுஸூ, ஒன்று - காமம், இரண்டு - க்ரோதம், மூன்று - லோபம்" என்கிறார்.

## அத்வைதம்

## தீயவை அனைத்தும் ஆசையிலிருந்தே

ஷட்ரிபுக்கள் என்று ஆறு உட் பகைவர்களைச் சொல்வதில் காமம், க்ரோதம், லோபம் முதல் மூன்று. மோஹம், மதம், மாத்ஸர்யம் என்பவை பாக்கி மூன்று. யோசித்துப் பார்த்தால் இதுகளும் காமத்திலே, ஆசையிலே பிறந்தவைதான். மோஹம் என்பது என்ன? ஒன்றிடம் ஆசையினாலே அப்படியே அறிவிழந்து மயங்கிக் கிடப்பதுதான். மதம் என்பதும் தம் ஆசைப்படியெல்லாம் இருக்கலாமென்ற திமிர்தான், அல்லது நம் ஆசைப்படி நடந்துவிட்டது என்ற திருப்தியில் உண்டாகும் கொழுப்புத்தான். மாத்யஸர்யம் என்பதாக இன்னொருத்தனிடம் பொறமைப்படுவது எதனால்? நம்மிடம் இல்லாத எதுவோ ஒன்று அவனிடம் இருக்கிறது. பணமோ, புத்தியோ, செல்வாக்கோ எதுவோ ஒன்று அது நம்மிடம் இல்லையே என்பதால்தான் மாத்ஸர்யம் - அதாவது அது நமக்கு வேண்டும் என்ற ஆசைதான் மாத்ஸர்யத்தை உண்டாக்குகிறது. இவ்வாறாக, உட்பகைவர் என்கிற ஆறு அஸுரர்களுக்கும் காமம்தான் மூலம் என்றாயிற்று.

ஆகையால் ஸதா ஸர்வ காலமும் நம்மைப்பிய்த்துப் பிடுங்கிக்கொண்டிருக்கிற தேவாஸுர யுத்தம் நிற்கவேண்டுமானால் மூல விரோதியாக இருக்கப்பட்ட காமம் என்கிற அஸுரனை இல்லாமல் பண்ணிவிடவேண்டும். ஜீவன் சாந்த நிலை அடைய ஒரே வழி ஆசா நாசம்தான்.

"காமம் என்ற பெருந்தீனிக்காரனான பாபியை உன்னுடைய பரம விரோதி என்று புரிந்துகொண்டு சண்டை போடு :மஹாசநோ மஹா பாப்மா வித்த்யேநமிஹ வைரிணம்."

காமத்தை அது இது என்று அஃறினையாகச் சொல்லாமல் அவன், பெருந்தீனிக்காரன் என்று personify செய்து சொல்கிறார். பரமாத்ம தத்வமே அவராக வந்திருக்கிறது. ஜீவனைத் தூக்கி விடுவதற்காகத் தத்வப்பொருள் க்ருஷ்ண பரமாத்மாவாக கண், காது, மூக்கோடு ஆகி வந்திருக்கிறது.

அப்படிப்பட்ட தாம்,

ஜீவனைக் குழியிலே தள்ளும் தீய சக்தியையும் ஒரு ஆளாகத்தான் சொல்ல வேண்டுமென்று, இப்படிச் சொல்கிறார். இவர் தேவ சக்தி. அது அஸுர சக்தி.

'மஹாசனன், மஹாபாப்மா' என்று காமத்தை, அல்லது காமனை (அவனிலேயே க்ரோதனும் அடக்கம். அப்படிப் பட்ட காமனை)ச் சொல்கிறார்.

"மஹாசந :" - பெருந்தீனிக்காரன். "அசநம்" என்றால் சாப்பாடு. "அசனன்" என்றால் சாப்பிடுகிறவன். அக்னிக்கு "ஹுதாசனன்" என்று பெயர். ஆஹுதியைச் சாப்பிடுபவனாதலால் இப்படிப் பேர். "மஹா அசனன்" - நிறையச் சாப்பிடுகிறவன். "கொண்டா,கொண்டா!" என்று வாங்கிச்சாப்பிடும் குண்டோதரன். விஷயானுபோகங்களை இப்படித்தான் இந்த்ரியங்கள் மூலம் வாங்கி வாங்கித் தின்று கொண்டே இருக்கிறான் காமன்.

இவன் "மஹா பாப்மா". "பாப்மா" என்றால் பாபம்தான். உபநிஷத்தில் ஆத்மா பாபமற்றது என்று சொல்லுமிடத்தில் "அபஹத பாப்மா" என்று இருக்கிறது. காமத்தைக் காமன் என்கிற மாதிரி அவனையே பாபி, பாபாத்மா என்ற அர்த்தத்தில் "பாப்மா" என்கிறார். ஸாதாரண பாபி இல்லை, "மஹா பாப்மா", அதாவது, பெரும்பாவி. ஜீவர்களைப் பாபத்தில் புகுத்துவது யார் என்று அர்ஜுனன் கேட்டானே, அது இவன்தான். அதனால் இவன் மஹாபாபத்தின் வடிவமாகவே இருக்கவேண்டும்.

"இவனையே ஸம்ஸாரத்தில் பெரிய சத்ருவாக நீ அறிய வேண்டும்" என்கிறார் பகவான். "வித்த்யேநம் இஹ வைரணிம்."

"இஹ" - 'இஹ பர' என்பதில் 'இஹ' மான ஸம்ஸாரத்தில்,

"ஏநம்" - இவனையே, காமத்தையே,

"வைரிணம்" - சத்ருவாக, அதாவது தேவாஸுரப் போரில் அஸுர ராஜாவான முதல் விரோதியாக,

"வித்தி" - அறிவாயாக

"இப்போது கௌரவ ஸேனையோடு நீ போட வேண்டிய யுத்தம் லோகத்துக்காக. உனக்காக நீ போட்டுக்கொள்ள வேண்டியது துரியோதனன் ஸ்தானத்தில் ஆசையஸுரன் தலைமை வஹிக்கிற துர்வ்ருத்தி ஸேனையோடுதான்" என்கிறார் பகவான்.

ஸரி, ஆசையால்தான் அத்தனை கஷ்டமும் என்று தெரிந்துவிட்டது. ஆசை எனபது மனஸுக்கு ரொம்பவும் ஸௌக்யத்தைத் தருகிற மாதிரித் தோன்றினாலும், ஸௌக்யத்தை அடையவே நாம் நமக்கு ஏற்படுகிற ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள முயல்கிறோமாயினும், கஷ்ட பரம்பரை அத்தனைக்கும் அதுதான் காரணம் என்று தெரிகிறது. ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்தில், இதன் நிமித்தமாகத்தான் ப்ராணிகளுக்கு ஸர்வ அனர்த்த ப்ராப்தியும் என்கிறார். நிறைவேறாவிட்டால் கோபம், அநுதாபம் தயை முதலான குணங்களை அழித்துக்கொண்டு ஒரு தானமா, தர்மமா, உபகாரமா பண்ணாமல் நம்மிடம் உள்ளதைப் பேராசையோடு பிடித்துக்கொண்டிருக்கிற லோபம், இப்படி பிடித்துக் கொண்ருக்கிற வஸ்துவிலேயே புத்தியை இழப்பதான மோஹம், ஆசை நிறைவேறிவிட்டாலோ அந்தத் திமிரிலே மதம். இன்னொருத்தனிடம் இருப்பதில் நமக்குள்ளே ஆசையால் அவனிடம் உண்டாகும் மாத்ஸர்யம் என்றிப்படி

பாபத்துக்கு மேல் பாபமாக நம்மை அஸுரர்கள் நரகத்துக்கு இழுப்பதெல்லாம் ஆசையை மூலமாக வைத்தத்தானே?

ஆசை என்பது எப்படிப் பார்த்தாலும் பொல்லாததாக இருக்கிறது - நிறைவேறினாலும் மதத்தை உண்டாக்குகிறது, ஆசை தன்னுடைய நிறைவேற்றத்தால் கிட்டிய பொருளிடம் மோஹத்தையும், அதைக் கொஞ்சங்கூட மற்றவர்களுக்கு ப்ரயோஜனப்படுத்தக்கூடாது என்ற லோப குணத்தையும் ஏற்படுத்துகிறது. நிறைவேறாவிட்டாலோ க்ரோதம், மாத்ஸர்யம் இவற்றை ஏற்படுத்துகிறது.

இது தெரிந்துவிட்டது. அதாவது அத்தனை கஷ்டமும் காமம் ஒன்றால்தான். எல்லாக் கஷ்டத்துக்கும் மூலமான அஸுரன் இதுதான் என்று தெரிந்துவிட்டது. ஸௌக்யத்துக்காக ஆசைப்பட்டுப் பரம அஸௌக்யத்தில், கஷ்டத்தில் போய்

மாட்டிக் கொள்கிறோம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### ஸந்தோஷத்தினாலேயே கஷ்டம்

ஸௌக்யம் என்று போய்க் கஷ்டத்தில் விழுகிறோம். ஸந்தோஷம் தருவது என்று நினைத்து ஆசையை வளர்த்துக் கொண்டு அதனாலேயே துக்கத்தை அடைகிறோம். இங்கேயும் ஆசை நிறைவேறாவிட்டால்தான் துக்கம் என்றில்லை. ஆசையின் நிறைவேற்றத்தாலேயும் துக்கம்தான். எப்படியென்றால் ஆசை நிறைவேற்றத்தால் எதைப் பெற்றோமோ அது கையை விட்டுப் போய்விடப் போகிறேதே என்று துக்கம். அதோடு பயம். இந்த பயம் நிஜமாயும் ஆகிவிடுகிறது. நமக்குக் கிட்டிய ஆசை வஸ்து நம்மை விட்டுப் போய்விடுகிறது. ப்ரியமானவர் செத்துப்போகிறார், பணத்தைத் திருடன் கொண்டுபோகிறான், அல்லது பாங்கு முழுகிப் போகிறது, அல்லது நமக்குத் திருட்டு' போனதாக நேரே தெரியாவிட்டாலும் பண வீக்கத்தில் அதன் மதிப்புக் குறைந்து, 'ஐயோ!வீடு வாங்கலாம், கல்யாணம் பண்ணலாமென்று வயிற்றைக் கட்டி வாயைக்கட்டி மீத்தினோம், இப்போது பார்த்தால் இந்த ஸேவிங்ஸ் க்ரவுண்ட் வாங்கக்கூடப்போதவில்லையே, வரதக்ஷிணைக்குக்கூடப் போதவில்லையே' என்று துக்கிக்கும்படி ஏற்படுகிறது.

ஸந்தோஷம் தரும் என்றுதான் ஒன்றுக்கு ஆசைப்படுகிறோமென்றாலும் அதை அடைவதற்கே வேறு எத்தனையோ கஷ்டப்பட வேண்டியதாகிறது. ஸினிமா பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானாலும் எத்தனையோ நாழி 'க்யூ' வில் கால் வலிக்க நிற்கவேண்டியிருக்கிறது. அப்புறம் ஒரே புழுக்கத்தில் கண்ணை எரியவைக்கிற வெளிச்சத்தோடு, காதைத் துளைக்கிற சப்தத்தோடு ஓடுகிற ஸினிமாவைப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால்

தலைவலியும் கண் எரிச்சலும் உண்டாகின்றன. கிரிக்கெட் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானால் முதல் நாள் ராத்ரியே அங்கே போய்ப்பணியில் படுத்துக்கொண்டு, பட்டினி கிட்டினி பார்க்காமல் அவதிப்பட்டுக் கொண்டுதான் இடம் பிடிக்க வேண்டியிருக்கிறது என்கிறார்கள். இப்படித்தான் எதற்கு ஆசைப்பட்டாலும் அது கிடைப்பதற்குக் கூலியாகக் கஷ்டம் ஏதாவது படும்படியே இருக்கிறது. நல்லதற்கு ஆசைப்பட்டாலுங்கூடத்தான். ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி, சிதம்பரத்தில் ஆர்த்ரா தரிசனம் பார்க்கணும் என்று நல்லதாக ஆசைப்பட்டாலும் எத்தனையோ இடி மொத்துப்பட்டுக் கொண்டு, பனியிலே குளிரிலே ராவெல்லாம் விரைத்து க்யூவில் கால் கடுத்துக் கஷ்டப்படத்தான் வேண்டியிருக்கிறது. பூஜை பார்க்க வேண்டும், தீர்த்தம் வாங்கிக் கொள்ளவேண்டும் என்கிற ஆசையில் (நல்ல ஆசைதான், அதில்) நீங்கள் (இந்த மடத்துக்கு) வந்தால் நான் மத்யானம் இரண்டு மணி, மூன்று மணிவரை உங்களைப் பட்டினி போட்டுக் கஷ்டப்படுத்துகிறேன்!நல்ல லக்ஷ்யத்துக்கு ஆசைப்பட்டு யோகம், ஸாதனை என்ற எது செய்வதானாலும் அதிலே எத்தனையோ கஷ்டம். பத்மாஸனம் போட்டுக் கொள்வதென்றால் காலை முறித்து விடுகிற மாதிரி வலிக்கிறது!பூஜை என்றால் இந்த புஷ்பம் பத்ரம் இந்த ஸ்வாமிக்கு, இன்னொரு புஷ்பம் பத்ரம் இன்னொரு ஸ்வாமிக்கு, இதற்கு இந்த நைவேத்யம், அதற்கு அந்த நைவேத்யம் என்றெல்லாம் வைத்து கஷ்டப்படுத்தியிருக்கிறது. இன்னம் பஹு கஷ்டமாக உபவாஸம் இருப்பது. அங்க ப்ரதக்ஷிணம் பண்ணுவது, செடில் குத்திக்கொள்வது என்றெல்லாம் வேறு 'அப்படியானால் ஸாதனை வேண்டாமா, உத்ஸவங்கள் பார்ப்பதும் க்ஷேத்ராடனம் பண்ணுவதும் கூடாதா, பூஜை பண்ண வேண்டியதில்லையா?' என்றால், இந்த விஷயத்துக்கு - அதாவது நல்லதாக ஆசைப்பட்டு அதற்காகக் கஷ்டப்படுவது என்ற ஸமாசரத்துக்கு அப்புறம் வருகிறேன். இங்கே சொல்ல வந்தது எப்படிப் பட்ட ஆசையாயிரு ந்தாலும், "ஆசை வர வர ஆய்வரும் துன்பம்" என்பதுதான்.

## அத்வைதம்

### ஆனந்தமும் த்ருப்தியும்

எந்த ஆசையும் உண்டாவதற்குக் காரணம் என்ன? நாம் ஸந்தோஷத்தைத் தேடுவதுதான். ஸந்தோஷம் என்பதை விட ஆனந்தம் என்பதுதான் ஸரியான வார்த்தை. ஏனென்றால் நாம் 'ஸந்தோஷம்' என்பதுதான் ஆனந்தம், இன்பம், happiness (happiness-° மேலே bliss, அதற்கு மேலே joy) என்று நினைத்துக்கொண்டிருந்தாலும் அப்படியில்லை. "ஸந்தோஷம்" என்பது "த்ருப்தி" என்றே பொருள்படுவது. தோஷம் (tosham) என்றால் த்ருப்தி. நல்ல ஆழ்ந்த த்ருப்தி ஸந்தோஷம். ஆனந்தப்படுவதும், த்ருப்தி கொள்வதும் நெருக்கமாகத் தொடர்பு கொண்டவைதான் என்றாலும் இரண்டும் ஒன்று என்று சொல்லமுடியாது, அதற்கப்புறம் அத்ருப்திப்பட எதுவுமே உண்டாக முடியாது என்று நிறைந்த நிறைவாக, முடிந்த முடிவாக த்ருப்திப்படும் ஆத்மானந்தம் ஒன்றில்தான் இரண்டும் ஒன்றே ஆகி விடுகின்றன. மற்ற விஷயங்களில் ஆனந்தத்துக்கும் த்ருப்திக்கும் கொஞ்சம் வித்யாஸமிருப்பதாகத்தான் பார்க்கிறோம். மந்த மாருதம் வீசினால் ஆனந்தமாயிருக்கிறது என்போமே ஒழிய, த்ருப்தியாயிருக்கிறது என்று சொல்லமாட்டோமல்லவா? எதிர்பார்க்கிற ஆசைப் பூர்த்திக்கு மட்டுமே 'த்ருப்தி' என்பது பொருந்துகிறது. எதிர்பாராமல் கிடைப்பதை 'த்ருப்தி' என்காமல் 'ஆனந்தம்' என்று மட்டுமே சொல்கிறோம்.

### ஆசையும் இன்பதுன்பங்களும்

ஆனந்தம் தருகிறது என்பதற்காகத்தான் ஒன்றில் ஆசை வைக்கிறோமென்று சொல்லவந்தேன். ஆனால் அந்த ஆசை ஒன்று, ஆனந்தத்தையே தராமல் துக்கத்தைக் கொடுக்கிறது, அல்லது கொஞ்சம் ஆனந்தத்தையும் நிறைய துக்கத்தையும் கொடுக்கிறது, இல்லாவிட்டால் ஸமமாகக் கொடுக்கிறது. இப்படியெல்லாமின்றி நாம் விசேஷமாக ஆசைபடாமல் தானாகவே ஒரு ஆனந்தம் வருகிறது, அது துக்கக் கலப்பே இல்லாத ஆனந்தமாயிருக்கிறது என்றால் அந்த ஆனந்தம்

சாச்வதமாயிருக்க மாட்டேனென்கிறது. கொஞ்ச காலத்துக்கு அப்புறம் அது எங்கேயோ ஓடிப்போய் மறுபடி நம்முடைய அழுகைகள் நம்மைப் பிடித்துக்கொண்டு துக்கப்படுகின்றன. இந்த ஆனந்தம் நமக்குத் தெரியாமலே இருந்திருந்தால்கூட நாம் பாட்டுக்கு இருந்திருப்போம். நடுவாந்தரத்தில் அது வந்து அப்புறம் ஓடிவிட்டதாலேயே, மறுபடி அந்தமாதிரி வருமா, வருமா என்று ஏக்கமுண்டாகிறது.

பணத்தால் ஆனந்தம் வரும் என்று ஆசைப்பட்டு ரேஸுக்குப் போகிறான். இருப்பதையும் கோட்டை விட்டு விட்டு 'ஹோ'வென்று அழுகிறான். இது ஆனந்தமே தராமல் துக்கம் மட்டும் தருகிற ஆசை. கண்ணால், காதால் ஆனந்தம் வரும் என்று ஆசைப்பட்டு ஸினிமாவுக்கு, (ஸங்கீத) ஸபாவுக்குப்போகிறான். ஸினிமா கொஞ்சம்கூட நன்றாயில்லை, ஒரே பேயும் கொலையுமாக வந்து குலைநடுங்குகிறது. 'ஆனந்தம் என்று வந்து விலை கொடுத்து இதை வாங்கிக்கொண்டோமே, பொழுதும் பணமும் வேஸ்ட் ஆச்சே' என்று எரிச்சலும் துக்கமும் வருகின்றன. வித்வானுக்குத் தொண்டைக் கட்டு, ஒரே அபஸ்வரம் என்றால், ஆனந்தத்துக்காக ஸபாவுக்குப் போனவனுக்கு எப்படி இருக்கும்? வெங்காய ஸாம்பாரோடு தோசை தின்னலாமென்று நாக்காலும் மூக்காலும் (நாக்கு ருசியைப் போலவே மூக்கு 'கமகமா வினாலுந்தான் தீனி, ஆசை) அனந்தம் அடைய ஆசைப்பட்டுக்கொண்டு க்ளப்புக்கு (ஹோட்டலுக்கு) போகிறான். அங்கே ஆறிப்போனதாய், ஊசிப் போனதாய், சுட்ட எண்ணெயில் பண்ணினதை (ஸர்வர்) கொண்டு வந்து வைக்கிறான். வாயில் வைக்க வழங்கவில்லை. வந்து விட்டோமே, ஆர்டர் பண்ணி வி டடோமே என்று முழுங்கிவைக்கிறான். கஷ்டம் அதோடு போகவில்லை. தலையைச் சுற்றுகிறது. வாந்தி பண்ணுகிறது. ஸ்பர்ச உணர்ச்சியில் சரீரத்துக்கு ஆனந்தம் ஏற்படும் என்று ஆசைப்ட்டுக்கொண்டு ஜிலு ஜிலு என்று 'ஷவர்பாத்'தில் போய் நிற்கிறான். அது ஒரே சில்லிப்பாக கொட்டி விரைக்க வைக்கிறது. ஜலதோஷமும் மண்டையிடியும் வருகின்றன.

இதெல்லாம் ஆனந்தம் என்று தேடிப்போய் ஆனந்தக் கலப்பே இல்லாமல் துக்கத்தை மட்டும் பெற்றுக்கொள்வதற்கு த்ருஷ்டாந்தம். சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம் என்று பஞ்சேந்த்ரியங்களால் ஆசைப்படுகிறவற்றுக்கு த்ருஷ்டாந்தம்

கொடுத்தேன். கச்சேரியில் சப்தம், ஸினிமாவில் சப்தம், ரூபம் இரண்டும். ரஸமும் கந்தமும் ஹோட்டலில். ஸ்பர்சம் 'ஷவர் பாத்'.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஐம்புலனாலும் அழிவடையும் மானுடன்**

"விவேக சூடாமணி" என்று ஒரு உத்தமமான ஞான நூல். நம்முடைய ஆசார்யாள் பண்ணினது. அதிலே ஒரு ச்லோகத்தில் இந்தப் பஞ்சேந்த்ரிய ஸமாசாரம் வருகிறது. ஒவ்வொரு ப்ராணி, இந்த ஐந்து இந்த்ரியங்களில் ஒவ்வொன்றினாலுமே, அதாவது ஐந்தாலுமே மோஹிக்கப்பட்டு அழிவதைச் சொல்லி எச்சரிக்கிறார், துக்கப்படுகிறார்

மான் சப்தத்தினால் நாசமடைவது. வேடன் கொம்பு ஊதுவான். அதைக் கேட்கிற ஆசையால் மான் மயங்கி நிற்கும்போதே பாணம் போட்டு அடித்துவிடுவான்.

யானை ஸ்பர்சத்தால் நாசத்தைத் தேடிக் கொள்கிறது. 'கெட்டா' (Khedda)) என்று மைஸூர்க் காடுகளில் பண்ணுகிறார்கள் - யானையே கொள்ளும்படியான பெரிய பள்ளம் தோண்டி, மேலே அது பள்ளம் என்று தெரியாதபடி செத்தை செடி கொடிகளைப் பரப்பி வைத்திருப்பார்கள். பிடிக்க வேண்டிய ஆண் யானை பள்ளத்துக்கு ஒரு திக்கில் இருக்கிறது என்றால், அதற்கு எதிர் திக்கில் பள்ளத்துக்கு அந்தண்டை ஏற்கெனவே பிடித்துப் பழக்கப் படுத்திய ஒரு பெண் யானையைக் கட்டி வைத்திருப்பார்கள். அதை ஸ்பர்சித்து ரமிக்கவேண்டும் என்று ஆண் யானைக்கு ஆசை உண்டாகும். அந்த மோஹத்தில் அது குறுக்கே இருக்கிற பள்ளத்தைப் பள்ளமென்றே தெரிந்துகொள்ளாமல் செத்தை செடிசொடியின் மேலாக ஓடும். அவற்றால் இதன் 'வெய்ட்'டைத்தாங்கமுடியுமா? அப்படியே ஒடிந்து அதுகள் விழ, யானையும் பள்ளத்தில் தொபுகடீர் என்று

விழுந்துவிடும். பிடித்து விடுவார்கள்.

ரூபத்தால் நாசமடையும் ஐந்து விட்டில் பூச்சி - தீபத்தின் பளீர் ரூபத்தில் ஆசைப்பட்டுத் தானே வந்த அதில் விழுந்து மடிகிறது? 'ரஸம்' என்பதாக வாய்க்கு ஆசை காட்டும் ஆஹாரத்தால் மீன் உயிரை விடுகிறது - தூண்டிலில் உள்ள புழுவைத் தின்ன ஆசைப்பட்டுச் சாகிறது. வண்டு கந்தத்தினால் மரணத்தைத் தேடிக் கொள்கிறது. பெரிசு பெரிசாகச் சம்பகப் பூக்கள் உண்டு. அதன் வாஸனையில் நமக்கே மூக்கில் ரத்தம் கொட்ட அரம்பித்துவிடும் - அத்தனை தீக்ஷ்ணமான ஸுகந்தம் இப்படிப் பட்ட புஷ்பங்களுக்குள்ளே போய் வண்டு உட்கார்ந்து கொண்டு அப்படியே தன் மதி இழந்து சொக்கிப்போய்விடும். அப்போது இதழ் ஒவ்வொன்றாக மூடிக் கொண்டு, மலந்திருந்த புஷ்பம் நன்றாகக் கூம்பிவிடும். அதற்குள் மாட்டிக்கொண்ட வண்டுக்கு அதோடு ஆயுஸ் தீர்ந்துபோகும். இப்படி "பஞ்ச" இந்த்ரியங்களில் ஒவ்வொன்றால் ஒவ்வொரு ப்ராணி "பஞ்சத்வம்"(மரணம்) அடைகிறது என்று ஆசார்யாள் சிலேடை செய்கிறார். மநுஷ்யன் ஐந்தாலுமே அழிகிறோனே என்று பரிதாபப்படுகிறார்

சப்தாதி பஞ்சபிரேவ பஞ்ச பங்சத்வம் - ஆபு:ஸ்வகுணேந பத்தா : 1

குரங்க - மாதங்க - பதங்க - மிந - ப்ருங்கா நர :பஞ்சபிரஞ்சித :கிம்11

'குரங்க' என்றால் மான் குரங்கில்லை. 'மாதங்கம்' என்றால் யானை. 'பதங்கம்' விட்டில். மீனம்தான் மீன். ப்ருங்கம் என்றால் வண்டு.

"நர:" - மநுஷ்யனானவன்;"பஞ்சபி:" - ஐந்தாலும் (ஐம்புலனாலு ம்);"அஞ்சித:" - கவரப்பட்டிருக்கிறான். "பஞ்சபி:அஞ்சித:" என்பது ஸந்தியில் "பஞ்சபிரஞ்சித:" என்றாயிருக்கிறது. "கிம்" என்று முடித்திருக்கிறார். "கிம்" என்றால் "என்ன". ஐயோ, இப்படி மநுஷ்ய ஜீவனானது பஞ்சேந்த்ரியத்தாலும் கவர்ந்திழுக்கப்படுகிறதே, என்ன பண்ணலாம்?' என்று பரம கருணையோடு, "கிம்" போட்டிருக்கிறார்.

ஆசை, ஆனந்தம் என்று போய் அடியோடு ஏமாந்து

நாசமடைவதைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**சாச்வத இன்பம் ஆசையால் விளையாது**

ஆனால் எப்போதும் இந்த மாதிரி அடியோடு கெடுதலாகத்தான் நடக்கிறது என்று 'பெஸ்ஸிமிஸ்டிக்காக'ச் சொல்லக்கூடாது. இப்படியும் அநேக ஸமயங்களில் நடக்கிறதென்றே காட்டவந்தேன். கொஞ்சமாவது ஆனந்தம், அதோடு துக்கம் கலந்து வருவது என்பதாகத்தான் பெரும்பாலும் பார்க்கிறோம். புத்தியையும் கெடுத்து, உடம்பையும் கெடுத்து, குடும்ப வாழ்க்கையையும் கெடுப்பதான மதுபானத்தில் ஒருத்தன் போனால்கூட, குடிக்கிற அந்த ஒரு நிமிஷம் அவனுக்கு ஒரு ஆனந்தம் இருக்கக்கூடும். ஹோட்டலில் போடுவதில் எப்போதுமே சுட்ட எண்ணெயும், ஊசலும்தான் என்றில்லாமல் வாய்க்கு ருசியாகவும், அதாவது நாக்குக்கு நிஜமாகவே ஆனந்தமளிப்பதாகவும் போடலாம், அப்போதும்கூட அதற்கான bill, இந்த அநாசாரத் தீனியால் ஏற்படும் ஆத்மஹானி ஆகியவற்றைப் பார்த்தால் ஆனந்தப்படுவதைவிட துக்கப்பட வேண்டியதே ஜாஸ்தி என்று தெரியும். வித்வானுக்கு எப்பவும் தொண்டை கட்டுவதில்லை. சாரீரம் வசதியாயிருந்து, mood-ம் நன்றாயிருந்து அவர் பாடினால், "கொடுத்த காசு வீணில்லை" என்று தோன்றுகிறது. இங்கே ஆனந்தமும் துக்கமும் ஸமம். கைக் காசு போட்டு டிக்கட் வாங்கியது துக்கம்தான், இப்போது அப்படித் தெரியாவிட்டாலும் வித்வான் நன்றாகப் பாடியிராவிட்டால் அப்போது தெரிந்திருக்கும்.

"இன்னும் எத்தனை வேண்டுமானாலும் கொடுக்கலாம்" என்று நினைக்கும்படியாக வித்வான் பாடியிருந்தால் அப்போது துக்கத்தைவிட ஆனந்தம் ஜாஸ்தி. இலவசச்சீட்டு கிடைத்து ஸபாவுக்குப் போய், வித்வானும் வெளுத்து வாங்கிவிட்டால்

அப்போது (செலவு என்பதால் ஏற்படும்) துக்கமில்லாத ஆனந்தம்.

வாஸ்தவம். ஆனால் இந்த ஆனந்தமும் சாச்வதமாய் நின்றதா? dull-ஆக depressed-ஆக, இந்த அழுமூஞ்சி ஸம்ஸாரத்தை நினைத்துக் கொண்டிருக்காமல் ஸபாவுக்குப் போகலாமென்று நினைத்தான். "ஓஸி" டிக்கெட்டும் கிடைத்தது. கச்சேரியும் நன்றாயிருந்தது. ஆனந்தமாகக் கேட்டான். ஆனால் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது அந்த ஆனந்தம் அப்படியே இருந்ததா? "கச்சேரி விமரிசையை அகத்திலே கொஞ்சம் 'அளந்து' உத்ஸாஹப்படுத்திக் கொள்ளலாம்" என்று இவன் நினைத்துக்கொண்டு வந்தான். ஆனால் ஊர் சுற்றிவிட்டு நாழி கழித்துச் சாப்பிட வந்திருக்கிறானே, போட (பரிமாற) வேண்டுமே என்று அகமுடையாள் உர்ரென்று இருக்கிறாள்!இவனுடைய ஆனந்தம் போய் Dull அடித்து, மறுபடி depressed ஆகிவிடுகிறது. படுக்கப்போய் காற்றில்லை, கொசு பிடுங்குகிறது என்றால் இப்போது அந்தக் கச்சேரி ஆனந்தத்தில் லவலேசமாவது ஆற்றிக் கொடுக்க வருகிறதோ?

இப்படியே ரேஸுக்குப் போகிறவர்களில் ஜயிக்கிறவர்களும் இருக்கிறார்கள். ஆனாலும் அந்தப் பணம் கொண்டு வந்த ஆனந்தம் சாச்வதமாயிருக்கிறதா? அதனாலேயே எத்தனையோ தொல்லை, ஸங்கடம் வருகிறது. பணமும் ஸொத்தும்தான் மநுஷ்யன் பல விதக் கெடுதல்களில் போய்க் கஷ்டத்தை உண்டாக்கிக் கொள்வதற்குக் காரணமாயிருக்கிறது. இந்த லோகத்தில் கஷ்டமே படாமல், ஸுக ஜீவனம் செய்தே செத்துப்போகிற பணக்காரர்களும் இருக்கிறார்கள்,

ஆனால் அவர்களும் பணத்துக்காக அல்லது பணத்தினால் செய்த அநேகக் கெடுதல்களுக்காக - தொழிலபிவிருத்திக்காக லஞ்சம் கொடுத்தது, யாசகனை அடித்து விரட்டியது இப்படி ஏதாவது கெடுதலுக்காக - பரலோகத்தில் பதில் சொல்லத்தான் வேண்டியிருக்கும், அதாவது கஷ்டப்பட வேண்டித்தானிருக்கும். கொஞ்சமோ நஞ்சமோ கஷ்டத்தை உண்டாக்காமல் பொருளாசை ஒருத்தனை விடுவதென்பது நடக்காத கார்யம்.

கஷ்டமே தராமல், துக்கமே கொடுக்காமல் ஆனந்தத்தைத் தரும் ஆசாபூர்த்தியும் (ஆசையின் நிறைவேற்றமும்) அப்போதைக்கு மட்டும் தாற்காலிக - மாகத்தான் அந்த ஆனந்தத்தைத் தருமேயன்றி, சாச்வத ஆனந்தம் தருவதில்லை. 'ஷவர்' ரொம்பவும் ஹிதமாகவே கொட்டினாலுங் கூட அதிலேயே சாச்வதமாக நிற்க முடியாது. உசந்தால் அரை மணிக்கு மேல் தாங்காது. வித்வான் எத்தனை நன்றாகப் பாடினாலும் அவர் ஐந்து மணி, ஆறு மணி பாடிக்கொண்டே போனால் 'போர்' அடித்துவிடுகிறது வீட்டுக்குப் போக பஸ் கிடைக்குமா என்று விசாரம் ஏற்படுகிறது!

பாதாம்கீர் நன்றாயிருக்கிறது என்றாலும் எத்தனை டம்ளர் சாப்பிடுவது? இரண்டு மூன்று டம்ளர் சாப்பிட்டால் வயிறு முட்டிப்போகிறது. அதற்கு மேலே உபசரித்தால், "அய்யோ, தயவு செஞ்சு விட்டுடப்பா" என்று கெஞ்சுகிறோம். இந்த இரண்டு மூன்று டம்ளராவது நல்லது பண்ணுகிறதா? இல்லை. ஒன்றோடு நிறுத்திக் கொண்டிருந்தால் உடம்புக்குப் புஷ்டியைத் தந்திருக்கும். ஆசையின் மேலே மேலும் இரண்டு டம்ளர் சாப்பிட்டதில் வயிற்றுப் போக்கு, வாயில் எடுப்பு உண்டாகிறது. ஆனந்தம் ஸம்பாதித்துக் கொண்டது நன்றாயிருக்கிறதல்லவா?

ஆசை வஸ்துவை அளவோடு நிறுத்திக்கொள்ள முடிவதில்லை. அதற்கு மேல் வேண்டியிருக்கிறது. அதற்காக, "அதையே சாச்வதமாய் அநுபவி, நாள் பூரா பாட்டுக்கேளு, அண்டா பாதாம் கீர் சாப்பிடு" என்றாலும் முடிவதில்லை. புஸ்தகப் புழு என்று நாளெல்லாம் படிப்பவர்களுக்குக்கூட ஒரு இடத்தில் அலுப்புத் தட்டி புஸ்தகத்தைத் தூக்கிப் போட்டுவிட்டு, கொஞ்சம் 'வாக்' பண்ணிவிட்டு வரலாம் என்று புறப்படுகிறார்கள். அலுப்பாவது சாச்வதமாகத் தட்டிவிட்டதா, அப்படியாவது இந்தப் பாட்டு அசை, சாப்பாட்டு ஆசை, படிக்கிற ஆசை, அல்லது வேறு எத்தனையோ ஆசைகளில் ஒன்று அடியோடு தீர்ந்ததா என்றால் அதுவும் இல்லை, இன்றைக்கு வேண்டாம் என்று விட்ட ஆசை நாளைக்கு ரொம்பவும் வேண்டியதாக அரித்தெடுக்க ஆரம்பிக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### கால - தேசாதிகளின் பாதிப்பு

இன்னொரு விசித்ரம் - ஆனந்தத்தைத் தருவது என்பதால் ஒன்றிலே ஆசை ஏற்படுவதாகப் பார்த்தோம். ஆனால் இந்த போக்ய வஸ்து அதன் அநுபோகத்தில் ஏதோ ஒரு அளவில் அலுத்துப் போவது மட்டுமில்லாமல், கால தேச ஸந்தர்ப்பாதிகளாலும் ஒவ்வொரு ஸமயத்தில் வேண்டாததாகி விடுகிறது. இப்போது ஆனந்தம் தருகிற ஒன்று எப்போதும் ஆனந்தம் தருவதில்லை. எத்தனை ருசியான ஆஹாரமானாலும், நமக்கு ரொம்பவும் பிடித்தமான உணவு பதார்த்தமானாலும் கொஞ்சம் ஜ்வரம் வந்துவிட்டால் வைக்க வழங்குகிறதா? வேண்டும், வேண்டும் என்று எந்தப் பதார்த்தத்தைத் தேடிப்போய்ச் சாப்பிடுவோமோ அதையே இப்போது வேண்டவே வேண்டாம் என்கிறோம். தேடிப் தேடிப் போய் எது எதுகளை பர்ர்போபமோ அவற்றையே கண்வலி வந்தால் பார்க்காமல் கண்ணை மூடிக்கொள்கிறோம். உசந்த காஷ்மீர் சால்வைதான். 'எத்தனை ஹீதமாய் இருக்கிறது?' என்று மார்கழி மாஸம் எடுத்தும் போர்த்திக் கொண்டோம். சித்திரை பிறக்கிறது. அதே சால்வைதான். அது ஹிதம் தருகிறதா? மேலே பட்டாலே 'நெருப்பாட்டம்' இருக்கிறது. முதல் கார்யமாகப் பெட்டியிலே போட்டு மூடுகிறோம்.

வேடிக்கையாக ஒன்று சொல்வார்கள். பிரிட்டிஷ் துரைத்தனத்தார் காலத்தில் கிஸ்தி நோட்டீஸ்கள் வருமாம், நிலச் சொந்தக்காரனுக்கு, 'இப்படித் தீட்டி விட்டானே!' என்று கோபம் கோபமாக வருமாம். இந்தக் காலத்தில் "ஒரு தினுஸில்" உத்யோகஸ்தர்களை (உத்யோகஸ்தர்களை விட அரசியல்வாதிகளை) "ஸரி கட்டி" வரி, கிரி எதுவானாலும் ஸாகமாக மாற்றிக் கொள்வதாகச் சொல்கிறார்கள். அந்தக் காலத்தில் இந்த "தினுஸு" அவ்வளவாக நடைமுறையில் இல்லை. அடியோடு இல்லாமலில்லை. ஆனால் இப்போது தாண்டவம் பண்ணுகிற அளவுக்கு அப்போது இல்லை.

இப்போது மாதிரி எடுத்ததற்கெல்லாம் 'ரிட்'டும் அப்போது போடமுடியாது. ஆனதால் அந்த நிலச்சுவான்கள் மூக்கால் அழுதுகொண்டே கிஸ்தியைக் கட்டிவிடுவார்களாம். மனஸிலே மட்டும், "வரி போட்ட ஆபீஸரை எப்படியாவது பழி வாங்கவேண்டும்" என்று கங்கணம் கட்டிக்கொள்வார்களாம்.

தநுர்மாஸ பஜனை முடிந்து ராதா கல்யாணம் நடக்கும். நிலக்காரர்கள் அதற்கு அந்த உத்யோகஸ்தரை மரியாதை பண்ணிக் கூப்பிடுவார்கள். அவரும் வருவார். ராதா கல்யாண முஹூர்த்தம் முடிந்து நன்றாக போஜனமும் பண்ணி வைத்து, சந்தன தாம்பூலம் கொடுத்து உத்யோகஸ்தரை ரொம்பவும் மரியாதையுடன் அனுப்பிவைக்கிற கட்டம் வரும். "நன்னா சந்தனம் பூசிக்கோங்கோ, பூசிக்கோங்கோ" என்று அவரிடம் கேட்டுக்கொள்வார்கள். நல்ல குளிர் மாசம். அவர் எவ்வளவு பூசிக்கொள்வார்? ஏதோ கையில், கழுத்தில் கொஞ்சம் தடவிக் கொள்வார்.

வரி கட்டிவிட்டு, மனஸுக்குள் க்ஷாத்ரமாயிருப்பவர்கள் பழிவாங்குவதற்கு இதிலேதான் "ஆயுத"த்தை ஒளித்து வைத்துக் கொண்டிருப்பார்கள்!வெளியிலே மரியாதை குறையாமல் ரொம்பவும் அன்பு ஸ்வாதீனமாக, யார்டா அங்கே? ஸார் ஷர்ட்டைக் கழட்டுடா, ராதா க்ருஷ்ண ப்ரஸாதமா உடம்பெல்லாம் சந்தனம் தடவலாம்" என்று சொல்லி, அப்படியே அவர் உடம்பெல்லாம் பேலா சந்தனத்தையும் கொட்டிச் சொத சொதவென்று தேய்த்து விடுவார்களாம். பக்கத்துக்கு ஒருத்தராகக் கூப்பிட்டு நிறுத்திப் பெரிய பெரிய விசிறிகளை அவர்களிடம் கொடுத்து, "ஸாருக்கு நன்னா விசுறுங்கோடா" என்பார்களாம்.

இந்த பலவந்த உபசாரத்தில் அதிகாரி உடம்பெல்லாம் வெட வெட என்று நடுங்கிக்கொண்டு தவியாய்த் தவித்து ஊரைவிட்டு மாற்றல் கேட்டுக்கொண்டு ஓடிப்போய்விடுவாராம்!ஆயுதமாக ஹிம்ஸித்த இந்த சந்தனமும் விசிறியும் சித்திரை வைகாசியில் "சைத்யோபசாரம்" என்பதாக எத்தனை ஆனந்தம் தந்திருக்கின்றன?

## ஆசையை விழுங்கும் இன்னோர் ஆசை

ஒரு ஆசையை இன்னொரு ஆசை முழுங்கி, ஆனந்தத்தைப் பறிப்பதையும் பார்க்கிறோம். ரொம்பவும் பிடித்த பாடகரின் கச்சேரி. ஃப்ரீ பாஸூம் கிடைக்கிறது. ஆனால் யாரோ நெருங்கின பந்துவுக்கு அன்று ஆபரேஷன், அல்லது "என்னவோ"வே நேர்ந்துவிட்டது, என்றால் கச்சேரிக்குப் போகத் தோன்றுகிறதா? இப்போது பாட்டு ஆசையும், ஆனந்தமும் என்ன ஆயின? ஒரு ஆசையை இன்னொரு ஆசை முழுங்கிவிடுகிறது. பாட்டு ஆசையைவிட பந்துத்வ ஆசை பெரிசாயிருக்கிறது.

சாக்லேட்டை நீட்டினால் கையிலிருக்கிற சொப்பை ஒரு குழந்தை போட்டுவிட்டு இதற்கு ஓடிவருகிற மாதிரிதான் பெரியவர்கள் என்று சொல்லிக்கொள்கிற நாமும் இருக்கிறோம்

ஏதோ கொஞ்சம் ஸ்வாமி ஆசையும் நடுப்புற வந்து கோவிலுக்குப் போகிறான். புறப்பாட்டுக்கு நாழியாகும் என்பதால் காத்துக் கொண்டிருக்கிறான். அன்றோடு சினிமா கடைசி 'ஷோ' என்று காதில் விழுகிறது. உடனே "புறப்பாட்டை" விட்டுவிட்டு இவனே ஸினிமா கொட்டாய்க்குப் புறப்படுகிறான். அல்லது மாற்றியும் சொல்லலாம். ஸினிமாவுக்கு கிளம்புகிறான், அன்றைக்கு ஸ்வாமி புறப்பாடு என்று கேள்விப்படுகிறான், உடனே, ஸினிமா கிடக்கட்டும் என்று கோவிலுக்கு நடையை மாற்றிக்கொள்கிறோன். எதுவோ ஒன்று மொத்தத்தில் ஒரு ஆசையும் நிரந்தரமாக இல்லை. இன்னொரு ஆசை தன்னை முழுங்க விட்டுவிடுகிறது, ஒரேடியாயும் ஜீர்ணமாகி விடுவதில்லை. மறுபடி பழைய பலத்தோடேயே திரும்பி வந்து நம்மை பிடித்துக் கொள்கிறது.

ரொம்ப கஷ்டம் வருகிற காலத்தில் ஸினிமாவை விட்டு விட்டு நவக்ரஹம் சுற்றுவது பிள்ளையாருக்குக் குட்டிக்கொள்வது என்றிப்படி ஆசை, புராண ப்ரவசனம் கேட்கப் போகலாமே என்று தோன்றுகிறது. ஸௌக்யம் வந்தால் குஷி பிறந்து, அந்த ஆசைகள் போய் ஸினிமா, இல்லாவிட்டால் வேறே ஏதோ கேளிக்கையில் ஆசை பிறக்கிறது.

## அத்வைதம்

### தன் உடம்பிலேயே ஆசை வித்யாஸம்

நம்முடைய சரீரத்திலேயே ஒரு அங்கத்தைவிட இன்னொரு அங்கத்திடம் ஆசை ஜாஸ்தியாயிருக்கிறது. ஸாதாரணமாக மற்ற எல்லா வெளி வஸ்துக்களையும் விட நமக்கு நம்முடைய சரீரத்தில்தான் அதீத ப்ரியம். 'நாம்' என்பதே நம்முடைய சரீரம் என்றுதானே ஞானிகளைத் தவிர மற்ற எல்லோரும் நினைக்கிறோம்? "நான் சிவப்பாக இருக்கிறேன். அல்லது கறுப்பாக இருக்கிறேன். நான் குட்டையாயிருக்கிறேன், அல்லது நெட்டையாயிருக்கிறேன்" என்றெல்லாம் சொல்லும்போது உடம்பையே "நானாக" நினைப்பதுதானே தெரிகிறது? நமக்கு ரொம்ப ப்ரியமானவர்கள் கவனக் குறைவால் நம் கால்விரலில் ஒன்றைக் கொஞ்சம் மிதித்து விட்டால்கூட அவர்களிடமுள்ள ப்ரியம் போய்க்கோபம் கொள்கிறோம். ஏனென்றால் உடம்பிடம் அத்தனை ஆசை. இந்த்ரிய ஆனந்தங்களையெல்லாம் அதுதான் தருகிறது என்பதனால் இப்படியொரு ஆசை. ஸோப் ஸென்ட், ஸில்க் எல்லாம் போட்டு உடம்பை ஆசைஆசையாய் அலங்காரம் பண்ணிக்கொள்கிறோம்.

விரலிலே புண், நன்றாய் சீழ் வைத்துவிட்டது, அதனால் ஜ்வரம் ஜன்னி வந்தது என்றால், "எங்கே கை முழுவதுமே புரை ஓடி அழுகிவிடுமோ?" என்ற பயத்தில், நவரத்ன மோதிரம், வைர மோதிரம் போட்டு அலங்காரம் பண்ணிக் கொண்ட அந்த விரலை "ஆம்ப்யுடேட்" செய்யச் சொல்கிறோம்,. நம்முடைய உடம்பிலேயே ஒரு அங்கத்தைவிட இன்னொன்றிடம் ஆசை ஜாஸ்தி என்பதைக் காட்ட வந்தேன். இன்னொருத்தர் நம் கால் விரலைக் கொஞ்சம் மிதித்தால் அத்தனை கோபம் வருகிறதே, ஆனால் நமக்கு சர்க்கரை வியாதி வருகிறது, அதனால் காலில் ஏதோ புண் ஆறாமல் புரை ஓடிவிட்டது என்றால், விரல் மட்டுமில்லை, "காலையே வெட்டினாலும் பரவாயில்லை. உயிரைக் காப்பாற்றுங்கள்" என்று டாக்டரிடம் சொல்கிறோம்.

"ஹார்ட்"டுக்கு மருந்து சாப்பிட்டால் வயிற்றுக்கு இன்னின்ன போடக்கூடாது, யீணீமீ சேர்க்கவே கூடாது என்று diet வைக்கிறார்கள். 'அப்படியே பண்ணுகிறேன்' என்று நோயாளி செய்கிறபோது இவனுடைய சரீரத்திலேயே இவனுக்கு வயிற்றைவிட ஹ்ருதயத்திடம் ப்ரியம் ஜாஸ்தீ என்றுதானே அர்த்தம்? ஜி.ங்பி.க்கு ஏதோ ஒரு ஊசி குத்தினால், காது அடைத்து போகும் என்று சொன்னால், "காது போனால் போகட்டும், லங்ஸைக் காப்பாற்றிக் கொடுங்கள்" என்கிறான்.

ஆசைவேகம் ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவுவதாகவும் இருக்கிறது. ஒரு மனிதருக்குப் பணத்திலே ரொம்பவும் ஆசை. தன்னுடைய ஏக புத்ரனிடமும் அதே மாதிரி ஆசை. எதனிடம் ஜாஸ்தி ஆசை என்று அவருக்கே தெரியாது. பிள்ளைக்குப் 'போலியோ'வோ எதுவோ ஒரு வ்யாதி வந்தது. அதற்காக ஊர் ஊராக, தேசம் தேசமாகப் போய் வைத்யம் பார்த்தார். அத்தனை ஸொத்தும் கரைந்து போயிற்று. பார்த்துப் பார்த்துச் சேர்த்த ஸொத்தைவிடப் பிள்ளைதான் முக்யமென்று தெரிந்தது. அதாவது பண ஆசையை விடப் பிள்ளை ஆசைதான் பெரிசு என்று தெரிந்தது.

"ஈஷணா த்ரயம்" - "மூவாசை" என்பார்கள் வித்தேஷணா, புத்ரேஷணா, தாரேஷணா என்று மூன்று ஈஷணைகள். 'ஈஷணை'யிலிருந்துதான் ஈஷிக்கொள்வது என்ற வார்த்தை வந்திருக்கிறது. அதாவது சமைத்த பதார்த்தம் 'பத்து' (பற்று) என்று பாத்திரத்தில் கெட்டியாய் ஒட்டிக் கொள்வது போல ஏற்படும் ஆசைதான் ஈஷணை இரண்டும் பற்றுதான். பற்றிக் கொள்வது ஆசை. வித்தேஷணை பணத்தாசை, புத்ரேஷணா பிள்ளைப் பாசம், தாரேஷணா பெண்டாட்டி மோஹம். பிள்ளையின் இளம்பிள்ளை வாதத்துக்காக இந்த மனிதர் ஆஸ்திபாஸ்தியைக் கரைத்ததில் இவருக்கு வித்தேஷணையை விடப் புத்ரேஷணை பலமானதென்று தெரிகிறது.

அப்புறம் அந்தப் பிள்ளைக்கு உடம்பு ஸ்வஸ்தமாயிற்று. ஆனால் பெண்டாட்டி "போய்" விட்டாள். இரண்டாம் கல்யாணம் பண்ணிக்கொண்டார். கொஞ்ச காலம் கழித்து என்ன ஆயிற்றென்றால் இளையாள் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு, ஆதியில் அத்தனை அருமையாகக் காப்பாற்றிய பிள்ளையை அடித்து விரட்டி விட்டார்.

மறுபடியும் ஒரு ஆசையை இன்னொன்று முழுங்கிவிட்டது. புத்ரேஷணையை தாரேஷணை பெரிசாகிவிட்டது.

அப்புறம் அவருக்கு வயிற்றிலே என்னமோ உபாதி வந்தது. நிரம்ப சிகித்ஸை கொடுத்து ஸரிப் பண்ணி, "ஆனாலம் இனிமேல் ரொம்பவும் கொஞ்சமாக, ஆனாலும் புஷ்டியுள்ளதாக பாதாம் ஹல்வா, பால்கோவா மாதிரிதான் சாப்பிடவேண்டும்" என்று டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள். இப்போது என்ன பண்ணினார் என்றால், ஏற்கனெவே ஸொத்தும் ரொம்பக் கரைந்துவிட்டதால், விலை உயர்ந்த இந்த ஆஹாராதிகளை அந்த ப்ரிய பத்னியின் கண்ணில்கூடக் காட்டாமல், தான் மட்டும் மூடிமூடிச் சாப்பிட ஆரம்பித்தார். அதனால் தாரேஷணையையும்விடத் தன்னிடமே உள்ள ஆசைதான் பெரிசு என்று ஆயிற்று.

அப்படித் "தானாக" நினைத்ததிலும் பல அம்சங்கள் ஒன்றைவிட ஒன்று அதிக ஆசைக்குரியதாக உள்ளன என்பது இதற்கு அப்புறம் தெரிந்தது. அந்த மநுஷ்யருக்கு ஹார்ட் அட்டாக் வந்தது. அப்போது யீணீமீ - பண்டங்களான ஹல்வாவும் கோவாவும் சாப்பிடப்படாது என்று பத்தியம் வைத்து விட்டார்கள். இவரும் உடனே அவற்றைவிட்டுவிட்டார். 'தான்'என்று நினைத்த உடம்பிலேயே ஹ்ருதயத்திடமுள்ள ஆசையால் வயிற்று ஆசை போய்விட்டது!

இப்படி நம் உடம்பிலேயே ஒரு அங்கத்தை விட இன்னோர் அங்கத்திடம் அதிக ப்ரியம் இருக்கிறது. கார்யங்களைச் செய்யும் கை,கால் முதலான அங்கங்களை விட ரஸாநுபவத்தை, சுவை உணர்ச்சியைத் தரும் நாக்கு, காது, மூக்கு, கண் முதலியவற்றிடம் அதிக ஆசை எனலாம். நான் சொன்ன ஆசாமிக்கு ('அவர் யார்? அட்ரஸ் சொல்லுங்கள்' என்று கேட்டுவிடக்கூடாது!) கண்ணில் கோளாறு வந்தது. அப்போது அதற்கு மருந்து கொடுத்தால், உடம்பு பூரா ஒரே நரம்பு மண்டலமாதலால் காலில் வலி வந்து நடமாடக் கஷ்டம் ஏற்படும் என்றார்கள். "பரவாயில்லை" என்று சொல்லிக் கண்ணை குணப்படுத்திக்கொண்டு, காலுக்குக் கஷ்டத்தைத் தெரிந்தே வரவழைத்துக் கொண்டார். கர்மேந்த்ரியத்தைவிட ஞானேந்த்ரியம் ஆதிக ஆசைக்குரிய தாயிருக்கிறதென்பதற்கு த்ருஷ்டாந்தம்.

இன்னொரு ஸமயத்தில், அந்தக் கண்ணே மங்கிப்போனாலும் பரவாயில்லை என்று உயிருக்கு ஆபத்து என்னும் போது ஏதோ ஊசிப் போட்டுக் கொண்டார். எல்லா இந்த்ரியங்களையும்விட உயிர் பெரிசாயிருக்கிறது. இதனால்தான், ஒரு உணர்ச்சியுமில்லாமல் 'கோமா'விலேயே எட்டு மாஸம், பத்து மாஸம் தன்னை வைத்திருக்க முடியுமென்றாலும் அதற்குப் பணம் கட்டி வைத்யம் பார்த்துக் கொள்கிறேனென்கிறான். மயக்க நிலையிலேயும் கூட இருக்கிற அந்த உயிர் இன்னதென்றே இவனுக்குத் தெரியாத நிலையிலேயும் இப்படி உயிராசை என்று ஒன்று இருக்கிறது!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### மனம் ஆத்மாவுக்கும் புலனுக்கும் இடைப்பட்டது

உயிருக்கு முன்பாகவும் கர்மேந்த்ரிய ஞானேந்த்ரியங்களுக்குப் பின்பாகவும் வருகிற ஒன்றைச் சொல்லவேண்டும். ஜீவனுக்கு ரொம்பவும் முக்யமான ஒன்று. அதுதான் மனஸ். இந்த்ரியங்களால் பெறும் அநுபோகங்களையெல்லாம் உணர்வது மனஸ்தான். ஆனால் இந்த்ரிய உபகரணங்கள் இல்லாமலேயும் அது தானாக அநுபவங்களைப் பெறும். பல தினுஸாக எண்ணி எண்ணிக் கல்பனைகள் செய்வதிலேயே ஸந்தோஷம், பயம், துக்கம் எல்லாம் படுவது பின்னே சொன்னவகையைச் சேர்ந்ததுதான். ஒரு கல்யாணமென்றால் ஸந்தோஷப்படுவது, ஒரு சாவு என்றால் துக்கப்படுவது, ஆவி சேஷ்டை என்று கேள்விப்பட்டால் பயப்படுவது, பக்கத்து வீட்டுக்காரனுக்கு லாட்டரி விழுந்தால் பொறாமைப்படுவது என்றிப்படிப் பல உணர்ச்சிகள் (மற்ற இந்த்ரியங்களின் மூலமாக இன்றி) மனஸுக்கே டைரக்டாக உண்டாகிறவைதான். உயிரைப்பற்றி ஒரு மநுஷ்யனுக்குத் தெரியாதது போல மனஸைப்பற்றித் தெரியாமலில்லை. கர்மேந்த்ரிய ஆனந்தத்தை விட ஞானேந்த்ரிய ஆனந்தத்தைப் பெரிசாக நினைக்கிற

மநுஷ்யன், அந்த எல்லா இந்த்ரியங்களின் ஆனந்தத்தையும்விட மனஸின் தனித்த ஆனந்தத்தையே பெரிசாக நினைக்கிறான். குடி, கஞ்சா, என்று போகிறானே அது எதற்கு? போதையிலே கண் தெரியாமல், காது கேட்காமல், வாயும் குளறிப்போய் - அதாவது ஞானேந்த்ரியங்கள் எல்லாவற்றையும் ஹானி செய்துகொண்டு, தள்ளாடித் தள்ளாடி நடந்தபடி - அதாவது கர்மேந்த்ரியத்தையும் ஹானி செய்தகொண்டு - ஏதோ ஒரு சாக்கடையில் போய்ப் புரளுகிறானே, தன்னையே 'படேர்' 'படேர்' என்று அடித்துக்கொள்கிறானே எதனால்? எதற்காக? தனக்கு ரொம்பவும் ப்ரியமான சரீரத்தை இத்தனை கஷ்டப்படுத்திக் கொள்வது, அந்த போதை நிலையில் மனஸிலே இவனுக்கு ஏதோ ஒரு ஆனந்தம் தெரிகிறதே, அதற்காகத்தான். கர்மேந்த்ரிய, ஞானேந்த்ரியங்களை மட்டுமின்றி அறிவுக்கே இந்த்ரியமான மூளையையும் அந்த நிலையில் பறிகொடுத்து விட்டு இவன் தேடிப்போகிற எதுவோ ஒன்று மனஸின் ஆனந்தந்தான் கவலைகளை மறக்கணும். மனஸ் ஸந்தோஷமாய் இருக்கணும் என்றுதான் மற்ற இந்த்ரியம், மூளை இவற்றிலுள்ள அதீதப் பற்றையும் விட்டு, ஊரவமானத்தையும் வாங்கிகொள்ளத் தயாராக போதை வஸ்துவில் போய்விழுகிறான்.

ஸரி, பழைய கேள்வியை மறுபடி கேட்கிறேன், அந்த ஆனந்தம் அப்படியே சாச்வதமாகத் தங்கி நின்றதா? எத்தனை மொந்தை போட்டாலும் எப்போதோ ஒரு போது போதை தெளியத்தான் செய்கிறது, ஆனந்தம் மாயமாகப் போய்விடுகிறது. வயிறுகெட்டு, குடும்பம் கெட்டு, இப்படிக் கெடுத்த பாபமெல்லாம் இவன் மேல் மூட்டையாக விழுகிறது. ஆனந்தத்துக்காக இவன் செய்த காரியமே இந்தப் பாப மூட்டையின் வழியாக இவனுக்கு மஹா கஷ்டத்தையும், துயரத்தையும் கொடுக்கிறது. "பாபம் சரதி பூருஷ:" தான்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## மனத்தின் இன்பமும் நிலைத்ததல்ல

மநுஷ்யனுக்குத் தன்னிலேயே மற்ற அங்கங்களை விட அதிப்ரியமானதாயிருக்கிற இந்த மனஸினால் பெறும் ஆனந்தங்கூட ஒரு அளவுக்குப் பிறகு அலுத்துத்தான் போகிறது. படித்த நாவல் மனஸுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. அதனால் படுத்த பின்னேயும் தூக்கம் வராமல் நினைவு அதையே சுற்றிச் சுற்றி வருகிறது. இப்படியே வித்வான் பாடின தோடி, இல்லாவிட்டால் யாரோ ஸ்வாமிகள் பண்ணின பூஜை, என்று இவன் ஆழ்ந்து அநுபவித்து மகிழ் ந்த எதுவோ ஒன்று ராவெல்லாமும் மனஸில் சுற்றிச் சுற்றி வருகிறது. மனஸ் ஆனந்தித்ததுதான். இதற்காக ஒரு செலவுமில்லை. கையை காலை ஆட்டி வேலை செய்யும் ச்ரமம் இல்லை, வேறே எந்த விதமான கஷ்டமுமில்லை. ஆனால் அதே நினைவு ராத்ரி பன்னிரண்டு (மணி), ஒன்று என்று நீடித்துக்கொண்டிருந்தால்? அது பிடிக்கவா பிடிக்கிறது? "தூக்கம் வராமல் உபத்ரவப் படுத்துகிறதே" என்று எரிச்சலாக வருகிறது.

மனஸைத்தான் "நிஜ நாம்" என்று நினைத்துக்கொண்டு அதற்காக மற்ற எல்லாவற்றையும் விட்டுவிடத் தயாராக இருக்கிறோம். ஆனால் இப்படிப்பட்ட மனஸின் ஆனந்தமும் ஒரு ஸ்டேஜில் பிடிக்காமல், வெறுமனே செத்துப் போனமாதிரி, ஒன்றும் தெரியாமல் தூங்குவதில் ஆசை உண்டாகிறது!தூக்கத்திலே உடம்புக்கோ, மனஸுக்கோ, புத்திக்கோ ஏதாவது கொஞ்சமாவது ஆனந்தம் இருக்கிறதோ? இல்லை அப்படியிருந்தும் அதிலே ஆசை. நாலு நாள் தூக்கம் இல்லாவிட்டால், உடம்பு, மனஸ், புத்தி எல்லாமே பலஹீனப்பட்டுப் போகிறது. ராஜபோகமாக ஜீவிக்கிறவன், சந்த்ரிகை தாவள்யமாய்க் கொட்டும் ஸலவைக் கல் நிலா மாடத்தில், பட்டு மெத்தையில், சயனித்துக்கொண்டிருக்கிறான். தென்றல் ஜிலு ஜிலு வென்று வீசுகிறது. ப்ரிய பத்தினி பக்கத்திலேயே ஸுநாதமாக வீணாகானம் செய்து கொண்டிருக்கிறாள். அத்தர் வாஸனை மணக்கிறது. ஆனாலும் ஒரு ஸ்டேஜுக்கு அப்புறம் இத்தனை ஸுகமும் தெரிய வேண்டாம் என்று மறந்து தூங்குவதற்கு ஆசைப்படுகிறான்.

மற்ற ஆசைகளும், ஆனந்தங்களும் அநுபவிக்கும் போதே

ஒரு ஸ்டேஜூக்கு அப்புறம் அலுத்துப் போகிறாற்போல் தூக்கம் மட்டும் தூங்குகிறவனுக்கு அலுத்துப்போவது என்றில்லை. அவன்தான் உணர்ச்சியே இல்லாமல் தூங்குகிறானே, எப்படி அலுப்பு தெரியும்? ஆனால் முழித்துக்கொண்ட பின் மறுபடி கொட்டாவி வந்தால், 'இது என்ன சனியன்!மறுபடி தூக்கம் வருகிறது? தலையிலே தண்ணியைக் கொட்டிக் கொண்டாவது அதை அடித்து விரட்டுவோம்' என்று நினைக்கிறான. அதாவது தூக்க ஆசை - ஆனந்தமும் அலுத்துத்தான் போகிறது.

## அலுத்துப் போனாலும் அற்றுப் போவதில்லை

ஒவ்வொரு ஆசையும் ஒவ்வொரு ஸமயத்தில் அலுத்துப் போகிறது. ஆனாலும் எந்த ஆசையுமே ஒரு வழியாக அற்றுப்போயும் விடாமல் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் 'விட்டேனா பார்' என்று மறுபடி படையெடுக்கிறது. ஆசையைப் பூர்த்தி பண்ணும் வஸ்துவின் அநுபோகம் ஜீவனுக்குத் திரும்பத் திரும்ப வேண்டியிருக்கிறது. அதற்கு அவன் அடிமையாகிவிடுகிறான், addict - ஆகிவிடகிறான். அடிமையாய் விட்டால் அப்புறம் துக்கப்பட வேண்டியதுதான்.

'ஷவர்பாத்' தான் தனக்கு 'ஹாபிட்' என்றால் எல்லா இடத்திலும் 'ஷவர் பாத் கிடைக்குமா? ஸங்கீதத்தில் ராஸிக்யம் இருக்கிறவனுக்கு எப்போதும் உசந்த ஸங்கீதமாகக் கிடைக்க முடியுமா? கவிதையிலே ரொம்ப ரஸிப்பு, இலக்கியத்திலே ஈடுபாடு இருக்கிறவனுக்கு உசந்த விஷயமாக எப்போதோதான் கிடைக்கிறது. காமா சோமா, கன்னா பின்னா ஆகியவைதான் நிறையக் கிடைக்கின்றன. இவனுக்கோ பிடிக்காமலிருக்க முடிவதில்லை. அப்படி ஹாபிட் ஆகிவிட்டது. ஆனால் படிக்க எடுக்கிற புஸ்தகம் எதுவும் த்ருப்தி தரமாட்டேன் என்றது. அதற்காகப் படிக்காமல் இருந்தாலும் dull -ஆக , depressed- ஆக இருக்கிறது. ஆசை உண்டாக்குகிற ஹாபிட் என்கிற பழக்க தோஷத்தினால் இப்படியெல்லாம் துன்பம். ரேஸ் கோர்ஸ், கள்ளுக்கடை சீட்டாட்டம், காஃபி க்ளப்தான் என்றில்லை, எதிலே ஆசை வைத்தாலும் அது ஒரே இழுப்பாக இழுத்து, அதிலே ரொம்ப ஆனந்தத்தைத் தந்த அநுபோகத்துக்காக மறுபடி மறுபடி தாஹப்பட வைத்து ஒருத்தனை வாட்டி

எடுத்து விடுகிறது. இவன் எதிர்பார்பபது - உசந்த ஸங்கீதம் பிடித்தவனுக்கு உசந்த ஸங்கீதம், க்ராம்யக் கூச்சல் பிடித்தவனுக்கு அப்படிப்பட்ட கூச்சல், உசந்த லிட்ரேசர் பிடித்தவனுக்கு ரஸமான இலக்கியம், ஆபாஸக்கூத்து பிடித்தவனுக்கு அந்த ஆபாஸம் இட்லி ஸாம்பார் ப்ரியனுக்கு அந்த போஜ்யம் -இப்படி ஒவ்வொருத்தனும் எதிர்பார்ப்பது அவன் ஆசைப்படும் தரத்துக்கு எப்போதும் கிடைப்பதில்லை. அப்படிப்பட்ட ஸமயங்களில் ஏமாற்றமும் துக்கமுமே ஏற்படுகிறது. அந்த ஆசை இல்லாதிருந்தால் இந்தத் துக்கமும் இல்லை.

குறிப்பாக ஒன்றிலே ரொம்ப ஆசை வைத்து ஓஹோ என்று ஸந்தோஷிப்பதாலேயே, அது கிடைக்காத போதெல்லாம் ஒரேயடியாகக் குறைப்பட்டுக்கொண்டு துக்கம் கொண்டாடுவதாக ஆகிறது. அதே ரகத்தைச் சேர்ந்த வேறு நல்ல விஷயங்களைக்கூட உள்ளபடி அநுபவித்து ரஸிக்க முடிவதில்லை. இவனுக்கு எதுவோ ஒரு ராகம், எதுவோ ஒரு கீர்த்தனம் favourite (அலாதியாய்ப் பிடித்தது என்றால், ஒரு வித்வான் வேறே எத்தனை ராகம், எத்தனை கீர்த்தனம் தேவகானமாகப் பாடி, ஸபை பூராவும் கொண்டாடினாலும், இவன் மட்டும் தனக்குப் பிடித்ததைப் பாடவில்லையே என்று மூக்கால் அழுகிறான். இப்படியே இவனுக்கு ஒருத்தர் favourite வித்வானென்றால், வேறே எத்தனை வித்வான்கள் நன்றாகப் பாடினாலும், தனக்குப் பிடித்தவர் பாடவில்லையே என்றே குறைப்படுகிறான்.

ஸ்வாமி, ஸ்வாமியார்கள் விஷயத்தில்கூட இப்படி உண்டு. ஏதோ ஒரு க்ஷேத்ர மூர்த்தியிடந்தான் ஒருத்தனுக்கு ரொம்பப் பிடித்தமென்றால், வேறே எந்தக் கோவிலுக்குப் போனாலும், அங்கே எத்தனை பேர் பக்தி பரவசமாக தர்சனம் பண்ணிக்கொண்டிருந்தாலும், இவன் மட்டும், "அந்த மாதிரி ஆகுமா?" என்றுதான் குறையோடு நினைத்துக்கொள்கிறான். யாரோ ஒரு ஸ்வாமியாரைப் பெரியவர் என்று பிடித்துவிட்டால், அப்புறம் வேறே எந்த மஹானைப் பார்த்தாலும், "உம், அவர் மாதிரி ஆகாது" என்றுதான் முனகிக்கொள்கிறான்!

அப்புறம் நமக்குப் பிடித்த ஸ்வாமிக்கே எத்தனை நன்றாய் அலங்காரம் பண்ணியிருந்தாலும், பிக்ஷாடன அலங்காரம்

மாதிரி ஆகுமா என்று குறைப்படுவது, நமக்குப் பிடித்த ஸ்வாமிகளே கீதை உபந்நியாஸம் எவ்வளவு உயர்வாகப் பண்ணினாலும், "விவேக சூடாமணி" பண்ணப்படாதோ என்று குறைப்படுவது - என்றெல்லாமும் ஒன்றில் ஆசை, சந்தோஷம் என்பதாலேயே அநேக வேறு ஸந்தோஷங்களைப் பறிகொடுப்பதாக ஆகிறது!

அதற்காக, நமக்குப் பிடித்ததை நிரந்தரமாகப் பிடித்து வைத்துக்கொள்ள முடிகிறதா? இல்லை. அது எப்போதாவது தான் கிடைத்தால் கிடைக்கிறது. அப்படிக் கிடைக்காத போது ஒன்றும் பிடிக்க மாட்டேனென்கிறது. சொல்லத் தெரியாத வேதனையாக இருக்கிறது. சில ஸமயத்தில் கோபமாகக்கூட வருகிறது.

கஞ்சா, இந்த நாளில் 'drug' என்று பேர் தந்திருக்கும் போதை வஸ்துக்களில் ஆசை வைத்து ஹாபிட் ஆக்கிக் கொள்ளும்போது, ஆசைப் பூர்த்தியால் தேஹம் கெட்டு புத்தி வைகல்யம் (தடுமாற்றம்) ஏற்படுகிறெதன்றால், ஹாபிட்டை இவன் விடப்பார்த்தாலோ, முடியாமல், அது அவனைப் படாத பாடுபடுத்தி ப்ராணஹத்திகூடப் பண்ணிக்கொள்ளச் செய்கிறது என்கிறார்கள்.

அதாவது ஆசையால் கெடுதல் என்று தெரிந்தால்கூட அதை விட்டு விடுவது ச்ரமமாயிருக்கிறது.

நாம் பெரிசாக ஆசைப்பட்டுத் தேடிப் போகாமல் அதுவாகவே வந்து கலப்பில்லாத ஆனந்தம் தருவதாகவும் சில வஸ்துக்கள் இருக்கின்றன. கொஞ்சம் விச்ராந்தியாயிருக்கலாமென்று பீச்சில் போய் உட்காருகிறோம், அல்லது மொட்டைமாடியில் போய் உட்காருகிறோம். நமக்கு அன்று பூர்ணிமை என்று தெரியாது. ஆனால் தலையைத்தூக்கிப்பார்த்தால் பூர்ணசந்த்ரன் வெண்ணெய்க்கட்டி மாதிரி அழகாகத் தெரிகிறது, குளுகுளு என்று சந்த்ரிகையைக் கொட்டுகிறது. நாம் ஆசைப்படாமேலே ஆனந்தம் கிடைக்கிறது. இந்த ஆனந்தத்துக்காக நாம் எந்தக் கஷ்டமும் படவில்லை. இதற்கு அப்புறமும் இந்த அநுபவத்தால் ஒரு கெடுதலும் வரப்போவதில்லை. எல்லாம் ஸரிதான். ஆனாலும் இந்த ஆனந்தமும் எத்தனை நாழி சாச்வதம்? அத உள்ளளவும் கூட அதாவது ராத்ரி பூரா நம்மால் அதைப்

பார்த்துக்கொண்டிருக்க முடிகிறதா? உசந்தால் ஒரு மணி பார்ககிறோம். அப்புறம் அந்த ஆனந்தம் நிற்கிறதா? ஆனாலும் இன்றைக்குப் பார்த்ததில் 'ஹாபிட்' மாதிரிக் கொஞ்சம் ஏற்பட்டுவிட்டது. நாளைக்கும் சந்த்ரனைப் பார்க்கிறோம். ஆனால் அது இன்று மாதிரி இல்லை. கொஞ்சம் மூளியாகத் தானிருக்கிறது. இன்று பூர்ணமாகப் பார்த்துவிட்டதாலேயே நாளைக்கு மூளியாகப் பார்க்கும்போது என்னவோ போல் இருக்கிறது. 'எப்போ பூர்ணிமை வரும்? எப்போவரும்?' என்று இன்னும் ஒரு மாஸத்துக்கு அப்புறம் அதேநாள் வருகிற வரைக்கும் ஒரு ஆசை அடித்துக்கொண்டேயிருக்கிறது. அதாவது முதலில் பூர்ணிமைக்காக ஆசைப்படா விட்டாலும்கூட, அதைப் பார்த்து ஆனந்தப்பட்டபின் ஆனந்தமே ஆசையை உண்டாக்கிவிடுகிறது. இப்படி எதிர்பாராமல் தானாகவே ரொம்ப ஆனந்தமாகவருகிறவையும், பிற்பாடு அது வராதா வராதா என்று எதிர்பார்க்க வைக்கிற ஆசையை ஏற்படுத்திவிடுகிறது. எந்த ஆனந்தமானாலும் அது நிரந்தரமாய் இருப்பதில்லையாதலால், அந்த ஆனந்தத்துக்குக் காரணமான வஸ்து ஏதோ ஒரு ஸமயத்தில் மட்டுமே நமக்குக் கிட்டுவதாய் இருந்துகொண்டு மற்ற ஸமயங்களிலெல்லாம் அதற்காக நம்மை தவிக்கப் பண்ணிக்கொண்டிருக்கிறது.

நல்லதில்லாததுகளைப் போலவே நல்லதின் விஷயத்திலும் இப்படியே இருக்கிறது. ஈச்வர தர்சனம் க்ஷணகாலம் கிடைத்து அவன் மறைந்துபோய் விடடானானால் அப்புறம் அந்த தர்சன ஆசை பக்தனைப் பைத்தியமாக, வெறியாக ஆக்கிவிடுகிறது. அதை ஒரு உத்தமமான விரஹ தாபமாகச் சொல்கிறார்கள். அந்த பாவத்திலேதான் மாணிக்கவாசகர், ஸ்ரீ க்ருஷ்ண சைதன்யர் எல்லாம் கதறு கதறு என்று கதறி மூர்ச்சைபோட்டு விழுந்திருக்கிறார்கள். சென்ற நூற்றாண்டில் இப்படியே (ராமக்ருஷ்ண) பரமஹம்ஸாவைச் சொல்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## அத்வைதம் தவிர அனைத்திலும் துக்கம்

ஸ்ருஷ்டியிலே ஈச்வரன் சாச்வத ஆனந்தம் தருவதாக எதொன்றையுமே படைக்கவில்லை. அவனே தர்சனம் தந்தால்கூட அது ஸர்வ கால ஆனந்தமாக இருப்பதில்லை. நாமதேவரைப் போல, ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகைளைப் போல தினந்தினம் அவனைப் பார்த்துக் கொட்டமடித்தவர்களைகூட அவ்வப்போது விட்டுப் பிரிந்து அழ அழவுந்தான் வைத்திருக்கிறான். க்ருஷ்ணனுக்கு ராதை உயிர் என்கிறார்கள். அவளையும் விரஹத்தில் அப்படியே தேஹமே சிதறிப்போய் விடுகிறாற்போலத் துடிக்கத்தான் விட்டிருக்கிறான். ஆசைப்பட்டால் அழுதுதான் ஆகணும் என்றே இப்படியெல்லாம் வைத்திருக்கிறான். அவனை வெளியிலே வேறாக வைத்து ஆனந்தப்படுகிறவரை அதுவும் சாச்வத ஸுகமில்லை, அத்வைதம் தவிர எல்லாம் துக்கம்தான் என்று காட்டவே இப்படிப் பண்ணுகிறான் போலிருக்கிறது.

இலக்கியம், ஸங்கீதம், சிற்பம் முதலானதுகளில் மனஸைக் கொடுத்தவர்கள் (அதாவது நிரம்ப ஆசை வைத்தவர்கள்) உசந்ததாக அவற்றில் ஒன்றைப் பார்த்து விட்டால் அதுமாதிரி பார்ப்போமா பார்ப்போமா என்று ஸதாவும் ஒரு தவிப்பாகத் தேடிக்கொண்டே இருப்பார்கள். தவிப்பது, தேடித்தேடி, அலைகிறது என்றால் அது அசாந்திதான், துக்கம்தான்.

கெட்ட அநுபோகங்களும் இதே மாதிரி ஒருதரம் ருசி கண்டுவிட்டவர்களுக்கு ஆசை வெறியைத் தூண்டிவிடுகிறது. அப்புறம் அவர்களே கொஞ்சம் அறிவு தெளிந்த நிலையில், 'ஐயோ, இத்தனை கீழ்த்தரமாக இருந்து விட்டோமே' என்று தனக்குள்ளேயே குன்றிப்போய் மிகவும் துக்கப்படும்படி இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## பிறரை வருத்தியும்

இதிலே இன்னொரு பெரிய தப்பு என்ன என்றால் நாம் எதுவோ ஒன்றில் ஆசைப்பட்டுவிட்டால், அதன் அநுபோகத்தில் நமக்குக் கிடைக்கும் ஸ்வய த்ருப்திக்காகப் பிறத்தியார் என்ன கஷ்டப்பட்டாலும் பரவாயில்லை என்ற எண்ணம் வந்துவிடுகிறது. நமக்கு வாய்க்கு ருசியாக ஒன்று வேண்டுமென்பதற்காக வயஸான தாயார் கல்லுரலைக் கட்டிக்கொண்டு மன்றாடினாலும் பரவாயில்லை என்று தோன்றுகிறது. இப்படி எத்தனையோ கஷ்டங்களுக்கு, கொடுமைகளுக்குப் பிறரை ஆட்படுத்தி நம் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள நினைக்கிறோம். இதெல்லாம் நம் பாபக்கணக்கில் ஏறி வருங்காலத்தில் நம்மை வட்டிபோட்டுத் தீட்டிவிடும்.

இந்த விஷயத்தை ஆலோசித்துப் பார்க்கும்போது பிறர் கஷ்டப்பட்டாவது நாம் த்ருப்திப்பட நினைக்கிறோம் என்பது நமக்கே தெரியாத விதத்தில், ரொம்பவும் நல்ல உத்தசேங்களில்கூட எத்தனை சூதாக (இதைத்தான் மாயை என்பது) வேலை செய்கிறது என்று தெரிகிறது. பொது ஜனஸேவை பரோபகாரம் என்று செய்கிறோமே, தாத்பர்யம் என்ன? நம்மைக் கஷ்டப்படுத்திக்கொண்டாவது பிறருக்கு மகிழ்ச்சி உண்டாக்கவேண்டும் என்பதுதான். ஆனால் இந்த ஸேவையாலும் பிறத்தியாருக்கு த்ருப்தியைத் தருவதைவிட நமக்கே த்ருப்தி உண்டாக்கிக் கொள்கிறதுதான் உள்ளூர, நம்மை அறியாமலே, நமக்கு முக்யமாய்விடுகிறது. எப்போது பார்த்தாலும் நாம் விரும்புவது போன்ற பரோபகாரப் பணி நமக்குக் கிடைக்கும் என்ற சொல்ல முடியாதல்லவா? அப்படி சரீரத்தாலோ, த்ரவய்தத்தாலோ உபகாரம் பண்ண முடியாமலிருக்கிற நாளில், தொண்டில் ரொம்பவும் ஈடுபட்டவர்களுக்கு, 'ஐயோ, இன்றைக்கு தண்டத்துக்கு ஒரு தொண்டும், இல்லாமலிருக்கிறோமே' என்று வருத்தமாய் இருக்கிறது. அந்த மாதிரி ஸமயத்தில் எவனோ ஒருத்தன், 'தரித்ரத்தில் திண்டாடறேன், அஞ்ச பத்து உதவி பண்ணுங்கோ' என்று வந்தால் பரோபகாரிக்கு ஸந்தோஷமாயிருக்கிறது, 'யாரோ கீழே விழுந்துவிட்டார்கள். first-aid தரவேண்டும், ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டு போகவேண்டும்' என்று ஸேவைக்கு டிமான்ட் வந்தால்

உடனே ஸந்தோஷம் உண்டாகிறது.

அதாவது ஒரு பரோபகாரி விண்டு பார்த்துக் கொண்டால், அவனுடைய உள்மனஸுக்கே அது ஸம்மதமாகத்தான் இருக்காது என்றாலும்கூட, அவனுக்கு ஸேவை செய்வதில் உள்ள ஆசையினால், அவனையும் அறியாமலே அந்த ஆசைப் பூர்த்தியை முன்னிட்டு வேறு எவனோ ஒருத்தன் தரித்திரத்திலோ ஆபத்திலோ கஷ்டப்பட்டாக வேண்டியிருக்கிறது. அதவாது தான் இன்னொருத்தன் கஷ்டத்தைத் தீர்க்கவேண்டும் என்ற ஆசைப் பூர்த்தியை முன்னிட்டு எவனாவது கஷ்டப்படவேண்டும் என்று எதிர்பார்க்கிறான்!"எதிர்ப்பார்கிறான்" என்றால் மனஸ் அறிந்து இல்லை. "எனக்குத் தொண்டு வாய்ப்பு கிடைப்பதற்காக யாராவது கஷ்டப்படவேண்டும்" என்று மனஸறிந்து ஒரு உபகாரி நினைக்கமாட்டான். ஆனாலும் பதுங்கி கொண்டு இருக்கிறாற் போலத்தான் இருக்கிறது.

வெள்ள நிவாரணம் என்று பெரிதாக ஒரு பணி செய்து முடித்துத் திரும்பும்போது, "நாளைக்கு இப்படி ஒடி ஆடி நூறு ஜனங்களுக்குச் செய்வதற்கில்லையே" என்று ஒரு தாபம் பிறந்தால், அப்போது தனக்கு ஸேவா பாக்யம், அதிலே கிடைக்கும் ஆசைப்பூர்த்தி, ஆத்ம த்ருப்தி போய்விட்டதே என்ற அபிப்ராயம் துளியாவது இருக்கத்தான் செய்கிறது. ஸேவை மாதிரி உத்தம விஷயமாக இல்லாமல் கெடுதலானவற்றில் ஆசை உள்ளபோது இந்த அபிப்ராயமே நன்றாக பலமாக வெளிப்பட்டு, பிறரை மனஸறிந்து கஷ்டப்படுத்தியாவது ஸ்வய ஆசையைப் பூர்த்திப் பண்ணிக் கொள்ள வைக்கிறது.

எதுவோ ஒன்றில் நாம் ஆசை வைத்துவிட்டால் அது நம் கையை விட்டுப் போகிறபோது, நமக்கு அந்த ஒன்றில் ஏற்படும் மனத்ருப்தியையே நினைத்து பிறத்தியார் கஷ்டப்பட்டாவது நமக்கு அது மறுபடி கிட்டவைக்க வேண்டுமென்று நினைத்துவிடுகிறோம். இப்படி அநேகத் தப்பு எண்ணங்களை ஆசை உண்டாக்குகிறது.

இதுவரை ஆசைப்படுகிறவர் ஆளாகிற கஷ்டம், துக்கங்களையே பற்றி நிறையச் சொன்னேனே, ஆசைப்படுகிறவர்களால் மற்றவர்களுக்கு ஏற்படும் கஷ்ட துக்கங்களைப் பார்க்கும்போது இது ரொம்ப அல்பமாகி

விடுகிறது. ஆசையினால் எத்தனை கொலைகள் ஸாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கவேண்டுமென்று ராஜாக்கள், ராஜா மாதிரியான ஹிட்லர், முஸோலினி போன்வறக்கள் ஆசைப்பட்டால் எத்தனை லக்ஷம் உயிர்கள் சாகவேண்டியிருக்கிறது? நடக்கின்ற அத்தனை கொலையும் கொள்ளையும் ஸ்த்ரீகளை பலாத்காரம் படுத்துவதும், மற்ற மோசடிகளும் ஆசையினால்தானே?

தன்னுடைய ஆசையினால் மற்றவருக்கு இழைக்கும் இந்தத் துன்பங்கள் ஒருவனைச் சும்மா விடுவதில்லை. அவை எல்லாம் அவனுடைய பாபக் கணக்கில் ஏறி ஒட்டிக்கு இரட்டியாக அவனை நரக லோகத்திலும் மறு ஜன்மாக்களிலும் பழி வாங்கத்தான் செய்யும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**உயர் பண்புகளுக்கு ஊறு செய்யும் ஆசை**

இப்படிப் பாப ரூபமெடுத்துப் பழி வாங்குவதில் முக்யமானது பொய். ஆசைதான் இப்படிப் பலபொய்களை அடுக்க வைக்கிறது. பொய்க்கும் வித்து ஆசைதான். மநு முதலான மஹா பெரியவர்கள் ஸகல மக்களுக்கும் அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, தூய்மை, புலனடக்கம் என்ற ஐந்து உயர்ந்த பண்புகள் இருக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ஐந்தையும் நாசம் பண்ணுவதாக ஆசை என்பது இருக்கிறது.

ஹிம்ஸை ஏன் செய்கிறோம்? மாம்ஸத்தில் உள்ள ஆசையினால். இன்னொருத்தனிடமுள்ள ஒரு பொருளில் நமக்கு ஏற்படும் ஆசையால் அவனை ஹிம்ஸித்தாவது அதைப் பெறப் பார்க்கிறோம்.

ஸத்யத்தை ஏன் விடுகிறோம்? ஆசை வைத்த எதையோ ஸத்யமான முறையில் போய் அடைய முடியாது என்பதால் தான் இப்படிச் செய்கிறோம். நம்மைக் காப்பாற்றிக்கொள்ள

வேண்டும், நம்முடைய ஸொத்து, நம்முடைய அந்தஸ்து, மானம் போன்ற எதுவோ ஒன்றைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்ற ஆசைக்காகத்தான் பேசுகிற பொய்யெல்லாம், பண்ணுகிற மோசடியெல்லாம்.

பொருளிடத்திலுள்ள ஆசையால்தான் திருடுவது என்பதை விளக்கவேண்டிய அவச்யமில்லை. ஆசார சுத்தியைவிட்டு விடுவது, 'மனஸ் போனபடி ஸௌகர்யங்களை அநுபவிக்கவேண்டும்' என்ற ஆசையினால்தான். புலனடக்கம் போவது ஆசையால்தான் என்பதைச் சொல்லவே வேண்டாம்.

அதாவது மநு சொன்ன ஐந்து பெரிய தர்மங்களையும் மீறப் பண்ணுவது ஆசைதான். அறுபகைக்கு மூலம், ஐந்து தர்மங்களையும் நிர்மூலம் செய்வதற்கும் காரணம் - என்றிப்படி ஸகல தோஷங்களுக்கும் பிறப்பிடமாக இருப்பது ஆசைதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**அகண்ட ஆனந்தம் மனத்துக்கு இல்லை**

ஆக, ஆரம்பித்த இடத்துக்கே திரும்ப வருகிறோம் - நமக்குள்ளே தினந்தினமும் நடக்கிற தேவாஸுர யுத்தத்திலே நல்ல வ்ருத்திகளான தேவசக்திகளை ஹதாஹதம் பண்ணும் கெட்ட வ்ருத்தி என்னும் அஸுர சக்திகளுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாக இருப்பது ஆசைதான்.

உயர்ந்த ஸந்தோஷத்தைத் தருவதாக நமக்குத் தோன்றுகிற நல்ல ஆசைகள் கூட உண்மையில் துன்பம் தருபவைதான். ஏனென்றால் எப்பேர்ப்பட்ட ஆசையாயிருந்தாலும் அது ஒரு வித அரிப்புத்தான் ஆசை, ஆசை என்பது மனஸுக்கு எடுக்கிற தாஹம் தான் ஆசை. ஆசையிருக்கிறதென்றால் மனஸ் என்று ஒன்று இருக்கிறது என்றே அர்த்தம். மனஸ் என்பது இருந்துவிட்டால் உபத்ரவம்தான். மனஸ்

அத்மாவுக்கு த்விதீயமான வஸ்து, அதனால் பஹேதுவானது என்று பார்த்தோமே இந்த மனஸ் என்கிற வஸ்துதான் அகண்டானந்தமான பரமாத்மா சிறுத்துக் குறுகி போய் ஜீவாத்மா என்று வேஷம் போட்டுக்கொள்ளும்போது இப்படி அதைச் சின்னதாகக் குறுக்க வைத்துக் கட்டுவது. தனி ஜீவன்கள், Individual-கள் என்று தங்களை அவர்கள் தெரிந்துகொள்வதே தனித்தனி மனஸ்களைக் கொண்டுதான். ஆனதால் மனஸ் என்பது பரமாத்மாவுக்கு வேறேயாகத்தான் எப்போதும் இருக்கமுடியும். ரொம்ப உயர்ந்த நிலையில்கூட அது பரமாத்மாவைத் தொட்டுக் கவிந்து கொண்டோ, அல்லது பரமாத்மாவின் சக்தி, கருணை முதலானவற்றை ஒரளவுக்குத் தனக்குள்ளும் நிரம்பிக்கொண்டோதான் இருக்கமுடியுமே தவிர, அப்படியே அவனுடைய அகண்டாகார ஸ்வரூபத்தோடு ஒன்றாகி, அவனுடைய அகண்டாநந்தத்தைத் தானும் அநுபவிக்க முடியாது. இந்த மனஸைப் பூராவுமே அவனிடமே கரைத்து இல்லயென்றாக்கிக் கொண்டால்தான் சாச்வதமான அகண்ட ஆனந்தம் கிடைக்கும்.

வைகுண்டத்திலே, கைலாஸத்திலே பேரானந்தம் அநுபவிப்பதாகச் சொல்வதும்கூட மனஸை வைத்துக் கொண்டு பெறும் அநுபவம்தான். த்வைத விசிஷ்டாத்வைத ஸித்தாந்திகள் இது துக்கக் கலப்பேயில்லாத சாச்வத ஆனந்தம் என்று சொல்கிறார்கள். ஆனாலும்கூட அங்கே அவர்கள் முக்தர்களாகச் சொல்பவர்கள் பரமாத்மாவுக்கு வேறேயாக இருந்துகொண்டு, வேறுபட்ட மனஸால்தான் அவரை அநுபவிக்கிறார்களாதலால், நிறைந்த நிறைவு நிலையிலேயே நிரந்தரமாக இல்லாமல் குறைவுகளுக்கும், துக்கங்களுக்கும் எப்போதாவது ஒரு ஸமயத்திலாவது ஆளாகத்தான் செய்கிறார்களென்றே புராணங்களிலிருந்து தெரிகிறது. ஸாகக்ஷாத் அம்பாள், மஹாலக்ஷ்மியிலிருந்து நாரதர், ஸநகாதிகள், ப்ருங்கி மஹர்ஷி மாதிரியான மஹா மஹா பெரியவர்களும்கூடத் தனியான ஒரு மனஸோடு பரமாத்மாவுக்கு வேறே மாதிரி பாவத்தில் இருக்குமபோது துக்கத்துக்கும் கோபத்துக்கும் ஆளாவது, சாபத்துக்கு ஆளாவது, பரமாத்மாவைப் பிரிந்து ரொம்பவும் துக்கிப்பது, பூலோகத்தில் பிறந்து பச்சாதாபப்பட்டு மிகவும் உக்ரமாகத் தபஸ் செய்து தங்களையே வருத்திக்கொள்வது என்றெல்லாம் அவஸ்தைப்படத்தான் வேண்டியிருக்கிறது என்று புராணக்

கதைகளிலிருந்து தெரிகிறது. அதனாலேதான், மற்றப் பற்றுக்கள் (ஆசைகள்) விடுவதற்காகப் பரமாத்மா ஒருவனிடம் மாத்திரம் பற்று (ஆசை) வையுங்கள் என்று,

பற்றுக பற்றற்றான் பற்றினை - அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு

என்று திருவள்ளுவர் சொன்னதற்கு மேலேயும் போய்

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்

ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்.

என்று திருமூலர் சொன்னார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**யுத்தம் தீர ஆசையை அழிக்க**

நமக்கு ஸந்தோஷம் தருவதாகத் தோன்றினாலும் உண்மையில் கஷ்டம் விளைவிப்பதுதான் என்பதாகச் சில ஆசைகளைப் பற்றி மாத்திரம் நமக்கே தெரிகிறது. உதாரணமாக, அரிக்கிறபோது சொறிந்துகொண்டால் ஹிதமாயிருக்கிறதென்று அப்படிப் பண்ணினால் அப்புறம் புண் ஜாஸ்தியாவது நமக்கு நன்றாகத் தெரிகிறது. அதனால் சொறிந்து கொள்ளாமல் கட்டுப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறோம். எல்லா ஆசையுமே அரிப்புத்தான். ஆசை என்பதே அரிப்புத் தான். அதன் பூர்த்திக்காகப் பண்ணுவதெல்லாமே சொறிந்து கொடுத்துப் புண்ணை 'ஸெப்டிக்' ஆக்குவதுதான்.

இதனால் என்ன ஏற்படுகிறதென்றால் ஆசையை அழித்தால்தான் உள்ளே நடக்கும் தேவாஸுர யுத்தம் தீரும், நமக்கு சாந்தி கிடைக்கும்.

எப்படி அழிப்பது?

நூறு, ஆயிரம், லக்ஷமாக இத்தனை ஆசைகள் இருக்கின்றனவே!ஒன்றை அடக்கினால் இன்னொன்று தலைதூக்குகிறதே!அந்த இன்னொன்றை அடக்கப்போனால் முதல் ஆசையே 'நான் செத்தேனா பார்!' என்று 'ஸொரூபம்' காட்டுகிறதே!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மரணத்தால் ஆசை அழியுமா?**

"ஸரி, இந்த உடம்பு இருப்பதால்தானே ஆசை ஏற்படுகிறது? ஆசையால் துன்பப்படுவது - துன்பப்படுத்துவது, ஆசையால் பயப்படுவது - பயமுறுத்துவது, ஆசையால் அவமானத்துக்கு ஆளாவது - அவமானத்துக்கு ஆளாக்குவது எல்லாம் உடம்பு உள்ளவரைதானே? செத்துப்போனவர்களுக்கு துன்பம் உண்டா, பயம் உண்டா, அவமானமுண்டா?" என்று நினைத்து மரணத்துக்கு வேண்டிக்கொள்ளலாமா? குளம் குட்டையில் விழலாமா? சாண் கயிற்றைத் தேடலாமா?

ஊஹும். இது ஸொல்யூஷன் (தீர்வு) இல்லை.

செத்துப் போனவர்களுக்கு ஆசையும் அதனால் ஏற்படும் பயம், அழுகை, அவமானம் முதலானதும் இல்லை என்று முடிவு பண்ணினது தப்பு. செத்துப்போனவர்கள் ஒரேயடியாகப் போய்விடவில்லை. உயிரோடிருந்தபோது பலவிதமான ஆசைகளுக்கு உட்பட்டு அவர்கள் பண்ணிய பாபங்களை உடம்பு போன பின்னும் நரகாதி லோகங்களில் அநுபவித்துவிட்டு பாக்கியை அநுபவிக்க இந்த லோகத்துக்கே அவர்கள் வந்து கொண்டுதானிருக்கிறார்கள்.

அதாவது அந்த உடம்புதான் போச்சு. வேறே உடம்பு வந்துவிட்டது. அது மநுஷ உடம்பாகவே இருந்து மறுபடி பழையபடியே ஆசைகள் பட்டு அவஸ்தைகளைத் தேடிக்கொள்ளலாம். அல்லது ஒரு மாட்டின் உடம்பாகி ஏர்க்காலில் அவதிப்படலாம். குதிரையின் உடம்பாகி

வண்டிபாரத்தை இழுத்துக்கொண்டு ஓடலாம். ஆக, உடம்பு, அதனால் வருகிற துன்பம் இரண்டையும் சாவினால் போக்கிக்கொண்டுவிட முடியாது.

அதிலும் தற்கொலையால் சாவு தேடிக்கொள்வது என்னும்போது, ப்ராண ஹத்தி என்று இதுவே பெரிய பாபமாகச் சேர்ந்து, இதற்காக வேறு மஹா கஷ்டமான தண்டனைகள் அநுபவிக்க வேண்டிவரும். தற்காலத்தில் சிலர் பெரிய தப்புக் கார்யம் பண்ணிப், "பிடிபட்டு விடுவோம்" என்கிற ஸ்தீதி உண்டானாலோ, அல்லது ஸஹிக்க முடியாத பெரிய துக்கம் எதுவாவது ஏற்பட்டாலோ ரிவால்வரை எடுத்துத் தங்களையே சுட்டுக் கொண்டு விடுகிறார்கள். ஆனால் ஸம்ஸாரத்தால் உண்டாகும் தீமைகளையும் துக்கங்களையும் போக்கிக்கொள்ள இது ஒரு வழியாகுமா என்றால், ஆகாது. ஸ்தூல சரீரத்தை அழித்துக்கொண்டாலும் அப்புறம் ஸூக்ஷ்மமாக ஏதோ ஒரு மாதிரியான மற்றொரு சரீரம் இருந்துகொண்டிருக்கும். நாம் பண்ணின கார்யம் எண்ணின எண்ணம் எல்லாவற்றுக்கும் காரணமாகவும், அவற்றை அநுபவித்த ஒன்றாகவும், சாவவுரை அநுபவித்தும் தீர்க்காமல் இன்னும் பா க்கி நிற்கும் அநுபவத்தை அடைய வேண்டியதாகவும், எண்ணின எண்ணங்களுடைய போக்குகள் மறுபடியும் அப்படியே எண்ண வைக்கிற விதத்தில் வேர் கொண்டு ஆஸ்பதமாகப் பற்றிக் கொண்டிருப்பதாகவும் 'அந்தஃகரணம்' என்பதன் ரூபமாக அந்த மற்றொரு சரீரம் இருந்துகொண்டிருக்கும். தற்கொலையால் ஸ்தூல சரீரத்தைப் போக்கிக்கொண்ட பிற்பாடும் அந்த சரீரத்தோடு சுற்றிக்கொண்டு இருக்கவேண்டும்.

நாமாக ஸூயிஸைட் பண்ணிப் போக்கிக் கொள்ளாமல் தானாக உயிர் போனால், ஜீவனின் ஸூக்ஷ்ம சரீரம் நரகம் அல்லது ஸ்வர்க்கத்தில் கர்மபலனை ஓரளவுக்கு அநுபவித்துவிட்டு, பாக்கியை அநுபவிக்க பூலோகத்திலேயே 'எண்பத்துநாலுலக்ஷம் யோனி பேதம்' என்னும் உயிரினங்களில் எதுவோ ஒன்றாகப் பிறக்கிறது. ஸூயிஸைட் பண்ணிக்கொண்டவனின் ஆவியோ நரகத்திலுள்ளதை விடக் கஷ்டமான அவஸ்தைகளை ஆத்மஹத்திப் பாபத்துக்காக இந்த லோகத்திலேயே அலையாய் அலைந்து அநுபவிக்கவேண்டும். நரகம்

அல்லது ஸ்வர்க்கம், அப்புறம் மறுபடி பூமி என்பதற்கு முந்தி, "பேயாய் அலைவது" என்றே சொல்கிறோமே, அப்படி ஒரே தவிப்புடன் அலையவேண்டும். அந்த ரூபத்தில் பசி தாஹம் முதலானவற்றைப் பூர்த்தி பண்ணிக்கொள்ளமுடியாமல் எவராவது ஒருத்தருடைய உடம்பைப் பிடித்து ஆட்டிவைத்துக்கொண்டு, இந்தப் பாபத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். வேப்பிலையால் வீறுவீறு என்று அடிவாங்கவேண்டும். இதோடு நிற்காது. மறுபடி ஜன்மா வரும். எந்தத் தப்பு வெளிவந்துவிடுமோ என்று பயந்து தற்கொலை செய்துகொண்டானோ, அல்லது எந்தத் தோல்வியைத் தாங்கமுடியாமல் சுட்டுக்கொண்டானோ, அல்லது எந்த வ்யாதிக் கஷ்டம் தாங்காமல் விஷத்தைச் சாப்பிட்டானோ அந்தத் தப்பு மாதிரியே ஒன்று அடுத்த ஜன்மாவில் அம்பலமாகி மானம் போகத்தான் போகும்., அல்லது அதே போன்ற தோல்வி அப்போது ஏற்படத்தான் செய்யும்., அதே மாதிரி வ்யாதி உபாதைப்படத்தான் செய்யும். அதனால் தற்கொலை மூலம் எதிலிருந்து ஒருத்தன் தப்புவதற்கு நினைக்கிறானோ அதனிடமிருந்து தப்புவதென்பது இல்லவே இல்லை.

இதனாலெல்லாந்தான் ஆத்மஹத்தி பெரிய பாபமென்று தர்ம சாஸ்த்ரங்கள் முடிவு செய்திருக்கின்றன. இக்காலச் சட்டப்படியும்கூட அது குற்றம் என்று வைத்திருக்கிறார்கள். படவேண்டிய கஷ்டங்களோடுகூட வேப்பிலை அடியும் வாங்குவதுதான் மிச்சம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பிறவித் தண்டனை**

ஒரு விதத்தில் பார்த்தால், இயற்கை மரணத்துக்கு அப்புறம் புனர்ஜன்மா ஏற்பட்டு மறு உடம்பு வருவதுங்கூட அடிவாங்குவதற்குத்தான். ஸாத்விக தண்டனை அதிகமாகிவிட்ட இக்காலச் சட்டமுறை அமலுக்கு

வருவதற்கு முன்பெல்லாம் குற்றவாளிகளுக்கு இத்தனை கசையடி என்று தண்டனை விதிப்பார்கள். கட்டிவைத்து அடிப்பார்கள். பெரிய குற்றங்களுக்குத் தரும் அத்தனை கசையடியையும் குற்றவாளியால் ஒரே ஸமயத்திலே தாங்கிக்கொள்ளமுடியாது. நடுவிலே மூர்ச்சை போட்டுவிடும். அல்லது உயிரே போய்விடும். 'இப்படி ஆவதற்கு விடக்கூடாது. ஒவ்வொரு கசையடியையும் அவன் அநுபவித்துக் கஷ்டப்படவேண்டும். அப்போதுதான் தண்டனை பெற்றதாகும்' என்ற அபிப்ராயம் அப்போது நியாய பரிபாலனமாக நினைக்கப்பட்டது. அதனால் என்ன பண்ணுவார்களென்றால், பக்கத்தில் ஒரு வைத்யரை வைத்துக்கொண்டே அடிக்க ஆரம்பிப்பார்கள். அவர் குற்றவாளியை அவ்வப்போது பரீக்ஷித்துக் கொண்டேயிருப்பார். ஏதோ ஒரு கட்டத்தில் அதற்குமேல் ஸ்மரணையோடு வலியை அநுபவிக்க முடியாதென்றோ, ப்ராணன் போய்விடுமென்றோ அவருக்குத் தெரிந்தால், உடனே, 'இதோடு இன்றைக்குப் போதும். நாளைக்கு, அப்புறமும் மீந்தால் அதன்பின் வரும் நாட்களில், பாக்கி அடிகொடுக்கலாம்' என்று சொல்வார். அப்படியே நிறுத்திவிடுவார்கள். அப்புறம் குற்றவாளிக்கு ஆஹாரம் போடுவார்கள். நல்ல ஆஹாரமாகவேபோடுவார்கள். அப்போதுதானே அடிவாங்க சக்தி இருக்கும்? அப்புறம் நன்றாகத் தூங்கவும் பண்ணுவார்கள். இந்த உபசாரமெல்லாம் மறுபடி தண்டனை தருவதற்காகவேதான் மறுநாள் மறுபடி 'பூசை' ஆரம்பித்துவிடுவார்கள்.

அந்த மாதிரிதான் நாம் பண்ணின பாபங்களை அநுபவிக்க உடம்பைக் கொடுத்து, கஷ்டங்கள் என்கிற கசையடிகளை பகவான் கொடுக்கிறார். இந்த உடம்பு அதற்கு மேலே தாங்காது என்று அவர் நினைக்கிற கட்டத்தில் சாவை அனுப்பிவைக்கிறார். அப்போதைக்குத் தூங்கப் பண்ணிவிடுகிறார். கொஞ்ச நாழி அவரிடம் லயிப்பு!அப்புறம் அதே உயிரைப் பிறப்பிக்கிறார். குழந்தையாகப் பிறந்து பால்யதசை முடிக்கிறவரை அதற்குக் கஷ்டம் அதிகம் தெரிவதில்லை. வ்யாதி வக்கை அதைப்பிடுங்கி எடுத்தாலும். அப்பா அம்மா அடித்தாலும் அப்போதைக்கு ஏதோ 'வ்ராச்சு' 'வ்ராச்சு' என்று கத்தித் தீர்க்கிறதே தவிர, துக்கச் சுமை என்று ஒன்றைத் தோளிலே போட்டுக் கொண்டு நீடித்துத் துன்பப்பட்டுக் கொண்டிருப்பதில்லை.

வயஸு வந்தபின் நாம் படுகிற கஷ்டத்தில் கால்வாசிதான் நாம் நடைமுறையில் ப்ரத்யக்ஷமாக அநுபவிப்பதாக இருக்கும், பாக்கி முக்கால்வாசி அந்தக் கஷ்டத்தையே பற்றி நினைத்து நாம் தோளில் தோய்த்துப் போட்டுக் கொள்வதுதான். துக்கம் கால்வாசி என்றால் துக்கம் கொண்டாடுவது முக்கால்வாசி!ஏற்பட்டுவிட்ட துக்கத்தை நினைத்துப் பார்ப்பது, இது போதாதென்று இதிலிருந்து இன்னும் என்னனென்ன உண்டாகுமோ என்று இனிமேல் ஏற்படக்கூடிய துக்கங்களைக் கல்பித்துக் கொண்டேயிருப்பது ஆகியவற்றின் பாரம் நமக்கு ஜாஸ்தி. குழந்தைக்கு இந்த மனச்சுமை இல்லை. எதையும் ஆழப் போட்டுக்கொண்டு நாம் உழப்பிக்கொள்கிறமாதிரி இல்லாமல் அது க்ஷணத்தில் மறந்துவிட்டு லேசாகிவிடும். நம்மாதிரி அதற்கு வாழ்க்கை ப்ரச்னைகளும் இல்லை. பொதுவாகக் குழந்தை ப்ரயாமானது விளையாட்டு, சீராட்டல் என்று ஸந்தோஷமாகவே போகிறது.

குற்றவாளிக்கு ஆஹாரம் போட்டுப் போஷிப்புப்பண்ணி, மறுபடி தண்டனை வாங்குவதற்குத் திராணி உண்டாக்கிய மாதிரி நமக்கு பால்யத்தை வைத்திருக்கிறார் பகவான். அப்புறம் மறுபடி கஷ்டக் கசையடி ஆரம்பித்து விடுகிறது.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## வேப்பம்பழத் தித்திப்பு

யாராயிருந்தாலும் ஒரே கெட்டதாகப் பண்ணாமல் எங்கேயோ கொஞ்சம் நல்லதும் பண்ணுவதால் நடுநடுவிலே கொஞ்சம் கொஞ்சம் இன்பமானது நடக்கிறது. இந்த ஸந்தோஷம் கசையடிக்கு ஆயின்ட்மென்ட் போடுகிறது. எங்கேயாவது யாருக்காவது புண்யசாலிகளுக்குக் கசையடியில்லாமல் சந்தனப்பூச்சாகவே நடக்கிறது. அது ரொம்பவும் அபூர்வம். நூற்றுக்குத் தொண்ணூறு நாம் பாபம் செய்தவர்களேயானதால் ஸந்தோஷம் ஒரு மடங்கு என்றால் கஷ்டம் பத்து மடங்கு என்றே வருகிறது. ரொம்ப உசந்தாலும்

வாழ்க்கையில் நாம் அநுபிக்கிற ஆனந்தம் வேப்பம்பழத்தித்திப்புத்தான். வேப்பங்காயைவிட வேப்பம்பழத்துக்குத் தித்திப்பு உண்டு என்பது வாஸ்தவந்தான். ஆனால் அது மாம்பழத்தின் தித்திப்பாக முடியுமா? ரொம்பக் கசப்பிலேயே கொஞ்சம் தித்திப்புமாக, அநேக கஷ்டங்களுக்கு மத்தியிலே அல்ப ஆனந்தம் நமக்குக் கிடைக்கிறது. இவ்வளவுக்குத்தான் நமக்குத் தகுதி. அல்லது இப்போதே நம் தகுதியை மீறி பகவான் கொஞ்சம் தயை தாக்ஷிண்யம் காட்டுவதால்தான் இவ்வளவு கஷ்டத்தோடாவது நிற்கிறது என்று சொல்லலாம்.

ஆசைதான் இதற்கெல்லாம் காரணம் என்றால், அந்த ஆசை உடம்பை அழிப்பதாலும் போகாது என்றால் என்னதான் பண்ணுவது? எப்படித்தான் தப்பித்துக் கொள்வது?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**விடாமுயற்சி வேண்டும்**

ஆசை அடங்கமாட்டேனென்றாலும் திரும்பத் திரும்ப அடக்கிப் பார்த்துக் கொண்டேதானிருக்கவேண்டும். வைராக்யம் என்பதான ஆசையின்மையை, பற்றின்மையை ஸம்பாதித்துக்கொள்ள விடாமுயற்சி பண்ணிக்கொண்டே இருக்கவேண்டும்.

ஏனென்றால் ஆசை என்ற இந்த ஒரே ஒரு சத்ருவை எப்படியோ ஒரு தினுஸில் எப்பாடுபட்டாவது நாம் ஒழித்துக் கட்டிவிட்டால் போதும் - அப்புறம் நாம் ராஜாதான். ராஜா என்றால் இந்த உலகத்து ராஜா இல்லை. அவனுக்கு உள்ள ஆசையும் தொல்லையும் நமக்கு வேண்டவே வேண்டாம். நான் சொல்வது ஆசை, தொல்லைகிட்டேயே வராத சாச்வத சாந்தத்தை உடைய ராஜா.

பல நூறாயிரம் கெட்ட வ்ருத்திகளை ஒவ்வொன்றாய் அடக்கப் பார்த்து ப்ரயோஜனமில்லை. அது முடியாத

காரியம். ஆகையால் அவை கிளைகள் என்றால் அவற்றுக்கு வேறாக உள்ள ஆசை என்ற ஒன்றை வெட்டிவிட்டால் போதும்,. ஆனால் வெளியே நீண்டிருக்கும் கிளையை வெட்டுவதைவிட உள்ளே புதைந்துள்ள வேரைத் தோண்டி அழிப்பது ரொம்பவும் கஷ்டம் தான். இருந்தாலும் இதை செய்யாவிட்டால் வெட்டிய கிளைகள் மறுபடிமறுபடி முளைத்துக்கொண்டு தானிருக்கு மென்பதால் எப்படியாவது இதை ஸாதிக்கத்தான் வேண்டும்.

கறையான புற்று வைக்கிறது. அதை உடைக்கிறோம். அடுத்த வாரம் பார்த்தால் அது மறுபடி முளைத்திருக்கிறது. மறுபடி தட்டிவிடுகிறோம். அதற்கப்புறம் சில நாள் போனால் புற்று மறுபடியும் கிளம்பிதானிருக்கிறது. இதற்கு முடிவு எப்படி? தாய்ப்பூச்சி இருக்கிறவரைக்கும் அது கொஞ்சங்கூட அலுக்காமல் சலிக்காமல் இப்படிப்புற்று வைத்துக்கொண்டேதான் இருக்கும். அது எங்கே எந்த சந்துபொந்தில் மூங்கிலுக்குள் ஒாிந்துகொண்டிருக்கிறதோ அங்கே தேடித் தோண்டி அதை எடுத்து 'ஸம்ஹாரம் பண்ணினால்தான் அப்புறம் புற்று புறப்படாமலிருக்கும். இப்படியே ஸகல கஷ்டத்துக்கும், ஸகல துர்வ்ருத்திகளுக்கும் தாய்ப்பூச்சியாயுள்ள ஆசையை அழிக்காமல், அந்தக் கஷ்டம் ஒவ்வொன்றையும் நிவ்ருத்தி செய்துகொள்ளவும், ஒவ்வொரு துர்வ்ருத்தியாகப் போக்கிக் கொள்ளவும் பாடுபட்டால் அவ்வளவும் நிஷ்பலனாகத்தான் ஆகும். Cause-ஐ(காரணத்தை) அழிக்காமல் விடும்வரை effects-ஐ (விளைவுகளை) நிரந்தரமாக அழிப்பது என்பது நடக்காத காரியம்.

பகவான் காம - க்ரோதம் என்று சொல்லி, க்ரோதத்தையும் காமத்திலேயே அடக்கி ஒருமையாகப் பேசும்போது இப்படித்தான் உபதேசம் செய்திருக்கிறார்.

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண - ஸமுத்பவ: 1

இதற்கு அர்த்தம் சொல்லிவிட்டேன். தொடர்ந்து,

மஹாசநோ மஹாபாப்மா வித்த்யேநம் இஹ வைரிணம் 1

என்று சொன்னதற்கும் கொஞ்சம் அர்த்தம் சொன்னேன்.

இந்தக் காமமானது பெருந்தீனி கேட்பது "மஹாசந:", ஒரு

தரம் தீனி போட்டுவிட்டால், அதாவது ஒரு ஆசையை ஒரு தரம் பூர்த்தி பண்ணிக்கொண்டுவிட்டால், அதோடு அதன் பசி தீர்ந்து விடுவதில்லை. சாப்பாட்டு விஷயத்தில் எப்படி ஒரு வேளை போஜனம் செய்தால் சாச்வதமாய் நம் வயிறு நிரம்புவதென்றில்லாமல் தினந்தினம் மூன்றுவேளை நாலு வேளை சாப்பிடவேண்டியிருக்கிறதோ, அப்படியேதான் ஆசைப் பசியும் எத்தனை தடவை தீர்த்துக் கொண்டாலும் தீராமல் மறுபடி எழும்புகிறது. அப்புறம் "மஹாபாப்மா" - மஹாபாவி என்று ஆசையை (பகவான்) திட்டுகிறார். நம்முடைய அத்தனை பாப பட்டாளத்துக்கும், அதாவது கெட்ட வ்ருத்திகளான அஸுரப் படைக்கும் இதுதானே உற்பத்தி ஸ்தானம்? ஆதனால் "மஹாபாப்மா". வித்த்யேநம் இஹ வைரிணம் - வித்தி ஏநம் இஹ வைரிணம். பொழிப்புரையாய் சொன்னால், "இஹ ஏநம் வைரிணம் வித்தி". "இஹ" - இந்த உலகத்திலே, ஸம்ஸாரத்திலே, "ஏநம்" - இதை, இந்தக் காமத்தை, "வைரிணம்" - விரோதியாக, "வித்தி" - அறிந்து கொள். "இந்த லோக வாழ்க்கையில் காமம்தான் பெரிய சத்ரு என்று தெரிந்து கொள்ளடா அப்பா" என்கிறார்!.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆசையின் செயலும் "அதிஷ்டான"மும்**

அப்புறம் சொல்லிக்கொண்டு போகிறார், அதன் க்ரூர ரூபம், கார்யம் முதலானதுகளை, "அக்னியை எப்படிப் புகை மறைக்கிறதோ, கண்ணாடியை எப்படி தூசி மறைக்கிறதோ, வயிற்றில் உள்ள சிசுவை எப்படி கர்ப்பப்பை மறைக்கிறதோ அப்படி காமம் ஞானத்தைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு மறைக்கிறது," என்று சொல்லிவிட்டு மறுபடி, "ஆமாண்டா அர்ஜுனா ஞானிக்குப் பரம சத்ரு இதுதான்.

பூர்த்தியே பண்ணமுடியாமல்
கொழுந்தவிட்டுக்கொண்டிருக்கும் ஆசைத் தீதான்
மநுஷ்யனின் அறிவை அப்படியே சூழ்ந்து

கொண்டிருக்கிறது" என்கிறார்.

முதலில் அறிவுத் தீயை மறைக்கும் புகையாய் ஆசை இருக்கிறது' எனறார். அபபுறம் ,இதுவே அக்னிபோல ஒருத்தனைத் தபிக்கச் செய்வதை நினைத்து, 'அறிவை எரிக்கிற நெருப்புப்போல ஆசை பிடித்துக்கொண்டிருக்கிறது' என்கிறார்.

இன்னமும் சொல்கிறார், எந்த வஸ்துவானாலும் அது தொழில் பண்ணவேண்டுமானால் ஏதோ ஒரு இடத்தில் ஊன்றி நிலைப்பட்டு நின்று அங்கேயிருந்துதான் கைவரிசையைக் காட்டவேண்டும். இப்படி நிற்கும் ஸ்தானத்துக்கு "அதிஷ்டானம்" என்று பெயர்.

"அதிஷ்டானம்" என்றவுடன் ஸ்ந்நியாஸிகளின் ஸமாதிகளுக்கு அப்படிப் பேர் சொல்வது நினைவு வரலாம். எதனால் இந்தப் பேர் என்றே கேள்வி எழலாம்.

சரீரத்தைவிட்டு ஸித்தியான பெரியவர்களுடைய அநுக்ரஹ சக்தியில் ஒரு கலை ப்ராணவியோகமான பிறகும் அவர்களுடைய சரீரத்திலே இருந்து கொண்டிருக்கும். அந்தப் பெரியவருடைய தேஹத்தைப் புதைத்து வைக்கிற இடத்தில் இந்த அநுக்ரஹ கலையானது ஊன்றி நின்று பக்தர்களுக்குப் பாயும்படியாக ஸ்தானம் ஏற்படுத்தித் தரப்படுகிறது. அதனால்தான் ஸமாதியை "அதிஷ்டானம்" என்பது.

வழக்கத்தில் எப்படியிருக்கிறதென்றால், சில இடங்களில் ஸமாதியின் மேலே துளஸி வைக்கிறார்கள், சில இடங்களில் ஸமாதிக்கு மேல் சிவலிங்கம் ப்ரதிஷ்டை செய்கிறார்கள். துளஸி வைக்கப்பட்ட ஸமாதியை ப்ருந்தாவனம் என்றும் லிங்கம் வைக்ககப்பட்ட ஸமாதியை அதிஷ்டானம் என்றும் சொல்வதாக வழக்கு ஏற்பட்டிருக்கிறது. நம் மடத்து ஆசார்யர்களிலேயே கலவையில் ஸித்தியான இரண்டு பெரியவர்களுக்கு அங்கே துளஸி வைத்த ப்ருந்தாவனம் அமைந்திருக்கிறது, இளையாற்றங்குடியில் ஸித்தியானவருக்கு அங்கே சிவலிங்க ப்ரதிஷ்டையோடு அதிஷ்டானம் அமைந்திருக்கிறது.

ஆசை தன்னை ஊன்ற வைத்துக்கொண்டிருக்கிற அதிஷ்டானம் என்ன என்று பகவான் சொல்கிறார்.

ஒன்றில்லை, மூன்று அதிஷ்டானங்கள். ஜீவனை 'உண்டு - இல்லை' என்று வதைப்பதற்காக அவனுடைய இந்திரியம், மனஸ், புத்தி மூன்றையுமே ஆசை ஆக்ரமித்துக்கொண்டு தனக்கு அதிஷ்டானமாக்கிக் கொண்டிருக்கிறது, அவனை மோஹத்திலே தள்ளி ஞானத்தை மறைக்கிறது என்கிறார்.

"அர்ஜுனா உன்னை நன்றாக அடக்கிக் கட்டுப்படுத்திக் கொண்டு இந்த ஆசைப் பாவியை ("பாப்மா" என்றே மறுபடி சொல்கிறார்) வெல்லு, கொல்லு" என்கிறார்.

நன்றாக வர்ணித்துச் சொல்லிவிட்டால் போதுமா? கொல்ல முடியவில்லையே எதைப் பண்ணவே படாது என்று நினைத்து அதில் ஆசையை அடக்குகிறோமோ அதுவேதான் திமிறிக்கொண்டு கிளம்புகிறது?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அர்ஜுனனின் குறை

ஆசையை அடக்குவது என்பதும் மனஸை அடக்குவது என்பதும் ஒன்றுதான். ஏனென்றால் ஆசைகள் முளைக்கிற ஆதார ஸ்தானம் மனஸ்தான். அதை அடக்கவே முடியாமல் அது பலவந்தமாய் ஜீவனை இழுத்துக்கொண்டு போகிறதே என்று அர்ஜுனன் அழுகிறான்.

சஞ்சலம் ஹி மந:க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் 1

தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் 11

"க்ருஷ்ணா!இந்த மனஸ் சஞ்சல மயமாயிருக்கிறதே;ஜீவனைப் போட்டுக் கலக்குகிறதே!("மாதி" என்றால் கலக்குவது, கடைவது. 'அம்ருத மதனம்' என்பதில் வரும் 'மத' பாற்கடலைக் கடைந்ததைத்தானே குறிப்பிடுகிறது? 'ப்ரமாதி':ரொம்பவும் கலக்குவது. ஜீவனைப் போட்டுக் கடைந்து கலக்குகிறது மனஸின் எண்ணங்கள்.) இது ரொம்ப பலமாகவும் உறுதியாகவும் கலக்குகிறது. எப்படிக் காற்றைப்

பிடித்து நிறுத்திவைக்க முடியாதோ, அப்படியேதான் இந்த மனஸையும் பிடித்து அடக்கி வைக்கமுடியாது என்றே எனக்குத் தோன்றுகிறது" என்கிறான் அர்ஜுனன்.

"தஸ்ய" - இந்த மனஸினுடைய, "நிக்ரஹம்" - அடக்கல், "வாயோரிவ" - காற்றைப் போல, அதாவது காற்றை அடக்கிவைப்பது போல; "ஸுதுஷ்கரம்" - ஸாதிக்க முடியாத கார்யம் என்று, "மந்யே" நினைக்கிறேன்.4

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**கண்ணன் சொல்லும் உபாயம்**

அழுகிற அர்ஜுனனிடம், "நீ சொல்கிறாற் போல மனோ நிக்ரஹம் கஷ்டமானதுதான். ஆனாலும் இது ஸாதிக்கவே முடியாதது இல்லையப்பா" என்று பகவான் உத்ஸாஹப்படுத்திச் சொல்கிறார். அவன் சொன்னதை ஒப்புக்கொள்கிறாற் போலவே 'ஸிம்பதெடிக்'க்காக ஆரம்பித்து அப்புறம் அவன் முடியாதது என்று கைவிடப் பார்க்கிற ஸாதனையை முடியும்படிப் பண்ண வழி சொல்லித் தருகிறார், 'ஹோப்' கொடுத்துச் சொல்கிறார்.

அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம் 1

"சலம்" என்றால் சஞ்சலம்தான். சஞ்சலித்துக்கொண்டேயிருக்கும் மனஸை அடக்க முடியாதுதான். "துர் நிக்ரஹம்" - நிக்ரஹம் செய்வதற்கு முடியாது. "அஸம்சயம்" - இதிலே ஸந்தேஹமில்லை. "அர்ஜுனா (அர்ஜுனனை 'மஹாபாஹு' என்கிறார். மஹா வீரனாதலால் அவனுடைய தோள் வலியைக் குறிக்க 'மஹாபாஹு என்று கூப்பிடுகிறார். வெளி யுத்தத்தில் போலவே உள் யுத்தத்திலும் அவன் மஹா வீரன் ஆகணும் என்று தாத்பர்யம்.) ஸந்தேஹமில்லாமல் நீ சொன்னமாதிரிதான் மனஸ் சஞ்சலித்துக் கொண்டேயிருக்கிறது. அதை நிக்ரஹம் பண்ணுவது

லேசில்லைதான்" என்று, அவன் சொன்னதற்கு ஆமாம் போட்டுவிட்டு, அதற்குப் பரிஹாரமும் சொல்கிறார்.

ரொம்பவும் முக்யமான விஷயத்தைச் சொல்கிறார் "அப்யாஸம், வைராக்யம் என்ற இரண்டில் தீவிரமாயிரு ந்தாயானால் மனோ நிக்ரஹம் பண்ணி விடலாம்" என்கிறார்.

"எத்தனை திமிறினாலும், உன்னை திசை தப்பி எத்தனை தரம் இழுத்துக்கொண்டு போனாலும் ஸரி, அதற்காக மனஸைக் கட்டுப்படுத்த ப்ரயாஸை எடுக்காமல் விட்டு விடாதே. வெளியிலே ஓடுகிற அதை ஒவ்வொரு தரமும் மறுபடி உன் வழிக்கு இழுத்துக்கொண்டு வரப் பார். இப்படி விடா முயற்சியுடன் எதிரத்துப் போராடிக்கொண்டேயிருந்தால், அது ஒருநாள் அடங்கிப் பணிந்துபோக ஆரம்பித்துவிடும். எதிடமும் ஆசைவைக்கப்படாது என்ற வைராக்ய சிந்தை எத்தனை வழுக்கிவிட்டாலும் ஊன்றி நிற்கஅப்யாஸம் செய்து கொண்டே இருப்பது - ஆகிய இந்த இரண்டால் முடிவிலே ஒரு நாள் ஜயித்துவிடலாம்" - இப்படி பகவான் ஆறுதலாக பதில் சொல்கிறார்.

யதோ யதோ நிச்சரதி மநச் சஞ்சலம் அஸ்திரம்

ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத்

"யதோ யதோ" - எது எதை, அதாவது எந்தெந்த ஆசையை, முன்னிட்டு, "சஞ்சலம்" - சஞ்சலித்துக்கொண்டேயிருப்பதும், "அஸ்திரம்" - எதிலும் நிலைப்பட்டு நிற்காததுமான, "மந" - மனஸானது, "நிச்சரதி" - வெளியில் ஓடிக்கொண்டேயிருக்கிறதோ, ததஸ்தத" - அந்த ஒவ்வொரு ஆசையிலிருந்தும், "ஏதத்" - இந்த மனஸை, "நியம்ய" - இழுத்து அடக்கி, "ஆத்மநி ஏவ" ("அத்மந்யேவ")- ஆத்மாவிலேயே, "வசம் நயேத்" - வசப்படுத்தி வைக்கவேண்டும். எத்தனை தரம் என்னென்ன ஆசைகளை முன்னிட்டு மனஸ் வெளியில் திரும்பத் திரும்ப ஓடினாலும் ஸரி, ஒவ்வொரு தரமும் அந்த ஆசை ஒவ்வொன்றிலிருந்தும் மனஸைத் திருப்பிக் கட்டுப்படுத்தி ஆத்மாவிலேயே அடங்கியிருக்கச் செய்யவேண்டும்.

## அத்வைதம்

## ஆத்மா - மாறுபாடு அற்றது

ஆத்மா என்கிற ஜீவனுடைய நிஜ ஸ்வரூபத்தில் விஷயத்தைக் கொண்டு வந்துவிட்டார்!

தனி ஜீவன் என்று குறுகி நிற்கிறபோது மனஸ்தான் ஜீவன் என்று தோன்றுகிறது. தனக்கென்று தனித்தனியாக இன்னின்ன லக்ஷணம் இருக்கிறது, அதாவது தான் சிவப்பு, தனக்கு இன்ன பெயர், இன்ன ஊர், இன்னார் அப்பா - அம்மா, இன்ன படிப்பு, இன்ன வேலை, இன்னின்ன குணம் (ஒருத்தன் முன்கோபியாயிருக்கிறான். ஒருத்தன் குஷியாயிருக்கிறான், இன்னொருத்தன் அழுமூஞ்சியாயிருக்கிறான். ஒருத்தன் கெட்டிக்காரனாயிருக்கிறான், இன்னொருத்தன் அசடாக இருக்கிறான். இப்படித் தனி ஆள் என்ற நிலையில் ஒவ்வொருவனுக்கும் குறிப்பிட்ட குணங்கள் இருக்கின்றனவே, அதிலே தனக்கு இன்னின்ன குணம்) என்பதாகக் கட்டுப்படுத்திக் காட்டும் லக்ஷணங்கள் எல்லாம் ஜீவனானவன் தன்னை மனஸோடு identify பண்ணிக்கொள்வதனால் ஏற்பட்டவைதான். அதாவது ஜீவன் தன்னுடைய மனஸின் எண்ணங்களால் தன்னை எப்படித் தெரிந்து கொள்கிறானோ அதுவே தன்னுடைய நிஜ ஸ்வரூபம் என்று நினைக்கிறான்.

அவனே தூங்குகிறான், அல்லது க்ளோரோஃபார்ம் கொடுத்த மயக்கத்திலிருக்கிறான், அல்லது யோக நிஷ்டையில் அப்படியே ஸமாதியில் ஆழ்ந்து கிடக்கிறானென்றால் அப்போதெல்லாம் மனஸ் வேலை செய்யவில்லை. அவனுக்கு எந்தவிதமான எண்ணமும் இல்லை. தன்னைக் குறித்து தனித்ததாக எந்த லக்ஷணமும் இருப்பதாக அவனுக்கு அப்போது தெரிவதேயில்லை. இந்த நிலைகளில் ஸகல ஜிவன்களும் ஸமம்தான் - அரசன் ஆண்டி இரண்டு பேரும் ஒன்றுதான் தூங்குகிற அல்லது மூர்ச்சித்திருக்கிற அல்லது ஸமாதி நிலையிலுள்ள ராஜாவுக்குத் தன் ராஜரீக மஹிமை எதுவும் தெரியாது. அப்போது ஆண்டிக்கும் தன்

தரித்ரத் திண்டாட்டம் தெரிவதில்லை. பலிஷ்டனான ஒரு வஸ்தாத், ரொம்பவும் துர்பலனான ஒரு நோஞ்சான், A -யிலிருந்து Z -வரை டிகிரிகள் போட்டுக்கொள்ளும் மஹாமேதாவி, சுட்டுப் போட்டாலும் படிப்பு ஏறாத நிரக்ஷரகுக்ஷி- இப்படி எவரானாலும் தங்கள் தனி குணம், லக்ஷணம் எதுவும் இல்லாமல், அனைவரும் ஒரே ஸ்திதியில் இருப்பதாக இந்த மனஸற்ற நிலை இருக்கிறது. மனஸின் வேலையில்லாமல் தூங்குகிறவனுக்குத் தன் பேர், ஊர், தனக்கு ப்ரியமானவர்கள், விரோதானவர்கள் ஏதாவது தெரியுமா? தான் ஆணா பெண்ணா, கிழமா குழந்தையா என்பதெல்லாம் கூடத் தெரிவதில்லை. மனஸ் வேலை செய்யும்போது தனித்தனி லக்ஷணங்களோடு ஒருத்தருக்கொருத்தர் நூறாயிரம் வித்யாஸத்தோடு இருக்கிற அத்தனை கோடானு கோடிப் பேர்களும் அது வேலை செய்யாத ஸமயத்தில் ஒரு வித்யாஸம்கூட இல்லாமல் ஒன்றாகவே இருக்கிறார்கள் -ஆனாலும் இருக்கிறார்கள், லக்ஷணங்கள் என்ற கட்டுப்பாடுகள் இல்லாத நிஜமான "நானாக" இருக்கிறார்கள்.

இதுதான் முக்யமான விஷயம். தூக்கம், மூர்ச்சை, ஸமாதி ஆகிய நிலைகளில் ஒருத்தன் செத்துப் போய்விடவில்லை. உயிரோடுதான் இருக்கிறான். அப்போதும் இவனுக்குள்ளே ஒன்று இருந்து கொண்டிருக்கிறதே, அதுதான் ஆத்மா.

அதற்கு சாவே கிடையாது. அதற்கு மாறுதலும் கிடையாது. மாறுதல் என்பதும் ஒரு தினுஸில் சாவுதான் - யோசித்துப்போர்த்தால் புரியும். "சாவு" என்பது "இல்லாமல் போவதுதானே?" "பொய்யாய்ப் போவது" தானே? பூ காயாய் மாறுகிறது, காய் பழமாய் மாறுகிறது, புழு குளவியாய் மாறுகிறது என்றெல்லாம் சொல்லும்போது அந்தப் பூ, காய், புழு எல்லாம் இல்லாமல் போய்தான் அவற்றின் இடத்தில் காயும், பழமும், குளவியும் வந்திருக்கின்றன. அதாவது வளர்ச்சி என்று சொல்கிற மாறுதலுக்குள்ளே ஒரு அழிவு அல்லது சாவு இருக்கிறது ரூபம் அழிந்துதான் இன்னொன்றாக வளர்ந்து உருவாகிறது.

நம் உடம்பு மாறுகிறது. குழந்தையாயிருந்த உடம்பு வேறே, நடுத்தர வயஸுக்காரனின் உடம்பு வேறே எத்தனையோ விதத்தில் மாறி, வளர்ந்து குழந்தையின் உடம்பு மத்யம

பிராயத்தினனின் உடம்பாகிறது. அதற்கப்புறம் ஜரை (மூப்பு) வருகிறது. இதுவரை வளர்ச்சியால் மாறிய உடம்பு இனிமேல் தேய்வினால் மாற ஆரம்பிக்கிறது. தோல் மாறிச் சுருங்குகிறது. தலைமயிர் மாறி நரைக்கிறது. நமக்கு அப்படித் தெரியாவிட்டாலும், ப்ரதிக்ஷணமும் உடம்பு மாறிக்கொண்டு தானிருக்கிறது என்று டாக்டர்களும், ஃபிஸியாலஜிக்காரர்களும் சொல்கிறார்கள். அதாவது உடம்பை "நான்" என்று நினைக்கிறோமாயினும் அது க்ஷணத்துக்கு க்ஷணம் மாறிக்கொண்டு, அதாவது செத்துப் போய்க் கொண்டிருக்கிறது அப்படியானால் போன க்ஷணம் செத்துப்போய்விட்ட உடம்பை இந்த க்ஷணமும் "நான்" என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமே, இது எப்படி? போன க்ஷணம் என்ன? நாற்பது, ஐம்பது வருஷம் முந்தி நடக்கக்கூடத் தெரியாமல் இருந்த குழந்தையுடம்பிலிருந்து இன்றைக்கு இருக்கிற உடம்புவரை மாறிமாறி - அதாவது செத்துச் செத்து - உண்டான அத்தனை உடம்புகளையும் ஒரே "நானு"டையதாக நினைக்கிறோமே இது எப்படி?

இப்படியேதான் மனஸை எடுத்துக்கொண்டாலும், அது ஓயாமல் சஞ்சரித்துக் கொண்டேயிருப்பதைத்தான் இத்தனை நாழி சொன்னேன். அதாவது ஓயாமல் மாறிக்கொண்டு, செத்துக்கொண்டு இருக்கிறது. போன ஸெகன்ட் அதற்குத் துக்கம், இந்த ஸெகன்ட் ஸந்தோஷம், அடுத்த ஸெகன்ட் கோபம். மனஸின் வளர்ச்சியும் அறிவின் வளர்ச்சியும் குழந்தைப் பிரயாத்திலிருந்து எத்தனை வித்யாஸமாக மாறி இருக்கிறது? அப்புறம் ரொம்ப வ்ருத்தாப்யத்தில் இவையே தேய்ந்து ஓய்ந்தும் போய்விடுகின்றன. அதாவது மாறுதல் என்கிற அழிவின் ஓட்டம் நிற்பதே இல்லை. மாறுபாட்டை 'விகாரம்' என்பார்கள். விகாரம் என்றால் கோரம், குரூபம் என்று தமிழ்ல் அர்த்தம் பண்ணிக்கொள்கிறோம். காரணம், மாறுபடுகிறபோது அப்படி மாறுபாடு காண்கிற வஸ்துவின் ரூபம் நசித்துப் போவதுதான் ஒரு வஸ்து நாசமாகிக் கிடந்தால் அது பார்ப்பதற்கு ரொம்பவும் விகாரம்தானே? ஆனாலும் இங்கே நான் சொன்ன எக்ஸாம்பிள்களில்லாம் ஒரு வஸ்து நசிப்பேதாடு முடியவில்லை,இன்னொன்றாக அது பரிணமிக்கவும் செய்கிறது. பூ நசித்ததோடு முடியாமல் காயாகிறது காய் நசித்ததோடு முடியாமல் பழமாக ஆகிறது. புழு நசித்ததோடு முடியாமல் குளவியாகிறது. உயிர்தத்வம், உயிர்தத்வம் என்னும் எதுவோ ஒன்று பூக்கும்

அடிப்படையிலிருந்து கொண்டு அந்த ரூபத்தை அழியப்பண்ணியே காயாக்கி, அந்தக் காய்க்கும் அடிப்படையாயிருந்து கொண்டு அதைப் பழமாக்குகிறது. உயிரோடு மரத்திலே அந்தப் பூ ஒரு அங்கமாய்

ஒட்டிக்கொண்டிருப்பதால் இப்படி நடக்கிறது. அதுவே மரத்திலிருந்து ஒரு பூவை நாம் பறித்து விட்டால் அது வாடிச் செத்துப் போவதோடேயே முடிந்து போகிறது. அப்பேது பூ காயாவதில்லை. புழுவின் ஆதாரமாக உள்ள உயிர்தத்வம் அந்தப புழு ரூபத்தைக் கொன்ற பின்னும் அதே உயிராதாரமாக அதனிடத்தில் புதிதாக உண்டாக்கிய குளவியிடம் இருக்கிறது. புழுவை நாம் நசுக்கிப்போட்டால், அல்லது ஒரு குருவி எடுத்துத் தின்றுவிட்டால் அது குளவியாகாமல் ஒரேயடியாய் அழிவடைகிறது.

இப்படியே நம் உடம்பும் மனஸூம் அழிந்து அழிந்து புதுப்புது ரூபம் எடுத்துக்கொண்டேயிருக்கும்போது அத்தனைக்கும் அடிப்படையாக இருக்கிற உயிர்த் தத்வம்தான் ஆத்மா. உயிர்த் தத்வம் என்றால் மூச்சு இல்லை. மூச்சு போன பின்னும் ஆத்மா அழிவதில்லை. மூச்சைக்கொண்டு உடம்பு வாழும்படியாகச் செய்யும் உயிருக்குயிரான தத்வமே ஆத்மா. அதுதான் "நிஜ" நாம். போன நிமிஷம் இருந்து, இந்த நிமிஷம் இல்லாமலாகிவிட்ட உடம்போ, மனஸோ எப்படி நிஜ நாமாக இருக்கமுடியும்? அதுதான் க்ஷணத்துக் க்ஷணம் பொய்யாகி விடுகிறதே!இம்மாதிரி மாறுதல்கள் இல்லாமல், அதாவது நிர்விகாரமாக, எப்போதும் ஒரே போலவே இருந்துகொண்டிருக்கும் ஆத்மாதான் நிஜ "நான்." உடம்பும் மனஸூம் பல தினுஸாய் மாறினாலும், அத்தனை நிலைகளிலும் "நான்" என்று இருக்கிற பாவம் மட்டும் கொஞ்சங்கூட மாறாமலே தானே இருக்கிறது, அதனால் அந்த நிலைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு இந்த "நான்" என்ற அடிப்படையான ஆத்மாவை மட்டும் பிரித்துப் பார்த்தால் இதுதான் நமது நிஜ ஸ்வரூபம் என்று ஆகிவிடுகிறது.

உடம்பைப் பற்றிய ப்ரக்ஞை இல்லாமல், மனஸின் ஓட்டமும் இல்லாமல் ஆழ்ந்து தூங்கும்போது, மூர்ச்சை போட்டுக் கிடக்கும்போது, ஸமாதி நிஷ்டை கூடியிருக்கும் போது அப்படித்தான் ஆத்மா மாத்திரம் இருக்கிறது.

அது மாறுபடாத வஸ்து. குழந்தையாயிருந்தபோது இருந்த "நான்" என்ற நினைப்புக்கும் இப்போதுள்ள "நான்" என்ற நினைப்புக்கும் கொஞ்சமாவது வித்யாஸமிருக்கிறதா? இல்லையே!விஷயம் தெரியாதபோது, விஷயம் தெரிந்த பிற்பாடு, வ்யாதியுள்ளபோது, ஆரோக்யமாயிருக்கிற போது, தரித்ரப்பட்டபோது, பணம் வந்ததற்குப் பிற்பாடு - இப்படி சரீரம், மனஸ் இவை பலவிதங்களில் கஷ்ட ஸுகங்கள்படுகிறபோதும் அந்த இரண்டின் நிலைகள் பலதினுஸாக மாறிக்கொண்டே இருந்தாலும், அத்தனையிலும் "நான்" என்ற பாவம் மாத்திரம் முழுக்க ஒரே விதமாகத்தான் இருக்கிறது. மாறிவிட்டவற்றை, இனியும் மாறிக்கொண்டே இருக்கப் போகிறவற்றை "நான்" என்ற சொல்வதற்கில்லை. அத்தனை நிலைக்கும் ஆதாரமாயிருந்து கொண்டு, "ஸூத்ரே மணிகணா இவ" என்று பகவான் (கீதை. 7-7) சொன்னபடி, பல மணிகளையும் ஒரே ஜபமாலையாகக் கோத்துக் கொடுக்கிற சரடு மாதிரி, அத்தனை மாறுபட்ட நிலைகள் அததுவும் தனியே சிதறிப்போய் நசித்துவிடாமல், தொடர்புப்படுத்தி ஒரு வாழ்க்கையாகக் காட்டிக்கொடுக்கிற ஆத்மாதான் நிஜத்தில் நாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## "நிஜ" ஆத்மாவும் பொய் வேஷ மனஸும்

"நிஜம்" என்பதை "உண்மையானது" என்று நாம் அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். "நிஜம்" என்பதற்கு நிஜமான அர்த்தம், "தனக்கே உரிய ஸ்வபாவம்".

"தன் உண்மை இயல்பு" என்பதாகும். இரண்டு அர்த்தத்திலும் ஆத்மாதான் நிஜ நாம். அதை அறியாத நாம் மனஸின் பொய் வேஷத்தில் நம் ஸ்வபாவத்தைத் தெரிந்து கொள்ளாமலிருப்பவர்கள்தான். மனஸை நாமாகவே நினைத்துவிடுகிற அளவுக்கு அது பெரியே வேஷம் போட்டு ஏமாற்றிவிடுகிறது.

ஒரு வேஷமில்லை, மாறிக்கொண்டே இருக்கிற பல வேஷங்கள்!பழநியில் (தண்டாயுதபாணிக்கு) கிடுகிடு வென்று ஒரு அபிஷேகத்துக்கு மேல் இன்னொரு அபிஷேகமாகப் பண்ணித் திரைபோட்டு அலங்காரம் பண்ணித் திறந்து காட்டுவார்கள். ஒரு அலங்காரத்திலே ஆண்டிப்பண்டாரமாக நிற்பார், கொஞ்ச நேரத்தில் இன்னொரு அபிஷேக, அலங்காரமாகித் திரையை விலக்கும்போது பார்த்தால் ராஜாவாகக் காட்சி கொடுப்பார், அதற்கப்புறம் இன்னொரு அலங்காரத்தில் வேடரூபத்தில் தர்சனம் தருவார். அதே மாதிரிதான் நம் வேஷமும் மாறிக்கொண்டே இருக்கிறது. பிறந்ததிலிருந்து (கருவாய் உருவனாதிலிருந்து, இன்னும் பின்னே போனால் எத்தனையோ ஜன்மத்துக்கு முன்னாலிருந்து) நம் உடம்பும் மனஸும் மாறிக்கொண்டே இருக்கிறதென்றால் ஒவ்வொரு மாற்றமும் ஒரு வேஷந்தானே? இருந்தாலும், ஒரு துணியும் போட்டுக்கொள்ளாமல், மல மூத்ரங்களை அடித்துக்கொண்டு, செருப்பு, துடைப்பக்கட்டை எதுவானாலும் 'ஹாவு ஹாவு' என்று கடித்துக்கொண்டு "ஹா, ஹூ" என்று விளையாடிக்கொண்டிருந்த அந்தக் குழந்தையதோன் இன்றைக்கு எத்தனையோ நாசூக்கு நாகரிகம் பார்க்கிற நாம் என்பதாக ஒரு "நான்-எண்ணம்" அன்றிலிருந்து இன்றுவரை ஆறாத, மாறாத தொடரிழையாக இருந்துகொண்டேயிருக்கிறது. இந்த எண்த்துக்கு அடியில் நமக்கு உயிராதாரமாக இருப்பதுதான் ஆத்மா. அன்றைக்குக் குழந்தை வேஷத்தில் இருந்தவனும் இன்றைக்கு இப்போது நாமுள்ள இந்த வேஷத்திலிருப்பவனும் ஒரே ஆஸாமி என்று நமக்குத் தெரிந்து, மற்றவர்களுக்கும் தெரிவது அத்தனை வேஷத்துக்கும் ஆதாரமாக மாறாமலுள்ள அந்த ஆத்மாவினால்தான்.

ஸினிமா, ட்ராமாவிலே பல வேஷங்களில் ஒரு நடிகன் வருகிறான். ஒன்றில் அவன் ராமனாக வரலாம். இன்னொன்றில் ராவணனாக வரலாம். ஒன்றில் பணக்காரனாகவும் இன்னொன்றில் தரித்ரனாகவும் வரலாம். இப்படி வேஷம் மாறுகிறதென்றாலும் வேஷம் போட்டுக் கொண்ட ஆஸாமி ஒருத்தன்தான். அப்படியே நம்முடைய வாழ்க்கை நாடகத்தில் நாம் போட்டுக்கொள்ளும் பல வேஷங்களில் ஒரு வேஷமாக இல்லாமல், இத்தனை

வேஷமும் போட்டுக்கொள்கிற அந்த ஒரு நிஜ ஆஸாமியாக இருப்பது ஆத்மாதான். வேஷங்கள் பல இருக்கின்றன என்பதாலேயே, வேஷமாயில்லாத ஒரு நிஜ ஆஸாமியும் இருப்பதால்தான் இந்த வேஷங்கள் அவனுக்கு ஏற்பட முடிகிறது என்று ஆகிவிடுகிறது.

வேஷத்தைக் கலைத்துவிட்டு, அந்த ட்ரெஸ், மேக்கப் எல்லலாவற்றையும் எடுத்துவிட்டு ஆஸாமி தன் வீட்டில் இருக்கிறாற்போல், ஆத்மாவானது மனஸ், உடம்பு முதலிய உடுப்பும் ஹரிதாரமும் இல்லாமல் ஸுஷுப்தியிலும் (தூக்கத்திலும்) நிஷ்டையிலும் இருக்கிறது. அப்போது உடம்போடு, மனஸோடு பட்டுக்கொள்ளாமல், தனியாயிருப்பதானால் ஒரே சாந்தமாய் இருக்கிறது. ஒரு கார்யமும் எண்ணமுமில்லாமல், இவற்றால் ஏற்படும் இழுபறிப் போராட்டம், அதாவது தேவாஸுர யுத்தம் இல்லாமல் ஜீவன் இருப்பது அப்போதுதான். ஆசையும், அதனால் ஏற்படும் அவஸ்தையுமில்லாமல் ஜீவன் இருப்பது மனஸின் ஆட்டமில்லாமல் ஆத்மா மட்டும் இருந்து கொண்டிருக்கும் நிலையிலேதான். ப்ரசாந்த நிலை என்கிற உசந்த அமைதி நிலை அதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## ஆத்மாவினாலேயே மனத்தின் இயக்கம்

ஆனால் விசித்ரம் என்னவென்றால், சாந்தமயமான இந்த ஆத்மா இல்லாமல், சாந்தியே தெரியாத மனஸுக்கு வேலை செய்கிற சக்தி இல்லை. மனஸின் வேலை என்பது என்ன? எதையாவது நினைப்பது, ஆசைப்படுவது. நினைப்பும் ஆசையும் இல்லாததாக ஆத்மா இருந்தாலும் அந்த உயிர்த் தத்வம் இல்லாமல் மனஸ் நினைக்க முடியாது. மனஸின் நினைப்புக்களை (குறிப்பாக ஆசைகளை) ஒட்டித்தான் சரீரம் வேலை செய்வது. உடம்பைப்பலவிதமாய் வேலை வாங்குவது மனஸ்தான். ஆனால் அந்த மனஸும் வேலை

செய்வது ஆத்மாவின் சக்தியால்தான். ஆனால் ஆத்மாவோ தனியாய் உள்ளபோது "சக்தி" என்பதற்கு இடமே கொடுக்காததாக, ஒரே சாந்த மயமாகத்தான் இருக்கிறது "ஆத்மசக்தி" என்று தற்காலத்தில் பத்திரிகைகளிலும் ப்ரஸங்கங்களிலும் ரொம்ப அடிபடுகிற வார்த்தைகூட யோசித்துப் பார்த்தால் ஸரியானதில்லைதான். இன்னொன்றை (நல்லதாகவோ, கெட்டதாகவோ) பாதிப்பதாக ஒன்று உள்ளபோதுதான் அதன் "சக்தி" பற்றிய பிரஸ்தாவமே வரமுடியும். எதனோடும் ஸம்பந்தப்படாமல் தான் பாட்டுக்கு சாந்தமயமாய் இருக்கிற ஆத்மாவில் "சக்தி"க்கு இடமில்லை.

"ஸம்பந்தப்படவில்லை என்கிறீர்கள். நீங்கள்தானே கொஞ்சம் முன்னாடி மனஸ், உடம்பு எதுவானாலும் அவை வேலை செய்ய ஆத்மாதான் ஆதாரம் என்றீர்கள்?" என்று கேட்கலாம்.

**மாயை**

வாஸ்தவம். ஆத்மா இல்லாமல் எந்த இயக்கமும் இல்லை. ஆனாலும் ஆத்மா எதனோடும் நேராக ஸம்பந்தப்படவில்லை. இதைத்தான் மாயை என்பது. எத்தனை யோசித்தாலும் இது புரிபடாது. எதிலும் ஸம்பந்தப்படாவிட்டாலும் ஸம்பந்தப்பட்டாற்போல மாயா விலாஸத்தால் ஆத்மா இருந்து கொண்டுதான் இத்தனை கூத்தையும் நடத்துகிறது!

இதை ஏதோ கொஞ்சம் புரியவைப்பதற்காக ஓரிரு த்ருஷ்டாந்தம் சொல்வார்கள். அதாவது, ஸூர்யன் இருப்பதால்தான் இத்தனை செடி கொடிளும், வ்ருக்ஷங்களும் வளர்ந்துகொண்டும், புஷ்பித்துக்கொண்டும், பழுத்துக்கொண்டும் இருப்பது. ஸூர்யன் இல்லாவிட்டால் இது எதுவுமே நடக்காது. அதற்காக, ஸூர்யனேதான் திட்டம் போட்டு இவற்றை எல்லாம் உண்டாக்கி நடத்துவதாகச் சொல்லமுடியுமா?

வெளிச்சம் இல்லாமல் ஒரே இருட்டாயிருந்தால் எந்தக் கார்யமும் செய்ய முடிவதில்லை. விளக்கு ஏற்றி வைக்கிறோம். அதன் வெளிச்சத்தில் ஒருத்தன் புராணம் படிக்கிறான், இன்னொருத்தன் ஏதோ மனைஸக் கெடுக்கும் நாவல் படிக்கிறான். வெளிச்சத்தின் துணையினால் பலபேர்

பலவிதமான நல்லதும் கெட்டதுமான கார்யங்களைச் செய்கிறார்கள். அதனால் இத்தனைக்கும் விளக்குதான் ஜவாப்தாரி என்று சொல்வதா? ஆனாலும் அந்த தீபம் இல்லாவிட்டால் இந்தக் கார்யம் எதுவும் நடக்கமுடியாது. இப்படித்தான் ஆத்மாவின் நேர் தூண்டுதல் அல்லது கர்த்ருத்வம் இல்லாமலே அதன் ஸாந்நித்ய விசேஷத்தால் மட்டும் மனஸ் வேலைசெய்வதும், சரீரத்தை வேலை வாங்குவது என்று உபமானம் சொல்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## இருக்கும் நிலையும், செய்யும் நிலையும்

மனஸானது நினைப்பு என்ற வேலையில்லாமலும், சரீரம் ஓடியாடிச் செய்யும் வேலையில்லாமலும் தூங்குகிறபோது அல்லது ஸமாதி நிலையிலிருக்கும்போது ஜீவன் அந்த ஆத்மாவாகவே இருக்கிறான் என்று சொன்னேன்.

அது இருக்கிற நிலை. மனஸூம் உடம்பும் வந்தவிட்டதோ, உடனே அந்த "இருக்கிற" நிலை போய், "செய்கிற" நிலை வந்துவிடுகிறது. இவை இல்லாதபோது ஆத்மா ஏதாவது செய்ததா? இல்லை. எதுவுமே செய்யவில்லை. வெறுமனே இருந்துகொண்டு மட்டும் இருக்கிறது. இதைத்தான் "கேவல ஸ்திதி" என்பது. "கேவலம்" என்றால் மட்டமானது என்று அர்த்தமில்லை. எதனாலோ இப்படி (அர்த்தம்) வந்து விட்டது. அந்த வார்த்தைக்கு ஸரியான அர்த்தம், இன்னொன்றின் கலப்பில்லாமல், தன்னந்தனியாக ஸ்வச்சமாக இருப்பது என்பதே இப்படி "கேவல"மாக ஆத்மாவைப் பிரித்து அதிலே நிலைத்திருக்கும் அநுபவம்தான் "கைவல்யம்." கைவல்ய பதவி, கைவல்ய மோக்ஷம் என்று கேள்விப்படிட்டிருப்பீர்கள். அப்படியென்றால், மனஸின் பந்தமும் அதனால் ஏற்படும் ஸம்ஸார பந்தமும் இல்லாமல் விடுபட்டுத் "தான்" மட்டும் கலப்பற்று நிற்கிற சாச்வதாநுபவம் என்று அர்த்தம்.

மோக்ஷம் என்பதை ஒவ்வொரு ஸித்தாந்தம் ஒவ்வொரு பெயரில் சொல்லியிருக்கும். அத்வைதிகள் அதை ஆத்ம ஸாக்ஷாத்காரம் அல்லது ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் என்கிறோம். சைவர்களும், வைஷ்ணவர்களும் சிவ ஸாயுஜ்யம், விஷ்ணு ஸாயுஜ்யம் என்பார்கள். புத்தர் ஒரு தீபம் அணைந்து போய்விட்டாற்போல ஸகலமும் அழிந்து போய்விட்ட "நிர்வாணம்" என்கிறார். ந்யாய - வைசேஷிக ஸித்தாந்திகள் துக்கம் என்பதே இல்லாததான "அபவர்க்கம்" என்பார்கள். ஜைன மதத்திலும், யோக சாஸ்த்ரத்திலும் "கேவல ஸ்திதி", கைவல்யம்" என்றே மோக்ஷத்தைச் சொல்லியிருக்கிறது.

இப்படி வெறுமனே "இருந்துகொண்டு மட்டும் இருக்கிற நிலை" போய், மனஸ் முளைத்து "செய்கிற நிலை" ஏற்பட்டு விட்டால் உடனே அனர்த்த பரம்பரை அத்தனையும் புற்றீசல் மாதிரிப் புறப்பட்டு விடுகின்றன.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## ஆசைப் பசியின் விளைவுகள்

மனஸ் வந்துவிட்டால் உடனே அதற்கு ஆசைகள் என்ற ஆயிரக்கணக்கான பசிகள் ஏற்பட்டு, அதைத் தீர்த்துக் கொள்வதில் கோபம், லோபம், பொய், பொறமை, அழுகை, பயம், எல்லாமும் பட்டாளமாக வந்துவிடுகின்றன. அப்படியாவது ஆசை தீர்ந்ததா என்றால் அதுதான் இல்லை. விடாமல் ஒன்று மாற்றி ஒன்று என்று ஆசைப் பூர்த்திக்கான கார்யங்கள் நம்மைப் பிடித்துக்கொண்டு பேய் மாதிரி ஆட்டி வைக்கின்றன. ஆனந்தம் வேண்டும் என்பதற்காகத்தான் நாம் செய்கிற இத்தனை கார்யங்களும் என்றாலும், இந்தக் கார்யங்களினால் அதிகபக்ஷமாக அடையக்கூடிய ஸந்தோஷங்களுங்கூடத் தாத்காலிகமாக இருந்து மறைந்துதான் போகின்றன. எதுவுமே கலப்படமில்லாத ஸந்தோஷமாக இல்லாமல் கையோடேயே ஒரு துக்கத்தையும் அழைத்துக் கொண்டு வருகிறது.

"பக்ஷணம் சாப்பிட்டால் ஸந்தோஷமாயிருக்கிறது, வயிற்றுவலியும் வருகிறது" என்பது வயிற்றுப் பசி விஷயத்தில் மட்டும்தான் என்று இல்லை. கண்ணின் பசி, காதின் பசி, சரீரப்பசி, எண்ணத்தின் பசி, பணப்பசி எல்லாவற்றிலும் இதே தான் நடக்கிறது. குழந்தை விளையாடிப் பார்த்தால் ஸந்தோஷமாயிருக்கிறது, அதற்கு ஒரு ஜ்வரம் வந்துவிட்டால் இந்த ஸ்ந்தோஷத்தைப்போல் நாலு மடங்கு கவலை ஏற்படுகிறது. நிறையப் பணம் வந்தால் ஸந்தோஷமாயிருக்கிறது, அதே ஸமயத்தில், திருட்டுப் போயிடப் போறதே!டாக்ஸை உசத்திவிடப் போறானே!எவனாவது டொனேஷன்' கேட்டுண்டு வந்துடப் போறானே" என்றெல்லாம் பல தினுஸான கவலையும் பயமும் உண்டாகிறது. உத்யோகம் பண்ணுவது, குழந்தை குட்டி பெற்றுக்கொள்வது, பணம் சேர்ப்பது, க்ளப்புக்குப் போவது ஸினிமாவுக்குப் போவது என்றிப்படி-இன்னும் என்னென்ன செய்கிறோமோ அவை எல்லாமும் - ஸந்தோஷம் வேண்டும், ஆனந்தம் வேண்டும் என்பதற்காகவே ஆனாலும், ஒவ்வொன்றாலும் உண்டாகிற ஸந்தோஷத்தோடு கூட அதை விடவும் ஜாஸ்தியாக துக்கம், விசாரம், பயம், ஆத்திரம், அவமானம், பொறாமை, அஹங்காரம் எல்லாமும் உண்டாகின்றன. அப்படியாவது இந்த ஆனந்தங்களில் எதாவது ஒன்றையாவது சாச்வதமாகப் பிடித்து வைத்துக்கொள்ளமுடிகிறதா என்றால் அதுவும் இல்லை.

ஏதோ ஒன்றின் மேல் ஆசை உண்டானவுடன் அதை எப்படி அடைவது என்ற கவலை பிறக்கிறது. இன்னொருத்தன் அதை அடைய முயற்சி செய்கிறானென்றால், போட்டி போடுகிறானே என்று கோபம் வருகிறது. அதை அவன் அடைந்துவிட்டால் பொறாமை, நாம் அடைந்து விட்டால் திமிர் - அவனை அவமானப்படுத்தத் தோன்றுவது - இப்படியாக, ஆசையின் நிகர விளைவாக, ஏதோ ஒரு தோஷத்தை ஸம்பாதித்துக் கொள்கிறோம். ஆசைப்பட்ட வஸ்துவை அடைந்தபின் அல்ப ஸந்தோஷம். அப்புறம் அது தேய்ந்து மறைந்து போய் இன்னொரு வஸ்துவுக்காக இதே மாதிரிப் பறப்பும் தோஷங்களை ஸம்பாதித்துக்கொள்வதும்.

ஆசை வைத்த எதையோ ஒன்றை அடைவதற்காகவே க்ஷணநேரம் சும்மாயில்லாமல் கார்யம் செய்கிறோம்.

தூக்கத்திலிருந்து முழித்துக்கொண்டு மனஸ் புறப்பட்டதோ இல்லையோ இந்தக் கார்யப் பிசாசு பிடித்துக்கொண்டு சாந்தம் என்ன, நிம்மதி என்ன, நிறைவு என்ன என்றே தெரியாதபடி ஆட்டிவைக்க ஆரம்பிக்கிறது. நடு நடுவிலே ஏதோ கொஞ்சம் ஆசை ஈடேறி, பிறக்கிற நிம்மதியும் த்ருப்தியும் போன சுவடு தெரியாமல் அத்ருப்தி ப்ரவாஹத்தில் எங்கேயோ அடித்துக்கொண்டு போய்விடுகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## கொள்ளுவதும் தள்ளுவதும்

ஒன்றைக் கொள்ளுவதற்காகச் செய்யும் முயற்சியில் கஷ்டம், அதை நமக்கென்று (வைத்துக்) கொண்டிருப்பதிலேயே எத்தனையோ கஷ்டம், அது கைவிட்டுப் போனாலும் கஷ்டம். கொள்ளுகிறதால் ஏற்படும் இந்தக் கஷ்டங்களோடேயே கைகோத்துக் கொண்டு, தள்ளுவதால் ஏற்படும் அநேக கஷ்டங்களும் சேருகின்றன. எந்தக் கார்யமானாலும் ஒன்றைக் கொள்ளுவது (ஸம்பாதிப்பது), இன்னொன்றைத் தள்ளுவது (விலக்குவது) இரண்டும் சேர்ந்து சேர்ந்தே வரும். இல்லாததைக் கொண்டு வரவேண்டும், வேண்டாமென்பதைத் தள்ளவேண்டும். உடம்பு நன்றாயிருக்கச் சாப்பிடவும் வேண்டும். விஸர்ஜனம் பண்ணவும் வேண்டும் என்றிருக்கிறமாதிரிதான். போக்கிரி வேலைக்காரனைத் தள்ள வேண்டும், நல்ல வேலைக்காரனைக் கொண்டுவரவேண்டும். சத்ருக்களைப் போக்க வேண்டும், மித்ரர்களை அடைய வேண்டும். பணத்தைக் கொண்டுவர வேண்டுமென்றால், அந்த முயற்சிக்கு இடையூறாக வருகிற எல்லாவற்றையும் தள்ளவேண்டும். எல்லா ஆசைக்கும் இப்படியே.

இப்படிக் கொள்ளுவது, தள்ளுவது இரண்டாலும் உபத்ரவம். (உட்)கொண்ட ஆஹாரம் ஜெரிக்காமல் உபத்ரவப்படுத்துகிறது, அல்லது மறுபடி அதே மாதிரி

வேண்டும் என்ற அரிப்பை ஏற்படுத்துகிறது. விஸர்ஜனம் ஆகாவிட்டால் வியாதி உண்டாக்குகிறது, அல்லது ஒரேயடியாகப் "போய்", கால் கை ஓய்ந்து படுக்கும்படிப் பண்ணுகிறது. தள்ளின வேலைக்காரன் நம் கையை காலை உடைத்துப்போட வேண்டும் என்று கருவிக்கொண்டு போகிறான். அவனிடம் பயப்படுகிறோம். "கொண்ட" வேலைக்காரன் இன்க்ரிமென்ட் கேட்கிறான், ஸ்ட்ரைக் செய்வேனென்று பயமுறுத்துகிறான். ஒரு காலத்தில் கொண்டவனையே இன்னொரு காலத்தில் தள்ளவேண்டியதாகிறது. முதல் நாள் "கொண்ட" ஆஹாரத்தைத்தானே மறுநாள் விஸர்ஜனமாகத் தள்ளுகிறோம்?

சத்ருவிடம் பயப்படுவது போதாதென்று மித்ரர் ரொம்பவும் உறவு கொண்டாடிக்கொண்டு வந்து விடப்போகிறாரே என்று அதைவிட பயப்பட வேண்டியிருக்கிறது. (நம்மைப் பற்றி அவர்களுக்கும் இதே மாதிரி இருக்கலாம்!) ஆக, கொண்டதையே தள்ளும்படி ஏற்படுகிறது.

இப்படிப் பார்த்துக்கொண்டே போனால் கார்யம் செய்வதே பைத்தியக்காரத்தனம் என்று தோன்றுகிறது.

கார்யமே இல்லாமல் வெறும் ஆத்மா மட்டும் இருக்கும்போது எத்தனை நன்றாயிருக்கிறது? நமக்கு ஸமாதி நிஷ்டை பற்றித் தெரியாவிட்டாலும் நித்ரை பற்றித் தெரியும். அந்த நித்ரை எத்தனை ஆனந்தமாயிருந்தது? ஒரு கார்யமும் இல்லாமல், மனஸும் இல்லாமல் எத்தனை நிம்மதியாயிருந்தது? ஒரு ராஜாகூட, ஸகல போக்யங்களிலும் அலுத்துப்போய் தன் ராஜரிகப் பெருமை எதுவுமில்லாத நித்ரையில் விழவேண்டுமென்று தினமும் நினைக்கத்தானே செய்கிறான்? அது எதனால் என்றால் ஆத்மாவாக இருக்கும்போது கொள்ளுவது, தள்ளுவது என்ற இரண்டும் இல்லாததால்தான். ஆத்மாதான் நிஜ நாம் என்று பார்த்தோம். நம்மை நாமே கொள்ளுவது என்பது எப்படி ஸாத்யம்? இனிமேல்தான் நம்மைக் கொள்ளவேண்டுமென்றால் இப்போது நாம் யாராகவோவா இருக்கிறோம்? நாம் எப்படி நாமாக இல்லாமலிருக்கமுடியும்? நாம் எப்படி யாரோவாக இருக்கமுடியும்? - இந்த இரண்டுமே ஸாத்யமில்லை. அதே மாதிரி நம்மையே நாம் எப்படித் தள்ளிக்கொள்ளமுடியும்?

முடியுமானால் தள்ளுவது யார்? தள்ளிய பின் மிஞ்சக்கூடியது யார்? நம்மைத் தவிர நம்மிடம் எதுவும் இருக்கவே முடியாததலால், ஆத்மாவைத் தள்ளவோ, தள்ளியபின் மிஞ்சி நிற்கவோ எவரும் இருக்கமுடியாது. நம்மை நாமே தள்ள முடியாது, கொண்டு வரவும்முடியாது. நாம் நாமாக இருந்துகொண்டே இருக்கிறோமாதலால், புதிதாகக் கொண்டு வரமுடியாது.

அம்பாளை இப்படிப்பட்ட ஆத்ம ஸ்வரூபமாக வைத்துத்தான் (லலிதா) ஸஹஸ்ரநாமத்தில் அவளுக்கு ஹேயோபா தேய வர்ஜிதா என்று ஒரு பெயர் சொல்லியிருக்கிறது. "ஹேயம்" என்றால் தள்ளப்படுவது. "உபாதேயம்" என்றால் கொள்ளப்படுவது, தள்ளவும் முடியாதவளாக, கொள்ளவும் முடியாதவளாக இருப்பவள் "ஹேயோபாதேய வர்ஜிதா." நம்மைத் தவிர வேறாக இருப்பவற்றைத்தான் கொள்ளவும், தள்ளவும் ஓயாமல் கார்யம் செய்து வீணாகிறோம். நாமாகவே இருப்பதற்குக் கார்யம் வேண்டாம். நாமாகவே இருக்கும் போது கார்யத்தின் தொல்லையே இல்லை.

அதனால்தான் தூக்கத்திலே அத்தனை ஸௌக்யம், சாந்தி. ஆசையின் பிடுங்கல், மனஸின் அரிப்பு இல்லாமல், தேவாஸுர யுத்தம் என்றேனே, அது இல்லாமல் நாம் நிம்மதியாயிருப்பது தூக்கத்தில்தான். நமக்குத் தகுதி இல்லாவிட்டாலும் பகவான் பரம கருணையால் தினமும் ஏழெட்டு மணி இந்த சாந்த நிலையை அநுக்ரஹம் பண்ணுகிறார். ஒருகால், பிறரிடம் கருணையால் நாம் அவர்களுக்கு இந்த ஏழெட்டு மணியாவது உபத்ரவம் பண்ணாதிருக்கவே நம்மைத் தூங்கப் பண்ணுவதாகவும் இருக்கலாம்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தூக்கமல்ல வழி**

அப்படியானால், தேவாஸுர யுத்தமில்லாமல், மனஸ்

இல்லாமல், அதிலிருந்து முளைக்கும் ஆசை இல்லாமல் நாம் சாந்தமாக இருக்க வழி தூங்கிக் கொண்டேயிருப்பதுதானா? நிறையத் தூக்க மாத்திரை வாங்கி வைத்துக்கொண்டு, முழித்துக்கொள்ளும் போதல்லாம் போட்டுக்கொண்டு மறுபடி தூங்கிவிடலாமா? அது ஸரியில்லை.

நல்ல தூக்கத்திலே மனஸின் க்ருத்ரிமம் இல்லை, ஆத்மா மட்டும் இருக்கிறது என்றாலும், "ஆத்மாநுபவம்" என்கிற ஆனந்தமான சாந்தமான நிலையாக நாம் அதைத் தெரிந்து கொண்டு தூக்கத்தின் போது அநுபவிக்கிறோமா என்ன? இல்லை. முழித்துக்கொண்ட பிற்பாடு "ஸுகமாகத் தூங்கினேன், நிம்மதியாயிருந்தது" என்று சொல்லத் தெரிகிறதே ஒழிய, தூங்கும்போது அந்த ஸுகமோ, நிம்மதியோ நமக்குத் தெரியவில்லை. ஏதோ மரக்கட்டை மாதிரி கிடக்கிறோம். இப்படி வெறும் ஜட நிலைக்கு நம்மைத் தாழ்த்திக் கொள்வது நம்மையே நாம் அவமரியாதை பண்ணிக்கொள்வதுதான். வேறு யாராவது நம்மை "ஜடமே" என்று கூப்பிட்டால் அவமானம், கோபம் படுகிறோமே, நம்மை நாமே அப்படி பண்ணிக்கொள்ளலாமா? ஸ்ருஷ்டி என்ற பெரிய விஷயத்தையே ஏளனப்படுத்துவதாக ஒரு மநுஷ்யன் தன்னை எப்போது பார்த்தாலும் தூங்கிக் கொண்டிருக்கும் ஜட ஸ்திதிக்குத் தாழ்த்திக் கொள்ளக்கூடாது.

ஜட நிலைமைக்கு அப்புறம் ஓரறிவிலிருந்து ஆறறிவு என்று ஸ்ருஷ்டி க்ரமம் உயர்ந்துகொண்டே போவதில் மநுஷ்யன் உச்சாணியல் இருக்கிறான். இந்த ஆறறிவால் இவனுக்கு ஏகப்பட்ட உபத்ரவங்கள், ஹிம்ஸைகள் ஏற்படுவது வாஸ்தவந்தான். ஆனால் அதற்காகப் பேடி மாதிரி, ஒருவன் தன்னை நபும்ஸகனாக்கிக் கொள்கிற மாதிரி, இதுகள் எல்லாவற்றையும் சக்தியிழக்கப் பண்ணி ஜடமாக்குவது கொஞ்சங்கூட அழகில்லை. ஆறறிவுகளால் ஹிம்ஸை, உபத்ரவம் வந்தாலும் எத்தனையோ நல்லதும் பண்ண முடிகிறதோ இல்லையோ? உசந்த தத்வ விசாரணை, ஸங்கீதம், சில்பம், பொது ஜன ஸேவை, அன்பு, த்யாகம், இப்படி எத்தனையோ நல்லவற்றிலும் கர்மேந்த்ரிய ஞானேந்த்ரியங்களையும் மனஸையும் செலுத்த முடிகிறதோல்லியோ? இப்படிச் செய்ய முயலவேண்டும். அப்புறம், ஆறறிவுக்கு மேலே ஒரே அறிவாக ஆக, ஞான விசாரம் செய்யவேண்டும், ஆறறிவுக்குக் கீழே

ஜடநிலைக்குப் போகப்படாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## வைராக்யமும் அப்யாஸமும்

பகவான் சொன்னாற்போல வைராக்யத்தாலும், அப்யாஸத்தாலும் அஸுர சக்திகளைத் திருட்மபத் திரும்ப அடக்கி, தேவ சக்திகளைத் சக்திகரமாகச் செயலாற்ற வைப்பதே இதற்கெல்லாம் ஆரம்பம்.

ஒன்றைக் கொள்வது, ஒன்றைத் தள்ளுவது என்பதால் ஏற்படும் விருப்பு வெறுப்புகளில் பிடித்த பிடியாயில்லாமல் விலகியிருக்கப் பழகுவதுதான் வைராக்யம். நம் மனஸுக்குப் பிடித்தது பிடிக்காதது என்று பார்க்காமல், இவற்றில் வைராக்யத்தைக் கொள்ள முயற்சி பண்ணிக்கொண்டே, தர்மரக்ஷணைக்காகவும் நம்முடைய ஜீவன் பக்குவப்படுவதற்காகவும் நாம் என்ன பண்ணவேண்டும் என்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறதோ அவற்றின் பொருட்டே இந்த்ரியங்களையும் மனஸையும் ஈடுபடுத்திக் கார்யங்கள் பண்ணவேண்டும். இதிலும் கொள்ளுவது - தள்ளுவது, லாபம் - நஷ்டம், ஜயம் - அபஜயம், மானம் - அவமானம் எல்லாம் வரத்தான் வரும். இவற்றையும் ஸமசித்தத்தோடு எடுத்துக் கொள்ளத்தான் வைராக்யம் தேவை. இதைப் பெறுவதற்கு முயன்று கொண்டே போகவேண்டும்.

இப்படி ஜட நிலைக்கு மேற்பட்ட ஆறறிவை முதலில் அதன் மிருகத்தன்மையிலிருந்து மநுஷத் தன்மைக்கும் அப்புறம் தேவத் தன்மைக்கும் உசத்திக் கொண்டே போய், அப்புறம் இவற்றுக்கும் உயர்வான ஏக அறிவான ஆத்மாவிலே கரைத்துவிடவேண்டும். முடிவில் ஆறறிவைப் போக்கடித்துக் கொள்ளத்தான் வேண்டும். ஏனென்றால் அதனால் சாச்வத ஸௌக்யம் இல்லை. ஆனால் இப்படிப் போக்கடித்துக் கொள்வது ஆறறிவுக்குக் கீழ்ப்பட்ட ஜட நிலையில்

ஆத்மாவின் ஸுகாநுபவம் நமக்கே தெரியாமல் தூங்குவதாக இருக்கக்கூடாது, இவற்றுக்கு மேற்பட்டதாய், இவற்றுக்கு ஆதாரமாய், எது இல்லாமல் இவை இயங்க முடியாதோ அதுவாக உள்ள ஆத்மாவை நன்றாக உணர்ந்து அறிகிற சாந்த ஸமாதி நிஷ்டையாயிருக்க வேண்டும்.

உழைத்து உழைத்தும் யோசித்து யோசித்தும் களைத்துப் போகிற உடம்புக்கும் மனஸுக்கும் ஓய்வு தருவதற்காக எவ்வளவு தூங்க வேண்டுமோ அவ்வளவே தூங்கணும். அதை சாந்த ஸமாதி என்று நினைத்துவிடக் கூடாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆனந்த ஞான சாந்தம்**

ஆத்மாவின் சாந்தம் சூன்யமாகச் சாவிலும் தூக்கத்திலும் இருக்கிற மாதிரியான சாந்தம் அல்ல. புத்தர் சொன்ன நிர்வாணம் சூன்யத்தின் சாந்தம்தான். ஆனால் நம்முடைய சங்கரபகவத் பாதர்கள் உபநிஷத்துக்களின் ஆததாரத்திலிருந்து காட்டியது என்னவென்றால் ஸமாதி நிலையில் அடைகிற ஆத்ம சாந்தமென்பது ஆனந்த மயமானது, ஞான மயமானது என்பதே. அது பூர்ணாநுபவம். சூன்யாநுபவமில்ல. செத்த பின்னும் அழியாத உயிர்த் தத்வமாயுள்ள ஆத்மா ஞானமயமாயும், ஆனந்த மயமாயும் இல்லாமல் வேறெப்படி இருக்கமுடியும்?

ஆத்மா ஞானமயம் என்பது எப்படி என்றால் உயிருள்ளதாக ஒன்றைச் சொல்வதே அது வெறும் ஜடமாயில்லாமல் அறிவும் உணர்ச்சியும் பெற்றிருப்பதைக் கொண்டுதான் அல்லவா? எனவே உயிருக்குமயிராயுள்ள ஆத்மா என்பது அறிவும் உணர்ச்சியும் ஒன்றாகிவிட்ட சைதன்யமயமாயிருப்பதுதானென்பது நிச்சயமாகிறது. இதைத்தான் ஞானம் என்பதும்.

ஆத்மா எதனோடும் நேராக ஸம்பந்தப்படாமலிருப்பது

என்றும் முன்னேயே சொன்னேன். ஆனபடியால் அது அறிவதற்கும், உணர்வதற்கும் வெளி வஸ்து எதுவுமில்லை. எனவே அது எதை அறியும், உணரும் என்றால் தன்னையே தான் அறிந்து கொள்வதாயும் உணர்ந்து கொள்வதாயுமிருக்கும். வேறு மனஸோ, இந்த்ரியமோ கிட்டே போய் அறிந்துகொள்ள முடியாத ஆத்மாவை அந்த ஆத்மா மட்டும்தான் தெரிந்துகொண்டிருக்கிறது. ஸமாதியில் மனஸ் 'டப்'பென்று நின்றுவிட்டவுடன் இப்படித் தன்னைத் தானே தெரிந்துகொள்ளும் ஆத்மாநுபவம் உண்டாகிறது. தூக்கத்தில் ஆத்மாநுபவம் தெரிவதில்லை.

"ஆத்மா ஆனந்த மயம் என்பது எப்படி?" என்றால், "வேறெப்படி அது இருக்க முடியும்?" என்று திருப்பிக் கேட்கத் தோன்றுகிறது. கட்டுப்பாடே இல்லாமல் பரம ஸ்வதந்தரிமாய் உள்ள ஒன்று ஆனந்தமாயில்லாமல் வேறு எப்படி இருக்க முடியும்? ஆசைகளைக் கொண்டு மனஸ் போடும் கட்டு, இந்த்ரியக் கட்டு, மற்ற மநுஷ்யர்கள் - இடம் - பொருள் - ஏவல் இவற்றின் கட்டு, கர்மபந்தம், ஸம்ஸாரபந்தம் ஆகியவற்றால்தான் நாம் துன்பப்படுவது - இந்த எதுவும் ஆத்மாவுக்கு இல்லை. அதே ஸமயத்தில் அது அறிவோ உணர்சசியோ இல்லாததாயுமில்லலாமல் சைதன்யமயமய், சிக்கனமாய் இருக்கிறது. எனவே தனது கட்டுப்பாடற்ற நிலையை அது உணர்ந்து அறியவும் செய்யும். இப்படிப்பட்ட பரம ஸ்வாதந்த்ரிய அநுபவமானது பேரானந்தமாகத்தானே இருக்கும்? கட்டுக்குள்ளேயே நமக்கு அவ்வப்போது தாற்காலிகமாக ஆனந்தம் வருகிறதென்றால், கட்டுப்பாடே இல்லாமல் சாச்வதமாயுள்ள ஆத்மாவின் இன்பமே பேரானந்தம். நமக்கு இன்னொருத்தரிடமிருந்து உண்டாகிற துக்கம், பயம், கோபம் எதுவும் தன்னையன்றி வேறெதையும் அறியாத ஆத்மாவுக்கு இல்லாததாலும் அதற்கு மாறாத ஸதாநந்தமாக, நித்யப் பேரின்பமாக இருக்கிறது.

நமக்கு மேலே அடக்க யாராவது இருக்கிறார்கள். எல்லாவற்றுக்கும் மேலே இயற்கை என்கிற சக்தியின் ஆதிக்கத்தில்தான் எல்லாரும் மாட்டிக் கொண்டிருக்கிறோம். நம்மை ஆபீஸர் அடக்குகிறார், அவரையும் அவர் பெண்டாட்டி அடக்குகிறாள்!எல்லாரையும் ,எல்லாவற்றையும், இயற்கையையுங்கூட அடக்கி ஆள்கிறவனாக ஈச்வரன் இருக்கிறானே, அவனுங்கூட இப்படி த்வைதமாக

ஈச்வரனென்றும் பக்தன் என்றும் இருக்கும்போது, பக்த "பரதீனன்" என்பதாக பக்தர்களின் ஆதிக்கத்தின்கீழே இருக்கிறான்!த்வைதம் இருந்தவிட்டால் ஸ்வாதீனம் கிடையாது. பராதீனம்தான். ஸ்வாதீனம் நம்மில் யாருக்கும் இல்லை. அது இருந்தொலொழிய பூர்ணானந்தம் ஏது? தன்னை அடக்க எந்த மேல் சக்தியும் இல்லலாமல் இருக்கும் அத்வைத ஆத்மாவுக்கு அகண்டாநந்தம் என்பது இருக்கிறது. அந்த ஆனந்த ஸமுத்ரத்தில் ஒரு துளி, இரண்து துளிதான். மாயை யானது அந்த ஆத்மாவின் ஆதாரத்தில் ஜீவாத்மாவின் வாழ்க்கையை நடத்தி வைக்கும்போது, அதாவது இந்த மாயா நாடகத்தைப் போடும்போது, ஜீவனுடைய இந்த்ரியங்களால் வெளிப்பொருட்களின் அநுபோகத்தின் மூலம் பெறப்படுவது.

உண்மையில் வெளி வஸ்துவில் ஆனந்தமில்லை. உள்ளே உள்ள ஆத்ம ஜ்யோதிஸை மாயையானது ஜீவனின் அந்தக்கரணத்தில் ப்ரதிபலித்து இந்த்ரியங்கள் வாயிலாக அநுபோகத்தைக் கொடுக்கும்போது அந்த ப்ரதிபிலிப்பின் ரச்மிகள் (கிரணங்கள்)தான் வெளி வஸ்துவிலிருந்துவரும் ஆனந்தம் போலமாறித் தெரிகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆத்மாநந்த கிரணமே வெளியின்பம்**

தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரத்தில் ஒரு ச்லோகத்தில் இவ்விஷயத்தை நம் ஆசார்யாள் சொல்கிறார். நிறைய சின்னச்சின்ன த்வாரமுள்ள ஒரு கடத்துக்குள் ஒரு தீபமிருக்கிறாற்போல் உடம்புக்குள் ஆத்மா அறிவு ஜ்யோதிஸாக, ஆனந்த ஜ்யோதிஸாக இருக்கிறது. அதை மாயை ப்ரதிபலித்து கண், காது, மூக்கு முதலிய இந்த்ரிய த்வாரங்களின் வழியாக சின்னச் சின்ன ஞான, ஆனந்த ரச்மிகளாக வெளியே அனுப்புகிறது. இந்த ரச்மிகள் எந்தப்பொருள்களின் மேல்படுகின்றனோவா

அப்பொருள்களும் கொஞ்சம் ப்ரகாசம் பெறுகின்றன. இந்த்ரிய ரச்மிகள் இந்த ப்ரகாசத்தைக் கொடுப்பது தாங்களே என்பதையும், தங்களுக்கும் முடிவாக ப்ரகாசம் தருவது ஆத்மாவே என்பதையும் அறியாமல், அந்த வெளிப்பொருள்களிலேயே இந்த ப்ரகாசம் இயற்கையாக இருப்பதாகவும் தாங்கள் அவற்றைத் தொட்டு அவற்றிடமிருந்து அதைப் பெறுவதாகவும் நினைத்து ஸந்தோஷிக்கின்றன. ஆத்மாவின் அறிவு, ஆனந்தம் ஆகியவற்றின் லவசேலத்தையே வெளிப் பொருள்களைப்பற்றித் தங்களுக்கு ஏற்படும் அறிவாகவும், வெளிப்பொருள்கள் தங்களுக்குத் தரும் ஆனந்தமாகவும் அசட்டு ஜீவன் எண்ணுகிறான்.

ஒரு பந்தம் போட்டிருக்கிறது. ஸூர்ய வெளிச்சம் கீற்று ஓட்டை வழியாக உள்ளே வருகிறது. இதை ஒரு குழந்தை பார்த்தால் அந்த இடத்தில் பந்தலேதான் ஒளியை ஸ்ருஷ்டித்து அனுப்பியிருக்கிறதென்று நினைக்கும். ஸூர்யனைப் பந்தல் மறைப்பது, அதன் இடுக்கு வழியாய் ஸூர்ய வெளிச்சம் வருவது எல்லாம் குழந்தைக்குத் தெரியாது. நாமும் அப்படித்தான் இருக்கிறோம். ஆத்ம ஜ்யோதிஸை மறைக்கிற நம் சரீரத்தில் அதன் லவலேசத்தைப் பாயவிடுவதாக இந்த்ரியானுபவங்கள் இருக்கின்றன. நாமோ இந்த்ரியங்களுக்கு விஷயமாகும் வஸ்துகளிலிருந்தே அநுபவம் வருவதாக மயங்குகிறோம் ஜ்யோதிஸை மறைக்கிற பந்தலிலிருந்தே வெளிச்சத்தை உண்டாக்கிக்கொள்ள முயற்சி செய்தால் எப்படியிருக்கும்? அப்படித்தான் நாம் தேஹத்தைக் கொண்டு நித்யானந்தத்தைப் பெற நினைப்பது. பந்தலைப் பிரித்துவிட்டால் எல்லாம் வெளிச்சமாய் விடுவது போல் தேஹ ப்ரக்ஞை போனால் ஆத்மாவுக்கே உரியதான பூர்ணானந்த ஸ்வரூபமாகி விடலாம்.

வெளிப்பொருள் அதுவாகவே ஆனந்தத்தைத் தரவில்லை என்பதைக் கொஞ்சம் ஆலோசித்தாலும் புரிந்துகொண்டுவிடலாம். காஷ்மீர் சால்வை அதுவே ஆனந்தம் தருவது என்றால் எக்காலத்திலும் ஒருத்தனுக்கு ஹிதமாகத் தானே இருக்கவேண்டும்? ஆனால் அது எத்தனைவிலை உயர்ந்ததாயிருந்தாலும், எத்தனை மழமுமழப்பாயிருந்தாலும் நல்ல கோடை காலத்தில் மேலே

பட்டாலே தாங்காமல் தூக்கி எறிகிறோமே அதனால் ஆனந்தம் அதிலேயே இல்லை என்று புரியத்தானே செய்கிறது, ரொம்பவும் அழகான ஒரு ராகத்தை நல்ல சாரீரமும் ஞானமும் உள்ள பாடகர் ஆலாபனை செய்கிறாரென்பதால் அது எப்போதும் ஆனந்தமளிப்பதாக உள்ளதா என்றால் - நமக்கு ரொம்பப் பிரியமானவர் "போய்" விட்டார் என்று சேதி வருகிறது, அப்போது ரேடியோவிலே அந்த ராகத்தை அந்த வித்வான் தேவகானமாகப் பாடுகிறொரென்றால் ஆனந்தமா தருகிறது? கேட்கப் பிடிக்காமல் நிறுத்தித்தானே விடுகிறோம்? ஜ்வரக்காரனுக்கு நல்ல பக்ஷணமோ, ஐஸ்க்ரீமோ ஆனந்தம் தருமா? சொல்லிக்கொண்டே போகலாம் - ஆனந்தம் வெளிவஸ்துவில் இல்லை என்று காட்டுவதற்கு. ஜீவனுடைய மனஸ் கலப்பதில்தான் ஆனந்தம் உண்டாகிறது. இவன் மனஸ் எதிலும் கலக்காமல் தூங்கிக்கொண்டிருக்கும்போது எந்த வஸ்துவாவது ஆனந்தம் தருகிறதா? இந்த மனஸின் ஆனந்தமோ அதைப்போல ஆயிரம் மடங்கு அழுகை என்றுதான் இத்தனை நாழி பார்த்தோம். இடுக்குவழியாக துளித்துளி வெளிச்சத்தை உள்ளே விட்டு, பாக்கி முழுக்க இருட்டையே தருகிற பந்தல் மாதிரி, துளித்துளி ஆனந்தத்தோடு ஏராளமான துக்கத்தையே மனஸ் தருகிறது. இதன் க்ருத்ரிமம் இல்லாமல் இதற்கு ஆதாரமான ஆத்மாவுக்குப் போனால்தான் சாச்வத ஆனந்தமென்பது.

ஜீவன் தானே நித்ய ஆனந்த ஸ்வரூபனான ஆத்மாவாக இருந்துகொண்டு, தாற்காலிக ஆனந்தங்களுக்காக வெளியே அலையாக அலைகிறான். இதைத் தன் வயிற்றுக்குள்ளிருந்தே வாஸனை எழும்புகிறது என்று தெரிந்துகொள்ளாத ஒரு கஸ்தூரி மான் வாஸனை உண்டாகுமிடத்தைத் தேடித்தேடித் திரிவதற்கு உபமித்து அத்வைத சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது.

மனஸ் அடிபட்டுப்போன ஸமாதியில் சைதன்ய மயமான இந்த ஆத்மானந்தம் நன்றாக அறியப்பட்டதாகும். சாந்தமான அந்த ஆனந்தம் எப்படியிருக்கும் என்று நமக்குத் தெரியாது.

## அத்வைதம்

### மனத்துக்குப் புரியாத சாந்தாநந்தம்

ஆத்மா தெரியாமல் மனஸ் மட்டுமே தெரிவதான நம் நிலையில் ஆனந்தம் என்பது சக்தி நிறைந்த உணர்ச்சி என்றும், சாந்தம் என்பது உணர்ச்சி அடங்கிப்போன நிலை என்றுத் தோன்றுகிறது. எனவே உணர்வு என்பதே ஒரு சக்தியாயுள்ளதால் ஆத்மாவின் சாந்தத்தில் எப்படி ஆனந்தத்தை உணரமுடியும் என்று தோன்றலாம். ஆனால் நம் மனஸுக்குப் புரிவதாகவும், நம் மனஸுக்கு ஒத்த விதத்திலும் ஆத்மாவின் சாந்தமும், ஆத்மாவின் ஆனந்தமும் இருக்க வேண்டும் என்று எப்படி எதிர்பார்க்கலாம்? ஆத்மாதான் மனஸக்கு அப்பாற்பட்ட மனோதீத வஸ்துவாயிற்றே!அதன் அறிவு, உணர்வு, ஆனந்தம், சாந்தம் எல்லாம் எப்படியிருக்கும் என்று அதற்குத்தான் தெரிய முடியுமே தவிர மனஸுக்கு எப்படித் தெரியமுடியும்? நம் உடம்பிலேயே கண்ணுக்கு ஆனந்தமான ஒரு காட்சியைக் காது புரிந்துகொண்டு ஸந்தோஷிக்க முடிகிறதா? காதுக்கு ஆனந்தமான கானத்தைக் கண்ணால் ரஸிக்க முடிகிறதா? இப்படி யோசித்துக்கொண்டு போனால் நாம் ஸகல இந்த்ரியங்களுக்குமே புரியாத ஒரு ஆனந்தமும் இருக்கலாம் என்று தெரியும் .ஆனந்தமாயுள்ளபோதே அது சாந்தமாயுமிருக்கலாம்.

சாந்தம் என்பது என்ன? சலனமில்லாமல் தனக்குள்ளேயே அடங்கியிருப்பதுதான். மனஸின் ஆனந்தம் இன்னொன்றின் அநுபோகத்திலேயே விளைவதால், அந்த இன்னொன்றை நோக்கி மனஸ் சலிப்பதாலேயே அநுபோகம் ஏற்படுவதால், அப்போது 'சாந்தம்' என்பதாகத் தனக்குள்ளேயே அடங்கியிருப்பதன் சாந்தமும் கிடைக்கிறது.

மனஸுக்கு அதீத சக்திகள் உண்டாகும்போது, அது அமாநுஷ்ய ஆற்றல்களைப் பெறும்போது, மநுஷ்ய சக்திக்கு மேற்பட்ட கந்தர்வர்கள், பித்ருக்கள், தேவர்கள் ஆகியவர்களுக்குப் படிப்படியாக ஒருத்தரைவிட இன்னொருத்தருக்குப் பலமடங்கு ஆனந்தம் ஸித்திக்க

முடியும் என்று தெரிகிறது. இப்படி வரிசையாக ஒன்றுக்குமேல் ஒன்றான ஆனந்தங்களைத் தைத்திரீய (உபநிஷ)த்தில் "ஆனந்தவல்லீ" என்றே பெயருள்ள அத்யாயத்தில் சொல்லியிருக்கிறது. அந்த ஆனந்தங்கள் என்ன என்று மநுஷ்யனுக்குப் புரியாது. காபி சாப்பிடுவதிலும், கச்சேரி கேட்பதிலும் மநுஷ்யனுக்கு என்ன ஆனந்தம் என்று ஒரு மாட்டுக்குப் புரியுமா? அப்படித் தான் இதுவும். இப்படிப்பட்ட பல ஆனந்தங்களின் முடிந்த முடிவான உச்சஸ்தானம்தான் ஆத்மானந்தம்.

(பரா)சக்தியின் ஆனந்தமும் சாந்த ஆத்மாவிலேயே

லலிதா ஸஹஸ்ரநாமத்திலே அம்பாளுக்கு ஒரு பெயர் -

ஸ்வாத்மாநந்த - லகீ ூ - பூத ப்ரஹ்மாத்யாநந்த ஸந்ததி

என்று இருக்கிறது. ப்ரஹ்மாதி தேவதைகளுடைய அத்தனை ஆனந்த வரிசைகளையும் தன்னுடைய ஆத்மாநந்தத்தில் லவலேசமாக்கி விடுபவள் என்று அர்த்தம்.

நம்முடைய ஆனந்தம் ரொம்பக் குறைவாக இருப்பதற்குக் காரணம் நமக்கு மேலே எண்ணிமுடியாத தேவ - அஸுர சக்திகளுக்கு ஆதிக்யம் இருந்து, நாம் அவற்றுக்குக் கட்டுப்பட்டு ஆடவேண்டியிருப்பதுதான். நம்மைவிட சக்தி

அதிகமான தேவதைகளில் பல இனங்கள். அவற்றில் ஒன்றைவிட ஒன்றுக்கு சக்தி அதிகம். ஒன்றுக்கு எந்த அளவுக்குச் சக்தி அதிகமோ அந்த அளவுக்கு அது அதற்குக்கீழ்ப்பட்ட சக்திகளின் ஆதிக்கக்கட்டுப்பாட்டுக்கு ஆளாகாமல் இருக்கிறது. இந்த 'ப்ரபோர்ஷ'னின் படியே ஒவ்வொரு இனத்துக்கும் ஆனந்தம் ஜாஸ்தியாக இருக்கும். தேவ இனங்களின் முடிவிலே ப்ரஹ்மா இருக்கிறார். அதனால் அவருக்கு "ஃப்ரீ"யாக இருப்பதன் ஆனந்தம் ரொம்பவும் அதிகம். அவருடைய ஆனந்தமும்கூட கட்டுப்பாடே அடியோடு இல்லாத ஆனந்தமில்லை. அவரும் தகப்பனார் மஹாவிஷ்ணுவுக்குக் கட்டுப்பட்டவர். பராசக்திக்கு, அவளைத் தவிர எல்லாருமே கட்டுப்பட்டவர்களாதலால் இவரும் கட்டுப்பட்டவர்தான். அதனால்தான் அடியோடு கட்டுப்பாடு இல்லாமல் தன்னை அடக்கி வைக்க யாருமே இல்லாமலிருக்கிற அம்பாளின் ஆனந்தமானது ப்ரஹ்மாதிகளின் ஆனந்தத்தையும்

லவேலசமாக்கி விடுகிறதென்று சொல்லியிருக்கிறது.

சக்தி ஜாஸ்தியாக ஆக ஆனந்தம் ஜாஸ்தி என்பதால் அந்த சக்தியினாலேயே ஆனந்தம் உண்டாகிறது என்று அர்த்தமில்லை. சக்திக்கும் ஆனந்தத்துக்கும் நேர் ஸம்பந்தமில்லை. ஒருத்தருக்குத் தம்மைவிடக் குறைந்த சக்தியுள்ளவர்மீது தம்முடைய சக்தியினால் ஆதிக்கம் செலுத்த முடிகிறது, அவரைக் கட்டுப்படுத்த முடிகிறது என்பதிலே ஏற்படும் ஆனந்தம் தப்பான அஹங்காரத்தில் ஏற்படுவது, அதை முறையான ஆனந்தம் என்று சொல்லமுடியாது. பின்னே, சக்தி ஜாஸ்தியானால் ஆனந்தம் எப்படி ஜாஸ்தி ஆகிறது என்றால், அப்போது நம்மைவிடவும் அதிக சக்தியோடு இருந்துகொண்டு நம்மைக் கட்டுப்படுத்துபவர்கள்

குறைச்சலாகிக்கொண்டு வருகிறார்கள். ஆகையால், நாம் இன்னொருத்தரை ஆளமுடிகிறது என்பதைவிட, நமக்கு மற்றவர்களுடைய ஆளுகையின் கட்டுப்பாடு குறைந்து, நம்மைவிட ஸ்வதந்திரத்தின் எல்லை ஜாஸ்தியாகிறது என்பதாலேயே ஆனந்தம் ஏற்படுகிறது. ஒரு குமாத்ஸா ஆபீஸராகிறாரென்றால் அவர் நல்லவராயிருந்தால், தாம் பிறத்தியார்மீது 'தாட்பூட்' செய்யமுடியுமென்ற ஆனந்தம் அவருக்கு ஏற்படுவதில்லை. ஆனாலும் தம்க்கு இப்போது ஆபீஸரின் கட்டுப்பாடு இல்லை, ஸ்வதந்தரமாகச் சில கார்யம் செய்யலாம், முடிவுகள் எடுக்கலாம் என்பதில் ஆனந்தம் உண்டாக்கதான் செய்யும்.

ஆபீஸர் மாதிரியான பெரிய பொஸிஷனில் சில பேர் இருக்கிறார்கள். ஆனால் இவர்களுக்கு குமாஸ்தாக்கள் கட்டுப்படிருப்பதைவிட அதிகமாக இவர்கள் இவர்களுக்கும் மேலிதிகாரிகளிடமோ, அல்லது எம்.எல்.ஏ போன்றவர்களிடமோ கட்டுப்பட்டு நடக்கவேண்டுமென்று இருக்கும்போது, 'நம்மைவிட அந்த குமாஸ்தா எவ்வளவோ தேவலை, அவனுக்கு இருக்கிற 'ஃபீரிடம்' நமக்கு இல்லை' என்று வருத்தப்படுகிறார்கள். ஆகையால் சக்தியைவிட ஃபிரீடம்தான் ஆனந்தம் தருவது என்று தெரிகிறது.

பெரிய கம்பெனிகளில் மானேஜராகக் கொடி கட்டிப் பறந்த சிலபேர் ராஜிநாமா பண்ணிவிட்டு, அதோடு 'கம்பேர்' பண்ணிப் பார்க்கும்போது ரொம்பச் சின்னதாக ஸொந்தத்தில்

கம்பெனி ஆரம்பிக்கிறார்கள். "ஏன் இப்படி வருமானம், வசதி எல்லாவற்றையும் குறைத்துக்கொண்டு ஸொந்த பிஸினெஸ் ஆரம்பித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டால், "அதுவா? அங்கே என்னதான் பெரிய

பொறுப்புகள், பெரிய வருமானம் முதுலானது இருந்தாலும் மேலே உள்ள டைரக்டர்களுக்கு ரொம்பவும் 'obey'பண்ணிக்கொண்டிருக்கவேண்யியிருந்தது. அவர்கள் 'கன்ட்ரோல்'தாங்காமல்தான், பாக்கி ஸமாசாரங்களில் நஷ்டமேற்பட்டாலும் ஃப்ரீயாக இருக்கணுமென்று சொந்த பிஸினெஸ் ஆரம்பித்தது" என்கிறார்கள்.

ஆகையினால் ஸ்வாதந்த்ரியத்தால்தான் ஸந்தோஷமே தவிர சக்தியினால் இல்லை. சக்தி அதிகமாகும்போது ஸந்தோஷம் அதிகமானாலும்கூட அது அப்போது தங்கள் மீது கட்டுப்பாடு குறைவதால் ஏற்படுவதுதான்.

அதனால்தான் இங்கே பராசக்தியின் பரமானந்தத்தைச் சொல்லும்போதுகூட அவளுடைய மஹாசக்தியால் ஆனந்தம் உண்டாகிறது என்கிற அபிப்ராயத்தைக் கொடுக்காமல், "ஸ்வாத்மாநந்த" என்று சொல்லியிருக்கிறது. அதாவது அவளுக்குத் தன்னுடைய சக்தியைக் குறித்து ஆனந்தம் ஏற்படாமல், கட்டுப்பாடே இல்லாமல் பரம ஸ்வாதந்த்ரியத்தோடு இருக்கும் ஆத்மாவை அநுபவித்துக் கொண்டிருப்பதிலேயே இப்படி மஹதானந்தம் ஏற்படுகிறதென்று காட்டியிருக்கிறது.

ஆத்மாவுக்கும் சக்திக்கும் ஸம்பந்தமில்லை. சக்தி என்பது வெளியிலே காட்டி, இன்னொன்றை நல்லதாகவோ கெட்டதாகவோ பாதிப்பதிலேயே உள்ள விஷயம். ஆத்மாவுக்கு வெளி என்று ஒன்று இல்லை. அது எதையும் எந்த விதத்திலும் பாதிப்பதுமில்லை. சக்தி த்வைதத்தைக் குறித்தது. ஆத்மா அத்வைதம். ஸாக்ஷாத் பாராசத்திக்கும்கூட, சக்தியினாலில்லாமல், சாந்தமாக ஆத்மாவை அநுபவிப்பதாலேயே உத்க்ருஷ்டமான (மிகவும் உயர்ந்ததான) ஆனந்தம் ஏற்படுகிறது.

சக்தி ஒரே குணமயம், கார்யமயம். ஆத்மா நிர்குண நிஷ்க்ரியம். அதைத்தான் சிவம் என்பது. 'ஆத்மாநந்தம்' என்கிறாற்போல 'சிவாநந்தம்' என்றுதான் வார்த்தை உண்டே

தவிர 'சக்தியாநந்தம்' என்று இல்லை. பராசக்திக்கும் ஆனந்தம் ஆத்மாவில்தான், சிவத்தில்தான். அவள் தக்ஷிணாமூர்த்தியாக இருந்துகொண்டு பிறருக்கும் ஞானமாகிய இந்த சிவாநந்தத்தைத் தருவதாக ஸஹஸ்ர நாமத்தில் வருகிறது.

தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ

ஸநகாதி ஸமாராத்யா

சிவஞான ப்ரதாயிநீ

அந்த மஹா பெரியவளான பராசக்திக்குக் கிடைக்கும் ஆத்மானந்தம் நமக்கும் அநுபூதி நிலையில் பரிபூர்ணமாக உரியதேயாகும். 'ஆத்மா' என்னும்போது அதில் மஹா சக்தியான அம்பாளின் ஆத்மா, அல்ப சக்தர்களான நம்முடைய ஆத்மா, நம்மை விடவும் அல்ப சக்தி படைத்ததான கொசுவின் ஆத்மா என்று வித்யாஸமில்லை. இருப்பது ஒரே அத்மாதான். அது சக்தியிலே அம்பாளிடம் பூர்ணமாகவும் மற்றவர்களிடம் அந்த சக்தியின் கோடாநுகோடியில் ஒரு பங்காகவும் வேஷம் போட்டுக்கொண்டிருந்தாலும், வேஷமில்லாத அடிப்படையிலே எல்லாரிடமும் ஒன்றாகவேதான் இருக்கிறது. அதனால், ஒரு 'ப்ரம்மாவே கூட த்வைத நிலையிலுருக்கும்போது பெறக்கூடிய ஆனந்தத்தை விடவும் கோடிகோடி மடங்கு பெரிதான ஆனதத்தை நாம் அத்வைதமாக ஆத்மாநுஸந்தானம் பண்ணும்போது அநுபவிக்கலாம்.

அந்த ஆனந்தம் எப்படிப்பட்டதென்று இப்போது நமக்குப் புரியாது. இத்தனை செயல்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் மூலமான அம்பாளும்கூட செயலில்லாத, வெளி உணர்ச்சியில்லாத அந்த ஆத்மானந்தத்தில்தான் முழுகியிருக்கிறாளென்றால் அது நமக்குப் புரியாது. பூர்ண அமைதியிலேயே பூரித்த ஆனந்தமாயும் இருக்கிற நிலை அது பூர்ண அமைதியே அதைத் தெரிந்துகொண்டு அநுபவிக்கும் பூரித்த உணர்வு நிலையாகவும் அப்போது இருக்கிறது.

## அத்வைதம்

### நித்ரை நிலை

தெரியாத ஆனந்தம் ஆனந்தமே இல்லை. இங்கே உசந்த கவிதைப் புஸ்தகம் இருக்கிறது, ஆனால் நமக்குக் கண் தெரியவில்லை என்றால் என்ன ப்ரயோஜனம்? ஆத்மா மட்டுமே இருப்பதன் ஆனந்தத்தை அநுபவ பூர்வமாகத் தெரிந்துகொள்ள முடியாத நித்ரை இப்படிப்பட்டதுதான். ஆதைத் "தெரிந்த ஆனந்த"மாக உணர்வதே ஸமாதி நிலை. எத்தனையோ ஸாதனை செய்தே அதைப் பெற முடியும். தெரியாத ஆனந்தத்தில் துக்கமும் தெரியாமலிருப்பதாக உள்ள நிம்மதியைத்தான் போனால் போகிறதென்று பகவான் எல்லாருக்கும் நித்ரையில் தந்திருக்கிறான். தன் சாந்த ஸௌக்யத்தை ஜீவன் தெரிந்துகொண்டு ஆத்மாவாக ப்ரகாசித்துக் கொண்டிருப்பதான ஸமாதி நிலையை எல்லாருக்கும் தரவில்லை. அவன் க்ருபையை நம்பி, அதற்கான ஸாதனையைச் செய்தவர்களுக்கே தருவான்.

சற்று முன்னாடி ஒரு உபமானம் சொன்னேன். குடத்துக்குள்ளே இருக்கிற தீபத்தின் ஒளி அதன் ஓட்டைகள் வழியாக வெளியே துளித்துளி தெரிகிறமாதிரிதான் ஆத்மானந்தத்தில் துளித்துளி, இந்த்ரிய விஷய அநுபவங்களில் உண்டாகிறதென்று சொன்னேன். இது ஜாக்ரத் ஸ்திதியில் (விழிப்பு நிலையில்) நாம் விஷயங்களை அநுபவிக்கும்போபது. ஸுஷுப்தியில் (தூக்கத்தில்) எப்படியிருக்கிறதென்றால் உபமானத்தை இன்னம் கொஞ்சம் விஸ்தாரம் பண்ண வேண்டும். குடம் என்பதற்குப் பதில் கூடை என்று வைத்துக்கொள்ளுங்கள். ஸாதாரணமாக பல த்வாரங்களுள்ள குடம் இருப்பதில்லை, குடத்துக்குள்ளே தீபத்தை வைக்க ப்ரமேயமும் அதிகம் ஏற்படுவதில்லை. ஆனால் காற்றடிக்கும்போது தீபத்தின் மேலே ஒரு கூடையைப் போட்டுக் கவிழ்த்து விடுவதுண்டு. அப்போது கூடையில் இடுக்குகள் வழியாய் தீபத்தின் ரச்மிகள் கொஞ்சங் கொஞ்சம் வெளியில் வரும். ஜாக்ரத்தில் இப்படி இருக்கிறதென்று வைத்துக்கொண்டால் ஸுஷுப்தியில்

எப்படியிருப்பதாக சொல்வது? கூடையின் விளிம்பைப் பிரம்புகளை ஒரு மாதிரி முறுக்கிப் பண்ணியிருக்கும். அதனால் அதைப் போட்டுக் கவிழ்க்கிறபோது விளிம்பு பூமியிலே முழுக்கப் பதியாமல் அங்கங்கே கொஞ்சம் தொட்டும் தொடாமலுமாகத் தானிருக்கும். இதனால் பெரிய காற்றாக அடிக்கிறபோது, கூடைக்குக் கீழாக காற்று போய்தீபம் அணைந்தவிடப்போகிறதெயன்று, ஒரு கம்பளியையும் எடுத்துக் கூடை மேல் போட்டுவிட்டால் எப்படியிருக்கும்? அதன் 'நெசவிலே நம் கண்ணுக்குத் தெரியாத அதி ஸூக்ஷ்மமான இடுக்குகள் இருக்குமாதலால், இப்போதும் தீபம் எரிவதற்கான அளவு காற்று உள்ளே போகத்தான் செய்யும். ஆனாலும் நம் பார்வையிலோ, கூடையின் இடுக்குகளை கம்பளி மறைத்து விடுவதால் முன்னே தெரிந்த தீப ரச்மிகள்இப்போது அடியோடு தெரியாது. தூக்கத்தில் இப்படித்தான், உள்ளே ஆத்ம ஜ்யோதிஸ ஸ்வஸ்தமாக இருந்துகொண்டிருக்கும் போதிலும், அதன் ஒளி விழிப்பு நிலையில் ஏதோ துளித்துளி விஷயானுபவத்தில் தெரிகிற மாதிரி கூட இல்லாமல் எல்லாம் ஒரே இருட்டாகிவிடுகிறது. விழிப்பு நிலையின் பிக்கல் பிடுங்கல் தூக்கத்திலில்லைதான் என்றாலும், அதே ஸமயத்தில் விழிப்பிலே ஏதோ ஒரு நிழலாட்டமாகவாவது ஆத்மானந்தத்தில் துளி தெரிவதுங்கூடத் தூக்கத்திலே அடியோடு தெரியாமல் ஆத்மானுபவத்தைக் குறித்தமட்டில் ஒரே இருட்டில் இருக்கிறோம். ஒரேயடியாக ஜ்யோதிஸிலேயே இருக்கிற, ஜ்யோதிஸாகவே இருக்கிற ஸமாதி நிலைக்கும் இதுற்கும் எத்தனை வித்யாஸம்?

நம் முயற்சி இல்லாமல், தூக்கம் என்பது தானாக நம்மைக் கவ்விக் கொள்கிறது. "தூக்கம் கண்ணைச் சுற்றிக் கொண்டு வருகிறது" என்னும்போது அது நம்மை மீறிய சக்தி என்று தெரிகிறது. எனவே அதை நமக்கென்று கெட்டியாய்ப் பிடித்து வைத்துக்கொள்வதும் நம் கையில் இல்லை. "என்னவோ பாதி ராத்ரி முழிப்புக் கொடுத்துவிட்டது. அப்புறம் என்ன பண்ணியும் தூக்கம் வரலை. உடம்பை என்னவோ பன்றது" என்கிறோம். அதாவது தூக்கம் என்பது எதுவோ ஒரு வெளி இயற்சைக் சக்தியாக நம்மை இஷ்டப்படி ஆட்டிவைப்பதுதான். தூக்க மாத்திரை சாப்பிட்டு நாமே அதை வரவழைத்துக் கொள்வதாகத் தோன்றும்போதுகூட இதுதான் உண்மை நிலை.

## அத்வைதம்

### கனவு நிலை

தூக்கம் என்பதை நாமாக மாத்திரை, இல்லாவிட்டால் ஏதோ ஒரு தைல ஸ்நானத்தால் வரவழைத்துக்கொண்டு விடலாம். ஆனால் அந்தத் தூக்கம் நிஜமாகவே ஆழ்ந்த தூக்கமாக இருக்கும்படியாக நம்மால் பண்ணிக்கொள்ள முடியாது. நல்ல ஆழ்ந்த தூக்கத்தில்தான் மனஸ் அடங்கியிருப்பது. ஆனால் எப்போதும் அப்படியில்லாமல் அரைத்தூக்கம், கால் தூக்கம், வீசம் தூக்கம், முக்கால் தூக்கம் என்னும்படியாகப் பல நிலைகளில் நாம் நித்ரையில் இழுத்துப்போகப் படுகிறோம். அப்போதெல்லாம் மனஸ் முணுக் முணுக்கென்றோ, அதைவிடச் சற்று அதிகப் பிரகாசமாகவோ வேலை செய்துகொண்டுதான் இருக்கும். இந்த நிலைகளில்தான் மனஸானது ஸ்வப்னங்களை உண்டாக்குகிறது. ஜாக்ரத்தில் (விழிப்பு நிலையில்) நாம் புத்தி பூர்வமாகச் செயற்பட்டதால் ஒரளவு அமுக்கிவைத்திருந்த ரொம்பவும் பயமூட்டுவதான, காமவிகாரம் மிகுந்ததான, அழவைப்பதான, அல்லது பேத்தல் என்று புத்தி ஒதுக்கி வைத்துவிட்டதான தாறுமாறான விஷயங்களை எல்லாம் இப்போது நம்முடைய அந்த புத்திக் கட்டுப்பாடு இல்லாமல் மனஸ் தன்னிஷ்டப்படி வெளியே விட்டு ஸ்வப்னங்களைப் படைக்கிறது. அதனால் ரொம்ப பயங்கரமாய் ஏதாவது ஸ்வப்னம் கண்டு "ஊழ் ஊழ்" என்று ஊளையிட்டுக்கொண்டு எழுந்திருக்கிறோம். இல்லாவிட்டால் குய்யோ முறையோ என்று அழுகிறோம். 'பைத்தியம் மாதிரி இப்படி கன்னாபின்னா என்று ஸம்பந்தமில்லாததை எல்லாம் அஸம்பாவிதமாகச் சேர்த்துக் கனாக் கண்டிருக்கிறோமே' என்று நினைக்கும்படியாக அநேக ஸ்வப்னங்கள் வருகின்றன.

ரொம்பவும் மனஸை பக்தி, யோகம் என்று ஈடுபடுத்திப்பரிசுத்திக்காக, ப்ரம்மசர்யத்துக்காக ப்ரயத்னம்

பண்ணிக் கொண்டிருக்கும் ஸாதகர்கள், "எங்களுக்கு இப்படித் தகாததால் ஸ்வப்னம் வந்துவிட்டதே" என்று எங்கள் மாதிரி இருக்கப்பட்டவர்களிடம் அழுது, பரிஹாரம் கேட்கிறார்கள்.

இதனாலெல்லாம், நம் ஸாதனையால் இயற்கைக்கும் மேலே உள்ள ஈச்வரனின் ப்ரஸாதமாகப் பெறப்பட்டு, நம்மால் உறுதிப்படுத்தி வைத்துக்கொள்ளக்கூடிய ஸமாதி நிஷ்டையாக இல்லாமல், தன்னிஷ்டப்படி நம்மைத் தன்னுடைய பல லெவல்களில் அடித்துக்கொண்டு போகிற தூக்கத்தால் தேவாஸுரயுத்தத்துக்கு முடிவுகாண நினைப்பது வழியேயில்லை என்று தெரிகிறது. தூக்கத்திலும் ஸ்வப்ன ரூபத்தில் அஸுர கணங்கள் எப்போது வேண்டுமானால் படை எடுக்கக்கூடும். எப்போதாவது வேண்டுமொனால் அம்பாள் தர்சனம், ஆலய தர்சனம் மாதிரி நல்ல ஸ்வப்னம் வரலாம். அதுவே அஸம்பாவிதமாக மாறியும்விடலாம். மனஸின் உழப்பறிசல், உள்ளே அடக்கிவைத்த ஆசையின் இழுபறி எல்லாம் தூக்கத்திலும் பிய்ததுக்கொண்டு கிளம்ப வழியிருப்பதால் தூங்கிக்கொண்டேயிருந்துவிட்டால் சாந்தி என்பது இல்லை. தூக்க மருந்துக்கும் ஸ்வப்னாவஸ்தை ஏற்படாமல் தடுப்பதற்கு சக்தியில்லாததால் அதைக் கொண்டும் பூரண சாந்தமான நித்ரை பெறமுடியாது. அப்படியே சாந்தமாக ஆழ்ந்து தூங்கினாலும் அது ஜடத்தனந்தானே யன்றிப் பேரானந்தமில்லை என்று முன்னேயே சொன்னேன்.

ஓயாமல் வெளியிலே ஓடிக்கொண்டிருக்கும் மனஸை உள்ளே இழுத்து, 'உள்ளுக்குள்ளே உனக்கு அடி ஆதாரமாக ஒரு கார்யமுமில்லாமலிருக்கும் ஆத்மாவை நினை' என்று பழக்கிக்கொண்டேயிருந்தால்தான், அது அப்படியே நினைத்து நினைத்து, களைத்து விழுந்தபோது, ஸாக்ஷாத் அந்த ஆத்மா மட்டுமே பிரகாசித்துக்கொண்டு விளங்கும். சாச்வத சாந்த ஸௌக்கியத்தை அநுபவிக்கலாம். வேறே வழி கிடையாது.

யதோ யதோ நிச்சரதி மனச் - சஞ்சல - மஸ்திரம் 1

ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத் 11

என்கிறார் பகவான். "ஸ்திரமாக ஒன்றில் நிற்காமல்

சஞ்சரித்துக்கொண்டே இருக்கும் மனஸானது எதெதைப் பற்றி வெளியிலே ஓடினாலும், அது ஒவ்வொன்றிலிருந்தும் இந்த மனஸை இழுத்து அடக்கி ஆத்மாவிடேமே வசப்படுத்தி வைக்கவேண்டும்" என்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மனம் ஆத்மாவிடம் வசப்படுவது எப்படி?**

'ஆத்மா மனஸுக்கு அப்பாற்பட்டது, மனஸோடு ஸம்பந்தப்படாமல் வெறுமே தானாக இருந்துகொண்டிருப்பது' என்று சொல்லிவிட்டு, 'மனஸை இழுத்து அடக்கி ஆத்மாவிடம் வசப்படுத்து" என்றும் சொன்னால் என்ன அர்த்தம்? மனோதீதமான, நிஷ்க்ரியமான (கார்யம் செய்யாததான) ஆத்மா மனஸை எப்படித் தன் வசத்தில் வைத்துக்கொள்ளும்?

ஸரி, மனஸுக்கு ஆத்மா அப்பாற்பட்டதுதான், அதற்குக் கார்யமே இல்லைதான். ஆனாலும் நம்மால் புரிந்துகொள்ளவே முடியாத மாயையால் இதே ஆத்மாதான் மனஸுக்கும் ஆதாரமாய் நிற்கிறது, அது இல்லாவிட்டால் மனஸால் ஒரு கார்யமும் பண்ண முடியாது என்றும் பார்த்தோமல்லவா? இப்படி மாயையால் ஆத்மாதான் மனஸ் என்று ஒன்றை அவிழ்த்துவிட்டு, அத வெளியிலே ஓடிக்கொண்டிருப்பதற்கும் சக்தி தருகிறது என்றால், அவிழ்த்து விட்டதைத் தனக்குள்ளேயே எப்படியோ இழுத்துக் கரைத்துக்கொண்டு விடும் என்பதையும் ஏற்க வேண்டியதுதானே?

மாயை என்பது என்ன? அதுதான் ஈச்வர சக்தி. அம்பாள் என்று அதைத்தான் சொல்வது. உயிரும், அறிவும் உணர்வுமாக உள்ள ஆத்ம சைதன்யத்தை மாயைதான் ஸூர்ய வெளிச்சத்தை ஒரு கண்ணாடி ப்ரதிபிம்பிக்கிறது போலப் பண்ணி இந்தச் சின்ன ப்ரதிபலிப்பின் ப்ரகாசத்திலே ஜீவனின் அந்தஃகரணம் உயிர், உணர்ச்சி, அறிவு

எல்லாவற்றையும் பெறும்படியாகச் செய்வது. அல்லது இன்னொரு தினுஸாகவும் சொல்வார்கள். எங்கேயும் நிறைந்திருக்கும்படியான ஆகாசத்தில் (வெட்டவெளியில், space-ல்) ஒரு குடம் இருக்கிறதென்றால் அந்தக் குடத்துக் குள்ளேயும் அந்த வெட்டவெளி இருக்கத்தான் இருக்கிறது. எங்கும் பரவியுள்ளதை மஹாகாசம் என்றும், குடத்துக்குள் இருப்பதை கடாகாசம் என்றும் சொல்வார்கள். இம்மாதிரியே மஹாகாசம் போலுள்ள அகண்ட ஆத்ம சைதன்யத்தை மாயை என்பது கடாகாசம் போலக் கண்டமாக்கி ஜீவ சைதன்யமாகப் பண்ணுகிறது. இப்படிப் பண்ணும் மாயா சக்தி இதை நீக்கவும் கூடும்தானே? தான் குறுக்கே வந்து ப்ரதிபலிக்காமல் விலகி ஜீவன் அப்படியே ஆத்ம சைதன்ய ஜ்யோதிஸ்ஸாக இருக்கும்படி அது விடக்கூடும்தானே? கட ரூபத்துக்குள்ளே அகண்டத்தைக் கண்டமாக்கிய அது அந்த ரூபத்தை அழிவித்து ஜீவனை ஆத்மாகாசமாகவே ஆக்கவும் கூடும்தானே?

"மனஸை அடக்கி ஆத்மாகிட்டே வசப்படுத்து" என்றவுடன் ஆத்மாவிலே மனஸ் எப்படி ஸம்பந்தப்படும் என்று கேட்கிறவர்கள், இன்னொன்றும் யோசித்துப் பார்க்கணும். 'மனஸை அடக்கு', 'மனஸை இழு' என்றெல்லாம் சொல்வது மட்டும் எப்படி ஸாத்யம் என்று யோசித்துப் பார்க்கணும். அஞ்ஞான தசையிலுள்ள ஜீவனக்குத்தான் இந்த உபதேசமெல்லாம். ஞானமடைந்து விட்டவனுக்கு உபதேசம் எதற்கு? அஞ்ஞான தசையில் உள்ள ஜீவத்தன்மைக்கே மனஸ்தான் காரணம். மனஸுக்கு மேற்பட்டதாக அஞ்ஞான ஜீவனிடம் எதுவும் கிடையாது. அப்படியிருக்கும்போது, "மனஸை இழு, அடக்கு" என்றால் எதைக்கொண்டு ஜீவன் இதைப் பண்ணமுடியும்? அவனிடம் உள்ள ஸர்வமுமே மனஸ்தான் என்றிருக்க, அதை வேறு எதனால் அவன் உள்ளே இழுக்கவோ அடக்கவோ முடியும்? மனஸ்தான் அவனுக்காக எல்லாம் பண்ணுவதும். அவனையே ஆட்டிப் படைத்து எல்லாம் செய்யப் பண்ணுவதும். அப்படியிருக்க அதை அடக்குவது, இழுப்பது என்பதாக என்னென்னவோ பண்ணுவது என்றால் எப்படி எது பண்ணும்? மனஸே தன்னை இழுத்துக்கொள்ளுமா, அடக்கிக் கொள்ளுமா? அடங்காமல் ஓடுவது தானே அதன் இயற்கையே?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### ஈச்வர க்ருபையால்

இங்கெல்லாம்தான் மஹாசக்தனான ஈச்வரன் என்பவனின் க்ருபை வருகிறது. மாயையால் இந்த ஜீவனையும் லேகாத்தையும் தோற்றுவித்தவன் அவன்தான். அந்த மாயா ஸ்ருஷ்டிகளில் ஒன்றேயான மனஸ், தான் ஒன்றிலே இழுபடணும், அடங்கணும் என்று அசைப்படவேண்டுமனால் முடியுமே தவிர, தன்னைத்தானே அப்படிப் பண்ணிக்கொள்ளமுடியாது. அதன் ஸ்வபாவமே சஞ்சலம் என்றிருக்க, அது எப்படித்தானே அடங்கமுடியும்? "சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண" - என்று அர்ஜுனன் சொன்னபோது, "ஆமாம். ஸம்சயமே இல்லாமல் அது (சஞ்)சலமானதாகவும், அடக்க முடியாததாகவும்தான் இருக்கிறது" என்று பகவானும் ஒப்புக்கொள்கிறாரே! "அஸம்சயம் மஹா பாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்". ஆகையால் உடனேயே அவர் அப்யாஸத்தாலும், வைராக்யத்தாலும் நாளாவட்டத்தில் அதை அடக்கலாம் என்று சொன்னபோதிலும், இந்த அப்யாஸத்தைப் பண்ணும்படியாகவும் அந்த மனஸ் ஜீவனை விட்டால்தானே முடியும்? சஞ்சல ஸ்வபாமுள்ள அது அப்படி விடுமா? அதே மாதிரி வைராக்யத்தை இவன் பழக்கிக் கொள்வதற்கும் ஆசாமயமான அது அநுமதிக்குமா? இதற்கெல்லாம் ஒரே பதில்தான் ஈச்வர க்ருபை. "ஐயோ, பாவம்!இந்த சஞ்சல மனஸைக் கொண்டும் ஜீவன் இப்படிப்பட்ட ஸாதனையில் இறங்கியிருக்கிறானே!" என்று ஈச்வரன்தான் இரங்கி இவனுடைய மனஸை அடங்கப் பண்ணி, உள்ளே இழுபட வைத்து, அப்யாஸ வைராக்யங்களில் ஜீவன் தீவ்ரமாகும்படி அருள் செய்வது.

ஜீவன் மாதிரியில்லாமல் ஈச்வரன் மனஸுக்கு மேற்பட்ட சக்தி. அதனாலே அவனுடைய க்ருபையில்தான் மனஸ் அடங்கமுடியும். அது தன்னைத்தானே அடக்கிக் கொள்ளவில்லை. ஈச்வரன்தான் மாயைக் கலப்பற்ற

தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்திலே ஜீவமனஸை வசப்படுத்தி வைக்கிறான். ப்ரயாஸை, ப்ரயத்னம்தான் ஜீவன் செய்யக் கூடியது. அதற்கு மேலே மாயா நாடகத்தைப் பண்ணினவன்தான் ஸித்தியை அருள வேண்டியவன். ஆனபடியால், ஓயாமல் வேலை பண்ணிக் கொண்டேயுள்ள மனஸ் எப்படி வேலையே பண்ணாததும், தனக்கு அப்பாற்பட்ட தாயுமிருக்கிற ஆத்மாவிலே கரைந்து போக முடியும் என்று தர்க்க ரீதியில் கேட்பதில் அர்த்தமில்லை. அதைத்தானே மாயை இதுவாக்கியிருக்கிறது? இதே மாதிரி, திரும்ப இது அதுவாக ஆகவும் ,இடம் கொடுத்து, தான் விலகிப்போய் விடுகிறது.

மனஸால் ஆத்மாவைப் பிடிக்க முடியாது. ஆனால் நமக்குத் தெரிந்தது, நம்மை ஸதா ஸர்வ காலமும் இறுக்கிப் பிடித்துக் கொண்டிருப்பது, இந்த மனஸ்தான். அதனால் இதை வைத்துக்கொண்டுதான் நாம் ப்ரயாஸை, ப்ரயத்னம், ஸாதனை செய்தாக வேண்டும். மனஸினால் முடியக்கூடியது, உபத்ரவம் பிடித்த தன்னை எப்படியாவது தொலைத்துத் தலை முழுகிவிட்டு உபத்ரவமே இல்லாத ஆத்மாவாக ஆகிவிடவேண்டுமென்று நினைப்பதுதான். தன்னால் முடிந்த இந்த நினைப்பை அதுவிடாமல் வைராக்யத்தோடு அப்யஸித்துக் கொண்டேயிருக்கவேண்டும். அப்புறம் - க்ருபை என்று ஒன்று இருக்கிறதோல்லியோ? அது பாக்கி வேலையைப் பார்த்துக்கொண்டுவிடும். மனஸை இல்லாமல் பண்ணி ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அது அநுக்ரஹம் செய்துவிடும். இதைத்தான் பகவான்,

"தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம்(கீதை18-62)

-ஈச்வர க்ருபையால் உயர்ந்த, சாச்வதமான, சாந்த நிலையை அடைவாய்" என்று சொன்னார்.

## தர்க்கத்துக்கு அப்பாற்பட்டது

மாயையால் என்ன முடியும், முடியாது, க்ருபையால் என்ன முடியும், முடியாது என்று நாம் எப்படி நிர்ணயிப்பது? நம்முடைய தர்க்கமும் அந்த மாயையின் ஸ்ருஷ்டியாகவே இருக்கும்போது, இதற்குப் புரிகிற முறையில்தான் அது நடக்கவேண்டும் என்றால் அர்த்தமில்லை. கார்யமில்லாத

சாந்த ஆத்மா ஸதா ஸர்வ காலமும் எதையாவது பண்ணிக்கொண்டிருக்கும் அசட்டு நாமாக ஆகியிருப்பது ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. இது தர்க்கப்படி ஸரியில்லை என்று சொல்லி என்ன ப்ரயோஜனம்? நிதர்சனமாகத் தெரிகிறதே!அதனால், இதற்குக் காரணமான ஈச்வர சக்தி இதையே திருப்பி வைத்து அசட்டு நாம் சமர்த்து ஆத்மா ஆகவும் செய்யும் என்று ஒப்புக்கொள்ளவேண்டியதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ப்ரத்யக்ஷச் சான்றுகள்**

மனஸ் விலகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திருப்பதை புத்தியாலும் புஸ்தகத்தாலும் நிரூபிக்க முடியாது. அதற்கு நிருபணம் ப்ரத்யக்ஷமாக இப்படி மனஸ் அடிபட்டுப்போய் ஆத்மானந்தத்தில் ஆழ்ந்திருக்கும் மஹான்கள்தான்.

(ஸதாசிவ) ப்ரம்மேந்த்ராள் அப்படியிருந்தார். கையை வெட்டினால்கூடத் தெரியாமல் அவர் பாட்டுக்கு இருந்தார். கொடுமுடியிலே அவர் நிஷ்டைகூடிக் காவேரிக்கரையில் உட்கார்ந்தார். வெள்ளம் புரண்டுவந்து அவரை அடித்துக்கொண்டுபோய் அப்புறம் அவர் மேலேயே மண்மேடிட்டு விட்டது. பஹு நாள் கழித்து யாரோ அதைக் கொத்தினபோது உள்ளேயிருந்த அவருடைய கையிலே அடிபட்டு ரத்தம் பீய்ச்சி அடித்தது. "அடாடா, உள்ளே யாரோ ஆஸாமி இருக்காப்பல இருக்கே" என்று அவர்கள் இழுத்துப் போட்டார்கள். அவர் பாட்டுக்கு ஆனந்தமாகச் சிரித்துக்கொண்டு எழுந்திருந்து கால் போன போக்கில் போனார் என்கிறார்கள்.

'அது முன்னூறு வருஷத்துக்கு முந்திய கதை. ஒரு வேளை கதை கட்டினதாகவும் இருக்கலாம். எப்படி நம்புவது?' என்று கேட்கலாம். ஸமிப காலத்தில் நம்மகத்துப் பெரியவர்களே நேரில் பார்த்வர்களாகவும் இப்படிப்பட்ட மஹான்கள் இல்லாமல் போகவில்லை.

கும்பகோணத்தில் இருந்த மௌன ஸ்வாமிகளை நேரில் பார்த்தவர்கள் ஆச்சர்யமாகச் சொல்கிறார்கள். நேரம், காலம் தெரியாமல் அவர் பாட்டுக்கு அப்படியே நிஷ்டையில் இருப்பாராம். கண் திறந்த நிலையில் ஸமாதியில் போனாரானால், எத்தனை மணி, எத்தனை நாள் அவர் ஸமாதி ஸ்திதியலிருந்தாலும் திறந்த கண் கொட்டவே கொட்டாமல் நிலைகுத்திட்டபடி இருக்குமாம். விரை முழிக்குள்ளே விட்டால் கூடு, இமை மூடாமல் இருக்குமாம். வாயிலே சிறிது ஆஹாரத்தைப் பக்தர்கள் திணிப்பார்கள். அது ஏதோ கொஞ்சம் உள்ளே போனால் உண்டு. இல்லாவிட்டால் அது வாயில் அப்படியே அப்பிக்கொண்டு, எறும்பெல்லாம் போட்டுப் பிடுங்கி உதடு வீங்கீத்தொங்கும். அதுவும் தெரியாமல் அவர் நிஷ்டையில் இருப்பார். முகத்திலே ஆத்ம ஜ்யோதிஸின் ப்ரகாசம் வீசிக்கொண்டிருக்கும்.

தூக்கத்திலும் மனஸ் இல்லைதானென்றாலும் அப்போது ஆத்ம ஞானமுமில்லாததால் ப்ரகாசத்துக்குப் பதில் வழக்கமாயுள்ள சோபைகூட இல்லாமல், "சொல்லக்கூடாதது" மாதிரிக் கிடக்கிறோம் ஆத்மாநந்தத்தின் ப்ரதிபலிப்பாக ஸமாதியிலுள்ள மஹான்களுடைய முகத்திலோ ப்ரகாசமான மந்தஹாஸம் தவழ்ந்து கொண்டிருக்கும்.

இரண்டு மூன்று நாள் ஆஹாரப் பற்றும் பசையும் ஒட்டிக் கொண்டிருந்தும் மௌன ஸ்வாமி நிஷ்டை கலையாமலே இருந்தால் மற்றவர்கள் அதை எடுத்துப்போட்டு, வாயை சுத்தி பண்ணி, வேறு ஆஹாரத்தை வைத்துப் பார்ப்பார்களாம்.

வேறு யோகி ச்ரேஷ்டர்களைப் பற்றியும் இப்படியெல்லாம் சொல்கிறார்கள். சர்க்கரையை அவர்கள் நாக்கில் வைத்து அழுத்தினால் கூடத் துளி எச்சில் சுரக்காமல், எத்தனை நாழியானாலும் கரையாமல் அது அப்படியே இருக்குமாம். நம்முடைய இஹலோக ஆசைகளுக்கும் ஆனந்தங்களுக்கும் மரத்துப்போய், போக்ய வஸ்துக்களின் ருசி இழுப்புக்குக் கொஞ்சங்கூட ஆளாகாமல், இதற்கெல்லாம் அப்பாற்பட்ட பேரானந்தத்தை ருசித்துக் கொண்டு ஜீவன் அதிலேயே ஒன்றாகித் திளைத்திருக்க முடியும் என்பதற்கு இதெல்லாம் அத்தாட்சி.

இதேபோலக் காசியில் பாஸ்கரானந்தர் என்பவரை தினந்தினம் நேரில் பார்த்த பல பேரும் ஸாக்ஷி சொல்கிறார்கள்.

நமக்கே நன்றாகத் தெரியும், ரமண ஸ்வாமிகளை. புழுவும் பூச்சியும் போட்டுத் தொடை, ப்ருஷ்டபாகங்களைக் குடைந்தாலும் தெரியாமல் ஆத்மாராமனாக உட்கார்ந் திருக்கிறார்.

இப்படிப்பட்டவர்களின் அநுபவத்துக்குப் பெரிய சான்று இவர்களுடைய ஸந்நிதி விசேஷம்தான். இன்றைக்கு நம் தேசத்தின் பல பாகத்திலிருந்தும் வெளி தேசங்களிலிரு ந்துங்கூடப் பலபேர் ரமணாச்ரமத்துக்கு வருகிறார்கள். "எத்தனையோ மனச்சஞ்சலங்களோடு போராடிக்கொண்டு போனோம். அவர் முன்னாடி போய் உட்கார்ந்ததும் அத்தனை சஞ்சலமும் எங்கே போச்சு என்று தெரியாமல் மறைந்து ஒரே சாந்தமாய் விட்டது" என்று சொல்கிறார்கள். இதிலே சிலபேர் அப்புறம் நல்ல ஸாதகராகிறார்கள். அப்படி ஆகாமல் ஸம்ஸார வாழ்க்கைக்கே திரும்புபவர்கள் கூட, ஆச்ரமத்தில் மட்டும் தங்கள் மனஸ் ஸம்ஸாரத்தில் ஒட்டாமல் கொஞ்ச நாழியாவது ஒரு அலாதியான அமைதியை அநுபவித்தது என்று சொல்கிறார்கள். இத்தனைக்கும் அவர் என் மாதிரி லெக்சர் அடிப்பதில்லை. ஏதாவது கேட்டால் மட்டும் சொல்கிறார். ஆனாலும் அவர் எதுவும் பண்ணாமல் சும்மாயிருப்பதே மற்றவர்களுக்கு ஒரு சாந்தியை அளிக்கிறது என்கிறார்கள். தூங்குகிறவனைப் பார்த்தால் இப்படி ஆகிறதோ? 'டல்'தானே அடிக்கிறது.

ஜீவனுள்ளதாக ஒரு அநுக்ரஹ சக்தி ஞானிகளிடமிருந்து மற்றவர்களுக்குப் பாய்வதாலேயே, இவர்களெல்லாரும் சூன்யமான ஒரு சாந்தத்தில் இருப்பவர்களில்லை, பூர்ணானந்தமான சாந்தத்திலே இருப்பவர்கள் என்று நிரூபணமாகிறது. அநுக்ரஹசக்தியாலே அந்த மாதிரி உயர்ந்த நிலை மற்றவர்களுக்கும் தாத்காலிகமாகவாவது கிடைக்கிறது என்றும் 'ப்ரூவ்' ஆகிறது. இதையே விஸ்தாரம் செய்து பார்த்தால், ஈச்வர க்ருபையால் ஜீவனுக்கு சாச்வதமாகவே மனஸ் விலகி ஆத்மாநுபவம் உண்டாக முடியும் என்பதை ஒப்புக்கொள்ள முடிகிறது.

குழந்தைபோல ஒரு வஸ்திரமில்லாமல் அன்று சுக

ப்ரஹ்மமும், ஸமீபகாலத்தில் ஸதாசிவ ப்ரஹ்மமும் ஆனந்தமாக காடு மலை நதி என்று ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டிருந்தார்களென்று படிக்கிறோம்.

ஆத்மாநுபவிகள் அடித்த சிலையாக நிர்விகல்ப ஸமாதி நிஷ்டையிலிருக்கும்போதுகூட அவர்கள் உள்ளே ஆனந்தமயமாயிருப்பது அவர்களுடைய வெளித்தோற்றத்திலிருந்தே தெரியும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஜீவன் முக்தர்கள்**

இந்த நிஷ்டை கலைந்த பிறகும்கூட அவர்களின் உள்ளுக்குள்ளே அநுபவம் மாறாது. "நிஷ்டை கலைந்தது" என்பது நம் பார்வையில்தான். நிஷ்டை கலைந்து அவர்கள் வெளி உணர்வோடிருப்பதாக நாம் நினைக்கும்போதுகூட அவர்கள் ஆத்மாவிலேயேதான் ஐக்யமாயிருப்பார்கள். மனஸின் பந்தமும் ஸம்ஸார பந்தமும் கர்மபந்தமும் துளிக்கூட இல்லாமல் இங்கேயே மோக்ஷம் அடைந்துவிட்ட ஜீவன் முக்தர்கள் என்று அவர்களைத்தான் சொல்வது. தூங்கிக்கொண்டே ஒரு குழந்தை தாய்ப்பால் சாப்பிடுகிறதல்லவா? இப்படி அவர்கள் உள்ளே ஸமாதி நிஷ்டையிலிருந்த கொண்டேதான் நமக்கு பஹிர் முகப்பட்டதுபோல (புறவுணர்வடைந்தது போலத்) தோன்றி வெளிலோகத்தில் ஸஞ்சாரம் செய்வது, ஸல்லாபம் செய்வது எல்லாமும். இந்த வெளி நாடகத்தில் அவர்கள் கோபப்படுகிறாற்போல, துக்கப்படுகிறாற்போல இருக்கும் ஸமயங்களிலும்கூட அவர்கள் வாஸ்தவத்தில் ஸதாநந்தமான ஆத்மாவிலேயே ஒன்று பட்டிருப்பவர்கள்தான்.

அந்த உள்ளநுபவத்தை சூன்யம் என்றும் பாழ் என்றும் நம் பார்வையிலிருந்து அந்த அநுபவிகளும்கூட சில ஸமயங்களில் சொல்வதுண்டு. உண்மையில் அது ஆனந்த பூரிதமான நிலையே.

## ஆத்மாவிடமிருந்தே ஆனந்தம்

ஆத்மானுபவம் என்பது ஒன்றுமில்லாத ஒரு 'வெறிச்சு, நிலையாக இல்லாமல் ஆனந்த பூர்ணமாயிருக்கும் என்பதற்கு நான் Proof-கள் கொடுக்கப் பார்ப்பது எனக்கே சிரிப்பு வருகிறது. ஆனந்தம், ஆனந்தம் என்ற நாம் சொல்வதே ஆத்மாவின் ஸ்வரூப லக்ஷணந்தான். முன்னே நான் காட்டின த்ருஷ்டாந்தத்திலே, ஒரு கடத்துக்குள் இருக்கிற தீபத்தின் ப்ரகாசத்தைத் துளித்துளி அதிலுள்ள சின்ன த்வாரங்களின் மூலம் கிரணமாகப் பெற்று ,இந்தக் கிரண ஸ்பர்சத்திலேயே லவலேசம் ஒளி பெற்ற வஸ்துக்கள், "ஆந்த தீபத்துக்கு ப்ரகாசம் இருக்கா, இல்லியா?" என்று கேட்டால் எப்படி இருக்கும்? அப்படித்தான் புலன்களால் ஏதோ கொஞ்சம் எப்போதோ ஆனந்தம் காண்கிற நாம் ஆத்மாவுக்குக் கேவல ஸ்திதியில் ஆனந்தம் உண்டா என்று கேட்பதும்.

நாய் என்ன பண்ணுமென்றால், அது ஒரு காய்ந்துபோன எலும்புத் துண்டைப் பார்த்தால் அதிலே என்றைக்கோ ஒட்டிக்கொண்டிருந்த மாம்ஸ வாடை இருப்பதை முன்னிட்டு அதைப் பேட்டுக் கடிக்க ஆரம்பிக்கும். நாய் ஆஹாரம் பண்ணுவதற்கு அந்த எலும்பிலிருந்து ஒரு ஸத்தும் வராது, ஆனால் அது நாயின் வாயில் குத்தி இந்த நாயின் ரத்தமே வெளிவர ஆரம்பிக்கும். அறிவில்லாமல் அந்த நாய் எலும்பிலிருந்தே ரத்தம் வருவதாக நினைத்து ஸந்தோஷப்பட்டுக்கொண்டு, அதை மேலும் மேலும் கடித்துத் தன் வாயை மேலும் மேலும் வ்ரணமாக்கிக் கொண்டு, அதிலிருந்து வடிகிற தன் ரத்தத்தையே குடித்து ஆனந்தப்படும். இப்படித்தான் வெளி வஸ்துக்களின் அநுபோகத்தில் நாம் பெறும் ஆனந்தமென்பது அந்த வெளி வஸ்துக்கள் தருவதல்ல. நாயின் வாய் ரத்தம் போல நம் இந்த்ரியங்களிலேயே உள்ள ஆனந்தம்தான் அது. அந்த ரத்தமும் எங்கேயிருந்து வந்தது? நாயுடைய உயிரிலிருந்துதான். இம்மாதிரி இந்த்ரிய இன்பம் என்பதும் ஆத்மாவிலிருந்தே வருவதுதான். வெறுமே ஆத்மாவாக மட்டும் இருந்துகொண்டு அந்தப் பூர்ணானந்தத்தில் நிறைந்திருக்காமல், இந்த்ரியத்தினால் அதிலே துளி பாகம் ஆபாஸப்பட்டு ("ஆபாஸப்பட்டு" என்றால் "ப்ரதிபலிக்கப்பட்டு" என்று அர்த்தம். "அறுவறுப்பான

ரூபமடைந்து" என்று அர்த்தமில்லை. இப்படி ஆபாஸப்பட்டு) வெளிப்படுவதையே நாம் ஆனந்தம் என்ற நினைக்கிறோம், அதுமட்டுமில்லாமல், இந்த ஆனந்தமும் இந்த்ரியங்களின் அநுபோகத்துக்கான விஷயங்களிலிருந்து வருவதாக வேறு நினைக்கிறோம்! (object-களிலிருந்து) ஆனந்தம் "தன்னது" தான், subjective-தான், வெளி வஸ்துவிலிருந்து வரும் objective ஸமாசாரம் அல்ல. நிஜமான "தானும்" ஆத்மாதானேயன்றி அந்த ஃகரணமோ, இந்த்ரியங்களோ அல்ல.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**"உடைய" அல்ல, உடையவரே !**

இதைப் ப்ரக்ருதத்தில் (நடைமுறையில்) நம்முடைய பேச்சு வழக்கிலிருந்தே தெரிந்துகொள்ளலாம். என்னுடைய என்று ஒன்றைச் சொன்னால் அப்போது அந்த ஒன்று "நான்" அல்ல என்று ஆகும். "இது என்(னுடைய) தண்டம், இது என் கமண்டலம்" என்று சொன்னால் இந்த தண்டமே நானில்லை (நான் "தண்டமாக" இருந்தாலும் அது வேறு அர்த்தத்தில்!இந்த மூங்கில் கழி நானில்லைதானே?), இந்தக் கமமண்டலமே நானில்லை என்றும், இந்தத் தண்ட கமண்டலங்களைத் தன்னுடையதாகக் கொண்ட வேறே ஒரு ஆஸாமி இருக்கிறானென்றும் நன்றாகத் தெரிகிறதல்லவா? "உடைய" போடுகிற "உடையவர்" வேறு, அவ"ருடைய" னவாகிய உடைமைகள் வேறுதான். "என்னுடைய வீடு", "என்னுடைய பிள்ளை", "என்னுடைய பாங்க் டிபாஸிட்" என்றெல்லாம் சொல்லும்போது அதுகளே நீங்கள் அல்ல. அவை உங்கள் "உடையவை" - அதாவது அவை உடைமை, நீங்கள் உடைமையாளர். இதை இங்கிலீஷில் Possesive case என்கிறார்கள். Possession தானே உடைமை?

இப்போது உடம்பு (அதாவது (இந்த்ரியங்கள்) நானில்லை, மனஸ் புத்தி சித்த அஹங்காரம் முதலானவை சேர்ந்த

அந்தஃகரணமும் நானில்லை என்பது எப்படி என்று காட்டுகிறேன். "என்னுடைய கை, என்னுடைய கால், என்னுடைய உடம்பு" என்றெல்லாம் அநேக ஸந்தர்பங்களில் சொல்கிறீர்களோ இல்லியோ? "என்னுடைய கண் பார்வை குறைந்து கொண்டே வருகிறது", "என்னுடைய காது ஆபரேஷனுக்கு

அப்புறம் நன்றாய்க் கேட்கிறது" என்றெல்லாம் இந்த்ரியங்களுக்கும் "உடைய" போடுகிறோமல்லவா? "என்னுடைய மனஸ் உனக்குத் தெரியாது", "என்(னுடைய) புத்தியை 'ஜோட்'டால் அடிச்சுக்கணும்" என்றெல்லாம் அந்தஃகரணத்தைக் குறித்தும் "உடைய" போட்டுச் சொல்கிறோம். அப்படியானால் இந்த "உடைமை"களுக்கெல்லாம் ஸொந்தக்காரனாக ஒரு "உடையவர்" இருக்கத்தானே வேண்டும்? அந்த உடைமையாளன்தான் "நான்" "என்னுடைய நான்" என்று வார்த்தை வருமா? வரவே வராது. உடைமையாக இல்லாமல் உடைமையாளனாகவே இருக்கிற அசல்தான் ஆத்மா.

"என்னுடைய ஆத்மா" என்று நாம் பேச்சிலே எப்போதாவது சொன்னால் அது தப்பு இதே போல இன்னொருத்தருடைய ஆத்மாஎன்று சொன்னாலும் தப்பு. 'ஆத்மா' என்றால் என்னவென்று தெரியாததால் நாம் பண்ணும் தப்பு. ஸாதாரணமாக ஆத்மாவைப்பற்றி எப்போது சொல்கிறோம்? யாராவது ரொம்பவும் கஷ்டப்பட்டால், "பாவம், அந்த ஆத்மா படாதபாடு படுகிறது" என்கிறோம். ஓயாமல் சஞ்சலப்பட்டுக்கொண்டே இருப்பவரை, "நிம்மதியில்லாத ஆத்மா" என்கிறோம். "காலமானார்" என்று பேப்பரில் போடும்போது, அன்னாருடைய ஆத்மா சாந்தி அடையட்டும்" என்று போடுகிறார்கள். இந்த எல்லா இடத்திலுமே "ஆத்மா" என்ற பத ப்ரயோகம் ஸரியில்லை. ஆத்மா பாடும் படாது, நிம்மதி இல்லாமலும் இருக்காது, அது புதிசாக சாந்தி என்ற ஒன்றை அடைய வேண்டியதுமில்லை. இங்கேயெல்லாம் மாயா ஸம்பந்தத்தால் ஜீவபாவம் பெற்றும் அந்தஃகரணத்தினால் செயல் புரிவதான ஆத்மாபாஸத்தைததர்ன்., ஆத்ம சைதன்ய மஹா ஜ்யோதிஸ்ஸின் ஒரு சின்னப் பொறியான ஜீவத்வத்தைத்தான், ஆத்மா என்று தவறாகச் சொல்கிறோம். ணிரீஷீ என்று சொல்கிறார்கள். சித்தம், புத்தி, மனஸ், கர்மேந்த்ரியங்கள்,

ஞானநேத்ரியங்கள் இவற்றால் கட்டுப்படுத்தப்பட்ட ஒரு ஜீவனுக்கு, இவையே "தான்" என்பதாக ஒரு உணர்வு இருக்கிறது. இதற்குப் பேர் "அஹங்காரம்". சித்தம், புத்தி, மனஸ் என்று மூன்றோடு இந்த அஹங்காரத்தையும் சேர்த்தே அந்தஃகரணம் என்பது. அகண்டமானது ஆத்மா. அதன் கண்டமான ஆபாஸமே ஜீவபாவம் அடைந்து தன்னையே "நான்" என்று நினைப்பதுதான் அஹங்காரம், Ego என்பது இந்த Ego- வைத்தான் நாம் பெரும்பாலும் ஆத்மா என்ற தப்பாகச் சொல்லிவிடுகிறோம். ஸமுத்ரத்திலே ஒரு சொம்பை அமுக்கி, அந்த சொம்புக்குள் இருக்கிற நாலு ஆழாக்கு ஜலத்தை ஸமுத்ரம் என்கிறது போலத்தான், நாம் தனி ஜீவ அஹங்காரத்தை ஆத்மா என்பதும். சொம்பு ஜலம் ஸமுத்ரத்துடையது என்பது போல இதுவும் ஆத்மாவுடையதுதான். இதுவும் "நானி"ல் வராமல், "என்னுடைய" என்பதில்தான் வரமுடியும். ஆத்மாவுடைய ஆபாஸத்தில் வந்ததுதானே இது?

ஆனால் ஆத்மாவோ "தன்னுடையது" என்று எதைப் பற்றியும் எண்ணுவதில்லை. அதற்குத் "தான்" ஒன்றைத் தான் தெரியுமே தவிர, தனக்கு வெளி வஸ்தவாக, "தன்னுடைய" என்று சொல்லிக்கொள்ளும்படியாக ஏதொன்றும் இருப்பதாகத் தெரியாது. அதனிடமிருந்தே ஜீவனின் ஸர்வஸ்வமும் வந்திருந்தாலும் அது இவற்றோடு ஸம்பந்தப்படுவதில்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆசையும் ஆத்மாவைக் குறித்ததே**

நாம் அறிந்த ஆனந்தமெல்லாம் சின்ன ஜீவ நானான அஹங்காரம் என்ற ணிரீஷ்-வுடையதே. இது ஆசைப்பூர்த்தியாலேயே ஆனந்தமடைவது. ஆத்மாவோ ஆசையே இல்லாதது. அன்யமான இன்னொன்றைக் குறித்துத்தானே ஆசை ஏற்படமுடியும்? ஆத்மாவுக்கு அன்ய

வஸ்து எதுவும் தெரியாதே ஆனாலும், எப்படி சின்ன ஜீவ நானின் சைதன்யமும் ஆத்ம சைதன்யத்திலிருந்து வந்ததுதானோ அப்படியே இந்த ஆசையும்கூட ஆத்மாவிடம் இதற்குள்ள ஆசையிலிருந்துதான். வந்தது. இப்படிச் சொன்னால் ஆச்சர்யமாக இருக்கும். தனியொன்றாக மாத்திரமே இருப்பது ஆத்மா. அதாவது ஆத்மா அத்வைத வஸ்து. இது எப்படி த்வைத ரீதியில் மட்டுமே வைக்கக்கூடிய ஆசை என்பதற்கு ஆஸ்பதமாயிருக்க முடியும் என்று ஆச்சரியமாயிருக்கலாம் .ஆத்மாவைக் கொஞ்சம்கூட அறிந்து கொள்ளாத ஜீவ மனஸ் அதனிடம் எப்படி ஆசை வைக்க முடியும் என்றும் கேட்கலாம் ஆனாலும் உபநிஷத்திலே இப்படித்தான் சொல்லியிருக்கிறது. யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி தம்முடைய பத்னி மைத்ரேயிக்கு உபதேசம் பண்ணுமிடத்தில் இவ்விஷயம் சொல்கிறார். "ஆசை" என்ற வார்த்தையைச் சொல்லாமல் "ப்ரியம்" என்று சொல்கிறார். இரண்டும் ஒன்றுக்கொன்று ரொம்ப நெருங்கிய ஸம்பந்தமுள்ளவைதான், ஒன்றேகூட என்று சொல்லிவிடலாம். நாம் ஆசைப்படுகிற வஸ்துக்களிடமெல்லாம் நமக்கு ப்ரியம் இருக்கிறது. நமக்கு அப்ரியமானவற்றிடம் ஆசையில்லை. அவர் (யாஜ்ஞவல்க்யர்) என்ன சொல்கிறாரென்றால்,பெண்டாடிக்கு அகமுடையானிடம் ப்ரியம் இருக்கிறதென்றால் அவனை முன்னிட்டே அவள் ப்ரியம் வைக்கிறாள் என்று அர்த்தமில்லை. ஆத்மாவை (தன்னை) முன்னிட்டே அவனிடம் இவள் பரியம் வைக்கிறாள். இப்படியேதான் அவன் இவளிடம் ஆசை வைப்பதும். புத்ரபாசம் என்ற ப்ரியம் அந்தப் பிள்ளைகளையே முன்னிட்டு அல்ல, ஆத்மாவை முன்னிட்டுத்தான். வித்தம்(பொருள்) ப்ரியமாயிருப்பதும் இதே காரணத்துக்காகத்தான்" என்று சொல்லிக்கொண்டு போகிறார். நான் முன்னே சொன்னது நினைவிருக்கலாம். பொருளாசை கொண்ட ஒருவர் பிள்ளைக்காகப் பொருளை விட்டார், செலவிட்டார், அப்புறம் பிள்ளையை இரண்டாம் பெண்டாட்டிக்காக விட்டார். தமக்கு உடம்பு ஸரியில்லாதபோது அவளையும் விட்டு தாம் மட்டும் போஷாக்குப் பண்ணிக் கொண்டார், அப்புறம் அந்த உடம்பிலேயும் ஞானேந்த்ரியத்துக்காகக் கர்மேந்த்ரியத்தை விட்டார் (அதுகளை வெட்டி ஆபேரஷன் பண்ண ஸம்மதித்தார்) என்று சொன்னேன். இதற்கு மேலே மனஸின்

ஆனந்தத்துக்காக எல்லா இந்தியத்தையுமே விட்டு விட்டுக் குடித்துவிட்டுக் கொம்மாளம் போட்டார், மனஸையும் விட்டு விட்டு அவருக்கே இன்னதென்று இனம் தெரியாத உயிரின் ஆனந்தத்துக்காக (உயிர் ஆனந்தப்படுமா, படாதோ என்ற கூட அவருக்கத் தெரியாது. அது என்ன என்றும் தெரியாது. ஆனாலும் அது இருந்தால் போதும் என்பதற்காகவே) எத்தனை வருஷமானாலும் மனஸின் வியாபாரம் இல்லாமல், அதாவது மனஸையும் விட்டுவிட்டு, 'கோமா'வில் தன்னை வைத்திருக்கச் சொன்னார் - என்று கூட்ஸில் வாகன்களைக் கோத்துக்கொண்டு போவது போல நீளமாகச் சொல்லிக்கொண்டு போனேன். ஆழ்ந்து உள்ளே போனால் இந்த ஆசைக்கெல்லாம் ஆஸ்பதமாகும் உயிர்மூலம்தான் ஆத்மா என்பது புரியும் .அதனிடம் நமக்கு (அதாவது சைதன்யாபாஸ ஜீவனுக்கு) ப்ரியம், ஆசை இருப்பதும் இதிலிருந்து தெரியும்.

பணத்திடம் ஆசை பணத்துக்காகவே இருந்தால் அந்தப் பணத்தைப் பிள்ளைக்காகச் செலவழிக்கத் தோன்றாது. பிள்ளையாசையும் அவனுக்காகவே இருந்தால் இளையாளுக்காக அவனைத் திரஸ்கரிக்கத் தோன்றாது. இப்படியே இளையாள் ஆசையும் அவள் பொருட்டே இல்லை என்று தெரிகிறது. ஒன்றைவிட ஒன்று அகித ஆசையாக முதலில் பணம், அப்புறம் பிள்ளை, பெண்டாட்டி, தன் கர்மேந்த்ரிய ஞானநேந்த்ரியங்கள் என்று போய் உயிர்மூலமாயுள்ள தன்னுடைய நிஜத் "தானி"டம்தான் முடிந்த முடிவான ஆசை என்று தெரிகிறது. முடிவு என்றாலும் ஆரம்ப ஆசையிலிருந்து எல்லாமே அதை வைத்துத்தான். சின்ன "நானா"ன தன்னுடைய ஸொந்த மனஸின் த்ருப்திக்காகத்தான் பணம், பிள்ளை, பெண்டாட்டி, சரிரம் முதலியவற்றில் ஆசை. இவை ஒவ்வொன்றிடமும் மனஸ் ஒரே மாதிரி த்ருப்திப்படாமல் ஒன்றைவிட இன்னொன்றிடம் அதிக த்ருப்தி காண்பதால்தான் ஒவ்வொன்றாக ஆசையை விட்டுக்கொண்டே போயிற்று. உடம்புக்கு அப்புறம் மனஸ் தன்னிடமே ஆசைப்பட்டது, அதற்காக உடம்பையும்விடத் தயாராயிற்று. ஆனால் முடிவிலே மனஸ் தன்னையும் விலக்கிக்கொண்டு உயிரை மாத்திரம் இருக்கவிடும்போது, அதற்கே ஸரியாக விளங்காவிட்டாலும் அது ஆத்மாவிடம் கொண்டுள்ள ப்ரியத்தால்தான் இப்படிச் செய்கிறது என்று தெரிகிறது.

இப்படி இனம் தெரியாமல் இருக்கிற ப்ரியத்தை இனம் புரிவதாக ஆக்கிக்கொண்டால் இப்போதே மனஸை ஆத்மாவிலே ஒடுக்கி இல்லாமற் பண்ணிக்கொண்டு அத்மாவாக மட்டும் இருப்பதற்கு எண்ணம் வந்துவிடும். "ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத்" என்று பகவான் உபதேசம் பண்ணியபடி செய்து பார்க்கத்தோன்றும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அஸுரப் படை அழிவு ஆத்ம ஜயமே

அவர் சொன்ன அந்த ஆத்மா வெறுமே இருப்பது என்றேன். அப்புறம் 'வெறுமே' என்றால் 'வெறிச்சென்று சூன்யமாய்" என்று இல்லை, அது சைதன்யமாய், ஆனந்தமாய் இருப்பது என்றேன். இருப்பதுதான் ஸத், ஜடமாயிராமல் உயிராய், அறிவாய், உணர்வாயுள்ள சைதன்யமே சித், அந்த உணர்வு வெளியிலே ஒன்றை அநுபவிப்பதால் ஏற்படுவதாக இல்லாமல் தனது ஸ்வபாவத்திலேயே இருப்பதாக அநுபவிப்பதுதான் ஆனந்தம். ஸத் - சித் - ஆனந்தம் என்றே இதனால் ஆத்மாவைச் சொல்கிறார்கள். இது வெளியிலுள்ள ஒன்றை அறிவதாகவும், அதைக் குறித்து ஆனந்திப்பதாகவும் இல்லாமல் தன்னறிவாக (ஸ்வபோதமாக), தன்னுணர்வாக (ஸ்வாநுபூதியாக) இருப்பதால்தான் "வெறுமே" என்று சொல்ல நேர்ந்தது. தனக்கு அந்நியமாய் இன்னொன்றில்லாத "வெறுமே", கேவல நிலையின் "வெறுமே".

அந்த நிலைக்குப் போய் மனஸ் இல்லாமல், உடம்பு இல்லாமல் (அதாவது உடம்பை நான் என்று நினைக்காமல்) ஆனால்தான் காமக்ரோதாதி அஸுரப்படை அழிந்து ஆத்ம ஜயம் பெறமுடியும்.

சாவினால் இப்போதுள்ள உடம்பை இல்லாமல் ஆக்கிக் கொள்ள முடியுமே தவிர உடம்பே இல்லாமல் ஆக்கிக் கொள்ளமுடியாது. செத்தாலும் மறு ஜன்மாவில் மறுபடி ஒரு

உடம்பு, நரகத்தில் யாதனா சரீரம், ஸூயிஸைடில் பேயுடம்பு என்று உடம்புகள் ஏற்படத்தான் செய்யும். அதனால், "உடம்பு நானில்லை" என்று ஞானம் தான் சொஸ்யுஷனே தவிர, சாவு அல்ல.

## தொல்லையின் மூல காரணம்

அத்தனை உபத்ரவத்துக்கும் மூலம் காமக்ரோதம்தான் என்று (கீதையின்) இந்த இடத்தில் பகவான் சொன்ன போதிலும், "இந்த காமக்ரோதமுங்கூட effect -தான் (வேறே ஒன்றிலிருந்து விளைந்ததுதான்). இதற்கும் cause-(மூலகாரணம்) உண்டு. அது மனஸ்தான் மனோநாசம் பண்ணி ஆத்ம ஜயமடைவதுதான் லக்ஷ்யம்" என்று வேறு இடங்களில் அவர் தெளிவு செய்திருக்கிறார்.

நமக்குத் தெரியக்கூடிய அளவில் ஆசைதான் அனர்த்தத்துக்கு மூலகாரணம். நாம் இருக்கிற நிலையில் ப்ரயத்னப்படக்கூடியது அசையை அடக்குவதற்குத்தான் நமக்கு ஒரு கஷ்டம் வருகிறதென்றால் அதற்கு நேர் காரணமாக நமக்குக் காட்டக்கூடியது அசைதான். "ஆசைப்பட்டாயோல்லியோ? படு அவஸ்தை" என்கிறோமே, அப்படி ஆனால் நமக்குக் கிட்டினதாகக் காட்டக் கூடிய - ஆக ஆசை இருப்பதால் அதைக் காரணம் என்கிறார்.

ஆனால் இது மூல காரணமில்லை. மறுபடி மறுபடி புற்று வைக்கிற மூலமான கரையான் பூச்சி ஆசைதான் என்று சொன்னது முழுக்க ஸரியில்லை, முழுக்கத் தப்புமில்லை. ஆசைக்குக் காரணம் மனஸ். அதற்கும் காரணமான மாயைதான் த்வைத ப்ரபஞ்சத்துக்கே மூலகாரணம். அதுதான் தாய்ப்பூச்சி. தாயாகச் சொல்வதும் அந்த மஹா மாயையைத்தான்!அது இருக்கட்டும். ஆனால் ஜீவனாக இருப்பவனின் பந்தநிலையை மனஸின் மூலமாகவே மாயை உண்டாக்குவதால் மனோநாசமே ஜீவன் முயலவேண்டியது.

ஆசைக்கு நேர் காரணம் மனஸிலும் குறிப்பாக ரஜோ குணம் என்ற தன்மையாகும். ரஜோகுண ஸமுத்பவ - "ரஜோ குணத்தில் பிறந்தது ஆசை" என்றே பகவான் சொல்கிறாராதலால் ரஜோ குணந்தான் ஆசைக்கு நேர் காரணவஸ்து என்று தெரிகிறது.

ஸத்வ - ரஜோ - தமோ குணங்கள் என்கிற மூன்றில் ஸமநிலையில் ப்ரஸன்னமாயிருக்கும் (தெளிந்திருக்கும்) ஸத்வமாயில்லாமல், எதிலும் ஈடுபடாமல் மந்தித்துச் சோம்பிக்கொண்டு கிடக்கும் தமஸாகவுமில்லாமல், துருதுரு வென்று ஏதாவது பண்ணிக்கொண்டிருக்கத் தூண்டுகிற வேகமாகிய ரஜஸில் மனஸ் நிறைந்திருக்கும் போதுதான் அசை உண்டாகிறது. இபப்டிச் சொன்னதால் மனஸை ஆச்ரயித்துத்தான் ரஜோ குணம் (எந்தக் குணமுமே) இருக்கிறது என்று தெரிகிறது. ஆகையால் ரஜோகுணமும் அனர்த்தத்தின் மூலக் காரணமில்லை. மனஸ்தான் காரணம் என்று தெரிகிறது. கடைசியில் முக்குணங்கள், மனஸ் எல்லாமே மாயையின் வேலைதான். அதுதான் மூல காரணமென்று முடிகிறது.

ஆனாலும் மாயை என்ற அந்த மஹாசக்தியை நாம் ஒன்றும் பண்ண முடியாது. அதை அடக்க நம்மால் ஆகாது. நம்மால் முடியக்கூடியது நம்மிடமுள்ள மனஸை அடக்குவதுதான். மழை ஒரே சாரலாய் அடிக்கிறது என்றால் அந்த மழையை நிறுத்த நம்மால் ஆகுமா? நம்மகத்து ஜன்னல் கதவைத்தான் சாத்திக்கொள்ள முடியும். அந்தச் சாரலே நாம் கதவை இழுத்துச் சாத்த வொட்டாமலும் செய்யும். ஆனால் கஷ்டப்பட்டால் சாத்திவிடலாம்.

ஆக, நம்மைப் பொறுத்தமட்டில் அனர்த்த பரம்பரையின் காரணம் மனஸ்தான். ஆசை அதிலிருந்தே தோன்றுகிறது. மனஸின் தாஹம், அரிப்புதான் ஆசை என்று முன்னேயே சொல்லியாயிற்று.

இங்கே முதலில் அர்ஜுனனிடம் கெட்ட தூண்டுதல்களுக்கு proximate cause- ஆக (உடனடிக் காரணமாக) ஆசையைச் சொன்னாலும் ,உடனேயே அந்த ஆசைக்கு ஆதாரம் மனஸ் என்று மேலே கொண்டு போகிறார்.

கீதையின் உபதேச ஆரம்பத்திலேயே அனர்த்த பரம்பரைக்கு ஆதிமூலத்திலிருந்து முடிவுவரை ஒரு லிஸ்ட் கொடுத்திருக்கிறார். அங்கே, "நினைப்பதால் மநுஷ்யனுக்கு விஷயங்களில் (போக்ய வஸ்துக்களில்) தொடர்பு ஏற்படுகிறது, அந்தத் தொடர்பினால் ஆசை பிறக்கிறது. ( "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம : " ); ஆசையிலிருந்து க்ரோதம்

பிறக்கிறது, க்ரோதத்திலிருந்து மோஹம், மோஹத்திலிருந்து புத்தியின் கலக்கம், புத்திக் கலக்கத்திலிருந்து புத்தியின் அழிவே ஏற்படுகிறது, அப்புறம் ஆஸாமியே வீணாய், பாழய்ப் போய்விடுகிறான்" என்கிறார். காமம் ஆதி காரணமில்லை. நினைப்பு என்பது விஷயங்களில் தொடர்பு கொள்வதால்தான் காமம் உண்டாகிறது. நினைப்புக்கு ஸ்தானம் மனஸ் மனிஸலிருந்துதான் எண்ணங்கள் உண்டாகின்றன.

மனஸைக் கொண்டே மாயை தனி ஜீவத்வைத்தை ஏற்படுத்துவதால் இரண்டையும் சேர்த்து "'மனமாயை' என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதுதான் மூல காரணம் அது போனால்தான் காமக்ரோதாதி இழுப்புக்களிலிருந்து விடுபட்டு சாந்தியும், சாச்வத ஸுகமும் பெறமுடியும்.

நான் முதலில் ஆரம்பித்த இடத்தில் (கீதையின் மூன்றாம் அத்யாயத்தில் காமக்ரோதம் பற்றிய பகுதியில்) பகவான் காமக்ரோதம்தான் பாபத்தில் ஜீவனை ஏவுகிறது என்று சொன்னதைத் தொடர்ந்தே, இந்த ஆசைத் தீக்கு இந்த்ரியம், மனஸ், புத்தி ஆகியவை அதிஷ்டானம் என்று சொல்கிறபோது இந்த மூன்றினால் மாயை ஆத்மாவிலே உண்டாக்குகிற தனி ஜீவத்வ பாவம்தான் எல்லா அனர்த்தத்துக்கும் மூலகாரணம் என்று தெளிவு செய்துவிடுகிறார். இந்த மூன்றையுமே சேர்த்துத்தான் பொதுவிலே மனமாயை என்பது. இந்த்ரிய த்வாரா (புலன்களின் வழியே) கட்டுப்படாமல் ஓடுவது மனஸ்தான். இந்த்ரியங்களின் ஆசைப் பசிகளுக்கும் ஆட்டங்களுக்கும் மனஸ்தான் காரணம். இப்படி ஓடாமல் மனஸைக் கட்டுப்படுத்துவது புத்தி, ஆக அடங்காத மனஸ் இந்த்ரியமாகவும், அடக்குகிற மனஸ் புத்தியாகவும் இருக்கிறதென்று சொல்லிவிடலாம்.



**அத்வைதம்**

## இந்த்ரியத்துக்கும் உயர்வுண்டு

இந்த மூன்றைப் பற்றியும், இதில் ஒன்றைவிட ஒன்று உயர்ந்தது என்று மேலே சொல்லிக்கொண்டு போகிறார்.

இந்த்ரியாணி பராண்யாஹு:இந்த்ரியேப்ய:பரம் மந:

மநஸஸ்து பரா புத்தி:யோ புத்தே:பரதஸ்து ஸ:

(கீதை 3.42)

இந்த்ரியங்கள் உணர்வுடையவை என்று ஆரம்பிக்கிறார். "பராணி" என்றால் உயர்வு பொருந்தியவை. நம்மை அதல பாதாளத்துக்கு இழுத்துவிடும் இந்த்ரியங்களையா உயர்ந்தவை என்கிறொரன்றால், ஆமாம், அப்படித்தான் சொல்கிறார். தான் சொன்னது மட்டுமில்லை. இப்படித்தான் பெரியவர்கள் சொல்கிறார் -களென்று வேறு சொல்கிறார். "ஆஹு:" என்றால் "சொல்கிறார்கள்". "இந்த்ரியாணி பராணி ஆஹு:" - இந்த்ரியங்கள் உயர்வு பொருந்தியவை என்று சொல்கிறார்கள்." யார் சொல்கிறார்களென்றால், விஷயம் தெரிந்த பெரியவர்கள் சொல்கிறார்கள். "விஷயம் தெரிந்த பெரியவர்கள்" என்று பகவான் வெளிப்படச் சொல்லாவிட்டாலும், இவர் ஒரு அபிப்ராயத்தை ஒப்புக்கொண்டு மேற்கோள் காட்டுகிறாரென்றால் அதைச் சொன்னவர்கள் விஷயக்ஞர்களான பெரியவர்களாகத்தான் இருக்கவேண்டும்.

நம்மைக் கீழே இழுத்துவிடும் இந்த்ரியங்களை ஏன் உசந்தவையாய் சொல்கிறாரென்றால் அதுதான் க்ருஷ்ண பரமாத்மாவின் வழக்கம். எதிலுமே நல்லது பொல்லாதது கலந்துதான் இருக்கும். விஷம்கூட மருந்தாக ப்ரயோஜனப் படுவதுண்டு. அந்த மாதிரி எதிலேயும் இருக்கிற நல்லதை பகவான் ச்லாகிக்க வேண்டிய இடத்தில், ச்லாகிக்கக்கூடிய அளவில் ச்லாகித்துப் பேசுவதே அவர் வழக்கம். 'கெட்டது பண்ண ரொம்ப இடம் கொடுப்பதாக, ஆனாலும் தனக்குள்ளே துளிப்போல நல்லதும் உள்ளதாக ஒன்று இருக்கிறது அதை ஒருத்தன் அடியாடு விட்டால்தான் நல்லது' என்று உள்ளபோதுகூட, இப்போது அவன் இருக்கிற அபக்வ ஸ்திதியில் அப்படி அடியோடு விட அவனால் முடியுமா என்று பகவான் பார்ப்பார். அவர் "ஆஹு" என்று

குறிப்பிடுகிற பெரியவர்களான நமது தர்ம சாஸ்த்ரக்காரர்களும் பார்ப்பார்கள். அப்படி அடியோடு விட்டுவிட அவனுக்கு உறுதி போதாது என்பதால், அவனைக் கொஞ்சம் கொஞ்சமாக விடப் பண்ணுவதற்கு வசதியாக வழி போட்டுத் தருவார்கள். அதிலே உள்ள நல்லதைக் காட்டி இப்படி அதைக் கொண்டு பண்ண முடிந்த நல்லதுகளில் அவனைச் செலுத்துவார்கள் - அதாவது அடியோடு விடாமல், கெட்டது பண்ண இடமிருப்பவற்றை மட்டும் விடப் பண்ணுவார்கள். இப்படியே போனால்தான் அப்புறம் அடியோடு ஒன்றைவிடுகிற பக்வம் ஏற்படும்.

பணத்துக்காக பகவானை ப்ரார்த்தனை பண்ணுவது தப்புதான். கஷ்டம் போகணும், வ்யாதி தீரணும் என்று ப்ரார்த்தனை பண்ணுவதுகூட அவிவேகம்தான். பகவானுக்காகவே பகவான் என்ற ப்ரேமையோடு செய்கிற பக்திதான் நிஜமான பக்தி. ஆனால் பகவானோ (கீதையில் இன்னோரிடத்தில்) இப்படிப் பணத்துக்காகவும், கஷ்ட நிவ்ருத்திக்காகவும் ப்ரார்த்திக்கிறவர்களைக்கூட உயர்ந்தவர்கள் ("உதாரா") என்கிறார். ஏன் அப்படிச் சொல்கிறாரென்றால் ப்ரார்த்தனை செய்வது, எதுவோ ஒன்றுக்காக பகவான் என்று ஒருத்தனை நினைப்பது, நம்மால் முடியாத ஒன்றைச் செயகிற மஹா சக்தன் அவன் என்பதால் அவனிடம் வேண்டிக்கொள்வது (இதிலேயே நம் வேண்டுதலை நிறைவேற்றி வைக்கும் அருள் மனஸ் அவனுக்கு உண்டு என்ற நம்பிக்கையும் இருக்கிறது) - இப்படி அநேக நல்ல விஷயங்கள் பணத்துக்காகவும் கஷ்ட நிவ்ருத்திககர்கவும் ப்ரார்த்திப்பதில்கூட இருக்கத்தானே செய்கின்றன? அதனால்தான் இப்படி ப்ரார்த்திப்பவர்களையும் உசந்தவர்களாகச் சொன்னார். "ஏதோ ஒரு தினுஸில் என்னிடம் வந்துவிட்டால் போதும். அப்புறம் ஸரியான தினுஸில் வரும்படியான பக்வத்தை அவனுக்குக் கொஞ்சம்கொஞ்சமாகத் தந்துவிடலாம்" என்று நினைத்துத்தான் அப்படிச் சொன்னார்.

அன்போடு அவரை நினைக்கணுமென்பதுகூட இல்லை. கம்ஸன் மாதிரி பயத்தோடு, சிசுபாலன் மாதிரி க்ரோதத்தோடு நினைத்தால்கூட ஸரி, அவர்களும் நினைத்தார்களோ இல்லையோ, அதனால் அவர்களுக்கும் உயர்கதி கொடுப்பது என்று எதிலும் நல்லதைப் பார்த்தவர் அவர். அநேகக்

கெட்டதில் துளி நல்லது இருந்தாலும் நல்லதை 'என்கரேஜ்' பண்ணிக்கொண்டே போய் அப்புறம் நல்லது கெட்டது இரண்டையும் விட்டுவிடும்படிப் பண்ணுவார். இதுதான் நம் வேத தர்மத்தின் வழி.

இங்கே நல்லது கெட்டது இரண்டையும் முடிவிலே தள்ளுவது பற்றிக் குறிப்பிட்டேன். நல்லதை ஏன் தள்ளணும் என்ற கேள்வி எழலாம். அதற்கு அப்புறம் வருகிறேன். அத்வைதம் என்பதன் தாத்பர்யமே இப்படி இரண்டையும் தள்ளுவதில்தான் இருக்கிறது.

பணத்தால் தான தர்மமும் பண்ணலாமோல்லியோ? ஒருத்தனுக்கு வ்யாதி அல்லது வேறே கஷ்டம் தீர்ந்தால்தானே அவன் பகவானை நிச்சிந்தையாய் த்யானிக்க முடியும், ஸமூஹத்துக்குத் தொண்டு பண்ண முடியும்? ஆனபடியால் இதுகளையும் வேண்டுகிறவர்களுக்குக் கொடுத்து, அவர்களை உதாரர்கள் லிஸ்டில் சேர்த்துக் கொள்வார். முடிவிலே தானமோ, தர்மமோ, வ்யாதியோ, கஷ்டமோ எதுவுமே ஒருத்தனுக்கு ஒரு பொருட்டாக இருக்கப்படாதுதான். இதெல்லாமே மாயா ப்ரபஞ்ச ஸமாசாரம் என்று அவன் தள்ளவேண்யடிதுதான். ஆனால் ஆரம்ப தசையில் இதை ஒருத்தனுக்குச் சொன்னால் ஸரிப்படாது. அவன் தானம் வேண்டாம் எனப்தைத் தவறாகப் புரிந்துகொண்டு தயா தாக்ஷிண்யமில்லாத க்ரூர சித்தனாக ஆவதற்கு விடக்கூடாது. 'வ்யாதி நமக்கில்லை' என்ற வைராக்யத்தைப் பெறாமலே அதை குணப்படுத்திக்கொள்ளாமல் விட்டாரானால் அப்புறம் அவன் இரண்டு மடங்கு அழக்கூடுட்ம. கஷ்ட - ஸுகத்தை ஸமமாகப் பார்க்க அப்யஸிப்பதற்கு முந்தியே, 'கஷ்டம் வந்தால் வரட்டும், அதற்காக ப்ரார்த்திப்பதில்லை' என்று வைத்துக்கொண்டானானால் அப்புறம் அந்தக் கஷ்டத்தை இன்னம் பெரிசாக வளர விட்டுவிட்டு, அதிலிருந்து விடுபட்டு detached-ஆக நிற்கத் தெரியாமல் ரொம்பவும் அவஸ்தைப்பட நேரிடும்.

நம்முடைய சாஸ்த்ரங்களைக் கொடுத்த பெரியவர்களும், எல்லா சாஸ்த்ரங்களையும் கடைந்தெடுத்து (கீதையாகக்) கொடுத்திருக்கிற பகவானும், இப்படிப் பல காரணங்களை உத்தேசித்து, குறிப்பாக ஒரு சாதாரண மநுஷ்யன்

இருக்கப்பட்ட மனநிலையை கவனத்தில் கொண்டு, அப்படிப் பட்டவர்களைக் கவருகிற விஷயங்களில் அங்கங்கே ஏதோ நல்லது இருந்தாலும் அந்த அளவுக்கு அதிலே அவன் ப்ரவ்ருத்திப்பதற்கு (ஈடுபடுவதற்கு) அநுமதித்து, வழிப்படுத்தித் தந்திருக்கிறார்கள்.

இம்மாதிரிதான் இந்த்ரியங்களை 'பராணி' - 'உசந்தவை' என்று சொன்னது.

எத்தனையோ அழகான, தெய்விகமான, பரிசுத்த ஆனந்தமான அநுபோகங்களையும் இந்த்ரிய த்வாரா பெறமுடிகிறதோல்லியோ? அம்பாள் ஸந்நிதியில் நெய்தீபம் போட்டால் அந்த தாஸனையின் வழியாகவே இந்த மூக்கு ஸாந்நித்யத்தையும் நமக்குள்ளே அனுப்பிகிறதல்லவா? அவளுக்குக் கண்குளிர அலங்காரம் செய்து தர்சனம் செய்யும்போது இந்த நேத்ர இந்த்ரியம் மூலம் தெய்விகத்தைப் பானம் பண்ணுகிறோமல்லவா? த்யாகையார்வாள் க்ருதி, தாயுமானவர் பாடல் யாராவது மனஸ் உருகி ஸுஸ்வரமாகப் பாடிக் கேட்டால் அப்போது ச்ரோத்ரேந்த்ரியத்தின் வழியாக ஈச்வர சிந்தனை நமக்குள்ளே பாயவில்லையா? இப்படி, இந்த்ரியங்கள் பொதுவாகக் கெட்டதிலேயே போவதாயிருந்தாலும், முடிவிலே அவை தள்ள வேண்டியவையாயிருந்தாலும், அப்படித் தள்ள முடியாத ஆரம்ப காலத்தில் அவற்றாலும் செய்யக்கூடிய நல்லதுகளைச் செய்யப் பழகவேண்டும். பூஜை பண்ணுவது, க்ஷேத்ராடணம்-ஆலய தர்சனம் பண்ணுவது, நாம ஸங்கீர்த்தனம் பண்ணுவது, கோயில் கட்டுவது, குளம் வெட்டுவது, ஏதேனும் ஸமூஹப்பணி செய்வது என்றிப்படியானவற்றில் கை, கால், கண், மூக்கு, நாக்கு முதலானவற்றை ஈடுபடுத்தவேண்டும். இப்படிப்பட்ட நல்லவற்றைச் செய்யத் திறன் பெற்றிருப்பதால் இந்த்ரியங்கள் உசந்தவைதான்.

ஒவ்வொரு இந்த்ரியத்தையும் எடுத்துக்கொண்டு அது பராசக்தி பண்ணின ஒரு மிஷின் - ஆனால் ஜடமான மிஷினாக இல்லாமல் ஜீவனுள்ள மிஷினாக இருப்பது - என்று பார்த்தால் அது ரொம்பவும் உசந்ததாகத்தான் தெரியும். இத்தனூண்டு ஒரு கண் - இது ஒரு பெரிய மலைத்தொடரையே பார்க்கிறது, தினுஸு னுஸான வர்ண

பேதங்களைப் புரிந்துகொள்கிறது. அப்படியே காது ஆயிரம் வகைப்பட்ட சப்த பேதங்களை, இது இன்னாருடையது, இது இந்த ம்ருக - பக்ஷியுடையது, இன்ன வாத்யத்துடையது என்றெல்லாம் தெரிந்துகொள்கிறது. இதே மாதிரிதான் நாக்கு நாலாயிரம் ருசி பேதங்களைத் தெரிந்துகொள்கிறது. இப்படியே வாஸனை, நாற்றம் என்று ஒவ்வொரு பண்டத்துக்கும் ஒன்றாக எத்தனையோ, மூக்குக்கு விஷயமாகின்றன. ஸ்பர்ச உணர்ச்சியை எடுத்துக்கொண்டால் அது எல்லாவற்றையும்விடப் பெரிய ஆச்சர்யம் எழுபதடி எண்பதடி ஆழக்கிணறு. அதிலே பத்து இருபதடி ஆழமுள்ள ஜலத்துக்கு அடியிலே ஏதோ ஒரு பொருள் எப்போதோ விழுந்தது அப்படியே கிடக்கிறது. அதை நாம் கண்ணால் பார்க்க முடியவில்லை. கையால் ஸ்பர்சிக்க முடியவே முடியாது. ஆனாலும் இத்தனை தூரத்துக்கு வெளியிலிருந்து ஒரு நீளமான கோலை விட்டு அதைத் தொட்டுவிட்டால்கூடப் போதும் - ஒரு மாதிரி அதன் 'ஷேப்' என்ன, அது கெட்டியாயிருப்பதா, மெத்தென்றிருப்பதா என்றெல்லாம் புரிந்துகொண்டுவிட முடிகிறது. அதனால் இந்தத் திறமைகளைப் பெற்ற இந்த்ரியங்களை உசந்தவை என்று சொல்வதில் தப்பில்லை அல்லவா?

கடைசியில் பெரிய விநோதம் என்னவென்றால் இப்டிக் கலர்கள், சப்தங்கள், வாஸனைகள் இத்யாதிகளை வாஸ்தவத்தில் தெரிந்துகொண்டவை இந்தக் கண், காது, மூக்கு அல்ல. இவற்றின் மூலம் மூளைதான் தெரிந்துகொள்கிறது. நுண்ணியதாக அந்த மூளை கொடுக்கும் கனெக்ஷன்களில் தான் சைதன்ய கரண்ட் ஓடி இந்த்ரியங்களுக்கு இந்த சக்திகளைக் கொடுத்திருக்கிறது. இது அத்தனைக்கும் ஆதாரம் மனஸ். அதனால்தான் இந்த்ரியங்கள் உசந்தவை என்று சொன்னதற்கப்புறம் அவற்றைவிட மனஸ் உசந்தது என்கிறார்:"இந்த்ரியேப்ய பரம் மந:" மனஸின் கருவிகளே இந்த்ரியங்களானபடியால் இவ்றைவிட அது உசந்தது.

அப்புறம் அந்த மனஸையும்விட உசந்தது புத்தி:"மனஸஸ்து பரா புத்தி:" மனஸில் உணர்ச்சிகள் அவை பாட்டுக்குக் கிளம்பிவிடுகின்றன, இது நல்லதா, கெட்டதா என்று பார்ப்பதில்லை. மனஸில் நல்லது, கெட்டது எல்லாமே ஒரு போலத் தோன்றிவிடுகின்றன. இவற்றிலே எது நல்லது எது

கெட்டது என்று பார்த்து, கெட்டதைத் தள்ளி நல்லதை எடுத்துக் கொள்ளும்படிச் செய்வதுதான் "புத்தி" மனிஸலே நிச்சயமில்லாமல் பல தோன்றும்போது, அதிலே இதைத்தான் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று நிச்சயப்படுத்தி உறுதி செய்து தருவது "புத்தி"தான். எது நன்றாயிருக்கிறது என்று அதைத் தேடி ஓடுவதே மனஸின் வேலை. ஆனால் நன்றாயிருப்பது நல்லதாயும் இருக்கும் என்று சொல்ல முடியாது. நல்லது எது என்று தீர்மானம் பண்ணி அதில் மனஸைப் போகச் செய்வது புத்தியின் கார்யம். மனம் இந்த நிமிஷம் ஒன்று நல்லதென்று நினைக்கும். அடுத்த நிமிஷம் இது நல்லதில்லை என்று இன்னொன்றுக்குப் போகும். ஸம்சயித்துக் கொண்டும் சஞ்சலித்துக் கொண்டுமே இருக்கும். புத்தி இப்படி இல்லை. "இது நல்லது, இது கெட்டது" என்று அது உறுதியாக நிர்ணயித்துவிடும்.

மனஸ், புத்தி என்கிறவற்றுக்கு பல இடங்களில், அந்த இடத்தைப் பொறுத்து, பல விதமாக அர்த்தம் கொடுக்கும்போது இங்கே இப்படித்தான் அர்த்தம் செய்துகொள்ளவேண்டும். அந்தஃகரணம் என்பதில் மனஸ், புத்தி, சித்தம் அஹங்காரம் என்று நான்கு இருப்பதாகப் பாகுபாடு செய்யும்போது ஆசார்யாள் இப்படித்தான் விளக்கம் கொடுத்திருக்கிறார். ஆனால் பொதுவாக மனஸ் என்பதே அந்தஃகரணம் என்ற அர்த்தத்தில்தான் உபயோகிக்கப்படுகிறது. பெரும்பாலும் நானும் அப்படித்தான் சொல்லிக் கொண்டு போயிருக்கிறேன். அதாவது மனஸிலேயே lower, higher என்று (தாழ்ந்ததாகவும் உயர்ந்ததாகவும் இரண்டு பகுதிகள்) இருப்பதாகவும் இவற்றில் lower-தான் நல்லது கெட்டகளில் நிச்சயமில்லாமல் வெறுமே உணர்ச்சிக்கு நன்றாயிருப்பதில் ஓடுவதாக இருப்பது என்றும், நல்லதை நிர்ணயித்து "ஜட்ஜ்" பண்ணிக்கொடுக்கும் higher mind அல்லது மேலான மனஸ்தான் புத்தி என்றும் சொல்லாம்.

நல்லது, கெட்டதில் நல்லதை நிச்சயப்படுத்தித் தருவதே புத்தி என்று நாம் நடைமுறையில் வைத்துக் கொள்ளவில்லை. கெட்டதற்கு ஸாமர்த்யமாகத் திட்டம் போடுவதைக்கூட புத்தியின் கார்யமாகவே நினைக்கிறோம். கெட்டதோ, நல்லதோ மனஸ் மாதிரி ஒன்றைப்பற்றி வெறும் உணர்ச்சி

வேகத்தில் தாறுமாறாக நாலாபக்கமும் ஓடிக்கொண்டிராமல், அதைப்பற்றிய ஒரு நிச்சயமான அபிப்ராயத்தோடு தீர்மானம் பண்ணித் திட்டம் போட்டுத் தருவதைப் புத்தியாக நினைக்கிறோம். ஆக, எப்படிப் பார்த்தாலும், மனஸ் - நிச்சயமில்லாதது, புத்தி - நிச்சயமுள்ளது.

முடிவிலே நல்லதுமில்லை, கெட்டதுமில்லை. இரண்டும் மாயைதான். ஆத்மா தன்னுடைய நிஜஸ்திதியில் அந்தஃகரண ஸம்பந்தமில்லாமல், மனஸின் சஞ்சல ஓட்டமில்லாமல், சஞ்சலத்தைப் போக்கி ஸ்திரப்படுத்தித் தரும் புத்தியின்

கார்யமுமில்லாமல் இருக்கிறபோது எப்படியிருக்கிறது? அதாவது ஒரு ஞானியின் ஸமாதி நிலையில் எப்படியிருக்கிறது? அது நமக்குத் தெரியாது. ஆனால் நமக்கும் ஒருவிதத்தில் அது மாதிரியான தூக்க நிலையைப் பற்றித் தெரியும். ஸ்வப்னம் என்பதான அந்தஃகரண ஓட்டம்கூட இல்லாத ஆழ்ந்த தூக்க நிலையைச் சொல்கிறேன். அங்கே நல்லது என்று ஏதாவது தெரிந்ததோ, கெட்டது என்று ஏதாவது இருந்ததோ? இந்த இரண்டுமே ஆத்மாவுக்கு ஸம்பந்தமில்லாதவைதான். மாயையால் அந்தஃகரணம் கல்பித்துக்கொள்கிறவைதான். ஆக, நல்லது, கெட்டதை நிர்ணயம் பண்ணித் தருகிற உசந்த கார்யத்தைச் செய்யும் புத்தியும்கூட முடிவான உச்சநிலை அல்ல.

காமம் அதிஷ்டானமாக ஊன்றி நிற்கும் மூன்று ஆதாரங்களில் புத்தியும் ஒன்று என்று பகவானே சொல்லியிருப்பதை முன்னே பார்த்தோமே காமத்துக்கு அதிஷ்டானமாகவுள்ள அது எப்படி முடிவான நிலையாக இருக்கமுடியும்? நல்லது பொல்லாததுகளை எடுத்துக்காட்டுகிற புத்தியும் நல்லதோடு நின்றுதான் விடும். அதாவது அதற்கு நல்லதிலே காமம் என்று வைத்துக்கொள்ளலாம். அதற்கு மேலே போய் ஆத்மாவைக் காட்டிக்கொடுக்க அது ப்ரயோஜனப்படாது, தானாகத் தனித்து இருக்கிற ஆத்மாவை அதற்கு வேறான ஜீவன் மாதிரி ஆக்கிவைக்கிற மாயையின் ஸ்ருஷ்டிதான் நல்லது என்பதும், அதை நிச்சயப்படுத்தித் தருகிற புத்தியுங்கூட. மாயைக்கு மேலே போனால்தான் ஆத்மா லபிக்கும் என்னும்போது புத்தியையும் விட்டுவிட்டு அற்கு மேலே போய்த்தானே

ஆகவேண்டும்? ஆனபடியால் புத்தி முடிந்த முடிவில்லை எனறு ஆகிவிடுகிறதல்லவா?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**"ஸத்"தான ஆத்மா**

புத்திக்கும் ஆதாரமான ஆத்மாதான் உச்சி, உசந்தவற்றிலெல்லாம் உசந்தது. அதைத்தான் "தத்ஸத்" என்பதில் "தத்" என்பது.

எது "ஸத்"? என்றைக்கும் மாறுதல் என்பதே இல்லாமல் உள்ளபடி இருப்பதுதான்.

உள்ளபடி இருப்பதுதான் உண்மை. அந்த உண்மை, ஸத்யம், (அல்லது ஸத் என்றாலே போதும்) அது ஆத்மாதான்.

"தத்" என்றால் "அது". ஆண் பெண் என்று அவனாகவோ, அவளாகவோ இல்லாமல் "அது"வாக இருப்பது ஆத்மா.

அந்த "அதை"யேதான் ஈச்வரன் என்று சொல்லும்போது "அவன்" என்கிறோம் - ஆண்பாலில் சொல்கிறோம். ரொம்பவும் அம்பாள் பக்தர்களாக இருப்பவர்கள் வேண்டுமானால் "அவள் ஸங்கல்பம் எப்படியோ, அப்படி" என்று சொல்லலாமே தவிர, பொதுவில் "அவன்" என்பதுதான் வழக்கம். "அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது" என்றே வசனம். ஆழ்வாரும் (நம்மாழ்வாரும் திருவாய்மொழியை) ஆரம்பிக்கும்போதே, "உயர்வற உயர்நலமுடையவன் எவன் அவன்" என்றுதான் சொல்கிறார். இங்கிலீஷிலும் காபிடல் பி போட்டு பிமீஎன்று புருஷனாகச் சொல்வது பரமாத்மாவைத்தான். ஸம்ஸ்க்ருதத்தில் "ஸ:" என்றால் 'அவன்'. பரமாத்மாவை 'ஸ:' என்றே குறிப்பிடுவார்கள். 'ஸோஹம்' 'ஸோஹம்' என்பதாகப் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே என்று அத்வைத உபாஸனை செய்வதுண்டு. 'ஸ: அஹம்' என்பதுதான் 'ஸோஹம்' என்றாவது. 'அஹம்' என்றால் 'நான்' - அதாவது

உபாஸகனான ஜீவாத்மா. 'ஸ:' என்று இங்கே 'அவ'னாகக் குறிப்பிடப்படுவதுதான் பரமாத்மா. 'தத்' என்று அஃறிணையில் சொல்கிற அந்த ஸத்ய வஸ்துவை ஆண்பாலாக 'ஸ' என்றும் குறிப்பிடுவதுண்டு என்பதற்காகச் சொன்னேன். "புருஷ ஸூக்தம்" என்கிறோமே அங்கே 'புருஷன்' என்று ஆணாகச் சொல்வது பரமாத்ம வஸ்துவைத்தான். ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் ஆத்மா என்பதையே 'புருஷன்' என்று தான் சொல்லியிருக்கிறது. மாயையை ப்ரக்ருதி என்று அதில் சொல்வார்கள். எதிலும் பட்டுக்கொள்ளாத ஆத்மா புருஷன். அந்த ஆத்மாவிலிருந்தே இந்த ஜகத், ஜீவன், ஜீவனுடைய இந்த்ரியாதிகள் எல்லாவற்றையும் கொண்டு வரும் சக்தியான மாயை அல்லது ப்ரக்ருதி என்பது பெண்பால். (புருஷன், ப்ரக்ருதி என்ற) இந்த இரண்டையுமே தான் சிவம், சக்தி என்று ஆண் பெண்களும் சொல்வதும்.

க்ருஷ்ண பரமாத்மா புத்திக்கும் மேலான ஆத்மாவை "ஸ:" என்றே "அவ"னாகச் சொல்கிறார், "புத்தே:பரதஸ்து ஸ:" - புத்திக்கும் உசந்தவனாயிருப்பவன் ஆத்மா என்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## படிப்படியாய் ஆத்ம நிலைக்கு

ஆத்மாவைத் தவிர எல்லாம் மாயை. அதாவது பொய், ஆனாலும் அப்படி நம்மால் நினைக்கமுடியவில்லை. ஏனென்றால் இத்தனை பொய்யிலும் எங்கேயோ துளித் துளி ஆத்ம சைதன்ய ப்ரதிபலிப்பு இருக்கிறது என்று சொன்னேனே, அதனால். நிஜ "மெய்"யான ஆத்மாவின் சாயையால் இந்த்ரியப் பொய், மனஸ் என்கிற பொய், புத்தி என்கிற பொய் இவற்றிலும் நமக்கு மெய்ம்மை தெரிகிறது. இப்படி மாயா சக்தி செய்கிறது. அதனால்தான் அதை அப்பட்டப் பொய்யான "அத்யந்த அஸத்" அல்ல, ப்ரதிபலிப்பு என்ற அளவிலே கொஞ்சம் மெய்ம்மை உடைய "ப்ராதிபாஸிக ஸத்யம்" என்று அத்வைத சாஸ்த்ரத்தில்

சொல்லியிருக்கிறது.

அந்த மாயா சக்தியின் வீச்சிலே நம்மை இப்போதே நல்லது கெட்டது இல்லாத நிலைக்கு உயர்த்திக்கொள்வது முடியாத கார்யமாக இருக்கிறது. அதனால் நல்லது, கெட்டது இரண்டுக்கும் அது அப்பாற் பட்டதாக இருந்த போதிலும் நல்லவற்றின் மூலமாகவே நாம் கொஞ்சம் கொஞ்சமாக அதை நோக்கிப் போக வேண்டியவர்காளக இருக்கிறோம். அதெப்படி என்றால் இதற்குத்தான் உதாரணம் சொல்கிறார்கள். ஒரு முள்ளை இன்னொரு முள்ளாலே குத்தி எடுத்துவிட்டு, இரண்டு முள்ளுகளையுமே தூக்கிப் போட்டு விடுகிற மாதிரி நல்லதால் கெட்டதைத் தோண்டி எடுத்து விட்டு, அப்புறம் இரண்டையும் தூக்கிப் போட்டுவிட்டு ஆத்ம ஸ்வரூபமாயிருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். இப்போது அநேகக் கெட்டதுகளில் நாம் மாட்டிக்கொண்டிருக்கிறோம் என்று நன்றாகத் தெரிகிறது. ஆசை, கோபம், துக்கம், பயம் என்று பலவற்றில் மாட்டிக்கொண்டிருப்பது தெரிகிறது. 'எதிலும் ஸம்பந்தப்படாத ஆத்மா எப்படி இப்படி மாட்டிக்கொண்டது? மாட்டிக்கொண்டாற் போன்ற ஒரு ப்ரமையில், அதாவத மாயையில் மாட்டிக்கொண்டது?' என்று கேட்டு ப்ரயோஜனமில்லை. இதைப் பற்றி அத்வைத சாஸ்த்ரத்தில் என்னென்னவோ சொல்லிவிட்டு முடிவாக மாயையின் தன்மையைப் பற்றி எதுவுமே சொல்வதற்கில்லை. - அது "அநிர்வசநீயம்" என்று முடித்திருக்கிறது.

எப்படி மாட்டிக்கொண்டோம் என்று ஆராய்ச்சி பண்ணி ப்ரயோஜனமில்லை. மாட்டிக்கொண்டதிலிருந்து எப்படி விடுபடுவது என்பதற்கே வழி தேடியாக வேண்டும். பாம்புக் காலைச் சுற்றிக்கொண்டிருக்கிறதென்றால் எப்படிச் சுற்றிக் கொண்டது என்பதைக் கண்டுபிடிக்கவா பாடுபடுவோம்? அதை எப்படி உதறிக்கொண்டு விடுபடுவது என்பதில்தானே குறியாயிருப்போம்? அப்படித்தான், மாயையில் மாட்டிக்கொண்டு அவதிப்படுகிற நாம் அதிலிருந்து விடுபடுவதற்குதர்ன் வழி தேட வேண்டும். இப்படி வழி தேடி விடுதலை கண்ட பெயரிவர்கள் நமக்கும் அந்த வழியைச் சொல்லித் தந்திருக்கிறார்கள். 'துளித்துளி மெய்யின் கலப்புள்ள இந்த்ரிய, மனோ, புத்திப் பொய்களிலிருந்து துளிக்கூடப் பொய்க் கலப்பே இல்லாத மெய்க்குப்

போகவேண்டும். இவற்றிலேயே ஒன்றைவிட ஒன்று உசந்ததாயிருப்பதால் அதாவது ஒன்றைவிட ஒன்றில் அதிகமாக ஆத்மஜ்யோதிஸின் ப்ரதிபலிப்பு இருப்பதால், அதாவது மெய்யின் 'ப்ரபோர்ஷன்' (விகிதா சாரம்) ஒன்றைவிட ஒன்றில் கூடுதலாகப் போவதால், கொஞ்சம் கொஞ்சமாக இந்த்ரியாநுபவத்திலிருந்து மனஸின் அநுபவங்களுக்கு ஏறு, அப்புறம் புத்தியின் அநுபவத்துக்கு ஏறு, முடிவாக ஆத்மாவுக்கு வந்துவிடுவாய்" என்று சொல்லியிருக்கிறார்கள். இதெல்லாம் எதுவும் ஆத்மா இல்லை. ஆனாலும் ஆத்மாவுக்குக்கொண்டு விடும்" என்கிறார்கள்.

இங்கே (திருப்பதியில்) ஒவ்வொரு மலையாக ஏழுமலைகள் ஏறிப் பெருமாளிடம் வந்திருக்கிறோம். அப்படி இந்த்ரியம், மனஸ், புத்தி, இவற்றைத் தாண்டி ஆத்மாவை அடையவேண்டும். மலைகள் பெருமாளா என்றால் இல்லைதான். ஏழாவது மலையின் கடைசிப்படி இருக்கிறதே, அது கூடப் பெருமாளா என்றால் இல்லைதான். அதையும் தாண்டிப் போனால்தான் "அப்பாலுக்கு அப்பால்" என்கிறபடி பெருமாள் இருக்கிறார். அப்படித்தான் இந்த்ரியம், மனஸ், புத்தி ஆகியவை ஆத்மா இல்லை. புத்தியின் உச்சஸ்தானம் கூட ஆத்மா இல்லை .ஆனாலும் அதுவரைக்கு ஏறிப்போனால்தான் அப்புறம் ஆத்மதர்சனம் கிடைக்கும். கீழத் திருப்பதியிலேயே இருந்துகொண்டு பெருமாள் தர்சனம் வேண்டுமென்கிற மாதிரிதான், நாம் இப்போது உள்ள நிலையில் இருந்துகொண்டே ஆத்ம ஸாக்ஷாத்காரம் கிடைக்க வேண்டுமென்று சொல்வது. ஒவ்வொரு மலையாக ஏறிப்போகிறவதுபோல கர்மா, உபாஸனை, த்யானம், விசாரம் என்று இந்த்ரியங்கள், மனஸ், புத்தி இவற்றால் பண்ணிக்கொண்டு போனால்தான் இவையும் பொய்யாய்ப் போகிற ஆத்ம ஸாக்ஷாத்காரம் முடிவில் கிடைக்கும். முழங்கால் முறிச்சானிலிருந்து அத்தனை படி ஏறிப்போன பிற்பாடு முடிவில் நாம் ஒன்றுமே பண்ணவில்லை. வெறுமனே நின்று விடுகிறோம். பெருமாள் தாமாகவே தர்சனம் தந்து கொண்டு நிற்கிறார். அப்படித்தான் நமக்கு ஜீவ பாவத்தைத் தருகிற சரீரம், மனஸ், புத்தி எல்லாம் கடைசியில் ஒன்றும் செய்யாமல் ஸமாதி என்று செயலிழந்து நிற்கிறது. ஆத்மா அதுவாகவே ப்ராகாசிக்கிறது.

(திருப்பதி) மலை ஏறும்போது அதற்கென்று உள்ள வழியில்தான் போகவேண்டும். இப்படி ஆத்ம தர்சனத்துக்கு வழியாயிருப்பதைத்தான் "நல்லது" என்று சொல்வது. வழி தப்பினால் காட்டிலே, புதரிலே போய் மாட்டிக்கொள்ள நேரும். அந்தக் காடும் புதரும்கூடத் திருப்பதி மலைதான்.

('திருப்பதி மலை' என்று சொல்வது ஸரியில்லை, 'திருமலை' என்றே சொல்லவேண்டும். பதி என்றால் ஊர் என்று ஒரு அர்த்தம். சம்பாபதி என்று காவிரிப்பூம்பட்டினத்துக்கு ஒரு பேர் கேள்விப்பட்டிருக்கலாம். திருப்பதி என்பது பெருமாளின் ஊர். அந்த ஊர் எந்த மலையில் இருக்கிறதோ அது திருமலை.)

திருமலையிலேயே ஏதோ ஒரு முறையான வழியாகப் போனால்தான் பெருமாளிடம் போய்ச் சேரலாம், தப்பினால் காட்டிலே மாட்டிக்கொள்வோம். காடும் திருமலைதானே என்று கேட்டு ப்ரயோஜனமில்லை. நல்லதைப் போலவே கெட்டதும் ஆத்மாவிலிருந்தே வந்ததுதான் - "விலிருந்தே" ஒழிய ஆத்மா"வே"அல்ல!இரண்டும் ஒரே மாதிரி மாயைதான். இருந்தாலும் திருமலையில் காட்டிலே போவார்களா? இப்படித்தான் ஆத்மாவை அடைவதற்கு சாஸ்த்ரம் சொல்லும் நல்ல வழியை விட்டுக் கெட்ட வழியில் போவது. நல்லதைச் செய்ய உதவும் அதே மனோ இந்த்ரியங்கள்தான் இந்தக் கெட்டவற்றுக்கும் காரணம். ஆனாலும் இவற்றிலே போகக்கூடாது. கெட்டது, நல்லது இரண்டும் ஒரே மன மாயையினால்தான் என்றாலும், ஒரே திருமலையைச் சேர்ந்த ப்ரதேசத்திலேயே என்பது போல, நல்லது - கெட்டது என்று இரண்டாக இருப்பவற்றில் கெட்டதில் போகாமல் நல்லதில்தான் போகவேண்டும். அப்படிப் போவதற்குத்தான் பலவிதமான கர்மாக்கள், பக்தி வழிபாடுகள், யோகம் முதலியவை.

இவற்றிலேயும் குறுக்கே சில கெட்டவை வரத்தான் செய்யும். மலை ஏறுகிறபோது குறுக்கே குரங்குகள் வரும், திருடர்கள் வரலாம், காலை கையை வலிக்கலாம். இப்படி எத்தனையோ இடையூறுகள் ஸாதனையிலும் வரும். வந்தாலும் த்ருடமான உறுதியோடு எல்லாவற்றையும் ஜயித்து மேலே போக வேண்டும். அப்புறம் ஸந்நிதானத்திலே நாம் போய் வெறுமனே நின்றுவிட்டாலே அங்கே எப்போதும்

இருந்துகொண்டிருக்கிற பெருமாளின் தர்சனம் கிடைக்கிறாற்போல, ஸாதனை எல்லாம் நின்றுபோய், கெட்டது நல்லது எல்லாம் போய், ஆத்மா ஸ்வச்சமாய் அநுபவத்துக்கு வரும். ஏழுமலை ஏறி என்னென்னவோ பாடு நாம் பட்டோமானாலும் முடிவிலே தர்சனம் செய்யும் பெருமாளை நாமா பண்ணினோம்!அப்படித்தான் ஸாதனாந்தத்தில் (ஸாதனை முடிவில்) பெறுகிற ஆத்மாவையும் நாம் பண்ணவில்லை. எப்போதும் இருந்துகொண்டிருக்கிற ஆத்மாவைத் தான் நாம் இப்போது புதுசாக அடைகிறோம்.

இவ்வளவு சொன்னதில் இப்போது முடிவானது என்னவென்றால், கஷ்டங்களுக்குக் காரணம் காமக்ரோதம் - அல்லது க்ரோதத்துக்கும் காரணமாயுள்ள காமம், அதனால் காமத்தை அடக்கவேண்டும், ஆனால் இந்தக் காமமும் மூல காரணமில்லை, அது மனஸிலே உண்டாகி இந்த்ரிய வ்யாபாரங்களால் நிறைவடைதாக உள்ளது, ஆகையினால் மனோ - இந்த்ரியங்களை அடக்கவேண்டும், அடக்குவதென்றால் ஓரேயடியாக முடியாதாதலால் முதலில் இவற்றாலான நல்லது கெட்டதுகளில் கெட்டதுகளை நல்லவற்றால் அடக்க வேண்டும். கெட்டதற்கு 'ஆப்போஸிட்' (எதிரானது) நல்லது - இருட்டுக்கு வெளிச்சம் மாதிரி. இருட்டை அடக்குவது என்றால் என்ன செய்யவேண்டும்? வெளிச்சத்தைத்தானே கொண்டு வரவேண்டும்? அப்படியே கெட்டதை அடக்குவதற்காக நல்லவற்றை மனோ, இந்த்ரியங்களால் பண்ண வேண்டும், புத்தியைக் கொண்டு இப்படிப் பண்ண வேண்டும், இதிலே நன்றாக முன்னேறியபின், நல்ல பக்வம் பெற்றபின் ஈச்வர ப்ரஸாதத்தினால் அந்த புத்தியும் ஆத்மாவிலே அடங்கி, நல்லது கெட்டது இரண்டிலும் ஸம்பந்தப் படாமலிருப்பதான - கல்லார்க்கும் பொல்லார்க்கும் நடு நின்ற நடு" என்பதாக இரண்டிலும் பட்டுக்கொள்ளாமல் 'ந்யூட்ரலா'க இருக்கின்ற - ஆத்ம ஸ்வரூபமாகவே ஆகிவிடுவோம். இப்படித்தான் பகவான் (கீதையின் இவ்விடத்தில் அர்ஜுனனின் கேள்விக்குப் பதிலை) முடிக்கிறார்:

ஏவம் புத்தே : பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மாந - மாத்மநா1

ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் (3-49) 11

## அத்வைதம்

### "ஆத்மாவை ஆத்மாவினால் அடக்குவது"

மனஸை புத்தியினால் அடக்குவது என்பதற்கு இங்கே பகவான் 'ஸம்ஸ்தப்யாத்மாந - மாத்மநா' - பிரித்துச் சொன்னால். 'ஸம்ஸ்தப்ய ஆத்மாநம் ஆத்மநா' - என்ற வார்த்தைகளைப் போட்டிருக்கிறார். இதற்கு நேர் அர்த்தம் என்னவென்றால் 'ஆத்மாவினால் ஆத்மாவை நன்றாக அடக்கி' என்பதேயாகும். 'ஸம்ஸ்தப்ய' என்பதில் 'ஸ்தப்ய' என்றால் அசைவில்லாமல் நின்று போகும்படிப்

பண்ணுவது. இதனால் தான் அசையாமல் நிற்கிற தூணுக்கு 'ஸ்தம்பம்' என்று பேர். 'ஸம்ஸ்தப்ய என்றால் இப்படி நன்றாக ஒன்றை அசைய முடியாமல் நிறுத்திவிடுவது. ஆத்மாவை ஆத்மாவிலேயே இப்படி நிறுத்தி அடக்கிப் போடவேண்டும் என்று (கீதையின் வாசகம்) இருக்கிறது. ஆத்மாவுக்கு கார்யமே கிடையாது, அதை அடக்குவதற்குமில்லை. பரிபூர்ணமாக விடுபட்ட அதை அடக்கவேண்டிய அவச்யம் ஏது?

பின்னே ஏன் இப்படிச் சொல்லியிருக்கிறதென்றால், நான் ஏற்கெனவே சொன்னாற்போல, நாம் தற்போதுள்ள நிலையில் மனஸைத்தானே நம்முடைய நிஜமான ஸ்வரூபமாகிய ஆத்மாவாக நினைத்துக் கொண்டிருக்கிறோம்? இந்த மனஸிலேயே கீழான lower மனஸ்தான் சாஞ்சல்யத்தோடு (சஞ்சலத் தன்மையோடு) கட்டுப்பாடில்லாமல் ஓடுவது என்றும், மேலான higher மனஸ் நிச்சயத்தோடு அதற்கு நல்லதை உறுதிப் படுத்திக் கொடுக்கும் புத்தி என்றும் சொன்னேன். 'ஆத்மாவினால் ஆத்மாவை அசையாமல் நிறுத்தி அடக்கவேண்டும்' என்று பகவான் சொல்லும்போது அடக்கப்படவேண்டிய ஆத்மா (அதாவது (ஆத்மாவை" - "ஆத்மாநம்") என்று அவர் குறிப்பிடுவது lower மனஸைத்தான், அதை அடக்குகிற ஆத்மா (அதாவது

"ஆத்மாவினால்" - "ஆத்மநா") என்று அவர் சொல்வது higher மனஸான புத்தியே ஆகும். இப்படி அடக்குகிற "ஆத்மநா" என்பதற்கு ஆசார்யாள் "ஸம்ஸ்க்ருதேன மநஸா" என்று பாஷ்யம் செய்திருக்கிறார். "பரிசுத்தப் படுத்தப்பட்ட மனத்தினால்" என்று பொருள். அதுதான் புத்தி. சுத்தப்படுத்தப் பெறாத நிலையில் மனஸ் கெட்டவற்றிலும் ஓடுகிறது கெட்டவை தான் அசுத்தி. நல்லதே பரிசுத்தி. நல்லது தெரிந்த புத்தியால் மனஸை அடக்கி நிறுத்த வேண்டும்.

ஆனால் அப்புறம் புத்தியும் அடங்கவேண்டுமே!அதுவும் போனால்தானே ஆத்மா ப்ரகாசிக்கும்? புத்தி தன்னைத்தானே அடக்கிக்கொள்ளுமா? இல்லை. சற்று முன்னாடி, 'மனஸ் தன்னையே எப்படி அடக்கிக்கொள்ளும்? அடங்கணும் அடங்கணும் என்று தவிக்கமட்டுந்தான் முடியும். அந்தத் தவிப்புக்கு இரங்கி ஈச்வரன்தான் அடக்கி, ஆத்மாவில் கரைக்கிறான்' என்று சொன்னதைத்தான் இப்போது திருப்பிச் சொல்ல வேண்டியிருக்கிறது. அப்போது, 'மனஸுக்கு மேலே புத்தி, அந்த புத்தியால் மனஸை அடக்கவேண்டும்' என்று சொல்லவில்லை. காரணம், மனஸோடு புத்தியையும் சேர்த்து தன்னுடைய அங்கங்களில் ஒன்றாகக் கொண்ட அந்தஃகரணத்தையேதான் அந்த இடத்தில் 'மனஸ்' என்று குறிப்பிட்டேன்.

ஈச்வர க்ருபையைக் குறிப்பிடாததேன்?

ஈச்வர க்ருபையால்தான் புத்தி அடங்கி நின்று ஸத்ய தத்வம் ப்ரகாசிக்கிறது என்று இந்த இடத்தில் பகவான் சொல்லவில்லை. ஈச்வரனிடம் சரணாகதி செய்தால் அவன் அநுக்ரஹத்தால் லக்ஷ்யத்தில் சேர்ந்துவிடலாம் என்று வேறு இடங்களில் அவர் சொன்னாலும் இங்கே அப்படிச் சொல்லவில்லை. ஸகுணமான ஈச்வரனைக் கொண்டுவராமல் ஞானமாகவே சொல்லிக்கொண்டு போவதால் இப்படி என்று வைத்துக்கொள்ளலாம்.

"நாம் ஈச்வர க்ருபையைப் பற்றிச் சொன்னால் என்ன, சொல்லாவிட்டால் என்ன? அது எப்படியும் தான் பண்ண வேண்டியதைப் பண்ணிவிட்டுப் போகிறது. அதுவுமில்லாமல் ஈச்வரன் க்ருபை ப்ணணுவதில் ஜீவன் செய்யவேண்டியது என்ன இருக்கிறது? இவன் செய்யவேண்டியதும், செய்யக் கூடியதும் அந்தஃகரணத்தை அடக்கி ஒடுக்க முயற்சி

பண்ணுவதும், அதற்காகத் தாபப்படுவதும்தான். இதற்காக இவன் ஈச்வரனைக் கூப்பிடணும் என்று இல்லை. 'ஈச்வரன்' என்ற பேரைச் சொல்லி இவன் கூப்பிடாவிட்டாலும் இவனுக்குள்ளே அவர் உட்கார்ந்துகொண்டுதானே இருக்கிறார்? அதனால் இவனுடைய ஸாதனையை - ஸத்யத்தை அறிவதில் இவனுக்குள்ள ஆர்வத்தை - மெச்சி, அவர் புரிய வேண்டிய க்ருபையை அவரே புரிந்துவிட்டுப் போகிறார். "நீதான் கதி" என்று சரணாகதி செய்து ஈச்வர க்ருபையைப் பெறலாமென்பது வாஸ்தவம்தான். ஆனால் அதுதான் வழி என்று இல்லை. ஆத்ம விசாரம் பண்ணிப் பண்ணி, தன் ஆசை அபிலாஷைகளை, மனஸையே ஒருத்தன் ஞான மார்க்கத்தில் அழித்துத் தேய்த்துக்கொள்வதும், அவனுடைய அஹங்காரத்தை அழித்துக் கொள்வதுதானே? சரணாகதி என்று பக்தி மார்க்கத்தில் சொல்வதும் இப்படி அஹங்காரத்தை அழித்துக்கொண்டு கிடப்பதுதானே? இன்னம் சொல்லப்போனால், "அஹம்" என்று சொல்கிற தனி ஜீவத்தன்மையை அடியோடு இழந்துவிடுகிற அத்வைத (ஞான) மார்க்கந்தான், சரணாகதி செய்தபோதிலும் பக்தி பண்ணுவதற்காகவும் ஈச்வரனக்குக் கைங்கர்யம் செய்வதற்காகவும் தன்டைய தனித்தன்மையைக் கொஞ்சம் பிடித்து வைத்துக்கொள்கிற பக்தி - ப்ரபத்தி (த்வைத) மார்க்கங்களை விடவும் பூர்ண அஹங்கார நாசத்துக்கு ஆனது. இதற்கு ஆர்வத்தோடு முயல்கிறவருக்கு ஈச்வரன் அநுக்ரஹம் செய்யாமலிருப்பாரா?

"வார்த்தையையோ, கார்யத்தையோ பார்க்காமல் ஹ்ருதய பாவத்தையே பார்க்கும் பரமாத்மா, இவன் (ஞான மார்க்க ஸாதகன்) அவனுக்கு ஈச்வரன் என்று பெயர் கொடுத்துக் கூப்பிட்டு, 'சரணாகதி செய்கிறேன்' என்று சொல்லாவிட்டாலும் இவன் ஹ்ருதய பூர்வமாக முயற்சி பண்ணுவதால் க்ருபை செய்துவிடுகிறார்" -

என்றிப்படி நினைத்து இங்கே ஞானமார்க்கத்தைச் சொல்லும்போது ஈச்வர க்ருபையைச் சொல்லாமல் விட்டிருப்பார்.

ஜீவன் ஆத்மாவுக்கு வேறாக இருப்பதன் உச்சநிலைக்கு மேலே தானாகப் போகமுடியாது. ஏனென்றால்

வேறாயிருப்பதனாலேயேதான் ஜீவபாவத்தில் 'தான்' என்று நினைக்கிற அந்தஃகரணம் முளைக்கிறது. அதிலேதான் மனஸூம் புத்தியும் அங்கங்கள். அதனால் மனஸோ, புத்தியோ, அந்தஃகரணமோ, 'இப்படி நாம் ஆத்மாவுக்கு வேறாக இருக்கப்படாது' என்று ஆசைப்பட்டு, அதே நினைப்பாகத் தவிக்க முடியுமே தவிர, வேற்றுமை போன நிலையை வாஸ்தவத்தில் அடையமுடியாது. ஸூர்யனை இருட்டு எப்படிப் பார்க்க முடியும்? வெளிச்சத்தக்கு வந்தவுடன்தான் இருட்டே அழிந்துபோய்விடுமே இங்கே இருட்டு தானாகத் தன்னை அழித்துக்கொள்ளவுமில்லை. அப்படி, ஆத்ம ஜ்யோதிஸில் மாயா இருட்டு மனஸ் அழிகிறது. மனோபுத்திகள் எட்டக் கூடிய பரம உச்சஸ்தானத்துக்கு மேலே ஒரு ஈச்வரன் இருந்து தூக்கிவிட்டால்தான் அந்த உச்சிக்கு எட்டாத ஒன்றுக்கு ஜீவன் போகமுடியும் என்பதில் ஸந்தேஹமில்லை.

அலசி அலசிப் பார்த்துப் புரிந்துகொள்ளவேண்டிய விஷயம். அந்தஃகரணம் என்பது அடையக்கூடிய எத்தனை உச்சமான நிலையிலுங்கூட ஆத்மாவைத் தொடமுடியாது. இது நசித்தால்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரமே ஸாத்யமாகும். தன்னைத்தானே அது எப்படி நசிப்பித்துக்கொள்ள முடியும்? ஒருவன் ஸூயிஸைட் செய்துகொள்கிறானென்றால் அப்போது அவனுக்கு வேறேயாக ரிவால்வர், ஒரு முழம் கயிறு என்று எதுவோ ஒன்று இருக்கிறது. கிணற்றில் விழுகிறானென்றால் ஜலம் என்று ஒன்று மூச்சை அடைக்கிறது தானே மூக்கை வாயைப் பொத்திக்கொண்டோ, அல்லது மூச்சைவிடாமல், அடைத்துக்கொண்டோ சாகிறானென்றால்கூட அப்போது சாகிற உடம்புக்கு வேறாக 'சாகவேண்டும்' என்ற பிடிவாத ஸங்கல்பம் என்று ஒன்று இருக்கிறது. உடம்புக்கு வேறாக நிறுத்துமாறு மூச்சு என்று ஒன்று இருக்கிறது. அனால் ஜீவன் ஜீவனென்று உள்ளவரையில் அவனுடைய அந்தஃகரணத்துக்கு வேறாக எதுவும் இல்லையே!அவனுடைய ஸர்வமும் அதுவாகவே இருக்க, அதனாலேயே அதை எப்படி ஸூயிஸைட் செய்துகொள்ள முடியும்? ஆனாலும் மனஸ் (அந்தஃகரணம்) நசித்து ஸமாதி நிலையிலே ஆத்மாவை அநுபவிப்பவர்கள் இருக்கிறார்களே இதுஎப்படி நடக்கிறது.

## அத்வைதம்

### ஈசுவரன் : த்வைத - அத்வைதப் பாலம்

இதற்குப் பதில் ஈச்வரன்தான், ஈச்வர க்ருபைதான். ஜீவத்வம் ஒரே த்வைதம். ஆத்மா ஒரே அத்வைதம். அதனால் ஜீவத்வத்துக்குக் காரணமான மனஸையும், ஜீவபாவம் அற்ற ஆத்மாவையும் ஸம்பந்தப்படுத்தமுடியாமல், "இது எப்படி ஸாத்யம்? அதெப்படி ஸாத்யம்?" என்று கேள்விகள் கேட்கிறோம். இங்கேதான் ஈச்வரன் வருகிறான்.

ஈச்வரன் எப்படியிருக்கிறான்? த்வைதத்துக்கும் அத்வைதத்துக்கும் ஒரு பாலம் மாதிரி அவன் இருக்கிறான். ஒன்றையொன்று தொட்டுக்கொள்ள முடியாத த்வைத - அத்வைத இக்கரை - அக்கரைகளை ஸம்பந்தப்படுத்தி வைக்கும் பாலமாக அவன் இருக்கிறான். உள்ளுக்குள்ளே அத்வைதமான ஆத்ம ஸ்வரூபமான இருக்கிறான். வெளியிலே த்வைதமான இத்தனை ப்ரபஞ்ச நாடகக் கூத்தும் அடிக்கிறான். நம் மனஸை அவன் ஏவிவிட்ட மாயை கட்டிப்போட்டு ஒரு சின்னக் கட்டுக்குள் வைத்திருக்கிறது. அவன் இம்மாதிரி மனஸினால் கட்டுப்பட்டவன் அல்ல. 'ஆத்மாவானது மாயையோடு சேர்ந்துதான் ஈச்வரன், ஜீவன் இருவருமே உண்டாயிருந்தாலும், ஜீவன்தான் மனஸிடம் மாட்டிக்கொண்டு முழிப்பவன், ஈச்வரன் அப்படி மனிஸனால் பந்தப்படுத்தப்பட்டவன் அல்ல' என்று அத்வைத சாஸ்த்ரத்தில் நிறையச் சொல்லியிருக்கிறது. லோக வ்யாபாரமெல்லாம் திட்டம்போட்டுச் செய்யும் மஹா மனஸ், Cosmic Mind என்று ஈச்வரனையே சொல்லலாம், ஆனால் அவனுக்குக் கட்டுப்படுத்தகிற உபாதியாக மனஸ் என்பது இல்லை என்பதைப் புரிந்துகொள்ளவேண்டும். அவன் என்னவும் பண்ணுவான். நம் புத்திக்குப் புரியாததெல்லாம் அவனுக்கு ஸாத்யம். 'ஜீவ மனஸோ, புத்தியோ அந்தஃகரணமோ எப்படி இதைப் பண்ணமுடியும், அதைப் பண்ணமுடியும்?' என்று கேள்வி கேட்பது போல, 'ஈச்வரன் எப்படி இன்னது பண்ணமுடியும்?' என்று கேட்க முடியாது.

மனஸினால் கட்டுப்படாதவனாதலால், எதுவும் செய்ய அவனால் முடியும்.

ஜீவன் தன் அந்தஃகரணத்தைக் கொண்டு என்ன ப்ரயத்னம் பண்ணமுடியுமோ, அவ்வளவும் பண்ணினபின் அது அழிந்து நாசமடைவதற்கும், அதற்கு எட்டாததை (ஆத்மாவை) ஜீவன் எட்டுவதற்கும் அவன்தான் வழி செய்கிறான். ஜீவபாவத்தின் உச்சிக்கு ஒருத்தன் போய், அங்கேயிருந்தும் ஆத்மாவைத் தொடமுடியவில்லை என்று கண்டுகொண்டு ஆத்மாநுபவத்துக்குத் தவிக்கும்போது, ஜீவபாவத்தை அழித்து, இந்த்ரிய - மனோ - புத்திகளை இல்லாமல் பண்ணி, தன்னுடைய உள் ஸ்பரூபமான ஆத்மாவிலே ஐக்யப்படுத்திக்கொள்கிறான்.

**அத்வைத சாஸ்த்ரமும் ஈச்வராநுக்ரஹமும்**

அத்வைத சாஸ்த்ரங்களில் இவ்வளவு -ஆக ஈச்வராநுக்ரஹத்தால்தான் ஞானம் என்று சொன்னதாகத் தெரியவில்லையே என்று கேட்கலாம். அத்வைத சாஸ்த்ரம் சொல்கிற ஞானம் என்பது அறிவால் அறிவதைக் குறிக்காது. ஆத்மா தன்னையே அநுபவத்தால் அறிந்து கொள்ளும் அத்வைதமான ஸாக்ஷாத்கார நிலைக்கேதான் ஞானம் என்று பெயர். ஆகையால் ஞானம் பெறுவது என்றால் மோக்ஷத்தை அடைவது என்றே அர்த்தம். ஈச்வராநுக்ரஹத்தால்தான் இது ஸித்திக்கிறது என்று அத்வைத சாஸ்த்ரத்தில் வலியுறுத்தி வெளிப்படையகாச் சொல்லியிருக்கக் காணோமே என்று கேட்கலாம். பகவானும் (அத்வைத) ஞானவழியில் இங்கே பேசுவதால்தான் ஈச்வர க்ருபையைச் சொல்லணீவில்லை என்றால், ஏன் அந்த வழியில் இதைச் சொல்லக்கூடாது என்று கேட்கலாம்.

(விடையாக) ஒரு காரணம் (தோன்றுகிறது). அதாவது - அத்வைத லக்ஷ்யம் த்வைத ஞானத்தை (அல்லது ஸரியாய்ச் சொல்ல வேண்டுமானால், த்வைத அஞ்ஞானத்தை) அறவே போக்கடிப்பதுதான். அத்வைத ஸாதனையின் கடைசி கட்டமாக மனஸை அடக்கி அழிக்கிற ப்ரயத்னத்தின்போது ஈச்வரனைப் பற்றிச் சொன்னால் என்ன ஆகும்? த்வைதத்தைக் கொண்டு விட்டதாகத்தான் ஆகும். ஜீவனுக்கு வேறாக இருப்பவன்தான் ஈச்வரன். 'அவன் இவனுக்கு க்ருபை செய்கிறான்' என்பதாலேயே அவனும் இவனும்

வேறுவேறுதான் என்றாகிறது. அதாடுகூட அவனும் (ஈச்வரனும்) உள்ளுக்குள்ளே பரம அத்வைத ஸ்வரூபியானாலும், தன் க்ருபைக்குப் பாத்ரனாக ஒருத்தன் இருக்கிறான் என்று நினைத்து அப்படி க்ருபை செய்கிறான் என்றால், நினைப்பும் செய்கையும் உள்ள த்வைத பாவத்தையே காட்டுகிறானென்று ஆகிறது. இப்படி த்வைதத்துக்கு நிறைய இடம் கொடுக்கக்கூடிய ஒன்றை அத்வைத ஸாதனையின் மிக உயர்ந்த லெவலில் சொல்லி ஸாதகனை த்வைத பரமாகத் திருப்பக்கூடிய ஹேதுவுக்கு இடம் தரவேண்டாமென்றே அத்வைத சாஸ்த்ரங்களில் ஈச்வர க்ருபையாலேயே ஸித்தி என்று வெளிப்படச் சொல்லவில்லை என்று வைத்துக்கொள்ளலாம். 'நாம் சொல்லாததாலும், ஸாதகன் இதைத் தெரிந்து கொள்ளாததாலும் அந்த க்ருபாமூர்த்தி தன்னுடைய க்ருபையை நிறுத்தி வைத்தக்கொள்ளப் போவிதல்லை. ஆனால் நாம் ஈச்வரனைப் பற்றிச் சொல்வதால், எத்தனையோ ப்ரயாஸைப்பட்டு அத்வைதத்துக்கு தன்னைப் பக்வப்படுத்திக் கொண்டுள்ள இந்த ஜீவன் மறுபடி த்வைதமாக ஈச்வர பக்தி என்று போக நேரலாம். த்வைதமாக அவனிம் பக்தி பண்ணுவதைவிட அத்வைதமாக அவனிலேயே ஐக்யமாகவதுதான் லக்ஷ்யம். அந்த ஈச்வரனே அதைத்தான் விரும்புவான். அதனால் சொல்லவேண்டாம்' என்று (அத்வைத க்ரந்த கர்த்தர்கள்) விட்டுவிட்டதாக வைத்துக்கொள்ளலாம்.

"ஐயையோ!ஈச்வர பக்தியை விட்டுவிட்டு ஒரு ஞானமா? அப்படியானால் அது மோக்ஷமேயில்லை, மோஹந்தான் அதிலே கொண்டு போய் அவன் என்னைத் தள்ளுகிறானே!" என்று ஒரு பெரியவர் அலறிக்கொண்டு செய்ததாக ஒரு ச்லோகமே இருக்கிறது. அவர் மாதிரி ஆகாமல், ஈச்வர பக்தியை மட்டும் விட்டு, ஈச்வரனை விடாமல் அவனுடைய உள் ஸ்வரூபமான அரூபத்தைப் பிடித்துக்கொண்டு அதிலே கரையவிட வேண்டுமென்றுதான், த்வைதமாக இருக்கிற வெளி ஸ்வரூபத்தை உச்ச லெவலிலே சொல்லவேண்டாமென்று (அத்வைத க்ரந்த கர்த்தர்கள்) விட்டிருக்க வேண்டும்.

முதலிலே த்வைத மயமான கர்மாநுஷ்டானத்தையும், த்வைதமாகவே ஈச்வரனை உபாஸிப்பதையும் அத்வைத சாஸ்த்ரத்தில் நன்றாக விதித்துத்தான் இருக்கிறது. அது

மனஸை ஒருமுகப் படுத்துவதற்காகப் பயில்விக்கிற லெவலில். அங்கே த்வைதம் இருக்கலாம், இருக்க வேண்டியதே. இல்லாவிட்டால் (ஸாதகனுக்கு) ஒன்றும் புரியாமல் நாலாதிசையும் மனஸ் ஓடும், அல்லது எங்கேயோ வெறிச்சென்று விட்டாற்போல சூன்யமாக இருக்கும். ஆனாலும், அப்புறம் அவன் ச்ரவண, மனனங்கள் செய்து, த்யானத்தில் தீவ்ரமான நிதித்யாஸனத்துக்குப் போய்விடும் போது த்வைதத்தைச் சொல்லி, ஆத்மாவில் ஒருமுகப்பட ஆரம்பித்திருக்கிற சித்தத்தைக் கலையும்படிப் பண்ணக்கூடாதல்லவா?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ப்ரஹ்மம் - ஆத்மா - ஈச்வரன்**

ஸத்ய தத்வத்தை மறைத்து த்வைதக் காட்சிகளையும் அநுபவங்களையும் உண்டாக்கும் சக்தியைத்தான் மாயை என்பது. அந்த ஸத்யமான ஆத்ம தத்வத்துக்கு அந்ய வஸ்துவே கிடையாதாதலால் இந்தக் காட்சிகள், அநுபவங்கள் ஆகியவையும் அதனுடைய வேஷங்கள்தான். ஸத்ய தத்வத்தை மறைப்பதை ஆவரணம் என்றும், அந்த ஒன்றையே பல வேஷங்களில் காண்பிப்பதை விக்ஷேபம் என்றும் சொல்வார்கள். மாயைக்கு ஆவரண - விக்ஷேப சக்திகள் இருக்கின்றன என்று சொல்வார்கள். இப்படி மாயையால் வேஷங்கள் போடுபவன்தான் ஈச்வரன். அதாவது ப்ரஹ்மமே மாயையோடு கூடி ஈச்வரனாகி த்வைதங்கள் நிறைந்த ஜகத்தைத் தன்னிலேயே தோற்றுவித்துக் கூத்தடிக்கிறது.

அதென்ன ப்ரஹ்மம் என்றால் அது ஆத்மாதான். சின்ன ஜீவனுக்கு மூலம் என்ன என்று பார்க்கும்போது ஆத்மா என்று சொல்கிறோம். பெரிய ஜகத்துக்கு மூலம் என்ன என்று பார்க்கும்போது ப்ரஹ்மம் என்கிறோம். ஜீவ மூலமும் ஜகத் மூலமும் ஒன்றுதான். ஒன்றிலிருந்தேதான் ஜீவ - ஜகத்துக்கள்

தோன்றியிருப்பது. ஜீவ மூலமான ஆத்மாவுக்கு அந்யமாக எதுவுமில்லை என்று சொன்னபின் ப்ரஹ்மம் மட்டும் அதற்கு வேறாக இருக்கமுடியுமா? ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றேதான். ஆனாலும் அந்த ஒரே ஸத்ய வஸ்துவை ஜீவனை மட்டும் குறித்ததாகச் சொல்லும்போது ஆத்மா என்றும், எத்தனையோ லக்ஷக்கணக்கான ஜீவராசிகளும் கோடாநு கோடி வஸ்துக்கள் கொண்டதான ஜட ப்ரபஞ்சமும் அடங்கிய ஜகத்தைக் குறித்ததாகச் சொல்லும் போது ப்ரஹ்மம் என்றும் சொல்வதாயிருக்கிறது.

## ஜீவன் ஈச்வரனிடமிருந்தே

ஆத்மா மாயையோடு கூடி ஈச்வரனாயிருக்கிறது. ஆத்மாவே மாயையால் ஜீவதசையை அடைந்திருக்கிறது என்பதில் அத்வைதிகளுக்கு ஒரே அபிப்ராயம்தான். ஜீவர்களுக்கு மேலேஇருந்துகொண்டு ஈச்வரன் ஜகத்தை ஆட்டிப் படைப்பதையும் எல்லா அத்வைதிகளும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் ஜீவன் ஈச்வரனிலிருந்துதான் தோன்றின, ஜீவத்தோற்றத்தை ஈச்வரன்தான் ஏற்படுத்துகிறான் என்று அவர்களில் எல்லோரும் தீர்மானமாக சொல்வதில்லை. அதாவது ப்ரஹ்மம் முதலில் மாயையோடு கூடி ஈச்வரனாகி, அப்புறம் அந்த ஈச்வரன் ஜீவனை உண்டாக்குகிறான் என்று சொல்லாமல், 'ஆத்மாவே மாயையால் ஜீவனாயிருக்கிறது, ஈச்வரனுமாயிருக்கிறது' என்று மட்டும் சொல்லி விட்டுவிடுவதும் உண்டு.

ஆனால் பகவான் கீதையில் புருஷோத்தம யோகத்தில் ஸ்பஷ்டமாகவே இப்படிச் சொல்லியிருக்கிறார். புருஷோத்தமன் என்று தன்னையேதான் காட்டிச் சொல்கிறார். புருஷோத்தமன் யாரென்றால் அவன்தான் ஈச்வரன், பரமாத்மா எனப்படுபவன், அதாவது த்ரிலோகத்துக்குள்ளும் புகுந்து அதைத் தாங்கிக் கொண்டிருப்பவன் என்று சொல்லியிருக்கிறார். ஆசார்ய பாஷ்யத்தில் இங்கே நிர்குண ப்ரஹ்மத்தைச் சொல்லாமல் புருஷோத்தமன்தான் நாராயணன் என்று பெயர் பெற்றவன் என்றே ஸகுணமாகச் சொல்லியிருக்கிறது. இப்படிப்பட்ட ஈச்வரனாக இருந்து கொண்டு பகவான் என்ன சொல்கிறாரென்றால்

மமைவாம்சோ ஜீவ லோகே ஜீவ பூத : ஸநாதந : 1

மந : ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி 11 (15.7)

"நித்யனான என்னுடைய அம்சமே ஜீவ லோகத்தில் ஜீவனாகத் தோன்றி, ப்ரக்ருதியிலே இருப்பு கொண்ட மனஸையும் பஞ்சேந்த்ரியங்களையும் தனதாக இழுத்து வைத்துக்கொண்டிருக்கிறது" என்கிறார்.

(இங்கே ஐந்து இந்த்ரியங்களோட மனஸையும் ஒரு இந்த்ரியமாகவே சேர்த்து ஆறு இந்த்ரியங்கள் - 'ஷஷ்டானி இந்த்ரியாணி' - என்கிறார். இப்படிச் சொல்லும் வழக்கமும் உண்டு. ஆசார்யாள்கூட "ஷட்பதீ" என்று ஸ்தோத்ரத்தில் இந்த அபிப்ராயத்தை வெளியிட்டுக் கொஞ்சம் வார்த்தை விளையாட்டு பண்ணியிருக்கிறார்.)

ஆகக்கூடி ஈச்வரனேதான் தன்னுடைய லவலேச அம்சத்தினால் ஜீவனாகி இருக்கிறான். ஜீவன் அவனிடமிருந்துதான் வந்திருக்கிறான். ப்ரக்ருதி என்கிறது மாயைதான். மாயையைத் தனக்கு விஷயமாகக் கொண்ட மனஸானது இந்த ஈச்வராம்சத்தினால் இழுத்து வைத்துக்கொள்ளப்படுகிறது என்றால் என்ன அர்த்தம்? வேறு என்ன அர்த்தம்? - அந்த ஈச்வரனேதான் இப்படி ஒரு மனஸை ஜீவனுக்குக் கொடுத்து அது மாயையிலே ப்ரவ்ருத்திக்க வேண்டுமென்று வைத்திருக்கிறானென்றே அர்த்தம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**விடுவிப்பு ஈசனாலேயே**

இதனாலேயே, இதிலிருந்து விடுவிக்கக் கூடியவனும் அவன்தான் என்று தெரிகிறது. இவன்தான் இழுத்துச் சேர்த்து வைத்தவன் என்றால், பிடுங்கிப் போடக்கூடியவனும் இவன்தானே?

மாய ப்ரக்ருதியில் ஒரு மநுஷ்யன் எப்படிப்பட்ட தன்மைகள்

கொண்ட ஜீவனாக ஆக்கப்படுகிறானோ அதை அந்த ஜீவனுடைய ப்ரக்ருதி என்றே சொல்வார்கள். ப்ரக்ருதி என்றால் இங்கே இயற்கை, இயற்கையன்னை என்பதெல்லாமும் ப்ரக்ருதிதான். எல்லாம் மாயை செய்த ஸ்ருஷ்டிதானே?

## மாயையை அடக்குவது ஈசனே

இங்கே இன்னொன்றுகூட சொல்லத் தோன்றுகிறது. ப்ரக்ருதியில் ஜீவனை ப்ரவ்ருத்திக்க விட்டவன் எவனோ அந்த ஈச்வரனின் க்ருபையிருந்தால்தான் அதிலிருந்து 'ரிலீஸ்' ஆகி மோக்ஷமடையலாம் என்பது ஸம்பந்தமான விஷயம்தான்.

ஆரம்பத்திலேயே சொன்னேன். "ஞானவானாகயிருந்தால்கூட ப்ரக்ருதியை எப்படி நிக்ரஹம் பண்ண முடியும்? என்று பகவானே கேட்டார் என்று. ஆனால் ப்ரக்ருதி என்கிற மாயை அடங்கினால்தான் மோக்ஷம். ப்ருக்ருதி என்ற மாயை உற்பத்தி செய்த சரக்குதான் மனஸ். மனஸ் அடங்கினபின் ஜீவன் மோக்ஷம் பெறுகிறான் என்று இத்தனை நேரம் சொன்னேனே தவிர மாயை அடங்குவதைப் பற்றிச் சொல்லவில்லை. அத்வைத சாஸ்த்ரங்களிலும் மனஸை அடக்கச் சொல்லித்தான் ஸாதகனுக்கு உபதேசமேயொழிய "மாயையை அடக்கு" என்று சொல்வதில்லை.

ஏன்? ஏனென்றால் அது இவனுக்கு மேற்பட்ட மஹாசக்தி. இவனையே உண்டாக்கிய சக்தி அது. ஆகையால் இவன் அதை அடக்கமுடியாது. அதன் வசப்படாமல் தன் மனஸை இழுக்க ப்ரயத்னப்படுவதுதான் இவனால் முடிந்தது. இந்த ப்ரயத்னத்தையும் ஸபலமாக்குவது (பலிதமாக்கித் தருவது) ஈச்வர க்ருபைதான். ஜீவனுடைய மனஸ் அடங்கின பின் மாயாசக்தி மறுபடி மனஸை முளைக்கப் பண்ணாமலிருக்க வேண்டுமே மனஸேயில்லாமலிருந்த ஆத்மாவில்தானே முதலில் மாயையை இருப்பாகக் கொண்ட மனஸை ஈச்வரன் இழுத்து வைத்து ஜீவபாவம் உண்டாயிற்று? இப்போதும் ஜீவன் மனஸை அற்றுப்போகப் பண்ணி ஆத்மாவாகிறபோது அப்படி இவன் மறுபடி மாயா ஸம்ஸாரத்தில் விழும்படியாக அந்த ஈச்வரன் பண்ணலாமோ, இல்லையோ? அப்படி நடக்காமல் பலபேர் அத்வைத ஸாக்ஷாத்காரம் பெற்றிருக்கிறார்களென்பதால், ஈச்வரனேதான் மாயா சக்தியை

அடக்கி, ஜீவனுக்கு ஆத்ம ஸித்தி லபிக்கச் செய்கிறானென்று தெரிகிறது.

அபூர்வமாகவே இருந்தாலும், இப்படி அபூர்வமாகவும் பலபேர் மநோ நிக்ரஹம் செய்து ஞானியாகி, அப்புறம் ஸதா ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருக்கிறார்களென்றால், ஈச்வரன்தான் அப்படிப் பரம க்ருபையினால் இவர்களை நிலைத்திருக்கும்படியாக விட்டிருக்கினானென்று அர்த்தம். ஞானியாலேயும் அடக்க முடியாது என்று அவனே சொன்ன ப்ரக்ருதியை அவனொருத்தன்தான் அடக்க முடியும். அப்படி அவன் அடக்குகிற பரம க்ருபையால்தான் எவருக்கும் மோக்ஷஸித்தி என்பது ஸாத்யமாகிறது.

ஜீவன் ஈச்வரனிலிருந்து தோன்றினவனா என்ற விஷயத்தில் இருந்தோம். கீதையில் அப்படித்தான் இருக்கிறது என்று காட்டினேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## ஜீவ - ஈச்வர வித்யாஸம்

ஜீவனானவன் மாயையின் ஆவரண சக்தி, விக்ஷேப சக்தி இரண்டுக்கும் ஆளானவன். ஆத்மா இன்னதென்று இவன் தெரிந்துகொள்ள முடியாதபடி ஆவரண சக்தி மறைக்கிறது. த்வைத ப்ரபஞ்ச வ்யாபாரத்திலேயே இவனுடைய மனஸுக்கும் இந்த்ரியங்களுக்கும் விஷயம் இருப்பதால் விக்ஷேப சக்தியும் இவனை நன்றாக ஆட்கொண்டிருக்கிறது.

ஈச்வரன் விஷயம் இப்படியில்லை. அவன் எப்படியிருக்கிறான்? மாயையோடு கூடின ஆத்மா அல்லது ப்ரஹ்மம்தான் ஈச்வரன். மாயை ஸம்பந்தப்படாத நிலையைத்தான் ஆத்மா அல்லது ப்ரஹ்மம் என்றே குறிப்பாகச் சொல்வது, ஸம்பந்தப் பட்ட நிலையில் அது தன்னைக் காட்டிக்கொண்டவுடனே அதை ஈச்வரன் என்று சொல்ல ஆரம்பித்துவிடுகிறோம். எதனோடும்

ஸம்பந்தப்படாத ஆத்மாவை எப்படி மாயையோடு ஸம்பந்தப்பட்டதாகச் சொல்லலாமென்றால், இதுவும் அதன் மாயைதான்!

ஈச்வரன் மாயா ஸம்பந்தமுள்ளவனானாலும் ஜீவனுக்கும் அவனுக்கும் ரொம்ப வித்யாஸமுண்டு. ஜீவன் மாயைக்குக் கீழ்ப்பட்ட சக்தி, ரொம்பவும் கீழ்ப்பட்ட சக்தி. அதன் ஆதிக்கத்தில் இருப்பவன். இவனுடைய ஜீவத்வத்தை உண்டாக்கியிருப்பதே மாயைதான். ஆத்மாவை, ப்ரஹ்மத்தை ஈச்வரன் என்று வேறுபோல் ஆக்கியிருப்பதும் மாயைதானென்றாலும், இது அவனே செய்துகொண்ட விளையாட்டுதான். மாயையை அவன் அடக்குவான். மாயை அவனுக்கு அதீனமானது. அவன்மேல் அது ஆதிக்கம் செலுத்தவே முடியாது. ப்ரஹ்மத்தினிடத்தில், அதைக் கொண்டே மாயா சக்தியால் ஜகத் தோற்றத்தை அவன் கல்பித்து அதன் வ்யாபாரத்தை நடத்துகிறானென்ற அளவில் அவனை மாயையின் விக்ஷேப சக்திக்குப் பாத்ரனாக மட்டும் அத்வைத சாஸ்த்ரங்கள் சொல்லும், ஆனாலும் ப்ரஹ்மத்தை அவனிடமிருந்து மாயையாலும் மறைக்க முடியாததால் அதன் ஆவரண சக்திக்கு அவன் கொஞ்சமும் ஆளாவதில்லை என்று அவனிடமிருந்து மறைக்க முடியாது என்பதற்கு அர்த்தம், அவன் எப்போதும் உள்ளுக்குள்ளே ப்ரஹ்மமாகவே இருக்கிறான் என்பதாகும் வெளியிலே இத்தனைக் கூத்து இருந்தாலும் அவனது ஆத்ம ஞான நிலை கொஞ்சங் கூட பாதிக்கப்படுவதில்லை.

## த்வைதத்திலிருந்து அத்வைதத்துக்கு

இப்படி அவன் த்வைத - அத்வைதங்கள் இரண்டிலும் இருப்பதால்தான், மனஸிடம் ஸம்பந்தமே படிமுடியாமல் ஒரே அத்வைதமாக உள்ள ஆத்மாவுக்கும், ஆத்மாவிடம் ஸம்பந்தப்படவே முடியாமல் ஒரே த்வைதமாக உள்ள ஜீவ மனஸுக்கும் பாலமாக இருக்க முடிகிறது. தன் விஷயத்தில் ஆத்மாவை மாயை மறைக்க முடியாமல் வைத்துக் கொண்டு, அதே ஸமயம் மாய ப்ரபஞ்சத்தையும் ஆண்டு கொண்டிருக்கிற அவன் ப்ரபஞ்சத்திலுள்ள ஜீவனிடமும் ஸம்பந்தம் வைத்துக்கொண்டு, மறைவில்லாத வெட்டவெளியான ஆத்மாவையும் அநுபவித்துக் கொண்டிருக்கிறான். இப்படி இரண்டிலும்

ஸம்பந்தப்பட்டிருப்பதால் அவன்தான் அந்த வெட்டவெளிக்குக் கொண்டு சேர்க்கக் கூடிய பாலமாக இருக்கிறான். அவன் இப்படி இரண்டுமாக இருப்பது நமக்குப்புரியாது. புரியாத புதிராகவேதான் கொஞ்சங் கொஞ்சமாக த்வைத மனஸையும் அத்வைத ஆத்மாவிலே கரைத்து ஜீவனை அதுவாகவே ஆக்கிவிடுகிறான்.

இதைக் கொஞ்சம் புரியவைப்பதற்கு ஒரு த்ருஷ்டாந்தம் வேண்டுமானால் சொல்லிப் பார்க்கலாமென்று தோன்றுகிறது. ஒரு இரும்புக் குண்டு இருக்கிறது. அதை வாயுவிலே கரைப்பது என்றால் எப்படி முடியும்? அதுவாகக் கரைய முடியாது. பெரிசாக (furnace) ஊது உலையில் இரண்டாயிரம், மூவாயிரம் டிகிரிக்கு நெருப்பை உண்டாக்குகிறார்கள். அந்த நெருப்பும் வாயுதான். என்னவோ ஒரு gas என்கிறார்கள். அந்த எரிவாயுதான் இப்படி நெருப்பாக எரிவது. வாயு என்றாலும் கண்ணுக்கு தெரியாமலில்லை. பெரிய ஜ்வாலையாக, கண்ணையே பறிக்கிற மாதிரித் தெரிகிறது. இப்படிப்பட்ட ஜ்வாலையில் காய்ச்சினால், அத்தனை கெட்டியாக இருந்த இரும்புக் குண்டும் இளகி த்ரவமாகி, அப்புறம் அந்த த்ரவமும் வாயுவாகி மறைந்து போய்விடுகிறது.

இப்படித்தான் மாயையில் போட்டு நன்கு கிட்டித்த அந்தஃகரணமும் குண்டு மாதிரி கிண்டாக ஆத்மாகாசத்தில் 'ஆத்மா என்ற வாயுவெளியில்' என்று வைத்துக்கொள்வோம், அதில்-கரைய முடியாமல் தனக்குத்தனியான ஜீவபாவத்தைக் கற்பித்துக்கொண்டு கிடக்கிறது. வாயுவாக இருந்துகொண்டிருந்தாலும் ஜ்யோதிஸ் என்று ரூபத்தோடு கூட இரும்பைத் தொட்டு, அதற்குள்ளே தன் சக்தியை செலுத்தி உருக்குகிற ஜ்வாலை மாதிரி ஈச்வரன் இருக்கிறான் ஆத்மாவைப்போல இல்லாமல் இவன் ஜீவனோடு ஸம்பந்தப்பட முடியும். அவனுடைய மனஸை உருக்கி இளக்க முடியும். அப்புறம் வாயு மாதிரிப் பரவிப் பறக்கவைக்கமுடியும். ரூபமற்ற வாயு போன்ற தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்திலேயே இந்த மனஸூம் இரண்டறச் சேர்ந்து மறையும் படியாகவும் பண்ணமுடியும்.

## அத்வைதம்

## இடை நிலைகள்

கெட்டியான த்ருட பதார்த்தமான இரும்பு த்ரவமாக இளகி உருகி, வாயுவாக ரூபத்தை இழப்பதற்கிடையே த்ருடமுமில்லாமல் வாயுவுமில்லாமல் எத்தனையோ நிலைகள் உண்டு. இப்படியே நம்முடைய த்வைத புத்திக்கு வராததாகவும், ஆனால் அத்வைத ஸ்திதியிலும் சேராததாகவும் ஜீவனுக்கு எத்தனையோ (இடை) நிலைகளை ஈச்வரன் கொடுக்கிறான். இவற்றைப்பற்றி நாம் "எப்படி முடியும்?" என்று கேள்வி கேட்டுக்கொண்டேயிருக்க வேண்டியதுதான். 'ஆன்ஸர்' அந்த நிலைகளுக்கு நாமே போனால்தான் தெரியும் ஆனால் அப்படித் தெரிந்து கொண்டதை நாம் மற்றவர்களுக்குச் சொல்ல முடியாது ஏனென்றால் தெரிந்து கொண்டது இந்த லோகத்தின் த்வைதத்துக்கு மேலே போய்க் கொண்டிருக்கிறபோது அதைத் தெரிவிக்க வேண்டியதோ இந்த த்வைத லோகத்தின் நிலைக்கு வந்தபோது அந்த அநுபவ நிலைகளுக்கு போனால்தான் அது தெரியும். அறிவால், வார்த்தையால் விளக்கி வைக்க முடியாது. தித்திப்பு முதலான ருசிகளையோ, சிவப்பு முதலான கலர்களையோ வார்த்தையில் புத்தியால் கொண்டுவர முடியுமா? ஏதோ கோடி காட்டலாம். அவ்வளவுதான் த்வைதத்துக்கு மேற்பட்டவை அநுபவபூர்வமாகத் தெரிந்தபின், மற்ற ஜீவர்களுள்ள த்வைத லோகத்துக்கு வருவோமா என்பதே ஸந்தேஹம். ஆனால் எத்தனையோ ஞானிகளை அவன் லோகத்திலே வைத்து உபதேசம், அநுக்ரஹம் பண்ணும்படியும் செய்திருக்கிறானே அவர்களும் இதை ஏன் சொல்லவில்லை என்றால், ஊட்டியில் அநுபவித்த குளிரை மெட்றாஸில் 110 டிகிரி வெயில் அடிக்கும்போது சொல்லுங்கள் என்றால் எப்படி முடியும்? அந்த மாதிரி உச்சமான அநுபவ நிலையில் கண்டதை கீழான இன்னொன்றில் கொண்டு வர முடிவதில்லை.

த்ரவமாக இளகுகிறது, உருகுகிறது, அப்புறம் வாயுவாகப்

பறக்கிறது, பரவுகிறது என்றால் கெட்டியாய் இருந்தது மேலும் மேலும் ம்ருதுவாக, லேசாக ஆகிக் கொண்டே போகிறது என்று அர்த்தம். அப்புறம் ரொம்ப லேசான போது ரூபமே இல்லாமல் மறைந்துபோய்விடுகிறது. கெட்டியாக "நான்" கொண்டாடிக் கொள்ளும் அஹம்பாவ மனஸ் இப்படித்தான் நிறைய ஸாதனை பண்ணி ஈச்வர க்ருபையைப் பெற்றபின் மேலும் மேலும் ம்ருதுவாகவும் லேசாகவும் ஆகிறது. கெட்டி நிலையில் சைதன்ய ரச்மி ஏதோ துளிதான் ஜீவ மனஸில் ப்ரதிபலிக்கிறது. அது குழைந்து ம்ருதுவாகி இளகினால், த்ரவ பதார்த்தத்துக்குள் ஸூர்ய பிம்பம் நன்றாக ப்ரதிபிம்பிப்பது போல் சைதன்ய ஒரி நன்றாக உள்ளே புகுந்து நிரப்புகிறது. ஆனால் பிம்பம் வேறே, ப்ரதிபிம்பம் வேறேதான். த்ரவமும் அதற்கப்புறம் ரொம்ப லேசாகி வாயுவாகிறபோதுதான் ஒளி மண்டலத்தில் ரூபமே தெரியாமல் ஒன்றாகிவிடுகிறது. இதுமாதிரி பக்தி லயம், யோக லயம் முதலான இடைநிலைகளில் ஈச்வர குணங்கள், சக்தி இவற்றிலே ஜீவன் நன்றாக ஊறி, அப்புறம் ஞான ப்ராப்தியில் நிர்குணமாய் சாந்தமாய் இருக்கிற அவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தில் வித்யாஸிமல்லாமல் ஒன்றாகி விடுகிறான். (ஆத்ம 'ஸ்வரூபம்" என்றாலும் அது 'அரூபம்'தான்!)

த்வைதத்துக்கும் அத்வைதத்துக்கும் நடுவே பாலத்தில் போகிறபோது ஜீவமனஸின் கெட்டிரூபம் கொங்சம் கொஞ்சமாக லேசானதாக மாறிக்கொண்டே வருகிறது.

த்ருட வஸ்து மாதிரி இல்லாமல் த்ரவ வஸ்து பரவும் தன்மையுள்ளதாக இருக்கிறது. வாயு பதார்த்தங்களோ த்ரவங்களை விடவும் வேகமாகத் தொலை தூரங்களுக்கும் பரவிவிடுகின்றன. இரும்பு குண்டு த்ரவமாகவும், வாயுவாகவும் ஆகிறபோது அந்த குண்டுதானா இது என்று ஆச்சர்யப்படும்படியாக ரூபம் மாறுகிறது, அரூபமாகத் தேய்கிறது. இம்மாதிரி ஜீவ மனஸ் உருகி உருகிப் பரவப் பரவ, அதாவது கெட்டிப்பட்டுக் குறுகியிருந்த தன் தன்மை போய் மேலும் மேலும் விஸ்தாரமாகிறபோது அந்தப் பழைய மனஸ்தானா இது என்னும்படியாக மாறிக்கொண்டே போகிறது. த்வைதத்தில் ஒரயேடியாகக் கட்டுபட்டிருந்தது போய் அத்வைதத்தை நோக்கி விஸ்தரிப்புப் பெற்றுப் பரவுகிறது. இதனால்தான் ஸாதாரணமாக ஜீவமனஸுக்கு ஏற்பட முடியாத அதீந்த்ரிய சக்திகள் அதற்கு

உண்டாகின்றன. அதீந்த்ரிய அநுபவங்கள் அதற்கு ஏற்படுகின்றன. எங்கேயோ நடப்பது தெரிகிறது, எவர் மனஸிலோ இருப்பது தெரிகிறது, எந்தக் காலத்திலோ நடந்ததும் நடக்கப் போவதும் தெரிகிறது. இதற்கு என்ன அர்த்தம்? ஒரே த்வைதத்திலிருந்த நிலைமை மாறி த்வைத - அத்வைதமான ஈச்வரனில் கொஞ்சங் காலமாக ஊறி அவனுடைய தன்மைகளை இது எடுத்துக் கொள்கிறது. என்ற அர்த்தம். அவன் ஒன்றிலே குறுகி இராமல் எல்லா இடத்திலும், எல்லார் உள்ளத்திலும் எல்லாக் காலத்திலும் இருக்கிற ஸர்வ வ்யாபி அல்லவா? அத்தனையிலும் இருக்கிற ஒருவன் என்பதால் அத்வைதம். 'அத்தனையிலும் என்று பலவற்றைக் குறிப்பிடும்படி இருப்பதால் த்வைதம். "ஏகமேவ அத் விதியம்" என்று ஒன்றேயான அத்வைதப் பொருளாயில்லாமல், பலவற்றினுள்ளே இருக்கிற ஒன்றான தத்வம் இது. ஜீவன் முழு த்வைதத்திலிருந்து, இப்படி இரண்டுமாயுள்ள ஈச்வரனில் தோய்ந்து, கெட்டி மனஸ் மாறி, விஸ்தாரமாகி மேலும் மேலும் அத்வைதத்தை நோக்கி உயர்ந்த அநுபவ நிலைகளைப் பெறுகிறான். அப்புறம்தான் வாயுவில் இரண்டறக் கரைக்க முடியாமலிருந்த இரும்புக் குண்டைக் கடைசியில் வாயுவாகவே ஆக்கிவிடுவதுபோல ஈச்வரன் தன் உள்நிலையான பரிபூர்ண அத்வைத ஸ்திதியில் ஜீவனை அபேதமாகக் கரைத்து கொண்டுவிடுவது.

ஒரே த்வைதமாக இப்போது நாமிருக்கிற நிலையும், ஒரே அத்வதைமாக ப்ரஹ்மம் இருக்கிற நிலையும் ஸந்தித்துக் கொள்ளவே முடியாது என்று நமக்குத் தோன்றினாலும், நடுவே த்வைதம் நீர்த்து நீர்த்து அத்வைதம் இறுகிவருகிற உபாஸனா நிலைகளும் ஒரு கட்டத்துக்கு அப்புறம் வருகின்றன. 'அத்வைதமாக ஆவதற்கு முற்பட்ட எல்லாமே உபாஸிக்கிறவன், உபாஸனா லக்ஷ்யம் என்ற த்வைதமுள்ளதுதான், அவையெல்லாம் உபாஸனை என்பதோடு ஸரி, ஞானமாகாது - அத்வைதந்தான் ஞானம்' என்று சொல்லும் ஆசார்யாளே இந்த உபாஸனைகளிலும் ஒன்றுக்குமேல் ஒன்றாக அத்வைதத்துக்குத் தூக்கி விடுகிறவைகள் இருக்கின்றன என்று சொல்லியிருக்கிறார். அநேகவிதமான உபாஸனைகளைச் சொல்லும் சாந்தோக்யோபநிஷத்துக்கு "ஸம்பந்தபாஷ்யம்"

என்பதாகச் செய்துள்ள உபோத்காதத்தில் (முன்னுரையில்),

"இந்த உபநிஷத்தில் 'அப்யுதயம்' என்பதாக லௌகிகமான உயர்ந்த பலன்களைத் தரும் கர்ம ஸம்பந்தமான உபாஸனைகள், கைவல்ய மோக்ஷத்துக்குக் கிட்டே சேர்ப்பதான பலன்களைத் தரும் உபாஸனைக்ள ("கைவல்ய ஸந்நிக்ருஷ்டபலாநி"), அத்வதைதத்திலிருந்து துளி மட்டுமே மாறுபட்டு ப்ரஹ்மத்தைக் குறித்ததான உபாஸனைகள் ("அத்வைதாத் ஈஷத்விக்ருத ப்ரஹ்ம விஷயாநி") என்று பலவிதமானவற்றைச் சொல்லியிருக்கிறது" என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். இது விஷயத்தை நன்றாகத் தெளிவுபடுத்துகிறது. அதாவது, அத்வைத ஞானமாக இல்லாமல் உபாஸனையாயிருப்பதிலேயே அதற்குக் கொண்டு விடுபவையாகப் பல இருக்கின்றன என்கிறார்.

ஆனாலும் "நிதித்யாஸனம் என்பதாகத் தீவிர ஆத்ம விசாரம் பண்ணும்போது ஈச்வரன் ஜீவ மனஸை எடுத்துக் கொண்டு மாற்றி ஆத்மாவில் சேர்க்கிறான்" என்று ஸ்பஷ்டமாக அத்வைத நூல்களில் சொல்லத்தானில்லை. ஆத்ம விசாரம் பண்ணிக்கொண்டே போனால் தானாக ஒரு கட்டத்திலே அந்த விசாரமும் நின்றுபோய் ஸ்வயம் ப்ரகாசமான ஆத்மா தானாகவே பளிச்சிட்டுவிடும் என்கிற ரீதியில்தான் சொல்லியிருக்கிறது. ஜீவனும் ப்ரஹ்மமும் அபேதம் என்பதை சொல்வதான உபநிஷத் மஹா வாக்யங்களை குருமுகமாக உபதேசம் பெற்று அதையே சிந்தனை பண்ணிப் பண்ணி நன்றாக உறுதிப் படுத்திக்கொண்டு, உறுதிப் படுத்திக்கொண்டதை உள்ளுக்குள்ளே நன்றாக இறக்கிவிடுகின்ற த்யானமாக நிதித்யாஸனம் செய்து கொண்டே போனால், 'டாண்' என்று ஒரு நாள் ப்ரஹ்ம ஞானம் பிறந்துவிடும் என்று சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அதிகாரிகளையொட்டி உபதேச மாறுபாடு

இந்த நாளில் எல்லாருக்கும் எல்லாவற்றையும் சொல்கிறது

போல அப்போது பண்ண மாட்டார்கள். பாத்ரமறிந்து, யோக்யதை பார்த்து, அதிகாரம் உள்ளவருக்கே சொல்வார்கள். ஸரியாக்ப் புரிந்து கொள்ள முடியாதவர்கள், புரிந்துகொண்டாலும் அதை முறையாகப் பாடுபட்டு அநுஷ்டானத்தக்குக் கொண்டவர முடியாதவர்கள், தப்பாகப் புரிந்துகொண்டதை அநுஷ்டானம் செய்து விபரீதத்தை உண்டாக்கி கொள்ளக்கூடியவர்கள் - என்றிப்படியெல்லாம் இருக்கக்கூடிய சராசரி ஜன ஸமூஹம் முழுதற்கும் ஒரு பெரிய தத்வத்தை - நிரம்பவும் அப்யாஸ, வைராக்ய ஸாதனை தேவைப்படும் ஸித்தாந்தத்தை- சொல்ல மாட்டார்கள். 'ப்ரின்டிங் ப்ரெஸ்' வராததால் ரொம்பக் குறைச்சலாகவே ப்ரதி எடுக்கக் கூடியதாகச் சுவடிகளில் அவர்கள் சாஸ்த்ரமாக எழுதிவைத்தது யார்? யோக்யதையுள்ள பாத்ரர்களாக இருந்தார்களோ, அதவாது 'அதிகாரி'களென்று கருதப்பட்டவர்களாயிருந்தார்களோ அவர்களுக்குத் தான் ப்ரயோஜனப்பட்டன. யார் வேண்டுமானலும் வாங்கி ஒரு பொழுது போக்குக்காக, அல்லது க்யூரியாஸிடிக்காகப் படிக்கிற விதத்தில் பெரிய விஷயங்கள் புஸ்தகங்களில் இறைபடவில்லை.

நானே கூட கூட்டத்தில் பேசும்போது ஜனங்களுக்கு எட்டாத தத்வங்களை இப்போதே எல்லாரும் அப்யஸிக்க வேண்டுமென்கிறாற்போல வற்புறுத்திச் சொல்லிக்கொண்டு போனால் அது தப்புத்தான். ஸதா ஸர்வ காலமும் மாயையிலேயே உழன்று கொண்டிருக்கிற ஸர்வ ஜனங்களும் இந்த மாயைக்கு அப்பாற்பட்டதாக ஆத்மா என்று ஒன்று இருப்பதை தினமும் கொஞ்சம் நினைத்துக் கொள்ளத்தான் வேண்டும். எல்லாரும் அப்படிச் செய்ய வேண்டுமென்பதற்குத்தான் அத்வைதத்தைப் பற்றி உபந்யஸிப்பது. அந்தப் பரம தத்வம் ஒருத்தருக்குக்கூட நஷ்டப்பட்டுப் போகாமல் அதை எல்லாருக்கும் தெரிவிக்கவேண்டிய கடமை ஆசார்யாளுடைய மடத்திலிருக்கிற எங்களுக்கு இருக்கிறது. ஆனாலும் தினமும் கொஞ்சம் அத்வைத நினைப்பு இருக்கணுமென்றுதான் சராசரி ஜனங்களுக்குச் சொல்லணுமே தவிர, இப்போத எல்லாரும் எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஆத்ம விசாரத்தில் உட்காருங்கள் என்று சொல்லக்கூடாது. அது ஸாத்யமில்லாததைச் சொல்வதேயாகும். அதிகாரிகள ாயில்லாதவர்கள் அப்படிச் செய்யப் பார்த்தால் அநேகத்

கஷ்டங்கள், கெடுதல்கள் ஏற்படும். ஆகையால் த்வைதமான கர்மா, பக்திகளையே பொதுமக்களுக்கு அதிகம் சொல்லி, அதில் அவர்கள் நன்றாக இறங்கி அப்யஸிக்கிற அளவுக்கு வற்புறுத்திச் சொல்லி, அத்வைத லக்ஷ்யத்தை நினைவூட்டுவதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும்.

"கார்யத்திலேயே பற்று வைக்கக் கூடியவர்களாயிருக்கிற பாமர ஜனங்களுக்கு கார்யமில்லாத வேதாந்த ஸத்யங்களைச் சொல்லி புத்தியைக் குழப்பக்கூடாது" என்றே கீதையில் பகவான் கட்டளை போட்டிருக்கிறார்.

த்வைதத்துக்கே அதிகாரிகளாகத் தற்போது இருக்கிறவர்களைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பக்வப்படுத்திதான் அத்வைதத்தை ஸாதனையாக அப்யஸிப்பதற்கான விஷயங்களைச் சொல்லவேண்டும். த்வைதமாகவே முதலில் நிறைய ஆரம்பித்து, கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே போய் அப்புறம் அத்வைதத்தை நிறையச் சொல்லவேண்டும்.

த்வைத - அத்வைத அதிகாரிகளைப் பொறுத்தே உபதேசம் வித்யாஸமாயிருக்கவேண்டும். இதில் முக்யமாக, இப்போது நாம் எடுத்துக்கொண்டுள்ள விஷயத்தில், கவனிக்க வேண்டியது என்னவென்றால், 'த்வைத அதிகாரிகளுக்கு ஆரம்பத்திலிருந்தே அத்வைத் லக்ஷ்யம் என்ற ஒன்றைத் துளி சொல்லவேண்டும், அப்புறம் பக்வப்படுத்திக் கொண்டே போய் அத்வைதத்துக்கு அதிகாரியாக்க வேண்டும்' என்பதால் இவர்களுக்கு முழுக்கவும் த்வைத உபதேசத்தோடேயே முடித்துவிடக் கூடாது என்றாகிறது. ஆனால் இவர்கள் அத்வைதத்துக்கு அதிகாரிகளாவதற்குப் பக்வப்பட்ட பிற்பாடோ இவர்களுக்கு த்வைதத்தைப் பற்றிக் கொஞ்சங்கூடச் சொல்லக்கூடாது. அங்கே இங்கே கூட த்வைதத்தில் இவர்களுடைய சித்தம் போகவிடாமல் முழுக்க முழுக்க அத்வைதமாகவே சொல்லிக் கொண்டு போய் அதிலேயேதான் இவர்களை ஆணி அடித்தாற்போல நிறுத்தவேண்டும்.

த்வைதிகள்தான் த்வைதத்துக்கு மேலே அவர்கள் போகவேண்டியதான நிலைகளைப்பற்றிக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்துகொள்ளவேண்டுமே தவிர, அத்வைத ஸாதகர்கள் அவர்கள் விட்டு விட்டு வந்த த்வைத

ஸமாசாரங்களை மறுபடி நினைத்துக்கொள்ள வேண்டியதில்லை. அவற்றை மறக்கத்தான் வேண்டும். அதனாலேதான் அப்படிப்பட்டவர்களுக்கான சாஸ்த்ரங்கள் ஈச்வரன், ஈச்வர க்ருபை உள்பட த்வைதமான, த்வைதாத்வைதமான எதையும் விஸ்தரிப்பதில்லை.

நம்முடைய தேசத்தில் தத்வங்கள் அறிவு மட்டத்தோடு நிற்காமல், அவற்றின் அநுபவத்தைப் பெறுவதற்கான அநுஷ்டானங்களையும் விஸ்தாரமாகக் கொண்ட ஸம்ப்ரதாயங்களாக இருக்கின்றன. இவற்றை அநுஷ்டிக்கக்கூடிய அதிகாரிகளா என்று பார்க்காமல் லெக்சர் பண்ணினால் அது ஸரியேயில்லை. அத்வைத ஸித்தாந்தத்தைப் போல மஹாபாவிகளே கடினமான நீண்ட ஸாதனைக்கப்புறமதான் அநுபவத்துக்குக் கொண்டுவரக் கூடியதான தத்வ சாஸ்த்ரத்தை ஜனநாயக ரீதியில் ப்ரசாரம் செய்வது யுத்தமில்லை.

அத்வைத சாஸ்த்ரங்கள் கர்மாநுஷ்டானம், உபாஸனை ஆகியவற்றில் நன்றாக முன்னேறி, அவற்றையும் விட்டுவிட்டு ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு மஹாவக்ய உபதேசம் பெற்ற ஆத்ம விசாரம் செய்ய ஆஸ்தை உடையவர்களைக் கருதியே முக்யமாக எழுதப்பட்டவை,. முன்னே சொன்னாற் போல, இவர்களை இவர்கள் புத்திபூர்வமாக ஸாதனை செய்யும் வரையில் அத்வைதத்திலேயே ஆணி அடித்தாற் போல நிறைநிறுத்த வேண்டுமென்ற அபிப்ராயத்தில்தான் த்வைதமான ஈச்வர க்ருபையைப் பற்றிப் பளிச்சென்று சொல்லாமல் விட்டது. நிதித்யாஸனத்தில் மேலே மேலே உயர்ந்த நிலைகள் கிட்டி மனோ நாசத்திலேயே முடிந்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுகின்றதென்று சொன்னாலும் இப்படி மேலும் மேலும் உயர் நிலைகளை அடைவிப்பது ஈச்வர க்ருபைதான் என்று சொல்லி, இவனுக்கு வேறான ஒரு ஈச்வரனை அந்த இடத்தில் வலியுறுத்துவதில்லை.

ஈச்வரன் மஹா மாயாவி!அவனன்றி அணுவும் அசையாது என்கிறார்கள். ஆனாலும் அவன் நம் மனஸிலே புகுந்து கொண்டுதான் நம்மை நினைக்கப் பண்ணுகிறான் என்பது கொஞ்சம்கூடப் புரியாத நிலையிலேயே நம்மை வைத்திருக்கிறான். நம் நினைப்பு கன்னாபின்னா என்று

இருப்பதைப் பார்க்கும்போது, 'இது நிச்சயமாக அவன் நினைப்பதாயிருக்க முடியாது, இப்படிப்பட்ட நினைப்புக்கள் அவனுக்கு ப்ரீதியாக இருக்காது' என்று தோன்றுகிறது. நல்ல நினைப்புகளைத் தூண்டிவிடும்படி அவனிடமே ப்ரார்த்திக்கிறோம். காயத்ரிக்கே அதூன் அர்த்தம் ஆனதால், எல்லாம் ஈசன் செயலே என்று சொன்னாலும், அவன் 'நம் செயல்' என்று நாம் ஏதோ செய்து பார்த்து, முட்டி, மோதிக்கொண்டு, அதனாலேயே அறிவு பெறுகிறோமா என்று பரீக்ஷிக்கிற விதத்தில்தான் நமக்குத் தனி மனஸைக் கொடுத்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எல்லாம் அவன் திட்டம், எல்லாம் அவன் செயல் என்றால் அப்புறம் நாம் நம்மைத் திருத்திக் கடைத்தேற்றிக் கொள்வதற்காக ஸாதனை என்று ஒன்று செய்யவேண்டியதே இல்லையே!

நம் தனி மனஸ் தன்னிஷ்டமாக ஒன்றில் போவதற்கு அவன் எவ்வளவு தூரம் இடம் கொடுப்பான்? எப்போது கொஞ்சமும் இடம் கொடுக்காமல் தானே பூராவும் எடுத்துக் கொள்வான்? - (என்று) யாரும் சொல்ல முடியாது. ஆகையினால், ஆத்ம விசாரத்தில் நாம் ப்ரவேசித்து அவனால் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தப்படுகிற மனஸையும் கூட அவன் பூர்ணமாக எடுத்துக் கொள்வதற்கு முன் விளையாட்டுப் பார்க்கக் கூடும். அதாவது அப்போதுகூட ஜீவமனஸ் ஸ்வதந்த்ரமாக நினைத்து முடிவபுண்ண ஈச்வரன் அநுமதிக்கக்கூடும் இம்மாரியான உச்ச கட்டத்திலே ஜீவனானவன், 'த்வைதமான ஈச்வர க்ருபை இத்தனை நன்றாயிருக்கிறதே!அதனால் இதைச் செய்கிற ஈச்வரனிடம் த்வைதமாய் பக்தி பண்ணிக்கொண்டே அதோடு நின்றுவிட்டாலென்ன?' என்று நினைக்கலாமல்லவா? அப்போது இதே ஈச்வரனின் அரூபமான, நிர்குணமான ஸார ஸத்யத்தில் ஜீவன் ஒன்றாவது எப்படி "ஒரு ஜீவன் தானாக இஷ்டப்பட்டுக் கேட்கிறதைக் கொடுப்போம்" என்று ஈச்வரன் கடைசிமட்டும் விளையாட்டுப்பண்ணுவானாகில், இவனுக்கு அத்வைத ஸித்தி எப்படிக் கிடைக்கும்.

## அத்வைதம்

### ஈசன் செய்வதற்கு சாஸ்த்ரம் எதற்கு?

ஈச்வரனே தன் க்ருபை என்று காட்டிக் கொள்ளாமல் இவனை ஸாக்ஷாத்காரத்தில் சேர்த்தாலும் சேர்க்கலாம். இம்மாதிரி ஸித்தி அடைந்தவர்கள் பிற்பாடு சாஸ்த்ரம் செய்தால் அதில் ஈச்வர க்ருபையைக் சொல்வதற்கு இடமில்லை. அல்லது அவன் தன்னையும், தன் க்ருபா விலாஸத்தையும் ஸாதகனுக்கு நன்றாகத் தெரிவித்தாலுங்கூட, அப்போது இவர்கள், 'அவன் நம்மைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆட்கொண்டு மேலே அழைத்துக்கொண்டு போகிறான். அவன் இப்படிப் பண்ணப் பண்ண அந்த அளவுக்கு நாம் புத்தி பூர்வமாக ஸாதனை பண்ணுவதும் போய்விடுகிறது, நம்மை மீறிய சக்தியே மேலே நம்மை ஏதோ பண்ணுவிக்கிறது' என்றும் தெரிந்துகொண்டு விடுவார்கள்.

புத்தி பூர்வமாக ஸாதனை பண்ணுவதற்குத்தான் சாஸ்த்ரத்தில் வழி சொல்லிக்கொடுக்க முடியும். புத்தியை ஈச்வரன் கொஞ்சம் கொஞ்சமாய் எடுத்துக்கொண்டு இவனைக் கருவி மாத்ரமாகக் கொண்டு பண்ணுவிக்க ஆரம்பித்தபின் சாஸ்த்ரம் எப்படி வழி சொல்லித்தர முடியும்? ஸாதகன் பண்ண வேண்டியதற்குத்தான் சாஸ்தரமே தவிர, ஈச்வரன் பண்ண வேண்டியதற்கு இல்லை. அதனாலேதான், "ஜீவன் புத்தி பூர்வமாக நிதித்யாஸனம் பண்ணும்வரை பண்ணட்டும். அப்புறம் அவனை ஈச்வரன் எடுத்துக்கொண்டு, தானே பண்ணவேண்டியதைப் பண்ண விட்டுவிடுவோம். அங்கே போய் நாம் ஒன்றும் ஒரு கோட்பாட்டையும் சொல்லிக்கொண்டு, ஜீவமனஸ் அதிலே போகும்படி இடம் பண்ணித்தர வேண்டாம். ஈச்வரனால் 'ஔவர்பவர்' செய்யப்படக்கூடியவனுக்கு நாம் எதுவும் சொல்லவேண்டாம். 'நிதித்யானம் பண்ணிக்கொண்டே போ, ஸித்தி தானே வந்துவிடும்' என்று சொல்லி, விட்டு விட்டால் போதும்" என்று நினைத்து (அத்வைத) சாஸ்தரங்கைள் கொடுத்திருக்கிறார்கள். மாயைத் திரையை ஈச்வர க்ருபை கிழிக்கிறது என்று வ்யக்தமாகச் சொல்லாமல், நிதித்யாஸனத்தின் தீவ்ரத்திலேயே அது கிழிந்து விடுகிறது

என்கிற மாதிரிச் சொல்லி, முடித்து விட்டிருக்கிறார்கள்.

## கீதையில் வெளிப்படக் கூறிய உண்மை

ஆனாலும் பகவான் இந்த (ஈச்வர க்ருபையால் அத்வைத லக்ஷ்ணம் ஸித்திக்கிறது என்ற) விஷயத்தை நன்றாக வெளிப்படவே (கீதையில்) பல இடங்களில் சொல்லியிருக்கிறார். அவரும் பாத்ரம் பார்க்காமல் உபதேசம் பண்ணவில்லை தான். "தபஸ் இல்லாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும, பணிவிடை செய்யாதவனுக்கும் இந்த கீதா சாஸ்த்ரத்தை சொல்லப்படாது" என்று அவரே அதை முடிக்குமிடத்தில் சொல்லியிருக்கிறார். ஆனால் அவர் சொன்ன கீதை, மற்ற அத்வைத சாஸ்த்ரங்களைப் போல அத்வைத ஸாதனைக்கான 'அட்வான்ஸ்ட் ஸ்டேஜு'க்குப் போனவர்களுக்கு மட்டுமில்லை. பகவத்கீதை பதினெட்டு அத்யாயம் இருப்பதில் முதல் ஆறை கர்ம ஷட்கம் என்றும், நடு ஆறை பக்தி ஷட்கம் என்றும் சொல்ல, கடைசி ஆறைத்தான் ஞான ஷட்கம் என்று சொல்வது. இப்படிச் சொன்னதால் இந்த ஒவ்வொரு மார்க்கத்தை மட்டும் தான் ஒவ்வொரு ஆறு அத்யாயத்திலும் சொல்லியிருப்பதாக அர்த்தமில்லை. புத்திக்குப் பரமாக ஆத்மா என்று ஞானமார்க்கப்படி அவர் சொல்வதுகூட கர்ம ஷட்கத்திலுள்ள (மூன்றாம்) அத்யாயத்தில்தான். ஆனாலும் மேலெழுந் தவாரியாக இப்படி க்ளாஸிஃபை செய்யும்படியாகவே கீதை இருக்கிறது. அத்வைதத்துக்கே என்று ஏற்பட்ட க்ரந்தங்களில் கர்மாவைப் பற்றியும் உபாஸனை (பக்தி)யைப் பற்றியும் இவ்வளவு சொல்லாமல் ரொம்பவும் குறைவாகவே இருக்கும். ஆரம்ப ஸ்டேஜில் அவை அவச்யமானவை என்று சொல்வதற்கு அதிகமாக அவற்றை விஸ்தாரம் செய்து சொல்லியிருக்காது. இப்படியாக, பாத்ரம் பார்த்துத்தான் சொன்னாரென்றாலுங்கூட, பகவான் நேராக ஆத்ம விசாரத்தில் ப்ரவேசிக்கும் கட்டத்தில் இருக்கிறவர்களுக்கு மட்டும் தான் உபேசிப்பது என்றில்லாமல், கர்மா, பக்தி, ஞானம் ஆகியவற்றில் எதுவொன்றாலும் ஆத்மிக வாழ்க்கையின் முதல்படி ஏற விரும்புகிறவர்களிலிருந்து ஆரம்பித்து எல்லோரையுமே உத்தேசித்து கீதோபதேசம் செய்திருக்கிறார். அதனால் இதிலே த்வைதாக பக்தி பண்ணுவதைப் பற்றியும் நிறைய வருகிறது. அத்வைதத்தைப் பற்றியும் அப்படியே வருகிறது. இப்படி இரண்டைப்

பற்றியுமே பகவான் நிறையச் சொல்லிவிட்டதால், "இது என்ன த்வைதத்தையும் (பக்தியையும்) சொல்கிறார்? அத்வைதத்தையும் '(ஞானத்தையும்) சொல்கிறார்? த்வைதத்துக்கு ஆப்போஸிட் அல்லவா அத்வைதம்?" என்று கேள்வி எழக்கூடும். அப்படி எழும்பாமலிருக்கத்தான் இரண்டையும் 'லிங்க்' பண்ணியும் அநேக விஷயங்கள் சொல்கிறார் .அதிலே அத்வைதத்துக்கு என்றே ஏற்பட்ட சாஸ்த்ரங்களில் அதிகம் சொல்லப்படாததான 'ஈச்வரன் ஜீவனை த்வைதத்திலிருந்து அத்வைதத்துக்குத் தூக்கி விடுகிறான்' என்று விஷயத்தையும் அவர் சொல்ல நேர்கிறது. ஸாதகனின் ஸாதனையால் மாயை கிழிபடவில்லை, ஈச்வர க்ருபைதான் கிழிக்கிறது என்பது போன்ற விஷயங்களைத் தெளிவாக வெளியிட்டுச் சொல்கிறார்.

அர்ஜுனன் ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு பூர்ண அத்வைதமாகப் போகக்கூடிய "ஸாங்க்ய" (ஞான) ஸாதகன் இல்லை. அதாவது உத்தமாதிகாரி (உத்தம அதிகாரி) இல்லை, ஸ்வதர்ம கர்மவைப் பலனிலே கருத்தை வைக்காமல் ஈச்வர ஆராதனமாகப் பண்ணிச் சித்த சுத்தி பெறக்கூடிய "யோக" ஸாதகன்தான், அதாவது மத்யமாதிகாரி (மத்யம அதிகாரி) தான் - என்று ஆசார்யாள் (பாஷ்யத்தில்) ஸ்தாபித்திருக்கிறார். மத்யமம் என்பது நடு. அது உத்தமத்துக்கும் அதமத்துக்கும் 'லிங்க்'-ஆக(இணைப்பாக) முடியும். அதனாலேயே அவனுக்கு உபதேசிக்கும்போது த்வைத - அத்வைத 'லிங்க்' - ஆன ஈச்வரனை, அவனுடைய க்ருபையை, பகவான் உத்தமோத்தம ஸ்திதியைச் சொல்லும்போதும் குறிப்பிட்டிருக்கிறார்.

ஒரு இடத்தில் "ஸத்வ - ரஜோ - தமோ குணவடிவாயுள்ள மாயை என்னுடைய சக்தியாகும். அதனாலே அது தெய்வ சக்தி பெற்றது. மநுஷன் எப்படித் தன் பலத்தால் அதை தாண்ட முடியும்? என்னிடம் "ப்ரபத்தி (சரணாகதி) பண்ணினால்தான் என் அருளால் தாண்ட முடியும்" என்கிறார்.

ஸர்வபாவத்தாலும் ஈச்வரனிடம் சரணாகதி பண்ணினால் அவனுடைய அநுக்ரஹத்தால் சாச்வத சாந்த பதமான அத்வைத மோக்ஷம் ஸித்திக்கும் என்று இன்னோரிடத்தில் சொல்கிறார் (18 - 62)

த்வைதமாகத் தன்னை ஒரு மாதிரி பாவித்து பக்தி

பண்ணினாலும் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் தத்வ ஸ்வரூபத்தைப் புரிந்துகொண்டு (புரிவிப்பதும் அவர் க்ருபைதான்), அந்த தத்வத்துக்குள்ளேயே போய் அத்வைதமாக இருந்துவிடலாம் என்றும் உபதேசம் செய்கிறார். (18 - 55).

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆதிசங்கரரும் கூறும் ஈசனது ஞானக் கொடை**

நம்முடைய ஆசார்யாளும் ஈச்வர க்ருபையாலேயே முடிவான ஞானம் உண்டாவதை அங்கங்கே சொல்லாமல் போகவில்லை.

"ஸௌந்தர்ய லஹரி", "சிவாநந்த லஹரி" முதலான அவருடைய பக்தி ஸ்தோத்ரங்களில் அவர் மாயையைப் போக்கி மோக்ஷத்தைப் பரமாத்மாவே அருள்வதாகச் சொல்வது மட்டுமில்லை, தமது ஞான க்ரந்தங்களிலும் அங்கங்கே இப்படிச் சொல்லாமல் விட்டுவிடவில்லை. பக்தி ஸ்தோத்ரத்தில் இப்படிச் சொன்னதில் விசேஷமில்லை. ஞான மார்க்க ஸாதகர்களுக்கு த்வைதமான ஈச்வரானுக்ரஹத்தைப் பற்றிச் சொல்ல வேண்டாமென்று விட்டுவிட்டதாகச் சொன்னது போலவே இதற்கும் காரணம் சொல்லிவிடலாம். "பக்தி வழியிலே போகிறவர்களுக்கு ஞான விசாரமான நிதியாஸனத்தினால்தான் லக்ஷ்யஸித்தி என்று சொல்லவேண்டாம். பக்தி பண்ணிக்கொண்டே போனால், அதனால் ஒருமுகப்படப் பழகிவிட்ட மனஸ் அப்புறம் தானாகத் தன் ஆதாரத்தைத் தேடிக்கொண்டு ஞானமாகப் போக ஆரம்பித்து, முடிவிலே, ஸித்தி வரும். தானாக நடப்பது நடந்தே தீரும். அதை நாம் இப்போது பிடித்தே சொல்லவேண்டாம். ஈச்வர பக்திக்கு மேலே ஞானம் அத்வைதம் என்று எதற்கோ போகவேண்டுமா என்று பக்தி மார்க்கத்தில் போகிறவருக்குத் தோன்றிவிடலாம். அல்லது 'மோக்ஷத்துக்கு அதுதான் நேர்வழி என்றால், இந்த பக்தி

எதற்கு?' என்று பக்தி பண்ணுவதை விட்டுவிடத் தோன்றலாம். ஆனாலும் ஞான விசாரம் என்றால் அதற்கு வேண்டிய சித்த ஐகாக்ரியம் இவர்களுக்கு இல்லையே, அதை உண்டாக்கத்தானே முதலில் பக்தியைச் சொல்லியிருப்பது, இப்படிப் பல தினுஸாக ஆலோசித்துத்தான் இப்போது இவர்கள் உள்ள நிலையில் ஒரு குழப்பத்தை உண்டாக்காமல் இவர்கள் மனஸுக்கு ஏற்கும்படியாக ஈச்வரானுக்ரத்தாலேயே ஞானம், மோக்ஷம், அத்வைதம் எல்லாம் ஸித்திப்பதாக சொல்லிவிடலாம்" என்று நினைத்து இம்மாதிரிச் சொன்னதாக அர்த்தம் செய்துகொள்ள இடமுண்டு. ஆகையால் தம்முடைய பக்தி ஸ்தோத்ரங்களில்லாமல் ஞான நூல்களான பாஷ்ய க்ரந்தங்கள், ப்ரகரண க்ரந்தங்கள் ஆகியவற்றில் ஆசார்யாள் இவ்விஷயமாகச் சொல்லியிருந்தால்தான் இதற்கு "வால்யூ" அதிகம். இதை அவர் அத்வைத நூல்களில் விரிவாகவோ அழுத்தமாகவோ சொல்ல முடியாது என்பதற்குக் காரணம் பார்த்தோம். ஆனாலுங்கூட இந்த உண்மையை அடியோடு சொல்லாமல் விட்டுவிடக்கூடாது என்பதுபோல, சில இடங்களிலாவது அவர் சொல்லிவிட்டும்தான் போயிருக்கிறார்.

"ஈச்வரனையே ஸர்வபாவத்தினாலும் நீ சரணடை, அவன் அனுக்ரஹத்தால் சாச்வதமான பரம சாந்த பதம் அடைவாய்" என்கிற (கீதா வாசகம்) மாதிரியான இடங்களுக்கு பாஷ்யம் பண்ணும்போது ஆசார்யாள் இவ் விஷயத்தைச் சொல்லியிரு ந்தால்கூட அது பெரிசில்லை. மூல க்ரந்தத்தில் ஈச்வரானுக்ரஹத்தைப் பற்றிக் குறிப்பாக இல்லாத இடங்களிலும் கூட சில ஸமயங்களில் ஆசார்யாள் தம்முடைய பாஷ்யங்களில் அதைப் புகுத்தி அதனுடைய பெருமையைச் சொல்லியிருப்பதுதான் பெரிசு. உதாரணமாக, ஸர்வ பாவத்தினாலும் சரணாகதி செய்வதைப் பற்றிச் சொல்வதற்கு முந்தி, அந்த (பதினெட்டாம்) அத்யாயத்திலேயே பகவான், "ஒருத்தன் தனக்கென்று ஏற்பட்ட கர்மத்தை விடவே படாது. ஸ்வகர்ம, ஸ்வதர்மங்களையே ஈச்வர ப்ரீதியாக, ஈச்வர ஆராதனையாகப் பண்ணவேண்டும். அப்படிச் செய்தால் அவனுக்கு ஸித்தி கிடைக்கிறது. அதாவது '(ஆசார்ய பாஷ்யப்படி) ஞான நிஷ்டைக்கான யோக்யதை கிடைக்கிறது. அப்புறம் அவன் எப்படி ஞானத்தின் உச்சமான நிஷ்டையான

ப்ரஹ்மத்தையே சேர்கிறானோ அதைச் சொல்கிறேன் கேள்". என்கிறார். ஈச்வரார்ப்பணமாகத் தன் கர்மாவைச் செய்பவன் ஞான விசாரத்துக்குப் பக்வமடைவதாகவும் அப்புறம் அவன் பண்ணவேண்டியது இன்னவென்றுந்தான் இந்த இடத்தில் பகவான் சொல்கிறார். ஈச்வரன்தான் இந்தப் பக்வத்தை அநுக்ரஹிப்பதாக இந்த இடத்தில் அவர் சொல்லவில்லை. ஆனாலும் ஆசார்யாள், "ஸ்வகர்மாவினால் ஈச்வரனை ஆராதனை பண்ணி, அவனுடைய அநுக்ரஹத்தினால் பிறந்த ஞான நிஷ்டா யோக்யதை எனும் ஸித்தியை அடைந்து", "என்று இங்கே ஈச்வர க்ருபையைக் கொண்டுவருகிறார்!"தத்ப்ரஸாதஜாம்" என்பதாக,

மூலத்தில் இந்த இடத்தில் சொல்லாத ஈச்வர ப்ரஸாதத்தை ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்திலே குறிப்பிட்டு, ஸ்வகர்மாநுஷ்டானம் அதுவாகவே ஞான விசாரத்துக்கான தகுதியைத் தருவதில்லை என்றும், அதற்குப் பலனாக ஈச்வரன் அநுக்ரஹித்தே அந்தத் தகுதி உண்டாகிறது என்றும் தெளிவுபடுத்துகிறார். மூலத்தில் சொல்லாத இடத்திலும் அவர் பாஷ்யத்தில் சேர்த்திருப்பதற்குத் தனியான விசேஷம் உண்டு.

ஈச்வரன்தான் கர்மாவுக்குப் பலன் தருபவன், கர்மா தானாகவே பலனைத் தருவதில்லை என்பதுதான் அத்வைதிகள் கொள்கை, 'கர்மாவே பலனைத் தருகிறது, ஈச்வரன் என்று ஒருத்தனைக் கொண்டுவரவேண்டாம்' என்று அபிப்ராயம் கொண்ட பூர்வ மீமாம்ஸகர்களை அத்வைதிகள் நன்றாகக் கண்டித்து, ஸகலத்துக்கும் பலதாதா லோக வ்யாபாரத்தையெல்லாம் நடத்தும் ஈச்வரன்தான் என்று கூறியிருக்கிறார்கள். ஆனாலும் மாயைக்கு உட்பட்ட கர்ம லோகத்திலே தான் அவனைப் பலதாதாவாகச் சொல்லியிருக்கிறார்களே தவிர மாயையிலிருந்து விடுபடும் ஞான ஸாதனையிலும் அதன் ஒவ்வொரு ஸ்டேஜிலும் பலன் தருகிறவன் ஈச்வரன் தான் என்று அவர்கள் குறிப்பிட்டுக் காட்டுவதில்லை. 'கர்ம யோகத்தினால் சித்த சுத்தி ஏற்படுகிறது, சித்தம் சுத்தமான பின் ஞான விசாரம் பண்ண ஜீவன் பக்வமாகிறான்' என்று சொல்வார்களே தவிர, 'கர்மயோகத்துக்குப் பலனாக ஈச்வரன் சித்த சுத்தி அநுக்ரஹித்து ஞான நிஷ்டைக்கு ஒரு ஜீவனைப் பக்வப்படுத்துகிறான்' என்று சொல்வதில்லை. ஆனால்

இங்கே ஆசார்யாள் இவ்விஷயத்தை ஸ்பஷ்டமாகவே தெரிவிக்கிறார்.

கர்மத்திலிருந்து ஞானத்துக்குப் போக ஈச்வர க்ருபை வேண்டுமென்பதைக் கர்மா எல்லாம் போய் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதையே முக்யமாக விவரிக்கும் (கீதையின்) கடைசி அத்யாயத்தில் ஆசார்யாள் சொன்னார். இதற்கு முதல்படி இரண்டாம் அத்யாயத்தில் ஆரம்பிக்கிறது. அங்கே முதலில் ரொம்பவும் ஞானவேதாந்த தத்வங்களைச் சொல்லிவிட்டு, "இதுவரை ஸாங்க்யம் சொன்னேன். இனிமேலே யோகம் சொல்கிறேன்" என்று, கர்ம யோகத்தைப் பற்றி பகவான் ஆரம்பிக்கிறார். ஸாதாரணமாக ஸாங்க்யம் என்றால் கபிலர் சொன்ன ஸாங்க்ய சாஸ்த்ரமென்றும், யோகம் என்றால் பதஞ்ஜலி சொன்ன ராஜயோகமென்றும் நினைப்போம். இங்கே பகவானோ ஞான மார்க்கத்தையே ஸாங்க்யமென்றும், கர்ம மார்க்கத்தை யோகமென்றும் பெயர் கொடுத்துச் சொல்கிறார். இப்படி ஸ்வகர்மாநுஷ்டானத்தைப் பற்றில்லாமல் செய்யும் யோகத்தைப் பற்றிப் பேச ஆரம்பிக்கும் போதே, "இது கர்மா செய்கிற யோகமானாலும் இதுவேதான் கர்ம பந்தத்தை அறுக்கிறது" என்கிறார். ஆசையின் மேலே, பலனை உத்தேசித்து கர்மா பண்ணினால் அது ஸம்ஸார பந்தத்தை உண்டுபண்ணுகிறது. ஆசையை விட்டு, பலனை உத்தேசிக்காமல், லோக க்ஷேமத்துக்காகவும், சித்த சுத்திக்காவும் சாஸ்த்ரீய கர்மாவைச் செய்தால் அது பந்தத்தை அறுக்கிறது. "இம்மாதிரி அறு அப்பா" எனறு தான் அந்த ச்லோகத்தில் பகவான் சொல்லியிருக்கிறார், "கர்ம பந்தம் ப்ரஹாஸ்யஸி" - கர்மக் கட்டை அறுத்துப் போடுவாய்" என்கிறார்.

இங்கேயும் அவர் சொல்லாவிட்டாலும் தாம் சொல்லாமலிருக்கக் கூடாது என்று ஆசார்யாள் நினைத்துத் தம்முடைய பாஷ்யத்தில், "ஈச்வராநுக்ரஹத்தைக் காரணமாகக் கொண்டு ஞானத்தை அடைந்து தர்ம அதர்மங்கள் எனப்படுகிற கட்டான கர்மாக்கட்டை அறுப்பாய்" என்று விளக்கியிருக்கிறார். அதாவது கர்ம யோகம் அதுவாகவே பலன் தராமல் ஈச்வரன்தான் பலதாதாவாக இருப்பதை நிச்சயப்படுத்துகிறார். இங்கே இன்னொரு முக்யமான விஷயம் "ஈச்வர ப்ரஸாத நிமித்த" எனபதாக ஈச்வராநுக்ரஹம் என்ற காரணத்தைச் சொல்வதோடு மட்டும் ஆசார்யாள்

நிறுத்தவில்லை. ஸ்வதர்ம கர்மாவைப் பண்ணினவனின் கர்மாக்கட்டை (அதாவது பூர்வ வினைனத்தளையை) ஈச்வரன் வெட்டிவிடுவது எப்படியென்றால், ஜீவனுக்கு ஞான ப்ராப்தி உண்டாக்குவதாலேயே இப்படி அவன் செய்கிறானென்று தெளிவு செய்கிறார். "ஈச்வர ப்ரஸாத நிமித்த ஞான ப்ராப்தே:" என்று பாஷ்யத்தில் இருக்கிறது. கர்மாபோவதை விட ஞானம் வருவது முக்யம். ஞானத்தை அடைவதற்கு வழியாகவே ஒருவன் கர்மாவைப் போக்கிக் கொள்வதற்கு ஈச்வரன் அநுக்ரஹிக்கிறான் என்ற அபிப்ராயத்தை ஆசார்யாள் நிஸ்ஸந்தேஹமாக வெளியிட்டிருக்கிறார்.

இப்படியாக கீதையில் கர்ம யோகத்துக்கு விதை விதைக்கிற ஆரம்பத்திலிருந்து அது தானாகவே பட்டுப்போய் நிஷ்கர்மத்திலே கொண்டுவிடுகிற முடிவுவரை ஈச்வர க்ருபையே இந்த யோகத்தினால் கர்ம நாசத்தைப் பண்ணி ஜீவனை ஞானத்தில் சேர்க்கிறது என்று ஆசார்யாள் காட்டியிருக்கிறார். அப்படி முடிக்கிற இடத்திலே. "புத்தியால் எப்படி ஆத்மாவைப் பிடிக்க முடியும்?" என்று கேட்கிறவர்களுக்கு பதிலாக, "குரு ப்ரஸாதத்தை அடைந்து தன்னிலேயே ப்ரஸாதம் பெறுகிறவர்களுக்கு இது எப்படி என்று தெரியும்" என்கிறார். "லப்த குர்வாத்ம ப்ரஸாதாநாம்" என்கிறார். "குரு ப்ரஸாதம்" என்கிற இடத்தில் ப்ரஸாதம் என்றால் 'அநுக்ரஹம்' என்று அர்த்தம். "ஆத்ம ப்ரஸாதம்" என்கிற இடத்தில் ப்ரஸாதம் என்றால் 'தெளிந்த நிலை' என்று அர்த்தம். குருவின் அநுக்ரஹத்தால் அந்தஃகரணம் (புத்தியும் அதில் சேர்ந்ததுதான் அத்வைதமாய் மாறிக்கொண்டே போய் அத்வைத ஆத்மாவில் ஐக்யப்படுவதாக முன்னே சொன்னதற்கு ஆதரவாக இப்படிச் சொல்லியிருக்கிறார். இங்கேயும் ஜீவனின் அந்தஃகரணம் (புத்தியும் அதில் சேர்ந்ததுதான்) அத்வைதமாய் மாறிக்கொண்டே போய் அத்வைத ஆத்மாவில் ஐக்யப்படுவதாக முன்னே சொன்னதற்கு ஆதரவாக இப்படிச் சொல்லியிருக்கிறார். இங்கேயும் ஜீவனின் அந்தஃகரணத் தெளிவை மாத்திரம் சொல்லாமல், அவனுக்கு வேறு மாதிரியுள்ள குருவின் அநுக்ரஹ சக்தியையும் சொல்லியிருக்கிறார். மூலத்தில் இதைப்பற்றிக் குறிப்பே இல்லாவிட்டாலும், அநுக்ரஹத்தின் விசேஷத்தைச் சொல்லியே ஆகவேண்டுமென்பதால் தம்முடைய

பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார்.

குரு என்பவர் ஈச்வரனுக்கு ப்ரதிநிதிதான். "ஸ பூர்வேஷாமபி குரு:" - ஈச்வரனே எல்லா குருக்களுக்கும் முந்தைய முதல் குரு. ஈச்வரனேதான் குருவாக வந்து ஜீவனை நல்ல வழியில் கொண்டுபோகிறான் என்பதே நம் மதத்தின் கொள்கை. ஆனபடியால் இங்கே சொன்ன குரு ப்ரஸாதம் என்பது ஈச்வர ப்ரஸாதம்தான், ஈசன் க்ருபைதான்.

இதிலிருந்து இன்னொரு முக்யமான விஷயமும் ஏற்படுகிறது. அத்வைத சாஸ்த்ரங்கள் முழுவதுமே ஞான மார்க்கத்தில் போவதற்கு ஓரளவு பக்வப்பட்டவருக்குத்தான். அதனால்தான் அவற்றில், கர்மாநுஷ்டானமும் பக்தியுபாஸனையுமே ஆரம்ப நிலைகள் என்று சொல்லியிரு ந்தாலுங்கூட இவற்றைக் குறித்த விதிமுறைகளை விவரிக்காமல் தத்வ சோதனத்துக்கே முக்யம் கொடுத்து விளக்கியிருப்பது. அத்வைதமாகவே வாதத்தைக் கொண்டுபோக வேண்டுமென்றுதான் கடைசி கட்டத்தில் கிட்டுகிற ஈச்வராநுக்ரஹத்தை அவற்றில் சொல்வதில்லை என்று பார்த்தோம். இப்படி ஆசார்யாள் செய்துள்ள அத்வைத க்ரந்தங்களிலும் கீதை, உபநிஷத், ப்ரஹ்ம ஸூத்ரம் ஆகியவற்றுக்குச் செய்துள்ள பாஷ்யங்களைவிட, அவரே செய்துள்ள ப்ரகரண க்ரந்தங்களான 'விவேக சூடாமணி', 'உபதேச ஸாஹஸ்ரீ', 'அபரோக்ஷாநுபதி' முதலிய நூல்கள் 'அத்வைதந்தான் நம்முடைய லக்ஷ்யம்' என்று வைத்துக் கொண்டிருப்பவர்களையே உத்தேசித்தவையாகும். இதே மாதிரிதான் ஆசார்யாளுக்குப் பிந்தி வந்திருப்பவர்கள் செய்துள்ள நூல்களும் அத்வைதத்தில் ஓரளவு 'advanced student'-களுக்கே உத்தேசிக்கப்பபட்டவை எனலாம். ஆகையினால் இவற்றில் த்வைதமான ஈச்வராநுக்ரஹ ஸமாசாரம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுவதில்லை. ஆனாலுங்கூட இதைத்தான் 'முக்யமான விஷயம்' என்று சொன்னேன் - இந்தப் புஸ்தகங்கள் எல்லாவற்றிலுங்கூட எடுத்தவுடன் மங்கள ச்லோகமாக ஈச்வரனுக்கோ குருவுக்கோ வந்தனம் சொல்லியிருக்கும். அவருடைய அநுக்ரஹத்தாலேயே ஞானம் உண்டாவதாகவும் அதில் ஸ்தோத்திரித்திருக்கும்.

'விவேக சூடாமணி' போன்ற அநேக அத்வைத க்ரந்தங்களில்

சிஷ்யன் குருவுக்கு அப்படியே சரணாகதி செய்து அவர்தான் கதி என்று கிடப்பதாக ஆரம்பித்திருக்கும். கடைசியில் அவருடைய அநுக்ரஹத்தாலேயே தனக்கு மிகவும் உயர்ந்ததான அத்வைதாநுபவம் ஏற்பட்டதாக ரொம்பவும் நன்றியுடன் நமஸ்காரம் தெரிவித்திருக்கும். இவை எல்லாம் ஈச்வராநுக்ரஹத்தால் ஞான ப்ராப்தி என்பதை அத்வைதம் ஒப்புக்கொள்வதற்கு ப்ரூஃப்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**குரு என்ற த்வைதம் இடறுவதில்லை**

'ஈச்வரன்' என்று கண்ணிலே தெரியாத ஒரு தத்வத்தைச் சொன்னால் அது அத்வைதமாகப் போக ஆசைப்படுகிறவனுக்கு அவ்வளவாக அவச்யமில்லாத ஒரு த்வைதமாகத் தோன்றுகிறது. ஆனாலும் ப்ரத்யக்ஷத்தில் இவனுக்கும் ஒரு அநுபவியின் உபதேசமும் அநுக்ரஹமும் தேவைப்படுகிறது. ஆனபடியால் இப்படி உபகாரம் பண்ணுபவராக குரு என்று ஒருவரை இவனுடைய கண்ணுக்கு முன்னால் மநுஷ்ய ரூபத்தில் காட்டுகிறபோது அதன் த்வைதம் இவனுக்கு இடறுவதில்லை, அது அத்வைதத்துக்கு ஸஹாயமான த்வைதமாகவே தெரிகிறது.

த்ருஷ்டாந்தம் காட்டினால் புரியும். ரமண ரிஷியிடம் வருகிறவர்கள், முக்யமாக வெள்ளைக்காரர்கள், ரொம்பவும் அத்வைத ஃபிலாஸஃபியிலேயே போகத்தான் ஆசைப்படுகிறார்கள். ஈச்வரனைக் கொண்டுவருவது அவர்களுடைய ஆத்ம விசாரத்துக்கு ஒட்டாமல்தான் இருக்கும். ஆனாலும் அவர்களும்கூட அவரை 'குரு, "மாஸ்டர்"' எனறு சொல்லி மரியாதை செய்து, அவருடைய அநுக்ரஹத்தால் தங்களுக்கு அநுபவம் வந்ததாகத் தெரிவிக்கிறார்கள். இத்தனைக்கும் அவர் தம்மை குரு என்றும் தம்மிடம் வருபவர்களை சிஷ்யர்கள் என்றும் சொல்லிக் கொள்வதேயில்லை இதைவிடவும் அதிசயமாக,

"குருவே வேண்டியதில்லை. வரையறுத்து இதுதான் ஸித்தாந்தம் என்று எதையும் வைக்கப்படாது" என்று அபிப்ராயப்படுகிற (ஜே.) க்ருஷ்ணமூர்த்தி போன்ற ஒருவரிடம் போகிறவர்கள் கூட அவரை ஒருவிதத்தில் குரு மாதிரியாகவே மரியாதையுடன் நினைத்து, அவருடைய சக்தியினால் தங்களுக்குத் தெளிவு உண்டாவதைச் சொல்கிறார்கள்.

அதனால் ஈச்வரானுக்ரஹம் என்று சொல்லிக் கொஞ்சம் அழுத்தமாகவே த்வைத பாவத்தைக் கொண்டுவிடாவிட்டாலும் அதையே குரு ப்ரஸாதம் என்பதாக அத்வைதிகளும் சிறப்பித்துச் சொல்லித்தான் இருக்கிறார்கள். குர்வஷ்டகம்' முதலான அநேக நூல்களில் நம்முடைய ஆசார்யாள் இவ் விஷயத்தை ரொம்பவும் பக்தியோடும் நன்றியோடும் ஸ்பஷ்டமாகவும் அழுத்தமாகவும் வெளியிட்டிருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### மாயாசக்தியே ஞானமும் அளிப்பது

ஈச்வரன் ஞான ஸ்வரூபி, அவனே ஞானம் தருபவன் என்கிற விஷயத்தைச் 'சொல்லாமல் சொல்லும்' ஸூக்ஷ்மமான முறையில் ஆசார்யாள் கேநோபநிஷத் பாஷ்யத்தில் வெளியிட்டிருப்பதாகத் தோன்றுகிறது. 'யார் எது செய்தாலும் அது தன்னுடைய ஸொந்த சக்தியைக் கொண்டு அல்ல, ப்ரஹ்மத்தின் சக்தியைக் கொண்டுதான் எவரும் எதையும் செய்யமுடிவது' என்று அம்பாள் இந்த்ரனுக்கு உபதேசித்ததாக அந்த உபநிஷத்திலே இருக்கிறது. மூலத்திலே அம்பாளை 'ரொம்ப சோபையுள்ளவள், உமா என்றும் ஹைமவதி என்றும் பெயருள்ளவள்' என்று தான்

சொல்லியிருக்கிறது. ஆனால் ஆசார்யாளோ இதற்குப் பதம் பதமாகச் செய்த பாஷ்யம், வாக்யம் வாக்யமாகச் செய்த பாஷ்யம் ஆகிய இரண்டிலும் அம்பாளைத் திரும்பத் திரும்ப

"வித்யா" என்று சொல்கிறார். "வித்யா" என்றால் ஞானம் என்றே அர்த்தம். ஞானம் என்றால் அத்வைதத்தில் ப்ரஹ்ம ஞானம்தான் - அதாவது ஜீவன் தன்னுடைய ஆத்மாவே ப்ரஹ்மம் என்று உணர்வதான அத்தைவ ஞானம்தான். உபநிஷத்தில் பலவிதமான உபாஸனைகளையும் வித்யா என்றே சொன்னாலும் அவற்றிலெல்லாம் அந்த உபாஸனையே ஸம்பந்தப்படுத்தி அதற்கு "இன்ன வித்யா" என்று அடைமொழி கொடுத்துப் பெயர் சொல்லியிருக்கும். இப்படியில்லாமல் வெறுமே வித்யா என்று மட்டும் சொன்னால் அது ப்ரஹ்ம வித்யாதான், அதாவது ஆத்மஞானம்தான். "சோபையுள்ளவற்றிலெல்லாம் பரம சோபையானது வித்யையே" என்று அம்பாளை வித்யாவாகச் சொல்கிற ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருப்பதால் அவர் அவளை ப்ரஹ்ம வித்யாஸ்வரூபிணியாகவே சொல்கிறார் என்று நிச்சயப்படுகிறது.

அவித்யா என்றால் அஞ்ஞானம். மாயையை ஆசார்யாள் அவித்யா என்றே சொல்வார். (அப்புறம் மாயைக்கும் அவித்யைக்கும் கொஞ்சம் வித்யாஸம் காட்டியும் ஒரு அபிப்ராயம் அத்வைதிகளுக்கிடையே எழுந்தது. அவர்கள் மாயை என்பது ஒன்றை இன்னொன்றாகக் காட்டும் 'மாஜிக்' மாதிரியான சக்தி என்றும், அவித்யா என்பது ஸத்யத்தைத் தெரிந்துகொள்ளாத அஞ்ஞான நிலை என்றும் ஒரு பாகுபாடு செய்கிறார்கள். ப்ரஹ்மம் மாயையோடு சேர்ந்துள்ளபோது ஈச்வரனாகிறது என்றும், அவித்யையில் கட்டுப்படும்போது ஜீவனாகிறது என்றும் அவர்கள் சொல்கிறார்கள்.

அது இருக்கட்டும்.) மாயா சக்தியோடு சேர்நது ப்ரஹ்மம் ஈச்வரனாயிருக்கிற போதும் அந்த ஈச்வரன் ஞான ஸ்வரூபியாகவே இருப்பதாக அத்வைதிகள் சொல்வதில் இன்னம் மேலேபோய் ஆசார்யாள் இங்கே அம்பாளை வித்யா என்றே சொல்கிறார். அம்பாளை ராஜ ராஜேச்வரியாக ஆராதனை செய்யும் உபாஸனைக்கே ஸ்ரீ வித்யை என்று பெயர் இருக்கிறது. அந்த ஆராதனையையும் ஆசார்யாள் யந்த்ர ப்ரதிஷ்டை, 'ஸௌந்தர்யலஹரி' ஸ்தோத்ரம் முதலியவற்றால் போஷித்திருக்கிறார். மாயையாகவே இருக்கிற அவளை மாயா நிவ்ருத்தியையே மோக்ஷமாகச் சொன்ன ஆசார்யாள் ஞானாம்பிகையான வித்யாவாகச் சொல்வதால் மாயையால் லோகத்தை நடத்தும் சக்திதான்

அதிலிருந்து விடுவிக்கவும் செய்கிறது என்று அவர் காட்டுவது தெரிகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**கர்ம பந்தம் ஈசனால்**

**ஞான ஸித்தியும் அவனாலேயே !**

ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தை எடுத்துக்கொண்டாலும் இப்படியே மூலக்ரந்தத்தில் ஈச்வராநுக்ரஹத்தைச் சொல்லாத இடத்திலும்கூட ஆசார்ய பாஷ்யத்தில் அதை ஞானத்துக்குக் காரணமாகச் சொல்லும் த்ருஷ்டாந்தங்கள் இருக்கின்றன. ஸூத்ர மூலத்திலேயே ஒரு இடத்தில் "ஜீவாத்ம - பரமாத்ம அபேத ஞானம் ஜீவனிடம் மறைந்து கிடைக்கிறது. பரமேச்வரனை த்யானிப்பதால் மறைந்துள்ள ஞானம் வெளிப்பட்டுவிடும். ஏனென்றால் அவனிடமிருந்தே தான் ஜீவனுக்கு பந்தம் (கட்டு), மோக்ஷம் (விடுதலை) இரண்டும்" என்று இருக்கிறது. இம்மாதிரியான இடங்களில் ஆசார்யாள் ஈச்வராநுக்ரஹத்தால் அத்வைத ஸித்தி ஏற்படுவதைச் சொன்னால் அதில் விசேஷமில்லை. இந்த ப்ரஹ்ம ஸூத்ரத்திலேயே இன்னொரிடத்தில், ஜீவன் கர்த்தாவா, இவன் கார்யம் செய்கிற கர்த்தா என்றால், கார்யமில்லாத ஸமாதி இவனுக்கு எப்படி ஏற்படும் என்கிற விஷயங்களை ஆராய்ந்து, 'அவன் கர்த்தாவுந்தான், கார்யமில்லாமல் ஆத்மாவாக இருப்பவனுன்தான்" என்று முடிவு தெரிவித்திருக்கிறது. '(அதெப்படி இரண்டும் முடியும்?"' என்று கேட்டால், 'தச்சன் மாதிரி' என்று பதில் சொல்லியிருக்கிறது. தச்சு வேலை செய்கிறபோது ரம்பம், இழைப்புளி முதலான கருவிகளை கொண்டு வேலை செய்கிற தச்சனே, அந்தக் கருவிகளைப் போட்டுவிட்டு வீட்டில் வந்து 'ரெஸ்ட்' எடுத்துக்கொள்ளும்போது வேலையில்லாமல் இருக்கிறானோல்லியோ? இப்படியே இந்த்ரியக் கருவிகளைக் கொண்டு கர்த்தாவாயுள்ள ஜீவன் ஸமாதியில் அவற்றை

விட்டு விட்டு அகர்த்தாவாக இருக்கிற ஆத்மாவில் 'ரெஸ்ட்' பண்ணிக் கொண்டிருக்கிறான் என்று சொல்லிவிட்டு, இப்படி ஜீவனுக்கு ஒரு கர்த்ருத்வம் ஏற்பட்டது பரமேச்வரனிடமிருந்தேயாகும் என்று கூறியிருக்கிறது. ஈச்வரனால் கர்த்ருத்வம், அதாவது கார்யமும் அதன் பந்தமும் ஜீவனுக்கு ஏற்படுவதைப் பற்றித்தான் இங்கே சொல்லியிருக்கிறது. இந்த பந்தத்திலிருந்து விடுவிக்கிற ஞானத்தைப் பற்றியோ, அதை அடைவிப்பதில் ஈச்வரனின் பங்கைப் பற்றியோ ஒன்றும் மூல நூலில் இந்த இடத்தில் இல்லை. ஆனாலும் ஆசார்யாள் இங்கே பாஷ்ம் செய்யும் போது, கார்யம் செய்து அநுபோகங்களைப் பெறும் கர்த்ருத்வ, போக்த்ருத்வத்தினால் ஜீவனுக்கு ஸம்ஸார வாழ்வு ஏற்படுவது ஈச்வராக்ஞையினாலேயே என்று சொல்வதோடு நிறுத்தாமல், இதே ஜீவன் உத்தம ஞானத்தினால் மோக்ஷ ஸித்திக்கு அருகதை பெறுவதற்கும் அதே ஈச்வரனின் அநுக்ரஹம் தான் காரணம் என்கிறார். "ஈச்வராத் தத் அநுஜ்ஞயா கர்த்ருத்வ போக்த்ருத்வ லக்ஷணஸ்ய ஸம்ஸார ஸித்தி:" என்பதோடேயே நிறுத்தியிருக்கலாம். மூலத்தில் அதற்கு மேலே விளக்க இல்லை. ஆனாலும் ஆசார்யாள் ஸம்ஸார பந்தத்துக்கு ஈச்வரன் காரணம் என்று மட்டும் குற்றம் சொல்கிறதுபோல முடித்து விடக்கூடாது, இதிலிருந்து நிவ்ருத்திக்கும் அவன் அநுக்ரஹம்தான் காரணம் என்று கையோடேயே சொல்லிவிடத்தான் வேண்டுமென்று நினைத்து, "தத் அநுக்ரஹ ஹேதுகேநைவ ச விஜ்ஞாநேந மோக்ஷ ஸித்திர் பவதும் அர்ஹதி" என்று சேர்த்திருக்கிறார். அதாவது "ஈச்வரனுடைய அநுக்ரஹம் என்ற காரணத்தைக் கொண்டே உயர்ந்த ஞானத்தின் மூலம் மோக்ஷ ஸித்தி அடையவும் ஜீவன் தகுதி பெறுகிறான்" என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

ஆனாலும் இதை அத்வைத ஸாதகர்களுக்கே ஏற்பட்ட சாஸ்த்ரங்களில் சொல்லித்தானாக வேண்டுமென்றில்லை, சொல்லாமல் விடுவதற்கு நிரம்ப நியாயமிருக்கிறது என்று பார்த்தோம். அதனால்தான் ஈச்வர க்ருபா விசேஷத்தால் மோக்ஷம் ஸித்திருப்பதை நன்றாக வெளியிட்டுச் சொல்லும் கீதையிலேயே கூட, மிகவும் ஞான மார்க்கமாக உபதேசித்துக்கொண்டு போகும்போது பகவானே இதைச் சொல்லாமல் விடுவதும் உண்டு. அப்படித்தான், இந்த்ரியத்திலிருந்து மனஸ், புத்தி, ஆத்மா என்று ஒன்றைவிட

ஒன்று உயர்த்திச் சொல்லி, "புத்திக்கும் பரதத்வத்தை அறிந்து, மனஸை அடக்கி, ஆசை என்ற எதிரியை அழி" என்பதாக, ஜீவன் தானாகவே எல்லாவற்றையும் ஸாதித்துக் கொண்டு விடுவதைப் போலச் சொல்லி (அந்த மூன்றாம் அத்யாத்தை) முடித்துவிடுகிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## மெய்யறிவு ஆத்ம ஞானமே

இந்த ஆனந்தம் இருக்கிறதென்றால் அதை அநுபவிக்கிற ஆஸாமியும் ஒருத்தன் இருந்தாக வேண்டும். ஆனால் அவன் ஆனந்தத்துக்கு வேறாக இருந்துகொண்டு அதை அநுபவிப்பவன் என்றால், அப்போது த்வைதம் வந்துவிடும். த்வைதம் வந்துவிட்டால் பயந்தான். அப்புறம் ஆனந்தம் எப்படி இருக்க முடியும்? ஆனபடியால் அந்த ஆஸாமி தானே ஆனந்த் ஸ்வரூபியாய் இருக்கவேண்டும்.

அந்த ஆஸாமியைத்தான் ஆத்மா, ஆத்மா என்று சொல்வது. ஆத்மா என்றால் "தான்".

தான் என்று இதுவரைக்கும் மனஸை நினைத்துக் கொண்டிரு ந்துவிட்டோம். இதன் அநுபவங்களையே நமது ஸொந்த அநுபவமாக நினைத்தோம். இதுகளைப் பெறுவதில் தான் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்கிறாற்ப்போல் ஆனந்தத்துக்குப் பதில் துக்க பரம்பரையை ஸம்பாதித்துக்கொண்டோம்.

இதிலே பெரிய துக்கம் நிஜத்தைத் தெரிந்துகொள்ளாமல் பொய்யையே நிஜமாக நினைத்ததுதான்.

மனஸை "தான்" என்று, அதாவது அதுதான் நம் நிஜமான ஸ்வரூபமென்று நினைத்தது தப்பு அல்லவா? பொய்யல்லவா? அந்த மனஸ் அற்றுப்போய் விடுவது என்றும் ஒரு நிலை இருக்கிறதே!தூக்கத்தில், க்ளோரோஃபாரத்தில், ஸமாதி நிலையில் மனஸ் அற்றுத்தானே போய்விடுகிறது,

அப்போதும் நாம், அதாவது, "தான்" என்னும் ஆத்மா இருக்கிறதே!ஆகையால் மனஸை நாமாக நினைத்து தப்பு, அது பொய் என்று நிச்சயமாகத் தெரிகிறது. ஆத்மாவை அறிவது - அதாவது ஆத்ம ஞானம் -- தான் மெய்யை அறிவது. நாம் இதுவரை "நாமாக" நினைத்த மனஸ் பொய்யென்று தெரிந்தபின், நிஜ "நாமா"ன ஆத்மாவைத் தெரிந்துகொள்ள வேண்டியதுதானே நாம் செய்யவேண்டியது?

ஏதேதோ தெரிந்து கொள்கிறோம் - ஹிஸ்டரி, ஜாகரஃபி, அடாமிக் ஸயன்ஸ், எலெக்ட்ரானிக்ஸ் என்று என்னென்னவோ தெரிந்துகொள்கிறோம். பலவிதமான உண்மைகளைத் தெரிந்துகொள்வதுதான் மநுஷ்யனாகப் பிறந்ததற்குப் பயன், இப்படி அநேக கலைகள், விஞ்ஞானங்கள் தெரிந்தகொள்கிறோம். நமக்கு இன்பத்தைத் தரும் உபகரணங்களை உண்டாக்கிக் கொள்வதற்காகவும் இப்படி அறிவினால் "ஸர்ச்" (தேடுவது), "ரிஸர்ச்" (ஆராய்ய்சிச செய்வது) எல்லாம் செய்கிறோம். ஆனால் கடைசியில் பார்த்தால், இவற்றால் நம்மை மஹா புத்திசாலிகளாக நினைத்துக்கொண்டிருக்கிற நமக்கு ரொம்பவும் அவமானமாக, நம் அத்தனை புத்திசாலித்தனத்தையும் அசடாக்குவதாக ஒன்று தெரிகிறது. அதாவது உண்மை, உண்மை என்று நினைத்து நாம் தேடிப்போன எல்லாவற்றையும் எந்த மனஸினால் தேடினோமோ, எந்த மனஸின் திருப்திக்காகத் தேடினோமோ, எந்த மனஸினால் உண்மைகள் என்று அவற்றைத் தெரிந்துகொண்டோமோ அந்த மனஸே உண்மையில்லை, அது உண்மையான "நாம்" இல்லை என்று தெரிகிறது. (மனஸ் என்பதை இங்கே புத்தியையும் உள்ளடக்கியதான அந்தஃகரணம் என்ற அர்த்தத்திலேயே சொல்லிக்கொண்டு போகிறேன்.) நம்முடைய ப்ரமாதமான ஸர்ச், ரிஸர்ச்சகள் நம்முடைய ஸந்தோஷத்துக்கான உபகரணங்களைப் பெருக்கி கொள்வதிலே முடிகிறது என்பதும் இப்போது அசட்டுத்தனமாகிறது. ஏனென்றால் இங்கே நாம் சொல்கிற ஸந்தோஷமும் மனஸின் ஸந்தோஷம்தானே? நிஜமாக நாமாக இல்லாத ஒன்றின் ஸந்தோஷத்துக்கான உபகரணங்களை உண்டாக்கி கொள்வதற்காகவே நாம் இத்தனை பாடுபடுகிறோம் என்றால் அது கொஞ்சங்கூட புத்திசாலித்தனமாகாததுதானே? நிஜ ஆஸாமியைத்

தெரிந்துகொள்ளாமல், அவனுக்குச் செய்யவேண்டியதைச் செய்யாமல் வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறவனை நிஜ ஆஸாமியாக நினைத்துக்கொண்டு அவனுடைய அநுபோகங்களுக்காக நாம் ஸதா ஸர்வதா எதையாவது பண்ணிக்கொண்டு உபத்ரவப்படுகிறோமென்றால் இது ரொம்பவும் துக்கப்பட வேண்டிய விஷயம்தானே? பொய்யைப் போஷிக்கவா இந்தப் பாடு? இப்படி ஏமாந்தல்லவா போயிருக்கிறோம்? இனிமேலாவது மெய்யறிவு பெறவேண்டாமா?

இதைத்தான் நான், "ஆத்மாவை எதற்காகத்தெரிந்து கொள்வேண்டும்?" என்று கேட்ட ஒருத்தருக்குப் பதிலாகச் சொன்னேன். நம்முடைய லோக த்ருஷ்டியிலே பார்த்தால் அவரை 'அத்ருஷ்டசாலி' என்று சொல்லவேண்டும். ஸுகஜீவி. எந்தப் பிக்கல் பிடுங்கலும் அவருக்கு இல்லை. அதனால் "நீங்கள் என்னவோ அத்வைதம், ஆத்ம சாந்தி என்று உபந்யாஸம் பண்ணுகிறீர்கள். 'அவற்றைப் பெற்றால்தான் ஸுகமுண்டு, இல்லாவிட்டால் ப்ரபஞ்சத்தின் துக்கத்துக்குத்தான் ஆளாகவேண்டும்' என்கிறீர்கள். எனக்கென்னவோ ப்ரபஞ்சம் அப்படியொன்றும் துக்கமாகத் தெரியவில்லை. ஜீவனம் ஸௌக்யமாகத்தான் போய்க்கொண்டிருக்கிறது. அப்படியிருக்கும்போது, இப்படியே இருந்துவிட்டுப் போகட்டும் என்று இநத் வாழ்கையிலேயே இருந்தவிட்டாலென்ன? எதற்காக வாயைக் கட்டுகிறேன், மனஸைக் கட்டுகிறேன் என்றெல்லாம் வேண்டாத ச்ரமங்களை இழுத்துவிட்டுக்கொள்ள சொல்கிறீர்கள்?" என்று கேட்டார். இதையே ஒரு மாதிரி மறைமுகமாகக் கேட்டார்.

அப்போது நான் அவரிடம், "நீங்கள் எவரையோ உபசாரம் பண்ணிப் போஷித்து வைத்துக்கொண்டிருக்கிறதாக வைத்துக்கொள்வோம். அவரால் உங்களுக்கு ஏதோ ஸந்தோஷங்கள் கிடைக்கிறதென்பதற்காக இப்படிப் பண்ணுகிறீர்கள். ஆனால் அப்புறம் தெரிகிறது, அவரை நீங்கள் யாரென்று நினைத்து உபசாரம் பண்ணினீர்களோ அவரில்லை இந்த மநுஷ்யர், அவர் மாதிரி வேஷம் போட்ட போலி ஆஸாமி என்று. அவர் தருகிற ஸந்தோஷமும் நீங்கள் நினைக்கிறமாதிரி நீடித்து நிற்கப் போகிறதில்லை என்றும் தெரிகிறது. அப்போது எத்தனை துக்கமாக

இருக்கும்? அந்த மாதிரிதான் நம்முடைய நிஜஸ்வரூபமென்று மாயாவேஷ மனஸை நினைத்து அதைப் போஷிப்பதும், அது தருகிற ஸௌக்யத்தை ஆத்மானந்தமென்று நினைப்பதும்" என்று சொன்னேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மன வாழ்க்கையின் குறைபாடு**

ஸந்தோஷமாக இருப்பதாகச் சொல்வது மனஸின் அநுபவங்களை வைத்துத்தான். ஆனால் ஸந்தோஷாநுபவம் பெறுகிற அந்த மனஸ்தான் நாமா என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டாமா? எதெதையோ தெரிந்து கொள்வதிலும் எதெதையோ ஆராய்ச்சி பண்ணி உண்மைகளைக் கண்டுபிடிபப்திலும்தான் மநுஷ்ய ஜீவனின் பெருமையே இருக்கிறது என்று சொல்லிக்கொள்கிறோம். அணுவிலிருந்து galaxy வரையிலும் எல்லாவற்றையும் ஆராய்ந்து அவற்றின் உண்மைகளை தினந்தினமும் தெரிந்து கொண்டு கர்வப்படுகிறோம். இப்படித் தெரிந்து கொள்கிற நாம் வாஸ்தவத்தில் யார் என்று ஆராய்ச்சி பண்ணித் தெரிந்து கொள்ளவேண்டாமா? தன்னுடைய ஸத்யமான ஸ்தீதியையே தெரிந்துகொள்ளாமல் மற்றவற்றைத் தெரிந்துகொண்டு, "ஸயன்ஸால் ஸத்யங்களைத் தெரிந்துகொள்கிறோமாக்கும்" என்று மார்தட்டிக் கொள்வது பரிஹாஸத்துக்கு இடமானதல்லவா? ஸத்ய ஸத்யமானதைத் தெரிந்துக்கொள்ள வேண்டும், அறிகின்ற அறிவை அறிய வேண்டும் என்றால் ஆத்ம சாஸ்த்ரத்தை அப்யஸிக்க வேண்டும்.

ஆத்மாசாஸ்த்ரங்களை இப்போதே தீவ்ரமாக அப்யஸிப்பதற்கில்லாத பெரும்பாலாருங்கூட, மெய்யான ஆத்மாவை அடியோடு மறந்து பொய்யான மனஸுக்காகவே ஸதாவும் பாடுபட்டுக் கொண்டிருப்பதாக இருக்கப்படாது. அப்படியிருந்தால் நாம் ஏமாளி என்று ஆகிவிடும். அதனால்தான், எப்படிப்பட்டவராயிருந்தாலும், தினம் ஒரு

அஞ்சு நிமிஷம் பத்து நிமிஷமாவது? 'நம்முடைய கார்யம், எண்ணம் லோகம் முதலான ஸகலமும் பொய்யாகப் போய்விடும் ஒரு பெரிய சாந்த பதம் ஆத்மா ஆத்மா என்று இருக்கிறது' என்பதாக நினைப்பூட்டிக்கொண்டு, அந்த அஞ்சு பத்து நிமிஷம் சாந்தமாக உட்கார்ந்திருக்க வேண்டும் என்பது.

மனஸைக் கொண்டு அநுபவங்களைப் பெறுகிற லோக வாழ்க்கை ஒருத்தருக்கு இன்றுவரை ஸௌக்யமாக ஸந்தோஷமாக இருந்துவருகிறது என்பதற்காக அதுவே போதும் என்று இருந்து விடுவதற்கில்லை, நாளைக்கே இந்த ஸந்தோஷம் போய்விடலாம். ஏதாவது வ்யாதி வக்கை வரலாம். ஸொத்து திருட்டுப் போகலாம். ப்ரியமானவர்கள் செத்துப் போகலாம். மனஸுக்கு ஆசை, வெறி, கோபம், பயம் ,துக்கம் முதலானவை ஏற்படுமாறு எந்த நிமிஷத்தில் வேண்டுமானாலும் ஏதாவது நடந்துவிடலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## போகவேண்டியது தேஹமல்ல மனமே

இதனால் இப்படியெல்லாமில்லாமல், சாச்வதமாய் ஸௌக்யத்துடன் சாந்தத்துடன் இருக்க வேண்டுமானால் அதற்கு மனமாயை விலகி ஆத்ம ஸத்யத்தில் நிலைத்து நின்றால்தான் முடியும். அந்த நிஜ நானை அடைந்தபோது தான் 'தேஹம் நான்' என்ற பாவம் போகும். அப்போது தேஹத்துக்கு வ்யாதி வக்கை வந்தாலும் பாதிப்பு இருக்காது.

'தேஹத்தால்தானே பல தினுஸான கஷ்டங்கள்? தேஹத்தைப் போக்கிக்கொண்டு விடலாம்' என்று 'ஸூயிஸைட்' பண்ணிக்கொள்கிறவர்களை முன்னே குறிப்பிட்டேன். இந்த தேஹம், போனாலும் உயிர் வெவ்வேறு உடம்புகளை, பேயுடம்பு, அப்புறம் ஏதோ ஒரு ஜன்மமாக ஸ்தூல உடம்பு என்று எடுத்துக்கொண்டேதான் போகும். அந்த உடம்புகளாலும் கஷ்டத்தை விலைக்கு வாங்கிக் கொள்ளும்

என்று சொன்னேன். ஆகையால் கஷ்டம் போக சாவு ஸொல்யூஷன் இல்லை என்றேன். ஸொல்யூஷன் என்னென்றால் உடம்பு போவதில்லை, உடம்பில் 'நான்' என்றிருக்கிற அபிமானம்தான் போகவேண்டும், உடம்பை "நானாக" நினைக்கிற அஞ்ஞானம்தான் போகவேண்டும் என்றேன். அது மட்டும் போதாது. மனஸை "நான்" என்று நினைப்பதும் போகவேண்டும். தேஹத்தை "நான்" எனறு நினைப்பதுபோய், அப்படி நினைக்கிற மனஸ்தான் "நான்" என்று நினைத்தால் அதுவும் பொய்யை மெய்யாக எடுத்துக் கொண்டுவிடுவதுதான். "நான்" என்ற நினைப்பே போக வேண்டும். நினைப்பு இருந்தால் நினைக்கிற மனஸ், நினைக்கப்படும் "நான்" என்று இரண்டு இருப்பதாக அர்த்தம். இரண்டு இருப்பது பயஹேது. அதனால் நினைப்பு போய், நினைக்கிற மனஸ் போய், நானாக மட்டுமே இருக்கவேண்டும். அதுதான் ஆத்ம ஸாக்ஷாத்காரம். அதுதான் நம் நிஜ நிலை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பிறவி, முக்தி குறித்த கொள்கைகள்**

அந்த நிஜமான "நானி"லே ஜீவ பாவம், தனி மனஸ், உடம்பு முதலியன எப்படி வந்தன என்று கேள்வி கேட்கலாம். மாயாசக்தியைக் கொண்டுதான் ஆத்மா (அதாவது, நிஜமான "நாம்") இப்படி ஜீவனாக ஒரு மனஸோடு, உடம்போடு தோன்றுகிறது என்று பதில் சொன்னால், எதற்காக ஆத்மா இபப்டி மாயையோடு சேரவேண்டுமென்று கேள்வி பிறக்கிறது. இதற்கு 'கன்வின்ஸிங்'காக ஒன்றும் பதில் சொல்லத் தெரியவில்லை. 'ஆனந்த பூர்ணமாக, தான் மட்டுமாக இருந்த ப்ரஹ்மம் எதற்காக மாயை பண்ணி இப்படி அபூர்ணமாகவேண்டும்?' என்று கேட்டால், 'என்னவோ நமக்குப் புரியாத லீலை' என்றுதான் பதில் சொல்லவேண்டியிருக்கிறது. அதற்கு மேலே சொல்லத் தெரியவில்லை. பூர்ணமான தானே அபூர்ணமாகக் குறைந்து

நிறைந்த தன்னைத் தேடிப் பிடிப்பதற்காக் கண்ணாமூச்சி ஆடிக்கொள்கிற விளையாட்டு இது. எதற்காக ப்ரஹ்மம் இப்படி விளையாடணும் என்று கேட்டால் பதில் தெரியவில்லை.

"காரணம் இல்லாததுதானே விளையாட்டு? ஸரி, தப்பு, தர்க்கம் எல்லாம் வராததுதானே விளையாட்டு? 'ஏதோ விளையாட்டுக்குச் சொன்னேன்', 'இதைப் பெரிசா நினைக்காம விளையாட்டுன்னு விட்டுடு' என்றெல்லாம் இந்த அர்தத்தில்தானே சொல்கிறோம்? இப்படி ப்ரஹ்மத்தில் காரணமில்லாமல் விளையாட்டு, லீலை தோன்றுகிறது என்றால், 'அதற்கு என்ன காரணம்?' என்று கேட்பதில் அர்த்தமே இல்லையே" என்று ஒரே போடாகப் போட்டு நம்மைப் பேசவிடாமல் பண்ணிவிடுகிறார்கள்.

இந்த ஜன்மாவில் ஏற்பட்டிருக்கிற இநத் உடம்பு பூர்வ ஜன்ம கர்மாவினால் வந்தது என்று பதில் சொல்லி விடலாம். போன ஜன்மா, அதற்கும் முந்தின ஜன்மா, இன்னும் இப்படியே பூர்வஜன்மங்கள் என்று போனால் ஆதியிலே எப்படி உடம்பு வந்தது என்றால், அப்போது கர்மாவினால் வந்திருக்க முடியாது அப்படியிருந்தால், இம்மாதிரி கர்மா செய்வதற்கு அதற்கும் முந்தி ஒரு பூர்வ ஜன்மமும், உடம்பும் இருந்திருக்கவேண்டும். இப்படி இருந்தால், அது ஆதிஜன்மாவே இல்லை.

ஜன்மா உள்ளது ஜீவன். ஜன்மாவே இல்லாத நிலையிலேயே இருந்திருந்தால் ஒரே ஆத்மாதான் இருந்திருக்கும். ஆத்மாவுக்கு ஜன்மா கிடையாது. ஆனாலும் அது ஜன்மா எடுக்கும் ஜீவனாக ஆகியிருக்கிறது.

ஒன்றுக்கொன்று முரண்ன மாதிரி, ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஆரம்பத்தில், 'ப்ரஹ்மத்திடமிருந்துதான் ஜன்மம் ஏற்படுகிறது' என்றும், பிற்பாடு ஜன்மா என்கிறது சரீரத்தால் ஏற்பட்ட பாவனைதானே தவிர நிஜமில்ல, ஆத்மா ஸ்ருஷ்டிக்கப்படாமல் நித்யமாயிருப்பது' என்றும் இருக்கிறது. பல ஜீவாத்மாக்கள் இருப்பதாகச் சொல்கிற த்வைதிகள் இந்த முரணபர்ட்டை 'ஸால்வ்' செய்துகொள்ள முடியாது. அவர்கள், 'ஆத்மா ஸ்ருஷ்டியற்ற நித்யப் பொருள்' என்பது ஜீவாத்மாவைக் குறிப்பதாகச் கொண்டால், அத்ற்கு ப்ரஹ்மத்திடமிருந்து ஜன்மா ஏற்படுவதை ஒப்புக்கொள்ள

முடியாது. நித்யமான ஸ்ருஷ்டியில்லாத ஒன்றுக்கு இன்னொன்றிடமிருந்து எப்படி ஜன்மா ஏற்படமுடியும்? அத்வைதத்தில், லோக வ்யாவஹாரத்துக்காகத்தான் ஜீவாத்மா' என்று ஒன்றைச் சொல்கிறோமே தவிர, வாஸ்தவத்தில் ஜீவாத்மா பரமாத்மா என்று இரண்டு ஆத்மாக்களோ, இப்படி அநேகம் ஜீவாத்மாக்களோ இருப்பதாகக் கொள்வதில்லை. நம் கொள்கை, இருப்பது ஒரே ஆத்மா என்பதுதான். அதையேதான் ப்ரஹ்மம் என்பதும், அது ஸ்ருஷ்டியற்ற நித்யவஸ்து என்று ப்ரஹ்மஸூத்ரம் சொல்வதை நாம் அப்படியே ஒப்புக்கொள்கிறோம். இந்த ஒரே ஆத்மாவில் பல ஜீவர்களுடையவும் ஜகத்தினுடையவும் தோற்றம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி ஜீவத்தோற்றம் அதிலிருந்து ஏற்பட்டுள்ளதால் ப்ரஹ்மமாகிய ஆத்மாவிடமிருந்தே ஜன்மம் என்று சொல்லியருப்பதையும் நாம் ஏற்க முடிகிறது." ஏதற்காக, எப்போது ஏன் இப்படி ஏற்பட்டு அப்புறம் கர்மாவினால் ஜன்மாந்தரங்கள் நடக்க வேண்டும்.?' என்றால்தான் புரியமாட்டேனென்கிறது.

இந்தப் புதிர்களை யோசித்தால் தலை சுற்றுகிறது. ஆதியிலே ஜன்மா எடுக்க ஜீவன், எப்படி உண்டாயிற்று என்று கேட்காதே. அது உண்டாவதேயில்லை. பரமாத்மா என்கிற அநாதி தத்வமே தான் அது' என்கிறார்கள். இன்னொரு விதமாகச் சொல்லும் போது மாயையானது ஆத்மாவிலே ஜீவன் என்ற பாவத்தைத் தோற்றுவித்திருக்கிறது என்கிறார்கள். "அப்படியானால் இந்த மாயை எப்போது தோன்றிற்று?" என்று கேட்டால் "எப்போது' என்று மாயையைப்பற்றிக் கேட்பதே தப்பு 'எப்போது' என்பது காலத்தைக் குறிப்பது. மாயையால்தான் காலம் என்ற ஒன்றே காலாதீதமான ஆத்மாவில் ஏற்பட்டிருக்கிறது. காலமே மாயையால் உண்டாக்கியுள்ளபோது, மாயை எந்தக் காலத்தில் தோன்றினது என்று கேட்டால் என்ன அர்த்தம்?"என்று வாயை அடைத்து விடுகிறார்கள்.

ஆறுதலாகவும் ஒன்று அவர்கள் சொல்வதில் தெரிகிறது. ஜீவன்தான் அநாதியோ, மாயைதான் அநாதியோ அது எப்படியானாலும் இந்த இரண்டுமே அநாதியாக வேண்டுமானால் இருக்க முடியுமே தவிர ஆனந்தம் இல்லை என்று தெரிகிறது. அதாவது முடிவில்லாதது இல்லை. முடிவுள்ளதுதான் என்று தெரிகிறது. ஆதி, அந்தம் என்று

இரண்டு. ஆதி தோற்றம், அந்தம் முடிவு. ஆதியந்தமில்லாமல் அநாதியாய், அனந்தமாயிருப்பது பரமாத்மா மட்டுந்தான். மாயைக்கு அந்தம் உண்டு. ஞானம் வந்தவுடன் அது இருந்த இடம் தெரியாமல் அழிந்துவிடும். அப்போது ஜீவாத்மாவும் பரமாத்மாவில் அந்தம் அடைந்து அதுவே ஆகிவிடும். அப்புறம் ஜன்மா இல்லை, உடம்பு இல்லை, கஷ்டங்கள் , த்வைதத்தால் ஏற்படும் ஆசை, பயம் முதலான எதுவும் இல்லை.

ஜீவாத்மா என்று தனியாய் ஒன்று அநாதியாயிருபப்து போலவே அனந்தமாகவும் இருக்கிறது என்பது த்வைதிகள் கட்சி. சாச்வதமாக ஜீவாத்மா என்று ஒன்றாகவே ஈச்வர ஸந்நிதானத்தில் ஆனந்தமாயிருப்பதுதான் மோக்ஷமான முடிவு நிலை, ஜனன - மரணம், மறுபடி சரீரம், ஸம்ஸாரம் என்பதற்கெல்லாம் அதுவே முடிவு என்கிறார்கள். அப்படியிருக்கும்போது அந்த ஈச்வரனே தங்களுக்குள்ளே அந்தர்யாமியாக இருப்பதை ஜீவாத்மாக்கள் தெரிந்துகொண்டு அதனால் ஜீவனுக்குள்ள பிடுங்கல் இல்லாமல் ஈச்வரனின் ஞான, ஆனந்தங்களைத் தாங்களும் அநுபவித்துக் கொண்டிருப்பார்கள் என்று த்வைதத்திலேயே ஒரு 'மாடிஃபிகேஷன்' செய்து விசிஷ்டாத்வைதம் என்று சொல்கிறார்கள். அந்தர்யாமி என்பதோடு நிற்காமல் இதற்கு மேலே இன்னம் கொஞ்சம் அத்வதைமாகவும் சிலர் அபிப்ராயப்படுகிறார்கள். (இவர்கள்) என்ன சொல்கிறார்களென்றால், ஸூர்ய வெளிச்சத்தில் நக்ஷத்திரங்கள் இருக்கிறாற்போல, மோட்சத்திலே ஈச்வர ஸந்நிதானத்தில் ஜீவாத்மாக்கள் இருக்கிறார்கள் என்கிறார்கள். ஸூர்ய வெளிச்சத்தில் நாம் இருப்பது கொஞ்சமாவது தெரிகிறதோ? இல்லையல்லவா? அப்படியானால் நட்சத்ரங்கள் அப்போது அழிந்தா போய்விட்டன? அப்படியும் இல்லை. இதே மாதிரிதான் பரமாத்ம தத்வத்திலே ஜீவாத்ம தத்வம் தன்னுடைய தனித்தன்மை அப்படியே மங்கி அதன் ப்ரகாசத்திலேயே முழுகிக் கிடக்கிறது என்கிறார்கள். 'முக்தியிலும் மும்முதல் உண்டு' என்பதாக மோட்ச நிலையிலும் பசு (ஜீவாத்மா), பதி (பரமாத்மா), பாசம் (ஜகத்) இருக்கிறது என்பவர்களோ அத்வைத (சார்பு) கொடுத்தும் இப்படிச் சொல்கிறார்கள். மோட்சத்திலே பரமாத்மாவோடு ஸம்பந்தம் எப்படி இருந்தாலும் ஸரி, இதைப்பற்றி ஸித்தாந்தங்கள் ஒன்றுக்கொன்று எத்தனைமாறுபட்டாலும்

ஸரி, அந்த ஸ்தீதியை அடைந்த பிற்பாடு மறுபடி ஸம்ஸாரமில்லை. ஜன்மா இல்லை என்பதை எல்லாரும் ஒரே மாதிரி சொல்கிறார்கள்.

இதைக் கொண்டே நாம் ஆறுதல் அடைவோம், த்ருப்திப்படுவோம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## தேவை விடுதலைக்கு முயற்சியே !

ஸ்வதந்த்ர ஆத்மாவுக்கு எப்படி ஸம்ஸார பந்தம் ஏற்பட்டது என்று எந்த ஸித்தாந்தத்திலும் த்ருப்திகரமாகச் சொல்லவில்லை என்பதை நினைத்து வருத்தப்பட வேண்டாம். ஸம்ஸாரத்துக்கு காரணம் மாயை என்று சொல்லும் அத்வைதத்தில் அந்த மாயையின் ஆளுகைக்கு எப்படி ஆத்மா ஆட்பட்டது என்று சொல்லாததைப் பற்றியும் நாம் வருத்தப்பட்டு யோசித்துக் குழம்பவேண்டியதில்லை.

ஏனென்றால், தெரிந்து ஒரு பொறியிலோ வலையிலோ விழுவதென்பதில்லை. அப்படித்தான் மாயா ஜால வலையில் எப்படியா விழுந்துவிட்டோம். 'ஜாலம்' என்றாலே வலை என்று அர்த்தம். 'மாஜிக்' என்றும் ஒரு அர்த்தம் - இதை வைத்துத்தான் 'மாஜிக்'கை ஜாலவித்தை என்கிறோம். மாஜிக் பொய்தான். ஆனாலும் நிஜம் மாதிரித் தெரிகிறது. அதனால்தான் 'மாஜிக் ஷோ' நடத்தி நாம் போய்ப் பார்க்கிறோம் - காசைக் கொடுத்துப் பார்த்து ஸந்தோஷப்படுகிறோம் ஆத்மா மாயையிலே கட்டுப்பட்டதாக நினைப்பதே மாயா மாஜிக்தான்!'அது நிஜமல்ல, ஆத்மா கட்டுப்படவே முடியாது' என்று எத்தனை சொன்னாலும், ப்ரத்யக்ஷமாக இத்தனை அவஸ்தைப்படுகிறோமே கொஞ்சே நேரம் பார்க்கிற மாஜிக் ஸந்தோஷம் தருகிறதென்றால், பல வாழ்க்கைகளாக அநுபவித்துவரும் இந்த மாஜிக் துக்கமே தருகிறது. அதனால், விடுபட யத்னம் ஆரம்பிப்பதொன்றுதான் நாம்

செய்யவேண்டியது. பொறியில் விழுந்தால், எப்படி விழுந்தோமென்றா ஆராய்ச்சி செய்துகொண்டிருப்போம்? எவ்வுளவு சீக்ரம் தப்புவோம், எந்த விதத்தில் தப்புவோம் என்றுதானே முயற்சி செய்வோம், அப்படி, மற்ற ஆராய்ச்சிகள் பண்ணி, 'எப்படி உடம்பு வந்தது? ஜன்மா வந்தது? ஸம்ஸாரம் வந்தது? மாயா பந்தம் வந்தது?' என்று மண்டையை குடைந்து கொள்ளாமல், இவற்றிலிருந்து விடுபடவே முயற்சி தொடங்கவேண்டும். இந்தக் கேள்விக்கெல்லாம் 'ஆன்ஸர்' கண்டே பிடித்து விடுகிறோமென்றாலும் அதனால் என்ன ப்ரயோஜனம்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**முடிவுள்ளதே ஸம்ஸாரம் ; ஏகோபித்த கருத்து**

எல்லா ஸித்தாந்திகளுமே ஜீவனுக்கு அந்தம் இருக்கிறதோ இல்லையோ, ஸம்ஸாரத்துக்கு அந்தம் இருக்கிறது என்கிறார்கள். நமக்கு வேண்டியது இதுதான், எல்லாக் கஷ்டங்களுக்கும் காரணமான ஸம்ஸாரம் போனால் போதும் என்றிருக்கிறது. அப்புறமும் ஒன்றும் தெரியாத ஜடமாய் ஆகிவிடாமலிருந்தால் தேவலை என்று இருக்கிறது. ஒரு கட்சி பரமாத்மாவாக ஆகி ஜடத்துக்கு நேர் மறுகோடியான சைதன்ய ஸ்வரூபமாக ஆவதைச் சொல்கிறது. இன்னொன்று அந்தப் பரமாத்மாவின் ப்ரேமையை அநுபவிக்கும் ஆனந்தத்தில் இருப்பதைச் சொல்வதால் இதுவும் ஜட ஸ்திதி இல்லை, நன்றாக சைதன்ய விலாஸமுள்ள நிலை என்று தெரிகிறது. இப்படியதோன் மூன்றாம் கட்சி சொல்கிறபடி சைதன்ய ப்ரகாசத்தில் முழுகிப் கிடப்பதும்.

முடிவு எதுவானாலும், ஆரம்பம் ஸம்ஸார பந்தத்தைக் கழித்துக் கொள்வதற்கானதை பண்ணத் தொடங்குவது-இதிலே எல்லா ஸித்தாந்திகளும் ஒத்துப்போகிறார்கள். ஸத்கர்மா பண்ணிப் பாபகர்மாவினால் ஏற்பட்ட ஸம்ஸார பந்தத்தைப் போக்கிக்கொள்வதும், கர்மாவைத் தூண்டிய பாப

சிந்தனையை ஈச்வர பக்தி பண்ணிப் போக்கிக் கொள்வதும்தான் ஆரம்பம்.

அத்வைத ஸாதனைக்கும் இதுதான் ஆரம்பம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**த்வைத நிலைகளை ஒப்புக்கொள்ளும் அத்வைதம்**

இதைப்பற்றிக் குழப்பமே வேண்டாம். "நாம் அத்வைதிகள் அல்லவா? அந்த ஸம்ப்ரதாயத்தில் வந்திருப்பவர்களல்லவா? அல்லது அதுதான் ஸத்யமான தத்வம் என்ற நம்பிக்கை உடையவர்களல்லவா? அந்த அநுபவம் ஸித்திக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறவர்களல்லவா? நாம் போய் ஒரே த்வைத மயமான கார்யத்திலும் (சாஸ்த்ரிய கர்மாநுஷ்டானங்களிலும்), பக்தி உபாஸனையிலும் ஈடுபடுவதாவது?" என்று கொஞ்சங்கூடக்குழம்பவே வேண்டாம். அத்வைத ப்ரதிஷ்டாபனாசார்யாளான பகவத்பாதோளே இப்படிப் பண்ணும்படிதான் ஆக்ஞை செய்திருக்கிறார். இத்தனை காலம் த்வைதத்திலிரு ந்துகொண்டு தப்புப் பண்ணிவிட்டு இப்போது திடீரென்று அத்வைதம் வரவேண்டுமென்றால் எப்படிவரும்? த்வைதத்தால் ப்ணணின தப்பை த்வைதத்தினாலேயே ஸரி பண்ணிக்கொண்டால், அப்புறம்தான் அத்வைதமாக ஸாதனை செய்யமுடியும். ஆனடிபயால் ஆசார்யாள் இப்படிப்பட்ட நிலையிலிருக்கிற நமக்காக த்வைதத்தை இந்த மட்டத்தில் நன்றாக ஒப்புக்கொண்டு நம்மையும் இதை ரிஸர்வேஷன் இல்லால் தைர்யமாக ஒப்புக்கொண்டு, அப்புறம் பக்வப்படப்பட இதைவிட தீரத்தோடு இதனுடன் போராடி ஜயித்து அத்வைதத்துக்குப் போகும்படியாகச் சொல்கிறார்.

மற்ற ஸித்தாந்திகள் அத்வைதத்தை அறவே ஒப்புக்கொள்ளததாததுபோல அத்வைதிகள் மற்ற ஸித்தாந்தங்களை ஒப்புக்கொள்ளாமல் மறப்பதில்லை.

அத்தைவ நிலையை அடைவதற்கு முன்னே த்வைதத்தின் பல நிலைகளும் இருக்கவே செய்கின்றன என்பதை ஆசார்யாள் நன்றாக ஒப்புக்கொண்டிருக்கிறார்.

"ந ச த்வைதஸ்ய அந்ருதத்வ புத்தி ப்ரதமமேவ கஸ்ய சித் ஸ்யாத் - அதாவது, "ஆரம்பத்திலிருந்தே த்தைவ ப்ரபஞ்சம் பொய்யானது என்று அறிவு யாருக்கும் இருப்பதற்கில்லை" என்று ப்ருஹதாரண்யகத்தில் பரம அத்வைதமாக "அதுவும் பூர்ணம், இதுவும் பூர்ணம்" என்று வரும் மந்த்ரத்துக்கு பாஷ்யம் செய்யுமிடத்திலேயே ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

ப்ரஹ்மத்திலிருந்து ஜகத்தின் தோற்றம் எப்படி என்பதைப் பற்றிப் பல கொள்கைகளை ப்ரஹ்ம ஸூத்ரத்தில் இரண்டாம் அத்யாய முதல் பாகத்தில் ஆராய்ந்திருக்கிறது. ப்ரஹ்மம்தான் ஜகத்தகாரணம் என்றாலும் வேறே வஸ்துக்களை வைத்துக்கொண்டு அது ஜகத்தைச் செய்ததா, தானே ஜகத்தாகப் பரிணமித்ததா, அல்லது வெறுமே இப்படி ஜகத் மாதிரி தோன்ற மட்டும் செய்கிறதா என்று பல அபிப்ராயங்கள் இருக்கின்றன. வேறு வஸ்துக்களைக் கொண்டு செய்ததென்றால் அவை எங்கேயிருந்து வந்தன? எங்கிருந்தோ வந்தனவென்றால் அப்போது ப்ரஹ்மம்தான் ஜகத்காரணம் என்பதே தப்பாகிவிடுகிறது. ப்ரஹ்மத்தைத் தவிர வேறு ஆதார வஸ்து இருந்துவிட்டால் ப்ரஹ்மமென்பது ப்ரஹ்மமே இல்லை ப்ரஹ்மம் ஜகத்தாகப் பரிணமித்தது, அதாவது பால் தயிராகிற மாதிரி மாறிற்று என்றாலும் ஸரியில்லை. விகாரம் (மாறுதல்) இல்லாமல் ஸ்வரூபத்திலேயே இருப்பதுதான் ப்ரஹ்ம ஜகத்தாகப் பரிணமித்தது, அதாவது பால் தயிராகிற மாதிரி மாறிற்று என்றாலும் ஸரியில்லை. விகாரம் (மாறுல்) இல்லாமல் ஸ்வரூபத்திலேயே இருப்பதுதான் ப்ரஹ்ம லக்ஷணம். இது இன்னொன்றாக மாறிற்று என்றால் ஸரியில்லை. அதோடுகூட, ஜகத்தாக இதுவே மாறிவிட்டதென்றால் அப்புறம் ப்ரஹ்மம் என்று தனியாக இருக்க முடியாது. ஜகத் தோன்றின பிறகு ப்ரஹ்மம் இல்லை என்று ஆகிவிடும். ஆனால், இந்த அபிப்ராயங்கள் எதுவும் ஸரியில்லை. ப்ரஹ்மம் வெறுமே ஜகத் மாதிரித் தோன்ற மட்டுந்தான் செய்கிறது. நிஜமாக ஸ்ருஷ்டி என்று ஏதோ வெளி சரக்கை வைத்துக்கொண்டு பண்ணவுமில்லை, அல்லது தானே உருமாற்றம்

கொள்ளவுமில்லை" என்று ஆசார்யாள் ஸ்தாபித்திருக்கிறார். பரிணாமம் என்று வேறாக ஆவது வேறு, ஆசார்யாள் சொன்னதுபோல வேறாகத் தோன்றுவது வேறு, இதற்கு 'விவர்த்தம்' என்று பெயர். பரிணாமம் என்றால் வாஸ்தவமாகவே ரூபம் மாறுவது. புழு வண்டாகிறது பரிணாமம். அபபுறம் அந்தப் புழு உண்டா ? இல்லை. ஆனால் அதே புழு ஏதோ பிய்ந்துபோன ரப்பர் துணுக்கு மாதிரித் தெரிகிறதென்றால் அப்போது வாஸ்தவத்தில் அதற்க்கு ஏதாவது மாறுதல் ஏற்பட்டதா என்ன? அது புழுவாகவேதான் இருந்துகொண்டு இருக்கிறது, அதே ஸமயம் ரப்பர் பிச்சாளம் மாதிரித் தெரிகிறது. இப்படி ப்ரஹ்மம் நிர்விகாரமாகவோ, தன் நிஜ ஸ்வரூபத்தில் எந்தவிதச் சலனமுமில்லாமலேதான் இருக்கிறது. அப்படியிருக்கும்போதே அதில் மாயையானது ஜகத் தோற்றத்தைக் கல்பிக்கிறது என்று ஆசார்யாள் எடுத்துச் சொல்லியிருக்கிறார். ரஜ்ஜு - ஸர்ப்ப ந்யாஸம், அதாவது கயிறு பாம்பாகத் தெரிகிற மாதிரி என்று அத்வைத புஸ்தகங்களில் அடிக்கடி வரும்.

அத்வைதத்தின் அடிப்படையான இந்த கொள்கையை "ப்ரஹ்ம ஸூத்"ரத்தின் அந்த பாகத்தில் "ததநந்யத்வ - மாரம்பண - சப்தாதிப்ய" என்ற (பதிநாலாம்) ஸூத்ரத்தில் நிலைநாட்டி விளக்கிக்கொண்டு போகிறபோதே நம்முடைய ஆசார்யாள் இதற்கு மாற்று அபிப்ராயமுள்ளவர்களையும் மதிக்கிறமாதிரி அத்வைதத்துக்கு முந்தைய நிலையில் த்வைதக் கருத்துக்களை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான் என்கிறார். ரொம்பவும் ஸ்பஷ்டமாக, "ஸ்வப்ன தசையில் உள்ளவரை அந்த ஸ்வப்ன வ்யவஹாரங்கள் ஸத்யமாகவே இருந்து, முழித்துக்கொண்ட பிறகே பொய்யெனத் தெரிவது போல, பரமாத்மாவே ஜீவாத்மா என்ற ஞான விழிப்பு ஏற்படுவதற்கு முந்தி த்வைதமான எல்லா ஸம்ஸார வ்யவஹாரங்களுக்கும் ஸத்யத்தன்மை பொருந்துவதாகவே கொள்ள வேண்டும்":

"ஸர்வ வ்யவஹாராணாமேவ ப்ராக் ப்ரஹ்மாத் மதா விஜ்ஞாநாத் ஸத்யத்வோபபத்தே : ஸ்வப்ந வ்யவஹாரஸ்ய ப்ராக் ப்ரபோதநாத்" என்று சொல்லியிருக்கிறார்.

இப்படி உள்ளதை உள்ளபடி ஒப்புக்கொண்டு, ஆசார்யாளே

விதித்துள்ளபடி புஷ்கலமாக (பூர்ணமாக) கர்மாநுஷ்டானம், பக்தி உபாஸனை பண்ணி, அப்புறந்தான் மனஸ் போகப் பண்ணிக்கொள்வதற்கான ஞான விசாரத்துக்கு ம்போகவேண்டும். அப்போதுதான் உள்ளது உள்ளபடி எப்போதுமே இருக்கும் ஒன்றே ஒன்றான தத்வததை அடைய முடியம். அத்வைதத்தை ஒப்புக்கொள்பவர்களாச்சே த்வைதமாகப் பண்ணலாமா? 'அத்வைதம் என்று நீட்டி முழக்கிவிட்டுக் கடைசியில் பார்த்தால் இவர்களும் நான் பண்ணும் கர்மா - பக்திகளைத்தானே பண்ணுகிறார்கள்!'என்று த்வைததிகள் பரிஹாஸம் செய்பவர்களே!" என்றெல்லாம் யோசிக்க வேண்டியதில்லை. ஸத்யம்தான் வேண்டும் என்றால் எல்லாவற்றுக்கும் துணிந்துதான் ஆகவேண்டும். ஒரேயடியாகப்பணிவதற்கும் துணியவேண்டு ம்!கொள்கையபிமானம் உள்படி எல்லா மானாபிமானமும் போகணும். இதுதான் ஆசார்யாள் வழி.

வறட்டு ஸித்தாந்தப் பிடிமானம் போகணும். 'முரட்டுப் பிடிவாதம்' என்கிறோமே, அது தன் வாத்தையே முரட்டுத்தனமாகப் பிடித்துக் கொண்டிருப்பதுதான். இப்படி, ஸித்தாந்த வாத்தையே வாயளவில் பிடித்துக்கொண்டு, வாழ்க்கை அநுஷ்டானத்தால் அந்த ஸித்தாந்த ஸாரத்தைத் தெரிந்துகொள்வதற்கு அடிநிலையிருந்து முயற்சி பண்ண பயப்பட்டால் உருப்பட முடியாது.

ஆசார்யாள் அவதாரத்தை முடித்துக்கொண்டு விதேஹ முக்தியடைய இருந்த ஸமயத்தில் பக்தர்கள் அவரிடம் வந்து, "தங்களுடைய ஏராளமான உபதேசங்களின் ஸாரத்தை வைத்துச் சுருக்கமாகக் கொடுத்து அநுக்ரஹம் பண்ணுங்கள்" என்று கேட்டுக்கொண்டார்கள், அப்போது அவர் ஸாதாரணமாக நம் மாதிரியாக உள்ள ஜீவன் அடிமட்டத்திலிருந்து எப்படி ஆரம்பித்துப் படிப்படியாக அத்யாத்ம ஸாதனைக்குப் போகவேண்டுமென்பதை ஐந்து ச்லோகங்களில் உபதேசித்தார். ('உபதேச பஞ்சகம்' என்றும் 'ஸோபாந பஞ்சகம்' என்று கூறப்படும்) அதிலே, "வேதத்தைத் தினமும் ஓதி, அதில் சொன்ன கர்மாக்களையெல்லாம் நன்றாக அநுஷ்டியுங்கள்" என்று முதல் வரியிலேயே உபதேசித்திருக்கிறார். ஸொந்த ப்ரீதிக்காக இல்லாமல் ஈச்வர ப்ரீதிக்காக இப்படிக் கர்மா பண்ணுங்கள் என்கிறார். அப்புறம், "பகவதோ பக்திர் த்ருடாதீயதாம்", அதாவது, "பகவானை

த்ருடமான பக்தியோடு உபாஸியுங்கள்" என்கிறார்.

நாம் நிஜமான ஆசார்ய சிஷ்யர்களானால் அவர் தம்முடைய ஜீவயாத்ரையை முடித்துக்கொள்ளும்போது முடிவாக அநுக்ரஹித்த உபதேசப்படிதான் நடக்க வேண்டும். அதாவது கர்மா, பக்திகள் பண்ணி, 'நம் சித்தம் சுத்தியாயிற்று, அதற்குச் சிதறாமல் ஒன்றிலேயே நிற்கிற ஆற்றல் ஏற்பட்டுவிட்டது' என்று நமக்கு நிச்சயமான உறுதி ஏற்பட்டபோதுதான் கர்மாவையும் பக்தியையும் நிறுத்திவிட்டு அத்வைத விசாரத்தில் தீவ்ரமாக ஈடுபடலாம். ஆரம்பத்திலிருந்தே அத்வைத லக்ஷ்யம் மறக்கப்படாதுதான். தினமும் கொஞ்சநேரம், 'இது அத்தனையும் மாயைதான், த்வைதந்தான், ஆத்மா ஒன்றுதான் ஸத்யம், அது எந்தக் கார்யமுமில்லாமல் பரம சாந்தமாக இருப்பதுதான் என்று நினைத்து, 'நாம் அப்படித்தானிருக்கிறோம்' என்று பாவனையாகவாவது சற்று நேரம் இருக்கத்தான் வேண்டும். ஆனால் அந்த பாவனை வாஸ்தவமாகவேண்டுமென்றால் அதற்குக் கர்மா, பக்திகள் பண்ணினால்தான் முடியும். பாவனை வலுக்க வலுக்க இவைதாமே விட்டுப்போகும். முதலிலேயே விடப்படாது. த்வைதத்தைக் கொண்டே அத்வதைத்துக்குப் போகவேண்டும். சரீரத்தால் செய்யும் கர்மாநுஷ்டானத்தைக் கொண்டே கர்ம நாசத்துக்கு வழி தேடவேண்டும். மனஸைக் கொண்டு செய்யும் பக்தியாலேயே மனோ நாசத்துக்குப் பக்வப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மற்ற ஸித்தாந்திகள் அத்வைதத்தை ஒப்புக்கொள்வதில்லை, ஆனால் அத்வைதிகள் அவர்கள் சொல்கிற த்வைதத்தையும் அத்வைதத்துக்கு ஏற்றிவிடும் படிகளாக ஒப்புக்கொள்கிறோமென்பதில் ஆச்சர்யமில்லை. வீட்டில் கீழே 'க்ரௌண்ட் ஃப்ளோரி'ல் இருப்பவர்களுக்கு மேலே மாடியிருப்பது தெரியாமலிருக்கலாம். ஆனால் மாடியிலே இருக்கிறவருக்குக் கீழே ஒரு தளம் இருப்பது தெரியாமலிருக்க முடியாது. "இந்த வீட்டுக்கு மாடி இருக்கா என்ன?" என்று கீழே இருப்பவர்கள் கேட்கலாம். ஆனால் மாடியில் இருப்பவர், "இதற்குக் கீழே ஒரு ஃப்ளோர் இருக்கா?" என்று ஸந்தேஹப்பட்டு கேட்கமாட்டார். இங்கேயிருந்து (கும்பகோணத்திலிருந்து) சிதம்பரத்துக்குப்போய் அங்கேயே இறங்கிவிடுபவருக்கு மெட்றாஸ் இருப்பது தெரியாது. ஆனால் மெட்றாஸ்

போகிறவர் சிதம்பரம் வழியாய்த்தான் போகவேண்டும். மலை உச்சிக்குப்போகிறவர் கீழேயிருந்துதான் போகவேண்டும். அதனலே கீழே உள்ள மலை ப்ரதேசங்களையும் அவர் "இருக்கு" என்று ஒப்புக்கொள்வார். கொஞ்ச தூரம் மட்டும்போய் அங்கேயே நின்றுவிடுகிறவர்களுக்கு உச்சியை தெரியாது. அவர்கள் பார்வையில் அந்த உச்சி மறைந்திருந்தால், "இதற்கு (அவர்கள் வந்திருக்கும் இடத்துக்கு) மேலே உச்சி இல்லை" என்று கூட நினைத்துவிடலாம். இந்த மாதிரி உபமானங்கள் கூடச் சொல்லவேண்டியதில்லை. என்னவோ சொன்னேன். மற்ற ஸித்தாந்தங்களையும் அரவணைத்துத் தழுவிக்கொண்டு போவதே அத்தைவமாதலால் இப்படியெல்லாம் சொல்வது கூட அதன் 'ஸ்ப்ரிட்'டுக்கு ஏற்காததுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### ஸத்ய, ஸந்தோஷங்கள் அத்வைதத்திலேயே

செய்யவேண்டியது, கர்மாவும் பக்தியும். ஆனாலும் ஆத்ம சிந்தனையும் ஆரம்பத்திலிருந்து ஒரு இழை அறுபடாமல் இருந்துகொண்டு இருக்கவேண்டும். அத்வைத மஹா தத்வத்தின் நினைவு மறக்கவிடக்கூடாது. 'அதற்காகத் தான் (அத்வைத அடைவுக்காகத்தான்) கர்மாவும், பக்தியும். கர்மாவுக்காகவே கர்மா இல்லை, பக்திக்காகவே பக்தி இல்லை. End (லக்ஷ்யம்) அத்வைதந்தான், means (உபாயம்) தான் த்வைதமாய் செய்யும் இது எல்லாம்' என்று ப்ரக்ஞை இருக்கவேண்டும். மாறாமலிருக்கிற ஸத்யநிலை அத்வதைமாயிருப்பதுதான். பாக்கியெல்லாம் மாறுதல்தான். மாறுகிற தென்றால் ஸத்யமான ஒரே ஸ்திதியில் நிலைப்பட்டு இல்லை என்றே அர்த்தம் .அதனால் த்வைதம் எத்தனை நன்றாயிருந்தாலும் ,அதிலே எத்தனை நல்லது இருந்தாலும் ஸத்யத்தைத் தெரிந்துகொண்டு அந்த ஸத்யமாகவே இருக்கவேண்டுமென்றால் இதைவிட்டு அத்வைத ஞானத்துக்குத்தான் போகவேண்டும். ஸத்யமான நிலையில்

நாமில்லை என்றால் அஸத்யமாக இருக்கிறோமென்றுதானே அர்த்தம்? அப்படியிருக்கலாமா?

இப்படியாக ஸத்யமாக இருப்பதோடு, நிஜமான ஸந்தோஷமாக இருப்பதும் அத்வைதத்தில்தான். "எதற்காக அத்வைதம்?" என்று கேட்ட ஸுக ஜீவிக்குச் சொன்ன பதில் இதுதான். புண்ய கர்ம வசாத் இன்றுவரை ஸுக ஜீவனம் கிடைத்தாலும், மனஸுக்கேயான இந்த ஸுகம் எந்த நிமிஷமும் ஓடிப்போய்விடலாம். மனஸானது உடம்பு, உடைமை இவற்றிலேயே பற்றுக் கொண்டதாயிருப்பதால் நாளைக்கே கைகால் உடைந்தால், அல்லது தேள் கொட்டினால், பாங்கில் போட்டிருந்ததை ஃபோர்ஜரி பண்ணி எவனோ அடித்துக்கொண்டு போய்விட்டால், அல்லது தெற்கத்திக்காரன் நம்முடைய ப்ரியமான பந்துமித்ரர்களால் எவரையோ பிடித்துக்கொண்டு போய்விட்டால் அப்போது மனஸிலே ஸுகம் போய் அதுநம்மை ஒரேயடியாய் தலையில் கை வைத்துக்கொண்டு உட்காரும்படி செய்துவிடும். அல்லது இப்படி வெளியேயிருந்து எதுவோ மனஸை பாதிக்க வராமல், அதுவே தாறுமாறாக எதையாவது நினைத்துவிட்டு அப்புறம், "இப்படி நினைச்சோமே, நினைச்சோமே" என்று கஷ்டப்படும்படியாகவோ, வெட்கப் படும்படியாகவோ நடக்கலாம், எந்த நிமிஷம் வேண்டுமானாலும் நடக்கலாம்.

அதனால் முடிந்த முடிவாக, எப்போதாவது, எப்படியாவது அதற்கான யோக்யதையை ஸம்பாதித்துக்கொண்டு மனஸைக் குறித்த த்வைத ஸுகானுபவம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, ஆத்மாவைக் குறித்ததாக மாத்ரமில்லாமல் ஆத்மாவாகவே இருக்கிற அத்வைத ஸௌக்யத்தில் சேர்வதில் கருத்து வைக்கவேண்டும்.

ஆத்மாவை அடைந்த போதுதான் நிஜமான 'தான்' தெரியுமாதலால், அதற்கப்புறம் உடம்பில் அபிமானம் போய், அதற்கு ஏற்படும் தொந்தரவுகள் நம்மை பாதிக்காதபடிசெய்துகொள்ளலாம். அப்போது ஸொத்தையோ, மநுஷ்யர்களையோ தன்னுடையவையாக நினைக்கிற மயக்கம்போகும். அதனால் அப்போது திருட்டுப்போவது, பந்துமித்ரர்களின் தேஹவியோகம் ஆகியவையும் கஷ்டத்தைக் கொடுக்காது. ஆசை, கோபம்,

பயம், துக்கம் என்று இன்னொரு வஸ்துவைக் குறித்து எழுகிற ஸகலமும் அதளபாதாளத்துக்கு அமுங்கிபோய் ஆனந்தமாயிருக்கலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆசையின் அனர்த்தங்களில் பயமும் ஒன்று**

நம்முடைய நிஜஸ்வரூபமான ஆத்மாவுக்கு இன்னொன்றாக, அதற்கு வேறான இரண்டாவது வஸ்துவாக எதுவுமே இல்லை என்பதுதான் அத்வைதம். தூக்கத்திலோ மயக்கத்திலோ நமக்கு வேறாக உலகம் இருந்ததா, உறவுக்காரர்கள் இருந்தார்களா, விரோதிகள்தான் இருந்தார்களோ, உடைமை எதுவாவது இருந்ததா? எதுவும் இல்லைதானே? இவை உள்ளவரைதான் இவற்றைக் குறித்து ஆசை, அந்த ஆசைக்கு இடையூறு ஏற்படுகிறபோது கோபம், அது நிறைவேறாதபோது துக்கம், அதை நமக்குக்கிட்டாமல் பண்ணக்கூடியவர்களிடம் பயம், அதைப் பெற்றவர்களிடம் பொறாமை என்றெல்லாம் ஏற்படுகின்றன.

"பயத்தையும் ஆசையில் உண்டாவதாகச் சொன்னது எப்படி? பேய் பிசாசு என்றால் பயப்படுகிறோம், புயல் மழை என்றால் பயப்படுகிறோம், முரடனிடம் பயப்படுகிறோம், மேலதிகாரியிடம் பயப்படுகிறோம் என்றால் இது மாதிரியான பயங்களுக்கு ஆசையா காரணம்?"

ஆமாம், ஆசைதான் காரணம். உடம்பிலே "நான்" என்ற ஆசை - அதற்கு ஹானி வந்துவிடப்போகிறதே என்று புயலுக்குப் பயப்படுகிறோம். சித்தத்திலே "நான்" என்ற ஆசை - அதனால் அதைப் பிடித்து ஆட்டுமே என்று பேய் பிசாசிடம் பயம். உடம்பை அடித்துப் போடுவானோ, அல்லது பொய்யான "நானி"ன் உடைமைகளைக் கொள்ளையடிப்பானோ என்று உடல் - உடைமையாதிகளிடம் உள்ள ஆசையிலேயே முரடனிடம் பயம். மனஸுக்கு 'மானம்' என்று ஒரு பெரிய மமகாரம் இருக்கிறது, அதிலே

உள்ள ஆசையால், மானம் போகிற மாதிரி மேலதிகாரி கேள்வி கேட்பாரோ, ஸஸ்பென்ட் பண்ணுவாரோ என்று அவரிடம் பயம். ஆக நாம் நம்முடையது என்று தப்பாக நினைத்து ஆசைப்படும் எதுவோ ஒன்றுக்கு ஹானி வந்துவிடப்போகிறதே என்பதிலேயே பயம் என்பது ஏற்படுகிறது. முன்னே க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் எல்லாவற்றுக்கும் காமம் (ஆசை)தான் மூலம் என்றேன். துக்கம், பயம் இவற்றுக்கும் அதுவேதான் காரணம் என்று இப்போது தெரிகிறது. ஆசைப்பட்டது கிடைக்காவிட்டால், அல்லது கிடைத்தும் அப்புறம் அதை இழந்துவிட்டால் துக்கம்.

மனஸில் ஆசை எழுவது எதைக் குறித்து? அதற்கு இன்னொன்றாக இருக்கிற ஏதோ ஒன்றிடம்தான். அந்த ஆசைக்குக் குறுக்காக எதுவோ ஏற்பட்டு க்ரோதமா, சோகமோ, பயமோ உண்டாவதும் இன்னொன்றால்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பலவற்றைக் குறிக்கும் த்வைதம்**

இன்னொன்று இல்லாமல் ஒன்று மட்டுமாயிருப்பது அத்வைதம். ஒன்று மட்டுமில்லாமல் இன்னும் பல இருப்பது த்வைதம். ஸரியாக வார்த்தைக்கு அர்த்தம் சொன்னால் "த்வைதம்" என்றால் இரண்டு" "இருமை" என்றுதான் அர்த்தம். - "பல" என்று அர்த்தமில்லை. 'பரமாத்மா என்று ஒன்று, ஜீவாத்மா என்று அதற்கு வேறாக இன்னொன்று. இப்படி இரண்டு இருப்பதுதான் ஸத்யம்' என்பதே த்வைத ஸித்தாந்தம். இங்கே முழுக்க ஜீவாத்மாவைப் பற்றியேதான் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவனைப் பொறுத்தமட்டில், தேஹ - இந்த்ரிய - அந்தஃகரணங்களே ஜீவாத்மா என்று நினைக்கிறவரையில் அவனுக்கு வேறாக அவனுடைய அநுபவத்துக்கு வருபவையாக அநேக வெளி வஸ்துக்கள் இருக்கின்றன. இவனொன்று, வெளியிலே இன்னொன்று

என்றில்லை. அவனொன்று, வெளியிலே பல. இப்படி இவனுக்கு வேறாக உள் எல்லாவற்றையுமே 'த்வைத ப்ரபஞ்சம்' என்று சொல்லிவிடுவது வழக்கம். அதிலே இரண்டுக்கு மேற்பட்ட பல பொருட்கள், அநேக சேதனா சேதனங்கள் இருந்தாலும், 'ஜீவாத்மா' என்று ஒருத்தன். 'அவனுக்கு இரண்டாவதாக இந்த இத்தனையும்' என்று வைத்து, த்வைத ப்ரப்ஞசம் என்று சொல்வதாக வழக்கம் ஏற்பட்டிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மனஸ் தனிப்பட்டு இராது**

தேஹேந்த்ரிய அந்தஃகரணமே ஜீவாத்மா, அதாவது பொதுவாகச் சொல்கிறபடி, மனஸ்தான் மநுஷ்யன் என்று நினைக்கிறவரையில் இந்த த்வைதத்துக்குத் தப்பவேமுடியாது 'மனஸ்' என்பதை வைத்ததான் 'மநுஷ்யன்' என்ற வார்த்தையை உண்டாயிருப்பது. 'மன்' என்றால் 'நினைப்பது'. ஜீவ ஜந்துக்களில் மிக உயர்வான சிந்தனாசக்தி படைத்தவனாக இருப்பதாலேயே இவனுக்கு மநுஷ்யன் என்று பெயர். ஆனாலும் இதுவரை நாம் பார்த்ததிலிருந்து இந்தச் சிந்தனா சக்தியினால்தான் அத்தனை கஷ்டமும், ஜன்மமும், கர்மமும், ஸம்ஸாரமும் என்று தெரிந்தது. அதோடு இந்தச் சிந்தனா சக்திக்கும் அடியிலே அதற்கும் ஆதாரமாக, ஆனால் அதனால் எட்டிப்பிடிக்க முடியாததாக, எண்ணமே எழும்பாத ஆத்மா என்று ஒன்று இருப்பதாகவும் அதுதான் ஜீவனுக்கு நிஜமான ஸ்வரூபமென்றும் தெரிந்தது.

மனஸ் இன்னொன்றின் ஸஹாயத்தை வேண்டாமல் அதுவாகவே சிந்திக்கிற சக்தி பெற்றிருக்கிறது என்பதை மட்டும் பார்க்கும்போது அதுவும் ஆத்மா மாதிரி அத்வைத ப்ரபஞ்சத்தின் 'டச்' இல்லாமல் ஏன் இருக்கப்படாது என்று தோன்றலாம். வெளியிலிருந்து வருகிறவற்றால்தானே உபத்ரவமெல்லாம்? வெளியிலிருக்கிற ஒன்றை

நம்முடையதாக்கிக் கொள்வதற்குத்தான் நாயாய், பேயாய் திரிந்து ப்ரயாஸைப்பட வேண்டியிருக்கிறது. அப்புறமும் அந்த வெளி ஸமாசாரம் தங்கி நிற்குமா என்று கவலை. அதுதானே அழியலாம், அல்லது வேறு யாராவது அதை அபஹரித்துவிடலாம் இதையெல்லாம் நினைத்தே கோபம், அழுகை, பயம் எல்லாம் உண்டாகின்றன, வெளி ஸம்பந்தமில்லாமல் மனஸ்பாட்டுக்குச் சிந்தனை பண்ணிக் கொண்டிருந்தால் இந்தக் கஷ்டமெல்லாம் இராதல்லவா? மனஸுக்கே டைரக்டாக சிந்தனா சக்தி இருப்பதால், அது அனர்த்த ஹேதுவான வேறு எதையும் சாராமல் தான் மாத்திரமாக இருந்துகொண்டு தன் காரியத்தைப் பண்ணிக்கொண்டு போகட்டுமே என்றால் -

இங்கேதான் மாயையின் திரிசமன் எல்லாம் இருக்கிறது. அதாவது மனஸுக்குத் தான் மாத்திரமாகத் தனித்து இருக்கவே தெரியாது. எப்போது அது தன்னிலேயே நிற்கிறதோ அப்போதுதானே இல்லாமல் ஓடிப்போய்விடும். ஆத்மா மட்டுந்தான் அதற்கப்புறம் ப்ரகாசிக்கும். பரமேச்வர மாயை இப்படித்தான் அதை ரொம்பவும் விசித்ரமாகப் பண்ணியிருக்கிறது.

மனஸ் அதுவேதான் சிந்திக்கிறது என்றாலும், எப்போதும் அது இன்னொன்றைக் குறித்தேதான் இப்படிச் சிந்தனைகளைச் செய்யக் கூடியதாக இருக்கிறது வேறொன்றையும் குறிக்காமல் சிந்திப்பது என்பது மனஸுக்குத் தெரியாத கார்யம். மாயா நாடகத்தில் இது அதனால் முடியாத கார்யம். மனஸிலேதான் பலவிதமான எண்ணங்கள் உண்டாகின்றன. ஆனால் யோசித்துப் பார்த்தால் உங்களுக்கே தெரியும் - அது ஒவ்வொன்றும் வேறே எதையோ பற்றியதாகவேதான் இருக்கும். அதற்கு அன்யமான விஷயங்களைப் பற்றியே அதில் எண்ணங்கள் உண்டாகின்றன.

மனஸ் think பண்ணுவது (நினைப்பது) மட்டுமில்லாமல் feel பண்ணவும் (உணரவும்) செய்கிறது. இபப்டி அது feel பண்ணுகின்ற, அதாவது அநுபவிக்கின்ற எல்லாமும் அதற்கு அன்யமான வஸ்துக்கள்தான். கோபம், ஸந்தோஷம், பயம், துக்கம் என்று பல உணர்ச்சிகள் மனஸிலேதான் எழுகின்றன என்றாலும் அவை வெளியிலிருந்து பெறும் அநுபவங்களைக்

குறித்தே எழுகின்றன. கரண்டியில் சாதம், ஸ்பூனால் உறுகாய், உத்தரிணியால் ஆபோசன தீர்த்தம் என்று நாம் எடுத்துப் போட்டுக்கொள்கிறாற்போல மனஸானது கண்ட, காது, மூக்கு, நாக்கு, த்வக்கு (சர்மம்) முதலியவற்றால் வெளி விஷயங்களை எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடுகிறது. அநுபோகம் செய்வது மனஸ்தானென்றாலும், அதற்குக் கருவியாக மனஸுக்கு இந்த்ரியங்கள் வேண்டியிருக்கிறது. அப்புறம் அந்த இந்த்ரியங்களுக்கும் வேறாகக் கண் பார்க்கிற காட்சி, காது கேட்கிற பாட்டு, மூக்கு மோந்து பார்க்கிற ஸென்ட், நாக்கு சப்புக் கொட்டுகிற ஊறுகாய், த்வக்கு புரள்கிற மெத்தை என்றிப்படிப் பல அந்யமான வஸ்துக்கள் தேவைப்படுகின்றன.

இந்த்ரியங்களை ஏவாமல் மனஸாக எதையோ நினைத்து அநுபவித்துக் கொண்டிருக்கிறது என்னும்போதுகூட அது எதையோதான் நினைக்க வேண்டியிருக்கிறதே தவிரத் தன்னையே நினைத்து அதை அநுபவித்து நிறைவுபெற முடியுவில்லை. மனஸ் கதை கல்பிக்கிறது, கவிதை புனைகிறது என்றாலும் அது வேறே பாத்ரங்கள், இயற்கைக் காட்சிகள், ரஸங்கள் ஆகயிவற்றைக் குறித்தனவாகத்தானிருக்கின்றன. வேடிக்கை என்னவென்றால் ஸுகமும் துக்கமுமான லக்ஷோபலக்ஷம் இந்த்ரியாநுபவங்களிலும் அந்த ஸுக துக்காதிகளை உண்மையாக அநுபவிப்பது மனஸு தானென்றாலும், இதில் ஒன்றைக்கூட அது தன்னிடமிருந்தே பெறமுடியாமல் வெளி வஸ்துக்களைக் குறித்தனவாகத்தான் பெறமுடிகிறது.

தனியாகத் தன்னை இன்னவென்று பார்த்துக்கொள்ள முயற்சி பண்ணினால் மனஸுக்குத் "தான்" என்றே ஒன்ற இல்லை என்றுதான் தெரியும். தன்னுடைய ஸம்பந்தமுடையதாக, தனக்கு ஸந்தோஷம், தனக்குத் துக்கம், தன்கருப் பிடித்தது, தனக்குப் பிடிக்காதது, தனக்குத் தோன்றுகிற எண்ணம், தனக்குக் கிட்டுகிற அநுபவம் என்றெல்லாம் அநேகமிருப்பது மட்டுமே தெரிகிறது. அதனாலேயே இது எதுவும் அதன் தானான நிஜ ஸ்வரூபமில்லை என்று தெரிகிறது. இவை மனஸுடன் ஸம்பந்தமுடையவை. ஸம்பந்தமுடையவை மட்டுமே என்பதாலேயே இவையே மனஸில்லை என்றாகிவிடுகிறது. ராமன் என்ற ஒருத்தனின் ஸம்பந்தம் கொண்டவைகளாக ராமனுக்கு வீடு இருக்கிறது. ராமனுக்கு

நிலம் இருக்கிறது, ராமனுக்குப் பத்னி புத்ரர் இருக்கிறார்கள். ராமனுக்கு புத்தி இருக்கிறது, ராமனுக்குப் பதவி இருக்கிறது என்றால் அந்த வீடு, நிலம், பத்தினி, புத்ரர், புத்தி, பதவி எல்லாம் வேறு, அவன் வேறுதானே? இவையெல்லாம் இல்லாமலும் ராமன் என்று ஒருத்தன் இருக்கமுடிகிறதுபோல, மனஸ் எதன் ஸம்பந்தமுமில்லாமல் இருக்க முடிகிறதா என்று பார்த்தால் அப்படி முடியவேயில்லை. மனஸ் என்றால் அது எதையாவது நினைக்காமல், அநுபவிக்காமல் இருக்க முடிவதேயில்லை. இந்த நினைப்பும், அநுபவமும் அயன் வஸ்துக்களைக் குறித்ததாக அல்லாமல் இருக்கமுடிவதும் இல்லை. அதாவது மனஸ் என்று வந்துவிட்டால் அது த்வைதத்தில்தான் ப்ரவ்ருத்திக்கும் (ஈடுபடும்).

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தனித்து நிற்பது ஆத்மாவே**

தனியாகத் தானாக அதைப் பிரித்துப் பார்க்கவே முடியாது. ஆகையால் மனஸை ஒருமுகப்படுத்தி தன்னிலேயே நிறுத்துவது என்பது வாஸ்தவத்தில், தனி ஸ்வரூபமே இல்லாத மனஸில் நிறுத்துவதாக இல்லாமல், எந்த வெளி ஸம்பந்தமும் இல்லாமல், இந்த மனஸின் ஸம்பந்தமும் கூட இல்லாமல் தன்னில் தானேயாய் நிறைந்திருக்கும் நிஜ நாமான ஆத்மாவில் நிற்பதுதான். மனோதீதமான ஆத்மாவை மனஸால் அநுபவிக்க முடியாது. ஆத்மாவை ஆத்மாவாலேயேதான், ஆத்மா ஒன்றால் மட்டுமேதான், அநுபவிக்க முடியும். மனஸின் ஸ்வபாவமும் ஆத்மாவின் ஸ்வபாவமும் ஒன்றுக்கொன்று முழுக்க ஆப்போஸிட்டாக இருக்கிறது. மனஸுக்குத் தன்னைத் தெரியாது, தனக்கு வேறான வஸ்துக்கள்தான் அதற்குத் தெரியும். ஆத்மா தன்னை மட்டுமே தெரிந்துகொண்டிருப்பது வேறு வஸ்துக்களே அதற்குத் தெரியாது. மனஸ் த்வைதம், ஆத்மா அத்வைதம்.

ஆனாலும் ஆத்மா இல்லாமல் மனஸ் இல்லை. ஆத்மாவே ஒருத்தனின் நிஜ ஸ்வரூபமான "தான்" என்றால், அந்தத் "தானை" ஆச்ரயிக்காமல் ஜீவனிடம் எதுவாவது இருக்க முடியுமா என்ன? தானே இல்லாத ஒருத்தனிடம் மனஸ் என்று ஒன்று எப்படியிருக்க முடியும்? ஆத்மாதான் மாயையால் மனஸாகியிருக்கிறது. அதாவது மனஸையே 'தான்' என்று நினைக்கிற ஜீவனாக ஆகியிருக்கிறது என்று அத்வைத சாஸ்த்ரம் சொல்கிறது. இப்படி அநேக ஜீவர்களாகவும் ஒரே ஆத்மாதான் ஆகியிருக்கிறது என்று சொல்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மின்ஸார உபமானம்**

இங்கே அத்யாத்ம சாஸ்த்ரத்துக்கு ஸயன்ஸ் உபகாரம் செய்து உபமானம் கொடுக்கிறது அடிக்கடி சொல்லும் உபமானம்தான். அதாவது, ஒரே எலெக்ட்ரிஸிடி வேறே வேறே பல்புகளில் நூறு 'வாட்', அறுபது'வாட்' என்றும் பச்சை, சிவப்பு முதலான பல நிறங்களிலும், டேப்ரிகார்டரில் சப்தமாகவும், ஏர்-கண்டிஷனரில் ஜில்லிப்பாவும், ஹீட்டரில் சூடாகவும் - இப்படிப் பலதினுஸாக வெளிப்படுகிறது. எலெக்டிரிசிடி இல்லாமல் இந்த எதுவும் வேலை செய்வதில்லை. ஆனாலும் இதை வைத்து எலெக்ட்ரிஸிடி இத்தனை வாட், அது இன்ன நிறம், அது இன்ன பாட்டுப்பாடுவது, அது இத்தனை சூடாக அல்லது குளிர்ச்சியாக இருப்பது என்று முடிவு பண்ணலாமா? இந்த எதுவுமாக இல்லாமல், இந்த எல்லாவற்றையும் இப்படியிப்படி ஆக்கிக் கொண்டு ஒரே மின்ஸார சக்தி பல ரூபங்களில் பல கார்யங்களை ஆக்குவிப்பது போல்தான் ஒரே அத்மா பலவிதமான ஜீவ ஜந்துக்களில் பலவிதமான மனப்போக்கு, சக்தி முதலியவற்றை ஏற்படுத்திப் பலவிதமான கார்யங்களையும் செய்துகொண்டிருக்கிறது. ஆனால் இந்த மனோபபாவங்கள், சக்தி ஸாமர்த்யங்கள், கார்யங்கள்

எதுவாவது அதற்குரிய லக்ஷணங்களா என்றால் அதுதான் இல்லை. இவற்றை அதன் லக்ஷணமாகச் சொல்வது பச்சை பல்பைப் பார்த்துவிட்டு எலெக்ட்ரிஸிடி பச்சை நிறமானது என்று சொல்கிற மாதிரிதான் டேப்ரிகார்டர் கேட்டுவிட்டு எலெக்ட்ரிஸிடிக்கு அஞ்சு கட்டைச் ச்ருதி என்கிற மாதிரிதான்!

பல எலெக்ட்ரிஸிடிகள் இல்லை. ஒரே எலெக்டரிஸிடிதான். அத்வைதம் அதுவே அநேக வஸ்துக்களில் அநேக கார்யங்களைச் செய்து த்வைதங்களுக்குக் காரணமாகிறது. இப்படி ஒரே ஆத்மாதான் மாயாசக்தியால் ஸகல ஜீவ - ஜட ஸமூஹவயாபாரங்களுக்கும், அதாவது ப்ரபஞ்ச நாடகம் முழுவதற்கும் காரணமாயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பரமாத்ம - ஜீவாத்மாக்கள்**

ஒரே ஆத்மாதான் இப்படி மாயையால் எல்லவாற்றையும் இருக்கிற மாதிரி காட்டுவது என்றால் அப்போது ஜீவாத்மா, பரமாத்மா என்று வேறு வேறாக இரண்டும் இருக்க முடியாது என்றாகிவிடுகிறது. மற்ற எல்லா மாயத்தோற்றம் மாதிரியதோன் ஜீவன் என்கிறவனும் ஆத்மாவிலே தோன்றிய ஒன்று பல ஜீவர்கள் இருந்தாலும், ஒவ்வொருவருக்கும் ஆத்மா என்று தனியாக ஒன்று இல்லாமல் ஏக ஆத்மாவேதான் எல்லாருக்கும் நிஜ ஸ்வரூபமாயிருக்கிறது.

தனி ஜீவன் என்று எடுத்துக் கொள்ளும்போது அவனுக்குத் தலையிலள்ள மயிரிலிருந்து ஆரம்பித்து கால்நகம் வரை ஒவ்வொன்றும் ஒரே விதமான பல அவயவங்கள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான கார்யத்தைச் செய்யும் பலவான கர்மேந்த்ரிய ஞானேந்த்ரியங்கள், சதை - கொழுப்பு - எலும்பு - ரத்தம் முதலான ஸப்த தாதுக்கள், லங்ஸ் - ஹார்ட் - குடல் முதலானவை, சித்தம் - புத்தி - மனஸ் - அஹங்காரம் என்று எத்தனையோ இருந்தாலும் இது அத்தனைக்குமாக

ஒரே உயிர்தானே இருக்கிறது? அந்த உயிர் போய்விட்டால் இந்த அத்னையும் பேய்விடுகின்றன நான் மேலே சொன்னவற்றில் சித்தம் - புத்தி - மனஸ் - அஹங்காரம் ஆகியவை உயிர் போனவுடன் ஒரு உடம்பை விட்டு மட்டும் போகின்றன, இன்னொரு உடம்பை அடைகின்றன. மற்றவை, அதாவது தேஹமாகப் பல கார்யங்களைச் செய்த அத்தனை அவயவங்களும் உயிர்போனபிறகு அழிந்தே போய்விடுகின்றன. எனவே இத்தனை த்வதைங்களுக்கும் மூலமானது அந்த ஏகமான உயிர் என்று தெரிகிறது.

இப்படியேதான் அநேகமான உயிர்களாகத் தெரியும் அத்தனை ஜீவர்களுக்கும் மூலம் ஒரே ஆத்மாதான். ஜீவாத்மா, ஜீவாத்மா என்று பல ஆத்மாக்கள் இல்லை. ஆத்மா ஒன்றுதான். பரமாத்மா என்பதும் அதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பரமாத்மா - ஜகத் காரணன், அந்தர்யாமி**

ஆனாலும் நெடுங்காலமாக நடைமுறையில் பரமாத்மா, ஜீவாத்மா என்று இரண்டு வழங்கி வருகிறது. நடைமுறை லோக நாடகத்தை வைத்து இப்படிப்பட்ட பாகுபாடு ஏற்பட்டிருக்கிறது.

லோகத்திலே என்ன பார்க்கிறோம்? ஜட லோகங்களும் ப்ரக்ருதியும் பலவிதமாகத் தொழில்படுகிறது. ஸூர்யனைச் சுற்றி க்ரஹங்கள் வருகின்றன. உலகத்தைச் சுற்றிச் சந்த்ரன் வருகிறது. இதனால் பகல் இரவு, அயனங்கள், பருவக் காற்றுகள் முதலியன உண்டாகின்றன. ஸூர்ய சக்தியில் பயிர் பச்சை வளர்கின்றன. இப்படிப் பல சேர்ந்து மநுஷ்ய ஜீவர்களின் வாழ்க்கைக்கு ஏற்றதாக உலகத்தை ஆக்கித் தருகின்றன. மநுஷ்யர்களிலும் மற்ற ஜீவ ஜந்துக்களிலும் ஸ்த்ரீ புருஷர்கள் சேர்ந்து இன வ்ருத்தி செய்துகொள்கிறார்கள். இன்னம் புத்தி, பலம் முதலியவற்றால் என்னென்னவோ செய்கிறார்கள். ஒவ்வொருத்தர்

ஒவ்வொருவிதமான புத்தி, பலங்களைப் பெற்றிருக்கிறார்கள். பூர்வகர்மா என்று அவரவர் பண்ணியது அவர்களை ஜன்ம ஜன்மாவாகப் பிடித்துக் கொண்டு பலனை அநுபவிக்கும்படிப் பண்ணுகிறது. இப்படி எத்தனையோ ஸமாசாரங்கள் ஒரு ஆர்டரில் ஒன்று ஒன்று சேர்ந்திருப்பதில்தான் நடைமுறை லோகவாழ்க்கை என்பது ஏற்பட்டிருப்பது தெரிகிறது. அதனால் இதை எல்லாம் வைத்து, இன்னின்ன மாதிரி நடத்தி வைத்துக்கொண்டிருக்கிற ஒருத்தன் இருக்கவேண்டும். என்று தெரிகிறது. அவனைத்தான் பரமாத்மா என்பது. 'பரம்' என்றால் உயர்ந்த, ச்ரேஷ்டமான என்று அர்த்தம். ஸகல ஜகத் காரணனனாகவும், அதன் கார்யங்களுக்கு அர்தர்யாமியான கர்த்தனாகவும் உள்ளே பேருயிராக அவன் இருப்பதால் பரமாத்மா' என்று சொல்கிறார்கள்.

அத்தைவ சாஸ்த்ரங்களை அநுஸரித்துப் பேசிக்கொண்டு போகிறபோது, ஜீவனின் சரிரம், இந்த்ரியம், அப்புறம் மனஸ் சித்தம் முதலிய அடங்கிய அந்தஃகரணம், அதற்கும் அப்புறம் மநோ இந்த்ரிய சேஷ்டையில்லாத வெற்றுவெளியான ஆத்மா என்று சொல்லிக்கொண்டு போய்விடும்படி ஆகிறது. பல ஜீவர்களும் ஒரே மாதிரியான அநுபவங்களைப் பெறும்படியான ஜகத் ஒன்று இருக்கிறதே அதன் தோற்றம் எப்படி என்பதைச் சொல்ல இங்கே இடமேற்படவில்லை. இதில் அத்வைதிகளுக்கிடையிலேயே தத்வங்களை ரொம்பவும் வித்யாஸப்படுத்திக்கொண்டு போகும்போது வித்யாஸமான அபிப்ராயங்கள் இருக்கின்றன. 'எனவே அத்வைதிகளின்' பொதுக்கருத்தை 'ஸிம்பப்ளிஃபை" பண்ணிச் சொல்கிறேன்.

மனஸ் இருப்பதால்தான் ஜீவனுக்கு ஜகத்தின் அநுபவம் ஏற்படுகிறது. ஜன்மாக்கள், உபத்ரவங்கள் எல்லாம் இதிலிருந்தே ஏற்படுகின்றனவாதலால் மனஸை இல்லாமல் பண்ணிக்கொண்டு ஆத்மாவாய் இருந்துடணும் என்று சொன்னேன். ஒரு தனி ஜீவனுக்கு ஜகத்தின் அநுபவம் மனஸினால் ஏற்படுகிறது. அதனால் மனஸை அடக்கி அந்த அநுபவத்தைப் போக்கிக்கொண்டு ஆத்மாநுபவம் அடையவேண்டும் என்பது ஸரி. ஆனால் இவன் தனி மனஸை அடக்கினவுடன் ஜகத்நுபவம் இவனுக்குப் போகிறதே ஒழிய, அந்த ஜகத்தே இல்லாமல் போய்விடுகிறதா என்ன? மற்ற ஜீவர்கள் அவர்களுடைய

மனஸ்களால் அதை அநுபவிக்கத்தானே செய்கிறார்கள்? ஜக்ததின் அழிவு இவன் மனஸினால் ஏற்படவில்லை என்பது போலவே, ஜகத்தின் தோற்றமும் இவனுடைய தனி மனஸின் கல்பனையில்லை என்பது ஸ்பஷ்டமாகிறது. இவனுடைய மனோ கல்பனையே ஜக்த என்றால், மற்ற ஜீவர்களுக்கும், ஸகல ஜீவர்களுக்கும் ஜகத் என்பதே மாதிரியாக, objective reality என்ற பொதுவான வெளிஉண்மை மாதிரியான ஒன்றாக இருக்காது. க்ரஹ நக்ஷத்ராதிகளின் ஸஞ்சாரத்திலிருந்து அணுக்குள்ளே எலெக்ட்ரான் - ப்ரோடான் ஸஞ்சாரம் வரையிலாக நடக்கிற எத்தனையோ விசித்ரங்களையெல்லாம் விசித்ரம் என்றாலும், ஒவ்வொன்றும் இஷ்டப்படி நடக்காமல் அநேக விதிகிளின்படியே இவை நடப்பதை கவனித்தோமானால் இவ்வளவையும் ஏதோ ஒரு தனி ஜீவ மனஸ் பண்ணினதாகச் சொல்வதற்கில்லை.

இந்த மனஸினால்தான் ஒரு ஜீவன் கர்மாக் கட்டில் மாட்டிக்கொண்டு அவஸ்தைப்படுகிறான் என்பதை கவனித்தோமானால் போதும்!எல்லாம் மனோ கல்பனை என்றால் எங்கேயாவது ஒரு ஜீவன்தானேதனக்கு இப்படி அவஸ்தையைக் கல்பித்துக்கொள்வானா? எல்லாம் மனோ கல்பிதமாயிருந்து, (இப்போது நமக்கு நன்றாகத் தெரிகிறபடி) பாபங்களைப் பண்ணுவதிலேயே மனஸூக்கு அதிகமான ப்ரவ்ருத்தியும் இருக்கிறதென்றால், அப்போது அந்த மனஸே இந்த பாக்யங்களுக்காக அநேக தண்டனைகளை அநுபவிக்க வேண்டுமென்று தன்னையே கஷ்டப்படுத்திக் கொள்ளுமா என்ன?

இதெல்லாவற்றுக்கும் மேலாக, ஒரு ஜிவனுக்கு அந்யமாக அநேக ஜீவர்கள் அவனுக்குத் தெரிகிறார்களே, அவர்களையெல்லாம் இவன் மனஸா படைத்தது? அப்படிப் படைத்திருந்தால் அதில் யார் எப்படிப்பட்டவர் என்று இவனுக்குத் தெரியவேண்டுமே!ஆனால் நடைமுறையில் கொஞ்சங்கூட அப்படிக் காணோமே!எத்தனை பழகினாலும் ஒருத்தர் எப்படிப்பட்டவர் என்று தீர்மானம் செய்து கொள்ள முடியாமலிருக்கிறதே!யோக்யர் என்று நினைத்து பலரிடம் ஏமாந்து போகிறோம். தப்பானவர் என்று நாம் நினைத்த ஒருவர் யோக்யம் என்று அப்புறம் தெரிந்து கொள்கிறோம்.

இன்னொன்று, உங்கள் மனஸின் கல்பனைதான் மற்றவர்

என்று நீங்கள் நினைத்தால், அவர்களில் ஒவ்வொருவரும் அவனுடைய மனோ ஸ்ருஷ்டிதான் நீங்கள் என்று நினைக்கலாம் எல்லா ஜீவர்களும் ஏதோ ஒரு ஜீவனின் மனோ கல்பனை என்றால், இந்த ஒரு ஜீவன் தன்னுடைய மனஸை அழித்து அதுவாக்கி முக்தி அடைந்தவுடன், மற்ற அத்தனை பேருமே இல்லாமல் அல்லவா போய் விடவேண்டும்? ஆனால் நடைமுறையிலோ எத்தனையோ மஹான்கள் மநோநாசம் செய்து அத்வைத முக்தி அடைந்திருக்கிறார்களென்றாலும், ஜீவ ப்ரபஞ்சமும் ஜட ப்ரபஞ்சமும் இருந்துகொண்டுதானே இருக்கின்றன இப்படி ஆலோசித்துக்கொண்டு போனால் மற்ற ஜீவ ஜகத்துக்களால் ஒருவன் பெருகிற அநுபவத்துக்குத்தான் அவனுடைய மனஸ் காரணமே தவிர, அந்த ஜீவ - ஜகத்துக்களுக்கே அது காரணமில்லை என்று தெரியும் .ஆனாலும் அவற்றுக்கெல்லாம் ஒரு காரண வஸ்து இருந்தாலொழிய இவை தோன்றியிருக்க முடியாது. இத்தனை சன்ன பின்னலிலும் அநேக விதிகளைத் துளிக்கூட வழுவாமல் அநுஸரிப்பதாகவும் ஜகத் வ்யாபாரம் இருக்கமுடியாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஈச்வரன் அல்லது ஸகுண ப்ரஹ்மம்**

அந்தக் காரண வஸ்து என்ன? அதுதான் மாயாசக்தி. ப்ரஹ்மத்தை இப்படிப் பலவான ஜீவர்களாகவும் ஜக்தாகவும் காட்டிக்கொண்டிருக்கும் சக்தி.

தனக்கு அந்யமாக ஏதுவுமே இல்லாத, இருக்கமுடியாத வஸ்துவே ப்ரஹ்மமாதலால், இந்த மாயா சக்தியும் அதற்கு வேறாக இருக்க முடியாதுதான். அப்படியிருந்துவிட்டால் ப்ரஹ்மமே எல்லாவற்றுக்கும் மூலாதாரம் என்பது பொய்யாகிவிடும் இதிலிருந்து தெரிவது என்னவென்றால், ப்ரஹ்மமே தான் மட்டுமாக எந்தத் தொடர்பும் இல்லாமிலிருப்பதோடுகூட, தன்னுடைய மாயாசக்தி

என்பதாக ஒன்றிடம் தொடர்பு கொண்டாற்போலவும் ஒரநிலை இருக்கிறது. தான் மட்டுமாகத் தனித்திருப்பதே நிர்குண ப்ரஹ்மம் என்பது. மாயையோடு கூடியிருக்கும்போது அதுவே ஸகுண ப்ரஹ்மம் எனப்படுகிறது. குணம் என்றால் ப்ரத்யேக லக்ஷணம். தனித்தன்மை என்பது. எந்த குணமும் இல்லாதது நிர்குணம் குணங்களுள்ளது ஸகுணம். ஈசவ்ரன் என்பது ஜகத் வ்யாபாரம் செய்கிற ஸகுண ப்ரஹ்மத்தைத் தான்.

ஒரே ஆத்மாவையே, ஜகத்தில் படைக்கப்பட்டு அட்டி வைக்கப்படுபவனாக இருக்கும்போது ஜீவாத்மா என்றும், அப்படிப் படைத்து ஆட்டிவைக்கிற ஸகுண ப்ரஹ்மமான ஈச்ரவனாக இருக்கும்போது பரமாத்மா என்று சொல்கிறோம்.

ஈச்வரனாக மாயா சக்தியுடன் கூடியுள்ளபோது (நிர்குணஞ்ரீ ப்ரஹ்மம் ஜகத்தைக் கல்பிக்கிறது என்றால் அப்போது இந்த ஈச்வரனை மஹா மனஸ் என்று சொல்லலாம். அல்பமான ஜீவ மனஸ் இருக்கிறாற்போல, கார்யங்களை நடத்தி வைக்கிறாற்போல, ஈசர்வரனான பரமாத்மாவின் சிந்தனையிலேயே ஜகத் உண்டாகிறது, ஜக்த வ்யாபாரத்தை அவனே நடத்துகிறானென்றால் (மஹாமனஸ் என்று சொல்லாம்தானே? எல்லா ஜிவ மனஸ்களுக்கும் மூலமான மஹா மனஸ் பரமாத்மா என்று சொல்லலாம். Cosmic Mind என்கிறார்களே, அது! இந்த மனஸுக்கும் நம்முடைய ஜீவ மனஸுக்கும் உள்ள பெரிய வித்யாஸம் நம்முடைய மனஸூக்கு ஆத்மாவைத் தெரிய முடியாது. மனஸ் அழிந்தால்தான் ஆத்மா விளங்கும். ஆனால் ஈச்வரனோ மஹாமனஸாயிருந்து கொண்டே ஆத்மஞான ரூபியாகவும் இருப்பவன். முன்னேயே பார்த்த ஸம்சாரம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**வேதாந்த "ஈச்வரன்" சிவனல்ல**

ஈச்ரவன் என்றவுடன் சிவன் என்று அர்த்தம்

பண்ணிக்கொண்டுவிடக்கூடாது. பொதுவிலே ஈச்ரவ சப்தம் சிவனுக்குத்தான் உரியதாக இருக்கிறது. ஈச்வரன் கோவில், பெருமாள் கோவில் என்றே சிவ விஷ்ணு ஆலயங்களை வித்யாஸப்படுத்திச் சொல்வதாயிருக்கிறது. வைஷ்ணவர்கள் மஹாவிஷ்ணுவை 'ஈச்வரன்' என்று சொல்லாமல் 'பகவான்', 'பெருமாள்' என்று சொல்கிறார்கள். ('பகவான்' என்பதன் அடியாகப் பிறந்த) பகவான் என்றால் விஷ்ணு பக்தன் என்றே அர்த்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் பழைய வேதாந்த சாஸ்த்ரத்தில் - ராமாநுஜரின் விசிஷ்டாத்வைத வேதாந்தம் உள்படத்தான் சொல்கிறேன் - இப்படி இல்லை. ராமாநுஜ மதம் உள்பட எந்த வேதாந்த சாத்ஸத்ரமானாலும் அதில் ஜீவ ஜட ஸமூஹப் ப்ரபஞ்சத்தையெல்லாம் ஆக்கி அளித்து அழிக்கிற பரமாத்ம சக்தி எதுவோ அதை Cosmic Mind என்றேனே அதை, "ஈச்வரன்" என்ற பெயரால்தான் குறிப்பிடுவார்கள். மஹா விஷ்ணுதான் இந்த மஹாசக்தி என்று ஸித்தாந்தம் பண்ணினவர்களும் அவனை "ஈச்வரன்" என்றே குறிப்பிட்டார்கள்.

பிற்பாடு வைஷ்ணவர்கள் "ஈச்வரன்" என்ற பெயர் வைத்துக்கொள்வதை நிறுத்திவிட்டாலும், ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தின் (ஸித்தாந்தத்தின்) முதல் ப்ரவர்த்தகர் (ஆசார்யர்) என்று கருதப்படும் நாதமுனிகள் என்பவரின் தகப்பனார் பெயரே ஈச்ரவ பட்டர் என்பதுதான். ராமாநுஜருக்கும் முந்தி அந்த ஸித்தாந்தத்தில் இரண்டு பூர்வாசார்யர்களைச் சொல்வார்கள். ஆளவந்தார் என்பவர் ஒருவர். அவருக்கும் முந்தி இருந்தவர் நாதமுனிகள். நாதமுனிகளின் பேரர்தான்

ஆளவந்தார். நாதமுனிகளின் தகப்பனாருடைய பெயர் ஈச்வர பட்டர் என்பது. எந்த ஒரு தெய்வத்தையும் குறிப்பிடாமல் பொதுவில், 'கடவுள்', 'ஆண்டவன்' என்கிறாற்போல, ஜீவலோகத்தை ஆட்டிவைத்துக்கொண்டிருக்கும் சக்தியையே 'ஈச்வரன்' என்பது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

ஆகவே ஜீவனின் இந்த்ரியம், மனஸ் ஆகியவற்றுக்கு அப்பால் ஆத்மா என்றே அத்வைத நூல்களில் பெரும்பாலும் சொல்லிக்கொண்டு போனாலும், ஜீவ மனஸுக்கு மேலேயும், 'ஜகத் என்பது அடிபட்டு போய் எந்தக் கார்யமும் நினைப்பும் இல்லாமலிருக்கிற) ஆத்மாவுக்கு கீழேயும் ஜகத் காரணமான, ஜகத் வ்யாபாரத்தை நடத்துவதான ஒரு பரமாத்ம சக்தி இருக்கிறது. ஜீவனுக்குக் கர்மாப்படி ஜன்மாக்களைத் தந்து ஆட்டி வைத்துக்கொண்டிருப்பது அந்தப் பரமாத்ம சக்தியே. மனஸானது அந்தப் பரமாத்மாவான மஹா மனஸை உபாஸனை பண்ணின பின் தான் ஐகாக்ரியம் அடைந்து (ஒருமுகப்பட), அப்புறம் அதற்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மாவிலே போயக் கரையமுடியும் .இப்படிதான் ஆசார்யாள் பாதை போட்டுக் கொடுத்திருக்கிறார்.

மனஸ் சுத்தமாவதற்காக சாஸ்தரப்படியான கர்மாவைப் பண்ணவேண்டம், பலவற்றிலே சிதறிக்கொண்டிருக்கிற மனஸ் ஒருமுகப்படுத்துவதற்காகத் தன்னைப் பண்ணின மனஸான ஈச்ரவனை உபாஸிக்கவேண்டும், இப்படிச் சுத்தப்படுத்தி ஒருமுகப்படுத்திய பிறகுதான் அது தன் ஸ்வரூபத்தையே ஆத்மாவில் இழப்பதற்குரிய பக்வத்தை அடையும், அப்போதுதான் ஞான மார்க்கத்தில் ஆத்ம விசாரம் செய்யவேண்டும் என்று ஆசார்யாள் வைத்திருக்கிறார்.

சின்ன மனஸ் அந்தப் பெரிய மனஸை நினைத்து, அதனிடம் பணிவோடு பக்தி பண்ணிக்கொண்டுநின்றால் அந்தப் பெரிய மனஸ் இதற்கு அநுக்ரஹம் செய்ய நினைக்கிறது. "இதை மாயையிலிருந்து விடுவிக்கலாம்" என்று அருளோடு நினைத்து, சின்ன மனஸினனான ஜவனுக்கு அத்வைதத்திலே ஆசையை, பிடிப்பை ஏற்படுத்தி இவனை ஆத்ம மார்க்கத்தில் போகப் பண்ணுகிறது. ஈச்வரன் என்கிற அந்த Cosmic Mind-ன் அநுக்ரஹத்தால்தான் ஒரு ஜீவனுக்கு அத்வைதத்தில் ருசியே ஏற்படுகிறது என்று அத்வைத சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது.

## அத்வைதம்

## ஸத்ய ஆராய்ச்சி - ஜீவ கோணத்திலும், ஜகத் கோணத்திலும்

ஆனால் இதை விட்டுவிட்டாற்போல, இந்த்ரியம் - அதற்கு ஆதாரமான மனஸ் (ஜீவனை ஒரு தனி ஆஸாமி) போலக் குறுக்கி காட்டுவதே இதுதான்) - அந்த மனஸுக்கு ஆதாரமான ஆத்மா என்று சொல்லிக்கொண்டு போவதற்குக் காரணம், ஜீவனுடைய நிலையிலிருந்து அவனுடைய உள் ஆதாரத்தைப் பார்த்துக்கொண்டு போவதுதான். சரீரம்தான் முதலில் தெரிகிறது. இது ஜீவனுடைய தனிப்பட்ட சரீரம்தான். அப்புறம் அதற்க்குள்ளே அதை ஆட்டிவைக்கும் இந்த்ரிய ருசிகள் தெரிகின்றன. இந்த இந்தரிய ருசிகளும் ஒரு தனி ஜீவனுக்கு உரியவைதான் அப்புறம் இதற்கும் உள்ளேயிருந்து இந்த ருசிகளை உண்டாக்கி ஆட்டிவைப்பதான மனஸ் என்பது தெரிகிறது. இதுவும் தனிப்பட்ட ஜீவனைச் சேர்ந்ததுதான், Individual mind-தான். கடைசியிலே அடையப்போகிற ஆத்மாதான் ஜீவனுடைய ஸார பூதமான ஆதார ஸத்யம். அதனாலே அதை, ந்யாயமாகப் பார்த்தால், தனி ஜீவனுடையது என்று சொல்லவேகூடாது என்றாலும் - தனி ஜீவத்வம் அடிபட்டுப்போனால்தான் அந்த ஆத்மாவின் அநுபவேம உண்டாகும் என்னும்போது அதை இவனுடையது என்று சொல்வது ந்யாயமில்லை என்றாலும் அதுதான் தன்னுடைய உண்மை நிலை என்று ஒரு 'உடைய' போட்டு ஜீவன் நினைப்பதால், எதற்குமே அது உடைமையாயிருக்க முடியாதாயினும் அதையும் நம்முடைய பாவனையைக் கொண்டு தனி ஜீவனைச் சேர்ந்த விஷயமாகவே வைக்க இடமேற்படுகிறது. இப்படியாக ஒரு 'இன்டிவிஜுவல்' (தனிப்பட்ட) ஜீவனின் ஸொந்தமான உள்தத்வம் என்று அவனை மையப்படுத்தி உள்ளே உள்ளே போய்ப் பார்க்கிறபோது இந்த்ரியங்களைக் கொண்ட சரீரம் - இந்த்ரியங்களை ஆளும் மனஸ் (மனஸை அங்கமாகக் கொண்ட அந்தஃகரணம்) - அதற்கும் ஆதாரமான ஆத்மா என்றே போய் முடிந்துவிடுகிறத. இவனொருத்தனையே

ஆராய்ந்துகொண்டு போனதால், இவனை மட்டுமில்லாமல் மற்ற ஜீவ ப்ரபஞ்த்தையும், ஜட ப்ரபஞ்சத்தையும் கல்பித்த ஈச்வரனை இங்கே மனஸுக்கும் ஆத்மாவுக்கும் நடுவே கொண்டுவராமலே சொல்லிக்கொண்டு போகும் படியாக ஆகிறது.

ஆனால் ஸத்ய தத்வத்தை ஜீவனுடைய நிலையிலிருந்து ஜீவனுடைய Point of view -விலிருந்து பார்க்காமல் ஜீவ ஜட ப்ரபஞ்சமான ஜகத்தின் கோணத்திலிருந்து ஆராய்ந்து கொண்டு போனால் அப்போது ஈச்வர தத்வம் வந்துவிடும்.

ஜகத்துக்கு ஆதார ஸத்யம் என்பதாக எந்த மூலவஸ்து ஆராயப்படுகிறதோ அதற்குத்தான் "ப்ரஹ்மம்" என்று பெயர். "ப்ருஹ்" என்றால் "பெரியதானது". பெரியதிலெல்லாம் இதுவே பெரியது என்பதால் "ப்ரஹ்மம்" என்று பெயர். ஸகல ஜீவ - ஜட லோகங்களுக்கும், அதாவது சேதனமான கோடானு கோடிவித ஜீவ ஜந்துக்களுக்கும், எத்தனை விஸ்தாரம் என்று கணக்குப் பண்ணுவதற்கே தலை சுற்றுகிற மாதிரி கோடி கோடி கோடி மைல்கள் பரவியிருக்கிற கோடானுகோடி நக்ஷத்ராதிகளுக்கும் எது காரணமோ அதான் பெரிசில் எல்லாம் பெரிசு? அதனால் "ப்ரஹ்மம்" என்று பெயர். இப்படி அதுவே ஸர்வகாரணம், ஸர்வாதாரம், ஸகலத்துக்கும் மூலம் என்றால் அப்போது ஜீவனுக்கும் அதுவேதானே ஆதாரமான மூலவஸ்துவாக இருக்கவேண்டும்? இப்படி ஜீவனுக்கு ஆதரமாயிருப்பதைதானே அவனுடைய நிஜ ஸ்வரூபமான ஆத்மா என்பதாகச் சொன்னோம்? அதனாலே ஆத்மாவதோன் ப்ரஹ்மம் என்று ஆகிவிடுகிறது. ஜீவனுடைய 'பாயின்ட்'டிலிருந்து அவனுக்கு அடிப்படையான ஸத்யம் எது என்று பார்த்துக்கொண்டே போய் நாம் முடிவாக அடைந்த ஆத்மா எதுவோ அதையே தான் ஜகத்தின் 'பாயின்டி'லிருந்து அதற்கு எது அடிப்படை என்று பார்த்துக்கொண்டு போகும்போது 'ப்ரஹ்மம்' என்கிறோம் என்று தெரிகிறது.

ஆத்மாவே ப்ரஹ்மம் என்று சொல்வதைவிட ப்ரஹ்மமே ஆத்மா என்பதுதான் பொருத்தமானது. ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றேதான் என்றாலும்கூட, ஒரு ஜீவனைக் குறித்ததாகவே நினைக்கப்படும் ஆத்மாவை ஸர்வ ஜீவ - ஜட காரண வஸ்தவான ப்ரஹ்மம் என்பதைவிட, "ப்ரஹ்மமேதான்

ஆத்மா, அதாவது, ஸகல ப்ரபஞ்சங்களாகவும் எது தோன்றுகிறதோ, அதுவேதானப்பா நீயாகவும், நானாகவும், அவனாகவும் இப்படி நாநா ஜீவர்களாகத் தோன்றுவது" என்று சொல்வதுதான் பொருத்தம். அதுதான் அழகு. ஜீவனாகத் தன்னை நினைத்துக் கொண்டிருப்பவன் ப்ரஹ்மமேதான். இவனுடைய ஆத்மாதான் ஸர்வாத்மா. ஸர்வ ஆத்மா என்றால் பல ஆத்மா இல்லை. ஆத்மா ஒன்றுதான். ஸர்வத்துக்கும் அந்த ஒன்றே ஆத்மா. ஸர்வ ஜீவ ஜகத்துக்களகாவும் அந்த ஒன்றே மாயா சக்தியாலே வேஷம் போட்டுக்கொண்டு தோன்றுகிறது. இப்படிச் சொல்கிறபோதுதான், அதாவது ஜீவனின் 'பாயின்ட்'டில் ஆதாரமென்ன என்று பார்க்காமல், ஜகத்தின் 'பாயின்ட்' டிலிருந்து ஆதாரத்தை ஆராய்ச்சி பண்ணும்போதுதான், ஆத்மாவுக்கு அடுத்தாற்போல், அது மாயையாலே போட்டுக்கொண்டுள்ள ஈச்வரன் ரூபமான Cosmic Mind வந்துவிடும். அப்புறம்தான் அது சின்ன மனஸ்களான நம் மனஸ்களை உண்டு பண்ணி, நமக்குத் தனி அஹங்காரத்தைக் கொடுத்து ஜீவர்களாக ஆக்குவது. இந்த ஈச்வரனேதான் இந்த்ரிய மூலமாக ஜீவ மனஸ் பலவித அநுபோகங்களை எதிலிருந்து பெறுகிறதோ அந்த ஜகத்தையும் தோற்றுவிப்பது.

இன்னொரு தினுஸாகச் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஜீவ ஆத்மா, ஈச்வர ஆத்மா**

ஜீவனுக்கு ஆதாரம் என்ன என்று பார்த்தால் அவனுடைய மனஸ், அப்புறம் ஆத்மா என்று போகிற மாதிரி, ஜகத்துக்கு ஆதாரம் என்னவென்று பார்த்தால் இதையெல்லாம் பண்ணி ஜகத்துக்கு ஆதாரம் என்னவென்று பார்த்தால் இதையெல்லாம் பண்ணி, ஒன்றோடொன்று பின்னி வைத்து ஆட்டிக்கொண்டிருக்கிற ஈச்வரன் என்று தெரிகிறது. அப்புறம்

ஆலாசித்தால் அவனுக்கும் ஆதார அடிப்படையாக ஒன்றும் பண்ணாமல் தானாக இருந்துகொண்டிருக்கிற ஒரு ஆதார ஸத்யம் இருப்பதாகத் தெரியவரும். ஜகத்தைப் பண்ணுகிறவன் ஈச்வரன் என்னும்போதே, அவன் அதைப் பண்ணாமல் தானாக இருக்கிற நிலை என்ன என்பதாக அவனுடைய நிஜ ஸ்வரூபத்துக்கு ஒரு basis-ஐத் தேடவேண்டியதாகத்தானே இருக்கிறது? ஜீவ மனஸுக்கு இதே மாதிரி ஆதாரத்தைத் தேடிக்கொண்டே போனபோதுதான்." ஸதாவும் எதையாவது பண்ணிக்கொண்டேயுள்ள இந்த மனஸுக்கு ஆதாரமாக எதையும் பண்ணாமல் வெறுமே இருந்துகொண்டு மட்டும் உள்ள ஆத்மா இருக்கிறது. அதன் இருப்பு தூக்கம், மூர்ச்சை முதலியவற்றால் 'நெகடிவ்' ஆகவும், ஸமாதியநுபவத்தால் 'பாஸிடிவ்' ஆகவும் தெரிகிறது" என்று தெரிந்து கொண்டோம். அந்த ஆதாரத்தினால்தான் மனஸ் வேலை பண்ணுவதே, அது இல்லாமற் போனால்

மனஸே இல்லை என்று தெரிந்துகொண்டோம். இந்தத் தனி ஜீவ மனஸுக்குச் சொன்னது ஈச்ரவன் என்ற Cosmic Mind-க்கும் பொருந்தத்தான் வேண்டும். ஈச்வரனுக்கும் ஆதார ஸத்யமாக எதுவும் பண்ணாமல் இருந்து கொண்டு மட்டும் இருப்பதான ஒன்று இருந்துதான் ஆக வேண்டும். ஜீவனுக்கு ஒரு ஆத்மா உள்ள மாதிரி, ஈச்வரனுக்கும் ஒரு ஆத்மா இருக்கவேண்டும். அதுதான் பரமாத்மா எனப்படுவது.

'இத்தனை நாம ரூபங்களும் குணங்களும் கார்யங்களும் கொண்ட ஜகத்துக்கு ஆதாரமான ஈச்வரன் தன்னில் தானாக ஆதார ஸத்ய நிலையில் இருக்கும்போது அவனுடைய நிஜ ஸ்வரூபமான, அதாவது ஆத்மாவாக இருப்பது எப்படியிருக்கும்?' என்று ஆலோசித்தோமானால், அது எந்த நாமமம், ரூபமும் குணமும், கார்யமும் இல்லாததாகத் தானிருக்குமென்று தெரியும். "அதெப்படி?" என்றால், அதற்கென்று தனியாக ஒரு குணம், ரூபம், கர்மம், நாமம் இருந்துவிட்டால் அது இதற்கு வித்யாஸமான மற்ற குண கர்மங்கள் நாம ரூபங்கள் ஆகியவற்றை எப்படி உண்டாக்க முடியும்? பல கலர்கள் பிறக்கிற மூலம் எது என்று த்ருஷ்டாந்தத்தை வைத்து இதைப் புரிந்துகொள்ளலாம்.

ஊதாவில் ஆரம்பித்து சிவப்புவரையில் V- I - B - G - Y - O - R என்று ஏழு கலர்கள் சொல்கிறார்கள். இந்த ஏழும் எதிலிருந்து உண்டாயின என்றால், எந்த வர்ணமுமேயில்லாத வெளிச்சத்திலிருந்து colourless light -லிருந்து வந்தது என்கிறார்கள். இதை விஞ்ஞான பூர்வமாகவே colour spectrum என்று நமக்கு நிருபித்துக் காட்டுகிறார்கள். கலரேயில்லாத ஸூர்ய வெளிச்சத்திலிருந்தே மேக மண்டலத்தில் ஒரிச் சிதறல் (refraction) ஏற்பட்டு ஏழு கலரும் உள்ள அழகான வானவில் தோன்றுவதைப் பார்க்கிறோம். கலரில்லாத வைரத்தின் பட்டைகளில் வெறும் வெளிச்சம் பட்டு ஏழு வர்ணங்களையும் வாரிக் கொட்டும் விநோதத்தைப் பார்க்கிறோம். இதிலிருந்து, பல வர்ணங்களையும் உற்பத்தி செய்யக்கூடியது ஏழு வர்ணமுமே இல்லாததாக இருக்க வேண்டுமென்று தெரிகிறது- இப்படித்தான் நாநா பேதங்கள் கொண்ட குண கர்ம நாம ரூபங்களைக் கொண்ட ப்ரபஞ்சத்துக்கு ஆதாரனாக உள்ளவனின் அடிப்படையான நிஜ ஸ்வரூபம் எந்த குணமும் இலலாததாக, எந்த கர்மாவும் செய்யாததாக, எந்த நாமமும் தரிக்காததாக, எந்த ரூபமும் கொள்ளாததாக இருக்கவேண்டும். அதுதான் அத்வைதிகள் சொல்லும் நிர்குண, நிஷ்க்ரிய, நாம ரூபரஹித ப்ரஹ்மம்.

ஜீவனின் நிஜ ஸ்வரூபமான ஆத்மா இப்படிப்பட்டதே என்று பார்த்தோம். இதிலிருந்து இன்னம் ஆலோசித்துக் கொண்டு போனால், ஈச்வரனின் நிஜஸ்வரூபமான ஆத்மா ஜீவனின் ஆத்மா மாதிரியான இன்னொன்றாக இருக்க முடியாததென்றும், இதுவும் அதுவும் ஒன்றாகவேதான் இருக்க வேண்டும் என்றும் தெரியும்.

எப்படி?

ஜீவனின் ஆத்மா என்று வைத்துக்கொண்டாலும் ஸரி, அல்லது ஈச்வரனின் ஆத்மா என்று வைத்துக்கொண்டாலும் ஸரி. எதுவானாலும் அது குணம், கார்யம், ஊர், பேர், உருவம், உடைமை எதுவுமே இல்லாதது என்று பார்த்தோம். அது இப்படி இப்படி இல்லாதது ("தேதி" என்று இதை வேதாந்தத்தில் சொல்வார்கள்),

எதுவாகவுமே இல்லாதது என்று முடிவுக்கு வரும்போது

அதை ஒரு ஸைஃபர் என்றுதான் கருதவேண்டியிருந்தது. ஸைஃபர் என்பது இல்லாத வஸ்து. எனவே அதிலே இரண்டு ஸைஃபர், மூன்று ஸைஃபர் என்று இருக்க முடியாது. 'நம்பர்களாக இருக்கிறவற்றில்தான் ஒன்று, இரண்டு, மூன்று என்று வித்யாஸமாகப் பல இருக்கமுடியும். இல்லாத ஸைபராகப் பல இருக்க முடியாது. ஆகையினாலே, ஜீவனுக்கு ஆத்மாவாயிருக்கிற ஒரு ஸைஃபர், ஈச்வரனுக்கு ஆத்மாவாக உள்ள இன்னொரு ஸைஃபர் என்று இருக்க முடியாது. இரண்டும் ஒன்றுதான் என்று ஆகிவிடுகிறது.

ஜீவ - ஜகத்தின் கோணத்திலிருந்து பார்க்கும்போது இவற்றைக் குறித்த எதுவாகவும் அது இல்லை என்பதால் இப்படி ஸைஃபராகின்றது, ஆனால் அது வாஸ்தத்வதில் எப்படி ஸைஃபராக இருக்கமுடியும்? ஸர்வமும் அதிலிருந்து தான், அது இல்லாமல் எதுவுமே இல்லை, அதுதான் ஆதாரம், நிஜஸ்வரூபம் என்று சொல்லிவிட்டு அது ஸைஃபர் என்றால் எப்படி? ஆகையினால் நம்மை ஸென்டராக வைக்காமல், அதையே ஸென்டராக வைத்துக் பார்த்தால் அது ஸைஃபர் இல்லை, அதுவே பூர்ணம் என்று தெரியும். ஏழு கலரில் எதுவாகவும் இல்லை என்பதால் அவற்றுக்கு ஆதாரமாக 'லைட்' என்றே ஒன்று இல்லை என்றால் அது கொஞ்சங் கூட ஸரியில்லையே கலர்களாக அது இல்லையே தவிர ஒாி என்ற ஒன்றாக இருக்கத்தானே செய்கிறது? அப்படியே ஜீவனின் ஆத்மா என்பது அவனுடைய இந்த்ரியாதிகள், மனஸ், கார்யங்கள், குணங்கள் முதலியன இல்லாததாயிருந்தாலும் அதுதான் ஸத்யம் என்ற இருப்பாகவே இருப்பது. 'அது இல்லாமல் இது எதுவும் இல்லை. அதெல்லாம் அதன் துளிச்சாயைதான். மேகத்திலோ, 'ப்ரிஸ'த்திலோ ஒாி சிதறி வர்ணமுண்டாகிற மாதிரி மாயையிலே ஆத்ம ஒாி சிதறித்தான் ஜிவனுடையதான அந்தகரணம் உண்டாகி, இந்தரியாதிகள் வரை விரிவடைந் திருக்கிறது. என்பதால் அது பூர்ண வஸ்துவாகவே இருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது. அது பூர்ணம்தான் என்பதற்கு proof மஹான்களின் ப்ரத்யக்ஷ அநுபவத்தில் இருக்கிறது? ஆத்மாவிலே நிலைத்த அவர்கள்தான் கொஞ்சங்கூட எந்தவிதமான குறைவும், குறையும் இல்லாமல், நிறைந்த நிறைவோடு இருக்கிறார்கள். அந்த நிறைவுக்கு அதிகமாக எதையும் கூட்டமுடியாது. இப்படிக் கூட்டுவதற்கில்லாமல் நிறைவாக இருப்பதுதானே

பூர்ணத்வம்? இப்படியே, இதைவிட, ஸ்பஷ்டமாக, தெரிவது - ஸகல ஜகத்தையும் உண்டாக்கி, ஸகல ஜீவர்களையும் ஆட்டிப் படைக்கும் ஈச்வரனுக்கும் ஆதார ஸத்யமாயுள்ள அவனுடைய ஆத்மா நிச்சயமாகா பூர்ணமாகத்தானிருக்க வேண்டுமென்பது. ஜீவன் என்று தனியாக உள்ளவரையில் அந்தஃகரணம்தான் ஜீவனை இப்படித் தனியாக ஆக்கியிருக்கிற மாதிரியே, ஈச்வரன் என்று ஒருவனை ஆக்கியிருப்பதும் மாயையே. மாயையோடு சேர்ந்த பிரம்மமே ஈச்வரன். அப்புறம் அவனிடமிருந்து ஜிவ - ஜகத்துக்கள். அப்படியானால் ஈச்வரனின் ஆத்மா எப்படியிருக்கவேண்டும்? எல்லாம் ஜீவர்களின் தனித்தன்மை கொண்ட அந்தஃகரணங்களுக்கும் காரணமாய் இருக்கின்ற மாயையிலேயே நேராக எதன் ஒளி சிதறி ஜீவ ஸமூஹம் முழுதையும் பண்ணியிருக்கிறதோ, அதோடு ஜடமான ப்ரபஞ்சத்தையும் பண்ணியிருக்கிறதோ அது பூர்ண வஸ்துவாகத்தானிருக்க வேண்டும். "ஸர்வ பரிபூர்ண அகன்ட தத்வம்"

என்று தாயுமானவர் சொல்கிறதாகத் தான் அது இருக்கவேண்டும் என்பதில் கொஞ்சங்கூட ஸந்தேஹமில்லை.

ஜீவனின் ஆத்மா பரிபூர்ணமானது. ஈச்வரனின் ஆத்மாவும் பரிபூர்ணமானது என்றால் அது ஒரு பூர்ணம், இது இன்னொரு பூர்ணம் என்று இருக்க முடியாது. எப்படி இரண்டு ஸைஃபர் இருக்க முடியாதோ, அப்படியே இரண்டு பூர்ணமும் இருக்கமுடியாது. ஸைஃபர் ஒன்றுதான் என்கிற அனந்தமும் ஒன்றுதான். "இரண்டும் ஒன்று" என்று சொல்லும்போதுகூட நம்பர் கொடுத்துவிடுகிறோம். ஆகவே ஒன்று என்பதுகூடத் தப்பு. இதனால்தான் ஆசார்யாள் இரண்டு இல்லை என்று பொருள்படும்படியாக "அத்வைதம்" என்று பேர் வைத்தாரே தவிர, ஒன்று என்று அர்த்தம் கொடுக்கும்படி "ஏகம்" என்று வைக்கவில்லை. ஆகக்கூடி, இரண்டு பூர்ணம் நிச்சயமாய் இருக்க முடியாது. பூர்ணம் என்றாலே அதற்குள் அடங்காததாக எதுவுமில்லை, அதைத்தவிர எதுவுமில்லை என்றுதான் அர்த்தம். அப்படியிருக்க ஒரு பூர்ணத்துக்கு அதிகமாக இன்னொன்று எப்படியிருக்க முடியும்? ஒரு பூர்ணத்துக்குள் இன்னொன்றை அடக்கினால் அதன் அங்கமாகிவிட்ட இது எப்படிப் பூர்ணம்

என்ற பெயருக்கு உரியதாக முடியும்?

ஆக, ஜீவனின் ஆத்மாவும் ஈச்வரனின் ஆத்மாவும் நம்முடைய மாயா லோக பார்வையில் தெரிகிறபடி ஸைஃபராயிருந்தாலும் ஸரி, அல்லது வாஸ்தவமாய் அவளை உள்ளபடி பூர்ணமாயிருந்தாலும் ஸரி, எப்படியானாலும் அவை இரண்டும் ஒன்றேதான், வேறு வேறு இல்லை என்று தீர்மானமாகிறது. "இவை", "இரண்டும்" என்று பிரித்துப் பன்மையில் சொல்வதே தப்பு ஒரே ஆத்மா, அல்லது ஸத்யம், அல்லது பரஹ்மம்தான் ஈச்ரவனாகவும் ஆகியிருக்கிறது. ஜீவனாகவும் ஆகிவிடுகிறது. இருந்தாலும் வ்யவஹாரத்தில் ஈச்ரவன், ஜீவன் என்கிறவை ஆத்மாவுக்கு வேறுமாதிரி தெரிகிறது. இதனால்தான் 'ஜீவாத்மா', 'பரமாத்மா' என்ற வார்த்தைகள் ஏற்பட்டது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**த்வைத - விசிஷ்டாத்வைதங்களில் ஜீவாத்ம - பரமாத்மாக்கள்**

த்வைதமாகவே நினைக்கப் பழக்கப்பட்டுவிட்ட நம்மில் எவருக்கும் தோன்றக் கூடியது ஸர்வசக்தனும், ஸர்வஜ்ஞனுமான பரமாத்மா வேறேதான், அல்ப சக்தனும், கிஞ்சித்ஜ்ஞனுமான (சிற்றிவினனுமான) ஜீவாத்மா அவனுக்கு வேறேதான் என்ற எண்ணமே. இவர்களை முறையே பேருயிர், சிற்றுயிர் என்றும் சொல்வதுண்டு. இப்படி ஒருவருக்கொருவர் மலைக்கும் மடுவுக்குமாக வித்யாஸமாயுள்ள இரண்டு பேர் நிச்சயமாக இருவேறு ஆஸாமிகளாகத் தானிருக்கவேண்டுமென்று தோன்றும். இதுதான் மத்வாசார்யார் ப்ரசாரம் செய்த த்வைதம். பரமாத்மாவும் ஜீவாத்மாவும் இரு வேறு வ்யக்திகள் என்ற அபிப்ராயத்தைக் கொண்டதால் 'த்வைதம்' எனப்படுகிறது. ஒரு குயவன் தனக்கு முற்றிலும் வேறாகப் பானை என்று ஒன்றைப் பண்ணிப் போடுகிற மாதிரி பரமாத்மா

ஜீவாத்மாவை அடியாடு வேறு வஸ்துவாகப் பண்ணிவிடவில்லை என்றும், உடம்பை உயிர் இயக்குகிற மாதிரி ஜீவனின் உயிரை அதற்கும் உயிராக (''உயிர்க்குயிராக' என்கிறோமே, அப்படி) இயக்கும் அந்தர்யாமியாக அவன் இருக்கிறானென்றும் ராமாநுஜர் ஸித்தாந்தம் செய்தார். இதைத்தான் விசிஷ்டா த்வைதம் என்பது. அவரும் இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவை த்வைதமாகப் பிரிந்திருந்து பக்திதான் பண்ணிக்கொண்டிருக்க முடியுமே தவிர, அந்தப் பரமாத்ம தத்வத்திலேயே ஜீவன் பிறிதற அத்வைதமாக ஒன்றிவிட முடியாது என்றுதான் மோக்ஷ நிலையை த்வைதமாக செய்திருக்கிறார். ஸரி, இங்கேயெல்லாம் ஜீவாத்மா என்று சொல்வதிலே ஆத்மா என்பது என்ன? ஜீவனின் நிஜமான உள் உண்மைத் தத்வம் எதுவோ அதுதான். இது மனஸ் இல்லை, அந்தஃகரணம் இல்லை என்பதை த்வைதிகள் உள்பட எல்லா ஸித்தாந்திகளும் ஒப்புக்கொள்கிறார்கள். எதிலும் பட்டுக்கொள்ளாத 'ஸாக்ஷி' என்று ஒன்றைச் சொல்கிறார்கள். ஆனாலும் பட்டுக்கொள்ளாத ஸாக்ஷியின் ஸ்வாநுபவத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாமல், த்வைதமான ஈச்வரானுபவத்தைத்தான் மோக்ஷமென்பதான ஜீவாத்மாவின் ஸ்வதந்த்ர ஸ்வபாவ அநுபவ நிலையாகச் சொல்லி முடித்துவிடுகிறார்கள்.

ஜீவனின் நிஜ ஸ்வரூபமும் ஈச்வர ஸ்வரூபமும் சாச்வதமாக வேறேதான் என்கிற த்வைதிகள் விஷயத்தில் ஜீவாத்மா பரமாத்மா என்ற இரண்டு தினுஸு ஆத்மாக்களை சொல்வதற்கு அதிக விளக்கம் அவச்யமில்லை. மோக்ஷத்தில் ஆத்மாவின் நிஜ ஸ்வரூபத்திலிருக்கும்போதும் அவர்களுடைய ஜீவன் அல்ப சக்தன் என்றே முடிந்துபோகிறான். இல்லாவிட்டால் இவன் எதற்காக மோக்ஷத்தில் ஈச்வரனுக்கு ஸேவை செய்துகொண்டிருக்க வேண்டும்? ஈச்வரனும் மஹாசக்தன் என்பதோடு முடிந்துபோகிறான். அந்த சக்திக்கு ஆதாரமாகவும், ஆனாலும் சக்தியைக் காட்டுவது என்று த்வைத கார்யமில்லாததால் செயலற்ற ஒரே சாந்தமாகவும் உள்ள ஸத்யம்தான் அவனுடைய நிஜ ஸ்வரூபம் என்கிறவரைக்கும் அவர்கள் போவதில்லை. இப்படி அநேக அல்ப சக்தர்கள் அவர்களை ஆள்பவனான ஒரே ஒரு மஹாசக்தன் என்று இரண்டு இருக்கும்போது இவர்களை ஜீவாத்மாக்கள் என்றும், இவர்களைவிட மிக உயர்வான ஈச்வரனைப் பராமாத்மா

என்றும் சொல்வது பொருத்தந்தானே? ஸகல ஆதார, ஸகல காரண, நித்ய, சுத்த, முக்த, ஸச்சிதானந்த ப்ரஹ்மம் என்பதே அவர்களுக்கு ஈச்வரன்தான். அவனும் ஜீவர்களும் என்றைக்கும் வேறு வேறாக இருக்கவேண்டியவர்களே என்பது அவர்களுக்கு ஸித்தமாயுள்ளபோது, ஜீவனை ஜீவாத்மா என்றால், 'பரமபதம்' என்றும் 'பரம் தாமம்' என்றும் சொல்லும் அவர்களுடைய மோக்ஷ லோகத்தில் இருக்கிற ஈச்வரனைப் பரமாத்மா என்றுதானே சொல்லவேண்டும்?

ஒரே ஆத்மா என்று பரமார்த்த ஸத்ய நிலையில் சொல்லும் அத்வைதிகள், வ்யவஹாரத்தின் பார்வையில் அது ஒரு பக்கம் ஜீவனாக அந்தஃகரணத்தால் கட்டுப்பட்டிருப்பதையும், இன்னொரு பக்கம் இந்த ஜீவனுக்கு மிகமிக உயர்ந்த, பரமான, அகண்ட சக்தியோடு மாயையால் ஈச்வரனாக இருப்பதையும் கருத்தில் கொண்டு ஜீவாத்மா, பரமாத்மா என்று பேதம் கல்பித்தாற்போலப் பேசுகிறார்கள். த்வைதிகளோ இது வ்யவஹாரத்தை வைத்து வெறுமே கல்பித்த பேதம்தான் என்று நினைக்காமல், "இதுவேதான் ஸத்யம். கீழ்ப்பட்ட ஜீவாத்மாவாக ஒன்றும், மேம்பட்ட பரமாத்மாவாக இன்னொன்றும் சாச்வதமான பேதத்துடனேயே உள்ளன" என்று சொல்கிறார்கள்.

ஜீவாத்மா, பரமாத்மா, என்ற வார்த்தைகளைப் பற்றி இன்னம் கொஞ்சம் ஆலோசனை (ஆலாபனை) பண்ணிப் பார்க்கலாம்.

த்வைதிகள் (விசிஷ்டாத்வைதிகளையும் த்வைதிகளில் சேர்த்தே சொல்கிறேன்) ஜீவனின் ஆத்மாவை அத்வைதிகள் சொல்லும் நிஷ்க்ரிய, நிர்குண வஸ்துவாகச் சொல்வதில்லை - அதாவது கார்யமும் குணமும் இல்லாத பொருளாகச் சொல்வதில்லை. ஆனாலும் அவர்களும்கூட இந்த்ரிய வ்யாபாரங்களில் போய் லோக விஷயானுபோகங்களில் ஈடுபடுவதாகவே ஜீவனுக்குத் தற்போதுள்ள தன்மை அவனது நிஜமான தன்மை அல்ல என்றும், ப்ரக்ருதி சேஷ்டி தங்களிலிருந்து (இயற்கையின் சேஷ்டைகளிலிருந்து) விடுபட்டு ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட ஈச்வரனை அன்போடு நினைத்து அவனுக்கு ஆராதனை பண்ணிக் கொண்டிருப்பதுதான் ஜீவனின் நிஜ ஸ்வரூபமான ஆத்மாவின் ஸ்வபாவம் என்றும் சொல்கிறார்கள். அந்த

நிலை இப்போது ஜீவனுக்குத் தெரியத்தானே இல்லை? அதனால் தற்போது தப்பாக உள்ள ஜீவனுக்கு இவன் ஸரியான நிலையில் இருக்கவேண்டிய ஆத்மாவைத் தெரிவிப்பதற்காக இரண்டையும் வேறுபடுத்தி, ஜீவன் வேறு ஆத்மா வேறு என்கிற மாதிரியாக "ஜீவாத்மா" என்று பெயர் கொடுத்தார்கள்.

அத்வைதிகள் (பரமார்த் நிலையில் ஜீவாத்ம பரமாத்ம பேதங்களை ஒப்புக்கொள்ளாமல் ஒரே ஆத்மாவைத்தான் சொல்பவர்களாயினும்) வ்யவஹார உலகத்தை ஒப்புக் கொள்ளும் கீழ் நிலையில் 'ஜீவாத்மா' என்ற 'கான்ஸெப்டை' ஏற்றுக்கொள்கிறார்கள். ஆத்மா என்ற நிஜத் 'தானாக' ஜீவன் தன்னைத் தெரிந்துகொள்ளாத வ்யவஹாரத்திலும் அவன் எதையோ ஒன்றைத் 'தானாக' நினைத்துக்கொண்டுதானே இருக்கிறான்? அதை ஜீவாத்மா என்று சொல்லிவிட்டுப் போவவோமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## தொடர்புகொண்ட இரண்டு வஸ்துக்கள்

ஜீவனும் ஆத்மாவும் ஒன்று என்றால், ஜீவ பாவத்தில் இருப்பதும் ஆத்மாவாக இருந்துகொண்டிருக்கும் நிலையும் ஒன்று என்றால், அப்போது ஜீவன் என்றோ ஆத்மா என்றோ ஒன்றை மட்டும் சொன்னால் போதும். இரண்டையும் சேர்த்து ஜீவாத்மா என்று சொல்லவேண்டியதில்லை. வேடிக்கையாகத் தோன்றலாம், சேர்த்துச் சொன்னதாலேயே இரண்டையும் பிரித்துக் காட்டினதாக ஆகிறது 'பால் பாயஸம்' என்று சொல்கிறோம். பாலே பாயஸமில்லை. அதிலே பாலுக்கு வேறாக என்னமோ, சர்க்கரை கிக்கரை சேர்த்து, அதன் இயற்கையான தன்மையை (நிஜ ஸ்வரூபத்தை) வேறே மாதிரிமாற்றி, அதன் இயற்கை ருசியைக் கூட்டிப் பாயஸம் என்று இன்னொன்றைப் பண்ணியிருக்கிறது. அதனால் 'பால் பாயஸம்' என்று சொல்கிறோம்.

பாலும், சர்க்கரையும் போல வேறாக இன்றி, பாலும் milk-ம் ஒன்றேதான். பாலுக்கே 'க்ஷீரம்' என்றும் பெயர் இருக்கிறது. இப்படி ஒரே வஸ்துவை இரண்டு வார்த்தைகள் குறிக்கும்போது இரண்டையும் சேர்த்துப் பால் - மில்க் , பால் - க்ஷீரம் என்று சொல்வதுண்டா?

'ஜீவாத்மா' (என்ற வார்த்தை) ஸமாசாரமும் இதிலிருந்து புரிகிறது. ஜிவனும் ஆத்மாவும் ஒரேயடியாக ஸம்பந்தமே இல்லாதவையாயிருந்தாலும் 'ஜீவாத்மா' என்று சேர்த்துச் சொல்ல முடியாது. பாலோடு ஸம்பந்தப்படுகிறவற்றைத்தான் பால் பாயஸம், பால் போளி, பால் சாதம் என்று சொல்ல முடிகிறதே தவிர அதோடு ஸம்பந்தப்பட முடியாத ரஸம், மோர் முதலியவற்றோடு சேர்த்துப் பால் ரஸம், பால் மோர் என்று சொல்ல இடமிருக்கிறதா? ஒன்றாகவேயும் ஆகிவிடாமல், ஒரேயடியாக ஸம்பந்ததே இல்லாமல் வேறு வேறாயும் இருந்துவிடாமல், ஒன்றோடொன்று ஸம்பந்தப்பட்டுக்கொண்டு மட்டுமிருக்கும்போது தான் இரண்டின் பேரையும் சேர்த்து ஒரு வார்த்தை உண்டாவது.

ஜீவனுக்கு தப்பான ஜீவத்வத்தோடு இருக்கும் ஸ்திதி, நிஜ ஸ்வரூபத்தை அறிந்து ஆத்மாவாயிருக்கும் ஸ்திதி என்று இரண்டு இருப்பதாலும், ஆனாலும் அந்த இரண்டில் ஸரியானது எதுவோ அதுவேதான் தப்பாகவும் ஆகி இருக்கிறது என்ற ஸம்பந்தமும் அதே ஸமயத்தில் இருப்பதாலும் 'ஜீவாத்மா' என்ற இரண்டையும் சேர்த்துச் சொல்கிறோம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**"ஈச்வராத்மா"வுக்குப் பதில் ஏன் "பரமாத்மா"?**

ஸரி, 'ஜீவாத்மா' என்பதுபோல, 'ஈச்வராத்மா' என்று சொல்லாமல் ஏன் 'பராமாத்மா' என்று சொல்லவேண்டும்?

ஈச்வராத்மா என்று ஏன் சொல்லவில்லையென்றால் ஈச்வரன் ஆத்மாவை அறிந்துகொள்ளாத நிலை என்று ஒன்று கிடையாது. ஈச்வரனும் ஆத்மாவும் இரண்டாகப் பிரிந்து ஸம்பந்தப் படுபவர்களல்லாததால் 'ஈச்வர plus ஆத்மா - ஈச்வராத்மா' என்று plus போட்டு வார்த்தை கொடுக்க முடியவில்லை. அவன் எப்போதும் ஆத்ம ஞானமுள்ளவன். அவன் நிஷ்க்ரிய, நிர்குணனாக இல்லாமல் மாயையினால் கார்யம் செய்கின்ற, ஸகுண (குணங்களுள்ள) ஈச்வரனா யிருக்கிறொனன்று அத்வைத சாஸ்த்ரங்களில் சொல்லியிருப்பதைப் பார்த்து, அப்படியானால் மாயா ஸம்பந்தத்தால் தன் நிஜ ஸ்வரூபத்தை அவன் மறந்து போய் வேறே மாதிரிதான் இருக்கிறானாக்குமென்று அர்த்தம் பண்ணிக்கொண்டு விடக்கூடாது. ஜீவன் ஆத்மா ஸ்வரூபத்தை மறந்து போனாற்போல், ஈச்வரன் மறந்து போயிருப்பதாக அவை சொல்லவே சொல்லாது.

அதனால், ஈச்வராத்மா என்காமல், ஜீவாத்மாவுக்கு உயர்ந்தது என்று மட்டும் "பரம்" போட்டுக் காட்டிப் "பரமாத்மா" என்பது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அத்வைதக் கொள்கைகளில் சில

ஆதார ஸத்யம் எப்படி ஈச்வரன் மாதிரித்தோன்றுகிறது, எப்படி ஜீவன் மாதிரித் தோன்றுகிறது என்பதில் அத்வைதிகளுக்குள்ளேயே இரண்டு மூன்று 'தியரி'கள் இருக்கின்றன. பிம்ப ப்ரதிபிம்ப வாதம், அவச்சேத வாதம், ஆபாஸ வாதம் என்று இவற்றுக்குப்பேர். அந்த வித்யாஸங்கள், கட்சி ப்ரதி கட்சிகளை அதிகம் சொல்லப்போனேனால் உங்களுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி இருக்கும்,. இப்போது மாயை நம் கண்ணைக் கட்டி இந்த ஸம்ஸாரக் காட்டில் விட்டிருப்பதை ஏதோ கொஞ்சமாவது தளர்த்திவிடப் பார்க்கலாமென்று

உபந்நியாஸம் செய்ய ஆரம்பித்துவிட்டு, நானே நேர்மாறாகப் பண்ணிவிடக்கூடாது. அதனால் ரொம்பவும் சிக்கலான 'தியரி'களில் ஆழமாகப் போகாமல் மேலெழுந்தவாரியாகச் சொல்லிக்கொண்டு போகிறேன்.

தியரிகளுக்குப் போனால், "ஜீவ மனஸ், 'காஸ்மிக்' மனஸ் என்று இரண்டு இல்லை" எனறு கூட ஒரு கட்சி சொல்லும். "அப்படியானால் 'காஸ்மாஸை' (ஜகத்தை) ஜீவ மனஸா பண்ணிற்று?" என்று கேட்டால், "ஆமாம், அப்படித்தான் உன் பார்வையில்தான் ஜகத் இருக்கிறது. அதற்குத் தனியாக இருப்பு இல்லை" என்பதாக த்ருஷ்டி - ஸ்ருஷ்டிவாதம் என்று ஒன்றை சொல்வார்கள். இதை "ஏக ஜீவவாதம்" என்றும் சொல்வதுண்டு. ஒரு ஜீவனுடைய த்ருஷ்டி என்கிற பார்வையில்தான் (அதாவது ஒரு ஜீவனுடைய மனஸின் வெளிப்பாட்டில்தான்) ஜகத் ஸ்ருஷ்டியே இருக்கிறது என்பார்கள். ஜகத்தின் இன்னொரு பெயரைக் கொண்டே இந்த வாதத்திலும் நியாயமிருப்பதாகச் சொல்வார்கள். ஜகத்துக்கு 'லோகம்' என்று பெயர் இருக்கிறது. 'லோக்' என்னும் தாதுவுக்குப் 'பார்ப்பது' என்று அர்த்தம். Look என்பது இதிலிருந்து வந்ததுதான். 'லோகனம்' என்றால் பார்ப்பது. இப்படி நம்மால் பார்க்கப்படுவதால் மட்டுமே இருப்பு உள்ளதாக எது இருக்கிறதோ அதுதான் 'லோகம்'. Locality, locus என்றெல்லாம் இடம் ஸம்பந்தமானவற்றைச் சொல்வதும் 'லோக்' தாதுவை வைத்துத்தான். தமிழிலும் பார்க்கப்படுவதாலேயே இருப்பு உள்ளது என்பதைக் குறிப்பதாகப் "பார்" என்றே உலகத்துக்குப் பேர் இருக்கிறது. பரத்தை மறைத்தது பார் முதற் பூதம் என்று பரம அத்வைதத்தைத் (திருமூலர்) சொல்கிறபோது 'பார்' என்றே ஜகத்தைச் சொல்லியிருக்கிறது.

"நீ பார்ப்பதால் உனக்கு லோகம் தெரிகிறது. பார்க்காவிட்டால், அதாவது மனஸை வெளியிலிருந்து உள்ளே திருப்பிவிட்டால் உனக்கு லோகம் மறைந்து போகிறது. இதை வைத்தே லோகம், location, பார் முதலான பேர்கள் ஜகத்துக்கு வந்திருக்கலாம். இதற்குத் தப்பர்த்தம் பண்ணி ஜீவன் பார்ப்பதால்தான் ஜகத்துக்கே இருப்பு இருக்கிறது. ஜீவன் பார்க்காவிட்டால் அதுவும் இல்லை என்று சொல்வது என்ன நியாயம்? 'பூனை கண்ணை மூடிண்டா உலகம் அஸ்தமிச்சுப் போயிடுமோ?' என்று பழமொழியே

இருக்கிறதே!" என்று கேட்கலாம்.

த்ருஷ்டி - ஸ்ருஷ்டி வாதம் சொன்னவர்களும் மஹா பெரியவர்கள்தான். அவர்கள் இருந்த ஒரு உசந்த நிலையிலிருந்து கொண்டு அவர்கள் எப்படிப் பார்த்தார்களோ அதையே சொன்னார்களென்று வைத்துக்கொள்ளவேண்டுமே -யொழிய அதை நம் கோணத்திலிருந்து 'க்ரிடிஸைஸ்' பண்ணுவது ஸரியல்ல. ஜீவ மனஸை ஈச்வரன் என்கிற Cosmic Mind மாயைக்கு அந்தண்டை (அப்பால்) சேர்க்கும்போது ஒரு கட்டத்தில் அந்த Cosmic Mind -லேயே ஜீவமனஸ் அப்படியே கலந்து அதுவாகவே ஆனாற்போன்ற பாவம் வரும். அதாவது எதுவும் செய்யாத நிர்குண ஆத்மாவுக்குப் போவதற்கு முந்தி, அதற்குப்போகும்படிப் பண்ணுகிறானே, எல்லாவற்றையும் செய்கிற ஸகுண ஈச்ரவன், அவனோடு ஐக்யமாகிவிட்டது போன்ற ஒரு ஸ்திதி வரும். அப்போது அந்தப் பெரிய மனஸின் ஸ்ருஷ்டி, தன்னுடைய கல்பனை மாதிரியே தோன்றும். ஆனால் வாஸ்தவத்தில் ஜீவன் ஈச்ரவன் ஆவதில்லைதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஜீவன் ஈசனாக முடியாது**

எல்லாம் ஒன்று என்று அத்வைதம் சொன்ன ஆசார்யாளே நிர்குண நிலையிலே ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்று என்றுதான் சொன்னாரே தவிர ஸகுணத்தில் ஜீவனும் ஈச்வரனும் ஒன்று என்று சொல்லவேயில்லை. Cosmic Mind-இவன் நன்றாகத் தோய்ந்திருக்கும்போது அந்த Mind- ஆன ஈச்வரனின் அதிசய சக்திகள் பல இவனுக்கும் வருமென்பது வாஸ்வதம்தான், ஆனாலும் ஜகத் முழுதையும் நிர்வஹிக்கும் சக்தி என்பதாக ஈச்வரனுக்கு உள்ள ஐச்வர்யம் இவனுக்கு வராது என்று சொல்லியிருக்கிறார்.

"ப்ரஹ்ம ஸூத்ர"த்தில் கடைசி அத்யாயத்தின் கடைசி பாதத்தில் முக்தனைப் பற்றி - அதாவது சிற்றின்பங்களே தெரிந்த மனஸாகிற கட்டை அறுத்துவிடுபட்டு நித்யமான பேரின்பத்தை அடைந்தவனைப் பற்றி - சொல்லும்போது இவ்விஷயம் வருகிறது. இந்த மனஸ் போய் நிர்குண ப்ரஹ்மத்தில் கரைவதற்கு முந்தி, ஸகுண ஈச்வரனிடம் ஸாயுஜ்யம் எனும்படியான சேர்க்கையைப் பெறுகிற கட்டத்தில் அவனுக்கு எல்லா ஐச்வர்யமும், அதாவது ஈச்வரனுடைய ஸகல சக்திகளும் வந்துவிடுமா என்ற கேள்வி வருகிறது. அதற்குப் பதிலாக "ப்ரஹ்ம ஸூத்ர"த்தைச் செய்த பாதராயணர் (வ்யாஸர்), "மற்ற சக்தி எல்லாம் வரும், ஆனால் ஜகத் ஸ்ருஷ்டி -ஸ்திதி ஸம்ஹாராதி சக்திகள் ஜீவனுக்கு வரவே வராது" என்று தீர்மானம் பண்ணிச் சொல்லியிருக்கிறார். இதற்கு பாஷ்யம் பண்ணும்போது தான் நம்முடைய ஆசார்யாள், "ஏனிப்படி எல்லாம் ஒரே ப்ரஹ்மமாயிருக்க, ஜீவனும் ஞான மார்க்கத்தில் போய் பரம்மாயிருக்க, ஜீவனும் ஞான மார்க்கத்தில் போய் ப்ரஹ்மமாகவே ஆகிவிடமுடிகிறதென்கிறபோது ஈச்வரனாக மட்டும் ஆக முடியாது?" என்ற கேள்விக்கு பதில் சொல்கிறார்.

செயலில்லாத நிலையில்தான் இரண்டு ஒன்றாக முடியுமே தவிர, செயல் இருக்கும்போது அப்படி ஆக முடியாது. ஏனென்றால் இரண்டு வஸ்துக்கள் ஒரே கார்யத்தைப் பண்ண முடியாது. நான் பேசுகிறேன், ஊர் சுற்றுகிறேன், உங்களை எல்லாம் ஏமாற்றுகிறேன் என்றால் இதுகளைப் பண்ணுபவனாக நான் ஒருத்தன்தான் இருக்க முடியுமே தவிர இன்னொருத்தனும் இதையே ஐக்யமாகிப் பண்ணுவது என்பது முடியாது. கார்யம் த்வைதம். இன்னொன்றை வைத்துதான் கார்யமென்று ஏற்படுகிறது. இன்னொன்று இல்லாமல் அத்வைதமாகத் தன்னில் தானாய் உள்ளபோது மட்டும்தான் கார்யமில்லை. கார்யமுள்ள த்வைதத்தில் எப்படி கண்டு ஏகமாகப் போவதான ஐக்யம் ஏற்பட முடியும்? நிஷ்க்ரியமான (கார்யமில்லாத) ப்ரஹ்மம் ஜகத் கர்த்தாவாகி இருக்கிற நிலைக்குத்தான் ஈசவ்ரன் என்று பெயராதலால் அவன் த்வைதமாகத்தான் இருந்தாக வேண்டும் ஜீவனுக்குள்ளே அவனுடைய நிஜ ஸ்வரூபமாகக் கார்யமில்லாமலிருக்கிற அத்வைத ஆத்மா இந்தக்

கார்யமுள்ள ஈச்வனோடு ஐக்யமாகிறது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆத்மா அபப்டியேதான் இருந்துகொண்டிருப்பது. அதை ஜீவனாகக் காட்டுகிற மாய விலாஸத்தை ஈச்ரவன் விலக்கிவிட்டால் ஜீவன் அதுவாகவே ஆகிவிடுகிறான் என்பேதாடு ஸரி. அதை ஈச்ரவன் ஸகுண ரூபத்திலுள்ள தானாக ஐக்யம் பண்ணிக்கொள்வதற்கு இடமில்லை. அது நடக்கமுடியாத ஸமாசாரம். ஈச்வரன் என்ற த்வைத நிலையிலுள்ள வஸ்துவைப் பிடிப்பதும் அநுபவிப்பதும் த்வைத நிலையிலுள்ள ஜீவனுடைய மனஸ்தான். இந்த்ரியத்தில் இழுப்படடு சிற்றின்பத்தில் மாட்டிக்கொள்ளாத பரிசுத்த மனஸாகத்தான் இருக்கட்டும், வேறு எதுவாகத்தான் இருக்கட்டும், அது த்வைத நிலையிலுள்ள ஈச்வரன் என்ற இன்னொன்றை அநுபவிக்கிறது என்பதாலேயே தானும் த்வைத நிலையில் குணங்களோடும் கார்யங்களோடும் இருப்பதாகத்தான் இருந்தாக வேண்டும்.

இந்த லெவலில் மட்டும் நின்று பார்க்கிறபோது த்வைத - விசிஷ்டாத்வைதிகளின் ஸித்தாந்தப்படி அவர்கள் எதை மோக்ஷம் என்று சொல்லுகிறார்களோ அந்த மோக்ஷத்திலும் ஒன்றாய்ப் போய்விடுவதென்பது இல்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அவர்கள் ஜீவனின் அடி ஆழமான கார்யமற்ற ஆத்மா வரைக்கும் போகாதவர்கள். ஈச்வரனிடம் ப்ரேம பக்தி பண்ணுவது தாஸ்யம் (பகவத் ஸேவை) பண்ணுவது இவைதான் ஒரு ஜீவனுக்கு மோக்ஷம் என்கிற சாச்வத ஆனந்தத்தைக் கொடுக்க கூடியவை என்ற கருத்துடையவர்கள் அவர்கள். இவர்களுடைய ஈச்வரனுக்கும் நிர்குணம் என்பது நிஜ ஸ்வரூபமில்லை என்கிறார்கள். ஸகுணம்தான் அவர்களுடைய முடிந்த முடிவு. அத்வைதிகளான நாம்தான் ஒரே ஆத்மாவிலேயே ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டைச் சொல்கிற மாதிரி, ஒரே ப்ரஹ்மத்தையே ஜகத் கார்யமற்ற நிஷ்ப்ரபஞ்ச "நிர்குண ப்ரஹ்மம்" என்றும், ஜகத் வியாபாரம் செய்யும் ஸப்பரப்ஞச "ஸகுண ப்ரஹ்மம்" என்றும் ஜீவனுடைய நிலையிலிருந்து வித்யாஸம் கல்பித்து இரண்டு மாதிரிச் சொல்கிறோம். அவர்களுக்கு ப்ரஹ்மம் என்றாலே ஸகுண ப்ரஹ்ம ஈச்ரவன்தான். நிர்குணம் கிடையாது.அவர்களுடைய அடிபப்டை அபிப்ராயப்படிப் பார்த்தால் அப்படித்தான் முடிவு பண்ணவேண்டியதாகும். ஜீவாத்மாவுக்கு சாச்வதமான

மோக்ஷ நிலை தாஸ்யம் தானென்றால், அப்போது ஈச்வரனும் அந்த பக்திப் பணியை சாச்வதமாக ஏற்றுக்கொள்கிறவனாக, ஏற்றுக்கொண்டு க்ருபையை வர்ஷிக்கிறவனாகவே இருந்தாகவேண்டும். ஒன்றை எடுத்துக்கொள்வது, க்ருபை புரிவது என்பதெல்லாம் கார்யத்தைச் சேர்ந்தவையே, த்வைதத்தைச் சேர்ந்தவையே. எனவே இதை சாச்வதமாகச் செய்வேண்டியவன் ஈச்வரன் என்பதால் அவன் எப்போதும் ஜீவனை ஐக்யம் செய்தகொள்ளதவனாக வெளியிலேதான் விட்டு வைத்திருக்கவேண்டம். அதாவது அவர்கள் சொல்கிற மோக்ஷப்படி பேதமாகவே வைத்திருக்க வேண்டம். தன்னை தாஸ்யம் பெறும் மஹாசத்கனாகவும் அவர்களை தாஸ்யம் செய்யும் அல்ப சக்தர்களாகவும்தான் வைத்திருக்கவேண்டும். இவனுக்கும் கார்யம் போகவில்லை, அவர்களுக்கும் கார்யம் போகவில்லை என்றால் இப்படி வேறாகத்தான் இருக்க முடியும், ஐக்யமாக முடியாது. கார்யமில்லாமல் தூங்குகிறபோது ஒரு சக்ரவர்த்தியும் ஒரு ஆண்டிப் பரதேசியும் ஒரேவிதமான சாந்தாநுபவத்திலிருக்க முடியும். கார்யம் வந்து அவன் சக்ரவர்த்தியாயுள்ளபோது ஆண்டிப் பரதேசி அவன் மாதிரி இருப்பது எப்படி முடியும்?

"ஸரி, ஈச்வரனோடு ஐகய்மாகி அவனோயக ஜீவன் ஆக முடியாது என்றாலும் பரம கருணையால் அந்த ஈச்வரனும், தானும் ஈச்வரனாக இருந்துகொண்டு ஜீவனுக்கும் தன் ஐச்வர்ய சக்தி முழுவதையும் கொடுக்கலாமே" என்று கேட்டால், அப்படி மட்டும் அவன் செய்யவேமாட்டான். ஏனென்றால் அப்படிப் பண்ணினால் இவனொருவனிடம் அவன் பரம கருனை காட்டுவதே ஜகத் முழுதற்கும் அவன் மஹா கஷ்டத்தைக் கொடுப்பதாக ஆகிவிடலாம். எப்படியென்றால், அவன் ஜகத் நிர்வாஹத்திலே இப்படியிப்படி இது இது இந்த இந்த ஸமயத்தில் ஸ்ருஷ்டி ஆகவேண்டும், ஸம்ஹாரம் ஆகவேண்டுமென்றெல்லாம் ஸங்கல்பித்து நடத்திக்கொண்டிருக்கிறான். ஒரே ஆஸாமியின் ஸங்கல்பமாக இது நடப்பதால்தான் ஜகத் வ்யாபாரம் சீராக, ஆர்டரோடு இருக்கிறது. ஜீவனுக்கும் பூரா ஈச்ரவ சக்தி ஏற்பட்டது என்று வைத்தக்கொள்ளுங்கள். அப்போது ஒரிஜனல் ஈச்ரவன் ஸ்ருஷ்டி செய்ய ஸங்கல்பிக்கும்போது இவன் ஸம்ஹாரம் பண்ண ஸங்கல்பிக்கலாம், அவன் ஒன்றை ஸம்ஹாரம் செய்கிறபோது இவன் அதை ஸ்ருஷ்டி செய்ய ஆம்பிக்கலாம். இப்படி ஒரே தாறுமாறாகப் போய், லோகம்

பூராவும் chaos என்கிறபடி ஒரே குழப்பமாய்விடும், இந்தக் காரணத்தைக் காட்டித்தான் ஆசார்யாள் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்திலே எந்த ஜீவனும் ப்ரஹ்மமாகிறானே தவிர ஈச்வரனாவதில்லை என்கிறார்.

ஈச்வரனாகவே, ஆகாமல், ஆனால் அவனுடைய ஜகத் வ்யாபார 'ஆபீஸ்' தவிர பாக்கி சக்திகளை ஜீவன் பெற முடியும். அதீதமான ப்ரேம பக்தியின் பரவசத்தில் அவனே ஆகிவிட்டது போன்ற பாவம்கூட ஏற்படலாம். பாவம் தானே தவிர இது நிஜம் இல்லை. பரவச பாவத்தில் உள்ளபோது மட்டும் அவனுடைய சக்தி முழுதையுமே தாங்கள் பெற்றதாக இவர்கள் அநுபவிப்பார்கள். இது ஈச்வராவேசம். அப்புறம் அது போய்விடும். இந்த ஸ்திதியில் இருக்கிறபோதுதான் அநேக மஹான்கள் இந்தலோகம், ஸமுத்ரங்கள், மலைகள், நக்ஷத்ரங்கள் எல்லாங்கூடத் தங்கள் ஸ்ருஷ்டிதான் என்பதுபோலப் பாடி வைத்திருக்கிறார்கள். அந்தப் பரவச நிலையின்போது நிஜமாகவே அவர்களுக்கும் ஈச்வரனைப் போலவே ஸகல விஷயமும் தெரிந்திருக்கும், ஸகல ஜீவர்களுக்கு உள்ளும் புறமும் இருப்பதெல்லாம் அவர்களுக்குத் தெரிந்துவிடும். அதனால், "உன் ஸ்ருஷ்டி யானால் இந்த ஜீவர்களுடைய ஸமாசாரத்தையெல்லாம் சொல்லேன்" என்று அவர்களிடம் கேட்டால் நம் மாதிரி முழிக்க மாட்டார்கள். ஸர்வஜ்ஞதை கூடிய அவர்களுடைய அந்த நிலையில் எல்லாம் சொல்லிவிடுவார்கள். த்ரிகால ஞானிகளாக வந்தது, வரப்போகிறது எல்லாவற்றையுமே சொல்வார்கள். இம்மாதிரி நிலையிலேயே த்ருஷ்டி - ஸ்ருஷ்டி ஸித்தாந்தமும், இந்த ஒருவன் முக்தனால் அத்தனை பேரும் சக்தி அடைவதாகச் சொல்கிற 'ஸர்வமுக்தி'க் கொள்கையும் ஏற்பட்டதாகக் கொள்ளவேண்டும், ஆனாலும் இந்த ஆவேசம் சாச்வதமல்ல. ஜீவன் நிஜமாக ஈச்வரனாவதில்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**த்வைத ஜீவனுக்கு ஈசன் தொடர்புண்டு**

ஈச்வரன் த்வைத நிலையில் கார்யம் பண்ணும் ஸகுண வஸ்துவாகவே இருந்தபோதிலும், ஜீவனைப்போல் த்வைதத்தை மட்டும் தெரிந்துகொண்டு அத்வைதமான நிஜ ஸ்வரூபத்தை அறியாதவனாக இருக்கவில்லை. 'வெளியில் த்வைதமாயிருந்து கொண்டு ஈச்வரன் என்ற பெயரில் தெரியும்தானே உள்ளே அத்வைத ஆத்மாவாக, நிர்குண ப்ரஹ்மமாக இருக்கிறோம்' என்ற ஞானம் அவனுக்கு எப்போதும் உண்டு. தான் வெளியில் ஈச்வரன், உள்ளே ப்ரஹ்மம் என்று எப்போதும் அவனுக்குத் தெரியும். தன்னிடம், அதாவது வெளியிலே தெரிகிற தன்னுடைய ஈச்வர ஸ்வரூபத்திடம் பக்தியோடு வருபவனைத் தனக்கு உள்ளே அனுப்பி வைத்து ப்ரஹ்மத்திலேயே ஐக்யம் பெறும்படியாகப் பண்ணவும் அவனால் முடியும்.

அர்ஜுனனிடம் பகவான் இதைத்தான் பிற்பாடு கீதையிலேயே முடிவுக்குப் போகிற ஸமயத்தில் சொன்னார். "பக்தியோடு என்கிட்டே வந்தாயானால் அப்புறம் என் உள் ரூபம் என்ன என்று தெரிந்துகொள்ள ஆரம்பிப்பாய். அப்புறம் உள்ளேயே போய்விடுவாய்" என்றார்.

ஜீவனால் நினைக்காமலிருக்க முடியாதென்றும் நினைக்கிற மனஸாலேயே அவனுக்கு ஜீவத்வ identify என்றும் திரும்ப திரும்பச் சொல்லியாயிற்று. நினைப்புக்கு அதீதமான 'ஆத்மாவை நினை' என்றால் ஜீவனால் முடியாது. இந்த இடத்திலேதான் 'ஈச்வரனை நினை' என்பது. ஜகத் வ்யாபார கார்யம் பண்ணும் த்வைத நிலையிலுள்ள ஈச்வரனை ஜீவனின் த்வைத மனஸால் நினைக்க முடியும். ஆத்மாவுடன் தொடர்புகொள்ள முடியாத ஜீவன் ஈச்வரனோடு தொடர்பு கொள்ள முடியும்.

ஜகத் வ்யாபரம் என்கின்ற மஹா பெரிய விளையாட்டையும் ,அதை விளையாடும் மஹா பெரிய சக்தியையும் பூர்ணமாகப் புரிந்துகொள்வதும், அறிந்துகொள்வதும் ஜீவனால் முடியாத கார்யம்தான். அதனால் பரவாயில்லை. ஈச்வரன் ஜீவனிடம் கேட்பது என்னிடம் அன்பைத்தான், தன்னைப் பற்றிய அறிவை அவனிடம் எதிர்பார்க்கவில்லை. ஆனபடியால், "உன் அன்பிலே நீ என்னை எந்த ரூபத்தில் பாவித்தாலும் நான் உனக்கு அன்போடு அநுக்ரஹம் பண்ணுகிறேன்" என்கிறார். நம் மனஸால் எவ்வளவுதான் பிடிக்க முடியுமோ

அந்த அளவுக்கு அவனுடைய அகண்ட சக்தியைப் பிடித்தாலும் போதும், அருள் செய்கிறேன் என்கிறார். என்ன அருள் என்றால் அவர் வாஸ்தவத்தில் எப்படியிருக்கிறோரோ அதை நாம் அறிந்துகொள்ளும்படிச் செய்யும் அருள்தான். ஞான ப்ரஸாதம்தான் ஈசனுடைய பேரருள்.

அந்த வாஸ்தவ ரூபமென்பது அகண்ட சக்தனாக இருப்பதுகூட இல்லை, அந்த சக்திக்கும் ஆதாரமான அகண்டமான ஸத்யமாக இருப்பதுதானென்று காட்டி அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரத்தை தருகிறார். அகிலாண்ட சக்தியின் ஆதார ஸத்யமாகச் சொல்லப்படும் போது "ப்ரஹ்மம்" என்பதேதான் ஜீவனின் நிஜ ஸ்வரூபமாகச் சொல்லப்படும்போது "ஆத்மா" எனப்படுகிறது என்பதை முன்னேயே பார்த்தோம். அதனால் ஜகத்கர்த்தனான ஈசவ்ரனின் வாஸ்தவ ஸ்வரூபமான ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பதென்பது ஜீவனானவன் தன்னுடைய நிஜ ஸ்வரூபமான ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதே என்றாகிறது. பரமாத்மா, ஜீவாத்மா என்று இரண்டு இல்லை என்று அப்போது ஆகிவிடும்.

ஆனாலும் ஜீவனுக்கு ஜீவதசையில் ஆத்மாவைத் தெரியவில்லை. இதே ஆத்மாவை ஜகத் வ்யாபாரம் செய்யும் ஈச்வானயுள்ளபோது அந்த ஈச்வரன் தன்னை ஆத்மா என்று எப்போதும் அறிந்தவனாக இருக்கிறான். ஜீவமனஸூம் த்வைதத்தின் அப்பாற்பட்டது, ஈச்வரனும் த்வைத ப்ரபஞ்ச வ்யாபாரத்திலுருப்பவனே என்றாலும் இப்படி ஒரு பெரிய வித்யாஸமிருக்கிறது. ஜீவனுக்கு ஆத்ம ஞானமில்லை. அந்த ஞானம் வந்தவுடனேயே இவனுடைய ஜீவத்வம் போய்விடுகிறது. ஈச்வரனுக்கோ பரிபூர்ண ஆத்ம ஞானம் ஸதாவும் இருக்கிறது. அது இருப்பதால் த்வைதமான அவனுடைய ஈச்வரத்வம் பாதிக்கப்படுவதில்லை. இப்படி ஒரு பெரிய 'டிஃபரென்ஸ்'.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## ஈசன் -ஜீவன் அவித்யை - அந்தஃகரணம்

இதைத்தான் அத்வைத சாஸ்த்ரத்தில் சொல்கிறபோது ஜீவத்வம், ஈச்வரத்வம் இரண்டுமே ஸத்ய ஸ்வரூபமில்லையானாலும், ஒரே ஸத்யம் மாயா ஸம்பந்தத்தினால்தான் ஈச்வரன், ஜீவன் என்ற இரண்டாகவும் ஆகியிருக்கிறது என்றாலும் இரண்டுக்கும் ஒரு வித்யாஸம் காட்டி செய்திருக்கிறது (லக்ஷணம் கொடுத்திருக்கிறது). அதாவது ப்ரஹ்மம் அவித்யையோடு சேர்ந்திருக்கிறபோது ஈச்வரனாகத் தெரிகிறதென்றும், அந்தஃகரணத்தோடு சேர்ந்திருக்கும்போது ஜீவனாகத் தெரிகிறதென்றும் சொல்லியிருக்கிறது. அவித்யை என்பதுதான் மாயை. அந்தஃகரணம் என்பது பொதுவில் 'மனஸ்' என்பது. அதன் அங்கங்கள் மாதிரியான சித்தம், புத்தி, அஹங்காரம் ஆகியவற்றோடுகூட இருப்பது. (இந்த விஷயம் முன்னேயே பார்த்தோம்.( அதாவது சின்னச் சின்ன மனஸ்களில் கட்டுப்பட்டுக் குறுகிக்கிடப்பவன் ஜீவன். இப்படி ஆத்மாவை குறுக்கினமாதிரி காட்டும் மாயாசக்தியே ஈச்வரன். இருக்கிற ஒரே ஸத்ய வஸ்துவான ஆத்மாவை மறைத்து, அதாவது இல்லாத மாதிரி ஆக்கி, முடிவிலே ஸத்யத்வமே இல்லாத பல ஜீவர்களை இருக்கிற மாதிரிக் காட்டும் சக்தியாதலால் அதற்கு மாயை என்று பேர். அதையேதான் அஞ்ஞானம் என்பது. அஞ்ஞானத்துக்கே இன்னொரு பேர்தான் அவித்யா. (இவற்றுக்குள்ளேயும் ஒன்றுக்கொன்று கொஞ்சம் வித்யாஸம் இருப்பதாக ஒரு அபிப்ராயமிருந்தாலும் இங்கே நான் பொதுக் கருத்தைச் சொல்கிறேன்.) ஸத்யத்தை அறிவதே ஞானம் அல்லது வித்யா. 'வித்' என்றாலும் ஞானம் என்பது போலவே அறிவதுதான். மெய்யறிவே வித்யா. ஸத்ய ஞானமாயில்லாமல், இருப்பதை இல்லாததாகவும், இல்லாததை இருப்பதாவும் தப்பாக அறியப் பண்ணுவதால் மாயைக்கு அவித்யா என்று பேர். ஆனாலும் இப்படி மாயா சக்தியுடன் சேர்ந்திருக்கிற நிலையிலுள்ள ஈச்வரன் அவனைப் பொறுத்தமட்டில் அஞ்ஞானியாக இல்லை. "ஈசாந:ஸர்வ வித்யாநாம்" என்பதாக அவனை வித்யகைளுக்கெல்லாமும் ஈச்வரனாக சொல்லியிருக்கிறது. நம்மை மாயையால் அஞ்ஞானியாக்கினாலும் அவன் அப்டிபயில்லை. மாயையை அவன் வைத்துக் கொண்டிருக்கிறானாயினும், தானே அதில் கட்டுப்படாமல் வைத்துக் கொண்டிருக்கிறான். நம்மை மட்டும்

அந்த மாயா சக்தியினால் கண்டம் கண்டமாகக் குறுக்குகிற அந்தக் கரணத்தோடு சேர்த்துக் கட்டிப்போட்டிருக்கிறான். இதனால் நாம் ஒன்று, இப்படிக் கட்டப்பட்டு ஜீவர்களாக மாத்திரம் இருக்கிறோம், அல்லது, அவன் கட்டவிழ்த்து விட்டுத் தனக்கு உள்ளே அனுப்பும்போது அஞ்ஞானம் போய் ஆத்மாவை மாத்திரம் இருக்கிறோம். அவனோ த்வைத மாயையிலே கட்டுப்பட்ட மாதிரி ஈச்வரனாக ஜகத் வ்யாபாரம் செய்யும்போதே ஆத்மஞானியாகவுமிருக்கிறான். அவனை 'லிமிட்' பண்ணுகிற மாதிரி இருப்பது மாயை என்கிற அவித்யைதான். ஜீவனை லிமிட் பண்ணுவதோ அந்த மாயையிலிருந்து விளைந்த அந்தஃகரணம். இது ஒவ்வொருத்தருக்கும் ஒரு தினுஸாக, "தனி மனஸ் என்பதாக, ஆகி அவர்களை ரெம்பவும் சின்னதாக குறுக்கிவிடுகிறது. மாயை என்பது ஜெனரல். இத்தனை அந்தஃகரணத்துக்கும் பொதுவானது அது. ஸத்ய ஸ்வரூபத்தை அத்தனை ஜீவர்களுக்கும் மறைக்கும் பொதுவான சக்தியாயிருப்பது மாயை, இப்படி மெய்யறிவை மறைப்பதால் இதை 'அவித்யை' என்றாலும், இதைக்கொண்டு ஜகத் வ்யாபாரத்தை நடத்தும் ஈச்வரனோ அவனைப் பொறுத்தமட்டில் இதனால் தன்னுடைய மெய்யறிவை இழக்காமலே இருக்கிறான்.

இதைத்தான் த்ருஷ்டாந்தம் காட்டிப் புரியவைக்கும் போது, "பாம்பின் வாய்க்குள்ளேயே விஷப்பல் இருந்தாலும் விஷத்தால் அது பாதிக்கப்படுவதில்லை. அதனிடம் கடிபடுபவர்களை மட்டுமே விஷம் தாக்குகிறது. அதே மாதிரி, 'மாயி'யான, மாயாவியான ஈச்வரனை அவனுடைய மாயை பாதிக்காமல், அவன் அதை யாரைக் குறித்து ப்ரயோகிக்கிறானே அந்த ஜீவ லோகத்தை மட்டும் பாதிக்கிறது" என்று சொல்கிறார்கள். மாஜிக் பண்ணுகிறவன், தான் மாயா ஸ்ருஷ்டியாகப் பண்ணும் காட்சிகளை மற்றவர்கள் நிஜமென்று நம்பும்படியாக ஏமாற்றச் செய்கிறானே தவிர, தானே அவற்றை நிஜமாக நினைத்து ஏமாற மாட்டானல்லவா? இப்படித்தான் மாயா ஜகத் ஸ்ருஷ்டிக்காரனான ஈச்வரனும் என்கிறார்கள்.

"உபாதி"கள் என்பதான லிமிட் பண்ணும் கண்டிஷன்கள் எதனாலும் பாதிக்கப்படாத ஐச்வர்யத்தை உடையவனுக்குத்தான் "ஈச்வரன்" என்று பேர் என்றே ஆசார்யாள் ('விஷ்ணு) ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் "ஈச்வர"

நாமாவுக்கு பாஷ்யம் பண்ணும்போது விளக்கியிருக்கிறார். "ஐச்வர்யம்" என்றால் ஈச்வரனுடைய உடைமை, அவனுடைய தன்மை என்று அர்த்தம். ஆட்சி செய்கிற சக்தி உள்ளவன்தான் ஈச்வரன். "ஈச்" என்ற தாதுவுக்கு ரூல் பண்ணுவது, கவர்ன் பண்ணுவது, கமான்ட் பண்ணுவது என்று அர்த்தம். இப்படி மற்றவற்றை அடக்கி ஆள்பவன் மாயை தன்னையே அடக்கி ஆளவிட்டுவிடுபவனாக இருப்பானா? மாயையோடு கூடியிருந்தாலும் அந்த மாயையையும் ஈச்வரன் அடக்கி ஆள்கிறான். ஆகையால் அது தன்னிடம் அதன் ஸாமர்த்யத்தைக் காட்டி ஒரு தப்பு 'நானை'த் தோன்றும்படிச் செய்ய விட்டுவிட மாட்டான்.

"ஜீவன் ஆத்மாவைத் தெரிந்துகொள்ளாமல் ஜீவபாவம் வேறாகவும் ஆத்ம ஸ்திதி வேறாகவும் இருக்கிறது, அதே ஸமயம் அவை ஸம்பந்தமே இல்லாதவையும் அல்ல. ஆகையால்தான் 'ஜீவாத்மா' என்ற வார்த்தை ஏற்பட்டது" என்று பார்த்தோம். ஆனால் ஈச்வரன் எப்போதும் ஆத்மாவை அறிந்தவனாக ஞான ஸ்திதியிலேயே இருப்பதால் ஈச்வர பாவம், ஆத்மா என்பதை ஸம்பந்தம் மட்டுமுடைய வேறு வேறான இரண்டு அல்ல என்று தெரிகிறது. ஈச்வரனேதான் ஆத்மாவும், இரண்டையும் பிரித்து ஸம்பந்தப்படுத்தப்படாது. அதனாலேயே 'ஈச்வராத்மா' என்று சொல்வதில்லை, 'பரமாத்மா' என்றே சொல்கிறோம் என்றும் பார்த்தோம்.

"அப்போது 'பரமாத்மா' என்று ஏன் சொல்லவேண்டும்? வெறுமனே ஆத்மா என்றால் போதாதா?" என்றால், போதாதுதான். ஆத்மா என்று மாத்திரம் சொன்னால் ஜீவர்களான நம்முடைய நினைப்பில் அப்போது ஜகத்தும் ஜகத் வ்யாபாரமான ஈச்வரனின் கார்யமும் வராமல் போய்விடும். ஈச்வரனும் அற்றுப்போன நிர்குண தத்வத்தையே ஆத்மா என்று நினைப்போம். அதனால் 'பரம' என்று அடைமொழி போட்டது.

"பரம" அல்லது "பர" என்று ஏன் ஆத்மாவுக்கு முன்னே போட்டதென்றால், ஜீவனைவிடப் பரம ச்ரேஷ்டமான ஸ்தானத்தில் ஈச்வரன் இருப்பதால் அப்படிப் போட்டிருக்கிறது. ஆத்மாவாக மாத்திரம் அவன் இல்லை என்பதால் அவனை ஆத்மா என்று மட்டும் சொல்லமுடியாது.

அவனுடைய நிலையிலிருந்து கொண்டு ஈச்வரனாகப் பார்க்கும் போது அவனுக்கு ஆத்மா வேறாக இல்லாததால் ஈச்வராத்மா என்றும் சொல்லமுடியாது. ஆனால் நம்முடைய நிலையிலிருந்து பார்க்கும்போது, ஏக ஆத்மாவே நம்மாதிரி அஞ்ஞானியாகவும், அல்ப சக்தனாகவும் இல்லாமல் நம்மை விட மிக உயர்வான, உத்தமமான ஸர்வஜ்ஞனாகவும், ஸர்வசக்தனாகவும் ஈச்வர வேஷம் போட்டுக்கொண்டிருக்கும் போது அப்படியிருப்பவனை அவனுடைய அந்த உயர்வு தோன்றும்படியாகப் பரமாத்மா என்று சொல்லவேண்டியதாகிறது.

இது அத்வைதிகளின் நோக்கிலே சொன்னது. ஒரே ப்ரஹ்மம், ஒரே ஆத்மா என்பவர்கள் ஏன் பரமாத்மா, ஜீவாத்மா என்று இரண்டு சொல்லவேண்டும் என்பதற்கு இவ்வளவு சொல்லவேண்டியதாயிற்று. உச்சி அத்வைதத்தில் இல்லாமற் போகும் அநேக இரட்டைகளை வ்யவஹார நோக்கில் (emperical existence என்கிறார்களே அந்த நடைமுறை லோகத்தின் கோணத்திலிருந்து) அத்வைதம் ஒப்புக்கொள்கிறபோது சொல்கிற ஒரு இரட்டைதான் இப்படிப் பரமாத்மா, ஜீவாத்மா என்பதும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**த்வைத 'மோக்ஷ'மும் ப்ரக்ருதி (மாயை)யும்**

எந்த ஸித்தாந்தப்படியும் மோக்ஷம் என்பது கர்மாவின் கதியிலிருந்தும், இந்த்ரிய மனோ இழுப்புக்களிலிருந்தும் விடுபட்டு ஸம்ஸார சக்ரத்திலிருந்து தப்பி சாச்வத ஸுகத்தை அநுபவித்துக்கொண்டிருப்பதுதான். இப்படிப் பட்ட சாச்வத ஆனந்த நிலையான மோக்ஷம் என்பது இந்த லோகத்தைவிட்டு, புனர்ஜன்மா இல்லாமல் பரமாத்மாவின் ஸ்தானத்துக்குப் போய் அவரோடேயே என்றென்றைக்கும் இருந்து கொண்டிருப்பதுதான் என்று மற்ற ஸித்தாந்திகள் சொல்கிறார்கள். அவர்கள் கொள்கைப்படி, பரமாத்மா

என்பதாகத் தனக்கு வேறாக உள்ள ஒருத்னோடு இருப்பது, பக்தி பண்ணுவது அவனுக்கு தாஸ்யம் (பணிவிடை) செய்வதென்பதெல்லாம் மோக்ஷ நிலையில் தன்னுடைய நிஜமான உள் ஸ்வரூபமான ஆத்மாவாக இருக்கிறபோதும் ஜீவனுக்கு இருக்கிறது. அதாவது பக்தி முதலான எண்ணங்களும் உணர்ச்சிகளும், தாஸ்யம் புரிவது முதலான செயல்களும் ஜீவாத்மாவுக்கு எப்போதும் இருப்பதாக இந்தக் கொள்கையிலிருந்து ஏற்படுகிறது.

இப்படி நினைக்க மனஸூம், கார்யம் செய்ய தேஹமும், செய்கிற இடமாக ஒரு லோகமும் (வைகுண்டமோ, கைலாஸமோ எதுவோ ஒரு லோகம்) இருந்தாலும், 'இவை எல்லாமே அப்ராக்ருதம், அதாவது ப்ரக்ருதி (மாயை)யின் ஸம்பந்தமில்லாதவை. அதனால் அங்கே நம்முடைய ப்ராக்ருதமான லோகத்தில் மாயா வசப்பட்ட மனஸாலும் தேஹத்தாலும் நாம் உபத்ரவம் வரவழைத்துக் கொள்கிறது போல இருக்காது. எல்லாமே நல்லதாயிருக்கும்' என்கிறார்கள்.

நல்லதாயிருக்கும் என்றாலும் அது ஆத்மாவாயிருப்பதற்கில்லை என்றுதான் நாம் பார்க்கிறோம். தூக்கத்தில், மூர்ச்சையில், ஸமாதியில் கெட்டதோடு நல்லதும் இல்லாமலே அத்மா இருப்பது தெரிகிறது. 'நல்லது' என்பதும், இருக்கிற ஆத்மாவின் ஜீவாபாஸத்தினால் அறியப்படுகிற இன்னொன்றாகத்தான் இருக்கமுடியும். அதாவது, ஜீவாத்மாவால் அறிந்து அநுபவிக்கப்பட வேண்டிய அநேக த்வைத வஸ்துக்களில் ஒன்றாகத்தான் நல்லது என்பதும் இருக்கும். இன்னொன்றை ஜீவாத்மா அறிந்தநுபவிக்கும் நிலையில் இருந்தால் அப்போது தன்னை அறிந்தநுபவித்துக் கொள்ள முடியாது. இரண்டு விஷயங்களை எப்படி ஒரே ஸமயத்தில் அறியவும் அனுபவிக்கவும் முடியும்? நம்முடைய மனஸ் ஒருமைப்பட்டு, புத்தி 'ஸ்டெடி'யாக இல்லாதபோது பல நினைப்புப், பலவற்றை மேல்வாரியாக அறிவது, ஆழமாயில்லாமல் பல அநுபவங்களை அடுத்தடுத்துப் பெறுவது - என்றெல்லாம் உள்ளது. மனஸ் ஒன்றிலேயே குறியாகக் குவிந்து விட்டால் அந்த ஒன்றுதான் நினைப்புக்கும் அறிவுக்கும் அநுபவத்துக்கும் வரும். அக்கம்பக்கத்தில் என்ன நடந்தாலும் தெரியாமல் இப்படி ஒன்றிலேயே ஈடுபட்டிருப்பதுதான் அதைக் குறித்த

பூர்ணமான, நிஜமான அறிவும் அநுபவமும் ஆகும். அதாவது ஒரே ஸமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட வஸ்துக்களை அறிந்தநுபவிக்க முடியாது. எனவே அப்ராக்ருதமே ஆனாலும், வைகுண்ட கைலாஸாதிகளில் ஜீவாத்மா என்பது தனக்கு இன்னொன்றான நல்லதை, இன்னொன்றான ஈச்வரனை அறிந்து அநுபவித்துக் கொண்டிருக்கிறவரயில் தன்னை அறிந்து அநுபவித்துக் கொள்வில்லை என்றே அர்த்தம். தன்னையே தெரிந்துகொள்ளாத இப்படிப்பட்ட நிலையாகவா ஜீவனின் ஸத்ய நிலை இருக்கும்? அவனுடைய ஸத்ய நிலையில் அவனைச் சேர்க்காமலிருக்கும் ஒரு ஸ்தானம் மோக்ஷமாக இருக்கமுடியம்? ஆத்ம ஞானம், ஆத்மாநுபவம் ('இரண்டும் ஒன்றேதான்) இல்லாத ஒரு ஸ்திதியை ஜீவனின் நிஜ ஸ்திதி என்றோ, மோக்ஷமன்றோ ஒப்புக்கொள்வதறக்கில்லை. இப்படி அத்வைதிகள் சொல்கிறார்கள்.

கார்யம் நினைப்பு என்பவை, இவை இல்லாத ஆத்மாவில் அதற்கு அந்யமாக ஏற்பட்டவையான க்ருத்யங்கள்தான். 'க்ருதம்' என்றால் செய்யப்பட்டது', 'செய்யப்பட்டது' என்றால் இயற்கையாய் இல்லாததுதானேஈ இந்த 'க்ருத'த்தை வைத்தே ப்ரக்ருதி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. "ப்ர" என்பது அப்புறம் வருகிற "க்ருதி" என்ற வார்த்தைக்கு அழுத்தம் கொடுத்து உறுதிப்படுத்துவதே. 'இயற்கை' என்ற 'ப்ரக்ருதி'யைச் சொன்னாலும்., ஸ்வாபாவமாக உள்ள குணமற்ற, செயலற்ற ஆத்ம ஸ்திதியல் குணங்களையும் செயல்களையும் உண்டாக்குவதால் செயற்கைதான் ப்ரக்ருதி. எத்தனை உத்தமமான கார்யம் ஆனாலும் அதாவது பகவானையே த்யானித்து பக்திபண்ணுவதான, அவனுக்குச்தாஸ்யம் பண்ணுவதான, பரம உத்தமமான கார்யமானாலும் - அதுவும் ஆத்மாவின் ஸ்வபாவ ஸ்திதிக்கு அந்யமாக ஏற்பட்டதுதான். அது ப்ரக்ருதிக்கு மேற்பட்ட அப்ராக்ருதம் என்று சொல்வதில் ஸாரமில்லை. பகவான் (கீதையின் ஏழாம் அத்யாயத்தில்), கீழ்ப்பட்ட அப்ரா ப்ரக்ரதிக்கு மேற்பட்டதாக பரா ப்ரக்ருதி என்று ஒன்றைச் சொல்கிற மாதிரி வேண்டுமானால், விஷய ஸுகத்தில் இழுத்துவிடும் கீழ்ப்பட்ட ப்ரக்ருதியாயில்லாமல், பகவானிடமே இழுத்து சேர்ப்பிக்கும் ப்ரக்ருதியாக மோக்ஷத்தில் இருக்கிறது என்று த்வைதிகள் சொல்விட்டுப் போகலாம். பகவானே இப்படித்தான் உசந்த ப்ரக்ருதி என்று

ஒன்றைச் சொல்லி அப்புறம் குணமும் கார்யமுமில்லாத ப்ரஹ்ம நிலையைச் சொல்லியிருக்கிறாரே தவிர, குணங்களோடேயே கார்யங்களோடேயே இருக்கும்போதிலும் ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாமல் அப்ராக்ருதம் என்று ஒன்று இருப்பதாகச் சொல்லவில்லை.

ஏதோ ஒரு லோகத்துக்குப் போய் வஸிப்பது என்று வந்துவிட்டால் அது ப்ரக்ருதி ஸம்பந்தமானதுதான், அதாவது மாயா ஸம்பந்தமானதுதான். மாயை உள்ளவரை மோக்ஷம் எப்படி ஸாத்யம்? "இது நல்லதே செய்கிற மாயையாதலால் நாங்கள் இதிலேயே இருந்துகொண்டு இருக்கிறோம். இதையே மோக்ஷமாக வைத்துக்கொள்கிறோம்" என்று வேண்டுமானால் சொல்லிவிட்டுப் போகட்டும். "இதுதான் மோக்ஷம்" என்று எப்படிச் சொல்லலாம்? அத்வைதிகள் சொல்கிறபடி ஜீவனும் ப்ரஹ்மமும் அபேதமாகப் போய்விடுகிற ஒரு மோக்ஷம் கிடையாது என்று எப்படிச் சொல்லலாம்?

தமக்கு த்வைதந்தான் பிடித்திருந்தபோதிலும் அதுவே முடிவான மோக்ஷம், ஆனால் ஈச்வரபக்தி இல்லாத அந்த மோக்ஷம் எங்களுக்கு வேண்டாமென்று அவர்கள் சொல்வார்கள். திருவாரூரில் இருந்த பரம சாம்பவர்களான 'திருக்கூட்டதார்' இப்படித்தான் இருந்தார்கள் என்று சேக்கிழார் சொல்கிறார்.

கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி

வீடும் வேண்டா வீறலின் விளங்கினார்

என்கிறார். அதாவது, 'ப்ரேமையில் ஈச்வரனோடு கலந்து அவனை பக்தி பண்ணிக்கொண்டேயிருக்க வேண்டும், இதை விட்டு விட்டு 'வீடு' என்கிற மோக்ஷத்துக்குப் போகவேண்டாம்' என்று அநத் சிவனடியார்கள் நினைத்தார்களாம். இப்படிச் சொன்னதாலேயே கைலாஸம் மாதிரியான ஒரு லோகத்தில் போய் த்வைதமாக ப்ரேம பக்தி பண்ணிக்கொண்டிருப்பதை அவர்கள் (சேக்கிழாரும் கூடத்தான்) வீடாக (மோக்ஷமாக) நினைக்கவில்லை என்று தெரிகிறது.

இந்தப் பாட்டின் முதல் இரண்டு வரிகளிலிருந்து இன்னொரு ஸ்வாரஸ்யமான ஸமாசராமும் தெரிகிறது. அத்வைத

மோக்ஷம் வேண்டாமென்று இவர்கள் சொல்வபர்கள ரயிருந்தாலும், அவர்களை அத்வைதமான ஸரஸபாவத்திலேயே லோகத்தில் எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்த்திருக்கிறார்கள் ஜீவ-ப்ரஹ்ம ஐக்யம் தவிர மற்றவற்றில் அத்வைதிகளான இருந்திருக்கிறார்கள். மண்ணாங்கட்டியும் தங்கமும் அவர்களுக்கு ஒன்றாக இருந்திருக்கிறது.

ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்.

ஆக்கல், அழித்தல் என்ற வித்யாஸமே தெரியாத லக்ஷ்மீகரமான மனோபாவத்தில் அவர்கள் இருந்தார்களாம்

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்.

அழிவு, கேடு அவர்களைத் தொடாது. உசந்த ஸம்பத்துள்ள வாழ்வு, ஆக்கமும் அவர்களைத தொடாது. ஸமபாவம் என்ற பரமமங்கள வஸ்து நிறைந்த "திருவினார்". மங்களந்தான் லக்ஷ்மி, அதுவே திரு.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**த்வைத ருசிக்குத் துன்பம் தவிர்க்கவொண்ணாதது**

அப்படியாவது த்வைதிகள் மோக்ஷமாகச் சொல்லும் வைகுண்ட கைலாஸாதி லோகத்திலே அவர்கள் சொல்கிறபடி சாச்வதமாக நல்லதாகவே இருக்கிறதா என்று பார்த்தால் அப்படியும் காணோம். ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி, கருடாழ்வார், ஆதிசேஷன், நாரதர் மாதிரியானவர்கள்கூட ஏதாவது ஸந்தர்ப்த்தில் கோபம், துக்கம், போட்டி, போன்ற உணர்ச்சிகளுக்கு ஆளாவதாகப் புராணங்களிலிருந்து தெரிகிறது. இவர்கள் சாபத்தைக்கூட வாங்கிக் கட்டிக்கொள்வதைப் பார்க்கிறோம். ஏன், பகவானுக்குமே இப்படி ஏற்படுகிறது முதலிலேயே சொன்னேன், பகவானுக்குமே யாரைவிட அதிக ப்ரியம் கிடையாது என்கிறார்களோ, அந்த ராதையைக்கூட விரஹம் என்று கதறக்கதற அடிக்கிறானென்று.

இரண்டு வஸ்து இருந்தால் இப்படி ஸுகமும் துக்கமும் மாறி மாறி வராமல் இருக்க முடியாது. எதிரெதிர் ஜோடிகள் pairs of opposites- என்பது- இல்லாவிட்டால் த்வைதம் ருசிக்கவே ருசிக்காது. எப்போதும் பார்த்தாலும் ஸந்தோஷமாகவே இருந்து கொண்டிருந்தார்கள் என்று ஒரு கதை எழுதினால்கூட அலுப்புத் தட்டிவிடும். கஷ்டம் வரணும், துஷ்டன் வரணும், கதாநாயகியைத் தூக்கிக்கொண்டுபோகணும், கதாநாயகனுக்குப் பட்டாபிஷேக ஸமயத்தில் எவளாவது ஒருத்தி எதையாவது கிளப்பிவிட்டு அதை நிறுத்தணும், ஸபாமத்தியிலே சத்ருக்களிடம் மஹத்தான மானபங்கப் பட்டுக்கொண்டு நிராதவராகக் கதாநாயகி கதறணும், அடிச்சுக்கணும், புடைச்சுக்கணும் - இப்படி நடந்தால்தான் கதைகூட ருசிக்கிறது.

த்வைதத்திலே ஸந்தோஷ அநுபவம் வேறொன்றைக் குறித்தே ஏற்படுவதால் அது சாச்வதமாகத் திகட்டாமலிருக்க முடியாது. ஆகையால் நடுப்பற நடுப்பற அது மறைந்து போய் மறுபடி வந்தால்தான் அலுப்புத்தட்டாமல் ஸந்தோஷாநுபவம் பெற முடியும். நஷ்டமான ஒன்றை மறுபடி பெறும்போதுதான் அநுபவானந்தம் த்வைதத்தில் ஜாஸ்தீயாகும். அதற்காகத்தான் பகவான் தனக்குப் பரம ப்ரியமானவர்களும் அவ்வப்போது தன்னைவிட்டுப் பிரியுமாறு பண்ணுவது. த்வந்தங்கள், pairs of opposites, த்வைதத்தில் இருந்தே ஆகணும். அப்போதுதான் அதற்கு ருசி. ராத்திரி - பகல், ஐஸ்லாண்டு - ஸஹாரா, புலி - மான்குட்டி, தாழம்பு - கத்தாழை, ஜனனம் - மரணம், கல்யாணம் - இன்னொன்று, சர்க்கரைப் பொங்கல் - அது திகட்டாமலிருப்பதற்கே நடு நடுவே மிளகாய்த் தொக்கு, முடிவாக நல்லது - கெட்டது , இன்பம் - துன்பம்.

இம்மாதிரி நடுவிலே நடுவிலே துன்பம் வருகிறது என்றால் அது சாச்வதமான இன்பமில்லை. சாச்வத இன்பமில்லாவிட்டால் அது மோக்ஷமுமில்லை. திகட்டாமல் அப்படியே சாச்வத இன்பமாக இருக்க முடிவது அத்வைதமான ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கும்போதுதான்

- என்றிப்படி அத்வைதிகள் சொல்கிறோம்.

வைகுண்டம், கைலாஸம் என்பதாக ஒரு லோகத்துக்குப்

போவது, அங்கே ரூபத்தோடு இருக்கும் சிவனோடு, விஷ்ணுவோடு வஸிப்பது என்றில்லாமல், ரொம்பவும் தத்வ ரீதயிலே போய் உசந்த த்யானத்திலே லயித்திருப்பதைச் சொல்லும் காஷ்மீரி சைவம் மாதிரியான ஸம்ப்ரதாயங்களும் இருக்கின்றன. ஆனால் அவற்றிலுங்கூட ஐக்யம் ஆவது என்றில்லாமல் த்யானம் பண்ணுவது, லயம் பெறுவது என்று உள்ளவரை த்யான லக்ஷ்யத்திலிருந்து லயம் சிதறி விலகுவதற்கும் இடமிருக்கத்தான் செய்கிறது. ரூபமுள்ள சிவன் இல்லை, அரூப சிவம் என்றாலும், அதுவாகவே ஆகாமல், அதோடு இழைகிற த்யான லயிப்புதான் என்றால், ஒரு நூலோடு இழைத்துவிட்ட இன்னொரு நுலை எதிர்திசையில் முறுக்கிப் பிரித்துவிடுகிறாற்போல, இங்கேயும் பிரிவு ஏற்படத்தான் செய்யும். அதாவது த்யான ஸுகமும் சாச்வதமில்லை. அத்வைதமொன்றுதான் நித்ய ஸுகம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பரிசுத்தி செய்துகொள்ளும் பணி**

அது லக்ஷ்யமான உச்ச ஸ்தானத்தில், கர்மா எல்லாம் போய் மனஸ் பரிசுத்தியாகி ஒருமுகப்பட்டு நின்ற பிற்பாடுதான் அந்த ஸ்தானத்துக்குப் போகமுடியும். அப்படிப் போகிற மட்டும் நன்றாக த்வைத ஸாதனைகளைத்தான் பண்ணவேண்டும் - ஆனாலும் அத்வைத நினைப்பை ஒரு அடியிழையாக அறாமல் வைத்துக்கொண்டே.

பரிசுத்தி செய்வதற்காக ஸ்வதர்மப்படி அவரவருக்கு வாய்த்த கார்யங்களை வேத சாஸ்த்ரம் விதித்தபடி பண்ணவேண்டும். காம க்ரோதாதி அழுக்குப் போவதற்காக மனஸை பகவானிடம் ப்ரேமையில் நனைத்துக்கொண்டு பக்தியில் உருகவேண்டும். சும்மாவுக்காக இப்போது நாம் இருக்கிற ஸ்திதியிலேயே, "நான் எதுவும் பற்றாத ஆத்மா" என்று கதை பண்ணிக்கொண்டிருப்பதில் ப்ரயோஜனமில்லை. அதிலே (ஆத்மாவிலே) தான், என்ன மாயையோ, இத்தனை

அழுக்கை ஜன்ம ஜன்மமாக ஏற்றிக் கொண்டிருக்கிறோமே!முணுக்கென்றால் எத்தனை கோபம், பயம் எல்லாம் வந்து விடுகிறது? எத்தனை ஆசைகள் இழு இழு என்று இழுக்கின்றன?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பாஷை ஆராய்ச்சி, அதிலும் பரமாத்ம - ஜீவாத்மா**

ஒரு செப்புச் சொம்பு இருக்கிறது...

'சொம்பு' என்பது 'செம்பு' என்பதன் திரிபு. செப்பு என்பதும் செம்புதான். தமிழ் பாஷையில் 'ம்பு' என்பது 'ப்பு' என்று ஆகிறதிலே ஒரு வேடிக்கை - இதில் ஒரு பொது விதியே இருக்கிறது. பெரிசாக, மூலமாக ஒன்று இருக்கிறபோது அதன் பெயரில் 'ம்பு' வரும். அதிலிருந்தே சின்னதாக ஒன்றைச் செய்கிறபோது அதன் பெயரில் 'ம்பு' என்பது 'ப்பு' என்று மாறிவிடும். தாய்ச் சரக்கு "ம்பு", அதிலிருந்து வந்த குழந்தைச் சரக்குகள் "ப்பு" என்று சொல்லலாம். இரும்பு என்பது மூலப் பொருள் - அது (உ)லோஹத்துக்குப் பேர். ஆனால் அந்த இரும்பைக் கொண்டு ரயில்வே லைன் போட்டால் இருப்புப்பாதை" என்கிறோம். இதே மாதிரி, இலுப்பச் சட்டி என்பது இருப்புச் சட்டிதான். "வரம்பு" என்பது பொதுப்படையான எல்லை. இதையே குறுக்கி ஒரு வயலுக்கு எல்லை கட்டும்போது "வரப்பு" என்கிறோம். கரும்பு பொதுப்பேர். அதைச் சின்னதாக particularise பண்ணும்போது (குறிப்பிட்ட ஒன்றாக ஆக்கும்போது) கருப்பஞ்சாறு, கருப்பட்டி என்றெல்லாம் ஆகிறது. புலவர்களாக இருக்கப்பட்டவர்கள் மன்மதன் கையிலிருக்கிற தநுஸைக் "கருப்பு"வில் என்றுதான் சொல்வார்கள். 'கம்பு' என்பது கழிக்குப் பொதுப்பேர். இதையே ஒரு மரத்தோடு சேர்த்து அதன் பாகமாகச் சொல்லும்போது "கப்பும் கிளையுமாக" என்கிறோம். "திரும்புவது" பொதுக்கார்யம், திருப்பம், திருப்புமுனை என்று அதை 'பார்ட்டிகுல'ராகப்

பண்ணுகிறோம்.

வினைச் சொல்லில் "ம்பு" என்றிருப்பது பெயர்ச் சொல்லில் "ப்பு" என்றாகிறதும் உண்டு. விரும்பு - வினைச் சொல், விருப்பு - பெயர்ச்சொல். திரும்பு - திருப்பம் என்பதைக்கூட இப்படிச் சொல்லலாம்.

"ம்பு", ப்பு" இரண்டையும் சில ஸமயம் ஒரே அர்த்தத்தில் சொல்வதையும் பார்க்கிறோம். ஸம்ஸ்க்ருதத்திலேயே ஜலத்துக்கு 'அம்பு', அப்பு' என்ற இரண்டு பேர்களும் இருக்கின்றன. 'தூசி தும்பு', 'தூசி துப்பு' என்று இரண்டு தினுஸாகவும் சொல்கிறோம்.

பொதுவாகச் சொன்னால், பொதுவாயிருப்பது "ம்பு", அதிலே குறிப்பாக ஒன்றாக ஆக்கினது "ப்பு".

சொம்பு, சொப்பு-வுக்கு வருகிறேன். முன்னாளில் குழந்தைகள் சமையல் விளையாட்டு விளையாடுவதற்குச் செம்பினால் ஆன பாத்ரங்கள்தான் சின்னச் சின்னதாகப் பண்ணிக்கொடுத்தார்கள். அதனால் அவற்றுக்குச் "செப்பு" என்று பெயர். செப்புப் பாத்திரம் என்பதாக எத்தனையோ இருந்தாலும், குறிப்பாக குழந்தைகளுடைய விளையாட்டு ஸாமான்களுக்கே 'செப்பு' என்று பேர் வந்துவிட்டது. 'சொப்பு' என்பது அதைத்தான். இப்படி செம்பினால் ஆன ரொம்பவும் சின்ன வஸ்துவுக்குச் 'செப்பு' என்று பேர் ஏற்பட்டபின், அதே லோஹத்தினாலான பெரிய பாத்ரங்களில் அதிகம் உபயோகிக்கப்படவதான தீர்த்த பாத்திரத்துக்குச் 'செம்பு' (சொம்பு) என்று பேர்வைக்கும்படி ஆயிற்று. தாய்ச் சரக்கின் பேரில் "ம்பு" வரும், அதில் உண்டாகும் குழந்தைச் சரக்கின் பேரில் அது "ப்பு" என்றாகிவிடுமென்றேனல்லவா? குழந்தை வைத்துக் கொண்டிருப்பது "சொப்பு" என்பதால், தாயார் வைத்துக்கொண்டிருப்பது "சொம்பு" ஆகிவிடுகிறது வாஸ்வதத்தில் அதுவும் செப்புப் பாத்திரம்தான்.

ஆத்ம தத்வத்திலிருந்து இப்படி பாஷை ஆராய்ச்சிக்கு வந்துவிட்டோமே என்று பார்த்தால் இதிலும் வேதாந்த ஸமாசாரம் வருவதாக ஸமாதானம் பண்ணிக்கொள்ளலாம். எப்படியென்றால், "ம்பு" என்பது மூலமான பரமாத்மா மாதிரி, 'ப்பு' அதிலிருந்து வந்த ஜீவாத்மா மாதிரி என்று வைத்துக்கொள்ளலாம்!

## அத்வைதம்

### பாத்திரம் தேய்ப்பதுபோல

பாஷை, பேச்சு, மனஸ் எல்லாம் அடிபட்டுப் போகும் ஸமாசாரம் பேசிக்கொண்டிருந்தோம். அதில் உபமானத்துக்குச் செப்புச் சொம்பைக் கொண்டுவந்தேன். அது எத்தனையோ நாளாகக் கும்பியிலே புதைந்து அழுக்கு காய்ந்து கனமாய்ப் பிடித்துக்கொண்டிருக்கிறதாக வைத்துக்கொள்வோம். அத்தனை அழுக்குக்கும் உள்ளே சொம்பு இருப்பது வாஸ்தவம் ஆனால் அதனால் என்ன ப்ரயோஜனம்? அதை எத்தனை நாள், எத்தனை புளி போட்டு, உரிமட்டை. மண் இதனாலெல்லாம் தேய்க்க வேண்டியிருக்கிறது? களிம்பு லேசிலே விடுகிறதா? அதிலே பிடித்திருக்கிற பச்சை எல்லாம் போய் அது பளிச்சென்று ஆவதற்குத்தான் இத்தனை தேய்ப்பதாக நாம் சொல்கிறோம். ஆனால் வாஸ்தவத்தில் தேய்ப்பதெல்லாம் களிம்பு போவதற்கு மட்டுந்தான். அழுக்கு எல்லாம் போன பிற்பாடு பாத்ரம் தானே பளிச்சென்று இருந்துவிடுகிறது நாம் ஆக்கவில்லை.

பாத்ரத்தை நாம் புதுசாகப் பண்ணவில்லை, அதனுடைய பரிசுத்தத்தையும் நாம் பண்ணவில்லை. தடிப்பாக அதை மூடியிருந்த அசுத்தத்தையே எடுத்தோம். அவ்வளவுதான்.

இந்த செப்புப் பாத்ரம் மாதிரிதான் ஆத்மா இருக்கிறது. அது தெரியாதபடி அதன்மேலே ஏக அழுக்கை அப்பிக் கொண்டிருக்கிறோம். நம் மனஸினாலே நினைக்கிற எண்ணங்கள், வாயாலே சொல்கிற வார்த்தைகள், உடம்பாலே செய்கிற காரியங்கள் இவற்றால் எல்லாம் கும்பி மண்ணைக் கொண்டுவந்து கனமாகப் படியவிட்டிருக்கிறோம. அப்படியிருக்கும்போது உள்ளுக்குள்ளே ஆத்மா இருக்கிறது என்றாலும் அதைத் தெரிந்துகொள்வதற்குப் பரிசுத்தி பண்ணத்தானே வேண்டும்? முதலில் மனோ, வாக்,

கார்யங்களால் பண்ணின கெட்டவை எல்லாம் போக அதே மனோ, வாக், காயங்களாலேயே அநேக நல்லதைப் பண்ணித் தேய்த்துத் தேய்த்து அலம்ப வேண்டும். கும்பி மண் போக, வேறே மண், மட்டை, புளி போட்டுத் தேய்க்கிற மாதிரி. முடிந்த முடிவிலே பார்த்தால் இந்த மண், மட்டை, புளி எல்லாமும் அசுத்தம்தான். (ஸத்வ குண வ்ருத்திக்குப் புளி ஆகாது. ஸாதுக்கள், ஸ்நநியாஸிகள் புளியைத் தள்ளளித்தான் ஆஹாரம் பண்ணவேண்டும்) ஆனாலும் ஆரம்பத்திலே இவைதான் அசுத்தத்தைப் போக்குகிறவை. கடைசியில் சுத்த ஜலத்தைவிட்டுப் பாத்ரத்தை அலம்புகிறபோது, கொஞ்சங்கூட மட்டை, மண், புளிக்கோது இல்லாமல் அலம்புகிறோம். எதனால் அசுத்தத்தைப் போக்கினோமோ அதையும் அசுத்தமென்று சுத்த ஜலத்தைக் கொட்டி அகற்றுகிறோம். இதே மாதிரி கடைசியில் மனோ -வாக் - காயம் எல்லாவற்றையுமே ஆத்மாவை அசுத்தி செய்பவைதான் என்று ஞான விசார தீர்த்தத்தின் தாரையில் அலம்பி அப்புறப்படுத்திவிடத்தான் வேண்டும். அதற்காக, முதலிலேயே அழுக்குக் கப்பி களிம்பு பிடித்திருக்கிற பாத்ரத்தில் வெறும் சுத்த ஜலம் விட்டு அலம்பினால் போதுமா? இப்படித்தான் ஆரம்பத்திலேயே ஆத்ம விசாரம் மட்டும் போதும் என்று பண்ணுவது. ஆரம்பத்தில் மனஸிலே ப்ரேமை, பக்தி முதலிய நல்ல எண்ணங்களோடு, கட்டுப்பாடு, விநயம் முதலான குணங்களோடு, சரீரத்தாலும் வாக்காலும் சாஸ்த்ரம் சொல்கிற சடங்குக் கர்மாக்கள், பரோபகாரம் முதலான ஸத்கர்மாக்கள் பண்ணி, ஜன்மாந்தரமாகத் தடிப்பேற்றிவிட்ட கெட்டவற்றையெல்லாம் தேய்த்து அப்புறப்படுத்தவேண்டும். அப்பும்தான் இந்த நல்ல ஸமாசாரங்களிலும்கூட ஆத்மானுபவத்தின் சாச்வதமான சாந்தமும் ஆனந்தமும் இல்லை என்பதானால் இவற்றையும் ஞான தீர்த்தத்திலே அலம்பி அகற்றவேண்டும். த்யானம் பண்ணுவது என்பதாக ஒன்று செய்வதும் ஆத்மாவாக இருப்பதற்கு அந்யமானதுதான். அதையும் நிறுத்திவிட்டு வெறுமே ஆத்மாவாக இருப்பதே முடிவு. ஆனால் அது கடைசியில்தான். அந்தக் கடைசி கட்டம் எப்படி நடக்கிறது என்பதை புத்தியாலோ வார்த்தையாலே விளக்கி வைக்க முடியாது. ஏனென்றால் புத்தி, மனஸ், வாக்கு எல்லாவற்றுக்கும் மேலான ஒரு நிலை அது.

இப்போது அடிக்கடி கேள்விப்படுகிற உபநிஷத்

"கொடேஷன்" அப்படித்தான் சொல்கிறது. இவற்றுக்கு அகப்படாத நிலையை இவற்றால் எப்படி விளக்குவது? அங்கே போன அப்புறம் மனஸூம், வாக்கும், சரீர ப்ரக்ஞையுமே போய்விடுவதால் இவற்றாலே பண்ணும் பாபம் மட்டுமில்லாமல் புண்யமுங்கூட இல்லாமற் போய்விடுகிறது. மனஸூக்கும் வாக்குக்கும் எட்டாததைப் பிடித்துவிட்டவன் அப்புறம், "நான் ஏன் இன்னின்ன புண்யம் பண்ணவில்லை? நான் ஏன் இந்தந்த பாபத்தைப் பண்ணினேன்?" என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருப்பதில்லை என்று அந்த உபநிஷத்திலே சொல்லியிருக்கிது. செயலைப் புரிந்து அதற்கான பலனை அநுபவிக்கிற கர்த்தாவாக ஆத்மா இல்லை, அப்படி இல்லாத அதுவே "தான்" என்று இவனக்குத் தெரியுமாதலால் இப்படியிருக்கிறான். ஆனால் "தானை"த் தெரிந்துகொள்ளாத நாம் அவன் மாதிரி சும்மாயிருக்க முடியுமா?

தேய்த்து சுத்தம் செய்கிற மண், புளி முதலான ஸாமான்களை சுத்த ஜலத்தினால் அலம்பி அப்புறப்படுத்திய பிறகு, இந்த சுத்த ஜலமும்கூடச் செப்புச் சொம்பில் ஒட்டிக் கொண்டிருக்க விடுவதில்ல. அந்த ஜலம் இருந்தால்கூடக் களிம்பு பிடிக்கத்தான் செய்யும். அதனால் ஜலத்தையும் ஒட்டத் துடைத்து விட்டே வைக்கிறோம். அப்படித்தான் ஆத்ம ஞான ஸித்தியை ஒருத்தன் பெற்றுவிட்ட பின் த்யானமும் ஆத்மவிசாரமும்கூடப் போய்விடுகின்றன.

நன்றாகத் தேய்த்து, ஈரம் போக ஒட்டத் துடைத்து வைத்தால்கூட, நாள்பட்டால் காற்றிலே கரைந்திருக்கிற வஸ்துக்கள் பட்டுப்பட்டே சொம்பில் பச்சை ஏறிவிடும். அதனால் அடிக்கடித் தேய்த்து வைத்துக்கொண்டேதானிருக்க வேண்டும். ஆத்ம நிஷ்டை விஷயமும் இப்படித்தான். எத்தனையோ ஸம்ஸ்காராதிகளால் சுத்திபண்ணி பின்பு ஆத்ம அநுபவம் வருவதும் ஆரம்பத்தில் மின்னல் வெட்டுகிற மாதிரி இருந்துவிட்டு மறைந்து போய் விடும். "மின்னலுக்கும் மின்னல், கண் கொட்டுகிற மாதிரி இருந்துபோய்விடுவது" என்று கேநோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. உள்ளே நித்ய நிரந்தர மின்னலாக அது இருப்பதை நாராயண ஸூக்தத்தில் விரிவாக வர்ணித்திருந்தாலும் அநுபவத்திலே பார்த்தோமானால் அது எத்தனையோ ஸாதனைகளுக்குப் பிறகும் மின்வெட்டு மாதிரி வெட்டிவிட்டுப் போவதாகத்தான் நீண்டகாலம் இருக்கிறது.

அப்படிஉள்ளவரை, அந்த ஆத்மாநுபவ மின்னல் மறைந்த பிற்பாடு, ஒருதரம் தேய்த்துப் பளிச்சென்று வைத்த சொம்பை மறுபடி தேய்க்கிறது போல அநுஷ்டானங்களையும் மற்ற ஸத்கர்ம ஸாதனைகளையும் தொடரத்தான் வேண்டும். இப்படிச் செய்துகொண்டே போய், முண்டக (உபநிஷ)த்திலே சொல்லியிருக்கிறாற் போலக் கர்மா எல்லாம் நாசமாகி, ஹ்ருதயத்தில் வாஸனா முடிச்சு அவ்வளவும் தெறித்து விழுந்த பிற்பாடுதான் ஆத்ம ஸித்தி சாச்வதமாகிறது. அப்போது சொம்பு சொம்பாக இல்லாமல் தங்கமாக ஆகிவிடுகிறது. அப்புறம் களிம்பு பிடிக்காது. தங்கம்கூட காலக்ரமத்தில் பளபளப்பு குறைந்து மெருகு போடவேண்டியதாகிறது. ஆத்மா அதற்கும் மேலே என்றைக்கும் ஜ்வலிப்பு குறையாத ஸூர்யன் மாதிரி!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**'ரவை ஸல்லா' உவமை**

திருப்பதியில் "ரவை ஸல்லாக் கட்டளை" என்று பழைய கால ராஜாக்கள் ஒன்று வைத்திருந்தார்கள். தற்காலத்தில் அத்தனை அசுத்தத்துக்கும் கோயில்தான் இடம் என்று ஆக்கியிருக்கிறோம்!ப்ராகாரத்தின் பக்கம் போவதென்றாலே மூக்கைப் பிடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறதென்று சொல்கிறார்கள். நான் வருகிறேன், மந்த்ரி, கமிஷனர் வருகிறதென்றால் அப்போது நடப்பது வேறே. மற்ற நாளில் எப்படியிருக்கிறதென்று பக்தர்கள் துக்கப்பட்டுக்கொண்டு என்னிடம் சொல்கிறார்கள். ப்ராகாரத்துக்கு வெளியிலே மட்டுமில்லை, ஸந்நிதிகளிலேயே கொஞ்சங்கூட சுத்தமில்லை, ஸ்வாமி மேலே சார்த்துகிற வஸ்த்ரமே பிடித்துணிக்கும் கேவலமாக அழுக்கேறியிருக்கிறது என்று துக்கப்பட்டுக் கொண்டு சொல்கிறார்கள்.

இதே தேசத்தில் நம் முன்னோர்கள் மனஸுக்குப் பரிசுத்தி தரவேண்டிய ஆலயம், புறத்திலும் பரம சுத்தியாயிருக்க

வேண்டுமென்பதில் கண்ணும் கருத்துமாயிருந்து அப்படியே நடத்திக் கொடுத்திருக்கிறார்கள்.

அப்போது திருப்பதியில் ரவை ஸல்லா கட்டளை நடந்து வந்தது. ரவை ஸல்லா என்றால் 'மாக்கா மஸ்லின்' மாதிரி நல்ல வெள்ளை வெளேரென்றும், ரொம்ப மெல்லிசாகவும் இருக்கிற துணி, மேலே போட்டுக்கொண்டால் போட்டுக் கொண்டிருக்கிறமோ என்றே தெரியாது, உடம்பெல்லாம் தெரியும். நல்ல நைஸாக, மெல்லிசாக நெசவு பண்ணியிருந்ததால் உடம்போ, தரையோ எதிலே போட்டாலும் நன்றாகப் படிந்துவிடும். துளி ஈரக்கசிவு (உடம்பிலா தரையிலோ) இருந்தால்கூட அப்படியே ஒட்டிக்கொண்டுவிடும். இப்படி அதன் texture இருந்ததால் எதிலே அது கொஞ்சம்பட்டுவிட்டாலும் அந்த அழுக்கு இதில் ஒட்டிக்கொண்டுவிடும். அதோடு மல்லிகைப் பூ மாதிரி வெள்ளை வெளேர் என்றுவேறே இருந்ததால் அழுக்கு லவலேசம் இருந்தால்கூட அதைத் தூக்கிக் காட்டிவிடும்.

திருப்பதியில் பெருமாள் ஸந்நிதானத்தில் கீழே கொஞ்சங்கூட அழுக்கில்லாமல் பரம சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்று ரொம்பவும் கவனமாக இருந்தார்கள். அபிஷேகமான இடமென்றால் அபிஷேக வஸ்துக்கள் தரையில் படிந்து அழுக்கு ஆகத்தானே செய்யும்? அதோடு தீபத்தின் எண்ணெய் சொட்டுவது முதலானவற்றால் பிசுக்காகி, அர்ச்சகர்கள் அதிலேயே நடக்கிறபோது சொத சொத என்றாகித் தரை அழுக்காக்தானே ஆகும்? அப்படிப்பட்ட மூலஸ்தானத் தரையை நன்றாகத் தேய்த்து அலம்பிவிட்டு, துணிகளைப் போட்டுப் போட்டுத் துடைப்பார்கள். முதலில் அப்படித் துடைக்கிற துணிகளே கொஞ்சம் அழுக்காகத்தான் இருக்கும்.

நம் வீடுகளில் கூட அப்படித்தான் - துடைக்கிற துணியைப் "பழசு", "சுருணை" என்று சொல்வோம். அது அழுக்காகத்தான் இருக்கும் நாம் சுத்தமாயிருக்கும் போது அது மேலே பட்டாலே பிடிக்காது - அப்படியிருக்கும் ஒரே அழுக்காய் உள்ள இடத்தை நல்ல துணியால் துடைத்தால் நல்ல துணியும் அழுக்காகி வீணாய்விடும் என்பதால் அதற்கென்றே ஒரு அழுக்குத் துணி வைத்துக் கொண்டிருப்போம். நாம் காலை வைத்து நடக்கும் தரை

போன்றவற்றை இப்படி அழுக்குத் துணியால் துடைப்பதோடு நிறுத்திக்கொண்டாலும், நாம் உட்காருகிற மணைப் பலகை முதலானவற்றைத் தேய்த்து அலம்புகிற போது இப்படி ரொம்ப அழுக்காயிருக்கும். துணியால் துடைக்காமல், கொஞ்சம் சுத்தமாயுள்ள துணியால்தான் துடைப்போம். ஸ்வாமி விக்ரஹத்துக்கு அபிஷேகம் செய்து துடைப்பதென்றால் நிச்சயமாகச் சுருணையால் செய்ய மாட்டோம். முதலில் ஓரளவு சுத்த வஸ்த்ரத்தால் துடைத்துவிட்டு, அப்புறம் நன்றாகக் காய்ந்த இன்னொரு சுத்த வஸ்த்ரத்தாலும துடைப்போம்.

திருப்பதியில் விக்ரஹத்தை மட்டுமில்லாமல் ஸந்நிதித் தரையையே எவ்வளவு சுத்தமாக வைத்துக்கொண்டிரு ந்தார்கள் என்றால், பெருமாள் ஸந்நிதானத்தில் முதலில் தடிமனான பழைய வஸ்தரங்களில் ஆரம்பித்து, அதைவிட மேலும் மேலும் சுத்தமான மெலிசான துணிகளால் துடைத்துக்கொண்டே போவார்கள். கடைசியில் ரவை ஸல்லாவைப் போட்டுத் துடைப்பார்கள். துளியூண்டு அழுக்கோ பிசுக்கோ இருந்தால் கூட அந்த வஸ்த்ரம் காட்டிக் கொடுத்துவிடும். இன்னொரு ரவை ஸல்லா, அப்புறம் ஒன்று என்று அந்த வஸ்த்ரத்திலும் கொஞ்சம்கூட அழுக்குப் படியாதவரை துடைத்துக்கொண்டே போக வேண்டும் என்று ராஜாக்கள் கட்டளை வைத்திருந்தார்க்ள. அதில் துளிக்கூட அழுக்குப் படியாமலிருக்கிறதா என்று பரீக்ஷித்துப் பார்ப்பதற்கென்றே ஒரு மணியக்காரன் போட்டிரு ந்தார்கள். அவ்வளவு சுத்தமாக, மூலவர் பிம்பத்தை வைத்துக்கொள்கிற மாதிரியே அவர் இருக்கிற கர்ப்ப ப்ருஹத்தை வைத்துக்கொண்டிருந்தார்கள்.

முதலிலேயே ரவை ஸல்லாவைப் போட்டுத் துடைத்தால் அதுவே கிழிந்துபோய்விடும். ஜலத்தை எல்லாம் பெரும்பாலும் தடிமனான சுருணைகளால் துடைத்துவிட்டு, குப்பை கோதுகளையும் அவற்றால் முக்காலே மூணுவாசி துடைத்துவிட்டுத்தான் ரவை ஸல்லாவுக்குப் போகவேண்டும்.

அத்வைதமாக ஆத்ம தத்வத்தை நினைத்து த்யான விசாரம் பண்ணிக்கொண்டிருப்பது வெள்ளை வெளேரென்று மெல்லிசு ரவை ஸல்லா போட்டு மனஸைத் துடைத்து விடுகிற மாதிரி தற்போது ஒரே மலினமாகவும், ஆசைப்பசை இக்குப்

பிசுக்கு என்று ஒட்டிக்கொண்டும், கோபம் லோபம் முதலியவற்றால் கரடு முரடான கல்தரை மாதிரியும் உள்ள நம்முடைய மனஸிலே அந்த த்யான ஸல்லாவைப் போட்டுத் துடைத்தால் இதுவும் சுத்தமாகாது. அதுவும் கிழிந்துபோய்விடும். தடிமனான சுருணையில்தான் ஆரம்பிக்க வேண்டும். அதனால்தான் இந்த்ரியக்ளை வைத்துக்கொண்டு அவற்றைக் கொண்டே பெறுவதான க்ருஹஸ்தாச்ரம அநுபோகங்களில் ஆரம்பித்திருக்கிறது. ஆனாலும் பழைய அழுக்கை இந்தச் சுரணையும் துடைத்தெடுககிற மாதிரி, பழைய கர்மாவைப் போக்கிக் கொள்ளை ரீதியிலே சாஸ்த்ர விதிகளின்படி இதிலும் கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. மதஸம்பந்தமான அநேக சடங்குகளான கர்மாகளையும் கொடுத்திருக்கிறது. இப்படி அநேக கர்மாக்களைப் பண்ணிப்பண்ணி ஜன்மாந்தர அழுக்குகளையத் துடைத்துக் கொண்ட பின்தான் த்யான விசாரத்துக்குப் போகமுடியும். ஆரம்பத்திலேயே அப்படிப் பண்ணுவது நம்மையே ஏமாற்றிக்கொள்ளவாகத்தான் ஆகும்.

ஆனாலும் ஆரம்பத்தில் கெட்டிச் சுருணையைப் போட்டுத் துடைக்கும்போதே, அப்படித் துடைக்கிறவன், "கடைசியிலே மணியக்காரன் ரவை ஸல்லாப் பரீக்ஷை நடத்துவான். அதில் ஜயிக்க வேண்டும" என்பதை மறக்காமல், அந்த நினைவுடனேயேதான் அழுந்த அழுந்தத் துடைப்பான். அதுபோல, கர்ம அழுக்குக் கழிவதற்காகவே சாஸ்த்ரங்கள் வர்ணம், ஆச்ரமம் என்று வகுத்து ஒவ்வொரு ஸ்டேஜில் என்னென்ன செய்யவேண்டுமென்று சொல்கிறதோ அவற்றையெல்லாம் நாம் மனோ வாக்காயங்களைக் கொண்டு பண்ணிக் கொண்டிருக்கும்போதும், 'இதற்கெல்லாம் முடிவு மனோதீதமான, வாக்குக்கு அப்பாற்பட்டதான, கார்ய ப்ரபஞ்சத்துக்கு அப்பாற்பட்ட ஆத்ம ஸாக்ஷாத் தாரம்தான், அதை ஞானவிசாரத்தால் அடையும் நிலைக்குக் கொண்டு விடுவதற்குத்தான் இப்போது, நாம் செய்யும்படியான எல்லாமும்' என்கின்ற ஒரு நினைப்பை வைத்துக்கொண்டே இருக்கவேண்டும்.

ஒரு பாத்ரத்தை அலம்பும்போது கடைசியிலே சுத்த ஜலத்தை மட்டும்விட்டு, முதலிலே சுத்திக்குப் பிரயோஜனமான புளி, மண் முதலானவற்றின் கோது, தூள் முதலிலே மண்ணையும்

புளியையும் போட்டுத் தேய்க்கிறபோதுகூட அவற்றோடு சுத்த ஜலத்தைக் கொஞ்சம் சேர்த்துக் கெட்டியாகக் கரைத்துக்கொண்டுதானே தேய்க்கிறோம்? அந்த மாதிரி ஆரம்பக் காலத்தில் மனோ இந்த்ரியாதிகளால் கர்மாக்களைச் செய்கிற காலத்திலுங்கூட ஆத்ம சிந்தனைத் தீர்த்த்தைக் கொஞ்சம் இவற்றில் தெளித்துக் கொள்ளத்தான் வேண்டும். ஆரம்பத்திலிருந்தே அநேக கர்மாக்களுக்கிடையிலும் த்யானத்துக்கென்று, ஆத்ம விசாரத்துக்கென்று கொஞ்ச காலம் ஒதுக்கத்தான் வேண்டும்.

எது ஒன்றையோ நாம் தேய்த்து சுத்தம் செய்கிறோம் என்றாலும், இத்தனை கஷ்டப்பட்டு நாம் தேய்த்து அலம்பி கடைசியிலே சுத்தமாக ஆகிற அந்த ஒன்று - சொம்போ, தரையோ, விக்ரஹமோ எதுவோ ஒன்று - இருக்கிறதே அந்த ஒன்றை நாம் புதிதாகப் பண்ணவில்லை. அதை நாம் எதுவாகவோ மாற்றிவிடவும் இல்லை. அது இருக்கிறபடி தான் இருக்கிறது. அதன் மேலே சேர்ந்த, ஆனால் அதோடு சேரக்கூடாததான வஸ்துக்களை நாம் போக்கினோமென்பது தான் நாம் பண்ணின தெல்லாம். இப்படித்தான் ஸ்வயம் ஸித்தமாக எப்போதும் இருந்துகொண்டிருக்கிற ஆத்மா அதன் ஸ்வபாவமான ஸ்திதியில் ப்ரகாசிக்கும்படிச் செய்வதற்கே தான் செய்கிற ஸாதனையெல்லாம். அதன்மேல் படிந்து அதை மறைத்துக்கொண்டிருக்கிற மாயா ஸ்ருஷ்டியான மனஸைப் போக்குவதற்குத்தான் அநேக கார்யங்களைச் செய்ய வேண்டியதாயிருக்கிறது. மனஸ் என்கிறபோது அந்தஃகரணம், வாக், காயம் எல்லாவற்றையுந்தான் அதில் சேர்த்துவிடுகிறேன். அதே மாதிரி, கார்யம் என்னும்போது மனஸின் கார்யமான எண்ணங்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**நல்லதில் கெட்டது கலக்காமலிருக்க**

தப்புக் கார்யம், தப்பு எண்ணமான காம க்ரோதம் ஆகியன போவதற்கே சாஸ்த்ர ரீதியான ஸத் கார்யங்களை வர்ணாச்ரமப்படி செய்வது, அன்பு பரோபகாரம் பக்தி பணிவு முதலான நல்ல எண்ணங்களை வளர்த்தக் கொள்வது இவை எல்லாம். தப்புக் காரியங்கள், அஸத் வ்ருத்திகள் என்பவையே ஆரம்பத்தில் சொன்ன தேவாஸுர யுத்தத்தில் அஸுர கணங்கள். நல்ல கார்யங்கள், ஸத் வ்ருத்திகள் தேவ கணங்கள். இந்தச் சண்டையில் தேவர்களுக்கும் கொஞ்சம் கொஞ்சம் அஸுர குணங்கள் ஏற்படுவதுண்டு அஸுரர்களின்மீது க்ரோதம் ஏற்படுவது, அவர்களை இவர்கள் சில ஸமயங்களில் வஞ்சனையாக ஏமாற்றிக்கூட ஜயிப்பது, அம்ருதம் லக்ஷ்மி போன்ற உத்தம வஸ்துக்களைப் பெறுவதில் அஸுரர்களுக்குப் போட்டியாக தேவர்களுக்கும் ஆசை (காமம்) உண்டாவது- என்றிப்படி நல்லதிலேயே கெட்டவையும் கலப்பதைப் புராணங்களில் பார்க்கிறோம். பரமார்த்த ஸத்யம் என்பது நல்லது என்பதற்குங்கூட அப்பாற்பட்டது என்று காட்டவே இப்படியிருக்கிறதென்று சொல்லலாம்.

தேவர்களுக்கு ஏற்படும் அஸுரத்தனங்களில் ரொம்பவும் துஷ்டத்தனமான ஒன்றை உபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறது. அஸுரர்களை ஜயித்து முடித்தபின், தேவர்கள், 'நமக்குப் பரமாத்மா கொடுத்திருக்கிற சக்தியைக் கொண்டும், அவனுடைய க்ருபையாலும்தான் நாம் ஜயித்தோம' என்று உணராமல், 'நம் சக்தி கொண்டே ஜயித்து விட்டோமாக்கும்' என்று கர்வப்பட்டார்களாம். இப்படி ஒரு உபநிஷத்தில் கதை சொல்லியிருக்கிறது இது போல நாம் பண்ணும் ஸத்கர்மா, உபாஸனை முதலியவற்றிலுமேகூட கொஞ்சம் தப்புகளுக்கும் இடம் கொடுத்துப் போகக்கூடும்தான். முடிவிலே நாம் ஸாதிக்கும் ஸாதனைக்கும் அவனருளே காரணம் என்பதை மறந்து, "நாமாக்கும் ஸாதித்தோம்" என்று தற்பெருமை ஏற்படலாம். அதற்காகத்தான் இவை எல்லாம் வராமல் முடிந்தமட்டும் பாதுகாத்துக் கொள்வதற்காக ஆரம்பதிலிருந்தே கெட்டதோடு நல்லதற்கும் அப்பாற்ப்பட்டதான அத்தைவ நிலையின் நினைப்பு வேண்டும் என்பது. 'நாம் பண்ணுகிற இந்த எதுவுமே நிஜமான நமக்காக இல்லை, ஏதோ ஒரு வேஷத்தில் மாட்டிக்கொண்டு விட்டோம், அது ராஜ

பார்ட்டாகத்தான் இருக்கட்டும், இல்லாவிட்டால் ஆண்டிப் பரதேசியாகத்தான் இருக்கட்டும், ராஜ வேஷமானாலும் அந்த கீரிடம், குண்டலம், பீதாம்பரம் எல்லாவற்றையும் அவிழ்த்துப் போடத்தான் வேண்டும், ஆண்டி வேஷமானாலும் பொய்ததாடி, ஜடாபாரம் எல்லாவற்றையும் எடுத்துப் போடத் தான் வேண்டும்' என்று ஒரு நினைப்பைக்கொஞ்சம் கொஞ்சம் வைத்துக்கொண்டேயிருக்க வேண்டும். அப்போது இந்தப் பொய் வேஷத்துக்குள்ளேயே நாம் நல்லவன் வேஷம் போடும்போது கெட்டவை வந்து சேர்ந்துவிடாமல் காப்பாற்றிக் கொள்ளலாம். இதெல்லாமே நிலைத்து நிற்கக் கூடாதவைதான் என்ற நினைப்பு ஏற்படும்போது நல்ல நாடக பாத்ரமாக, அதவது தேவர்கள் மாதிரி வேஷம் போடும்போதுகூட, அதையே ஸ்திரமாகக் காப்பாற்றிக் கொள்வதற்காக எதுவும் செய்யாமலிருப்போம். தாங்கள் தேவர்களாக இருக்கிற நிலையிலேயே ஸ்திரமாக இருக்க வேண்டும் என்ற அபிமானப் பிடிப்பினால்தான் புராணங்களில் வரும் தேவர்களும் அவ்வப்போது தப்பில் போனது எல்லாமே பொய் வேஷம், நிஜ நாம் இல்லை என்று நாம் அறிந்தால் தேவர்களுக்கு உண்டான அஹம்பாவ கர்வம் நமக்கு உண்டாவதற்கு இடம் இல்லை.

"அஹம்பாவம்" என்றால் ஒரு அர்த்தம் "நான் என்பது என்ன என்று உணர்வது". 'அது இப்போது நமக்குத் தெரியவேயில்லை. தெரியவிடாமல் நம்முடைய கர்மா அழுக்காகப் படிந்திருக்கிறது. அதைத் துடைக்கவே இத்தனை பாடும் படுகிறோம்' என்ற எண்ணத்தை அன்றன்றும் கொஞ்சம் வளர்த்துக்கொண்டு விட்டால், அப்புறம் அஹம்பாவமும் கர்வமும் எப்படி உண்டாகும்? மனஸினால் உண்டாகும் அஹம்பாவம் போகச்செய்கிற ஸாதனையிலேயே அஹம்பாவப் படாமிலுருக்க ஆத்ம சிந்தனை அவசியம். ஆனால் அது ஆரம்பப் படிகளில் அதிகம் ஸாத்யமில்லாததால் அஹம்பாவம் போவதற்கும், ஸத்குணம் வளர்வதற்கும், ஸத் கர்மா பண்ணுவதற்கும் ஆதாரமாக அப்போது இருக்கிற பெரிய துணை ஈச்வர பக்தியே. மனஸைக் கண்டபடி அலையவிடாமல் ஜீவனுக்குக் கர்ம மார்க்கமானது அநேக ஸத் கார்யங்களைக் கொடுத்து சுத்தி பண்ணினாலும் அது (அந்த மனஸ்) அன்பிலே வளர்வதற்கு ஈச்வர பக்திதான் ஆதாரமாக இருக்கிறது.

**அத்வைதம்**

**அன்பின் பல பெயர்கள்**

பக்தி என்பது ஈசனிடம் வைக்கும் அன்புதான்.

அன்புக்கே அது யாரைக் குறித்து வைக்கப்படுகிறது என்பதைப் பொறுத்து வேறுவேறு பேர்கள் உண்டு. ஸம வயஸினரிடம் வைக்கும் அன்புக்கு ஸ்நேஹிதம், நட்பு என்று பேர். பெரியவர்களிடம் வைக்கிற அன்பு - மரியாதை. குழந்தையிடம் வைக்கும் அன்பு - வாத்ஸல்யம். கதாநாயகன் - நாயகி அன்பு கொள்வது ச்ருங்காரம். நம்மாதிரி ஸாதாரணப்பட்டவர்கள் நம்மைவிட தீனர்களிடமும் கஷ்டப்படுகிறவர்களிடமும் வைக்கும் அன்புக்குப் பரிவு என்று பெயர். அதுவே நம்மைவிட மஹா பெரியவர்கள் நம்மிடம் வைக்கும்போது அருள், க்ருபை என்றெல்லாம் பேர் எடுக்கிறது. வெறுமே பரிவாக ஒரு ஆறுதல் தருவதாக மட்டுமின்றி தீன நிலையை, கஷ்ட ஸ்தியைப் போக்கடிக்கும் சக்தியே மஹான்களின் அருளுக்கு இருக்கிறது. அதன் உச்சிதான் ஈச்வரன் நம்மிடம் வைக்கும் பரிவான அன்பு. பரமகருணை, அநுக்ரஹம் என்று அதற்குப் பேர் சொல்கிறோம். அந்த ஈச்வரனிடம் நாம் வைக்கிற உசந்த அன்புதான் பக்தி என்பது.



**அத்வைதம்**

**பக்தி - அன்பின் லக்ஷணம்**

அன்பு என்றால் என்ன?

நம் மனஸ் இன்னொரு மனஸில் அப்படியே கலந்து விடுவது.

முடிவுநிலை என்ன? ஆத்மாவிலே மனஸ் கரைந்துவிட வேண்டும். அப்படி ஆத்மாவிலே மனஸ் கரைவதற்கும், இன்னொரு மனஸிலே அன்பாலே கலப்பதற்கும் என்ன ஸம்பந்தம்?

கரைவதற்கு முந்திய ஸ்டேஜ் கலப்பது. சர்க்கரையை முதலில் பாலில் போட்டுக் கலக்கவேண்டும். அப்புறந்தான் கரையும். இரண்டு வஸ்துக்கள் ஒன்றுக்கொன்று அந்யமாக இருக்கும்போது இரண்டும் ஒன்றோடொன்று கலக்கின்றன. அப்புறம் ஒன்றிலே மற்றது கரைய ஆரம்பித்து முடிவாகக் கரைந்து முடிந்தபின், இரண்டு இல்லை, ஒன்றுதான் இருக்கிறது. இது 'ஐக்யம்' ஆகிவிடுவது என்பார்கள். 'ஏகம்' என்ற ஒன்றின் தன்மையை அடைவதே 'ஐக்யம்' பாலில் சர்க்கரையைக் கலக்கும்போது பாலும் சர்க்கரையும் வேறேயாகத்தான் இருக்கும். 'கலப்பு' என்பது இரு வேறு வஸ்துக்கள் உள்ளபோதுதான் ஏற்படமுடியும். அது ஏகமான அத்வைதமான கரைப்பில்தான் முடிந்தாக வேண்டும் என்றில்லை. த்வைதக் கலப்பு அப்படியே நின்றுவிடலாம். அக்ஷதையையும் எள்ளையும் வாத்யார் கலந்து வைக்கிறார். அவை ஒன்றில் இன்னொன்று கரைந்து ஐக்யமாகி விடுவதில்லை.

ஆத்மா வேறு ஒன்றின் கலப்பே இல்லாமல் ஸ்வச்சமான ஏகமாக, தன்னில் தானாக, தனியாக இருப்பது என்று பார்த்தோம். அதனால் அதிலே கொண்டுபோய் மனஸைக் கலப்பது என்றால் முடியாத கார்யம். மனஸ்தான் ஆத்மாவின் கிட்டேயே போகமுடியாது இதை எப்படி அதில் போய்க் கலக்கும்படிச் செய்வது? இந்த இடத்தில்தான் இரண்டாக இருந்து கலக்கக்கூடியதாக அந்த ஆத்மாவையே ஈச்வரன் என்று வைத்து பக்தி பண்ண வேண்டியிருப்பது. பரமாத்மா, ஜீவாத்மா என்று த்தைவமாகப் பிரித்து சொல்வது இங்கேதான். ஜீவாத்மா சின்ன மனஸ், பரமாத்மா மஹா மனஸ் என்று பார்த்தோம். சின்ன மனஸ் எந்தத் தொடர்புமில்லாத ஆத்மாவோடு கலக்க முடியாது. ஆனால் அதைப் படைத்த மஹா மனஸோடு கலக்க முடியும். இதை அதுதான் படைத்தது என்பதாலேயே, தாயாரிடம் குழந்தை அன்போட கலக்கிற மாதிரி கலக்க முடியும். அந்தப்

பரமாத்மாவும் தாயார் மாதிரி அன்போடு ஜீவாத்மாவுடன் கலந்து அநுக்ரகம செய்வார், அல்லது செய்யும். ஜீவாத்மா பக்தனாகிப் பரமாத்மா என்ற ஈச்வரனிடம் அன்பில் கலக்கிறான் இரண்டாகக் கலந்தபின் இரண்டறக் கலந்த கரைகிற நிலையை ஈச்வரனே அநுக்ரஹிக்கிறான். அப்புறம த்தைவமான ஜீவாத்ம - பரமாத்ம பேதம் இல்லாமல் ஒரே ஆத்மா என்றாகிவிடுகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

### பக்தியால் அத்வைத முக்தி

கீதையில் பகவான் இப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்.

பக்த்யா மாம் அபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்த்வத:1

ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விசதே தத் அநந்தரம் 11

"பக்தியினாலேயே நான் எப்படிப்பட்டவன், யார் என்று ஒருத்தன் உண்மை நிலையைத் தெரிந்துகொண்டு, அதற்கப்புறம் அந்த உண்மை அறிவினால் எனக்குள்ளே புகுந்து விடுகிறான்" என்கிறார். "அநந்தரம் விசதே" என்கிறார். "விசதே" என்றால் "புகுகிறான்". "அநந்தரம்" என்றால் "அந்தரமில்லாமல்" என்று அர்த்தம். "அந்தரம்" என்றால் இடைவெளி. "அந்தரத்தில் தொங்குவது" என்று சொல்கிறோம் அல்லவா? "அநந்தரம் விசதே" என்றால் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடைவெளியே இல்லாமல் இவன் அவனிலேயே ஒன்றிவிடுமாறு உள்ளே ப்ரவேசிக்கிறான் என்று அர்த்தம்.

பக்தியிலேயே ஒருத்தன் ஈச்வரனின் நிஜ ஸ்வரூபமான ஆத்மாவுக்குள்ளே போய்விடவில்லை. பக்தியினாலே, அதாவது அதை வழியாகக் கொண்டு, அந்த நிலைக்குப் போகிறான். பக்தி நிலையில் வேறேயாக இருப்பதோடு, த்தைவ மோக்ஷத்தோடு லக்ஷ்யம் ஸித்திக்கவில்லை.

அதற்கப்புறம் - "ததோ" என்றால் "அதற்கு அப்புறம்" என்று அர்த்தம் - அத்வைதமாய் அவனுக்குள்ளேயே போய்விடும் முடிவான மோக்ஷம் ஸித்திக்கிறது.

இதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது "யாவாந்" - "பகவான் எப்படிப் பட்டவன்" என்று அர்த்தம் சொல்லும் போது, பக்தியிலே ஒருத்தன் முதலில் பரமாத்மாவை ஜகத்காரணனாகவும், ஜகத்தை நடத்துபவனாகவும்தான் த்வைதமாகத் தெரிந்துகொள்கிறான் என்றார் "உபாதி க்ருத விஸ்தர பேத"னான அவனைத் தெரிந்து கொள்வதாகச் சொல்கிறார். அதாவது பலவித குண, கர்ம உபாதிகளால் குறுக்கப்பட்ட நானாவித ப்ரபஞ்சமாகவும் அவன் விரிந்து பலவிதமாக பேதப்பட்டிருப்பதையே முதலில் தெரிந்துகொள்கிறான். அப்புறம் இத்தனை பேதத்துக்கும் ஒரே பேதமற்ற, இரண்டற்ற அறிவுதான் காரணமாயிருக்க வேண்டுமென்று, "அத்வைதம், சைதன்ய மாத்ர ஏக ரஸ"மாகத் தெரிந்துகொள்வதாகச் சொல்கிறார். இப்படிச் சொன்னதால் ஜீவமனஸ் மஹா மனஸிடம் பேத பாவத்துடன் போய் பேதமாகவே பார்த்தாலும், அந்த மஹா மனஸான ஈச்வரன் இதன் பேத உணர்ச்சியைப் போக்குகிறான் என்று த்வனிக்கிறது.

"த்வனி"யாக மட்டும் இங்கே இருப்பதை அடுத்த ச்லோகத்தில் பகவான் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கிறார் - "மத் ப்ரஸாதாத் அவாப்நோதி சாச்வதம் பதம் அவ்யயம்" "என்னுடைய அநுக்ரஹத்தால் ஒருவன் சாச்வதமான, மாறுதலில்லாத நிலைமை அடைகிறான்" என்கிறார். அந்த நிலைதான் அத்வைத மோக்ஷம். ஸகுண ப்ரஹ்மத்திடம் ஒருத்தன் பக்தியுடன் போய் த்வைதமாக அன்பு செய்து கொண்டிருந்தால், அதன் அநுக்ரஹத்தால் அவன் நிர்குண ப்ரஹ்மத்தில் ஐக்யம் பெற்று விடுகிறானென்று பெறப்படுகிறது. அது (ஸகுண ப்ரஹ்மமான ஈச்வரன்) தானே இவனை வேறுபடுத்திக் காட்டிய காரண வஸ்து? அதனால் அதுவே அந்த வேறுபாட்டை அழித்து ஒன்றாகவும் ஆக்கிவிடுகிறது.

இங்கே தன்னையே பரமாத்மாவாக வெளியிட்டுப் பேசிக் கொண்ட பகவான், நாலைந்து ச்லோகம் தள்ளி, ஸர்வ பூதங்களின் ஹ்ருதயத்திலும் இருந்துகொண்டு

பொம்மலாட்டக்காரன் மாதிரி அவற்றை மாயையால் ஆட்டிக் கொண்டிருக்கிற பரமாத்ம சத்தியை "ஈச்வரன்" என்று சொல்லிவிட்டு, அடுத்த ச்லோகத்தில் அந்த ஈச்வரனின் அநுக்ரஹத்தால், சாச்வதமான பரம சாந்தி நிலை ஸித்திக்கும் என்கிறார். அந்த நிலைதான் மோக்ஷம். மோக்ஷம் ஒன்றுதான் சாச்வத சாந்த நிலை. "மனோ இந்த்ரியங்களால் ஏற்படுகிற எல்லா பாவங்களையும் திரட்டி ஈச்வரனிடம் சரணாகதி செய்துவிடு. அதாவது சின்ன மனஸை அப்படியே மஹா மனஸின் முன்னாலே போட்டு அர்ப்பணம் செய்துவிடு. அவனுடைய அநுக்ரஹ ப்ரஸாதமாக சாச்வத சாந்தமான மோக்ஷத்தை அடைந்துவிடுவாய்" என்கிறார்.

தமேச சரணம் கச்ச ஸர்வ பாவேந பாரத 1

தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் 11

ஜீவ மனஸ் கர்ம மார்க்கத்தால் சுத்தியாகி, தனக்குக் காரணமான மஹா மனஸிடம் பக்தி மார்க்கத்தில் போய் ப்ரேமை பண்ணி, அநுக்ரஹத்தால் ஞான மார்க்கத்தில் ப்ரவேசித்து, அதற்கும் மூலமான ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் பெறுகிறது என்று ஏற்படுகிறது. "பெறுகிறது" என்றாலும் அங்கே மனஸ் என்று ஒன்று பெற்றுக்கொள்கிற வஸ்துவாகவும், ஆத்மா என்ற ஒன்று பெறப்படும் வஸ்துவாகவும் இல்லை. ஆத்ம அகண்டத்தைத் துண்டித்துக்கண்டமான ஜீவனாகக்குறுக்கிய மனஸ் போயேபோய் விடுகிறது, அப்புறம் அகண்டம் தானாக இருப்பதை உணர முடிகிறது. துண்டத்தையே நாம் என்று நினைப்பது போகவேண்டும். அதாவது மனஸ் தன்னையே இழப்பதற்கு கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லிக்கொடுக்க வேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பக்தி - அன்பின் அவசியம்**

துண்டாகப் பிரிந்து 'தான் தான்' என்று இருந்த மனஸ் இன்னொன்றில் கலக்க வேண்டுமென்று நினைக்கிறபோதுதான் தன்னுடைய தனி அஹங்காரத்தை -individuality என்பதை இழக்க ஆரம்பிக்கிறது. இப்படி மனஸ் கலப்பதுதானே அன்பு? எந்த ப்ராணியிடம் அன்பு வைத்தாலும் அப்போது மனஸ் தன்னுடைய சின்ன தனித்தன்மையையே போஷித்துக்கொண்டு, தன்னையே மையமாக வைத்துக் கொண்டு கார்யம் செய்வது என்பதை ஓரளவுக்கு விட்டு விட்டு, அன்புக்கு உரியாதாகிற ப்ராணிக்காக ஒன்றைச் செய்ய ஆரம்பித்திருக்கிறது.

இதனால் மனஸுக்கு ஸ்வந்தமாக எந்தவித லாபமும் இருக்கப்படாது என்பது முக்யம். ஸ்வந்த லாபம் வந்து விட்டால் அது தன்னையே போஷித்துக் கெட்டிப்படுத்திக் கொள்கிறதென்றுதான் அர்த்தம். இம்மாதிரி இன்னொருவரிடம் வைக்கிற ப்ரியம் அன்பே இல்லை. அது ஆசை அல்லது காமம்.

நம் மனஸ் ஏதோ ஒரு ஸந்தோஷ லாபத்தை அடைந்து அந்த அநுபோகத்தில் இன்னும் கொழுத்தப் போவதற்கு உதவும் எல்லா ப்ரியங்களும் காமத்தைச் சேர்ந்தவையே தவிர அன்பைச் சேர்ந்தவையல்ல.

மனஸின் கொழுப்பை இளக்கி, அது பிற்பாடு அப்படியே கரைந்து போய்விடுவதற்கு வஸதியாக அதை எது ம்ருதுவாக்கித் தருகிறதோ அதுதான் அன்பு.

ஒன்று இல்லாமல் போவதற்கு முன்னாடி கொஞ்சம் கொஞ்சமாக லேசாகிப், பரவிக்கொண்டே போகவேண்டும். அதாவது தன் ஸ்வரூபத்தை விசாலமாக்கிக் கொண்டே போகவேண்டும். அப்புறம்தான் அகண்டத்தில் அரூபமாக அப்படியே கரைந்து மறைந்து போவது. முன்பு இரும்புக் குண்டு த்ருஷ்டாந்தம் சொன்னேன். இன்னொரு த்ருஷ்டாந்தம் ஜலம். அது ஆவியாகி, லேசாகிப் பரவிக்கொண்டே போனால்தான் இல்லாமல் போகிறது. அப்படித்தான் மனஸ் லேசாகிப் பரவுவதற்கு அன்பு என்று பேர். காமத்திலே (ஆசையிலே) என்ன ஆகிறதென்றால் லேசான ஆவியாகிப் பரவுவதற்குப் பதில் கனமாகிக் கெட்டிப்பட்டு ஐஸ் கட்டி மாதிரி ஆகிவிடுகிறது. ஐஸாவது

உருகுகிற ஸ்வபாவமுள்ளதாக இருக்கிறது. ஆசை வாய்ப்பட்ட மனஸோ உருகாத ஐஸாக ஆகிவிடுகிறது!"கல்கூட உருகினாலும் உருகும், இது உருக மாட்டேனென்கிறதே" என்று பெரியவர்கள் பாடி வைத்துவிட்டுப் போயிருப்பது இதைத்தான்.

கரைவதற்குரிய ம்ருதுத்தன்மையை, லேசாகிப் பரவும் தன்மையை மனஸுக்குத் தரும் இந்த அன்பு அன்பு என்பதை மற்ற ப்ராணிகளிடம் செலுத்துவதைவிட ஈச்வரனிடம் செலுத்துவதுதான் விசேஷம். அதுதான் ரொம்ப அவச்யம். ஏனென்றால் மற்ற ஜீவ ஜந்துக்களோட அன்பினால் பழகும் போது அது ஆசையாகிவிடக்கூடிய ஆபத்து இருக்கிறது. நம் மாதிரியானவர்களிடம் பழகும்போது எந்த விதத்திலாவது அவர்களிடமிருந்து ஸ்வய லாபமாக ஒரு ஸந்துஷ்டியைப் பெறவேண்டுமென்று மனஸுக்குத் தோன்ற ஆரமபித்துவிடுகிறது. அவர்களுக்காக நாம் த்யாகங்கள் கூடப் பண்ணலாம், ஆனால் இதில்கூட இந்த த்யாகத்தை அவர்கள் 'ரெகக்னைஸ்' பண்ணவேண்டும் என்ற ஆசை உண்டாகிவிடுகிறது. அப்படிப் பண்ணாமற்போனால் நன்றியில்லாதவர்கள் என்று வருத்தம். எரிச்சல் வருகிறது. இதெல்லாம் மனஸின் கொழுப்பை வளர்த்துக் கொள்கிறவைதான். இன்னொரு கஷ்டம், நாம் பழகுகிறவர்களை நாம் உயர்த்துவதற்குப் பதில், அல்லது அவர்கள் நம்மை உயர்த்துவதற்குப் பதில், அவர்களை நாமோ, நம்மை அவர்களோ தாழ்த்துவதாகவும் ஆகிவிடலாம். மூன்றாவதாக ஒரு கஷ்டம், நம் மனஸ் தனக்காக மட்டும் செய்துகொள்வது என்ற சின்ன எல்லையைத் தாண்டி இன்னொருத்தரிடம் போனபின், மேலும் மேலும் அதன் எல்லை விஸ்தாரமாகி உயிர்க்குலம் முழுதையும் தழுவுவது என்று ஆகாமல், அவரோடேயே நின்று போகலாம். 'தனக்காக மட்டும்' என்பது 'அவருக்காக மட்டும்' என்று அதே மாதிரி இன்னொரு சின்ன எல்லைக்குள் கட்டுப்பட்டு கெட்டிப்பட்டுப் போவதோடேயே முடியலாம். அப்போது ஒருத்தரிடம் அன்பினால் அவருக்கு நல்லது செய்வேண்டும் என்று நினைப்பது முற்றிப்போய் அதற்காகவே இன்னொருத்தருக்குத் தீங்கு பண்ணவும் துணிந்துவிடுகிறோம் தகுதி போதாத ஒருவரை அன்பினால் உத்யோகத்துக்கு ரெகமன்ட் செய்கிறபோது, தகுதியுள்ள இன்னொருத்தருக்கு அந்த வேலை கிடைக்காமல் குந்தகம்

உண்டாக்கி விடுகிறோம் மற்ற ப்ராணிகளிடம் அன்பு வைப்பது என்பதில் இப்படி அநேக தோஷங்கள் சேர்ந்துவிட இடமேற்படுகிறது.

ஈச்வரனிடம் அன்பு வைக்கிறபோதுதான் நம் மனஸ் கரைந்து போவதற்கு வழியாக எப்படிக் கனிந்து, லேசாக, ம்ருதுவாக, விசாலமாக ஆக வேண்டுமோ அப்படி ஆக முடிகிறது. இதுதான் அவனுடைய அநுக்ரஹ விசேஷம்!"மத் ப்ரஸாதாத்", "தத் ப்ரஸாதாத்" என்றெல்லாம் பகவான் சொல்லும் அருட் ப்ரஸாதமானது அவனிடம் அன்பு வைத்த ஒரு மனஸை அடியோடு லேசாக்கி அவனுடைய நிர்குண ஸ்வரூபத்தில் தன்னையே இழந்துகொள்ளுமாறு செய்துவிடுகிறது. மனஸ் இழக்கப்படுவதோடு சூன்யமாய் முடியாமல் ஜீவனை நிர்குண ப்ரஹ்மமான பூர்ணமாக இருக்கப் பண்ணுவதே அருட் ப்ரஸாதத்தின் விசேஷம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## அநுபூதி பெற்றோர் விஷயம்

தான் அந்த நிலையை கொடுத்து, ஜீவன் வாங்கிக் கொள்கிறானென்று ஈச்வரன் வெளிப்படக் காட்டவேண்டுமென்பதில்லை. இப்படிக் காட்டாமலே, ஜீவன் முதிர்ச்சி அடைந்த பிறகு, கனிந்த அந்த ஜீவனுடைய மனஸ் ஆத்ம விசாரததிலேயே தோய்ந்திருக்கும்படியாகப் பண்ணி, முடிவிலே பளீர் என்று ஆத்மா ப்ரசாசித்து, மின்னலானது அதைப் பார்க்கிற கண்ணைப் பறிக்கிறார்போல் மனஸை அப்படியே பறித்து, தான் மட்டுமாக விளங்குவதாக காட்டினாலும் காட்டுவான்.

அத்வைதாநுபவம் பெற்ற அநேக மஹான்கள் இப்படித்தான் ஞான விசாரம் பண்ணுவது, ஜீவ-ப்ரஹ்ம அபேதத்தைச் சொல்லும் மஹா வாக்யங்கள் காட்டுகிற பரம உத்தம நிலைகளையே ஸதாவும் அநுஸந்தானம் பண்ணிக் கொண்டிருப்பது என்றிருந்து அதலிருந்தே அப்படியே

மனோதீதமான ப்ரஹ்மானுபவத்தைப் பெற்றிருக்கிறார்கள். ஈச்வரன் ஜகத்திலேதான் ஒளிந்து விளையாடுகிறானென்றில்லாமல் முக்தி தருவதிலும் தன்னை ஒளித்துக்கொள்கிறான்!

"தன்னை ஒளித்துக்கொள்கிறான்" என்றால், நாம் ஈச்வரனாக எதை நினைக்கிறோமோ அந்த ஸகுணத்தைத்தான்!அது அவனுடைய நிஜ 'நான்' இல்லை என்றும், அதற்கும் அடியில் அவன் நிர்குண ஆத்மாவாக இருக்கிறானென்றும் பார்த்தோமல்லவா? ஆனபடியால் ஆத்மானுபவம் ஒரு ஜீவனைக் கவிந்து கொண்டே வந்து அப்படியே தனக்குள் அடக்கி ஐக்யப்படுத்திக் கொண்டுவிடுகிறது என்னும்போது ஈச்வரன் ஒளிந்து கொள்கிறானென்பது கூட ஸரியில்லை, தன்னுடைய நிஜ ஸ்வரூபத்தில் அந்த ஜீவனை அவன் இறுக்கி இருக்கிப் புதைத்துக் கொள்கிறானென்றுதான் அர்த்தம்.

பல தடவை சொன்னதுபோல த்வைத பாவம் ஞான மார்க்கத்திலே வேண்டாமென்பதால்தான் நம்முடைய பார்வையில் ஈச்வர ப்ரஸாதத்தை மறைத்துப் பண்ணுவது.

ஜீவனுடைய ஜீவவேஷத்தைக் கலைக்கிறதுபோலவே, தன்னுடைய ஈச்வர வேஷத்தையும் கலைத்தே ஸூக்ஷ்மமாக அநுக்ரஹித்து அத்விதீயமான ப்ரஹ்மத்தில் இரண்டையும் ஒன்றாக்கி விடுகிறான்.

இதனால்தான் அநுபூதிமான்களாக இருக்கப்பட்டவர்களில் தங்களுக்கு ஞானஸித்தி எப்படி ஏற்பட்டது என்று சொல்லியிருக்கிறவர்களில் அநேகம் பேர், "இப்படி இப்படி ஞானமார்க்கத்திலேயே ஸாதனை பண்ணினோம். திடீரென்று ஒரு நாள் மனஸ் அப்படியே நின்றுபோய், ஸ்வ - ஸ்வரூபாநுபூதி ஏற்பட்டுவிட்டது" என்கிற ரீதியில் சொல்கிறார்கள்.

நீங்கள் என்னிடம், "நீங்களானால் 'ஈச்வரன்தான் ஞனா மார்க்கத்திலே ஒருத்தனைக் கொண்டுவிட்டு, அப்புறம் ஸித்தி தருகிறான்' என்கிறீர்கள். ஆனால் ஸ்வயமாக அத்வைதாநுபூதி பெற்று அதைச் சொல்லியிருப்பவர்களான இன்னார், இன்னாரெல்லாம் இப்படிச் சொல்லவில்லையே" என்று கேட்டீர்களானால் அதற்கு இதுதான் பதில். ஈச்ரவன்,

'நான்தான் ஈச்வரன்' என்று ஸகுணத்தில் காட்டிக்கொண்டு 'இந்தா ஞானம்' என்று எதையோ பொட்டலம் கட்டிக் கொண்டு வந்து கொடுப்பதில்லை. தன் ஸகுண ரூபத்தை மறைத்து ஸூக்ஷ்மமாகவே இந்த அநுக்ரஹத்தைச் செய்வதாகவே அவன் அநேகம் மஹான்களிடம் செய்திருக்கிறான்.

இன்னம் சில பேருக்கு நன்றாக ஞானோபதேச குருவாகவே வந்து நின்றுகொண்டு அவர்களை ஞானத்திலே அழைத்துக்கொண்டு போயிருக்கிறான். ஒரே பக்தியாக அவனை ஆராதித்துக் கொண்டிருப்பவர்களுக்கு அவன்தான் பண்ணுகிறானென்று நன்றாகத் தெரியும்படியாகவே திடிரென்று அத்தைவாநுபூதியை வாரிக் கொடுத்திருக்கிறான்.

அருணகிரிநாதருடைய கந்தரநுபூதியில் இம்மாதிரி விஷயங்கள் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன.

"அந்தத் திருடன் 'சும்மா இரு' என்றான். உடனே அத்தனை வெளிவஸ்துவும் மறைந்தே போய்விட்டது!அ
ம்மாடி!இதென்ன, ஆச்சர்யம்?

"'சும்மா யிரு சொல் அற' என்றலுமே

அம்மா!பொருள் ஒன்றும் அறிந்திலேனே!"

என்று ஒரு இடத்தில் சொல்கிறார். வள்ளியைத் திருடிக்கொண்டு போன திருடன் இவருடைய ஜீவ பாவத்தையும் 'அபேஸ்' பண்ணி த்வைதமான ஸகலத்தையும் பறித்து அத்வைதாநபூதி தந்ததைத்தான் இப்படிச் சொல்கிறார். இதைவிட, நல்ல ஸ்பஷ்டமாகவே இன்னொரு இடத்தில்,

"யான் ஆகிய என்னை விழுங்கி, வெறும்

தானாய் நிலை நின்றது தற்பரமே"

என்றும் சொல்லியிருக்கிறார்.

மாணிக்கவாசகர் ஈச்வரனே தன்னையும் அவனுடைய நிர்குண சிவ ஸ்வரூபமாக்கிக் கொண்டானென்பதை

"சிவமாக்கி எனையாண்ட"

என்கிறார். "சிவனாக்கி" இல்லை, "சிவமாக்கி" சிவன் என்பவன்

ஸகுண ஈச்வரன். சிவம், நிர்குண ப்ரஹ்மம். ஈச்வரனாக யாரும் ஆக முடியாது, ப்ரஹ்மமாகத்தான் ஆக முடியுமென்று பார்த்தோமே!

திருவாசகத்தில் இன்னொரு இடத்தில் (மாணிக்க வாசகர்) பரமேச்வரனைக் கூப்பிட்டு எதிரே நிறுத்தி வைத்துக்கொண்டு, "நம்ப ரெண்டு பேர்லே யார் கெட்டிக்காரா? நம்ம பரஸ்பரம் ஒருத்தரை இன்னொருத்தருக்கு விக்ரயம் பண்ணிக்கிறதா பேரம் பேசிண்டு அப்படியே பண்ணினிதிலே யார் 'கெட்டிக்காரா0ன்னு தெரியறது? ஒண்ணுமில்லாத அல்பமான என்னை நீ எடுத்துண்டு முடிவேயில்லாத ஆனந்த ஸ்வரூபமான உன்னை எனக்குக் கொடுத்துட்டியே யார் கெட்டிக்காரா சொல்லு" என்கிறார். ஈச்வரனே அவருக்கு அகண்டாநுபூதி தந்ததைத்தான் வேடிக்கையாகச் சொல்கிறார் அருணகிரிநாதர் திருடன் என்றார். மாணிக்க வாசகர் அசடு, ஏமாந்த சோணகிரி என்கிறார்!

நம்மாழ்வரும் இப்படியே பரமாத்மா ஜீவாத்மாவான அப்புறம், அந்த ஜீவாத்மாவுக்குத் தன்னையே கொடுத்து தானாகவே ஆக்கிக் கொள்கிறது என்கிறார்:

"யானே நீயாகி என்னை யளித்தானே"

என்கிறார். 'திருவாய்மொழி'யை முடிகிறபோது ஒரே அத்வைதமாகச் சொல்லிக்கொண்டு போகிறதில், 'கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சிய இரும்பிலே ஒரு சொட்டு ஜலம் விழுந்தால் அது 'சுர்ர்'ரென்று அதை இழுத்துக் கொள்கிற மாதிரி என்னை நீ உனக்குள்ளே உறிஞ்சிக்கொண்டு விட்டாயே' என்கிறார்.

(காமாக்ஷியைக் குறித்து 'பஞ்சசதீ' செய்த) மூகரும் இதேமாதிரிச் சொல்லியிருக்கிறார். குருசரணத்தில் சரணாகதி செய்தவர்களுக்கு அம்பாளே கருணையோட ஸகுண உபாஸனையை மட்டுமில்லாமல் நிர்குண உபாஸனையையும் படிவரிசை போட்டுக் கொடுத்து மோக்ஷம் என்கிற உப்பரிகையில் ஏறி நிற்கச் செய்கிறார் என்கிறார்

ஸத்க்ருத - தேசிக - சரணா ஸபீஜ - நீர்பீஜ - யோக - நிச்ரேண்யா 1

அபவர்க - ஸௌக - வலபீம் ஆரோஹந்த் - யம்ப கே(அ)பி
தவ க்ருபயா 11

சேக்கிழாரும் கூட இதே மாதிரி ஸம பாவம் வாய்ந்த சிவனடியார்களைப் பற்றிச் சொன்னதை பார்த்தோம். ஆனால் அவர்கள் அத்வைத மோக்ஷம் வேண்டாம் என்று பக்தி பண்ணிக் கொண்டிருப்பதிலேயே நிறைவு காண்பவர்கள் என்று பார்த்தோம்.

அத்வைதமே மோக்ஷம் என்று ஸித்தாந்தம் செய்த அப்பைய தீக்ஷிதர் பரமேச்வரனை ஸ்தோத்ரம் பண்ணும்போது, "ஏதோ ரெண்டு எருக்கம்பூ, தும்பைப் பூவைப் பறிச்சு உன் மேலே போட்டுட்டா போறும், அதுக்குப் பலனா மோக்ஷ ஸாம்ராஜ்யம் கிடைச்சுடறது" என்பதாக பக்தி பண்ணிப் பரம ஸுலபத்தில் ஈச்வர ப்ரஸாதத்தால் முக்தி அடைந்துவிட முடியுமென்கிறார்.

ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தியே அத்வைதாநுபூதியை அளித்து விடுவதாக ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் சொல்கிறார்.

இப்படி அத்வைதிகளில் ஒவ்வொரு இஷ்ட தேவதையை வைத்துக்கொண்டிருந்தவர்கள் அந்த தேவதை அத்வைத ஞான ஸித்தியை அருள்வதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

அத்தனை தேவதைகளையும் ஒரே அத்வைத த்ருஷ்டியோடு ஸ்தோத்ரம் செய்த ஆசார்யாள், ஒவ்வொரு தேவதையும் இப்படி அநுக்ரஹிப்பதைப் பற்றித் தாம் அந்த தேவதையை குறித்துச் செய்துள்ள ஸ்தோத்ரத்தில் எங்கேயாவது ஒரு இடத்தில் சொல்லாமல் விட்டிருக்கமாட்டார்.

"ஸரி, பக்தி உபாஸனையும் வைத்துக்கொண்டிருந்த அத்வைதிகளைப் பற்றிச் சொன்னீர்கள். யாரானாலும் பக்தி பண்ணி, கர்மாவும்கூடப் பண்ணித்தான், ஞான மார்க்கத்துக்குப் போய் அத்வைத விசாரம் பண்ண முடியுமென்றும் நிறையச் சொன்னீர்கள். ஆனால் அநேக ஞானிகளின் வாழ்க்கையைப் பார்த்தால் அவர்கள் கர்மாநுஷ்டானமோ, பக்தி வழிபாடோ ஒருபோதும் பண்ணாமல் ஆரம்பத்திலிருந்தே ஞான ஸாதனைகள்தான் பண்ணியிருப்பதாகத் தெரிகிறது. இன்னம் சில பேர் ஸாதாரணமாக எல்லாரையும் போல லௌகிகத்திலேயே

இருந்து கொண்டிருக்கும்போது திடிரென்று அவர்களுக்கு அத்வைதத்திலே பிடிப்பு உண்டாகி நேராக ஞானவழிக்கே போயிருக்கிறார்களென்றும் தெரிகிறது. இதற்கு என்ன சொல்வது?" என்று கேட்கலாம்.

இதெல்லாம் "விட்ட குறை தொட்ட குறை" என்பதைச் சேர்ந்தது. அதாவது ஜன்மாந்தரத்தில் விட்ட இடத்தில் இந்த ஜன்மத்தின் அநுபவங்கள் ஆரம்பிக்கின்றன. அவர்கள் முன் பிறவிகளிலேயே கர்மா, பக்தி நிறையப் பண்ணி சித்த சுத்தியும் ஐகாக்ரியமும் பெற்றிருப்பார்கள். இப்படிப் பட்டவர்களில் சிலருக்குங்கூட அப்போதிருந்த கொஞ்சம் கொஞ்சம் லௌகிக ஆசைகள் எல்லாம் ஒன்று திரண்டுதான். இந்த ஜன்மாவில் ஒரு குறிப்பிட்ட வயஸு வரை அதற்குப் பலனாக அவர்கள் லௌகிகாநுபவங்களைப் பெற்றுத் தீர்க்கும்படியாக இருந்திருக்கும். அப்புறம் கெட்ட வாஸனை தீர்ந்தவுடன் மேகம் விலகி ஸூர்யன் ப்ரகாசிக்கிறார்போல, சட்டென்று ஞான ப்ரகாசம் ஏற்பட்டிருக்கும்.

நிறைய ஆத்மிகமாக முன்னேறியும்கூட எல்லாக் கர்மாவையும் தீர்த்துக் கொள்ளாமல் கொஞ்சம் பாக்கியிருக்கும் போதே செத்துப் போய்விடுபவர்கள் உண்டு. அப்படிப்பட்டவர்களை பகவான் (கீதையின் ஆறாம் அத்யாயத்தில்) 'யோக

ப்ரஷ்டர்'கள் என்கிறார். அவர்கள் அடுத்த ஜன்மாவில், விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்து மறுபடி ஸித்திக்காக ஸாதனை செய்கிறார்கள் என்கிறார்.

இம்மாதிரிப் பிறப்பவர்களில்தான் கர்மா, பக்தி செய்ய வேண்டிய அவச்யமில்லாமல் (அவற்றைப் பூர்வத்திலேயே பண்ணிவிட்டால் இப்போது அவச்யமில்லாமல்) நேரே ஞானத்துக்குப் போகக் கூடியவர்களாக, அல்லது நேராக ஞானத்தின் ஆவேசத்துக்கு திடீரென்று ஆளாகக் கூடியவர்களாகச் சிலர் இருந்திருக்கிறார்கள்.

## அத்வைதம்

## நமக்கான வழி

நம் மாதிரியான பெருவாரி ஸாதாரண ஜனங்களுக்கு நிஷ்காம்ய கர்மாவும், பக்தியும்தான் ஞான மார்க்கத்துக்கான யோக்யதையை ஸம்பாதித்துத் தருபவை.

ஆனால் இப்படி ஸத்கர்மா செய்யும்போதும், பக்தி உபாஸனை செய்யும்போதுங்கூட இவற்றிலே கிடைக்கும் த்ருப்திக்காக மாத்திரம் இவற்றைச் செய்வதென்றில்லாமல், நித்ய ஸௌக்யமான, சாச்வத சாந்த பதமான, ஸத்யங்களுக்கெல்லாம் மேலான ஒரே ஸத்யமாக உள்ள அத்வைத லக்ஷ்யத்துக்குப் போகவே இவை படிகள் என்ற நினைப்பை விடாமல் செய்யவேண்டும்.

லோக வாஸனைகளில் நன்றாகத் தடிப்பேற்றிக்கொண்டு ஒழுங்கு கெட்டுப்போன நாம முதலில் லோக கார்யங்களை ஒழுங்காகச் செய்து அந்தத் தடிப்பைத் தேய்த்துத் தேய்த்துக் கரைத்துவிட்டு அப்புறந்தான் லோகத்தைவிட்ட ஆத்மாவுக்குப் போகவேண்டும். அதாவது முதலில் தர்ம மார்க்கத்தில் போய், அப்புறம்தான் ப்ரஹ்மத்துக்கு முயலவேண்டும். தர்மம் என்பது ஸத்கர்மம் வழியாகவே ஆற்றப்படுவது. அதனால்தான் இன்னாருக்கு இன்ன கர்மம் என்று பக்வம் பார்த்து, அதிகார பேதம் பார்த்துப் பிரித்துக் கொடுத்திருக்கும்போது அப்படிப்பட்ட கர்மத்தையே அவரவருக்கும் ஸ்வகர்மம் என்று சொல்லாமல் ஸ்வதர்மம் என்று சொல்லியிருப்பது.

வ்யாதி போன பிற்பாடுதான் விருந்து சாப்பிடமுடியும். ஆத்மானந்தமாகிய அம்ருத போஜனம் பண்ணணுமென்றால் முதலில் கர்ம வ்யாதிகளையும் மனோ வ்யாதியையும் போக்கிக் கொள்ளளவேண்டும். (மனோ வ்யாதி என்றால் மனஸுக்கு ஏற்படும் க்லேசம், ப்ரேமை போன்ற வ்யாதியைச் சொல்லவில்லை. மனஸே ஒரு வ்யாதியாக ஆத்மாவிலே தோன்றியிருப்பதைத்தான் சொல்கிறேன்.)

மனஸின் உயர்ந்த பண்புகளோடு கலந்து சரீரத்தின் வேலைகளை அதிகமாகக் கொண்டிருக்கும் தர்ம கர்மாக்கள் மூலமும், சரீரத்தின் வேலைகள் குறைவாகவும் மனஸின்

உத்தம குணங்களே அதிகமாக இருக்கும் பக்தி உபாஸனையினாலும் கர்ம வ்யாதி மனோ வ்யாதிகளைப் போக்கிக் கொள்ளவேண்டும். ஆரம்பத்தில் சரீர ப்ரஜ்ஞை மிகவும் அதிகமாதலால் கர்மாவுக்கு முக்யத்வம். அப்புறம் பக்திக்கு முக்யத்வம். அப்புறம்தான் ஆத்ம விசாரமே முக்யமாகிற நிலைக்குப்போவது.)

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**பிற மார்க்கத் தொடர்பு, எதையும் கண்டிக்கலாகாது**

ஆனாலும் ஆரம்பத்தில் கர்மம் முக்யம் என்றாலும் மற்றவையும் 'ஸப்ஸிடரி'யாக (துணையம்சமாக) இருக்க வேண்டும் இவற்றிலே பக்திக்கு அதிகமாக இடம் கொடுக்க வேண்டும். ஆத்மாவைப் பற்றிய ஸ்மரணை, அத்வைதத்தைக் குறித்த சிந்தனை, ஞான நூல்கள் படிப்பது ஆகியனவும் கொஞ்சம் இருக்கவேண்டும்.

அப்புறம் பக்தி அதிகமாக இருக்கும்போது கர்மாவைப் பற்றி விசேஷமாக கவனம் செலுத்தி, இழுத்துப்போட்டுக் கொண்டு செய்யவேண்டியதில்லை. கர்மா முக்யமாயிருந்த முதல் ஸ்டேஜில் நாமாக மனஸறிந்து, வலிந்துங்கூட, பக்தி வழிபாடும் பண்ணவேண்டுமென்பதுபோல இப்போது பக்தி முக்யமாய்விட்டபோது கர்மா பண்ணத்தான் வேண்டுமென்றில்லை. சாஸ்த்ரீயமான முக்ய கர்மாவைப் பண்ணினால் போதும். சரீர ப்ரஜ்ஞையிலிருந்து அதைவிட ஸூக்ஷ்மமான நம்முடைய மனஸைக் குறித்தே நேராக ப்ரஜ்ஞை ஏற்பட்ட கட்டத்தில், இதைவிட ஸ்தூலமான கர்மாநுஷ்டானத்தில் புத்திபூர்வமாக வலிந்து ஈடுபட வேண்டியதில்லை.

அதுவாக வாய்த்த கர்மங்களை, தவிர்க்க முடியாத கர்மங்களை மட்டும் நன்றாகப் பண்ணினால் போதும்.

ஆனாலும் இப்போதுங்கூட "கர்மாவை விட்டு

விட்டேனாக்கும்" என்று ப்ரகடனப்படுத்திக் காட்டக்கூடாது. அப்படிக் காட்டி, கர்மா அவச்யமாயிருக்கிற முதல் ஸ்டேஜ் மநுஷ்யர்களுக்கு மனக்குழப்பம் ஏற்படும்படிப் பண்ணிவிடக்கூடாது. கர்மா, பக்தி எல்லாம் போன ஞானியுங்கூட இப்படிப் பண்ணிவிடப்படாது என்று பகவான் (கீதை மூன்றாம் அத்யாயத்தில்) தீர்மானமாகக் கூறியிருப்பதை மறக்கவே கூடாது.

பக்திக்கும் அப்புறம் ஞானத்திலே போனபிறகு கர்மா, பக்தி இரண்டுமே அவச்யமில்லை. ஆனாலும் இவை யாரக்கும அவச்யமில்லை என்கிற மாதிரியாக இவற்றை ஞான மார்க்கத்தில் போறகிறவனுங்கூடப் பொதுப்படையாகக் கண்டித்துத் தள்ளக்கூடாது. அவனுக்கு பகவானின் உபதேசம், "நீ இவற்றை விட்டுக்கோ, ஆனால் உன் மாதிரி பக்வப்படாத வாளும் விட்டுவிட்டு இரண்டுங்கெட்டானாகத் திண்டாடும்படியாகப் பண்ணிவிடாதே!உன்னால் 'ரன்னிங் ரேஸ்' ஓட முடிகிறது என்பதால் குழந்தைகளுக்கும் நடைவண்டி வேண்டாம், கால் ஊனமானவனுக்கும் கக்க தண்டம் வேண்டாம் என்று நினைக்கும்படிப் பண்ணிவிடாதே" என்பதே.

(ஞான) ஸாதனையில் மேலே போகப் போக, ஜீவனுடைய இஷ்ட - அநிஷ்டங்கள் (விருப்பு- வெறுப்புக்கள்) போய், ஈச்வர சக்தியே அவனை நடத்திக்கொண்டுபோகிறபோது, கர்மாவையும், பூஜை முதலான உபாஸனைகளையும் விட்டுவிட்டே ஒருத்தன் ஸந்நியாஸி ஆனாலும் ஆகலாம். அல்லது ராஜ்யபாரம் பண்ணிக்கொண்டே ஞானியாய் இருந்த ஜனகரைப் போல, கர்மா எல்லாம் பண்ணிக் கொண்டும் இருக்கலாம். அல்லது அத்வைதகிளாயிருந்த அநேகம் பெரியவர்களைப்போல் நிரம்ப ஈச்வர பக்தி பண்ணிக்கொண்டும் இருக்கலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## தன்னியல்பான ஸாதனை முதிர்வு

"எப்போது கர்மாவிலிருந்து பக்திக்கு முக்யத்வத்தை மாற்றவேண்டும்? எப்போது பக்தியிலிருந்து ஞான விசாரத்துக்குப் போகவேண்டும்? எதுவரை மணி அடித்துப் பூஜை? எப்போது த்யானம்? எதற்கப்புறம் த்யானத்தையும் விடுவது?" என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கவேண்டியதில்லை நிறையக் கர்மா, அதோடு அதற்கடுத்தபடியாக பக்தியுபாஸனை, கொஞ்சம் ஆத்மார்த்தமான சிந்தனை என்று பிள்ளையார்சுழி போட்டு இப்போது ஆரம்பித்து விட்டால் போதும். இப்படிப் பண்ணிக் கொண்டு போகிற போதே கர்மவாஸனை தேயத் தேய, மனஸின் பரிசுத்தி அதிகமாக ஆக, எந்தவிதமான ஸாதனைகளையும் அப்யாஸங்களையும் விடவேண்டுமோ அவற்றில் பிடிப்பு தானாகவே கொஞ்சங் கொஞ்சமாக விட்டுப்போய், எந்த விதமான ஸாதனாப்யாஸங்கள் கூடவேண்டுமோ அவற்றிலே தன்னால் ஒரு அபிருசி ஏற்பட்டு அவற்றிலே இயற்கையாக நாம் ஈடுபட்டுப் பின்பற்ற ஆரம்பித்துவிடுவோம்.

முடிந்த முடிவான அநுபவத்துக்கு முற்பட்ட நிலையில், அதாவது, ஞான மார்க்கத்தில் ப்ரேவசித்த பிறகு, ஜீவ - ப்ரஹ்ம அபேதம் பற்றி ச்ருதி வாக்யங்களை ச்ரவணம் செய்வது, அதையே மனஸிலே உருட்டிக்கொண்டு மனனமும், த்யானமும் செய்வது என்பவற்றை எப்போது நிறுத்தி ஆத்ம தர்சனம் பெறுவது என்கிற கேள்விக்கு ஆசார்யாள சொல்கிற பதில் அடிநிலையில் கர்மாநுஷ்டானம் ஆரம்பிப்பதிலிருந்தே பொருந்தும். என்ன சொல்கிறாரென்றால், "நெல்லு குத்துவதை எப்போது நிறுத்த வேண்டுமென்றால் என்ன பதில் சொல்வது? எப்போது உமி நன்றாக உதிர்ந்து நெல்லிலிருந்து அரிசி வெளிவருகிறதோ அதுவரை குத்தத்தான் வேண்டும். அந்த மாதிரி ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும்வரை ச்வரணாதிகளைப் பண்ணிக்கொண்டேதான் இருக்கவேண்டும்" என்கிறார். எந்த அநுஷ்டானத்தையுமே "எப்போது நிறுத்துவது" என்று கேட்காமல் அதற்கு மேலான நிலை வரும்வரை தொடரவேண்டும்.

## அத்வைதம்

### தர்ம மருந்து

நாம் முதலில் செய்யவேண்டியது கர்ம வ்யாதியைப் போக்கிக் கொள்வது. வ்யாதி எப்படிப் போகும்? வைத்யரிடம் போய், மருந்து வாங்கிச் சாப்பிட்டால் போகும். ஏற்கெனவே வந்துவிட்ட கர்ம வ்யாதி தீரவும், மறுபடி அது வராமலிருக்கவும் மருந்து சொல்லும் வைத்யர் யார்? மநுதான் அந்த வைத்யர். மநு என்றால் மநு முதான யார் யார் தர்ம சாஸ்த்ரங்களைக் கொடுத்திருக்கிறார்களோ அவர்கள் எல்லோரும். இதிலிருந்தே அவர்கள் கொடுக்கிற மருந்து என்ன என்று ஊகித்துவிடலாம். நம்முடைய கர்மாக்களை நிர்ணயம் செய்து கொடுக்கும் தர்ம சாஸ்த்ரங்களே தான் மருந்து. இது நான் ஏதோ அழகாக உபமானம் சுட்டிச் சொல்வதில்லை. வேதத்திலேயே, "மநு என்ன சொன்னாரோ அதுதான் பேஷஜம்". என்று "தைத்திரீய ஸம்ஹிதை"யில் சொல்லியிருக்கிறது, 'பேஷஜம்' என்றால் 'மருந்து', ("ஸ்ரீ ருத்ரம்", "விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" தெரிநத்வர்களானால், அர்த்தம் தெரியாவிட்டாலும் 'பேஷஜம்' என்ற வார்த்தையாவது தெரிந்திருக்கும்.)

மருந்து கொடுத்தால் பத்யமும் வைப்பார்கள். இதிதைச் சாப்பிடப் படாது, சாப்பிட்டாலும் இவ்வளவுதான் சாப்பிடலாம் என்று கட்டுப்பாடு செய்வார்கள். அதே போல தர்ம சாஸ்த்ரங்களில் இன்னின்ன பண்ணக்கூடாது, இன்னின்ன அநுபோகங்கள் இவ்வளவுதான் வைத்துக்கொள்ளலாம் என்றெல்லாம் விதிகள், நிஷேதங்கள் இருக்கின்றன.

எப்படியும் என்றைக்கோ ஒரு நாள் அழிந்தபோகப் போகிற சரீர அபிவ்ருத்தியை முன்னிட்டே வைத்யர் தரும் கசப்பு மருந்து, உறைப்புக் கஷாயம் எல்லாம் சாப்பிட்டு, அவர்கள் சொல்கிற பத்யங்களை ஏற்று நடத்தும் நாம் ஆத்மாபிவ்ருத்திக்காக மருந்து சொல்லும் மஹா

பெரியவர்களான தர்ம சாஸ்த்ரகாரர்களின் மருந்து, பத்யங்களை அதைவிட நம்பிக்கையுடனும் பக்தியுடனும் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

முன்னேயே சொன்னேன், போகப் போக தர்ம கர்மாநுஷ்டானமென்பதே மனஸுக்குப் பிடித்த கூஷ்மாண்ட லேஹ்யம் மாதிரி, யுனானி மருந்து மாதிரித் தித்ததிக்க ஆரம்பித்துவிடுமென்று.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தவறான குற்றச்சாட்டு**

அதர்மம் மாதிரியே தர்மமும் மாயை என்கின்ற அத்வைதத்தால் இந்த லோக வாழ்க்கையில் இருப்பவர்கள் அதர்மமாகப் போவதற்கு இடம் கொடுத்துவிடுகிறது என்று யாராவது சொன்னால் அது அத்வைத சாஸ்த்ரங்களைக் கொஞ்சங்கூடப் புரிந்துகொள்ளாமல் பேத்துவதுதான்.

அப்படியேதான், 'ஜீவாத்ம - பரமாத்ம பேதமில்லை என்று சொல்லிக்கொண்டு அத்வைதிகள் ஈச்வரோபாஸனையைவிடச் சொல்வதால் பக்திக்கு ஹானி ஏற்பட்டுப் பெருவாரியான ஜனங்களுக்குப் பிடிப்பு இல்லாமல் கஷ்டப்படும்படி ஆகிறது' என்று க்ரிடிஸைஸ் பண்ணுவதும் விஷயம் தெரியாமல் செய்கிற குற்றச்சாட்டுதான்.

ஞான மார்க்கத்துக்கு அதிகாரிகளாகப் பக்வப்பட்டவர்களுக்கென்று பரம அத்வைதமாக எழுதப்பட்டுள்ள சாஸ்த்ர நூல்களில் இப்படிப்பட்டவர்களை முன்னிட்டு, அவர்கள் கொஞ்சங்கூட சித்தம் சிதறாமல் அத்வைதத்திலேயே ஒரு முகப்பட வேண்டுமென்பதற்காக கர்மா - பக்திகளின் த்வைதம் அடியோடு எடுபட்டுப் போகும் அடிப்படையிலேயே வழிபோட்டு கொடுத்திருப்பது வாஸ்தவம். ஆனால் பரம அத்வைதிகளும் ஸகல

ஜனங்களையும் முன்னிட்டுப் புஸ்தகம் எழுதும்போதோ, கார்யம் செய்யும்போதோ அவர்கள் புஷ்கலமாக ஸ்வதர்ம கர்மாநுஷ்டானமும், ஸகுண உபாஸனையும் பண்ணுவதில்தான் ஆரம்பிக்கவேண்டுமென்று தீர்மானமாகக் காட்டியிருக்கிறார்கள்.

ஆசார்ய பாஷ்யங்களில் திரும்பத் திரும்ப உத்தமாதிகாரிகளுக்கே ஸ்வச்சமான ஞான மார்க்கம் மட்டுமென்றும், மத்யம- அதம அதிகாரிகள் ஒருகாலும் கர்மாநுஷ்டானத்தையும், ஈச்வேராபாஸனையையும் விடாமல் பின்பற்றத்தான் வேண்டுமென்றுமே சொல்லியிருக்கிறது.

அத்வைதிகளான மதுஸூதன ஸாஸ்வதிகள், அப்பைய தீக்ஷிதர் முதலானவர்கள் ஏராளமான பக்தி நூல்களை உபகரித்திருக்கிறார்களென்றால், கோவிந்த தீக்ஷிதைரைப்போன்றவர்கள் நிறைய யஜ்ஞ கர்மாநுஷ்டானங்களும், ஸமூஹ நலனுக்காக அநேகப் பரோபகாரப் பணிகளும் செய்திருக்கிறார்களென்றால் எதனால்? கர்மா, பக்திகளை ஸாதாரண தசையிலுள்ள ஜனங்களெல்லாம் அநுஷ்டானம் செய்ய வேண்டுமென்று வழிகாட்டிக் கொடுப்பதற்குத்தான்!

அத்வைதம் என்றாலே கரித்துக் கொட்டிக் கண்டிக்கிற த்வைதிகளின் பலவிதமான ஸித்தாந்தங்களுக்குங்கூட ஒவ்வொரு நிலையில் நியாயமுண்டு என்று மனஸார நினைத்து, அந்த நிலைக்கே பக்வப்பட்ட ஜனங்களை அவற்றிலேயே நிலை நிறுத்த வேண்டுமென்ற உயர்ந்த 'ஸிம்பதி'யோடு (அநுதாபத்தோடு) அந்த ஸித்தாந்தங்களை எடுத்துச் சொல்லும் புஸ்தகங்களையும் எழுதிய அத்வைதப் பெரியார்கள் உண்டு.

ஸாங்க்யம், பூர்வ மீமாம்ஸை, ந்யாய (தர்க்க) சாஸ்த்ரம் முதலானவை அத்வைதத்துக்கு வித்யாஸமானவை. யோக சாஸ்த்ரம்கூட அத்வைதத்துக்கு அப்படியே ஒத்துப்போகாதுதான். ஆனலும் அத்வைத சாஸ்த்ர கர்த்தர்களில் முக்ய ஸ்தானம் வஹிக்கும் ஒருவரான வாசஸ்பதி மிச்ரா மற்ற இந்த எல்லா சாஸ்த்ரங்களை விளக்கியும் புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்.

வித்யாரண்யாள் (அத்வைத) ஆசார்ய பீடத்திலேயே

இருந்தவர். அவர் "ஸர்வ தர்சன ஸங்க்ரஹம்" என்று ஒரு நூல் எழுதியருக்கிறார். அதிலே லோகாயதம் என்கிற நாஸ்திகம் உள்பட, எல்லா ஸித்தாந்தங்களின் கருத்துக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதை எல்லா விதமான ஸ்மப்ரதாயங்களுக்கும் digest என்று சொல்லலாம்.

இதையெல்லாம் விட வேடிக்கை - விசேஷம் என்றும் சொல்லலாம் - இப்போது மத்வரின் த்வைத ஸித்தாந்தம், ராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம், ஸ்ரீ கண்டாசார்யாரின் சைவ ஸித்தாந்தம் முதலியவற்றை அறிய விரும்பும் ஸம்ஸ்க்ருத ஞானமுள்ளவர்கள் அவற்றுக்காகக் படிக்கும் திட்டவட்டமான நூல்கள் எவை என்றால் அத்வைதியான அப்பைய தீக்ஷிதர் அவை ஒவ்வொன்றையும் அநுஸரித்து ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு எழுதியுள்ள பாஷ்ய நூல்கள்தான்!

த்வைதத்துக்கு இவ்வளவு இடம் தந்து "அகாமடேட்" பண்ணும் அத்வைதிகள் ஒருபோதும் கர்மாநுஷ்டானம், பக்தி ஆகியவை கலகலத்துப் போகும்படிப் பண்ணி, லோகப்ராயாமான பெருவாரி ஜனங்கள் தர்மத்தில் பிடிப்புவிடும்படியாகவோ, அன்பு முதலான குணாபிவ்ருத்தியில் அக்கறை காட்டாதபடியோ செய்யவே இல்லை.

ஆசார்யாள் செய்துள்ள பக்தி ஸாஸ்தரங்கள் எத்தனை? அவர் க்ஷேத்ராடனம் செய்து பண்ணியுள்ள ஆலய புனருத்தாரணம், யந்த்ர ப்ரதிஷ்டை முதலானவற்றுக்கு கணக்கு உண்டா? இன்றைக்கும் அவர் பேரில் நடக்கிற மடங்களில் வைதிக கர்மாநுஷ்டான, வேத அத்யயனாதிகளுக்கும், ஸகல ஜனங்களும் சாஸ்த்ர வழிப்படி தர்மாசரணை பண்ணவும், பூஜை, ஆலய கும்பாபிஷேகம் முதலியன நடக்கவுந்தானே விசேஷான ஊக்கம் கொடுத்தும், உபதேசம் செய்தும் வருகிறோம்?

லக்ஷ்யம் மறக்கப்படாது என்ற இப்போது ஏதோ அத்வைத உபந்நியாஸம் பண்ணுகிறேனே தவிர, நீங்கள் தனியாக என்னிடம் வந்தால், வந்து மாட்டிக்கொண்டால், "ஸந்த்யாவந்தனம் பண்ணுங்கள், ஓபாஸனம் பண்ணுங்கள், அம்பாள் ஸந்நிதியில் நெய் தீபம் போடுங்கள், ப்ரகாரத்தில் முள்ளை பிடுங்குங்கள், குளம் வெட்டுங்கள், ஆஸ்பத்திரிகளில் ப்ரஸாதம் விநியோகியுங்கள், பிடி அரிசித்

திட்டத்தை ஏற்று நடத்துங்கள்" என்றெல்லாம் சொல்லித் தானே கஷ்டப்படுத்துகிறேன்? இப்படியெல்லாம் த்வைதமாகக் கஷ்டப்படுத்தியே, ஏற்னெவே ஸம்பாதித்துக் கொண்டுள்ள த்வைதக் கஷ்டத்தைப் போக்குவதற்கு ஆரம்பிக்க வேண்டும் என்ற ஆசார்யாள் உத்தரவு போட்டு விட்டுப் போயிருப்பதால்தான் இந்த மாதிரி (செய்கிறேன்).

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தர்ம - அதர்மங்களும் அத்வைதியும்**

விஷயம் தெரியாவதர்கள்தான், 'எல்லாம் மாயை என்பது தர்மம் கூடப் பொய்தான் என்ற அபிப்ராயத்தைக் கொடுத்து, ஜனங்களை எப்படி வேண்டுமானாலும் நடக்கலாம் என்று நினைக்கச் செய்துவிடும்' என்கிறார்கள். பொது ஜனங்களுக்கு மாயைக் கொள்கையை 'டெமாக்ரடைஸ்' பண்ணுவதற்கு ஆசார்யாளடைய 'ஸாங்க்க்ஷன்' கிடையவே கிடையாது. ஆசார்யாள் மட்டுமில்லை ,அத்வைத அநுபவிகளாக வந்த எந்த மஹானுமே தர்மத்தை விட்டு விட்டு ஜனங்கள் எப்படி வேண்டுமானாலும்பண்ணலாம் என்று நினைக்கும்படியாக மாயைக் கொள்கையை அவர்களிடம் சொன்னதுமில்லை, சொல்லச் சொன்னதுமில்லை.

மாயைதான் என்றாலும் அது நிஜமாகவே விலகும்போது தான் தர்மாதர்ம பேதம், நல்லது - கெட்டது என்று வித்யாஸம், புண்ய பாப பேதம் அற்றுப்போகுமே தவிர, மாயையிலிருந்து விடுபடாத நிலையில் இந்த பேதம் இருக்கவே செய்கிறது என்றுதான் அவர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். 'நல்லதைச் செய், புண்யம் செய், தர்மாநுஷ்டானம் பண்ணு' என்றே வற்பறுத்தியிருக்கிறார்கள்.

ஹடயோகத்தில் நல்ல ஸித்தி அடைந்து உடம்பை வஜ்ரம் மாதிரி ஆக்கிக்கொணடால் அப்போது கண்ணாடியை ஆணியைத் தின்றுவிட, 'ஆஸிடை'க் குடித்துக்கூட ஜீர்ணம் தின்னச் சொல்வதுண்டா? மனஸ் இப்போதுள்ள

ஜீவஸ்திதியிலிருந்த மேலேபோய் ஆத்மாவிலேயே வஜ்ரம் மாதிரி ஊன்றி நிற்கிபோது என்ன அதர்மமானாலும், பாபமானாலும் ஜெரித்துப் போய்விடும். ஆனால் அது லோக ஜனங்களுக்கானது அல்ல. அப்படி அத்வைத சாஸ்த்ரத்தில் இல்லவே இல்லை. இவனை தர்ம மருந்து சாப்பிட வேண்டிய நோயாளியாகத்தான் அது வைத்திருக்கிறதேயொழிய, ஆணியைத் தின்கிற ஹடயோகியாக அல்ல.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஞானியும் வினைப் பயனும்**

ஞானி அதர்மம் - தர்மம் இரண்டுக்கும் மேலே போனவன். பாபம், கெட்டது எல்லாமே அதர்மம்தான். தர்மம் என்பதில் புண்யம், நல்லது என்கிற எல்லாமுமே அடங்கிவிடும், இவை எல்லாவற்றுக்கும் மேலே போனவன் ஞானி. ஆத்மாவாகவே இருந்து கொண்டிருக்கும் நிலைக்குக் கீழ்ப்பட்ட த்வைதத்திலேதான் இருட்டு வெளிச்சம், இன்பம் - துன்பம் என்று த்வந்த்வங்கள் இருக்கிறாற்போலவே நல்லது - கெட்டது, புண்யம் - பாபம் , தர்மம் - அதர்மம் என்ற இரட்டைகளும் இருக்கின்றன. மாயா ஸ்ருஷ்டியில் வருகிறவையேயான இவை எதுவுமே ஆத்மாவை பாதிக்காது, அதாவது ஆத்மாவை அறிந்த ஞானியை பாதிக்காது.

இப்படிச் சொன்னதால் அவன் புத்தி பூர்வமாக உத்தேசித்து அதர்மமானபாபம் பண்ணி ஒருத்தருக்கு ஒரு கெடுதலை விளைவிக்கலாமென்றோ, அப்படி அவன் விளைவிப்பானென்ற அர்த்தம் இல்லை. ஞானிக்கு புத்தி, பூர்வம் உத்தேசம் என்பதெல்லாம் ஏது? "புத்தே:பரதஸ்து ஸ:" என்று புத்திக்கும் மேலாக உள்ள ஆத்மாவில் தன்னை ஸ்தம்பம் மாதிரி நிலைநாட்டிக் கொண்டவன் அவனென்று பகவான் சொல்லியிருக்கிறாரே!ஆகையால் அவன் நம்மைப் போல் புத்தி பூர்வமாக ஏதொன்றும் உத்தேசித்துச் செய்யவே

மாட்டான். ஸங்கல்பம் இருக்கும்போதுதான் உத்சேம் எழும்பும். மனஸ் அற்றுப்போன ஞானி ஸங்கல்ப - விகல்ப ரஹிதனல்லவா?. 'நிர்விகல்பம்' என்பதே அவன் இருக்கும் நிலை.

பழைய கர்மாவில் இந்த ஜன்ம அநுபோகத்துக்கு என்று ஒதுக்கப்பட்டதாக ப்ராப்ரதம் என்று இருப்பதில் இன்னம் அநுபிக்க வேண்டியுள்ள பாக்கியைத் தீர்க்கவே அவனுக்கு சரீரம் இருக்கிறது. ஸஞ்சிதம்" என்பதாக மூட்டை கட்டிய ஜன்மாந்தர கர்மாக்களிலே இனிமேலே ஜன்மங்களைக் கொடுக்கக் கூடியதாயுள்ள எதையும்விட்டு வைக்காமல் அதை ஞானாக்னியால் எரித்துவிட்டவன். அவன். இந்த ஜன்மதத்திலே பண்ணின கர்மா "ஆகாமி" என்ற பெயரில் ஒன்றுசேர்ந்து மறுபடி ஜன்மம் தராதபடியும் அவன் ஞானத் தீயிலே பஸ்மும் பண்ணிவிட்டவன். ஆனாலும் இந்த ஜன்மாவுக்கென்று ஏற்பட்டு, பலன் கொடுக்கத் தொடங்கிவிட்ட ப்ராப்ரதத்தை மட்டும் அவனால் எரிக்க முடியாது. வில்லிலிருந்து விடுப்பட்டுவிட்ட அம்பு மாதிரி அது. அதை நிறுத்த முடியாது. வில்லில் பூட்டி எய்யாமல் ஏற்கனெவே அம்புறாத்தூணியில் இருந்துகொண்டிருக்கிற அம்புகளை அப்படியே தோளிலிருந்த எடுத்துப்போட்டு விடலாம். புதிசாக 'ஆர்டர்' கொடுத்த அம்புகளை வாங்கிக்கொள்ளாமல் இருக்கலாம். இப்படிதான் ஸஞ்சித, ஆகாமிகளை ஞானி போக்கிக்கொள்வது. ஆனால் நாணை இழுத்துப் ப்ரேயாகம் பண்ணிவிட்ட அம்பை எப்படி நிறுத்துவது? அப்படித்தான், பலன் தர ஆரம்பித்துவிட்ட ப்ராப்ரத்தை நிறுத்த முடியாததலால் அதை அநுபவிப்பதற்காகவே இன்னமும் அவனுக்கு சரீரம் இருக்கிறது. ஏற்கெனவே புத்தி பூர்வமாக ஸங்கல்பித்துச் செய்ததன் விளைவுகள் மட்டும் இபபோது நேருமே தவிர, புதிதாக அவன் எதையும் நினைத்து, உத்தேசித்துப் பண்ணுவதில்லை.

ப்ராப்ரத விளைவுகளும்கூட நம் பார்வையில் ஏற்படுவதாகத் தெரியுமே தவிர அவன் அதனால் பாதிக்கப்படமாட்டான். உதாரணமாக, பூர்வ ஜன்ம கர்மாவுக்காக அவனுக்கும் ஏதாவது கொடூரமான ரோகம் உண்டாகக் கூடும். அல்லது அவன் வெறும் 'ஹம்பக்' என்று ஊரில் கதை கட்டிவிட்டு அவதூறு ஏற்படலாம். ஆனாலும் இந்த ரோகத்தையோ,

அவதூற்றையோ அவன் கொஞ்சங்கூடப்பொருட்படுத்தமாட்டான், "படுத்தமாட்டான்" என்று 'டெலிபிரேட்'டாக அவன் செய்வதுபோலச் சொல்வது கூட ஸரியில்லை. வ்யாதி, அபவாதம் முதலானவை ஒரு பொருளாக அவனுக்கு முதலுக்கே தெரியாது.

வ்யாதி, அபவாதம் ஆகியவற்றுக்குப் பதில் பூர்வ ஸுக்ருதம் காரணமாக ஒரு ஞானிக்கு ஸான்டோ மாதிரியான அரோக்யம், ஒரே கீர்த்தி, சக்ரவர்த்திக்குச் செய்கிறது போல சிஷ்யர்கள் ஸிம்ஹாஸனம் போட்டு பீதாம்பரம் போர்த்தி உட்கார்த்தி வைப்பது என்றும் ஆனால் இவையும் அவனைப் பொறுத்தமட்டில் பொருளாகத் தெரியாது.

ஞானி எதுவுமே ஸங்கல்பித்து 'டெலிபிரேட்'டாகச் செய்வதில்லை என்று சொல்லவந்தேன். ப்ராரப்த வசாத் என்ன நடக்கணுமோ அது நடந்துவிட்டுப் போகட்டும் என்று உடம்பை ஒப்புவித்துவிட்டு, உள்ளே ஆத்மாவிலேயே ரமித்துக் கொண்டிருப்பவன் அவன்.

ஞானயின் ப்ரார்ப்தம் பற்றி வித்யாஸமான இன்னொரு அபிப்ராயமும் உண்டு. "ஞாநாக்நி : ஸர்வ கர்மாணி ப்ஸமஸாத் குருதே" என்று பகவான் சொல்கிறபடி ஞானத் தீ ஸர்வ கர்மங்களையும் பஸ்மமாக்கிவிடும் என்பதில் ப்ரார்ப்த கர்மமும்தான் அடக்கம், ஞானொதயத்தில் பரிபூர்ண மநோ நாச, கர்ம நாசம்தானே யொழிய, ப்ராரப்தம் என்று ஒன்றை மட்டும் விட்டு வைத்திருப்பதற்க்கில்லை என்று அபிப்ராயப்படுகிறவர்கள் உண்டு. "தீபத்தை ஏற்றி வைத்தால் இருட்டு ஓடிப் போய்விடுகிறாற்போல ஞானோதயத்தின் ப்ரகாசத்தில் மாயையின் இருட்டு ஓடியே போய்விடுகிறது என்பதில் ஸந்தேஹமில்லை. அந்த மாயையின் ஒரு அங்கம், அல்லது ஸ்ருஷ்டிதானே கர்மாவும் கர்ம பலனும்? இப்படியிருக்கும்போது, மாயை போகிறது, ஆனால் கர்மாவிலே மட்டும் ப்ராரப்தம், ஸஞ்சிதம், ஆகாமி என்று இருக்கிற மூன்று. தினுஸகளில் இரண்டு மாத்திரம்போய், இன்னொன்று இருக்கிறது' என்று அர்த்தமாகவில்லையே!" என்று இவர்கள் கேட்கிறார்கள்.

"போட்ட பாணத்தைக்கூட அது லக்ஷ்யத்தை அடிக்காமல் மந்த்ரசக்தியால் திரும்ப வாங்கிக்கொள்ள முடிகிறதே!மந்த்ர சக்திக்கெல்லாம் மேற்பட்ட ஆத்ம ஞானத்தால் ப்ராரப்த

பாணத்தைத் திரும்ப வாங்கிக் கொள்ள முடியாதா?" என்று கேட்கலாம்.

ஆசார்யாள் கீதா பாஷ்யத்திலேயே "ஸர்வ கர்மங்கள்" என்று சொல்லியிருப்பது பலன் கொடுக்க ஆரம்பித்துவிட்டதான ப்ராரப்தம் தவிர ஏனைய ஸர்வ கர்மங்களையும் குறிப்பதே என்று பாஷ்யம் செய்திருக்கிறார். ஆனால் அவரே "விவேக சூடாமணி"யில் பத்துப் பதினைந்து ச்லோகங்களில் இந்த விஷயத்தை விசாரித்து விமர்சிக்கும்போது வேறு விதமாக முடிவு சொல்கிறார். அங்கே சொஞ்சமாவது தேஹத்திலே ஆத்ம புத்தி ஒட்டிக்கொண்டிருக்கிற வரையில் தான்" ப்ராரப்தம் உண்டு என்றும், அடியோடு தேஹாத்ம புத்தி நசித்துப்போனால் அப்புறம் ப்ராரப்தமும் இல்லை என்றும் தீர்ப்புக் கொடுத்திருக்கிறார். "அப்படிப்பட்ட ஞானிக்கு ஜன்மா, கர்மா எல்லாமே ஸ்வப்னமாகிவிடுகிறது. அவன் ஞானத்திலே விழிப்புப் பெற்றவன். இப்படிப்பட்டவனுக்கு ப்ராரப்தம் உண்டு என்பது, ஸ்வப்னத்தில் ஒருத்தன் ஸம்பாதித்ததில் ஒரு பங்கு மாத்திரம் அவன் முழித்துக் கொண்ட பிற்பாடு அவனுக்குச் சேர்கிறது என்கிற மாதிரிதான் என்று பரிஹாஸமாகக் காட்டியிருக்கிறார். "ஞானி எப்படி த்வைத ப்ரபஞ்சத்தில் இருக்கமுடியும் என்று புரியாத அஞ்ஞானிகளுக்கு ஏதாவது ஸமாதானம் காட்டவேண்டுமென்றே அவனுக்கு ப்ராப்தமுண்டு என்று சொல்வது" என்று சொல்லி முடிக்கிறார்.

எல்லா மார்க்கக்காரர்களும் படிக்கும் கீதையில் ஸராசரி மநுஷ்யனின் லெவலில் த்ருப்தியாக எதேனும் ஸமாதானம் சொல்ல வேண்டுமென்ப்தல் ஞானி விஷயத்தில் ப்ராரப்தத்தை ஒப்புக்கொண்டாரென்றும் ஞானத்திலே விசேஷப் பற்றுள்ளவர்களுக்கேயான 'விவேக சூடாமணி'யில் உள்ளதை உள்ளபடிச் சொன்னாரென்றும் வைத்துக்கொள்ளலாம். அப்படி பற்றுள்ளவர்கள் அவர்களாகவே ஞான விசாரத்தால், "ஞானிக்கு ஏன் சரீர யாத்ரை இருக்கவேண்டும்? அது ப்ராரப்தமில்லை என்றால் வேறு என்ன காரணத்துக்காக?" என்று தெரிந்து கொள்ளட்டுமென்று விட்டுவிட்டாரென்று சொல்லலாம்.

ஆனால் நான் இப்போது எல்லா ஜனங்களுக்கும் இதைச் சொல்லிவிட்டேனே உங்களையெல்லாம் "நீங்களே

ஞானியாகித் தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொன்னால் தப்பாகிவிடுமே "நிறையக் கர்மா, பக்தி பண்ணின அப்புறமே ஞான விசாரததுக்குப் போங்கள் என்றல்லவா பல்லவி பாடிக்கொண்டிருக்கிறேன்?"

ஸரி, உங்களுக்கு இன்னொரு விதத்தில் ஸமாதானம் சொல்கிறேன் - ஞானிக்கும் ஞானம் வந்தபின் (அதாவது அத்வைத ஸித்தி ஏற்பட்டுவிட்டபின்) ஏன் சரீரம் இருந்து கொண்டு இந்த லோகத்தில் - நம் பார்வையிலாவது - வாழ்க்கை என்று ஒன்று நடக்க வேண்டுமன்பதற்கு ஒரு விதமான ஸமாதானம் சொல்லிப் பார்ககிறேன்.

ஞானம் வந்துவிட்டால் அப்புறம் லோகத்தில் என்ன கஷ்ட ஸுகம், லாப - நஷ்டம் வந்தாலும் அதொன்றுமே கொஞ்சங்கூட ஒட்டாமல் ஆத்மானந்தத்தில் இருக்கலாமென்பதுதானே சாஸ்த்ரம்? இது நிஜந்தானா என்று தெரியவேண்டுமானால் அப்போது ஞானமடைந்தவன் இந்த லோகத்தில் இருந்துகொண்டு இப்படிக் காட்டினால்தானே நிரூபணமாகும்? அதற்காகத்தான் ஞானியையும் ஈச்வரன் லோகத்தில் இருக்க வைத்திருக்கிறான் என்கலாம். நம்மைத் தலைதெறிக்கப்பண்ணும் எத்தனை புகழ் வந்தாலும், நம்மைத் தலை தூக்க வொட்டாமல் பண்ணும் எத்தனை இகழ் வந்தாலும், நாம் தோளைத் தட்டிக் காட்டும்படியான எத்தனை ஆரோக்யமிருந்தாலும், அல்லது நாம் பயந்து இடிந்துபோய் விழும்படியான எத்தனையோ கோரமான வ்யாதி வந்தாலும் இன்னும் பல தினுஸான இன்ப- துன்பங்களில் எது நேர்ந்தாலும் எல்லாவற்றையும்ஸமமாக, சாந்தியுடன் நிச்சலனமாக ஏற்றுக்கொள்வதே ஆத்ம நிலை என்பது 'ப்ரூவ்' ஆக வேண்டுமானால் அதற்கு 'ப்ரூப்' ஆக ஞானிகள் லோகத்தில் இருந்து காட்டினால்தானே முடியும்?

'அத்வைத மோக்ஷம் இஹத்திலேயே பெறக்கூடியது அதற்கு இஹ பர வித்யாஸமில்லை' என்ற பின், அதை நம் பார்வையில் இஹமென்று தெரிகிற லோகத்திலேயே இருந்துகொண்டு ஒரு ஞானி அநுபவித்துக் காட்டினால்தானே ஸரியாயிருக்கும்? ஞானம் வந்தவுடன் ஒருவனுடைய சரீரம் அற்றுப்போய் விட்டதென்றால், இஹத்திலே ஞானத்தோடு இருக்கமுடியாது - அதாவது ஞானத்துக்கு இஹம் என்கிற ஒரு வித்யாஸம் தெரிகிறது -

என்றல்லவா ஆகிவிடும்?

இன்னொரு காரணமும் சொல்லலாம். ஜனங்களுக்கெல்லாம் நல்லது செய்வதற்காகவே, அவர்களுக்கு உத்தமமான வாழ்க்கைப் பண்புகளை உதாரண புருஷர்களாக வாழ்ந்து காட்டுவதற்காகவே ஈச்வரன்தான் ஞானிகளை லோகத்திலே கருவி மாத்ரமாக வைத்து, அவர்கள் மூலம் தன்னுடைய இந்த ஸங்கல்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறானென்று சொல்லலாம்.

"வஸந்தகாலம் எப்படி ஒரு ஸொந்த உத்தேசமுமில்லாமல் லோகத்தில் பசுமையையும் செழிப்பையும் ஏற்படுத்திக் கொண்டு போகிறதோ அப்படி ஞானியும் லோகத்தில் ஹிதத்தைத் தன் உத்தேசமில்லாமலே ஏற்படுத்திக்கொண்டு போகிறான், தான் ஸம்ஸாரத்தை தாண்டினதோடு, பிறத்தியாரையும் ஒரு ஸ்வயநல காரணமும் இல்லாமல் தாண்டுவிக்கிறான்" என்று ஆசார்யர் சொல்லியிருக்கிறார். இப்படிப் பிறரை உயர்த்துவதற்காக ஒரு ஞானி இருப்பது அவனுடைய உத்தேசத்தினால் இல்லை. ஏனென்றால் அவனக்கு எந்தவிதமான உத்தேசமும் இல்லை. பின்னே இதுமாதிரி எப்படி நடக்கிறதென்றால், அவன் அப்படியிருக்க வேண்டுமென்று ஈச்வரன் உத்தேசம் பண்ணுவதால்தான்!

ஸம்ஸாரத்தைக் தாண்டுவதில் முதல் அங்கமான தர்ம வாழ்க்கைக்கு ஐடியலாகக்கூட ஒரு ஞானியை ஈச்ரவன் இருக்கப் பண்ணுவதுண்டு. ஜனகர் அப்படித்தானிருந்தார். ஜனங்களுக்குப் புரிபடுவதான தர்மங்களையே ஞானியும் செய்து காட்டுகிறானென்று பகவானும் சொல்லியிருப்பதைப் பார்த்தோம்.

ஆகக்கூடி, ஞானிக்கு ஸ்வய உத்தேசம், உத்தேசிக்கும் மனஸ் எதுவும் இல்லாதபோது, அவனாக தர்மம் அதர்மம் என்று நினைத்து எதையும் பண்ணுவதுமில்லை, விடுவதுமில்லை. அவனை ஈச்வரனே கருவி மாத்ரமாகக் கார்யம் பண்ணவைக்கும்போது லோக ஹிதத்துக்காக, லோகத்தின் ஞான உயர்வுக்காக, அல்லது (லௌகிக) தர்மத்துக்கும்கூட ஒரு ஐடியலாகத்தான் இருக்கச்

செய்கிறான். ஆகையால் எப்படிப் பார்த்தாலும் ஒரு ஞானி அதர்மத்தை, கெட்டதை பாபத்தைப் பண்ண இடமில்லை.

ஆனபடியால் தர்மாதர்மம். புண்ய பாபம், நல்லது கெட்டது ஞானிக்கு இல்லை என்பது ஒரு தத்வமாக இருப்பதுதானே ஒழிய. இதனால் நடைமுறையில் ஒரு ஞானி தர்மும், பாபமும், கெட்டதும் பண்ண இடம் கொடுததுப் போவது என்பதே இல்லை. அவனுக்குள்ளே இந்த எதுவும் ஒட்டாது என்பதால் அவன் இவற்றில் தப்பாக இருக்கிறவற்றின்படி வெளியிலே நடக்கிறானென்று அர்த்தம் ஆகவே ஆகாது.

எனவே, 'அத்வைத ஸித்தாந்தமானது அதர்மம் முதலானவற்றுக்கு handle கொடுத்துவிடும். அதர்மத்தை easy-யாக எடுத்துக்கொள்ளப் பண்ணிவிடும்' என்று குற்றம் சொல்வது, நிஜமான ஸாதகர்களுக்கான புஸ்தகங்ளை அப்படியில்லாதவர்கள் படித்துத் தப்பர்த்தம் செய்து கொள்வதன் விளைவுதான்.

தர்ம ஸங்கடமான சில ஸந்தர்பங்கள் ஏற்படுவதுண்டு. அப்போது பொதுவிலே ஒரு தர்மத்தை, நல்லதை நிலைக்கப் பண்ணுவதற்காகவே ஒருத்தர் அதர்மமாக ஒன்று செய்ய நேரிடும். அம்மாதிரி ஸந்தர்பங்களில்தான் அப்படிபப்ட்ட அதர்மங்கள் ஒரு ஞானியைத் தாக்காது என்பதால் அவனைக் கொண்டு அதைச் செய்து பொது க்ஷேமத்தை உண்டாக்குவதுமுண்டு. மஹாபாரத யுத்தத்தில் மஹா ஞானியான க்ருஷ்ண பரமாத்மா இப்படித்தான் பல செய்து, ஜெரித்துக் கொண்டார். எப்போதாவது இம்மாதிரி நடப்பதை வைத்து, இது ஞானிகளுக்கு மட்டுமில்லாமல் அத்தைவதில் கொஞ்சம் விசுவாஸமுள்ளவர்களுக்கும் ஜெனரல் ரூலாகிவிடும் என்று குறை சொல்வது ந்யாயமே இல்லை.

முதலிலே அதர்மத்தைப் போக்கிக்கொண்டு, அப்புறம் ரொம்ம்ம்....பவும் அப்புறந்தான் தர்மத்தையும் விடும்படி அத்வைத சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது.

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய..." -" எல்லா தர்மங்களையும் விட்டு என்னை சரண் அடை" என்று பகவான் எப்போது சொன்னார்? கீதையின் கடைசிக் கடைசியிலேதான் ஆரம்பத்திலெல்லாம் என்ன சொன்னார்? இன்னொரு கோடியில் அரம்பித்துத்தான் சொன்னார் ."எல்லாவற்றையும் விட்டு விட்டு ஸந்நியாஸியாகப் போகிறேன்" என்ற அர்ஜுனனை "பேடிப் பயல் மாதிரி" என்று நன்றாகத் திட்டி,

"தர்மத்தைப் பண்ணு, ஸ்வதர்மத்தைப் பண்ணு" என்றுதான் மறுபடி மறுபடி வற்புறுத்திச் சொன்னார். அப்புறம் தான் கொஞ்சம் கொஞ்சமாக ஒரு விஷயம் பாக்கியில்லாமல் கர்மா பக்தி - ஞானங்களில் எல்லா உபதசமும் கொடுத்து, தன்னுடைய விச்வரூப தர்சனத்தையும் கொடுத்து அவனுடைய மனஸை ரொம்ப உயர்த்தி "எலிவேட்" பண்ணி ,அந்த நிலையிலே "தர்மத்தையெல்லாம் விடு, என்னிடமே சரணாகதி என்று விழு" என்றார்.

இப்படித்தான் அத்வைத சாஸ்த்ரங்களில் உத்தம அதிகாரியாக ஒருத்தனை ஆக்கிய பின்தான் தர்மத்தை விடச் சொல்வது.

அதுவுங்கூட, ஸரியாகப் புரிந்துகொண்டால் கார்யத்தில் தர்மத்தை விடும்படிச் சொல்வதில்லை, தர்மாதர்மங்களின் பலாபலனை நினைத்துக்கொண்டு அவற்றைச் செய்கிற மனோபாவத்தைதான் விடச்சொல்வது. உத்தமாதிகாரியாவதற்கு முற்பட்ட நிலைகளிலுள்ள மனிதர்களுக்கு மநு முதலான தர்ம சாஸ்த்ர டாக்டர்களோடு கூட, ஆசார்யாள் முதலான ஆத்ம சாஸ்த்ர டாக்டர்களும் தர்ம மருந்துதான் 'ப்ரிஸ்க்ரைப்' செய்திருக்கிறார்கள்.

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய"வுக்கு பாஷ்யம் செய்யும் போது ஆசார்யாள் இதை மந்த, மத்யம அதிகாரிகள் தப்பாக நினைத்துவிடக்கூடாதே என்ற கவலையுடன், கருணையுடன் நன்றாகத் தெளிவுபடுத்தி அர்த்தம் பண்ணியிருக்கிறார். "எல்லாக் கார்யத்தையும் விட்டு விடும்படிச் சொல்வதுதான் பகவான் இங்கே உபதேசிக்க உத்தேசித்தது. ஆகையால் அவர் 'தர்மம்' என்று சொல்லியிருப்பதில் அதர்மமும் அடங்கியிருக்கிறதென்று புரிந்து கொள்ள வேண்டும் என்கிறார்.

இப்படிச் சொல்லிவிட்டு ஆரம்ப நிலைகளிலிருக்கும் பெருவாரியானவர்கள் அதர்மத்தை விடுவதே முக்யம் என்பதை ச்ருதி ப்ரமாணத்தால் நிலைநாட்டுகிறார். ஆசார்யாள் சொன்னால் போதுமென்றாலும் வேதத்தின் 'அதாரிடி'யையே காட்டுவது அவச்யம் என்று நினைத்து கடோபநிஷத்தை மேற்கோள் காட்டுகிறார். துர்நடத்தையை விடாதவன் ப்ரஜ்ஞானம் என்ற உத்தமமான அறிவினால் ஆத்மாவை அடைவதென்பதில்லை" என்று அதில்

சொல்லியிருப்பதைக் காட்டி, அதர்மத்தை விடும்படியாக முதலில் உபதேசிக்கிறார் இது பொதுவாக எல்லாருக்கும் அப்புறமே உத்தமாதிகாரி அதர்மத்தோடு தர்மத்தையுங்கூட விட்டுவிட வேண்டும் (அதாவது தர்ம - அதர்ம வித்யாஸ சிந்தையை விட்டுவிட வேண்டும்) என்பதற்கு மஹாபாரத சாந்தி பர்வத்தில் "த்யஜ தர்மம் அதர்மம் ச" என்று சொல்லியிருப்பதை ப்ரமாணமாகக் காட்டுகிறார். (மஹாபாரதம் "ஐந்தாவது வேதம்" என்று உயர்த்திச் சொல்லப்பட்டாலும் அது ச்ருதி ப்ரமாணத்துக்கு அப்புறம்தான்.)

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய'ன்னு பகவான் சொல்லிட்டாரே' தேவலையே நல்ல உபதேசமாயிருக்கே நாம் பாட்டுக்கு தர்மங்களை விட்டுடலாம்" என்று யாரும் அர்த்தம் பண்ணிக்கொண்டு விடப்படாது. (ஸ்ரீ சரணர்கள் சிரிக்க, ஸபையும் சிரிக்க, சிறிது நேரம் சிரிப்பிலேயே செல்கிறது.) முதலிலே அதர்மத்தை விட்டு விட்டு அப்புறம்தான் தர்மத்தை விடுகிற ஸமாசாரத்துக்குப் போகவேண்டும்.

முதலில் அதர்மத்தை விடுவது, அதோடு கர்ம மீமாம்ஸையில் 'அதாதோ தர்ம ஜிஜ்ஞாஸா' என்று சொன்னபடி தர்மங்களை அறிந்து அநுஷ்டிப்பது, அப்புறம் தர்மா தர்மங்களின் பலாபலனை நினைக்காமலிருப்பது, அதற்கும் அப்புறம் உத்தர மீமாம்ஸையில் சொன்னபடி ப்ரஹ்மத்தை அறிவதில் நாட்டம் வைத்து ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸையில் ஸாதனை செய்வது, கான்ஷஸாக (புத்தி பூர்வமாக) 'தர்மம் பண்ணுகிறேனாக்கும்' என்று பண்ணாமல் அவன் பாதத்தில் தன் கான்ஷன்ஸையே போட்டுவிட்டு, அதன் அங்கமாக தர்மம் பற்றிய நினைப்பையும் போட்டுவிடுவது, 'இதுதான் 'எல்லா தர்மத்தையும் விட்டுவிட்டு, என்னை சரணடை' என்று பகவான் சொன்னதன் தாத்பர்யம் என்கலாம்), முடிவாக தர்மா தர்ம வித்யாஸமே தெரியாத அத்விதீயமான ஸம த்ருஷ்டியைப் பெறுவது என்று படிப்படியாக போகிறவிஷயம் இது. (இதைப்) புரிந்துகொள்ளாத குறைதான், அத்வைதத்தால் தர்மத்துக்கு ஹானி வரும் என்று குறை சொல்வது.

முதலில் அதர்மத்திலிருந்து தர்மத்துக்கு? அப்புறந்தான் தர்மத்திலிருந்து ப்ரஹ்மத்துக்கு. இதைப்பற்றி ஸந்தேஹமே

இல்லை.

ஞானிகளைப் பார்த்து, அல்லது, "விட்டகுறையில்" எடுத்தவுடனேயே ஞானமார்க்த்தில் பிடிப்பபுள்ளவர்களைப் பார்த்து, அப்படிப் பிடிப்பில்லாத மற்றவர்கள், அல்லது ஏதோ சில ஸந்தர்ப்பங்களில் மட்டும் பிடிப்பு ஏற்பட்டு அப்புறம் நழுவி எங்கேயோ போய்விடுவதாக உள்ளவர்கள். முதலிலிலேயே தர்மா தர்மமமில்லாத ஆத்ம விசாரம் என்று உட்கார்வது நிஷ்பலனாக ஆகும், அல்லது விபரீத பலனாகக் கூட ஆகலாம். பிறக்கிறபோதே பறக்கிற பக்ஷிகள் இருப்பதைப் பார்த்துவிட்டு ஒரு புழுவும் அந்த மாதிரிப் பண்ண நினைத்தால் எப்படியிருக்கும்? அது புழுவாக இருந்து, அப்புறம் கூட்டுப் புழுவாக ஆகி, அதற்கும் அப்புறம்தானே கொசு, குளவி, வண்ணாத்திப் பூச்சி மாதிரியான ஒன்றாகிப் பறக்க முடியும்? ஸுலபத்தில் மனஸை நிறுத்த ஸ்வாபாவிகமாக, அல்லது ஜன்மாந்த்ர ஸமஸ்காரத்தினால் யோக்யதை பெற்றிருப்பவர்களைப் பார்த்து அவர்களுடைய ஸாதனா மார்க்கத்தை நாம் அனைவரும் எடுத்துக் கொள்வதற்கில்லை.

இப்போது ரொம்பவும் வேதாந்தப் பேச்சு ஜாஸ்தியாகி, கர்மா - 'ரிசுவல்' எல்லாம் ரொம்பவும் 'அன்னெஸஸரி' என்ற ப்ரசாரம் பண்ணுவதாக இருப்பதால் இந்த விஷயத்தை நான் கொஞ்சம் 'ஓவ'ராகவே 'ஸ்ட்ரெஸ்' பண்ணிச் சொல்ல வேண்டியதாகிறது. இப்படிப் பேசுபவர்களில் வேதாந்தைப் பற்றிய ப்ரஸங்கிகள், ப்ரொஃபஸர்கள், டாக்டர் பட்டம் வாங்கினவர்கள், சீமை ப்ரெஸ்ஸிலே புஸ்தகம் போட்டவர்கள் நிறைய ஏற்பட்டிரு ந்தாலும், ஞானி என்று சொல்லும்படியாக யாரவாது இருக்கிறார்களா என்ற தேடினால்...., தேடிக் கொண்டே யிருக்கும்படியதானிருக்கிறது. இவர்கள் பிறத்தியாருக்கும் உபதேசம் பண்ணி, ஏற்கெனவே ஒழுங்கு கெட்ட இன்றைய உலகத்திலே ஏதோ கொஞ்சம் சாஸ்த்ரம், ஸம்ப்ரதாயம், ஆசார அநுஷ்டானத்துக்கு வரக்கூடியவர்களையும் "வேதாந் தா"வுக்கு நேரே இழுக்கிறார்களே என்று கவலையினால்தான் சொல்கிறேன். இப்போது தார்மிகத்துக்கும் ஆத்மிகத்துக்கும் நாஸ்திகத்தினால் வந்திருக்கிற ஆபத்து போதாது என்று "வேதாந்தா"க்காரார்களிடமிருந்து வேறு ஆபத்து வந்திருக்கிறதே என்று விசாரமாயிருக்கிறது. குற்றம் சொல்வதற்காக (இதையெல்லாம்) சொல்லவில்லை. குற்றம்

ஏற்படாமல் தடுக்கமுடியுமா என்று பார்ப்பதற்காகத்தான் சொல்கிறேன்.

தர்மம், அதோடு சேர்ந்த கர்மம், பக்தியுபாஸனை எல்லாம் சேர்ந்துதான் நம்மை த்யான நிலைக்கும் ,அப்புறம் ஞான நிலைக்கும் கொண்டு சேர்க்கவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**தர்மமும் அன்பும்**

தர்மாதர்மம் கடந்தவர்களானாலும் ஞானிகள் தர்மமாகவேதான் நடித்திருக்கிறார்களே தவிர அதர்மத்தில் போனதாக நாம் பார்ப்பதில்லை. அப்படியே நல்லது. கெட்டது இரண்டையும் அவர்கள் தங்களளவில் தாண்டியிருந்தலும் லோகத்தின் த்ருஷ்டியில், 'இவர்களைவிட நல்லவர்களில்லை' என்னும்படியாகத்தான் பரம கருணையோடு, அநுதாபத்தோடு, தாக்ஷிண்யத்தோடு இருக்கிறார்கள். "ஸர்வ பூத ஹிதே ரதா:" - எல்லா ஜீவ ஜந்துக்களின் நலனிலும் களிப்பவர்கள் என்றும், "ஸுஹ்ருதம் ஸர்வபூதா நாம் ஜ்ஞாத்வா மாம்" - ஜீவ குலம் முழுதிடமும் நட்பு கொண்ட தன்னை அறிந்தவர்கள் என்றம் பகவான் அவர்களைச் சொல்கிறார்.

நல்லதிலெல்லலாம் பெரிய நல்லதான அன்பிலே ஞானிகளை மிஞ்சி யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. "அன்பு த்வைதந்தான் - இன்னொன்றை வைத்துச் செய்வதுதான். இந்த லோகமோ மாயை. இதில் தர்மமிருந்தாலென்ன, அதர்மமிரு ந்தாலென்ன? இதிலிருக்கிற ஜனங்கள் தர்மம் பண்ணினாலென்ன? பண்ணாமல் கெட்டுப்போனாலென்ன? அவர்களிடம் நமக்கென்ன அன்பு, பரிதாபம் வேண்டிக்கிடக்கிறது? அவர்களுக்காக நாம் என்ன உபகாரம் செய்ய இருக்கிறது? உபகாரமும் மாயைதான்" என்று நினைத்து ஆசார்யாள் மாதிரியானவர்கள் உலக உதாரணத்துக்காக எதுவும் பண்ணாமல் ஒதுங்கியிருந்து

தாங்கள் பாட்டில் ஆத்மாராமர்களாக வாழ்க்கையைக் கழித்துவிட்டுப் போயிருக்கலாமோல்லியோ? அப்படியானால் அவர்கள் ஜனங்களுக்காக உடம்பைச் சக்கையாகப் பிழிந்து எத்தனை அலைச்சல் அலைந்து, எத்தனை உபதேசங்கள் வாயால் செய்தும் கையால் எழுதிவைத்தும் தொண்டு செய்திருக்கிறார்கள்?

இதிலேயே இன்னொரு புரளி அடிபட்டுப்போகிறது. அத்வைதத்தால் லோகத்தில் தர்மத்திடம் பிடிப்பு போய்விடும், பாபபயம் போய்விடும் என்பதுபோல, அத்வைதத்தின் மாயா - டாக்ட்ரினால் (கொள்கையால்) தான் இந்தியர்கள் கார்ய சக்தியில்லாத சோப்ளாங்கிகளாகி விட்டார்களென்று ஒரு புரளி உண்டு. கார்ய லோகத்தில் ஆசார்யாளைப் போன்றவர்களின் ஸாதனை இது எத்தனை தப்பான வாதமென்று நிதர்சனமாக்குகிறது.

தர்மத்திலும் அன்பிலும் நன்றாக ஊறியே தர்மா தர்மங்களுக்கு அதீதமான, ப்ரேம - த்வேஷங்களுக்கு அதீதமான ஆத்ம ஸ்தானத்துக்குப் போக முடியும், அப்படியே போக வேண்டுமென்பதுதான் ஸாராம்சம்.

ஒரு சக்கரத்துக்கு இரும்பு பட்டை அடிப்பதென்றால் மாற்றி மாற்றிக் காய்ச்சியும் குளிர்ந்த ஜலத்தைக் கொட்டியும், மாற்றி மாற்றி விரிவடையவும் சுருங்கவும் பண்ணுவது வழக்கம். அப்போதுதான் அது சக்கரத்தை நன்றாகக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும். இல்லாவிட்டால் 'லொடலொட' என்று விட்டுப் போய்விடும். காய்ச்சி விரிவாக்கணும், ஜலத்தைக்கொட்டி சுருங்கவும் பண்ணணும். இந்த மாதிரிதான் ஒரு ஜீவன் ஆத்ம ஸ்தானத்தைப் போய்க்கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்றால் தர்மத்தின் பல பட்டப்பாடுகளால் அதன் கீழான குணம் குறுகும்படியாகவும பண்ணும், அன்பின் விசாரத்திலே தன் மேலான குணம் விரியும்படியும் பண்ணவேண்டும்.

கார்யமே இல்லாமல் ஆகிறதற்காகவே எத்தனையோ வகை வகையான கர்மாக்களை, சடங்குகளை, பொதுத் தொண்டுகளை நிறையப் பண்ணவேண்டும். தூக்கம் வரவில்லை என்று சொல்கிறவர்களிடம் என்ன சொல்கிறோம்? "நன்றாக ஓடியாடி, உழைத்து வேலை பண்ணு. தானே அடிச்சுப் போட்ட மாதிரி தூக்கம் வரும்"

என்கிறோமல்லவா? இது சரீர 'ரெஸ்ட்'டுக்கு மட்டும் சொன்னது. ஆத்மாவில் 'ரெஸ்ட்' ஆவதற்கும் கர்மா இப்படியே உபயோகமாகிறது.

இதே விதத்தில்தான் வெளி உணர்ச்சிகள் ஒன்றுமே இல்லாமல் ஆவதற்காகவே ப்ரேமையை, அதன் முற்றிய ஸ்தானமாக பக்தி என்ற உணர்ச்சியை நன்றாக வளர்த்துக் கொண்ட அதில் ஆவேசம், பரவசம் என்கிற ஸ்திதிக்குப் போகவேண்டும். இப்படிப் பண்ணினால்தான் 'ஏகப் பேருணர்வு என்கிறார்களே, அதில் கொண்டுவிடும். இப்படியில்லாமல் முதலிலேயே எல்லா உணர்ச்சியையும் போக்கிக் கொள்வது என்றால் முடியாது. அப்படி முடிந்தாலும் அது மரத்துப்போன மாதிரி உயிரில்லாத ஒரு வறட்டு நிலையில் தான் சேர்க்குமே தவிர ஏகப் பேருணர்விலே அல்ல. பலவிதமான உணர்ச்சிகள் எம்பிக் கொண்டேயிருக்கும்போது எல்லாவற்றையும் அடியோடு இல்லாமல் பண்ணிக் கொள்வது ஸாத்யமா? இல்லாவிட்டால் அவற்றிலேயே ரொம்பவும் உத்தமமாக இருக்கப்பட்ட ப்ரேமை என்ற ஒன்றை மட்டும் பெரிசாக வளர்த்துக்கொண்டு ,அதிலே மற்ற உணர்ச்சிகள் அமுங்கிப் போகும்படி செய்வது ஸாத்யமா?

பலபேர் சேர்ந்து சளசளவென்று பேசிக்கொண்டிருக்கும்போது எல்லாரையும் சைலன்டாக இருக்கச் சொன்னால் அவர்களால் இருக்கமுடிகிறதா? முடிவதில்லை. ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷத்துக்கப்புறம் ஒருத்தர் இருண்டு பேர் ரஹஸ்யம் பேசிக்கொள்ள ஆரம்பித்து, அப்புறம் எல்லோருமே அப்படிப் பண்ணி, ஒரு பத்து நிமிஷம் போனால், ரஹஸ்யம் என்பதும் நல்ல சத்தமாகவே ஆகிவிடுகிறது மனஸின் எல்லா உணர்ச்சிகளையும் ஒரே வீச்சில் அடக்கப் பார்ப்பதும் இப்படித்தான் முடியும். அதுவே, "ஸைலன்ஸ் ப்ளீஸ்" என்று திரும்பத் திரும்பச் சத்தம் போட்டுக்கொண்டிருக்காமல் - (சிரித்தவாறு) "ஸைலன்ஸ் ஸைலன்ஸ்" என்றே சத்தம் போட்டுக் கொண்டிருக்காமல் - "ராம ராமா", "சிவ சிவா" என்று ஏதோ ஒரு நாமாவை யாராவது ஒருத்தர் சொல்ல ஆரம்பித்தால், அதிலேயும் ராகம் தாளம் எல்லாம் சேர்த்து ரஸம் அதிகமாகும்படி பஜனையாக ஆரம்பித்தால் எல்லாரும் அதையே திருப்பிச் சொல்லி அத்தனை சத்தமும் இந்த நாம

சப்தத்திலேயே அடங்கிப் போய்விடுகிறது. அரைமணி, ஒரு மணி கூட, ராத்ரியெல்லாம்கூடப் பல தினுஸாகப் பலுக்கிப் பலுக்கி, ராக தாளங்களை மாற்றி, நாமங்களையும் மாற்றி பஜனை செய்தால் எல்லாரும் மற்றப் பேச்சுப் பேசாமல் அதில் கலந்துகொள்ள முடிகிறது. இது மௌனம் இல்லைதான். ஆனால் அதற்கு 'நெக்ஸ்ட் பெஸ்ட்( (அதற்கடுத்தபடியான உத்தம நிலை) என்று சொல்லலாம். இப்படி நாமாவிலே தோய்ந்து சொக்கிப் போனால், தானே மௌனத்தில் கொண்டு விட்டுவிடும். வெறும் பேச்சு அப்படிப் பண்ணுமா?

அப்படித்தான், அநேக உணர்ச்சிகளில் அன்பு என்பது பக்தியின் பல ரஸ பேதங்களோடு வெளிப்படுகிறபோது, பல விதத்தில் வெளிப்படும்போது அதில்தான் மற்ற உணர்ச்சிகள் அமுங்கி, அப்புறம் இந்த த்வைத அன்பும் அந்த பல பாவங்களில் ஏதோ ஒன்றிலேயே நின்று, பிறகு அத்தைவ அமைதியிலே சேர்க்க முடியுமே தவிர, அப்படியே நேரே மனஸின் எல்லா உணர்ச்சியையும் அடைத்து விடுவதென்றால் முடியாது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**மனம் பட்டுப்போக அன்பு தேவை**

யோக சாஸ்த்ரம் என்பது எல்லா மன ஓட்டத்தையும் நிறுத்தி விடுவதற்குத்தான். ப்ரஹ்மாநந்தம், ஆத்மாநந்தம் என்பவற்றை இதன் மூலம் அடைவது பற்றி யோக சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கவில்லை - ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கவில்லை. மனஸின் பிக்கல் பிடுங்கல் இல்லாமல் இருந்தால் போதும் - ஆனாலும் அது ஜடமான தமோ நிலையாக துக்கத்தைப்போல இல்லாமல் புருஷன் (என்ற ஆத்மா) மனஸின் தொடர்பில்லாமல் தனித்திருக்கும் கைவல்ய ஸமாதியாயிருக்கவேண்டும்' என்று யோக மார்க்கக்காரர்கள் ஒரு தினுஸாக மோக்ஷத்தைச்

சொல்கிறார்கள். புத்தருடைய சூன்யம் மாதிரி என்று சொல்வதற்கில்லையானாலும் இவர்களும் அத்வைதத்தின் சித்தாந்தமான பூர்ண ஸ்திதியைச் சொல்லாமல், மனஸ் பட்டுப்போன பாழிலேயே இருப்பதான ஒரு உரியத் தத்வத்தைச் சொல்பவர்கள்தான்.

ஆனதால் எல்லா உணர்ச்சியையும் ஒரேடியாக அடக்குவதற்கே முதலிலிருந்து ப்ரயாஸைப்பட்டு, அதன் முடிவில் மனஸ் வெறிச்சென்ற முடிவதோடு நின்றால், அப்படிப்பட்ட நிலைகூட இவர்களுக்கு (யோக மார்க்கத்துகாரர்களுக்கு) ஸம்மதமில்லாமலிருக்க முடியாது. ஆனாலும் யோக ஸூத்ரகாரரான) பதஞ்ஜலி இதுபோக நேராக எல்லா உணர்ச்சியையும் அடக்குவது ஸாத்யமே இல்லை என்று நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார். அதனால்தான் "ப்ரதிபக்ஷ பாவநா" என்று ஒன்றைச் சொல்லி அன்பு என்கிற உணர்ச்சியை வளர்த்துக்கொள்ளச் சொல்கிறார்.

"இப்படியிப்படிப் பண்ணாதே" என்பதாக மனஸின் ஓட்டத்தை அடக்குவதற்காகப் பல யம - நியமங்களை யோக சாஸ்த்ரத்தில் அவர் சொல்லியிருக்கிறார். அவர் சொன்னாலும் ஸாதகர்கள் அப்படி முயற்சி பண்ணினாலும் அதற்கு நேர்மாறாகக் கெட்ட சக்திகள், கெட்ட உணர்ச்சிகள் அவர்களை இழுத்துக் கொண்டேயிருப்பதையும் அவர் தெரிந்து கொண்டிருந்தார்.

அதனால்தான் முதலில் கெட்ட உணர்ச்சியைப் போக்கிக் கொள்வதற்காக நல்ல உணர்ச்சிகளை வளர்த்துக்கொண்டு, அப்புறமே உணர்ச்சியல்லாத மனோ நாசத்தை அடைய வேண்டுமென்றே அவரும் வைக்கவேண்டியதாயிற்று. உணர்ச்சிகளிலேயே இருண்டு விதமானவை இருக்கின்றனவென்றும், ஒருவிதமானது மேலும் மேலும் இந்த்ரிய ஸுகத்தில் இழுத்துவிடுவதாயும், இன்னொன்று பாரமார்த்திகத்துக்குத் தூக்கி விடுவதாயும் உள்ளது என்றும் அவர் சொல்கிறார். இந்தக் கீழான உணர்ச்சிகளை க்லிஷ்ட வ்ருத்தி என்றும் சொல்கிறார். க்லிஷ்டம் என்றால் க்லேசத்தை உண்டாக்குவது. அக்லிஷ்டம் க்லேசமளிக்காமல் நல்லதைச் செய்வது. க்லிஷ்டமானவையாக எழும்பும் காமம் க்ரோதம் முதலான வ்ருத்திகளை அப்படியே அடக்கி நசிப்பிக்க

முடியாது என்றும், அக்லிஷ்டமான அன்பு, ஈகை, தூய்மை முதலான வ்ருத்திகளாலேயே அவற்றைப் போகப் பண்ண முடியுமென்றும் சொல்கிறார். அப்புறம்தான் இந்த வ்ருத்திகளையும்நிறுத்தி ஸமாதி நிலை அடைவது.

அக்லிஷ்ட வ்ருத்திகள் க்லிஷ்டமானவற்றைப் போல ஜீவனை ஒரே பிடியாகப் பிடித்துக் கொள்வதில்லை என்றும், இவை நன்றாக முதிர்ச்சி பெற்றபின் கைவல்ய ஸமாதி நிலைக்கு இடம் கொடுத்துவிட்டுத் தாங்களும் போய்விடும் என்றும் சொல்கிறார். இன்னின்ன கெட்ட (க்லிஷ்ட) வ்ருத்தி ஏற்பட்டால் அதை அதற்கு ப்ரதிபக்ஷமான - அதாவது எதிர்வெட்டான - இன்னின்ன நல்ல (அக்லிஷ்ட்) வ்ருத்தியால் "பாலன்ஸ்" பண்ணி, சமனம் பண்ணி அடக்க வேண்டுமென்று சொல்கிறார்.

இதில் அன்பையே முக்யமாக வைத்து அதில் நாலு பிரிவுகளைச் சொல்கிறார் - மைத்ரீ, கருணா, முதிதா, உபேக்ஷா என்கிற நான்கு. ஸந்தோஷமாக இருந்து கொண்டிருப்பவர்களிடம் காட்டும் ஸ்நேஹித பாவம் - மைத்ரீ. துன்பப்படுபவர்களிடம் காட்டுவது கருணா (கருணை). உத்தம குணமுள்ளவர்களிடம் மகிழ்ச்சி பொங்கிச் செய்யும் அன்பு - முதிதா. அதம குணமுள்ளவர்களிடம், விசேஷமாக அன்பு வைக்க முடியாவிட்டாலும் கொஞ்சம்கூட த்வேஷமேயில்லாமல், அவர்களிடம் பட்டுக்கொள்ளாமல் ஒதுங்கியிருப்பது உபேக்ஷா (உபேக்ஷை).

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**உயர் லக்ஷ்யமில்லாவிடில் உயர்நிலை ஸித்திப்பதில்லை**

அக்லிஷ்ட வ்ருத்திகள் க்லிஷ்ட வ்ருத்திகளைப்போல ஒருத்தரைத் தங்களிலேயே இழுத்துப் புதைத்துக் கொள்வதில் என்றும், தாங்களும் அற்றுப்போகும் உசந்த நிலைக்குக்கொண்டுபோய் விடுகின்றன என்றும் பார்த்தோம்.

இப்படியேதான், ஸொந்த ஆசையின்மேல் செய்யும் கார்யங்கள்தான் முடிவில்லாமல் தங்களிலேயே ஒரு ஜீவன் ஓயாமல் ப்ரவர்த்திக்கும்படியாகக் குழிபறித்துக் கொண்டு போகின்றன. பற்றில்லாமல் செய்வதான சாஸ்த்ரீய கர்மாக்கள் இப்படிச் செய்யாமல் தங்களை விட்டுவிட்டு ஞானத்துக்குப் பக்வப்பட ஜீவனுக்கு உதவி செய்கின்றன. இதேபோல, ஈச்வரனை த்வைதமாக வைத்த பக்தியில் செய்யும் ஸகுணோபாஸனையும் அதைக்கூட விட்டுவிட்டு நிர்குணத்தில் அவனாகவே ஐக்யப்படுவதற்கு அழைத்துக்கொண்டு போகிறது.

இதைக் குறித்து ஒரு உபமானம் சொல்லலாம். நம்மை விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்ளும் கெட்ட சக்திகளை, நம்மிடமிருந்து தங்களுக்கு ஏதாவது ஸ்வய காரணம் ஸாதித்துக்கொள்வதற்காகக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும் துஷ்டர்களின் ஸஹவாஸத்துக்கு ஒப்பிடலாம். அப்போது நாம் போய் உதவி கோரும் போலிஸ்காரர்களைப் போலத்தான் தர்மமான கர்மாக்கள், உத்தம குணங்களை, ஸகுண உபாஸனை முதலானவை. துஷ்டர்களின் தொல்லை நமக்கில்லாமல் செய்கிறவரையில் போலடிஸ்காரர்கள் நம்முடன் ஸம்பந்தம் வைத்துக் கொண்டிருந்து விட்டு, அவர்களைத் துரத்திய பின், அல்லது அரெஸ்ட் பண்ணிய பின், தாங்களும் போய்விடுகிறார்களல்லவா? இப்படித்தான் மேலே சொன்ன நல்ல சக்திகளானவை கெட்டவற்றை அடக்கிப் போட்டபின் தாங்களும் போய்விடுகின்றன.

ஆனால் இதிலே நம்முடைய லக்ஷ்யம் என்ன, நாம் எந்த லக்ஷ்யத்துக்காகத் தாபம் கொண்டு அதிலேயே கருத்தாக இருக்கிறோம் என்பவையும் முக்யம் என்று தெரிகிறது. நாம் மனஸார எந்த லக்ஷ்யத்துக்கு ஆசைப்பட்டு. அதிலேயே கவனம் தப்பாமலிருக்கிறோமோ அதைத்தான் ஈச்ரவன் நிறைவேற்றித் தருகிறானே தவிர, அவனாக அதைவிட உயர்ந்த லக்ஷ்யத்தில் நம்மைச் சேர்ப்பதில்லை என்றே பெரும்பாலும் தோன்றுகிறது. ஏன் இப்படிச் சொல்கிறேனென்றால், நாம் ப்ரத்யக்ஷமாகப் பலர் விஷயத்தில் பார்ப்பதிலிருந்து, தர்மமான கர்மங்கள், அன்பு பக்தியோடு கூடிய ஸகுண உபாஸனை ஆகியவை நாம் அவற்றையே லக்ஷ்யம் என்று நினைக்கிவரையில் தம்மளவோடு மட்டும் நின்றுவிடுவதாகத்தான் தெரிகிறது.

ஒருவனுக்கு அத்தைவம் லக்ஷ்யமாயில்லாவிட்டால் இவை அவனைத் தங்களுக்கு மேலேயுள்ள அந்த ஞானநிலைக்குத் தூக்கிவிடாததாகத்தான் தெரிகிறது- அதிலேயே பற்றோடு யஜ்ஞ கர்மாநுஷ்டானம் பண்ணுபவர்கள் ஜீவ்ய காலம் முழுதும், எண்பது தொண்ணூறு வயஸு ஆனாலுங்கூட வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்று ஏதாவது யஜ்ஞமே தான் ஒன்றுக்கப்புறம் இன்னொன்று என்று பண்ணிக் கொண்டு போகிறார்கள், பக்தி ஞான ஸாதனைகளுக்கு வருவதில்லை. ஸோஷல் ஸர்வீஸ் செய்கிறவர்களும் காலம் முழுதும் அங்கே ஆஸ்பத்ரி கட்டலாமா, இங்கே அநாதாச்ரமம் வைக்கலாமா என்பதேதான் கார்ணமாக இருக்கிறார்கள். க்ஷேத்ராடனம் பண்ணுபவர்களும் இப்படித்தான், 'இன்னம் ராஜஸ்தானில் புஷ்கருக்குப் போகவில்லையே, அஸ்ஸாமில் காமாக்யாவுக்குப் போகவில்லையே' என்று எங்கேயாவது போய்க்கொண்டே இருக்கிறார்கள் நாம ஸங்கீர்த்தனம் பண்ணுபர்கள் அதையேதான் கடைசி மூச்சுவரை பண்ணிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

ரொம்ப வயஸாகித் தளர்ந்து ஒய்ந்துபோய், இதுகள் எதுவுமே பண்ணமுடியாமல், விழுந்துவிட்டால்கூட அப்போதும், "ஐயோ, வாஜபேயம் பண்ணிலியே,", "அந்த ஊரில் 'ஆர்ஃபனேஜ்' வைக்கலியே!", "ஜம்மு வைஷ்ணவி பார்க்காமலே படுக்கையில் விழுந்துட்டோமே!", "வாயால் நாலு நாமாவைக் கத்தக்கூட முடியாமல் ஆயிட்டோமே!" என்றுதான் வருத்தப்படுகிறார்களே தவிர, இனிமேலாவது இருந்த இடத்தோடு, வெளி கார்யம், வெளி உபகரணம் எதுவுமில்லாமல் செய்யக்கூடிய ஞான விசாரத்தில் இறங்குவோம் என்று த்ருப்தியாகப் பண்ணக்கூடியவர்களைப் பார்ப்பது துர்லபமாகவே இருக்கிறது.

"ஸாதாரணமாக ஒரு ஜீவனுக்கு நிறையக் கர்ம சேஷம் இருப்பதால் அது ஒரு ஜன்மாவில் பூராவாகத் தீர்க்கப்படுவதற்கில்லை. அதனால்தான் இவர்கள் ஒரு வாழ்நாள் முழுதும் தாங்கள் எடுத்துக்கொண்ட ஏதோ ஒரு த்வைத ஸாதனை யிலேயே போகவேண்டியிருப்பது, 'யோக ப்ரஷ்டர்'களின் கணக்கில் இவர்கள் அடுத்த ஜன்மத்தில், இப்போது விட்ட இடத்தில் தொடங்கி அத்வைதத்துக்கு வருவார்கள்" - என்று இதற்கு ஒரு காரணம், அல்லது

ஸமாதானம் சொல்லலாம்.

இன்னொன்று, எனக்குத் தோன்றினதைத்தான் சற்றுமுன் சொன்னேன். அதாவது த்வைதம்தான் லக்ஷ்யம் என்று வைத்துக்கொள்ளாதவர் விஷயத்திலும், அல்லது அப்படி முதலில் வைத்துக்கொண்டாலும் அதற்கு ஆரம்ப கட்டத்திலுள்ள த்வைதமான ஸாதனைகளிலேயே ஒரு பிடிப்பு ஏற்பட்டு அதனால் லக்ஷ்யத்தில் கவனம் தப்பி போனவர் விஷயத்திலும் இந்த ஸாதனைகள் அத்வைதத்துக்கு உயர்த்திவிடாமல் தங்கள் மட்டத்தோடேயே நின்று விடுகின்றன போலிருக்கிறது என்று எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்.

த்வைத மோக்ஷத்தைச் சொன்ன பல மஹான்கள் அப்புறமும் கூட வேறு மஹான்களாக அவதரித்ததாகச் சொல்கிறார்கள். இவர்கள் எத்தனை தடவை அவதரித்தாலும் அந்த த்வைத்தையேதான் சொல்லியிருக்கிறார்கள். ஏன்? "அத்வைதம் வேண்டாம், த்வைதம்தான் லக்ஷ்யம்" என்று அவர்கள் இருந்ததாலேயே, "உன் இஷ்டப்படியே உனக்குக் கொடுக்கிறேனப்பா" என்று ஈச்வரனே வைத்திருக்கிறானோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

திருடனைப் போக்கிய பிற்பாடு, அப்படிப் போக்கினார்களே என்பதால் போலீஸ்காரர்களிடமே ப்ரியம் ஏற்பட்டு அவர்களிடம் உறவு கொண்டாடினால் எப்படி? இப்படித்தான், ரொம்பவும் கெட்ட சக்திகளிலிருந்து விடுபடுவதே முதல் தேவையாக இருப்பவர்கள், முடிவாகச் சேரவேண்டிய லக்ஷ்யத்தை விட்டுவிட்டு, இடைநிலையில் கெட்டதைப் போக்கிக் கொள்வதற்காகப் பின்பற்றிய ஸாதனா மார்க்கத்திடமே பற்று வைத்து அதையே லக்ஷ்யமாக்கிக்கொள்ளும் போது ஆகிறது.

தேவாஸுரப் போரில் முதலில் அஸுரர்கள்தான் போக வேண்டும். அதை தேவ சக்திகளாலேயே ஸாதித்துக் கொள்ளவேண்டும், அப்புறம் தேவர்களையே பிடித்து வைத்துக்கொண்டால், இவர்களும் நமக்கு வேறுபட்டவர்கள்தானே? நம்முடைய ஆத்மா இல்லையே நல்ல குணங்களைத்தானே தேவ சக்திகளென்றும், கெட்ட குணங்களை அஸுர சக்திகளென்றும் சொன்னோம்? எந்த குணமானாலும் அது நிர்குண ஆத்மாவைக்

சேர்ந்ததாகாதே!குணம் மனஸின் ஸமாசாரமல்லவா? இந்த மனஸ் என்பது ஆத்மாவுக்கு வேறானது, அதனால்தான் த்வைதத்தின் அத்தனை கஷ்டமும் என்றுதானே விஸ்தாரமாகப் பார்த்தோம்? ஆகையால் நல்ல குணங்களென்பதும் போனால்தான் ஆத்மானுபவம் என்ற நித்யானந்தத்தைப் பெறமுடியும். வேதாஸுர யுத்தத்தில் அஸுரரைப் போக்ககடித்துக் கொண்டால் மட்டும் போதாது. அப்புறம் தேவர்களும் ஆத்ம சாந்திக்கு அன்யமாகவே இருப்பார்கள். 'அன்யம்' என்ற வார்த்தை 'சத்ரு' என்பதைப் போலக் கடுமையாயில்லாவிட்டாலும் இரண்டுக்கும் தாத்பர்யம் ஏறக்குறைய ஒன்றேதான். ஆகையால் முடிவாக அன்ய ஆஸாமியே இருக்கப்படாது. யுத்தம் செய்யவே தெரியாத ஆத்மா மட்டுமாக இருக்க விட்டாலொழிய முடிவான விமோசனமில்லை.

ஜீவனுக்குள்ளே தேவாஸுர யுத்தம் நடக்கிறது என்று சொல்கிறபோது ஜீவன் என்கிறது யார்? ஜீவபாவமுள்ள மனஸ்தான், ஆத்மா இல்லை. ஆத்மாவை எந்தப் போராட்டமும் பாதிக்கமுடியாதே யுத்தத்துக்கு ஆச்ரயமாக, அடிப்படையாக இருக்கிற ஜீவனே போனால்தான் ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் ஏற்படும். யாரே ஒரு ஆஸாமியை வைத்துத்தான் ஒரு யுத்தம் என்றால் அந்த ஆஸாமியே போய்விட்டால்தானே அப்புறம் நிச்சயமாக யுத்தம் நடக்கவே முடியாது? மனஸ் என்ற ஆஸாமியே போனால்தான் தேவாஸுர யுத்தம் தீருவது. முதலில் கெட்ட சக்திகளான காம க்ரோதாதிகளை ஜயிக்கச் சொன்னார் பகவான். அப்புறம், நன்றாக ஆகிவிட்ட மனஸை, அதாவது தேவசக்திகள் கூடியதாக உள்ள மனஸை வைத்துக்கொண்டு அப்படியே இருந்துவிடும்படியாக அவர்கள் சொல்லவில்லை. அந்த மனஸையும் அதற்குப் பரமான ஆத்ம வஸ்துவில் அடக்கி, இல்லாமல் பண்ணிவிடு என்றுதான் முடித்திருக்கிறார்.

## தேவசக்திகளும் பீடிப்பதுண்டு

நாமே தேவசக்திகளை, அல்லது இன்னொரு உபமானம் சொன்னபடி போலீஸ்காரர்களை விடமாட்டேன் என்று ஒட்டிக்கொள்வது ஒன்று. இன்னொன்று, அந்த சக்திகளே அவற்றை நாம் விட்டுவிட்டு மேலே ஆத்மாவுக்கு போக முடியாதபடி நம்மைத் தடுத்துப் பிடித்து வைத்துக் கொள்வதாகும். நமக்கும் அவற்றின் பிடிப்பு பிடித்து உடன்பட்டு இருந்துவிடலாம். நமக்கு அவை தரும் ஸந்தோஷம், சக்தி முதலானவற்றில் மயங்கி ஏமாந்து அவற்றின் பிடிப்பை ரஸித்து ஏற்றுக் கொண்டுவிடலாம்.

போலீஸ் டிபார்ட்மென்டிலேயே சில பேர் - இந்தக் காலத்தில் 'கரப்ஷன்' இல்லாத இடமேயில்லை என்கிறார்கள் அதனால் போலீஸில்கூட யாராவது சில பேர் - திருடர் உபத்ரவத்தைத் தாற்காலிகமாகப் போக்கினவிட்டு, அப்படிச் செய்ததற்காக ப்ரதி ப்ரேயாஜனம் எதிர்பார்த்துக்கொண்டு, இந்த மாதிரி ப்ரயோஜனம் விடாமல் கிடைத்துக் கொண்டே இருக்கணும் என்பதற்காகத் தாங்களே கூடத் திருட்டுப் பயத்தைப் பரப்பிக்கொண்டு ஜனங்களோடு உறவு விடாமல் செய்துகொள்வதாகக் கேள்விப்படுகிறோம். இதைப் போலத்தான் தேவ சக்திகளிலேயே ரொம்பவும் உத்தமமானவையாக இல்லாமல் மத்யமமாகவும் மத்யமத்தைவிடக் கீழாகவும் இருக்கிறவை ஒருத்தனைத் தங்கள் ஆளுகையிலிருந்து போய்விடாமல் இருத்திக் கொள்ளப் பார்ப்பதும் உண்டு.

மநுஷ இயற்கை என்பதில் அடங்கிய அநேக குணங்களுக்கு அஸுர, தேவ ரூபங்கள் உண்டு. வெளி இயற்கை என்பதன் forces-க்கும் 'சக்திகளுக்கும்' தேவாஸுர ரூபங்கள் உண்டு. இவற்றிலே தேவத்தன்மை உடையவை என்று சொல்லக்கூடியவற்றில் சிலவும்கூட ஒரு ஜீவனை எல்லலாத் தன்மைகளுக்கும் அப்பாற்பட்டட (ஆத்ம) ஸ்தானத்துக்குப் போகவிடாமல், தங்களிடமே கட்டுப்படுத்திக்கொண்டு அவன் மூலமாகத் தங்கள் இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்வதுண்டு.

ஸாதகர்களுக்கு ஒரு கட்டத்தில் ஸித்தி, கித்தி என்று ஆச்சர்யமான சக்திகள் உண்டாகி அவர்கள் அதிலேயே

ஒரேயடியாக ஈடுபட்டு ஆத்மாவை மறந்துபோவது இம்மாதிரியான சக்திகளின் ஆதிக்கத்தினால்தான்.

இவை எல்லாவற்றுக்கும் மேலே உள்ள ஈச்வரனிடம் நமக்கு அசையாத பிடிப்பு இருந்துவிட்டால் அப்போது இவற்றால் நம்மிடம் வாலாட்ட முடியாது. ஈச்வரன் என்று ஸகுணமாகத்தான் நினைத்துப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்பதில்லை. ஆத்மா என்று அந்த நம் இறுதி லக்ஷ்யமான வஸ்துவை, அதுதான் நமக்கு லக்ஷ்யம் என்று குறி தப்பாமல் கவனத்தில் வைத்துக் கொண்டிருந்தாலும் அதிலே நம்மை சேரப் பண்ணும் ஈச்வரன், இடையூறு உண்டாக்கப் பார்க்கும் அஸுரர்கள் தேவதைகள் ஆகியவர்களுடைய பீடிப்பு நமக்கு இல்லாமல் பார்த்துக்கொள்வான், பார்த்துப் பார்த்து ரக்ஷிப்பான்.

ஈச்வர சக்தியை நிரம்பப்பெற்று, தாங்கள் பரப்ரஹ்ம வஸ்துவே என்ற ப்ரஜ்ஞான நிலையில் எப்போதும் உள்ளூர உள்ள உத்தம தேவதைகள் ஜீவனுடைய ஞான லக்ஷ்ய ஸித்திக்கு இடையூறு செய்யவே செய்யாது. இப்படிப்பட்ட ரத்ன த்ரயமாக ஈச்வரன், அம்பாள், மஹாவிஷ்ணு மூன்று பேரும் இருக்கிறார்களென்று அநேக காரணங்கள் காட்டி அப்பயய்ய தீக்ஷிதர் நமக்கு உறுதிப்படுத்திக் கொடுத்திருக்கிறார். இன்னம் பிள்ளையார், ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி லக்ஷ்மி, ஸரஸ்வதி போன்றவர்களும், ராம-க்ருஷ்ணாதி அவதாரங்களும் இம்மாதிரியானவையே.

குறியைப் பொறுத்தே இறைவன் அருள் ஆனால், இரண்டு விஷயத்தை மறக்காமல் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஒன்று - இருளன், வீரன், காட்டேரி மாதிரியான தேவதைகளைக்கூட அது ஏதோ ஒருவிதமான சக்தி படைத்த ஒரு வ்யக்திதான் என்று குறுக்கி நினைக்காமல் அது பரமாத்மாவே, ஈச்வரனே என்று நினைத்து, பரமாத்மாவின் ஒரு ரூபம் என்றே வழிபட்டால் வாஸ்தவமாகவே அவற்றுக்குள்ளேயும் உள்ள பரமாத்மா அநுக்ரஹம் செய்வான். இருளனாக, காட்டேரியாக அவை இருந்து பண்ணக்கூடிய இடைஞ்சலை அவை பண்ணமுடியாதபடி பார்த்துக்கொள்வான். உத்தமமான ஞானத்தைக் கொடுப்பான்.

இரண்டு - இப்போது சொன்னதற்கு இது மறுகோடி. ஸாக்ஷாத் ஈச்வரனை, பரமாத்மாவைக்கூட 'அவன் நமக்கு வேறாகவே இருக்கிறான், அப்படி வேறாகவே இருந்துகொண்டிருக்கட்டும், அந்த நிலையில் அவன் தரும் ஆனந்தமே போதும், அத்வைதம் வேண்டாம்' என்று பிடிவாதமாக நினைத்து பக்தி பண்ணினால் ஈச்வரன் ஞானத்தைக் கொடுக்காமல் "உன் இஷ்டப்படியே த்வைதமாக இருந்துவிட்டுப் போ" என்று விட்டு விடுவதாகத்தான் பெரும்பாலான உதாரணங்களிலிருந்து தோன்றுகிறது.

இதிலே இன்னம் கொஞ்சம் பகுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. நிரம்ப பக்தியுள்ளவர்களாக, பக்தியிலேயே த்ருப்தியுள்ளவர்களாகச் சிலர் இருக்கலாம். இவர்கள் அத்வைதத்தைப் பற்றி அறியாதவர்களாகவோ, அது வேண்டுமென்று குறிப்பாகக் கவலைப்படாதவர்களாகவோ இருக்கலாம். ஆனாலும் தீர்மானமாக, "அத்வைதமா? அது நமக்கு வேண்டவே வேண்டாம்" என்று பிடிவாதத்துடன் நினைக்காதவர்களாகவும் இருக்கலாம். பக்தியே த்ருப்தியாகத்தானிருக்கிறது என்றாலும், ஞானம் என்று அத்வைதமாக ஒன்று வருமென்றால் அது வேண்டியதில்லை என்று ஒதுக்கிவிடாமல் ஏற்றுக்கொள்ளக்கூடியவர்களாக இவர்கள் இருக்கலாம். இப்படி இருந்தால்கூட ஈச்வரனே இவர்களுக்கும் தன் நிர்குண நிலையைத் தெரியப்படுத்தி, அதில் இவர்களுக்கு ஈடுபாடு ஏற்படும்படி அநுக்ரஹித்து, முடிவில் ஞான மோக்ஷம் தந்துவிடுவான்.

பகவான், "நீ என்னை எப்படி நினைக்கிறாயோ அப்படி பக்தி பண்ணு, அப்படிப் பண்ணிக் கொண்டே போனால் நான் வாஸ்தவத்தில் உள்ளே எப்படியிருக்கிறேனோ அந்த ஸ்வரூபத்தை நீ உள்ளபடி புரிந்துகொண்டு எனக்குள்ளே ப்ரவேசித்து ஐக்யப்படுமாறு பண்ணிவிடுகிறேன்" என்று சொன்னதாகச் சொன்னேன். அது அத்வைதமே லக்ஷ்யமானாலும் நிர்குணமாக த்யானம் பண்ணத் தெரியவில்லை என்பதால் ஏதோ ஒரு ரூபத்தில் வழிபடுகிறவர்களைக் குறித்து மட்டும் பகவான் சொன்னதல்லவென்றும், இப்போது சொன்ன கோஷ்டியைப் போல், அத்வைதத்தைப் பற்றி நினைக்காமல்

பக்திக்காகவேதான் பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலும், அதன் முதிர்ச்சியில் த்வைத ஞானம் பிறக்குமானால் 'அது வேண்டாம்' என்று தள்ளாதவர்களையும் குறிப்பது என்றும் கொள்ளலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**திருமூலர், திருவள்ளுவர் அறிவுரை**

மொத்தத்தில் விஷயம் என்னவென்றால், அத்வைதந்தான் குறி என்றோ, அல்லது அத்வைதம் வேண்டவே வேண்டாம் என்பதாக த்வைதமே குறியாகவோ ஒரு ஜீவன் எப்படி நினைக்கிறானோ அதற்கேற்பத்தான் அவர்களுக்கு அத்வைத அல்லது த்வைத ஸித்தியை ஈச்வரன் அருளுகிறான்

"ஆசை அறுமின்கள்!ஆசை அறுமின்கள்!

ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்!"

என்று திருமூலர் சொன்னதும்,

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு

என்று திருவள்ளுவர் சொன்னதும் ஒன்றுக்கொன்று வித்யாஸமாயிருப்பதாகத் தோன்றினாலும், இப்போது நாம் பார்த்துக்கொண்டு வந்த இரண்டு விதமானவர்களில் ஒவ்வொருத்தரை உத்தேசித்துச் சொன்னதுதான். இப்படிப் புரிந்துகொண்டால் இரண்டு உபதேசமுமே ஸரியானதுதான் என்று தெரியும்.

"ஸத்ய தத்வம் வாஸ்தவத்தில் எப்படியிருக்குமோ அப்படியே நமக்குத் தெரியட்டும். நாம் அதை ஸகுணமாக நினைத்து த்வைதமாக பக்தி பண்ணினாலும் அது நிர்குணமாக இருந்து அத்வைதமான ஞானத்தினால்தான் அடையத்தக்கதாக இருந்தால் நாம் அதை அப்படி அடையும்படியாகவே அது

பண்ணுமானால் பண்ணட்டும்" என்று நினைப்பவர்களுக்கு அல்ல திருமூலரின் உபதேசம். ஸகுணமான ஈச்வரனிடம்தான் பற்று வைப்பது என்பதாக (பக்தி எனும்) தங்களுடைய ஸாதனா மார்க்கத்திலேயே பிடிவாதமான பிடிமானம் உள்ளவர்களைப் பார்த்தே திருமூலர் உபதேசம் செய்திருக்கிறார். "இப்படிப் பண்ணாதீர்கள்!ஈச்வரனிடமே யானாலும்கூட ஸகுணமாகத்தான் அவன் நமக்கு வேண்டும் என்ற ஆசையை வளர்த்துக்கொண்டு விடாதீர்கள். 'அந்த ஈச்வரனுக்கும் இன்னொரு ஸ்வரூபம், இந்த ஈச்வர ஸ்வரூபத்தைவிடவும் ஸத்யமான ஒரு ஸ்வரூபமிருக்குமானால் அதன் அநுபவம் நமக்குக் கிடைக்கட்டும்' என்று திறந்த மனஸோடு இருங்கள்" என்பதைத்தான் 'ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்று அவர் சொல்லியிருக்கிறார். ஆசைப்பட்ட லக்ஷ்யத்தைத்தான் ஈச்வரன் கொடுப்பான், அதற்கு மேலே கொடுக்க மாட்டானாதலால், அவனாகிய ஸகுண ஸ்வரூபத்திலே ஆசை வைத்தால் அதற்குமேல் பெற முடியாது என்ற அபிப்ராயத்தில் சொல்கிறமாதிரி இருக்கிறது.

எல்லாவிதமான ஆசையும் போகவேண்டும், (ஆசை யெல்லாம் போவதென்றால் மனஸ் போனால்தானே முடியும்? - இப்படி மனஸ் அடிபட்டுப் போய் ஞானஸித்தி பெற வேண்டுமென்று லக்ஷ்யம் வைத்துக்கொண்டிருப்ப -வர்களைப் பார்த்து ஆசார்யாள் ஞானத்துக்கு ஸகுணோபாஸனையை உபாயமாக வைத்தார். அவர்களை உத்தேசித்தேதான், ஆசார்யாளைப்போலத் திருவள்ளுவரும் ஈச்வரனிடம் பற்று வைக்கச் சொல்கிறார். இவர் 'அட்வைஸ்' பண்ணுகிறவர்களுக்கு ஈச்வரனிடம் பற்று இருந்தாலும் அதுவே லக்ஷ்யம் என்று வைத்துக்கொண்டு விடவில்லை. எல்லாப் பற்றும் அற்றுப்போன ஸ்திதிதான் அவர்களுடைய லக்ஷ்யம். அதே மாதிரி அப்போது அந்த ஈச்வரனும் இவர்களை த்வைதப் பற்றுடன் நிறுத்திவிடுவதில்லை. த்வைதப் பற்றோடு நின்று போககிறவர்களிடம் அவனும் அப்படி த்வைதமான பற்றுள்ளவனாகத்தான் தன்னையும் நிறத்திக்கொள்கிறான். எப்போதும் அவர்களுடைய பக்தியை ஏற்பது, தாஸ்யத்தை ஏற்பது, கருணை செய்வதுஎன்றால் அவனும் த்வைதப்பற்றுறவுதானே அவர்களிடம் வைத்திருப்பதாக அர்த்தம்? ஆனால் அங்கே திருவள்ளுவரோ அவனைப் பற்றற்றான்" என்றே சொல்கிறார்.

கடவுள் என்றோ, பகவான் என்றோ, ஆண்டவன் என்றோ எந்த வார்த்தையாலும் ஈச்வரனைச் சொல்லாமல் "பற்றற்றான்" என்றே இங்கே அத்விதீய வஸ்துவாகப் பெயர் கொடுத்திருக்கிறார். 'நீ ஈச்ரவன் என்று பற்றிக்கொள்வதன் வாஸ்தவத்தில் பற்றற்ற அத்வைத ஸ்வரூபம்.. அதனால் நீ லக்ஷ்யமாகக் கொண்டிருக்கிற பற்றற்ற அத்வைத ஸ்திதியில் உன்னை அவன் சேர்த்துவிடுவான். பற்று அறுக்க விரிம்பியும் முடயாதவர்கள் ஞானத்துக்கே நேரே ப்ரயாஸை பண்ண வேண்டியதில்லை. அவர்களுடைய லக்ஷ்யமான பற்றற்ற பொருள்தான் பற்றும் படியாக ஈச்வரனாக ஆகியிருப்பது. இப்படி 'ஆகியிருப்பதாக' இல்லாமல் உள்ளபடி இருப்பதான நிலையில் அந்த ஈச்வரனே 'பற்றற்றான்' என்பதை மறந்து போகாமல் அவனை பக்தியில் பற்றிக்கொண்டால் அவனே பற்றுவிட்ட ஞானத்துக்குத் தூக்கி விடுவான்" என்று இத்தனை அபிப்ராயத்தையும் உள்ளே அடக்கித்தான் ரத்னச் சுருக்கமாக இருண்டு வரி பண்ணிவிட்டார்.

ஆசையிலேதான் ஆரம்பித்தோம். அனர்த்த பரம்பரை அதிலிருந்துதான் என்று ஆரம்பித்து எத்தனையெத்தனையோ தினுஸாக ஆசைகளைப் பற்றிப் பார்த்தோம். ஆசையின் அந்த அஸுர பரம்பரைகளை தேவ சக்திகள் என்று சொல்லக் கூடிய உயர்ந்த நல்ல குணங்களால் ஜயித்து அடக்க வேண்டுமென்று பார்த்தோம். கடைசியில் பார்த்தால் அந்த நல்ல குணங்களான தேவ கணங்களும்கூடக் கெடுதல் பண்ணிவிடமுடியும். எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிற ஈச்வரனிடம்கூட ஆசை என்று வைத்துவிட்டால் ஸத்ய ஸாக்ஷாத்காரம் கஷ்டம்தான் என்கிற அளவுக்குத் தெரிகிறது. நம்முடைய குறி ஆதார ஸத்யந்தான் என்று திர்மானமாக வைத்துக் கொள்ளாவிடடால் நம்முடைய மற்ற குறிகளை நாம் அடையப் பண்ணியே ஈச்வரன் மாயம் செய்துவிடுகிறான் என்று நினைக்கும்படியாக இருக்கிறது. இப்படிப் பலகாலம் பண்ணினாலும், அப்புறம் 'ஐயோ, பாவம்' என்று அவனே உண்மையான, குறிதப்பாத ஞானதாஹத்தைக் கொடுத்து, அப்புறம் அதைப் பூர்த்தி செய்வானென்று வைத்துக்கொள்ளலாம்.

என்றாலும் அவன் என்றைக்கோ அப்படிச் செய்கிறபடிச் செய்யட்டுமென்று இருந்துவிடாமல் நாமும் இடைநிலை

ஸாதனைகளில் அல்லது ஸாதனைகளின் இடைநிலையில் பெற்ற அநுபவங்கள் சக்திகள் முதலியவற்றிலேயே ஆசை மோஹம் கொள்ளாமல், ஆசைக்கே இடம் தராததான அத்வைத லக்ஷ்யத்தை அப்போதப்போதும் நினைத்து உறுதிப்படுத்திக் கொள்வதுதான் ச்லாக்யம். அதுதான் விவேகம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## ஆரம்பத்திலிருந்தே அத்வைத நினைப்பு

முடிவான லக்ஷ்யத்திலிருந்து 'டீஸ்ட்ராக்ட்' ஆகும் (சித்தம் விலகும்) கெடுதலுக்கு, கஷ்டத்துக்கு ஆளாகாமல் எப்படித் தப்புவது என்று கேட்டால், இதற்காகத்தான் ஆரம்பத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சம் நாழியாவது தினமும் அத்வைதத்தைப் பற்றிய நினைப்பை உண்டாக்கிக் கொள்ளவேண்டுமென்பது. அந்தக் கொஞ்சம் நாழி, பத்து நிமிஷமோ, அஞ்சு நிமிஷமோ, அநுபவ பூர்வமாக வராவிட்டாலுங்கூட, வலுக்கட்டாயமாக இப்படி நினைக்கணும், "எத்தனை நல்ல கார்யமானாலும், உத்தமமான ஸமூஹ ஸேவையானாலும், பகவானே ப்ரத்யக்ஷமாகிக் கருணையைக் கொட்டுகிறானென்றாலுங்கூட, இதெல்லாமும் ஆத்மா இல்லை, ஆத்மாநுபவம் இல்லை சாச்வதமான ஸத்யமில்லை, நிரந்தரமான ஸௌக்யம் இல்லை. இதெல்லாமும் மாயைதான். இவற்றில் எதிலே நாம் ஊறிப்போய்விட்டாலும் ஸத்யத்தை சாச்வதமாக அநுபவித்துக்கொண்டு ஆனந்தமாயிருப்பதென்பதில்லை. இது எதுவுமே தொடாத அகண்ட சாந்தமாக ஆகாசம் மாதிரி உள்ள ஆத்மாதான் நாம்" என்று நினைக்கவேண்டும். அஞ்சு நிமிஷமோ, பத்து நிமிஷமோ - அவ்வளவு முடியாவிட்டால்கூட ஒரு நிமிஷம், அரை நிமிஷமாவது, "நாம் எதுவும் என்னவும் பண்ணாத வஸ்து, நம்மை எதுவும் எண்ணவும் பண்ணமுடியாது" என்று ராஜாவாக உட்கார்ந்திருக்க வேண்டும்.

'நாம் எதுவும் பண்ணாத வஸ்து' என்று நினைக்கிறபோதே மனஸிலே ஒரு மூலை எதையாவது நினைக்கப்பண்ணிக்கொண்டுதான் இருக்கும். 'நம்மை எதுவும் என்னவும் பண்ணமுடியாது' என்கிறபோதே ஒரு கொசு கடித்தால்கூட அதைத் தாங்கிக்கொள்ள முடியாமல்தான் இருக்கும். ஆனால் இபப்டி நாம் எதையாவது பண்ணிக்கொண்டு, நம்மை வெளி வஸ்துக்களும் எதுவாவது பண்ணி பாதித்துக் கொண்டும் இருந்தால்கூட, 'பண்ணுகிற, (பாதிப்புப்) பண்ணப்படுகிற நாம்' என்பது 'நிஜ நாம்' இல்லவேயில்லை, இது மாயைதான் என்று திரும்பத் திரும்ப சில நிமிஷங்கள் மனஸிலே நன்றாக ஏற்றிக்கொள்ளவேண்டும். 'மனஸினாலே ஆத்மாவைப் பற்றி நினைப்பது' என்கிற இந்த நிலையிலே மனஸ் இருக்கத்தான் செய்கிறது, நினைக்கத்தான் செய்கிறது, ஆத்மாவாக இல்லாமல் 'ஆத்மாவைப் பற்றி' என்பதாக த்வைதமாகத்தான் வேலை செய்கிறது. ஆனால் கூட இப்படி ஒரு ஆரம்பம் பண்ணினால்தான் இஞ்ச் இஞ்ச் - ஆகவாவது அத்வைதத்துக்குப் போக முடியும். ரொம்பவும் த்வைதத்தில் ஆழ்த்துகிறவை, அத்வைதத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறவை என்று த்வைதத்திலேயே இரண்டு வகையானவை இருப்பதில் ஆத்ம சிந்தனை என்பது இரண்டாவது வகையாகும். சிந்தனை இல்லாமல் போனால்தான் ஆத்மா ஆகையால் ஆத்மசிந்தனை என்பதும் த்வைதம்தான், மனஸினாலே கட்டினதுதான் என்பதிலே ஸந்தேஹமிலலை. ஆனாலும் இது ஆத்மாவுக்குக் கொண்டு போய்ச் சேர்க்க உதவுமென்பதைப் பற்றிக் கொஞ்சமும் ஸந்தேஹமில்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**கட்டவிழ்க்கும் கஷ்டங்கள்**

இப்படி அஞ்சு பத்து நிமிஷம் இருந்துவிட்டு அப்புறம் ஒவ்வொரு பிடுங்கலாக நாம் மாட்டிக்கொள்கிறபோது

அதற்காக வருத்தப்படவேண்டாம். மாயையினால் எக்கச்சக்கமாக ஏற்கெனவே போட்டுக்கொண்ட முடிச்செல்லாம் அவிழ்க்கப்படும் வரையில் பிடுங்கல் இருக்கத்தான் செய்யும் என்று ஸமாதானம் பண்ணிக்கொண்டு அத்தனை முடிச்சையும் ஒவ்வொன்றாக அவிழ்ப்பதற்காக எத்தனை தார்மிகமான கர்மா செய்யணுமோ, எவ்வளவு பூஜை புநஸ்காரம், ஜபம், க்ஷேத்ராடனம் செய்யணுமோ அவ்வளவும் செய்து கொண்டே போவோம். இதிலேயே எத்தனையோ இடைஞ்சல், கஷ்டம் வரத்தான் வரும். சொன்னேனே, வைகுண்ட ஏகாதசி, ஆர்த்ரா தர்சனம் என்று ஸ்ரீரங்கம், சிதம்பரத்துக்குப் போனால்கூட குளிரில் விரைத்து, கூட்டத்தில் மொத்துப்பட்டு அவஸ்தைப்படத்தான் வேண்டியிருக்கிறது என்று!மலை ஏறுவது, அங்க ப்ரதக்ஷிணம், இப்படி எத்தனையோ ச்ரமம் இருக்கத்தான் இருக்கும். பொதுப்பணி என்றாலும் ஒரு வெள்ளக் காட்டிலே, சேற்றிலே, சதுப்பிலே போய் ஆஹாரம் தண்ணி வேளைக்குக் கிடைக்காமல் எத்தனையோ அவஸ்தைப்படவேண்டித்தானிருக்கும். ஆனால் இவற்றைப் பண்ணாமல், 'வெறுமே ஆத்மாவாய் உட்கார்ந்திருக்கிறேன்.' என்று அஞ்சு, பத்து நிமிஷத்துக்கு மேல் 'ட்ரை' பண்ணினால், ஒன்றும் முடியாமல் ஒரே கன்னாபின்னாவில் மனஸ் பிய்த்துக்கொண்டு போகிறதே!'ச்ரமப்படாமல் உடம்பை வைத்துக்கொள்கிறேன்' என்று சும்மா இருக்கப் பார்த்தால், சும்மா எங்கே இருக்க முடிகிறது? சரீரம் கெட்ட கெட்ட அநுபோகங்களைக் கேட்கிறது. ஆக கர்மா, பக்தி பண்ணாவிட்டால் முடிச்சுக்கள் முன்னிலும் பலமாகிக்கொண்டே போகின்றன. அதனாலே, கர்மாவிலும், பக்தியிலும் எத்தனை கஷ்டம், இடைஞ்சல்கள் இருந்தாலும் பட்டுத்தான் ஆகவேண்டுமென்று நினைத்து நிறையக் கர்மாநுஷ்டானம் செய்யவும், ஈச்ரவ பக்தி செய்யவும்தான் வேண்டும்.

இவற்றுக்காகக் கஷ்டப்பட்டாலும் இவை முடிவிலே கஷ்டத்தை தீர்க்கும் கஷ்டங்களாக இருக்கின்றன. இவை கர்மாக் கட்டை அவிழ்ப்பதற்காகப் படவேண்டியவை வ்யாதிக் கஷ்டத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவே ஊசி போட்டுக் கொள்வது, ஆபரேஷன் செய்துகொள்வது முதலான கஷ்டங்களைப் படவேண்டியிருக்கிற மாதிரிதான் இது. 'இதைப் படமாட்டேன்' என்றால் அப்போது சும்மா

அத்வைதமாகவும் இருக்கமுடியாமல், இதற்கும் வராமலிருப்பதால் வேறே காரியம், ஈச்வர பக்திக்குப் பதில் வேறே வஸ்துக்களிடம் பற்று வைப்பது என்றுதான் போய் அதில் இதைவிட ஜாஸ்திக் கஷ்டங்களை வரவழைத்துக்கொண்டு, கர்மா மூட்டையை மேலும் பெரிசாக்கிக் கொள்வதாகவே ஆகும்.

ஆகவே, 'அத்வைதமாயிருப்பதைத் தவிர நமக்கு வேறென்ன கடமை வெச்சிருக்கு?' என்ற எண்ணத்தை அடியிலே ஒரே ஸ்வரமாக ச்ருதி சேர்த்து வைத்துக்கொண்டாலும், மேலே பல ஸ்வரங்களில் பாடுகிறாறப்போல, அபஸ்வரம் தட்டாமல் கவனமாகப் பாடுகிறாற்போல், பல விதமான கடமைகளையும் கவனமாக, ஸின்ஸியராக, பெர்ஃபெக்ட் - ஆகப் பண்ணிக்கொண்டேதான் போக வேண்டும். இல்லாவிட்டால் ச்ருதியோடேயே சேராத அபஸ்வரக் களஞ்சியமாக வேறே எதுவோ செய்வதாகத் தான் இருக்குமே தவிர, சாந்தமாக மௌனமாக ஆகிவிடாது. சப்த ப்ரஹ்மம், நாத ப்ரஹ்மம் என்று அநுஸந்தானம் பண்ணிக்கொண்டு போனால் அதுவே மௌனத்தில் இழைத்து விடுகிறாற்போல, சாஸ்த்ரீய கார்யங்கள் கார்யமில்லாத நிலையிலே முடிவில் இழைத்து விடும், குணோபாஸனை நிர்குணத்தில் இழைத்துவிடும்.

என்ன கார்யம், கடமை பண்ணினாலும் பாரத்தை அவன் தலையில் போட்டுவிட வேண்டும். பட்டுக்கொளள்ளாமல், ஆனாலும், பெர்ஃபெக்டாகப் பண்ணவேண்டும். இது தான் நிஷ்காம்ய கர்மா. அவன் தலையில் போடுவது என்பதுதான் பக்தி. அப்புறம் அவனுடைய தலையிலே போட எந்த பாரமும் இல்லாமல் ஜீவனடைய கர்மச் சுமை முழுதும் தீர்ந்து போய்விடும். 'தான் எதுவும் பண்ணாதவன், தன்னை எதுவும் என்னவும் பண்ணமுடியாது' என்ற நிலைக்கு ஜீவன் வாஸ்தவமாகவே போய்விடுவான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

## நல்லதற்கும் மேலே செல்க

நல்லது, தர்மமானது என்கிற தேவ கணங்களைவிட்டு வைத்தால் இவையும் ஆத்மாவுக்கு அந்யமான மனஸின் பாற்பட்டவையேயாகையால், இவற்றாலும் தொந்தரவு வரக்கூடும் என்ற நினைவு எப்போதும் நமக்கு இருந்து நம்மை ஜாக்ரதைப்படுத்த வேண்டும்.

World War-ல் (உலக யுத்ததில்) Allies(நேசநாடுகள்) என்று ப்ரிட்டன், அமெரிக்கா, ப்ரான்ஸ், அப்புறம் ரஷ்யா முதலானவை ஒருபக்கமும், ஹிட்லர் (ஜெர்மனி), முஸோலினி (இத்தாலி), ஜப்பான் ஆகியவை (அச்சு நாடுகள்) என்று இன்னொரு பக்கமாகச் சண்டை போட்ட போது, இருப்பதற்குள் நேசநாடகள்தான் நல்லவை, ஓரளவு தேவசக்தியோடு கூடியவை என்று தோன்றிற்று. ஹிட்லர், முஸோலினியும், ஜப்பான்காரர்களும் பண்ணினவை அஸுரத்தனமாகத் தெரிந்தன. நல்லவேளையாக நேச நாடுகள் ஜயித்தன. ஆனால் அப்புறம் என்ன ஆச்சி? அவர்களிலேயே இரண்டுபிரிவாகப் பிளந்து போயிருக்கிறார்கள். ஒருத்தரையொருத்தர் எதிர்த்துக்கொள்கிறார்கள். அஸல் யுத்தத்தைவிட மோசமாக ஸதாவும் கிலியிலும் அவநம்பிக்கையிலும் உலகத்தைத் தவிக்கும்படியாகக் "கோல்ட்வார்" நடத்திக்கொண்டிருக்கிறார்கள்.

அவ்வளவு தூரம் போகவேண்டாம். இங்கே நம்ம ஸமாசரத்தை எடுத்துக்கொண்டால், நம்முடைய உசந்த நாகரிகத்தைக் கெடுத்துக்கொண்டிருந்த வெள்ளைக்காரர்களை எதிரத்து ஸ்வதந்த்ரப் போராட்டம் ஆரம்பித்து நடத்தியபோது, அந்தப் போராட்டத்தை நடத்திய தலைவர்களின் தன்மை, அவர்களுடைய கொள்கை முதலியவ்றைப் பார்க்கும்போபது மொத்தத்தில் நல்லதான - அதாவது தேவர்களின் படையான - அம்சங்களே நம்முடைய தரப்பாக இருக்கிறதென்றும், வெள்ளைக்கார ஆட்சி எத்தனை நல்ல வேஷம் போட்டாலும் அஸுரக் கட்சியைப் பேலத் தானென்றும் தோன்றியது. அப்புறம், அவர்களைப் போகப் பண்ணிவிட்டு, ஸ்வதந்த்ர நாடாக நாம் இருக்கும்போது என்ன பார்க்கிறோம்? ஸ்வதந்த்ரப் போராட்டத்தை ஜயித்துக்கொடுத்த, நல்லதாகத் தெரிந்த

கோஷ்டியிலேயே இரண்டு, மூன்று, நாலு என்று பிரிவுகள் ஏற்பட்டு ஒருத்தரை யொருத்தர் அஸுரர்களாக வர்ணித்துக்கொண்டு ஆயுதமில்லாவிட்டாலும் வாய்ச்சண்டை போட்டுக்கொண்டிருப்பதைதான் பார்க்கிறோம். இதிலே யாரைக் கூடிய மட்டும் தேவஸக்திகளோடு சேர்த்துச் சொல்லலாம் என்றே ஸரியாகத் தெரியாமல் ஜனங்களுக்குள் அபிப்ராய பேதங்கள் ஏற்பட்டுப் பிரிந்து பிரிந்து நிற்கிறார்கள்.

எதற்குச் சொல்ல வந்தேனென்றால், எந்த நல்லதும் அப்படியே சாச்வதமாயிருந்துவிடாமல் அதிலும் கெடுதல்கள் வரத்தான் செய்கின்றன. ஆகையினால் நல்லது என்று ஒன்றைப் பிடித்த பிடியாக வைத்திருக்க வேண்டுமென்ற ஆசையும் இல்லாமல், ஆனாலும் இப்போது நம்மைப் பிடித்த பிடியாகப் பிடித்தாட்டுகிற கெட்டதைப் போக்கிக்கொள்ள நல்லவற்றைத்தான் நாம் பின்பற்ற வேண்டுமென்று புரிந்துகொண்டு ஸின்ஸியராகக் கர்மாநுஷ்டானம், பக்தியுபாஸனை செய்துகொண்டே போகவேண்டும். கர்ம யோகம், அப்புறம் பக்தி யோம் என்று சொல்லி முடிவிலே பகவான் நிலை நாட்டின அந்த ஸாங்க்ய (ஞான) யோகத்தையே, அவர் கர்மயோகத்தைச் சொல்வதற்கு முன்னாலும் அஸ்திவாரம் போலப் போட்டுக்கொடுத்ததை மறக்காமல் நாம் ஆரம்பத்திலிருந்தே சிறிதேனும் ஆத்ம த்யானம் வைத்துக்கொள்ளவேண்டும். அப்போதுதான் தேவர்களுக் கிடையிலேயே அல்லது தேவர்களாலேயே சண்டை என்பதற்கும் இடமேற்படுவதற் கில்லாமல், சண்டடிக்கு ஆஸ்பதமாக ஜீவபாவத்துடன் இருக்கிற ஆஸாமியே எடுபட்டுப்போய் ஆத்மா மட்டும் இருப்பதான, சண்டை யறியாத சாச்வதமான சாந்த நிலைக்கு என்றைக்காவது ஒரு நாள், இந்த ஜன்மாவில் இல்லாவிட்டாலும் எந்த ஜன்மாவிலாவது ஒரு நாள்போய்ச் சேர கொஞ்சங் கொஞ்சமாக வழி திறந்துவிடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## அத்வைதம்

## ஆத்ம சிந்தனை அனைவர்க்கும் அவசியம்

ஞான வாசல் கதவு திறந்து உண்மையைக் காண்பது மநுஷ்ய ப்ராணி ஒன்றுக்குத்தான் உரியது என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ப்ராணி வர்க்கங்களில் மநுஷ்யன் ஒருத்தன்தான் தன்னையே பரப்ஹ்மமாகத் தெரிந்துகொள்கிற ஞானத்துக்கு முயல முடியுமென்பதால்தான் "அரிது அரிது மானுடராய்ப் பிறத்தலரிது" என்று சொன்னது. இதையேதான் ஆசார்யாளும் "விவேக சூடாமணி"யில் "ஜந்தூநாம் நரஜந்ம துர்லபம்" என்றார்.

இதனால், மநுஷ்ய ஜன்மா எடுத்த எல்லாரும் சற்றேனும் ஆத்ம விசாரம் செய்து ஞானத்தை அடைவதற்கு ப்ரயத்னம் பண்ணவேண்டும்.

இதற்கு பொழுது கிடைக்கவில்லை என்று சொல்வது கொஞ்சங்கூட ஸரியில்லை. "ரொம்பவும் தாற்காலிகமான ஸந்தோஷங்களை உத்தேசித்தே செய்கின்ற ஸகல கார்யங்களையும் பண்ணப் பொழுது இருக்கிறது. எது சாச்வதமான ஆனந்தமோ, ஸெளக்யமோ அதற்கு ப்ரயத்னம் பண்ணப் பொழுது இல்லை" என்று சொன்னால் நம்மைப்போல அசடு இல்லை என்றுதான் அர்த்தம்.

மாயை, இயற்கை, மனஸ் என்று தினுஸு தினுஸாக இத்தனையை வைத்து பகவான் லீலை செய்கிறது எதற்காக? இவற்றைக் கொண்டு செய்கிற கார்யங்களைக் கொண்டே இவற்றுக்கு அப்பாற்பட்ட ஸதாநந்தத்துக்கு நாம் வழி தேடிக் கொள்கிறோமோ என்று பரீக்ஷை பார்க்கிறதற்காகத்தான். ஆகையால் கர்மா கழிகிற வரையிலே இந்த லோகத்திலே நாம் கடமைகளை, கர்மாக்களை அநுஷ்டானம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டியதுதான். இதிலே தாம்பத்யம், சாப்பிடுகிறது, பொழுதுபோக்குகளை ரஸிக்கிறது எல்லாங்கூட அடக்கந்தான். வரம்பு மீறாமலி ருக்கிறவறை எதுவுமே அந்ததந்த வயஸுக்கட்டம், வாழ்க்கை நிலைகளில் தள்ளு படியில்லை. எல்லாம் நாம் பக்வமாதவற்குப் படிப்படியாக உதவி செய்கிறவைதான்.

ஆனால் இதுகளோடேயே நின்று விட்டு ஆத்ம சிந்தனைக்குப் பொழுதே இல்லை என்றால் - நாம் எத்தனை பீ.ஏ., எம்.ஏ., படித்திருந்தாலும், டாக்டர் பட்டம்

வாங்கியிருந்தாலும் - அசடு என்றுதான் அர்த்தம். ஸம்பாதிப்பது, படிப்பது, குடும்ப வாழ்க்கை நடத்துவது முதலான எல்லாவற்றுக்கும் 'டயம்' இருக்கிறது, நிறைந்த நிறைவைத் தரமடியாத இதற்கெல்லாம் நிறைவைத் தருகிற ஞானத்துக்கு முயற்சி பண்ண 'டயம்' இல்லை என்பது, "குப்பை செத்தையை எல்லாம் சேர்த்து மூட்டி எரிப்பதற்கு 'டயம்' இருந்தது, ஆனால் குளிர் காய 'டயம்' இல்லை" என்கிற மாதிரிதான்!"வேலை செய்யப் பொழுதிருந்தது, கூலி வாங்கப் பொழுதில்லை" என்று சொல்வது போலத்தான் மற்ற ஸகல கார்யத்துக்கும் முடிவு, லக்ஷ்யம் ஆத்மாவில் கொண்டு சேர்ப்பதுதான். அப்படிப்பட்ட ஆத்மாவைப் பற்றி பாவனையாகவாவது த்யானம் செய்வது, அஞ்சு பத்து நிமிஷமாவது இப்படி த்யானம் செய்வது என்று வைத்துக் கொள்ளாவிட்டால் நாம் செய்யும் அத்தனை கார்யமும் தங்களையே முடிவாக்கிக்கொண்டு த்வைதத்தின் அசாந்திகளையே கொடுத்துக்கொண்டிருக்குமே யொழிய ஆத்மாவுக்கு ஏற்றிவிடாது. அந்த முக்கியமான கார்யத்தைக் கொஞ்சம் 'ட்ரை' பண்ணிப் பார்ப்பதற்கு 'டயம்' இல்லை. இல்லாவிட்டால் மனஸ் பக்வப்பட்டு வரவில்லை என்று சொல்வதெல்லாம் நொண்டி ஸால்ஜாப்புகள்தான். முயற்சி பண்ணி பண்ணித்தான் மனஸைப் பக்வப்படுத்த வேண்டுமே தவிர, பக்வமில்லை என்பதால் முயற்சி பண்ணுவதற்கில்லை என்பது தலைகீழ் வாதம்.

ஸங்கல்ப பலம் இல்லாததால் தான் இப்படி வாதிப்பது நம்மைப் பற்றியே நமக்குத் தன்னம்பிக்கையோ, ஈச்வராநுக்ரஹத்தில் நம்பிக்கையோ இல்லாததால்தான் சாக்குச் சொல்லத் தோன்றுகிறது.

Where there is a will there is a way: மனமிருந்தால் வழியுண்டு. பொய்யான மனஸைப் போக்கிக்கொண்டு மெய்யான ஆத்ம ஸ்வரூபமாவதற்கு முயற்சி பண்ண வேண்டுமென்று மனமிருந்தால் ஞான வாசல் திறக்க நிச்சயம் வழி உண்டு.

Will -ஸங்கல்ப உறுதி - ஏற்படாததற்கு என்ன காரணம்? வழி திறந்து ஞான பூமிக்குப் போகணும் என்பதன் அவச்யம் நமக்குத் தெரியாமலிருப்பதுதான். பெரிய மழையிலே, அல்லது கொளுத்துகிற வெயிலிலே நட்ட நடுத் தெருவிலே

மாட்டிக் கொண்டோமானால் எந்த வீட்டிலாவது வாசல் கதவு திறந்திருக்காதா என்று எத்தனை தவிப்போடு தேடுவோம்? எங்கேயாவது உள்ளே போய் ஒதுங்கியாக வேண்டுமென்று அப்போது தீவ்ரமாக எண்ணம், அதாவது ஸங்கல்பம் இருப்பதால், மூடியுள்ள ஏதாவதொரு கதவை இடித்தாவது திறக்கப் பண்ணி வழி ஏற்படுத்திக் கொள்கிறோம். இம்மாதிரி ஆத்மாவுக்குள்ளே போய் ஸ்வஸ்தமாக ஸம்ஸார வெய்யில், அல்லது ஸம்ஸார ப்ரளயம் பாதிக்காமல் இடம் தேடிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமில்லாததால்தான் விமாசனத்துக்கான ப்ரயாஸை பண்ணாமலே இருக்கிறோம்.

இப்படியிருப்பவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருக்கிற கஷ்டத்தை, பொய்யை எடுத்துக்காட்டி, விடுதலைக்கான ஆர்வத்தை ஸங்கல்பத்தை ஏற்படுத்தி, அப்புறம் மார்க்கத்தையும் சொல்லிக் கொடுப்பதற்குத்தான் மடாலயங்கள் இருக்கின்றன. உங்களை இவ் விஷயமாகச் சிந்தனையைத் திருப்பபச் செய்வதுதான் எங்கள் மாதிரியானவர்களின் கடமை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**அத்வைதம்**

**ஆலோசித்து அறிய வேண்டியவை**

அதனாலே, கொஞ்சம் உங்களையே ஆலோசித்துப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இப்போது வாழ்க்கையில் உங்களுக்கு நிம்மதியாயிருக்கிறதா? ஏதோ அப்பப்போ கொஞ்சம் ஸந்தோஷம், த்ருப்தி ஏற்பட்டாலும், ஒன்று மாற்றி ஒன்று ஏதோ இழுபறிச் சக்திகளிடம் மாட்டிக் கொண்டு சாந்தியில்லாமல் ச்ரமப்பட்டுக் கொண்டே இருக்கும்படிதானே இருக்கிறது? 'ஆஹா' என்று, 'அக்கடா' என்று, "நமக்குக் கவலையே இல்லை, பயமே வராது, துக்கமே வராது" என்றெல்லாம் சொல்லும்படியான உறுதிப்படுத்திய சாந்தியாயிருக்கிறதா? இல்லையோல்லியோ?

இல்லை என்றுதான் பதில் சொல்வீர்கள்.

ஸரி, எதனால் இத்தனை சலனம், பறப்பு? இழுபறி, ச்ரமம் எதனால்?

இதை யோசித்தீர்களானால், யாராலும் க்ஷணம்கூடச் சும்மா இருக்காமல் ஏதாவது கார்யம் செய்துகொண்டே இருக்கத் தோன்றுவதாயும், இந்தக் கார்யங்களினால்தான் சாந்தியைக் குலைக்கிற எல்லாம் வந்து சேருவதாயும் தெரியம். கார்யமேயில்லாவிட்டால்தான் சாந்தி என்பது இரண்டும் இரண்டும் நாலு என்கிற மாதிரி எவருக்கும் தெரியும்.

'எதற்காகக் கார்யம்? என்பது அடுத்த கேள்வி. இதை யோசித்துப் பாருங்கள். பார்த்தால் பலவிதமான ஆசைகளில் எதுவோ ஒன்றின் பூர்த்தியை முன்னிட்டுத்தான் ஒவ்வொரு கார்யமும் என்று புரியும்.

கோபத்தினாலோ மோஹத்தினாலே வேறெந்த உணர்ச்சியினாலோ செய்கிற ஸகல கார்யங்களுங்கூட, அந்த உணர்ச்சிகளுக்கெல்லாம் அடியிலே மூலமாகப் பதுங்கியிருக்கிற ஒரு ஆசையினாலேதான் என்று கொஞ்சம் தீர்க்கமாக ஆலோசித்துப் பார்த்தால் புரிந்துவிடும்.

ஸரி, கார்யத்தை நிறுத்திவிடலாமா என்று பார்த்தீர்களானால், அது லேசில் ஸாத்யமில்லை என்பது தெரியும். ப்ரக்ருதி (நேச்சர்) ஒருத்தனை ஏதாவது கார்யத்தில் ஏவிக்கொண்டேதானிருக்கிறதுஎன்று தெரியும்.

அதனாலேதான், சாஸ்த்ரம் இந்த ஸ்டேஜில் என்ன சொல்கிறென்றால், 'கார்யம் செய்துவிட்டுப் போங்கள். ஆனால் ஆசை வயப்பட்டுச் செய்வதைக் குறைத்துக் கொள்ளுங்கள். ஸ்வந்த ஆசைக்காகச் செய்வது என்றில்லலாமம் உலக நலனுக்காக கார்யங்களைப் பண்ண ஆரம்பியுங்கள்" என்கிறது. உலகத்தில் பலதரப்பட்ட கார்யங்கள் நடக்கவேண்டியிருப்பதால், அவற்றை அழகாக 'ஸ்வதர்ம்ம' என்று பிரித்து ஒவ்வொருவருக்கும் பாரம்பர்யமாக ஒன்றைக்கொடுத்திருக்கிறது.

அந்தப்படி பண்ண ஆரம்பியுங்கள். அப்புறம் தெரியம், ஸொந்த ஆசைக்கு அடம் கொடுக்காமல்தான் இருக்கத்தான் கர்மாநுஷ்டானம் ஸஹாயம் செய்கிறதே தவிர, அந்த ஆசை எழும்பாமல் அழிந்து போவதற்கு நேராகப் போராடி

ஜயித்துத் தரவில்லை என்று. ஸ்வதர்ம கார்யங்களானவை ஸ்வய ஆசைகள் படருவதற்கு அவகாசம் தராமல் 'டைவர்ட்'தான் செய்கின்றனவே தவிர, அவற்றை அப்படியே அழித்துவிடுவதற்குப் பயன்படுவதில்லை என்று தெரியும்.

இந்த விஷயத்திலே ஸஹாயம் செய்யத்தான் சாஸ்த்ரங்க்ள் பக்தியைச் சொல்லியிருப்பது. ஆசை உண்டாவதற்கு உற்பத்தி ஸ்தானம் மனஸ். அதை இந்தரியங்களிலிருந்து ஈச்வரன்கிட்டே திருப்பினால்தான் நேராக ஸ்வய ஆசைகளை நிறுத்தமுடியும். ஆனால் முதலில் ஸ்தூல தேஹத்தில்தான் ஜனங்களுக்குத் 'தான்' என்ற எண்ணம் அதிகமிருப்பதால், தேஹத்தைக் கொண்டு செய்யும் கார்யத்தைத் தூய்மைப்படுத்தித் தருவதற்கே முதலில் முக்யம் கொடுத்து, அப்புறம் தான் ஸூக்ஷ்மமான மனஸை பீமீணீறீ பண்ணுவதற்குப் பிராதான்யம் கொடுத்திருக்கிறது. இப்படி ரெண்டாவது கட்டத்திலே மனஸிலிருந்து ஆசைகளை எல்லாம் நீக்கி ஈச்வர பக்தி பண்ணிவந்தாலே ஸம்ஸார இழுபறி பெருமளவுக்குக் குறைந்து, பரிசுத்தமான ஆனந்தமும் சாந்தியும் ஒரு கணிசமான அளவுக்கு உண்டாகிவிடும்.

ஆனாலும்கூட அதற்கும் மேலே ஆலோசனை பண்ணிப் பார்த்தீர்களானால் இப்போதும் கூடப் பூர்ண அமைதியில்லை. சாச்வதமான சாந்தியல்லை என்று தெரியும். பக்தி பண்ணும் போதும் அதிலேயே எத்தனையோ தாபங்கள் இருப்பது தெரியும். ஈச்வரன் என்று ஒருத்தனைப் பக்தி பண்ணுகிறோமே, அவனை உள்ளுக்குள்ளே ஊறி அநுபவிக்கவில்லை என்று தெரியும். அவனுடைய நிஜமான தன்மை என்ன என்று பக்தியிலே தெரியவில்லை, நாம் எதை அவன் தன்னை என்று நினைத்தாலும் அப்படி மட்டும் வந்துதான் அவன் தன்னைக் காட்டிக் கொள்கிறாறென்று தெரியும். அதோடுகூட, இந்த பதியிலே அவனுடைய உள் தன்மை என்னவென்று தெரியாதது போலவே நம்முடைய உள்தன்மை - நிஜ ஸ்வபாவம் - என்னவென்பதும் தெரிந்துவிடவில்லை என்று தெரியும். பக்தி பண்ணும் மனஸோடு நாம் முனைந்து விடவில்லை என்பது தன்னை மறந்து பக்தி ஆவேசத்தில் கிடக்கிற ஸமயங்களில் தெரிந்தாலும், அப்போதும் மனஸுக்கு மேலான அந்த நாம் என்ன என்பது அநுபவ பூர்வமாகத் தெரியவில்லை என்றே

இருக்கும்.

இதைப் பற்றி நன்றாக ஆலோசனை பண்ணும்போது, ஆசை போவது மட்டும் ஸம்ஸாரப் போராட்டம் தீர்வதற்குப் போதாது என்பது தெரியும் .பக்தி பண்ணும் மனஸுக்கும் குறை, தாபம், கஷ்டம் இருப்பது தெரிவதால் மனஸும் போனால்தான் யுத்தம் நிற்கும், சாச்வதமான சாந்தி உண்டாக்கும் எனறு தெரியும்.

ஞான நூல்களை ச்ரத்தையோடு அப்போது பயின்றால், ஏகமான ஆத்மாவைப் பற்றியும், அதுவே ஈச்வரனாகவும் ஜீவனாகவும் ஆகியிருபப்தைப் பற்றியும் தெரிந்துகொள்ளலாம். தற்போது மனஸின் மேல் மட்டத்தில் தெரிந்துகொள்வது போலில்லாமல், அப்போது பரிசுத்தி பெற்றுவிட்ட அந்த மனஸின் உள்ளேளயே ஆழமாகப் பதியும்படியாக வேதாந்த ஞான உண்மைகளைத் தெரிந்துகொள்ளலாம்.

இப்டிபயெல்லாம் புரிந்துகொண்டால்,

வெய்யிலில் , வெள்ளத்தில் மாட்டிக்கொண்டால் ஒதுக்கிடம் வேண்டிக் கதவைத் தட்டுவதுபோல, strong-ஆன will- ஓடு way-யைத் தேடி, ஓடி, மோக்ஷ வாசல் கதவைத் தட்டுவதில் தீவிரம் பிறக்கும்.

அது ஏற்படுவதற்காகத்தான் ஆத்ம த்யானம் சிறிது முதலிலிருந்தே செய்யச் சொல்வது.

ஆத்மாவை த்யானிக்கவும் முடியாததுதான். த்யானம் உள்பட எதற்குமே விஷயமாகாமல் தனித்து நிற்பது ஆத்மா. ஆனால் அதை நம் மனஸுக்குக் கொஞ்சம் புரிய வைப்பதுபோல்க் கொஞ்சம் நினைக்க முடிகிறதோல்லியோ? "ஒரு பாதிப்பும் இல்லாமல், அலையெழாத மஹா ஸமுத்ரம் போல அகண்டமாகக் கிடக்கும் பரம சாந்தநிலை" என்கிற மாதிரி வர்ணித்துப் பார்க்கும்போதே, ஸம்ஸாரப் போராட்டத்தின் பாதிப்பு நம்மைத் தொடாமல், நாம் ஆத்ம ஆகாசமாய் ஆனந்தமாயிருப்பது போன்ற ஒர் எண்ணம் ஏற்படுகிறதோல்லியோ? வெறும் பாவனை, ப்ரமை என்று வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டு ம்!எதுவானாலும் நமக்கு ஆறுதலைத் தந்து நம்மைச் சற்று

சும்மாயிருக்கச் செய்கிற எண்ணமாக இது இருக்கிறவரையில் உசத்திதான். இந்த்ரியத்தாலும் மனஸாலும் கெடுதல் பண்ணிக்கொண்டேயிருக்கும் நம்மைக் கெடுதல் மாத்திரமின்றி நல்லது கூடப் ப்ணணாமல் உட்கார்த்தி வைக்க வசதி செய்துதரும். இப்படிப்பட்ட எண்ணத்தில் சிறிது நேரமாவது தோய்ந்திருப்பதுதான் ஆத்ம த்யானம் என்பது. இப்படி ஏதோ ஒரு பாவனையில் ஆரம்பித்தாலே, பாவனை வலுத்து முதிர்ந்து தீவிரமாகும்போது வாஸ்தவ நிலை தன்னைத்தானே தெரியப்படுத்திக்கொள்ள ஆரம்பிக்கும்.

ஆக, ஜனங்கள் தாங்கள் ஒரு போராட்டத்திலே மாட்டிக்கொண்டிருக்கிறோம் என்று நன்றாக உணர்ந்து, போரிலே மாட்டிக்கொண்டவர்கள் அமைதி பிறக்காதா என்று எப்படி ஆர்வமாயிருப்பார்களோ அப்படி அமைதியை வேண்டினால், நிச்சயமாக ஆத்ம த்யானம் செய்ய்ம்பொழுது கிடைக்கும். அதிலே நன்றாக மனம் வைத்தபின் வழியும் பிறக்கும்.

மாயா ஸ்வரூபிணியாக இருந்து, தானே இத்தனை நாமாகவும் ஆகிப் போராட்டத்துக்கு ஆளாகி, அதே ஸமயம் அந்தப் போராட்டத்திலிருந்து விலகியிருந்து அதைப் பார்த்து லீலா விநோதம் கொள்கிறவளாயுமுள்ள அம்பாள் தன்னுடைய ஞான ஸ்வரூபத்தைக்கொண்டு அதற்குள்ளேயே நம் எல்லோரையும் அடக்கிக்கொண்டு , நமக்குப் போர் தீர்ந்த பெரிய அமைதியை அளிப்பதற்கு ப்ரார்த்திப்போம். இதற்கு அவள் ஸங்கல்பிக்க வேண்டும், பெரிய மனஸ் பண்ணவேண்டும். அவளுக்கு Will-ம் Way-ம் ஒன்றுதான். (ஸங்கல்பமும், அதன் நிறைவேற்றத்துக்கான வழியும் ஒன்றுதான்.) அப்படிச் சொன்னால்கூடப் போதாது.

அவளுடைய will-ஏ way-யின் முடிவான Goal-ம்கூடத்தான் (ஸங்கல்பமே மார்க்க முடிவான லக்ஷ்ய ஸித்தியுமாகும்.) ஆனாலும், அவள் தன் ஸங்கல்ப மாத்ரத்தாலேயே எல்லாம் பண்ணாமல், நம்மையும் கருவி மாத்ரமாக்கி, நாமும் ஏதோ ப்ரயாஸைகள், ப்ரயத்னங்கள் செய்வதுபோலக் காட்டிக் காட்டியே பலன் தருவதாக லீலை செய்பவள், ஆனதால், ஆத்மானந்தத்துக்கான ஸாதனை மார்க்கத்தில் நாம் ப்ரவேசிப்பதற்கும், அப்புறம் விடாமல் ப்ரயாணத்தைத் தொடர்வதற்கும் நமக்கெல்லாம் உத்ஸாஹத்தை அருளுமாறு

அவளிடம் ப்ரார்த்திக்கிறேன். முடிவிலே, ஞான வாசலைத் திறந்துவிட்டு அவளுடைய ஸத்ய நிலையிலே நாம் இரண்டறக் கரைந்து, எல்லாப் போராட்டமும் தீர்ந்து சாந்தானந்தமாக ஆவதற்கு அவளையே எல்லாரும் ப்ரார்த்தனை செய்துகொள்வோம். அந்த அம்மா நமக்கு ஊட்ட வேண்டிய பால், போட வேண்டிய பிக்ஷை இதுதான்.

ஞான வைராக்ய ஸித்த்யர்த்தம்

பிக்ஷாம் தேஹி ச பார்வதி 11

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**அத்வைத தத்வமும் நடப்பு நிலையும்**

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் உலகத்திலுள்ள மேதைகள் எல்லாரும் ஆசர்யப்படும்படியாக அத்வைத பாஷ்யங்கள் செய்திருக்கிறார். ஏற்கெனவேயிருந்த ப்ரஹ்ம ஸூத்ரம், உபநிஷத்துக்கள், பகவத்கீதை முதலியவற்றை விளக்கி அவர் எழுதியதற்கு 'பாஷ்யம்' என்று பெயர். இது தவிர தாமே (ஒரிஜினாக) "விவேக சூடாமணி", "உபதேச ஸாஹஸ்ரீ" முதலான பல அத்வைத க்ரந்தங்களைச் செய்திருக்கிறார். பாஷ்யத்திலிருந்து வித்யாஸம் தெரிவதற்காக, அவர் சொந்தமாகச் செய்த இது போன்ற நூல்களை 'ப்ரகரண க்ரந்தங்கள்' என்பார்கள்.

இவற்றிலெல்லாம் சொல்லப்பட்ட அத்வைத தத்வம் என்பது ரொம்பவும் பெரிய விஷயம். நாம் ஸத்யமானது என்று நினைத்துக்கொண்டிருக்கிற இந்த ஜகத் ஒரு மாயை, பரமாத்மா ஒன்றதான் ஸத்ய வஸ்து, அதற்கு வேறாக இருக்கிற ஜீவாத்மா என்று தன்னை நினைத்துக்கொண்டிருக்கிற நாமும் வாஸ்தவத்தில் அந்த பரமாத்மா தவிர வேறே இல்லை, ஜீவனேதான் ப்ரஹ்மம் - என்பதுதான் அத்வைதம். ச்ருதி (வேத) ப்ரமாணத்தாலும்,

அறிவாலும், அநுபவத்தாலும் ஆசார்யாள் இந்த ஸித்தாந்தத்தை அலசி அலசி நிச்சயப்படுததி, பாறாங்கல் மாதிரி நிலைப்படுததிக் கொடுத்திருக்கிறார்.

ஆனாலும் இந்த பரம ஸத்யமான தத்வம் நம்மிலே பெரும்பாலாருக்கு எட்டவே மாட்டேன் என்கிறது. அறிவு மூலம் இதுதான் உண்மை என்று ஆசார்யாளின் வாதங்களைப் படித்து உறுதி ஏற்பட்டாலும்கூட, அநுபவம் என்று வருகிறபோது அத்வைதம் எங்கேயோ, நாம் எங்கேயோ என்றுதான் அதற்கு ரொம்ப தூரத்தில் நிற்கிறோம். ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்று வெறுமே புத்தியால் தெரிந்துகொண்டு என்ன ப்ரயோஜனம்? ஒரு ஆட்டமும் இல்லாமல் அப்படியே பரம சாந்தமாக இருந்துகொண்டிருக்கிற ப்ரஹ்மமாக நம்மை நாம் எங்கே தெரிந்துகொள்ளமுடிகிறது? நமக்கு ஒயாத ஒட்டம், ஓயாத அமைதியின்மைதான். மனஸின் ஓட்டமும், ஓடிக்கொண்டே இருக்கிற இநத் ப்ரப்ஞசமும்தான் நமக்குத் தெரிந்த் உண்மை. மனஸ் நின்றுவிட்டால் இந்த ஓட்டம் இல்லை. அப்போது ஜகத் மாயையாக மறைந்து போய்விடும். நாம் ப்ரஹ்மமாக இருந்துகொண்டிருப்போம். ஆனால் மனஸ் நிற்கவே மாட்டேன் என்கிறதே!அதனால் அத்தைவதம் என்பது நமக்குக் கொஞ்சம்கூட அநுபவத்தில் தெரிவதில்லை.

ஆனாலும் அந்த அநுபவத்துக்குப் போவதற்கு நாம் இங்கிருந்தே ஆரம்பித்துத்தான் ஆகவேண்டும். நாம் இருக்கிற நிலையில் நமக்கு ஸத்யமாகத் தெரிகிறவைகளை வைத்துக்கொண்டே அநுஷ்டானங்களை ஆரம்பிததும் , படிப்படியாக, மேலே மேலே போய், இதெல்லாம் ஸாத்யமில்லை என்று தெரிந்து கொண்டு (தெரிந்துகொண்டு என்றால் சும்மா புத்தியால் தெரிந்துகொள்வதில்லை, அநுபவத்தில் தெரிந்துகொள்ள வேண்டும்), ஒரே ஸத்யமான அத்வைத ஸித்தியை அடையவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## பக்தி

"வண்டு ஸ்தோத்ரம்"

## நடப்பு நிலையிலிருந்து அத்வைதத்துக்கு

ஆசார்யாளுக்கு நம் அவல நிலை தெரியாததில்லை. அவர் பரம கருணாமூர்த்தி. அத்வைத பாஷ்யமும், ப்ரகரண க்ரந்தங்களும் மட்டும் நமக்கு ப்ரயோஜனப்படாது என்று ஆசார்யாளுக்குத தெரியும். ஆனதினால், அவர் அறிவிலும் அநுபவத்திலும் எவரெஸ்டாக இருந்தாலும் அந்த உச்சியிலிருந்து ரொம்பவும் இறங்கி நாம் இருக்கிற லெவலுக்கு வந்து நம்மைக் கைப்பிடியாக அழைத்துகொகண்டு ஒவ்வொரு படியாக மேலே போகிறார்.

மனைஸ நிற்கப் பண்ணுவதற்குப் பூர்வாங்கமான, அதை நாலா திசையிலும் வெறி நாய் மாதிரி ஓடிக்கொண்டிருக்காமல் முதலில் கட்டுப்படுத்த வேண்டும். இதற்கு அவரவரும் ஸ்வதர்மப்படி கர்மா செய்துகொண்டே இருக்க வேண்டும்.

நமக்கென்று ஆசை, த்வேஷம் இல்லாமல், லோகோபகாரமாக நமக்கென்று வாய்த்திருக்கிற கர்மாவை அவரவரும் பண்ணிக்கொண்டிருப்பது சித்த சுததியைத் தரும் என்பதால் ஆசார்யாள் கர்மாநுஷ்டானங்களை நம் எல்லோருக்கும் விதித்திருக்கிறார். 'கர்மா' என்பது ஓரளவுக்கு மனஸை மறந்து செய்கிற கார்யம் வேலையிலேயே நம் குறி இருப்பதால் சித்தம் தறி கெட்டு ஓடிக்கொண்டிருக்க விடாமல் பண்ணுகிறோம். இம்மாதிரி மனஸை மறந்து (ignore பண்ணி) கார்யம் பண்ணுவதோ? அதை நல்லதிலேயே பழக்கி, முழுக்கி, ஒருமுகப்படுத்த வேண்டும். மனஸுக்கு ஐகாக்ரியம் (ஒருமுகப்படுதல்) ஏற்பட ஏற்படத்தான் அது அடங்கி, அப்படியே ஆத்மாவில் கரைந்துவிட வழி உண்டாகும். இதற்காகத்தான் அத்தனை நல்லலதும் சேர்ந்ததான, ஸகல கல்யாண குண நிலயமான, ஸகுண மூர்த்தியிடம் பக்தி உபாஸனை செய்ய வேண்டும். மனஸ் அப்படியே ஆனந்தத்தால் ரொம்பி அந்தமூர்த்தியிடம் ஒருமுகப்பட்டு நின்றுவிட்டால் அப்புறம் கண்ட கண்டபடி ஓடாது. அந்த இஷ்டமூர்த்தி ஒன்றிடமேபதிந்து நிற்கும். பிறகு அந்த மூர்த்தியின் அநுக்ரஹத்தால், இப்படிப் பிரிந்திதிருந்து அதன் குணங்களை அநுபவிப்பது என்றில்லாமல், அத்றகும் மேலேபோய், அதிலேயே கரைந்து நிர்குணமான ப்ரஹ்மமாக

ஆகிவிடலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஆதிசங்கரரின் பக்தித் துதிகள்**

இதற்காகத்தான் ஆசார்யாள், கர்மாநுஷ்டானம் மாதிரியே பக்தி உபாஸனையையும் நம்மெல்லோருக்கும் விதித்திருக்கிறார். விதித்தது மட்டுமில்லை -எப்படி பக்தி பண்ணுவது, எப்படி ப்ரார்த்தனை பண்ணுவது என்றே நமக்குத் தெரியவில்லை அல்லவா? இதை நமக்குச் சொல்லிக் கொடுக்கிறமாதிரி அவரே ஸகல ஸ்தோத்ரங்களைச் செய்து நமக்கு அநுக்ரஹித்திருக்கிறார்.

அம்பாள் மேல் ஆசார்யாள் செய்த "ஸௌந்தர்ய லஹரி", ஈச்வரன் மேல் பண்ணின "சிவாநந்த லஹரி" இரண்டும் நூறு நூறு ச்லோகம் கொண்டது, இவ்வளவு பெரிதாக இல்லாமல் சின்னச் சின்னதாகவும் ஒரு தெய்வம் மிச்சமில்லாமல் - யார் யாருக்கு எது இஷ்ட தெய்வமானாலும் அதை அவர்கள் மனஸ் உருகி ஸ்தோத்ரம் பண்ணி அந்த இஷ்ட மூர்த்தியின் அநுக்ரஹத்தைப் பெறுகிற மாதிரி - நிறைய ஸ்தோத்ரங்கள் பண்ணியிருக்கிறார்.

இவற்றில் சிலவாவது நம் எல்லோருக்குமூ மனப்பாடமாகத் தெரிந்திருகக்க வேண்டும். ரொம்பவும் உசந்த தத்வங்களையும், உள்ளத்தைத் தொடும்படியான ரஸங்களையுங்கூடப் பரம லலிதமான, ஸுலபமான வாக்கில் கொடுப்பதே ஆசார்யாளின் பெருமை. அறிஞர்களும் நன்றாக யோசித்து யோசித்தே புரிந்து கொள்ளக்கூடியதான ஸூக்ஷ்மமான கருத்துக்களைக் கொடுத்து அத்வைத பாஷ்யம் பண்ணினவரே சின்னக் குழந்தைகூட ருசித்துச் சொல்லி ப்ரயோஜனம் அடையும்படியான ஸ்தோத்ரங்களைச் சின்னதும் பெரிதுமாக, ஏராளமாக அநுக்ரஹம்

செய்திருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஷட்பதீ ஸ்தோத்ரம்**

அதிலே ஸாக்ஷாத் ஜகத் பரிபாலகனான மஹா விஷ்ணுவைப் பற்றி ரொம்பவும் உயர்ந்த கருத்துக்களும், மனஸை உருக்கும் பாவமும், வாய்க்கு அம்ருதமாக இருக்கிற வாக்கும் கொண்டதான 'ஷட்பதீ ஸ்தோத்ரம்' என்பது ஒன்று. சின்ன ஸ்தோத்ரம்தான். அதை நன்றாக மனஸில் வாங்கிக்கொண்டு விட்டால் நாம் ஆசார்யாளையும் தெரிந்துகொண்டுவிடலாம், மஹாவிஷ்ணுவையும் தெரிந்து கொண்டு விடலாம், நம்மையும் தெரிந்துகொண்டுவிடலாம். நம்மைத் தெரிந்துகொள்கிறபடி தெரிந்து கொள்வதுதான் அத்வைதம். அந்த உச்சாணி வரைக்கும் இந்த ஷட்பதீ நம்மை அழைத்துக்கொண்டு போய்விடும்.

**பதம் : செய்யுட் பகுதி**

"ஷட் - பதீ" என்றால் ஆறுகால் கொண்டது" என்று அர்த்தம். "ஷட்" - ஆறு, "பதம்" - கால்.

அதென்ன, ஆறு கால் ஸ்தோத்ரம்?"

'பதம்' என்றால் 'கால்' என்பதோடு வார்த்தை என்றும் அர்த்தம். ச்லோகத்தில் நாலில் ஒரு பகுதிக்கும் பதம், பாதம் என்று பெயர். மனித சரீரத்தில் நாலில் ஒரு பாகமாக, அதாவது கால்பகுதியாக இருப்பதே கால் என்று அவயவம். இதே போல, கால் என்ற பொருளைத் தரும் பதம், பாதம் என்பவை ச்லோகத்திலும் நாலில் ஒரு பாகத்தைக் குறிக்கிறது.

இப்படி ஒரு ஒழுங்குப்படி நாலாகப் பிரிகின்ற "பதங்களைக் கொண்டது" ச்லோகம் என்பதாலேயே "பொயட்ரி"க்கு

"பத்யம்" என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது 'பதம்' என்றால் ('வார்த்தை' என்று மட்டும் அர்த்தம் செய்து கொள்வதனானால் 'ப்ரோஸு'ம் பதங்களாலான பத்யம்தானே? ஆனால் அதற்கு அப்படி ('பத்யம் என்று) பெயரில்லாமல் 'கத்யம்' என்றே பெயர் கொடுத்திருக்கிறது. 'கத் என்றால் பேசுவது. அதனால் பேச்சு நடை, வசன நடை, இயல் என்று சொல்லும் ப்ரோஸை கத்யம் என்பது. இசை என்னும் கவிதைக்குத்தான் சீரான பகுதி பகுதியாகப் பிரித்த பதங்கள் இருப்பதால், அதாவது, அது நாலு கால் பகுதிகளாலேயே ஆனதாக இருப்பதால்தான், 'பதம்' என்றால் கால் பகுதி என்ற பொருளையொட்டி அது பத்யம் எனப்படுகிறது. பாட்டும் கவிதா ரூபமானதால்தான் கல்யாணப் பாட்டு முதானவற்றைப் 'பத்தியம்' என்று தமிழில் சொல்வது. Pattiyam என்கிறார்கள். அது தப்பு. ஸரியான வடிவம் padyam என்பது. Gadyam- இயல். Padyam-இசை.

நோயாளி இன்னதான் சாப்பிடலாம் என்று நிர்ணயிக்கிற 'பத்தியம்' வேறே. ப்ரஸவித்தால் 'பத்தியம்' போடுவது என்ற அதைத்தான் சொல்வது. அது Pathyam. Padam என்றால் கால், அதை வைத்துப் பொயட்ரி என்பது Padyam. Patham என்றால் வழிமுறை. அதனால் சாப்பாட்டை ஒரு முறையிலே வழிபடுத்தி நிர்ணயிப்பது pathyam.

பதம் என்பது ச்லோகத்தின் காற்பகுதி. உதாரணம் சொல்கிறேன் : ஸாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த (அல்லது தெரிந்ததாக நான் நினைத்துக் கொண்டிருக்கிற) 'சுக்லாம்பரதரம்' ச்லோகத்தை எடுத்துக்கொள்வோம். அது அநுஷ்டுப் சந்தஸில் (சந்தத்தில்) அமைந்தது. அதாவது மொத்தம் முப்பத்திரண்டு எழுத்துக்கள் இருக்கும். இது நாலு எட்டெழுத்துக்களாக - அதாவது நாலு பாதங்களாக - ப் பரிந்திருக்கும்.

தமிழ் எழுத்திலே எழுதி எண்ணினால் முப்பத்திண்டுக்கு மேல் இருக்கும். ஏன் என்றால், 'சுக்லாம்' என்கிறபோது 'க்லாம்' என்பதே தமிழில் மூன்று எழுத்தாகிவிடும். ஆனால் கூட்டெழுத்து இருக்கிற ஸம்ஸ்க்ருதத்தில் 'க்லாம்' ஒரே எழுத்துத்தான். அதனால் எழுத்து ரீதியில் லிபியை பார்த்துக் கணக்குப் பண்ணாமல் எத்தனை Vowel Sound-கள்

(உயிரெழுத்து ஒலிகள்) இருக்கின்றன என்று கணக்குப் பண்ணினால்தான் ஸரியாக வரும். அப்படிக் கணக்குப் போட்டால் 'க்லாம்' என்பதில் 'ஆ' என்ற ஒரே ஓர் உயிரெழுத்தும், அதோடு க்,ல்,ம் என்ற மெய்யெழுத்துக்களும் சேர்வதாக ஆகும். அதாவது 'க்லாம். என்பது ஒரே அக்ஷரம் என்று ஆகும். இப்படியேதான் பின்னாடி 'விஷ்ணும்' என்கிறபோது 'ஷ்ணும்' என்று தமிழில் மூன்று எழுத்தாக எழுதினாலும், அதில் 'உ' என்ற ஒரே உயிரெழுத்துக்கு முன்னும் பின்னுமாக ஷ்,ண்,ம் என்ற மெய்யெழுத்துக்கள் சேர்வதாக ஏற்படுவதால், 'ஷ்ணும்' என்பது ஒரே அக்ஷரம்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**உயிரும் மெய்யும் உயிர்மெய்யும்**

உயிரெழுத்து, மெய்யெழுத்து என்று சொல்கிறபோது சைவ ஸித்தாந்திகள் சொல்கிற ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது.

வைஷ்ணவர்கள் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் சரீர - சரீரி என்று சொல்கிறமாதிரியே (சைவ) ஸித்தாந்திகளும் சொல்வதுண்டு. அதாவது நம் சரீரத்துக்குள் உயிர் என்று ஒன்று இருக்கிறது, அதுபோய்விட்டால் இந்த சரீரம் அடியோடு ப்ரயோஜனம் இல்லாததாகி விடுகிறது. இதே மாதிரி ஸகல ஜீவாத்மாக்களும் சேர்ந்து பரமாத்மாவுக்கு சரீரம், அதற்குள் உயிராக இருப்பவனே பரமாத்மா. உயிருக்கு உயிராக என்பதுபோல், இத்தனை உயிர்களுக்கும் உயிராக, பேருயிராக இருப்பவனே பரமாத்மான என்பதுதான் சரீர - சரீரி தத்வம்.

நமக்குத் தெரிவது சரீரம்தான். உயிர் தெரியவில்லை. அதனால்தான் சரீரத்துக்கே "மெய்" என்று பேர் வைத்தார்கள்.

ஆனாலும் நமக்குத் தெரியாமல் இருக்கிற உயிர் போய்விட்டதானால், அப்புறம் இந்த 'மெய்' ஒன்றுக்கும் ப்ரயோஜனமில்லாத பொய்யாகி விடுகிறது. 'மெய்யும் பொய்யானபின்' என்று கூடப் பாடுகிறார்கள். இப்படித்தான் ஜீவலோகமும் உள்ளே அந்தர்யாமியாக இருக்கிற பேருயிரான பகவான் இல்லாவிட்டால் பொய்யாகப் போய் விடுகிறது.

'பொய்' என்று சொன்னாலும், அத்வைதத்தில் ஆசார்யாள் பரம ஸத்யமான ஒன்றை (ப்ரஹ்மத்தை)த் தவிர இன்னொன்று இருப்பதே பொய், அது வெறும் மாயத்தோற்றம்தான் என்று சொல்கிற ரீதியில் (சைவ) ஸித்தாந்திகள் சொல்லவில்லை. ஈச்வரன் உள்ளே புகுந்து இயக்குகிற இந்த ஜீவ ப்ரபஞ்சத்துக்கும் ஒரு ஸத்யத்வத்தை அவர்கள் சொல்வார்கள். இதற்குத்தான் இந்த உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர் மெய்யெழுத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்வார்கள். மெய்யெழுத்து என்பது க்,ங்,ச்,ஞ் முதலானவை. உயிரெழுத்துக்கள்தான் அ,ஆ,இ,ஈ வரிசை. இரண்டு சேர்ந்த க-கா-கி,கீ, ங-ஙா-ஙி-ஙீ, ச-சா-சி-சீ, ஞ-ஞா-ஞி-ஞீ மாதிரியானவை தான் உயிர்மெய் என்பவை. இங்கே மெய்யெழுத்து வேறே, உயிரெழுத்து வேறே என்று பிரித்திருப்பதாலேயே, 'மெய்' என்று சொல்லப்பட்டாலும் அந்த ஒலிகளுக்குத் தனியாக உயிர் இல்லை என்று ஆகிவிட்டது. சரீரத்துக்கு மெய் என்று பெயர் வைத்தாலும் உயிரில்லாவிட்டால் அது எதற்கும் உதவாத மாதிரிதான் மெய்யெழுத்தும். க்,ங்,ச்,ஞ் முதலான ஒலிகளைத் தனிப்பட உச்சரிக்கவே முடியாது. இக், இங் இச், இஞ் என்று முதலில் சின்னதான ஒரு 'இ' சப்தம் சேர்த்தால்தான் இந்த ஒலிகளே வெளியில் வரும், அல்லது பின்னாடி அ, ஆ முதலான உயிரெழுத்துக்களைக் கூட்டி க, கா என்ற மாதிரி ஒலியை வெளிப்படுத்த முடிகிறது. உயிரெழுத்து இல்லாமல் இவை ப்ரயோஜனமில்லை. ஆனால் அதற்காக இந்த மெய்யெழுத்துக்ளள் (consonants) அடியோடு இல்லை, ஒரே பொய் என்று சொல்லலாமா? உயிரெழுத்து (vowel) சேர்ந்தால் இவை க,ங,ச,ஞ என்று வேறு வேறு ரூபத்தை, ஒலியைப் பெறத்தானே செய்கின்றன? அப்போது எல்லாம் ஒரே சப்தமாக இல்லையே அதனால் இந்த மெய்யெழுத்துக்களுக்கும், உயிரெழுத்தில்லாமலே தனித்

தனியாக ஒரு ரூபம் இருக்க வேண்டும், அதனால் ஒரு ஸத்யத்வம் இருக்க வேண்டும் என்றுதானே அர்த்தம்? என்வே மெய்யெழுத்துக்கள் தாமாகவே கொஞ்சம் மெய்மாதிரி இருப்பவைதான். இதே ரீதியில் ஜீவர்களும் வேறு வேறாக இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்கும் மெய்யெழுத்துக்கு இருக்கிற மாதிரி கொஞ்சம் தனியான ஸத்யத்வம் இருக்கத்தான் வேண்டும். ஒரே பொய் என்று தள்ளிவிட முடியாது. ஆனாலும் உயிர் போய்விட்டால் எல்லாரும் ஒரே மாதிரி சவமாகி விடுகிற மாதிரி, 'சீவ ப்ரபஞ்சமும் சிவம் என்ற பேருயீர் இல்லாவிட்டால் சவம்தான்' - என்றிப்படி (சைவ) ஸித்தாந்திகள் சொல்வார்க்ள. அத்வைதமாக எல்லாம் ஒரே ஆத்மா என்று சொல்லாமல் கொஞ்சம் பிரித்து த்வைதமாக இருப்பதற்கு இப்படி த்ருஷ்டாந்தம் காட்டுகிறார்கள். ஜீவாத்மா மெய்யெழுத்து, பரமாத்மா உயிரெழுத்து மாதிரி என்கிறார்கள்.

வாஸ்தவத்தில் ஸ்ரீ சங்கர பகவத் பாதரும் லோகம் - ஜீவன் முழுப்பொய் என்று சொல்லவில்லை. ஸத்யத்திலேயே அவர் பலநிலைகளை (லெவல்களை) சொல்லியிருக்கிறார். ஆனால் இங்கே நான் தத்வச் சண்டை போட வரவில்லை. ஆசார்யாளே இந்த வாதம், சண்டை எல்லாம் வேண்டாம், பக்திதான் வேண்டும் என்று நமக்குக் கற்றுக்கொடுக்க வந்த ஷட் பதீ ஸ்தோத்ரத்தைத்தான் சொல்ல ஆரம்பித்தேன். ஆறுகால் என்பதை விளக்க ஆரம்பித்தபோது ச்லோகத்தின் பாதங்களைப் பற்றிப் பேச்சுவந்து, அது அக்ஷரக் கணக்கில் கொண்டுபோய், ஸித்தாந்தங்களில் இழுத்துவிட்டது மறுபடியும் 'சுக்லாம்பரதரம்' குட்டிக்கொண்டு ஆரம்பிக்கலாம்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**இருவகைச் சந்தங்கள்**

"சுக்லாம்பரதரம்" ச்லோகத்தை எடுத்துக்கொண்டு அதில்

(உயிரெழுத்து ரீதியில்) எத்தனை அக்ஷரம் இருக்கிறது என்று பார்த்தால் 32 அக்ஷரம் கணக்கு வருகிறது. இது

சு-க்லாம்-ப-ர-த-ர-ம் வி-ஷ்ணும்

ச-சி-வர்-ணம்-ச-துர்-பு-ஜ-ம் 1

ப்ர-ஸன்-ன-வ-த-னம் த்யா-யேத்

ஸர்-வ-வி-க்நோ-ப-சா-ந்த-யே 11

என்று எட்டெட்டு எழுத்து கொண்ட நாலு பாதங்களாகப் பிரிந்திருக்கிறது. 'சுக்லாம்பரதரம் விஷ்ணும்' என்பது முதல் பாதம். 'சசிவர்ணம் சதுர்புஜம்' இரண்டாம் பாதம். 'ஸர்வ விக்நோபசாந்தயே' என்பது நாலாவது பாதம்.

ஸரி, அப்படியானால் 'ஷட்-பதீ' என்கிற 'ஆறுகால் ஸ்தோத்ர'த்தில் ஒவ்வொரு ச்லோகத்திலும் இப்படி ஆறு அடிகள் இருக்கின்றனவா? இல்லை. ஒவ்வொரு ச்லோகத்திலும் நாலு பாதங்கள்தான் இருக்கின்றன. ஸாதாரணமாக அப்படி இருப்பதுதான் வழக்கம்.

இந்த 'ஷட்பதீ' ஸ்தோத்ரத்திலே ஒரு ச்லோகத்தை எடுத்துக்கொண்டால் அதற்குள்ளே வருகிற பாதங்கள் 'சுக்லாம்பரதர'த்தில் இருக்கிற மாதிரி ஸமமான அக்ஷரம் கொண்டதாக இல்லை.

'சந்தஸ் சாஸ்த்ரம்' என்பதாகக் கவிதா லக்ஷணம் கூறும் ஸம்ஸ்க்ருத யாப்பிலக்கணத்திலேயே இந்த விதமான அக்ஷரக்கணக்கில் வராத சந்தங்களை (மீட்டர்'களை)ப் பற்றியும் இருக்கிறது. மீட்டரில் இரண்டு தினுஸை அது சொல்கிறது.

ஒன்றுதான் ஒரு உயிரெழுத்துக்கு ஒரு அக்ஷரம் என்ற கணக்குப்படி இருக்கும் மீட்டர். இதற்கு 'வ்ருத்தம், என்று பேர். தமிழில் 'விருத்தம் பாடுவது' என்று சொல்வது இதன் தொடர்புடையதாகத்தான் வந்திருக்கவேண்டும். இன்னொன்று'ஜாதி' எனப்படும்.

ஜாதிக்கும், வ்ருத்தத்துக்கும் என்ன வித்யாஸமென்றால், வ்ருத்தத்தில் குறில், நெடில், கூட்டெழுத்து எல்லாவற்றுக்கும் ஒரே 'வால்யூ'தான். 'சுக்லாம்' என்பதில் 'சு' என்பது குறில்,

'க்லாம்' நெடில், அதோடு கூட 'க்லாம்' என்பது க்,ல்,ம், என்ற மூன்று சப்தங்கள் கொண்ட கூட்டெழுத்தாக இருக்கிறது. இப்படியிருந்தாலும், நாம் எந்த அக்ஷரமானாலும் அதற்கு வால்யூ ஒன்று என்று வைத்து, 'ஐ' ஒரு அக்ஷரம், 'க்லாம்' - உம் ஒரு அக்ஷரம் என்றுதானே கணக்குப் பண்ணினோம்?

"ஜாதி"யில் ஒரு உயிரெழுத்துக்கொண்ட அக்ஷரம் ஒவ்வொன்றுக்கும் ஒரே மதிப்பு (value) கொடுப்பதில்லை. 'வால்யூ' என்றும் 'மதிப்பு' என்றும் சொல்வதற்கு 'மாத்ரா' என்று பெயர். மாத்திரை என்று தமிழில் ஆகும். என்பதுகூட 'மாத்ரா' விலிருந்து வந்ததுதான். குறில், நெடில் என்று இரண்டு இருக்கின்றன அல்லவா?

குட்டையான அ,இ,உ, முதலானவை குறில். நெட்டையான ஆ,ஈ, முதலானவை நெடில். இவற்றை முறையே 'ஹ்ரஸ்வம்' என்றும் 'தீர்க்கம்' என்றும் சொல்வது வழக்கம். யாப்பிலக்கணத்திலே குறிலான ஹ்ரஸ்வத்தை 'லகு' என்றும், நெடிலான தீர்க்கத்தை 'குரு' என்றும் சொல்லியிருக்கிறது. 'லகு என்றால் லேசானது, குரு என்றால் கனமானது.) ஜாதி எனப்படும் சந்த வகையில் லகுவான அக்ஷரத்துக்கு, அதாவது குறிலுக்கு, வால்யூ ஒன்று, குருவான நெடில் அக்ஷரத்துக்கு வால்யூ இரண்டு. இப்படிப் பொதுவாகக் குறிலுக்கு ஒருமாத்திரை என்றாலும் சில எழுத்துக்களோடு சேர்ந்து ஒரு குறில் வரும்போது, அது இரண்டு மாத்திரையாகிவிடும். அம், கம், சம் என்பதுபோல ஒரு குறிலுடன் 'அநுஸ்வாரம்' என்கிற 'ம்' சேரும்போது அந்தக்குறிலுக்கு இரண்டு மாத்திரை ஏற்பட்டுவிடும். 'விஸர்கம்' என்பதாக 'ஹ'சப்தத்துடன் அநேக சொற்கள் முடியும். ":" என்று இரண்டு புள்ளி போட்டு விஸர்கத்தைக் குறிப்பிடுவார்கள். "ராம:" என்பதை "ராமஹ" என்று சொல்லவேண்டும. இப்படிப்பட்ட விஸர்கம் ஒரு குறிலை அடுத்து வந்தால் அப்போதும் குறிலுக்கு இரண்டு மாத்திரை, உதாரணமாக "ராம:"வில் வரும் "ம" இரட்டை மாத்திரை பெற்றுவிடுகிறது. ஒரு குறிலை அடுத்து ஒன்றுக்கு மேற்பட்ட மெய்யெழுத்துக்களின் கூட்டு வந்தாலும் அப்போது குறில் இரண்டு மாத்திரை பெற்றுவிடும். உதாரணமாக, 'விஷ்ணு' என்ற வார்த்தையில் 'ஷ்ணு' என்பது 'ஷ், ண், உ' என்பதாக இரண்டு மெய்யெழுத்துக்களும் ஒரு உயிரெழுத்தும் சேர்ந்தசப்தம் 'வி' என்ற குறிலை அடுத்து இங்கே ஷ்,ண்

என்ற இரண்டு மெய்யெழுத்துக்கள் வரும். அந்தக் குறில் இரண்டு மாத்திரை பெற்று வரும்.

அக்ஷரங்களை வைத்து 'வ்ருத்தம்' என்ற மீட்டர் முறை இருக்கிறாற் போலவே மாத்திரைகளை இப்படிக் கணக்குப் பண்ணி 'ஜாதி' என்ற 'மீட்டர்' முறையும் இருக்கிறது. இப்படி'ஜாதி'யில் பல சந்தஸ்கள் (சந்தங்கள்) இருக்கின்றன. ஒரு ச்லோகத்தைப் பாதங்கள் என்ற நான்கு பகுதிகளாக (வ்ருத்தத்தில் போலவே) இதிலும் பிரித்து, ஒவ்வொரு பாதத்துக்கும் இத்தனை மாத்திரைகள் இருக்க வேண்டுமென்று இந்த முறையில் வைத்திருக்கிறது. ஆனால் 'ஜாதி'யில் ஒரு சுலோகத்தின் எல்லாப் பாதத்துக்கும் ஸமமான மாத்திரையாயில்லாமல், ஒவ்வொரு பாதத்துக்கும் வெவ்வேறாக இத்தனை இத்தனை மாத்திரை என்று வைத்திருக்கும்.

'சுக்லாம் பரதரம்' ச்லோகத்தில் 'சு'வும் ஒரு அக்ஷரம், 'க்லாமு'ம் ஒரு அக்ஷரம் என்று வ்ருத்த முறையில் கணக்குப் பண்ணினோமல்லவா? இதையே ஜாதி முறைப்படி செய்தால் இந்த இடத்தில் அந்த அக்ஷரம் ஒவ்வொன்றும் இரண்டு மாத்திரையாகவிடும். 'சு' என்பது குறிலானதால் பொதுவாக அதற்கு ஒரு மாத்திரை தானென்றாலும், இங்கே அடுத்து 'க்லாமி'ல் க், ல் என்ற இரண்டு மெய்யெழுத்துக்கள் சேர்ந்தாற்போல் வந்துவிடுகின்றனவல்லவா? அதனால் இங்கே குறிலான 'சு'வுக்கே இரண்டு மாத்திரை. 'க்லாம்' என்பதில் 'ஆ' என்கிற நெடில் (க்,ல்,ம் என்பவற்றோடு) வருவதால் அதற்கும் இரண்டு மாத்திரை.

பொதுவாக, ஜாதி என்பதையும் வ்ருத்தம் என்றே சொல்லிவிடுகிறார்க்ள. மீட்டரில் இருப்பதெல்லாம் வ்ருத்தம் என்ற அபிப்ராயத்தில் இப்படிச் சொல்வதாயிருக்கிறது. அதனால்தான் 'ஜாதி' வகையைச் சேர்ந்த 'ஆர்யா' முதலான மீட்டர்களைக்கூட 'ஆர்யா வ்ருத்தம்' என்று சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது.

காமாக்ஷி அம்பாளைப் பற்றிய ப்ரஸித்த ஸ்தோத்ரமான "மூக பஞ்ச சதி"யில் முதல் நூறு ச்லோகங்கள் ஆர்யா என்ற ஜாதியைச் சேர்ந்தவையே. அந்தப் பகுதிக்கு 'ஆர்யாக சதகம்' என்றே பெயர். பரம உயர்வு பொருந்தியவள் என்பதால் அம்பாளுக்கே 'ஆர்யா' என்று பெயருண்டு.

ஆசார்யாளுடைய அம்மாவின் பெயர் ஆர்யாம்பாள் என்பதுதான். பாடப்படடும் அம்பாள், பாடல் அமைந்த மீட்டர் இரண்டுக்கும் பொருந்தும்படி 'ஆர்யா சதகம்' என்று ச்லேஷையாகத் தலைப்புக் கொடுத்திருக்கிறது.

சற்றுமுன் சொன்னாற்போல் ஜாதி சந்தஸ்களில் இன்னொரு விசேஷம், நாலு பாதங்களில் ஒவ்வொன்றும் ஒரே எண்ணக்கையுள்ள மாத்திரைகள் கொண்டதாக இருப்பதில்லை.

வ்ருத்தம் என்று உயிரெழுத்துக்களைக் கொண்டு கணக்கு பண்ணுவதிலுங்கூட பாதத்துக்குப் பாதம் அக்ஷர வித்யாஸமுள்ளதாயும் சில மீட்டர்கள் உண்டுதான். எல்லாப் பாதமும் ஒரே அளவான அக்ஷரம் கொண்டது ஸம வ்ருத்தம். இப்படியில்லாமல் முதல் பாதத்திலும் மூன்றாம் பாதத்திலும் ஒரே அளவு அக்ஷரங்களும், அதற்கு வித்யாஸமாக இரண்டாம் பாதத்திலும் நாலாம் பாதத்திலும் ஒரே அளவான அக்ஷரங்களும் கொண்ட மீட்டர்களும் உண்டு. இவற்றை அர்த்த ஸமவ்ருத்தம் என்று சொல்வார்கள்.் ஒவவொரு பாதமுமே வேறு வேறு எண்ணிக்கையில் அக்ஷரங்கள் கொண்ட மீட்டர்கள்கூட இருக்கின்றன. இவை 'விஷம வ்ருத்தம்' எனப்படும். "அதென்ன விஷமம்?" என்றால், வி-ஸமம் என்பதே விஷமம். "ஸம'த்துக்கு எதிரானது 'வி-ஸமம்'. எல்லாப் பாதமும் ஸமமான அக்ஷரம் கொண்டதாயில்லாமல் இருப்பதால் 'விஷம வ்ருத்தம்' என்று பெயர். யாரைப் பற்றியோ விஷமமாகப் பாடுவது என்று அர்த்தமில்லை விஷமம் என்ற வார்த்தை 'மிஸ்சீஃப்' என்று அர்த்தம் கொடுப்பதற்குக் காரணம்கூட, அது ஸமநிலையில் அதாவது நடு நிலையில் இருந்துகொண்டு உள்ளதை உள்ளபடிச் சொல்லாமல் வெளியிலே ஒரு அர்த்தமும் உள்ளுக்குள்ளே திரிசமனாக இன்னொரு அர்த்தமும் கொடுக்கும்படியாகப் பேசுவது அல்லது கார்யம் செய்வாக இருப்பதுதான். 'திரிசமன்' என்கிறபோதும் அது ஸமமாக இருப்பதைத் திரிப்பது என்று பொருள்படுவதாகவே தோன்றுகிறது.

இரண்டால் வகுத்து ஸம பாதிகளாக ஈவு கொடுக்காத ஒற்றைப்படை எண்களையெல்லாம் 'விஷமம்' என்பார்கள். ஐந்து, மூன்று ஆகியவை ஒற்றைப் படை என்கள்தானே?

ஆகையால் ஐந்து புஷ்ப பாணங்களை உடைய மன்மதனை "விஷமசரன்" என்றும், முக்கண்ணான பரமேச்வரனை விஷமநேத்ரன்' என்றும் சொல்வதுண்டு.

இங்கிலீஷில் odd, even என்கிறபோதும் even என்பது இரட்டைப் படையை மட்டுமில்லாமல், even-mided என்பதில் ஸமநிலையான மனஸைக் குறிப்பிடுகிறது. ஒற்றைப் படையைக் குறிக்கும் என்பது விஷமம் (மிஸ்சீஃப்) என்று அர்த்தம் தராவிட்டாலும், அதற்குக் கிட்டே உள்ள 'விசித்ரமான', 'fanciful' என்ற அர்த்தங்களையும் தருகிறது - ஆட் பிஹேவியர்', 'ஆட் எக்ஸ்ப்ளனேஷன்' என்று சொல்லும்போது!

வ்ருத்தங்கள் பெரும்பாலும் ஸமமாயிருப்பவைதான். அர்த்த ஸம, விஷம வ்ருத்தங்கள் அபூர்வமே. ஆனால் ஜாதிகளிலோ வரிக்குவரி (பாதத்துக்கு பாதம்) மாத்ரைகளின் எண்ணிக்கை வித்யாஸமாயிருப்பதே பொது வாக்கியமாயிருக்கிறது. உதாரணமாக 'ஆர்யா'வில் முதல் பாதம், மூன்றாம் பாதம் ஆகிய இரண்டில் தலைக்குப் பன்னிரண்டு மாத்ரைகள் இருக்கவேண்டும். இரண்டாம் பாதத்தில் பதினெட்டு மாத்ரை இருக்கணும். கடைசியான நாலாவதில் பதினைந்து.

நம்முடைய ஷட்பதீ ஸ்தோத்ரத்தின் ச்லோகங்கள் ஆர்யா. ஜாதியில் அமைந்தவைதான்.

அதன் முதல் ச்லோகத்தை எடுத்துக்கொண்டால் முதல் பாதம் அல்லது வரி:அவிநய மபநய விஷ்ணோ."

மாத்திரைக் கணக்குப் பண்ணினால் 'அ-வி-ந-ய-ம-ப-ந-ய' என்ற எட்டும் அநுஸ்வாரம், விஸர்கம், அடுத்தாற்போல் ஒன்றுக்கு மேற்பட்ட மெய்யெழுத்து என்கப்பட்ட எதுவுமில்லாமல் சுத்தமான குறில்களாக இருக்கின்றன. அதனால் இந்த எட்டுக்கும் எட்டு மாத்திரை. அப்புறம் 'விஷ்ணோ' என்று வருவதிலுள்ள 'வி'மட்டும், அது குறிலாக உள்ள போதிலும், அதன் பின்னால் ஷ்,ண் என்ற இரண்டு மெய்யெழுத்து வருவதால், நெடிலைப் போல இரண்டு மாத்திரை பெற்றவிடுகிறது. முதலில் சொன்ன எட்டு மாத்திரை ப்ளஸ் இரண்டு. அதாவது பத்து, 'ஷ்ணோ' என்பதில் 'ஓ, என்ற நெடில் வருகிறது. அதற்கு இரண்டு

மாத்திரை. மொத்தம், முதல் வரியில் பத்து ப்ளஸ் இரண்டு, அதாவது பன்னிரண்டு மாத்திரை.

இரண்டாவது வரி, "தமய மந சமய விஷயம்ருகத் ருஷ்ணாம்".

த-ம-ய-ம (என்ற) ஒவ்வொன்றுக்கும் ஒரு மாத்திரை வீதம் மொத்தம் நாலு. அப்புறம் "ந:" என்ற குறியான 'ந'க்குப் பின்னால் விஸர்கம் வருவதால் இரண்டு மாத்திரை. நாலு ப்ளஸ் இரண்டு, அதாவது ஆறு. அப்புறம், ச-ம-ய-வி-ஷ-ய-ம்-ரு-க என்ற எட்டும் சுத்தமான குறில்கள். 'ம்ருஷ என்பதுகூட, 'உ'காரத்தைத் தாழ்த்திச் சொல்லும் குற்றியலுகர வர்க்கத்தைச் சேர்ந்ததால் ஸம்ஸ்கிருதத்தில் ஒற்றை மெய்யெழுத்துக் குறில்தான். அதை ம்,ர்,உ என்பதாக இரட்டை மெய்யெழுத்துடன் சேர்ந்த உயிரெழுத்தாகக் கொள்ளக்கூடாது. இதோடு இரண்டாம் வரியில் ஆறு ப்ளஸ் எட்டு, அதாவது பதினான்கு மாத்திரை. அப்புறம் 'த்ருஷ்ணாம்' என்பதில் வரும் 'த்ரு'வும் சற்று முன் சொன்ன 'ம்ரு' மாதிரி குற்றியலகரமானதால் அதற்கும் ஒற்றை மாத்ரைதானென்றாலும், அதை அடுத்து வரும் 'ஷ்ணாம்' என்பதில் 'ஷ்,ண்' என்ற இரட்டை மெய்யெழுத்துக்கள் வருவதால் இங்கே 'த்ரு'வுக்கு இரண்டு மாத்திரை. பதினான்கு ப்ளஸ் இரண்டு. முடிவில் வரும் '(ஷ்)ணா(ம்)' நெடிலானதால் அதற்கும் இரண்டு மாத்திரை. ஆக மொத்தம், இரண்டாம் பாதத்தில் பதினெட்டாம் மாத்திரை.

மூன்றாவது பாதம்: "பூத தயாம்ட விஸ்தாரய."

"பூ" நெடிலானதால் இரண்டு மாத்திரை. 'த-த'வுக்கு ஒவ்வொரு மாத்திரை. 'யாம்)' நெடில், இரண்டு மாத்திரை 'வி'க்குச் சேர்ந்தாற்போல் 'ஸ்த்' என்று இரண்டு மெய்யெழுத்து வருவதால் இரட்டை மாத்திரை. 'தா' நெடிலானதால் இரண்டு 'ர-ய' ஒவ்வொன்றும் ஒன்று. மொத்தம் மூன்றாம் வரியில், முதல்வரி போலவே, பன்னிரண்டு மாத்திரைகள்.

இந்த முதல் ச்லோகத்தின் கடைசி வரி:"தாரய ஸம்ஸார ஸாகரத:" "தா" இரண்டு மாத்திரை. 'ர-ய' - தலைக்கு ஒவ்வொரு மாத்திரை. 'ஸம்' என்பதில் 'ம்' என்கிற அநுஸ்வரம் வருவதால் இரட்டை மாத்திரை. 'ஸா' இரண்டு மாத்திரை. 'ர'- ஒன்று. மறுபடியும் ஸா - இரண்டு 'க-ர தலைக்கு ஒவ்வொரு

மாத்திரை "த" என்று முடிவதில் விஸர்கம் வருவதால் இரண்டு. மொத்தம் கடைசிப் பாதத்தில் பதினைந்து மாத்திரை.

"ஆர்யா" மீட்டரிலேயே "கீதி" என்றும் சற்று வித்யாஸமாக ஒன்று உண்டு. அதிலேயும் முதல், மூன்றாம் பாதங்களுக்குப் பன்னிரண்டு மாத்திரைதான். ஆனால், இரண்டு, நான்கு ஆகிய இரு பதங்களுக்கும் இதிலே பதினெட்டு மாத்திரைகள். இரண்டு பாதங்கள் 12 மாத்திரையும், இரண்டு பாதங்கள் 18 மாத்திரையும் கொண்ட இது அரத்த ஸம மாத்ரா ஜாதியைச் சேர்ந்ததாகும். "மூக பஞ்சசசதீ"யின் "ஆர்யா சதக" ச்லோகங்கள் இந்த ஜாதியில் அமைந்தவைதான். முதல் ச்லோகம்.

காரண பர சித்ரூபா

காஞ்சீபுர ஸீம்நி காம பீடகதா 1

காசந விஹரதி கருணா

காச்மீர ஸ்தபக கோமளாங்கலதா 11

முதல் பாதம் : கா(2) ர(3) ண(4) ப(5) ர(6) சி(8) (அடுத்து 'த்ரூ'வில் இரட்டை மெய்யெழுத்து வருவதால்) த்ரூ (10:நெடிலானதால்) பா(12) - மொத்தம் 12 மாத்திரை.

இரண்டாம் பாதம் : கா(2) ஞ்சீ(4) பு (5) ர(6) ஸீ(8) ம்நி(9) கா(11) ம(12) பீ(14) ட(15) க(16) தா(18) - மொத்தம் 18 மாத்திரை

மூன்றாம் பாதம் : கா(2) ச(3) ந(4) வி(5) ஹ(6) ர(7) தி(8) க(9) ணா(12) - மொத்தம் 12 மாத்ரை.

நான்காம் பாதம் : கா(2) ச்மீ(4) ர(6) (அடுத்தாற்போல் 'ஸ்,த்' என்ற இரண்டு மெய்யெழுத்து வருவதால் ஸ்த(7) ப(8) க(9) கோ(11) ம(12) ளா(14) ங்க(15) ல(16) தா(18) - மொத்தம் பதினெட்டு மாத்திரை.

பக்தி

"வண்டு ஸ்தோத்ரம்"

ஆறு ச்லோகத் துதி

ஜாதிச் சந்தஸ்களைக் கொண்டுதான் "ஷட்பதீ"யை ஆசார்யாள் செய்திருக்கிறார். அத்வைதி!ஆனால் அவர்காட்டாத variety (வேறுபாட்டு விசித்ரம்) இல்லை!இந்த ஸ்திதியிலுள்ள எல்லா ச்லோகங்களுமே ஆர்யா வ்ருத்தத்தில் அமைந்தவை. அவை ஒவ்வொன்றிலும் முதல் வரிக்கும் மூன்றாம் வரிக்கும் 12 மாத்திரைகள், இரண்டாம் வரிக்கு 18 மாத்திரை, நாலாம் வரிக்கு 15 மாத்திரை. பாதம் பாதமாகக் கணக்குப் பண்ணிப் பார்த்தீர்களானால் பொழுது போக்காக இருக்கும் உயிரெழுத்துக்களை கொண்டு எண்ணாமல் லகு, குரு மாத்திரை பார்த்து எண்ணினால்தான் இநத் ச்லோகங்களில் விதிப்படி ஏற்பட்ட ஒரு க்ரமம் இருப்பதாகத் தெரியும். இல்லாவிட்டால் சீர் ஸரியில்லை என்று தோன்றிவிடும். ஆனாலும் ஆசார்யாளின் வாக்விசேஷம், 'வ்ருத்த'ங்களுக்கே அதிகம் பழகி 'ஜாதிகைளப் புரிந்து கொள்ள முடியாத நமக்கும்கூட, இந்த ஷட்பதீ

ச்லோகங்களை நாம் சொல்கிறபோதே அவற்றில் சீரில்லை என்கிற மாதிரி கொஞ்சம்கூடத் தோன்றாது. வார்த்தைகளும், சப்தங்களும் ஒன்றக்கொன்று ரொம்பவும் இசைந்து, இந்த இரண்டும் அர்தத்தோடேயே இசைந்து செல்வதான அழகான போக்கிலேயே நம் ஸ்தோத்ரம் அமைந்திருக்கிறது. குழந்தைகூட நினைவு வைத்துக்கொள்ளும்படியாக அவ்வளவு ஸுலபமாக இருக்கிறது.

பலச்ருதி மாதிரி இருக்கிற கடைசி ச்லோகத்தை விட்டு விட்டால் இதிலே ஆறு ச்லோகங்கள் இருக்கின்றன. (பல ச்ருதியும் மேலே சொன்ன அதே மீட்டரில் இருப்பதுதான்.)

பலச்ருதி "மாதிரி"தான், அசல் பலச்ருதீ இல்லை. அசல் பலச்ருதி என்றால், (இந்த ச்லோகத்தைச் சொல்பவருக்கு இன்னின்ன பலன்கள் உண்டாகும்' என்று உடைத்து வ்யக்தமாகச் சொல்லியிருக்க வேண்டும். இங்கே கடைசி ச்லோகத்தில் அப்படிச் சொல்லவில்லை. அதைப்பற்றிப் பிறகு சொல்கிறேன். கடைசி ச்லோகத்தைக் கடைசியில தானே

சொல்லவேண்டும்? முதல் ச்லோகத்திலிருந்து வரிசையாகச் சொல்லிக்கொண்டு போகிறேன். முதல் ச்லோகத்தை ஆரம்பிக்குமுன் இப்போது டைட்டில் 'ஷட்பதீ' என்பது என்ன என்று சொல்ல ஆரம்பித்தேன்.

இதிலே ஆறு ச்லோகங்கள், பலச்ருதி நீங்கலாக உள்ளன. அதனால் 'ஷட்-பதீ', அதாவது, 'ஆறு பதங்கள் கொண்ட நூல்' என்று ஆசார்யாள் டைட்டில் கொடுக்கிற போது, 'பதம்' என்றால் ச்லோகத்தின் ஒரு பாகம் என்று அர்த்தம் கொடுக்காமல், ஒரு முழு ச்லோகத்தையே 'பதம்' என்று குறிப்பிடுவதாகத் தெரிகிறது. 'பதம்' என்ற வார்த்தை பல அர்த்தத்தில் ப்ரயோகமாகிறது. வேதத்தில் 'பதம்', 'க்ரமம்' என்று சொல்லிக்கொண்டே போய் 'கனம்' என்பதில் முடிப்பார்க்ள. மந்த்ர அக்ஷரங்களைப் பல தினுஸில் மாற்றி மாற்றிக் கோர்த்து வாங்கிச் சொல்வது தான் 'பதம்', 'க்ரமம்', 'கனம்' எல்லாம். கனம் வரைக்கும் தேர்ச்சி பெற்றவரைத்தான் 'கனபாடி' என்பது. இங்கே 'பதம்' என்றால் வார்த்தை வார்த்தையாகப் பிரித்துச் சொல்வது.

காற்பகுதியை மட்டுமின்றி முழு ச்லோகத்தையே 'பதம்' என்று குறிப்பிடும் வழக்கமும் உண்டு. ஜயதேவரின் "கீத கோவிந்த"த்தை "அஷ்டபதி"கள் என்கிறோமே, இங்கே பதம் என்றால் ஒரு முழு செய்யுள் - என்றே ஆகிறது. தமிழில் கூட ஒரு பதிகத்தையோ பாசுரத்தையோ குறிப்பிட்டு 'அதில் எத்தனை செய்யுள் இருக்கறிது?' என்று கேட்பதற்குப் பதில், 'எத்தனை அடி இருக்கிறது?' என்று கேட்கிறோம். இங்கே 'அடி' என்றால் செய்யுளின் ஒரு பாகம் என்று அர்த்தமாகாமல் முழு செய்யுள் என்றே ஆகிறது. இப்படியேதான் ஒரு கீர்த்தனம் என்று எடுத்துக் கொண்டாலும், நாலைந்து சரணம் இருந்தால் 'எத்தனை அடிகள்?' என்றே கேட்கிறோம். இதிலே இன்னொரு வேடிக்கைகூட சேலாகமாக இருந்தால், 'பதம்', 'பாதம்' என்கிறோம். பாட்டாக கீர்த்தனமாக இருந்தால் 'சரணம்' என்கிறோம். 'பாதம்' என்பது போலவே 'சரணம்' என்றாலும் கால்தான் 'அடி' என்பதும் காலைக் குறிப்பதுதானே?

அடிமேல் அடிவைத்து முன்னே போவ 'பதேபதே, என்று சொல்வார்கள், step by step என்று அர்த்தம். இப்படியே பக்தியில் அடிமேல் அடிவைத்து ஒவ்வொரு ச்லோகத்தின்

வழியாக முன்னேற வழி சொல்கிறதாலும் இது 'ஷட்-பதீ' என்று வைத்துக்கொள்ளலாம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**சிலேடை மர்மம்**

இதிலே ஒரு ச்லேஷை (சிலேடை)யும் இருக்கிறது. 'பதம்' என்றால் 'கால், அல்லவா? ஷட்-பதீ என்றால் 'ஆறுகால்கொண்ட 'ஐந்து' என்று அர்த்தம்.

'ஆறுகால்!ஐந்தாவது? விசித்ரமாயிருக்கிறதே!' என்று தோன்றும்!மநுஷ்யன் இரண்டு கால் ப்ராணி. மிருகங்கள் நாலு கால் ப்ராணி. எட்டுக்கால் பூச்சி என்று ஒன்று இருக்கிறது. காலே இல்லாத பாம்பு. மரவட்டைக்கு எண்ணி முடியாத கால்கள். ஆறுகால் ஐந்து என்ன?

அதுதான் வண்டு. வண்டுக்கு ஆறுகால்தான் இருக்கும். ஷட் - பதம் கொண்டது அது. ஆகையால் ஷட்-பதீ என்றால் வண்டு என்று அர்த்தம். ஷட் - பதீ சதோத்ரம் என்றால் வண்டு ச்தோத்ரம்.

'ஆறு பதம் (ச்லோகம்) உள்ள இந்த ஸ்தோத்ரத்துக்கு ஏன் வண்டு - ஸ்தோத்ரம் என்று பேர்? இந்த ச்லேஷை என்?' என்று ஆசார்யாள் கடைசியான ஏழாவது ச்லோகத்தில்தான் புதிர் அவிழ்க்கிறார். ஒரு கதை சொல்கிறவர் அதில் மர்மமாக ஒன்றை ஆரம்பத்தில் சொல்லி விட்டு, அதை உடனேயே அவிழ்த்து விடாமல் கடைசிவரை மூடிமூடி வைத்து, ஆர்வத்தை ஜாஸ்தீயாக்கிக்கொண்டே போய்க் கடைசியில்தான் அவிழ்ப்பார். அதே மாதிரி 'ஷட் - பதீ' என்று ஸ்தோத்ரத்துக்கு டைட்டில் கொடுத்த ஆசார்யாளும் ச்லோகம் முடிகிறபோதுதான் இதற்கு ஏன் 'ஆறுகால் ஸ்தோத்ரம்', அதாவது 'வண்டுத் துதி' என்று பேர் கொடுத்தார் என்று விண்டு சொல்கிறார். காவ்யங்களிலும் பக்தி

க்ரந்தங்களிலும் ஈடுபட்டவர்களுக்கு, ரஸிகர்களுக்கு, அவர் சொல்லாவிட்டாலும் ஆரம்பத்திலேயே புரிந்துவிடும்.

உங்களில் கொஞ்சம் பேருக்கு இப்போதே ஷட்பதீ (வண்டு) என்பதிலுள்ள ச்லேஷை புரிந்திருக்கலாம். புரியாதவர்களுக்கு நானும் ஆசார்யாள் மாதிரியே கடைசியில்தான் புரிய வைக்கப்போகிறேன்.

இப்போது முதல் ச்லோகத்திலிருந்து ஆரம்பிக்கலாம். இந்த முதல் ச்லோகததில் எவையெவற்றை வேண்டி ப்ரார்த்தனை பண்ண வேண்டும் என்று நமக்க ஆசார்யாள் சொல்லிக் கொடுக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

## எதற்கு வேண்டுவது?

பகவானை எதற்காக பரார்த்தனை பண்ணவேண்டும் என்பதில் அபிப்ராய பேதங்கள் உண்டு.

இந்த லோக வாழ்க்கையில் நமக்கு எண்ணி முடியாத கஷ்டங்கள், ச்ரமங்கள், க்லேசங்கள், துக்கங்கள் ஏற்படுகின்றன. சரீரக் கஷ்டம், மன மஞ்சலம், பண முடை, பயம், அவமானம் இப்டியாகக் கணக்கேயில்லாமல் அவதிப்படுகிறோம். இவை தீருவதற்கு வேறு வேறு வழிகளைத் தேடுகிறோம். உடம்பு ஸரியில்லை என்றால் டாக்டரிடம் போகிறோம். பணக்கஷ்டம் என்றால் கடன் கொடுக்கக் கூடியவர்களிடம் போகிறோம். ஆவிகள் சேஷ்டை என்றால் மாந்த்ரிகரிடம் போகிறோம். பலவிதமான ப்ரச்னைகள் தீர ராஜாங்க அதிகாரிகளிடம் போகிறோம். இப்படிப் பல பேரிடம் போனாலும், இந்தக் கஷ்டங்கள் தீர பகவானையும் ப்ரார்த்தனை பண்ணிக்கொள்கிறாம். நாம் கஷ்டம் தீர யாரைத் தேடிப் போகிறோமோ அவர்கள் நமக்கு அநுகூலமாக இருப்பதற்கு பகவானை ப்ரார்த்திக்கிறோம்.

டாக்டர் மருந்துதான் கொடுப்பார். அது நமக்குப் பலிக்க வேண்டுமே!இதற்காக பகவானை வேண்டிக்கொள்கிறோம். ஒருத்தர் ஸஹாயம் செய்வார் என்று அவரிடம் போகிறோம். ஆனால் போகிற வழியிலேயே நமக்கு ஒரு விபத்து வந்துவிட்டால் என்ன பண்ணுவது? இதற்காக ப்ரார்த்தனை பண்ணுகிறோம்.

இந்த மாதிரியெல்லாம் ப்ரார்த்தனை பண்ணுவது தப்பு என்று சிலபேருக்கு அபிப்ராயம். 'நம் கர்மாவுக்காகத்தான் கஷ்டம் வருகிறது. பகவானேதான் இந்தக் கஷ்டங்களைக் கொடுத்து தண்டித்து, கர்மாவைத் தீர்க்கிறான். அதனால் இந்த மாதிரி லௌகிக விஷயங்களுக்கு ப்ரார்ததனை பண்ணவே கூடாது. பகவானுக்கே நமக்கு எதை எப்போது எப்படித் தரவேண்டும் என்று தெரியும். அதனால் அவனை எதுவும் ப்ரார்த்திக்கவே கூடாது. அவனை ஸ்மரித்தால் அது ஆனந்தமாக இருக்கிறதல்லவா? இந்த ஆனத்நம் ஒன்றுகாக மட்டுமே ஸ்மரிக்க வேண்டும். பக்தி பண்ணுவதற்குப் பலன் பக்தியில் கிடைக்கிற மன நிறைவேதான். இந்தப் பெரிய நிறைவை விட்டுவிட்டு, பக்தியைச் சின்னச் சின்ன தாற்காலிக நிறைவுகளுக்கு ஒரு உபாயமாக வைத்துக்கொள்வது ரொம்பவும் தப்பு. ஆகையால், அது வேண்டும், இது வேண்டும் என்று வேண்டவே கூடாது. எதற்காகவாவது ப்ரார்த்தனை பண்ணலாமானால் அது நம்முடைய ஆத்ம பரிசுத்தி ஒன்றுகாகத்தான்' என்று இப்படிச் சிலர் அபிப்ராயப்படுகிறார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**பகவானின் கருத்து**

பகவானே சொல்கிற வாக்குதான் நமக்குப் பெரிய ப்ரமாணம். கீதையில் இவ்விஷயமாக ஸ்வாமி என்ன சொல்கிறார்?

கீதையில் க்ருஷ்ண பரமாத்மா இப்படிச் சொல்கிறார்

சதுர்விதா பஜந்தே மாம்

ஜநா:ஸுக்ருதிந:அர்ஜுந 1

ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:அர்த்தார்த்தீ

ஜ்ஞாநீ ச பரதர்ஷப 11

'என்னை நாலு தினுஸான (சதுர்விதமான) ஜனங்கள் பூஜிக்கிறார்கள், அதாவது வழிபடுகிறார்கள். யார் யார் இந்த நாலு வகைக்காரர்கள்? ஒன்று ஆர்த்தன், இரண்டாவது ஜிஜ்ஞாஸு, மூன்றாவது அர்த்தார்த்தி, நாலாவது ஞானி' என்கிறார்.

முதலில் சொன்ன 'ஆர்த்தன்' என்பதற்கு 'கஷ்டப்படுகிறவன்', 'துக்கமுற்றவன்' என்று அரத்தம். மனக் கஷ்டம், சரீரக் கஷ்டம் இவற்றுக்கு ஆளானவன் ஆர்த்தன். வ்யாதி, வலி, தாரித்ரியம் (வறுமை), மாளாத கஷ்டங்கள், ப்ரச்னைகள், மன க்லேசம் தருகிற உபத்ரவங்கள் இவை எல்லாம் ஆர்த்தியல் அடக்கம். இந்தக் கஷ்டம் தீருவதற்காக, துக்கபாரம், துயரச் சுமை தீருவதற்காக இவர்கள் பகவானை வழிபடுகிறார்கள். "அப்பா, இந்த பாரத்தை இறக்கி வையப்பா" என்று ப்ரார்த்தனை

பண்ணுகிறார்கள்.

பக்தர்களில் இரண்டாவது வகை யார் என்றால், ஜிஜ்ஞாஸு, அதாவது ஞானம் அடைய விரும்பி ஸாதனை செய்கிற ஸாதகன். பகவான்தான் ஞான விதை போட வேண்டுமாதலால் ஞானாம்பாள்தான் ஞானப்பால் கொடுப்பாளாதலால், இவன் பகவானை வழிபடுகிறான். ஆர்த்தன் மாதிரி இவன் 'ஞானம்தா', 'ஞானம் தா' என்று வேண்டி ப்ரார்த்தனை பண்ணினாலும் பண்ணுவான், அல்லது இப்படிக் கேட்காமல், பகவானின் திவ்ய ரூபத்தையும், கல்யாண குணத்தையும் வெறுமனே த்யானம் பண்ணிக்கொண்டேயிருப்பான். அதுவே ஆனந்தமாக இருப்பததோடு இவனுடைய சித்தம் சிதறிப்போகாமல் இழுத்தக்கட்டி ஒருமுகப்படுத்தும். ஆசார்யாளும் இந்த சித்த

ஜகாக்ரியத்துக்காகத்தான் உபாஸைனையைச் சொன்னார். இவன் 'ஞானம்தா' என்று கேட்கவே வேண்டாம். பகவானை த்யானம் பண்ணிக்கொண்டு ஸந்தோஷமாக இருந்தாலே போதும். இவனுடைய சித்தம் ஒருமுகப்பட்டு, தானே அந்த பகவானின் நிர்குணமான, அரூபமான ஸத்யநிலையில் இவனை இரண்டறக் கரைத்துவிடும். அப்படி, ஜீவாத்மா என்று கொஞ்சம்கூடத் தனியாகப் பிரிந்திருக்காமல் ஸத்ய வஸ்துவோடு ஐக்யமாய் இருப்பதுதான் ஞானம். அந்த நிலையிலே பூஜையும் இல்லை, த்யானமும் இல்லை. அந்த ஸ்டேஜுக்குப் போவதற்காகவே முதலில் இந்த ஜிஜ்ஞாஸு பகவானை பஜிக்கிறான்.

மூன்றாவதாக அர்த்தார்த்தி. முதலில் சொன்ன 'ஆர்த்தி'யில் வருகிற 'தி' வேறே, இங்கே 'அர்த்தார்த்தி'யில் சொல்கிற 'த'யும் 'தா'வும் வேறே. ஸம்ஸ்க்ருதத்தில் 'க' வர்க்கம். 'ச'வர்க்கம், 'ட'வர்க்கம், 'த'வர்க்கம், 'ப' வர்க்கம் ஆகியவற்றில் ஒவ்வொன்றிலும் நாலுவிதமான சப்தங்கள் உண்டு. 'க'வை எடுத்துக்கொண்டால் முதலில்Ka, அப்புறம் அதையே அழுத்தி kha, மூன்றாவதாக Ga- கங்கை என்பதில் வருகிற மாதிரி, நாலாவதாக இதையும் அழுத்தி Gha. இப்படியே ச,ட,த,ப-விலும் நன்னாலு உண்டு. 'த'வில் முதல் சப்தம் Ta தான் 'ஆர்த்தி'யில் வந்தது. 'அர்த்தார்த்தி' என்பதில் வருகிற 'தா'வும் 'தி'யும் இரண்டாவது 'த' -Tha. 'அர்த்தார்த்தி' என்றால் 'பொருளை இச்சிக்கிறவன்' என்று அர்த்தம், 'அர்த்தம்' என்றால் பொருள், அதாவது பணம் 'அர்த்தி' எனர்றல் அதை வேண்டுகிறவன்.

முதலில் துன்புற்றவனைச் சொன்னாரே, அதிலேயே பொருள் இல்லாமல் கஷ்டப்படுகிறவனும் அடக்கம்தான். அதனால் இங்கே பிரித்துச் சொல்லியிருக்கிற அர்த்தார்த்தி என்பவன் வறுமையால் கஷ்டப்படுகிறவன் அல்ல, வாழ்க்கை நடத்தவே முடியாமல் இவன் ச்ரமப்படவில்லை. ஆனாலும் இது போதாது, இன்னும் நிறைய ஸுபிக்ஷம் வேண்டும் என்று பகவானை ப்ரார்த்தனை பண்ணுகிறான். நம்மில் பல பேர் இப்படித்தான் இருக்கிறோம். காலக்ஷேபம் நடக்க நமக்கு ச்ரமமில்லைதான். இருந்தாலும் இன்னும் நிறைய ஸௌகர்யம், வீடு வேண்டும், கார் வேண்டும் என்று ஆசை இருக்கத்தான் செய்கிறது. ஸப் கலெக்டர் கலெக்டராக

ப்ரமோஷன் கிடைக்கவேண்டும் என்று ப்ரார்த்தனை பண்ணுகிறார். கலெக்டர் மாகாணம் பூராவுக்கும் ஏதாவது ஓர் அதிகாரியாக வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார். 'அர்த்தம்' என்றதில் பணம் மட்டுமில்லாமல் பதவி, கௌரவம், புகழ் எல்லாவற்றையுமே சேர்த்துக் கொள்ளலாம்.

நாலாவதாக ஞானியைச் சொன்னார். ஞானியும் தன்னை பஜிப்பதாக ("பஜந்தே மாம்" என்று) சொல்கிறார். சற்று முன்னாடிதான் சொன்னேன், ஞானியாகி விட்டால் அப்புறம் பகவான், பக்தன் என்ற வித்யாஸமேயில்லாமல் பாரமார்த்த ஸத்யமான ஒரே ஏகத்தில் இவன் கரைந்து அங்கே பூஜை, த்யானம் எல்லாம் நின்று போய் விடுகிறது என்று. இங்கே இப்படி ஞானியும் பக்தி பண்ணுவதாக பகவானை quote பண்ணுகிறோனே (மேற்கோள் காட்டுகிறேனே) என்றால், ஞான ஸமாதி நிலையில் பகவானுக்கு வேறாக பக்தன் இல்லைதான். ஆனால் ஞானி எப்போதுமே இப்படி லோக ப்ரக்ஞை இல்லாமல் நிர்விகல்ப ஸமாதியில் இருப்பதில்லை. அவனுக்கு வெளி உணர்வு இருக்கிற - அல்லது இருக்கிற மாதிரி வெளி உலகத்துக்குத் தோன்றுகிற - ஸமயங்களும் உண்டு. அப்படிப்பட்ட ஸமயங்களில், ஸமாதி நிலையில் எந்த நிர்குண நிராகார (குணமும் உருவமும் இல்லாத) ஸத்ய வஸ்துவோடு இரண்டறக் கலந்திருந்தானோ, அதே வஸ்து லீலா நிமித்தமாகப் பல குணங்களோடு, ரூபங்களோடு லோக நிர்வாஹம் பண்ணுகிறதை ஞானியானவன் ரஸிக்கிறான். 'வாஸுதேவஸ் ஸர்வமிதி' என்று அந்த வாஸுதேவனே கீதையில் சொன்ன மாதிரி இந்த ஞானி லோகத்தில் எதைப் பார்த்தாலும் அதைப் பரமாத்மாவாகவே பார்த்து, 'இதுவும் அதன் இன்னொரு வேஷம், இன்னொரு விதமான 'லீலை' என்று அதை ரஸிக்கிறான். ஆசார்யாள் "பஜ கோவிந்த"த்தில் 'நந்ததி நந்ததி நந்ததி ஏவ' என்று மூன்று தடவை திரும்பத் திரும்பச் சொன்னது மாதிரி எதிலும் எப்போதும் பரமாத்ம ரஸத்தையே ருசித்துக்கொண்டு ஆனந்த மயமாக இருக்கிறான். இந்த ஞானி (வெளி ப்ரக்ஞையற்ற) நிர்விகல்ப ஸமாதியில் இல்லாமல் பஹிர்முகமாக (வெளி ப்ரக்ஞையுடன்) இருக்கிறபோதுகூட அவனுக்கு வெளி - உள் எல்லாம் ஒன்றுதான். வேதத்தில் சொன்னதுபோல் உள்ளே வெளியே எல்லாம் அந்த ஒரே நாராயணன், வாஸுதேவன், பரமாத்மாதான் வ்யாபித்திருக்கிறது என்ற உள்ளுணர்வு இருந்துகொண்டே இருக்கும் ஞானி அடைய வேண்டியது

எதுவுமே இல்லை. ஆகவே, 'அதைத்தா, இதைத்தா' என்று ப்ரார்த்திக்க வேண்டிய அவச்யம் அவனுக்கு இல்லை. ஒரு ப்ரார்த்தனையும், காரணமும் இல்லாமல், தன்னால் அன்பாகத்தான் இருக்கமுடிகிறது என்பதாலேயே பரமாத்மாவிடம் அன்பாயிருக்கிறானே, இது தான் பரம பரிசுத்தமான பக்தி. 'அஹைதுகீ பக்தி' (ஹேது அல்லது காரணம் இல்லாத பக்தி) என்று இதை ப்ரஹ்ம ஞானியான சுகாசார்யாள் பாகவதத்தில் சொல்கிறார். இவனை ஒருத்தர் கத்தியால் வெட்டினால்கூட அதிலிருந்து காப்பாற்றும்படி இவன் ப்ரார்த்தனை பண்ணமாட்டான். ஏனென்றால், தான் சரிரமில்லை, ஆத்மாதான் என்ற உள் அநுபவம் இவனை விட்டு அப்போதும் விலகியிருக்காது. அந்த நிலையிலும் பரார்த்தனை பண்ணாமலே பகவானிடம் பக்தியாக அன்புமயமாக இருப்பான்.

'இப்பேர்ப்பட்ட பக்தி எங்கே? கஷ்டம் தீருவதற்காக பகவானை ப்ரார்த்ததிகக்றி ஆர்த்தனின் ப்கதி எங்கே? அதை விடமட்டமாக, போதுமெனக்றி அளவுக்கு ஸெளகர்யம் இருந்தும் இன்னும் வேண்டும் என்று கே்கிற அர்த்தார்த்தியின் பக்திக்கு பக்தி என்று பேர் கொடுப்பதே தப்பு மாதிரி இருக்கிறதே' என்று தோன்றலாம்.

ஆனால் ஸாக்ஷாத் பகவான் ஞானத்தை வேண்டுகிற ஜிஜ்ஞாஸுவையும், ஞானத்தை அடைந்தே விட்ட ஞானியையும் சொன்னாற்போலவே இந்த ஆர்த்தன், அர்த்தார்த்தி இரண்டு பேரும்கூடத் தன்னை பஜிப்பதாகத்தான் சொல்கிறார். அது மட்டுமில்லை. இந்த நாலு தினுஸானவரையும் 'ஸுக்ருதின ஜனா' அதாவது ஸுக்ருதம் பண்ணினவர்கள் - புண்யம் பண்ணினவர்கள் என்று ச்லாகித்துச் சொல்கிறார். இரண்டு ச்லோகங்களுக்குப் பிறகு, மறுபடியும் இந்த நாலு வகையான பக்தர்களும் ச்ரேஷ்டமானவர்களே (உதாரமானவர்களே):உதாரா:ஸர்வ ஏவைதே என்கிறார்.

ஏன் இப்படிச் சொன்னார்?

"ஞானியையும், ஞானத்தைத் தேடுகிறவனையும் மட்டுமில்லாமல், லெளகிக கஷ்டம் தீருவதற்காகவே ப்ரார்த்தனை பண்ணுகிறவனையும், ஓரளவு ஸெளக்யமாயிருந்தும்கூட இன்னும் ஜாஸ்தி ஸெளக்யம்

வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறவனையும்கூட ஏன் பகவான் தன் பக்தர்கள் என்று சொல்லிக் கொண்டார்? ஏன் அவர்களை 'ஸுக்ருத்', 'உதாரர்கள்' என்றெல்லாம் ச்லாகித்தார்?" என்பது கேள்வி.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**லௌகிக ப்ரார்த்தனைக்கு ஸமாதானம்**

லோக வாழ்க்கையில் நமக்கு அநேக கஷ்டங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. இத்தனை கஷ்டங்களையும் கொஞ்சம்கூடப் பொருட்படுத்தாமல், 'பகவான் விட்ட வழி' என்று நாம் பகவானை பகவானுக்காகவே பக்தி பண்ணிக் கொண்டிருந்துவிட்டால் ரொம்ப உசத்திதான். இதற்கு ஆக்ஷேபணையே இல்லை. ஆனால் நடைமுறையில், வாஸ்தவத்தில் நம்மில் யாரால் அப்படி இருக்க முடிகிறது? ஏதோ ஒரு மாயை லோகம் முழுவதையும் பிடித்து ஆட்டுகிறது. 'மஹா மாயா விச்வம் ப்ரமயஸி' என்று ஆசார்யாள்கூடச் சொன்னார். அதிலே நாம் மாட்டிக் கொண்டிருக்கிறோம். லோகம்தான் நிஜம், நம் தேஹம்தான் நிஜம் என்றே நாம் அத்தனைபேரும் நினைத்துக்கொண்டிருக்கிறோம். லோக வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கிறோம். இதிலே ஒரு தோல்வி, மானபங்கம், வ்யாதி, வக்கை, கடன், கஸ்தி வந்தால் கஷடப்படத்தான் செய்கிறோம். இப்படிக் கஷ்டப்படாவிட்டால் உசத்திதான். ஸந்தேஹமேயில்லை. இன்றைக்கு இல்லாவிட்டாலும் என்றைக்கோ ஒரு நாளாவது நாம் இம்மாதிரிக் கஷ்டப்படாமல், மாயையை மாயை என்று புரிந்துகொண்டு, பட்டுக்கொள்ளாமல் இருக்கத்தான் வேண்டும். இப்போதிலிருந்தே அதற்கான ப்ரயத்னங்களைப் பண்ணிக்கொண்டே இருக்க வேண்டும். ஆனால் என்றைக்கோ அப்படி நாம் ஆவதும் ஆகாததும் ஒருபக்கம்

இருக்கட்டும். இன்றைக்கு, இப்போது நமக்குக் கஷ்டம் இருந்தால் அது கஷ்டமாகத் தெரிகிறதோ? இல்லையோ? முள் குத்தினால் கால் வலிக்கிறதோ இல்லியோ? ஜ்வரம் வந்தால் "ஹா ஹா" என்று அனத்துகிறோமோ இல்லையோ? வீட்டிலே ஒரு கஷ்டம், ஆஃபீஸில் சண்டை, ஏதோ ஒரு அவமானம் என்றால் உள்ளே அது நம்மைக் கருணைக் கிழங்கு மாதிரி அரித்துப் பிடுங்கிக்கொண்டே இருக்கிறதா, இல்லையா? நம் விட்டுக்காரர்களுக்கு நாம் செய்ய வேண்டியதை செய்யவேண்டும், பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணவேண்டும், பிள்ளைக்கு காலேஜில் ஸீட் பிடிக்கவேண்டும் என்று இப்படி நம் கடமைக்காக, பொறுப்புக்காக அலைய வேண்டியிருக்கிறதோல்லியோ?

இதில், போகிற இடங்களில் கார்யம் ஜயிக்காமல் ஏமாந்தும் போகிறோமல்லவா? இந்த மாதிரி ஸமயங்களில் என்ன பண்ணுவது? எல்லாம் கர்மா என்று மனஸைத் தேற்றிக்கொண்டு, கீதையில் சொன்ன மாதிரி, நம் கடமையை மட்டும் பண்ணிக்கொண்டு, பலனை நினைக்காமல் லேசாக இருந்துவிடலாம் என்றால், அது முடியாமல், உள்ளே அரித்துப் பிடிங்கிக்கொண்டே இருக்கிறதே, இப்போது என்ன பண்ணலாம்? பகவான் என்று ஒருத்தன் இருக்கிறான், அவன்தான் ஸர்வ லோகங்களையும் நிர்வாஹம் பண்ணுகிறான், தர்மம் என்கிற சட்டத்தை (law) வைததுக்கொண்டு அதன்படி அவன் ஆட்சி பண்ணுகிறான் என்று நாம் நம்புகிறோம். தர்ம 'லா'படிதான் அவன் 'ரூல்' பண்ணுகிறான் என்றாலும், அவன் பரம கருணாநிதி, எத்தனை அபராதங்கள் பண்ணினாலும் க்ஷமிக்கிற அருள் வள்ளல், க்ருபா ஸமுத்ரம் என்றும் மஹான்கள் பாடி வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள் அதனால் லோக வாழ்கையில் மாட்டிக்கொண்டிருக்கிற நாம் - அவன்தானே இப்படி நம் மேலே மாயையைப் போர்த்தி மாட்டி வைத்திருக்கிறான்? - அவனிடமே இந்த லோகத்துக் கஷ்டங்கள் தீருவதற்குப் ப்ரர்த்தனை பண்ணுவதில் என்ன தப்பு? இப்படி ஒர் அபிப்ராயம்.

எது வேண்டுமனாலும் எப்படி வேண்டுமனாலும் போகட்டும் என்று தாமரை இலைத் தண்ணீர் மாதிரி இருக்கிறவர்கள் (அல்லது அந்த மாதிரி என்றைக்காக வேனும் நாமும் ஆகவேண்டும் என்று தாப்படுகிறவர்கள்கூட) லோகத்தில்

அபூர்மவாகத்தான் இருப்பார்கள். இந்த உலக வாழ்க்கையின் கஷ்ட நஷ்டங்களைப் பொருட்படுத்துகிறவர்கள், அது தீரவேண்டும் என்று தவகிக்றவர்கள்தான் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இருப்பார்கள். இவர்களுடைய கஷ்டத்தைத் தீர்த்து வைக்க பகவானுக்கு சக்தியும் உண்டு, உரிமையும் உண்டு. அதற்கான கருணையும் அவனுக்கு நிச்சயம் உண்டு. அதனால் அவனிடம் கஷ்டத்தைத் தீர்க்கச் சொல்லி ப்ரார்த்தனை பண்ணுவது ரொம்ப ஸரியானதுதான் என்று அபிப்ராயப்படுகிறவர்கள் உண்டு.

"பகவான் உனக்கு ஒரு சரீரத்தைத் தந்திருக்கிறான். குடும்பத்தைத் தந்திருக்கிறான். இவற்றை நன்றாகப் பார்ததுக்கொள்ளவேண்டிய பொறுப்பு உனக்கு இருக்கிறது, கடமை இருக்கிறது. இதற்காக டாக்டர், மேல் அதிகாரி, கடன் கொடுக்கிறவன், அவன் இவன் என்று யார்யாரிடமோ போய் நிற்கிறாயா இல்லையா? எல்லாருக்கும் மேலே இருக்கிற பகவானிடம் மட்டும் போய் நின்றால் என்ன தப்பு? வெட்கப்பட அதில் என்ன இருக்கிறது? மநுஷ்ய ரூபத்தில் உனக்கு உதவி செய்கிறவர்கள் (human agency) கூட உனக்கு ஸாதகமாக இருக்கவேண்டும் என்றால், இதை ஸாதித்துத் தரக்கூடியவன் பகாவன்தானே? அதனால் மற்றவன் காலில் விழுகிறதற்கு முன்னாடி அவன் காலில் விழு. ஒருத்தன் காலிலும் விழாமலிருக்கிற பக்வம் உனக்கு வந்தால் அப்போது இந்த லௌகிக கஷ்ட நிவ்ருத்திக்காக நீ பகவான் காலிலும் விழாமல் இருக்கலாம்" என்று அவர்கள் சொல்வார்கள்.

நம்மால் எதையும் ஸாதித்துக் கொள்ள முடியாது, ஈச்வர சக்திதான் எல்லாவற்றுக்கும் மேல் பெரிதானது என்று நம்பித்தானே ஓர் 'ஆர்த்தன்' (அதாவது கஷ்டப்படுகிறவன்) பகவானை ப்ரார்த்திக்கிறான்? இது நல்ல மனோபாவம்தானே? இதனால்தான் இப்படிப்பட்ட மனோபாவம் படைத்தவர்களையும் பகவான் 'ஸுக்ருதின:' உதாரா' என்று ச்லாகித்துச் சொல்லியிருக்கிறார் என்று வைத்துக்கொள்ளலாம்.

எதற்கும் 'நான்', 'நான்' என்று மாரைத் தட்டிக்கொண்டிருக்கிற மநுஷ்யன் ஏதோ ஓர் இடத்தில், தான் அவன் க்ருபை இல்லாமல் எதுவும் செய்ய முடியாது என்று நம்பி, அடங்கி,

பணிந்து, வேண்டிக்கொள்கிறான் என்றால் அது எந்த அளவுக்கு உயர்ந்ததுதான். லௌகிகமான தேவையின் பூர்த்திக்காகத்தான் இருக்கட்டும், அல்லது வேறு எந்தக் காரணத்துக்காக வேண்டுமனாலும் இருக்கட்டும், நம் எல்லோரையும்விட பகவான் பெரியவன் என்ற நம்பிக்கையோடு ப்ரார்த்னை பண்ணுவது ஸரியானதுதான் என்றே சொல்லவேண்டும். 'இந்த வாழ்கையிலேயே தர்மத்துக்கு விரோதமாக இல்லாதவரையில் ஜனங்களின் ந்யாயமான ஆசைகளாகக்கூட நானே இருக்கிறேன்' என்று பகவானே கீதையில் சொல்லியிருக்கிறான் (7-11) தர்மா விருத்தோ பூதேஷு காமோஸ்மீ பரதர்ஷப. அதர்மமாக ஆசைப்படக்கூடாது துராசை கூடாது. தர்மமான ஆசைகள் இருந்தால் அதை பகவானும் அந்த ஸ்டேஜில் ஒத்துக்கொள்வார்.

"ஸரி, அப்படியானால் போதுமான அளவுக்கு (ஸௌகர்யம்) இருந்தும்கூட, அதற்கும் மேல் வேண்டும் ப்ரார்த்தித்துக்கொள்கிற 'அர்த்தார்த்தி'யின் ஸமாசாரம் என்ன? அவனை எப்படி பக்தர்களோட சேர்க்கலாம்?" என்ற கேள்வி எழும்புகிறது.

ஜீவனம் நடத்துவதற்கு எதெது அத்யாவச்யமோ அதற்கு மேல் ஒரு துரும்புகூட வைத்துக்கொள்ளாமலிருப்பதுதான் முறை. எதெது இல்லாவிட்டால் நம்மால் ஜீவிக்கவே முடியாதோ, அவற்றோடு நம் தேவைகளை நிறுத்திக்கொள்ளவேண்டும் என்பதுதான் தர்மசாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிற 'அபரிக்ரஹம்' என்ற உயர்ந்த கொள்கை. ஆகையால், வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான அர்த்தம் (பொருள்) இருந்தும் அதற்கு மேல் ஒருத்தன் (அர்த்தார்த்தி) பகவானிடம் பரார்த்திக்கிறான் என்றால் அது பேராசைதான், எனவே அது தப்புதான். ஆனால் இவனையும் ஏன் க்ருஷ்ண பரமாத்மா நாலுவித பக்தர்களில் ஒருத்தனாக ச்லாகித்துச் சொல்கிறார்., என்றால் அதற்கு ஒரு தினுஸான அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

அதாவது லோகத்தில் பலவிதமான தர்மகார்யங்கள், ஸமூஹப் பணிகள் நடந்தாக வேண்டியிருக்கிறது. ஒரு கோயிலைப் புனருத்தாரணம் பண்ணிக் கும்பாபிஷேகம் நடத்தவேண்டியிருக்கிறது. பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி

வைக்க வேண்டியிருக்கிறது .வேத வித்துக்களை ரக்ஷிக்க வேண்டியிருக்கிறது. இப்படிப் பல பெரிய காரணங்கள் நடந்தாக வேண்டியிருக்கிறது. இவற்றுக்கெல்லாம் நிறையப் பணம் தேவைப்படுகிறது,. இந்தப் பணம் எங்கிருந்து வரும்? தங்கள் செலவுக்குப் போக தர்மம் செய்யக்கூடிய தனிகர்கள் இருந்தால்தானே அவர்களிடமிருந்து நல்ல கார்யங்களுக்காக த்ரவ்யம் கிடைக்கமுடியும்? இந்த மாதிரி, தனக்கென்று இல்லாமல் தன் தேவைக்கு மேற்பட்டதை லோகோபகாரமாக தர்மம் பண்ணுவதற்கே ஒரு அர்த்தார்த்தி பகவனிடம் ப்ரார்த்தனை பண்ணினால், அப்படிப்பட்ட ப்ரார்த்தனையை பகவான் ஒப்புக்கொள்கிறார் என்று வைத்துக்கொள்ளலாம்.

வர்ணாச்ரம தர்மங்கள் யதோக்தமாக நடைமுறையில் அநுஷ்டிக்கப்பட்ட காலத்திலேயே, ப்ராமணனுக்கு அபரிக்ரஹம், ஸமுத்ரத்தைத் தாண்டிப் போகக்கூடாது என்பது போன்ற கட்டுப்பாடுகளைப் போட்ட சாஸ்த்ரம், வைஸ்யர்களுக்கோ, 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்று உபதேசம் பண்ணிற்று. என்ன காரணம்? அப்படி அவர்கள் த்ரவயிம் தேடினால்தான் அநேக தர்ம கார்யங்கள் நடக்க முடியும். நடுவே அவர்கள் கொஞ்சம் அதிக ஸௌகர்யம் (லக்ஷுரி என்கிற போக்ய் வாழ்க்கை) பெற்றாலும் பெற்றுவிட்டுப் போகட்டும், அவர்கள் செய்கிற தானத்தினால் இந்த தோஷம் நிவ்ருத்தியாகிவிடும். கொடுக்கக் கொடுக்கத் தானாகாவே 'லக்ஷுரி' பிடிக்காமல் போய்விடும். தனக்கு வசதி பண்ணிக்கொள்ளாமல் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்பதிலேயே ஆஸ்தை அதிகமாகும். அப்படியே இவன் தனக்காக ஒரு பங்களா வைத்துக்கொண்டாலும், அதிலே பத்து ஏழைகளுக்கு இடம் கொடுக்கத் தோன்றும், ஒரு கார் வைத்துக்கொண்டால் பிறத்தியார் நாலு பேருக்கு உதவியாக அதைக் கொடுக்கத் தோன்றும்.

மொத்தத்தில் ஞானியாகவும், ஞானத்தைத் தேடும் ஜிஜ்ஞாஸுவாகவும்தான் இருக்க வேண்டுமென்பதில்லை- ஆர்த்தனாகவோ, அர்த்தார்த்தியாகவோ இருந்தால் கூடப் பரவாயில்லை, ஏதாவது ஒரு விதத்தில் பகவான் என்று ஒருத்தனை நம்பி அவனிடம் போயவிட்டால் போதும், எதற்காக ப்ரார்த்னை பண்ணினாலும் போதும், கொஞ்சம் கொஞ்சமாக இவனை ப்ரார்த்னை மேலே அழைத்துக்

கொண்டுபோகும். முதலில் நிறையவே செல்வம் செல்வாக்கு வேண்டும் என்று ப்ரார்த்தித்தால்கூட காலக்ரமத்தில் தானாக இந்த மாதிரி ஆசைகள் குறையும். அப்புறம் அடுத்த ஸ்டேஜில் ஒரு கஷ்டம், ச்ரமம், வ்யாதி என்பதற்கும் ப்ரார்த்திக்காமல், நல்ல ஞான வைராக்யாதிகளுக்காகவே ப்ரார்த்தனை பண்ணத் தோன்றும். அதற்கப்புறம் இந்த ப்ரார்த்தனைகூட நின்றுபோய், பக்தியில் உள்ள ஆனந்தத்துக்காகவே பக்தியாக இருக்கிற உயர்ந்த நிலைக்குப் போய்சேரலாம்.

இப்படி லோகரீதியான ப்ரார்த்தனைக்கும் ந்யாயம் காட்ட, ஸமாதானம் சொல்ல இடமிருக்கிறது.

ஆசார்யாளின் 'ஸௌந்தர்ய லஹரி' முடிவில் 'ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா' என்று ஒரு ச்லோகம் வருகிறது. அந்த ச்லோகத்திலிருந்து அம்பாள் படிப்பு, பணம், மன்மதாகரமான சரீர ஸம்பத் முதலான 'ஐஹிகமான (இக உலகத்து) பெருமைகளைக் கூட ஆரம்பக் காலத்தில் தந்து படிப்படியாக பசு - பாசு பந்தத்தைக் கத்திரித்துப் பரானந்தத்தைத் தருகிறாள் என்று தெரிகிறது. ஆகையால் ஒரு 'ஸ்டேஜ்' வரை லௌகிகமாக ப்ரார்த்தனை பண்ணினால் அது தப்பில்லை என்று ஏற்படுகிறது.

ப்ராத்த்தனை பண்ணுகிற வழக்கம் எப்படியோ ஒரு விதத்தில் ஏற்பட்டு விட்டால் தானாகவே அது காலக்ரமத்தில் ஆத்மாபிவ்ருத்திக்காக மட்டும் ப்ரார்த்திக்கிற நிலைக்குக் கொண்டு விட்டுவிடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ப்ரார்த்தனை ஈடேறாமையும் நாஸ்திகமும்**

ஐஹிகமாக நாம் ப்ரார்த்தனை பண்ணுவதெல்லாம் நமக்குக் கிடைத்து விடுகிறதா என்ன? இல்லை. சில ப்ரார்த்தனை

நிறைவேறுகிறது. சில நிறைவேறாமல் போகிறது. ஆனால் நிறைவேறவில்லை என்பதற்காக நாம் பகவானை விட்டுவிடுவதில்லை பக்தியை விட்டுவிடுவதில்லை. வேறே பலனுக்காக பக்தி பண்ணினாலும், ஏதோ நாம் செய்கிற துளிதுளி பக்தியிலும் அதற்கென்றே ஒரு ஸுகம் நமக்குத் தெரிவதால், நாம் வேண்டின பலன் கிடைக்காவிட்டாலும் பக்தியை விடுவதில்லை.

என்னிடமே ரொம்பப் பேர் வருகிறார்கள்., ஏதோ ஒரு கஷ்டம் தீரவேண்டும், பெண்ணுக்குக் கல்யாணம் ஆக வேண்டும். பிள்ளைக்கு வேலை கிடைக்க வேண்டும், வ்யாதி போகவேண்டும், கேஸ் ஜயிக்க வேண்டும் என்று இப்படிப்பட்ட ப்ரார்த்னைக்கா வருகிறார்கள். எல்லாருக்கும் எல்லா ப்ரார்த்தனையும் நிறைவேறுகிறதா? இல்லை. ஆனாலும் அதற்காக அவர்களுடைய அபிமானம் போய்விடவில்லை. தொடர்ந்து வந்து கொண்டேதான் இருக்கிறார்கள். நாம் பரார்த்திப்பதெல்லாம் நமக்குக் கிடைத்துதத்தானாக வேண்டும் என்று எதிர்பார்க்க நமக்கு அருகதையில்லை என்று உள்ளூர நமக்கு ஏதோ ஒரு தினுஸில் தெரிந்திருக்கிறது. அதனால் நம் ப்ரார்த்னை நிறைவேறாவிட்டாலும் பகவானை விடுவதில்லை.

ப்ரார்த்தனை நிறைவேறாததற்காக நாஸ்திகர்களாகப் போகிறவர்கள் ரொம்பக் குறைச்சல்தான். அநேகமாக ஸ்வாபாவிகமாகவே (இயற்கையாகவே) தான் நாஸ்திகர்கள் அப்படியிருக்கிறார்களே தவிர, பக்தி பண்ணினதால் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை என்கிற தாபத்தால் நாஸ்திகராவதென்பது ரொம்பவும் அபூர்வம்தான் லௌகிகமான பலனை உத்தேசித்து ஏதோ கொஞ்சம் பக்தி பண்ண ஆரம்பித்துவிட்டால்கூட ஸரி, அது ஒருபோதும் அழிந்து போய்விடுவதில்லை. வளராமல், பக்வமாகாமல் வேண்டுமானால் போகலாம், ஆனால் அடியோடு இல்லாமல் போய்விடுவதில்லை.

இதனால்தான் க்ருஷ்ண பரமாத்மா, "நீ ஞானியாகவோ, ஜிஜ்ஞாஸுவாகவோ இல்லாவிட்டாலும் ஸரி, ஆர்த்தனாகவோ அர்த்தார்த்தியாகவோதான் என்னிடம் வருகிறாயா? அதவும் ஸரி, ஏதோ காரணத்துக்காக என்னை நம்பி வந்துவிட்டாய் அல்லவா? அதனால் நீயும்

பக்தன்தானப்பா?" என்று பரம கருணையோடு இவர்களையும் பக்தர்களோடு சேர்த்துக்கொள்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஆத்ம ச்ரேயஸுக்கான ப்ரார்த்தனை**

லௌகிகத்தில் நமக்கு எந்த ப்ரார்த்தனை இருந்தாலும் இல்லாவிட்டாலும், 'நமக்கு ஒரு குறையுமில்லை, ஒன்றுக்காகவும் நாம் ப்ரார்த்திக்க வேண்டியதில்லை' என்ற நிறைந்த நிலையை நாம் நிஜமாக அடைகிறவரை ஆத்ம ச்ரேயஸுக்கானவற்றை பகவானிடம் ப்ரார்த்தித்துக் கொண்டிருந்தால் அப்படி ப்ரார்த்திப்பதே நமக்கு ஓரளவு தாப சாந்தியாக இருக்கும். நம் ஆத்மாபிவ்ருத்திக்கு எதெது தேவை என்று பகவானுக்கே தெரியும், நாம் கேட்காமலே அவன் கொடுப்பான் என்பதெல்லாம் வாஸ்தவமானாலும்கூட, நம் கறைகளை அவனிடம் நாமே வாய்விட்டுச் சொல்லிகொள்வதில் நமக்கு ஒரு ஆறுதல் கிடைக்கத்தான் செய்கிறது. இந்த ரீதியில் நாம் ஆத்ம ச்ரேயஸுக்காக என்னனென்னவற்றை ப்ரார்த்திக்க வேண்டும் என்பதை ஆசார்யாள் "ஷட்பதீ" முதல் ச்லோக்தில் சொல்கிறார்.

"ஸுப்ரஹ்மண்ய புஜங்க"த்தில் நம் ஆசார்யாள் செந்தில் நாதனுடைய பத்ரவிபூதி மஹிமையில் ஸகல வ்யாதிகளும் தீருவதைப்பற்றிச் சொல்லியிருக்கிறார். அங்கே 'ஆர்த்தி'க்காகக்கூட அவரே பக்தி பண்ணிக் காட்டுகிறார். "கனகதாரா ஸ்தவ"த்தை எடுத்துக்கொண்டால் அங்கே ஆசார்யாள் 'அர்த்தார்த்தியின் வேண்டுதலைக்கூட ஒப்புக்கொள்கிற மாதிரி மஹாலக்ஷ்மியிடம் தத்யாத் த்ரவிணாம்புதாராம் "மேகம் மழையை வர்ஷிக்கிற மாதிரி செல்வ தாரையைக் கொட்டு" என்று ப்ரார்த்திக்கிறார்.

ஆனால் இந்த "ஷட்பதீ ஸ்தோத்ர"த்தில் ஆர்த்தனாகவும்,

அர்த்தநாரியாகவும் இல்லாமல் ஞானத்தை விரும்புகிற ஸாதகனான ஜிஜ்ஞாஸு எப்படி ப்ரார்த்தனை பண்ணுவானோ அப்படியே பண்ணச் சொல்லிக் கொடுக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஞானத்துக்கும் விஷ்ணு**

மஹாவிஷ்ணுதான் இந்த லோக வ்யாபாரத்தை நிர்வஹம் பண்ணும் பரிபாலன மூர்த்தி. அதனால் அவன் தானாகவே தன் உத்தயோகப்படி ஆர்த்தனுக்கும், அர்த்தார்த்திக்கும் அநுக்ரஹம் பண்ணிவிட்டுப் போகிறான். ஆனால் அவன் இதற்கு மேல் ஞான வைராக்யாதிகளை அநுக்ரஹிக்க சக்தி இல்லாதவனா என்ன? இல்லை. "நாராயணம்பத்மபுவம்"* எனறு ப்ரஹ்ம வித்யா ஆசார்யர்களிலேயே அத்வைதிகள் அவனைத்தான் முதலாவதாக வைத்து நமஸ்காரம் பண்ணுகிறார்கள். லோகபாலகனேதான் லோக வ்யவஹாரமெல்லாம் முடிந்து போகிற தத்வத்துக்கு முதல் ஆசார்யனாக இருக்கிறான். அதனால் அவனிடம் ஞான ப்ரார்த்னையும் பண்ணலாம்.

'ஞானம், முக்தி சிவன்தான் தருவான். இந்த லோக வ்யவஹாரத்துக்குத்தான் விஷ்ணுவைப் பிடிக்க வேண்டும்' என்று தப்பாக நினைத்துக் கொண்டிருக்கிற ஜனங்களுக்கு இது ஒரு பாடமாக இருக்கட்டும் என்று பகவத்பாதாள் நினைத்தாரோ என்னமோ? இப்படித் தோன்றுகிற மாதிரி, ஞான உதயத்துக்குப் பூர்வாங்கமான சித்த சுத்திக்கு வேண்டிய விஷயங்களையே இந்த "ஷட்பதீ" முதல் ச்லோகத்தில் ப்ரார்த்திக்கிறார். இஹம் - பரம், போகம் - ஞானம் என்பதில் இரண்டையும் மஹாவிஷ்ணு அநுக்ரஹம் செய்வாரென்று காட்டி, குறிப்பாக இந்த ஸ்துதியில் இரண்டாவதையே அவனிடம் கேட்கச் சொல்லிக்கொடுக்கிறார்.

ஷட்பதீ மட்டுமில்லை. இன்னும் அநேக ஸ்தோத்ரங்களிலும் மஹாவிஷ்ணுவை ஆசார்யாள் ஞான தாதாவாக வைத்தே ப்ரார்த்திக்கிறார். ஞான கைங்கர்யங்களுக்குப் பாடின "பஜ கோவிந்த"த்தில் அவர் சொல்லியிருப்பது கோவிந்தனைத்தானே? "ஹரிமீடே" ஸ்தோத்ரமென்று அத்வைதமாகப் பண்ணியிருக்கிறார். அதிலே ஒவ்வொரு ச்லோகத்திலும் "ஸம்ஸார இருட்டை அழிக்கும் ஹரியை ஸ்தோத்திரிக்கிறேன் தம் ஸம்ஸார த்வாந்த விநாசம் ஹரிம் ஈடே" என்று முடித்திருக்கிறார். இப்படி அநேகம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**மனம் ஸரியாக**

மனஸை ஸரியாக ஆக்கிக்கொண்டாலொழிய எவனும் ஸௌக்யமாயிருக்க முடியாதென்பதால் அப்படிப் பண்ணிக் கொள்வதற்கான ப்ரார்த்தனையோடு ஆசார்யாள "ஷட்பதீ ஸ்தோத்ர"த்தை ஆரம்பிக்கிறார். வெளி ஸௌகர்யங்கள் எத்தனை இருந்தாலும் மனஸ் நல்ல படியாக இருந்தால்தான் ப்ரயோஜனமுண்டு. இல்லாவிட்டால் துக்கம்தான், அழுகைதான், பயமும் சஞ்சலமும்தான். வெளி ஸௌகர்யங்கள் எதுவுமே இல்லாவிட்டாலும் கூட, மனஸ் மட்டும் இருக்க வேண்டியமாதிரி இருந்துவிட்டதோ, அப்போது ஒரு கஷ்டமும் தெரியாது. "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்ன மாதிரி ஸதானந்தமாக இருந்து கொண்டிருக்க முடியும்.

மனஸ் நல்லபடியாக இருப்பது என்றால் என்ன? எப்போது பார்த்தாலும், 'அது வேண்டும், இது வேண்டும், இப்போது இருக்கிற ஸௌகர்யங்கள் போதாது, பொருள், பதவி, பேர் வேண்டும்' என்று ஓயாமல் எதற்காவது மனஸ் ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கிறது அதாவது எப்போதும்

அத்ருப்தியிலேயே இருந்து கொண்டிருக்கிறது. வேண்டியது கிடைத்துவிட்டது என்றாலும் த்ருப்தியாக நிறைந்திருக்க அதற்குத் தெரிகிறதோ? இல்லை. இன்னம் ஏதாவது தேவையை ஸ்ருஷ்டி பண்ணிக்கொண்டு அதற்காக அலையத்தான் செய்கிறது. இப்படியில்லாமல் மனஸ் த்ருப்தியாக, நிறைந்து இருந்துவிட்டால் அப்போதுதான் ஸரியாக இருக்கிறது என்று அர்த்தம். ஆசை, அதனால் வருகிற அத்ருப்தி, த்வேஷம் போட்டி, பொறமை, துக்கம் இவை உள்ளவரை எத்தனை கோடீச்வரனானாலும், மஹா பண்டிதனானாலும் ஒருத்தனுக்கு சாந்தியும் இல்லை ஸௌக்யமும் இல்லை. 'சாந்தமு லேகு ஸௌக்யமுலேது' என்று த்யாகையர்வாளும், 'அசாந்தஸ்ய குத:ஸுகம்' என்று க்ருஷ்ண பரமாத்மாவும் சொன்ன மாதிரிதான்!க்ருஷ்ணர் சொன்னதை நினைத்துக் கொண்டேதான் த்யாகையர்வாள் இப்படிப் பாடியிருக்கிறார் என்று தோன்றுகிறது. மன நிறைவினால் ஏற்படும் நிம்மதியில்லலாமல் நிஜமான ஸௌக்யம் என்பது இல்லவே இல்லை என்று அந்த இரண்டு பேரும் சொல்கிறார்கள்.

வெளியிலே பார்ப்பதற்கு ஒரு குடம் அழகாக இருக்கிறது. ஆனாலும் அதற்கு அடியிலே நாலு சின்ன ஓட்டை இருந்துவிட்டால், உள்ளே அம்ருதத்தைப் பிடித்துவைத்திரு ந்தால்கூட எல்லாம் ஒழுகித்தானே போகும்? அந்த மாதிரிதான், வெளிப்பார்வைக்கு நாம் ரொம்ப ஸரியாக இருக்கிற மாதிரி தோன்றலாம். பணம், படிப்பு மற்ற லௌகிகமான ஸந்தோஷங்கள் நமக்கு யதேஷ்டமாக இருக்கலாம். ஆனாலும் அத்ருப்தி, கோபம், பொறாமை, அழுகை மாதிரியான நாலு பொத்தல் நமக்குள் கண்ணுக்குத் தெரியாமல் இருந்துவிட்டால் ஆனந்தம் என்கிற அம்ருதத்தை நமக்குள் பிடித்து வைத்துக்காப்பாற்றிக்கொள்ள முடியாது.

ஆகையினால்தான் ஆசார்யாள் "ஷட்பதீ ஸ்தோத்ரம்" ஆரம்பகிக்கும்பபோதே நம் மனஸிலிருந்து கெட்ட உணர்சசி வேகங்கள், அசுத்தங்கள் எல்லாம் போய், அது சுத்தமாக வேண்டுமென்று எடுத்துக் காட்டியிருக்கிறார். அப்படி ஆவதற்கு பகவானிடம் ப்ரார்த்தித்துவிட்டால் போதும், அவன் க்ருபையாலே இதை ஸாதித்துக்கொள்ளலாம் என்று வழி காட்டியிருக்கிறார்.

அவிநயம் அபநய விஷ்ணோ

தமய மந :சமய விஷ்ய ம்ருக - த்ருஷ்ணாம் 1

பூத தயாம் விஸ்தாரய

தாயாய ஸம்ஸார ஸாகரத : 11

இது "ஷட்பதி" முதல் ச்லோகம்.

முதலில் 'அவிநயம் அபநய என்று ஆரம்பிக்கிறது. விநயம் என்று வார்த்தை எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அதற்கு முன்னாடி 'அ' என்று சேர்த்தால் விநயத்துக்கு (எதிர்மறை) என்று அர்த்தம். விநயம் என்றால் பணிவாக, அடக்கமாக, இருப்பது. அவிநயம் என்பது திமிராக, மரியாதையில்லாமல் இருப்பது, 'அபநய' என்றால் 'போக்குவாயாக' என்று அர்த்தம்.

'உபநயனம்' என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். உப - அருகில், நயனம் - கொண்டு விடுவது. ஒரு பையனுக்குப் பூணூல் போட்டு குருகுலவாஸம் பண்ணுவதற்காக ஆசார்யரின் "பக்கத்தில் கொண்டு விடுவது" என்று அர்த்தம். ஒன்றிடம், இன்னொன்றைக் கொண்டு சேர்ப்பது 'உபநயனம்' அதற்கு (எதிர்மறை)தான் அபநயனம்' - அதாவது ஒன்றிடம் இருப்பதை அதிலிருந்து பிரித்துத் தள்ளிவிடுவது 'அபநயம்'. நம்மிடம் இப்போது திமிர்த்தனம், கொழுப்பு, அடங்காமை (அவிநயம்) இருக்கிறது. இதை நம்மிடமிருந்து பிரித்துத் தள்ளுமாறு (அபநயனம் செய்யுமாறு) ஸாக்ஷாத் ஸ்ரீ மஹா விஷ்ணுவிடம் ஆசார்யாள் ப்ரார்த்திக்கிறார். இதுதான் ஷட்பதீ ஸ்தோத்திரத்தின் ஆரம்பம்.

அவிநயம் அபநய விஷ்ணோ 1

"விஷ்ணோ - ஹே விஷ்ணுவே" என்று நேரே பகவானை நிறுத்தி வைத்துக் கூப்பிடுகிறமாதிரி கூப்பிட்டு ப்ரார்த்திக்கிறார். "ஜனங்களுக்கு இருக்கிற தோஷங்களைப் போக்கடி" என்று அவர் ஜனங்களைத் தம்மிடமிருந்து வேறேயாகப் பிரித்துவைத்து, அவர்களுக்காக (அவர்களுடைய தீமீலீணீறீயீ-ல்) வேண்டிக் கொள்ளவில்லை. நம்முடைய தோஷங்களெல்லாம் தம்மிடமே இருக்கிற மாதிரி பாவித்து, தம் ஈச்வரத்வத்தைக் குறைத்துக்கொண்டு,

தமக்காகவே வேண்டிக்கொள்கிற மாதிரி ப்ரார்த்திக்கிறார். தமக்காக, உலக ஜனங்களுக்காக என்று பிரித்துக்கூடக் காட்டாமல் எல்லோருக்கும் பொதுவாக "விநயமில்லாமையைப் போக்குவாயாக" என்று ஆரம்பிக்கிறார்.

"அவநியத்தைப் போக்கு" என்று ஆசார்யாள் ப்ரார்த்திக்கிறார் என்றால் "விநயத்தை உண்டாக்கு" என்றே அதற்கு அர்த்தம். இப்போது நம்மிடம் இருப்பது அவிநயம்தானே? இல்லாதது விநயம். அதனால்தான் "விநயத்தை உண்டாக்கு" என்பதாக இல்லாததைக் கொண்டுவரச் சொல்லாமல், (நம்மிடம்) இருந்துகொண்டு கெடுதல் பண்ணும் "அவிநயத்தைப் போக்கு" என்றார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**முக்யப் பண்பு விநயமே**

இப்போதெல்லாம் பண்பு, நாகரிகம், கலாசாரம், கல்ச்சர் என்கிற வார்த்தைகள் நிறைய அடிபடுகின்றன. ஆனால் இதுகளைச் சொல்லும்போது விநயத்தை முக்யமான அம்சமாக நினைத்து நாம் பேசவில்லை. முன் காலத்தில் இப்படியில்லை. அப்போது கல்ச்சர், கலாசாரம் என்றாலே அதற்கு முதல் லக்ஷணமாக விநயத்தைத்தான் நினைத்தார்கள். கல்ச்சர், கலாசாரம் என்ற வார்த்தைகளுக்கும், கல்வி என்ற வார்த்தைக்கும் ரொம்பவும் ஸம்பந்தம் இருப்பதைக் 'கல்'என்பது இவை எல்லாவற்றுக்கும் பொதுவாக இருப்பதிலிருந்தே தெரிந்தகொள்ளலாம். கல்வி பெற்றவர்கள்தான் கல்சர்டு-ஆக, நாகரிகமுள்ளவர்களாக இருப்பார்கள். இங்கே கல்வி என்கிறபோது எழுதப் படிக்கத் தெரிவதைச் சொன்னதாக அர்த்தமில்லை. நல்ல விஷய ஞானம்தான் கல்வி. அதை 'வித்யா' என்று சொல்வார்கள். அந்த வித்யையின் வாஸ்தவமான ப்ரயோஜனம் நமக்கு

விஷய ஞானம் வந்துவிட்டது என்று திமிர்பிடித்து அலையாமல், 'இன்னமும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது' என்று அடங்கி, விநயமாக இருப்பதுதான்.

ஆதிகாலத்தில் சிஷ்யனானவன் குருவிடமும், தான் கற்கிற கல்வியிடமும், பகவானிடமும், ஸகல லோகத்திடமுமே அடங்கி விநயமாக இருந்ததால்தான் ஆத்ம வித்யையை யதேஷ்டமாக ஸம்பாதித்து வந்தான். ப்ரம்மசாரியானவன் குருகுலவாஸம் செய்கிற காலத்தில் அவன் எத்தனை பெரிய மிராசுதார் வீட்டுப் பிள்ளையானாலும் வீடுவிடாகப் போய் 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று பிச்சை எடுத்து வரவேண்டும் என்று வைத்தார்களே, அது முக்யமாக இந்த அடக்க குணத்தை உண்டாக்கத்தான்.

அந்தக் காலத்தில் குரு, முதல் பாடமாக விநயத்தைத்தான் சொல்லிக்கொடுத்தார். வெறுமே சொல்லிக் கொடுத்தால் வருகிற பாடமா அது? வாஸ்தவமாக அவரே, மாணவர்கள் தாமாக அவருக்கு அடங்கி மரியாதை செலுத்தும்படியான ஆத்ம குணங்களோடு இருந்து வந்தார், வாழ்ந்து காட்டினார். இப்போது தாம்பும் அறுதல், தோண்டியும் பொத்தல் என்கிற ஸ்திதியாக இருக்கிறது.

இப்படியே ஒரு தேசத்து ராஜாவும் ப்ரஜைகளின் மற்ற அபிவ்ருத்திகளைப் போலவே அவர்களை விநயமுள்ளவர்களான இருக்கச் செய்வித்தல் விசேஷ கவனம் செலுத்தி வந்தான். சாஸ்த்ரத்தில் ராஜாவின் கடமைகளைச் சொல்கிறபோது முதலில் "விநயதான"த்தைச் சொல்லிவிட்டு, அப்புறம்தன் "ரக்ஷணம்", "பரணம்" என்பதைச் சொல்லியிருக்கிறது. ஜனங்கள் எல்லோரும் அவரவருக்கான தொழிலில் ஈடுபட்டு, ஸம்பாதித்து, வாழ்க்கை வசதிகளோடு இருக்குமாறு ஸஹாயம் பண்ணி அவர்களைத் தாங்குவது "பரணம்". உள்நாட்டுக் கலகம், வெளிநாட்டு யுத்தம் முதலியவற்றிலிருந்து அவர்களைக் காப்பது "ரக்ஷணம்". தற்காலத்தில் ராஜாங்கக் கடமையாக ரக்ஷணமும் பரணமும் மட்டுமே நினைக்கப்பட்டாலும் சாஸ்த்ரப்படி இதற்கெல்லாம் முந்தி விநயதானம்தான் வருகிறது. அதாவது ஜனங்களைப் பணிவுப் பண்போடு அடங்கியிருக்கும்படிப் பண்ணவேண்டும். எப்படிப் பண்ணுவது என்றால், முறையான

கல்வியினால், ஸத் உபதேசத்தினால், மதாநுஷ்டானங்களினால், தெய்வ விச்வாஸத்தினால் பண்ணவேண்டும்.

அடக்கம், பணிவு, ம்ருதுவான நடவடிக்கை, ('ஜென்டில்மான்' என்கிறார்களே அதில் உள்ள 'ஜென்டில்னெஸ்'), பிறத்தியாருக்கு விட்டுக் கொடுக்கிற ஸ்வபாவம், அஹங்காரமே இல்லாமலிருப்பது எல்லாம் சேர்ந்தததுதான். விநயம் என்கிற குணம். நிஜமான கல்வி இதை ஊட்டவே ஏற்பட்டது.

இதனால்தான் மாணாக்கன், சிஷ்யன் என்பவனுக்கே "விநேயன்" என்று பேர். எவன் விநயமுள்ளவனோ அவனே விநேயன்.' சீடன் என்பதற்குப் பதில் 'விநேயன்' என்றே சொல்வார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**சங்கரரும், சிஷ்யர்களும், விநயமும்**

நம் பகவத்பாதாளைப் பற்றி அவருடைய சிஷ்யரான பத்மபாதாசார்யாள் ஒரு ச்லோகம் பண்ணியிருக்கிறார். "யத் வக்த்ர மாநஸ ஸர" என்று ஆரம்பிக்கும்). அதன் முழு அர்த்தம் இங்கே நான் சொல்லவில்ல. அதிலே "விநீத விநேய ப்ருங்கா" என்று வருகிறதுதான் நம் விஷயத்துக்கு ஸம்பந்தப்பட்டது.

ஆதிசங்கர பகவத் பாதளுடைய மனஸ் எப்படி இருக்கிறது? இதை அந்த ச்லோகத்தில் அவர் கூடவே வஸித்த பத்மபாதாசார்யாள் சொல்கிறார். கரை காணாத விசாலமாக, ஒரே தெளிவாக, ஜில்லென்று இருக்கிறதாம். மாநஸ ஸரஸ், மாநஸஸரோவர் என்றெல்லாம் சொல்கிறார்களே, ஹிமாசலத்தில் இருக்கிற பரம நிர்மலமான விஸ்தாரமான ஏரியை, அந்த மாநஸ ஸரஸாக இருக்கிறதாம் ஆசார்யாளின்

மனஸ். மனஸ் நம் கண்ணுக்குத் தெரியாது. முகம்தான் தெரியும். முகம்தான் மனஸூக்குக் கண்ணாடி, Face is the index of the mind என்கிறார்கள். நாம் வேண்டுமானால் மனஸிருப்பதை முகத்தில் காட்டாமல் வேஷம் போடலாம். ஆசார்யாள் மாதிரியான மஹா புருஷர்களுக்கு அகத்தின் அழுகு முகத்தில் தெரியும்'. ஆகையால் ஸ்ரீ ச்ங்கர பகவத் பாதாளின் முகமும் அவர் மனஸ் மாதிரியே நிர்மலமாக, விஸ்தாரமாக மாநஸ ஸரோவரம் போலவே இருக்கிறது. ஒரு தடாகம் என்றால் அதில் தாமரைப் பூ இருக்கவேண்டுமே ஆசார்யாளின் முக தடாகத்தில் பூக்கிற தாமரைப் பூ எது? ரொம்பவும் உயர்ந்த தத்வங்களை ஒயாமல் பொழிந்து கொண்டிருப்பதும், தாபத்தோடு வருகிற ஜனங்களுக்குப் பரம கருணையோடு ஆறுதல் சொல்வதுமான அவருடைய வாய்தான் அந்தத் தாமரைப் பூ. தாமரைப் பூ என்றால் அதிலிருந்து மகரந்தம், அதாவது, தேன் பெருக வேண்டுமல்லவா? ஆசார்யாளின் வாய்த் தாமரையிலிருந்து பெருகும் தேன் எது? இது தெரியவில்லையா? ஜகத்தை உத்தாரணம் பண்ணுகிற அவருடைய பாஷ்யங்களே தாமரைப் பூவிலிருந்து மகரந்தம் பெருகுகிற மாதிரி அவருடய வாயிலிருந்து பெருகுகிறது. முதலில் அவர் வாயாலேதான் பாஷ்யத்தை உபதேசம் செய்தார் - அவருடைய காலத்தவர்களுக்காக. அப்புறம்தான் நம்மாதிரி பிற்காலத்தவர்களுக்காக பாஷ்யங்களை எழுதி வைத்தது. 'பாஷ்' என்றாலே சொல்வதுதான், எழுதுவதல்ல. 'ஸம்பாஷணை' என்று ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கொள்வதைத்தானே சொல்கிறோம்?

"யத் வக்த்ர" என்று ச்லோகம் ஆரம்பிப்பதில் "வக்த்ர" என்றால் 'முகம்' என்று அர்த்தம். முகம், மாநஸரஸ். அதிலுள்ள வாயிலிந்து வரும் பாஷ்யம், ஸரஸிலுள்ள தாமரைப் பூவிலிருந்து வேரும் தேன். ஆனாலும் ச்லோகத்தில் முகமான ஸரஸ், பாஷ்யமான தாமரைத்தேன் ("பாஷ்யாரவிந்த மகரந்தம்") என்று முகத்தையும் பாஷ்யத்தையந்தான் நேரே மானஸ ஸரஸூக்கும் தேனுக்கும் உவமித்துச் சொல்லியிருக்கிறது. வாய் ஸரஸிலுள்ள தாரையாயிருக்கிறது என்று சொல்லியிருக்கவில்லை. வாய் என்பதற்கு அதில் வார்த்தை இல்லை. பாஷ்யத்தை அரவிந்த மகரந்தம் என்று சொல்லியிருப்பதால், இந்த மகரந்தத்தைப்

பெருக்கும் அரவிந்தமாக வாய் இருப்பதாக நாமே ஊஹித்துக் கொள்ளும்படி விட்டிருக்கிறது. இதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது.

ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ஒரு வேடிக்கை, ஸம்ஸ்க்ருதத்தில் 'வாய்' என்ற அவயவத்துக்குத் தனியாக ஒரு வார்த்தை இல்லை. 'முகம்', 'வக்த்ரம்', 'வதநம்', 'ஆநநம்', 'ஆஸ்யம்' என்கிற மாதிரி Face என்ற அர்த்தத்தில் உள்ள வார்த்தைக்கேதான் 'வாய்' என்றும் அர்த்தம். தமிழில் பார்த்தாலோ 'வாய்'க்குத்தான் வார்த்தை இருக்கிறது. 'முகம்' என்பதற்கு (Face) தமிழ் வார்த்தை இல்லை. 'முகம்' என்பது ஸம்ஸ்க்ருத வார்த்தை. அது தமிழ் தாதுவில் வந்ததல்ல. 'மூஞ்சி' என்று பேச்சு வழக்கில் என்னவோ சொல்கிறோம். ஆனால் அது இலக்கிய மொழி (Literary language) இல்லை. ஸம்ஸ்க்ருதத்தில் வாய் இல்லை, தமிழில் முகம் இல்லை!

இதனால் பழங்காலத்தில் ஸம்ஸ்க்ருத கடிகாஸ்தானங்களிலும், தமிழ்ப் பள்ளிகளிலும் படிக்கிற வித்யார்த்திகள் பரஸ்பரம் கேலி பண்ணிக் கொளவார்களாம். (இப்போது மாதிரி ஸம்ஸ்க்ருதம், தமிழ் என்று கட்சி கட்டிக்கொண்ட குஸ்தி போடாவிட்டாலும் அந்தக் காலத்திலும் அசட்டுத்தனம் கொஞ்சம் கொஞ்சம் இருந்திருக்கிறது அல்லது ஸ்வாதீனத்தில் தமாஷாகக் கேலி செய்து கொண்டதாக இருக்கலாம்) தமிழ் மாணவன் ஸம்ஸ்க்ருதம் படிக்கிறவனைப் பார்த்து, "வாயில்லாதவன்" என்று பரிஹாஸம் பண்ணுவானாம், அவன் இவனைத் திருப்பி, "முகமில்லாதவன்' என்று கேலி பண்ணுவானாம்!

வக்த்ரம் என்றால் முகம், வாய் இரண்டும். அதனால் தான் நாம் 'மூஞ்சி' என்கிறதை 'வக்த்ரம்' என்று அந்த ச்லோகத்தில் சொன்ன பிறகு, வாயைக் குறிப்பிடுவதற்காக எந்த வார்த்தையைப்ப போட்டாலும் அதையும் மூஞ்சி என்றே அர்த்தம் பண்ணிக்கொள்ள இடம் ஏற்பட்டு, 'டூப்ளிகேட்' செய்த மாதிரி ஆகிவிடப் போகிறிதே என்று நினைத்துப் பத்மபாதர் வாய்க்குத் தனியாய் வார்த்தை போடாமல் ஊஹித்தறியுமாறு விட்டுவிட்டார் போலிருக்கிறது.

கவிகள் முகம், கண், பாதம், கை ஆகிய எல்லாவற்றையுமே

தாமரைக்கு ஒப்பிட்டு "மகாம்போஜம்", "நயன கமலம்", "பாத பத்மம்", "கர அரவிந்தம்" என்றெல்லாம் சொல்வார்கள். தம் பெயரிலேயே ஒரு பத்மத்தை வைத்துக் கொண்டிருக்கிற பத்மபாதாசார்யாளோ இங்கே ஆசார்யாளின் முகத்தைத் தாமரை என்று சொல்லாமல் மாநஸஸரஸ் என்று சொல்லி, அவர் உபதேசிக்கிற பாஷ்யத்தைத் தாமரையின் தேன் என்கிறார். தாமரை என்பது வாய் என்று குறிப்பிட்டுச் சொல்லவில்லை. ஆனாலும் அப்படி த்வனிப்பொருளாய் தெரிவிக்கிறார். பாஷ்யம் என்றால் ஃபிலாஸஃபி. அது மண்டையை உடைக்கிற பாறை மாதிரிதான் பொதுவாக இருக்கும். ஆனால் இந்த ஃபிலாஸஃபியே நம் ஆசார்யாளின் தாமரைப் பூ மாதிரி ம்ருதுவான, அழகான வாயிலிருந்து வந்திருப்பதால், ஸுலபமாகப் பருகக்கூடிய மதுரமான தேனாகப் பெருகியிருக்கிறது பாஷ்யங்கனின் உட்பொருளான அத்வைதம்தான் தேனின் ரஸம். அந்த ரஸத்தைப் பருகுவதற்காகக் கூட்டம் கூட்டமாக சிஷ்யர்களான வண்டுகள் வந்து மொய்க்கின்றனவாம். இங்கே சிஷ்யர்களைச் சொல்லும்போதுதான் 'சிஷ்ய' என்று சொல்லாமல் 'விநேய', அதாவது 'விநயமுள்ளவன்' என்று சொல்லியிருக்கிறது.

இந்த ச்லோகத்தில் தாமரையைப் பற்றியும் வண்டைப் பற்றியும் வருகிற மாதிரியே ஆசார்யாளைப் பற்றிய இன்னொரு ச்லோகத்திலும் வருகிறது. எண்ணூறு வருஷங்களுக்கு முற்பட்ட ஒரு கல்வெட்டில் இந்த ச்லோகம் பொறித்திருக்கிறது அந்தக் கல்வெட்டு எங்கே கிடைத்தது என்று சொன்னால் உங்களுக்கு இன்னம் ஆச்சர்யமாயிருக்கும். அது கம்போடியா தேசத்தில் கிடைத்த கல்வெட்டு அந்த அன்ய தேசத்தில் கிடைத்த கல்வெட்டிலே ஆசார்யாளை "பகவத் சங்கரர்" என்று சொல்லியிருக்கிறது. நம் தேசத்தில் அவரை 'பகவத் பாதர்' என்றுதான் சொல்கிறோம் என்றால், கம்போடியாக்காரர்கள் இன்னம் ஒரு படி உயர்த்தி 'பகவான்' என்றே அவரைச் சொல்லியிருக்கிறாக்ள் அந்த ச்லோகத்திலே ஆசார்யாளின் பாதத்தைத் தாமரையாகச் சொல்லியிருக்கிறது. "அங்க்ரி பங்கஜம்" என்று சொல்லியிருக்கிறது. இந்தப் பாத தாமரையை விட்டு அசைய மாட்டோம் என்று லோகத்தில் ஒரு வித்வான்கூட பாக்கியில்லாமல் ('நிச் சேஷமாக' என்று ச்லோகத்தில் இருக்கறிது) தங்கள் தலைகளை அதிலேயே

தாழ்த்திக் கிடக்கிறார்களாம். 'ஸகல வித்வத் ஜனங்களின் சிரஸ்களாகிய வண்டுக்களால் மொய்க்கப்பட்ட பத்ம பாதத்தை உடைய பகவான் சங்கரர்' என்று அந்தக் கல்வெட்டில் இருக்கிறது

நிச்சேஷ - ஸூரி - மூர்தாலி - மாலா - லீடாங்க்ரி - பங்கஜாத் 11

முதலில் நான் சென்ன ச்லோகம் பத்மபாதர் நம் பகவத்பாதரைப் பற்றிப் பண்ணினது. இங்கே பகவத் பாதாளின் பாதத்தையோ முகத்தையோ பத்மமாகச் சொல்லாமல் பாஷ்யத்தைப் பத்மத்தின் மகரந்தமென்று சொல்லியிருக்கிறது. வாய்த் தாமரையிலிருந்து ஊறும் அத்வைதத் தேனைப் பருகுகிறார்களாம் அவருடைய சிஷ்யர்களான வண்டுகள். இங்கே 'சிஷ்யர்கள்' என்று சொல்வதற்கு ச்லோகத்தில் 'விநீத விநேய ப்ருங்கா' என்று வருகிறது.

'விநீத' என்றால் நல்லொழுக்கத்தில் பழக்கப்பட்டவர்கள் என்று அர்த்தம். 'ப்ருங்கா:' என்றால் வண்டுக் கூட்டம். 'சிஷ்யன்' என்பதற்கு 'விநேயன்' என்று போட்டிருக்கிறார்.

கம்போடியக் கல்வெட்டில் "நிச்சேஷ ஸூரி"களும், அதாவது மிச்சம் மீதியில்லாமல் அத்தனை அறிஞர்களும், வண்டுக்கூட்டமாக ஆசார்யாளின் பாதபத்மத்தில் தங்கள் தலையைக் கிடத்தி நமஸ்கரிப்பதாகச் சொல்லியிருக்கிறது. "மூர்த்தா" என்றால் தலை. "மூர்த்தாலிமாலா" மூர்த்தாக்களாகிய "அலிமாலா". "அலிமாலா" என்றால் வண்டுக்கூட்டம். "அலி" என்றால் வண்டு.

பத்மபாதர் வாய்ப் பத்மத்தைச் சொல்லாமல் பாஷ்யத்தேனை சொல்லாமல் விட்டிருக்கிறது. ஆனால் நிச்சேஷ ஸூரி ஜனங்களும், அதாவது ஸகல வித்வத் ஸமூஹமும். பாதபத்மத்தில் வண்டுக்களாகத் தலைகளைக் கிடத்தியிருப்பதாகச் சொல்லியிருப்பதால், அவர்கள் ஸாமான்ய மக்கள் ஸமூஹத்தைப் போல பக்தியினால் மட்டும் பாத வந்தனம் பண்ணுபவர்களில்லை என்றும், பாஷ்யத் தேனை ரஸித்துத்தான் ஆசார்யாளிடம் பக்தி பண்ணுகிறார்களென்றும் உள்ளர்த்தம் ஆகிறது எனலாம்:பாதத்திலிருந்து பாஷ்யம் வந்ததாகச் சொல்வது

பொருந்தாதென்பதாலேயே. பாத பத்மம் என்று மாத்திரம் சொல்லி பாஷ்ய மகரந்தத்தைத் ஊஹித்துக் கொள்ளும்படியாய் விட்டிருக்கிறது.

அப்பய்ய தீக்ஷிதர் ஆசார்யாளின் மேல் செய்துள்ள "அதிகதபிதா பூர்வசார்யான்" என்ற ச்லோகத்தில் அவருடைய (ஆசார்யாளுடைய) வாயான பத்மத்திலிருந்து வெளிவரும் அத்வைத ஸூக்திப் பெருக்கு நம்முடைய பிறவிப் பிணியைப் போக்குகிறது என்று சொல்லியிருக்கிறார். 'ஸூக்தி' என்பது 'ஸு உக்தி' அதாவது 'உத்தமமான வாக்கு'.

அதிகதபிதா பூர்வசார்யாந் உபேத்ய ஸஹஸ் ரதா

ஸரிதிவ மஹீந்பாகாந் ஸம்ப்ராப்ய செளரி பதோத்கதா 1

ஜயதி பகவத்பாத ஸ்ரீமந் முகாம்புஜ நிர்கதா

ஜநநஹரணீ ஸூக்திர் ப்ரஹ்மாத்வயைக பராயணா 11

இங்கே வாய்த் தாமரையையும் அதிலிருந்து பெருகும் பாஷ்ய உபதேசப் பெருக்கையும் சொல்லியிருக்கிறது. ஆனாலும் இது தேன் பெருக்கு என்பதைக் குறிப்பிட்டுக் காட்ட இதிலே வார்தையில்லை. ஆனால், பத்மத்திலிருந்து தேனில்லாமல் வேறென்ன பெருகும்? இதை ஊஹிப்பது கொஞ்சங்கூடக் கஷ்டமில்லையே!

இப்படியாக ஒன்றிலே வாயைச் சொல்லாமல் தேன், இன்னொன்றில் வாய், தேன் இரண்டையும் சொல்லாமல் வண்டுக்கூட்டம், மூன்றாவதில் வாயைச் சொல்லி, தேனைச் சொல்லியும் சொல்லாமல் விட்டிருப்பது என்று பார்க்கிறோம். ஆனால் மூன்றிலுமே சொல்லாததை ஸுலபமாய் ஊஹிக்கும்படி விட்டிருப்பதிலேயே ரஸம் இருக்கிறது.

இவற்றில் பத்மபாதர், சிஷ்யர்களை விநேயகர்கள் என்பது தான் நம் (ஷட்பதீ) விஷயத்துக்கு ஸம்பந்தமானது.

நம் ஆசார்யாளிடம் ஆச்சர்யம் என்னவென்றால் அவருடைய சிஷ்யர்கள் விநயமுள்ள விநேயர்களாக இருந்தது மட்டுமில்லை. ஜகத்குருவான அவரே எல்லோரையும்விட விநயம் உள்ளவராக இருந்தார்.

ஆசார்யாள் 'ஸெளந்தர்ய லஹரி' என்று செய்திருப்பது

தெரிந்திருக்கும். பக்தி, கவித்வம், பாஷை, அழகு, தத்வச் சிறப்பு, மந்த்ர சாஸ்த்ர விஷயங்கள், உவமை முதலான அணிகள் அத்தனையும் ஈடிணை இல்லாமல் சேர்ந்திருக்கிற பரம உத்க்ருஷ்டமான ஸ்தோத்ரம் அது. அதோடுகூட அதற்கே அபாரமான மந்த்ர சக்தியும் இருக்கிறது. இப்பேர்ப்பட்ட ஒரு க்ரந்தத்தைப் பண்ணினவருக்கு எவ்வளவு தற்பெருமை ஏற்பட்டாலும் அது ந்யாயம்தான். ஆனால் நம் ஆசார்யாளுக்கோ, லவலேசமாவது இப்படிப்பட்ட தற்பெருமை - தாம் பெரியதாக ஒன்றை ஸாதித்துவிட்டோம் என்று அஹம்பாவம் - இருந்ததா? இல்வே இல்லை. "ஸௌந்தர்ய லஹரி" முடிவிலே அவர் விநயமே வடிவாக மன்னிப்புக் கேட்கிற பாவனையில் அம்பாளிடம் சொல்கிறார்:"அம்மா!சப்த ஸமுத்ரமாக, வாக் ஸமுத்ரமாக இருக்கப்பட்ட உன்னைப்பற்றி ஏதோ இந்த நூறேநூறு ச்லோகம் பண்ணி உன்னை வர்ணிக்க நான் முயற்சி செய்திருக்கிறேனே!இது எப்படித் தெரியுமா இருக்கிறது? ராமேச்வரத்திலே, ஸேது தீர்த்தத்திலே பக்தர்கள் ஸமுத்ர பூஜை பண்ணுகிறபோது அந்த மஹா ஸமுத்திரத்திலிருந்தே ஒரு கை ஜலத்தை அள்ளி அதற்கே அபிஷேகம் செய்வதாக ஓர் உபசாரம் செய்கிறார்களே, அந்த மாதிரிதான் இருக்கிறது" என்றார். இதே போல் பரம பவ்யமாக இன்னும் மூன்று உதரணமும் கொடுக்கிறார்.

இப்படிப் பரமேச்வராவதாரமாக இருந்த போதிலும் விநயமே வடிவாக இருந்த ஆசார்யாள், ஒரு சக்தியும் இல்லாமலே, அடக்கமில்லாமல் திரிகிற நம்மோடு சேர்ந்து நின்றுகொண்டு, நமக்கு ப்ரார்த்திக்க சொல்லிக் கொடுப்பதற்காகவே "அவிநயம் அபநய" ("என் விநயமின்மையைப் போக்குவாயாக!") என்று 'ஷட்பதீ ச்லோக'த்தை ஆரம்பிக்கிறார்.

அடக்கம் ஒன்று வந்துவிட்டால் போதும், பாக்கி எல்லா நல்ல குணங்களும் அதன் பின்னே தானாக வந்துவிடும். "அடக்கம் அமரருள் உய்க்கும்" என்று திருவள்ளுவர்கூடச் சொல்லியிருக்கிறார்.

பள்ளிப் பருவத்திலேயே விநயத்தில் பழக்கிவிட வேண்டும். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது. வயஸ் ஏறிப் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு, யௌவனம், பதவி,

பணம், பலம் என்று தேடிக் கொள்கிறபோது, விநயம் வருவது ரொம்பக் கஷ்டம். ஆனதால் சின்ன வயஸிலேயே இதில் பழக்கிவிடவேண்டும். மாணாக்கன் என்று சொல்லப்படுகிறவனுக்கு 'விநேயம். என்றே ஆதிநாளில் பேர் வைத்திருந்தது இந்த தத்வ்த்தைத்தான் காட்டுகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஸிக்கியர் மதத்தில்**

மாணாக்கனை 'சிஷ்யன்' எனறும் சொல்கிறோம. சிஷ்யன் என்றால் 'சிக்ஷை பெறுபவன்' என்று அர்த்தம். குருகுலவாஸம் செய்து குருவிடமிருந்து பாடத்தில் மட்டுமின்றி, நடத்தையிலும் பயிற்சி பெறுகிவன்தான் சிஷ்யன். பாடம், நடத்தை இரண்டையும் சொல்லிக் கொடுப்பதுதான் சிக்ஷை. இப்போது சிக்ஷை என்றால் பாட்டு சொல்லிக் கொள்வதைத் தான் நினைக்கிறோம். 'ஸங்கீத சிக்ஷை' என்று சொல்கிறோம். அல்லது ஒரு ஜட்ஜ் தண்டனை விதித்தால், 'ஆயுட்கால சிக்ஷை, தீவாந்தர சிக்ஷை, என்ற மாதிரி சிக்ஷை விதித்ததாகச் சொல்கிறோம். பாட்டு சொல்லிக் கொள்வதையோ தண்டனையையோ தான் 'சிக்ஷை' என்கிறோம். சில ஸமயங்களில் ஸங்கீத சிக்ஷை" என்பதே ஸங்கீதத்துக்குத் தருகிற தண்டனை மாதிரி ஆகிறது என்கிறார்கள் - அது வேறு விஷயம் ஒரு குருகுலத்தில் சிஷ்யனானவன் எப்படி ஆசியிரிருக்கு கட்டுப்பட்டு விநயமாக இருக்கிறானோ அப்படியேதான் ஒரு மதத்தைச் சேர்ந்தவன் அதன் கொள்கைகளுக்கும், அந்த மதாசார்யருக்கும் கட்டுப்பட்டு அடங்கியிருக்கவேண்டும் என்ற கருத்தில் ஸிக்கிய மதத்தை குருநானக் ஸ்தாபித்தார். அதிலே ஹிந்து மதம். இஸ்லாம் இரண்டின் அம்சங்களும் இருக்கின்றன. இஸ்லாம் மதத்தில் கட்டுப்பாடு ரொம்பவும் ஜாஸ்தீ. தங்களடைய மதக்கோட்பாடுகளுக்கும்,

வ்ரதாநுஷ்டானங்களு -க்கும் முஸ்லீம்கள் கட்டுப்பட்டு இருக்கிறமாதிரி மற்ற மதங்களில் சொல்ல முடியாது. இப்படிப்பட்ட அடக்கக் கட்டுப்பாட்டை குருநானக், தாம் ஸ்தாபித்த ஸிக்கிய மத்யஸ்தர்களுக்கு முக்யமாக வைத்தார் .அந்த மதஸ்தர்கள் குருகுலத்தில் மாணவர்கள் குருவுக்குக் கட்டுப்படுகிற மாதிரி மதத்தலைவருக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று கருதினார். அதனால்தர்ன் அந்த மதத்தலைவருக்கு 'குரு' என்றே பெயர் வைத்தார். 'சிஷ்ய' என்பதுதான் 'ஸிக்' என்றாயிருக்கிறது. பஞ்சாப் பக்கங்களில் அதாவது ஸிக்கிய மதம் பரவியுள்ள இடங்களில் வேத அத்யயனம் செய்கிறபோது "ஷ" எனற அக்ஷரத்தை "க" எனறுதான் உச்சரிப்பார்கள் உதாரணமாக "ஹவிஷா" என்று புருஷ ஸூக்தத்தில் வருவதை அவர்கள்"ஹவிகா" என்றே சொல்வார்கள். அதே ந்யாயத்தில் 'சிஷ்ய'விலும் ஷ' என்பது 'க'வாகி 'ஸிக்' என்றாகியிருக்கிறது. இது என் ஊஹம். 'சிக்ஷக' எனபது 'ஸிக்' என்றாகியிருப்பதாகவும் ஊஹிக்கலாம். குருதான் சிக்ஷகர். மற்றவர் சிஷ்யர். 'ச' வை ஷ,ஸ என்றெல்லாம் வடக்கே மாற்றிவிடுவார்கள்!கடைசி எழுத்துக்களை முழுங்கிவிடுவார்கள். ஆகையால் 'சிக்ஷக' என்பதும் 'ஸிக்' ஆகிவிடமுடியும்.

விநயம் என்பது மனிதனுக்கு இருக்கவேண்டிய முதல் குணம். அதனால்தான் 'அவிநயம் அபநய' என்றார் நம் ஆசார்யாள். அவிநயம் போனால் அடக்கம் வந்துவிடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**இருவித அடக்கம்**

இந்த அடக்கத்திலே இரண்டு தினுஸு உண்டு.

இரண்டு விதத்தில் மநுஷ்யனுக்கு அடக்கம் ஏற்பட வேண்டும். ஒன்று, இந்த்ரியங்க்ள் அடங்கியிருப்பது,

அதாவது கண் கண்டதைப் பார்க்கக் கூடாது, மனஸை விகாரப்படுத்தும் காட்சிகளை அது பார்க்கக்கூடாது. ஆலய தர்சனம் போல நல்ல காட்சியே பெறவேண்டும். அதே மாதிரி காது அபஸ்வரமான, நாஸ்திகமான சப்தங்களைக் கேட்கக்கூடாது. நாம கிர்த்தனம், ஸ்தோத்ரம் என்றிப்படியே கேட்கவேண்டும். வாய் சித்த சுத்திக்கு ஹானி உண்டாக்குகிற மது மாம்ஸாதிகள், வெங்காயம் மாதிரி பதார்த்தங்களைத் தின்னக் கூடாது. ஸத்வ அபிவ்ருத்திக்கான ஆஹாரம், நைவேத்யமான ப்ரஸாதம் ஆகியவற்றையே சாப்பிடவேண்டும். வாயால் செய்கிற இன்னொரு கார்யம் பேச்சு. அது வ்ருதாவிலும் வம்பிலும் சண்டையிலும் செலவாகக்கூடாது. பகவந் நாமாவைச் சொல்வதற்கே வாக்கு ப்ரயோஜனமாக வேண்டும். சரீரம் என்பதைக் கொண்டு கீழ்த்தரமான சிற்றின்பங்களைப பெறாமல், அதைக் கொண்டு பரோபகாரமே பண்ணவேண்டும், பூஜையும் ப்ரதக்ஷிணமும் நமஸ்காரமும் பண்ணவேண்டும். இப்படி இந்த்ரியங்களைக் கெட்ட வழியில் போகவிடாமல் அடக்கி நல்லதிலேயே கொண்டுவருவது ஒருவிதமான அடக்கம். இதை 'சமம்', 'தமம்' என்று சொல்வார்கள். "தலையே நீ வணங்காய்' பாடலில் அப்பர் ஸ்வாமிகள் இப்படித்தான் ஒவ்வொரு அவயவத்தையும் பகவத்பரமாக ஆக்குகிறதைச் சொல்லியிருக்கிறார்.

'சம'த்தோடு 'தமம்' என்பதைச் சேர்த்து 'சம தமாதி' என்று சொல்வதுண்டு. 'தமம்' என்பது மனஸை அடக்குவது. இரண்டு விதமான அடக்கத்தில் ஒன்று வெறுமே இந்த்ரியங்களை மட்டும் வெளியில் கெட்ட கார்யத்தில் போக விடாமல் தடுப்பது - இதுதான் சமம். அடக்கத்தில் இரண்டாவது தினுஸான தமம் என்பது மனஸையே, உள்ளே எழுகிற எண்ணத்தையே அடக்கிவிடுவது. கார்யத்தில் கெடுதல் செய்யாமல் இந்த்ரியங்களை அடக்கிவிடலாம். ஆனாலும் மனஸானது அந்தக் கெட்டதுகளையே கல்பித்துக்கொண்டு, அதாவது மானஸிகமாக அந்தக் கெடுதல்களைச் செய்து கொண்டு அதிலே ஸந்தோஷப்பட்டால், வெளி அடக்கத்தால் ஒரு ப்ரயோஜனமும் இல்லை. உள்ளடக்கம்தான் 'தமம்', என்பது.

ஆனால் இந்த உள்ளடக்கம் ஸித்திப்பது ரொம்ப ச்ரமம். முதலில் வெளி அடக்கமான 'சம'த்தைப் பழகிப் பழகி

முன்னேறினால்தான், பிறகு 'தமம்' உண்டாகும். கீதையில் கூட ஓரிடத்தில் (2-59) பகவான் சொல்லியிருக்கிறார். ஆஹாரத்தை விட்டுவிட்ட ஒருத்தனுக்கு (இங்கே 'ஆஹாரம்' என்கிறபோது பகவான் வயிற்றுச் சாப்பாட்டை மட்டுமின்றி கண், காது, மூக்கு, வாய், சரீரம் ஆகியவை அநுபவிக்கின்ற எல்லா விஷய ஸுகங்களையுமே குறிப்பிடுகிறார். இப்படி ஆஹாரம் பண்ணுவதை விட்டுவிட்டவனுக்கு) அநுபோக்யமான அந்த வஸ்துக்கள் விட்டுபோனதோடு ஸரி. ஆனாலும் அந்த வஸ்துக்களை அநுபோகம் பண்ணுவதில் இவன் அடைந்த ருசியின் வாஸனை மட்டும் மனஸில் இருந்து கொண்டுதான் இருக்கும். அந்த ருசியும் போய், மனஸ் எப்போது பூர்ண பரிசுத்தமாக ஆகும்? பரமாத்மாவைப் பார்த்துவிட்டால் அப்புறம்தான் இவனுக்கு வெளி விஷயாநுபோகத்தோடு (வெளி நுகர்ச்சியோடு) உள்ளேயும் ரஸாநுபோக இச்சை தொலையும் என்கிறார்.

"அப்படியானால் மனஸிலிருந்து விஷயவாஸனை போனால்தான் பரமாத்ம தர்சனம் கிடைக்கும் என்பது ஸரியா? அல்லது இங்கே பகவான், 'பரமாத்ம தர்சனம் கிடைத்தால்தான் மனஸிலிருந்தே வாஸனைபோகும்' என்று சொல்வது ஸரியா? இது என்ன, 'கல்யாணமானால் பைத்தியம் தெளியும், பைத்தியம் தெளிந்தால் கல்யாணமாகும' என்கிற மாதிரி அல்லவா இருக்கிறது?"

முதலில் நமக்கு 'மனஸ் சுத்தமாக வேண்டும்' என்ற தாபம் இருக்கவேண்டும். 'மனஸிலிருந்து வாஸனைகள், பழைய ருசிகள் அடியோடு போகவேண்டும்' என்ற தாபமும், தவிப்பும் இருக்கவேண்டும். தவிப்பு இருந்தாலும் இது லேசிலே ஸித்தித்து விடாது. அதற்காக வெளியிலேயாவது இந்த்ரியங்களால் ஸுகங்களை அநுபவிக்காமல் 'சம'த்தை அப்யாஸம் பண்ண வேண்டும். அதிலே முன்னே போகப் போகத் தானாகவே கொஞ்சம் கொஞ்சமாக 'தம'மும் கைகூட ஆரம்பிக்கும் - மனஸிலிருந்தும் வாஸனை வேகம் குறைந்துபோக ஆரம்பிக்கும். குறையுமே ஒழிய அது பூர்ணமாகத் தொலைந்து போகாமல் அவ்வப்போது வழுக்கிவிட்டுக் கொண்டுதான் இருக்கும். உறியடி உத்ஸத்வதில் வழுக்கு மரத்தில் ஏறுகிறவனின் கதையாக, எத்தனை வழுக்கினாலும் நாம் விடாமுயற்சியுடன் மேலே ஏறப்பார்க்க வேண்டும். இதிலே நம் அந்தரங்க சுத்தத்தைத்,

ச்ரத்தையைப் பார்த்துப் பரமாத்மாவே நமக்குக் கடைசியில் தர்சனம் தருவார். அந்த தர்சனம், ஒன்று, ஸகுணமாக அவனுடைய காருண்ய, லாவண்ய மூர்திதியனுடையதாயிருக்கலாம், அல்லது, அரூபத்தில் நிர்குணமாக அவனுடைய ஞானானந்தத்தை நம் ஆத்மாவில், ஆத்ம ஸ்வரூபமாகவே அநுபவிப்பதாக இருக்கலாம். எப்படியானாலும் கொஞ்சம் அவ்வப்போது ஜாடை மாடையாக அந்த தர்சன ருசி கிடைத்துவிட்டதானால் போதும், அப்புறம் இந்த மனஸ் ஒரு நாளும் அதைவிட்டுவிட்டு? மற்ற ருசிகளில், வாஸனைகளில் ஆழ இறங்கி முழுகிப்போகாது. அதற்கப்புறம் வழக்கல் இருக்காது.

சமம், தமம் என்பனவற்றை 'சமாதி ஷட்க ஸம்பத்' என்பதாக ஆத்ம ஸாகதனுக்கு இருக்க வேண்டிய ஆறு ஸம்பத்துக்களில் நம் ஆசார்யாள் வைத்திருக்கிறார்.

'சம'த்தோடு சேர்ந்த நிலைதான் 'சாந்தி' : 'தம'த்தோடு சேர்நத் நிலை 'தாந்தி எனப்படும். இப்போது 'சாந்தி' என்ற வார்த்த நம் எல்லோர்க்கும் தெரிகிறது. 'தாந்தி' என்ற வார்த்தை அவ்வளவாகத் தெரியாது. மடத்து ஸ்வஸ்தி வசனம் தெரிந்தவர்களானால், அதிலே ஆசார்யாளைச் சொல்கிறபோது 'சாந்தி தாந்தி பூம்நாம்' என்று வருவதை கவனித்திருப்பீர்கள். "ஷட்பதீ" ஸ்தோத்ரத்தில் பகவத்பாதாள் பகவானிடம் சாந்தி, தாந்தி இரண்டையும் ப்ரார்த்திக்கிறார்.

மன அடக்கம், புலன் அடக்கம் இதுகளுக்கு முந்தி எளிமையோடு பணிவாக இருக்கிற அடக்க குணம் இருக்கவேண்டும். சமம் வேணும், தமம் வேணும் என்று பகவானிடம் வேண்டிக்கொள்ளவே அடக்க குணமான விநய மனப்பான்மை இருந்தால் தானே முடியும்? அதனால் முதலில் 'அவநியம் அபநய' என்று ஆரம்பித்தார். அப்புறம் 'விஷ்ணோ!' என்று கூப்பிட்டு பகவானைப் பக்கத்தில் நிறுத்தி வைத்துக்கொண்டு,

தமய மந :

சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம்

என்கிறார். "மனஸுக்கு 'தாந்தி', 'தமம்' வேண்டும், அதைப் பண்ணு. என் மனஸை அடக்கு. விஷய ஸுகம் என்கிற கானல் நீரைத் தேடி ஓடுகிற இந்த்ரியங்களுக்கு 'சாந்தி

வேண்டும், அவற்றை அடக்கி, 'சம'த்தை உண்டு பண்ணு"

என்கிறார்.

"தமய மன:" என்பதும், "சமய விஷய" என்பதும் இத்தனை நேரம் நான் சொன்னதிலிருந்து உங்களுக்குப் புரிந்திருக்கும். "ம்ருக த்ருஷ்ணா" என்று வருகிறதே, அது என்ன என்று சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**கானல் நீர்**

"ம்ருக த்ருஷ்ணா" என்றால் "கானல் நீர்" என்று அர்த்தம். ஏன் அப்படி அர்த்தம்?

இதிலே 'ம்ருகம்', 'த்ருஷ்ணா' என்று இரண்டு வார்த்தைகள் இருக்கின்றன. 'ம்ருகம்' என்றால் விலங்கு என்பது பொது அர்த்தம். அதோடுகூட ஸம்ஸ்க்ருதத்தில் 'ம்ருகம்' என்றாலே விலங்கினத்தில் குறிப்பாக மான் என்ற ஒரு ப்ராணியை விசேஷமாகக் குறிக்கும்.

ஸம்ஸ்க்ருத வார்த்தைகளைத் தமிழில் வழங்குகிறபோது சிலதில் அர்த்தத்தில் வித்யாஸம் ஏற்படுகிறது. தமிழில் மிருகம் என்றால் பொதுவான விலங்கினம் மட்டும்தான். ஆடு, மாடு, கழுதை, குதிரை, மான், புலி, சிங்கம் எல்லாமே நமக்கு மிருகம்தான். ஸம்ஸ்க்ருதத்தில் இந்த அர்த்தம் இல்லாமலில்லை. ஆனாலும் மானை மட்டும் குறிப்பாக ம்ருகம் என்று சொல்வது ஸம்ஸ்க்ருத வழக்கு. "ம்ருகாணி", "ம்ருகதரன்" என்றெல்லாம் பரமசிவனுக்கு ஏன் பெயரிருக்கிறது என்றால், அவர் கையிலே ஒரு மானைப் பிடித்துக் கொண்டிருப்பதால்தான். இது மாதிரி இன்னொரு வார்தை "பசு" என்பது. "பசு" என்றால் தமிழில் மாடு, ஆனினம் ஒன்றைத்தான் நினைப்போம். ஆனால்

ஸம்ஸ்க்ருதத்தல் "பசு" என்றால் அது ஆடு, மாடு, குதிரை, கழுதை, புலி, சிங்கம், மான் ஆகிய எல்லா விலங்கரயும் குறீக்கும். அதிலே குறிப்பாக யஜ்ஞத்தில் பலியாகும் ம்ருகத்தைப் பசு என்பார்கள். ஆடுதான் பெரும்பாலும் பலியாவதால் யஜ்ஞ பசு என்றாலே ஆடு என்றுதான் அர்த்தமாகும். மாட்டுக்கும் அந்தப் பெயர் உண்டு. பாமர நிலையிலுள்ள மநுஷ்யனும் கூடப் பசுதான்!காளைமாட்டை வாஹனமாக வைத்துக்கொண்டிருப்போடு, ஜீவாத்மாவுக்கெல்லாம் மேலான பரமாத்மாவாகவும் இருப்பதால் ஈச்வரனைப் "பசுபதி" என்கிறோம். அவர் ம்ருகபாணி, பசுபதி இரண்டாகவும் இருக்கிறார்.

ஸம்ஸ்க்ருதத்தில் மானினத்தை மட்டும் விசேஷமாகக் குறீப்பிடும்"ம்ருக" என்ற சொல்லால் நாம் எல்லா ப்ராணிகளையும் குறிப்பிடுகிறோம் என்றால், இதற்கு மாறாக எல்லா ப்ராணிகளையும் குறிப்பிடுகிற "பசு" என்ற சொல்லால் மாடு ஒன்றை மட்டுமே குறிப்பிடுகிறோம்.

இங்கே "ம்ருக த்ருஷ்ணா" என்கிறபோது 'ம்ருகம்' என்றால் 'மான்' என்று அர்த்தம். 'த்ருஷ்ணா' 'தாஹம்', 'நீர் வேட்கை' என்று அர்த்தம். Thirst என்ற வார்த்தையும் 'த்ருஷ்ணா'விலிருந்துதான் வந்திருக்கும் போலிருக்கிறது. "ம்ருக த்ருஷ்ணா" என்றால் "மானின் தாஹம்" என்று அர்த்தம்.

மானின் தாஹத்துக்கும் கானல் நீருக்கும் என்ன ஸம்பந்தம்?

பாலைவனங்களில் நிறைய மான் கூட்டங்கள் இருக்கும். அவற்றுக்கு வெயில் காலத்தில் "ஹா ஹா" என்று தாஹம் எடுக்கும். ஆனால் பாலைவனத்தில் ஜலம் கிடைக்குமா? கிடைக்காவிட்டால் போகிறது. அங்கே ஜலமே கிடைக்காது என்பதாவது தெரிந்துவிட்டால் மான் கூட்டம் பாலை வனத்தை விட்டு வெளியிலே உள்ள நீர் வளமுள்ள நாட்டுக்கு ஓடிவந்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஆனால் இதையும் செய்ய முடியாமல் ஜலமே இல்லாத பாலலைவனத்தில் ஜலம் இருக்கிற மாதிரி ஒரு ஏமாற்று ஜாலம் நடக்கிறது. அதுதான் கானல்நீர் என்பது. ப்ரதிபிம்பம் (reflection), ஔிச் சிதறல் (refraction) 'தியரி'களைக் கொண்டு ஸயன்ஸில் இதை விளக்குகிறார்கள். மொத்தத்தில்

இது என்னவென்றால், பாலைவனம் மாதிரியான ஒரு விஸ்தாரமான வெளியில் ரொம்பவும் உஷ்ணம் ஏறிப்போய், காற்று ப்ரதேசம் லேசாகி விடுகிறபோது, தூரத்திலிருநது பார்க்கிறவர்களுக்கு ஜலத்திலே ப்ரதிபிம்பம் தெரிகிறமாதிரி மண்ணிலேயே தெரிகிறது. தூரத்திலிருந்து பார்க்கிறபோது வெறும் மணற்பாங்கான பூமியே ஒரு நதி ஓடுகிற மாதிரி தெரியும். அதை நோக்கிப் போகப் போக, அதுவும் தள்ளிப் போய்க்கொண்டேயிருக்கும்.

இப்படிப்பட்ட கானல் நீரைப்பார்த்து மான்கள் வாஸ்தவமான ஜலம் என்ற நினைத்து அதைத் தேடித் தேடி ஓடி கடைசியில் ஓடமுடியாமல் களைத்து, வெயிலின் உஷ்ணம் தாங்காமல், ரொம்பவும் பரிதாபமாக ஜீவனை இழக்கும். ஸம்ஸ்க்ருதத்தில் 'ம்ருக்' என்றால் 'தேடுவது' என்று அர்த்தம. ஓயாமல் எதையாவது தேடி ஓடிக்கொண்டே இருப்பதுதான் 'ம்ருகம்'. கானல் நீரைத் தேடி ஓடி மடிவது மான் என்ற ம்ருகத்தின் பரிதாபமான கார்யமாக இருக்கிறது!

லோகமெல்லாம் மாயை என்று அத்வைத சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது.

"அதெப்படி மாயை? லோகம்தான் கண்ணுக்குத் தெரிகிறதே?" என்று கேட்டால், "கானல் நீர் கூடத்தான் கண்ணுக்குத் தெரிகிறது. அதனால் அது நிஜமாகி விடுமா? அப்படித்தான் இந்த லோகமும் ஒரு கானல் நீர்" என்று அத்வைத க்ரந்தங்களில் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**பாலைவன உவமையின் பொருத்தம்**

இந்தக் கானல் நீர் உபமானம் லோகத்தை ஒரு ஸ்வப்னமாக உவமிப்பதை விடப் பொருத்தம் வாய்ந்ததாகும். ஸ்வப்னம் காண்கிறவரையில் நிஜம் மாதிரியே இருக்கிறது.

விழித்துக்கொண்டபின் அது அடியோடு பொய்யாகப் போய் கனவு கண்ட ஒரே ஆஸாமியின் எண்ணம்தான் கனவில் வந்த அத்தனை ஸ்ருஷ்டியும் என்று தெரிகிறது. அந்த மாதிரிதான் நாம் அஞ்ஞான தசையில் இருக்கிறமட்டும் லோகமே நிஜம் போல இருக்கிறது. ஞானம் வந்துவிட்டால், 'இப்படி ஒன்று இல்லவே இல்லை, ஒரே ஒரு பரமாத்ம ஸத்யம்தான் இப்படிப் பலவகையான உலக ஸ்ருஷ்டியாகத் தோன்றியிருக்கிறது என்று தெரியும். இதனால் மாயையை ஸ்வப்னத்துக்கு ஒப்பிடுவதுண்டு. "ஸரி, அப்படியானால் விழித்துக்கொண்ட பிற்பாடு ஒருத்தனுக்கு ஸ்வப்னம் தெரியாத மாதிரி, ஞானிக்கு லோகமே தெரியக்கூடாது .ஆனால் பரம ஞானிகளான ஆசார்யாள், சுக ப்ரம்மம் மாதிரியானவர்களும், லோகம் என்ற ஒன்று இருக்கிற மாதிரியான பாவனை கொஞ்சம் இருந்தால்தானே' லோக உதாரணத்துக்காக உபதேசங்கள் பண்ணினார்கள்? லோகமே தெரியாத நிலையில் யாருக்கு யார் உபதேசம் பண்ணுவது? என்ன உபதேசம் பண்ணுவது, இவர்கள் உபதேசம் பண்ணினதால் லோகம் இவர்களுக்குத் தெரிந்தது என்று தானே அர்த்தம்? அப்படியானால் இவர்களுக்கு ஞானம் வரவில்லையா?" என்று கேட்கலாம். இங்கே ஸ்வப்ன உபமானத்தைவிட கானல் நீர் உபமானம்தான் பொருத்தமாக பதில் கொடுக்கிறது. ஒருத்தனுக்குக் கானல் நீர் நிஜமான ஜலம் இல்லை என்று தெரிந்துவிடுகிறது. ஆனால் அதற்கப்புறமும் அவன் கண்ணுக்கு ஜலம் ஓடுகிற மாதிரியான அந்தப பொய்த் தோற்றம் நன்றாகத் தெரிந்துகொண்டுதானே இருக்கிறது? இது, கனாவலிருந்து விழித்துக்கொண்டபின் கணா அடியோடு தெரியாத மாதிரி இல்லை. கானல் நீர் நிஜமான நீர் இல்லை என்று தெரிந்த பின்னும் அது கண்ணுக்குத் தெரியத்தான் செய்கிறது. இதனால் அவன் அதை நிஜ ஜலம் என்ற நினைத்து ஓடுகிறவர்களிடம், "ஓடாதீர்கள். ஜலம் மாதிரி கண்ணுக்குத் தெரிந்தாலும் அதில் ஜலம் இல்லை" எனறு எடுத்துச் சொல்லித் தடுக்க முடிகிறது.

"ம்ருக த்ருஷ்ணா" - "மானின் தாஹம்" - என்ற சொற்றொடர் அந்த தாஹத்தினால் தேடப்படும் கானல் நீருக்கே பெயராகிவிட்டது. இது இலக்கியத்தில் அலங்கார சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிற ஓர் அணி(figure of

speech)யின்படி உண்டான பெயர்.

திருமூலர் பஞ்ச இந்த்ரியங்களை "பால் பசு ஐந்து"' எனறு சொன்னார். இங்கே பகவத் பாதாள் இந்த்ரியங்களை மான்களாகச் சொல்கிறார். "கானல் நீரைத் தேடி ஓடி ஓடிப்போய், பாவம், கடைசியில் வெயில் தாளாமல் ப்ராணனை விடுகிற மான்கள் மாதிரி, இந்த்ரியக்ஙள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான அல்பஸுகத்தைத்

தேடித் தேடி ஓடி வீணாகப் போகிறதே!இந்தக் கஷ்டம் வேண்டாமப்பா!புலன்களின் இந்த வேட்கையை அடக்குவாய் - சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம்" என்று மஹா விஷ்ணுவிடம் ப்ரார்த்திக்கிறார்.

லோக வாழ்க்கை ஒரு பாலைவனம். இந்த்ரியங்களுக்கு ஸுகம் மாதிரி இதிலே தோன்றுகிறதெல்லாம் கானல் நீர் தான்.

ஒரு ப்ரதேசம் பாலைவனமாக பின் அதிலே ஜலமே இல்லை. பொய் ஜலம்தான் கானல் நீராகத் தெரிகிறது. ஆனால் அந்த ப்ரதேசம் பாலைவனமாவதற்கு முன் எப்படி இருந்தது என்பதற்கு ஜியாலஜியில் சொல்வதைக் கேட்டால் ஆச்சர்யமாக இருக்கும். ஆதியிலே பெரிய ஜலாசயங்களாக, நீர் நிலைகளாக, ஸமுத்ரமாக இருந்த இடங்கள்தான் பிற்பாடு பல மாறுதல்களால் பாலைவனங்களாகிவிட்டன என்று பூதத்வ சாஸ்த்ரத்தில் ஆராய்ச்சி செய்து விளக்குகிறார்கள். முக்யமாக இப்போது பாலைவனமாக இருக்கிற ப்ரதேசங்களைத் தோண்டிப் பார்க்கிறபோது, அவற்றில் ஸமுத்ரத்தில் மாதிரியே வாழக்கூடிய திமிங்கிலங்கள், மீன்கள் முதலியவற்றின் எலும்புகள், கிளிஞ்சல் சிப்பிகள் முதலியன கிடைக்கின்றன. இதனால் ஆதிகாலத்தில் பெரிய நீர் நிலைகளாக இருந்தவைதான் இன்றைய பாலைவனங்கள ாகியிருக்கின்றன என்று தெரிகிறது. ஒவ்வொரு ஸமயங்களில் ஏற்பட்ட பூகம்பம் முதலான பெரியசலனங்களால் ஸமுத்ரத்திலே சில இடங்களில் அடி பூமி முற்றிலும் மேலுக்கு வந்து வளைத்துக்கொண்டு அதற்கு நடுவே land locked-ஆக ஸமுத்ர ஜலம் தேங்கியிருக்கிறது. அப்புறம் ஸூர்ய உஷ்ணத்தினாலும், இன்னும் வேறு தினுசான பருவ மாறுபாடுகளாலும் இந்த ஜலம் வற்றிப்போன பிற்பாடுதான், ஒரு காலத்தில் நீர்நிலையாக இருந்த இடங்களே பிறகு

சொட்டு ஜலம்கூட இல்லாத பாலைவனங்களாகிவிட்டன என்கிறார்கள்.

பூலோகம் என்ற ஒன்று ஸ்ருஷ்டியாகிற போதே அதன் பூமிப்பகுதியில் தான் மநுஷ்ய இனம் ஜீவிக்க வேண்டும் என்றும் ஸங்கல்பமாகி, அதிலே மநுஷ்யனுக்குத் தேவையான தான்யம் விளையவும், நதிகள் ஓடவும் ஏற்பாடுகள் ஆகியிருக்கின்றன. இந்த ப்ரபஞ்ச நிர்மாணத்தைப் பற்றிக்கொஞ்சம் நினைத்துப் பார்த்தாலே ரொம்ப விசித்ரமாகவும், ப்ரமிப்பாகவும் இருக்கிறது. கடைசியில் இதெல்லாம் பொய், கானல் நீர், ம்ருக த்ருஷ்ணா என்றுதான் இத்தனை நாழி லெக்சர் அடித்தேன். ஆனால் ஒரு கானல் நீர்க்கூடக் கண்ணுக்குத் தெரிகிறவரையில் மஹாவிசித்ரமாக இருப்பதுபோல், இந்த லோகா மாயையும் பகவான் பரம விசித்ரமாகத்தான் நிர்மாணம் பண்ணியிருக்கிறான். இதில் இங்கே ஒரு மலை இருக்கிறது. அங்கே ஒரு பள்ளத்தாக்கு இருக்கிறது. இன்னோரிடத்தில் ஒருநதி ஓடுகிறது என்றால், இவை ஒவ்வொன்றுக்கும் ஒரு ப்ரயோஜனம் இருக்கிறது, அர்த்தம் இருக்கிறது. பௌதிகமான லோகத்தில் ஆறு, மலை, ஸமவெளி என்று பல தினுஸாக வைத்து, ஜீவ சைதன்யமுள்ள ப்ராணி வர்க்கத்திலும், மநுஷ்யன், ம்ருகம், பக்ஷி, நீர் வாழ்வன, நிலம் வாழ்வன என்றெல்லாம் பல தினுஸாக வைத்து, இவற்றையெல்லாம் ஆதி விசித்ரமாக ஒன்றோடொன்று பொருத்தி இயற்கை என்ற பெயரில் பரமாத்மா லீலை செய்கிறார். அந்த லீலையில் சில ஸமயங்களில் பொருத்தமில்லாமல் விபரீதமாகவும் துளித்துளி செய்துவிடுகிறார். முழுக்கப் பொருந்தியிருந்துவிட்டால் இந்த லோகம் தான் முழு நிஜம் என்று ஏற்பட்டுவிடுமே!அப்படித் தோன்றக்கூடாது என்றுதான் போலிருக்கிறது, இதிலே பொருத்தமில்லாமல் விபரீதமாகவும் ஏதாவது அவ்வப்போது நடத்திக் காட்டுகிறார். அதனால் தான் ஒரு பூகம்பம் வருகிறது, ஒரு எரிமலை வெடிக்கிறது. இம்மாதிரி ஒன்றாக, ஸமுத்ரத்திலே சில பாகம் நிலப் பகுதியோடு சேர்ந்து பாலைவனமாகிறது.

ஆதியிலேயே மநுஷ்யனுக்கு இருப்பிடமாக ஸங்கல்பமான பூமியில், அவனுடைய வாழ்வுக்கு அவச்யமான மழை, நதி, பயிர் பச்சை எல்லாம் இருக்கின்றன. ஆனால் இப்போது

விபரீதமாக பூமியோடு ஸமுத்ரப்பகுதியும் வற்றிச் சேர்கிறபோது, இப்படிப்பட்ட பாலைவன பூமியில் மழையும் இல்லை, பயிர் பச்சையும் இல்லை. ஆதியில் பரமாத்மா, 'இது கடல் ப்ரதேசம், அதனால் இந்த இடத்தில் ஜலத்தின் உள்ளோட்டம் வேண்டாம்' என்று வைத்து விட்ட இடம்தானே இப்போது நிலப்பகுதியோடு சேர்ந்து விட்டது, அப்படிச் சேர்ந்துவிட்டது என்பதற்காக அவர் பழைய இயற்கை விதிகளை மாற்றிவிடுவதில்லை. இதனால்தான் ஒரு காலத்தில் ஜல ப்ரவாஹமாக இருந்த இடமே பிற்பாடு சொட்டு ஜலம் இல்லாத பொட்டடலாகி விடுகிறது!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஸஹாரா - ஸாகரம்**

பாலைவன விஷயமாக என் 'ரிஸர்ச் ஒன்றைச் சொல்கிறேன். இப்போது ஸஹாரா பாலைவனமாக இருப்பது ஒரு காலத்தில் ஸமுத்ரமாக இருந்த இடம் என்று ஜியாலஜிக்காரர்கள் சொல்கிறார்கள். உங்களுக்கு ராமாயணக் கதை தெரிந்திருக்கலாம். ஸகரன் என்ற ராஜாவின் பிள்ளைகள் தான் பூமியை வெட்டிக்கொண்டே போய் ஸமுத்ரத்தை உண்டாக்கினார்கள் என்று அதில் சொல்லியிருக்கிறது. ஸகர புத்ரர்கள் வெட்டியதாலேயே ஸமுத்ரத்துக்கு "ஸாகரம்" என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஸாகரம் என்பதுதான் மருவி 'ஸஹாரா' என்றாயிருக்கிறதென்று நினைக்கிறேன்.

இந்தியாவில் ராஜஸ்தானம் இப்படிப்பட்ட ஒரு பாலைவனமாகத்தான் இருக்கிறது பாலைவனத்துக்கு ஸம்ஸ்க்ருதத்தில் 'மருவாடிகா' என்று பெயர். இதனால்தான் ராஜஸ்தான்காரர்களை நாம் 'மார்வாடி' என்று சொல்கிறோம்.

ஒரு காலத்தில் உயிரையும் செழிப்பையும் ஊட்டுவதான ஜலம் ஸமுத்ரமாக இருந்த இடமே இப்போது பாலைவனமாக

இருக்கிறது என்கிற மாதிரி, இந்த லோக வாழ்வான பாலைவனமும் உயிருக்கு ஸாரமான பரமாத்மாவிடமிருந்து வந்ததுதான்!ஆனால் அதிலே இப்போது ஆத்மாவை வளர்க்கிற ஸாரம் இல்லை. காமம், க்ரோதம் முதலான கானல் நீரோட்டம்தான் நம்மை இழுக்கடித்து, அலையாக அலைய வைத்து, நாசம் பண்ணுகிறது. இதைத்தான் ஆசார்யாள் "விஷய ம்ருக த்ரஷ்ணா" என்றார்.

முதலில் விநயத்தை, எளிமையை வேண்டினார். பிறகு மன அடக்கத்தை ப்ரார்த்தித்தார். அப்புறம் இந்த்ரியங்கள் பலவிதமான ஆசைக் கானல் நீரை நோக்கி ஓடாமல் இருக்கும்படி அவற்றின் தாஹத்தை அடக்கச் சொல்கிறார்.

**ஏன் தாந்திக்குப் பின் சாந்தி?**

முதலில் வெளிப்புலனடக்கமும், அதற்கப் பிற்பாடே உள் விஷயமான மன அடக்கமும் ஸித்திக்கும் என்றாலும் இங்கே ஏன் மாறுதலாக, முதலில் மன அடக்கமான தாந்தியையும், பிறகு புலனடக்கமான சாந்தியையும் சொன்னார் என்றால், இந்தப் புலனடக்கமும் மன அடக்கம் என்ற லக்ஷ்யத்துக்கு ஸாதனம் என்று உணர்த்துவதற்காகத்தான். மன அடக்த்துக்காக அல்லாமல், வேறு காரணங்களுக்காகவும் புலனை அடக்கலாம். கண்ணிலே கெடுதல் என்றால் ஸினிமா பார்க்காமல் அந்தப் புலனை அடக்கச் சொல்கிறார்கள். குடலில் புண் என்றால் மது மாம்ஸாதிகளைச் சாப்பிடக்கூடாது என்கிறார்கள். இங்கெல்லாம் ஒரு புலனின் ஆசையை அடக்குவதை மன அடக்கத்துக்கு வழியாகச் சொல்லவில்லை. இப்படியில்லாமல் மனஸ் அடங்குவதற்கு வழியாகவே இந்த்ரிய ஜயம் செய்வதுதான் ஆத்மாபிவிருத்திக்கு வேண்டியது என்பதால், அந்த லக்ஷ்யத்தை மறக்கக்கூடாது என்றே, முதலில் லக்ஷ்யமான மன அடக்கத்தை ப்ரார்த்தித்துவிட்டு, அதற்கப்புறம் அதற்கு ஸாதனமாக புலனடக்கத்தைச் சொன்ன மாதிரி தோன்றுகிறது.

"என் அடங்காப்பிடாரித்தன அவிநயத்தைப் போக்கு. மனஸை அடக்கு. விஷய ஸுகமான கானல்நீரை நோக்கி ஓடுகிற என் இந்த்ரியங்களைக் கட்டிப்போடு" என்று இதுவரை ஒரு பக்தன் தன்னளவில் ப்ரார்த்தித்துக் கொள்ள வேண்டியதையெல்லாம் சொன்னார் ஸ்ரீ ஆசார்யாள். ஒருத்தனுக்கு எளிமை வந்து, மனஸும் இந்த்ரியமும்

வசமாகி ஆசைப் பூர்த்திக்காக அலையாக அலைவதும் முடிந்து விட்டதென்றால், அப்புறம் தன்னளவில் வேறொன்றுமே வேண்டாம்..

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**தனது உய்வோடு உலகமும் உய்ய**

ஆனால் ஆசார்யாள் இப்படித் தன்னளவில் மோக்ஷத்துக்கான உபாயங்களை ஸாதித்துக் கொள்வதோடு ப்ரார்த்னையை நிறுத்தவில்லை. அவர் லோகமெல்லாம் பொய், மாயை என்று ஒரு பக்கம் சொன்னவர் என்றால், இன்னொரு பக்கம் லோகம் முழுதிடமும் பரம கருணை கொண்டவர். லோகம் பொய் என்று அவர் சொன்னபோது இது மலடி மகன் மாதிரியோ முயல் கொம்பு மாதிரியோ முழுப்பொய் என்று சொல்லவில்லை. லோகம் ஒரு ஸ்வபனம் மாதிரி என்பதையே மாயை, பொய், என்றார். ஸ்வப்னம் என்பது மலடிமகன் மாதிரியோ, முயல் கொம்பு மாதிரியோ ஒரு காலும் இல்லாத பொய் இல்லை. ஸ்வப்னம் காணுகிற வரைக்கும் அது இருக்கத்தான் செய்கிறது. ரொம்பவும் நிஜம் மாதிரியே இருக்கிறது. ஆனாலும் விழித்துக்கொண்ட பின் பொய்யாகி விடுகிறது இப்படி அரை குறை உண்மையாக இருப்பதைத்தான் மாயை, மித்யை, ப்ராதிபாஸிக ஸத்யம் என்றெல்லாம் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். லோகத்தையே முழு ஸத்யம் என்ற நினைத்து நாம் தடுமாறிக்கொண்டிருக்கிறோம். நம்மை ஞானிகளாக விழிக்கப் பண்ணி, இந்த ஸ்வப்னத்தைக் கலைத்துக்கொள்ளு ம்படியாகச் செய்யவேண்டும் என்கிறதையே ஒரு ஜன்ம வ்ரதம் மாதிரி வைத்தக்கொண்டு, பரம கருணையுடன் நமக்காக ரொம்ப இள வயஸிலிருந்தே அலுக்காமல் சலிக்காமல் மூன்று தடவை இந்ததேசம் முழுவதையும் சுற்றி ஸஞ்சாரம் செய்தவர் நம் ஆசார்யாள். தாம் ஸதா காலமும்

இருந்து கொண்டிருந்த பரமஞான நிலையிலேயே ஆத்மாராமனாக அவர் பாட்டுக்கு உட்கார்ந்து கொண்டிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யாமல் க்ஷணம்கூடச் சும்மாயிராமல், இத்தனை பாஷ்யம் எழுதினார், ஸ்தோத்ரம் எழுதினார், ஊர் ஊராய்ப்போய் வாதம் பண்ணினார், க்ஷேத்ரம் க்ஷேத்ரமாகப் போய் மூர்த்தி ப்ரதிஷ்டை, யந்த்ர ப்ரதிஷ்டை என்றிப்படிப் பண்ணினார் என்றால் இத்தனைக்கும் காரணம் அவருடைய அளவிட முடியாத கருணைதான்.

அதனால்தான் இந்த ஷட்பதீ ஸ்தோத்ரத்தில் மஹா விஷ்ணுவிடம் ப்ரார்த்தனை பண்ணும்போதும், அவிநயம் அபநய, தமய மன : சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம் என்பதாக ஒரு பக்தன், தன் நிறைவுக்கான ஸகலத்தையும் வேண்டிக் கொள்வதோடு நிறுத்தாமல், இதைத் தொடர்ந்து,

பூத தயாம் விஸ்தாரய

என்கிறார்.

"உயிர்க்குலம் முழுதிடமும் என் அன்பை, அருளை, தயையை விஸ்தாரமாக ஆக்கு அப்பா!" என்று ப்ரார்த்தனை பண்ணுகிறார்.

இங்கே 'பூதம்' என்றால் 'ப்ராணி வர்க்கம்', 'உயிர்க்குலம்.'

தான் உய்வதோடு, தனது அன்பினாலே உலகையும் உய்யப் பண்ணவேண்டும் என்ற நினைத்துச் சொல்கிறார்.

எத்தனை ஞானம் வந்தாலும் போதாது, ஹ்ருதயததில் தயையை ரொப்பிக் கொண்டு ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் நல்லது பண்ணிக்கொண்டே இருக்கவேண்டும். 'சங்கரர்' என்றாலே 'நல்லது பண்ணுகிறவர்' என்றுதான் அர்த்தம் (root-meaning). சம் - நல்லது, கரர் செய்கிறவர்.

பிள்ளையாரைப் பற்றி ஸகலருக்கும் தெரிகிற 'சுக்லாம்பரதரம்' ச்லோகம் மாதிரி, ஒவ்வொரு ஸ்வாமி பற்றியும் ஏராளமான ச்லோகம் இருந்தாலும் ஏதாவது ஒன்று ரொம்ப ப்ரஸித்தமாக இருக்கும். ஸ்ரீ ராமன் என்றால் 'ஆபதாம் அபஹர்தாரம்' பலருக்கும் தெரிந்திருக்கும். ஸரஸ்வதி என்றால் 'யா குந்தேந்து' அநேகமாகப் பல பேருக்குத் தெரியும்.

விஷ்ணுவுக்கு 'சாந்தாகாரம் புஜக சயனம்' ச்லோகம். அம்பாளுக்கு "ஸர்வ மங்கள மாங்கல்யே". இந்த மாதிரி நம் ஆசார்யாளைப் பற்றி ப்ரஸித்தமாக இருக்கிற ச்லோகம்.

ச்ருதி ஸம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம்

நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்

இதிலே முதலில் அவர் வேதம் (ச்ருதி), சாஸ்த்ரம் (ஸ்ம்ருதி), புராணம் எல்லாவற்றுக்கும் உறைவிடமான (ஆலயமான) மஹா பெரிய அறிவாளி என்று சொல்லிவவிட்டு, அப்புறம் "கருணாலயம்", அவர் கருணையே குடிகொண்ட ஒரு கோயில் என்றம் சொல்லியிருக்கிறது. முடிக்கிறபோதும், அவர் சங்கரர், லோகத்துக்கெல்லாம் சம் - கரர், நல்லதைச் செய்பவர் என்றம் சொல்லியிருக்கிறது. ஸகல ஜீவர்களிடமும் கருணை, ஸர்வபூத தயை ஆசார்யாளின் குணவிசேஷம்.

ஆசார்யாள் ஞானத்திலும் ஸமுத்ரம், கருணையிலும் ஸமுத்ரம். அதனால்தான் நமக்கும் ப்ரார்த்தனை பண்ணச் சொல்லிக்கொடுக்கும்போது ஆத்மாபிவ்ருத்தியோடு நிறுத்தாமல், பூத தயையை வேண்டியக்கொள்ளச் சொல்கிறார்.

இங்கே "பூத தயையை விஸ்தாரப்படுத்து என்று மஹா விஷ்ணுவிடம் வேண்டிக் கொண்டவர், 'சிவ அபராத க்ஷமாபன ஸ்தோத்ரம்' என்பதில் பரமேச்வரனை ப்ரார்த்திக்கு ம்போது.

ப்ராணிநாம் நிர்தயத்வம மாபூதேவம் மம பசுபதே!ஜந்ம ஜந்மாந்தரேஷு என்கிறார்.

("பௌரோஹித்யம் என்று ஆரம்பிக்கும்) அந்த ச்லோகத்தில் 'எனக்கு இன்னின்ன நல்லதுகள் வேண்டும்' என்று சொல்லாமல், 'என்னிடம் இன்னின்ன கெட்டதுகள் சேராமலிருக்க வேண்டும்' என்று பலவற்றைச் சொல்லிக் கொண்டே போகிறார். அந்த வரிசையில்தான், "எனக்கு ப்ராணிகளிடம் நிர்தயை (தயையின்மை) ஜன்ம ஜன்மத்திலும் ஏற்படாமல் இருக்கட்டும்" என்கிறார். ஸம்ஹார மூர்த்தியான ஈச்வரனிடத்தில் தயையின்மையை நாசம் செய்யும்படி 'நெகடிவ்' ஆக வேண்டிக்கொண்டவர் இங்கே ஜகத் பரிபாலன மூர்த்தியான மஹா விஷ்ணுவிடம் 'பாஸிடிவ்' ஆக,

பூத தயாம் விஸ்தாரய

என்று ப்ராத்தனை பண்ணுகிறார்.

ஸரி, இன்னம் என்ன ப்ரார்த்தனை பண்ணவேண்டும்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**"அக்கரை அடைவிப்பாய் ! "**

தாரய ஸம்ஸார ஸாகரத:

என்று முதல் ச்லோகத்தை ஆசார்யார் முடிக்கிறார். "ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்று!" என்று அர்த்தம்.

தாரகம் என்றால் கடத்துவிப்பது படகிலே வைத்து ஓட்டிக்கொண்டு போய் அக்கரை சேர்ப்பது என்று அர்த்தம். ப்ரணவத்தையும், ராம நாமாவையும் தாரக மந்த்ரம் என்று சொல்வது வழக்கம். "தாரக நாமா!" என்று த்யாகராஜர் கூட ராமசந்த்ர மூர்த்தியைத் தாபத்தோடு கூப்பிட்டுப் பாடியிருக்கிறார். ஸம்ஸாரக் கடலில் விழுந்து, அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிற நம்மைப் படகிலே தூக்கிப்போட்டுக்கொண்டு பரமபதமான அக்கரையில் கொண்டு போய்ச் சேர்ப்பதுதான் தாரக மந்த்ரம்.

இந்த ச்லோகத்தில் என்னென்னவோ வேண்டிக்கொண்டாரே அவிநயம் போகவேண்டும், மனஸ் அடங்க வேண்டும், இந்த்ரியங்களின் கானல் நீர் வேட்கை முடியவேண்டும், ஸமஸ்த ஜீவ ராசிகளிடம் தயை பெருக வேண்டும் என்றெல்லாம் வேண்டிக்கொண்டாரே, அத்தனைக்கும் முடிந்த முடிவு என்ன என்றால், ஸம்ஸாரம் என்ற இந்த ஜனன - மரண சக்ரத்திலிருந்து தப்பி, மோக்ஷ ஸ்தானம் என்ற நித்ய ஸுகமான விடுதலை நிலையில் சேரவேண்டும் என்பதுதான்.

இப்போது நாம் இந்த ஸம்ஸாரத்தில் சிக்கிக்கொண்டு அவதிப்படுவது நன்றாகத் தெரிகிறது. இதிலிருந்து மீள வேண்டும். மீட்கிறவன் பகவான்தான். அவனிடம், "அப்பா, இந்த பவக் கடலிலிருந்து அக்கரைக்குக் கடத்துவி!"

தாரய ஸம்ஸார ஸாகரத:

என்று ப்ராத்தனை பண்ணவேண்டும்.

அவன் இந்த ஸ்ம்ஸாரக் கடலிலிருந்து நம்மை மீட்பானானால் அப்புறம் நாம் இப்போது இந்த லோகத்தில் படுகிற துக்கம், கஷ்டம் இராது. அந்த மட்டில் இப்பாதைக்குப்போதும். உங்களுக்கு நான் அத்வைத முக்தி, த்வைத முக்தி, விசிஷ்டாத்வைதமுக்தி என்றபேதங்களையெல்லாம் இங்கே சொல்லப்போவதில்லை. எந்த ஸித்தாந்தத்தைச் சேர்ந்தவர்களானாலும் பகவத்பாதாள் இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிற மாதிரி பகவானிடம் ப்ரார்த்னை பண்ணுவோம். ப்ரார்த்தனைக்கு பலனைத் தரவேண்டிய பலதாதாவாக இரக்கப்பட்ட பகவான் எந்த தினுஸில் நமக்கு இந்த ஸம்ஸாரத்திலிருந் மீட்சி தர நினைக்கிறோனோ, அப்படித் தருவான்.

இங்கே "தாரய ஸம்ஸார ஸாகரத:" என்று சொன்ன மாதிரியே, இதைவிடக் கூட மனஸை உருக்கும்படியாக 'பஜ கோவிந்த'த்திலும் ஆசார்யாள்,

இஹ ஸம்ஸாரே பஹு துஸ்தாரே

க்ருபயா பாரே பாஹி முராரே

என்று முறையிட்டிருக்கிறார்.

தாரம் - கடப்பது, துஸ்தாரம் - கடக்க முடியாதது., பஹு துஸ்தாரம் - இந்த ஸம்ஸாரம் அடியோடு கடக்க முடியாததுதான். அதாவது நாமாக எத்தனை முயற்சி பண்ணினாலும்முடியாதது. ஆனால் பகவானின் க்ருபை பொங்கி வந்துவிட்டால் இந்த ஸம்ஸாரம் என்ன பண்ணும்? அவனுடைய அருளால் எதைத்தான் செய்ய முடியாது? "அப்படிப்பட்ட உன் க்ருபையால் என்னை அக்கரை சேரப்பா, முராரியே!" என்று ப்ரார்த்திக்கிறார். பாரம் என்றால் கரை. இங்கே ஸம்ஸாரக் கடலின் அக்கரையில் சேர்ககச்

சொல்வதாக அர்த்தம்.

புத்தியிலும், ஞானத்திலும், வாக் சக்தியிலும் மேரு மாதிரியான நம் ஆசார்யாள், பரம பவ்யமாக அடங்கி நின்று, 'நம்மால் ஆவது எதுவுமில்லை, ஈச்வர க்ருபைதான், தயைதான் எதையும் செய்யும்' என்கிற விநயத்தோடுகூட 'க்ருபயா', 'தயயா' என்று சொல்கிற இடங்கள் 'ஸௌந்தர்ய லஹரி'யிலும் உண்டு. "தகுதி பார்க்காமல் என்னையும் உன் கடாக்ஷ தாரையால் க்ருபையோடுகூட ஸ்நானம் பண்ணுவிப்பாய் அம்மா" என்கிற இடத்தில் "ஸ்நபய க்ருபயா மாம் அபி சிவே" என்கிறார். மறுபடியும், "அம்மா, என் தலையிலும் கூட உன் பாதங்களை தயையோடு வைப்பாய்" என்கிறபோது, "சிரஸி தயயா தேஹி சரணௌ என்கிறார்."

ஷட்பதீ ஸ்தோத்ரத்தில் 'க்ருபயா' என்று போடாவிட்டாலும் இந்த ஸ்துதி பூராவும் பகவானின் க்ருபையையும் மற்ற அநந்தகல்யாண குணங்களையும் பரம மங்கள ஸ்வரூபத்தையும் நினைத்துக்கொண்டேதான் செய்திருக்கிறார். நமக்கே அவனிடமிருந்துதான் பூத தயை வேண்டுகிறோம் என்றால் அதன் தயாளுவாக, க்ருபாளுவாகத்தானே இருக்கவேண்டும்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**இனிய எளிய ச்லோகம்**

அடுத்த ச்லோகத்தில் பகவானின் பாதத்தை வர்ணிக்கிறார் நம் பகவத்பாதார். "ஷட்பதீ"யின் அடுத்த பதம் பகவத் பாதம்!

திவ்யதுநீ - மகரந்தே

பரிமள பரிபோக ஸச்சிதாநந்தே!

ஸ்ரீபதி பதாரவிந்தே

பவ பய நேத ச்சிதே - வந்தே!

திருப்பித் திருப்பி சொல்லிக் கொண்டேயிருக்கலாம் போல் மதுரமான அக்ஷரங்களோடு, லளிதமான பதச்சேர்க்கையோடு இருக்கிறது ச்லோகம். பகவானின் பாத தாமரையை வர்ணிக்கிற ச்லோகத்தில் வார்த்தைகளும் புஷ்பம் போல் ம்ருதுவாக அமைந்திருக்கின்றன. 'மகரந்தே', 'ஆனந்தே', 'அரவிந்தே', 'வந்தே' என்று ஒவ்வொரு பாதமும் rhyme-ஆக முடிவதிலேயே ஒரு ஆனந்தம் சுரக்கிறது.

செய்யுளின் ஒவ்வொரு அடியின் ஆரம்பமும் rhyme ஆவது தமிழில் விசேஷமாக இருக்கிறது. இதற்குத்தான் 'எதுகை' என்று பெயர். தேவாரத்தில், திவ்ய ப்ரபந்தத்தில் எங்கே பார்த்தாலும் இப்படித்தான் ஒவ்வொரு அடியின் நாலுவரியிலும் ஆரம்ப அக்ஷரம் ஒரே தொனியில் எல்லாம் நெடிலாகவோ, குறிலாகவோ ஆரம்பிக்கும், அந்த முதல் வார்த்தையின் இரண்டாம் எழுத்து நாலு அடியிலும் ஒன்றாகவே இருக்கும்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி

ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது

வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது

நாதன் நாமம் நமச்சி வாயவே

என்கிறபோது, முதலெழுத்து எல்லாம் - கா, ஓ, வே, நா என்கிற - நாலும் நெடிலாக இருக்கின்றன. இரண்டாவது எழுத்து நாலுவரியிலும் 'த'தான் இது ஞான ஸம்பந்தர் தேவாரம். இதே மாதிரி அப்பர் ஸ்வாமிகள் நமசிவாய மஹிமையைச் சொல்லி,

சொற்றுணை வேதியன் சோதி வானவன்

பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்

கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்

நற்றுணை யாவது நமச்சி வாயவே

என்று பாடுகிறபோது, முதல் வரியின் முதல் எழுத்து 'சொ' என்று குறிலாக இருப்பதால் மற்ற வரிகளிலும் 'பொ', 'க', 'ந' என்று குறிலே ஆரம்பமாயிருக்கிறது. இந்த தேவாரத்தில் 'ற்று' இரண்டாவது எழுத்தாக மட்டுமில்லாமல், மூன்றாவது எழுத்தான'ணை'யும் எல்லா வரியிலும் திரும்புகிறது.

ஒரு செய்யுளின் ஆரம்ப வார்த்தைகள் "ரைம்" ஆகிற எதுகையை ஆரம்ப ப்ராஸம் என்பார்கள். ஸாதாரணமாக ஸம்ஸ்க்ருதத்தில் இப்படி ஆரம்ப வார்த்தைகள் 'ரைம்' ஆகாமல் ஒவ்வொரு வரியின் முடிவான வார்த்தையும்தான் "ரைம்" ஆவது வழக்கம். அந்திய வார்த்தை ஒரே மாதிரி வருகிற இந்த அணியை அந்த்ய ப்ராஸம் என்பார்கள். உதாரணமாக இநத் மடத்துப் பூஜை முடிவில் ஒவ்வொரு வேளையும் சொல்கிற

ஸமரவிஜய கோடீ ஸாதகாநந்த தாடீ

ம்ருதுகுண கணபேடீ முக்ய காதம்ப வாடீ

முனிநுத பரிபாடீ மோஹிதாஜாண்ட கோடீ

பரமசிவ வதூடி பாதுமாம் காமகோடீ

என்கிற ச்லோகத்தில் பளிச்சென்று தெரிகிற மாதிரி ஒவ்வொரு அடியின் முடிவம் 'ரைம்' ஆகிற அந்த்ய ப்ராஸம் வருகிறது. இது ஜகன்மாதாவான காமாக்ஷியைப் பற்றி மூகர் பண்ணின "பஞ்ச சதீ"யில் வருகிற ச்லோகம்.

தத்வ ரீதியிலும், அநுபவரீதியிலும், கவித்வ ரீதியிலும் உயர்ந்ததான ஸ்துதிகளில் இம்மாதிரிச் சொல்லணிகளும் சேர்ந்து அவற்றின் அழகையும் சிறப்பையும் உயர்த்துவதுண்டு, ஷட்பதீ ஸ்தாத்ரத்திலும் இப்படிப்பட்ட சொல் ஜாலங்கள் (word-play) நிறைய உண்டு.

இடையின, மெல்லின, எழுத்துக்களில் ஒரே மாதிரியானவை திரும்பத் திரும்ப வந்தால் சொல்வதற்கே மதுரமாக இருக்கும். 'அவிநயம் அபநய, தமய மந:சமய' என்கிறபோது ந,ய,ம என்ற அக்ஷரங்கள் திரும்பத் திரும்ப வருகின்றன. சொல்ல அழகாக இருக்கிறது. ஒரே போன்ற சப்தங்களுள்ள

வார்த்தைகள் அடுக்காக வருகின்றன. 'விஸ்தாரய - தாரய' என்றும் போட்டிருக்கிறார். இதை 'யமகம்' என்றும் 'மடக்கு' என்றும் சொல்வார்கள்.

உச்சரிப்பதற்கு அழகாக இருப்பதோடு இப்படிப்பட்ட சொல்லணிகளைச் கையாள்வதால் அவை மனஸில் நன்றாப் பதிந்து ச்லோகங்களை நினைவு வைத்துக்கொண்டு மனப்பாடம் பண்ணுவதும் ஸுலபமாகிறது.

இரண்டாவது ச்லோகம், சற்று முன் சொன்னேனே, அதில் 'மகரந்தே, ஆத்நதே, அரவிந்தே, வந்தே என்று அந்த்ய ப்ராஸம் வைத்துக் கவித்வ ரீதியில் ச்லோகத்தை அலங்காரம் பண்ணியிருக்கிற ஆசார்யாள், அதனாலேயே நாம் சுலபமாக நெட்டுருப் போடுகிற மாதிரியும் அநுக்ரஹம் பண்ணியிருக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**திருமகளும் தாமரையும்**

பகவான் விஷ்ணுவின் பாதங்களைத் தாமரைப் பூவுக்கு ஒப்பிடுகிறார் நம் பகவத்பாதர்கள்.

ஸ்ரீபதி பதாரவிந்தே

'பத அரவிந்தம்' என்றால் திருவடித் தாமரை. ஸ்ரீ என்றால் மஹாலக்ஷ்மி. ஸ்ரீபதி - லக்ஷ்மி நாராயணன். ஸ்ரீ பதிக்குத் தாமரைப் பாதமிருப்பது மிகவும் பொருத்தம் ஏனென்றால் லக்ஷ்மிக்கு தாமரைப்பூ ஸம்பந்தம் ரொம்பவும் ஜாஸ்தி.

பத்மப்ரியே பத்மினி பதம் ஹஸ்தே

பத்மாலயே பத்ம தளாயதாக்ஷி

என்று அவளை ஸ்தோத்ரம் செய்வார்கள். அவளுக்கு

தாமரைப் பூவிடம் ப்ரியம் அதிகம். ஆகையால் "பத்மப்ரியே!" பத்மினி என்றால் தாமரைக்கொடி. மஹாலக்ஷ்மி இப்படித்தான் ஸௌகுமார்யத்தால் துவண்ட கொடியாக இருக்கிறார். பெண்களில் உத்தமமான லக்ஷணம் உடையவர்களை 'பத்மினி ஜாதி' என்பதே வழக்கம். 'பத்மினி' என்றால் பத்மங்களை உடையவள் என்று அர்த்தம் செய்துகொள்ளலாம்.

லக்ஷ்மி நித்யவாஸம் செய்வதாக ஐந்து இடங்கள் உள்ளன. தாமரைப் பூவின் மத்தி, யானையின் மஸ்தகம் (தலை), பசுவின் பின்புறம், வில்வ இலையின் பின்பக்கம், ஸுமங்கலிகளின் ஸீமந்தம் (வகிடு) என்பவை இந்த ஐந்து. இப்படி ஐந்து இருந்தாலும் எல்லாருக்கும் தெரிந்தது அவள் தாமரைப்பூவில் உட்கார்ந்திரு -க்கிறாளென்பதுதான். படங்களில் அப்படியே போட்டிருக்கிறது. சில்பங்களும் அப்படித்தான் இருக்கின்றன. அதனால்தான் "பத்மாலயே!" என்றது.

அவளுடைய நான்கு கைகளில் இரண்டில் இரண்டு தாமரைப்பூவை வைத்துக்கொண்டிருக்கிறாள். ஆகையால் "பத்மஹஸ்சதே" அவளுடைய கண்கள் விரிந்த தாமரை இதழ்போல இருக்கின்றனவாதலால் "பத்மதளாயதாக்ஷி". அவளுடைய முகமும் தாமரை போன்றது. இந்த ச்லோகத்தில் அதைச் சொல்லாவிட்டாலும் (லக்ஷ்மி) அஷ்டோத்ரத்தில் "பத்ம முகி" என்று இருக்கிறது.

பத்ம ஸம்பந்தமாகவே அதிலும் அநேகம் பெயர்களைச் சொல்லியிருக்கிறது. தாமரைப் பூவாலேயே மாலை போட்டு கொண்டிருக்கிறாளாம். "பத்ம மாலாதரா". அவளுடைய திவ்ய தேஹம் தாமரை போன்ற வாஸனை வீசுகிறதாம். "பத்ம கந்திநி". இவள் "பத்ம ப்ரியா"வாகத் தாமரையிடம் ப்ரியம் வைத்துள்ளதுபோல இவளிடம் ப்ரியம் வைத்திருப்பது யாரென்று பார்த்தால் அது நாபியிலேயே ஒரு தாமரையை மலர்த்திக்கொண்டிருக்கிறனவாக இருக்கிறது - "பத்மநாப ப்ரியா" என்று அஷ்டோத்ரம் சொல்கிறது.

'பத்மாவதி', 'கமலா', 'அம்புஜா' (பங்கஜா) என்றெல்லாம் தாமரையை வைத்தே லக்ஷ்மிக்குப் பெயர்கள் இருக்கின்றன.

இதற்கேற்றாற்போல் அவளுடைய பதி, ஸ்ரீபதியின் பதம்

தாமரையாக இருக்கிறது. ஸ்ரீபதி பதாரவிந்தே. அரவிந்தாஸனையான லக்ஷ்மி க்ஷீராப்தியில், சேஷ பர்யங்கத்தில் பகவானின் பாதாரவிந்தத்தைத்தான் பிடித்துக்கொண்டிருக்கிறாள். அவளையும் இந்த ச்லோகத்தில் சொல்லாமல் சொல்லி தம்பதி ஸமேதராக தர்சனம் பண்ணி வைக்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**கங்கை சுரக்கும் திருவடி**

தாமரை என்றால் அதிலிருந்து தேன் சுரக்க வேண்டும். பகவானின் பாத தாமரையிலிருந்து எந்த தேன் சுரக்கிறது?

திவ்யதுநீ மகரந்தே

'மகரந்தம்' என்றால் தேன்'. 'துநீ' என்றால் நதி. 'திவ்யதுநீ' என்றால் தேவ லோகத்து நதி. கங்கைதான் ஆகாசத்திலும் பூமியிலும் பாதாளித்திலும் மூன்று பெயர்களில் பாய்கிற நதி. மஹாபலி சக்ரவர்த்தியின் பாய்கிற பகவான் குட்டை ப்ரம்மசாரியாக வந்த அப்புறம் விச்வாகாரமாக த்ரிவிக்ரமாவதாரம் செய்த ஒரே காலால் தேவலோகம் முழுதையும் அளந்தார் அல்லவா? அப்போது அந்தப் பெரிய பாதம் தேவலோகத்தை எட்டியபோது ப்ரம்மா ஓடோடி வந்து அந்த திவ்ய சரணத்துக்கு அபிஷேகம் பண்ணினார். அப்படிப் பண்ணிய ஜலமே மந்தாகினி என்ற பெயரில் ஆகாச கங்கையாகிவிட்டது. அதுதான் 'திவ்ய துநீ'.

பகவானின் மஹா பெரிய பாத பத்மத்திலிருந்து அபிஷேக ஜலம் கங்கையாகப் பாய்வதைப் பார்க்கிறபோது வெளியிலிருந்து ப்ரம்மா அதில் ஜலத்தைக் கொண்டுவந்து வார்த்து. அந்த ஜலம் வழிகிற மாதிரி இல்லை. பெரிய தாமரைப்பூ மாதிரி இருக்கிறதே இந்தப் பாதம், இந்தத் தாமரையேதான் அந்த கங்கையான தேனைத் தன்னிலிருந்தே

பொழிய விடுவதுபோல் இருக்கிறது - திவ்ய துநீ மகரந்தே.

பகவானின் பாத தாமரை ஸுகந்தம் வீசுகிறது. நாமெல்லாம் ஸெண்ட் போட்டுக்கொண்டால் தான் வாஸனை பகவான் ஸ்வாபாவிகமாகவே (இயற்கையாகவே) திவ்ய 'கந்த த்வாராம்' என்றெல்லாம் வேதத்திலேயே தெய்வ மூர்த்திகளைச் சொல்லியிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஸம்ஸாரம் நீக்கி ஸதாநந்தம் அருளும் அடி**

பரிமள பரிபோக ஸச்சிதாநந்தே என்று ஆசார்யாள் சொல்கிறார். பரிமளம் என்றால் ஸுகந்தம். பரிமளரங்கநாதர் என்றே சொல்வதுண்டு.

'பரிபோகம்' - ஸுகித்து அநுபவிக்கக்கூடியது. எத்தனை ருசித்தாலும் திகட்டாத ஆனந்தம் தருவது. எப்படிப்பட்ட ஆனந்தம்? ஸாதாரண விருந்து, நிலாச் சாப்பாடு சாப்பிடுகிற ஆனந்தமா? இல்லை. (தைத்திரீய) உபநிஷத்தில் ஆனந்தத்துக்கு மேல் ஆனந்தம் என்று ஒவ்வொரு தினுஸான ஆனந்தத்தையும் அடக்கிக்கொண்டே போய் அதன் உச்சியாகச் சொல்லியிருக்கிற ப்ரம்மானந்தத்தையே தருவது பகவானின் பாதம்.

ப்ரம்மத்தை ஸத்-சித்-ஆனந்தம் என்பார்கள். அது தான் அழியாத உண்மைப் பொருளான ஸத். அதுவே அறியப்படுவதாகவும் அறிகிறவனாகவும்கூட இருக்கிற அறிவு: சித். அந்த நிலையில் தனக்கு வேறாக எதுவுமே இல்லாமலிருப்பதுதான் சாச்வத ஆனந்தம்: ஸச்சிதானந்தம். இந்த ஸச்சிதானந்ததையே தேனாகப் பொழிந்து கொண்டும், ஸுகந்தமாக மணம் விசிக்கொண்டும் இருப்பது ஸ்ரீ பதியின் பாதாரவிந்தம்:

திவ்யதுநீ மகரந்தே

பரிமள பரிபோக ஸச்சிதானந்தே

ஸ்ரீபதி பதாரவிந்தே

அது ஸச்சிதானந்தைத்க் கொடுக்க வேண்டும் என்றால் அதற்கு முன்னால் இந்த ஸம்ஸார பயத்தைக் கெடுக்க வேண்டும்.

பவ பய கேத - ச்சிதே வந்தே

முதல் ச்லோகத்தில் தாரய ஸம்ஸார ஸாகரத என்று வேண்டிக்கொண்டார் அல்லவா? அதில் வந்த ஸம்ஸாரமே இதில் 'பவ பய' என்பதில் வரும் பவம்.

'ஸம்ஸாரம்' என்பதை 'பவம்', 'பவம்' என்றும் சொல்வார்கள் 'பவவினை' 'பவஸாகரம்' என்றெல்லாம் பாட்டுக்களில் வரும். பவம் என்றால் உண்டாவது. சரவணத்தில் உண்டானவன் சரவணபவன். உத்பவம் என்கிறோமே, அது 'பவ'த்தின் அடியாகப் பிறந்த வார்த்தைதான். ஸம்ஸார என்றால் நிலையில்லாமல் ஓடிக் கொண்டேயிருப்பது. அது 'பவ'மானது. அதாவது அது "உண்டான வஸ்து". உண்டானது என்பதாலேயே இது அநாதியாக, ஸ்வயம்புவாக இருப்பதல்ல என்றும், இன்னொன்றிலிருந்து பிறந்ததே என்றும் தெரிந்துவிடுகிறது. இதற்கு ஆதியும், பிறப்பும் இருப்பதாலேயே அந்தமும், அழிவும் இருந்துதான் ஆக வேண்டும். இது எதனிடமிருந்து உண்டாயிற்றோ அந்த பரமாத்ம தத்வமே ஆதியந்தமற்ற நித்யவஸ்து.

பவன் என்று பரமேச்வரனுக்கும் பெயருண்டு. பவன், சர்வன், ருத்ரன், பசுபதி, உக்ரன் மஹாதேவன், பீமன், ஈசானன் என்ற எட்டுப் பெயர்களும் பரமசிவனுக்கு ரொம்பவும் விசேஷமானவை. பவனின் பத்னிதான் 'பவானி', சர்வனின் பத்னி 'சர்வாணி', ருத்ர பத்னி ருத்ராணி, இப்படியே ஈசானன் - ஈசாவனி. எல்லவாற்றையும் உண்டாக்குவதால் அவன் 'பவன்'. அழிப்பதால் 'சர்வன்'. ஆக்குகிறவனேதான் அழிப்பவனும் "பவ" என்ற வார்த்தையை வைத்து மூகர் ("பஞ்ச சதீ"யில்) வேடிக்கையாகச் சொல்வார், "அம்மா உன்னுடைய பாதம் பவனுக்கு (சிவனுக்கு) ரொம்பவும்

ஆனந்தத்தை உண்டாக்கிக் கொண்டே இன்னொரு பக்கத்தில் பவத்தை (ஸம்ஸாரத்தை) அழிக்கிறதே" என்று சொல்வார்.

அம்பாள் பாதத்தை மூகர் சொன்னார். அவளுடைய புருஷ ஸ்வரூபமேயான மஹாவிஷ்ணுவின் பாதத்தைச் சொல்லும்போது ஆசார்யாள், "ஸம்ஸார பயம் என்ற துன்பத்தை வெட்டி எரிகிறது பகவானின் பாதம்" என்கிறார்.

பவபய கேத ச்சிதே வந்தே

பக்தி - த்வைதம் கூறும் அத்வைத ஆசார்யர்

அடுத்த ச்லோகத்தில் - அதாவது 'ஷட்பதீ'யன் மூன்றாவது ச்லோகத்தில் - ஒரு பெரிய தத்வத்தைச் சொல்கிறார் ஸ்ரீ ஆசார்யாள்.

ஸத்யபி பேதாபகமே

நாத தவாஹம் ந மாமகீநஸ்த்வம்

ஸாமுத்ரோ ஹி தரங்க:

க்வசந ஸமுத்ரோ ந தாரங்க:

'பேத அபகமே' என்பது சேர்ந்து வரும்போது 'பேதாபகமே' என்றாகிறது. 'அபகமம்' என்றால் 'போய்விடுவது', 'நீங்குவது' என்று அர்த்தம். கமம், கமனம் என்றால் வருவது, சேர்வது. இதற்கு எதிர்ச் சொல் அபகமம். 'பேத அபகமே' என்றால் 'பேதம் நீங்கவிட்ட நிலையிலே' என்று அர்த்தம்.

என்ன பேதம்? இப்போது பரமாத்மா என்று ஒன்று இருக்கிறது, அதற்கு வேறாக ஜீவாத்மா என்று இன்னொன்று இருக்கிறது என்றுதானே நாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம்? இப்படி பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வேறு வேறு என்று, அதாவது அவை பேதமானவை என்று நினைத்துக்கொண்டிருப்பதால்தான் ஸம்ஸார நாடகமே நடக்கிறது. இரண்டும் வேறு இல்லை, ஒன்றுதான், கொஞ்சம்கூட பேதமே இல்லை என்று சொல்வதுதான் அத்வைதம். ஆசார்யாள் நிலைநாட்டின ஸித்தாந்தம் அதுதான். 'ஜீவ ப்ரஹ்ம அபேத யோகம்' என்றே அதைச் சொல்வார்கள்.

இந்த பேதம் போன நிலையைத்தான் 'பேதாபகே' என்றார், அதுதான் ஸத்யமான, எக்காலும் மாறாத ஆனந்தமான, மோக்ஷம் எனப்படுகிற நிலை. இதுதான் பரம ஸத்யம் என்றாலும்கூட,..

ஸத்யபி

'அபி' எனறால் 'என்றாலும்கூட'. இப்படியொரு clause போட்டுவிட்டால், இதற்கு மாறாக, வித்யாஸமாக இன்னோர் அபிப்ராயம் வரப்போகிறது என்று அர்த்தம். "பகவானே நீயும் நானும் வேறாக இருக்கிற பேதம் போய்விட்டாலுங்கூட" என்று ஆரம்பிக்கிறார்.

'அத்வைத ப்ரதிஷ்டாபன ஆசார்ய' என்றே ஸ்தோத்ரம் செய்யப்படுகிற பகவத்பாதாள் அபேத அத்வைதத்துக்குத் துளிக்கூட மாறாக, வித்யாஸமாக இன்னொன்றைச் சொல்லக் கூடாதே, இங்கே என்ன இப்படி 'இருந்தாலுங்கூட' என்று 'அபி' போடுகிறார் என்று பார்த்தால்:

இங்கே அவர் பக்தராகப் பேசுகிறார். ஞானியாக அத்வைதத்தைச் சொன்னார். ஞான மார்க்கத்தில் போகக் கூடியவர்களுக்கு எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படித் தமது பாஷ்யங்களிலும், மற்ற ஞான க்ரந்தங்களிலும் சொன்னார் தீர்மானமாக, 'ஜீவாத்மா பராமாத்மா என்று இரண்டில்லை. ப்ரஹ்மம் ஒன்றுதான் ஸத்யம். ஜீவனும் அந்த ப்ரஹ்மம்தான். இந்த லோகமெல்லாம் வெறும் மாயைதான்' என்று திரும்ப திரும்பச் சொன்னார்.

ஆனால் இப்படி அவர் சொன்னார் என்பதாலேயே, சொல்கிறவர், அதைக் கேட்க வேண்டியவர்கள் என்றெல்லாம் ஏதோ பேதமிருக்கிற மாதிரி இருக்கிறது. எல்லாம் ப்ரஹ்மம், லோகம், மாயை என்று விட்டால் யாருக்கு யார், என்னத்தை உபதேசிப்பது?

சங்கர பகவத் பாதர்களுக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. கார்யமில்லாமல் எல்லாம் தானாக அடங்கிப்போன நிலையில் அத்வைதம் ஸித்திக்கிறது, அங்கே ஜீவ ப்ரஹ்ம பேதமே இல்லை. 'பேத அபகமம்' ஏற்படுகிறது. ஆனால், அந்த ப்ரஹ்மத்மேதான் மாயா சக்தியால் தன்னை இத்தனை ஜீவ ஜந்துக்களைப் போலவும் ஜகத்தைப் போலவும் காட்டி,

இந்தக் கார்ய ப்ரப்ஞசத்தை ஏற்படுத்தியிருக்கிறது. கார்ய ப்ரபஞ்சமும் இறுதியான ஸத்மயம் இல்லை. அதற்கு ஆதாரம் கார்யமில்லாத ப்ரஹ்மம்தான். அந்த ப்ரஹ்மத்தோடு ஒன்றிவிடுவதுதான் நிரந்தர ஸத்யமான நிலை. எல்லாம் ஸரிதான். ஆனால் நிரந்தர ஸத்யமாக இல்லாவிட்டாலும், தாற்காலிகமாக இந்த லோகத்தை நாம் நிஜம் என்று நினைக்கிறவரையில் அதுவும் ரொம்ப நிஜம் மாதிரி தானே இருந்து கொண்டிருக்கிறது? பரம ஸத்யத்திலே கரைந்து ஒரு ஞானி நிர்வகில்ப ஸமாதியில் ப்ரஹ்மமாக இருந்தாலும் கூட, அந்த ப்ரஹ்மமே இந்தக் கார்ய ப்ரபஞ்சத்தை நடத்துவதற்காக எடுத்துக்கொண்டிருக்கிற ஈச்வர நிலையில் வந்த அந்த ஞானியினையும்?"அப்பா, உனக்கு ஸாரத்தில் எல்லாம் ஒன்றாகத் தெரிந்தாலும், வ்யவஹாரத்தில் வேறு வேறு மாதிரி இருப்பதையும் நீ கொஞ்சம் கவனிக்கிற மாதிரி கவனித்து இந்த லோகத்துக்கு நல்லது பண்ணு, இதற்கு உபதேசம் பண்ணு" என்று ஞானியையும், தன்னலமே இல்லாத பரோபகார கர்மாவில் தள்ளிக்கொண்டுதானே இருக்கிறது? இந்த நிலையில் இருந்து கொண்டுதானே அத்வைத ஸ்வரூபமான ஆசார்யாளும், உபதேசத்தைக் கேட்பதற்காகத் தமக்கு அந்யமாக இன்னொருத்தர் இருப்பது போலத் தோன்றும் வ்யவஹார தசையை ஒப்புக்கொண்ட மாதிரி நிறைய எழுதியும், பேசியும், வாதம் செய்தும், தேசமெல்லாம் சுற்றியும் உபதேசம் பண்ணினார். கார்யமில்லாத ப்ரஹ்மத்தோடு ஸாக்ஷாத் ப்ரஹ்மமாகவே அத்வைதமாக இருக்கிறவர், கார்யம் என்று வந்தபோது, ஈச்வரன் என்ற மஹாசக்தியின் லவலேசம்தான் தாம் என்று அடங்கியிருந்து காட்டினார். கார்யமற்ற நிலையில் ஜவினைத் தானாகவே ஆக்கிக்கொள்கிறவன் கார்யலோகத்தில் தான் மட்டுமே ஸர்வ சக்தனாக இருந்துகொண்டு அந்த சக்தியில் துளித் துளிதான் ஜீவர்கள் மூலம் வெளிப்படுத்துகிறான். இப்படித்தான் ஆசார்யாள் அபிப்ராயப்பட்டிருக்கிறார்.

அதனால்தான் ப்ரஹ்மத்தோடு ப்ரஹ்மமாக இருந்தவரே, காரணம் என்று வருகிறபோது (உள்ளூர பகவத்பாதாளுக்கு தாம் கார்யமில்லாத வஸ்து என்ற அநுபவம் ஸதா இருந்து கொண்டிருந்தாலும் இப்படி ஒரு வேஷம் போட்டு நடக்கிற போது) ஈச்வரனிடம் ரொம்பவும் அடங்கி, பரம விநயமாக இருந்து காண்பித்தார். இந்த கோணத்திலிருந்து தான் 'ஷட்பதீ'யில் மூன்றாவது ச்லோகத்தைப் பண்ணியிருக்கிறார்.

ஜீவன் - ப்ரஹ்மம் என்ற பேதம் அடிபட்டுப்போன உயர்ந்த ஞான அநுபவ நிலையிலே, இருப்பதெல்லாம் ஒரே 'ஸத்' வஸ்துதான் என்றாலும் லோக தசையில் இருக்கிற வரை ஞானாநுபவம் வருகிறவரை, ஆள்கிறவனான மஹா சக்தனாக ஈச்வரன் என்று ஒருவனும், அவனுக்கு வேறுமாதிரி ஆளப்படுகிறவர்களான அல்ப சக்தர்களான அநேக ஜீவர்களும் தோன்றத்தான் செய்கிறார்கள். இதே ஸ்தியில் 'நானும் ஈச்வரனும் ஒன்று' என்று இந்த அல்ப சக்தன் அந்த ஸர்வ சக்தனோடு அபேதம் கொண்டாடிக்கொண்டால் தப்பு.

'அப்படியானால் அத்வைதம் தப்பா?' என்றால் அப்படியுமில்லை. இதென்ன குழப்பமாயிருக்கிறதே என்று பார்த்தால் ஆசார்யாள் ரொம்ப அழகாகத் தெளிவபடுத்தி பதில் சொல்கிறார். ஸமுத்ரமும் அலைகளும் ஒன்றா, வேறு வேறா? மேலே பார்த்தால் வேறேதான். உள்ளே போனால் ஒன்றுதான். உள்ளுக்குள்ளே அலையே இல்லை. அந்தமாதிரி உள்முகமாகப் போய்விட்டால் ஜீவாத்மாக்கள் என்ற பல அலைகளே இல்லாமல் ஒன்றேயான பரமாத்ம ஸாகர அடி மட்டம் மட்டும்தான் அத்வைதமாக இருக்கிறது. அந்த ஸமுத்ரமேதான் மேல் மட்டதத்தில் பல அலைகளாகத் தெரிகிறது. ஏக ஸமுத்ரத்தில் காற்றினால் அநேக அலைகள் உண்டாகிற மாதிரி, மாயையால் வெளிமுகப்படுகிறபோது, ஒரே பரமாத்மாவில் பற்பல ஜீவாத்மாக்கள் உண்டான மாதிரி இருக்கிறது.

இந்த ஸ்திதியில் ஒவ்வொரு அலையும், 'நானே பூர்ண ஸமுத்ரம்' என்று சொன்னால் தப்புதானே? அலைகளான தாங்கள் அனைவரும் ஒரே ஸமுத்ரத்தைச் சேர்ந்த அதன் சிறுசிறு அம்சங்கள் என்பதுதானே ஸரி?

அதுபோல, அத்வைதநாநுபூதியில் இருப்பது ஒன்றே என்றாலும் -ஸத்யபி பேதாபகமே - விவகார தசையில் ஜீவர்களான நாங்கள் எல்லோரும், எப்படி ஸமுத்ரமில்லாமல் அலைகள் இல்லையோ அப்படி உன்னையன்றி இருப்பு என்பதே யில்லாமல் முழுக்க முழுக்க உன்னைச் சேர்ந்தவர்களே"

நாத தவாஹம் ந மாமகீனஸ் -த்வம்

நாத - எங்களை ஆள்கிற ப்ரபுவே!

தவாஹம் - தவ, அஹம், அஹம் - நான், தவ - உன்னுடையவன். நான் உன் உடைமை.

'ந மாமகீந: த்வம்' என்றால் த்வம் - நீ, மாமகீந: - என்னுடையவன், ந- அல்ல. நீ என்னுடைமை அல்ல.

ப்ரபுவே! நான் உன் உடைமை. நீ உடைமையாளன். நீ என்னைச் சார்ந்து, என் உடைமையாக இருப்பவனில்லை. அலையில்லாமல் சாந்தமாக ஸமுத்ரம் இருக்கலாம். உள்ளே எப்போதும் அது அப்படியிருப்பதுதான். அதுபோல் ஜீவர்களும் ப்ரபஞ்சமும் இல்லாமல் நீ இருக்கலாம். ஆனால் ஸமுத்ரமில்லாமல் அலை இருக்கமுடியாது. அது போல், நீ இல்லாமல் நான் இல்லவே இல்லை.

ஸமாதி நிலையில் நான் நீ பேதமில்லாத ஏகத்தை நான் அநுபவிக்கிறேன் என்பதால் வ்யவஹார தசையில் நம்மை இரண்டாகப் பார்க்கிறபோது, நீதான் என் உடைமை, நீதான் என்னைச் சார்ந்திருப்பவன் என்று நினைத்தால் அது எப்பேர்ப்பட்ட அஸம்பாவிதம் தெரியுமா? ஸமுத்ரம்தான் அலையைச் சேர்ந்தது, அலை ஸமுத்ரத்தைச் சேர்ந்ததில்லை என்று நினைக்கிற மாதிரிதான்.

ஸாமுத்ரோ ஹி தரங்க: க்வசந ஸமுத்ரோ ந தாரங்க:

தரங்கம் என்றால் அலை. (ஜலதரங்கம் என்கிறோம்.) அலைதான் ஸமுத்ரத்தின் உடைமை. ஸமுத்ரம் அலையின் உடைமை இல்லை - ஒருகாலும் இல்லை. 'க்வசந' - ஒருகாலும். தப்பித் தவறிக்கூட, பரமாத்மா ஜீவாத்மாவைச் சார்ந்திருப்பதாக நினைத்துவிடப்படாது என்பதற்காக, ஒருகாலும் இப்படியில்லை" என்று அழுத்தமாக "க்வசந" போட்டுக்காட்டியிருக்கிறார். அத்வைதத்தை வ்யவஹார உலகத்திலே தப்பாகப் போட்டுக் குழப்பிக் கொள்ளக்கூடாது என்ற அக்கறையால், கவலையால் இப்படி அழுத்திச் சொல்லியிருக்கிறார். "எல்லாம் உன் உடைமையே" என்று தாயுமானவர் பாடினார். உடைமைக்கு "ஸ்வம்" என்று பெயர். எல்லாவற்றுக்கும் - ஸ்வம் அனைத்துக்கும் - உடைமையாளன்தான் "ஸ்வாமி." அதனால்தான் "உடையவர்" என்று வைஷ்ணவர்கள் சொல்கிறார்கள். மற்றவர்கள் கூட முன்காலத்தில் கபாலீச்வர ஸ்வாமி. நாகேச்வர ஸ்வாமி என்பது போன்ற பெயர்களை "கபாலீச்சுரமுடையார்",

"திருநாகேச்சுரமுடையார்" என்பதுபோல 'உடையார்' சப்தத்தால்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

முடிவான அநுபவம் என்று வருகிறபோது, அசார்யாள் சைவ வைஷ்ணவ ஸித்தாந்தங்களுக்கு மாறாத ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே என்று ஸித்தாந்தம் செய்தபோதிலும், யதார்த்த நிலையை, வ்யவஹார தசையைக் கருத்தில் கொண்டு, இந்த ச்லோகத்தைப் பண்ணும்போது, நடைமுறை வாழ்க்கையில், தானே ஈச்ரவன் என்று தப்பாக எவனும் நினைத்துவிடாமல், அவனது லவலேச அம்சமேதான் என்று அடங்கிப் பணிந்து இருக்கவேண்டும் என்று உபதேசிக்கிறார். சைவ - வைஷ்ணவ பக்திமான்களுக்குக் கொஞ்சமும் பின்வாங்காமல் அவர்களைப் போலவே நைச்யமாக, எளிமையாக பகவானை ப்ரார்த்தனை பண்ணுகிறார். "ஷட்பதீ" ஆரம்பத்தில் அவர் வேண்டிய விநயத்துக்கு அவரே விக்ரஹமாக இருந்தகொண்டு ப்ரார்த்தனை பண்ணுகிறார்.

ஆசார்யாள் எப்படிக் கொள்கைப் பிடிவாதமேயில்லாமலிருந்தார் என்று இங்கே தெரிகிறது. அவரது ஸித்தாந்தம், லக்ஷ்யம் என்னவென்றால் அத்வைதம். ஆனால் அந்த ஸித்தியின் அந்தத்துக்கு, லக்ஷ்ய நிலைக்கு போகாமல், ஈச்ரவன் - ஜீவன் என்று த்வைதமாக இருக்கும் போது, ஜீவனைப் பார்த்து, 'அடா, அப்பா! அத்வைதத்தை இங்கே கொண்டுவந்துவிடாதே!" என்று அவரே தடுக்கிறார். த்வைதிகளைவிட ஸ்ட்ராங்காக அத்வைதத்தை அந்தண்டை கொண்டுபோகச் சொல்கிறார்!

பரமாத்மாவாகவே இருப்பதிலே ஒரு ஆனந்தமென்றால், அவனை பக்தி பண்ணிக்கொண்டிருப்பதிலும் ஒரு ஆனந்தம் இருக்கிறது. பக்தி பண்ணும்போது, 'அவனே நாதன், நம்மை உடைமையாகக் கொண்டவன், அவனிடம் துரும்பாகப் பணிந்து கிடக்க வேண்டியவர்களே நாம்' என்று புரிந்துகொண்டால்தான் அந்த ஆனந்தம் கிடைக்கும். ஆகையினால்தான் ராமாநுஜருக்கும் மத்வருக்கும் கொஞ்சங் கூடப் பின்னே தங்காமல் அத்வைத பரமாசார்யாளும், "நீ மஹா ஸமுத்ரமென்றால் நான்அதிலே ஒரு சின்ன அலைதான். நீயன்றி நானில்லை. நான் உன் ஸொத்துதான்" என்று ஒரே பணிவாகச் சொல்கிறார்.

ஸத்யபி பேதாபகமே

நாத தவாஹம் ந மாமகீநஸ் - த்வம் 1

ஸாமுத்ரோ ஹி தரங்க:

க்வசந ஸமுத்ரோ ந தாரங்க:

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**அதிசய அந்தாதி**

ஷட்பதீ ஸ்தோத்ரத்தில் ஒவ்வொரு ச்லோகத்திலும் ஒரு தினுஸான அழகு ரொம்பிக் கிடக்கிறது. நாலாவது ச்லோகத்தில் ஆசார்யாள் வார்த்தைகளைப் பின்னியிருக்கிற அழகு ஈடிணையில்லாமல் இருக்கிறது.

ஸாதாரணமாக, 'அந்தாதி' என்று ஒரு கவிதை வகையைக் கொண்டாடிச் சொல்கிறோம். 'ஸரஸ்வதி அந்தாதி', 'சடகோபர் அந்தாதி' என்றெல்லாம் கம்பர் பண்ணியிருக்கிறார். 'திருவாய் மொழி' எனப்படும் நம்மாழ்வாரின் ப்ரபந்தங்களில் பாசுரங்கள் முழுக்க முழுக்க அந்தாதி க்ரமத்தில்தான் இருக்கும். 'நாலாயிர திவ்ய ப்ரபந்த'த்தில் மூதல் மூன்று ஆழ்வார்களும் சேர்ந்து பகவத் தர்சனம் பெற்றவுடன் ஒருத்தருக்குப் பின் ஒருத்தராக அந்தாதிதான் பாடியிருக்கிறார்கள். தற்காலத்தில் 'அபிராமி அந்தாதி' ப்ரஸித்தமாகிக் கொண்டு வருகிறது.

'அந்த', ஆதி' என்ற இரண்டு வார்த்தைகளும் சேர்ந்து 'அந்தாதி என்றாகிறது. 'அந்தம்' என்றால் முடிவு, 'ஆதி' என்றால் ஆரம்பம். ஆரம்பமும் முடிவும் இல்லாத பரமாத்மாவை' அத்யந்த ரஹிதன்' என்று சொல்வது வழக்கம். 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியை' என்று மாணிக்கவாசகர் 'திருவெம்பாவை'யை ஆரம்பிக்கிறார்.

'அந்தாதி' என்று ஒரு கவிதை வகைக்கு ஏன் பெயர் வந்தது என்றால் இதில் ஒரு செய்யுளின் அந்தமான (முடிகிற) வார்தையே அடுத்த செய்யுளின் ஆதி (ஆரம்ப) வார்த்தையாக வரும்.

உதாரணமாக, பெருமாளைப் பாட வந்த பொய்கையாழ்வார் 'முதல் திருவந்தாதி'யில் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்தை ஸ்தோத்ரம் செய்யும்போது,

ஆலமரநீழல் அறும் நால்வர்க்(கு) அன்(று) உரைத்த

ஆலம் அமர் கண்டத்(து) அரன்

என்று ஒரு செய்யுளில் 'அரன்' என்பதை 'அந்த'மான வார்த்தையாக முடிக்கிறார். இதற்கடுத்த செய்யுளில் ஹரி - ஹர அபேதத்தைச் சொல்கிறபோது, 'அரன்' என்ற இதே வார்த்தையை 'ஆதி' வார்த்தையாக வைத்து ஆரம்பிக்கிறார்.

அரன் - நாரணன் நாமம் ஆன்விடை - புள் ஊர்தி

என்றிப்படிச் சொல்லிக்கொண்டே போகிறார்.

இப்படி அந்தாதியாக ஒரு ஸ்தோத்ரததில் செய்யுள்களை மாலை மாதிரி கோத்துக்கொண்டே போவதில் ஒரு பெரிய ஸௌகர்யம், நாம் மேலே மேலே ஒவ்வொரு செய்யுளை நினைவு வைத்துக்கொண்டு மனப்பாடம் பண்ண ஸுலபமாகிறது. "இந்தச் செய்யுள் 'அரன்' என்று முடிகிறதா? ஸரி, அப்படியானால் அடுத்த செய்யுள் 'அரன்' என்றுதான் ஆரம்பிக்கும்" என்று நினைவு வைத்துக்கொள்ள முடிகிறது.

ஒரு செய்யுளின் அல்லது ச்லோகத்தின் முடிவு, அடுத்ததன் ஆரம்பமாக வைத்து அந்தாதி பாடுவதற்கு நிரம்பப் பாண்டித்யம் இருக்கவேண்டும். நம் ஆசார்யாளே இதைவிடப் பல மடங்கு கஷ்டமான ஒரு ஸாதனையை 'ஷட்பதீ'யின் நாலாவது ச்லோகத்தில் அநாயாஸமாகப் பண்ணியிருக்கிறார். ஒரு ச்லோகத்துக்கும் இன்னொரு ச்லோகத்துக்கும் அந்த - ஆதித் தொடர்பு இருப்பதைவிட எத்தனையோ மடங்கு கடினமானதாக, ஒரே ச்லோகத்துக்குள்ளேயே ஒரு வார்த்தைக்கும் அடுத்த வார்த்தைக்கும் அந்த - ஆதித் தொடர்பு இருக்கிற விதத்தில் இங்கே பதங்களைக் கோத்துக்கொண்டு போயிருக்கிறார்.

அந்த ஸ்லோகத்தைச் சொல்கிறேன்.

உத் - த்ருத நக - நகபிதநுஜ - தநுஜகுலாமித்ர - மித்ர சசி த்ருஷ்டே

த்ருஷ்டே பவதி

இதுவரை பதத்துக்குப் பதம் அந்தாதி க்ரமத்தில் வந்திருக்கிறது. ஆரம்பத்தில் 'உத் - த்ருத நக'. இதில் முடிகிற 'நக'வையே அடுத்த பதத்துக்கு ஆரம்பமாக வைத்து 'நகபிதநுஜ இதன் அந்த்யமான 'தநுஜ'வை ஆரம்பமாக வைத்து, இதற்கடுத்த பதமான 'தநுஜ குலாமித்ர'. இந்த ரீதியல் ரொம்பவும் ஆச்சர்யமாக ச்லோகம் போகிறது. ஒரு சொற்றொடர் முடிவில் வரும் வார்த்தை அடுத்த சொற்றொடரின் ஆரம்பமாகிறது. ஒரு சொற்றொடர் முடித்துவிடும் வார்த்தையைப் பிடித்துக்கொண்டு அடுத்த சொற்றொடர் ஆரம்பிக்கிறது. இதை "முக்த பத க்ரஸ்தம்" என்பார்கள். "முக்த" - விட்ட, "க்ரஸ்த" பிடித்துக்கொண்ட.

முதல் வரி முடித்துவிட்ட "த்ருஷ்டே"வைப் பிடித்துக்கொண்டு இரண்டாவது வரியை 'த்ருஷ்டே பவதி' என்று ஆரம்பித்து, அப்புறம் இந்த 'பவதி' என்ற அக்ஷரங்களையே பல தினுஸில் திரும்பி,

த்ருஷ்டே பவதி ப்ரபவதி ந பவதி கிம் பவதிரஸ்கார :11

என்று முடிக்கிறார். முழு ச்லோகத்தையும் சேர்த்துச் சொன்னார் - ஒரு தைலதாரை பிசிர் இல்லாமல், முறிவு படாமல் விழுகிற மாதிரி வார்த்தைக்குப் பின் வார்த்தை யாகத் தானாகச் சேர்ந்துகொண்டேபோகும்.

உத் - த்ருத நக - நகபிதநுஜ தநுஜ குலாமித்ர மித்ர சசி த்ருஷ்டே 1

த்ருஷ்டே பவதி ப்ரபவதி ந பவதி கிம் பவதிரஸ்கார 11

ச்லோகத்தின் உச்சாரண அழகு கெட்டுப்போகக் கூடாதென்று இங்கே சீர் பிரிக்காமல், ஸந்தி பிரிக்காமல் சொன்னேன். பிரித்துச் சொன்னால் 'நகபிதநுஜ' என்பது 'நகபித் அநுஜ' என்றாகும், 'பவதிரஸ்கார' என்பது 'பவ திரஸ்கார:" என்று இரண்டு வார்த்தைகளாகப் பிரியும்.

வார்த்தைகளை அழகாகக் கோத்துவிட்டால் போதுமா? இந்த நாளில் கூட ரொம்பவும் அடுக்குச் சொல் அலங்காரம் வந்தவிட்டது என்கிறார்கள். சொல் அடுக்கு அழகாக இருந்தால் மட்டும் ப்ரயோஜனம் இல்லை. அதன் அர்த்தமும் அழகாக, ஆழமானதாக இருக்கவேண்டும். இந்த ச்லோகத்தில் சொல்லழகோடு பொருளழகும் சேர்ந்திருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**கருத்திலும் தொடர்சசி காட்டும் ச்லோகம்**

உத் - த்ருக் நக

'நகம்' (nagam) என்றால் மலை. 'கம்' (gam) என்றால் நடப்பது, அசைவது, சலிப்பது. அசையாமல் சலிக்காமல் இருப்பதால்தான் மலைக்கு 'அசலம், அகம்', 'நகம்' என்றெல்லாம் பெயர் ஏற்பட்டிருக்கிறது. பர்வதராஜ குமாரியாக இருக்கப்பட்ட அம்பாளை 'கரிஜா' (கிரி என்றாலும் மலைதானே?) என்கிற மாதிரியே, 'அகஜா', 'நகஜா' என்றெல்லாமும் சொல்வதுண்டு. பிள்ளையாரின் மேல் எல்லோரும் சொல்கிற ஸ்தோத்ரம் ஒன்றுகூட 'அகஜாநந பத்மார்க்கம் கஜாநநம்' என்று ஆரம்பமாகிறது. இவர் கஜ ஆநநர் அதாவது ஆனை முகர். 'கஜாநநத்'துக்கு 'சொல்லிலக்கணப்படி' (opposite)'அகஜாநநம்'. ஆனால் வார்தையின் அர்த்தப்படி பார்த்தாலோ, இந்த கஜாநநர், அகஜாவான பார்வதியின் ஆநந (முக) பத்மத்தை மலர்விக்கும் அர்க்க (ஸுர்ய)னாக இருக்கிறார்!

அகஜாநந பத்மார்க்கம் கஜாநநம்

அகம், நகம் இரண்டுக்கும் ஒரே அர்த்தம். மலை என்று பொருள். 'உத்-த்ருத நக' என்றால் 'மலையைத் தூக்கியவனே,

மலையைத் தாங்கியவனே' என்று அர்த்தம். 'கிரிதர கோபாலன்' என்று மீராபாய் எப்போது பார்த்தாலும் பாடிக்கொண்டிருந்தது இந்த அவஸரத்தைத்தான்.

பகவான் இரண்டு ஸந்தர்ப்பங்களில் மலையைத் தூக்கியிருக்கிறான். அம்ருதம் எடுப்பதற்காக க்ஷீரஸாகரத்தில் மந்தர மலையை மத்தாகப் போட்டு வாஸுகிப் பாம்பை நாணாகச் சுற்றிக் கடைந்தபோது, மஹா விஷ்ணுவேதான் அந்த மலை ஸமுத்ரத்தில் ஆடாதபடி அதை அடியிலிருந்து ஆமை ரூபத்தில் தாங்கிக் கொண்டிருந்தார். அப்புறம், க்ருஷ்ணனாக அவதாரம் பண்ணினபோது, இந்த்ரனின் போகத்தினால் பெரிய மழை உத்பாதம் ஏற்பட்டபோது, கோவர்த்னகிரியைக் குடையாகத் தூக்கி கோகுலம் முழுவதையும் மழையிலிருந்து காப்பாற்றினார். அவர்தான் கிரிதர போபாலன். நம்முடைய கர்ம பாரம் ஒரு மலை மாதிரி. இதை பகவான்தான் சுண்டு விரல் நுனியிலே பாலக்ருஷ்ணன் கோவர்தன கிரியைத் தாங்கின மாதிரித் தாங்க வல்லவன், "உத்-த்ருத நக".

"நகபிதநுஜ-": நகபித', 'அநுஜ' என்ற இரண்டு வார்த்தைகள் சேர்ந்து 'நகபிதநுஜ' என்றாகிறது. 'நகபித்' என்றால் 'மலைகளைப் பிளந்தவன்' என்று அர்த்தம். பூர்வத்தில் மலைகளுக்கு இருந்த இறக்கைகளை தேவேந்திரன் வஜ்ராயுதத்தால் வெட்டினான் என்று கதை. இந்த தேவேந்த்ரனுக்கு 'அநுஜன்' என்றால் 'உடன் பிற்நதவன்' என்று அர்த்தம். 'உடன் பிற்நதவன் 'என்றால் மட்டும்போதாது. 'பின்னால் பிறந்தவன்', அதாவது தம்பிதான் அநுஜன். முன்னால் பிறந்த அண்ணா, பின்னால் பிறந்த தம்பி இரண்டுபேருமே "உடன் பிறந்தவர்"தான். இவர்களில், முன்னால் பிறந்த அண்ணாவைப் "பூர்வஜன்" என்றும், பின்னால்பிறந்த தம்பியை "அநுஜன்" என்றும் சொல்லவேண்டும்.

தேவேந்த்ரனுக்குத் தம்பியாகப் பிறந்தவர் பகவான். ராமாநுஜன் என்றால் ராம அநுஜன். அதாவது ராமனுக்குத் தம்பியான லக்ஷ்மண ஸ்வாமி. லக்ஷ்மணன் ஆதீசேஷ அவதாரம். சேஷாவதாரமாகவே வைஷ்ணவர்கள் சொல்கிற ராமாநுஜாசாரியாருக்கு லக்ஷ்மணன் என்றே பூர்வாச்ரமத்தில் பெயர்.

விஷ்ணு எப்போது இந்த்ரனுக்குத் தம்பியாகப் பிறந்தார்? வாமனாவதாரத்தின் போதுதான். இந்த்ராதி தேவர்கள் யாவரும் கச்யப மஹர்ஷிக்கும் அதிதி என்கிற அவருடைய பத்னிக்கும் பிறந்தவர்கள். மஹாபலியை அடக்குவதற்காக பகவான் வாமனராக அவதாரம் செய்தபோது, அதிதி - கச்யப தம்பதிக்குதான் பிள்ளையார்ப் பிறந்தார். இதனால், இந்தரனுக்கு அநுஜனாகிவிட்டார். 'உபேந்த்ரன்' என்றுகூட இதனால் அவருக்கு ஒரு பெயர் உண்டு.

க்ருஷ்ணாவதார காலத்தில் இந்த்ரனின் கர்வத்தை அடக்கி அவனை அடிபணிய வைப்பதற்காகத்தான் கோவர்தன கிரியைத் தூக்கி 'உத்-த்ருத நக'ராக ஆனால் பூர்வத்தில் வாமனாவதாரத்தில் அதே இந்த்ரனுக்கு ஸஹோரதனாக - 'நகபிதநுஜ'னாக - இருந்திருக்கிறார்!அப்போது மஹாபலியை அடக்கி இந்த்ரனுக்கு தேவலோக ஆதிபத்யைத்தையும் மீட்டுக்கொடுத்தார். பகவானுக்குத் தனியாக ஒரு மனுஷ்யர் மீது ப்ரியம், அப்ரியம் என்பதில்லை. ஒருவர் அடக்கத்துடன் தர்ம வழியிலே வர நினைத்தால் ப்ரியமாயிருப்பார், அவரே அஹங்கரித்துக்கொண்டு அதர்மமாகப் போனால் தண்டிப்பார். ஒருத்தர் செய்யும் நல்லது - கெட்டதுகளை வைத்தே அவரது ப்ரியாப்ரியங்கள். ஒரே ஆஸாமியின் விஷயமாக இப்படி அவர் மாறுபட்டுச் செய்ததை ஒரே ச்லாகத்தில் அடுத்தடுத்து ஆசார்யாள் கோத்துக் கொடுத்திருக்கிறார்: "உத்-த்ருதநக, நகபிதநுஜ".

"தநுஜ - குலாமித்ர":'தநுஜர்' என்றால் அஸுரர்கள். "தநு" என்பவளின் பிள்ளைகள்தான் தநுஜர்கள். தேவர்களுக்குப் பிதாவான அதே கச்யபரின் பத்னிதான் தநுவும். தேவர்கள், அஸுரர்கள் அனைவருக்கும் அவரே பிதா. மாதாக்கள், வேறு வேறு. அதிதியின் பிள்ளைகளான தேவர்களை ஆதித்யர் என்கிறார்கள். 'திதி' என்றும் கச்யபருக்கு ஒரு பெண்டாட்டி உண்டு. அவளுடைய பிள்ளைகள் தைத்யர்கள். இவர்களும் அஸுரர்கள்தான். தநுவின் பிள்ளைகளை தநுஜர் என்பது போலவே தானவர் என்றும் சொல்வதுண்டு.

'நகபிதநுஜ' என்கிறபோது வந்த 'தநுஜ' என்பது இரண்டு வார்ததைகளின் ஸந்தியில் ஏற்பட்டது. அதை 'நகபித் அநுஜ' என்று பிரித்தால்தான் அர்த்தமாகும். 'நகபி', 'தநுஜ' என்று பிரித்தால் தப்பு. பின்னாடி 'தநுஜ குலாமித்ர' என்று

வருவதற்கு அந்தாதி கர்மத்தில் படி போடுவதற்கே, ஸ்ரீ ஆசார்யாள் 'நகபிதநுஜ' என்பதில் இரண்டு வார்த்தைகளின் ஸந்தியில் ஒரு 'தநுஜ'வை முடிச்சுப் போட்டிருக்கிறார்!

அநேக ச்லோகங்களில் இப்படி வேடிக்கையாக வரும். 'அகஜாநந பத்மார்க்கம்' ச்லோகத்தில்கூட 'அநேக - தந்தம் பக்தாநாம் ஏக தந்தம் உபாஸ்மஹே' என்று வருகிறது. 'இதென்ன வேடிக்கை? ஒருத்தரையே ஏக தந்தர், அநேக தந்தர் என்றால் - அதாவது ஒரு தந்தம் உள்ளவர், பல தந்தம் உள்ளவர் என்றால் - எப்படி ஸரியாகும், என்று தோன்றுகிறது. 'அநகே - தந்தம்' என்பது 'அநேகதம்' என்ற வார்தையாகவும், அதை அடுத்து வரும் 'தம்' என்ற வார்த்தையாகவும் பிரியும். அநேக - தம் - தம் என்பது 'அநேக தந்தம்' என்றாகும். 'பக்தாநாம் அநேகதம்' என்றால் பிள்ளையார் அவருடைய பக்தர்களுக்கு அநேக விதமான நலன்களை அருள்கிறார் என்ற அர்த்தம். 'தம் உபாஸ்மஹே' என்றால் 'அவரை உபாஸிக்கிறேன்' என்று அர்த்தம். அவருக்கு ஒரே ஒரு தந்தம்தான் உண்டு ஒற்றைக் கொம்பர். ஏக தந்தர். இந்த 'ஏக தந்தம்' என்பதே வார்தை விளையாட்டில் இன்னொரு தரம் வந்தால் கவிதைக்கு அழகு செய்கிறது என்பதற்காக 'அநேக தந்தம்' (அநேகதம் தம்) பக்தாநாம் ஏகதந்தம் உபாஸ்மஹே' என்று ச்லோகத்தில் வைத்திருக்கிறது. prose-order படி இருந்தால் "பக்தாநாம் அநேகதம் ஏகதந்தம் தம் உபாஸ்மஹே" (பக்தர்களுக்குப் பலவற்றை, அநேக நலன்களை தரும் ஒற்றைக் கொம்பரான அவரை உபாஸைனை செய்கிறேன்) என்று இருக்கவேண்டும்.. எந்த பாஷையானால், 'பொயட்ரி'யில் வார்த்தைகளை முன் பின்னாக வைக்கலாம் என்ற விதிப்படி இங்கே மாற்றியிருக்கிறது.

'தநுஜ குலாமித்ர' என்றால் தநுஜ குலமான அஸுரர்களுக்குப் பகைவர் (அமித்ர) என்று அர்த்தம.

இந்த்ரனுக்குத் தம்பியாகக் காச்யப - அதிதி தம்பதிக்கு பகவான் அவதரித்தபோது, தநுஜர்களும் அவருக்கு பித்ருபக்ஷத்தில் (அப்பாவை வைத்துப் பார்த்தால்) அண்ணாமார்கள்தான், தநுஜர்கள் அவருடைய மாற்றாந்தாயின் பிள்ளைகள். ஆனால் உறவுமுறை பார்க்காமல் தர்மாதர்மங்களையே பகவான் பார்ப்பவராதலால்

அவர்களுக்கு அமித்ரராக (பகைவராக) இருந்தார்.

ஒரு ஸமயத்தில் நல்லவனாகவும் ஒரு ஸமயத்தில் அப்படியில்லாமலும் இருக்கிற இந்த்ரனிடம் அவர் அன்போடு தம்பியாக இருந்து மஹாபலியிடமிருந்து அவனுடைய ராஜ்யத்தை க்ரஹித்து அவனுக்கு அதைத் திரும்பக் கொடுத்துமிருக்கிறார். தண்டிப்பவராக கோவர்தனத்தைத் தூக்கிப் பிடித்து, அவர் சக்கையாய் மழை பெய்து அப்புறந்தானே சக்தியெல்லாம் இழந்து சக்கை மாதிரி வந்து காலில் விழும்படியும் பண்ணினார். எல்லா ஸமயங்களிலுமே கெட்டவர்களாக இருக்கிற தநுஜர்களும் ஸஹோதரர் முறையாக வேண்டியவர்களானாலும், அவர்களுக்கு 'ஆமித்ரர்' என்றே சொல்லும்படியாக எப்போதும் இருக்கிறார்.

ஒரு வார்த்தையின் முடிவை அடுத்த வார்தையின் ஆரம்பமாக கோத்துக்கொண்டு போவதுபோலவே பகவானின் நிகரஹானுக்ரஹங்கள் (தண்டிபப்தும் அருள்வதும்) எப்படி இருக்கின்றன என்ற 'ஐடியா'வையும் ச்லோகத்தில் (டெவலப்) பண்ணிக் கோத்துக் கொடுத்தாற்போல இருக்கிறது "மித்ர சசி த்ருஷ்டே":மித்ர என்றால் நண்பர் என்று எல்லாருக்கும் தெரிந்திருக்கும். 'பந்து மித்ரர்'கள் என்று சொல்கிறோம். 'மித்ர'னுக்கு opposite 'அமித்ரன்'. இங்கே, 'மித்ர சசித்ருஷ்டே' என்னும்போது 'மித்ர' என்றால் 'ஸுர்யன்' என்று அர்த்தம். ஒரே வார்த்தையை வெவ்வேறு அர்த்தத்தில் ப்ரயோகிக்கிற அலங்காரத்தை இங்கே ஆசார்யாள் கையாண்டிருக்கிறார்.

வேதம் நெடுகிலும் ஸுர்யனை மித்ரன், மித்ரன் என்று சொல்லியிருக்கிறது. அந்தக் காலத்தில் வைதிகமான ஸௌர்யோபாஸனை லோகம் பூராவிலுமே பரவியிருந்தது. தேசாந்தரங்களிலும் (அந்நிய நாடுகளிலும்) இந்த "மித்ர" என்ற பேர் அப்படியே வழக்கில் இருந்திருக்கிறது. கிறிஸ்து பிறப்பதற்கு ஆயிரத்து முன்னூறு வருஷங்களுக்கு முன்பு எகிப்து தேசத்தில் இரண்டு ராஜாகக்ள் செய்து கொண்ட

உடன்படிக்கை (Treaty of Rameses 11 With the Hittites) கூட 'மித்ரா வருண' ஸாக்ஷியாகச் செய்து கொண்டதாக இருக்கிறது!

"மித்ர - சசி - த்ருஷ்டே" என்கிற இடத்தில் 'மித்ர' என்றால் ஸூர்யன். 'சசி' என்றால் சந்த்ரன் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். வெள்ளை வெளேர் என்று இருக்கிற சந்த்ரனுக்குள்ளே நிழல் மாதிரி ஒன்று கறுப்பாய்த் தெரிகிறதல்லவா? உற்றுப் பார்தால் இது ஒரு முயல் மாதிரி தோன்றும். முயலை ஸம்ஸ்க்ருதத்தில் 'சசம்' என்பார்கள். 'முயலைத் தன்னிடத்தில் கொண்டது' என்பதால் சந்த்ரனுக்கு சசாங்கன் என்றும், சசி என்றும் பெயர்.

மித்ரனையும் சசியையும், அதாவது சந்த்ர ஸூர்யர்களை இரண்டு கண்களாகக் கொண்டவனைத்தான் 'மித்ர சசி த்ரஷ்டே' என்று சொல்கிறார். பகவானின் விச்வ ரூபத்தில், விராட் ஸ்வரூபத்தில், அவனுக்கு ஸூர்யன் வலது கண், சந்த்ரன் இடது கண்.

இந்த்ரனுக்கு அநுஜன், தநுஜர்களுக்கு அமித்ரன் என்றெல்லாம் வாமனாவ தாரத்தை நினைவூட்டியதன் தொடர்ச்சியாக வாமன ப்ரஹ்மசாரி த்ரிவிக்ரமனாக விச்வரூபம் எடுத்து சந்த்ர - ஸூர்யர்களைக் கண்களாகக் காட்டியதையும் இப்போது ஞாபகப்படுத்துவதுபோல் இருக்கிறது.

விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் பூர்வ பாகத்தில் சொல்கிற "பூ பாதளே" என்று ச்லோகத்தில் 'சந்த்ர ஸூர்யளெ ச நேத்ரே" என்று வருகிறது. இதுவேதான் "மித்ர சசி த்ருஷ்டே".

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**தர்சனத்தால் ஸம்ஸார நீக்கம்**

"த்ருஷ்டே பவதி ப்ரபவதி ந - பவதி கிம் பவதிரஸ்கார:" என்பதாக "பவதி" என்கிற சப்தத்தை நாலு முறை அடுத்தடுத்து வெவ்வேறு அர்த்தங்களில் திருப்பி இந்த

ச்லோகத்தைப் பூர்த்தி பண்ணியிருக்கிறார். மஹா கவிகளின் புலமையெல்லாம் தோற்றுப்போகிற மாதிரி வாக் ஸாமர்த்யத்தை ஆசார்யாள் காட்டியிருக்கிறார்.

'த்ருஷ்டே பவதி' என்னும்போது 'பவித' என்றால் 'தங்களிடத்தில்' என்று அர்த்தம். ஒருத்தரிம் மரியாதையாகத் 'தாங்கள்' என்று சொல்வேண்டுமானால், 'பவான்' என்று குறிப்பபிடவேண்டும். இதற்கப் பெண்பால் "பவதி" "பவதி பிக்ஷாம் தேஹி" என்கிறபோது "பவதி" என்றால் ஒரு வீட்டுக்காரியை அம்மணி!" என்று மரியாதையாக கூப்பிடுவதாக அர்த்தம். ஆண்பாலில் வருகிற 'பவத்' என்பது ஏழாம் வேற்றுமை உருபாடு சேரும்போதும் 'பவதி' என்று ஆகும். அப்போது "தங்களிடத்தில்" என்று அர்த்தம் உண்டாகும். இங்கே அப்படித்தான் 'த்ருஷ்டே பவதி' என்பதில் "பவதி"க்கு அர்த்தம்.

"த்ருஷ்டே பவதி" என்றால், தங்களிடத்தில் (எங்கள்) த்ருஷ்டி ஏற்பட்டு விட்டால்', அதாவது 'எங்களுக்கு உன் தர்சனம் கிடைத்துவிட்டால்' என்று அர்த்தம். அவன் எப்படிப்பட்டவன்? எல்லாருக்கும் ப்ரபுவாக, அகிலாண்ட நாயகனாக இருக்கிறவன். 'ப்ரபவதி பவித தருஷ்டே' என்றால் 'ப்ரபூவான உன்னிடம் (எங்கள்) பார்வை உண்டாகுமானால்' என்று அர்த்தம். பகவத் தர்சனம் கிடைத்துவிட்டால்.... அப்புறம் என்ன ஆகிறது?

"ந பவதி கிம் பவ திரஸ்கார:"

'பவதிரஸ்கார:' என்பதை 'பவதி, ரஸ்கார' என்று பிரித்தால் தப்பு. 'சுக்கு - மிளகு - திப்பிலி' என்பதை 'சுக்குமி-ளகுதி-பிலி' என்று பிரித்தான் என்று கதை சொல்வார்களே, அப்படி ஆகிவிடும். 'அநேகதம் தம்' என்பதை 'அநேக தந்தம்' என்று பிரிக்கிற மாதிரியான தப்புத்தான் இது. 'பவ திரஸ்கார' என்பதுதான் சரியான பிரிவினை. திரஸ்காரம் என்றால மறைப்பது. மாந்த்ரீகத்தில் மறைக்கிற வித்தையை 'திரஸ்கரிணி' என்பார்கள். பவம் என்றால் ஸம்ஸாரம். முன்பே இந்த 'ஷட்பதீ'யில் 'பவ பய கேதச்சிதே' என்கிற இடத்தில் 'பவம்'ன்ற வார்தை வந்திருக்கிறது. ஸம்ஸார பந்தத்தை மறைப்பது, அதாவது ஸம்ஸார வாழ்க்கை மறையும்படிச் செய்வது, அல்லது ஸம்ஸாரத்தைப் போக்கிக்கொள்வதுதான் 'பவதிரஸ்காரம்'.

'ந பவதி கிம்' என்கிற இடத்தில் 'பவதி' என்பது வினைச் சொல். இங்கே 'பவதி' என்றால், உண்டாகிறது' என்று அர்த்தம். 'ந பவதி கிம்' என்றால் 'உண்டாகிறதில்லையா என்ன?' என்று அர்த்தம். எது உண்டாகிறதில்லையா? ஸம்ஸாரத்தின் மறைவுதான். 'உன் தர்சனம் கிடைத்து விட்டால் அப்புறம் ஸம்ஸார நீக்கம் உண்டாகாகமலும் இருக்குமா என்ன?' என்று கேள்வி ரூபத்தில் கேட்கிறார். 'உன் தர்சனம் கிடைத்தபின் ஸம்ஸாரம் விலகுகிறது' என்று(நேர்)ஸ்டேட்மெண்டாகச் சொல்வதைவிட, இப்படிக் கேள்வி ரூபத்தில், 'ஸம்ஸார நீக்கம் ஏற்படாதா என்ன? ஏற்படாமலும் போகுமா என்ன?' என்று சொல்வது, சொல்லவந்த விஷயத்துக்கு மேலும் அழுத்தம் கொடுக்கிறது.

கீதையில் (2-59), பரமாத்மாவை தர்சித்துவிட்டால் அதோடு உள் மனிஸில் தேங்கயிருக்கும் வாஸனை ருசி எல்லாம் போய்விடும் என்று சொல்லியிருக்கிறது. அதோடு ஸம்ஸாரமும் போய்விடவேண்டியதுதான். அந்த இடத்தில் "பரம் த்ருஷ்ட்வா" என்று பகவான் சொல்லியிருக்கிறது போலவே ஸக ஆசார்யாள் "த்ருஷ்டே பவதி" என்கிறார். பகவத் தர்சனம் அத்தைவ ஸாக்ஷாத்காரத்துக்குத்தான் அழைத்துக்கொண்டு போகட்டும், அல்லது த்வைதமாக அவனை தர்சிப்பதகாவே தான் இருக்கட்டும் - எப்படியிருந்தாலும் அதற்கப்புறம் இந்த பூலோகத்தில் ஜனன மரணச் சுழலில் மாட்டிக்கொள்விதல்லை. "இப்படி ஏற்படமல் கூடப் போகமுடியுமா என்ன - ந பவதி கிம் பவ திரஸ்காரா:?" என்று கேட்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**திருமாலுக்கு ஈச்வர சப்தம்**

அடுத்த ச்லோகம், ஷட்பதீயில் ஐந்தாவது ச்லோகம்,

மத்ஸ்யாதிபி - ரவதாரை

அவதாரவதாவதா ஸதா வஸுதாம்

பரமேச்வர பரிபால்யோ

பவதா பவதாப பீதோஹம்

இங்கேயும் கடைசியில் பவதா என்று இரண்டு தடவை திருப்புகிறார். முதலில் 'பவதா'வைத்தனி வார்த்தையாக எடுத்துக்கொள்ளவேண்டும் 'தங்களால்' என்று அர்த்தம். அடுத்து வருவது 'பவ தாப பீதோஹம் (பீத அஹம்)' என்று பிரியும். 'ஸம்ஸார தாபத்தினால் பீதி அடைந்துள்ள நான்' என்று இதற்குப் பொருள்.

'பரமேச்வர பரிபால்யே. பவதா பவதாப பீதோஹம்' என்பதற்கு 'ஸம்ஸார தாபத்தினால் பீதி (பயம்) அடைந்துள்ள நான் பரமேச்வரனான தங்களால் பரிபாலிக்கப்படவேண்டியவனாக இருக்கிறேன்' என்று அர்த்தம்.

பொதுவாக நாம் ஈச்வர சப்தம், பரமேச்வர சப்தம் முதலானவை சிவ பெருமாளைக் குறிப்பிடுவதாகவே வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆசார்யாளோ எல்லாவற்றிலும் அத்வைதி, அபேத உணர்ச்சியே கொண்டவர். சிவ விஷ்ணு அபேதமும் இவற்றில் ஒன்று. 'ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா' என்கிற க்ரந்தத்தில் ஆசார்யாள் கேள்வி - பதில் ரூபத்தில் உபதேசித்துக்கொண்டேபோகிறபோது, 'பகவான் யார்? (கச்ச பகவான?)' என்று ஒருகேள்வி கேட்டுவிட்டு, அதற்கு பதிலாக, "சங்கரனாகவும் நாராயணனாகவும் இருக்கப்பட்ட ஒரே ஆத்மாவான மஹேச்வரன் தான், பரமேச்வரன்தான். அதனால், மஹாவிஷ்ணுவையே "பரமேச்வர" என்று கூப்பிட்டு, "நான் உன்னால் ரக்ஷிக்கப்படவேண்டியவன்" (பரிபால்ய:அஹம்) என்று ப்ரார்த்திக்ககிறார்.

இது ச்லோகத்தின் பிந்திய அடி. முந்திய அடியில் 'வதா வதா' என்று என்னவோ திருப்பித் திருப்பிச் சொல்கிறாரே. அதற்கு என்ன அர்த்தம்?

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**அவதாரங்கள்**

"மதஸ்யாதிபிரவதாரை" என்பதை வார்த்தை பிரித்தால் "மத்ஸ்யாதிபி:அவதாரை:". அப்படியென்றால், 'மத்ஸ்யம் முதலான அவதாரங்களால்' என்று அர்த்தம். லோக ரக்ஷணத்துக்காக பகவான் தசாவதாரம் எடுத்ததைச் சொல்கிறார்.

லோக ரக்ஷணம் என்றால் என்ன? எல்லா தேசங்களுக்குமாக பெரிய கவர்ன்மென்ட், பெரிய கோர்ட், பெரிய ஸைன்யம், பெரிய போலீஸ் டிபார்ட்மென்ட் வைத்துக்கொண்டு பண்ணுகிற கார்யமா என்ன? இல்லை. வேதத்தை ரக்ஷித்துக்கொடுத்து, அவரவர்களும் ஸ்வதர்மத்தைப் பண்ணும்படியாக ஆக்கிவிட்டால் அதுதான் லோகரக்ஷணம். வேதரக்ஷணம் தான் லோகரக்ஷணம். வேத மந்த்ர சப்தங்கள் அட்மாஸ்ஃபியரில் குறையாமல் பரவிக்கொண்ட, வைதிக யஜ்ஞங்களால் ஸகல தேவதா ப்ரீதி ஏற்பட்டு விட்டால், தன்னால் லோகம் முழுதும் ரக்ஷிக்கப்பட்டதாக ஆகிவிடும். அதனால் எப்போதெல்லாம் வேத தர்மத்துக்கு ஹீனம் உண்டாகி, லோகம் க்ஷீணமாயிற்றோ அப்போ தெல்லாம் பாலன கர்த்தாவான மஹாவிஷ்ணு அவதாரம் பண்ணி வேதத்தை புநருத்தாரணம் செய்வார். இதனால் லோகம் க்ஷேமம் அடைந்துவிடும்.

ஸோமுகாஸுரன், ஹயக்ரீவன் போன்ற அஸுரர்கள் வேதத்தையெல்லாம் ஜலக் காட்டிலே ஒளித்து வைத்தபோது பகவான் மீனாகத் தோன்றி அதை மீட்டு வந்ததுதான் மத்ஸ்யாவதாரம். 'ப்ரளய பயோதி ஜலே' என்று ஜயதேவர் அஷ்டபதியில் இதைச் சொல்லியிருக்கிறது.

இது மாதிரியான பத்து அவதாரங்களில் பகவான் தம்முடைய உயர்ந்த ஸ்தானத்தை விட்டு இந்த பூலோகத்துக்கு இறங்கி

வருகிறார். பரமபதம் என்று சொல்கிற உத்தமமான வைகுண்டத்திலிருந்து இறங்கி நம் லோகத்துக்கு வருகிறார். 'அவதாரம்' என்றாலே 'இறங்கி வருவது' என்பதுதான் அர்த்தம். 'தார' என்றால் உச்சி. தார ஸ்தாயி என்று மேல் ஸஞ்சாரத்தைச் சொல்கிறோம் அல்லவா? 'அவ-தாரம்' என்றால் reverse order-ல்அந்த உச்சியிலிருந்து கீழே வருவது. பரம கருணையால் பகவான் இப்படி இறங்கி வருகிறான். கீழே இருக்கிற நம்மைக் கையைப் பிடித்து மேலே அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்பதற்காக, உச்சத்துக்கெல்லாம் உச்சத்திலுள்ள பகவான் நம் லெவலுக்கு இறங்கி வருகிறான்.

'அவதாரவதா' என்று ச்லோகத்தில் வருவதற்க்கு 'இறங்கி வந்தவனாக ஆனதால்' என்று அர்த்தம்.

"மத்ஸ்யாபி:அவதாரை:" - மத்ஸ்யம் முதலான அவதாரங்கள ால:"அவதாரவதா" - கீழே இறங்கி வந்தவனாக ஆனதால்.

அவதாரவதா + அவதா என்பதே 'அவதாரவதா வதா' என்று அடுத்தடுத்து மூன்று 'வதா'வைக் கொடுக்கிறது. பின்னே சொன்ன 'அவதா' என்பதில் 'அவ' என்பது ரக்ஷிப்பதைக் குறிக்கும். 'மாமவ', 'மாமவ' என்று அநேக கீர்த்தனைகளில் வருவது 'மாம் + அவ' என்பதே. "மாம் - என்னை, அவ - காப்பாற்று' என்பது அர்த்தம்.

'அவதா ஸதா வஸுதாம்' என்று இங்கே ச்லோகத்தில் இருப்பது, எப்பொழுதும் (ஸதா) லோகத்தை (வஸுதாம்) பகவான் அவதாரங்களால் அவனம் (ரக்ஷணை) செய்துகொண்டிருப்பதைச் சொல்கிறது.

வஸு என்றால் பல தினுஸான செல்வங்களையம் (natural resources) பூமி கொடுப்பதால் பூமிக்கு 'வஸுதா என்று பேர். 'வஸுந்தரா' என்றும் சொல்வதுண்டு. இப்படிச் செல்வம் நிரம்பின பூமியானது ஜனங்களின் பாபத்தினால் வற்றி வாடிப் போகிற போதெல்லாம் அதை ரக்ஷித்துப் பழையபடி ஆக்குவதற்காக ஸ்வாமி அவதரிப்பதை ஆசார்யாள் சொல்கிறார். ஜனங்கள் பண்ணும் ஸகல பாபத்தையும் தாங்கிக்கொள்கிற பூமாதேவி ஒரு ஸ்டேஜுக்கு மேல் தாங்க முடியாமல் பகவானிடம் போய் முறையிடுவாள். உடனே அவர் அவதாரம் பண்ணிவிடுவார். பூமா தேவி பசு ரூபத்தில்

போய் முறையிட்டவுடன் பகவான் க்ருஷ்ணனாக அவதாரம் பண்ணிப் பசு மந்தைகளை மேய்த்ததாக பாகவதத்தில் இருக்கிறது.

'இப்படி லோகத்தை மத்ஸ்யம் முதலான அவதாரங்களால் எப்போதும் ரக்ஷிக்கிற பரமேச்வரா!ஸம்ஸார தாபத்தினால் பயந்துகிடக்கிற நானும் உன்னால் ரக்ஷிக்கப்பட வேண்டியவன்' என்பது இந்த ச்லோகத்தின் அர்த்தம்.

லோகரக்ஷணத்துக்காக பரம கருணையோடு திரும்பத் திரும்ப பகவான் அவதரிப்பதை வாக்கின் போக்கிலேயே காட்டி விடுகிறமாதிரி, "அவதாரவதாவதா... பவதா பவதாப" என்று ஒரே சப்தங்களைத் திரும்பத் திரும்ப அடுக்கி வைத்திருக்கிறார்!

'திருப்பித் திருப்பி அவதாரம் பண்ணுகிற விஷ்ணுவுக்குத்தான் கர்ப்பவாஸம் உண்டு. எங்கள் ஈச்வரனுக்குக் கிடையாது' என்று சைவர்கள் பெருமையாகச் சொல்லிக் கொள்வதும், 'தான் கீழே இறங்கி வந்தாகிலும் ஜனங்களை உயர்த்த வேண்டும் என்று அவதாரம் பண்ணும் பரம காருண்யம் எங்கள் பெருமாளுக்குத்தான் உண்டு, ஈச்ரவனுக்கு இல்லை' என்று வைஷ்ணவர்கள் பெருமைப்பட்டுக்கொள்வதுமாக இருக்க, நம் ஆசார்யாளோ பெருமாளையே, 'பரமேச்வரா!' என்று கூப்பிட்டு அவதாரங்களையும் சொல்லி ஸமரஸப்படுத்தியிருக்கிறார்.

'புருஷர்களுக்கு உயர்ந்த புருஷோத்தமனே ஹரி, மஹேச்வரன் என்பதாக ஈச்வர பட்டம் உடையவன் த்ரயம்பகனான (முக்கண்ணனான) ஒருவனே அன்றி வேறில்லை' என்று காளிதாஸன் சொல்லியிருக்கிறான்:ஹரிர் யதைக:புருஷோத்தம ஸ்ம்ருத:மஹேச்வரஸ் - த்ரயம்பக ஏவ நாபர:

'அமரம்' என்கிற ஸம்ஸ்க்ருத டிக்ஷனரியிலும் ஈச்வர:சர்வ ஈசாந:என்பதாக 'ஈச்வர' என்கிற டைட்டிலை சர்வனும் ஈசானனுமான சிவனுக்கே கொடுத்திருக்கிறது.

ஆனால் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் இடையில் கொஞ்சம் கூட வித்யாஸம் பாராட்டாத நம் ஆசார்யாள் இங்கே "பரமேச்வர" என்று மஹாவிஷ்ணுவையே கூப்பிடுகிறார். "என்னை ரக்ஷியப்பா" என்று அவனை வேண்டிக்

கொள்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**பன்னிரு நாமங்கள் : நெற்றிக்கிடும் நாமம்**

அடுத்த ச்லோகம்:

தாமோதர குணமந்திர

ஸுந்தரவதநாரவிந்த கோவிந்த 1

பவஜலதி மதந மந்தர

பரமந்தரம் பநய த்வம் மே 11

"ந்த" என்ற சப்தம் திரும்பத் திரும்ப வருகிற மாதிரி மதுரமான பதங்களினால் ச்லோகத்தைச் செய்திருக்கிறார் நம்முடைய ஆசார்யாள். ஒவ்வொரு வரியிலும் இந்த சப்தம் வரவேண்டும் என்பதால் நாலாவது வரியில் இரண்டு பதங்களின் ஸந்தியில் 'பரமந்தரம்' என்று வைத்திருக்கிறார். பரமம் - தரம் என்ற இரண்டு வார்த்தைகள் சேர்ந்து 'பரமந்தரம்' என்றாகியிருக்கிறது. 'அநேகதம் - தம்' என்பது 'அநேகதந்தம்' என்றான மாதிரி.

முதல் இரண்டு வரிகளில் பகவானைக் கூப்பிடுகிறார். "தாமேதர, கோவிந்த" என்ற இரண்டு பெயர்களைச் சொல்லிக் கூப்பிடுகிறார். 'குணமந்திர', 'ஸுந்தர வதநாரவிந்த' என்பதெல்லாமும் ஸ்வாமியை அழைப்பதுதான். ஆனால் தாமோதரன், கோவிந்தன் என்பன பகவானின் ப்ரஸித்த நாமாக்களாகவே இருப்பதை.

பன்னிரண்டு நாமாக்கள் மஹாவிஷ்ணுவுக்கு முக்யம். பரமேச்வரனக்கு (சிவபெருமானுக்கு) பவன், சர்வன்,

ஈசானன், பசுபதி, உக்ரன், ருத்ரன், பீமன், மஹாதேவன் என்ற அஷ்ட நாமாக்கள் முக்யமாயிருப்பது போல் மஹா விஷ்ணுவுக்குப் பன்னிரண்டு. ஸஹஸ்ர நாமம், த்ரிசதி (முந்நூறு நாமம்), அஷ்டோத்தர சதம் (108 நாமம்) முதலியன சொல்லி அர்ச்சனை பண்ணினாலும் முடிவில் இந்த அஷ்ட நாமாவையோ, த்வாதச (பன்னிரண்டு) நாமாவையோ சொல்லி முறையே ஈச்வரனையும், பெருமாளையும் அர்ச்சனை பண்ணவேண்டும். அஷ்டோத்தர முதலியன பண்ண முடியாதபோது இந்த எட்டு அல்லது பன்னிரண்டு நாமாக்களை மட்டும் மனஸாரச் சொல்லி அர்ச்சனை பண்ணினால் போதும் என்று சொல்லி இருக்கிறது. பிள்ளையாருக்கும் இப்படி விசேஷமான நாமாக்களாகப் பதினாறைச் சொல்லியிருக்கிறது.

மஹா விஷ்ணுவுக்கு த்வாதச நாமாக்கள் முக்யமானவை. வைஷ்ணவர்களாக இருக்கப்பட்டவர் நெற்றியிலே போட்டுக்கொள்வதை 'நாமம்' என்று சொல்கிறோம். இந்தப் பேர் எப்படி வந்தது? வைஷ்ணவர், சைவர், ஸ்மார்த்தர், மாத்வர் யாவரும் நெற்றியில மட்டுமில்லாமல் மார்பு, வயிறு, புஜம், மணிக்கட்டு முதலான இடங்களில் நாமமோ, விபூதியோ? கோபி சந்தனமோ இட்டுகொள்ள வேண்டும். ஆசார சீலர்கள் இப்படியே இன்றைக்கும் நாமம் போட்டுக் கொள்ளவேண்டும். 'த்வாதச நாமம் போட்டுக்கொண்டு வந்தார்' என்று சொல்கிறோம். மஹா விஷ்ணுவுக்கு ரொம்பவும் ப்ரீதியாக இருக்கப்பட்ட பன்னிரண்டு நாமாக்களில் ஒவ்வொன்றுக்கும் அடையாளமாக சரீரத்தின் ஒவ்வொரு இடத்திலும் உலகளந்தவனும், உலகமே உருவானவனுமான பகவான் நினைப்போடு திருமண் இட்டுக்கொள்ளவேண்டும் என்பதே தாத்பர்யம். இப்படி பகவானின் த்வாதச நாமாக்களுக்கு அடையாளமாக இருப்பதாலேயே இந்தப் பன்னிரண்டு திருமண் சின்னங்களுக்கும் த்வாதச நாமம் போடுவது என்று பேர் வந்தது. அப்புறம் திருமண் சின்னத்துக்கு "நாமம" என்று பேராகிவிட்டது.

இத்நப் பன்னிரண்டு நாமாக்களையே ஆசமனம் செய்யும் போதும் நாம் சொல்லி கன்னம், கண், மூக்கு, காது, புஜம், ஹ்ருதயம், தலை முதலான அவயவங்களைத் தொட்டு கொள்கிறோம்.

கேசவ - நாராயண - மாதவ - கோவிந்த - விஷ்ணு - மதுஸூதன - த்ரிவிக்ரம - வாமன - ஸ்ரீதர - ஹ்ருஷீகேச - பத்மநாப - தாமோதர என்பவையே இந்தப் பன்னிரண்டு நாமாக்கள்.

இதிலே வேடிக்கையாக , முக்யமாக அவதாரங்களான க்ருஷ்ண, ராம என்ற இரண்டு பெயர்களும் இல்லை. ஆனாலும் கேசவன், கோவிந்தன், தாமோதரன் முதலானவை க்ருஷ்ண பரமாத்மாவின் பெயர்கள்தான். 'கேசி' என்ற அஸுரனைக் கொன்றதால் கேசவன், கோக்களை (பசுக்களை) ரக்ஷித்ததால் கோவிந்தன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**தாமோதரன்**

'தாமோதரன்' என்றால், 'கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவன்' என்று அர்த்தம். தாமம் என்றால் கயிறு. 'கேஸ் பெட்டி' , 'கேட் வாசல்' என்று ஒரே அர்த்தமுள்ள இரண்டு வார்த்தைகளைச் சேர்த்துச் சொல்கிறமாதிரி 'தாமக் கயிறு' என்று சொல்லி சொல்லிதான் 'தாம்புக் கயிறு' என்று வந்துவிட்டது தாமம் - கயிறு, உதரம் - வயிறு. கயிற்று வயிற்றனே தாமோதரன்.

"வெண்ணெய் திருடுகிறாயா? உன்னைக் கட்டிப் போடுகிறேன், பார்" என்று யசோதை பால க்ருஷ்ணனைப் பிடித்துக் கயிற்றால் கட்டிப்போடப் பார்த்தாள். அவள் எத்தனை கயிறுகளைச் சேர்த்து ஒட்டுப்போட்டுக்கொண்டே போன போதிலும் அதனுடைய சின்ன வயிற்றைச் சுற்றிக் கட்டுவற்குப் போதாதபடி மாயாஜாலம் பண்ணினார் பகவான், அப்புறம் அவள் வேர்த்து விருவிருத்துப் போனதைப் பார்த்துப் பரிதாப்பட்டுத் தாமாகவே கயிற்றிலே கட்டுப்பட்டார், அந்த அவஸரத்திலேதான் 'தாமோதரன்'

என்று பேர் ஏற்பட்டது. "உரலோடு சேர்த்து யசோதை கட்டிப்போட, மிருதுவான உன் வயிற்றைச் கயிறு உறுத்தும் படி எளிமையாகக் கட்டுப்பட்டாயே!" என்று ஆழ்வாராதிகள் இதை உருகி உருகிப் பாடி அநுபவித்திருக்கிறார்கள். "தான் பக்தர்களின் அன்புக்குக் க்டடுப்படும் பக்த பராதீனன், ஆனாலும் அவர்கள் 'என்னால் கட்டிவிட முடியுமாக்கும்' என்று அஹம்பாவத்தோடு நினைக்கிறவரையில் தன்னைக் கட்டமுடியாது, தானே கருணைக்கொண்டு கட்டுப்பட மனஸ் வைத்தால்தான் முடியும் என்று காட்டுபவன் தாமோதரன். பிற்பாடு பாரத யுத்தம் ஏற்படுவதற்கு முன், ஸ்வாதீன ப்ரேமையில் ஸஹாதேவன் 'உன்னைக் கட்டிப்போடுகிறேன் பார்' என்று ஸவால் விட்டபோது, அவன் நிஜமாகவே கட்டிப்போடும்படியாகவும் பகவான் நின்றிருக்கிறான். தாமோதரனாய் இருக்கும்போது, இந்த ஷட்பதீ ஸ்தோத்ரம் ஆரம்பத்திலிருந்து வலியுறுத்தி வந்துள்ள விநயத்தோடு கூடிய பக்தியை எடுத்துக் காட்டியிருக்கிறான்.

"தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை" என்று ஆண்டாள் சொல்லியிருக்கிறாள், தன்னை தரித்த தாயாரான தேவகியின் குடலைத் தன்னுடைய கர்ப்பவாஸத்தால் பரிசுத்தி பண்ணிவிட்டான் என்பது அவள் சொல்வதற்கு அர்த்தம். எவனது குடலுக்கு வெளியிலே மேல் பக்கம் தாம்புக்கயிற்றைப் போட்டு வளர்ப்புத் தாய் யசோதை புண்ணாக, அழுக்காக ஆகும்படிச் செய்தாளோ அவன் தன் ஜனக மாதாவின் (பெற்றதாயாரின்) குடலை தன்னுடைய வாஸத்தாலேயே தூய்மை செய்தவனாக்கும் என்று காட்டியிருக்கிறான்.

இது பக்தி பூர்வமாக சொல்கிற அர்த்தம். தத்வரிதியாய் 'தாம உதரன் என்றால் 'எல்லாவற்றுக்கும் இருப்பிடமான வயிற்றைக்கொண்டவன். அதாவது எல்லவாற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பவன்' என்று அர்த்தம் பண்ணுவார்கள்.

பக்தி

"வண்டு ஸ்தோத்ரம்"

திருப்பெயர்களின் பொருள்

'கோவிந்தன்' என்றால் 'இந்த்ரியங்களை அடக்கி ஆளுகிறவன்' என்றும் அர்த்தம் சொல்வார்கள், இந்த இடத்தில் 'கோ' என்றால் இந்த்ரியங்கள், 'பார்ப்பார் அகத்துப் பாற் பசு ஐந்து' என்று திருமூலர் சொன்ன இந்த்ரியப் பசுதான் 'கோ'. 'கேசவன்' என்பதற்கும் இப்படியே தத்வார்த்தமாக 'க + அ + ஈச + வ' என்பதே கேசவன் என்று வ்யாக்யானம் செய்வார்கள். க என்றால் ப்ரம்மா. வேதத்திலேயே அப்படிப் பெயர் சொல்லியிருக்கிறது, அ என்பது விஷ்ணு. 'அகர முதல எழுத்தெல்லாம்' என்றபடி விச்வத்தின் ரூபமாக இருக்கிற விஷ்ணுதான் அ, அ, உ,ம என்ற மூன்றும் சேர்ந்த ப்ரணவவமான 'ஓம்' என்பதில்கூட அ என்பது விஷ்ணு, உ என்பது ஈச்வரன், ம என்பது ப்ரம்மா என்ற த்ரிமூர்த்தி ஸ்வரூபமாகத்தான் சொல்லியிருக்கிறது. அப்படியே "கேசவ" நாமாவிலும் க என்பது ப்ரம்மா, அ என்பது விஷ்ணு. ஈச என்பது ஈச்வரன் (சிவன்) - இந்த மூவரையும் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருக்கிற பரமாத்மாதான் 'கேசவன்' என்று அர்த்தம் பண்ணுவதுண்டு.

மது மாதிரி - தேன் மாதிரி - மதுரமான ரூபத்தோடும் ஸ்வபாவத்தோடும் இருப்பவன் மாதவன். இதுவும் விசேஷமாக க்ருஷ்ணன் பேராகவே இருக்கிறது, ஆனால் மஹாவிஷ்ணுவுக்கே இந்த பெயர் உண்டு. மது - கைடபர் என்ற இரண்டு அஸுரர்களை மஹாவிஷ்ணு ஸம்ஹாரம் பண்ணினார். மதுவைக் கொன்றதால் மாதவன் என்ற பெயர் வந்தது. இன்னொரு அர்த்தமும் உண்டு. 'மா' என்றால் லக்ஷ்மி என்று அர்த்தம் பண்ணுவதுண்டு. 'சிவ' பத்னி 'சிவா' என்பதுபோல, 'க என்ற ப்ரம்மாவின் பத்னியான ஸரஸ்வதிக்குக் 'கா' என்று பெயர். 'கா'வான ஸரஸ்வதியும் 'மாவான லக்ஷ்மியும் எவளக்கு இரண்டு அக்ஷங்களாக (கண்களாக) இருக்கிறார்களோ, அவளே 'காமாக்ஷி' தீக்ஷிதர்கூட 'நீரஜாக்ஷி காமாக்ஷி' க்ருதியில் லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் காமாக்ஷிக்கு இரண்டு கண்களாக இருப்பதை, 'சாரதா ரமா நயனே' என்கிறார். 'மா' என்றே தமிழிலும்

லக்ஷ்மியைச் சொல்லியிருக்கிறது. 'தவன்' என்றால் புருஷ் 'கணவன்'. தவன், அதாவது புருஷன், இல்லாதவள் விதவா. ல்க்ஷுமி நாயகனாதலால் மஹா விஷ்ணுவுக்கு மாதவன் . மாதவன் என்ற பேர். மாரமணன் என்றும் ஒரு பேர்.

பன்னிரண்டு நாமாக்களில் இன்னொன்றான 'மதுஸூதன' என்பதும் மது என்ற அஸுரனைக் கொன்றைதைத்தான் குறிப்பிடுகிறது. இது மஹாவிஷ்ணு பண்ணின கார்யமானாலும் க்ருஷ்ணன் பூர்ணாவதாரமானபடியால் பொதுவில் அவரையே மதுஸூதனன் என்று சொல்கிறோம்.

இப்படியே 'ஹ்ருஷீகேசன்' என்ற பெயரையே அநேக இடங்களில் க்ருஷ்ணனுக்குக் கொடுத்திருக்கிறது.

பன்னிரண்டு நாமாக்களில் நாராயணன், விஷ்ணு, ஸ்ரீதரன், பத்மநாபன் என்ற நாலு பெயர்கள் நேராக மஹா விஷ்ணுவைக் குறிப்பதாக இருக்கின்றன. த்ரிவிக்ரம, வாமன என்ற இரண்டும் வாமன ப்ரம்மச்சாரியாகக் குட்டையாக வந்து அப்புறம் த்ரிவிக்ரமானாக வளர்ந்து உலகளந்த அவதாரத்தைச் சொல்கின்றன. கேசவன், மாதவன், கோவிந்தன், மதுஸூதனன், ஹ்ருஷீகேசன், தாமோதரன் என்ற பாக்கியுள்ள ஆறு பெயர்களும் லோக வழக்கில் க்ருஷ்ண நாமாக்களாகவே கருதப்படுகின்றன. ராமாவதாரம், நரஸிம்மஹாவதாரம் முதலிய மற்ற அவதாரங்களுக்கு ஏற்பட்ட தனிப் பெயர்கள் இந்தப் பன்னிரண்டில் இல்லை.

வேத ஸூக்தங்களில் மஹாவிஷ்ணு த்ரிவிக்ரமனாக வந்ததையே விசேஷமாய்ச் சொல்லியிருக்கிறது. பிற்பாடு புராணங்களிலும், பஜனை, ஸங்கீர்த்தனம் முதலானவைகளிலும் க்ருஷ்ணனையே பூர்ணாவதாரம் என்ற விசேஷித்திருக்கிறது. த்வாத ச நாமாக்களிலும் இந்த இரண்டு அவதாரப் பெயர்களே இருக்கின்றன.

இந்தப் பன்னிரண்டு பெயர்களில் தாமோதர, கோவிந்த என்ற இரண்டை "ஷட்பதீ"யின் ஆறாவது ச்லோகத்தில் ஆசார்யாள் ப்ரயோகித்திருக்கிறார். முதல் ச்லோகத்தில் "அவிநயம் அபநய விஷ்ணோ" என்று விஷ்ணுவை அழைத்து இந்த ஸ்தோத்ரத்தை விஷ்ணுபரமாகவே ஆரம்பித்தாலும், இங்கே பூர்ணாவதாரமான க்ருஷ்ணனின் இரண்டு பெயர்களாலே கூப்பிட்டு முடிக்கிறார்.

## பக்தி

## "வண்டு ஸ்தோத்ரம்"

## நிர்குணமும் குணநிலையமும்

"தாமோதர குணமந்திர!" என்று ஆறாவது ச்லோகத்தை ஆரம்பிக்கிறார் ஸ்ரீ ஆசார்யாள்.

'தாமோதர' சப்தத்துக்கு முன்பே அர்த்தம் சொன்னேன்.

'குண மந்திர' என்றால் 'குணங்கள் யாவும் குடிகொண்டவனே' என்று அர்த்தம். மந்திரம் என்றால் குடியிருக்கும் இடம். முக்யமாக, பகவான் அர்ச்சா ரூபத்தில் (விக்ரஹ வடிவில்) குடிகொள்ளும் கோயிலை மந்திரம் என்கிறோம். வடக்கே 'மந்திர்' என்று சொல்கிறார்கள். அனந்த கல்யாண குணங்களும் ஒரு கோயிலாகக் குடிகொண்டிருப்பவனே 'குண மந்திரன்'.

'குணம்' என்பதற்குக் கயிறு என்று ஒரு அர்த்தம். 'தாமோதர' என்ற பெயரில் 'தாம' என்பது கயிற்றைக் குறிப்பிடுவதால், இந்த ஸ்தோத்ரம் பூராவும் சொற்களையும் பொருளையும் inter - linked - ஆக (ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதாக)ப் பின்னிக்கொண்டு போயிருக்கும் ஆசார்யாள் அடுத்தாக 'குண மந்திர' என்று போட்டிருப்பதாகவும் வைத்துக்கொள்ளலாம்.

குணமந்திரன் என்றால் அனந்த கல்யாண குண நிலயன். அத்வைத சாஸ்த்ரம் அவரை குறையாகத் தெரிந்தவர்கள், 'நம் ஆசார்யாள் இப்படி அனந்த கல்யாண குண நிலயனாக பகவானைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்யலாமா?' என்று கேட்கக்கூடும். ஏனென்றால் சங்கர பகவத்பாதாள் முடிந்த முடிவாக ஸ்தாபித்த அத்வைத ஸித்தாந்தத்தின்படி ப்ரஹ்மம் அல்லது பரம்பொருள் என்பது நிர்குணமானதுதான் - அதாவது. அதற்கு எந்த குணமும் கிடையாது. அதவேதான்

ஜீவாத்மாவும். ஜீவாத்மாவுக்கு மனஸ் என்று ஒன்று இருக்கிறவரையில் தான் குணங்கள், கார்யங்கள், நாம - ரூபம் (பெயர் - வடிவம்) எல்லாம் உண்டு. ஞான விசாரம் பண்ணிப் பண்ணி மனஸைத் தொலைத்துவிட்டால். அப்புறம் நிர்குணமான, ஏக வஸ்துவான ப்ரஹ்மமாகவே ஜீவனம் ஆகிவிடுகிறான். அதுதான் மோக்ஷம். இப்படிப்பட்ட ஸித்தாந்தத்தை அவலம்பித்தவர் (பிடிப்பாகக் கொண்டவர்) பகவத்பாதாள்.

ராமாநுஜாசார்யார், மத்வாசார்யார் போன்றவர்களே ப்ரஹ்மத்தை அனந்த கல்யாண குணம் கொண்ட ஸ்ரீ மந் நாராயணன் என்று சொல்பவர்கள். அனந்த கல்யான குணங்களை அநுபிவத்து அனந்தப் பட்டுக் கொண்டிருப்பதுதான் அவர்களுடைய ஸித்தாந்தப்படி மோக்ஷம்.

அதாவது சங்கரர் நிர்குண ப்ரஹ்மத்தையும், மத்வ ராமாநுஜர்கள் ஸகுண ப்ரஹ்மத்தையும் சொன்னவர்கள். இப்போது நம் விஷயத்துக்கு இவ்வளவு போதும். "நிர்குண ப்ர்ஹ்மத்தையே சொன்ன பகவத்பாதாள் 'குண மந்திர' என்று கொண்டாடிச் சொல்லலாமா?" என்பது கேள்வி.

சொல்லாம் என்பது பதில். (சங்கர) ஆசார்ய பாஷ்யங்களைப் பார்த்தால் என்ன தெரிகிறது? முடிவிலே எல்லாம் நிர்குணமாகிறதுதான் மோக்ஷம். அதுதான் ஜீவாத்மா பரமாத்மா இரண்டும் ஒன்றாகிவிடுகிற ஸ்வஸ்வரூபம் என்றாலும், இவர்களிலே பரமாத்மாவானவர் மாயா சக்தியினால் ஜீவ - ஜகத்துக்களை உண்டு பண்ணி, நடத்துகிற ஈச்வரனாக இருக்கிறார் என்றும் சொல்கிறார். இந்த ஈச்வரன் தான் ஸகுண ப்ரஹ்மம் என்பது.

ஈச்வரனை வேறாக இருந்து உபாஸித்துப் பெறுகிற ஆனந்தங்களையே ராமாநுஜரும் மத்வரும் சொன்னார்கள். அந்த உபாஸனையையும், ஆனந்தத்தையும் நம் (சங்கர) ஆசார்யாளும் நிறையச் சொல்லியிருக்கிறாரென்பதை இதுவரை "ஷட்பதீ"க்கு அர்த்தம் கேட்டதிலேயே புரிந்து கொண்டிருப்பீர்கள்.

ஆனால் இந்த உபாஸையை முதல் படியாகக் கொண்டு, இதிலிருந்து இரண்டாம் படியாக உபாஸகனே

உபாஸ்யமாகவும் (உபாஸிக்கப்படும் பொருளாகவும்) ஆகிவிடுகிற நிர்குண அத்வைதத்துக்குப் போகவேண்டும் என்றார்.

ஸரி, ஆனால் இப்படி அத்வைதானுபவம் பெற்றுவிட்ட ஞானி எப்போதும் நிர்குணத்திலேயேதான் இருக்கிறானா? அப்படிக் காணோமே!மஹாஞானிகளும் வெளிலோகத்தில் நிறையக் கார்யங்களை, அநுக்ரஹங்களைச் செய்து கொண்டுதானே இருக்கிறார்கள்? சுக ப்ரம்த்திலிருந்து, நம் ஆசார்யாளிலிருந்து, ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் வரை இப்படித்தானே இருந்திருக்கிறார்கள்? அப்படியானால் ஸமாதியில் அவர்கள் பெற்ற நிர்குண அநுபவம் இவர்களை விட்டுப் போய்விட்டதா?

இதற்கு பதில் என்னவென்றால் நாம், 'லோகம் தெரியாத நிலைமைதான்

ஸமாதி, ஞானி லோக கார்யம் பண்ணும்போது அவனுடைய ஸமாதி கலைந்துவிட்டது' என்று சொன்னாலும், வாஸ்தவத்தில் அந்த ஞானி லோகத்தில் கார்யம் பண்ணுவதாக நமக்குத் தெரிகிறபோதும் கூட ஸமாதி நிலையிலேயதான் இருக்கிறான், நமக்கு அவன் வேலை செய்வதாகத் தோன்றினாலும் அவனுக்கு இந்த எண்ணமோ, 'நாம் செய்கிறோம்' என்கிற கர்த்ருத்வமோ இல்லை. அவனுடைய பழைய தனி மனஸ் போனது போனது தான். அப்புறம் அவன் மூலம் ஈச்வரனேதான் கார்யங்களைப் பண்ணுகிறான்.

இப்படி இவனை லோக ஸங்க்ரஹத்துக்காக (உலக நன்மைக்காக) ஈச்வரனே பல தினுஸாக இயக்கிவைக்கிறபோது. இந்த நாம - ரூப ப்ரபஞ்சத்தைப் பண்ணி, நடத்திக் கொண்டிருக்கிற ஸகுண ப்ரஹ்மமாக தன்னையும் அவன் ரஸித்து, பக்தி பண்ணும்படியாக ஒரு விளையாட்டுப் பண்ணுகிறான்.

இப்படிப்பட்ட ஞானிக்கு ஸகுண - நிர்குண பேதங்களே அடிபட்டுப் போய் ஸகுண ப்ரஹ்ம அநுபத்திலேயே நிர்குண ப்ரஹ்மாநுபவ ஆனந்தம் தெரிகிறது. இன்னும் சில ஸமயங்களில் இந்த த்வைதமும் (பலவாக இருக்கிற variety-யும்) அந்த அத்வைதத்தின் வேஷம்தானே என்ற

உணர்வு அவனுக்கு நன்றாக ஸ்திரப்பட்டு விட்டதால், 'நிர்குணமாக இருக்கிற ஏக சாந்தத்தைவிட இப்படி ஸகல கல்யாண குணமாக இருக்கிற variety-ஐத்தான் அநுபவிக்கலாமே' என்றுகூடத் தோன்றிவிடுகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**க்ருஷ்ண பக்தர்களான அத்வைதிகள்**

இந்தமாதிரி நிலையில்தான் பரம அத்வைதியான (ஸதாசிவ) ப்ரம்மேந்த்ராள் 'ப்ரஹ்மணி மாநஸ ஸஞ்சர ரே' ('ஹே மனமே, நிர்குண ப்ரஹ்மத்திலேயே ஸஞ்சாரம் பண்ணு') என்று சொல்லிவிட்டு உடனே, மயிலிறகைத் தலையில் சொருகிக் கொண்டிருக்கிற ஸகுணமான க்ருஷ்ண பரமாத்மாவைப் பரவசமாக வர்ணிக்க ஆரம்பித்து விடுகிறார்.

இப்படித்தான் ஆசார்யாளும் ஏராளமான ஸ்தோத்ரங்களை ஸகுண ப்ரஹ்மதின் பல ரூபங்களாக இருக்கப்பட்ட அநேக மூர்த்திகளின் மீதும் பாடியிருக்கிறார். அவற்றில் கேசாதி பாத வர்ணனை, பாதாதி கேச வர்ணனை எல்லாம் பண்ணி, அந்தந்த தெய்வத்தின் குணகண மஹிமைகளையும் லீலைகளையும் உள்ளமுருகிக் கொண்டாடியிருக்கிறார்.

'குண மந்திரம்' என்பதால் நிர்குணத்தை மறந்து விட்டார், அல்லது அதை மறுத்து முரணாகப் பேசுகிறார் என்று அர்த்தமில்லை. மாறாக, குண மந்திரம் என்பதாலேயே நிர்குணத்தைத்தான் அவர் சொல்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது.

இது எப்படி?

VIBGYOR என்று ஏழு கலர்களைச் சொல்கிறோம். இந்த ஏழையும் ஒன்றாகச் சேர்த்துவிட்டால் என்ன ஆகிறது? ஒரு கலரும் இல்லாமல் வெள்ளை வெளேர் என்று

ஆகிவிடுகிறதல்லவா?

இதே மாதிரி அத்தனை குணங்களும் அவனிடம் குடி கொண்டிருப்பதாலேயே அவன் ஒரு குணமும் இல்லாத நிர்குண வஸ்துவாக இருக்கிறான்.

ஒரு கலரும் இல்லாத ஸூர்ய வெளிச்சம் refraction-ல் ஏழு கலர்களுமாகப் பிரிகிற மாதிரி அந்த நிர்குணம்தான் மாயையில் பட்டு, அந்த refraction-ல் இத்தனை குணங்களுமாகிறது. 'நாம - ரூப ரஹிதமான ப்ரஹ்மம் இத்தனை நாம - ரூப ஜீவ ஜகத்துக்களாகிறது.

'தாமோதர' என்றவுடன் 'குணமந்திர' என்று ஆசார்யாள் சொல்வதில் ஒரு வார்த்தை விளையாட்டே இப்போது தெரிகிறது. தாம - உதரன் என்றால் 'கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவன்'. 'குணம்' என்றாலும் கயிறு என்று அர்த்தம் உண்டு என்றேன். 'குண மந்திர' என்பது குணங்களிலே கட்டப்பட்ட மாதிரி நிர்குண வஸ்து இருக்கிறது என்று சொல்வதுபோலத் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் குணங்களால் கட்டுப்படுத்த முடியாதவன். ஆனாலும் யசோதை எத்தனை கயிற்றாலும் கட்டமுடியாத வயிற்றை பகவானே பிறகு கட்டுக்கு அகப்படுத்திக் கொண்டதுபோல ப்ரஹ்மமும் இப்படி ஸகுணம் மாதிரிக் கட்டுப்பட்டு வேஷம் போடுகிறது.

"என்ன ஆச்சர்யம்!உபநிஷதங்களின் அர்த்தமான நிர்குண ப்ரஹ்மம் இப்படி உரலில் கட்டுப்பட்டிருக்கிறதே!" என்று 'க்ருஷ்ண கர்ணாம்ருத'த்தில் ஒரு ச்லோகமுண்டு. குண மந்திரமாக இருப்பதும் இப்படிக் கட்டுப்பட்டிருக்கும் நிலைதான் என்கிற மாதிரி 'ஷட்பதீ ஸ்துதி'யில் அடுத்தடுத்து "தாமோதர, குணமந்திர" என்று வருகிறது!

இப்படி குணத்தோடு ரூபத்தோடு அது வருகிறபோது அதை ரஸித்து ஆனந்தப் படுகிற நிலையிலேயே, அடுத்து "ஸூந்தர வதநாரவிந்த" என்கிறார்.

ஸூந்தர - அழகான, வதந - முக்யமாகிய, அரவிந்த - தாமரை, "தாமரை போல அழகான முகம் படைத்தவன்" என்று பகவானை வர்ணிக்கிறார்.

பரம அத்வைதிகள், பேச்சிலே மட்டுமில்லாமல்

அநுபவிகளாக இருந்த அத்வைதிகள், பகவானின் ரூபஸௌந்தர்யத்தை 'ஓஹோ' என்று வர்ணித்து ஆனந்திருத்திருக்கிறார்கள், அத்வைதிகள் பக்தர்காளாயிருப்பதில் குறிப்பாக க்ருஷ்ணரை இஷ்ட தெய்வமாகக் கொண்டவர்களாகவே அதிகம் இருந்திருக்கிறார்கள்.

"க்ருஷ்ண கர்ணாம்ருதம்" பண்ணிய லீலாசுகர் அத்வைத ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்தான். மலையாளத்தைச் சேர்ந்தவர் - அவர், அங்கே அத்வைத ஸம்ப்ரதாயம்தான் உண்டு. அதோடுகூட அவர் தங்கள் குடும்பத்தைப் பற்றிச் சொல்லிக்கொள்ளும்போது தங்களுடைய குலதெய்வம் சிவபெருமான் என்றும், தாங்கள் சிவ பஞ்சாக்ஷரி ஜபத்தையே உயர்கதியாகக் கொண்டவர்களென்றும் சொல்லிக்கொள்கிறார். "ந கலு விசாரணீய:" - இதைப் பற்றிக் கொஞ்சம் கூட - ஸந்தேஹமில்லை - என்று உறுதிப்படுத்திச் சொல்கிறார். அப்படியிருந்தும் க்ருஷ்ணனிடமே உயிரை வைத்து, நம்முடைய மனஸைக் கொள்ளை கொள்கிற முறையில் அவர் "கர்ணாம்ருதம்" செய்திருக்கிறார்.

நானூறு, நானூற்று ஐம்பது வருஷத்துக்கு முந்தி மதுஸூதன ஸரஸ்வதி என்று ஒரு பெரியவர் இருந்தார். பெங்காலை (வங்காளத்தை) சேர்ந்தவர் என்பது பொது அபிப்ராயம். "அத்வைத ஸித்தி" என்று ஒரு உத்தம க்ரந்தம் உபகரித்திருக்கிறார்.

அத்வைத ஸம்ப்ரதாயத்துக்கு வேறு நூல்களும் உதவியிருக்கிறார். இவரே "பக்தி ரஸாயனம்" என்றும் ஒரு க்ரந்தம் செய்திருக்கிறார். நிர்குண ப்ரஹ்ம அநுபவமான ஞானத்துக்கும். ஸகுண ப்ரஹ்ம உபாஸனயை பக்திக்கும் Contradiction (முரண்பாடு) இல்லை என்று நிலை நாட்டுவதற்காக இந்த நூல் எழுதினார்.

மதஸூதன ஸரஸ்வதி க்ருஷ்ண பரமாத்மாவின் பரம பக்தர். 'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்' என்று ரொம்பவும் உயர்ந்த சிவபரமான ஸ்தோத்ரம் ஒன்று உண்டு. மஹா ராஷ்ட்ரத்திலிருந்து ஆரம்பித்து வடக்கே போகப்போக அது ஸகல ஜனங்களுக்கும் தெரிந்திருக்கும். இங்கே உங்களில் பல பேருக்கு அதன் பெயர்கூட நான் சொல்லித்தான் தெரியவேண்டியிருக்கிறது!இந்த 'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்' க்ருஷ்ணனையும் ஸ்தோத்ரம் பண்ணுவதாக அதன்

வார்த்தைகளுக்கு அர்த்தம் பண்ணி அவர் (மதுஸூதனர்) ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். அதாவது அதற்கு சிவபரமாக அர்த்தம் பண்ணியதோடு விஷ்ணுபரமாகவும் அர்த்தம் பண்ணி எழுதியிருக்கிறார்.

'அத்வைதிக்கு பக்தியே இருக்கக்கூடாது. அப்படி இருந்தாலும் அது ஆசார்யாளுக்கு இருந்த மாதிரி ஸகல தெய்வங்கயையும் ஒன்றாகவே நினைக்கிற பக்தியாகத்தான் இருக்கவேண்டும்' என்று புஸ்தகம் படித்தே அத்வைதத்தைப் பற்றித் தெரிந்துகொண்டுள்ள நாம் நினைத்தாலும், அத்வதை அநுபவியான மதுஸூதன ஸரஸ்வதி க்ருஷ்ண பரமாத்மா என்ற ரூபத்திலேயே விசேஷ பக்தி வைத்திருக்கிறார்.

உடுப்பியில் க்ருஷ்ணனை ப்ரதிஷ்டை பண்ணினவர் மத்வாசார்யாள். அவருடைய ஸித்தாந்தத்தை வலியுறுத்திச் சொல்லி, (சங்கர) ஆசார்யாளின் அத்வைதத்தை வன்மையாகக் கண்டித்தவர்களுள் வ்யாஸ தீர்த்தர் முக்கியமானவர். வ்யாஸதீர்த்தருடைய ஆக்ஷேபனைகளுக்கு எதிராகப் 'பாயின்ட்'களை கொடுத்தே மதுஸூதன ஸரஸ்வதி பரம அத்வைதமான நூல்களை எழுதினார். இப்படி நிர்குண ப்ரஹ்மாநுபவத்தை நிலைநாட்டிய இவரே, குழந்தைக் கண்ணன் விழித்தெழுந்தவுடன் கொட்டாவி விட்டுக்கொண்டு சோம்பல் முறித்ததை நெஞ்சுருகிப் பாடியிருக்கிறார்!

"ஆநந்த மந்தாகிநி ஸ்தோத்ரம்" என்று க்ருஷ்ணன் மேல் நூற்றுக்கு மேல் ச்லோகம் செய்து குணாநுபவ ஆனந்தத்தைக் கொட்டிருயிருக்கிறார்.

'அத்வைத தத்வமாவது, த்வைத தத்வமாவது?' என்கிற மாதிரி ஒரு இடத்தில், "எனக்கு க்ருஷ்ணனைத் தவிர வேறு ஒரு தத்வமும் தெரியவில்லை"

க்ருஷ்ணத் பரம் கிருபி தத்வம் அஹம் ந ஜாநே

என்று அவர் சொல்லியிருக்கிறார்.

'த்யாநாப்யாஸ' என்று ஆரம்பிக்கிற ஒரு ச்லோகத்தில். 'யோகிகள் மனஸை அடக்கி, உள்ளுக்குள்ளே நிர்குணமாக, நிஷ்க்ரியமாக (கார்யம் இல்லாததாக) உள்ள ஏதோ ஒரு ஜ்யோதிஸை (ஜோதியை)ப் பார்க்கிறார்களென்றால் நன்றாகப் பார்த்துவிட்டுப் போகட்டும்!நம்மால் அப்படி த்யான

அப்யாஸம் பண்ணி, மனஸை அடக்கி ஜ்யோதி தர்சனம் செய்ய முடியவில்லையே என்று அழவேண்டாம்!அந்த ஒளியாக இந்த யமுனா நதிக்கரையில் ஓடி விளையாடுகிற தல்லவா? (க்ருஷ்ண பரமாத்மாவைத்தான் சொல்கிறார்.) இதையே நாம் பார்த்துக்கொண்டிருப்போம்!இது

நம் கண்களுக்கு ஆனந்தமூட்டுவதாக, சிரஞ்ஜீவியாக இருந்து கொண்டிருக்கட்டும்" என்கிறார்.

எல்லாவற்றையும் விட்டு விட்டுப் பரமாத்மாவைப் பிடித்து பிறகு, 'எல்லாவற்றிலும் அந்தப் பரமாத்மாதான் இருக்கிறது. எல்லாம் அந்தப் பரமாத்மாவில்தான் இருக்கிறது. எல்லாமாகவும் அந்தப் பரமாத்மாவே தான் இருக்கிறது' என்று அநுபவ பூர்வமாகத் தெரிந்துவிடுவதால் எதையும் விடவேண்டிய அவச்யம் இருப்பிதல்லை, இந்த நிலையில்தான் அத்வைதிகள் ஸகுண ப்ரஹ்மத்தை ஸ்தோத்ரம் செய்த "வாஸ்தவத்தில் பிரிவு இல்லையே!பிரிவு மாதிரி இருப்பது விளையாட்டுத்தானே? நாமும்தான் பக்தனாகப் பிரிந்திருந்து ஸகுணத்தை ரஸிக்கலாமே! ஸமுத்ரமும் அலையும் மாதிரி ஏகத்திலேயே பிரிந்த மாதிரி இருக்கலாமே!" என்று இருக்கிறார்கள்.

அப்படித்தான் ஆசார்யாளும் குண மந்திர, ஸுந்தர வதநாரவிந்த" என்று குண, ரூபங்களை ஸ்துதிக்கிறார்.

எல்லா குணமும் குடிகொண்டிருப்பதாலேயே, ஒரு குணமும் இல்லாத நிர்குண ப்ரஹ்மமாக பகவான் இருக்கிறான் என்பதுதான் 'குண மந்திர' என்பதற்கு அர்த்தம். ஒரு குணமோ, அல்லது சில குணங்களோ மட்டும் பகவானுக்கு இருப்பதாகச் சொன்னால் அவன் நிர்குணம் இல்லை. இந்த ஒருசில குணங்களுக்குள்ளேயே கட்டுப்பட்டிருக்கிறான் என்று ஆகும். ஒருத்தன் வெளுப்பாயிருக்கிறான் என்று சொன்னால் அவன் வெள்ளை கலர் மட்டும் உள்ளவன் என்று அர்த்தம். ஒருத்தன் வெள்ளையாகவும் இருக்கிறான், கறுப்பாயும் இருக்கிறான், பச்சையாகவும் இருக்கிறான் என்று சில கலர்களை மட்டும் சொல்லி நிறுத்தினாலும் அவன் அந்தச் சில கலர்கள் மட்டுமே என்றாகும். ஆனால் ஒருத்தன் இன்னம் மற்ற எல்லாக் கலர்களாகவும் இருக்கிறான் என்றால் என்ன ஆகும்? அவன் வாஸ்வதத்தில் இவற்றல் எந்தக் கலருமேயில்லை. ஒரு கலருமே இல்லாமலிருக்கிறவன்,

ஒவ்வொரு ஸமயத்தில் இப்படி ஒவ்வொரு கலராகத் தெரிகிறவன் - என்றுதானே ஆகும்? இப்படியேதான் நல்லது - கெட்டது, அழகானது - அழகில்லாதது, புண்யம் - பாபம், தர்மம் - அதர்மம் முதலிய எல்லாக் குணங்களுமாக குணமந்திரமாக பகவான் இருக்கிறான் என்பதாலேயே அவன் வாஸ்தவத்தில் இந்த எதுவுமில்லை, அப்படிப்பட்ட நிர்குணமாக இருந்து கொண்டே இப்படிப் பல குணங்களுக்குள்ளவனாகத் தெரிகிறான் என்பதுதான் தாத்பர்யமாகும்.

நமக்குப் பிடித்த மாதிரி, நாம் ப்ரீதியோடு பக்தியோடு நினைத்து உருகுகிற மாதிரி, அரூபமான அவனே அழகான ரூபத்தோடு வருகிறான். 'ஸுந்தர வதநாரவிந்த' என்று ஆசார்யாள், தாமரைத் திருமுகத்தோடு கூடிய இந்த அழகு ரூபத்தைச் சொல்கிறார்.

அரூபத்ததக்கு ரூபம் வந்தவுடனேயே, பெயரில்லாத அதற்குப் பெயரும் வந்துவிடுகிறது, நாம- ரூபம் என்று சேர்த்துச் சொல்வதுபோல் உருவும் வந்தவுடன் பேரும் வேண்டும் '"கோவிந்தகோவிந்த" என்று பேர் சொல்லிக் கூப்பிடுகிறார் ஆசார்யாள்:

ஸுந்தர - வதநாரவிந்த கோ-விந்த

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஸுந்தர - வதநாரவிந்த கோ-விந்த**

கோவிந்த - ஹர நாமச்சிறப்பு

"கோவிந்த" என்கிற நாமம் ரொம்பவும் விசேஷமானது. ஈச்வர நாமாக்களுக்குள் 'ஹர' என்பதற்கும், விஷ்ணுவின் நாமாக்களுக்குள் 'கோவிந்த' என்பதற்கும் ஒரு தனிச்சிறப்பு உண்டு.

ஸத்ஸங்கத்துக்காக, ஸத்விஷயத்துக்காகப் பல பேர் கூடினாலும், மநுஷ்ய ஸ்வபாவத்தில், கொஞ்ச நேரம் போனதும் கூட்டத்தில் பலர் பல விஷயங்களைச் சளசளவென்று பேச ஆரம்பிக்கிறார்கள் அவர்கள் பேச்சை நிறுத்தி பகவானிடம் மனஸைத் திருப்புவதற்கு என்ன செய்கிறோம்? யாராவது ஒருத்தர் "நம பார்வதீ பதயே" என்கிறார். உடனே, பேசிக்கொண்டிருந்த எல்லாரும் "ஹர ஹர மஹா தேவ" என்கிறார்கள். அதற்கப்புறம் ஒரு பஜனையோ உபந்யாஸமோ ஆரம்பிக்கிறது. இப்படிப் பல பேருடைய மனஸை ஈச்வரனிடம் லகான் போட்ட மாதிரி இழுக்கிற சக்தி ஹரநாமத்துக்கு இருக்கிறது அரன் நாமமே சூழ்க, வையகமும் துயர் தீர்கவே என்ற ஞானஸம்பந்தக் குழந்தை வாழ்த்திய விசேஷத்திலிலேயே இப்படி ஹரன் நாமத்துக்கு சிறப்பு ஏற்பட்டிருக்கிறது!

"நம :பார்வதீ பதயே" மாதிரியே இன்னொன்றும் ஒரு கூட்டத்தின் மனஸை பகவத் பரமாகத் திருப்பி விடுவதற்காக கோஷிக்கப்படுகிறது, அதுதான் "ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்" என்பது, இப்படி ஒருத்தர் சொன்னவுடன் கூட்டம் முழுவதும் "கோவிந்தா கோவிந்தா" என்கிறது, "பஜகோவிந்தம்" என்ற நம்முடைய ஆசார்யாள் குழந்தையாயிருந்தபோதே சொன்னதன் மஹிமை!

"அண்ணாமலைக்கு அரோஹரா" என்று லக்ஷோபலக்ஷம் பக்தர்கள் சேர்ந்தபொழுது கோஷிக்கிறோம், காவடி எடுக்கிறபோது ஸுப்ரமண்ய ஸ்வாமிக்கும் அரோஹரா' போடுகிறோம், அர நாமமே சூழ்கிறது, இப்படியே நித்ய உத்ஸவ மாக இருக்கிற திருப்பதியில் லக்ஷோபலக்ஷம ஜனங்களும் 'கோவிந்தா' போட்டுக்கொண்டே தான் மலையேறுகிறார்கள்.

இரண்டு தெய்வக் குழந்தைகளின் வாக் விசேஷம்

ஹர நாமத்தைவிடக்கூட கோவிந்த நாமாவுக்கு ஜாஸ்தி விசேஷம் தோன்றுகிறது, ஒருத்தர் 'பார்வதீ பதி'யைச் சொன்ன பிறகுதான் மற்றவர்கள் 'ஹர ஹர' என்கிறார்கள், ஆனாலும கோவிந்த நாம விஷயமாகவோ, முதலில் சொல்கிற ஒருத்தரும் 'ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்' என்று இந்தப் பெயரையேதான் கோஷிக்கிறார், மற்றவர்களும்

அதே நாமாவைத் திருப்புகிறார்கள்.

இன்னொன்று கூட : தீவிர வைஷ்ணவர்கள் ஹர நாமாவை கோஷிப்பார்கள் என்று சொல்வதற்கில்லை, ஆனால் கோவிந்த நாமாவை ஸகலருமே சொல்வார்கள், அதனால்தான் போலிருக்கிறது இதற்கு மட்டும் 'ஸர்வத்ர' என்று, அதாவது எல்லா இடத்திலும், எல்லாக் காலத்திலும் என்று அடைமொழி கொடுத்திருக்கிறது. 'ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்' அதனால், என்னை யாராவது ஹிந்து மதத்தில் ரொம்ப ரொம்ப விசேஷமான நாமா எது என்று கேட்டால் 'கோவிந்தா' தான் என்று சொல்வேன்.

ஸர்வலோக சக்ரவர்த்தியாக இருக்கப்பட்ட பகவான் பரம கருணையோடு பரம எளிமையோடு வந்து மாடு மேய்த்து, கோபர்களையும் (ஆயர்களையும்) கோபிக்களையும் அத்யந்த ப்ரேமையோடு அநுக்ரஹித்த அவஸரத்திலேயே

அவருக்கு கோவிந்த நாமா எற்பட்டது. இந்த நாமா ஏற்பட்ட வ்ருத்தாந்தத்தை பாகவதம் சொல்கிறது, "உத்த்ருதநக" ச்லோகத்தில் refer செய்த வ்ருத்தாந்தம்.

'தான் மழை பெயவ்தால்தானே லோகம் உயிர் வாழ்கிறது?' என்ற கர்வம் இந்த்ரனுக்கு ஏற்பட்டது. அப்போது க்ருஷ்ணன் கோகுலத்தில் குழந்தையாக இருந்த ஸமயம். அவர் இந்த்ரனுக்கு புத்தி கற்பிக்க எண்ணினார், அதனால் கோபர்களிடம், அவர்கள் வழக்கமாகச் செய்யும் இந்த்ர பூஜையை நிறுத்திவிட்டு .அதற்கு பதிலாக கோவர்த்தன கிரிக்குப் பூஜை பண்ணச் சொன்னார், அதே போலச் செய்தவுடன் இந்த்ரனுக்கு ஒரே ஆத்திரமாக வந்தது. அந்த ஆத்திரத்திலே கோகுலத்தையே அடித்துக்கொண்டு போய் விடுகிறாற்போல் பெரிய மழையைக் கொட்ட ஆரம்பித்துவிட்டான், அந்த ஸமயத்தில் தான் பகவான் கிரிதர கோபாலனாக கோவர்த்தன மலையைத் தூக்கி, மழையைத்தடுத்து, தீன ஜனங்களையும் பசு முதலான ப்ராணிகளையம் ரக்ஷித்தார், பிறகு தேவேந்த்ரனே மழை பெய்ய முடியாமல் களைத்துப் போய் அவரிடம் வந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, ஸகல உயிர்களையும் ('கோ' என்பது பசுவை மட்டும் குறிக்காமல் எல்லா ஜீவராசிகளையும் குறீப்பதாகும் - பசு என்பதும் எல்லாப் பராணியையும் குறிப்பது போல!இப்படி எல்லா உயிர்களையும்) ரக்ஷிப்பவர்

அவர்தான் என்று அர்த்தம் தொனிக்கும்படியாக "கோவிந்த" என்று அவருக்குப் பட்டம் சூட்டி அபிஷேகமும் பண்ணிவைத்தான். அதனால் இந்த கட்டத்திற்கு கோவிந்த பட்டாபிஷேகம் என்றே பெயர். 'கோ'க்களுக்கு 'இந்த்ரன்' கோவிநத்ன், 'விந்த' என்றால் ஒன்றைத் தேடி, நாடிப்போய் அடைவது. பசுக்கள் இப்படி க்ருஷ்ணனிடேமே உயிராயிருந்த அவரைத் தேடி அடைந்ததால் கோவிந்தன், 'கோ' என்பது பசுவை மட்டுமில்லாமல் பூமி, ஆகாசம், வாக்கு, இந்த்ரியங்கள் ஆகியவற்றையும் குறிப்பது, இவையெல்லலாம் தேடிப் போய் அடையும் லக்ஷ்யமான பரமாத்மா அவர் என்பதையும் கோவநித் நாமம் தெரிவிக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**"குறையொன்றுமில்லாத கோவிந்தா"**

ராமாயணத்தில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் மாதிரி, பாகவத்தில் பகவானுக்குப் பட்டாபிஷேகமான ஸந்தர்ப்பத்தில் சூட்டப்பட்ட பேர் "கோவிந்த" என்பதே, ராமர் மாதிரி க்ருஷ்ணர் பெரிய ராஜ்யத்துக்கு ராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணிக்கொள்ளாவிட்டாலும், தேவ ராஜாவாலேயே பட்டாபிஷேகம் பெற்றதால் இதற்கு ரொம்ப முக்யத்வமுண்டு. "கோவிந்தராஜா" என்று க்ருஷ்ணனுடைய பல பெயர்களில் இதற்கு மட்டுந்தான் "ராஜா" சேர்க்கிறோம்!

எனக்கு ஒன்று தோன்றவதுண்டு. ஆண்டாள் திருப்பாவையில் "குறையொன்றுமில்லாத கோவிந்தா!" என்று கூப்பிடுகிறார் அல்லவா? பகவானுக்குக் குறை இருந்தது என்று யாராவது நினைப்பதுண்டா? ஸாதாரண மநுஷ்யன் குறைப்பட்டுக்கொண்டேயிருக்கும் ஸ்வபாவமுள்ளவவன், அதனால் அப்படியில்லாத ஒருவனைக் 'குறையான்று மில்லாத மநுஷ்யர்' என்று விசேஷிப்பது பொருத்தம்,

பகாவனை ஏன் இப்படிச் சொல்லவேண்டும்? இப்படிச் சொல்வதாலேயே, 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்கிற மாதிரி, பகவானுக்குக் குறையிருந்தது போலத்தானே த்வனிக்கிறது!

யோசித்துப் பார்த்ததில், பகவானுக்கு வாஸ்தவமாகவே பூர்வத்தில் ஒரு குறை இருந்தது, அது கோவிந்தனாக அவன் ஆனபோதுதான் தீர்ந்தது என்று தெரிந்தது. பகவானுக்கு என்ன குறை இருந்தது? 'ராம பட்டாபிஷேகம்' என்றேனே. அதிலேயேதான் குறை சக்ரவத்திர்த்தியாக முடி சூடியதில் என்ன குறை என்றால், இதை வால்மீகி தம்முடைய ராமாயணத்தில் வர்ணித்திருக்கிற தினனுஸிலேதான் குறை ஏற்பட்டுவிட்டது.

'வஸிஷ்ட வாம தேவாதி ரிஷிகள் எட்டுப்பேர் ஸ்ரீராம சந்த்ரமூர்த்திக்குப் பட்டாபிஷேகம் பண்ணினார்கள், அது எப்படித் தெரியுமா இருந்தது? அஷ்ட வஸுக்கள் தேவேந்த்ரனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணின மாதிரி இருந்தது' என்று வால்மீகி வர்ணித்திருக்கிறார், "வஸவோ வாஸவம்யதா" - "வாஸவன் எனப்படும் இந்த்ரனுக்கு வஸுக்கள் பண்ணியதுபோல" என்று அர்த்தம். இந்த Comparison (ஒப்புவமை) தான் ராமருக்குக் குறை உண்டாக்கிவிட்டது, ஏன்? இந்த்ரன் சீரழிந்த கதையை இதே வால்மீகி பாலகாண்டத்தில் சொன்னார். கௌதம பத்னியாகிய - அதாவது தாய் போல் மதிக்க வேண்டிய - ரிஷிபத்னி அஹல்யையிடம் தப்பாக நடந்து கொண்டு, மஹாபாவம் பண்ணினவன் இந்த்ரன். அதற்காக சாபத்தை வாங்கிக் கட்டிக்கொண்டு அவமானப்பட்டவன். பதிதையாகிவிட்ட அஹல்யைக்கு ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி புனருத்தாரணம் தந்த பெருமைதான் இன்றைக்கும் அவரை "பதித பாவன ஸீதாராம்" என்கிறோம்.

கதை இப்படியிருக்க, அந்த இந்த்ரனையே தனக்கு உவமையாக வால்மிகி மஹர்ஷி சொல்லிவிட்டதில் ராமருக்கு உள்ளூரக் குறை ஏற்பட்டுவிட்டது. ஏகபத்னீ வ்ரதனான தம்மை, தகாத பாபம் பண்ணினவனோடு ஒப்பிட்டுவிட்டாரே என்று ஒரு குறை.

ஆதியிலே ஒரு பட்டாபிஷேகம் நிச்சயமான ஸமயத்திலே அது நிறைவேறாமலே ராமர் வனவாஸம் பண்ணும்படி

ஆயிற்று. அப்புறம் பதிநாலு வருஷங்கள் ஜனக்ங்ள் தவியாயத் தவித்துக் காத்திருந்து மறுபடி பட்டாபிஷேகம் நடக்கிறது, அதனால் பட்டாபிராமன் என்றே பகவானுக்கு ஒரு பேர் ஏற்பட்டிருக்கிறது, ராமாயண பாராயணம், ப்ரவசனம் எதுவானாலும் பூர்த்தி செய்யும் மங்களமான கட்டம் அதுதான். அங்கேபோய், பால காண்டததில் தன் கால் தூசியினாலேயே பரிசுத்தி பெற்ற ஒருத்தியை ஆதியில் தூசுபடுத்தியவனோடு தன்னை ஒப்பிட்டால் பகவானாகத்தானிருக்கட்டும், அவர் மநுஷ்யம் மாதிரிதானே நன்றாக 'ஆக்ட்' பண்ணினார், அதனால், வருத்தம் ஏற்படத்தானே செய்யும்?

இன்னொரு குறை - இந்த்ராதி தேவர்கள் ராவணனின் ஹிம்ஸையைத் தாங்கமாட்டாமல் ப்ரார்த்தனை பண்ணிக் கொண்டதன் மேல்தான் மஹாவிஷ்ணு ராமாவதாரம் பண்ணினது. ராவணனின் புத்ரன் மேகநாதனே இந்த்ரனை ஜயித்து "இந்த்ரஜித்" என்று பேர் பெற்றிருந்தான். அப்படிப்பட்ட ராவணனைத் தாமே ஜயித்தும், இந்த்ரஜித்தைத் தாம் ஜயிக்கவேண்டுமென்று இல்லாமல் தம்பி லக்ஷ்மணனை விட்டே ஜயித்தும் விஜயராகவனானவர் ராமர். இப்படி ஸமூலம் ராக்ஷஸ ஸம்ஹாரம் பண்ணிவிட்டுப் பட்டாபிஷேகம் பண்ணிக்கொள்கிறபோது, தம்மிடம் தோற்றும் போனவரிடம் தோற்றுப்போன இந்த்ரனுக்கே தம்மை 'கம்பேர்' பண்ணினால் குறையாகத்தானே இருக்கும்?

வால்மீகி பாத்திரங்களின் குணத்தை Compare பண்ணி இப்படிச் சொல்லவில்லை, பட்டாபிஷேக வைபத்திலிருந்து ஆனந்த கோலாகாலத்தைப் பார்த்ததும் வேதலோகத்தில் நடந்த இந்த்ர பட்டாபிஷேகத்தின் விமர்சைக்கு இதை ஒப்பிடலாம் என்று நினைத்தார், எட்டு வஸுகக்ள் மாதிரியே இங்கேயும் ஸரியாக எட்டு ரிஷிகள் அபிஷேகம் பண்ணினவுடன் , "வஸவோ வாஸவம் யதா" என்று உத்ஸாஹத்தில் எழுதிவிட்டார் ".

இதனால் பகவானுக்கு உள்ளுக்குள்ளே ஏற்பட்ட குறை, அப்புறம் க்ருஷ்ணாவதாரத்தில் ஸாக்ஷாத் அந்த இந்த்ரனே, தோற்றேன்" என்று இவர் காலில் வந்து விழுந்து இவருக்கு 'கோவிந்த' பட்டம் தந்தது அபிஷேகம் பண்ணின போதுதான் தீர்ந்தது. ராமபட்டாபிஷேகத்தில் உண்டான குறை

கோவிந்த பட்டாபிஷேகத்தினால்தான் தீர்ந்தது. இதைத்தான் ஆண்டாள் suggestive-ஆக (குறிப்பால் உணர்த்தும் முகமாக) "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்று சொன்னாள்.

'குறைவேயில்லாத' என்றால் பரிபூர்ண வஸ்து என்று அர்த்தம். 'பூர்ணம் ப்ரஹ்ம ஸநாதனம்', 'பூர்ணாவதாரம்' என்று க்ருஷ்ண பரமாத்மாவைச் சொல்வது இதனால்தான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**குரு - தெய்வ "கோவிந்த"**

கோவிந்த நாமாவுக்கு இருக்கப்பட்ட அநேகச் சிறப்புக்களில் இன்னொன்று நம் ஆசார்யாளுக்கு அதுதான் ரொம்பவும் பிடித்தது -favourite- என்பது!'பஜ கோவிந்த'த்திலிருந்து இது தெரிகிறது, 'பஜகோவிந்தம்' என்பது அவருடைய 'சிவானந் தலஹரி', 'ஸௌந்தர்ய லஹரி', அல்லது இந்த 'ஷட்பதீ' ஸ்தோத்ரம் போல ஒரு ஸ்வாமியை ஸ்தோத்திரிக்கும் ப்ரார்த்தனை இல்லை. அதிலே ஜெனரலாக ஒரு மநுஷ்யம் இருக்கவேண்டிய வாழ்முறையையும், தத்வ உபதேசங்களையும், விவேக வைராக்யங்களையும்தான் சொல்லியிருக்கிறார். அது வைஷ்ணவர், சைவர் என்ற பேதமில்லாமல் ஸகல ஜனங்களுக்குமானது. இப்படிப்பட்ட க்ரந்தத்தில் ஆசார்யாள் 'பராமாத்மாவை பஜியுங்கள்' என்று பொதுப்பெயரை சொல்லாமல் 'கோவிந்தனை பஜியுங்கள்' என்று சொல்கிறாரென்றால், அந்தப்பெயரில் அவருக்கு ரொம்பவும் பிடித்தம் என்று தானே அர்த்தம் தெரிகிறது?

லோகத்தில் உள்ள உபதேச க்ரந்தங்களையல்லாம் உச்சியில் உள்ள கீதையை அர்ஜுனனுக்குச் சொன்னதால் க்ருஷ்ணருக்கு "ஜகத்குரு" என்ற பட்டம் உண்டு. "க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்" என்று ச்லோகாம் சொல்கிறோம். அதற்கு

அப்புறம் நம் பகவத்பாதாளுக்குத்தான் ஜகத்குரு பட்டம் எற்பட்டது. ஜகத்குருவாயினும் ஆசார்யாளுக்கு, சிஷ்யபாவத்தில் இருந்துகொண்டு தம்முடைய குருவை ஸ்துதிப்பதிலேயே ஸந்தோஷம் அவருடைய குருவின் பேர் என்ன என்றால் கோவிந்த பகவத் பாதர் என்பதே, ஆனதால் குரு - தெய்வம் இரண்டின் பெயராகவும் உள்ள 'கோவிந்த' என்னும்போது க்ருஷ்ண பரமாத்மாவை மட்டுமின்றி தம் குருவையும் ஆசார்யாள் நினைத்துக்கொண்டார் என்பதற்கு internal evidence(உட்சான்று), ஆக "விவேக சூடாமணி"யின் ஆரம்ப ச்லோகத்தில்.

கோவிந்தம் பரமாநந்தம் ஸத்குரும் ப்ரணதோஸ்ம்யஹம் என்று சொல்லியிருக்கிறார்.

## மூன்றில் ஒன்று

கோவிந்த நாமத்துக்கு இன்னொரு விசேஷமும் இருக்கிறது. முன்பு மஹாவிஷ்ணுவுக்கு ப்ரீதியான நாமாக்கள் என்று பன்னிரண்டைச் சொன்னேன் அல்லவா!அவற்றில் 'கோவிந்த' என்பது ஒன்றாக வருகிறது, இது தவிர மூன்றே மூன்று நாமாக்கள் மஹாவிஷ்ணுவுக்கு ரொம்பவும் விசேஷமானவை என்று எடுத்திருக்கிறார்கள். இந்த மூன்று நாமாக்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆசமனம் பண்ணிவிட்டு, அப்புறம் அந்தப் பன்னிரண்டு நாமாக்களைச் சொசல்லி கன்னம், கண், மூக்கு, காது , புஜம், ஹ்ருதயம், சிரஸ் முதலியவைகளைத் தொட்டால் தேஹசுத்தி உண்டாகிறது, எந்தக் கர்மாவானாலும் முதலில இப்படிச் செய்து சரீரத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும், மூன்று முறை ஆசமனம் செய்கிறபோது சொல்கிற நாமாக்கள், "அச்யுத. அனந்த. கோவிந்த" என்கிறவையே.

இப்படியாக, விசேஷமான பன்னிரண்டு நாமாக்கள், அதனிலும் விசேஷமான மூன்று நாமாக்கள் இரண்டிலும் வருகிற ஒரே ஒரு நாமம் 'கோவிந்த'என்பதுதான்.

கேசவ - நாராயண - மாதவ- கோவிந்த - விஷ்ணு - மது ஸூதன, த்ரிவிக்ரம - வாமன - ஸ்ரீதர - ஹ்ருஷீகேச - பத்மநாப - தாமோதர.

அச்யுத - அனந்த - கோவிந்த,

மூன்றிலே ஒரு நாமாவாக இருக்கப்பட்ட "கோவிந்த" என்பதை "பஜகோவிந்தம், பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம்" என்று மூன்று தூரம் ஆசார்யாள் சொல்லிச் சொல்லி ஸந்தோஷப்பட்டிருக்கிறார், ஒன்றை ஸத்ய ப்ரமாணமாகச் சொல்ல வேண்டுமானால் மூன்று தரம் திருப்பிச் சொல்வார்கள்.

இப்படி ஆசார்யாள் சொன்னது மட்டுமில்லாமல், ஆண்டாளும் மூன்று இடங்களில் கோவிந்த நாமாவை ப்ராயோகித்திருக்கிறாள். அவளுடைய "திருப்பாவை"யிலே. "திருப்பாவை"யின் கடைசியான முப்பதாவது பாட்டு அதற்கு பலச்ருதி. அதைவிட்டுவிட்டால் அதற்கு முந்திய மூன்று பாட்டுக்களிலும் "கோவிந்தா" என்றே பகவானைக் கூப்பிட்டிருக்கிறாள். இருபத்தேழாவது பாட்டில் "கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!" என்கிறார். இருபத்தெட்டாவதில்தான் "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்பது. இருபத்தொன்பதாவது பாட்டில் "இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா!" என்கிறாள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**பவக்கடல் கடையும் பகவத் மத்து**

இப்படி அநேகச் சிறப்புகள் பொருந்திய கோவிந்த நாமாவைச் சொல்லி பகவானை அழைத்து, "பவ ஜலதி மதன மந்த்ர"' எனகிறார் அசார்யாள்.

'பவம்' என்றால் ஸம்ஸாரம், 'ஜலதி' என்றால் ஸமுத்ரம். 'பவஜலதி' என்றால் ஸம்ஸார ஸாகரம். 'மதன' என்றால் கடைவது. Mathana என்று சொல்லவேண்டும். Madana என்றால் மன்மதனுக்குப் பேராகிவிடும். Madana என்றால்

போதை உண்டாக்குவது என்று அர்த்தம். அப்படிப் பண்ணும் மதனவேள் ஜனங்களின் மனஸை மதனம் (Mathanam) பண்ணுகிறார் போல் காமத்தினால் கடைந்து

கொந்தளிக்கச் செய்வதால்தான் மன்மதன் (Manmathan) என்றும் பெயர் பெற்றிருக்கிறான். தயிரை மத(tha)னம் பண்ணுகிறபடியால்தான், தயிர் சிலுப்பும் குச்சியை 'மத்து' என்கிறோம். 'மந்த்ர' என்பது மந்த்ர மலை' என்று பொருள்படும். 'பவ ஜலதி மதன மந்த்ர' என்றால் 'ஸம்ஸார ஸாகரத்தைக் கடைகிற மந்தரமலையாக இருக்கிறவனே!' என்று அர்த்தம்.

அம்ருத மதனத்துக்காகப் பாற்கடலை தேவாஸுரர்கள் கடைந்தபோது மந்தரமலையைத்தானே மத்தாகப்போட்டு அதிலே வாஸுகிப் பாம்பைக் கயிறாகச் சுற்றிக் கடைந்தார்கள்? அந்த மாதிரி இப்போது நாம் மாட்டிக்கொண்டிருக்கிற இந்த சாவுக்களமான ஸம்ஸார ஸாகரத்திலிருந்தும் நித்யத்வமுள்ள மோக்ஷமான அம்ருதத்தைப் பெறுவதற்காக பகவானே மந்தர மலையாக வரவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார். பாற்கடலைக் கடைந்தபோது மந்த்ரமலை அலைகளில் நிலை தடுமாறாதபடி மஹாவிஷ்ணு தான் ஆமை ரூபத்தை எடுத்துக்கொண்டு அதைத் தூக்கிக் தாங்கிக்கொண்டார். அதுதான் கூர்மாவதாரம். இந்த ஷட்பதீ ஸ்தோத்ரத்திலேயே நாலாம் ச்லோகத்தில் "உத்த்ருத நக" என்றபோது இப்படி பகவான் மலையைத் தாங்கியதைச் சொல்லியிருக்கிறது. (கூர்மாவதாரத்தில் மந்த்ர மலையைத் தாங்கினது, க்ருஷ்ணாவதாரத்தில் கோவர்த்தனகிரியைத் தூக்கினது என்ற இரண்டு ஸந்தர்ப்பங்களில் பகவான் 'உத்த்ருத நக'னாக இருந்திருக்கிறான்.

பாற்கடலில் மந்த்ர மலையைத் தாங்கினவனையே இங்கே, 'பவஜலதி மதன மந்தர, என்னும்போது ஸம்ஸார ஸாகரத்தைக் கடைய உதவுகிற ஒரு மந்த்ர மலையாக உருவகப்படுத்துகிறார், இங்கே மலையைத் தாங்குகிறவனாக அன்றி மலையாகவே வர்ணிக்கிறார். இதற்கு அர்த்தம் என்ன? ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடத்துவிக்கிறான் என்று வழக்கமாய்ச் சொல்வதுபோல் சொல்லாமல், ஸம்ஸார ஸாகரத்தைக் கடைகிற மத்தாக இருக்கிறான் என்று என்

சொல்லவேண்டும்?

பாற்கடலைக் கடைந்தபோது முதலில் விஷம் வந்தது. அப்புறம்தான் அம்ருதம் வந்தது. கடைந்து கடைந்து முதலில் அதிலிருக்கிற கெட்டதை எல்லாம் விஷ ரூபத்தில் திரட்டி வெளிப்படுத்திய அப்புறந்தான், நல்லதான அம்ருதம் - வந்தது. நம்முடைய வாழ்க்கையும், ஸம்ஸாரத்தையும் இப்படிக் கடையவேண்டும். தன்னால் அது அலை அடித்துக் கொண்டிருப்பதுதான். காம, க்ரோதாதிகளான பல சலனங்களலால் அது அலைவீசிக்கொண்டிருக்கிறது. ஆனால் அதற்குள்ளேயே ஈச்வர தத்வமும் அம்ருதம் போல் இருக்கத்தான் செய்கிறது. இந்த ஸம்ஸாரக் கடலை நன்றாக கடைந்து காம , க்ரோதாதிகள் விஷயமாகத் திரண்டு வெளியே போகும்படி செய்து விட்டால் அப்புறம் திவ்ய அநுபவம், ஈச்வர ஸாக்ஷாத்காரம் என்கிற அம்ருதம் வந்துவிடும். முதலில் கெட்டதை எல்லாம் திரட்டவேண்டும். எதற்காக என்றால் வைத்துக்கொண்டு அநுபவிப்பதற்காக அல்ல. வெளியிலே துரத்துவதற்காகத்தான்!குப்பையை எல்லாம் ஒரு இடமாக பெருக்கித் திரட்டி வெளியிலே கொட்டுவதுபோல!அப்படி வெளியிலே துரத்துகிறவரை கெட்டதுகள் இருக்கத்தான் செய்யும். அவற்றை பகவானே மத்தாக வந்து ஒன்றாகச் சேர்த்து ஒரு இடத்தில் concentrate செய்து (திரட்டிக்) கொடுக்கிறான்.பூஜை, க்ஷேத்ராடனம், ஸ்தோத்ரம் படிப்பது, ஜபம், த்யானம் என்கிற ஸாதனையெல்லாம் பகவானின் அநுக்ரஹ ஸ்வரூபம்தான். இப்படிப்பட்ட ஸாதனைகளால் வாழ்க்கைக் கடலை கடந்து முதலில் விஷத்தைத் திரட்ட வேண்டும். பிறகு, அதை வெளியே அனுப்பிவிடவேண்டும். அப்புறம் அம்ருதத்தை அடையவேண்டும்.

ஆகக்கூடி, எடுத்தவுடன் அம்ருதம் வேண்டும் என்றால் முடியாது. விஷத்தை அநுபவித்து தீர்த்தபின் தான் அம்ருதம் வரும். வாழ்க்கையில் கெட்டது, கஷ்டம், காம, க்ரோதம் எல்லாம் இருந்துதான் ஆகவேண்டும். போக போக இதையெல்லாம் விலக்கிவிட்டு ஒரே நல்லதாக, பேரின்பமாக ஆகவேண்டும்.

கெட்டதுகள் இருக்கின்றனவே என்று நாம் ஓயாமல் அழுதுகொண்டும், பயந்துகொண்டும், நம்பிக்கை இழந்து

கொண்டும் இருக்கவேண்டாம் என்று ஆறுதலாகத் தெம்பு ஊட்டுகிற விதத்தில் 'பவஜலதி மதன மந்தர' என்று ஆசார்யாள் சொல்கிறார். மத்து போட்டுக் கடைகிறபோது எத்தனை கொந்தளிப்பு, எத்தனை பாடுபடவேண்டியிருக்கிறது? அம்மாதிரி நம் பூர்வ கர்மா, பழைய வாஸனைகள் தீருவதற்கும் வாழ்க்கையைக் கடைகிற கடையில் மொத்துப்படவேண்டும், இப்படிப் பல சோதனைகளில் பரீக்ஷைகளில் தேறின பிறகுதான் விமோசன்ம் கிடைக்கும். அப்புறம் விமோசனம் கிடைப்பதற்காகவே, இப்போது ஸாக்ஷாத் பகவான்தான் இத்தனை கொந்தளிப்பை உண்டாக்குகிறான் என்று தெரிந்துவிட்டதானால் நம்முடைய பயம், அழுகை, நம்பிக்கைத் தளர்ச்சியெல்லாம் போய் விடும்.

மத்வாசார்யார் உடுப்பியிலே ப்ரதிஷ்டை பண்ணிய க்ருஷ்ணன் கையில் மத்து இருக்கிறது. பகவானே மந்தர மலை என்ற மத்தாக வந்து ஸம்ஸார ஸாகரத்தைக் கடைகிறான் என்று சங்கராசார்யார் சொல்கிறார்!

மத்தைக் கயிற்றால் சுற்றுகிற மாதிரி பகவானையே சுற்றிக் கட்டிப்போட்டிருந்தபோதுதான் அவன் தாமோதரனானது. மத்தைப்போட்டு யசோதை தயிர் கடைந்துகொண்டிரு ந்தபோது அவளிடம் பாலக்ருஷ்ணன் பால் குடித்துக் கொண்டிருந்தான். அடுப்பிலே பால் பொங்கி வந்தது, அதனால் குழந்தைக்குப் பால் கொடுப்பதை விட்டுவிட்டு அவள் எழுந்திருந்தாள். அதிலே ஏற்பட்ட ஆத்திரத்தால்தான் ஸ்வாமி தயிர்ச்சட்டியை உடைத்து, உறி வெண்ணெயை எடுத்துக் குரங்குகளுக்கு உபசாரம் பண்ணி, முடிவிலே யசோதை கட்டிப்போட, தாமோதரனாக ஆனது. "தாமோதர" என்று ச்லோகத்தை ஆரம்பித்து, அப்புறம் அவனையே மத்தாகச் சொல்வதில், இந்த ஸ்தோத்ரம் பூராவும் ஒன்றிலிருந்து ஒன்றாக அபிப்ரயாங்கள் கிளைவிட்டுக்கொண்டு போகிற அழகில் இன்னொன்றைப் பார்க்கிறோம்.

ஸம்ஸார ஸாகரத்தைக் கடையும்போது முதலில் ஏன் விஷம் வரவேண்டும், லோக வாழ்க்கையில் ஏன் கஷ்டம் இருக்க வேண்டும், கெட்டது இருக்கவேண்டும் என்றால் அது தான் பகவானுடைய விளையாட்டு. இயற்கை நியதியிலேயே

இப்படித்தான் வைத்திருக்கிறார், காய் கசக்கத்தான் வேண்டும், அப்புறம் கசப்புக் காயே துவர்ப்பாக வேண்டும், அதற்கப்புறம் துவர்ப்பு புளிப்பாக வேண்டும், கடைசியில் தான் புளிப்பு தித்திப்பாகவேண்டும் என்று வைத்திருக்கிறார். அப்படியே நம்முடைய காமம், க்ரோதம் முதலிய கசப்பு எல்லாம் படிப்படியாகத்தான் துவர்த்து, புளித்து அப்புறம் ப்ரசாந்த மதுரமாக வேண்டும். ஆனதால் நமக்கு இந்த தோஷங்கள் இருக்கிறதே என்று அழவேண்டாம்.

பகவானை நினைத்துக்கொண்டு, பக்தியோடு இருந்துகொண்டு, கர்மாநுஷ்டானங்களைப் பண்ணிக்கொண்டு, ஜனங்களுக்கு நம்மாலான தொண்டைச் செய்துகொண்டு இருந்தால் தன்னால் காலக்ரமத்தில் இந்த தோஷம் எல்லாம் போய்ப் பழுத்த பழமாக, அன்பு என்கிற ஒரே மதுரமயமாக ஆகிவிடுவோம். இம்மாதிரி பக்தி, கர்மாநுஷ்டானம், ஸேவை, த்யானம் முதலியவை இல்லாவிட்டால் கசப்பு மாறவே மாறாது.

இப்போது இத்தனை தோஷங்களோடு இருக்கிற மாதிரியே மனம் போனபடி இருந்துகொண்டு எப்போதும் கசப்பாக இருப்பதும் ஸரியில்லை. தோஷம் இருக்கிறதே என்று ஓயாமல் அழுதுகொண்டிருப்பதும் ஸரீயில்லை. செய்ய வேண்டிய கர்மாக்களைப் பண்ணிக்கொண்டே போனோமானால் கசப்பு எல்லாம் மாறவேண்டியபோது மாறும், மது மயமாய்விடும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**சில உதாரணர புருஷர் போதும்**

தனியாக ஒரு பழத்தை எடுத்தால் இப்படி, பூவிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகப் பழுக்க வேண்டும் என்பது தனி மநுஷ்யன் விஷயம். ஸமூஹம் என்று எடுத்துக்கொண்டால்

அதிலே எங்கேயோ அபூர்வமாக ஒருசில மநுஷ்யர்கள் தான் இப்படிப் பழுக்கிறார்கள். இதற்காகவும் குறைப்படவேண்டாம், ஸமூஹத்தை ஒரு மரம் என்று வைத்துக் கொண்டால் ஒரு மரத்தில் எத்தனை இலைகள் இருக்கின்றன? ஸீஸனுக்கு ஸீஸன் எத்தனை ஆயிரம் இலையும் பூவும் உதிர்ந்து கொண்டிருக்கின்றனு? விழுகிற பூக்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் பூ விழுந்த பின் உண்டாகிற பிஞ்சுகள் கொஞ்சந்தான். அந்தப் பிஞ்சுகளிலும் வெம்பி விடாமல் கடைசி ஸ்டேஜ்வரை பக்வமாகிக்கொண்டே போய்ப் பழுத்த பழமாகிறவை ரொம்பவும் ஸ்வல்பம்தான். இயற்கையில் இப்படித்தான் இருக்கிறது. ஜீவ ஸ்ருஷ்டியிலும் ஏராளமானவர் இலையாயும் பூவாயும், சருகாய், வாடலாகி கருகி விழுந்து, காயிலும் ஏராளமானவை வெம்பி விழுந்தும், பக்ஷிகளும் குரங்குகளும் கடித்து விழுந்தும், முடிவாக மிஞ்சும் கொஞ்சமே யானாலும் போதும், அதுவே ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் என்றுதான் பகவான் லீலை பண்ணிக் கொண்டிருக்கின்றான்.

ஜன ஸமுதாயத்தில் அடங்கிய எல்லாரும் நிறைந்த நிறைவாக ஆகி பூர்ணத்வம் அடையாவிட்டால் பரவாயில்லை. மரத்துக்குப் பழம் மாதிரி, ஜனத்தொகையில் எவரோ ஒருத்தர், ஆயிரத்தில் லக்ஷத்தில் ஒருத்தர் பூர்ணமாகி விட்டால்கூடபோதும், அப்படி ஒரு ஆத்மா நிறைகிறதற்குத்தான் இத்தனை பேர் ஸ்ருஷ்டியாகி, இத்தனை காம க்ரோதாதிகளில் மாட்டிக்கொண்டு தவிக்கிறதெல்லாம். அத்னாம் பெரிய ஸமுத்ரத்தைக் கடைந்து ஒரு சின்னக் கலசம் அம்ருதம் எடுத்ததுபோல் இவ்வளவு ஜீவ கோடிகளுள் ஸம்ஸாரத்தை கடைவதிலிருந்து அம்ருத த்வமாக ஆன உதாரண புருஷர்கள் ஸ்வல்பம் உண்டானாலும் போதும். பவக்கடலைக் கடைந்து அதன் ஸாரமாக ஸ்வல்ப அளவு அம்ருதத்தை எடுக்க உதவுகிற மத்தாகத்தான் ஆசார்யாள் இங்கே பகவானை நினைத்து 'பவஜலதி மதன மந்தர, என்கிறார். அப்படிச் சொல்வதால், இந்த ஸம்ஸாரத்துக்குள்ளேயே விஷம் மட்டுமில்லாமல் அம்ருதமும் இருக்கிறது என்று நமக்கு ஆறுதல் உண்டாக்குகிறாற் போலிருக்கிறது. மத்தைப் போட்டுக் கடைந்த உடனே வெண்ணெய் வந்து விடுமா? எத்தனையோ நாழி சிலுப்பினால்தான் வரும். அதுவரை அவஸரப்படக்கூடாது, ஆத்திரப்படக்கூடாது. நம்பிக்கை

இழக்கக்கூடாது.

நிதானமாக, படிப்படியாக அபிவ்ருத்தி எவருக்கும் உண்டு. ஆகவே நாம் செய்ய வேண்டியதெல்லாம், அந்த மத்து கயிற்றிலிருந்து நழுவி விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டியதுதான். என்ன கயிறு? பக்தி என்கிற கயிறதான் 'சிவாநந்த லஹரி'யில் ஆசார்யாள் பரமேச்வரனிடம், "பக்திக் கயிற்றால் என் மனக்குரங்கை நன்றாகக் கட்டிப்போடு" (த்ருடம் பக்த்வா) என்று சொல்லியிருக்கிறார். நாம் பக்திக் கயிற்றால் பகவான் என்ற மத்தைச் சுற்றி, பிடிப்பை நழுவ விடாமலிருந்தால் அவர் இந்த ஸம்ஸார ஸாகரத்தைக் கடைந்து முதலில் விஷங்களைத் திரட்டி அப்புறப் படுத்திவிட்டுப் பிறகு நமக்கு அம்ருதம் எடுத்துக் கொடுத்துவிடுவார். அதாவது அமர நிலையான மோக்ஷத்தைக் கொடுத்துவிடுவார்.

பிறப்பு - இறப்பு, ஜனன - மரணம்தான் ஸம்ஸாரம். அம்ருதம் என்றால் இறப்பில்லாதது. இறப்பேயில்லை என்றால் அப்புறம் மறு பிறப்பு இல்லை. அப்படிப்பட்ட சாச்வதமான மோக்ஷானந்தமான அம்ருதத்தை இந்த ஸம்ஸார ஸாகரத்திலிருந்தே பக்தியின் துணை கொண்டு பகவதநுக்ரஹத்தால் பெறவேண்டும் என்பது தாத்பர்யம்.

ஸம்ஸார ஸாகரத்தை விட்டுக்கடத்துவிப்பது என்றால் லோகத்தை அப்டிபயே துறந்துவிடச் செய்வது. ஸம்ஸாரத்தைக் கடைந்து அம்ருதம் பெறுவது என்றால், அதை விட்டுப் போகாமல், எல்லாவற்றிலும் உள்ள எல்லாமுமான ப்ரஹ்மம் லோகத்திலும் இருக்கிறது என்று தெரிந்து கொண்டு இஹத்திலேயே பரத்தைப் பெறுவது - என்றிப்படி அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம். ஞானமாகவே போனால், வைராக்யத்தில் ஸம்ஸாரத்தைத் துறந்து அதைக் கடப்பது, பக்தியாகப் போனால், அவன் க்ருபையிலுள்ள நம்பிக்கையால் ஸம்ஸாரத்தை விட்டுப் போகாமலே இதிலேயே அவனுடைய அம்ருத தத்வத்தைக் கடைந்து பெறுவது என்று வேண்டுமானாலும் அர்த்தம் செய்து கொள்ளலாம்.

"ஷட்பதீ"யை ஸம்ஸாரத்திலிருந்து கடப்பதில் ஆரம்பித்து, - "தாரய ஸஸோர ஸாகரத:" என்று முதல் ச்லோகத்தில் ஆரம்பித்து கடைவதில் முடிக்கிறதால் எதையுமே விடாமல்,

ஒதுக்காமல், எதிலும் ஆத்ம தத்வத்தை அறிகிற பெரிய விசாலமான நிறைவில் முடிப்பதாக ஆகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**துதியின் ஸாரம் : ஸம்ஸாரத் துன்ப நீக்கம்**

முதல் ச்லோகத்தில் "தாரய ஸம்ஸார ஸாகரத:" - ஸம்ஸார ஸாகரத்திலிருந்து அக்கரை சேரு!" என்று ப்ரார்த்தித்தார். அடுத்த ச்லோகத்தில் "ஸம்ஸார பயத்தையும் வேதனையையும் சிதைக்க வல்லதான பாதாரவிந்தத்தை நமஸ்கரிக்கிறேன்" "பவபய கேத - ச்சிதே வந்தே" என்றார். மூன்றாவதில் ஸம்ஸாரத்தைப் பற்றி 'ரெஃபரென்ஸ்' இல்லை. பரமாத்ம - ஜீவாத்மாக்கள் ஒன்றேயானாலும் வ்யவஹாரத்தில் ஸமுத்ரமும் அலையும் மாதிரி இருப்பவர்கள் என்று அதில் சொல்கிறார். யோசித்துப் பார்த்தால் இதிலும் ஸம்ஸார ஸமாசாரம் உட்கிடையாக இருக்கிறது. வ்யவஹார நிலை என்பது தான்ஸம்ஸாரம். அதையேதான் பொதுவாக ஸமுத்ரம் என்பது. (முதல் ச்லோகத்தில் வரும் ஸாகரம்', ஆறாவதிலே வரும் 'ஜலதி' என்பனவற்றுக்கு ஸமுத்ரம் என்றே அர்த்தம்.) இந்த ஸம்ஸார ஸமுத்ரத்திலே அடிபட்டு, முழுகிப்போகாமலிருக்க வழி, இப்படி இதிலே த்வைதமாக உள்ளபோதுகூட, 'நாம் இந்தஸமுத்ரத்தின் அங்கமல்ல. பரமாத்ம ஸமுத்ரத்தின் அங்கம்தான், அதன் அலைதான். அலை ஸமுத்ரத்தில் ஒடுங்கி ஒன்றாய்விடுகிறது போல நாம் பரமதாத்மாவிலேயே ஐக்யமாகி விட வேண்டிய 'ஸமுத்ரம் தானே அலையாக ஆகியிருப்பது? அப்படி பரமாத்மா அல்லவா நாமாக ஆகியிருப்பது? அவன் நினைவோடு அவனுடைய அலை நாம் என்ற உறுதியோடு இருந்தால் இந்த ஸம்ஸார ஸமுத்ரம் நம்மை என்ன பண்ணமுடியும்?' என்று மூன்றாம் ச்லோகம் எண்ண வைக்கிறது. அத்வைதப் பார்வையில் பார்த்தபோது அதில் த்வைதத்தின் நைச்யம்

(எளிமை, தாழ்மை) இருப்பதாகச் சொன்னேன், த்வைதமான ஸம்ஸாரத்தின் கோணத்தில் பார்க்கும்போது 'ஸமுத்ரத்துக்கு வேறாக இல்லாத அலை மாதிரி பரமாத்மாவுக்கு 'நாம்' என்கிற கருத்தே அத்வைதத்தின் கம்பீரத்தை நமக்கு அழுமூஞ்சி ஸம்ஸாரத்திலும் ஊட்டுவதாகத் தெரிகிறது. நாலாம் ச்லோகத்திலும் ஸம்ஸாரத்தைப்பற்றி வருகிறது. "பகவத் தர்சனம் கிட்டிவிட்ட பின் ஸம்ஸாரத்தின் அழிவு எப்படி ஏற்படாமலிருக்கும்? - ந பவதி கிம் பவ திரஸ்கார:" என்று அது கேட்கிறது. அடுத்த ச்லோகத்தில், ஸம்ஸார தாபத்தில் பீதியுற்ற தம்மை பகவான் பரிபாலிக்க வேண்டிக்கொண்டார். "பவதாப பீதோஹம்" என்று அதில் வருகிறது, கடைசியான ஆறாவதில் ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து அம்ருதமான ஆத்ம தத்வத்தைக் கடைந்து கொடுக்கும் மத்தாக பகவானை வர்ணிக்கிறார். ஆக ஸமய அநுஷ்டானங்கள், ஆத்மிகமான ஸாதனைகள் ஆகிய எல்லாவற்றுறுக்கும் ஒரே லக்ஷ்யமான ஸம்ஸார கஷ்ட நிவ்ருத்தியை பக்தியில் ஆரம்பித்து பெற முயல்வதே "ஷட்பதீ"யின் ஸாரதத்வம் என்று தெரிகிறது.

பரமம் தரம் அபநய த்வம் மே என்று இந்த ச்லோகம் முடிகிறது. 'தரம்' என்றால் பயம் என்று அர்த்தம். மே - எனக்கு (அதாவது என்னுடைய) பரமம் - மிகுந்த. தரம் - பயத்தை த்வம் - நீ. அபநய - போக்குவாயாக!

உருப்படுவோமோ மாட்டோமோ, கதிமோக்ஷம் கிடைக்குமோ கிடைக்காதோ என்கிற பயம், மரண பயம், மறுபடியும் ஜன்மா வந்துவிடுமோ என்கிற பயம், நம் பாபங்களை நினைத்து நரக பயம் - இப்படிப் பல தினுஸாகப் படுகிற பெரிய ஸம்ஸார பயத்தைப் போக்க பகவானிடம் ப்ரார்த்தனை செய்கிறார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

## ஆதி வார்த்தை அந்தத்திலும்

'ஷட்பதீ' ஆரம்ப ச்லோகத்தில் 'அவிநயம் அபநய' என்று தொடங்கினார். ஆறாவது ச்லோகத்தை முடிக்கிறபோதும் 'தரம் அபநய த்வம் மே' என்பதாக அதே 'அபநய' என்ற வார்த்தையைப் போட்டிருக்கிறார். ஆதி வார்த்தையே அந்தத்தில் வருவதால் Circle complete (வட்டம் பூர்த்தியாகிவிடுகிறது) ஆகிவிடுகிறது. இது ஸ்தோத்திரத்தின் பூர்ணத்வத்துக்கு அடையாளம்.

'அபநய' என்பதற்கு அப்புறம் 'த்வம்', 'மே' என்ற இரண்டு வார்த்தைகள் வந்தாலும், மேலே காட்டினமாதிரி 'எனக்கு மஹாபயத்தை நீ போக்குவாயாக' என்பதற்கு நேர்வாக்யம், 'மே பரமம் தரம் த்வம் அபநய' என்று 'அபநய'வைக் கடைசி வார்த்தையாக வைத்து முடிப்பதாகத்தானிருக்கும். வசன நடையில் அப்படித்தான்இருக்கும். கவிதையானதால் அதன் லக்ஷணங்கள் பொருந்துவதற்காக இப்படி 'அபநய'வை கொஞ்சம் முன்பே கொண்டு வந்து 'மே' என்று முடிக்கும்படி ஆயிற்று.

பகவத் கீதையில் இப்படியேதான் இருக்கிறது. அதிலே பகவானின் உபதேசம் இரண்டாம் அத்யாயத்தில் 'அசோச்யாந் அந்வசோசஸ்தவம்' என்கிற (11-வது) ச்லோகத்தில் ஆரம்பிக்கிறது. கடைசியில் பதினெட்டாவது அத்யாயத்தில் 66-வது ச்லோகத்தில்,

ஸர்வ தர்மாந் பரித்யஜய மாம் ஏகம் சரணம் வ்ரஜ 1

அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச : 11

என்று உபதேத்தை முடிக்கிறார்.

இந்த இரண்டிற்கும் முந்தியும் பிந்தியும் இருக்கிற ச்லோகங்கள் preface (முன்னுரை) Epilogue (பின்னுரை) தான்.

'சுச' - கோச்ய' என்கிற வார்த்தைகள் 'வருத்தப்படுவதை'க் குறிக்கும் முதலில், 'அசோச்யாந் அந்வ சோசஸ் த்வம்' என்றதற்கு 'வருத்தப்பட வேண்டாதவர் விஷயத்தில் நீ

வீணுக்கு வருத்தப்படுகிறாய்' என்று அர்த்தம். 'ஐயோ, இந்தக் கௌரவ ஸேனையை எப்படிக் கொல்வேன்?' என்று வருத்தப்பட்ட அர்ஜுனனிடம், 'தர்மத்தை உத்தேசித்து இந்த யுத்தம் நடந்தாக வேண்டியிருக்கிறது. பூபாரம் தீருவதற்காக, இவர்கள் எல்லாரும் ஸம்ஹாரம் ஆக வேண்டும் என்று ஏற்கெனவே ஈச்வர ஸங்கல்பமாகிவிட்டது. ஆகையினால் நீ வருத்தப்பட வேண்டாதவர்களுக்காக அநாவச்யமாக வருத்தப்படுகிறாய்' என்று சொல்ல வந்த பகவான், 'அசோச்யாந் அந்வசோஸ்த்வம்' என்று ஆரம்பிக்கிறார். கடைசியில் முடிக்கிறபோது, "எல்லாத் தர்மங்களையும் விட்டுவிட்டு (அதாவது, எல்லா தர்மங்களுக்கும் மேலாக) என்னிடம் சரணாகதி பண்ணி, நான் விட்டவழி என்று இருந்துவிடு. நான் உன்னை ஸகல பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். இது நிச்சயம். ஆதலால் கொஞ்சங்கூட வருத்தப்படாதே" என்று அர்ஜுனனுக்குத் தன் வாக்குறுதியைக் கொடுக்கிறபோது மா சுச:என்கிறார். 'மா சுசு:' என்றால் 'வருத்தப்படாதே' என்று அர்த்தம். ஆரம்பத்தில் வந்த 'அசோச', முடிந்த முடிவில் வருட்ம 'மா சுச' இரண்டும் ஒன்றேதான். 'சுச்' என்கிற root (தாது) இரண்டிற்கும் பொது.

கீதையில் போலவே ஷட்பதீயிலும் முதல் ச்லோக ஆரமபத்தில் வந்த "அபநய" ஆறாம் ச்லோக முடிவிலும் வருகிறது. "விநயமின்மையைப் போக்கு" என்று ஆரம்பித்தவர் "பயத்தைப் போக்கு" என்று முடிக்கிறார். போக வேண்டியதைப் போக்கிக் கொள்ளவேண்டியது, வரவேண்டியதை வரவழைத்துக் கொள்வைதவிட முக்யம். முதலில் இதைச் செய்துகொண்டால்தான் அப்புறம் அதைச் செய்து கொள்ளமுடியும். செய்துகொள்வது, போக்கிக்கொள்வது என்றாலும் அது நம்மாலாகிற கார்யமா? இல்லை. அவனடைய அருள்தான் அப்படிப் போக்க வைக்கவேண்டும். அதனால்தான் ஆரம்பம் முடிவு இரண்டிலும், போகவேண்டிய இரண்டை - திமிரையும் பயத்தையும் - போக்கு, "அபநய", என்று வேண்டிக் கொள்கிறார். பயம் என்பது திமிருக்கு நேரெதிர். பூஞ்சை மனஸைக் காட்டுவது. உத்தமமானவருக்குத் திமிரும் இருக்காது, பூஞ்சையான பயங்காளித்தமும் இருக்காது. நமக்கு இரண்டும் இருக்கிறது. சிலவற்றைக் குறித்துத் திமிர், சிலவற்றைக் குறித்து பயம் என்று இருக்கிறது. இது இரண்டையும் போக்கிக்கொள்ள பகவானை ப்ரார்த்திக்கச்

சொல்லிக் கொடுக்கிறார் ஆசார்யாள்.

ஒரு ச்லோகத்தின் முடிவு வார்த்தை அடுத்ததன் ஆரம்பமாக இருப்பதைத்தான் அந்தாதி என்பது. "உத்த்ருத நக"வில் ஒரே ச்லோகத்துக்குள்ளேயே ஆசார்யாள் அந்தாதி விளையாட்டுப் பண்ணியதைப் பார்த்தோம். இப்போது ஆறு ச்லோகம் கொண்ட முழுச் ஸ்தோத்ரத்துக்குமாகச் சேர்ந்து முதல் வார்த்தையான 'அபநய' என்பதையே கடைசியிலும் போட்டு ஒரு விநோதமான அந்தாதி பண்ணியிருப்பதைப் பார்க்கிறோம். முதல் வார்த்தை, கடைசி வார்த்தை என்பதற்குப் பதில் முதல் வினைச்சொல், கடைசி வினைச்சொல் என்று வைத்துக்கொள்வதுதான் இன்னும் ஸரியாயிருக்கும். முதல் வார்த்தை 'அவநிய' என்பதே. அதையடுத்து முதல் வினைச்சொல்லாக 'அபநய' வருகிறது கடைசி வார்த்தைக்ள் 'அபநய த்வம் மே'. 'அபநய'வுக்கு அப்புறம் 'த்வம் மே' இருக்கிறது. ஆனால் வினைச்சொல்லின் எது கடைசி என்று பார்த்தால் 'அபநய'தான்!

Verb என்பதைத் தமிழில் வினைச்சொல் என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் க்ரியா பதம் என்றும் சொல்கிறோம். இதிவிலிருந்த, அது ஒர வேலையைக் கொடுப்பது என்று தெரிகிறது. இப்படி. நம்மை விடாமல் ஒரு வேலை வாங்குவதற்கே ஸூக்ஷ்மமாக இப்படி ஷட்பதீ ஸ்தோத்ரம் முழுதையும் வினைச் சொல்லால் ஒரு அந்தாதியாக ஆசார்யாள் பண்ணியிருக்கிறார் போலிருக்கிறது!ஆரம்ப verb-ஐ முடிவிலே போட்டதால், "மறுபடியும் அவிநயம் அபநய' என்று அந்தாதிக்ரமத்திலே ஆரம்பி. அதாவது, திரும்பத் திரும்ப இந்த ஸ்தோத்ரத்தை ஜபம் பண்ணு" என்று வேலை கொடுக்கிற மாதிரி இருக்கிறது!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

## பலச்ருதி போன்ற சரணாகதி விண்ணப்பம்

இதற்கு அடுத்ததாக வரும் ஏழாவது ச்லோகம் இந்த ஸ்தோத்ரத்தின் சிறப்பை, பலனைச் சொல்கிற பலச்ருதி மாதிரியானது.

'ஷட்பதீ' என்றால் ஆறு செய்யுள்கள் என்று அர்த்தம் பண்ணினால், அது

தாமோதர குணமந்திர

ஸுந்தர வதநாரவிந்த கோவிந்த ।

பலஜலதி மதந மந்தர

பரமம் தரட்ம அபநய த்வம் மே ॥

என்கிற ச்லோகத்த்தோடு முடிந்துவிடுகிறது.

ஜயதேவர் பாடிய 'கீத கோவிந்த'த்திலுள்ள பாட்டுக்களை 'அஷ்டபதி' என்பது எதனால்? அந்தப் பாட்டு ஒவ்வொன்றிலும் எட்டு அடிகள் இருப்பதனால்தானே? இவ்வாறு பதம் என்பது வார்த்தையை மட்டுமின்றி ஒரு முழுச் செய்யுளை, ச்லோகத்தைக் குறிப்பிடுவதாகும் என்று முன்னேயே சொன்னேன். 'அஷ்டபதி' என்பது எட்டு ச்லோகமென்பதுபோல், 'ஷட்பதீ'யும் ஆறாம் ச்லோகத்தோடு பூர்த்தியாகிவிட்டது என்று அர்த்தம்.

நூற்சிறப்பு அல்லது பயனை 'பலச்ருதி' என்று சொல்கிற மரபுப்படியே, ஏழாவதாக ஒரு ச்லோகம் வருகிறது.

கீதையில் பகவான் சொன்ன மாதிரியே ஆசார்யாளும் ஆதிவார்த்தையை அந்தத்தில் வைத்திருக்கிறார் என்று சொன்னேனல்லவா? ஆசார்யாள் கீதையின் 'மாடலை' புத்தி பூர்வமாக நினைத்தே (கீதையை இந்த ஸ்தோத்ர அமைப்புக்கு முன்னோடி என்று புத்திபூர்வமாக எண்ணியே) இப்படிச் பதப்ரயோகம் பண்ணியிருப்பார் போலிருக்கிறது என்று ஏழாம் ச்லோகத்தைப் பார்த்தால் தோன்றுகிறது. ஏனென்றால் இதிலே கீதையின் கடைசி ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் சரணாகதியைத்தான் ஆசார்யாளும் சொல்கிறார்.

நாராயண, கருணாமய.

சரணம் கரவாணி தாவகௌ சரணௌ 1

இதி ஷட்பதீ மதீயே

வதந ஸரோஜே ஸதா வஸ்து 11

என்பது ஷட்பதீக்கு பலச்ருதி மாதிரி உள்ள ஏழாவது ச்லோகம். 'பலச்ருதி மாதிரி' என்று ஏன் சொல்கிறேன் என்றால், இதிலே ஆசார்யாள் அசல் பலச்ருதியாக, 'இந்த ஸ்துதிக்கு இன்னின்ன பலன்' என்று உடைத்துச் சொல்லாமல், மறைமுகமாக நாம் ஊஹித்துப் புரிந்து கொள்ளும் விதத்திலேயே பலனைச் சொல்லியிருப்பதால்தான் ரொம்பவும் விநய சீலரான நம் ஆசார்யாள் "சிவாநந்த லஹரி" முதலியவற்றின் முடிவில்கூட, "இந்த ஸ்தோத்ரத்தைச் சொன்னால் இப்படியாகப்பட்ட பலன்கள் வரும்" என்று பலச்ருதி சொல்லவில்லை. ஸூசனையாகவே தெரிவித்திருக்கிறார்.

"நாராயண - நாராயணனே கருணாமய - கருணை மயமானவனே தாவகௌ சரணமாக, அடைக்கலமாகக் கொள்கிறேன். இதி - இப்படிப்பட்ட, ஷட்பதீ - ஷட்பதீயானது, மதீயே - என்னுடைய, வதந ஸரோஜே - வாய் என்கிற தாமரையில், ஸதா- எப்பொழுதும், வஸது - வஸிக்கட்டும்.

ஷட்பதீ ஸ்தோத்ரம் தம்முடைய வாக்கில் ஸதா இருக்கட்டும் என்று ஆசார்யாள் சொல்வதற்கு அர்த்தம், சற்று முன்னால் நான் சொன்னாற்போல அதை நாம் திரும்பத் திரும்ப ஜபித்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதே.

"தாவகௌ சரணௌ" என்கிறபோது Charanam என்று சொல்லவேண்டும். "சரணம் கரவாணி" என்னும்போது சங்கரன், சங்கு, சட்டை என்பதில் சொல்கிற 'ச'வாக என்று சொல்லவேண்டும். Charanam என்றால் கால், Saranam என்றால் அடைக்கலாம், புகலிடம்.

த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைத வித்யாஸங்களை நினைக்காமல் பக்தி பரவசத்தில் எப்படியெப்படி பாவம் வருகிறதோ அப்படியெல்லாம் ஆசார்யாள் இந்த

ஸ்தோத்ரத்தைப் பண்ணிக்கொண்டு போயிருக்கிறார் என்று நடுநடுவே தெரிந்தது அல்லவா? ஸ்வச்சமான அத்வைதம் என்று பார்த்தால் அதிலே சேராத ஸகுண ப்ரஹ்ம வர்ணனை, ஸமுத்ரத்துக்கு அலை அடக்கமானதே என்பது போல ஈச்வரனுக்கு ஜீவன் அடங்கினவன் என்கிற தத்வம் ஆகியவற்றை இந்த ஸ்தோத்திரத்தில் ஆசார்யாள் சொல்லியிருப்பதைப் பார்த்தோம். முடிக்கிறபோதும் அத்வைதத்துக்கு முக்யமான ஞான மார்க்கத்தைச் சொல்லாமல், பக்திக்கு ப்ரதானமாக இருக்கிற சரணாகதியைத்தான் சொல்லியிருக்கிறார்.

சரணம் கரவாணி தாவகௌ சரணௌ

ப்ரஹ்ம பாவனையும் சரணாகதியும் ஒன்றே

பிற்காலத்தில் ராமானுஜர் இந்த சரணாகதியைத்தான் முக்யமான உபாயமாக வைத்து விசிஷ்டாத்வைத மதத்தை உருவாக்கினார். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முக்யமானவை அஷ்டாக்ஷரம், த்வயம் என்ற இரு மந்த்ரங்களும், கீதையின் சரம ச்லோகமான 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' ச்லோகமும், வீபீஷண சரணாகதியின்போது ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி தம்முடைய சரணாகத ரக்ஷக வ்ரதத்தைச் சொல்கிற ராமாயண ச்லோகமும் ஆகும்.

ராமாநுஜருக்குப் பிற்பாடு வடகலை, தென்கலை என்று இரண்டாகப் பிரிந்ததும் இந்த சரணகாதிக்குள்ளேயே இருக்கிற மாறுபாடுகளை வைத்துத்தான். பூனைக் குட்டி தனக்கென்று ஒரு ப்ரயத்னமும் இல்லாமல் கிடக்கிறதல்லவா? அதைத் தாய்ப்பூனை தானாகத் தானே வாயில் கௌவிக் கொண்டுபோகிறது? இதுமாதிரி நாம் பெருமாள் விட்ட வழி என்று கிடப்பதுதான் நிஜ சரணாகதி என்பது தென்கலைக்காரர்களின் அபிப்ராயம். இதற்கு 'மார்ஜார கிசோர ந்யாயம்' என்று பேர். மார்ஜாரம் என்றால் பூனை. கிசோரம் என்றால் குட்டி. "பூனைக்குட்டி முறை"தான் தென்கலை. வடகலைக்காரர்களின் அபிப்ரயாம் என்னவென்றால். 'குரங்குட்கக்குட்டி என்ன பண்ணுகிறது? அதுதானே தாய்க் கரங்களை இறுகக் கட்டிக்கொண்டிருக்கறிது? இந்த மாதிரி நாமேதான் ப்ரயத்னம் பண்ணி பகவானைப் பிடித்துக்கொள்ளவேண்டும். இந்த ஒரு யத்னம் தவிர பாக்கி விஷயங்களில்தான் அவன் விட்ட வழி

என்று இருக்க வேண்டும்' என்று மர்க்கட கிசோர ந்யாய'மாக இவர்கள் சரணாகதியைச் சொல்கிறார்கள். 'மர்க்கடம்' - குரங்கு. 'மர்க்கட கிசோர ந்யாயம்' - குரங்குக் குட்டி முறை.

இரண்டிற்கும் அடிப்படையாக இருப்பது சரணாகதி.

'தானே ப்ரஹ்மம்' என்கிற ப்ரஹ்மபாவனை ஞான மார்க்த்துக்கு மையமாக இருக்கிற மாதிரி, 'தான் ஒன்றுமே இல்லை என்று பகவானிடம் சரணாகதி செய்து கிடப்பது பக்தி மார்க்கத்துக்கு மையமாக இருக்கிறது. இந்த இரண்டும் ஒன்றேதான்.

'அதெப்படி? ஒன்றுக்கொன்று மலைக்கும் மடுவுக்குமாக அல்லவா இருக்கிறது?' என்று மேலெழுந்தவாரியாகப் பார்க்கிறபோது தோன்றும். ஆழ்ந்து பார்த்தால் இரண்டும் ஒன்றுதான். 'தானே ப்ரேஹ்மம்' என்கிறபோது சொல்கிற 'தான்' வேறு, 'தான் ஒன்றுமே இல்லை' என்று சொல்கிற 'தான்' வேறு. தானே ப்ரஹ்மம் என்று அத்வைதி சொல்கிறபோது தன்னுடைய சரீரம், இந்த்ரியம், புத்தி மனஸ் இந்த எதுவும் நிஜமானதான் இல்லை என்று தள்ளிவிட்டு, மிஞ்சி நிற்கிற ஆத்மாவைத்தான் ப்ரஹ்மம் என்கிறான். 'ஸாதாரணமாக எந்த ஜீவாத்மாவும் அஞ்ஞானத்தினால்"தானாக" நினைக்கும் இந்த சரீரம், இந்த்ரியம், புத்தி, மனஸ் இதுகளிலிருந்தெல்லாம் நாம் விடுபடவேண்டும். இவை இழுத்துக்கொண்டு போகிறபடி ஓடாமல் இவற்றை இறைவனின் பொற்பாத கமலங்களில் ஒன்றுமேயில்லை என்கிற மாதிரி கிடத்திவிட வேண்டும்', என்கிற அர்த்தத்தில்தான் 'தான் ஒன்றுமேயில்லை' என்று பக்தி மார்க்கக்காரன் சரணாகதி பண்ணுகிறான். அத்தைவ "தானாகச" சொல்லும் ஆத்மாவுக்கு அந்தயமாக அவன் தள்ளுவதையேதான் த்வைத, விசிஷ்டாத்வைதிகள்"தான்" என்றுவைத்து பகவானின் பாதத்தில் தள்ளுகிறார்கள்

ஆகையால் இரண்டும் ஒன்றுதான். அஹங்காரம் (ego) போகவேண்டும். என்பதுதான் இரண்டு மார்க்கத்துக்கும் பொதுவான லக்ஷ்யம்.

அத்வைத பாஷ்யங்களிலும் ப்ரகரண க்ரந்தங்களிலும் ஞான மார்க்கத்தைச் சொன்ன ஆசார்யாள். இங்கே பக்தராக இருந்து, அதே லக்ஷ்யத்துக்கு சரணாகதியை வழியாக சொல்லியிருக்கிறார். "சரணம் கவாணி தாவகௌ சரணௌ - உன் இணையடிகளில் சரணாகதி செய்கிறேன்" என்கிறார்.

"கருணாமய" என்றதால் கருணைக் கடலான பகவான் சரணாகதனை நிச்சயம் ரக்ஷிப்பான் என்று உணர்த்துகிறார்.

நாராயண கருணாமய

முதல் ச்லோகத்தில் 'விஷ்ணோ' என்று அரம்பித்து விட்டு, ஆறாவது ச்லோகத்தில் 'தாமோதர' என்று க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லிஅழைத்தவர், இங்கு நாராயண என்கிறார். மதத்தின் பெயரைப் பார்க்கும்போது 'விஷ்ணு'வின் பெயரை வைத்து அது 'வைணவம்' எனப்பட்டாலும், அதற்கு முக்யமான அஷ்டாக்ஷரீ மந்த்ரத்தில் 'நாராயண' நாமம்தான் வருகிறது. "கண்டு கொண்டேன் நாராயண என்னும நாமம்" என்று ஆழ்வாரும் பாடியிருக்கிறார். ஆசார்யாளே தமது அத்வைத பாஷ்யங்களில் ஸகுண ப்ரஹ்மத்தைச் சொல்லும்போது நாராயணன் என்றே குறிப்பிட்டிருக்கிறார். ஸந்யாஸிகளுக்கு யார் நமஸ்காரம் பண்ணினாலும் அவர்கள் "நாராயண நாராயண" என்றே ஆசிர்வதிக்கணுமென்று அவர் ஏற்பாடு பண்ணியிருக்கிறார்.

இங்கே ஆசார்யாள், 'நாராயணனின் சரணத்தை நான் சரண் அடைகிறேன்' என்கிறார் அல்லவா? இதே அர்த்தத்தில் தான், ஏறக்குறைய இதே வார்த்தைகளிலேயே வைஷ்ணவர்கள் த்வய மந்த்ரம் இருக்கிறது.

இந்த மாதிரி அத்வைத, விசிஷ்டாத்வைத ஒற்றுமைகளைப் பார்க்கிறபோது ரொம்பவும் ஸந்தோஷமாயிருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**ஆறு ச்லோகமும் ஆறு வார்த்தையும்**

'இதி ஷட்பதீ மதீயே வதந ஸரோஜே ஸதா வஸ்து'

என்பதற்கு, "இந்த ஆறு ச்லோகங்கள் கொண்ட ஷட்பதீ ஸ்தோத்ரம் என வாய் என்கிற தாமரையில் எப்போதும் இருக்கட்டும்" என்று அர்த்தம் பண்ணிக்கொண்டால் "ஷட்பதீ' என்பது 'ஆறு ச்லோகம், என்ற பொருள் கொடுக்கும். 'பதம்' என்றால் 'ச்லோகம்' என்று பொருள் கொள்ளாமல் 'வார்த்தை' என்றே அர்த்தம் செய்து கொண்டாலும் பொருத்தமாக அமைகிறபடி இங்கே ஆசார்யாள் ஒரு வார்த்தைகள் என் வாய்த் தாமரையில் எப்போதும் இருக்கட்டும்" என்றும் ஒரு பொருள் கொள்ள இடமிருக்கிறது. அதுவும் பொருத்தமானதே!எப்படி? எந்த ஆறு வார்த்தைகள்?

ச்லோகத்தின் முதல் பாதியில் வருகிற ஆறு வார்த்தைகள்தான்!'நாராயண', 'கருணாமய', 'சரணம்', 'கரவாணி', 'தாவகௌ', 'சரணௌ' என்ற ஆறு வார்த்தைகள்தானே முதல் பாதியில் இருக்கின்றன? "கருணாமயமான நாராயணா!

உன் இணையடியில் சரண் புகுகிறேன்" என்ற இந்த ஆறு வார்த்தைகள் ஸதா ஸர்வ காலமும் தம் வாய்த் தாமரையில் இருக்கவேண்டும் என்று சொல்வதாகவும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

ஷட்பதீயின் முதல் ஆறு ச்லோகங்களையோ அல்லது ஏழாவது ச்லோகத்தின் முதல் பாதியான ஆறு வார்த்தைகளையோ எப்போது பார்த்தாலும் சொல்லிக்கொண்டேயிருந்தால் பகவத் அநுக்ரஹம் கிடைத்துவிடும். 'விநயமின்மை போகவேண்டும், மனஸின் ஓட்டம் நிற்கவேண்டும், ஜீவதயை வ்ருத்தியாக வேண்டும், ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடத்தப்பட வேண்டும், ஸம்ஸார ஸாகரத்தைக் கடைகிற மத்தாக பகவானே வந்து அம்ருதத்தை - அமரத்தன்மையை - அநுக்ரஹிக்க வேண்டும்' என்றெல்லாம் இந்த ஸ்தோத்ரத்தில் ஆசார்யாள் பல ப்ரார்த்தனைகளைச் சொன்னாரல்லவா? அந்த ப்ரார்த்தனையெல்லாம் இந்த அறு ச்லோகங்களையும், அவற்றுக்குப் பிறகு வரும் ஆறு வார்த்தைகளையும், ஸதா சொல்லிக்கொண்டிருப்பதாலேயே நிறைவேறிவிடும் என்று சொல்லாமல் சொல்கிற பலச்ருதியாக ஏழாவது ச்லோகம் இருக்கிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பக்தி**

**"வண்டு ஸ்தோத்ரம்"**

**"வண்டு"ப் புதிர் அவிழ்கிறது**

"மதீயே வதந ஸரோஜே' - 'என்னுடைய வாயான தாமரையில்' என்று ஏன் சொன்னார்? 'என் வாய்' என்றாலே போதும். வதநம் என்றாலே போதும். வாய்த்தாமரை, வதந ஸரோஜம் என்று அதற்கு ஏன் ஒரு அடைமொழி கொடுத்தார்? பகவானைப் பற்றி நயன கமலம், முகத்தாமரை, பாதபத்மம் என்று சொன்னால் ஸரியாகப்படுகிறது. இந்த ஸ்தோத்ரத்திலே இப்படி பகவானுடைய பாத கமலத்தையும் (ஸ்ரீபதி பதாரவிந்தே) முக கமலத்தையும் (ஸுந்தரவதநாரவிந்தே) முன் ச்லோகங்களில் சொன்னது ஸரி. ஆனால் பக்தனான தன்னைச் சொல்லிக்கொள்ளும்போது ஏன் 'வதந ஸரோஜே' என்று தாமரையோடு வாயை ஒப்பிட்டுக்கொள்ளவேண்டும்?

பல ச்ருதியைக்கூட விண்டு சொல்லாத அளவுக்கு விநய ஸம்பத் படைத்த ஆசார்யாள். 'அவிநயத்தைப் போக்கு' என்றே இந்த ஸ்துதியை ஆரம்பிக்கிற ஆசார்யாள், இங்கே இப்படித் தம்முடைய வாயை 'வதந ஸரோஜே' என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பித்துச் சொல்வதற்கு ஒரு காரணம் உண்டு.

இந்த ஸ்தோத்ரத்தைச் சொல்ல ஆரம்பிக்கும்போது 'ஷட்பதீ', என்றால் 'ஆறுகால் உடைய வண்டு' என்று அர்த்தம் சொல்லி, இதில் ஆறு ச்லோகம் இருப்பதாலும், வண்டு ஸம்பந்தம் இருப்பதாலும்தான் ஆசார்யாள் ச்லேஷையாக 'ஷட்பதீ ஸ்தோத்ரம்' என்று பெயர் வைத்தார் என்று சொன்னேன் அல்லவா? வண்டு என்பது எப்படிப் பொருந்தும் என்கிற புதிர் இங்கேதான் அவிழ்கிறது.

'ஆறு ச்லோகம் - அதோடு (ஏழாவது ச்லோகத்தில் ஆறு வார்த்தைகள் - ஸதா என் வாக்கில் இருக்கட்டும்' என்று ஆசார்யாள் சொல்லிவந்தார். அப்படிச் சொல்கிற போது

'ஷட்பதீ' என்றால் வண்டுக்கும் பேர் அல்லவா என்று தோன்றி விட்டது. வண்டு என்கிற அர்த்தத்தில் 'ஷட்பதீ' என்கிற வார்தையை ஆசார்யாள் "ஸுப்ரஹ்மண்ய புஜங்க"த்திலும், "ஸௌந்தர்ய லஹரியிலும் உபயோகித்திருக்கிறார்

திருச்செந்தூர் முருகன் மீது 'புஜங்கம்' பாடி ப்ரார்த்திக்கு ம்போது, "ஹே ஸ்கந்தா!பத்மத்தில் வண்டு மொய்த்துக் கொள்கிறது போல் பவ வினையால் க்லேச முற்றுக்கொதிக்கும் என் மன வண்டானது என் பாதபத்மத்தில் ஸதா ரமித்துக்கொண்டிருக்கட்டும்" என்று சொல்லியிருக்கிறார். அங்கே,

மந:ஷட்பதோ மே பவ க்லேச தப்த:

ஸதா மோததாம் ஸ்கந்த தே பாதபத்மே

என்கிறார்.

வண்டுக்கு ப்ருங்கம், ப்ரமரம், மதுபகம் என்றெல்லாமும் பெயர் இருக்க, அதை மனஸுக்கு ஒப்பிடும்போது ஷட்பதப் பெயரை ஏன் குறிப்பிட்டார் என்பது 'ஸௌந்தர்ய லஹரி'யில் வெளியாகிறது. அதில் 'ஸௌந்தர்ய லஹரியில்) 'பஞ்ச இந்த்ரியங்கள் என்கிற ஐந்து காரணங்களோடும் மனஸ் என்று ஆறாவது கரணத்தோடும் தசேர்நத்தால் ஆறுகால் கொண்ட வண்டு போலிருக்கிற என் ஜீவனானது உன் பாத பத்மத்தில் புதைந்து கிடக்கட்டும்' என்று அம்பாளிடம் ப்ரார்த்திக்கிறார்.

நிமஜ்ஜன் மஜ்ஜீவ: காரண சரண ஷட்சரணதாம்:1

பதம், சரணம் இரண்டும் காலைக் குறிக்கும். 'ஷட்சரண' என்றால் ஷட்பதமான வண்டு என்றுதான் அர்த்தம்.

மனஸை ஐந்து இந்த்ரியங்களோட ஆறாவதாகச் சொன்னாலும் மற்ற ஐந்தையும்கூட ஆட்டிப் வைப்பது அதுதான், அதனால் மனஸையே அதுவும், அதன் ஐந்து அங்கங்களான பஞ்சேந்தரியங்களும் கொண்ட ஆறுகால் வஸ்துவாகச் சொல்வதுண்டு. அதனால்தான் "மன :ஷட்பதோ" என்றார்.

ஆகையால் இங்கே, 'ஆறு ச்லோக - ஆறு வார்த்தை - ஷட்பதீ என் வாயில் எப்போதும் இருக்கட்டும்' என்று

சொல்ல வந்தபோது அவருக்கு வண்டு நினைவு வந்து விட்டது. வண்டு ஸதா இருக்கிற இடமாகத் தம் வாய் இருக்கவேண்டுமென்றால் அந்த வாயானது தாமரைப் பூவாக இருந்தால்தானே முடியும்? வண்டு தாமரையைத் தானே ஸதா மொய்க்கும்? அதனால்தான் 'வதந ஸரோஜே' என்று போட்டுவிட்டார்!

ஸ்ரீபதியின் பதாரவிந்தத்தை, ஸுந்தர வதநாரவிந்தத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டேயிருக்கிற ஒரு பக்தனின் வாயும் அரவிந்தமாக ஆகிவிடுமாதலால், 'என் வாய்த்தாமரை' என்று போட்டதில் எந்த அநுசிதமும் இல்லை. அந்த வதன ஸரோஜத்தில் உள்ள வண்டு எது என்றால் அதுதான் ஷட்பதீ ஸ்தோத்ரம்.

வண்டு ஸ்தோத்ரம்" என்ற நாமகரணம் இப்போது புரிந்துவிட்டதல்லவா? புதிர் அவிழ்ந்து விட்டதல்லவா?

வதந ஸரோஜத்தை - முக கமலத்தை - சொல்கிற போது ஆசார்யாளைப் பற்றி அவரது நேர் சிஷ்யரான பத்ம பாதாசார்யாளும், பிற்பாடு அப்பைய தீக்ஷிதரும் பண்ணின ச்லோகங்கள் மறுபடி நினைவு வருகின்றன. முன்பே சொன்னேன். ஆசார்யாளின் முகமாகிற மாநஸ ஸரஸிலே வாயாகிற தாமரையில் பாஷ்யம் என்கிற தேன் பொழிகிறது என்றும் அதை சிஷ்ய கணங்களான வண்டுக் கூட்டம் பருகுவதாகவும் சொன்னேன். அப்பைய தீக்ஷிதிர் ச்லோகத்தில் விஷ்ணுவின் பாதகமலத்திலிருந்து கங்கை பெருகினது போல, ஆசார்யாளின் முக கமலத்திலிருந்து பாஷ்யம் பெருகிற்று என்கிறார். "பகவத்பாத ஸ்ரீமன் முகாம்புஜ" என்கிறார். முகாம்புஜம் (முக அம்புஜம்) என்பதும் "ஷட்பதீ" முடிவில் சொல்லும் 'வதநஸரோஜம்' என்பதும் ஒன்றுதான். அந்த பகவத்பாதாளே இந்த 'ஷட்பதி'யின் இரண்டாவது ச்லோகத்தில் ஸ்ரீபதியின் பாதாரவிந்தத்திலிருந்து தேவகங்கை பொழிகிறதைப்பற்றிச் சொல்லியிருப்பதைப் பார்த்தோம். ஜனன மரணமாகிய பவபய கேதங்களை பகவானின் பாதம் போக்குகிறது என்று இங்கே நம் பகவத் பாதாள் சொல்கிறாரென்றால், அப்பைய தீக்ஷிதிரோ ஆசார்ய பாஷ்யத்தையோ 'ஜநந ஹரணி' (பிறவியைப் போக்குவது) என்கிறார்!

ஸுப்ரஹ்மண்யர், அம்பாள் முதலியவர்களின் பாத

கமலத்தில் தமது உள்ளம் வண்டாகப் படியவேண்டும் என்று ஆசார்யாள் சொல்கிறாரென்றால், பழங்காலத்துக் கம்போடியா தேசக் கல்வெட்டில், நம் ஆசார்யாளுடைய பாத கமலத்தில் ஸகல பண்டிதர்களுடைய தலைகளும் வண்டுக்கூட்டம் மாதிரி மொய்த்துக் கொண்டிருப்பதாக இருக்கிறதென்று முன்னே சொன்னேன். இப்படிப்பல தினுஸில் வண்டுப் பொருத்தமுள்ள ஆசார்யாள் 'வண்டு ஸ்தோத்ரம்' என்றே ஒன்று பண்ணியிருப்பது ந்யாயம் தானே? இன்னொரு பொருத்தம் சொல்கிறேன்:

நம் ஆசார்யாளுக்கு அவருடைய குருவான கோவிந்த பகவத்பாதர்களிடமிருந்த பக்தியைப்பற்றிச் சொன்னேல்லவா? இதற்கேற்றாற்போல், இங்கே மடத்திலே, ராஜாக்களுக்கு பராக் சொல்கிற மாதிரி நம் ஆசார்யாளுக்குச் சொல்லும்போது, "ஜயகோவிந்த பகவத்பாத பாதாப்ஜ ஷட்பத" என்று ஆரட்மபிக்கிறோம். கோவிந்த பகவத்பாதாளின் பாதாரவிந்தத்தில் நம் ஆசார்யாள் ஷட்பதமாக (வண்டாக) இருந்தார் என்று அர்த்தம். இப்படியாக, தாமரை - வண்டு இவற்றின் ஸம்பந்தம் ஆசார்யாளின் குருவான கோவிந்த பகவத்பாதாள், ஆசார்யாள். அவருடைய சிஷ்யரான பத்மபாதர் என்று தொடர்ந்து வருகிறது. பகவானின் முக கமலம், பாத கமலம் இவற்றோடு அந்த பகவானை ஸ்தோத்ரிக்கும் பகவத்பாதாளின் முக கமலம், பாதகமலம் இவற்றையும் ஸ்மரிக்கிற பாக்யம் நமக்கு ஏற்படுகிறது.

"ஸதாஸர்வ காலமும் இந்த ஷட்பதீ என்று வாக்கில் இருக்கட்டும்" என்று ஆசார்யாள் ப்ரார்த்தித்து, நம் எல்லோர் பொருட்டும் அவர் செய்த ப்ரார்த்தனையாகும். இந்த 'வண்டு ஸ்தோத்ரம்' மொய்க்கிற தாமரைகளாக நம் எல்லோருடைய வாயும் ஆகவேண்டும். அப்படியிருந்தால் பஞ்சநேந்த்ரியமும் மனஸும் சேர்ந்து ஷட்பதமாக இருக்கிற நம்முடைய ஜீவனாகிற வண்டு எப்போதும் பகவானின் பாத கமலததில் படிந்துகிடக்கும். ஆரம்பத்தில், "தமய மந:சமய விஷய ம்ருக த்ரஷ்ணாம்..... தாரய ஸம்ஸார ஸாகரத:" என்கிறபோது ஆசார்யாள், மனஸும் இந்த்ரியங்களும் அடங்கி ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடைத்தேற்றுவிக்கப்படவேண்டும் என்றுதான் ப்ரார்த்தனை செய்தார். கடைசியில் பகவானின் பாதங்களில் மனஸ்,

இந்த்ரியங்கள் எல்லாவற்றையும் சரணாகதி பண்ணுவதைச் சொல்லி முடித்திருக்கிறார். அழகாலும், அருளாலும் நம்மை வசீகரித்து, தன்னிலே நம் உள்ளத்தை லயிக்கப் பண்ணி, ஸுலபமாக நம்மை பவஸாகரத்தலிருந்து கரைசேர்ப்பது பகவானின் பாத கமலம்தான். அதுதான் "பகவத்பாதர்" என்றே சொல்லப்படுகிற நம் ஆசார்யாள். அவரே பகவானின் பாதகமலம் என்றால் அதிலும் அவரது முகம் ஒரு கமலமாக இருக்கிறது. அதிலே ஸதாவும் இருக்கிற வண்டு ஷட்பதீ ஸ்தோத்ரம். அது ஆசார்யாளுடைய வாக்குத் தேனையும், அதன் வழியாக பகவானின் அருள்தேனையும் நமக்குக் கொடுத்துக் கொண்டேயிருக்கட்டும்

அவிநய - மபநய விஷ்ணோ

தமய மந:சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம் 1

பூத - தயாம் விஸ்தாராய

தாரய ஸம்ஸார - ஸாகரத:(1)

திவ்ய - துநீ மகரந்தே

பரிமள பரிபோக ஸச்சிதாநந்தே 1

ஸ்ரீபதி பதாரவிந்தே

பவ - பய - கேத - ச்சிதே வந்தே (2)

ஸத்யபி பேதாபகமே

நாத தவாஹம் ந மாமகீநஸ் - த்வம் 1

ஸாமுத்ரோ ஹி தரங்க:

க்வசந ஸமுத்ரோ ந தாரங்க:(3)

உத்த்ருத - நக நகபிதநுஜ

தநுஜகுலாமித்ர மித்ர - சசி - த்ருஷ்டே 1

த்ருஷ்டே பவதி ப்ரபவதி

ந பவதி கிம்ட பவ - திரஸ்கார:(4)

மத்ஸ்யாதிபி - ரவதாரை -

ரவதாரவதா - வதா ஸதா வஸுதாம் 1

பரமேச்வர பரிபால்யோ

பவதா பவ - தாப - பீதோஹம் (5)

தாமோதர குணமந்திர

ஸுந்தர - வதநாரவிந்த கோவிந்த 1

பவ - ஜலதி - மதந மந்தர

பரமம் - தர - மபநய த்வம் மே (6)

நாராயண கருணாமய சரணம் கரவாணி தாவகௌ சரணௌ

இதி ஷட்பதீ மதீயே வதந - ஸரோஜே ஸதா வஸது 11

ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தநம்!

கோவிந்தா, கோவிந்தா!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**அரசருக்கும் மேலே**

மன்னர்க்குத்

தன்தேசம் அல்லால் சிறப்பில்லை,

கற்றோருக்குச்

சென்றவிட மெல்லாம் சிறப்பு

-இப்படி அவ்வைப் பாட்டி சொல்லியிருக்கிறார். அப்படிச்

சொல்ல அவளுக்கு ரொம்ப உரிமை உண்டு. . அவளுக்குச் சென்ற இடமெல்லாம் ஒரே சிறப்பாக, போகிற இடங்கஎெல்லாம் ஒரே புகழாகத்தான் இருந்தது. மன்னர்களுக்கு மேலே அவள்தான் கொடிகட்டிப் பறந்தாள். சேர, சோழ, பாண்டிய, மன்னர்கள் மூன்று பேருமே அவள் ஒன்று சொல்லிவிட்டால் அதை ரொம்பவும் மரியாதையோடு கேட்டுக்கொண்டார்கள்.

கவிகளை ரொம்பவும் ஆதரித்த பாரி வள்ளல் காலமாகி, அவனுடைய இரண்டு பெண்கள் அநாதைகயாக நின்றபோது அவ்வைதான் மிகவும் நன்றியறிதலோடு அவர்களுக்கு வரன் தேடிக் கல்யாணம் பண்ணிவைத்தாள். அந்தக் கல்யாணத்துக்கு அவள் அழைப்போலை அனுப்பினால் என்பதற்காக மூவேந்தர்களூமே வந்துவிட்டார்கள். பரஸ்பரம் குஸ்தி போட்டுக் கொள்பவர்காளனாலும் அவ்வையின் அழைப்பைத் தட்டப்படாது என்றே வந்து அப்படி மூன்று பேரும் ஒன்று சேர்ந்ததைப் பார்த்தவுடன் அவள் ரொம்பவும் ஸந்தோஷமடைந்தாள். "இரு பிறப்பாளர்களான ப்ராம்ணர்கள் வளர்க்கிற கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்ற த்ரேதாக்னி (முத்தீ) மாதிரியல்லவா நீங்கள் மூவரும் ஒரே இடத்தில் சேர்ந்து ஜ்வலிக்கிறீர்கள்" என்று பாடினாளாம். புறநானுற்றிலே அந்தப் பாட்டு இருக்கிறது.

பொம்மனாட்டி, அதிலும் கிழவி, கூழுக்குப் பாடுவது என்று அத்தனை எளிமையாக இருந்தவள் அவ்வை. ஆனாலும் ராஜாக்களும் அவள் சொல்வதை பயபக்தியோட கேட்டுக்கொண்டார்கஎென்றால் அதற்குக் காரணம் அவள் கற்றவளாயிருந்ததுதான்.

கவிகள். பாவாணர்கள் என்பவர்கள் ரொம்பவும் கற்றறிந்தவர்களாக இருப்பார்கள். அதனால் அவர்கள் ராஜாவுக்கு மேலே, சென்ற இடமெல்லாம் சிறப்புப் பெற்றிருந் தார்கள்.

இப்படித் தங்களுக்கு இருக்கிற சிறப்பை அவர்கள் நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தார்கள். அதனாலேயே ஒரு ராஜாவுக்குக் கூடத் தாங்கள் ஸலாம் போட வேண்டியதில்லை என்பதாக ரொம்பவும் மானம், ரோஷம், தைர்யம் உள்ளவர்களாக இருந்தார்கள். இப்படி அவர்கள் இருந்ததற்கு அந்தக் கிழப்பாட்டி, மன்னர்க்குத்

தன்தேசம் அல்லால் சிறப்பில்லை,

கற்றோர்க்குச்

சென்றவிட மெல்லாம் சிறப்பு

என்று தைர்யமாகப் பாடி ப்ரசாரம் பண்ணியதே பெரிய சான்று

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**மஹான் -கவி வித்யாஸம்**

ரொம்பவும் ஞானியாக, பக்திமானாக ஆகிறபோது மானாவமானம், த்வேஷ - ரோஷங்கள் இருக்காது, இருக்கப்படாது. ஆனாலும் கவிகளை அப்படிப்பட்ட மஹான்கள் கோஷ்டியிலே வைப்பதற்கில்லை. ஸாதாரண ஜனங்களை விடக் கவிகள் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள். அழகு - அதிகாரம் - ஸொத்து முதலியவற்றால் பெரியவர்களாயிருப்பவர்களை விடவுங்கூடத் கற்றறிந்த கவிவாணர்கள் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள்தான். என்றாலும் லோகம், லோக வாழ்க்கை வேண்டாமென்று பாரமார்த்திகமாகப் போய் விட்ட பக்தர்களோடு, ஞானிகளோடு அவர்களைச் சொல்வதற்கில்லை.

மஹா பக்திமான்களிலும் பரம ஞானிகளிலுங்கூட உத்தமமான கவிகளாக ரொம்பப் பேர் இருந்திருக்கிறார்கள். வேத ரிஷிகளிலிரந்து ஆரம்பித்து வால்மீகி, வ்யாஸர், அப்புறம் நம் ஆசார்யாள், நாயன்மார்கள், ஆழ்வார்கள், வேதாந்த தேசிகர், இன்னும் ஞானதேவர், துளஸிதாஸ், புரந்தரதாஸர், போதனா என்று நம் தேசத்தில் ஆத்மிகமாக மிகவும் உயர்வைப் பெற்றவர்களே மஹாகவிகளாகவும்

இருந்திருக்கிறார்கள். "நான் - ரிஷி. காவ்யம் குர்வதே", அதாவது, ரிஷியாக இருப்பவனைத் தவிர இன்னொருத்தனால் காவ்யம் பண்ணமுடியாது என்றே வசனம் இருக்கிறது. வேதத்தில் 'கவி' என்றாலே 'ரிஷி' என்றுதான் அர்த்தம். கவிக்கு லக்ஷணம் சொல்லும்போது "க்ராந்த தர்சி" என்று சொல்லியிருக்கிறது. அதாவது, ஸகல ஸத்யத்தையும் தெரிந்துகொள்கிற திறமை வாய்ந்தவனே கவி என்று அர்த்தம். அதற்கேற்ப நம் தேசத்து மஹான்களையெல்லாம் கவிகளாக இருந்திருக்கிறார்கள்.

நான் இங்கே அவர்களைச் சொல்லவரவில்லை. அந்த ஆதி வேத இதிஹாஸ காலத்துக்கப்புறம் காவ்யம் இலக்கியம் படைப்பதே வாழ்க்கையாகக் கொண்டிருந்தவர்களைத்தான் சொல்ல வந்தேன். கவி, இலக்கிய ஸ்ருஷ்டி கர்த்தா என்பதாகவே முக்யமாக நினைக்கப்படுபவர்களைப் பற்றிச் சொல்லவந்தேன்.

அக்காலங்களில் ராஜாதான் கலைகளை ரொம்பவும் ஆதரித்து, கலைகளை ஸம்மானிக்கிற patron -ஆக இருந்தான். அதனால் ராஜ ஸதஸில் இடம் பெறவேண்டும், ராஜாவிடமிருந்து 'அக்ஷர லக்ஷம்' என்கிற மாதிரியாக யதேஷ்டமான ஸம்பாவனை பெறவேண்டும் என்கிற ஆசையில் ராஜாவை ரொம்பவும் ஸ்துதி பாடிய கவிகளும் வித்வான்களும் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் அப்படியில்லாமல், ஸ்வய மரியதைக்குக் குறைவாக இருக்கிறது என்னும்போது, 'ராஜாவும் கெட்டான், ராஜ ஸதஸூம் கெட்டது' என்று உதறிவிட்டுப் போன கவிகளும் இருந்திருக்கிறார்கள். ஸம்ஸ்க்ருத கவிகளில் ப்ரதம ஸ்தானம் வஹிக்கும் காளிதாஸன், தமிழ்க் கவிஞர்களில் முதலிடம் பெற்ற கம்பர் ஆகிய இரண்டு பேர் விஷயத்திலுமே இப்படி நடந்திருக்கிறது.

## *தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

### பண்பாடு

## கவிகளின் தன்மான உணர்ச்சி

## மன்னனைப் பொருட்படுத்தாத மஹான்கள்

மஹான்கள் ராஜ ஸதஸ் வேண்டாம் என்று ஒதுக்கினால் அதில் ரொம்ப ஆச்சர்யப்படும்படியாக எதுவுமில்லை. 'ராஜாவே கூப்பிடுகிறான். அதனாலே எத்தனையோ பேரும் புகழும் பெறலாம்' என்னும்போது, அந்த வச்யத்துக்கு ஆட்படாமல் அவர்கள் இருந்ததற்கு நாம் மதிப்புக் கொடுக்கவேண்டும்தான். இப்படி, த்யாகையர்வாள் சரபோஜி ராஜா கூப்பிட்டபோது, "ராஜாவுடைய நிதி ஸௌக்யம் தருமா? ராமனுடைய ஸந்நிதி ஸௌக்யம் தருமா?" என்று பாடினதை எல்லாரும் கொண்டாடிச் சொல்கிறோம், இப்படியே இன்னும் அநேக மஹான்களும் ஈச்வரனைத் தவிர ராஜா, கீஜா யாரைப் பற்றியும் பாடுவதில்லை என்ற தங்கள் அபிப்ராயத்தை வெளியிட்டுச் சொல்லியிருக்கிறார்கள்.

"வாய்கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்"

என்று நம்மாழ்வார் சொல்லியிருக்கிறார்.

புலவர்களையெல்லாம் பார்த்து ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள். "அவனையும் இவனையும் எதற்காகப் பாடுகிறீர்கள்? சிவனையே பாடுங்கள்" என்று அறிவுறுத்தி ஒரு முழுப் பதிகமே பாடியிருக்கிறார். "கொடுக்கிலாதானை" ஏன் பாரிவள்ளல் என்று புகழவேண்டும் என்று கேட்டிருக்கிறார்.

சைவத்தை அப்பர் ஸ்வாமிகள் பரப்புகிறாரே என்று கோபங்கொண்டு, அப்போது ஜைன மதத்திலிருந்த மஹேந்த்ரவர்மப் பல்லவன் அவரைத் தண்டிப்பதற்காக ஆளனுப்பியபோது அவர் "நாமார்க்கும் குடியல்லோம்" பாடியதைவிட மஹான்களான கவிகளின் தீரத்துக்கு த்ரஷ்டாந்தம் இல்லை.

பக்தி, ஞானங்கள் போலவே பாண்டித்யத்திலும் சிறந்து விளங்கிய வேறே பல மஹான்களும் ராஜாவின் ஆஸ்தான வித்வானாயிருப்பதை த்ருண மாத்ரமாக உதறியிருக்கிறார்கள். ஆஸ்தான வித்வானாக மட்டுமில்லாமல் திருமலை நாயகருக்கு முக்ய மந்த்ரியாகவே இருந்தார் நீலகண்ட

தீக்ஷிதர். அவர் ஒரு ஸமயம் நாயகரின் தகாத ஸந்தேஹத்துக்கு ஆளானபடியால், அப்புறம் அவர் (நாயகர்) தப்பை உணர்ந்து மன்னிப்புக் கேட்டு கொண்டுங்கூட, "போதும் ராஜஸேவகம்" என்று மந்த்ரி பதவியை ராஜிநாமா பண்ணிவிட்டுத் தாம் பாட்டுக்கு ஒதுக்குப்புற மான ஒரு க்ராமத்துக்குப் போய்ப் பரம வைதிகமாக வாழ்க்கை நடத்த ஆரம்பித்துவிட்டார். இனிமேல், தம்முடைய வம்சத்திலேயே எவரும் ராஜ ஸேவகத்துக்குப் போகப்படாது, என்றும் அவர் சொல்லிவிட்டதாகச் சொல்வார்கள். முடிவிலே ஸந்நியாஸமே வாங்கிக் கொண்டார்.

வேதாந்த தேசிகரைப் பற்றிக்கூட இப்படிச் சொல்கிறார்கள். விஜய நகர ஸாம்ராஜ்யம் ஸ்தாபிதமானதற்குக் காரணமாயிருந்தவர் வித்யாரண்ய ஸ்வாமிகள், அவர் பேரிலேயே அவருடைய சிஷ்யர்களான ஹரிஹர - புக்க ஸஹோதரர்கள் "வித்யா நகரம்" என்று ஏற்படுத்திய ஸாம்ராஜ்யந்தான் "விஜய நகரம்" என்று திரிந்துவிட்டது. அவர் பரம அத்வைதி. (ஸ்ரீ சங்கர மடத்துப்) பீடத்திலேயே இருந்த அத்வைத ஆசார்யர். அஸாதராணமான பாண்டித்யம் பெற்றவர். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்றபடி அவர் தேசிகரிடம் மதிப்புக் கொண்டிருந்தார்.

இத்தனைக்கம் தேசிகர் அத்வைதத்தைக் காரஸாரமாகக் கண்டித்த வைஷ்ணவ ஆசார்யபுருஷர். யாரானாலும் அவர்களுடைய புலமையைப் போற்றி கௌரவிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டவர் வித்யாரண்யர். அவர் விஜயநகர ராஜ்யத்துக்கு ராஜகுருவாக இருந்ததால், அந்த ஆஸ்தானத்துக்கு வந்து அலங்கரிக்கும்படியாக தேசிகருக்கு அழைப்பு அனுப்பினார். ஆனால் தேசிகர் தமக்கெதற்கு ராஜ ஸதஸ் என்று அதை மறுதலித்துவிட்டார். அப்படி அவர் அனுப்பிய பதில்தான் 'வைராக்ய பஞ்சகம்' என்று ஐந்து ச்லோகங்கள் - என்று சொல்கிறார்கள்.

இப்படிப்பட்ட பெரியவர்கள் - 'மஹான்கள்' என்ற கணக்கிலே சேர்க்கப்பட வேண்டியவர்கள் - பட்டம், பதவி, ராஜாவின் பஹுமானம் ஆகியவற்றை வேண்டாமென்று உதாஸீனம் செய்தது போற்றத்தக்கதுதான் என்றாலும் இதை நாம் விசேஷமாக ஆச்சர்யப்பட்டுக் கொண்டாடுவதற்கில்லை. கவிகள் என்றே லோக வாழ்க்கையை ரஸித்து நடத்திக்

கொண்டிருந்தவர்களுங்கூட "ஆஸ்தான கவி" என்ற விருது வேண்டாம் என்று ஒதுக்கியதாக உள்ள எடுத்துக்காட்டுக்கள்தான் நாம் ஆச்சர்யப்பட்டுக்கொண்டாட வேண்டியவை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**வைராக்கியமும் மான உணர்வும்**

மஹான்கள் வைராக்யத்தின் மேல் ராஜ கௌரவத்தைப் புறக்கணித்தார்கள். கவிகளாகவே இருந்தவர்கள் மான உணர்ச்சியின்மேல் இப்படிப் பண்ணியிருக்கிறார்கள்.

மஹான்க்ள மான உணர்ச்சிக்கு மேலே போனதால் மானாபிமானங்களை விட்டுவிட்டவர்கள். மஹான்களாக இல்லாத மற்ற ஜனக்ஙள் மானத்தை விட்டு ஹீனமாகப் பிழைப்பதை அதோடு சேர்த்து நினைப்பதற்கில்லை. என்ன அவமானம் வேண்டுமானாலும் பட்டுக்கொண்டு ஆஸ்தான கவி என்றபெரிய பெயரில் இருந்துவிட்டால் போதும் என்று புகழ், ஸன்மானம் முதலியவற்றுக்காக மானத்தை விட்டால் அது ரொம்பவும் குறைவு. அப்படியில்லாமல் தீரத்துடன், துணிச்சலுடன், 'இன்டிபென்டென்டாக (ஸ்வதந்த்ரமாக) ஒரு கவி இருந்தாரென்றால் அதை அவனுடைய ஸ்டேஜை வைத்துப் பார்க்கும்போது விசேஷமாகப் போற்றிக் கொண்டாடத்தான் வேண்டும். நாம் இருக்கிற ஸ்டேஜில் நாமும் ஸ்வய லாபத்துக்காக மானத்தை விடாமல் அவர்களைப் போலத்தான் இருக்கணும் என்று பாடம் பெறவேண்டும்.

இவர்களில் காளிதாஸன், கம்பன் என்ற இரண்டு பேரையும் சொல்லிவிட்டேனே!அதனால் அவர்கள் கதையைச் சொல்லிவிடுகிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## பண்பாடு

### கவிகளின் தன்மான உணர்ச்சி

### காளிதாஸனும் போஜராஜனும்

வள்ளலாக வாரிக் கொடுத்துக் கவிஞர்களையும் அறிஞர்களையும் ஆதித்தவன் போஜராஜா. அவனுடைய ஆஸ்தான கவியாகக் காளிதாஸன் இருந்தான். போஜனுக்கு நல்ல ராஸிக்யம் உண்டு. அவனுக்கேகூடக் கவி பண்ணும் ஸாமர்த்யமுண்டு. அதனாலே ஆதரிக்கிற ராஜா, அவனால் ஆதரிக்கப்படும் கவி என்ற அந்த இரண்டு பேரும் இல்லாமல் கவியோடு இன்னொரு கவி என்று ஸமதையாக, ஸ்நேஹிதமாக ஸமமட்டத்தில் பழகி வந்தார்கள். இப்படிப் பழகிப்பழகி ஒருத்தருக்கொருத்தர் பரம ப்ரியமாய்விட்டார்கள்.

### நட்பு முறிந்தே பகைமை

இயற்கை எப்படி என்றால், எது ஒன்று ரொம்ப உச்சமாயிருக்கிறதோ அது மாறினால்தான் படு மோசமாகிவிடும். நல்ல பழம் அழுகிவிட்டால் ஸஹிக்கமுடியாமல் நாற்றமெடுக்கிறது. சுத்தமான நெய் கெட்டுப்போனால் வயிற்றைப் பிடுங்கிக்கொண்டு குமட்டுகிறது. கள்ளிச் சொட்டு மாதிரியான பால், துளி ஏதோ சேரப்படாத வஸ்து சேர்ந்துவிட்டால் கட்டி கட்டியாய்த் திரிந்து எதற்குமே ப்ரயோஜனமில்லாமல் ஆகிறது. இப்படித்தான் அத்யந்த ஸ்நேஹத்தில் கொஞ்சங் கொஞ்சம் எங்கேயாவது விரிசல் விட்டுவிடடால் அதுதான் பரம விரோதமாகிவிடுகிறது. அதி ப்ரியம், அதிலே அடைகிற இன்பம் ஆகியவை கொஞ்சம் பங்கப்பட்டுப் போனாலும் பரம த்வேஷம், ஒரே கோபம், துக்கம் என்றாகிவிடும். முதலில் இருந்ததற்கு தலை கீழாகிவிடும்.

இப்படித்தான் ஒரு ஸமயத்தில் காளிதாஸனுக்கும் போஜராஜாவுக்கும் இடையே இருந்த நெருக்கமான நட்பும்

நேர்மாறாய் மாறிற்று.

**தனக்கே சரமகவி கேட்டவன் !**

ஏதோ போதாத காலம், அவர்களுடைய பரஸ்பர அன்புக்கு த்ருஷ்டி பட்டாற்போல், திடீரென்று போஜனுக்கு ஒரு விபரீத ஆசை வந்தது. என்ன ஆசையென்றால், 'காளிதாசனின் காவ்யச் சுவையை நாம் பல தினுஸிலே பருகியாய் விட்டது. இருந்தாலும் ஒன்று பாக்கி. அதை நம் ஆயுஸிலே நாம் கேட்டு அநுபவிப்பதற்கில்லை. என்னவென்றால், நாம் செத்துப்போய் விட்டால் அப்போது அவன் சரமகவி பாடுவானோல்லியோ. அதிலே நம் அந்யோந்யத்தை மனஸை பிசைகிற மாதிரி கொட்டி சோக ரஸம் அப்படியே தளும்பும்படியாகச் செய்வான். இதுவரைக்கும் கேள்விப்படாத உபமானம் கொடுத்து பிரிவுத் துயரம் நெஞ்சை உருக்கும்படியாக - 'இரங்கற்பா' என்று இப்போது சொல்கிறார்களே அந்த - சரம ச்லோகம் பண்ணுவான். அதை நாம் எப்படிக் கேட்பது?' என்றிப்படி ஆசை வந்து விட்டது.

அந்தச் சரமகவி ரொம்பவும் உசந்ததாக இருக்குமென்ற எண்ணத்தில் அதைத்தான் எப்படியாவது கேட்டாக வேண்டும் என்ற ஆசை போஜனுக்கு தலைக்கேறிவிட்டது. அதனால் விபரீதமாக ஒன்று பணணினான்.

காளிதாஸனை அழைத்துக்கொண்டுவரச் சொன்னான்.

"நான் செத்துப்போய் விட்டதாக நீ கற்பனை செய்த பார்த்துக்கொள். நீதான் அம்பாளின் கடாக்ஷத்தினல் எதையும் அஸாத்யமாகக் கல்பனையிலேயே பார்க்கிற வனாயிருக்கிறாயே!அதனால், இப்படிக் கல்பனை பண்ணி, அப்போது உன் மனஸ் துடித்து எப்படி துக்கத்தில் சரம ச்லோகம் செய்வாயோ அந்த மாதிரி இப்போதே கவனம் பண்ணி எனக்குச் சொல்லிக்காட்டு. யாருக்கு எப்போது என்ன ஆகுமோ? எனக்கே அடுத்தக்ஷணம் என்ன ஆகுமோ? அதற்கப்புறம் நீ கவி செய்தால் அதில் என்கென்ன லாபம்? ஆகையால் இப்போதே இப்படிப் பண்ணிக்காட்டு" என்றான்.

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**காளிதாஸன் மறுப்பும் அதன் சிறப்பும்**

அதற்குக் காளிதாஸன் ஒப்புக்கொள்ளவில்லை. யாராயிருந்தாலும் உயிரோடே இருக்கிறவனை, அதிலும் ராஜாவைப் பற்றி அவன் எதிரிலேயே சரம ச்லோகம் பாடுவதற்கு இஷ்டப்படத்தானே மாட்டார்கள்?

ஆனால் இப்படி ஒப்புக்கொள்ளாத பிறகும் போஜ ராஜா விடாப்பிடியாக, "நான் ராஜா. இது ராஜாக்ஞை. இதற்கு நீ கீழ்ப்படியாவிட்டால் என் ராஜ்யத்திலேயே இருக்கக்கூடாதென்று தேசப்ரஷ்டம் பண்ணிவிடுவேன்" என்று மிரட்டி வற்புறுத்திய போது, மற்ற ஸாதாரணப்பட்ட கவிகளாயிருந்தால் ஒப்புக்கொண்டிருக்கக்கூடும். "நமக்கு என்னத்துக்கு ராஜவிரோதம்? இவன் லோகத்தை விட்டுப் போனானென்று பாடப்படாது என்பதற்காக நாம் ஏன் வீட்டையும் வாசலையும் ஊரையும் விட்டு ப்ரஷ்டமாகப் போய் அவதிப்படணும்? சரம ச்லோகந்தான் பாடித் தாம்பாள் நிறைய ஸ்வரணமும் ரத்னமுமாக வாங்கிக்கொள்ளலாமே" என்று நினைத்திருக்கக்கூடும்.

ஆனால் காளிதாஸன் அப்படி ஸம்மதிக்கவில்லை. 'ராஜாக்ஞையை மீறி நாம் ஏன் கஷ்டத்துக்கு ஆளாக வேண்டும்?' என்றே கோழைத்தனமான எண்ணமோ, அவன் சொல்கிறபடி தான் பாடி அக்ஷரலக்ஷமாகக் குவித்துக்கொள்ளலாமே என்ற தாழ்வான ஸ்வயலாப எண்ணமோ அவனுக்குத் துளிக்கூட இல்லை. போஜன் சொன்னதைக் கேட்காமல், தன்னுடைய ஸ்வய மரியாதையை விடாமல் ஸ்வாதந்த்ரியமாகக் கடைசிமட்டும் அவனிடமே 'ஸ்ட்ராங்'காக மறுத்துப் பேசினான். "ப்ரஷ்டனாகவே போகிறேன்" என்று சொல்லிவிட்டு தனக்குப் பரம ப்ரியமான போஜன், அவனுடைய ராஜ்யம், தன் வீடு வாசல் எல்லாவற்றையும் விட்டுவிட்டுப் போய்விட்டான்.

கவிவாணர்களின் தன்மானத்தைப்பற்றிச் சொல்லவந்தேன். ஆனால் காளிதாஸன் விஷயத்தில் மான உணர்ச்சி மாத்ரமில்லாமல் இன்னும் அவனுடைய வேறு பல குண விசேஷங்களும் இதிலே தெரிகின்றன. அவனுடைய உண்மையான ஸ்நேஹ ஹ்ருதயம் இதில் தெரிகிறது. உயிரோடே இருக்கிற தன்னுடைய குழந்தை செத்துப்போய்விட்டதென்று பாடவேண்டுமென்றால், எப்படி ஒரு தாயாருக்கு மனஸ் இடம் கொடுக்காதோ, அப்படி ஸ்நேஹ தர்மத்தினாலே காளிதாஸனுக்கு போஜனின் மரணத்தைக் கல்பித்துப் பார்த்துக் கவிதை கட்ட மனஸு இடங்கொடுக்கவில்லை.

இன்னொரு காரணத்தாலும் அவன் கல்பனையாகச் சரமகவி பாட முடியாமலிருந்தது. ரிஷிகளைப் பற்றி பவபூதி "உத்தரராம சரித"த்தில் ஸ்ரீ ராம சந்த்ர மூர்த்தியின் வாயிலாக ஒரு உண்மையைச் சொல்கிறார். "ஏனைய மக்கள் என்ன நடக்கிறதோ அதைச் சொல்வார்கள். ரிஷிகளோ என்ன சொல்கிறார்களோ அது நடந்துவிடுகிறது. ஒரு விஷயத்தை மற்றவர்கள் வார்த்தையாகச் சொல்கிறார்களென்றால், ரிஷிகளைப் பொறுத்தமட்டிலே அவர்கள் சொல்கிற வார்த்தையை விஷயம் ஓடிப்போய்ப் பிடித்துக்கொண்டு நிஜமாகிவிடுகிறது - வாசம் அர்த்தோ(அ)நுதாவதி" என்று ராமர் வஸிஷ்டரைக் குறித்துச் சொல்வதாக பவபூதி ஒரு General truth-ஐ (பொது உண்மையை)ச் சொல்கிறார்.

ரிஷியும், தெய்வாநுக்ரஹம் பெற்ற அருட்கவியுட் ஒன்று என்பதற்கேற்ப, அம்பாளின் பரிபூர்ண க்ருபையைப் பெற்றறிந்த காளிதாஸினின் வாக்குக்கும் இப்படிப்பட்ட சக்தி இருந்தது. அதாவது அவன்வாக்கால் என்ன கவிதை வந்தாலும் அது நிஜமாகிவிடும். அவன் கல்பனையாகச் சொல்வதே ஸத்யமாகிவிடும்.

ஆனபடியால், போஜராஜா சொன்னபடி அவன் கல்பித்துச் சரமகவி பாடினால்கூட போஜன் நிஜமாகவே சரமகவிக்குப் பாத்ரமாகிவிடுவான்

இதையும் காளிதாஸன் மனஸைவிட்டு போஜனுக்கு சொல்லத்தான் செய்தான்.

அப்புடியும அவனுக்கு எவ்வளவோ உயர்ந்த குணங்களுள் அந்த போஜனுக்கு, 'நாம் ராஜா. நம் வார்த்தையை ஒரு ப்ரஜை கேட்காமலிருப்பதா? உயிரே போவதானாலும் நம் வார்தையை நாமே ரத்து பண்ணிவிட்டு ஒரு ப்ரஜை சொல்வதை ஒப்புக்கொள்வதா?' என்ற எண்ணம் ஏற்பட்டது. இதுதான் அதிகாரம் பண்ணுகிற கோளாறு!ஒரே பிடிவாதமாயிருந்தான்.

காளிதாஸனும் அதற்கு மேலே பிடிவாதம் பிடித்து ஊரைவிட்டே போய்விட்டான். அதிலே அவனுடைய த்யாக சிந்தையும், மற்ற கவிகளிடம் அவனுக்கு இருந்த பரிவும் கூடத் தெரிகிறது.

எப்படியென்றால்,

போஜனின் வற்புறுத்தல் தாங்காமலோ, அல்லது உயிரையே கொடுத்தாவது ஒரு உத்தமான கவிதையைப் பெற வேண்டுமென்று விரும்பும் அந்த அதிசய ரஸிகனின் ஆசையைப் பூர்த்தி செய்துதான் தன்னுடைய கவி தர்ம மென்று கருதியோ காளிதாஸன் சரம ச்லோகம் பாடினால் என்ன ஆகும்? போஜன் போய் விடுவான். ஆனால் அதனால் காளிதாஸனுடைய கீர்த்தி, ஸம்பத், அந்தஸ்து முதுலானதுகளுக்கு ஒரு குறையும் வந்துவிடாது. 'நான் முந்தி', 'நீ முந்தி' என்று மற்ற ராஜாக்கள் அவனைக் கூப்பிட்டு உபசாரம், ஸன்மானம் நிறையப் பண்ணி விடுவார்கள். ஆனாலும் காளிதாஸன் தன்னைப் பற்றி மட்டும் நினைக்கவில்லை. மற்ற எல்லாக் கவிகளின் நிலைமையைப் பற்றி நினைத்தான். அவனுக்கும், அவனுக்கு அடுத்தபடி ரொம்பவும் யசஸோடு இருந்த ஒரு சில கவிகளுக்கும், எந்த ராஜா இருந்தாலும் போனாலும் கவலையில்லை. அவர்களுக்கு ஜாம் ஜாமென்று நடந்துவிடும், ஆனால் அள்வளவு புகழ், அவ்ளவு ப்ரதிபா சக்தி இல்லாத மற்ற கவிகள் பலபேர் இருக்கிறார்களே, அவர்களின் பாடு, போஜன் போய் விட்டால் என்ன ஆகும்? யாராயிருந்தாலும் உதாரமாக வாரிக்கொடுத்த போஜன் போய்விட்டால் அப்புறம் வேறே எந்த ராஜா, அல்லது ப்ரபு இந்தக் கவிகளை ஆதரிப்பான்? தான் சரம ச்லோகம் பாடி போஜன் மரணமடைவதால் ஏற்படக்கூடய எத்தனையோ கஷ்டங்களுக்கு மேலாகக் காளிதாஸன் தன்னுடைய

ஸஹோதர கவி குலத்தில் அவ்வளவாக சரக்குப் போகாதவர்களுக்கு ஏற்படக்கூடிய அநாதரவைதான் பெரிசாக நினைத்தான்.

அதனால் இப்போ சரம ச்லோகத்துக்கு அட்சர லட்சத்துக்குமாக இல்லாமல் அட்சர கோடியாகவே அட்வான்ஸில் போஜனிடமிருந்த வாங்கிக்கொண்டு கவி கட்டிவிடலாமாயினும், அந்த மாதிரிப்பண்ணாமல், த்யாக புத்தியுடன், அவ்வளவாக ஸாமர்த்யம் போதாத lesser poets - இடம் உள்ள அன்பும் ஒரு காரணமாகி, அதனால் ப்ரஷ்டனாவதற்கு ஸம்மதித்து ஊரை விட்டே போய்விட்டான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**மாறு வேஷம்**

தாரா நகரம் என்பதுதான் அந்த ஊர். தற்போது Dhar என்று வழங்குகிறது. மத்யப்ரதேஷில் இருக்கும் ஊர். விக்ரமாதித்யனின் தலைநகரமாக வித்வத் ஸமூஹமும் கவி ஸமூஹமும் உன்னத ஸ்திதியிலிருந்து உஜ்ஜயினிக்குத் தெற்கில் நாற்பது ஐம்பது மைலுக்குள் "தார்" இருக்கிறது.

போஜ ராஜ்யத்தை விட்டு எங்கே ஓடினாலும் காளிதாஸனை லோகம் அடையாளம் கண்டு கொண்டாட ஆரம்பித்துவிடும். அப்படிக் கொண்டாட வேண்டாம் என்றே காளிதாஸனுக்கு இருந்தது. ப்ராண ஸகாவாக இருந்த போஜன் தன்னைத் திரஸ்காரம் பண்ணின விட்டு லோகத்தில் வேறு யாரும் தன்னை ஆதரிக்க வேண்டிய தில்லை, அப்படி ஆவதற்குத் தான் விட்டால் அது அவனிடம் தனக்குள் உத்தமமான ஸ்நேஹத்துக்கே த்ரோஹம் செய்கிற மாதிரி என்று காளிதாஸன் நினைத்தான். அத்தனை உசந்த எண்ணம் அவனுக்கு இருந்தது. அதனால் ஊரைவிட்டு ஓடின

அப்புறம், தான் காளிதாஸன் என்றே தெரியாமல் ஏதாவது மாறுவேஷம் போட்டுக்கொண்டு சுற்றுவது என்று முடிவு பண்ணினான். என்றைக்காவது ஒரு நல்ல காலம் பிறந்து மறுபடியும் தான் போஜனோடு சேரும்படியாக இருக்கலாமென்பதற்காக, இப்படி மாறுவேஷத்தில் உயிரை வைத்துக்கொண்டிருக்கலாமென்று நினைத்தான்.

என் மாதிரி வேஷம் போட்டுக்கொண்டான். என்று கதை!அதாவது, பைத்தியக்கார சாமியார் மாதிரி வேஷம் போட்டுக்கொண்டானாம்!

அவன் ஊரை விட்டுப் போன கொஞ்ச நாளுக்கு அப்புறம், போஜராஜாவினால் அவனில்லாமல் தாங்க முடியவில்லை. அதனால் அவன் குடுகுடுப்பாண்டி வேஷம் போட்டுக் கொண்டு காளிதாஸனைத் தேடிக்கொண்டு புறப்பட்டான். விநோதமான ஒரு விதத்தில் அவனைக் கண்டுபிடித்தான் என்று கதை.

நான் சொல்ல வந்தது, ஒருத்தன் ராஜா என்பதற்காகக் கூட அவன் சொல்வதற்கெல்லாம் ஸலாம் போடுவது என்றில்லாமல் தங்கள் தன்மானப்படி மனஸ்ஸாக்ஷியை காப்பாறிக் கொண்டவர்களாக அநேக கவிகள் இருந்திருக்கிறார்கள். அவர்களில் காளிதாஸனும் ஒருவன் என்பதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**மரபுவழிக் கதைகளும் ஆராய்ச்சியும்**

தாரா, உஜ்ஜயினி என்று இரண்டு ஊர்ப்பெயர் சொன்னேன். தாராதான் போஜன் ஆட்சி செய்த மாளவ ராஜ்யத்துக்குத் தலைநகரம், உஜ்ஜயினி அதை அடுத்து மேற்கிலே உள்ள அவந்தி ராஜ்யத்துக்குத் தலைநகர். க்ருஷ்ணா, கோதாவரி நதிகளுக்கிடையில் ஆதியில் விஸ்தாரமாயிருந்து, இப்போது

'பேரார்' என்கிற பகுதிக்கு மட்டும் பேராயிருக்கிற 'விதர்ப'த்துக்கு வடக்காக இருப்பதை மாளவமும் அவந்தியும். தலைநகரான உஜ்ஜயினிக்கே அவந்தி என்றும் பெயர் உண்டு. அங்கேயிருந்து ஆட்சி பண்ணின விக்ரமாத்தியன்தான் காளிதாஸனின் patron-ஆக இருந்தவன், போஜன் இல்லை, பல்லாளன் என்கிறவன் ஏதோ கர்ண பரம்பரைக் கட்டுக்கதைகளைத் திரட்டி "போஜ ப்ரபந்தம்" என் எழுதியிருப்பதில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களுக்கு உறுதி செய்யும் ஸத்யத்தன்மை இல்லை

என்று ஆராய்ச்சி செய்கிற 'ஸ்காலர்'கள் சொல்கிறார்கள். அப்புறம், 'அந்த விக்ரமாதித்யன் யார்? சகர்களை ஜயித்து விக்ரம சகாபதம் ஏற்படுத்திய உஜ்ஜயினி சக்கரவர்த்தி சந்த்ர குப்தனா, பாடலிபுத்ரத்திலிருந்து ஆட்சி செய்த குப்த வம்சத்து இரண்டாவது சந்த்ரகுப்தனா - என்றிப்படி, பல சந்த்நர குப்தர்களில் எவன்?' என்பதிலும் அவர்களுக்குள்ளேயே அபிப்ராயபேதங்கள் இருக்கின்றன!

காளிதாசன் மட்டுமில்லை, இன்னும் அநேக கவிகளைப் பற்றி - ஸம்ஸ்க்ருத இலக்கியத்தில் மட்டுமில்லை, எல்லா பாஷையிலும் இருந்த இலக்கிய கர்த்தர்களைப் பற்றி - இப்படி அவர்கள் வாழ்ந்த காலம், தேசம் எல்லவாற்றையும் பற்றி இட்டுக் கட்டின கதைகள் பரவி விட்டன என்கிறார்கள். உதாரணமாக, தமிழிலேஎடுத்துக்கொண்டால், திருவள்ளுவரும் அவ்வையாரும் சமகாலத்தவர்கள், அவர்கள் அண்ணா - தங்கையாக வேண்டும் என்று ஒருகதை, இன்னொரு பக்கம் அவ்வையார், கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி எல்லாவற்றையும் ஸம காலத்தவர்களாக்கி வழங்குகிற அநேக கதைகள். இவையெல்லாமே வெறும் கதைதான். 'ஹிஸ்டாரி'கலாக ஸரியாயில்லை என்கிறார்கள்.

கதையாகத்தானிருக்கட்டும், fact-ஆகத் தானிருக்கட்டும், எதுவானாலும் இவற்றை எடுத்துக்கொண்டு ரஸிக்க வேண்டுமென்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கதைகள் எந்தக் கவிவாணர்களைக் குறித்தனவோ அவர்கள் கல்பனையாகப் பல பாத்ரங்களை வைத்துக் காவ்ய, நாடகங்கள் எழுதியிருக்கிறார்கள். நிஜமாக இருந்த பாத்ரங்களின் மேலேகூடத் தங்கள் கல்பனையை ஏற்றி,

ஸம்பவங்களை மாற்றி, இலக்கியச் சுவை அதிகரிக்கு ம்படியாக மெருகு போட்டிருக்கிறார்கள். ஒரே ராமாயணத்தையே வால்மீகி ஒருவிதமாகச் சொன்னார், கம்பர் ஒருவிதமாக, துளஸிதாஸ் இன்னாருவிதமாக, க்ருத்திவாஸ் இது எல்லாவற்றைக்கும் வித்யாஸமாகச் சொன்னார்கள் என்றால் எதனால்? அவரவரும் தங்கள் கல்பனா சக்தி, அநுபவம், 'டேஸ்ட்', தாங்கள் எடுத்துக்கொண்டுள்ள நோக்கம் ஆகியவற்றை அநுஸரித்து, நிஜமாக நடந்ததையே மாறுதல்கள் செய்து சொல்லலாம் என்று நினைத்ததனால்தான். திணீநீமீ-க்கு (நடைமுறை உண்மைக்கு) ஒரு ஸத்யத்வம் உண்டு என்றால், ஒரு உத்தமமான கவியின் கல்பனை, நோக்கம் முதலானதுகளுக்கும் ஒரு ஸத்யத்வம் உண்டு என்று நினைத்து இப்படி மாற்றியிருக்கிறது. நாமும் அந்தக் காவ்ய, நாடகங்களை ரஸித்துப்படித்துப் பலவிதத்தில் பயனடைகிறாம்.

அந்தக் கவிகள் வேறே பாத்ரங்களைப் பண்ணினது போலவே, அவர்களையே பாத்ரங்களாக்கி மற்றக் கவிகளும், ஜனங்களும் கதைகள் பண்ணினால், இதையும் நாம் ரஸித்து இதிலும் வெளியாகிற அநேக உண்மைகளாலும் நீதிகளாலும் பயனடைய வேண்டியதுதானே? கவி ஸமூஹமாக இல்லாத ஜன ஸமூஹம் இப்படிக் கதை கட்டிற்று என்றால்கூட, ஒரு பெரிய பண்பாட்டின் கீழே வருகிற நம் தேசத்தில் பரம்பரை பரம்பரையாக மக்கள் ஏற்றுக்கொண்டு, ஸந்தோஷப்பட்டுப் பயன் பெற்ற மரபுவரிக் கதைகள் இவை என்னும்போது அவற்றுக்கு ஒரு 'வெய்ட்', அவற்றை அப்படியே தள்ளிவிட முடியாததான ஒரு மதிப்பு, ஏற்படத்தான் செய்கிறது.

'நெருப்பில்லாமல் புகையாது' என்ற மாதிரி ஒரு ஆதாரமும் இல்லாத இந்த எல்லாக் கதைகளும் தோன்றியிருக்காது. சிலேதா, பலதோ கூட, ஆதாரமில்லாமலிருந்தாலும், எல்லாமே அப்படி இருந்துவிடாது. ஸம்பந்தப்பட்ட ஊர்கள், பேர்கள், காலம் முதலான விவரங்கள் தப்பாக இருக்கிறபோது கூட இந்தக் கதைகளில் வருகிற ஸம்பவத்துக்கும், அதிலே வெளியாகிற கவியின் குணப்பான்மைக்கும் ஆதாரம் இருக்கவே செய்யும்.

இந்த மாதிரிக் கதைகளில் ஒன்று மட்டும் ஒப்புக்கொள்ள முடியாததாக இருப்பதைச் சொல்லவேண்டும்.

கம்பனானாலும், ஸரி, காளிதாஸனானலும், ஸரி, எந்தக் கவியையும் தாஸிகளோடு ஸம்பந்தப்படுத்தி உண்டாயிருக்கும் கதைகளைத்தான் சொல்கிறேன். எத்தனையோ பக்தியை ஊட்டும் படியாகவும, உசந்த தத்வ - வேதாந்தக் கருத்துக்கள் ஜ்வலிக்கும்படியாகவும், 'கல்ச்சர்' என்று எடுத்துக்கொண்டாலும் அதில் உச்சமான அம்சங்களை ப்ரதிபலிப்பதாகவும் காவ்ய நாடகாதிகள் செய்துள்ள மஹாகவிகளை ஸொந்த வாழ்க்கையில் பிசகி நடந்தவர்களாகச் சொல்வதில் ஸத்யம் இருப்பதற்கில்லை. 'பின்னே ஏன், நெருப்பில்லாமல் இங்கே மட்டும் புகையணும்?'என்று கேட்டால், இந்தப் புகைக்கும் ஆதாரமாக ஒரு நெருப்பைச் சொல்லலாம். என்ன வென்றால், காவ்யங்களின் லக்ஷணப்படி அவற்றிலே சிருங்கார ரஸம் நிறைய இருக்கத்தானே செய்யும்? அது தான் புகைக்கு நெருப்பு இத்தனை ச்ருங்காரமாகக் கவிதை பண்ணினவர்களென்றால், அவர்களே இதிலே ரொம்பவும் ஈடுபட்டவர்களாகத்தான் இருந்திருக்கவேண்டும் என்று தப்பாக நினைத்துக் கதைகள் செய்தவிட்டார்கள்.

பிற்காலத்தில் நடிகர்கள், கவிகள் ஆகியவர்கள் ரொம்பவும் உல்லாஸப் பேர்வழிகளாக ஆகிவிட்டதை வைத்து, முற்காலத்தில் சாஸ்த்ரோக்தமாக ஆட்சி நடந்தபோது ராஜஸதஸிலே ஸத்வித்வான்களும் மெச்சும்படியாக இருந்த கவிகளும் இப்படியே இருந்திருப்பார்களென்று நினைத்து விடப்படாது. ஒருத்தர், இரண்டுபேர் அப்படி இருந்தும் இருக்கலாம். ஆனால் எல்லாரையும் அப்படி வைத்துவிடுவது ஸரீயில்லை.

இந்த ஒரு அம்சத்தைத் தவிர மற்றபடி மொத்தத்தில் குறைந்த பக்ஷம் கதையாகவேயாவது எல்லாவற்றையும் ஏற்று ரஸிக்க வேண்டியதுதான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

## கவிகளின் தன்மான உணர்ச்சி

## கம்பரும் குலோத்துங்கனும்

கம்பருக்கு வருகிறேன்.

பத்தாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில் அதுவா, இதுவா என்று கம்பருடைய காலத்தைப் பற்றி உள்ள ஆராய்ச்சிகள் இப்போது நமக்கு வேண்டாம். அவர் நாளில் ஆட்சி பண்ணினது விக்ரம சோழனா, குலோத்துங்கனா. குலோத்துங்கன் என்றால் எத்தனாவது குலோத்துங்கன் என்ற விவாதம் வேண்டாம். கதைதான் வேண்டும். கதையானாலும் அதிலே அவருடைய குணப் பண்புக்கு விதை இருக்கிறது என்று மதித்துக் கேட்பதுதான் நமக்கு வேண்டியது.

போஜனும், காளிதாஸனும் மாதிரிதான் குலோத்துங்க சோழனும், கம்பரும் அத்யந்தமாயிருந்திருக்கிறார்கள். அதனாலே கம்பர் அவனிடம் ரொம்ப ஸ்வாதீனமாகப் பேசுவார்.

பெரிய ராஜ்யத்தைத் தன் ஆதீனத்தின் கீழே வைத்திருக்கிறோம் என்பதை ஒரு நாள் குலோத்துங்கன் ரொம்பப் பெருமையாகச் சொல்லிக்கொண்டான்.

உடனே கம்பர் ஸ்வாதீனத்தின் பேரில், "ராஜ்யமே உன் ஆதீனத்திலிருக்கிற தென்றாலும், நீ என் ஆதீனத்தில்தானே இருக்கிறாய்?" என்று கேட்டுவிட்டார். ப்ரியத்தின் பேரிலே, மனஸிலே எந்த அதிகார, அஹங்காரமும் இல்லாமல்தான் இப்படிச் சொன்னார்.

ஈச்வரனையே பக்த பராதீனன் என்பது - "இறைவரோ தொண்டருள்ளத்(து) ஒடுக்கம்" என்பது - ஈச்வரனுக்குத் தானே பெருமை? அப்படி பெரிய புவியரசனும் கவியரசரான தமக்கு அடக்கமென்பது அவன் பெருமையை - கலையை மதிக்கும் அவனுடைய ராஸிக்யப் பெருமையை - காட்டுவது தான் என்று நினைத்து வெள்ளையுள்ளத்தோடு கம்பர் சொன்னார்.

அதிகாரத்திலுள்ள ஒருவர் ரொம்பவும் ஜாக்ரதையாகயிரு ந்தாலொழிய அந்த ஸ்தானத்தின் போதை எப்போதாவது ஒரு

போது தலைக்கேறத்தான் செய்யும். இப்போது குலோத்துங்கனுக்கு அப்படித்தான் ஆயிற்று. 'ராஜாவான தனக்கு மேலே என்று இந்தப் பாட்டுக்காரன் சொல்லிக் கொள்வதா?' என்று அஸாத்ய கோபம் வந்தது.

அதில் ஸ்நேஹம் தான் பரம விரோதமாக மாறுமென்று முன்னேயே சொன்னேனல்லவா? இந்தக் கதையிலும் அப்படி ஆயிற்று.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**நட்பு பகையாவதன் நுட்பம்**

காரணம் என்னவென்றால் - அவ்வளவாக நெருங்கிய பழக்கமில்லாதவர்கள் நமக்குப் பிடிக்காததாக ஏதாவது செய்துவிட்டாலோ, சொல்லிவிட்டாலோ, 'நம் மனஸு இவர்களுக்குப் புரிய வேண்டுமென்பதில்லை. அதனாலே அதற்கு எப்படி ஹிதமாக நடந்துக்கணும் என்று தெரியாமல் இவர்கள் வேறு தினுஸாக நடந்துகொள்கிறார்கள். இதைப் பெரிய குற்றமாக எடுத்துக்கொள்வதற்கில்லை' என்று நம் மனஸே கொஞ்சம் ஸமாதானம் பண்ணிக்கொண்டுவிடும். நமக்குப் பிடிக்காததைப் பழக்கமில்லாதவர் பண்ணினாலும் குற்றமாகத்தான் தெரியும், கோபம்தான் வரும். ஆனாலும் பெரிய குற்றமாகத் தெரியாது, ஸஹிக்கமுடியாத கோபம் வராது. நமக்கு ரொபவும் பழக்கமானவர் பிடிக்காததைப் பண்ணும்போதுதான், 'நம் மனஸ் நன்றாகத் தெரிந்தும் அதை க்லேசப்படுத்தும்படியாக இப்படிப் பண்ணுகிறார்களே!இவர்கள் நம் எண்ணத்தை மதிக்காமல் இந்த மாதிரி செய்வதா, செய்வதா?" என்று மஹா கோபம் வந்து, அவர்கள் மன்னிக்க முடியாத குற்றம் பண்ணினதாகத் தோன்றிவிடுகிறது.

இப்படித்தான் தன்னைக் கம்பர் மதிக்கவில்லை என்று சோழ

ராஜாவுக்கும், தன் மனஸைத்தான் அவன் புரிந்து கொள்ளவில்லை என்று கம்பருக்கும் தாங்கமுடியாத ஆற்றாமை உண்டாகி, வார்தை வலுத்தது.

காளிதாஸன் கதை போலவே சோழராஜாவும் "நீ என் ராஜ்யத்தைவிட்டுப் போ!" என்று கம்பரிடம் சொல்லிவிட்டான்.

கம்பரின் ரோஷமும் சபதமும்

இப்படி ஒரு ராஜாக்ஞை என்றால் மற்றவர்கள் ராஜாவின் காலிலே விழுந்து கெஞ்சிக் கூத்தாடி மன்னிப்புக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். ஆஸ்தான கவியாக வேறே யாராவது இருந்தால் ராஜாவின் பேராதரவை இழக்கக்கூடாது என்று நினைத்து, 'என்ன இருந்தாலும் நாடாளும் மன்னனை நமக்கு அடங்கியவன் என்றது ஸரியில்லைதான்' என்று வாபஸ் வாங்கிக்கொண்டு ஸ்தானத்தைத் தக்க வைத்துக் கொண்டிருக்கக்கூடும்.

ஆனால் கம்பர் என்ன பண்ணினாரென்றால்,,, அவருக்கு ஒரேயடியாகத் தன்மான உணர்ச்சி பொங்கி, ரோஷத்தோடு,

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?

உன்னையறிந் தோதமிழை ஓதினேன்?"

என்று குலோத்துங்கனைத் தூக்கி எறிந்து பேசிவிட்டு, ராஜ்யத்தை விட்டுப் போயே போய்விட்டார்?

போகிறதுக்கு முன்னாடி இன்னொன்றும் சொன்னார்.

இப்போது நான் சொன்னது அந்த ஸந்தர்ப்பதில் கம்பர் சொன்ன செய்யுளின் முதல் பாதிதான். 'நீ காப்பாற்றுவாய் என்பதற்காகவா நான் தமிழ் படித்ததும் கவிதை செய்வதும்?' என்று இங்கே கேட்டவர், பின்பாதியில் என்ன சொன்னாரென்றால், "நீ இல்லாவிட்டால் என்ன? என்னை, 'வா, வா' என்று கூப்பிட்டு மரியாதை செய்ய வேறே மன்னர்கள் இல்லையா என்ன? என்னை ஆஸ்தான கவியாக வைத்துக் கொள்ள ஆசைப்படாத வேந்தர்கூட உண்டா?" என்று ஸவால் விடுகிற மாதிரிக் கேட்டார்.

(ஸவால் விடுகிற) மாதிரி மட்டுமில்லை. நல்ல ஸவாலாகவே,

"புவியரசனைக் கவியரசன் தனக்கு அடக்கமாக்கிக்கொள்ள முடியாது, இவன்தான் அவனுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்றாயல்லவா? நீயே பார்த்துக்கொள், இப்போ நீயே யாரை நினைத்துப் பயப்பட்டுக் கொண்டிருக்கிறாயோ அந்த சேர மஹா ராஜாவையே எனக்கு அடங்கியிருக்கும் அடைப்பைக்காரனாகப் பண்ணி அழைத்துக் கொண்டு வருகிறேன்" என்று சபதம் கூறிவிட்டுப் புறப்பட்டார்.

அடைப்பைக்காரன் என்றால், ஒரு பெரிய மநுஷரின் கூடவே அவருடைய தாம்பூலப் பொட்டியைத் தூக்கிக் கொண்டு வந்து, அவர்கள் கேட்கிறபோது அவருக்கு வெற்றிலை மடித்துத் தருகிற பணியாள். அடைக்காய் என்றால் பாக்கு. அதை வெற்றிலையோடு போட்டு வைத்திருக்கிற பை, அல்லது பெட்டியைக்கூட, அடைப்பை என்று அடப்பம் என்றும் சொல்வார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**கம்பர் - காளிதாஸன் ஒப்பீடு**

அன்றுவரையில் ப்ராண ஸ்நேஹிதமாயிருந்த போஜன் ப்ரஷ்டன் பண்ணின பிறகுகூட, உலகத்தின் கண்ணில் அவன் தப்பைக் காட்டிக் கொடுக்கிற மாதிரி தான் வேறே எந்த ராஜாவிடமும் போவதில்லை என்று காளிதாஸன் பெரிய மனஸோடு இருந்திருக்க, கம்பர் இந்த மாதிரி ஸவால் விட்டிருக்கலாமோ என்றால், அவரவர் இருந்த ஸந்தர்ப்பத்தில் காளிதாஸன் அப்படிப் பண்ணியதும், கம்பர் இப்படிப் பண்ணியதுந்தான் ஸரி. காளிதாஸனுக்கு போஜனிடம் அபிப்ரயாய பேதம் உண்டானது எதை வைத்து? அவன் சரம கவி கேட்டதை வைத்துத்தான். அவன் ஏன் அப்படிக் கேட்டான்? காளிதாஸனுடைய வாக்விசேஷத்தில் மிகுந்த பற்று வைத்திருந்ததால்தான் தான் போனபின் காளிதாஸன் செய்யும் சரம கவி உள்ளத்தை அப்படியே

உருக்குவதாக இருக்கும் என்ற உசந்த எண்ணத்தினால் தான், அப்படிப்பட்ட கவிதையைத் தான் உயிரோடிருக்கும்போதே கேட்டுவிட வேண்டுமென்று வற்புறுத்தினான். ஆக, அபிப்ராய பேதம் ஏற்பட்டாலும் அதற்கு அடிக்காரணம் போஜன் காளிதாஸனின் கவிதையில் வைத்திருந்த மோஹந்தான். அப்படி தன்னுடைய கவிதை கேட்பதற்காகவே உலகத்தில் யாரும் பயப்படுகிற அச்சான்ய எண்ணம் இல்லாமல் போஜன் அவனுடைய மரணத்தைப் பற்றியே பாடிக் கேட்க வேண்டுமென்றபோது, அப்படிப்பட்ட மஹா ரஸிகனை விட்டபின் இன்னொருத்தன் ஆதரவைப் பெறக் காளிதாஸன் மாதிரியான ஒரு பெரியவருக்கு எப்படி மனஸ் வரும்? அதனால்தான் போஜனுக்கு இல்லாத தன் கவிதையை யாருக்கும் வேண்டாம் என்று பைத்தியக்கார ஸந்நியாஸி வேஷம் போட்டுக்கொண்டான். அந்த நிலையில் கம்பர் இருந்தாலும் அப்படித்தான் பண்ணியிருப்பார்.

வாஸ்தவத்தில் கம்பர் இருந்த நிலை என்ன? இவர் ப்ரிய ஸ்வாதீனத்தின் பேரிலே சொன்னதை சோழராஜா நல்ல 'ஸ்பிரிட்'டில்தானே எடுத்துக்கொண்டிருக்க வேண்டும்? அல்லதை அதை ஸீரியஸாக எடுத்துக்கொள்ளாமல் விளையாட்டாக விட்டிருக்கத்தானே வேண்டும்? அல்லது, இன்னம் ஒரு படி கீழே போனால்கூட, "என்ன இருந்தாலும் நான் ராஜா. ஆனதால் ப்ரஜைகளின் கண்ணில் என் ஸ்தானத்தின் கெடுபிடியைக் கட்டிக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். அதனால் நீ ரொம்ப ஸ்வாதீனம் எடுத்துக்கொண்டால், லோகத்திலே அது பரவி ராஜ மரியாதை கெட்டுப்போகும்படி ஆகலாம்" என்று லேசாக 'வார்ன்' செய்தாவது விட்டிருக்கலாம்.
இப்படியெல்லாமில்லாமல், "ஹா, ஹு!யார் யாருக்கு அடங்கினவா, பார்த்துடலாம்!.... ராஜாக்ளை" என்று அவன் எகிறினால் அவருக்கும் கோபம் வந்து ஸவால்விடத் தானே தோன்றும்? அந்த நிலையில் காளிதாஸன் இருந்தாலும் அப்படித்தான் பண்ணியிருப்பான்.

கம்பருடைய பெரிய மனஸும் பிற்பாடு கதையில் தெரிகிறது.

சேரநாட்டு விஜயமும் சேரன் குணநலமும்

சொன்ன மாதிரியே அவர் சேர ராஜ்யத்துக்குப் போய் அதன் ராஜாவைத் தம்முடைய கவிதையினால் ஆகர்ஷித்தார்.

அவனுடைய அபாரமான மதிப்பு மரியாதைகளைப் பெற்றுவிட்டார்.

இங்கே, அவரைத் துரத்திவிட்ட சோழ ராஜாவுக்கானால் இருப்பாக இல்லை. ரஸிகன்தான். உயர்ந்த குணங்கள் உள்ளவன்தான். அதனால், தமிழ் பாஷையில் தோன்றிய கவிகளுக்கெல்லாம் சக்ரவர்த்தி எனப்பட்டவர் தன்னையும் தன்னுடைய ஸதஸையும் விட்டுப்போனதை, நாளாக ஆக அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

அவரைப் பற்றி விசாரித்து, திரும்பவும் அழைத்துவர தூதர்களை எல்லா திசையிலும் அனுப்பினான். ஒற்றர்களையும் அனுப்பினான். சேரன் ஸபையில் அவர் இருப்பதாகவும், சேர ராஜா அவரிடம் மிகுந்த பக்தி விச்வாஸம் வைத்து ஆதரிப்பதாகவும் தெரிந்தது.

அங்கேயும் ஆளனுப்பினான். தான் அவரிடம் நடந்து கொண்டது தப்பு என்று வருத்தம் தெரிவித்து, மறுபடியும் சோணாட்டுக்குத் திரும்பி ஆஸ்தானத்தை அலங்கரிக்க வேண்டுமன்று கேட்டுக்கொண்டு ஓலை அனுப்பினான். பழைய வாஞ்சை கம்பர் மனஸையும் கவ்வியது.

சேர ராஜாவிடம் பிரியாவிடை பெற்றுக்கொண்டு சோழ தேசத்துக்குப் புறப்பட்டார். பழைய கதையெல்லாம் சேரனுக்குத் தெரியும். அதனால், "நீங்கள் என்னை அடைப்பைக்காரனாக ஆக்கிக் கொண்டல்லவா திரும்பி வருவதாகச் சோழனிடம் சபதம் பண்ணியிருந்தீர்கள்? இப்போது என்னை விட்டுவிட்டுப் புறப்படுகிறீர்களே இதோ நானும் காஞ்சியை (தாம்பூலம் பட்டையை)த் தூக்கிக்கொண்டு வருகிறேன்" என்றான்.

இங்கே சேரனின் குணச் சிறப்பு தெரிகிறது. தன்னுடைய மதிப்பைப் பெற்ற ஒருவருக்காக போட்டியரசனின் முன்னே அடைப்பைக்காரனாகப் போகிற அளவுக்குத் தன்னை அடக்கிக்கொள்ளும் விநயம் அவனுக்கும் இருந்திருக்கிறது. ஒரு ராஜாவின் அஹங்காரத்தைச் சொன்ன கதையே இன்னொரு ராஜாவின் எளிமையையும் சொல்கிறது அதனால்தான், கதையேயானாலுங்கூட இவற்றை எடுத்துக் கொள்ளவேண்டும் என்றது.

சேர ராஜ இப்படி சொன்னவுடன் கம்பர் சொன்ன பதிலில்

அவருடைய உயர்வு தெரிகிறது. என்ன சொன்னாரென்றால், "அப்போது அவன் கோபத்தில் ஏதோ சொல்ல, நானும் ரோஷத்தில் பதிலுக்கு ஏதோ சபதம் செய்துவிட்டு வந்தேன். அவன் கோபத்தை மறந்து, மறுபடி என்னைக் கூப்பிட்டனுப்பியிருக்கும் இப்போது, நானும் பழைய ரோஷத்தையும் சபதத்தையும் மறந்து விட்டுப்போவது தான் அழகு. அதுவுமில்லாமல், நீ நாடாளும் மன்னன். உன்னுடைய பணிவாலும், ப்ரியத்தாலும் நீ எனக்குப்பணி செய்ய முன்வந்தாலும், அத்யாவச்யம் ஏற்பட்டாலொழிய நான் அதை ஏற்றுக்கொள்வது கொஞ்சங்கூட உசிதமாகாது" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

இதைவிடவும் உயர்வாக அவருடைய பண்பு ப்ரகாசித்ததைக் கதை முடிவிலே பார்ப்போம்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**சோழ ஸபையில் "அடைப்பைக்கார"ச் சேரன்**

நாடு திரும்பிய கம்பரைக் குலோத்துங்க சோழன் மிகவும் மரியாதை செய்து வரவேற்றான். பழையபடி கம்பர் அவனுடைய ஸதஸில் ஆஸ்தான கவியானார். கம்பர், தாம் சேரனிடம் சொன்ன 'அத்யாவச்யம்' வந்தவிட்டது என்று கருதினார். ஸ்வய மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் வேண்டுமென்று நினைத்தார்.

சேரனுக்கு ஓலை அனுப்பினார்.

சேர மஹாராஜாவும் உடனே புறப்பட்டு சோழ மஹாராஜாவின் ஸதஸுக்கு அடைப்பைக்காரக் கோலத்தில் வந்துவிட்டான்.

அப்போது சோழனும் கமபரும் ஸம்பாஷித்துக் கொண்டிரு ந்தார்கள். அடைப்பைக்கார வேஷத்தில் சேரனைப்

பார்த்ததும் கம்பருக்கு மனஸ் கேட்கவில்லை. ஆனாலும், 'சபதம் பண்ணியிருக்கிறோம சோழன் இன்னொரு தரமும் அதை நினைவுப்படுத்திக் குத்திக் காட்டும்படி விடப்படாது' என்று நினைத்தார்.

அதனால் வேஷ - அடைப்பைக்காரனை லக்ஷ்யம் பண்ணி வரவேற்கக்கூட இல்லை.

சோழனுக்கோ, அத்தனை பணிவுடன் காளாஞ்சியும் கையுமாக நிற்கிறவன் சேர மஹராஜன் என்று கொஞ்சங் கூட ஊஹிக்க முடியவில்லை. புதுசாகச் சேர தேசத்தில் கம்பர் வேலைக்குப் போட்டுக்கொண்ட எவனோ ஒருத்தன் என்றே நினைத்துவிட்டான்.

கம்பர் என்ன பண்ணினாரென்றால், சோழனோடு நடத்திக் கொண்டிருந்த ஸம்பாஷணைக்கு நடுவிலேயே அலக்ஷ்யமாகச் சேரன் பக்கம் கையை நீட்டினார். உடனே அவன் அடக்கவொடுக்கமாக வெற்றிலை மடித்து அவரிடம் நீட்ட, அதை அவனைத் திரும்பிக்கூடப் பார்ககாமல் வாங்கி, இரண்டு விரலுக்கு நடுவில் இடுக்கிக் கொணடார். வாயில் போட்டுக் கொள்ளவில்லை.

இப்படி ஸம்பாஷணைக்கு நடுவிலேயே இரண்டு மூன்று தரம் தாம்பூலச் சுருளை வாங்கிக்கொண்டு, அவற்றை விரல்களிலேயே இடுக்கிக்கொண்டார். அப்புறம், "போகலாம்" என்று அவர் சேரனுக்கு ஜாடை செய்தார். உடனே அவன் புறப்பட்டுவிட்டான்.

வாசலுக்குப் போய் அவன் குதிரையைத் தட்டிவிட, அது காற்றாகப் பறந்து போய்விட்டது. அப்போதுதான், வந்தது சேரன் என்று சோழனுக்குப் பளிச்சென்று புரிந்தது.

அடையாளம் தெரிவிப்பதற்காக சேரனும் போகிற போக்கில் தன்னுடைய முத்திரை மோதிரம் ஒன்றைப் போட்டுவிட்டுப் போயிருந்தான்.

"கம்பரே!என்ன இப்படிப் பண்ணிவிட்டீர்கள்? வந்திருந்தது சேர ராஜா என்று சொல்லாமலே இருந்து விட்டீர்களே!அச்வ ஸாரத்யத்தில் ரொம்பவும் வல்லவனான அவனை இனிமேல் பிடிக்க முடியாதே!" என்றான் சோழன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**கம்பரின் உயர் பண்பு**

அதறக்குக் கம்பர் "அப்பா குலோத்துங்கா சேரன் என்னுடைய அழைப்புக்காகத்தான் இங்கே வந்தானேயொழிய, உன்னுடைய அழைப்பு அவனுக்கு இல்லை. என்னுடையமானத்தைக் காப்பாற்றுவதற்காக அவன் அழையா வீட்டுக்கு வந்தபோது, அவனுடைய மானத்தை நான் காப்பாற்ற வேண்டுமல்லவா? அவன் சேரன் என்று தெரிந்தால் நீ அவனை எந்த தினுஸில் வரவேற்றிருப்பாயோ. எனக்காக வந்தவன் என் காரியத்தை முடித்துத் தந்துவிட்டுப் போக விடவேண்டு மென்றுதான், உனக்கு அவனை அறிமுகம் பண்ணாமலே விட்டேன்" என்றார்.

மறுபடியும் கம்பரின் பண்பு தெரிகிறதல்லவா?

"அப்படியா? அது ஸரி. ஆனால் அவன் கொடுத்த வெற்றிலைச் சுருள்களை ஏன் வாயில் போட்டுக்கொள்ளாமல் விரலிலேயே இடுக்கிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று குலோத்தங்கன் கேட்டான்.

அதற்குக் கம்பர் சொன்ன பதிலில்தான் அவரடைய உயர்ந்த குணத்தின்

உச்சியைப் பார்க்கிறோம்.

"ஒரு ராஜாவாக இருக்கப்பட்டவன் இன்னொருத்தனுக்கு 'அடைப்பை தூக்குகிறேன்' என்றால் அது அவனுடைய விநயத்தைக் காட்டுகிறது. அப்போது, அவனுடைய பணியைப் பெருகிறவன் மட்டும் ஒரேயடியாக விரைத்துக் கொள்வதா? இவனும் விநயத்தைத்தானே காட்ட வேண்டும்? என்னவோ வேளை பொல்லாப்பு, ஆதியில் நீ ஒன்று சொல்ல, நான் ஒன்று சொல்ல இப்படிச் சபதம் பண்ணி,

அப்புறம் என் ஸ்வய மரியாதைக்காக அதை நிறைவேற்றும்படி ஆயிற்று. அதற்காக, மூவேந்தர்களில் ஒருத்தனாக இருக்கப்பட்டவனை அடைப்பைக்காரனாக வரவழைக்க வேண்யடிதாயிற்றறு. நீ அவனை அடையாளம் கண்டு கொள்ளக் கூடாது என்பதற்காகவும், நான் நிஜமாகவே அவனுக்கு யஜமானனைப் போல நடக்கவேண்டும் என்பதற்காகவும் அலக்ஷ்யமாகவே அவனிடமிருந்து தாம்பூலம் வாங்கிக்கொள்ள வேண்டியதாகவும் ஆயிற்று. இதெல்லாம் போதாது என்று அதை நான் வாயிலேயே போட்டுக்கொண்டு சாப்பிட்டிருந்தேனானால் அவனிடம் நன்றாகவே ஊழிய லாபம் பெற்று, நிஜ யஜமானனாகவே என்னை நிலைநாட்டிக் கொண்டதாக ஆகியிருக்கும்.

"நீ பண்ணின சபதம் என்ன? சேர ராஜாவை அடைப்பைக்காரனாக்கிக் கொண்டு வருகிறேன் என்பதுதான். அடைப்பை தாங்குவதும், தாம்பூலம் எடுத்துக் கொடுப்பதுந்தான் அவன் கார்யம். அதற்கு மேலே, அந்தத் தாம்பூலத்தை வாங்கிக் கொண்டவன் அதைச் சாப்பிடும்படிப் பண்ணுவது அவன் கார்யமல்ல. அதனால் சேர ராஜாவை அடைப்பைக்கார வேலை முழுசாகப் பண்ணவைத்த என் சபதத்தை நிறைவேற்றிக் கொண்டாலும் அதை நான் தின்று எனக்கு யஜமானத்வத்தை உண்டாக்கிக் கொள்ளவில்லை" என்றார்.

தன்மானம் ஸ்வய மரியாதையைக் காப்பாற்றிக் கொண்டது மற்றுமில்லாமல் இப்படி சேரனுடைய மான, மரியாதைகளையும் கம்பர் காப்பாற்றிக் கொடுத்தார்.

ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் முதலானவர்கள் அரசவைக் கவிஞர்களாக இருந்திருக்க, கம்பர் மட்டும் சடையப்ப வள்ளல் என்ற ஒரு ப்ரபுவையே தம் ஆதரவாளராகக் கொண்டிருந்ததிலிருந்து அவர் ரொம்பவும் ஸ்வதந்த்ர உணர்சசியுள்ளவராக இருந்திருப்பாரென்று ஊஹிக்கலாம்.

## கவிகளின் தன்மான உணர்ச்சி

## இரண்டு "குட்டி"கள்

கம்பன், காளிதாஸன் போல் ஜகத் ப்ரஸித்தமான கவிகள் தானென்றில்லை, இன்னம் அநேக கவிஞர்களும் ராஜாவுக்குக்கூட பயப்படாத தீரத்தோடு இருந்திருக்கிறார்கள். மஹாகவிகள் இரண்டு பேரைச் சொல்லி விட்டேன். குட்டி கவி, குட்டி சாஸ்த்ரி என்றே பேருள்ள இரண்டு பேரைப் பற்றி சொல்கிறேன்.

இவர்களில் முதலாமவரான குட்டி கவியின் நிஜப்பெயர் - 'இயற்பெயர்' என்பது - வாஞ்ச்யேச்வரன் என்பதாகும். அவருடைய முன்னோர்களின் ஊர் ஸ்ரீ வாஞ்சிய க்ஷேத்திரமான படியால் அந்த க்ஷேத்ர மூர்த்தியின் பேரை அவருக்கு வைத்தார்கள். குழந்தையிலே அவருக்குக் கவிதா விலாஸம் ஏற்பட்டுவிட்டதால் 'குட்டி கவி' என்று பேர் ஏற்பட்டது.

## ஷாஹஜி மன்னர்

17-வது நூற்றாண்டுக் கடைசியில் தஞ்சாவூர் ராஜ்யம் நாயக்கர்களிடமிருந்து சிவாஜி வம்சத்தைத் சேர்ந்த மஹா ராஷ்ட்ரர்களிடம் கை மாறிற்று. அந்த வம்சத்தில் வந்த முதல் ராஜாக்களில் ஒருவர் ஷாஹஜி. அவர் ஸகல கலாவல்லபர். வித்வான்களை நிரம்பப் போஷித்தவர். சிவபக்தியில் சிறந்த அவரே, ஜயதேவர் க்ருஷ்ணரை வைத்துப் பண்ணினாற்போல, திருவாரூர் த்யாகராஜாவின் பேரில் இருபத்து நாலு அஷ்டபதியில் செய்திருக்கிறார். அவருக்குச் சிறந்த பண்டிதர்களை கொண்டதாகவே ஒரு முழு ஊரை நிர்மாணிக்க வேண்டுமென்று ஆசை ஏற்பட்டது. என்ன பண்ணினாரென்றால் காவேரியின் தென் கரையிலுள்ள திருவிசைநல்லூர் - தேவாரத்தில் திருவியலூர் எனப்படுவது - அந்த ஊரில் பெரிசாக ஒரு ஸர்வமான்ய அக்ரஹாரம் நிர்மாணம் செய்தார். அதிலே நாம் குஜராத் என்கிற கூர்ஜரத்திலிருந்து ஆரம்பித்து, மஹாராஷ்டரம், ஆந்த்ரதேசம், கர்நாடகம் முதலியவ்றறிலிருந்தும், நம்முடைய த்ராவிட சேத்திலிருந்தம் உத்தம வித்வான்களை

ப்ரார்த்தனை பண்ணி வரவழைத்துக் குடியேற்றினார். அவர்கள் ஒவ்வொருவருக்கும் பூதானம், க்ருஹதானம் எல்லாம் வழங்கினார், அப்படிக் குடியேறியவர்களில் ஒருவர்தான் அந்த சீமையிலேயே நன்னிலத்தின் கிட்டேயுள்ள ஸ்ரீ வாஞ்சியத்திலிருந்து வந்த குட்டி கவியின் அப்பா.

ராஜ வாழ்க்கையும் பொருட்படுத்தாத கவிகளைப் பற்றி ஆரம்பித்தேன். இப்போது ஷாஹஜி ராஜாவுக்குக் குழந்தை ப்ராயத்திலிருந்த குட்டிகவி புகழ்மாலை, பாமாலை, சூட்டியதைக் கொஞ்சம் சொல்கிறேன்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**அரசனைப் போற்றும் கவிதை**

'ராஜாக்கள் நல்ல ரஸிகர்களாகவும் வள்ளல்களாகவும் இருக்கும்போது அவர்களை உத்ஸாஹப்படுத்தி, அதன் மூலம் அவர்கள் கவிகளை மேலும் ஆதரிக்கப்பண்ணி, இதனால் கவிகள் பெறுகிற உத்ஸாகத்தில் மேலும் நல்ல நல்ல காவ்யங்கள் உண்டாக உதவவேண்டும்' - என்ற எண்ணத்தில் இப்படிப்பட்ட ராஜாக்களின் மேல் கவிகள் ஸ்தோத்ரமாகக் கவிதைகள் பாடுவதுண்டு. Exaggeration ஆகத்தானிருக்கும். இலக்கியச் சுவைக்காக அதையும் "அதிசயோக்தி", "மிகைபடக்கூறல்", "உயர்வு நவிற்சி" என்று சொல்லி அங்கீகரித்திருக்கிறது. "சாடு" (Chattu)கவிதை என்று இவற்றுக்குப் பேர்.

ராஜாவை உத்ஸாஹப்படுத்த ரொம்பவும் சிறந்த வழி அவனைப் புகழ்வதைவிட அவனுடைய பத்தினியைப் போற்றுவதுதான் என்பதால் ராணிகளையும் உசத்தி வைத்துப் பாடுவதும் உண்டு.

ஒன்று நினைவுக்கு வருகிறது.

அப்பய்ய தீக்ஷிதிரின் தாத்தாவுக்கு ஆச்சான் தீக்ஷிதர் என்று பெயர். ஆசார்ய தீக்ஷிதர் என்ற பெயர்தான் அப்படி மாறி இருந்தது. அவருக்கே 'வக்ஷஸ்தலாசார்யார்' என்றும் பெயர் சொல்வார்கள். இப்படிப் பேர் வந்ததற்குக் காரணமே அவர் க்ருஷ்ணதேவராயரின் ராணியைப் புகழ்ந்து கவிபண்ணியதுதான்.

க்ருஷ்ண தேவராயர் காஞ்சீபுரத்திலே வரதராஜப் பெருமானை தர்சிப்பதற்காக வந்திருந்தார். அவருடைய ஸதஸைச் சேர்ந்த பண்டிதோத்தமரான ஆச்சான் தீக்ஷிதரும் கூட வந்தார்.

பட்டர் வரதராஜாவுக்கு கர்ப்பூரார்த்தி நன்றாகத் தூக்கிக் காட்டி கிழே இறக்கிக் கொண்டே வரும்போது முக மண்டலத்தில் பல தினஸாக நிழலாடியதிலோ என்னவோ, ராயருக்குப் பெருமாள் கண்ணைப் கொஞ்சம் தாழ்த்திக் குனிந்து பார்த்துக் கொள்கிற மாதிரி தோன்றிற்று. அதை ஆச்சான் தீக்ஷிதரிடம் சொல்லி "தீக்ஷிதர்வாள்!இதற்கு ஏதாவது காரணம் - ஐதீஹ்யம் (ஐதீஹம்) - தங்களுக்குத் தெரிகிறதோ?" என்று கேட்டார்.

ராயர் கேட்டவுடனேயே தீக்ஷிதர் பளிச்சென்று ஒரு ச்லோகமாக பதில் சொல்லிவிட்டார். "அதுவா? ஸ்வர்ண காந்தியாக ஜ்வலித்துக்கொண்டு உன் பக்கத்திலே நிற்கிற ராணியைப் பார்த்ததும் பெருமாளுக்கு ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி என்று தோன்றிவிட்டது. 'அப்படியானால் தன்னுடைய வக்ஷஸ்தலத்திலே (திருமார்பிலே) அவள் இல்லாமல் இறங்கிப் போய்விட்டாளா என்ன?' என்று ஸம்சயம் ஏற்பட்டுத்தான் கண்ணைத் தாழ்த்தி மார்பைப் பார்த்துக்கொள்கிறார்" என்று அர்த்தம் கொடுக்கும் ச்லோகமாக பதில் சொல்லிவிட்டார்!

காஞ்சித் காஞ்சந கௌராங்கிம் வீக்ஷ்ய ஸாக்ஷாதிவ ச்ரியம் ।

வரத ஸம்சயாபந்நோ வக்ஷஸ்தலம் அவேக்ஷதே ॥

"வக்ஷஸ்தலத்தைப் பார்த்துக் கொள்கிறார்" என்று முடித்ததாலேயே ராயர் அவருக்கு "வக்ஷஸ்தல" என்ற பட்டம்

தந்தார். "ஆசார்ய" என்ற அவருடைய பேரோடு சேர்ந்து, அதுமுதல் அவர் "வக்ஷஸ்தலாசார்யா"ராகி விட்டார்.

இப்படி, போஜனைக் காளிதாசன் அதீத கல்பனையாகப் புகழ்ந்திருப்பதில் வேடிக்கையாக ஒன்று:

பூலோகத்தில் கோகுலத்திலே குழந்தையாய் வளர்ந்த க்ருஷ்ண பராமாத்மா அவதாரத்தை முடித்த பிறகு ஆகாசத்திலே கோலோகம் என்பதில் வாஸம் பண்ணிக் கொண்டிருக்கிறாரென்று சொல்வார்கள்.

ஒருநாள் அவர் அந்த திவ்யலோகத்தைவிட்டு மறுபடியும் பூலோகத்துப் போயக்கொண்டிருப்பதை நாரதர் பார்த்தாராம்.

"கோபாலா!உன்னுடைய லோகத்தை விட்டு எங்கே, எதற்காகப் போகிறாய்?" என்று கேட்டாராம்.

"தேவர்ஷே!(தேவரிஷியே) வேறே ஒன்றுமில்லை. இங்கே முக்யமான பசுவாயுள்ள ஸாக்ஷாத் காமதேனுவே கன்றுக்கு ஊட்டக்கூடப் பாலில்லாமல் மரத்துப் போய்விட்டது. யார் எது கேட்டாலும் கொடுக்கும் காமதேனுவுக்கு ஏன் இப்படி ஆச்சு என்றால், பூலோகத்திலே கவிவாணர்கள் கேட்காமலே வாரிவாரிக் கொடுக்கும் போஜனைப் பற்றி அதற்குத் தெரிந்தது. 'நம்மையும் மிஞ்சி ஒருத்தனா?' என்று ஏங்கி ஏங்கி இளைத்தே பால் மரத்துவிட்டது. அதனாலே அதன் கன்றுக்குப் புல் பிடுங்கிக்கொண்டு வரத்தான் அவனுடைய உலகத்துக்கப் போகிறான்" என்று பகவான் பதில் சொன்னாராம்.

அதற்கு நாரதர், "அடாடா நீ போகிற கார்யம் நடக்கிறதற்கு இல்லையே!ஏனென்றால், எங்கே பார்த்தாலும் போஜனிடம் வீரத்திலோ, ஈகையிலோ, அழகிலோ, படிப்பிலோ, எதிலேனும் தோற்றுப்போன ஏராளமான எதிரிகள் மண்ணைக் கவ்விக் கவ்வி அங்கே இப்போது புல் என்பதே முளைத்திருக்க வில்லையே" என்றாராம்!

"போற்றினும் போற்றுவர். தூற்றினும் தூற்றுவர்" என்கிறபடி, ஸ்துதிக்க வேண்டிய ஸமயத்தில் இப்படி புகழ்ந்த அதே போஜனையேதான், அவன் வலக்கட்டாயமாக கவி கேட்டபோது காளிதாஸன் விட்டுவிட்டுப் போய்விட்டான்.

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?" என்று கேட்ட அதே கம்பர், குலோத்துங்கனைப் பாராட்ட வேண்டிய ஸந்தர்ப்பத்தில்,

"தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே,

மண்ணாவ தும்சோழ மண்டல மே"

என்று கொண்டியாடியுந்தான் பாடியிருக்கிறார்.

கார்யத்தைப் பார்த்துத்தான் தூற்றுவதோ, போற்றுவதோ செய்திருக்கிறார்க ளேயொழிய, அல்பத்தனமாக இச்சகம் பாடியோ த்வேஷாரோபம் செய்தோ அல்ல.

போற்றுகிறபோது, தங்களை ஆதரித்தவர்கள் த்ரவ்யத்தில் எவ்வளவு ஔதார்யம் (உதாரத்தன்மை) காட்டினார்களோ அதைவிடவும் ஔதார்யமாக அவர்கள் மேல் புகழ்மொழியைப் பொழிந்திருக்கிறார்கள்.

ராமபட்டாபிஷேகத்தைச் சொல்லும்போது கம்பர், தம்மை ஆதரித்த திருவெண்ணெய் நல்லார் சடையப்ப வள்ளலின் முன்னோர் ஒருவருடைய கையிலிருந்துதான் வஸிஷ்டர் கீரிடத்தை வாங்கி ராமருக்குச் சூட்டினாரென்றே பாடியிருக்கிறார்

மன்னரும் குழந்தையும் பரஸ்பரப் பாராட்டு ஷாஹஜி மீநாக்ஷியம்மனை தர்சிப்பதற்காக மதுரைக்குப் போயிருந்தார். கூடவே வித்வான்களின் பரிவாரத்தையும் அவர் அழைத்துக் கொண்டு போனதால் குட்டி கவியின் அப்பா, குட்டிகவி, ஆகிய இரண்டு பேருக்கும் ஜகன்மாதா மீநாம்பிகையின் தர்சன ப்ராப்தி கிட்டிற்று.

அம்பாளைப் பார்த்த மாத்ரத்தில் ஷாஹஜியின் வாயிலிருந்து ஆசுகவியாக ச்லோகம் வந்தது. வார்த்தை ஜாலமுள்ள ச்லோகமாக அது இருந்தது!

புரிமதுரம் கிரிமதுரம் கரிமதுரந்தர - நிதம்ப - பாராட்யம் 1

ஸ்தூல குசம் நீல கசம் பாலக ச்த்ராங்கிதம் பஜே தேஜ: 11

என்பதே ச்லோகம்.

முதலில் 'மதுரம்', 'மதுரம்' என்று இரண்டு முறை வந்ததற்குப் பொருந்த, 'கரிம - துரந்தர' என்பதையே "கரிமதுரந்தர" என்று ப்ராஸம் போட்டுச் சொன்னேன்.

அம்பாள் வாஸம் செய்யும் ஊரின் பெயரே இனிமை - மதுரம் - மதுராபுரி. "புரி மதுரம்".

அம்பாளுடைய வாக்கு-அல்லது அவளுடைய பேர் என்றும் வைத்துக் கொள்ளலாம் - அதுவும் இனிமை. "கிரி மதுரம்."

அப்புறம் அவளுடைய மதுரமான ரூபத்தை வர்ணித்து "நீலகசம்" என்று அவளுடைய கரிய கூந்தலையும், அதிலே அவள் தரித்திருக்கிற பிறை மதியையும் சொல்லி ("பாலக சந்த்ராங்கிதம்" என்று சொல்லி), இப்பேர்ப்பட்ட ஒரு தேஜஸாக்கும் அம்பாள் என்று முடித்திருக்கிறது.

இந்த ஆனந்தமான கவிதா ரஸப்ரவாஹத்தைக் காதாரப் பருகிற்று

பக்கத்திலிருந்த குழந்தைக் கவி. உடனே அதுவும் ஆசுகவியாகி ராஜாவையே பாராட்டிப் பாடிவிட்டது. ராஜா பண்ணியதற்கு மேலே வார்த்தை ஜாலம பண்ணிப் பாடிவிட்டது.

கவிலோகே நவிலோகே புவி லோகேசஸ்ய ஸாஹஜே ரூபமாம் 1

ஹ்ருதிதரஸா (அ)விதிதரஸா - ததிதரஸாஹித்ய - வா - ந-மே - லகதி 11

முதல் பாதிக்கு அர்த்தம், "உலகத்தை ஆளுபவனான ஷாஹஜிக்கு ('ஸாஹஜி' என்று ச்லோகத்தில் இருக்கிறது) உவமிக்கும்படியாக பூமியில் கவிலோகம் முழுதிலும் நான் எவரையும் பார்க்கவில்லை" என்பது. இதில் 'கவிலோகே' வுக்கு அப்புறம் 'நவிலோகே' என்று இருப்பது 'ந விலோகே' என்று பிரியும். "லோகேசனாயுள்ள ஸாஹஜிக்கு உபமானமாகிறவரை பூலோகத்திலே 'கவி லோகே கவியுலகில், 'ந விலோகே':பார்க்கவில்லை." 'பூலோகத்திலே லோகேசனாயுள்ள' என்கிற இடத்தில் 'புவி - லோகேசஸ்ஏ' என்று வருவதற்குள்ளும் ஒரு 'வியோகே' இருக்கிறது.

இரண்டாம் பாதியில் முதல் வார்த்தை 'ஹ்ருதி - தரஸா' என்று பிரியும். அடுத்தது '(அ) விதி - தரஸா' இல்லை. அதை '(அ) விதித - ரஸா' என்று பிரிக்க வேண்டும். 'தத் - இதர - ஸாஹித்ய' என்பதிலேயும் ஒரு 'தரஸா' வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது!

முதல் பாதியில் மூன்று 'விலோகே'. இரண்டாம் பாதியில் மூன்று 'தரஸா'.

இரண்டாவது வரியில் குழந்தைக் கவி, "இப்படிப்பட்ட ராஜாவுடைய கவிதா வாக்கைத் தவிர வேறெந்த ஸாஹித்ய வாக்குகளிலும் இப்பேர்ப்பட்ட ரஸத்தைக் காணமுடியாததால் அவை எதுவும் இதுபோலச் சடேரென்று என் ஹ்ருதயத்தில் ஒட்டிக்கொள்ளவில்லை" என்கிறது.

ராஜாவுக்கு ஸர்ட்டிஃபிகேட்' கொடுக்கும்போதே தனக்கும் ஸர்ட்டிஃபிகேட் கொடுத்துக் கொண்டிருக்கிறது - தனக்குக் கவிதாரஸ ஞானம் நன்றாக உண்டு என்று மற்ற எல்லாருடைய கவிதையிலும் காண முடியாத ரஸத்தைத் தன்னால் ஷாஹஜியின் கவிதையிலேயே காணமுடிகிறது என்கிறது. ஷாஹஜியின் வாக்கே அதன் ஹ்ருதயத்தில் சடேரென்று ஒட்டிக்கொள்கிறதைக் குறிப்பால் சொல்கிறது. 'தரஸா' என்றால் 'சடேரென்று', பால் சொல்கிறது. 'தரஸா( என்றால் 'சடேரென்று'. 'லகதி' ஒடடிக்கொள்கிறது.

ராஜாவை உதாஸீனமாகப் பேசுவதற்கு தைர்யம் வேண்டுமென்றால், ஒரு குழந்தையாகப்பட்டது அவனுக்கு ஸர்ட்டிஃபிகேட் கொடுப்பதற்கு அதைவிட தைர்யம் வேண்டும். அம்பாள் ஸந்நிதானத்திலே அரசன் தன்னை மறந்து கவிதை பண்ணினபோது, மற்ற பெரிய வித்வான்கள்கூட அதைக் கேட்டுக்கொண்டு அடக்கமாகத்தான் இருந்தார்கள். அந்த ஸந்தர்ப்பதில் குழந்தை இப்படி 'டான்' என்று அவனுக்கு ஸ்பாஷ் போட்டு ச்லோகம் பண்ணிற்று என்றால் இதுவும் ஒரு கவிக்கு அரசனுக்கும் மேலான ஸ்தானம் உள்ளதைத்தான் காட்டுகிறது.

இந்த ஸமயத்தில்தான் ராஜா குட்டிகவி என்று வஞ்ச்யேச்வரனுக்கு பட்டம் கொடுத்தார் என்று சொல்வதுண்டு.

ராஜா நல்ல கவிதை பண்ணினபோது ஸபாஷ் போட்ட அதே குட்டிகவி, ராஜா தப்புப் பண்ணினபோது அவனை வாங்கு வாங்கு என்று வாங்குவதற்கும் சளைக்கவில்லை. ஆனால் தப்புப் பண்ணின அந்த ராஜா ஷாஹஜி இல்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**மன்னரும் குழந்தையும் பரஸ்பரப் பாராட்டு**

ஷாஹஜி மீநாக்ஷியம்மனை தர்சிப்பதற்காக மதுரைக்குப் போயிருந்தார். கூடவே வித்வான்களின் பரிவாரத்தையும் அவர் அழைத்துக் கொண்டு போனதால் குட்டி கவியின் அப்பா, குட்டிகவி, ஆகிய இரண்டு பேருக்கும் ஜகன்மாதா மீநாம்பிகையின் தர்சன ப்ராப்தி கிட்டிற்று.

அம்பாளைப் பார்த்த மாத்ரத்தில் ஷாஹஜியின் வாயிலிருந்து ஆசுகவியாக ச்லோகம் வந்தது. வார்த்தை ஜாலமுள்ள ச்லோகமாக அது இருந்தது!

புரிமதுரம் கிரிமதுரம் கரிமதுரந்தர - நிதம்ப - பாராட்யம் 1

ஸ்தூல குசம் நீல கசம் பாலக ச்த்ராங்கிதம் பஜே தேஜ: 11

என்பதே ச்லோகம்.

முதலில் 'மதுரம்', 'மதுரம்' என்று இரண்டு முறை வந்ததற்குப் பொருந்த, 'கரிம - துரந்தர' என்பதையே "கரிமதுரந்தர" என்று ப்ராஸம் போட்டுச் சொன்னேன்.

அம்பாள் வாஸம் செய்யும் ஊரின் பெயரே இனிமை - மதுரம் - மதுராபுரி. "புரி மதுரம்".

அம்பாளுடைய வாக்கு-அல்லது அவளுடைய பேர் என்றும் வைத்துக் கொள்ளலாம் - அதுவும் இனிமை. "கிரி மதுரம்."

அப்புறம் அவளுடைய மதுரமான ரூபத்தை வர்ணித்து "நீலகசம்" என்று அவளுடைய கரிய கூந்தலையும், அதிலே அவள் தரித்திருக்கிற பிறை மதியையும் சொல்லி ("பாலக சந்த்ராங்கிதம்" என்று சொல்லி), இப்போர்ப்பட்ட ஒரு தேஜஸாக்கும் அம்பாள் என்று முடித்திருக்கிறது.

இந்த ஆனந்தமான கவிதா ரஸப்ரவாஹத்தைக் காதாரப் பருகிற்று பக்கத்திலிருந்த குழந்தைக் கவி. உடனே அதுவும் ஆசுகவியாகி ராஜாவையே பாராட்டிப் பாடிவிட்டது. ராஜா பண்ணியதற்கு மேலே வார்த்தை ஜாலம பண்ணிப் பாடிவிட்டது.

கவிலோகே நவிலோகே புவி லோகேசஸ்ய ஸாஹஜே ரூபமாம் 1

ஹ்ருதிதரஸா (அ)விதிதரஸா - ததிதரஸாஹித்ய - வா - ந-மே - லகதி 11

முதல் பாதிக்கு அர்த்தம், "உலகத்தை ஆளுபவனான ஷாஹஜிக்கு ('ஸாஹஜி' என்று ச்லோகத்தில் இருக்கிறது) உவமிக்கும்படியாக பூமியில் கவிலோகம் முழுதிலும் நான் எவரையும் பார்க்கவில்லை" என்பது. இதில் 'கவிலோகே' வுக்கு அப்புறம் 'நவிலோகே' என்று இருப்பது 'ந விலோகே' என்று பிரியும். "லோகேசனாயுள்ள ஸாஹஜிக்கு உபமானமாகிறவரை பூலோகத்திலே 'கவி லோகே கவியுலகில், 'ந விலோகே':பார்க்கவில்லை." 'பூலோகத்திலே லோகேசனாயுள்ள' என்கிற இடத்தில் 'புவி - லோகேசஸ்ஏ' என்று வருவதற்குள்ளும் ஒரு 'வியோகே' இருக்கிறது.

இரண்டாம் பாதியில் முதல் வார்தை 'ஹ்ருதி - தரஸா' என்று பிரியும். அடுத்தது '(அ) விதி - தரஸா' இல்லை. அதை '(அ) விதித - ரஸா' என்று பிரிக்க வேண்டும். 'தத் - இதர - ஸாஹித்ய' என்பதிலேயும் ஒரு 'தரஸா' வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது!

முதல் பாதியில் மூன்று 'விலோகே'. இரண்டாம் பாதியில் மூன்று 'தரஸா'.

இரண்டாவது வரியில் குழந்தைக் கவி, "இப்படிப்பட்ட ராஜாவுடைய கவிதா வாக்கைத் தவிர வேறெந்த ஸாஹித்ய

வாக்குகளிலும் இப்பேர்ப்பட்ட ரஸத்தைக் காணமுடியாததால் அவை எதுவும் இதுபோலச் சடேரென்று என் ஹ்ருதயத்தில் ஒட்டிக்கொள்ளவில்லை" என்கிறது.

ராஜாவுக்கு ஸர்ட்டிஃபிகேட்' கொடுக்கும்போதே தனக்கும் ஸர்ட்டிஃபிகேட் கொடுத்துக் கொண்டிருக்கிறது - தனக்குக் கவிதாரஸ ஞானம் நன்றாக உண்டு என்று மற்ற எல்லாருடைய கவிதையிலும் காண முடியாத ரஸத்தைத் தன்னால் ஷாஹஜியின் கவிதையிலேயே காணமுடிகிறது என்கிறது. ஷாஹஜியின் வாக்கே அதன் ஹ்ருதயத்தில் சடேரென்று ஒட்டிக்கொள்கிறதைக் குறிப்பால் சொல்கிறது. 'தரஸா' என்றால் 'சடேரென்று', பால் சொல்கிறது. 'தரஸா( என்றால் 'சடேரென்று'. 'லகதி' ஒடடிக்கொள்கிறது.

ராஜாவை உதாஸீனமாகப் பேசுவதற்கு தைர்யம் வேண்டுமென்றால், ஒரு குழந்தையாகப்பட்டது அவனுக்கு ஸர்ட்டிஃபிகேட் கொடுப்பதற்கு அதைவிட தைர்யம் வேண்டும். அம்பாள் ஸந்நிதானத்திலே அரசன் தன்னை மறந்து கவிதை பண்ணினபோது, மற்ற பெரிய வித்வான்கள்கூட அதைக் கேட்டுக்கொண்டு அடக்கமாகத்தான் இருந்தார்கள். அந்த ஸந்தர்ப்பதில் குழந்தை இப்படி 'டான்' என்று அவனுக்கு ஸ்பாஷ் போட்டு ச்லோகம் பண்ணிற்று என்றால் இதுவும் ஒரு கவிக்கு அரசனுக்கும் மேலான ஸ்தானம் உள்ளதைத்தான் காட்டுகிறது.

இந்த ஸமயத்தில்தான் ராஜா குட்டிகவி என்று வஞ்ச்யேச்வரனுக்கு பட்டம் கொடுத்தார் என்று சொல்வதுண்டு.

ராஜா நல்ல கவிதை பண்ணினபோது ஸபாஷ் போட்ட அதே குட்டிகவி, ராஜா தப்புப் பண்ணினபோது அவனை வாங்கு வாங்கு என்று வாங்குவதற்கும் சளைக்கவில்லை. ஆனால் தப்புப் பண்ணின அந்த ராஜா ஷாஹஜி இல்லை.

பண்பாடு

## கவிகளின் தன்மான உணர்ச்சி

## ப்ரதாப ஸிம்ஹனும் குட்டிகவியும்

ஷாஹஜிக்கு அப்புறம் அவருடைய பிள்ளை ப்ரதாப ஸிம்ஹன் ராஜாவானான். ராஜ்ய நிர்வாஹத்தைத் திறம்பட நடத்தி வந்த முக்ய அதிகாரிகளான நானாஜி ப்ரபு, சந்த்ர பானு, ஆனந்தராயர் முதலான பெரியவர்கள் கால க்ரமத்தில் காலமாகிவிட்டார்கள். துரத்ருஷ்டவசமாக ப்ரதாப ஸிம்ஹன் கல்வி கேள்விகள் இல்லாத சில சில்லறை ஆஸாமிகளின் வசப்பட்டுவிட்டான். அவர்களை ஆலோசகர்களாக வைத்துக்கொண்டு நிர்வாஹம் செய்ததில் ஆட்சி சீர்குலைந்து, கோணாட்டு மக்கள் பலவிதத்தில் கஷ்டப்படும்படி ஆயிற்று. முறையாக அறிந்த வித்வான்கள், கவிகள் ஆகியோருக்கும் ஆதரவு இல்லை.

இப்போதுதான் ராஜாவை தைர்யமாக இடித்துரைக்க வேண்டுமென்று குட்டி கவி ஒரு காவ்யம் எழுதப் புறப்பட்டது. இப்போது "குட்டி"யாக இல்லாமல் நல்ல வயஸு வந்தவராக அவர் ஆகியிருந்தார். வெறுமனே ஆத்திரத்தைக் கொட்டித் திட்டித் தீர்ப்பதற்காக அவர் எழுதவில்லை. தம்முடைய எழுத்தின் மூலம் ப்ரதாப ஸிம்ஹனுக்கு புத்தி புகட்டி நல்வழிப்படத்தவேண்டுமென்ற எண்ணத்துடனேயே எழுதினார். அவன் அவனைப் பொறுத்தமட்டில் நல்லவன் தான். ஆனால் எடுப்பார் கைப்பிள்ளையாகத் தகாதவர்களின் வலையில் விழுந்து அவர்களுக்குத் தலையாட்டிக் கொண்டிருந்ததால்தான் ப்ரஜைகளையெல்லாம் கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தான்.

இவனை எப்படிக் வழிக்குக் கொண்டுவருவது என்று யோசித்த குட்டிகவி, இக் காலத்தில் satire என்றும் irony என்றும் சொல்கிறார்களே - மறைமுகமாக, ஹாஸ்ய ரஸத்தோடு குத்திக்காட்டி எழுதுகிறார்களே - அப்படி ஒரு காவ்யம் எழுதுவது என்று ஆரம்பித்தார். இப்படி எழுதுவதைச் "சலோகத்தி" என்பார்கள். வெளியிலே ஒன்றைச் சொல்லி உள்ளே இன்னொன்றை உணர்த்துகிற முறையையும் கையாண்டார். இந்த அணிக்கு 'அந்யாபதேசம்'

என்று பெயர். இக்காலத்திலே கார்ட்டூன் என்று போடுகிறார்கள். அதில் மநுஷர்களையே ம்ருகங்கள் மாதிரி கூடக் கேலியாகக் சித்ரிக்கிறார்கள். குட்டிகவி வார்தையாலேயே கார்ட்டூன் போட்டுவிட்டார்!

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**எருமைத்துதி**

அந்த நூல் இப்போது இருக்கிறது. நூறு ச்லோகம் கொண்ட அதற்கு "மஹிஷ சதகம்" என்று பெயர் எருமையை ஸ்தோத்ரம் பண்ணும் நூறு பாட்டு என்று புரிகிறேதால்லியோ? தலைப்பிலேயே பரிஹாஸமாக இடித்துச் சொல்லுதல் "மஹிஷி" என்று ராணிக்குப் பெயர் இருக்கிறது. 'பட்ட மஹிஷி' என்கிறோம். ஆனால் ராஜாவுக்கு 'மஹிஷன்' என்று பேரில்லை. 'மஹி' என்றால் பூமி என்பதை வைத்து 'மஹீசன்', 'மஹிபதி' என்று தான் பெயர்கள் இருக்கின்றன.

குட்டிகவி மஹிஷ சதகம் பண்ண ஆரம்பித்துவிட்டார். அவர் 'சதகம்' பண்ணத்தான் நினைத்தாரோ அல்லது 'ஸாஹஸ்ரீ'யாக ஆயிரம் ச்லோகம் பண்ண நினைத்தாரோ? கொஞ்சம் கொஞ்சமாக ச்லோகம் பண்ணிப்பண்ணி, அவற்றை ராஜாவுக்கே அனுப்பி வந்தார்.

அதன் ஸப்ஜெக்டைச் சுருக்கமாகச் சொன்னார், அஸத்தானவர்களைத் தன் ஸபையில் வைத்துக்கொண்டு அவர்களுக்கு 'ஆமாம் பூசாரி' போடுகிற ஒரு ராஜாவுக்கு ஸேவகம் செய்து பிழைப்பதைவிட ஒரு எருமைக்கடாவை வைத்துக்கொண்டு அதனால் "உழுதுண்டு வாழ்வதே மேல்" என்பதுதான் உழுதுண்டு வாழ்வதற்காக எதை ஏரிலே பூட்டிப் பின் செல்கிறோமோ அந்த எருமையை "தொழுது" ஸ்துதிப்பதாகத்தான் ச்லோகங்கள் செய்தார்!

அதிலே இரண்டே இரண்டின் தாத்பர்யத்தை மட்டும்

சொல்கிறேன்.

மஹாபண்டிதரான ஸ்ரீதரர் தம் வித்தையைக் காசுக்கு விற்கிறார். ஷட் - தர்சனம் கற்ற அம்பு தீக்ஷிதர் சோற்றுக்குத் தாளம் போடுகிறார். ஷட் - தர்சனமாவது, சை!க்யாதி வாய்ந்த குட்டிக் கவியுங்கூட துஷ்ட தனிகரின் வாசலில் காத்துக் காத்து ஓய்ந்து போய்த் தூங்கி விழுந்து விட்டார். இத்தனையும் எதனால்? மஹிஷேச்வரனான - எருமைக் கடவுளான - உன்னை அநுஸரித்து ஆச்ரயிக்காத துர்பாக்கியத்தின் பலன்தான்!" என்று ஒரு ச்லோகம்.

இனனொன்றில், "எருமையே ராப் பகலாக நிலத்தை உழுது உழுது ஏன் கஷ்டப்படுகிறாய்? இப்போது ராஜஸபையில் இருப்பவர்களோடு நீயும் சேர்ந்து ஸுகஜீவனம் பெறலாமே 'எனக்கு அறிவில்லையே, ஸாமர்த்திய மில்லையே' என்றெல்லாம் வீணுக்கு அலட்டிக் கொள்ளாதே!தற்போதைய ஸபாக்காரர்களோடு பார்த்தால் உன்னை ப்ருஹஸ்பதீ என்றெ சொல்லணுமாக்கும்" என்றார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**நாட்டைக் காத்த கவி**

ராஜரீக ஹோதாவைப் பார்க்காமல் ப்ரதாப ஸிம்ஹன் குட்டிகவியிடம் போய், தனக்கு நல்லறிவு பிறந்துவிட்டதாகவும், ஞான சூன்யமான ஸ்வய நல கோஷ்டியை நீக்கி விட்டு, விஷயமறிந்த ஸத்துக்களை ஆலோசகர்களாகப் போட்டுக்கொண்டு ஆட்சி நடத்துவதாகவும் வாக்குக் கொடுத்தான்.

தேசத்துக்கு உபகாரமாகத் தாம் எடுத்துக் கொண்ட கார்யம் பலிதமானதில் குட்டிகவி ஸந்தோஷம் அடைந்தார்.

அதோடு அவர் தாம் கவனம் செய்துகொண்டிருந்த பரிஹாஸ

காவ்யத்துக்கும் பரிஹாஸ காவ்யத்துக்கும் 'ஃபுல் ஸ்டாப்' போட்டுவிட்டார். அதுவரை ஸரியாக நூறு ச்லோகங்கள் ஆகியிருந்ததால் 'மஹிஷ சதகம்' என்று அதற்குப் பெயர் கொடுத்து வைத்து விட்டார்.

'ராஜாதான் திருந்திவிட்டானே, ஏன் அந்த ச்லோகங்களைக் கிழித்துப் போட்டிருக்கக் கூடாது?' என்றால், 'ராஜாவையுங்கூட ஒரு கவியானவன் அடக்கி நல்வழிக்குக் கொண்டு வரமுடியும். நாட்டை அடக்கி ஆள்கிறவனுக்கும் மேலான சக்தியைக் கவி நிஜமாகவே பெற்றவன்' என்பதற்கு ப்ரத்யட்ச நிரூபணமாக இந்தக் காவ்யம் இருந்து கொண்டிருக்கட்டும் என்றே கிழித்துப் போடாமல் வைத்துவிட்டார். வருங்காலத்தில் ஆட்சிக்கு வருபவர்களுக்கும் பாடமாக, எச்சரிக்கையாக இருக்கட்டுமென்று வைத்துவிட்டார்.

ராஜாவும் அந்தச் சுவடிகளை confiscate பண்ணுவது, proscribe பண்ணுவது என்று பறிமுதல், தடை செய்யாததை இங்கே சொல்லவேண்டும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**வங்க வித்வானை வென்ற வாலிபர்**

குட்டிகவியின் கொள்ளுப் பேரரும் அவருடைய இயற் பெயரையே கொண்ட இன்னொரு வாஞ்ச்யேச்வரர்தான். (தாத்தாவேதான் பேரனாகப் பிறக்கிறார் என்று கருத்தில் அவர் பேரையே இவனுக்கு வைப்பதால்தான் 'பேரன்' என்று சொல்வது!) கொள்ளுப் பேரரை வாஞ்ச்யேச்வர யஜ்வா என்பார்கள். ஸோம யாகம் செய்தவரானால் 'யஜ்வா'. கொள்ளுத் தாத்தாவைப் போலவே இவரும் பாண்டித்யம், ஸாஹித்ய ஆற்றல் எல்லாம் உள்ளவர். அவரைப் போலவே மஹா தீரர் என்பதுதான் நாம் எடுத்துக் கொண்டுள்ள

விஷயத்துக்கு முக்யமானது. ப்ரபிதாமஹரின் அச்சாக இவர் இருந்ததால் இவரைக் "குட்டி சாஸ்த்ரியார்" என்றே பொதுவில் சொல்ல ஆரம்பித்தார்கள்.

இவர் தம்முடைய தைர்யத்தை முதலில் காட்டியது ராஜாவிடமல்ல, வேறொரு மஹாபண்டிதரிடமேயாம். அப்போது அவருக்கு வயஸு பதினெட்டுதான்.

பெங்காலில் 'நாடியா' என்கிற நவத்வீபத்தில் விசேஷமாக உருவாக்கப்பட்ட நவீன தர்க்க சாஸ்த்ரத்தில் கரை கண்ட அந்த ஊர் வித்வான் ஒருவர் திருவிடைமருதூருக்கு வந்து அமரஸிம்ஹ மஹாராஜாவின் முன்னால் வாதம் நடத்தினார். அவருக்கு ஈடு கொடுக்கத் தஞ்சை சீமையில் யாருமே இல்லாமல் ஸதஸ் விக்கித்து அவமானப்பட்டு நின்ற போது யுவாவான குட்டி சாஸ்த்ரி பதில் கொடுத்து என்னவோ முனகினார். சிறுபிள்ளை என்று அலக்ஷ்யமாக பெங்கால் பண்டிதர் கையமர்த்த, இவருக்கு மானம் பொங்கிக்கொண்டு வந்தது. முனகலாக ஆரம்பித்தவர் கர்ஜனையாகவே முழுங்க ஆரம்பித்தார். "காதாதரி" என்ற தலை சிறந்த நவீன தர்க்கப்புஸ்தகத்தில் சொல்லியுள்ள அறுபத்துநாலு வாதங்களையும் அலசினார். பெங்கால் பண்டிதரை முனகக்கூட முடியாமல் வாயடைத்து உட்காரச் செய்துவிட்டார் இப்படித் தமிழ்நாட்டின் வித்வத் ஸமூஹத்துடைய மானத்தையே அவர் காப்பாறியதில்தான் அவருடைய தைர்யம் அங்குரார்ப்பணமாயிற்று.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**சரபோஜிக்கு பணியாத சாஸ்த்ரியார்**

ராஜாவிடம் அவர் மானம் மரியாதைகளைத் துணிந்து காப்பாற்றிக் கொண்ட கதைக்கு வருகிறேன்.

அவருக்கு வயஸானபோது சரபோஜி மஹாராஜா தஞ்சாவூரிலிருந்து கொண்டு ஆட்சி நடத்திவந்தார். அவர் தினமும் பக்கத்திலே ஒரத்தநாட்டுக்குக் குதிரையின் மேல் ஆளனுப்பி, அங்கே தாம் குடியேற்றியிருந்த ஸத் பிராம்மணர்கள் அன்றன்றும் வைதிக கர்மாக்களும் பூஜையும் முடித்து விட்டுத் தருகிற மந்த்ராட்சதையைக் 'கலெக்ட்' பண்ணிக்கொண்டு வரச் செய்து, அதைத் தம் சிரஸில் போட்டுக் கொண்ட பிறகே போஜனம் செய்வார். இந்த ப்ராம்மணோத்தமர்களில் குட்டி சாஸ்த்ரிகளும் ஒருவர்.

அவர் கொஞ்சங்கூட லோபமில்லாமல் தீர்கமாக அநுஷ்டானங்கள் பண்ணுகிறவர். ராஜாவின் குதிரைக்காரன் வந்தவிட்டானே என்பதற்காக "ஓட்ட"மாட்டார். (குதிரையைச் சொல்லவில்ல. அநுஷ்டானத்தை!) கவனமாக, நிறுத்தி நிதானமாக அநுஷ்டானங்களை முடித்தே அக்ஷதை தருவார். இதனால் மஹாராஜாவின் போஜனம் பல நாட்களில் 'டிலே' ஆயிற்று.

ஒரு ஸமயம் சரபோஜி அவரைப் பார்த்தபோது, "சாஸ்த்ரிகளே அநுஷ்டானம் ரொட்ப நிதானமாக நடக்கிறாப்போல இருக்கே" என்று கேட்டுவிட்டார்.

சரபோஜி மதிப்புக்குரியவர். கலைகளுக்கு அளவில்லாத பணி செய்திருக்கிறவர். ஸரஸ்வதி மஹால் கலெக்ஷன் ஒன்று போதும் அவருடைய உயர்ந்த பணிக்கு!ஆனாலும் ராஜா என்பது எங்கேயாவது, எப்போதாவது துருத்திக் கொண்டு வருமாதலால் இப்படிச் சொன்னார்.

அவ்வளவுதான்!சாஸ்த்ரியாருக்குத் தாளவில்லை. 'ஒரு ராஜாவுக்காக ப்ராம்மணானவன் வேத கார்யத்தையும் தேவ கார்யத்தையும் அவற்றுக்கான விதிமுறைகளை 'ரிலாக்ஸ்' செய்து பண்ணுவதா? ராஜாவுக்கே ஆசீர்வாதமாக அக்ஷதை அனுப்பி வைக்கிறவனாக வெளி பார்வைக்கு வைத்தாலும் அவனுக்கு ஊழியம் செய்கிற ஸேவகன் என்ற நிலையில்தானே நம்மை உள்ளுக்குள்ளே நினைப்பதாகத் தெரிகிறது?' என்று குன்றி, மனம் வெதும்பினார்.

அன்றைக்கே ராவோடு ராவாக ஊரைக் காலி பண்ணிக் கொண்டு பெண்டாட்டியுடன் கூடக் கிளம்பிவிட்டார். நேரே அர்த்த ஜாமத்துக்குத் திருவையாறு வந்து சேர்ந்தார்.

அம்பாள் தர்மஸம்வர்த்தனியிடம் ஓடிப்போய் அப்படியே அவள் சரணத்தில் விழுந்து இப்படித் தம்முடைய ஸ்வதர்மத்துக்கு பங்கம் வரும் ஹேது நேர்ந்துவிட்டதற்காகக் கதறி முறையிட்டார். ஸதிபதிகள் அதோடு அப்படியே கிளம்பி, நின்ற இடத்தில் நிற்காமல் மஹாராஷ்ட்ராவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**ஸ்நேஹத்திலும் சிறந்த சாஸ்த்ரியார்**

குட்டி சாஸ்த்ரிகள் அங்கே எத்தனையோ இடையூறுகளுக்கு ஈடு கொடுத்த, அப்புறம் பாஜிராவ் ஸ்ரீமந்தன் என்ற பேஷ்வாவின் ராஜாங்க ஸதஸில் வித்வானானார்.

மஹாராஷ்ட்ராவில் முக்ய மந்த்ரிகாளக இருந்த பேஷ்வா என்பவர்களே ராஜாவைப் போன்ற ஆட்சியதிகாரம் பெற்றிருந்தார்கள். "ஸ்ரீமந்த" என்பது அவர்களுடைய" டைட்டில்."

பண்டிதர்காளன கவிஞர்கள் முறை தவறி நடக்கிற அரசனை விட்டுவிடுவது போலவே, வித்வானாகவும் ரஸிகனாகவும் உள்ள அரசனோடு ஒட்டிக்கொண்டு உறவு வைத்துக்கொள்வார்கள். குட்டிகவி ஷாஹஜியைப் போற்றி ஆச கவி செய்ததாகப் பார்த்தோமல்லவா?

இம்மாதிரி குட்டி சாஸ்த்ரியாரிடம் நல்ல விஷய ஞான முள்ளவரான ஸ்ரீமந்தனைப் போற்றி, அவரிடம் நெருக்கமான அன்பு பாராட்டினார். அவர் காட்டிய தீரத்தைப்போலவே இந்த அன்பு விச்வாஸத்தையும் ச்லாகித்துக் சொல்லும்படியாக ஒன்று செய்தார்.

வெள்ளைக்காரர்கள் இங்கே சண்டை செய்தும், வேறே க்ருத்ரிமங்கள் செய்தும் நாடு பிடிததுக்கொண்டிருந்த காலம்

அது. மஹாராஷ்டிரத்தின் சின்னச்சின்ன ராஜாக்களையும் ஸ்ரீமந்தன் ஒன்று திரட்டித் துணை சேர்த்துக்கொண்டு வெள்ளைக்காரப் பாடையெடுப்பதை இரண்டுமுறை எதிர்த்தார்.

கடைசியில் 1818-ல் அவர் தோற்றுப்போகும்படி ஆயிற்று. அதோடு பேஷ்வா வம்சமே முடிந்து வெள்ளைகாரர் ஆதிக்கம் ஏற்பட்டுவிட்டது.

தோற்றுப்போய் பேஷ்வா பதவியும் போனவுடன் ஜயித்தவர்கள் "ஸ்ரீமந்த" டைட்டிலையும் பிடுங்கிக்கொண்டு, தோற்றுப் போன எல்லா ஸ்வதேச ராஜாக்களுக்கும் "உப்புக்குச் சப்பாணி" என்று கொடுத்திருந்த "மஹாராஜ்" என்ற பெயரை பாஜிராவுக்கும் கொடுத்தார்கள். ரொம்பவும் பெரிய மனஸு பண்ணியது போல அவருக்கு ஒரு பென்ஷனைக் கொடுத்து, வடக்கே பஹுதூரத்துக்கு அந்தண்டை, கான்பூர் பக்கத்தில் உள்ள பிதுர் (Bithur) என்ற ஊருக்கு அனுப்பினார்கள, ஜெயிலில் வைப்பதையே திரிசமனாக பெரிய பங்களாவில் வைக்கிறதுபோலக்காட்டிவிட முடிவு பண்ணார்கள். ஜனஸமூஹத்தை விரோதித்துக்கொண்டால் கஷ்டம் என்பதற்காகவேதான் இப்படி, தோற்றுப் போனவர்களைக் கொல்லாமல், பென்ஷன் தருவது, ஊரை மட்டும் விட்டுக் கொண்டுபோய் பங்களாவில் வைப்பது என்றெல்லாம் கண்துடைப்பதை வெள்ளைக்காரர்கள் நிறையப் பண்ணியிருக்கிறார்கள்.

வெள்ளைக்காரர்கள் அவரைச் சிறைப் பிடித்துவிட்டார்கள், கான்பூர் பக்கத்தில் எங்கேயோ ஜெயில் மாதிரி கொண்டு போய் அடைத்து வைக்கப்போகிறார்கள் என்ற செய்தி குட்டி சாஸ்த்ரிகளுக்குத் தெரிந்தது.

உடனே ஓடினார். கைதியாயிருந்த பாஜிராவோடு வெள்ளைக்கார அதிகாரிகள் புறப்படும் ஸமயம். "நீ நன்றாயிருந்த காலத்தில் உன்னோடு வாழ்ந்தேன். இப்போ உன் கஷ்டகாலத்தில் உன்னைவிட்டுப் பிரியமாட்டேன், நானும் கான்பூர் வருவேன்" என்றார்.

பாஜிராவ் எவ்வளவோ தடுத்துப்பார்த்தும் அவர் கேட்கவில்லை. குட்டிசாஸ்த்ரியாரும் அவர்களோடேயே

போனார். வழியெல்லாம் பிச்சை எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டே அத்னாம் தூரம் போனார்.

கங்கைக்கரையில் பாஜிராவைக் காவல் வைத்திருந்த இடத்திலேயே தாமும் தங்கிவிட்டார். அத்தனை அன்பு, விச்வாஸம், நன்றி!

அப்புறம் ஒரு வருஷத்துக்குப்பிறகு காசிக்கு வந்தார். அந்த ஸமயம் சரபோஜியும் ஸரஸ்வதி மஹாலுக்கு நிறைய அபூர்வச் சுவடிகள் சேர்பதற்காக காசிக்கு வந்திருந்தார். குட்டி சாஸ்தீரியாரைப் பார்த்ததும், ஏதோ வேளைக் கோளாரினால் ஆதியிலே தாம் அவரிடம் சொன்னதற்கு ரொம்ப வருத்தம் தெரிவித்து அவரை தஞ்சாவூருக்கும் திரும்பி வருமாறு கேட்டுக் கொண்டார். பாஜிராவும் தம்மோடு பினைத்துக்கொண்டு சாஸ்த்ரிகள் கஷ்டப்படுவதைப் பொறுக்காமல் அவரை ஊருக்குத் திரும்பும்படி வற்புறுத்தினார். முடிவில் சாஸ்த்ரியார் ஒப்புக்கொண்டார். ஊருக்குத் திரும்புவதற்கு முந்தி அப்போது காசியிலே வாஸம் செய்துகொண்டிருந்த அஹோபில பண்டிதர் என்ற மஹா பண்டிதரிடம் வேதாந்த சாஸ்த்ர அப்யாஸம் பண்ணினார்.

பிறகு, ஸொந்த ஊருக்கே புறப்பட்டார். பழைய ஸ்நேஹிதர்களைப் பார்க்க எண்ணி மஹாராஷ்ட்ரா வழியாக வந்தார். அப்புறம் தமிழ் நாட்டுக்கு வருவதற்காக கர்நாடகத்தை 'டச்' பண்ணினபோது, அப்போது மைஸூர் மஹாராஜாவாயிருந்த ஒரு க்ருஷ்ண ராஜ உடையார் தம்முடைய ஆஸ்தானத்தை சாஸ்த்ரிகள் அலங்கரிக்க வேண்டுமென்று ரொம்பவும் கேட்டுக்கொண்டார். ப்ரியத்தினாலேயே நிர்பந்தப்படுத்தி அவரை அங்கேயே நிறுத்திக்கொண்டுவிட்டார்.

அதிலிருந்து சாஸ்த்ரிகளுக்கு மைஸூர் ராஜா யதேஷ்டமாக ஸம்பாவனைகள் செய்துவந்தார். அப்படியிருந்தும் அவரிடமும்கூட சாஸ்த்ரிகள் தம்முடைய 'இன்டிபென்டென்ட்' மனப்பான்மையை ஒரு ஸமயம் நிலைநாட்டிக் காட்டினார்.

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

**மைஸூர் மன்னருக்கு மறுதலிப்பு**

மைஸூரிலிருந்துபோதுதான் குட்டி சாஸ்த்ரி ஸோமயாகம் செய்து யஜ்வா ஆனது. இதையறிந்த உடையார், "வாஜபேய யாகம் செய்கிறவருக்கு ராஜாவே குடைபிடிக்கவேண்டுமென்று இருக்கிறது. எனக்கு அந்த பாக்யத்தைத் தருவதற்காக தாங்கள் ஒரு வாஜபேயம் பண்ணவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

ஆனால் குட்டி சாஸ்த்ரிகள், "பாசர்த்யார்கள் (மேல் நாடடினர்) கையில் மாட்டிக்கொண்டு காலம் இருக்கிற இருப்பில் முறை தப்பாமல் யாகம் பண்ணுவது மிகவும் ச்ரமமாயிருக்கிறது. ப்ராம்மண தர்மத்ததுக்கு நான் இழைத்திருக்கக்கூடிய தவறுகளை நிவ்ருத்தி செய்துகொள்வதற்காகவே வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு இந்த ஒரு யாகம் பண்ணினேன். வாஜபேயம் பண்ணப்போய் என்ன அபசாரத்தச் செய்யும்படி ஆகுமோ என்று பயப்படுகிறேன். ஸமூஹத்தில் இதைப் புரிஞ்சுக்கணும்" என்று மறுத்துவிட்டார். மரியாதையாகவே ஆனாலும், தீர்மானமாக மறுத்துவிட்டார்.

ராஜாவின் வார்த்தைக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற பயமும் அவருக்கில்லை, வெண்கொற்றக்குடை வேந்தனே தமக்குக் குடை பிடிக்கத் தாம் அவப்ருத ஸ்நானத்துக்கு பவனி செல்லலாமே என்ற ஆசை, சபலமும் இல்லை.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிகளின் தன்மான உணர்ச்சி**

"நம் பந்து"

குட்டி சாஸ்த்ரிகள் நமக்கெல்லாம் பந்துவைப் போல. எப்படியென்றால் அவர், அவருடைய பிதா நரஸிம்ஹ சாஸ்த்ரி, பாட்டனார் மாதவ சாஸ்த்ரி ஆகிய எல்லோரும் நம் ஸ்ரீ மடத்து வித்வான்களாக இருந்திருப்பவர்கள் வாஜபேயத்தில் ராஜா பிடிக்கும் குடை வேண்டாமன்று சொன்ன அவர் தமது கொடையாக நம் மடத்துக்கு அனுப்பி வைத்த அலங்காரக் குடைகள் நிறைய உண்டு ஸ்வாதந்த்ரியம், ஸ்வய மரியாதை இவற்றோடு பிறர் மரியாதையைப் பேணுவது, பிறர் நலனைப் பேணுவது, அன்பு ஆகிய சிறந்த குணப்பண்புகளைக் கொண்ட கவிகளில் "மஹா"பட்டம் பெற்ற இரண்டு பேர் கதையும் கேட்டீர்கள். இன்னம் இப்படி அநேகம் பேர் உண்டு. த்யாகையார்வாள் சொன்னாற்போல, "அந்தரிகி வந்தனமு".

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## பண்பாடு

## கவிஞர், அறிஞரின் தற்பெருமை

## அதுவும் ஓர் அழகு

ஸ்வய மரியாதை என்பது கொஞ்சம் கவனக் குறைவாக இருந்துவிட்டால் தற்பெருமையாகி விடும். அப்படிப்பட்ட ஸமயங்களில் மற்றவர்களைத் தூக்கி எறிந்து ஆணவமாகவே கூடப் பேசிவிடுவதுண்டு. அதாவது மற்றவரின் ஸ்வய மரியாதையை பங்கப்படுத்துவதுண்டு. நல்ல கவிஞர்களாக, அறிந்தவர்களாக உள்ளவர்களும் இப்படி ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தில் பண்ணியிருக்கிறார்கள். காளிதாஸன், கம்பன் ஆகியவர்களைப் பற்றியே இம்மாதிரியான கதைகளும் இருக்கின்றன. அதிலும் கதா ரஸம் இருப்பதால் சொல்கிறேன்.

இந்த விஷயங்களை "deep-ஆக எடுத்துக்கொண்டு அவர்களை எடை போட்டுவிடக்கூடாது. அவர்களுடைய

உயர்ந்த குணங்களும் பண்புகளும் பெரிய 'ரிஸர்வாயர்' மாதிரித் தேங்கியிருந்ததென்றால், அதிலே மேல் பரப்பிலே எப்போதோ எழுந்திருந்து அப்புறம் அமுங்கிப் போய்விடுகிற அலைகள் மாதிரிதான் இவற்றை நினைக்கவேண்டும். இப்படி அலை கொஞ்சம் வீசுவதே ரிஸர்வாயருக்கு அழகு. நம்மிடம் தற்பெருமை அலையடித்தால் அது சொம்பு மாதிரி, டம்ளர் மாதிரி இருக்கிற ஜலத்தில் அலை அடிப்பதுபோன்ற விபரீதமாக ஆகும்!

தங்களுடைய மேதாவிலாஸத்தைக் 'கான்ஷஸாக'த் தெரிந்துகொண்டிருந்த கவிகளும் அறிஞர்களும் இப்படி மற்ற கவிகளையோ, பண்டிதர்களையோ, ஆதரவாளர்களான ப்ரபுக்களையோ அலக்ஷ்யமாகப் பேசி, பாடியிருப்பதாக அநேகத் துணுக்குகள் இருக்கின்றன.

ஸாதாரணமாக போட்டி, பொறாமை இருப்பது தப்புதான். ரொம்பத் தப்புதான் ஆனாலும் வித்யை வளர வேண்டுமானால் அதற்கு இதுவும் உதவி பண்ணுகிறது, ஸ்பர்தயா வர்ததே வித்யா என்பார்கள். ரன்னிங் ரேஸில் கலந்துகொண்டவன் போட்டி தப்பு என்று பின்னாடி நின்று விட்டால் எப்படியிருக்கும்? ஒரு மாணவன் மற்றவர்கள் rank எடுக்கட்டுமென்று போட்டிபோடாமல் இருந்தால் ஸரியா?

பொறாமையில்லாமல் போட்டி இருப்பதுதான் உத்தமம். அதுதான் ஸரி. ஆனால் பெரிய பண்டிதர்கள், கவிகள் விஷயத்தில் இந்தப் பொறாமைகூட மிஞ்சிப் போகாதபோது அவர்களுடைய குணசித்ரத்துக்கு ஒரு 'கான்ட்ராஸ்ட்' (வேறுபாட்டு ருசி) தருவதாகவே அழகு செய்கிறது. மிஞ்சிப் போகும்போது அவர்களுக்கும் ஒரு குட்டு விழுந்து பாடம் பெற்று அடங்கியும் போயிருக்கிறார்கள்.

காளிதாஸன் யாரை எடுத்தெறிந்து பேசினானென்றால், தன்னுடைய ஸஹ கவிகளையோ ராஜாவையோ அல்ல, அதற்கும் மேலே அம்பாளை, ஸாக்ஷாத் பராசக்தியையே அப்படிப் பேசிவிட்டான் அவளுடைய உச்சிஷ்ட தாம்பூலம்தான் அவனுக்கு கவித்வ சக்தியே கொடுத்தது "காளி - தாஸன்" என்பதாக அவளுடைய அடிமை என்றே பேர் வைத்துக் கொண்டிருந்தான். அம்பாள் ஸ்தோத்ரம் என்றவுடன் யாரும் கற்றுக் கொண்டு செல்லும் "ச்யாமளா

தண்டகம்" அவன் வாக்கிலிருந்து வந்ததுதான்.

ஆனாலும் என்ன ஆயிற்று என்றால் :

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

## பண்பாடு

## கவிஞர், அறிஞரின் தற்பெருமை

## தெய்வத் தீர்ப்பு கோருவது

கவிகளுக்குள்ளே ரொம்ப போட்டி முற்றி, வாதத்தினாலே அவர்களில் எவருடைய ஸுபீரியாரிடியையும் நிச்சயிக்க முடியாமல் போனால், அப்போது ராஜா தெய்வத்தின் தீர்ப்புக்குத்தான் விஷயத்தை விட்டு விடுவான். எல்லாக் கவிகளையும் வித்வான்களையும் கோவிலுக்கு அழைத்துக்கொண்டு போவான். அங்கே பூ கட்டி வைத்து எடுத்துப் பார்ப்பார்கள். அல்லது போட்டிக் கவிகளின் கவிதைகளைக் கொண்ட சுவடிகளைத் தராசிலே நிறுத்திப் பார்ப்பார்கள். ஸாதாரணமாகப் பார்த்தால் அந்தச் சுவடிக் கட்டுகளில் எதில் ஜாஸ்தி கவிதைகள், அதாவது ஓலைகள் இருக்கிறதோ அதுதான் அதிக எடையாக இருக்கும். ஆனாலும் இப்படி தெய்வ ஸந்நிதானத்தில், தெய்வமே கதி என்று அவர்கள் அத்தனைப் பேரும் நம்பி, நாஸ்திக வாதமும் பரிஹாஸமுமில்லாமல் பூர்ணமாக நம்பி, நிறுத்துப் பார்த்தபோது, ஓலை 'வெய்ட்டி'யில் ரொம்ப லேசாயிரு ந்தால்கூட, எது கவிதையிலே உசந்த தரமானதோ அதை வைத்த தட்டுதான் கீழே இறங்கும். துளியூண்டு திருக்குறளை சங்கப் பலகையில் வைத்ததும் பாக்கி அத்தனை சங்கப் புலவர்களும் பொற்றாமரைக் குளத்தில் விழுந்துவிட்டார்களல்லவா? அந்த மாதிரி!ஞானஸம்பந்தர் கதையிலே வருவதுபோல அனல்வாதம், புனல் வாதம் என்று நடத்தியும் திவ்ய சக்திகளின் முடிவுக்குப் போட்டியை விடுவதுண்டு. அல்லது எல்லாருமாக ஸந்நிதிக்குப் போய் அப்படியே மௌனமாக ப்ரார்த்தித்து த்யானம்

பண்ணுவார்கள்.

அர்ச்சகரின் மேல் ஆவசேம் ஏற்பட்டு ஈச்வர சித்தம் தெரியும். அல்லது அசரீரி கேட்கும்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிஞர், அறிஞரின் தற்பெருமை**

**காளிதாஸனும் அம்பிகையும்**

காளிதாஸன், பவபூதி, தண்டி இந்த மூன்று பேரில் யார் உசத்தி, அவர்களை எப்படி பண்ணுவது என்று வாதப் பரீட்சைகள் மூலம் முடிவுகட்ட முடியவில்லை. அதனால் போஜன் எல்லாரையும் அம்பாள் ஸந்நிதானத்துக்கு அழைத்துக்கொண்டு போனான்.

அம்பாள் அசரீரியாக முடிவு சொசன்னாள்.

"கவிர் - தண்டி கவிர் - தண்டி

பவபூதிஸ்து பண்டித:1"

"தண்டியைக் கவி என்று சொல்லவேண்டும். ஒரு தரத்துக்கு இரண்டு தரமாக நிச்சயப்படுத்தி அப்படிச் சொல்லலாம். பவபூதியோ என்றால் பண்டிதர் என்க வேண்டும்" - என்று அர்த்தம் கொடுக்கும்படியாகச் சொன்னாள்.

பாண்டித்யம் அதிகமென்றால் அநேக விஷயங்களைப் பற்றிய அறிவு, பாஷையின் இலக்கணத்தில் நல்ல ஞானம் இருப்பது என்று அர்த்தம். ஆனால் இலக்கணம் வேறே, இலக்கியம் வேறே!கவிக்கு ரொம்பவும் விஷயம் தெரிந்து , பாஷா சாஸ்த்ர ஞானம் நிறைய இருக்கணுமென்ற அவச்யமில்லை. ஹ்ருதயத்திலே எதிலோ, ஒன்றிலே, சின்ன விஷயமானாலும் அதிலே, அப்படியே ஊறி ரஸத்தை அநுபவித்து, அதைப் பெரிய grammar இல்லாவிட்டாலும்

மதுரமான லளிதமான வாக்கிலே மற்றவர் ஹ்ருதயத்திலும் புகும் விதத்தில் நயமாக நகாஸ் செய்து சொல்கிறவன்தான் கவி. பாண்டித்யம் கவித்வம் இரண்டு ஸமமாகச் சேர்ந்திருந்தால் விசேஷம். ஆனாலும் அவை பொதுவாகக் 'கவி' என்கப்பட்வர்களில் வெவ்வேறு 'ப்ரபோர்ஷனி'ல் (விகிதத்தில்) தான் சேர்ந்திருப்பதைப் பார்க்கிறோம். சிலதைத்தான் poetic என்னும்படியாகவும், சிலதை Scholarly என்னும்படியாகவும் இருக்கிறது.

இதிலேதான் தண்டியிடம் பாண்டியத்த்தைவிடக் கவிதாரஸம் அதிகம் என்றும், பவபூதியிடம் கவிதா ரஸத்தை விட அறிவின் கனம் அதிகம் என்றும் பொருள் ஏற்படும்படியாக அம்பாள் ரத்னச் சுருக்கமாகத் தீர்ப்புக் கொடுத்தாள். காளிதாஸனைப் பற்றி இதில் எதுவும் இல்லை.

'அப்படியானால், தன்னை அவள் கவிஞன் என்றும் வைக்காமல், அறிஞன் என்றும் வைக்காமல் அடியோடு கழித்துக் கட்டிவிட்டாளா?' என்று அவனுக்குப் பொத்துக்கொகண்டு வந்துவிட்டது.

அப்போதுதான், கவித்வ சக்தியான சிந்தனைக்கும் வாக்குக்குமே எவள்தான் மூலமோ, எவளால்தான் காளிதாஸன் ஆளானதோ அவளையே தூக்கி எறிந்து ஒரு வார்த்தை சொல்லிவிட்டான். நம்மைத் தூக்கிவாரிப் போடுகிறமாதிரி வார்த்தை சொல்லிவிட்டான்.

"அப்படின்னா நான் யார்டீ....?" என்று திட்டி ஒரு வார்த்தை போட்டுவிட்டான். "கோ(அ)ஹம்...." என்று ஸம்ஸ்க்ருதத்திலே கோபமாகக் கேட்டுவிட்டான்.

அவன் அவஸரப்பட்டுவிட்டான்!தண்டியையும், பவ பூதியையும் பற்றிச் சொன்னதோடு அம்பாளுடைய 'ஜட்ஜ்மென்ட்' முடிந்துவிடவில்லை. அதைத் தொடர்ந்து காளிதாஸனைப் பற்றியும் அவள் சொல்வதற்குத்தான் இருந்தாள். ஆனால் ஒருத்தர் கவிஞர், இன்னொருத்தர் அறிஞர் என்று அவள் சொன்னவிட்டு, இனிமேலே சொல்ல எதுவுமில்லை என்று காளிதாஸன் அவஸரப்பட்டுவிட்டான். பரதேவதையை துச்சமாக வார்த்தை சொல்லிவிட்டான்.

அதற்காக அவள் கோபம் கொள்ளவேயில்லை. நம்

குழந்தையை நாம் ஏதோ அலட்சியப்படுத்திவிடுகிறோம், ரொம்பவும் கார்யமாயிருந்ததில், அது சொல்ல வந்ததைக் காதில் போட்டுக் கொள்ளாமலிருந்து விடுகிறோம். அதனாலே அது கோபித்துக்கொண்டுபோய் உம்மென்று உட்கார்ந்துவிடுகிறது. அந்தக் குழந்தைக்காக அடுப்பிலே பட்சணம் பண்ணிக்கொண்டிருந்ததால்தான் நாம் அது சொல்ல வந்ததை கவனிக்காதது. பட்சணம் பண்ணியானதும் எடுத்துக்கொண்டுபோய், "உர்உர்" என்று உட்கார்ந்திருக்கிற குழந்தைக்கு கொடுக்கிறோம். "வேண்டாம், போ!" என்று வாரி நாம் மூஞ்சியிலேயே அடிக்கிறது. அதனிடம் நமக்குக் கோபமா வருகிறது?" ராஜாப் பயலே!உனக்கு இத்தனை ரோஷமா? உன்னைக் கவனிக்காத இந்த அசட்டு அம்மாவை நன்னா அடி!" என்று குனிந்துகாட்டடத்தானே தோன்றுகிறது?

அம்பாளுக்கும் அவனுடைய குழந்தையான காளிதாஸனின் சீறியதில் கோபமே வரவில்லை, பெருமைதான் பட்டாள்!

"நான் யாருடீ?....." என்று அவன் கேட்டதற்கு பதிலாக,

"த்வமேவாஹம், த்வமேவாஹம்,

த்வமேவாஹம் ந ஸம்சய:"

என்றாள்.

"நீ நானேதான், நீ நானேதான், நீ நானேதான். இதில் ஸந்தேஹமில்லை" என்று ஒரு தரத்துக்கு மூன்று தரமாக ஸந்தேஹத்துக்கிடமில்லாமல் சொல்லிவிட்டாள். "நீ நானேதான்", அல்லது, "நீயேதான் நான்" என்று சொல்லவேண்டும். (த்வம் ஏவ - நீயேதான், அஹம் - நான்)

குறுக்கே சீறிக்கொண்டு இவன் கேட்டிருக்காவிட்டால் அவளாக என்ன சொல்லியிருப்பாளோ? 'ஒரு கவி நிஜமான கவி, இன்னொரு கவி அறிஞர்' என்று சொன்ன அப்புறம், இவன் (காளிதாஸன்) இரண்டும் பூர்ணமாகச் சேர்ந்த பண்டித கவி' என்கிற மாதிரி ஏதாவது 'ட்ரிப்யூட்' (பாராட்டு) கொடுப்பதோடு நிறுத்திக் கொண்டிருப்பாளோ என்னவோ? அவன் கோபத்தில் இடை மறித்ததாலேயே அவனைத் தானே" என்று உச்சிக் கோடிக்கு உசத்திச் சொல்லிவிட்டாள்!

பண்டிதர்களுடைய அறிவெல்லாம் அடங்கிய ஞானம்

அவள்தான். ஜ்ஞாநதா, ஜ்ஞாநவிக்ரஹா (ஞானமளிப்பவள், ஞானவடிவினள்) என்று ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியிருக்கிறது. கவிதா ரஸத்துக்கும் அவள்தான் மூலம். தைத்திரீயத்தில் பரமாத்ம தத்வமாகச் சொன்ன ரஸம் அவள்தான். ரஸஜ்ஞா, ரஸசேவதி அதாவது, ரஸமறிந்த ரஸிகை, ரஸம் நிரம்பிய களஞ்சியம் - என்று ஸஹஸ்ர நாமம் சொல்கிறது. இப்படி இரண்டும் சேர்ந்திருப்பதில் தனக்கு ஸமம், தானே கூட, யாரென்றால் காளிதாஸன்தான் என்றாளாம் 'தான் இப்டிபப் பாராட்டிச் சொன்னதில், ஏதோ ஒரு ஸமயம் தற்பெருமை என்றில்லாமல் எப்போது பார்த்தாலும் மண்டைக்கனம் பிடித்தவனாகச் காளிதாஸன் ஆகிவிட்டால் என்ன ப்ணணுவது? அப்படிச் ஆகிவிடக் கூடாது ' என்பதால் இன்னொரு ஸந்தர்ப்பதில அம்பாள் அவனை ஒரு இறக்கு இறக்கவும் செய்தாள்.

இப்போது பவபூதிக்கும் காளிதாஸனுக்கும் மட்டும்தான் போட்டி. இந்த ஸமயத் தராசிலே இரண்டு பேர் கவிதையையும் எதிரெதிர்த் தட்டுக்களில் வைத்து அம்பாள் ஆலயத்தில் எடைபோட்டுப் பார்க்கத் திர்மானமயிற்று. ஏதோ ஒரு விஷயமாக போஜன் இரண்டு பேரையும் கவி பண்ணச் சொன்னதில்தான் எது உசத்தி என்று அவனாலும் ஸதஸாலும் சீர்தூக்கிச் சொல்லத் தெரியாமல் அம்பாள் சித்தத்துக்கு விட்டது. போஜனே ஒரே அளவான ஒலை நறுக்குகளில் இரண்டு பேர் கவிதையும் எழுதி எதிரெதிர்த் தட்டுகக்ளில் வைத்தான்.

அம்பாள் தர்ம ந்யாயமாகக் கவிதைகளின் தரத்தில் சித்தத்தைச் செலுத்தியதில் பவபூதியின் தட்டு மேலாகவும், காளிதாஸனுடைய தட்டு கீழாகவும் போக ஆரம்பித்தது. அதாவது காளிதாஸனுக்கே வெறறி சேர இருந்தது.

உடனே அம்பாள், கவிதைகளை மட்டும் ந்யாயமாகச் சீர்தூக்கிக் காட்டிவிடடர்ல், கவிகளை அந்யாயமாகச் சீர் கெட்டுப்போகப் பண்ணுவதாகி விடுமென்று நினைத்தாள், 'இப்போதும் காளிதாஸனே ஜயீத்தால் அப்புறம் ரொம்பவும் மண்டைக்கனம் ஏறி வீணாய்விடுவான். அதேபோல, ரொம்பவும் 'சரக்கு' உள்ள பவபூதியும் ஏற்கெனவே கொஞ்சம் மறைமுக இறக்கலாக 'பண்டித'ப் பேர் வாங்கினது போதொதென்று, இப்போது நேராகக் காளிதாஸனுக்குத்

தோற்றுப் போனால் மனஸ் உடைந்து சீர்குலையும்படி ஆகும். இரண்டு குழந்தைகளையுமே இப்படி ஆக விடப்படாது' என்று நினைத்தாள். நிமிஷகாலம்தான். அல்லது அதை விடவுங்கூட குறைவு. அம்பாளானதால் அதற்குள் இப்படி நினைத்து, தராசுத் தட்டுகள் ஏறி இறங்குவதை மாற்றுவதற்கும் அந்த கணத்துக்குள்ளேயே ஒரு வழியை நிச்சயம் செய்துகொண்டாள்.

அழகுக்கு அழகு செய்பவளான பரதேவதை ஸர்வாலங்கார பூஷிதையாக இருப்பவள். அவள் தலையில் கேசத்தில் பின்னலின் உச்சியில் புஷ்பம் வைத்துக் கொண்டிருப்பது மட்டுமில்லை, காதின் மேலேயும் ஒரு புஷ்பத்தைச் சொருகிக் கொண்டிருப்பாள். (லலிதா)ஸஹஸ்ரநாம வர்ணனையில் இப்படி இருக்கிறது. கேசத்தில் சம்பகம், சோகம், புன்னாகம், ஸௌகந்திகம் ஆகிய புஷ்பங்களைச் சூட்டிக் கொண்டிருப்பவள் என்று முதலில் வருகிறது. சம்பகாசோக - புந்நாக - ஸௌகந்திக - லஸத் - கசா. அப்புறம் ரொம்பவும் மனஸைக் கொள்ளை கொள்ளும் விதத்தில் செவிப்பூவாகக் கதம்ப புஷ்பக் கொத்தை வைத்துக் கொண்டிருக்கிறவள் என்று வருகிறது. கதம்ப - மஞ்ஜரீ - க்லுப்த - கர்ணபூர - மநோஹரா.

நம் கதை நடந்தபோது இம் மாதிரி கல்ஹாரம் என்ற குவளை மலரை அம்பாள் காதின்மேல் அணிந்துகொண்டிருந்தாள்.

பவபூதியின் தட்டு மேலே கிளம்பியபோது, அந்தக் காதுப் பூவை ஸரிசெய்து கொள்கிறதுபோல் விரலாலே மெதுவாக அழுத்திக்கொண்டாள். அப்படிப் பண்ணுவதிலேயே ஸாமர்தயமாக அந்தப் புஷ்பத்திலிருந்த தேன் சொட்டைச் சுண்டிவிட்டு அது போய் நேரே பவபூதியுடைய ஏட்டின் மேலே விழும்படிச் செய்துவிட்டாள்.

கவிதா "ரஸம்" என்று தேனை நினைத்துத்தான் சொல்கிறோம். மதுர ஸவரூபிணியான அம்பாளுடைய செவிப்பூவின் தேன்சொட்டு விழுந்த கனத்தில், பவபூதியுடைய கவிதையில் குறைந்த ரஸம் 'மேக் - அப்' ஆகிவிட்டது. சட்டென்று அவனுடைய கவிதை (தட்டு) கீழே இறங்கி, காளிதாஸன் கவிதை உயரே போயிற்று. கவிஞர்களை எடுத்துக்கொண்டாலோ இதற்கு நேர்மாறாக பவபூதிக்கு உயர்வு கிடைத்தது, காளிதாஸனை ஒரு இறக்கு

இறக்கினதாயிற்று!

ஆனால் உடனேயே காளிதாஸனுக்கு அம்பாள் செய்த 'ட்ரிக்' புரிந்துவிட்டது. எப்படிப் புரிந்தது என்றால் அவளே, "நானேதான் நீ!" என்று சொல்லியிருந்தாளோ, இல்லையோ? அவள் வாக்கு பொய்க்குமா? அவளாகவே இருந்து அவளுடைய கார்யத்தைப் புரிந்துகொண்டுவிட்டாள்.!

உடனே இதை ஆசு கவிதையாகப் பாடியும் விட்டான்.

ஆனால் முன்னே அவஸரப்பட்டுத் திட்டினானே, அப்படி திட்டியா பாடினான்? இல்லை. உண்மையில் ஸுபீரியராக இருந்த அவனுடைய கவிதையை அவள் மட்டப் படுத்தினதற்காக அவன் திட்டியிருந்தால்கூடத் தப்பு என்று சொல்ல முடியாது. ஆனால் இப்போது திட்டாமல், கொஞ்சங்கூடக் பாபப்படாமல், "அஹோ மே ஸௌபாக்யம்", "ஆஹா என்னுடைய பரம பாக்யத்தை என்ன சொல்ல!" என்றே ஆரம்பித்து, அம்பாளுடைய காதணியான கல்ஹாரத்தின் தேனால் அவள் பவபூதியின் கவிதைக்கு கனம் கொடுத்ததைப் பாடினான்.

நல்லறிவு உதித்ததாலேயே (அதுவும் அவள் க்ருபைதான்) மனஸ் மாறி இப்படிப் பாடினான். "நீயும் நானும் ஒன்று" என்றவள் இப்போது பட்சபாதமாகப் பண்ணினாளென்றால் ஏன்? அவளைத் தவிரத் தான் வேறில்லை என்று இல்லாமல் தனக்கு அஹங்காரம் தலை தூக்குகிறதே, அந்த கனத்தை இறக்கத்தான்

பவபூதியின் பாடலுக்கு கனம் தந்தாள் என்று புரிந்துகொண்டான். அதனாலேயே இதைத் தன் பாக்யமாய் நினைத்துப் பாடினான்.

"அப்படியா விஷயம்?" என்று உடனே பவபூதி காளிதாஸனுக்கு நமஸ்காரம் செய்ய, காளிதான் போஜனிடம் சொல்லி பவபூதிக்கு நூறு மத்த கஜங்களை ஸம்பாவனை செய்யச் செய்தானாம்!

போட்டியும் பொறைமயுமாய் இருந்த இரண்டு மஹா கவிகள் இப்படி ஒற்றுமையானதைத் தெரிந்து கொள்ள நம் மனஸுக்கு மிகவும் ஸந்தோஷமாயிருக்கிறது.

அப்புறம் காளிதாஸனுக்கு நல்ல அடக்கமுண்டாயிற்று. அவையடக்கமாக அவன் செய்துள்ள ச்லோகங்களைப் பார்த்ததால் தெரியும். உதாரணமாக, "ரகுவம்ச"த்தின் ஆரம்பத்தில் இப்படி ஒரு காவ்ய முயற்சியில் தான் இறங்கி யிருப்பது ஏதோ ஒரு சின்னப் படகைக் கொண்டு கடக்க முடியாததாக ஸமுத்ரத்தைக் கடக்கப் புறப்படுவது போலத்தான். ரகுவம்ச திலகனின் கதையை எழுதிய வால்மீகி போன்ற உயர்ந்த கவிகளே ஸாதிக்கக்கூடிய இந்தக் கார்யத்தில் தான் முயற்சிபண்ணுவது நல்ல நெட்டையானவேனே பறிக்கக்கூடிய பழத்துக்கு ஒரு குள்ளன் கை நீட்டிப் பார்ப்பது போலத்தான் என்று விநயமாகச் சொல்கிறான்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிஞர், அறிஞரின் தற்பெருமை**

**கம்பரும் அவ்வையும்**

கம்பருக்கும் இப்படிக் கொஞ்சம் "தான்" ஜாஸ்தியான போது, தமிழ் நாட்டைப் பொருத்த மட்டில் ஸரஸ்வதி அவதாரம் எனத்தக்க அவ்வை அவருடைய "தானை" இறக்கினதாகக் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

தண்டுக்கு நன்னாலு இலையாக முளைக்கிற ஆரைக்கீரையைக் கம்பர் பார்த்தாராம். அதன் பேரைச் சொல்லமல் பதிர் போட்டு அவ்வைக் கண்டு பிடிக்கிறாளா என்று பார்க்க நினைத்தாராம். "ஒரு காலில் நாலிலைப் பந்தலடீ" என்று அவளை அடீ" போட்டுச் சொல்லி விட்டாராம். தனக்கு அவர் டெஸ்ட் வைத்ததே தப்பு, அதிலும் "அடீ" போட்டது மஹா தப்பு என்று அந்தப் பாட்டிக்கு கோபமான கோபம் வந்து, "எட்டேகா லட்சணமே!" என்று ஆரம்பித்து கம்பருக்கு ஒரே "அர்ச்சனை" யாய்ப்பண்ணி "ஆரை அடா சொன்னாய் அது?" என்று

முடித்தாளாம். "அடீ என்று ஆரை அடா சொன்னாய்?" என்று பதிலுக்கு 'டா' போட்டுப் பழி வாங்கினது மட்டுமல்லாமல், ஆரைக் கீரையையும் தான் புரிந்து கொண்டதை "ஆரை, அதாவது, யாரை அடா" என்று கேட்டதன் மூலம் தெரிவித்து விட்டாளாம்!இப்படிக் கதை.

"எட்டே கால் லட்சணம்" என்ன, எப்ப? தெரியுமோல்லியோ?

அப்புறம் அந்தக் கம்பர் எத்தனை அடக்கர் ஆனார் என்தபற்கு அவருடைய ராமாயணத்தைப் பார்த்தால் போதும். ராமர் உள்பட அவர் அவதரித்த ரகு வம்சத்திலே கதையைத் தான் பாட முயல்வது பெரிய ஸமுத்ரத்திலே குட்டிப் படகை இறக்குகிறது போல என்று காளிதாஸன் சொன்னானென்றால், கம்பரோ ராம சரித்ரத்தை தாம் பாட நினைப்பது க்ஷீரஸாகரத்தை ஒரு பூனை நக்கி நக்கிக் குடித்தே தீர்த்துவிட நினைப்பதுபோலத்தான் என்று சொல்லியருக்கிறார். அவ்வளவு அடக்கம் வந்தவிட்டது.

ஸரி, அந்த அவ்வையை யாருக்கும் "தான்" முற்றிவிடப்படாதே!அதை இறக்கின கதையும் கேட்டீர்பீர்கள்.

ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிதான் அப்படி இறக்கியவர். அவள் போகிற வழியில் மாட்டுக்காரப் பையனாக வந்து ஒரு நாவல் மரத்தின் மேலே உட்கார்ந்து கொண்டிருந்தார் முருகர். "பாட்டி!சுட்ட பழம் வேணுமா? சுடாத பழம் வேணுமா? எதைப் பறிச்சுப் போடட்டும்? என்று கேட்டார்.

மஹாமேதையான அவ்வைக்கே பழம் எப்படிச் சுடுமென்று புரியவில்லை. இருந்தாலும் சூடாக இருக்கிற பழத்தைக் கேட்பானேன் என்று சுடாத பழம் கேட்டாள்.

ஸுப்ரஹ்மண்யர் நன்றாகக் கனிந்த பழமாய்ப் பார்த்துப் பறித்துப் போட்டார். உள்ளே கொஞ்சம் 'கொள கொள' ஆகியிருந்ததால் அது பூமியிலே நன்றாய்ப் பதிந்து மண் ஒட்டிக்கொண்டது.

அவ்வை மண்போக அதை ஊதினாள். ஸ்வாமி கலகலவென்று சிரித்து, "பாட்டி!பழம் சுட்டதால்தானே ஊதறே?" என்று கேட்டார்.

அவ்வைக்கு ஆச்சயர்மாகவும் வெட்கமாகவும் ஆகி

விட்டது. 'ஆனானப்பட்ட கம்பர் மாதிரியானவர்களை ஒரு கை பார்த்த நாம் ஒரு மாட்டுக்காரப் பையனிடமல்லவா தோற்றுப் போய்விட்டோம்? நல்ல வஜ்ரம் பாய்ந்த கருங்காலி மரத்தைக்கூட ஒரே பாடாகப் போட்ட கோடாலி, ஒரு வாழை மரத்தை வெட்டமுடியாமல் ஆனமாதிரி அல்லவா இருக்கிறது!

'கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாலி

இருங்கதலித் தண்டுக்கு நாணும்'

என்று நினைத்து அதிலிருந்தே பாடம் பெற்று, இனிமேலே அடங்கயிருக்க வேண்டுமென்று தீர்மாணித்தாள். கனியாத தன்னைக் கனிவித்துக் கொள்ளவே இது பாடெமன்று எடுத்துக்கொண்டாள்.

உடனேயே ஸுப்ரஹ்மண்யர் நிஜமான ரூபத்தை எடுத்துக்கொண்டு அவளுக்கு நிரம்ப அநுக்ரஹம் செய்து, எதெது கொடியது, எதெது இனியது, எதெது பெரியது, எதெது அரியது, என்று ஒவ்வொன்றைப் பற்றியும் அவளைப் பாடவைத்துக் கேட்டுப் பாராட்டினார்.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிஞர், அறிஞரின் தற்பெருமை**

**வில்லிப்புத்தூராரும் அருணகிரிநாதரும்**

கவிதைப் புலமைச் செருக்கில் ரொம்பவும் உக்ரமாகப் போனதை வில்லிப்புத்தூரார் கதையில் கேள்விப்படுகிறோம். புலவர்களையெல்லாம் வாதுக்குக் கூப்பிட்டு, அதிலே தோற்றுப் போனவர்களின் காதையே அவர் மிகவும் க்ரூரமாக அறுப்பது வழக்கம் என்று சொல்கிறார்கள். அருணகிரிநாதர்தான் அவரைக் 'கந்தரந்தாதி' பாடி ஜயித்தார். ஜயித்ததற்காக, அவர் மற்றவர்களைப் பண்ணின மாதிரி இவர் அவரைப் பண்ணாமல், அவருக்கு அடக்கம்

வரும்படியாகவே உபதேசம் பண்ணி, விட்டுவிட்டார். அதனால்தான் "கருணைக்கு அருணகிரி" என்று சொல்வது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிஞர், அறிஞரின் தற்பெருமை**

**நீலகண்டரும் மஹாதேவரும்**

நீலகண்ட தீட்சிதர் பல விதத்தில் பெரியவர். குடிப்பெருமையை எடுத்துக் கொண்டால் பரமேச்ரவனின் அம்ச பூதரான அப்பைய தீட்சிதரின் தம்பிக்குப் பேரர். படிப்பு, அநுஷ்டானம் எல்லவாற்றிலும் சிறந்தவர். மஹாவித்வான். நல்ல பக்தர். பதவியிலும் பெரியவர். மஹால். தஹால் என்று மதுரையிலே சொல்கிற மஹாலையும், மீநாட்சி கோயில் புது மண்டபத்தையும் கட்டிய திருமலை நாயகருக்கு மந்த்ரியாக, அவருக்கு வலது கை மாதிரி விளங்கியவர். குணஸம்பத்தும் நிரம்பப் பெற்றவர். இப்படிப்பட்டவரும் ஒரு ஸமயம் தன் ஸ்தானம், யோக்யதை, குலம் முதலியவற்றினாலே உயர்வு மனப்பான்மை அடைந்து விட்டதாக இருக்கிறது.

தீட்சிதரின் காலத்தில் - அதாவது 16-ம் நூற்றாண்டின் பின்பாதி, 17-ம் நூற்றாண்டின் முன் பாதியில் - தஞ்சாவூர் ஜில்லா பழமார்நேரி க்ராமத்தில் மஹாதேவ சாஸ்த்ரி என்ற மஹா பண்டிதர் இருந்தார். பாண்டித்யம் குறைவில்லாமலிருந்தும் தீட்சீதரைப் போல இவருக்கு எல்லா ஜனங்களிடையேயும் ப்ரக்யாதி இல்லை. பண்டிதருலகுக்கு இவருடைய பெருமை தெரியும்.

பழமார்நேரிக்குப் பக்கத்தில் ஐராவதேச்வரர் கோயில் இருக்கிறது. அங்கே அலங்காரேச்வரி என்று அம்பாள் இருக்கிறாள். அந்த அம்பாளைத்தான் மஹாதேவ சாஸ்த்ரி நல்ல பக்தியோடு வழிபட்டுக் கொண்டிருந்தார். ப்ரார்த்தனை அப்யாஸத்தில் அவர் நன்றாக ஊறிப் போய் நாளாவட்டத்தில்

அவருக்கு அலங்காரேச்வரியின் உத்தரவுகள் கிடைக்க ஆரம்பித்தன.

புத்ர ஸந்ததி இல்லை என்ற குறை அவருக்கு இருந்தது. இதற்காக ப்ரார்த்தித்த போது மதுரைக்குப் போய் அங்கே பராசக்தியின் பரிபூர்ண சைதன்ய விலாஸத்தோடு விளங்கும் மீநாட்சியம்மனை ஆராதனை செய்யும்படி அவருக்கு உத்தரவாயிற்று.

அப்படியே மதுரைக்குப் போனார். மீநாம்பிகையைப் பார்த்ததும் அவளிடம் ஆழ ஈடுபட்டு ஆராதித்துவர ஆரம்பித்துவிட்டார். தீட்சீதர் ஏற்கெனவே அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். இப்போது அவர் மதுரை வந்திருப்பது தெரிந்தது. அவரை ஸந்திப்பதற்கு ஆசைப்பட்டார். ஆனாலும்...

மஹா பெரியவர்களானாலும் பதவி, ஸ்தானம் என்பவை எவரையும் எப்போதேனுமாவது கொஞ்சம் "அசக்கி" விடும். ஆனதால் தீட்சீதருக்கு, மந்த்ரி பதவியிலிருந்த தாம் தம்முடைய அந்தஸ்துக்குக் குறைவில்லாமலே சாஸ்த்ரிகளைப் பார்க்கணுமென்ற எண்ணம் ஏற்பட்டது. மஹாதேவ சாஸ்த்ரிகளே பேட்டிக்குக் கேட்டு அனுப்புவாரா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் சாஸ்திரி -களுக்கா, மீநாட்சியை தர்சனம் பண்ணினதிலிருந்து அவளுடைய ஆராதனையைத் தவிர எந்தச் சிந்தனையுமில்லை. 'அவாளைப் பார்பபோமா, இவளைப் பார்ப்போமா?' என்ற ஆசை கொஞ்சமுமில்லை.

எல்லாம் அறிந்த அம்பாளே - அவள் ஸகல வித்யா ஸ்வரூபிணியானதால் - இந்த இரண்டு மஹாவித்வத் குழந்தைகளும் ஸந்திப்பதற்கு ஸங்கல்பம் பண்ணினாள். இதனால், வித்வத்தோடு விநயமும் இருந்தாலே ஒருவருக்கு அழகு என்று தீட்சிதரும், அவர் மூலமாக லோகமும் தெரிந்துகொள்ளப் பண்ணணுமென்று நினைத்து, ஸம்பவங்களை உருவாக்கினாள்.

ஒருநாள் வீதியிலே தீட்சிதர் மந்த்ரி ஜபர்தஸ்துக்குரிய மரியாதைகளோடு பல்லக்கில் போய்க்கொண்டிருந்தார். மஹாதேவ சாஸ்த்ரிகள் பாட்டுக்கு அதே ஸமயத்தில் அம்பாளை தர்சனம் பண்ணிவிட்டு, அவளுடைய சரணார

விந்தத்தை த்யானம் செய்தபடி அந்த வழியாகத் தம்முடைய ஜாகைக்குத் திரும்பிக்கொண்டிருந்தார். பல்லக்கை அவர் கவனிக்கவில்லை.

வீதியிலே அத்தனைபேரும் மந்த்ரியை மரியாதை பண்ணணிக்கொண்டிரு -க்கும்போது, அசட்டுப் பிச்சு மாதிரி இப்படி ஒரு ப்ராம்மணன் அலட்சியமாக குறுக்கே போவதைப் பார்த்தார் தீட்சிதர். 'அசட்டுப் பிச்சு மாதிரி இருந்துகொண்டு இத்தனை அஹங்காரம் வேறேயா?' என்று தப்பாக நினைத்துவிட்டார்.

அதனால் அதட்டலாக, தம்முடைய பரிவார ஜனங்களைப் பார்த்து, "தொங்கல் காதோடு குறுக்கே வரும் இந்தப் பேர்வழி யார்? இவருக்கு 'அர்த்த சந்த்ர' உபசாரம் பண்ணி அனுப்பி வையுங்கள்" என்றார்.

மஹா பாண்டித்யமும், ரஸஞானமுமுள்ளவரானதால் கோபத்தில் உத்தரவு போடும் போதுகூடச் சமத்கார பாஷையில் "அர்த்த சந்த்ர உபசாரம்" என்று சொன்னார். "கல்தா" கொடுப்பதுதான் அர்த்த சந்த்ர உபசாரம் என்பது!கல்தா கொடுக்கிறபோது கையை அர்த்த சந்த்ரனைப் போல அரைவட்டமாக வைத்துக் கொண்டுதானே ஒருத்தர் கழுத்தைப் பிடித்துத் தள்ளுவது? அதனால் இப்படிப் பெயர்.

ஆயாந்த - மத்வந் - யதி - தீர்க - கர்ணம் புதம் மஹாதேவ ஸுநாமதேயம் 1

விலோக்ய மந்த்ரீ மகி ஸார்வ பௌம ஸ்ரீநீலகண்ட : சிபிகாதிரூட :

நிஷ்காஸயைநம் த்வதி - தீர்க - கர்ணம்ட க்ருத்வார்த - சந்த்ரம் த்ருதமித்யுவாச 1

சாஸ்த்ரீ ததாகர்ண்ய ஜரித் - யுவாச தம் தீட்சிதம் ஞாந லாவட்ய மூடம் 11

அத்வநி - வழியில், அதி தீர்க கர்ணம் - தீர்க்கமான தொங்கல் காதுடன், ஆயாந்தம் - வருகிற, புதம் - அறிவாளியான, மஹாதேவ ஸுநாமதேயம் - மஹாதேவ சாஸ்த்ரி என்ற நல்ல பெயருள்ளவரை:மகி ஸார்வபௌமம:- தீட்சிதேந்த்ரரும், மந்த்ரீ - மந்த்ரியும், சிபிகாதிரூட - சிவிகையில் வீற்றிருந்தவருமான,

ஸ்ரீ நீலகண்ட, ஸ்ரீ நீலகண்ட தீட்சிதர், விலோக்ய - பார்த்து, அதி தீர்க கர்ணம் - தொங்கல் காதுக்காரரான, ஏநம் - இவரை, த்ருதம் - உடனே, க்ருத்வா அர்த சந்த்ரம் - 'அர்த்த சந்த்ர மரியாதை' செய்து, நிஷ்காஸய - விரட்டுங்கள், இத்யுவாச என்று சொன்னார்.

ச்லோகத்தில் முதல் மூன்று வரியில் வரும் இந்தக் கதையைத்தான் இதுவரை சொன்னேன்.

நாலாம் வரியில் என்ன சொல்லியிருக்கிறதென்றால், இப்படி தீட்சிதர் சொன்னதைக் கேட்டதும் சாஸ்த்ரிகளும் உடனே பளிச்சென்று பதில் கொடுத்தார். "மகி ஸார்வ பௌமர்", "மந்த்ரி" என்று பெயர் பெற்றிருந்த தீட்சிதர் லவலேச ஞானத்தினாலே ஊதிப்போயிருந்த கற்றறி மூடர்தான் என்று மஹாதேவ சாஸ்த்ரி சுடச்சுட பதில் சொன்னதாக அந்த வரியில் இருக்கிறது.

தத - அதை (தீட்சிதர் சொன்னதை), ஆகர்ணய் - கேட்டு, சாஸ்த்ரீ - மஹாதேவ சாஸ்த்ரிகள், ஜ்ஞாநலவாட்ய மூடம் - லவலேச ஞானத்தாலே வீங்கிப் போன அறியாதாராகிய, தம் தீட்சிதம் - அந்த தீட்சிதரிடம், ஜரித்யுவாச - ஜடிதியில் பதில் சொன்னார்.

என்ன பதில்?

'தெருவோடு, தான்பாட்டுக்கு தேவி சிந்தனையோடு போகிற ஒரு அப்பாவி -யைக் கழுத்தைப் பிடித்துத்தள்ளு என்கிறவர் எப்படிப்பட்டவராயிருப்பார்? படாடோபத்தைப் பார்த்தால் பெரிய பதவிக்காரரென்று தெரிகிறது. 'அர்த்தசந்த்ர உபசாரம்' என்கிறதிலிருந்து படிப்பும் இருப்பது தெரிகிறது. ஆனால் அது வெறும் படிப்பாயில்லாமல் நிஜமான கல்வி யிருந்தால் இத்தனை டம்பமும் இறுமாப்பும் இருக்குமா? இந்தப் பாண்டிய தேசத்தில் தற்போது நிஜமான ஸத்வித்வான்கள் இல்லாத குறையினாலேதான் இந்த அரைகுறை ஆஸாமி பெரிசாக சோபித்துக்கொண்டு 'தாட்பூட்' பண்ணமுடிகிறது' என்று மஹாதேவ சாஸ்த்ரி நினைத்தார். தம்முடைய இந்தக் கருத்தைக் கவிநயத்தோடு சொல்லாமல் சொல்லி, தீட்சிதரைத் தலை குனியவைத்துப் பாடம் பெறும்படிச் செய்யவேண்டும் என்று நினைத்தார். பளீரென்று ச்லோக ரூபத்திலே பதில் கொடுத்தார்.

"ஸூர்யன் அஸ்தமித்தாச்சு. இன்னும் சந்த்ரனும் உதிக்கவில்லை. நட்சத்திரங்கள் சிலதுதான் ஏதோ கொஞ்சம் முணுக் முணுக்கென்று தெரிகிற ஸமயம். இப்படி ஒரே இருட்டாக இருக்கிறபோது மின்மினிப் பூச்சி படாடோபமாக ஜ்வலித்துக் காட்டுவதில் ஒன்றும் ஆச்சர்யமில்லையே!" - இவ்வளவுதான் சாஸ்த்ரிகள் சொன்னார்.

ஸூர்ய ப்ரநஷ்டே சசிநிஹ்யத்ருஷ்டே தாராஸு மந்த - த்யுதிஷு ப்ரகாசம் 1

மஹாந்தகாரே (அ)திவிராஜிதே ஹி கத்யோதகோப் - யல்ப - ருசிர் - ந சித்ரம் 11

ஸூர்ய ப்ரநஷ்டே - ஸூர்யன் மறைந்து, சசிநி ஹி அத்ருஷ்டே - சந்த்ரன் பார்வைக்கு வராமல், தாராஸு - நட்சத்திரங்கள், மந்த த்யுதிஷுப்ரகாசம் - ஒளிமங்கி இருக்கிற, மஹாந்தகாரே - நல்ல கும்மிருட்டின்போது, கத்யோதக, அபி - மின்மினிப் பூச்சிகூட ('க' என்றால் ஆகாசம், 'த்யோதகம்' என்றால் ஒளியுள்ளது. வானத்தில் ஒளியைப் பரப்பிக் கொண்டு போவதால் மின்மினிப் பூச்சிக்கு இப்படிப் பெயர்), அல்ப ருசி - தன்னுடைய ஸ்வல்ப ப்ரகாசத்தாலேயே, விராஜதே - பெரிசாக ஜொலிப்புக் காட்டுகிறது, (இதிலே) ந சித்ரம் - ஆச்சர்யமில்லை.

இப்படி அவர் ஜாடையாகச் சொன்னதே தீட்சிதருக்குப் போதுமானதாக இருந்தது. நல்ல மாட்டுக்கு ஒரு சூடு என்பார்களல்லவா? அநேக விதத்திலே மேன்மை பெற்றிருந்த தீட்சிதர் உடனே அம்பாளை த்யானித்துப் பார்த்ததில் அவருக்கு எல்லாம் தெரிந்துவிட்டது. தாம் எந்த மஹா பண்டிதரைப் பார்க்க ஆசைப்பட்டோமோ, அவரையேதான் 'தொங்கல் காதர்' என்று எடுத்தெறிந்து பேசி விட்டோம், அவர் உபாஸிக்கிற அலங்காரேச்வரிதான் அவரை இங்கே தம்முடைய இஷ்டமூர்த்தியாக உள்ள மீநாட்சியிடம் அனுப்பியருக்கிறாள் -என்று தெரிந்து விட்டது.

பெரியவர்களாகப்பட்டவர்கள் தாங்கள் செய்த தப்பை மனஸ்விட்டு ஒப்புக்கொள்வதிலும் பெயரிவர்களாக இருப்பார்கள். உடனே தீட்சிதர் பல்லக்கிலிருந்து குதித்து நேரே மஹாதேவ சாஸ்த்ரியிடம் போய், அவருக்கு சாஸ்தரோக்தமாக ரொம்பவும் மரியாதைகள் பண்ணி

"அலங்காரி அனப்பி வைத்துத்தானே மீநாட்சியை தர்சிக்க வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

இவர் இப்படிக் கேட்டதிலேயே சாஸ்த்ரிகளுக்கும் இவருடைய பெருமை தெரிந்தது. அம்பாளுடைய வித்வித் - குழந்தைகள் இரண்டும் அவள் ஆசைப்படியே ஒற்றுமையாய்ச் சேர்ந்துவிட்டன

நிசம்ய தத் - துஷ்ட -மநா மகி ச தஸ்மை ஸபர்யாம் விதிவத் சகார 1

பவாந் அலங்கார்யபி - சோதித ஸந் மீநாம்பிகாம் ஸேவிதும் ஆஜகாம 11

மகீச - தீட்சிதரும், தத் - அதை (சாஸ்த்ரி சுடச்சுடச் சொன்ன பதிலை), நிசம்ய -கேட்டு, து(tu)ஷ்ட மநா:- ஸந்தோஷமுற்ற மனத்தவராக...

நமக்காயிருந்தால், 'மந்த்ரியாயும் வித்வானாயுமுள்ள நம்மை நடுவீதியிலே எவனோ ஒருத்தன் வெறும் மின்மினிப் பகட்டுக்காரன் என்று சொல்வதா?' என்று பற்றிக் காண்டு வரும். உத்தம குணமுள்ள தீட்சிதரின் மனஸோ, இப்படி அவர் தமக்குப் பாடம் புகட்டியதில் ஸந்தோஷமே அடைந்தது. பவபூதியின் ஓலையில் அம்பாள் தேனைச் சுண்டிவிட்டு தன்னைத் தோற்கப் பண்ணினதையே காளிதாஸன் "மேஸௌபாக்யம்" என்ற பாடினாற்போலத்தான் (தீட்சிதர் சாஸ்த்ரிகளின் சூடான பதிலைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்தவராக) தஸ்மை - அவருக்கு, ஸபர்யம் - மரியாதைகளை, விதிவத் - விதிப்படி, சகார - செய்தார். பவாந் - தாங்கள், அலங்காரி - அபிசோதித:ஸந் - அலங்காரியால் தூண்டப்பட்டவராகி, மீநாம்பிகாம் - மீநாம்பிகையை, ஸேவிதும் - ஸேவிப்பதற்கு, ஆஜகாம - வந்திருக்கிறீர்கள். இல்லையா? (என்று கேட்டார்).

தாம் ராஜாவின் வலது கையாக, அல்லது ராஜாவும்கூட தம்முடைய வார்த்தைப்படி நடக்கிறவனாக, எந்தப் பட்டணத்தில் பெரிய கௌரவம் பெற்றிருந்தாரோ, அங்கேயே நட்ட நடுவீதியில் சற்றுமுன்தான் தம்மால் வெகு அலட்சியமாகப் பரிஹாஸம் செய்யப்பட்ட ஒரு ஊர்பேர் தெரியாதவரிடம், அவர் தம்மை பதிலுக்கு ஒரே போடு

போட்டபோது, அடக்கத்தோடு போய் ஸத்காரம் செய்து தீட்சிதர் குசலம் விசாரித்திருக்கிறார்.

இப்படியாக, பெரிய அறிஞர்களுக்கும் கவிஞர்களுக்கும் அஹங்காரம் ஏறுவதுகூட முடிவிலே அவர்களை மேலும் உசத்தி, நமக்கும் பாடம் புகட்டுவதாகவே அமைகிறது.

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**பண்பாடு**

**கவிஞர், அறிஞரின் தற்பெருமை**

**விகாரமும் ஏற்றம் பெறுகிறது**

புஷ்ப தந்தர் "சிவ மஹிம்ந ஸ்தோத்ர"த்திலே ஒரு இடத்தில், "விகாரோ அபி ச்லாக்ய:' - "விகாரமானதுங்கூட ச்லாகிக்கக் கூடியதாகிறது" என்று சொல்கிறார். விஷத்தைப் பரமேச்வரன் பானம் பண்ணி, அது அவருடைய வெள்ளை வெளேரென்ற சங்குக் கழுத்தில் நீலமணி மாதிரி ப்ரகாசிப்பதைப் பார்த்து, "விகாரமானதுகூட ச்லாகிக்க் கூடியதாகிறது" என்கிறார். அப்படித்தான் இந்தப் பெரியவர்களுக்கு உண்டான அஹங்காரங்கூட முடிவில் அவர்களுடைய

உட்சிறப்பை வெளிப்படுத்தி, மெச்சுதலுக்கு உரியதாகிறது. "விகாரோபி ச்லோக்ய."

*தெய்வத்தின் குரல் (நான்காம் பாகம்)*

**மங்களாரத்தி**

**மாருதி மஹிமை**

"குரங்கு புத்தி" என்றே சொல்வது வழக்கம். எது ஒன்றிலும் சித்தம் நிமிஷகாலங்கூட நிற்காமல் ஸதா ஸர்வதா ஒன்று

மாற்றியொன்றாகப் பாய்ந்துகொண்டே இருப்பதற்குப் பேர் போனது குரங்கு. துளிக்கூட கட்டுப்பாடே இல்லாமலிருப்பதற்கு காரணம் அதுதான். இதனால்தான் மநுஷ்யர்களான நம் சித்தமும் எதிலும் கட்டுப்பட்டு நிற்காமல் சாஞ்சல்யமயமாக இருக்கிறபோது "குரங்கு புத்தி" என்கிறோம்.

ஹ்ருதய - கபிம் அத்யந்த சபலம்

என்று ஆசார்யாளே சொல்கிறார். "பரமேச்வரா!ரொம்ப ரொம்பச் சபலமான இந்த என்னுடைய மனக்குரங்கை பக்திக்கயிற்றாலே கட்டி உன் கையிலே பிடித்துக் கொண்டு குரங்காட்டி வித்தை பண்ணிப் பிழைத்துப் போ!வெறுமனே கபாலத்தை வைத்துக்கொண்டு பிச்சை கேட்பதைவிட இப்படி ஒரு வித்தை, கித்தை செய்து காட்டினாயானால், உனக்கும் நல்ல வரும்படி வருகிற பிழைப்புக் கிடைக்கும், நானும் பிழைத்துப்போவேன்" என்று பரமச்வரனிடம் அவர் வேடிக்கையாக ப்ரார்த்திக்கும்போது, "ஹ்ருதய கபி' அதாவது "மனக்குரங்கு", என்ற வார்த்தையை போட்டிருக்கிறார்.

வெள்ளைக்காரர்களும் "monkey mind" என்கிறார்கள். கட்டுப்பாடேயில்லாமல் ஸதா ஸர்வகாலமும் சரீரத்தாலோ, மனஸாலோ, அல்லது இரண்டினாலுமோ அலையாக அலைந்து கொண்டேயிருப்பதற்குக் குரங்குதான் ரூபகம்.

ஒரு பசு இருக்கிறது, யானை இருக்கிறது - இவை மாம்ஸம் சாப்பிடுவதேயில்லை, சாக உணவுதான் தின்கின்றன என்றால் அதிலே ஆசார்யப்படுவதற்கு ஒன்றுமில்லை. 'பசித்தாலும் புல் தின்னாது' என்கிற ஒரு புலி சாக பட்சிணியாக மாறினால் அதுதான் ஆச்சர்யம்!

ஆஞ்ஜநேய ஸ்வாமியின் ஆச்சயர்மான பெருமை இதில்தான் இருக்கிறது சாஞ்சல்யத்துக்கே (சஞ்சலத்தன் மைக்கே) பேர்போன கபியாக அவர் இருந்த போதிலும், அதோடு மஹா பலிஷ்டராக இருந்தபோதிலும், மனஸைக் கொஞ்சங் கூட சஞ்சம், சபலம் என்பதேயில்லாமல் அடக்கி, புலன்களையெல்லாம் அடக்கி, இந்த்ரிய நிக்ரஹம் பண்ணி, சரீரத்தையும் ராமசந்த்ரமூர்த்தியின் தொண்டுக்கே என்று அடக்கி அடிபணிந்து அவர் இருந்ததுதான் அவருடைய மஹிமை.

இதிலே இன்னொரு ஆச்சர்யம், அவர் மனஸைஅடக்கினார், பூர்ணமான இந்த்ரியக் கட்டுப்பாட்டோடே இருந்தாரென்றால், எல்லாக் கார்யத்தையும் விட்டு விட்டு எங்கேயோ குஹையிலே மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விடவில்லை. ஜன ஸமூஹ ஸம்பந்தமில்லாமல், கார்ய ப்ரபஞ்சத்தில் பட்டுக்கொள் -ளாமல் எங்கேயோ ஒதுங்கி மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்காருபவர்கள் இந்த்ரியம், சித்தம் ஆகியவற்றை ஓடாமல் அடக்கிப்போட்டு விடலாம். ஆஞ்ஜநேயர் அப்படி இல்லை. 'அஸாத்ய ஸாகதர்' என்கிற அளவுக்குக் கார்ய ப்ரபஞ்சத்திலே செய்திருக்கிறார். ஸமுத்ரத்தையே தாண்டுவது, ஒருமலையையே தூக்கிக்கொண்டுவருவது, ஒரு பெரிய வனத்தை அப்படியே நிர்மூலம் பண்ணுவது, ஒரு பெரிய பட்டணத்தையே தஹனம் பண்ணுவது - என்றிப்படிச் செய்தவர் அவர்.

மனஸ் கொஞ்சங்கூடச் சலிக்காதவர், ஸ்ரீ ராமனின் பாதாரவிந்தத்தை விட்டு இந்தண்டை, அந்தண்டை துளிக்கூட ஆடாமல் ஓடாமல் மனஸை நிறுத்தியிருந்தவர். ஆனால் உடம்பால் அவரைப்போல ஓடி ஆடித் தொண்டு செய்த இன்னொருத்தர் இல்லை. ராம த்யானத்திலே அசையாத மனஸு, ராம கார்யத்திலே 'இதைவிட வேகமில்லை' என்னும்படியாக ஓடியாடுகிற உடம்பு!

ரொம்ப வேகமாக ஓடுவது எது?

'வாயுவேகம், மனோவேகம்' என்பார்கள்.

காற்றுதான் ஸ்தூலத்திலே பஹுவேகமாகச் செல்வது, ஸூக்ஷமத்திலே மனஸின் ஓட்டத்துக்கு மிஞ்சி எதுவுமில்லை.

"காற்று மாதிரி இந்த மனஸு கிடந்து பறக்கிறதே! காற்றைப் பிடித்து வைத்து அடக்க முடியாத மாதிரியே அல்லவா இந்த மனஸையும் கட்டுப்படுத்தி வைக்க முடியுவில்லை?" என்று அர்ஜுனன் முறையிடுகிறான்:

சஞ்சலம் ஹி மந:க்ருஷ்ண.... வாயோரிவ ஸுதுஷ்கரம் (கீதை 6-34)

பகவானும் ஆடாமல் அசையாமல் நிறுத்தப்பட் யோகியின் மனஸைக் கொஞ்சங்கூடக் காற்றேயில்லாத இடத்தில்

'ஸ்டெடி'யாக ஜ்வலிக்கிற தீபத்தோடு உவமித்துத்தான் சொல்லியிருக்கிறார்:

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா.... (கீதை 6-19)

'நிவாதம்' என்றால் 'காற்று இல்லாமல்' என்று அர்த்தம். வாதம் என்றால் காற்று. வாதம், வாயு இரண்டும் ஒன்றுதான். 'வாயுப் பிடிப்பு' என்றும் 'வாத ரோகம்' என்றும் ஒன்றையேதானே சொல்கிறோம்?

ஆஞ்ஜநேய ஸ்வாமி யார்?

சஞ்சலத்துக்கே பேர்போன கபி இனத்தில் பிறந்த அவர் ஸதாகாலமும் சஞ்சலித்துக்கொண்டேயிருக்கும் வாயுவுக்குப் புத்ரர்!வாயுகுமாரர். 'வாதாத்மஜர்' என்றும் சொல்வார்கள். 'வாத' என்றாலும் வாயுதானே? 'ஆத்மஜன்' என்றால் புத்ரன். வாத - ஆத்மஜன் என்றால் வாயு புத்ரன்.

வாதாத்மஜம் வாநர - யூத - முக்யம்

ஸ்ரீராமதூதம் சிரஸா நமாமி

'யூதம்' என்றால் கூட்டம், ஸேனை. வானரப்படையில் முக்யஸ்தர் இவரே ஆனடிபயால் 'வாநர - யூத முக்யர்'

இது ச்லோகத்தின் பின் பாதி. முன் பாதி என்ன? அதிலே என்ன சொல்லியிருக்கிறது?

வாயுவேகம், மனோவேகம் என்று இரண்டு சொன்னேனே, அந்த இரண்டு வேகமும் படைத்தவர் இவர் என்று சொல்லியிருக்கிறது. ஆனால் மன்,

இந்த்ரியங்கள் ஆகியவற்றின் சலனத்தில் அல்ல. சரீரத்தாலே செய்கிற கார்யத்தில் தான் வாயுவேக, மனோவேகக்காரராக இருக்கறிவர்.

மநோ - ஜவம் மாருத - துல்ய - வேகம்

ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம்

"மநோ - ஜவம்' - மனஸைப் போன்ற வேகம் கொண்டவர். 'ஜவம்'என்றால் வேகம்.

"மாருத - துல்ய வேகம்" - காற்றுக்கு ஸமமான வேகமுடையவர். 'மாருதம்' என்றாலும் காற்றுதான். 'மந்த மாருதம்' என்கிறோமல்லவா? மாருதத்தின் புத்ரர் என்பதால்தான் அவருக்கு 'மாருதி' என்று பெயர். 'வீர மாருதி கம்பீர மாருதி' என்று (பஜனையில்) பாடுவார்கள்.

ஓயாமல் சலிக்கிற மனஸைப் போல 'மநோஜவர்':அப்படியே, ஓயாமல் சலித்துக்கொண்டிருக்கிற வாயுவைப் போல 'மாருத - துல்ய - வேகர்', அவரே வாயுவின் பிள்ளைதான் - 'வாதாத்மஜர்', சஞ்சல ஸ்வபாவத்துக்கே பேர் போன கபிகுல முக்யஸ்தராக இருப்பவர் வேறே - 'வாநர - யூத - முக்யர்!'

இப்படியெல்லாம் இருக்கிறவருடைய ஆச்சர்யமான மஹிமை என்ன என்றால், இவரையே ச்லோகம்,

ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம்

என்று ஸ்தோத்ரிக்கும்படியாகவும் இருக்கிறார்!

புலன்களை வென்றவர் இவர்:"ஜிதேந்த்ரியர்" - ஜித இந்த்ரியர் ஜயிக்கப்பட்ட இந்த்ரியத்தை உடையவர். மனஸ்தான் அத்தனை இந்த்ரிய கார்யத்துக்கும் மூலம். ஆகையால் அதை ஜயிப்பவர்தான் ஜிதேந்த்ரியர். மஹா சஞ்சலம் வாய்ந்த மனஸை ஜயித்த ஜிதேந்த்ரியர் இவர்.

அதனாலேதான் புத்திமான்களுக்கெல்லாம் உச்சியிலுள்ள 'புத்திமதாம் வரிஷ்ட'ராகி யிருக்கிறார். மனஸை நல்லதிலேயே 'ஸ்டெடி'யாக நிறுத்தி வைப்பதுதான் புத்தி. ஆகையினாலே ஜிதேந்த்ரியாக மனோ நிக்ரஹம் செய்துள்ள ஆஞ்ஜநேய ஸ்வாமி "புத்திமதாம் வரிஷ்ட" ராயிருக்கிறார்.

'புத்திமான்' என்று சொன்னாலே உசத்திதான். அதை விட உச்த்தி 'புத்திமதாம் வர' என்று சொல்லியிருந்தால். அப்படிச் சொல்லியிருந்தால் 'புத்திமான்களில் சிறந்தவர்' என்று அர்த்தம் கொடுக்கும். அதையும்விட உசத்தி, 'புத்தி மதாம் வரீய' என்று சொல்லியிருந்தால். சிறப்புப் பொருந்தியவர்களிலேயே ஒருத்தரை மற்றவேராடு ஒப்பிட்டு, 'கம்பேரடிவ்' - ஆக அவர் மற்றவரைவிட உயர்வு பொருந்தியவராக இருக்கும்போது 'வரீய' என்பார்கள். ஆனால், ஆஞ்ஜநேயரை இப்படிச் சொன்னால்கூடப்

போதாது!இதையும் விட உசத்தியாக, "இதற்கு மேலே உசத்தியில்லை, இவரோடுகூட 'கம்பேரிஸ'னுக்கும் இடமில்லை, இவர்தான் புத்திக்கு 'ஸுபர்லேடிவ்', புத்திமான்கள் அத்தனை பேருக்கும் உச்சத்தில் இவரைத் தான்வைக்கணும்" என்றே (ச்லோகத்தில்) "புத்திமாதம் வரிஷ்ட" என்று சொல்லியிருக்கிறது. "வரிஷ்ட"தான் சிறப்பின் உச்சஸ்தானம். அதற்கு மேலேயும் இல்லை, ஸமதையும் இல்லை அதற்கு அடுத்தபடியாக 'கம்பேர்' பண்ணக்கூட இன்னொன்று இல்லை.

ஞானிகளில்கூட இப்படி ப்ரஹ்மவித், ப்ரஹ்மவித்வரன், ப்ரஹ்மவித்வரீயன், ப்ரஹ்மவித்வரிஷ்டன்' என்று உயர்த்திக் கொண்டே போவதுண்டு. மாருதி புத்திமதாம் வரிஷ்டர்.

ஆனால் இந்த இந்த்ரிய ஜயம், புத்திச் சிறப்பு எல்லாவற்றையும் விடப் பெரிய அவருடைய பெருமை என்னவென்றால் அவர் ராமதாஸனாக இருந்து, "பகவானுக்கு இவரைப் போலப் பணி புரிந்தவரில்லை" என்று அக்ர ஸ்தானம் (முதலிடம்) பெற்றிருக்கிறாரே, அதுதான். புத்திமான்களைப் போலவே பக்திமான்களுக்கு வரிஷ்டராயிருக்கிறாரே, அதுதான், தேஹ சக்தியோடு, புத்தி நுட்பத்தையும் ரொம்பவும் காட்டிச் செய்ய வேண்டிய பணி தூது போவது. அந்த தூதுப் பணியை ரொம்பவும் சிறப்பாகச் செய்த, ஸாட்சாத் ஸீதா - ராமர்களுக்கே துக்கத்தைப் போக்கிப் பெரிய நம்பிக்கையையும் உத்ஸாஹத்தையும் ஊட்டினாலே, அதற்காகத்தான் முக்யமாக அவரைத் தலை வணங்கிப் பணியவேண்டும் ."ஸ்ரீ ராமதூதம் சிரஸா நமாமி" என்று பாதத்தில் விழுந்து நமஸ்காரம் பண்ணவேண்டும்.

மநோஜவம் மாருத - துல்ய - வேகம்

ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் 1

வாதாத்மஜம் வாநர - யூத - முக்யம்

ஸ்ரீ ராமதூதம் சிரஸா நமாமி 11

மங்களம்

# தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### காரிய நிறைவு கரிமுகனாலேயே

புது வருஷம் பிறக்கும்போது பஞ்சாங்கம் படிப்பது வழக்கம். அப்போது முதலில் ஒரு ச்லோகம் சொல்லப்படுகிறது :

வாகீசாத்யாஸ் - ஸுமநஸஸ் - ஸர்வார்த்தாநாம் உபக்ரமே *

யம் நத்வா க்ருதக்ருத்யாஸ்யு : தம் நமாமி கஜாநநம் **

'கஜானன'என்று முடித்ததால், ச்லோகம் பிள்ளையாரைப் பற்றியது என்று எல்லாருக்கும் புரிந்திருக்கும். அவரைப் பற்றி இங்கே என்ன சொல்லியிருக்கிறது?"ப்ரம்மாதி தேவர்களும்கூட எந்தக் கார்யத்தின் ஆரம்பத்திலும் எவரை நமஸ்கரித்தே எடுத்த கார்யத்தை முடித்தவர்களாகிறார்களோ அந்த கஜானனரை-யானை முகரை - நானும் நமஸ்காரம் பண்ணுகிறேன்"என்று சொல்லியிருக்கிறது.

'அல்ப சக்தர்களாக உள்ள மநுஷ்யர்கள்தான் என்றில்லை, நிரம்ப சக்தி படைத்த தேவர்களும்கூடப் பிள்ளையாரை வணங்குகிறார்கள். எப்போதாவது, முக்யமான ஸமயங்களில், பிள்ளையார் சதுர்த்தி மாதிரியான தினங்களில்தான் வணங்குகிறார்கள் என்றில்லை. எப்போது பார்த்தாலும், எந்தக் காரியத்தை ஆரம்பித்தாலும் வணங்குகிறார்கள்'. என்று ச்லோகம் தெரிவிக்கிறது.

அது மட்டுமில்லை. வணங்கியதன் பயனைப் பூர்ணமாகப் பெற்றுவிடுகிறார்களென்றும் தெரிவித்துவிடுகிறது. அவர்கள் நமஸ்காரம் பண்ணினார்கள், இவர் அதை வெறுமனே வாங்கிக்கொண்டார். என்று முடிந்துபோகவில்லை. அவர்கள் எந்தக் கார்யத்தின் ஆரம்பத்தில் அவரை நமஸ்காரம் பண்ணினார்களோ அந்தக் கார்யத்தைப் பலிதமாக்கி, நிறைவேற்றிக் கொடுத்துவிடுகிறார். அவர்களை எடுத்த கார்யத்தை வெற்றிகரமாக முடித்தவர்களாக, அதாவது ச்லோகத்தில் சொல்லியிருக்கிறபடி 'க்ருத க்ருத்யர்களாக ,

ஆக்கிவிடுகிறார்.

தேவர்கள்கூடப் பிள்ளையாரை நமஸ்கரிக்கிறார்கள் என்பதற்கு ச்லோகத்தில் "வாகீசாத்யா: ஸுமநஸ:"என்று சொல்லியிருக்கிறது. "வாகீசன் முதலான தேவர்கள்"என்று அர்த்தம்.

'ஸுமநஸ்'என்றால் தேவர்.

# தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### மலரும் மனமும்

'ஸுமநஸ்'என்றால் நேர் அர்த்தம் 'நல்ல மனம்'. நல்ல மன விசேஷம்தான் தேவ சக்தி. துஷ்ட மனஸ்தான் அஸுர சக்தி. புஷ்பத்துக்கும் ஸுமநஸ் என்று பேர் உண்டு. ஒரு செடி அல்லது கொடியின் நல்ல மனம் மாதிரி இருப்பது அதன் புஷ்பம். நல்ல மனஸுக்கு அடையாளம் என்ன அதில் அன்பு ஊறிக்கொண்டிருப்பதுதான். இம்மாதிரி ஒரு செடியிலோ கொடியிலோ மாதுர்யத்தின் ஸாரமான தேன் ஊறிக்கொண்டிருப்பது அதன் புஷ்பத்தில்தானே?அதன் பழத்தை விடவும் தித்திப்பு தேன்தான். கசப்பாகக் கசக்கும் காய், பழம் கொண்ட தாவரவகைகள் எத்தனையோ உண்டு. ஆனால் அவற்றிலும் புஷ்பத்திலே ஊறுகிற தேன் கசப்பாக இருப்பதாக எங்குமே கிடையாது. ஒரு செடி அல்லது கொடியில் பார்க்கவும் ரொம்ப அழகானது, ஸ்பர்சத்துக்கும் ரொம்ப மென்மையானது, வாஸனையும் அதிகம் கொண்டது, எல்லாவற்றுக்கும் மேலாக அதனுடைய பரம மாதுர்ய ஸாரத்தைத் தருவது அதன் புஷ்பந்தான்.
இப்படிச்சொன்னதால் ஐம்புலன்களில் கண், சர்மம், மூக்கு, நாக்கு ஆகிய நான்குக்கும் ஒரு புஷ்பம் இன்பம் ஊட்டுவதாகத் தெரிகிறது. கண்ணுக்கு ரொம்பவும் அழகான ரூபம் பூவுக்கு இருக்கிறது. சர்மத்துக்கு ஸுகமாக அதன் மார்தவம் (ம்ருதுத்தன்மை). மூக்குக்கு நல்ல ஸுகந்தம். நாக்குக்கு ருசியான தேன். பாக்கி இருப்பது காது. அந்தக்

காதுக்கு இன்பமான வண்டுகளின் ரீங்காரத்தையும் ஒரு புஷ்பம் தன் தேனைக்கொண்டு வரவழைத்துவிடுகிறது ஸுமநஸ் என்றால் அழகானது என்று அர்த்தம்.

இப்படி நல்ல மனம், அழகு, தேவர்கள், புஷ்பம் ஆகிய நாலுக்கும் 'ஸுமனஸ்'என்று பெயரிருப்பதை வைத்துச் சிலேடை செய்து பல ச்லோகங்கள் உண்டு (ஸ்ரீ அனந்த ராம) தீக்ஷிதர் பிராபல்யப் படுத்திவரும் மஹிஷாஸுர மர்த்தினி ஸ்தோத்தரத்தில்கூட இப்படி 'ஸுமநஸ்-ஸுமநஸ்'என்று மூன்று நாலுதரம் அடுக்கிக்கொண்டு போயிருக்கிறது. 'நல்ல மனம் கொண்ட தேவர்கள் அர்ச்சனை பண்ணுகிற அழகான புஷ்பங்களின் நிரம்பவும் மநோஹரமான காந்தியுடன் கூடியவளே!'என்று ஸ்தோத்ரிக்கும்போது, 'நல்ல மனம்', 'தேவர்கள்', 'அழகு', 'புஷ்பம்', 'நிரம்பவும் மநோஹரமான'என்கிற ஒவ்வொன்றுக்கும் ஒரு 'ஸுமந'வைப் போட்டு அழகாக ச்லோகம் அமைந்திருக்கிறது.

தேவர்களாலும் பூஜிக்கப்படுபவர் பிள்ளையார் என்று சொல்லும்போதே நல்ல மனம்கொண்ட எவரானாலும் அவரை பூஜை பண்ணித்தான் பண்ணிவிடுகிறார்கள் என்றும் தெரிவித்துவிடுகிற மாதிரி "வாகீசாத்யா:ஸுமநஸ:"என்று, தேவர்களைக் குறிப்பாக இந்த ஸுமனஸ் என்ற பெயரால் சொல்லியிருக்கிறது.

நல்ல மனமுள்ளவரெல்லாம் ஒருத்தரைப் பூஜை பண்ணுகிறார்களென்றால், அப்படிப் பூஜிக்கப்படுபவரும் ரொம்ப நல்ல மனஸ் படைத்தவராகத்தானே இருக்க வேண்டும்?

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

தேவரும் தொழும் தெய்வம்

ஆனைக்கா ஆனைமுகன்

பிள்ளையாருடைய மனஸ் எத்தனை நல்லது என்பதற்கு ஒன்று சொல்லிவிட்டால் போதும். ஒருத்தரின் கிட்டேயே

கோபம் நெருங்க முடியாது:மஹா கோபிஷ்டர்கூட அவருக்கு முன்னால் தானாகவே சாந்தமாகிவிடுவாரென்றால் அப்படிப்பட்டவர் வெகு நல்ல மனம், உயர்ந்த அன்புள்ளம் படைத்தவராகத்தானே இருக்க வேண்டும்?இப்படி ஒரு உதாஹரணம் பிள்ளையார் விஷயமாக இருக்கிறது. நம் எல்லோரிடமும், ஈ எறும்பிலிருந்து ஆரம்பித்து அத்தனை ஜீவராசிகளிடமும் பரம கிருபையோடு இருக்கக்கூடிய ஒருவர் யார்?ஸாக்ஷாத் அம்பாள் தான். இத்தனை ஜீவராசிகளுக்கும் தாயாக இருக்கப்பட்ட அகிலாண்ட ஜனனி அவள்தானே?அப்படிப்பட்ட அந்த அகிலாண்டேசவரியே ஒரு ஸமயம் உக்ர ரூபம் கொண்டிருந்தாள். ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்காவில்) இருக்கப்பட்ட அகிலாண்டேச்வரி கலிகாலத்தில் ஜனங்கள் போகிற போக்கைப் பார்த்து இப்படி உக்ரக் கோலமாக ஆகிவிட்டாள். ஸகல சக்தியும் அவள்தானாகையால் அன்பில் பரம ஸௌம்யமான லலிதாம்பாளாக இருக்கப்பட்ட அவளே கோபம் வந்தால் அதன் உச்சியில் காளியாயிருப்பாள். இப்போது அப்படித்தான் ஆகியிருந்தாள்.

கலியைக் கட்டுப்படுத்தி வைப்பதற்காக அவதாரம் செய்திருந்த நம்முடைய ஆசார்யாள் அங்கே வந்தார். பரமேச்வராவதாரமானதால் அவரால் உக்ரகோலத்திலிருக்கிற அம்பாளிடமும் போகமுடியும். ஆனாலும் அவர் இந்த ஸந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு பிள்ளையாரின் அன்பு மனப் பெருமையை உலகத்துக்குத் தெரிவிக்க நினைத்தார். அதனால் அம்பாளுக்கு நேர் எதிரே, கோவில் முடிந்து மதில் வந்துவிடுகிற அவ்வளவு தூரத்திலே, பெரிசாக ஒரு பிள்ளையாரை ப்ரதிஷ்டை பண்ணிவிட்டார்!

அவ்வளவுதான்!செல்லப்பிள்ளை எதிரே இருக்கிறான் என்றதும் அம்பாளுடைய அத்தனை உக்ரமும் போன இடம் தெரியாமல் போய்விட்டது!அநேக விநாயக மூர்த்தங்களில் ஒன்றுக்கு 'செல்லப் பிள்ளையார்'என்றே பெயர்!அப்படிப்பட்ட பிள்ளையின் அன்பு மன விசேஷத்தால் அம்பாளுக்கும் கோபம் போய் வாத்ஸல்யம் பிறந்தது.

அப்போது அம்பாளை விட்டுப் போயிருந்த கோபம் மறுபடியும் ஒருபோதும் அவளிடம் திரும்பிவிடக்

கூடாதென்று ஆசார்யாள் நினைத்தார். அதனால் அந்த உக்ர கலைகளை அப்படியே யந்த்ராகாரமான இரண்டு தாடங்கங்களில் ஆகர்ஷித்து சமனம் செய்தார் (அடக்கினார்). அந்தத் தாடங்கங்களை அம்பாளின் காதுகளிலேயே அணிவித்தார்.

தாடங்கம் ஸௌமங்கல்ய்த்துக்கு (ஸுமங்கலித் தன்மைக்கு)ச் சின்னம். அமிருதத்தைச் சாப்பிட்டவர்களாயிருந்தபோதிலும் மற்ற தேவர்களெல்லாம் அழிவடைகிற மஹாப்ரளயத்திலுங்கூட, அவர்கள் அமிருதம் சாப்பிட்ட போது தான் ஒருத்தன் மட்டும் காலகூட விஷத்தைச் சாப்பிட்டானே, அந்தப் பரமேச்வரன் மட்டும் எப்படி அழியாமலிருக்கிறான் என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஒரு கேள்வி எழுப்பியிருக்கிறார். உடனே அதற்கு ரத்னச் சுருக்கமாகப் பதிலும் சொல்லிவிடுகிறார். " தவ ஜநநி தாடங்க மஹிமா :அம்மா!இது உன் தாடங்கத்தின் மகிமைதான்"என்கிறார்.

இப்படி அவளுடைய பாதிவ்ரத்ய (கற்பு நெறி)ப் பெருமைக்குரிய தாடங்கத்தில் உத்ரகலையை ஆகர்ஷித்ததோடு, அதறகு முந்தியே அவளுடைய வாத்ஸல்யப் பெருமையைக் காட்டுவதாக ப்ரிய வத்ஸனான பிள்ளையாரை அவளுக்கு முன்னால் ப்ரதிஷ்டை பண்ணிவிட்டார். ஜம்புகேச்வரம், திரு ஆனைக்கா என்ற இரண்டு பேர்களிலுமே பிள்ளையார் ஸம்பந்தமிருக்கிறது. ஜம்பு என்பது நாவல் மரம். அந்த க்ஷேத்ரத்தில் வெண்ணாவல் மரம்தான் ஸ்தல வ்ருக்ஷம். பிள்ளையாருக்கு ரொம்பப் பிடித்தது நாவல் பழம். ' கபித்த ஜம்பூபல ஸார பக்ஷிதம் 'என்று ஸ்தோத்ரம் சொல்கிறோம். பிள்ளையாரின் பரம பக்தையான அவ்வையாருக்கு ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி போட்ட சுட்ட பழமும் நாவல்தான்.

'திரு ஆனைக்கா'என்கிறபோதும் அதிலே 'ஆனை'வந்து உட்கார்ந்து கொண்டு கஜானன மூர்த்தியை ஞாபகப்படுத்துகிறது.

ஈச்வரனே ஆசார்ய ரூபத்தில் அவதாரம் செய்தபோது ஈச்வரிக்கு, அகிலாண்ட ஈச்வரிக்கு முன்னால் சிவ-சக்தி தம்பதியரின் ப்ரிய ஸுதனான பிள்ளையாரை ப்ரதிஷ்டை

செய்தது விசேஷம்.

கருணாமூர்த்தியாக இருக்கப்பட்ட பராசக்திக்குமே கூடக் கோபம் ஏற்பட்டாலும், அது போய் அவள் குளிர்ந்த மனஸோடு லோகத்துக்கு அநுக்ரஹம் பண்ணும்படியாக மாற்றிவிடும். சக்தி பிள்ளையாருக்கு இருக்கிறது. 'சக்தி'என்றால் அவர் ஏதோ பெரிசாக மந்த்ரம் போட்டோ, அல்லது வேறே ஏதாவது பண்ணியோ அந்தப் பராசக்தியை மாற்றவேண்டுமென்றில்லை. இவர் அவள் கண்ணிலே பட்டுவிட்டால் அதுவே போதும். அன்பே வடிவமான விநாயக ரூபத்தைப் பார்த்தமாத்திரத்தில் அம்பாளின் கண் வாத்ஸல்ய வர்ஷம் பொழியத் தொடங்கிவிடும்.

அத்தனை நல்ல மனஸ் அவருக்கு!ஸுமனஸாகிய அவரை வாகீசாதி ஸுமனஸர்கள் நமஸ்கரித்தே ஸகல கார்ய ஸித்தி பெறுகிறார்கள்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**தேவரும் தொழும் தெய்வம்**

**வாகீசர் யார் ?**

வாகீசர் என்பது யார்?திருநாவுக்கரசு ஸ்வாமிகளுக்கு அப்படிப் பேர் என்பது தெரிந்திருக்கலாம். மருள்நீக்கியார் என்பதே அவருக்கு இயற்பெயர். பிற்பாடு அவர் சமண மதத்தில் சேர்ந்து அதிலே ஒரு முக்ய புருஷரானபோது தர்மஸேனர் என்று பெயர் வைத்துக்கொண்டார். அதற்கும் பிற்பாடு அவர் மறுபடியும் நம்முடைய மதத்துக்கே திரும்பித் திருவதிகையில் தம்முடைய முதலாவத் தேவாரத் திருப்பதிகம் பாடியவுடன் பரமேச்வரனின் வாக்கே அசரீரியாக எழுந்து அவருக்கு 'நாவுக்கரசு'என்ற பெயரைச் சூட்டியது. 'நாவுக்கு அரசு'என்பதற்கு ஸம்ஸ்க்ருதம் 'வாகீசர்'.வாக் - சொல், ஈசர் - அரசர். நாவுக்கு அரசர் என்பது சொல்லுக்கு அரசர் என்பதால் தானே?இதற்கும் அப்புறம் திருஞானஸம்பந்தர் அவரை 'அப்பரே!'என்று அழைத்ததால் அப்பர் என்றும் அவருக்கு ஒரு பெயர் ஏற்பட்டுவிட்டது.

ஆனால் இங்கே (பிள்ளையார் ச்லோகத்தில்) சொல்லும் வாகீசர் என்பது அப்பர் ஸ்வாமிகளல்ல. வாகீசர் முதலான தேவர்களைப் பற்றியல்லவா இங்கே சொல்லியிருக்கிறது. தேவஜாதியில் வாகீசர் என்பது யார்?

இரண்டு தேவர்களுக்கு அந்தப் பெயருண்டு. ஒருவர் ப்ருஹஸ்பதி. மற்றவர் ப்ரம்மா.

'ப்ருஹஸ்பதியோ?'என்று கேட்கிற அளக்கு விசேஷமான புத்தி ப்ரகாசம் பெற்ற தேவகுரு, வியாழன் என்று சொல்கிறோமே. அவர் ஸகல சாஸ்திரங்களிலும் மஹா கெட்டிக்காரரானதால் வாகீசர் எனப்படுபவர். பேச்சில்வல்ல வாகீசர் அவர். வாகீசர் என்றே அர்த்தம் கொடுப்பதான 'கீஷ்பதி'என்ற பெயரும் அவருக்கு உண்டு. ப்ருஹஸ்பதியை ப்ரஹ்மணஸ்பதி என்றும் வேதம் சொல்லும். அறிவும் வித்வத்தும் உருவமான அவருக்குப் பிள்ளையார் ஸம்பந்தம் விசேஷமாக உண்டு. 'வேதகால ப்ரஹ்மணஸ்பதிதான் புராணகால விக்நேச்வரர்'என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்வார்கள். விநாயகமூர்த்தியின் ஆவாஹனத்தில் பிரஸித்தமாக வழங்கும் வேத ரிக்கே ப்ரஹ்மணஸ்பதிக்கானதுதான்.

தேவர்கள் விதிப்படி குருமுகமாகப் பிள்ளையார் வணக்கம் செய்கிறார்களென்று காட்டுவதற்காக 'வாகீசாத்யா:ஸுமநஸ:'என்று சொல்லியிருக்கிறதென்று உள்ளர்த்தம் செய்துகொள்ளலாம். தேவகுருவே பிள்ளையாருக்கு நமஸ்காரம் பண்ணிச் சீடர்களான தேவர்களுக்கெல்லாம் வழிகாட்டுகிறார் என்று தொனிக்கிறது.

வாக்தேவியான ஸரஸ்வதியின் பதியான ப்ரஹ்மாவுக்கும் வாகீசர் என்ற பெயருண்டு. 'வாக்'என்றாலே ஸரஸ்வதி. ஸரஸ்வதீ காந்தர் வாகீசர்.

பொதுவாக 'ப்ரஹ்மாதி தேவர்கள்'என்று சொல்வதே வழக்கமாதலால் இங்கே 'வாகீசாதி ஸுமனஸர்கள்'என்று வருவதைக் கொண்டு, வாகீசர் என்பது ப்ரம்மாவைக் குறிக்கும் என்றே வைத்துக்கொள்ளலாம். ப்ரம்மாவுக்கு உள்ள பல பெயர்களில் 'வாகீச'என்பதைச் சொல்லியிருப்பதால் பிள்ளையார் அறிவுக்கும் வித்வத்துக்கும் தெய்வம் என்று உணர்த்தப்படுகிறது வாக்தேவியான ஸரஸ்வதியின் பதி

அவர் என்றால், அவள்தானே அறிவுக்கும் வித்யைக்கும் அதிதேவதையாயிருப்வள்?

ப்ரஹ்மா ஸ்ருஷ்டிகர்த்தா. ஸ்ருஷ்டி என்றவுடன் காலம் என்ற தத்வத்தைத்தான் முதலில் நினைக்கிறோம். காலத்தை அளப்பதற்குத்தான் வருஷம் என்ற அளவு கோலை வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆகையால் வருஷப் பிறப்பில் பஞ்சாங்க படனம் பண்ணும்போது ப்ரம்மாவை முதலில் சொல்லி, அப்பேர்ப்பட்ட ப்ரம்மா முதலான தேவர்கள் நமஸ்காரம் பண்ணும் விக்நேச்வரருக்கு வந்தனம் செலுத்துவது பொருத்தமாக இருக்கிறது.

ப்ரம்மாவை வாகீசர் என்று குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதால் வாக்கு ஸம்பந்தமாக, அதாவது வாக்கு குறிப்பிடும் அறிவு, வித்வத், வித்யை, இலக்கியம் முதலானவற்றில் மேற்கொள்ளும் எல்லா முயற்சியையும் நிர்விக்னமாக நிறைவேற்றித் தர விக்நேச்வர பூஜை அவசியம் என்று தெரிகிறது. தொன்றுதொட்டு இந்த நம்பிக்கைப்படிதான் ஒரு சுவடி எழுதத் தொடங்கும்போது, அது எந்த விஷயம் பற்றிய சுவடியாயிருந்தாலும் ஸரி, ஆரம்பத்தில் "ஸ்ரீ கணாதிபதயே நம:"என்று போடும் வழக்கம் அநுஸரிக்கப்பட்டு வந்திருக்கிறது.

கால தத்வத்தை ஸ்ருஷ்டிகர்த்தர் என்ற முறையில் ப்ரம்மா ஞாபகப்படுத்துவதால் அவரால் வழிபடப்பெறும் பிள்ளையாரை வருஷம் தொடங்கும் போது நமஸ்காரம் பண்ணவேண்டுமென்பது போலவே, அவர் (ப்ரம்மா) வாகீசர் என்ற ஸரஸ்வதிகாந்தனாயிருப்பதால், அவர் வழிபடும் பிள்ளையாரை எந்தப் புஸ்தகத் தொடக்கத்திலும் நமஸ்கரிக்க வேண்டுமென்றாகிறது!

இதனால்தான் இந்த ('வாகீசாத்யா:ஸுமநஸ:'என்ற) ச்லோகத்தையே ஆதி காவ்யமான ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தைப் பாராயணம் பண்ணும்போதும் மங்களச்லோகமாக முதலில் சொல்கிறோம். அதற்கப்புறம்தான் ஸரஸ்வதியைக் குறித்ததான "தோர்பிர்யுக்தா"ச்லோகம் சொல்வது.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

தேவரும் தொழும் தெய்வம்

தேவதையரின் இடையூறும் தீர்ப்பவர்

இதிஹாஸ காவ்யம் ஒன்று என்றால் அதன் ஆரம்பத்தில் வாக்தேவியாயும் வித்யாதிதேவதையாகவும் இருக்கப்பட்டவளை ஸ்தோத்ரிப்பதே பொருத்தம். அதுவே போதும் என்று தோன்றலாம். ஆனால் அவளுக்கும் முந்திப் பிள்ளையாரை ஸ்தோத்ரிக்க வேண்டியிருக்கிறது. ஏன் இப்படி?

அவளை நாம் ஸ்தோத்ரிப்பதற்கே ஏதாவது விக்னம் ஏற்பட்டுவிட்டால் என்ன பண்ணுவது?அதனால் முதலில் விக்னங்களைப் போக்கடிக்கும் விக்நேச்வரரை ஸ்தோத்ரிக்க வேண்டியதாகிறது.

இதைவிடவும் முக்யமாக இன்னொரு காரணமும் உண்டு. நாம் ஸ்தோத்ரிக்க முடியாமல் நமக்குத்தான் விக்னம் ஏற்படுமென்றில்லை. நாம் ஸ்தோத்ரிக்கும் தேவதை நமக்கு அநுக்ரஹம் பண்ணமுடியாமல் அந்த தேவதைக்கும் ஏதாவது விக்னம் ஏற்படலாம். புராணங்களைப் பார்த்தால் தெரியும். ஸாக்ஷாத் பார்வதி பரமேச்வரர்கள், மஹாவிஷ்ணு அவருடைய அவதாரங்கள், ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி முதலானவர்களுக்குக்கூடச் சில ஸந்தர்ப்பங்களில் எடுத்த கார்யத்தை முடிக்கமுடியாமல் விக்னங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அப்போது அந்த தெய்வங்களும் விக்நேச்வரருடைய ஸஹாயத்தைக் கோரிப் பெற்று, அவருடைய அருளாலேயே விக்னத்திலிருந்து நிவாரணம் பெற்றிருக்கிறார்கள். ப்ரம்மாதி தேவர்களும் இவரை நமஸ்கரித்தே க்ருத க்ருத்யர்களாவார்களென்று தானே (ஆரம்பத்தில் சொன்ன) ச்லோகத்திலும் பார்த்தோம்?அதனாலேயே இவருடைய துணை அவர்களுக்கு இல்லாவிட்டால் அவர்களுடைய கார்யங்களும் நிறைவேறாமல் விக்னம் ஏற்படுமென்று தெரிகிறதல்லவா?ஆகையினால்தான் ஒரு காவ்ய ஸ்ருஷ்டியாயிருந்து அதன் ஆரம்பத்தில் ஸரஸ்வதியை ஸ்துதிப்பதானாலும், இதே மாதிரி, தனலாபத்துக்காக

லக்ஷ்மியை ஸ்துதிப்பதானாலும், நோய் நொடி தீருவதற்காக ஸூர்ய நாராயணனை ஸ்துதிப்பதானாலும், இப்படியே எந்த லக்ஷ்யத்தை முன்னிட்டு எந்த ஸ்வாமியை ஸ்துதிப்பதானாலும், அந்த ஸ்வாமியின் கார்யத்துக்கும் விக்னம் ஏற்படாமல் ரக்ஷிக்கும் பிள்ளையாரைத்தான் முதலில் ஸ்துதிக்கவேண்டுமென்று ஏற்பட்டிருக்கிறது.

ருத்ராபிஷேகமாக இருக்கட்டும், சண்டி ஹோமமாக இருக்கட்டும், வேங்கடரமண ஸ்வாமி ஸமாராதனையாக இருக்கட்டும், எந்தச் சடங்காகத்தான் இருக்கட்டும், பிள்ளையாருக்கு 'சுக்லாம்பரதரம்'குட்டிக்கொள்ளாமல் எதுவும் தொடங்குவதில்லை!பிரம்மாதி தேவதைகளில் யாரானாலும் தங்கள் காரிய நிறைவேற்றத்துக்காக அவர்களும் இவரை நமஸ்கரித்தாக வேண்டியிருக்கிறது என்பதாலேயே அவர்களிடம் நாம் ஒரு கார்யத்தை எதிர்பார்த்துப் போய் வழிபாடு நடத்தும் போது, அவர்களுக்கும் முந்தி இவரை வழிபடவேண்டுமென்று விதி ஏற்பட்டுவிடுகிறது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**தேவரும் தொழும் தெய்வம்**

**மன்னார்குடிப் பெரியவாள்**

கொஞ்சம் வேடிக்கை கலந்த மாதிரி இந்த விஷயத்தைப் பற்றி ஒரு பெரியவர் ச்லோகம் பண்ணியிருக்கிறார். 'பெரியவர்'என்றேன். அவரைப் 'பெரியவா(ள்)'என்றே தான், பெயரைச் சொல்லாமல், மரியாதையாகக் குறிப்பிடுவது வழக்கம். என் மாதிரி ஒரு மடாதிபதியாக இருப்பவரைப் 'பெரியவா'என்பதில் விசேஷமில்லை. ஸ்வயமான யோக்யாத இல்லாவிட்டாலுங்கூட, ஸ்தானத்தினாலேயே எங்களுக்குப் பெரியவர் பட்டம் கிடைத்துவிடும். நான் சொல்கிற பெரியவர் மடாதிபதி இல்லை. அதற்கடுத்த படியாக லோக கௌரவத்தைத் தன்னுடைய ஆச்ரமத்தினாலேயே ஸம்பாதித்துவிடுகிற (மடாதிபதியாக இல்லாத)

ஸந்நியாஸிகூட இல்லை. க்ருஹஸ்தராகவே வாழ்க்கை நடத்தியவர். ஆனால் "குலபதி"என்று புகழக்கூடிய அளவுக்கு ஏராளமான சிஷ்யர்களுக்கு குருகுலம் நடத்திப் பல மஹாவித்வான்களை உருவாக்கிய மஹா மஹோபாத்யாயராக இருந்தவர். ஸந்நியாஸிகளுங்கூட வந்து பாடம் கேட்டுக்கொண்டு போகும்படியான அப்பேர்ப்பட்ட பாண்டியத்தோடு கூடியிருந்தவர். மஹா பண்டிதர் என்பது மட்டும் அவர் பெருமையல்ல. உசந்த குணவானாகவும் இருந்தார். சிவபக்தியில் சிறந்தவர். பரம ஆசார அநுஷ்டானத்தோடுகூட ரொம்பவும் சீலராக வாழ்ந்த பெருமையும் அவருக்கு உண்டு. ஞானம், சீலம் இரண்டிலும் பெரியவராக இருந்த அவரைத்தான் 'பெரியவாள்'என்றே லோகம் சொல்லிற்று. அடையாளம் தெரிவதற்காக, அவர் வாழ்ந்துவந்த ஊரின் பெயரைச் சேர்த்து "மன்னார்குடிப் பெரியவாள்"என்று சொல்வார்கள். உயர்ந்த அறிவு, சிறந்த ஒழுக்கம் இரண்டும் கூடிய அவர் 19-ம் நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்து இருபதாம் நூற்றாண்டு ஆரம்பம் வரை ஸுமார் தொண்ணூறு வயசு ஜீவ்யவந்தராக இருந்து 'ஞான-சீஸ-வயோ வ்ருத்தர்'என்கிற புகழ்ச் சொல்லுக்கு முற்றிலும் உரியவராக இருந்தார். மஹானாகிய அப்பைய தீக்ஷிதரின் வம்சத்தில் வந்த அவருடைய சர்மன் த்யாகரஜர் என்பது. அவர் யாகங்கள் செய்ததால் 'த்யாகராஜ மகி'என்று தம்முடைய நூல்களில் தம்மைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருப்பார். 'மகம்'என்றால் யாகம். சின்ன வயசிஸில் அவரை வீட்டிலே பெரியவர்கள் கூப்பிட்ட பேர் ராஜு. அதனால் ராஜு சாஸ்திரிகள் என்றும் சொல்வதுண்டு. ஆனால் பேச்சு வழக்கில் 'மன்னார்குடிப் பெரியவா'தான். ஊர் உலகமெல்லாம் பெரியவா என்று அழைத்தாலும் ரொம்பவும் அடக்கத்தோடு எளிமையாக இருந்தவரவர். அவருடைய குருமார்களில் கோபாலாசாரியார் என்பவர் ஒருவர் பிற்காலத்திலே இந்த கோபாலாசாரியாரின் புத்திரர் மன்னார்குடிப் பெரியவாளிடம் படித்த மாணவர்களில் ஒருவரானார். இவர் பெரியவாளைவிட வயஸில் சிறியவர் அதோடு சிஷ்யர். அப்படியிருந்தும், குரு புத்ரனுக்கு மரியாதை காட்டவேண்டும் என்ற வழக்கை அநுஸரித்து இவர் வகுப்புக்கு வரும்போது இவருக்கு குருவான மன்னார்குடிப் பெரியவாளே எழுந்திருந்து நிற்பாராம்!பக்தி ச்ரத்தை, ஆசாரம், ஸத்குணங்கள், அபாரமான வித்வத்

இத்தனையும் பெற்று, ஸந்நியாஸிகளுக்கும் பாடம் சொன்னவரானாலும் அவர் கடைசி மட்டும் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளவில்லை. "நமக்கு ஏது அவ்வளவு யோக்யதை?"என்றே சொல்வாராம். அத்தனை அடக்க ஸம்பத்து!

அவருக்கு மஹாமஹோபாத்யாய பட்டம் சூட்டியதிலேயே இப்படி (அவரது அடக்க குணத்தைக் காட்டுவதாக) ஒரு விஷயம் உண்டு. (1887-ல்) விக்டோரியா பட்டமேறிய கோல்டன் ஜுபிலி கொண்டாடியபோது, இந்தியாவின் பழைய வழக்கத்தை அநுஸரித்து இனிமேல் வெள்ளைக்கார ராஜாங்கமும் பண்டிதோத்தமர்களுக்கு 'மஹா மஹோ பாத்யாய'பட்டம் கொடுக்க வேண்டுமென்று தீர்மானம் பண்ணினார்கள். அதன் பிரகாரம் முதல் வருஷமே வடக்கத்தி வித்வான் ஒருவருக்கும், தெற்கத்தி வித்வான் ஒருவருக்கும் டைட்டில் தருவது என்று தேர்ந்தெடுத்தபோது அவர்களில் ஒருவராக இருந்த தெற்கத்திக்காரர் நம்முடைய மன்னார்குடிப் பெரியவாள்தான். ஆனாலும் அவருக்கு இந்த விஷயம் தெரிவிக்கப்பட்டபோது, 'பூர்வ காலத்தில் மஹாபெரிய வித்வான்களுக்கே கொடுத்து வந்த இந்தப் பட்டம் எனக்கா?அவ்வளவு யோக்யதை இல்லவே இல்லை'என்று சொல்லிச் சும்மா இருந்துவிட்டாராம். பட்டம் வாங்கிக்கொள்ள அவர் டில்லி தர்பாருக்குப் போகவேயில்லை!விஷயத்தை மறந்துவிட்டுத் தம்பாட்டுக்குப் பாடம் சொல்வது, சிவ பூஜை பண்ணுவது என்று இருந்துகொண்டிருந்தார். ராஜாங்கத்தில் இவருக்காகக் காத்துக் காத்துக் பார்த்தார்கள். டில்லிக்குப் போகாவிட்டாலும் கிட்டத்தில் இருக்கிற தஞ்சாவூருக்காவது போய் கலெக்டரிடமிருந்து டைட்டிலை ராஜமரியாதையோடு பெறுவாரா என்று காத்துப் பார்த்தார்கள். விநயப் ஸம்பன்னரான இவருக்கா, அந்த எண்ணமேயில்லை!அப்புறம் கலெக்டர் அந்தப் பெரிய பட்டத்துக்கான ஸன்னதுகளை அவருடைய வீட்டுக்கே அனுப்பி வைத்தபோதுதான் மறுக்க முடியாமல் ஏற்றுக்கொண்டார்.

வித்யை இருந்தால் தலைக்கனமும் இருக்கத்தான் வேண்டும் என்றில்லாமல் நேர் வித்யாஸமாக இருந்தார். வித்யாரம்பத்திலேயே விநாயகரை வந்தனம் செய்வதாலும்,

எந்த சாஸ்த்ரமாயிருந்தாலும் அதற்கான புஸ்தகத் தொடக்கத்திலேயே பிள்ளையார் ஸ்துதிக்கப்படுவதாலும் உண்மையான வித்வானொருவன் எப்படியிருக்கவேண்டும் என்று காட்டிய அந்தப் பெரியவரைப் பற்றிச் சொல்வதெல்லாமும் விக்நேச்வர ப்ரீதிதான். நாம் எடுத்துக் கொண்ட விஷயத்தை விட்டு எங்கோ போய்விட்டதாக ஆகாது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## "ந்யாயேந்து சேகரம் "

அந்தப் பெரியவர் பண்ணியிருக்கும் க்ரந்தங்களில் 'ந்யாயேந்து சேகரம்'என்பது ஒன்று. அது அத்வைத வேதாந்தம், தர்க்க சாஸ்த்ரம் ஆகிய இரண்டும் சேர்ந்த புஸ்தகம். தர்க்க சாஸ்த்ரம் என்று பொதுவாகச் சொல்வதற்கு 'ந்யாய சாஸ்த்ரம்'என்றே பெயர். அதனால்தான் அந்த சாஸ்த்ரத்தை ஸம்பந்தப்படுத்தி எழுதப்பட்ட இந்த நூலுக்கு 'ந்யாயேந்து சேகரம்'என்று பேர்.

'ந்யாய பாஸ்கரம்'என்று ஒரு புஸ்தகம் இருக்கிறது. அது அனந்தார்யார் என்பவர் எழுதியது. அத்வைத வேதாந்த க்ரந்தங்கள் சிலவற்றில் மேற்கொள்ளப்பட்டிருக்கும் தர்க்க வாதங்கள் சரியானவையில்லை என்று கண்டனம் செய்து தர்க்க ரீதியாக எழுதப்பட்ட புஸ்தகமே 'ந்யாய பாஸ்கரம்'. அதில் சொல்லியிருக்கும் வாதங்கள்தான் சரியில்லை என்றும், அத்வைத க்ரந்தங்களின் வாதங்கள் சரியானவையே என்றும் நன்றாக அலசி மன்னார்குடிப் பெரியவர் எழுதிய மறுப்பு நூல்தான் 'ந்யாயேந்து சேகரம்'. ந்யாய சாஸ்திரத்தில் தம்முடைய புஸ்தகம் ஸூர்யன் மாதிரி ப்ரகாசிப்பது என்று பொருள்பட அனந்தார்யார் 'ந்யாய பாஸ்கரம்'என்று பெயர் வைத்தார். ஸூர்ய.ன் அஸ்தமித்தபின் குளுகுளுவென்று நிலாவைக் கொடுத்துத் தாபசாந்தி செய்வது சந்திரன். சந்திரனுக்கு இந்து என்றும் பெயர். ந்யாய பாஸ்கரத்தின்

வாதங்களை அஸ்தமிக்கப் பண்ணி ஸஹ்ருதயர்கள் மனஸுக்குச் சந்திரிகை மாதிரி ஜிலுஜிலுவென்றிருப்பது தம்முடைய மறுப்பு நூல் என்று காட்டும் விதத்தில் நம்முடைய பெரியவர் தம் புஸ்தகத்துக்குப் பெயர் வைக்க எண்ணினார். ஆகையால் இதற்கு அவர் 'ந்யாயேந்து'என்று பேர் வைத்திருந்தாலே போதும். ஆனால் அடக்க குணமுள்ள அவர் தாம் ஸ்வயமாக இப்படி ஒரு பெரிய நூல் எழுதியதாக நினைக்காமல் ஈச்வர ப்ரஸாதமாகவே எழுதியதாகத்தான் நினைத்தார். அதனால் தாம் வைக்கும் பேர் ஈச்வரனையும் ஞாபகப்படுத்துவதாக இருக்க வேண்டுமென்று நினைத்தார். சந்திரன், சிவன் இருவரையுமே ஞாபகப்படுத்துவதாக 'சந்திர சேகர'என்ற பெயர் இருக்கிறதல்லவா?இதையே 'இந்து சேகர'என்றும் சொல்வார்கள். அதனால்தான் "ந்யாய இந்து சேகரம்", "ந்யாயேந்து சேகரம்"என்று தம்முடைய புஸ்தகத்துக்குப் பெயர் வைத்துவிட்டார். தலையாக, உச்சியாக விளங்குவது 'சேகரம்'. அத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டி அந்த, ஸம்பிரதாயப் புஸ்தகங்களில் கூறியுள்ள வாதங்கள் தர்க்க சாஸ்த்ர ரீதியாக ஸரியானவையே என்று அழுத்தமாக நிரூபிக்கும் தலைசிறந்த நூலாக 'ந்யாயேந்து சேகரம்'விளங்குகிறது.

கும்பகோணத்தில் நமது மடத்துப் பரம குரு ஸ்வாமிகள் அத்வைதப் பிரசாரத்துக்காக அத்வைத ஸபா என்று ஆரம்பித்துவைத்து, அது நம்முடைய ஸித்தாந்தத்துக்காக நல்ல ஸேவை செய்துவருகிறது. அதில் வருஷா வருஷம் நடத்தும் பரீக்ஷைகளில் 'ந்யாயேந்து சேகரம்'குறித்தும் ஒரு பரீக்ஷை இருக்கிறது. இதில் சிறப்பாகத் தேறி முதல் பரிசு வாங்குவதுதான் ஸபையின் தலைசிறந்த ஸம்மானமாகக் கருதப்படுகிறது என்பதிலிருந்து நூலின் சிறப்பு புரியும். (அத்வைத ஸபாவின் ஆரம்ப வருஷங்களில் நம்முடைய சாஸ்த்ரிகள் அதில் முக்யமான அங்கம் வஹித்திருக்கிறார்.)

## பிள்ளையாரும் தர்க்க சாஸ்திரமும்

ஸரி, தர்க்க சாஸ்த்ரத்துக்கும் பிள்ளையாருக்கும் என்ன ஸம்பந்தம்?

தர்க்க சாஸ்த்ரத்தில் 'இதனால் இது இப்படி'என்று காரண - காரியங்களை அறிவு ரீதியில் இசைத்துக் காட்டி வகுத்துள்ள விதிகளுக்கு 'ந்யாயம்'என்று பெயர். அதனால் தான் அந்த சாஸ்த்ரத்துக்கே 'ந்யாயம்'என்று விசேஷப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. உவமைகளைக் கொண்டும் நமக்குப் புரியுமாறு பல 'ந்யாய'ங்களை வகுத்துத் தந்திருக்கிறது. ந்யாய சாஸ்த்ர நூல்களில் சொல்லியிருப்பவற்றோடு ஆன்றோர் வசனத்திலும் பொது வழக்கிலும் பிறந்த இப்படிப்பட்ட அநேக ந்யாயங்களும் உள்ளன. உதாஹரணமாக :உத்தேசமில்லாமல் தற்செயலாக ஒன்றை அடுத்து இன்றொன்று நடக்கும்போது 'காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்தது'என்கிறோமல்லவா?இதற்குக் 'காக - தாளீய ந்யாயம்'என்று பெயர். 'தாளி'என்றால் பனை. 'தாலி'கூட அதிலிருந்து வந்ததுதான். ஸம்ஸ்க்ருதத்தில் 'ல'வுக்கும் 'ள'வுக்கும் பேதம் கிடையாது.

ஸ்திரீகளின் ஸௌமங்கல்யத்துக்கு முக்கியமான சின்னங்கள் காதுத் தோடும், கழுத்திலுள்ள மங்கள ஸூத்ரப் பதக்கமும்தான். ஆதியில் ரொம்பவும் எளிமையாக நம் பெரியோர்கள் வாழ்க்கையை அமைத்துக் கொடுத்திரு ந்தபோது இந்தக் காதணி, கழுத்தணி இரண்டுமே பனையோலையால் ஆனதாகத்தான் இருந்தன. அதனால் தான் வைரத் தோடானால்கூட அதைப் பிற்காலத்திலும் வைர ஓலை என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. 'ச்யாமளா நவரத்னமாலை'யில் அம்பாளையே 'தாளீ பலாச தாடங்காம்'என்று சொல்லியிருக்கிறது. அம்பிகையே பனை ஓலையைத்தான் தாடங்கமாகச் சுருட்டிப் போட்டுக் கொண்டிருக்கிறாளாம். கழுத்தின் மங்கள ஸூத்ரப் பதக்கமாகவும் அந்த ஓலை நறுக்கே இருந்திருப்பதால்தான் அதற்குத் தாலி என்று பேர் ஏற்பட்டிருக்கிறது.

பிள்ளையாரை விட்டு விஷயம் எங்கேயோ போய்விட்டது!

அத்வைத வேதாந்தம், ந்யாய ஸித்தாந்தம் ஆகியவற்றைப் பற்றிய 'ந்யாயேந்து சேகர'த்தில் பிள்ளையாரைப் பற்றி

இருப்பதைச் சொல்லவந்தேன்.

'இன்ன அடிப்படையினால் இது இப்படி நிரூபிக்கப்படுகிறது'என்று காட்டுவனவாக ந்யாயங்கள் என்று பல உண்டு என்று சொன்னேனல்லவா?ஒரு புஸ்தகம் எனிறிருந்தால் அதில் முதலில் 'மங்கள ச்லோகம்'என்று இருக்கும். 'பாயிரம்', 'கடவுள் வணக்கம்'என்றெல்லாம் சொல்வது இதைத்தான். சற்றுமுன் சொன்னாற்போல், இப்படிப்பட்ட மங்கள ச்லோகங்களில் எடுத்த எடுப்பில் உள்ளது பிள்ளையாரைப் பற்றியதாகத்தானிருக்கும். 'ந்யாய ஸம்பந்தமாக நாம் எழுதுகிற இந்தப் புஸ்தகத்தில் ஆரம்ப ச்லோகமாயிருக்க வேண்டிய பிள்ளையார் ஸ்துதியிலேயே ஏதாவதொரு ந்யாயத்துக்கு எடுத்துக்காட்டு கொடுத்துவிட்டால் எவ்வளவு பொருத்தமாக இருக்கும்?'என்று ராஜு சாஸ்திரிகள் (மன்னார்குடி பெரியவர்கள்) நினைத்தார். மஹா பண்டிதரானதால் நினைத்தபடியே ச்லோகம் பண்ணி விட்டார். பிள்ளையாரை அதுதான் தர்க்க சாஸ்த்ரத்தோடு ஸம்பந்தப்படுத்திவிடுகிறது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**தேவரும் தொழும் தெய்வம்**

**" பெரியவா " ளின் பிள்ளையார் ச்லோகம்**

அப்யந்யாமரம் ஆரிராதயிஷதாம் யத் பாத பங்கேருஹ-

த்வந்த்வாராதநம் அந்தராயஹதயே கார்யம் த்வவச்யம் விது :

தத்-ஹேதோரிதி நீதிவித்து பஜதே தேவம் யம் ஏகம் பரம்

ஸர்வார்த்த ப்ரதிபாதநைக சதுரோ த்வைமாதுரோ (அ)வ்யாத் ஸ ந :

இது தான் 'ந்யாயேந்து சேகர'த்தின் மங்கள ச்லோகம்.

இதற்கு என்ன அர்த்தமென்றால் :'வேறே ஏதோ ஒரு தெய்வத்தை, அதாவது விக்நேச்வரர் அல்லாத இன்னொரு

தெய்வத்தை, பூஜை பண்ண விரும்புகிறவர்கள்கூட தங்களுடைய பூஜையில் ஏற்படக்கூடிய விக்னம் நீங்குவதற்காக விக்நேச்வரருடைய இரண்டு பாத கமலங்களை அவசியம் பூஜிக்கத்தான் வேண்டுமென்று அறிந்திருக்கிறார்கள். பூஜை செய்கிறவன் 'தத்-ஹேது ந்யாயம்'தெரிந்தவனாயிருந்தாலோ (வேறே தெய்வத்தைப் பூஜை பண்ணவேண்டுமென்றே நினைக்காமல்) ஏகப் பரம்பொருளான விக்நேச்வரர் ஒருவரை மாத்திரம் பூஜிப்பதோடு முடித்துவிடுகிறான். இப்படி ஸகல கார்யத்தையும் தாமே பூர்த்தி செய்துதர வல்லவராக உள்ள அந்த விக்நேச்வரர் நம்மை ரக்ஷிக்கட்டும்'என்பதாகும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## 'தத்-ஹேது ' நியாயம்

ந்யாயங்களில் ஒன்றான தத் - ஹேது ந்யாயத்துக்கு இங்கே எடுத்துக்காட்டுக் கொடுத்துவிடுகிறார். 'தத் - ஹேதோ:இதி நீதி'என்று (ச்லோகத்தில்) வருவதற்கு 'தத்ஹேது என்னும் நியாயம்'என்று அர்த்தம். நீதி, நியாயம் இரண்டும் ஒன்றுதான். பேச்சுவழக்கில்கூட நீதிபதி - ந்யாயாதிபதி, நீதிமன்றம் - ந்யாய ஸ்தலம் என்று இரண்டு விதமாகவும் சொல்கிறோமல்லவா?

இந்த தத் - ஹேது ந்யாயத்தைக் கொஞ்சம் புரிய வைக்கப் பார்க்கிறேன்.

'ஹேது'என்றால் காரணம். 'ஏது'என்று தமிழில் சொல்வார்கள். 'ஒய'ரைத் தொட்டால் ஆபத்துக்கு ஏதுவாகும் என்று சொல்கிற இடத்தில் 'ஏது'என்பது காரணம் என்றுதானே அர்த்தம் கொடுக்கிறது?ஹேதுவுக்கு 'ஆப்போஸிட்'அஹேது. அது பெயரெச்சமாக வரும்போது 'அஹைதுக'என்று ஆகும். பகவான் காரணமே இல்லாமல் காட்டுகிற கருணையை 'அஹைதுக க்ருபா'என்பார்கள். இதேமாதிரி ஒரு ஞானி காரணமேயில்லாமல் காட்டுகிற பக்தியை 'அஹைதுகீ

பக்தி'என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறது. பக்தி மார்க்கத்திலேயே போகிற பக்தன் பகவானை அடையவேண்டும் என்ற காரணத்துக்காக பக்தி பண்ணுகிறான். ஞானியோ பகவானின் நிர்குண ஸ்வரூபத்தைத் தன்னிலேயே பெற்றுவிட்டவனாதலால் இனிமேல் தான் பகவானை அடையவேண்டுமென்றில்லை. ஆனாலும் காரணமேயில்லாமல் பரம ஞானிக்கும் தன்னியல்பாக உருகி உருகி பக்தி பண்ணியிருக்கிறார்கள். இதைத்தான் பாகவதம் "அஹைதுகீ பக்தி"என்கிறது........

'தத்-ஹேது ந்யாய'த்தில் ஹேது என்றால் காரணம், அதாவது உபாயம். 'தத்'என்றால் 'அது'எது?காரணத்தால், உபாயத்தால் அடையும் லக்ஷ்யம், அல்லது பலன். ஒரு பலனை ('தத்'தை) அடையப் பல உபாயங்கள் ('ஹேது'க்கள்) இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். ஆனாலும் இவை தாங்களே நேராகப் பலன் தர முடியாமல், நேர்ப் பலன் தருவதாக உள்ள இன்னொரு உபாயத்தின் ஸஹாயம் பெற்றே பலன் கொடுக்க முடியும் என்றும் வைத்துக்கொள்ளுங்கள். அப்போது, இந்த உபாயங்களில் ஒன்றை நாம் கைக் கொண்டால், முதலில் நேர் உபாயத்தை இதற்கு ஸஹாயமாக்கிக் கொள்ள வேண்டும். அதாவது, இது பலன் கொடுக்கக்கூடியதாக ஆவதற்கு உபாயமாக நேர் உபாயத்தை ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளணும். அப்புறம் இதைக் கொண்டு பலனைப் பெற வேண்டும். அதாவது முக்ய லக்ஷ்யம் (தத்) என்று ஒன்று, அதை அடைய நாம் கைக்கொள்ளும் உபாயம் (ஹேது) என்று ஒன்று என்பவற்றோடு நிற்காமல், இந்த உபாயத்தைப் பலனளிக்கத்தக்கதாக்க வேண்டும் என்ற இன்னொரு லக்ஷ்யமும் ('தத்'தும்)-இந்த இன்னொரு லக்ஷ்யத்தை உபலக்ஷ்யம் என்று சொல்லலாம் - இந்த உபலக்ஷ்யத்தை நிறைவேற்றித் தருவதாக இன்னொரு ஹேதுவும் (இந்த இரண்டாவது ஹேதுவை உபஹேது என்று சொல்லலாம்;இப்படியொரு உபஹேதுவும்) வேறு சேர்கின்றன. ஆனால் எதற்காக இப்படிச் சுற்றி வளைக்கணு ம்?உபலக்ஷ்யத்தை அடைவிக்கும் உபஹேதுவேதான் முக்ய லக்ஷ்யத்திற்கும் நேர் ஹேதுவாக இருக்கிறதென்று பார்த்தோமே?ஆகையால் அந்த நேர் ஹேதுவைக்கொண்டே 'டைரக்டா'க நம்முடைய முக்ய லக்ஷ்யத்தை அடைந்துவிட்டுப் போகவேண்டியதுதானே? வேறே ஒரு ஹேதுவைக் கொண்டுவருவானேன்? நேர்

ஹேதுவைக்கொண்டு அந்த இன்னொரு ஹேது பலிக்கும் படிச் செய்வது என்ற இன்னொரு லக்ஷ்யத்தை ('தத்'தை) வேறே இழுத்துவிட்டுக் கொள்வானேன்?

இதைத்தான் 'தத்-ஹேது ந்யாயம்'என்று கேள்வி ரூபத்தில் சொல்வது. 'தத்-ஹேதோரேவ தத்-ஹேதுத்வே மத்யே கிம் தேந?'என்பதுதான் அந்தக் கேள்வி. இரண்டு 'தத்'வருகிறது. 'தேந'என்று முடிவதும் 'தத்'தின் மூன்றாவது வேற்றுமைதான். (அதற்கு) 'தத்'தினால் என்று அர்த்தம். இந்த வாக்யத்திற்கு என்ன அர்த்தமென்றால்: "'தத்'துக்கு ஹேதுவாயிருப்பதே 'தத்'துக்கு ஹேதுவாயிருக்கும்போது நடுவாந்தரத்தில் 'தத்'தினால் ஆவதென்ன?"

புரியவில்லையா?யோசித்துப் பார்த்தால் புரிந்துவிடும். முதல் 'தத்'என்பது உபலக்ஷ்யம். இரண்டாவது 'தத்'முக்யலக்ஷ்யம். மூன்றாவதாக 'தேந'என்பது குறிப்பிடும் 'தத்'தும் உபலக்ஷ்யம்தான். இப்படிப் புரிந்துகொண்டால் அந்த வாக்யத்தின் அர்த்தம் 'உபலக்ஷ்யத்துக்கு உபாயமாயிருப்பதே முக்ய லக்ஷ்யத்துக்கு உபாயமாக இருக்கும்போது நடுவில் உபலக்ஷ்யம் என்ற ஒன்றினால் ஆவதென்ன-உபலக்ஷ்யம் என்று ஒன்றை நடுவில் கொண்டுவருவானேன்?'என்பது.

த்ருஷ்டாந்தம் காட்டினால் தெளிவாகப் புரியும்:அரிசி மூட்டை வாங்கணும். அதுதான் லயம்-தத். 'கிராமத்தில் பண்ணையாரிடம் மூட்டை இருக்கும். அவரிடம் போய் வாங்கலாம்'என்று நினைக்கிறோம். பண்ணையார் ஹேது. ஆனால் அவர் நம்மூர்ப் பலசரக்குக் கடைக்காரர் சிபாரிசு பண்ணினால்தான் மூட்டை போடுவார். இப்படிப் பலசரக்குக்காரர் மூலம்தான் நாம் பண்ணையாரைப் பிடிக்க வேண்டுமென்னும்போது, முன்னே ஹேதுவாகச் சொன்ன பண்ணையாரே பலசரக்குக்காரரை கொண்டு நாம் அடைய வேண்டிய (உப)லக்ஷ்யம் ('தத்') ஆகிறார். இதற்குப் பலசரக்குக்காரர் ஹேதுவாகிறார் (உபஹேது.) வேடிக்கை என்னவென்றால், பலசரக்குக்காரரிடமே அரிசியும் இருக்கிறது. வேறே யாருடைய சிபார்சும் இல்லாமல் அவரே நமக்கு அதை விற்கவும் விற்பார். அதாவது அவரே நம்முடைய முக்ய லக்ஷ்யத்திற்கு நேர் ஹேதுவாக இருக்கிறார். இப்படியிருக்கும்போது இவரிடமே அரிசி வாங்கி வியாபாரத்தை ஈஸியாக முடித்துவிட

வேண்டியதுதானே?நடுவாந்தரத்தில் பண்ணையாரை இழுத்துவிட்டுக்கொண்டு, இந்தப் பலசரக்குக்காரர் மூலமே அவரை அரிசி விற்கும்படிப் பண்ணுவது என்ற கார்யத்தை (இன்னொரு லக்ஷ்யத்தை-'தத்'தை) வேறே உண்டாக்கிக்கொள்வானேன்?

இதோ இந்தக் குத்துவிளக்கில் இந்த (கிழக்கு) முகத்தை ஏற்றவேண்டுமானால் என்ன செய்யணும்?ஒரு வத்திக் குச்சியைக் கிழித்து இந்த (கிழக்கு முகத்) திரியை ஏற்றணும். அவ்வளவுதான் பண்ணவேண்டியது. யாராவது, 'முதலிலே அநதப் பக்க (மேற்கு முகத்) திரியை ஏற்றுங்கள். அப்புறம் அந்தத் திரியினால் இந்தத் திரியை ஏற்றுங்கள்' என்றால்..... (சிரிக்கிறார்கள்.) நேரே இந்தத் திரியையே ஏற்றலாமாயிருக்க, மத்தியிலே இன்னொரு திரி எதற்கு? 'தத்-ஹேதோ ரேவ தத்-ஹேதுத்வே மத்யே கிம் தேந?'

'ந்யாயேந்து சேகர'ச்லோகத்தில் இதைப் பிள்ளையாருக்கு எப்படிப் பொருத்தியிருக்கிறது?

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## இதர தெய்வ உபாஸகரும் வழிபடுவது

(ச்லோக) ஆரம்பத்தில் ஸாதாரண ஜனங்கள் பண்ணுவதைச் சொல்லியிருக்கிறது. படிப்பு வர ஸரஸ்வதி பூஜை, பணம் வரணமென்று லக்ஷ்மி பூஜை, நேத்ரரோகம் ஸரியாவதற்காக ஸூர்ய நமஸ்காரம் என்றெல்லாம் செய்கிறோம். அதாவது பல பயன்களைப் பெறுவதற்கு ஹேதுவாகப் பல தெய்வங்களுக்கு வழிபாடு செய்கிறோம். எந்த வழிபாடானாலும் அதற்கு விக்னம் ஏற்படாமலிருக்க ஆரம்பத்தில் மஞ்சள் பிள்ளையார் பிடித்துவைத்து மஹா கணபதிக்கு முதல் பூஜையைப் பண்ணிவிடுகிறோம். இதைத்தான் முதல் பாதியில் சொல்லியிருக்கிறது.

"அப்யந்யாமரம் ஆரிராதயிஷதாம்" :இதர தேவதையை,

பிள்ளையாருக்கு அன்னியமான ஒரு தெய்வத்தை, ஆராதிக்க விரும்புகிறவர்கள்கூட....

அமரர் என்றால் தேவர். மரணமில்லாதவர் அமரர்.

'அபி அந்ய அமரம்'என்பதாக ஆரம்பத்திலேயே உட்கார்ந்திருக்கும் 'அபி'க்குக் 'கூட'என்று அர்த்தம்.

யாரோ 'கூட'எதையோ செய்கிறார்கள் என்றால் அவர்கள் செய்கிற கார்யம் நமக்கு ஆச்சர்யம் தருவதாக இருக்கும். எடுத்தவுடன் 'அபி'போட்டுவிட்டால் ஆச்சர்யம் தருவதாகப் பின்னாடி ஸமாசாரம் வரப்போகிறது என்று ஏற்பட்டுவிடும். படிப்பவர்களுக்கு ஆர்வம் உண்டாக்குவதற்காக 'அபி'போட்டு ச்லோகத்தை ஆரம்பிப்பதுண்டு.

வேறு தேவதைகளை ஆராதிக்க விரும்புகிறவர்கள்கூட என்ன செய்கிறார்கள்?அந்த ஆராதனைக்கு ஏற்படக்கூடிய விக்னம் போவதற்காக யாரோ ஒருவருடைய இணையடிக் கமலங்களை ஆராதிப்பது கட்டாயம் செய்யவேண்டிய காரியமென்று அறிந்திருக்கிறார்கள்."யத் பாத பங்கேருஹ த்வந்த்வாராதனம் அந்த்ராய ஹதயே கார்யம் து அவச்யம விது:"என்பதற்கு இதுதான் அர்த்தம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### "தொந்தம்"

"பாத பங்கேருஹ த்வந்த்வம்:"- இணையடித் தாமரை த்வந்த்வம் என்றால் இரட்டை. இரண்டு பேர் சேரும்போது உறவு ஏற்படுவதால் அதை 'தொந்தம்'என்று சொல்வது த்வந்த்வத்திலிருந்துதான். உறவை ஸொந்தம், பந்தம், தொந்தம் என்று மூன்று பேரில் சொல்கிறோம். 'ஸ்வ'என்றால் 'தான்'. தன்னைச் சேர்ந்தது ஸ்வந்தம், அதாவது சொந்தம். பந்தம் என்றால் கட்டு. அன்பினாலே நம்மோடுகட்டுண்டிருப்பதால் உறவுக்காரர்களை பந்தம்

என்கிறோம். 'ஆள்கட்டு'என்றுகூடச் சொல்கிறோமல்லவா?இது நல்ல அர்த்தம். இன்னொரு அர்த்தமும் உண்டு. ஸம்ஸ்காரத்தைத் தானே ஜீவனுக்குப் பெரிய கட்டு என்கிறோம்?ஸம்ஸார பந்தம் என்கிறோம்?அந்த பந்தத்தில் கட்டிப்போடுவதில் முக்கியமாக இருப்பதாலும் உறவுக்காரர்களை பந்தம் என்கிறார்கள். 'பந்த'த்திலிருந்துவந்ததுதான் 'பந்து'. இவர்களுக்குள்ளே ஒருத்தனை ஸம்ஸாரத்தில் ரொம்பவும் கட்டிப் போடுவது பெண்டாட்டிதான் என்று நினைத்துத்தான் அவளையே ஸம்ஸாரம் என்று சொல்லும் வழக்கம் வந்திருக்கிறது!'இந்த அம்மாள் இன்னாருடைய ஸம்ஸாரம்'என்கிறோம்!தொந்தம் என்றாலும் உறவுதான்.

இரண்டு பேர் உறவாகச் சேர்ந்திருப்பதை த்வந்த்வம் என்பது போலவே இரண்டு பேர் பகையாகிச் சண்டை போட்டுக்கொள்வதையும் 'த்வந்த்வ யுத்தம்'என்கிறோம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### பாத தாமரை

"பாத பங்கேருஹ த்வந்த்வம்":தாமரை போன்ற பாத இரட்டை. 'பங்கேருஹம்'என்றாலும் 'பங்கஜம்'என்றாலும் ஒரே அர்த்தந்தான். பங்கம் என்றால் சேறு. சேற்றில் முளைப்பது பங்கஜம் அல்லது பங்கேருஹம். அழுக்கேயில்லாமல் பரம நிர்மலமாக, அழகாக உள்ள தாமரை அழுக்கான சேற்றில் பிறக்கிறது. எங்கே பிறந்தாலும் உயர்வாக, சிரேஷ்டமாக உருவாகலாம் என்று ஞாபகப்படுத்துவதற்காக அழகான தாமரைக்குச் 'சேற்றில் பிறந்தது'என்று பேர் வைத்திருக்கிறார்கள். நீரில், நீர்நிலையில் பிறப்பதால் நீரஜம், அம்போருஹம், ஸரஸிஜம், குட்டையைக் குழப்பி உண்டான சேற்றில் உண்டாவதால் பங்கேருஹம். குழம்பிக்கிடக்கிற நம் மனஸிலும் மலர்ந்திருப்பது பகவானின் பாத தாமரை.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

தேவரும் தொழும் தெய்வம்

"பாத பூஜைக்கார" ரின் பெருமை

அந்நிய தேவதைகளை ஆராதிக்க விரும்புகிறவர்கள்கூட இந்த யாரோ ஒருவருடைய பாத கமலங்களை நிச்சயம் ஆராதித்தாலே தங்களுடைய தேவதாராதனத்துக்கு இடையூறு இல்லாமல் பண்ணிக்கொள்ளலாமென்று அறிந்திருக்கிறார்கள்-என்று ச்லோகத்தில் சொல்லியிருப்பதற்கு, இப்படி அறிந்திருப்பதால் அதற்கேற்க இந்த யாரோ ஒருவருக்கு அவர்கள் பாதபூஜை பண்ணுகிறார்களென்றே அர்த்தம். 'அந்தராயம்'என்றால் விக்னம், இடையூறு. 'அந்தராய ஹதயே':விக்ன நிவாரணத்துக்காக. அதற்காக இந்த ஒருத்தரைப் பூஜை பண்ணியே தீரவேண்டுமென்று அவர்கள் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். பண்ணினால் நல்லது என்று மட்டுமில்லை;பண்ணியே தீரணும், இது அவச்யம் செய்ய வேண்டிய கார்யம் என்று தெரிந்துகொண்டிருக்கிறார்கள்: கார்யம் து அவச்யம் (த்வவச்யம் என்று ஸந்தியில் வரும்) விது:

யார் இப்படி அவசியம் பூஜிக்கப்பட வேண்டியவரென்று இங்கே சொல்லிவிடவில்லை. 'அபி'(கூட) என்பதை முதலில் போட்டு அப்புறம் விஷயத்தைச் சொல்கிறது போல, முதலிலேயே ஒருத்தரை இன்னாரென்று சொல்லிவிடாமல் எவரோ ஒருத்தர் என்று சொல்லிப் பிற்பாடு "அந்த அவர்"என்று வெளிப்படுத்திச் சொல்வதும் ஸ்வாரஸ்யத்துக்காகக் கவிகள் கையாளுகிற ஒரு யுக்தி. அதை அநுஸரித்து இங்கே இன்னாருக்குப் பாதபூஜை பண்ணுவதாகச் சொல்லாமல் 'எவருக்குப் பாதபூஜை பண்ணுகிறார்களோ'என்று 'யத்'போட்டுச் சொல்லியிருக்கிறது. 'யத் பாத பங்கேருஹ.........'.

எவரை நேராக ஆராதிக்க வேண்டுமென்று உத்தேசிக்காமல் வேறு தெய்வத்தை ஆராதிக்க விரும்புபவர்கள் 'கூட'-என்று

'கூட'ப் போட்டுச் சொன்னதில் இந்த எவரோ ஒருவருடைய பெருமை தெரிகிறது. இவரை ஆராதிப்பது அவர்களுடைய முக்யமான நோக்கமில்லை. ஆனாலும் 'கூட'அவச்யம் இவரை ஆராதித்தாக வேண்டுமென்று கருதுகிறார்கள் என்றால், இவருக்கு அது ரொம்பப் பெருமைதானே?அந்த பாத பூஜைக்கார ஸ்வாமி யாராயிருந்தாலும் அவருக்கு இப்படிப்பட்ட பெருமை இருக்கிறது.

இதர தேவதாராதனத்தில் இடையூறு வந்தால் அதைத் தீர்க்க அந்த தேவதைகளுக்குச் சக்தி இல்லை. இவரொருத்தருக்குத்தான் உள்ளது. இல்லாவிட்டால் இவருக்கு எதற்கு அந்நிய தேவதா உபாஸகர்களும் பூஜை செய்யவேண்டும்?எந்த தேவதைதான் அவர்களுக்கு இஷ்டமூர்த்தியாக இருக்கட்டும், அதனுடைய பாரம்யத்தை (பரத்வத்தை, அபிப்ராயத்தை) அவர்கள் எத்தனைதான் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தாலும், அந்த மூர்த்திக்கு அவர்கள் செய்கிற பூஜைக்கே ஒரு விக்னம் வருமானால் அதை நிவிருத்தி செய்வதற்கு அதற்குப் 'பவர்'இல்லை என்றும், இவருக்குத் தான் 'பவர்'இருக்கிறதென்றும் ஒப்புக்கொள்வதால்தான் அவச்யம் இவர் காலைப் பிடிக்கணுமென்று கருதுகிறார்கள்.

'எவருக்கு இப்படிப் பாதபூஜை பண்ணியாகணுமென்று கருதுகிறார்களோ'என்று (ச்லோகத்தின் இரண்டாவது வரியில்) சொன்னதையடுத்து, (மூன்றாம் வரியில்) 'எவரை தத்ஹேது ந்யாயம் அறிந்தவர் இவரே ஏகப் பரம் பொருளான தெய்வம் என்று உபாஸிக்கிறாரோ'என்று சொல்லியிருக்கிறது.

இங்கேயும் இன்னார் என்று உடைத்து ஆஸாமியைச் சொல்லவில்லை. 'எவரை'('யம்') என்றே குறிப்பிட்டிருக்கிறது. 'யம் ஏகம் பரம்', 'தேவம் யம் ஏகம் பரம்'என்று சொல்லியிருக்கிறது. இதில் குறிப்பாக எந்த ஒரு ஸ்வாமியின் பெயரும் இல்லை. இவர் தெய்வம் என்பதால் 'தேவம்'. அத்தனை தெய்வங்களுக்கும் மூலம் ஒன்றேயான ப்ரஹ்மம் தானே?அதைத்தான் 'ஏகம் பரம்'என்று சொல்லியிருக்கிறது. இந்த எவரோ ஒரு மூர்த்தியை அத்விதீயமான பரவஸ்துவாகச் சொல்லியிருப்பது ஸ்தோத்ரம் பண்ணிய பெரியவரின் அபிப்ராயமாகவே ச்லோக அமைப்பில் த்வனிக்கக் கூடுமானாலும் அது தத்ஹேது நியாயமறிந்து

அது காரணமாக இவரை-இவரை மாத்திரமே-உபாஸிக்கிறவரின் அபிப்ராயமும் ஆகும் என்பது ஆலோசித்துப் பார்த்தால் புரியும்.

பெயரைச் சொல்லாமலே ச்லோகத்தில் கொண்டு போயிருந்தாலம் ஆஸாமி யார் என்று நமக்குத் தெரியாமலில்லை. வேறு ஒரு ஸ்வாமிக்கான பூஜையானாலும் அதில் விக்னம் ஏற்படாமலிருப்பதற்காகப் பூஜிக்கப்படும் ஸ்வாமி இவர் என்பதால் விக்நேச்வரரைத்தான் ச்லோகம் குறிப்பிடுகிறது என்று புரிகிறது. விக்ன நிவ்ருத்திக்கே ஏற்பட்ட அந்த மஹாசக்தரைத்தான் தமிழில் குழந்தை ஸ்வாமியாகப் 'பிள்ளையார்'என்கிறோம். குழந்தை என்பதால் பிள்ளை. அதே சமயம் ஸ்வாமியாயும் இருப்பதால் 'யார்'போட்டுப் 'பிள்ளையார்'என்கிறோம்.

இந்த வரியில்தான் தத்ஹேது ந்யாயத்தைப் பிள்ளையாரோடு பொருத்தியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### 'ந்யாயம்' அறியாதவரும் அறிந்தவரும் பண்ணுபவை

எந்தப் பலனை விரும்பி, அதற்காக எந்த தெய்வத்தை உபாஸிக்கிறவனானாலும் சரி, அவன் இந்த உபாஸனைக்கே ஏதாவது உபத்ரவம் வந்து விடப்போகிறதே என்று கவலைப்படுகிறான். 'இப்படிப் படலாமா?இது அந்த தெய்வத்திடம் இவனுடைய விச்வாஸக் குறைவு மாதிரியல்லவா இருக்கிறது? இவன் ஆரம்பிப்பது ஒரு தெய்வ உபாஸனை. அப்படியிருக்க அந்த தெய்வம் இவன் அதற்குச் செய்யும் உபாஸனைக்கே உபத்ரவம், விக்னம் வரப் பார்த்துக்கொண்டிருக்குமா?'என்று கேட்கலாம். ஆனால் வாஸ்தவத்தில் இவன் கவலைப்படுவதற்கு நியாயமிருக்கவே செய்கிறது. சாஸ்த்ர புராணங்களில் சொல்லியிருப்பதைப் பார்த்துவிட்டுத்தான் இவன் இப்படிக் கவலைப்படுகிறான். இவனுடைய உபாஸனா மூர்த்தி, இன்னும் மற்ற தெய்வ

மூர்த்திகள் ஆகிய எல்லாருங்கூட லோகாநுக்ரஹமாக பெரிய காரியங்களை ஆரம்பிக்கும்போது அவர்களுக்கே ஒவ்வொரு ஸந்தர்ப்பதில் விக்னம் ஏற்பட்டிருப்பதை இவன் புராணங்களில் பார்த்திருக்கிறான் அப்போது அவர்கள் பிள்ளையாரைப் பூஜை பண்ணித்தான் விக்ன நிவ்ருத்தி பெற்றிருக்கிறார்களென்றும் புராணங்களில் படித்திருக்கிறான். 'அப்படிப்பட்ட தெய்வங்களுக்கே விக்னம் வந்ததென்றால் நாம் எம்மாத்திரம்?'என்று இவன் கவலைப்படுவது நியாயந்தானே?ஒன்று, தான் உபாஸனைக்கு வேண்டிய திரவியங்கள் ஸம்பாதிப்பதிலோ, அல்லது மனஸை அதில் நிறுத்தி உபாஸிப்பதிலோ இடையூறு ஏற்படலாம். வீட்டிலே, ஊரிலே ஏதாவது நடந்து விக்னம் விளைவிக்கலாம். இது தனக்கு ஏற்படும் விக்னம். இப்படியில்லாமல், தன்னுடைய உபாஸனைக்கு உரிய தெய்வத்துக்கே ஏதாவது விக்னம் ஏற்பட்டு அது தனக்கு அநுக்ரஹம் செய்யமுடியாதபடியும் ஆகலாம். புராணங்களில் இப்படித் தானே (தெய்வங்களுக்கே விக்னம் உண்டாவதைப்) பார்க்கிறோம்?ஆனபடியால், எந்த விதமான விக்னமாக இருந்தாலும் ஸரி, அது விலகுவதற்காக அந்தத் தெய்வங்களும் பூஜித்தவரை நாமும் முதலில் பூஜித்துவிடுவோம் என்று முடிவு பண்ணுகிறான்.

ஸாதாரண மநுஷ்யனாக இருந்தால் இப்படி முடிவு பண்ணிப் பிள்ளையாருக்கு ஆரம்ப பூஜை பண்ணிவிட்டு அப்புறம் தான் எந்த தெய்வத்தை உபாஸிக்க வேண்டுமென்று உத்தேசித்திருந்தானோ அதைப் பூஜிப்பான்.

நம்முடைய ச்லோகத்தில் வரும் உபாஸகர் அப்படிப்பட்ட ஸாதாரண மநுஷ்யன் இல்லை. அவரை 'தத்ஹேதோரிதி நீதிவித்'என்று சொல்லியிருக்கிறது. அதாவது, அவர் தத்ஹேது என்கப்பட்ட ந்யாயத்தை அறிந்தவர். அந்த ந்யாயம் அறிந்தவரென்றால் தர்க்க சாஸ்த்ரம் தெரிந்த புத்திமான் என்றே அர்த்தம். எனவே அவர் நன்றாக யோசனை பண்ணி முடிவெடுப்பார். பிள்ளையார் விஷயத்தில் அவர் அப்படி நினைத்து என்ன முடிவு பண்ணுவாரென்றால்...

'ஸகல தேவதைகளும் பிள்ளையாரைப் பூஜிக்கின்றன;அப்போதுதான் அவற்றால் நிர்விக்னமாக ஒரு

கார்யத்தை முடிக்க முடியும்;பூஜிக்காத தேவதை எதுவாயிருந்தாலும் அதன் கார்யம் நடக்கமுடியாதபடி இவரால் விக்னம் செய்ய முடியும்-என்றால் இவர் அவை எல்லாவற்றையும் விடச் சக்தி வாய்ந்தவராக இருக்கவேண்டும். அதனால்தான் இவர் தயவை அவை யாவும் நாடியே ஆக வேண்டியிருக்கிறது. அவற்றின் தயவை இவர் நாடியதாக எங்கேயும் சொல்லியிருக்கவில்லை. அதனால் இவர் ஸர்வ சக்தரென்று தெரிகிறது. ஆனபடியால் அவர்கள் அளிக்கக்கூடிய பலன்களையும் ஸர்வ சக்தரான இவரே அளிப்பதற்கு வல்லவராக இருக்க வேண்டும். கணேச மூர்த்தங்களில் அநேகம் சொல்லி, அது ஒவ்வொன்றுக்கும் வைத்திருக்கிற பெயர்களைப் பார்த்தாலே இது வாஸ்தவந் தானென்று தெரிகிறது. லக்ஷ்மி கணபதி, வித்யா கணபதி, விஜய கணபதி என்றெல்லாம் பெயரிருப்பதைப் பார்க்கும்போது லமி மாதிரி இவரே ஸம்பத்து அநுக்ரஹிப்பார், ஸரஸ்வதி மாதிரி கல்வியை அநுக்ரஹிப்பார், அம்பாள்-துர்கை-மாதிரி வெற்றியை அநுக்ரஹிப்பார் என்றெல்லாம் தெரிகிறது. எந்த விதமான பலனையும் அவர் அநுக்ரஹிப்பாரென்று காட்டுவதாக, 'ஸர்வஸித்திப்ரத கணபதி'என்றே ஒரு பெயரிலும் அவருக்கு மூர்த்தியிருக்கிறது!'ஸித்தி விநாயகர்', 'வர ஸித்தி விநாயகர்'என்ற பெயரில் அவருக்குப் பல கோவில்கள் ஏற்பட்டிருப்பதற்கும் இதுதான் காரணம். மற்ற ஸ்வாமிகளுக்கு 'ஸித்தி'என்று இப்படிப் பெயரோடு சேர்ப்பதாகக் காணோம்!

'இப்படி இவர் இருப்பதால் இவர் ஸகல தேவதைகளுக்கும் மூலமான ஏகப் பரம்பொருளே என்று தெளிவாகிறது,'-இவ்வாறு ' ஏகம் பரம் தேவம் 'என்று பிள்ளையாரைத் தர்க்க சாஸ்த்ர அறிவாளி தெரிந்துகொள்கிறார்.

அப்புறம் தத் - ஹேது ந்யாயத்தை இவருடைய வழிபாட்டில் 'அப்ளை'பண்ணிப் பார்க்கிறார்.

அவர் நினைக்கிறார் :'ஒவ்வொரு பலனைத் தரும் ஒவ்வொரு தேவதையும் அரிசி வியாபாரி, பருப்பு வியாபாரி, மிளகாய் வியாபாரி மாதிரி. ஆனால் அவர்களில் எவரும் பிள்ளையாரின் சிபார்சில்லாமல் சரக்குப் போடமுடியாது.

அதனால் முதலில் இவரைப் பிடித்து சிபார்சு வாங்கிவிட்டே அவர்களிடம் போய்ச் சரக்கு வாங்கவேண்டியதாகிறது. இவரோ எவர் சிபார்சும் இல்லாமல் தாமே அரிசி, பருப்பு, மிளகாய் முதலிய அத்தனையும் விற்கும் பலசரக்குக் கடைக்காரராக இருக்கிறார்!('ஸ்ர்வ ஸித்திப்ரதர்'என்பது இது தானே?) அப்படியானால், இவரொருவரைப் பிடித்தே நமக்கு எது வேண்டுமானாலும் வாங்கி விடலாமே!வேறு வ்யாபாரிகளிடம் (தேவதைகளிடம்) எதற்காகப் போக வேண்டும்?

'ஒரு உபாயத்தால் நேராக ஒரு பலனை அடையமுடியும் போது அந்த உபாயத்தை மட்டும் கொண்டே பலனைப் பெற்றுவிட வேண்டியதுதானே?அதை விட்டுவிட்டு, வேறே ஏதோ உபாயத்தை எடுத்துக் கொண்டு, அது பலன் தருவதற்காக முதலில் சொன்ன உபாயத்தைப் பிடித்து அப்புறம் இரண்டாவது உபாயத்தினால் பலனடைவது என்பது அசட்டுத்தனமாகச் சுற்றி வளைப்பதுதானே?

'இதர தேவதா உபாஸனை பலன் தரத் தக்கதாக வேண்டும் என்ற உத்தேசத்துக்கு ('தத்'துக்கு) ஹேதுவாக நாம் உபாஸிக்க வேண்டியிருக்கும் பிள்ளையார் தாமே அந்தப் பலனை (மூலமான 'தத்'தை)யும் தரமுடியும் என்னும் போது இவரை உபாஸிப்பது மாத்ரமே போதுமே!இதர தேவதோபாஸனை எதற்கு? தத்ஹேதோரேவ தத்ஹேதுத்வே மத்யே கிம் தேந ?

'எப்படியும் இவரைப் பூஜிக்காமலென்னவோ நாம் எந்த தெய்வ வழிபாடும் செய்ய முடியாது. முதலில் இவருக்கு 'சுக்லாம்பரதரம்'குட்டிக்கொண்டுதான் ஆக வேண்டும். இப்படியிருக்க, அப்புறம் மட்டும் இன்னொரு தேவதாராதனம் எதற்கு?விக்ன நிவாரண மூர்த்தியான இவர் வழிவிடாமல் மற்ற தேவதைகள் நமக்கு அநுக்ரஹிப்பதற்கில்லை என்கிறபோது, அதோடுகூட இவரே எந்த தேவதை செய்யக்கூடிய அருளையும் தாமே செய்வாரென்னும்போது, நாம் விரும்புகிற பலன் எதுவானாலும் சரி, அதைப் பெற இவரை மாத்ரம் வழிபட்டாலே போதும்.'

தத்ஹேது ந்யாயம் தெரிந்தவர் இப்படி நிச்சயித்து இவரே ஏகப் பரம்பொருள் என்று பூஜிப்பதோடு முடித்து விடுகிறார் : தத்ஹேதோரிதி நீதிவித்து பஜதே தேவம் யம் ஏகம் பரம் . ஆரம்ப பூஜை மட்டும் இவருக்கு, அப்புறம்

இன்னொருத்தருக்கு விஸ்தாரமான பூஜை என்றில்லாமல், "இவருக்கே முழுப் பூஜையும்"என்று முடித்துவிடுகிறார்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### எல்லாப் பலன்களும் அளிக்காதவராயினும்...

கொஞ்சம் வேறே தினுஸாகவும் சொல்லலாம். அதாவது, வெவ்வேறு பலன்களைத் தருவதற்கு வெவ்வேறு தெய்வங்கள் இருப்பது வாஸ்தவந்தான். விக்நேச்வரர் ஸர்வ சக்தரானாலுங்கூட எல்லாப் பலன்களையும் தாமே அளிப்பது என்று வைத்துக்கொள்ளாமல் விக்னத்தைப் போக்குவது என்ற ஒரு பலனை மட்டுமே தாம் அளிப்பவராக இருந்து கொண்டு, மற்ற தெய்வங்கள் அததற்கென்று விதித்திருக்கிற பலன்களைக் கொடுக்கும்படியாக விட்டுவிடுகிறாரென்றும் வைத்துக்கொள்ளலாம்.

ஏனென்றால், இவருக்குச் சொன்னது மற்ற தெய்வங்களில் சிலருக்கும் பொருந்துவதுதான். அதாவது, அந்த தெய்வம் ஒவ்வொன்றைக் குறித்த புராணத்திலும், ஆகம தந்த்ரங்களிலும் அந்த தெய்வத்தையே ஸர்வ சக்தி வாய்ந்த ஏகம், பரம் என்று சொல்லியிருக்கிறது. இது ஸத்யந்தான். இருக்கிற ஒரே பரமாத்மாதான் இப்படிப் பல தெய்வங்கள ாகியிருக்கிறது. அதுவேதான் நாமெல்லாராகவுங்கூட ஆகியிருக்கிறது. ஆனால் நமக்கு ஸர்வசக்தி வாய்ந்த அது தான் நாம் என்ற ஞானம் கொஞ்சங்கூட இல்லாதபடி நம்மை அதுவே மாயையால் மயக்கியிருக்கிறது. ஆனால் அது தெய்வங்களாகி இருக்கிறபோதோ அவற்றில் ப்ராதன தெய்வங்களுக்குத் தாங்கள் பரமாத்ம வஸ்துவே என்ற ஞானம் நன்றாக இருக்கும்.

எல்லா தெய்வங்களையும் இப்படிச் சொல்ல முடியாது. அவற்றில் பூர்ண பரமாத்ம சக்தியோடு இருப்பவை, அப்படி இல்லாமல் ஓரளவு சக்திமட்டும் உள்ளவை என்று இரண்டு பிரிவு உண்டு என்று அபிப்ராயமிருக்கிறது. அந்த

வித்யாஸங்கள் இங்கேவேண்டாம். ஏனென்றால், பரிபூர்ண பிரம்ம சக்தி வாய்ந்த 'ரத்ன த்ரயம்'எனற அப்பைய தீக்ஷிதர் காரணம் காட்டி நிலைநாட்டியுள்ள சிவன், அம்பாள், மஹாவிஷ்ணு ஆகியவர்களுக்காக நாம் பூஜை பண்ணினாலுங்கூட ஆரம்பத்தில் விக்நேச்வர பூஜை பண்ணத்தானே செய்கிறோம்?

ஆக, பொதுவழக்கு என்னவென்றால் எந்த ஒரு தெய்வத்துக்கும் தான் பரமாத்ம வஸ்துவே என்று தெரிந்தாலும் கூட அது ஸர்வ சக்தியையும் காட்டாமல், அதாவது ஸகலவிதமான பலன்களையும் தானே வழங்காமல், தனக்கென்று குறிப்பாக விதிக்கப்பட்டுள்ள பலனைமாத்திரந்தான் தரும். ஏகமான பரமாத்மா இந்த மாதிரி பல தெய்வரூபங்களைக் கொண்டதே ஒவ்வொன்றும் ஒரு பலன் தரவேண்டும் என்பதற்குத்தானே?இந்த நம்முடைய ஸநாதன தர்மத்திலே ஜனங்கள் இப்படி ஒரு Pantheon (தெய்வங்களின் கூட்டம்) வைத்துக் கொண்டு விதவிதமான அலங்காரம், ஆராதனா பத்ததிகள், நைவேத்யங்கள் என்று பண்ண வேண்டுமென்று பரமேச்வரனுடைய 'ப்ளானி'ல் தானே ஏற்பட்டிருக்கிறது?லோக வியாபாரத்தில் தினுஸு தினுஸாகக் கூத்தடிக்கணுமென்று ஈச்வரனுக்கு இருக்கிற ஆசையிலேதான் இப்படிப் பல தேவதா ரூபங்களை எடுத்துக் கொண்டு, ஒவ்வொரு பலனுக்கு ஒவ்வொரு தெய்வமென்று அவன் நம் ரிஷிகளுக்குக் காட்டி, அவர்கள் மூலம் ஒவ்வொன்றுக்கும், மந்த்ரம், தந்த்ரம் என்று பிரித்து ஆராதனாக்ரமங்களைக் கொடுத்திருப்பது.

இப்படிக் கொடுத்திருப்பதில் விக்ன நிவாரணத்துக்கென்று விகநேச்வரரை வைத்திருக்கிறான். அதாவது அவனேதான் அப்படியும் ஒரு ரூபம் எடுத்துக்கொண்டிருக்கிறான். ஆகையினாலே அவர் அவருக்குக் கொடுத்திருக்கிற அந்த போர்ட்ஃபோலியோ (இலாகா)ப்படி மாத்திரந்தான் அதிகாரம் வஹிப்பார்;வித்யை, ஸம்பத், விஜயம் முதலானவற்றை அவர் நேரே தாமாகவே தரமாட்டார்;அததற்கான தெய்வம் அந்தந்த பலனைக் கொடுத்துவிட்டுப் போகட்டும் என்றே விட்டுவிடுவார்-என்றும் வைத்துக் கொள்ளலாம். இப்போது தத்ஹேது ந்யாயம் 'அப்ளை'ஆகுமா?

ராஜாங்கத்தில் ஒரு 'மினிஸ்ட்ரி'அமைக்கிறபோது ஒருத்தர்

ஃபைனான்ஸ், ஒருத்தர் மராமத்து, ஒருத்தர் போலீஸ் என்றெல்லாம் பொறுப்புக் கொடுக்கிறார்கள். எவருக்கும் எந்த இலாகாவும் வஹிக்கிற யோக்யதை இருக்கலாம். அல்லது ஜனநாயக ஸெட்-அப்பிலே எதிலுமே இல்லாவிட்டாலும், எதுவானாலும் தெரிந்த மாதிரி எடுத்துக்கொண்டு ஒரு மாதிரி ஒப்பேற்றிவிடலாம்!எப்படியானாலும் அவருக்கு என்று ஒரு இலாகா இருக்கும்போது இன்னொன்றில் ஒரு மந்திரி பிரவேசித்து உத்தரவு போட முடியாது. ஒருத்தரே இன்றைக்கு ஒரு இலாகா மந்தியாயிருந்து விட்டு நாளைக்கு வேறு இலாகாவுக்கு மாற்றப்படுகிறார், அல்லது இன்றுவரை இரண்டு இலாகாக்களுக்கு மந்திரியாயிருந்துவிட்டு நாளைக்கு ஒன்று அவரிடமிருந்து எடுபட்டுப் போகிறது என்றால், நாளையிலிருந்து எந்த இலாகாவில் மாத்திரந்தான் தனக்குப் அதிலேதானே அவர் அதிகாரம் வஹிக்க முடியும்?'நேற்றைக்கு நான் அந்த போர்ட்ஃபோலியோ பார்த்தேனே, அதிலே இன்றைக்குச் சட்டம் போடுவேன்'என்று அவர் பண்ண முடியாதோல்லியோ?

லோக நிர்வாஹம் நடத்துகிற தெய்வ ராஜாங்கத்திலும் இப்படியே தேவதைகள் அவாளவாளுக்கு பொறுப்புத் தந்துள்ள பலன்களைக் கொடுத்து அநுக்ரஹிப்பதுதான் பொது வழக்கு.

'பொது வழக்கு'என்று எப்போது சொல்கிறேனோ அப்போதே இதற்கு 'அபூர்வ விலக்கு'ம் உண்டு என்பது தொக்கி நிற்கும்.

ஒரு தெய்வம்- அது விக்நேச்வரராகவும் இருக்கலாம். வேறு எந்த தெய்வமாகவும் இருக்கலாம்-ஏதோ ஒரு தெய்வம், தனக்குள்ளேயும் ஸர்வசக்தரான பரமாத்மாவே இருக்கிறாரென்ற உசந்த ஸ்வாநுபூதியிலிருந்து கொண்டு அநுக்ரஹிக்கிறபோது, குறிப்பாக ஒருவித பலனைத்தான் என்றில்லாமல், பரமாத்மா போலவே ஸகலவிதமான பலன்களையும் கொடுத்துவிடுவதுண்டு. 'நீதான் என் ஒரே தெய்வம். உன்னையன்றி ஒருவரிடமும் போகமாட்டேன்'என்று ஒரு பக்தர் ஒரு தெய்வத்தையே இஷ்டமூர்த்தியாகக் கொண்டு சரணாகதி பண்ணிவிடும்போது, அந்த தெய்வமும் பரமாத்ம பாவத்தில் உள்ளூரத் தன் வரைக்கும் இருப்பதோடு மட்டுமில்லாமல், கார்யத்திலும் பரமாத்மாவாகவே ஸகல பலன்களையும்

அநுக்ரஹிக்கும், அது பரமாத்ம ஸ்வாநுபூதி பெறாத குட்டி தேவதையாக, அல்லது மாநுஷமான ஸாதாரண மாதா, பிதா, குரு, பதி-இப்படி ஒருவராக இருந்தால்கூட, இவர்களிடம் ஒருத்தர் ஹ்ருதயத்தை அர்ப்பணம் செய்து சரணாகதி பண்ணி விட்டால், ஸாக்ஷாத் பரமாத்மாவே அந்த சரணாகதனின் பக்தியை மெச்சி அந்தக் குட்டி தேவதை அல்லது மநுஷ்யர் மூலம் ஸகல பலன்களையும் அநுக்ரஹித்துவிடுவார். ஆனால் இப்படிப்பட்ட சரணாகதி, இஷ்டதெய்வம் என்று ஒன்றிடமே பற்று என்பதெல்லாம் அபூர்வமாகவே இருக்கப்பட்டவை.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**தேவரும் தொழும் தெய்வம்**

**பல தெய்வங்கள் ஏன் ?**

ஜன ஸமூஹத்துக்குப் பொதுவாக அநுபவங்களை நானா விதமான ருசி பேதங்களில் நுகர்வதுதான் இயற்கை குணம். ஆஹாரம் பல சுவைகளில் இருக்கணும். ஒன்றே இருந்தால் திகட்டிப் போகிறது. கதை, நாடகம் என்றாலும் பல ரஸங்கள் இருக்கணும். பாட்டு என்றால் பல ராகங்களில், தாளங்களில் இருக்கணும்;விறுவிறுப்பாகவும் வேணும், விளம்பாகவும் வேணும். உபாஸனை என்று வரும்போதும் இப்படி நானா தினுஸாக உள்ள வைசித்ரியம் (விசித்ரத் தன்மை) வேண்டும். முடிவிலே ஸமாதி யோகம், வேறே கலப்பேயில்லாமல் ஒரே ஒரு உணர்வாக, 'ஏகப் பேருணர்வாக'என்பார்கள், அப்படி மனஸின் ஆட்டமே இல்லாமல் ஆகவேண்டுமென்றாலும், அது எங்கேயோ எப்போதோ எவருக்கோதான் லபிக்கிற ஸ்திதி. அந்த ஸ்திதிக்குப் போவதற்கே, அலை பாய்கிற இந்த மனஸை வைத்துக் கொண்டுதான் உபாஸனையை ஆரம்பிக்கும்போது அலை அலையாகப் பாய்ந்தாலும், பாய்கிறதெல்லாம் நம்மை ஸம்ஸாரத்தில் முழுக்கடிக்கிற அலைகளாக இல்லாமல், ஏதோ ஒரு தினுஸில் ஈச்வர ஸ்மரணத்தில் நனைப்பதாக இருக்கட்டும் என்றுதான் வைசித்ரிய ருசி கொண்ட மனஸுக்குப் பிடித்த மாதிரியே ஏக

பரமேச்வரன் பல திவ்ய ரூபங்கள் எடுத்துக்கொண்டு பல விதமான பலன் தருவது;பூஜா பத்ததியையும் பல விதமாகக் கொடுத்து, ஒன்றுக்கு (ஒரு தெய்வத்துக்கு) வில்வம், ஒன்றுக்குத் துளஸி, ஒன்றுக்கு வெல்லச் சீடை, ஒன்றுக்குக் கொழுக்கட்டை என்று வைத்திருப்பது எல்லாம். இதுதான் பெரும்பாலான ஜனங்களுக்கு அதாவது 'வழக்கு'என்பது.

ஈச்வரனின் விளையாட்டில் இதற்கு 'விலக்கு'ம் கொஞ்சம் கொஞ்சம் உண்டு. சிலபேருக்கு இஷ்ட தெய்வம் என்று ஒன்று, அதனிடமே அத்யந்தமான பக்தி என்று ஏற்படுகிறது. விதவிதமாக தெய்வ பேதங்களைப் பூஜிக்க வேண்டுமென்று தோன்றாமல் இவர்களுக்கு இஷ்ட தெய்வத்திடமே முழு பக்தியுமாக இருக்கிறது. இன்னொன்றைப் பூஜிப்பதில்லை என்ற அநன்ய பக்தியோடு, ஏகாந்த பக்தியோடு ஒன்றை மட்டுமே பிடித்துக்கொண்டு ஆராதிக்கிறார்கள். இவர்கள் ஏகமான பரமாத்ம சைதன்யத்தின் பரிபூர்ண விலாஸமாகவும் தங்கள் இஷ்ட தெய்வமே இருக்கிறது, அதுவே முழுமுதற் கடவுள் என்று கொண்டு எல்லாவிதமான பலன்களையும் அதனிடமே கோருகிறார்கள். அதை ஏதோ ஒரு குறிப்பிட்ட பலன் தருவதாக மட்டும் நிறுத்திவிடுவதில்லை இப்படி முருக பக்தர்கள், தேவி பக்தர்கள், விஷ்ணு பக்தர்கள், அந்த விஷ்ணுவிலும் ஏதோ ஒரு அவதாரமான ராமனை மட்டும் தான் பக்தி பண்ணுபவர்கள், க்ருஷ்ணனை மட்டும்தான் பக்தி பண்ணுகிறவர்கள் என்று ஒரே மூர்த்தியை பிடித்துக் கொண்டிருப்பவர்களும் இருக்கிறார்கள். பூர்ண ப்ரஹ்ம சக்தியான பரமாத்மாவும் அந்த ஒரு மூர்த்தியின் மூலமே இந்த பக்தர்களுக்கு ஸகல விதமான பலன்களையும் அநுக்கரஹிக்கிறது.

ஆனால் இப்படி சிவோபாஸனைதான், அம்பாள் உபாஸனைதான், ராமனோ க்ருஷ்ணனோ எவரோ ஒருத்தருக்குத்தான் மனஸைப் பூர்ணமாகக் கொடுத்து பக்தி பண்ணுவது என்று இருக்கிறவர்கள்கூடப் பிள்ளையாரை மட்டும் தள்ளிவிட முடிவதில்லை. 'சுக்லாம்பரதர ம்'குட்டிக்கொள்ளாமல் அவர்களும் இஷ்ட தெய்வ உபாஸனை பண்ண முடிவதில்லை. இஷ்ட தெய்வத்தைத் தவிர ஏனைய தெய்வங்களில் எதுவும் வேண்டாமென்று மற்ற தெய்வங்களை விட்டு விட்டாலும் பிள்ளையாரை மாத்திரம் அப்படி விடமுடிவதில்லை.

இப்படிப்பட்ட அநன்ய பக்திக்காரர்கள் குறைச்சல் தான். பொதுவாக பலவேறு தெய்வங்களையும் அது அது தருகிற பலன்களுக்காக வழிபடுவதாகத்தான் காணப்படுகிறது. ஒரு கோவிலுக்குப் போனால் எத்தனை ஸந்நிதி?ஒவ்வொரு ஸந்நிதிக்கும்தான் போய் தர்சனம் பண்ணி வணங்குகிறோம். சிவன் கோவிலில் உள்ள ஸந்நிதிகள் பெருமாள் கோவிலில் இருக்காது;அதே மாதிரி அங்கேயிருக்கிற ஸந்நதிகள் இங்கே இருக்காது. நாம் என்ன பண்ணுகிறோமென்றால் ஈச்வரன் கோவிலுக்குப்போய் தரிசனம் பண்ணினபிறகு பெருமாள் கோவிலுக்கும் போகிறோம். காஞ்சீபுரம் மாதிரிப் பல தெய்வங்களில் ஒவ்வொன்றையும் மூல மூர்த்தியாக வைத்துப் பல ஆலயங்கள் உள்ள ஊர்களில் நாம் காமாக்ஷி, ஏகாம்ரேச்வரர், வரதராஜா ஆகிய ஒவ்வொருவருடைய கோவில்களுக்கும், இன்னும் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்கான குமரக் கோட்டம்,-சித்ரகுப்தனுக்குக் கோவிலிருக்கிறதா?ஸரி, அதற்கும் போய்-இப்படி எல்லா தெய்வங்களையும்தான் தர்சிக்கிறோம் எந்தக் கோவிலுக்குப் போனாலும் அங்கே இந்த விகநேச்வரர் மட்டும் இல்லாமலிருக்கமாட்டார் பெருமாள் கோவிலானாலும் விஷ்வக்ஸேனர் என்ற பெயரில் நாமத்தைப் போட்டுக்கொண்டு வந்து நிற்பார்!நம்முடைய நமஸ்காரத்தை வாங்கிக்கொண்டு விடுவார்!

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### எல்லாப் பயனும் அளிக்காதவராயினும்தான்

சொல்ல வந்தது, விக்நேச்வரரை ஸகல பலதாதாவாக 'ஏகம் பரம் தேவம்'என்று கொள்ளாமல், தனித்தனிப் பலன்களைக் கொடுக்க ஏற்பட்ட பல தெய்வங்களில் ஒருத்தர் தான் இவரும் என்று வைத்து, அவரை அவருக்கென்று குறிப்பாக ஏற்பட்ட விக்ன நிவாரணத்தோடேயே நிறுத்தி விட்டால் 'தத்ஹேது ந்யாயம்'என்னவாகும் என்ற விசாரணைதான். இப்போதுங்கூட ஒரு விதத்தில் அந்த ந்யாயம் அவருக்கு

'அப்ளை'ஆகத்தான் செய்யும். இது விக்நேச்வரர் ஒருவருக்கே உரிய விசேஷமான பெருமை. அதாவது எல்லாப் பலன்களையும் இவரே நேராக அளிக்காத போதுகூட இவரைக் காரணமாகக் கொண்டே எந்தப் பலனையும் அடைந்துவிடலாம். இன்னொரு ஸ்வாமியைப் பூஜிக்கவேண்டுமென்பதில்லை.

அதெப்படி?

இவர் தருகிற பலன் என்ன?விக்ன நிவாரணம். இடையூற்றின் நீக்கம். இவருடைய அருள் இல்லாவிட்டால் நாம் எந்த தெய்வத்துக்குச் செய்கிற பூஜையும் இடையூறு இல்லாமல் நடக்க முடியாது. இதைவிட முக்யமாகச் சொல்ல வேண்டியது, இவருடைய அருள் இல்லாவிட்டால் எந்த தெய்வமும் அது விரும்புகிறபடி நமக்குப் தரவும் முடியாது. அந்தத் தெய்வங்களின் அநுக்ரஹ கார்யத்துக்கே இடையூறு ஏற்படலாம். அதைப் போக்க விகநேச்வரரா தான் முடியும்.

லோகத்துக்கெல்லாம் அநுக்ரஹம் பண்ணவேண்டுமென்று ஈச்வரன் த்ரிபுர ஸம்ஹாரம் செய்யப் புறப்படுகிறார். ஆனால் அவர் காரியத்துக்கே விக்னம் உண்டாகிறது. ரதத்தின் அச்சு முறிகிறது. அப்புறம் அவர் பிள்ளையானாலும் விக்நேச்வரரைத் தாம் வழிபடாவிட்டால், தாம் உத்தேசித்த லோக அநுக்ரஹ கார்யம்கூட நடக்காது என்று புரிந்து கொண்டு இவரைப் பூஜிக்கிறார். இவர் ப்ரீதி அடைந்து இடையூறுகளை நீக்குகிறார். அப்புறந்தான் தகப்பனார்க்காரரால் த்ரிபுர ஸம்ஹாரம் செய்ய முடிகிறது. இப்படி ஒவ்வொரு தெய்வமும் இவரை வழிபட்டு விக்ன நிவாரணம் பெற்றே தங்களுடைய கார்யத்தைச் செய்ய முடிந்திருக்கிறது என்று கதைகள் இருக்கின்றன.

அதனால்தான் இவரொருத்தரை மாத்திரம் எந்த தெய்வத்தின் பூஜையிலும் முதலில் வணங்கியே ஆகவேண்டியிருக்கிறது. 'விக்ன நிவாரணம்'என்பதாக இவருக்குப் பிரத்யேகமாக ஏற்பட்டுள்ள போர்ட்ஃபோலியோவின் விசேஷச் சிறப்பு இது!மற்ற ஸ்வாமிகள் நமக்கு வேண்டிய பலனைத் தருவதற்கு இஷ்டப்பட்டாலும், அந்த இஷ்டம் நிர்விக்னமாகக் கார்ய ரூபத்தில் முடிவதற்கு அவையும் இவரைத்தான் 'டிபென்ட்'பண்ணவேண்டியிருக்கிறது!

ஆரோக்யத்துக்காக ஸூர்யனைப் பூஜிக்கிறோம், படிப்புக்கு ஸரஸ்வதியை, பணத்துக்கு லக்ஷ்மியை, என்று இப்படி ஒவ்வொரு பலனுக்காக ஒரு மூர்த்தியைப் பூஜை பண்ணுகிறோமென்று வைத்துக்கொள்ளுங்கள், இந்த மூர்த்திகளில் ஒன்றுக்கு மற்றதன் தயவு வேண்டாம். ஸூர்யனுக்கு லக்ஷ்மி, ஸரஸ்வதிகளின் தயவு வேண்டியதில்லை. அவர்களுக்கும் அதே மாதிரிதான். அவரவர் தாங்கள் தரவேண்டிய பலனைத் தந்துவிட்டுப் போவார்கள்.

ஆனால் அப்படித் தரமுடியாமல் விக்னம் ஏற்பட்டு விட்டால்?ஸூர்ய பகவானுக்குத் தன் ஆரோக்ய அநுக்ரஹ கார்யத்தைச் செய்ய ஸரஸ்வதி தரும் படிப்போ, லக்ஷ்மி தரும் பணமோ வேண்டியதில்லைதான். ஆனால் அந்தக் கார்யத்துக்கே இடையூறு ஏற்பட்டால் பரவாயில்லை என்று அவர் இருக்க முடியுமா?

எந்த தெய்வமானாலும் தாங்கள் கொடுக்க விரும்பும் பலனுக்கு விக்னம் வந்தால் வந்துவிட்டுப் போகட்டுமென்று இருக்க முடியாதல்லவா?அதனால்தான் விக்ன நிவாரண போர்ட்ஃபோலியோக்காரரான கணபதியின் தயவு மாத்திரம் எல்லா தெய்வங்களுக்கும் வேண்டியிருக்கிறது!இவர் தயவில்லாமல் அவர்கள் தங்கள் அநுக்ரஹ கார்யத்தைப் பண்ணமுடியாது!

லௌகிக பலனாக இல்லாமல் ஞானம் வேண்டும், நிஜமான பக்தி வேண்டும் என்றெல்லாம் ஈச்வரனை, அம்பாளை, விஷ்ணுவைப் பூஜை பண்ணும்போதுகூட அதற்கு நம் பக்ஷத்திலோ, நமக்கு அநுக்ரஹக்கவேண்டிய உபாஸ்ய மூர்த்தியின் பக்ஷத்திலோ விக்னம் ஏற்படமலிருப்பதற்கு கணபதியின் தயவு வேண்டித்தானிருக்கிறது.

ஆனபடியால் அவரை ஸகல பல தாதாவாக வைக்காமல், நாம் பலனுக்காக வேறொரு மூர்த்தியைப் பூஜித்தாலுங்கூட முதலில் இவர் தயவை நாடி ஆரம்ப பூஜை இவருக்குச் செய்து தானாகவேண்டியிருக்கிறது.

இங்கே தான் தத்-ஹேது நியாயமறிந்தவன் ஆலோசனை பண்ணிப் பார்க்கிறான் : 'சரி, விக்நேச்வரர் தாமே எல்லா விதப் பலன்களையும் தராமல் விக்ன நிவிருத்தி செய்பவராக

மட்டுமே இருந்தாலும் இருந்துவிட்டுப் போகட்டும். இப்படி மட்டும் இவர் இருக்கும்போதுகூட எந்த தெய்வமானாலும் இவரைப் பூஜித்து இவருடைய தயவைப் பெற்றுத்தான் நம்முடைய கார்யத்தை நடத்திக் கொடுக்க வேண்டியிருக்கிறது. விக்னம் ஏற்படாமலிருப்பதற்காக எந்த தெய்வமானாலும் இவரிடம் வந்து நிற்கவேண்டித்தான் இருக்கிறது. அதாவது அந்த தெய்வங்கள் நம் கார்யத்தை இடையூறு இல்லாமல் நடத்தித் தருவதற்குக் காரணமாக, அதாவது ஹேதுவாக, இருப்பவர் இவர்தான். இப்படி மற்ற தெய்வங்களுக்குமேல் இவருக்கு ஒரு 'பவர்'இருப்பதால் அந்த தெய்வங்களைத் தம் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடக்குமாறு செய்ய இவருக்கு சக்தி இருக்கும். அதனால், எந்தப் பலனைத் தருகிற எந்த தேவதையானாலும் அதனிடம் அவர் 'இன்ன பக்னுக்கு இன்ன அருளைப் பண்ணுங்கள்'என்று சிபார்சு பண்ணினால், அந்த தேவதை அந்த சிபார்சை உத்தரவு போலவே எடுத்துக்கொண்டு அதன்படிப் பண்ணிவிடும். அந்த தேவதையின் போர்ட்ஃபோலியோவை இவர் தாமே எடுத்துக்கொண்டு அது தரும் பலனைத் தரவேண்டுமென்றில்லை பரமேச்வரனின் ராஜாங்கத்தில் யாருக்கு எந்த இலாகாவோ அது அப்படியே இருக்கலாம். ஆனால் எந்த தெய்வமானாலும் அதனிடம் இவர் 'இன்னாருக்கு நீ அருள் பண்ணு'என்று சொல்லிவிட்டால் அது பண்ணிவிடும். இல்லாவிட்டால் ஏதாவது காரியத்தில் அந்த தெய்வம் ஈடுபடும்போது விக்னம் ஏற்பட்டுக் கஷ்டப்படும்படி ஆகிவிடும்.

'இதனால் என்ன ஏற்படுகிறதென்றால், நமக்கு எந்தத் தெய்வத்தின் மூலம் எந்தப் பலன் கிட்டவேண்டுமானாலும் ஸரி, விக்நேச்வரரொருத்தரைப் பூஜை பண்ணிவிட்டாலே போதும். அவர் தம்முடைய இன்ஃப்ளுயென்ஸைக் கொண்டு எந்ததெய்வமானாலும் அதனிடம் சொல்லி நமக்கு வேண்டிய அருளைப் பண்ணும்படி செய்துவிடுவார்.'

தத்ஹேது நியாயமறிந்தவன் இப்படி யோசித்து, 'விக்நேச்வரரின் இன்ஃப்ளுயென்ஸை ஹேதுவாகக் கொண்ட எந்த தெய்வத்திடமிருந்தும் அது கொடுக்கக்கூடிய பலனை அடையும்படியும் என்னும்போது இவருக்கு மாத்திரம் பூஜை பண்ணுவதோடு நிறுத்திக்கொண்டு விடலாமே!பலதாதா

என்பதாக இன்னொரு தெய்வத்துக்கு வேறு ஏன் பூஜை செய்யணும்?இவராலேயே நாம் மற்ற தெய்வங்களிடம் காரியம் ஸாதித்துக்கொள்ள முடியுமென்னும் போது இவருக்குப் பூஜை பண்ணுவதோடுகூட அவர்களுக்கும் எதற்குப் பண்ணணும்?அவர்களைப் பூஜை பண்ணி நமக்கு ஆகவேண்டியது என்ன?"தத்ஹேதோரேவ தத்ஹேதுத்வே"என்று நினைக்கிறான். ஆரம்ப பூஜை இவருக்கு, அப்புறம் முக்ய பூஜை இன்னொருத்தருக்கு என்று இல்லாமல் இவரையே முக்யமாய் வைத்து முழு பூஜையும் இவருக்கே பண்ணி விட்டுத் திருப்தியாகிவிடுகிறான் தனக்கு வேண்டிய எந்த விதமான பலனையும் விகநேச்வர - த்வாரா (விக்நேச்வரரின் வழியாகப்) பெற்றுவிடுகிறான்.

தத் ஹேதோரிதி நீதி வித்து பஜதே தேவம் யம் ஏகம் பரம்

"நீதிவித்து"என்பதற்கு 'தத்ஹேது நீதி அறிந்தவனோ என்றால்'என்று அர்த்தம். மற்ற ஸாதாரண ஜனங்கள் பிள்ளையாருக்கு ஆரம்பத்தில் ஒரு குட்டி பூஜை, அப்புறம் இன்னொரு தெய்வத்துக்குப் பெரிசான முக்ய பூஜை என்று செய்தாலும், தத்ஹேது ந்யாயம் தெரிந்தவனோவென்றால் இவரைக் காரணமாகக் கொண்ட இதர தேவதா ப்ரஸாதங்களையும் பெற்றுவிட முடியுமென்பதால் இவருக்கே முழு பூஜையும் செய்து முடித்துவிடுகிறான் என்ற இவ்வளவு அர்த்தம் " தத்ஹேதோரிதி நீதிவித்-து பஜதே "என்பதில் அடங்கியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### 'வெரைட்டி' வழிபாடே மனித இயற்கை

இப்படி நான் சொன்னதற்காக-நானாகச் சொல்லவில்லை, அந்த மன்னார்குடிப்பெரியவர் சொன்னதை எடுத்துக் சொன்னதற்காக, - நீங்கள் பிள்ளையாரைத் தவிர எல்லா தெய்வங்களையும் மூட்டை கட்டிவைத்துவிட்டு அவரொருத்தரைத்தான் வழிபடவேண்டுமென்று

அர்த்தமில்லை. சற்று முன்னே சொன்னாற்போல பகவானுக்கு திநுஸு திநுஸாக லீலை பண்ணியே இந்த த்வைத ப்ரபஞ்சக் கூத்தை நடத்த வேண்டுமென்று இருப்பதாலும், அவன் இந்தக் கூத்திலே பிசைந்து போட்டிருக்கிற மநுஷ்ய ஜீவனுக்கும் ஜெனரலாக எந்த ஒரு அநுபோகமானாலும் அதிலே திநுஸு திநுஸான வைசித்ரிய ருசி வேண்டியிருப்பதாலும்தான் இத்தனை தெய்வ ரூபங்களை அவன் தரித்துக் கொண்டிருப்பது. ஆகையால் அவாளவாளுடைய மனப்பான்மைப்படி ஒவ்வொருத்தரை ஒவ்வொரு ரூபம்தான் 'இஷ்ட தெய்வம்'என்னும்படியாக ஆகர்ஷிக்கும். அதே மாதிரி சாஸ்த்ராதிகளிலும் ஸம்ப்ரதாயப்படியும் ஸம்பத்துக்கு லக்ஷ்மி, வித்யைக்கு ஸரஸ்வதி, ஆரோக்யத்துக்கு ஸூர்யன், இன்னும் இந்த இந்த க்ரஹ பீடை போக ராஹு - கேது, இன்ன நாளில் இன்னாருக்கு உத்ஸவம் என்று எப்படியெப்படி பூஜிக்கச் சொல்லியிருக்கிறதோ அப்படி அந்தந்த தெய்வத்துக்கு வழிபாடு நடத்தினால்தான் பலன் என்றே பொதுவாக ஜனங்களுக்கு நம்பிக்கையும், பிடிப்பும் இருக்கும். சனிப் பெயர்ச்சி என்றால் லக்ஷம் ஜனங்கள் திருநள்ளாற்றில் கூடுகிறார்கள், மகரவிளக்கு என்று சபரிமலையில் பத்துலக்ஷம் ஜனங்கள் கூடுகிறார்கள் என்றால் இதுதான் காரணம். அத்வைத ஸாதனையில் நன்றாக முன்னேறிப்போகிற அபூர்வமான சிலரைத் தவிர இந்த த்வைத ப்ரபஞ்சத்திலேயே பக்தி, ஏதோ கொஞ்சம் ஞானம் என்று போகிற எல்லாருக்கும் ஒண்ணே ஒண்ணு என்று பிடித்துக்கொள்வது கஷ்டம்தான். 'வெரைட்டி'தான் லோக வாழ்க்கைக்கே ஸாரமாயிருப்பது!இஷ்டதேவதை என்று ஏதோ ஒன்றை ஓரளவு கெட்டியாகப் பிடித்துக் கொண்டாலுங்கூட அப்போதும் அதற்கே திநுஸு திநுஸாக வேஷம் போட்டு அலங்காரம் பண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது!இன்றைக்கு உத்ஸவத்தில் கைலாஸ வாஹனம் என்று ராஜாதி ராஜனாக அலங்காரம் பண்ணிப் பார்க்கிறவனையே நாளைக்கு பிக்ஷாண்டி என்று எல்லாவற்றையும் வழித்துவிட்டு நிறுத்திப் பார்த்து ஸந்தோஷிக்கத் தோன்றுகிறது!

மனஸ் கவடு விட்டுக்கொண்டு நானாவித ருசி பேதங்களில் போனாலும், அதன் இயற்கையிலேயே அதை விட்டுப் பிடித்துக் கொஞ்சம் கொஞ்சமாக வழிக்குக் கொண்டுவந்து

ஒன்றிலேயே நிற்பதற்குப் பக்குவப் படுத்தத்தான் மதம் ஏற்பட்டிருக்கிறதேயொழிய, எடுத்த எடுப்பிலேயே மனஸை ஒன்றிலேயே அமுக்கிப் போடுவதற்கில்லை. இப்படி வற்புறுத்திப் பண்ணினால் மனஸின் இயற்கைப்படி அது ஈடு கொடுக்க முடியாமல் திணறி, திமிறிக் கஷ்டப்பட்டுக் கொண்டு முடிவிலே ஜடம் மாதிரியோ, இல்லாவிட்டால் எதிர்த்திசையில் வெறித்தனமாகவோதான் போகும். அதனால், நமது மதம் செய்கிற முதல் காரியம் நானாவிதமான லௌகிக ருசிகளிலேயே ஸந்தோஷிக்கிற மனஸை நானாவிதமான தெய்விக ருசிகளைக் காட்டி ஸந்தோஷப்படுத்தி, அந்த மனஸின் அழுக்கை எடுத்துத் தெளிவு பண்ணுவது தான். இப்படி நன்றாக அழுக்குப் போய் தெளிந்த தெளிவாக ஆகிப் பக்குவப்பட்ட அப்புறம், முடிவில்தான், நானா தினுஸு என்கிற த்வைத அநுபவங்களை விட்டு ஒன்றேயான அத்வைதம் என்று கொண்டு போவது.

அதனால் பிள்ளையார், ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி, அம்பாள், சிவன், விஷ்ணு, ராமன், க்ருஷ்ணன், நவக்ரஹம், ஐயனார் என்று எல்லாவற்றையும் வைத்துக்கொண்டே விதவிதமாக அலங்காரம் பண்ணி, உபசாரம் பண்ணி, நைவேத்தியம் பண்ணி, ஒவ்வொன்றுக்கும் அததற்கான நியமங்களை அநுஷ்டானம் பண்ணி ருசி பேதத்திலேயே நிறைவு காண்கிற மனஸுக்கு ஸந்தோஷம் கொடுத்துக் கொடுத்து, தத் - த்வாராவே (இதன் மூலமே) அதைக் கொஞ்சம் கொஞ்சமாக மேலே உசத்திக்கொண்டு போவோம். லௌகிகத்திலேயே அழுந்திக் கிடக்கிற மனஸை எப்படியோ ஒரு அப்படி தெய்வ விஷயமாகக் கொஞ்சம் தொட்டுகொண்டு அதிலே ஒரு ஸந்தோஷம் அடையும்படிப் பண்ண இது (பல தெய்வ வழிபாடு) ஒத்தாசை பண்ணுகிறதா இல்லையா?

குழந்தைகளுக்கு ஒரே வர்ணத்திலுள்ள ஒரு பொருளைக் காட்டிலும் கலர் கலராகக் காட்டினால் ஒரே உத்ஸாஹம், குஷி பிறந்து சிரித்துக் கூத்தாடும். அத்யாத்ம ரீதியில் நாமும் அந்தக் குழந்தை மாதிரிதான். அதனால் அத்தனை 'ஹிண்டு பாந்திய'னையும் வெட்கப்படாமல் வைத்துக் கொண்டு, ஒரே மூர்த்திதான் என்னும்போது ஏற்படக்கூடிய சலிப்பு இல்லாமல் (சிரித்துக்கொண்டு) 'போர்'அடிக்காமல், ஏதோ தெரிந்த மட்டும் வழிபாடு பண்ணி, ஏதோ நமக்குக் கிடைக்கிற மட்டும் கொஞ்சம் பக்தி ருசியை அநுபவிப்போம். ஏக ரஸம் எல்லாம்

அப்புறம்தான், இப்போது அவியல்தான்!

எடுத்துக் கொண்ட விஷயத்தின் உயர்வை விசேஷப்படுத்திக் காட்டுவதற்காகத்தான் தத்ஹேது ந்யாயப்படி விக்நேச்வர உபாஸனை ஒன்று மாத்திரமே போதும் என்று காட்டியிருக்கிறதே தவிர, இதனால் நடைமுறையில் அப்படியே எல்லாரும் பண்ணி விடவேண்டும், மற்ற ஸ்வாமியையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட வேண்டுமென்று அர்த்தமில்லை. இந்த ச்லோகத்தைப் பண்ணினவரே எல்லா ஸ்வாமியையும் ஸ்தோத்ரம் பண்ணினவர்தான். விக்நேச்வர பூஜையே போதுமென்றில்லாமல் விசேஷமாக சிவாராதனம் பண்ணினவர்தான்.

ந்யாய ரீதியாக புத்தி மட்டத்தில் ஒன்றை நிலைநாட்டி விட்டால் போதுமா?மனஸ், மனஸ் என்று ஒன்று, அதுதானே புத்திக்கு மேலே நம்மைப் பிடித்துக்கொண்டு ஆட்டி வைக்கிறது?பக்தி என்று வந்துவிட்டால் அங்கே புத்தியையே கொண்டுவரக் கூடாது என்று கூடச் சொல்கிறார்களே!

ஆனபடியால் புத்தி லெவலில் ந்யாயம் சொல்வது அப்படியே இருக்கட்டும், நம்முடைய ஸ்டேஜில் நமக்கு அது நிறைவு தரவில்லை என்றால், ஸகல தேவதாராதனம், இஷ்ட தெய்வ ஆராதனம் என்று எதில் ஸந்துஷ்டியோ அதன்படி செய்வோம். இப்படியும் அப்படியுமாகக் கலந்து கலந்து வேண்டுமானாலும் செய்வோம்.

அதே ஸமயத்தில், புத்திரீதியில் ஆராய்ந்து பார்த்தால் இப்படி ஸர்வ தேவதோபாஸனா பலன்களையும் விக்நேச்வரர் ஒருத்தரின் மூலமே, அவரொருவரை மட்டும் வழிபடுவதனாலேயே, அடையமுடியும் என்பதான ஒரு பெரிய சிறப்பு அவருக்கு நிச்சயமாக இருக்கிறது என்பதையும் புரிந்து கொள்வோம். நாம் பல பேரை வழிபடுகிறபோது, முதலில் அவரிடம் வந்து குட்டிக் கொள்ளும்போது, புத்தி ரீதியில் நாம் தெரிந்துகொண்ட இந்த ந்யாயமே நம்முடைய ஹ்ருதயத்திலும் பளிச்சென்று நினைவுக்கு வந்து அவரிடம் நாம் செய்கிற பக்திக்கு ஒரு ஜீவனை ஊட்டிவிடும்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### இக - பர பலன்கள்

ஸகல தேவதோபாஸனா பலன்களையும் கொடுக்க வல்லவராகப் பிள்ளையார் இருக்கிறார் என்பதால்தான் ச்லோகத்தின் கடைசி வரியில் " ஸர்வார்த்த ப்ரதிபாதநைக சதுரோ த்வைமாதுரோ (அ)வ்யாத் ஸ ந : "என்று சொல்லியிருக்கிறது. ஏக பர தெய்வமாக இருந்துகொண்டு அதனால் பிள்ளையாரை ஸர்வசக்தியுடன் டைரக்டராக எந்தப் பலனை வேண்டுமானாலும் தரலாம்;அல்லது மற்ற தேவர்களுக்கும் விக்ன நிவ்ருத்தி அருளுகிற சக்தி பெற்றவர் என்பதாலேயே அவர்கள் மீது தமக்குள்ள செல்வாக்கைக் கொண்டு நாம் விருபம்பும் பலனை அவர்கள் கொடுக்கும்படி அவர் சிபார்சு செய்யலாம். எப்படியானாலும் நமக்கு எல்லா விதமான பலன்களையும் அடைவிக்கப் பண்ணுவதில் அவர் வல்லவர் : ஸர்வார்த்த ப்ரதிபாதநைக சதுரர் . 'ஸர்வார்த்த ம்'என்றால் நாம் விரும்பும் எல்லாப் பொருள்களையும் பலன்களையும் என்று அர்த்தம். மநுஷ்ய வாழ்வின் லக்ஷ்யங்களாக நாலு சொல்வார்கள், 'சதுர்வித புருஷார்த்தம்'என்று தர்மார்த்த (தர்ம - அர்த்த) - காம - மோக்ஷம் அல்லது அறம் - பொருள் - இன்பம் - வீடு என்பது இதுதான். இந்த நாலு புருஷார்த்தங்களையும் தர வல்லவர் பிள்ளையார் என்றும் ("ஸர்வார்த்த ப்ரதிபாதநைக சதுர :"என்பதற்கு) அர்த்தம் செய்துகொள்ளலாம். காமம், மோக்ஷம் என்பது தான் முறையே இஹம், பரம், இவ்விரண்டையும் தருகிறார் என்றால் அதில் அடங்காதது எதுவுமே இல்லை!

இஹத்துக்கு ஆதாரமாக இருக்கப்பட்ட காமம் நம்மை இதிலேயே புதைந்து பரத்தின் பக்கமே போக முடியாமல் தடுத்துவிட்டால் நாம் பிறவி எடுத்து என்ன புண்ணியம்?அதனால்தான் அதை முதலில் நெறிப்படுத்தித் தருவதற்காக தர்மத்தை முதல் புருஷார்த்தமாக வைத்திருக்கிறது.

காமம், அதாவது, ஆசை என்பது மனஸிலே இருக்கிற

விஷயம். அதன் நிறைவேற்றுத்துக்குப் பல வஸ்துக்கள் வேண்டும். இந்த வஸ்துக்களைப் பெற நமக்கு வசதி இருந்தால்தான் ஆசைகள் பூர்த்தியாகும். இந்த வசதியைத் தருவதுதான் இரண்டாவது புருஷார்த்தமான 'அர்த்தம்'என்கிற பொருட்செல்வம். இந்த பொருட் செல்வத்தை நம்முடைய சொந்த ஆசைகளுக்காக இல்லாமல் பரநலமாகச் செலவிடவும் இடமிருக்கிறது. இப்படிப் பண்ணும்போது இரண்டாவது புருஷார்த்தமான அர்த்தமே முதல் புருஷார்த்தமான தர்மத்தை நமக்குக் கொடுக்கிறது!அனர்த்த ஹேதுக்களான அர்த்த-காமங்களுக்கு முன்னால் முதலிலே தர்மத்தின் பிடிப்பு இருந்து, அதோடு இவற்றைச் சேர்த்து அநுபவித்தால் நாளாவட்டத்தில் பக்குவம் ஏற்பட்டு நாலாம் புருஷார்த்தமான மோக்ஷத்தின் வழியில் கொண்டுவிடும்.

"ப்ரதிபாதன - ஏக - சதுர":'கொடுக்கவல்ல ஒரே ஒருவர்.'இஹ - பர நலன்கள், பலன்கள் எல்லாவற்றையும் கொடுப்பதில் சதுரர், திறமை மிக்கவர்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## இரண்டு தாயார்க்காரர் !

த்வைமாதுர :

இந்த ச்லோகத்தில் விக்நேச்வரருக்குச் சொல்லியிருக்கிற பேர் இது (த்வைமாதுரன் என்பது) தான். அவருடைய வேறே பெயர் எதுவும் (ச்லோகத்தில்) இல்லை. கணபதி, கணேசர், விக்நேச்வரர், விநாயகர், கஜாநநர், லம்போதரர் என்றிப்படிப் பல பேர்கள் நம் காதில் அதிகம் பட்டிருக்கிற மாதிரி படாத பேர்:த்வைமாதுரர். அப்படியென்றால் "இரண்டு தாயார்களை உடையவர்"என்று அர்த்தம். 'த்வி மாதா'- இரண்டு தாயார்கள். 'த்வை மாதுரர்':- இரண்டு தாயார்களை உடையவர். 'இரண்டு பெண்டாட்டிக்காரன்'என்று கேள்விபட்டிருக்கிறோம். இவரோ நாம் கேள்விப்படாத விதமாக இரண்டு தாயார்க்காரர்'!

யார் அந்த இரண்டு தாயார்கள்?ஒன்று, அம்பாள். இது எல்லாருக்கும் தெரிந்தது. இன்னொன்று கங்கை. ஈச்வரனின் தலையின் மேல் உட்கார்ந்து கொண்டிருக்கிற கங்கா தேவியையும் அவருக்குப் பத்னியாகவே சொல்வது வழக்கம்...

அம்பாளுடைய நேத்ரமே ச்ருங்காரம், பீபத்ஸம், கோபம், ஆச்சர்யம், பயம், ஹாஸ்யம் முதலான எல்லா நாடக ரஸங்களையும் ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தில் காட்டுவதாக ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஒரு ச்லோகத்தில் வர்ணித்திருக்கிறார். அங்கே அம்பாளுடைய நேத்ரம் எப்போது கோபக் குறிப்பைக் காட்டுகிறது என்று சொல்லும் போது 'கங்கையைப் பார்க்கும்போது'என்றே சொல்லியிருக்கிறது: ஸ ரோஷா கங்காயாம் . கங்கையை பார்த்தால் அம்பாளுக்கு சக்களத்திக் காய்ச்சல்!அதுதான் கோபம் கோபமாக வருகிறது!

ஆனால் அன்புருவமான பிள்ளையாரோ, 'கங்கை யார்?நம்முடைய பிதாவின் பத்னி. அதனால், அவளையும் அம்பாளைப் போலவே எனக்கு இன்னொரு அம்மாவாக வைத்துக் கொள்ளுவேன். த்வைமாதுரன் என்றே பேர் பெறுவேன்'என்று ஒற்றுமைக்கு உருவமாக இருந்துகாட்டுகிறார்!

எல்லாருக்கும் தெரிந்த கதை சிவ நேத்ரத்திலிருந்து பிறந்த அக்னிப் பொறிகள் ஆறும் கங்கையிலே தங்கித்தான் அப்புறம் ஸுப்ரஹ்மண்ய மூர்த்தியாயிற்று என்பது. பொறிகள் ஆறு;கங்கையும் ஆறு!கங்கையில் தங்கி உத்பவித்ததால் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி வெளிப்படையாகவே கங்கையின் புத்திரர். பிதாவின் பத்தினி என்ற அளவில் உபசாரமாகப் பிள்ளையார் அவளுக்கு மாத்ரு ஸ்தானம் கொடுத்தது போலில்லாமல் வ்யக்தமாக அவளுடைய ஸம்பந்தம் பெற்றே ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி தோன்றினார். அதனால்தான் (கங்கா புத்ரர் என்று பொருள்பட) அவருக்கு கங்கேயர் என்றே பெயர்.

பிள்ளையாருக்கு கங்கையுடன் நேர் ஸம்பந்தமில்லாத போனாலும் அவளுக்குக் குழந்தையாகத் தம்மைக் கருதிக் கொண்டதுதான் விசேஷம்!எல்லாரையும் அணைத்துப்

போகிற அவருடைய அன்புள்ளத்துக்கு அது அடையாளம். குமாரஸ்வாமி பரமேச்வரனின் நேத்ராக்னியிலிருந்து உண்டானாரென்றால், விக்நேத்வரர்தான் அம்பாள் தன் தேஹத்திலுள்ள சந்தனப் பூச்சு, வாஸனைப் பொடி, மஞ்சள், குங்குமம் இத்யாதிகளை அப்படியே தன் தலையோடு கால் வழிந்து எடுத்துத் தன்னுடைய திவ்ய ஹஸ்தத்தினாலேயே பிம்பமாகப் பிடித்து வைத்து உயிர் கொடுத்து உருவாக்கின மூர்த்தி. இப்படிப் பூர்ணமாக அம்பாள் ஸம்பந்தத்தில் உத்பவித்தும் அவர் கங்கையையும் அவளுக்கு ஸமமாக, இன்னொரு

தாயாராகப் பார்ப்பது அவருடைய குணச் சிறப்பைக் காட்டுகிறது. ஸ்திரீகள் அத்தனை பேரையும் தாயாராகவே பார்த்த சுத்த ப்ரஹ்மசர்ய மூர்த்தியான அவர், அவர்களில் முக்யமாக ஒன்று அம்பாள், இன்னொன்று அவளுக்கு எதிரியான கங்கை என்று வைத்துக் கொண்டிருக்கிறார்!இப்படி அவர் இருவருக்குப் பிள்ளையான த்வைமாதுரராக இருப்பவர்.

நதிகளில் உருண்டு புரண்டு விளையாடி நீச்சலடிப்பதில் யானைகளுக்கு அலாதிப் ப்ரியம். குதிரை, மாடு, சிங்கம், புலி முதலானவற்றுக்கு இப்படிச் சொல்ல முடியாது. மஹிஷமானால், குட்டையைக் குழப்பிக்கொண்டு சேற்றில் ஸந்தோஷப்படும்!யானைக்குத்தான் நீர் விளையாட்டில் ரொம்பவும் இஷ்டம். அந்த ஒரு மிருகத்துக்குத்தானே தும்பிக்கை இருக்கிறது?அதிலே ஜலத்தை எடுத்து பீய்ச்சாங்குழல் அடிக்கிற மாதிரி வாரி வீசிக்கொண்டு அமர்க்களப்படுத்தும். தன்னுடைய அத்தனாம் பெரிய தேஹத்தைக் கொண்டு அநாயாஸமா நீந்தி விளையாடும். காடுகளில் கூட்டங்கூட்டமாக நதிகளுக்குப் போய் அல்லோலகல்லோலப் படுத்துவது யானையின் வழக்கம். பாகவதத்தில் கஜேந்த்ர மோக்ஷக் கதையில் இப்படியொரு காட்சியை ரொம்பவும் இயற்கையாக வர்ணித்திருக்கும். யானைமுகராக இருப்பதால் தானோ என்னவோ விகநேச்வரருக்கு கங்கா நதியிடம் புத்ர வாத்ஸல்யம்!

ஸாதாரணமாக யாராவது ஈவிரக்கம், அன்பு, அருள் இல்லாமலிருந்தால், 'நீயும் ஒரு அம்மாவின் வயிற்றில் பிறந்தவனா?'என்று கேட்கிற வழக்கம். அம்மாவைச்

சொல்லிப் பிள்ளைக் குறிப்பிட்டால் பிள்ளை அன்புள்ளம், அருளுள்ளம் உள்ளவன் என்று அர்த்தம். நம்முடைய பிள்ளையார் இரண்டு அம்மாக்காரர் என்றால் அவர் இரட்டிப்பு மடங்கு அன்பும் அருளும் நிறைந்தவர் என்று அர்த்தம்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### ஆறு தாயார்க்காரர் !

இவர் 'த்வைமாதுரர்'என்றால் தம்பியான குமார ஸ்வாமிக்கோ 'ஷாண்மாதுரர்'என்று பெயர். அதாவது அவருக்கு ஆறு தாயார்கள். இந்த ஆறில் அம்பாள், கங்கா தேவி இருவருமே சேர்த்தி இல்லை!க்ருத்திகா நக்ஷத்ர தேவிகளான - 'கார்த்திகைப் பெண்டிர்'என்று சொல்கிற - ஆறு பேர்தான் ஸுப்ரஹ்மண்யருடைய ஷண்மாதாக்கள். அவர் உத்பவித்தவுடன் இவர்களே அவருக்கு ஸ்தன்ய பானம் பண்ணுவித்ததால் அவர்களைத் தாயார்களாகக் கொண்டார். க்ருத்திகா தேவதைகளின் புத்ரரானதால்தான் அவருக்குக் கார்த்திகேயர் என்று பெயர் வந்தது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

### பிற சொத்துக்களும், குரு தரும் சொத்தும்

அப்பா வைத்துவிட்டுப் போகிற வீடு நாளானால் இடிந்து போகும். அதனால் அவ்வப்போது அதற்கு ரிப்பேர் பண்ணணும், வெள்ளையடிக்கணும், பெயின்ட் அடிக்கணும். அப்பா வைத்துவிட்டுப் போகிற நிலத்திலேயும் வருஷா

வருஷம் முதல் போட்டு, விதை போட்டு உழைத்தே மாசூல் காணமுடியும். எத்தனை எருப் போட்டாலும் கொஞ்சம் கொஞ்சமாக பூஸாரம் போய்விடுகிற நிலங்களும் உண்டு. மழை பொய்யாமல் போவது, ஞிணீனீ திறக்காமலிருப்பது, பூச்சி, பொட்டு, ஒரேயடியாக மழை பெய்து அடித்துக் கொண்டு போகிறது, அழுகிப் போகிறது இப்படிப் பல கஷ்டங்கள். எல்லாவற்றிற்கும் மேலே 'ஸீலிங்' (உச்சவரம்பு) சட்டம்!ரூபாயக (சொத்து) வைத்துவிட்டுப் போனாலும் நாளுக்கு நாள் 'டிவால்யுவேஷன்'(நாணய மதிப்பு குறைந்து போவது)!பல தினுசு டாக்ஸ்!புதுசாக என்ன டாக்ஸ் வருமோ என்று ஓயாமால் பயம். திருட்டுப் போவது;எங்கே திருட்டுப் போய்விடுமோ என்று ஸதா பயம்.

இப்படியெல்லாம் எந்த விதமான ஸொத்தானாலும் அது சாச்வதமாயில்லாமல் க்ஷீணித்துப் போக இடமிருக்கிறது. இது ஒரு பக்கம் என்றால் இன்னொரு பக்கம் ஸொத்தைப் பெறுகிற வார்ஸின் மனசு கெட்டுப்போவது. ஸொத்தை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ளணும் என்பதற்காகப் பலவிதத்தில் தப்புகள் செய்வது;சட்டத்தை மீறிச் செய்வது;பிறத்தியாருக்கு நஷ்டம், கஷ்டம் உண்டாக்கியும் தங்களுக்கு லாபமாகப் பண்ணிக் கொள்ளப் பார்ப்பது;லஞ்சம் கொடுக்கிறது;பொய்க் கணக்கு காட்டி ஏமாற்றுகிறது;ஸீலிங்குக்காக 'பினாமி'என்று பிறத்தியார் உடைமை மாதிரி பொய்யாகப் பிரித்துக் காட்டுவது;இன்னும் பல தினுஸான தகிடுதத்தம் செய்வது-இப்படியெல்லாம் தப்பு வழியிலே போய், ஸொத்து (சிறு முடிச்சு போலக் கையைக் காட்டி) இவ்வளவு என்றால், அதை முன்னிட்டு மூட்டை கட்டுகிற பாவம் (பெரிய அளவாகக் கையை விரித்துக் காட்டி) இத்தனாம் பெரிசாகிறது!

பூர்வபுண்யத்திலேயோ, ஏதோ அத்ருஷ்டத்திலேயோ அப்பா ஸொத்து நன்றாகவே வளர்கிறது, தப்புப் பண்ணாமலே விருத்தியாகிறது என்றால்கூட, கடைசியில் ஒரு நாள் 'காதுறுந்த ஊசியும் வாராது காண் கடை வழிக்கே'என்று அத்தனைகளையும் விட்டுவிட்டுப் போக வேண்டியதாகவே ஆகிறது அரண்மனை மாதிரி வீடாகட்டும், ஆயிரம் வேலி முப்போகம் விளைகிற நிலமாகட்டும், கோடி-பத்து கோடி என்று ரூபாயாகட்டும், எதுவானாலும் அதிலிருந்து துளிக்கூட நமக்குப் பிரயோஜனம் கிடைக்காத படி அத்தனையையும்

விட்டுவிட்டு ஒரு நாள் புறப்படும்படி ஆகிறது.

ஆக அப்பா ஸொத்து சாச்வதமில்லை.

நாமே தேடிக் கொள்கிற ஸொத்துக்களுக்கும் இதே கதைதான்.

சாச்வதமான ஸொத்து, இழந்து போகாத, ரிப்பேர் பண்ணவேண்டாத ஸொத்து, டாக்ஸூம் திருட்டும் தொடாத ஸொத்து, 'திருட்டுப் போயிடுமோ?'என்று பயப்படவும் வேண்டாத ஸொத்து, தப்பு வழிகளில் போய் நாம் காப்பாற்றிக்கொள்ள வேண்டாத ஸொத்து அப்பா கொடுக்க முடியாது;நாமாகவும் தேடிக்கொள்ளமுடியாது.

குரு என்கிற ஒருத்தர்தான் சாச்வதமான அந்த ஸொத்தைத் தருகிறவர். இது நாம் போன பிற்பாடு நம் கூட வராத ஸொத்தில்லை-நம்மையே திரும்பி வரப் பண்ணாத ஸொத்து!எது சாச்வதமோ அந்தப் பரமாத்மாவுடன் நம்மைப்பிரிக்க முடியாமல் சேர்த்துவிடுகிற ஸொத்து. ஞானம் என்ற ஸொத்தை குரு அநுக்ரஹிக்கிறார். ஸொத்து க்ஷீணித்துக் கொண்டே போவது, நாம் சிரமப்பட்டு அதை விருத்திபண்ணப் பாடுபடுவது, இந்தப்பாட்டில் பாவ மூட்டையை இன்னும் பெரிசாக்கிக் கட்டிக்கொள்வது என்பதற்கெல்லாம் இடமே வைக்காமல் நாளுக்கு நாள் தானும் வளர்ந்து நம்மையும் வளர்ப்பது குரு தருகிற உபதேச ஸொத்து.

மற்ற ஸொத்து எதுவானாலும் அதனால் கிடைக்கும் எல்லா ஸூகங்களும் தாற்காலிகம்தான். 'நித்யானந்தம்'என்றே சொல்லப்படுவதான சாச்வ ஸூகத்தைத் தருவது குரு அநுக்ரஹிக்கிற ஞானமொன்றுதான்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

ஈசனும் ஆசானும்

## தெய்வ பக்தியும் குரு பக்தியும்

இப்படிப்பட்ட பெரிய உபகாரத்தைப் பண்ணுகிற குருவிடம் எவ்வளவு பக்தி பண்ணினால்தான் போதும்?அதனால் தான் ஸாக்ஷாத் ஈச்வரனிடத்தில் எவ்வளவு பக்தி வைக்க வேண்டுமோ அதே அளவுக்கு குருவிடமும் வைக்கணும் என்று சொல்லியிருப்பது:

யஸ்ய தேவே பராபக்திர்-யதா தேவே ததா குரௌ

'யதா தேவே'-ஈச்வரனிடத்தில் எப்படியோ;'ததா குரௌ'-அப்படியே குருவிடமும்;'பராபக்தி'-உயர்ந்த பக்தி(வைக்கவேண்டும்).

ச்லோகம் எப்படிச் சொல்லிக்கொண்டு போகிறதென் தென்றால், இம்மாதிரி ஈச்வரனிடம் பக்தி வைத்து, அதே அளவுக்கு குருவிடமும் பக்தியாக இருக்கிற மஹாத்மாவான சிஷ்யனுக்குத்தான் உபதேசிக்கப் படுகிற விஷயத்தின் உள்ளர்த்தம் முழுதும் வெளிப்படும் என்கிறது. ஈச்வர பக்திக்கு ஸமானமாக குருபக்தி உள்ள சிஷ்யனை "மஹாத்மா"என்று உயர்த்திச் சொல்லியிருப்பதால், இந்த பக்தி பாவமே அவனுக்கு ஆத்ம ஞானத்தைக் கொடுத்து மஹாத்மா என்னும்படியாக ஆக்கிவிடுகிறது. என்று ஏற்படுகிறது. ச்லோகத்தில் "யஸ்ய"-"எவனுக்கு"-என்று ஆரம்பித்து, 'எவனுக்கு ஈச்வரனிடம் உத்தம பக்தி இருக்கிறதோ அதோடுகூட அதே அளவுக்கு குருவிடமும் இருக்கிறதோ அந்த மஹாத்மாவுக்கு தத்வார்த்தங்கள் எல்லாம் பிரகாசிக்கும்'என்று சொல்லியிருக்கிறது:

தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா : ப்ரகாசந்தே மஹாத்மந :

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

அநுபவ ஞானம்

'பிரகாசிக்கும்'என்றால் உள்ளர்த்தங்கள் மூளைக்குப் புரியும் என்று அர்த்தம் செய்துகொள்வதோடு முடித்து விடக்கூடாது. மூளைக்குப் புரியும்படியாக ரஹஸ்யார்த்தங்களை குருவே சொல்லிவிடுவார். பக்தியினால்தான் இந்த மூளைக் கார்யத்தைப் பண்ணிக்கொள்ளவேண்டும் என்றில்லை. பின்னே என்ன அர்த்தம் என்றால், உபதேசத்தின் ஸாரமாக எந்த அநுபவம் இருக்கிறதோ அது சிஷ்யனின் ஹ்ருதயத்தில் பிரகாசிக்கும். (சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுத் தொடர்கிறார்கள்.)

நன்றாக யோசித்துப் பார்த்தால், 'ரஹஸ்யார்த்தங்கள் நன்றாக ப்ரகாசிக்கும்'என்று சொல்வதன் தாத்பர்யம் என்னவாக இருக்கமுடியும்?மறைவாகவோ, சுருக்கமாகவோ, வ்யங்கியமாகவோ (உள்ளூறை பொருளாகவோ), ரொம்பவும் சிக்கலான கருத்திலோ நடையிலோ சொல்லியிருக்கிற விஷயங்கள் பளிச்சென்று தெளிவாகிவிடும் என்பதுதான் தாத்பர்யமா?அப்படியும் வைத்துக் கொள்ளலாம். ஈச்வர க்ருபையில், குரு க்ருபையில் இஹ - பர நலம் எதுவுமே கிடைக்க முடியும் என்னும்போது, நம் மூளையும் நன்றாகச் சாணை தீட்டிய மாதிரி தீட்டப்பெற்று மேலே சொன்னது போல மறைபொருளை, சிக்கலான விஷயத்தை ஸ்பஷ்டமாகப் புரிந்துகொண்டு விடுகிற திறமையைப் பெறக் கூடும்தான். ஆனால் ஆலோசித்துப் பார்த்தால் இப்படி மூளையின் சாதிப்போடு விஷயத்தை முடித்துவிட்டால் அது பிரயோஜனமில்லை என்று தெரியும். அத்யாத்ம உபதேசம் எதற்கு இருக்கிறது?மூளையின் திருப்திக்காகவா?இல்லையே!மூளையின் த்ருப்தி அஹங்காரத்தில் சேர்ப்பதல்லவா?அத்யாத்ம உபதேசமோ அஹங்காரம் அழிவதற்காக அல்லவா?ஆகையினால், மூளை ரீதியான ப்ரகாசத்தில் எதையோ தெளிவு செய்வதென்று வைத்துக் கொண்டால் கூட, இதுவும் ஆத்மாவிலே கொண்டுவிட உதவி செய்வதாயிருக்க வேண்டும் என்பதுதான் தாத்பர்யமாக இருக்கவேண்டும். அதாவது உபதேச லக்ஷ்யமான ஆத்மாநுபவங்கள் என்னென்னவோ அவையெல்லாம் மூளை லெவலில் புரிந்து கொண்டதாக மட்டும் முடிந்துபோகாமல் பிரத்யக்ஷமாக

சிஷ்யனுக்கே நேராக அநுபவத்தில் வர வேண்டும். 'ஸ்வாநுபூதி'என்பது இப்படி ஒருத்தர் நேராக தானே ஒன்றை அநுபவிப்பதுதான். மூளைக்கும் ஆதாரமாக ஒரு ஜீவ சைதன்யம் இருக்கிறதல்லவா?ஜீவனின் உயிர் என்று சொல்வது அதைத்தான். அந்த உயிரின் அநுபவமாகவே விஷயம் ஆகும்போதுதான் ஸ்வாநுபூதி ஏற்படுகிறது. அப்புறம் ஜீவ சைதன்யம், ப்ரஹ்ம சைதன்யம் என்கிற பேதம் போய், விஷயம் - அதை அநுபவிப்பவன் என்ற பேதமும் போய்விட்ட நிலை. சாச்வதமான ஸத்யமாக ஆகிவிடுகிற நிலை. அத்வைதிகள் சொல்லும் மோக்ஷம் அது தான்.

"ஸ்வாநுபூதி"என்பதை "அபரோக்ஷாநுபூதி"என்றும் சொல்வார்கள். அந்தப் பெயரிலேயே ஆசார்யாள் ஒரு க்ரந்தம் எழுதியிருக்கிறார்.

பரோக்ஷம், அபரோக்ஷம் என்று இரண்டு. பரோக்ஷம் என்பது நமக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருப்பது, ரஹஸ்மாயிருப்பது. அபரோக்ஷம் அதற்கு ஆப்போஸிட் :நமக்கு நன்றாகத் தெரிவது. கேள்வியறிவு பரோக்ஷம், அநுபவ அறிவு அபரோக்ஷம். அநுபவத்துக்கு வராதவரையில் ஒன்றைப் பற்றிய அதன் பிரயோஜனமான ஆனந்தத்தை நமக்குக் காட்டாமல் ரஹஸ்யமாக வைத்துக் கொண்டு இருக்கிறது என்று அர்த்தம்.

குற்றாலம் அருவியைப் பற்றிப் பக்கம் பக்கமாகப் படிக்கிறோம். போய்விட்டு வந்தவர்கள் அதைப் பற்றி மணிக் கணக்காக வர்ணித்துக் கேட்கிறோம். ஆனாலும் இதனாலெல்லாம் அநுபவ ஆனந்தம் நமக்குக் கொஞ்சமாவது ஏற்படுகிறதா?நாமே போய், மணிக்கணக்கெல்லாம் வேண்டாம், நாலு நிமிஷம் அஞ்சு நிமிஷம் அதன் கீழே நின்றுவிட்டால் அப்போதுதானே நிஜமாக அதைத் தெரிந்தகொண்ட ஆனந்தம் ஏற்படுகிறது?

ஆத்மாவுக்கான ஸமாசாரங்களை டன் டன்னாகப் புஸ்தகத்தில் பார்த்தும் படித்தும் நெட்டுருப் போட்டும், quote பண்ணியும் ப்ரயோஜனமில்லை. குருவே உபதேசம் பண்ணியுங்கூட, அது காதுக்குள்ளே, காது வழியாக மூளைக்குள்ளே போனாலுங்கூட, ப்ரயோஜனமில்லை. அதுவரை அது பரோக்ஷம்தான். ஆத்மாவிலேயே அது அநுபவமாகப் பேசணும். அப்போதுதான் அபரோக்ஷம்.

இதிலே கொஞ்சம் வேடிக்கை. குரு உபதேசம் மூளை லெவலில் மட்டும் ஏறுகிறபோது நமக்கு ரஹஸ்யமாக இருக்கிற மாதிரி தோன்றவில்லை. மூளைக்கு நன்றாக விஷயம் தெரியத்தான் தெரிகிறது. ஆனாலும் அது உயிரின் அநுபவமாக இல்லாததால் அதை பரோக்ஷ ஞானம் என்றே வைக்கவேண்டும். எப்போது அது உயிருக்கு உள்ளேயே போய் அநுபவமாகிறதோ அப்போதுதான் அதற்கு அபரோக்ஷ அநுபூதி என்ற பெயர் கொடுத்திருக்கறது. இதிலேதான், முரண் மாதிரி இருக்கும் வேடிக்கை!வெளிப்பட குரு வாக்கியம் நன்றாகத் தெரிந்து, மூளைக்கு அது எட்டும்போது, அதற்கு 'ஒளித்து வைத்தது', 'ரஹஸ்யமானது'என்று அர்த்தம் கொடுக்கும் 'பரோக்ஷ'ப் பட்டம் ஒட்டிக்கொண்டிருக்கிறது!பரமரஹஸ்யமாக இருக்கப்பட்ட உயிரின் உள்ளுக்குள்ளே அதுவே தோய்ந்து, உறைந்து போய், வெளிப்படத் தெரிகிற வாக்கு, மூளை எல்லாம் மறைந்து போனபோது தான் 'அபரோக்ஷம்'என்று, அதாவது நன்றாக, வெளிப்பட ப்ரகாசிப்பதாக, பட்டம் பெறுகிறது!

இது எப்படி ஸரி என்றால்,

பால் ருசியாக இருக்கிறது வஸ்து என்று நமக்குத் தெரியும். வெல்லமும் ருசியான வஸ்து என்று தெரியும். அதனால், பாலையும் வெல்லத்தையும் போட்டு நன்றாக ஸாரம் திரண்டு வரும்படி இறுகக் காய்ச்சினால் அந்தத் திரட்டுப் பால் பஹு ருசியாகத்தான் இருந்தாக வேண்டும் என்று தெரிகிறது. அதாவது, மூளைக்குத் தெரிகிறது. இப்படி மூளையால் நிச்சயப்படுத்தித் தெரிந்து கொண்டுவிட்டாலும் அதனால் திரட்டுப் பாலில் உண்டாகிற ருசியநுபவம் கிடைத்துவிடுகிறதா?திரட்டுப் பாலின் பலனான அந்த இன்பத்தை அடைய என்ன பண்ணவேண்டும்?தின்று பார்க்கவேண்டும் வெளியிலே தெரிகிற திரட்டுப்பாலை உள்ளே தள்ளுகிறபோதுதான் அதைப் பற்றிய ஸரியான, நிஜமான அநுபவம் உண்டாகிறது. இங்கே வெளிப்பட இருந்த வஸ்து மறைந்துபோய் உள்ளுக்குள்ளே ரஹஸ்யமாக ஆன பிறகுதானே அதனால் என்ன பயனோ, அது எந்த லக்ஷ்யத்தை உத்தேசித்து செய்யப்பட்டதோ அது பூர்த்தியாகிறது?உள்ளுக்குள்ளே போனபின் அதன் ரூபம்

மறைந்தாலும் அதன் பயன் அப்போதுதானே வெளிப்படுகிறது?

அதாவது 'உள்' 'வெளி'என்பதில் இரண்டு விதம் இருப்பதாகத் தெரிகிறது. ரூபத்தினால் வெளிப்பட ஒன்று இருக்கிறபோது அதனுடைய ஸாரமான பயன் பிரகாசிக்காமலிருக்கிறது. பிரகாசிக்காமலிருக்கிறது என்றால் ரஹஸ்யமாக ஒளிந்து கொண்டிருக்கிறது என்றுதான் அர்த்தம். அதாவது வேதாந்த பரிபாஷைப்படி அது 'பரோக்ஷ'மாகத்தானிருக்கிறது. உள்ளே போய் அதன் ரூபம் மறைந்து விடுகிறபோது அதன் ஸாரமான பிரயோஜனம் பிரகாசித்து 'அபரோக்ஷ'மாகிறது.

ஒரு வஸ்து ஸ்தூலத்தில் தெரிந்துகொண்டிருந்தாலும் அதனால் கிடைக்கக் கூடிய ஸாரமான பிரயோஜனம் கிடைக்கவில்லை என்றால் அது இருந்தாலும் இல்லாத மாதிரிதான். அது ஸ்தூலமாகத் தெரியாவிட்டாலும் அதன் ப்ரயோஜனம் நன்றாக வெளிப்பட்டுத் தெரிகிறது என்றால் அப்போதுதான் அதற்குப் பொருள் உண்டு. வஸ்துவின் வெளிவேஷத்தைவிட அதன் உள் ஸாரம்தான் முக்யம் என்பதை ஒப்புக் கொண்டோமானால்-இதை யாரும் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியாது-அந்த ஸாரம் வெளியாகாத நிலையே நிஜத்தில் பரோக்ஷம், ஸாரம் வெளியாகிப் பயன் தரும் போதே அபரோக்ஷம் என்று ஏற்பட்டுவிடும். அப்போது மூளை லெவலில் உபதேசம் நிற்கிறபோதுகூட அதன் ஸார அநுபவ இன்பம் கிட்டாததால் அது பரோக்ஷம்தான். உபதேசமும் போய், மூளையும் போய் தன்னையே மறந்த ஸமாதி நிலையில் உபதேச ஸாரம் வெளிப்பட்டு உயிரில் உறைவதுதான் அபரோக்ஷம் என்று ஏற்பட்டுவிடும். அபரோக்ஷம், பரோக்ஷம் என்பவற்றை மாற்றி முரணாக வேடிக்கை பண்ணவில்லை;வாஸ்தவத்தைத்தான் உள்ளபடி சொல்லியிருக்கிறது என்று தெரியும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

ஈசனும் ஆசானும்

மூளையும் இதயமும்

மூளைக்குத் தெரிகிறது வேறே;அதற்கும் ஆதாரமான உயிருக்கு தெரிகிறது வேறே. கோட்டான் கண்ணுக்கு வஸ்துக்கள் ராத்திரியில்தான் தெரிகிறது. பகலில் அதற்கு எதுவும் தெரிவதில்லை. மநுஷக் கண்ணுக்குப் பகலில்தான் தெரிகிறது. ராத்ரியில் தெரிவதில்லை. மூளைக்கு அநுபவம் தெரிவதில்லை. அதற்குத் தர்க்கத்தையொட்டி விசாரிக்கிற அறிவு வாதம்தான் தெரியும். அநுபவம் தெரிகிற ஹ்ருதயத்துக்கு அறிவு வாதம் தெரிவதில்லை. ஜீவனின் ஸார ஸத்யமான உயிரைத்தான் ஹ்ருதயம் என்பது.

ஆனாலும் ஹ்ருதயம் லேசில் திறந்து கொள்வதில்லை. எதனாலோ மநுஷ்யர்களுக்கு மூளைப் பெருமையையே பெரிசாக வைத்திருக்கிறது. அதனால் எதுவுமே முதலில் புத்தியில், மூளையில் உறைத்தாக வேண்டியிருக்கிறது. ஹ்ருதயமே அநுபவிக்கவேண்டிய ஆத்யாத்மிக விஷயங்களைக்கூட மூளை ஸரியாயிருக்குமா இருக்காதா என்று எடைபோட்டுப் பார்க்க ஆரம்பிக்கிறது. ஸரியாயிருப்பதாக அது முடிவு பண்ணினால் அதற்கப்புறமே, 'இப்படி நாம் அறிவினால் முடிவு பண்ணினது போதாது. இதனால் அந்த விஷயத்தின் லக்ஷ்யமான ப்ரயோஜனம் நமக்குக் கிடைத்து விடவில்லை. உதாரணமாக, ஆத்மா ஸச்சிதாநந்த ஸ்வரூபமாகத்தான் இருக்கவேண்டுமென்று இத்தனை வேதாந்த புஸ்தகங்களைப் படித்து, குரு உபதேசங்கள் கேட்டு புத்தியினால் புரிந்துகொண்டபோதிலும் நமக்கும் ஸத்தும் தெரியலை, சித்தும் தெரியலை, ஆனந்தமும் தெரியலை. அசடு மாதிரி துக்கப்பட்டுக் கொண்டுதான் கிடக்கிறோம். அதனால் புத்திக்குள் போனதோடு நிறுத்திக்கொள்ளாமல் அதை ஹ்ருதயத்துக்குள் இறக்கிக் கொள்ளவேண்டும்'என்று நினைக்கிறோம். மூளை தான் பண்ணவேண்டியதையெல்லாம் பண்ணியும் ஸாரமான ப்ரயோஜனத்தை அடைய முடியாமல் களைத்து விழுந்த அப்புறம்தான் ஹ்ருதயத்தைத் திறந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் பிறக்கிறது. இது மநுஷ்ய ஜீவனுக்குத் தன்னுடைய மூளை விசேஷத்தினால் உண்டான விபரீதமான பலன்!அவ்வளவாக புத்தி போதாமலிருக்கிற

எளிய ஜீவன்களைவிட புத்திமான்களுக்குத்தான் இதன் கஷ்டம் ஜாஸ்தியாக ஏற்படுகிறது. அவர்கள் (எளிய ஜீவர்கள்) புத்தியால் குடையாமல், ஏதோ ஒரு நம்பிக்கையின் பேரில் ஏற்றுக்கொண்டு விடுவார்கள். 'புத்திசாலி'களான நாம்தான் திண்டாடுகிறோம். ஏதோ சில ஸமயத்தில் நமக்கும் 'இதையெல்லாம் நம்முடைய மூளையால் எடைபோட்டுத் தீர்மானம் பண்ணிவிட முடியாது'என்று தோன்றுகிறது. எல்லாம் நம்முடைய மூளையின் ஜூரிஸ்டிக்ஷனுக்குள் (ஆணையெல்லைக்குள்) வந்துவிட முடியுமா என்று தோன்றுகிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

### ஈசனும் ஆசானும்

### ச்ருதி-யுக்தி-அநுபவம்

புத்தியினாலே நிரம்ப வாதங்கள் செய்து லோகம் பூராவும் இன்றைக்கும் ப்ரமிக்கும்படியாக ஸித்தாந்தம் நிர்மாணம் பண்ணின ஆசார்யாளும், 'ச்ருதி (வேதம்) சொல்கிற விஷயங்களை மூளையால் ஆராய்ச்சி பண்ணவே பண்ணாதே. நம் மூளைக்கு அதீதமானதை பரமாத்மாவே ரிஷிகளுக்கு ஸ்புரிக்கப்பண்ணி அவர்கள் லோகோபகாரமாக நமக்கு வேதங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ச்ருதி வாக்யத்தைக் கேள்வி கேட்காமல் அப்படியே ஒப்புக்கொள்ளு'என்றுதான் சொல்லியிருக்கிறார்.

ஆனால் அவேர புத்தியினால் எந்த அளவுக்கு ஸித்தாந்தத்தை நாட்ட முடியுமோ அந்த அளவுக்கு ஆழமாகப் போய் அலசி அலசிப் பார்த்து, ஆக்ஷேபணை, ஸமாதானம் எல்லாம் விஸ்தாரமாகச் சொல்லிப் புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்.

வைதிகமான எல்லா ஸம்ப்ரதாயங்களைச் சேர்ந்த ஆசார்ய புருஷர்களும், (அதாவது) ராமாநுஜர், மத்வர் முதலிய

யாரானாலும் ஸரி, இப்படி ச்ருதியை 'சப்த ப்ரமாணம்'என்பதாக அப்படியே கேள்வி கேட்காமல் ஏற்றுக்கொண்டு, ஆனாலும் தங்கள் தங்கள் கொள்கைகளை புத்தி ரீதியிலும்தான் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லி எழுதியிருக்கிறார்கள்.

ஒரு ஸித்தாந்தமென்றால் அது ச்ருதி, யுக்தி, அநுபவம் என்ற மூன்றுக்கும் பொருந்துவதாக, மூன்றுக்கும் ஏற்புடையதாக இருக்கவேண்டுமென்ற கருத்தையே எல்லா ஆசார்யர்களும் பின்பற்றியிருக்கிறார்கள். ச்ருதி சொல்கிற விஷயங்களை அப்படியே ஏற்கவேண்டும். அதற்கு விரோதமில்லாமலும், அதன் முடிவுகளுக்கே கொண்டு விடுவதாகவும், அல்லது அதில் குறிப்பு மட்டும் காட்டியிருப்பதை நன்றாக விளக்கியும், அதில் சொல்லாமல் விட்ட விஷயங்களை நன்றாக ஆராய்ச்சி பண்ணியும் புத்திவாதம் செய்வதுதான் 'யுக்தி'. முடிவிலே ச்ருதியும் யுக்தியும் அநுபவத்தில் கொண்டுவிட்டால்தான் ப்ரயோஜனம். அந்த அநுபவம் ஹ்ருதயம் என்பதான உயிருக்குள்ளேயே ஏற்படுவது.

ச்ருதி யுக்திகளினால் விள்ககமுடியாத அநுபவங்கள் ஸித்தாந்தம் செய்கிற ஆசார்ய புருஷர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம். இவற்றைக் காட்டியும் ஒரு ஆசார்யர் தாம் முடிவாகச் சொல்லவந்த பேரநுபவத்துக்குப் பக்கபலம் உண்டாக்கலாம். அந்த மஹான்களுக்குத்தான் என்றில்லை. நம்மைப் போன்றவர்களுக்குக்கூடச் சில அநுபவங்கள் ஏற்படுகின்றன. அவற்றுக்கு புத்தி யுக்தியால் காரணம் சொல்லமுடியாது ஒரு தாயாரின் நிறைந்த அன்பு, ஒரு ஸூஸ்வரமான வீணாகானத்தைக் கேட்டு அப்படியே சொக்கிப் போவது, நல்லதாக இல்லாததாகவும் இதே மாதிரி பல விஷயங்களை அநுபவத்தில் தெரிந்து கொள்கிறோம். இதற்கெல்லாம் யுக்தி காட்டமுடியுமா?இப்படிப்பட்ட அநுபவங்களை எடுத்துக்காட்டி, "இப்படியிப்படி ப்ரயத்க்ஷ அநுபவம் இருக்கிறதோ, இல்லையோ?நீயே பார்த்திருக்கிறாயோ, இல்லையோ?இதே அடிப்படையில் நாங்கள் ஸித்தாந்தம் பண்ணுகிற இந்த ஸமாசாரங்களையும் ஏற்றுக்கொள்"என்று ஒரு ஆசார்யர் compare பண்ணி (ஒப்புவமை காட்டி). parallel (இணை) காட்டி விஷயத்தை ஸ்தாபிப்பது, ச்ருதி-யுக்தி-அநுபவம் என்ற மூன்றில் கடைசியான அநுபவம் என்பதன் கீழ்வரும்.

கடைசியில் மஹாநுபவமாக சிஷ்யனுக்கே கிடைக்கிற ஸித்திதான் ஸ்வாநுபூதி என்றும் அபிரோக்ஷாநுபூதி என்றும் சொல்வது.

ஈச்வர பக்தி இருக்கிறவனுக்கே, அதோடுகூட அந்த ஈச்வர பக்திக்கு ஸமதையான குருபக்தியும் இருக்கிறவனுக்கே தத்வார்த்தமெல்லாம் பிரகாசிக்கும் என்று சொல்கிறபோது அந்த ப்ரகாசம் என்பது இந்த அநுபூதி தான். 'ப்ரகாச ம்'என்பதை அப்படியே மொழி பெயர்த்த மாதிரிதான் அவர்களும் (மேல்நாட்டினரும்) Enlightenment என்றும் Illumination என்றும் சொல்கிறார்கள் ஆக அது அநுபவ ப்ரகாசம்;வெறும் புத்தி ப்ரகாசமில்லை. (புத்தி என்பதை மூளை என்ற அர்த்தத்தில் சொல்கிறேன்.)

அநுபவம்தான் முக்யம். ஆணிவேர். உபதேசம் மூளையோடு நிற்காமல் அநுபவமாகப் பழுக்கவேண்டுமானால் அதற்கு ஈச்வர பக்தியும், அதற்குக் கொஞ்சங்கூடக் குறைச்சலில்லாத குரு பக்தியும் இருந்தால்தான் முடியும். அதுதான் ஹ்ருதயம் என்கிற நிலத்தைக் கிளறிவிட்டு அநுபவம் ஊற்றெடுப்பதற்கு வழி பண்ணும் அல்லது, இன்னொரு விதமாகச் சொன்னால், ஹ்ருதயம் என்ற கதவைத் திறந்துவிட்டு ஞான ஜ்யோதிஸ் உள்ளுக்குள்ளே அடிப்பதற்கு வழி ஏற்படுத்தும்.

மூளையைச் சாணை தீட்டிக்கொண்டு யுக்தியினால் உள்ளர்த்தங்களை பிரகாசிக்கச் செய்து கொண்டாலும்கூட அந்தப் பிரகாசமும் ஆத்ம ஜ்யோதிஸின் அநுபவ ப்ரகாசத்துக்கு வழி திறந்துவிடுவதாகத்தான் இருக்கவேண்டும். மூளை அஹம்பாவக் கொழுப்புத் பிடித்துத் தன்னையே நிலை நாட்டிக்கொள்ளாமல், இப்படி வழி விட்டு, விலகிப் போவதற்கு பக்தி வேண்டும். ஈச்வர பக்தியும் அதற்கு ஸமானமான குருபக்தியும் வேண்டும் என்று அந்த ச்லோகம் சொல்கிறது.

## குரு

## ஈசனும் ஆசானும்

## இரண்டு பக்திகளா ?

இன்னம் கொஞ்சம் ஆலோசனை பண்ணிக்கொண்டு போனால், இதென்ன இரண்டு பக்திகள்?ஈச்வர பக்தி என்று ஒன்று, குரு பக்தி எனற இன்னொன்று?அப்புறம் இரண்டும் ஸம எடையா என்று நிறுத்துப் பார்ப்பது?இப்படி வேண்டாம்!ஈச்வரன்தானே தன்னை நமக்குக் காட்டிக் கொடுப்பதற்காக குருவாக வந்திருக்கிறான்?அப்படித் தானே ஸகல சாஸ்த்ரங்களும் சொல்லியிருக்கின்றன?அத்தனை பெரியவர்களும் எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள்?அவரவர்களும் தங்கள் இஷ்டமூர்த்தியே குரு ஸ்வரூபத்தில் வந்து தங்களை நல்ல வழியில் திருப்பிவிட்டு அநுக்ரஹித்ததாகத் தானே சொல்கிறார்கள் என்று தோன்றுகிறது.

(விநாயகர்) அகவலில் அவ்வையார் விக்னேச்வரரே குருவாக வந்தார் என்கிறாள். அவள் அப்படிச் சொல்கிறாளென்றால் அநுபூதி (கந்தரநுபூதி)யில் அருணகிரிநாதர் 'குருவாய் வருவாய்'என்று முருகனை வேண்டிக் கொண்டு முடிக்கிறார். இங்கே அநுபூதி பெறாத நம் சார்பில் மனமுருகி வேண்டிக்கொண்டிருக்கிறார். அவருக்கு முருகன் ஏற்கனவே குருவாக வந்து அநுக்ரஹம் செய்து அவர் அநுபூதி பெற்று விட்டவர். இதை (நூலின்) உள்ளே சொல்லியிருக்கிறார். 'எல்லாக் கார்யத்தையும் விட்டு விட்டு மௌனமாக ஆத்மாவுக்குள்ளே முழுகிப் போய்விடு; சும்மாயிரு சொல்லற 'என்று ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி தன்னிடம் சொன்னார்;உடனே அப்படியே ஸகல வஸ்துவும் மறைந்து போய் ஏக வஸ்துகளில் தான் நின்று விட்டேன் என்று சொல்லியிருக்கிறார். இப்படி ஒரு உபதேசத்தைப் பண்ணி, அந்த உபதேசம் உள்ளநுபவமாகவும் ஆகுமாறு முருகன் பண்ணினானென்பது அவன் குரு ஸ்வரூபமாக வந்து விட்டான் என்பதையே காட்டும். மாணிக்க வாசகரும் திருப்பெறந்துறையில்-ஆவுடையார் கோவில் என்கிறது அந்த ஸ்தலத்தைத்தான்;அங்கே-குருந்த மரத்தடியில் குரு ஸ்வரூபமாக வந்து பரமேச்வரன் தம்மை ஆட்கொண்டு

விட்ட பரம கருணையைப் பல இடங்களில் உருகி, உருகிச் சொல்லியிருக்கிறார்.

அருபரத்தொருவன் அவனியில் வந்து

குருபரனாகி அருளிய பெருமை

என்கிற மாதிரி, எப்பேர்ப்பட்ட உத்க்ருஷ்டமான ஏக புருஷன் இப்படி இந்த பூலோகத்திலே நம் கண்ணுக்குத் தெரிந்து, நாம் கலந்து பழகும்படியாக குரு என்று வந்து அருள் பண்ணியிருக்கிறான் என்பதை நிறையச் சொல்லியிருக்கிறார்.

காளிதாஸன் அம்பாளைக் குறித்துச் செய்துள்ள 'நவரத்னமாலிகை'யில் அவள் குரு ரூபத்திலே வந்து உயர்ந்த ச்ரேயஸ்களைக் காட்டினாள் என்கிறான்:

தேசிக ரூபணே தர்சிதாப்யுதயாம்

ஆனதினாலே, ஈச்வரனேதான் குருவாக வந்திருக்கிறான் என்று வைத்தக் கொண்டுவிட்டால்- 'வைத்துக்கொள்வது'என்றால் கல்பிதமாக இப்படி அபிப்ராயம் ஏற்படுத்திக் கொள்ளுகிற மாதிரி த்வனிக்கிறது. அதனாலே கொஞ்சம் மாற்றிச் சொல்கிறேன். ஈச்வரனே குருவாக வந்திருக்கிறானென்பதுதானே நிஜம்?இதைப் புரிந்து கொண்டுவிட்டால்-அப்புறம் ஈச்வரனிடமும் பக்தி, அதே அளவுக்கு குருவிடமும் பக்தி என்று இரண்டு பக்திகளைச் சொல்லவேண்டியதில்லை. குருவே ஈச்வரன் என்று அந்த ஒருவரிடமே பூர்ணமாக மனஸைக் கொடுத்து ஒரே பக்தியாகப் பண்ணவேண்டுமென்று ஆகிவிடும்.

இப்படி ஒரு ரூபத்தில் வந்திருக்கிற ஈச்வரனிடத்தில், அல்லது ஈச்வரனின் மநுஷ்ய ரூபமான குருவினிடத்தில் உயர்ந்த பக்தியை, பராபக்தி என்கிற உத்தமான பக்தியைச் செலுத்திவிட்டாலே உபதேசத்தின் உட்பொருளெல்லாம் உள்ளநுபவமாகப் புரிந்து அநுபூதி-ஜனன மரண நிவ்ருத்தியான மோக்ஷபதம்-கிடைத்துவிடும்.

## பலனளிப்பவன் ஈச்வரனே !

பக்தி செலுத்தவதால் முக்தி கிடைத்துவிடுமென்று சொன்னால் நாம் செலுத்தும் அந்த பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகிறது என்று அர்த்தமில்லை. நாம் செய்கிற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை;பலன்களைத் தருகிற பலதாதாவாக ஈச்வரனே இருக்கிறான். அவன்தான் பாபபுண்யம் பார்த்து எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம் பண்ணுகிற பக்திக்குப் பலனாக அவன் பரம க்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக மோக்ஷானுபூதியைக் கொடுக்கிறான். ஆக, பலன் தருவது நாம் பண்ணும் பக்தியே அல்ல;அதற்குப் பிரதியாக ஈச்வரன் செய்யும் கிருபைதான் பலனைத் தருவது.

பக்தி நிஜமானதாக இருந்தால் பக்தி பண்ணுகிறவன் அதற்கு ப்ரதியே எதிர்பார்க்க மாட்டான். ப்ரதி ப்ரயோஜனம் எதிர்பார்த்து விட்டால் அது வியாபாரம்தானேயொழிய பக்தி இல்லை என்றே பாகவதாதி நூல்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பக்தன் (பிரதி வேண்டாமால்) இருந்தாலும் இவனிடமிருந்து நிஜமான பக்தியைப் பெற்றுக் கொண்ட பகவானுக்கு மனசு கேட்குமா?அதனால் அவன் க்ருபை பண்ணத்தான் பண்ணுவான். ஞானத்தை அநுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தில் சேர்க்கத்தான் செய்வான்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

ஈசனும் ஆசானும்

**இரண்டு க்ருபைகளா ?**

குருவே ஈச்வரன், ஈச்வரனே குரு என்கிறபோது குரு க்ருபை என்ற ரூபத்தில் இந்த மஹா பெரிய பலனை அவன் கொடுத்து விடுகிறான் என்று அர்த்தமாகிறது. முதலில் குருவாக உபதேசம் பண்ணுகிறான். அது மூளை லெவலோடு நிற்காமல் அந்தராத்மாவுக்குள்ளே புகுந்து அநுபவமாக வேண்டுமானால் நாம் பரிபூர்ணமான பக்தியை அந்த குருவிடம் செலுத்த வேண்டும். இதற்கு ப்ரதியாக குரு பரம க்ருபை பண்ணுகிறபோது ப்ரத்யக்ஷமான அநுபூதி பிறக்கும்.

இரண்டு பேரிடம் பக்தியா என்கிற மாதிரியே இரண்டு பேருடைய க்ருபையா-ஈச்வர க்ருபை என்று ஒன்று, குரு க்ருபை என்று ஒன்று, இப்படி இரண்டு க்ருபைகளா-என்ற கேள்வி வந்தால் பதில் சொல்வது கஷ்டம்தான். ஒருத்தனுக்கு ஞான ப்ரகாசம் உண்டாக்குவதில் குரு, ஈச்வரன் என்ற இரண்டு பேரின் க்ருபைகளில் ஒவ்வொன்றுக்கும் எத்தனை பெர்ஸென்ட் என்று கணக்குப் பார்க்கவேண்டியதாகும் (சிரிக்கிறார்.) ஞானப் பிரஸாமென்பது இரண்டு க்ருபைகளுக்குகிடையில் பங்குபோட்டு நடத்தக்கூடிய விஷயமில்லை என்றும், ஈச்வரன் என்ற ஒருத்தனுடைய ஒரே க்ருபைதான் குருவின் மூலமாக குருக்ருபை என்பதாக என்றும் ஆலோசித்து பார்த்தால் தெரியவரும்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு**

**ஈசனும் ஆசானும்**

**எல்லா வணக்கமும் போய்ச்சேருவது ஒருவனையே !**

எல்லா தேவர்களுக்குச் செய்யும் நமஸ்காரமும் ஒரே ஈச்வரனைத்தான் போய்ச் சேருகிறது என்று சாஸ்த்ரம் சொல்கிறது :

ஸர்வ தேவ நமஸ்கார : கேசவம் ப்ரதிகச்சதி

ஒரே பரமாத்மாதான் பல ஸ்வாமிகளாக ஆகியிருக்கிறது. ஆஸாமிகள் அத்தனை பேராகவும்கூட அதுவேதான் ஆகியிருக்கிறது. ஆகையால் எந்த ஸ்வாமிக்குப் பண்ணும் நமஸ்காரமும்-'எந்த ஆஸாமிக்குப் பண்ணும் நமஸ்காரமு ம்'என்றும் சேர்த்துக் கொள்ளவேண்டும்-ஏக பரமாத்மாவைத்தான் சென்றடைகிறது.

'கேசவம்'என்று சொல்லியிருப்பதை க்ருஷ்ணர் என்ற அவதாரம் என்றோ அல்லது அநேக தெய்வங்களில் ஒன்றாக இருக்கப்பட்ட விஷ்ணு என்றோ அர்த்தம் பண்ணிக்கொள்ளக் கூடாது. க, அ, ஈச, வ என்ற நாலு வார்த்தைகளும் சேர்ந்து 'கேசவ'என்றாகியிருக்கிறது. க என்றால் ப்ரம்மா, அ என்றால் விஷ்ணு. வேத புராணாதிகளில் பல இடங்களில் ப்ரம்ம விஷ்ணுகளுக்கு இப்படி (முறையே க என்றும், அ என்றும்) பெயர் சொல்லியிருக்கிறது. ஈச என்பது சிவன் என்பது எல்லோருக்கம் தெரிந்தது. க, அ, ஈச மூன்றும் சேர்ந்து 'கேச'என்றாகும். அதாவது ப்ரம்ம-விஷ்ணு-ருத்ரர்களான த்ரிமூர்த்திகளைக் 'கேச'என்பது குறிக்கும். 'வ'என்பது தன் வசத்தில் வைத்துக்கொண்டிருப்பதைக் குறிக்கும். த்ரிமூர்த்திகளை எவன் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருக்கிறானோ, அதாவது த்ரிமூர்த்திகளும் எவனுக்குள் அடக்கமோ அவனே கேசவன். ஆசார்யாள் இப்படித்தான் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹார மூர்த்திகளான மூவரையும் தன் வசத்தில் வைத்துக்கொண்டிருப்பவன் என்றால் அவன் ஏக பரமாத்மாவாகத்தான் இருக்கவேண்டும். எந்த ஸ்வாமிக்கும் ஆஸாமிக்கும் செய்கிற நமஸ்காரத்தை அந்த ஸாமிக்குள், ஆஸாமிக்குள் இருந்து கொண்டு அவன்தான் வாங்கிக்கொள்கிறான். ஸர்வ தேவ நமஸ்கார : கேசவம் ப்ரதிகச்சதி .

நமஸ்காரம் என்றால் என்ன?உடம்பினாலே தண்டால் போடுகிற மாதிரி காரியமா?இல்லை. இங்கே காரியம் இரண்டாம் பக்ஷம். பாவம்தான் முக்யம். பக்தி பாவத்தைப் பல விதமாகத் தெரிவிக்கத் தோன்றுகிறது. அப்போது பகவானுக்கு முன்னால் தான் ஒண்ணுமே இல்லை என்று மிக எளிமையோடு விழுந்து கிடப்பதைக் காட்டவே நமஸ்காரம்

என்ற க்ரியை. ஆக, நமஸ்காரம் என்று க்ரியையைச் சொன்னாலும் அநு பக்தி என்ற உணர்ச்சியைக் குறிப்பது தான். எவருக்குச் செய்கிற நமஸ்காரமும் ஒரே பரம் பொருளான கேசவனுக்குப் போய்ச் சேரும் என்று சொன்னால், எவரிடம் செலுத்தும் பக்தியும் பரமாத்மா என்ற ஒருவனுக்கே அர்ப்பணமாகும் என்றே அர்த்தம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

## ஒரே பக்திதான் ; க்ருபையும் ஒன்றுதான் !

சற்று முன் நாம் பார்த்த விஷயம் இங்கே தெளிவாகி விடுகிறது. இரண்டு பக்திகளா, இரண்டு க்ருபைகளா என்று விசாரித்துப் பார்த்தோமல்லவா?அதற்கு இங்கே ஆன்ஸர் வந்து விடுகிறது. அத்தனை பேரிடம் செலுத்தும் பக்தியும் ஒருத்தனிடம்தான் போய்ச் சேருகிறது என்ற பிறகு, குரு பக்தி, ஈச்வர பக்தி என்று இரண்டைப் பிரித்துச் சொல்ல அவசியமேயில்லாமலாகிறது. குருவிடம் செலுத்தும் பக்தியும் ஈச்வரனிடம்தான் போய்ச் சேரப்போகிறது என்கிற போது பிரித்துப் பிரித்து இவருக்கு, அவனுக்கு என்று இரண்டு பக்தி பண்ணுவானேன்?

அப்புறம் க்ருபைக்கு வருவோம். 'குரு க்ருபை, ஈச்வர க்ருபை-ஒன்றா, இரண்டா?'என்கிற விஷயம். அதற்கும் இங்கே ஆன்ஸர் கிடைத்துவிடுகிறது. எந்த ஸ்வாமி, அல்லது மஹாபுருஷர்கள், குரு போன்றவர்கள் க்ருபை செய்கிறார்களென்றாலும் எதை முன்னிட்டுச் செய்கிறார்கள்?பக்தியை முன்னிட்டே செய்கிறார்கள். நாம் பக்தியாக இருந்தால் அதற்கு ப்ரதியாகவே க்ருபை செய்கிறார்கள். நாம் செய்கிறது பக்தி. அதற்காக அவர்கள் செய்வது க்ருபை. பக்திக்கு அடையாளமாக நாம் நமஸ்காரம் பண்ணுகிறோம், அப்போது அவர்கள் அதற்குப் பதிலாக ஆசீர்வாதம் பண்ணுகிறார்களென்றால், அந்த

ஆசீர்வாதமென்பது க்ருபைக்கு அடையாளமே.

ஸரி, எல்லா நமஸ்காரமும் ஒரு பரமாத்மாவுக்குத்தான் போகிறதென்றால், அதற்குப் பதிலாக நமஸ்கரிக்கப்படுபவர் எவர்களானாலும் அவர்கள் பண்ணுகிற ஆசீர்வாதமெல்லாமும் அந்த ஒருவனிடமிருந்தே என்று தானே அர்த்தம்?நமஸ்காரத்தை இவர்கள்-இந்த ஸாமிகள், ஆஸாமிகள் எவரானாலும் இவர்கள்-வாங்கிக் கொள்ளவில்லை, இவர்களுக்கு அந்த 'ரைட்'இல்லை என்கிறபோது ஆசீர்வாதம் மட்டும் இவர்கள் எப்படிப் பண்ண முடியும்?ஈச்வரனுக்குச் செய்யப்பட்ட நமஸ்காரத்துக்குப் பதிலாக இவர்கள் யார் ஆசீர்வாதம் பண்ண?அதனால் விஷயம் தெரிந்தர்களாயிருந்தால், ஒரு மரியாதையை, ஸம்ப்ரதாயத்தை உத்தேசித்து ஆசீர்வசனம் சொன்னாலும். தங்களுக்குச் செய்யப்பட்ட நஸ்காரத்தை வாஸ்தவத்தில் அவனுக்கே அர்ப்பணம் பண்ணிவிட்டு, 'அப்பா!இந்தக் குழந்தையை நீ எப்படி ஆசீர்வாதம் பண்ண நினைக்கிறாயோ அப்படிப்பண்ணு'என்று தாங்களும் மனஸுக்குள் அவனிடம் ஒரு நமஸ்காரம் பண்ணிக் கேட்டுக்கொள்ளத்தான் செய்வார்கள். நமஸ்காரம் பண்ணுகிறவனுக்காகப் பண்ணப்படுபவரும் ஈச்வரனிடம் மனஸுருகி வேண்டிக்கொண்டு நமஸ்காரம் பண்ணும்போது, ஈச்வரன் அவரை முன்னிட்டு அவனுக்கு இன்னும் கொஞ்சம் சேர்த்து க்ருபை பண்ணுவான்.

'உங்களுக்குப் பண்ணுகிற நமஸ்காரங்களையெல்லாம் நானே வாங்கிக் கொள்வேன். பதிலுக்கு ஆசீர்வாதம் மட்டும் நீங்கள் பண்ணவேண்டும்'என்று ஈச்வரன் நிச்சயம் இருக்கமாட்டான். ஸகல ஆசீர்வாதமும் அவன் பண்ணுவதுதான்.

'ரொம்ப பெரியவா, மஹான்னு சொல்றவா, அவாளெல்லாம் ஆசீர்வாதம் பண்ணினாளே, அப்படியும் பலிக்காமப் போயிடுத்தே!'என்று சில பேர் நொந்து கொள்வதைக் கேட்கிறோம். (இப்படி நடப்பதற்கு) என்ன அர்த்தம்?ஒன்று, அந்தப் பெரியவர், 'இவர்களுக்கு ஏதோ தற்கால சாந்தியாக இருக்கட்டும். எப்படியும் கர்மா இவர்களைப் பழிவாங்கத்தான் போகிறதென்றாலும், அப்படிப் பழிவாங்கின அப்புறம் இவர்கள் அழுதுவிட்டுப் போகட்டும். இப்போதே பிடித்து அழவேண்டாம் அதனால் கொஞ்சம்

ஆறுதலாகத்தான் சொல்லி வைப்போமே'என்று நல்லபடியாக ஆசீர்வாதம் பண்ணியிருக்கலாம். அல்லது, ஏதோ ஒரு மஹாமாயை, அதன் விளையாட்டில், அவரும்கூட ஈச்வர ஸங்கல்பத்தைத் தெரிந்து கொள்ளாமல், அல்லது 'அவனுடைய ஆசீர்வாதம்தான் தன் மூலம் பாயவேண்டும்;தான் நிமித்த மாத்ரந்தான் (கடவுளின் கருவியளவுதான்)'என்பதை மறந்து, தானே ஆசீர்வாதம் பண்ணியிருக்கலாம். ஈச்வரனுடைய ஆசீர்வாதம் ஒருத்தரிடம் புகுந்து அவருடைய ஆசீர்வாதம் மாதிரி வந்தாலொழிய எவருடைய ஆசீர்வாதமும் அதுவாகவே பலித்துவிடாது.

சிஷ்யன், பக்தன் போன்றவர்களின் மனஸில் ஒரு நல்ல விநயமான எண்ணமாகப் புகுந்து அவர்களை நமஸ்காரம் பண்ண வைக்கிறவனுங்கூட ஈச்வரன்தான்!அப்புறம் அவர்கள் யாருக்கு நமஸ்காரம் செய்தாலும் அதை வாங்கிக் கொள்கிறவனும் அவன்தான். அதற்கப்புறம் அவர்களுக்குள் புகுந்து ஆசீர்வாதம் செய்கிறவனும் அவனேதான்.

பலருடைய நமஸ்காரங்களுக்கும் பாத்ரராகிற எல்லாருடைய ஆசீர்வாதங்களையும் பண்ணுவிக்கிறவன் அவனொருத்தன்தான். அதாவது எல்லா பக்திகளுக்குமாக,-அறியாத நிலையில் குரு பக்தி, ஈச்வர பக்தி என்று நாம் பிரித்துப் பிரித்துப் பலபேரிடம் செலுத்துகிற எல்லா பக்திகளுக்கும் பதிலாக-அப்படிப் பல ரூபத்திலிருக்கிறவர்கள் செய்கிற க்ருபைகளும் அவன் ஒருத்தனே செய்வதுதான்.

குருவுக்கு ஸொந்தமாக க்ருபா சக்தி என்று ஒன்று எப்படி உண்டாகமுடியும்?ஸகல சக்திகளும் அந்த ஈச்வரன் ஒருவனைச் சேர்ந்தவைதானே?அவனோடு சேர்ந்திருந்து அவனிடமிருந்துதானே குருவும் சக்தி பெறுகிறார்?குரு என்கிறவர் அந்த ஸ்தானத்துக்கு உயர்ந்ததும் ஈச்வர க்ருபையால்தான். குருவான அப்புறமும் ஈச்வரனுடைய க்ருபையை நம்பி,அதைத்தான் பற்றிக்கொண்டு அவரும், இருக்கிறார். ஆகவே, அவருடைய க்ருபா சக்தி என்று தனியாக ஒன்று இல்லை. அதுவும் ஈச்வர சக்திதான். திருவருள், குருவருள் என்று இரண்டு சொல்வதில் குருவருள் என்பதும் திருவருளே இவர் மூலமாக வருவதுதான்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

## ச்லோகப் பொருளில் மாறுதல்

இப்படி ஆராய்ந்து பார்த்துக்கொண்டு போனால் முதலில் சொன்ன ச்லோகத்தைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளும்படி ஆகும். (ச்லோகத்தில்) என்ன பார்த்தோம்?'எவனுக்கு ஈச்வர பக்தி இருக்கிறதோ, அதற்குக் குறைச்சலில்லாத குரு பக்தியும் இருக்கிறதோ அவனுக்கு ரஹஸ்யார்த்தங்களெல்லாம் ப்ரகாசிக்கும்-அதாவது ஞான ஸித்தி, மோக்ஷ ப்ராப்தி பர்யந்தம் எல்லாம் கிட்டிவிடும்'என்று பார்த்தோம். இப்போது விசாரணை பண்ணிப் பார்த்ததில், ஈச்வரனையே குருவாக, அல்லது குருவையே ஈச்வரனாகக்கொண்டு ஒருவரிடம் ஒரே பக்தியை-இன்னொருவருக்கு மிச்சம் மீதி வைக்காமல் 'அநன்யம்'என்பதாக ஒருரிடமே முழு பக்தியையு ம்-வைத்துவிட்டால் போதும்;அதுவே ஞான ப்ரகாசத்தைத் தந்து மோக்ஷத்தில் சேர்த்துவிடும் என்று தெரிகிறது.

நடுவிலே இன்னொரு விஷயமும் பார்த்தோம். எதுவுமே தானாகப் பலன் தராமல், பலதாதாவான ஈச்வரன்தான் பலன் தருகிறான் என்பதற்கேற்ப நம்முடைய பக்தியும் அதுவே ஞானம், மோக்ஷம் முதாலனவற்றைத் தருவதற்கில்லை;நம்முடைய பக்தியைப் பார்த்து மெச்சி ஈச்வரன் காட்டுகிற க்ருபையினால்தான் பலன் கிடைக்கிறது என்று பார்த்தோம். அப்புறம் பல பேரைக் குறித்ததாகப் பல பக்திகள் இல்லை, ஒரே ஈச்வரனுக்கு உரித்தாகும் ஒரே பக்திதான் இருக்கிறது;இது போலவே பக்திக்கு ப்ரதியாகப் பெறும் க்ருபையும் பல பேர் பண்ணுவதில்லை, ஒரே ஈச்வர க்ருபைதான் பல பேர் மூலமாக வருகிறது என்று பார்த்தோம்.

இப்படிப்பட்ட பல ரூபங்களுக்குள் குரு ரூபத்தில் ஈச்வரன் க்ருபை பண்ணும்போதுதான் என்றும் அழியாத அமரமான ஸொத்தை ஒருவனுக்கு அநுக்ரஹிக்கிறான். ஞானச் செல்வத்தை அளித்து அவனை நித்யானந்தத்தில்

சேர்க்கிறான்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

ஈசனும் ஆசானும்

### ஒருவரே போதுமெனில் அவர் ஈச்வரனா, குருவா ?

இப்போது ஒரே ரூபத்தில் முழு பக்தியையும் செலுத்தி விட்டாலேபோதும் என்கிறபோது, 'ஈச்வரன்தானே குரு?அதனால் ஈச்வரனிடமே அநன்ய பக்தி பண்ணிவிடுவோம்'என்று இருக்கலாமா?அல்லது 'குரு என்பவர் ஸாக்ஷாத் ஈச்வரன் தானே?குருஸ்-ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம என்கிறோமே?அதனால் குருவிடமே பூர்ண பக்தியும் செலுத்தி விடுவோம்'என்று இருக்கலாமா?

இப்போது எடுத்துக்கொண்டிருக்கிற topic குருவாக இருப்பதால் குருவே ஈச்வரன் என்று அவர் ஒருத்தரிடமே முழு பக்தி விச்வாஸமும் வைத்து சரணாகதி பண்ணிவிட வேண்டுமென்றுதான் சொல்லப் போகிறேன்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

ஈசனும் ஆசானும்

### மாறுபாட்டில் ருசியே மனித இயற்கை

மநுஷ்ய நேச்சர் (எனக்குத்) தெரியமாலில்லை. ஸாதாரண மநுஷ்யர்கள் என்றில்லை, பக்குவ ஸ்திதியில் ரொம்ப தூரம் முன்னேறியவர்களாக இருந்தால்கூட, மநுஷ ஸ்வபாவம் எப்படியிருக்கிறதென்றால் :ஒன்றிலேயே எக்காலமும் முழு

மனஸையும் கொடுப்பதென்றால் முடிவதில்லை. எத்தனை நன்றாயிருந்தாலும் ஒன்றிடமே முழு ஈடுபாட்டை ஸதா காலமும் வைக்க முடிவதில்லை. இன்றைக்குச் சமையல்-ஸாம்பார், ரஸம், கறி-நன்றாகத்தானிருக்கிறது அத்ருப்திக்குக் கொஞ்சங்கூட இடமில்லை. ஆனால் நித்யம் (தினந்தோறும்) இதே சமையல் என்றால் பிடிக்கிறதா?கறி காய்களை, குழம்புத் தானை மாற்றத் தோன்றுகிறது!அப்புறம், 'இது எதுவுமே வேண்டாம் ஒரு நாள் சித்ரான்னங்களாகச் சாப்பிடலாம்'என்று தோன்றுகிறது. வித்வான் எத்தனை நன்றாகப் பாடினாலும் அதே பாட்டு, அதே ராகத்தை ஒவ்வொரு கச்சேரியிலும் பாடினால் அலுத்துப் போகிறது. எதில் (எந்தத் துறையில்) போனாலும் இப்படித்தான் பல தினுஸாக, மாறுபாடாக வேண்டியிருக்கிறது. அவ்வப்போது ஒவ்வொன்றிடமும் முழு ஈடுபாடு இருந்தாலும்-இன்றைக்குத் தயிர்வடை என்றால் சப்பு கொட்டிக்கொண்டு ஐந்து ஆறு என்று உள்ளே தள்ளினாலும், நாளைக்கு, நாளன்றைக்கு, நாலாம் நாள், அஞ்சாம் நாளும் அதுவேதான் என்றால், இன்றைக்குச் சப்புக் கொட்டினவர்களே அன்றைக்கு முகத்தைச் சுளிக்கிற மாதிரி-திரும்பத் திரும்ப அது ஒன்றேதான் என்று வரும்போது அதிலே ருசி, ஈடுபாடு குறைந்து விடுகிறது. இது தெரிந்துதான் நம்முடைய மதத்தில் இத்தனை ஸ்வாமி, விதவிதமான ரூபம், விதவிதமான அலங்காரம், விதவிதமான வாஹனம், அததற்கும் விதவிதமான பூஜா பத்ததி என்று வைத்திருக்கிறது.

கோயிலுக்குப் போகிறோம். பிள்ளையார் ஸந்நிதியில் நிற்கிறோம். அப்போதைக்கு ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம் மனஸு குவிந்த மாதிரிதான் இருக்கிறது. அப்புறம் கையை, காலை சொறிந்து கொள்கிறோம். மனஸு பிய்த்துக்கொண்டு கிளம்பி விடுகிறது!அப்படியே எந்தக் குப்பைத் தொட்டிக்கு வேண்டுமானாலும் ஓடட்டும் என்று விட்டு விடுவதா?அப்படி விட்டு விடாமல், நல்லதிலேயே, தெய்வ ஸம்பந்தமாகவே அந்த மனஸை இழுத்தால்தானே தேவலை?எப்படி இழுப்பது?பாழும் மனஸுக்கு இந்த விகநேச்வர மூர்த்தி, தொப்பையும் தொந்தியுமாக இத்தனை அழகாக உட்கார்ந் திருந்துங்கூட, அவரிடமே தொடர்ச்சியாக ஒட்டிக்கொண்டிருக்க முடியவில்லையே!'பரவாயில்லையப்பா!'என்று இங்கேதான் நம் ஸமயாசார புருஷர்கள் ஆறுதல் தர வருகிறார்கள்.

'மனஸின் நேச்சர் அப்படித்தான் அப்பா!அதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் திருத்தி நிலையாக ஒருமுகப் படுத்த முடியுமப்பா!அதற்கு எதிலும் 'சேஞ்ச்'வேண்டும். தெய்வ ஸம்பந்தமாகவுங்கூட அப்படி வேண்டும். அதையும்தான் நம்முடைய மதம் தருகிறதே!விகநேச்வரரிடம் ஈடுபாடு குறைகிறதா, அழாதே!இதே 'சேஞ்சா'க ஸுப்ரஹ்மண்யர் ஸந்நிதி, அப்புறம் இன்னும் பல 'சேஞ்ச்'கள் -அம்மன், ஸ்வாமி, தக்ஷிணாமூர்த்தி, துர்க்கை, நடராஜா, மநுஷ்ய ரூபத்தில் வந்த அறுபத்து மூவர் என்று எல்லாம் ஒன்று சேர்த்துத்தானே கோவில் என்று வைத்திருக்கிறோம். ஒவ்வொன்றிடமும் ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம் மனஸ் ஈடுபட்டுக் கும்பிட்டு விட்டுபோயேன். மொத்தத்தில் ஒரு கணிசமான நாழி உன் மனசு தெய்வ ஸம்பந்தமாகவே ஈடுபட்டிருக்கும்'என்கிறார்கள்.

நம்முடைய மதத்தின் சிறப்புக்களிலெல்லாம் பெரிய சிறப்பாக ஒன்று தோன்றுகிறது:ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றேதான் என்று காட்டுகிற ஒரே மதம் ஹிந்து மதம்தான் என்று பலபேர், அறிவாளிகள், அந்நிய தேசத்தவர்கள்கூட, ரொம்பவும் சிறப்பித்துச் சொல்கிறார்கள். 'எந்த மதத்திலும் இல்லாத அத்வைத ரத்னம் இருக்கிற இந்த மதத்தில், எந்த மதத்திலும் இல்லாத அளவுக்கு இத்தனை த்வைதமான ஆசார அநுஷ்டானங்களும், சாமிப்பட்டாளமும் இருக்கிறதே!இவை ஒன்றுக்கொன்று ஒரே முரண்பாடாக இருக்கிறதே'என்று அவர்களில் ரொம்பப் பேர் வருத்தப்படுகிறார்கள். ஆனால் எனக்கோ என்ன தோன்றுகிறதென்றால், அத்வைதம் நம்முடைய பெரிய சிறப்புத்தான் என்றாலும், அதைவிடவும் சிறப்பாக எது தோன்றுகிறது என்றால், இப்படி ஒன்றேயான அத்வைதத்தைச் சொன்ன மதத்திலேயே வித்யாஸம் வித்யாஸமாக இத்தனை வர்ணாச்ரம வ்யவஸ்தைகளும், இத்தனை பட்டாளமாக தெய்வங்களும் வைத்திருப்பதுதான்!அத்வைதம் ஏக பரமாத்மா என்பது ஐடியல். இத்தனை ஸ்வாமி பட்டாளம், இத்தனை விதமான ஆசார வ்யவஸ்தைகள் என்பது ப்ராக்டிகல். ப்ராக்டிகலில் ஆரம்பித்து க்ரமேண (படிப்படியாக) முன்னேறினால்தான் ஐடியலுக்குப் போய்ச் சேர முடியும். இப்போதே ஐடியல் என்று யத்தனம் பண்ணினால் ஒன்று தோல்வியாக ஆகும், அல்லது, அதைவிடத் தப்பாக ஹிபாக்ரிஸியாக, போலி

வேஷமாகத்தான் ஆகும். அத்வைதத்தைச் சொன்ன மதத்தில் இத்தனை த்வைதத்துக்கு இடம் கொடுப்பதா என்று கொஞ்சங்கூடத் தயங்காமல், ஜனங்களின் மனப்பான்மையை நன்றாகப் புரிந்துகொண்டு, அநுதாபத்துடன், பரம கருணையுடன் இத்தனை தர்மாசாரப் பிரிவினைகளையும், சாமிப் பட்டாளத்தையும் இடம் கொடுத்து வைத்துக்கொண்டிருப்பதுதான் சிறப்புக்களில் பெரிய சிறப்பு. அதனால்தான் அத்வைத ஆசார்யாளான நம்முடைய பகவத் பாதாளே வர்ணாச்ரம வ்யவஸ்தைகளையெல்லாம் மறுபடி நன்றாக ஒழுங்குபடுத்தி நிலைநாட்டினார். பஞ்சாயதனம் என்று ஐந்து தெய்வங்களை வைத்துப் பூஜை பண்ணும்படியாக ஏற்பாடு செய்தார். அதோடு, 'ஸுப்ரஹ்மண்யரையும் பூஜை பண்ணு'என்கிற மாதிரி (ஸுப்ரஹ்மண்ய) புஜங்கம் பாடி வைத்திருக்கிறார். ஷண்மத ஸ்தாபனம் என்று பண்ணும்போது அதில் (ஸுப்ரஹ்மண்ய உபாஸனையான) கௌமாரம் என்பதையும் சேர்த்துக்கொண்டார். இன்னும், ராமன், க்ருஷ்ணன், நரஸிம்மமூர்த்தி, அம்பாள் என்று எடுத்துக்கொண்டாள் அதிலேயே த்ரிபுரஸுந்தரி, பவாநி, ப்ரமராம்பா, சாரதாம்பா என்று பல ரூபபேதங்கள், கங்காதி புண்ய நதிகள்-என்று ஒன்று பாக்கியில்லாமல் அத்தனை சாமிப்பட்டாளத்தின் மேலேயும் ஸ்தோத்ரங்களைப் பாடி வைத்திருக்கிறார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

### ஈசனும் ஆசானும்

### அநன்ய பக்தி : ஆதர்சத்துக்கான யுக்தியே

ஆனதினால், இப்போது நான் ஒரே மூர்த்தியிடம்-தெய்வ மூர்த்தியோ, குரு மூர்த்தியோ ஏதோ ஒன்றிடமே-பூர்ண பக்தியும் வைப்பதைப் பற்றி விசாரணை பண்ணி, குருவிடமே அப்படி வைத்துவிட்டால் போதும் என்று முடிக்கப் போவதால் நீங்கள் எல்லாரும் இப்போதே அப்படிப் பண்ண

ஆரம்பித்துவிட வேண்டுமென்று அர்த்தமில்லை. (சிரித்துக் கொண்டே) எனக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டு, என்னுடைய சந்த்ரமௌளீச்வரரை விட்டு விட்டுப் போய் விட்டீர்களானால் என்ன பண்ணுவது?அவரில்லாமல் எனக்கு எப்படி பிக்ஷை. பிழைப்பு நடக்கும்?அவரில்லாமல் மடம் என்ன ஆகிறது?ஆசார்யாள்தானே இப்படி மடங்கள் வைத்து, அவற்றில் தன் பெயரை வைத்துக்கொண்டிருக்கும் குருக்களே இத்தனை ஸ்வாமிகளையும் வைத்துக்கொண்டு ஒவ்வொன்றுக்கும் பூஜை செய்யவேண்டுமென்று ஏற்படுத்தியிருக்கிறார்! இது என் பிழைப்பைப் பற்றிய விஷயம். உங்களை எடுத்துக்கொண்டாலும், விதவிதமான மூர்த்திகள் உங்களுக்கு வேண்டித்தானே இருக்கிறது?ஏதோ ஒரு ரூபம், அதிலேயே பூர்ணத்ருப்தி என்கிற எண்ணம் வரவில்லை தானே?பாட்டில் ராகமாலிகை மாதிரி ஸ்வாமியிலும் பலதைக் கோத்துக் கொடுத்தால்தானே ரஸமாயிருக்கிறது?ஆகையினால் நான் 'ஒன்றிடமே அநன்ய பக்தி'என்று ப்ரஸங்கம் பண்ணப் போவதெல்லாமும் ஐடியலை ஞாபகப்படுத்தத்தானே ஒழியப் அதை இப்போதே அநுஸரிப்பதற்காக அல்ல!யுக்தி அநுபவம் என்று இரண்டு சொன்னேனே, அதிலே யுக்தியாகவே இப்போது அநன்ய பக்தி பற்றிச் சொல்லப் போவது. அது இப்போதே உங்கள் அநுபவமாகி விடவேண்டுமென்று அர்த்தமில்லை.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

## அநன்ய பக்தி : நடைமுறை சிரமங்கள்

ரொம்பவும் உயர்ந்த நிலைக்குப் போய்விட்டால் அநன்ய பக்தி என்பது ஆத்மாவுக்கு அன்யமாய் எதுவுமே இல்லை என்று அதிலேயே ஆணி அடித்த மாதிரி நின்று விடுகிற ஞானமாகி விடுகிறது. அதற்கு அடுத்த நிலையில், மனஸே அடியோடு போகாத நிலையில், அந்த மனஸுக்கு

ஆலம்பனமாக ஏதோ ஒன்றே ஒன்று மட்டும் தேவைப்பட்டு அதிலேயே அது பூர்ணமாக நீடித்துத் தோய்ந்திருக்கின்ற யோக்யதை கிடைத்திருக்கும். அப்போது வேண்டுமானால் ஒரு மூர்த்தியிடமே அநன்ய பக்தி பாராட்டலாம். மற்ற படி, பல மூர்த்திகளிடம், அவை ஒவ்வொன்றும் ஒரே பரமாத்மாவின் தோற்றமே என்ற உணர்வோடு, அவற்றுக்கிடையே ஏற்றத் தாழ்வுகள் இல்லை என்ற ஸமரஸ பாவத்தோடு பக்தி செலுத்தத் தோன்றுவதுதான் மநுஷ மன இயற்கை, அதிலே தப்புமில்லை.

ஒரே மூர்த்தியிடம் பக்தி, அது குரு மூர்த்தியே என்று சொன்னால் இன்னொரு தினுஸான கேள்விகூட எழும்பலாம். ஒருவருக்கே ஒன்றுக்கு மேற்பட்ட குரு இருக்கலாம். வெவ்வேறு சாஸ்திரங்களை வெவ்வேறு குருவிடம் ஒருவர் படித்திருக்கலாம். வெவ்வேறு மந்த்ர தீக்ஷைகள் வெவ்வேறு குருவிடமிருந்து பெற்றிருக்கலாம். 'பெற்றிருக்கலாம்'என்ன?உங்களிலேயே தீக்ஷை ஆனவர்களில் பல பேருக்கு அப்படித்தான் இருக்கும். நீங்கள் இந்த விஷயமாக யோசித்துப் பார்க்காவிட்டாலும், சொல்கிறேன். உங்களுக்கு ப்ரம்மோபதேசம் பண்ணியது யார்?தகப்பனார் தானே?அதாவது அவர்தான் உங்களுக்கு காயத்ரீ தீக்ஷை தந்த குரு. பல பேருக்கு இந்த விஷயம் தோன்றுவதே இல்லை. மந்த்ர தீக்ஷை என்றால் ஏதோ பஞ்சாக்ஷரீ, அஷ்டாக்ஷரீ மாதிரி பண்ணிக்கொள்வதுதானென்று நினைக்கிறார்களே தவிர, தங்களுக்கு 'மந்த்ர ராஜம்' எனப்படுகிற காயத்ரீ தீக்ஷை ஆகியிருப்பதோ, அப்படி தீக்ஷை கொடுத்த குரு தன்னுடைய பிதா என்பதோ பலபேருக்கு ஞாபகமே இருப்பதில்லை! அதோடுகூட பஞ்சாக்ஷரீ, அஷ்டாக்ஷரீ போன்ற ஏதோ ஒரு மந்த்ரமும் உபதேசமானவர்கள் உங்களில் இருப்பீர்கள். பெரும்பாலும் இவற்றைத் தகப்பனாரிடமிருந்து இல்லாமல் வேறொருவரிடமிருந்துதான் வாங்கிக் கொண்டிருப்பீர்கள். இப்போது ஒன்றுக்கு மேற்பட்ட தீக்ஷா குரு ஆகிவிடுகிறதல்லவா?ரொம்பப் பெரியவர்களாக இருந்த சில பேருக்கே ஒன்றுக்கு மேற்பட்ட குருமார்கள் இருந்திருப்பதுண்டு. சாஸ்த்ரங்களை உபதேசித்த வித்யா குரு ஒருவராகவும், ஸந்நியாஸம் கொடுத்த ஆச்ரம குரு இன்னொருவராகவும் இருப்பார்கள். இரண்டு குருக்களையுமே ஸ்தோத்ரம் பண்ணி எழுதியுள்ள

பெரியவர்கள் இருக்கிறார்கள்.

இன்னங்கூட ஒன்று. குரு பீடங்களாக மடாலயங்கள் இருக்கின்றன. இவற்றில் ஒரே ஸமயத்தில் இன்றைய மடாதிபதி, வருங்கால மடாதிபதியான இளவரசுப் பட்டம் என்று இரண்டு பேர் இருப்பதுண்டு. நாமே நிறைய இப்படி ஒரே மடத்தில் ஸீனியர் ஸ்வாமி, ஜூனியர் ஸ்வாமி என்று பார்க்கிறோம். இரண்டு பேருமே குரு ஸ்தானம்தான். இதெல்லாம் போக, ஜபம் த்யானம் என்று உட்காரும் போதே குரு பரம்பரை என்று ஆதியிலிருந்து அநேக குருக்களை த்யானம் பண்ணவேண்டுமென்று விதி இருக்கிறது.

ஆகையால் இப்படி குருவாகவே பலபேர் இருக்கிற போது ஒரே குருவிடம் அவரே ஈச்வரன் என்று முழு பக்தியையும் அநன்யமாகச் செலுத்துவது என்றால் அது நடைமுறைக்கு முடியாமல் ச்ரமமாகத்தானே ஆகும்?ஒரே பக்தியாவேசமாக 'இவர்தான் நமக்கு ஸகலமும்'என்று ஒருத்தரிடமே மனஸைக் கொடுத்துவிட்ட சில பேருக்குத்தான், 'இன்னொருவரை நினைப்பானேன்?அத்தனை குரு பரம்பரையும், அத்தனை சாமி பட்டாளமும் இவருக்குள் தான் அடக்கம்'என்ற த்ருட நம்பிக்கை உண்டாகி, மனஸூம் அதன் ஸாமான்ய நேச்சர்படி 'சேஞ்ஜ்', 'சேஞ்ஜ்'என்று பறக்காமல், அந்த ஒரு குரு சரணத்திலேயே ஒட்டிக் கொண்டுகிடக்கும்.

மனஸே போய்விடுகிற ஞானத்துக்கு அடுத்தபடியாக அந்த மனஸ் நாலா திசையில் ஓடாமல் ஒரே ரூபத்தோடு த்ருப்திப்பட்டு, அதுவே ஆலம்பனம் என்று இறுகப்பிடித்துக் கொண்டு லயித்துப் போகிற உசந்த நிலையை நினைத்துப் பார்த்துக்கொண்டோமானால், அப்படிப்பட்ட நிலையில்தான் மனஸானது சிதறாத பக்தியினால் பற்றிக்கொள்ள வேண்டிய ஒரே வஸ்து ஈச்வரன் என்ற குருவா, அல்லது குரு என்ற ஈச்வரனோ என்ற கேள்வி எழும்பும்;அதற்கு பதில் சொல்ல வேண்டியிருக்கும். ஈச்வரனே குரு என்று பக்தி பண்ணுவதை விட, குருவையே ஈச்வரன் என்று பக்தி பண்ணுவதை அங்கே அந்த இடத்தில்தான் ஏற்றதாக இப்போது உயர்த்திச் சொல்லப்போகிறேன்.

# குரு

## ஈசனும் ஆசானும்

### ' ஈசனே குரு ' என்பதும், ' குருவே ஈசன் ' என்பதும்

இந்த இரண்டுக்குமிடையில் என்ன வித்யாஸம், புரிகிற தோல்லியோ?'ஈச்வரனையே குரு'என்றால், 'இந்த லோகத்தில் மநுஷ்ரூபத்தில் தெரிகிற எந்த குருவையும் நாம் தேடிப் போகவேண்டாம்;ஈச்வரனொருத்தனிடமே பக்தி பண்ணுவோம்;அவனே நல்வழி காட்டுகிற குருவாக நம்மை அழைத்துப்போகட்டும்'என்றிருப்பது. 'குருவையே ஈச்வரன்'என்றால், அதுதான் நான் விந்நியாஸப்படுத்தப் போகிற விஷயம்:'ஈச்வரன் என்று கண்ணுக்குத் தெரியாத யாரோ ஒருத்தனை, அல்லது ஒரு சக்தியை, Power-ஐ நினைத்து பக்தி பண்ண வேண்டாம்;கண்ணுக்கு முன்னால் தெரிகிறாரே, குரு என்று-இவரே நமக்கு ஸகலமும், இவரே நமக்கு ஈச்வரன், கீச்வரன் எல்லாம்;இவரொருத்தரையே பக்தி பண்ணுவோம்'என்று இருப்பது.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

# குரு

## ஈசனும் ஆசானும்

### குருவையே ஈசனாகக் கொள்வதெப்படி ?

"அதெப்படி?அகிலாண்ட ப்ரபஞ்சங்களை ஆக்கிப் படைத்து ஆட்டுவிகக்கிற ஈச்வரன் என்ற ஒருத்தனிடம் தனியாக பக்திவேண்டாம் என்று, மநுஷ்ய ரூபத்தில் நம் மாதிரி இருந்து கொண்டிருக்கிற குருவிடமே அநன்ய பக்தி செலுத்துவது என்றால் அதெப்படி?"

அகிலாண்ட ப்ரபஞ்சங்களை ஈச்வரன் ஆக்கட்டும், ஆட்டி

வைக்கட்டும், அழிக்கட்டும். அதைப் பற்றி உனக்கென்ன வந்தது?அந்த மஹாபெரிய சக்தியில் உனக்கு வேண்டியது என்ன?துளிப்போற க்ருபை- உன் அழுக்கைப் போக்கடிப்பதற்காக;ஸம்ஸாரத்திலே மாட்டிக்கொண்டு முழிக்கிற உன்னை ரிலீஸ் பண்ணுகிறதற்காக. உனக்கு வேண்டியது உன் விமோசனம் தான். அகிலாண்ட வியவஹாரம் அவன் ஸமாசாரம். மாயையோ, லீலையோ, actual ஸ்ருஷ்டியோ எதுவானாலும் அது அவன் கார்யம். அவனுடைய மாயை அல்லது லீலை அல்லது ஸ்ருஷ்டியாக இருக்கிற அகிலாண்டங்களை அவன் என்ன பண்ணிக்கொள்கிறானோ பண்ணிக் கொண்டு போகட்டும். அதிலே நீ தலையிட்டு உனக்கும் ஒன்றும் ஆகவேண்டாம். அவனுக்கும் ஒன்றும் ஆகவேண்டாம். உனக்குத் தெரிவது, உனக்குத் தெரிவது, உன் அழுக்கும் நீ கட்டிலே மாட்டிக்கொண்டு கஷ்டப்படுகிறதும்தான். இது போயாகணும். இதைப் போக்குகிறது எதுவோ அது ஒன்று தான் உனக்கு வேண்டியது. போக்கடிக்கிற வஸ்துவை எவர் தருகிறாரோ அந்த ஒருத்தர்தான் உனக்கு வேண்டும். ஆகையினால் உன்னை காப்பாற்றி, விமோசனம் தருகிற அந்த வஸ்துவான ஞானத்தைத் தருபவராக குரு என்று இருக்கிறாரே, இவரொருத்தரே உனக்குப் போதும். உன்னைக் கடைத்தேற்றுபவர்தான் உனக்கு வேண்டுமேயொழிய, இதற்கதிமாக அகிலாண்ட ப்ரபஞ்சங்களை ஆட்டி வைக்கிற மஹாசக்தன் என்பதற்காக ஒரு ஈச்வரன் வேண்டியதில்லை.

"ஆமாம், இந்த குரு எனக்கு ஞானம் தருகிறார் என்றால் அவருக்கு மட்டும் அந்த ஞானம் எங்கிருந்து வந்தது?அதை எனக்குத் தருகிற க்ருபை அவருக்கு இருக்கிறதென்றால் அதுவும் எங்கேயிருந்து வந்தது?எல்லாவற்றுக்கும் மூலம் ஈச்வரன்தானே?"

இருக்கட்டும்!நான்தான் சொன்னேனே, ஈச்வரன் ஸகலமும் நிரம்பிய ஸர்வசக்தி ஸமுத்ரமாகவே இருக்கட்டும். ஞான ஸமுத்ரமாக, க்ருபா ஸமுத்ரமாக எல்லாம் அவனே இருக்கட்டும். உன் அழுக்கை அலம்ப அத்தனை ஸமுத்ரமும் வேண்டாம்தானே?ஊற்றிலே, குழாயிலே கங்கை வருகிறதென்றால் அதைக் குடித்தாலே போதும்தானே?கங்கா ப்ரவாஹத்திலேயேதான் மொண்டாக வேண்டுமென்று இல்லையோல்லியோ?அந்த மாதிரி ஞானஸமுத்ரத்திலிருந்து,

க்ருபா ஸமுத்ரத்திலிருந்து உனக்குப் போதுமான ஊற்றாக, குழாய் ஜலமாக குரு வந்திருக்கிறார். உனக்கு முடிந்த முடிவாக எந்த ரிலீஸ் வேண்டுமோ, எந்தப் பேரானந்தம் வேண்டுமோ அதைக் கொடுத்து தாஹம், தாபம் தணிவிப்பதற்கு அவரே போதும்.

யாரோ ப்ரபு லக்ஷ ப்ராம்மண போஜனம் செய்யப் போகிறார். அதற்காக மலை மலையாக சாப்பாட்டு வகைகள் கொட்டிக் கிடக்கிறது. ஆனாலும் உனக்கு வேண்டியது ஒரு இலைச் சாப்பாடுதானே? உனக்கு ப்ரபுவைத் தெரியாது. ஆனால் அவருக்கு வேண்டப்பட்ட ஒருவரைத் தெரியும். இவரிடம் கேட்டுக்கொண்டால் இவரே காரியரில் போட்டு எடுத்துக்கொண்டு வந்து நீ இருக்கிற இடத்திலேயே கொடுத்துவிடுவார். அப்புறம் ப்ரபுவிடம் போய் நீ எதற்கு நிற்கவேண்டும்? சாப்பாடு அவருடையதாகவே இருக்கட்டும். அதற்காகப் அவரைப் போய் நீ தொந்தரவு பண்ணவேண்டியதில்லை. அவர் அதை எதிர்பார்க்கவும் இல்லை. 'உன்னிடம் வருகிறவர்கள் யாரானாலும் கொடுத்துவிட்டுப்போ'என்று அந்த வேண்டப்பட்ட நபருக்கு அவரே தாராளமாக உரிமை கொடுத்திருக்கிறார். அவரும் (அந்த நபரும்) ப்ரபுவின் சாப்பாட்டைத்தான் தாம் போடுகிறோமே தவிர, தாமாகவே போடுவதாக பாத்யத்தை கொண்டாடிக்கொள்தில்லை. ஈச்வரன்தான் ஞானத்தை அநுக்ரஹிக்கும் சக்தியை குருவுக்குக் கொடுத்திருக்கிறான். அவரும் தாமே ஞானம் அளிப்பதாகக் கொஞ்சம்கூட உரிமை பாராட்டுவதில்லை. ஆனாலும் ஈச்வரனே இப்படி ப்ரியப்பட்டு மற்றவர்களுக்கு ஞானம் வழங்கும்படியான சக்தியை இவருக்கு, குரு என்கிறவருக்கு, வழங்கியிருக்கிறானென்றால், தங்களைக் கடைத் தேற்றுவதான பரம லக்ஷ்யத்தை நிறைவேற்றிவிடும் இந்த குருவையே சிஷ்யர்கள் ஸகலமுமாக நினைத்து அவரிடமே அநன்ய பக்தி செலுத்துவதும் அவனுக்கு உகப்பாகத்தானே இருக்கவேண்டும்?

# குரு

## ஈசனும் ஆசானும்

### குரு வழிபாட்டின் சிறப்பம்சங்கள்

ஈச்வரன் என்று தனியாக ஒருவனை வைத்துக்கொண்டு உபாஸிக்காமல் குருவையே அப்படி உபாஸிப்பதற்கு ஆதரவாகச் சில காரணங்கள் உண்டு.

முக்யமாக, ஈச்வரன் நம் கண்ணுக்குத் தெரியவில்லை. அவனை மஹான்களின் வர்ணனைகளிலிருந்து பாவனையாகத் தான் மனஸில் கல்பித்துப் பார்க்க முடிகிறது. குருவோ கண்ணுக்குத் தெரிகிறார். அவரோடு நாம் கலந்து பழக முடிகிறது. நேருக்கு நேர் கேட்டுக்கொள்ள முடிகிறது. ஈச்வரனால் நமக்கு நடக்கவேண்டிய கர்ம நாசம், ஞான ப்ராப்தி எல்லாம் இவரே நடத்திக்கொடுக்கிறார்.

நாம் நேரே ஈச்வரனிடம் ப்ரார்த்தித்துக்கொண்டால் அவன் நமக்குச் செய்கிற அநுக்ரஹத்தைவிட ஜாஸ்தியாகவே நாம் அவனை ப்ரார்த்திக்காமல் குருவையே ப்ரார்த்திக்கும்போது, அந்த குருவின் மூலம் பெற்று விடலாம்!எப்படி என்கிறீர்கள ா?நாமே நேராக ஈச்வரனிடம் ப்ரார்த்திக்கிறோம் என்றால், நம்முடைய ப்ரார்த்தனா சக்தி எவ்வளவு?ரொம்பக் கொஞ்சந்தான். மனஸின் ஆழத்திலிருந்து தீவிரமாகப் பிரார்த்திக்கவே நமக்குத் தெரியாது. அதோடு நமக்கேதான் நாம் பிரார்த்தித்துக் கொள்கிறோம். நம்முடைய ஸொந்த நலனையேதான் ஈச்வரனிடம் வேண்டுகிறோம். இதற்கு அவன் செவி சாய்க்க மாட்டானென்றில்லை. ஆனாலும் நம்முடைய அல்ப ப்ரார்த்தனா பலத்தில் நமக்காகவே நாம் வேண்டிக் கொள்வதற்கு அவன் பெரிசாக எப்படி ஒரு பலன் தருவான்?ஆனால் நாம் குருவே எல்லாம் என்று இருந்து விட்டால், 'அவர் இந்தக் குழந்தைக்காக நாம்தான் ப்ரார்த்திச்சுக்கணும்'என்று ஈச்வரனிடம் நம் சார்பில் ப்ரார்த்தனை செய்வார். அவர் நம்மைப்போல ஈச்வரனை நேரில் தெரிந்துகொள்ளாதவரில்லை. அவருடைய ப்ரார்த்தனா சக்தி மிகவும் பலமானது. நமக்கு எட்டாக்கையனாக இருக்கும் ஈச்வரனுக்கு ஸமீபத்திலேயே இருப்பவர் அவர். தன்னுடைய வலுவாய்ந்த பிரார்த்தனா சக்தியோடு அவர் நமக்காக அவனிடம் வேண்டிக்கொண்டு,

எடுத்துச் சொல்லி கேட்டுக் கொள்கிறபோது அவன் அதை நிச்சயம் கேட்கத்தானே கேட்பான்?நாம் எக்கேடு கெட்டுப் போனாலும் குருவுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. அப்படியிருந்தும் அவர் பரம கருணையோடு நமக்கு உபதேசம் பண்ணி, நம் அழுக்கைப் போக்குவதற்காகப் பாடுபட்டு, ஸ்வய நலமே கொஞ்சங்கூடக் கலக்காமல் நம் பொருட்டாகவே ஈச்வரனிடம் வேண்டிக் கொள்கிறாரென்றால் அதற்கு வால்யூ ரொம்ப ஜாஸ்திதானே?நம்முடைய ஸாதனை, ப்ரார்த்தனை ஆகியவற்றுக்காக ஈச்வரன் ஏதோ கால் பங்கு, வீசம் பங்கு அநுக்ரஹம் பண்ணுவானென்றால், நமக்காக குரு ப்ரார்த்திக்கும்போது முழுப் பங்கும் பண்ணிவிடுவான். லௌகிகத்திலேயே பார்க்கிறோமோல்லியோ?கவர்னர், மந்திரி மாதிரி ஒருவரால் நமக்கு ஒரு கார்யம் நடக்குமென்றால் நாமே அவரிடம் போய் நிற்க முடியுமா?நமக்குப் பேட்டி கிடைக்குமா?அவரிடம் சாய்கால் உள்ளவராக இருக்கிற நமக்குத் தெரிந்த ஒருவரிடம் நாம் போய் முறையிட்டாலே போதுமானதாக இருக்கிறதல்லவா?இவருடைய சிபாரிசுக்காகவே கவர்னர் நம்மைப் பார்க்கக்கூடப் பார்க்காமல் நமக்கு வேண்டிய கார்யம் ஆவதற்கு உத்தரவு போட்டு விடுகிறாரல்லவா?

ஈச்வரனிடம் நாம் போகவேண்டாம். நாம் போய் நடத்திக்கொள்வதைவிட இன்னம் நூறு பங்கு நன்றாக நமக்கு அவனிடம் சொல்லி நடத்திக் கொடுப்பதற்காக இருக்கிற குருவிடம் போய் அவரிடமே முறையிட்டுவிட்டால் போதும்.

நாமாக நம் கர்மாவைக் கழித்துக்கொள்வது கஷ்டம் குருவுக்கு ஈச்வரன் கொடுத்திருக்கிற விசேஷ சக்தியால் அவர் நம் கர்மாவிலே எவ்வளவோ பங்கு கழிந்து போவதற்கு ஸஹாயம் செய்வார். தம்முடைய தபோ சக்தியைக் கூட அதற்குச் செலவழிப்பார். பரம கருணாமூர்த்தியாகவும் த்யாகியாகவும் இருக்கப்பட்ட அவர் ஓரளவுக்குத் தாமே கூட நம் கர்மாவை வாங்கிக்கொண்டு அநுபவித்து, நமக்கு பாரத்தைக் குறைப்பார். இப்படி அவர் தம்மை வருத்திக் கொண்டுதான் நமக்கு ஈச்வரனிடமிருந்து உய்வு பெற்றுத்தரவேண்டுமென்றில்லை. அவர் அவனிடம் ரொம்ப நெருக்கமாக இருப்பவரானால் ஸ்வாதீனமாகவே அவன்கிட்டே, "இவனுக்காக இந்த அநுக்ரஹம் பண்ணு. பண்ணியே ஆகணும். (குரலை உயர்த்தி மிரட்டுவது போல:)

என்ன, பண்றயா, இல்லையா?"என்பார். "ஆஹா, பண்றேன்"என்று ஈச்வரனும் அவர் சொன்னபடியே செய்து விடுவான்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

## யதோக்தகாரி :

## சொன்ன வண்ணம் செய்த பெருமாள்

"சொன்னவண்ணம் செய்த பெருமாள்"என்ற பெயரிலேயே காஞ்சீபுரத்தில் ஒரு கோவிலில் பகவான், மஹாவிஷ்ணு இருக்கிறார். "யதோக்தகாரி"என்று ஸம்ஸ்க்ருதத்தில் சொல்வார்கள். 'யதோக்த'-'யதா உக்த':'சொன்னபடி', 'சொன்னவண்ணம்';'காரி'-செய்பவர்.

யார் சொன்னபடி பெருமாள் செய்தார்?குருவாக இருக்கப்பட்ட ஒருவர், தன் சிஷ்யன் ஊரைவிட்டுப் போகிறானா, அப்போது பெருமாளும் அவன் பின்னே துரத்திக்கொண்டு ஓடவேண்டும்;அப்புறம் அவன் ஊருக்கே திரும்பி வருகிறானா, அப்போதும் அவன் பின்னேயே துரத்திக்கொண்டு வந்துவிடவேண்டும் என்று 'ஆர்டர்'போட்டார்!பகவானுக்கே ஆர்டர் போட்டார்!அவர் சொன்னபடியெல்லாம் பகவானும் பண்ணினான். யதோக்தகாரி என்று பெயர் வாங்கினான்.

அந்த குரு யார்?சிஷ்யப்பிள்ளை யார்?ஏன் இப்படி (குரு) ஆர்டர் போட்டார்?

கொஞ்சம் கதை கேட்கலாம்.

ஆழ்வார்களில் திருமழிசையாழ்வார் என்பவர் ஒருவர். பூந்தமல்லிக்குக் கிட்டே இருக்கும் திருமழிசையில் பிறந்து வளர்ந்தவராதலால் ஊரை வைத்தே அவர் பேரைச்

சொன்னார்கள். பெரியவர்களின் பேரைச் சொல்லப்படாது என்பதால் அந்த நாளில் இப்படியெல்லாம்தான் ஊரை வைத்து, அல்லது அவர்கள் செய்த காரியத்தை வைத்து, அல்லது அவர்களுடைய மஹிமையைக் குறிப்பிடுகிறமாதிரி இன்னொரு பெயரைச் சொல்வார்கள். பெரியாழ்வார்-பெரிய ஆழ்வார், நம்மாழ்வார்-நம்முடைய, அதாவது நமக்கு ரொம்ப ஸொந்தமான ஆழ்வார் என்பவையும் இப்படிப்பட்ட காரணப் பெயர்கள்தான். காரணப் பெயரே ப்ரஸித்தி பெற்று, அம்மா அப்பா வைத்த பெயர் மறந்து, மறைந்து போய்விடுவதுமுண்டு. திமழிசையாழ்வாருக்கு பக்திஸாரர் என்று ஸம்ஸ்க்ருதப் பேர் சொல்கிறார்கள். அதுவும் காரணப் பெயராகவே இருக்குமோ என்னவோ?திருமழிசை என்பதில் மழிசை என்பது 'மஹீஸாரம்', அது மஹீஸார க்ஷேத்ரம் என்கிறார்கள். பூமிக்கே ஸாரமான ஊர் அது என்று அர்த்தம். மஹீஸாரத்தில் பிறந்து வளர்ந்தவர் பக்திஸாரர்!

அப்புறம் அவர் காஞ்சீபுரத்துக்கு வந்து வாஸம் பண்ணிக் கொண்டிருந்தார். அங்கேயிருக்கிற ஒரு பெருமாள் கோவிலில் பாசுரம் பாடிக்கொண்டும், உபதேசம் பண்ணிக் கொண்டும் அவ்வப்போது அப்படியே யோகஸமாதியில் போய்க்கொண்டும் இருந்தார்.

பொதுவாக அவரைப் பற்றி ஒன்று நினைக்க இடமுண்டு. அதாவது, 'முதலாழ்வார்கள் என்கிற மூன்று பேரும்-பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் என்ற அந்த மூன்று பேரும்-மஹாவிஷ்ணுவின் பரம பக்தர்களென்றாலுங்கூட ஸமரஸ மனப்பான்மையோடு சிவனையும் உயர்வாகச் சொல்லிப் பாடினவர்கள்;திருமழிசையாழ்வார்தான் வீரவைஷ்ணவமாகவே சொல்ல ஆரம்பித்தவர்'என்று சொல்வதற்கு இடமிருக்கிறது. பெரியவர்களைப் பற்றிக் குறைவாகச் சொல்லக்கூடாது.

இதர தெய்வங்களைக் குறைத்துச் சொல்லியிருந்தாலும் அவர் பண்ணின திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி ஆகியவற்றில் விஷ்ணுவிடம் பரம பக்தியையும், யோக மார்க்கத்தின் உத்தம ஸ்திதிகளைப் பற்றியும் பார்க்கிறோம். இத்தனை நாழி ஒருவரிடமே அநன்ய பக்தி பண்ணுவது பற்றி சொன்னேனே, அப்படி விஷ்ணு பக்தர்களை ஒரே குறியாக

அந்த ஒரு மூர்த்தியிடமே ஈடுபடுத்துகிற நோக்கத்தில்தான் அவர் இதர தெய்வங்களை மட்டம் தட்டினாலும் பரவாயில்லை என்று பண்ணியிருக்கிறாரென்று ஸமாதானம் செய்து கொள்ளலாம். அது இருக்கட்டும்.

பகவானுக்குப் பாசுரம் ஸேவிப்பது, பாகவதாளுக்கு உபதேசம் செய்வது, அப்படியே யோக நிஷ்டையில் போய் விடுவது என்று அவர் கோவிலிலேயே வாஸம் பண்ணிக் கொண்டிருந்தார். (அது) வரதராஜா கோவிலென்று நினைத்தால் அது தப்பு.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு**

**ஈசனும் ஆசானும்**

**யதோக்தகாரி :**

**காஞ்சியிலுள்ள " திவ்ய தேசங்கள் "**

காஞ்சீபுரத்துப் பெருமாள் கோவில் என்று சொன்னால் இப்போது பிரதானமாகவுள்ள வரதராஜாவைத்தான் நினைக்கத் தோன்றுகிறதென்றாலும், வாஸ்தவத்தில் அந்த நகர எல்லைக்குள்ளேயே ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்த "திவ்யதேசங்க"ளாகப் பதினாலுவிஷ்ணுவாலயங்கள் இருக்கின்றன. சைவத்தில் "பாண்டிப் பதினான்கு"என்று தெற்கு ஜில்லாக்கள் அத்தனையிலுமாகப் "பாடல் பெற்ற ஸ்தல"ங்கள் பதினாலுதான் இருக்கின்றனவெனில், வைஷ்ணவத்திலோ தொண்டை மண்டலத்தின் ராஜதானியான காஞ்சீபுரம் ஒன்றுக்குள்ளேயே பதினான்கு முக்யமான விஷ்ணு ஆலயங்கள் இருக்கின்றன!அவற்றில் ஸமீபகாலமாகச் சிற்பச் சிறப்பு, சரித்ர முக்யத்வம் ஆகியவற்றால் வைகுண்டப் பெருமாள் கோயில் அறிவாளிக்களுக்கிடையில் கொஞ்சம் ப்ரபலமாகி வருகிறது. அதைப் பற்றிக் கொஞ்சம் சொல்கிறேன்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

ஈசனும் ஆசானும்

பல்லவரும் சைவ-வைணவமும் :

வைகுண்டப் பெருமாள் கோயில்

மோக்ஷம் என்பதை சைவர்கள் கைலாஸம் என்பார்கள். வைஷ்ணவர்கள் வைகுண்டம் என்பார்கள். காஞ்சீபுரத்தில் கைலஸாநாதர் கோயிலும் இருக்கிறது:வைகுண்டப் பெருமாள் கோயிலும் இருக்கிறது!இரண்டுமே சிற்ப விசேஷம் படைத்தவையாகவும் இருக்கின்றன. காஞ்சீபுரத்தை ராஜதானியாகக் கொண்டிருந்த பல்லவ ராஜாக்கள் நல்ல வைதிகப் பற்றுள்ளவர்கள். முறையான வைதிகம் என்றால் அது சிவ பக்தி, விஷ்ணு பக்தி இரண்டிற்கும் ஒரே மாதிரி இடம் கொடுப்பதாகவே இருக்கும். பல்லவ ராஜாக்கள் தங்களை சிவ பக்தர்களான 'பரம மாஹேச்வரர்'களாகவும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள், விஷ்ணு பக்தர்களான 'பரம பாகவதர்'களாகவும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதோடு த்ரிமூர்த்திகளில் இன்னொருவரான ப்ரஹ்மாவையும் விடாமல் 'பரம ப்ரஹ்மண்யர்'கள் என்றுகூடத் தங்களைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆரம்பகாலக் கோயில்களை எழுப்பியபோது ப்ரஹ்மாவுக்கும் இடம் கொடுத்தார்கள். ஆனால் அது நம்முடைய வழிபாட்டு மரபிலே சேராமல் மங்கி மறைந்து போய்விட்டது. 'ப்ரஹ்மண்யர்'என்பது ஸுப்ரஹ்மண்ய பக்தரைக் குறிப்பது என்றும் அபிப்ராயம் உண்டு. பல்லவர் கோயில் திருப்பணிகளில் பார்வதீ பரமேச்வரர்களுடன் பால ஸுப்ரஹ்மண்யரும் சேர்ந்திருப்பதான ஸோமாஸ்கந்த மூர்த்தம் சிலா (கல்) வடிவிலேயே லிங்கத்தின் பின்னால் மூலஸ்தானத்தில் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அவர்களுடைய முருகபக்தி தெரிகிறது. ஆதிப் பல்லவ ராஜா ஒருத்தனின் பெயரே ஸ்கந்த சிஷ்யன் என்பதாகும். ஸிம்ஹ விஷ்ணு, நரஸிம்ஹன் என்று விஷ்ணுப்

பெயர்கள்;பரமேச்வர வர்மா, நந்திவர்மா என்று சிவ ஸம்பந்தமான பெயர்கள்-இப்படி அந்த ராஜ வம்சத்தில் இரண்டு விதமாகவும் பார்க்கிறோம். சைவம் வைஷ்ணவம் இரண்டையும் ஸமமாக மதிக்கும் சுத்த வைதிகமாகப் பல்லவர்கள் இருந்துகொண்டிருந்தார்கள். நடுவாந்தரத்தில் மஹேந்த்ர வர்மா ஜைனனாகப் போனாலும், அப்புறம் அப்பர் ஸ்வாமிகளின் மஹிமையினால் வைதிகத்திற்கே திரும்பினான். சைவ-வைஷ்ணவ ஸமரஸம் கொண்டவர்களானாலும் இஷ்ட மூர்த்தி என்று வரும்போது பல்லவ ராஜாக்களில் சிலருக்கு அது சிவனாகவும், சிலருக்கு விஷ்ணுவாகவும் இருந்திருக்கிறது.

அறுபத்து மூன்று நாயன்மார்களில் கோச் செங்கட்சோழன், புகழ்ச்சோழன் என்ற சோழ ராஜாக்களும், நெடுமாறன் என்ற பாண்டியராஜாவும், சேரமான் பெருமாள் என்ற சேர ராஜாவும் இடம் கொண்டிருப்பது தெரிந்திருக்கலாம். நெடுமாறனின் பத்தினியான பாண்டியராணி மங்கையர்க்கரசியும் ஒரு நாயனார். ஐயடிகள் காடவர்கோன் என்றும் ஒரு ராஜா அறுபத்து மூவரில் ஒருவராக இருந்திருக்கிறார். பன்னிரு சைவத் திருமுறைகளில், பதினொன்றாவதான திருமுறையில் 'திருவெண்பா'என்பதைப் பாடியிருப்பவர் அவர்தான். கோவில் கோவிலாகப் போய் வெண்பாப் பாடிக்கொண்டிருந்த அந்த சைவ ராஜாவைப் பல்லவ வம்சத்தைப் சேர்ந்தவரென்றே சேக்கிழார் (பெரிய புராணத்தில்) சொல்லியிருக்கிறார். அதாவது சேர-சோழ-பாண்டிய ராஜாக்களில் நாயன்மார் இருந்ததுபோலவே பல்லவ ராஜாக்களிலும் ஒரு நாயனார் இருந்திருக்கிறார்.

ராஜஸிம்ஹன் என்ற இரண்டாவது நரஸிம்ஹன் பெரிய சிவ பக்தனாக இருந்தான். சைவாகமங்களில் அவன் நல்ல அப்யாஸம் பெற்றவன். 'சிவ பாத சேகரன்'என்று ராஜ ராஜ சோழனுக்குப் பட்டம் இருந்ததென்றால் அவனுக்கு முன்னூறு வருஷம் முந்தியே ராஜ ஸிம்ஹப் பல்லவனுக்கு 'சிவ சூடாமணி'என்ற பட்டம் இருந்திருக்கிறது. இவன் தான் முதல் முதலாகப் பாறைக் கல்களைக் கட்டிடமாக அடுக்கிக் கோயில் கட்டினவன். அவனுக்கு முன் காலத்தில் மலைகளையும், குன்றுகளையும், பெரிய ராக்ஷஸப் பாறைகளையும் அப்படியே போட்டுக் குடைந்துதான் ஆதி பல்லவர்கள்

கோயில் எழுப்பினார்களே யொழிய, கல்லின் மேல் கல் அடுக்கிக் கட்டிடமாகக் கட்டவில்லை. ராஜஸிம்ஹப் பல்லவன் கட்டின அந்தக் கோவில்தான் கைலாஸநாதர் ஆலயம். ஒரே சிற்ப மயமாகப் பொரித்துக் கொட்டிக் கட்டிய கோவில் அது. ஏகப்பட்ட சிற்பம் என்றாலும் ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து வெகு நுணுக்கமாகப் பண்ணியிருக்கும். கலா ரஸிகர்கள் காஞ்சீபுரக் கோவில்களுக்குள்ளேயே, ஏன், தமிழ்நாட்டுக் கோவில்களுக்குள்ளேயே அதற்குத்தான் 'ஃபர்ஸ்ட் ப்ரைஸ்'கொடுக்கிறார்கள்!அதிலுள்ள சிற்பங்களெல்லாம் புராண ஸம்பந்தமானவை. பெரும்பாலும் சிவ லீலைகள் தானென்றாலும் மஹாவிஷ்ணுவைக் குறித்ததாகவும் சில இருக்கின்றன.

அதற்கடுத்தபடியாக நிறையச் சிற்பம் கொண்டதுதான் வைகுண்டப் பெருமாள் கோவில். அதற்குப் பழைய பெயர் -ஆழ்வார் பாசுரத்தில் வருகிற பெயர், "பரமேச்சுர விண்ணகரம்"என்பது. "விண்ணகரம்"என்றால் விண்ணாட்டு நகரம் இல்லை!'விஷ்ணுக்ருஹம்'தான் 'விண்ணகர ம்'ஆகிவிட்டது. ஸிம்ஹ விஷ்ணுவின் பெயரை மஹாபலிபுரத்தில் 'சிம்ம விண்ண போத்ராதி ராஜன்'என்றே செதுக்கியிருப்பதிலிருந்து 'விஷ்ணுக்ருஹம்'தான் 'விண்ணகர'மாகியிருக்கிறதென்று புரிந்துகொள்ளலாம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## ஈசனும் ஆசானும்

## பல்லவர் தோற்றுவாய்

'போத்ராதிராஜன்'என்னவென்றால்...

பல்லவம் என்றால் துளிர். போதம் அல்லது போத்ரம் என்றாலும் துளிர் என்றே அர்த்தம். அச்வத்தாமாவிடம் ஒரு வனத்திலே தேவ ஸ்த்ரீ ஒருத்தி ஒரு பிள்ளையைப் பெற்றாள்

என்றும், அதைத் துளிர்ப்படுக்கையிலே போட்டு விட்டு தேவலோகம் போய்விட்டாள் என்றும், அந்தப் பிள்ளைதான் துளிரில் வளர்ந்ததால் 'பல்லவன்'என்று பெயர் பெற்று ராஜாவாக ஆட்சிக்கு வந்தான் என்றும் கதை இருக்கிறது. தெலுங்கு தேசத்தில் அமராவதி என்ற இடத்திலுள்ள ஸிம்ஹவர்ம பல்லவனின் ஸம்ஸ்க்ருதக் கல்வெட்டில் இந்தக் கதையை விரிவாகச் சொல்லியிருக்கிறது. அரக்கோணத்திற்கு ஏழெட்டு மைலிலுள்ள வேலூர் பாளையம் என்கிற இடத்தில் அகப்பட்ட மூன்றாவது (விஜய) நந்தவர்மாவின் தாம்ர சாஸனத்திலும் இந்தக் கதையைக் குறிப்பிட்டிருக்கிறது. அச்வத்தாமா பாரத்வாஜ கோத்ரத்தைச் சேர்ந்த ப்ராம்மணர். அவருடைய பிதாவான த்ரோணாசார்யாருக்கு பாரத்வாஜர் என்றே ஒரு பெயர். பல்லவ ராஜாக்கள் தங்களை பாரத்வாஜ கோத்ரக்காரர்களாகவே சாஸனங்களில் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

பல்லவ ராஜாக்களே சாஸனங்களில் இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டாலும், பழைய தமிழ் இலக்கியங்களிலிருந்து ஆராய்ச்சி பண்ணித் தமிழபிமானிகள் பல்லவர்களின் 'ஆரிஜின்'(தோற்றுவாய்) பற்றி வேறே ஒரு கதை சொல்கிறார்கள். நாகப்பட்டினத்துச் சோழ ராஜா ஒருத்தனுக்கு நாக கன்னிகையிடம் ஒரு பிள்ளை பிறந்தது;அவள் தொண்டைக் கொடியைச் சுற்றி அந்தக் குழந்தையை ஸமுத்ரத்தில் மிதக்க விட்டுவிட்டாள்;அதுதான் கரையேறித் தொண்டைமான் என்ற பல்லவ ராஜா ஆயிற்று என்று இந்தக் கதை. காஞ்சீ மண்டலத்துக்கே தொண்டை மண்டலம் என்று பெயர். தொண்டைக் கொடியை ஸம்ஸ்க்ருதத்தில் 'துண்டீரம்'என்பார்கள். அதனால் ஸம்ஸ்க்ருத நூல்களில் துண்டீர மண்டலம், துண்டீர சக்ரவர்த்தி என்றெல்லாம் சொல்லியிருப்பதைப் பார்க்கிறோம்.

குழந்தையை தேவ ஸ்த்ரீ படுக்கவிட்ட படுக்கையானாலும் ஸரி, நாக ஸ்த்ரீ அதன் இடுப்பில் சுற்றிய கொடியானாலும் ஸரி, இரண்டும் துளிர்களால் ஆனதுதான். துளிர்தான் பல்லவம். அதனால், எந்தக் கதைப்படி பார்த்தாலும் பல்லவர் என்ற பெயர் பொருத்தமானதாகிறது.

துளிருக்கேதான் இன்னொரு பேர் போதம், அல்லது, போத்ரம். தமிழிலும் சின்னஞ்சிறு நன்றாக உள்ள செடியைப்

'போத்து'என்றே சொல்கிறோம். 'பல்லவ மஹாராஜா'என்பதே இன்னொரு விதமான பத ப்ரயோகத்தில் 'போத்ர அதிராஜன்', 'போத்ராதி ராஜன்'என்றாயிற்று அதனால்தான் ஸிம்ஹ விஷ்ணுப் பல்லவச் சக்ரவர்த்தி என்பது 'சிம்ம விண்ண போத்ராதி ராஜன்'என்றாயிற்று.

'போத்ர ராஜன்'என்பதைத் தமிழில் 'போத்தராயன்'என்று சொல்லியிருக்கும். ஒரு வேலையும் செய்யாமல் கொழுத்துப் போனவர்களை 'போத்(த)ராசா'என்று திட்டுகிற வழக்கம் இருக்கிறதே, இந்த 'போத்(த)ராசா'கூட 'போத்ர ராஜா'விலிருந்து வந்ததுதான்!

வைகுண்டப் பெருமாள் கோவிலில் ஆரம்பித்தது, விஷ்ணுக்ருஹம், ஸிம்ஹ விஷ்ணு, போத்தராசா என்று எங்கெங்கேயோ போய்விட்டது!விஷ்ணு க்ருஹத்துக்குப் போவதற்குள் எங்கெல்லாமோ சுற்ற வைத்துவிட்டேன்!

கைலாஸம், வைகுண்டம் என்ற இரண்டில் ராஜஸிம்ஹன் கைலாஸநாதர் கோவில் கட்டினமாதிரியே, அவனுக்குப் பின் இரண்டாவது பட்டமாக வந்த நந்திவர்மா வைகுண்டப் பெருமாள் கோவில் கட்டினான். அதற்குப் 'பரமேச்வர விஷ்ணுக்ருஹம்'என்றே பழைய பெயர். விஷ்ணுவின் க்ருஹம், ஆனால் பரமேச்வரனின் பேரில் இருக்கிறது என்கிறபோதே நான் இத்தனை நேரம் சொன்ன சைவ-வைஷ்ணவ ஒற்றுமை தெரிகிறது. ஆனால் இங்கே 'பரமேச்வரன்'என்பது கோயில் கட்டிய நந்திவர்மாவின் இன்னொரு பெயரை வைத்துத்தான்!ராஜராஜன் கட்டியது ராஜராஜேச்சுரம், கங்கைகொண்ட சோழன் கட்டியது கங்கைகொண்ட சோழீச்சுரம் என்கிற மாதிரி பரமேச்வரப் பல்லவமல்லனான நந்திவர்மா கட்டிய வைகுண்டப் பெருமாள் கோவில் அவன் பெயரிலேயே பரமேச்வர விண்ணகரம் ஆயிற்று.

கைலாஸநாதர் கோவில் சிற்பங்கள் புராண ஸம்பந்தமானவையாகப் பிரஸித்தி பெற்றிருக்கின்றன. வைகுண்டப் பெருமாள் கோவில் சிற்பங்களோ சரித்ர ஸம்பந்தத்தினால் முக்யத்வம் பெற்றிருக்கின்றன.

ராஜஸிம்ஹன் ரொம்பவும் பேர் புகழோடு ஆட்சி செய்துவிட்டு காலகதி அடைந்தபின் ராஜ்யத்தில்

ஒரேயடியான குழப்பநிலை உண்டாயிற்று. சாளுக்ய ராஜாவான விக்ரமாதித்தன் காஞ்சீபுரத்தின்மீது படையெடுத்து வந்து அதைக் கைப்பற்றிக்கொண்டான். ராஜஸிம்ஹனுடைய பிள்ளையும் ஒரு பரமேச்வர வர்மாதான். அவன் ரொம்பவும் ஸ்வல்ப காலமே ஆட்சி பண்ணிவிட்டு, ஸந்ததி இல்லாமலே இறந்து போய்விட்டான். தலைப்பிள்ளைக்கு பட்டம் என்ற நம்முடைய றிக்ஷீவீனீஷீரீமீஸீவீமீ ஞூபக்ஷீமீ வழக்கப்படிப் பல்லவ வம்சத்தில் ஸிம்ஹ வர்மாவுக்கு அப்புறம் ஸிம்ஹவிஷ்ணு வழியாக ராஸிம்ஹனின் பிள்ளைவரை போன நடுக்கிளை அதோடு முடிந்து போயிற்று. அப்புறம் அதன் பக்கக் கிளைகளில் ஒன்றில் வந்த கோத்ர தாயாதியான ஹிரண்யவர்மா என்பவனிடம் பல்லவ ராஜ்யத்தின் முக்யஸ்தர்கள் தூது போய்க் கேட்டுக்கொண்ட, அவனுடைய பிள்ளையான இன்னொரு பரமேச்வர வர்மாவுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணினார்கள். அவன்தான் நந்திவர்மப் பல்லவமல்லன் என்று பெயர் வைத்துக்கொண்டு அறுபது வருஷத்திற்குமேல் ஆட்சி நடத்தினான்.

அவனுடைய இன்னொரு பெயரில் அமைக்கப்பட்ட பரமேச்வர விண்ணகரமாகிய வைகுண்டப் பெருமாள் கோவிலில் இதைப் பற்றிய கல்வெட்டு இருக்கிறது.

இப்படி எழுத்திலே வெட்டியிருப்பதைவிட முக்யமாக இந்தக் கோவிலுக்கு என்ன சரித்ர ப்ரஸித்தி என்றால், மஹாவிஷ்ணுவிலிருந்து ஆரம்பித்து ப்ரம்மா வழியாகப் பல்லவ ராஜாக்கள் அத்தனை பேரின் வம்சாவளிக் கதைகளையும்-இந்தக் கோவிலைக் கட்டினவர் வரையில்-சிற்ப வரிசைகளில் வடித்துக் காட்டியுள்ள ஒரு மண்டபம் அங்கே இருப்பதுதான்.

சரித்ர முக்யத்வம் மட்டும்தானென்றில்லாமல் மத ஸம்பந்தமான விசேஷமும் அந்தக் கோவிலுக்கு உண்டு. இங்கே மூன்று அடுக்குகளாக ஸந்நிதிகளை அமைத்து, பெருமாளின் நின்ற திருக்கோலத்தைக் கீழ் தளத்திலும், இருந்த (உட்கார்ந்த) திருக்கோலத்தை நடு தளத்திலும், கிடந்த (சயனித்த) திருக்கோலத்தை மேல்தளத்திலும் அமைத்திருக்கிறது. 'அஷ்டாங்க விமானம்'என்பதாகப் பொதுவாகச் சொல்லப்படுகிற ஆகம விதிகளின்படி இப்படிப் பல அடுக்குகளில் ஆலயம் நிர்மாணிப்பது ரொம்பவும்

அபூர்வமே. பாண்டி நாட்டில் திருக்கோட்டியூரிலுள்ள பெருமாள் கோவில், மதுரையிலேயே கூடலழகர் கோவில், காஞ்சி வைகுண்டப் பெருமாள் கோவில், இதைக்கட்டிய நந்திவர்மனின் பிள்ளையான தந்திவர்மன் காஞ்சிக்கு ஸமீபத்திலுள்ள உத்திரமேரூரில் கட்டிய ஸுந்தர வரதப்பெருமாள் கோவில் ஆகிய நாலில்தான் இந்த அமைப்பு இருப்பதாகத் தெரிகிறது.

நந்திவர்மப் பல்லவமல்லன் திருமங்கையாழ்வாரின் காலத்தில் இருந்தவன் என்று தெரிகிறது. அவனைத் தம்முடைய பாசுரத்தில் குறிப்பிட்டு அவர் பாடியிருக்கிறார்.

இந்த ஆழ்வாரிலிருந்து குரு - சிஷ்ய ஸமாசாரமாக நாம் பார்த்த ஆழ்வாருக்குப் போகலாம். சிஷ்யனுக்காக ஸ்வாமியையே, 'இப்படிப் பண்ணு, அப்படிப் பண்ணு'என்று சொல்லித் தாம் சொன்னவண்ணம் செய்ய வைத்த அந்த ஆழ்வாருக்குப் போகலாம். திருமழிசையாழ்வார் என்று பெயர் சொன்னேன், ஞாபகமிருக்கிறதல்லவா?

அவர் காஞ்சீபுரத்திலே ஒரு பெருமாள் கோவிலில் வாஸம் பண்ணி வந்தாரென்று சொல்லி அது எந்தக் கோவில் என்று சொல்வதில்தான் இருந்தேன். காஞ்சியிலுள்ள பதினாலு திவ்ய தேசங்களுக்குள் அவர் இருந்தது திருவெஃகா என்பதிலாகும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## திருவெஃகா பெருமாளின் பெருமை

திருவெஃகா மாதிரியே திருத்தண்கா என்றும் பதினாலில் இன்னொன்று இருக்கிறது. வெஃகா, தன்கா என்றால் (முறையே) வெம்மையான காடு என்றும் தண்மையான காடு என்றும் அர்த்தம். ஆதியில் காடுகளில் ரிஷிகள் பூஜை பண்ணிக்கொண்டிருந்த இடங்கள்தான் அப்புறம் நாம் பார்க்கிற க்ஷேத்ரங்களாக ஆனதால் கா, காடு என்றே

அவற்றில் பலவற்றின் பேர் இருக்கிறது-திருவானைக்கா, திருக்கோடிகா, திருவேற்காடு, திருமறைக்காடு (வேதாரண்யம்) இப்படி. தண்காவைத் தூப்புல் என்பார்கள். தூய புல்லான தர்ப்பை வளரும் இடம். வடகலை ஆசார்ய புருஷரான வேதாந்த தேசிகரின் ஜன்ம ஸ்தலம் அதுதான். தண்காவுக்கு இப்படிப் பெருமையென்றால், நம்முடைய கதைக்கார ஆழ்வார் ஸம்பந்தப்பட்ட வெஃகாவில் தான், அதன் புஷ்கரிணியில் (திருக்குளம் என்கிற பொய்கையில்) ஆழ்வார்களில் முதல்வராக இருக்கப்பட்ட பொய்கையாழ்வார் அவதாரம் செய்திருக்கிறார். அங்கேதான் யதோக்தகாரியாக பகவான் இருப்பது. யதோக்தகாரி என்ற பெயர் ஏற்படுவதற்கு முந்தியே அவர் அங்கே புஜங்க சயனப் பெருமாளாகப் படுத்துக் கொண்டிருந்திருக்கிறார். வரதராஜா ஆவிர்பவித்ததற்கு முந்தியே இருந்திருப்பவர் இவர். ஏனென்றால்...ப்ரஹ்மா ஒரு யாகம் பண்ணி, அதில் வரம் தர வந்தவர்தான் வரத ராஜா. அந்த யாகம் பண்ணும்போது ப்ரஹ்மாவுக்கும் ஸரஸ்வதிக்கும் மனஸ் தாபம். அதனால் ப்ரஹ்மா ஸரஸ்வதியை ஒதுக்கிவிட்டு, ஸாவித்ரி காயத்ரி என்ற இரண்டு பேரையே யஜ்ஞ பத்னிகளாக வைத்துக்கொண்டு யாகம் ஆரம்பித்தார். அப்போது ஸரஸ்வதி ஒரே கோபமாக வேகவதி என்ற நதி ரூபம் எடுத்துக்கொண்டு, வேகமாக வெள்ளம் அடித்துக் கொண்டு யாகசாலையை நோக்கி வந்தாள். அந்த ஸமயத்திலே இந்த புஜங்க சயனப் பெருமாள்தான் நதி வருகிற வழியில் குறுக்கே போய்ப் படுத்துக்கொண்டு தடுத்தார். யஜ்ஞமும் பூர்த்தியாகி, ப்ரஹ்மாவுக்கு மாத்திரமில்லாமல் எல்லா ஜனங்களுக்கும் எல்லாக் காலத்திலும் வரம் கொடுப்பதற்காக வரதராஜா தோன்றிக் கோயில் கொண்டார். நம்முடைய கதையில் வரும் ஆழ்வாரான திருமழிசைக்காரர் காஞ்சீபுரத்தில் இந்த புஜங்கசயனர் ஆலயத்திலோ, அல்லது அதை ஒட்டினாற்போலவோதான் வஸித்து வந்தார். அப்போதுதான் அவர் பெருமாளைத் தாம் சொன்னபடி செய்ய வைத்து யதோக்தகாரியாக்கியது.

வரதராஜா உள்படக் காஞ்சீபுரத்திலுள்ள பெருமாள்களில் பெரும்பாலும் எல்லாருமே 'நின்ற திருக்கோலம்'தான். 'இருந்த திருக்கோலம்'என்பதாக உட்கார்ந்த நிலையில் ஓரிரண்டு பெருமாள் இருக்கலாம். திருவெஃகாக்காரரோ

'கிடந்ததிருக்கோலம்'. அதாவது ஸ்ரீ ரங்கநாதர், பத்மநாபஸ்வாமி, சார்ங்கபாணிப்பெருமாள் ஆகியவர்களைப் போலப் பள்ளி கொண்டிருப்பவர். இவரைப்பற்றி ஒன்று குறிப்பிட்டுப் பெருமையாகச் சொல்வார்கள்.

என்னவென்றால்...எந்த க்ஷேத்ரத்திலுள்ள சயனக் கோலப் பெருமாளானாலும் ஸரி, அவருடைய சரீரம் மல்லாக்க (மல்லாந்து) படுத்திருந்தாலும், சிரஸையும் அந்தப்படியே வைத்து ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார். முக மண்டலத்தை ஸந்நிதிப் பக்கம் கொஞ்சமாவது திருப்பி பக்த ஜனங்களைக் கடாக்ஷித்துக் கொண்டுதானிருப்பார். ஸ்ரீரங்கநாதர் தெற்குப் பார்த்த திருமுகமண்லடத்தோடு மேற்குப் பக்கம் சிரஸை வைத்துக்கொண்டு கிழக்கே பாதத்தை நீட்டிக் கொண்டிருப்பவர். நாம் அவருடைய ஸந்நிதிக்கு எதிரே நின்று பார்க்கும்போது நமக்கு இடதுகைப் பக்கம் அவருடைய சிரஸூம், வலது கைப்பக்கம் பாதமுமாக இருப்பார். திருவனந்தபுரத்தில் பத்மநாப ஸ்வாமி கிழக்குப் பார்த்த திருமுகண்டலத்தோடு இருக்கிறார்.

அவர் தெற்கே சிரஸூம் வடக்கே பாதமுமாக சயனித்துக் கொண்டிருப்பதால் அவரையும் நாம் எதிரேயிருந்து பார்க்கும்போது நமக்கு இடதுகைப் பக்கம்தான் சிரஸ், வலதுகைப் பக்கம் பாதம் என்று இருக்கும். கும்பகோணத்தில் ஆராவமுதன் என்கிற சார்ங்கபாணியும் அப்படித்தான் இருக்கிறார். திருவெஃகாவில் மாத்திரம் எப்படியிருக்கிறதென்றால், பெருமாள் தெற்கு - வடக்காக சிரஸ் - பாதங்களை வைத்து சயனித்திருத்திருந்தாலும் ஸந்நிதி மேற்குப் பார்த்தது. அதாவது அவருடைய திருமுகமண்டலம் மேற்குப் பார்க்கிறது. இதனால் என்னவாகிறதென்றால் நாம் அவருக்கு எதிரே நின்று தர்சிக்கும்போது நம்முடைய வலதுகைப் பக்கம் அவர் சிரஸூம் இடதுகைப் பக்கம் பாதமும் இருக்கின்றன. மேலே சொன்ன மற்ற சயனமூர்த்திகளின் வலது பார்ச்வம் (right side) நமக்குக் கிட்டேயும், இடது பார்ச்வம் (left side) திருமேனிக்கு மறுபக்கம், நமக்குத் தள்ளி அந்தண்டையும் இருக்கும். ஸந்நிதிப் பக்கமாக நமக்குக் கிட்ட இருக்கும் வலது கையை நன்றாகத் தூக்கி அவர் அபயம் காட்டுவதாக அந்தப் பெருமாள்களின் சில்பம் அமைந்திருக்காது. சயன பீடத்தை ஒட்டினாற்போலவே அந்தக் கை தலைப் பக்கமாக

மடிந்திருப்பதாகத்தான் மூர்த்தி பெரும்பாலும் அமைந்திருக்கும். அதாவது அந்தக் கையையே அவர் 'தலைக் கோசரம்'(தலைக்கு உயரமான தலையணை) மாதிரி வைத்துக் கொண்டிருக்கும் பாவனையில்தான் சில்பம் இருக்கும். உள்ளங் கையை விரித்து அவர் அபய முத்ரை காட்டினாலுங்கூட, முழங்கைக்குக் கீழே எடுப்பாகத் தூக்கி நன்றாக ஆசீர்வாதம் செய்கிறாற்போலில்லாமல், பீடத்தின் மட்டத்தோடேயே சேர்ந்தாற்போலதான் கை இருக்கும் கையைத் தூக்கினால் திருமேனியையே கொஞ்சம் மறைக்கிறாற்போலக் குறுக்கே நிற்கும்;கர்ப்பூரம் காட்டும்போது அதன் நிழல் திருமேனி மேல் விழும்-என்பது காரணமாயிருக்கலாம். அதோடுகூட, horizontal-ஆக-குறுக்கு வாட்டமாக-சயன மூர்த்தியைப் பெரிசாகச் சில்பத்தில் வடிக்கிறபோது முன்னங்கையைத் தூக்கினாற்போல் பண்ணுவதில் ச்ரமங்கள் உண்டு.

ஆனால், திருவெஃகாவில் ஸ்வாமி மற்ற சயன மூர்த்திகளைப் போல இல்லாமல், வித்யாஸமாக, தெற்கே சிரஸ்-வடக்கே பாதம், ஆனால் மேற்குப் பார்த்த திருமுக மண்டலம் என்று இருப்பதால் எல்லாம் மாறிப்போகின்றன!எதிரே ஸந்நிதியில் நின்று தர்சிக்கும்போது அவருடைய இடது பார்ச்வம் நமக்குக் கிட்டேயும் வலது பார்ச்வம் அந்தண்டையுமாக இருக்கின்றன. அதாவது அவரது இடது கை நமக்குக் கிட்டேயும், வலது கை-அபயமுத்ரை காட்டக் கூடிய வலதுகை-திருமேனிக்கு மறுபுறமுமாக இருக்கும். இங்கே, ஸ்வாமி வலது கையைத் தலைக்கோசரம் மாதிரி வைத்துக் கொண்டாரானால் முகத்தை அந்தக் கைப் பக்கமாகச் சாய்க்கநேர்ந்து, அவர் ஸந்நிதியைப் பார்க்கிறதற்குப் பதில் பின் சுவரைப் பார்ப்பதாகிவிடும்!அதனால் இங்கே பெருமாள் மூர்த்தி அப்படியில்லை. இடது பக்கமாக ஸந்நிதியை, ஸந்நிதியில் நிற்கிற நம்மைப் பார்க்கிறாற் போலவே அவர் முகத்தைச் சாய்த்தபடி சயனித்துக் கொண்டிருக்கிறார். இந்த விதமான அமைப்பில் (Posture-ல்) என்ன விசேஷமென்றால், நம் பார்வையில் அவருடைய திருமேனிக்கு மறுபுறம் இருக்கும் வலது கையை அவர் நன்றாகத் தூக்கி அபயம் ஸாதித்தாலும் அது நமக்கும் பிம்பத்துக்கும் குறுக்கே வந்து மறைக்காது. வலது கை திருமேனிக்கு மறுபக்கம் போய், பிம்பத்தின் அந்த மறுபக்கம்

பின்சுவரை ஒட்டினாற்போலப் போய்விடுவதால், அந்தக் கையைத் தூக்கி வைத்து சில்பம் பண்ணுவதிலும் ச்ரமம் இல்லை. இந்தக் காரணங்களால், முன்னே சொன்ன சயன மூர்த்திகளுக்கெல்லாம் வித்யாஸமாக, விசேஷமுள்ள வித்யாஸமாக, இந்த யதோக்தகாரி நமக்கெல்லாம் நன்றாக வலதுகையை உயர்த்தி அபயம் ஸாதித்தபடி சயனித்துக் கொண்டிருக்கிறார்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

**கணிகண்ணன் :**

## அருள் நெஞ்சும் அஞ்சாநெஞ்சும்

அவருக்கு (யதோக்தகாரி என்ற) அந்தப் பெயர் வருவதற்கு முற்பட்ட காலத்திலேயே திருமழிசையாழ்வார் அவரை இஷ்டமூர்த்தியாக உபாஸித்துக் கொண்டிருந்தார். அவருக்கு அத்யந்த சிஷ்யனாக ஒரு பையன். கணிகண்ணன் என்று பேர். அவன் பிறந்ததே ஆழ்வார் அநுக்ரஹத்தில்தான். அவனுடைய பெற்றோருக்கு ரொம்ப காலமாக ஸந்ததியில்லை. அவர்கள் நித்தியம் ஆழ்வாருக்குப் பால் கொண்டுவந்து கொடுத்துக் கொண்டிருந்தார்கள். யோக நிஷ்டையிலேயே போய்க் கொண்டிருந்த ஆழ்வார் எப்போதாவதுதான் கண்ணைத் திறப்பார். எதுவும் ஆஹாரம் பண்ணுவதில்லை. இந்தப் பாலை மட்டுந்தான் கொஞ்சம் குடித்துவிட்டு பாக்கியை அவர்களுக்கே கொடுத்துவிடுவார். ப்ரஸாதமாக அவர்கள் அதைக் குடிப்பார்கள். அதன் பலனாகத்தான் அவர்களுக்குப் புத்திரன் பிறந்தான்.

கணிகண்ணன் என்ற அந்தப் பிள்ளை குழந்தைநாளிலிருந்தே ஆழ்வாரிடம் வந்து அந்தரங்க சிஷ்யனாகிவிட்டான்.

ஒரு நாள் அவன் கோவிலுக்குப் போகும்போது அங்கே ஒரு தொண்டு கிழவி, முதுகு நன்றாகக் கூனிப் போனவள்,

எலும்பும் தோலுமாக ரொம்பவும் ச்ரமப்பட்டுக் கொண்டு பெருக்கி, மெழுகி, கோலம் போட்டுக் கைங்கர்யம் செய்வதைப் பார்த்தான். உடம்பு கொஞ்சங்கூட முடியாவிட்டாலும், மூச்சு போகும் வரையில் பகவத் கைங்கர்யம் பண்ணாமலிருப்பதில்லை என்ற த்ருடமான பக்தியிலேயே அவள் கொண்டு புரிவது தெரிந்தது. கணிகண்ணனுக்கு அப்படியே மனஸ் உருகிவிட்டது. 'ஐயோ, இவளுக்கு நாம் உபகாரம் பண்ணவேண்டாமா?எப்படிப் பண்ணுவது?என்று மனஸார நினைத்தான்.

இந்த மாதிரிப் பெரிசாக ஒரு காருண்ய சிந்தனை வந்தால் அப்போது தன்னால் குருவுடைய அநுக்ரஹ சக்தி சிஷ்யனுக்குள்ளும் ஆவிர்பவித்துவிடும். ஈச்வரனிடமிருந்து குரு பெற்றிருக்கிற சக்தியை குருவிடமிருந்து சிஷ்யனும் பெற்றுவிடுவான். அந்த விதத்தில் ஆழ்வாரின் அநுக்ரஹ சக்தி அந்த நிமிஷத்தில் கணிகண்ணனுக்கே வந்துவிட்டது.

தன்னை மறந்த நிலையில் அந்தக் கிழவியிடம்போய் அன்போடு அவள் முதுகைத் தடவிக்கொடுத்தான்.

உடனே, அநுக்ரஹ சக்தியினால் அவளுடைய கூன்முதுகு நேராக நிமிர்ந்தது. அது மட்டுமில்லை. எலும்பும் தோலுமாக, விருத்த தசையிலிருந்த கிழவி அந்த க்ஷணத்திலேயே நல்ல ஆரோக்யமுள்ள யுவதியாக மாறிவிட்டாள்.

மதுராபுரியில்-வட மதுரை என்பதில்-க்ருஷ்ண பரமாத்மா குப்ஜை (கூனி)க்கு இதே போன்ற அநுக்ரஹம் தான் பண்ணினார். அது ஸப்த மோக்ஷபுரிகளில் ஒன்று. காஞ்சிதான் அந்த ஏழு மோக்ஷபுரிகளுக்குள் தக்ஷிண தேசத்தில் இருக்கப்பட்ட ஒரே ஒரு க்ஷேத்ரம். வடக்கே பகவான் பண்ணின அத்புதமான அருளை தெற்கே அவனுடைய அடியார்க்கடியானே பண்ணிவிட்டான். ஆழ்வார் பகவானுடைய அடியார். கணிகண்ணன் ஆழ்வாருக்கு அடியான்.

'கூன் பாண்டியன்'என்றே சொல்லப்பட்டவனைத் திருஞானஸம்பந்தர் 'நின்ற சீர் நெடுமாறன்'என்பவனாக நிமிர்த்திய கதையும் நினைவு வருகிறது.

கணிகண்ணன் குமரியாக்கிய கிழவி யாரென்றால் கிழவியாவதற்கு முந்திக் காஞ்சீபுரத்து ராஜாவின் ஸபையில்

தாஸியாக இருந்தவள். பிற்பாடு நிஜமாகவே 'தேவதாஸி'யாகி ஸ்வாமியின் கைங்கர்யத்தில் ஈடுபட்டவள்.

'அடடா, இந்த பாகவதோத்தமருடைய அநுக்ரஹத்தால் இப்படி நல்ல பலம் வந்துவிட்டதே!இதை வைத்துக் கொண்டு பெருமாள் ஸேவையிலேயே ஸதா காலமும் இருந்துவிட வேண்டும்'என்று யுவதியான பின்பும் அவள் தீர்மானம் பண்ணிக்கொண்டு, அப்படியே செய்ய ஆரம்பித்தாள்.

கிழவி குமரியானால் ஊர் உலகமெல்லாம் ஆச்சர்யப்படாதா?எங்கேயும் அதே பேச்சாகத்தானே இருக்கும்?காஞ்சீபுரத்தில் இருந்துகொண்டு ஆட்சி நடத்திய பல்லவ ராஜாவின் அரண்மனைக்குச் சேதி போயிற்று. ராஜாவும் அப்போது வ்ருத்தாப்ய தசையில் இருந்தான். தனக்கு ப்ரியமாக இருந்தவள் குமரியாகிவிட்டாள் என்றதும் அவனுக்குத் தகாத சபலம் ஏற்பட்டது.

கணிகண்ணனை வரவழைத்து, "என்னையும் இளமையாகப் பண்ணப்பா!"என்றான். கணிகண்ணன் பரிஹாஸமாகச் சிரித்தான். குருவே ஸகலமும், அவரே சரணம் என்று இருந்த அவனுக்கு ராஜா, கீஜா யாராயிருந்தாலும் பொருட்டாகத் தெரியவில்லை. யாராயிருந்தாலும் தான் கொஞ்சங்கூட பயப்படாமல், பவ்யப்படாமல் தர்மப்படி நடக்கணும், அவர்களுக்கும் தர்மத்தைச் சொல்லணும் என்ற தீரம் அவனுக்கு இருந்தது.

ராஜாவைப் பார்த்து, "நானா அந்தக் கிழவியைக் குமரி ஆக்கினேன்?எனக்கு ஏது அந்த சக்தி?என்னுடைய குருநாதருடைய சக்திதான் எனக்குள் புகுந்து கொண்டு அப்படிப் பண்ணுவித்தது"என்றான்.

"அப்படியானால் அந்த குருவையேதான் அழைத்துக் கொண்டு வாயேன்"என்று ராஜா சொன்னான்.

"அவரைப் பற்றி உனக்குத் தெரியாதா?நீ ராஜாவாயிருந்தும் உன்னைப் பார்க்க அவர் இத்தனை காலமாக வராததிலிருந்தே அவரைப் பற்றி நீ தெரிந்து கொண்டிருக்க வேண்டுமே!அவருக்கு பகவானைத் தவிர எவரிடமும் போய் என்னவும் ஆகவேண்டியதில்லை. பகவானையே நினைக்கிறவர்கள், பகவத் கைங்கர்யத்துக்கே ஆசைப்படுபவர்கள் ரொம்பவும் கஷ்டப்படும் போது

அவர்கள் யாரானாலும் அவர்களிடம் அவருக்கு ஸ்வாபாவிகமாகக் கருணை உண்டாகி அநுக்ரஹம் செய்து கஷ்டத்தை நிவர்த்தி செய்துவிடுவார். அவர்கள் போய் அவரிடம் சொல்லவேண்டுமென்பதில்லை. அவரும் தாமே அவர்களிடம் போய் அநுக்ரஹம் பண்ண வேண்டுமென்பதுமில்லை. ஏதோ ஒரு கருவி மூலம் அநுக்ரஹம் பண்ணிவிடுவார். அந்த கிழவிக்கு அப்படித் தான் நடந்தது. அவள் தன்னுடைய ஸொந்த சரீர அநுபோகங்களுக்காக யௌவனம் பெறவேண்டுமென்று நினைக்கவில்லை. பகவானுக்கு சரீர கைங்கர்யம் நன்றாகச் செய்ய வேண்டுமென்பதொன்றே அவள் நினைவாயிருந்தது. அதனாலே என் குருவுக்கு தயை பொங்கிக்கொண்டு வந்தது. ப்ரக்ருதி (இயற்கை) நியதியையும் மாற்றினால்கூடப் பரவாயில்லை என்று அவளை யுவதியாக்கினார்.

"நீயோ சரீர போகங்களை அநுபவிக்கவேண்டும் என்ற ஆசையிலேயே யௌவனத்தைக் கேட்கிறாய். இதற்கு அவர் ஒரு நாளும் ஒப்புக்கொண்டு அநுக்ரஹிக்க மாட்டார். யாரானாலும் ப்ரக்ருதி நியதிப்படி ஜரா மரணங்கள் நேரவேண்டியபோது நேரத்தான் செய்யும். நீ போனால் வேறே எவனோ ஒருத்தன் ராஜாவாக வந்து ராஜ்ய பரிபாலனம் பண்ணிவிட்டும் போகிறான். உனக்கு முந்தி எத்தனையோ பேர் ஆட்சி நடத்திவிட்டு அப்புறம் கிழடுதட்டி, 'போய்த்தானே'இருக்கிறார்கள்?ஒருவிதமான விசேஷ காரணமுமில்லாமல் உன்னை இளமையாக்குவதற்கு என் குருநாதர் ஸம்மதிக்கவே மாட்டார்"என்று கொஞ்சங்கூட ஒளிவு மறைவில்லாமல் கணிகண்ணன் துணிச்சலாகச் சொன்னான்-பல்லவ ராஜாகிட்டேயே.

ராஜஸ குணமே கொண்ட ராஜாவுக்குக் கோபம் வந்து விட்டது. "உன்னை இந்த ஊரை விட்டே ப்ரஷ்டம் பண்ணுகிறேன்"என்று ஆஜ்ஞை பண்ணினான்.

"நானே இப்படிப்பட்ட ராஜா இருக்கிற ஊரில் இருக்கிறதில்லை என்றுதானப்பா தீர்மானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன்!"என்று கணிகண்ணனும் சொல்லிவிட்டு நேரே கோவிலுக்கு, ஆழ்வாரிடம், வந்தான்.

அரண்மனையில் நடந்ததையெல்லாம் அவரிடம் சொல்லி விட்டு ஊரை விட்டுப் புறப்பட்டான்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

## சொன்ன வண்ணம் செய்தது !

பக்தர், யோகி ஆனாலும் ஆழ்வாருக்கும் சுத்தமான ப்ரமையினாலே இரண்டு பாசங்கள் மட்டும் இருந்தன போலிருக்கிறது!சிஷ்யன் கணிகண்ணனை விட்டுப் பிரிய முடியாத பாசம் அவருக்கு இருந்தது. அதேபோல அந்த ஆலய மூர்த்தியாக அர்ச்சாவதாரத்திலிருந்த புஜங்க சயனப் பெருமாளிடமும் அவருக்கு அலாதியான பாசமிருந்தது.

அதனால் கணிகண்ணனின் பின்னோடேயே அவரும் புறப்பட்டுவிட்டார். அவன் அவரைக் கூப்பிடவில்லை. 'தான் எங்கேயாவது காடு, மலை என்று போய்விடலாம்;குருவையும் அங்கேயெல்லாம் இழுக்கடித்து ச்ரமப்படுத்த வேண்டாம்;இங்கேயே அவர் பாட்டுக்குப் பெருமாள் ஸந்நிதியில் இருந்து கொண்டிருக்கட்டும்;அவர் எங்கேயிருந்தாலும் நாம் எங்கேயிருந்தாலும் அவருடைய அருள் நம்மைக் கட்டிக் காக்கும்;சரீர ரீதியில் எங்கேயிருந்தாலும் நம்முடைய ஹ்ருதயத்தில் அவர் எப்போதும் இருந்து கொண்டுதானிருப்பார்'-என்ற தெளிவோடு கணிகண்ணன் புறப்பட்டுவிட்டான்.

ஆனாலும் அவருக்கு அப்படி இருக்கமுடியவில்லை. ஸ்வயநலம் கலக்காத வாத்ஸல்யங்களில் இருக்கிற அழகு உலகத்துக்குத் தெரியவேண்டுமென்பதற்காக மிகவும் பெரியவர்கள்கூட பந்த பாசமிருக்கிறதுபோல இருப்பதுண்டு. அநேக கதை புராணங்களில் இப்படிப் பார்க்கிறோம்.

கணிகண்ணனின் பின்னோடேயே புறப்பட்ட ஆழ்வார், அந்த மாதிரியே பாசத்துடன் பெருமாளும் தன் பின்னாடி தொடர்ந்து வருவாரென்று நினைத்துக்கொண்டு ஆலயத்தில் இருக்கப்பட்ட தம்முடைய அபிமான மூர்த்தியைப் பார்த்தார்.

ஆனால் ஸ்வாமி லீலா விநோதனல்லவா?அதனால் அவன் பாட்டுக்கு நிம்மதியாக சேஷ பர்யங்கத்தில் படுத்துக் கொண்டே இருந்தான்.

அப்போதுதான் இந்தக் கதை ஆரம்பத்தில் நான் சொன்னாற்போல சிஷ்யனுக்காக குருவானவர் ஸ்வாதீனத்துடன் ஸ்வாமிக்கே ஆர்டர் போட்டார்.

தான் பரம பாகவதன், இந்த அர்ச்சையிடமே அபிமானம் வைத்தவன், ஆனபடியால் தன்னை பகவான் பின் தொடர்ந்து வரவேண்டும் என்று தற்பெருமையாக ஆழ்வார் ஆர்டர் போடவில்லை. பின்னே என்ன போட்டார்?

"கணிகண்ணன் போகின்றான்..."

தான் போவதைச் சொல்லிக்கொள்ளவில்லை. சிஷ்யன் போகிறானே, ஊரைவிட்டுக் கிளம்பிவிட்டானே, அதையே சொல்கிறார். "குழந்தை ஊரைவிட்டு, மனஸு வெறுத்துப் போகிறது. அதன்கூடவே நீ ஸதாகாலமும் இருந்து ரக்ஷிக்க வேண்டாமா?"

ஆழ்வார் ஸதாவும் தன்னை ரக்ஷிக்கிறார், ரக்ஷிப்பாரென்ற உறுதி கணிகண்ணனுக்கு இருந்தாலும் அவர் தாம் ரக்ஷிப்பதாக நினைக்கவில்லை. வெளியிலே தடபுடலாக பகவானுக்கு உத்தரவு போட்டாலும், உள்ளுக்குள்ளே ரக்ஷணமெல்லாம் அவனால்தான் நடக்கிறது. தாம் ஒன்றுமே இல்லை என்ற எளிமையோடுதான் இருந்திருக்கிறார்!அதனால்தான் கணிகண்ணன் போகிறபோது பேசாமல் படுத்துக்கொண்டிருக்கிற ஸ்வாமியிடம் இப்படிக் கேட்கிறார்

"குழந்தையோடு நீயும் போகாமல் ஜம்மென்று பாம்பு மெத்தையில் படுத்துக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம், ஓய்?இப்படி நீள் நெடுகப் படுத்துக்கிடக்காதீர்!இது கொஞ்சங்கூட நன்றாயில்லை"(என்கிறார்).

" கணிகண்ணன் போகின்றான் , காமரு பூங்கச்சி

மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டா !

"இப்படிப் படுத்துக்கொண்டு கிடக்காதே. நான் தைரியமாக,

துணிச்சலோடு உள்ளது உள்ளபடி சொல்கிறவன்;ஸத்யத்தின் சிவப்பேறிய நாக்கோடு உள்ளது உள்ளபடி பாடுகிற கவி."

" துணிவொன்றிச் செந்நாப் புலவோன் யான் "

என்று சொல்லிக்கொள்கிறார். "நான் பயப்படாமல் வாய் சிவக்க ஸத்யத்தையே பாடுபவன்"என்று சொல்வதிலேயே "நீ பொறுப்பில்லாமல் படுத்துக் கொண்டிருந்தால் அதை உள்ளபடி உலகத்துக்குத் தமுக்குப் போட்டு விடுவேன்!"என்று எச்சரிக்கிற மாதிரி பாட்டு போகிறது.

" கணிகண்ணன் போகின்றான் , காமரு பூங்கச்சி

மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டா ! துணிவொன்றிச்

செந்நாப் புலவோன் யான் சொல்கின்றேன் ...

குழந்தை போகிறான். மனசு தாளாமல் நானும் போகிறேன். நீ மட்டும் ஸுகமாகப் படுத்துக்கொண்டிருந்தால் என்ன அர்த்தம்?(குரலை உயர்த்தி) கிளம்பு வாரிச் சுருட்டிக்கொண்டு, பெரிசாக சேஷ பர்யங்கம் விரித்துக் கொண்டிருக்கிறாயே, அதைச் சுருட்டிக்கொண்டு நீயும் எங்களோடு புறப்படு.

" நீயும் உன்றன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள் !"

-அழுத்தமான ஆர்டராகவே போடுகிறார்!

" கணிகண்ணன் போகின்றான், காமரு பூங்கச்சி

மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டா !- துணிவொன்றிச்

செந்நாப் புலவோன்யான் செல்கின்றேன், நீயுமுன்றன்

பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள் ".

பகவான் சயனித்துக் கொண்டிருக்கிறபோது ஆதிசேஷன் அவருக்குப் படுக்கை. அவரே எங்கேயாவது போகிறாரென்றால் அப்போது அவன் அவருக்கு ஆயிரம் தலையாலும் குடைபிடித்துக்கொண்டு போவான்.

சென்றால் குடையாம்.

க்ருஷ்ணாவதாரம் ஆனவுடன் வஸுதேவர் குழந்தையை

மழை வெள்ளத்தில் தூக்கிக்கொண்டு போகும்போது ஆதிசேஷனேதான் குடை பிடித்தான்.

ஆர்டர் போடுகிறபோதும் ஸ்வாமியிடம் ஆழ்வாரின் கரிசனம் குறையவில்லை. 'பாம்பு மெத்தையிலிருந்து இறங்கி நீ வா'என்று மட்டும்சொல்லாமல், 'ஸ்வாமிக்கு வெயில் படாமல், மழை படாமல் குடை வேண்டுமே'என்ற கரிசனத்தில் சேஷசயனத்தையும் சுருட்டிக் கூட எடுத்துக்கொண்டே புறப்படச் சொல்கிறார்!

ஆர்டர் போட்டாரோ இல்லையோ, பெருமாளும் அப்படியே பண்ணிவிட்டார்!அதற்குமேல் விளையாட்டுப் பார்த்து பக்தர் மனஸ் வருத்தப்படும்படி பண்ணக் கூடாதென்று, அவர் சொன்னபடியே வாரிச் சுருட்டிக் கொண்டு கணிகண்ணனோடும் ஆழ்வாரோடும் தானும் புறப்பட்டுவிட்டார்!

'சொன்ன வண்ணம் செய்தது'இதோடு முடியவில்லை.

மூன்று பேரும் அப்படியே புறப்பட்டு நாலு, அஞ்சு மைல் போகிறதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. மநுஷ்யர்கள் மாதிரியே விளையாடணும் என்று பகவானுக்கு இருந்ததால், "ராத்ரி ஆயிடுத்து. அதனால், இனிமேலே பிரயாணம் பண்ண வேண்டாம். இங்கேயே ராத் தங்கிவிட்டு கார்த்தாலே கிளம்பலாம்"என்று சொன்னான். பகவான் தான் சொன்னானோ, ஆழ்வாதான் சொன்னாரோ?அவனே இவர் சொன்னவண்ணம் செய்பவனாகத்தானே இருந்தான்?

ஆகக்கூடி, பாலாற்றங்கரையிலே குளுகுளு என்று காற்று வீசுகிற இடத்திலே மூன்று பேரும் ராப்பொழுதை சொஸ்தமாகக் கழித்தார்கள்.

இதற்குள்ளே-கோவிலைவிட்டுப் பெருமாள் புறப்பட்ட அந்த நிமிஷத்திலிருந்தே-காஞ்சீபுரத்தில் என்ன ஆச்சு என்றால், ஒரேயடியாக அலக்ஷ்மி (அமங்களம்) வந்து கப்பிக் கொண்டுவிட்டது. பகவான் ஊரைவிட்டுப் போய்விட்டானென்றால் அவனுடைய வக்ஷஸ்தலத்திலேயே வாஸம் பண்ணிக்கொண்டிருக்கும் லக்ஷ்மியும்தானே கூடப் போய் விடுவாள்?அதனால் "நகரேஷு காஞ்சி"என்று ப்ரஸித்தி பெற்ற ராஜதானியிலே லக்ஷ்மீகரமே போய் மூதேவி வந்து மூடிக்கொண்டு விட்டது. ஒரே இருட்டு!ஒரு

இடத்திலேயாவது தீபமே ஏற்றிக் கொள்ளவில்லை!தேவாலயங்களிலும் தீபமில்லாமல் பூஜையெல்லாம் நின்று போயிற்று. எல்லார் மனஸிலேயும் வேறே ஒரேயடியாக இருள் கப்பிக்கொண்டு விட்டது. இனம் தெரியாமல் ஒரே துக்கம் ஒரே திகில்.

எல்லாரும் போய் ராஜாவிடம் முறையிட்டார்கள்.

அவனுக்கு ஒரே வியாகுலம், பய ப்ராந்தியாகத்தான் இருந்தது. பெருமாள் ஊரைவிட்டுப் போனதில்தான் இப்படி உத்பாதமாக ஆகிவிட்டது என்று புரிந்தது. "இதோ போய் அவர் காலில் விழுந்து ப்ரார்த்தித்துக்கொண்டு அவரை மறுபடி அழைத்துக்கொண்டு வருகிறேன்"என்று புறப்பட்டான்.

இருட்டிலே ராஜாவைக் காபந்து பண்ணி ஊரெல்லைக்கு அழைத்து வருவதற்குள் பொழுது விடிந்துவிட்டது.

பாலாற்றங்கரையில் பகவான் ஆழ்வாரோடும் கணிகண்ணனோடும் தங்கியிருந்த இடத்துக்கு ராஜா மறுநாள் காலம்பற வந்து சேர்ந்தான்.

அப்போதும் அவனுக்குக் கணிகண்ணனிடம் தான் தப்பாக நடந்துகொண்டு நகர ப்ரஷ்டம் பண்ணினதற்காக மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று தோன்றவில்லை. நேரே பெருமாளிட ம்,-அவர் அர்ச்சையாக இருந்தாரோ, சல (நடமாடும்) மூர்த்தியாக இருந்தாரோ, ஏதோ ஒன்று;அவரிடமே போய்-நெடுஞ்சாண்கிடையாக நமஸ்காரம் பண்ணினான். "பெருமாள் இல்லாமல் ஆலயம் சூன்யமானது போலவே ஊர் முழுக்கவும் சூனியமானமாதிரி ஆகிவிட்டது. எல்லா ஜனங்கள் மனசும் சூன்யமாகிவிட்டது. என்ன அபசாரம் நடந்திருந்தாலும் க்ஷமித்து பகவான் மறுபடியும் காஞ்சிக்கு எழுந்தருளணும்"என்று வேண்டிக்கொண்டான்.

ஸ்வாமியோ, "நானாக ஸங்கல்பித்துக்கொண்டு அங்கே விட்டுப் புறப்படவில்லை. ஆழ்வார் சொன்னார். அவர் சொன்னபடி செய்யணுமென்றே கூட வந்துவிட்டேன். அவரே மறுபடி சொன்னாரன்னியில் நான் இங்கேயிருந்து திரும்புவதற்கில்லை!"என்று சொல்லிவிட்டார்.

அர்ச்சா மூர்த்தியாகவே அவர் இருந்திருந்தால் இப்படி

அசரீரியாகத் தெரிவித்தாரென்று வைத்துக் கொள்ளலாம். வேறே வழியில்லாமல் ராஜா ஆழ்வார் காலில் விழுந்து வேண்டிக்கொண்டான்.

அவரானால், "பெருமாளை விட்டு என்னாலே இருக்க முடியாது. அதனாலே அவரை மாத்திரம் உன்னோடு போகச் சொல்லிவிட்டு நான் இங்கேயே இருப்பது என்பது நடக்காத கார்யம்"என்று மறுத்துச் சொல்லிவிட்டார்.

"தாங்களும்தான் திரும்ப வாருங்கள். நான் அதற்குத் தான் காத்துக் கொண்டிருக்கிறேன்"என்று ராஜா வேண்டிக்கொண்டான்.

அதற்கு அவரும் பெருமாள் சொன்ன மாதிரியே பதில் சொன்னார். "நானாக உத்தேசம் பண்ணி இங்கே வந்திருந்தால் நானாகவே மறுபடி திரும்பலாம். ஆனால் நானும் தானாகப் புறப்பட்டுவிடவில்லை. கணிகண்ணனுக்கு நீ ஆக்ஞை பண்ணினதாலும், நீ நடந்துகொண்ட விதத்தில் அவனுக்கே உன் ஊரில் இருக்கப் பிடிக்காததாலும் அவன் புறப்பட்டான். அவனை விட்டுப் பிரிந்திருக்க முடியாமலே நானும் பின்னோடே கிளம்பினேன். ஆனாதினாலே என் காலில் விழுகிறதற்குப் பதில் அவன் காலில் போய் விழு. பண்ணினது தப்பு என்று க்ஷமாபனம் பண்ணிக்கொண்டு திரும்பிவரணமென்று அவனிடம் ப்ரார்த்தித்துக் கொள்ளு. அவன் ஸம்மதித்தால் நானும் திரும்புகிறேன், பெருமாளையும் திரும்பச் சொல்கிறேன்"என்று முடிவாகச் சொல்லிவிட்டார்.

அப்புறம் என்ன பண்ணிக்கொள்கிறது?

ராஜா போய் கணிகண்ணன் காலில் விழுந்தான்.

சிஷ்யனுக்காக குரு முதலில் த்ரிபுவன சக்கரவர்த்தியான பகவானையே வாரிச் சுருட்டிக்கொண்டு கோவிலை விட்டு விட்டு வரப் பண்ணினார். இப்போது அந்தப் பையன் காலில் பல்லவ சக்ரவர்த்தி விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும்படிச் செய்கிறார்!

ராஜா வேண்டிக்கொண்டவுடனே, ஸ்வபாவத்தில் இளகின மனசு படைத்த கணிகண்ணன் காஞ்சீபுரத்துக்கு திரும்பவும் புறப்பட்டான்.

அவன் பின்னோடே ஆழ்வார், ஆழ்வார் பின்னோடே அவர் சொன்னபடியெல்லாம் செய்கிற பெருமாள்-என்று எல்லோருக்குமாக ராஜதானிக்கு வந்து சேர்ந்தார்கள்.

பெருமாள், ஆழ்வார், கணிகண்ணன் ஆகிய மூன்று பேரும் ராத்ரி முழுவதும் பாலாற்றங்கரையில் தங்கிய அந்த இடத்திற்கு ஓரிரவிருக்கை (ஓர் இரவு இருக்கை) என்றே பெயர் ஏற்பட்டது. அந்தப் பெயர் சிதைந்து சிதைந்துதான் இப்போது ஓரிக்கை என்று வழங்குகிறது.

மூன்றுபேரும் காஞ்சீபுரத்திற்குத் திரும்பியதும் அலக்ஷ்மியெல்லாம் நீங்கி நகரம் பழையபடி சோபை பெற்றது. ஜனங்களின் மனஸிலிருந்த பீதி துக்கம் எல்லாமும் போய் ஸந்துஷ்டி நிறைந்தது.

பகவான் கேவிலுக்குத் திரும்பின அப்புறமும் சுருட்டிப் பிடித்துக்கொண்டு வந்த சேஷ பர்யங்கத்தை விரித்துப் படுத்துக் கொள்ளாமலே நின்று கொண்டிருந்தான். "பாயைச் சுருட்டிக்கொண்டு புறப்படு"என்று உத்தரவு போட்டவர் "படு"என்று மாற்றி உத்தரவு போடும்வரையில் தானாக எப்படிப் படுப்பது என்றுதான் நின்றுகொண்டேயிரு ந்தான்!பக்தர்கள் வார்த்தைக்கு பகவான் அப்படிக் கட்டுப்படுகிறான்!"பக்த பராதீனன்"என்று அவனைச் சொல்வது அதனால்தான்.

இப்படி, பரம பத நாதனாக இருக்கப்பட்டவன் தன் வார்த்தைக்குக் காத்துக் கொண்டிருக்கிறானென்று பார்த்தவுடன் ஆழ்வாருக்கு நெஞ்சு உருகிவிட்டது. முன்னே பாடின பாட்டின் வார்த்தைகளையே துளித்துளி மாற்றி, ஆனால் அர்த்தம் அடியோடு மாறும்படியாக, பாடினார்.

இப்போதும், "உன்னைவிட்டுப் பிரிந்திருக்க முடியாத நான்தான் திரும்பி வந்துவிட்டேனே!இன்னமும் ஏன் யோசிக்கிறாய்?உன் சேஷ பர்யங்கத்தை விரித்துக்கொண்டு படுத்துக்கொள்"என்று சொல்லாமல், "கணிகண்ணன்தான் திரும்பி வந்துவிட்டானே!"என்று சிஷ்யனைப் பெருமைப்படுத்தி, அவனிருக்கிற இடம் எதுவானாலும் அங்கே அவனை ரக்ஷிப்பதற்காக பகவானும் கூட இருக்கணும் என்று த்வனிக்கும்படியாக ஆரம்பித்தார்.

" கணிகண்ணன் போக்கொழிந்தான் "

"போக்கு ஒழிந்தான்": இந்த ஊரைவிட்டு ப்ரயாணம் பண்ணுவதில்லை. என்று இங்கேயே தங்கிவிட்டான்.

முன்னே "கணிகண்ணன் போகின்றான்"என்று ஆரம்பித்துப் பாடியவர் இப்போது அதையே கொஞ்சம் மாற்றி-அர்த்தத்திலே ரொம்ப மாறுபட்டாலும், வார்த்தையிலே ஸ்வல்பமாகவே மாற்றிப் பாடிக்கொண்டு போய், "நீயுமுன்றன் பைந்தாகப் பாய் விரித்துக்கொள்"என்று முடித்தார். முன்னே, 'சுருட்டிக் கொள்'என்று சொன்னதை மாற்றி 'விரித்துக்கொள்'என்று முடித்து விட்டார். அதை வெண்பா மீட்டர். பெரும்பாலான வார்த்தைகள் ஒன்றேதான். ஆனாலும் அப்போது "பாயைச் சுருட்டிண்டு கிளம்பு"என்றவர் இப்போது அதற்கு நேர் எதிராக "பாயை விரிச்சுண்டு படுத்துக்கோ"என்று பகவானிடம் சொன்னார்.

கணிகண்ணன் போக்கொழிந்தான், காமரு பூங்கச்சி

மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டும் !- துணிவொன்றிச்

செந்நாப் புலவோன் யான் செலவொழிந்தேன், நீயுமுன்றன்

பைந்நாகப் பாய் விரித்துக்கொள் .

முன்னே, "நீ கிடக்க வேண்டா"-" இப்படிப் படுத்துண்டு கிடக்காதே "என்றவர், இப்போது " நீ கிடக்கவேண்டும் " என்கிறார். "நன்னா உன் கிடந்த திருக்கோலத்திலேயே சயனம் பண்ணிக்கோப்பா!"

முன்னே, "யான் செல்கின்றேன்"என்றவர் இப்போது "யான் செலவொழிந்தேன்"என்கிறார். கணிகண்ணன் போக்கொழிந்ததால் இவரும் செலவொழிந்துவிட்டார். 'செலவு'என்றால் செல்வது. 'வரவு செலவு'என்று ரூபாயைச் சொல்லும்போது மட்டும் இந்த வார்த்தையைச் சொல்கிறோம். "ரொம்ப செலவாகிறது"என்றால் கையைவிட்டு ரொம்ப ரூபாய் சென்று விடுகிறது, போய்விடுகிறது என்று அர்த்தம்.

"கணிகண்ணனும் போக்கொழிந்தாச்சு, நானும் செலவொழி ந்தாச்சு. இனிமேலே இங்கேதான் இருக்கப் போகிறோம். இப்போது ஊருக்கு நேர்ந்த உத்பாதத்தைப் பார்த்துவிட்டதால்

இனிமேலே ராஜாவோ, ஜனங்களோ யாரும் நாங்கள் இந்த ஊரை விட்டுப் போகிற மாதிரிச் செய்யமாட்டார்கள். அதனால் இங்கேயே இருந்துகொண்டிருப்போம். ஆகையினால் நீயும் இனிமேல் உன் சேஷ பர்யங்கத்தை விரித்துக்கொண்டு நிம்மதியாகப் படுத்துக் கொள்ளலாம். ஐயோ பாவம்!உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. பெருமாளாகப் பட்ட நீ இந்த சின்ன ஆள் என்ன சொல்லுவேனோ, பண்ணுவேனோ என்றா சயனத்தைச் சுருட்டி வைத்துக்கொண்ட கையோடேயே இன்னமும் நின்று கொண்டிருக்கிறாய்?அதை விரித்துக் கொள்ளப்பா!

" பைந்நாகப் பாய் விரித்துக் கொள் !"

இப்படி அவர் வாய்ப்படச் சொன்ன அப்புறந்தான் ஸ்வாமி மறுபடி ஆதிசேஷனை மெத்தையாகப் போட்டுக் கொண்டு படுத்துக் கொண்டார்.

அவர்தான் காஞ்சீபுரத்தின் அநேத தேவாலயங்களில் ஒன்றில் இருக்கிற யதோக்தகாரி, சொன்ன வண்ணம் செய்த பெருமாள்.

காஞ்சீபுரத்தில் பச்சை வண்ணப் பெருமாள், பவள வண்ணப் பெருமாள் என்றெல்லாமும் பகவான் இருக்கிறார். இவரோ, சொன்ன வண்ணம் செய்த பெருமாள்!

எதற்குத் கதை சொன்னேனென்றால்:சிஷ்யன் அவனே பகவானிடம் போக வேண்டுமென்றில்லை;அவன் குருவினிடத்தில் பூர்ண பக்தி விச்வாஸம் வைத்துவிட்டால் அவர் பகவானையே அவன் கிட்டே போகப் பண்ணி விடுவார்;அவன் போகிற இடமெல்லாம் பின்னோடேயே பகவானும் போய் ரக்ஷிக்குமும்படியாகப் பண்ணிவிடுவார். சிஷ்யனுக்காக குரு ஆர்டர் போட்டுவிட்டால் பகவானே "நில்"என்றால் நிற்பான், "ஓடு"என்றால் ஓடுவான், "படு"என்று அவராகச் சொன்னால்தான் படுப்பான்.

இதைத் தெரிந்து வைத்துக்கொண்டுதான் சில பேர் குருவே போதும், தனியாக ஒரு ஈச்வரன் வேண்டாம் என்றிருந்தது.

ஈச்வரனையும் வருவித்துத் தரும் குரு

அப்படியே, ஈச்வரன் வேணுமா?அதற்கும் அவனைத் தான் நேரில் உபாஸிக்கணுமென்றில்லை. அவனைப் பிடித்துக் கொண்டுவர நம்முடைய உபாஸனா சக்தி போதவே போதாது. அதனால் ஒரு குருவைப் பிடித்துக் கொண்டு விட்டால் போதும். நமக்காக அவர் ப்ரார்த்தித்தோ சண்டை போட்டோ அவனை இழுத்துக்கொண்டு வந்து விடுவார்.

இப்படி தனக்குக் கிடைத்த ஈச்வர தர்சனம் தன்னுடைய சிஷ்யர்களுக்கு, அல்லது தன்னைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் கிடைக்கும்படியாகப் பல மஹான்கள் பண்ணியிருக்கிறார்கள்.

ஸோமாசி மாற நாயனார் கதையில் இப்படித்தான் பார்க்கிறோம். அவர் தம்மால் நேராக ஈச்வரனை வருவித்துக் கொள்ள முடியாதென்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளிடம் போய் வேண்டிக்கொள்ள, ஸுந்தரமூர்த்தி அப்படியே வரவழைத்து விட்டாரென்று கதை. இவர்களை குரு சிஷ்யர்களென்று சொல்ல முடியாது. ஆனாலும் இதிலிருந்தே ஈச்வரனோடு நெருங்கியிருக்கிற குரு, அவனை சிஷ்யனுக்கும் நெருக்கமாகக் கொண்டு வந்து விட முடியுமென்று தெரிகிறது.

அந்தக் கதையைக் கொஞ்சம் பார்க்கலாம். ஆழ்வார் கதை கேட்டோம். நாயன்மார்களில் ஒருத்தர் கதை கேட்க வேண்டாமா?இது இரண்டு நாயன்மார்கள் ஸம்பந்தப்பட்ட கதை.

## ஸோமாசி மாற நாயனார்

'ஸோமாசி'என்றால் என்னவோ ஏதோ என்று சிரிக்க வேண்டாம். ஸோமயாகம் பண்ணிய 'ஸோமயாஜி'தான் 'ஸோமாசி'என்றாயிருக்கிறது!

நாயன்மார்களில் ஸமூஹத்தின் அத்தனை பிரிவைச் சேர்ந்தவர்களும் இருப்பார்கள். தீண்டாதாராகப் பண்ணவேலை செய்து கொண்டிருந்த நந்தனாரிலிருந்து, வேடர் (கண்ணப்பர்), செம்படவர் (அதிபத்த நாயனார்), வண்ணான் வேலை பண்ணினவர் (திருகுறிப்புத் தொண்ட நாயனார்), குயவர் (திருநீலகண்டர்) என்றிப்படிப் போய் சேர, சோழ, பாண்டிய, பல்லவ ராஜாக்கள் வரையில் அத்தனை ஜாதிகளையும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் பார்க்கிறோம் இவர்களில் ஞானஸம்பந்தர் உள்பட பன்னிரண்டு வைதிக ப்ராம்மணர்கள் இருக்கிறார்கள். இவர்களில் ஒருத்தர்தான் ஸோமாசிமாறர்.

பேரளத்துக்குக் கொஞ்ச தூரத்தில் அம்பர், அம்பர் மாகாளம் என்று இரட்டை ஊர்கள் அடுத்தடுத்து இருக்கின்றன. அந்த அம்பரைச் சேர்ந்தவர்தான் ஸோமாசி மாறர். "அம்பரான் சோமாசி மாறனுக்கு"என்றே 'திருத்தொண்டத்தொகை'யில் ஸுந்தமூர்த்தி அவரைச் சொல்லயிருக்கிறா சுக்லயஜுக்வேதியானார் ஸோமயாகம் செய்த இடம் என்று இன்றைக்கும் அம்பருக்கும் அம்பர் மாகாளத்துக்கும் நடுவிலுள்ள ஒரு மண்டபத்தைச் சொல்கிறார்கள். வைகாசி மாஸ ஆயில்யத்தில் அந்த யாகத்தை ஞாபகப்படுத்தி உத்ஸவம் நடத்துகிறார்கள். அதில் ஸ்வாரஸ்யமான அம்சங்கள் உண்டு. அது ஸம்பந்தமாகத்தான் கதை சொல்ல வந்தேன். நாமாக ஈச்வரனை வரவழைக்க முடியாத போது நமக்காக குருவை, அல்லது குருஸ்தானத்திலுள்ள ஒரு பெரியவரைக் கொண்டு அவனை வரவழைத்துக் கொண்டு விடலாம் என்கிற கதை.

பெரிய புராணத்தில் ஸோமாசி மாறரைப் பற்றிச் சொல்லும்போது அவர் யாக கர்மாவின் மூலமே பரமேச்வரனை ப்ரீதி செய்துவிடலாம் என்ற அபிப்ராயத்தை உடையவரென்றும், திருவாரூருக்குப்போய் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளை ஆச்ரயித்து அதன் மூலமே சிவஸாயுஜ்யம்

அடைந்தாரென்றும் மாத்திரம் சொல்லி அதோடு விட்டிருக்கிறது. ஸ்தல புராணங்களிலிருந்து அவர் பண்ணின ஸோம யாகக் கதையை-ஸ்வாரஸ்யமான கதை என்றேனே, அதை-தெரிந்துகொள்கிறோம். அநேக ஸ்தல புராணங்களைப் போல இது ஜனங்களுக்குத் தெரியாததாக இல்லாமல் அந்தச் சீமைகளில் இன்றைக்கும் ப்ரபலமாக இருப்பதால், இதற்காகவே உத்ஸவம்கூட நடத்துவதால், authentic-ஆனதுதான் (ஆதார பூர்வமானது தான்) என்று தெரிகிறது. இப்படிச் சொன்னதால், ஜனங்களுக்கு அதிகம் தெரியாத ஸ்தல புராணங்கள் authentic இல்லை என்று அர்த்தமில்லை.

'ஸோம யாகத்தினால் பரமசிவனை ப்ரீதி பண்ண வேண்டும். அதிலே நாம் கொடுக்கிற ஆஹுதிகள் அக்னி முகமாக அவனைச் சென்றடைகின்றன என்று வெறுமனே ஒரு நம்பிக்கையின் மூலம் தெரிந்துகொண்டால் போதாது. ஈச்வரனே ப்ரத்யக்ஷமாக யஜ்ஞத்துக்கு வந்து ஆஹுதியை வாங்கிக்கொள்ளவேண்டும்'என்று ஸோமாசிமாறருக்கு ரொம்பத் தாபமாக இருந்தது. அதே ஸமயத்தில், 'நமக்காவது, ஈச்வரனே நேரே வந்து தர்சனம் தந்து, ஆஹுதிகளை வாங்கிக் கொள்வதாவது?அவனை வரவழைக்கிற அத்தனை சக்தி, பக்தி நமக்கு எது?'என்றும் இருந்தது. ஆனாலும் ஆசை மட்டும் விடவில்லை. அதனால், 'ஈச்வரனின் பரம பக்தராக, அவனோடு நெருங்கியிருப்பவராக யாராவது இருந்தால் அந்தப் பெரியவரிடம் போய் வேண்டிக்கொண்டு நம்மால் முடியாததை அவரால் நடத்திக் கொள்ளலாமே!இப்படி நமக்காக ஈச்வரனை வரவழைத்துத் தரக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்?'என்று தேடிக்கொண்டிருந்தார்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு**

**ஸ்வாமியிடம் ஸ்வாதீனம் கொண்ட ஸ்வாமிகள்**

அப்போதுதான் அவர் திருவாரூரிலிருந்த

ஸுந்தரமூர்த்திஸ்வாமிகளைப் பற்றிக் கேள்விப்பட்டார். அவருக்கும் ஈச்வரனுக்கும் இருக்கப்பட்ட அத்யந்த உறவைப் பற்றிக் கேள்விப்படப் பட அவருக்கு ரொம்ப விசித்ரமாகவும் இருந்தது, அதிசயமாகவும் இருந்தது. அந்த ஸ்வாமிகள் (ஸுந்தரமூர்த்தி) ஊரிலுள்ள எல்லா ஸ்வாமிகள் மாதிரியும் இல்லாமல் ரொம்ப மாறுதலாக இருந்தார். ஸ்வாமிகள் என்றால் பொதுவாக ஒட்ட ஒட்டக் கிடந்துகொண்டு, ஒரு கோவணத்தைக் கட்டிக்கொண்டு, 'பெண்ணாவது, பொன்னாவது?'என்று இருப்பார்கள் என்றால் இவரானால் ஷோக் ஆஸாமி மாதிரி இருப்பதாகத் தெரிந்தது!குங்குமப் பொட்டும் ஜவ்வாதுப் பொட்டுமாக ஏக அலங்காரமாயிருப்பாராம்!அதோடு, கேட்டாலே 'ஷாக்'அடிக்கிற மாதிரி, போகப்படாத வீட்டுக்குப் போகிறவராம்!இருந்தாலும் ஈச்வரன் அவருக்கு ரொம்பவும் அத்யந்தமாம். "பொன் வேணும், பெண் வேணும்"என்று அவனையே இவர் கேட்டால் அவனும் உடனுக்குடனே அப்படியே கொடுக்கிறானாம்!போகப்படாத வீட்டுக்காரி இவர் கிட்டே கோபித்துக் கொண்டால், இவருக்காக ஈச்வரனும் அந்தப் போகப்படாத இடத்துக்கு நடையாக நடந்து தூது சொல்லி அவளுடைய கோபத்தைத் தீர்த்துவைத்து இவர் அங்கே மறுபடி போகும்படி ஸஹாயம் பண்ணுகிறானாம்!ஸ்வாதீனத்திலே இவர் ஈச்வரனையே எடுத்தெறிந்துகூடப் பேசுகிறாராம். இவர் பொய் ஸத்யம் பண்ணிக் கண் அவிந்து போனால், அதற்காக ஈச்வரனைத் திட்டுவாராம். 'ஏனையா என் கண்ணைப் பறிச்சே!நீ நன்னா இருப்பியா? வாழ்ந்து போதீரே !"என்பாராம். (... அதாவது 'நீ நன்றாக வாழ்வாய்'என்று சொல்லுகிற மாதிரி சொல்லும் போதே 'நீ வாழ்வாயா?'என்ற அபிப்ராயத்தைத் தெரிவிப்பது. 'எனக்கு இத்தனை கஷ்டம் கொடுத்தியோன்னோ, நீ நன்னாயிரப்பா!'என்றால் என்ன அர்த்தம்?இப்போதுங்கூட, 'நீ வாழ்ந்தே!'என்று சொல்லும்போது என்ன அர்த்தத்தில் சொல்கிறோம்?) இப்படி அந்த ஸ்வாமிகள் ஈச்வரனையே கடிந்து கொள்கிறாராம். ஈச்வரனும் உடனே கண்ணைக் கொடுக்கிறானாம். இவருக்கு ஏதோ திருட்டு போனால், 'நீ இருந்து என்ன ப்ரயோஜனம்: எத்துக்கிருந்தீர் ?'என்று ஸ்வாமியை அதட்டுகிறாராம். உடனே ஸ்வாமி திருடர்களையே திரும்பிவந்து கொள்ளையடித்ததையெல்லாம் கொட்டிவிட்டுப் போகப்

பண்ணுகிறாரம். மிரட்டி உருட்டியுங்கூட ஸ்வாமியிடம் காரியம் ஸாதித்துக் கொள்வதால் அவருக்கு 'வன்றொண்டர்'என்றே பேராம்!தொண்டர்களென்றால் அடங்கியொடுங்கிக் கிடப்பார்களென்றால் இவரோ வன்மையாகக் கண்டித்துப் பேசி யஜமானனிடம் காரியம் வாங்கிக்கொள்ளும் வன்தொண்டராயிருக்கிறார்!இவர் விசித்ரமான தொண்டராயிருக்கிறாரென்றால் ஸ்வாமியும் அதைவிட விசித்ரமாக இவர் சொல்கிறபடியெல்லாம் கேட்கிற இன்னொரு யதோக்தகாரியாக இருக்கிறார்! (என்றெல்லாம் ஸோமாசி மாறர் நினைத்தார்.)

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு**

**நம் அறிவை மீறிய மஹான்களின் போக்கு**

மகான்களின் போக்கு, ஈச்வரனின் போக்கு நம்முடைய சின்ன புத்திக்குப் புரியாது. ஆகையால், நாம் இந்த புத்தியைக் கொண்டு முடிவு பண்ணி அபசாரத்துக்கு ஆளாகிவிடக்கூடாது. நம் புத்திக்கும் புரிகிற மாதிரி சிலவற்றுக்குக் கதை, புராணங்களில் பெரியவர்கள் காரணம் காட்டியிருக்கிறார்கள். அவற்றை நம்பி எடுத்துக் கொள்ளவேண்டும்.

ஸுந்தரமூர்த்தி பரவை, சங்கிலி ஆகியவர்களிடம் ப்ரேமையாயிருந்தாரென்பதால் சட்டென்று அவரைப் பற்றிக் கன்னாபின்னா என்று நினைத்துவிடக்கூடாது. அவர்கள் அன்ய ஜாதி, அதிலும் ஒருத்தி போகப்படாத தெருவை, வீட்டைச் சேர்ந்தவள், என்பதால் அவர்களையும் குறைவாக நினைத்துவிடக் கூடாது. பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் என்று அவர்களை நிரம்ப மரியாதை கொடுத்தே தொன்று தொட்டுச் சொல்லிவருவதிலிருந்து அவர்கள் எத்தனை உயர்ந்த சீலமும் பக்தியும் உள்ளவர்களாயிருந்திருக்க வேண்டுமென்று புரிந்துகொள்ளலாம் 'அவர்கள் யார்?ஸு

ந்தரமூர்த்தி யார்?சாஸ்த்ரோக்தமாக அவர் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போனபோது வ்ருத்த வேதியராக வந்து ஓலையைக் காட்டி அவரைத் தன் அடிமை என்று ரூபித்து அவர் க்ருஹஸ்தாச்ரமம் போகாமல் தடுத்த ஈச்வரனே அப்புறம் அவரை இந்தப் பெண்களிடம் சேர்த்து வைப்பானேன்?அதற்காகப் போகப்படாத இடத்துக்குத் தானே தூது போவானேன்?'என்பதற்கெல்லாம் 'பெரிய புராண'த்தின் ஆரம்பத்திலேயே பதிலிருக்கிறது.

ஸுந்தரமூர்த்தி பூலோகத்தில் பிறப்பதற்கு முன்பு கைலாஸத்தில் ஈச்வரனுக்கு நெருங்கிய பார்ஷதராக (கிங்கரராக) இருந்தவர். அப்போது பரவை நாச்சியாரும் சங்கிலி நாச்சியாரும் அம்பாளுக்கு ஸகிகளாக இருந்தனர். ஒரு நாள் அவர்கள் இரண்டு பேரையும் ஸுந்தரர்- அப்போது ஆலால ஸுந்தரர் என்று அவருக்குப் பெயர்- அவர்களை நந்தவனத்தில் பார்த்தார். பரஸ்பரம் அவர்களுக்குள் ப்ரேமை ஏற்பட்டுவிட்டது. கைலாஸத்தில் இந்த மாதிரி காதல், கீதல் என்று நடப்பது ரொம்பத் தப்பு என்று தான் ஈச்வரன் அவர்களை பூலோகத்தில் பிறக்கும்படிச் சபித்து, அதிலேயே கருணையோடு அந்த ஜன்மாவில் அவர்கள் தங்கள் ஆசையையும் பூர்த்தி செய்துகொள்ளட்டும் என்று அநுக்ரஹம் பண்ணினான்.

இம்மாதிரி, நமக்கு விசித்ரமாக, ஒவ்வாததாகத் தோன்றுகிற பலவற்றுக்குக் காரணம் புராணங்களில் கொடுத்திருக்கிறது. நாம்தான் அவஸரப்பட்டு, ஒன்றையும் பார்க்காமல் 'க்ரிடிஸைஸ்'பண்ண ஆரம்பித்துவிடுகிறோம். சிலவற்றுக் காரணம் சொல்லியிருப்பதிலிருந்தே, சொல்லாமல் விட்டவற்றுக்கும் ஏதாவது காரணம் இருக்க வேண்டுமென்று புரிந்து கொள்வதுதான் முறை.

பரவை, சங்கிலி விஷயமாக ஸுந்தரமூர்த்தியைப் பற்றிக் குறைத்து நினைப்பவர்கள் இன்னம் சில விஷயங்களையும் சேர்த்துப் பார்க்கவேண்டும். பத்னி என்று ஒரு கன்னிகைக்கு அவர் சாஸ்த்ரோக்தமாகத் தாலிகட்டி தாம்பத்தியம் ஆரம்பிக்கவிருந்த ஸமயத்தில்தான் ஈச்வரன் அவரை இழுத்தான். அவரும் உடனே அவனுக்கு "மீளா அடிமை"என்று சொல்லிக்கொண்டு குடும்ப வாழ்க்கையைத் துச்சமாகத் தள்ளிவிட்டு கோவில் கோவிலாகச் சுற்றப்

புறப்பட்டுவிட்டார். அப்போது ஒரு ஊருக்கு அவர் போன போது அங்கேயிருந்த கோட்புலி நாயனார் என்ற பெரியவர் நல்ல குணவதிகளாகவும், ஸௌந்தர்யவதிகளாகவும் இருந்து தம்முடைய இரண்டு புத்ரிகளையும் ஸுந்தரமூர்த்திக்கு அர்ப்பணம் பண்ணி, "இவர்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும்"என்று கேட்டுக்கொண்டார். சிங்கடி, வனப்பகை என்ற அந்தப் பெண்களும் வந்து அவரை நமஸ்கரித்தார்கள். அப்போது ஸுந்தரர் பரம சுத்தமான மனஸோடு, "இவர்களை என் புத்ரிகளாக ஏற்றுக்கொள்கிறேன்"என்றே சொன்னார். இதற்கு அகச்சான்றாக அவ்வூரிலே பாடிய பதிகத்தில் தம்மை "சிங்கடியப்பன்"என்றே சொல்லிக்கொள்கிறார்.

இன்னொரு angle-ல் (கோணத்தில்) சொல்கிறேன்:மஹான்களுடைய சரித்ரம், வாழ்க்கை வரலாறு என்பதில் வெளியிலே நடக்கிற ஸம்பவங்களைப் பார்க்கிறோம். அந்த ஸம்பவங்கள் அவர்கள் மனஸை எப்படித் தொட்டது,- தொட்டதா தொடாமலே இருந்ததா?-என்றும் பார்க்கிறோம். ஆனால் இதற்கெல்லாம் உள்ளே அவர்களுடைய ஹ்ருதய அந்தரங்கம் எப்படியிருந்தது என்று தெரிந்தால் தான் அவர்களுடைய உண்மையான பெருமை தெரியும். அது இந்த வெளிவாழ்க்கையில் தெரியாது. தெரிந்தாலும் கொஞ்சம் ஏதோ லேசாகத்தான் தெரியும். பின்னே அவர்களுடைய அந்தரங்கம், உயிர்நிலையான பண்பு, எதிலே தெரியுமென்றால் அவர்கள் தங்களுடைய அந்தராத்மாவிலிருந்து பொங்கி வருவதாக அருள் வேகத்தில் எழுதி வைத்திருக்கிறார்களே, அந்த நூல்களில்-பாடி வைத்திருக்கிறார்களே, அந்தப்-பாட்டுகளில் தான் தெரியும்.

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய வெளிவாழ்க்கை எப்படி வேணுமானால் இருக்கட்டும் அவருடைய உள் மனஸ், அந்தரங்கம் எப்படி இருந்தது என்றால் அதற்கு அவருடைய பாடல்களைத்தான் பார்க்கவேண்டும். இப்படியும் ஒரு உத்தமமான பக்தியா என்று நாம் குழைந்து போகிற மாதிரி அவர் தேவாரம் பாடியிருக்கிறார். எத்தனையோ நூற்றாண்டுகளாக, எத்தனையோ தலைமுறைதளை இப்படிக் குழைத்து வருகிறவர் பரம பக்த சிகாமணியாகத்தான்

இருந்திருக்க வேண்டுமென்று நாம் புரிந்துகொள்ளாவிட்டால் நம்மை விட அசடு இல்லை என்றே அர்த்தம்.

" அன்னே ! உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே "

" அத்தா ! உனக்காளாய் ..."

"... உனை நான் மறக்கினும் சொல்லு(ம்) நா நமச்சிவாயவே "

என்று இப்படி அநேகம், நம்முடைய கருங்கல் மனஸையும் நெகிழச் செய்கிற மாதரி பாடி வைத்திருப்பவரைப் பற்றி அபசாரமாக நினைத்துவிடப்படாது.

ஈச்வரனையே ஏவினார், ஏசினார் என்றால் அதுவும் அவன் எவ்வளவு ஸௌலப்யன் என்று காட்டுவதற்குத்தான். அவனே தன்னை வழிபடுவதிலுள்ள பல மார்க்கங்களில் இவரை ஸகா மார்க்கத்தில் ஸ்நேஹிதனாகப் பழக வைத்ததால்தான் அவனிடம் உரிமையோடு சண்டைகூடப்போட்டார். ' தம்பிரான் தோழர் 'என்றே அவருக்கு ஒரு பேர். ஸாக்ஷாத் ஈச்வரனிடம் இப்படி வன்தொண்டராக இருந்த அவரேதானே அவனுடைய அடியார்களான அறுபத்து மூவருக்கும் தம்மை "அடியேன், அடியேன்"என்று ஒரே அடக்கமாகத் தெரிவித்துக்கொண்டு, நமஸ்காரம் பண்ணித் 'திருத்தொண்டைத் தொகை'பாடியிருக்கிறார்?

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

## தூதுபோன தூதுவளை !

தாம் பண்ணப்போகிற யஜ்ஞத்துக்குப் பரமேச்வரனை யார் மூலம் வரவழைக்கலாம் என்று பார்த்துக்கொண்டிருந்த ஸோமாசிமாறர் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைப் பற்றித் தெரிந்து கொண்ட பிறகு அவரைப் பிடித்தே கார்யத்தை நடத்திக் கொள்ளலாமென்று தீர்மானம் பண்ணினார்.

ஆனால் அவரைப் பிடிப்பதும் அப்படி லேசான கார்யமாக இருந்துவிடவில்லை. ஏனென்றால் அவரைச் சுற்றி எப்போது பார்த்தாலும் சிவனடியார்களும், ஜனங்களுமாக ஜே, ஜே என்று கூட்டமாக இருக்கும். ராஜா மாதிரி ஒரு பெரிய தர்பார்-சிவ பக்தி தர்பார்-அவர் நடத்தி வந்தார்!ஆதி சைவரென்றும், சிவ ப்ராஹ்மணரென்றும் சொல்லும் அர்ச்சகர்கள் ஜாதியில் அவர் பிறந்திருந்தாலும், அவரை திருமுனைப்பாடி நாட்டின் சிற்றரசரே ஸ்வீகாரம் செய்து கொண்டு வளர்த்தார். அப்புறம் அவருக்கு மூவேந்தர்களுமே, அதிலும் சிறப்பாக சேர ராஜா, நெருங்கிய பக்தர்களாக இருந்தார்கள். மூவேந்தர்களும் புடைசூழக்கூட அவர் சில பாண்டி நாட்டு ஸ்தலங்களுக்குப் போயிருக்கிறார். ஆகையால் அவரும் ஒரு ராஜா மாதிரியே அலங்காராதிகளுடன் பரிவாரம் சூழ இருந்தார்.

'யாரோ ஒரு ஏழை ப்ராம்மணனான தான் அவரை எப்படி நெருங்குவது?அவர் கவனத்தை எப்படிக் கவர்வது?என்று ஸோமாசி மாறர் யோசித்தார். 'தம்மால் என்ன பெரிய காணிக்கை, ஸம்பாவனை ஸமர்ப்பித்து அவருடைய கவனத்தைப் பெறமுடியும்?'என்று யோசனை பண்ணினார். சட்டென்று அவருக்கு ஒரு யுக்தி தோன்றிற்று.

அவர் அக்னிஹோத்ராதி கர்மாக்கள் எல்லாம் க்ரமப்படி செய்துவிட்டு மத்யான்னம் ஒரு மணிக்கு மேலே தான் போஜனம் பண்ணுவார். போஜனமென்றால் ஒன்றும் பஞ்ச பக்ஷ்ய பரமான்னமில்லை. "இவன் யார் பார்ப்பான்?பிடுங்கித் தின்கிறான்!"என்று எவரும் சொல்வதற்கு இடமில்லாமல், எத்தனை எளிமையாக ப்ராம்மணன் இருக்க வேண்டுமென்று சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறதோ அப்படி வாழ்க்கை நடத்தினவர் அவர். ஆனதினாலே யாருக்கும் எந்தத் தொந்தரவுமில்லாமல், தானம் தக்ஷிணை என்றுகூட யாரிடமும் எதையும் எதிர்பார்க்காமல், அவர் பாட்டுக்குப் பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண்டே ஆற்றங்கரையோடு போய், கேட்பாரில்லாமல் ஒதுக்குப் புறத்தில் முளைத்திருக்கிற கீரை முதலானதுகளைப் பறித்துக்கொண்டு வந்து பத்னியிடம் கொடுத்தே பாகம் (சமையல்) பண்ணி வைக்கச் சொல்வார். ஊரானைப் பிடுங்கித் தின்கிறதில்லை;ஊருக்கு ஒதுக்குப் புறத்துக் கீரையைத்தான் பிடுங்கித் தின்கிறது! அதனால்

அவருக்கு இப்போது என்ன நினைவு வந்ததென்றால், 'நாம் ஸமர்ப்பணம் பண்ணுவதற்கு வேறே பெரிய காணிக்கை இல்லாவிட்டால் என்ன?நம் ஆற்றங் கரையிலே எங்கேயுமில்லாத விசேஷமாக ரொம்ப உசந்த ஜாதி தூதுவிளங்கீரை (தூதுவளை அல்லது தூதுளை என்கிற கீரை) யதேஷ்டமாக விளைகிறதே!அது தேஹாரோக்யத்தோடு ஞானத்தையும் வ்ருத்தி பண்ணக்கூடியது என்று சொல்கிறார்களே!ஆகையினாலே பச்சுப் பச்சென்று அதை நித்யமும் பறித்தெடுத்துக்கொண்டு போய் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் க்ருஹத்தில் சேர்ப்பித்து அவருடைய ஆஹாரத்தில் சேர்க்கும்படிப் பண்ணிவிட்டால், என்றைக்காவது ஒரு நாள் அவர், யார் நித்யமும் இப்படி கீரை கொண்டு வந்து தருகிறது?'என்று கேட்டுத் தெரிந்து கொண்டு பேட்டி கொடுக்க மாட்டாரோ?'என்று எண்ணினார். தூதுவிளங்கீரை மூலமாக ஸூக்ஷ்மமாக ஒரு தூது அனுப்பி ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகளின் கவனத்தைக் கவர யுக்தி பண்ணிவிட்டார்!

யுக்தியாக மட்டும் பண்ணவில்லை, பக்தியோடுந்தான் பண்ணினார். 'அவர் கீரையைக் கவனிக்காவிட்டால் கூடப் போகட்டும். அந்தப் புண்யாத்மா குஷியில் நித்யமும் நம்முடைய நிவேதனம் போனாலே போதும். நாம் பாட்டுக்குக் quiet-ஆகக் கொடுத்துக் கொண்டேயிருப்போம். நடக்கிறது நடக்கட்டும்'என்று முடிவு பண்ணினார்.

அந்த ப்ரகாரமே தினமும் ச்ரமத்தைப் பார்க்காமல் திருவாரூருக்குப் போய் தூதுவளை கொடுக்க ஆரம்பித்தார்.

ஸுந்தரமூர்த்தி பரவை நாச்சியார் வீட்டில் வாஸம் பண்ணிக்கொண்டிருந்தார். அங்கே வருகிறவர்களும் போகிறவர்களுமாக திருவிழா மாதிரியே எப்பவும் இருக்கும். அந்த அமர்க்களத்தில் ஸோமாசி மாறர் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் இருந்த பக்கமே போவதில்லை. அவர் பாட்டுக்கு ஓசைப் படாமல் சமையற்கட்டுக்குப் போய் பரிசாரகர்களிடம் கீரையைக் கொடுத்துவிட்டுப் போய் விடுவார். 'யாரோ ப்ராம்மணர், இத்தனை அக்கறையாக ஒரு நாளைப் போலக்கொண்டு வந்து தருகிறாரே'என்று பரவை நாச்சியார் பரிவாக நினைத்துக்கொண்டு அதை ஸுந்தமூர்த்தியின் ஆஹாரத்தில் சேரும்படியாக ஏற்பாடு

பண்ணிக்கொண்டிருந்தாள். ஆனாலும் அந்த ப்ராம்மணரை பற்றிப் பதியிடம் சொல்ல அவளுக்கு அவகாசம் கிடைக்கவில்லை.

பெரிய பங்க்தியாக சிவனடியார்களோடு சேர்ந்துதான் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் போஜனம் பண்ணுவார். ஒன்று, போஜனம் மௌனமாக சிவத்யானத்தோடேயே பண்ணுவார். இல்லாவிட்டால் ஈச்வர மஹிமைகளை அடியார்களோடு பரிமாறிக்கொண்டே, தமக்குப் பரிமாறப்படும் அன்னத்தை புஜிப்பார். போஜனம் ஆன பிற்பாடும் நாம கீர்த்தனம், த்யானம், ஆலய தர்சனம், இவரே புதிது புதிதாகத் தேவாரம் பாடுவது என்று நடந்து வந்ததால் கீரையைப் பற்றி அவர் தனி கவனத்தோடு விசாரிக்க இட மேற்படவில்லை.

நாள் ஓடிக்கொண்டேயிருந்தது. ஸோமாசி மாறரும் மனந்தளராமல், கால்வலி பார்க்காமல் தினமும் கீரைக் கைங்கர்யம் பண்ணிக்கொண்டே வந்தார்.

அப்புறம் என்ன ஆச்சு என்றால், அவர் வருகிற வழியில் ஆற்றில் பெரிசாக வெள்ளம் வந்து விட்டது. ஸோமாசி மாறரால் அதைத் தாண்டி வர முடியவில்லை. 'ஐயோ, இப்படி நம்முடைய அல்ப கைங்கர்யத்துக்கும் விக்னம் ஏற்பட்டுவிட்டதே!'என்று துக்கப்பட்டார். துக்கப்பட்டு என்ன பண்ணுவது?நாலு, ஐந்து நாளுக்கு வெள்ளம் வடியவேயில்லை. ஆறாத குறையோடு ஸோமாசி மாறர் வீட்டோடேயே கிடந்தார்.

ஆனால் ஈச்வரன் இப்படி விக்னம் மாதிரிக் காட்டியதிலேயேதான் அவருடையே பிரச்னையைத் தீர்ப்பதற்கு வழி வைத்திருந்தான். இப்படி விளையாடுவதுதான் அவன் வழக்கம்!

அங்கே, திருவாரூரில், நாலஞ்சு நாள் சேர்ந்தாற் போல தூதுவளை போஜனத்தில் சேராததாலேயே ஸுந்தரமூர்த்தி குறிப்பாக அதைக் கவனித்துவிட்டார்!

அநேக ஸமாசாரங்கள் அவை நடக்கும்போது நம் கவனத்துக்கு விசேஷமாக வராது. ஆனால் நடக்காமல் நின்று போனால் சட்டென்று கவனித்து விடுவோம் நாம் இப்போது பேச்சிலேயே கவனமாக இருப்பதால் இங்கே காற்றோட்டாமாயிருக்கிறது என்பதை ஒரு விஷயமாக

மனஸில் வாங்கிக்கொள்ளாமலே இருக்கிறோம். அதுவே இந்தக் கதவு, ஜன்னல் சட்டென்று சாத்திக்கொண்டு, புழுங்க ஆரம்பித்தால் அப்போதுதான், 'ஓஹோ, இத்தனை நாழி காற்றோட்டமாக இருந்திருக்கிறது!'என்று தெரிந்து கொள்வோம்.

அந்த மாதிரி, போஜனத்தில் தூதுவளை சேர்ந்துகொண்டிருக்கும் வரையில் வேறே சிவ ஸ்மரணம், சிவ கதை பேசுவது என்பதில் ஸுந்தரமூர்த்தி அதை மனஸில் வாங்கிக் கொள்ளாவிட்டாலும், இப்போது சேர்ந்தாற்போல சில நாட்கள் அது நின்று போனதும் ஆஹாரத்தில் என்னவோ வித்யாஸம், குறை இருக்கிற மாதிரித் தெரிந்தது.

விசாரித்ததில் எவரோ ப்ராமணர் எங்கேயிருந்தோ தினந்தினம் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்த கீரை நின்று போயிருப்பதைப் பரவை நாச்சியார் சொன்னாள்.

"ஐயோ, பாவமே!இப்படியொருத்தர் நம்மை அடையாளம் காட்டிக்கொள்ளாமல் மெனக்கிட்டு கைங்கர்யம் செய்துகொண்டிருந்தாரா?இப்படிபட்ட உத்தமமான ஜீவனைத் தெரிந்துகொள்ளாமல் போய்விட்டேனே!அவர் மறுபடியும் வந்தால் என்னிடம் அனுப்பு. அவரை அவச்யம் பார்க்கவேண்டும். நம்மால் ஏதாவது ப்ரதி செய்ய முடியுமானால் செய்யவேண்டும்"என்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் சொன்னார்.

இவரைப் பார்ப்போமா, பார்ப்போமா என்று அவர் தவித்துக்கொண்டிருந்த மாதிரியே அவரைப் பார்ப்போமா என்று இவர் தவிக்க ஆரம்பித்து விட்டார்!இதுதான் ஈச்வரன் செய்யும் விளையாட்டு!

வெள்ளம் வடிந்தது.

'அப்பாடா மறுபடி கைங்கர்யம் ஆரம்பிக்கலாம்'என்று ஸோமாசி மாறர் ரொம்ப ஸந்தோஷமாகக் கூடுதலாகவே கீரை பறித்துக்கொண்டு வந்துசேர்ந்தார்.

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் அவரைப் பார்க்க ப்ரியப்படுகிறாரென்று தெரிந்ததும் ஸந்தோஷத்தில் உச்சிக்கே போய்விட்டார். "மஹா பெரியவர், ஈச்வரனோடு நேரே பேசிப்

பழகுபவரின் ஸந்திப்புக் கிடைக்கிறதே!"என்று ஹ்ருதயம் பட், பட்டென்று அடித்துக்கொள்ள அவருக்கு முன்னாடிபோய் விழுந்தார்.

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்குக் கீரைக் கைங்கர்யக்காரரைப் பார்த்ததில் ரொம்பவும் ஸந்தோஷம் ஏற்பட்டது. "நீர் யார் ஸ்வாமி?கஷ்டம் பார்க்காமல் நித்யம் தூதுவளை கொண்டுவந்து கொடுத்துண்டு இருக்களே?என்னாலே உமக்கு ஏதாவது ஆகணுமா?"என்று கேட்டார்.

இந்த ஒன்றுக்காகத்தான் ஸோமாசிமாறர் காத்துக் கொண்டிரு ந்தாரென்றாலும், தம்முடைய பெரிய ஆசையை எல்லார் எதிரிலும் தெரிவிக்க வெட்கப்பட்டுக்கொண்டு, "ஆமாம், தங்களால் ஒரு உபகாரம் நடக்கணும். அதை ஏகாந்தத்தில் தெரிவிச்சுக்கணும்"என்றார்.

இப்படி அவர் சொன்னவுடனேயே ரொம்பப் பெரிசாக எதற்கோ அவர் அடி போடுகிறாரென்று ஸுந்தரமூர்த்திக்குப் புரிந்துவிட்டது. 'என்னதான் ஈச்வரன் தனக்கு எந்த அபீஷ்டமானாலும் பூர்த்தி பண்ணுகிறவனாக இருந்தாலும், அதற்காகத் தன்னிடம் எவர் வேண்டுமானாலும் எது வேண்டுமானால் நடத்தித் தரும்படி கேட்டால் அவனிடம் சிபார்சு பண்ணுவதா?'என்று அவர் நினைத்து, "பிராம்மணா!என்னாலே எதையும் முடித்துத் தரமுடியுமென்று நினைக்காதீர். என்னால் முடிந்ததைச் சொன்னால் செய்கிறேன்"என்றார்.

"தங்களால் முடியாததே இல்லை"என்று ஸோமாசி மாறர் பிடிவாதம் பிடித்து, ஏகாந்தத்தில் ஸுந்தரமூர்த்தியிடம் விஷயத்தைச் சொன்னார்.

"பரமேச்வரன் நேரிலே வந்து உம்மிடம் ஹவிஸ் வாங்கிக் கொள்வதென்பது ஸாமான்ய விஷயமில்லை. என்னால் அதை முடித்துத் தரமுடியுமா என்று தெரியவில்லை. ஆனாலும் உம்ம கீரை இந்த உடம்பில் நிறையச் சேர்ந்து விட்டதால், என்னால் முடிந்தது, சொல்லிப் பார்க்கிறேன். செய்கிறதும் செய்யாததும் ஸ்வாமி இஷ்டம். தப்பாக நினைச்சுக்கப்படாது"என்று ஸுந்தரர் முடித்துவிட்டார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

### பரமன் வைத்த பரீக்ஷை

அப்புறம் கோவிலுக்குப் போய் த்யாகராஜாவிடம் விஷயத்தைச் சொன்னார். அவருக்கு அது (ஸ்வாமியிடம் பேசுவது) ஸஹஜமான ஸமாசாரம்!

த்யாகராஜா அதற்கு, "ஸுந்தரம்!நீ ஒன்று சொல்லி நான் செய்யாமலிருப்பதற்கில்லை. உனக்கு ஒருத்தன் கைங்கர்யம் பண்ணிவிட்டானென்றால் அவனுக்கு நான் கூடுதலாகவே செய்யக் கடமைப் பட்டிருக்கிறேன். அதனாலே, உனக்காக அவனிடமிருந்து ஹவிஸ் வாங்கிக் கொள்வதற்கு நானே நேரில் போகிறேன். ஆனாலும் ஒன்று;இந்தப் ப்ராஹ்மணன் ரொம்பப் பெரிசாக ஆசைப்படுகிறான். அதை நான் அப்படியே நிறைவேற்றித் தருகிறதென்றால் நியாயமாகாது. ஆகையால், இந்த ரூபத்திலேயே போவேனென்று சொல்ல முடியாது. எந்த ரூபத்தில் போனாலும் அவன் புரிந்துகொண்டு கொடுத்தால் 'ஆஹா'என்று வாங்கிக்கொள்கிறேன்"என்றார்.

"ஆனால் ஸரி"என்று சொல்லிவிட்டு ஸுந்தரர் ஸோமாசிமாறரிடம் வந்து, "ஸ்வாமி வருவதற்கு ஒப்புக் கொண்டுவிட்டார்"என்று மாத்திரம் சொல்லி, விட்டு விட்டார்.

"ஸ்வாமி வரேன்னு சொல்லிவிட்டாரா, சொல்லிவிட்டாரா?"என்று ஸோமாசி மாறருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

ஸந்தோஷமாக அம்பர் மாகாளத்துக்குத் திரும்பினார்.

எல்லோருடைய ஸஹாயத்தையும் கேட்டுப் பெற்றுப் பெரிதாக ஸோம யாகமும் பண்ணினார். வைகாசி மாஸம் ஆச்லேஷ (ஆயில்ய) நக்ஷத்ரம் கூடிய நல்ல நாளில் யஜ்ஞம் நடந்தது.

ஹவிஸ் கொடுக்க வேண்டிய ஸமயம். 'ஸ்வாமி வல்லையே,

வல்லையே!வருவானா, வருவானா?வராமல்கூட இருப்பானா?'என்று ஸோமாசிமாறருக்குக் கிடந்து அடித்துக் கொள்ளும்போது...

'ஐய்ய, இதென்ன இப்படி நடக்கக் கூடாத அநாசாரமாக நடந்துவிட்டது!'என்று எல்லாரும் அருவருத்துக் கொண்டு மூக்கைப் பிடித்துக் கொள்கிற மாதிரி, ஒரே முடை நாற்றமும் அதுவுமாக, ஒரு புரிய புலையர் கூட்டம் தம்பட்டம் அடித்துக்கொண்டு திபு திபுவென்று யாக சாலைக்குள் நுழைந்துவிட்டது. ஒரு சேரியே படையெடுத்துவிட்டாற்போல இருந்தது. அத்தனை பேருக்கும் பிரதானமாக ஒரு புலையன். நடுவிலே அவன்-அவனைச் சுற்றித்தான் பாக்கிக் கூட்டம். அவன் கையில் நாலு நாய்களைப் பிடித்துக்கொண்டிருக்கிறான். பக்கத்தில் அவன் பெண்டாட்டி. அவள் தலையில், காத தூரத்துக்குக் காடி அடிக்கிற கள்ளுக்குடம்.

யஜ்ஞ ப்ராஹ்மணர்களுக்கு எப்படியிருக்கும்? "போச்சு, போச்சு. யாகமே பாழாப் போச்சு. பரிஹாரம், ப்ராயச்சித்தம் பண்ணிக்காட்டா நம்ப ப்ரஹ்மண்யமும் போயே போயிடும். இந்த அசட்டு மநுஷனுக்கு யாகம் நடத்தித்தர வந்ததற்கு நன்றாக அவஸ்தையை வாங்கிக் கட்டிக் கொண்டோம்"என்று அருவருத்துக் கொண்டு, ஆத்திரப்பட்டுக்கொண்டு எல்லாரும் அந்த இடத்தைவிட்டு மூக்கைப் பிடித்துக்கொண்டு ஓட ஆரம்பித்தார்கள்.

ஸோமாசி மாறர் மட்டும் பரமானந்தமாக உட்கார்ந்து கொண்டிருந்தார். அத்தனை நாளாக ஈச்வரனை வரவழைக்க வேண்டுமென்று அவருக்கு இருந்த ஆர்வம், ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்கு அவர் ச்ரமம் பார்க்காமல் பண்ணின கைங்கர்ய பலன், அவரிடம் இவருக்கு இருந்த நம்பிக்கை, இவரிடம் அவருக்கு இருந்த அநுக்ரஹ சிந்தை எல்லாமாகச் சேர்ந்து ஸரியான ஸமயத்தில் அவருடைய கண்ணைத் திறந்து வைத்துவிட்டது. பரமேச்வரன் வைத்த பரீக்ஷையில் அவர் பாஸ் பண்ணிவிட்டார்.

'நடுநாயகமாக நிற்கின்றானே ஒரு புலையன், இவன் வேறே யாருமில்லை-ஸாக்ஷாத் பரமசிவன்தான்!கள்ளுக்குடமும் தலையுமாக அவன் பக்கத்தில் நிற்கிறவள் அம்பாளே!நாலு வேதங்களையும்தான் நாய்களாகக்கிக் கையில் பிடித்துக்

கொண்டிருக்கிறான். சேரிப் பட்டாளம் முழுவதும் பூதகணங்ள்தான் என்று அவருக்குத் தெரிந்துவிட்டது!

காசியில் ஆசார்யாளிடம்கூட இப்படியே ஈச்வரன் தீண்டாதான் வேஷத்தில் வந்தான். அவர் முதலில் புரிந்து கொள்ளாத மாதிரி இருந்துவிட்டு, அப்புறம் அவனே வேதாந்தமாகச் கேள்வி கேட்ட பிறகு புரிந்துகொண்டாரென்று கேட்டிருப்பீர்கள். ஸோமாசிமாறர் தாமாகவே புரிந்துகொண்டு விட்டதாக இந்தக் கதை.

"ருத்ர"த்தில் ஸகலத்தையும் சிவ ஸ்வரூபமாகச் சொல்லிக்கொண்டு வரும்போது திருடன், புலையன் ஆகியவர்களாகவுங்கூட அவனே இருக்கிறானென்று இருக்கிறது. கீதையிலே பகவான், "பூஸுரர்கள் என்று பூஜிக்கப்படும் உத்தமமான ப்ராஹ்மணன்;கோ பூஜை, கஜ பூஜை என்று வழிபாடு பெறும் பசு, யானை;இதற்கு மறுபக்கம் பரம நிக்ருஷ்டமாக (தாழ்வாக)க் கருதப்படும் நாய்;அந்த நாய் மாம்ஸத்தையும் சாப்பிடும் புலையன் என்றிப்படி ஸகல ப்ராணிகளிடமும் ஸமதர்சனம் உடைவன்தான் உண்மையாகக் கற்றுணர்ந்த பண்டிதன்"என்று சொல்லியிருக்கிறார்.

ஸோமாசி மாற நாயனார் எத்தனையோ காத்திருந்து கஷ்டப்பட்டு, ஈச்வரன் வருவானென்று உடலை வருத்திக் கொண்டு யஜ்ஞம் செய்து கடைசியில் சேரிக்கூட்டம் வந்த போது, 'ஐயோ, அத்தனையும் வீணாப் போச்சே!'என்று அழுது, ஆத்திரப்பட வேண்டிய ஸமயத்தில் அமைதியாக அன்புருவமாக இருந்துகொண்டு சேரித்தலைவனாக வந்தவன் அந்த ஈச்வரனே என்று தெரிந்துகொண்டு அவன் கையிலே ஹவிஸைக் கொடுத்தார்.

மற்ற ப்ராம்மணர்களையும், "ஓடாதேள், ஓடாதேள்!ஸ்வாமியேதான் ஸபரிவாரம் இப்படி வேஷம் போட்டுண்டு வந்திருக்கான். நான் சொல்றதை நம்புங்கோ"என்று முறையிட்டுக் கூப்பிட்டார். ஆனால் அவர்கள் அவரை நிந்தித்துவிட்டுப் போய்விட்டார்கள்.

அதனால் ஸ்வாமி அவர்களையே தீண்டாதாராகும்படி சபித்து விட்டாரென்றும், அப்புறம் அவர்களுக்காக ஸோமாசிமாறர் வேண்டிக்கொண்டதன் மீது ஹவிஸ் தந்த அந்த நேரத்தில் மட்டும் தினமும் அவர்களை ஒதுக்கி வைக்கவேண்டுமென்று

சாபத்தை இளக்கினாரென்றும் மேலே கதை சொல்வார்கள்.

யஜ்ஞத்தில் கலந்துகொள்ள யாருக்கு அதிகாரம் இருக்கிறது. யாருக்கு இல்லை என்று சாஸ்த்ரத்தில் எப்படிச் சொல்லியிருக்கிறதோ அதை அந்த ப்ராம்மணர்கள் பின்பற்றியதில் தப்பில்லைதான். ஆனால் இவர்களைவிட நல்ல சாஸ்த்ரஜ்ஞரான ஸோமாசிமாறர் படாத பாடுபட்டு இப்படி ஒரு யஜ்ஞம் பண்ணி, இப்போது இவர்களை இருக்கச் சொல்லி மன்றாடுகிறாரென்றால், அதற்கு ஏதோ காரணமிருக்க வேண்டுமென்று அவர்கள் கொஞ்சம் பொறுமையாகத்தானே இருந்திருக்க வேண்டும்?அப்படிப் பண்ணியிருந்தால் அவர்களுக்கும் ஈச்வர தர்சனம் கிடைத்திருக்கும். மாறாக அவரை இவர்கள் திட்டிவிட்டு வெளியேறியதாலேயே ஈச்வர சாபத்திற்கு ஆளாகும்படியாயிற்று.

நமக்கு இது முக்யமில்லை. ஸோமாசி மாறர் ஹவிஸை எடுத்துக்கொண்டு வந்தவுடன் சேரித்தலைவன் ரிஷபாரூடராக தர்சனம் தந்தான். அம்பாள், கணங்கள் ஆகியவர்களும் ஸ்வயரூபத்தில் காட்சி கொடுத்தனர்.

ஸோமாசிமாற நாயனாருக்கு ஜன்ம ஸாபல்யமாயிற்று. ஜன்ம நிவ்ருத்தியுமாயிற்று. சிவ லோகத்தை அடைந்தார்.

கதை எதற்குச் சொன்னேனென்றால், ஸ்வய பலத்தால், பக்தியால் ஈச்வர தர்சனம் பெறமுடியாது என்று அவருக்குத் தெரிந்தபோது, ஈச்வரனை நன்றாக அறிந்த பெரியவரின் மூலம் அதை அவர் பெற்றாரென்று காட்டுவதற்குத்தான்.

பச்சிலையைக் காட்டி ஒரு பசுவை வரவழைப்பதுபோல, ஒதுக்குப் புறத்தில் கிடந்த ஒரு கீரையை அவர் காட்டியதிலேயே ஈச்வரனுக்கு ஸ்நேஹிதர் ஸ்தானத்திலிருந்தவர் அவருக்குத் தாம் கடன்பட்டதாக நினைத்து அவனை வருவித்துக் கொடுத்துவிட்டார்.

(முதலில் 'ஈச்வரனைப் பிடிப்பதற்காக நாம் பிடிக்க வேண்டிய ஸுந்தரமூர்த்தியையே எப்படிப் பிடிப்பது?'என்று யோசித்து, ஸோமாசி மாறர் அர்ப்பணித்த கீரை தான் ஒரு விதத்தில் அவருக்காக ஸுந்தரரிடம் தூது போய் தான் ஒரு விதத்தில் சேர்த்து வைத்திருக்கிறது. அதனால்தான் 'தூதுளங்கீரை'என்ற பெயரோ என்னவோ?ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும்

இப்படியே ராமாநுஜருக்கு முன்னால் ஆசார்ய புருஷராயிருந்த ஆளவந்தார் என்பவர் ஆரம்ப நாட்களில் ராஜபோகத்துடன் வாழ்ந்துவந்த காலத்தில் மணக்கால் நம்பி என்பவர் தூதுளங்கீரை அனுப்பிவைத்தே அவருடைய கவனத்தைக் கவர்ந்ததாக இருக்கிறது. ஆனால் வித்யாஸமென்னவென்றால், அந்தக் கதையில் கீரை அனுப்பிவந்த மணக்கால் நம்பிதான் ஆளவந்தாருக்கு குரு ஸ்தானமாக ஆனவர். எப்படியானாலும் அந்தக் கீரைதான் இரண்டு பேருக்கு நடுவே தூது போகிற மாதிரிப் போய் அவர்களைச் சேர்த்து வைத்திருக்கிறது!)

ஈச்வரனே வேண்டியதில்லை, குரு போதும்;அல்லது ஈச்வரன் வேண்டுமானாலும் அவனையும் குரு மூலமே ஸம்பாதித்துக் கொள்ளலாம்-என்று காட்டுவதற்குத்தான் கதை, புராணம் சொல்கிறேன்.

குரு செய்யும் பரமோபகாரத்துக்காக நாம் அவருக்குச் செய்யவேண்டியது பக்தி ஒன்றே.

நம்பிக்கை எல்லாவற்றுக்கும் மூலம், 'இவர் நிச்சயம் கடைதேற்றுவார்'என்ற உறுதியான நம்பிக்கை வேண்டும். பக்தி ச்ரத்தை என்பது அதைத்தான்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு**

**குருவுக்குக் குறை இருந்தாலும்...**

ஈச்வர பக்தி என்று தனியாக ஒன்று செய்யாமல் குரு பக்தி மட்டுமே பண்ணிக் கொண்டிருந்தால் போதும் என்று சொல்வதை ஆக்ஷேபித்து ஒன்று சொல்லலாம். 'ஒருத்தரிடம் பரிபூர்ண பக்தி, இவர் நமக்காக மோக்ஷ பர்யந்தம் எதுவும் அநுக்ரஹிப்பார் என்ற நம்பிக்கை எப்போது வரும்?அவரிடம் கொஞ்சங்கூட தோஷமே இல்லாமலிருக்க வேண்டும். அனந்த கல்யாண குணங்களும் நிரம்பியவராக அவர் இருக்கவேண்டும். அப்படிப்பட்டவரிடந்தான் நம்

ஹ்ருதயத்தில் பூர்ணமான பக்தி உண்டாகும். அதே போல, அவர் ஸர்வசக்தராகவும் இருக்கவேண்டும். அப்போதுதான் அவர் நமக்கு எதையும் அநுக்ரஹிக்க முடியும், மோக்ஷ பர்யந்தம் எதுவும் தரமுடியும் என்ற நம்பிக்கை உண்டாகும். ஈச்வரன் இப்படிப்பட்ட தோஷமே இல்லாத அனந்த கல்யாண குண நிலயன்; அதோடு ஸர்வசக்தனும்; இஹம் பரம் இரண்டிலும் அத்தனையும் அநுக்ரஹிக்க முடிந்தவன் என்பதில் ஸந்தேஹமில்லை. யாருக்குமே இதில் கொஞ்சங்கூட ஸந்தேஹம் கிடையாது. ஆனால் இம்மாதிரி தோஷமென்பது கிஞ்சித்கூட இல்லாதவராகவும், நமக்காக எதையும் ஸாதித்துத் தரக்கூடிய ஸர்வசக்தி பொருந்தினவராகவும் இருக்கும் ஒரு குருவை நாம் பெறமுடியுமா?என்னதான் மஹான் என்றாலும் கோபம், கீபம் இப்படி ஏதோ ஒன்று, எதிலேயாவது அவருக்கும் ஆசை - த்வேஷம் என்றெல்லாம் கொஞ்சமாவது இருக்கிற மாதிரிதானே அவர்களும் தெரிகிறார்கள்?ஸர்வசக்தி என்று எடுத்துக்கொண்டாலோ, இவர் எதுவும் முடிகிற ஸர்வசக்தர் என்று காட்டுகிறபடி எந்த குருவாவது இருப்பதாகச் சொல்லமுடியுமா?அவர்களே போடுகிற ப்ளான்களில்கூட சிலது நிறைவேறாமல் போவதைப் பார்க்கிறோம். அவர்களும் தங்கள் கார்யங்கள் நடப்பதற்கு ஈச்வரனை ப்ரார்த்தித்துக்கொண்டு, அந்த சக்தியைத்தானே நம்பியிருக்கிறார்கள்?' என்று கேட்கலாம்.

இருக்கட்டும். அவர்களும் ஈச்வர சக்தியைத்தான் depend பண்ணிக்கொண்டிருப்பதாகவும், அவர்களிடமுங் கூட தோஷ லேசங்கள் இருப்பதாகவுமே இருக்கட்டும். ஆன எங்கும் நிறைந்துள்ள ஈச்வரன் அவர்களுக்குள்ளும் இருக்கிறானா, இல்லையா?அவர்களையே தோஷ ரஹிதமான சுத்த வஸ்து, உத்தம குண ஸம்பன்னர், ஸர்வசக்திமந்தர் என்று நினைத்து நாம் பக்தி பண்ணினால், நிஜமாகவே அவர்களுக்குள் அப்படி தோஷ ரஹிதமாயும், சுத்தமாயும் கல்யாணகுண பூரிதமாயும், ஸர்வசக்தி மயமாகவும் இருக்கிற ஈச்வரன் அந்த பக்தியை ஏற்றுக்கொண்டு, நமக்கான அநுக்ரஹத்தைப் பண்ணாமல் போவானா என்ன? நாயிடத்திலும், நாயைத் தின்கிறனிடத்திலுங்கூட ஈச்வர பாவனை இருந்தால், வாஸ்தவமாகவே அவர்கள் மூலமாகவும் அவன் அருள் செய்வான் என்னும் போது, நம்மைவிட எவ்வளவோ மடங்கு சுத்தரான, நல்ல குணம்,

ஒழுக்கம், கல்வி முதலியவை நிரம்பியவரான, கருணையும் நம்மைக் காப்பாற்றும் எண்ணமும் உள்ளவரான,-நம்மை விட எவ்வளவோ மடங்கு அநுஷ்டான சக்தி, ஸாதனா பலம் ஆகியவையும், இவற்றால் பெற்ற அநுக்ரஹசக்தியும் உடையவரான-குருவின் மூலம் அவரையே மனஸார நம்பிக் கொண்டு கிடக்கிற நமக்கு அநுக்ரஹம் பண்ணாமல்கூட ஒரு ஈச்வரன் இருப்பானா என்ன?

# தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

### குருபக்தியின் அநுகூலங்கள்

ஸரி;ஆனால், வாஸ்தவத்திலேயே தோஷமில்லாமல், கொஞ்சங்கூட குணஹீனமில்லாமல், பரிபூர்ண சக்தி மயமாக ஒரு ஈச்வரன் இருக்கும்போது, அவனையே நேராக பக்தி பண்ணாமல், இந்த அம்சங்களிலெல்லாம் நம்மைவிட எவ்வளவு உசந்தவரானாலும் அவனைப்போல முழுக்க perfect என்று சொல்ல முடியாத ஒருவரை perfect-தான் என்று நம் பாவனையால் பூர்த்தி பண்ணுவித்து பக்தி செலுத்துவானேன்-என்று கேட்டால்...

ஈச்வர பக்தியைவிட குரு பக்தியில் இருக்கிற அட்வான்டேஜைச் சொல்கிறேன். முன்பே சொன்னேன். இன்னம் கொஞ்சம் சேர்த்துச் சொல்கிறேன். ஈச்வரன் கண்ணுக்குத் தெரியவில்லை. இவரோ தெரிகிறார். இவரோடு கலந்து பழகமுடிகிறது. நமக்கான நல்லது, பொல்லாததுகளை ஈச்வரன் வாய்விட்டுச் சொல்வதில்லை. இவர் கர்ம ச்ரத்தையாக எடுத்துச் சொல்லி முட்டிக் கொள்கிறார். நாமும் இவரிடம் 'இப்படிச் செய்யலாமா, அப்படிச் செய்யலாமா?'என்று நன்றாக வழிகேட்டுப் பெறமுடிகிறது. ஈச்வரனிடமிருந்து அப்படிப் பெற்றுக்கொள்கிற அளவுக்கு நமக்குத் தீவிர பக்தி ச்ரத்தை இருக்கிறதா?

அப்புறம், ஈச்வரன் என்றால் எங்கேயோ எட்டாத நிலையிலிருப்பதாலேயே, ஒரு பக்கம் அவனோடு நாம்

கலந்து பழக முடியாது என்பதோடு, இன்னொரு பக்கம், கண்ணுக்கு -வாக்கு, மனஸு எல்லாவற்றுக்குமேதான்-எட்டாத நிலையிருக்கிற அவன் நாம் செய்வதையெல்லாம் பார்த்துக் கொண்டேயிருக்கிறான்;அதனால் தண்டிக்க வேண்டியதற்கு தண்டிப்பான், அநுக்ரஹிக்க வேண்டியதற்கு அநுக்ரஹிப்பான் என்ற எண்ணமும் நமக்கு இல்லை. அவனுடைய பார்வையிலேயே இருக்கிறோமென்று தெரியாததால்தான் துணிந்து மனம் போனபடி எதுவும் பண்ணுகிறோம். தப்பு பண்ணினால் தண்டனை என்ற பயமில்லாமல் பண்ணுகிறோம். அப்படியே, நல்லதுசெய்வதென்றால் எந்த நல்லதானாலும் அதற்கு நாம் தேஹத்தாலோ த்ரவியத்தாலோ ஏதாவது விதத்தில் கொஞ்சமாவது ஸாக்ரிஃபைஸ் செய்யாமல் முடியாது இப்படி ஸாக்ரிஃபைஸ் பண்ணுவானேனென்று இருந்துவிடுகிறோம். 'அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்'என்று பழமொழி இருக்கிறது. கொல்வது மட்டுமில்லை, நல்லது பண்ணுவதென்றாலும் அரசன் உடனே பொன், பொருள், ராவ்பஹதூர்-திவான் பஹதூர்-ஸர் வரைக்கும் பட்டம் கொடுக்கிறதுபோல தெய்வம் உடனே கொடுப்பதாகத் தெரியவில்லை. நம் புண்ய-பாப கர்மங்களின் நல்ல-கெட்ட பலன்கள் எத்தனையோ ஜன்மாந்தரங்களில் கோத்து வாங்கிக்கொண்டு போகும்படியாகத்தான் ஈச்வர தர்பார் நடக்கிறது. இப்படி எப்பவோ பண்ணியதற்கு எப்பவோ பலன் என்பதால், நாம் இப்படிப் பண்ணியதற்குத்தான் இது பலன் என்றே நமக்குத் தெரியாமல் போய்த் தப்பு பண்ணுவதிலும் குளிர்விட்டுப் போகிறது;நல்ல பண்ணுவதற்கும் உத்ஸாஹமில்லாமல் போகிறது.

குரு எப்படி இருக்கிறார்?நாம் தப்புப் பண்ணினால் உடனேயே எடுத்துச் சொல்லிக் கண்டிக்கிறார். நமக்கு உறைக்கும்படிக் கரித்துக்கூடக் கொட்டுகிறார். நாம் ஒரு தப்புப் பண்ணக்கூடிய நிலைமை ஏற்படும்போது, "இது குருவின் காதுக்குப் போய்விட்டால் என்ன ஆவது?"என்ற பயம் ஏற்பட்டு நம்மைக் கட்டிப்போடும். அவர் ஆத்மசக்தி நிறைந்த குருவாயிருந்தால் நாம் எங்கே என்ன தப்புப் பண்ணினாலும் அவர் தாமாகவே தெரிந்துகொண்டு விடுவார். அவ்வளவு சக்தியில்லாவிட்டாலும், அல்லது சக்தி இருந்தும் அதை வெளியில் காட்டாதவராக இருந்தாலு

ம்-மநுஷ்ய விளையாட்டு விளையாடுவதில் பல குருக்கள் இப்படித்(தெரிந்தும் தெரியாத மாதிரி) இருப்பது முண்டு, இப்படி இருந்தாலும்-வேறே யாராவது சொல்லி நம் தப்பு அவருக்குத் தெரிந்துவிட்டால் அப்புறம் நம் கதி என்ன என்ற பயம் இருந்து கொண்டேயிருக்கும். அது நம்மைத் தப்பிலிருந்து தடுக்கும்.

இதேபோல நாம் ஒரு நல்லது பண்ணினாலும் குரு அதை உடனே தாமாகவேயோ, இன்னொருத்தர் சொல்லியோ தெரிந்துகொண்டு-அல்லது இது நாம் பண்ணிய நல்லதல்லவா?அதனால் நாமே எப்படியாவது அது அவர் காதில் விழுகிற மாதிரி செய்துவிடுவோம்!இப்படி ஏதோ ஒரு விதத்தில் அவர் தெரிந்துகொண்டு-நம்மை மெச்சி, விசேஷமாக ஆசீர்வாதம் அநுக்ரஹம் பண்ணி, மேலும் மேலும் உத்ஸாஹப்படுத்துவார். ஒரேயடியாக மெச்சினால் நமக்கு மண்டைக் கனம் ஏற்படுமென்பதால், 'தப்புக்காக சிஷ்யனை வெளிப்படக் கண்டிக்கிறதுபோல, அவன் செய்யும் நல்லதற்காக வெளிப்பட ச்லாகிக்கக் கூடாது'என்று வைத்துக் கொண்டிருக்கும் குருகூட ஸூக்ஷ்மமாக, ஆனாலும் சிஷ்யனுடைய மனஸுக்கு நிச்சயமாகத் தெரிகிறவிதத்தில், ஏதோ ஒரு மாதிரி தம்முடைய ஸந்தோஷத்தைக் காட்டி, அதற்காக ஒரு அநுக்ரஹம் செய்யத்தான் செய்வார்.

நாம் கடைத்தேற வேண்டுமானால் அதற்கு நம்முடைய பாப கர்மாக்களைக் குறைத்துக் கொண்டு, புண்ய கர்மாக்களைக் பெருக்கிக் கொண்டாலொழிய எப்படி ஸாத்யமாகும்?இதில் புண்ணிய கர்மாவைப் பெருக்கிக் கொள்வதற்கு 'இன்ஸெண்டிவ்'(போனஸ் மாதிரி நம்மை உத்ஸாஹப்படுத்துவது), பாப கர்மாவைக் செய்தால் 'டிஸ் இன்ஸெண்டிவ்'இரண்டுமே நமக்கு உடனுக்குடன் குருவின் தீர்ப்பில் தெரிவதுபோல ஈச்வரனின் தீர்ப்பில் தெரிவதில்லை.

இதற்கும் மேலே, நம்முடைய பாப சித்தத்தைக்கூட குரு என்ற ஒருவர் இருக்கும்போது அவரே, நாமாக சுத்தி செய்து கொள்வதைவிடச் சிறப்பாக நமக்காக சுத்தி செய்துதருகிறார். பாபத்தில் கொஞ்சத்தைத் தாமே கூட வாங்கிக் கொண்டு தீர்த்து வைக்கிறார். நம்மைவிடக் கெட்டியாக நமக்காக ப்ரார்த்திக்கிறார். நமக்காக ஈச்வரனிடம் முறையிடுகிறார்,

வாதிக்கிறார், ஸ்வாதீனமாக உத்தரவு போடுகிறார், சண்டைகூடப் பிடிக்கிறார்- என்றெல்லாம் சொன்னேன்.

இதனாலெல்லாம்தான் ஈச்வரனைக் காட்டிலும் அபூர்ணமான குருவாக இருந்தாலுங்கூட அவரையே பூர்ண ஈச்வரன் என்று வழிபடச் சொல்லி "குரு வாத்"(Guru-vad) என்றே (வட இந்தியாவில்) உயரக் கொண்டு வைத்திருப்பது.

இப்படி அன்பும், அசைக்க முடியாத நம்பிக்கையும் குருவிடமே வைத்து விட்டவர்களுக்குத் தெரியும். பகவத் ஸ்மரணையை விடவும் குரு ஸ்மரணையிலேயே அதிக சாந்தி என்று.

அதெப்படி (பகவத் ஸ்மரணையைவிட குரு ஸ்மரைணயில் அதிக சாந்தி) இருக்க முடியுமென்றால்,

நம் பிரார்த்தனையை பகவான் கேட்கிறானா, நாம் பண்ணும் நல்லது கெட்டதுகளை அவன் பார்க்கிறானா என்றே நிச்சயமாகத் தெரியாதபோது, 'நமக்கு அவன் விமோசனம் அளிப்பான்'என்ற உறுதியில் உண்டாகிற சாந்தி, நிம்மதி எப்படி ஏற்படமுடியும்?'அநுக்ரஹிப்பானா, அநுக்ரஹிப்பானா?'என்று வெதுக்கு, வெதுக்கென்று மனஸ் அடித்துக் கொள்வதாயிருக்குமே தவிர 'நமக்கென்ன பயம்?அவன் பார்த்துக் கொள்கிறான்'என்ற த்ருட உறுதி, அதனாலே விச்ராந்தி, சாந்தி எப்படி ஏற்படும்?அப்பப்போ ஏற்பட்டாலும் ஸந்தேஹத்தில், அழுகையில், பயத்தில் அது அடித்துக் கொண்டு போய்விடுகிறது.

குரு சுச்ருஷைக்கு என்றே தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள் பயம், ஸந்தேஹம், அழுகை இல்லாமல் அவர்கள் பாட்டுக்கு நிம்மதியாக, "அவர் பார்த்துக்கொள்கிறார்"என்று இருப்பார்கள்.

பகவத் ஸ்மரணை என்னும்போது, அந்த பகவான் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஆனவர். எண்ணி முடியாத அத்தனைகோடி ஜந்துக்களில் நம்மைக் குறிப்பாகக் கவனித்து அவர் செய்வாரா, செய்வாரா என்றிருக்கிறது. அவர் பட்டுக்கொள்ளாமல் எங்கேயோ இம்பெர்ஸனலாக உட்கார்ந்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. குருவோ நமக்கென்றே ஏற்பட்டிருப்பவராகத் தெரிகிறார். நம்மைக்

கடைத்தேற்றவே இவர் கங்கணம் கட்டி கொண்டிருக்கிறார். உலகம் முழுதையும் கவனித்துக் கொள்கிற பெரிய ஆபீஸ் இவருக்கு இல்லாமல், தாம் நல்வழிப் படுத்தக் கூடியவர்களையே தம்மிடம் சேர்த்துக் கொள்பவராக இருப்பதால் அப்படிச் சேர்ந்த நம்மிடம் 'பெர்ஸனல் அடென்ஷன்'காட்டுபவராக இருக்கிறார். இவர் நமக்கு ரொம்பப் பெர்ஸனல்!நம் கஷ்டங்களிலெல்லாம் கலந்து கொள்கிறவராக இருக்கிறார். நம்மை கவனிப்பாரோ மாட்டாரோ என்றில்லாமல், "நமக்குன்னே ஏற்பட்டவர்"என்று உறவு கொள்கிறோம்.

ஈச்வரன் பண்ணுவதெல்லாம் நம்முடைய ஞானமில்லாத பார்வையில் ஏதோ யந்த்ர கதியில் இயற்கை பண்ணுகிறாற்போலவே தெரிகிறது;அவன் கர்த்தா என்று தெரியவில்லை. நமக்கு ஞானம் வருகிற வரையில், அவன் அநுக்ரஹம் செய்கிறபோதுகூட, யத்ருச்சையாக (தற்செயலாக) நடந்திருக்குமோ, என்னவோ என்று ஸந்தேஹமாக இருக்கிறது. 'பெர்ஸனல் டச்'குரு செய்வதில்தான் பிரகாசித்துக் கொண்டு தெரிகிறது;அதனால் நமக்குத் தெம்பும், விச்ராந்தியும் தருகிறது.

அத்தனை தினுஸான பக்ஷணம் பணியாரங்களும் கொட்டிக் கிடக்கிறது, ஆனால் ஆள் யாருமில்லை, நாமே எடுத்துத் தின்கிறோம் என்றால் எப்படி இருக்கிறது?ஏதோ கொஞ்சம் கூழ்தான் என்றாலுங்கூட ஒரு தாயார்க்காரி, "அப்போ கொழந்தே, சாப்பிடு"என்று தன் கையால் கொடுக்கிறாள் என்னும்போது அது எப்படி இருக்கிறது?இந்த 'பெர்ஸனல் டச்'சுக்கு இருக்கிற ஆனந்தம், பஞ்ச பக்ஷ்ய ஆஹாரத்தில் கிடைக்குமா?அதையும் யாரோ பண்ணித் தான் இருக்கிறார்கள். நாம் சாப்பிட வேண்டுமென்றே கொட்டிவைத்தும் இருக்கிறார்கள். ஆனால் பண்ணினவர் தெரியாவிட்டால் பண்டத்தின் ரஸாநுபவம் ரொம்பக் குறைந்துவிடுகிறது. ஈச்வராநுக்ரஹத்துக்கும், குரு அநுக்ரஹத்துக்கும் இதுதான் வித்யாஸம்.

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைப் போல, இன்னம் பல மஹான்களைப் போல அவனுடைய அநுக்ரஹத்தை அவனே ஸாக்ஷாத்தாகச் செய்வதாகக் கண்டு கொண்டு பெறுகிற வரையில், எத்தனை அருள் கிடைத்தாலும்

கொஞ்சம் ஸந்தேஹம், கேள்வி புறப்பட்டுக்கொண்டுதான் இருக்கும்.

இன்னொன்று வேறே!நல்லது கெட்டது எல்லாமே அவனிடமிருந்துதான் என்கிறார்கள். மாயையை ஏவி விட்டு இத்தனை கஷ்டங்களை உண்டாக்குவதும் அவனுடைய விளையாட்டுத்தான் என்கிறார்கள். பராசக்தி ஞானியைக்கூட பலவந்தமாகப் பிடித்திழுத்து மோஹத்திலே துள்ளுகிறதுண்டு என்று பயமுறுத்துகிறார்கள். ஈச்வர ஸங்கல்பம் நமக்குத் தெரியவே தெரியாது;புரியவே புரியாது என்று முடித்து விடுகிறார்கள். 'குடைராட்டினத்தில் பொம்மைகளை வைத்து இஷ்டப்படி சுற்றுகிற மாதிரி ஈச்வரன் ஸர்வ ப்ராணிகளையும் மாயையில் வைத்து ஆட்டுகிறான்'என்று பகவானே சொல்கிறான். ஆனதினாலே, அவனை ஸ்மரிக்கும் போது, 'நம்மகிட்ட எப்படி விளையாடுவானோ?கரைதான் சேர்ப்பானோ?இன்னும் நன்னாதான் அமுக்குவானோ?'என்றும் பயம் ஏற்பட இடமிருக்கிறது.

குரு இப்படியில்லை. ஈச்வரன் ஞானம் மாயை இரண்டுமாக இருக்கிறாற்போல அல்ல, குரு. ஞானத்துக்கு மாத்திரமே அவர் இருக்கிறார். மாயையைப் போக்கி ஞானத்தைத் தரவே ஏற்பட்டதுதான் அவருடைய ஆபீஸ். கெடுதலானதற்கும் ஆச்ரயமாயிருப்பவர், மாயையை ஏவி விட்டுக் கஷ்டங்களையும் கொடுத்து வேடிக்கை பார்ப்பவர்-என்று அவரைப் பற்றிச் சொல்லவே முடியாது. நமக்குக் கொடுதாலானவற்றை நீக்கி, நம்முடைய கஷ்டங்களைப் போக்கி, மாயையிலிருந்து நம்மை இழுத்துப் போடவே வந்துள்ள அவரைப் பற்றி ஸந்தேஹம், பயம் தோன்ற இடமேயில்லை.

இதனாலெல்லாந்தான் பகவத்ஸ்மரணையைக் காட்டிலும் குரு ஸ்மரணை அதிக சாந்தி என்பது. மரித்து, த்யானித்துப் பார்த்தவர்களுக்குத் தெரியும். ஒருவரை ஸ்மரிப்பது, த்யானிப்பது என்றால் என்ன?அவருடைய ரூபத்தை, கார்யத்தை, குணத்தை நினைத்துப் பார்த்துப் பார்த்து மனஸை அப்படியே அவரிடம் கரைந்து நிற்கும்படியாகச் செய்வது. கார்யமென்று எடுத்துக் கொண்டுதான் இத்தனை நாழி சொன்னேன். ஈச்வரனின் கார்யம் எதுவும், 'இது அவனுடையதுதான்'என்று நமக்குத் தீர்மானமாகத்

தெரியாததாகவே இருக்கிறது. நமக்கும் அவனுக்கும் நேர் 'டச்'இல்லை. வேறு பக்தர்களுக்கு அவன் செய்த அநுக்ரஹ கார்யங்களையே நினைக்கும்படிதானிருகிறது. அது நம் மனஸை நிரப்பிவிட்டால் விசேஷம்தான். த்ரௌபதிமான ஸம்ரக்ஷணம், குசேலாநுக்ரஹம், கஜேந்த்ர மோக்ஷம்-இப்படி எத்தனையோ, எல்லா தெய்வங்களைப் பற்றிய புராணங்களிலும் இப்படி அநேக அநுக்ரஹங்கள், இன்னம் பலவிதமான லீலா கார்யங்கள்... ராஸ லீலை, ஈச்வரனானால் ஆனந்த நடனம் என்றிப்படி;ஞானோபதேசம்:க்ருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்குப் பண்ணியது, தக்ஷிணாமூர்த்தி ஸநகாதிகளுக்குப் பண்ணியது-என்றிப்படி பலவிதமான கார்யங்கள் இருக்கின்றன. ஆனால் நம்முடைய அரைவேக்காட்டு நிலையில் அவற்றில் நம்மால் எவ்வளவு தூரம் முழுக முடிகிறது?வேறே யார் யாருக்கோ அவன் பண்ணியதில் நம்மால் எவ்வளவுக்கு மன நிறைவு பெற முடிகிறது?'அவர் எங்கே, நம்ப எங்கே?அதெல்லாம் நமக்குக் கிடைக்குமா?'என்று குறைந்துகொண்டு வருத்தப்படுவதாகக்கூட ஆகலாம். ஆனால் குரு ஸ்மரணை என்று நினைத்துப் பார்த்தால் நமக்கே அவர் நேராக எத்தனை செய்திருக்கிறாரென்று-நாம் மட்டும் நன்றியறிவு மறக்காதவர்களாக இருந்தால்-அநேகம் அகப்படாமல் போகாது. நாம் யோக்யதை மீறி ஆசைப்படுவதில் அநேகம் அவர் பூர்த்தி செய்யாமலும் இருக்கலாம். ஆனால் நம் ஸ்திதி என்ன என்கிற நினைப்பு இருந்து, நன்றியறிவும் இருந்துவிட்டால் நமக்கு அவர் செய்து அதிகப்படி என்று தெரியும்.

நாம் சீர்ப்பட வேண்டுமென்று எவ்வளவு முட்டிக் கொள்கிறார்?அது தவிர, எத்தனை வைராக்யம் சொன்னாலும் இந்த மநுஷ ரீதியில் ஒரு வாஞ்சை, வாத்ஸல்யம் என்று நம் நிலையில் ஆலம்பனம் வேண்டியிருக்கிறதே, இதையும்கூட எவ்வளவு நன்றாகப் பூர்த்தி செய்கிறார்?நம்முடைய யோக க்ஷேமங்களை எவ்வளவு அக்கறையாகக் கேட்டுக் கொள்கிறார்?நாம் மறந்து போயிருக்கும்போதுகூட, (அவரிடம்) போயிருந்தவர்களிடம் நம்மைப்பற்றி விசாரித்து ப்ரஸாதம் கொடுத்தனுப்பியிருக்கிறாரே!'வெயில்லே போகாதேடா!பட்டினியாப் போகாதேடா!'என்று எத்தனை ப்ரியமாகச் சொன்னார்!-என்று இப்படி நம்மைப் பற்றியதாகவே குரு செய்திருக்கும் அநேக

கார்யங்களைப்பற்றி ஸ்மரித்து ஆனந்தமாக நிறைந்திருக்க முடிகிறது.

ரூபம் என்று ஸ்மரிக்கும்போது, ஈச்வரனை தெய்வத்தின் ஒரு குறிப்பிட்ட மூர்த்தியாக த்யானம் செய்யும்போது, அந்த மூர்த்தி பற்றி ஏற்கெனவே கொடுத்திருக்கிற வர்ணனைப்படி பண்ணிப் பார்க்கிறோம். அப்படியே மனஸ் போய் அந்த ரூபத்திலே ஒட்டிக்கொண்டு நின்றுவிட்டால் உசத்திதான். நமக்கு அப்படி முடிகிறதா?புராணங்களிலும், மந்த்ர சாஸ்த்ரங்களிலும் வர்ணனை என்று கொடுத்திருப்பதில் பாதாதிகேசம், கேசாதி பாதம் விஸ்தாரமாக அங்க அங்கமாக லக்ஷணங்களைச் சொல்லியிருக்கும். 'பாதாதி கேசம்'என்றால் காலிலிருந்து தலைவரையில். புருஷ ரூபத்தில் உள்ள தெய்வங்களை இப்படித்தான் வர்ணிப்பார்கள். பாதத்தில் ஆரம்பித்து வரிசையாக மேலே கணுக்கால், முழங்கால், இடுப்பு, மார்பு, கழுத்து, முகம், என்றுபோய் சிரஸின் வர்ணனையோடு முடிப்பார்கள். கேசாதி பாதம் என்ற முறையிலே ஸ்த்ரீ தெய்வங்களை வர்ணிப்பார்கள் இது சிரஸில் ஆரம்பித்து வரிசையாகக் கீழே நெற்றி, கண், மூக்கு, வாய், கழுத்து, இடுப்பு என்று பாதம் வரையில் வர்ணிப்பது. இப்படி எந்த தெய்வமானாலும், இத்தனை கை... நாலு, எட்டு பதினெட்டு என்று வகைகள்;ஒவ்வொரு கையிலும் இன்ன ஆயுதம்;இப்படியிப்படி அலங்காரம்:கங்கை, சந்த்ரன், பாம்பு, புலித்தோல்-பீதாம்பரம், வனமாலை, கௌஸ்துபம்;இன்ன வாஹனம்-ரிஷபம், ஸிம்ஹம், கருடன், மூஷிகம், மயில் என்று எதுவோ ஒன்று, என்பதாக நீள நெடுக details (விவரங்கள்) சொல்லியிருக்கும். ஒவ்வொரு ரூபத்தைப் பற்றியும் இப்படிப் பெரிய லிஸ்ட் வைத்துக்கொண்டு நாம் த்யானிக்கும்போது, 'இன்னம் அந்த அம்சம் இருக்கே, இந்த அம்சம் இருக்கே!'என்று மனஸூ அலை பாய்ந்தபடியும் ஆகலாம். சாஸ்த்ரங்களில் என்ன சொல்லியிருக்கிறதென்றால் -க்ருஷ்ண பரமாத்மாவும் உத்தவ ஸ்வாமியிடம் அப்படித் தான் சொல்லியிருக்கிறார்-அங்க அங்கமாக முழு ரூபத்தையும் கொஞ்சம் ரஸித்துவிட்டு அப்புறம் புன்சிரிப்போடு விளங்குகிற முக மண்டலத்திலேயே 'கான்ஸென்ட்ரேட்'பண்ண வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. ஆனால் நாம் த்யானம் என்று உட்காரும் சித்தே (சிறிது) நாழியிலே அங்க அங்கமாக நின்று ரஸிக்கப் பொழுது இருக்குமா என்பதே ஸந்தேஹம். அப்புறம்,

மந்தஹாஸம் (புன்சிரிப்பு) அல்லது கருணா கடாக்ஷம் என்று ஒன்றிலேயே சித்தத்தை நிறுத்த முடியுமா என்பதும் அதைவிட ஸந்தேஹம். இத்தனை புஜங்கள், ஆயுதங்கள், அணிபணிகள் வாஹனம் என்றிருப்பதில் ஒன்றை நினைத்தால், 'இன்னொண்ணை மறந்துவிட்டோமே!'என்று சித்தம் நாலா திசையில் ஓடலாம் கங்கையை நினைக்கும்போது, சந்த்ரன் போச்சே என்று!நெற்றிக் கண்ணை நினைத்தால், நீலகண்டம் போச்சே என்று!மானை நினைத்தால் மழு போகிறது!சங்கத்தை நினைத்தால் சக்கரம் மறைந்து போகிறது!கௌஸ்துபத்தை நினைத்தால் ஸ்ரீவத்ஸம் மறைந்து போகிறது! கமலக்கண்ணை நினைத்தால் சிரித்த வாய் மறைகிறது!இந்த மாதிரி ஆவதால், நின்று, நிலைத்து, நிறைவுண்டாகும்படி ரூப த்யானம் பண்ண முடியாமல் ஆகலாம். சாஸ்த்ர ப்ரகாரமான இத்தனை வர்ணனை நமக்குத் தெரியாமலிருந்தாலே தேவலை போலிருக்கிறதே என்று நினைக்கும்படிகூட ஆகலாம்.

ஆனால் குரு என்று எடுத்துக்கொண்டு ரூப த்யானம் செய்ய ஆரம்பித்தால் நேரே பழகின ஸமாசாரமானதால் பூர்ணமாக ஒரு ஆகாரத்தில் (வடிவத்தில்) மனஸ் அப்படியே நின்றுவிடுகிறது. அம்மா, அப்பா, ஸ்நேஹிதர், ஆபீஸர்-நேரிலே பார்த்துப் பழகுகிற யாரானாலும் அவர்களை நினைக்கும்போது, தனித்தனியாகக் கண், மூக்கு என்றா நினைக்கிறோம்?ஆயுதம்-(சிரித்து) அம்மாவானால் கரண்டி, ஆபீஸரானால் ஃபௌண்டன் பேனா என்று இப்படியா சித்தத்தில் கொண்டுவந்து பார்க்கிறோம்?இப்படியெல்லாமில்லாமல் மொத்தமாக ஒரு 'ஐடியா'வாகத்தானே பார்க்கிறோம்?

இன்னம் சொல்லப்போனால், முழு ரூபத்தையும் ஒருமாதிரியாகப் பார்ப்பது மட்டுமில்லை, அவர்களுடைய கார்யம், அவர்களுடைய ஸ்வபாவம், மனப்பான்மை நம்மிடத்தில் அவர்களுடைய பாவம், அவர்களிடத்தில் நம்முடைய பாவம் என்று எல்லாமாகக் கலந்து ஒரு total effect ஏற்படும் விதத்திலேயே நமக்கு நேரிலே தெரிந்தவர்களைப் பற்றிய சிந்தனை ஏற்படுகிறது. இப்படித்தான் குருவை ஸ்மரிக்கிறோம். ரூபத்தில் பல அம்சங்களென்று ஒன்றுக்கொன்று மனஸ் பாயாதது மட்டுமில்லை;ரூபம், கார்யம், குணம் என்ற பிரிவுகூட

இல்லை!Totalஆக ஒரு பாவம், 'ரொம்ப பெர்ஸனல், ரொம்ப உறவு, நாம் கடைத்தேறுவதற்கென்றேயான கருணை'என்று சித்தம் ஒன்றிலேயே போய்-சிதறியோடாமல்-குரு த்யானத்தில் ஆனந்தமாக நின்றுவிடுகிறது. தெய்வ மூர்த்திகளின் ரூபத்தை கர்ணாந்த விச்ராந்த நேத்ரம் (காதளவோடிய கண்கள்), ஆஜாநுபாஹு என்றெல்லாம் வர்ணித்திருக்கிறது போல இல்லாமல் ஒரு குரு கண் நொள்ளையாக, கட்டை குட்டையாக, கரடுமுரடான சரீரமாக இருந்தால்கூட அந்த ரூபத்தை நினைத்தாலே ஒரு சாந்தி, ஒரு ஆனந்தம் ஏற்படுகிறது. அம்மா அழகாக இருக்கிறாளா, எம். ஏ. டிகிரி வாங்கியிருக்கிறாளா என்று பார்த்தா அவளிடம் ப்ரியமாயிருக்கிறோம்?அப்படி குருவிடமும் ஏற்படுகிறது. எத்தனை குரூபியாயிருந்தாலும் அம்மாவுக்குக் குழந்தையிடம் வாத்ஸல்யம் மாதிரி குருவுக்கு சிஷ்யனிடம் காருண்யம் பொங்குகிறது. அவள் உடம்புக்குப் பால் கொடுத்தால் இவர் ஞானப் பாலூட்டுகிறார். அவரை ஸுலபமாகச் சித்தத்தில் நிறுத்தி, ஸ்மரித்து, ஆனந்தப்பட முடிகிறது.

ஒன்றுதான்-பகவான், ஆசார்யன் வேறே வேறே இல்லை. ரொம்ப மேலே போய்விட்டால் சிஷ்யன்கூட வேறே இல்லை. ஆனால் அது இப்போது நாமிருக்கும் தசையில் வெறும் சவடால்தான். நன்றாகப் பக்குவப்பட்டவர்களுக்கே என்ன சொல்லியிருக்கிறதென்றால், "எல்லாவற்றிடமும் (அவை தன்னையின்றி வேறில்லை என்னும்) அத்வைத பாவனையை வைத்துக்கொள். ஆனாலும் இதற்கு ஒரு விலக்கு இருக்கிறது. குருவிடம் மட்டும், 'அவர் பெரியவர், நான் சின்னவன்'என்று த்வைதமாகவே பழகு. குருவோடு அத்வைதம் பாராட்டுவதென்று ஒருபோதும் வைத்துக் கொண்டுவிடாதே"என்றே உபதேசித்திருக்கிறது. அப்படியிருக்கும்போது நம் விஷயத்தைச் சொல்லவே வேண்டாம். நாம் குருவை வேறேயாகத்தான் பார்க்கமுடியும். அதில் தப்பில்லை. ஆனால் அவர் ஈச்வரனுக்கு வேறேயில்லை என்று பார்க்கப் பழகவேண்டும்.

ஈச்வரனும் குருவும் வேறு இல்லை. ஈச்வரனே தன்னைக் காட்டிக்கொடுக்கிற குரு ரூப்த்தில் வருகிறான். இப்படி நம்பி ஒருவரை குருவாக வரித்துவிட்டால் பலன் நிச்சயம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு

### மூன்று விதமான பாவங்கள்

ஈச்வரனிடத்தில் பக்தி, அதே போன்ற பக்தி குருவிடத்திலும் என்று இருந்துவிட்டால் உபதேச உள்ளர்த்தமெல்லாம் புரிந்து அநுபூதி கிடைத்துவிடும். அதுதான் முதலில் சொன்ன ச்லோகம்.

இதிலே சிஷ்யர்களின் மனப்பான்மைகளையொட்டி, பக்தி பாவத்தில் பங்கீடும் கொஞ்சம் வித்யாஸாக வரும்.

'ஈச்வரனிடத்தில் பக்தி செய்வதுதான் பரம தாத்பர்யம்;அதற்கு வழிகாட்டுபவர் என்ற முறையில் குருவிடமும் பக்தி விச்வாஸம் பாராட்டுவோம்'என்பதாக மனோபாவமுள்ளவர்களும் இருப்பார்கள். இங்கே, ஈச்வரன் என்ற நமக்குத் தெரியாத ஆஸாமியையே மனஸு பற்றிக் கொண்டிருக்க முக்யமாக ஆசைப்படும். அவனைத் தெரிய வைப்பதற்கு ஸஹாயம் செய்பவரென்றே குருவிடம் போவது, அந்த மெயின் லைனில் கொண்டு போய்ச் சேர்க்கிற ஸைட் - லைன் இவர் என்ற அளவில் இவரிடமும் ஒரு நன்றி, ஒரு பக்தி இருக்கும். இப்படிப்பட்ட மனோபாவத்தையும் குரு மதித்து இவனை ஏற்றுக்கொள்வார். ஒரு சின்ன கொடி படர ஆதாரமில்லாமல் ஆடிக்கொண்டிருக்கும் போது நாம் அதைப் பிடித்து ஒரு கொழுகொம்பில் சுற்றிவிடுவதுபோல, அவர் இந்த மனோபாவக்காரனைக் கொண்டு போய் ஈச்வரன் என்ற கொழுகொம்பைப் பற்றிக் கொள்ளும்படி செய்துவிடுவார். அவனுக்குத் தெரியாமலிருந்த விஷயத்தைத் தெரிந்ததாகப் பிடித்துக்கொடுத்து விடுவார். ஈச்வரனும் இந்த ரீதியிலேயே அவனை அங்கீகரித்துக் கொள்வான்.

இன்னொரு பாவம், ஈச்வரனே குரு ஸ்வரூபமாக வந்திருக்கிறானென்பது ஈச்வரன், குரு இரண்டு பேரும் ஸமம் என்று வைத்துக்கொண்டு (ஆரம்பத்தில் சொன்ன ' யஸ்ய

தேவே பராபக்திர்-யதா தேவேததா குரௌ ' என்ற)
ச்லோகத்தில் சொன்னபடி ஈச்வரனிடமும் பக்தி, குருவிடமும் அதற்குக் கொஞ்சங்கூட குறையாத பக்தி என்றிருப்பது.

பக்தியைப் பங்கு போடுவதா, அதோபோல அநுக்ரஹத்திலும் ஈச்வரன், குரு என்று இரண்டு பேர்கள் பங்கு போட்டுக்கொண்டு பண்ணுவார்களா என்று நான் பரிஹாஸம் பண்ணினாலும் அது 'யுக்தி'யில் சொன்னது தான். 'அநுபவ'த்தில் எப்படி இருக்குமென்றால் இம்மாதிரி மனோபாவகாரனுக்கு சில சில ஸமயங்களில் ஈச்வரன் என்பதிலேயே சித்தம் போய் அப்படியே பக்தியில் நிற்கும். சில சில ஸமயங்களில், 'அவனுடைய நராகாரமே இது'என்ற பாவத்துடன் குரு ஸ்வரூபத்திலேயே சித்தம் பக்தியில் நிரம்பிப் பதிந்திருக்கும். ஒரே ஈச்வரன் ஈச்வரனேயான ரூபம், குருவாக எடுத்துக்கொண்ட ரூபம் என்ற இரண்டின் மூலமும் அநுக்ரஹம் பண்ணுவான்.

மூன்றாவது பாவம், 'ஈச்வரனைப் பற்றிய கவலையே இல்லை. அவன் எப்படி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும். நமக்கு வேண்டியது குருதான். ஈச்வரன் அவர் மூலம் நல்வழி காட்டுகிறான், அல்லது அவராக ரூபம் எடுத்துக்கொண்டு வருகிறான் என்ற கதையெல்லாம்கூட வேண்டாம். நமக்கு குருவான இவரேதான் ஸகலமும். இவரேதான் நம்முடைய ஈச்வரன், கீச்வரன் எல்லாமும். அதனால் இவரை மாத்திரம் அநன்யமாக உபாஸிக்க வேண்டியது. இவரே கடைத்தேற்றிவிட்டுப் போகிறார்'என்று இருப்பது முழு பக்தியும் குரு ஒருவருக்கே செலுத்துவது.

'கடைத்தேறுவது என்பதைக்கூட நினைப்பதில்லை. குருவிடம் பக்தியாயிருந்து சுச்ருஷை பண்ணிக்கொண்டிருப்பதே ஆனந்தமாக இருக்கிறதோ இல்லியோ!அதற்காகவே அப்படிச் செய்வது. கடைத்தேற்றுகிறார், ஏற்றாமலிருக்கிறார், எப்படிச் செய்வாரோ செய்துவிட்டுப் போகட்டும். நமக்கு அதைப்பற்றி விசாரமில்லை. நாம் பக்தியோடு தாஸ்யம் செய்துகொண்டு அதிலேயே நிறைந்து கிடப்பது'என்று இருப்பது இன்னம் மேலே.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு

குரு பக்திக்கு ஈசன் செய்யும் அருள்

சிஷ்யன் எப்படி நினைத்தாலும், கடைத்தேறணுமென்று நினைத்தாலும் ஸரி, அதைப் பற்றித் தான் கவலைப்படுவதில்லை என்று வைத்துவிட்டாலும் ஸரி-இவனுக்கும் பரம ஞானம், கதி மோக்ஷம் கிடைத்தே தீரும். இவன் ஈச்வரனை நினைக்காவிட்டாலும், ஈச்வரன் இவன் பராபக்தியுடன் தாஸ்யம் செய்கிற குருவுக்குள் இருப்பதால், இவனுடைய பக்தியை வாங்கிக்கொண்டு-எல்லா நமஸ்காரமும் ஒரு கேசவனைத்தான் சென்றடைகிறது என்றபடி வாங்கிக் கொண்டு-இவனுக்குப் பரமாநுக்ரஹம் பண்ணி விடுவான். அவனுக்குத் தன்னை ஈச்வரனென்று பெயர் கொடுத்து, ஸ்தானம் கொடுத்து பக்தி பண்ணினால்தான் அநுக்ரஹிப்பது என்ற எண்ணம் கிடையாது. எவராயிருந்தாலும், எவரிடமாயிருந்தாலும் கொஞ்சங்கூடத் தன்னலமே கருதாமல் பூர்ணமான ப்ரேமையை வைத்து, ஆத்மார்ப்பணம் பண்ணி ஸேவை செய்தால் அது தனக்கே செய்யும் பூஜை என்று ஏற்றுக்கொண்டு க்ருபை செய்துவிடுவான்.

அவனையேகூட த்ரிலோக நாதன் என்று தெரிந்துகொள்ளாமல், அதனால் கை கட்டி வாய் புதைத்துப் பூஜை பண்ணாமல், 'நம்மைச் சேர்ந்த, நம்மைப் போன்ற ஒரு ஆள்'என்றே நினைத்து, ஆனாலும் தன்னலம் கலக்காமல் பூர்ண ப்ரேமையோடு ஸ்வாதீனமாகக் கலந்து பழகினாலும் மோக்ஷ பர்யாந்தம் அநுக்ரஹம் புரிந்து விடுவான் கோபிகா ஸ்தீரீகள் வ்ருத்தாந்தத்தில் இப்படித்தான் பார்க்கிறோம். பக்தியின் உச்சஸ்தானம் எங்கே என்றால் அவர்களிடம்தான் என்று நாரதாதிகளும் சொல்லி நமஸ்காரம் பண்ணியிருக்கிறார்கள். க்ருஷ்ண பரமாத்மாவே அப்படித்தான் கொண்டாடியிருக்கிறான். அவர்களுக்கு அவன் பரமாத்மா என்ற ஸமாசாரமே தெரியாது. பரமாத்மா என்ற ஒன்றைப் பற்றியே அவர்கள் கேள்விப்பட்டதில்லை. ஜார சோரன்-ஸ்த்ரீகளின் ஹ்ருதயத்தை ப்ரேமையில் தவிக்க

வைப்பவன்-திருடன், என்றுதான் அவனைத் தெரியும். ஆனாலும் அவனிடமே ப்ரேமை என்று ஸர்வஸங்க பரித்யாகம் பண்ணினார்கள். அந்த வார்த்தைகூட அவர்களுக்குத் தெரியாது!ஆனாலும் பண்ணினார்கள்!பகவான் அதையே மதித்து அவர்களை கோலோகம் என்கிற தன்னுடைய நித்யாநந்த விஹார பூமியிலே தன்னுடைய மஹிஷிகளாக்கிப் பெரிய உயர்வு கொடுத்தான்.

இந்தவிதமாக, குருவையே ஸகலமுமாக நினைத்து பக்தி பண்ணிவந்தால், ஞானம், கதிமோக்ஷம் என்று ஒருவன் தவித்து வேண்டிக்கொள்ளாவிட்டாலும் ஈச்வரனே அவற்றை அநுக்ரஹம் செய்துவிடுவான். இவனுடைய கர்மாவையும் பார்த்து ஈச்வரன் செய்வது என்கிறபோது, சோதனைகள் வைக்கும்போது 'டிலே'பண்ணிக்கொண்டே போகும் போது, குருவின் ஸஹாயம் இதையெல்லாம் ஸமாளிப்பதற்குப் பெரிய பக்கபலமாக இவனுக்கு உதவும். அதாவது குருவின் மனஸ் என்பது ஈச்வரனுக்கு வேறே மாதிரியாக கொஞ்சமோ நிறையவோ இருக்கிறதில்-அவனுடைய விளையாட்டிலே பரம அத்வைதாநுபூதிமான்களாக இருக்கப்பட்டவர்களுக்குக்கூடக் கருணா நிமித்தமாகவே கொஞ்சம் பேதமாகத் தங்களுடைய தனி மனஸு மாதிரி ஒன்று இருப்பதுண்டு. அநுபூதியிலே ரொம்ப மேலே போகாத குருக்களுக்கு இன்னம் ஜாஸ்தியாகவே த்வைத பாவம் இருக்கும். இப்படிக் கொஞ்சமாகவோ, நிறையவேயோ இருக்கிறதில்-குருவானவர்கள் சிஷ்யனின் கர்மாவுக்காக சோதனை, டிலே என்று ஈச்வரன் ரொம்பவும் செய்து விடாமல், அவனுடைய behalf-ல் தாங்களும் ஈச்வரனிடம் பிரார்த்திப்பார்கள். தங்களுடைய தபோ சக்தியையும் அதற்காகக் கொடுப்பார்கள். தங்களிடமே கூட சிஷ்யனின் கர்மாவை transfer செய்து கொண்டும் உபகரிப்பார்கள். ஈச்வரனிடம் நேராகப் பேசிப் பழகக் கூடியவர்களானால் அவனிடம் சிஷ்யனுக்காக மன்றாடுவதிலிருந்து மிரட்டுவது வரை எல்லாம் செய்வார்கள். முன்னேயே கதைகள் சொன்னேன்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

# குரு

## குரு-சிஷ்யர் : இருபெரும் தர்மங்களின் உருவகம்

குருவே ஈச்வரன் என்று ஏக பக்தி செய்யாமல் ஈச்வரன், குரு என்று இரண்டு பேரையும் ஒருவன் பக்தி செய்யும் போதும் இப்படியெல்லாம் இவன் செய்யும் சுச்ருஷை, ஸாதனை ஆகியவற்றோடு அவர் பல தினுஸில் இவனுடைய behalf-ல் செய்வதும் சேருமென்றாலும், 'அவரொருவரே ஈச்வரன் உள்பட ஸகலமும்'என்று அவன் இருக்கும்போதே அவருடைய ஸஹாயம் பூர்ணமாகக் கிடைக்கும். அவர் இப்படிச் செய்வது தன்னிடமே அவன் ஏகபக்தி செய்கிறானே என்பதில் தற்பெருமையால் அல்ல. எல்லா தர்மங்களுக்கும் மேலாக சரணாகதரக்ஷணத்தைத்தானே சொல்லியிருக்கிறது?அந்த தர்மபரிபாலனார்த்தமே அவர், தன்னையே எல்லாமாக நினைத்து சரணாகதி பண்ணிவிட்ட சிஷ்யனின் உத்தாரணத்துக்காக தாமும் தம்மாலான எல்லாம் பண்ணுவார்.

இரண்டு பெரிய தர்மங்கள். ஒன்று சரணாகத ரக்ஷணம், இன்னொன்று செய்நன்றி மறவாமை. முதலாவதின் 'பெர்ஸானிஃபிகேஷ'னாக-'உருவகமாக'-இருப்பது குருவின் லக்ஷணம். இரண்டாவது 'பெர்ஸானிஃபிகேஷ'னாக இருப்பது சிஷ்யனின் லக்ஷணம்.

சரணாகத ரக்ஷணத்தின் உச்சிக்குப் போய் சிஷ்யனைக் காப்பாற்ற குரு கடமைப்பட்டிருப்பது, 'அவரே ஸகலமும், ஈச்வரன் உள்பட'என்று சிஷ்யன் நினைக்கும்போதுதான்.

அதனால் நான் சொன்ன மூன்று பாவங்களில் ஒன்றாக அநன்யமான குரு பக்தி செய்யும்போது இவனுடைய ஸாதனா பலம் ஒரு பங்கு என்றால் குரு இவனுக்காகச் செய்வது நூறு பங்கு, ஆயிரம் பங்காக இவனை பலப்படுத்தி ஒரே தூக்காகத் தூக்கிவிடும்.

# குரு

## ஈசனருள் பெறலாம்

மனோபாவத்தில், பக்தி பாவத்தில் பல விதமாக ஜனங்களுக்கிடையிலே வைத்திருப்பதில் அவரவர்களுக்கு ஏற்ற விதத்தில் போய், அதற்கு ஈச்வரன் எப்படி அநுக்ரஹிக்கிறானோ அப்படிப் பெறவேண்டியது. அவனையே நேராக நம்பிப் போகிறவர்களையும் அவன் ஒரே தூக்காகத் தூக்கி அநுக்ரஹிக்கிறான். அவனையும் ஆசார்யனையும் ஸமமாக பக்தி செய்கிறவனுக்கும் அப்படிப்பட்ட பரமாநுக்ரஹம் பண்ணுகிறான்-விளையாட்டாகத் தான் பாதி பண்ணுவது, குரு பாதி பண்ணுவது போலக் காட்டிப் பண்ணுகிறான். ஆசார்யனொருவனே போதுமென்று பக்தி செய்கிறவனுக்கும் இத்தனை நாழி சொன்னதுபோல அவருடைய அந்தர்யாமியாக இருந்து கொண்டும், அவர் இவனுடைய behalf-ல் செய்யும் அநேக கார்யங்களை மதித்து நிறைவேற்றிக் கொடுத்தும் பரமாநுக்ரஹத்தைப் பண்ணகிறான். இந்த மூன்றாவது பாவத்தை 'அநுபவ'மாக்கிக் கொள்வதற்கு 'யுக்தி'யாகவே இத்தனை நாழி விஸ்தாரம் பண்ணிச் சொன்னது. மற்ற இரண்டு வித அநுபவங்களுக்கும் இது போலவே யுக்தி உண்டு. இன்றைக்கு என்னவோ தோன்றிற்று, இப்படியும் ஒரு பாவம், ஸாதனாமார்க்க ம்-குருவிடமே அநன்ய பக்தி பண்ணுவது என்று இருப்பதை எடுத்துச் சொல்லலாமென்று.

ஈச்வரனிடம் போக வழிபட்டும் காட்டுபவரென்றோ, ஈச்வரன் மாதிரியே அவனுக்கு ஸமமாக இருப்பரென்றோ, நமக்கு இவரைவிட்டு ஈச்வரன் கூட வேண்டியதில்லையென்றோ எதுவோ ஒரு விதத்தில் ஒரு குருவிடம் பக்தி வைத்து நல்லதைத் தெரிந்து கொண்டு நல்ல வழியில் போவதற்கு அவரவர்களும் தன்னாலான முயற்சியைப் பண்ணவேண்டியது.

# குரு

## குருமுகமாக அறிவதன் சிறப்பு

நாமாகவே தெரிந்து கொள்வதைவிட, அதாவது புஸ்தகம் படித்தும் ஸ்வய அநுபவங்களாலும் மட்டும் தெரிந்து கொள்வதைவிட குருமுகமாகத் தெரிந்து கொள்வதில் என்ன சிறப்பு என்றால், நாமாகத் தெரிந்துகொள்ளும் போது, 'இவ்வளவு படித்தோம், இப்பேர்ப்பட்ட விஷயங்களை நம்முடைய அநுபவத்தாலேயே தெரிந்து கொண்டோம்'என்ற அஹங்காரம் ஏற்பட இடமிருக்கிறது. புஸ்தகப் படிப்பும் வேண்டியதுதான். குருவே புஸ்தகத்திலிருந்தும் உபதேசிக்கிறார். 'இது இது இன்னும் படி'என்றும் சொல்வார். அதே மாதிரி, அல்லது அதை விடவும், ஸ்வய அநுபவத்தாலும் தெரிந்துகொள்ள வேண்டியதுதான். குரு உபதேசமெல்லாமும் ஸ்வாநுபூதியில் கொண்டு விடுவதற்குத்தானே?ஆனால் அப்படி ஒரு பெரியவரின் துணை, guidance இல்லாமல் நாமாகப் படிப்பு, அநுபவம் என்று போகும்போது (தலையத் தொட்டுக் காட்டி) கனத்துப் போகிற அபாயம் இருக்கிறது. குரு என்று ஒரு பெரியவரை வரித்து விட்டால் அவரிடம் அடங்கியிருப்பது, சுச்ருஷை செய்வது என்று இருப்பதில் ஆத்மாவுக்கு மிகவும் ஹானிகரமான இந்த அஹங்காரம் அப்படியே நசிக்க வசதி ஏற்படுகிறது. வெறும் புத்திவ்ருத்தியாய் மட்டும் எல்லாம் முடிந்துபோய்விடாமல், அன்பு, தொண்டு ஆகியவற்றால் உள்ளம் பக்குவமாகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறதும், மூளை லெவலில் மட்டும் புரிகிறதுமான தத்வங்கள், ஒரு அநுபவியின் மூலம் அவருடைய நிறைந்த அநுக்ரஹ சிந்தையோடு உபதேசமாக வரும் போது ஜீவனுள்ள சக்தியாக நமக்குள் போய் நம்மையும் ஸத்ய அநுபவத்துக்கு அழைத்துக்கொண்டு போகிறது. அந்தப் பெரிய அநுபவம் தனக்கு ஏற்படுவதிலும் சிஷ்யன் அஹங்காரப்பட முடியாது. ஏனென்றால் அஹங்காரம் நாசமாகி ஆத்மா மாத்திரம் பிரகாசிப்பதுதான் அந்த அநுபவமே!அதற்கு குருவின் அநுக்ரஹம் ரொம்ப

அவச்யம்.

எல்லோரும் முடிந்த அளவு குரு பக்தி செய்து ச்ரேயஸை அடைய வேண்டியது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## மும்மூர்த்தியாரை மூலப்பொருளாக அல்லாமல் !

எல்லாருக்கும் தெரிந்த, அல்லது தெரிந்ததாக நான் நினைத்துக் கொண்டிருக்கிற, ச்லோகம்;

குருர் - ப்ரஹ்மா குருர் - விஷ்ணு : குருர் - தேவோ மஹேச்வர :

குருஸ் ஸாக்ஷாத் பரம் - ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம :

'குருதான் மும்மூர்த்திகளும், பரம்பொருளும் அவர் தான். அப்படிப்பட்ட அவருக்கு நமஸ்காரம்'என்று ஸ்லோகம் சொல்கிறது.

மும்மூர்திகளின் பெயர்களைத் தனியாக ப்ரம்மா, விஷ்ணு, மஹேச்வரன் என்று சொல்லிவிட்டு, அப்பறம் பரப்ரஹ்மத்தைச் சொல்லியிருப்பதால் இந்த ச்லோகப்படி ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேஷ்வரன் என்று மூன்று பேரில் எவருக்கும் பரப் பிரம்மம் என்றும், முழுமுதற் கடவுள் என்றும் சொல்லப்படும் ஸ்தானம் தரப்படவில்லை என்று தோன்றுகிறது. அவர்களை ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரகர்த்தாக்களாக மட்டுமே வைத்திருக்கிறதென்று தெரிகிறது. அதாவது படைப்பது, காப்பாற்றுவது, ஸம்ஹாரம் பண்ணுவது என்ற ஒவ்வொரு காரியத்தை மட்டுமே அவர்களில் ஒவ்வொருவரும் செய்வதாக ஆகிறதே தவிர, ஸர்வ கார்ய காரணங்களுக்கும் ஆதி காரணமாகவும் ஆதார சக்தியாகவும் இருக்கப்பட்ட மூலப் பொருளாக, பரப்ரஹ்மமாக, முழுமுதற் கடவுளாக அவர்களைச் சொல்லவில்லை என்று தேன்றுகிறது.

இல்லாவிட்டால் மூன்று பேரையும் சொன்னவிட்டுத் தனியாக "குருஸ் - ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம"என்று சொல்வானேன்?

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### பண்டிகை இல்லாத கடவுள்

ப்ரம்மாவை முழு முதற் கடவுளாக என்றைக்குமே லோகத்தில் உபாஸித்ததாகத் தெரியவில்லை. பஹுகாலமாக ஸ்ருஷ்டி கர்த்தா என்ற முறையில்கூட அவருக்கு உபாஸனை இல்லாமலே இருக்கிறது. இத்தனை பண்டிகைகள் இருக்கின்றன. பிள்ளையார் சதுர்த்தி, ஸ்கந்த ஷஷ்டி, ராமநவமி, கோகுலாஷ்டமி, வரலக்ஷ்மி வ்ரதம், ஸரஸ்வதி பூஜை, நவராத்ரி, சிவராத்ரி-இவை எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தவை. இவை போக இன்னம் அநேகம். பஞ்சாங்கத்தைப் பார்த்தால் அநேகமாக தினமும் ஏதாவது ஒரு தெய்வத்துக்கான ஒரு பண்டிகையாக இருக்கும்;ஒரு நாளிலேயே இரண்டு மூன்று சேர்ந்துகூட வரும். இப்படி கணக்கு வழக்கில்லாமல் பண்டிகைகள் இருக்கின்றன. ஆனால் இவற்றில் ப்ரம்மாவுக்கென்று ஒன்றுகூட நாம் கொண்டாடுவதாக இல்லை.

உங்களகங்களில் ஸ்வாமி விக்ரஹங்கள், படங்கள் எவ்வளவு வைத்திருக்கிறீர்கள்?ஆனால் ப்ரஹ்மாவுக்கு உண்டா?மஹா விஷ்ணு சயனித்துக் கொண்டிருக்கும் கோலத்தில் படம் இருந்தால் அதில் பகவானின் நாபி கமலத்தில் அவர் இருப்பார். திருக்கல்யாணப் படங்கள் இருந்தால் அதில் 'பண்ணி வைக்கிற சாஸ்த்ரி'களாக உட்கார்ந்து கொண்டிருப்பார். ஆனால் அவர் பாட்டுக்கு கூட்டத்தோடு கூட்டமாக என்னவோ இருப்பாரே தவிர அவரை நாம் பூஜார்ஹமான (பூஜை பெறத் தகுதி பெற்ற) ஒருவராக நினைத்து வழிபடுவதென்பதில்லை. கூட்டத்திலே ஒருவராக அவர் வந்து நிற்பதோடு ஸரி.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## கோயிலில்லாத கடவுள்

நம் தேசத்தில் இத்தனை ஆயிரம் கோயில்கள் இருந்தும், ஒவ்வொரு கோயிலிலும் ஏகப்பட்ட ஸந்நிதிகள் இருந்தும் அநேக உத்ஸவாதிகள் நடத்தப்பட்டபோதிலும் ப்ரம்மாவுக்கு எதுவுமே காணோம்!அபூர்வமாக எங்கேயாவது புஷ்கர் மாதிரி ஒரு க்ஷேத்திரத்தில்தான் தேடித்தேடி அவருக்குக் கோயில் பார்க்க முடிகிறது. பிரம்மா கோயில் என்றாலே புஷ்கரைத்தான் இன்று நினைக்கிறார்கள். நம்முடைய கும்பகோணத்திலேயே ப்ரம்மாவுக்குத் தனிக் கோயில் இருப்பது ரொம்பப் பேருக்கு தெரியவில்லை. காஞ்சீபுரத்திலும் கும்பகோணத்திலும் தடுக்கிவிழுந்த இடமெல்லாம் கோவில்கள் என்பார்கள். காஞ்சீபுரத்தில் நாம் ஜென்மாவில் பண்ணுகிறதற்கெல்லாம் கணக்கு எழுதும் சித்திரகுப்தனுக்கு அபூர்வமாகக்கோயில் இருக்கிறதென்றால், கும்பகோணத்தில் ஜென்மாவைத் தரும் ப்ரம்மாவிற்கு அபூர்வமாகக் கோயில் இருக்கிறது!திருக்கண்டியூர் என்று திருவையாற்றுக்குக் கிட்டே இருக்கிறது. அது பரமசிவன் ப்ரஹ்மாவுக்கு ஆதியில் இருந்த ஐந்து தலைகளில் ஒன்றைச் சேதித்த க்ஷேத்திரம். அங்கே சிவனுக்கு பரஹ்மசிரக்கண்டீசர் என்றே பேர். அங்கே ப்ரஹ்மாவுக்கும் ஸந்நிதி இருக்கிறது. கொங்கு நாட்டிலுள்ள த்ரிமூர்த்தி க்ஷேத்ரமான பாண்டிக் கொடுமுடியிலும் இருக்கிறது. சிதம்பரத்தில் ப்ரஹ்மாவையே சண்டேச்வரர் என்று சொல்லி, (கனக)ஸபையைச் சுற்றி வரும்போது அவருக்கு ஒரு சின்ன கோஷ்டம் காட்டுகிறார்கள். ஆனாலும் இதெல்லாம் ஸமுத்ரத்தில் ஒரு துளி மாதிரிதான். நம் தலையெழுத்தை எழுதுகிறவரின் தலையெழுத்து இப்படி இருக்கிறது!

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### பூஜை இல்லாத காரணம்

அவருக்குப் பூஜை இல்லாமலிருப்பதற்கு ஒரு காரணம் சொல்வார்கள். பரமேச்வரன் ஜ்யோதிர்மயமான லிங்கோத்பவ மூர்த்தியாக ஆகாசத்துக்கும் பூமிக்குமாக நின்றார். அந்த ஜ்யோதிஸ் எங்கே ஆரம்பிக்கிறது, எங்கே முடிகிறது என்று தேடிக்கொண்டு ப்ரஹ்மாவும் விஷ்ணுவும் போனார்கள். 'நம் இரண்டு பேரில் யார் இதன் அடியையோ முடியையோ கண்டு பிடிக்கிறார்களோ அவரே பெரியவர்'என்று பந்தயம் கட்டிக் கொண்டு போனார்கள். இப்படிப் புறப்படுகிறபோதே ப்ரஹ்மாவுக்கு, 'அடிப்பாகத்தைப் போய் நாம் தோடுவதா?'என்று அஹந்தை உண்டாயிற்று. அதனால், 'நான் முடியைத் தேடுகிறேன்'என்று ஹம்ஸபக்ஷியின் ரூபத்தை எடுத்துக்கொண்டு உயரே தேடிக்கொண்டு போனார். மஹாவிஷ்ணு எளிமையாக அடியைத் தேடிக்கொண்டு வராஹ ரூபத்தில் போனார். இரண்டு பேரும், ஒருத்தர் மேலேயும், ஒருத்தர் கீழேயுமாக, எவ்வளவு தூரம் போய் ச்ரமப்படட்டும் முடியாவது அடியாவது தெரிகிற அடையாளத்தையே காணோம். இனிமேலே முடியாது என்று களைத்துப்போய்த் திரும்பி விட்டார்கள். ஆனால் திரும்பின பிறகு மஹாவிஷ்ணு தம்மால் அடியைப் பார்க்க முடியவில்லை என்று ஒப்புக் கொண்டார். ப்ரஹ்மாவோ முடியைப் பார்த்துவிட்டதாகப் பொய் சொன்னார்.

அப்போதுதான் ஜ்யோதி ஸ்வரூபத்திலிருந்து பரம சிவன் வெளிப்பட்டு, 'பொய் சொன்ன ப்ரம்மாவுக்கு இனிமேல் பூஜையே நடக்காமல் போகட்டும்'என்று சபித்து விட்டார்;அ ந்தப்படியே இப்போதும் நடந்துவருகிறது - என்று கதை சொல்கிறார்கள். நான் (கதையின்) அவுட்லைன் மட்டும்தான் சொன்னேன். நிஜத்தைச் சொன்ன விஷ்ணுவுக்குப் பரமசிவன் சக்ரம் தந்தார், தம்முடைய உடம்பிலேயே இடது பாகத்தைக் கொடுத்தார் என்றெல்லாம் சொல்வார்கள்.

பரமேச்வரனின் முடியைத் தேடித் தேடிப் போனவரின் கோயிலையும் இன்று நாம் தேடிப் தேடிப் பார்க்கும்படி இருக்கிறது! ஆனால் இது சைவமான கதை. சைவர்கள்

சொல்கிற கதை. வைஷ்ணவர்கள் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். வருத்தப்படுவார்கள் ஆக்ஷேபிப்பார்கள்.

ப்ரஹ்மா தப்புப் பண்ணியதாக இன்னம் சில கதைகளும் உண்டு. கண்டியூர் கதைகூட அப்படித்தான். இல்லாவிட்டால் அவருக்கு ஆதியில் இருந்த ஐந்து தலைகளில் ஒன்றை ஈச்வரன் எதற்காக கொய்ய வேண்டும்?இதுவும் சைவமான கதைதான். விஷ்ணு கோயில்களிலேயும் ஏன் ப்ரம்மாவுக்கு ஸந்நிதி இல்லை?வைஷ்ணவர்கள் உட்பட ஸகல ஹிந்துக்களுந் தானே ப்ரம்மாவுக்கு வழிபாடில்லாமல் வைத்திருக்கிறார்கள்?சிவ ஸுதர்களான விக்நேச்வரருக்கும், ஸுப்ரஹ்மண்யருக்கும் ஜாம் ஜாமென்று பூஜை, உத்ஸவம் நடக்கிறது போல விஷ்ணுவின் ஸுதரான ப்ரஹ்மாவுக்கு ஏன் இல்லை?

ப்ரஹ்மாவுக்கு வழிபாடு இல்லாததற்கு வைஷ்ணவர்கள் ஏதாவது கதை, காரணம் சொல்கிறார்களோ என்று தெரியவில்லை. இப்போது ஒன்றும் ஞாபகம் வரவில்லை. ச்ருதியிலேயே (வேதத்திலேயே) உள்ள ப்ராஹ்மணங்கள் என்ற பிரிவுகளில் ப்ரஜாபதி தப்புப் பண்ணியதாகக் கதை இருக்கிறது. ப்ரஜாபதி என்பது ப்ரஹ்மாதான். ஸகல ஹிந்துக்களுக்கும் வேதம் ஆதாரமாக இருப்பதால் அந்த ப்ராஹ்மணக் கதை காரணமாகவே வைஷ்ணவர்கள் உள்பட எல்லோரும் அவரது வழிபாட்டை நிறுத்திவிட்டார்களென்று சொல்லலாமென்று பார்த்தால், அதுவும் ஸரியாய் வரவில்லை. வேத காலத்திற்கு அப்புறம் வெகுநாள்வரை ப்ரம்மாவுக்கு வழிபாடு நடந்துதான் வந்திருக்கிறது. கஷ்டம் என்றால் தேவர்கள் அவரிடம்தான் முதலில் ஓடி இருக்கிறார்கள். அஸுர, ராக்ஷஸரில் பலரும்அவரைக் குறித்துத் தபஸிருந்தே பெரிய வரங்கள் பெற்றிருக்கிறார்கள். முழுமுதல் தெய்வமாக அவர் வணங்கப்பட்டதாக தெரியாவிட்டாலும், முக்ய தேவர்களில் ஒருவராக மதிக்கப்பட்டிருக்கிறார். அப்புறம்தான் இது அப்படியே நின்று போய் விட்டதாகத் தெரிகிறது. வைஷ்ணவர்களும் ஏன் நிறுத்திவிட்டார்கள்?

நாம் பொழுது விடிந்தால் நூறு தப்புப் பண்ணிக் கொண்டிருக்கும்போது, ப்ரஹ்மா போன்றவர்கள் தப்புப் பண்ணிய கதையைச் சொல்லவே பிடிக்கவில்லை. "சாமியாம்,

இப்படித் தப்புப் பண்ணித்தாம்!"என்று நாஸ்திகர்கள் கேலி செய்வது இவற்றைக் காட்டித்தான். அதனால் சைவமாகப் பார்த்தது போதும். வைஷ்ணவமாக வேறு துருவ வேண்டாமென்று தோன்றுகிறது.

ஒன்று வேண்டுமானால் சொல்லலாம்.

(அது) என்ன?

விஷ்ணுவுக்கு ஒரு பிள்ளை ப்ரம்மா. இன்னொரு பிள்ளை உண்டு. அவர்தான் மன்மதன். இரண்டு பேரும் லக்ஷ்மியின் ஸம்பந்தமில்லாமலே பிறந்தவர்கள். ப்ரம்மா விஷ்ணுவின் நாபிகமலத்தில் உண்டானார். மன்மதனை அவர் மானஸிகமாக ஒரு பிள்ளை உண்டாகட்டும் என்று மனஸினால் நினைத்த மாத்திரத்திலேயே ஸ்ருஷ்டித்துவிட்டார். அதனால் அவருக்கு மனஸிஜன் என்று பெயர் வந்தது. ப்ரம்மா கமலஜர். மூன்றாவது பிள்ளையாக மஹாவிஷ்ணு மோஹிணி ரூபத்தில் சிவனிடம் பெற்ற சாஸ்தா இருக்கிறார். அவருக்குப் பூஜை இருக்கிறது. பெரிசாக வ்ருத்தியாகியும் வருகிறது. ப்ரஹ்மாவுக்குப் பூஜை இல்லை. மன்மதனுக்கும் இல்லை.

இதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது. மன்மதன், ப்ரஹ்மா இருவருமே ஒரு ஜீவன் ஜன்மா எடுப்பதற்குக் காரணமான இருப்பவர்கள்தானே?புத்ரோத்பத்திக்குக் காரணமான வேகத்தை மன்மதன் உண்டாக்குகிறான். அப்புறம் எந்த ஜீவன் எந்த பிண்டத்தில் புகுந்துகொள்ள வேண்டுமென்று பார்த்து ப்ரஹ்மா ஜன்மாவைக் கொடுக்கிறார். அத்தனை கஷ்டமும் நாம் ஜன்மா எடுத்ததால்தானே தெரிகிறது?ஸகல ஸமயாசாரங்களும், ஸாதனைகளும் ஜன்ம நிவ்ருத்தி என்ற ஒன்றுக்காகத்தானே இருக்கிறது?

இதனால்தான் ஜன்மா ஏற்படக் காரணமான ப்ரஹ்மாவுக்கு வழிபாட்டில்லாமலாயிருக்கிறது என்று தோன்றுகிறது. மன்மதனுக்கும் இதே காரணம்தான். கூடுதலாக இன்னொன்று ம்:எல்லா வேகங்களிலும் மஹா பொல்லாததாக, வெறிப்பிடித்ததாக இருப்பதை உண்டாக்கி ஜீவனை அலைக்கழிப்பவன் அவன்தானே?ஆனால் அவனைப் பற்றி இப்போது கேள்வியில்லை. பேச்சுவாக்கில் அவன் விஷயம் வந்துவிட்டது. குருவை மும்மூர்த்தியாகவும்

சொல்லியிருக்கிறதென்று பார்த்ததில் முதல் மூர்த்தியான ப்ரஹ்மாவைப் பறறிதான் விசாரித்துக் கொண்டிருந்தோம்.

கஷ்டத்துக்கெல்லாம் காரணமான பிறவிக்கு அவர் காரணமாயிருக்கிறாரே என்பதால்தான், 'இவருக்கென்ன வழிபாடு?' என்று கோபித்துக் கொண்டு நிறுத்திவிட்டோமோ என்னவோ என்று சொன்னேன் பூர்வ காலங்களிலும் அவர்தானே ஸ்ருஷ்டிகர்த்தா?அப்போதெல்லாம் அவருக்கு நிரம்ப மரியைதை நடந்திருப்பதாகச் சொன்னீர்களே!'என்று கேட்டால், அந்தப் பூர்வ காலங்களில் இத்தனை அதர்மமும், பாபமும், அதனால் விளையும் கஷ்டங்களும்-இயற்கை உத்பாதங்கள் என்பவை கூட மனிதர்கள் செய்கிற பாபத்தின் விளைவாக ஏற்படுபவைதான். இவையும்-இல்லை. துஷ்ட சக்திகள் என்றைக்கும் இருக்கத்தான் செய்திருக்கின்றனவென்றாலும், பிற்காலத்தில் ஆனதுபோல அவை பூர்வத்தில் தலைவிரித்தாடவில்லை. அதனாலே இந்த லோகத்தில் ஜீவயாத்ரை நடத்துவது, ஜன்மா எடுப்பது என்பது இப்போது போல அப்போது அவ்வளவு நொந்து கொள்ளும்படியாக இருந்திருக்காது. தெய்வ ஸம்பந்தமாக அநேக விஷயங்கள் எங்கு பார்த்தாலும் நடப்பதாகவும், யாக யஜ்ஞாதிகள் நிரம்ப நடப்பதாகவும், அவதார புருஷர்களும் மஹான்களும் ரிஷிகளும் நிறைய இந்த பூலோகத்தில் ஸஞ்சரிப்பதாகவுமிருந்த அந்தக் காலத்தில் 'ஜன்மா ஏன் கொடுத்தார்?'என் று ப்ரம்மாவிடம் ரொம்பக் கோபப்படவேண்டி இருந்திருக்காது என்று தெரிந்திருக்காது என்று ஸமாதானம் சொல்லலாம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### வைஷ்ணவ ஆலய மூர்த்திகள்

வைஷ்ணவர்களின் கோயில்களை எடுத்துக்கொண்டால் அநேக நவக்ரஹங்கள் கூடத்தான் கிடையாது. பெருமாள், பெருமாளோடு இணைபிரியாத தாயார், அவருடைய

வாஹனம், அவருடைய அவதாரங்கள், அவரையே சேர்ந்த பார்ஷதர்கள் அவருடைய பக்தியிலேயே ஸதாவும் திளைத்துக் கொண்டிருக்கும் ஆழ்வார்கள், வைஷ்ணவ ஸித்தாந்தத்துக்கே ஏற்பட்ட ஆசார்ய புருஷர்கள்-என்பதாக முழுக்க முழுக்க விஷ்ணு ஸம்பந்தமிருப்பவர்களுக்குத்தான் அவருடைய ஆலயங்களில் இடம் கொடுத்து வைத்திருக்கிறார்கள். நவக்ரஹங்களை இப்படிச் சொல்ல முடியாதல்லவா?வைஷ்ணவர்களைப் பற்றி 'மறந்தும் புறந்தொழார்'என்பார்கள். பெருமாள், அப்புறம் பெருமாளே ஸகலமும் என்று அவருக்கே தங்களை அர்ப்பணித்துக் கொள்வார்கள், ஸேவை செய்கிறவர்கள், வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரவர்த்தகர்கள் ஆகியவர்கள் தவிர, புறம்பாக உள்ள எவரையும் அவர்கள் தொழ மாட்டார்கள்.

ப்ரஹ்மா விஷ்ணுவின் ஸாக்ஷாத் புத்ரர்தான். தகப்பனாரை மிகவும் மதித்து அவருக்கு அடங்கியே இவர் இருந்ததாகத்தான் புராணங்களிலிருந்து தெரிகிறது. ஆனாலும் அவரிடமே உருகி உருகி பக்தி பண்ணிக்கொண்டு அவர் இருப்பதாகத் தெரியவில்லை. ஸ்ருஷ்டி என்று தனக்கு தன் ஆபீஸ் வைத்துக் கொண்டுதான் நடத்திவருகிறார். அதாவது, வைஷ்ணவர்கள் முழு முதற்கடவுளாகக் கருதும் நாராயணனே த்ரிமூர்த்திகளில் ஒருவரான பாலனகர்த்தாவாக ஒரு வேஷம் போட்டுக் கொள்ளும்போது, அந்த த்ரிமூர்த்திகளில் இன்னொருவராக, அதாவது அவருக்கு ஸம ஸ்தானத்திலிருப்பவர் போல, இவர் ஸ்ருஷ்டி கர்த்தாவாக இருக்கிறார். பெருமாளின் அவதாரமாகவேயோ, அல்லது அடியாராகவோ இருப்பவருக்குத்தான் வைஷ்ணவ ஆலயங்கள் இடம் தருமே தவிர, அவருக்கு ஸமதை மாதிரி ஒரு ஸ்தானத்திலுள்ள இன்னொருவருக்குத் தராது. அதனால்தான் விஷ்ணு ஆலயங்களிலும் ப்ரம்மா இல்லை போலிருக்கிறது!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ஆகமத்தில் ப்ரம்மா

ஆனாலும் த்ரிமூர்த்திகளில் ஒருவராக இருக்கிற அவருக்கு, நாலு வாயாலும் நாலு வேதங்களைச் சொல்லிக் கொண்டு அந்த மந்த்ர சக்தியாலேயே ஸ்ருஷ்டி செய்கிறவருக்கு, ஆலயத்தில் இடமில்லாமல் இருக்கக்கூடாது என்று ஆகம சாஸ்திரங்களில் ஒன்று செய்திருக்கிறார்கள். மூலஸ்தான விமானத்தின் மேல், கர்ப்ப க்ருஹ வாஸலுக்கு மூன்று பக்கத்திலும் த்ரிமூர்த்திகள் ஒவ்வொருவரை வைப்பது என்று விதி செய்து, அதில் ப்ரஹ்மாவுக்கும் பிம்பம் வைக்கப் பண்ணியிருக்கிறார்கள். யாரும் அதிகம் கவனிக்காத இடத்தில், கவனிதாலும் 'ஸ்வாமி'என்று கன்னத்தில் போட்டுக்கொள்ளாமல், பொம்மை பார்க்கிற மாதிரி நினைக்கிற இடத்தில் வைத்திருக்கிறார்கள்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ப்ரம்மாவின் தொழில் கருணையானதே !

ஜன்மாவைக் கொடுக்கிறவர், மறக்கமுடியாததாகத் தலையில் எழுதிவிடுகிறவர்-அதற்குப் பேரே 'ப்ரம்ம லிபி'என்றுதானே சொல்கிறோம்?-என்பதற்காக ப்ரம்மாவைப் பூஜிக்க மாட்டோமென்றால் அது வாத்ஸவத்தில் ஸரியில்லைதான். எய்தவன் இருக்க அம்பை நொந்து கொள்கிற காரியம்தான். நொந்துகொள்ள வேண்டியது நம்மையேதான். ப்ரஹ்மாவை அல்ல. பூர்வத்தில் நாம் ஏகமாகப் பண்ணி, தீர்ந்துபோகாமலே பெரிசாகக் கர்மா மூட்டையைக் கட்டியிருக்கிறோம். நாமே கட்டிக்கொண்ட மூட்டைதான். அவர் (ப்ரம்மா) எதையோ பிடித்துப் போட்டுக் கட்டவில்லை. அத்தனை கர்மாவையும் ஒரு புருஷாயுஸில் அநுபவித்துத் தீர்த்தமுடிவதில்லை. தேஹ தர்மமென்று ஒன்றை ஈச்வரன் வைத்திருப்பதில் அது வ்யாதி, வக்கை என்று எதற்கோ ஆளாகி ஒரு நாள் ஜீர்ணித்து (அழிந்து) போகிறது. அதற்குள் கர்மா தீர்ந்திருக்கவில்லை. மூட்டையில் பாக்கியிருக்கும்போதே சரீரம் போய்விடுகிறது.

இப்போது என்ன பண்ணுவது?சரீரத்தை விட்டுப்போன உயிருக்கு மோக்ஷம் கொடுத்து அதைப் பரமாத்ம தத்வத்தில் கரைப்பதற்கில்லை. இத்தனை கர்மா பாக்கி இருப்பவர்களுக்கு அந்த நித்யானந்த நிலையை எப்படி பகவான் தருவான்?பின்னே அந்த உயிர் என்ன ஆவது?ஆவியாக, பேயாக, பிசாசாக உலாவ விடலாமா என்றால் மநுஷ ரூபத்தில் பண்ணிய கர்மாவை ஆவி ரூபத்தில் தீர்த்துக் கொள்ளமுடியாது. ஆனால் அந்த ஆவிக்கும் க்ஷுத் - த்ருஷ்ணாதிகள் (பசி, தாஹம் முதலியன) உண்டு. ஆகையால் கர்மாவையும் தீர்க்காமல், பசி, தாகம் என்று தவித்துக்கொண்டு அது பாட்டுக்குச் சிரகாலமும் (என்றென்றைக்கும்) திரிய வேண்டியதாகத் தானிருக்கும். இவை தீர யாரையாவது பிடித்து ஆட்டி, அவர்களை உறிஞ்சி ஆஹாரம் முதலானவற்றைப் பெற்று பாப மூட்டையை ஜாஸ்தியாக்கிக் கொள்ளும். இப்படியெல்லாம் ஆகாமலிருப்பதற்குத்தான் இன்னொரு உடம்புக்குள் சேர்ந்து இன்னொரு ஜன்மா தருவது என்று பரமாத்மா திட்டம் பண்ணி, இந்தக் கார்யத்தைச் செய்யும் அதிகாரியாக ப்ரஹ்மாவை வைத்திருக்கிறான். நல்லதைப் பண்ணி நாம் மூட்டையை கரைத்துக் கொள்வதற்காக அவன் கருணையுடன் மறுபடி மறுபடி சான்ஸ் கொடுக்கிறானென்பதே உண்மை நிலை. அப்படியிருக்க நாம் சான்ஸை தவறவிட்டு, மேலும் தப்புப் பண்ணிக்கொண்டே மூட்டையை இன்னும் பெரிசாக்கிக் கொண்டு, இன்னொரு ஜன்மா, அப்புறமும் பல ஜன்மாக்களென்று ஆக்குகிறோமென்றால் இதற்கு ப்ரமாமாவிடம் குறைபட்டுக்கொண்டு என்ன புண்யம்?

ஆனாலும் நம்முடைய நிலையில், இப்படி இந்த ஸம்ஸாரத்தில் மொத்துப்பட்டுக் கொண்டு கிடக்கும்போது, ஜன்மாவைத் தரும் ஸ்ருஷ்டிகர்த்தாவைப் பூஜிக்கவேண்டும் என்ற பக்தி தோன்றத்தான் மாட்டேனென்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ருத்ரன் - சிவன் (சிவம், நடராஜா) - மஹேச்வரன்

த்ரிமூர்த்திகள், அவர்களுக்கும் ஆதாரமான பரப்ரஹ்மம் என்று குருவைக் கொண்டாடும் விஷயமாகக் கொஞ்சம் அலசிப் பார்க்கலாமென்று ஆரம்பித்தேன். முதல் மூர்த்தியான ப்ரஹ்மா விஷயத்தின் அலசல் நீண்டு விட்டது.

த்ரிமூர்த்திகளை முதலில் சொல்லியிருக்கிறது. குரூர் - ப்ரஹ்மா, குரூர் - விஷ்ணு, குரூர் தேவோ மஹேச்வர:

ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ரர் என்று சொல்வார்கள். ப்ரஹ்ம - விஷ்ணு - சிவன் என்பதில்லை. சிவபக்தர்கள் சிவன் மும்மூர்த்திகளில் ஸம்ஹார மூர்த்தியாக இருப்பவன் அல்ல என்பார்கள். சிவனுடைய அநேக ரூபங்களில் ஒன்றுதான் ருத்ரன் என்பார்கள். சிவன்தான் பரமாத்மா. ஸரியாகச் சொல்ல வேண்டுமானால், ஆண்பாலில் சிவன் என்று சொல்லாமல் அஃறிணையாக சிவம் என்றே சொல்வார்கள். அந்த சிவம்தான் ஸகல க்ருத்யங்களுக்கும் காரணமான முழுமுதற் கடவுள். ஸகல க்ருதயமும் அடங்கிப்போன சாந்தமும் அதுதான். அதிலிருந்தே லோக வ்யவஹாரார்த்தம் ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹார க்ருதயங்களைச் செய்யும் ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ரர் தோன்றுவது. சைவத்தில் - சாகத்திலும்தான் - இந்த மூன்றோடு இன்னும் இரண்டு க்ருதயங்கள். பஞ்ச க்ருதயம் என்பதாக. திரோதானம் அல்லது திரோபவம் என்பது ஒன்று. அதுதான் மாயை. லோகத்தை எதிலிருந்து எப்படி உண்டாக்கினான்?அதுதான் புரியவே மாட்டேனென்கிறது. ஏதோ ஒரு மாயா சக்தியினால் இப்படி எல்லாவற்றையும் செப்பிடு வித்தை காட்டுகிறான். அதுதான் திரோதானம். மும்மூர்த்திகளின் கார்யங்களுக்கும் அடிப்படையானது அதுதான். பஞ்ச க்ருதயத்தில் பாக்கியிருப்பது 'அநுக்ரஹம்'எப்படியோ ஜீவனுக்கு கர்மா என்ற ஒன்று ஏற்பட்டபின் அதை அநுபவித்தால்தானே தீர்க்கமுடியும்?அதற்கு 1. சரீரம், 2. அதன் புறக்காரணம் மட்டுமின்றி அகக் காரணம் (மனஸ், புத்தி முதலியவை) 3. இவற்றை வைத்துக்கொண்டு வினையை அறுவடை செய்கிற களமாக உள்ள இந்த ஜகத் என்பது. 4. அறுவடையை அநுபவிப்பது என்பது தேவையாயிருக்கின்றது. (முறையே) தநு, கரணம், புவநம், போகம் என் று சொல்லும் இந்த நாலையும் பரமாத்மா கொடுப்பதுதான் அநுக்ரஹம். இது

சின்ன அநுக்ரஹம். பெரிய அநுக்ரஹம், கடைசீயில் இதெல்லாவற்றிலிருந்தும், அதாவது தாரோதானத்தினால் உண்டான மாயா லோக வாழ்க்கையிலிருந்தே, ஜீவனை விடுவித்து மோக்ஷபதத்தைத் தருவதுதான். நடராஜாவின் குஞ்சிதபாதம் அந்தப் பதத்தைத்தன் தருகிறது. திருவடி என்று அதற்கு ஏற்றம்.

நடராஜாவின் நாட்டியத்திற்கு பஞ்சக்ருத்ய பரமானந்தத் தாண்டவம் என்று பெயர். ஒரு கையில் அவர் பிடித்துக் கொண்டிருக்கிற டமருகத்தின் சப்தத்தினால்தான் ஸ்ருஷ்டி உண்டாகிறது. அபயஹஸ்தத்தினால் 'ஸ்திதி'என்ற பரிபாலனம் செய்கிறார். இன்னொரு கையிலிருக்கும் அக்னியால் ஸம்ஹாரம் பண்ணுகிறார். முஸலகனின் மேலே ஊன்றியிருக்கிற அவருடைய வஸ்து பாதத்தால் திரோதான க்ருத்யத்தை நடத்துகிறார். முடிவாக, குஞ்சித பாதம் என்ற இடது திருவடையைத் தூக்கிக் காட்டி, இதைப் பிடித்துக் கொண்டால் அதுதான் மோக்ஷாநுக்ரஹம் எனறு தெரிவிக்கிறார்.

நடராஜா சிவம் என்ற பரமாத்மாவாக, ஸகல கார்ய காரண மூலமாக இருப்பவர். அவரிடமிருந்து ஒவ்வொரு கார்யத்திற்கு ஒவ்வொரு மூர் த்தி வருகிறார். இப்படி வரும்போது ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரத்திற்கு ப்ரஹ்ம - விஷ்ணு ருத்திரர்கள் இருப்பதுபோல திரோபவ, அநுக்ரஹ கர்த்தாக்களையும் இரண்டு மூர்த்திகள் இருக்கவேண்டுமல்லவா?திரோபவ கர்த்தாவுக்குத்தான் ஈச்வரன் என்று பெயர்.

நடைமுறையிலும், இதர சஸ்திரங்களிலும் ஈச்வரன் என்பதற்கு என்ன அர்த்தம் கொடுத்தாலும், சைவ சாஸ்திரப்படி ஈச்வரன் என்றால் திரபாவம் என்கிற மாயையைச் செய்யும் மூர்த்தி என்றே அர்த்தம். வெறுமே ஈச்வரன் என்று சொல்லாமல் மஹேச்வரன் என்பார்கள். அநுக்ரஹ கர்த்தாவுக்கு ஸதாசிவன் என்று பேர்.

சுருங்கச்சொன்னால், சைவ சாஸ்திரப்படி, சிவம் என்ற பரமாத்ம வஸ்து ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ர - மஹேச்வர - ஸதாசிவர்களைக் கொண்டு ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹார - திரோதான - அநுக்ரஹங்கள் என்ற பஞ்ச க்ருத்யங் களைச் செய்கிறது. சாக்தத்தில் சிவத்துக்குப் பதில் சக்தியைப்

பஞ்சக்ருத்ய பராயணா என்று சொல்லியிருக்கிறது.

ருத்ரன் ஸம்ஹார கர்த்தா. (குருர் ப்ரஹ்மா) ச்லோகத்திலோ "மஹேச்வர;" என்று சொல்லியிருக்கிறது. "குரூர் - தேவோ - மஹேச்வர:"ஆனாலும் இங்கே மஹேச்வரன் என்பதைத் தீரோதாரனகர்த்தா என்'று அர்த்தம் பண்ணிக் கொள்ளாமல் ஸம்ஹாரகர்த்தா என்று அர்த்தம் பண்ணிக் கொள்வதுதான் பொருத்தம். முதலில் ப்ரம்மா, விஷ்ணு என்று ச்ருஷ்டி, ஸ்த்தி கர்த்தாகளைச் சொன்னதால் அடுத்து ஸம்ஹார கர்த்தாவைச் சொல்வதுதானே பொருத்தம்?சைவ சாஸ்திரப்படி நுணுக்கமாகப் போகாமல் ஸாதாரணமாகச் சிவம், சிவன், ஈச்வரன், மஹேச்வரன், ருத்ரன் என்ற எல்லாவற்றையும் ஒருவனுக்கே பேராகச் சொல்வதுபோலவே இங்கேயும் சொல்லியிருக்கிறதென்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்**

**வைஷ்ணவத்தில்**

வைஷ்ணவ ஸித்தாந்தப்படி பார்த்தால் விஷ்ணு என்பவர் த்ரிமூர்த்திகளில் ஒருவராக ஜகத் பரிபாலனம் பண்ணுவதோடு மட்டும் முடிந்துவிடவில்லை. அவர்தான் முழு முதற்கடவுள். பூர்ணசக்தியாக இருக்கப்பட்ட அவருடைய அம்சங்களாக, அவருக்கு அடங்கி நடப்பவர்களாகத்தான் எல்லா தேவர்களும்- முத்தொழில் செய்யும் தேவர்கள் கூடத்தான்-தங்கள் தங்கள் காரியங்களைச் செய்கிறார்கள். ஆனாலும் சைவர்கள், பஞ்சக்ருத்யம், ஐந்தொழில் என்று முத்தொழிலுக்கு மேலே இரண்டைச் சொல்லி ஒவ்வொன்றுக்கும் ஒரு தேவதையைச் சொல்வதுபோல வைஷ்ணவர்கள் சொல்லக்காணோம். ஸம்ஹார மூர்த்தியான ருத்ரனுக்கு வேறேயாக திரோதானத்துக்கு மஹேச்வரனென்றும், அநுக்ரஹத்துக்கு ஸதாசிவனென்றும் சைவர்கள் சொல்வதுபோல திரோதான, அநுக்ரஹ

மூர்த்திகளாக இருவரை பரிபாலண மூர்த்தியான விஷ்ணுவுக்கு வேறேயாக பேர் கொடுத்து வைஷ்ணவர்கள் சொல்வதில்லை. பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்று அவர்களும் ஐந்தைச் சொல்லி அவற்றுக்கான அநேக விஷ்ணு மூர்த்திகளைச் சொன்னாலும் அது வேறுவிதமான 'க்ளாஸிஃ்பிகேஷ'னாக இருக்கிறது. கவனித்துப் பார்த்தால், பஞ்ச க்ருத்ய 'ஐடியா'அதில் அடங்கியிருக்கலாம். ஆனால் அதற்கு முக்யத்வம் கொடுத்து ஸ்பஷ்டமாகச் சொல்வதாகத் தெரியவில்லை. ருத்ரன் என்ற பெயருள்ளவனுக்கு மேலே சிவன் என்கிறதுபோல விஷ்ணு என்று பெயருள்ள பரிபாலன கர்த்தாவுக்குமேலே தனிப்பெயரோடு ஒரு முழுமுதலை அவர்கள் சொல்லவில்லை. நாராயணன் என்ற பெயருக்கு வைஷ்ணவத்தில் உசந்த மதிப்பு உண்டு. அஷ்டாக்ஷரீ என்றும், த்வயம் என்றும் அவர்களுக்கு முக்கியமாக இருக்கப்பட்ட இரண்டு மந்த்ரங்களிலும் நாராயண நாமாதான் இருக்கிறது. ஆனாலுங்கூட 'நாராயணன்தான் முழு முதற்கடவுள்;விஷ்ணு அவனுக்கு அடங்கிய, அவருடைய அம்சம்'என்று பிரித்திருக்கவில்லை. ஸமய ஸம்பிரதாயத்துக்கே விஷ்ணுவின் பெயரை வைத்து "வைஷ்ணவம்"என்றுதானே பெயர் இருக்கிறது?விஷ்ணு ஸஹஸ்ர நாமம்", "விஷ்ணு புராணம்"என்றெல்லாம் சொல்லும்போது விஷ்ணுவே தான் முழுமுதல் தெய்வமாக இருக்கிறார். (உடனுள்ள வைஷ்ணவரிடம் விசாரணை செய்துவிட்டு) 'விஷ்ணு'என்பது வேதத்தை அநுசரித்து வந்த வைதிகமான பெயரென்றும், 'நாராயணன்'என்பது பாஞ்சராத்ரம் என்பதாக வைஷ்ணவர்களுக்கு முக்யமாக இருக்கிற தந்த்ரத்தை அநுசரித்து வந்த தாந்த்ரிகமான பெயரென்றும் இவர் சொல்கிறார். (சிரித்துக்கொண்டே, அவஸரமாக:) நான் சொல்லலை, நான் சொல்லலை - இவர், வைஷ்ணவர், சொல்வதைத்தான் ஒப்பிக்கிறேன்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

குரவே நம :

(குருர்-ப்ரஹ்மா) ச்லோகத்துக்குப் போகலாம். அதில் முதலில் குருவை ப்ரஹ்மா என்றும், அப்புறம் விஷ்ணு எனறும் சொல்லி மூன்றாவதாக மஹேச்வரன் என்று சொல்லி முத்தொழில் புரியும் மூன்று மூர்த்திகளாகக் காட்டி விட்டு, முடிவாக அவரே முழு முதல் தெய்வமான 'ஸாக்ஷாத் பர ப்ரஹ்மம் என்று சொல்லியிருக்கிறது. ஐந்தொழில் என்பது சைவர்களும் சாக்தர்களும் மட்டுந்தான் சொல்வது. பொதுவாக உலகத்தில் சொல்கிறபடி, (ச்லோகத்திலும்) முத்தொழிலைச் சொல்லி, அவற்றுக்குரிய மூர்த்திகளைச் சொல்லி, அப்புறம் மூலப்பரம்பொருளைச் சொல்லி, குருதான் இந்த மூர்த்திகள் யாவரும்;அவருக்கு நமஸ்காரம்-"தஸ்மை ஸ்ரீ குரவே நம :" என்று முடித்திருக்கிறது. "குருமூர்த்தியாக உள்ள அவருக்கு- 'தஸ்மை'என்றால் 'அவருக்கு'நமஸ்காரம்".

அத்வைத சாஸ்த்ரங்கள் அத்தனையும் பிழிந்து ஸாரமாகத் தருவதுபோல ஆசார்யாள் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் ஒன்று செய்திருக்கிறார். "தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்" என்று சொல்வார்கள். அஷ்டகம் என்றால் எட்டு ச்லோகம் கொண்ட ஸ்தோத்ரம். ஆனாலும் இதில் எட்டுக்குப் பிறகும் சில ச்லோகங்கள் இருக்கின்றன. (நூற்பயனைச் சொல்லும்) பலச்ருதியாக ஒரு ச்லோகம் மாத்திரமில்லாமல் மேலும் நாலைந்து ச்லோகங்கள் இருக்கின்றன. எல்லாமே ரொம்ப அர்த்த புஷ்டியும் அழகும் கொண்டவை. 'குருர் - ப்ரஹ்மா'ச்லோகத்தில் 'தஸ்மை ஸ்ரீ குரவே நம :'என்று முடித்திருப்பது போலவே, ஆசார்யாளும் அந்த ஸ்தோத்ரத்தில் (முதல் ஒன்பது ச்லோகங்களில்) ஒவ்வொரு ச்லோகத்தையும்

தஸ்மை ஸ்ரீ குரு மூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணா மூர்ததயே என்று முடித்திருக்கிறார்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## எதற்காக நமஸ்காரம் ?

த்ரிமூர்த்திகளாகவும் அவர்களுக்கும் மூலப்பொருளான பரம்பொருளாகவும் குரு இருப்பதால் அவருக்கு நமஸ்காரம் பண்ணவேண்டுமென்றால், வேடிக்கையாக, "ஏன்?எதற்காக?"என்று கேட்கத்தோன்றுகிறது!வேடிக்கை என்றால் வெறும் தமாஷ் இல்லை. வம்பு மாதிரி, வாதம் மாதிரி. "த்ரிமூர்த்தி, பரப்ரஹ்மம் ஆகியனவாக இருந்து விட்டுப் போகட்டும், அதற்காக ஏன் ஐயா நமஸ்காரம் பண்ண வேண்டும்?"என்று கேட்கத் தோன்றுகிறது. வேடிக்கை, வாதம் இரண்டும் கலந்து!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## முத்தொழில் புரிபவர் என்பதற்காக வழிபாடில்லை

ச்லோகத்தில் ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன் என்று மூன்று பேரை வரிசையாகச் சொல்லிவிட்டு, அப்புறம் பரப் ப்ரம்மம் என்பதால் அந்த மூன்று பேரை ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்மஹார மூர்த்திகளாகவே காட்டியிருக்கிறது என்பது வெளிப்படை. இத்தனை நாழி அதைப் பற்றித்தான் விசாரித்தோம்.

தேவர்களெல்லாம் எந்தக் கஷ்டமானாலும் ப்ரம்மாவிடம்தான் முதலில் முறையிடுவார்கள், அஸுரர்களிலும் பல பேர் தபஸ் பண்ணி அவரிடமிருந்து வரம் பெற்றிருக்கிறார்கள்- என்னும்போது அவர்கள் அவரை ஸ்ருஷ்டி கர்த்தா என்று மட்டும் வைத்து அவரிடம் போய்ப் பிரார்த்திக்கவில்லை. தெய்வசக்தி என்று பொதுவாகச் சொல்கிறோமே, அந்த சக்தி நிரம்பிய ஒருவர் என்றுதான் அவரிடம் இவர்கள் போயிருக்கிறார்கள். தங்களுக்கு ஏதேதோ ஸௌக்யங்களை, போக போக்யங்களை அவர் கொடுக்க வேண்டும்;பிரார்த்திப்பது தேவர்களானால், அஸுரர்கள் அழிந்து போக அவர் அருள்புரியவேண்டும்;அல்லது பிரார்த்திப்பது அஸுரர்களானால், தேவர்களை அழிக்க

அவர் பலம் தரவேண்டும் என்றுதான அவரிடம் போயிருக்கிறார்கள். இதில் ஸெளக்யம் போகபோக்யம் கொடுப்பதென்பது பரிபாலனத்தைச் சேர்ந்தது. அது த்ரிமூர்த்திகளில் விஷ்ணுவின் கார்யம். அஸுரர்கள் அழிவது, அல்லது தேவர்கள் அழிவது என்றால் அதுவோ ருத்ரனின் கார்யம். இவற்றுக்காகத்தான் அவர்கள் ப்ரம்மாவிடம் போயிருக்கிறார்கள். ஸ்ருஷ்டி கர்த்தாவாக அவர் செய்யக்கூடிய எதையோ கேட்டுக்கொண்டுதான் அவர்கள் அவரிடம் போனார்களென்றில்லை.

தனக்கு சிரஞ்ஜீவித்வம் வேண்டுமென்று பல அஸுரர்கள் அவரிடம் ப்ரார்த்திக்க அவரோ, 'அப்படி அன்-கண்டிஷனலாக வரம் தர எனக்குச் சக்தியில்லையப்பா!மரணம் வராமலிருக்க ஏதாவது கண்டிஷன் வேணுமானால் போட்டுக்கேளு;தருகிறேன்'என்று சொல்வதாகப் பல புராணங்களில் பார்க்கிறோம். இதிலிருந்து அவர், 'வெறும் ஸ்ருஷ்டி கர்த்தா இல்லை. எதையும் செய்யவல்லவர்'என்ற நம்பிக்கையிலேயே வரம் கேட்பவர்கள் அவரிடம் போயிருக்கிறார்களென்றும், ஆனால் அவரோ தாம் ஸர்வசக்தி படைத்தவரல்ல என்றே தம்மைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறாரெனறும் ஆகிறது.

யாராவது சிலபேர் அவரிடம், 'இப்படியிப்படி அடுத்த ஜன்மா கொடுங்கள் என்று வரம் கேட்டிருக்கலாம், அல்லது பிள்ளைவரம் கேட்டிருக்கலாம். இவர்கள் வேண்டுமானால் ஒருவேளை அவர் ஸ்ருஷ்டி கர்த்தா என்பதாக மட்டுமே அவரை இம்மாதிரி கேட்டிருக்கலாமோ என்னவோ?ஆனால் இதே வரத்தை இதர தெய்வங்களிடமும்-சிவன், விஷ்ணு, அம்பாள், ஸுப்ரம்மண்யர் போன்றவர்களிடமும்-பல பேர் கேட்டிருக்கிறார்கள். ஆகையால் பிறப்பு ஸம்பந்தமான வரமானால் படைப்புக்கே ஏற்பட்ட ப்ரம்மாவிடம்தான் போகவேண்டுமென்று பொதுக் கருத்து இல்லை என்றே ஏற்படுகிறது. இதையே இன்னொரு தினுஸில் திரும்பிப் பார்த்தால் படைப்புக் கடவுள் என்ற முறையில்தான் ப்ரம்மாவிடம் போய் ஒன்றை வேண்டிக்கொண்டார்களென்று இல்லை என்று தெரிகிறது.

இதேபோல விஷ்ணுவையும், சிவனையும் பலபேர் உபாஸித்து இஹ - பர ஸெளக்யங்களில் அத்தனையையும்,

பரம ஞானத்தையும், மோக்ஷத்தையும்கூடப் பெற்றிருக்கிறார்கள் என்னும் போது அவர்கள் அந்த இரண்டு பேரையும் பரிபாலன கர்த்தா, ஸம்ஹாரகர்த்தா என்று மாத்திரம் வைத்து ஆராதிக்கவில்லை என்று தெரிகிறது. இவர்களை வேண்டிக்கொண்டு, தபஸ் முதலானது பண்ணியே பலர் புத்ரவரம் பெற்றிருக்கிறார்கள். 'ராஜா இருந்தான்;அவனுக்கு எல்லா ஸௌக்யங்களும் இருந்தன;ஆனால் பிள்ளை இல்லையே என்ற பெரிய குறை மட்டும் இருந்தது;இல்லாவிட்டால், யாரோ ஒரு ரிஷி இருந்தார்;அவருக்கு மனதில் எவ்வளவோ சாந்தி இருந்தும் பித்ரு ருணம் (மூதாதையரின் கடன்) தீர்க்கப் பிள்ளையில்லையே என்பது விசாரமாயிருந்தது;அந்த ராஜா, அல்லது ரிஷி விஷ்ணுவை, அல்லது சிவனைக் குறித்துத் தபஸ் பண்ணினார்;விஷ்ணுவோ சிவனோ ப்ரஸன்னமாகிப் புத்ர வரம் கொடுத்தார்'என்று அநேகம் கதைகள் பார்க்கிறோம். இங்கேயெல்லாம் ப்ரஹ்மாவுக்குரிய ஸ்ருஷ்டியை இந்த இரண்டு பேர் செய்திருப்பதாக ஆகிறது. அதோடு, தேவர்கள் பிரார்த்தித்தார்கள். ரிஷிகள் பிரார்த்தித்தார்கள் என்று மஹாவிஷ்ணு அவதாரத்துக்கு மேல் அவதாரமாக எடுத்து ஹிரண்யன், ராவணன், கம்ஸன் என்று பல பேரை ஸம்ஹாரம் பண்ணியிருக்கிறார். சிஷ்ட பரிபாலனம் என்று அவர் பண்ணுவதே பூர்வ குணங்களில் முக்யமாக துஷ்ட நிக்ரஹமாகத்தான் இருந்திருக்கிறது. சிவனைப் பார்த்தால் அவர் எத்தனையோ பக்தர்களுக்கு ஆயுராரோக்யம், ஐச்வர்யம் என்று வாரி வழங்கியிருக்கிறார். ஸ்தல புராணங்களைப் பார்த்தால் தெரியும். ராஜாக்கள் கட்டிய அநேக சிவாலயங்கள் இருக்கின்றன அல்லவா?ஒரு ராஜாவின் கொடூரமான நோயை ஈச்வரன் ஸொஸ்தம் செய்தான். ஒரு ராஜா ராஜ்யத்தை இழந்து காட்டில் வஸித்தபோது அவன் இந்த லிங்கத்தைப் பூஜித்துத் தான் ஈச்வரன் அவனுக்கு அந்த ராஜ்யத்தை மீட்டுக் கொடுத்தான், அதற்காகவே அவர்கள் இந்த ஆலயத்திருப்பணி செய்தார்கள் என்று (ஸ்தல புராணங்களில்) இருக்கும்.

(இவற்றிலிருந்து) என்ன தெரிகிறதென்றால், ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரிடமிருந்து பல பேர் பலவிதமான வரங்கள் பெற்றிருக்கிறார்களென்றால் அவர்கள் அந்த மூவரையும் எல்லாம் செய்யக்கூடிய தெய்வ சக்தி நிரம்பியவர்கள் என்றுதான் பூஜித்திருக்கிறார்களேயொழிய,

இவர் ஸ்ருஷ்டி மட்டும் செய்பவர், இவர் ஸ்திதிக்கு மட்டும் அதிகாரி, இவர் ஸம்ஹாரம் மட்டும் செய்பவர் என்று நினைத்து அவர்கள் ஆராதிக்கவில்லை.

ஆனால் இந்த (குருர் - ப்ரஹ்மா) ச்லோகம் போகும் ரீதியிலிருதோ ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹார கர்த்தாக்களாக இவர்கள் இருப்பதற்காகவே, அல்லது அந்த அதிகாரத்தில் மாத்திரம் அவர்களை வைத்தே, அவர்களுடைய உருவமாயுள்ள குருவுக்குப் பூஜை செய்யவேண்டும். நமஸ்கரிக்க வேண்டும் என்று சொல்வதாகத் தெரிகிறது. 'இவர்தான் ப்ரஹ்மா, இவர்தான் விஷ்ணு, இவர்தான் மஹேச்வரன்'என்று சொல்லி, 'இவருக்கு நமஸ்கார ம்-குரவே-நம:' என்று முடித்தால், 'அந்த மூன்று கார்யங்களைப் பண்ணுவதற்காகவே அவர்களுக்கு செய்யவேண்டிய நமஸ்காரத்தை இவருக்குச் செய்'என்பதாகத்தானே அர்த்தம் கொடுக்கிறது?நமஸ்காரம் என்றால் உபாஸனை என்று அர்த்தம். ஒருவரை பக்தியோடு உபாஸித்து ப்ரார்த்திப்பதற்கு நமஸ்காரத்தை அடையாளமாகச் சொல்லியிருக்கிறதென்று அர்த்தம்.

இங்கேதான், வேடிக்கையோ, வம்போ, வாதமோ, எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள், வருகிறது.

ஸ்ருஷ்டிக்குத்தான் சாமி, ஸ்திதிக்குத்தான் சாமி, ஸம்ஹாரத்துக்குத்தான் சாமி என்று ஒருவரை வைத்துவிடும்போது அவரை பக்தி பண்ணி உபாஸிக்கவேண்டியதே இல்லை!நமக்கு ஸந்தோஷகரமான ஒன்றை ஒரு ஸ்வாமி செய்திருக்கிறார், செய்கிறார், அல்லது செய்வார் என்கிறபோது தான் அவரிடம் பக்தி உண்டாகி உபாஸிப்போம். ப்ரம்மா நம்மைப் படைத்தாரே என்று நாம் ஸந்தோஷமா படமுடியும்? அவரிடம் சண்டை வேண்டுமானால் பிடிக்கலாம் என்றுதான் தோன்றும். படைப்பதற்கு மேல் அவர் ஒன்றும் செய்யமுடியாது- அதாவது, ஸ்ருஷ்டிகர்த்தா என்றே அவரை வைக்கிறபோது. இனிமேல் நம்முடைய இந்த வாழ்க்கையில் அவர் செய்யக்கூடியது எதுவுமில்லை. இவரிடம் எதற்கு பக்தி வைக்கணும்?அதற்கு அடையாளமாக நமஸ்காரம் பண்ணனும்?ஆனதினால் 'குருதான் ப்ரஹ்மா, ஆகவே குரவே நம:'என்று முடிச்சுப் போட்டால் எடுபடாது. (சிரித்து)

நாங்கள் நவீன கால ப்ரஜைகள். 'லாஜிக'லாக ஸரியாக வந்தால்தான் ஒப்புக் கொள்வோம்!ஆகையால் குரு ப்ரஹ்மாவாக இருப்பதற்காக அவருக்கு நமஸ்காரம் பண்ண முடியாது!

"'குருர் - விஷ்ணு:"- விஷ்ணு ஸமாசாரத்திற்கு அப்புறம் வருகிறன்.

"குருர்-தேவோ மஹேச்வர:-தஸ்மை ஶ்ரீ குரவே நம:"என்றால், இது ப்ரம்மா விஷயத்தை விடவும் ஒப்புக் கொள்ளவே முடியாது!ருத்ர மூர்த்தி சூலத்தைக் தூக்கிக் கொண்டு வந்து ஹதாஹதம் பண்ணுபவர். வேறே ஒன்றும் அவருக்குத் தெரியாது. அவநருக்குத் தெரியுமோ தெரியாதோ, ச்லோகத்தில் அவரை ஸம்ஹார க்ருத்யத்துக்கு மட்டும் உரியவராகக் காட்டிக்கொடுக்கும்போது அப்படித்தான் வைத்திருக்கிறது. நம்மை ஸம்ஹாரம் செய்கிறவரிடம் பக்தியா உண்டாகும்?"ஸ்வாமி, என்னை ஸம்ஹாரம் பண்ணுங்கோ!"என்று வேண்டிக்கொள்ள யாராவது தயாராயிருப்பார்களா?ஜன்மா எடுத்து விட்டோமே என்று எத்தனைதான் வருத்தப்படுபவர்களாக இருந்தாலும், அதற்காக ப்ரம்மாவிடம் என்னதான் 'கர்ர் புர்ர்'என்று இருந்தாலும், அதே ஸமயத்தில் ஸம்ஹாரமாவதற்கு நாம் யாராயாவது ரெடியாக இருக்கிறோமா என்ன?நாம் பெரிய திட்டாக, வயிறெரிந்து சொல்வதே நாம் சாகணும் என்று சபிப்பதுதான். இப்படிப்பட்ட சாபத்தைக் காரியமாகவே நடத்தி விடுகிறவனை அநுக்ரஹ மூர்த்தியாகக் கொண்டு எங்கேயாவது நமஸ்கரிக்க முடியுமா?

இன்னொன்றும் கவனிக்க வேண்டும். சிவன்-மஹேச்வரன், ருத்ரன், எதுவோ ஒரு பேர்;ஸம்ஹாரகர்த்தா என்பதுதான் பாயின்ட்-சிவன் ஸம்ஹாரம் செய்கிறார் என்னும்போது அவர் சாச்வதமாக ஜன்ம நிவ்ருத்தி கொடுக்கிறார் என்று அர்த்தமாகாது. முன்னேயே சொன்னேன்:ப்ரக்ருதி நியதியில் ஒரு சரீரம் ஜீர்ணமாகி மரணம் ஏற்பட்டாலும், கர்மாவைத் தீர்த்துக் கொள்வதற்காக இன்னொரு சரீரம் எடுத்துதான் ஆகணும். ருத்ரன் இந்த ஜன்மாவில் எடுத்த சரீரத்தைத்தான் நிவ்ருத்தி பண்ணுகிறானே தவிர, ஜன்மாவையே, கர்மாவையே நிவ்ருத்தி பண்ணிவிடவில்லை. நமக்குப் பிடிக்கிறதோ, பிடிக்க வில்லையோ, ஒரேடியாக ஜன்ம

நிவிருத்தி 'கம்பல்ஸரி'யாக கொடுக்கிறானென்றாலாவது, 'அப்பா!ஜனன - மரண சக்கரத்திலிருந்து தப்பணும் என்று என் அஞ்ஞானத்தில் எனக்காகத் தெரியாவிட்டாலும், நீ பிடிவாதமாக என்னை விடுவிக்கிறாயே!'என்று அவனை பக்தியோடு நமஸ்கரிக்கலாம். இது அப்படியும் இல்லை.

ப்ரளயத்தின்போது அவன் நம்மை ஸம்ஹரித்துத் தன்னிடம் லயப்படுத்திக்கொண்டு, அடுத்த ஸ்ருஷ்டிவரை, அதாவது நீண்டகாலம், ஓய்வு தரத்தான் செய்கிறான். ஆனாலுங்கூட ப்ரளயத்தை நினைத்து பயப்படத்தான் நம்முடைய அஞ்ஞான நிலையில் தோன்றுகிறதே தவிர, அதற்காக வேண்டிக்கொண்டு அவனை நமஸ்காரம் பண்ணணுமென்று நிச்சயமாகத் தோன்றவில்லை.

நெஞ்சில் கை வைத்துக்கொண்டு சொன்னால், நாமிருக்கும் ஸ்திதியில் நம்மில் யாரும் சாவை விரும்பவில்லை. எனவே சாவைக் கொடுப்பவனாகவே ஒரு மூர்த்தி இருப்பதற்காக அவனை நாம் உபாஸிக்க வேண்டியதில்லை. ஆனபடியால், "குருர் - தேவோ மஹேச்வர:தஸ்மை ஸ்ரீ குரவே நம :"என்றால் (சிரித்து) அடியோடு தப்பு!

"குருர் - விஷ்ணு:"இங்கேதான் (இப்படிச் சொல்கிற போதுதான்) மேல் பார்வையில், பக்தியுடன் நமஸ்காரம் செய்யலாம் மாதிரித் தோன்றுகிறது. விஷ்ணுதான் நம்மைப் பரிபாலிப்பவர். காப்பாற்றுபவர் என்பதால் அவர் செய்கிற ரக்ஷணைக் கார்யம் ரொம்ப நல்லதாக, நம் மனஸுக்கு ரொம்பப் பிடித்ததாக இருக்கிறது. ஆகையால் அவரை உபாஸிக்க வேண்டியதுதான். குருவானவர் விஷ்ணுவாக இருப்பாரானால், "குருர் விஷ்ணு:தஸ்மை ஸ்ரீ குரவே நம :"என்று அவருக்கு நிறைய நமஸ்காரம் பண்ணவேண்டியது தான் என்று தோன்றுகிறது. மேலோடு பார்க்கும் போது இப்படித் தோன்றுகிறது.

கொஞ்சம் ஆழ்ந்து பார்த்தால் அபிப்ராயம் மாறிப் போகிறது!விஷ்ணு பரிபாலனமூர்த்தி என்று பேர் வைத்துக் கொண்டிருப்பதிருக்கட்டும். நடைமுறையில், நம் வாழ்க்கையில், அப்படி ஆஹா என்று நாம் ஸந்தோஷப்படும்படி அவர் பரிபாலிப்பதாகத் தெரிகிறதோ?'அவர் காப்பாற்றுகிறார், நமக்கென்ன குறை?'என்று யாருக்காவது அவர் செய்ததற்காகவும்,

செய்கிறதற்காகவும் நன்றியோடு நமஸ்காரம் செய்யவேண்டுமென்று தோன்றுகிறதோ?'இவர்தானே பரிபாலன மூர்த்தி என்கிறார்கள்?அதனால் இனிமேலாவது இன்ன இன்ன ஸௌக்யங்களைக் கொடுக்கட்டும்'என்று இனிமேல் அவர் செய்யவேண்டியதற்காகத்தான் அவரை நமஸ்கரிப்போமேயொழிய இதுவரை செய்ததற்காகவோ, இப்போது செய்கிறதற்காகவோ மனம் நிறைந்து பண்ண மாட்டோம்!எல்லோருமே இப்படித்தான் இருக்கிறோம் என்று சொல்வதற்கில்லை-அப்படி நான் சொல்லியிருந்தால் ஸரியில்லை. ஆனால் மிகவும் பெரும்பாலானவர்கள் அப்படித் தான் இருக்கிறோம். 'எப்படியெல்லாம் நமக்கு அநுக்ரஹம் பண்ணியிருக்கிறான்?'என்று நிறைந்து இருக்கிறவர்கள் ரொம்பக் குறைச்சல். 'நம்மை இப்படி வெச்சிருக்கானே, அதைக் கொடுக்கலையே, இதைக் கொடுக்கலையே!'என்று மூக்கால் அழுகிறவர்கள்தான் மெஜாரிட்டி. 51%மெஜாரிட்டி இல்லை, 90-99%மெஜாரிட்டி!இப்போது நன்றாக வைத்திருக்கிறானென்று த்ருப்தியாயிருப்பவர்களில்கூட ரொம்பப் பேர் நாளைக்கும் அவனாக நன்றாக வைப்பான் என்று த்ருப்தியாக இருந்துவிடமாட்டார்கள். எதிர்காலத் தேவைகள், குறைபாடுகள் எதையாவது வைத்துக்கொண்டுதான் இருப்பார்கள். இப்போது இங்கே மஹாவிஷ்ணு வந்து நின்று கொண்டு எல்லோரும் தங்களுக்கு என்னவாவது வேணுமானால் பெடிஷன் கொடுக்கலாம் என்று சொன்னால் நம்மில் ஒவ்வொருத்தரும் ஒரு பெரிய லிஸ்ட் வைத்திருப்போம்!

என்ன அர்த்தம்?பரிபாலன மூர்த்தி என்று பேர் வைத்துக்கொண்டிருந்தாலும் அவர் அந்தக் கார்யத்தை ஸரியாகப் பண்ணாததாகத்தான் நமக்கு உள்ளூர அபிப்ராயம் என்றே அர்த்தம்!

வாஸ்தவத்தில் அவர் பண்ணாமலில்லை. ப்ரம்மாவுக்குச் சொன்னதேதான் இவருக்கும். "நாம் கட்டிக்கொண்ட கர்ம மூட்டைக்காகத்தான் ப்ரஹ்மா நமக்கு ஜன்மா தருகிறாரே தவிர, அவராக நம்மைக் கஷ்டப்படுத்த வேண்டுமென்று அப்படிச் செய்யவில்லை. ஆனதினாலே, 'ஏனையா, ஜன்மா கொடுத்தீர்?'என்று அவரிடம் சண்டைக்குப் போவது விவேகமில்லை"என்று சொன்னேனல்லவா?அப்படியேதான்

நமக்கு life-ல் இன்ன இன்னதான் மஹாவிஷ்ணு கொடுத்திருக்கிறார், இன்னதெல்லாம் கொடுக்கவில்லை, கொடுத்ததைவிட கொடுக்காததுதான் ரொம்ப ஜாஸ்தி-என்றால், இதற்குக் காரணம் நம் கர்மாவுக்கு இதுதான் நமக்கு ப்ராப்தி என்பதுதான்.

அவர் ஏதோ வேண்டுமென்றே கஷ்டப்படுத்துகிறார், கிராக்கி பண்ணுகிறாரென்று அர்த்தமேயில்லை. கர்மாவைப் பார்க்கிறார். அதை வைத்து இவ்வளவுதான் கொடுக்கணுமென்று கணக்குப் போட்டுக் கொடுக்கிறார்;அவரிஷ்டப்படி, மனம் போனபடி இல்லை. விவேகமுள்ளவர்கள் இப்படியே எடுத்துக் கொள்வார்கள்.

ஆனால் நாம் அவிவேகிகள்தானே?விவேகம் வந்தவர்கள ாயிருந்தால் நமக்கு எதற்கு குரு?அது வருவதற்குத்தானே குரு என்று ஒருத்தர்கிட்டே போய் நிற்கிறோம்?இந்த நிலையில் விவேகிகளுக்கானதை நமக்குச் சொல்வதில் அர்த்தமில்லை. இப்படியிருக்கிறபோது, மஹாவிஷ்ணுவின் ரக்ஷிப்பு போதவில்லை, அவர் ஸரியாகப் பண்ணவில்லை என்று நமக்கு இருக்கிறபோது அவரை நமஸ்கரிப்பது, பக்தியோடு உபாஸிப்பது என்றால் எப்படி?

ஆனால், "சாக அடியுங்கோ, ஸ்வாமி!"என்று சிவனிடம் வேண்டிக்கொள்வதற்கு மனஸு வராது என்ற மாதிரியில்லாமல், "நன்னா ரக்ஷியுங்கோ, ஸ்வாமீ!"என்று விஷ்ணுவிடம் ப்ரார்த்தித்துக்கொள்ள இடமிருக்கிறதே-இதுவரை அவர் ரக்ஷித்து வருவது நமக்கு த்ருப்தியில்லையென்றாலுங்கூட இனிமேலாவது நன்றாகச் செய்யும்படியாக அவரிடம் ப்ரார்த்தித்துக்கொள்ள இடமிருக்கிறதே-அதனால் (அவர் இனி பண்ண வேண்டியதற்காக) நமஸ்காரம் செய்யலாமே என்றால்......ரக்ஷணத்துக்குத்தான் அவர் இருக்கிறார், அந்த உத்யோகத்தை அவர் பார்த்துக்கொண்டிருக்கிறார். அப்படியிருக்கும்போது நாம்போய் அவரிடம் 'நன்னா ரக்ஷியுங்கோ!'என்றால், அவர் ட்யூட்டியை செய்யாததாக நாம் குத்திக் காட்டுகிற மாதிரி ஆகாதோ?இப்படிக் கேட்டால் அவர் கோபித்துக்கொண்டு, "நீ சொல்லிக்கொடுத்துதான் நான் தெரிஞ்சுக்கணுமோ?"என்று செய்வதையும் குறைத்துக் கொண்டுவிட்டால் என்ன ஆவது?இருந்தாலும்,

குத்திக்காட்டிக் குற்றம் சொல்கிறாற் போலில்லாமல் விநயமாக இம்மாதிரி விண்ணப்பம் பண்ணிக்கொள்ளலாமோ என்று பார்த்தால்.......

ஸரி, நமஸ்காரம் செய்து அவரிடம் விண்ணப்பித்துக் கொள்கிறோம். அவர் என்ன சொல்வோர்?யோசித்துப் பார்த்தால் அவர் என்ன சொல்வாரென்று ஊஹிக்க முடியும். "நானாக எதுவும் பண்ணுகிறதற்கில்லை. நாங்கள் மூன்று பேருமே எங்கள் இஷ்டப்படி எதுவும் பண்ணவில்லை. எங்களுக்கு அந்த அதிகாரம் கிடையாது. ஸர்வ சக்தனான ஒரு பரமாத்மா கொடுத்திருக்கும் வேலையை, எல்லை போட்டுக் கொடுத்திருக்கும் வேலையையே, நாங்கள் செய்கிறோம். உங்கள் கர்மாவைக் கொண்டே இன்ன மாதரிப் பிறப்பைக் கொடுப்பது என்று பிரம்மா வைத்துக் கொண்டிருக்கிறார். இந்தப் பிறவியில், அதாவது பிறவி ஒவ்வொன்றிலும், உங்கள் கர்ம மூட்டையில் ஏதோ ஒரு அளவு நீங்கள் அநுபவிக்க வேண்டுமென்று பரமாத்மா நிர்ணயம் செய்திருக்கிறார். அந்த அளவு பார்த்தே உங்களுக்கு ஒவ்வொரு ஜன்மாவிலும் நான் ரக்ஷிப்புக் கொடுக்கிறேன். நிறைய ஸுக்ருதம் இருந்தால்-அது நீங்களே செய்ததுதான்-நிறைய ரக்ஷிப்புத் தருகிறேன். குறைவாக இருந்தால் குறைவாகத் தருகிறேன். நீங்கள் எத்தனை ரூபாய் வைத்திருக்கிறீர்களோ அதற்கான சரக்குத் தருகிறேன். கள்ள நோட்டு நீட்டினால் தண்டனை தருகிறேன். இப்படி பரமாத்மாவின் நிர்ணயப்படி ஒரு ஜன்மாவுக்கான அளவை நீங்கள் அநுபவித்தானவுடன் ருத்ரமூர்த்தி வியாதி, வக்கை என்று எதையோ அனுப்பி ஆயுளை முடித்துவிடுகிறார். ஆகக்கூடி, இனிமேலே உங்களுக்கு நல்ல ரக்ஷிப்புக் கிடைக்கணுமென்றால் அதற்கு விசை உங்கள் கிட்டேயோதான் இருக்கிறது. ஸத்கர்மா நிறையப் பண்ண ஆரம்பியுங்கள். அப்போது நல்ல ரக்ஷிப்பு கொடுக்கு ம்படியாக என்னைப் பரமாத்மா வைப்பார்.

ஆனால் அதுவுங்கூட நீங்கள் ஆசைப்படுகிற மாதிரி இன்றைக்கு ஸத்கர்மா செய்தால் நாளைக்கே அதன் ஸௌக்ய பலன் கிடைத்துவிடுமென்று நான் 'காரன்டி'பண்ணத் தயாரில்லை. என்றைக்கோ, எந்த ஜன்மத்திலோதான் பலன் என்ற பரமாத்மா தீர்மானம் செய்துவிட்டால் நீங்கள் என்னிடம் சண்டைக்கு வந்து

ப்ரயோஜனமில்லை"என்று இப்படித்தான் மஹாவிஷ்ணு சொல்வார்.

இங்கே நன்றாக 'க்ளிய'ராகிவிட்டது. இவரையும் நமஸ்காரம் பண்ண வேண்டியதில்லை என்று. இவரை, அவரை மூன்று பேரையுந்தான்!நடுவாந்தரத்திலே ஒன்று சொன்னாரோ இல்லையோ, 'உங்களுடைய ரூபாய் எவ்வளவோ அதற்கேற்ற சரக்குத்தான்'என்று. அதில் எல்லாம் முடிந்துபோய் விடுகிறது. ரூபாய்க்கு ஸரியாக சரக்கு தரும் வியாபாரியை யாராவது நமஸ்காரம் பண்ணுகிறோமா? (சிரிக்கிறார்.)

நாம் பண்ணுவதை வைத்து இப்படியிப்படிப் பலன் என்று முடிவெடுப்பவன் எவனோ ஒருத்தன். இந்த மூன்று பேரும் இல்லை. பரமாத்மா என்கிறவன். ஸர்வ சக்தனாக இருக்கிறவன் அவன் எடுத்த முடிவை இவர்களைக்கொண்டு அமல்படுத்துகிறான். இவர்கள் அவனிடமிருந்து பெற்ற ஸ்ருஷ்டி சக்தி, பரிபாலன சக்தி, ஸம்ஹார சக்தி ஆகியவற்றைக்கொண்டு தங்கள் ட்யூட்டியைச் செய்கிறார்கள். ட்யூட்டி செய்கிற ஆபீஸர்களிடம் நாம் போய் "இந்த ப்ரகாரம் பண்ணுங்கோ, அந்த ப்ரகாரம் பண்ணுங்கோ"என்று கேட்டு என்ன ப்ரயோஜனம்?ஒரு பக்கம் இது நமக்குப் பயன் தராத வியர்த்தமான காரியமென்பதோடு, இன்னொரு பக்கம் ஆபீஸர்களிடம் போய்த் தப்பான சலுகை கேட்டு லஞ்சம் கொடுக்கிற மாதிரியும் ஆகிறது. ஏற்கெனவே பலதினுஸாக (கர்மா) பண்ணிவிட்டுப் பரமாத்மாவிடம் மாட்டிக்கொண்டு முழிப்பது போதாதென்று, "என் தீர்ப்பை மாற்றச்சொல்லி என் சிப்பந்திகளுக்கே லஞ்சம் கொடுக்கப் பார்க்கிறாயா?"என்று வேறே...(பயப்படுவது போல) வேண்டாண்டாப்பா, நமக்கு இந்த த்ரிமூர்த்தி நமஸ்காரம்!இவர்களுக்கு நமஸ்காரம் (பண்ணுவது) என்ற அபிப்ராயத்துக்கே ஒரு நமஸ்கார ம்!(சிரிக்கிறார்.)

ஆக ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ரர்களுக்கு, அவர்களாக ஏதோ செய்யக்கூடியவர்கள் என்னும்போதுதான், புராணாதிகளில் பல பேர் செய்திருப்பதுபோல நாமும் நமஸ்காரம் செய்து உபாஸிக்க இடமிருக்கிறதே தவிர, அவர்களுக்கு மேலே ஒரு பரமாத்மா ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்று

திட்டவட்டமாக அதிகார எல்லை போட்டுக் கொடுத்து அவர்கள் அதன்படியே ஆபீஸ் பண்ணுகிறார்களென்று வைத்துப் பார்க்கும்போது இடமில்லை. இவர்களுக்கு நமஸ்காரமென்றால் அது மேலதிகாரியான பரமாத்மாவுக்கு அபசாரம் என்றாகி, அவன் அதற்காகவும் வேறு வைத்துத் தீட்டுவதாகத்தான் ஆகும்.

'இந்த மூன்று பேர் இப்படி மூன்று ஆபீஸ் பண்ணுவது மட்டுமில்லை, இதற்கான சக்தியைப் பரமாத்மாவிடமிருந்து பெற்றிருப்பது மட்டுமில்லை., இவர்களுக்குள்ளே உட்கார்ந்திருக்கும் பரமாத்மாவுடன் இவர்கள் அப்படியே ஒன்றிப்போய் அவனாகவே இருந்துகொண்டு ஸர்வசக்தனான அவனைப்போல எதையும் செய்யக்கூடியவர்கள்;கர்மாவை மன்னித்தும் மீறியும்கூடப் பரமாத்மா பண்ணுவதுபோல, அல்லது கர்மாப்படியே நடப்பதை நாம் அழாமல், மூஞ்சியைச் சுளிக்காமல் சாந்தமாக ஏற்றுக்கொள்ளும் பக்வத்தை அவன் தருவதுபோல இவர்களும் தந்துவிடுவார்கள்'என்று வைத்துக்கொள்ளும்போதுதான் இவர்களை நமஸ்கரித்து உபாஸிப்பதற்கு இடமிருக்கிறது.

எந்த தெய்வத்தையுமே இப்படி முழுமுதற் தெய்வத்தின் ஒரு தோற்றமாகக்கொண்டு, ஆனாலும், 'குறிப்பாக இந்தத் தோற்றத்தில் இது இந்தக் காரியத்துக்கு அதிகாரம் வஹிக்கிறது. ஆனால் நாம் பூர்ணமாகச் மனஸை இதனிடம் கரைத்து வேண்டிக்கொண்டால் அதுவும் மனஸு கரைந்து, தான் பரமாத்மாவிலே கரைந்து, அந்த பரமாத்மாவினாலேயே நமக்கு நடக்கக் கூடிய எதையும் ஸாதித்துத் தந்துவிடும்'என்று உபாஸனை செய்வதுதான் முறை.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்**

**முழுமுதலாக விளங்கும் மூர்த்திகள்**

இங்கே விஷ்ணு, ருத்ரர் ஆகிய இரண்டு பேருக்கும்

ப்ரஹ்மாவுக்கும் ஒரு வித்யாஸம் சொல்வதுண்டு. விஷ்ணுவும் ருத்ரமூர்த்தியும் வெளிக்கார்யம் எப்படி வைத்துக் கொண்டிருந்தாலும்-ஒரு ஆய்ச்சியிடம் அடிவாங்கிக் கொண்டு, ஒரு பிட்டு வாணிச்சிக்குக் கூலிவேலை செய்துகொண்டு இருக்கிறபோதுகூட-உள்ளூரப் பரமாத்மாவோடு ஒன்றுபட்டு ஸதாகாலமும் அந்த ஸர்வசக்தனாகவும், சக்தி விலாஸமெல்லாமும்கூட அடிபட்டுப்போன நிர்குண ப்ரஹ்ம வஸ்துவாகவும் தங்களைத் தெரிந்து கொண்டிருப்பவர்கள். அம்பாள், ஸாக்ஷாத் பராசக்தி, அவளும் இப்படித்தான். மஹாலக்ஷ்மி மஹாவிஷ்ணுவோடு கொஞ்சம்கூடப் பிரியாத பாவத்தில் கரைந்திருந்து தத்-த்வாரா (அதனடியாக) பரமாத்ம ஸ்வரூபத்தில் ஒன்று பட்டிருப்பவள். வைஷ்ணவர்கள் (அவளுடைய) ஸ்தானத்தை நன்றாக உயர்த்தி, அநுக்ரஹிக்குமாறு மஹாவிஷ்ணுவைத் தூண்டிவிடும் சக்தியே அவள்தான் என்பார்கள். 'தாயார், தாயார்'என்று நம் மனஸை உருக்கும்படியாக இப்படி அபிப்ராயம் சொல்வார்கள். நம்முடைய ஆசார்யாளும் மஹாலக்ஷ்மியை ஸ்துதிக்கும்போது அவளையே கீர்தேவதை', அதாவது ஸரஸ்வதி என்றும், 'சசிசேகரவல்லபா'அதாவது சந்த்ரமௌளீச்வரனின் சக்தியான அம்பாள் என்றும் சொல்லியிருக்கிறார்.

பிள்ளையார், முருகன் ஆகியவர்களும் இப்படியேதான் (முறையே) விக்னஹர்த்தா, தேவஸேநாதிபதி என்று மட்டும் முடிந்து போகாமல் முழுமுதலாக நின்று கொண்டு அநுக்ரஹிக்க கூடியவர்கள். ஆஞ்ஜநேய மூர்த்தியும் ராம தாஸனாக இருந்து கொண்டே ஸர்வ சக்தராகப் பூஜிக்கப்படும் ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறார். ப்ரஹ்மாவை இந்த லிஸ்டில் சேர்க்கவில்லை. ஏராளமான சாஸ்திரங்களை அலசிப் பார்த்து அப்பைய தீக்ஷிதர் அபிப்ராயம் பண்ணும்போது விஷ்ணுவையும், சிவனையும், அம்பாளையும் 'ஈச்வரகோடி'என்ற பூர்ண ப்ரஹ்ம சக்தியாகச் சொல்லியிருப்பதுபோல் ப்ரஹ்மாவைச் சொல்லவில்லை. பேரிலே 'ப்ரஹ்மா'என்பது 'ப்ரஹ்மம்'என்கிறமாதிரி இருந்தாலும், ஸாரத்திலே அப்படிப் பூர்ணமாக இல்லை. சித்தே முந்திதானே பார்த்தோம். தனக்குச் சிரஞ்ஜீவித்வம் வேண்டும் என்று யாராவது வரம் கேட்டால் ப்ரஹ்மாவே, 'எனக்கு அப்படிக் கொடுக்க அதிகாரமில்லை,

சக்தியில்லை'என்று சொல்லிவிடுவாரென்று?

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ப்ரம்மாவுக்கு மட்டும் ஏன் விலக்கு ?

ஒன்றைச் சொல்லப் புகுந்தால் இன்னொன்று அகப்படுகிறது!ப்ரம்மாவுக்குக் கோவில் இல்லாமலிருப்பதற்கு இப்போது இன்னொரு காரணம் கிடைக்கிறது.

ஒருத்தருக்குக் கோவிலெடுத்துக் கும்பிடவேண்டுமென்றால் ஒன்று, அவர் ஸகல சக்த பரமாத்மாவாக இருக்க வேண்டும். அல்லது அவர் அதிகாரம் பெற்றிருக்கும் விஷயம் நமக்கு வேண்டியதாக இருக்க வேண்டும். செல்வம் தருவது (லக்ஷ்மி), அறிவு தருவது (ஸரஸ்வதி), விக்னத்தை போக்குவது (பிள்ளையார்), ஆரோக்யம் தருவது (தன்வந்தரி;ஸூரியபகவானுதான்), அல்லது நவக்ரஹங்கள் மாதிரி நமது ஜாதக பீடைகளைப் போக்குவது, ஐயனார் மாரியம்மன் மாதிரி துஷ்ட சக்திகளையும் நோய்நொடிகளையும் போக்குவது-என்றிப்படி ஒருவர் அதிகாரம் பெற்றுள்ள விஷயம் நாம் வேண்டிப் பெறக்கூடிய ஒன்றை அருளுவதாக இருக்க வேண்டும். ஸ்ருஷ்டியதிகாரத்தில் இப்படியொன்றுமில்லை என்று முன்னேயே பார்த்தோம். இல்லாவிட்டால் (ஆலய வழிபாட்டுக்குரிய ஒரு மூர்த்தி) ஒரு பெரிய அடியாராகவோ, ஆசாரியராகவோவாவது இருக்கவேண்டும். ப்ரஹ்மாவானால் இதில் எந்தத் கணக்கிலும் சேர்வதாகத் தெரியவில்லையோல்லியோ?

அதனால்தான் நவக்ரஹங்கள், ஆழ்வார்-நாயன்மார், மாரியம்மன்-இருளன்-வீரன் ஆகியவர்களுக்குக்கூடக் கோவில் இருந்தும் மும்மூர்த்தியில் ஒருவரும், சதுர்முகங்களால் சதுர்வேதங்களை ஸதா ஓதிக் கொண்டிருப்பவருமான ஒரு பெரிய தெய்வத்திற்கு மட்டும் கோவில் இல்லை. பாவமாகத்தான் இருக்கிறது!

பரமாத்மாவாகவே தம்மை அவர் தெரிந்துகொள்ளவில்லை, அல்லது தெரிந்து கொண்டாலும் அப்படிக் கொள்வதில்லை என்பதால் அவருக்குப் பூஜையில்லை;அதோடு ஒரு வீரன், இருளன் மாதிரியான க்ஷுத்ரதேவதை கொஞ்சங்கூடப் பரமாத்ம பாவமே இல்லாததாயிருந்தாலும், அதனாலும் நமக்கு அநுகூலமாக ஒரு கெட்டதை நிவ்ருத்தி செய்யமுடிகிறபோது, ஸ்ருஷ்டிகர்த்தா என்பவர் மட்டும் அப்படி எதுவும் செய்யமுடியாததால் அவருக்குப் பூஜை இல்லை என்று சொன்னால் ஒரு கேள்வி கேட்கலாம். "எந்தவிதமான அநுக்ரஹ சக்தியுமில்லாத ஒரு மாதா, பிதா, பதி போன்றவர்களைப் பூஜித்தால் கூட, அவர்களுக்கு ஸ்வயமாக அருள் சக்தியோ ஞானமோ கொஞ்சமும் இல்லாவிட்டாலும்கூட, அவர்களுக்குள்ளேயும் பரமாத்மா உட்கார்ந்திருப்பதால், பூஜிக்கிற நமக்கு அவர்கள் மூலமாக அந்தப் பரமாத்மாவே அநுக்ரஹித்துவிடும் என்று சொல்லியிருக்கிறதல்லவா?நீங்களே கூடச் சொல்லியிருக்கிறீர்களே!'நம்முடைய பக்தியும், சரணாகதியும்தான் முக்யம். அது யாரைக் குறித்து என்பது முக்யமில்லை. யாரைக் குறித்ததானாலும் நம்முடைய பக்தி சுத்தமானதாக இருந்தால் ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா நமக்கு அநுக்ரஹம் பண்ணிவிடுவார்'என்று சொல்லியிருக்கிறீர்களே!அப்படியிருக்கும்போது, ஒரு க்ஷுத்ர தேவதையையோ, ஸாதாரண மநுஷப் பிறவிகளான ஒரு அப்பா-அம்மாவையோ கூட வழிபட்டுப் பரமாத்மாவின் அநுக்ரஹத்தைப் பெறமுடியும் என்னும்போது, ப்ரஹ்மா ஒருத்தரை மாத்திரம் இந்தக் கணக்கிலும் சேர்க்காமல் ஏன் ஒதுக்கி வைக்கணும்?அவர் என்ன பாவம் பண்ணினார்?"என்று கேட்கலாம்.

பாவமே பண்ணவில்லை. அவருக்கு ஒரு தனிஸ்தானம் கொடுத்து உசத்தித்தான் வைத்திருக்கிறது. ஸர்வ சக்த பரமாத்மா என்று வைக்காவிட்டாலும், அதற்கு அடுத்த படியில் அவருக்குத்தான் புராண, சாஸ்த்ரங்களில் இடம் கொடுத்திருக்கிறது. ஸூர்யன், சந்த்ரன் முதலான நவக்ரஹங்களும் தேவராஜாவான இந்த்ரனும் கூட அவர் காலிலே நிறைய விழுந்திருப்பதாகப் பார்க்கிறோம். ஈச்வரகோடியைச் சேர்ந்த மூர்த்தியாக ப்ரஹ்மா இல்லாவிட்டாலும் அப்படிப்பட்ட மூர்த்திகளிடம் ஏனைய

தேவதைகளைவிட நெருங்கிப் பழகுபவர். அதனால் ஏனைய தேவர்கள் ஸுலபத்தில் தாங்களாகப் பிடிக்க முடியாத சிவன், விஷ்ணு, அம்பாள் முதலியவர்களிடம் இவர் அவர்களை அழைத்துக்கொண்டு போய் 'ரெகமன்ட்'பண்ணுவார். அதனால்தான் அவர்கள் இவர் காலில் வந்து விழுவது. தகப்பனார், ஈச்வர கோடியைச் சேர்ந்தவர் அப்படிப்பட்ட விஷ்ணுவே அஸல் மநுஷன் மாதிரி வேஷம் போடுவது என்று தீர்மானித்துக் கொண்டு ராமாவதாரம் பண்ணிய காலத்தில் (ராவணவதமாகி, ஸீதை அக்னி ப்ரவேசம் செய்யும் கட்டத்தில்), "நீ வெறும் மநுஷ்யனா?ஸாக்ஷாத் நாராயணனல்லவா நீ?இந்த ஸீதை மஹாலக்ஷ்மியல்லவா?"என்று ஆகாசத்திலே வந்து ஞாபகப்படுத்தியது ப்ரஹ்மாதான். அவருக்கு எவ்வளவு சக்தி என்பதற்கு, இன்றைக்கும் ஒரு விஷயத்தைத் தலை தூக்க விடாமல் முடித்துப்போடும்போது "ப்ரஹ்மாஸ்திரம் போட்டாச்சு"என்று சொல்வதே அத்தாட்சி.

இப்படியிருந்தாலும் ஒரு 'பெக்யூலியர் பொஸிஷ'னில் (தமக்கே உரிய ஒரு விசித்ரமான நிலையில்) அவர் இருப்பதால் தான் அவருக்கு மட்டும் கோயில் இல்லாமல் வைக்கும்படி ஆகியிருப்பதாகத் தோன்றுகிறது.

அவர் ஏதோ பாவம் பண்ணினார், 'பெக்யூலியர் பொஸிஷ'னில் இருக்கிறார் என்று சொல்வதைவிட, நாம் தான் ஏதோ பாவம் பண்ணி, நம்முடைய மனஸின் ஸ்வபாவம் ஒரு 'பெக்யூலியர் பொஸிஷ'னில் இருப்பதால் நம்மால் அவரைக் கோவிலில் வைத்து வழிபட முடியவில்லை என்று சொல்லத் தோன்றுகிறது.

பரமாத்மா எவருக்குள்ளேயும் இருந்துகொண்டு, அந்த ஒருவரிடம் நாம் பக்தி பண்ணினால் அநுக்ரஹித்து விடுவாரென்றபடி ப்ரஹ்மாவுக்குள்ளேயும் இருந்துகொண்டு பண்ணத்தான் செய்வார். அதில் ஸந்தேஹமேயில்லை. ஆனால், கஷ்டம் என்னவென்றால் நம்மால் ப்ரஹ்மாவை பக்தி பண்ண முடியுமாலிருப்பது தான்!நாம் மட்டும் ப்ரஹ்மாவை வழிபட்டு விட்டோமோ, நிச்சயமாக அவர் மூலமும் ஸர்வாந்தர்யாமியான பரமாத்வினால் நமக்கு வேண்டியது அநுக்ரஹிக்கப்பட்டுவிடும். ஆனால் அப்படி வழிபடவிடாமல் நம் மனஸின் இயற்கை செய்கிறது. நம்

மனஸினால் சிவன், விஷ்ணு, தேவி, முருகன் போன்றவர்களைப் பரமாத்மாவே என்று வழிபட முடிவதுபோல இவரைச் செய்ய முடியவில்லை. எதனாலோ இவரை அப்படி முழுதற்தெய்வமாக வழிபடும் நடைமுறை இல்லாமலே இருந்திருப்பதால் இவருக்குப் பரமாத்ம ஸ்தானம் கொடுத்துப் பார்ப்பதற்கு நம் மனஸினால் முடியவில்லை. ஆசார்யாள் ஷண்மதம் என்று ஸ்தாபித்த காலத்திலேயே அவற்றில் விஷ்ணுமதம், சிவமதம் ஆகியவற்றோடு ப்ரஹ்ம மதம் என்று ஸ்தாபிக்கக் காணோமே!(ஷண்மதங்களில் ஒன்றாக) ஸுர்ய மதத்தைக்கூட அவர் ஸ்தாபித்திருந்தும் த்ரிமூர்த்திகளில் ஒருவரான இவர் பெயரில் ஒன்று ஸ்தாபிக்கத்தானே இல்லை?இப்படி நெடுங்காலமாக இருந்து வந்திருப்பதால் இப்போது நம்மாலும் இவரை முழுமுதலாக பாவிக்க முடியவில்லை.

ஒரு குறிப்பிட்ட அதிகாரம் மாத்திரம் கொண்ட தேவதையைக்கூட நாம் வழிபட ஆரம்பித்துவிட்டால், அப்புறம் அதனிடமே ப்ரியம் உண்டாகி, அதுவே நம் இஷ்ட தேவதையாகிவிட, அதன் பிற்பாடு அதுவே நம்மைப் பொறுத்தமட்டில் நமக்கு ஸகலவித அநுக்ரஹமும் செய்யுமென்ற அநன்ய பக்தி ஏற்பட்டு அதை முழுமுதலாகப் பூஜிக்க முடிகிறது. ஆனால் இவர் விஷயமாகவோ, முதலுக்கே மோசமாக, 'ஜன்மா தருவது'என்பதான இவரது அதிகாரமே நமக்கு இஷ்டமில்லாத விஷயமாகிவிடுவதால், இவரை வழிபடவேண்டுமென்ற எண்ணம் ஆரம்பத்திலேயே நமக்குத் தோன்றுவதில்லை.

யாராயிருந்தாலும் அவர்மூலம் பரமாத்மா அருள்வார் என்றாலும், நாம் பல காரணங்களுக்காக ப்ரியப்பட்டு வழிபடக் கூடியவர்களாக இன்னும் எத்தனையோ தேவதைகள் இருக்கும்போது, அப்படி நம் ப்ரியத்தை விசேஷமாக ஸம்பாதிக்க முடியாத ஒருவரிடம்-அவர் தாமே பரமாத்ம நிலையிலிருந்துகொண்டு அநுக்ரஹிப்பாரென்று நமக்குத் தோன்றாதபோதிலும், அவரிடம் நமக்காக இயற்கையில் ஒரு விசேஷபக்தியும் சுரக்காமலிரு ந்தபோதிலும், அப்படிப்பட்ட ஒருவரிடம்-போய் இவர் மூலமும்தான் பரமாத்மா அநுக்ரஹிக்கட்டுமே என்று வழிபடுவதென்றால் அது ரொம்ப செயற்கையாகவும், வலிந்து மேற்கொண்ட ஜீவனில்லாத கார்யமாகவும்தான் இருக்கும்.

அதனால் அப்படிப் பண்ண நம்மில் எவருக்கும் தோன்றுவதில்லை.

ஏதாவது ஒரு காரணத்துக்காக முதலில் ஒருவரிடம் இஷ்டப்பட்டுப் போய்விட்டால் அப்புறம்தான் அவரிடம் பக்தியைப் பெருக்கிக்கொண்டு போகமுடிகிறது. முதலுக்கே மோசமென்றால் ஒன்றும் பண்ணிக்கொள்ளுவதற்கில்லை.

மனஸின் ஸ்வபாவத்தில் இன்னொன்று :அப்பா, அம்மா, குரு இன்னும் யாரோ மஹான், இந்த நாளில் 'தலைவர், 'தலைவர்'எனப்படுகிறவர்-இப்படி ஒருத்தர் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறபோது, நமக்கு அவரிடம் ஏற்படுகிற பிடிமானத்தினால் அவரையே பரமாத்மாவைப்போல பக்தி பண்ணி சரணாகதி செய்யத்தோன்றுகிறது. ப்ரயக்ஷமாகத் தெரியாத ஒரு தேவதையிடம், அது பரமாத்மாதான் என்று நமக்காகத் தோன்றாதபோது, இப்படி ஒரு குருவிடமோ, தலைவரிடமோ, பெற்றோர் போன்றவரிடமோ நாம் பரமாத்ம பாவத்தை ஏற்றிவைத்துப் பார்க்கிறமாதிரிப் பண்ணமுடிவதில்லை. 'ஏற்றி வைத்து'என்பதுகூட ஸரியில்லை. அப்படிச் சொன்னால் புத்தி பூர்வமாகச் செய்வதாகத் தோன்றுகிறது. ஆனால் இப்படி புத்தி வேலையில்லாமல், நமக்கு ஒரு தலைவரிடம் ரொம்பவும் ப்ரியம், அல்லது குருவிடம் மரியாதை, வேறே ஒருவரிடம் ஒரே 'அட்டாச்மென்ட்'என்றால் உடனே தன்னால் 'இவர்தான் நமக்கு ஸகலமும்;இவருக்கே நம் வாழ்க்கை அர்ப்பணம்'என்ற தீர்மானம் ஏற்பட்டுவிடுகிறது.

'எந்த மூர்த்தியின் மூலமும் பரமாத்மாவே அநுக்ரஹிக்க முடியும்'என்று புத்தி பூர்வமாக நமக்குத் தெரிந்தாலுங்கூட, மனஸுக்குப் பிடிமானமில்லாத ஒரு மூர்த்தியிடம் இப்படி ஒரு காரணத்தை ஏற்றிவைத்து பக்தி பண்ணுவதென்பது நம் மனஸின் ஸ்வபாவத்துக்கு ஒத்து வரவில்லை.

இப்போது, ஒரு கோவிலில் ப்ரம்மாவுக்கும் ஸந்நிதி இருப்பதாக வைத்துக்கொண்டு பார்ப்போம்.

(கோவிலில் ஸந்நிதிகள் கொண்டுள்ள) சிவலிங்கம், அம்பாள், பெருமாள், தாயார் ஆகியவர்கள். ஸர்வ சக்தர்கள் என்று தெரிகிறது. அதனால் மனஸார நமஸ்காரம் பண்ணமுடிகிறது.

நவக்ரஹங்கள், அடியார்கள் முதலானவர்கள்-அப்படியில்லை

என்று தெரிகிறது. ஆனாலும் நமக்குப் பிடித்தமானதை அநுக்ரஹிக்கக்கூடிய சக்தி உள்ளவர்கள் என்றும் தெரிகிறது. ஆகையால் நமஸ்காரம் பண்ணுகிறோம்.

ஸர்வ சக்தி பொருந்திய மூர்த்தி, அல்லது ஏதோ ஒரு விதமான சக்தி மட்டும் பொருந்திய மூர்த்தி என்று இரண்டு விதமாகத்தான் நம்மால்-அதாவது average பக்தர்களால் -ஒன்றிடம் பக்தி வைக்க முடிகிறது. ஸர்வ சக்தி இல்லாத மூர்த்தியின் மூலமும் ஸர்வ சக்தி இல்லாத மூர்த்தியின் மூலமும் ஸர்வ சக்தி வாய்ந்த பரமாத்மா அநுக்ரஹம் பண்ண முடியும் என்ற எண்ணத்தோடு இதை அதுவாகப் பார்ப்பது நமக்கு அவ்வளவாக முடிவதில்லை. சண்டிகேச்வரரையோ விஷ்வக்ஸேனரையோ 'மூலமான பரமாத்மா இவர்மூலம் அருள் செய்யட்டும்'என்று நினைத்து நம்மால் வேண்டிக்கொள்ள முடிகிறதா?ஸர்வ சக்தி, கிஞ்சித் (சிறிதளவு) சக்தி என்று தெளிவாக இரண்டு பிரித்துக் கொண்டு விடுகிறோம்.

இதற்கு வித்யாஸமாக ஒரே ஒரு இடத்தில் மட்டும் செய்கிறோம். ஆசார்ய புருஷர்களின் பிம்பங்களைப் பார்த்தால், 'நம்மைப் பொறுத்தமட்டில் நமக்கு ஈச்வர கோடியாகவே இருந்து அநுக்ரஹிக்கக் கூடியவர்கள்;பரமாத்மா பல ரூபங்களில் குறிப்பாக இப்படி நம்மிடம் ஸுலபத்தில் வருவான்'என்று தெரிகிறது. அவர்களை நமஸ்கரிக்கிறோம்.

அதாவது, ஈச்வரகோடி என்று தெளிவாக ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள், அப்படியில்லை என்று தெளிவாக ஒரு பிரிவினர், நம்மைப் பொறுத்தமட்டில் அப்படியிருக்கிறவர்கள் என்று ஒரு பிரிவினர்-இருப்பதாகப் பார்க்கிறோம். இப்படி மூன்று பிரிவுகள் செய்து நமஸ்கரிக்கிறோம்.

ப்ரஹ்மாவின் ஸந்நிதி இருக்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் ஈச்வர கோடியில் இல்லை. அதோடு த்ரிமூர்த்திகளில் ஒருவரான ஸ்ருஷ்டி கர்த்தாவாக அவரை நினைப்பதே நம் மனஸில் வேரோடிப் போயிருக்கிறது. புராண காலங்களில் அவரை முதலில் பிடித்து அவர் மூலமாக ஈச்வர கோடிகளைப் பிடிக்கலாம் என்ற அபிப்ராயம் இருந்திருந்தாலும், அப்புறம் பஹுகாலமாக, லோகத்தில் கலிபாதை ஜாஸ்தியாகி அதனால் ஜன்மா என்பதே ரொம்ப

வெறுத்துக்கொள்ளவேண்டி ஆனதினாலோ, அல்லது வேறே காரணத்தினாலோ ப்ரஹ்மாவிடம் பக்தி குறைந்து, எனவே அவரைக் கொண்டு ஈச்வர கோடியைப் பிடிப்பதென்பது மறைந்துபோயிருப்பது வாஸ்தவம். ஆகையால் அவரையே முழுமுதலாக நினைக்க முடியாததோடு, அவர் மூலம் முழுமுதலிடம் போகலாமென்ற அபிப்ராயமும் நமக்கு இல்லை. ஆசாரிய புருஷர்களைப் போல நம்மைப் பொறுத்தமட்டில் முழுமுதல் தெய்வமே இவராக இருந்து அநுக்ரஹிக்கும் என்று நினைக்கவும் தோன்றவில்லை;அதற்கு விசேஷமாக basis (அடிப்படை) இல்லை.

அப்புறம், கோவிலில் ஆழ்வார், நாயன்மார் போன்ற பக்தர்களைப் பார்க்கும்போது அவர்களுடைய பக்தியின் உயர்வுக்காக அவர்களை நமஸ்கரிக்கத் தோன்றுகிறது. ப்ரஹ்மாவுக்கும் இப்படி பக்தர் என்று விசேஷமாகச் சிறப்பிக்கப்படும் அடியார் கோஷ்டியிலும் சேரவில்லை!

மற்ற கிஞ்சித்-சக்தி மூர்த்திகளை (ஸ்வல்ப சக்தி படைத்த தேவதைகளை) அவரவருக்குள்ள சக்திக்காக நமஸ்கரிப்பது போல இவருக்கும் பண்ணிவிட்டுப் போகலாமேயென்றால், இவருடைய சக்தி என்ன?ஸ்ருஷ்டி செய்வது. அதாவது நமக்கு ஜன்மாவைத் தந்து, "தலையெழுத்து, கர்மம்"என்று தலையில் அடித்துக்கொள்கிறோமே, அதை-பழைய ஸ்டாக்கிலிருந்து இந்த ஜன்மாவில் அநுபவிக்கவேண்டியது இவ்வளவு என்பதை-எழுதி விடுவது. அதோடு அவர் வேலை முடிந்தது. அதற்கப்புறம் அவர் நமக்குச் செய்வது, செய்யக்கூடியது எதுவுமேயில்லை. ஒவ்வொரு சாஸ்த்ரத்திலும், ஸயன்ஸிலும் "விதிகள்"என்று பலவற்றைச் சொல்கிறோம். அவை மாற்றமுடியாத நியதிகள் தானே?ரூல்கள்தானே? மாற்றமுடியாததாக நம் தலையில் "விதியை"எழுதும் ப்ரம்மாவுக்கே "விதி"என்று பேர் இருப்பதால் அவரும் ஸ்வதந்திரமாக நமக்கு எந்த அநுக்ரஹமும் செய்யமுடியாத ஒரு ரூல் மாதிரிதானிருப்பதாக தோன்றுகிறது. ஆகையினால் அவரிடம் பக்தி பொங்கிக்கொண்டு வரும்படி எதவுமே நமக்கு இல்லை.

கிஞ்சித் சக்தியுள்ளவரானாலும் நம்மைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய சக்தர்தானே, அதற்காக ஒரு நமஸ்காரம்

பண்ணிவிடலாமே என்றால், இங்கேதான் அவர் மற்ற எல்லாருக்கும் (எல்லா தேவர்களுக்கும்) வித்யாஸமாக, 'பெக்யூலிய'ராக இருக்கிறார்.

அது என்ன?

இவரொருவர் மாத்திரம் ஈச்வர கோடியாக இல்லாமலே, அப்படியிருக்கும் சிவ - விஷ்ணுகளுக்கு ஸமதை மாதிரியும் த்ரிமூர்த்திகளில் இருக்கிறார்!சிவம் என்கிற பேரில் ஸர்வ சக்தராக இருப்பவர் கிஞ்சித் சக்தரான ஸம்ஹார ருத்ர மூர்த்தியாகவும், அதே போல, ஸர்வ சக்தி வாய்ந்த விஷ்ணு அந்தப் பேரிலேயே கிஞ்சித் சக்தரான பரிபாலன மூர்த்தியாகவும் இருக்கிறபோது, ஸர்வ ஸக்தராக நாம் தெரிந்துகொள்ளாத ப்ரஹ்மாவும் ஸ்ருஷ்டி கர்த்தாவாக அவர்களோடு மூன்றாமவராக அவர்களோடு ஸம ஸ்தானம் பெற்றவராகக் காணப்படுகிறார்.

ப்ரம்மாவை ஸ்ருஷ்டிப்பதற்கு அதிகமாக எந்த சக்தியும் பெற்றவராகவோ, நமக்காகப் பரமாத்விடம் ரெகமென்ட் செய்யக் கூடியவராகவோ பார்க்கிற பார்வை நமக்கில்லை. பரமாத்மாவின் கட்டளைப்படி, நம் கர்மப்படி ஜன்மா தருபவர் என்பதோடு அவரை முடித்தவிடுகிறோம். அதே ஸமயத்தில் விஷ்ணு, சிவன் ஆகியவர்கள் விஷயத்தில் எப்படியிருக்கிறது?விஷ்ணு என்று நினைத்த மாத்திரத்தில் ஸாக்ஷாத் பரமாத்மா, ஸர்வசக்தி வாய்ந்தவரென்றுதான் தோன்றுகிறதேயொழிய, பரமாத்மாவின் அதிகாரிகளில் ஒருவராக நம்முடைய கர்மாப்படி ஜீவயாத்திரையில் கணக்குத் தீர்க்கும் பரிபாலகர் என்று சின்னதாகவா நினைக்கிறோம்?அப்படியே, சிவன் என்றால் பரம்பொருள், எல்லாம் வல்லவர். எல்லாமும் தரவல்லவரென்றுதான் தோன்றுகிறதேயொழிய சாவைத் தருவபரென்றா தோன்றுகிறது?இப்படித் தோன்றினால் அவருடைய கோவிலுக்குப் போகவே மாட்டோம்!

த்ரிமூர்த்திகளில் பரிபாலனமும், ஸம்ஹாரமும் செய்பவர்கள் என்பதைக் கருத்தில் கொள்ளாமல் ஸகலமும் செய்யவல்லவர்கள் என்பதையே நினைப்பூட்டும் சிவன், விஷ்ணு என்பவர்களோடு, த்ரிமூர்த்திகளில் ஸ்ருஷ்டிப்பவராக மட்டுமே நம்மால் நினைக்க முடியும் ப்ரஹ்மாவைக் சேர்த்தால் நம்முடைய average மனநிலையில்

குழறுபடியாகிறது. இவர் எங்கே அவர்களுக்கு நடுவிலே போய் ஸமதையாய் நின்றார் என்று தோன்றுகிறது. இப்போது தோன்றுகிறதோ இல்லையோ, ஸ்தூலமாக அவருக்கும் கோவிலில் முக்யமான இடம் கொடுத்திருந்தால் அவரைப் பார்க்கிறபோது ஆண்டவனாகவோ, அடியாராகவோ, ஆசார்யராகவோ எப்படியும் வைத்துப் பார்க்க முடியாத அவரைப் பற்றி இப்படி வேறு, 'ஈச்வர கோடிகளோடு இவர் எப்படி ஸமதை?'என்ற கேள்வியும் வரும்-வரலாம்-என்றுதான் அவருக்குக் கோவில்லாமல் வைத்துவிட்டார்கள் போலிருக்கிறது. இப்படியும் ஒரு காரணம் இருக்கலாமோ என்று தோன்றியதைச் சொன்னேன்.

நம்மால் முழு முதல் தெய்வமாக மதிக்கப்படும் சிவ - விஷ்ணுக்களுக்கு ஸமதை மாதிரி இவர் எப்படி இருக்கலாம் என்று கேள்வி வந்துவிட்டதால், அப்புறம் நம்மைவிட அவர் எப்படியும் பெரிய சக்திமான்தானே என்ற அளவில் அவரிடம் மரியாதை பாராட்டுவதில்கூட ஒரு 'ரிஸர்வேஷன்'வந்துவிடும். இதற்கு இடமே கொடுக்கவேண்டாமென்று தான் அவருக்குக் கோவிலில் இடமில்லை என்று வைத்திருப்பார்கள் போலிருக்கிறது என்று தோன்றியதைச் சொன்னேன்.

இதர தேவதைகள் அநேகரைவிட ப்ரஹ்மா குறைந்து போய்விடவில்லைதான். ஆனால் நாம் அவரிடம் நிறைந்த பக்தி செலுத்த முடியாதவர்களாக இருக்கிறோமே!கோவில் என்று ஒன்று அவருக்குக் கட்டி வைத்துவிட்டால் ஜனங்களுக்குப் போகத் தோன்றும். அதற்காகத்தானே கோவில் கட்டுவதே?ஆனால் போய் அவரை தர்சனம் செய்தால் அவரிடம் பொங்கிக்கொண்டு ப்ரேமை, பக்தி வருவதாக இருக்காது. (யாருக்காவது ப்ரஹ்மாவிடம் பக்தி என்று கேள்விப்படுகிறோமோ) விசேஷமாக பக்தி வராவிட்டால் போகிறது;சித்ரகுப்தன் மாதிரியானவர்களிடம் மட்டும் பெரிசாக பக்தி வந்துவிடுகிறதா என்ன-என்றால் அங்கேயெல்லாம் கேள்வியும் வருவதில்லையோல்லியோ?அதனால் நம்மைவிட நிச்சயம் பெரியவரென்று ஒரு நமஸ்காரம் செய்துவிட முடிகிறது. இவரிடம் மட்டும் கேள்வி, சிவ-விஷ்ணுக்களோடு இவருக்கு எப்படி ஸமஸ்தானம் என்று. அவர் அப்படி ஸம ஸ்தானம் கொண்டாடாமலே இருக்கலாம். அவரைக் குற்றம்

சொல்லவேண்டாம். ஆனால் 'ப்ரம்மா-விஷ்ணு-சிவன் என்று த்ரிமூர்த்திகள்'என்று கேட்டுக் கேட்டு நமக்கு அப்படிப்பட்ட அபிப்ராயம் ஆழமாக ஏற்பட்டிருக்கிறதே!அதனால் கேள்வி புறப்படத்தான் செய்யும். கேள்வி இருக்கிற இடத்தில் பக்தி எப்படி இருக்கும்?விசேஷ பக்தி என்றில்லை, ஸாதாரணமான ஒரு மரியாதை உணர்ச்சிகூட எப்படி இருக்கும்?அப்போது பண்ணும் நமஸ்காரம் எப்படி ரீமீஸீஞூஸீவீஸீமீ-ஆக இருக்கும்?பண்ணுகிற அநேக தகிடுதத்தங்களுக்குப் பரிஹாரம் தேடிக் கொள்வதற்குத்தான் கோவில். கோவிலுக்குப் போயே மனப்பூர்வமாயில்லாமல் ஒப்புக்கு நமஸ்காரம் செய்வதென்றால் அது ரொம்பவும் தோஷம் தானே?இப்படி வேண்டாம் என்றுதான் ப்ரஹ்மாவுக்குக் கோவிலில்லாமல் விட்டிருக்கலாம். அவருடைய குறைபாடில்லை, காரணம். நம் குறைபாடுதான் (காரணம்). அவருடைய சக்தி இப்படி என்று நம்மால் கணித்துக் கொள்ளமுடியாமல், நாம் பக்தி வைக்கக்கூடிய மூன்று பிரிவில் எதிலும் அவரை வைக்கமுடியாமல், 'கிஞ்சித் சக்தர் என்ற பிரிவில் வைக்கலாமே!'என்றால், 'பின்னே பூர்ண சக்தர்களோடு ஸமம் மாதிரி இருக்கிறாரே!'என்று கேள்வி கேட்டுக்கொண்டு நாம் இருப்பதால், பொய் நமஸ்காரம் பண்ணும் தோஷம் நமக்குச் சேர்ந்துவிட வேண்டாமென்ற கருணையிலேயே அவருக்குக் கோவில் இல்லாமல் வைத்திருக்கிறார்கள். இப்படியும் ஒரு காரணம் தோன்றுகிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ஸரஸ்வதிக்கு ஆலயம் இல்லாததேன்

ஒரு விஷயத்தை ஆலோசிப்பதில் இன்னொன்று

அகப்படுகிறது என்று சொன்னதற்கு இன்னொரு த்ருஷ்டாந்தம். சிவன்-அம்பாள், மஹாவிஷ்ணு-மஹாலக்ஷ்மி என்று ஸதிபதிகளாக அவர்களின் உயர்வைச் சொல்லிக்கொண்டு போகும்போது, சட்டென்று ப்ரஹ்ம பத்னியான ஸரஸ்வதி விஷயத்தை விட்டு விட்டோமே என்று நினைவு வந்தது. ப்ரஹ்மா விஷயத்துக்குக் குறுக்கே அதைக் கொண்டு வராமல், எடுத்துக்கொண்ட விஷயத்தை நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்திவிட்டு அப்புறம் அதை எடுத்துக்கொள்ள நினைத்தேன்.

ஸரஸ்வதியைப் பற்றி எப்படி நினைக்கிறோம்?பூர்ண ப்ரம்ம சக்தி என்று நினைக்கிறோமா இல்லையோ வித்யாதி தேவதை, கலைமடந்தை, அறிவுத் தெய்வமென்று அவளுக்கு ரொம்பவும் உன்னதமான ஸ்தானம் கொடுத்திருக்கிறோம். வெள்ளை வெளேரென்று வீணா புஸ்தகங்களோடு அவளை நினைத்தாலே சாந்தியாயிருக்கிறது. ஸரஸ்வதி பூஜை பண்ணுகிறோம். அவளைப் பற்றி ஸ்தோத்ரங்கள்-மஹான்கள் பண்ணியிருப்பது-கம்பர், ஒட்டக்கூத்தர், குமர குருபரர், பாரதியார் போன்றவர்கள் தமிழில் அழகாகப் பண்ணியிருக்கிறார்கள், அவற்றை-ஓதுகிறோம். (முத்துஸ்வாமி) தீக்ஷிதர் முதலானவர்கள் அவள் மீது செய்திருக்கும் கீர்த்தனங்கள் பாடுகிறோம். குழந்தையாக ஸ்கூல்போக ஆரம்பிக்கும்போதே அவள்மேல் ச்லோகங்கள் சொல்லி ப்ரியத்துடன் பக்தி பண்ண ஆரம்பித்துவிடுகிறோம்.

இத்தனை இருந்தாலும், இவ்வளவு ஆயிரம் கோவில் இருந்தும் ஸரஸ்வதிக்கு ஒன்றையும் காணோம்!தமிழ்நாடு பூராவிலும் தஞ்சாவூர் ஜில்லாவில் கூத்தனூர் என்ற ஒரு இடத்தில்தான் ஸரஸ்வதி ஆலயம் இருக்கிறது. அது ஒட்டக்கூத்தர் கட்டிய கோவில். (ஒட்டக்) கூத்தனுடைய ஊர்தான் கூத்தனூர். காமகோட்டத்தில் (காஞ்சி காமாக்ஷி ஆலயத்தில்) ஸரஸ்வதிக்கு ஸந்நிதி உண்டு. ஆனால் அதுகூட ப்ரஹ்ம பத்னியான ஸரஸ்வதி இல்லை என்றும், ராஜ ராஜேச்வரிக்கு மந்த்ரிணியாக இருக்கும் ராஜச்யாமளையான மஹா ஸரஸ்வதி என்றும் ஒரு வித்யாஸம் சொல்வதுண்டு. ஸரஸ்வதிக்கு பிம்பம், ஸந்நிதியுள்ள மற்ற கோவில்களிலும் அவை முக்யமான இடம் பெறாமல் ஏதோ ஒரு மூலையில்தான் இருக்கின்றன. மொத்தத்தில், ப்ரஹ்மா மாதிரியே ஸரஸ்வதிக்கும் கோவில்

முக்யத்வம் இல்லை. ஆனால் ப்ரஹ்மாவிடம் ஜனங்களுக்கு விசேஷ பக்தி, மரியாதைகள் இல்லாததுபோல, ஸரஸ்வதிக்கு இல்லாமலில்லை. அவளை எல்லாரும் நிரம்பப் போற்றி பக்தி செய்கிறோம். படிக்க ஆரம்பிக்கும்போதே கல்வித் தெய்வம் என்று அவளை ஸ்துதிக்கக் கற்றுக்கொடுத்து விடுவதால், அது பசுமரத்தாணியாக மனஸில் பதிந்து என்றைக்கும் அவளிடம் பக்தி நீங்காமலே இருக்கிறது. ந்யூஸ்பேப்பர் பாஷையில் சொன்னால், அவள் 'பாபுலர்'தெய்வம்;ப்ரஹ்மா 'அன்பாபுலர்'தெய்வம்!அன்பாபுலர் தெய்வத்துக்குக் கோவிலில்லை என்றால் அது ந்யாயம். நல்ல பாபுலாரிடி இருக்கிற தெய்வத்துக்கும் ஏன் அப்படியே இருக்கவேண்டும்?

இங்கேதான் நம்முடைய தேசாசாரம் வருகிறது. பதிவ்ரத்யம் என்பது நம் தேசாசாரத்தில் ஊறிப்போன விஷயம். பதிவ்ரதைகள் புருஷனுக்கு இல்லாத எதையும் தாங்கள் அநுபவிக்க மாட்டார்கள். ஸரஸ்வதி ப்ரஹ்மாவின் நாக்கிலேயே உட்கார்ந்து கொண்டிருக்கும் பதிவ்ரதை. அதாவது ப்ரஹ்மாவின் நாக்குதான் அவள் குடியிருக்கும் கோவில்!அவள் எப்படிப் பதிக்குக் கோவிலில்லாதபோது தான்மட்டும் கோவிலில் குடிகொள்வாள்?அதனால்தான் அவளுக்கும் அவர் மாதிரியே கோவில் இல்லை.

அகத்திலே நாம் கூப்பிட்டால் அவள் வருவாள். தாயாரல்லவா?அதனால் நம் குடும்பத்து மநுஷியாக வருவாள். நமக்கு அறிவு புகட்ட வேண்டிய ட்யூட்டியும் அவளுக்கு இருப்பதால் தனிப்பட்ட முறையில் அகத்துக்கு வருவாள்.

ஆனால் ஊர் உலகத்துக்குப் பொதுவாக அவளைப் பெருமைப்படுத்திக் கோவில் கட்டுவது என்றால், அப்போது பதியை விட்டு விட்டுத் தான் மட்டும் மஹிமை கொண்டாடிக் கொள்ள அவள் ஸம்மதிக்க மாட்டாள்!அவளுடைய அந்த உத்தம ஸ்த்ரீ குணத்தை மதித்துத்தான் அவளுக்கு ஆலயமில்லாமல் வைத்திருக்கிறது. சக்திகளை வழிபடுவதற்கென்றே நவராத்ரி என்று வைத்துப் பூஜை பண்ணும்போது துர்கா-லக்ஷ்மிகளுடன் அவளும் வந்து ஸரஸ்வதி பூஜை பெறுவாள். அதோடு ஸரி. பதியை நீக்கி பொது ஸ்தலத்தில் கோவில் என்று வைத்து ஊர் கூடி நித்ய

பூஜை, உத்ஸவாதிகள் பண்ணுவதற்கு அவள் ஒப்புக்கொள்ள மாட்டாள்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ஸாவித்ரி, காயத்ரி, நாரதர் விஷயம்

ப்ரஹ்மாவுக்கு மூன்று பத்னிகள். ஸரஸ்வதி ஒருத்தி. காயத்ரி, ஸாவித்ரி என்று இன்னும் இரண்டு பேர். காயத்ரி மந்த்ரம் என்ற தலைசிறந்த மந்திரத்தின் வெளி ரூபமாக இருக்கப்பட்ட சந்தஸ் (மீட்டர்)தான் காயத்ரி. அதன் உள்ளுயிராக இருக்கிற ஜ்யோதி சக்திக்கே ஸாவித்ரி என்று பெயர். ஸகல வேதங்களுக்கும் ஸாரமாகவுள்ள மந்த்ரத்துடன் ஸம்பந்தப்பட்ட போதிலும் அந்த இரண்டு பேருக்கும் கோவில் இல்லை. காரணம் மேலே சொன்னதுதான். பதிக்கு இல்லாதது தங்களுக்கும் வேண்டியதில்லை என்று அவர்கள் வைத்துவிட்டதுதான் காரணம்.

இப்படிப் பார்த்துக்கொண்டு போகும்போது நாரதருக்குக் கோவிலில்லாததற்கும் காரணம் தெரிகிறது. விஷ்ணுவின் அடியார்கள், பாகவதோத்தமர்கள் என்று எடுத்தால் நாரதர் 'டாப்'பில் நிற்கும் ஒருவர். பக்தி ஸூத்ரமே அவர் பண்ணியதுதான். கலிக்கு ஸங்கீர்த்தனம் தான் (ப்ரத்யேக மோக்ஷ மார்க்கம்) என்னும்போது, ஸதா ஸர்வ காலமும் வீணாகானத்தோடு பகவந் நாம கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கும் அவருக்குத்தான் ஊருக்கு ஊர் கோவில் இருக்கணும். ஆனாலும் கோவிலே இல்லை என்றால் என்ன காரணம்?தகப்பனாரான ப்ரம்மாவுக்கும், மூன்று தாயார்களுக்கும் ஆலயம் இல்லாதபோது, பிள்ளை மட்டும் ஆலயத்தில் வஸிப்பாரா?மாதா பிதாக்களுக்கில்லாதது தமக்கும் வேண்டாம் என்ற ஸத்புத்ர தர்மத்தை அவர் பின்பற்றுகிறார்!

பொதுவாக இன்னொரு காரணம் தோன்றலாம்:தக்ஷ ப்ரஜாபதிக்கு அவரிடம் கோபம் வந்து, 'நீ நின்ன இடத்திலே

நிக்காம சுத்திண்டேயிரு'என்று சபித்தான், அதனால்தான் அவர் 'த்ரிலோக ஸஞ்சாரி'என்னும்படியாக ஓடிக் கொண்டேயிருக்கிறார் என்று கதை உண்டு. சுற்றிக் கொண்டே இருப்பவரை-இருக்க வேண்டியவரை-ஆலயங்களில் ப்ரதிஷ்டை பண்ணி எப்படி உட்கார்த்தி வைப்பது?

குருவில் ஆரம்பித்து எங்கெங்கேயோ த்ரிலோக ஸஞ்சாரம் பண்ணிவிட்டு நாரதரில் வந்து நிற்பதும் பொருத்த ந்தான்!அவர் தான் ஸங்கீர்த்தன குரு. த்யாகையர்வாளின் குரு. குருவாகவும் இருந்து கொண்டு, அதே சமயம், "கலி ஸந்தரணம்"-கலியைத் தாண்டுவது-என்று இந்த யுகத்துக்கு ஸ்பெஷலாக உள்ள மந்த்ரத்தை முதல் முதலாகப் பெற்றுக்கொண்ட சிஷ்யராகவும் அவர் இருக்கிறார். எல்லாரும், எக்காலமும், எங்கே வேண்டுமானாலும் சொல்லக்கூடிய அந்த மந்த்ரம்,

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே

ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே

என்பதுதான். தகப்பனாரான ப்ரம்மாவிடமிருந்தே நாரதர் இந்த மந்த்ரத்தில் உபதேசம் பெற்றிருக்கிறார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## குரு பரம்பரையில் ப்ரம்மா

இப்படிச் சொல்லும்போது, ஸ்ருஷ்டிகர்த்தாவாக இல்லாமல், ஆனால் குரு பரம்பரையில் ஒரு மூல புருஷராக ப்ரஹ்மா இருப்பது நினைவுக்கு வருகிறது. நாரதருக்கு நாம மந்த்ரம் உபதேசித்த பக்தி குருவாக இருக்கிற அவர் வேதாந்த (அதாவது ஞான மார்க்க) குருவாகவும் இருக்கிறார். குரு என்பதுதான் நாம் எடுத்துக்கொண்டுள்ள விஷயமாதலால் ப்ரஹ்மாவை குருவாகக் கொண்டு வருவதிலும் பொருத்தம்

இருக்கிறது.

சங்கர பகவத் பாதாளைப் பின்பற்றுபவர்களான ஸ்மார்த்தர்களின் ப்ரஹ்ம வித்யா குரு பரம்பரையில் ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் மூன்று பேருமே இருக்கிறார்கள். ஆதி முதல் குரு பேசாமலே, வாயுபதேசம் செய்யாமலே, ஞானத்தைக் கொடுத்துவிடும் தக்ஷிணாமூர்த்தி. சிவ பெருமானின் பரம ஞான வடிவமான அவர்தான் ஆதி குரு. அப்புறம் ப்ரஹ்மா - விஷ்ணு - சிவன் மூவரும் ஒன்றுசேர்ந்த ரூபமாக மூன்று தலையோடு விளங்கும் தத்தாத்ரேயர். (அந்த ரூபத்திலே அவர் ஞான குருவாயிருந்தாலும், தனியாக அந்த மூன்று பேரைச் சொன்னால் ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரங்களைத்தான் குறிக்கிறது. இவ்விஷயம் இருக்கட்டும்.) தத்தாத்ரேயருக்கு அப்புறம்தான் நன்றாக வாய்விட்டே, க்ரமமாகவே, குரு சிஷ்யாளென்று உபதேசம் செய்வது ஏற்பட்டது. முதலில் அப்பா - பிள்ளைகளே இப்படி குரு - சிஷ்யாளாக ஐந்தாறு தலைமுறை போய், அப்புறம் கல்யாணமே பண்ணிக்கொள்ளாத சுகாசார்யாளிலிருந்து ஸந்நியாஸ குரு - ஸந்நியாஸ சிஷ்யர் என்று அந்த ப்ரஹ்ம வித்யா குரு பரம்பரை போகிறது. இதிலே முதலாவது குரு மஹாவிஷ்ணு அப்புறம் அவர் பிள்ளையான ப்ரஹ்மா :

நாராயணம் பத்மபுவம்

நாராயணன் முதலில், அடுத்து பத்மபுவரான- தாமரைப் பூவில் தோன்றியவரான-ப்ரஹ்மா. ப்ரஹ்மா சிஷ்யராகப் பிதாவிடமிருந்து ப்ரஹ்ம வித்யையை உபதேசம் வாங்கிக்கொண்டு, அப்புறம் தாமும் ப்ரஹ்ம வித்யா குருக்களில் ஒருவராகித் தம்முடைய புத்ரரான வஸிஷ்டருக்கு அதை உபதேசம் பண்ணினார. நாரதர் ப்ரஹ்மாவுக்குப் பிள்ளை என்கிறாற்போல வஸிஷ்டரும் அவருடைய பிள்ளைதான். ப்ரஜாபதிகள் என்று பத்துப் பேர் ப்ரஹ்மாவின் புத்ரர்கள். வேதத்தில் ப்ரஜாபதி என்றால் ப்ரஹ்மா என்றாலும் வழக்கில் அவருடைய பத்துப் புத்ரர்களுக்கே அது பெயராக ஆயிற்று. அந்தப் பத்து ரிஷிகளில் நாரதர் மாதிரியே வஸிஷ்டரும் இன்னொருவர். அவருக்குப் பரமோபதேசமான அத்வைதத்தை ப்ரஹ்மா உபதேசம் பண்ணியிருக்கிறார். ஸ்ரீ வைஷ்ணவர்களின் குரு பரம்பரையில் முதலில் மஹாவிஷ்ணு, அப்புறம் மஹாலக்ஷ்மி. பெரிய பெருமாள்,

பெரிய பிராட்டி என்று அவர்களைச் சொல்வார்கள். அப்புறம் ப்ரஹ்மா இல்லை. சிவ ஸூதனான பிள்ளையார் சிவனுடைய பூதப்படைகளுக்கெல்லாம் தலைவரான கண-பதியாக இருக்கிறாரல்லவா?அப்படி விஷ்ணு கணங்களுக்கெல்லாம் பதியாக ஒருத்தர் இருக்கிறார். அவர் ப்ரஹ்மா இல்லை. அவர் பெயர் விஷ்வக்ஸேனர். 'சேனை முதலியார்'என்று சொல்வார்கள். அவர்தான் மஹாலக்ஷ்மிக்கு அடுத்ததாக வரும் ஸ்ரீ வைஷ்ணவ குரு. அவருக்கப்புறம் பூலோகத்திலேயே இருந்த நம்மாழ்வாரிலிருந்து அவர்களுடைய மநுஷ்ய ரூப குருக்கள்.

ஸ்மார்த்த ஸம்பிரதாயத்தில் மஹாவிஷ்ணுவுக்கு அப்புறம் ப்ரம்மா.

ஆகையால், ப்ரஹ்மாவுக்குக் கோவில், பூஜை என்று எதுவுமில்லாவிட்டாலும், வேதாந்தம் அப்யாஸம் செய்கிற ஸ்மார்த்தர்கள் குரு த்யானத்தில் ஆரம்பிக்கும்போது "நாராயணம் பத்மபுவம் வஸிஷ்டம்"என்று ச்லோகம் சொல்லி நமஸ்காரம் பண்ணும்போது (பத்மபுவரான) ப்ரஹ்மா நமஸ்காரம் வாங்கிக் கொண்டு விடுகிறார். இது கொஞ்சம் ஆறுதலாயிருக்கிறது.

இப்படியே வ்யாஸபூஜை என்பதாக ஆண்டுதோறும் ஸந்நியாஸிகள் குரு பரம்பரா பூஜை செய்யும்போது அதில் ஸரஸ்வதி, நாரதர் ஆகிய இரண்டு பேருக்கும் கூடப் பூஜை சொல்லியிருக்கிறது.

வேதாந்தம் படிப்பவர்கள், ஸந்நியாஸிகள் ஆகியவர்களுக்கு ப்ரஹ்மாவைப் பற்றி ஸென்டிமென்டலான ரிஸர்வேஷன்கள் இருக்காதாதலால் இங்கே அவர் ஸ்ருஷ்டி கர்த்தா என்பதற்காக இல்லாமல் குரு என்ற ஹோதாவில் நமஸ்காரம் பெற்றுவிடுகிறார். ஆனாலும் ஜனஸமூஹத்தில் இது விதிவிலக்கு மாதிரித்தானேயொழிய விதியாக இருப்பதல்ல.

## நமஸ்கரிப்பதற்குக் காரணமில்லை !

இதுவரையில் சொன்னதலிருந்து என்ன ஏற்பட்டது என்றால், 'குருநாதன் ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன். ஆனதினாலே அவருக்கு நமஸ்காரம் பண்ணும், தஸ்மை ஸ்ரீ குரவே நம :'என்றால் அது தப்பு என்று ஆயிற்று!(சிரிக்கிறார்.) குருவுக்கு நமஸ்காரம் பண்ணு என்று சொல்லி அதற்கு வேறே என்ன காரணம் சொன்னாலும் ஸரி;ஆனால் ப்ரஹ்ம-விஷ்ணு-மஹேச்வரர்களாக இருக்கிறாரென்றால், அந்த மூன்று பேருக்குமே இப்படி ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹார மூர்த்திகளா இருக்கும் அவஸ்தையில் (நிலையில்) நமஸ்காரம் பண்ணுவத்கில்லையாதலால், இவருக்கும் கிடையாது, (சிரித்து) கிடையவே கிடையாது!

குரு :ஸாக்ஷாத் பர ப்ரஹ்ம;தஸ்மை ஸ்ரீ குரவே நம :

'குருநாதன் பரப்பிரம்மம், அதனால் அவருக்கு நமஸ்கார ம்'என்றால் அது ஸரியா, அதுவாவது ஸரியா?

ஊஹும், அதுவும் ஸரியில்லை.

"ஏன் ஸரியில்லை?

பரப்ரஹ்மம் மனஸ், வாக்கு எல்லாம் கடந்தது. அதை நீ புரிந்து கொண்டு நமஸ்காரம் பண்ணவும் முடியாது. பண்ணினாலும் நிர்குணமாக, நிஷ்க்ரியமாக (குணங்கள், செயல்கள் ஏதுமற்றதாக) இருக்கிற அது உன் நமஸ்காரத்தை வாங்கிக்கொள்ளாது. ஒன்றுமே பண்ணாமல், பண்ணத்தெரியாமல் கிடக்கிற ஸ்திதியைத்தான் 'பரப்ரஹ்மம் ஜகந்நாதம்'என்கிறோம். அதனிடம் போய் நமஸ்காரம் பண்ணி என்ன ப்ரயோஜனம்?பரப்ரஹ்மத்தை நீ புரிந்துகொள்ளும்போது நீயே அதுவாகிவிடுவாயா கையால் அப்போதும் நமஸ்காரத்துக்கு இடமில்லை. நீ உனக்கேயா நமஸ்காரம் பண்ணிக்கொள்வது?

ஆரம்ப ச்லோகமாக சிஷ்யனுக்குச் சொல்லிக் கொடுக்கிற குரு வந்தனமே இப்படித் தப்பும் தாறுமாக இருக்கிறது!குட்டிக்கொள்ளும்போதே பிடரியில் குட்டிக்கொள்வதுபோல ஒரே கோளாறாக இருக்கிறது! (நெடுநேரம் சிரிக்கிறார்.)

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

விக்யாஸமான முத்தொழில்கள்

நிஜமான தாத்பர்யம் என்ன?

குருவானவர் ப்ரஹ்ம - விஷ்ணு - மஹேச்வரர்கள் செய்யும் ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரத்தையே தாமும் அச்சடித்தமாதிரி செய்யவில்லை. இந்த ஜன்மாவைக் கொடுப்பது, லோக வாழ்க்கையில் காப்பாற்றுவது, அப்புறம் அதை முடித்து வைப்பது என்ற கார்யங்களை அவர் பண்ணவில்லை. அவற்றைச் செய்யத்தான் அந்த மும்மூர்த்திகள் இருக்கிறார்களே!

அதனால் அவரை மும்மூர்த்திகளாகச் சொல்லும்போது அவர்கள் பண்ணும் முத்தொழிலைப் போலவே இவரும் என்னவோ செய்கிறாரென்றுதான் தாத்பர்யமே தவிர, அவற்றையே என்றல்ல.

இவர் மூன்று கார்யங்கள் செய்கிறார். அவை த்ரிமூர்த்திகள் செய்யும் முத்தொழில் மாதிரியே இருக்கின்றன. அதனால் இவரை அவர்களாகவே சொல்லியிருக்கிறது. உபமாலங்காரமாக, அதாவது, உவமையணியாக, சொல்லியிருக்கிறது.

'கண்ணே, மணியே!'என்று குழந்தையைச் சொன்னால் அது நிஜமாகவே கண், மணி என்றா அர்த்தம்?கண் என்பது எப்படி நமக்கு இன்றியமையாததாக இருக்கிறதோ, மிகவும் ப்ரியமான அங்கமாக இருக்கிறதோ, ஜாக்ரதையாக இமையால் மூடிக் காப்பாற்ற வேண்டியதாக இருக்கிறதோ அப்படியே, நமக்குக் குழந்தை இன்றியமாயாததாக, ப்ரியமாக, கவனமாக ஸவரக்ஷணை பண்ண வேண்டியதாயிருப்பதாலேயே கண் என்றும், அந்தக் கண்ணிலும் கருவான பாகமாக இருக்கப்பட்ட மணி என்றும்

('கண்ணே, கருமணியே!'என்றுகூடச் சொல்வதுண்டு) சீராட்டுவது. 'மணி'என்றால் நமக்கு மிகவும் அலங்காரமாக உள்ள நவரத்ன மணி என்றும் வைத்துக்கொள்ளலாம். 'மூத்தே, மாணிக்கமே!'என்றுகூட நவமணிகளின் பெயரிலும் சீராட்டிச் சொல்லுகிறோமே!

"மழபாடியுள் மாணிக்கமே!"

என்று பகவானையே கொஞ்சுகிறார்கள்.

இதெல்லாம் உவமித்துச் சொல்வது. ஒரு வஸ்துவை எடுத்துக் கொள்கிறோம். அது உபமேயம். அதற்கு இன்னொன்றை ஒப்புக் காட்டுகிறோம். இது உபமானம். ஏதோ சில அம்சங்களில் அதுவும் இதுவும் ஒன்றாயிருக்கிறது. அதனால் உபமேயத்துக்கு உபமானம் காட்டுகிறோம். சில அம்சங்களில்தான் ஒப்பே தவிர முழுக்க அல்ல. அப்போது (முழுக்க ஒப்பிருந்தால்) உபமான, உபமேயம் என்று பிரித்துச் சொல்வதற்கேயில்லாமல் ஒன்றாக அல்லவா ஆகிவிடும்?ஒன்றைப் போல இன்றொன்று இருப்பதுதான் உவமை. அசல் அதுவாகவே இருந்துவிட்டால் உபமாலங்காரம் பிறக்க முடியாது. சந்திரனைச் சந்திரனுக்கே உவமை காட்ட முடியுமா?உபமான - உபமேயங்கள் முற்றிலும் ஒன்றே இல்லை என்றாலும் அவற்றுக்குள் சில அம்சங்களில் ஒற்றுமை இருக்கும். இப்படிச் சொல்லும்போதே, சிலதில் இருக்காது என்றும் ஆகிவிடுகிறது. 'சந்த்ரவதன ம்'-சந்த்ரனைப் போன்ற முகம்-என்னும்போது முகத்தில் 'சந்திரனைப் போன்ற காந்தி, பரிசுத்தம், குளுகுளுப்பு, மனஸைக் கவர்கிற வசீகரம் ஆகியவை இருப்பதாக அர்த்தம். இந்த அம்சங்களில்தான் ஒற்றுமை. மற்றதில் இல்லை. சந்திரனுக்கு மநுஷ முகத்திள்ளதுபோல கண், காது, மூக்கு இல்லை. முகம் ஆகாசத்தில் மிதப்பதில்லை;அது பதினைந்து நாளுக்கு ஒரு முறை தேய்வது, வளர்வது என்பதும் கிடையாது.

இம்மாதிரிதான் குருவை த்ரிமூர்த்திகளாகச் சொல்லும் போது ஏதோ சிலவற்றில் ஒற்றுமை, மற்றதில் வேற்றுமை என்று இருக்க வேண்டும்.

இன்னொரு ச்லோகம், நம் மத ஸ்ம்ப்ரதாயங்கள் எல்லாவற்றுக்கும் மூல புருஷராகவுள்ள வ்யாஸாசார்யாளை

பற்றியது, ஞாபகம் வருகிறது. அதிலே வ்யாஸருக்கும் த்ரிமூர்த்திகளுக்கும் ஒற்றுமை இல்லாத ஒவ்வொரு அம்சத்தைச் சொல்லியே வேடிக்கை செய்திருக்கிறது. "இவர் ப்ரஹ்மா என்றால் நாலு மூஞ்சி இல்லையே! அசதுர்வதநோ ப்ரஹ்மா !விஷ்ணு என்றால் இரண்டு கைதானே இருக்கு?நாலு இல்லையே! த்விபாஹுரபரோ ஹரி :! சிவன் என்றால் நெற்றிக்கண் எங்கே போச்சு? அபால லோசந : சம்பு :என்று அந்த ச்லோகம்.

அசதுர்வதநோ ப்ரஹ்மா

த்விபாஹுரபரோ ஹரி :

அபால லோசந : சம்பு :

பகவாந் பாதராயண :

பாதராயணர் என்பது வேத வ்யாஸரின் இன்னொரு பேர். 'பதரி'என்ற இலந்தை மரத்தடியை இருப்பிடமாக ('அயன'மாக)க் கொண்டு, அதாவது பதரி விருக்ஷத்திற்கு அடியில் உட்கார்ந்துகொண்டு நெடுங்காலம் தபஸ் செய்தவராதலால் 'பாதராயணர்'என்று பெயர்.

ப்ரஹ்ம-விஷ்ணு-மஹேச்வரர்களாக குருவை உபமாலங்காரத்தில் சொல்லியிருக்கிறதென்றால் அவர்களுக்கும் குருவுக்கும் ஒற்றுமையும் இருக்க வேண்டும், வேற்றுமையும் இருக்க வேண்டும்.

முத்தொழில் செய்பவர்களென்பதால் அவர்களை நாம் நமஸ்காரம் பண்ணுவதற்கில்லை என்று பார்த்தோமல்லவா?அந்த அம்சத்தில் வேற்றுமை இருந்துவிட்டால் ஸரியாய்ப் போய்விடும். ச்லோகம் கோளாறில்லை. தாறுமாறாகச் சொல்லவில்லை என்றாகிவிடும்.

அப்படியிருக்கிறதா, பார்க்கலாம்.

மும்மூர்த்திகள் பேரை வரிசையாக (ச்லோகத்தில்) சொல்லியிருப்பதால் இவரும் முத்தொழில் போலவே செய்கிறாரென்று தெரிகிறது. அதையே செய்யவில்லை. அதுபோல (செய்கிறார்).

ஏதோ ஒரு விதத்தில் இவர் ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரம் செய்பவராக இருக்கிறார். எந்த விதத்தில்?

யோசித்துப் பார்த்தால் புரிகிறது:

இவர் நமக்கு ஞான லோகத்தில், அத்யாத்ம லோகத்தில் புதுப் பிறவி கொடுக்கிறார். நமக்கு அறிவுக் கண்ணைத் திறந்து வைத்து, நம்முடைய மனப்பான்மையை மாற்றி அது வேறொன்றாக ரூபம் கொள்ளும்படிச் செய்கிறார். மாற்றுவது, வேறு ரூபம் தருவது என்றால் ஸ்ருஷ்டிப்பது, புது ஜன்மா தருவது என்றுதான் அர்த்தம். குருவானவர் நமக்கு ஞானப் பிறவி தருவதால், நமக்குள் ஞானம் பிறக்கும்படிச் செய்வதால், ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மாவாகிறார்!

அப்புறம் ஸ்திதி - பரிபாலனம். எப்படி பரிபாலிக்கிறார்?ஞான வாழ்க்கையில் நாம் அத்யாத்ம ஸம்பத்துக்களைப் பெறும்படிச் செய்து பரிபாலிக்கிறார். தேஹ போஷணைக்காக மஹாவிஷ்ணு செல்வம், ஆரோக்யம் முதலானவற்றை கொடுத்து ரக்ஷிப்பதுபோல ஆத்மாவின் போஷணைக்காக உபதேசம், புஸ்தகங்கள், ஸாதனாமார்க்கம் முதலானவற்றைக் கொடுத்து ரக்ஷிக்கிறார். தம்முடைய வாழ்க்கையையே நம் பொருட்டாக த்யாகம் செய்துவிட்டு-நிம்மதியாகத் தாம்பாட்டுக்கு ஸமாதி நிலையில் ஸுகித்துக் கொண்டிருக்காமல், நம்மிடம் முட்டிக்கொண்டு-நம்மைக் கரையேற்றத் தம்மாலானதெல்லாம் செய்கிறார். இஹ லோகத்திலுங்கூட நம்முடைய கஷ்டங்களைத் தீர்த்து வைத்துப் பரிபாலிக்கிறார். லௌகிகத்திலும்கூட நாம் எப்படியெப்படி இருந்தால் நல்லதோ, ஆத்மாபிவ்ருத்திக்கு உதவியாக இருக்குமோ அப்படி இருப்பதற்குச் சொல்லிக் கொடுக்கிறார். ஆனாலும் ஆத்யாத்மிகமான ஞானப் பரிபாலிப்பே அவர் முக்யமாகச் செய்வது. இதனால் பரிபாலன கர்த்தாவான விஷ்ணுவாக இருக்கிறார்

ஸம்ஹாரம்?

இவர் பரம ஸாத்விகரல்லவா?எப்படி ஸம்ஹாரம் பண்ணுவார்?ருத்ரன், ருத்தாண்டவம், ரௌத்ராகாரம் என்றாலே பயமாக அல்லவா இருக்கிறது?இவரோ தயை, அருள் நிரம்பியவரல்லவா?ருத்ரனாக இவரை எப்படிச் சொல்வது?அந்தப் பேரைச் சொல்லி பயமுறுத்த

வேண்டாமென்றுதானோ என்னவோ, (ச்லோகத்தில்) 'ருத்ர'னென்று சொல்லாமல் "குருர் தேவோ மஹேச்வர :"என்று சொல்லியிருந்தாலும் அதனால் குறிப்பிடும் கார்யம் ஸம்ஹாரமாகத் தான் இருக்க வேண்டும். ஸ்ருஷ்டி - ஸ்திதிகளுக்கான ப்ரஹ்ம - விஷ்ணுக்களைச் சொன்னதன் தொடர்ச்சியாக மஹேச்வரனைச் சொல்லியிருப்பதால் வேறுவிதத்தில் அர்த்தம் பண்ணிக்கொள்ள முடியாது.

"உபமாலங்காரத்தில் ஒற்றுமை இல்லாத அம்சங்களும் இருக்கும் என்றீர்களே, அந்த ரீதியில் மஹேச்வரனுக்கும் குருவுக்கும் ஸம்ஹார கார்ய்த்தில் ஒற்றுமையில்லாமல், வேறு எதிலேயாவது இருக்குமோ என்னவோ?"என்று கேட்டீர்கள ானால்,....

அப்படி இருக்க முடியாது.

தொடர்ச்சியாக ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன் என்று சொல்லிக்கொண்டு போகும்போது முதலிரண்டு பேர் செய்யும் ஸ்ருஷ்டி- ஸ்திதிகளை குரு இன்னொரு தினுஸில் பண்ணுவதாகக் காட்டுகிறபோது மூன்றாவதாக ஸம்ஹாரம் தான் வரவேண்டும். அதுதான் யுக்தம்.

அப்படியானால் ப்ரஹ்மாவாக இருந்து நமக்கு ஞானம் பிறக்கச் செய்து, அந்த ஞானத்தை விஷ்ணுவாக இருந்து வளர்த்துக் கொடுத்துவிட்டு, அப்புறம் (சிரித்துக்கொண்டே) அந்த ஞானத்தை ருத்ரனாக ஹதம் பண்ணிவிடுவாரா? இல்லை. ஞானம் அடைய முடியாதபடி நம்மை அநேகக் கெட்ட சக்திகள் ஓயாமல் இழுக்கின்றனவே, இதுகளுடன்தான் பொறுமையாகப் போராடி ஹதம் பண்ணுகிறார், ஸம்ஹாரம் பண்ணுகிறார். பயிரை வளர்ப்பதைப்போலவே, அந்தப் பயிர் வளர்வதற்காகவே, களையை அகற்றவேண்டியது மிகவும் அவசியமல்லவா?அப்படித்தான் நமக்கு ஞானத்தை போதிப்பதைப்போல நம்முடைய கனத்த அஞ்ஞானத்தை அகற்றுவதும் முக்யம். ஞானபோதனையைவிட இதுதான் கடினமான கார்யம். சாண் ஏறினால் முழம் சறுக்குகிற வழுக்கு மரத்தில் நம்மை இஞ்ச், இஞ்சாக மேலே ஏற்றிக்கொண்டு போகிற ச்ரம ஸாத்யமான காரியம். கெட்டதுதான் நம்மை அப்படியே கவிந்து மூடிக்கொண்டிருக்கிறது. ஏதோ துளி நல்லது முணுக்கு முணுக்கு என்று தலைநீட்ட ஆரம்பித்தால்

உடனே கெட்டது இன்னம் கனாந்தகாரமாக வந்து அழுத்தி அதை அணைக்கப் பார்க்கிறது. இந்த அஞ்ஞான தமஸை, அறியாமை இருளைத்தான் குருவானவர் ருத்ரமூர்த்தியாக இருந்து ஸம்ஹாரம் செய்கிறார். 'குரு'என்ற வார்த்தையின் Definition (லக்ஷணை) ஒன்றே அப்படித்தான் சொல்கிறது 'கு'என்றால் இருட்டு;'ரு'என்பது அழிப்பதைக் குறிப்பது. இருட்டை அழிப்பவன் 'குரு'.

இப்படி குருவினால் ஞானத்தில் புனர்ஜன்மம், அதில் பரிபாலிப்பு, அதற்கு எதிராக, தடையாக இருப்பவற்றின் அழிவு ஆகிய மூன்று கார்யங்கள் நடக்கின்றன. அதாவது ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரம் நடக்கிறது. ஆகையால் குருமூர்த்தியே த்ரிமூர்த்தியாகிறார்!

வித்யாஸம் என்னவென்றால், ப்ரஹ்மா ஸ்ருஷ்டித்து, விஷ்ணு ரக்ஷிக்கும் அதே சரீரத்தைத்தான் ருத்ரன் ஸம்ஹாரம் செய்வது. ஆனால் இங்கேயோ குரு ஸ்ருஷ்டிப்பதும், ரக்ஷித்துக் கொடுப்பதும், ஞானத்தை. ஆனால் அழிப்பது ஞானத்தையல்ல. அரும்பாடு பட்டு அவரே படைத்துக் காத்ததை எங்கேயாவது அவரே அழிப்பாரா?த்ரிமூர்த்திகளில் ஆஸாமி வேறாகப் போனதால் வேறே ஒருத்தர் படைத்து, வேறே ஒருத்தர் காப்பாற்றியதை ருத்ரமூர்த்தி அழிக்கிறார். இங்கே மூன்றையும் செய்வது ஒரே ஆஸாமியல்லவா?அதனால் படைத்துக் காப்பது ஞானமாகவும், அழிப்பது அஞ்ஞானமாகவும் இருக்கிறது.

அவர் படைத்துக் காக்கிற ஞானம் நம் சரீரம் மாதிரி ஒருகாலத்தில் அழிவுபடுவதல்ல. அது அம்ருதமானது, அமரமானது. அதை யாராலும் அழிக்கமுடியாது.

இப்படியாக, உலக வாழ்வில் ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்று மூன்று தெய்வங்கள் செய்வதையும் சேர்த்து வைத்து ஞான வாழ்வில் குரு ஒருவரே செய்கிறார். நினைத்துப் பார்த்தால் விசித்ரமாயிருக்கிறது!அழிவதும், சாச்வத ஸௌக்யத்தைத் தரவே முடியாததுமான லோக வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கப் பெரிசாக மூன்று தெய்வங்கள் வேண்டியிருக்கிறது!அழிவற்றதும், சாச்வத ஸுகமளிப்பதுமான ஞான வாழ்க்கையையோ மநுஷ்ய ரூபத்தில் தெரிகிற ஒரு குரு பண்ணிவிடுகிறார்! 'அவர்கள் (த்ரிமூர்த்திகள்) கோடாநுகோடி ஜீவன்களுக்குச் செய்ய

வேண்டியிருக்கிறது, இவரோ (குருவோ) ஒரு ஸெலக்ட் - க்ருப்புக்குத்தானே செய்கிறார்?'என்று ஸமாதானம் சொல்லலாம்.

ஆக, குரு எப்படி த்ரிமூர்த்திகளாயிருக்கிறாரென்று பார்த்தோம். த்ரிமூர்த்திகளும் சேர்ந்து ஒருத்தரான ஒரு ஸ்வாமி தத்தாத்ரேயர் என்று பார்த்தோமே, அவர் மாதிரி தான் எல்லா குருக்களுமே இருக்கிறார்கள்!

த்ரிமூர்த்திகள் சரீரத்தை ஸ்ருஷ்டித்து, பரிபாலித்து, ஸம்ஹரிப்பது போல சிஷ்யனுக்குள் ஞானத்தை ஸ்ருஷ்டித்து, பரிபாலித்து, அஞ்ஞானத்தை ஸம்ஹரிப்பதனால் உபமாலங்காரப்படி, ஒற்றுமை யம்சத்தைக்கொண்டு குருவை ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன் என்று சொல்லியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### நமஸ்காரத்திற்கு உரியவராக

ஆனால் அந்த மூன்று பேரை அந்த மூன்று கார்யத்துக்காக நமஸ்காரம் பண்ணமுடியாமலிருக்க, இவருக்கு (குருவுக்கு) நமஸ்காரம்-தஸ்மை ஸ்ரீகுரவே நம :என்று சொல்லியிருக்கிறது. இங்கேதான் உபமாலங்காரம் என்றால் அதில் ஒற்றுமை அம்சத்தோடு வேற்றுமை அம்சமும் இருக்கத்தான் செய்யுமென்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

அந்த மூன்று பேருக்கு ஏன் நமஸ்காரம் பண்ணமுடியவில்லை?

ஒருவரை நமஸ்காரம் பண்ணுவது எப்போது?ஒன்று, அவர்கள் இதுவரை பண்ணியது நமக்கு ஸந்துஷ்டி, த்ருப்தி அளித்தால் அதற்காக நன்றி பாராட்டி, அதன் அடையாளமாக நமஸ்கரிப்போம். அல்லது நாம் வேண்டிக்கொண்டு அதன்மேல் அவர் இனிமேல் நமக்கு

ஸந்தோஷமான, பிடித்தமான ஒன்றைச் செய்வாரென்றால், நமஸ்கரித்துப் பிரார்த்தனை பண்ணிக்கொள்வோம்.

ப்ரஹ்மா நம்மை ஸ்ருஷ்டித்ததிலோ, விஷ்ணு நம்மைப் பரிபாலிக்கிற விதத்திலோ, மஹேச்வரன் நம்மை ஸம்ஹரிக்கப் போவதிலோ நமக்கு ஸந்தோஷமில்லை. நம்முடைய ஸ்ருஷ்டி, இதுவரை நடந்த 'பரிபாலிப்பு'எனப்படுவது ஆகிய சென்றகால, நிகழ்கால விஷங்களுக்கு நம்மால் ப்ரஹ்ம விஷ்ணுக்களிடம் நன்றி பாராட்டி நமஸ்காரம் செய்யமுடியவில்லை. இனிமேலே அவர்கள் நமஸ்காரம் பெறும் விதத்தில் ஏதாவது செய்வார்களா என்றால்-வருங்காலத்தில், இந்த ஜன்மாவில் ப்ரஹ்மா நம்மைக் குறித்து எதுவும் செய்வதற்கில்லை. ஸ்ருஷ்டித்ததோடு அவர் கார்யம் முடிந்துவிட்டது. ஸரி, அடுத்த ஜன்மா நல்லதாகத் தரச்சொல்லி வேண்டிக்கொள்ளலாமா என்றால், அதிலும் அவருக்கு ஸொந்த அதிகராம் எதுவுமில்லை. நம் கர்மாவைப் பொறுத்துப் பரமாத்மாவின் சட்டப்படி எப்படிப்பட்ட ஜன்மா வாய்க்கவேண்டுமோ அதைத்தான் அவர் தரமுடியும். ஆகையால் எதிர்காலத்தை உத்தேசித்தும் நாம் அவரை நமஸ்காரம் பண்ணுவதற்கில்லை. இதுவே தான் விஷ்ணுவுக்கும், நாம் கேட்டுக்கொள்வதற்காக அவர் இனிமேல் நல்ல ஸம்ரக்ஷணை கொடுக்கமுடியாது;கர்மாப்படி தான் பண்ணுவார்.

மஹேச்வரனுடைய தொழிலான ஸம்ஹாரம் இனிமேலே நடக்கவேண்டியதுதான்;இதுவரை அவர் செய்ததாக எதுவுமில்லை. முன் ஜன்மங்களில் ஸம்ஹாரம் பண்ணினாரே என்றால், அந்த ஜன்மங்களைப் பற்றி நமக்கு எதுவும் தெரியாது. அதனால் அப்போது பண்ணின ஸம்ஹாரத்துக்காக இப்போது அவரை நாம் 'தாங்க்'பண்ணி நமஸ்கரிப்பதற்கில்லை. இனிமேலே இந்த ஜன்மாவில் அவர் ஸம்ஹரிக்கப் போகிறார் என்பதிலும் நாம் ஸந்தோஷப்பட்டு நமஸ்காரம் செய்வதற்கில்லை. அல்லது, "ஸம்ஹாரம் பண்ணாதேள், ஸ்வாமீ!"என்று வேண்டுமானால் நமஸ்காரம் செய்து கேட்டுக்கொள்ளலாமா என்றால், அதற்கும் பலனிருக்காது. கர்மாவைப் பார்த்து அவர் ஆயுஸை முடிக்கிறபடி முடித்துத்தான் வைப்பார்.

இப்படியாக இவர்கள் பண்ணியது, பண்ணுவது, பண்ணப்போவது ஆகிய எதிலும் நமக்குப் பிடித்தமானதைச் செய்யவில்லை என்பதால்தான் நமஸ்காரம் செய்யத் தோன்றவில்லை.

ஆனால், குரு பண்ணியது, பண்ணுவது, பண்ணப்போவது எப்படி இருக்கின்றன? அஞ்ஞானிகளாக ஸம்ஸாரத்தில் மாட்டிக்கொண்டு திண்டாடிக் கொண்டிருந்த நமக்கும் கொஞ்சங்கொஞ்சமாவது ஆத்ம சாந்தி என்றால் என்னவென்று தெரிவதற்கு வழி திறந்துவிட்டாரே, அந்த வழியிலே நம் கையைப் பிடித்துக்கொண்டு அடி அடியாக நடத்தி வைக்கிறாரே-இப்படி அவர் செய்த, செய்கிற அநுக்ரஹத்திற்காக அவருக்கு நாம் எத்தனை நன்றி தெரிவித்தால்தான் போதாது?எத்தனை நமஸ்காரந்தான் பண்ணக்கூடாது?

இனிமேல் செய்யப்போகிறது?-அது இதுவரை செய்ததையெல்லாம்விட மஹா பெரிசு. இதுவரை ஏதோ ஒரு சின்ன இடுக்கு வழியாக வரும் ஒன்றிரண்டு ரச்மிதான் ஆத்ம ஸ்வாராஜ்யம் என்ற ஜ்யோதிலோகத்தியிருந்து நாம் அநுபவித்திருப்பது. இனிமேலே-அது எந்தக் காலத்தில் வேண்டுமானாலும் இருக்கட்டும்-முடிவாக என்றோ ஒரு காலத்தில் இவரால்தான் நாம் ஜ்யோதி லோகத்திலேயே ப்ரவேசித்து, இன்னும் அதற்கு மேலே, அந்த ஜ்யோதிஸ் ஸாகவே ஆகிவிடப் போகிறோம். அப்படி நம்மைப் பண்ணுவிக்கிற வரையில் அவர் ஓயமாட்டார். இந்த ஜன்மாவிலேயே நாம் அந்த லக்ஷ்யத்தை அடையாவிட்டாலும் பரவாயில்லை. நாம் எத்தனை ஜன்மா எடுத்தாலும் அவர் கூடவே வந்து நம்மை முடிவாக அதில் சேர்க்காமல் விடமாட்டார்.

நிஜமான குரு என்றால் நிஜமான சிஷ்யனுக்கு இந்த நித்யானந்த ப்ராப்தியை உண்டாக்கும்வரையில் விடவேமாட்டார்-ஜன்ம ஜன்மாந்தரமானாலும் ஸரி. நிஜமான குருவைப் பற்றித்தான் பேச்சு. அப்படியில்லாதவரைப்பற்றி எதற்கு நம் நேரத்தை வீணாக்கிக் கொண்டு, தொண்டைத் தண்ணியை வற்ற அடித்துக் கொண்டு ச்ரமப்படணும்?

ஆனபடியால், பண்ணின, பண்ணுகிற, பண்ணப்போகிற

எல்லாவற்றாலும் நமக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பவராக, நம்முடைய நன்றிக்கு மிகவும் பாத்திரராக இருக்கும் குருவுக்கு நாம் எத்தனை நமஸ்காரமும்-'அனந்த கோடி நமஸ்காரம்'என்று சொல்வதுண்டு, அப்படி-செய்யலாம் தான், செய்யவேண்டியதுதான்.

" குருர்-ப்ரஹ்மா குருர்-விஷ்ணு : குருர்-தேவோ மஹேச்வர :" என்று சொல்லி " தஸ்மை ஸ்ரீ குரவே நம :"என்று முடித்ததில் ஒன்றும் தப்பாக, பொருத்தமில்லாததாக இல்லை.

ப்ரஹ்ம-விஷ்ணு-ருத்ரர்கள் நம்முடைய கர்மாப்படி மட்டுமே பலன் தருகிறவர்கள்...(ஒன்றை மறந்துவிடப்படாது-இங்கே நாம் விஷ்ணுவையும், சிவனையும் பொதுவாக முழு முதற்தெய்வமாகப் பார்ப்பது போலப் பார்க்காமல், ஸ்திதி-ஸம்ஹார கர்த்தாக்களாக மாத்திரந்தான் பார்க்கிறோம். அப்போது நம் கர்மாப்படிப் பண்ணுவதற்கதிமாக அவர்கள் எதுவும் செய்யமாட்டார்கள்.) குருவோ நாம் கர்மாவைக் கழிப்பதற்கு ஸஹாயம் செய்கிறார். கர்மா அது பாட்டுக்கு அதன் பலனைத் தந்து கொண்டிருந்தாலும் அது நம்மை பாதிக்காதபடி பக்தி, ஞானக் கவசம் போட்டு நமக்கு அடிபடாதபடிக் காப்பாற்றி விடுகிறார். கர்மாவின் வீர்யமே குறைவதற்கும் அவர் அநுக்ரஹிக்க முடியும். அவரே நம் கர்மாவை வாங்கிக் கொண்டுகூட நம்முடைய சுமையைக் குறைக்கமுடியும்.

இப்படி வித்யாஸமிருக்கிறது-த்ரிமூர்த்திகள் கர்மாப்படி நடத்துவிக்கிறார்கள்;குருமூர்த்தி கர்மாவிலிருந்து கடத்துவிக்கிறார். ஆகையால் நம்முடைய நமஸ்காரங்களுக்கெல்லாம் உரியவராக இருக்கிறார். அதனால், "குருர்-ப்ரஹ்மா குருர்-விஷ்ணு :குருர்-தேவோ மஹேச்வர:தஸ்மை ஸ்ரீ குரவே நம :"என்பது ரொம்பவும் ஸரிதான்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

பரப் பிரம்மமாக

இன்னம் (ச்லோகத்தில்) ஒரு பாதம் அர்த்தம் சொல்லப்படாமலிருக்கிறது. அது என்ன?

குருஸ் - ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம

நிஜமான குருவைப் பற்றித்தான் பேச்சு என்றால் இதுவும் வாஸ்தவமாகத்தான் இருக்கவேண்டும். 'அவர் எப்படி ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன்?'என்று கேள்வி கேட்டு அதற்கு பதில் சொல்லவேண்டியிருந்த மாதிரியில்லை இது:அவரே பரப்ரஹ்மம் என்பது.

நம்மை அவர் முடிவாக ஒரு லக்ஷ்யத்தில் சேர்க்கிறார், (அது) ஆத்ம ஸ்வாராஜ்யம், ஞான ஜ்யோதிஸ் என்றெல்லாம் சொன்னதற்கு அர்த்தம் அவர் நம்மையே பரப்ரஹ்மமாக்குகிறார் என்பதுதான். அதாவது, 'பரப்ரஹ்மம் தானப்பா நீயாக வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறது'என்று நமக்குப் புரியவைத்து, அந்த வேஷத்தைக் கலைத்து அதுவாகவே இருக்கும்படிப் பண்ணுகிறார். தாமே இப்படி ஆனவராயிருந்தாலொழிய நம்மை எப்படி இந்த மாதிரி ஆக்கமுடியும்?ஆகையினால்,

குருஸ் - ஸாக்ஷாத் பரம் - ப்ரஹ்ம

என்பதில் துளிக்கூட ஸந்தேஹமில்லை.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்**

**கரை ஏறியவர் , ஏற்றுவிப்பவர்**

ஸம்ஸார ஸாகரத்தைத் தாமும் தாண்டி பிறரையும் தாண்டுவிக்கிறவர்தான் குரு என்பதே லக்ஷணம் (definition) தாமே ஸாகரத்தில் முழுகுகிறவரானால் இன்னொருத்தரை எப்படி அக்கரை சேர்க்கமுடியும்?

தான் கரையேறாமலே "அத்வைதா"என்று பெரிசாக லெக்சர் பண்ணிப் புஸ்தகம் போடுகிறவர் ப்ரெஃபஸர், டாக்டர் பட்டம் வாங்குகிறவரேயன்றி குரு இல்லை.

தான் கரை சேர்ந்தவிட்டு அப்படியே ஆத்மாராமராக ஒதுங்கியிருந்து விடுபவர்-அவரும், மஹான், ப்ரஹ்ம ஞானி என்று எந்தப் பெயர் வாங்கினாலும் குரு இல்லை. (இதனால் அவரைக் குறைவுபடுத்திச் சொல்வதாக அர்த்தம் இல்லை. யதார்த்தத்தைச் சொன்னேன்.)

தானும் கரை சேர்ந்து, பிறரையும் சேர்ப்பிக்கிற ப்ரஹ்ம ஞானிதான் குரு.

கரை சேர்வது, ஸம்ஸார ஸாகரத்தைக் தாண்டுவது என்பது ப்ரஹ்ம ஞான ஸித்தி தவிர வேறெதுவுமில்லை.

ஆசார்யாள் குறிப்பாக இதைத்தான் குருவின் லக்ஷணமாகச் சொல்வார்:தானும் கரையேறி, பிறரையும் ஏற்றுவது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்**

ப்ரம்மமாயினும் நமஸ்காரத்துக்குரியவரே!

த்ரிமூர்த்திகள் த்ரிமூர்த்திகளாக மட்டும் தங்கள் தொழில்களைக் குறுக்கிக் கொண்டுள்ளபோது அவர்களுக்கு நமஸ்காரம் பண்ண நமக்குக் காரணமில்லையென்றால், ப்ரஹ்மமோ குறுகலே இல்லாமல் ஒரே விரிவாக, ஒரே பெரிசாக இருந்தாலும் அது எதற்கும் -மனஸ், வாக்கு ஆகிய எதற்குமே-எட்டாமலிருப்பதால் நாம் நமஸ்காரம் பண்ணினாலும் அது அதை எட்டாது. ப்ரஹ்மம் நிஷ்கரியமாக ஒன்றுமே செய்யாமலிருக்கும்போது நம்முடைய நமஸ்காரத்தை மட்டும் 'ரிஸீவ்' பண்ணிக்கொள்ளுமா என்ன? ஆகையால் அதை நமஸ்கரிப்பதில் அர்த்தமில்லையென்று பார்த்தோம். த்ரிமூர்த்திகளை நமஸ்கரிக்கும் தேவை நமக்கில்லை;

ப்ரஹ்மத்துக்கு நம் நமஸ்காரம் தேவையில்லை!
அப்போது, குரு ப்ரஹ்மமென்றால் அவரை ஏன் நமஸ்காரம் பண்ணணும்?
ஸரி, குரு ஒரு விதத்தில் த்ரிமூர்த்திகளாக இருந்தாலும் அவருக்கு நாம் நமஸ்காரம் பண்ணவும் நிறைய நியாயமிருக்கிறதென்று பார்த்தோமல்லவா? அதேபோல இங்கேயும் இருக்குமா?ஆமாம். அப்படித்தான். எப்படியானால்-நிதர்சனமாகவேதான் தெரிகிறதே! குரு ப்ரஹ்மமானாலும் நமக்கு எட்டாமலா இருக்கிறார்? எந்தக் காரியமுமில்லை, எதையும் தெரிந்து கொள்வதில்லை, ஏற்றுக்கொள்ளுவதுமில்லை, தள்ளுவதுமில்லை என்றெல்லாம் நிஷ்க்ரியமாகவா அவர் இருக்கிறார்? எட்டாத அந்த நிஷ்க்ரியமேதானே நமக்கு எட்டியே ஆகவேண்டும் என்று இப்படி ரூபம் எடுத்துக்கொண்டு இந்த க்ரியாலோகத்தில் இத்தனை செய்கிறது?
அதனால் ப்ரஹ்மமாகவே இருக்கிற ப்ரஹ்மத்துக்கு நமஸ்காரம் வேண்டாம்தான் என்றாலும், குருவாக இருக்கிற ப்ரஹ்மத்துக்கு-ஸரியாகச் சொன்னால், அதே ப்ரஹ்மம் குருவாக வந்துள்ளபோது-அனந்த கோடி நமஸ்காரமும் பண்ணத்தான் வேண்டும். ப்ரஹ்மமாக இருப்பதோடு அப்படியே ஹாய்யாக இருந்துவிடமால் குருவாகி இப்படி நம்முடைய இத்தனை கோணாமாணாவையும் நேராக்க வேண்டும் என்று வந்திருக்கும் கருணைக்கு நமஸ்காரம் பண்ணிக்கொண்டேயிருக்க வேண்டும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ஆசார்யாள் அளிக்கும் ஆசார்ய லக்ஷணம்

"விவேக சூடாமணி"யில் ஆசார்யாளைப் பற்றி வர்ணிக்கும்போது 'ஆசார்யாள்' என்றாலே இவர்தான் என்றாகிவிட்ட நம்முடைய பகவத் பாதாள்,
தீர்ணா : ஸ்வயம் பீம - பவார்ணவம் ஜநாந் அஹேதுநா -
(அ)ந்யாநபி தாரயந்த :

என்கிறார். (குரு) ஸ்வயமாக இந்த பயங்கரமான ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டியவராயிருக்கவேண்டும். 'பீம பவார்ணவம்' என்றால் பயங்கரமான ஸம்ஸார ஸாகரம். குருவாக இருப்பவர்கள் அதை, 'தீர்ணா:' -தாண்டியிருப்பவர்கள் இப்படி இருந்து கொண்டு. 'அந்யாந் அபி' -மற்றவர்களையும், 'தாரயந்த:' -தாண்டுவிப்பவர்களாக... தாண்டுவிப்பவர்களாக இருக்கிறார்கள். 'இருக்கிறார்கள்' என்று (ஆசார்யாள்) மொட்டையாகச் சொல்லி நிறுத்தியிருக்கவில்லை. குருமார்கள் என்ன மாதிரி இதைச் செய்கிறார்களென்பதை ச்லோகத்தின் முன் பாதியில் ரொம்பவும் அழகாகச் சொல்லியிருக்கிறார். நான் சொன்னது பின் பாதி. முன் பாதி :

சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ வஸந்தவல் -
லோகஹிதம் சரந்த :

சொல்லழகோடு பொருளழகும் கூடிய வாக்கு. குருவுக்கு அநேக அடைமொழிகள் கொடுத்திருக்கிறார். 'சாந்தா :" - பரம சாந்தர்கள்; 'மஹாந்த :' -மஹான்களாக இருப்பவர்கள்; 'ஸந்த :' -ஸாதுக்கள். அப்புறம் வருகிறதுதான் ரொம்பவும் அழகானது; ஆசாரியாளின் பக்குவமான கவியுள்ளத்தைக் காட்டுவது. 'வஸந்த வல்லோகஹிதம் சரந்த :' -'வஸந்த வத்' : வஸந்த காலத்தைப் போல; 'லோகஹிதம்' : உலக நலனை; 'சரந்த:' ஆற்றுகிறவர்கள்.

வஸந்த காலம் வந்ததென்றால் லோகமெல்லாம் பச்சுப் பச்சென்றாகி விடுகிறது. அதுவரைக்கும் பனியில் உலகம் நடுங்கிக்கொண்டிருந்தது. இலையுதிர் காலம் என்று மரத்தையெல்லாம் வழித்துவிட்டு, பார்த்தாலே என்னவோ மாதிரி இருந்தது. வஸந்த காலம் வந்ததோ இல்லையோ கிளு கிளு கிளு என்று எங்கே பார்த்தாலும் துளிர்விட்டு விடுகிறது. நடுக்கும் குளிர் போய், கொளுத்தும் வெய்யிலாகவுமில்லாமல் சீதோஷ்ணம் ஹிதமாக ஆகிறது. ஒரே மல்லிப் பூவும், மாம்பழமுமாக வாஸனை தூக்குகிறது. ஆனாலும் வஸந்தம் என்று ஒன்று கண்ணுக்குத் தெரிகிறதோ? இல்லை. தன்னை அடையாளங்கூடக் காட்டிக் கொள்ளாமல், அப்படியொரு அஹங்கார லேசமேயில்லாமல், இத்தனை நல்லதைப் பண்ணி விடுகிறது!

குருவும் இப்படித்தான். அஹங்கார லேசமும் இல்லாதவர். ஆனால் அடையாளம் காட்டிக்கொள்கிறாரே என்றால், அதுவும் நம்முடைய நிமித்தமாகத்தான். நமக்கு ஈச்வரனை

அடையாளம் தெரியவில்லையே என்று தவித்துக் கொண்டிருக்கும்போது அவனே நம் பொருட்டுத் தன்னுடைய அடையாளமாக அனுப்பி வைப்பவர்தான் குரு என்பவராயிருக்க, அவர் அடையாளம் காட்டிக் கொள்கிறாரே என்று கேட்டால் அர்த்தமில்லை. ஆனால் 'நானாக்கும் பண்ணுகிறேன்' என்று பெருமைப்படுவதற்காக அவர் தம்மைத் தெரிவித்துக்கொள்ளவில்லை. நமக்கு அடையாளம் தேவை என்பதற்காகவே காட்டுகிறார். அவர் வாஸ்தவத்தில் அடையாளமில்லாத ப்ரஹ்மவஸ்து. 'நிர்லிங்கம்' என்பார்கள், அது. 'லிங்கம்' என்றால் அடையாளம்.

குருதான் இப்படிப் பண்ணுகிறாரென்று அடையாளம் தெரியாமலேயும் அநேக நல்லதுகள் நமக்கு அவைபாட்டுக்கு நடக்கிறாற்போலவே நடப்பதுண்டு. சட்டென்று ஒருநாள், 'இது எப்படி நடந்தது? இதனாலா? அதனாலா? அப்படித்தான் தோன்றிற்று. ஆனால் இது, அது எல்லாம் எப்படி இவ்வளவு சீராகச் சேர்ந்து நமக்கு ஸாதகமாகக் கார்யத்தை நடத்திக் கொடுத்தது? அதெல்லாமில்லை. குரு க்ருபைதான் ஸூக்ஷ்மமாக இப்படி எல்லாவற்றையும் சேர்த்து வைத்திருக்கிறது' என்று மனஸுக்குப் பளிச்சென்று தெரியும்.
வஸந்தத்துக்கும் குருவுக்கும் இவை எல்லாவற்றையும் விடச் சிறப்பான ஒற்றுமையை,-(ஆசார்யாளின்) ச்லோகத்தில் சொல்லியிருப்பதை-இதுவரை நான் சொல்லவில்லை. அது சின்ன வார்த்தை, நாலு எழுத்தில், போட்டு அதை ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.
'அஹேதுநா' என்பதுதான் அந்த வார்த்தை. "தீர்ணா ஸ்வயம் பீம பவார்ணம் ஜநாந் அஹேதுநா-(அ)ந்யாநபி தாரயந்த :" என்று போட்டிருக்கிறார்.
'அஹேதுநா' என்றால், 'காரணமில்லாமல்'. காரணமே இல்லாமல் வஸந்த காலத்தைப்போல் குரு அருள் பண்ணிக்கொண்டு லோகத்தில் இருந்து வருகிறார். 'நிவஸந்தி'-இருக்கிறார்கள், வஸித்து வருகிறார்கள். ஆசார்ய புருஷர்கள் சாந்தர்களாக, மஹான்களாக, ஸாதுக்களாக, பயங்கரமான பவஸாகரத்தைத் தாண்டியவர்களாக, தாங்கள் தாண்டியதோடு பிறரையும் தாண்டுவிப்பவர்களாக, வஸந்த காலத்தைப் போல் ஒரு காரணமும் இல்லாமல் ('அஹேதுநா') உலக நலனைச் செய்துகொண்டு இருக்கிறார்கள் என்று ச்லோகம் சொல்கிறது.

இப்படி அவர்கள் அநுக்ரஹிப்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. எதற்காக அநுக்ரஹக்கிணும்? ராப் பகல் உபதேசம் பண்ணணும்? ஊர் ஜனங்களைக் கட்டிக்கொண்டு மாரடிக்கணும்? ஊர் ஊராகச் சுற்றணும்? நமக்கு இப்படி ஒரு அநுக்ரஹம் பெற என்ன யோக்யதை? இல்லாவிட்டால் நம்மகிட்டே ஏதாவது அவர் கடன்பட்டிருக்கிறாரா, அநுக்ரஹம் பண்ணியாகணுமென்று? இதெல்லாம் போக, அவருக்கு இதனாலே ஏதாவது லாபமுண்டா? லாபமில்லாததோடு இல்லை. ஆத்மாராமராக விச்ராந்தியாக உட்கார்ந்திருக்கக் கூடியவர் நம்முடைய உழப்பறிசல்களை அல்லவா இழுத்துப்போட்டுக் கொண்டிருக்கிறார்?

ஆக, நம்முடைய angle-லிருந்து பார்த்தாலும் ஸரி, அவருடைய angle-லிருந்து பார்த்தாலும் ஸரி, இப்படி குரு என்று ஒருவர் ஸதா ஸர்வதா அநுக்ரஹம் பண்ணிக் கொண்டிருப்பதற்குக் காரணமேயில்லை. "அஹேதுநா" தான் அவர் இப்படிச் செய்கிறார். நம்மை கடைத்தேற்றி அவருக்கு ஒன்றுமே ஆக வேண்டியதில்லை. நமக்கு அந்த யோக்யதை இல்லவேயில்லை. ஆனால் யோக்யதையையும் உண்டாக்கி அப்புறம் கடைத்தேற்றியும் தீர்வது என்று அவர் அசராமல் பாடுபடுகிறார்.

'வஸந்தவத்' (வஸந்தத்தைப் போல) என்று போட்டதன் அழகு, பொருத்தம் இந்த 'அஹேதுநா'வில் தான் விளக்கம் பெறுகிறது. பனியில் ஜனங்களெல்லாம் நடுங்கிக்கொண்டு, பயிர் பச்சை எல்லாம் கருகிக்கொண்டிருந்த ஸமயத்தில் லோகத்தையே தளிரும் இலையும் பூவும் பழமுமாக நானா வர்ணாலங்காரம் செய்து, பரம ஹிதமான சீதோஷ்ணத்தைக் கொடுத்துக்கொண்டு வஸந்தம், வஸந்தம் என்று ஒன்று வருகிறதே, அதற்கு என்ன காரணம் சொல்ல முடியும்? ஒரு காரணமும் தெரியவில்லை. "அஹேதுநா".

நம்மால் வஸந்தத்துக்கு ஏதாவது ப்ரதி ப்ரயோஜனம் உண்டோ? அப்படியே நாம் அதற்கு ஏதோ செய்ய முடியுமானால்கூட, அது தன்னை அடையாளமே காட்டிக்கொள்ளாமல் அல்லவா நல்லது பண்ணிக் கொண்டிருக்கிறது? ஆகையால் அதை நாம் எப்படிப் பிடித்து நாம் செய்யக்கூடிய ப்ரதியைச் செய்வது?

குரு அடையாளம் காட்டிக்கொள்கிறார் என்று சொல்லி, அதற்குக் காரணம் பார்த்தோம். அதே மாதிரி இங்கேயும்,

'வஸந்தத்துக்கு நாம் எதுவுமே (ப்ரதி) செய்யாத மாதிரி, செய்யமுடியாத மாதிரி குரு விஷயத்தில் இல்லையே! நம்மாலான சிறு சுச்ரூஷை, சின்னத் தொண்டு செய்யத் தானே செய்கிறோம்? த்ரவ்ய ரூபத்தில்கூடக் காணிக்கை கொடுக்கிறோமே? குரு சுச்ரூஷை, குரு தக்ஷிணை ரொம்பவும் முக்யமென்று சாஸ்த்ரத்திலும் நிறையச் சொல்லியிருக்கிறதே!' என்று கேட்கலாம். அவர் அடையாளம் காட்டிக் கொள்வதற்குச் சொன்ன காரணத்தைத்தான் இங்கேயும் மறுபடி சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது, நம் பொருட்டாகத்தான் அவர் சுச்ரூஷை, தக்ஷிணை ஆகியவற்றை ஏற்றுக்கொள்வது. இதனாலே நமக்கு ஏற்படும் த்ருப்தி, நமக்குக் கிடைக்கும் புண்யபலன் ஆகியவற்றை உத்தேசித்துத்தான் அவர் இவற்றை ஏற்றுக்கொள்கிறாரேயன்றி, அவராக இவற்றை ப்ரதியாக எதிர்பார்த்தோ, இவற்றை நாம் செய்யவேண்டும் என்பதற்காகவோ நமக்கு உபதேசம் முதலிய அநுக்ரஹங்களைச் செய்யவில்லை. காரணமின்றி வஸந்தம் லோகஹிதம் செய்வதுபோல குருவும் செய்கிறார். தன்னையறியாமல் ஒரு கருணை அவரிடம் சுரக்கிறது. ஈச்வரன் அப்படி அவரை சுரப்பிக்கச் செய்திருக்கிறான். அதனால் 'லோகம் நன்றாயிருக்கட்டும்' என்ற எண்ணம் அவருக்கு ஸதா காலமும் மனப்பூர்வமாக ஏற்பட்டு, ஹிதத்தைச் செய்து கொண்டிருக்கிறார். இதிலே முடிவாக அவர் செய்வது, 'பீம பவார்ணவம் ஜநாந்...தாரயந்த:' என்றபடி மக்களை பாவக்கடலிலிருந்து கடத்துவிப்பது. அதை இவரால் எப்படிச் செய்யமுடிகிறதென்றால் இவர் தம்மளவில் அப்படிக் கடந்தவர், அதனால்தான். 'ஸ்வயம் தீர்ண :' தாம் கடந்தவர், அந்த பலத்தினாலேயே 'அந்யான்' - பிறரை, 'தாரயந்த' -கடத்துவிப்பவர்.

'உபதேச ஸாஹஸ்ரீ' என்பதாக ஆயிரம் உபதேச மொழிகள் கொண்ட ஒரு நூல் ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்...ஆசார்யாள் என்றால் உடனே நூற்றுக்குத் தொண்ணூறு பேர் 'பஜ கோவிந்தம்' என்று நினைத்துக் கொள்வார்கள். அடுத்தபடியாக 'ஸௌந்தர்ய லஹரி' ப்ரஸித்தமாயிருக்கிறது. 'விவேக சூடாமணி' என்ற பேர் காதில் விழுந்தால் நூற்றிலே ஐம்பது பேர் ஆசார்யாளை நினைத்துக் கொள்ளலாம். (நூற்றில்) பத்து பேருக்குத்தான்

'உபதேச ஸாஹஸ்ரீ' பற்றி தெரிந்திருக்கக்கூடும். அது உயர்ந்த தத்வங்களையும் அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவருவது எப்படி என்பதையும் சொல்கிற நூல். அதில் முன்பாகம் ப்ரோஸ், பின்பாகம் பொயட்ரி. இந்தப் புஸ்தகத்திலும் ஆரம்பத்திலேயே ஆசார்யாள் இதே கடைத்தேற்றும் விஷயத்தை குருவின் காரியமாகச் சொல்லியிருக்கிறார்:
வித்யாஸந்ததிச்ச ப்ராண்யநுக்ரஹாய பவதி நௌவரிவஸ நதீம் திதீர்ஷோ:
ஸம்ப்ரதாய வித்யையப் பரம்பரை க்ரமத்தில் உபதேசிப்பதானது ஆற்றைக் கடக்க விரும்புகிறவனுக்குப் படகு உதவுகிற மாதிரி ஜீவ ஸமூஹத்துக்கு உதவுகிறது. அநுக்ரஹிக்கிறது என்று அர்த்தம்.

'நதீம் திதீர்ஷோ:'-நதியைக் கடக்க விரும்புபவனுக்கு: 'நௌரிவ'-படகு போல, 'நௌ' என்றாலும் 'நௌகா' என்றாலும் படகு என்று அர்த்தம். 'நௌ'தான் தமிழ் 'நாவாய்'. (கிறிஸ்துவ வேதத்திலே, ப்ரளயத்தில் பகவானருளால் நாவாயில் வைத்து ரக்ஷிக்கப்பட்டவனுக்கே நோவா (Noah) என்று பேர் சொல்லியிருக்கிறது! அதுவும் நம் வைவஸ்வத மநுவின் கதைதான்!)
ஸம்ஸாரப் பெருக்கில் படகு ஓட்டுபவர் குரு. 'கர்ணதாரன்' என்றால் படகுக்காரன். குருவுக்கும் அதே பெயர் சொல்வதுண்டு.
ஸம்ஸாரத்தைத் தானும் தாண்டி பிறரையும் தாண்டுவிக்கிறவர் என்பதையே வேறே விதமாகச் சொன்னால், தானும் ப்ரம்மமாக ஆகிப் பிறரையும் அப்படி ஆக்குகிறவர். அவர் ப்ரம்மமாயிருப்பதுதான் "குருஸ்-ஸாக்ஷாத் பரம் - ப்ரஹ்ம" தாம் அப்படி ஆகாமல் வாய்வேதாந்தம் பேசுபவரில்லை. அவரும் நன்றாக விரிவாக வேதாந்தம் பேசத் தொிந்தவர் தான். தன் ஸித்தாந்தத்துக்கு ஆதரவாக நன்றாக 'ஆர்க்யூ' செய்யும் 'பாஸிடிவ்' ஆன 'ஊஹ' சக்தி, மாற்று ஸித்தாந்தத்தை நிராகரிப்பதிலும் அப்படியே வன்மையாக எதிர்வாதம் செய்யும் 'அபோஹ' சக்தி-இவை இரண்டையும் சேர்த்து 'ஊஹாபோஹம்' என்று சொல்வார்கள். குரு இந்த இரு சக்திகளும் பெற்றவர். இதையும் ஆசார்யாள் சொல்லிவிட்டு, இன்னம் அநேக லக்ஷணங்களையும் சொல்லி விட்டு, இதற்கெல்லாம் முத்தாய்ப்பாக அவரை "ப்ரஹ்மவித், ப்ரஹ்மணி:" ஸ்தித என்கிறார். 'ப்ரஹ்மவித்' என்றால்

ப்ரம்மத்தை அறிந்தவர். இப்படிச் சொன்னால்கூட அறிவு மட்டத்தில் மட்டும் intellectual-ஆக ப்ரொஃபஸர், டாக்டர் மாதிரித் தெரிந்து கொண்டதோடு ஸரியோ என்ற ஸந்தேஹம் வந்துவிடப் போகிறதே என்றுதான், உடனே 'ப்ரஹ்மணி ஸ்தித:' என்றும் போட்டிருக்கிறார். 'ப்ரஹ்மத்திலேயே நிலைத்து நிற்கிறவர்' என்று அர்த்தம். அதாவது ப்ரஹ்மமாகவே ஆனவர்.ஆகையால் "குருஸ் ஸாக்ஷாத் பரம்ப்ரஹ்ம" என்றால் அது ஸரிதான். தஸ்மை ஸ்ரீகுரவே நம: என்னும்போது தான் மறுபடி கேள்வி வருகிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### நமஸ்காரமே செல்வம்: ஆசார்யாள் உணர்த்துவது

இந்த நமஸ்காரம் தான் நமக்கு மஹா பெரிய செல்வம். ஆசார்யாள் அப்படித்தான் சொல்லியிருக்கிறார். அவர் பால ப்ரம்மசாரியாக இருந்த காலத்தில் ஒரு ஏழை ப்ராம்மண ஸ்த்ரீக்கு இரங்கி லக்ஷ்மியிடம் ப்ரார்த்தித்துக் கொண்டு 'கனகதாரா ஸ்தவம்' பாடின கதை தெரிந்திருக்கலாம். அவர் ப்ரார்த்தித்துக்கொண்டவுடன் லக்ஷ்மி வந்து கனக வர்ஷமாகப் பொழிந்துவிட்டாள். அது ஏழை ப்ராம்மணக் குடும்பத்துக்காக. ஆசார்யாள் அதில் ஒரு குன்றிமணிகூட எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் லக்ஷ்மிக்கு த்ருப்தியாக இருக்குமா, அவர் கேட்டுக்கொண்டாரே என்று வேறே யாருக்கோ வாரி வழங்கிவிட்டு, இதனை அழகான ஸ்துதி பண்ணின அவதாரக் குழந்தைக்கு எதுவும் கொடுக்காமல் போவதற்கு? ஆசார்யாளுக்கும், 'வேறே யாருக்கோ தான் உன் அநுக்ரஹம் தேவைப்பட்டது; அதற்காக ப்ரார்த்தித்துக் கொண்டேன்; எனக்கு உன்னிடமிருந்து ஒன்றும் தேவையில்லை என்கிற மாதிரி இருந்துவிட்டால் அது மரியாதைக் குறைச்சல். அதனாலே நாம் சின்னவன் மாதிரி இருந்து மஹாலக்ஷ்மியிடம் நமக்காகவும் ஏதாவது கேட்டுக் கொள்ளவேண்டும்' என்று தோன்றிற்று. ஆனால் அவருக்கு எந்த ஆசையும், எந்தத் தேவையும் வாஸ்தவத்தில்

இல்லாததால் என்ன கேட்பது என்று தெரியவில்லை. அவளையே நமஸ்காரம் பண்ணி அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்து நமஸ்கரித்தார். உடனேயே, "அவளிடம் வேறென்ன செல்வத்தைக் கேட்கவேண்டும்? இப்படி நாம் சின்னவராக நின்றுகொண்டு ஒருத்தரிடம் ப்ரியத்தோடு, அடக்கத்தோடு, நன்றியோடு நமஸ்காரம் செய்யும்போது மனஸுக்கு எவ்வளவு நிறைவாக இருக்கிறது? அதனால் இந்த நமஸ்காரமேதான் பெரிய செல்வம். 'இந்த நமஸ்காரச் செல்வத்தை எனக்குக் கொடு' என்றே ப்ரார்த்தித்துக் கேட்டு வாங்கிக்கொள்வோம்" என்று தோன்றிற்று. அதையே ச்லோகமாகப் பாடிவிட்டார்.

ஸம்பத்கராணி ஸகலேந்த்ரிய நந்தநாநி
ஸாம்ராஜ்ய தாந நிரதாநி ஸரோருஹா த்வத் வந்தநாநி
துரிதோத்தரணோத்யதாநி
மாமேவ மாதரநிசம் கலயந்து நாந்யே "நாந்யே"-முடிவாக,

முடிந்த முடிவாக இந்த வார்த்தையைப் போட்டிருக்கிறார். "Final word" என்றால் அப்புறம் வேறே தீர்மானமில்லை என்று அர்த்தம்! 'நாந்யே' 'ந அந்யே' என்றால், 'வேறு எதுவும் இல்லை', -அதாவது 'வேறு எதுவும் வேண்டாம்'. "அம்மா, மஹாலக்ஷ்மி! உனக்குப் பண்ணும் நமஸ்காரமே செல்வநாயகியான நீ எனக்குக் கொடுக்கும் பெரிய செல்வம். அதைத் தவிர வேறே எதுவும் வேண்டாம்!"

'த்வத்-வந்தநாநி'-உனக்கான நமஸ்காரங்கள்;
'மாமேவ'-என்னை ('மாமேவ' ஸமாசாரத்திற்கு அப்புறம் வருகிறேன்); 'அநிசம்'-இடையறாமல்; 'கலயந்து'-வந்தடையட்டும். 'ந அந்யே'-வேறே எதுவுமில்லை.
'எப்போது பார்த்தாலும் உன்னை வணங்கிக்கொண்டிருக்கும்படியான இந்த நமஸ்கார ஸ்ரீயைத் தவிர வேறு எதுவும் நான் உன்னிடம் ப்ரார்த்திக்கவில்லை'.

"செல்வத்துட் செல்வம் அருட்செல்வம்" என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். அருள் ஆண்டவன் செய்வது. ஆசார்யாள் சொல்லும் நமஸ்காரமோ நாம் செய்வது. நம்மைப் போன்றவர்கள் அவனுடைய அருட்செல்வத்தை வேண்டி நமஸ்காரம் செய்கிறோம். ஆசார்யாளோ நாம் நமஸ்கரித்து வேண்டி அதற்குப் பலனாக அப்புறம் அவன் அருளென்ற செல்வத்தைத் தரவேண்டுமென்று நினைக்கவில்லை. நாம் செய்கிற நமஸ்காரமே அவன் தரும் பெரிய செல்வம் என்று நினைத்து, இது தவிர "எதுவும்

வேண்டேன்" என்கிறார்! "இது மட்டுமே என்னை அடையட்டும்": "த்வத்-வந்தநாநி... மாமேவ மாதரநிசம் கலயந்து."

'மாத:', 'அநிசம்' என்பவை சேர்ந்து 'மாதரநிசம்'. "மாதா!" என்று லக்ஷ்மியைக் கூப்பிட்டு, 'அநிசம்'-எப்போதும், இடையறாமல்-நமஸ்கார லக்ஷ்மி தன்னிடம் தங்கியிருக்கட்டுமென்கிறார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### அம்பா, மாதா அம்மன், தாயார்

'மாதா', 'அம்பா' என்று இரண்டு வார்த்தைகள் எல்லாருக்கும் தெரிந்ததுதான். ஆனால் குழந்தை வாயில் 'அம்பா' என்றுதான் சட்டென்று வரும். 'அம்மா', 'அம்பா' இரண்டும் ஒன்றுதான். 'மாதா' என்பது இலக்கண ரீதியான வார்த்தை. தமிழில் 'தாயார்' என்கிற மாதிரி. அம்பா, அம்மா என்கிறபோது ரொம்ப எளிமை. மாதா, தாயார் என்கிறபோது ஒரு ஸ்தானம் கொடுத்து உயர்த்தி வைத்தாற் போல இருக்கிறது. பரமேச்வர பத்னியாக இருக்கப்பட்ட தேவியைப் பற்றிச் சொல்லும்போது 'அம்மன்', 'அம்மன் ஸந்நிதி' என்கிறோம். 'அம்மன்' என்னும்போது 'அம்மா' என்பதை விடவும் குழந்தை பாஷையில் சொல்கிற மாதிரியிருக்கிறது. அப்பா-அப்பன் மாதிரி அம்மா-அம்மன். ஸாதாரணமாக ஆண்பால் பெயர்கள்தான் 'ன்'னில் முடியும். குழந்தை பாஷைக்கு இலக்கணமில்லை. அதனால் 'அம்மா'வும் 'அம்மனா'கி விடுகிறது. பரமேச்வர பத்னியை அம்மன் என்கிறோம். பொது வழக்கிலேயே பரமேச்வர பத்னியை அம்பா, அம்பாள் என்று சொல்லுகிறோம். மஹாவிஷ்ணுவின் பத்னியைப் பற்றிச்சொல்லும்போதோ 'தாயார்', 'தாயார் ஸந்நிதி' என்கிறோம். (ஸம்ஸ்க்ருத அகராதியான) 'அமர (கோச)'த்தில் பார்த்தாலும் இப்படியே இருக்கிறது. விஷ்ணு பத்னியைச் சொல்லும்போது, "இந்திரா, லோக மாதா" என்று

குறிப்பிட்டுவிட்டு, சிவபத்னியைச் சொல்கிறபோது, "அபர்ணா பார்வதீ துர்கா ம்ருடாநீ சண்டிகா அம்பிகா" என்று, 'அம்பா'ப் பேருக்கே அழகு பண்ணி 'அம்பிகா' என்று குறிப்பிட்டிருக்கிறது. தனம் வேண்டுமென்றே லக்ஷ்மியிடம் போகிறோமாதலால், அவளை நிறைய தனம் படைத்த பெரிய சீமாட்டியாக பாவித்துத்தான் 'தாயார்' என்றும் 'மாதா' என்றும் மரியாதை செய்கிறோம் போலிருக்கிறது!
'மாத: அநிசம் கலயந்து நாந்யே' என்று மாதாவாக அவளைக் கூப்பிடுபவர், 'ஸரோருஹாக்ஷி' என்றும் ச்லோகத்தில் பெயர் கொடுத்திருக்கிறார். தாமரை போன்ற கண் படைத்தவள் என்று அர்த்தம். பகவானுக்கும் புண்டரீகாக்ஷன் என்று இதே அர்த்தத்தில் பெயரிருக்கிறது. ஸதிபதிகள் ஒற்றுமை.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்**

**நமஸ்காரம் அளிக்கும் பயன்கள்**

'எனக்கு உன் நமஸ்காரமே போதும்' என்று சொல்லும் ஆசார்யாள், 'அது தன்னாலேயே எனக்கு ஒரு நிறைவைத் தருகிறது; அதனால் அதுவே போதும்' என்று சொல்வதுகூட அவ்வளவு அடக்கமாக இல்லை. "நான் ரொம்பப் பக்வியாக்கும் (பக்குவம் பெற்றுவிட்டவனாக்கும்)! மற்றவர்கள் தனம், தான்யம், ஆரோக்யம், ஸந்தானம் என்றிப்படிக் காம்யமாக எட்டுவித ஐச்வர்யங்களை அஷ்ட லக்ஷ்மியாயுள்ள உன்னிடம் ப்ரார்த்தித்து நமஸ்கரிக்கும்போது, நான் மாத்திரம் அதில் எதையும் பொருட்படுத்தாமல், நீ எதையோ கொடுத்து நான் கீழே நின்று வாங்கிக் கொள்கிறவனாக இல்லாமல், நானாகவே நமஸ்காரம் செய்து, நானாகவே நமஸ்காரம் செய்து, நானாகவே அதில் நிறைந்து விடுகிறோனாக்கும் என்று சொல்கிற தோரணையில் இருக்கிறது"-என்று நினைத்திருப்பார் போலிருக்கிறது! அதனால் நமஸ்கார க்ரியையே ஒருவரை நிறைவித்து விடுவதாகச் சொல்லாமல் அது இன்னின்ன பிற பலன்களைத் தருகிறது, 'ஆனபடியால் இத்தனை பலனைத் தரும்

நமஸ்காரமே எனக்குப் போதும்' என்கிறார். லக்ஷ்மிக்குச் செய்யும் நமஸ்காரம் இந்தப் பலன்களைத் தருகிறதென்று சொன்னால் லக்ஷ்மியே தருகிறாளென்றுதான் தாத்பர்யம். அதாவது அவள் கொடுத்தே இவர் வாங்கிக்கொள்கிறாரென்று அடக்கத்துடன் காட்டுகிறார். (அவை) என்னென்ன பலன்கள்? "ஸம்பத்கராணி"-நிறைய ஸம்பத்தைக் கொடுக்கிறது."ஸகலேந்த்ரிய நந்தநாநி"-எல்லா இந்த்ரியங்களுக்கும் இனியவற்றை அளிக்கிறது. அதாவது ஸகல போக போக்யங்களையும் அளிக்கிறது. "ஸாம்ராஜ்ய தான நிரதாநி"-பக்தர்களுக்குப் பெரிய ஸாம்ராஜ்யத்தையே வழங்கவேண்டுமென்று உத்ஸாஹத்தோடு ஈடுபட்டிருக்கிறது. "ராஜராஜேச்வரீ, ராஜ்யதாயிநீ", அப்புறம் "ராஜபீட நிவேசித நிஜாச்ரிதா" (மெய்யடியார்களை அரியணையிலே ஏற்றுவிப்பவள்) என்றெல்லாம் "லலிதா ஸஹஸ்ரநாம"த்திலும் வருகிறது. மற்ற காரணங்களோடு, லௌகிகமான பலன்களைச் சொன்னால்தான் ஜனங்களுக்கு நமஸ்காரம் செய்யத் தோன்றுமென்று ஆசார்யாளுக்குப் பட்டதால் இப்படியெல்லாம் சொல்ல ஆரம்பித்தார். இப்படி (ச்லோகத்தின்) முதல் பாதியில் சொல்லி முடித்து, இவ்விதமான பலன்களைத் தரும் நமஸ்காரங்கள்-த்வத் வந்தநாநி : உனக்குரிய நமஸ்காரங்கள்-என்று சொன்னவுடன் அவருக்கு ஒரு யோசனை வந்துவிட்டது. நிறைய ஸம்பத், ஸகலேந்த்ரிய ஸந்துஷ்டி, பெரிய ராஜ்யாதிகாரம் ஆகியவற்றை மட்டும் சொல்லி நிறுத்தி விட்டால், எல்லாம் இஹலோக அநுக்ரஹங்களாகவே அல்லவா ஆகிவிடுகிறது? "இவற்றைத் தருவதான நமஸ்காரங்கள் என்னை வந்தடையட்டும்" என்று ஆசார்யாளால், ஸொந்த வாழ்க்கையில் கொஞ்சங்கூட உலகப்பற்றில்லாத ஆசார்யாளால் எப்படி ப்ரார்த்திக்க முடியும்? -இதைப்பற்றி ஆலோசித்துப் பார்த்தார். மஹாமதியான ஆசார்யாளுக்கு ஆலோசனை, யோசனை எல்லாம் க்ஷணமாத்ரம்தான். அல்லது அவ்வளவுகூட இல்லை. ச்லோகம் கவனம் பண்ணிக்கொண்டு போகிற போதே அடுத்த வார்த்தை போடுவதற்குள்ளே பதில் வந்துவிடும். நிறுத்தாமலே, தங்கு தடையில்லாமல் முழுக்கப் பூர்த்தி பண்ணிவிடுவார்.

இப்போது ஸம்பத்து முதலான பலன்களைச் சொல்லி

இவற்றைத் தரும் நமஸ்காரங்கள்-'த்வத் வந்தநாநி' என்று பின்பாதியை ஆரம்பித்தவுடன், "என்னடாது! எல்லாம் லௌகிகமாகவே சொல்லிவிட்டோமே!" என்று நினைத்த ஆசார்யாள், உடனேயே குறையை நிவர்த்தி செய்வதாக, அடுத்தாற்போல் "துரிதோத்தரணோத்யதாநி" என்று மின்னல் வெட்டுகிற வேகத்தில் போட்டுவிட்டார்! "வந்தநாநி" என்ற வார்த்தைக்கு முன்னால் லௌகிகமான பலன்களாக இரண்டு மூன்று சொன்னவர், அந்த வார்த்தைக்குப் பின்னால் ஆத்மார்த்தமாக "துரிதோத்தரணோத்யதாநி" என்று ஒரு பலனைச் சேர்த்துவிட்டார். கவிதைகளில் வசன நடைபோல இல்லாமல் முன்னே பின்னே வார்த்தைகளை மாற்றிப் போடலாம். அப்படிப் போடுவதே ஒரு அழகு. அதிலும் ஸம்ஸ்க்ருத பாஷையிலோ வார்த்தைகளை பல தினுஸிலே கோத்து வாங்கி விளையாடும் ஸ்வாதந்திரியம் ஜாஸ்தி. ஆகையால் ச்லோகரூபத்திற்குக் கொஞ்சங்கூட பங்கம் ஏற்படாமலே,

த்வத் வந்தாநாநி துரிதோத்தரணோத்யதாநி என்று போட்டுவிட்டார்.

"இன்ஸ்பிரேஷன்" என்று பொதுவாகச் சொல்லுவதன் உசந்த நிலையில், ஒரு திவ்ய ஆவேசத்தில்தான் ஆசார்யாள் போன்றவர்கள் கடகடவென்று கவிதையாகக் கொட்டியது. அதற்கு நடுவிலேயே கொஞ்சம் யோசனை, புத்தி பூர்வமான சிந்தனை செய்ததாக நம் பார்வையில்-அல்லது நம்முடைய ராஸிக்ய பாவனைக்குப் பிரீதீ ஏற்படும் விதத்தில்-இப்படியெல்லாம் செய்வது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## ஒரு திருத்தம்: 'துரித உத்தரணம்'

புஸ்தகத்திலே-அச்சில் வந்திருக்கும் எடிஷன்களில் நான் பார்த்த பலவற்றிலே-தப்பாக இருக்கிறது. "துரிதாஹாரணோத்யதாநி" என்று போட்டிருக்கிறது. ஸரியான பாடம், "துரிதோத்தரணோத்யதாநி" என்பதே. திருத்திக்

கொள்ளவேண்டும்.
'துரிதம்' என்றால் பாபம்.
இப்போது தப்பாக ஸங்கீதத்திலே 'துரித காலம்' என்று சொல்கிறார்கள்! வேகமாகப் பாடுவதை அப்படிச் சொல்கிறார்கள்! விளம்பமாகப் பாடினால்தான் புண்யம், வேகமாகப் பாடினால் பாபம் என்று அர்த்தமில்லை! 'த்ருதம்' (Drutam) என்றால் 'வேகமாக' என்று அர்த்தம். அதைத்தான் 'துரிதம்' (Duritam) என்று 'பாப'மாக மாற்றிவிட்டாற்போலிருக்கிறது! ஒரே வேகமாக அடித்துத் தள்ளிக்கொண்டு பாடினால் பாவம் எல்லாம் போய், 'ஐயோ பாவமே!' என்ற மாதிரிதான் ஆகிவிடும்! 'த்வரிதம்' (Tvaritam) என்றும் ஒரு வார்த்தை இருக்கிறது. அதற்கும் 'வேகமாக' என்றே அர்த்தம். அதுவும் இப்படித் திரிந்திருக்கலாம். துரிதம் என்றால் பாபம். எந்தக் கர்மாவுக்கும் ஸங்கல்பம் செய்துகொள்ளும்போது "துரித-க்ஷய-த்வாரா பரமேச்வர ப்ரீத்யர்த்தம்" என்கிறோம். ஈச்வரனை ப்ரீதி செய்வதே நம்முடைய லக்ஷ்யம். நாம் பண்ணிய பாவம் ஈச்வரப்ரீதி கிடைக்கவொட்டாமல் தடுக்கிறது. பாபம் நசித்தாலே, துரிதம் க்ஷயமானாலே, அதன் வழியாக-(அதாவது) துரிதக்ஷயத்வாரா-ஈச்வர ப்ரீதியை ஸம்பாதிக்க முடியும். 'துரிதாஹரணோத்யதாநி' என்பது 'துரித ஆஹரண உத்யதாநி' என்று பிரியும். ஹரணம், ஆஹரணம் என்ற இரண்டுக்கும் ஒரே அர்த்தம்தான். போக்குவது என்று இங்கே அர்த்தம். 'உத்யதாநி' என்றால் 'முனைந்திருப்பவை.' 'துரிதஹாரணோத்யதாநி' என்றால் 'பாபத்தைப் போக்குவதில் முனைந்திருப்பவை'. மஹாலக்ஷ்மிக்குச் செய்யும் நமஸ்காரங்கள் நம்முடைய பாபங்களைப் போக்கடிப்பதில் முனைந்து செயல்படுகின்றன என்று அர்த்தம். (இது) ஸரியாகத்தானே இருக்கிறது என்று தோன்றும்.
ஆனால் ஹரணம், ஆஹரணம் இரண்டுக்கும் ஒரே அர்த்தம் இலக்கணப்படி இருந்தாலும், டிக்ஷனரியில் அப்படிப் போட்டிருந்தாலும், வழக்கில் 'ஹரணம்' என்றாலே 'போக்குவது' என்றும் 'ஆஹரணம்' என்றால் 'கொண்டு வந்து சேர்ப்பது' என்றும்தான் வைத்துக்கொண்டிருக்கிறோம். 'ஹரண'த்துக்கு வலிவூட்டுவதற்காக, மேலும் எதிரிடை அர்த்தம் தரும் 'அப' சேர்த்து 'அபஹரணம்' ('ஸீதாபஹரணம்') என்று சொல்வதும் வழக்கமாயிருக்கிறது. 'ஆஹரணம்' என்று முதலில் சேர்க்கிற 'ஆ' இப்படி

எதிரிடையாக 'போக்குவது' என்ற அர்த்தம் கொடுக்காமல், இன்னும் வலுவாகச் 'சேர்த்துவைப்பது' என்றே பொருள் கொடுக்கும். ஆனாலும் 'ஆஹரணம்' என்றால் போக்குவது என்றும் அர்த்தமிருப்பதால் அப்படிப் போட்டிருக்கவே முடியாது என்று ஸாதிப்பதற்கில்லை.
பின்னே ஏன் தப்புப் பாடம், திருத்திக் கொள்ள வேண்டுமென்று சொன்னேனென்றால் "துரிதோத்தரணோத்யதாநி" என்னும்போதுதான் இதைவிட சிறப்பான, பொருத்தமான பொருள் கிடைக்கிறது.
'துரித உத்தரண உத்யதாநி' என்பது (இதன்) பதப் பிரிவினை. 'ஆஹரண' என்பதற்குப் பதில் 'உத்தரண' (uddharana).'உத்தரணம்' என்பது 'உத்தாரணம்' என்றும் நீளும். இதற்குக் குறிப்பாக என்ன அர்த்தமென்றால் பிடுங்கி எறிவது. 'பிடுங்குவது' என்றால், எதுவோ ஒன்று உள்ளே புதைந்து போயிருக்கிறது, அதைத்தான் பிடுங்கவேண்டியிருக்கிறது என்று உள்ளர்த்தம் கொடுக்கிறது. தரைமட்டத்தில் இருப்பதைப் 'பிடுங்க' வேண்டியதில்லை. அப்படியே எடுத்துப் போட்டால் போதும். புதைந்திருக்கு ம்போது, அதாவது ஆழ உள்ளே போய் மாட்டிக்கொண்டிருக்கும் போதுதான் பிடுங்குவதற்கு அவசியம் ஏற்படுகிறது. (க்ருஷ்ணர்) கோவர்த்தனோத்தரணம் பண்ணினார் என்கிறோம். அதன் முழு அர்த்தம் புரியாமலே, பூமி மட்டத்துக்கு ஸமனாயிருந்த மலையடிவாரத்தில் கையை விட்டுத் தூக்கிவிட்டாரென்று நினைத்து, இதையே அத்புதமாகக் கொண்டாடுகிறோம். அவரானால் இன்னம் பெரிய அத்புதமாக, பூமிக்குக் கீழேயும் ஆழமாகக் கையைவிட்டு மலையை ஆட்டிப் பிடுங்கி வெளியே தூக்கி "உத்தரண"மாகச் செய்திருக்கிறார்-அநாயாஸமாக ஒரு நாய்க்குடையைப் பிடுங்குகிற மாதிரி!
ஆலயத் திருப்பணியை 'ஜீர்ணோத்தாரணம்' என்கிறோம். அர்த்தம் தெரியாமலே சொல்கிறோம். 'ஜீர்ணம்' என்றால் கிலமானது, இடிந்து போனது என்று அர்த்தம். கோவில் முழுதுமோ, அல்லது அதில் பல இடங்களோ இடிந்துபோன போது என்ன செய்யவேண்டியிருக்கிறது? மேலெழ எதையோ வாரிக் கொட்டிவிட்டால் போதுமா? அல்லது ஒரே போடாகப்போட்டு உள்வரை நொறுக்கித் தள்ளி விட்டால் ஸரியாயிருக்குமா? இப்படியெல்லாமும் கொஞ்சம் செய்யவேண்டியிருக்கும். ஆனால் இதைவிடக் கஷ்டமாக

ஒன்று நிறையப் பண்ணும்படியிருக்கும். மேலே இடிந்தும், அதோடு அடிவாரமும் கலகலத்துப் போயும் இருக்கும் பல இடங்களில்கூட உள்ளே கிண்டு கிண்டாகக் கற்கள் இருக்கும். இவற்றை அப்படியே வாரிக் கொட்டவும் முடியாது; நொறுக்கித் தள்ளவும் முடியாது. உள்ளேயிருந்து பிடித்து இழுத்து இழுத்தே அதாவது பிடுங்கியே வெளியேற்ற வேண்டியிருக்கும். கோபுரத்தில், ப்ராகாரத்தில் மரம், செடிகள் வேர்விட்டு முளைத்திருந்தால் இப்படி உள்ளே விட்டுக் குடைந்தே பிடுங்கிப் போடவேண்டும். உள்ளே ஆழமாகக் சொருகிக் கொண்டிருக்கும் கல், மரம், செடி முதலியவற்றை இழுத்துப் பிடுங்கித் தள்ளுவதுதான் ஜீர்ணோத்தாரணம். முள்ளைப் பிடுங்கி எடுத்துப் போடுவதைக் 'கண்டகோத்தரணம்' என்று சொல்வார்கள்.

நாம் ஜீர்ணோத்தாரணம் என்பதை Renovation என்பதற்கு நேர் வார்த்தையாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். அதாவது புதிசு பண்ணுவது, 'புதுக்குவது' என்கிறார்களே அது, என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். உண்மையிலே பழசை இழுத்துப் பிடுங்கிப்போடுவது என்றே அர்த்தம். கலியிலும் அவதார புருஷர்கள் ஜகத்தை உத்தாரணம் செய்ய வருகிறார்களென்றால் என்ன அர்த்தம்? "ஜகதோத்தாரணா!" என்று தாஸர் ஏன் பாடுகிறார்? அதர்மச் சேற்றில் அழுந்திப் போயிருக்கும் ஜகத்தை அவர்கள் அடியில் கை கொடுத்துப் பிடுங்கி வெளியே இழுத்துக்கொண்டு வருவதால்தான். வெளியே இழுத்ததை எறியத்தான் வேண்டுமென்றில்லை. அதை நல்லபடியும் பண்ணலாம். அப்படித்தான் இவர்கள் உலகத்தை அதர்மத்திலிருந்து இழுத்துக்கொண்டு வந்த பின் அதற்கு நல்லது பண்ணுவது. அதர்மத்திலிருந்து விடுபடுத்துவதே நல்லதுதான்! கோவர்த்தனகிரியை இழுத்தெடுத்த பின் பகவான் எறிந்துவிடாமல் குடையாக அல்லவா உபயோகப்படுத்தினார்? அதற்குத்தானே அதைப் பிடுங்கியதே?

பிடுங்கி இழுத்து வெளியில் கொண்டு வருவதே உத்தரணம். அதற்கப்புறம் அதை எறிந்துவிடலாம். அழித்து விடலாம், அல்லது நன்றாக உருப்படுத்தலாம், உபயோகம் செய்து கொள்ளலாம். அந்தந்த Context-ஐ (ஸந்தர்பத்தை) வைத்து இவற்றில் எது என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளவேண்டும்.

நம் மனஸுக்குள் ஆழமாக முள் செடி மாதிரி வேரோடித் தைத்திருக்கும் பாபத்தை அப்படியே பிடுங்கி எடுத்துப் போடுவதுதான் "துரிதோத்தரணம்." உள்ளே தப்பான ஸாமான் சொருகிக் கொண்டிருந்தால் எப்படி சரீரத்துக்கு ஆபத்தோ, அப்படி நம்முடைய பாபங்கள் உள்ளே போய் சொருகிக்கொண்டிருப்பது உயிருக்குப் பெரிய ஆபத்து. அதை நன்றாகக் கிள்ளி எறிவது 'துரிதோத்தரணம்'. ஆகையினால், 'போக்குவது' என்று லேசாக அர்த்தம் தருகிற வார்த்தையான 'ஆஹரணம்' என்றில்லாமல், ஜன்ம ஜன்மாந்தரமாக நாம் பண்ணின பாபம் பெரிய முள்ளு மரமாக நமக்குள்ளே வேரோடியிருக்கிறதை பெரிய கடப்பாரை, அது, இதைப் போட்டு நெம்பிப் பிடுங்கி வெளியிலே இழுத்து அழித்துப் போடவேண்டுமென்று இத்தனை அர்த்தத்தை ரத்னச் சுருக்கமாகக் கொடுக்கும் 'உத்தரணம்' என்றிருப்பதுதான் பொருத்தம். நம்முடைய ஸகல பாபத்தையும் நிவ்ருத்தி செய்து வாழ்க்கைக்கு ஜீர்ணோத்தாரணம் செய்துவிட்டால் அப்புறம் ஒரே சுத்தந்தான்; அம்ருதத்தாலேயே கும்பாபிஷேகந்தான்! இதை நமஸ்காரமே ஸாதித்துக் கொடுத்து விடுகிறது என்று காட்டுகிறார். அதனால், "அந்த நமஸ்காரம் என்னை வந்தடையட்டும்" என்கிறார். "மாமேவ கலயந்து"-"என்னை வந்தடையட்டும்."

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## மறுமைப் பயன் கோரி

நமஸ்கார பலனாக முதலில் சொன்ன ஸம்பத்து, ஸகல இந்த்ரிய ஆனந்தங்கள், ஸாம்ராஜ்யாதிகாரம் என்ற மூன்றில் எதையுமே தாம் ஏற்க முடியாமலிருக்கும்போது, இவற்றைத் தர வல்லதான நமஸ்கார க்ரியை தமக்கு வேண்டுமென்றால் ஸரியாயில்லையே! அதனால்தான் தாமும் விரும்புவதற்குரிய பலனாக வேறே என்ன சேர்க்கலாமென்று யோசித்து-ரொம்ப

யோசிக்கவில்லை; க்ஷணம் அல்லது அதற்கும் குறைச்சலாக யோசித்து-"துரிதோத்தரணம் செய்வதாகவும் நமஸ்கார க்ரியை இருக்கிறதே! ஆகையால் இந்தப் பலனை நாமும் வேண்டிக்கொள்வதாக (ச்லோகத்தை) மேற்கொண்டு கவனம் பண்ணி முடித்துவிடலாம்" என்றுமுடிவு பண்ணி அப்படியே செய்துவிட்டார். வாஸ்தவத்தில் துரித லேசமும் அண்ட முடியாத பவித்ர புருஷர் நம் ஆசார்யாள். ஆனாலும் நமக்காக, நமக்கு ப்ரார்த்திக்கக் கற்றுக்கொடுக்கிறபோது, நம் நிலையில் தன்மையும் நிறுத்திக்கொண்டு, தமக்கும் துரித நிவ்ருத்தி தேவையாயிருப்பது போலச் சொல்லி, அதை அளிக்க வல்லதான நமஸ்கார ஸ்ரீயை மஹாலக்ஷ்மியிடம் வேண்டிக் கொண்டு ச்லோகத்தைப் பூர்த்தி பண்ணிவிட்டார். ஸம்பத்து ஸர்வேந்திரிய ஆனந்தம், ராஜ்யாதிகாரம் ஆகியவை இம்மையின்பங்களாகவே இருக்க, இந்த பாபோத்தரணம்தான் மறுமைக்கு உதவுவதாக இருப்பது. இது ஒன்றுதான் பாரமார்த்திக ப்ரயோஜனம் உடையது. இந்த 'டிஸ்டிங்க்ஷ'னைத் தெளிவு படுத்தும் விதத்தில் முதல் மூன்றை 'வந்தநாநி' என்பதற்கு முன்னாடி போட்டு, அப்புறம், தனியாகப் பிரித்து, 'வந்தநாநி' என்பதற்குப் பின்னாடி "துரிதோத்தரணோத்யதாநி" என்று போட்டு ச்லோகத்தை அமைத்திருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## "ஏவ" எதில் சேர வேண்டும்?

"மாமேவ கலயந்து" - "வந்தநாநி மாம் ஏவ கலயந்து" "நமஸ்காரக் கார்யம் என்னை வந்தடையட்டும்." "மாம் கலயந்து" என்றாலே "என்னை வந்தடையட்டும்" என்று அர்த்தம் ஏற்பட்டுவிடும். "மாம் ஏவ கலயந்து" என்று "ஏவ" சேர்த்துச் சொன்னால், "என்னையே வந்தடையட்டும்", "என்னொருவனையே வந்தடையட்டும்," "என்னை மட்டுமே வந்தடையட்டும்" என்று அர்த்தமாகும். அதாவது நமஸ்காரம் வேறே யாரையும் போய்ச் சேராமல் ச்லோக கர்த்தாவுக்கு

மட்டுமே கிடைக்கவேண்டுமென்று ஆகும். ஆசார்யாள் பிறருக்காகவே, 'பிறர்க்குரியாளர்' என்னும்படியாகவே வாழ்ந்தவர். மஹான்களாக, ஆசார்யர்களாக இருக்கிறவர்களைப் பற்றி, 'ஒரு ப்ரதிபலனும் எதிர்பாராமல் வஸந்தகாலம் மாதிரி லோகஹிதம் செய்பவர்கள்' என்று சொன்ன அவரே அப்படி இருந்தவர்தான். அப்படிப்பட்டவர் எங்கேயாவது நமஸ்கார க்ரியையானது வேறே எவருக்குமில்லாமல் தம் ஒருவருக்கே சேரணுமென்று monopolise (ஏக போக்கியம்) பண்ணிக்கொள்ள நினைப்பாரா? ஆனாலும் போதுமான யோசனை இல்லாமல் இப்படிச் சில பேர் அர்த்தம் பண்ணிக்கொண்டிருப்பதோடு, அதுவும் போதாமல் கடைசியில் "கலயந்து நாந்யே" என்று இருப்பதையும் "(கலயந்து) நாந்யம்" என்று பாடபேதம் பண்ணி தப்புக்கு மேலும் அழுத்தம் கொடுத்திருக்கிறார்கள்! "நாந்யே (ந அந்யே)" என்று நாம் வைத்துக்கொண்ட பாடப்படி, "எனக்கு வேண்டியதெல்லாம் நமஸ்கார க்ரியை தான். வேறே எதுவுமில்லை" என்று அர்த்தம். "நாந்யம் (ந அந்யம்)" என்றாலோ, "என்னையே நமஸ்கார க்ரியை சேரணும். வேறே எவரையுமில்லை என்று ஆகிவிடும்! தனக்கு மட்டுமே என்று selfish-ஆகச் சொன்னதை இன்னும் வலியுறுத்தி, "ஆமாம், வேறே யாருக்குமில்லை" என்று சொன்னதாகி விடும்!
ஆசார்யாள் எங்கேயாவது அப்படிச் சொல்லியிருப்பாரா?
'நாந்யே'வா, 'நாந்ய'மா, என்று சில பேர் யோசித்து, "இந்த வம்பே வேண்டாம். 'நாந்யே'யும் வேண்டாம், 'நாந்ய'மும் வேண்டாம். 'மாந்யே' என்று போட்டு முடித்து விடலாம் என்று நினைத்து,மாமேவ மாதரநிசம் கலயந்து மாந்யே என்று வைத்துக்கொண்டு விடுகிறார்கள். 'மாந்யே!' என்பது லக்ஷ்மியைக் கூப்பிடும் ஸம்போதனம் (விளி வேற்றுமை). 'மதிப்புக்குகந்தவளே!' என்று அர்த்தம். 'லோக மாந்ய திலகர்' என்கிற மாதிரி 'மாந்யே'.
ஒரு கேள்வி கேட்கலாம். "இங்கே இப்படிச் சில பேர் 'மாந்யே' என்றும், நீங்கள் 'நாந்யே' என்றும் வைத்துக் கொண்டு சமாளித்தாலும், 'மாமேவ' என்பது அப்படியே தானே இருக்கிறது? 'எனக்கு மட்டுமே' என்றுதானே அதற்கு அர்த்தம்? இதற்கு என்ன, ஸ்வாமிகளே, ஸமாதானம் சொல்லப்போகிறீர்கள்?" என்று கேட்கலாம்.
சொல்கிறேன். எந்த பாஷையாயிருந்தாலும் ச்லோகம், செய்யுள், பொயட்ரி என்று இருக்கும்போது வார்த்தைகள்

முன்னே பின்னே வரலாம். அதனால்தான் 'பொயட்ரி'யை 'ப்ரோஸ் ஆர்டர்' பண்ணுவது என்று இருக்கிறது. இப்படி முன்னே பின்னே வார்த்தைகளை மாற்றிப் போடுகிற ஸ்வாதந்த்ரியம் ஸம்ஸ்க்ருதத்தில் ரொம்ப ஜாஸ்தி. அந்த பாஷையில் ப்ரோஸிலேயே வார்த்தைகளை ஸஹஜமாக இடம் மாற்றிப் போடுவதுண்டு. பொயட்ரியிலோ கேட்கவே வேண்டாம். 'மீட்ட'ரை உத்தேசித்தும், ஒலி நயத்தை உத்தேசித்தும் வார்த்தைகளை எப்படியெல்லாமோ இடம் மாற்றிப் போடுவதுண்டு.

இந்த வகையில் 'ஏவ' என்பது 'மாம்' என்பதை ஒட்டியிருந்து 'மாமேவ' என்று வந்தாலும், அர்த்தத்தில் அது 'மாம்' என்பதைத் தழுவி "என்னையே" என்று பொருள் கொடுப்பதாக வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. முந்தின வரியில் 'வந்தநாநி' என்று வருகிறதல்லவா? அதையே இந்த 'ஏவ' தழுவுகிறதென்று அர்த்தம் செய்து கொண்டுவிட்டால் எல்லாம் ஸரியாகிவிடும். அதாவது வார்த்தைகளை அடுக்கியுள்ள முறையில் 'மாம் ஏவ' என்று இருந்தாலும், அர்த்தத்தைப் பார்க்கும்போது இந்த 'ஏவ' என்பதை 'வந்தாநாநி' என்பதோடு ஒட்டிவைத்து 'வந்தநாநி ஏவ' என்று பொருள் கொள்ள வேண்டும். அப்போது, "அம்மா! நீ பலவிதமான ஸம்பத்துக்களைத் தருபவளானாலும் எனக்கு அவற்றில் வேறெதுவும் வேண்டாம் (நாந்யே); வந்தனங்கள் மாத்திரமே வேண்டும். நமஸ்காரஸ்ரீ மட்டுமே என்னை வந்தடைய வேண்டும்" என்று அர்த்தமாகிவிடும். "வந்தநாநி...மாம் ஏவ கலயந்து" என்று ச்லோகத்தில் இருந்தாலும் அதை "வந்தநாநி ஏவ மாம் கலயந்து" என்று வைத்துக்கொண்டு அர்த்தம் பண்ணிக்கணும். அப்போது, "வந்தன க்ரியை என்னை மாத்திரம் வந்தடையட்டும்" என்ற அபிப்ராயம் அப்படியே மாறி, "வந்தன க்ரியை மாத்திரம் என்னை வந்தடையட்டும்" என்றாகிவிடும்! மஹாலக்ஷ்மி, தாயார் வேறே எந்த அநுக்ரஹமும் செய்யவேண்டாம்; அவளை நமஸ்கரிக்கிற எண்ணமொன்றை மாத்திரம் அநுக்ரஹிக்க வேண்டும் என்றாகும். "கலயந்து" என்றால் 'வந்தடையட்டும்' என்று சொன்னேன். இது ஒன்றுதான் அதற்கு அர்த்தமென்றில்லை. 'கல்' என்பது அதற்கு தாது. அதற்கு அநேக அர்த்தங்கள். இதன்படி "கலயந்து" என்பது "வந்து சேரட்டும்" என்று ஸாதாரணமாகச் சொல்வதிலிருந்து "ஆட்கொள்ளட்டும்" என்று பரவச பாவமாக உசத்திச்

சொல்லும்வரை அர்த்தம் கொடுக்கும். வந்தனக்ரியை தம்மை அப்படியே கெட்டியாகப் பிடித்துக் கொள்ளட்டும் என்று சொல்லவே ஆசார்யாள் "(வந்தநாநி மாம்) கலயந்து" என்று பதப்ரயோகம் செய்திருக்கிறார்.
ஆசார்யாள் தமக்காக இன்றி நமக்காக வேண்டிக் கொள்வதுதான் இது. எப்படி வேண்டிக்கொள்ள வேண்டும் என்று நமக்குச் சொல்லிக் கொடுப்பதுதான் இது. "நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே" என்ற மாதிரி, "வந்தனம் என்ற ப்ரக்ரியையை நான் விட்டாலும், அது என்னை விடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டும்" என்று நமக்கு வழிகாட்டவே ஆசார்யாள் ப்ரார்த்தனை பண்ணிக் கொண்டிருக்கிறார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

### மூவுலக குரு

மஹாலக்ஷ்மியை "த்ரிபுவநைக குரோஸ் தருணி" என்று இந்த ஸ்தோத்ரத்தில் ஓரிடத்தில் அவர் சொல்லியிருக்கிறார். "மூவுலக குருவின் ப்ரிய பத்னி" என்று அர்த்தம். குரு என்றால் ஆசார்யர், தகப்பனார் என்று இரண்டு அர்த்தம். இவளைத் தாயார், தாயார் என்கிறதற்கேற்ப மஹாவிஷ்ணுவைத் தகப்பனாராகக் கருதி 'குரு' என்று சொல்லியிருக்கலாம். த்ரிபுவனங்களுக்கும் இவர்கள் தாய்தந்தையர் என்ற அர்த்தத்தில் சொன்னதாகக் கொள்ளலாம். ஆனால் தாயார் ஸந்நிதி, அம்மன் ஸந்நிதி என்று லக்ஷ்மி, பார்வதி ஸந்நிதிகளைச் சொல்வதுபோலப் பெருமாள், ஈச்வரன் ஸந்நிதிகளைத் தகப்பனார் ஸந்நிதி, அப்பன் ஸந்நிதி என்று சொல்லும் வழக்கம் அதிகமில்லை. மலையாளத்தில் மட்டுந்தான் குருவாயூரப்பன், வைக்கத்தப்பன், ஐயப்பன் என்பது. ஆகையால் லோக குரு, ஜகத்குரு என்பதுபோல 'த்ரிபுவந குரு' என்ற மஹா ஆசார்யனாக மஹாவிஷ்ணுவைக் கருதியே அவனுடைய பத்னியை 'த்ரிபுவந குரோஸ் தருணி' என்று சொன்னதாகக்

கொள்வதும் ஸரியாயிருக்கும். பகவான் க்ருஷ்ணனாகவும் நம்முடைய பகவத் பாதர்களாகவும் அவதரித்த காலங்களில் நர சரீரத்தில் அவதாரம் செய்ததால் இந்த நரலோகத்துக்கே குருவாயிருந்து "லோக குரு" என்று பெயர் வாங்கினான். நாராயணனாக திவ்ய சரீரத்திலிருக்கும்போது நரர், ஸுரர், அஸுரர் ஆகிய எல்லோருக்கும் பலவேறு ஸந்தர்பங்களில் உபதேசம் செய்து த்ரிலோக குருவாக இருந்திருக்கிறார். அவருடைய பத்னி லக்ஷ்மி. அவளுக்கு ஸதா கால நமஸ்காரமென்றால், பதியை நீக்கிப் பண்ணமுடியாது. "தம்பதியா நில்லுங்கோ, நமஸ்காரம் பண்றேன்" என்று சொல்வதுதான் சாஸ்த்ர வழக்கு. அதனால் த்ரிலோக குருவுக்கும் எப்பவும் நம் நமஸ்காரம் இருக்கணும். த்ரிலோக அதிபதியான பரமேச்வரனாகவும் லோகமெல்லாம் அடிபட்டுப்போன நிலையிலுள்ள பரப்ரம்மாகவும் நமக்கு இருப்பவர் நம்முடைய குருவேதான். த்ரிலோக குரு என்று வேறே எவரையோ தேடிப்போக வேண்டாம். இவர் ஒரு புது மாதிரியான த்ரிமூர்த்தியாகவும், ஒரு புது பரப்ரஹ்மமாகவும் இருப்பதால் நமது பரம நன்றி நமஸ்காரங்களுக்கு உரியவராகவும் அவற்றால் எட்ட முடிபவராகவும் இருக்கிறார். ஆனபடியால், நமஸ்தே நமஸ்தே நமஸ்தே நமோஸ்து என்று அநேக ஸ்தோத்ரங்களில் வருவதுபோல அவருக்கு வந்தனம் செய்து கொண்டிருப்போம்! துரிதோத்தரணம் பண்ணுவதொன்றையே கார்யமாகக் கொண்டுள்ள அவருக்குரித்தான நமஸ்காரமே நமக்கு மிகப் பெரிய செல்வமாக நம்முடன், நம் உள்ளுக்குள், இருந்து ரக்ஷித்துக் கொண்டிருக்கட்டும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

## குரு வந்தனை-நிந்தனை : அம்ருதம்-விஷம்

கேள்வியும் பதிலுமாக அநேக விஷயங்களை "ப்ரச்னோத்தர ரத்ந மாலிகா" என்ற நூலில் ஆசார்யாள் உபதேசித்துக்கொண்டு வருகையில் "எது விஷம்?" என்று

ஒரு கேள்வி. "கிம் விஷம்?" அவதீரணா குருஷு என்று அதற்கு பதில் கொடுத்திருக்கிறார். குருவிடத்தில் அவமரியாதை காட்டுவதுதான் விஷம் என்று அர்த்தம். "அவதீரணா" என்றால் அவமரியாதை. இதையே திருப்பி வைத்தால் மரியாதை பண்ணுவது, அதாவது மனஸார நினைத்து நமஸ்காரம் பண்ணுவதுதான் நமக்கு அம்ருதம். ('ப்ரச்நோத்தர ரத்நமாலிகா' ச்லோகங்களைச் சொல்லிப் பார்த்துக் கொண்டு) 'விஷம் என்ன?' என்ற மாதிரியே, 'அம்ருதம் என்ன?' என்றும் கொஞ்சம் தள்ளிக் கேள்வி வருகிறது. ஆனால், 'அம்ருதம் என்ன?' என்று பொதுவாகக் கேட்காமல் 'காதுக்கு அம்ருதம் என்ன?' என்று கேட்கிறார். 'கர்ணாம்ருதம்' என்கிறோமே, அப்படி. "பாதும் கர்ணாஞ்ஜலிபி : கிம் அம்ருதம்?"
"கர்ணாஞ்ஜலிபி:"-காது மடல்களால்; "பாதும்"-குடிப்பதற்கு; "கிம் அம்ருதம்"-எது அம்ருதம்? காது மடல் குவிந்து ஒரு தொன்னை மாதிரிதானே இருக்கிறது? தொன்னையால் பாயஸம் சாப்பிடுவது போல இந்தக் காது மடலில் எந்த அம்ருதத்தை ரொப்பிக்கொண்டு உள்ளே ஹ்ருதயத்துக்கு அனுப்பி வைக்கணும்?
இப்படிக் கேட்டுவிட்டு பதிலாக "ஸதுபதேச". என்கிறார். குரு அளிக்கும் நல்ல உபதேசம்தான் அப்படிப்பட்ட அம்ருதம் என்கிறார். எது அம்ருதம் என்று பொதுவாகக் கேட்காமல் காதுக்கு எது அம்ருதம் என்று குறிப்பிட்டுச் சொன்னதில் நமக்கு ஆதரவாக ஒரு விஷயம் கிடைக்கிறது. என்ன பார்த்தோம்? குரு நிந்தைதான் விஷம் என்று பார்த்தோம். அப்படியானால் அதன் ஆப்போஸிட்டான குரு வந்தனம்தான் விஷத்துக்கு ஆப்போஸிட்டான அம்ருதம் என்று முடிவு பண்ணினோம். ஆசார்யாளும் அப்படியேதான் முடிவு பண்ணி விட்டிருக்கிறார். "நிந்தனை விஷமென்றால் வந்தனைதான் அம்ருதம்; இது குழந்தைக்குக்கூடத் தெரிந்துவிடும்; ஆகையால் இவற்றில் ஒன்றை-விஷத்தை-சொன்னதே போதும். 'அம்ருதம் எது?' என்று இன்னொரு கேள்விபோட்டு பதில் சொல்லிக்கொண்டிருக்க வேண்டாம்" என்று தீர்மானம் செய்திருக்கிறார். அப்புறம் குருவின் உபதேசத்தைப்பற்றிச் சொல்ல வேண்டும் என்று நினைத்து, எந்தக் கேள்வியை எழுப்பி, அதற்கு பதிலாக "ஸதுபதேசம்" என்று சொல்லலாமென்று யோசித்திருக்கிறார். அப்போதுதான் "காதுக்கு எது அம்ருதம்?" என்று கேள்வி போடுவோமென்று

முடிவு செய்திருக்கிறார்.

கர்ணாம்ருதம் (காதுக்கான அம்ருதம்) என்று சொல்லாமல் 'கர்ணாஞ்ஜலியால் குடிக்கும் அம்ருதம்' என்று போட்டிருப்பதிலும் அர்த்தபுஷ்டி இருக்கிறது. கர்ணாஞ்ஜலி என்றால் காது மடல். இங்கே அஞ்ஜலி என்றால் மடல். கூம்பியிருக்கும் புஷ்பம் விரிவதை 'மடலவிழ்வது' என்கிறோம். கன்னத்தோடு மடித்துவைத்தால் கூம்பினாற்போலிருப்பது காதுமடல். அதை அவிழ்த்து, இப்போது நமக்கிருக்கிறது போல விட்டுவிட்டால் மடல் மலர்ந்து சப்தங்களை வாங்கிக் கொள்கிறது. அதனால்தான் கர்ணாஞ்ஜலி என்பது. அஞ்ஜலி என்று சொன்னால் பொது அர்த்தம் நமஸ்காரந்தானே? புஷ்பம் கூம்பிக் குவிந்த மாதிரி மனஸு குவிந்து பக்தி செய்யும்போது அதற்கு அடையாளமாகக் கைகுவித்து-"கைகூப்பி" என்றே வழக்கில் சொல்கிறபடி-நமஸ்காரம் செய்கிறோம். அப்போது கையின் 'ஷேப்' கூம்பின புஷ்பம் மாதிரியிருக்கிறது. 'அம்ருதம் என்றால் அது குரு வந்தனந்தான்; விஷம் குருநிந்தை என்றால் வேறு விதமாக இருக்கமுடியாது. அதனால்தான் 'காதுக்கு அம்ருதம்' என்று பாகுபடுத்திச் சொல்கிறார்' என்று பார்த்தோம். அதையும் இன்னம் நயமாகக்கொண்டு போய்க் கர்ண அஞ்ஜலிக்கு அம்ருதம் என்று சொல்லியிருப்பதில், 'அஞ்ஜலி' என்ற வார்த்தையையும் போட்டு நமஸ்காரம்தான் அம்ருதம் என்பதை நன்றாகவே உறுதிப்படுத்திவிட்டார் என்று தோன்றுகிறது. 'நமஸ்காரமாகிய அஞ்ஜலியே பொதுவாக உயிருக்கு அம்ருதம். கர்ணஞ்ஜலிக்கு அம்ருதமாயிருப்பது குரு அருளுகின்ற ஸதுபதேசம்' என்று ஆசார்யாள் காட்டியிருப்பதாகத் தெரிந்துகொள்கிறோம்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

குரு மூர்த்தியும் த்ரிமூர்த்தியும்

குருவின் 'முயற்சி' உத்தரணத்தைக் குறிப்பதே

ஒன்றிலிருந்து ஒன்று அபிப்ராயங்கள் சுவடு விட்டுப்

போய்க்கொண்டிருப்பதில், இப்போது 'ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா'வைக் கிளறிப் பார்த்ததில், இதுவரை நாம் பார்த்த துரிதோத்தரண ஸமாசாரமாகவும் இன்னொரு விஷயம் வந்திருக்கிறது. (சிரித்து) உள்ளேயிருந்து இன்னொரு விஷயத்தைப் பிடித்து இழுத்து வெளியே கொண்டுவந்து "உத்தரணம்" பண்ணியிருக்கிறது!

இதில் ('ப்ரச்நோத்தர ரத்ந மாலிகை'யில்) ஆரம்பம், 'எது ஏற்கத்தக்கது?' என்பதுதான். அதாவது எதை ஆதாரமாக எடுத்துக்கொண்டு அதன்மேல் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளவேண்டும் என்ற கேள்விதான்: கிம் உபாதேயம்?

பதில், "குருவசனம்."

அப்புறம், "குரு யார்?" என்று கேள்வி: கோ குரு:?

பதில் கொஞ்சம் நீளமாகவே வருகிறது: "அதிகத-தத்த்வ:, சிஷ்யஹிதாயோத்யத: ஸததம்."

"அதிகத தத்த்வ:" என்றால் தத்வார்த்தங்களைக் கற்றுணர்ந்தவர், அவற்றில் அநுபவம் பெற்றவர் என்று அர்த்தம்.

அப்புறம்தான் நம் ஸமாசாரம்-துரிதோத்தரணம்-வருகிறது: "ஸததம்"-ஸதா காலமும்; "சிஷ்ய ஹிதாய"-சீடர்களின் நலனுக்காக; "உத்யத:"-முயன்று கொண்டிருப்பவர், முனைந்து வேலை செய்து கொண்டிருப்பவர். முன்பே சொன்ன விஷயந்தான்-குரு என்றால் தாம் கற்றறிந்து அநுபவித்தவராக இருப்பதோடு, மற்றவர்களுக்கும் அந்த அறிவையும் அநுபவத்தையும் ஊட்டி அவர்களுக்குப் பரம ஹிதத்தைச் செய்பவராக இருக்கவேண்டும். இந்தப் பணியிலேயே அவர் ஸததமும் முனைந்து முயற்சி பண்ணிக் கொண்டிருக்கவேண்டும். "உத்யத:" என்பதற்கு அதுதான் அர்த்தம்-கவனமாக, வலுவாக முயற்சி பண்ணுவது. ("கநகதாரா ஸ்தவ"த்தில்) 'துரிதோத்தரண'த்தைச் சொல்கிறபோதும், "உத்யத" என்ற இந்த வார்த்தையையே போட்டிருக்கிறார்: "துரிதோத்தரணோத்யதாநி", அதாவது, "துரித உத்தரண உத்யதாநி."

நமஸ்காரம் என்ற க்ரியை செய்யும் பல காரியங்களில், (துரிதம் என்கிற) பாபங்களை (உத்தரணம் என்பதாக) உள்ளேயிருந்து பிடுங்கி எடுப்பதில் முனைப்பாக முயற்சி பண்ணுவதே முடிவாக வருவது என்று காட்டியிருக்கிறார். இங்கே மட்டுந்தான் 'ச்ரமப்பட்டு முயலுவது' என்று

பொருள்படும் "உத்யத" போட்டிருக்கிறார். மற்ற காரியங்களை நமஸ்காரம் ச்ரமப்பட்டு முயற்சி செய்து ஸாதிக்கவில்லை. ஸுலபமாக, அநாயாஸமாக ஸாதித்துவிடுகிறது. நமஸ்காரங்கள் ('வந்தநாநி') என்று பன்மையில் சொல்லும் ஆசார்யாள் முதலில் அவற்றை "ஸம்பத்கராணி" என்கிறார். "ஸம்பத்துக்களை உண்டாக்குபவை" என்று 'ஈஸி' வேலையாகச் சொல்லிவிடுகிறார். 'முயன்று' உண்டாக்குவதாகச் சொல்லவில்லை. இதேபோல, அடுத்தபடி, "ஸகலேந்த்ரிய நந்தநாநி"-"எல்லாப் புலன்களுக்கும் இன்பமாக, இன்பம் தருவனவாக, இருப்பவை" என்னும் போதும் 'பாடுபட்டு முயன்று' என்று சொல்லவில்லை. அதற்கப்புறம், "ஸாம்ராஜ்யதாந நிரதாநி": பெரிய ராஜ்யத்தையே வழங்க வல்லனவாக இருப்பவை. "நிரத" என்றால் ஸந்தோஷமாக ஒரு கார்யத்தில் ஈடுபட்டிருப்பது. ச்ரமப்பட்டு முயன்று செய்வதல்ல. 'அதற்கு' ஆப்போஸிட். பக்தனை ராஜாவாகவே தூக்கி வைப்பதுகூட நமஸ்காரத்தின் சக்தியில் ஸந்தோஷமாகச் செய்யும் அநாயாஸமான கார்யமாகவே இருக்கிறது.

இப்படி இஹலோக விஷயங்களை ஈஸியாக முடித்த பிறகுதான் கடைசியில் வருகிறது, பரலோகத்துக்கான துரிதோத்தரணம். இங்கே மட்டுந்தான் "உத்யதாநி" என்று போட்டிருக்கிறார். ஒருத்தனுக்குள்ளே ஜன்மாந்தரமாகப் போய்ச் சொருகிக்கொண்டிருக்கும் பாபத்தையெல்லாம் நெம்பி இழுத்துப் போடுவது என்பது நமஸ்கார க்ரியையின் மஹாசக்திக்கும் ஈஸியாக இருந்துவிடவில்லை என்று காட்டியிருக்கிறார்.
அதன் சக்தியைக் குறைத்து நினைப்பதற்காக இப்படி "உத்யதாநி" என்று போடவில்லை. நாம் எத்தனை பாபத்தை, துஷ்கர்மத்தைப் பண்ணி அவற்றின் வாஸனை நமக்குள் ஆழமாக வேரோட விட்டிருக்கிறோம் என்று புரிந்து கொள்வதற்காகவே இப்படிச் சொல்லியிருக்கிறார்.
இங்கே ('ப்ரச்நோத்தர ரத்நமாலிகா'வில்) சிஷ்யனின் ஹிதத்துக்காக பாடுபட்டு முயற்சி பண்ணுபவர் ("உத்யத:") குரு என்கிறார். 'ஹிதம்' என்பது என்ன? சீடனின் நலம். அந்த 'நலம்' என்ன? அவனுடைய கர்மாவை நிவ்ருத்தி பண்ணுவதுதான். ஸம்ஸார நிவ்ருத்திக்கு இதைத் தவிர வேறு வழியே இல்லை.குருவை ஒரு சீடன் எந்த முடிவான லக்ஷ்யத்திற்காக அடைகிறானோ அந்த நித்யானந்தத்தை

அவன் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டால்தான் பெறமுடியும். தன்னுடைய கர்மாவிலிருந்து அவன் விடுபட்டால்தான் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடமுடியும்.
கர்ம நிவ்ருத்தி என்பதுதான் பாப நிவ்ருத்தி, அதாவது துரிதோத்தரணம்.
நமஸ்கார சக்தியானது முனைந்து முயன்று துரிதோத்தரணம் செய்வதாகச் சொன்ன அதே ஆசார்யாள், சிஷ்ய ஹிதத்துக்கு ஸதாகாலமும் குரு முனைப்பாக முயன்றபடியிருக்கிறார் என்று சொல்லும்போது, இந்த குரு செய்வதும் துரிதோத்தரணம்தான் என்று ஆகிறது.
நாம் செய்யும் நமஸ்காரம் அவருக்குள்ளே உள்ள அநுக்ரஹ சக்தியைத் தூண்டி, அது நமக்குள்ளே போய்ச் சொருகிக் கொண்டுள்ள பாபங்களையெல்லாம் தோண்டியிழுத்து வெளியில் தள்ளும்படிச் செய்கிறது. ஸம்பத், ஸாம்ராஜ்யாதிகளுக்காக லக்ஷ்மியிடம் போக வேண்டுமென்றும், பாப நிவாரணத்துக்கு குருவிடம் போக வேண்டுமென்றும் நடைமுறையில் ஏற்பட்டிருக்கிறது.
அதனால் ஆசார்யாள் மஹாலக்ஷ்மியிடம் பிரார்த்தித்ததையே நாம் கொஞ்சம் மாற்றி குருவிடம் பிரார்த்திக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். "எங்களுடைய துரிதங்களை உத்தரணம் செய்வதற்காக அயராமல் பாடுபடும் தங்களுக்குச் செய்யும் நமஸ்காரமே எங்களைவிட்டு என்றும் நீங்காத நிதியாக இருக்கவேண்டும்" என்று ப்ரார்த்தித்து, திரும்பத் திரும்ப நமஸ்காரம் பண்ணிக்கொண்டு, அவருடைய அநுக்ரஹமான கனகதாரையைப் பெற்று ஆனந்தமாக, பஞ்சு மாதிரி லேசாக, ஆகிவிடவேண்டும்.
ஆசார்யாள் "மாதா!" என்று கூப்பிட்டுச் சொன்னதையே, "குரோ!" என்று மாற்றிக்கொண்டு, "எங்களுக்கு வேறே எதுவும் வேண்டாம்! உங்களை நமஸ்காரம் பண்ணுவது என்பது மட்டும் எங்களுடைய ஸொந்த ஸொத்தாக ஆகிவிடவேண்டும். வேறே எந்த உடைமையும் வேண்டாம். வந்தன ப்ரக்ரியை எங்களை விடாமல் இருக்க வேண்டும். அவ்வளவுதான். சரீரத்தை கீழே கிடத்தி, ஹ்ருதயத்தைத் தங்கள் சரணாரவிந்தங்களில் அர்ப்பணித்து நாங்கள் செய்கிற இந்த நமஸ்காரத்தால் பெறுகிற அநுக்ரஹத்துக்கு மேலே ஸொத்து, உடைமை எதுவுமில்லை" என்று ப்ரார்த்தித்து, அப்படியே நிறைந்து இருந்துவிட வேண்டும்.
தஸ்மை ஸ்ரீ குரவே நம:

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

### ப்ரவ்ருத்தி- நிவ்ருத்தி

இரண்டாயிரம், இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முந்தி நம்முடைய தேசத்தின் நிலைமை ரொம்பவும் சீர்கெட்டுப் போயிருந்தது. அநாதி காலமாக வேதோக்தமான வழி நம் தேசத்திலிருந்து வந்திருக்கிறது. ஸநாதன தர்மம் என்று அதற்குப் பேர். வேதத்தை அநுஸரித்து ஏற்பட்டதால் அதற்கு வைதிக மதம் என்றும் பேர் சொல்லலாம். அப்புறம் பஹு காலம் கழித்துதான் அந்நிய தேசத்தினர்கள் ஹிந்து மதம், ஹிந்து மதம் என்று அதற்குப் பேர் கொடுத்து சொல்லி நாமும் அவர்கள் வைத்த பெயரையே சொல்லிக்கொண்டிருக்கிறோம். இதற்குப் பேர் ஸநாதன தர்மமென்றோ, வைதிக மதமென்றோகூட நம்முடைய மதத்திற்கு ஆதாரமாக இருக்கப்பட்ட நூல்களில் எதிலும் சொல்லியிருக்கவில்லை. வேறே மதங்களில்லாமல் இது ஒரே மதம்தான் அநாதி காலமாக இருந்துவந்ததால் இதற்கு ஒரு பேர் கொடுக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. அப்புறம் மேற்கு தேசங்களிலிருந்து வந்தவர்கள் நம்முடைய பாரத தேசத்தில் முதலில் ஸிந்து நதியைத்தான் கடக்க வேண்டியிருந்ததால், ஸிந்தவை Indus-ஆக்கி, அப்படியே அதைச் சேர்ந்து வரும் பாரத தேசத்துக்கும் India என்று பேர் கொடுத்து, அதன் ப்ராசீனமான மதத்தை Hinduism என்றும், அதைப் பின்பற்றும் நம் எல்லோரையும் Hindus என்றும் சொல்ல ஆரம்பித்து, இந்தப் பெயர்களே நிலைத்து விட்டன. வேதங்கள் வகுத்துள்ள இந்த ஸநாதன தர்மத்தில் இரண்டு மார்க்கங்கள்-ப்ரவ்ருத்தி மார்க்கமென்றும், நிவ்ருத்தி மார்க்கமென்றும். லோக வாழ்க்கையை நன்றாக, தர்மமாக நடத்துவதற்கு ப்ரவ்ருத்தி மார்க்கம். லோக வாழ்க்கையை விட்டுவிட்டு, அதை முடித்து விட்டு பரமாத்மாவோடு ஐக்யமாகி ஜனன மரணத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு நிவ்ருத்தி மார்க்கம். தர்மமாக, அதாவது தனக்கும்

நல்லதாகவும், ஜன ஸமூஹத்துக்கும் நல்லதாகவும் வேத விதிப்படி இல்லற வாழ்க்கை நடத்தி, வர்ணாச்ரம வியவஸ்தைகளை அநுஸரித்து கர்மாநுஷ்டானங்களைச் செய்வதுதான் ப்ரவ்ருத்தி மார்க்கம். இதிலே கர்மாநுஷ்டானம் எவ்வளவு நன்றாகச் செய்கிறோமோ, அந்த அளவுக்குப் புண்யம் கிடைத்து, புண்ய பலனாக ஸ்வர்கம் என்ற இன்ப லோகத்தில் வாஸம் கிடைக்கும். ஆனால் அந்த இன்பம் சாச்வதமல்ல. அந்த இன்பத்தை அநுபவிக்க அநுபவிக்க நம்முடைய புண்ய 'பாலன்ஸ்' குறைந்துகொண்டே வரும். முழுக்க அது தீர்ந்தவுடன் "புநரபி ஜனனம்" என்கிறபடி மறுபடி இந்த மண்ணுலகிலேயே பிறக்க வேண்டியதுதான். ஆனாலும் வேத தர்மப்படி (பூர்வ ஜன்மத்தில்) செய்ததால் இது நல்ல பிறவியாக, நல்ல வசதிகள் வாய்த்த பிறவியாக இருக்கும். இந்தப் பிறவியலும் தர்மம் தப்பாமல் வாழ்க்கை நடத்தினால் மறுபடி ஸ்வர்க்க போகம். ஆனாலும், (முன்பு) சொன்னமாதிரி, இந்த போகம் சாச்வதமல்ல.
சாச்வதமல்ல என்பது ஒரு பக்கம். அதோடுகூட அநுபவிக்கு ம்போதேகூட இந்த இன்பம் பூர்ணமான நிறைவைத் தருவதாக இருக்காது. 'இனிமேலே எதுவும் வேண்டாம்! இந்த நிலை நிரந்தரமாக வாய்த்து விட்டதல்லவா? இதிலிருந்து கொஞ்சங்கூட விலகுவதற்கில்லை. இனியொரு குறை நமக்குக் கிடையாது' என்று எப்போது ஆக முடியுமோ அப்போதுதான் நிறைவான பூர்ணானந்தம். பூலோகம், ஸ்வர்கம் ஆகிய இரண்டிலுமே எத்தனைதான் ஸந்தோஷமிருந்தாலும் அது இப்படிப்பட்ட நிறைந்த ஆனந்தத்தைத் தரமுடியாது. பல தினுஸான பயம், துக்கம், காமக்ரோதாதி இழுபறிகள் இல்லாமல் இந்த லோகங்களில் இருந்துவிட முடியாது. இந்த இன்பங்களைப் பெறுவதற்காக ஓயாத முயற்சியும் பண்ணிக்கொண்டே தானிருக்க வேண்டும். அதாவது போராடிக் கொண்டேதானிருக்க வேண்டும்.

அது மட்டுமில்லை. இந்த இன்பங்கள் நம்முடைய உள்ளாழத்தில் நாம் என்னவாக இருக்கிறாமோ அதை த்ருப்தி பண்ணுமா? பண்ணவே பண்ணாது. ஏதோ கண்ணுக்கு, காதுக்கு, வாய்க்கு, இன்னம் ஸ்பர்சாதிகளுக்கும், மனஸுக்கும், அறிவுக்குங்கூட இன்ப அநுபவம் இருக்குமேயொழிய, இதற்கெல்லாமும் உள்ளே, நம்முடைய அந்தஃகரணத்துக்கும் உள்ளே இருக்கப்பட்ட ஆத்மாவுக்கு

இவற்றிலே கொஞ்சமும் ஸுகாநுபவம் இருக்காது. இன்பங்களை அநுபவிக்கிற நமக்கே அப்பப்போ ஒரு தீர்க்கமான யோசனை வரும்போது, 'இது என்னது? நம்மிலே ஸாரபூதமாக உள்ளேயிருக்கிற ஏதோ ஒன்றுக்கு ஒரு நிறைவையும் பெறாமல், வெளிமட்டத்தில் ஸௌக்யம், இன்பம் என்று அஸ்திரமான (நிலையற்ற) எதையோ தேடிக்கொண்டு போய்ப் பைத்தியம் மாதிரி என்னென்னவோ பண்ணி த்ருப்திப்படப் பார்க்கிறோமே!' என்று தோன்றும். பூர்ணமான உள்நிறைவைத் தருவது நிவ்ருத்தி மார்க்கம்தான். கர்மாக்களை விட்டு, ஜன ஸமூஹத்தை விட்டு ஸந்நியாஸிகி ஸதா காலமும் ஆத்ம சிந்தனை, த்யானம் என்று இருப்பவன்தான் ஆத்மா ப்ரஹ்மமே என்று அறிந்து அநுபவிப்பதான, நிறைந்த நிறைவான நிலையைப் பெறுவான். ஸமாதி என்று ஸாக்ஷாத்காரம் என்றும் சொல்லும் அந்த நிலையொன்றுதான் ஒரு முறை கிட்டினால் அப்படியே சாச்வதமாக இருப்பது. பேச்சு வழக்கில்கூட 'ப்ரம்மான ந்தமாயிருந்தது!' என்று நமக்குத் தெரியும் இன்பத்தைச் சொல்கிறோம்! வாஸ்தவத்தில் அந்த "ப்ரம்மானந்தம்" நிவ்ருத்தி மார்க்கத்தில் ஸித்தி பெற்றவனுக்குத்தான் தெரியும்! அது, ப்ரம்மம் என்று ஒன்றை இன்னொருவன் அநுபவித்து ஆனந்திப்பது அல்ல. ப்ரம்மம் என்ற ஆனந்தம்தான் ப்ரம்மானந்தம். இவன் (நிவ்ருத்தி மார்க்கத்தில் ஸித்தி பெற்றவன்) தானே அந்த ப்ரம்மம் என்ற ஆனந்தமாக ஆகிவிடுகிறான். அங்கேதான் பயமேயில்லை, துக்கமில்லை, காமமும் க்ரோதமும் போட்டு இழுக்கிறதும் இல்லை. ஓயாத முயற்சியும் வேண்டியிருப்பதில்லை. ஸித்தியடைவதற்கு முன்னாடி ரொம்பப் பாடுபடத்தான் வேண்டும். போராட்டம் என்றேனே, அது பெரிசாக இருக்கத்தான் செய்யும். ஆனால் ஒரு தரம் அந்த லக்ஷ்யத்தை அடைந்துவிட்டால் போதும். அப்புறம் அதிலிருந்து நழுவுவது, விலகுவது என்பது கிடையாது. "தில்லை வெளியிலே கலந்து விட்டாலவர் திரும்பியும் வருவாரோ?" என்று சொன்னது இதைத்தான். ஒரு தரத்துக்கு இரு தரமாக,

அநாவ்ருத்தி சப்தாத் அநாவ்ருத்தி சப்தாத் என்று "ப்ரஹ்ம ஸூத்ரம்" முடித்திருப்பதும் இதைத்தான் சொல்கிறது. ப்ரஹ்மஸூத்ரகாரர், "இது தாமே சொல்வதில்லை, ச்ருதியிலேயே (வேதத்திலேயே) இப்படி இருக்கிறது" என்றும் சொல்கிறார். 'சப்தாத்' -என்றால் சப்த ப்ரமாணம் என்பதான

ச்ருதியிலிருந்து என்று அர்த்தம். ச்ருதி சிரஸான சாந்தோக்ய உபநிஷத்தில் இப்படியே இரண்டு தடவை சொல்லி முடித்திருக்கிறது.
அதாவது, நிவ்ருத்தி மார்க்கத்தினால்தான் நித்யமான பேரின்பம் ப்ரவருத்தியில் பெறுவதெல்லாம் நச்வரமான (நிலையற்ற) சிற்றின்பம்தான்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**இருவித மக்களுக்கான இரு வழிகள்**

ஆனாலும் லோகம், ப்ரஜைகள் என்று ஈச்வரன் நாடகம் ஆடுவதில், 'ஸந்நியாஸிகப் போ; காட்டுக்குப்போய் மூக்கைப் பிடிச்சுக்கோ; அப்படியே 'ஆத்மா, ஆத்மா'ன்னு விசாரம் பண்ணி, அதிலேயே தோஞ்சு போ' என்றால் ரொம்பப் பேர் அதைக் கேட்கக் கூடியவர்களாக இல்லை. எல்லாவற்றுக்கும் காரணமான வஸ்துவைத் தெரிந்துகொண்டு-ப்ரஹ்மம், ப்ரஹ்மம் என்னும் அதுதான் தன்னுடைய ஆத்மா என்று தெரிந்துகொண்டு-அதிலேயே ஐக்யமாகிவிட வேண்டுமென்ற தாபம் பெருவாரியானவர்களுக்கு ஏற்படுவதேயில்லை. இந்தத் தாபத்திற்கு 'முமுக்ஷுத்வம்' என்று பெயர். 'விடுபட வேண்டும் என்று ஆசைப்படுவது' தான் முமுக்ஷுத்வம். அந்த ஆசையுள்ளவன்தான் முமுக்ஷு என்பவன். நிவ்ருத்தி மார்க்கம் என்று இத்தனை நாழி நான் சொன்னது ஞான மார்க்கம் என்று பொதுவில் சொல்லப்படுவதுதான். அதில் சொல்ல யோக்யதை பெற்ற அதிகாரி முமுக்ஷுக்கள்தான். ஜனத்தொகையில் அவர்கள் ரொம்பவும் கொஞ்சமாகவே இருப்பார்கள்.
மற்றவர்கள் ஏதாவது கார்யம் செய்வதில்தான் எப்போதும் ஈடுபட்டிருப்பார்கள். வெளி உபகரணங்கள், மற்ற மநுஷ்யர்கள் ஆகியவை இல்லாமல் கார்யமில்லை. இவற்றையெல்லாம் வைத்துக்கொண்டு எதையாவது பண்ணிக்கொண்டேயிருப்பதுதான் பெருவாரியான ஜனங்களின் ஸ்வபாவம். கர்மத்திலேயே பற்றுள்ள

இவர்களை 'கர்ம ஸங்கிகள்' என்று பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார். ஏனிப்படிக் கர்மா பண்ணிக் கொண்டிருக்கிறார்களென்றால், இவர்களுக்குப் பலவிதமான ஆசைகள் இருக்கின்றன. அவற்றை நிறைவேற்றிக் கொள்வதென்றால், அதற்காக ஏதோ உழைத்து, கிழைத்து, பிறத்தியானை ஏமாற்றி, கீமாற்றி ஏதாவது கார்யம் பண்ணித்தானேயாக வேண்டியிருக்கிறது? நாம்பாட்டுக்குச் சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தால், நாம் ஆசைப்படும் வஸ்து அதுவே நம் கையில் வந்து விழுமா?
வெளியிலிருந்து 'வரவேண்டும்' என்றில்லாமல், நம்மிடமே எப்போதும் ஸ்வயம் ஸித்தமாக இருக்கும் ஆத்மாவை அடையத்தான் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டுமே தவிர, பாக்கி எது வேண்டுமென்றாலும் கார்யம் பண்ணித்தானாக வேண்டும். இப்படிச் சொல்வதினாலேயே ஒவ்வொரு கார்யமும் பண்ணும்போது ஆத்மாவை விட்டுவிட்டு மேலும் மேலும் வெளியில் போய்க் கொண்டிருப்பதாக ஏற்படுகிறது 'ப்ர-வ்ருத்தி' என்றாலே அதுதான் அர்த்தம்; 'வெளியிலே போய்க்கொண்டேயிருப்பது' என்றே அர்த்தம்.
இதற்கு எதிர்ப்பதம் 'நி-வ்ருத்தி'. விட்டுவிட்டு வெளியிலே போவதற்கு எதிர் என்ன? இருந்த இடத்துக்கே திரும்ப வருவதுதானே? 'திரும்பி வருவது' தான் 'நிவ்ருத்தி' -ஆத்மாவுக்கே திரும்பி வந்துவிடுவது.
'ப்ரவ்ருத்தி' என்றால் கார்யத்தில் ஈடுபட்டிருப்பது என்றும், 'நிவ்ருத்தி' என்றால் கார்யத்துக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு இருப்பது என்றும் அர்த்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

பெருவாரியான ஜனங்கள் ஆத்மாவை விட்டு, கார்யத்தில் போகிறவர்களாகத்தானிருப்பார்கள் என்றால் அவர்களையெல்லாம், 'அப்படிப் போகப்படாது; சும்மா உட்கார்ந்து கொண்டு ஆத்ம விசாரம் பண்ணு' என்று பலவந்தம் செய்ய முடியுமா என்ன? பண்ணினாலுந்தான், அவர்களுக்காக அந்த ஆசை-முமுக்ஷுத்வம் என்ற ஆசை-லோக ஆசைகள் எல்லாம் போய் ஸத்ய வஸ்துவை அடைய வேண்டுமென்று மட்டுமுள்ள ஆசை-இல்லாதபோது என்ன பலன் இருக்கும்?
ஸரி, அதற்காக அவர்களை அப்படியே விட்டுவிடுவதா? அப்படிவிட்டால் அவனவனும் தன் துராசைகளுக்காகப்

பிறத்தியானை ஏமாற்றுவது, வயிற்றில் அடிப்பது என்று அல்லவா லோகமே சீர்குலைந்து போய்விடும்? ஈச்வரனுக்கு லோகம் ரஸமுள்ள நாடகமாயில்லாமல் அலங்கோலக் கூத்தாக அல்லவா ஆகிவிடும்? பின்னே என்ன செய்யலாம்? இதற்குத்தான் வேதமானது ப்ரவ்ருத்தியிலேயே போகக் கூடியவனுக்கு அவனுடைய போக்குக்கு ஏற்றதாக, ஆனால் அவன் இஷ்டப்படியெல்லாம் அதர்மமாகக் கார்யங்களைப் பண்ணவிடாமல், ப்ரவ்ருத்தி மார்க்கம் என்று தர்ம மயமாகக் காரியங்களை வகுத்துத் தருகின்ற கர்ம மார்க்கத்தையும், கார்யத்தை விட்டுச் செயலற்ற ஆத்மாவில் ஒடுங்க விரும்புபவனுக்கு நிவ்ருத்தி மார்க்கம் என்னும் ஞான மார்க்கத்தையும் போட்டுக் கொடுத்தது.

வேதம் போட்டுக் கொடுத்தது என்றால் என்ன அர்த்தம்? வேத மந்த்ர ரூபமாக ஈச்வரனே ரிஷிகள்மூலம் போட்டுக் கொடுத்தான் என்றுதான் அர்த்தம்.

இந்த இரண்டு விதமான ப்ரஜைகளும் அவனிடமிருந்து தானே வந்திருக்கிறார்கள்? அவர்களுக்கு நல்ல மார்க்கம் போட்டுக் கொடுக்க வேண்டியது அவனுடைய கடமை தானே? கர்ம ஸங்கிகளாகவே அதிகம் பேர் இருக்கிறார்களென்றால் அதுவும் அவனே அவர்களை அப்படி இருக்கும் படிப் பண்ணிப் போட்டிருப்பதால்தான்!

யத: ப்ரவ்ருத்திர்-பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் என்று கீதையில் சொல்லுகிற இடத்தில், எவனால் இது அனைத்தும் வ்யாபிக்கப் பட்டிருக்கிறதோ அந்த ஈச்வரனிடமிருந்தேதான் ஜீவர்களுக்கு ப்ரவ்ருத்தி என்பது ஏற்பட்டிருக்கிறது என்று ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதை ஆசார்யாள் பாஷ்யத்தில் மேலும் ஸ்பஷ்டமாக்கி ஈச்வரன் ஒரு ஜீவனுக்குள்ளே அந்தர்யாமியாக உட்கார்ந்து கொண்டே அதை ப்ரவ்ருத்தியில் ஈடுபடுத்துகிறான் என்று சொல்லியிருக்கிறார்.

முதலில் 'கர்மயோகம்' முதலான அத்யாயங்களில் சொல்லும்போது பகவான், ஜனங்கள் கர்மஸங்கிகளாக (அதாவது ப்ரவருத்தியிலேயே நாட்டமுடையவர்களாக) இருப்பதற்குக் காரணம் ப்ரக்ருதி, ப்ரக்ருதி என்றே சொல்லி வந்தார். ப்ரக்ருதி என்றால் மாயைதான். ஸரி, மாயை என்றால் அது மட்டும் தானே ஏதோ பண்ணுகிறதா என்ன? அந்த மாயையையும் உடையவனாக, அதற்கு யஜமானனாக ஈச்வரன்தான் இருக்கிறான். "ப்ரக்ருதி என்பது மாயை என்று

தெரிந்துகொள். அந்த மாயைக்கு ஸொந்தக்காரன்-மாயையின் யஜமானன்-மஹேச்வரன் என்று தெரிந்து கொள்" என்று ஒரு உபநிஷத்து சொல்கிறது. பகவானும் கீதையில் "மம மாயா துரத்யயா": "கடக்க இயலாததான என்னுடைய மாயை" என்றே சொல்லியிருக்கிறார். ஆகையினாலே ஈச்வரனேதான் அவனுடைய மாய லீலை நடக்கணுமென்றே கர்ம ஸங்கிகளாக ப்ரவ்ருத்தியில் போகிறவர்களையும் அப்படிப் பண்ணியிருக்கிறானென்று தெரிகிறது. ஜீவர்கள் அத்தனை பேருமே நிவ்ருத்தியில் போனால் என்ன ஆகும்? அவர்கள் ஞானத்தினால் மாயையை உடைத்தெறிந்துவிட்டு ஈச்வரனுடைய நிர்குணமான ப்ரஹ்ம ஸ்வரூபத்திலேயே ஐக்யமாகிவிடுவார்கள்.

அப்புறம் ப்ரபஞ்ச லீலை என்று எப்படி அவன் விளையாடிக் கூத்தடித்து ஸந்தோஷப்பட முடியும்? முதலில் ஸ்ருஷ்டியில் தோன்றிய ஸநகாதிகள் நிவ்ருத்தியில் போய்விட்டதால், அப்புறம் ப்ரஜாபதிகள் என்றே ஏகமாகப் பிள்ளை, குட்டிகளைப் பெற்று பூமியை ரொப்புவதற்காக மரீசி முதலான பத்துப்பேரை ப்ரஹ்மா ஸ்ருஷ்டித்தாரென்று பாகவதத்தில் பார்க்கிறோம். ஆகையினால் திவ்ய ஸங்கல்பமே லோகம் பூராவும் ஞானியாகப்போய், லோகத்தையே விட்டு விட்டுப்போய், அவனுடைய ட்ராமா ஸ்டேஜைக் காலியாக, பாழாகப் பண்ணிவிடக் கூடாதென்றுதான் இருக்கிறதென்று தெரிகிறது. ஆனாலும் அதற்காக ட்ராமாவில் நடிக்கிற எல்லாரையும் தறிகெட்டு அவரவர் இஷ்டத்துக்கு ஆக்ட் பண்ண விட்டு விடலாமா? இப்படிக் கூடாது என்றுதான், 'இந்த ஜனங்கள் ப்ரவ்ருத்தியில் போனாலும், நாம் வேடிக்கை பார்ப்பதற்காக அவர்களுக்குக் கொடுத்திருக்கிற கொஞ்சம் ஸ்வாதந்த்ரியத்தைக் கொண்டு ஒரே கோணா மாணாவாக ஒவ்வொருத்தரும் தன்னிஷ்டப்படியே பண்ணி, ஒட்டு மொத்தமான ஸமூஹவாழ்வு ஒழுங்கு கெட்டுப் போகும்படி ஆவதற்கு விட்டு விடக்கூடாது. இதுகள் தனி ப்ரஜைகளாகவும் ஒரேயடியாகத் தப்புப் பண்ணிப் பாபத்தில் மாட்டிக்கொள்ளவிடக் கூடாது. ட்ராமாவே இல்லாமல் எல்லாம் ப்ரம்மமாகவும் போகப்படாது; ட்ராமா ஒரே குழப்பமாகவும் போகப்படாது; ஒரேயடியாகத் தப்பு-தண்டா, அதற்காகப் பாபத்தில் மாட்டிக்கொண்டு பரிதவிப்பது என்றும் போகவிடப்படாது. கர்மாவினால் நித்யாநந்தந்தான்

நிச்சயமாக இல்லையென்றாலும், அதைப் புண்ய கர்மாவாகப் பண்ணுவதால் அடையக்கூடிய தாற்காலிகமான போக போக்யாதி ஆனந்தங்கூட இல்லை என்று ஜனங்கள் ஆக்கிக்கொண்டு ஒரே கஷ்டத்தில் அழுந்திவிடுவதற்கு விடப்படாது. தனி வாழ்க்கை, ஸமூஹ வாழ்க்கை எதுவானாலும் அதில் ஒரு ஒழுங்கு, அன்பு, அழகு, பரஸ்பர ஸஹாயம் எல்லாம் இருக்கும்படியாக-இத்தனையையும் சேர்த்து ஒரே வார்த்தையில் சொல்வதானால், தர்மமாக இருக்கும்படியாக-இவர்களுக்கு வழியமைத்துக் கொடுக்கவேண்டும்' என்று ஈச்வரன் பரம க்ருபையோடு நினைத்தே ப்ரவ்ருத்தி மார்க்கம் என்பதை வேதங்கள் வழியாக வெளிப்படுத்தினார். அவரவரும் ஸமூஹத்தில் ஈச்வரன் தங்களைப் பிறப்பித்திருக்கிற நிலைக்கு ஏற்ப இப்படியிப்படி ஸத்கார்யங்களாகப் பண்ணிக்கொண்டு போய், இந்த லோகத்திலே தாங்களும் ச்ரேயஸை அடைந்து, லோகமும் தங்களால் க்ஷேமமடையும் படியாகச் செய்துகொண்டு, அதற்கும் மேலான ஸ்வர்காதி புண்ய லோகங்களிலும் ஸந்தோஷத்தைப் பெறட்டும் என்று வழிபோட்டுக் கொடுத்தார். வேதத்தில் இந்த பாகத்துக்குக் கர்ம காண்டம் என்று பெயர். யஜ்ஞ கர்மாநுஷ்டானமெல்லாம் இதில் அடங்குவதுதான். நிவ்ருத்தி மார்க்கமாக மோக்ஷ ஸித்திக்கு அதே வேதத்தில் முடிவு பாகங்களிலுள்ள உபநிஷத்துக்கள் மூலமாக வழி போட்டுக் கொடுத்தார். அதற்கு ஞான காண்டம் என்று பெயர். அதில் தத்வோபதேசம் நிரம்ப இருக்கும்.

மோக்ஷம் வேறு, ஸ்வர்கம் வேறு. மோக்ஷம்தான் ஸம்ஸாரத்திலிருந்து நிரந்தர விடுதலை பெறும் ஸ்தானம். பரமசாந்தமான ஸ்தானம். ஸ்வர்கம் என்பது புண்யத்தின் அளவைப் பொருத்து, அது செலவழியும் காலம் வரையில் மாத்திரம், பலவித இந்த்ரிய இன்பங்களை மாத்திரம் கொடுக்கும் லோகம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## கர்ம மார்க்கத்தின் இருவித பலன்கள்

ஈச்வர வேதவாயிலாகப் போட்டுக் கொடுத்த கர்ம மார்க்கத்தில் ஒரு பெரிய விசேஷம் என்னவென்றால் : அப்பப்போ நமக்கே ஒரு யோசனை, 'இது என்னமோ ஓயாமல் ஒழியாமல் பண்ணிக்கொண்டிருக்கிறோமே! ஆனால் இதனாலே நமக்கு உள்ளே என்னவோ ஒன்று நிறையாமல், எல்லாம் ஏதோ மேலெழுந்தவாரியாக அல்ப ஸுகம் அநுபவித்துத் தீர்ந்து போகிறாற்போலத்தானே இருக்கிறது?' என்று வருகிறதென்று சொன்னேன். இப்படி ஒரு எண்ணம் வந்தாலும் உடனே பழக்க வாஸனை அதை நல்ல விரக்தி - வைராக்யமாக வளர வொட்டாமல் அமுக்கிப் போட்டு விடுகிறது. 'பழைய குருடி' என்று சேற்றுக் குட்டையிலேயே விழுந்து குழப்பிக்கொண்டு, 'நன்னாயிருக்கு, நன்னாயிருக்கு' என்று ஸந்தோஷப்படுகிறோம். நம்மாலே எதுவுமே செய்து கொள்ளமுடியாததாக ஒரு சாவு, பெரிய நஷ்டம் என்று ஏதாவது வந்தால் அப்போது மட்டும்-கார்யமே செய்கிற நாம் இதில் செய்துகொள்ள ஒரு கார்யமும் இல்லை என்பதாலோ என்னவோ-கொஞ்சம் வைராக்யமாயிருக்கிற மாதிரி இருப்போம். பிரஸவ வைராக்யம், ச்மசான வைராக்யம் என்பார்கள். ஆனால் அதுவும் நீர் மேல் எழுத்து என்கிற மாதிரி அடித்துக்கொண்டு போய் விடுகிறது. இப்படியே கொஞ்சம் கொஞ்சமாகப் 'பட்டு'க்கொண்டு போனால், பட்டுப் பட்டுக் கொஞ்சத்திலே கொஞ்சம் பக்வம் வரும். அந்த நிலையிலும் நம்மாலே கர்மாவைவிட முடியாதுதான். ஆத்மா-ப்ரஹ்மம்-ஞானம் என்று ஏகாந்தத்தில் போய் உட்கார்ந்து கொண்டு த்யான விசாராதிகள் பண்ணும் யோக்யதை வந்தால் தேவலையே என்ற எண்ணம் அடிவாரத்தில் உண்டாயிருக்கும் கார்யங்களில்தான் மனஸின் ப்ரவ்ருத்தி ('மனஸின் போக்கு' என்ற அர்த்தத்தில் சொல்கிறேன்) இருந்தாலும் அதை விட்டுவிட்டு ஞான விசாரம் பண்ண முடியாவிட்டாலும், 'கார்யம் விட்டால் தேவலை, ஞான விசாரத்திற்கான யோக்யதை வந்தால் தேவலை' என்று விருப்பம் உண்டாகும். இம்மாதிரியிருப்பவர்கள் கர்ம ஸங்கிகளில் அதிகம் பேர் இருக்கமாட்டார்கள். ஆனாலும் முமுக்ஷுக்களாக நிவ்ருத்தி என்றே தீவிரமாகப் போகிறவர்களைவிட நிறையப் பேருக்கு

இந்த எண்ணமாவது அடிப்படையில் இருக்கும். ப்ரவருத்தி மார்க்கத்தை உத்தேசித்து ஈச்வரனால் வேதத்தின் மூலம் கொடுக்கப்பட்ட அதே கர்ம காண்டத்தின் அநுஷ்டானம் இப்படிப்பட்டவர்களுக்கும் ஒரு பெரிய உபகாரத்தைச் செய்து, நிவ்ருத்தி மார்க்கத்திற்குப் பிற்பாடு ஒரு காலத்திலாவது போய்ச் சேருவதற்கு யோக்யதை உண்டாக்குகிற உபாயமாக அமைகிறது. பரமாத்மா அப்படி அமைத்திருக்கிறார். என்ன செய்திருக்கிறாரென்றால், தர்மமான இந்த சாஸ்த்ரோக்த கர்மாக்களைச் செய்தால் அது இரண்டு விதமான பலன்களைக் கொடுக்கும்படியாகச் செய்திருக்கிறார். இரண்டு விதமான லக்ஷ்யங்களை உத்தேசித்துக் கர்மாக்களைச் செய்யும் இரண்டு வகையான ஜனங்களுக்கு அவரவர் லக்ஷ்யத்தையும் நிறைவேற்றித் தருவதாக இரண்டு வித பலனை அமைத்திருக்கிறார்.

ஒரு வகை, பூலோக - ஸ்வர்க்க லோக இன்பங்களுக்கு மேலே எதையும் நினைக்காதவர்கள். இவர்கள் தாங்கள் விரும்பும் இன்பங்களுக்காகத் தங்கள் மனஸூப்படியெல்லாம் செய்தால் லோகத்துக்கும் கஷ்டம் விளைவித்துத் தங்களுக்கும் பாவத்தைத் தேடிக்கொள்கிறார்களே, அதனால் தங்களுக்கும் கஷ்டத்தை உண்டாக்கிக் கொள்கிறார்களே. தாங்கள் ஆசைப்படும் நச்வரமான இன்பங்களையும் அடையாமல் வீணாய்ப் போகிறார்களே என்றுதான் சாஸ்த்ரோக்தமாக கர்ம காண்டம், கர்ம மார்க்கம் என்று ஈச்வரன் போட்டுக் கொடுத்து. "அப்பா! உன்னாலே ஏதாவது கார்யந்தான் ஸதாவும் பண்ணிக்கொண்டிருக்க முடியும். நான்தான் உன்னை அப்படிப் படைத்திருக்கிறேன். உனக்கு நான் கொஞ்சம் ஸ்வாதந்திரியமும் கொடுத்திருக்கிறேன். வேடிக்கை பார்க்கணுமென்றுதான் இப்படியெல்லாம் செய்திருக்கிறேன். ஆனால் வேடிக்கையாக இல்லாமல் ஒரே வெறிக்கூத்தாக நான் பார்த்து, 'நம்ம ஸ்ருஷ்டி இப்படியாச்சே!' என்று நினைக்கும்படிப் பண்ணிவிடாதே! நீ இஷ்டப் படி கார்யம் செய்து உனக்கும் கஷ்டம், ஊருக்கும் கஷ்டம், எனக்கும் கஷ்டம் என்று ஆக்கிவிடாதே! இப்படி ஆகாமலிருக்க வழிதான் கர்ம காண்டம். உனக்குப் பிடித்த பூலோக-ஸ்வர்க்கலோக ஸௌக்யங்களை நிஜமாகவே உனக்குக் கொடுப்பதாக அதில் கர்மாக்களைத் தந்திருக்கிறேன். கார்யம் பண்ணுவதிலேயேதான் உன் ஸ்வபாவம் இருப்பதால் மனஸூப்படிப் பண்ணுவதை விட்டு,

இப்படி (சாஸ்த்ரத்தில் கொடுத்துள்ள கர்மாக்களைப்) பண்ண ஆரம்பி. இந்த மாதிரி கர்மானுஷ்டானம் செய்வதில் கஷ்டங்கள், ச்ரமங்கள், த்யாகங்கள், இருக்கத்தான் செய்யும். ஆனால், 'நம்மிஷ்டப்படி செய்தால் பின்னால் வருகிற கஷ்டங்கள் இதைவிட ரொம்பப் பெரிசாக அல்லவா இருக்கும்? அது, செய்கிற கொஞ்ச காலத்தில் ஸௌக்யமாயிருந்தாலும், செய்து முடித்தபின் நெடுங்காலம் ஏற்படும் விளைவுகள் பரம கஷ்டமாக இருக்கும். இது (வேத சாஸ்த்ர கர்மானுஷ்டானம், ஸ்வதர்ம பரிபாலனத்தில் செய்கிற ஒவ்வொரு கார்யமும்) செய்கிற கொஞ்ச காலம் ச்ரமமாகப் பல நியமம், த்ரவியத் தியாகம் என்றிப்படியிருந்தாலும், பலனே பஹுகாலம் ஸந்தோஷத்தைக் கொடுப்பதாக இருக்கிறதல்லவா? அதனால் நம்மைக் கொஞ்சம் ஸரிப்படுத்திக்கொண்டு ஈச்வராஜ்ஞைக்கு அடங்கி இப்படிப் பண்ணுவோம்' என்று ஒரு தீர்மானம் பண்ணிக்கொள்"- என்றே கர்ம மார்க்கத்தை வேதத்தின் வழியாக பகவான் விதித்திருக்கிறான். இது ஒரு வகையான ஜனங்களுக்கு. ஆத்மானுபவம், ஈச்வரானுபவம் ஆகியவற்றைப் பற்றி அலட்டிக்கொள்ளாமல், ஸந்தோஷமாக வாழ் ந்துகொண்டிருந்தால் போதும் என்று நினைக்கும் ஜனங்களுக்கு.

இன்னொரு வகை சொன்னேன். ஆத்மா என்று விசாரம் செய்யவோ, ஈச்வரன் என்று அப்படி உருகிப்போகவோ முடியாத வகைதான். ஆனாலும், 'செக்குமாடு மாதிரி இதென்ன சுற்றி சுற்றிக் கார்யம்? இதனாலே பெறுகிற இந்த ஸந்தோஷங்கள் தான் என்ன? உள்ளே ஒரு நிறைவைத் தரவில்லையே! அதைப் பெறவேண்டுமே! என்கிற எண்ணம் உள்ள ஜனங்கள். இவர்களுக்கும் கர்ம காண்டத்தின் ஸ்வதர்மானுஷ்டானங்களையேதான் ஈச்வரன் மார்க்கமாகக் கொடுத்திருக்கிறான். ஆனாலும் ஒரு வித்யாஸம். மேலே சொன்னபடி பூலோக-ஸ்வர்கலோக ஸந்தோஷங்களோடேயே த்ருப்திப் பெற்றுவிடுபவர்கள் ஸந்தோஷ ப்ராப்தி என்ற பலனை உத்தேசித்தே கர்ம மார்க்கத்தில் போகிறார்கள். ஈச்வரனே அந்த மார்க்கத்துக்கு இந்தப் பலன் உண்டு என்று வைத்திருக்கிறான். ஆனால், 'இந்தப் பலன் வேண்டாம். நச்வரமான இந்த ஆனந்தங்களில் எங்களுக்கு ஆசையில்லை. ஆனாலும் நிவ்ருத்தி மார்க்கத்தில் போவதற்கான சித்தப் பக்குவம் எங்களுக்கில்லை. ஏதாவது

கார்யம் பண்ணிக்கொண்டிருப்பதிலேயேதான் எங்கள் ஸ்வபாவம் இருக்கிறது என்பதாக இன்னொரு வகை சொன்னேனல்லவா, அவர்களுக்கும் அந்தச் சித்தப் பக்வத்தை சாஸ்த்ரோக்தமான கர்ம மார்க்கமே அளிக்கும்படியாக (ஈச்வரன்) வைத்திருக்கிறான். பலனை விரும்பிப் பண்ணினால் ஒரொரு ஸந்தோஷங்களைக் கொடுத்துவிட்டு அதோடேயே முடிந்து போய்விடும் கர்மாநுஷ்டானத்தையே, பலனை விரும்பாமல், 'இது ஈச்வராஜ்ஞை.

வேதம் வழியாக அவன் போட்டுள்ள ஆஜ்ஞை, அதற்காகவே அடங்கி அதை அநுஷ்டிக்கிறோம். ஆனால் இதனால் ஏற்படும் ஸந்தோஷ பலன் எதுவும் வேண்டாம்' என்று நினைத்து ஒருவர் செய்து கொண்டுபோனால் அது அவருக்குக் சித்த சுத்தியைக் கொடுத்துவிடும். ஸ்வய லாபம், தன் ஸொந்த ஸந்தோஷம் என்ற பலனில் ஆசையில்லாமல், அதாவது நிஷ்காம்யமாக, 'லோகம் ஒழுங்காக இருப்பதற்காக பகவான் வகுத்துக் கொடுத்திருக்கிற வழி, கார்ய க்ரமம், இது (கர்ம மார்க்கம்) என்பதற்காக மட்டும் அதன்படிப் பண்ணுவோம்' என்று ஒருவன் கர்மாக்களைப் பண்ண ஆரம்பித்தால், -தன்னலம் கருதாமலும், ஆசையின் அழுக்குப் படாமலும் பகவான் கட்டளைக்கு அடங்கி, 'அவனுடைய ப்ரீதிக்கே இதைச் செய்கிறேன் : 'பரமேச்வர ப்ரீத்யர்த்தம்' என்று ஸ்வதர்மப்படி ஒருவருக்கு ஏற்பட்டிருக்கும் அத்தனை கர்மாக்களையும் விடாமல் இழுத்துப் போட்டுக்கொண்டு பண்ண ஆரம்பித்தால்- அவனுடைய சித்தத்திலுள்ள தோஷங்களெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து மறைந்து போய்விடும். இப்படிப்பட்ட சித்த சுத்தி பெற்றபின் அவனால் கர்மாவை விடமுடியும். ஓயாமல் காரியம் என்று பறக்கும் ஸ்வபாவம் அடங்கிப் போகும். கொஞ்சங் கொஞ்சமாக த்யானம், விசாரம் என்று அதற்கப்புறம் நிவ்ருத்தி மார்க்கத்தில் போகமுடியும். கர்ம மார்க்கத்துக்கு இப்படி இரண்டு விதமான பலன், ஒன்று, கர்மாவினால் நேராக ஏற்படும் பூலோக-ஸ்வர்க லோக ஸந்தோஷ பலன். இன்னொன்று இந்தப் பலன் வேண்டாமென்று ஈச்வரார்ப்பணம் பண்ணிவிட்டு, அவனுடைய ஆஜ்ஞை என்பதற்காக மாத்திரம் பண்ணிக் கொண்டுபோனால் நாளடைவில் உண்டாகும் சித்த சுத்தி என்ற பலன். சித்த சுத்தி அதோடு முடிந்துபோவதில்லை.

நிவ்ருத்தி மார்க்கமென்கிற ஞானயோகத்தில் ப்ரவேசிப்பதற்கான யோக்யதையை அதுவே உண்டாக்குகிறது.

இரண்டு விதமான பலன் என்று நான் சொன்னாலும், வாஸ்தவத்தில் கர்ம பலன் என்றால் அது அந்தக் கர்மா நேராக பூலோக-ஸ்வர்க்க லோகங்களில் தரும் தாற்காலிக ஸந்தோஷங்கள்தான். இந்தப் பலன் வேண்டாமென்று நினைத்தபோதிலுங்கூட, கர்மா செய்யாமலிருக்க முடியவில்லையே என்பதாலும், விதிப்படி ஸ்வதர்மங்களைச் செய்வதால் நமக்கே ஒரு டிஸிப்ளின் உண்டாகிறது என்பதாலும், இதனால் ஸமூஹத்தின் ஒழுங்கான வாழ்க்கைக்கும் உதவ முடிகிறது என்பதாலுமே ஒருவன் கர்மா பண்ணும்போது அவனுக்குச் சித்த சுத்தி ஏற்படுகிறதென்றால் அந்தச் சித்த சுத்தி நேராக அந்தக் காரியங்களிலிருந்து பலனாக உண்டாகிவிடவில்லை.

காய்கறித் தோட்டம் போடுவதற்கு என்ன பலன்? கத்திரிக்காய் ஸாம்பார், வெண்டைக்காய் கறி இத்யாதி தானே? ஒருத்தருக்கு இந்த ஸாம்பாரும் கறியும் வேண்டியிருக்கவில்லை. ஆனாலும் அவருக்கு என்னவோ வேதனை-புத்ர சோகம், business-ல் loss மாதிரி என்னவோ ஒன்று. அது தெரியாமலிருக்க, வெட்டி, கொத்தி ஏதாவது கார்யம் பண்ணி மறக்கடிக்கலாமென்று காய்கறித் தோட்டம் போடுகிறார். அதற்காக, தோட்டம் போடுவதன் பலன் என்ன என்று கேட்டால், 'புத்ர சோக நிவ்ருத்தி' என்று சொல்லலாமா?

இப்படித்தான் ஒரு கர்மாவின் இஹாமுத்ர பலன் வேண்டாமென்று கர்மா செய்கிறவன் பெறும் சித்த சுத்தியைக் கர்ம பலனாகச் சொல்வதில்லை. அது ஈச்வர ப்ரஸாதமாக அவன் பெறுவதே. "நேர்ப் பலன் தனக்கு வேண்டாமென்றிருந்தும், நம்முடைய ஆஜ்ஞை என்பதாலும், ஸமூஹ ஒழுங்கை உத்தேசித்தும் நம்முடைய ப்ரீதிக்காகவே இவன் இவ்வளவு நன்றாகக் கர்மாநுஷ்டானம் செய்கிறானே! இந்த மனோபாவத்துக்காக இவனுடைய சித்தத்தின் அசுத்தங்களைப் போக்குவோம்" என்று ஈச்வரனே அநுக்ரஹிப்பதுதான் சித்த சுத்தி.

நேர்ப்பலன் என்பதைக்கூட கர்மாவே கொடுப்பதில்லை தான். ஜடமான கர்மா எப்படிப் பலன் தரமுடியும்? பல தாதாவான ஈச்வரன்தான் அதையும் கொடுக்கிறான். என்றாலும்,

அதிலேயே வித்யாஸம் பண்ணி, வெளி வஸ்துக்களாலேயே ஒருத்தனுக்கு ஏற்படும் பூலோக-ஸ்வர்க லோக பலன்களை மட்டும் கர்மாவின் நேர்ப் பலனாகவும், உள்ளேஅந் தஃகரணத்தில் ஜீவனுக்கு உண்டாகும் சித்த சுத்தியைத் தன்னுடைய ப்ரஸாதமாகவும் காட்டுகிறான். ஆகையால் சித்த சுத்தியைக் கர்ம பலன் என்று சொல்லும் வழக்கமில்லை. கீதாதி சாஸ்த்ரங்களிலும் கர்ம பலம், கர்ம பல த்யாகம் என்றெல்லாம் சொல்லும்போது இந்த அர்த்தத்தில்தான் சொல்லியிருக்கிறது. சித்த சுத்தி (என்பது) கர்ம பலனில்லை, (அது) கர்ம பலனைத் தியாகம் செய்வதாலேயே கிடைப்பது. ஞான மார்க்கத்தில் போகவும் யோக்யதை இல்லை, கர்மாவில் உண்டாகும் ஸந்தோஷங்களிலும் நிறைந்த நிறைவில்லை என்றிருக்கிறவர்களிடம் பகவான், "உன்னால் கார்யங்களை விடமுடியாததால், பண்ணிக்கொண்டே போ. ஆனால் பலனில் ஆசை வைக்காதே. பலத்யாமகம் பண்ணி, என் ப்ரீதிக்காகவே கர்மங்களை அநுஷ்டி. அதனால் கால க்ரமத்தில் சித்த சுத்தி உண்டாகும். அப்புறம் ஞான மார்க்கத்தில் பிரவேசிக்கலாம்" என்கிறார். கர்ம மார்க்கம் என்பது இங்கே கர்ம யோகம் என்றே உயர்வு பெற்று விடுகிறது. ஞான மார்க்கம் எப்போதுமே ஞானயோகம் தான். யோகம் என்றால் சேர்ந்திருப்பது, சேர்ப்பது. பரம ஸத்யத்தில் ஒரு ஜீவனைச் சேர்ப்பதற்கு உதவும் வழிகளை அத்யாத்ம சாஸ்திரங்களில் யோகம், யோகம் என்று சொல்லியிருக்கும். நேராக இவற்றில் ஒவ்வொன்றுமே முடிவான ஸத்ய லக்ஷ்யத்தில்கொண்டு சேர்த்துவிட வேண்டுமென்பதில்லை. மெயின் ரோடில் கொண்டுபோய்ச் சேர்க்கிற சந்து மாதிரி இருந்துவிட்டால்கூடப் போதும், இதுவும் யோகம்தான். லக்ஷ்யத்தில் நேரே சேர்ப்பது ஞானயோகம். அந்த மெயின் ரோடுக்குக் கொண்டுவிடுவது கர்ம யோகம். அதற்குப் பல ஜன்மா பிடித்தாலும் பிடிக்கும். ஆனாலும் ஒரு நாள் கொண்டு விட்டுவிடும்.

## காலப் போக்கில் கர்ம யோக நலிவு

ஸ்ருஷ்டி உண்டாகும்போதே, 'நம்முடைய ஸ்ருஷ்டியில் இத்தனைதானென்றில்லை, அத்தனை தினுஸான மனோபாவம் கொண்ட ஜீவர்களும் இருந்து, நமக்குப் பெரிய நாடக விநோதமாகப் பிரபஞ்சம் இருக்கணும். இதற்கு, ஜீவனுக்குக் கொஞ்சம் ஸ்வாதந்த்ரியமும் இருக்கணும். ஆனாலும் விநோதம் விபரீதமாகப் போகவிடப்படாது' என்று பகவான் நினைத்து ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி மார்க்கங்கள் என்ற இரண்டை வேத வாயிலாக வெளிப்படுத்தினான்.

ஆதி காலங்களில், பூர்வ யுகங்களில் ஜனங்கள் எவரெவர்களுக்கு எந்த மார்க்கமோ அதை எடுத்துக் கொண்டு ச்ரேயஸை அடைந்து வந்தார்கள். நிவ்ருத்தியில் சில பேர் போனார்கள். ப்ரவருத்தியில் மற்றவர்கள் ஈடுபட்டார்கள். ஒரு முக்யமான விஷயமென்னவென்றால்: ஜீவ ஸ்வாதந்த்ரியத்தை ரொம்பவும் இஷ்டப்படி ஓடவிடாமல் பூர்வ யுகத்து ஜனங்கள் ஸகலருமே ஈச்வரனுக்குக் கட்டுப்பட்டு, ஈச்வர ப்ரீதிக்காகவே செய்யணும் என்ற எண்ணமுடையவர்களாக இருந்தார்கள். அதனால் அவர்களுக்கு ஆசைகள் அளவுக்கு மீறிக் கவடு விட்டுக் கொண்டே போகவில்லை. இதனால் என்னவாயிற்று என்றால் ஏதோ ஒரு காலம் வரையில் போக்ய பலன்களுக்காகவே அவர்கள் கர்மங்களைப் பண்ணி வந்தாலும்கூட அப்புறம் அந்த ஸௌக்கியங்களில் பற்றுக் குறைந்து போய், ஆத்மாவைக் கடைத்தேற்றிக்கொள்ளவேண்டுமென்று நினைத்தார்கள். ஆனால் ஞான நிஷ்டைக்கான யோக்யதை தங்களுக்கு இல்லை என்று உணர்ந்திருந்தார்கள். ஆகையால் அதற்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதான பலத்யாகம் செய்து கர்ம மார்க்கத்தைக் கர்மயோகமாகவே அநுஷ்டித்து வந்தார்கள். ப்ரவ்ருத்தி தர்மம் அந்த ஆதிக் காலங்களில் கர்மயோகமாகவே உசந்த நிலையில் ப்ரகாசித்து வந்தது. இந்த யோகத்தில் முன்னேறி நல்ல சித்த சுத்தி உண்டான பிறகு ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு நிவ்ருத்தியில் போய் மோக்ஷமடைந்து வந்தார்கள்.

தர்ம சாஸ்திரங்களில் பொதுவான வாழ்க்கை முறையாகவே க்ருஹஸ்தாச்ரமத்திற்கு அப்புறம் வானப்ரஸ்த்யம், ஸந்நியாஸம் என்று நிவ்ருத்தியை விதித்திருப்பதால் அப்படியே எல்லாரும் அந்த நாளில் பண்ணி

வந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஒரு வயஸுக் கட்டம் வரையில் காம்யமாகக் கர்மாக்கள் பண்ணி போகங்களை அநுபவித்தாலும், அப்புறம் பற்றுக்களைக் குறைத்துக்கொண்டு நிஷ்காம்ய யோகமாக ஆரம்பித்திருக்கிறார்களென்று தெரிகிறது. ஸூர்யவம்ச ராஜாக்களைப் பற்றிக் காளிதாஸன் இப்படித்தான் 'ரகுவம்ச'த்தில் சொல்லியிருக்கிறார்-அவர்கள் யௌவனத்தில் விஷய ஸுகப் பற்றுள்ளவர்களாக இருந்தாலும் அந்திமத்தில் யோகிகளாகியே சரீரத்தை விட்டார்களாம்.
அந்த நாளிலுங்கூட இப்படிக் கர்மாவை யோகமாக்கிக் கொள்ளமுடியாத சில பேரும் இருந்திருக்கலாம். ஆனால் அவர்களும் கர்ம யோகிகள், ஞான யோகிகள் ஆகியவர்களைப் போற்றி நமஸ்கரித்துக்கொண்டு, 'நம்மால் அப்படி இருக்க முடியாவிட்டாலும் அதுதான் நித்ய ச்ரேயஸுக்கான வழி' என்றே தெரிந்துகொண்டிருந்தார்கள். தங்களுடைய (யோகமில்லாத) கர்ம மார்க்கம்தான் உசத்தி என்று ஸ்தாபிக்கப் பார்க்கவில்லை.

அப்புறம், போகப்போக, ஜனங்களுக்கு ஆசைகள் அதிகமாக ஆரம்பித்தன. அதனால் பலனை விரும்பியே, பலனுக்காகவே கர்மா செய்வது ஜாஸ்தியாயிற்று. பலத்யாகம் செய்து சித்த சுத்தி பெறுவது, அப்புறம் நிவ்ருத்திக்குப் போவது என்பது குறைந்துகொண்டே வந்தது. இப்படிக் கர்மா செய்தவர்கள், 'இதுதான் ஸரி. இதுதான் பரம புருஷார்த்த ஸாதனம். கர்மாவை விட்ட ஸந்நியாஸ மார்க்கம் ரொம்பத் தப்பு' என்று பெரிய ஸித்தாந்தமாகவே எழுதி வைத்துவிட்டார்கள். ஈச்வரன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்பதையெல்லாம் தள்ளிவிட்டு, 'வேதோக்த கர்மா தானாகவே பலன் தருகிறது. ஈச்வரனென்ற பலதாதாவுமில்லை. கார்யமில்லாத ஆத்மானந்த மோக்ஷமுமில்லை. வேதத்தில் சொன்ன கர்மாக்களை அதற்கான பலனுக்காகவே பண்ணி ஸ்வர்க்கத்துக்குப் போவோம். அப்படியே ஸ்வர்க்கத்துக்கு மேலே மோக்ஷம் என்று ஒன்று இருக்குமானாலும், ஒன்றும் செய்யாமல் ஞான விசாரம் என்று பண்ணிக் கொண்டிருந்தால் அது கிடைத்துவிடும் என்றால் எப்படி? நாம் கடைசி வரை பண்ணவேண்டியது கர்மாதான். அதனாலேயே அந்த மோக்ஷம் வருமானால் வரட்டும்' என்று ஸித்தாந்தம் பண்ணினார்கள்.

நிவ்ருத்தி, ஞானம், ஸாக்ஷாத்காரம் ஆகியவற்றை வேதங்களின் முடிவுப் பகுதிகளான உபநிஷத்துக்கள் சொல்கின்றன. அவற்றை வேதத்தின் உத்தர (பின்) பாகம் என்பார்கள். ஞான காண்டம் என்ற அதை அப்படியே தள்ளிவிட்டு, வேதத்தின் பூர்வ (முன்) பாகத்தில் சொல்லப்பட்டுள்ள கர்ம காண்டத்தை மாத்திரம் ஒப்புக்கொண்டு இப்படிச் செய்த ஸித்தாந்தத்திற்குப் 'பூர்வ மீமாம்ஸை' என்றும் 'கர்ம மீமாம்ஸை' என்றும் பெயர். 'மீமாம்ஸை' என்றால் 'நல்ல விஷயத்தைப் பற்றிய ஆராய்ச்சி'. உத்தரபாகமான ஞான காண்டத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டான ஸித்தாந்தத்திற்கு 'உத்தர மீமாம்ஸை' என்று பெயர். ஆனாலும் அதை 'வேதாந்தம்' என்று குறிப்பிடுவதே வழக்கமாயிற்று. ஒவ்வொரு வேத சாகையின் அந்தத்திலும் (முடிவாக) வரும் உபநிஷதங்களைக் குறித்த சாஸ்திரமாதலால் 'வேதாந்தம்' என்று பெயர் வந்தது. பூர்வ மீமாம்ஸையையே மீமாம்ஸை என்று சொல்வதாக வழக்கம் ஏற்பட்டுவிட்டது. இந்த விஷயம் இருக்கட்டும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## இரு மார்க்கங்களின் உபதேசங்கள்

ஸ்ருஷ்டி காலத்திலிருந்து பகவான் வரிசையாக மஹாபுருஷர்களை ஆசார்யர்களாக அனுப்பி ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்பதான இரு தர்மங்களையும் உபதேசிக்கச் செய்துவந்தான். நிவ்ருத்திதான் முடிவான மோக்ஷ ஸித்தியானதால் அதற்குத் தானே குருவாக தக்ஷிணாமூர்த்தி ரூபத்தில் இருந்தான். அது பரமசிவ ஸ்வரூபம். அவர் தான் முக்யமாக நிவ்ருத்திக்கு (தெய்வம்). விஷ்ணுவும் ஹம்ஸாவதாரம், தத்தாத்ரேயர், ஹயக்ரீவர் என்ற ரூபங்களில் நிவ்ருத்தி தர்மத்தை உபதேசித்தார். ஆனாலும் இவற்றில் தசாவதாரம் மாதிரி அவ்வளவு சக்தியைக் காட்டவில்லை. தக்ஷிணாமூர்த்தி, ஹம்ஸர், ஹயக்ரீவர் ஆகியோர் லோகத்தில் ஸஞ்சாரம் பண்ணி ஞானோபதேசம் செய்யவில்லை. ஸநகாதியர், ப்ரம்மா போன்றவர்கள் அவர்களைத் தேடிப்போய் உபதேசம் பெற்றனர்.

தக்ஷிணாமூர்த்தி வார்த்தையால் உபதேசிக்காமல், அநுபவமாகவே அநுக்ரஹித்துவிடுவார். இப்போது நாம் தெய்வங்களை வேண்டிக் கொள்ளும்போது நம்முடைய வேண்டுதல்களில் பல நிறைவேறுகின்றன. ஆனால் அந்த தெய்வமே ப்ரத்யக்ஷமாகி அப்படிப் பண்ணுவதில்லை. ஸூக்ஷ்மமாகவே பண்ணுகின்றன அல்லவா? அப்படி தக்ஷிணாமூர்த்தி, ஹயக்ரீவர் ஆகியவர்களிடம் ஞானத்துக்காக வேண்டிக்கொண்டு அந்த அநுக்ரஹத்தை ஸூக்ஷ்மமாகப் பெற்றவர்கள், பெறுபவர்கள் உண்டு. சிவலாயமென்றால் அங்கே ஞானதாதாவாக அவர் தக்ஷிணாமூர்த்தி ரூபத்தில் நிச்சயம் இருப்பாரென்று பாமர ஜனங்கள் உள்பட எல்லாரும் தெரிந்துகொண்டு, அவருக்கு முன்னால் ஒரு க்ஷணம் கண்ணை மூடிக்கொண்டு, ஞானம் (என்பது) என்னவென்று தெரியாவிட்டாலும் அவரிடம் வேண்டிக்கொள்ளுவார்கள். இந்த அளவுக்கு ஹயக்ரீவரைப் பற்றிச் சொல்லமுடியாது. இப்படிப் பரமசிவனையே நிவ்ருத்திக்கு முக்யமாக நினைப்பதாயிருக்கிறது. தத்தாத்ரேயரைப் போல் ஸஞ்சாரம் செய்தவர்கள்-ஸநகாதியரும்கூட விஷ்ணுவின் அம்சாவதாரங்கள்தான்; அவர்களும் ஸஞ்சாரம் செய்வார்கள-இவர்களெல்லாம் லோகத்திலே பல பேருக்குப் பல ஸமயங்களில் நிவ்ருத்தியை உபதேசித்தார்கள். ஆனாலும் உபதேசமே தங்கள் கார்யம் என்று ஸித்தாந்தமாக வகுத்துக்கொண்டு எங்கே பார்த்தாலும் சிஷ்ய ஜனங்களுக்குச் சொல்லிக்கொண்டு போகவில்லை. ப்ரவ்ருத்தி தர்மத்திற்குப் பரமாத்மா இவ்வளவு தூரம் தானே நேராகச் செய்யவேண்டியிருக்கவில்லை. கார்யத்தை விட்டு, மனஸை விட்டு, நிவ்ருத்தி என்று ஞானத்தில் போவதுதான் ஜனங்களுக்குக் கஷ்டமானதால் அதை உத்தேசித்தே அதிகமாக மஹான்களை அனுப்புவது, தானும் உபதேசிப்பது என்று செய்தார். மனஸையும் கார்யங்களையும் வைத்துக்கொண்டு செயல்படுவதுதான் மநுஷ ஸ்வபாவமானதால், இவற்றை ஈடுபடுத்தியே செய்கிற ப்ரவ்ருத்தி ஸாதனைக்கு அவரவரின் வித்யாப்யாஸ குரு ச்ரௌத, ஸ்மார்த்த சாஸ்த்ரங்களின்படி சொல்லிக்கொடுப்பதே போதுமானதாயிருந்தது.

என்றாலும் இந்தக் கர்மாநுஷ்டானங்களை நிஷ்காம்யமாகச் செய்தால் நிவ்ருத்தி மார்க்கத்திற்கு முன்னேறுவதற்கான சித்த சுத்தியை அளிக்கவல்ல யோகமாகவே அது ஆகும் என்ற

ரஹஸ்யத்தை ஆதியில் பகவானேதான் விவஸ்வானுக்கு, அதாவது ஸூர்யனுக்கு, உபதேசிக்கும்படியிருந்தது. ஸூர்யன் நம்முடைய மன்வந்தரத்தின் அதிபதியான வைவஸ்வத மநுவுக்குக் கர்ம யோகமாகிய ப்ரவ்ருத்தி தர்மத்தை (அதாவது நிவ்ருத்தி தர்மத்திற்கு வழிபோட்டுக் கொடுப்பதாக உள்ள ப்ரவ்ருத்தி தர்மத்தை) உபதேசம் செய்தார். வைவஸ்வதன் என்றால் விவஸ்வானின் பிள்ளை என்று அர்த்தம். வைவஸ்வத மநு தன்னுடைய பிள்ளையும் ஸூர்யகுலத்தில் முதல் ராஜாவுமான இக்ஷ்வாகுவுக்கு உபதேசம் செய்தார். இப்படியே ப்ரவ்ருத்தி தர்மம் கர்மயோகமாகப் பிள்ளை பிள்ளைவழி நெடுங்காலம் உபதேசிக்கப்பட்டு, கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. விவஸ்வானான ஸூர்யனுக்குத் தான் கர்ம யோகம் உபதசேம் பண்ணி, அது பிள்ளை வழியாக அநேக ராஜரிஷிகளின் வழியாகப் போனதை கீதையில் பகவான் சொல்லியிருக்கிறார். கீதையில் கர்மம், ஞானம் ஆகிய இரண்டு யோகங்களும் உபதேசிக்கப்படிருக்கின்றன. அதோடு இதுவரை நான் சொல்லாத பக்தி யோகம் என்பதும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**பக்தி**

ப்ரவருத்தி, நிவ்ருத்தி என்பதாகக் கார்யம் செய்வது, செய்யாமலிருப்பது என்றே பாகுபடுத்திச் சொல்லிக் கொண்டு போனதால் கார்யமான கர்ம யோகம், கார்யங்களை விட்டு த்யான விசாரம் செய்து கொண்டு ஏகாந்தமாயிருக்கும் ஞான யோகம் என்ற இரண்டை மட்டும் சொல்லி, அதோடு விட்டுவிட்டது. பக்தி என்பது கார்யமாகவும் பூஜை முதலான சடங்குகளாக வரும். கார்யமில்லாத த்யானமாக, ஸவிகல்ப ஸமாதி என்று அப்படியே பகவானிடம் சொக்கிப்போய் இஹ ப்ரஜ்ஞையேயில்லாமல் உட்கார்ந்துவிடுகிற வரையிலும் போகும். 'அவனிடம் சொக்கிப்போயிருக்கிற உறவுகூடப்

போதாது. இன்னம் நெருக்கமாக, கொஞ்சங்கூடப் பிரிவு இல்லாமல் அவனே ஆகிவிடவேண்டும்' என்று பக்தியானது உச்ச கட்டத்துக்குப் போகும்போது அதுவே ஞானமாகிவிடும். ஜன ஸமூஹத்தில் யோகம், வேதாந்தம், மீமாம்ஸை என்றெல்லாம் தத்வ ஆராய்ச்சியில் போகாதவர்கள்தான் நிறைய இருப்பார்கள். இவர்கள் உள்பட ஸகலமான பேருக்கும் அல்பமாகவோ ஸ்வல்பமாகவோ பக்திதான் ஏதோ ஒரு விதத்தில் ஸ்வாபாவிகமாக (தன்னியல்பாக) அமைந்தது. நாஸ்திகர்களைப் பற்றியும், ஈச்வரப் பிரஸ்தாவம் வேண்டியதில்லை என்று ஒதுக்கிய மீமாம்ஸகர்களைப் பற்றியும் இங்கே பேச்சில்லை. ஸாதாரணமாக யாராயிரு ந்தாலும், 'இந்த லோகம் இப்படித் தோன்றி நடந்து கொண்டிருப்பதற்குக் காரணமாக ஒரு மஹாசக்தி இருக்கவேண்டும். அதனிடம் நாம் அடங்கியிருக்க வேண்டும்' என்ற அளவுக்கு ஒரு பக்தியெண்ணம் தோன்றாமலிருக்காது. கர்ம ஸங்கிகளாகவே இருந்தாலுங்கூட, 'பலதாதாவாக ஒரு ஈச்வரன் இருக்கவேண்டிய அவசியமில்லை' என்ற மீமாம்ஸைக் கொள்கையைப் பொதுவாக ஜனங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். மஹாசக்தனான அவனைத்தான் தங்களுடைய எந்த விருப்பத்தையும் ஈடேற்றுபவனாகக் கருதி ப்ரார்த்திப்பார்கள். பணம், படிப்பு, ஆரோக்யம், ப்ரமோஷன் எதுவானாலும், இதற்கெல்லம் தாங்களும் முயற்சி மேற்கொண்டு கார்யங்கள் பண்ணிக்கொண்டேயிரு ந்தாலும், அவனருள் இருந்தால்தான் நமக்கு வேண்டியது பலிக்கும் என்று, தங்களுக்குத் தெரிந்த அளவில் பக்தி செய்து கொண்டிருப்பார்கள். 'இது பக்தியே இல்லை, வ்யாபாரம்தான்' என்று சொல்பவர்கள் சொன்னாலும், தங்களளவில் பக்தியாக இருப்பதாகத்தான் இந்த ஜனங்கள் நினைக்கிறார்கள். ஒரே கடவுள் பல தேவதைகள் மூலம் அருள் செய்கிறாரென்பதைப் புரிந்து கொள்ளாமல் ஒவ்வொரு தேவதையையும் ஒவ்வொரு காமனைக்காக ஆராதிப்பதோடு நின்று விடுவபவர்களை விஷயம் தெரிந்தவர்கள் பரிஹாஸம் செய்தாலும், இவர்களிடமும் எங்கேயோ ஒரு மூலையில் ஏக பரமாத்மாவிடம் ஒரு நிஜமான பக்தியெண்ணம் இல்லாமலே போய்விடவில்லை. அவரவருடைய குணங்களையொட்டியே காமனைகள் இருக்குமாதலால், அவைகளை நிறைவேற்றித் தரவும்

வெவ்வேறு தெய்வ பேதங்களை உபாஸிப்பது, தங்களுடைய குணத்துக்கு ஏற்றபடியே உபாஸனா மார்க்கத்தை அமைத்துக் கொள்வது என்று இருப்பதில், நல்லதற்கில்லாத அநேக விஷயங்களும் வழிபாட்டில் சேர்ந்துவிடுகின்றன. கர்ம யோகம் என்பது மீமாம்ஸகர்களிடம் நலிவு பட்டுப் போனாற் போலவே பக்தி யோகமும் கீழ் நிலைக்கு வந்து விடும்படி ஆகிறது. கீதையில் பகவான் இதைப் பற்றியும் சொல்லியிருக்கிறார்.

பல தேவதைகளைக் காம்யமாக (விருப்பப் பூர்த்திக்காகவே) உபாஸித்து நச்வரமான பலன்களைப் பெறுவது, ஏகமான பரமாத்மாவை அவனுக்காகவே உபாஸித்து சாச்வதமான பலன் பெறுவது முதலான விஷயங்களை "ஞான விஜ்ஞான யோகம்" என்ற அத்யாயத்தில் சொல்லியிருக்கிறார். அப்புறம் முடிக்கிறதற்கு முந்தி "ச்ரத்தா த்ரய விபாக யோகம்" என்ற அத்யாயத்தில், 'ஸத்வ குணமுடையவர்கள் ஸத்வமான தேவதைகளையும், ரஜோ குணிகள் யக்ஷ - ராக்ஷஸர்களையும், தாமஸ குணமுடையவர்கள் பூத ப்ரேதங்களையும் பூஜிக்கிறார்கள் என்றெல்லாம் சொல்கிறார். இதில் ஆபாஸமான வழிபாட்டு முறைகள், நரபலி முதலான க்ரூரமான வழிபாட்டு முறைகள் ஆகியனவும் வந்துவிடுகின்றன. அவனாகவே ஆகிவிடுவது என்ற பரமஞான, அதாவது நிவ்ருத்தி மார்க்கத்தின் பராகாஷ்டா நிலையிலிருந்து, கார்யத்தில் மஹா நீசமாகக் கழுத்தைச் சீவிப்போட்டு பலி கொடுக்கும் ப்ரவ்ருத்தி வரையில் பக்தியானது பல மட்டங்களிலும் கலந்து வருகிறது என்று சொல்லவந்தேன்.
ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்று இரண்டுதானே ஒன்றுக்கொன்று எதிரிடையாக இருக்கமுடியும்? மூன்றாவதாக ஒன்று எங்கேயிருந்து வரும்? அதனால்தான் கர்மம், ஞானம் என்று மட்டும் சொல்லி, ஸகல ஜனங்களுக்கும் ஸ்வாபாவிகமாகத் தோன்றிக் கர்மத்தின் கீழ் நிலையிலிருந்து ஞானத்தின் உச்ச நிலைவரை எல்லாவற்றையும் தழுவிக்கொண்டு போகும் பக்தியைச் சொல்லாமல் விட்டது. உலகம் மாயை என்று அநுபவ பூர்வமாகத் தெரிந்து கொண்ட ஞானியும் 'மாயைக்கு அதீச்வரனாக இப்படி யொரு பரமாத்மா இருந்து கொண்டு என்னவெல்லாம் விளையாடுகிறான்?' என்று பக்தியில் உருகிப்போகிறான். ஞானமே வேண்டாம் என்றே ஒதுக்கி விட்டு, ஸம்ஸார ப்ரவ்ருத்தியையும் அதே போல ஒதுக்கி

விட்டு, அவனுடைய மஹிமைகளையே த்யானம் செய்து கொண்டு அவனை ஸாக்ஷாத்தாக வாத்ஸல்யம் முதலான பாவங்களில் அநுபவித்துக் கொண்டிருக்கும் பரம பக்தர்கள் இருக்கிறார்கள். ப்ரவ்ருத்தியில் இருந்துகொண்டே, அவன் தான் ஞான பிக்ஷை போட்டு நிவ்ருத்தியில் சேர்க்கவேண்டும் என்று வேண்டுபவர்கள் இருக்கிறார்கள். கர்ம யோகிகள் ஞான யோகத்திற்குப் போகும் யோக்யதையைப் பெறச் சித்த சுத்தியோடு, சித்த ஐகாக்ரியமும் (ஒருமுனைப்பாடும்) பெறவேண்டியிருக்கிறது இப்படிச் சித்தத்தை ஒன்றிலேயே நிறுத்த ஈச்வர சிந்தனை தான் உதவுகிறது என்பதால் அவர்களும் பக்தியுபாஸனை செய்கிறார்கள். அதோடு பலதாதா அவனே என்று அவனுக்கே தங்கள் கார்யங்களின் பலனை அர்ப்பணம் செய்து, இந்த முறையில் பக்தி செலுத்துகிறார்கள். யோகிகளாக இல்லாமல் பலன்களை விரும்பியே ஓயாமல் கார்யம் செய்யும் நம் போன்றவர்களும், "தேங்காய் உடைக்கிறேன், அங்க ப்ரதக்ஷிணம் செய்கிறேன், ஸ்வாமீ! இதைப் பண்ணுங்கோ, அதைப் பண்ணுங்கோ" என்று, நாம் பக்தியென்று நினைத்துக்கொண்டிருக்கின்ற ஒன்றைப் பண்ணுகிறோம். இன்னும் க்ரூரமாகவும் பீபத்ஸமாகவும் (அருவருக்கத் தக்கவாகவும்), மத்யபானம் (கள் குடிப்பது), ஸ்த்ரீ போகம், கடா வெட்டுவது வரையில் பக்தி என்றே நினைத்துக்கொண்டு செய்பவர்களும் இருக்கிறார்கள். எதுவானாலும் கடைசியில் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்ற ஏதோ ஒன்றில்
அடங்கிவிடவேண்டியதுதான். அதனால்தான் அந்த இரண்டோடு விட்டது. ஆனாலும் ப்ரவ்ருத்தி தர்மத்துக்கு ஆதாரமாக வேதத்தின் கர்ம காண்டமென்றும், நிவ்ருத்தி தர்மத்துக்கு ஆதாரமாக அதன் ஞான காண்டமென்றும் சொல்வதோடு சிலர் பக்தி வழிபாட்டுக்கு ஆதாரமாக அந்த வேதத்திலேயே உபாஸனா காண்டம் என்றும் ஒன்றைச் சொல்வதுண்டு. கீதையில் தெளிவாகவே கர்மா, பக்தி, ஞானம் என்று மூன்று யோகங்களைச் சொல்லியிருக்கிறது. முதல் ஆறு அத்யாயம் கர்ம ஷட்கம், அடுத்த ஆறு அத்யாயம் பக்தி ஷடகம், அதற்கப்புறம் முடிவாக வரும் ஆறு அத்யாயம் ஞான ஷட்கம் என்றுகூடச் சொல்வதுண்டு.

## ஸ்ரீ சங்கர சரிதம்

### கீதை கூறும் யோகங்கள்

இப்படி முக்யமாக மூன்று யோகங்களை பகவான் சொன்னதோடு, அவற்றின் பிரிவாகப் பதினெட்டு அத்யாயங்களிலும் வரும் ஒவ்வொரு விஷயத்துக்கும் ஒவ்வொரு யோகம் என்றே பெயர் கொடுத்திருக்கிறார். ஸாங்க்ய யோகம், கர்ம யோகம், என்பவைதான் (முறையே) நேராக நிவ்ருத்தி, ப்ரவ்ருத்தி மார்க்கங்களைக் குறிப்பிடுபவை. ஒரு அத்யாயத்திற்கு-பன்னிரண்டாம் அத்யாயத்திற்கு-பக்தியோகம் என்று பெயர். இவை தவிர த்யான யோகம், ராஜவித்யா - ராஜகுஹ்ய யோகம், விபூதி யோகம், புருஷோத்தம யோகம் என்றெல்லாம் மொத்தம் பதினெட்டு யோகங்கள் கீதையில் heading-ஆகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அர்ஜுன விஷாத யோகம் என்று முதல் அத்யாயத்திற்குப் பேர். அதாவது அர்ஜுனனின் மனக்குழப்பத்துக்குக்கூட 'யோகம்' என்று பெயர்! 'பகவான் தான் இப்படி பதினெட்டு அத்யாயத்திற்கும் தலைப்புப் போட்டாரா? அவர் பாட்டுக்கு அர்ஜுனனோடு ஸம்வாதம் பண்ணிக்கொண்டு (ஸம்பாஷித்துக் கொண்டு) தானே போனார்? நடுவில் அத்யாயத் தலைப்பு எங்கே வந்தது?' என்று கேட்டால் எனக்கு பதில் சொல்லத் தெரியாது. கீதை பகவான் சொன்னது என்று வழிவழியாக வந்திருக்கும் நம்பிக்கை நமக்குப் போதும். அதை பாரதத்தில் சேர்த்து எழுதிய வ்யாஸர் அத்யாயத் தலைப்புப் போட்டிருந்தால், அதுவும் பகவானே போட்ட மாதிரிதான். வ்யாஸரும் பகவானின் அவதாரம் தான்; அம்சாவதாரம். விஷாதத்தை, (அதாவது) மனக் குழப்பத்தை, ஏன் யோகமென்று சொன்னார்? அதனால் (அந்த மனக் குழப்பத்தால்) தானே அவனுக்கு ஆத்ம ஸம்பந்தமாக நினைக்கத் தோன்றிற்று? அதனால்தான்! அதுவரையிலும் அவன் எத்தனையோ பேருடன் கொஞ்சம்கூட மனக்குழப்பமேயில்லாமல் சண்டை போட்டு ஜயித்து "விஜயன்" என்றே பெயர் வாங்கியிருக்கிறான். இப்போதுதான் இந்த குருக்ஷேத்ரத்தில் பாட்டனாரான பீஷ்மர், ஆசார்யரான த்ரோணர், பெரியப்பா

பிள்ளைகளான கௌரவர்கள் முதலானவர்களைப் பார்க்கும்போது அவனுக்கு மனஸ் குழம்பி, 'இவாளை ஜயிச்சு ராஜ்யம் ஆண்டு என்ன ஆகணும்? இதைவிட, எல்லாத்தையும் விட்டுட்டு பிச்சை வாங்கிச் சாப்பிடறது மேல்' என்ற எண்ணங்கள் தோன்றியிருக்கின்றன. இது மனஸ் பக்குவப்பட்டு கனிந்து ஏற்பட்ட விரக்தி இல்லைதான். இதுவரை ஹிம்ஸையா, அஹிம்ஸையா என்று யோசிக்காமல் அந்நிய மநுஷ்யர்களுடன் பராக்ரமத்தோடு யுத்தம் செய்தவன், இன்று 'இவா நம்ம மநுஷாளாச்சே' என்ற அஞ்ஞான அட்டாச்மென்டினாலேயேதான், பாச பந்தத்தினாலேயே தான் ஒரு அசட்டு விரக்தியில் நினைத்திருக்கிறான். தர்ம யுத்தம் செய்யவேண்டிய அவன் இப்படி அசடாகி விட்டானே என்றுதான் பகவான் என்றுதான் பகவான் அவனை வைகிறார். ஆனாலும் இப்படி ஒரு குழப்பம் வந்தால்தானே அவன் ராஜ்ய போகம் தவிர வேறொன்றை, நிவ்ருத்தியை, நினைக்க முடிந்தது? ஸத்ய தத்வத்தை பகவான் அவனுக்கு உபதேசிப்பதும் இதனால் தானே ஸாத்யமாயிற்று? அதுவரை, திருட்டுத்தனம் பண்ணிக்கூட ஸுபத்ரையை அவனுக்கு விவாஹம் பண்ணுவிப்பது முதலான கார்யங்களைத்தான் பகவான் அவனுக்குப் பண்ண முடிந்ததே தவிர, ஞானோபதேசம் என்று வாயைத் திறக்க முடிந்ததோ? அதனால் எப்படியோ ஒரு விதத்தில் விஷாதமும் நல்லதில் கொண்டு சேர்த்ததால் அதற்கு 'விஷாத யோகம்' என்றே பெயர் ஏற்பட்டுவிட்டது!

பகவான் அர்ஜுனனுக்கு உபதேசம் பண்ணும் காலத்தில் சித்த சுத்தியை அடைந்து பரமாத்மாவோடு ஏகீபாவம் பெறுவதற்கு உபாயமாக, அநுகூலமாக உள்ள எல்லாவற்றையுமே 'யோகம்', 'யோகம்' என்று பெயர் கொடுத்துச் சொல்லிக்கொண்டு போனார். 'சேர்க்கை' என்பதுதான் 'யோகம்' என்பதற்கு அர்த்தமென்றால், எதுவெல்லாம் பரமாத்மாவிடம் சேர்க்க உதவுமோ அதுவெல்லாம் யோகந்தானே? "அவனுக்கு யோக காலம்; 'வாருகிறான்'!" என்றால் என்ன அர்த்தம்? ஜாதகப்படி க்ரஹங்கள் நல்ல ஸ்தானங்களில் சேர்ந்து-சேர்க்கை பெற்று-இருப்பதாலேயே அவனுக்கு எல்லாம் நல்லதாக நடக்கின்றன என்று அர்த்தம். இப்படிப் பல விதமான சேர்க்கைகள்-யோகங்கள் இருந்தாலும் எது பரம உத்தமமான யோகம்? பரமாத்மாவுடன் சேர்வதுதானே? அதுதான்

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

ஸ்ரீ சங்கர சரிதம்

'நிரந்தர' யோகமான அத்வைதம்

அப்படிச் சேர்வதிலும் உத்தமநிலை நிரந்தரமாகப் பரமாத்மாவுடன் சேர்வதுதான் என்று உபநிஷத்துக்கள் சொல்கின்றன. 'நிரந்தரமாக' என்றால் 'காலத்தில் சாச்வதமாயிருக்கிற' என்று நாம் அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். அதுவும் தப்பில்லைதான். 'அந்தரம்' என்றால் இடைவெளி. 'நிரந்தரம்' இடைவெளியில்லாதது. காலத்தில் இடைவிடாமலிருப்பது 'நிரந்தரம்' என்பது ஸரிதான். ஆனால் 'காலம்' என்பது இங்கே நாம் அதிகப்படியாகச் சேர்த்துக்கொள்ளும் அபிப்ராயம். 'நிரந்தரம்' என்றால் வெறுமனே 'இடைவெளியற்றது' என்றுதான் அர்த்தம். இடத்திலே இடைவெளியில்லாமல் நிறைந்திருப்பதும் 'நிரந்தரம்' தான். இப்படி 'காலத்தில்', 'இடத்தில்' என்றெல்லாம் நாம் 'ஸப்ளை' செய்து வருவித்துக் கொள்ளாவிட்டால், 'நிரந்தரம்' என்பதற்கு 'இடைவெளியில்லாதது' என்று மட்டும்தான் அர்த்தம். 'பரமாத்மாவோடு நிரந்தரமாகச் சேர்வது' என்றால் அவனுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடைவெளியே இல்லாமல் ஒன்று சேர்ந்துவிடுவது என்றுதான் அர்த்தம். ஒன்று சேர்ந்துவிடுவது என்பது ஒன்றாகவே ஆகிவிடுவதுதான். ஒன்றாகவே ஆகிறவரைக்கும் கொஞ்சமாவது இடைவெளி இருந்துகொண்டுதானிருக்கும். கொஞ்சம் இடைவெளி இருந்தாலுங்கூட அவன் அங்கே, நாம் இங்கே என்று பிரிந்து பேதப்பட்டு இருக்கிறோமென்றுதான் அர்த்தம். இப்படி இருக்கும்வரையில், 'இந்த இடைவெளி இன்னும் ஜாஸ்தி ஆயிடுமோ?' என்ற பயம் இருந்துகொண்டே தான் இருக்கும். ஆனபடியால் இடைவெளி அடியோடு இல்லாமல் அவனிடம் 'நிர்-அந்தர'மாக ஐக்யமாகி, அவனேயாகிவிட வேண்டும். ஜீவ-ப்ரஹ்ம அபேத யோகம் எனும் இதுதான் ச்ருதி சிரஸ்

(வேதத்தின் முடியான உபநிஷத்) தருகின்ற பரம உத்தம யோகம். 'அந்தரம் இருந்தால் அதாவது துளி இடைவெளி, துளி பேதம் இருந்தால்கூட இந்தச் சேர்க்கை எப்பொழுது முடிந்து விடுமோ என்ற பயம் இருந்துகொண்டேதான் இருக்கும்' என்று தைத்திரீயோபஷத்தின் ப்ரஹ்மவல்லியில் சொல்லியிருக்கிறது. (ஆனந்தவல்லி என்றும் அந்தப் பகுதியைச் சொல்வதுண்டு.) முமுக்ஷுவானவன் எப்போது ப்ரஹ்மத்திலேயே நிலைகொள்கிறானோ அப்போதுதான் அபய ப்ரதிஷ்டை பெறுகிறான் என்றும் இதற்கு முந்தி சொல்லியிருக்கிறது அத்வைதம், அத்வைதம் என்பது ஜீவாத்மா இப்படி ப்ரஹ்மத்துடன் இரண்டறக் கலந்து அதுவே ஆகி விடுவதுதான்.

இந்த ஜீவ-ப்ரஹம அபேதமாகிய உத்தம யோகத்தை சொல்வதற்காகவே பகவான் கீதையை உபதேசித்தார். ஆனால் க்ஷத்ரியனாக, கர்ம வீரனாக இருக்கப்பட்ட அவனுக்கு இதற்கான நிவ்ருத்தி மார்க்க உபதேசத்தை உடனடி உபாயமாகக் கொடுத்தால் அவனால் க்ரஹித்துக்கொண்டு பின்பற்ற முடியாது என்பதால் கர்ம யோகத்தை முக்யமாகச் சொல்லி, மற்ற அநேக யோகங்களையும் சொல்லிவிட்டு. முடிவிலே 'மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம்' என்பதாக நிவ்ருத்தியை நன்றாக விளக்கிச் சொன்னார். ஆனால் அர்ஜுனன் கர்மயோகம் அநுஷ்டித்துத்தான் ஞான நிஷ்டைக்கு வரவேண்டுமாதலால், கர்ம பல தாதாவான தன்னிடம் எல்லாக் கார்யங்களையும் அர்ப்பித்துவிட்டு சரணாகதி பண்ணினால் அவனைத் தாம் ஸகல பாபங்களிலிருந்து விடுவிப்பதாக அபய வாக்குச்சொல்லி முடித்தார். "துக்கப்படாதே! மா சுச:!" என்று பரம கருணையுடன் அவனைத் தடவிக் கொடுத்து ஆறுதல் சொல்லி முடித்தார்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

ஸ்ரீ சங்கர சரிதம்

கண்ணன் செய்த புனருத்தாரணம்

ஸூர்யனுக்குத் தாம் உபதேசித்து, அப்புறம் இக்ஷ்வாகு பரம்பரையில் தொடர்ந்து உபதேசிக்கப்பட்டு வந்த யோகம் காலக்ரமத்தில் சைதில்யம் அடைந்துவிட்டது (சிதிலமாகி விட்டது) என்று பகவான் அர்ஜுனனிடம் சொல்லி, "அதை பக்தனும் ஸகாவுமான உனக்கு உபதேசித்துப் புத்துயிர் கொடுக்கவே நான் வந்திருக்கிறேன்" என்று கீதோபதேசம் செய்தார். அர்ஜுனனைச் சாக்காக வைத்து லோகம் முழுவதற்கும் உபதேசம் செய்தார். இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவான்-அஹம்-அவ்யம் விவஸ்வான் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவே (அ)ப்ரவீத் ஏவம் பரம்பரா ப்ராப்தம் இமம் ராஜர்ஷயோ விது: ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ஸ ஏவாயம் மயா தே(அ)த்ய யோக : ப்ரோக்த : புராதந :

பக்தோ (அ)ஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதத்-உத்தமம் (IV1-3)

("இந்த அழிவில்லாத யோகத்தை நான் ஸூர்யனுக்கு உபதேசித்தேன். ஸூர்யன் மநுவுக்கு உபதேசித்தான். மநு இக்ஷ்வாகுவுக்கு உபதேசித்தான்.

இவ்விதம் வம்ச பரம்பரையாக வந்த இதனை ராஜரிஷிகள் அறிந்திருந்தனர். எதிரிகளை தப்பிக்கச செய்பவனே (அர்ஜுனா)! நெடுங்காலப் போக்கில் அந்த யோகம் இவ்வுலகில் நஷ்டமடைந்து (நலிவுற்றது). நீ எனக்கு பக்தன்; தோழனாகவும் இருக்கிறாய்! அப்புராதன அப்புராதன யோகமே இன்று என்னால் உனக்கு எடுத்துரைக்கப்பட்டது. இது உத்தமமான ரஹஸ்யம் அன்றோ!")

பகவான் இங்கே சொல்லும் யோகம் கர்மயோகம் அதைத்தான் பஹுகாலமாக ராஜரிஷிகள் பரிபாலித்து வந்து, க்ருஷ்ணர் காலத்தில் அது சைதில்யமாயிருந்ததால் அவர் மறுபடி ராஜகுலத்தைச் சேர்ந்த அர்ஜுனனுக்கு அதை உபதேசித்துப் புனருத்தாரணம் செய்வதாகச் சொல்கிறார்.

கீதையின் immediate context-ஐப் பார்த்தால் இப்படித் தெரியும். ஆனால் இதற்கு முதலத்யாய ஆரம்பத்தில் -இங்கே கர்ம யோகத்தைத் தர்ம ஆதியில் ஸூர்யனுக்கு உபதேசித்ததாகச் சொன்னமாதிரியே-"ஞான யோகம், கர்மயோகம் என்ற இரண்டையும் நான் முறையே ஸாங்க்யர்கள் என்கிற ஸந்நியாஸிகளுக்கும், யோகிகள் என்கிற நிஷ்காம்ய கர்மமார்க்கிகளுக்கும்

உபதேசித்திருக்கிறேன்" என்றும் சொல்லியிருக்கிறார்.
லோகே(அ)ஸ்மிந் த்வி-விதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயா(அ)நக
ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம் (III-3)
ஆகையால் ப்ரவ்ருத்திக்காரர்களுக்கான கர்ம யோகத்தை மட்டுமின்றி, நிவ்ருத்திக்காரர்களுக்கான ஞான யேகத்தையும் புனருத்தாரணம் செய்யத்தான் க்ருஷ்ணர் அவதாரம் எடுத்திருக்கிறாரென்று தெளிவாகிறது. இவ்விரண்டு யோகங்களென்றால் 'எல்லா யோகமும் அடங்கலாக' என்றே அர்த்தம்! எதுவானாலும் ப்ரவருத்தி நிவ்ருத்தி என்ற இரண்டிலொன்றின் கீழ் வந்துதானே ஆக வேண்டும் இக்ஷ்வாகுவிலிருந்து வழிவழி வந்ததாக அவர் சொன்ன அந்த ராஜரிஷிகள்கூட ப்ரவ்ருத்தி தர்மத்தை கர்ம யோகமாக மெருகேற்றி உபதேசித்தபோது அது எதிலே கொண்டு சேர்த்ததோ அந்த நிவ்ருத்தி தர்மத்தை, அதாவது ஞான யோகத்தைப் பற்றியும் ஓரளவாவது உபதேசிக்காமல் மொட்டையாக நிறுத்தியிருக்கமுடியாது அவர்கள் ஸமாசாரம் எப்படி வேண்டுமானால் இருக்கட்டும். பகவான் (க்ருஷ்ணர்) நிச்சயம் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டையும் தான் புது ஜீவன் உண்டாக்கி உத்தரணம் பண்ணினார். கீதையில் அவர் ஸகல யோகங்களையும்தானே சொல்லிக் கொண்டு போயிருக்கிறார்? ஆனாலும் அவரது உபதேசம் ஆரம்பிப்பதும் ஞானிகளுக்கேயான ஸாங்க்ய யோகம், முடிவதும் மோக்ஷ ஸந்நியாஸ யோகம் என்பதிலிருந்து ஞானத்தினால் அத்வைத ஸித்தி பெறும் நிவ்ருத்தி தர்மத்தைத்தான் அவர் பரம லக்ஷ்யமாக நிலைநாட்டுகிறாரென்று தெரிகிறது. கீதை கர்ம யோகத்தைத்தான் சொல்கிறது என்று சில பேர் நினைக்கிற அளவுக்கு அநேக இடங்களில் அதை பகவான் ச்லாகித்து, அழுத்தம் கொடுத்துச் சொல்லியிருக்கிறரென்றால் அதற்குக் காரணம் கீதோபதேசத்தை அவரிடமிருந்து பெற்றுக்கொண்டே நேர் சிஷ்யனான அர்ஜுனன் கர்ம யோகத்திற்கே அதிகாரியாக இருந்ததுதான்.
இப்படி, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஆகிய இரண்டு மார்க்கங்களையும் சீர்ப்படுத்திக் கொடுத்து, முடிவாக ஞான மோக்ஷத்தை நிலைநாட்டி, ஸநாதனமான வைதிக தர்மத்தை ஸம்ஸ்தாபனம் செய்யவே க்ருஷ்ணாவதாரம் ஏற்பட்டது. கீதாபாஷ்ய உபோத்காதத்தில் (முகவுரையில்) ஆசார்யாள்

இப்படித் தெளிவாக்கியிருக்கிறார்.
தாம் ஸூர்யனுக்கு உபதேசித்து, பிறகு ராஜரிஷிகள் வழியாகப் பலகாலம் விளங்கிவந்த கர்மயோகம் தம் நாளில் நஷ்டப்பட்டுப் போனதையே க்ருஷ்ண பரமாத்மா வ்யக்தமாகச் சொன்னபோதிலும், அவருடைய காலத்தில் எல்லா யோகங்களும், எல்லா மார்க்கங்களுமே பழுதாகித்தானிருந்தன என்றும் கீதையிலிருந்து தெரிகிறது. பிற்பாடு கலியில் ஒரேயடியாக சைதில்யம் அடைந்தாற்போல் ஆகாவிட்டாலும், இந்த யுகத்தைத் தொட்டுக்கொண்டு அவர் அவதாரம் செய்த த்வாபராந்தரத்திலும் பொதுப்படையாக ஓரளவு நலிவு எல்லா மார்க்கத்திலும் ஏற்பட்டதாகத் தெரிகிறது. கர்மா செய்யும் இந்த்ரியங்களை சும்மா வெளிக்கு மட்டும் அடக்கின மாதிரி இருந்துகொண்டு, உள்ளுக்குள்ளே இந்த்ரிய விஷயங்களான சிற்றின்பங்களையே நினைத்துக் கொண்டிருப்பவன் வெறும் மித்யாசாரன், அதாவது மோசக்காரன், 'ஹிபாக்ரிட்' என்று ஒரு இடத்திலே திட்டுகிறார். இது நிவ்ருத்தியில், அதாவது ஞான மார்க்கத்தில், போன மாதிரி இருந்துகொண்டே அந்த ஐடியலிருந்து நழுவிப்போன வாய் வேதாந்திகள் அந்த நாளிலும் இருந்திருப்பதைக் காட்டுகிறது. இதற்கு முந்தி, தம்முடைய உபதேசத்தை ஆரம்பிக்கும் இரண்டாவது அத்யாயத்திலேயே, மீமாம்ஸகர்களைத் திட்டியிருக்கிறார். வேதத்தின் ஸாரமான தத்வார்த்தத்தை எடுத்துக் கொள்ளாமல், ஏதோ இலக்கண ரீதியில் மட்டும் அந்த வாக்கியங்களை அலசி வாதம் செய்து அதிலேயே பூரித்துப்போகிற 'வேத வாதரதா:' என்கிறார். இப்படி மீமாம்ஸகர்கள் அர்த்தம் பண்ணித்தான் வேதத்தின் ப்ரயோஜனமே அது கர்மாவில் மநுஷ்யனை ஏவுவதில்தான் இருக்கிறதே ஒழிய, ஞான விசாரமென்று கர்மாவை விட்டுவிட்டு ஸந்நியாஸியாகப் போகிறதில் இல்லை என்று நிர்ணயிப்பது. ஆசைப் பூர்த்திக்காகவே கர்மங்களைச் செய்யும் இவர்களை "காமாத்மா"க்கள் என்று வைகிறார். மோக்ஷமென்ற நித்யானந்தத்தை நாடாமல் தேவலோகம் என்ற கேளிக்கை உலகத்தையே நாடும் 'ஸ்வர்க்கபர'ர்கள் தங்களுக்கு இந்த வழியில்தான் போகமும் ஐச்வர்யமும் கிடைப்பதால், வாஸ்தவத்தில் பிறவிச் சுழலிலேயே பிடித்துத் தள்ளுவதான இந்த விஸ்தாரமான சடங்குகளைப் பற்றிப் பிரமாதமாக, வசீகரமாக ப்ரஸங்கம் பண்ணுகிறவர்கள்-என்றெல்லாம்

கண்டனம் செய்கிறார்.

புஷ்பாலங்காரம் செய்வதுபோல வார்த்தைகளை ஜோடித்தே ஜயிக்கிறார்கள் என்பதற்கு 'புஷ்பிதாம் வாசம்' என்கிறார். இங்கிலீஷிலும் Flowery language என்றுதான் சொல்கிறார்கள். இவர்களை அறிவில்லாத 'அவிபச்சிதர்'கள் என்கிறார். கிருஷ்ணருடைய காலத்தில் கர்மயோகமும் கெட்டுப் போயிருந்ததை இது காட்டுகிறது. 'பிற்காலத்தில் நஷ்டப்பட்டுப் போன யோகம்' என்று பகவானே சொன்ன விஷயம்.
பக்தி மார்க்கத்திலும் தப்பான வழிகள் ஏற்பட்டதை முன்னேயே சொன்னேன். யக்ஷ ராக்ஷஸர், பூத ப்ரேதங்கள் வரை எல்லாவற்றையும் ரஜோ - தமோ குணக்காரர்கள் ராஜஸிகமாகவும் தாமஸிகமாகவும் வழிபட்டதைச் சொன்னேன்.
இப்படி எல்லா மார்க்கத்திலும் ஏற்பட்டிருந்த சீரழிவைப் போக்கிப் புனருத்தாரணம் செய்யவே க்ருஷ்ணாவதாரம் ஏற்பட்டது.
தர்ம ஸம்ஸ்தாபனத்திற்காகவே அவதாரம் என்று க்ருஷ்ணன் சொன்னது தெரிந்திருக்கும். தர்மம் என்பது ப்ரவ்ருத்தி தர்மம், நிவ்ருத்தி தர்மம் என்று இரண்டாக இருப்பதென்று ஆரம்பித்தேன். நிவ்ருத்திக்குப் பக்குவப்படுத்தும் நிஷ்காம்ய கர்ம யோகமாக ப்ரவ்ருத்தி மார்க்கம் அமையாதவரையில் அதற்கு 'தர்மம்' என்று பேர் கொடுக்கவே க்ருஷ்ண பரமாத்மா தயாராக இல்லை. எத்தனைதான் வேத கர்மானுஷ்டானம் செய்தாலும் ஸரி, கர்ம பலனுக்காகவே செய்தால் ப்ரயோஜனமில்லை; பலனைத் தியாகம் செய்து, நித்ய ஸௌக்கியத்திற்கான நிவ்ருத்தி மார்க்கத்தை மேற்கொள்ளும் சித்தப் பக்குவத்தைப் பெறுவதுதான் ப்ரயோஜனம் என்பதே அவர் அபிப்ராயம். வேதாந்தத்தில் இருப்பதைத்தான் அவர் தம்முடைய அபிப்ராயமாகவும் சொன்னார். ஆசார்யாளும் அதையேதான் நன்றாக மெருகேற்றி ப்ரகாசிக்க வைத்தார். ப்ரவருத்தியைக் கர்ம யோகமாக்கினால்தான், கர்ம யோகத்தினால் சித்த சுத்தி, சித்த சுத்தி பெற்றபின் கர்மாவில் பற்றுப் போய் ஞான விசாரத்தில் ஈடுபாடு ஏற்பட்டு நிவ்ருத்திக்குப் போவது என்று ஆகும். பலனுக்காகவே கர்மாவை ஆயுஸ் முழுக்கப் பண்ணிக்கொண்டிருப்பது என்ற மீமாம்ஸையை ஏற்றுக்கொண்டு விட்டால் அப்புறம் நிவ்ருத்தி மார்க்கம் ஏது?

இவ்விதத்தில் க்ருஷ்ணர் நாளில் நிவ்ருத்தி தர்மத்திற்கு முக்யமாக ஹானி ஏற்பட்டு, அவர் இரண்டையும் ஸ்தாபிப்பதற்காக அவதரித்தார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

### ஸ்ரீ சங்கர சரிதம்

### கண்ணனும் சங்கரரும்

எடுத்துக்கொண்டிருக்கும் விஷயம் என்ன? பகவத் பாதாள்கதை கேட்க வந்தோம். எங்கே, யாருக்குப் பிள்ளையாகப் பிறந்தார் என்று ஆரம்பிக்காமல் என்னவோ, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி என்று ஆரம்பித்து சங்கராவதாரத்திற்குப் பதில் க்ருஷ்ணாவதாரத்தில் அல்லவா கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது? என்று தோன்றலாம். க்ருஷ்ணாவதார காலத்திலிருந்த சூழ்நிலை முற்றித்தான் சங்கராவதாரம் ஏற்படுவதற்கு அவசியம் ஏற்பட்டது. க்ருஷ்ணாவதாரத்தில் அவர் கொடுத்த வாக்குப்படித்தான் இவருடைய அவதாரம் நிகழ வேண்டியதாயிற்று. க்ருஷ்ணரில்லாமல் ஆசார்யாள் இல்லை. "பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம்" என்று லோகம் முழுக்கப் பரப்பியவர் அவர். அவருடைய பிறந்த ஊரில் குல தெய்வமாக இருந்த ஆலய மூர்த்தியே க்ருஷ்ணன்தானென்று சொல்வதுண்டு. இன்றைக்கு 'ஜகத்குரு' என்று சொன்னால் நம்முடைய ஆசார்யாள்தான் என்று ஆகியிருக்கிறதென்றால் இவருக்கு முந்தி அந்த விருதைப் பெற்றிருந்தவர் க்ருஷ்ண பரமாத்மா தான். "க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்" என்று ஸ்தோத்ரம் இருக்கிறது. அந்த ஜகத்குரு உபதேசித்த கீதைக்கு இந்த ஜகத்குரு பாஷ்யம் பண்ணியிருக்கிறார். எல்லாவற்றுக்கும் மேலாக தர்மம் ரொம்பவும் க்ஷீணித்து, அதர்மம் மேலோங்கி எழுந்த ஒரு ஸமயத்தில் நம்முடைய ஆசார்யாளின் அவதாரம் ஏற்பட்டு, இன்றைக்கும் நாம் அவருடைய சரித்திரத்தைக் கேட்டு கேட்டு மகிழ்கிறோமென்றால், இந்த மாதிரி சூழ்நிலையில் இப்படியொரு அவதாரம் ஏற்பட்டுத்தான் ஆகவேண்டும் என்று முன்னாடியே வாக்குக்

கொடுத்தவர் க்ருஷ்ண பரமாத்மாதான். எல்லாருக்கும் காதில் விழுந்திருக்கக் கூடும்-அவர் கொடுத்த வாக்கு :
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே
இதற்கு முந்தின ச்லோகமாக அவர் சொன்னது:
யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் - பவதி பாரத
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்
அதாவது, "எப்பொழுதெப்பொழுது தர்மத்திற்கு ஹானியும், அதர்மத்திற்கு எழுச்சியும் உண்டாகிறதோ அப்பொழுதெல்லாம் நான் என்னையே அவதாரமாகப் படைத்துக்கொண்டு வருவேன்" என்று ஸத்யம் பண்ணிக் கொடுத்தார். அதைக் காப்பாற்றத்தான் ஸ்ரீசங்கராவதாரம் பிற்பாடு ஏற்பட்டது. இதனாலெல்லாம் அந்த அவதாரத்தைச் சொல்லிவிட்டு இந்த அவதாரத்தைச் சொல்வதுதான் பொருத்தம்.
அவதாரக் கதை கேட்பது இருக்கட்டும். எதற்காக அவதாரம் என்று தெரிய வேண்டுமோ, இல்லையோ? அதற்காகத்தான் ப்ரவ்ருத்தி-நிவ்ருத்தி, கர்மா-ஞானம்-பக்தி என்றெல்லாம் சொன்னது. அந்த வழிகள் எல்லாவற்றையும் செப்பனிட்டுக் கொடுத்து ஜீர்ணோத்தாரணம் செய்வதற்குத் தான் இரண்டு அவதாரங்களும் ஏற்பட்டது. க்ருஷ்ண பரமாத்மாவின் காலத்தை விடவும் இந்த வழிகளெல்லாம் சீர்கெட்டுப் போயிருந்த ஸமயத்தில் ஆசார்யாளின் அவதாரம் ஏற்பட்டு மஹத்தான புனருத்தாரணம் பண்ணிற்று.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## பூர்வகால அவதாரங்கள்

க்ருஷ்ணாவதாரத்துக்கு முந்தியும் மத்ஸ்யத்திலிருந்து ராமர் வரை ஏழு அவதாரங்கள் ஏற்பட்டிருந்தன. எட்டாவது அவதாரமான பலராமரும் க்ருஷ்ணரின் ஸம காலத்தவரேயானதால் ராமரோடு நிறுத்திக்கொண்டேன். அந்த அவதாரங்கள் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை உபதேசிப்பதற்காக ஏற்பட்டவையல்ல. ஏதோ கொஞ்சம் அவ்வப்போது

உபதேசித்தால்கூட அது அந்த அவதாரங்களின் முக்ய நோக்கமில்லை. ஏனென்றால் அந்தக் காலங்களில் உபதேசத்துக்காக பகவானே அவதரிக்கவேண்டும் என்னும்படியான சூழ்நிலை இருக்கவில்லை. ஸூர்யன்-மநு-இக்ஷ்வாகு-அப்புறம் அவன் வம்சம் என்று கர்மயோகம் அது பாட்டுக்கு தொடர்ச்சியாக நல்ல முறையில் போய்க்கொண்டிருந்தது என்று பகவான் சொன்னது போலவே ஞானயோகம், பக்தியோகம் ஆகியனவும் ஞான பரம்பரை, பக்தி பரம்பரை வழியாக குரு-சிஷ்யாளென்று சீராக அந்தக் காலங்களிலெல்லாம் தொடர்ந்து சென்று கொண்டிருந்தன. ஜனங்களெல்லாம் பொதுவாக நல்ல வழிகளிலேயே போய்க்கொண்டிருந்தார்கள்.
அப்போதெல்லாம் அவதாரங்கள் ஏன் ஏற்பட்டனவென்றால் அஸுரர், ராக்ஷஸர் என்ற இனங்கள் ஆதிக்கத்துக்கு வந்து கொடுமைப்படுத்திய ஸமயங்களில் அவர்களை அழிப்பதற்காகத்தான். இந்த ஸம்ஹார க்ருத்யம் ஆனபின் ஜனங்கள் நிர்பயமாக பழையபடி நல்ல வழியிலேயே போய்க்கொண்டிருப்பார்கள். ஸாக்ஷாத் ஈச்வரனே மெனக்கிட்டு உபதேசம் பண்ணுவதற்கென்று அவரிதரிக்க வேண்டுமென்றில்லாமல், மஹான்கள் மூலம் அது நடந்து கொண்டிருந்தது. ஜனங்கள் அவரவர் மனப்பான்மைக்கேற்ப எந்த யோகமோ அதில், ப்ரவ்ருத்தி-நிவ்ருத்திகளில் ஒன்றில், போய்க்கொண்டிருந்தார்கள்.
ஞானத்தின் பெருமை தெரிவதற்காகவே அவ்வப்போது பகவானும் தத்தர், ஹம்ஸர் முதாலன அவதாரங்களின் மூலம் உபதேசங்கள் செய்தாலும் இதற்காக ஈச்வர சக்தியை விசேஷமாகக் கைக்கொள்ள வேண்டியிருக்கவில்லை. ஏதோ ஒன்று ரொம்பவும் சிதிலமானால் தானே அவைத் தூக்கி நிறுத்திப் பழையபடி பலமாக நிறுத்துவதற்கு நிரம்பவும் சக்தியைச் செலவழிக்கவேண்டும்? இதனால்தான் அஸுர, ராக்ஷஸர்களின் ஸம்ஹாரத்துக்காக ஏற்பட்ட அவதாரங்களையே பகவானின் ஸாக்ஷாத் சக்தி வாய்ந்த தசாவதாரங்கள் என்று சிறப்பாகப் பாகுபடுத்திவிட்டு உபதேசகர்களாக அவன் எடுத்த ஸநகாதியர் நர-நாராயணர்கள் கபிலர், தத்தர், வ்யாஸர் முதலானவர்களை அம்சாவதாரங்கள் என்று வைத்தார்கள். இருபத்து நாலு அவதாரம் என்று ஒரு கணக்கு. அதில் தசாவதாரங்களும் அதோடு இந்த ஞானோபதேச அவதாரங்களும், இன்னம்

தன்வந்தரி, மோஹினி போன்றவர்களும் அடங்குவார்கள். ராமாவதாரத்திற்கு அப்புறம் க்ருஷ்ணாவதாரத்திற்கு முன் என்ன ஆயிற்று என்றால் அஸுர-ராக்ஷஸர்கள் தனியாக அப்படியிருப்பதைவிட மநுஷ்ரூபத்திலுள்ள பல ராஜாக்களிலேயே அதிகம் ஆவேசித்தார்கள். கம்ஸன், ஜராஸந்தன், கௌரவர்கள் ஆகியவர்கள் மநுஷ்ய ஜாதியிலேயே பிறந்தவர்கள், ஆனாலும் அஸுர குணத்தோடு இருந்தார்கள். பரசுராமர்கூட மதோன்மத்தமாகப் போன மாநுஷமான ஒரு ராஜா குடும்பத்தை ஸம்ஹரிப்பதில்தான் ஆரம்பித்தார். ஆனால் அப்புறம் அப்படி (மதோன்மத்தாக) இல்லாத ராஜாக்களையும் அவர் ஸம்ஹரித்துக் கொண்டே போய்க் கடைசியில் ராமரிடம் தோற்றுப் போனதாகக் கதை வேறே மாதிரி போய்விடுகிறது. க்ருஷ்ணர் காலத்தில்தான் அநேக ராஜாக்களின் ரூபத்தில் அஸுரர்கள் அக்ரமம் பண்ணிக்கொண்டிருந்தது. நரகாராஸுரன், பகாஸுரன், பாணாஸுரன் மாதிரி அசல் அஸுரர் என்றேயும் சிலர் இருந்தார்கள்.
இம்மாதிரி ஏதோ சில அசல் அஸுரர்கள் அவர்களைக் காட்டிலும் அதிகமான அளவில் மநுஷ ரூபத்தில் அரசர்களாக உள்ள அஸுரர்கள் ஆகியவர்களே க்ருஷ்ணாவதார காலத்தில் லோகத்துக்கு, தர்மமான மார்க்கங்களுக்கு ஹானி செய்துகொண்டிருந்தார்கள். ஆனால் இவர்கள் எல்லோரைக் காட்டிலும் அதிக அளவினரான பொதுஜனங்கள் பொதுவாக தர்மவழிகளை விட்டு அதிகமாக விலகிவிடவில்லை. (சற்றுமுன்) சொன்னது போல, கர்மாத்மாக்களாக வறட்டுக் கர்மாவே செய்பவர்கள், க்ரூரமான உபாஸனைகளைக் கடைப்பிடிக்கிறவர்கள், ஞானம் வராமலே வந்தமாதிரி ஹிபாக்ரிஸி செய்கிறவர்கள் ஆகியவர்களும் ஜன ஸமூஹத்தில் இருந்தாலும், அதைவிட அதிகமாகவே நல்ல வழிகளில் போகிறவர்கள்தான் இருந்தார்கள். இருந்தாலும் கெட்டதுகள் வியாதி பரவுகிற மாதிரி பரவிவிடப் போகிறதே என்று க்ருஷ்ண பரமாத்மா ஸமயத்தில் அர்ஜுனனை முன்னிலைப்படுத்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தர்மங்களை நன்றாகச் செப்பனிட்டு உபதேசித்தார். ஆனாலும் இதற்காக மட்டுமே அவர் அவதாரம் செய்தாரென்று சொல்ல முடியாது. அவர் இன்னம் அநேக உத்தேசங்களை வைத்துக்கொண்டே பூர்ணாவதாரம் என்னும் படியாக முழு ஈச்வர சக்தியோடு அவதாரம் செய்தார்.

ராஜாக்களின் வேஷத்திலிருந்த அஸுரர்களின் அதிக்ரமத்தால் பூமி கஷ்டப்பட்டது; பூமாதேவி ப்ரஹ்மாவிடம் போய் முறையிட்டாள்; அவர் அவளையும், தேவ ஸமூஹத்தையும் அழைத்துக்கொண்டு மஹாவிஷ்ணுவிடம் போய் முறையிட்டார்; மஹாவிஷ்ணு அதைக்கேட்டே க்ருஷ்ணாவதாரம் செய்தார்-என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறது. அரச ரூப அஸுரர்களை அழித்து பூபாரம் தீர்ப்பது, நல்ல வழிகளை உபதேசம் செய்வது என்ற இரண்டோடு, இன்னம் தெய்வமாகவும் மநுஷனாகவும் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அத்தனையும் செய்து காட்டித் தீர்ந்துவிடுவது என்றே அந்த அவதாரத்தில் பூர்ண சக்தியோடு வநதார். வெண்ணெய் திருடி இடைச்சிகளிடம் அடிபடுவதிலிருந்து, அவர்களோடேயே அப்புறம் ராஸக்ரீடை செய்வதிலிருந்து, கோவர்த்தனோத்தரணம், விச்வரூப தர்சனம் முதலான பெரிய காரியங்கள், தூது போவது தேரோட்டுவது முதலான சின்ன கார்யங்கள், பக்த வாத்ஸல்யம் என்றால் இப்படியும் உண்டா என்னும்படியாகப் பாண்டவர்கள், த்ரௌபதி, குசேலர் முதலானவர்களுக்கு அநுக்ரஹம் செய்வது என்று என்னென்னவோ, ஏகமாகப் பண்ணினார். அதில் ஒரு முக்யமான கார்யம்தான் உபதேசம். அதுவே முழுக் கார்யமில்லை. பூலோகத்தில் நரவேஷத்தில் ஆடினதில், ஆயுஸில் முக்கால்வாசி போன விட்டுத்தான் கீதோபதேசம் என்று ஞானாசார்யனாக வாயைத் திறந்தார்.

அப்புறம் கடைசியில் நரலீலை முடித்துப் பரமபதத்திற்குத் திரும்புவதற்குத் முன் உத்தவ ஸ்வாமி என்ற பரம பக்தருக்கு இன்னொரு உபதேசம் செய்தார். 'உத்தவ கீதை' என்று அதற்குப் பெயர். அர்ஜுனனுக்குப் பண்ணிய உபதேசத்துக்கு உபதேசம் செய்தவரை வைத்து 'பகவத் கீதை' என்று பேர் ஏற்பட்டது. அவதாரத்தில் கடைசிக் கார்யமாக பண்ணிய உபதேசத்துக்கோ அதைக் கேட்டுக் கொண்டவரை வைத்து 'உத்தவ கீதை' என்று பேர் ஏற்பட்டது.

## கலியுகம் : தொடக்க காலத்திலும் பிற்காலத்திலும்

க்ருஷ்ணர் பரமபதாரோஹணம் செய்வதற்குக் கொஞ்சம் முந்தியே கலியுகம் பிறந்து விட்டது. ஆனாலும் உடனேயே லோகம் முழுக்கக் கெட்டு விழுந்துவிடாமல் பகவான் செய்திருந்தவை கை கொடுத்து, முட்டுக் கொடுத்து, காப்பாற்றிக் தூக்கிக் கொண்டிருந்தன. சக்தி குறைந்த கலிகால மநுஷ்யர்களின் அநுஷ்டானத்துக்கு இயலும் வகையில் அம்சாவதாரமான வேதவ்யாஸ பகவான் வேதங்களைப் பிரித்துக் கொடுத்தார். அதனாலேயே-அதன் கர்ம காண்ட, ஞான காண்ட, விதிகளாலேயே-ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்கள் அடிபட்டுப் போகாமல் காப்பாற்றிக் கொடுத்தார். அதோடு, உபநிஷத்துக்கள் எல்லாவற்றிலுமாகப் பரந்து விரிந்து சிதறிக் கிடக்கும் அத்யாத்ம தத்வங்களை ஸாரமாகத் திரட்டி 'ப்ரஹ்ம ஸூத்ரம்' என்று, ஒரு ஸூத்ரத்தில் (கயிற்றில்) மணிகளைக் கோத்துக் கொடுப்பது போல, உலகத்துக்குத் தந்து ஞான மார்க்கத்துக்கு, நிவ்ருத்தி தர்மத்துக்கு, விசேஷ உபகாரம் செய்தார். ஸர்வ ஜனங்களின் ஆத்மிக மேம்பாட்டுக்காக பதினெட்டுப் புராணங்களையும் அநுக்ரஹித்து பக்தி மார்க்கத்திற்கும் போஷாக்குத் தந்தார். இதனாலெல்லாம் கலி பிறந்தும் இரண்டாயிரம், இரண்டாயிரத்து ஐநூறு வருஷம் வரைக்கும் ஜனங்கள் பெரும்பாலும் நல்ல வழியிலேயே போய்க் கொண்டிரு ந்தார்கள்.

கலி பிறந்தது கி.மு. 3102-ல் என்று திட்டமாகக் கணக்கு இருக்கிறது. ப்ரதி தினமும் வைதிக கர்மாவில் செய்து கொள்ளும் ஸங்கல்பத்தில் பிரஹ்மாவின் ஆயுஸில் எத்தனாவது வருஷம் (வயஸு) என்பதிலிருந்து, அதிலே எந்த கல்பம், அந்தக் கல்பத்தில் எந்த மன்வந்தரம், அந்த மன்வந்தரத்தில் எந்த சதுர்யுக 'ஸைகிளி'ல் எந்த யுகத்தில் எத்தனாவது வருஷம், அந்த வருஷத்தில் எந்த அயனம், ரிது, மாஸம், பக்ஷம், திதி என்கிற வரைக்கும் ஆதியிலிருந்து up-to-date-ஆக அன்றைய தினத்தைச் சொல்லி வருவதால் கலியுகம் எப்போது ஆரம்பித்தது என்று ஸந்தேஹத்துக்கு இடமில்லாமல் தெரிகிறது. இதிலேதான் சுமார் இரண்டாயிரம் வருஷத்துக்கு மேல், அதாவது இன்றைக்கு சுமார் 2500

வருஷத்துக்கு முந்தி வரை லோகம் ஓரளவு நல்ல வழியிலேயே ஓடிக் கொண்டிருந்தது.
ஆனாலும் பகவான் விளையாட்டில் யுக தர்மம், கலி புருஷனுக்கு அதிகாரம் கொடுப்பது என்று ஏற்பட்டிருந்ததால் அப்புறம் அவனுடைய சேஷ்டை ஜாஸ்தியாகத் தொடங்கியது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## கலியின் பேரபாயம் : மயக்கு வேஷம்

இந்த யுகத்திலே முக்யமாக என்ன பெரிய அபாயம் என்றால், அபாயமான வஸ்து அப்படி கண்ணுக்குத் தெரியாமல் அதுவே ரொம்ப நல்லது மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து மயக்கி விடுவதுதான். அபாயத்தை அபாயமானது என்று தெரிந்து கொள்ள முடிந்தால்தானே அதிலிருந்து நம்மை ஜாக்ரதை செய்து கொள்ளலாம்? தீரர்களாக இருந்தால் அதோடு சண்டையும் போட்டு அதை அடக்கி வைக்கலாம்? பூர்வ யுகங்களில் அபாய ஹேதுவாக அஸுரர்கள் தோன்றியபோது, அவர்களுடைய க்ரூரமான ரூபம், வெளிப்படையாகவே அவர்கள் க்ரூரமாகச் செய்த கார்யங்களெல்லாம் ஜனங்களுக்குத் தெரிந்தபோது அவர்கள் ஒதுங்கிப் போகப் பார்த்தார்கள். அப்படியும் இவர்கள் மேலே வந்து விழுந்து பிடுங்கினபோது 'நம்மால் இவர்களோடு சண்டை போட்டு முடியாது' என்று பகவானிடம் ப்ரார்த்தித்துக் கொண்டார்கள். பகவானும் அவதாரங்கள் எடுத்து அவர்களை ஸம்ஹரித்தார். முள்ளு குத்தினால் அதைப் பிடுங்கிப் போட்டவுடன் எல்லாம் ஸரியாய் விடுவது போல, அப்புறம் ஜனஸமூஹம் (தேவ ஸமூஹத்தையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்) நல்லபடியாகி, பழையபடி நல்ல வழியிலேயே போய்க் கொண்டிருந்தது.
க்ருஷ்ணாவதாரத்திலும் கம்ஸன், சிசுபாலன், ஜராஸந்தன், துர்யோதனன் முதலானவர்களை தர்மத்திற்கு அபாயம் உண்டாக்கும் துஷ்டர்கள் என்று இனம் பிரித்துக் கண்டு

கொள்ள முடிந்தது. இப்படிப் பூர்வயுகங்களில் ஒவ்வொரு துஷ்டக் கூட்டம் ஹிம்ஸை செய்வது, அதை பகவான் அவதாரம் பண்ணி ஸம்ஹாரம் செய்தவுடன் லோகம் நன்றாக ஆகிவிடுவது என்று இருந்தது. நல்ல வழியை உபதேசிக்கும் மஹான்கள் அப்போது நிறைய இருந்தார்கள். துஷ்டர்கள் அழிந்ததும் அவர்கள் நிர்பயமாகத் தங்கள் பணியை ஆரம்பித்து விடுவார்கள். நேராக பகவதவதாரமே ஜனங்களிடம் உபதேசம் பண்ணியோ, வாழ்ந்து காட்டியோ ப்ரவ்ருத்தி - நிவ்ருத்தி மார்க்கங்களை நிலைநாட்ட வேண்டுமென்ற அவசியம் இருக்கவில்லை. ஆனாலும் அவதாரம் ஏற்பட்டு துஷ்ட நிக்ரஹம் செய்யாமலிருந்தால் துஷ்டர்கள் இரண்டு மார்க்கங்களையும் ஒழித்துக்கட்டித்தான் இருப்பார்கள். இந்த ரீதியில் அவதாரங்கள் வேத தர்மத்தை ரக்ஷித்துக் கொடுத்தன.

அப்போதெல்லாம் கெட்டதே நல்லது மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு வந்து ஸர்வ ஜனங்களையும் மயக்கித் தன்னுடைய ஆதிக்கத்தில் கொண்டுவரவில்லை. கெட்டதுகள் வசீகரணமுள்ளதாகவும், ப்ரியமான மாதிரி நடிப்பதாகவும் இல்லாமல், கெட்டதாகவே ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொண்டு ஜனங்களை ஹிம்ஸித்தே தங்கள் ஆதிக்கத்தில் கொண்டுவரப் பார்த்தன. அதனால் இது கெட்டது என்று ஜனங்கள் நன்றாகத் தெரிந்துகொண்டு அதற்கு அடிபணியக்கூடாது என்று இருக்க முடிந்தது.

கலியிலே தனியாக இப்படி அஸுரக் கூட்டம், ராக்ஷஸ ஜாதி என்று இல்லை. மநுஷ்ய ஜாதிக்கு வெளியிலே அப்படியில்லை. அப்படியென்றால்........புரிகிறதோல்லியோ? மநுஷ்யர்களின் மூளைகளுக்குள்ளேயேதான் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் புகுந்துகொண்டு விட்டார்கள்! இந்த யுகத்தில் அதர்ம சக்தி வெளியிலே பௌதிகமாக இருந்துகொண்டு ஜனங்களைத் தாக்காமல் ஜனங்களுக்குள்ளேயே, அவர்களுடைய புத்திக்குள்ளேயே கெட்ட சித்த வ்ருத்திகளாகப் புகுந்துகொண்டு விட்டது!

## புது மத ஸ்தாபகர்கள்

இதைத் தூண்டிவிட்டு தூபம் போட்டு ஜனங்களைத் தப்பிலேயே நன்றாகப் பிடித்துத் தள்ளுவதற்காகப் பல பேர் வந்தார்கள். அவர்களும் க்ரூரமான அஸுரர்களாகத் தெரிபவர்களில்லை. ஜனங்களின் ஹிதத்தையே நினைத்து அவர்களுக்கு ஸத்யத்தைச் சொல்லி அவர்களுடைய ஆத்மாவை ரக்ஷித்துக் கொடுக்கவேண்டுமென்றே வாழ்கிறவர்கள் என்று எல்லோரும் நம்பும்படியானவர்களாக அவர்கள் தோன்றினார்கள். அவர்களில் சில பேர் நல்ல படிப்பு, அறிவு, வாதத் திறமை, சொந்த வாழ்க்கையில் உயர்ந்த சீலம் எல்லாம் உள்ளவர்களாகவும் காணப்பட்டார்கள். வாஸ்தவத்திலேயே அவர்களுடைய நோக்கம் நல்லதாகவும் இருந்திருக்கலாம். அவர்கள் சொன்னவற்றிலும் சில நல்ல அம்சங்கள் இல்லாமலில்லை. ஆனாலும் மொத்தமாகப் பார்த்தால் இவர்கள் ஒவ்வொருவர் சொன்னதும் ஜனங்களின் உண்மையான ஆத்மாபிவ்ருத்திக்காக ப்ரவ்ருத்தி-நிவ்ருத்தி தர்மங்களைப் பூர்ணமாக வகுத்துக் கொடுத்த வேத மார்க்கத்திற்கு விரோதமாகவே இருந்தது. மேலே பார்த்தால் நல்லது போலத் தெரிந்தாலும், உள்ளே போனால் இஹம், பரம் இரண்டிற்கும் ஸஹாயம் செய்யாதவையாகவே இருந்தது. இப்படியிரு ந்தாலும், இப்படிச் சொன்னவர்களுக்குரிய மரியாதையைக் குறைத்துச் சொல்லப்படாது. அவர்களுடைய நல்ல நோக்கத்தில்கூட நாம் ஸந்தேஹப்பட வேண்டியதில்லை. அவர்களில் சில பேர் தம்மளவில் ஒரு உயர்ந்த அநுபவம் பெற்றவர்களாகவும் இருந்திருப்பார்கள். ஆனாலும் மற்றவர்களுக்கு இவற்றைச் சொன்னதில், அவர்கள் (மற்றவர்கள்) இஹ-பர க்ஷேமங்கள் ஸகலத்துக்கும் ராஜ பாட்டையாக இருந்த வேத மார்க்கத்தை விட்டுவிட்டு சந்தில், பொந்தில் காட்டு வழியில் போகும்படியாகவே பண்ணிவிட்டார்கள். அக்காலத்தில் ஜனங்கள் அஞ்ஞானமாகிய அடர்ந்த காட்டுக்குள் விழுந்து கிடந்தார்கள்- "அஜ்ஞாநாந்தர்-கஹண-பதிதான்" -என்று சொல்லியிருக்கிறது. "கஹணம்" என்றால் அடர்ந்த காடு. இப்படி ஜனங்களை வேத தர்மத்தைத் விட்டுப்

போகும்படியாகப் பண்ணும் பலர் அப்போது தோன்ற ஆரம்பித்தார்கள்.
அவர்கள் யாரென்றால், பல மதங்களை, ஸித்தாந்தங்களை ஸ்தாபித்தவர்கள்; அல்லது ஏற்கெனவே எங்கேயோ துளி முளைவிட்டு மண் மூடிப் போயிருந்த அபிப்ராயங்களை இப்போது நன்றாக உரம்போட்டுப் பெரிய ஸித்தாந்தமாகத் தளிர்த்து வளரப் பண்ணியவர்கள். யாராயிருந்தாலும், லோக க்ஷேமார்த்தமாக ஈச்வர ப்ரேரணையின் மேல் ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட ஸநாதன தர்மமான வேத மதத்தின் தாத்பர்யங்களுக்கு விரோதமாக ஸித்தாந்தம் பண்ணியவர்கள்.

மதங்களின் மூல புருஷர்களாகவும் ஸித்தாந்த ப்ரவர்த்தகர்களாகவும் வந்த இவர்களில் இரண்டு வகை உண்டு. ஒருவகை, வேதத்தை அடியோடு ஆக்ஷேபிக்கவில்லை. தங்கள் கொள்கை வேதத்தை மறுத்துச் செய்யப்பட்டதென்று சொல்லவில்லை. ஆனால் வாஸ்தவத்தில் அவர்களுடைய கொள்கை, வேதத்தில் ப்ரவ்ருத்தி-நிவ்ருத்தி என்று பிரித்து, ஒன்றுக்கப்புறம் மற்றது என்று இணைத்துக் கொடுப்பது போலில்லாமல், ஏதாவது ஒன்றை மட்டும், அல்லது ஒன்றில் சில அம்சங்களை மட்டும் சொல்லி, அதுவே எல்லாம் என்று முடிப்பதாக இருந்தது. இரண்டாவது வகையினர் வேதத்தை அடியோடு, வெளிப்படையாக, ஆக்ஷேபித்துப் புது மதமாகவே பண்ணியவர்கள். பௌத்தம், ஜைனம், சார்வாகம் ஆகிய மதங்கள் இப்படிப்பட்டவையே. பௌத்தம், ஜைனம் என்று அந்த மதஸ்தாபகர்களான புத்தரையும் ஜினரையும் வைத்துப் பெயர் சொன்னதுபோலச் சார்வாகத்துக்கும் (அதன் ஸ்தாபகரை வைத்துப் பெயர்) சொல்வதானால் 'பார்ஹஸ்பதம்' என்று சொல்லவேண்டும். ப்ருஹஸ்பதி ஸ்தாபித்த மதமாகையால் (அது) பார்ஹஸ்பதம்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

## பௌத்த சமண மதங்களும் ஹிந்து மதமும்

நான் இப்போது பௌத்த, ஜைன மதங்களை 'க்ரிடிஸைஸ்' பண்ணிச் சொல்கிறேனென்று உங்களுக்கு வருத்தமாயிருக்கலாம். ஏனென்றால் நம்முடைய ஹிஸ்டரி புஸ்தகங்களில் புத்தரையும், ஜினரையும் (மஹா வீரரையும்) பற்றி உயர்வாகப் படித்திருப்பீர்கள். அந்த அளவுக்கு உயர்வாக நம்முடைய மத புருஷர்கள் யாரைப் பற்றியாவது பாட புஸ்தகத்தில் சொல்லியிருக்குமா என்பது ஸந்தேஹம். காந்தீயம், முன்னேற்றக் கொள்கைகள் என்றெல்லாம் தற்காலத்தில் சொல்லுவதில் அஹிம்ஸை, ஸகல ஜனங்களுக்கும் வர்ணாச்ரம பேதமில்லாமல் ஸமமாக எல்லா உரிமைகளும் கொடுப்பது ஆகியவற்றுக்கு பௌத்த, ஜைன மதங்கள் இடம் கொடுத்திருப்பதாலேயே அவற்றுக்கு உயர்வு கொடுக்கப்படுகிறது. யஜ்ஞத்தில் ஹிம்ஸை இருக்கிறது, ஜனங்களைப் பிறப்பினால் பிரித்து வெவ்வேறு அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது என்பதால் ஹிந்து மதத்திடம் ஒரு குறைவான அபிப்ராயம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் ஜன ஸமுதாயம் ஒழுங்காக வளர்வதற்குப் பல விதமான கார்யங்கள் நடக்கவேண்டியிருக்கிறது என்பதையும், ஜனங்கள் தேஹ ரீதியாகவும் மனோ ரீதியாகவும் பலதரப் பட்டிருக்கிறார்கள் என்பதையும் கவனித்துத் தான் அத்தனை பேருக்கும் ஒரே போன்ற தர்மங்களை வைக்கக்கூடாது, ஒரே போன்ற அநுஷ்டானங்களையும் பணிகளையும் கொடுக்கக் கூடாது என்று தீர்மானம் பண்ணி அவரவரும் இருக்கிற இடத்திலிருந்து மேலே போவதற்கு வசதியாக வர்ண விபாகம் ('ஜாதிப் பிரிவினை' என்று நடைமுறையில் சொல்லுவது) என்று நம் மதத்தில் பண்ணியிருப்பது. இது ஸமூஹ ஒழுங்கு. ஜன ஸமுதாயத்துக்குத் தேவையான அத்தனை பணிகளும் போட்டா போட்டியில்லாமல் தலைமுறை க்ரமமாகத் தட்டின்றி நடந்துவருவதற்கு ஏற்றபடி இந்த ஒழுங்கில் கார்யங்களைப் பிரித்துக் கொடுத்தார்கள். இதே மாதிரி ஒரு தனி மநுஷ்யனுக்கும் வாழ்க்கையில் ஒழுங்கான முன்னேற்றம் ஏற்படவேண்டுமென்றே அவன் ஒவ்வொரு ஸ்டேஜாகப் பக்வமாகிக்கொண்டு போவதற்கு வசதியாக ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்தயம் (இல்லறம்), வானப்ரஸ்தம், ஸந்நியாஸம் என்று ஆச்ரம விபாகம்

செய்யப்பட்டது.
அஹிம்ஸை போன்ற உயர்ந்த தர்மங்களை ஸகலருக்கும் உடனடி அநுஷ்டானமாக வைத்தால் எவருமே அநுஷ்க்க முடியாமல் தான் போகும்; அதனால் ஜனங்களுக்கு ஐடியலாக ஒரு பிரிவை வைத்து அவர்களுக்கு மட்டும் அதைத் தீர்மானமாக வைத்தால் அவர்கள் அதை ரொம்ப உஷாராக, ஒரு பெருமிதத்துடன் காப்பாற்றி வருவார்கள்; 'இந்த ஐடியல்படி நாமும் செய்து பார்க்கணும்' என்று மற்றவர்களும் ஓரளவுக்காகவது நிச்சயம் பின்பற்றுவார்கள்-என்று தான் தர்மங்களைப் பாகுபடுத்தியது. ப்ரத்யக்ஷத்தில் பார்த்தால் இன்றைக்கு பௌத்த தேசங்களில்தான் பிக்ஷுக்கள் கூட மாம்ஸ போஜனம் செய்கிறார்கள். அங்கேயெல்லாமும் ஸைன்யம், யுத்தம் என்று ராஜாங்க ரீதியிலும், கொலை, கொள்ளை என்று தனி மநுஷ்ய ரீதியிலும் நடந்துகொண்டு தானிருக்கின்றன. நம் தேசத்திலேயே அசோகனைத் தவிர பௌத்த, ஜைன ராஜாக்களாக இருந்தவர்கள் யாரும் சண்டையே போடுவதில்லை என்று இருந்துவிடவில்லை. ஆனாலும் தங்களுடைய மதக் கொள்கைக்கு இது ஸரியாக வரவில்லையே என்று அவர்கள் guilty-யாக feel பண்ணிக் கொண்டு, இரண்டுங்கெட்டானாக இருந்த ஸமயங்களில்தான் தேசத்திலே வலுவாய்ந்த பேரரசுகள் இல்லாமல்போய் அந்நிய தேசத்தார் படையெடுத்து வந்திருக்கிறார்கள்.

அப்புறம் அவர்களும் (பௌத்த, ஜைன அரசர்களும்) யுத்தம் செய்வது என்றுதான் ஆரம்பிக்கவேண்டி வந்தது. அதாவது, தங்களுடைய மதத்திற்கு விரோதமாகப் போக வேண்டி வந்தது. பாகுபாடு செய்யாமல் 'எல்லா தர்மமும் எல்லாருக்கும்' என்று வைத்த மதங்களில், இப்படிப் பாகுபடுத்திய நம் மதத்தில் ஒரு குறிப்பிட்ட பிரிவாவது தர்மங்களை உறுதியாக நடத்திக்காட்டி, அதனாலேயே மற்றவர்களையும் ஓரளவு அவற்றில் போகச் செய்வது போலக்கூட இல்லாமல், அத்தனை பேரும் தர்மங்களை விடுவதில்தான் ஸமமாக இருக்கிறார்கள் என்று ஆகியிருப்பதோடு, அவர்கள் யாவரும் தங்களுடைய மத விதிகளைப் புறக்கணித்தார்கள் என்ற பெரிய தோஷத்திற்கு ஆளாகும்படியும் ஏற்பட்டிருக்கிறது.
வைதிக மதத்தில் அதிகாரி பேதம் என்பதாகப் பாகுபடுத்தி தர்மங்களையும் கார்யங்களையும் கொடுத்திருப்பதுதான் ஏதோ ஒரு ஜாதியாருக்கு மாத்திரமின்றி ஸகலருக்குமே

நிரம்ப ஆத்ம ச்ரேயஸை அளித்திருக்கிறது என்பதற்கு ஒன்று சொன்னால் போதும்: இந்த ஒரு மதத்தில் தான் ஸகல ஜாதிகளிலும், ஒவ்வொரு ஜாதியிலுமே, மஹான்களும், ஞானிகளும் ஏகமாகத் தோன்றி, லோகம் பூராவிலுமே நம் நாட்டைத்தான் Land of saints (மஹான்களின் நாடு) என்று கொண்டாடும்படியாகப் பெருமை ஏற்பட்டிருக்கிறது. ஸமூஹ வாழ்வு நின்று நிலைத்த மஹோன்னதமான கலாசாரமாக நம் நாடு ஒன்றிலேயே எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக உறுதிப்பட்டிருப்பதும், நம் மதம் பாகுபடுத்திக் கொடுத்துள்ளபடி ஸமூஹத்தில் பல வர்க்கத்தினருக்கும் தங்கள் தங்கள் கார்யங்களை செவ்வனே செய்துகொண்டு, மொத்த ஸமுதாயமும் கட்டுக்கோப்புடன் ஒழுங்காக முன்னேறும்படி செய்ததால்தான். பாபிலோனியன் ஸிவிலிஸேஷன் (நாகரிகம்). ஈஜிப்ட் ஸிவிலிஸேஷன், க்ரீக் ஸிவிலிஸேஷன் என்று ஆதி காலத்தில் கொடிகட்டிப் பறந்த பெரிய ஸமுதாய மரபுகளெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோயிருக்க, வெளியேயிருந்தும் உள்ளேயிருந்தும் எத்தனையோ தாக்குதல்களைப் பெற்றும் இந்த ஹிண்டு ஸிவிலிஸேஷன் மாத்திரம் 'சாவேனா பார்!' என்று ஜீவனோடேயே இருந்துகொண்டிருக்கிறதென்றால், இப்படி இதற்கு ஸ்பெஷலாகச் சக்தி ஊட்டுவதற்கு மற்ற ஸிவிலிஸேஷன்களில் இல்லாததாக என்ன இருக்கிறது?-இந்த விஷயத்தைக் கொஞ்சம் ஆர அமர நடுநிலையிலிருந்து கொண்டு ஆலோசித்துப் பார்த்தால், நம் ஸிவிலிஸேஷனில் மட்டுமே உள்ள வர்ணாச்ரம விபாகம்தான் காரணம் என்று தெரியும். அதாவது இந்த ஏற்பாடுதான் ஒரு பக்கம், தனி மநுஷ்யர்களின் ஆத்மாபிவிருத்திக்கு போஷணை கொடுத்து இத்தனை மஹான்கள் தோன்றும்படிப் பண்ணியிருக்கிறது. ஐடியல் நிலைக்கு என்றே ஒரு பிரிவை மட்டும் வைத்தால் அதில் நிறைய மஹான்கள் தோன்றுவதும், அவர்களைப் பார்த்து மற்றப் பிரிவினரிலும் பலர் ப்ரயத்னம் பண்ணி அந்த மாதிரி ஆவதும் இயற்கைதானே? ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள் என்றாலும் அவர்கள் கண்ட ஞானமும் பக்தியும் சாந்தமும் அன்பும் அந்த பிரிவுக்கு மாத்திரம் ஸொந்தமாக நின்றுவிடாமல் ஸமூஹம் பூராவும் 'ரேடியட்' ஆவதால் எல்லாப் பிரிவுகளிலும் மஹான்கள் தோன்ற வழி கோலுகிறது. இன்னொரு பக்கம், வர்ணாச்ரம விபாகம்தான் இந்த தேசத்தின் பெரிய ஜன ஸமுதாயம் முழுவதையுமே

ஜீவசக்தி குன்றாத பெரிய நாகரிக மரபாக வலுப்படுத்திக் காத்துக் கொடுத்திருக்கிறது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**யாகத்தில் ஹிம்ஸை**

ஸாத்விகமான வாழ்முறைக்கென்று குறிப்பாக ஏற்பட்ட பிரிவினரிடமே ஹிம்ஸையம்சம் இருப்பதாகத் தோன்றும் யாக கர்மாவை வேதங்கள் கொடுத்திருக்கின்றன என்றால் அதில் ந்யாயமில்லாமலிருக்குமா? 'யஜ்ஞ பலியால் சில தேவ சக்திகள் ப்ரீதி அடைந்து லோகத்துக்கு நல்லது செய்கின்றன. பலியாகும் ப்ராணியும் ஸத்கதி அடைகிறது' என்று சாஸ்த்ரம் சொல்கிறது. (இதை) 'ப்ரூவ்' பண்ணிக்காட்ட வேண்டுமென்று சொன்னால், சொல்பவர்களிடம், "நீங்கள்தான் இப்படி இல்லை என்று 'ப்ரூவ்' பண்ணிக் காட்டுங்களேன்" என்று திருப்பிச் சொன்னால் என்ன பண்ணுவார்கள்? லோக க்ஷேமத்தையே உத்தேசித்து ஏற்பட்ட ஒரு சாஸ்த்ரத்தில், தத்வார்த்தங்களிலும் ஆத்மாநுபவத்திலும் உச்ச நிலைகளைச் சொல்வதாக உலகமே கொண்டாடும் ஒரு சாஸ்த்ரத்தில் வீணுக்கு இப்படி ஒரு ப்ராணியை அக்னியில் ஆஹுதி செய்யும்படிச் சொல்லியிருக்குமா?

யாகம் என்ற பெயரில் கூட்டங்கூட்டமாக ப்ராணிவதை பண்ணி ப்ராம்மணர்கள் தின்றிருந்தால் தப்புத்தான். ஆனாலும் வெறும் ஆடம்பரத்துக்காக பிம்பிஸாரன் மாதிரி எவனாவது ராஜா ப்ராம்மணர்களைக் கொண்டு இப்படிச் செய்திருக்கலாமே தவிர, வாஸ்தவத்தில் எந்த யஜ்ஞத்திலும் இத்தனை ப்ராணி பலிக்கு அவச்யமே கிடையாது. ஏராளமாக ப்ராணிவதை செய்து யாகம் செய்வது தப்பு என்பதற்கு பாகவத்தில் ஒரு உபாக்யானமே இருக்கிறது: ப்ராசீன பர்ஹிஸ் என்று ஒரு ராஜா. அவன் ஏகப்பட்டர் பசு (ஆடு) வதை பண்ணி யாகங்கள் செய்தான். நாரதர் அவனைத் தடுத்து நல்லறிவு புகட்டுவதற்காக வந்தார். வந்தவர் என்ன பண்ணினாரென்றால் ஸ்வர்க்க லோகத்தில் நடக்கும் ஒரு

காட்சியை அவனுக்குக் காட்டினார். அதிலே ஒரு பெரிய ஆட்டுக்கூட்டம். ஒவ்வொரு ஆட்டுக்கும் கெட்டியாக இரும்பு கொம்பு நல்ல கூராக இருக்கிறது. அந்த ஆடுகள் ஸாதுவான ஆடுகளாக இல்லாமல் புலி, சிங்கம் மாதிரி உக்ரமாக, தங்களுடைய இரும்புக் கொம்புகளைத் தீட்டிக்கொண்டு எதையோ கிழித்துப் போடுவதற்கு ஆயத்தமாக இருக்கின்றன. "ஐயையோ! இதுகள் ஏன் இப்படி விபரீதமாகப் பண்ணுகின்றன? எதை குத்திக் கிழிப்பதற்காக இவ்வளவு முஸ்தீபாக இருக்கின்றன?" என்று ப்ராசீனபர்ஹிஸ் கேட்கிறான். அதற்கு நாரதர், "உனக்காகத் தாண்டா இதுகள் காத்துக்கொண்டிருக்கின்றன! கணக்கு வழக்கில்லாமல் நீ யஜ்ஞபலி கொடுத்த ஆடுகள் தான் இதுகள். இவற்றுக்கு ஸ்வர்கப் பிராப்தி கிடைத்திருப்பது வாஸ்தவந்தான். ஆனாலும் நீ மிதமிஞ்சி ஜீவஹத்தி பண்ணினது பாபந்தான் என்பதால், நீ எப்போது அங்கே வருவாய், உன் குடலைக் கிழித்துப் போடலாம் என்றே காத்துக்கொண்டிருக்கின்றன" என்றார்-என்று (பாகவதக்) கதை.

ப்ராம்மணர்கள் தின்னுவதென்பது யஜ்ஞ ப்ரஸாதம் என்ற மரியாதைக்காக ஒரு குன்றிமணி அளவுதான். வயிறு புடைக்க அல்ல. அஹிம்ஸை, ஸமத்வக் கொள்கை என்பவற்றுக்காகத் தற்காலத்தில் பௌத்த-ஜைன மதங்களை ஹிந்து மதத்தை விட உயர்வாக நினைத்துக் கொண்டாடுவதைப் பற்றிச் சொல்ல வந்தேன்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## பிறமத கண்டனத்திற்காக அல்ல: ஸ்வயமத கண்டனம் கூடாது என்றே!

அந்த மதங்களை நான் 'க்ரிடிஸைஸ்' பண்ணவரவேயில்லை. எந்த மதத்தையுமே சும்மாவுக்காக க்ரிடிஸைஸ் பண்ணவேண்டியதில்லை. ஒவ்வொரு மதத்திலும் பல காலமாக ஒவ்வொரு ஜனக்கூட்டம் இருந்து வந்திருக்கிறது என்றால், அந்த மதங்களில் அவர்கள் ஒரு நிறைவைக்

கண்டுதானே அப்படி இருந்திருக்கவேண்டும்? எந்த மதமானாலும் ஸ்வய நலமாகப் போகப்படாது, ஆசைகளைக் குறைத்துக் கொள்ளவேண்டும், அன்பாக இருக்கணும் ஸத்யமாக நடக்கணும் என்று சொல்லி, இந்த உடம்பு அநுபவிக்கும் உலக இன்பங்களுக்கு மேலாக ஒன்றைக் காட்டிக் கொடுக்கத்தானே செய்கின்றன? சீலமும், ப்ரேமையும், த்யாகமும், தங்கள் கொள்கைக்கும் அநுஷ்டானத்துக்கும் உரிய ஒரு ஸொந்த அநுபவமும் பெற்ற மஹான்களாக எல்லா மதங்களிலுந்தான் பலர் வந்திருக்கிறார்கள். தத்வ சோதனமும் தீர்க்கமாகப் பண்ணிக் கொண்டு போகும் அறிவாளிகளான ஃபிலாஸஃபர்களும் பௌத்தம், மீமாம்ஸை, ந்யாயம், ஸாங்க்யம் போன்ற மதங்களில் இருந்திருக்கிறார்கள். (பௌத்தரான) நாகார்ஜூனர் புஸ்தகங்களில் எனக்கே ஒரு ஈடுபாடு உண்டு. ஆனால் எந்த மதமும் தப்பில்லை என்னும்போது நம்முடைய மதத்தை மட்டும் அப்படி (தப்பானது என்று) சொல்லலாமா என்பதுதான் கேள்வி. 'நம்முடையது' என்ற ஸ்வய அபிமானத்தில் fad-ஆக (அபிமான வெறியாகப்) போகாமல், நிஷ்பக்ஷபாதமாகப் பார்த்தாலே, இப்போது நான் காட்டின மாதிரி, எந்த மதத்தையும்விட இதில்தான் தலைமுறை தத்வமாக அதிக மாஹான்கள், அதாவது இந்த மதாநுஷ்டனத்தால் ஸ்வாநுபூதி பெற்ற பெரியவர்கள், தோன்றியிருக்கிறார்கள்; எந்த மதத்தை விடவும் வெகு நீண்ட காலமாக இது ஒன்றுதான் ஒப்பற்ற ஒரு நாகரிக ஸமுதாயத்தை ஜீவசக்தியுடன் காப்பாற்றி வந்திருக்கிறது என்று தெரிகிறது. எல்லாருக்கும் ஒரே ஏற்பாடாகப் பண்ணி வைக்காமல், பல தரப்பட்டவர்களுக்கும் அவரவருக்கேற்ற கார்யம், ஆசாரம் (அதாவது வாழ்க்கையொழுக்கம்), அவரவருக்குப் பிடித்த இஷ்ட மூர்த்தி என்று இடம் கொடுத்துள்ள நம்முடைய மதத்திலேதான் ஸகல லெவல்களிலும் அதற்கான உயர்ந்த அநுபவங்களைப் பெற்று, ஒரு லெவலிருந்து ஸௌக்யமாக அடுத்த லெவலுக்கு போய்க் கடைசியில் பரமாத்மாவே ஜீவாத்மா என்று ஆகிவிடும் பரம ஸத்ய நிலை வரையில் ஜீவனுக்குச் சீராக வழியமைத்துக் கொடுத்திருக்கிறது என்பதை எப்படிச் சொல்லாமலிருப்பது? ஸாதாரணமான லௌகிக அநுபவங்களுக்கு மேலே எதையோ ஒன்றை எல்லா மதங்களும் அடைவிக்கின்றன என்று அவற்றைக்

கொண்டாட வேண்டுமென்றால், அவை அடைவிக்கிறவற்றுக்கும் மேலே உத்தமோத்தமமான ஜீவ-ப்ரஹ்ம ஐக்யம் என்ற முடிவான நிறைவை நம் மதந்தான் அடைவிக்கிறது என்பதற்காக இதையும் அவற்றுக்கு மேலே கொண்டாடுவது ஸரிதானே? இப்படி இதன் தனி விசேஷங்கள் இருக்கிறபோது, இதன் பெரிய நிறைவான பரம தாத்பர்யத்தையோ, அதற்குப் போகிற வழியிலுள்ள இடை நிலையில் அவ்வப்போது ஒரு நிறைவைத் தரும் ஸம்ப்ரதாயங்களையோ புரிந்துகொள்ளாமல் மற்ற மதங்கள் இதைக் கண்டிக்கும்போது, 'எல்லா மதமும் உசத்திதான்; ஆனால் எல்லாவற்றிலும் உசந்த நம் மதம் மட்டும் அவை எல்லாவற்றின் கண்டனத்தையும் வாங்கிக் கட்டிக்கொண்டிருக்கவேண்டியதுதான்' என்று சும்மாயிருக்கலாமா?

ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்குமே வித்யாஸமில்லை என்று முடிக்கிற மதத்தில் இத்தனை வர்ணாச்ரம வித்யாஸமிருக்கிறதென்றால் அதற்கு என்ன காரணம் என்று நன்றாக அலசி ஆராய்ந்து பார்க்காமல், 'வித்யாஸம் பண்ணும் மதம்' என்று மற்றவர்கள் கண்டிக்கும் போது நாம் உண்மையை அலசிப் புரிந்துகொண்டு அவர்களுக்கும் எடுத்துச் சொல்லாமல் சும்மா இருந்து விடுவதா? புத்தர் பெரியவர், ஜினர் பெரியவர். ஆனால் அவர்களும் 'எதிலும் நல்லதிருக்கிறது. நாம் பாட்டுக்கு ஸமரஸமாக இருந்துவிட்டுப் போவோம். வைதிக மதத்தை நாம் ஏன் கண்டனம் செய்யவேண்டும்?' என்று இருந்துவிடவில்லையோல்லியோ? அப்படியானால், அவர்கள் இதை 'க்ரிடிஸைஸ்' செய்தது ஸரியில்லை என்று நமக்கு நன்றாகக் காரணம் தெரியும்போது நாமும் அவர்களுடைய 'க்ரிடிஸிஸ'த்தை 'க்ரிடிஸைஸ்' செய்து ஸத்யத்தை நிலைநாட்டுவதற்கு நம்மாலான முயற்சி பண்ணுவது ஸரிதானே?
ஸரியான ஆதி மத ஸித்தாந்தம் எதுவும் இல்லாமலிருக்கிற வெளி தேசங்களில், அந்த தேசத்து ஜனங்களின் பக்குவ ஸ்திதி, கலாசாரம் முதலியவற்றுக்கு ஏற்றனவாக ஒருவித உள் நிறைவைக் கொடுக்க உபகாரம் செய்வதாக பௌத்தம், கிறிஸ்துவம், இஸ்லாம் முதலியன அங்கே இருக்கின்றன. அப்படியே இருக்கட்டும். அதை நாம் ஆக்ஷேபிக்கவே வேண்டாம். ஆனால் எல்லா நிலைகளில் உள்ளவர்களுக்கும் ஏற்றபடி வழிபோட்டுக்கொடுத்து, உச்சியான நிறைவு

வரையில் அழைத்துக் கொண்டு போகும் ஒரு மதம் நமக்கு இருக்கிறபோது இங்கே அந்த மதங்கள் இடம் பிடிக்க வரும்போதும் நாம் ஒண்ணும் ஆக்ஷேபிக்கக்கூடாது என்றால் எப்படி?

ஆசார்யாள் கதை கேட்க உட்கார்ந்திருக்கிறோம். அவரைப் பெரியவர் என்று லோகம் பூரா கொண்டாடுகிறது. அவர் சொன்னவற்றில் அபிப்ராய பேதமுள்ளவர்கள்கூட அவர் மஹா புத்திமானென்றும், ஜனங்களுக்குத் தாம் செய்ய வேண்டிய ஒரு 'மிஷன்' இருக்கிறது என்ற 'டெடிகேஷனோடு ராப் பகல் பாடுபட்ட த்யாகி என்றும், இன்னும் இப்படிப் பல தினுஸாகவும் போற்றுகிறார்கள். அப்படிப்பட்டவர் முக்யமாகப் பண்ணியது என்ன? அவர் காலத்தில் இங்கே இருந்த மற்ற மதங்களையெல்லாம் கண்டனம் பண்ணி, வைதிகமான ஸநாதன தர்மத்தை மறுபடி ஜீவனோடு ப்ரகாசிக்கச் செய்ததுதானே? அதற்காகத்தானே அந்த அவதாரம் ஏற்பட்டதே? அப்படியிருக்கும்போது எந்த மதத்தையும் எதுவும் க்ரிடிஸைஸ் பண்ணாமல் ஆசார்யாளைப் பற்றி உபந்யாஸம் செய்வதென்றால் எப்படி? ஸரியான காரணம் காட்டி க்ரிடிஸைஸ் செய்கிறதில் தப்பேயில்லை. விதண்டாவாதமாகப் பண்ணினால்தான் தப்பு. ந்யாயமமான காரணங்கள், பாயின்ட்கள் தோன்றும்போது நாமும் மற்றவர்களை க்ரிடிஸைஸ் செய்ய வேண்டியதுதான். அதே மாதிரி அவர்களும் நம்மைச் செய்ய வேண்டியது தான். (கண்டனம் செய்வதில்) தப்பு இரண்டு விதத்தில்தான் இருக்கிறது. ஒன்று, ஸரியாகக் காரணம் காட்டாமல் விதண்டை பண்ணவது. இன்னொன்று, நம் மனஸில் த்வேஷத்தோடு க்ரிடிஸைஸ் பண்ணப்போவது, மாற்று அபிப்ராயமுள்ளவர்களிடமும் த்வேஷம் என்பதேயில்லாமல் ப்ரமையோடு அபிப்ராயங்களை மட்டும் க்ரிடிஸைஸ் செய்ய வேண்டும். 'அவர்கள் புத்திக்கு அப்படித் தோன்றுகிறது. நமக்குத் தோன்றுவதை அவர்களுக்கு எடுத்துச் சொல்வோம். அவர்களுக்குத் தோன்றுவதையும் கேட்டுக் கொள்வோம். இரண்டு பேரும் இரண்டையும் அலசி ஆலோசித்துப் பார்ப்போம்' என்ற மனோபாவத்தோடு நடக்க வேண்டும். இந்த ப்ரேமையில்தான் ஸமரஸம் இருக்க வேண்டுமே தவிரக் கொள்கையில் இல்லை. கொள்கையில் அப்படி (ஸமரஸம்) என்று சும்மாயிருந்தால், மற்றவர்கள் நம் தலையில் ஏறி உட்கார்ந்து கொண்டு நம்மை ஏமாந்த சோணகிரிகள

ாக்குவதில் தான் முடியும். மனஸில் அன்போடு, நமக்கு ஸத்யமாகத் தெரியும் கொள்கைகளுக்காகப் போராடவேண்டுமென்பதே முறை.

ஸகல ஸித்தாந்தங்களும் உள்ளடங்கியதாக உள்ள வேத தர்மத்தை ஆக்ஷேபித்து, அல்லது அதில் ஒரு அம்சத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அதுவே பூர்ண தர்மம் என்று ஸாதித்து, அறிவும் ஒழுக்கமும் வாய்ந்த சிலரும் கலியிலே ஸித்தாந்தங்களைப் பரப்பினார்களென்பதை நம்முடைய சாஸ்த்ர - புராணங்களில் கலிபுருஷன் பண்ணின க்ருத்ரிமமாகத்தான் சொல்லியிருக்கிறது. இது நல்லதற்கில்லாததே நல்லதாக வேஷம் போட்டுக் கொண்டுவந்து ஜனங்களை மயக்கி, அவர்கள் வேத விருத்தமான(வேதத்துக்கு முரணான) அம்சங்களையும் அநுஷ்டானங்களையும் கொள்கைகளையும் வாழ்முறைகளையும் பின்பற்றப் பண்ணியதுதான் என்று சொல்லியிருக்கிறது. புத்தர், ஜினர் போன்றவர்களை, ஜனங்கள் நல்ல வழிக்குப் போகப்படாது என்று தடுப்பதற்காகவே மனஸறிந்து மாற்றுவழி போட்டுக் கொடுத்தவர்களென்று சொல்வது கஷ்டமாயிருந்தால் அப்படிச் சொல்ல வேண்டாம். அவர்களைப் பொருத்தமட்டில், அவர்களைப் போன்ற நிலைக்குப் போனவர்களைப் பொருத்தமட்டில், அவர்கள் சொன்னவற்றை நல்லதற்கில்லாதவை என்று சொல்ல வேண்டியதில்லை. ஒரே அஹிம்ஸை, அன்பு, ஒழுக்கம் என்று இருந்துகொண்டு அவர்களைப்போல, 'சரீரம் போனாலும் போகட்டும். லக்ஷ்ய ஸித்தி அடையாமல் எழுந்திருப்பதில்லை' என்று, புலனையடக்கி அப்படியே ஒரு தபஸில் உட்கார்ந்துவிடக் கூடியவர்களுக்கு வேதமும் வைதிகாநுஷ்டானங்களும் நிஜமாகவே தேவையில்லைதான். இப்படி அந்த வேதமே சொல்லியிருக்கிறது. 'ஞானியாய்ப் போனவனுக்கு அப்பா அப்பா இல்லை; அம்மா அம்மா இல்லை; லோகம் லோகமில்லை; தேவர்கள் தேவரில்லை; வேதமும் வேதமில்லை' என்று இப்படி ச்ருதி சிரஸாக இருக்கப்பட்ட ஒரு உபநிஷத்திலேயே இருக்கிறது. ஆனால் இப்படிப்பட்ட உபநிஷத்துக்களிலேயே 'தத்வமஸி' என்கிற தலைசிறந்த ஞான லக்ஷ்யத்தைச் சொல்லுகிற சாந்தோக்யத்தில், முடிக்கிற இடத்தில் எவன் இம்மைக்குத் திரும்பி வராத ஸ்தானத்தை அடைகிறான் என்று

சொல்லும்போது, அவன் விதிப்படி வேத அத்யயன - அநுஷ்டானங்களைச் செய்து, குடும்ப வாழ்க்கை நடத்தி, இந்திரியங்களைச் சலனமில்லாமல் நிலை நிறுத்தி, வேத கர்மாக்களில் வருவதைத் தவிர மற்ற எல்லா இடத்திலும் அஹிம்ஸையக் கடைப்பிடித்துத்தான் அந்த உத்தம ஸ்தானத்தை அடையத் தகுதி பெறுகிறான் என்று சொல்லியிருக்கிறது. அதாவது ஒரு புத்தருக்கோ, ஜினருக்கோ, மற்ற ஞானிகளுக்கோ ஏற்பட்ட தர்மங்களை ஸகலருக்கும் நம் மதம் வைத்து விடவில்லை. அப்படி ஒருவன் முடிவிலே ஞானியாய்ப் போவதற்காகவே அவனுக்கு முடிவிலே ஞானியாய்ப் போவதற்காகவே அவனுக்கு அடியிலிருந்து வெவ்வேறு தர்மங்களை ஸ்டேஜ், ஸ்டேஜாக மாற்றிக்கொடுத்துக்கொண்டு போவதில்தான் நம் தர்மத்தின் பெருமையே இருக்கிறது. இதிலே இன்னும் பெருமை, அடி நிலையிலே இருக்கிறவனையும் அணைத்துப் போகவேண்டும், அவரவர் இருக்கும் இடத்திலிந்து கையைப் பிடித்து அழைத்துப் போகவேண்டும் என்பதற்காக, ஞானியும்கூட அந்த அடிநிலைக்காரன் மாதிரியே செய்துகாட்ட வேண்டுமென்று நம் மதத்தில் சொல்லியிருக்கிறது. குறிப்பாக கீதையில் பகவான் இதை ரொம்பவும் வற்புறுத்திருயிருக்கிறார். நடைமுறைக்கு ஏற்றதாகவும், மனோதத்வ ரீதியில் பொருத்தமுடையதாகவும் இப்படி நம் மதத்தில் ஞானியைக்கூட ஸாமான்ய ஜனங்களுக்கு வழிகாட்டியாக அவர்களுடைய தர்மத்தைச் செய்துகாட்ட வேண்டுமென்று சொல்லியிருக்க, இதற்கு நேர்மாறாக ஸாமான்ய ஜனங்களுக்கும் ஞானியின் தர்மத்தையே வைப்பது என்று ஒருத்தர் ஸித்தாந்தம் செய்தால், அவர் தனி வாழ்க்கையில் எத்தனை பெரியவராயிருந்தாலும் அந்த ஸித்தாந்தத்தால் மக்களின் ஆத்ம க்ஷேமம் குழறும்படியாகப் போகிறதே என்பதை உத்தேசித்து அதை நிராகரணம் செய்யத்தானே (நிராகரிக்கத்தானே) வேண்டியிருக்கிறது?

இதற்காகத்தான் நம்முடைய ஸ்ரீசங்கர பகவத்பாதாளின் அவதாரமானதால், அவரும், அவருக்கு முன்னேயும் பின்னேயும் வந்த வேதாந்த ஸம்ப்ரதயப் பெரியவர்களும் ஏனைய ஸித்தாந்தங்களில் எடுத்துக் காட்டியிருக்கும் தோஷங்களைச் சொல்லாமல் விடமுடியவில்லை. முன்னேயே சொன்ன மாதிரி, தோஷம் தெரிகிற இடத்தில்

அதைச் சொல்வதில் தப்பில்லை; சொல்லத்தான் வேண்டும். ஆனால் தோஷத்தைச் சொன்னாலும் த்வேஷம் இருக்கப்படாது என்பதுதான் முக்யம்.
அந்த மதங்களைக் கண்டிக்க வேண்டுமென்பதற்காக அல்ல; அந்த மதங்கள் நம் மதத்தைக் கண்டிப்பது ஸரியல்ல என்று எடுத்துக்காட்டி, நம்முடைய தாய்மதத்தை உள்ளபடி புரியவைப்பதற்காகவே இதெல்லாம் சொல்லவேண்டியிருக்கிறது.
வேத தர்மத்திற்கு முரண்பாடான மத ஸ்தாபகர்கள், ஸித்தாந்த ப்ரவர்த்தகர்கள் என்று சில பேரை மட்டும் கலியுகத்தின் போக்குக்குக் காரணமாகச் சொல்லி விட்டுவிடுவதற்கில்லை. ஒரு முள்ளு மரம் முளைக்கிறதென்றால் அதற்கு விதை இருக்கணுமென்பதுபோலவே, அந்த விதை முளைத்து வளரத் தக்கதாக பூமியும் இருந்தால்தானே முடியும்? மதஸ்தாபகர்களும் ப்ரசாரகர்களும் என்னதான் ஸித்தாந்த விதைகளை ஊன்றினாலும் ஜன ஸமூஹத்தின் மனநிலை என்கிற பூமி அவற்றை பூஸாரமூட்டிப் போஷித்தால்தானே அவை அந்த ஸமூஹத்தில் தழைத்து வளரமுடியும்? இப்படி, வேத தர்மத்துக்கு விரோதமான போக்குகளிலேயே அப்போது ஜெனரலாக ஜனங்களுக்கு ருசி ஏற்பட்டு, அதனாலேயே அவைதிக மதங்களை நன்றாகப் பரவும்படிச் செய்வதாக ஆயிற்று. அஸுர, ராக்ஷஸர்கள் ஜனங்களின் புத்தியிலேயே ப்ரவேசித்ததாகச் சொன்னது இதைத்தான். கலிபுருஷன் ரொம்ப ஸாமர்த்யமாக இந்த மதங்களும் தார்மிகமான வழிகளைச் சொல்கிற மாதிரியும், அதை உபதேசிக்கிறவர்கள் பின்பற்றுகிறவர்கள் ஆகிய இரண்டு பேரும் தர்மமாகவே போகிற மாதிரியும் 'ஷோ' பண்ணியிருந்தான்.
கலி பிறந்தபின்னும் க்ருஷ்ண பரமாத்மா, வ்யாஸாசார்யாள் ஆகியவர்கள் கொடுத்திருந்த பலத்தினால் சுமார் இரண்டாயிரத்தைநூறு வருஷம் ரொம்பவும் சீரழிவு ஏற்படாமலே வைதிக தர்மாசரணை நடந்துவந்ததற்கப்புறம் இப்படி இடைக்காலத்தில் அசதி மறதியாக இருந்ததற்கும் சேர்த்து வைத்துக் கலி புருஷன் தன்னுடைய ஆதிக்யத்தை ஒரே முரட்டுதனமாகக் காட்ட ஆரம்பித்தான். ரொம்ப நேரம் தூங்கிப் போய்விட்டால், 'ஐயோ, இப்படித் தூங்கிப் போய்விட்டோமே, கார்யத்தைப் பண்ணியாகணுமே!' என்று ஒரே தடால் புடாலென்று ஆரம்பிக்கிற மாதிரிக் கை

வரிசையைக் காட்ட ஆரம்பித்தான். இன்னொரு உதாரணம் சொல்லணுமானால், 'அடைத்து வைத்த ஸோடா பாட்டிலை உடைத்த மாதிரி' ஆயிற்று! அந்த வேகத்தில் எழுபத்திரண்டு மதங்கள் ஸநாதன தர்மத்திற்கு மாறாகத் தோன்றின என்று புஸ்தகங்களில் போட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் ரொம்ப உத்தண்டமாகக் கிளம்பிற்று என்றும் போட்டிருக்கிறது. அஸந்தர்ப்பமானவை எல்லாமே தடபுடலாகத்தான் கிளம்பும். வாஸ்தவத்திலேயே ஹிதமாகவும் ஸத்யமாகவும் இருப்பவை ஸாத்விகமாக, சாந்தமாகத்தான் தோன்றிச் செயலுக்கு வரும். அப்படியில்லாதவை அதம்பிக்கொண்டு அடாவிடியாகத்தான் ஆரம்பிக்கும். கலி அதர்மயுகம் என்று நிரூபித்துக் காட்டுகிறமாதிரி அப்போது இப்படி 72 மதங்கள் தோன்றின என்று புஸ்தகங்களில் இருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## கலி அதமர்த்திற்கே ஸங்கற்பிக்கப்பட்டதா?

இங்கே ஒரு விஷயம் சொல்லவேண்டும். 'பிரபஞ்ச நாடகத்திலே ஒவ்வொரு சதுர்யுகத்திலும் க்ருதயுகத்தில் ரொம்பவும் தர்மமாக ஆரம்பித்து, த்ரேதா யுகத்திலும் த்வாபர யுகத்திலும் கொஞ்சம் கொஞ்சமாகச் சீர் கெட்டுக் கொண்டு வந்து, கலியிலே ஒரே அதர்மமாகப் போகவேண்டுமென்பதும் பகவத் ஸங்கல்பம்தானே? அதைக் குற்றம் சொல்வானேன்? கலி அதர்மத்துக்கான யுகம் என்று ஏற்பட்டுவிட்டபின் அதைச் சீர் திருத்துவது என்று புறப்படுவானேன்?' என்ற கேள்வி வரலாம்.
பகவத் ஸங்கல்பம் நமக்கு புரியாது. என்றாலும், அவன் சாஸ்த்ர வாயிலாகக் கலி அதர்ம யுகம் என்று நமக்குக் தெரிவிக்கும்போது, அப்படியே அதர்மத்தில் லோகம் நசித்துப் போவதற்காகத்தான் இந்த யுகம் அவனால் தீர்மானமாக ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறதென்று அர்த்தம் செய்து கொண்டுவிடக் கூடாதென்றே தோன்றுகிறது. 'லோகம் அவனுக்கு நாடகம். அவன் கதை எழுதி, டைரக்ட்

பண்ணுகிற நாடகம். ரஸ வைசித்ர்ய ருசிக்காக (காவிய ரஸங்களில் மாறுபாடு செய்து சுவை கூட்டுவதற்காக) நாடாகாசிரியர் ரௌத்ரம், பீபத்ஸம், பயம் ஆகியவையுள்ள ஸீன்களையும் கல்பிப்பதுபோல அவனும் கலியில் செய்வதாயிருக்கலாம்' என்று சொன்னாலுங்கூட, இதிலே ஒரு அளவுக்கு மேலே போக அவனுடைய கருணையுள்ளம் இடம் கொடுக்காது. ஒரே ரௌத்ரம், பீபத்ஸம், பயானகம் என்று ஆகிவிட்டால் அதில் 'ரஸம்' என்று சொல்லும்படி என்ன இருக்கும்? விரஸம்தான் இருக்கும். ஆகையினால் அவன் பூர்வ யுகத்து மநுஷ்யர்களைப் போல இந்த யுகத்தில் அவ்வளவு தார்மிகர்களாகவும், தெய்வ சக்தியுள்ளவர்களாகவும் ஜனங்களை ஸ்ருஷ்டிக்காவிட்டாலும், அதர்மத்தில் அவர்களுக்கு உள்ளூர ஒரு ருசியைக் கொடுத்தே ஸ்ருஷ்டித்திருந்தாலும், அதிலேயே அவர்கள் முழுகி அழிந்து விடும் கொலைக் கூத்தாக முடித்துவிடமாட்டான். சறுக்கா மாலை விளையாட்டுப் போலச் சறுக்கும் வரை சறுக்கட்டும் என்று பார்த்துக் கொண்டிருந்தாலும், விழுந்து எலும்பை முறித்துக் கொள்ள விடாமல் தாங்கிக் கொள்வதற்கு வருவான், மஹான்களையும் அனுப்பிவைப்பான். ஒரு பக்கம் யுகத்தின் 'நேச்ச'ரை முன்னிட்டு அதர்மங்கள் ஜாஸ்தியாய் போய்க்கொண்டிருந்தாலும், இன்னொரு பக்கம் தர்மத்தை ஞாபகமூட்டிக் கொண்டிருப்பதாகவும் அநேகத்தைக் கொடுத்து, தார்மிகர்களாகவும் ஜனஸமூஹத்தில் கொஞ்சம் பேராவது இருந்து கொண்டேயிருக்கும்படிப் பார்த்துக் கொள்வான். லஞ்சம், மோசடி, கொலை, இன்னும் அநேக தகாத கார்யங்களுக்கான க்ளப்புகள், சூதாட்டங்கள் என்று இப்போது ஒரு பக்கத்தில் பார்க்கிறோமென்றால் இன்னொரு பக்கம் ப்ரவசனம், பஜனை, கும்பாபிஷேகம் என்றும் நிறையப் பார்க்கிறோமல்லவா? கலி முடிகிறபோது கூட நல்ல வைதிகமான தர்ம வாழ்வு நடத்துபவர்கள் அடியோடு அஸ்தமித்து விடப்போவதில்லை. கல்யந்தத்தில் (கலியின் முடிவில்) தாம்ரபர்ணி தீரத்தில், அதாவது நம்முடைய திருநெல்வேலி ஜில்லாவில், விஷ்ணுயசஸ் என்ற ஸத் பிராம்மணருக்குப் புத்ரனாக கல்கி என்ற பெயரில் பகவான் அவதரிப்பானென்று சொல்லியிருக்கிறது. அப்படியானால் அப்போதும் வைதிகாசாரங்களைப் பின்பற்றும் ஸத்பிராம்மணர்கள் கொஞ்சமாவது இருந்து

கொண்டிருப்பார்களென்று தானே அர்த்தம்?

கலியின் கொடுமையைப் புராணம் முதலானவற்றில் ஜாஸ்திப் படுத்தித்தான் சொல்லியிருக்கிறது. எல்லாம் போயேபோய் விட்ட மாதிரிதான் வர்ணித்திருக்கும். நம் ஆசார்யாள் அவதாரத்திற்கு முந்திக்கூட வேத தர்மம் அடியோடு போய்விட்டது என்றே தேவர்கள் கைலாஸத்துக்குப் போய் பரமேச்வரனிடம் முறையிட்டுக் கொண்டதாக இருக்கிறது. ஆனால் அப்புறம் பார்த்தால் தலைமுறை தலைமுறையாக உயர்ந்த வைதிகாநுஷ்டானமுள்ள ஒரு மலையாள ப்ராம்மண குடும்பத்தில் ஆசார்யாள் அவதாரம் பண்ணினார். யதோக்தமாக எல்லா வைதிக வித்யைகளையும் குருகுலத்தில் அப்யாஸம் செய்தார் என்றெல்லாம் தெரிந்து கொள்கிறோம். நல்ல வைதிகாநுஷ்டானங்களால் ஸம்ஸ்காரம் பெற்றவர்கள்-பத்மபாதர் போன்றவர்கள்-அவரிடம் சிஷ்யர்களாக வந்து சேர்ந்ததாகப் பார்க்கிறோம். ஆனபடியால் வேத தர்மம்-'வேத' தர்மம் என்று சொல்வானேன்? நம்மைப் பொறுத்தமட்டில் தர்மம் என்றால் வேத தர்மம்தான். அப்படிப்பட்ட தர்மம்-எப்போதுமே முற்றிலும் அழிந்துபோய் விடவில்லை என்று தெரிகிறது.
"இது கலியாச்சே! ஜனங்களுக்கு ஆத்மபலம் ரொம்பக் குறைச்சலாச்சே! இதிலே ஜனங்கள் அக்னிஹோத்ர கர்மாநுஷ்டானத்தை நன்றாக நடத்திக் காட்ட முடியுமா? ஸந்நியாஸ ஆச்ரமத்தை நியமத்துக்கு பங்கம் வராமல் அநுஷ்டிக்கத்தான் முடியுமா?" என்று இந்த யுக ஆரம்பத்தில் தர்ம சாஸ்த்ரங்களை வகுத்துக் கொடுக்கும்போதே ஒரு கேள்வி வந்தது. அக்னி ஹோத்ரம் என்பது கர்ம காண்டத்தில், ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் வருவது. ஸந்நியாஸம் என்பது ஞான காண்டத்தில் நிவ்ருத்தி மார்க்கமாக வருவது. எனவே இந்த இரண்டும் போய்விட்டால் ஜனங்கள் உருப்பட வழியேயில்லை. அல்ப சக்தர்களான கலிகால மநுஷ்யர்களுக்கு இந்த அதோகதிதானா என்று கேள்வி வந்தது. அதற்கு தர்ம சாஸ்த்ரக்காரார்கள் என்ன பதில் சொன்னார்கள். அதாவது, தீர்ப்புக் கொடுத்தார்கள்?
"கலியுகம், க்ருதயுகம் என்று போட்டுக் குழப்பிக் கொள்ளவேண்டாம். எதுவரை வர்ண விபாகம் கொஞ்சமாவது இருக்கிறதோ, எதுவரை வேத அத்யயனம் கொஞ்சமாவது இருக்கிறதோ, அதுவரை அக்னிஹோத்ரமும் ஸந்நியாஸமும் இருக்கலாம்" என்று தீர்ப்புக் கொடுத்தார்கள்.

அதனால் கலியிலும் இவையெல்லாம் மங்கிப் போனாலும் முழுக்க அணைந்து விடாமல் முணுக்கு முணுக்கு என்று எரிந்து கொண்டுதானிருக்கும் என்று தெரிகிறதல்லவா? அணைந்துபோகிற நிலைக்கு வரும்போது ஒரு மஹா புருஷர் வந்து எண்ணெய்போட்டு, திரியைத் தூண்டிவிட்டு நன்றாகவே ஜ்வலிக்கச் செய்வார். க்ருதயுகமே வந்துவிட்டதோ என்று நினைக்கிறமாதிரிகூடக் கொஞ்சகாலம் ரொம்ப நன்றாகப் போகும். அப்புறம் மறுபடி மங்கல், மறுபடித் தூண்டிவிடுவது என்று போய்க் கொண்டிருக்கும். ஆசார்யாளின் அவதார காலம் உள்பட எப்போதும், இந்தக் கலியிலுங்கூட, நல்ல கர்மாநுஷ்டாதாக்கள் (வறட்டு மீமாம்ஸையாக இல்லாமல் கர்ம யோகமாகச் செய்கிறவர்கள்), நல்ல பக்தியுள்ளவர்கள், ஞானம் நிரம்பிய ஞானிகள் எல்லோரும் கொஞ்சமாவது இருந்து வந்திருக்கிறார்கள்; இனிமேலும் இருப்பார்கள். குருபரம்பரை என்று ஒன்று எல்லா மார்க்கத்திலும் அவிச்சின்னமாக (முறிவுபடாமல்) இருந்தே வந்திருக்கிறது. குரு இல்லாமல் அத்யயனமுமில்லை, ஸந்நியாஸ தீக்ஷையுமில்லையாதலால், இவை எப்போதும் இருந்திருக்கின்றனவென்றால் பரம்பரா க்ரமத்தில் இவற்றை அப்யஸித்து உபதேசித்து வந்த குருக்களும் அவிச்சின்னமாக இருந்திருப்பதாகவே ஆகிறது. குரு சிஷ்யப் பரம்பரை க்ரமத்தில் வருவதான "ஸம்ப்ரதாயவித்யை"க்குத்தான் 'வால்யூ' உண்டு என்று ஆசார்யாள் பாஷ்யங்களில் பல இடங்களில் சொல்லியிருப்பதால் அவர் நாள் வரைக்கும் அப்படித் தொடர்ந்து வந்து கொண்டிருந்ததாக ஏற்படுகிறது. அத்வைத வித்யையை அவர் இப்படிப் பரம்பரை க்ரமத்தில் கோவிந்த பகவத் பாதாளிடமிருந்து உபதேசம் பெற்றது மட்டுமின்றி, அவர் காலம் வரை வேறு பல அத்வைத ஆசார்யர்களும் இருந்திருக்கிறார்கள்.காசக்ருத்ஸ்னர், த்ரவிடாசார்யார், ப்ரஹ்மநந்தி, பர்த்ருப்ரபஞ்சர், பர்த்ருஹரி, ப்ரஹ்மதத்தர், ஸௌந்தர பாண்ட்யர் என்பவர்கள் இப்படி ஆசார்யாளுக்கு முன்பே அத்வைதம் சொல்லியிருக்கிறார்கள். அதே மாதிரி அவர் நாளில் நல்ல வைதிக - ஆகம முறைகளின்படி பூஜைகள் நடந்த ஆலயங்களும் இல்லாமல் போய்விடவில்லை. அவர் மூன்று தடவை இந்த முழுவதிலும் க்ஷேத்ராடனம் செய்ததில் பல ஆலயங்களில் உக்ரமான பத்ததியை ஸௌம்யமாக்கினாரென்றும், அவைதிக தாந்த்ரிக

பூஜையை முறைப்படி மாற்றினாரென்றும் சொல்லியிருந்தாலும் எல்லா ஆலயங்களிலுமே அப்படிச் செய்தாரென்று சொல்லவில்லை ஸரியான முறையில் வழிபாடு நடந்த ஆலயங்களும் இருந்திருக்கின்றன. அவருடைய பெற்றோர்களே திருச்சூர் ஆலயத்தில் பஜனம் இருந்துதான் அவர் அவரிதரிக்கும்படி யாக வரம் பெற்றிருக்கிறார்கள்.

பின்னே ஏன், "போச்சு போச்சு! கலியில் எல்லாம் போச்சு! ஏதாவது கொஞ்சம் மிச்சமிருந்தாலும் அதுவும் கால க்ரமத்தில் போயே போயிடும். எல்லாம் மிருகப் பிராயமாயிடும்" என்று புராணங்கள் பயமுறுத்துகின்றனவென்றால், நாம் ஆலஸ்யமாக (மெத்தனமாக) இருந்துவிடக் கூடாது என்று எச்சரித்து உசுப்பிவிட்டு உஷார்ப்படுத்துவதற்குத்தான். ரொம்பவும் ஆபத்தாக வர்ணித்தால்தான் நாம் அசைந்து கொடுப்போம் என்பதால்தான். 'கலிதான் அதர்ம யுகமென்றால் நாம் அதர்மமாகத் தான் இருந்துவிட்டுப் போவோமே!' என்று சொல்வது தப்பு. "திருடர்கள் ஆபத்து ஜாஸ்தி இருக்கிறது" என்று போலீஸ் தண்டோராப் போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக்கொண்டு போகட்டும் என்று நாமே உடைமைகளைத் தெருவில் போட்டுவிட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'காப்பாற்ற முடிகிறவரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்று தானே ஜாக்ரதை செய்து கொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்டதன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்தமட்டும் ரக்ஷித்துக் கொடுப்பதற்குத்தானே? "கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்துவிட்டான்" என்று சாஸ்த்ரங்கள் தண்டோராப் போடுவதற்கும் தாத்பர்யம், கூடிய மட்டும் தர்மத்தை ஜாஸ்க்ரதையாக ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே ஒழிய, 'ஒன்றும் பண்ணிக்கொள்வதற்கில்லை' என்று, இருப்பதையும் விட்டுவிட்டு வீணாகப் போவதற்கல்ல. இந்த யுகத்தில் வரும் அதர்ம ப்ரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில் செய்யும் தர்மாநுஷ்டான பலனைவிடக் கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான ஸமயத்தில் தடுத்து நின்றால் தான் பெருமை அதிகம். (லேசாகச் சிரித்தபடி) மற்ற யுகங்களில் ரொம்பப் பேர் ஈச்வரனிடம் போய்ச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள். அவருக்கு ஸாவகாசமாக ஒவ்வொருவரையும் விசாரித்து அநுக்ரஹம்

செய்ய முடியாமலிருக்கும். கலியில், 'யார் வருவா? யார் வருவா?' என்று பார்த்துக் கொண்டிருப்பார். அதனால் நாம் கொஞ்சம் யத்னம் பண்ணினால்கூடக் கோடியாக நினைத்துக் கூப்பிட்டு வைத்துக்கொண்டு நன்றாக அநுக்ரஹம் பண்ணிவிடுவார். ஒரேயடியாக பயமுறுத்திப் "போச்சு, போச்சு" என்று சொல்வதாலேயே சிலர், 'நம்முடைய தடுப்பு முயற்சி நிஷ்பிரயோஜனமாகத்தான் போகும்' என்று சோர்ந்து விழுந்துவிடப் போகிறார்களே என்று, இந்த யுகத்திற்கே உள்ள சில ப்ரத்யேக அநுகூலங்களையும் சாஸ்த்ரங்களில் சொல்லித் தெம்பூட்டியிருக்கிறார்கள். க்ருத யுகத்தில் மனோ நிக்ரஹம் என்ற சிரம ஸாத்யமான கார்யத்துடன் கூடியதான த்யானம் செய்தும், த்ரேதாயுகத்தில் சரீரத்தைக் கஷ்டப்படுத்திக்கொண்டு யாகங்கள் செய்தும், த்வாபர யுகத்தில் விஸ்தாரமாக அர்ச்சனை பூஜை என்று செய்துமே பெறக்கூடிய அநுக்ரஹ பலனை இந்தக் கலியில்தான் ஸுலபமாக பகவந்நாமத்தைச் சொல்லியே பெற்றுவிடலாமென்றும் சொல்லியிருக்கிறார்கள்-பயமுறுத்திய அதே சாஸ்திரங்களிலேயே ரொம்பவும் ஆறுதலாகச் சொல்லியிருக்கிறார்கள். "கலியா அஸத்தான யுகம்? அதுதான் ஸத்தான யுகம். கலி: ஸாது:, கலி: ஸாது:" என்று வ்யாஸாசார்யாள் இரண்டு தரம் உறுதிப்படுத்திச் சொல்லியிருக்கிறார்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

### ஸ்ரீ சங்கர சரிதம்

### சங்கர 'விஜயம்'

அதை ரொம்பவும் அஸாதுவாக இழுத்துவிட்டுக் கொண்டிருந்த காலத்தைப் பற்றிப் பார்த்துக் கொண்டிருந்தோம். 72 துர்மதங்கள் அப்போது ஜனங்களைக் கலக்கிக் கொண்டிருந்ததாகப் புஸ்தகங்களில் சொல்லியிருப்பதைச் சொன்னேன். எந்தப் புஸ்தகங்கள் என்றால் ஆசார்யாளின் சரித்ரத்தைச் சொல்வதான புஸ்தகங்கள். அவற்றுக்கு 'சங்கர விஜயம்' என்று பேர். 'விஜயம் செய்தார்' என்று ஒரு பெரிய

மநுஷ்யர் ஒரு இடத்துக்கு 'விஸிட்' செய்தால் சொல்கிறோம். 'விஜயம்' என்றால் 'விசேஷம் வாய்ந்த ஜயம்'. அதாவது, சிறப்பான வெற்றி. ராஜாக்கள் திசைதோறும் சென்று மற்ற ராஜாக்களை ஜயிப்பது 'திக்விஜயம்'. இப்படியே ஜனங்களுடைய ஹ்ருதயங்களை ஒருவர் ஒரு இடத்துக்குப் போய் அன்பினால் வெற்றி கொள்கிறார் என்ற அர்த்தத்திலேயே 'விஸிட்' செய்வதை விஜயம் என்பது. வாழ்நாள் முழுவதும் தங்களுக்குள் தப்பான எண்ணங்கள் என்ற எதிரிகள் தலையெடுக்க முடியாதபடி 'ஆத்ம ஜயம்' என்ற பெரிய வெற்றியை ஸாதித்துக் கொண்டு, அதோடு லோக ஜனங்கள்-பண்டித, பாமரர்கள் அனைவர்-மனசுகளையும் அன்பினாலும் அறிவினாலும் வென்ற நம் ஆசார்யாள் போன்ற மஹாத்மாக்களின் சரித்ரம் 'விஜயம்' என்று பேர் பெறுகிறது. இப்படிப் பலபேர் பல சங்கர விஜயங்கள் செய்திருக்கிறார்கள். அவற்றில் சிலவற்றில் இந்த 72 மதப் பிரஸ்தாவம் வந்திருக்கிறது. ஆசார்யாளின் 'அஷ்டோத்தர (சத)'த்திலும் (அர்ச்சனைக்கான 108 நாமங்களிலும்)
த்வி-ஸப்ததி மதோச்சேத்ரே நம : என்று வருகிறது. 'எழுபத்திரண்டு மதங்களை நிர்மூலம் செய்தவர்' என்று அர்த்தம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## எழுபத்திரண்டு மதங்கள்

எத்தனை ஆராய்ச்சி செய்து பார்த்தும் அந்த எழுபத்திரண்டில் பலவற்றுக்குப் பெயர்கூடத் தெரியவில்லை! இப்படிச் சொன்னவுடனேயே, 'பார்த்தேளா? இந்த மாதிரிதான் ஆதாரம் காட்டமுடியாமலே கதை கட்டுவது நம் வழக்கம். இப்படிப் பண்ணித்தான் 'ஹிஸ்டரி' என்பதேயில்லாமல் எல்லாம் 'மித்' (myth)-ஆக எழுதிவைத்துக் கொண்டிருக்கிறோம்' என்று ஆக்ஷேபிக்க வேண்டாம்! எழுபத்திரண்டு மதத்திற்கும் பெயர் தெரியாவிட்டாலும்,

நாற்பது நாற்பத்தைந்தை நன்றாகக் கண்டுபிடிக்க முடிகிறது. இவற்றில் பலவற்றுக்கு ஆதாரப் புஸ்தகங்களும் ஏராளமாக உள்ளன. பல ஒரு காலத்தில் அநுஷ்டானத்தில் இருந்திருக்கின்றன என்பதற்கும் அழுத்தமாக 'எவிடென்ஸ்' இருக்கிறது. இவற்றில் மீமாம்ஸை, ந்யாயம், வைசேஷிகம் போன்ற சில நம்முடைய வேதாந்த மதத்திற்கே ஓரளவு வரை ஆதரவாக இருப்பதால் இன்றைக்கும் பாடசாலைகளில் சொல்லிக்கொடுத்துவருகிறோம். 'எழுபத்திரண்டு மதம்' என்ற பேச்சு ரொம்ப காலமாகத் தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. ஆகவே, நமக்கு அதில் சுமார் பாதி, அல்லது அதற்கு மேலேயே தெரிவதால், தெரியாமற்போன பாக்கியும் ஒரு காலத்தில் இருந்திருக்கவேண்டும்; இதில் கட்டுக்கதை ஒன்றுமில்லை, என்று அநுமானிக்க முடிகிறது.
ஆசாரியாளின் ஸமகாலத்தியவை என்றே சொல்லக் கூடிய அவரது சரித்ர புஸ்தகங்களில் அநேக மதங்களின் பெயர்களைச் சொல்லி அவற்றையெல்லாம் அவர் நிராகரணம் செய்தார் (நிராகரித்தார்) என்று விவரித்திருக்கிறது. சிவ மதங்கள், விஷ்ணு மதங்கள் மாதிரி ப்ரஹ்மாவையே குறித்ததாக 'ஹைரண்யகர்ப்ப மதம்' என்றுகூட இருந்திருக்கிறது! இந்த்ர மதம், குபேர மதம், இன்னும் மன்மத மதம், யம மதம் என்றெல்லாங்கூட இவர்கள் ஒவ்வொருவரையும் முழு முதல் தெய்வமாக வைத்து மதங்கள் இருந்திருக்கின்றன. இப்படியே பித்ருக்களைக் குறித்து மதம், பூத வேதாளங்களைக் குறித்துக்கூட மதம், குணங்களே கடவுள் என்று வழிபடுவது, காலமே கடவுள் என்று வழிபடுவது-என்றெல்லாம் விசித்ரமாக அந்தப் புஸ்தகங்களில் பார்க்கிறோம். அதிக விவரம் தெரியாத இவை தவிர, இன்னதுதான் ஸித்தாந்தம் என்று பூர்ணமாகத் தெரிந்த ஒரு இருபது, இருபத்தைந்து மதங்கள் இருந்திருக்கின்றன. என்னென்ன என்றால்: ஆசார்யாள் புது ஜீவனோடு ஸ்தாபித்த வேதாந்தம் தவிர ஷட்தர்சனம் என்ற ஆறில் மீதியுள்ள ஸாங்க்யம், யோகம், ந்யாயம், வைசேஷிகம், மீமாம்ஸை என்ற ஐந்து; பாசுபதம், காலாமுகம், பாகவத-பாஞ்சராத்ரம் (இந்த இரண்டையும் ஒன்றுபடுத்தியே ஆசார்ய பாஷ்யங்களில் சொல்லியிருக்கும்) ஆகிய நாலு; தப்பான முறையில் அவைதிகமாகப் பின்பற்றப்பட்ட காணபத்யம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ்ணவம், ஸௌரம் என்ற ஆறு (இந்த ஆறையே

வைதிகமான ஷண்மதங்களாக ஆசார்யாள் ஸ்தாபித்தார்); வேத ஸம்பந்தமே கூடாது என்று அடியோடு ஆக்ஷேபித்து எழும்பிய பௌத்தம், ஜைனம்; அப்பட்டமான நாஸ்திகமாக, ஆத்ம விஷயமாகவே போகாமல் முழு 'மெடீரியலிஸ'மாக இருந்த சார்வாகம் என்ற லோகாயத மதம் (பார்ஹஸ்பதம் என்று சொன்னேனே, அது)-என்று, ஒரு இருபது, இருபத்தைந்து மதங்கள் இருந்திருக்கின்றன.
எல்லாவற்றையும் கூட்டினால் நாற்பது, நாற்பத்தைந்து தேறலாம். (எழுபத்திரண்டில்) பாக்கியுள்ள சுமார் முப்பதுக்குப் பேர்கூடத் தெரியவில்லை! பேர் தெரிந்தவற்றில் சிலவற்றுக்கு மூலப் புஸ்தகங்கள் கிடைக்கவில்லை.
அதெல்லாம் எப்படியானாலும், அந்த எழுபத்திரண்டில் எதுவுமே இன்று நம் தேசத்தில் அநுஷ்டானத்தில் இல்லை! பௌத்தம் வெளி தேசங்களில் பரவி உலகத்தின் பெரிய மதங்களில் ஒன்றாக இருந்தபோதிலும் அது பிறந்த நாடான இந்தியாவில் இல்லை. ஜைனம் கொஞ்சம் கொஞ்சம் இருந்தாலும் நிறைய ஹிந்துமத வழிபாட்டு அம்சங்களை எடுத்துக்கொண்ட மதமாகவே இருக்கிறது. 'ஜைன்' என்று பேர் போட்டுக்கொள்ளும் பல பேர் ஹிந்துக்களோடு கொள்வினை-கொடுப்பனை செய்துகொள்பவராக இருக்கிறார்கள். ஆசார்ய பாஷ்யங்களில் ஜைனம் விசேஷமாக அலசப்படவில்லை. இன்னும் சொன்னால் ஆச்சர்மாயிருக்கும்-பௌத்தமத கண்டனம்கூட (ஆசார்ய பாஷ்யங்களில்) அதிகம் இராது. இந்த விஷயத்தைப் பிற்பாடு பார்க்கலாம்.
இப்போது நம் தேசத்தில் சைவமாகவும் வைஷ்ணவமாகவும் பல மதங்கள் இருக்கின்றனவென்றாலும், ஆசார்யாள் அவர் காலத்தில் கண்டனம் செய்த சைவ-வைஷ்ணவ மதங்கள் வேறே, தற்போது இருப்பவை வேறே. அவர் கண்டனம் செய்து, வழக்கற்றுப் போய்விட்ட மதங்களில் சில அம்சங்களை மாத்திரம் பிற்கால சைவ-வைஷ்ணவ மத ஸ்தாபகர்கள் எடுத்துக்கொண்டிருக்கலாம்.
ராமாநுஜாசார்யாரின் வைஷ்ணவத்தில் ஆசார்யாள் கண்டித்த பாஞ்சராத்ரக் கொள்கைகள் கலந்திருக்கின்றன. ஸித்தாந்த சைவம் (ஆசார்யாள் கண்டித்த) பாசுபதத்தை அங்கங்கே தழுவிக்கொண்டு போகலாம். எப்படியானாலும், இந்த மதங்களெல்லாம் ஆசார்யாள் அவர் காலத்தில் கண்டனம் செய்த அந்த மத ரூபங்களிலிருந்து மாறுபட்டு, அவருக்குப்

பிற்காலத்தில் வந்த மத ஸ்தாபகர்கள் கொடுத்த புது ரூபங்களில்தான் இருந்து வருகின்றன. ந்யாயம், மீமாம்ஸை போன்றவற்றுக்கு நிறையப் புஸ்தகம் இருந்து, இவற்றைப் படிப்பவர்களும் இன்றுவரை இருந்து வந்தாலும், 'ந்யாய மதஸ்தர்', 'மீமாம்ஸை மதஸ்தர்' என்றெல்லாம் அவற்றையே மதமாக எடுத்துக் கொண்டு அநுஸரிப்பதென்பது ஆசார்யாளுக்கு அப்புறம் இல்லை. இன்றைக்கு யோக மார்க்கங்கள் நிறையத் தோன்றிப் பல பேர் அவற்றின்படிப் பண்ணிப் பார்த்தாலும்கூடத் தங்களை ஹிந்துமதத்திலிருந்து பிரித்து 'யோக மதஸ்தர்' என்று சொல்லிக் கொள்ளவில்லை அல்லவா? எழுபத்திரண்டில் பல, பேர்கூடத் தெரியாமல் ஓடிவிட்டிருக்கின்றன என்றால் ஆசார்யாள்தான் ஓட்டியிருக்கிறார்! சிலவற்றைப் புஸ்தகங்களிலிருந்து தெரிந்துகொள்கிறோம். சில, தேசாந்தரங்களில் வழக்கத்தில் இருப்பதால் தெரிகிறது. இடிந்த சிலைகள், மண்டபங்களிலிருந்தும், "ஓஹோ! முன்னே இன்ன மதம் இருந்திருக்கிறது" என்று கண்டுபிடிக்கிறோம். ஆசார்யாள் ஒருத்தர் மட்டும் வந்திருக்காவிட்டால் அவற்றைக் கண்டுபிடிக்க இத்தனை கஷ்டப்படவே வேண்டாம்! ஹிந்து மதத்தைத்தான் தேடிக் கண்டுபிடிக்க நேர்ந்திருக்கும்!

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**ஆசார்யாளின் ஆச்சரிய ஸாதனை**

அதாவது அந்த எழுபத்திரண்டு மதங்களையும் இந்த தேசத்தில் வழக்கற்றுப் போகும்படியாக அந்த ஒரு மூர்த்தி செய்திருக்கிறார்! நினைத்து நினைத்து ஆச்சர்யப்படு ம்படியாக இப்படி ஒரு ஸாதனை செய்திருக்கிறார்! தம்முடைய ஆத்ம சக்தி, அறிவு சக்தி, வாத சக்தி ஆகியவற்றைக் கொண்டே ஒரு ஆண்டி இப்படிச் செய்திருக்கிறாரென்றால் அவர் அவதாரபுருஷராக இல்லாமல் வேறெப்படி இருக்க முடியும்? அதுவும் அவர் பூலோகத்தில் வாஸம் பண்ணியது முப்பத்திரண்டே

வருஷங்கள்தான்! இன்றைக்கு இந்த தேசத்திலுள்ள எல்லோருமே அவரைப் பின்பற்றும் அத்வைத ஸம்ப்ரதாயஸ்தர்கள் இல்லைதான். ராமாநுஜாசார்யார், மத்வாசார்யார், ஸ்ரீக்ருஷ்ண சைதன்யர், வல்லபாசார்யார், ஸ்ரீகண்டசார்யார், மெய்கண்டார் என்று பலர் ஏற்படுத்திய ஸம்ப்ரதாயங்களைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். இருந்தாலுங்கூட, இந்த ஆசார்யர்கள் எல்லோரும் நம்முடைய ஆசார்யாளுக்குப் பிற்பாடு நூற்றாண்டுகளுக்கு அப்புறம்தான் இந்த மதங்களை ஸ்தாபித்தார்கள். இன்று அத்வைதம் தவிர இங்குள்ள மதங்களெல்லாம் ஆசார்யாளுக்குப் பிற்காலத்தில் உண்டானவையே. அதுவரை ஆசார்யாளின் மதமே தனக்கு முந்தி இருந்த அத்தனை மதங்களையும் இல்லாமல் செய்துவிட்டு, தான் மாத்திரமே கொடிகட்டிப் பறந்திருக்கிறது! பின்னால் வந்த எந்த மதமும் அதற்குப் பெரிய நஷ்டத்தை ஏற்படுத்த முடியவில்லை. எத்தனை புது மதம் வந்தாலும் ஆசார்யாளைப் பின்பற்றும் ஸம்ப்ரதாயஸ்தர்களும் நிறைய இருந்துகொண்டேதான் வந்திருக்கின்றனர். ஆசார்யாளின் ஸித்தாந்தம் முன்னாலிருந்த எல்லா மதங்களையும் இல்லாமல் செய்த மாதிரி பின்னால் வந்த எந்த ஸித்தாந்தமும் செய்யவில்லை. ராமாநுஜர் வந்ததனால் அத்வைதம் இல்லாமல் போய்விடவில்லை. அதற்கப்புறம் மத்வர் வந்ததனால் அத்வைதம், விசிஷ்சாத்வைதம் இரண்டும் இல்லை என்று ஆகவில்லை. இப்படியே ஒவ்வொரு புது மதமும் வந்த போதும் அதற்கும் மநுஷ்யர்கள் சேர்ந்தார்களென்றாலும், அதிலேயே எல்லாரும் சேர்ந்து மற்ற எந்த மதமுமே இல்லை என்று ஆகிவிடவில்லை. ஆசார்யாள் ஒருத்தர் காலத்தில்தான் அவருடைய மதத்தையே அத்தனை பேரும் ஏற்றுக்கொண்டிருந்தது. அவருக்குப் பிற்பாடும் சில நூற்றாண்டுகள்வரை அப்படித்தான் இருந்தது. அதனால்தான் அவருக்கு 'ஜகத்குரு' என்றும் 'ஜகதாசார்யாள்' என்றும் தனியானதொரு கௌரவம் ஏற்பட்டது. 'ஜகத்குரு' என்பது அவரொருவருக்குத்தான் உபசாரத்திற்காக உயர்த்தி வைத்துக் கொடுத்த விருதாக இல்லாமல் வாஸ்தவமான உண்மையைச் சொல்வதாக இருக்கிறது! 'ஜகத்' என்று சொன்னதால் தேசாந்தரங்களைப் பற்றி நினைக்க வேண்டியதில்லை. வைதிக அநுஷ்டானத்துக்குரிய கர்ம பூமியாகவுள்ள நம்முடைய

தேசம்தான் ஜகத்துக்கே உயிர் மாதிரி, ஹ்ருதயம் மாதரி இருப்பதால் இது முழுதற்கும் ஆசார்யாள் என்றால் ஜகதாசார்யாள்தான். பாரத தேசம் என்று நாம் சொல்வதையே பூர்வ காலத்தில் இன்னம் விசாலமாக பரத கண்டம் என்று சொல்லி அதில் 56 தேசங்கள்-அங்கம், வங்கம், கலிங்கம் என்றெல்லாம் 56; தற்கால மாகாணங்கள் (மாநிலங்கள்) மாதிரியானவை-இருப்பதாகச் சொல்லி வந்தார்கள். அந்த ஐம்பத்தாறிலும் ஆசார்யாள் திக் விஜயம் செய்து எல்லா பரமதங்களையும் நிராகரணம் செய்து அத்வைத வேதாந்தத்தை நிலைநாட்டினாரென்றால் அதுதான் ஜகத்குருத்வம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அனைத்தும் அடங்கிய வைதிகம் ஆசார்யாள் மதமே

வேதத்தை ஒப்புக்கொள்வதாகச் சொன்னாலும், அப்படிச் சொல்லாவிட்டாலும் அன்றைக்கு இருந்த மதங்கள், அப்புறம் ராமாநுஜர், மத்வர் போன்றவர்கள் ஸ்தாபித்த மதங்கள், இன்றைக்கும் லோகம் பூராவிலும் இருக்கிற அந்நிய மதங்கள் ஆகிய எல்லாவற்றிலுமே நல்லதாக என்னென்ன அம்சம் இருக்கிறதோ அதெல்லாம் வேதத்தில் இருப்பதுதான். கால தேச வர்த்தமானங்களால் வெளி ஆசார அநுஷ்டானங்கள் வைதிகமாகத் தெரியாது போனாலும், தேசாந்தரங்களில் உள்ள மதங்கள் உட்பட எதுவானாலும் 'ஸ்பிரிட்'டை எடுத்துக்கொண்டால் அது வேதத்தில் ஆதாரமுள்ளதாகவே இருக்கும். இங்கே 'ஸ்பிரிட்' என்று சொல்லும்போது நான் மதங்களிலுள்ள தத்வங்களை மட்டும் சொல்லவில்லை. சடங்குகளையும்தான் சொல்கிறேன். இன்றைக்கு அந்நிய மதங்களில் உள்ள சடங்குகள் வைதிக வாஸனையே இல்லாத மாதிரி இருக்கிற போதும்கூட அந்தச் சடங்குகளின் ஜீவனாக இருக்கப்பட்ட, 'ஸ்பிரிட்' என்று சொன்ன, அம்சம் வேதத்தில் இல்லாமலிருக்காது. வைதிகம், அவைதிகம் என்று சொல்லப்படும் எல்லா மதங்களுமே தெரிந்தும் தெரியாமலும்

இப்படி தத்வம், சடங்கு இரண்டிலும் ஓரொரு அம்சங்களை வேதத்திலிருந்து எடுத்துக்கொண்டுதான் உருவாயிருக்கின்றன. ஓரொரு அம்சங்களைத்தான்; பூர்ணமாக இல்லை. வேதத்தைப் பார்த்தால் அதில் சிவ ஸம்பந்தமாகவும் பல உண்டு விஷ்ணு ஸம்பந்தமாகவும் பல உண்டு. விசிஷ்டாத்வைதம், த்வைத மதம் முதலியவற்றில் சிவ ஸம்பந்தமானவற்றை விட்டுவிட்டு வைஷ்ணவமானதை மட்டுந்தான் எடுத்துக்கொண்டிருக்கிறது. சிவாத்வைதம், சைவ ஸித்தாந்தம் முதலியவற்றில் இதற்கு vice verse-வாக இருக்கும். ஆகக்கூடி வேதத்தில் இருப்பதில் ஏதோ ஒன்றை விட்டு, ஒன்றை மட்டும் க்ரஹித்துக் கொள்வதாகவே இருக்கும். மீமாம்ஸகர்கள் கர்ம மார்க்கத்தை மட்டும் எடுத்துக் கொண்டு ஞானத்தைத் தள்ளினார்கள். பௌத்தம் யம நியம ஒழுக்கங்கள், நிஷ்ப்ரபஞ்ச தத்வம் இவற்றை மட்டும் வேத தர்மத்திலிருந்து எடுத்துக்கொண்டு, ஆனால் வேறே தினுஸாக 'டெவலப்' செய்துகொண்டு போயிற்று. இப்படி எந்த மதத்தைப் பார்த்தாலும் வேதத்தில் சிலதைக் கொள்ளுவது, சிலதைத் தள்ளுவது என்றே இருக்கிறது. ஸம்பூர்த்தியாக வேதம் முழுவதையும் அப்படியே எடுத்துக் கொண்டது ஆசார்யாளின் மதம்தான். ஸரியாய்ச் சொன்னால், அது ஆசார்யாள் மதமே இல்லை. ஒரிஜனல் வேத மதமேதான்! ஆசார்யாள் புனருத்தாரணம் பண்ணிய ஒரிஜனல் வேத மதம்! கர்மம், பக்தி, ஞானம், யோகம், தர்மம் என்ற ஒழுக்க நியமம், ஸப்ரபஞ்சம், நிஷ்ப்ரபஞ்சம், சிவன் - விஷ்ணு என்கிற மாதிரி பேதமில்லாமல் அத்தனை தெய்வங்களும் ஸம்மதமென்பது-என்று பூர்ணமாயிருப்பது ஆசார்யாள் கொடுத்துள்ள வழி ஒன்றுதான்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## இதர மதங்களைப் பற்றி

அவர் நிராகரணம் செய்த மற்ற அபூர்ண மதங்களைப் பற்றியும் கொஞ்சம் சொல்ல வேண்டியதாகிறது. கர்ம

காண்டத்தை மட்டும் எடுத்துக்கொண்ட மீமாம்ஸகர்களைப் பற்றிச் சொன்னேன். லோகத்தை ஈச்வரன் என்பவன் ஸ்ருஷ்டித்ததாக அவர்கள் கருதவில்லை. கர்ம பலன்களையும் அவன்தான் தருகிறான் என்பதையும் ஒப்புக் கொள்ளவில்லை. ஸகுண ஈச்வரன், நிர்குண ப்ரஹ்மம் இரண்டும் அவர்களுக்கு இல்லை.

ஈச்வரோபாஸனையுமில்லை; ஆத்ம த்யானமுமில்லை. ஸ்வர்க்கத்தையோ, அல்லது, அவர்களுக்கே என்ன என்றுசொல்லத் தெரியாத ஸ்வர்கத்துக்கு மேலான நித்யானந்த பதமாக இருக்கக்கூடிய மோக்ஷம் என்ற ஏதோ ஒன்றையோ பெறக் கர்மாநுஷ்டானமே போதும்; வேறே பக்தியோ ஞானமோ ஒன்றும் கூடாது என்றார்கள். தாங்கள் மட்டுமே ஸத்யமாக வேத தர்மத்தை அநுஸரிப்பவர்களென்றும், ஞானம் என்று சொல்லிக் கொண்டு கர்மாவை விட்டு ஸந்நியாஸியாகிறவர்கள் வேதத்துக்கு விரோதமாகப் போகிறவர்களென்றும் சொல்லி ஸந்நியாஸியைப் பார்த்தாலே பாபம் என்று நினைக்கும் அளவுக்குப் போனார்கள்.

ஆனாலும் ஆஸ்திக மதங்கள்-அதாவது வேத ஆதாரத்தை நம்பும் வைதிக மதங்கள்-என்று சொல்லப்படும் ஆறு தர்சனங்களில், வேதாந்தத்துக்கு ஸமதையாகத் தங்கள் அபிப்ராயத்துக்கும் அநுஷ்டானத்துக்கும் வேதத்திலேயே நேராக ஆதாரம் காட்டியவர்கள் இந்த மீமாம்ஸகர்கள்தான். அவர்கள் செய்த கர்மாநுஷ்டானங்கள் யாவும் வேதோக்தமானவைதான். வேத மந்த்ரங்களுக்கு விளக்கமாக அர்த்தம் பண்ணியவர்களும் அவர்கள்தான். ந்யாயம், வைசேஷிகம், ஸாங்க்யம், யோகம் ஆகியவை வேத ப்ராமாண்யத்தை ஆக்ஷேபிக்கவில்லை என்பதோடு முடிந்து போயிற்று. தங்களுடைய ஸித்தாந்தத்துக்கோ, ஆசரணைகளுக்கோ அவை நேராக வேதத்தில் அதிகம் ஆதாரம் காட்ட முடிவதில்லை.

இப்படி மீமாம்ஸை வைதிக மதமாகவே இருந்த போதிலும் அபூர்ணமான, மூளியான, வைதிக மதமாக இருந்தது. ஸ்கூலிலிருந்து காலேஜுக்குப் போவதுபோல, முதலில் கர்ம காண்டம், அப்புறம் ஞானகாண்டம் என்று வேதம் வைத்திருப்பதைப் புரிந்துகொள்ளாமல் ஸ்கூலோடேயே முடித்துவிட்டு அதுதான் எல்லா டிகிரிக்கும் மேலே என்று ஸ்தாபிக்கப் பார்த்தார்கள்!

ஸாங்க்ய மதத்தில் ப்ரக்ருதி முதல் பஞ்ச பூதம் ஈறாக இருபத்து நான்கு தத்வம் சொல்லியிருக்கும். ப்ரக்ருதி என்பது 'ப்ரதானம்' என்பதாகவும் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இதுதான் லோகத்தில் எல்லாவற்றுக்கும், லோகத்திற்குமே மூலமாக இருப்பது. இயற்கைச் சக்தி என்று இந்த நாளில் சொல்வது போன்றது. மனஸ், இந்த்ரியம் எல்லாமும் இந்த ப்ரக்ருதியிடமிருந்துதான். ஸ்தவம், ரஜஸ், தமஸ் என்ற தன்னுடைய அங்கங்களான முக்குணங்களை வெவ்வேறு விகிதசாரத்தில் கலந்து நானாவித ப்ரபஞ்சத்தை அது உண்டாக்குகிறது. ஆனால் அது ஜடம்தான். சேதன (உயிருள்ள) வஸ்து எதுவென்றால் அது புருஷன் என்பது. ப்ரக்ருதியில் பட்டுக்கொள்ளாமல் அது தன்னிலேயே அடங்கியிருப்பது. அது காரியம் பண்ணாது. ஆனால் அதன் ஸாந்நித்யத்தாலேயே ப்ரக்ருதி இத்தனை காரியமும் பண்ணுகிறது. ஒரு ஜீவனானவன் இருபத்து நான்கு தத்வத்தையும் ஆராய்ந்து, தள்ளிவிட்டு, ப்ரக்ருதியிலிருந்து விடுபட்டு புருஷனாகத் தனித்து இருந்துவிட்டால் அந்தக் கைவல்ய நிலைதான் மோக்ஷம் என்று அந்த மதம் சொல்கிறது.

ஞானகாண்டமான உபநிஷத்தில் சொன்ன நிர்குணமான ஆத்மா மாதிரியே இதில் சொன்ன புருஷனும், மாயை மாதிரி ப்ரக்ருதியும் இருக்கின்றன. ஆனாலும் அந்த ஆத்மாவேதான் பரமாத்மா எனப்படும் ப்ரம்மம் என்றும், அத்தனை ஜீவாத்மாக்களும் இந்த ஒரே ப்ரம்மம் என்றும், அத்தனை ஜீவாத்மாக்களும் இந்த ஒரே ப்ரம்மம் மாயையால் போட்டுக்கொண்ட வேஷங்கள்தான் என்றும் நம்முடைய வேதாந்தத்தில் (உபநிஷத்துக்களில்) சொன்னதற்கு மாறாகப் பல 'புருஷர்'கள் இருப்பதாக ஸாங்க்யம் சொல்கிறது. ஒரே மாயை அல்லது ப்ரக்ருதிதான் ஸகல ஜீவ-ஜகத்துக்கும் காரணமாயிருக்கும்போது, ஞானமயமாக, சாந்தமயமாக உள்ள ஆத்மா அல்லது புருஷனும் ஒன்றாகத்தானே இருக்கவேண்டும்? பலவாக எப்படி இருக்கமுடியும்? மீமாம்ஸை மாதிரிதான் ஸாங்க்யத்திலும் ஈச்வரன் கிடையாது. நிர்குணமாக உள்ள ப்ரஹ்மத்தையும் ஜீவ - ஜகத்துக்களையும் இணைப்பது மாயைக்கு ப்ரபுவாக இருக்கப்பட்ட ஸகுண ப்ரஹ்மம் என்னும் ஈச்வரன்தான். நிர்குண பட்ட ஸகுண ப்ரஹ்மம் என்னும் ஈச்வரன்தான். நிர்குண ப்ரம்மமே மாயையோடு கூடி ஸகுண ஈச்வரனாகி ஜீவ - ஜகத்

வியாபாரத்தைச் செய்கிறது என்று வேதாந்தம் சொல்வதே பொருத்தமாக இருக்கிறது. 'புருஷன்' எதிலும் ஸம்பந்தப்படாமலிருக்கிறது என்று சொல்லிவிட்டு அப்புறம் அதன் ஸந்நிதி விசேஷத்தாலேயே ஜட ப்ரக்ருதி இத்தனையையும் செய்கிறது என்று சொல்வதில் ஸாரமில்லாமலிருக்கிறது.

நிஷ்காம்ய கர்மாவினால் சித்த சுத்தி பெற்று, பலதாதாவான ஈச்வரனை பக்தியுடன் உபாஸித்து சித்தத்தை ஒன்றிலேயே நிறுத்தப் பழகிய பிறகு, ஞான விசாரம் செய்தால்தான் ப்ரக்ருதிக் கட்டிலிருந்து விடுபட முடியுமே தவிர, கர்மானுஷ்டானமுமில்லை, ஈச்வரனுமில்லை என்று வைத்துவிட்டு, அடைய வேண்டிய ஸத்யத்தைப் பற்றி விசாரம் செய்வதற்கு மாறாகத் தள்ள வேண்டிய இருபத்து நாலு தத்வங்களை ஆராய்வதால் எப்படி விடுதலை கிடைக்கும்?

சேதனமான ப்ரஹ்மத்தையே உபநிஷத்துக்கள் ஜகத் காரணமாகச் சொல்லுகின்றன, ஆனால் ஸாங்க்யமோ அசேதனமான ப்ரதானத்தை (ப்ரக்ருதியை)த்தான் காரணமாகச் சொல்கிறது என்ற மூலமான வித்யாஸத்தைக் கொண்டே ஆசார்யாள் அது வைதிக ஸம்ப்ரதாயமாகாது என்று ஸ்தாபித்திருக்கிறார்.

புருஷன் என்ற தத்வத்துக்கு (ஆத்மாவுக்கு)க் கர்த்ருத்வம் இல்லை, அதாவது அதற்கு எந்தக் காரியமுமில்லை என்று வேதாந்தம் மாதிரியே ஸாங்க்யமும் சொன்னாலும், அதற்கு போக்த்ருத்வம் இருப்பதாகவும், புருஷனின் போகத்துக்காகத்தான் ப்ரக்ருதியானது ஸ்ருஷ்டி என்ற ஒன்றைச் செய்வதே என்றும் சொல்கிறது. இது வேதாந்தத்துக்கும் ஒத்து வரவில்லை; பகுத்தறிவுக்கும் ஒத்துவரவில்லை. 'போகத்தை அனுபவிப்பது' என்பதும் ஒரு கார்யம்தானே? கார்யமில்லாத புருஷ தத்வம் இந்தக் கார்யத்தை மட்டும் எப்படிச் செய்ய முடியும்? ஆத்மா -அதாவது புருஷன்-கர்த்தாவுமில்லை, போக்தாவுமில்லை என்பதுதான் அநுபவிகள் யாவரும் ஸமாதி (நிலை)யில் கண்டுள்ள உண்மையாயிருக்க அது கர்த்தா மட்டுந்தான் இல்லை, ஆனால் போக்தாவாகும் என்பது ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாகும்.

'யோகம்' என்பது சித்தத்தை அடக்கி ஸமாதி நிலையில் விடுபட்டிருப்பதற்கு வழி சொல்கிற மதம்.

அஷ்டாங்க-அதாவது எட்டு அங்கங்கள் கொண்ட-யோக ஸாதனையை அது சொல்கிறது. அது இன்றளவும் பலரால் அநுஷ்டிக்கப்பட்டுப் பலன் கொடுத்தும் வருகிறது. ஆனாலும் ஈச்வரன் என்ற ஒருவனை அது ஏற்கிறது என்ற ஒரு அம்சம் தவிர மற்றபடி ஸித்தாந்தத்தில் ஸாங்க்ய மத அபிப்ராயங்களையே தான் எடுத்துக் கொண்டிருக்கிறது. அதனால் அதன் குறைபாடுகளில் பல இதிலும் இருக்கின்றன.

ஈச்வரனை அது ஒப்புக் கொள்வதும் அவன்தான் ஜீவ-ஜகத்துக்களின் வியாபாரத்தை நடத்தி கர்ம பலனையும் தருகிறவன் என்ற முறையில் அல்ல. சித்த நிரோதம் (அடக்குதல்) செய்ய விரும்பும் ஸாதகன் சித்தத்தைப் பலவற்றில் சிதற விடாமல் ஏதோ ஒரு உயர்ந்த லக்ஷ்யத்தில் நிறுத்துவதற்குக் கொஞ்சங்கூட அழுக்கும், அழுகையும் இல்லாத ஈச்வரன் என்ற ஐடியல் பிரயோஜனப்படுகிறதென்றே அந்த மதத்தில் அவனை ஒப்புக்கொண்டிருக்கிறது. ந்யாயம், வைசேஷிகம் என்பவை ஒரே புத்தி ஆராய்ச்சிகள்தான். ந்யாயமென்பது தர்க்க வாதம். ப்ரம்மம் ஒன்று தான் ஸத்யம், மாயையால் அது போட்டுக் கொண்டுள்ள இந்த ஜீவ வேஷத்தை நாம் ஞானத்தினால் கலைத்துவிட்டு அதுவே ஆகிவிட வேண்டுமென்று வேதாந்தம் சொல்கிறதென்றால், இந்த மதங்கள் ஜீவன், ஜகத்து எல்லாமே ஸத்யம்தான், வேஷமில்லை என்றும், ஏக பரமாத்மா என்றில்லாமல் அநேக ஆத்மாக்கள் இருப்பதாகவும் சொல்கின்றன. ந்யாயத்தையே அநுஸரித்துப் போகும் வைசேஷிகம் ஜீவ-ஜட ப்ரபஞ்சத்தில் ஒவ்வொன்றும் வித்யாஸப் பட்டிருப்பதற்குக் காரணமாக அது அதற்கும் என்று உள்ள 'விசேஷ' குணங்களை ஆராய்கிறது. 'விசேஷ'த்தை ஆராய்வதாலேயே 'வைசேஷிகம்' என்று பெயர். இந்த ஸித்தாந்தத்தில் ஞானத்தினால் ஜீவபாவமும் ஜகத்தும் அடிபட்டுப் போவதென்பது கிடையாது. ஜீவ-ஜகத்துக்கள் அழிக்கமுடியாத அணுக்களால் ஆனவை என்பது அதன் கொள்கை. அணுக்கள், பரமாணுக்கள் எப்படியெப்படி ஒன்று கூடி வஸ்துக்களை உண்டாக்குகின்றன என்பதை அது விஸ்தரிக்கும். இருபத்து நான்கு தத்வங்களை ஆராய்வதிலேயே ஜீவன் அவற்றிலிருந்து விடுபட்டு மோக்ஷம் சேர்வானென்று ஸாங்க்யம் சொல்கிறதென்றால், வைசேஷிகத்தில், ஒரு ஜீவன் அதன் அணுக்கொள்கை 'பதார்த்தங்கள்' என்கிற ஒருவிதமான விஷயப் பாகுபாடு

ஆகியவற்றை ஆராய்வதாலேயே தன்னுடைய சரீரம், அது அநுபவிக்கும் விஷயங்கள் ஆகியன ஜடமான வெறும் அணுக்களின் கூட்டம்தான் என்று பிரித்து வைத்துவிட்டு சைதன்யமான ஆத்மாவைத் தெரிந்துகொண்டு ஸம்ஸார விடுதலை பெறுகிறான் என்கிறது. அங்கே (ஸாங்க்யத்தில்) கண்ட தோஷங்கள் இங்கேயும் பொருந்தும். புத்தி வாதம் நிறையப் பண்ணி வஸ்துக்களைப் பற்றித் தெரிந்து கொள்வதால் எப்படிக் கர்ம நாசமும், மனோநாசமும் உண்டாகும்? இவையில்லாமல் எப்படி ஸம்ஸார விடுதலை? ஸாங்க்யம் அசேதனமான ப்ரதானத்தை ஜகத் காரணமாகச் சொல்வதுபோலவே ந்யாய-வைசேஷிகங்களும் அசேதனமான பரமாணுக்களை ஜகத் காரணமாகச் சொல்வதால், இந்த தர்சனமும் சேதனமான ப்ரஹ்மத்தை ஜகத் காரணமாகச் சொல்லும் உபநிஷத மதத்திற்கு, அதாவது வைதிக மதத்திற்கு முரணானது என்று ஆசார்யாள் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இவை ஆஸ்திக (வைதிக) தர்சனங்கள். வேத ப்ரமாணத்தையே ஒப்புக் கொள்வதில்லை என்று, முழுக்க அவைதிகப் புது மதங்களாக ஏற்பட்டவை பௌத்தமும், ஜைனமும். அத்யயனம், வைதிக கர்மாநுஷ்டானங்கள், உபநிஷத்துக்கள், வர்ணாச்ரமங்கள் எதுவும் வேண்டாம் என்று இந்த இரண்டு மதங்களில் தள்ளி விட்டார்கள். ஈச்வரன் ஈச்வரோபாஸனை ஆகியவற்றையும் தள்ளி விட்டார்கள். நம்முடைய தர்ம சாஸ்த்ரங்களில் ஸகல ஜனங்களுக்குமான "ஸாதாரண தர்மங்கள்" என்று வைக்கப்பட்ட அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம் (பிறர் ஸொத்தைக் கவராமை), ப்ரஹ்மசர்யம், அபரிக்ரஹம் (அவச்யத் தேவைக்கு மேல் கொஞ்சங்கூட உடைமைகளைச் சேர்த்துக்கொள்ளாமலிருப்பது) ஆகிய ஒழுக்கங்களை மட்டும இவர்கள் சொல்லி, ஆனாலும் அவரவர் பக்வத்துக்கேற்ப இவற்றில் நீக்குப் போக்கு செய்யாமல் எல்லோருக்கும் ஒரே போலக் கடுமையாக வைத்துவிட்டார்கள்.

ஜைனத்தில் கடுமையான நியமம், அவ்வளவு கடுமையாக இல்லாமலிருப்பது என்று பிரிவினை செய்து பிக்ஷுக்களுக்குக் கடுமையான 'மஹா வ்ரதம்' என்றும், மற்றவர்களுக்கு 'அணு வ்ரதம்' என்றும் வைத்திருந் தாலுங்கூட, வர்ணாச்ரம விபாகமில்லாத நிலையில் அந்த

அணுவ்ரதமும் பொதுமக்களின் பொதுப்படையான அநுஷ்டானத்துக்கு ச்ரமம் ஸாத்யமாகத்தானிருந்தது. ச்ரம அதிகம் தந்தே கர்மாவைக் கழிக்கப் பண்ணணுமென்று அந்த மதம் கருதியதால்தான் அதற்கு ச்ரமணம் (சமணம்) என்றே பெயர். மத முடிவான ஸித்தாந்தம் (ஃபிலாஸஃபி) என்று பார்க்கிறபோது, புத்தர், 'எதுவும் நாம் தீர்மானகச் சொல்லிவிட வேண்டாம். அவரவர் அநுபவித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளட்டும்' என்கிற மாதிரி கொஞ்சம் மட்டும் சொல்லி விட்டு விட்டதில், அந்தக் கொஞ்சத்தை எத்தனையோ தினுஸில் பிற்காலத்தில் விஸ்தாரம் செய்வது என்று ஆகி, வைபாஸிகம், ஸௌத்ராந்திகம், யோகாசாரம், மாத்யமிகம் என்று ஒன்றுக்கொன்று வித்யாஸமாகப் பல ஸம்ப்ரதாயங்கள் பௌத்தத்தில் ஏற்பட்டன. ஒன்றுக்கொன்று மாறுபட்டதாக அந்த ஒரு மதத்தின் பெயரிலேயே மஹாயானம், ஹீனயானம் என்று இரண்டு பிரிவுகள் ஏற்பட்டன. யோகாசாரமும், மாத்யமிகமும் மஹாயானத்தின் கீழ் வந்தன. ஸௌத்ராந்திகமும் வைபாஸிகமும் ஹீனயானத்தின் கீழ் வந்தன. இந்த ஒவ்வொரு ஃபிலாஸஃபியிலும் ஆழ்ந்து சிந்தனை பண்ணி அநுபவம் பெற்றவர்களும் தோன்றினார்களென்றாலும், மாறுபட்ட கொள்கைகளாக இப்படிப் பல ஏற்பட்டதில் அநுபவத்தைவிட வாதத்தில் முட்டிக்கொண்டு முடிந்து போவதற்கே அதிகம் இடம் கொடுத்துப் போயிற்று.

'அநுபவம்' என்று வரும்போதுஎன்ன ஆயிற்று என்றால், புத்தர் ஏதோ கொஞ்சம் சொல்லியும் சொல்லாமலும் விட்டுவிட்டாரென்றேனல்லவா? அது உபநிஷத்துக்களில் லோகம் மாயை என்று காட்டுகிற அம்சத்தை மட்டும் எடுத்துக்கொண்டு, மாயைக்கு ஆதாரமாக ஒரு ஸத்யம் இருக்கிறது என்பதை எடுத்துக்கொள்ளாமல் விட்டு விட்டது. அதனால், நித்ய - சுத்த - புத்தமாகவும், ஸத் - சித் ஆனந்தமாகவும் இருக்கப்பட்ட ஸத்யமான ப்ரஹ்மம் அல்லது ஆத்மாவின் அநுபூதியைப் பெற்று பூர்ணவஸ்துவாக ஆவதுதான் ஜீவனின் லக்ஷ்யம், அதுதான் மோக்ஷம் என்று பௌத்த ஸித்தாந்தங்கள் சொல்லாமல், ஒரு ஆதாரமுமில்லாமல் என்னவோ ஓயாமல் மாறிக்கொண்டே இருக்கும் மாயா ப்ரவாஹத்திலிருந்து விடுபட்டு ஒன்றுமில்லாத ஒரு சூன்யத்தில் சேர்ந்துவிடுவதுதான் நிர்வாணம் என்றும் மோக்ஷம் என்று சொல்வதாயிற்று. ஸத்ய

வஸ்து, சாச்வத வஸ்து எதுவும் இல்லை, எல்லாம் சூனியந்தான் என்ற நிச்சயத்தியின் பேரிலேயே த்யானம் செய்து பெறுகிற அநுபவம் எப்படி 'ப்ரஹ்மானந்தம்' என்றே பேச்சுவழக்கில் கூடச் சொல்லும் பேரின்ப நிலையாயிருக்கும்?
"லோகமும் இல்லை, ஜீவனும் இல்லை, ஈச்வரனும் ஆத்மாவும் இல்லை, ப்ரம்மமும் இல்லை; என்னவோ ஒரு ப்ரமைதான் ஏதேதோ நடப்பதாகத் தோன்றுவதெல்லாம். அப்போதைக்கப்போது தோன்றி மறைந்து போகிற ஸமாசாரங்களே தொடர்ச்சியாக நடந்து கொண்டு போவதால் நிஜமாகவே வாழ்க்கை ஓட்டம் என்று ஒன்று இருக்கிறமாதிரி ப்ரமை ஏற்படுகிறது. விளக்கை ஊதி அணைக்கிறமாதிரி இது எல்லாவற்றையும் ஊதி அணைப்பது தான் 'நிர்வாணம்' என்கிற மோக்ஷம்" என்று ஒரு சூன்யத்தில் கொண்டு விடுவதாகத்தான் பௌத்தம் மொத்தத்தில் முடிகிறது. ப்ரமம் என்ற பூர்ணத்தில் ஜீவாத்மா பரமாத்மாவில் ஐக்கியமாகும்போது லோகமும் ஜீவனும் பொய்யாகப் போவதை வேதாந்தமும் சொல்கிறது. அந்த ஐக்யம் ஏற்படாத நிலையில் தெரியும் த்வைதமான லோக வாழ்க்கை ப்ரம்மத்தினாலேயே அது மாயா சக்தியோடு கூடிய ஈச்வரனாயிருக்கும்போது ஏற்படுத்தப்பட்டது என்றும் சொல்கிறது.

ஈச்வரன் திட்டம் போட்டுத்தான் ஜகத்தை நடத்துகிறான்; அதானல்தான் முடிவிலே ஸத்யமாயில்லாமல் போனாலும் இருக்கிற வரையில் இந்த ஜகத்தும் இத்தனை கார்ய-காரண விதிகளோடு ஒரு ஒழுங்கில் நடக்கிறது என்கிறது.
ஈச்வரனையும், ஜகத்தின் ஓட்டத்திற்கு ஒரு தாற்காலிக ஸத்யத்யத்வத்தையும்கூட பௌத்தம் ஒப்புக்கொள்ளாமல் எல்லாமே அது அதுவும் தோன்றித்தோன்றி மறைகிறது என்று சொல்லிக்கொண்டே, இன்னொரு பக்கம் கார்ய காரண விதியிலேயே அடங்கும் கர்மாக் கொள்கையும், மறு பிறப்புக்களும்கூட உண்டு என்று ஒப்புக்கொள்வது ஒன்றுக்கொன்று பொருந்தவில்லை.
ஸத்ய வஸ்துவாக ப்ரஹ்மம் என்று ஒன்று இருப்பதையும் அது மாயையோடு கூடி ஈச்வரனாகி ஜகத்தை நடத்துவதையும் ஜைனமதமும் சொல்லவில்லை.
எதைப்பற்றியுமே, அது இருக்கிறதுஎன்றோ, இல்லையென்றோ தீர்மானம் பண்ண முடியாது என்று

சொல்லி ஒரு முடிவுக்கும் வராமல் அது விட்டு விடுகிறது. இதற்கு "ஸ்யாத்வாதம்" என்று பெயர். அதாவது "இப்படியும் இருக்கலாம்" என்று அந்தரத்தில் விட்டுவிடுவது! "இப்படி இருக்கிறது" என்று ஒரு முடிவு பண்ணிச் சொல்வதல்ல. 'May be' என்று சொல்வது! 'விஷீஹ் தீமீ' (இருக்கலாம்) என்றாலே 'May not be' (இல்லாமலும் இருக்கலாம்) என்பது தொக்கி நிற்கிறது. அதாவது வஸ்துவின் ஸத்யத்வம் பற்றித் தீர்மானமேயில்லாமலிருப்பதுதான் ஸ்யாத் வாதம்.
'ஸப்தபங்கி' என்று ஏழு கிளையாக இந்த 'இருக்கலாம்; இல்லாமலிருக்கலாம்' என்ற வாதம் போகும். கேட்டால் புதிர் மாதிரி விநோதமாயிருக்கும்! ஏழு என்னவென்றால்:
ஒன்று-"ஸ்யாத் அஸ்தி": "வஸ்து இருக்கலாம்".
இரண்டு-"ஸ்யாத் நாஸ்தி": "வஸ்து இல்லாமலிருக்கலாம்".
மூன்று-"ஸ்யாத் அஸ்தி நாஸ்தி": "வஸ்து இருக்கவும் செய்யலாம், இல்லாமலும் போகலாம்". நாலு-"ஸ்யாத் அவ்யக்தவ்ய": "வஸ்து எப்படிப்பட்டதென்று சொல்லவே முடியாமல் இருக்கலாம்". ஐந்து-"ஸ்யாத் அஸ்தி ச அவ்யக்தவ்ய": : "வஸ்து இருந்துங்கூட, எப்படிப்பட்டதென்று நிர்ணயித்துச் சொல்லமுடியாததாயிருக்கலாம்". ஆறு-"ஸ்யாத் நாஸ்தி ச அவ்யக்தவ்ய:"-"வஸ்து இல்லாமலிருந்தும் மேலே சொன்னாற்போலவே, விளக்கிச் சொல்ல முடியாததாயிருக்கலாம்". ஏழு-"ஸ்யாத் அஸ்தி ச நாஸ்தி ச அவ்யக்தவ்ய:"-"வஸ்து இருப்பதாகவும் இல்லாததாகவும் இருந்துகொண்டும் விளக்கிச்சொல்ல முடியாததாயிருக்கலாம்". இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டு போனால் என்ன நிச்சயத்துக்கு வரமுடியும்?
ஆத்மா ஞானமயமாக, சைதன்ய மயமாக இருக்கிறதென்று ஜைனத்தில் சொல்லியிருந்தாலும் வேறெந்த மதத்திலும் இல்லாத கொள்கையாக, அந்தந்த சரீரத்தின் அளவுக்கும் ஸரியாக ஆத்மா ஆகிறது, எறும்பின் சரீரத்திற்குள் எறும்பளவாகிறது, யானையின் சரீரத்திற்குள் யானையளவாகிறது, எறும்பு யானையாகப் பிறவி எடுத்தால் அப்போது எறும்பளவு ஆத்மாவே யானையளவாக ஆகிறது என்றெல்லாம் சொல்கிறது! கர்மாக்கள் பரமாணுக்களாகி ஆத்மாவுக்குள்ளேபோய் அதைக் குறுக்கித் கட்டுப் போடுவதாகவும், கட்டைப் போக்கி விட்டால் ஆத்மா விடுபட்டு, அந்த விடுபட்ட நிலையில் ஆகாசத்தின்

உச்சிக்குப் பறந்து போய் ஸௌக்யமாக இருந்து கொண்டிருக்கும் என்றும் சொல்கிறது. கட்டைப் போக்குவதற்கு, அதாவது அந்த மதம் சொல்லும் கர்மப் பரமாணுக்கள் ஆத்மாவுக்குள்ளே போய் அதை குறுக்கிக் கெடுக்காமலிருப்பதற்கு, அதில் (ஜைனமதத்தில்) விதித்துள்ள கடுமையான வ்ரதங்களை அநுஷ்டிக்க வேண்டும் என்கிறது.

அஹிம்ஸை, ஈகை முதலியவற்றை ஜைனமதம் ரொம்பவும் வலியுறுத்திச் சொல்லும். உலக வாழ்க்கையில் ரொம்பவும் வெறுப்பைக் காட்டும். இதெல்லாம் உத்தமமான கொள்கைகள்தான் என்றாலும் பெருவாரியாகவுள்ள ஜனங்களுக்குப் பின்பற்றுவது ச்ரமம். அதனாலேயே அவர்கள் மதத்தின் விதியை மீறுவதான தப்பைப் பண்ணும் படியாகும். நம்முடைய மதத்தில், குடும்ப வாழ்க்கைக்கும் 'க்ருஹஸ்த தர்மம்' என்று மதிப்புக்கொடுத்து, அர்த்த-காமங்களையும் புருஷார்த்தங்கள் என்று உசத்தி வைத்து, பெருவாரி ஜனங்கள் உத்ஹாஸத்தோடு லோக வாழ்க்கையை தர்மமாக நடத்த ஊக்கியிருப்பதுபோல் பண்ணாவிட்டால் அவர்களுக்கு நடைமுறை வாழ்க்கையில் பெறுகிற ஸந்தோஷம் என்பதே இருக்காது. ஆதர்ச வாழ்க்கை நடத்தவும் பக்குவம் போதாமல், போலியாக அப்படி வேஷம் போடுவது, நெறி பிறழ்வது என்று போய் ஸமூஹமே சீர்கெட்டுப்போகும். அல்லது, படிப்படியாகப் பக்வமாகி ஆசைகளை விட்டுப் பழுத்த பழமாகாமல், வெறுப்பிலே விடப் பார்த்துக் காயாக உள்ளபோதே வெம்பி விழுவதாக ஆகும். ஜைனம், பௌத்தம் இரண்டிலுமே இந்த ஆபத்து இருக்கிறது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**கடவுட்கொள்கை**

வேடிக்கை என்னவென்றால், வைதிக கர்மாநுஷ்டானத்தை மட்டுமே சொன்ன (பூர்வ)மீமாம்ஸையும் ஈச்வரனைச்

சொல்லவில்லை; வைதிக கர்மாநுஷ்டானத்தை அடியோடு ஆக்ஷேபித்த பௌத்த-ஜைன மதங்களும் ஈச்வரனைச் சொல்லவில்லை! இதைவிட வேடிக்கை: வைதிக கர்மா என்பது ஒரு பக்கம் இருக்கட்டும், 'கர்மக்கொள்கை' என்றும் Karma theory என்றும் ஒன்றைச் சொல்கிறோமல்லவா? 'ஒவ்வொரு செயலுக்கும் ப்ரதிச் செயல் உண்டு. ஒவ்வொரு வினைக்கும் விளைவு உண்டு. இதிலிருந்து யாரும் தப்பவே முடியாது. நாம் செய்யும் நல்ல கார்யம், கெட்ட கார்யம் ஒவ்வொன்றுக்கும் விளைவு உண்டு. இந்த விளைவுகளை அநுபவித்தேயாகவேண்டும். இதற்காகத்தான் ஒரு ஜீவனுக்கு ஒரு சரீரத்தில் மரணம் ஏற்பட்டாலும்கூட அது மறுபடி இன்னொரு சரீரத்தில் ஜன்மா எடுத்தும் அநுபவிக்க வோண்டி ஏற்பட்டு, இப்படியே ஸம்ஸார சக்ரம் என்பது சுற்றிக்கொண்டே போகிறது' என்பதுதான் 'கர்மா தியரி'. இப்படிக் கர்ம பல அநுபோகத்திற்காகப் பல ஜன்மாக்கள் எடுப்பதை கிறிஸ்துவ, இஸ்லாமிய மதங்கள் சொல்வதில்லை. ஆனாலும் தற்போதுள்ள அம்மதங்களில் இந்தக் கொள்கை இல்லாவிட்டாலும், அம் மதங்களின் மூலமான (ஒரிஜினல்) ரூபத்தில் இது இருக்கத்தான் செய்தது, அல்லது அந்த மதங்களுக்கு முந்தி அந்த தேசங்களிலிருந்த ஹீப்ரு மதங்களில் கர்மக் கொள்கை இருக்கவே செய்தது என்று சொல்கிறார்கள். இந்த விஷயம் நமக்கு ஸம்பந்தமில்லாதது. ஆசார்யாள் சரித்ரத்தில் கிறிஸ்துவ, இஸ்லாமிய மத ஸம்பந்தமாக எதுவுமில்லை. ஆனால், கர்மக் கொள்கையைப் பற்றி எதற்குச் சொல்ல வந்தேன் என்றால். ஆசார்யாளோடு நன்றாக ஸம்பந்தப்பட்ட-கண்டன ரூபமான ஸம்பந்தம் பெற்ற-மீமாம்ஸை, பௌத்தம், ஜைனம் மூன்றுமே கர்மா தியரியை ஒப்புக்கொண்டிருக்கின்றன.

மூன்றுமே கர்மா தியரியை ஒப்புக்கொண்டபோதிலும் கர்ம பல தாதாவாக இருக்கும் ஈச்வரனை ஒப்புக் கொள்ளாததுதான் ரொம்ப வேடிக்கை!

கர்மா என்பது அசேதனமான ஜட வஸ்து. அது எப்படி ஒழுங்காக 'ப்ளான்' போட்டுக்கொண்டு இதற்கு இன்ன பலன் என்று இத்தனை திட்டவட்டமாகவும், கண்டிப்பாகவும் ஏற்பாடு பண்ணமுடியும்? சைதன்ய சக்திமூலமாக இருக்கப்பட்ட ஒரு ஈச்வரன்தானே, 'இப்படிப் பண்ணினால் இப்படி விளைவு' என்று ஏற்படுத்திப் பலன் தரமுடியும்? ஆனாலும் ஒரு பக்கத்தில் மீமாம்ஸகர்களும் ஈச்வரனை

மறுத்து, 'கர்மா தனக்குத்தானே பலன் தந்து கொள்கிறது' என்றார்கள். இன்னொரு பக்கத்தில் ஒரே அவைதிகமான பௌத்த ஜைனர்களும் கர்ம பலன் எப்படி, எவரால் விளைவிக்கப்படுகிறது என்றே சொல்லாமல், நிரீச்வர வாதம் பண்ணிக்கொண்டே, ஆனாலும் கர்ம பலன்படி ஜன்மாந்தரங்கள் உண்டு என்று அஸ்திவாரமில்லாமலே ஸித்தாந்தக் கட்டிடம் எழுப்பினார்கள்! பௌத்தத்தில் நிர்வாணம் என்ற சூன்ய நிலைதான் மோக்ஷம் என்று சொல்லி, லோக வியாபாரம் முழுக்க என்னவோ ஒரு மாய ஓட்டத்தில் பல ஸமாசாரங்கள் சேர்ந்து நடக்கிற மாதிரி தெரிவதே ஒழிய, ஒரே பொய்தான் என்று சொல்லியிருக்கிறது. இப்படி ஒரே பொய்யாக, ஏதேதோ சேருவதும் பிரிவதும் மாதரி எல்லாம் இருக்கிறபோது, எப்படி இவ்வளவு திட்டமாக ஒவ்வொரு கர்மாவுக்கும் தப்ப முடியாதபடி இன்ன பலன் என்று நிர்ணயித்து நடக்க முடியும்? 'என்னவோ எல்லாம் மாய ஓட்டம்' என்று தள்ள முடியாமல், ஒரு மஹா மதியானது ஸங்கல்பித்துத் தானே இப்படியெல்லாம் காரண கார்ய விளைவுகளை ஏற்படுத்துவதாக ஊஹிக்க முடிகிறது? அந்த மஹாமதிதான் ஈஸ்வரன் என்பது.

இங்கே ஒரு விஷயத்தைக் குறிப்பிடவேண்டும். முக்யமான ஸமாசாரம். ஆசார்யாளும், 'லோக வ்யாபாரமெல்லாம் மாயை; ப்ரஹ்மம்தான் ஸத்யம்' என்றே சொல்லியிருப்பதை வைத்துக்கொண்டு சில பேர் இதுவும் பௌத்தத்தை அப்படியே 'காப்பி' அடித்ததுதான் என்று நினைத்துக்கொண்டு விடுகிறார்கள். இவர்கள் ஒரு முக்யமான பாகுபாட்டைப் புரிந்துகொள்ளவேண்டும். லோகம் மாயை என்று சொல்லும்போது ஆசார்யாள் அது ஏதோ தலை கால் இல்லாமல் பல ஸமாசாரங்கள் சேர்ந்த மாதிரி இருக்கிற ஓட்டம் என்று பௌத்தர்கள் மாதிரிச் சொல்லவே இல்லை. மாயையைத் தன் குணமாகக் கொண்ட ஒரு ஈச்வரன், அல்லது மாயா சக்தி படைத்த ஈச்வரன்தான் இந்த லோகம் என்ற தோற்றத்தை ப்ரஹ்மத்திலிருந்தே தோற்றுவித்து அதை நடத்தியும் வருகிறான், கர்ம பலன்களைத் தருகிறான் என்றே ஆசார்யாள் ஸ்தாபித்திருக்கிறார். இன்னொரு விதமாகச் சொல்வதானால், கார்யம், குணம் எதுவுமில்லாத ப்ரஹ்மத்தை நிர்குண ப்ரஹ்மம் என்று அவர் சொல்லி, அதுவே மாயா சக்தியோடு கூடிக் கார்யமும் குணமும் உள்ள ஈச்வரன் என்ற

ஸகுண ப்ரஹ்மமாகி லோக வ்யாபாரத்தைச் செய்கிறது என்று கூறியிருக்கிறார். இதிலிருந்து தப்பி, ஸகுணத்திலிருந்து நிர்குணத்துக்குப் போய், அதோடு அபேதமாக ஐக்யமாகிவிடுவதுதான் அவருடைய அத்வைதத்தின் லக்ஷ்யம். அதற்கு ஸகுண ப்ரஹ்மமான, மாயை ஸஹிதனான ஈச்வரனின் அநுக்ஹம் வேண்டுமென்றும், அத்வைத ஞான மார்க்கத்தில் போவதற்கு முதல்படியாக ஈச்வர பக்தி செய்ய வேண்டுமென்றும் லாதனா மார்க்கம் அமைத்துத் தந்திருக்கிறார்.

இன்னொரு பாகுபாடு : மாயை என்றால் அடியோடு பொய் என்று அர்த்தமில்லை. அடியோடு பொய்யாயிருப்பதை ஆசார்யாள் 'அத்யந்த அஸத்' என்று சொல்வார். பூர்ண ஸத்யமாயிருப்பது ப்ரஹ்மம், அதாவது நிர்குண ப்ரஹ்மம். இரண்டுக்கும் நடுவில் இருப்பது, 'ப்ராதிபாஸிக ஸத்யம்' என்பது. அதாவது நடைமுறை வ்யவஹாரத்தில் நிஜம் போலவே இருப்பது. ஆனாலும் ஞானம் வந்த நிலையில் நிஜமாக இல்லாமல் மறைந்து போய்விடுவது. மாயா லோகம் என்பது இப்படிப்பட்ட ப்ராதிபாஸிக ஸத்யம் என்ற தாற்காலிக நிஜத்தோற்றம் என்றே ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். அடியோடு பொய்யான அத்யந்த அஸத் என்று அல்ல. ஜகத் 'அஸத்யம்' அல்ல. அது 'மித்யை' என்னும் தற்கால ஸத்யம். இப்படி ஜகத்திற்கும் ஒருவிதமான (இடைநிலை) மெய்ம்மையைத் தரும்போதுதான், நல்லது கெட்டது என்று இனம் பிரித்து மாயியான ஈச்வரன் பலன் தருவதைச் சொல்லமுடிகிறது. அதனால், நல்லதே செய்துதான் அதன் வழியாக ஈச்வராநுக்ரஹத்தில் சித்த சுத்தி பெற்று நிவ்ருத்தி (ஞான) மார்க்கத்திற்குப் போகமுடியும் என்று சொல்ல முடிகிறது. நல்லது செய்வது என்றால் என்ன? ஒழுக்கமாயிருப்பது, தர்மப்படி நடப்பது. பௌத்தத்தில் 'சூன்யமாக ஒரு மோக்ஷம் இருக்கிறது, பாக்கி எல்லாமே ஒரே பொய்ம்மாய ஓட்டம்' என்று சொல்லிவிட்டு, ஆனால், அஹிம்ஸை ஸத்யம் முதலான ஒழுக்கங்களை வலியுறுத்தும்போது 'எல்லாம் பொய் என்கிறபோது ஹிம்ஸையானலென்ன, அஹிம்ஸையானலென்ன? ஸத்யமானாலென்ன, அஸத்யமானாலென்ன? தர்மம் எதற்கு? ஒழுக்கம் எதற்கு?' என்று எதிர்கேள்வி கேட்டால் பதில் சொல்ல முடியாமலிருக்கிறது. ஆசார்யாள் ஸித்தாந்தத்திலோ, முழுப் பொய்யாயுமில்லாமல், முழு நிஜமாயுமில்லாமல்

நடுவிலிருக்கிற மித்யையாக மாயா ஜகத்தைச் சொல்லி, இதை நிர்வஹிக்கும் ஈச்வரன் கர்மாப்படியே பலன் தருவதில் ஒரு ஜீவன் ஒழுங்காக, தர்மமாக ஒழுகினால்தான் அதற்கு சித்த சுத்தி தந்து ஞான மார்க்கத்துக்கு உயர்த்துவான் என்று பதில் சொல்ல முடிகிறது. இந்த தர்ம ஒழுக்கத்துக்கு உதவும் உபயமாகவே மீமாம்ஸை சொல்லும் வைதிக கர்மாநுஷ்டானங்களையும் ஆசார்யாள் ஏற்றுக்கொண்டார்.

ஆசார்யாளுடைய மதத்தின் பெருமையே அதில் மீமாம்ஸையின் கர்மாநுஷ்டானம், பௌத்தத்தின் மாயைக் கொள்கை, ஜைனத்தின் அஹிம்ஸை முதலிய எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு நிலைகளில் இடம் கொடுத்து அங்கீகரித்திருப்பதுதான்!

மொத்தத்தில் நான் சொல்ல வந்தது, ஈச்வரனைச் சொல்லாத பௌத்தம், சமணம் ஆகிய இரண்டும் கர்மக் கொள்கையை மட்டும் ஒப்புக்கொண்டு, அதன் அங்கமாக தர்ம ஒழுக்கங்களை விதிப்பதானது அஸ்திவாரமில்லாமல் கட்டிடம் எழுப்புகிற மாதிரி இருக்கிறது என்று காட்டத்தான். 'எல்லாம் பொய் ஓட்டம்' என்று பௌத்தம் தள்ளுவதுபோலத் தள்ளினாலும் ஸரி, அல்லது, 'எதைப் பற்றியும் எதுவும் இப்படியென்றோ அப்படியென்றோ வரையறுத்துச் சொல்லமுடியாது' என்று ஜைனம் நிச்சயமில்லாமல் முடிப்பதுபோல முடித்தாலும் ஸரி, இரண்டிலும் இத்தனை திட்டவட்டமாக ஒவ்வொரு கர்மாவிற்கும் பலனைப் பிணைத்துக்கொடுத்து ஸம்ஸார சக்ரத்தைத் தொடர்ந்து உருட்டிக் கொண்டுபோகும் ஏற்பாட்டிற்குத் தக்க விளக்கம் கிடைக்கவில்லை. மாயாலோகத்தை நடத்துபவனாகவும் கர்ம பல தாதாவாகவும் உள்ள ஈச்வரன்தான் விளக்கமாக அமைவது.

பொதுவாகவே ஜன ஸமுதாயத்திற்கு ஈச்வரன் என்ற ஒருவன் இல்லாத மதம் ஒட்டுவதில்லை.

## பௌத்த-ஜைனமும் - பொது ஜனங்களின் மனப்போக்கும்

பொது ஜனங்களுக்குத் தத்வ ஸித்தாந்தங்களைப் பற்றிக் கவலையில்லை. ஏதோ ஒரு பெரிய சக்திதான் இந்த லோகத்தைப் படைத்து நடத்திக்கொண்டிருக்கிறது என்ற நம்பிக்கை, ஸ்வாமி என்ற அந்த சக்தியிடம் தங்களுடைய காமனைகளை (விருப்பங்களை)ப் பூர்த்திப் பண்ணித்தர வேண்டிக்கொள்வது-இதுதான் ஸாதாரண மக்களின் 'ரிலிஜன்'. அதோடுகூட, தங்களுடைய மதிப்பு மரியாதைகளைக் கவரும்படியான ஒரு பெரியவர் வந்து ஒரு வழியைச் சொன்னால், 'இவர் சொன்னால் அது ஸரியாய்த்தானிருக்கும்' என்ற நம்பிக்கையின் பேரில், தங்களை அந்தப் பெரியவரின் வழியைச் சேர்ந்தவர்களாகவே சொல்லிக்கொண்டு ஒரு நிறைவு பெறுவது பொதுமக்கள் ஸ்வபாவம். அவருடைய 'வழி' என்பது அவர் சொல்கிற மத ஸித்தாந்தம்தான். அது என்ன என்று ஜன்ங்களுக்கு விசேஷமாகத் தெரிந்தே இருக்காது. தெரிந்த அளவுக்குக்கூட அதை அநுஷ்டானம் பண்ணி ஸொந்த அநுபவமாக்கிக்கொள்ளவும் பாடுபடமாட்டார்கள், ஆனாலும் 'அது எதுவாக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். இவர்-இந்தப் பெரியவர்-சொல்கிறாரென்றால் ஸரியானதாகத்தான் இருக்கும். ஆகையால், நாம் இவரைச் சேர்ந்தவர்கள் என்றே இருப்போம். இவர் சொல்வதில் ஏதோ கொஞ்சம் நம்மால் முடியுமானால் செய்து பார்ப்போம்' என்று இருப்பார்கள். இது நம் ஆசார்யாளின் மதத்தில் உள்ளவர்களுக்கும்தான் பொருந்தும்.

பௌத்த-ஜைன மதங்களை இந்தக் கோணத்தில் பார்க்கலாம். அந்த மதங்களில் சொல்லியிருக்கும் அஹிம்ஸை, ஸத்யம், அபரிக்ரஹம் (பொருள் சேர்த்துக் கொள்ளாமை) முதலான நல்லொழுக்கங்களை எந்த மதம்தான் சொல்லவில்லை? மநு தர்ம சாஸ்த்ரத்தில் ஸகல ஜனங்களுக்குமான ஸாதாரண தர்மங்கள் என்று ஆரம்பித்திருப்பதே இவற்றில் தான். சாஸ்த்ரம் என்று ஒன்று சொல்லவேண்டும் என்றே இல்லை; ஒழுக்கமாக இருக்கவேண்டுமென்று யாருக்குத்தான் தெரியாது? ஆனாலும் அப்படி இருக்கவொட்டாமல் ஆசைகள் பிடித்து இழுக்கின்றன. இப்படிப் பிடித்திழுக்கும் போது தத்வ விசாரம் செய்து-வேதாந்தப்படியோ, பௌத்த-ஜைனம் முதலியவற்றின்படியோ, ஸாங்க்யாதி

ஸித்தாந்தங்களின்படியோ, ஏதோ ஒரு விதத்தில் தத்வங்களை ஆராய்ந்து பார்த்து, அநுபவம் பெற்று-ஆசைகளை அடக்கிப்போடுவது என்றால் அது நூற்றிலே ஆயிரத்திலே ஒன்றிரண்டு பேருக்குத்தான் ஸாத்யம். மற்றவர்கள் கருணாமூர்த்தியான ஒரு ஈச்வரனை சரணடைந்து அவனை வேண்டிக்கொண்டு அவனருளால் கெட்டதுபோய் நல்லது வரணுமென்றால்தான் ஏற்றுக்கொள்ளக் கூடியவர்களாக இருப்பார்கள். பௌத்த ஜைன மதங்களில் ஈச்வரனே கிடையாது. ஜனங்களுக்கானால், அந்த மதங்களில் அநுஷ்டான லெவலில் சொன்ன ஒழுக்கங்களிலும் பிடிப்பில்லை, அநுபவ லெவலில் சொன்ன ஃபிலாஸஃபியில் போவதற்கும் சக்தியில்லை. அவற்றை ஜனங்களின் மதமாகப் பாபுலராக்க என்ன பண்ணுவது? அந்த மதங்களானால் தாங்கள்தான் அத்தனை பொது ஜனங்களுக்கும் ஆனவை என்று சொல்லிக் கொண்டவையாக வேறு இருந்தன! 'சொல்லிக் கொண்டவை' என்றால் அவ்வளவு நன்றாக த்வனிக்கவில்லை. வாஸ்தமாகவே புத்தரும் ஜினரும் mass religion-ஆக எல்லாருக்கும் எல்லா உரிமைகளையும் தர நினைத்தவர்கள் தான். வர்ண வ்யவஸ்தை உள்ள ஹிந்து மதம் சிலபேருக்கு மட்டும் பக்ஷபாதமாகப் பண்ணுவதாகச் சொல்லி, எல்லாருக்கும் ஸமமாகத் தங்கள் மதத்தில் அதிகாரம் கொடுத்தார்கள். ஆனாலும் mass religion-ஆக அவர்கள் கொடுக்க நினைத்ததில் mass appeal உள்ள தெய்வ வழிபாடு என்ற natural religion சேராவிட்டால் எப்படி நடக்கும்?

புத்தரும் ஜினரும் இருந்த காலத்தில் அந்த மதங்கள் ஜனங்களிடம் பரவின என்றால் அதற்குக் காரணமே வேறே. அதுவரை இருந்த (வேத) மதம் வித்யாஸம் பாராட்டுகிறதென்று சொல்லி, 'நாங்கள் ஸரியாயப் பண்ணி உங்கள் எல்லோருக்கும் ஸமமாக உயர்வு தருகிறோம்' என்று ஒரு புத்தரோ ஜினரோ புதுசாக ப்ரசாரம் பண்ணினால் அப்போது ஜனங்களுக்கு அதில் ஒரு கவர்ச்சி ஏற்படத்தானே செய்யும்? இவர்கள் சொன்ன கொள்கை என்ன, அது புரியுமா அதைப் பின்பற்ற முடியுமா என்ற கேள்விகள் அப்போது எழும்பியிராது. அதோடு, அப்படிச் சொன்ன புத்தரும் ஜினரும் அந்தஸ்து வாய்ந்த குடியில் வந்தவர்களாகவும்,

த்யாகம் நிரம்பியவர்களாகவும் இருந்ததால் அவர்களுடைய 'பெர்ஸனல் மாக்னடிஸம்' (காந்த சக்தி) ஜனங்களை ஆகர்ஷித்தது.
இது அந்த மதங்களுக்கு மட்டும் நான் சொல்லவில்லை. ஸகல மதங்களுக்குமே பொருந்துவதுதான். ஹிந்து மதத்தில் கூடத்தான்-பொது ஜனங்களைப் பொறுத்தமட்டில் அதன் பல்வேறு ஸித்தாந்தங்களை பற்றிக் கவலையில்லை; ஒரு ஸித்தாந்தத்தைச் சொல்ல விசேஷப் பெருமை வாய்ந்த ஒருத்தர் வந்தாரென்றால் அவர் பின்னே போய்விடுவது என்றுதான் எப்பவுமே பொது ஜனங்கள் செய்திருக்கிறார்கள். நம்முடைய ஆசார்யாள் விஷயமாகவே கூடவுந்தான், அவர் சொன்ன அத்வைதத்தைப் புரிந்து கொண்டுதான் ஜன ஸமூஹம் முழுதும் அவரைப் பின்பற்றிற்று என்று சொல்ல நான் தயாரே இல்லை. "இவர் பெரிய மஹான், நமக்கு நல்லதைத்தான் சொல்வார்" என்று அந்தத் தனி மநுஷ்யரின் குணங்களைக் கொண்டு அவரிடம் உண்டான ஈடுபாட்டினாலேயே, அதில் பிறந்த நம்பிக்கையின் மேலேதான் பொது ஜனங்களில் பல பேர் அவருடைய மதத்தைத் தழுவியிருபார்கள். இது இருக்கட்டும்.
புத்தரும் ஜினரும் போன பிறகு எப்படி ஜனங்களை அந்த மதங்களில் பிடிப்போடு இருக்கப் பண்ணுவது?
'வெறுமே ஒழுக்கம் ஒழுக்கம் என்றாலும் பிடிப்பில்லை ஃபிலாஸஃபியும் எட்ட மாட்டேன் என்கிறது. பொது ஜனங்கள் மத ஸித்தாந்தம், ஸாதனா மார்க்கம் என்பவை பற்றி அலடிக் கொள்வதில்லை. உயிரோடு ஈச்வரன் என்று உள்ள ஒன்றிடம்தான் அவர்கள் ஏதோ ஒரு மாதிரிப் பிடிப்பு வைத்துக்கொள்ள முடியும்' என்று இருக்கும்போது, அவர்களுக்குப் பிடித்த மாதிரி கொடுத்துத் தானாக வேண்டுமென்ற கட்டாயம் பௌத்த - ஜைனர்களுக்கு ஏற்பட்டது. அதனால், தங்கள் ஃபிலாஸஃபி இடம் கொடுக்காத ஈச்வரனைச் சொல்லாவிட்டாலும், எப்படியோ ஒரு விதத்தில், வழிபாட்டுக்குரிய மூர்த்திகளை கொடுத்து விடுவதென்று தீர்மானித்தார்கள். என்ன செய்தார்களென்றால்...ஸ்வாமி (ஈச்வரன்) என்று சிலை வைக்கவில்லைதான். ஆனால் பௌத்த-ஜைன மதங்கள் சொன்ன கொள்கைப்படிப் போய்ப் பூர்ணத்வம் அடைந்ததாக அவர்கள் கருதிய மஹான்களை வழிபடச் சொல்லி, அந்தப் பெரியவர்களுக்குக் கோவில், மூர்த்தி, பூஜாக்ரமம் எல்லாம்

ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். இந்த வழிபாட்டுக்கு அந்த மத புருஷர்கள் சொன்ன காரணம், யோக சாஸ்த்ரத்தில் ஈச்வரனை ஒரு ஐடியலாகக் கொண்டுள்ளது போலத்தான். அதாவது, வக்ஷ்யத்தை அடைந்துவிட்ட தங்கள் மதப் பெரியவர்களை-புத்தர்கள், போதி ஸத்வர்கள், தீர்த்தங்கரர்கள் போன்றவர்களை-வழிபடுவதால் அவர்கள் அடைந்த நிலைகளை மக்களும் ஐடியலாக எடுத்துக்கொண்டு பின்பற்றப் பார்ப்பார்கள் என்பதுதான். ஆனால் அப்படி நடந்திருக்குமா என்பது ரொம்பவும் ஸந்தேஹம். பெரிய பெரிய விஹாரங்களும் மூர்த்திகளுமாக ஏற்படுத்தியவுடன் ஜனங்களை அவை கவர்ந்து வழிபாடு செய்ய வைத்திருக்கும் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும் ஜனங்கள், 'இவா மாதிரி நாம் புத்தராகணும், போதி ஸத்வராகணும், அர்ஹர் (அருகர்) ஆகணும்' என்று ஐடியலை நினைத்து, லக்ஷ்யம், கிஷ்யம் என்று எதையோ நினைத்து, அலட்டிக் கொண்டிருக்க மாட்டார்கள்.

அதுவரை ஹிந்து மத தெய்வங்களிடம் வேண்டிக்கொண்டது போலவே, உலக வாழ்க்கையில் 'அது வேணும், இது வேணும், கஷ்டம் வேணும்' என்றும், ரொம்ப உசந்தால், 'ஞானம் வரணும், வைராக்யம் வரணும்' என்றும் இந்த (பௌத்த, ஜைன) மூர்த்திகளையும் வேண்டிக் கொள்வதோடுதான் நின்று போயிருப்பார்கள். 'அவர்களுடைய ஐடியலை நாமும் ப்ராக்டிகலில் செய்ய வேண்டும்' என்று ஆரம்பித்திருக்கமாட்டார்கள். பொது ஜன மனப்போக்கு இப்படித்தான்.
இப்படி வேண்டி வரம் பெறுவது என்றால் அப்போது கர்ம பல தாதாவான ஈச்வரன் இருந்து தானாக வேண்டும். கர்மாவுக்கு எவன் பலன் தருகிறானோ, அவன்தானே நாம் வேண்டுகிற பலனைத் தரவும் முடியும்?
அதாவது, அந்த இரண்டு மதங்களும் கர்ம பல தாதாவான ஈச்வரனாக இல்லாமல், லக்ஷ்யத்துக்குப் போக வழிகாட்டும் லக்ஷ்ய புருஷர்கள் என்ற முறையிலேயே பூஜா மூர்த்திகளை வைத்தாலும், ஜனங்கள் என்னவோ அவற்றை ஹிந்து மதத்திலுள்ள ஈச்வரனின் அநேக மூர்த்திகள் போலவே நினைத்து இஷ்ட காம்ய பலன்களுக்காகத்தான் வழிபட்டு வந்தார்கள்.
இது இப்படியே போனதில் அப்புறம் அந்த மதத் தலைவர்கள், ஹிந்து மதத்தில் ஒவ்வொரு பலனுக்கு

ஒவ்வொரு தெய்வம் என்றிருக்கிற மாதிரியே தாங்களும் தெய்வங்களை ஏற்படுத்தும் வரையில் போக வேண்டியதாயிற்று. ஹிந்து மத தெய்வங்களுக்குப் பெயர் மாற்றியோ, அல்லது அதே பெயரிலேயோ தங்கள் மதங்களிலும் எடுத்துக்கொள்ளும் படிக்கூட ஏற்பட்டது. உத்தேசம் வேறு, நடைமுறை வேறு என்று இருந்த போதிலும் உத்தேசப்படியே நடக்கிற மாதிரி காட்டிக் கொண்டு நடைமுறைக்கு வளைந்து கொடுத்துக்கொண்டு போவதென்றால் அது மதத்திற்குப் பெரிய குறைவல்லவா? அந்த மதத்தில் இருப்பதாகச் சொல்லிக் கொள்பவர்களுக்கும் இது குறைதானே? இப்படி அந்த 2500 வருஷத்திற்கு முற்பட்ட காலத்தில் இருந்தது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அப்பட்டமான லோகாயதம்

இந்த மதங்களெல்லாம் போக அப்பட்டமான நாஸ்திகமும் சார்வாகம் என்ற பெயரில் இருந்தது. இதுவரை சொன்ன எல்லா மதங்களிலும் ஸம்ஸாரம் ஒரு பந்தம் என்று வைத்து, அதிலிருந்து நிவ்ருத்தி பெறுவதற்கு வழிகள் சொல்லியிருக்கிறது. ஒவ்வொன்றிலும் உயர்ந்த தத்வங்கள் இல்லாமலில்லை. இவற்றுக்கெல்லாம் மாறாக, ஸம்ஸாரம் பந்தம் என்றும் அதிலிருந்து மோக்ஷம் பெறுவதே லக்ஷ்யம் என்றும் சொல்லாமல், கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று இருக்கும்படி சொன்ன மதம் தான் சார்வாகம். 'சாரு' என்றால் அழகானது, இனிமையானது. 'வாகம்' என்றால் வாக்கியம். கேட்க இனிமையாக உள்ள வாக்யமே சார்வாகம். "வ்ரதம் வேண்டாம்; உபவாஸம் வேண்டாம். தத்வங்களைச் சிந்தனை பண்ணி உழப்பிகொள்ள வேண்டாம்; நன்றாகத் தின்றுகொண்டு குடித்துக்கொண்டு போகங்களை அநுபவியுங்கள்" என்று சொன்னால் கேட்க நன்றாகத்தானே இருக்கிறது? அதனால் சார்வாகம் என்று பெயர். "சாமியாவது, பூதமாவது, ஆத்மாவாவது? அதெல்லாம் ஒன்றுமில்லை.

(அவை) கண்ணுக்குத் தெரிகிறதா என்ன? கண்ணுக்கு உடம்பு தெரிகிறது. லோகம் தெரிகிறது. இந்த உடம்புக்கு ஸௌக்யமாக இந்த லோகத்திலிருந்து என்னவெல்லாம் எடுத்துக்கொள்ள முடியுமோ, எடுத்துக்கொண்டு அநுபவியுங்கள். வேறே மதமும் வேண்டாம், மண்ணாங்கட்டியும் வேண்டாம்" என்பது அந்த மதம். தேவ குருவான ப்ருஹஸ்பதியின் அஸுரர்கள் நல்ல வழிக்கு வந்துவிடாமல் செய்வதற்காகவே இப்படி ஒரு மதத்தை உருவாக்கி ப்ரசாரம் செய்தார் என்பார்கள். அதனால் அதற்கு 'பார்ஹஸ்பதம்' என்று பேர்-முன்னேயே சொன்னேன். பரலோகத்தைப் பற்றிய பேச்சே இல்லாமல் இந்த லோகத்துடனேயே முடித்து விடுவதால் 'லோகாயதம்' என்று பொதுவாகச் சொல்வர்கள்! தமிழில் 'உலகாயதம்'. 'மெடீரியலிஸம்' என்கிறார்களே, அது. அஸுரர்களை உத்தேசித்துப் பண்ணிய இந்த மதமும் ஜனங்களுக்குள்ளேயே ஆஸுர வ்ருத்திகள் நுழைந்துவிட்ட கலிகாலத்தில் நம் தேசத்தில் கொஞ்சம் இருந்து வந்தது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

## வேதத்தை ஒப்பியும் வேதாந்தத்தை ஒப்பாத மதங்கள்

இப்படி (ஜைனம், பௌத்தம் சார்வாகம் ஆகியவற்றைப்போல்) வேதத்தை அடியோடு ஆக்ஷேபிக்காமல் 'வேத ப்ராமாண்யத்தை (வேதம் ஸத்ய ப்ரமாணமுடையது என்பதை) நாங்கள் ஒப்புக்கொள்கிறோம்' என்று சொல்லிக் கொண்டே, அதில் ஒவ்வொரு அம்சத்தை மட்டும் எடுத்துக் கொண்டு, அதுவே எல்லாம் என்று ஸித்தாந்தம் பண்ணி, மற்ற அம்சங்களைக் கண்டனம் செய்த மதங்களும் இருந்தன. முக்யமாக இந்த மதஸ்தர்கள் எல்லாரும் வேதங்களின் பரம தாத்பர்யமாக வேதாந்தத்தில் ஜீவ-ப்ரஹ்ம ஐக்யத்தைச் சொல்லி, அந்த ஐக்யத்தை ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் அநுபவிப்பதுதான் மோக்ஷம் என்றிருப்பதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆத்மாவைப்

பற்றிக் கொஞ்சம்கூடப் புரிந்து கொள்ள முடியாதவர்களுக்கான காரியங்களில் ஆரம்பித்து, அடியிலிருந்து நுனிவரை integrated-ஆக, ஸம்யுக்தமாக, ஒன்று சேர்த்துத் தரும் ஸநாதன தர்மத்தின் கட்டுக்கோப்பை பங்கப்படுத்தி ஏற்பட்ட இந்த மதங்களும் அப்போது வெவ்வேறு அளவில் பரவியிருந்தன. இவற்றில் விஷய ஆராய்ச்சி என்ற முறையில் சிறப்புப் பெற்றவை ஸாங்க்யம், யோகம், ந்யாயம், வைசேசிஷகம், மீமாம்ஸை என்ற ஐந்து. யோகத்தில் ஸாங்க்யத்தின் விஷய ஆராய்ச்சியோடு ஸாதனா மார்க்கமும் சிறப்பாகச் சேர்ந்திருக்கிறது. ஆனாலும் எல்லாமே ஸநாதன தர்மத்தின் ஸார தத்வத்துக்குக் கிட்டே போகாதவைதான்.

இந்த ஐந்தில் க்ருஷ்ண பரமாத்மாவே திட்டியுள்ள மீமாம்ஸை இந்த ஸமயத்தில் மறுபடி ப்ரபலமாகி வந்தது. ஸாங்க்யம், யோகம், ந்யாயம், வைசேஷிகம் ஆகியவை அறிவாளிகளான சிலரால் மட்டும் பின்பற்றப்பட்டன. கர்மாநுஷ்டான மயமான மீமாம்ஸை மட்டும் ஓரளவு கணிசமான ப்ராம்மண ஸமூஹத்தினரின் அநுஷ்டானத்தில் இருந்து வந்தது. அக்னிஹோத்ரம், யஜ்ஞங்கள் முதலான கர்மாக்களைச் சொல்லும் அந்த சாஸ்த்ரத்தில் வேதங்களின் அர்த்தத்தை விசாரிப்பதில் நிறைய அறிவாராய்ச்சியும் சேர்ந்திருந்ததால் அதற்கு ப்ராம்மணர்களிடையே ஓரளவு நல்ல following இருந்ததாகத் தெரிகிறது.

ஆனாலும் அந்த ஜாதியிலேயே இன்னொரு பகுதி பௌத்த மதத்தைத் தழுவியிருந்ததும் தெரிகிறது. வேதாந்தம் ரொம்பவும் நலிவுற்று, ஆனாலும் நான் சொன்னாற்போல அடியோடு போய்விடாமல் மூச்சைக் கையில் பிடித்துக்கொண்டிருந்த காலமாக இருந்ததால், கர்மாவில் மட்டும் நிறைவு காணமுடியாமல், Metaphysics என்கிறார்களே, அப்படிப்பட்ட பௌதிக அதீதமான உண்மைகளில் ஈடுபட்டுப் பார்க்க விரும்பிய ப்ராம்மணர்கள் பௌத்தத்திலும் abstract meditation-கு (கலப்படமில்லாத ஸ்வச்சமான த்யானவிசாரத்திற்கு) இடமிருப்பதால் அதில் போனார்கள். வைதிக கர்மாநுஷ்டானங்களுக்கு முக்யமான அதிகாரிகளாக ஆதிகாலத்திலிருந்து இருந்து வந்துள்ள ப்ராம்மணர்களில் பலபேர் அதைவிட்டு விட்டு பௌத்தத்துக்குப் போனதனால்தான், 'சங்கர விஜய'ங்களில் கொஞ்சம் அதிசயோக்தியாகவே, அப்போது தேவர்கள்

போய்ப் பரமேச்வரனிடம், "யாக" என்ற சப்தத்தைக் கேட்டாலே எல்லாரும் காதைப் பொத்திக்கொள்ளும் துர்த்தசை ஏற்பட்டுவிட்டதென்று முறையிட்டதாகச் சொல்லியிருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## முழுதும் வேத ஸம்மதமானாலே வைதிகம்

ஒன்றை வைதிக மதம் என்று சொல்ல வேண்டுமானால் அது வேதத்தில் சொல்லியுள்ள சிலவற்றை ஒப்புக்கொண்டு 'டெவலப்' பண்ணினதாக இருந்தால் மாத்திரம் போதாது. வேதத்தில் சொல்லியுள்ள எதையுமே அது ஆக்ஷேபிக்கக் கூடாது என்பது இதைவிட முக்யம். 'சிவனைப் பற்றி வேதத்தில் ஸூக்தங்கள் இருக்கின்றன; அதனால் அதை எடுத்துக் கொண்டு டெவலப் பண்ணிய பாசுபதம் முதலான சைவ மதங்கள் வைதிகமானவை' அல்லது, இதே மாதிரி, 'வேதத்தில் விஷ்ணு ஸூக்தங்கள் இருப்பதால் அதன் அடிப்படையில் ஏற்பட்டுள்ள பாகவத பாஞ்சராத்ரம் முதலிய வைஷ்ணவ மதங்கள் வைதிகமானவை' என்றால் அது ஸரியான வாதம் இல்லை. வேதத்தில் சிவன், விஷ்ணு என்ற இரண்டையும் ஒரேபோல ஸ்துதித்திருக்கிறது. ஒவ்வொன்றையும் சொல்லுமிடத்தில் அதையே பரப்ரஹ்மமாகச் சொல்லியிருக்கிறது. அதனால், சிவனையே முழுமுதல் தெய்வமாகச் சொல்லும் சைவ மதங்களோ, அதேபோல விஷ்ணுவையே முழு முதலாகக் கொள்ளும் வைஷ்ணவ மதங்களோ ஏற்படுவதில் தவறாக, அதாவது அவைதிகமாக எதுவுமில்லைதான் ஆனாலும் இந்த மதங்கள் தங்களுக்கு இஷ்ட தெய்வமாயுள்ள சிவனையோ விஷ்ணுவையோ முழு முதல் தெய்வமாகப் போற்றுவதோடு நிற்காமல், சைவ மதங்கள், 'விஷ்ணு முழு முதல் தெய்வமில்லை. அவர் சிவனுக்குக் கீழானவர்தான்' என்றும் வைஷ்ணவ மதங்கள், 'விஷ்ணு மட்டுந்தான் முழு முதல் தெய்வம். சிவன் அவருக்குக் கீழ்ப்பட்டவர்தான்' என்றும்

சொல்லுமானால் அப்போது அவை வேதத்துக்கு முரணாகத்தான் போகின்றன. ஆகையினால் அவை அவைதிகமானவையாகி விடுகின்றன. தனக்குப் பிடித்ததை மட்டும் பிடித்துக்கொள்வதோடு நின்று விட்டால் பரவாயில்லை. ஆனால் தனக்குப் பிடிக்காதது என்று ஒன்றை தாக்கப் போனால் அது வேதத்தின் ஒரு பகுதியையே தாக்கியதாகிவிடுகிறது. அதனால் அப்படிப்பட்ட மதம் வைதிகமானதாகாது.

இது ஓரளவு broad outlook-ல் (பரந்த பார்வையில்) சொல்வது. இன்னும் strict-ஆகச் (கண்டிப்பாகச்) சொல்பவர்கள், "வேதங்களில் எல்லா ஸ்வாமிகளுக்கும் உரிய யஜ்ஞங்களைச் சொல்லியிருக்கிறது. ஒரு யஜ்ஞத்திலேயே பல ஸ்வாமிகளுக்கு யஜ்ஞ பாகங்கள் கொடுக்கும்படியும் இருக்கிறது. அவை எல்லாவற்றையும் வித்யாஸமில்லாமல் பண்ணுகிறவன்தான் நிஜமான வைதிகன். 'ஒரு ஸ்வாமியைக் குறித்தவற்றை மட்டும் பண்ணுவேன்; இன்னொன்றை குறித்தவைகளைப் பண்ண மாட்டேன்' என்கிறவன் வைதிகன் ஆக மாட்டான். மனஸளவில் இஷ்ட மூர்த்தி என்று ஒன்றிடம் அத்யந்த பக்தியுடன் இருந்துவிட்டுப் போகட்டும். கார்யத்தில் யஜ்ஞம், பூஜை என்று வரும்போது ச்ருதி-ஸ்ம்ருதிகளில் எப்படியிருக்கிறதோ அப்படி தெய்வ பேதம் பாராட்டாமல் பண்ணினால்தான் வைதிகம் என்று அர்த்தம்" என்று சொல்வார்கள். "ச்ருதியை அநுஸரித்து ஸ்ம்ருதிகள் கொடுத்துள்ள நாற்பது ஸம்ஸ்காரங்களைத்தான் பின்பற்றவேண்டும். அவற்றில் இல்லாத ஏதோ ஒரு ஸம்ஸ்காரம் பண்ணினால் தான் தங்கள் மதத்தைச் சேர்ந்தவராக முடியும் என்று ஒரு மதம் சொல்லுமானால் அது வேத மதத்திற்கு வேறான இன்னொன்றுதான். உதாரணமாக, நாற்பது ஸம்ஸ்காரங்களில் சங்க-சக்ரங்களையோ, சூலம்-ரிஷபம் முதலானவைகளையோ தப்த கின்ஹங்களாக முத்ரா தாரணம் செய்து கொள்வதென்பது (முத்திரைகளாகச் சூடு போட்டுக் கொள்வதென்பது) இல்லை. இந்த விதமான ஸம்ஸ்காரம் பண்ணிக்கொண்டால்தான், ஒருவன் விஷ்ணு பரமான, அல்லது சிவ பரமான ஒரு மதத்தைச் சேர்ந்தவனாவான் என்றால் அவனை வைதிகனென்பதற்கில்லை" என்று Strict-ஆக இருப்பவர்கள் சொல்வார்கள்.

அதோடுகூட, 'யாராயிருந்தாலும் வர்ணாச்ரம அநுஷ்டானம் இருந்தால்தான் வைதிகர் என்று அர்த்தம். 'எங்களுக்கு பக்திதான் முக்யம். வர்ணாச்ரம வ்யவஸ்தைகள் தேவையில்லை' என்றால் அவைதிகம்தான்' என்பார்கள்.
பக்தி மதமாக இல்லாமல், தத்வ சோதன மதங்களாக உள்ளவற்றுக்கும் இப்படியேதான்: அதாவது, அவை வேத ஆதாரத்தில் சில தத்வங்களை ஆராய்ச்சி செய்கின்றன என்றால் மட்டும் போதாது. இந்தத் தத்வங்கள், யாருக்கு எந்த ஸ்டேஜில் வேதத்தில் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் கவனிக்கவேண்டும். அந்த நிலைக்கு வர இயலாதவர்கள் விஷயத்தில் வேதம் சொல்லியுள்ளவற்றைச் சகட்டுமேனியாக 'இதெல்லாம் அவச்யமில்லை' என்று தள்ளி விடக்கூடாது. மறுபக்கம், அந்த நிலைக்கு மேலே வேதத்தில் சொல்லியிருக்க கூடியவற்றையும் தள்ளிவிட்டு, 'தான் எடுத்துக்கொண்டுள்ளதோடேயே வேதத்தின் தாத்பர்யம் பூர்த்தியாகிவிட்டது' என்றும் சாதிக்கக்கூடாது. இந்தவிதமான அபிப்ராயக்காரர்களும், 'நாங்கள் ஃபிலாஸஃபியாகத் தானே சொல்லிக்கொண்டு போகிறோம்? அதனால் எங்களுக்கும் ஸமூஹ நடைமுறை ஸமாசாரமான வர்ணாச்ரமத்துக்கும் ஸம்பந்தமில்லை' என்று கத்திரித்துக்கொண்டு போகக் கூடாது.
இந்த அடிப்படைகளில்தான் எது வைதிக மதம், எது அவைதிக மதம் என்று மஹாபாரதத்திலேயே நிர்ணயம் செய்திருக்கிறது.
சரக்கூட்டில் படுத்துக்கொண்டிருந்த பீஷ்ம பிதாமஹர் தர்ம புத்ரருக்குப் பண்ணும் நீண்ட உபதேசம் மஹாபாரதத்தில் சாந்தி பர்வம், அநுசாஸன பர்வம் என்று இரண்டு பர்வங்களாக வருகிறது. அதில் பக்தி உபாஸனா மதங்களான பாஞ்சராத்ரம், பாசுபதம் ஆகிய இரண்டையும், தத்வ சாஸ்த்ரமாக இருக்கப்பட்ட ஸாங்க்யம், ஸாங்க்ய தத்வங்களின் அடிப்படையிலேயே மனோநிக்ரஹத்துக்கு க்ரியாரூபமாக ஸாதனம் சொல்லும் யோகம் ஆகிய இரண்டையும், அதாவது இந்த நாலு மதங்களையும் வேதத்திலிருந்து பிரித்து, வேறு வேறான தனி மதங்களாகத்தான் சொல்லியிருக்கிறது.
ஸாங்க்யம் யோக : பாஞ்சராத்ரம் வேதா : பாசுபதம் ததா என்று சொல்லியிருக்கிறது. அதாவது, 'ஸாங்க்யம், யோகம், பாஞ்சராத்ரம், வேதங்கள், பாசுபதம் என்ற ஐந்து மதங்கள்'

என்று இருக்கிறது. ஐந்தில் ஒன்றாகவே வேதம் வருகிறதென்றால் மற்ற நாலும் வேத மதத்தைச் சேர்ந்தவையில்லை என்றுதானே அர்த்தம்? பாரதத்திலேயே இன்னோரிடத்தில், யோகம் என்பதை அந்த மதத்தின் மூலபுருஷரான பதஞ்ஜலியின் பெயரை வைத்து 'பாதஞ்ஜலம்' என்று சொல்லி, இந்த ஐந்தையும் "நாநா மதாநி"-வெவ்வேறு மதங்கள்-என்றே ஸ்பஷ்டமாகக் குறிப்பிட்டிருக்கிறது.
'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்' என்று ஈச்வர மஹிமைகளைக் கூறுவதாக ஒன்று உண்டு. புஷ்பதந்தர் பண்ணியது. அது ரொம்பவும் பழமை வாய்ந்த ஸ்தோத்ரம். வட தேசத்தில் ரொம்பவும் ப்ரஸித்தமாக இருப்பது அதிலேயும் இப்படியே வேதம், ஸாங்க்யம், யோகம், பாசுபதம், வைஷ்ணவம் ஆகியன வெவ்வேறு மதங்கள் என்றே சொல்லியிருக்கிறது:
த்ரயீ ஸாங்க்யம் யோக : பசுபதிமதம் வைஷ்ணவம் இதி ப்ரபிந்நே ப்ரஸ்தாநே
'த்ரயீ' என்றால் வேதம், அது ஒரு மதம். 'ஸாங்க்யம்' இன்னொரு மதம். 'யோகம்'-அதுவும் தனியாக ஒரு மதம். 'பசுபதி மதம்' என்பது சிவபெருமானைக் குறித்த பாசுபதம், அதுவும் ஒரு தனி மதம். கடைசியாக இன்னொன்று 'வைஷ்ணவம்'. இவற்றை 'ப்ரபின்ன'மான 'ப்ரஸ்தான'ங்களென்று சொல்லியிருக்கிறது-"ஒன்றுக்கொன்று மாறுபட்ட மார்க்கங்கள்" என்று அர்த்தம்.
பாரதத்திலும் சிவ மஹிம்ந ஸ்தோத்ரத்திலும் இப்படிச்சொல்லியிருப்பதற்கு 'வால்யூ' அதிகம். பாரதக் கதை விஷ்ணு அவதாரமான க்ருஷ்ண பரமாத்மாவின் கதையுடனேயே ஒட்டிப் போவது. 'ஹரிவம்சம்' என்பதாக உள்ள பாரதத்தின் 'ஸப்ளிமென்ட்' (அநுபந்தம்) ஸ்ரீக்ருஷ்ண சரித்ரத்தையே விரிவாகச் சொல்வது. அப்படியிருந்தும் வேதத்தின் ஸாமரஸ்ய பாவத்துக்கு (ஸமரஸ மனப்பான்மைக்கு) விரோதமாக, மற்ற தெய்வங்களைக் குறைத்தும், ச்ருதி-ஸ்ம்ருதி ஆசாரணைகளுக்கு மாறாகவும் விஷ்ணுவைக் குறித்ததாகவே பாஞ்சராத்ரம் என்ற தந்த்ரம் அநுஷ்டிக்கப்பட்டபோது அதை பாரதம் வேதத்துக்குப் புறச் சமயமாகவே சொல்லியிருக்கிறது. இப்படியேதான், சிவ மஹிமைகளையே சொல்லவந்த ஸ்துதியாயிருந்தாலும் சில மஹிம்ன ஸ்தோத்ரத்தில் பசுபதி மதத்தை வேதத்துக்கு புறச் சமயமாகச் சொல்லியிருப்பதும்.
மஹாகவிகளின் வாக்குக்கும் ஒரு ஸத்ய

ப்ராமணமுண்டாகையால், அப்படியும் ஒன்று இந்த விஷயமகாச் சொல்கிறேன்:
பண்டித ஸமூஹத்தின் கௌரவத்தை நிரம்பப்பெற்றவர் ஸ்ரீஹர்ஷகவி. பாண்டித்யம் இல்லாதவர்களால் அவருடைய புஸ்தகங்களைப் புரிந்துகொள்ள முடியாது. அவர் நள சரித்ரத்தை "நைஷதம்" என்று பெயர் கொடுத்து எழுதியிருக்கிறார். அதிலே தமயந்தி ஸ்வயம்வர கட்டம். நளன் ஸ்வயம்வர மண்டபத்திற்கு வந்திருக்கிறான். அவனுக்கும் தமயந்திக்கும் பரஸ்பர ப்ரேமை. அதனால் அவள் அவனுக்குத்தான் மாலை போடுவாள். இந்த இடத்தில்தான் காவ்யச் சுவையைக் கூட்டிவைப்பதாக, இந்த நாள் மர்மக் கதைகள் மாதிரி புதிராக ஒன்று "நைஷத"த்தில் நடக்கிறது. அதாவது, ஒரு நளனுக்குப் பதில் ஐந்த நளர்கள் அடுத்தடுத்து உட்கார்ந்திருக்கிறார்கள்! அதில் ஒருத்தன்தான் நிஜ நளன். பாக்கி நாலு பேரும் தத்ரூபம் அவனைப்போலவே வேஷம் தரித்துக்கொண்டு வந்துள்ள அக்னி, யமன், வருணன், இந்திரன் ஆகிய நாலு தேவர்கள். அந்த ஐந்து பேரில் யார் நிஜ நளன் என்று தமயந்தி திகைத்துப் போகிறாள். இதைச் சொல்லவரும் போதுதான் கவி (ஸ்ரீஹர்ஷர்) நாம் பார்த்துக்கொண்டிருந்த விஷயத்தைக் கொண்டு வருகிறார்-உவமையாகக் கொண்டு வருகிறார். "உண்மையான வேதமதமான அத்வைதம், அதைப் போலவே வேஷம் போட்டுக்கொண்டுள்ள ஸாங்க்யம், யோகம், பாசுபதம், பாஞ்சாத்ரம் என்று நாலு மதங்கள், ஆகிய ஐந்தும் சேர்ந்துள்ளபோது எது நிஜம், எது பொய் என்று ப்ரமிப்பு ஏற்படுவதுபோல, நிஜ நளனோடு நளவேஷம் போட்டுக்கொண்டிருந்த நாலு தேவர்களைப் பார்த்தபோது 'இந்த ஐந்து பேரில் யார் உண்மை நளன்?' என்று தமயந்தி ப்ரமிப்படைந்தாள்" என்கிறார் : ..... பஞ்சம கோடி மாத்ரே... மதாநாம் அத்வைத தத்வ இவ ஸத்யதரேபி லோக (நைஷதம் :XIII.36.) இப்படியாக அந்தக் காலத்தில், நம் தேசத்தில் அநாதி காலமாக வேத வாக்குதான் ஈச்வர வாக்கான ஸத்யமான மதம் என்று பண்டித - பாமரரில் பெருவாரியானவருக்கு நம்பிக்கை இருந்ததால், வாஸ்தவத்தில் அவைதிகமான கொள்கைகளையும் க்ரியா கலாபங்களையும் கொண்டிருந்த பல மதங்களும் தங்களை வைதிகமானவையாகவே வர்ணித்துக்கொண்டு ஜனங்களைக் கவர்வதாக இருந்தது. இவற்றில் சில ஃபிலாஸஃபியாக

அறிவாளிகளைக் கவர்ந்தன; சில தெய்வ உபாஸனைகளாகப் பொது ஜனங்களைக் கவர்ந்தன.
எல்லா உபாஸனா மார்க்கங்களுமே இப்படி இருக்கவில்லை. வாஸ்தவமாகவே வைதிகமாக ஒவ்வொரு ஸ்வாமிக்கும் ஏற்பட்ட உபாஸனைகளும் இருந்தன. ஆனால் ரொம்பவும் மங்கிப்போயிருந்தன. அவைதிகமாயிருந்து கொண்டு வைதிக வேஷம் போடும் தந்த்ரங்களே அதிகமாக ப்ரசாரத்தில் இருந்தன.

இன்னொன்றைக்கூடச் சொல்லவேண்டும். அதாவது, "வேதம் என்ன பெரிய 'அதாரிடி'? வேதத்தைவிட ஆகமம் (அதாவது உபாஸனா மார்க்கங்களான தந்த்ரங்கள்) தான் 'அதாரிடி'. இதுதான் பரமாத்மாவே உபதேசித்து ஸ்தாபித்தது". என்று சொல்லிக்கொண்ட அநேக தந்த்ரங்களும் ப்ரசாரத்திலிருந்தன.
வேத மதத்துக்குத் தனிப்பெருமை அது பகவானே ஏற்படுத்தினது என்பதால்தானே? 'எங்கள் தந்த்ரம்தான் பகவான் ஏற்படுத்தியது' என்று சில பேர் சொல்லி, அதற்கும் கதை புராணம் எழுதிக் காட்டினபோது-அதோடு, வேதத்தின் அதிகார பேதங்களையும் தளர்த்திவிட்டு, ஜனங்களின் உணர்ச்சிகளுக்கு ருசியூட்டும் சடங்குகளையும் உண்டாக்கிய போது, பல பேர் 'இதைத்தான் பின்பற்றுவோமே!' என்று இவர்கள் பின்னே போனார்கள்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**புரட்சி மதங்கள்**

எங்கேயும் எப்போதும் ஜன ஸமூஹத்தில் ஒரு மூலையில் சில பேருக்காவது, 'பழசையெல்லாம் உடைத்துப் போட்டு விட்டு எல்லாம் புதிசாகப் பண்ணிப் பார்த்தால் என்ன?' என்ற எண்ணம்-'புரட்சி மனபபான்மை' என்று தற்காலத்தில் கொண்டாடிச் சொல்கிறார்களே, அந்தப் போக்கு-இல்லாமலிருக்காது. ஆனாலும் வஜ்ரம் பாய்ந்த

tradition-ஐ (மரபைச்) சட்டென்று உடைத்துக் கொண்டு கிளம்புவதற்குப் பூர்வ காலங்களில் ரொம்பவும் தயங்கியிருப்பார்கள். அப்படிப்பட்ட சூழ்நிலையில் யாராவது ஒருத்தர், இரண்டு பேர் துணிச்சலாகப் பிய்த்துக்கொண்டு கிளம்பிவிட்டால், அப்புறம், ஒரு ஏரிக்கரையில் சின்னதாக ஒன்று இரண்டு ஓட்டை விட்டாலும் அதுவே அரித்து அரித்துப் பெரிசாக உடைப்பெடுத்துக் கொள்வது போல, அந்த ஒன்று-இரண்டு புரட்சிக்காரர்களை அநுஸரித்துக்கொண்டு பல பேர் புறப்படுவார்கள்.
இப்படித்தான் அப்போது, 'வேதம் என்ன? எங்கள் சாஸ்த்ரம்தான் பகவான் ஏற்படுத்தியது' என்று சிலபேர் புறப்பட்டபோது, இன்னம் சிலர், 'வேதம் என்ன? பகவானும் தான் என்ன? வேதமும் வேண்டாம், பகவானும் வேண்டாம். வேதம், பகவான் இரண்டையும் தள்ளிவிட்ட எங்கள் சாஸ்த்ரம் தான் ஸரியானது' என்று முழுப் புரட்சியாகவே புது மதங்கள் ஸ்தாபித்தார்கள்.
இப்படித் தோன்றிய பௌத்தம், ஜைனம், சார்வாகம் ஆகிய மூன்றைச் சொன்னேன். இவற்றில் சார்வாகத்திற்கு அதிகம் ஆள் சேரவில்லை. என்ன இருந்தாலும், 'ஸ்வாமியே கிடையாது, உடம்பின் ஸுகத்துக்கு மேலே எதுவும் கிடையாது, மதாசரணை எதுவுமே வேண்டியதில்லை' என்றால் அதைப் பெரும்பாலான ஜனங்களால் துணிந்து ஏற்றுக் கொள்ள முடியாது அதனால் இந்த அப்பட்ட லோகாயதத்துக்குப் பெரிசாக ஆதரவு கிடைக்கவில்லை. கொஞ்சமே கிடைத்தது. பௌத்த-ஜைன மதங்களுக்குத்தான் நிறைய ஆதரவு இருந்தது. ராஜ குடும்பத்தில் பிறந்தும் துறவிகளாகப் போய்ப் பிரசாரம் செய்த புத்தருக்கும் ஜினருக்கும் இருந்த ஆர்ஷணம், அப்புறமும் அந்த மதங்களில் வரிசையாகப் அறிவாளிகள் தோன்றி நூல்களைக் கொடுத்து எல்லாவற்றுக்கும் மேலாக ராஜாக்களின் பேராதரவு அந்த மதங்களுக்கு இருந்தது-எல்லாம் சேர்ந்து அவற்றுக்கு நல்ல வளர்ச்சியைக் கொடுத்தது. ஸம்ஸ்க்ருதத்தைவிட்டு, ஸாதாரண ஜனங்களுடைய பேச்சு மொழியான ப்ராக்ருத பாஷையில் மதப் புஸ்தங்களை பௌத்தர் கொடுத்ததும், சமணர்கள் எல்லா ஜனங்களுக்கும் பள்ளிகூடம் வைத்துத் தாய்மொழியில் போதனை கொடுத்ததும் அவற்றின் பாபுலாரிடிக்கு ஒரு காரணமாயிற்று. அந்த மத உபதேசங்கள் என்ன என்று ஜனங்கள் அவ்வளவாகக் கவலைப்படவில்லை.

அவற்றை நடத்திக் காட்டவும் விசேஷமாகப் பாடுபடவில்லை. இருந்தாலும் தங்களுக்கும் பொதுவாக மத சாஸ்த்ரம் இருக்கிறது, பள்ளிகள் இருக்கின்றன என்ற பெருமைக்காக அந்த மதங்களில் சேர்ந்தார்கள். அவர்கள் விட்டுப் போகமால் மேலும் மேலும் சேர வசதியாகப் பிற்காலத்தில் அந்த மதங்களில் மூர்த்தி வழிபாடும் வைக்கப்பட்டு விட்டதைச் சொன்னேன். பொது ஜனங்களுக்கு இது இருந்துவிட்டால் போதும். இவ்விரண்டில் ஜைனம் ஆசார்யாள் நாளில் அவ்வளவு ஓங்கி இருக்கவில்லையென்று தெரிகிறது. ஏனென்றால் முன்னேயே சொன்னாற்போல், அவருடைய புஸ்தங்களில் ஜைன மத கண்டனம் ரொம்பவும் கொஞ்சமாகவே இருக்கிறது. பௌத்தம் பற்றி அங்கங்கே கண்டனம் இருந்தாலும் அதுவுங்கூடக் குறைச்சல்தான். மீமாம்ஸா கண்டனம்தான் அதிகம். காரணம் பிற்பாடு பார்க்கலாம்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**அவதாரம் தோன்ற அவசியச் சூழ்நிலை**

மொத்தத்தில்-இத்தனை நாழி நீட்டி முழக்கிச் சொன்னதற்கெல்லாம் ஸாரமாக-அப்போது தேச நிலைமை எப்படியிருந்ததென்றால், பூர்ணமான வைதிக மதம் மிகவும் க்ஷீணித்துப் போயிருந்தது; வைதிகம் என்று சொல்லிக் கொண்டே அப்படியில்லாத மதங்களும், வைதிகத்தைவிடத் தாங்கள்தான் நிஜமாகப் பரமாத்மாவின் அஜ்ஞையை அநுஸரித்து உண்டானவை என்று சொல்லிக்கொண்ட தாந்த்ரிக மதங்களும், வேதம்-பரமாத்மா என்ற இரண்டையுமே அடியோடு தள்ளிவிட்ட அவைதிக மதங்களுமாக மொத்தம் எழுபத்திரண்டு தடபுடலாகக் கிளம்பியிருந்தன. மநுஷ்யராகப் பிறந்த எவரும் ஸரிசெய்ய முடியாத துர்பாக்யமான நிலைமை நம்முடைய புராதனமான மத நாகரிகத்திற்கு ஏற்பட்டுவிட்டது. இதிலேயே பெரிய பாக்யமாக ஈச்வரனேதான் அவதாரம் செய்தாகணும் என்றும்

ஏற்பட்டுவிட்டது! இங்கேதான் க்ருஷ்ண பரமாத்மா வருகிறார். அவரைத் தானே முதலில் நிறையக் குறிப்பிட்டேன்? அதற்குக் காரணமான link-பகவத்பாதாளின் அவதாரத்தில் க்ருஷ்ணரின் தொடர்பு-என்ன என்பதற்கு வருகிறோம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அவதார தத்வம்

ஆதியில் தாம் ஸூர்யனுக்கு உபதேசித்த ஸநாதன தர்மம், முதலில் பல காலம் பிள்ளை, பிள்ளை வழியாகப் போய் நன்றாக அநுஷ்டானத்திலிருந்துவிட்டு அப்புறம் பிற்காலத்தில் நலிவடைந்து விட்டதென்றும், அதைத்தான் தாம் இப்போது அர்ஜுனனுக்கு மறுபடி எடுத்துக்கூறுவதாகவும் க்ருஷ்ணர் சொன்னார். இதைச் சொல்லும் கீதை ச்லோகங்களும் பார்த்தோம். அவர் நரவேஷம் போட்டுக் கொண்டு மயக்கிய மயக்கத்தில், தாம் பகவதவதாரம் என்பதையே அர்ஜுனனுக்கு மறக்கடித்திருந்தார்! அதனால் அவர் இப்படிச் சொன்னவுடன் அவன், "இதென்ன க்ருஷ்ணா! நீ இப்போது பிறந்தவன். ஸூர்யன் என்றைக்கோ பிறந்தவன். (ஸூர்யன் அர்ஜுனன் காலத்திலும் இருந்தவனானாலும், தாம் அவனுக்கு உபதேசித்த பிறகே அந்த உபதேசத்தை அவன் எத்தனையோ யுகங்களுக்கு முன்னிருந்த இக்ஷ்வாகுவுக்கு உபதேசித்தானென்று பகவான் சொன்னதால் அர்ஜுனன் இப்படிச் சொல்கிறான்.) அப்படியிருக்க அவனுக்கு உபதேசித்தாகச் சொன்னால் என்ன அர்த்தம்!" என்று கேட்டான்.
அபரம் பவதோ ஜந்ம, பரம் ஜந்ம விவஸ்தவ :*
கதம் ஏதத் விஜாநீயாம் த்வம் ஆதௌ ப்ரோக்தவாந் இதி**(கீதை மிக்ஷி.4)
இப்படி அவன் கேட்டதற்கு பகவான், "இதற்கு முந்தி எனக்கு எத்தனையோ ஜன்மங்கள் ஆகிவிட்டன. எனக்கு

மட்டுமில்லை. உனக்கும்தான். அந்தப் பூர்வ ஜன்ம ஸமாசாரமெல்லாம் எனக்குத் தெரியும். உனக்குத் தெரியாது" என்றார்.

பஹூநி மே வ்யதீதாநி, ஜந்மாநி தவ சார்ஜுன *
தாந்யஹம் வேத ஸர்வாணி, ந த்வம் வேத்த பரந்தப ** (கீதை IV.5)

இப்படிச் சொன்னதோடு அவர் நிறுத்திக்கொள்ளவில்லை. நிறுத்தியிருந்தால்கூட, அவரை மநுஷ்யர் மாதிரியே நினைத்துக் கொண்டிருந்த அர்ஜுனன் ஒன்றும் எதிர்க்கேள்வி போட்டிருக்க மாட்டான். "மநுஷ்யனாகிய தனக்கு அநேக முன் ஜன்மங்களிந்திருப்பது போலவே இந்த க்ருஷ்ணனுக்கும் இருந்திருக்கிறது. ஆனால் எப்படியோ இவன் அந்த ஜன்மாந்தரங்களையும் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறான்" என்றுதான் நினைத்து, அதோடு விட்டிருப்பான். அப்படியே கேள்வி கேட்டிருந்தால்கூட, "உனக்கு ஏன், எப்படிப் பூர்வ ஜன்மங்கள் உண்டாச்சு?" என்று கேட்காமல், "உனக்கு எப்படி பூர்வ ஜன்ம ஸமாசாரமெல்லாம் ஞாபகமிருக்கு?" என்றுதான் கேட்டிருப்பான். நமக்கோ அது ஒரு விஷயமே இல்லை. தான் மநுஷ்யர் என்று அவர் நம்மை ஏமாற்ற முடியாது! அதனால் ஸர்வஜ்ஞரான அந்த பகவானுக்கு எப்படி ஞாபகமிருந்தது என்ற கேள்வி நமக்கு எழும்பாது. ஆனால் நமக்கு வேறே ஒரு பெரிய கேள்வி எழும்பும். "அர்ஜுனன் மநுஷ்யனானதால் கர்மாப்படி அவனுக்கு அநேக பூர்வ ஜன்மங்கள் இருந்து, இப்போது அவன் அர்ஜுனனாகப் பிறந்திருக்கிறான். இவரோ பகவான். இவருக்கு ஏது கர்மா? அதனாலே இவருக்கு ஏது பூர்வ ஜன்மாக்கள்? இவர் ஏன், எதற்காக, எப்படிப் பல ஜன்மாக்கள் எடுக்கிறார்? இப்போது நர லீலைக்காகப் பிறந்திருக்கிறமாதிரியே முன்னாலேயும் பிறந்திருப்பாரோ?" என்ற கேள்வி எழும்பும். நாம் இப்படிக் கேட்போம் என்று அவருக்குத் தெரியும். அர்ஜுனனுக்குத் தாம் உபதேசிப்பதையெல்லாம் வ்யாஸாசார்யாள் பாரதத்தில் எழுதி வைத்து, நாம் படிக்கப் போகிறோமென்று அவருக்குத் தெரியாதா? அதற்காகத்தானே அவர் உபதேசித்ததே? அதனால், அர்ஜுனன் ஒன்றும் கேள்வி கேட்காவிட்டாலும், நாம் கேட்போமே என்று எதிர்பார்த்து இதற்கு பதில் சொல்ல ஆரம்பித்தார்:

அஜோ(அ)பி ஸந்-நவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோ

ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாம்-யாத்ம (IV.6)
"நான் கர்மாவில் மாட்டிக் கொண்டு அதற்காக ஜன்மா எடுக்க வேண்டியதில்லைதான். நான் பிறப்பற்ற வஸ்து: அஜன். ப்ருகிருதி சேஷ்டிதத்தினாலும் மனஸின் விகாரத்தினாலும் பல தினுஸான மாறுபாடுகளை அடையும் ஜீவனல்ல. நான் மாறாத ஆத்ம வஸ்து: அவ்யயாத்மா. நான் ஸகல பூதங்களுக்கும் ஈச்வரன் :- பூதாநாம் ஈச்வர :-
இப்படியெல்லாம் இருந்தும்-'அபி ஸந்' என்றால் 'இப்படியெல்லாம் இருந்தும்'-ப்ரபஞ்சத் தோற்றத்தின் ஆதார காரணமான ப்ரக்ருதியை என்னுடைய மாயையால் வசப்படுத்திக் கொண்டு ஸம்பவிக்கிறேன், அதாவது ஜன்மா எடுக்கிறேன்: "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்ம மாயயா".
ப்ரபஞ்சத்தை மாயையினால் தோற்றுவிப்பது போலவே தம்மையும் ஜன்மா எடுப்பவராகத் தோற்றுவித்துக் கொள்கிறார். ஜீவ-ஜட ப்ரபஞ்சம் அத்தனையும்கூட அவரே எடுத்துக்கொண்ட தோற்றங்கள்தான். அவரைத் தவிர எதுவுமில்லை. ஆனால் ஜீவ-ஜகத்துக்களை ப்ரக்ருதி என்பது வசப்படுத்தி ஆளும்படியாக விளையாடுகிறார். அதனால், இவற்றுக்குத் தாங்கள் அவரே என்று தெரியவில்லை. ஜீவன் ப்ரக்ருதியின் ஸத்வ-ரஜோ-தமோ குணங்களில் சிக்கிக் கொண்டு பல விதமாகக் கர்மா செய்து, அவற்றை அநுபவிக்கவே ஜன்மா ஜன்மாவாக எடுத்துக்கொண்டு போகிறான். அவரோ இப்படி ப்ரக்ருதிக்கு வசமாகாமல், ப்ரக்ருதியைத் தாம் வசப்படுத்திக் கொண்டு ஆள்பவராக இருந்து கொண்டே, ஆனாலும் நம் மாதிரி ஜன்மா எடுக்கிறார். அதுதான் அவதாரம் என்பது.
ஏன், எப்படி அவர் ஜன்மாக்கள் எடுக்கிறாரென்ற கேள்விகளில் எப்படி என்பதற்கு இங்கே பதில் சொல்லியாயிற்று. அப்புறம்தான் ஏன் இப்படி அவரும் ஜன்மா எடுக்கிறார் என்பதற்குக் காரணம் சொல்கிறார். அதுதான் ஆசார்ய சரித்ரத்துக்கு 'லிங்க்'.
ஸுப்ரஸித்தமாகவுள்ள இரண்டு ச்லோகங்களில் சொல்கிறார்.
யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்-பவதி பாரத
அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்
பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே (IV. 7-8)
ஏற்கெனவே தாம் எடுத்த ஜன்மங்களைப் பற்றித் தமக்கு

எல்லாம் தெரியும், அர்ஜுனனக்குத் தெரியாது என்றுதான் ஆரம்பித்தார். அதாவது பூர்வ ஜன்மங்களைப் பற்றியே சொன்னார். அப்புறம் பொதுவாகத் தாம் ஜன்மா எடுப்பது எப்படி என்று சொல்லி, பூர்வத்தில் மட்டுமில்லாமல் எக்காலத்திலுமே தாம் ஜன்மா எடுத்தது, எடுக்கப்போகிறது எல்லாம் ஏன், எதற்காக என்று சொல்கிறார்.
என்ன சொல்கிறார்?
எப்போதெப்போது தர்மத்துக்கு ஹானி ஏற்பட்டாலும் : "யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்-பவதி";
தர்மத்துக்கு ஹானி ஏற்பட்டால் என்ன ஆகும்?
அதர்மத்துக்கு அபிவிபிவிருத்தி உண்டாகும். அதைச் சொல்கிறார்: "அப்யுத்தாநம் அதர்மஸ்ய."
இப்படி தர்மம் க்ஷீணித்து, அதர்மம் மேலோங்கும் போது, எப்போதெல்லாம் இப்படி ஏற்படுகிறதோ, அப்போது-"ததா" : "அப்போது" ;
அப்போது, என்னையே பிறப்பித்துக் கொள்கிறேன்: "ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்."
தர்மம் க்ஷீணித்தபோது என்ன ஆகும்? ஸத்துக்களான ஜனங்கள் ரக்ஷணையில்லாமல் தவிப்பார்கள். துஷ்டர்களிடம் ஸாதுக்கள் சிக்கிக்கொண்டு கஷ்டப்படுவார்கள். இந்த ஸத்துக்களை ரக்ஷிக்க வேண்டும், அந்த துஷ்டர்களை சிக்ஷிக்க வேண்டும் என்று பரமாத்மா நினைப்பார்: "பரித்ராணாய ஸாதூநாம், விநாசாய ச துஷ்க்ருதாம்."
ஸாதுக்களை நன்றாகக் கட்டிக் காப்பாற்ற வேண்டும், துஷ்டர்களை அழித்து ஸம்ஹாரம் பண்ணவேண்டும் என்று பகவான் நினைப்பார்.
"இது ஏதோ அப்போதைக்குப் பண்ணின கார்யமாக முடிந்துபோய் விடக்கூடாது. அப்புறமும் கொஞ்சம் நீண்ட காலத்திற்கு லோகத்தில் தர்மம் நன்றாக ஸ்தாபிதமாயிருந்து, ஸாதுக்கள் நிம்மதியாக வாழும்படியாகவும், துஷ்டர்கள் தலை ஓங்காதபடியும் செய்யவேண்டும். சைதில்யம் அடைந்த தர்மம் லோகத்தில் எந்நாளும் நலியாமல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும்படிப் பண்ணுவதற்கில்லைதான். எதிரெதிர் சக்திகள்-pair of opposites என்பவை-போராடிக் கொண்டு மாறி மாறி மேலுக்கும் கீழுக்கும் போவதில்தான் லோக நாடகமே இருக்கிறது. ஆனாலும் ஸ்ருஷ்டியின் விசித்ரப் போக்கில் இது ஸம பலப் போராட்டமாக இல்லாமல் ஆஸுரமான (அஸுரத்தனமான) அதர்மதத்திற்கே ஜாஸ்தி

ஆளுகை கொடுத்துவிடுவதால் நாடக ரஸம் போய் விரஸமாகி விடுகிறது. இந்த மாதிரி ரொம்பவும் முற்றிப்போகும்போதுதான் அவதாரம் எடுத்து சீர்படுத்துவது. இப்படி சிஷ்ட ரக்ஷணமும் துஷ்ட சிக்ஷணமும் செய்து தர்மத்தின் ஆளுகையை ஏற்படுத்திவிட்டு நாம் திரும்பிய பிறகும் ரொம்ப சீக்ரமே அஸுரர்கள் தலைதூக்கி சிஷ்டர்களைத் தலை சாய வைக்கத்தான் பார்ப்பார்கள். அதாவது அதர்ம சக்திக்கு ரொம்ப சீக்ரமே 'அப்யுத்தானம்' (எழுச்சி) உண்டாகப் பார்க்கும். நமக்கு நாமே பிறப்பைக் கொடுத்துக்கொண்டு மெனக்கிட்டு அங்கே போய்ப் பண்ணினது இவ்வளவு சுருக்க (விரைவில்) வீணாகி விடாமல் செய்யணும். எந்நாளுக்குமாக தர்மத்தைப் பெர்மனென்ட் பண்ணுவதற்கில்லையானாலும், ரொம்பவும் டெம்பரரியாகப் பிசுபிசுத்து விடாமல், கொஞ்சம் நீண்ட காலத்துக்கு ஆழமாக நிலைநாட்டவேண்டும். அதாவது, தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணவேண்டும். மேலெழ வெறும் 'ஸ்தாபனம்' இல்லை, ஆழமாக 'ஸம்-ஸ்தாபனம்' பண்ண வேண்டும்" என்று நினைப்பார். "தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய": தர்மத்தை நன்கு நிலை நாட்டுவதற்காக.

என்னதான் 'நன்கு' நிலைநாட்டினாலும், சாச்வதமாக ஸ்தாபிப்பதற்கில்லையல்லவா? அதனால் ஒரு காலகட்டம் ஆன பிற்பாடு மறுபடியும் அதர்மம் கையோங்கும்தானே? "ஓங்கிவிட்டுப் போகட்டும். எப்போதெப்போது இப்படி ஏற்பட்டாலும் அப்போது பிறக்கிறேன் என்றுதான் சொன்னேனே! மறுபடியும் சொல்கிறேன்; ஸம்பவாமி யுகே யுகே: இப்படிப்பட்ட ஒவ்வொரு ஸந்தர்பத்திலும் அவதாரம் எடுக்கிறேன்."

'யுகே யுகே' என்றால் 'ஒவ்வொரு யுகத்திலும்' என்று 'லிடர'லாக அர்த்தம் பண்ணிக் கொண்டு ஒரு யுகத்தில் ஒரு அவதாரம்தான் செய்வார் என்று நினைத்துவிடக்கூடாது. 'இனி எத்தனை யுகங்கள் ஸ்ருஷ்டி நடந்தாலும், அலுக்காமல் சலிக்காமல் தர்ம ஸம்ஸ்தானத்திற்காக மறுபடி மறுபடி அவதரிப்பேன்' என்று பகவான் சொல்வதாகவே அர்த்தம் பண்ணிக்கொள்ளவேண்டும். முதலில் யுக அளவைச் சொல்லாமல், "யதா யதா" (எப்போதெப்போது) என்று தானே சொன்னார்? அதை அடுத்த ச்லோகத்திலேயே மாற்றி 'யுகத்துக்கு ஒரு தடவை' என்று பண்ணுவாரா? எப்போதெல்லாம் தர்மம் மிகவும் சீர்கேடுற்று, அதர்மம்

வலுத்தாலும் தாம் ஸத்துக்களைக் காப்பாற்றி அஸத்துக்களை அழிப்பதற்காக அவதாரம் என்ற பெயரில் ஜன்மா எடுப்பதாக பகவான் சொன்னார்.
'பரித்ராணாய ஸாதூநாம்'-"ஸத்துக்களைக் காப்பாற்றுவதற்காக"-என்று சொன்னதாலேயே, எத்தனைதான் அதர்மம் கையோங்கினாலும் அப்போதும் தர்மம் அடியோடு போய்விடாமல் தர்மத்தை அநுஷ்டிக்கும் ஸத்துக்கள் கொஞ்சமாவது இருந்து கொண்டிருப்பார்கள் என்று ஆகிறது. ப்ரக்ருதியின் ஆதிக்கத்தில் மாட்டிக்கொண்ட மநுஷ்யர்கள் மாதிரி கர்மாவுக்காக ஜன்மா தமக்கு இல்லை; லோக ரக்ஷணத்துக்காகவே தாமாக ப்ரக்ருதியை வசப்படுத்திக் கொண்டு ஜன்மா எடுக்கிறேன் என்று சொன்னார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அவதார ரஹஸ்ய சூசனை

"ப்ரக்ருதியை வசப்படுத்திக்கொண்டு"-"ப்ருக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய" என்று எதற்காகச் சொன்னார்?
இன்னோரிடத்தில் இதே கீதையில் சொல்லும்போதும் இதே அர்த்தத்தில் "ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய" என்கிறார். இங்கே "அதிஷ்டாய" என்று சொன்னதையே அங்கே "அவஷ்டப்ய" என்கிறார். இரண்டிற்கும் "வசப்படுத்திக் கொண்டு" என்றுதான் அர்த்தம். ஆசார்யாள் அப்படித்தான் (இரண்டு இடத்திலும் "வசீக்ருத்ய" என்றே) பாஷ்யம் பண்ணியிருக்கிறார். இங்கே தாம் ஜன்மாக்கள் எடுப்பதைச் சொன்னவர், அங்கே தாம் மற்றவர்களுக்கு மறுபடி மறுபடி ஜன்மாக்கள் தருவதைப் பற்றிச் சொல்கிறார். (அங்கே,) கல்ப ப்ரளயத்தில் ஒடுங்கிப் போன எல்லா உயிர்களையும் ப்ரளய கால முடிவில் தாம் ப்ரக்ருதியை வசப்படுத்திக் கொண்டு மறுபடி வெளியிலே விட்டு மீண்டும் மீண்டும் பிறப்பிப்பதைச் சொல்கிறார் :
ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய விஸ்ருஜாமி புந புந : *
பூத-க்ராமம் இமம் க்ருத்ஸ்நம் அவசம் ப்ரக்ருதேர்-வசாத் **

"நான் தர்ம ஸம்ஸ்தாபனத்துக்காக அவதார ஜன்மாக்கள் எடுக்கிறேன் என்று இந்த இடத்தில் சொல்லி அதோடு விட்டிருக்கலாம். அந்த இடத்திலும் "கல்ப ப்ரளயத்தில் ஒடுங்கிய உயிர்கள் கர்மாக்களை அநுபவிப்பவதற்காக, மறுபடியும் ஜன்மாக்கள் எடுக்கும்படி செய்கிறேன்" என்று சொல்லி விட்டிருக்கலாம். இரண்டு இடத்திலும், "நான் ப்ரக்ருதியை வசப்படுத்திக்கொண்டு இப்படிச் செய்கிறேன்" என்று ஏன் சொல்லவேண்டும்?

இங்கேதான் அவதார ரஹஸ்யம் வெளியாகிறது. அவதாரத்தைப் பற்றிய ஸூக்ஷ்மமான உண்மை என்ன என்பது தெரிகிறது. அதைத் தெரியவைப்பதற்காகவே இப்படி (ஒரு சொற்றொடர்) போட்டிருக்கிறார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## ஏன் ஸங்கல்ப மாத்திரத்தால் கூடாது?

அது என்ன என்று பார்ப்பதற்குப் பூர்வாங்கமாக ஒரு பெரிய கேள்வி: 'ஸரி, லோகத்தில் தர்மம் குறைகிறது. பரமாத்மா பரம கருணையோடு, 'இது இப்படி வீணாகப் போகவேண்டாம். மறுபடி தர்மமாக வாழட்டும்' என்று நினைக்கிறார். அப்படி அவர் ஸங்கல்பம் பண்ணிவிட்டாலே போதாதோ? தானாக பகவத் ஸங்கல்பம் நிறைவேறிவிட்டுப் போகிறது! அதை விட்டுவிட்டு ஜன்மா இல்லாத அவர் எதற்காக ஜன்மா எடுத்து, நாம - ரூபமில்லாதவர் அதுகளை வாரிப்போட்டுக்கொண்டு வந்து, 'அவதாரம்' என்று ஒன்றைப் பண்ணி, நம் மாதிரியே ரொம்ப யத்னங்கள் பண்ணி சண்டை கிண்டை எல்லாம் போட்டு ஸம்ஹாரங்கள் பண்ணி, அதில் தாமும்கூட அடி, உதை வாங்கிக் கொண்டு அவஸ்தைப்படவேண்டும்? அவதாரத்தில் அவரும் நமக்கிருக்கிற எல்லாக் கஷ்டங்களும்தான் படுகிறார்! வெளியிலிருந்து வருகிற கஷ்டம் மட்டுமில்லை. ஸச்சிதாநந்த ஸ்வரூபம் எனப்படும் அவருமே (அவதாரங்களில்) நம் மாதிரி கோபப்படுகிறார், அழுகிறார், ச்ருங்காரம்

பண்ணுகிறார். இதெல்லாம் எதற்காக? தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணட்டும். ஆனால் அதை அவருடைய உச்ச ஸ்தானத்திலிருந்து கொண்டே, வைகுண்டமோ கைலாஸமோ எதிலோ ஒன்றில் இருந்து கொண்டே, ஸங்கல்ப மாத்திரத்தில் பண்ணிவிட வேண்டியதுதானே? அவதாரம் என்று ஏன் ஜன்மா எடுக்கவேண்டும்?' என்று கேள்வி வருகிறது. ஸங்கல்பத்தினாலேயே ஸ்வாமி என்னவும் செய்யமுடியும் என்பது வாஸ்தவந்தான். ஆனால் நன்றாக ஆலோசித்துப் பார்த்தால், இப்படி அவர் ஸங்கல்ப மாத்திரத்தில் எதுவும் செய்வதென்றால், முடிவாக என்ன பண்ண வேண்டிவரும் தெரியுமா? 'ஸ்ருஷ்டியே வேண்டாம்' என்று ஒரேயடியாக 'க்ளோஸ்' பண்ணத்தான் ஸங்கல்பிக்க வேண்டிவரும்! (சிரித்து) 'ஸ்ருஷ்டி இல்லாமல் போகக் கடவது' என்று ஒரே ஸங்கல்பமாகப் பண்ணிவிட்டு அவர் பாட்டுக்கு நிம்மதியாக இருந்துவிட வேண்டியே வரும்!

நிம்மதியாயிருந்துவிடக் கூடாதென்றுதானே அவரே ப்ரியப்பட்டு ஸ்ருஷ்டியை உண்டாக்கியிருக்கிறார்? ஆதியில் அவர் மட்டுந்தானே ஸச்சிதாநந்த ப்ரஹ்மமாக இருந்தார்? அந்த நிம்மதி போதவில்லை என்றுதானே, 'விளையாடணும், கூத்தடிக்கணும்' என்று மாயையை வாரிப்போட்டுக் கொண்டு ஸ்ருஷ்டியை உண்டாக்கி, அசடு அசடுகளாக நம் இத்தனை பேரையும் பண்ணிப் போட்டிருக்கிறார்? (கல்ப) ப்ரளயத்தில் அத்தனை ஜீவர்களும் ஒடுங்கினாலும், அவரும் போனால் போகிறதென்று ஆயிரம் சதுர்யுக காலம் அந்த லயம் (ஒடுக்கம்) அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும் என்று சும்மாயிருந்தாலும், அப்புறம் ஒடுங்கினதையெல்லாம் மறுபடி புனர் ஸ்ருஷ்டி என்று பிடித்திழுத்துக்கொண்டு வந்து, ஜனன - மரணக் குடை ராட்டினத்தில் சுற்றுச் சுற்று என்று சுற்றத்தானே ஆரம்பித்துவிடுகிறார்? அவர் மனஸ், அவர் சித்தம் நமக்குத் தெரியவே தெரியாது. எத்தனை யோசித்தாலும் புரியவே புரியாது. தான்பாட்டுக்கு 'ஏகமேவாத் விதீயம்' (இரண்டற்ற ஒன்று) என்று இருந்துகொண்டிருக்காமல் ஸ்ருஷ்டி என்று எதற்காகப் பண்ணணும் என்று நமக்குத் தோன்றினாலும், எதற்காகவோ பண்ணித்தானே இருக்கிறார்? என்ன பண்ணுகிறது? 'அதெல்லாம் ஸ்ருஷ்டி என்றே ஒன்று இல்லை; எல்லாம் கல்பனைதான், மாயைதான்' என்று பரம வேதாந்தம் சொன்னாலும் அந்தக் கல்பனையோ, மாயையோ, அது

மட்டும் ஏன் உண்டாகணும்? அதனாலே தான் ஒரே வார்த்தையில் "என்னவோ லீலை" என்று சொல்லி முடித்து விடுகிறது!

ஸ்வாமியின் 'நேச்சர்' தமக்குத் தெரியாது, புரியாது. அதனால், 'நிம்மதியைக் கெடுத்துண்டு இதென்ன ஸ்ருஷ்டின்னு பண்ணிண்டு?' என்று நாம் நினைத்தாலும், அவர் என்னவோ நிம்மதியாக, ப்ரசாந்த நிலையில் ஆத்மாராமனாக இருந்து கொண்டேதான் எத்தனை கூத்து உண்டோ அத்தனையும் அடித்துக் கொண்டிருக்கிறார்! கூத்தடிப்பதனால் நிம்மதி போகவில்லையாதலால் கூத்தை முடிக்கவே மாட்டார்! ஸ்ருஷ்டியை 'க்ளோஸ்' பண்ணவே மாட்டார்? அவர்தானே வேண்டுமென்று ("வேணும்ன்னு" என்று சுவைத்துக் கூறுகிறார்கள்) இனாகுரேட் பண்ணி, ஜாம் ஜாமென்று நடத்திக் கொண்டிருக்கிறார்? அதனால், தன்னுடைய திட்டத்தில் ப்ரளயமென்று ஸ்ருஷ்டியை ஒடுக்கிக்கொள்ளவே ஏற்பட்ட காலம் தவிர வேறெப்போதும், எந்தக் காரணத்திற்காகவும் அதை 'க்ளோஸ்' பண்ணமாட்டார். அதிருக்கட்டும். அவதாரம் எடுக்காமல் ஸங்கல்ப மாத்திரத்திலேயே ஏன் அவர் தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணக்கூடாது என்று கேட்டால் அப்படிப் பண்ணுவதற்குப் பதில் அவர் ஸ்ருஷ்டியையே க்ளோஸ் செய்துவிடலாமென்று சொன்னால் என்ன அர்த்தம்?
என்ன அர்த்தமென்றால்...
தர்மம் அதர்மத்தை அழித்து விடும்படியான ஒரு நிலை வரும்போது ஸ்வாமி, 'தர்ம ஸம்ஸ்தாபனம் நடக்கட்டும்' என்று ஸங்கல்பம் பண்ணுவதாக வைத்துக் கொள்வோம். இந்த தர்ம ஸம்ஸ்தாபனம் சாச்வதமாக நிலைத்து இருக்கட்டுமென்று அவர் ஸங்கல்பிக்க முடியுமா? முடியாது. ஏனென்றால் இப்படி லோகம் பூரா ஒரே தர்ம மயமாகி அப்படியே இருந்து கொண்டிருந்தால் எந்த ரஸ பேதங்களுக்காக அவர் இப்படி விசித்ர விசித்ரமாக ஜீவ ஸ்ருஷ்டியை உண்டாக்கியிருக்கிறாரோ அதுவே இல்லாமல் போய்விடும்! லீலை, விளையாட்டு என்றால் எதிரெதிர்க் கட்சிகள் tug-of-war இழுத்துக்கொண்டு, எதிரெதிராக இரண்டு கட்சிகள் பந்தை இந்தப் பக்கம் அந்தப் பக்கம் உதைத்துக் கொண்டு, விழுந்து வாரிக்கொண்டு, வெற்றி - தோல்வி, ஏமாற்றம் - எதிர்பார்க்காத அதிருஷ்டம், கோபம் - ஸந்தோஷம், அழுகை-குஷி என்று பலவித உணர்ச்சிகளில்

மாட்டிக்கொண்டால்தானே விறுவிறுப்பாயிருக்கும்? 'லீலா நாடகம்' என்றால் நாடகத்தில் நவரஸமும் இருக்கணுமோ இல்லியோ? ஸர்வ ஜனங்களும் தர்மாநுஷ்டானம் பண்ணிக் கொண்டு சாந்தர்களாகி அப்படியே சாச்வதமாயிருந்து விட்டால் அதில் லீலா விசித்ரம் ஏது? நாடகரஸம் ஏது? ஸ்வாமிக்கு ஒரேயடியாக போர்தான் அடிக்கும்! இதற்குப் பேரே 'மிச்ர லோகம்' என்பது. அதாவது, நல்லது பொல்லாதது கலந்தாங்கட்டியாக இருக்கும்படியாகவே அவர் உத்தேசித்திருக்கிற லோகம் இது. ஒரே பொல்லாததாக அஸுர லோகம், ஒரே ஸந்தோஷமாக தேவலோக - கந்தர்வ லோகங்கள், ஒரே சாந்தியாக தபோலோகம் ஸத்ய லோகம் இத்யாதி என்று அவர் ஸ்ருஷ்டியில் பண்ணி, அதிலெல்லாம் தாம் அலுத்துச் சலித்துப் போகாமலிருப்பதற்காகத்தான், நம் லோகத்தை மிச்ர லோகமாகப் பண்ணி, ஜீவர்களுக்குப் பல தினுஸாகவும் கர்மா செய்ய ஓரளவு ஸ்வாதந்திரியத்தைக் கொடுத்து விளையாட்டுப் பார்ப்பது. அதனால் இந்த ஜீவ ஸ்வாதந்தர்யத்தின் ஸ்வாரஸ்யமே அடியோடு போய் எல்லாரும் எக்காலமும் தர்மிஷ்டர்களாக ஆகிவிட்டால் இந்த லோகமே பகவான் பார்வையில் 'மெகானிகலா'கப் போய் விடும்! மிச்ரலோகமாக இருக்க வேண்டியது அப்படியில்லாமல் அமிச்ரமான (கலப்பில்லாத) தர்மலோகமாகிவிட்டால் அதை க்ளோஸ் பண்ணிவிட வேண்டியதுதானே?
தர்மப்படியே எல்லாரும் பண்ணினால் புதுக் கர்மாவே சேராது. பழைய கர்மா தீர்கிற மட்டுமே மாயா லோக ஸம்ஸாரத்தில் இருந்துவிட்டு அப்புறம் இந்த ஸ்ருஷ்டியிலிருந்து விடுபட்டுவிடுவார்கள். இப்படி அத்தனை பேரும் மோக்ஷத்திற்குப் போய்விட்டால் ஸ்ருஷ்டி க்ளோஸாகிவிட வேண்டியதுதானே? இப்படி ஜனங்களாகப் பண்ணுவதைவிட அவர்களையும் பண்ணி போட்ட ஸ்ருஷ்டிகர்த்தாவே பண்ணி விட நினைப்பதுதானே இயற்கை? (சிரித்தவாறு) 'நாம் மெனக்கிட்டுப் பண்ணின ஸ்ருஷ்டியை இவா என்ன இல்லாமப் பண்றது? நாமே அப்படிப் பண்ணிடுவோம்' என்றுதானே அவருக்குத் தோன்றும்?

ஸ்ருஷ்டி லீலை அவருக்கு வேண்டியிருப்பதால், சாச்வதமாக தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ண வேண்டுமென்று

நினைக்கமாட்டார். இதனால்தான் லோகம் சாச்வதமாக தர்மத்திலேயே போய்க்கொண்டிருக்கவேண்டும் என்று ஸங்கல்பிப்பதற்குப் பதில் அவர் ஸ்ருஷ்டியையே க்ளோஸ் பண்ணிவிட நினைப்பார் என்று சொன்னது.
"ஸரி, அப்படியானால் 'சாச்வதமாக தர்ம ஸ்தாபனம் ஏற்படட்டும்' என்று (பரமாத்மா) ஸங்கல்பிக்க வேண்டாம். ரொம்பவும் மோசமான நிலை ஏற்படும்போது, அப்போதைக்கு மாத்திரம் ஏற்படட்டும்' என்று ஸங்கல்பிக்கலாமே! (இப்படி வெறுமனே ஸங்கல்பிப்பதை விட்டு) அவதாரம் என்று அவரே பிறப்பானேன்?"
இப்படி ஸங்கல்பித்தால் மறுபடி மறுபடி அதர்மம் மேலோங்கி, மறுபடி மறுபடி அவர் (தர்ம ஸ்தாபனத்தை) ஸங்கல்பிக்க வேண்டியதாகத்தானே ஆகும்? 'அவர் ஏன் அவதாரம் எடுக்கணும்? ஸங்கல்பத்தினாலேயே செய்யட்டுமே' என்று சொல்வது. அவர் ஏன் ச்ரமப்படணும்?' என்ற எண்ணத்தில்தான். அவதாரமெடுக்காமல் ஸங்கல்பிப்பது என்றாலும், நாம் அவருக்கு வேண்டும் என்று நினைக்கிற நிம்மதியோடு அவர் இருந்துவிட முடியாது. டெம்பரரி ஸங்கல்பமாகவே செய்வதால், லோகத்தின் நிலைமையை ஓயாமல் இன்ஸ்பெக்ட் செய்து கொண்டு மறுபடி மறுபடி ஸங்கல்பம் செய்யும் ச்ரமத்தை அவர் பட்டுத்தான் ஆகவேண்டும். நாம் நினைக்கிற நிம்மதி வேண்டாமல்தான் அவர் ஸ்ருஷ்டி என்று வேலையை இழுத்துப் போட்டுக் கொண்டு அத்தனை பேருக்கும் ஆஹாரம் போடுவது, கூலி தருவது என்று கார்யங்களை வலிய வரவழைத்துக் கொண்டிருக்கிறார். நாம் அவர் வேலையை எவ்வளவு குறைத்துத் தரலாமென்று நினைத்தாலும், திரும்பத் திரும்ப ஸங்கல்பம் செய்கிற கார்யத்தை அவர் போக்கிக்கொள்ள முடியாது என்றே தெரிகிறது. அப்படியிருக்கும்போது என்னமோ வெற்று யோசனையாக 'ஸங்கல்பம்' என்று பண்ணுவதைவிட-அவர் தான் லீலை ப்ரியராக இருக்கிறாரே, அதனால்-அவதாரம் என்று வேஷம் போட்டுக்கொண்டு வந்து லீலைகள் பண்ணித்தான் தர்ம ஸ்தாபனம் பண்ணுவோமே என்று நினைக்கிறார்.
எல்லாமே அவர் ஸங்கல்பந்தான். ஆனால் கார்ய ரூபத்தில் ஒவ்வொரு கருவி பண்ணினதாகக் காட்டுகிறார். ஓரோரு ஸந்தர்ப்பத்தில் அதர்மம் ஓங்குகிறதென்றால் அதுவும் அவர்

ஸங்கல்பந்தான். ஆனால், 'அவர் பரகமாத்மாவாகவே எங்கேயோ உட்கார்ந்துகொண்டு ஸங்கல்பம் செய்தார்: உடனே லோகம் அதர்மமாகிவிட்டது' என்று எங்கேயாவது படித்திருக்கிறோமோ? அஸுரர், ராஸர், துஷ்ட ராஜாக்கள், தப்பான கொள்கைகளை மதமாக ப்ரசாரம் செய்பவர்கள், இன்னம் பல பேர், திருடர்கள், கொலைகாரர்கள், ஃபோர்ஜரிக்காரர்கள் என்பவர்கள் கார்ய ரூபத்தில் அநேகம் பண்ணுவதால்தான் அதர்மம் தலையெடுக்கிறது. கலியில் ஜனங்களின் மனஸ் கெட்டதுகளில் போகிறது என்றால் அதுவும் கையால், காலால் செய்யும் கார்யமாயில்லாவிட்டாலும் மனஸினால் செய்யும் கார்யந்தான்! மனஸ் கெட்டதை நினைத்த பிறகு, அந்தக் கெட்டதை அநுபவிப்பதற்காகக் கையும் காலும் வெளிக் கார்யமாகவே கெட்டதைச் செய்ய ஆரம்பிக்கிறது. இப்படிக் கருவி, கார்யங்களாலேயே லோகத்தில் எல்லாம் நடக்கிறபோது, (கெட்டது மட்டுமில்லை, நல்லதுந்தான்-எல்லாமே கருவி, கார்யங்களால்தான் நடத்துகிறானே தவிர, ஸகலமும் அவன் ஸங்கல்பமென்றாலும், ஸங்கல்ப மாத்ரத்தால் நடந்ததாகக் காட்டுவதேயில்லை;-இப்படி நடந்துவரும்போது,) அதாவது அவன் நடத்தி வருகிறபோது, அதர்மத்தின் பெரிய எழுச்சியும் இப்படியே நடக்கும்போது தர்மத்தின் மறுமலர்ச்சி மட்டும் ஸங்கல்ப மாத்ரத்தாலேயே நடக்கவேண்டும் என்றால் எப்படி? அதற்கும் லோகத்தில் கருவி, கார்யங்களைக் காட்டாவிட்டால் அவனுடைய 'ஸ்போர்ட்'டில் ரொம்ப விறுவிறுப்பான ஒரு அம்சம் இல்லாமல் செய்கிற மாதிரி தான்!

அதனால், தர்மம் குறையும்போது அதை அபிவிருத்தி செய்வதற்காகத் தன் தூதர்கள் மாதிரியான மஹான்களைக் கருவியாக அனுப்புவான். அதுவும் பலிக்காது என்கிற கட்டத்தில் தானே தன் கருவியாகி அவதாரம் எடுப்பான்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அவதாரத்தில் மனிதத்தன்மையும் தெய்வத்தன்மையும்

தர்மோத்தரணம் செய்ய வேண்டுமென்ற லக்ஷ்யத்துக்காக இப்படி அவன் அவதாரம் எடுப்பதில் அநேக ஸாரமான விஷயங்களை உள்ளே சேர்த்துப் பிசைந்து வைத்திருக்கிறான். தர்மத்தை உபதேசம் செய்வதோடு, வாழ்ந்தும் காட்ட வேண்டும். வாழ்க்கையில் ஊறாத தர்மம் எத்தனை அழகாக உபதேசிக்கப்பட்டாலும் பயன் தராது. ஆதர்ச புருஷர்களாக ஸொந்த வாழ்க்கையில் நடத்தி வழிகாட்டுபவர்கள் இருந்தால்தான், 'அடாடா! இவர்கள் இப்படியிப்படிப் பண்ணி எத்தனை சுத்தர்களாக, சாந்தர்களாக இருக்கிறார்கள்! தாங்களும் ஆனந்தமாக இருந்துகொண்டு, லோகத்துக்கும் ஆனந்தமூட்டுகிறார்கள்! நாமும் இந்தப்படி பண்ணிப் பார்க்கவேண்டும்' என்ற எண்ணம் ஜனங்களுக்கு உண்டாகும். இம் மாதிரி ஆதர்ச வாழ்க்கை நடத்தி வழி காட்டுவதற்கும் அவனே அவதாரமாக வரவேண்டியிருக்கிறது.

ஆனால், 'ஆதர்சம்' என்பதற்காக நடைமுறையில் ஜனங்களுக்கு இருக்கிற அத்தனை போக்குகளும் தனக்கு அடியோடு இல்லை என்று அவதார புருஷன் ஒரே உச்சாணியாக இருந்துவிடலாமா? நம்முடைய உணர்ச்சி மோதல்கள் எதுவும் அவனுக்கு இல்லை, நம்முடைய ஆசைகள் எதுவும் அவனுக்கில்லை என்று எப்போதும் அதீத லெவலிலேயே அவன் இருந்து கொண்டிருக்கலாமா? கூடாது. அப்படி இருந்துவிட்டால் அவன் வழிகாட்டியாக, 'மாடல்'லாக, இருக்கவே மாட்டான். அதீத லெவலிலேயே இருப்பவன் எப்படி மற்ற லெவல்கள் இருப்பவர்களுக்கு லக்ஷ்ய புருஷனாக ஆக முடியும்? ஸாண்டோ யானையை மார் மேலே ஏற்றி நிறுத்திக் கொள்கிறானென்றால் நாம் கை தட்டி ஸந்தோஷப்படுவோம், ப்ரமிப்போமே ஒழிய அந்த மாதிரி நாம் பண்ணிப் பார்க்க நினைப்போமா? "அவனுக்கு அது முடிகிறது. நம்மால் முடியுமா?" என்றுதானே சொல்வோம்? அப்படித்தான், அவதார புருஷனொருவன் நம்முடைய பூலோக வாஸனைகளை இல்லாமல் உச்ச மட்டத்தில் பரம தார்மிகமாக எல்லாம் செய்துகொண்டிருந்தானென்றால், 'இவன் நம்முடைய மநுஷ்ய ஜாதியைச் சேர்ந்தவனேயில்லை. நமக்கு இருக்கிற மனஸின் இழுபறிப் போராட்டங்கள், ஆசாபாசங்கள் எதுவும் இவனுக்கு இல்லை'

என்று அவனுக்கு நமஸ்காரம் வேண்டுமானால் நிறையச் செய்வாமே தவிர அவன் வழியிலேயே நாமும் சென்று பார்க்கலாம் என்ற உத்ஸாஹத்தைப் பெற மாட்டோம். ஆகையால் அவனும் நம் மாதிரி இருப்பதுபோலவே தன்னை மநுஷ்யத்வத்தில் ஓரளவு கட்டுப்படுத்திக் கொண்டாற்போல நடித்து நடித்தே, ஆனாலும் தப்புக்கும் ரைட்டுக்கும் ஒரு போராட்டம் வரும்போது தப்பில் போகாமல் ரைட்டிலேயே போய், 'தர்மம்தான் செய்ய வேண்டியது. அதுதான் நிலைத்த இன்பத்தையும் சாந்தியையும் தருவது' என்று நமக்குக் காட்டிக்கொடுப்பான். நம் மாதிரியே பல அம்சங்களில் இருந்தும், நாம் ஃபெயில் ஆகிற இடத்திலெல்லாம் அவன் பாஸ் பண்ணிக் காட்டுவான். அப்படியிருந்தால்தான் நமக்கு, 'நாமும் இவன் மாதிரி நடக்கமுடியும்-தர்மமாக வாழமுடியும். சாஸ்த்ரம் போட்டுக்கொடுத்திருக்கும் பாடத்தில் பாஸ் பண்ணமுடியும்' என்ற உத்ஸாஹம் உண்டாகும். முழுக்க ஸாமானிய ஆளாகவே இருந்துவிட்டால் அவன் என்ன செய்கிறான், தர்மத்தில் போகிறானா இல்லையா என்பதையெல்லாமே நாம் கவனிக்க மாட்டோம். இப்போதுங்கூடப் பெயர் தெரியாமலே பல பேர் நல்லவர்களாக, தர்மத்திலேயே செல்கிறவர்களாக அங்கங்கே இருந்து கொண்டிருக்கலாம். ஆனால் இது எப்படி உலகத்துக்குத் தூண்டுகோலாக உதவ முடியும்? 'ஸத்யமாகவே இருப்பது, மனஸ் ஸாக்ஷிப்படியே செய்வது' என்று ஸமீப காலத்தில் காந்தி ஒருவர்தானா முயற்சி பண்ணியிருப்பார்?

இன்னம் பலபேர் இருந்திருப்பார்கள். ஆனாலும் தேசம் பூராவுக்குமான ஒரு லெவலில் அவர் கார்யங்கள் செய்பவராக இருந்ததாலேயே 'காந்தீயம்' என்று மற்றவர்களுக்கும் ஒரு வழி ஏற்பட்டு, அவருடைய காலத்தில் நிஜமாகவே பல பேர் அந்த வழியில் போகவும் பாடுபட்டார்கள். ஆகையினால், தன்னுடைய காலத்தோடு முடியாமல், வரப்போகிற காலத்திலும் தன்னுடைய 'இன்ஃப்ளுயென்ஸ்' இருக்கும்படியாக ஸ்வாமி அவதாரம் செய்யும்போது மாநுஷமாக ஒரு பக்கம் இருந்தாலும், இன்னொரு பக்கம் மநுஷ்யர்களையெல்லாம் தன்னிடம் ஆகர்ஷிக்கும்படியாக ஓரளவு திவ்யாம்சங்களையும், தெய்வ சக்திகளையும் கைக் கொள்ளுவான். அஸாத்யமான ஒரு கார்யத்தைப் பண்ணுவான். பாலனாக இருந்துகொண்டே

தாடகை, ஸுபாஹு போன்ற ராக்ஷஸர்களை வதம் செய்வான். அல்லது நம்மால் முடியாத ஒரு பெரிய த்யாகத்தைச் செய்து-பட்டாபிஷேகம் நிச்சயம் பண்ணின நாளிலேயே, "காட்டுக்குப் போ!" என்றால் "ஆஹா"! என்று சிரித்த முகமாகப் புறப்பட்டுப்போய்-மநுஷ்யர்களை ஆகர்ஷிப்பான். ஆனால், 'இவன் தெய்வாம்சம்; இவன் செய்வது நமக்கு மாடலாகாது' என்று நாம் ஒரேயடியாகத் தள்ளி நின்றுவிடாமல், இவனே நம் மாதிரி மூக்கைச் சிந்திப் போட்டுக்கொண்டு, 'மரமே கண்டாயா? மட்டையே, கண்டாயா?' என்று திண்டாடியும் காட்டுவான். தெய்வமாகவும் மாநுஷமாகவும் மாறி மாறி இருந்து காட்டி மொத்தத்தில் தர்ம வழியில் நாம் செல்ல ஊக்கம் தருவான். தெய்வ சக்திக்கு மநுஷ சக்தி குறைவானதுதான். தேவர்களைவிட மனிதர்கள் சக்தியில் குறைந்தவர்கள்தான். ஆனாலும் மநுஷ்யர்கள் தங்களைப் பற்றி நினைத்துக்கொண்டிருக்கிற அளவுக்கு அல்ப சக்தர்களில்லை. இந்த்ரிய நிக்ரஹம் செய்து சுத்தமாக வாழ்க்கை நடத்தினால் மநுஷ்யர்களும் எவ்வளவோ சக்தியுடன் கார்யங்கள் செய்யலாம். யோகேச்வரர்களாகப் போனால் தேவர்களைப் போலவும், அவர்களை விடவும்கூட சக்தியை ஸம்பாதித்துக் கொள்ளலாம். தங்களைப்பற்றி ரொம்பக் குறைவாக நினைத்துக்கொண்டிருக்கும் மநுஷ்யர்களுக்கு, 'தாங்களும் இத்தனை சக்தர்களாக, இப்படியிப்படிப் பெரிய கார்யங்களைப் பண்ணமுடியும்' என்ற நம்பிக்கையையும் உத்ஸாஹத்தையும் ஊட்டுவதற்காகவும் பகவான் பகவானாகவே இருந்துகொண்டு தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணாமல் மநுஷ்யனாக வந்து பண்ணுகிறான்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**கலந்து பழகும் ஆசைக்காகவும்**

'வழி காட்டுவதற்காகத்தான் அவன் மநுஷன் மாதிரி விளையாடுகிறான். தர்ம ஸம்ஸ்தாபனத்திற்காக ஸங்கல்பம்

மட்டும் பண்ணுவது ஒத்து வரவில்லை என்றுதான் அவதாரம் பண்ணுகிறான்' என்று இத்தனை நாழி காரணம் சொன்னதெல்லாம்கூடப் போதவில்லை. தர்மம், அதில் ஜனங்களுக்கு வழி காட்டுவது எல்லாம் இருக்கட்டும் இதெல்லாம் எப்படியிருந்தாலும் அவனுக்கே ஒரு ஆசை, தான் படைத்த குழந்தைகளோடு கலந்து பழகி வாழவேண்டுமென்று! அவன்தானே ஸர்வ பூதங்களுக்கும் மாதா பிதாக்கள்? குழந்தைகள் எப்படியிருந்தாலும் அவற்றோடு சேர்ந்து இருக்கணமென்று மாதா பிதாக்களுக்கு இல்லாமல் போகுமா? அப்படித்தான் அவனுக்கும், ஆசை! அவன் ஆசைப்பட்டாலும், அவன் அரூபமான பரமாத்மாவாக இருந்தால், நாம் அவனை கிரஹிக்க முடியுமா? க்ரஹிக்க முடியாதவனோடு எப்படி உறவு கொண்டாட? அல்லது திவ்ய ரூபம் எடுத்துக்கொண்டு சதுர்புஜனாக வந்தாலும் நாம் அவனிடம் போய்க் கலந்து பழகுவோமா? கன்னத்தில் போட்டுக்கொண்டு வரம் கேட்போம். இன்னம் கொஞ்சம் ஜாஸ்தியாகப்போனால், தர்சன மாத்திரத்திலேயே மூர்ச்சைபோட்டு விழுந்து விடுவோம். அதற்காகத்தான் நம் போன்ற மநுஷ்யனாகவே அவதாரங்களில் வந்து நம்மை இழைந்து பழக வைக்கிறது. ஒரு வேடனா, குரங்கா, இடைச்சியா-இவர்கள்கூட 'நமக்கு இவன் பரம ஸொந்தம்' என்று பாந்தவ்யம் பாராட்டும்படியாக அவதாரம் செய்வது, தன் ஆசை தீர, அவர்களுடைய ஆசை தீரவும்தான் எல்லோரும் ஸஹஜமாக ஒட்டிப் பழக வேண்டுமானால் அவர்கள் மாதிரியே ஆடினால்தான் முடியும் என்றுதான் பரமாத்மா அவதாரங்களில் ஆசாபாசம், கோபம், அழுகை எல்லாம் காட்டுவது. ஆனால் மொத்தத்தில் கணக்குப் பார்த்தால் இதற்கெல்லாம் மிகவும் அதிகமாக உத்தமமான ப்ரேமை, ஞானம், சீலம், ஸத்யம் எல்லாவற்றையும் அவதாரபுருஷன் நடத்திக்காட்டி தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணியிருப்பான்.

தன்னுடைய ஆசையை அவதாரனத்தினால் நிறைவேற்றிக் கொண்டால்மட்டும் போதாது; ஜனங்களுக்கும் அதனால் நல்லதற்கு வழி ஏற்படும்படி உதவ வேண்டும் என்று நினைத்து, இந்த இரண்டையும் சேர்த்து முடிச்சு போடுவதற்கு ஸந்தர்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். தர்மம் ரொம்பவும் சீர்கெடுகிறபோது, 'ஸந்தர்பம் வந்து விட்டது' என்று அவதாரம் செய்கிறான். இதில் அவன் மாநுஷமாக

இருப்பதைப் பார்த்து நமக்கு ஸந்தேஹம் வந்துவிடப் போகிறதே என்றுதான், "எத்தனை தான் மநுஷன் மாதிரி நான் இருந்தாலும், மனித உணர்ச்சி களைக்காட்டுகிறது போலவும் மனிதர்களுடைய உலக இன்பங்களை அநுபவிக்கிறது போலவும் இருந்தாலும், மனிதர்கள் மாயை வசப்பட்டு இப்படி இருப்பது மாதிரி நான் இல்லை. மாயையை நானாக்கும் வசப்படுத்திக்கொண்டு-ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய... அவஷ்டப்ய (ப்ரக்ருதி என்றால் மாயைதான்) இப்படிச் செய்கிறேன். பரமாத்மாவாக, பரப்ரஹ்மமாக நான் உள்ள நிலையில் மாயை என்கிட்டேயே வரமுடியாது. ஆனாலும் லீலைக்காக நான் ஈச்வரனாக உள்ளபோது மாயையை வைத்துக்கொண்டுதான் ஸ்ருஷ்டி பண்ணமுடிகிறது. அதனால் அப்போது மாயையை நான் இழுத்து என்னிடம் வைத்துக்கொண்டு, அதாவது என் வசப்படுத்திக்கொண்டு, முன்னே ப்ரளயத்தில் லயித்துப் போயிருந்த பூத க்ராமத்தை (உயிர்க்குலத்தை) மறுபடி பிறவிகள் எடுக்கச் செய்கிறேன்.

லோக லீலையில் தர்மம் ரொம்பவும் க்ஷீணித்துப் போகும்போதும் மாயையைப் பிடித்திழுத்து வசப்படுத்திக் கொண்டு, என்னிடமே அதற்குரிய முக்குணங்கள் வந்து விட்டாற் போலவும், அதனால் நானும் மாநுஷமான ஒரு ஜீவனாகிவிட்டாற் போலவும் வேஷம் போட்டுக்கொண்டு அவதாரமாகப் பிறப்பெடுக்கிறேன்" என்று சொன்னார். கொஞ்சத்தை மட்டும் சொல்லி மீதியை நாம் புரிந்து கொள்ளவிட்டு கீதோபதேம் செய்தார்.
பூதக்ராமத்தைப் பற்றி குறிப்பிடும்போது "அவசம் ப்ரக்ருதேர் வசாத்" என்று, அதாவது, மாயையின் வசப்பட்டு ஸ்வாதீனமே இல்லாமல் ஜீவ ஸமூஹம் இருக்கிறதாகச் சொல்லி, அதற்கு Contrast-ஆகத் தன்னுடைய அவதார ஜன்மாவைக் குறிப்பிடும்போது "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய", அதாவது, மாயையைத் தாம் வசப்படுத்திக்கொண்டு இப்படிச் செய்வதாகச் சொன்னதிலேயே இத்தனை விஷயத்தையும் கெட்டித்து அடக்கிவிட்டார். அவதாரம் மாநுஷமாகத் தோன்றுவதால் மாயைக்கு உட்பட்டது என்று நாம் கொஞ்சங்கூட நினைத்துவிடக்கூடாது என்று, 'அதுதான் எனக்கு வசம்; உங்களைப்போல் நான் அதற்கு வசமில்லை' என்றார். ("ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய", "ப்ரக்ருதிம்

ஸ்வாம் அஷ்டாப்ய" என்ற) இரண்டு இடத்திலும் "ஸ்வாம்", "ஸ்வாம்" என்று போட்டு "மாயை என்னுடையது; நான் உங்களைப்போல் மாயையின் உடைமையில்லை" என்று காட்டினார். "ஸ்வாம்" என்றால் "என்னுடைய". "ஸ்வாமி" என்றால் உடைமையாளார் என்று அர்த்தம். அவருடைய உடைமை மாயை, அதை அவர் என்ன வேண்டுமானாலும் பண்ணலாம். "வா" என்று சொல்லி வசப்படுத்தி வைத்துக்கொண்டு விளையாடவும் விளையாடலாம்; "போ" என்று தூக்கிப்போட்டுவிட்டு ஆத்மாராமராகவும் உட்கார்ந் திருக்கலாம். நம் மாதிரி அவதார புருஷனுக்கும் கோபம், துக்கம், பயம் முதலானவை வர அவன் 'அலவ்' பண்ணுவான். இதைப்பற்றி ஒன்று தோன்றுகிறது : அவன் ஆத்மாவிலேயே அச்சடித்தமாதிரி உள்ளூர இருப்பதாலேயே இப்படி 'வெளியிலே மனஸுக்குப் பல தினுசு உணர்ச்சிகள்தான் ஏற்பட்டு விட்டுப் போகட்டுமே; அதனால் நம் உள் ஸ்திதி பாதிக்கப்படுகிறதா என்ன?' என்றே அவற்றை 'அலவ்' பண்ணுகிறான் என்று தோன்றுகிறது.
ஸாதாரணமாக ஒரு ஆத்ம ஞானி என்றால் அவர் 'சரீரம் எப்படிப்பட்ட நிலையில் வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும்! குளிரில்தான் விரைக்கட்டும், நெருப்பில்தான் பொசுங்கட்டும்! அது ஒன்றும் ஆத்மாவை பாதிக்கவில்லையே!' என்று அவர்பாட்டுக்கு இருப்பாரென்று தெரிகிறது. ஆனால் 'மனஸும் ஆத்மாவுக்கு வேறானதுதானே? அது எப்படி வேண்டுமானால் இருந்துவிட்டுப் போகட்டும். ஆசை, அழுகை, கோபம் எது வேண்டுமானாலும் பட்டுவிட்டுப் போகட்டும்' என்று அவர் இருப்பதாகச் சொல்வதில்லை. ஏனென்றால் அவரும் ப்ரக்ருதி மாயைக்கு உட்பட்ட ஜீவனாகத் தோன்றியவர்தான். அந்த மாயை கொடுத்திருக்கிற மனஸ்தான் இவரை ஒரு தனி ஜீவனாக ஆக்கி வைத்தது. ஆகையால் அந்த மனஸை அடக்கிப் போட்டுவிட்டே அவர் தனியான ஜீவாத்மாவாக இல்லாமல் பரமாத்ம நிலையை அடைந்து ஞானியாயிருப்பது. அப்படியிருக்கும்போது அவர் எப்படி மனஸை மறுபடி கூப்பிட்டு வைத்துக்கொள்ள முடியும்? (மனஸுக்கே உரியதான) ஆசை, கோபம், அழுகை முதலானதுகளை 'அலவ்' பண்ண முடியும்? பகவான்தான் மாயைக்கு அதீச்வரன். அவன்தான் ப்ரக்ருதிக்கு வசப்படாமலே, தானாக, தன்னிஷ்டப்படி, ஸங்கல்பப்படி ஜீவன் மாதிரி

அவதரித்தவன். அவன் பரமாத்மாவாக இருக்கிற ஞானநிலையிலிருந்து விலகுவதென்பது ஒரு போதும் நடக்க முடியாத விஷயம். 'ஞானியின் சித்ததையும் பராசக்தியான மஹாமாயை கவர்ந்து மோஹத்தில் ஆட்படுத்த முடியும்' என்று இருக்கிற மாதிரி பகவானைப் பற்றி ஒரு காலத்திலும் சொல்லமுடியாது. ஏனென்றால் அவனுடையது, அவனை depend பண்ணிக்கொண்டே உயிர்வாழ்வதுதான் அந்தப் பராசக்தி, மாயை எல்லாமுமே! அதனால் அவன் ஒருத்தனே பகவானாக உள்ள நிலையிலோ, அவதாரமாக வருகிற நிலையிலோ, மாயாமனஸைத் தன்னிச்சையாக 'வா' என்றும் கூப்பிட்டு வைத்துக் கொள்ளலாம், 'போ' என்றும் பிடித்துத் தள்ளலாம். மநுஷாள் மாதிரி இருந்து அவர்களோடு கலந்து பழகி அவர்களுக்கு வழிகாட்டி உத்ஸாஹப்படுத்த வேண்டுமென்று அவன் அவதாரமாக வருகிறபோது வேஷம் நன்றாகப் பொருந்துவதற்காகவே கொஞ்சங்கூடத் தயங்காமல், பயப்படாமல் மனஸின் நானாவிதமான உணர்ச்சிகளையும் 'அலவ்' பண்ணுகிறான். அதனால் ஒரு அவதார புருஷனுக்கும் கோபம் வரும், பயம் வரும், அழுகை வரும், ச்ருங்காரம் வரும். ஒரு ஞானி சரீரம் எப்படி வேண்டுமானால் ஆடிவிட்டுப் போகட்டுமே என்று இருக்கிற மாதிரியே அவதார புருஷன் மனஸூம்தான் எப்படிவேண்டுமானால் ஆடி விட்டுப் போகட்டுமே என்று விட்டுவிடுவதால்தான் இப்படியெல்லாம் நடப்பது! அப்போதைக்கு மேல்மனஸிலேதான் அவதாரத்துக்கு இந்த உணர்ச்சிகளால் பாதிப்பு இருக்கிற மாதிரியே இருக்குமே தவிர, நம் மாதிரி அந்த உணர்ச்சிகளே அவனை அடித்துக்கொண்டு போய்விடுவதென்பது ஒருபோதுமில்லை. எத்தனை ஆசை, கோபம், அழுகை இருந்தாலும் அது அவனுடைய பரமாத்ம நிலையை பாதிக்க முடியாது; லோகத்தில் அவன் முடிவாகப் பண்ணவேண்டிய தர்மஸம்ஸ்தாபனத்தைப் பண்ணி முடிப்பதற்கும் குந்தகம் ஏற்படுத்த முடியாது. கொஞ்சம் ஃபெயிலாகிறதுபோல அவன் சாய்ந்தாலும் அப்புறம் நிமிர்ந்து நின்று பாஸ் பண்ணிவிடுவான். சாய்ந்தும் நிமிர்ந்தும் ஆடுவது அவனுக்கு விளையாட்டு!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

### அவதாரம் குறித்து ஐயம் கூடாது

இந்த விளையாட்டிலே அவதார புருஷன் மாயையின் ஆதீனத்தால்தான் இருக்கிறானோ என்று தோன்றுமளவுக்கும் போய்விடுவதுண்டு! அப்படி ஸந்தேஹப்படக் கூடாதென்று தான், "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய : மாயையை நான் வசப்படுத்தி அடக்கி வைத்துக்கொண்டு" என்று பகவான் கருணையோடு 'க்ளியர்' பண்ணியிருக்கிறார். ஆசார்யாள் சரித்ரத்திலேயே யாருக்காவது, எங்கேயாவது, "ஏன் இப்படிப் பண்ணினார்? காலடியில் ஒரு நதியை திசை மாற்றிக் கிட்டே ஓடப்பண்ணி, அப்புறம் நர்மதை ப்ரவாஹத்தை அடக்கி, இன்னும் ஸர்வஜ்ஞர் என்னும்படி ஸகல ஞானத்துடனும் கூடி தெய்விக சக்தராக இருந்த அவர் ஏன் இப்படி மநுஷர் மாதிரிப் பண்ணினார்? காசியில் விச்வநாதர் பஞ்சமனைப் போல் வந்தபோது ஏன் விஷயம் தெரிந்துகொள்ளாமல் அவனை தூரப் போகச் சொன்னார்? அப்புறம் அவனிடம் தாம் உபதேசம் வாங்கிக் கொண்டு நமஸ்காரம் பண்ணினார்?" என்கிற மாதிரி கேள்வி எழுந்தால் அப்போது கீதா வாக்யத்தை நினைத்துத் தெளிவு பெறவேண்டும். அவதாரத்திடம் மாயைக் கலப்பு இருக்கிறமாதிரிதான். ஆனால் மாயை யஜமான ஸ்தானத்திலிருந்து கொண்டு நம்மை ஆட்டிவைப்பதுபோல் அவதாரத்தை ஆட்டிவைக்க முடியாது. அவதாரம் யஜமானாக இருந்து, மாயை அந்த யஜமானுக்கு உடைமையாக, அடிமையாக இருக்கிறது. ஆனாலும் கெடுபிடி யஜமானாக இல்லாமல் விளையாட்டு விநோத யஜமானாக அவன் இருப்பதால் மாயைக்குத் தன் மேல் ஆதீனம் இருப்பதுபோலத் தோன்றுமளவுக்கு அதை ஆடவிடுகிறான்! ஆனால் சட்டென்று அதைப் "போ" என்று தள்ளியும் விடுவான். "மரமே, கண்டாயா? மட்டையே, கண்டாயா?" என்று விரஹ தாபத்தில் அழுதவனே அப்புறம்-எத்தனையோ ச்ரமப்பட்டு, ஸமுத்ரத்துக்கே அணை கட்டி பெரிசாக யுத்தம் பண்ணி ஜயசாலியாக ஆன அப்புறம்-எத்தனையோ ஆவலுடன் அந்தப் பத்னி வரும்போது, கொஞ்சங்கூட ஆசாபாசமே இல்லாமல்,

"கடமைக்காக உன்னை மீட்டேனே தவிர எனக்கு ஒன்றும் 'அட்டாச்மென்ட்' இல்லை. நீ எங்கேயாவது போய்க்கொள்" என்பான்! இந்த நிமிஷம் ஒரு அஸுரனைக் கொல்லும் திவ்ய சக்தி, அடுத்த நிமிஷம் ஒரு இடைச்சியிடம் அடி வாங்கிக்கொள்ளும் அபலமான மநுஷத்தன்மை என்று அவதாரம் இந்தக் கோடிக்கு அந்தக் கோடி போகமுடியும் என்று புரிந்துகொண்டால் ஸந்தேஹம் வராது. ஒரு அவதாரத்தைப்பற்றி, 'அது ஏன் இப்படி? இது ஏன் இப்படி? ஒரே மாறுபாடாயிருக்கிறதே!' என்று கேள்வி கேட்கமாட்டோம்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## முன்னெப்போதுமில்லா தர்மக் குறைவு

அவதாரத்தைப் பற்றி க்ருஷ்ண பரமாத்மா சொன்னது தான் ஸ்ரீசங்கராவதாரத்தை ஏற்படுத்திவிட்டது. தர்மம் நலிந்து, அதர்மம் பெருகும்போதெல்லாம் அவதரித்து தர்ம ஸம்ஸ்தாபனம் செய்கிறேன் என்று சொல்லிவிட்டாரல்லவா? அந்த வாக்கைப் பரிபாலனம் பண்ணிக்காட்ட வேண்டிய சூழ்நிலை அவர் பரமபத ஆரோஹணம் செய்து இரண்டாயிரம் - இரண்டாயிரத்தைநூறு வருஷங்களுக்கு அப்புறம் ஏற்பட்டது. அந்தக் காலத்து தேச ஸ்திதியை நிறையச் சொல்லியாயிற்று. சுருக்கமாகச் சொல்வதென்றால் க்ருஷ்ணாவதார காலத்தில் ப்ரவ்ருத்தி - நிவ்ருத்தி தர்மங்களுக்கு ஹானி ஏற்பட்டிருந்தது போலவே...இல்லை, அதைவிடப் பலமடங்கு தீவிரமாக, இப்போது ஏற்பட்டிருந்தது. க்ருஷ்ணர் காலத்தில் ப்ரவ்ருத்தி மார்க்கம் யோகமாக அநுஷ்டிக்கப்படாமல் வெறும் கர்மாநுஷ்டானமாக ஸ்வர்காதி பலன்களுக்காகவே பின்பற்றபட்டதென்றால், இப்போது அதோடுகூடவே, அதைவிட மோசமாக இன்னொன்றும் நடந்தது. வெறும் கர்மாநுஷ்டானமாகவாவது அவர்கள் வேதத்தில் சொல்லியுள்ள காரியங்களைப் பின்பற்றினார்கள் அல்லவா?

இப்போதோ அந்த வேதோக்த கர்மாக்களை அடியோடேயே புறக்கணிப்பவர்களும் நிறைய ஏற்பட்டுவிட்டார்கள். நிவ்ருத்தியிலும் இப்போது ஞானம் மாதிரியே ஒரு லக்ஷ்யத்தைக்காட்டி, ஆனால் சூன்யத்திலோ, அல்லது எதுவும் முடிவு செய்வதற்கில்லை என்ற த்ரிசங்கு ஸித்தாந்தத்திலோ கொண்டுபோய்த் தள்ளுவதாக மதங்கள் ஏற்பட்ட மாதிரி முன் எப்போதும் இருந்ததில்லை. ஆம், ப்ரவ்ருத்தி-நிவ்ருத்தி தர்மங்களை ரக்ஷித்து ஸம்ஸ்தாபனம் செய்ய நிச்சயமாக பகவானின் அவதாரம் ஸம்பவிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

# தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

### கீதா வாக்ய பரிபாலனம் : பிரச்னையும் தீர்வும்

கீதா வாக்யத்தில் ஒரு சின்ன இடறல் இந்தப் புதுச் சூழ்நிலையில் ஏற்பட்டது. அவதாரம் பண்ணி தர்மத்தை நிலைநாட்ட வேண்டியதுதான். அதில் ஸந்தேஹம் இல்லை, இடறல் இல்லை. பின்னே எதில் என்றால், பரித்ராணாய ஸாதூநாம், விநாசாயச க துஷ்க்ருதாம் என்றாரே, அதிலேதான் (இடறல்). "ஸத்துக்களுடைய ரக்ஷணைக்காகவும், அஸத்துக்களுடைய அழிவுக்காகவும், அவதாரம் எடுக்கிறேன்" என்று கீதையில் சொன்னார். சங்கராவதார ஸமயத்தில், முதலில் சொன்ன ஸாது ரக்ஷணையைப் பற்றி ச்ரமமிருக்கவில்லை. மற்ற பூர்வ அவதாரங்களின்போது இருந்த அளவு (ச்ரமம்) கூட (இப்போது) இருக்கவில்லை. ஏனென்றால், முன்னெல்லாம் பொதுவாக ஜனங்கள் எல்லாருமே ஸத்துக்களாகத்தான் இருந்தார்கள். எனவே அத்தனை பேரை 'பரித்ராணம்' என்பதாகக் கட்டி காப்பது என்றால் ச்ரமமான கார்யமாகத்தான் இருந்திருக்கும். எதையும் ஸாதிக்க வல்லவனான ஈச்வரனின் அவதாரமானதால் அவனால் இதைச் செய்யமுடிந்தது. இப்போது கலியிலே அவதரிக்கு ம்படியான இந்த ஸந்தர்ப்பம் வந்த போது ஸத்துக்கள்

பூர்வயுகங்களைவிட ரொம்பக் குறைவாகவே இருந்தார்கள். அதனால் இப்போது ஏற்பட வேண்டிய அவதாரத்திற்கு ஸாதுரக்ஷணை-"பரித்ராணாய ஸாதூநாம்" என்ற பாதி-முன்னளவுகூட ச்ரமமில்லாமல் ஸுலப ஸாத்யமான காரியமாகவே இருந்தது.
ஆனால் இன்னொரு பாதி, "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்று தப்புப் பண்ணுபவர்களை அழிப்பதைச் சொன்னாரே, அதிலேதான் பரமாத்மாவுக்கே க்ருஷ்ணாவதாரத்தில் சொன்ன வாக்குப்படிப் பண்ணுவதென்பது 'ப்ராப்ள'மாகி விட்டது! அந்த அவதாரத்திலேயும் அதற்கு முன்னேயும் தப்புப் பண்ணுபவர்கள் அஸுரர்கள், ராக்ஷஸர்கள், சில துஷ்ட ராஜாக்கள், அவர்களைச் சேர்ந்தவர்கள் என்று குறிப்பாகச் சில கோஷ்டிகளாக இருந்தனர். பொதுவான ஜன ஸமூஹத்திலிருந்து பிரித்து அவர்களை 'ஐஸொலேட்' பண்ண முடிந்தது. அப்படிப் பண்ணி அந்தப் பூர்வ அவதாரங்கள் தப்புப் பண்ணியவர்களை ஸம்ஹாரம் செய்தன. "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்று சொன்னபடிச் செய்ய முடிந்தது.

ஆனால் இப்போது ஆசார்யாள் காலத்தில் எப்படியிருந்தது? அஸுரர், ராக்ஷஸர் என்று எவரும் வெளிப்படத் தெரியவில்லை. கம்ஸன், ஜராஸந்தன், காலநேமி போல அஸுரர் மாதிரியே நன்றாகத் தெரிந்தவர்களும் இப்போது இல்லை. துர்யோதனன் பரிவாரம் போல மநுஷ்ர் மாதிரியே நன்றாக இருந்துகொண்டு, ஆனால் அஸுரத்தனமாக இருந்தவர்கள் க்ருஷ்ணர் காலத்தைவிட ரொம்ப நிறையப் பரவிவிட்டார்கள். அதோடுகூட, துர்யோதனப் பட்டாளம் வெளிப்படவே கொடூரமாக நடந்து கொண்டதுபோல இல்லாமல், வெளியிலே பார்த்தால் நல்லது மாதிரி இருந்து கொண்டே, நல்லதைச் சொல்லிக்கொண்டும், செய்துகொண்டும் இருக்கிற மாதிரி தோன்றிக்கொண்டே, ஏராளமான பேர் அதர்மமாகப் பண்ணுவதென்பதும் இந்த யுகத்துக்கே ஸ்பெஷலாகச் சேர்ந்தது! மொத்தத்தில் 'துஷ்க்ருத்'கள் என்று கீதையில் சொல்லியிருக்கும் 'கெட்டது செய்கிறவர்'களை ஜனஸமூஹத்திலிருந்து பிரித்து நாசம் செய்து விட்டு ஸாதுவான ஜன ஸமூஹத்தை ரக்ஷிப்பது என்பதற்கு இந்த யுகத்தில் இடமில்லாமல் அபூர்வமான சில ஸத்துக்களைத் தவிர ஜனஸமூஹம் முழுவதுமே அதர்ம ப்ரவாஹத்தில் முழுகித் தப்புப் பண்ணிக் கொண்டிருந்தது.

இந்த நிலையில் "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்று செய்வதனால் அத்தனை பேரையும் ஹதம் பண்ணி விடுவது என்றுதான் ஆகும்! இப்படியொரு "யுனிவர்ஸல் ஹாலோகாஸ்ட்" (ஸர்வ ஜீவ ஸர்வ நாசம்) செய்வதா தர்ம ஸம்ஸ்தாபனம்? பின்னாடி எப்போதோ வரவேண்டிய ப்ரளயத்தை உண்டு பண்ணுவதா அவதார லக்ஷ்யம்? மநுஷர்களோடு ஈச்வரனும் அன்பிலே பழகுவது, அப்படியே தர்மத்துக்கு வழிகாட்டி அழைத்துப் போவது என்று எதுவுமில்லாமல் ஸர்வ நாசம் செய்வதென்றால் அப்போது தர்மமும் ஸம்ஸ்தாபனமாகாமல் நசித்துப் போக வேண்டியதுதான். இப்படி ஒரு அவதாரம் பண்ணவே முடியாது. அவதார 'பர்ப' ஸுக்கே அது விரோதம். இதைத்தான் பரமாத்மாவுக்கு 'ப்ராப்ளம்' என்று சொன்னது. அஸுரன் என்று வெளியில் யாருமில்லாமல் ஸர்வ ஜனங்களுக்குள்ளேயும் புகுந்து கொண்டிருக்கும் போது எப்படி ஸம்ஹரிப்பது? விச்வாமித்ரருக்கு யாகம் செய்யணமென்று தர்மமான எண்ணம் இருந்தது. அஸுரர் என்று வெளியிலே இருந்த சிலர் இடைஞ்சல் பண்ணினார்கள். ராமர் போய் அவர்களை வதைத்து-துஷ்க்ருத்களை விநாசம் செய்து-யஜ்ஞ ரக்ஷணமும் ஸாது பரித்ராணமும் பண்ணினார். கலியில் விச்வாமித்ரர் இருந்தால் அவருடைய மூளைக்குள்ளேயே அஸுரன் போய், முதலுக்கே அவருக்கு யாகம் செய்யத் தோன்றியிருக்காது! இப்படி தர்ம கார்யங்கள் அரூபமான துஷ்ட சக்திகளால் நின்று போய்விடுகிற ஸமயத்தில் ஒரு அவதாரத்தைக் கொண்டு துஷ்ட சிக்ஷணம், சிஷ்ட ரக்ஷணம், தர்மோத்தரணம் ஆகியவற்றைச் செய்வதென்றால் எப்படி? நம்மாலானால் இதற்கு ஸொல்யூஷன் கண்டுபிடிக்க முடியாமல் போயிருக்கும். பரமாத்மாவானதால் ஸுலபமாகக் கண்டுபிடித்துவிட்டார்! "கலிகால அவதாரங்களில் துஷ்ட ஜனங்களை ஸம்ஹரிப்பதில்லை. ஜனங்களுக்குள்ளே புகுந்துகொண்டிருக்கும் துஷ்டத்தனத்தையே ஸம்ஹரிக்கவேண்டும். இப்படிப் பண்ணி ஜனங்களை நல்லவர்களாக்கிவிடவேண்டும். 'விநாசாய ச துஷ்க்ருதாம்' - 'கெட்டகார்யம் செய்பவர்களுடைய அழிவின் பொருட்டு' என்பதற்கு ஒரு அமென்ட்மென்ட் போட்டுவிட்டால் போதும். 'துஷ்க்ருதாம்' (கெட்டகார்யம் செய்பவர்களுடைய) என்பதை 'துஷ்க்ருத்யானாம்' (கெட்டகார்யங்களுடைய) என்று

'அமென்ட்' செய்துவிட்டால் போதும்" என்று (பரமாத்மா) ஸொல்யூஷன் கண்டுபிடித்துவிட்டார்!
லோகம் பூரா நடக்கும் கோடி கோடி தப்புக் கார்யங்களை எப்படி அழிப்பது, அது மட்டும் முடியுமா என்றால்: அந்தக் கார்யங்களை அழிக்க வேண்டாம். அவை விளைவுதான். இந்த விளைவுக்குக் காரணமுண்டு. வித்து உண்டு. வித்தை ஊறினால்தானே விளைச்சல் வரும்? காரியத்துக்கு வித்து எண்ணம். கெட்ட எண்ணம் முதலில் தோன்றி, அதன் நிறைவேற்றத்திற்காகவே அப்புறம் கெட்ட கார்யம் தோன்றுகிறது. ஆனபடியால் ஜனங்களுடைய கெட்ட எண்ணம் போகும்படியாக, அதாவது அவர்களுடைய அறிவு திருந்தும்படியாகப் பண்ணிவிட்டால் போதும். அவதார நோக்கமான தர்ம ஸமஸ்தாபனம் நடந்துவிடும்.
'அறிவு திருந்தும்படி எப்படிப் பண்ணுவது? வேறே எப்படி? எல்லாருக்கும் தெரிந்ததுதான்: நல்லதை நல்ல படியாக எடுத்துச் சொல்வதால்தான். ஞானோபதேசத்தினால்தான். வாயுபதேசம் மட்டும் போதாது. வாழ்க்கை உதாரணத்தோடு அது கலந்து வந்தால்தான் பலன் தரும், அதனால் ஞானியாக அவதாரம் செய்யணும். ஞானி என்றால் ஸந்நியாஸியாக அவதாரம் செய்யணும்' என்றிப்படி பகவான் தீர்மானம் பண்ணிவிட்டார்.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**ஏன் ஸந்நியாஸியாக அவதாரம்?**

ஸந்நியாஸிதான் ஞானியாக இருக்கமுடியுமென்பதில்லை. "ஒரு சண்டாளன்கூட ஞானியாயிருக்கிற பக்ஷத்தில் அவனே என் குரு" என்று நம்முடைய ஆசார்யாளே ஸ்தோத்ரம் செய்திருக்கிறார். அந்தக் கதை அப்புறம் கேட்போம். ஆனாலும் இந்த மாதரி எங்கே வேண்டுமானாலும் ஞானி தோன்றுவதென்பது அபூர்வமாக நடப்பதுதான். அதில் நாம் பயிற்சி கொடுத்துப் பண்ணும்படியாக ஒன்றுமில்லை. உபதேச குரு என்றால் அவர் ஒரு 'ஸிஸ்டப்'ப்படி பயிற்சி கொடுத்தே

சிஷ்யர்களை ஞானமடையச் செய்யணும். ஆகையால் இவரும் அப்படி 'ஸிஸ்ட'த்தில், அதாவது ஸம்ப்ரதாய பூர்வமாக, அதாவது சாஸ்த்ரோக்தமான முறையில் போய் ஞானியானவராக இருந்தால்தான் பொருத்தமாயிருக்கும். அபூர்வமாக ஞானிகள் எந்தச் சூழ்நிலையில் வேண்டுமானாலும் தோன்றலாமென்றாலும், பொதுவாக அந்த பரிபக்வத்தைப் பெற சாஸ்த்ரங்கள் கூறியுள்ள விதி என்னவென்றால், உசந்த முறையில் ப்ரஹ்மசர்யமோ, க்ருஹஸ்தாச்ரமமோ வகித்த பிற்பாடு ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு, ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு, உபநிஷத்துக்களில் ஜீவ-ப்ரஹ்ம ஐக்யத்தைப் பற்றிச் சொல்லும் மஹாவாக்யங்களை அநுஸந்தானம் பண்ணிப் பண்ணியே (தீர்க்கமாக த்யானம் செய்தே) ஞானம் அடையவேண்டும் என்பதுதான். அம்மாதிரி அவதாரத்தில் நடத்திக் காட்டுவதுதான் யுக்தம் என்று ஸ்வாமி நினைத்தார் எல்லாம் அசாஸ்த்ரீயமாகப் போய்க் கொண்டிருந்த காலத்தில் சாஸ்த்ரம், அதன் கட்டு ஆகியவற்றில் ஜனங்களுக்கு மதிப்பும் பிடிப்பும் ஏற்படுத்தித் தருவது தான் அவதார நோக்கம். அப்படியிருக்கும்போது, ஒரு சாஸ்த்ரமுமில்லாமல் எங்கே வேண்டுமானாலும் ஞானி தோன்றலாம் என்ற விதத்தில் அவதாரமே இருந்துவிட்டால் நோக்கத்திற்கே அது எதிராகத்தானே ஆகிவிடும்? ஒரு மநுஷ்ய ஜீவன் அடையக்கூடிய மிகவும் உச்ச நிலையான ஞானத்திற்கே சாஸ்த்ரம் வேண்டியதில்லையென்றால், அப்புறம் ஒரு உபதேசமும் வேண்டாம், அதைச் செய்யும் அவதாரமும் வேண்டாம் என்றாகிவிடும்! அல்லது அப்போது பரவியிருந்த அசாஸ்த்ரிய, அவைதிக மதங்கள் மாதிரி இன்னொன்றை உபதேசிக்கத்தான் அவதாரம் என்றாகிவிடும். ஆனால் அவதார லக்ஷ்யமே என்ன? வேத சாஸ்த்ரத்தை நிலை நாட்டுவதுதான். தர்ம ஸம்ஸ்தாபனம், தர்ம ஸம்ஸ்தாபனம் என்று சொன்னதெல்லாம் வேத ஸம்ஸ்தாபனத்தைத்தான். அதிலும் இந்த அவதாரம் முடிந்த முடிவாக வேதம் சொன்ன அத்வைதத்தையே தன்னுடைய சிகரமான பணியாக நிலைநாட்டி, நிவ்ருத்தி மார்க்க ஸந்நியாஸிக்கே அதில் அதிகாரம் என்று தெளிவாக வழி வகுத்துத் தரவேண்டுமென்று ஸ்வாமி ஸங்கல்பித்திருந்தார். அதனால் அவதார மூர்த்தியும் விதிவத்தாக ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு ஞானம் பெற்றதாகவே

காட்டவேண்டுமென்றாயிற்று.
பௌத்த, ஜைன மதஸ்தர்களுங்கூட ஞானத்துக்கே தங்களை 'டெடிகேட்' செய்து கொள்பவர்கள் பிக்ஷுக்களாக வேண்டுமென்றுதானே வைத்திருந்தார்கள்? ஸந்நியாஸியான குருவாக அவதாரம் செய்வதென்று முடிவாயிற்று. ஸந்நியாஸியாயில்லாத க்ருஷ்ணரும் ஞானோபதேசம் செய்தாரென்றாலும் அது அவர் செய்த அநேக கார்யங்களில் ஒன்றுதான். அந்தக் காலத்தில் அந்தமட்டும் செய்ததே போதுமாயிருந்தது.

ஜீவிதத்தின் பின் பாகத்தில் மாத்திரம் கொஞ்சம் உபதேசம் செய்தே அவர் 'ஜகத்குரு' பட்டத்தைத் தட்டிக்கொண்டு போய்விட்டார்! த்வாரகையில் ராஜ்யபாரம் வஹிப்பது, பதினாறாயிரம் பத்னிகளோடு குடும்பம் நடத்துவது, பாண்டவர்களைப் போய்ப் பார்த்துக் கொள்ளுவது, தூது போவது, தேரோட்டுவது, பக்தானுக்ரஹம் பண்ணுவது, நரகாஸுராதிகளை வதம் பண்ணுவது-என்று அவர் பண்ணாத கார்யமில்லை. அதில் ஒன்றாக உபதேசமும் செய்தார். 'இப்போது அப்படி முடியாது. ஆயுஸ் முழுக்க ஸந்நியாஸ குருவாக இருந்துகொண்டு உபதேசம் ஒன்றையே செய்தால்தான் முடியும்' என்று ஸ்வாமி தீர்மானித்தார். க்ருஹஸ்தனுக்கு சாஸ்த்ரங்களில ஏகப்பட்ட கர்மாநுஷ்டானங்களைக் கொடுத்திருக்கிறது. அவனுக்கு எத்தனையோ குடும்பப் பொறுப்புகள். அதிதி ஸத்காரம் (விருந்தோம்பல்), இன்னும் அநேக விதமான ஸமூஹத் தொண்டுகள் எல்லாம் அவன்தான் செய்யவேண்டும். இதெல்லாம் போகத்தான் உபதேசிப்பது என்றால் அன்றைய (ஆசார்யாள் காலத்திய) அபாயமான சூழ்நிலையில் போதவே போதாது. ஆகையினால் இந்தப் பொறுப்புகளும், இத்தனை கர்மாநுஷ்டானங்களும் இல்லாத ஸந்நியாஸிதான், 'உபதேசமே கர்மா; அதுவே தன் பொறுப்பு' என்று 'டெடிகேட்' செய்துகொண்டு ஞான ப்ரசாரத்திற்காக உழைத்துக் காட்டவேண்டும் என்று ஏற்பட்டது. இந்த அவதாரத்திலே பாரத தேசம் முழுக்க ஸஞ்சாரம் செய்து நாடு பூரா பரவியிருந்த தப்பான மதங்களை வாதங்களினால் நிராகரணம் பண்ணி, ஸத்யமான வேதாந்த மதத்தை ஸ்தாபிக்க வேண்டியிருந்தது. அதாவது அவதாரமாக வருகிறவர் ஸதா காலமும் ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும் என்ற அவச்யம்

ஏற்பட்டிருந்தது. குடும்பப் பொறுப்புள்ள க்ருஹஸ்தன் எப்படி இந்த மாதிரி எப்பவும் ஊர் சுற்றிக்கொண்டே இருக்கமுடியும்? மாறாக, ஸந்நியாஸிக்குத்தான் 'எப்பவும் ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டே இருக்கணும்; ஒரே இடத்தில் அதிக நாள் இருந்தால் 'லோகல் அட்டாச்மென்ட்'கள் உண்டாகி விடுமாதலால் இடம் மாறிக்கொண்டே இருக்கணும்' என்று சாஸ்த்ரமே விதி செய்திருக்கிறது. இதுவும் இப்போது ஸந்நியாஸ அவதாரம் ஏற்படுவதற்கு ஒரு முக்ய காரணமாயிற்று. நாலு ஆச்ரமங்களில் ஸந்நியாஸாச்ரமம்தான் ஸஞ்சாரத்திற்கு யோக்யமான ஆச்ரமம். பிரம்மசாரியாகப்பட்டவன் 'அந்தேவாஸி' என்பதாக குருவோடு கூடவே சேர்ந்து வஸிக்க வேண்டியவன். குருகுலவாஸமே விதிக்கப்பட்ட அவன் ஸஞ்சார வாழ்க்கை நடத்தமுடியாது. க்ருஹஸ்தன் மற்ற ஆச்ரமிகளை ஆதரிப்பதும், தன்னுடைய குடும்ப பரணம் செய்வதுமான கடமையை ஸ்வக்ருஹத்திலேயே இருந்து கொண்டுதான் செய்யமுடியும். அவனும் ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டே இருக்க முடியாது. வானப்ரஸ்தனும் காட்டில் ஒரே இடத்தில் இருந்துகொண்டுதான் வ்ரத நியம தபோநுஷ்டானங்களைப் பண்ணவேண்டும் என்று சாஸ்த்ரம். ஸந்நியாஸி மட்டுந்தான் சாஸ்த்ர விதிப்படியே ஒரே இடத்தில் ஜாஸ்தி நாள் தங்காமல் ஸஞ்சரித்துக்கொண்டே இருக்கவேண்டியவன். ஆகையினால் அப்படிப்பட்ட ஒரு அவதாரத்தினால்தானே தேசம் பூராவுக்கும் உபதேசம் தருவதான கார்யம் நடக்க முடியும்? க்ருஷ்ணர் க்ருஹஸ்தராக இருந்துகொண்டு ஞானோபதேசம் செய்தாரென்றாலும் ஊர் ஊராகப் போய் தேசத்தின் ஸகல வித்வத் ஸமூஹத்துக்குமா உபதேசித்தார்? ஒரு அர்ஜுனனுக்கும் ஒரு உத்தவருக்கும் மட்டுமே ஓரோரு ஸமயத்தில் மாத்திரம் உபதேசம் பண்ணினார். தாமே ஸ்வாமி என்று உபதேசத்திற்கு நடுவிலேயே அர்ஜுனனுக்கு விச்வரூபம் காட்டி நிச்சயப்படுத்தினார். உத்தவருக்குத் தனக்காகவே தெரியும், இவர் ஸ்வாமி என்று. ஸ்வாமி என்ற பிறகு க்ருஹஸ்தாச்ரமியா, அதுவா இதுவா என்றெல்லாம் பார்க்கமால் அந்த இரண்டு பேரும் உபதேசத்தை பக்தியோடு ஏற்றுக்கொண்டார்கள்.

அப்புறம் அவர் பரமபதம் போய், லோகமெல்லாம் அவர் ஸ்வாமிதான் என்று புரிந்துகொண்ட பிறகு, பரீக்ஷித்து, ஜனமேஜயன் ஆகியவர்களின் காலத்தில் அந்த

உபதேசங்கள் வ்யாஸாசார்யாளின் பாகவத, பாரதங்களின் மூலம் லோகத்துக்கு ப்ரசாரமாயின. ஸாக்ஷாத் பகவதவதாரத்தின் உபதேசம் என்பதால் எந்த ஆச்ரமத்திலிருந்துகொண்டு அவர் உபதேசித்தார் என்று கேள்வி கேட்டுக் கொண்டிருக்காமல் எல்லோரும் உபதேசங்களை ஏற்றுக்கொண்டார்கள். அவதாரமாக லோகத்தில் வாழும்போது, அவதார லக்ஷணப்படி எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் தம்மை தெய்வமாகத் தெரிவித்துக் கொள்ளாமல், மாநுஷமாகவே நிறைய வேஷம் போட்டு விட்டு, அப்புறம் ஒரு தலைமுறை, இரண்டு தலைமுறைக்குப் பிற்பாடு லோகம் தம்மை தெய்வமாகத் தெரிந்துகொண்ட பிறகே தம்முடைய ஞானோபதேசம் எல்லாருக்கும் ப்ரகாசிக்கும்படியாக க்ருஷ்ண பரமாத்மா செய்தார். இப்போதோ வீடு பற்றி எரிகிறபோது உடனே ஜலத்தைக் கொட்டி அணைக்க வேண்டுமென்பது போன்ற நிலையாக இருந்தது. ஒரு காலத்தில் அவதாரமாகி உபதேசம் செய்வது, ஆனாலும் அந்த உபதேசம் அப்போதே ப்ரசாரமாகாமல், லோகத்தைக் காக்க வைத்து அவதாரத்தை அவதாரமென்று அது புரிந்துகொண்ட அப்புறமே ப்ரசாரமாகச் செய்வது என்று காலஹரணம் செய்ய முடியாத சூழ்நிலையாயிருந்தது. அதர்ம அஞ்ஞான நெருப்புப் பிடித்துக் கொண்டிருந்த லோகத்தில் அப்போதேதான் ஞானோபதேசத்தை வர்ஷித்து அணைக்கவேண்டும் என்றிருந்தது. ஆனால் அவதார காலத்திலேயே ஆச்ரமத்தைப் பார்க்காமல் ஈச்வராவதாரமென்று எல்லாருக்கும் எப்போதும் தெரியும்படி இருப்பதென்றாலோ, ஒரு அவதாரமென்றால் அது மாநுஷமாகவும் இருந்துதானாக வேண்டும் என்று நாம் பல காரணங்களைக் கொண்டு தெரிந்துகொண்டாமே, அந்தப்படி பண்ணமுடியாமலாகி, அவதாரத்தின் லக்ஷணங்கள் லக்ஷ்யங்கள் இரண்டிற்குமே பாதகம் ஏற்படும். ஆனபடியால் ஸந்நியாஸாச்ரமத்தில்தான் அவதாரம் இருக்க வேண்டுமென்றும், அவதார புருஷர் லோகத்தில் உள்ள போதே எல்லாருக்கும் ப்ரகாசமாக உபதேசம் செய்துவிட வேண்டுமென்றும் ஆயிற்று. குறிப்பாக இந்திரியக் கட்டுப்பாடு போதாத இந்தக் கலிகாலத்தில் க்ருஹஸ்தன் ஞானோபதேசம் செய்தால் ஸந்தேஹத்திற்கும் பரிஹாஸத்திற்கும் இடமாகும். ஜனங்களெல்லாம் பலவிதத்தில் ஹிபாக்ரிஸி பண்ணிக்கொண்டிருக்கும்போது,

'பார்த்தால் க்ருஹஸ்தாச்ரமம், பண்ணுவதோ ஞானோபதேசம் என்று தங்களைப் போலவே அந்த ஆஸாமியும் ஒன்று என்று, ஜனங்கள் பரிஹாஸமாக நினைப்பார்கள். இந்திரியக் கட்டுப்பாடு இந்த யுகத்தில்போதவே போதாது, சபலத்தின் இழுப்பு இப்போது ஜாஸ்தி என்பதால்தான் ஐம்பது வயஸுக்கு மேற்பட்டு பத்னியோடுகூட இருந்து கொண்டே, ஆனாலும் தாம்பத்ய போகம் இல்லாமல், தபோ வ்ரதங்கள் செய்வதான வானப்ரஸ்தம் கலியில் வேண்டியதில்லை என்று சாஸ்த்ராபிப்ராயம் இருக்கிறது. நன்றாகப் பதமாகிறமட்டும் க்ருஹஸ்தாச்ரமத்திலேயே இருந்துவிட்டு நேரே ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளும்படியாக இந்த யுகத்துக்கு ஏற்பட்டிருக்கிறது.
முக்யமாக இந்த அவதாரம், நிவ்ருத்தி மார்க்கத்தில் ஞானம் பெற்றே மோக்ஷமடையமுடியும் என்ற உபநிஷத அபிப்ராயத்தை முடிவாகச் சொல்லவந்தது. எனவே அது ஸந்நியாஸியாயில்லாமல் வேறெப்படியும் இருக்கமுடியாதென்று ஆகிவிட்டது. ப்ரவ்ருத்தியிலிருப்பவர் நிவ்ருத்தியை அந்தரங்க ஸாதனமாகச் சொல்வது பெரிய முரண்பாடல்லவா?

இப்படிப் பல காரணங்களால், கலி பிறந்து ஸுமார் 2500 வருஷத்துக்கப்புறம், ஈச்வரன் குருவாக அவதாரம் பண்ண வேண்டுமென்றும், அப்படி ஞானாவதாரமாக வருபவர் ஸந்நியாஸியாகவே இருக்கவேண்டும், ஆயுஸ் முழுக்க அப்படியிருந்து உபதேசம் பண்ணவேண்டும் என்றும் முடிவாயிற்று. பகல் வேளையில் எப்போதோ ஒரு ஸமயம் மானம் (வானம்) மூடிக்கொண்டு இருட்டிப்போவது போல க்ருஷ்ணர் காலத்தில் ஏற்பட்டதால் அப்போதைக்கு அவர் ஒரு தீபத்தை ஏற்றி வைத்தால் போதுமானதாயிருந்தது. இப்போது ஒரே ராக்காலமாகவே ஆகிவிட்டதால் அவதார புருஷர் ஆயுஸ்காலம் பூராவும் நிறைய விளக்குப் போட்டாகவேண்டும் என்றாயிற்று. மனோ விகாரங்களும், விகல்பமான எண்ணங்களும் ஜனங்களுக்கு ஜாஸ்தியாகிவிட்டதால் அவதாரம் தாம்பத்ய வாழ்க்கையே இல்லாமல் இருக்கவேண்டுமென்றும் ஆயிற்று.
ஆசார்யாள் பூர்ணமாக மநுஷாயுஸ் பூலோகத்தில் இருக்கவில்லை, முப்பத்திரண்டே வயஸுதான் இருந்தாரென்று தெரிந்திருக்கும். அதாவது இத்தனை கலி ப்ரவாஹத்தையும் அடக்குவதற்கு அத்தனை ஸ்வல்ப

காலமே போதும்படியாக அப்பேர்ப்பட்ட ஞான சக்தியோடும் க்ரியா சக்தியோடும் அவதாரம் ஏற்பட முடிந்தது என்று தெரிகிறது. முப்பத்திரண்டு வருஷமென்ன, சொடக்குப்போடும் நாழியிலேகூட ஈச்வர சக்தியால் ஸாதிக்க முடியாததாக எதுவாவது உண்டா? ஆனால் நரலீலைக்காக அவதாரம் என்று ஆடிக் காட்டுவதில் இப்படி 32 வருஷமென்று ஸங்கல்பம் செய்யப்பட்டது. அதை ரொம்பவுமே லீலா விநோதமாகப் பண்ணினார்.
எப்படியென்றால், முதலில் தம்முடைய ஸ்வய ஸங்கல்பப்படி எட்டே வயஸு இருக்கிறமாதிரியும், அப்புறம் முதலை வாயிலிருந்து தப்புகிறபோது எட்டைப் பதினாறாக்கிக் கொண்டாற்போலவும், பதினாறு முடிந்போது வ்யாஸர், ப்ரம்மா ஆகியவர்களுடைய விருப்பப்படி இன்னும் ஒரு பதினாறு கூட்டிக்கொண்ட மாதிரியும் விளையாட்டுப் பண்ணினார். ஆனால் முதலிலேயே பரமேச்வரன் ப்ளான் போட்டதுதான்,-தாம் முப்பத்திரண்டு வருஷம் ஸந்நியாஸ குருவாயிருந்தே அத்வைத க்ரந்தங்களை எழுதி அவற்றை தேசம் பூரா ஸஞ்சாரம் பண்ணிப் பிரசாரம் செய்ய வேண்டுமென்பது.
ஸரி. ஆனால் 32 வருஷம் என்பது புருஷாயுஸ் இல்லை. புருஷாயுஸ் (என்பது) நூறு வருஷம். இந்த அவதாரம் அப்படிப் பூர்ணாயுஸ் கொண்டதாகவோ, அல்லது எண்பது தொண்ணூறு வயஸ் ஜீவிப்பதாகவோ இருந்து, அதில் முதலில் மற்ற ஆச்ரமங்களை வஹித்துவிட்டுக் கடைசி 32 வருஷம் மட்டும் ஸந்நியாஸியாயிருக்க முடியுமல்லவா? 'அப்படியெல்லாம்கூட க்ருஹஸ்தாச்ரமக் கலப்பு இருக்கவே கூடாது. அவதார கார்யத்தைப் பண்ணுவதற்கு 32 வருஷம் போதுமா? அப்படியானால் அந்த 32 வருஷமும் ஸந்நியாஸியாயிருந்துவிடவேண்டும். ஜீவிதம் பூராவும் ஞானோபதேசமே கார்யமாயிருந்துடணும். இந்தக் கலியுகத்தில் அவதாரமாக வரும்போது க்ருஹஸ்தாச்ரம வாடையே காட்டப்படாது' என்று பரமேச்வர ஸங்கல்பமாயிற்று.

## ப்ரம்மசர்ய ஆச்ரமசத்திலும்

(சில நிமிஷங்கள் யோசனையில் இருந்தபின் :) இந்த அவதாரத்தில் ஆயுஸ் முழுக்க உபதேசம், ஸந்நியாஸம் என்றால் முழுக்கவே இல்லை. முதலில் கொஞ்சம் வருஷம் ப்ரஹ்மசர்யம், குருகுலவாஸத்தில் பூர்த்தியாக வித்யாப்யாஸம்; அப்புறந்தான் ஸந்நியாஸமும், உபதேசம் பண்ணுவதும்.
அவதார கார்யத்திற்கு 32 வருஷம் தேவைப்பட்டதென்று நான சொன்னது ஸரியில்லை. அதைவிடவும் ஒரு எட்டு வருஷம் குறைச்சலாகவே போதுமென்றிருந்தது.
தீடீரென்று ஒரு குழந்தை உபதேசம் செய்கிறதென்றால் இது ஏதோ தெய்விகமான அத்புதம் என்று ஆகிவிடும். தெய்விகமும், மநுஷத்தன்மையும் கலந்திருப்பதான அவதார லக்ஷணத்துக்கு இது பங்கம் உண்டாகிவிடும். ஒரு தெய்வக் குழந்தையை ஜனங்கள் எப்படித் தங்களுக்கான 'மாட'லாக நினைத்து பின்பற்ற முடியும்? அதன் உபதேசம் தங்களுக்கும் அநுஷ்டான ஸாத்யம் என்று எப்படி எடுத்துக்கொள்ள முடியும்? ஒரேயடியாய் உச்சஸ்தானத்தில் அமர்த்தப்பட்ட அவதாரத்துக்கும் அப்போது ஜனங்களோடு கலந்து பழகும் ஆசை நிறைவேறாது. உபதேச குருவாக வருகிறபோதே ஒரு உச்சஸ்தானம், ஒதுக்கம் எல்லாம் வரத்தான் செய்யும். ரொம்பவும் நியமமாயிருந்துகொண்டு ஞான வைராக்யங்களை உபதேசித்துக்கொண்டிருப்பவர் மற்ற அவதாரங்களைப்போல ஜனங்களோடு அத்தனை 'இன்டிமஸி'யுடன் உறவு கொண்டாட முடியாதுதான். ஏதோ கொஞ்சத்தில் கொஞ்சம் முடிவதும் அவர் அற்புத லேபிள் ஒட்டிக் கொண்டே பிறந்தாரானால் அடியோடு போய்விடும்!
அதனால், "க்ருஹஸ்தாச்ரமத்தின் மூலம் மநுஷ்யனுக்கு 'மாட'லாக எத்தனையோ பாடங்களைக் காட்டத்தான் நமக்கு அடியோடு முடியாதென்றாலும், ப்ரஹ்மசாரியாக இருந்தாவது அதில் 'மாட'லாக இருந்து காட்டுவோம்" என்று பரமாத்மா நினைத்தார்.
ப்ரம்மசர்ய ஆச்ரமம் வஹிப்பதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. என்னவென்றால், வேத வழியை நிலை நாட்டுவதே அவதார நோக்கமாயிருக்க, வேதத்தின் கர்ம ஸம்பந்தம்

என்பதே இல்லாத ஸந்நியாஸிகவே அவதாரம் ஆயுஸ் முழுக்க இருந்துவிட்டால் எப்படி? ஸந்நியாஸிக்கும் (உபநிஷத்துக்களின்) மஹாவாக்யங்களால் வேத ஸம்பந்தம் இருக்கிறதென்றாலும், பெரும்பாலான ஜனங்கள் பண்ணக்கூடியது அவன் பண்ணும் மஹாவாக்ய விசாரம் அல்லவே! அவர்களுக்கானது வைதிக கர்மாக்கள் தானே? அதாவது, ப்ரவ்ருத்தி மார்க்கம்தான். அதுவோ க்ருஷ்ணர் காலத்தையும்விட இப்போது கெட்டுப் போயிருந்தது. வர்ண விபாகம் வேண்டாம் என்ற மதங்கள் இப்போதுதான் பரவி, வைதிக கர்மாநுஷ்டானத்திற்கு பெரிய ஹானி உண்டாக்கி வந்தன. இந்த ஸமயத்தில் தோன்றும் ஒரு அவதாரம் நிவ்ருத்திக்கான சித்த பரிபக்வம் பெற்ற கொஞ்சம் பேருக்கு மட்டும் அத்வைதத்தைச் சொல்லி விட்டுப் போய்விட்டால் எப்படி ஸரியாயிருக்கும்? லோகத்தில் பொதுவாக எப்படி தர்ம ஸம்ஸ்தாபனம் ஏற்படும்? முடிந்த முடிவாக ஞான லக்ஷ்யத்தைக் காட்டி நிவ்ருத்தியை நிலை நாட்டுவதே இந்த அவதாரத்தின் தலையான உத்தேசமானாலும், ஆரம்பமும், மத்தியும் இல்லாமல் முடிவுக்கு எப்படிப் போவது? லோகம் பூராவுக்கும் தர்ம ஸம்ஸ்தாபனம் என்னும்போது ப்ரவ்ருத்தி தர்மத்தில், அதாவது வேதோக்தமான கர்மாநுஷ்டானத்தில் பெரும்பாலான ஜனங்களை ஊக்கி உத்ஸாஹப்படுத்தாமல் ஒரு அவதாரம் முடிந்து போவதற்கில்லை.

வியவஸ்தைகள் கெட்டுப்போய் ஜனங்களெல்லாம் ரொம்பவும் அசாஸ்த்ரீயமாகக் கார்யங்களைச் செய்துகொண்டிருக்கும்போது அவர்களுக்கு சாஸ்த்ரோக்தமான கர்மாக்களில் ஈடுபாடு ஏற்படுத்தித் தரவேண்டியது அவதாரத்தின் முக்யமான கடமையாக ஆகியிருந்தது. ஆகையால் பெருவாரியான ஜனங்களை உத்தேசித்து வைதிக கர்மாநுஷ்டானம், ஆச்ரம வ்யவஸ்தைகள் ஆகியவற்றையும் (இந்த அவதாரத்தில்) வலியுறுத்திச் சொல்லத்தான் வேண்டும் என்று ஸ்வாமி நினைத்தார்.
சொன்னால் மட்டும் போதாதே! சொன்னதை ஸொந்த வாழ்க்கையில் எக்ஸாம்பிளாக நடத்திக் காட்டினால்தானே சொல்லுக்குச் சக்தி ஏற்படும்? ஆனால் வைதிக கர்மாநுஷ்டானமில்லாத ஸந்நியாஸி எப்படி அதற்கு எக்ஸாம்பிளாக வாழ்ந்து காட்ட முடியும்? இதை ஸமாளிக்கவுந்தான், ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்தில் முதலில்

இருந்துவிட்டு அப்புறம் ஸந்நியாஸியாவது என்று தீர்மானம் பண்ணினார். க்ருஹஸ்தன் மாதிரி அத்தனை யாக யஜ்ஞாதி கர்மாக்கள் ப்ரம்மசாரிக்கு இல்லாவிட்டாலும் இவனுக்கும் அநேக வைதிக அநுஷ்டானங்கள் உண்டு. ஆதலால், 'வழிகாட்டியாக ப்ரம்மசர்யாச்ரமத்திலிருந்து கொண்டு செய்ய முடிந்ததையெல்லாம் செய்யலாம்-வேதாத்யயனம் பண்ணலாம்; ஸமிதாதானம் பண்ணலாம்; பிக்ஷை எடுத்து வரலாம்; இந்த ஆச்ரமத்திற்குரிய நான்கு வ்ரதங்களை அநுஷ்டிக்கலாம்; இதெல்லாம் வறட்டு வறட்டு என்று வெறும் கார்யமாகப் போய்விடாமல் ஹ்ருதயம் கலந்து ப்ரியமாக, பணிவாக குரு சுச்ரூஷை பண்ணலாம்-'பெர்ஃபெக்டா'க இப்படி நடத்திக் காட்டிவிட்டு அப்புறம் ஸந்நியாஸத்திற்குப் போகலாம். அசாஸ்த்ரியமாக பல பிக்ஷுக்கள் இந்த நாளில் தோன்றியிருக்கிற மாதிரி இல்லாமல், 'இந்தக் குழந்தை ஸந்நியாஸி யார் தெரியுமாவாம்? நியமமாக குருகுலவாஸம் பண்ணிவிட்டு, அப்பபுறம் சாஸ்த்ரோக்தமாக, குருமுகமாக (ஸந்நியாஸ) தீக்ஷை வாங்கிக்கொண்ட குழந்தையாம்' என்று லோகம் பேசும்படியாக நடத்திக் காட்டவேண்டும். க்ருஹஸ்தனாயிருந்து தாரபுத்ராதிகள், அதிதிகள் ஆகியவர்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்துகாட்ட முடியாவிட்டாலும், ப்ரஹ்மசாரியாயிருந்து ஆசார்ய ஸேவை, தாயாருக்குச் செய்ய வேண்டிய தொண்டு ஆகியவற்றை சுத்தமாக நடத்திக் காட்ட வேண்டும். வேத சாஸ்த்ரங்களில் லோகத்துக்கு மறுபடி பிடிப்பு ஏற்படுத்தித் தரவேண்டிய அவதாரம், ஒரு சாஸ்த்ரமும் தேவையில்லாத அதிவர்ணாச்ரம ஞானியாகப் பிறந்து விடாமல், ப்ரஹ்மசாரியாகவாவது இருந்து சாஸ்த்ரோக்தமான கர்மாக்களைச் செய்து அப்புறமும் சாஸ்த்ரோக்தமாக ஸந்நிய தீக்ஷை பெற்று, அந்த ஆச்ரமத்துக்கான நியமங்களைப் பின்பற்றிக் காட்டுவதுதான் முறை" என்று பரமாத்மா நினைத்தார்.

நல்ல வேளையாக ஒருத்தனுக்கு நான்கு ஆச்ரமங்களும் 'கம்பல்ஸரி' தான் என்று வைக்காமல் நல்ல பக்வம் அடைந்தவனானால் ப்ரம்மசாரி க்ருஹஸ்தாச்ரமம் ஏற்காமல் அந்த ஆச்ரமத்திலேயே ஆயுஸ் முழுதும் இருக்கலாம்-'நைஷ்டிக' ப்ரஹ்மசாரி என்று இருக்கலாம்-என்றும், இன்னும்கூட மனஸ் பக்வப்பட்டு விவேக வைராக்யம் நிரம்பியிருந்தால்

ப்ரஹ்மசர்யத்திலிருந்தே ஸந்நியாஸாச்ரமத்திற்குப் போகலாமென்றும் சாஸ்த்ரங்களில் இருக்கிறது. போதாயனர், கௌதமர், வஸிஷ்டர், உசனஸ், அங்கிரஸ், யமன், காத்யாயனர், வ்யாஸர் ஆகியவர்கள் கொடுத்துள்ள ஸ்ம்ருதிகளில் (தர்ம சாஸ்த்ரங்களில்) இப்படிக் இருக்கிறது. ஜாபால ச்ருதியும் யோக்யதாம்சமுள்ள ப்ரஹ்மசாரி நேரே ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளலாம் என்கிறது. "ஆகையினால் இந்த அவதாரத்தில் அப்படித்தான் பண்ண வேண்டும். குழந்தையாகவும் ப்ரஹ்மசாரியாகவும் முதலில் ஒரு எட்டு வருஷம் இருந்துவிட்டு அப்புறம் ஸந்நியாஸியாகி அவதார கார்யத்தை முடிக்கலாம். க்ருஹஸ்தாச்ரமம் என்றால் இந்த யுகத்து ஜனங்களுக்கு விகல்பமான எண்ணங்கள் தோன்றுவதுபோல ப்ரஹ்மசர்யாச்ரமத்தைப் பற்றி இல்லாததால் மாதிரிப் பண்ணலாம்" என்று தீர்மானித்தார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அந்தண குல அவதாரம்

இன்னொன்றும் நினைத்தார்
க்ருஷ்ணர் அநேக விதமான கார்யங்கள் செய்ததில் துஷ்ட சிக்ஷணமும் நிறையச் செய்தார். ராமரும் மநுஷ்யர்களுக்கு எக்ஸாம்பிளாகவே வாழ்க்கை நடத்தியதோடுகூட நிறைய துஷ்ட சிக்ஷணமும் பண்ணினார். மத்ஸ்யத்திலிருந்து மற்ற அவதாரங்களெல்லாம் முக்யமாகப் பண்ணியதும் துஷ்ட சிக்ஷணம்தான். தன் ராஜ்யத்தில் துஷ்டர்களின் ஆட்சி ஏற்படாமல் ஒரு ராஜா சத்ரு ஸம்ஹாரம் செய்கிற மாதிரியே, த்ரிலோக ராஜாவாக இருக்கும் பரிபாலன மூர்த்தியான விஷ்ணு இந்த அவதாரங்களில் செய்திருக்கிறார். அதாவது க்ஷத்ரிய கார்யத்தைச் செய்திருக்கிறார். இதை வெளிப்படத் தெரிவிப்பதுபோலக் கடைசியான ராம-பலராம-க்ருஷ்ணாவதாரங்கள் மூன்றிலும் க்ஷத்ரியராகவே அவதாரம் செய்தார்.
இப்போது கலியிலே துஷ்ட சிக்ஷணமே முடியாது.

உபதேசந்தான் செய்வது என்பதாக அவதாரம் ஏற்படவிருந்தபோது, அதற்குப் பொருத்தமாக ஸாத்விக குணத்தோடு, ஆசார்யனாக இருந்துகொண்டு உபதேசிப்பதற்கே ஏற்பட்ட ப்ராம்மண ஜாதியில் அவதரிப்பதுதான் யுக்தமாயிருக்குமென்று திவ்ய ஸங்கல்பமாயிற்று.
க்ருஷ்ணர் கொடுத்த வாக்குறுதிப்படிதான் ஆசார்யாள் அவதரித்தது என்றாலும் அந்த அவதாரத்துக்கும் இதற்கும் வித்யாஸமாகப் பல பார்த்ததில் இதுவும் ஒன்று: அதிலே க்ஷத்ரிய தர்மத்தை முக்யமாகப் பண்ணிக் காட்டியது-இதிலே ப்ராஹ்மண தர்மம் ஒன்றை மட்டுமே பண்ணிக் காட்டியது. ஜனங்களில் அத்தனை லெவல்களில் இருக்கிறவர்களையும் அவரவருக்குப் பிடித்தமாதிரி செய்து காட்டி ஆகர்ஷித்தவர் க்ருஷ்ண பரமாத்மா. ஒரு திருடனாகட்டும், ஒரு காமுகனாகட்டும், ஒன்றும் தெரியாத இடைப் பசங்களாகட்டும்-அவர்கள் ஒவ்வொருத்தருங்கூட, 'அட, இவன் நம்மைச் சேர்ந்தவண்டா!' என்று நினைத்து வந்து ஒட்டிக்கொள்ளும்படியாக நவநீத சௌர்யம் (வெண்ணெய் திருடல்), ராஸக்ரீடை, மாடு மேய்ப்பது, எல்லாமும் பண்ணினார். ஞானாசார்ய ஸந்நியாஸியாக எடுக்கும் அவதாரத்தில் அந்த மாதிரியெல்லாம் நினைத்துக்கூடப் பார்க்கமுடியுமா? இந்த வித்யாஸங்களோடு அதிலே க்ஷத்ரிய தர்மம், இதிலே ப்ராஹ்மண தர்மம் என்று அநுஸரித்துக் காட்டியதும் சேர்கிறது.
ஒரே தர்ம ஸம்ஸ்தாபனமே உத்தேசமானாலும் ஸந்தர்ப்ப சூழ்நிலையைப் பொருத்து அவதாரத்துக்கு அவதாரம் எப்படி ஒரேயடியாக வித்யாஸமாயிருக்கிறது என்பதற்காகச் சொல்ல வந்தேன்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## விஷ்ணு அவதாரமும் சிவாவதாரமும்; சிவ-விஷ்ணு ஒற்றுமை வேற்றுமைகள்

க்ருஷ்ணாவதாரத்தைத் திரும்பத்திரும்பக் குறிப்பிட்டு, அவர்

சொன்ன கீதையையும் திரும்பத்திரும்ப quote பண்ணி, அதோடு ஆசார்யாள், ஆசார்யாள் என்று முடிச்சுப் போட்டால் ஒரு கேள்வி வரலாம்: "ஆசார்யாள் பரமசிவ அவதாரமென்றுதான் கேள்விபட்டிருக்கிறோம். க்ருஷ்ணர் மஹாவிஷ்ணுவின் அவதாரம். அப்படியிருக்க, அவர் அந்த மாதிரி பண்ணினார், இவர் இந்த மாதிரி பண்ணினார். ஆனாலும் அவர் கீதையில் சொன்ன வாக்குபடிதான் இவர் அவதரித்ததே; காலச் சூழ்நிலை மாறுபட்டதால் அவதார வாழ்க்கைமுறை மாறுபட்டாலும் கீதையில் சொன்ன அதே தர்ம ஸம்ஸ்தாபன நோக்கத்தைத்தான் பூர்த்தி பண்ணினார்" என்றால் எப்படி?"
அப்பா! சிவன், விஷ்ணு என்று முழுக்கவும் பேதப்பட்டு இரண்டு பேர் இல்லை. ஒரே பரமாத்மா போட்டுக் கொண்டுள்ள இரண்டு ரூபபேதங்கள்தான் அவர்கள்.
"ப்ரச்நோத்தர ரத்னமாலிகா"வை முடிக்கிற இடத்தில் ஆசார்யாள் ஒரு கேள்வி கேட்கிறார்:
"கச்ச பகவான்?" "பகவான் என்பது யார்?"
"மஹேச: சங்கரநாராயணாத்மைக:" என்று பதில் கொடுக்கிறார்.
வேதாந்தத்தில் ஈச்வரன் என்றும், ஈசன் என்றும் சொன்னால் சிவன் என்று அர்த்தமில்லை. ஜகத் வியவஹாரத்தையெல்லாம் நடத்திக் கொண்டிருக்கும் மஹா சக்தியான ஸகுண ப்ரமத்தைத்தான் 'ஈச்வரன்' என்று அங்கே சொல்வது. "மஹேச:" என்னும்போது மஹிமை வாய்ந்த ஈசனான அந்த ஸகுண ப்ரஹ்மம்தான் பகவான் என்று ஆசார்யாள் பதில் கொடுத்துவிடுகிறார். உடனே அடுத்த கேள்விக்குப் போய்விடவில்லை. "முக்யமாக நம் மதத்தில் சைவர், வைஷ்ணவர் என்று இரண்டு பிரிவு இருப்பதால், 'மஹேசன்' என்றால் அதோடு விடமாட்டார்கள். பகவான் 'யார்?' என்று கேட்ட மாதிரியே, 'மஹேசன் என்றால் யார்? சிவனா, விஷ்ணுவா?' என்று கேட்பார்கள்" என்று ஆசார்யாள் நினைத்து, அதற்கும் பதிலைச் சேர்த்துச் சொல்லிவிட்டார் :
"மஹேச: சங்கர-நாராயணாத்மைக:"சங்கர-நாராயண-ஆத்மா-ஏக :".
"சங்கரன், நாராயணன் இருவருக்கும் ஆத்மாவாக இருக்கப்பட்ட ஏக வஸ்து", அல்லது, "சங்கரன், நாராயணன் இருவராகவும் உள்ள ஆத்மா என்ற ஏக வஸ்து,"-அதுதான்

பகவான், அதுதான் மஹேசன்.
இருக்கிற அத்தனையும் ஒரே ஆத்மா அல்லது ப்ரம்மம்தான். அதுவே சிவன், அதுவே விஷ்ணு.
"அதுவே எல்லாமாய், எல்லாருமாய், நாமாகவுங்கூட இருக்கும்போது, இந்த இரண்டு பேரைக் குறிப்பாக ஏன் அப்படிச் சொன்னார்?"
அதுதான் நம் எல்லோருமாகவும்கூட இருப்பது என்பது வாஸ்தவந்தானப்பா! ஆனால் நம்மில் ஒருத்தருக்கொருத்தர் நாமேதான் மற்றவரும் என்று தெரிகிறதா? தெரிந்தால் இத்தனை போட்டி, அஸூயை, த்வேஷம் இருக்குமோ? நாம் ஆத்மாதான் என்பதாவது நமக்குத் தெரிகிறதா? ஈச்வரனும் (சிவனும்) மஹாவிஷ்ணுவும் இப்படியில்லை. அவர்களுக்குத் தாங்கள் ஆத்மாவான ப்ரஹ்மம்தான் என்று நன்றாகத் தெரியும். அதோடு ஈச்வரனுக்குத் தானே மஹாவிஷ்ணு என்று தெரியும். மஹா விஷ்ணுவுக்கும் தானே ஈச்வரன், அதாவது சிவன் என்று தெரியும்.

லோக நாடக தர்பாரில் ஒரே பரமாத்மா பல ரூபங்களை எடுத்துக்கொண்டு ஒவ்வொன்றும் ஒரு இலாகாவை நிர்வஹித்து விளையாடும்போது, மாயா ப்ரபஞ்சத்தை நடத்தி வைத்து ப்ரவ்ருத்தி தர்மத்தைப் பரிபாலிக்கும் சக்ரவர்த்தியாக மஹாவிஷ்ணுவும், ப்ரபஞ்சத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தை அருளும் நிவ்ருத்தி தர்ம மூர்த்தியாகப் பரமசிவனும் பொதுவில் இருப்பார்கள். சிவன் மோக்ஷம் தருவதில் இரண்டு வகை. ஒன்று-தகுதி பார்க்காமல் ஸகலருக்கும் ஸம்ஸார விடுதலை தருவது. ப்ரளயத்தில் அப்படித்தான் எல்லா ஜீவர்களுக்கும் ரெஸ்ட். ஆனால் இது சாச்வதமில்லை. மறு ஸ்ருஷ்டியில் அவர்கள் திரும்பவும் ஸம்ஸாரத்தில் பிறக்கத்தான் வேண்டும். இன்னொரு வகை தான் சாச்வத மோக்ஷம்: தகுதி பெற்றவர்களுக்கு மாத்திரம் ஞானத்தை அளித்து ஸம்ஸாரத்திலிருந்து விடுவிப்பது. பரமசிவன் இந்த இரண்டுவித மோக்ஷங்களையும் இரண்டு விதமான அவஸரங்களில் (கோலங்களில்) அருளுகிறார். தகுதியில்லாதவர்களுக்கு ஒரு ப்ரளயத்திற்கும் மறு ஸ்ருஷ்டிக்கும் இடையிலுள்ள அவ்வளவு நீண்ட காலம் ஸம்ஸார நீக்கம் தருவதுகூட கர்ம நியதிக்கும் நீதிக்கும் பொருந்தாத 'ஓவர்' - கருணைதான் என்பதால், அதைக் கொஞ்சம் ஈடுகட்டுவதற்காக அப்போது ஜீவர்களை பயமுறுத்துகிற மாதிரி ருத்ரன் என்ற பெயரில் ஸம்ஹார

மூர்த்தியாகி ப்ரளயம் என்று கோரமாகக் காட்டுகிறார். தகுதியுள்ளவர்களுக்குப் பரம சாந்தமாக ஞானாநுக்ரஹம் செய்து நித்ய மோக்ஷத்தில் சேர்க்கும்போது தக்ஷிணாமூர்த்தியாக சாந்தமான ஸௌம்ய ரூபத்தில் இருக்கிறார்.

பொதுவிலே இப்படி மஹாவிஷ்ணு-மாயா லோக நிர்வாஹம், பரமேச்வரன் - ஞான* ப்ரதானம் என்று தோன்றும்படியிரு ந்தாலும், பரமாத்மாவின் லீலையே "unity in diversity" (வேற்றுமையில் ஒற்றுமை) என்பதில் தான இருக்கிறது? அதனால் இரண்டும் ஒரே பரமாத்மா என்று காட்டும்படியாக அவ்வப்போது இந்த இரண்டு பேர்களும் தங்கள் இலாகாக்களைக் கொஞ்சம் பரஸ்பரப் பரிவர்த்தனையும் பண்ணிக்கொள்வார்கள்! தங்களுடைய ஐகீ பாவத்தை (ஒற்றுமையை) இப்படி விளையாடிக் காட்டுவார்கள். மோக்ஷ* எல்லா அவதாரங்களிலுமே மஹாவிஷ்ணு துஷ்ட ஸம்ஹாரம் பண்ணினார், அவர் கையால் ஸம்ஹாரமானவர்கள் மோக்ஷத்திற்கே போனார்கள் என்னும்போது அவர் பரமேச்வரனின் ருத்ர கார்யத்தைத்தானே பண்ணியிருக்கிறார்?

வேதம் சிவபரமாக ஸூக்தங்களையும் யஜ்ஞங்களையும் கொடுத்திருக்கிறது; விஷ்ணு பரமாகவும் அதே மாதிரி கொடுத்திருக்கிறது. இரண்டு பேருக்கும் ஒரே மாதிரி அடைமொழிகளைத்தான் கொடுத்து, பேதமேயில்லை என்று காட்டுகிறது. ஸ்ம்ருதிகளிலும் அப்படித்தான். புராணங்களைப் பார்க்கும்போதுதான் சைவமான புராணங்கள், வைஷ்ணவமான புராணங்கள் என்று இருப்பதில், பேதப்படுத்தி, 'இதுதான் ஒசத்தி; இல்லை, இன்றொன்றுதான் ஒசத்தி' என்று காட்டுவதாகத் தோன்றும். ஆனாலும் ஆதார சாஸ்த்ரங்கள் என்று 'அதாரிடி' பார்த்தோமானால் முதலில் ச்ருதி (வேதம்), அப்புறம் ஸ்ம்ருதி, அப்புறந்தான் புராணம் என்று வரும். அது மட்டுமில்லாமல் புராணங்களையேகூட ஆழ்ந்து பார்த்தால் ஒவ்வொன்றிலும் சில இடத்திலாவது, 'பேதமே கிடையாது, இரண்டும் ஒன்றுதான்' என்ற அபிப்ராயம் தத்வோபதேசமாக மட்டுமின்றி, நன்றாக மனஸில் தைக்கிற மாதிரி கதா ரூபமாகவேகூட விளக்கப்பட்டிருக்கும். அவரவர் மனஸுக்கு ஏற்றபடி இஷ்ட தெய்வமாக வரித்த மூர்த்தி ஒன்றிடமே சித்தம் சிதறாமல் ஒருமுகப்பட வேண்டுமென்றே ஒசத்தி-தாழ்த்தி

சொல்லியிருப்பதெல்லாம் என்று புரியும். ஆகையால் சிவ - விஷ்ணுக்களை ஒரேயடியாக பேதப்படுத்தி நினைப்பது ரொம்பத் தப்பு. பூர்ண வைதிகமாக ஆசார்யாள் மறுபடி ஸ்தாபித்த ஸ்மார்த்த ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு சிவ - விஷ்ணு பேதம் இருக்கவே கூடாது என்று தான் அவர் வைத்திருக்கிறார். ச்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள் காட்டுகிற அபேதத்தையே அவர்கள் பின்பற்ற வேண்டுமென்று வைத்திருக்கிறார்.

க்ருஷ்ணராக வந்தபோது அப்படித்தான், தாம் வேறில்லை, ஈச்வரன் வேறில்லை என்று அவர் ப்ரூவ் பண்ணிக் காட்டினார். மஹாவிஷ்ணுவின் அவதாரமானாலும், பரமேச்வரனுக்குரியதாகக் கருதப்படும் ஸம்ஹாரம், ஞானோபதேசம் இரண்டையும் நன்றாகச் செய்து காட்டினார். எல்லா அவதாரங்களிலுமே ஸம்ஹார மூர்த்தியாக இருந்திருக்கிறாரென்றாலும், இங்கே அந்த 'ஆஸ்பெக்ட்'டை நன்றாகவே 'அன்டர்-லைன்' பண்ணிக் காட்டினார்.
அர்ஜுனனுக்கு விச்வரூப தர்சனம் கொடுக்கும்போது, "திவ்யம் ததாமி தே சக்ஷு :, பச்ய மே யோகம்-ஐச்வரம்" -"உனக்கு தெய்விகமான பார்வை கொடுக்கிறேன். அதைக்கொண்டு, ஈச்வரனுக்குரியதான யோக சக்தியை என்னிடத்தில் பார்" என்கிறார்.
இங்கே 'ஈச்வரன்' என்னும்போது வேதாந்தம் சொல்லும் ஸகுண ப்ரம்மத்தைச் சொன்னாரா? அல்லது, வ்யவஹாரத்தில் பரமசிவனையே 'ஈச்வரன்' என்று சொல்லும் அர்த்தத்தில் சொன்னாரா?
வெகு காலமாக உலக வழக்கம் பரமசிவனையே ஈச்வரன் என்று சொல்வதாகத்தான் இருந்து வந்திருக்கிறது. (அகராதியான) 'அமர கோச'த்திலேயே சிவனுடைய பெயர்களைச் சொல்லும்போதுதான், "ஈச்வர: சர்வ ஈசாந:" என்று இருக்கிறது. காளிதாஸனுடைய வாக்கு உத்தமமான வியவஹாரம். அவர் 'ரகுவம்ச'த்தில்,
"ஹரிர்-யதைக: புருஷோத்தம ஸ்ம்ருத:
மஹேச்வரஸ்-த்ர்யம்பக ஏவ நாபர:"
-"எப்படி விஷ்ணு ஒருத்தரே புருஷோத்தமன் என்றும் த்ரிநேத்ரரான சிவன் ஒருத்தரே மஹேச்வரன் என்றும் கருதப்படுகிறார்களோ, அப்படி..." என்று ஏதோ ஒரு விஷயத்தைச் சொல்லிக்கொண்டு போகிறார். பரமசிவனைப் புருஷோத்தமன் என்று சொல்லும் வழக்கமே கிடையாது.

'புருஷ உத்தமன்' தான் 'பெரும் ஆள்'-'பெருமாள்' என்று ஆனது. பெருமாள் கோவில் என்றால் விஷ்ணு ஆலயம் தானே? சிவனுடையதில்லையே? அப்படியே, ஈச்வரன் கோவில் என்றால்...?
இப்படி 'அமரகோசம்', மஹாகவியின் வாக்கு, லோக வ்யவஹாரம் மூன்றிலும் ஈச்வர சப்தத்தால் குறிக்கப்படும் சிவனை க்ருஷ்ண பரமாத்மா சொன்னாரா, அல்லது வேதாந்த பரிபாஷைப்படி ஸகுண ப்ரம்மத்தைச் சொன்னாரா என்று கேட்டால், இந்த இடத்திலே சிவனைச் சொன்னதாகத்தான் அடுத்தாற்போல் நடப்பதிலிருந்து தெரிகிறது.
அடுத்தாற்போல் என்ன நடக்கிறது? பகவான் விச்வரூபம் காட்டுகிறார். ஆனால் மாயா மோஹனனாக ஜகத் பரிபாலனம் பண்ணி விளையாடும் மஹாவிஷ்ணுவாகவா அந்த விச்வரூபத்தில் அவர் (தம்மைக்) காட்டினார்? இல்லை. ப்ரளய கால ருத்ரனாகத்தான் காட்டினார்! அவரே, "காலோ (அ)ஸ்மி லோக-க்ஷய-க்ருத் ப்ரவ்ருத்த : -"உலகை அழிக்கும் மஹாபலம் கொண்ட காலனாக இருக்கிறேன்" என்கிறார்! கால காலனான பரமசிவனுக்கே மஹா காலன் என்று பெயர். உஜ்ஜயினியில் அந்தப் பெயரில்தான் ஜ்யோதிர்லிங்கமாயிருக்கிறார்.
பரம லாவண்ய மூர்த்தியாக வேணுகானம் பண்ணுபவனை இந்த உக்ரரூபத்தில் பார்க்கவே அர்ஜுனனுக்குக் குலை நடுங்குகிறது! ஸம்ஹார மூர்த்தியாக, ஆகாசத்துக்கும் பூமிக்குமாக விச்வரூப தர்சனம் தந்தால்? அர்ஜுனன் "ஐயோ, அப்பா!" என்று அலறிப் புடைத்துக் கொண்டு, "இந்த உன்னுடைய உக்ரரூபத்தைப் பார்த்து த்ரிலோகமும் நடுங்குகிறது. ததா (அ)ஹம்: நானும் அப்படியே! அக்னிஜ்வாலை வீசும் உன் கண்ணைப்பார்த்தால், காப்ராவில் என் தைர்யம் போன இடம் தெரியவில்லை! உன் கோரைப்பல்லையும், ப்ரளயாக்னி வீசும் வாயையும் பார்த்தால் எனக்கு திக்குத் திசையே புரியவில்லை!

இங்கே (போர்க்களத்தில்) கூடியிருக்கிற அத்தனை ராஜாக்களும், கௌரவ ஸமூஹமும், பீஷ்ம த்ரோணாதிகளும், கர்ணனும், நம்படைகள் உள்பட எல்லாரும் நீ பயங்கரமாகத் திறந்து கொண்டிருக்கும் வாய்க்குள் போய் அரைபட்டு, உன் பல்லுக்கு நடுவில் சூரணமாக ஈஷிக்கொண்டிருக்கிறார்களே!" என்றிப்படி விலவிலத்துப்போய் பெரிய ஸம்ஹாரமூர்த்தியாகத்தான்

அந்த விச்வரூபத்தை வர்ணிக்கிறான்.
பூமாதேவி துஷ்ட அரசர்களின் பாபத்தைத் தாங்க முடியாமல் முறையிட்டதன் பேரில்தான் க்ருஷ்ணாவதாரமானது பூபாரம் தீர்ப்பதான ஸம்ஹார உத்தேசத்துடன் ஏற்பட்டது. 'விநாசாய ச துஷ்க்ருதாம்' என்று ருத்ரனின் ஸம்ஹார க்ருத்யம் மற்ற அவதாரங்களிலும் நடந்தது தானென்றாலும், க்ருஷ்ணாவதாரத்திலேயே அது ஒரு நீண்ட ஆயுஸுக்காலத்தில் ஆரம்பத்திலிருந்து ஏறக்குறைய கடைசிவரை நெடுக நடந்தது. மத்ஸ்ய, வராஹ, நரஸிம்ஹ அவதாரங்களில் சட்டென்று ஒரு ஸந்தர்பத்தில் ஆவிர்பாவம், ஒரு அஸுரனை அல்லது அஸுரக் கூட்டத்தை வதம் செய்வது என்பதோடு ஸரி. கூர்மம் அமிருதம் கடைந்த காலத்தில் மத்தாக இருந்த மந்தர மலையைத் தாங்கியதோடு ஸரி. வாமனாவதாரம் ப்ரம்மசாரியாக சில வருஷங்கள் லோகத்திலிருந்து, மஹாபலிக்கு ஸம்ஹாரம் என்று சொல்ல முடியாத பரமானுக்ரஹமாகப் பண்ணியே அவனிடமிருந்து பூலோக, ஸ்வர்க லோகங்களை மீட்டது. பரசுராமர் ரொம்பவும் நீண்டகாலம், 21 தலைமுறை துஷ்டராஜாக்களை ஸம்ஹாரம் செய்தாலும் தனியாட்களைத்தான் கொன்றாரே தவிர ஸேனை ஸேனையாக வதம் செய்யவில்லை. ராமர் முதலில் பால்யத்தில் ஸுபாஹு மாரீசரோடு ஒரு சின்ன ராக்ஷஸ கோஷ்டி, அப்புறம் பல வருஷத்திற்கு அப்புறம் தண்டகாரண்யத்தில் விராதன், பிறகு 14,000 கர, தூஷணாதி ராக்ஷஸர்கள், அதற்கப்புறம் மிகப் பெரிய ராவண ஸைன்யம் என்று நாலைந்து ஸந்தர்ப்பங்களில்தான் ஸம்ஹாரம் செய்தார். நடுவில் கபந்தன், வாலி மாதிரியான தனி ஆஸாமிகளின் வதமும் நடந்தது. பிற்பாடு லவணாஸுரவதம் சத்க்ருனனால் நடந்தது. க்ருஷ்ணர்தான் பிறந்தவுடன் பூதனையில் ஆரம்பித்து, அப்புறம் சகடாஸுரன், த்ருணாவர்த்தன், பகாஸுரன் என்று கம்ஸன் வரையில் போய் ஒரு பட்டாளத்தை பால்யத்திலேயே ஸம்ஹரித்து விட்டு, அப்புறம் எழுபது எண்பது வருஷம் ஒன்று மாற்றி இன்னொன்று என்று-ஜராஸந்தனின் பெரிய ஸேனையைத் திரும்பத் திரும்ப அழித்து, காலயவனன் போன்றவர்களையும் மறைமுகமாகக் கொன்று, அப்புறம் ருக்மிணி விவாஹத்தில் மச்சினன்மார்களுடனேயே சண்டை (கொல்லவில்லை), நரகாஸுரனுடன் யுத்தம், பாண்டவர்களைக்

கருவியாகக்கொண்டு மிகப் பெரிய மஹாபாரத யுத்தம், தாத்தாவான பிறகுகூட பேரன் அநிருத்தனை ஜெயிலில் வைத்த பாணாஸுரனுடன் யுத்தம் என்று விடாமல் பண்ணி ருத்ர பாவத்தை நன்றாகக் காட்டினார். அவரே ஸபஷ்டமாக,
காலோஸ்மி லோக க்ஷயக்ருத் ப்ரவ்ருத்த : *
லோகாந் ஸமாஹர்த்தும் இஹ ப்ரவ்ருத்த :**
"நான் லோகத்தை அழிக்கும் பலவானான காலனாக இருக்கிறேன். லோகங்களை ஸம்ஹரிக்கவே இங்கே வந்திருக்கிறேன்" என்று சொல்லியிருக்கிறார்.
இது மிகைப்படுத்திச் சொன்னதுதான். வாஸ்தவத்தில் அவர் லோகம் முழுதையும் ஸம்ஹாரம் செய்து விடவில்லை. அவதாரத்தை முடித்தபோது லக்ஷோபலக்ஷம் கௌரவ-பாண்டவர்கள், செத்துப்போய், யது வம்சமும் அழிந்து போயிருந்தாலும் அப்போதும் நிறைய ப்ரஜைகள் பாக்கியிருக்கத்தான் செய்தார்கள். அவர்கள் மேல்தான் பரீக்ஷித்து ஆட்சி செலுத்தினான். ஏன் மிகையாகச் சொன்னாரென்றால், ......இவரே தேரை ஓட்டிக்கொண்டு வந்து அர்ஜுனனை யுத்த பூமியில் நிறுத்தியிக்கும்போது அவன், 'யுத்தமா பண்ணுவதா?' என்று முரண்டு பண்ணுகிறேன். 'டேய், நீ இல்லாவிட்டாலும் நானே தீர்த்துக் கட்டி விடுவேண்டா! அதுதான் என் ஸங்கல்பம்.

உனக்கு வெற்றி வீரன் என்று யசஸ் சேர்க்கணுமென்றே போனால் போகிறதென்று உன்னை எனக்குக் கருவியாக 'சூஸ்' பண்ணினேன்' என்று பகவான் அவனுக்குச் சொல்ல வருகிறார். அது அவனுக்கு நன்றாக மனஸில் தைக்கணுமானால் இப்படி மிகைப்படுத்தித்தான் சொல்லணு ம்.......ஒரு ஸத்கார்யம், ஆயிரம் ரூபாய் வேண்டியிருக்கிறது, நாமே போட்டுப் பண்ணிவிடலாம். ஆனாலும் நாலுபேருக்குப் புண்யம் வரட்டுமே என்று நினைத்து ஒருத்தனிடம் போய்க் கேட்கிறோம். அவன் மூக்கால் அழுகிறான். அப்போது, "அடேய் உன் ஸஹாயமில்லாமல் நானே லக்ஷரூபாய் போட்டுப் பண்ணிவிட முடியும்டா" என்று,-நமக்கு வேண்டியது ஆயிரம்தான், நம்மால் முடிந்ததும் அவ்வளவுதான் என்றாலும்கூட-அதை ஒரே தூக்காக லக்ஷம் என்று தூக்கித்தானே சொல்வோம்? அப்படித்தான், துஷ்ட ஜன ஸம்ஹாரத்திற்கு மட்டுமே வந்த பகவான் ஸர்வ லோகத்தையுமே ஸம்ஹரிக்க வந்ததாகச் சொன்னார்! அப்படிச் சொல்லும்போதே இப்படி ஸர்வலோக

ஸம்ஹாரம் செய்வது ப்ரளய கால ருத்ரனே ஆனதால், தானும் அவனும் ஒன்றுதான் என்று தெரிவித்துவிட்டார்! ஒரு பரமாத்மாதான்-சிவன், விஷ்ணு என்று இரண்டு ரூபத்தில் இரண்டு பேருக்கும் தாங்கள் பரமாத்மா என்று தெரியும். அதோடு ஈச்வரனுக்குத் தானே விஷ்ணுவென்றும், விஷ்ணுவுக்குத் தானே ஈச்வரனென்றும் தெரியும். கீதையில் அப்படித்தான், 'யோகம் ஐச்வரம்' என்று ஈச்வரனுக்குரியதான யோகத்தைத் தாம் காட்டுவதாகச்சொல்லி ஸம்ஹார க்ருத்யத்தைக் காட்டினார். ஆனால் லோக வ்யவஹாரம் என்பதைப் பல தேவதைகள் அவரவருக்கென்று ஒரு பொறுப்புடன் நடத்துவது போலவே விளையாட வேண்டும். ராஜாங்க அதிகாரிகள் இன்னார் இன்ன இலாகா என்று கார்யம் செய்வதுபோல தேவதைகளுக்கு ஒழுங்காக வகுத்துக் கொடுத்து விளையாட்டை நடத்தவேண்டும் என்பதுதான் ஏக பரமாத்மா பல ரூபம் போட்டுக்கொண்டதற்குக் காரணம். இதில் மஹாவிஷ்ணு, ஈச்வரன் என்று இரண்டு ரூபம் எடுத்துக் கொண்டு ஒன்றில் சக்ரவர்த்தியாயிருந்து லோக நிர்வாஹம் செய்வது, இன்னொன்றில் யோகியாயிருந்து லோகத்திலிருந்து ஜீவர்களை விடுவிப்பது என்று விளையாட்டுப் பண்ணுகிறார். இது நிரந்தர விடுதலை.

முன்னேயே சொன்னாற்போல, விடுவிப்பதில் இரண்டு தினுஸு. நிரந்தரமாக விடுவிப்பது ஒன்று. அது ஞானத்தினாலேயே நடப்பது. அதைச் செய்வதற்காக ஞான ஸ்வரூபமான தக்ஷிணாமூர்த்தி யோகியாயிருக்கிறார். இன்னொன்று, தாற்காலிகமாக விடுவிப்பது. ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெற லாயக்கே இல்லாதவர்களுக்கும், 'ஐயோ, பாவம்!' என்று தாற்காலிகமாக ஓய்வு தருவது. அதுதான் ப்ரளயம். 'ப்ரளயம்' என்ற வார்த்தையைக் கேட்டால் பயங்கரமாக இருந்தாலும் அதற்கு நிஜ அர்த்தம், 'நன்றாகப் பரமாத்மாவின் அமைதியில் லயித்துப் போவது' என்பதே. ப்ர-லயம்: 'ப்ர', நன்றாக; 'லயம்', லயிப்பது. 'ஸம்ஹாரம்' என்று கோர க்ருத்யமாகத் தெரிவதற்கும் அர்த்தம், ஸ்ருஷ்டியில் வெளிவந்ததை ஆதியிலிருந்த அமைதி நிலைக்கே பழையபடி இழுத்துச் சேர்த்துவைப்பது என்பதுதான். ஆனால் இது நிரந்தரமான முக்தியில்லை. முக்தியில் பரமாத்மாவுடன் ஜீவாத்மா மறுபடி பிரிக்கமுடியாமல் ஒன்றாகப் போய்விடும். லயிப்பது

என்றாலோ லயம் கலைந்தபிறகு அடுத்த ஸ்ருஷ்டியில் ஸம்ஸாரத்துக்கு வரவேண்டியதுதான் என்று அர்த்தம். ஆனாலும் அத்தனை காலமாவது, லாயக்கே இல்லாத ஜீவனுக்கும் ஈச்வரன் ருத்ரனாக இருந்து வாழ்க்கையின் ஓயாத சஞ்சலங்களிலிருந்து ஓய்வு தருகிறான். சித்த சுத்தியோடு கர்மாக்களைக் கழித்துக்கொண்டு ஞான மார்க்கத்தில் செல்பவர்களுக்கு தக்ஷிணாமூர்த்தி ரூபத்தில் குருவாக வந்து பரம சாந்தனாகவும் பரம ஹிதமாகவும் ஸம்ஸார விடுதலை தரும் போதோ அவர்களுடைய தகுதிக்கு ஏற்ற வெகுமதியாக நிரந்தர முக்தியாகவே தருகிறான்.

தகுதியில்லாதவர்களுக்கும் தாற்காலிக முக்தி தரும்போது அப்படி சாந்தமாக, ஹிதமாகப் பண்ணலாமா? அப்போது 'எப்படி வேண்டுமானால் இருந்துவிட்டுப் போகலாம்' என்று ஜனங்களுக்குக் குளிர்விட்டுப் போய்விடுமல்லவா? அதனால்தான் சாந்த ஸ்வரூபியாகப்போய் ப்ரளயத்தை உண்டுபண்ணாமல் ருத்ரனாக பயங்கர ஊழித்தாண்டவம் செய்து கார்யத்தை முடிக்கிறான். பயமுறுத்தி, கஷ்டப்படுத்தி, ஆனாலும் பெரிய சாந்த நிலையில் கொண்டுபோய்ச் சேர்க்கிறான். இது இருக்கட்டும்.
இவரிவருக்கு இன்ன கார்யம் என்று தேவதைகளுக்கிடையே பரமாத்மா வைத்திருக்கிறான் என்றேன். ஒருத்தர் டிபார்ட்மென்டில் இன்னொருத்தர் தலையிட்டால் ஒழுங்கு போய்விடும். ஆனாலும் எல்லாதேவதைகளும் முடிவில் ஒன்று தான் என்ற அபேத பாவமும் உலகத்திலிருக்கவேண்டும். இல்லாவிட்டால், "என்னுது, உன்னுது" என்று (தெய்வ பேதம் செய்து) கட்சி கட்டிக்கொண்டு ஒரே சண்டையாகத் தான் ஜனங்கள் நிற்பார்கள். ஆனால் பரமாத்மாவின் ஏற்பாட்டில் எப்படியிருக்கிறதென்றால், ஈச்வரன் (சிவன்), விஷ்ணு, அம்பாள் போன்ற முக்ய தேவதைகள் தங்களுக்குள் அபேதத்தைக் காட்டுவதாக எந்தப் பொறுப்பையும் ஏற்று, எந்த டிபார்ட்மென்டையும் நடத்தலாம் என்றிருக்கிறது. சின்ன தேவதைகள் இப்படிச் செய்யமுடியாது. முக்ய தேவதைகளும் ஒரொரு ஸமயத்தில் ஓரளவுக்குத்தான் இலாகாக்களை மாற்றிக்கொண்டு பண்ணுவது. ஒரேயடியாக மாற்றிக் கொள்வதில்லை.
க்ருஷ்ணருக்கு முற்பட்ட அவதாரங்களில், சட்டென்று

கொஞ்ச நாழிக்கு மட்டும் ஒரு ஆவிர்பாவம் பண்ணியோ, அல்லது சில வருஷமோ பல வருஷமோ பூலோகத்தில் மநுஷன் மாதிரி வாஸம் பண்ணியோ தப்புக் கூட்டங்களை அழித்து, வேத தர்மத்தை விளங்கும்படிச் செய்வது என்றிருந்தது. அதாவது ஒரு ராஜா சத்ருக்களை வதம் பண்ணி தர்ம மார்க்கத்தில் ராஜ்யபாரம் செய்வதுபோல அவை இருந்தன. இதனால் லோக பரிபாலனத்தில் ராஜாவாக உள்ள மஹாவிஷ்ணுவே அவதாரங்கள் எடுத்து க்ஷத்ரிய தர்மப்படி யுத்தம் செய்வது, பரிபாலிப்பது என்று பண்ணினார். யுத்தத்தில் ஈச்வரனின் ஸம்ஹார அம்சத்தை எடுத்துக்கொண்டார். க்ருஷ்ணாவதாரத்தில், நாம் பார்த்தபடி, ஈச்வர ஸ்வபாவத்தை ஸம்ஹார விஷயத்தில் வெளிப்படையாகவே சொல்லி எடுத்துக்கொண்டார். அதோடு ஈச்வரனின் இன்னொரு கார்யமான ஞானோபதேசத்தையும் அந்த அவதாரத்தின் கடைசி பாகத்தில் செய்தார்.
அதற்கு முற்பட்ட அவதாரங்களில் ஞானோபதேசம் இல்லை. அதைச் செய்ய அக்காலங்களிலிருந்த ஞானிகளும் மஹான்களுமே போதுமாக இருந்தது. இவர்கள்கூடத் தாங்களே ஜனங்களைத் தேடிப்போய் மல்லுக் கொடுத்து உபதேசிக்க அதிகத் தேவையில்லை; அவதாரத்தினால் துஷ்ட ஸம்ஹாரம் ஆன பிற்பாடு, ஜனங்கள் தாங்களாகவே பழையபடி தர்ம வழிகளில் போவதாகவும், மஹான்களைத் தாங்களே அதிகமாகத் தேடிப்போய் உபதேசம் வாங்கிக்கொள்வதாகவும் இருந்துவந்தது.
க்ருஷ்ணாவதார காலத்தில் அஸுரர்கள் மநுஷ்ரூபமான அரசர்களுக்குள் நன்றாகக் குடிகொண்டபோது, பொது ஜனங்களின் அறிவிலும் கொஞ்சம் புகுந்தனர். கலி மாதிரி ஒரேயடியாக இல்லை, கொஞ்சம்தான். ஆனாலும் கொஞ்சமாவது இப்படி ஏற்படத்தான் செய்தது. அதனால்தான் அர்ஜுனன் மாதிரியான ஒரு உத்தம புருஷன்கூட, முக்யமான ஒரு ஸந்தர்பத்தில் தர்மாதர்ம விவேகம் கலகலத்துப்போய், ஸ்வதர்மத்தை மறந்து, 'நான் யுத்தம் பண்ணமாட்டேன்' என்று சொல்லித் தனக்கு ஸாதகமாகத் தப்பான கொள்கைகளுக்கு உயர்ந்த ஃபிலாஸஃபி மாதிரி ரூபம் கொடுத்துச் சொன்னது. இதனாலேயே, அவதாரமாக வந்தவர் ஞானோபதேசமும் பண்ணவேண்டி வந்தது.

ஆனாலும்-பரிபாலனத்தைக் கடமையாகக் கொண்ட ஒரு

சக்ரவர்த்தி அதன் பொருட்டே துஷ்ட சிக்ஷணம் பண்ண வேண்டும் என்றிருப்பதால், மஹாவிஷ்ணுவான சக்ரவர்த்தி ஈசவரனின் ஸம்ஹார க்ருத்யத்தை மேற்கொள்வதுபோல ஞானோபதேசத்தையும் மேற்கொள்வதற்கு நியாயம் சொல்ல முடியாது. சக்ரவர்த்திக்கு ஞானோபதேசப் பொறுப்பு கொடுக்கப்படவில்லை...

அடியோடு கொடுக்கவில்லை என்று நினைத்துவிடக் கூடாது. ஜனங்களை 'விநயம்' உள்ளவர்களாக, அதாவது பண்பாளர்கள் என்னும்படியாக ஆக்கவேண்டியதும் ராஜாவின் ஒரு கடமைதான். ஜனங்களுக்கு ஆபத்து ஏற்படாமல் காப்பதான "ரக்ஷணம்", அவர்கள் வாழ்க்கை நடத்துவதற்கு வசதிகள் செய்து கொடுப்பதான "பரணம்" என்ற இரண்டிற்கும் முந்தியே ராஜாவின் முதல் கடமையாக அவர்களுக்கு 'விநய ஆதானம்' செய்யவேண்டும்-அதாவது அவர்களுக்கு நற்பண்புகளை ஊட்டவேண்டும்-என்று காளிதாஸன் சொல்லியிருக்கிறார். இதில் ஞானோபதேசமும் கொஞ்சம் வந்துவிடும்தான். ஆனாலுங்கூட ராஜாவே இந்த 'விநயாதான'த்தை, அதிலும் குறிப்பாக ஞானோபதேசத்தைச் செய்ய வேண்டுமென்று இல்லை. ஸத்துக்களை, நல்ல ஆசார்யர்களை, ரிஷிகளை, ஞானிகளை ராஜாவானவன் நன்றாக ஆதரித்து பஹுமானித்து வைத்துக்கொண்டு, அவர்கள் மூலமே ஜனங்களின் ஆத்ம ச்ரேயஸுக்கான விஷயங்களை வளர்த்துக் கொடுக்கவேண்டுமென்றுதான் சாஸ்த்ரங்கள் காட்டுகின்றன.

அத்யாவச்யத்தில் சக்ரவர்த்திகளும் உபதேசிக்கலாம் என்றாலும் அதைத் தன்னுடைய முக்யமான நோக்கமாக அவர்கள் வைத்துக்கொள்ள முடியாது. புராணங்களில் அநேக ராஜாக்கள் ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தில் உபதேசம் செய்வதைப் பார்க்கிறோம். துஷ்டர்கள்கூட உபதேசிப்பார்கள். "அஸுர வேதாந்தம்" என்றே அதைச் சொல்வது! ஆனாலும் க்ஷத்ரிய தர்மம், ராஜாவின் கடமை என்னவென்றால் லோகத்தில் தர்ம பரிபாலனமே தவிர, லோகத்தை விட்டுப் போகும் ஞானத்தில் உபதேசம் அல்ல. அது ப்ராம்மண தர்மமாக வைக்கப்பட்ட கார்யம். யோகிகளுக்கும் ஞானிகளுக்குமே அதில் முக்யமாக அதிகாரம்.

க்ஷத்ரிய தர்மத்தை மேற்கொண்ட லோகத்தில் தர்ம ஸம்ஸ்தாபனம் நடக்கவேண்டியிருந்த காலத்தில் பரமாத்மா

அதை லோக பரிபாலக சக்ரவர்த்தியாக இருக்கப்பட்ட மஹாவிஷ்ணுவின் அவதாரங்களாலேயே நடத்திவைத்தார். ராமர் க்ஷத்ரியராகப் பிறந்தார். அதே ஸமயம் பரம ஸாத்விகராக இருந்தார். பரசுராமர் ப்ராம்மணராகப் பிறந்தாலும் ஸாத்விகமாக இல்லாமல் க்ஷாத்ரமான (க்ஷத்ரியருக்குரிய)ரஜஸுடனே இருந்தார். இருவரும் அதர்ம சக்திகளை ஒவ்வொரு விதத்தில் அழித்து, உலகில் தர்மம் நிற்கும்படிச் செய்தார்கள். வாமனர் ப்ராம்மணரானாலும் தானம், யாசகம் என்று மறைமுகமாக விளையாடி, அஸுரனின் தலையில் காலை வைத்து அழுத்துவதாகக் காட்டியே அவனுக்குப் பரமானுக்ரஹம் பண்ணி ஒரே விசித்ரமாக முடித்து விட்டதால் அவரைப்பற்றி ஒன்றுமே சொல்ல முடியாமலிருக்கிறது! மஹாபலியும் மற்ற அஸுரர்கள் மாதிரியில்லாமல் அநேக உயர்ந்த குணங்களைப் பெற்றிருந்ததால் இந்தக் கதையே ஒரு மாறுதலாயிருக்கிறது. ஆனாலும் யோசித்துப் பார்த்தால், அவனுக்கு அஸுரர்களுக்கு உரியதான கீழ் லோகத்தில் மட்டுமே ஆதிக்யம் என்று அவன் தலையில் பகவான் கால் வைத்து அழுத்தி அனுப்பிவிட்டதால், இங்கேயும் லோக வியவஸ்தைகளை அமல் செய்யும் க்ஷத்ரிய ராஜ தர்மத்தைத்தான் அவர் மற்ற அவதாரங்களில் செய்தாற் போலவே செய்திருக்கிறாரென்று தெரிகிறது.

மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹ என்று 'ம்' போட்டு-வாமனர், பரசுராமர், ராமர் என்பது போலில்லாமல், 'ம்' போட்டு-சொல்வதிலிருந்தே அந்த அவதாரங்களுக்கு ஜாதி சொல்லமுடியாதென்று தெரிகிறது! என்றாலும் க்ஷத்ரிய தர்மத்தைத்தான் அவையும் அவலம்பித்திருக்கின்றன. அதர்ம சக்தியான அஸுரரை அடக்கி அதன் வழியாகவே தர்ம பரிபாலனம் நடக்கத்தான் அந்த அவதாரங்களும் ஏற்பட்டன. (அஸுரர்களுக்கு எதிரான தேவர்கள் அம்ருதம் பெற்று பலசாலிகளாகவும், மரணமில்லாதவர்களாகவும் ஆவதற்கு ஸஹாயம் செய்ய ஏற்பட்டதுதான் கூர்மாவதாரம்.) பலராமாவதாரம் க்ருஷ்ணாவதாரத்துடனேயே ஒட்டிக்கொண்டு போய்விடுகிறது. தம்பிக்கு வித்யாஸமாக அண்ணா போவதுகூட முடிவில் தம்பிக்கு மேலும் பெருமை சேர்ப்பதாகவே இருக்கும். அல்லது, நல்லது என்பது உள்பட எதுவானாலும் இந்த த்வைத ப்ரபஞ்சத்தில் 'ரிலேடிவ்' தான் என்றிருப்பதில், தம்பி ஒரு கோணத்தின் ந்யாயத்தைக்

காட்டினாரென்றால் அண்ணா இன்னொன்றின் ந்யாயத்தைக் காட்டினார் என்று சொல்லலாம். அவரும் (பலராமரும்) மொத்தத்தில் துஷ்ட சிக்ஷணத்தின் மூலம் சிஷ்டரக்ஷணம் என்ற க்ஷத்ரிய தர்மத்தைத்தான் நடத்தினார்.
க்ருஷ்ணர்தான் அதோடுகூட ப்ராஹ்மண தர்மமான ஞானோபதேசத்தையும் செய்தார். ஜீவிதத்தின் கடைசி பாகத்தில் அதற்கு அவச்யமேற்பட்டதால் செய்தார்.
அப்புறம், இப்போது, கலியில் துஷ்ட சிக்ஷணம் செய்வதற்கேயில்லை என்பதாக அஸுர சக்திகள் ஸர்வஜன வியாபகமாகியிருந்தன. ஆனபடியால் இப்போது அவதார கார்யம் பரம ஸாத்விகமான உபதேசம்தான்; அது ஆயுள் காலம்பூரா நடக்கவேண்டும் என்றாகியிருந்தது. ஆனபடியால் ப்ராம்மண தர்மத்தை மேற்கொண்ட ஞானியாகவே இப்போது அவதாரம் ஏற்படவேண்டியிருந்தது. இந்த அவதாரமும் மஹாவிஷ்ணுவின் அவதாரமாக இருக்கலாமா? சிவனுடைய ஸம்ஹாரத்தை அவர் மேற்கொண்டது க்ஷத்ரிய தர்மத்துக்கு முற்றிலும் உகந்ததே என்று பார்த்தோம். அந்த மாதிரி ஞானோபதேசத்தை மேற்கொண்டு பூர்ணமான ஞானாவதாரமும் அவரே எடுப்பதைச் சொல்லமுடியுமா? மஹாவிஷ்ணுவும் பரிபூர்ண ஞான ஸ்வரூபிதான். அதில் கொஞ்சங்கூட ஸந்தேஹமில்லை. அவர் ஞானாவதாரம் பண்ணினால் ஈச்வரனும், "ஏனையா, என் டிபார்ட்மென்டில் குறுக்கிடுகிறீர்?" என்று சண்டைக்கு வரப்போவதில்லை. ஸந்தோஷமாகப் பார்த்துக்கொண்டே, தாமும் ஸஹாயம் செய்ய வருவார். ஒருத்தர் ரிஷிபத்னிகளை மயக்க பிக்ஷாண்டியாகப் போனால், அவருக்கு ஸஹாயமாக அவரோடு கூடவே மற்றவர் ரிஷிகளை மயக்குவதற்கு மோஹினியாகப் போனதுபோலவே, மயக்கத்தைத் தீர்த்து ஞானம் தருவதிலும் இவருக்கு ஸஹாயமாக வர ஈச்வரன் தயாராகத்தான் இருப்பார். (அந்தக் கதையில் மயக்கியதும் ஞானம் தருவதில்தான் முடிந்தது.) ஈச்வரனுக்கும், விஷ்ணுவுக்கும் அவ்வளவு ஒற்றுமை.
ஆனாலும் விஷ்ணுவுக்கேதான் ஈச்வரனுடைய ஸம்ஹார க்ருத்யத்தைத் தாம் மேற்கொள்ளுகிற அளவுக்கு அவருடைய ஞானோபதேசத்தையும் தாமே மேற்கொள்ளுவதா என்று! ஞானோபதேசப் பெருமை, 'க்ரெடிட்' ஈச்வரனுக்கே இருக்க வேண்டுமென்று! அவச்யம் நேரிட்டபோது அவரும் சிவ ஸாம்யத்தைக் காட்டுகிறமாதிரி

ஞானியாக தத்தர், ரிஷபர், நர-நாராயணர், வ்யாஸர் முதலியவர்களாக வந்து உபதேசித்த போதிலும் இவர்களை தசாவதாரம்போல அவ்வளவு சக்தி வாய்ந்தவர்களாக, ஜகத் ப்ரஸித்தமாகக் காட்டாமல் அடக்கியே காட்டினார் 'ஞானாந ந்தமயம்' என்னும்படி ஹயக்ரீவர் என்ற ரூபம் எடுத்துக்கொண்டபோதும் அவருடைய பெருமை ஸாதனா மார்க்கத்தில் போகிறவர்களுக்கு மட்டுமே தெரியும்படி வைத்துக்கொண்டார். அதோடு அவரைப் பத்னி ஸமேதராக 'லக்ஷ்மி ஹயக்ரீவர்' என்றே சொல்கிறதாக வழக்கமிருக்கிறது.

பொதுவாகவே லோக வழக்கில்கூட 'சிவஞானம்', 'சிவயோகம்' என்று சொல்வதுபோல 'விஷ்ணு ஞானம்', 'விஷ்ணு யோகம்' என்றில்லாமல், 'விஷ்ணு மாயை' என்றே சொல்லும்படியாக, தம்மை 'மாயாவி' என்றும் 'லீலாவிநோதன்' என்றும் சொல்லும்படியாகவே (மஹாவிஷ்ணு) வைத்துக்கொண்டிருக்கிறார்.

ஆகையால் இப்போது தர்மத்துக்குப் பெரிய ஹானியும் அதர்மத்துக்குப் பெரிய எழுச்சியும் ஏற்பட்டிருந்தபோது கீதா வாக்யப்படி அவதாரம் எடுத்துத்தான் ஆகணும் என்றும், ஆனால் அது க்ஷத்ர தர்மப்படியில்லாமல், துஷ்ட சிக்ஷணமேயில்லாத, ஸாத்விகமான ஞானோபதேசத்திற்கே ஏற்பட வேண்டும் என்றும் ஆனபோது, அது சிவாவதாரமாகத்தான் இருக்க வேண்டுமென்று (மஹாவிஷ்ணு) நினைத்தார்.

பரமசிவனோடு ஒன்றாகவே இருப்பது, வேறே மாதிரியும் இருப்பது என்று இரண்டு விதமாக அவர் பண்ணுவார். ஒன்றாக இருப்பது, ஸத்யமான ஞான நிலையில், வேறு மாதிரி இருப்பது, வ்யவஹாரத்தில் ஸத்யம் மாதிரித் தெரியும் லோக லீலையில். விச்வரூப தர்சனத்தின்போது, "பச்ய மே யோகம் ஐச்வரம்" என்று ஈச்வரனின் தன்மையைத் தம்முடையதாகவே ஒன்றுபடுத்திச் சொன்னவர். கடைசி அத்யாயத்தில் அவன் தமக்கு வேறுபட்டுள்ள மாதிரி,

"ஈச்வர: ஸர்வ பூதாநாம் ஹ்ருத்-தேசே (அ)ர்ஜுந திஷ்டதி*
ப்ராமயந் ஸர்வ பூதாநி யந்த்ராரூடாநி மாயயா**
தமேவ சரணம் கச்ச"

என்கிறார்: "எல்லாவற்றின் ஹ்ருதயத்திலும் ஈச்வரன் என்று ஒருத்தன் இருக்கிறான். மாயாசக்தியால் எல்லாவற்றையும் குடைராட்டின பொம்மைகளைப்போல ஆட்டி வைத்துக்

கொண்டிருக்கிறான். "தமேவ", "தம் ஏவ"- அவனையே சரண் அடை!" என்கிறார்.

ஒரு இடத்தில் மே என்று தன்னோடு ஒன்றுபடுத்திச் சொன்னவர், இன்னோரிடத்தில் தம்-'அவனை'-என்று பிரித்துச் சொல்கிறார்!

அப்படியானால் பிரித்தே வைத்துவிடலாமா என்றால் அதற்கும் விடமாட்டேன் என்கிறார்! இங்கே 'ஸர்வ பூத ஹ்ருதயத்திலும் ஈச்வரன் இருக்கிறான்' என்றவரே முன்னாடி விபூதி யோகத்தில் 'ஸர்வ பூதாசயத்திலும் நான் ஆத்மாவாயிருக்கிறேன்' என்றும் சொல்லியிருக்கிறார்.

அஹம் ஆத்மா குடாகேச ஸர்வபூதாசய ஸ்தித:

'ஆசயம்' என்றாலும் 'ஹ்ருதயம்' என்றாலும் ஒன்றேதான். ஹ்ருதயவாஸியாக ஈச்வரனைச் சொல்லும் இடத்திலும், மாயையினால் ஆட்டிப் படைப்பதான தம்முடைய கார்யத்தை அவன் செய்வதாகவே சொல்கிறார்!

இங்கே, 'ஈச்வரனிடமே சரணாகதி பண்ணு' என்றவர் நாலே ச்லோகம் தள்ளி உபதேசத்தைப் பூர்த்தி செய்யும் போது 'என்னொருத்தனிடமே சரணாகதி பண்ணு'-மாம் ஏகம் சரணம் வ்ரஜ-என்கிறார்! 'இப்படி மாத்தி மாத்திச் சொல்றயே!' என்றால், "நான் ஒண்ணும் மாத்தலை. 'மாம் ஏகம்'னா இருக்கறதே நான் ஒண்ணுதான்னு அர்த்தம். அப்புறம் இந்த ஒண்ணுக்கு வேறேயா ஏது ஈச்வரன்? நான், அவர் இரண்டு பேரும் ஏகமான ஒரு பரமாத்மாதான். விளையாட்டு ருசிக்காகத்தான் கொஞ்சம் மாத்தினாப்பலேயும் சொல்றது" என்பார்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## ஞான சிவனே ஞானவதாரமாவது

இப்படி இரண்டு ரூபமாகப் பார்க்கும்போது ஈச்வரன் தான் முக்யமாக ஞானம் தருகிறவன். 'இது இதற்கு இன்னின்ன ஸ்வாமியிடம் போ' என்று சொல்லும்போது ஆரோக்கியத்திற்கு ஸூர்யன் மாதிரி, ஞானத்திற்கு

ஈச்வரனிடந்தான் போகச் சொல்லியிருக்கிறது:
ஆரோக்யம் பாஸ்கராத்-இச்சேத் ஞாந-தாதா மஹேச்வர:
ஞானந்தான் சாச்வதமான மோக்ஷத்தைத் தருவது. முடிவிலே "என்னை சரணடை" என்றபோது, "உன்னை எல்லாப்பாவத்திலிருந்தும் விடுவிக்கிறேன்" என்று சொல்லி, விட்டுவிட்டார். ஆனால் அதற்கு முன் "ஈச்வரனை சரணடை" என்றவர், "அவனுடைய அநுக்ரஹத்தினாலே பரம சாந்தமான சாச்வத ஸ்தானத்தை அடைவாய்" என்கிறார். அந்த ஸ்தானம்தான் ஞானத்தினால் பெறும் மோக்ஷம். தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம்
விச்வரூப யோக தர்சனத்தின்போது ஈச்வரன் ருத்ரனாகச் செய்யும் ஸம்ஹாரத்தைத் தம்முடையதாகவே காட்டியவர், முடிக்கிற அத்யாயத்தில் அவர் தக்ஷிணாமூர்த்தியாக இருந்து செய்யும் ஞான மோக்ஷ ப்ரதானத்தைச் சொல்லி, இது 'அவனுக்கே ஆன கார்யம்' என்று கொஞ்சம் வித்யாஸப்படுத்தினாற்போலக் காட்டினார். இப்போது, 72 துர்மதங்கள் கிளம்பியபோது இப்படிக் கொஞ்சம் பிரித்தாற்போல ஞானத்துக்கு என்றே இருக்கும் ஈச்வராவதாரமாகவே ஸம்பவிக்கட்டுமென்று நினைத்தார். ஆனால் இவர் 'ஸம்பவாமி யுகே யுகே' என்று சொன்னதற்காக அவர் அவதாரம் செய்து அவஸ்தையெல்லாம் படுவாரென்றால் இரண்டும் ஒன்றுதான் என்றும் ஆகிறது!
ஞானத்துக்காக அவதாரமென்றால் கிரீட குண்டலமும், கௌஸ்துபமும், பீதாம்பரமுமாக தர்பார் நடத்தும் தாம் போவதைவிட, ஒரே சடையும் முடியுமாக ச்மானத்தில் வஸ்திரத்தையெல்லாம் அவிழ்த்துப் போட்டுவிட்டோ, அல்லது ஆல மரத்தின் கீழேயோ, கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருப்பவர் போவதுதான் பொருத்தம் என்று நினைத்தார். 'நாம் தான் இவ்வளவு அவதாரம் எடுத்தாச்சே! அவர் மட்டும் ஏன் சும்மா உட்கார்ந்துகொண்டிருக்க வேண்டும்? 'சிவனேன்னு உட்கார்ந்திருக்கிறது' என்று பேர் வாங்கவேண்டும்? இந்தத் தடவை அவர் போகட்டும். நாம் ஒன்றுமே செய்யவில்லை என்றில்லாமல் அவருடைய கார்யத்தில் கொஞ்சம் ஸஹாயம் செய்வதற்காக அம்ச ரூபத்தில் அவருக்கு ஒரு சிஷ்யராக வேண்டுமானால் போகலாம்' என்று நினைத்தார்.
ஆசார்யாளுடைய நான்கு முக்ய சிஷ்யர்களில் ஒருவரான

பத்மபாதாசார்யாளை மஹாவிஷ்ணுவின் அம்சம் என்று 'சங்கர விஜய'ங்களில் சொல்லியிருக்கிறது பரமசிவனுக்கு ஈசானன், ஈச்வரன், ஸதாசிவன் என்றெல்லாம் பேர். ச்ருதியிலேயே "ஸகல வித்யைகளுக்கும் தெய்வம் ஈசானன், ஸர்வ பூதங்களுக்கும் அவனே ஈச்வரன்" என்றெல்லாம் சொல்லி, "அவன் எனக்கு மங்கள சிவமாக இருக்கட்டும்" என்று ப்ரார்த்திக்கொண்டு, அப்படிப்பட்ட ஸதாசிவனை ஓம்காரமான ஆத்ம ஸ்வரூபமாக அத்வைத பாவனையில் அநுஸந்திப்பதோடு முடித்திருக்கிறது. "ஈச்வர: ஸர்வ பூதாநாம்" என்று இங்கு உள்ள ச்ருதி வாக்யத்தையேதான் பகவானும் கீதையில் அப்படியே 'ரிபீட்' பண்ணியிருக்கிறார். ஸர்வ வித்யைகளுக்கும் அவனே அதிபதி என்றும் இங்கே வருவதால் அவன்தானே உபதேச குருவாக அவதரிக்க வேண்டியவன்?

தந்த்ர சாஸ்த்ரங்களையும், மந்த்ர சாஸ்த்ரங்களையும், இன்னும் அநேக திவ்ய உபாக்யானங்களையும் பார்த்தால் கூடப் பரமேச்வரன்தான் அந்த தந்த்ரத்தையோ, மந்த்ரத்தையோ, உபாக்யானத்தையோ அம்பாளை முன்னிலைப்படுத்தி உபதேசித்தவன் என்று இருக்கும். இந்த வித்யைகளுக்கெல்லாம் மேலே இருப்பது அத்வைத வித்யை. அந்த வித்யை வெறும் புஸ்தகமோ, மந்த்ரமோ இல்லை. அதுவே அநுபவம். தன்னில் தானாக இருக்கிற ஒரே ஸத்ய அநுபவம். அப்பேர்ப்பட்ட அத்வைத வித்யையும் அந்த சிவன்தான் என்றே குறிப்பாகச் சொல்லியிருக்கிறது. "அஹம் ப்ரஹ்மாஸ்மி" ('நானே பிரம்மம்') என்கிற மாதிரியே "சிவோஹம்" ('நானே சிவன்') என்று த்யானம் செய்கிற வழக்கமிருக்கிறது. மாண்டூக்ய (உபநிஷ)த்திலும் "சிவம் அத்வைதம்" என்றே இருக்கிறது. அதனால் அத்வைத வேதாந்தத்துக்கான ஆசார்ய புருஷர் பரமசிவனின் அவதாரமாயிருப்பதே பொருத்தமென்று தெரிகிறது.
குரு ஸகல அறிவும் நிரம்பியவராக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஸர்வஜ்ஞனாகப் பரமசிவனையே நிகண்டுவிலும் ("அமரகோச" அகராதியிலும்) சொல்லியிருக்கிறது : "க்ருசாநுரேதா ஸர்வஜ்ஞோ தூர்ஜடிர்-நீல லோஹித :".
மற்ற புஸ்தகங்களில் (பரமசிவனை ஞானாசார்யனாகச்) சொல்லியிருப்பது இருக்கட்டும். அவதார ஆசார்யாள் என்ன சொல்லியிருக்கிறார்? அவர் சொல்வதற்குத் தனியான

மதிப்புண்டல்லவா? குரு யார், ஞானம் தருவது யார் என்று அவர் எங்கேயாவது சொல்லியிருக்கிறாரா?
சொல்லியிருக்கிறார். "ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா"வில் இந்தக் கேள்விகளையும் போட்டு பதில் சொல்லியிருக்கிறார்.
"கோ ஹி ஜகத்குரு: உக்த?"-"ஜகத்குரு என்று சொல்லப்படுவது யார்?" என்றே அதில் ஒரு கேள்வி. வெறும் குரு இல்லை; ஜகத்குரு! ஜகத்குரு என்றாலே இப்போது ஆசார்யாளைத்தான் நினைத்துக் கொள்கிறோம். அவருக்கு முந்தி அந்தப் பட்டம் வாங்கினவர் க்ருஷ்ண பரமாத்மா. "க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்" என்றே எட்டு அடியும் முடிவதாக அவர் மேலே ஒரு அஷ்டகம் இருக்கிறது என்று சொன்னேன். ஆனால் இங்கே ஆசார்யாள் "கோ ஹி ஜகத்குரு-ருக்த:" என்று கேட்டுவிட்டு என்ன பதில் கொடுக்கிறார்
'சம்பு:"
'சம்பு' என்று சொல்லப்படும் சிவன்தான் என்கிறார். அந்த சம்-புதான் இந்த சம்-கரர் ஆனார்! அவரே இப்படிச் சொல்கிறார்! சிவன்தான் குரு என்பதை மேலும் உறுதிப்படுத்தும் விதத்தில் அடுத்த கேள்வியும் பதிலும் கொடுத்திருக்கிறார்.
"ஞாநம் குத :?"-ஞானம் எவரிடமிருந்து (கிடைக்கும்)?
"சிவாதேவ"-"சிவாத் ஏவ"-சிவனிடமிருந்துதான்.
ஞானாசார்ய அவதாரம் பரம சிவனுடையதாகத்தான் இருக்கவேண்டுமென்று தெளிவாகி விட்டதல்லவா?
மொத்தத்தில் விஷயம் என்னவென்றால் பரமாத்மாவின் ஸங்கல்பப்படி இதுவரை அதன் ஒரு ரூபமான மஹாவிஷ்ணுவிடமிருந்து அவதாரங்கள் ஏற்பட்டாற்போல இப்போது இன்னொரு ரூபமான பரமேச்வரனிடமிருந்து ஒரு அவதாரம் நிகழ வேண்டுமென்று நிச்சயமாயிற்று.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## சக்தி உள்ளடங்கிய தக்ஷிணாமூர்த்தியின் அவதாரம்

'இன்னொரு ரூபமான பரமேச்வரன்' என்றேன். ஆனால் அந்தப் பரமேச்வரனுக்கே பல ரூபமிருக்கிறதே, கல்யாணஸுந்தரமூர்த்தி, ஸோமாஸ்கந்தமூர்த்தி, நடராஜ மூர்த்தி, பைரவ மூர்த்தி என்றெல்லாம்! இவற்றில் எதிலிருந்து அவதாரத்தைப் பிறப்பிப்பது? ஸந்நியாஸி குருவாக அவதாரம் ஏற்படணுமென்று சொல்லியாயிற்று. ஆகையால் பத்னியோடிருக்கிற இந்த அவஸரங்களிலிருந்து அவதாரம் உண்டாவதற்கில்லை. ஏனென்றால் பதி பூலோகத்துக்குப் போகிறபோது அம்பாளும்தானே கூடக் கிளம்புவாள்?... பைரவருக்கும் பைரவி என்று பத்னி உண்டு.
அதுவுமில்லாமல் அவர் பயங்கரமான மூர்த்தி. பைரவம் என்றாலே பயங்கரம்தான். பயங்கரமாக, இருக்கிறவர் பரம சாந்த நிலையை உபதேசிக்க வருவதென்றால் அஸந்தர்பமல்லவா? ப்ரசாந்த நிலையிலுள்ள ஒரு அவஸரத்திலிருந்து இந்த அவதாரம் ஏற்படுவதுதானே பொருத்தம்?
இதனாலெல்லாம், பத்னி ஸமேதனாயில்லாமல், ஏகாங்கியாக, அடங்கிய சாந்த ஸமுத்ரமாக, நிஷ்கரிய நிஷ்டாமூர்த்தியாக, ஆதி குரு என்றே பெயர் பெற்று விளங்கும் தக்ஷிணாமூர்த்தியிடமிருந்தே இந்த அவதாரம் உண்டாக வேண்டுமென்று திவ்ய ஸங்கல்பமாயிற்று. ஒன்று சொல்லாமல் விடக்கூடாது. பத்னி ஸமேதனாகத் தெரியாவிட்டாலும் பரமேச்வரன் அம்பாளின் ஸம்பந்தம் இல்லாமலிருப்பது என்பது ஒரு போதும் கிடையாது. தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்திலுங்கூடத்தான்! அதேபோல அம்பாளும் பாலா த்ரிபுரஸுந்தரி, கன்யாகுமாரி, துர்காதேவி என்றெல்லாம் ஈச்வரனோடு சேர்ந்தில்லாமல் தனியாகக் காணப்படும் ஸமயங்களிலும், நம் காட்சிக்குத்தான் அவன் தெரியவில்லையே தவிர, அவன் அவளிடமிருந்து பிரிந்திருக்கிறான் என்று ஒருபோதும் இல்லை. சிவ-சக்திகளை ஒருபோதும் பிரிக்கவே முடியாது. நிர்குண-ஸகுண ப்ரம்மங்களைத் தான் (முறையே) சிவன்-சக்தி என்பது. இரண்டும் சேர்ந்துதான் பரப்ரம்மம். லோகத்தில் பல தினுஸாக விளையாடி, காட்சி கொடுத்து, பல விதமான பாடங்களைக் கொடுக்கவேண்டும், பல விதமான தத்வங்களை உணர்த்த வேண்டும்-பல விதமான ரஸங்களைத் தரும் கதை புராணங்களாக நடித்தே இப்படிச் செய்யவேண்டும்-என்றுதான் அவர்கள் சில அவஸரங்களில் தம்பதியாகவும்.

சில அவஸரங்களில் ஒண்டியாக, ஏகாங்கியாகவும் இருப்பது. பரமஞானமான தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்தில் பரமேச்வரன் நிஷ்க்ரியமாக உட்கார்ந்திருக்கும்போதும் அவருக்குள்ளே ஸகல க்ரியா சக்தியுமான ஸாக்ஷாத் அம்பிகையை அவர் நம் கண்ணுக்குத் காட்டாமல் வைத்துக் கொண்டுதானிருப்பவர். இல்லாவிட்டால் அந்த நிஷ்க்ரிய மூர்த்தி அவதாரம் என்ற க்ரியையையே பண்ணியிருக்க முடியாது! அவதரித்தபின் ஆஸேது ஹிமாசலம் மூன்றுதரம் இந்தப் பெரிய தேசத்தைச் சுற்றி வருவது, கட்டுக் கட்டாகப் புஸ்தகம் எழுதுவது, ஊர் ஊராகப் போய் வாதம் செய்வது, பேர் பேராக அநுக்ரஹம் செய்வது என்றெல்லாமும் செய்திருக்க முடியாது.
அவதாரத்துக்குப் பெயரே என்ன?
சங்கரர்.
'கரர்' என்றாலே 'செய்கிறவர்', 'காரியம் பண்ணுகிறவர்' என்றுதான் அர்த்தம். 'சம்' என்றால் உயர்ந்த மங்களமான ஸுகம். லோகத்திற்கெல்லாம் பரம மங்களத்தை விடாமல் செய்கிறவர் 'சங்கரர்'.
செயலில்லாத தக்ஷிணாமூர்த்தி இப்படி வந்தார் என்றால் எப்படி? க்ரியா சக்தி-இச்சா சக்தி, ஞான சக்தி ஆகியனவுந் தான்-எல்லா சக்திகளுக்கும் மூலமான பராசக்தி அவருக்குள்ளேயே ஸூக்ஷ்மமாக அடங்கியிருந்ததால்தான்!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## சாக்தர், சைவர், வைஷ்ணவர் மூன்றுமான ஆசார்யாள்

ஆசார்யாளைப் பற்றி சொல்வதுண்டு:
அந்த: சாக்தோ, பஹி: சைவ:, வ்யாவஹாரே து வைஷ்ணவ: என்று. உள்ளுக்குள்ளே சக்தி-அம்பிகையான பராசக்தி. வெளியிலே ரூபத்தைப் பார்த்தால் வெள்ளை வெளேரென்று, விபூதியும் ருத்ராக்ஷமுமாகப் 'பரமசிவனே வந்திருக்கிறானோ?' என்று நினைக்கும்படியாக. லோக வ்யவஹாரம் ஓயாமல் ஓடி ஆடிப் பண்ணிக்கொண்டிருப்பதிலோ விஷ்ணுவாகவே இருக்கிறார்.

வாயாலே ஆசீர்வாதம் பண்ணுவதும் "நாராயண, நாராயண" என்று தான்! ஸ்ரீமுகம் கொடுப்பதெல்லாம் "க்ரியதே நாராயண ஸ்ம்ருதி:" என்று விஷ்ணு ஸ்மரணையோடுதான்! சிவாவதாரம்! செய்வதெல்லாம் நாராயணன் பேரில்! இப்படி சிவ-விஷ்ணு அத்வைதம்!

விஷ்ணுவை வ்யவஹார சக்தி, க்ரியா என்றெல்லாம் சொன்னால் என்ன அர்த்தம்? அவர் அம்பாளே என்று தான் அர்த்தம்!

புருஷ ரூபத்தில் அவதாரமாதலால் அம்பாளின் புருஷ ரூபமான நாராயணனின் பெயரிலேயே எல்லாக் கார்யமும் செய்தார். வெளியிலே காட்டாமல் உள்ளுக்குள்ளே அம்பாள் ஸ்வரூபம். அதாவது ஹ்ருதயத்திலே தாயாராகப் பரம கருணை! அதுதான் அந்த: சாக்த:.

சக்தி, சக்தி என்றால் அந்தக் கருணைதான். அது இல்லாமல் சிவம் இல்லை. சிவம் தானிருப்பதாகத் தெரிந்து கொள்ளவே ஒரு சக்தி இருக்கத்தானே வேண்டும்? சிவம் தன்னையே கருணையாக வெளிப்படுத்திக் கொள்வதும் சக்தி தான். அவளுடைய 'விமர்ச'மில்லாமல் இவருடைய 'ப்ரகாசம்' லோகத்துக்கு ஏற்படவே முடியாது என்று தத்வ ரீதியில் சொல்வார்கள். ஆனாலும் ஸீதா-ராமர்கள், ராதா-க்ருஷ்ணர்கள் மாதிரி ஸ்திரீ புருஷ ஜோடியாக அவதாரம் எடுக்க முடியாமல், ஸந்நியாஸாவதாரமாக அமையவேண்டும் என்று காலத்தின் ஸந்தர்ப நிர்பந்தம் இருந்ததால், அவளை வெளியிலே காட்டாமல் உள்ளே வைத்துக்கொண்டுள்ள யோகேச்வர அவஸரத்திலிருந்து அவதாரம் நிகழ்த்துவதென்று ஸங்கல்பமாயிற்று.

மஹாவிஷ்ணு எப்போதும் லக்ஷ்மியை வெளிப்பட வைத்துக்கொண்டேதான் இருப்பார். அப்படியில்லாமல் அவர் ஏகாங்கியாக நர-நாராயணர்கள் மாதிரி இருந்தாரென்றால் அப்போது அவர் பூர்ண விஷ்ணுவாகத் தெரியமாட்டார்; அம்சாவதாரமென்னும்படிதான் இருப்பார். இப்போதோ கலி கோலாஹலத்தை அடக்குவதற்குப் பூர்ணமான பகவத் சக்தி அவதரிக்க வேண்டியிருந்தது. ஆனாலும் லக்ஷ்மீ ஸமேதரான விஷ்ணு தம்பதி ஸமேதமாக பூர்ணாவதாரம் செய்ய முடியாமல், இப்போது அவதரிக்க வேண்டியவர் ஸந்நியாஸிகத்தான் இருந்தாக வேண்டுமென்றும் இருந்தது. இப்படிப் பார்க்கிற போதும் பரிபூர்ண சிவமாகவே இருப்பவராக தக்ஷிணாமூர்த்தி என்று ஒரு ஏகாங்கி இருப்பது

ரொம்பவும் ஸௌகர்யமாகிவிட்டது! பார்வதி ஸமேதராக இருக்கப்பட்ட பரமேச்வரனின் அம்சமாக மட்டும் இல்லாமல் அவருடைய ஸ்வச்சமான பூர்ண ஸ்வரூபமாகவே இருக்கிறவர் தான் தக்ஷிணாமூர்த்தி. ஆகையால் இப்போது அவரிடமிருந்து அவதாரத்தை உத்பவிக்கச் செய்வதே ஸகல விதத்திலும் பொருத்தமுடையதாக இருந்தது. இப்படியெல்லாம் எல்லாப் பொருத்தங்களும் இருக்கும்படியாகப் பரமாத்மாவின் ஸங்கல்பம் அமைந்தே பரம சுபமான ஸ்ரீ சங்கராவதாரம் ஏற்பட்டது.

**தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)**

**ஸ்ரீ சங்கர சரிதம்**

**மங்கள மயமான தெய்வகுரு**

லோகத்தின் பெரிய பாக்யம், குரு ஸ்வரூபமாக அவதாரம் ஏற்படுவதென்று ஸங்கல்பமாயிற்று. சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அவன்தான் (பரமாத்மாதான்) குரு. உபநிஷத் பாட க்ரமத்தில் முதலில் அப்படித்தான் அவனை குரு ஸ்வரூபமாகச் சொல்லி நமஸ்காரம், சரணாகதி செய்வது. ஸகல உபதேசங்களுக்கும் உறைவிடமாயிருப்பது வேதம். அந்த வேதத்தை லோகத்துக்குத் தந்தது ப்ரம்மா. வேத மந்த்ரங்களைக் கொண்டே ஸ்ருஷ்டி பண்ணி, நாலு வாய்களாலும் நாலு வேதத்தைச் சொல்லிக்கொண்டு ப்ரம்ம வித்யையைத் தருபவர் அவர். ஆனால் அவரையும் படைத்து அவருக்கும் இந்த வேதத்தைப் பூர்வத்திலே தந்தவன் பரமாத்மா. அவனேதான் நம் புத்திக்குள்ளும் ப்ரம்மஞான ப்ரகாசத்தை உண்டாக்குபவன். 'மோக்ஷ நாட்டமுள்ள நான் அவனை சரணடைகிறேன்' என்று (உபநிஷத் பாராயணம்) ஆரம்பிப்பது வழக்கம்:

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாச்ச ப்ரஹிணோதி தஸ்மை *
த(க்)ம் ஹ தேவம் ஆத்ம புத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே **

இது 'ச்வேதாச்வதர உபநிஷத்'தில் வருவது. பரமாத்ம

குருவைப் பரமசிவ ஸ்வரூபமாகக் காட்டுவதற்கும் இந்த உபநிஷத்திலேயே ச்ருதி ப்ரமாணம் இருக்கிறது. வித்யா மூலமான வேதத்தை ஸதா ஓதிக் கொண்டிருக்கும் ப்ரம்மா (இவரை ஹிரண்யகர்ப்பன் என்று உபநிஷத் சொல்லும்) பிறந்ததையும் மஹர்ஷியான ருத்ரன் பார்த்துக்கொண்டிருந்தார் என்று அந்த உபநிஷத்தில் ஒரு இடத்திலும், அவரே தான் அந்த ப்ரம்மாவைப் படைத்தவர் என்று இன்னோரிடத்திலும் சொல்லியிருக்கிறது. 'மஹர்ஷி' என்றதால் உபதேசம் பண்ணும் ஆசார்யன் என்று ஆகி விடுகிறது. 'நமக்கு அவர் சுபமான புத்தியை அநுக்ரஹிக்கட்டும்' என்று இரண்டு இடத்திலும் பிரார்த்திக்கப்படுகிறது. சுபமான புத்தி-நல்லறிவு-ஆசார்யன்தானே அநுக்ரஹிப்பது? 'சுபம்' என்றாலும் 'சிவம்' என்றாலும் ஒரே அர்த்தந்தான். மங்களமானது, கல்யாணமானது என்று அர்த்தம். ப்ரம்மம் பரம கல்யாண ஸ்வரூபமானது, ஸ்மரிக்கிறவர்களுக்கு வரம் அருளுவது, மங்களம் என்றே அறியப்படுவது என்று (உபநிஷத் பாராயண) மங்கள பாட ச்லோகம் இருக்கிறது:

அதிகல்யாண ரூபத்வாத்
நித்ய கல்யாண ஸம்ச்ரயாத் *
ஸ்மர்த்ரூணாம் வரதத்வாச்ச
ப்ரஹ்ம தந்-மங்கலம் விது :**

அந்த சுபம், கல்யாணம், மங்களம் எல்லாமாக இருக்கப்பட்டவர் வரம் அருள்வது என்றால் என்ன வரம்? ஞானத்துக்கேயான உபநிஷத் பாட க்ரமத்தில் இந்த வரத்தைச் சொல்வதால், இது ஞானத்தைத் தவிர வேறென்னவாயிருக்க முடியும்? கொடுக்கிற ஆஸாமி சிவம். அவர் தரும் வரமான ஞானமும் சிவம்-சுபம், கல்யாணம், மங்களம். இந்தப் பரம மங்கள ஸ்வரூபமே நம்முடைய ஆசார்யாள். சிவம், கல்யாணம், சுபம் எல்லாம் அவரே. ஆதி சிவமே ஆசார்ய சிவமாக இப்படி அவதாரம் செய்தது.

"அவதாரமாகி விட்டதா? அப்படியென்றால் அப்பா, அம்மா யார்? எந்த ஊரில் அவதாரம்? ஒன்றும் சொல்லவில்லையே!"

கொஞ்சம் பொறுத்துக்கணும். பரமாத்ம ஸங்கல்பம் ஆகிவிட்டாலே கார்யம் ஆன மாதிரிதான் என்ற அபிப்ராயத்திலேயே அவதாரம் ஆன மாதிரி சொல்லிவிட்டது! ஸங்கல்பம் செய்தபோதிலும் உடனே ஈச்வரன் தானாகவே எங்கேயோ ஒரு ஊரில், யாரோ ஒரு

அப்பா அம்மாவுக்குப் பிறந்துவிடவில்லை.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## அவதாரத்திற்குப் பூர்வாங்கம்

ஊரில் திருட்டுப் புரட்டு இருக்கப்படாது என்ற ஸங்கல்பத்தில்தான் போலீஸ் ஸ்டேஷன் வைப்பது. ஆனாலும் நம்மகத்தில் திருட்டுப் போகும்போது நாம் 'கம்ப்ளெய்ன்ட்' கொடுத்தால்தானே போலீஸில் கேஸ் எடுக்கிறார்கள்? அப்படி ஈச்வரனும் அவதாரம் பண்ணுவதற்குமுன் இரண்டு 'பெடிஷன்' எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்-ஒரு பத்ததி வேண்டும் என்பதற்காக; தமக்கு மரியாதை வேண்டுமென்பதற்காக இல்லை! லோகத்திலுள்ளவர்களுக்கு மரியாதைப் பத்ததி தெரியவேண்டுமென்பதற்காக இப்படி உட்கார்ந்திருந்தார்.
ஒரு பெடிஷன் தேவர்கள் கொடுக்கவேண்டியது. அவர்களைத்தான் லோக நிர்வாஹத்துக்கு 'இன்-சார்ஜ்' கொடுத்து இவர் அதிகாரிகளாகப் போட்டிருப்பது. அதனால் லோகத்தில் ஒரு பெரிய கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது, தர்மம் திருட்டுப் போகிறது என்றால் அவர்கள் வந்து விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அப்போதுதான் ஸ்வாமி கேஸ் எடுப்பார். இன்னொரு பெடிஷன் வரப்போகிற அப்பா-அம்மா கொடுக்க வேண்டியது. பிறப்பேயில்லாத பரமேச்வரன் தாமாகப் போய் எவரோ ஒருத்தருக்குப் பிள்ளையாகப் பிறக்கலாமா? நிரம்ப யோக்யதாம்சமுள்ள தம்பதி யாராவது மனஸ் உருகிப் பிள்ளை வரம் கேட்டுப் பிரார்த்திக்க வேண்டும். அதுதான் பெடிஷன். அதை வாங்கிக்கொண்டு அங்கே போய்ப் பிறந்து விடுவார். எல்லா அவதாரத்திலும் இப்படித்தான்-இரண்டு பெடிஷன்கள். ராமாவதார, க்ருஷ்ணாவதாரக் கதையாவது தெரியுமோல்லியோ? தேவர்கள் போய் பகவானிடம் முறையிட்ட பிறகுதானே அந்த அவதாரங்கள் நடந்தன?

அதோடு தசரதன் பெரிசாக புத்ர காமேஷ்டி பண்ணித்தான் பகவான் அவனைத் தகப்பனாராக வரித்து அவதாரம் செய்தது. க்ருஷ்ணர் விஷயத்தில்-அநேக யுகங்கள், மன்வந்தரங்களுக்கு முன் ஒரு தம்பதி (ஸுதபஸ் என்ற ப்ரஜாபதியும், அவரது பத்னியான ப்ருச்னியும்) நீண்ட காலம் தபஸ் இருந்து, பகவானே தங்களுக்கு அந்த ஜன்மத்தில் மட்டுமின்றி மூன்று தடவை புத்ரனாகப் பிறக்கவேண்டுமென்று வரம் வாங்கிக்கொண்டார்கள். அதில் மூன்றாவது தான் க்ருஷ்ணாவதாரம். அந்த தம்பதி அப்போது தேவகி-வஸுதேவர்களாகப் பிறந்திருந்தார்கள். இதற்கு முன் அவர்கள் அதிதியாகவும் கச்யபராகவும் இருந்தபோது, பகவான் கொடுத்த வரப்படி அவர்களுக்கு இரண்டாம் தடவை பிறந்ததுதான் வாமனாவதாரம்.
இப்படியெல்லாம் மஹாவிஷ்ணு பத்ததி பார்த்து, பிகு பண்ணிக்கொண்டு அவதாரம் பண்ணியுள்ளபோது ஈச்வரன் மட்டும் சும்மா பூலோகத்துக்கு வந்து விடுவாரா? உள்ளுக்குள்ளே அவருக்கு பிகுவும் இல்லை, ஒன்றும் இல்லை. கருணையில் மனஸ் கிடந்து அடித்துக்கொண்டுதானிருந்தது!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## ஸ்ரீ சங்கர சரிதம்

## செயலற்றவரின் கருணையுள்ளம்

தக்ஷிணாமூர்த்தியாக ஆல மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருப்பவர்தான். அசைவதே கிடையாது, கண் பார்க்கிறதில்லை, வாய் பேசுகிறதில்லை என்று இருப்பவர் தான். ஆனாலும் அப்படிப்பட்டவருக்கு இப்போது கருணையில் மனஸ் உருகிக்கொண்டிருந்தது. மனஸும் இல்லாமலிருப்பவர்தான். மனஸ் என்பது போய், ஆத்மா மட்டுமாக இருப்பதுதான் அத்வைதம். தக்ஷிணாமூர்த்தி என்றால் அத்வைத ஸ்வரூபம் என்று அர்த்தம். ஆனாலும் கருணா நிமித்தமாகவே மனஸைப் பண்ணிப் போட்டுக்கொண்டு, 'ஐயோ, குழந்தைகள் இப்படிக் கெட்டுப்

போகிறதுகளே!' என்று உருகிக்கொண்டிருந்தார். (சிரித்து) அத்வைதத்துக்கு தக்ஷிணாமூர்த்தி என்று ரூபம் மட்டும் எப்படி வரலாமாம்? அதுவும் நம்மிடம் கருணையால்தானே? அப்போ மனஸும்தான் வரட்டுமே!
'படி தாண்டாப் பத்தினி' என்று சொல்வார்கள், இந்த நாளில் அப்படிச் சொன்னால் புரியுமோ புரியாதோ? கோஷா என்று சொன்னால் புரியுமோ என்னவோ? வீட்டைவிட்டு அடி எடுத்து வைக்கமாட்டார்கள். குரல்கூட வெளியில் கேட்காமல் இருப்பார்கள். ஆனாலும் குழந்தை தெருவிலே ஓடிப்போய் ஜலதாரையின் ஒட்டில் நின்றுகொண்டு ஸந்தோஷமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறது; அதற்குள்ளேயே குதிக்கலாமா என்று பார்த்துக் கொண்டிருக்கிறது என்றால் அவளுடைய கோஷாக் கட்டுப்பாடு நிற்குமா? பரபரத்துக்கொண்டு, சத்தம் போட்டுக்கொண்டு குழந்தையிடம் ஓடித்தானே வருவாள்? அப்படித்தான் தக்ஷிணாமூர்த்தியும் இருந்தார். அவருடைய ஸ்வபாவம் சும்மாயிருப்பது. 'சும்மாயிருப்பதே ஸுகம்', 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது' என்று சொல்கிற, 'பெரிய சும்மா நிலை'யிலிருப்பது.
துளிக்கூட சும்மா இருக்கமுடியாமல் ஜனங்கள் படாத பாடுபட்டுக்கொண்டு, பிறத்தியாரையும் படுத்திக் கொண்டிருப்பதை அவர் பார்க்கப் பார்க்க, அவர்களுக்கும் ஒன்றும் பண்ணாமல் சும்மாயிருப்பதைச் சொல்ல வேண்டுமென்று கருணை பொங்கிக்கொண்டு வந்தது.
ஒரு மதமா, ஸித்தாந்தமா, அநுஷ்டானமா என்றில்லாமல்தான் ஸாதாரணமாக ஜனங்கள் தங்களையும் ஹிம்ஸைப் படுத்திக்கொண்டு பிறத்தியாரையும் ஹிம்ஸைப் படுத்துவது வழக்கம். ஆனால் இப்போது ஏகப்பட்ட மதங்கள், ஸித்தாந்தங்கள், அநுஷ்டானங்கள் என்று ஏற்பட்டே ஒன்றோடொன்று மோதிக்கொண்டு ஒரே ஹிம்ஸை மயமாக இருந்தது! சரீர ஹிம்ஸையில்லை; புத்திக்கு ஹிம்ஸை! சும்மாயிருக்க முடியாமல் உடம்பாலே கார்யம் பண்ணித்தான் வீணாகப் போகவேண்டுமென்றில்லை, மனஸினாலே-அதாவது சிந்தனா சக்தியாலே-எத்தனை க்ருத்ரிமாகக் கார்யம் பண்ணமுடியுமோ அத்தனையும் பண்ணி தினுஸு தினுஸான மதங்கள் என்று உண்டாக்கிப் பரப்பினால், சரீர ஹிம்ஸையை விடவும் ஜாஸ்தி ஹானி ஏற்படுத்தலாமென்று இந்தக் காலநிலையில் தெரிந்தது.

அதனால், கார்யத்தை நிறுத்துவது மட்டுமல்லாமல் சிந்தையையும் அடக்கிச் சும்மா இருப்பதையே இந்த அவதாரத்தில் முக்யமாகவும் சொல்லணுமென்று பரம கருணையால் அவர் (தக்ஷிணாமூர்த்தி) நினைத்தார். சுருக்கமாகச் சொன்னால், இந்த அவதாரம் ஜனங்களைச் சும்மாயிருக்கப்பண்ணுவதற்காகவே ஆகும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## விக்நேச்வரர் ரக்ஷிக்கட்டும் !

ஸர்வார்த்த ப்ரதிபாதைநக சதரோ த்வைமாதுரோ அவ்யாத் ஸ ந :

என்று விகநேச்வர ஸ்தோத்ரத்தின் மூலம் தத்ஹேது ந்யாயத்தை எடுத்துக்காட்டும் 'ந்யாயேந்து சேகர'ச்லோகம் முடிகிறது. 'த்வைமாதுரோ அவ்யாத் ஸ ந:'என்றால் 'இரண்டு தாயார்களை உடையவரான விகநேச்வரர் நம்மை ரக்ஷிக்கட்டும்'என்று அர்த்தம்.

ச்லோகத்தின் முதல் மூன்று வரிகளில் அது விக்நேச்வரரைப் பற்றியது என்று பெயரைக் குறிப்பிட்டு வெளிப்படக் காட்டாமல், 'மற்ற தேவதைகளில் ஒன்றைப் பூஜிக்க விரும்புகிறவர்கள்கூட அந்தப் பூஜைக்கு ஏற்படக்கூடிய இடையூற்றை நீக்கிக் கொள்வதற்காக எவருடைய திருவடித் தாமரைகளைப் பூஜிக்கவேண்டியது அவச்யம் என்று கருதுகிறார்களோ, இப்படிப்பட்ட பக்தர்களில் தத்ஹேது ந்யாயமும் தெரிந்தவராக உள்ளவர்கள் மற்ற தேவதா பூஜையே வேண்டாம் என்று எவரொருத்தரையே பர தெய்வமாகப் பூஜிப்பதோடு நிறுத்திக் கொள்கிறார்களோ'என்று சொல்லிவிட்டு, 'எவர்''எவர்'என்று பெயரைச் சொல்லாமல் குறிப்பிட்ட அவரை நாலாம் வரியில் 'அவர் இவர்தான், த்வைமாதுரராக இருக்கப்பட்ட விக்நேச்வரர் தான்'என்று வெளிப்படப் பெயர் சொல்லி 'இப்படியாகப்பட்டவர் நம்மை ரக்ஷிக்கட்டும் : அவ்யாத் ஸ ந

:' என்று முடித்திருக்கிறது. 'யத் பாத பங்கேருஹ':எவருடைய திருவடித் தாமரைகளை;'தேவம் யம் ஏகம் பரம்' :எவரை ஏகம் பர தேவதையாக-என்று சொல்லி அப்புறம் 'த்வைமாதுரோ ஸ:ந:அவ்யாத்':த்வைமாதுரரான அவர் நம்மை ரக்ஷிப்பாராக'என்று நன்றாக அடையாளம் புரியவைத்து முடித்திருக்கிறது.

அப்ந்யாமரமாரிரா தயிஷதாம் யத்பாத பங்கேருஹ

த்வந்த்வாராதநமந்தராய ஹதயே கார்யம் த்வவச்யம் விது :*

தத்தேதோரிதி நீதிவித்து பஜதே தேவம் யமேகம் பரம்

ஸர்வார்த்தப்ரதிபாதநைகசதுரோ த்வைமாதுரோ (அ)வ்யாத்ஸ ந :**

கதை சொல்வார்கள் ஒருவன் யாசகத்துக்காக நவாபின் அரண்மனைக்குப் போனானாம். "கொஞ்சம் காத்திரு. நவாப் நமாஸ் பண்ணப் போயிருக்கிறார்"என்று ஆட்கள் சொன்னார்களாம். "அப்படியா ஸமாசாரம்?நாம் வேண்டுமானதைக் கேட்டு வாங்கிக் கொள்ள நவாபிடம் வந்தால், அவரும் தமக்கு வேண்டுமானதற்காக அல்லாவிடம் பிரார்த்திக்கத்தான் வேண்டியிருக்கா?அப்படியானால் நம்மைப் போலவே யாசகராகவுள்ள இந்த நவாபிடம் கை நீட்டாமல் நாமும் நேராக அந்த அல்லாவிடமே வேண்டிக்கொள்ளலாமே!"என்று சொல்லிவிட்டு யாசகன் போய்விட்டானாம்.

ஏறக்குறைய இந்த மாதிரிதான், 'ஏனைய தேவர்களும் தங்கள் கார்யம் நிர்விக்னமாக நடக்க வேண்டுமென்பதற்காக விக்நேச்வரரை நமஸ்காரம் பண்ணுகிறார்களென்னும் போது, நாம் ஒவ்வொரு கார்யத்துக்காக இவர்களில் ஒவ்வொரு தேவதையை வேண்டுவதைவிட இந்த எல்லாக் கார்யங்களுக்காகவும் விக்நேச்வரர் ஒருத்தரையே வழிபட்டு விடலாம்'என்பது.

பிள்ளையாரை விஷயமாக எடுத்துக்கொண்டு அவருடைய பெருமையிலேயே மனஸைச் செலுத்தி நாமும் பெருமைப்படும்போது இப்படிச் சொன்னாலும், பொதுவாக நம் மனப்பான்மை ஒவ்வொரு விதமான பலனுக்கு அதற்கென்றே விசேஷமாக ஏற்பட்டுள்ள தேவதையைப்

பிரார்த்திப்பதாகத்தான் இருக்கும். அதில் தப்பில்லை. அந்தப்படியே பண்ணலாம். அதோடு, இஷ்ட தேவதை என்று ஒவ்வொருத்தருக்கும் தனியான பிடிப்பு இருப்பதாக ஒன்று இருக்கும். குலதேவதை என்று வம்சாவளியாக ஒன்று இருக்கும். இந்த தேவதைகளை அவசியம் பூஜிக்கத்தான் வேண்டும். ஆனாலும் எந்த தேவதையின் பூஜையானாலும் முதலில் 'சுக்லாம் பரதரம்'குட்டிக் கொள்ளாமல் முடியாது!எந்த ஸ்வாமியிடம் எதற்காகப் போய் நிற்கவேண்டுமானாலும், அதற்கு முன்னாடி, அந்த ஸ்வாமியும் தான் க்ருதக்ருத்யராவதற்காக எந்த ஒரு ஸ்வாமியிடம்போய் நிற்க வேண்டியிருக்கிறதோ, அந்தப் பிள்ளையாரிடம் நாம் போய் நின்று பிரார்த்தித்து நமஸ்காரம் பண்ணித் தானாக வேண்டும்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### கண்டனத்திலும் கண்ணியம்

மன்னார்குடிப் பெரியவாள் நம்முடைய அத்வைத வித்யையைத் தர்க்க சாஸ்த்ர பூர்வமாக நிலைநாட்டப் புஸ்தகம் எழுதினபோது, ஆரம்பத்திலேயே ஒரு தர்க்க விதியை-தத்ஹேது ந்யாயத்தை-பக்தி ச்லோகத்தில் அழகாக நுழைய விட்டிருக்கிறார். தர்க்கம் மாதிரியான அறிவாராய்ச்சிகளும் தெய்வபக்திக்கு அடங்கியே போக வேண்டுமென்று காட்டுவதுபோல இருக்கிறது.

இந்த பக்தி விசேஷத்தால்தான் அவர் மஹாபுத்திமானாக இருந்தும் கொஞ்சங்கூட அஹங்காரமோ, கர்வமோ இல்லாமலிருந்தார். இதைப்பற்றி முன்னேயே சொன்னதில் குறிப்பாக ஒன்றைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதாவது, ரொம்ப அறிவாளியாக இருந்து, ஏதோ ஒரு நூலுக்கு மறுப்பு நூலாக வாதப்ரதிவாதங்களை வீசி ஒருத்தர் எழுதுகிறாரென்றாலோ, அல்லது, வித்வத்ஸதஸில் மற்ற வித்வான்களோடு வாதம் நடத்துகிறாரென்றாலோ, அப்போது

எதிராளிகளைத் தாக்குத்தாக்கு என்று தாக்குவதிலும் தங்களுடைய புத்தி வன்மையைக் காட்டுவதே இயற்கை. குத்தலாக-பரிஹாஸமாகவும், "பிச்சு வாங்குவது"என்றபடி நேராகவே கண்டித்தும் எழுதுவதில் அநேக வித்வான்களுக்கு ருசி ஏற்பட்டுவிடுகிறது. இந்த அம்சத்தில் இந்தப் பெரியவர் மாதிரி எவராவது அத்தனை ஸாத்விகமாகக் கண்டனம் தெரிவிக்கமுடியுமா என்றே இருக்கிறது. வாத ப்ரதிவாதங்கள் எதற்கு என்று அவர் எங்கேயோ ஒதுங்கியிருக்கவில்லை. ஸத்யமான தத்வங்களை நன்றாக ப்ரகடனம் பண்ணத்தான் வேண்டும் என்று, வித்வத் ஸதஸ்களில் கலந்துகொண்டு மாற்று அபிப்ராயக்காரர்களைத் தோற்றுப்போகப் பண்ணியவர் அவர், கண்டன க்ரந்தங்களும் எழுதினவர். 'ந்யாயேந்து சேகர'மே அப்படியொன்றுதான். அப்பைய தீக்ஷிதரைப் போலவே அத்வைதம், சிவ பக்தி ஆகிய இரண்டையும் நிலைநாட்டி அவர் வாதம் செய்யவும், புஸ்தகங்கள் எழுதவும் வேண்டியிருந்தது. 'ந்யாயேந்து சேகரம்'அத்வைத விஷயமானது. 'துர்ஜநோக்தி நிராஸம்'என்று ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். அது சிவஸம்பந்தமானது. அவர் காலத்திலிருந்த இன்னொரு பெரிய பண்டிதர்-அவரும் 'மஹாமஹோபாத்யாய'பட்டம் வாங்கினவர்-ஸ்மாத்தராகப் பிறந்த போதிலும் அத்வைதம், ஸந்நியாஸம், சிவபக்தி ஆகிய எல்லாவற்றையும் கண்டிப்பவராக இருந்தார். அவர் சிவாராதனையை ஒரே தூஷணையாக தூஷித்து எழுதினார். அப்போது பலர் நம்முடைய 'பெரியவா'ளிடம் விஜ்ஞாபித்துக்கொண்டதன் பேரிலேயே அவர் 'துர்ஜநோக்தி நிராஸம்'எழுதி, சைவத்துக்கு விரோதமான அபிப்ராயங்களைத் தகர்த்தெறிந்தார். அப்படியிருந்தும், அந்த எதிர்க் கட்சிக்காரப் பண்டிதர் ரொம்பவும் கடுமையாக சிவாராதனத்தைத் தாக்கிப் பலபேர் மனஸைப் புண்படுத்தியிருந்துங்கூட, இவரோ புத்திரீதியில் பாயிண்டுக்கு மேல் பாயிண்டாகக் கொடுத்துக்கொண்டே போய்தான் எதிர் வாதத்தை வென்றாரே தவிர தூஷணையாக த்வேஷமாக ஒரு வார்த்தைகூட எழுதவில்லை!புத்திமானாக இருந்தவர் கனிந்த பக்திமானாகவும் இருந்ததன் விசேஷம்!கண்டனத்திலும் கண்ணியம் தப்பாதவர் என்று பெரிய கீர்த்தி பெற்றார்.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### பிறையுடன் விளையாடிய பிள்ளையார்

'ந்யாயேந்து சேகர'த்திலுள்ள மங்கள ச்லோகம் சொன்னேன். சொல்கிறபோது இந்து சேகர ஸம்பந்தமுள்ளதாகவே பிள்ளையாரின் விளையாட்டை வர்ணிக்கும் இன்னொரு ச்லோகம் ஞாபகம் வந்தது.

தத்வம், தர்க்கம் பார்த்ததற்கு மாற்றாக அந்த விளையாட்டையும் சொல்கிறேன்.

'இந்து சேகரம்'என்றால் சந்திரன் இடம் பெற்றுள்ள சிரஸ் என்று அர்த்தம். பரமேச்வரன்தான் இப்படி இந்து சேகரனா இருக்கிறானென்பது எல்லாருக்கும் தெரிந்தது. ஞானப்பாலுண்ட குழந்தை முதல் பாட்டிலேயே "தூவெண்மதி சூடி"என்று சொல்லியிருப்பது இதனால்தான். ஈச்வரன் ஜடாபாரத்திலே சூட்டிக் கொண்டிருக்கிற சந்திர கலையுடனேயே விக்நேச்வரக் குழந்தை பண்ணிய விளையாட்டைப் பற்றி ஒரு ச்லோகம் சொல்கிறேன். லோகத்துக்கெல்லாம் ஸந்தோஷம் கொடுக்கிற விளையாட்டு. ஸர்வ லோகத்துக்கும் தாய் தந்தையராக இருக்கப்பட்ட அம்பாளும் ஈச்வரனும் ப்ரியத்திலே ஒன்று கூடினால் அதைப் போல லோகத்துக்கு ஸந்தோஷம் எதுவுண்டு?அப்படிப்பட்ட ஸந்தோஷத்தை பாலக்ரீடையால் (குழந்தை விளையாட்டால்) கணபதி உண்டாக்கியதாக ச்லோகம்.

காவ்ய மரபிலே சில உண்டு. நாயகனும் நாயகியும் - தமிழில் தலைவன், தலைவி என்பவர்கள்-எப்போதும் ப்ரியமாயிருந்து ஆனந்தமாகக் காலத்தைப் போக்கிக் கொண்டிருந்தார்கள் என்றால் காவ்யத்தில் ரஸம் போத மாட்டேனென்கிறது. அவர்கள் நடுவிலே கொஞ்சம் பிரிந்து போனார்கள், அப்புறம் சேர்ந்தார்கள் என்றால் ரஸம் ஏற்படுகிறது. பிரிவதில் இரண்டு விதம். எவனோ ஒரு ராவணன் (நாயகியைத்) தூக்கிக் கொண்டு போகிறான், அல்லது ஒரு மாதவியிடம் மயங்கி (நாயகன்) பிரிந்து போகிறான் என்பது

ஒரு விதம். இது மனஸுக்கு ரொம்பக் கஷ்டம் தருவதாக இருப்பது. இது சோகரஸம். பிரிந்திருக்கிறோமே என்ற சோகத்தில் நாயகனோ, நாயகியோ இரண்டு பேருமேயோ தாபப்படுவதற்கு 'விப்ரலம்பம்'என்று பெயர். இப்படி ஒரே சோகமாக இல்லாமல் விநோதமான ரஸக்கலவையாகப் பொய்க் கோப ரஸம், அதிலேயே கொஞ்சம் ஹாஸ்யரஸம், அங்கங்கே ஒரொரு இழை சோகரஸம், உள்ளுக்குள்ளே பார்த்தால் அதிலேயே ச்ருங்கார ரஸம் என்றிப்படி எல்லாம் சேர்ந்து நாயக - நாயகிகள் தங்களுக்குள்ளேயே சண்டைபோட்டுக்கொண்டு பிரிந்தாற்போலிருப்பதுமுண்டு. 'ப்ரணய கலஹம்'என்று இதைச் சொல்வார்கள். தமிழில் ஊடல் என்பார்கள்.

பொய்க் கோபத்தில் இப்படிப் பிரிந்து போன பிற்பாடு இரண்டு பேருக்கும் சேரணும் என்று தாபம் உண்டாகிவிடும். ஆனால் தங்களைக் குறைத்துக்கொண்டு, மானத்தை, கோபத்தை விட்டு ஸமாதானமாகப் போவதற்கும் மனஸ் இடம் கொடுக்காது. எப்படியாவது, ஏதாவது ஸந்தர்ப்பம் ஏற்பட்டு ஒன்றுசேரும்படியாக ஆகாதா, ஆகாதா என்று பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஸாமர்த்யசாலியான கவியாக இருந்தால் ரொம்பவும் அழகாக அப்படிப்பட்ட ஸந்தர்பத்தை ஜோடித்து இரண்டு பேரையும் ஒன்றுசேர்த்து விடுவார். இதிலே ரஸிக ஜனங்களுக்கும் மிகுந்த திருப்தி உண்டாகும்.

இம்மாதிரிதான் பரமேச்வரனுக்கும் அம்பாளுக்குமே ஊடல் ஏற்பட்டிருந்த ஒரு ஸமயத்தில் சந்திரமௌளியான பிதாவின் தலையிலுள்ள பிறைச் சந்திரனோடு பிள்ளையார் லீலை பண்ணப்போக லோகத்தின் மாதா பிதாக்கள் கோபத்தை மறந்து ஒன்றுசேரும்படி ஆயிற்று என்று ச்லோகம் இருக்கிறது.

அந்த ச்லோகம் எந்தப் புஸ்தகத்திலிருக்கிறது என்பதைப் பற்றிக் கொஞ்சம் சொல்லணும்.

# தேவரும் தொழும் தெய்வம்

## சித்ர கவிதை

மைஸூர் ராஜ்யத்தில் சாமரஜநகரில் ராம சாஸ்த்ரி என்று கவி இருந்தார். அவர் ராவணனுக்கும் ஸீதைக்கும் நடந்த ஸம்பாஷணை ரூபத்தில் ஒரு சின்ன காவ்யம் செய்திருக்கிறார். "ஸீதா - ராவண ஸம்வாதம்"என்று அதற்குப் பேர். பேரில் 'ஸீதா'என்று முதலில் சொல்லியிருந்தாலும் அவள் ஸம்பாஷிப்பது ரொம்பக் குறைவு. ராவணன்தான் நிறையப் பேசுவது. அதோடு ராவணன்தான் ஒவ்வொரு விஷயமாக எடுத்துக்கொண்டு முதலில் பேசுவான். அப்புறந் தான் ஸீதை அவன் சொன்னதை அப்படியே நிராகரித்து ரத்னச் சுருக்கமாக பதில் கொடுப்பாள். ஒவ்வொரு ச்லோகத்திலும் இப்படி முதல் மூன்று வரி ராவணனின் பேச்சாக, கூற்றாக இருக்கும். நாலாம் வரி மட்டுமே ஸீதை சொன்னதாக இருக்கும். ஆனாலும் தெய்விகமான பாத்ரங்களுக்கே அக்ரஸ்தானம் (முதலிடம்) தரவேண்டும் என்ற முறைப்படி அவள் பெயரை முதலில் வைத்து "ஸீதாராவண ஸம்வாதம்"என்று புஸ்தகத்துக்குத் தலைப்புக் கொடுத்திருக்கிறது. "ஸீதா ராவண ஸம்வாத ஜரீ"என்று ஒரு "ஜரீ"சேர்த்துச் சொல்வார்கள். 'ஜரீ'என்றால் அருவி. ச்லோகங்கள் அருவி போல-சொற்பொழிவு என்று சொல்கிறார்களே, அதுபோல-பெருகி வருவதால் காவ்யத்துக்கு 'ஜரீ'என்று அடைமொழி.

ப்ரதி ச்லோகத்திலும் முதல் மூன்று வரியில் ராவணன் ஒன்று, தன்னைப் பற்றி 'ஓஹோ'என்று உசத்தி ப்ரகடனம் பண்ணிக்கொள்வான்;அல்லது ராமரை மட்டந்தட்டி ஏதாவது சொல்வான்.

நாலாம் வரியில் ஸீதை அப்படியே நிராகரணம் செய்துவிடுவாள் என்றேனே, அவள் சொல்கிற அந்த வாக்யத்தில்தான் இந்தக் காவ்யத்தின் தனிச் சிறப்பே இருக்கிறது. கவியின் ஸாமர்த்யம் அந்த ஈற்றடியில் தான் இருக்கிறது.

ராவணன் ஒன்று சொல்ல, ஸீதைபாட்டுக்கு அதை ஆக்ஷேபித்து வேறே என்னவோ தன் வசனமாகச் சொல்லமாட்டாள். கவி இதை அந்த மாதிரி பண்ணவில்லை.

பின்னே அவள் என்ன பண்ணுவாள், சொல்லுவாள்?ராவணனைப் பார்த்து, "நீ சொன்ன வார்த்தைகளிலிருந்தே ஒரு குறிப்பிட்ட எழுத்தை எடுத்துவிடு;அல்லது அவற்றோடு ஒரு குறிப்பிட்ட எழுத்தைச் சேர்த்துவிடு;இல்லாவிட்டால் ஒரு எழுத்துக்குப் பதில் இன்னொன்றைப் போட்டுக்கொள், இப்படிப் பார்த்தாயானால் அதுதான் என் பதில்"என்று சொல்லுவாள் இம்மாதிரிப் பண்ணிப் பார்த்தால் ராவணன் சொன்னதன் அர்த்தம் அப்படியே மாறிப்போய்விடும்!அவன் தன்னை உசத்திச் சொல்லிக்கொண்டது, ஸீதை ஏற்படுத்திய ஒரே எழுத்து வித்யாஸத்தினால், அப்படியே மாறிப்போய், அவன் எவ்வளவு நீசன் என்று காட்டுவதாக ஆகிவிடும்;அதே போல ராமரை அவன் மட்டந்தட்டிச் சொன்னதும் மாறி அவருடைய உயர்வைச் சொல்லும் புகழ்மொழியாகிவிடும்.

உதாரணம் காட்டினால்தான் அர்த்தம் புரியும்:"எனக்கு ரொம்ப புத்தி ஜாஸ்தி"என்று ஒருத்தன் சொல்கிறான். இன்னொருத்தன், "ஜா-வுக்குப் பதில் 'நா'போட்டுக்கோ!"என்று கிண்டல் பண்ணுகிறான். என்ன ஆகும்?"புத்தி நாஸ்தி"என்றாகிவிடுமல்லவா?ஒரு எழுத்துக்குப் பதில் இன்னொன்றைப் போடுவதில் அர்த்தம் அடியோடு மாறிவிடுவதற்கு இது எடுத்துக்காட்டு.
'ராம'என்ற பெயரில் வரும் ரா-ம என்ற இரண்டு எழுத்துக்கள்தான் முறையே அஷ்டாக்ஷர, பஞ்சாக்ஷரங்களுக்கு ஜீவனான அக்ஷரங்கள் என்று காட்டுவதற்கு ஒன்று சொல்வார்கள். "அந்த இரண்டு மந்தரங்களிலிருந்து ரா-ம எனற எழுத்துக்களை எடுத்தவிட்டுப் பாருங்கள். அர்த்தத்தின் ஜீவனே போயிருக்கு ம்"என்பார்கள். "ஓம் நமோ நாராயணாய"விலிருந்து 'ரா'வை எடுத்துவிட்டால், "ஓம் நமோ நாயணாய"தானே?'நாயணாய'என்றால் 'மார்க்கமில்லாதவனுக்கு'என்று அர்த்தம். ("நாயநாய"என்பது தான் சரியான வார்த்தையானாலும் தமாஷில் கொஞ்சம் வித்யாஸமாக -'நா'வுக்குப் பதில் 'ணா'-வரலாம்.) அஷ்டாக்ஷரத்தில், 'நாராயணனுக்கு நமஸ்கார ம்'என்றிருப்பதே விபரீதமாக மாறி, 'வழி தெரியாதவனுக்கு நமஸ்காரம்'என்றாகிவிடும்!பஞ்சாக்ஷரத்தில் 'ம'வை எடுத்தவிட்டால் ('நம:சிவாய'என்பது) 'நசிவாய'என்றாகிவிடும். 'சிவனுக்கு இல்லை'என்ற விபரீத

அர்த்தம் ஏற்பட்டுவிடும்!இவை ஒரு எழுத்தை எடுப்பதால் அர்த்தம் மாறுவதற்கு த்ருஷ்டாந்தம்.

ரங்கஸ்வாமி என்று ஒருத்தன். 'ரங்கு'என்று கூப்பிடுவது. "உன் பேருக்கு முன்னாடி ஒரு 'கு'சேர்த்துக்கோ"என்றால்? (சிரிக்கிறார்.) ஒரு எழுத்தைச் சேர்ப்பதால் அர்த்த விபரீதம்!

ஒரு எழுத்தை எடுத்துவிடுவது, omit பண்ணுவது, ச்யாவிதாக்ஷரம் எனப்படும். ஒரு எழுத்தைச் சேர்ப்பது, add பண்ணுவது அதி-தத்தாக்ஷரம், ஒரு எழுத்துக்குப் பதில் இன்னொன்று என்று substitute செய்வது ப்ரதி - தத்தாக்ஷரம் எனப்படும்.

இப்படி ரத்னச் சுருக்கமாக ஒரு மாறுதலைச் சொல்லியே ஸீதை, ராவணனைத் தானே தன் முகத்தில் கரி தீற்றிக்கொள்ளச் செய்வதாக "ஸீதா ராவண ஸம்வாத"த்தில் ஒவ்வொரு ச்லோகமும் இருக்கிறது. நான் காட்டிய உதாஹரணங்களில் ஒரே ஒரு வார்த்தையில் தான் மாறுதல் பண்ணினோம். ஆனால் அந்தப் புஸ்தகத்திலோ ஒவ்வொரு ச்லோகத்திலும் ஒரு எழுத்து எத்தனை தடவை வந்தாலும் அத்தனையிலும் அதை மாற்றி வார்த்தை ஜாலம் செய்திருக்கிறது. கஷ்டமான கார்யம். பாஷையில் விசேஷ command இருந்தால்தான் அப்படிச் செய்ய முடியும். இப்படி 50 ச்லோகம் செய்திருக்கிறார்.

நூறு பண்ணவேண்டும் என்று ஆரம்பித்தார்;ச்ரமப்பட்டு 50 பண்ணி, அதற்குமேல் முடியவில்லை என்று விட்டு விட்டார்;அப்புறம் அவருடைய சிஷ்யர் மேலும் 50 பண்ணி சதகமாகப் பூர்த்தி செய்தார்-என்று சொல்கிறார்கள்.

எழுத்துக்களில் விளையாட்டுப் பண்ணி எழுதும் இப்படிப்பட்ட ச்லோகங்களை 'வர்ண சித்ரக்ருதி'என்பார்கள். புத்திக்கு நிறைய வேலை வைத்து விநோதமாக, சிக்கலாக புதிராகப் பண்ணும் கவிதைகளுக்கு 'சித்ர கவி'என்று பெயர். சித்ரகவிலேயே இரண்டு main division. வார்த்தை ஜாலமில்லாமல் அர்த்த ஜாலம் செய்து, ஆழ்ந்து யோசித்தாலே பொருள் புரியும்படி கவிதை செய்தால் அதற்கு 'அர்த்த சித்ரம்'என்று பெயர். இப்படியில்லாமல் சப்த ஜாலம் நிறைய இருக்கும்படி-பொருளணியாயின்றிச்

சொல்லணியாகச்-செய்தால் அதற்கு 'சப்த சித்ரம்'என்று பெயர். பொருளணியில் ஸப்-டிவிஷன்தான் எழுத்தை மாற்றி விசித்ரம் செய்யும் 'வர்ண சித்ரம்'.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### " மங்கள " ச்லோகம்

இந்தப் புஸ்தகத்தில்-"ஸீதா ராவணஸம்வாத" த்தில் -கவி கணேச ஸ்துதி ஆரம்பத்தில் கூறியிருக்கிறார். அதில் தான் சந்த்ரமௌலி ஸம்பந்தமாக ஒரு கணேச லீலை வருகிறது. அது ப்ரணய கலஹத்தில் ஊடியிருந்த பார்வதீ பரமேச்வராளை ஒன்றுசேர்த்து வைத்து, நம் மனஸில் பரம மங்களமான ஒரு உணர்ச்சியை உண்டாக்குகிறது. 'மங்கள ச்லோகம்'என்பது நிஜமாகவே ரொம்பவும் மங்களமாயிருக்கிறது. ஆனால் இந்த ச்லோகம் சித்ரகவியாக இல்லை. ஸ்வாபாவிகமான (இயற்கையான) கவிதா ரஸத்தோடு அமைந்திருக்கிறது.

க்ரீடாருஷ்டாத்ரிஜாங்க்ரி ப்ரணத - சிவ - சிரச் - சந்த்ரகண்டே கராக்ரம்

லீலாலோலம் ப்ரஸார்ய ஸ்புரதமலபிஸாசங்கயா (ஆ)க்ரஷ்டுகாம :*

உத்யத் ஹ்ருத்ய ஸ்மிதாப்யாம் அஹமஹமிகயா (ஆ)லிங்க்யமாந : சிவாப்யாம்

கச்சிந் - நச்சிந்திதார்த்தம் கலயது களபோ பால லீலாபிராம :**

குட்டியானையான கணபதி குழந்தை விளையாட்டில் களிக்கிறது: "களபோ பாலலீலா அபிராம:"

அந்த ஆனந்தக் குழந்தை நாம் விரும்பி நினைக்கிற பொருளையெல்லாம் நமக்கு அருளட்டும் :"ந:சிந்தித அர்த்தம் கவயது."

இது கடைசி வரி,

முதல் மூன்று வரிகளில் அது பண்ணும் விளையாட்டு போக்கிரித்தனம் என்று சொல்வதா, நிஷ்கபடமாக விளையாடுகிறது என்று சொல்வதா, என்று புரியாத விளையாட்டு எப்பயானாலும் ரஸித்து மகிழும்படியாக இருக்கிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### ஊடல் - கூடலின் தத்வார்த்தம்

'அத்ரி - ஜா'என்னும் 'மலைமகள்'இருக்கிறாளே, ஸாக்ஷாத் பார்வதி, அவளுக்கு பர்த்தாவிடத்தில் பொய்க்கோபம். 'க்ரீடா ருஷ்டா'என்று விளையாட்டுக் கோபக்காரியைச் சொல்லியிருக்கிறார் (கவி). இப்படி நாயகி ஊடல் செய்யும்போது நாயகன் அவள் காலிலேயே போய்விழுவதாகச் சொல்வது கவி மரபு. 'கீத கோவிந்த'த்தைப் பார்த்தால் க்ருஷ்ணன் ராதையின் காலில் போய் விழுந்தான் என்று இருக்கும். அருணகிரிநாதரில் (அவரது திருப்புகழில்) பார்த்தால் வள்ளிக்குறத்தியின் காலிலே போய் சிவசக்தி குமாரராக இருக்கப்பட்ட ஸுப்ரஹ்மண்யர் விழுந்தாரென்று இருக்கும்.

என்ன அர்த்தம்?ஜீவாத்மாதான் நாயகி, நாயகன், பரமாத்மா, ஜீவாத்மா எத்தனை பிணங்கிக்கொண்டு போனாலும் பரமாத்மா அதன் காலில் விழுந்து கெஞ்சிக் கூத்தாடியாவது தன்னுடன் சேரும்படிப் பண்ணும் என்பதே அர்த்தம். இரண்டு பேரையும் எப்பாடு பட்டாவது சேர்த்து வைக்கும் ஸகி என்று ஒருத்தி வருவாள். அவர்களிடையே தூது போவாள். ஜீவாத்ம-பரமாத்க்களைத் சேர்த்து வைக்கும் ஆசார்யர்தான் அந்த ஸகி. வெளியிலே பார்த்தால் ஏதோ காதல், விரஹம் என்று இருந்தாலும் உள்ளே இப்படிப் பாரமார்த்திகமாக இருக்கும்.

நம்முடைய ச்லோகத்தில் ஸகி செய்வதை ஒரு புது மாதிரியாக விளையாடிவிடுகிறார். இருவருக்கும் குழந்தையான விக்நேச்வரர்.

தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

தேவரும் தொழும் தெய்வம்

விளையாட்டில் மறைந்த விரோதம்

பார்வதி 'கடுகடு'என்று உட்கார்ந்திருக்கும்போது பரமசிவன் போய் அவள் காலில் விழுகிறார். "ப்ரணத சிவ"-ப்ரணாமம், நமஸ்காரம் பண்ணுகிறாராம் சிவபெருமான்!

ஜடாபாரத்தை அம்பாள் பாதத்தில் தடாலென்று அவர் சாய்க்கிறபோது அதிலுள்ள பிறைச் சந்திரன் 'குபுக்'கென்று நன்றாக வெளிப்பட்டு ப்ரகாசிக்கிறது.

இங்கிருந்துதான் சந்த்ரமௌளி ஸமாசாரம் ஆரம்பிக்கிறது.

ஈச்வரன் அம்பாள் பாதத்தில் நமஸ்கரிக்கும் கோலத்தில் சந்த்ர கண்டம் (பிறைச் சந்திரன்) நன்றாகத் தெரிகிறது.

யானைக்குட்டி என்ன பண்ணுமென்றால் குளத்திலே, ஓடையிலே புகுந்து அமர்க்களம் செய்யும்போது அதிலிருக்கும் தாமரைத் தண்டுகளை முறித்து, உள்ளேயிருக்கும் நூலை ஆசையோடு தின்னும். வாழைத் தண்டைவிடக்கூட இன்னம் நூல்மயமாக இருப்பது தாமரைத் தண்டு. யானை அந்தத் தண்டை முறித்து முறுக்குகிறபோது உள்ளேயிருக்கும் அத்தனை நூலிழையும் சுத்தையாக ஒன்று சேர்ந்து முறுக்கிக் கொண்டு வெள்ளை வெளேரென்று வரும். அதை யானைக் குட்டி ஆசை ஆசையாகத் தின்னும்.

இப்போது வெள்ளை வெளேரென்று ரேகா ப்ரமாணமாகத் தெரிகிற சந்திரனைப் பார்த்ததும் பாலகணேச யானை இது அந்த மாதிரியான தாமரை நூல் கத்தைதான் என்று நினைத்துக்கொண்டது. 'இதென்ன, தாமரை நூல்

கத்தையா?'என்று அதற்குக் கேள்வி வந்துவிட்டது. "ஸ்புரத் - அமல - பிஸ - ஆசங்கயா":ப்ரகாசிக்கின்ற - நிர்மலமான - தாமரைத்தண்டு (பிஸம் என்றால் தாமரை நூல்;தண்டு என்றும் சொல்லலாம்)-என்ற ஸந்தேஹத்தினால் ('ஆசங்கா'என்றால் கேள்வி, இது இப்படியிருக்குமோ என்னும் ஸந்தேஹம். ஸந்தேஹம் என்பதைவிட guess, ஊஹம் என்று சொல்லி விடலாம்.)

சந்த்ர கண்டத்தைப் பார்த்ததும் இது தாமரை நூல் கத்தை என்று பிள்ளையார் guessபண்ணினார்.

உடனே அதைப் பிடித்திழுக்க வேண்டுமென்று ஆசை ஏற்பட்டுவிட்டது : "ஆக்ரஷ்டுகாம :"

எதற்காக?தின்பதற்காகத்தான்

நிஜமாகத்தான் இப்படி ஸந்தேஹம் வந்ததோ?விளையாட்டுக் குறும்பில், அப்பா அம்மாவைச் சேர்த்து வைக்கவேண்டுமென்றே அப்படி நடித்தாரோ? "பால லீலாபிராம :"-குழந்தை விளையாட்டில் குஷிப்படுகிறவர் என்று பின்னாடி (கவி) முடித்திருக்கிறாரே?இங்கேயும் ஒரு 'லீலா லோலம்'வேறு போட்டிருக்கிறார்!

பஜனைகளில் 'லீலா லோலா', 'ராஸலீலா லோலா'என்றெல்லாம் கேட்டிருப்பீர்கள். ஒன்றுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு ஆடுவதுதான் 'லோலம்'. விளையாட்டு ப்ரியனாக விஹாரம் செய்பவன் லீலா லோலன்.

இங்கே நம் ச்லோகத்தில் 'லீலாலோலம்'என்று சொல்லியிருப்பது முழுப் பிள்ளையாரையும் இல்லை. முழுப் பிள்ளையாரையும் இல்லை என்றால் என்ன அர்த்தமென்றால், இங்கே குறிப்பாக அவருடைய தும்பிக்கை நுனிதான் விளையாட்டில் ப்ரியத்தோடு அசைந்தாடிக் கொண்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறது. பின்னால் அவரையே, அதாவது முழுப் பிள்ளையாரையும் லீலாபிராமன் என்றவர் இங்கேயும் 'லீலாலோலன்'என்று சொன்னால் புனருக்தி தோஷம் (கூறியது கூறல் என்ற குற்றம்) ஏற்பட்டுவிடும். அதனால் இங்கே அவருடைய ஒரு அங்கமாக மட்டுமுள்ள தும்பிக்கை நுனிக்கும் தனியாக ஒரு விளையாட்டு ஆசை இருப்பதாக, 'கராக்ரம் லீலாலோல

ம்'என்கிறார். 'கர அக்ரம்':யானையின் கையாகிய துதிக்கையின் நுனி. தும்பிக்கையை ஆட்டி ஆட்டிக்கொண்டு அதன் நுனியால் எதை உறிஞ்சலாம். எதைத் துழாவலாம், முறுக்கலாம், உடைக்கலாமென்று அவர் போவதைப் பார்த்தால், அந்தத் தும்பிக்கைக்கே தனியாக ஒரு உயிர் இருந்து, அதுதான் விளையாட்டில் ஆடி அசைகிறது என்று நினைக்கும்படி இருக்கிறது.

வெள்ளை வெளேரென்று சந்திரன் தாமரை நூல் கத்தை மாதிரி இருக்கிறது. இரண்டும் குளிச்சியாக இருப்பவை. நிலாக் கிரணங்கள் தனித்தனித் தாமரை நூலிழைகள் மாதிரி இருக்கின்றன.

பராசக்தி குண்டலிநீயாக ஸூக்ஷ்ம ரூபத்தில் ஒரு தாமரை நூலிழைப் பரிமாணத்தில்தான் இருக்கிறாள். 'பிஸதந்து தநீயஸி'என்று (லலிதா) ஸஹஸ்ரநாமத்தில் இருக்கிறது.

தாமரை நூல் கத்தை, அல்லது தண்டு போல இருக்கும் சந்திரப் பிறையைக் கண்டதும் அதை இழுக்கப் பிள்ளையார் ஆசைப்பட்டாரல்லவா?உடனே விளையாட்டு விநோதமாக ஆடிக்கொண்டிருக்கும் துதிக்கை நுனியை நீட்டி... "ப்ரஸார்ய"என்றால் நீட்டி...எட்டியிருப்பதை இருந்த இடத்திலிருந்தே தொட்டிழுத்துக்கொள்ள வாகாக நீட்டுமாறு பிள்ளையாருக்குத் தும்பிக்கை இருப்பதால் அதை நீட்டி, அம்மா பாதத்தில் விழுந்துள்ள அப்பாவின் சிரஸிலுள்ள சந்திர கலையை இழுக்க முயற்சி பண்ணினார்.

யானைக்குட்டி, ப்ரிய புத்ரன், குறும்பாக விளையாடிக் கொண்டுதன் தலையில் இருக்கும் சந்திரனைத் தும்பிக்கையால் பிடித்திழுக்கிறது என்றால் அந்தப் பரமேச்வரத் தகப்பனாருக்குத் எத்தனை ஸந்தோஷமாக இருக்கும்?கல்பனையாக நினைத்துப் பார்த்தாலும் நமக்கே அந்தக் காட்சியில் ஆனந்தம் பொங்கிக் கொண்டு வரும்போது, நேராக தாமே அந்த விளையாட்டுக்கு ஆளானவருக்கு அதுவும் ஸொந்தப் பிதாவாகவும் இருப்பவருக்கு அப்படியே பூரித்துக்கொண்டு தானே ஸந்தோஷம் ஏற்பட்டிருக்கும்?சந்த்ரமௌளீச்வரன் என்று தன்க்குப் பெரிய பெயர் கொடுத்துள்ள அந்த சிரோபூஷணத்தைப் பிள்ளை அபஹரிக்கப் பார்ப்பதே மகுடாபிஷேகம் செய்விக்கிற மாதிரி அவருக்குப்

பேரானந்தத்தைக் கொடுத்தவிட்டது!

இவருக்கே இப்படியென்றால் அம்மாவுக்கு எப்படியிரு ந்திருக்கும்?குழந்தையின் விளையாட்டில் அப்பாவைவிட அவள்தான் அதிக ஸந்தோஷம் அடைவாள். அதுவும் இப்போது அப்பாக்காரர் இவள் காலிலே தழைந்து விழுந்து கிடக்கிறார். இவளானால் 'உர்உர்'என்றிருக்கிறாள். இந்த ஸமயத்தில் அவருக்கு மிக அழகான சிரோபூஷணமாக இருந்துகொண்டு சந்த்ரமௌளி, இந்து சேகரர் என்றெல்லாம் அவருக்கு லோக ப்ரக்யாதியை உண்டாக்கும் பிறையைக் குழந்தை, ப்ரிய வத்ஸன், இழுத்தால், "வேணும், வேணும், இவருக்கு நன்னா வேணும்!பிள்ளை கையிலே சந்தினைக் கொள்ளை கொடுத்துவிட்டு நிற்கட்டும்!"என்று தானே தாங்கமுடியாத ஆனந்தம் ஏற்படும்?

பிள்ளை சேஷ்டையின் ஸந்தோஷத்தில் இரண்டு பேருக்குமே தங்கள் சண்டை ஸமாசாரம் மறந்துபோய் விட்டது!தான் உர்ரென்று மூஞ்சியைத் தூக்கிவைத்துக் கொண்டு சண்டைக்கு முஸ்தீபாக இருக்கவேண்டும் என்பது அம்பாளுக்கும், தான் அவளுடைய காலைப் பிடித்துக் கொண்டு மன்றாடியாவது மறுபடிப்ரேமையை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும் என்பது ஸ்வாமிக்கும் மறந்தே போய் விட்டது. குழந்தை விளையாட்டில் தங்கள் விரோதத்தை மறந்து சிரித்து விடுகிறார்கள். இருவரும் ஸந்தோஷப்பட்டுக் கொண்டு ஹ்குதயம் ரொம்பி சிரித்துக்கொண்டு... "ஹ்ருத்ய ஸ்மிதாப்யாம்"என்பது ஹ்ருதய பூர்வமாக சிரிக்கிற பார்வதீ பரமேச்வரர்களைக் குறிப்பிடுவது... வாய் சிரிப்பது மட்டுமில்லை;இவள் போலியாய்க் கோபித்துக் கொண்டிருப்பது, அவர் போலியாய் இவளுக்கு அடிமை மாதிரி நமஸ்காரம் பண்ணுவது- போலில்லாமல், போலிச் சிரிப்பாய், பொய்ச் சிரிப்பாய் இல்லாமல் வாய்ச் சிரிப்பாய் மட்டுமில்லாமல், ஹ்ருதயமே மலர்ந்து, அந்த மலர்ச்சியில் வாயாலும் சிரிப்பவர்களாக அவர்கள் ஆகிவிடுகிறார்கள்.

தங்களுடைய ஊடல் மறந்து போய், இரண்டு பேருக்குமே குழந்தையை அப்படியே கட்டி அணைத்துக் கொள்ளவேண்டுமென்று ஆர்வம் பொத்துக்கொண்டு வருகிறது. "நான், நான்"என்று போட்டிபோட்டுக்கொண்டு இரண்டு பேரும் பால கணேசனை இறுக ஆலிங்கனம்

செய்து கொள்கிறார்கள். "ஹ்ருத்ய ஸ்மிதாப்யாம் அஹமஹமிகயா ஆலிங்க்யமான:சிவாப்யாம்"-ஹ்ருதயம் ரொம்பிச் சிரித்துக்கொண்டு 'நான்தான் நான்தான்'என்று முண்டியடித்துக்கொண்டு... "அஹம் அஹமிகா"என்றால் நான் நானென்று ஒருத்தரோடொருத்தர் போட்டு போடுவது, அப்படிக் 'குழந்தையை நான்தான் முதல்லே கட்டி யணைச்சுப்பேன்'என்று பார்வதீ பரமேச்வராள் போட்டி போட்டுக்கொண்டு ஆலிங்கனம் பண்ணிக் கொள்கிறார்கள்.

"சிவாப்யாம்":அவர் சிவன். அவள் சிவா. அம்பாளுக்கு சிவா என்று பெயர். ஸர்வமங்களா என்று அர்த்தம். 'சிவாப்யாம்'என்றால் 'சிவன் சிவா ஆகிய இருவராலு ம்.'இருவராலும் விகநேச்வரர் ஆலிங்கனம் செய்து கொள்ளப்படுகிறார்: "ஆலிங்க்யமான:சிவாப்யாம்". குழந்தையை அணைத்துக் கொள்வதில் பெற்றோர் அடையும் ஆனந்தத்தைக் குறளில் கூடச் சொல்லியிருக்கிறது-மெய்தீண்டல் என்று சொல்லியிருக்கிறது. 'சாகுந்தல'த்தில் துஷ்யந்தன் சகுந்தலையைத் திரஸ்காரம் பண்ணிப் பல வருஷங்களுக்கு அப்புறம் கச்யபரின் ஆச்ரமத்தில் பரதனைத் தன் பிள்ளையென்று தெரிந்து கொள்ளாமலே பார்க்கிறான். பார்த்த பாத்திரத்தில் அவனைக் கட்டியணைத்துக் கொள்ளணும்போல அவனுக்கு ஒரு தாபம் உண்டாகிறது. இந்த இடத்தில் காளிதாஸனும் துஷ்யந்தன் வாயிலாகக் குழந்தையை மடியோடு அணைத்து வைத்துக்கொண்டு கொஞ்சுவதன் ஆனந்தத்தைச் சொல்லியிருக்கிறார். அப்புறம் அவன் வாஸ்தவமாகவே குழந்தையை மெய்தீண்டியதும் புல்லரித்துப்போகிறான் என்று கதை போகிறது, இதே போல பவபூதியும் "உத்தர ராம சரித"த்தில் லவகுசர்களை ராமர் இன்னாரென்றே தெரிந்து கொள்ளாமல் ஆலிங்கனம் செய்து கொண்டபோது எப்பேர்ப்பட்ட ஆனந்தமடைந்தாரென்று சொல்லியிருக்கிறார். அப்படியானால் அன்பே உருவான ஸாக்ஷாத் விக்நேச்வர மூர்த்தியைக் குழந்தையென்று பார்வதி பரமேச்வரர்கள் கட்டியணைத்தது எத்தனை பேரானந் தமாயிருந்திருக்கும்?

போட்டி போட்டுக்கொண்டு இரண்டு பேரும் குழந்தையை ஆலிங்கனம் பண்ணிக்கொள்கிறார்கள், குழந்தையையா பண்ணிக்கொள்கிறார்கள்?அவர்களே பண்ணிக்கொணடு

விடுகிறார்கள்!குழந்தை நடுவிலே இருக்கிறது. அதை இரண்டு பக்கமும் இரண்டு பேருமாக ஏக காலத்தில் அணைத்துக்கொள்கிறார்களென்றால், அந்த அவஸரத்தில் தங்களை அறியாமல் தாங்களே பரஸ்பரம் ஒருத்தர் முதுகில் இன்னொருத்தர் கைபோட்டுக்கொண்டு தானே விடுவார்கள்?

இந்த மாதிரி உத்தேசித்தோ உத்தேசிக்காமலோ, ஸ்வாமியுடைய திவ்ய ஸ்பரிசம் அம்பாளுக்கும், அம்பாளுடைய திவ்ய ஸ்பரிசம் ஸ்வாமிக்கும் ஒரு க்ஷணம் கிடைத்துவிட்டால்கூட, அப்புறம் அவர்களுக்குள் மனஸ் தாபம், ஒருத்தர் உர் உர்ரென்று உட்கார்ந்திருப்பது, இன்னொருத்தர் தவித்துக்கொண்டு காலில் விழுவது ஆகியவை நீடிக்கமுடியுமா?ஊடல் ஒட்டம் பிடித்து அவர்கள் இரண்டு பேரும் - ஸர்வலோகங்களுக்கும் தாய் தந்தையராக இருக்கப்பட்ட இரண்டு பேரும் - பரம ப்ரேமையில் ஒன்று சேர்ந்துவிட வேண்டியதுதானே?

அந்தத் தாய் தந்தையருக்கு நாம் எல்லாருமே குழந்தைகளென்றாலும் பிள்ளையார்தான் முதல் பிள்ளை, தலைச்சன், தலைப்பிள்ளை இரண்டு பேரும் உள்ளம் குளிர்ந்து ஒன்று சேர்ந்து உலகம் முழுதற்கும் ஆசீர்வாதம் செய்யும் படியாக அந்தப் பிள்ளையார் அவர்களைச் சண்டை தீர்த்து வைத்து ஸமாதானமாகப் போகும்படிப் பண்ணிவிடுகிறார். பால லீலா சேஷ்டிதமாகத் தகப்பனாரின் சிரஸிலுள்ள சந்த்ர கலையைப் பிடித்திழுத்து, நம் எல்லோருக்கும் லோக மாதா பிதாக்கள் அருள் கூரும்படியாக அவர்களை ஒன்று சேர்த்து விடுகிறார்.

பார்வதீ பரமேச்வராள் இவரை அணைத்துக் கொள்ளப் போனதில் தாங்களே பரஸ்பரம் ஸ்பர்சித்துக்கொண்டு ஊடல் தீர்ந்ததை ச்லோகத்தில் உடைத்துச் சொல்லவில்லை. ஹ்ருதயமாரச் சிரித்துக்கொண்டு, போட்டிபோட்டுக் கொண்டு சிவ-பார்வதியரான இருவராலும் விநாயகர் ஆலிங்கனம் செய்து கொள்ளப்படுகிறாரென்று சொல்லி அப்படியே விட்டிருக்கிறது. ஆனால் "க்ரீடாருஷ்டா"என்று அம்பாளின் பொய்க் கோபத்தில் ஆரம்பித்து, சந்த்ர கண்ட சிரஸூக்காரர் அவள் காலில் விழுந்ததைச் சொன்னதால், அந்தக் கதையைப் பூர்த்தி பண்ணாமல் விட்டால் கவிக்கு தோஷம் ஏற்படும். விஷயமறிந்த கவி அப்படி விடவேமாட்டார்.

ரஸிகர்கள் பூர்த்தி செய்து கொள்ளும்படி ஸூசனை காட்டி, 'குறிப்பாலுணர்த்தி', விஷயத்தைவிடும் நயமான யுக்தியை இங்கே கையாண்டு ஊடியவர்கள் கூடியதாகக் கதையை முடித்து வைக்கிறார்.

பரம மங்களமாக இப்படிப் பெற்றோரைச் சேர்த்து வைத்த விநாயக மூர்த்தி நாம் விரும்பிய எந்தப் புருஷார்த்தமானாலும் அதை நமக்குச் சேர்த்து வைக்கட்டும்: ந : சிந்திதார்த்தம் கலயது என்று கவி மங்களாசாஸனம் பண்ணுகிறார்.

# தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### " அந்த " ச்லோகத்திற்கு " இந்த " ச்லோகத்தின் அத்தாட்சி

அம்பாள் தம்மோடு சேரவேண்டும் என்று ஸ்வாமி விரும்பினார். அவளுக்கு நமஸ்காரம் பண்ணினார். நமஸ்காரம் அவளுக்கு;ஆனால் அவர் விருப்பத்தை நிறைவேற்றியதோ விக்நேச்வரர்!நான் "ந்யாயேந்து சேகர"ச்லோகம் சொல்லி, 'இந்து சேகர'ஸம்பந்தத்துக்காகவே "ஸீதா ராவண ஸம்வாத"ச்லோகம் சொல்லப் போக, இதிலேயும் அதில் பார்த்த விஷயத்துக்கு அத்தாட்சி வந்து விடுகிறது!இப்படித்தான் பல நல்ல, ரஸமான ஸமாசாரங்களை எடுத்துப்போட்டுக்கொண்டு கொஞ்சம் அலசினால் எதிர்பார்க்காத புதையல்கள் அகப்படுகின்றன!இப்போது அகப்படும் புதையல், அந்த ச்லோகத்தின் தீர்மானத்திற்கு இந்த ச்லோகத்தில் கிடைக்கும் அத்தாட்சி அல்லது கன்ஃபர்மேஷன். எந்த தேவதையை நாம் ஆராதித்தாலும், அந்த தேவதையும் தன்னுடைய அநுக்ரஹ கார்யத்துக்கு இடையூறு ஏற்படாமலிருப்பதற்காக விக்நேச்வரரிடம்தான் போய்ப் பிரார்த்தித்துக்கொண்டு நிற்குமாதலால், நாம் நேராக அவரொருவரையே எந்த அபீஷ்டம் நிறைவேறுவதற்கும் ஆராதித்துவிட்டால் போதும் என்று அந்த ச்லோகத்தில் பார்த்தோம். இப்போது இங்கே, இந்த ச்லோகத்தில், கவி

அந்த உத்தேசத்தில் இதை இயற்றாத போதிலும், என்ன பார்க்கிறோமென்றால்-அம்பாளோடு ஒற்றுமையாய்ப் போகவேண்டுமென்று ஈச்வரன் அவளை ஆராதிக்கிறார். காலிலே விழுவதைவிட என்ன ஆராதனை வேண்டும்?இப்படி அவர் ஆராதனை பண்ணியும் அவள் ஒன்றும் பண்ணவில்லை. கோபமாகவே இருக்கிறாள். அவளுக்கும் உள்ளூர ஒற்றுமையாக வேண்டுமென்றுதான் ஆசை. ஆனாலும் பிகுவை விட்டுக் கொடுப்பதா என்று ஒன்று புரியாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். கடைசியில் விக்நேச்வரர் அவர்களை விளையாட்டாக ஒன்று சேர்த்து விடுகிறார். அதாவது இவருக்கு ஆராதனை பண்ணாமல் அம்பாளைத்தான் ஈச்வரன் ஆராதித்தபோதும்கூட அவள் அந்த ஆராதனா பலனைத் தராமல் இவர்தான் தந்திருக்கிறார்!அதே மாதிரி, ஈச்வரனை ஆராதனை பண்ணாமல் அதற்கு நேர்மாறாக அவள் கோபமாயிருந்தாலும் அவளுக்கு உள்ளூர ஆசை எப்படியாவது அவர் தன்னைச் சேர்த்துக்கொண்டு விடவேண்டுமென்பதுதான். ஈச்வரனிடம் சேரணும், ஈச்வரன் நம்மைச் சேர்த்துக் கொள்ளணும் என்று ஆசைப்படுவது ஆராதனையில்லாமல் வேறே என்ன?வெளியில் கோபம், அவமரியாதை என்று அவள் காட்டினாலும் உள்ளே ப்ரியம், ஆராதனைதான் நிறைந்திருக்கிறது. அப்போது ஈச்வரனும் தாமாக அவளுடைய ஆராதனா பலனைக் கொடுத்துச் சேர்த்துக் கொள்ளவில்லை. விக்நேச்வரர்தான் அவர்களைச் சேர்த்து வைத்து அவர்களுடைய மனோபீஷ்டம் நிறைவேறுமாறு செய்து ஆராதனா பலனைக் கொடுத்திருக்கிறார். இதனால் இவரே எந்தப் பலனும் தர வல்லவர், இவரொருத்தரை நாம் ஆராதித்தாலே போதும் என்று கன்ஃபர்ம் ஆகிவிடுகிறதல்லவா?

மநுஷ்யர்களான நாம் தேவர்களிடம் பெறக்கூடிய அபீஷ்ட பூர்த்திகளுக்காக விக்நேச்வரரைப் பிடித்துவிட்டால் போதும் என்று அந்த ச்லோகம் காட்டிட்டடென்றால், இந்த ச்லோகமோ இன்னம் மேலேபோய், தேவர்களுக்குள் உச்சியில் இருக்கப்பட்ட பரமேச்வர தம்பதியுமே தங்களுக்குள்ளே ஒரு விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதுகூட இவருடைய ஸஹாயத்தால் முடிகிறது என்று காட்டுகிறது. குழந்தை விளையாட்டாக அவர் அந்தப் பெரிய கார்யத்தைப் பண்ணிவிடுகிறார்!ஸஹாயம் பண்ணவேண்டும் என்று தாம்

உத்தேசித்ததாகக்கூடக் காட்டிக்கொள்ளாமல், 'இவர் என்னமோ விளையாடினார்!அப்பா அம்மா ஒன்று சேர்ந்து விட்டார்கள்'என்று நினைக்கும் விதத்தில் பண்ணிவிடுகிறார்!

இவர் நாம் மனஸில் நினைக்கும் எல்லா அபீஷ்டங்களையும் ஸகல புருஷார்த்தங்களையும் ("சிந்திதார்த்தம்"என்பது இவற்றைத்தான்) நிச்சமயமாக நிறைவேற்றித் தரும். அநுக்ரஹ மூர்த்தியாகத்தானே இருப்பார்?இப்படி அவர் அருளட்டும் என்று கவி முடிக்கிறார்.

"ஸர்வார்த்தங்களையும் தருவதில் பிள்ளையார் சதுரர்"என்று "ந்யாயேந்து சேகர"ச்லோகம் சொன்னதற்குக் கன்ஃஃபர்மேஷனாகவே இந்த ச்லோகம் "நம்முடைய சிந்திதார்த்தங்களைப் பிள்ளையார் நிறைவேற்றி வைக்கட்டு ம்"என்கிறது!

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

### களபம்

பிள்ளையாருடைய பெயரில் எதுவுமே ச்லோகத்தில் இல்லை. 'களபம்'என்றுதான் வருகிறது. "கலயது கலபோ"என்று அழகான மோனையாக வருகிறது. (கலபம், களபம் என்று இருவிதமாகவும் ஸம்ஸ்க்ருதத்தில் வரும். ல-ள வித்யாஸம் அந்த பாஷையில் பார்ப்பதில்லை.) 'களபம்'என்றால் யானைக்குட்டி. 'குட்டி யானை'என்று சொன்னால் அதைவிடச் செல்லமாகயிருக்கிறது. வேடிக்கையாகவே பெரிய காரியங்களையும் ஸாதித்தது தெரியாமல் ஸாதித்துக் கொடுத்துவிட்டு, நாம் செல்லம் கொடுத்துக் கொஞ்சும் ஒரு விளையாட்டு ஜீவனாக இருக்க ப்ரியப்படுபவரை 'கணேசர்', 'விகநேச்வரா'என்ற மாதிரிப் பெரிய பெயர்களால் தெய்வமாகக் காட்டாமல், குட்டியானை என்று சொன்னாலே ஸந்தோஷப் படுவாரென்றுதான் 'களபம்'என்று போட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

அவ்வையார் "அகவ"லை

சீதக் களபச் செந்தாமரைப் பூம்

பாதச் சிலம்பு

என்று ஆரம்பிக்கிறாள். ஆனால் இங்கே 'களபம்'என்பது யானைக் குட்டியில்லை. யானைக்குட்டி ஸ்வாமியின் பாதத்தில் குங்குமப்பூ, பச்சைக் கர்ப்பூரம் முதலியவற்றோடு சேர்ந்து அரைத்த சந்தனம் பூசியிருக்கிறது. கலவை என்றும் கலவைச் சந்தனம் என்றும் சொல்கிற அந்த கந்தோபசாரத்தைத்தான் களபம் என்றும் சொல்வது. இங்கே ("அகவ"லில்) அதுதான் அர்த்தம். பெரிய யோக மூர்த்தியாக, அத்வைத ஞான மூர்த்தியாகப் பிள்ளையாரை ஸ்துதித்து அவ்வை பண்ணியது இந்த அகவல். அதனால் இதிலே 'பால லீலாபிராமனாக'விளையாட்டு பண்ணும் குட்டியானையாக அவரைச் சொல்ல முடியவில்லை. ("அகவல்"அறி ந்தவர்களிடம் சிறிது உரையாடி விட்டு) " அற்புதம் நின்ற கற்பகக் களிறு ", " வித்தக விநாயக "என்று அவரை உயர்ந்த ஸ்தானம் கொடுத்துத்தான் அவ்வை கூப்பிடுகிறாள். யோக சாஸ்த்ர ரஹஸ்யங்களைச் சொல்ல வந்த நூலில் அவரை அப்படிக் காட்டுவதுதான் ஔசித்யம் (உசிதமானது). ஆனாலும் குட்டியானையாக அவர் விளையாடிக்கொண்டிருப்பதையும் கொஞ்சம் கோடியாவது காட்டாமல் விடக்கூடாது என்று அவளுக்கு இருந்திருக்கும் போலிருக்கிறது!என்ன யோக சாஸ்த்ரம் எழுதினாலும் அவள் குழந்தைகளுக்கேயான பாட்டிக் கவியல்லவா?குழ ந்தைகளுக்கு மிகவும் ப்ரியமான யானைக்குட்டியை மறைமுகமாகவாவது சொல்லாமல் விடக்கூடாது என்றே, "புரிஞ்சுக்கிறவா புரிஞ்சுக்கட்டும்"என்று, எடுத்தவுடனேயே "சீதக் களப"என்று போட்டுவிட்டாள் என்று தோன்றுகிறது.

## தெய்வத்தின் குரல்(ஐந்தாம் பகுதி)

## தேவரும் தொழும் தெய்வம்

## லேசாக்கி அருள்வாராக !

இடையூற்று நீக்கத்திற்காக ஸகல தேவர்களாலும் வணங்கப்படுபவர்;தேவர்களில் உச்சாணியிலிருக்கிறவர்கள் தங்களுக்குள்ளேயே வணங்கிக் கொண்டாலும் பிணங்கிக் கொண்டாலுங்கூட அவர்களுடைய காமனைகளையும் (விருப்பங்களையும்) தாமாக நிறைவேற்றி வைப்பவர்- இப்பேர்ப்பட்ட மஹிமைகள் கொண்ட விகநேச்வரரை நாமும் பக்தியுடன் வணங்கி விகநேச்வர ப்ரஸாதத்தால் தடைகள் யாவும் ஆனந்தமாக இருப்போம்!

பெரியதடை நம் மனஸேதான். ஏதாவது காமம், கவலை, -'இது அப்படியாகணும்', 'அது அப்படியாகணும்', 'அப்படி ஆகுமோ ஆகாதோ?', 'எப்படி ஆயிடுமோ?'என்று பல தினுஸான எண்ணங்களின் பாரத்தில் நெரிபடுவது-என்று நம் மனஸையே நம்முடைய வாழ்க்கைப் பிரயாணம் ஆனந்தப் பாதையில் போகமுடியாதபடி பெரிய தடையாக குறுக்கே போட்டுக்கொண்டிருக்கிறோம். விக்நேச்வரரை உபாஸித்து உபாஸித்து அவருடைய ப்ரஸாதத்தினால் அவர் மாதிரியே நாமும் குழந்தைகளாகி ஒரு காமமில்லை, கவலையில்லை போனதையும் வருவதையும் குறித்த மனோபாரம் இல்லவே இல்லை என்றாகி,-அப்பப்போ ஒரு ஸந்தோஷமா?அதே குழந்தை மாதிரி நன்றாகச் சிரித்து அநுபவித்துக் கொண்டு-அதே மாதிரி, அப்பப்போ ஒரு துக்கம் வந்தாலும் அந்த நிமிஷம் மட்டும் அழுதுவிட்டு, ஆனால் அப்புறம் நினைத்து நினைத்து அழாமல்-இப்படி சிரிப்பு, அழுகை இரண்டும் இருந்தாலும் சிரித்து விளையாடுவதுதான் ஜாஸ்தியாக ஒரு குழந்தை இருப்பதுபோலவே இருந்துவிட்டோமானால் நம்மைவிட பாக்யசாலியில்லை. முக்யமாக, 'சென்று போனது இப்படியாச்சே; வரப்போவது இப்படியிருக்ககணுமே'என்று ஓயாமல் நம்மை பிய்த்துப் பிடுங்கும் சிந்தனைச் சுமை குழந்தைக்கு இல்லாததுதான் அதனுடைய ஆனந்தத்தின் ரஹஸ்யம். குழந்தை ஸ்வாமி கனமான யானை ரூபத்திலிருந்தாலும் இந்த விசாரத் சுமையில்லாமல் பரம லேசாக இருப்பவர். 'நெட்டிப் பிள்ளையார்'என்று அவரை லேசாகப் பண்ணுகிறோமல்லாவா?நம்மையும் அவர் அப்படிப் பண்ண ப்ரார்த்திப்போம்.

கவலை, குறை மட்டுந்தான் பாரம் என்றில்லை. தன்னைப்பற்றிய பெருமையும்கூடப் பெரிய பாரம்தான். இன்னும் சொல்லப்போனால் இதுதான் பெரிய பாரம். கவலைப்படுவது துக்க பாரம். தான் என்ற பெருமை அஹங்கார பாரம். துக்கத்தைப் போக்கிக்கொண்டு அதன் பாரம் தீரணும் என்ற எண்ணமாவது இருக்கிறது. அஹங்காரமோ பாரம் என்றே தெரியாததால் இதுதான் பெரிய ஆபத்து. இது குறைத்துக்கொள்ள வேண்டியது என்பதையே நாம் உணராததால் பாரத்தைப் பெருக்கிக் கொண்டே போகிறோம். 'நாம் இப்படியிப்படிப் பண்ணினோமாக்கும், இதையிதை ஸாதித்தோமாக்கும்'என்று பெருமைப்படுவது அஹங்கார பாரம்தான். விசேஷமாக எதுவும் செய்யாவிட்டாலும்கூட, "நான் அதைப் பண்ணினேன், இதைப் பண்ணினேன்"என்று வார்த்தையிலாவது சொல்லிக்கொள்ளத் தோன்றுகிறது. யாராவது ஏதாவது ஸரியில்லாமல் பண்ணிவிட்டால், "நானாயிருந்தா என்ன பண்ணியிருப்பேன் தெரியுமா, ஸார்?"என்று கேட்கத் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் நாம் பண்ணியிருந்தால் இன்னும் மோசமாயிருக்கும்!இப்படிக் கர்த்தாவாகக் கொண்டாடிக்கொள்ளும் பெருமையினால் நாமே நம் கழுத்தில் கல்லை கட்டிக் கொள்கிறோமென்பதுதான் உண்மை. கர்த்ருத்வம் மாதிரி பாரம் எதுவும் கிடையாது என்று பாரமார்த்திகமாகக் கொஞ்சம் போனால்கூடத் தெரிந்துவிடும்.

தேவர்களெல்லோராலும் தொழப்பட்டு, அவர்களுடைய விக்னங்களையும் போக்கும் பெரிய கார்யத்தைச் செய்யும் பிள்ளையார் எப்படியிருக்கிறார்?கொஞ்சமாவது பெருமை கொண்டாடிக்கொள்கிறாரா?அவர் பாட்டுக்கு குழந்தையாகவே அப்பா சிரஸிலுள்ள பிறையைப் பிடித்திழுத்து விளையாடிக்கொண்டிருக்கிறார். அதைத் தாமரைத் தண்டு என்று நினைத்துக்கொள்ளும் அறியாக குழந்தையாகத் தன்னைக் காட்டிக்கொண்டு விளையாடுகிறார். மனோபேதமாயிருந்த சிவ - சக்திகளையே தாம் ஒன்று சேர்த்து வைத்தும், 'எவ்வளவு பெரிய ஸாதனை செய்து விட்டேன்?'என்று மார்தட்டிக் கொள்ளாமல், தாம் செய்த ஸாதனை தமக்கே தெரியாத மாதிரி பால லீலையில் ஈடுபட்டிருக்கிறார். ரூபத்தில் யானையாயிருந்தாலும்

உள்ளப்பாங்கில் அந்தத் தாமரை நூல் மாதிரி லேசாகவே அவர் இருப்பதால் தான் எக்காலமும் குழந்தையாகக் குதூஹலித்துக் கொண்டிருக்கிறார்.

அந்தக் குழந்தை ஸ்வாமி நம் எல்லோரையும் குழந்தை பக்தர்களாக்கி ஆனந்த லோகத்தில் எப்போதும் லேசாக மிதந்துகொண்டிருக்கச் செய்வாராக!

ஸர்வ அர்த்தங்களையும் அருளுவதில் அவர் சதுரர் என்று ஒரு பெரியவரும், நாம் சிந்திக்கும் அர்த்தங்களை அவர் அருளவேண்டும் என்று இன்னொரு பெரியவரும் ஸ்தோத்ரம் செய்திருப்பதைப் பார்த்தோம். அப்படிப்பட்ட அவர் நமக்கு முக்யமாக மனஸை லேசாக்கி சாந்தியளித்து ரக்ஷிக்கட்டும்!

## Ashtangam for Sri Sarvadary (Tamil Year 2008 - 09)

All the files are in pdf format below

## தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)(ஸ்ரீ சங்கர சரிதம்)

### கலப்படமற்ற நன்மை எதுவுமில்லை

(தக்ஷிணாமூர்த்தியின் சிந்தனையாக இதுவரை பேசி வந்தவர்கள், ஒரு சிறிய இடைவெளி கொடுத்துத் தம்முடைய கூற்றாக ஆரம்பிக்கிறார்கள்.)

கார்யமென்று ஏற்பட்டால், அதிலே உசத்தியான கார்யம் எது?கர்மத்தைக் கழித்துக் கொள்வதற்காகவே ஸ்வய நலம் கருதாமல், பரநலம் மட்டுமே கருதிச் செய்கிற கார்யம்தான்;இதுதான் கர்மாவையே போக்கிக்கொள்ள உதவுகிற கர்மயோகம் என்று சொல்கிறார்கள். ஆனால் கலப்படமில்லாமல் இப்படிப் பரநலம் மட்டும் எந்தக் கார்யத்தினாலாவது பண்ணமுடியுமா என்று பார்த்தால் அப்படி எதுவுமே தெரியவில்லை!எந்தக் கார்யமானாலும் அதில் நல்லதோடு கெடுதலும்-பரநலத்தோடு ஹிம்ஸையும்-இருப்பதாகவே தெரிகிறது.

'லோக க்ஷேமத்திற்காக யுத்தம் பண்ணு'என்று கர்ம யோகத்தை உபதேசம் செய்து அர்ஜுனின் பிடரியைப் பிடித்து பகவான் தள்ளி, அந்தப்படியே அவனும் பண்ணினானே?அதனால் கலப்படமேயில்லாமல், unmixed, unalloyedஎன்கிறார்களே, அப்படிப்பட்ட-ஸர்வ க்ஷேமமா வந்தது? எத்தனை மஹாவீரர்கள், அபிமன்யு மாதிரி யுவாக்கள், நல்லதெல்லாம் தெரிந்த பீஷ்மாசார்யார் மாதிரியான பெரியவர்கள் சாகும்படியாயிற்று? ரத்த வெள்ளம், கை கால்கள் மீன் மாதிரி (அதில்) மிதந்துகொண்டு, அறுபட்ட சிகை பாசிமாதிரி படர்ந்துகொண்டு-என்று யுத்தவர்ணனையைப் படிக்கும்போதே ரத்தம் சில்லிட்டுப் போகிறது!இதுவா லோகக்ஷேமம் என்று தோன்றுகிறது!யுத்தம் முடிந்ததும் பெரிய லோக க்ஷேமம் ஏற்பட்டுவிட்டதென்று எவரும் பூரித்துப்போய் ஸந்தோஷம் கொண்டாடினதாகத் தெரியவில்லை. 'புருஷனை, புத்ரனை, பந்துமித்ராளை

இழந்து ஸ்த்ரீகளும் அவாளும் இவாளும் கலங்கிக்கொண்டு கதறிக்கொண்டு தர்ப்பணம் பண்ணப் போனார்கள்;வெற்றிபெற்று ராஜாவான தர்மபுத்ரரானால் எல்லாரையும்விடப் பெரிசாக அழுதுகொண்டு, 'இத்தனை நாசத்திற்கும் நான் காரணமாயிருந்தேனே!(கர்ணனை நினைத்து) ப்ராத்ருஹத்தி செய்துவிட்டேனே!'என்று நொந்துகொண்டார்; த்ரௌபதியோ அத்தனை பிள்ளைகளையும் பறிகொடுத்துவிட்டு வயிற்றில் அடித்துக்கொண்டாள் என்றுதான் பார்க்கிறோம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**உபகாரப் பணியிலும் அபகாரம் !**

யுத்த கார்யந்தானென்றில்லை, ரொம்பவும் ஸாத்விகமாக ஒரு நல்லது செய்யப் போனால்கூட ஒருத்தருக்கு உபகாரமென்று செய்வது வேறு யாராவது ஒருத்தருக்கு ஏதாவது அபகாரம் செய்துவிடுகிறது.

நான் ஒன்று நினைத்துக் கொள்வதுண்டு:-மில் துணி பஹிஷ்காரம் பண்ணிக் கதரை அபிவிருத்தி பண்ண வேண்டுமென்று காந்தி தீவ்ரமாக இருந்த காலம். சீமையிலிருந்துதான் அப்போது மில் துணி வரும். ஆகையினால் மில்துணி பஹிஷ்காரம் என்பதில். 'ஒரு கல்லில் இரண்டு மாங்காய்' என்கிறமாதிரி இரண்டு லக்ஷ்யங்கள் பூர்த்தி ஆயின:ஸ்வதேசியத்தை ஆதரித்து விதேசியத்தை பஹிஷ்கரிப்பது என்பது ஒன்று; Man-power-ஐ (மனித சக்தியை) ஆதரித்து மெஷின் பவரை எதிர்ப்பது என்பது இன்னொன்று.

இந்தக் கொள்கைகளில் எனக்கும் அபிமானம் உண்டு. அப்போது ராமேச்வர யாத்ரை போயிருந்தோம். இந்த நல்ல ஸமயத்தில் மடத்துச் சிப்பந்திகளையெல்லாம் ஆலைத் துணியை விட்டுவிட்டுக் கதர் உடுத்தும் பழக்கத்தை

மேற்கொள்ளச் செய்யவேண்டும் என்று தோன்றிற்று. அக்காலத்திலே அங்கங்கே மில்துணிகளைச் சொக்கப்பானை மாதிரி கொளுத்தி ஸ்வதேசி அபிமானிகள் விழா நடத்துவது வழக்கம். எனக்கென்னவோ, அசேதனமான துணிதான் என்றாலும் அதைக்கூட நெருப்பில் போட்டுக் கொளுத்துவது என்றால் ஹிம்ஸைமாதிரி தோன்றிற்று. இப்படியில்லாமல், ஸாத்விகமாக குளிர்ச்சியாக, 'ஜலஸமாதி'என்று சொல்கிறார்களே, அப்படி ஆலையில் உற்பத்தியான வஸ்திரங்களை ஸமுத்ரத்தில் போட்டுவிட்டு, (மடத்துச் சிப்பந்திகள்) எல்லாரையும் கதர் கட்டிக்கொள்ளும்படிப் பண்ணலாமென்று நினைத்தேன். அப்படியே தநுஷ்கோடியில் எல்லாரும் ஸ்நானம் செய்தவுடன், மில் துணி உடுத்திக்கொண்டிருந்தவர்கள் அதை ஸமுத்ரத்திலே போட்டுவிட்டுக் கதர் கட்டிக் கொள்ள ஆரம்பித்தார்கள். மதுரையிலிருந்து இதற்காக நிறையக் கதர் வஸ்த்ரங்கள் தருவித்திருந்தோம். தலா இரண்டு ஜோடி கதர் சோமனும் (வேஷ்டியும்) மேல்வேஷ்டியும் கொடுத்தது.

கைத்தொழிலை ஆதரிப்பது manual labour (உடலுழைப்பு) என்றால் மட்டமாக நினைக்காமல் யாராயிருந்தாலும் ராட்டினத்தை சுற்றி நூற்பது, அதனாலேயே வீண்பேச்சு முதலியவற்றில் போகாமல் ஒரு டிஸிப்ளினில் வருவது, நம் தேசத்துக்கு என்று என்ன உண்டோ அதோடு த்ருப்தியாயிருந்து, விதேசச் சரக்குகளில் மோஹத்தை விட்டு நம்முடைய பண்பாட்டைக் காப்பாற்றுவது, நம் நாட்டுப் பணம் அநியாயமாக வெளி தேசத்துக்குப் போகாமல் தடுப்பது, பல ஏழைகளுக்கு ஜீவனோபாயம் கிடைக்கப் பண்ணுவது-என்று இத்தனை அம்சங்கள் மில் துணியை பஹிஷ்கரித்துக் கதரை ஆதரிப்பதில் இருக்கிறதல்லவா?அதனால் இது ரொம்ப நல்ல திட்டமாகத்தானே தெரிகிறது?

ஆனால் இப்படிப் பண்ணினால் தங்கள் வியாபாரமே போய்விடும். தாங்கள் தலையில் துணியைப் போட்டுக் கொள்ளும்படியாகிவிடும்-(சிரித்து) தாங்கள் உற்பத்தி செய்யும் துணியை விற்று லாபம் பண்ணாமல், தாங்களே தலையில் துணியைப் போட்டுக்கொள்ளும்படியாகிவிடும்!- என்று லங்காஷயர், மாஞ்செஸ்டர் மில்காரர்களெல்லாம் கூ

கூ என்று கூப்பாடு போட்டார்கள். முதலில்,'அதற்காக அப்பாவி இண்டியன்தான் அகப்பட்டானா, தலையிலே கை வைக்க?'என்றுதான் தோன்றிற்று.

அப்புறம் யோசித்துப் பார்த்ததில், 'வெள்ளைக்காரர்கள் வஞ்சகமாக வ்யாபார ஸாமர்த்யங்கள் செய்து அமிதலாபம் பண்ணுவதும், வ்யாபாரம் என்று ஆரம்பித்துத் தங்களுடைய வாழ்க்கை முறை, ஆட்சி, மதம் ஆகியவற்றையும் பிற தேசங்களில் விஸ்தரித்து அவற்றின் வயிற்றிலடித்துத் தங்களைப் போஷாக்குப் பண்ணிக் கொள்வதும் மஹா தப்புதான். என்றாலும், அவர்கள் தேசத்தில் கருப்பு நிலக்கரியையும் வெளுப்புச் சாக்குக் கட்டியையும் விட்டால் வேறே விளைபொருள் கிடையாதே!ஆனதால் அவர்கள் ஆலைத் தொழில் பண்ணி ஏற்றுமதி செய்து பிற தேசங்களிடமிருந்துதானே தங்களுடைய எல்லா வாழ்க்கைத் தேவைகளுக்குமானதை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டு ம்?இதில் ஒரு 'அயிட்ட'மாக வெளி தேசத்துப் பருத்தியை அவர்கள் தருவித்து நூலாய் நூற்றுத் துணியாகப் பண்ணி ஏற்றுமதி செய்வதையும் அடியோடு தப்பு என்று சொல்லமுடியாது போலிருக்கே!அவர்கள் ஆசைப்படுகிற மாதிரி, 'இதில் தாங்களே ஏகபோக்கியம் பெற்று அமிதலாபம் எடுக்கவேண்டும்; அந்தந்த தேசத்து நெசவாளிகள் நாசமாகப் போனாலும் போகட்டும், தாங்கள் தான் வ்ருத்தியாக வேண்டும்'என்பது ந்யாயமே இல்லையென்றாலும், ஏதோ ஒரு அளவு, ஒரு quota அவர்களுக்கும் விட்டுக்கொடுத்து அவர்கள் மில்களை நடத்தவிட்டால்தானே அந்த ஜனங்களும் வாழமுடியும் போலிருக்கிறது?'என்று தோன்றிற்று.

இங்க்லாண்ட் மாதிரியேதான் இன்னும் சில தேசங்களும், ஏற்றுமதி பண்ணினால்தான் அவற்றைச் சேர்ந்த ஜனஸமூஹங்களுக்கு ஜீவனோபாயம் கிடைக்கும். அதைக் கொண்டுதான் அவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான பண்டங்களை இறக்குமதி செய்துகொள்ள முடியும். ஆனபடியால் இந்தியா, சைனா மாதிரி பெரிய தேசங்களில் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பண்டங்களையும் ஸ்வேதசியமாகவே பண்ணிச் சமாளித்துக்கொண்டுவிடுவது,

self-sufficiency (தன்னிறைவு) பெற்று ரொம்பவும் அத்யாவச்யமான இறக்குமதியோடு நிறுத்திக்கொண்டு விடுவது என்று வைத்துவிட்டால் ஏற்றுமதியையே நம்பி உயிர் வாழ்கிற தேசத்து ஜனங்கள், பாவம், என்ன பண்ணுவார்கள்?லங்காஷயர்க்காரன் கூ கூ என்று கத்துவதில் அடாவிடி இருக்கத்தான் செய்கிறதென்றாலுங்கூட, நாமும் ஸ்வதேசியக் கொள்கையில் ரொம்பக் கடுமையாக இருந்தால் அதனால் 'ஜெனுவி'னாகவே சிலபேர் கஷ்டத்துக்கு ஆளாகும்படிதானே ஆகும் போலிருக்கிறது?'என்று தோன்ற ஆரம்பித்தது.

அதற்கப்புறம் என்னை பொறுத்தமட்டில் மில் துணி வேண்டாம் என்று வைத்தது வைத்ததுதான் என்று ஆக்கிக் கொண்டுவிட்டாலும் மற்றவர்கள் விஷயமாக எதுவும் 'கம்பெல்'பண்ணவேண்டாமென்று விட்டுவிட்டேன்.

எதற்குச் சொல்லவந்தேன் என்றால், நம் தேச ஜனங்களின் தொழில் கெட்டுப்போகப்படாது. நம் பணம் அந்யாயமாக வெளியூருக்குப் போய் அவன் கொழுக்கப்படாது-நம்மை இளைக்கப்பண்ணி அவன் கொழுக்கப்படாது-என்பதற்காக ஒரு நல்ல ஏற்பாடு செய்தால், அதனாலுங்கூட 'ஜெனுவி'னாகவே எவனாவது பாதிக்கப்படுகிறான்!

வெளி தேசக்காரன்தான் என்றில்லை, கதர் கதர் என்று அதையே ஆதரிப்பதென்றால் உள்ளூரிலேயே கைத்தறிக்காரன், மில்காரன் தன் தொழில் போச்சு என்று அழுகிறான், ஆக்ஷேபம் பண்ணுகிறான்.

கைத்தொழிலுக்கு நல்லது செய்யப் போனால் ஆலைத் தொழிலுக்குக் கெடுதல் ஏற்படுகிறது. ஆலைத்தொழிலுக்கு நல்லது செய்யப்போய் அதில் வேலை செய்கிற ஆயிரம் பேருக்கு நல்லது ஏற்படுத்தும்போதோ பத்தாயிரம், இருபதாயிரம் கைத்தொழில்காரர்களின் வயிற்றிலடிக்க வேண்டி வருகிறது!

இத்தனை லிஜிஸ்லேஷன்கள் (சட்டங்கள்) கொண்டுவரப் பட்டிருக்கின்றனவே, இவை அத்தனையும் யாருக்கோ நல்லது செய்யும் உத்தேசத்தில் கொண்டுவ ந்ததுதானே?ஆனால் எந்த லெஜிஸ்லேஷனாவது எதிர்ப்பு

இல்லாமல் பாஸாகி இருக்கிறதோ?வாக்-அவுட், டெமானஸ்ட்ரேஷன், ஹர்த்தால் என்று போகிற அளவுக்கல்லவா எதற்கும் ஆப்போஸிஷன் வருகிறது?

என்ன அர்த்தம்?

â‰î ï™ô F†ì‹ ªè£‡´õ‰î£½‹ Ü¶¾‹ ò£¼,«è£ ªè´î™ ªêŒAø¶ â¡Áî£¡ Ü˜î‹!

அத்தனை அரசியல் கட்சிகளும் நல்லது செய்யத்தான் ஏற்பட்டிருப்பதாக அர்த்தம். அரசியல் கட்சிகளை மட்டும் சொல்வானேன்?அத்தனை மத ஸம்ப்ரதாயங்களும் நல்லதற்காகவேதான் ஸ்தாபிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் கட்சிக்குக் கட்சி மதத்துக்கு மதம் சண்டையான சண்டை என்றால், யார் சொல்வது நல்லது, யார் சொல்வது கெட்டது? ஸமூஹ விஷயத்தில் (லௌகிகமாக) இதுதான் நல்லது என்று ஒரு வழியை மட்டும் வைக்கமுடியாததால் தான் இத்தனை கட்சிகள் தோன்றியிருக்கின்றன. அப்படியே ஆத்மார்த்தமாகவும் இதுதான் நல்லது என்று ஸர்வ ஜன ஸம்மதமாக ஒன்றைக் காட்ட முடியாததால்தான் இத்தனை மதங்கள் தோன்றியிருக்கின்றன. எந்தக் கட்சியானாலும் மதமானாலும் அதனால் யாருக்கோ லோக ரீதியான வாழ்க்கையிலோ, மனோரீதியான அநுபவத்திலோ கஷ்டம் ஏற்படுவதால்தான் எதிர்ப்பு, சண்டை, குஸ்தி ஏற்படுகிறது!

ஸநாதனிக்கு நல்லது பண்ணினால் சீர்திருத்தவாதி லபோ லபோ என்கிறான். சீர்திருத்தவாதிக்கு ஸாதகமாகப் பண்ணினால் ஸநாதனி சபிக்கிறான்;இவன் சபிப்பது மட்டுமில்லை,-'ரிஷிகள் எல்லாம் சபிப்பார்கள். தெய்வ சாபமே வந்துவிடும்!'என்கிறான்!

ஒரு பாஷையை அபிவ்ருத்தி செய்தால் இன்னொரு பாஷை க்ஷீணிக்கிறது!

பண்ணையாளுக்கு நல்லது பண்ணினால் நிலச் சொந்தக்காரனுக்குக் கெடுதலாகிறது.

முன்னேறிய வர்க்கம், பின்னேறிய வர்க்கம் என்று பிரிவு செய்திருப்பதில் ஒன்றுக்கு நல்லது பண்ணுவதில் இன்னொன்று படும் அவஸ்தைகள் எல்லாருக்கும் தெரிந்ததுதான்.

'இது நல்லது' என்று ஒரு கட்சி, 'அப்படியில்லை என்று இன்னொரு கட்சி என்பதாகப் பிரிந்து நிற்பதற்கிடமில்லாமல், ஸர்வ ஜனங்களும் ஏக மனதாக, 'இது நல்லது தான்;இந்த ஸத்கார்யத்தினால் யாருக்கும் எந்தக் கெடுதலும் வராது'என்று நினைத்துப் பண்ணுகிறவற்றில் கூட ஒரு அஞ்சு, பத்து பெர்ஸென்டாவது கெடுதி வந்து சேராமலிருப்பதில்லை.

கோவில் கட்டுவதைவிட நல்ல கார்யம் லோகத்தில் இல்லை. அதிலேகூட பெரிய பெரிய பாறாங்கல்லுகளைக் கொண்டுவந்து இறக்குவது, அவற்றை தூக்கி நிறுத்தி கோபுரம் கட்டுவது என்கிறபோது மாடுகளுக்கும், ஆள்களுக்கும் முழி பிதுங்கி முதுகு ஒடிகிற மாதிரி ச்ரமம் ஏற்படுகிறது. ரதோத்ஸவத்தில் தேர்க்காலில் அரைபட்டு எவனோ ஒருத்தன் உயிரைவிடுகிறான்.

கோவில் கட்டுவதுகூட, ஸர்வஜன ஸம்மதமான நல்லது என்று இக் காலத்தில் சொல்லமுடியாது. 'எதற்குக் கட்டணும்? இருப்பதையும் இடிக்கணும்'என்று அதற்கும் எதிர்க்கட்சி இருக்கலாம்!ஆஸ்பத்திரியும் ஸ்கூலும் வைப்பதுதான் இப்போது ஸர்வ ஜன ஸம்மதம். வாஸ்தவமாகவே ஜனங்களின் சரீர உபாதைகளைப் போக்குவதும், அவர்களுக்குக் கல்வியறிவு தருவதும் உத்தமமான பணிகள் தான். சாஸ்த்ர, புராணங்களிலும் இவற்றை நிறையச் சொல்லியிருக்கிறது. ஆனாலும் இவைகூட முழுக்க, ஹுஸீனீவீஜ்மீபீ-ஆக நல்லது மட்டுந்தான் செய்பவையா என்று யோசித்துப் பார்த்தால், இல்லை என்றே தெரியும். துஷ்டத் தனமான மனப்போக்குள்ள ஒருத்தன் நோயாளியாக இருப்பதாலேயே தான்பாட்டுக்கு முடங்கிக் கிடப்பான்.

நல்லது செய்வதாக நினைத்து அவனுக்கு வைத்யம் பார்த்து த்ருடசாலியாக ஆக்கபோக, அவன் கன்னக்கோலையோ, கத்தியையோ தூக்கிக்கொண்டுபோய் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்துவிடுவான். எதுவும் தெரியாமல் ஸாதுவாகத் தன்பாட்டுக்கு ஏதோ ஒரு மூட்டை தூக்கிப் போட்டுவிட்டுக் கஞ்சி காய்ச்சிக் குடித்துக்கொண்டிருப்பவனுக்கு அறிவு ப்ரகாசம் உண்டாக்குவதாக நினைத்து கல்வி தரப்போக, அவன் இல்லாத குயுக்தி எல்லாம் செய்யக்கற்றுக்கொண்டு, ஃபோர்ஜரிப் பத்திரம் எழுத ஆரம்பிக்கலாம்!

நல்லதையெல்லாம் தள்ளிவிட்டுக் கெடுதலை மட்டும் பார்த்துப் பெரிசு படுத்துவதற்காகச் சொல்லவில்லை. எதிலும் கெடுதல்தான் ஜாஸ்தி என்றும் சொல்லவரவில்லை. அஞ்சு பெர்ஸென்ட், பத்து பெர்ஸென்ட் என்று (கெடுதலைக் குறைவாகத்) தானே முதலிலேயே சொன்னேன்?இன்னம் குறைவாக ஒரு பெர்ஸென்ட், அரை பெர்ஸென்ட் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுவோம். ஆனாலும் கார்யம் என்று வந்தால் நூறு பெர்ஸென்டும் நல்லதாகவே இருக்கமுடியாது என்பதுதான் உண்மை நிரூபணம் ஆகிறதா இல்லையா?

'ஐயோ நாம் அப்படி நினைத்துப் பண்ணினோம்;இப்படி விபரீதமாக முடித்துவிட்டதே!' என்று எத்தனை ஸந்தர்பத்தில் நினைத்திருக்கிறோம்?நல்லதென்று நினைத்துப் பண்ணுவது கெட்டதில் முடிகிறதைத்தானே இது காட்டுகிறது?

ஸ்வராஜ்யம் வாங்கிக் கொடுத்த காந்தியைப் போல நமக்கு நல்லது பண்ணினவரே இல்லை என்று விழாக்கள் கொண்டாடித் தலைவர்களெல்லாரும் புகழாரம் சூட்டுகிறார்கள். ஆனாலும் அவரோ ஸ்வராஜ்யம் வந்து ஐந்தாறு மாஸங்களுக்குள் அஸாஸினேட் ஆவதற்கு (கொலை செய்யப்படுவதற்கு) முந்தியே, தேசம் இரண்டாகப் பிரிந்ததில் லக்ஷக்கணக்கில் ஜனங்கள் கொன்றுகொண்டு ரணகளரியானதைப் பார்த்து மனஸ் தாங்காமல் 'இதற்காகத்தானா ஸ்வயராஜ்யம் வந்தது?'என்று புலம்பும்படியாயிற்று!ஸ்வதந்த்ர இந்தியாவில் அந்த ஐந்தாறு மாஸம் ஜீவிப்பதற்குள்ளேயே அவர் மனஸுக்கு ஏற்காத அநேக விஷயங்கள் நடந்து அவர் பட்டினிகூடக் கிடக்க வேண்டியதாயிற்று.

நல்லது பண்ணப் போய் எப்படி பயங்கரமாகக் கெட்டது புறப்பட்டுவிடுகிறது என்பதை நன்றாக தெரிவிப்பதாக 'கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது!'என்று பழமொழியே இருக்கிறது.

இன்னொரு:பழமொழி ஒரு ப்ரச்னையைத் தீர்க்க பரிஹாரமாக நினைத்து என்னவோ ஒன்று பண்ணுகிறோம். அப்போதைக்கு மூலமான ப்ரச்னை தீர்த்த மாதிரியிருக்கிறது. ஆனால், போகப் போக, நாம் பண்ணின பரிஹாரத்திலிருந்தே எதிர்பார்க்காத கஷடங்கள்

உண்டாகின்றன!வியாதி தீரச் சாப்பிடும் மருந்தே அப்புறம் அதைவிடப் பெரிய வியாதியை ஏற்படுத்துவதையும் பார்க்கிறோம். "ஸிமீனீமீபீஹ் ஷ்ஷீகூஷீவமீ மீ'லீணீஸீ பீவீவமீணீவமீ" என்கிறார்கள்!

Þ¬î ªò™ô£‹ ð£˜ˆ¶M†´, '²‹ñ£, AìŠð¶ î£¡ „ô£,ò‹, ï™ô¶ ð‡µA«ø¡ â¡Á Ýó‹H,èŠ «ð£ù£™ ï™ôîŸA™ô£îªî™ô£‹ A÷‹HM´Aø¶' â¡ð¬îˆ ªîKMŠðî£è '²‹ñ£ Þ¼,Aø êƒ¬è áF, ªè´ˆî£ù£‹ Ý‡®' â¡«ø ðöªñ£N Þ¼,Aø¶!

ஊர் ஸமாசாரமெல்லாம் சொன்னேன். ஸொந்த ஸமாசாரமாக இரண்டு சொல்கிறேன் :

å¼ áK™ (ÿñìˆF¡ ÝîóM™) Ü¡ùî£ù‹ ªêŒî¶. ªó£‹ð «ð˜, ã¬öèœ, õJø£ó„ ê£ŠH†´ M†´, ñùv °O˜‰¶ õ£›ˆF,ªè£‡´ «ð£ù£˜èœ. (ê¬ñò™ õ¬èèœ) â™ô£‹ G¬øòŠ ð‡EJ¼‰¶‹, Í†¬ì ÜKC õ®ˆF¼‰¶‹, ªè£…êƒÃì ð£,AJ™ô£ñ™ â™ô£‹ üùƒèœ õJŸÁ,°Š «ð£„«ê â¡Á ªó£‹ð ˆ¼ŠFò£è Þ¼‰î¶. ˆ¼ŠF â¡ø£™ â¡ù? 'ï£ñ£,°‹ ð‡EM†«ì£‹'â¡ø 'ß«è£'î£¡!

பாத்ரம், பண்டம் எல்லாம் தேய்த்து, அடுத்த ஊருக்குக் கிளம்பத் தயாராக இருந்த ஸமயம். அப்போது ஒரு பத்துப் பதினைந்து ஏழை ஜனங்கள்-ஸ்தீரிகள், குழந்தைகள் உள்பட-லொங்கு லொங்கு என்று ஓடிவந்து, "சோறு, சோறு"என்று கேட்க ஆரம்பித்ததுகள். எட்டு, பத்து மைல் தாண்டி எங்கேயோ இருக்கிறவர்கள். அன்னதான ஸமாசாரம் அவர்கள் காதுக்கு லேட்டாகத்தான் போயிருக்கிறது. உடனே, பாவம், வெய்யிலில் அத்தனாம் தூரம் ஓடி வந்திருக்கிறதுகள்!இங்கேயானால் பருக்கை சாதம் இல்லை!அண்டா, குண்டான் எல்லாம் வண்டியிலே ஏற்றிக் கொண்டிருக்கிறது!அப்போது அவர்களுக்கு உண்டான ஏமாற்றத்தைச் சொல்லிமுடியாது.

ஆயிரம் பேருக்குப் போட்டு ஏதோ நாம் ப்ரமாத உபகாரம் பண்ணிவிட்டோமாக்கும் என்று த்ருப்திப்பட்டது அத்தனையும் இந்தப் பத்துப் பதினைந்து பேருக்குப் பண்ணிய அபகாரத்தில் ஓடியே

போய்விட்டாற்போலிருந்தது!

ஏதோ பழம், கிழம் கொடுத்து, சில்லறை கொடுத்து, அவர்களை ஸமாதானம் பண்ணி அனுப்பிவைத்தது. அவர்கள் ஸமாதானமானார்களோ இல்லையோ, இங்கே (தம்மையே குறிப்பிட்டு) ஸமாதானமாகவில்லை!'பாவ ம்!வயிறார நல்ல சாப்பாடு கிடைக்குமென்று இந்தப் படைபதைக்கிற வெய்யிலில் இத்தனாம் தூரம் ஓடிவந்து குஞ்சும் குழந்தையும் பெண்களுமாக ஏமாந்து போச்சுகளே!'என்று தானிருந்தது!'ஆயிரம் பேர் சாப்பிட்டுவிட்டும் போனார்களே என்றால், நேற்றுவரைக்கும் அவர்களுக்கு நாமா போட்டோம்?நாளைக்கு நாமா போடப்போகிறோம்?அதே மாதிரி இன்றைக்கும் அவர்கள் எப்படியோ வயிற்றைக் கழுவிக் கொண்டிருப்பார்கள். ஆனால், 'போடுகிறோம்' என்று நாம் அக்ஷதை போட்டுக்கொண்டு கிளம்பினதால் தானே இந்தப் பத்துப் பதினைந்து பேர் வழக்கமாகத் தாங்கள் இருக்கிற இடத்தில் காய்ச்சிக் குடிப்பதை, அல்லது பிச்சை எடுத்துத் தின்னுவதை விட்டுவிட்டுப் பசியும் பட்டினியுமாய் வெய்யிலில் இத்தனாம் தூரம் ஓடிவந்து ஏமாந்து போகும்படி நேர்ந்திருப்பது?ஆக, கூட்டல், கழித்தல் பார்த்தால, உபகாரம் பெரிசா, அபகாரம் பெரிசா?'என்று தோன்றிற்று.

தானத்திலெல்லாம் உசந்ததாகச் சொல்லப்படும் அன்னதானத்தில்கூட இப்படி நல்லதோடு கஷ்டமும் கலந்து வருகிறது!

எதற்குச் சொல்கிறேனென்றால் :நாம் ஒருத்தனுக்கு உபகாரம் பண்ணுவதே நேராக இன்னொருத்தனுக்கு அபகாரமாக ஆகாதபோதுகூட, எப்படியோ சுற்றி வளைத்துக்கொண்டு போய் யாருக்கோ கஷ்டம் கொடுத்து, அதோடு, 'உபகாரம் செய்கிறேன்'என்று அக்ஷதை போட்டுக்கொண்டு கிளம்பின நாமும் மனஸ் வருத்தப்படும் படியாகலாம் என்று காட்டுவதற்குத்தான்!

அதாவது, எந்த உபகாரமானாலும் அத்தனை ஜனங்களுக்கும் செய்ய எவருக்கும் ஸாத்யமில்லை. எவராவது நம்முடைய உபகாரத்தை எதிர்பார்த்து ஏமாந்து மனமொடிந்து போகும்படியாகவும்தான் ஆகிறது. கோடீச்வரனானால்கூட ஸத்கார்யங்களுக்கு அவன் கொடுக்க ஆரம்பிக்கும்போது

புற்றீசல் மாதிரி (நன்கொடை) கேட்டுக் கொண்டு பலபேர் வருகிறபோது, ஏதோ ஒரு இடத்தில் அவன் 'இல்லை, போ'என்று கையை விரிக்கும்படியாகிறது. இவன் (புதிதாக வருபவன்) கேட்கிற நீணீஷுஃவமீஉசந்ததாகத் தான் இருக்கிறது. இவனுக்கு முன்னாடி யாரோ மோசக்காரர்கள்கூட ஏமாற்றி வாங்கிப் போயிருக்கிறார்கள். ஆனாலும் இவனுக்குக் கொடுப்பதற்கில்லாமல் ஏமாற்றத்தோடு அனுப்பிவைக்க நேருகிறது.

ஆஸ்பத்திரி, ஸ்கூல் என்று வைக்கும்போது, 'ஃமீபீ இல்லை;'ஸீட் இல்லை'என்று சொல்லி, ரொம்பவும் நோயாளியாக உள்ள ஒருவனை, நல்ல புத்திசாலியான குழந்தை ஒன்றை ஏமாற்றி, மனஸை வருத்தித் திருப்பியனுப்பும்படியாகவும் ஏற்படுகிறது.

ஒரு உயிரைக் காப்பாற்றுவது எத்தனை உத்தமமான கார்யமாகத் தெரிகிறது? அதிலேகூடக் கெடுதல் வருகிறது!

ஸொந்த ஸமாசாரத்தில் இன்னொன்று சொல்கிறேன்:

ஒரு ஊரிலே நாங்கள் முகாம் போட்டிருந்த ஜாகை ரொம்ப பழைய நாள் கட்டிடமாக இருந்தது. ஓட்டுக் கட்டிடம். நடுவிலே முற்றம். கட்டிடக் கூரையின் உத்தரம் அநேகமாக உளுத்துப்போயிருந்தது. அதிலே, 'விர்ர்' 'விர்ர்'என்று சத்தத்துடன் பறக்கிற பெரிய வண்டுகள் துளை போட்டுக்கொண்டு வாஸம் பண்ணிக்கொண்டிருந்தன. அவை அப்பப்போ முற்றத்திலே வந்து விழுந்து புரளும். இப்படி ஒரு வண்டு குப்புற விழுந்தபின் அதனால் மறுபடி நேராக நிமிர்ந்து புரள முடியவில்லை. எப்படியாவது புரண்டு பறந்து போய்விடணுமென்று அது காலை உதைத்துக் கொண்டு ரொம்ப ப்ரயத்தனம் பண்ணியும், முடியவில்லை. அப்போது-அந்த முற்றத்திலே சாரி சாரியாகக் சுட்டெறும்புகள் போய்க்கொண்டிருந்தன. அதுகள் இந்த வண்டு இப்படி வயிறு மேலேயும் முதுகு கீழேயுமாக ஒன்றும் பண்ணிக்கொள்ள முடியாமல் காலை உதைத்துக்கொண்டு கிடப்பதைப் பார்த்ததும், இதுதான் ஸமயம் என்று அதனிடம் வந்து மொய்த்துக்கொண்டு 'வெடுக்கு''வெடுக்கு'என்று அதன் கால்களைப் பிய்ப்பதற்காகக் கடிக்க ஆரம்பித்தன. வண்டு ஸஹிக்கமுடியாமல் அவஸ்தைப்படுவது தெரிந்தது. பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

வண்டைப் புரட்டி ஒரே நேரே போட்டால் அது பறந்து போகுமே, ஒரு உயிர் பிழைத்துப் போகுமே என்று நினைத்தேன்.

அப்படியே வண்டைப் புரட்டிப் போட்டது.

ஆனால் என்ன நடந்ததென்றால், அது தன் உயிர் தப்பினால் போதுமென்று உத்தரத்துத் துளைக்குப் பறந்து போய்விடவில்லை.

என்ன பண்ணிற்று என்றால், வழி தீர்த்துக்கொள்கிற மாதிரி அந்த எறும்புகளையெல்லாம் பிடித்து 'லபக்' 'லபக்'என்று தின்ன ஆரம்பித்துவிட்டது!

ஒரு உயிருக்கு உபகாரம் பண்ணப் போன லக்ஷணம் இத்தனை உயிர்களுக்கு அபகாரமாக முடிந்தது! 'நாம் ஏதோ ஒரு ப்ராணியைக் காப்பாற்றி நல்லது பண்ணி விட்டோமாக்கும்'என்ற 'ஈகோ'வுக்கு ஒரு அடி போட்ட மாதிரி, பல ப்ராணி வதைக்குக் காரணமாகும்படியாயிற்று.

ஸாதுவான ஒரு மானைப் புலியிடமிருந்து காப்பாற்றினால்கூட, அந்தப் புலிக்கு சாகபக்ஷணம் (மரக்கறி போஜனம்) செய்யமுடியாதபடி ஈச்வரனே வைத்திருப்பதால், மானுக்குச் செய்யும் உபகாரம் புலியைப் பட்டினி போட்டுக் கஷ்டப்படுத்துவதாக ஆகிறது! அதுவும் ஒரு உயிர்தானே?அது வேண்டுமென்றா தன்னைத் தானே துஷ்ட ப்ராணியாகப் படைத்துக் கொண்டிருக்கிறது?இது ஒரு பக்கம்.

இன்னொரு பக்கம், மஹா துஷ்டனாக, லோக கண்டகனாக இருக்கிற ஒரு ராவணனை பகவானே அவதாரம் பண்ணிக் கொல்கிறானென்றால்கூட அப்போது பரம ஸாத்வியாக, உத்தமியாக இருக்கப்பட்ட ஒரு மண்டோதரியின் மாங்கல்யத்தைப் பறித்து அவளைக் கதறக் கதற அடிப்பதாக இருக்கிறது.

---

## கோவிந்தரின் சிறப்பு

ஸந்நியாஸியான கோவிந்த பகவத்பாதாள் பரிவ்ராஜகராக ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டிருப்பதும் அவ்வப்போது அப்படியே நிஷ்டைவில் போய் ஒரே இடத்தில் தம்மை மறந்து உட்கார்ந்துகொண்டிருப்பதுமாக இருந்தார்.

அவர் என்ன புஸ்தகங்கள் செய்தாரென்று நிச்சயமாகத் தெரியவில்லை. ஆசார்யாள் செய்ததாக வழங்கிவரும் 'யோக தாராவளி'யும் 'அத்வைதானுபூதி'யும் கோவிந்த பகவத்பாதர் இயற்றயவை என்று ஒரு அபிப்ராயமிருக்கிறது. இப்படியொரு அபிப்ராயமிருப்பதால், ஆசார்யாளே அவற்றைச் செய்திருந்தாலும் அதற்கு முக்யமாக கோவிந்த பகவத்பாதரிடமிருந்தே இன்ஸ்பிரேஷன் கிடைத்திருக்க வேண்டுமென்று சொல்லலாம். 'யோக தாராவளி'யில் அஷ்டாங்க யோகம் முதலான யோக சாஸ்த்ர நுட்பங்களைச் சொல்லி அந்த வழியில் போய் அத்வைதானுபூதியான ஸமாதியில் தோய்ந்து அப்படியே பட்ட கட்டை மாதிரி பூர்ண ஸ்திதியில் ப்ரகாசித்துக்கொண்டிருப்பதைச் சொல்லியிருக்கிறது. யோக ஸூத்ரம் செய்த பதஞ்ஜலிதான் கோவிந்த பகவத்பாதர் என்பது இங்கே நினைவுக்கு வருகிறது. "அத்வைதானுபூதி"முழு ஞானம். யோகம் என்று ஒரு ஸாதனை, அதைப் பண்ணுவது என்று ஒரு கார்யம் ஆகியவைகூட இல்லாமல், ஸ்வயம்ஸித்தமாக எப்பவுமே தன்னில் தானாக இருக்கும் ஆத்மாவை அப்படியே அநுபவித்துக் கொண்டிருப்பதை "அத்வைதானுபூதி"யில் பரம ஞான மார்க்க முறையில் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு ப்ரகரணங்களுக்கும் கோவிந்த பகவத்பாதரின் ஸம்பந்தம் உண்டென்றாலே அவர் உத்தமமான யோகீச்வரராகவும், அநுபவ ஞானியாகவும் இருந்திருக்கிறாரென்று புரிந்துகொள்ளலாம்.

கல்வியறிவும், அநுபூதியும் பெற்றவர்களில் சிலபேர் நன்றாக எழுதிவைப்பார்கள். சிலபேருக்கு எழுத வராது. ஆனாலும் தங்களுடைய அநுபவ சக்தியால் அதே அநுபவத்தைப் பெறக்கூடிய உத்தம சிஷ்யர்களை உண்டாக்கி, அவர்கள் மூலம் ஸித்தாந்தத்தை ப்ரசாரப்படுத்துவதில் இவர்களுக்கு விசேஷத் திறமை இருக்கலாம்.

கோவிந்த பகவத்பாதாளை இந்த கோஷ்டியில் சொல்லலாம். அவர் முதலில் மஹாபாஷ்யத்தைக் கரைத்துக் குடித்தார். அந்த சாஸ்த்ரத்தை ப்ரசாரம் பண்ண அவரை விட்டால் வேறு யாருமில்லையென்றே கௌடர் உபதேசம் செய்ததாகப் பார்த்தோம். அவருக்கப்புறம் மஹாபாஷ்யம் லோகத்தில் நன்றாக ப்ரசாரமாகியிருப்பதும், அநேக வ்யாகரண புஸ்தகங்கள் தோன்றியிருப்பதும் ப்ரத்யக்ஷத்தில் தெரிகிறது. ஆனால் அவரே வ்யாகரண புஸ்தகம் எதுவும் எழுதிவைத்து விட்டுப் போயிருக்கவில்லை. அப்படியிருந்தும் அந்த சாஸ்த்ரம் ப்ரசாரமாகும்படிப் பண்ணியிருக்கிறாரென்றால், அப்போது அவர் நல்ல சிஷ்யர்களை உண்டுபண்ணி அவர்கள் வழியாகவே இப்படி நடக்கச் செய்ததாகத்தானே இருக்கவேண்டும்?

ஸங்கீதத்தில் கேளவிப்பட்டிருக்கிறேன். சில வித்வான்களுக்கு 'தியரி', ஆராய்ச்சி என்றெல்லாம் விசேஷமாகத் தெரிந்திருப்பதில்லை;ஆனால் ஸங்கீத சாஸ்த்ர ஆராய்ச்சிக் காரர்களைவிட இவர்களே அநேக சிஷ்யர்களை நல்ல வித்வான்களாக ரூபம் பண்ணியிருக்கிறார்கள்-என்று. இது எல்லாத் துறைக்கும் பொருந்துவதுதான். அறிவுச் ச்கதிக்கு மேல் ஸ்வாநுபூதிச் சக்தி என்பதையே இது காட்டுகிறது. ஒரு மநுஷ ஜீவனிடம் எப்படிப் பழகித் தட்டிக் கொட்டி அதை ரூபம் பண்ணுவது என்பதிலுள்ள திறமையையும் காட்டுகிறது.

கற்றுக் கொடுப்பது, ஸத்சிஷ்யர்களை உருவாக்குவது என்பது ஒரு தனியான கலை. அறிவு, அநுபவம், எழுத்து ஸாமர்த்யம் முதலியவற்றைப் பெற்ற பல பேருக்குக்கூட இப்படி உயிரோடுள்ள ஒரு ஜீவனை சிஷ்யனாக்கிக்கொண்டு அவனை அறிவாளியாகவும் அநுபவியாகவும் ரூபமாக்குவதற்கு முடியாமலிருக்கும்.

உசந்த சிஷ்யர்களை ரூபம் பண்ணும் திறமை கோவிந்த பகவத்பாதருக்கு விசேஷமாயிருந்திருக்கிறது.

அதனால்தான் அவருடைய மஹா பெரிய சிறப்பாக நம் ஆசார்யாளே அவரைத்தான் குருவாக வரித்து அவரிடமே சிஷ்யராகி உபதேசம் பெறவேண்டுமென்று இருந்திருக்கிறது.

ஆசார்யாளை அவர் 'ரூபம் பண்ண' வேண்டியிரு
ந்திருக்காதுதான். குரு என்று ஒருத்தர் பாடுபட்டும்,
அநுக்ரஹ சக்தியைச் செலவழித்துந்தானா புதுசாக அவரை
அறிவாளியாகவோ, அநுபூதிமானாகவோ ஆக்க
வேண்டும்?ஆனாலுங்கூடப் பரமேச்வரனே அவதாரம்
பண்ணி மநுஷ்யர் மாதிரி ஒருத்தரை குரு என்று பணிந்து
உபதேசம் வாங்கிக் கொள்ளும்போது அது இவர்தானென்று
தேர்ந்தெடுத்தாரென்றால் அப்படிப்பட்டவர் மஹா அநபவி,
அறிவாளி சிஷ்யர்களை உருவாக்கவதில் அலாதித் திறமை
பெற்றவர் என்று லோகத்துக்குக் காட்டுவதாகவே அர்த்தம்.

ஜகத்குரு என்று ஜகத்தே கொண்டாடும் ஆசார்யாள் சிஷ்ய
பாவத்தோடு இருந்துகொண்டு குரு பரம்பரையை விநயமாக
ஸ்தோத்ரிப்பது வழக்கம் குரு மஹிமையைத்
தெரிவிப்பதற்கே 'குர்வஷ்டகம்'என்று ஸ்தோத்ரம்
செய்திருக்கிறார். அவர் (இயற்றியுள்ள ஞான நூல்களில்
முன்னமேயுள்ள நூல்களின் பாஷ்யமாக இன்றி)
ஸொந்தமாகச் செய்துள்ள 'ப்ரகரண க்ரந்த'ங்களில்
சூடாமணியாக இருப்பது "விவேக சூடாமணி". அதன்
ஆரம்பத்தில் 'மங்களாசரணம்'என்பதாக கோவிந்த பகவத்
பாதாளை ஸ்தோத்ரம் செய்திருக்கிறார். அதிலிருந்து
அவருடைய (கோவிந்தருடைய) பெருமையைத்
தெரிந்துகொள்ளலாம்.

ச்லோகத்தைச் சொல்கிறேன்:

**ஸர்வ-வேதாந்த-ஸித்தாந்த-கோசரம் தம்-அகோசரம் ***

**கோவிந்தம் பரமாநந்தம் ஸத்குரும் ப்ரணதோஸ்ம்யஹம் ****

'ஸத்குரும் கோவிந்தம் அஹம் ப்ரணதோஸ்மி'-ஸத்குருவான
கோவிந்தரை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

'ஸத்குரும் என்பதற்குப் பதில் 'மத்குரும்'என்று பாடமுண்டு.
'மத்குரு' என்றால் 'என்னுடைய குரு'. ஆசார்யாள்
தம்முடைய குரு என்று ஸொந்தம் பாராட்டி இப்படிச்
சொல்வதாக வைத்துக்கொள்வதே 'ú˜º¼‹'â¡ð¬îMì Üöè£è

Þ¼,Aø¶.

அந்த குரு எப்படிப்பட்டவர்?

'பரமானந்தம்'-லோக ஆனந்தங்கள் எல்லாம் கீழானவை. உசந்த ஆனந்தம் ப்ரம்மானந்தம்தான். அது தான் பரமானந்தம். அதன் உருவமாகவே இவர் இருக்கிறார்.

இன்னம் என்னவாக இருக்கிறார்?

என்னவென்று இன்னவென்று அவரை வரையறைப்படுத்தி வர்ணிக்க முடியாது. அவர் நம்மால் எட்டிப் பிடிக்க முடியாதவர்-'அகோசரம்'.

வாஸ்தவத்தில் இப்படி எட்டவொண்ணாதவராக இருந்தாலும் கருணையால் நமக்கு எட்டக்கூடியவராகவும் ஆகிறார். எப்படி?வேதாந்தம், ஸித்தாந்தம் என்றெல்லாம் ஆத்ம சாஸ்த்ரங்களையும், ஸாதனா மார்கங்களையும் கொடுத்து அவற்றின் மூலம் தம்மை எட்டிப் பிடிக்கும்படிச் செய்திருக்கிறார். அதைச் சொல்லித்தான் ஆரம்பித்திருக்கிறது: 'ஸர்வ வேதாந்த ஸித்தாந்த கோசரம்'.

ஒரு மநுஷ்ய குருவை ஸ்துதிப்பதாக இல்லாமல் பரமாத்மாவையே ஸ்துதிப்பதாக ச்லோக வாசகம் இருக்கிறது.

ஸரியான பாவம் இருந்தால் 'மநுஷ்ய' குரு என்றே ஒன்று கிடையாது!பரமாத்மாதான் அந்த ரூபத்தில் வந்திருக்கிறான் என்பதுதான் சாஸ்த்ரம். ஆனால் நடைமுறையில் அதில் ஸந்தேஹம் வரலாம். 'நாம் ஏற்றி வைத்துப் பரமாத்மாவாக பாவிப்பது இருக்கட்டும். அவருக்கு அந்தப் பரமாத்மாநுபவம் நிஜமாக இருக்கிறதா?' என்று ஸந்தேஹம் வரலாம். ஆனால் ஆசார்யாளைப் போன்ற ஒருவர் இப்படிச் சொல்லியிருக்கிறாரென்றால் அப்போது அந்த குரு நிஜமாகவே அப்படி இருந்துதானிருக்க வேண்டும்.......

கோவிந்த பகவத்பாதர் பதரிகாச்ரமத்தில் இருக்கும் போது வ்யாஸாசார்யாளின் தர்சனம் அவருக்குக் கிடைத்தது.

அவதாரமாக வரபோகிறவருக்கு கோவிந்த பகவத்பாதர்தான் குருவாயிருக்க வேண்டுமென்ற திவ்ய ஸங்கல்பத்தை அவருக்குத் தெரிவிக்க இது ஸமயமாயிற்று.

வருங்காலத்துக்கெல்லாம் ப்ரஹ்ம வித்யை போவதற்கு அங்குரார்ப்பணமான பெரிய விஷயத்தைப் பற்றிய அறிவிப்பு அல்லவா?அதனால் சுகாசார்யாள் கௌடபாதாசார்யாள் ஆகியவர்களும் அங்கே கூடியிருந்தார்கள்.

வ்யாஸர் கோவிந்த பகவத்பாதருக்கு ஈச்வர நிர்மிதமாக ஏற்பட்டிருந்த பெரிய கார்யத்தைக் கொடுத்தார்.

"நம்முடைய (ப்ரஹ்ம) ஸூத்ரத்துக்கு ஸரியாக அர்த்தம் பண்ணி அத்வைத வேதாந்தத்தை லோகத்தில் ஸ்தாபிப்பதற்காகப் பரமேச்வரனே அவதாரம் பண்ணப் போகிறான். ஸந்நியாஸியாயிருந்து துர்மதங்களைக் கண்டித்து வைதிக தர்மத்தை நிலைநாட்டப் போகிறான். லோக ஸம்ப்ரதாயத்தையொட்டி அந்த அவதார புருஷருக்கு ஒருத்தர் ஆச்ரமம் கொடுத்து உபதேசம் பண்ணவேண்டும். இந்தப் பெரிய கார்யம் உனக்குத்தானே ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறது."

"தக்ஷிணத்தின் கோடியில் கேரள தேசத்தில் அவதாரம் ஏற்படப் போகிறது. அவதாரக்காரர் பால்யத்திலேயே உபதேசம் வேண்டி அங்கிருந்து புறப்பட்டு வருவார். நாமானால் இங்கே வட கோடியில் ஹிமாசலத்தில் இருக்கிறோம். இத்தனாந்தூரம் அவர் நடந்து வரும்படி விடக்கூடாது. (காரணம்:) அவதாரம் என்பது ஒன்று;குழந்தை என்பது இன்னொன்று;அதோடுகூட சிஷ்யன் குருவைத் தேடிப் போகிற மாதிரியே குருவும் ஸச்சிஷ்யனைத் தேடிப் போகவேண்டும். அதனால் பாதிதூரம் அவர் வருவதாகவும் பாதிதூரம் அவர் வருவதாகவும் பாதி தூரம் நீ போவதாகவும் இருக்கட்டும். இங்கேயிருந்து தேச மத்திக்குப் போ."

"நர்மதா தீரம் உனக்கு ஏற்கெனவே பழக்கப்பட்ட இடம்தானே? அங்கேபோய், நீ மஹாபாஷ்ய உபதேசம் பெற்றுக்கொண்ட அரச மரத்தடியிலேயே காத்துக் கொண்டிரு. அங்கேயுள்ள குஹையில் ஆத்மாநுஸந்தானம் பண்ணிக்கொண்டு உட்கார்ந்திரு. உரிய காலத்தில் அவர் வந்து சேரும்போது ஆச்ரமம் கொடுத்து உபதேசம் பண்ணு"என்று வ்யாஸர் சொன்னார்.

'ரவுன்ட் டேபிள் கான்ஃபரன்ஸ்'என்று உலகத் தலைவர்கள்

கூடி ரிஸொல்யூஷன் பாஸ் பண்ணுகிற மாதிரி (தீர்மானம் நிறைவேற்றுவது போல்) வ்யாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்த பகவத்பாதர் ஆகிய நாலு பெரிய மஹான்கள் கூடிய மஹாநாட்டில் இப்படி ரிஸொல்யூஷன் பாஸ் ஆயிற்று!

கோவிந்த பகவத்பாதர் நர்மதை நதிக்கரைக்குப் போய்ச் சேர்ந்தார். பூர்வாச்ரமத்தில் எந்த மரத்துக்கு மேலே சிஷ்யராக இருந்துகொண்டு வ்யாகரண உபதேசம் கேட்டாரோ, அதே மரத்தின் அடியில் ஒரு குகையில், தாம் ப்ரஹ்ம வித்யோபதேசம் செய்வதற்கான சிஷ்யரை எதிர் பார்த்து உட்கார்ந்துகொண்டு, அப்படியே நிஷ்டையில் ஆழ் ந்துவிட்டார்.

மஹாவிஷ்ணு ஹ்ருதய கமலத்தில் நடராஜ தர்சனம் கண்டதில் உண்டான அவரது சரீர கனத்தை ஆதிசேஷனால் தாங்கமுடியவில்லை என்பதில் ஆரம்பித்து, சிதம்பரத்தில் நடந்த பாடம், கௌடபாதர் - கோவிந்த பகவத்பாதர் சரித்ரங்கள் ஆகிய எல்லாம் 'பதஞ்ஜலி சரித'த்தில் விரிவாகச் சொல்லியிருக்கிறது. அந்த இரண்டு பேரையும் பரம குருவாகவும் குருவாகவும் பெற்ற ஆசார்யாளின் சரித்ரம் கடைசியான அதன் எட்டாம் ஸர்க்கத்தில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவருடைய சரித்ரம்தான் விஸ்தாரமாக 'சங்கர விஜயம்'என்றே உள்ள புஸ்தகங்களில் சொல்லியிருக்கிறதே என்பதால், பூர்வாசார்யர்கள் சரித்ரத்தை மட்டும் விரித்தும், இதைச் சுருக்கியும் (ராமபத்ர தீக்ஷிதர்) எழுதியிருப்பதாகத் தோன்றுகிறது.

ராமபத்ர தீக்ஷிதரே வையாகரணியாக (வ்யாகரணத்தில் தேர்ச்சி பெற்றவராக) இருந்தால் மஹாபாஷ்யம் செய்யப்பட்டு ப்ரசாரமானதை ஒரு காவ்யமாக எழுத வேண்டும் என்பதுதான் அவருடைய நோக்கமாயிருந்தது. மஹாபாஷ்ய கர்த்தாவின் பெயரில்தானே புஸ்தகமே 'பதஞ்ஜலி சரிதம்'எனப்படுகிறது?எனவே அதில் 'சங்கர விஜய'த்தை விஸ்தாரமாகச் சேர்க்க இடமில்லை. ஆனாலும் புண்ய சரித்ரத்தைச் சொல்லாமல் விடப்படாது என்று, சுருக்கமாக இருந்தாலும் தம்முடைய ஆசார்ய பக்தியைக் கொட்டி எழுதிவிட்டார்.

காலடியில் ஆற்றில் பாலசங்கரரின் காலை முதலை பிடித்ததில் இந்தக் கதையை ஆரம்பித்திருக்கிறது.

"அத்ராந்தரே ஸரிதி நக்ர க்ருஹீத பாத:"என்று ஆரம்பம். 'ஸரிதி'- ஆற்றில், 'நக்ர'-முதலை(யால்); 'க்ருஹீத பாத:-பிடிக்கப்பட்ட பாதம்...

அப்புறம் ஆசார்யாள் குருவைத் தேடிப்போய் உபதேசம் பெற்றது. காசிக்குப் போனது. பாஷ்யம் பண்ணியது, திக்விஜயம் பண்ணியது முதலியவற்றைச் சொல்லி ஸம்க்ஷேபமாக (சுருக்கமாக) ஒரு கடைசி ச்லோகத்துடன் முடித்திருக்கிறது :

கோவிந்த தேசிகம் உபாஸ்ய சிராய பக்த்யா

தஸ்மிந் ஸ்திதே நிஜ மஹிம்நி விதேஹ முக்த்யா *

அத்வைத பாஷ்யம் உபகல்ப்ய திசோ விஜித்ய

காஞ்சீபுரே ஸ்திதிம் அவாப ஸ சங்கரார்ய : **

'சங்கராசார்ய'என்பதை 'சங்கரார்ய'என்று சொல்லி முடித்திருக்கிறது. மீட்டரை உத்தேசித்து இப்படி ('ஆசார்ய'என்பதை 'ஆர்ய'என்று) சொல்லியிருப்பதும் நல்ல அர்த்தம் கொடுக்கிறது. 'ஆர்யர்'என்றால் உயர்ந்தவர், உத்தமமானவர். அதுதான் 'ஐயர்'என்றானது. சங்கரர் என்ற உயர்ந்த புருஷர் 'சங்கரார்யர்'. அவர் கோவிந்த குருவை வெகுகாலம் பக்தியுடன் உபாஸித்து வந்தார், அதாவது குரு சுச்ரூஷை செய்துவந்தார்: "கோவிந்த தேசிகம் உபாஸ்ய சிராய பக்த்யா". ஆசார்யாள் பல வருஷங்கள் கோவிந்த பகவத்பாதருடன் இருந்ததாகச் சொல்வதற்கில்லை. எட்டு வயஸில் ஸந்நியாஸியான அவர் பதினாறு வயஸுக்குள் காசிக்குப் போய்த் தம்முடைய பாஷ்யங்கள் எல்லைவற்றையும் எழுதிவிட்டார். ஆகையால் நர்மதைக் கரையில் அவர் குருவுடன் அதிக வருஷங்கள் இருந்திருக்க முடியாது. ஆனாலும் அவர் செய்த இடை விடாத சுச்ரூஷையே பல வருஷம் பணிவிடை செய்வதற்கு ஸமமாக இருந்ததால் 'சிராய'என்று போட்டிருக்கிறது.

லோகத்துக்கு வழிகாட்டியாக ஆசார்யாள் சிஷ்யராகி கோவிந்த தேசிகரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டார். தொடர்ந்தும் லோகத்துக்கு வழிகாட்டியாக குரு சுச்ரூஷை பண்ணினார்.

'வந்தக் கார்யம் ஆச்சு!வ்யாஸாசார்யாள் பொறுப்புக் கொடுத்த பெரிய கார்யத்தை நல்லபடி முடித்தாயிற்று. இனிமேல் சரீர த்யாகம் பண்ணிப் பரமாத்மாவோடேயே கலந்துவிட வேண்டியதுதான்'என்று கோவிந்த பகவத்பாதர் நினைத்தார். ப்ரஹ்ம ஞானம் பெற்றபின் சரீரத்திலிருக்கும்போதே முக்தராகத்தான் இருந்தார். அதற்கு ஜீவன் முக்தி என்று பெயர். அப்புறம் சரீரமும் போய்விடும். அதற்கு விதேஹ முக்தி என்று பெயர். ஜீவிக்கும்போதே ப்ரம்மாநுபவமான மோக்ஷத்திலிருப்பது ஜீவன் முக்தி. ஜீவனம் முடிந்து தேஹம் போனபின் ஏற்படுவது விதேஹ முக்தி.

அப்படி அவர் லோகவாழ்க்கையை முடித்து, சரீரத்தை விட்டு விதேஹ முக்தியடைந்தார். தன்னுடைய நிஜ ஸ்வரூபமான ப்ரஹ்மம் என்பதன் மஹிமையில் நிலைத்து விட்டார்! "தஸ்மின் ஸ்திதே நிஜ மஹிம்னி விதேஹ முக்த்யா."

ÞŠð® Üõ˜ G˜ò£íñ¬ì‰î Hø«è Ýê£˜ò£œ º¼õ£èŠ ðE Ýó‹H˜î£Ÿ«ð£ô «ñ«ô „«ô£è˜F™ Þ¼‚Aø¶. Ýù£™ Þ¡ªù£¼ Mîñ£ù š¼˜î£‰îº‹ Þ¼‚Aø¶. Üî¡ð®, Ýê£˜ò£œ üèî£ê£˜ò£÷£è F‚Müò‹ ªêŒ¶, ¬èô£ú‹ «ð£Œ ß„õóQìI¼‰¶ ð…ê LƒèƒèÀ÷Š ªðŸÁ, ð˜K‚ «èî£ó‹ º‚Lò Þìƒèœ õNò£è˜ F¼‹¹‹«ð£¶ ªè÷ìð£î¬ó‹» «è£M‰î ðèõ˜ð£î¬ó‹» î˜êù‹ ð‡E, 'îVí£Í˜˜F Üwìè‹'ªê£™L Ü®‚° Ü® ïñvè£ó‹ ªêŒî£˜ â¡Á ªîKAø¶.

'பதஞ்ஜலி சரித'ப்படி கோவிந்தரின் விதேஹமூர்த்திக்கு அப்புறம்தான் ஆசார்யாள் நிஜமாகவே ஆசார்யராகப் பணி ஆரம்பித்தது. "தஸ்மின் ஸ்திதே நிஜ மஹிம்னி விதேஹ முக்த்யா"-'கோவிந்தர் விதேஹ முக்தியடைந்து நிஜ (ஆத்ம) மஹிமையில் நிலைத்தபின்'-பின் ஆசார்யாள் என்ன செய்தாரென்று பின்பாதி ச்லோகத்தில் 'கன்டென்ஸ்'பண்ணிச் சொல்லிக் கதையை முடித்திருக்கிறது.

என்ன செய்தாரென்றால், அத்வைதபரமான பாஷ்யங்களையெல்லாம் அழகாக இயற்றினார். "அத்வைத பாஷ்யம் உபகல்ப்ய."

அந்த ஸித்தாந்தத்தை வெற்றிகரமாகப் பரப்புவதற்காக தேசம்

பூராவும் ஸஞ்சாரம் செய்தார். திக்விஜயம் செய்தார்: "திசோ விஜித்ய"-திசைகளை ஜயித்தார். அதாவது நாலு திசையிலும் இருந்த மாற்று ஸித்தாந்தக்காரர்களை வாதத்தால் ஜயித்தார். ஸர்வ ஜனங்களின் ஹ்ருதயத்தையும் அன்பினால் ஜயித்தார்.

இப்படி ஜயித்து-'விஜித்ய'-முடிவாக "காஞ்சீபுரே ஸ்திதிம் அவாப":காஞ்சியில் ஸ்திரவாஸம் வைத்துக் கொண்டுவிட்டார்.

'ஸ்திதி'என்றால் முடிந்துபோவது என்றும் அர்த்தம் உண்டு-கடைசி காலத்தில் ஆசார்யாள் காஞ்சியில் வஸித்து விட்டு அங்கேயே அவதார வாழ்க்கையின் முடிவை அடைந்தார் என்று அர்த்தம்.

'குருரத்னமாலா'விலுள்ள கோவிந்த பகவத்பாத ஸ்துதியில் அவருடைய பூர்வாவதாரங்கள் அவ்வளவையும் அடுக்கிக்கொண்டு போயிருக்கிறது:

ýKî™ð - ýó£ƒ‚KË¹ó - zñ£îó -

ஸௌமித்ரி - பலாத்ரிபுத்ர லக்ஷ்மா*

ஜயதாத் - உபரேவம் - ஆத்ததாமா

ஜய கோவிந்த முநி :ஸ சந்த்ரநாமா**

'சந்த்ரநாமா'-அதுதான் பூர்வாச்ரமப் பேர். 'ஜய கோவிந்தமுநி'-அது உத்தராச்ரம (பிற்கால ஆச்ரம)ப் பேர். 'ஜய'என்பது இங்கே பேரோடேயே சேர்ந்திருப்பது. 'ஜயராமன்'என்பது போல 'ஜய கோவிந்தர்'என்பதையே அவருடைய பெயராகச் சொல்லியிருக்கிறது. 'இப்படி ஏன் சொல்லணும்? "வெல்க, வெல்க"என்று போற்றி கூறும் அர்த்தத்தில் 'ஜய'என்பதைத் தனி வினைச் சொல்லாகப் பிரித்து, "கோவிந்த முனியே, வெல்க!"என்று ஏன் சொல்லக்கூடாது?'என்றால், ச்லோகத்தின் பின்பாதி ஆரம்பத்திலேயே ஒரு "போற்றி"சொல்லியாகிவிட்டது. "ஜயதாத்"என்று பின்பாதி ஆரம்பிப்பதற்கு "வெல்க"என்றுதான் அர்த்தம். ஆகையால் மறுபடி 'ஜய கோவிந்த முனி' என்று வரும்போது அதையே அவருடைய முழுப் பெயராக எடுத்துக்கொள்வதுதான் ஸரியானது. ஜய ராமன், ஜயலக்ஷ்மி,-வடக்கே ஜெய்கிஷன் (ஜயக்ருஷ்ணன்),

ஜெய் ஷங்கர் (ஜய சங்கரன்) என்றெல்லாம் கூடப் பேர் வைத்துக் கொள்கிறார்கள்-இவை மாதிரி ஜயகோவிந்தர் என்றே பேரைச் சொல்லியிருக்கிறது.

ஒருவர் உயிரோடிருக்கும்போது அவருக்கு ஜய கோஷம் செய்தால் அவர் கார்யமெல்லாம் வெற்றிகரமாகட்டும் என்று அர்த்தம். "ஜெய், ஜெய்" என்று இப்படிப் பல பேருக்கு கோஷம் போடுகிறோம். மறைந்து போனவர்களுக்குப் 'ஜெய்'போட்டால் என்ன அர்த்தம்?யசஃஃகாயம் (புகழுடம்பு) என்று சொல்வதில் அந்த ஆத்மா இருந்து கொண்டு ஆசீர்வாத கார்யத்தை வெற்றியோடு பண்ணிக் கொண்டிருக்கட்டும், உயிரோடிருந்தபோது பண்ணியவற்றுக்கே ஸூக்ஷ்மமாக இப்போதும் சக்தியைக் கொடுத்து அந்த லக்ஷ்யங்களில் தொடர்ந்து வெற்றி காணட்டும் என்று அர்த்தம்.

வெற்றியைத் குறிப்பது மட்டுமின்றி ஜய சப்தமே மிகவும் மங்களமானது. 'கடபயாதி ஸங்கியை'என்பதன்படி ஜய என்ற எழுத்துக்கள் 18 என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். 18 விசேஷமான மங்கள சக்தி வாய்ந்த எண்.

இதனாலெல்லம்தான் 'ஜய'என்று ஒருத்தர் பேரோடேயே சேர்ப்பது.

மநுஷக் குழந்தை மாதிரி இருந்த ஆசார்யாளை ஸந்நியாஸியாக்கி, நிஜமான ஆசார்யாளாக ஆக்கியவரின் பேருக்கு 'ஜய'சேர்க்காவிட்டால் யாருக்குத்தான் சேர்ப்பது? (சிரித்து) சிஷ்யர் 'ஜய ஜய சங்கர'ராக இருந்தால் குரு 'ஜய கோவிந்த'ராகவாவது இருக்க வேண்டாமா?

## üò «è£M‰î ºG : ú ê‰ˆóï£ñ£

'ஜய கோவிந்தமுனி'யாக ஆவதற்கு முன் அவர் சந்த்ர நாமா'க்காரராக இருந்தார். அதுவும் இதே பிறவியில்தான்.

அத்ற்கு முந்தி?

ஆதிசேஷனாயிருந்தார். இதைத்தான் 'ஹரிதல்ப'. 'ஹராங்க்ரிநூபுர', 'க்ஷ்மாத்ர'என்று அவர் செய்யும் மூன்று விதக் கார்யங்களால் தெரிவித்திருக்கிறது. ஆதிசேஷன் விஷ்ணுவுக்குப் படுக்கையல்லவா? அதுதான் 'ஹரிதல்பம்'.

அவரே சிவன் நர்த்தனம் பண்ணும்போது அவருடைய பாதத்தில் சிலம்பாகச் சுற்றிக்கொண்டிருக்கிறார் என்றேனல்லவா?அதுதான் 'ஹராங்க்ரி நூபுரம்'. அவர் செய்யும் இன்னொரு பெரிய கார்யம் இந்த பூமி முழுதையும் தம்முடைய ஆயிரம் சிரஸினால் தாங்கிக் கொண்டிருப்பது. 'க்ஷமா-தர'என்று இதைத்தான் சொல்லியிருக்கிறது. பூமாதேவி எல்லாவற்றையும் பொறுமையுடன் தாங்கிக் கொள்கிறாளென்றால் அவளையும் ஆதிசேஷன் தாங்கிக் கொண்டிருக்கிறார். 'க்ஷமா'என்றால் பூமி. அதிலிருந்துதான் க்ஷமா (பொறுமை) என்பது வந்தது. 'பொறுமைக்கு பூமாதேவி'. தன்னை வெட்டுகிறவர்களையும் தாங்குகிறது பூமி. க்ஷமாவையும் தாங்குவதால் ஆதிசேஷன் 'க்ஷமாதரர்'.

இந்த ஆதிசேஷ ஸ்வரூபம்தான் கோவிந்த பகவத் பாதாளின் ஆதி ரூபம். ஆதி ரூபத்திற்கும் இந்த (கோவிந்த) ரூபத்திற்கும் நடுவே இன்னும் சில அவதார ரூபங்களும் அவருக்கு உண்டு. என்னென்ன?

ஸௌமித்ரி, பலாத்ரிபுத்ர -ஸௌமித்ரி, பல, அத்ரி புத்ர. ஸௌமித்ரி என்றால் ஸுமித்ரா புத்ரனான லக்ஷ்மணர். விஷ்ணு ராமராக வந்தபோது ஆதிசேஷன் லக்ஷ்மணராகக் கூட வந்தார்.

அரச மரத்தின் மேலே நாள் கணக்காக ஆஹாரமில்லாமல், தூக்கமில்லாமல் சந்த்ர சர்மா பாடம் கற்றுக்கொண்டாரே, அது எப்படி முடிந்தது என்பதற்கு இங்கே ஆன்ஸர் கிடைக்கிறது. லக்ஷ்மணராக இருந்தபோது இதை விட பஹுகாலம்-பதிநாலு வருஷம்-வனவாஸத்தின் போது அவர் ஆஹாரமும் நித்ரையும் இல்லாமல்தானே அண்ணாவுக்குப் பணிவிடை பண்ணிக்கொண்டு, காவல் காத்துக்கொண்டு இருந்திருக்கிறார்?அந்த எக்ஸ்பீரியன்ஸ் தான் இப்பவும் கைகொடுத்திருக்கிறது!இப்போது இப்படிப் பண்ணவே, அப்போது 'ட்ரெய்னிங்'நடந்திருக்கிறது!

ªú÷I^Kò£è õ‰îõ«ó ÜŠ¹ø‹ ðôó£ñó£è ,¼wí£õî£ó^F™ õ‰î£˜. î‹Hò£è Þ¼‰îõ˜ Ü‡í£õ£è õ‰¶ Ü‡í£M¡ ªðò¬ó»‹ ¬õ^¶, ªè£‡ì£˜, ðôó£ñ˜ â¡Á. ðô ð^ó˜ â¡Á‹ ªê£™õ¶‡´. Þƒ«è "ªú÷I^K ðô£^K¹^ó"â¡ÂI ì^F™ 'ðô'â¡ð¶ ðôó£ñ¬ó^î£¡. Üõ¼‹ «êû£õî£ó‹.

அப்புறம் 'அத்ரி புத்ரர்'. அதுதான் ஆத்ரேயர் என்னும் பதஞ்ஜலி.

ஹரியின் படுக்கையாக, ஹரனின் பாதரஸமாக, பூமியை தரிப்பவராக, லக்ஷ்மணராக, பலராமராக, பதஞ்ஜலியாக வந்தவர்தான் சந்த்ர சர்மாவாகப் பிறந்து கோவிந்த முனியானவர். இப்போது அவர் நர்மதா தீரவாஸியாக ஆனார். அதைத்தான் "உபரேவம் ஆத்ததாமா"என்று சொல்லியிருக்கிறது. 'தாமா'என்றால் இருப்பிடம். ரேவா என்பது நர்மதைக்கு இன்னொரு பெயர். 'உபரேவம்'என்றால் 'ரேவாவுக்குப் பக்கத்தில்', அதாவது நர்மதா தீரத்தில். நர்மதா தீரத்தில் வாஸ ஸ்தானத்தை உடையவர்தான் 'உபரேவமாத்த தாமா'. இத்தகைய பல ரூபங்களைக் கொண்டவர் விஜயம் பண்ணட்டும்-"ஜயதாத்"-அவருடைய பேரும் கீர்த்தியும் எப்போதும் வெற்றிகரமாக விளங்கிக் கொண்டிருக்கட்டு ம்!இப்படிச் ச்லோகம் சொல்கிறது.

---

## **தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## அதிகார புருஷர் வரிசையே ஆசார்ய பரம்பரை

பூர்வாசார்யர்களின் கதைகளைத் தெரிந்துகொண்ட பிறகே ஆசார்யாள் கதையைத் தெரிந்துகொள்வது முறை என்பதால் தெரிந்துகொண்டோம்.

நம்முடைய அறிவாகிய ஆத்ம ஜ்யோதிஸைப் பூர்ணமாக ப்ரகாசிக்கச் செய்து, நம்மை துக்கமில்லாமல் ஆக்குவதற்கான ஸாதனங்களைக் கொடுக்க நமக்கு ஆசார்யர் அவச்யம் வேண்டும். இப்படி ஒரு காலத்தில் வருகிற ஆசார்யர் பிற்காலத்தில் இந்தக் கார்யத்தைத் தொடருவதற்காக இன்னொருவருக்கு அதிகாரம் கொடுக்கிறார். தம் அறிவையும் அநுபவத்தையும் அவருக்குள்ளே செலுத்துவதால் இப்படிப்பட்ட அதிகாரத்தை அளிக்கிறார். இப்படியே வரிசையாக அதே ஞானக் கரண்ட் தொடர்ச்சியாக அதிகாரம் பெற்றவர்களின் வழியாக குரு பரம்பரை

என்பதாகப் பாய்வதால்தான் லோகத்துக்கு எல்லாக் காலத்திலும் விடாமல் ஞான வெளிச்சம் கிடைக்கிறது.

எலெக்ட்ரிஸிடியை 'சார்ஜ்'ஆவது என்கிறோம். ஒருத்தர் இன்னொருத்தருக்கு அதிகாரம் கொடுப்பதையும் 'சார்ஜ்'கொடுப்பதென்றே சொல்கிறோம்!ஒரு குரு தம் சிஷ்யருக்குள் ஞான எலெக்ட்ரிஸிடியைச் சார்ஜ் பண்ணி அப்புறம் 'என் மாதிரி நீ இனிமேல் குருவாயிரு'என்று பதவியை ஒப்படைத்தும் அவருக்கு சார்ஜ் கொடுக்கிறார்!அதிகார பூர்வமாக சார்ஜ் வாங்கிக்கொண்டவர்தானே ஆபீஸ் பண்ணமுடியும்? குருவின் ஆபீஸும் அப்படித்தான். யார் வேண்டுமானாலும் குரு என்று உட்கார்ந்துவிட முடியாது. வரிசை க்ரமத்தில் இப்படி அதிகாரம் பெற்றவர்களைத்தான் குரு பரம்பரை என்பது. அவர்களே ஞான ப்ரகாசத்தைத் தொடர்ந்து லோகத்துக்குக் கொடுத்துக் கொண்டிருப்பவர்கள். இந்தப் பரமோபகாரத்தைப் பண்ணுபவர்கள் என்பதால்தான் ஆசார்ய பரம்பரையைப் பற்றி ஆசார்யாள் கதையில் தெரிந்துகொள்ள வேண்டியது அவச்யம் என்று கேட்டோம்.

இனிமேல் அவருடைய அவதாரக் கதைக்குப் போகலாம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

## வேண்டுதலும் வரமும்

தக்ஷிணாமூர்த்தி ஆலமரத்தடியில் கருணாகுலமாக உட்கார்ந்து கொண்டிருந்தார். 'ஜனங்களால் இங்கே வர முடியவில்லை. வரவேண்டும் என்று தோன்றக்கூடவில்லை. ஆனாலும் குழந்தைகள். நாமேதான் போய் நல்லதைச் சொல்லவேண்டும். ஆனால் தேவர்கள் மநுஷ்யர்களைப்போல அப்படி விஷயம் தெரியாதவர்கள் அல்ல. அவர்களுக்காக இவர்கள் வந்து சொல்லத்தான் வேண்டும். அதுதான் க்ரமம். ஜனங்களின் கர்மாநுஷ்டானம் குறைந்து போனதால் இவர்களுக்குத்தான் ஆஹுதி முதலானதுகள் நஷ்டப்படுகின்றன. அதனால் தேவர்கள்

வந்து சொல்லவேண்டியது தான்;அப்புறந்தான் அவதரிக்க வேண்டும்'என்று காத்துக் கொண்டிருந்தார்.

தேவர்களும் தப்புப் பண்ணுவார்கள். அதற்காக அவர்கள் கஷ்டப்படவேண்டிய காலம் வரும். ரொம்பவும் கஷ்டம் ஜாஸ்தியாகும்போது அவர்களுக்கு அடக்க ஒடுக்கம் ஏற்பட்டு ஈச்வரனிடம் ப்ரார்த்தித்துக்கொள்வார்கள். ஈச்வரனும் அவதாரம் பண்ணியோ வேறு விதத்திலோ கஷ்ட நிவாரணம் அளிப்பார்.

இப்போதும் அப்படி ஏற்பட்டது. தேவர்கள் கைலாஸத்திற்குப் போய் வட வ்ருக்ஷமூலத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த சம்பு மூர்த்தியிடம் ப்ரார்த்தனை பண்ணிக் கொண்டார்கள்.

லோகம் பூராவிலும் மத ஸம்ப்ரதாயமும் தத்வ சாஸ்த்ரமும் ரொம்பவும் குழறுபடியாகிவிட்டதைப் பார்த்து நாரதருக்குத்தான் முதலில் மனஸ் ரொம்பவும் ஸங்கடப்பட்டது;அவர் தம்முடைய பிதாவான ப்ரம்மாவிடம் போய்க் குறை தெரிவித்துக் கொண்டார்;அப்புறம் ப்ரம்மா ஸகல தேவர்களையும் அழைத்துக்கொண்டு கைலாஸத்திற்குப் போனார் என்று ஒரு 'சங்கர விஜய'த்தில் இருக்கிறது.

லோகத்தில் 'ச்ருத்யாசாரம்'நசித்துப்போய் 'மித்யாசாரம்'வ்ருத்தியாகிவிட்டது என்று தேவர்களெல்லாம் பரமேச்வரனிடம் முறையிட்டுக்கொண்டார்கள் என்று அதில் இருக்கிறது:

**ச்ருத்யாசாரம் பரித்யஜ்ய மித்யாசாரம் ஸமாச்ரிதா :**

ச்ருத்யாசாரம் என்றால் வேத வழி, மித்யாசாரம் என்றால் வேத வழி, மித்யாசாரம் என்றால் பொய்யொழுக்கங்கள், அதாவது ஒழுக்கம் மாதிரி இருந்தாலும் வாஸ்தவத்தில் ஒழுங்கைக் கெடுக்கும் வழக்கங்கள்.

"ஒரு பக்கத்திலேயானால் பௌத்தர் முதலிய அவைதிக மதஸ்தர்கள் வேத நிந்தனை பண்ணி, கர்மாநுஷ்டானஙகளையெல்லாம் கண்டனம் செய்தும், வர்ணாச்ரம ஒழுங்குகளைக் குலைத்தும் வருகிறார்கள். யஜ்ஞ

பூமியாயிருந்த பாரத வர்ஷத்து ஜனங்கள் 'யாகம்'என்ற வார்த்தையைக் கேட்டாலே காதைப் பொத்திக்கொள்கிற மாதிரியாகப் பண்ணியிருக்கிறார்கள். இன்னொரு பக்கத்திலோ சைவர், வைஷ்ணவரைப் போல வைதிக தெய்வங்களை உபாஸிப்பவர்களும் வைதிகமான உபாஸனையை விட்டுவிட்டு லிங்க முத்ரை, சக்ர முத்ரை என்றெல்லாம் சூடு போட்டுக்கொள்கிறார்கள். இன்னும் மிஞ்சிப்போய் காபாலிகர்கள் முதலானவர்கள் தங்கள் தலையையே பலி கொடுக்குமளவுக்கு க்ரூரமான வழிகளைப் பின்பற்றுகின்றனர். ஆகையினால்,

**" தத்-பவாந்-லோக ரக்ஷார்த்தம் உத்ஸத்ய நிகிலாந் கலாந் ***

**வர்த்ம ஸ்தாபயது ச்ரௌதம் ஜகத் யேந ஸுகம் வ்ரஜேத் **"**

அதாவது,

"தாங்கள்தான் தப்பு வழிக்காரர்களான அத்தனை பேரையும் நிர்மூலம் செய்து லோக ரக்ஷணம் செய்யவேண்டும். வேத வழியை மறுபடி ஸ்தாபனம் பண்ண வேண்டும். ஜகத் உண்மையான ஸுகத்தைப் பெற வேண்டுமானால் அதற்கு ச்ருதிதானே மார்க்கம்?அதைத் தாங்கள் நிலைநாட்ட வேண்டும்"என்று ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.

"மாதவீய சங்கர விஜயம்"என்பதில் இப்படிச் சொல்லித் தொடர்ந்து பரமேச்வரன் அவர்களுக்குப் பரமானுக்ரஹம் பண்ணியதையும் சொல்லியிருக்கிறது. தாமாகவே அவர் லோகரக்ஷார்த்தம் அவதாரம் பண்ண எண்ணி, இவர்கள் பெடிஷன் கொடுக்க வருவார்களா, வருவார்களா என்றுதானே தவித்துக் கொண்டிருந்தார்?

அதனால் உடனே, "உங்களுடைய மனோரதத்தை அப்படியே பூர்த்தி பண்ணுகிறேன். நானே மநுஷ்ய ஜன்மாவை மேற்கொண்டு துஷ்டாசாரங்களை அழித்து, தர்ம ஸம்ஸ்தாபனம் செய்கிறேன்."முக்யமாக ப்ரஹ்மஸூத்ரத்துக்கு பாஷ்யம் பண்ணி அதன் மூலம் வேதத்தின் பரம தாத்பர்யத்தை நிச்சயப்படுத்தி தர்ம ஸம்ஸ்தாபனதைப் பண்ணப் போகிறேன்.

"எல்லாம் ஒரே ப்ரம்மம்தான் என்ற ஸத்யம் மறந்து போய், ஜீவர்களை ப்ரம்மத்திலிருந்து பேதப்படுத்துவதுதான் அத்தனை அனர்த்தத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் மூலமாயிருப்பது. மாயையின் மோஹன சக்தியாலேயே ஜீவர்கள் ஆக்ரமிக்கப்பட்டு இந்த பேதம் என்கிற-த்வைதம் என்கிற-இருட்டிலே முழுகியிருக்கிறார்கள். நான் சங்கரர் என்ற பெயரோடு யதீந்திரராக பூலோகத்தில் அவதாரம் செய்து ஆத்ம ஞானம் என்ற ஸூர்ய ப்ரகாசத்தால் அந்த இருட்டை அகற்றுவேன்."

"நாலு சிஷ்யர்களோடுகூடி இந்தக் காரியத்தை நிறைவேற்றுவேன். இதுவரை அவதாரங்கள் செய்த மஹா விஷ்ணுவுக்கு அவருடைய சதுர்புஜங்கள் எப்படி அங்கமோ, அதுபோல எனக்கு இந்த நான்கு சிஷ்யர்களும்"

-என்று சம்புமூர்த்தி கடகடவென்று ஒரே வரமாக வர்ஷித்துவிட்டார்.

"இத்யுக்த்வோபரதாந் தேவாந் உவாச கிரிஜாப்ரிய":

"தேவர்கள் தாங்கள் சொல்லவேண்டியதைச் சொல்லி முடித்ததும் கிரிஜா ப்ரியர் அவர்களிடம் பேசலானார்"என்று இந்த வரப்ரதானத்தை ஆரம்பித்திருக்கிறது. "கிரிஜா ப்ரிய:"-அதாவது 'அம்பாளின் காந்தனாக இருப்பவர்'- â¡Á võ£I¬ò, ºPŠH†ìî£™, 'ÜõÀ¬ìò è¼¬í, Ü™ô¶ Üõ÷£Aò è¼¬í É‡®«ò Üõ˜ õó‹ î‰î¶. ð£˜ˆî£™ ãè£ƒAò£ù îVí£Í˜ˆFò£J¼‰î£½‹, ÜŠ«ð£¶‹ Ü‹ð£œ Üõ¼‚°œ Þ¼‰¶ªè£‡´ î£¡ Þ¼‰î£œ. Þó‡´ «ð¼‹ «ê˜‰«î Ýê£˜ò£÷£è Üõî£ó‹ð‡Eò¶'â¡Á Þˆî¬ù àœ÷˜ˆîƒè¬÷»‹ ¬õˆ¶„ ªê£¡ùî£è ãŸð´Aø¶!

ஸ்வாமி சொன்னது :

"மநோதரம் பூரயிஷ்யே மாநுஷம்-அவலம்ப்ய வ: *

துஷ்டாசார விநாசாய தர்ம ஸம்ஸ்தாபநாய ச **

ð£wò‹ °˜õ‰ Šóyñú¨ˆó-î£ˆð˜ò£˜ˆî MG˜íò‹ *

அவதாரத்தில் அவளுக்கு ஸரஸவாணி என்று பெயர்.

ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் அம்சமாகக் குமாரிபட்டர் என்பவர் அவதரித்தார். இந்த அவதாரங்களில் இவர்தான் எல்லாருக்கும் முந்தி பூலோகத்துக்கு வந்தவர். 'என்றும் இளையவர்' எல்லாருக்கும் மூத்தவராக வந்தார்!

இந்த்ரன் ஸுதன்வா என்ற ராஜாவாகப் பிறந்தான்.

குமாரிலர், ஸுரேச்வரர் ஆகிய இரண்டு பேருக்கும் ஸ்ரீசங்கராவதாரத்தில் இருந்த 'பார்ட்'பற்றிக் கொஞ்சம் சொல்லிவிடவேண்டும். குமாரிலரோடு ஸம்பந்தப்பட்டவன் ஸுதன்வா. ஸுரேச்வரரோடு ஸம்பந்தப்பட்டவள் ஸரஸவாணி. அதனால் அவர்கள் பங்கைப் பற்றியும் இதிலேயே ஓரளவு தெரிந்துவிடும்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

**பௌத்த கண்டனத்தில்**

**மீமாம்ஸகர்களின் உதவி**

பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர் ஆகிய மூன்று சிஷ்யர்களுக்கும் ஸுரேச்வராசார்யாளுக்கும் வித்யாஸங்கள் உண்டு. மற்ற மூன்று பேரும் ப்ரஹ்மசர்யத்திலிருந்து நேராக ஸந்நியாஸியானவர்கள்-ஆசார்யாள் மாதிரியே. ஸுரேச்வரர் மட்டும் க்ருஹஸ்தாச்ரமும் வஹித்து அப்புறம் ஸந்நியாஸியானவர். மற்றவர்களைப் போல இல்லாமல் இவர் ஆசார்யாளைவிட வயஸில் மூத்தவர். இன்னொரு வித்யாஸம், இவர் ஆரம்பத்தில் அத்வைத ஞான மார்க்கத்தை பலமாகக் கண்டித்த மீமாம்ஸகராக இருந்துவிட்டு, அப்புறமே ஆசார்யாளிடம் (வாதச்) சண்டை போட்டுத் தோற்றுப்போய் அவருடைய ஸித்தாந்தத்தை ஏற்றுக்கொண்டு ஸந்நியாஸியானவர். க்ருஹஸ்தராயிரு ந்தபோது அவருக்கு மண்டனமிச்ரர் என்று பேர். ஸுரேச்வரர் என்பது ஸந்நியாஸ நாமா. இவர் ப்ரம்மாவின் அவதாரம்.

வைதிக கர்மாநுஷ்டானங்களில் முக்யமாயிருப்பது யஜ்ஞம். அப்படிப்பட்ட யஜ்ஞத்தைச் செய்பவர்கள் நான்கு விதமான ரித்விக்குகள். அந்த நாலு பேரில் மேற்பார்வை செய்யும் ஸூபர்வைஸருக்கு ப்ரம்மா என்றே பெயர். அதனால்தானோ என்னவோ ப்ரம்மாவின் அம்சமாகப் பிறந்தவர் பெரிய கர்ம மீமாம்ஸகராக இருந்தார்!

இதேபோல் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் அம்சமும் இன்னொரு மீமாம்ஸகராகவே அவரித்தது. குமாரஸ்வாமியிலிருந்து தோன்றிய அவருக்குக் குமாரிலர் என்றே பெயர். ப்ராம்மணராதலால் குமாரில 'பட்டர்'. 'பட்டர்'என்றாலே அவர்தான் என்றாகி, அவருடைய ஸித்தாந்தத்துக்கு 'பாட்ட (Bhaatta) மதம்'என்றே பேர் ஏற்பட்டது. யஜ்ஞத்தில் ப்ரதானமாயிருப்பது அக்னி. அக்னிதான் ஸுப்ரஹ்மண்யர். அதனால் அவருடைய அம்சாவதாரமும் கர்ம மீமாம்ஸையை ப்ரசாரம் செய்வதாக ஏற்பட்டது போலிருக்கிறது!இவரும் முதலிலெல்லாம் அத்வைத வேதாந்தத்தை ஆக்ஷேபித்து வந்தவர்தான். கடைசியில் ஆசார்யாளின் ஞான மார்க்கத்தை ஏற்றுக்கொண்டார். ஆனாலும் சிஷ்யராகி ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளவில்லை. ஏன் என்று அப்புறம் கதை சொல்கிறேன். இப்போதே சொல்லிவிட்டால் ஸ்வாரஸ்யம் போய்விடும்!

ஆசார்யாள் ஞானமார்க்கம் இந்த இரண்டு பேரும் கர்ம மார்க்கம், அதனால் இவர்கள் அவரை ஆக்ஷேபித்தார்கள் என்றால், "இது என்ன?தேவர்களாயிருந்தும் இவர்கள் ஸஹாயத்துக்காக அவதரித்தார்களா?சண்டை போட அவதரித்தார்களா?"என்று கேட்கலாம்.

சண்டை போட்டது வாஸ்தவம். அதே ஸமயத்தில் அதைவிட ஸஹாயமும் செய்திருக்கிறார்கள்!மற்ற சிஷ்யர்களைவிடக்கூட இவர்கள் செய்த ஸஹாயம்தான் ஜாஸ்தி என்றே சொல்லலாம். வேடிக்கை என்னவென்றால், எந்தக் கர்ம மீமாம்ஸையினால்தான் இவர்கள் ஆசார்ய ஸித்தாந்தத்திற்கு விரோதிகளாயிருந்தார்களோ அதனாலேயேதான் பெரிய உபகாரிகளாகவுமிருந்

தார்கள்!எப்படியென்றால்..........

பௌத்த மதத்தைக் கண்டனம் பண்ணி அகற்றுவதற்கு ஆசார்யாள் எவ்வளவு கார்யம் செய்யத் தேவைப்பட்டிருக்குமோ அதில் பாதியை இந்த இரண்டு பேருமே மீமாம்ஸையினால் பண்ணித்தான் அவருடைய கார்யத்தைக் குறைத்துப் பெரிய ஸஹாயம் செய்துவிட்டார்கள்!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

## பௌத்தத்தின் மும்முனை ஆக்ஷேபணை

பௌத்தம் வைதிக தர்மத்தின் கர்மாநுஷ்டானம், பக்தியுபாஸனை, ஞான ஸித்தாந்தம் ஆகிய மூன்றையுமே ஆக்ஷேபிப்பது.

ஆனாலும் இவற்றில் பௌத்தர்களின் ஸித்தாந்தம் ஞான ரீதியில் ஓரளவுக்கேனும் அத்வைத்தோடு ஒத்துப்போவதே. மாயைக் கொள்கை அவர்களுக்கும் உண்டு. மனஸை அப்படியே அழித்துப்ப்போட்டு விடுவதுதான் அவர்களுடைய நிர்வாண லக்ஷ்யமும். ஆனால் மனஸ் அழிந்தபின் ப்ரகாசிக்கும் ப்ரஹ்ம பூர்ணத்தைச் சொல்லாமல் சூன்யமாக அவர்கள் முடித்தவிடுவது பெரிய வித்யாஸம். இன்னும் சில வித்யாஸங்களும் உண்டு. அதெல்லாம் சொல்லிப் புரிய வைப்பதென்றால் கஷ்டமான பாடம் நடத்துகிறமாதிரி ஆகி விடும். மொத்தத்தில் ஞான ஸித்தாந்தத்தில் நம் வேதாந்தத்துக்கு பௌத்தம் அடியோடு மாறுபட்டதல்ல.

பக்தி என்று எடுத்தால், ஸ்வாமி என்பதையே ஒப்புக் கொள்ளாததால் பௌத்தம் வைதிக தர்மத்திற்கு அடியோடு வித்யாஸமாயிருக்கிறது. கர்மா என்று பார்க்கும் போதும் யஜ்ஞாதிகள் கூடவே கூடாது, இன்னின்னாருக்கு இன்ன அநுஷ்டானம் என்று ஒழுங்குபடுத்தியுள்ள வர்ண தர்மமும் கூடாது என்றதால் அது வேத மதத்துக்கு அடியோடு

ஆப்போஸிட்டாக இருக்கிறது.

---

தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்) ஸ்ரீசங்கர சரிதம்

## கடவுட் கொள்கையை நிலை நாட்டியது

இவற்றில் பக்தி என்பது முன்னேயே சொன்னாற்போல் இயல்பாக ஸர்வ ஜனங்களுக்கும் இருப்பது. உலகம் என்று இப்படியொன்று இருந்து இவ்வளவு காரண - கார்ய விதிகளோடு எல்லாம் நடக்கிறதென்றால் இதை ஸ்ருஷ்டித்து நடத்தும் மஹாசக்தனாக ஒரு ஸ்வாமி இருக்கத்தான் வேண்டுமென்று எவருக்குமே தோன்றுவதுதான் இயற்கை. தோன்றாமலிருப்பதுதான் ஆச்சர்யம்!ஸ்வாமி இல்லை என்று சொல்லத்தான் சிக்கலான புத்தி வாதம் செய்யத் தெரிந்திருக்கவேண்டும்!அப்படி பௌத்தர்கள் செய்தார்கள். இந்த வாதத்துக்காக இல்லாமல் வேறு ஸமாசாரங்களுக்காகத்தான் அவர்களை ஜனங்கள் பின்பற்றினார்கள். பௌத்தத்தைப் பின்பற்றும்போதும் ஜனங்களுடைய மனஸை விட்டு பக்தியும் ஈச்வர நம்பிக்கையும் போகவில்லை. அதனால் வேறு வழியில்லாமல் அப்புறம் பௌத்தர்களும் பக்தி வழிபாட்டுக்கு ஒரு தினுஸில் இடம் கொடுக்க வேண்டியதாகிவிட்டது. இந்த விஷயங்களை முன்னாலேயே சொன்னேன்.

இப்படியிருந்த நிலையில் ஸரியான, வேத வழிப்படியான பக்தியை நிலைநாட்டுவதற்கு ஆசார்யாள் வாதம் எதுவும் அதிகம் பண்ணவேண்டியிருக்கலில்லை. 'புத்தி ஸமாசாரம் நிறையக் கலக்கும் ஞான விஷயமாக வாதம் நிறையப் பண்ணி எதிர்க்கட்சியை நிராகரணம் பண்ணுவதுபோல், இயற்கையாக ஹ்ருதயத்தில் ஊறுகிற பக்தி விஷயமாக வாதம் ஒன்றும் பண்ணவேண்டாம். ஜனங்கள் பக்தியை நன்றாக திறந்துவிட்டு ஈச்வரனிடத்தில் செலுத்துவதற்கு வழியாக நிறைய ஸ்தோத்ரங்களைப் பண்ணிக்கொடுத்தும், ஆலயங்களை மந்த்ர சக்தியினால் ஸாந்நித்யமுள்ள

வையாக்கியும், வழிபாட்டு முறைகளை சுத்தப்படுத்தித் தந்தும் விட்டாலே போதும். ஜனங்கள் இப்போது பௌத்தப்படி பண்ணிக்கொண்டிருக்கும் இரண்டாங்கெட்டான் உபாஸனையை (காபாலிகம், வாமாசாரம் என்றெல்லாம் பண்ணும் க்ரூரமான, ஆபாஸமான உபாஸனைகளையும் தான்) விட்டு விட்டு வைதிக உபாஸனைக்கு வந்துவிடுவார்கள். அறிவாளிகளாக வாதம் செய்கிற பௌத்தர்களைப் பற்றி நாம் அதிகம் கவலைப்பட வேண்டாம். பதில் வாதம் பண்ணுவதால் ஹ்ருதயத்திலிருந்து ஊற வேண்டிய பக்தியை ஊறப் பண்ண முடியுமா என்ன?'என்கிற ரீதியில் ஆசார்யாள் செய்துவிட்டுப் போய்விட்டார்.

அதனால் லோகத்திற்கு உபாதான காராணமாகவும் நிமித்த காரணமாகவும் ஒரு ஈச்வரன் உண்டு என்பதைக் காரணங்கள் காட்டி அழுத்தமாகச் சொன்னதற்கதிகமாக இவ் விஷயத்தில் வாதம் என்று அதிகம் செய்யவில்லை.

இப்போது இரண்டு வார்தைதை சொன்னேனே, உபாதான காரணம்-நிமித்த காரணம் என்று, இந்த இரண்டையும் கொஞ்சம் 'எக்ஸ்ப்ளெய்ன்' பண்ணாமல் மேலே போவதற்கில்லை. அத்வைதத்துக்கும் மற்ற வைதிக அவைதிக ஸித்தாந்தங்களுக்கும் உள்ள சில வித்யாஸங்களை முன்னே சொன்னபோதே இதையும் சொல்லியிருக்க வேண்டும்........

ஒரு வஸ்து உண்டாக்கப்பட்டிருக்கிறதென்றால் அது ஏதோ ஒரு மூலப் பொருளைக்கொண்டுதான் உண்டாக்கப்பட்டிருக்கவேண்டும். ஒரு நகை இருக்கிறதென்றால் தங்கம், வெள்ளி மாதிரி ஒரு லோஹத்தைக் கொண்டுதான் அதைப் பண்ணியிருக்கணும். வீடு இருக்கிறதென்றால் அதற்குச் செங்கல் வேண்டும். நகைக்குத் தங்கம் உபாதான காரணம். வீட்டுக்குச் செங்கல் உபாதான காரணம்.

தங்கம் எப்படி நகையாச்சு?செங்கல் எப்படி வீடாச்சு?தட்டானால் தங்கம் நகையாயிற்று. கொத்தனால் செங்கல் வீடாயிற்று. தட்டானும் கொத்தனும் நிமித்த காரணம்.

பானை உதாரணத்தைத்தான் பழைய புஸ்தகங்களில் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கும். பானைக்கு உபாதான காரணம் களிமண்;நிமித்த காரணம் குயவன்.

ஆதாரமான பொருளாகிய உபாதான காரணத்தைக் கொண்டு யார் அல்லது எது ஒரு வஸ்துவை உண்டாக்குகிறதோ அது நிமித்த காரணம்.

ஜகத் என்று ஒன்று இருப்பதற்கு ஈச்வரனே உபாதானம், நிமித்தம் என்ற இரண்டு காரணங்களும் என்பது அத்வைதத்தின் கொள்கை. ஜகத்தை மித்யை என்று அது சொல்லும். அதாவது நிரந்தர ஸத்யமாயில்லாமல் ஸத்யம் மாதிரித் தோற்றம் மட்டும் அளிப்பது;ஞானம் வந்தால் போய் விடுவது என்று சொல்கிறது. ஆனால் நடைமுறையில் இருப்பதுபோல 'வ்யாவஹாரிக ஸத்ய'மாக ஜகத் இருக்கிற போது அதைப் பண்ண ஒரு ஆதார 'மெடீரிய'லும், பண்ணுவிக்கிற ஒரு கர்த்தாவும் இருக்கத்தானே வேண்டும்?அந்த இரண்டுமே ஈச்வரன்தான் என்று அத்வைதம் சொல்கிறது. வேறு மெடீரியலைக் கொண்டு அவன் ஜகத்தைப் பண்ணினானென்றால் அந்த மெடீரியல் எங்கேயிருந்து வந்தது, அது எப்படி உண்டாயிற்று என்று கேள்வி வரும். அதனால் உபாதான மெடீரியலும் அவன்தான், அதை ஜகத்தாக நிர்மாணம் பண்ணிய நிமித்த காரணமாகிய கர்த்தாவும் அவன்தான் என்றே இருக்கவேண்டும். தன்னையே, தன்னுடைய மாயா சக்தியாலேயே, அவன் ஜகத் என்பதாகத் தோற்றம் காட்டும்படிப் பண்ணுகிறான் என்றால் உபாதான - நிமித்த காரணங்கள் இரண்டும் அவன்தானே?ஜகத் அவனுடைய மாயக் கனா. நாம் கனாக் காண்கிறோம் அப்போது அந்த ஸ்வப்ன லோகத்திலிருக்கிற அவ்வளவு வஸ்துக்களுக்கும் மெடீரியல் (உபாதானம்) நம்மிடமிருந்தே தோன்றியதுதானே?ஸ்வப்ன லோகத்தை நிர்மாணம் செய்த நிமித்த காரணமும் நாம்தானே?

ஸ்வாமியே இல்லை என்றும் சொல்லும் ஸித்தாந்தங்கள் அணுக்கள் என்ற உபாதான காரணத்தைக் கொண்டு ஜகத்தைச் செய்யும் நிமித்த காரணம் மட்டுமே ஸ்வாமி என்று

சொல்லும் ஸித்தாந்தங்கள்-என்றெல்லாம் பல இருந்தபோது இரண்டு காரணமும் அவன்தான் என்று அத்வைதம் சொல்லிற்று.

ஈச்வரன் ஜகத்தின் கர்த்தா இல்லை என்று ஸாங்க்யம் சொல்லும், ஈச்வர தத்வத்தை ஞான ஸ்வரூபமாகத்தானே சொல்லியிருக்கிறது? அப்படிப்பட்ட சைதன்ய மூலத்திலிருந்து ஜடமான லோகம் ஸம்பவிக்க முடியாது என்று ஸாங்கியர்கள் வாதிப்பார்கள். ஆசார்யாள் என்று சொன்னாரென்றால்: சைதன்ய மூலம் வாஸ்தவமாகவே இப்படி ஜட லோகம் என்று ஒன்றைப் பண்ணவில்லை, அதாவது ஜட ப்ரபஞ்சம் நித்ய ஸத்யமான ஒன்று இல்லை, மாயையினால் ஏற்பட்ட தோற்றம்தான். பௌதிகமாக ஜடம் என்று நினைப்பதும் மாயா கல்பனையான எண்ணம்தான்;அதாவது இப்போது ஸயன்ஸில் சொல்கிறபடி matter-ம் ஒருவித energy தான்;கல்பனா சிந்தனையான ஒரு தோற்றம்தான்;நம்முடைய அறிவில் கல்பனை எழும்புகிறதுபோலவே எல்லா அறிவுக்கும் காரணமான சைதன்ய மூலமான ஈச்வரனிடம் லோக கல்பனை ஏற்பட்டதில் சைதன்யம் - ஜடம் என்று முரணாக எதுவுமில்லை என்று காட்டினார். கல்பனா லோக கர்த்தாவாக ஒரு ஈச்வரன் உண்டு என்றார்.

'கர்த்தா'என்பது ப்ரஹ்மஸூத்ர வார்த்தை அதை எடுத்துக்கொண்டே கிறிஸ்துவர்களும் 'கர்த்தர்'என்பது.

மாயம், கல்பனை என்று எதுவானாலும் அப்படி (மாயக் கற்பனை) பண்ண ஒன்று இருக்கத்தானே வேணும்?அப்படிப்பட்ட கர்த்தா ஈச்வரன் என்று ஆசார்யாள் சொல்லி ஸாங்கயர்களைக் கண்டித்தார்.

பல தாதா ஈச்வரனே என்று விளக்கிக்காட்டி மீமாம்ஸர்களைக் கண்டனம் செய்தார். 'கார்யங்கள்- அதாவது கர்மாநுஷ்டான ம்-தானே பலன் கொடுப்பது, பலனைத் தர ஒரு ஈச்வரன் வேண்டியதில்லை'என்று மீமாம்ஸகர்கள் வாதம் செய்ததை ஆக்ஷேபித்துப் பேரறிவான ஈச்வரன்தான் இன்ன கார்யத்துக்கு இன்ன விளைவு என்று நிர்ணயம் பண்ணி, ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருப்பதான

கோடாநுகோடி கார்யங்களால் இப்படியொரு ப்ரபஞ்ச ஒழுங்கு ஏற்பட்டிருக்கும்படிப் பண்ணுகிறான் என்று ஆசார்யாள் எதிர்வாதம் செய்தார்.

இதற்கு அதிகமாக ஸ்வாமி ஸம்பந்தமாக ஆசார்யாள் வாதத்தில் போகாமல் பக்தி வளர என்னவெல்லாம் பண்ண வேண்டுமோ அதைக் கார்யத்தில் செய்து கொடுத்தே பௌத்த மதத்திற்கு ஜன ஸமூஹத்தில் following இல்லாமல் ஆக்கிவிட்டார். வழிபாட்டு முறைகளை க்ரூரமான அம்சங்களும், அறுவறுப்பான அம்சங்களும் இல்லாமல், ஜனங்களின் மனஸைக் கவரும்படியாக ப்ரேமை நிறைந்ததாகவும், வைதிக மந்திர பூர்வமானதாகவும் ஆக்கிக் கொடுத்தார். ஆலயங்களுக்கெல்லாம் போய் ஸாந்நித்யம் நன்றாக ப்ரகாசிக்கும்படியாகத் தூண்டிக்கொடுத்தார். பல ஆலயங்களில் யந்த்ரங்களை ஸ்தாபித்து நல்ல திவ்ய சக்திகள் பரவும்படிப் பண்ணினார். குழந்தையிலிருந்து ஆரம்பித்து மஹா பண்டிதர்வரை எல்லாரும் மனமுருகி ப்ரார்த்தித்துக் கொள்வதற்கான ஸ்தோத்ரங்களை ஏராளமாகச் செய்துகொடுத்தார்.

"தந்த்ரங்கள்"என்பதாக உருவாகிக் கொண்டுபோன வழிபாட்டு சாஸ்த்ரங்கள் பல இருக்கின்றன. அறுபத்து நாலு தந்த்ரம் என்று ஒரு கணக்கு. 'ஸௌந்தர்யலஹரி'யில் (இதை) 'சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை:'என்று சொல்லியிருக்கிறது. ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒரு தந்த்ரம் உண்டு. ஆகமம் என்றும் சொல்வதுண்டு. இவை வேத அடிப்படைக்கும் கொள்கைகளுக்கும் வித்யாஸமாகப் போய் தாங்களே மிஸீபீமீஜீமீஸீபீமீஸீமீ-ஆன ஆதார சாஸ்த்ரங்கள் மாதிரி ஆகுமானால் அப்போது இவற்றை ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று ஆசார்யாள் நிலைநாட்டினார். வேதத்தை அநுஸரித்துப் போகும் தந்த்ரங்களையே எடுத்துக்கொள்ளலாமென்று சொல்லி, ஜனங்கள் க்ரூரமான, பீபத்ஸமான வழிபாட்டு அம்சங்களை விடும்படிப் பண்ணினார், சமனம் பண்ணினார். தந்த்ரங்களில் கௌல மார்க்கம், மிச்ர மார்க்கம், ஸமய மார்க்கம் என்று உள்ள மூன்றில் கௌலம் (வேதத்தைச் சாராமல்) 'இன்டிபென்டென்டா'யிருப்பது. மிச்ரம் வேத வழிகளையும் அங்கங்கே கலந்து கொள்ளும். ஸமய மார்க்கம் தான் வேதத்தையே அநுஸரித்தது. ஆசார்யாள் அதைத் தான்

ஸ்தாபித்தார். அதனால்தான் மதம் என்பதற்கே ஸமயம் (சமயம்) என்று பேர் சொல்கிறோம்.

அப்புறம், அதாவது ஆசார்யாளுக்குப் பிற்காலத்தில் வந்த ந்யாய சாஸ்த்ரக்காரரான உதயனாசார்யார் என்பவர் புத்திவாதமாக, அதாவது தர்க்க ரீதியாகவே ஸ்வாமி உண்டு என்பதற்கு எவ்வளவு சொல்லமுடியுமோ அவ்வளவும் சொல்லி பௌத்த மதக் கருத்து இந்த அம்சத்தில் ஸரியேயில்லை என்று நிலைநாட்டினார். "ந்யாய குஸுமாஞ்ஜலி"என்ற அவருடைய புஸ்தகத்தின் மூலம் பௌத்தர்களின் நிரீச்வரவாதத்தை அவர் தர்க்கரீதியில் தகர்த்தார்.

உதயனாசார்யார் ஆசார்யாளின் அவதாரம் முடிந்து கொஞ்ச காலத்துக்குள் வந்து அவர் பாக்கிவைத்து விட்டுப் போயிருந்ததைப் பூர்த்தி பண்ணியவர்.

இது பக்தியுபாஸனையில்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

**ஆசார்யாளின் பாகுபாடு**

கர்மாநுஷ்டான விஷயமாகவோ ஆசார்யாள் செய்திருக்கவேண்டிய பௌத்த மத கண்டனத்தில் பெரிய பாகத்தைப் பூர்வ மீமாம்ஸகரான குமாரில பட்டர் பண்ணிவிட்டார்!ஆசார்யாளுக்குக் கர்மா என்பது முதல் படிதான். அது சித்தத்தைப் பரிசுத்தி செய்வதற்கு மாத்ரமே. அப்படி பரிசுத்தியான பிறகு ஞான விசாரம் பண்ணி, ஞானத்தினால்தான் மோக்ஷமடைய முடியும் என்பது ஆசார்யாள் கட்சி. அதனால் முதல் படியிலேயே அடியெடுத்து வைக்க வொட்டாமல் புத்தமதம் தடுக்கிறதே என்ற அளவுக்குத்தான் அவர் சண்டைபோடுவது. குமாரில பட்டருக்கோ கர்மாநுஷ்டானம் முதல்படி மட்டுமல்ல. அதுதான் முழு மார்க்கமுமே!ஞானம் என்பது வேண்டவே வேண்டாம், கர்மாவினாலேயே மோக்ஷம் என்பது அவர்

கட்சி. அதனால் அவருக்குத்தான் புத்தமதத்திடம் முழு அபிப்ராயபேதம் கர்மா விஷயமாக இருந்தது. பௌத்தம் வைதிக கர்மாவை ஆக்ஷேபிப்பதை அவர் தீவிரமாகவும் தீர்க்கமாகவும் அலசிக் கண்டனம் செய்தார். ஜைமினியின் மீமாம்ஸா ஸூத்ரங்களுக்கு சபர ஸ்வாமி என்பவர் செய்துள்ள பாஷ்யங்களுக்கு குமாரில பட்டர் எழுதியுள்ள வார்த்திகங்களில் இந்தக் கண்டனம் நிறைய வருகிறது.

ஸ்வாமி வேண்டியதில்லை என்ற பௌத்தக் கொள்கையை உதயனரும், கர்மா வேண்டியதில்லை என்ற அவர்களுடைய கொள்கையைக் குமாரிலரும் நன்றாகத் தாக்கித் தகர்த்தது போக பாக்கிதான் ஆசார்யாள் செய்ய வேண்டியிருந்தது.

உதயனர் ஆசார்யாளுக்குக் கொஞ்ச காலம் பிற்பட்டு வந்தவர். குமாரிலர் ஆசார்யாளுக்கு ஸுமார் ஐம்பது வருஷம் முந்திப் பிறந்திருக்கலாம். அவருடைய கடைசிக் காலத்தில் யுவாவாக இருந்த ஆசார்யாள் அவரை ஸந்தித்திருக்கிறார். அந்தக் கதையெல்லாம் பின்னால் சொல்கிறேன். அதாவது குமாரிலபட்டர் ஆசார்யாளின் senior contemporary.

ஈச்வரன் ஆசார்யாளாக அவதரிப்பதற்கு ஸுமார் ஐம்பது வருஷம் முந்தியே ஈச்வர குமாரனான குமாரஸ்வாமி குமாரில பட்டராக அவதரித்து அப்பாவின் கார்யத்தில் கணிசமான பங்கைத் தாமே செய்து முடித்து விட்டார்!

ஆனாலும், ரொம்ப விசித்ரமாகத் தோன்றும்-பௌத்த கண்டனத்தில் ஆசார்யாளின் கார்யத்தை வெகுவாகக் குறைத்து உபகாரம் பண்ணிய மீமாம்ஸகர்கள், நையாயிகர்கள் (ந்யாய மதஸ்தர்கள்) ஆகியவர்களைத்தான் ஆசார்யாள் நிரம்பக் கண்டித்தது!ந்யாய மதமும் பல ஆத்மாக்களைச் சொல்லுவதால் ஒரே ஆத்மாவாக நிறைந்துவிடும் அத்வைத மோக்ஷத்தைச் சொல்லவில்லை. அதனால் அதைக் கண்டிக்க வேண்டியிருந்தது. இருந்தாலும் இந்தக் கண்டனம் அவ்வளவு அதிகமில்லை. ஆசார்யாள் அதிகம் கண்டித்தது மீமாம்ஸையைத்தான். அதற்கடுத்தபடி அவர் நிறையக் கண்டித்தது ஸாங்க்ய மதத்தை. ப்ரம்மம்-மாயை என்று வேதாந்தம் சொல்கிற மாதிரியே அது புருஷன்-ப்ரக்ருதி என்று சொல்கிறமாதிரித் தோன்றும்.

ஆனாலும் அது வேதாந்த தாத்பர்யத்திற்கு விரோதமாகப் போவதே. அதே ஸமயத்தில் அதன் வேறு சில கொள்கைகள் வேதாந்தத்திற்கும் ஸம்மதமானவை. இப்படி இருப்பதாலேயே அது எபப்டி அத்வைதத்துக்கு வித்யாஸப்படுகிறதென்றும், அந்த வித்யாஸங்களிலுள்ள குறைபாடுகள் என்னவென்றும் நன்றாக இனம் பிரித்துக் காட்டி விளக்க வேண்டியிருந்தது. அதனால் ஸாங்க்யத்தையும் மீமாம்ஸைக்கு அடுத்தபடி ஆசார்யாள் நிறையக் கண்டனம் செய்தார். ஆனாலும் ஸாங்க்யம் அறிவாளிகளில் சில பேரோடு மட்டும் முடிந்துபோகும் ஒரு தத்வ சாஸ்த்ரம்தான். அது நமக்கு இங்கே விஷயமில்லை. ஜனங்களின் நித்யப்படி நடைமுறை வாழ்க்கையிலேயே கலந்து வருவதான கர்மாநுஷ்டானங்களைக் கொண்ட மீமாம்ஸைதான் ஸமூஹத்தை பாதிப்பது. அதனால் அவதாரத்தின் கார்யங்களில் அதுதான் முக்யமானது. ஒரு ஸ்டேஜ்வரை கர்மாநுஷ்டானம் இருந்தே ஆக வேண்டும்.

அது இல்லாவிட்டால் ஜீவனையும், ஸமூஹத்தையும் ஒழுங்குமுறையில் கொண்டுவரவே முடியாது. ஆனால் கடைசி ஸ்டேஜ் வரையிலும் அதுவேதான் என்றும் பண்ணி விடக் கூடாது. ஒரு ஸ்டேஜ் ஆன பின் அதுபோயே ஆக வேண்டும். அப்போதுதான் ஸத்ய ஸத்யமான ஆத்மாவில் சேரமுடியும். அதனால் ரொம்பவும் நுட்பமாக அலசி ஆராய்ந்து பார்த்து, எதுவரை எந்த அளவில் கர்மாநுஷ்டானங்களைக் கைக்கொள்ள வேண்டும் என்று நிர்ணயிக்கவும் வேண்டும்;அதையே லக்ஷ்யமாக்கிவிடுவதில் என்னென்ன தப்புக்கள் என்பதையும் ஸவிஸ்தாரமாக எடுத்துச் சொல்லித் தள்ளவும் வேண்டும். நன்றாக இப்படிப் பாகுபாடு பண்ண வேண்டும். மீமாம்ஸையில் கார்யமாக அநேகம் இருப்பதை எடுத்துக்கொள்ளும்போதே ஸித்தாந்தமாக அதில் இருப்பதில் உள்ள ஏராளமான குறைபாடுகளையும் புரிய வைத்துத் தள்ளும்படிச் செய்யவேண்டும். இப்படிச் செய்தவரே நம் ஆசார்யாள். கர்மாநுஷ்டானம்தான் ஸாதாரண ஜனங்களுக்கு முடிந்தது, ஸாதகர்களுக்கும் அதுதான் ஆரம்பப் படி என்பதால் ஆசார்யாள் ச்ரௌத-ஸ்மார்த்த கர்மாக்களை ஆதரித்து ஊக்கி வளர்த்தாலும், ஞானத்தை மீமாம்ஸை அடியோடு தள்ளிவிட்டுக் கர்மாவே எல்லாமும் என்று பிடித்துக் கொண்டிருந்ததால் ஞானத்தையே மோக்ஷமார்க்கமாகக்

கொண்ட ஆசார்யாள் அதையே அதிகம் கண்டனமும் செய்ய வேண்டியிருந்தது.

காலில் அடி, நடக்க முடியவில்லை என்றால் மருந்து போட்டுக் கட்டிக்கொண்டால்தான் விந்தி விந்தியாவது நடக்க முடியும். அப்படித்தான் ஜன்மாந்தர கர்மாவால் அடிபட்டு நாம் மோக்ஷமார்க்கத்தில் நடக்க முடியாதபோது கர்மாநுஷ்டானத்தால் மருந்துக் கட்டுப்போட்டுக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக அந்த வழியில் போக ஆரம்பிப்பது. அதற்காக, 'கால் நன்றாக ஸரியாகிக் கட்டைப் பிரித்துப் போட்டு வேகமாக நடப்பதென்பதே கூடாது;எப்பவும் கட்டுப்போட்டுக்கொண்டேதான் விந்தி விந்திப் போக வேண்டும்'என்றால்?கட்டிக் கட்டி வைப்பதிலேயே கட்டுப் புண் வந்து புரையோடி அடியோடு நடக்க முடியாமல்தான் போகும். 'கட்டுப் போனபின் ஞான மார்க்கத்தினால்தானே லக்ஷ்யமான மோக்ஷத்திற்கு ஸுகமாக, வேகமாகப் போய்ச் சேரமுடியும்?இவர்கள் (மீமாம்ஸகர்கள்) இப்படி இடைஞ்சலாகப் பண்ணுகிறார்களே!'என்பதால் ஆசார்யாள் அவர்களை நன்றாகக் கண்டனம் செய்ய வேண்டியிருந்தது.

பழம் தரவில்லையென்று குமாரஸ்வாமி அப்பாவைப்படுத்தி உருட்டி ஸந்நியாஸியாகப் போனாரல்லவா?அப்பாக்காரர் அவருக்குக் கீழ்ப்படிந்து போகும்படி ஆயிற்றல்லவா?பதிலுக்கு இப்போது அவர் ஸந்நியாஸமே கூடாது என்று வாதம் பண்ணும் மீமாம்ஸகரானபோது அப்பா அவரை நன்றாகக் கண்டனம் பண்ணி ஜயித்துக் காட்டிவிட்டார்!அவர் (குமாரஸ்வாமி) இன்னொரு ஸமயத்தில் ப்ரம்மாவை ஜெயிலில் போட்டு, அதன் தொடர்ச்சியாக அப்பாக்காரர் தன்னிடம் தலைவணங்கி உபதேசம் வாங்கிக்கொள்ளவும் பண்ணினார். இப்போது அப்பா அந்தப் ப்ரம்மாவையே அவருக்கு (குமாரிலபட்டருக்கு)ப் பக்க பலமாக மண்டனமிச்ரர் என்று அனுப்பினார். குமாரில பட்டருக்குக் கடைசிக் காலத்தில் தாமே ஞானோபதேசம் பண்ணினார்.

மண்டன மிச்ரர் எழுதியதாக மீமாம்ஸைப் புஸ்தகம் எதுவும் கிடைக்கவில்லை. ஆனாலும் கார்ய ரூபத்தில் அவர் நிறைய யஜ்ஞாதி அநுஷ்டானங்கள் செய்தும், மாற்று

ஸித்தாந்திகளுடன் வாதச் சண்டைகள் போட்டும் அந்த மார்க்கத்தை நன்றாக வ்ருத்தி செய்து கொடுத்திருக்கிறார். ஆசார்யாள் அவரையும் ஜயித்து, அதோடு நிற்காமல் அவருக்கு ஸந்நியாஸம் கொடுத்துத் தம்முடைய ப்ரதான சிஷ்யர்களில் ஒருவராகவே ஆக்கிக்கொண்டார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

**கர்ம மார்க்கக்காரர்களின்**

**அவதாரத்திற்குக் காரணம்**

தாம் அவதாரம் பண்ணுவதற்கு முந்தியே குமார ஸ்வாமியையும், ப்ரம்மாவையும் கர்ம மீமாம்ஸகர்களாக அவதரிக்கும்படிப் பரமேச்வரன் அனுப்பி வைத்ததற்கு ஒரு ந்யாயம் சொல்லலாம். இப்போது அவரிடம் வந்து முறையிடுவது தேவர்கள். அவர்களுக்கு ஜனங்களின் கர்மாநுஷ்டானத்தால்தான் லாபம்-தேவர்கள் ஆஹுதி பெறுவது வைதிக கர்மாவில்தான். ஞான மார்க்கத்தில் போகிறவனுக்கு தேவர்களால் ஆகவேண்டியது எதுவுமில்லை. அவன் அவர்களை உபாஸித்து ஆஹுதி கொடுப்பது கிடையாது. அதனால் தேவர்களுக்கு ஞானியைப் பிடிக்காது, கர்மாக்காரன்தான் அவர்களுக்கு ப்ரியமானவன் என்றுகூடச் சொல்வதுண்டு!'தேவானாம் ப்ரியன்'என்றாலே அஞ்ஞானி என்று அர்த்தம் ஏற்பட்டிருக்கிறதென்றால் பார்த்துக் கொள்ளலாம்!

இப்போது அவர்கள் வந்து முறையிடுகிறபோது, 'அவர்களுக்கு உபகாரம் செய்வதான கர்மாநுஷ்டானம் அடியோடு அடிபட்டுப் போன ஞானத்தையே சொல்வதற்குத் தாம் அவதாரம் பண்ணினால் அவர்களுக்கு எங்கேயாவது ஆறுதலாக இருக்குமா?யஜ்ஞபாகம் இல்லாமல் இவர்கள் வந்து தவித்துக்கொண்டு ப்ரார்த்திக்கும்போது, நாம் அத்வைத (ஞான)த்தைச் சொல்ல அவதரிக்கிறேனென்றால் அது கருணையாகுமா, (சிரித்து) manners ஆகுமா?'என்று

ஸ்வாமி நினைத்திருப்பார் போலிருக்கிறது! 'நடுவிலே ரொம்ப காலம் யஜ்ஞாதிகள் குறைந்துபோனதற்கு ஈடு செய்வதாக இப்போது ஒரு நாற்பது, ஐம்பது வருஷம் இவர்களுக்கு நிறைய யஜ்ஞபாகம் கிடைக்கட்டும். அதற்காக ப்ரம்மாவும், ஸுப்ரஹ்மண்யரும் போய்க் கர்ம மீமாம்ஸையை நன்றாக விருத்தி பண்ணட்டும். அதிலேயே நம் கார்யத்துக்கும் ஸாதகமாகக் கணிசமான அளவுக்கு பௌத்த நிராகரணமும் ஏற்படட்டும். அப்புறம் நாம் போகலாம்.

'பௌத்தர்களும் ஏதோ ஒரு வழியில் ஞானம் மாதிரியே சொல்கிறவர்களானதால் நாமும் ஞானம் என்றே ஆரம்பித்தால் எது வைதிகம், எது அவைதிகம் என்று வித்யாஸம் புரியாமல் ஜனங்கள் குழம்பிப் போவார்கள். அதனால் முதலில் இவர்கள் போய்க் கர்மாநுஷ்டானத்தால் பலமான வைதிக அஸ்திவாரம் போட்டுவிடட்டும். அப்புறம் நாம் போய், 'இந்த அநுஷ்டானங்களிலேயே ஆரம்பியுங்கள். அதனால் பக்வமான பின் ஞானத்தில் போங்கள்!'என்று வைதிகமான ஞான மார்க்கத்தை எடுத்துச் சொன்னால் லோகம் குழப்பமில்லாமல் புரிந்துகொண்டு முன்னேற முடியும்'என்று நினைத்தே ஸ்வாமி அந்த இரண்டு பேரை முதலில் அனுப்பினாரென்று வைத்துக்கொள்ளலாம்.

அதன்படி முதலில் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியும், ப்ரம்மாவும் தங்கள் அம்சங்களால் குமாரில பட்டராகவும், மண்டன மிச்ரராகவும் பிறந்து பௌத்தத்தை நன்றாகக் கண்டித்து, கர்ம மார்க்கத்தை வளர்த்தார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

**இந்திரன், ஸரஸ்வதி அவதாரங்கள் :**

**அரசு ஸஹாயமின்றியே ஆசார்யாள் பணி**

குமாரில பட்டருக்கு ஸஹாயம் செய்வதற்கே இந்த்ரன் ஸுதன்வா என்ற பெயரில் ஒரு ராஜாவாக பூலோகத்தில்

பிறந்தானென்று சில புஸ்தகங்களில் இருக்கிறது. யஜ்ஞ கர்மாநுஷ்டானம் தேவர்களின் ப்ரீதிக்கானது என்றால், தேவராஜனான இந்த்ரன் அதைப் புத்துயிரூட்டுபவருக்கு ஸஹாயம் செய்யப்போவது இயற்கைதானே?

இன்னொரு விஷயமும் சொல்லிவிட வேண்டும். குமாரில பட்டர் ஏதோ ஓரளவுக்கு ராஜ ஸஹாயத்தினால் பௌத்தர்களை ஜயித்திருப்பாராயிருந்தாலும், நம்முடைய ஆசார்யாள் அரச பலம் என்பதே கொஞ்சங்கூட இல்லாமல், தம்முடைய அறிவு பலத்தாலும், அநுபவ பலத்தாலும் மட்டுமேதான் வேதாந்தத்துக்கு ஜயம் பெற்றுக் கொடுத்தார். பௌத்த-ஜைன மதங்கள் பெரும்பாலும் ராஜபலத்தில் பரவினவை தான். அப்புறம் மறுபடி வைதிகத்துக்குத் திருப்பும்போதும் அப்பர், ஞான ஸம்பந்தர் ஆகியோர் அப்போதிருந்த பல்லவ, பாண்டிய ராஜாக்களை முதலில் மாற்றியதிலேயே ராஜ்யம் பூராவும் மாறிற்று என்று பார்க்கிறோம். ஆசார்யாள் சரித்ரத்தில் அப்படி எதுவுமில்லை. அவர் நாளில் பெரிய பெரிய ராஜாக்களே இல்லை. அக்காலத்தில் சக்ரவர்த்தியாக எவனும் இருந்து வர்ணாச்ரம தர்மங்களைப் பரிபாலனம் பண்ணாததாலேயே ஸமூஹ ஒழுங்கு முறைகள் கெட்டுப்போயிருந்ததற்கு ஸூத்ர பாஷ்யத்திலேயே 'ரெஃப்ரன்ஸ்'இருக்கிறது.

மற்ற தேவர்கள் ஈச்வராவதாரத்துக்கு ஸஹாயம் பண்ணவும் ஸேவை பண்ணவும் மநுஷ லோகத்துக்கு வரும் போது தேவராஜா வராமலிருக்கலாமா?அதற்காக அவனுக்கும் ஒரு சின்ன 'பார்ட்'கொடுத்தாற்போலிருக்கிறது!ஆசார்யாளுக்குப் பெரிய ஸஹாயம் பண்ணிய குமாரில பட்டருக்கு அவன் கொஞ்சம் ஸஹாயம் பண்ணினான்.

பிறருடைய பெரிய ஸஹாயம் கிடைத்தே கார்யம் முடிக்க முடிகிறது என்றால் அது அவதாரத்துக்குக் குறைவு தானே?அதனால்தான் போலிருக்கிறது, ஆசார்யாளுக்கு பௌத்த நிராகரணத்தில் ரொம்ப ஸஹாயம் செய்த குமாரில பட்டரும் மண்டனமிச்ரருமே வேதாந்தத்தையும் ஒரே கண்டனமாகப் பண்ணி, இதற்கு எதிர்க் கண்டனம் ஆசார்யாள் ஒருத்தரே எவர் ஸஹாயமுமில்லாமல் முழுக்கப் பண்ணி அவர்களை ஜயித்து அவதாரத்தின் பெரிய

சக்தியைக் காட்டும்படி ஏற்பட்டிருக்கிறது!

இந்த இரண்டு பேரிலுங்கூட ஆசார்யாள் குமாரில பட்டரிடம் அதிகம் வாதப்போர் செய்யவேண்டியிருக்கவில்லை. அவருடைய தேஹ வியோக ஸமயத்தில்தான் ஆசார்யாள் அவரை ஸந்தித்ததே. மண்டன மிச்ரருடன் தான் 21 நாள் விடாமல் வாதப் போர் நடத்தி ஜயித்தார்.

குமாரில பட்டர் பெரிய க்ரந்த கர்த்தாவாகவும், மண்டன மிச்ரர் பெரிய அநுஷ்டான கர்த்தாவாகவும் இருந்தார்கள். கர்மாநுஷ்டானம் நிறையப் பண்ணவேண்டுமென்றால் க்ருஹஸ்தராகத்தான் இருக்கவேண்டும். அப்போது பத்னி இருந்துதானே ஆகணும்?அதனால்தான் ப்ரம்மா மண்டன மிச்ரராக வந்தபோது ஸரஸ்வதியும் ஸரஸவாணி என்ற பெயரில் அவதரித்து அவருக்குப் பத்னியானாள்.

இன்னொரு காரணமும் உண்டு. அறிவுக் கடலாக, ஸர்வஜ்ஞராக ஆசார்யாள் இருந்து காட்டவேண்டியிருந்தது. அவரைப் பரீக்ஷித்துப் பார்த்து அவர் ஸர்வஜ்ஞர் என்று தீர்ப்புக் கொடுக்க ஒருத்தர் இருக்கவேண்டுமல்லவா?யார் அப்படி இருக்கமுடியும்?அறிவுத் தெய்வமான, வித்யாதி தேவதையான ஸரஸ்வதிதானே?அதனாலும் அவள் அவதரிக்க வேண்டியிருந்தது.

குமாரில-மண்டனர்கள் பிறந்து பெருமளவு பௌத்த நிராகரணம் செய்த பின்னரே ஆசார்யாள் அவதரித்தது.

அதாவது தேவர்கள் வந்து பரார்த்தித்துக்கொண்ட பிறகும் ஸுமார் ஐம்பது வருஷம் தள்ளியே ஸ்வாமி அவதரித்திருக்க வேண்டும். நன்றாகப் பசித்துச் சாதம் போட்டால்தான் முழு ஸத்தும் உடம்பில் ஒட்டும் என்கிற மாதிரி நன்றாகக் காக்க வைத்து அவதாரம் பண்ணினார் போலிருக்கிறது!

தேவர்கள் கொடுக்க வேண்டிய 'பெடிஷன்'வ ந்தாகிவிட்டது!யோக்யதாம்சமுள்ள ஒரு தம்பதி அவதார புத்ரனைப் பெறுவதற்குக் கொடுக்க வேண்டிய பெடிஷனும் அப்புறம் வந்தது.

'அவதார புத்ரனுக்கு அப்பா அம்மாவான அந்தப்

புண்யசாலிகள் யார்?பரம புண்யமான அவதாரம் எப்படி ஏற்பட்டது?எந்தப் புண்யகாலத்தில், எந்த தேசத்தில் எந்த ஊரில் நடந்தது?'-பார்ப்போம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## கேரள சரிதம்

பாரத தேசத்தில் அப்போது பரவியிருந்த அவைதிகச் சூழ்நிலையிலுங்கூட வைதிக அநுஷ்டானங்களைக் கூடிய மட்டும் விடாமலிருந்த பிரதேசத்திலேயே, ஸத்துக்களாகவுள்ள ஒரு ப்ராம்மண தம்பதிக்குத்தான் பிள்ளையாகப் பிறப்பதென்று ஸ்வாமி ஸங்கல்பித்திருந்தார். அது மலையாள தேசம் என்றும், அதில் காலடி என்பதே அவதார ஸ்தலம் என்றும் அநேகமாக எல்லோருக்கும் தெரிந்திருக்கும்.

அந்த உத்தம தம்பதியின் பேர் சிவகுரு, ஆர்யாம்பாள் என்பதும் சில பேருக்குத் தெரிந்திருக்கலாம்.

நீளமாக நீண்டுகொண்டு போகும் மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கு மறுபுறம், மேற்கு ஸமுத்ரத்துக்கும் மலைத் தொடர்களுக்கும் இடையில் இருப்பது மலையாள தேசம். கேரளம் என்பது அதன் ஸம்ஸ்க்ருதப் பெயர். ஒரு பக்கம் மலையும் மறுபக்கம் ஆழமும் (ஆழி என்றால் ஸமுத்ரம் தானே?) இருப்பதால் மலையாழ(ள)ம். கேரம் என்றால் தென்னை. ஒரே தென்னஞ்சோலை மயமாக அந்த ப்ரதேசம் இருப்பதால் கேரளம்.

மலைத்தொடருக்கும் ஸமுத்ரத்துக்கும் இடையில் குறுகலாக இப்படி அது உண்டானதற்கு ஒரு கதை உண்டு.

பரசுராமர் 21 தலைமுறை க்ஷத்ரிய ராஜாக்களை ஸம்ஹாரம் செய்து அவர்களுடைய ராஜ்யங்களை எடுத்துக் கொண்டாரென்று தெரிந்திருக்கலாம். லோகம் முழுக்க அவர் கைக்கு வந்துவிட்டது. அதே ஸமயம் அருக்கு விரக்தியும்

பச்சாதாபமும் ஏற்பட்டது. 'ப்ராம்மண ஜன்மா எடுத்தும் ஸாத்விகமாக ஊருக்கு நல்லது பண்ணாமல் பழி, கொலை என்று நிரம்பப் பண்ணிவிட்டோமே!நடந்தது நடந்துவிட்டது என்றிருக்கலாமானாலும் இப்போது இந்தப் பெரிய ராஜ்யத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வது?ஏற்கெனவே செய்ததற்காக ப்ராயச்சித்தம், தபஸ் பண்ணுவதைவிட்டு ராஜாவாகி ராஜ்யபாரம் வேறு வஹிப்பதா?அது கொஞ்சங்கூட ஸரியில்லை'என்று நினைத்தார். அதனால் தம் கைக்கு வந்துவிட்ட லோகம் முழுவதையும் கச்யப மஹரிஷிக்கு தானம் செய்துவிட்டார். அவருக்கு ஏன் தானம் செய்யணுமென்றால் அவரிடமிருந்துதான் எல்லா உயிரினங்களும் பிறந்தன. மநுவின் வம்சமாக வந்த நாம் மநுஷ்யர். அந்த மனுவின் பிதா விவஸ்வான். விவஸ்வானுக்குப் பிதா கச்யபர்தான். அதனால் அவரே மனிதகுலத்தைத் தோற்றுவித்தவர். அது மட்டுமில்லை. தேவர், தைத்யர், தானவர், ராக்ஷஸர், நாகர் ஆகிய எல்லோருக்குமே அவர்தான் பிதா. ப்ரஜாபதிகள் என்று பல பேர் இருந்தாலும் ஜீவ ஸ்ருஷ்டி பெருகுவதற்கு விசேஷ உபகாரம் செய்த அவரைத்தான் கச்யப ப்ரஜாபதி என்று குறிப்பிட்டுச் சொல்வது. அதனால், 'இந்த ஜீவ குலத்தையெல்லாம் அவரே கட்டி மேய்க்கட்டும்;அல்லது என்ன பண்ணுவாரோ பண்ணிக்கொள்ளட்டும்'என்று அவருக்குப் பரசுராமர் பூமியை தத்தம் செய்துவிட்டார்.

உங்களுக்கு ஒரு வீடு இருக்கிறது, அதை நீங்கள் ஒருவருக்கு தானம் செய்து விடுகிறீர்கள்-என்றால், அப்புறமும் அந்த வீட்டில் நீங்கள் இருந்துகொண்டிருக்கமுடியுமா?அந்த மாதிரிதான் இப்போது பரசுராமர் நினைத்தார். 'தானம் என்று இவருக்கு பூமியைக் கொடுத்த பிறகும் நாம் இங்கே வாஸம் செய்வது ஸரியில்லை. தேசத்தை விட்டு வெளியேறிப்போய், புதுசாக வாஸ யோக்யமாக ஒரு இடம் உண்டாக்கிக்கொண்டு அங்கே தபஸ் இருப்போம்'என்று நினைத்தார். அவரால் நடக்கவேண்டியிருந்த கார்யத்தை ஞான த்ருஷ்டியில் அறிந்த கச்யபரும் அந்த ரோஷக்காரருக்கு ரோஷமூட்டி அவர் நினைத்தபடியே செய்ய வைப்போமென்று நினைத்து, "தத்தம் பண்ணிவிட்ட ஸொத்தில் பாத்தியதை கொண்டாடாதே. இந்த

நிலப்பரப்பின் எல்லையைத் தாண்டிப் போய்ச் சேரு"என்று விரட்டினார்.

பரசுராமர் புறப்பட்டார். நிலப்பரப்புக்கு எல்லையாயிருந்த மேற்குத் தொடர்ச்சி மலையில் ஏறி ஸஹ்யம் என்ற பர்வத உச்சிக்குப் போனார். அக்காலத்தில் அந்த மலையை ஒட்டினாற்போலவே மறுபக்கம் மேற்கு ஸமுத்ரம் இருந்தது. அதாவது, மலைக்கு அந்தண்டை மலையாளதேசம் இல்லை. ஜலம் தான் இருந்தது. ஸமுத்ரராஜாவிடம் அவர், "இதுவரை பூலோகத்திலுள்ள நிலப் பரப்பில் இனிமேல் நான் வஸிப்பதற்கில்லாமலாகிவிட்டது. தேவலோகத்துக்குப் போகவும் முடியாமல் ஸப்த சிரஞ்ஜீவிகளில் ஒருவனான நான் இந்த பூலோகத்திலேயே இருந்துகொண்டு லோக க்ஷேமத்திற்காகத் தபஸ் செய்துகொண்டிருக்கும்படி ஈச்வராக்ஞை இருக்கிறது. அதனால் இப்போது நீதான் ஒரு உபகாரம் செய்யணும். என்னவென்றால் இந்த மலைக்கு அந்தப் பக்கம் நீ கொஞ்சம் விலகிப்போய், நான் வஸிப்பதற்குக் கொஞ்சம் நிலப் பரப்பு ஏற்படுத்தித் தர வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

ராமர் அணை கட்டுவதற்காக அலையை அடக்கிக் கொண்டவர் ஸமுத்ர ராஜா. பரசுராமருக்கும் உபகாரம் செய்ய நினைத்தார். 'இவரோ மஹா கோபக்கார ப்ராம்மணர். அதனால் நாம் எவ்வளவு தூரம் விலகிப் போனாலே இவருக்கு த்ருப்தி உண்டாகுமோ அதற்குக் குறைவாகச் செய்தோமானால் சண்டைக்கு வருவார்'என்றும் நினைத்தார். பரசுராமரிடம், "தங்கள் கையில் தாங்கள் தபஸிருந்து பரமேச்வரனிடமிருந்து பெற்ற பரசு (கோடரி) இருக்கிறதல்லவா?அதை ஸமுத்ரத்தில் வீசி எறியுங்கள். எவ்வளவு தூரத்துக்கு ஜலம் எழுப்பித் தெறிக்கிறதோ அவ்வளவு தூரமும் நான் பின்வாங்கிக்கொண்டு தங்களுக்கான பூமி வெளிப்படும்படி செய்கிறேன்"என்று சொன்னார்.

அப்படியே மஹாசக்தரான பரசுராமர் மலையுச்சியிலிருந்து ஸமுத்ரத்தின்மேல் பரசுவை வீச அது ஸமுத்ரத்தில் விழுந்து பல மைல் தூரத்துக்கு வடக்குத் தெற்காகவும், அதைவிடக் குறைவாகக் கிழக்கு மேற்காகவும் ஜலம் எழும்பித் தெறித்தது.

அந்தப் பரப்பளவு முழுவதிலுமிருந்து ஸமுத்ரம் பின்னுக்குப் போய்விட்டது. பூமி வெளி வந்தது.

அதுதான் மலையாள தேசம்.

பரசுராம க்ஷேத்ரம் என்றே அதற்குப் பெயர் இருக்கிறது. இன்றைக்கும் அங்கேதான் பரசுராமன் என்று பெயர் வைத்துக்கொள்பவர்கள் இருக்கிறார்கள்.

முதலில் அங்கே செம்படவர்கள்தான் வந்து குடியேறினார்கள். அங்கங்கே தீவுகளில் அவ்யவஸ்திதமான (ஒழுங்கு முறை செய்யப்படாத) பாஷைகளைப் பேசிக்கொண்டு வாழ்ந்துவந்த செம்படவர்கள் இங்கே வந்து சேர்ந்தார்கள்.

பரசுராமர் அதை நல்ல வைதிகமான புண்யபூமியாக்க வேண்டுமென்று நினைத்தார். இத்தனாம் பெரிய நிலப்பரப்பு ஏற்பட்டுள்ளபோது தாம் ஒருத்தர் தபஸ் பண்ணிக் கொண்டிருந்தால் மாத்ரம் போதாது, ஏராளமாக ஸத்பிராமணர்களைக் குடியேற்றி வைதிகாநுஷ்டானங்கள் வளரும்படிச் செய்யணும் என்று நினைத்தார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## ஆதித் தமிழகத்தின் அந்தணர்கள் ;

## கேரளத்தில் தமிழ்

சோழ தேசத்திலிருந்து சோழியர்கள் எனப்படும் ப்ராம்மணர்களை அழைத்துவந்து அங்கே அமர்த்தினார். இந்தச் சோழியர்கள் ஆதிகாலத்திலிருந்தே தமிழ் நாட்டைச் சேர்ந்த, தமிழ் மக்களாகவே இருந்த, ப்ராம்மணர்கள். த்ராவிட ப்ராம்மணர்கள். த்ராவிடரும் ப்ராம்மணரும் சத்ரு ஜாதிகள் இல்லை!த்ராவிட ஜாதி என்றும் ஒன்று இல்லை. த்ராவிட தேசம்தான் உண்டு. அதில் வஸித்துவரும் ப்ராம்மணர் உள்பட எல்லாரும் த்ராவிடர்கள்தான். த்ராவிட தேசத்திலிருந்து வடதேசத்துக்குப் போய் ஸெட்டில் ஆன

ப்ராம்மணர்களுக்கே இன்றைக்கும் வடக்கே 'த்ராவிட்'என்ற பெயர் இருக்கிறது! இப்படி ஆதியிலிருந்தே தமிழ் ஜனங்களாக இருந்தவர்கள் தான் சோழிய ப்ராம்மணர்கள். அப்புறம் வடக்கிலிருந்தும் பல ப்ராம்மணர்கள் இங்கு வந்தார்கள். 'வடமர்'என்று அவர்களுக்கே பேர். (கைபர் கணவாய் வழியாக என்றைக்குமே எவருமே வரவில்லை!பாரத தேசத்துக்குள்ளேயேதான் ராஜ்யத்துக்கு ராஜ்யம் இடம் மாறுவது.) 'வடமர்'என்று ப்ராம்மணரில் ஒரு பிரிவை மட்டும் சொல்வதாலேயே மற்றவர்கள் என்றைக்குமே 'தென்னவர்'களாக இருந்தவர்கள்தான் என்று ஆகிறதல்லவா?

பாரத தேசம் முழுதும் ஆதியிலிருந்து ஒரே இனம்தான். ஆர்ய த்ராவிட இன பேதம் வெள்ளைக்காரன் divide and rule-ல் (பிரித்து ஆள்வதில்) கதை கட்டிவிட்டது. அந்தக் கதையை நிஜம் என்றும், நிஜமான நம்முடைய சாஸ்த்ர, புராணங்களில் இருப்பதைக் கட்டுக் கதை என்றும் எண்ணி வருகிறோம்!இது இருக்கட்டும்.

தமிழ்நாட்டு ப்ராம்மணர்கள் ஸுகஜீவிகள். வடக்கே போகப் போகக் குளிர், வெய்யில் இரண்டும் ஜாஸ்தி. மேற்கே கர்நாடகத்துக்குப் போனால்கூட ஒரே மலைத் தொடராயிருப்பதால் சீதோஷ்ணம் கடுமைதான். தமிழ் நாடு மாதிரி மித சீதோஷ்ணம் அங்கேயெல்லாம் இல்லை. அதனால் மற்ற சீமை ஜனங்கள் கஷ்டங்களுக்கு அதிகம் பயப்பட மாட்டார்கள், 'அட்ஜஸ்ட்'பண்ணிக்கொள்வார்கள். தமிழ்நாட்டு ப்ராம்மணர்கள் அப்படியில்லை.

நான் சொல்வது பழங்கால ஸமாசாரம். தற்போது தமிழ்நாட்டில் ப்ராம்மணனைத் தீண்டாதானாகப் பண்ணி ஒதுக்கியிருப்பதிலும், இவனுக்கும் ப்ராம்மண தர்மத்திற்கு அடியோடு வித்யாஸமாக ஒரே பேராசை பிடித்துப் போயிருப்பதிலும் எந்த ஸஹாராவானாலும், ஐஸ்லாண்டானாலும் போய் 'அட்ஜஸ்ட்'பண்ணிக்கொண்டுவிடுகிறான்!

அந்தப் பூர்வ காலத்தில் ஸுகஜீவிகளாகக் காவேரி தீரத்திலிருந்த சோழியர்கள் மலையாளத்துக்குப் போனார்கள

ா?அங்கே ஓயா மழையும், சக்தியும், குறுக்கே குறுக்கே கழியுமாக (ஓடையுமாக) இருந்தது அவர்களுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. கோபக்காரர் என்று பேர் வாங்கின பரசுராமரிடம் சொல்லவும் பயம். அதனால் ரஹஸ்யமாகத் திரும்பி ஓடிவந்துவிடலாமென்று நினைத்தார்கள்.

இவர்கள் இப்படி நினைப்பார்களென்று அவருக்கும் தெரியும். அதனால் என்ன நினைத்தாரென்றால், 'இவர்களுடைய ஆசாரங்களில் எதையாவது ஒன்றை மாற்றி விடுவோம். அப்படிச் செய்துவிட்டால் இவர்கள் தாய்ச் சீமைக்குத் திரும்பிபோனால் அங்கே இருப்பவர்களுடன் கலந்து வாழமுடியாமல் போய்விடும். வேறு வழியில்லாமல் இங்கேயே இருந்துவிடுவார்கள்'என்று நினைத்தார். ஆகையால் அவர்கள் குடுமியைப் பின்பக்கம் முடிந்து கொள்ளாமல் தலை உச்சியில் சேர்த்து 'ஊர்த்வசிகா'என்பதாக என்பதாக முடிந்துகொள்ளும்படிப் பண்ணினார். இன்றைக்கும் நம்பூதிரிகள் அந்த வழக்கத்தைத்தான் பின்பற்றுகிறார்கள்.

ஆனால், 'இந்த ஒரு வித்யாஸம் மட்டும் சோழ தேச ஜனஸமூஹம் தங்களை ஒதுக்கிவிடும்படிப் பண்ணிவிடாது. முக்யமான அநுஷ்டானங்களில் வித்யாஸமில்லாதபோது சிகை எப்படியிருக்கிறதென்பதைக் கொண்டு மாத்ரம் யாரும் நம்மைத் தள்ளிவிடமாட்டார்கள்'என்று அந்த ப்ராம்மணர்கள் நினைத்தார்கள். அதனால் அவர்களில் ரொம்பப் பேர் ஊர்த்வ சிகையுடனேயே சோழ தேசத்துக்குத் திரும்பிவிட்டார்கள். அவர்கள் நினைத்ததுபோலவே ஜனஸமூஹமும் அவர்களை ப்ரியமாக வரவேற்று வைத்துக் கொண்டது. அந்த ப்ராம்மணர்களின் பரம்பரைக்கு உச்சிக்குடுமியே தங்கிவிட்டது. 'சோழியன் சிண்டு சும்மா ஆடாது'என்று அப்புறம் அதை வைத்துப் பழமொழிகூட வந்துவிட்டது!

'இதென்னடா, இப்படியாகிவிட்டதே!'என்று பரசுராமர் பார்த்தார். இனிமேல் தமிழ்நாட்டு ப்ராம்மணர்களிடம் போகவேண்டாமென்று, தெலுங்கு நாட்டிலும் கன்னட நாட்டிலும் உள்ள கல்வி - கேள்விகளில் வல்லவர்களான ப்ராம்மணர்களை அழைத்துக்கொண்டுபோய் மலையாளத்தில்

அமர்த்தினார். தமிழ்நாட்டு ஸுகஜீவிகளைப் போல அவர்கள் அட்ஜஸ்ட் செய்துகொள்ள முடியாமல் திரும்ப ஓடிவிடமாட்டார்களென்று அவருக்கு நம்பிக்கை இருந்தாலும் முன்ஜாக்ரதையாக இன்னொன்றும் செய்தார்-'ப்ராம்மணனுக்கு 108 ஆசாரங்கள் இருக்கின்றன. முன்பு அதில் ஒன்றை மட்டும் மாற்றியதால்தான் நம்முடைய திட்டம் தோற்றுப் போயிற்று. இப்போது 108-ல் பேர் பாதிக்கும் மேலே, 64 ஆசாரங்களை இந்த ஆந்திர-கர்நாடக ப்ராம்மணர்கள் விஷயத்தில் மாற்றிவிடுவோம். அப்போது இவர்கள் நிச்சயமாக ஊருக்குத் திரும்பிப்போய்க் கலந்து வாழமுடியாது'என்று தீர்மானம் செய்து அப்படியே மாற்றிக்கொடுத்துவிட்டார்.

அவர் ஆசைப்பட்டபடியே அந்த ப்ராம்மணர்கள் அங்கேயே வம்சாவளியாகத் தங்கி அத்யயனம், கர்மாநுஷ்டானம் எல்லாம் சிறப்பாகச் செய்யலானார்கள்.

அவர்களைத்தான் நம்பூதிரிகள் என்று சொல்வது.

மலையாள தேசத்தின் தோற்றுவாயைப் பற்றிக் கூறுவதாகக் 'கேரளோத்பத்தி'என்று புஸ்தகம் இருக்கிறது. சில புராணங்களிலும் இந்த ஸமாசாரம் வருகிறது. அவற்றிலிருந்துதான் கதை சொன்னேன்.

நம்பூதிரிகளில் சோழியர்கள் கொஞ்சம் பேரே மிச்சமிருந் தார்கள். பாக்கியெல்லாம் தெலுங்கு ப்ராம்மணர்களும், கன்னட ப்ராம்மணர்களுந்தான். தெலுங்கில் 'இல்லு'என்றால் வீடு. கன்னடத்தில் 'மன'â¡ø£™ i´. îIN™ Þ™ô‹, ñ¬ù â¡Á Þó‡´ õ£˜ˆ¬îèÀ‹ Þ¼‚A¡øù. ï‹ÌFKñ£˜èO™ Cô˜ îƒè¬÷, °PŠH†ì å¼ 'ñù£'¬õ„ «ê˜‰îõ˜è÷£è¾‹, Cô˜ î£ƒèœ °PŠH†ìªî£¼ 'Þ™ô'ˆ¬î„ «ê˜‰îõ˜èª÷¡Á‹ ªê£™L‚ªè£œAø£˜èœ. Ýê£˜ò£O¡ °´‹ðˆFŸ° '¬èŠðœO ñù£'â¡Á «ð˜ â¡Aø£˜èœ.

'இல்லம்'சொல்லிக்கொள்ளும் நம்பூதிரிகள் ஆந்திர தேசத்திலிருந்து வந்தவர்களென்றும், 'மனா'சொல்லிக் கொள்பவர்கள் கர்நாடகத்திலிருந்து வந்தவர்களென்றும் பொதுவாகக் கொள்ளலாமென்றாம், ஆதித் தமிழ்ச்

சோழியர்களின் வந்தவர்களிலும் கொஞ்சம் பேராவது நம்பூதிரிமார்களில் இருந்து, இந்த இரண்டில் ஏதோ ஒரு பிரிவில் வந்திருப்பார்களென்று நினைக்க இடமிருக்கிறது. ஆசார்யாளின் 'மனா'வும் அப்படித் தமிழ் தேசத்திலிருந்து போனதாகவே இருக்கக்கூடும் என்று நான் பண்ணியுள்ள 'ரிஸர்ச்'அப்புறம் சொல்கிறேன்.

ஒரு கேள்வி வரலாம்: 'கன்னட-தெலுங்கு ப்ராம்மணர்களே நம்பூதிரிகளில் பெரும்பாலோர்;அது தவிர ஏதோ அரபிக்கடல் தீவுகளில் ஆதிவாஸிகளின் பாஷைகளைப் பேசி வந்த செம்படவர்கள்தான் மலையாளத்தில் குடியேறியவர்கள் என்றால் அங்கே உள்ள மலையாள பாஷை எப்படிப் பாதித் தமிழ், பாதி ஸம்ஸ்க்ருதம் கலந்ததாக இருக்கிறது?'என்று கேட்கலாம்.

மலையாள பாஷை ஆயிரம், ஆயிரத்திருநூறு வருஷம் முந்தித் தோன்றியதுதான்;அதற்கு முன்னால் அங்கே தமிழேதான் இருந்தது என்று தெரிந்தவர்களும் 'அதெப்படி தமிழே அங்கேயிருந்திருக்க முடியும்?'என்று கேட்கலாம்.

சொல்கிறேன்:ப்ராம்மணர்களையும் செம்படவர்களையும் மட்டும் கொண்டதாக எங்கேயாவது ஒரு ஜன ஸமூஹம் ஜீவிக்கமுடியுமா?தேசத்தைக் கட்டி ஆண்டு பாதுகாக்க ராஜா-ஸைன்யம்;வியவஸாயம், மற்றும் பலவிதமான உடலுழைப்புச் செய்பவர்கள்;வியாபாரம் நடத்துபவர்கள்-ஆகியவர்களில்லாமல் எப்படி ஸமுதாய வாழ்வு ஏற்பட முடியும்? இந்தக் கார்யங்களைச் செய்ய மலையாளத்துக்குப் போய்ச் சேர்ந்தவர்கள் யாரென்றால் தமிழ் ஜனங்கள்தான்.

மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கு அந்தப் பக்கம் மலையாள தேசமென்றால் இந்தப் பக்கம் பெரும்பாலும் தமிழ்நாடுதானே?அதோடு அந்தக் காலத்திலேயே தமிழர்கள் உன்னதமான நாகரிகம் பெற்றவர்களாகவும், வீர ஸாஹஸமுள்ளவர்களாகவும், வாணிபம் முதலியவற்றில் திறமை மிக்கவர்களாகவும் இருந்தார்கள். நான் தமிழ்நாட்டு ஸுகஜீவிகள் என்று சொன்னது (சிரித்து) 'பருப்புத் தின்னிப் பார்ப்பானை'த்தான்!மற்றவர்கள் கஷ்டங்களைத் தாங்கிக்கொள்ளக்கூடிய நல்ல உழைப்பாளிகளாகவும், த்ருடசாலிகளாகவும் இருந்தவர்களே!அதனால் பிராமணரல்லாதாரில் தமிழர்கள் தான் மலையாள நாட்டில்

குடியேறியவர்கள். பொருளாதார ரீதியில் நல்ல விலை போவதாகவும், ஏற்றுமதிகள் செய்து நன்றாகக் கொழிக்க வைப்பதாகவும் உள்ள மிளகு, ஏலக்காய், தேக்கு, கொப்பரை முதலியவை யதேஷ்டமாகக் கிடைக்கும் தேசம் மலையாளம் 'அந்நிய பதார்த்தம்'சாப்பிடக்கூடியவர்களுக்கு நீண்ட ஸமுத்ரக் கரையிலும், தடுக்கிவிழுந்தால் வரும் கழிகளிலும் ஸம்ருத்தியாக 'ஜல புஷ்பம்'(மத்ஸ்யம்) கிடைக்கும். இப்படியிருந்தால் உழைப்பாளிகளாகவும், ஸாஹஸ குணமுள்ளவர்களாகவும் உள்ள ஜனங்கள் வந்து குடியேறுவார்கள்தானே?அப்படித்தான் ஏற்பட்டது. நிறையத் தமிழ் மக்கள் கேரளத்தில் குடியேறினார்கள்.

இப்படி எல்லா ஜாதியாரும் குடியேறியபின், மலையாளத்தின் இயற்கை வளத்தினால் ஸுபிக்ஷமான வாழ்க்கை ஏற்பட்டு, அது நாகரிக ஸமுதாயமாக உருவாக ஆரம்பித்தது. வைதிக வழிகளைப் பின்பற்றிய தமிழ் மன்னர்களான சேரர்கள் அந்த ப்ரதேசத்தில் ஆட்சி நடத்தி நன்றாக நாகரிக அபிவ்ருத்தி ஏற்படுத்திக் கொடுத்தார்கள்.

பெரும்பாலான மக்கள் தமிழர்களாயிருந்தால் தமிழே அங்கேயும் பாஷையாயிற்று. ஆந்த்ர-கர்நாடக நம்பூதிரிகளும் பொதுஜனத் தொடர்பினால் தமிழே கற்றுக்கொண்டு பேச ஆரம்பித்துவிட்டார்கள்.

சரித்ரகாலம் என்று சொல்லப்படுவதற்கு முற்பட்டே இதெல்லாம் நடந்திருக்கவேண்டும். அப்போதே பொருளாதார காரணத்திற்காக மற்ற ஜாதியினர் அங்கே போனார்களென்றால் ப்ராம்மணர்களும் தெய்வ ஸம்பந்தமான காரணங்களுக்காகக் கொஞ்சம் கொஞ்சம் போயிருக்கலாம். அதென்ன தெய்வ ஸம்பந்தம் என்றால், அந்த தேசத்திலும் அநேக திவ்ய லீலைகள் நடந்து, அப்படி நடந்த இடங்கள் பெரிய க்ஷேத்ரங்களாக ஆயின. பரசுராமரே இப்படிப் பல க்ஷேத்ரங்களைத் தோற்றுவித்தார். பழைய பூப்பிரதேசம் வேண்டாமென்று தமக்காகப் பரசுராமர் ஸ்ருஷ்டித்துக் கொண்ட இந்தப் புதிய பூப்பிரதேசத்தில் தாமே குடியேற்றியவர்களைத் தவிர வேறு யாரும் பழைய தேசத்திலிருந்து வரவேண்டாமென்று அவர் தடை செய்திருந்தார். ஆனாலும் கால க்ரமத்தில் அந்தத் தடை எடுபட்டுப்போய், அதாவது, பிற்பாடு பரசுராமர் எல்லோர்

கண்ணுக்கும் தென்படாமல் ஏகாந்தமாகப் போய்விட்ட பின், க்ஷேத்ராடனத்துக்காகவும் விஙீவீஸீஸீணீஸீஸீ-லிருந்து சில ப்ராம்மணர்கள் அங்கே போய் அப்படியே 'ஸெட்டில்'ஆகவும் செய்திருக்கலாம்.

சரித்ர காலத்தின் ஆரம்ப கட்டமாக வெள்ளைக்காரர்கள் சொல்வது அசோகருடைய காலத்தை. அந்த அசோகரின் சாஸனங்களிலேயே அவர் யுத்த திக்விஜயமாக இல்லாமல் தர்ம திக்விஜயமாகத் தம்முடைய கொள்கைகளைப் பரப்பிய ப்ரதேசங்களில் கேரளமும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நாகரிக ஸமுதாய வாழ்க்கை அப்போதே அங்கே நிச்சயமாக இருந்ததற்கு இது அத்தாட்சி.

அது தமிழ்ச் சேர ராஜ்யமாகவும், அதன் பாஷை தமிழாகவுமே இருந்தது. சிலப்பதிகாரம் பாடினவரே அந்த தேசத்தவர்தான்!தெய்வத் தமிழ் என்றே சொல்லும்படியான நல்ல தமிழில் திருமுறையும், ப்ரபந்தமும் பாடிய சேரமான் பெருமாள் நாயனாரும், குலசேகரப் பெருமாளும் மலையாள ராஜாக்கள்தான்.

ஆகவே நம்முடைய ஆசார்யாளும் தமிழ்தான் பேசியிருப்பார். அப்போது ப்ராம்மணர்களில் படிப்பாளிகள் (எல்லா ப்ராம்மண புருஷர்களுமே அப்படித்தானிரு ந்திருப்பார்கள். படிக்காத, அத்யயனம் செய்யாத ப்ராம்மணன் இருந்திருக்கவே மாட்டான். அவர்கள்) தங்களுக்குள் ஸம்ஸ்க்ருதத்தில் பேசிக்கொள்வதாகவும் மற்றவர்களிடம் தமிழில் பேசுவதாகவும் இருந்திருக்கும்.

ஆசார்யாள் அவதாரம் செய்து ஸநாதன தர்மப் புனருத்தாரணம் பண்ணினாலும், அப்புறம் போகப் போக மறுபடி சீரழிவு ஏற்படத்தான் செய்தது. அந்தப் போக்கில் பரசுராமர் மாற்றிக் கொடுத்த ஆசாரங்களில் சிலதை ஸாதகமாக்கிக்கொண்டு நம்பூதிரிகளில் தலைப் பிள்ளைகளாக இருப்பவர்களைத் தவிர மற்றவர்கள் இதர ஜாதியினரோடு கலந்து வாழுவதற்கு வழி உண்டாக்கிக் கொண்டார்கள். அப்படி உறவு ஏற்பட்டபோது நம்பூதிரிகளில் ஸ்பெஷலைஸ் செய்திருந்த ஸம்ஸ்க்ருதத்துக்கும் மற்றவர்களின் தமிழுக்கும் உறவு கெட்டிப்பட்டது. அந்த உறவிலேயே மலையாளம் என்பது தனி பாஷையாகப் பிறந்திருக்கலாம்.

ப்ராம்மணர் இதரரோடு உறவு ஏற்படுத்திக்கொண்டதில் அசாஸ்த்ரீயமாகப் பல நேர்ந்தாலும், எப்போதும் நல்லதும் கெட்டதும் கலந்தே வருவதில் இதிலும் சில நல்லது ஏற்பட்டது. ப்ராம்மண ஸம்பந்தத்தால் அங்கே ஸகல ஜாதி யாருமே நல்ல படிப்பறிவும், குறிப்பாக ஸம்ஸ்க்ருத அபிமானமும் பெற்றவர்களானார்கள். எல்லாருமே சுசி ருசியாக ஸ்நானம் செய்து சுத்த வஸ்திரம் உடுத்திக்கொள்வது, ஆசாரத்தோடு ஆலய தர்சனம் செய்வது ஆகிய நல்ல வழக்கங்களும் ஏற்பட்டன.

(ப்ராம்மணரல்லாதார் படிப்பறிவில்லாதவர், சுத்தமில்லாதவர் என்று மட்டம் தட்டுவதாக அர்த்தமில்லை. அவர்களுக்கு ஏற்பட்டுள்ள தொழில்களை முன்னிட்டு-குறிப்பாக, பாட்டாளி மக்களாக இருப்பவர்கள்-ரொம்பவும் சுத்தம் பார்க்கமுடியாமலாகி, அதுவே பழகிப் போய் விடுகிறது. அவர்கள் பல வருஷங்கள் படிக்கவும் முடிவதில்லை. ஸமூஹ வாழ்க்கைக்கு அவர்கள் தங்கள் பணிகளால் நிரம்ப உபகாரம் பண்ணுவதால் அவர்களுக்கு சாஸ்திரங்களிலும் சௌச விதிகளை (சுத்த ஆசார விதிகளை) இளக்கியே கொடுத்திருக்கிறது. கட்டாய வித்யாப்யாஸமும் விதிக்கவில்லை. இப்படியிருந்தும் மலையாளத்தில் இந்த அம்சங்களில் அவர்கள் நன்றாக முன்னேறியிருக்கிறார்களென்றால் அதற்கு ப்ராம்மண இன்ஃப்ளுயென்ஸ் காரணமாயிருந்திருக்கலாம் என்றுதான் சொன்னது)

என்னதான் விணீவீஸீரீணீஸீபீ-ஓடு தொடர்பு கொண்டிருந்தாலும் இன்றுபோல் போக்குவரவு ஸாதனங்களில்லாத அந்தக் காலத்தில் பெரிய மலைத் தொடருக்கு மறுபக்கம் இருந்த மலையாள தேசம் ஓரளவு தனித்தேதான் இருந்தது. ஆசார்யாள் காலத்தில் இப்படித் தனித்திருந்ததால்தான் அங்கே விணீவீஸீரீணீஸீபீ-ல் ஏற்பட்டிருந்த குழறுபடிகளின் பாதிப்பு அதிகமில்லாமல் அது கூடியவரை வைதிகமாக இருந்து, அவதாரமும் அந்த இடத்தைத் தேர்தெடுத்தது. பிறகு மலையாள பாஷை ஏற்பட்ட அப்புறமும்-ஸமீப நூற்றாண்டுகள் வரைகூட-அப்படித்தான் (மலையாள நாடு ஒதுங்கித் தான்) இருந்தது. அதனால் தங்களுக்கென்று ஒரு பாஷை ஏற்பட

ஆரம்பித்ததும் அதில் ஒரு ஜீகூஷீவீபீமீ-உடன் (பெருமிதத்துடன்) ஸகல ஜனங்களும் அதையே தாய்மொழியாக ஏற்றுக்கொண்டுவிட்டார்கள்.

மலையாளக் கதை இத்தனை சொன்னதால் இன்னம் கொஞ்சமும் சொல்லிவிடுகிறேன்.

மலையாளபாஷை பிறந்த பிற்பாடு தமிழ்நாட்டு ப்ராம்மணர்கள் சில காரணங்களுக்காக அங்கே குடியேறினார்கள். ரொம்ப உள்ளே ச்ரமப்பட்டுக்கொண்டு போகாமல், அந்த எல்லைக்குள் போய்க் கொஞ்சம் தூரத்திலேயே 'ஸெட்டில்'ஆனார்கள். இரண்டு வழிகள் அங்கே போவதற்கு, இரண்டு வழியாகவும் போனார்கள். ஒன்றில் கோயம்புத்தூர் வழியாகப் போய்ப் பாலக்காட்டில் குடியேறினார்கள். இன்னொன்றில் தென்காசி, செங்கோட்டை தாண்டித் திருவனந்தபுரப் பக்கங்களுக்குப் போய்த் தங்கினார்கள். இவர்கள் நம்பூதிரிகள் இல்லை. ஆதியில் குடியேற்றப்பட்ட நம்பூதிரி வம்சத்தினர் நடுவில் தமிழ் பேசியிருந்தாலும் பிறகு மலையாள பாஷைக்காரராகி விட்டார்கள். இப்போது நான் சொன்னவர்கள் மலையாளம் உண்டான பிறகே அங்கே குடியேறி, இன்றைக்கும் தமிழையே தாய் பாஷையாகக் கொண்டிருப்பவர்கள். சூழ்நிலையின் இன்ஃப்ளூயென்ஸால் அவர்களுடைய தமிழ் கொஞ்சம் வித்யாஸமாயிருக்கும். உச்சரிப்பில் மலையாள ப்ராஸம் கலந்திருக்கும்............

விணீவீஸீறீணீஸீபீ-க்குப் போக்குவரவுத் தொடர்பில்லாமல் அந்த தேசம் தனி மரபோடு உருவாயிற்று என்னும்போது ஒன்றை மறந்துவிடக் கூடாது. 'தனி மரபு' என்றதால் பாரத ஸமய கலாசாரத்துக்கு வித்யாஸமானது என்று நினைத்துவிடக்கூடாது. 'வேத நெறி'என்ற ஒரே நதியின் ஓட்டத்தில் சைவம், வைஷ்ணவம், சாக்தம் என்று பல துறைகள் இருப்பதுபோல, பாரத கலாசாரம் என்ற பொதுவான கங்கையில் ஒரு கட்டமாக இருப்பதுதான் மலையாள மரபு, இன்னும் தமிழ் மரபு, வங்காள மரபு, காஷ்மீரி மரபு எல்லாமே. பாரத கலாசாரத்தை வேராகக் கொண்டுதான் வேறு வேறு கிளைகளாக இவை-மலையாள மரபும்தான்-உருவாகியுள்ளன. விணீவீஸீறீணீஸீபீ-ல் இருந்த ப்ராம்மணர்களைத் தானே ஆதிக் குடிகளாக அங்கே

பரசுராமர் அமர்த்தினார்?பாரத தேசத்தின் வேதம், புராணம், கோவில், குளம் ஆகியவற்றைத்தானே அங்கேயும் நாட்டினார்?அப்புறம் போனவர்களும் இங்கேயுள்ள தமிழ் ஜனங்கள் தானே?அதனால் பாரத கலாசாரத்தில் தான் அது ஒட்டிக்கொண்டிருந்தது. இன்னும் சொல்லப் போனால், பாக்கி பாரத தேசம் பூராவும் ஸநாதன ஸமயக் கலாசாரத்தைப் பறி கொடுத்துக் கொண்டு, புதிய வழிகளில் இழுபட்டபோதுங்கூட மலையாள தேசம்தான் மலைக்கு மறுபக்கம் அந்தக் கலாசாரத்தைக் காபந்தாகக் காப்பாற்றிக் கொண்டிருந்தது. அதனாலேயே ஆசார்யாள் அவதாரமும் அங்கேயே நிகழ் ந்தது.

பிற்காலத்தில் இதற்கு நேரெதிராக நடந்ததையும் சொல்லணும். மலையாளத்துக்குக் கிழக்கே மலைத் தொடரானதால் உள்நாட்டு மாறுதல்களும் புரட்சிகளும் அதை அவ்வளவாக பாதிக்கவில்லையென்றால், அதற்கு மேற்கே என்ன இருக்கிறது? ஸமுத்ரம், அதனால் என்னவாயிற்றென்றால் மேற்கு நாடுகளிலிருந்து இதர மதஸ்தர்கள் ஸமுத்ர மார்க்கமாக வர ஆரம்பித்த காலத்திலிருந்து அவர்கள் நம் தேசத்தில் அடியெடுத்து வைத்தது மலையாளக் கரையில்தான். ஏற்றுமதி வியாபாரத்தில் கொழிக்கும்படியாக அங்கே ஏலக்காய், மிளகு தேக்கு, சந்தனக் கட்டை எல்லாம் அபரிமிதமாகக் கிடைத்ததால் அவர்கள் அங்கேயே தங்கிவிடுவதும் வழக்கமாயிற்று. யூதர்களிலிருந்து கிறிஸ்துவர்கள், முஸ்ஸீம்கள் எல்லோருக்கும் மலையாளம் தாய் வீடாயிற்று. அவர்களுடைய மதங்களும் அதோடுகூட அங்கேயே அதிகமாக ப்ரசாரமாயிற்று. உள்நாட்டு அவைதிக மதங்களின் பாதிப்புக்கு அதிகம் ஆளாகாத ப்ரதேசமே இப்படி வெளிநாட்டு மதங்களுக்கு நிறைய இடம் கொடுப்பதாக ஆயிற்று!

வேடிக்கையாக இன்னொரு விஷயமும் சொல்கிறேன். வெளிநாட்டு மதங்களை மலையாள நாட்டினர் ஏற்றுக் கொண்டாலும், ஹிந்து மதம் என்று வரும்போது அங்கே நம்முடைய ஆசார்யாளுக்குப் பிறகு அவருடைய ஸம்ப்ரதாயம் தவிர எதையும் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்களில் வைஷ்ணவ மதத்தையோ மத்வ மதத்தையோ பின்பற்றுபவர்கள் கிடையாது. பத்மநாப

ஸ்வாமி கோவிலானாலும் ஸரி, குருவாயூரப்பன் கோவிலானாலும் ஸரி அங்கேயெல்லாமும் ஸ்ரீவைஷ்ணவ பட்டர்கள் பூஜை பண்ணுவதில்லை என்று பார்க்கிறோமல்லவா?ஆசார்யாள் தங்கள் தேசத்தைத் தேடி வந்து அவதாரம் பண்ணினாரென்ற பக்தியபிமானம்!...

ஸமீப காலத்தில் போக்குவரத்து ஸாதனங்கள், இங்கிலீஷ் படிப்பு, ஸயன்ஸ் எல்லாம் வ்ருத்தியாக ஆரம்பித்தபின் ஒதுங்கியிருந்த மலையாள ஜனங்கள் ஒரேயடியாக வெளியே வந்து தேசம் பூராவும் பரவ ஆரம்பித்து விட்டார்கள். அங்கே ஜன ஸங்கியையும் பெருகிக்கொண்டே போனது ஒரு முக்ய காரணம். இப்போது வர வர, நம்முடைய தேசம் பூராவில் மட்டுமில்லாமல் அந்நிய தேசங்களுக்கும் அவர்களே ஏராளமாகப் போகிறார்கள். கௌரவம் பார்க்காத உழைப்பு மனப்பான்மையும் தொழில் ஸாமர்த்யமும் இருப்பதால் எடுபிடி வேலை, டீக் கடை இவற்றுக்கும் வருகிறார்கள். படிப்பும் அறிவும் இருப்பதால் பெரிய பெரிய பதவிகளுக்கும் வருகிறார்கள். ஸர்வஜ்ஞரான ஆசார்யாள் அவதரித்த ப்ரதேசத்தைச் சேர்ந்த அவர்களே அப்போதிலிருந்து இப்போதும் 'விடரஸி'யில் (படிப்பறிவில்) முதல் ஸ்தானம் வஹித்துவருகிறார்கள்.

புது யுகத்தில், ஒரு பக்கம் பழமையான அத்யயனாதிகளை இன்னமும் காப்பாற்றுபவர்கள் அங்கேயே இருந்தாலும், அங்கேதான் இன்னொரு பக்கம் ரொம்பப் புரட்சிகரமான மாறுதல்களும் ஏற்பட்டிருக்கின்றன. ஆலய ப்ரவேசத்திலிருந்து கம்யூனிஸ்ட் ராஜ்யம் வரை அநேகம் அங்கேதான் அங்குரார்ப்பணமாயிருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## கும்பகோணப் பூர்வீகம் ?

## காஞ்சி ஸ்ரீமடமும் கும்பகோணமும்

ஆசார்யாள் பிறந்த ஊர் காலடியானாலும், ஸ்வாமி தாமே

அவராகப் பிறக்கப் போவதாக அவருடைய பிதாவான சிவகுருவுக்கு வரம் தந்தது திருச்சூரில்.

திருச்சூர், சிவகுரு என்பவற்றைப் பற்றி என் ஆராய்ச்சியைச் சொல்கிறேன். ஆசார்யாள் கதையைவிட மலையாளத்தின் கதைக்கே அது அதிக ஸம்பந்தமுடையதாகையால் இங்கேயே சொல்லிவிடுகிறேன்.

ஒரு நாட்டினர் வேறொரு நாட்டுக்குக் குடி பெயரும் போது தங்களுடைய பழைய நாட்டில் தாங்கள் வாழ்ந்து வந்த ஊர்களின் பெயர்களையே புதிய நாட்டின் ஊர்களுக்கும் வைப்பது ஸஹஜமாயிருக்கிறது. தாய்நாட்டைவிட்டு வந்து விட்டாலுங்கூட மாத்ரு பூமியபிமானம் இப்படிப் பண்ணத் தூண்டுகிறது. இங்கிலீஷ்காரர்கள் அமெரிக்காவில் குடியேறியபின், இம்மாதிரிதான் தங்கள் தாய்நாட்டு ஊர்ப் பெயர்களுக்கே 'ந்யூ, 'ந்யூ'என்று சேர்த்து அமெரிக்காவில் புதிய ஊர்களை ஏற்படுத்திக்கொண்டார்கள். 'ந்யூ இங்க்லாண்ட்'என்றே அமெரிக்காவின் வடகிழக்கு மாகாணங்கள் ஆறுக்கும் சேர்த்துப் பெயர் உண்டு. இங்க்லாண்டில் யார்க், ஹாம்ப்ஷயர், ஜெர்ஸி என்றெல்லாம் இடங்கள் இருப்பது போலவே அமெரிக்காவில் ந்யூ யார்க், ந்யூ ஹாம்ப்ஷயர், ந்யூ ஜெர்ஸி என்றெல்லாம் பெயர் வைத்தார்கள். இப்படியே கிழக்கே ஆஸ்ட்ரேலியாவிலும் தங்கள் தாய்நாட்டுப் பேர்களை வைத்தார்கள். ந்யூ ஸெளத் வேல்ஸ் என்றே அங்கே ஒரு மாகாணத்துக்குப் பேர்.

இதேபோலத் தமிழ்நாட்டிலிருந்து பல பேர் மலையாளத்துக்குப் போய் 'ஸெட்டில்'ஆனபோது தமிழ்நாட்டுப் ஊர்ப் பெயர்களை அங்கே வைத்தார்கள். ஆல்வாய், (ஆலவாய்), பழூர் (பழுவூர்), கண்ணனூர், மாத்தூர், மேச்சேரி என்றெல்லாம் மலையாளத்து ஊர்ப் பெயர்கள் இருப்பது அப்படியே தமிழ்நாட்டு ஊர்ப் பெயர்களை அங்கே வைத்ததுதான்....

ஆசார்யாள் சரிதத்திலிருந்து பல நூற்றாண்டுகள் தாண்டி வருவோம் :

காஞ்சீபுரத்தில் இருந்துவந்த நம் மடம் பதினெட்டாம் நூற்றாண்டு மத்தியில் அங்கேயிருந்து புறப்படவேண்டி

வந்து, முடிவாகக் கும்பகோணத்திற்கு மாற்றப்பட்டது. அந்தக் காலத்தில் Carnatic Wars என்று சொல்லப்படும் யுத்தங்களில் காஞ்சிப் பிரதேசத்தில் ஓயாத சண்டையும் முற்றுகையுமாக இருந்தது. ஆர்க்காட்டு நவாப், ஈஸ்ட் இண்டியா கம்பெனி, ப்ரெஞ்சுக்காரர்கள், ஹைதர் அலி என்று எல்லாரும் ஒருத்தருக்கொருத்தர் குஸ்தி போட்டுக் கொண்டிருந்ததில் காஞ்சீபுரத்தில் கோவில்களையே கோட்டையாக உபயோகித்துக்கொண்டு ஆயுதங்கள் வீசுவது, ஊருக்குள் புகுந்து சூறையாடுவது என்றெல்லாம் விபரீதமாக நடந்து வந்தன. அதனால்தான் அப்போது நம் மடத்திலிருந்த ஸ்வாமிகள் (62-வது பீடாதிபதிகளான ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்) இடம் மாற்றியது.

ராமேச்வரம் வரை யாத்ரை போய்விட்டு அப்புறம் உடையார்பாளையம் என்ற ஸம்ஸ்தானத்திற்குப் போய்த் தங்கினார்.

திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலுள்ள உடையார்பாளையம் அப்போது தஞ்சாவூர் மஹாராஷ்ட்ர ராஜ்யத்திற்கு உட்பட்ட ஒரு ஜமீன்தாரி மாதிரி இருந்தது. அந்த ஸம்ஸ்தானாதிபதிகள் நம்முடைய மடத்தை ஆச்ரயித்து வந்தவர்கள். அதனால் அப்போதிருந்த ராஜா-அல்லது ஜமீன்தார்-அப்போதிருந்த ஸ்வாமிகளை அங்கே வந்து தங்கும்படி ப்ரார்த்தித்துக் கொண்டதன் பேரில் ஸ்வாமிகளும் அப்படியே பண்ணினார். அது நன்றாகக் காடுகள் சூழ்ந்து தற்காப்பாக இருந்த இடம். அதனால் வெளிச் சண்டை சச்சரவுகள் அதிகம் பாதிக்காத இடம்.

அந்நிய மதஸ்தர்கள் வந்து இங்கே பரஸ்பரம் குஸ்திப் போட்டுக்கொண்டிருந்த ஸமயத்தில் மடம் பாதுகாப்புக்காக வேற்றிடம் போனதற்குக் குறிப்பாக ஒரு காரணம் உண்டு. அதுதான் ஸ்வர்ண காமாக்ஷிஎன்பதாகச் சொக்கத்தங்கத்திலேயே ஆன அம்பாளின் விக்ரஹம். காமகோஷ்டம் (காமகோட்டம்) என்னும் காஞ்சி காமாக்ஷிகோவிலில் ஒரு ஸந்நிதியில் அந்த ஸ்வர்ண விக்ரஹம் இருந்து வந்தது. அந்தக் கோவில் நம் மடத்தின் நிர்வாஹத்தில் இருப்பது. ஆகையால் குஸ்தி பிடித்துக்கொண்டிருக்கிற அந்நிய மதஸ்தர்கள் சந்தடிச் சாக்கில் ஸ்வர்ண விக்ரஹத்தை அபஹரித்து விடாமல்

பாதுகாப்புப் பண்ணவேண்டிய பொறுப்பு மடத்துக்கு இருந்தது. இப்போது காப்பான இடமாக இருந்த உடையார் பாளைய ராஜா அழைப்பு அனுப்பியவுடன் மடம் அங்கே போய்த் தங்கியதோடு ஸ்வர்ண காமாக்ஷியும் கோவில் ஸ்தானீகர்களால் ஜாக்ரதையாக அங்கே கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டாள். அன்றிலிருந்து காமகோஷ்டத்தில் அந்த ஸந்நிதி காலியாகவே இருந்து வருகிறது.

ஸ்வர்ண காமாக்ஷிமட்டுமில்லாமல், இதே மாதிரியான கலவர காலங்களில் சிதம்பரம் நடராஜா, திருவாரூர் த்யாகராஜா, காஞ்சி வரதராஜா (உத்ஸவர்), ஸ்ரீரங்கம் ரங்கராஜா (உத்ஸவர்) ஆகியவர்களும் தங்கள் இடத்தை விட்டு ஸஞ்சாரம் பண்ணும்படியாக ஏற்பட்டிருக்கிறது. ராஜாக்கள்!அதிலும் ஸ்வாமியே ராஜாவானவர்கள் ஆனால் திக் விஜயம், ராஜ பவனி என்றில்லாமல், இந்த மாதிரி சண்டைக்கு பயந்துகொண்டு ஏன் போகும்படி இருந்ததென்றால், நடு நடுவே நம் மதஸ்தர்கள் ஸமயாபிமானம் குன்றிச் சோர்ந்து போயிருந்தபோது அதற்குத் தண்டனையாகவும், மறுபடியும் அவர்களை எழுப்பித் தூண்டி விடுவதற்காகவும் தான்!ஸ்வாமிக்கு சக்தி இல்லாமல் போய்விட வில்லை!நாம் ஆலஸ்யமாய் சக்தி இழந்து இருந்ததற்கு அநுபவிக்க வேண்டுமென்றே இப்படி விளையாடினார். அதோடு அந்த மஹா க்ஷேத்ரமூர்த்திகளுடைய ஸாந்நித்யம் வேறு க்ஷேத்ரங்களிலும் ஏற்படவேண்டும் என்றும் நினைத்திருக்கலாம்.

ஸ்வர்ண காமாஷிக்கு மாத்ரமின்றி, ஊரைவிட்டு ஊர் போன நடராஜா, த்யாகராஜா, ரங்கராஜா, வரதராஜா ஆகிய எல்லோருக்குமே 'டெம்பரரி'வாஸ ஸ்தானமாக இருந்தது உடையார்பாளையம்தான். பாதுகாப்பான இடமாக இருந்ததோடு, நல்ல ஆஸ்திக்ய புத்தி வாய்ந்த ஜமீன்தார்களின் ஆட்சியிலிருந்ததால் இந்தப் பெரிய புண்யத்தைத் தட்டிக்கொண்டது.

'ஸ்வாமி'என்பதற்கு நேர் தமிழ் உடைமைக்காரர், அல்லது உடையார் என்பதுதான். உடையார் பாளையம் தன் பெயருக்கேற்ப அநேக உடையார்களைத் தன்னிடம் உடையதாகப் பெற்றது!

அப்புறம் ஸமாதான காலம் வந்தபோது அந்தந்த மூர்த்தி அதனதன் ஊருக்குத் திரும்பிப் போயிற்று. காமாக்ஷிமட்டும் தஞ்சாவூருக்குப் போய் அங்கேயே ஸ்திரவாஸம் கொண்டுவிட்டாள். ஏனென்று அப்புறம் சொல்கிறேன்.

உடையார்பாளையத்தில் சிவன் கோவிலும் பெருமாள் கோவிலும் இருக்கின்றன. அங்கேயுள்ள சிவன் கோவிலில் இன்றைக்கும் 'ஸபாபதி மண்டபம்', 'த்யாகராஜ மண்டபம்', 'காமாக்ஷிமண்டபம்'என்று அந்த மூன்று மூர்த்திகளும் தாற்காலிக வாஸம் செய்த ஸந்நிதிகள் இருக்கின்றன. அதேபோல அங்கேயுள்ள பெருமாள் கோவிலில் ரங்கராஜ, வரதராஜ விக்ரஹங்கள் இருந்ததற்கும் சான்று இருக்கிறது. இந்த விஷயம் இருக்கட்டும்.

தஞ்சாவூரிலிருந்துகொண்டு அப்போது ஆட்சி செலுத்திவந்த ப்ரதாபஸிம்ஹ மஹாராஜா, தன்னுடைய ராஜ்யத்தில் சேர்ந்ததான உடையார் பாளையத்தில் இருந்து வரும் ஸ்வாமிகளும் மடமும் ராஜதானியான தஞ்சாவூருக்கே வந்துவிட்டால் நன்றாயிருக்குமே என்று நினைத்தார். அப்படியே ஸ்வாமிகளுக்கு ப்ரார்த்தனை செய்துகொண்டு அழைப்பு அனுப்பினார். ஸ்வாமிகளும் தஞ்சாவூருக்குப் போய்க் கொஞ்சகாலம் தங்கினார். ஸ்வர்ண காமாக்ஷியும் கூடப் போனாள்.

அப்புறம் அவருக்கு, 'ஸப்த நதிகளில் த்ராவிட தேசத்தில் இருக்கும் ஒன்றே ஒன்றான காவேரி இந்தத் தஞ்சாவூர் மண்டலத்திலேயே ஓடும்போதிலும் நம்முடைய மடத்தை அதன் தீரத்தில் அமைத்துக்கொள்ளாமல் தஞ்சாவூரில் ஏன் அமைத்துக் கொள்ளணும்?'என்று தோன்றிற்று. அதனால் காவேரித் கரையிலுள்ள கும்பகோணத்துக்கு வாஸத்தை மாற்றிக் கொள்ள நினைத்தார். ராஜாவும் ஸம்மதித்து மஹாராஷ்ட்ரா ப்ராம்மணரான மந்த்ரி டபீர் பந்த் என்பவரிடம் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யச்சொல்லி உத்தரவிட்டார். அதன்படி டபீர் பந்த் கும்பகோணத்தில் அமைத்துக்கொடுத்த மடமே அதற்கப்புறம் காஞ்சி பீடத்தின் 'ஹெட் ஆஃபீஸா'கி விட்டது!மடத்தைச் சுற்றி டபீர் பந்த் தம் பெயரிலேயே அக்ரஹாரம் ஏற்படுத்திக்கொடுத்து வித்வான்களான ஸத் ப்ராம்மணர்கள் சூழ்ந்திருக்கும்படியாக உபகாரம் செய்தார்.

ஆசை ஆசையாகக் கூப்பிட்டு வைத்து உபசாரம் பண்ணிய ராஜாவுக்கும் தஞ்சாவூர் ஜனங்களுக்கும் ஸந்தோஷமாக இருக்கட்டுமென்று ஸ்வாமிகள் ஒன்று பண்ணினார். என்னவென்றால் ஸ்வர்ண காமாக்ஷிதஞ்சாவூரிலேயே நித்ய ப்ரதிஷ்டையாயிருக்கட்டுமென்று ராஜாவிடம் சொன்னார். ஸ்ரீமடம் மாத்திரமே கும்பகோணத்திற்கு இடம் மாற்றிறு. ராஜா ஸந்தோஷமாக மேல வீதியில் கோவில் கட்டி அம்பாளுக்கு அதை நித்யவாஸமாக்கினார். "பங்காரு காமாக்ஷி"என்று இப்போதும் தஞ்சாவூரில் விளங்கி வருபவள் இப்படியாகக் காஞ்சீபுரத்திலிருந்து உடையார்பாளையம் வழியாக அங்கே வந்து சேர்ந்த ஸ்வர்ண காமாக்ஷிதான். 'பங்காரு'என்றால் தெலுங்கில் ஸ்வர்ணம் என்று அர்த்தம். ச்யாமா சாஸ்த்ரிகள் ஒரே தெலுங்குப் பாட்டுகளாகப் பாடியது இவள் மேல்தான். அவள் பேரிலும் 'பங்காரு'என்ற தெலுங்கு வார்த்தையே சேர்ந்துவிட்டது!

அவள் ஸமாசாரம், காஞ்சி மடம் கும்பகோணத்திற்கு வந்து சேர்ந்த ஸமாசாரம் எல்லாம் இருக்கட்டும். திருச்சூரைப் பற்றி அல்லவா பார்த்துக்கொண்டிருந்தோம்?ÜîŸ°‹ ÞîŸ°‹ â¡ù ú‹ð‰î‹?......

காவேரி தீரத்துக்கு மடத்தை மாற்றவேண்டி வந்த போது அப்போதிருந்த ஸ்வாமிகள் குறிப்பாக கும்பகோணத்தை ஏன் தேர்ந்தெடுத்தாரென்று நான் யோசித்துப் பார்த்தேன். தஞ்சாவூருக்கு இன்னம் ரொம்பக் கிட்டேயே 'பஞ்சநத ம்'என்பதாக நாலு கிளை நதிகளோடு காவேரி ப்ரமாதமாக ஓடிக்கொண்டிருக்கிறாள், அதுதான் திருவையாறு: திரு ஐ ஆறு-ஐந்து ஆறுகள்; அதுதான் 'பஞ்ச நதம்'. பூலோக கைலாஸம் என்று சொல்லப்படும் மஹா க்ஷேத்ரம் அது. இன்னம் அநேக மஹாக்ஷேத்ரங்களும் காவேரிக் கரையில் இருக்கின்றன. காவேரி துலா ஸ்நான விசேஷத்திற்கென்றே ஏற்பட்டதாக மாயவரம் இருக்கிறது. இப்படிப் பல இருக்கும்போது கும்பகோணத்தை ஸ்பெஷலாக ஸெலக்ட் பண்ணுவானேனென்று யோசித்துப் பார்த்தேன். அப்போது கும்பகோண மஹாத்ரத்தின் மாஹாத்மியங்கள் ஒன்றுக்குமேல் ஒன்றாக அலைமோதிக் கொண்டு நினைவு வந்தன.

முக்யமாக, இப்படி யோசித்துக் கொண்டே போகும்போது, 'அட! நம்முடைய ஆசார்யாளின் அவதாரத்திலேயே கும்பகோண ஸம்பந்தம் இருக்கிறது போலிருக்கிறதே!ஆதிநாளில் அவருடைய பூர்விகர்களுக்கே கும்பகோண ஸம்பந்தமுண்டு என்று தோன்றுகிறதே!'என்று ஆச்சர்யப்படும்படியாகச் சில றீவீஸிளீ-கள் (இணைப்புத் துண்டுகள்) அகப்பட்டன. அதைத்தான் சொல்ல வந்தேன்.

திருச்சூர் என்பதை நம்பூதிரிகள் 'சிவபுரம்'என்று சொல்கிறார்கள். தமிழில் சொன்னால்-தமிழ்தானே மலையாளத்திலும் ஆதிபாஷை?அதனால் அப்படிச் சொன்னால்-'சிவப்பேரூர்'. புண்யக்ஷேத்ரங்களுக்கு ஆரம்பத்தில் 'திரு'சேரும். மெட்றாஸிலேயே அல்லிக்கேணி என்பதைத் திருவல்லிக்கேணி என்றும், ஒற்றியூரைத் திருவொற்றியூர் என்றும் சொல்கிறோமல்லவா?அப்படி சிவப்பேரூருக்குத் என்றும் 'திரு'போட்டு சொன்னால் 'திருச்சிவப்பேரூர்'. 'திருச்சிவப்பேரூர்'என்பது மருவித்தான் 'திருச்சூர்'என்றாகியிருக்கிறது!

F¼„Å¼‚° Cõ¹ó‹ â¡Á «ð˜ ªê£¡«ùù™ôõ£?Cõ¹ó‹ â¡Á îI› ï£†®½‹ á˜ Þ¼‚Aø¶. ð£ì™ ªðŸø vîô‹. ÜŠð˜, ú‹ð‰î˜ Þ¼õ¼¬ìò «îõ£óƒèÀ‹ Üš×˜ võ£I‚° Þ¼‚Aø¶. Ü¶ °‹«ð£èí˜¶‚° Í¡Á ¬ñL™ ªî¡Aö‚«è Þ¼Šð¶.

கும்பகோணம் விஷயமாகச் சொன்னதற்கு இங்கேதான் காரணம் வருகிறது.

ஒரு மஹாக்ஷேத்ரமிருந்தால் அதன் ஸாந்நித்யம் அதைச் சுற்றி ஐந்து க்ரோச 'ரேடிய'ஸுக்குப் பரவியிருக்கும் ஒரு க்ரோசம் என்பது ஸுமார் இரண்டு, இரண்டே கால் மைல். அதாவது ஒரு மஹாக்ஷேத்ரத்தின் தெய்விக சக்தி, அதைச் சுற்றிப் பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்துக்குட்பட்ட வட்டம் முழுவதும் பரவியிருக்கும். பஞ்ச க்ரோச எல்லை என்று அதைச் சொல்வார்கள். சிவபுரம் அப்படிக் கும்பகோணத்தின் பஞ்ச க்ரோச எல்லைக்குள் இருப்பது.

பெரிய நகரங்களை அவற்றை யொட்டியிருக்கும் சின்ன ஊர்களோடு சேர்த்து இன்னம் பெரிய நகரமாக நிக்ஷீமீணீமீ மீக்ஷீ ஙிஷீனீதீணீஹ், நிக்ஷீமீணீமீ மீக்ஷீ விணீபீக்ஷீணீs என்றெல்லாம் சொல்கிற

வழக்கமிருக்கிறதெல்லவா?பஞ்ச க்ரோச எல்லையை அப்படி வைத்துக்கொண்டால் சிவபுரம் நிக்ஷீமீணீமீ மீக்ஷீ ளீஞ்பனீதீலீணீளீஷீஸீணீ-த்துக்குள் வந்துவிடும்!

தமிழ்தேசத்தில் கும்பகோணப் பஞ்சக்ரோச எல்லைக்குள் ஒரு சிவபுரம் இருக்கிறது. மலையாளத்தில் காலடிக்கு அருகே ஒரு சிவபுரம் (திருச்சூர்) இருக்கிறது. தமிழ்தேசத்திலிருந்து மலையாளத்துக்குப் போய்க் குடியேறியவர்கள் தங்களுடைய பூர்விக ஊர்களின் பெயர்களையே அங்கே வைத்தார்கள் என்பதற்கும் நிறையச் சான்று இருக்கிறது. இப்படிப் பார்க்கும்போது, 'இரண்டும் இரண்டும் நாலு'என்கிற மாதிரி என்ன ஊஹிக்கமுடிகிறது? கும்பகோணச் சிவபுரவாஸிகள் தான் ஆதியில் மலையாளத்துக்குப்போய் அங்கே தாங்கள் 'ஸெட்டில்'ஆன ஊருக்கும் அந்தப் பெயரையே ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் வைத்து, அந்த ஸம்ஸ்க்ருதப் பெயர் அதே ரூபத்திலேயும், தமிழ்ப் பெயர் 'திருச்சூர்'என்று மருவியும் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறதல்லவா?

Ü‰î˜ F¼„ÅK™ «ð£Œ ðüù‹ Þ¼‰¶î£¡ Ýê£˜ò£O¡ î£Œ î‰¬îò˜ ß„õóQìI¼‰¶ õó‹ ªðŸÁ, ß„õó¬ù«ò Üõî£ó ¹ˆóó£èŠ ªðŸø¶!

கும்பகோணத்துக்கு ஆசார்ய ஸம்பந்தம் இதோடு முடிந்துவிடவில்லை. இன்னமும் 'கிட்ட உறவு' சொல்கிறேன்.

ஆசார்யாளுடைய தகப்பனாரின் பெயர் சிவகுரு என்பது. ரொம்பவும் பொருத்தமான பெயர். 'குரு'என்றால் நேர் அர்த்தம் 'பெரியவர்'என்பது. அதனால் உபதேசம் செய்பவரை மட்டும் குரு என்று சொல்லாமல் தகப்பனாரையும் குரு என்று சொல்வதே வழக்கம். ஆகவே சிவ அவதாரத்துக்குத் தகப்பனாராக இருந்தவருக்கு சிவகுரு என்ற பெயர் ரொம்பவும் பொருத்தந்தானே?

ஆசார்யாளுடைய அம்மாவின் பெயரும் இப்படியே தான்! ஆர்யாம்பா என்பது அந்த அம்மாளின் பெயர். எல்லாவற்றிலும் ச்ரேஷ்டராக இருந்ததால் நம் ஆசார்யாள் 'ஆர்யர்'. அவருக்கு 'அம்பா'என்றால் 'அம்மா'. அப்படியிருந்தவள் ஆர்யாம்பா.

சிவகுரு ஸமாசாரத்துக்கு வருகிறேன். இந்தப் பெயர் நாம்

ரொம்பக் கேள்விப்படுவதேயில்லை. தென்னாட்டில் இல்லாத அநேக பெயர்கள் வடநாட்டில் வைத்துக் கொள்கிறார்கள். ஆனால் வடநாட்டிலும்கூடப் 'சிவகுரு'ப் பேர்க்காரர்கள் இல்லை. இந்தியாவில் எங்குமே அந்தப் பெயர் வைக்கப்படுவதாகக் காணோம். ரொம்பப் பேர், 'சிவனாகிய ஆதிகுரு, அல்லது சிவனுக்கும் உபதேசம் செய்த குமார ஸ்வாமி-இவர்கள்தான் சிவகுரு. மநுஷ்யர்களில் சிவகுரு என்றால் அது ஆசார்யாளின் அப்பர் ஒருத்தர்தான்'என்று கூட நினைத்துக்கொண்டிருப்பார்கள். அந்த அளவுக்கு அபூர்வமாகத்தான் 'சிவகுரு'என்று பேர் இருக்கிறது.

ஆனாலும் தமிழ் நாட்டில் ஒரு ஊரைச் சுற்றி மட்டும் இந்தப் பெயர் சற்று அதிகம் அடிபடுகிறது. சிவகுருதான் செட்டியார், சிவகுரு உடையார், சிவகுரு பிள்ளைவாள்-என்றெல்லாம் அங்கே காதில் படுகிறது. அது எந்த ஊர் என்றால்-அதே கும்பகோணம் தான்! கும்பகோண வட்டாரத்தில் மாத்ரமே சிவகுருப் பேர் கொண்டவர்கள் இருக்கிறார்கள். ஏன் அப்படி?

ஏனப்படியென்றால் கும்பகோணத்துக்குக் கிட்டே பஞ்ச க்ரோச எல்லைக்குள் உள்ள அந்த சிவபுரத்தில் கோவில் கொண்டுள்ள ஈச்வரனுக்கு சிவகுருநாத ஸ்வாமி என்பதே பெயர்! முருகன் சிவனுக்கு குருவாகி உபதேசித்த ஸ்வாமி மலையும் கும்பகோணத்துப் பஞ்ச க்ரோசத்துக்குள்ளேதான் வந்துவிடுகிறது! அங்கே பிள்ளைக்கு அந்த 'டைட்டிலை'க் கொடுத்துவிட்டாமே என்று இங்கே அப்பாவே 'சிவகுரு'ப் பேர் வைத்துக்கொண்டிருக்கிறார் இவர் சிவனாகிய குரு;ஸ்வாமிநாத ஸ்வாமி சிவனுக்கு குருவாகிய அவருடைய பிள்ளை; மலையாள ப்ராம்மணரான சிவகுருவோ சிவ அவதாரத்தைப் பிள்ளையாகக் கொண்ட அப்பா-சிவகுரு!ஒரே பெயரில் மூன்று தினுஸு!

மலையாள ப்ராம்மணருக்குக் கும்பகோணச் சிவபுரத்து ஸ்வாமியின் பேர் இருக்கிறது; அவர் பிள்ளை வரம்வேண்டித் தவமிருந்தது மலையாளச் சிவபுரமான திருச்சூர்-என்பதிலிருந்து என்ன நிச்சயப்படுகிறது?

ஆதியில் கும்பகோணச் சிவபுரத்திலிருந்து பரசுராமர் அழைத்துக்கொண்டு போன சோழிய ப்ராம்மணர்கள் மலையாளத்தில் குடியேறின ஊர்தான் திருச்சூர் என்றும்

அப்படிப்போன குடும்பம் ஒன்றின் வம்சத்தில் வந்தவர் தான் சிவகுரு என்றும் தீர்மானிக்கத் தோன்றுகிறதல்லவா?

திருச்சூரைச் சுற்றி அந்த வம்சாவளி பரவியபோது சிவகுருவின் தகப்பனாரான வித்யாதிராஜரோ அவருக்கும் முந்தி ஒருவரோ காலடியில் 'ஸெட்டி'லாகி இருக்க வேண்டும். ஆனாலும் தங்கள் ஆதி ஊரான சிவபுரம், பிறகு மலையைளத்தில் ஸொந்த ஊராக ஆன திருச்சூர் ஆகிய இரண்டையும் அக்குடியினர் மறக்காமலே இருந்திருக்க வேண்டும். அதனால்தான் வித்யாதிராஜர் புத்ரனுக்கு சிவபுரத்து ஸ்வாமியின் பெயரான சிவகுரு என்பதை வைத்திருக்கிறார். அப்புறம் அந்த சிவகுரு புத்ரனுக்காகத் தபஸ்-பஜனம் இருக்கவேண்டுமென்று நினைத்தபோது திருச்சூருக்கே போயிருக்கிறார்.

ஆக ஆசார்யாளின் ஆதி பூர்விக மூதாதைகளே கும்பகோணம் வட்டாரத்துக்காரர்கள்தான் என்று ஊஹிக்க முடிகிறது.

இதைவிட அந்த ஊருக்கு (கும்பகோணத்திற்கு) என்ன பெருமை இருக்க முடியும்? அங்கே ஸ்ருஷ்டிக்கான அம்ருத கும்பம் வந்து தங்கினதைவிட, ஸ்ருஷ்டியிலிருந்து விடுபட்டு அமரமான மோக்ஷத்தை அடைவிக்கும் அத்வைத அம்ருத கும்பத்தை லோகமுள்ளளவும் ஜீவர்களுக்கு வற்றாமல் சுரக்கும்படியாக ஸ்தாபித்து வைத்துவிட்ட ஆசார்யாள் அந்த க்ஷேத்ரவாஸிகளின் வம்சத்தைத்தான் தேர்ந்தெடுத்து அவதாரம் பண்ணினாரென்பதுதான் அதன் மஹா பெருமை.

காஞ்சீபுரத்தில் இருந்த ஆசார்யாளின் ஸ்ரீமடத்துக்கு இன்னொரு 'ஸெகண்ட் காபிடல்'அமைக்க நேர்ந்தபோது கும்பகோணமே அந்த ப்ரைஸைத் தட்டிக்கொண்டு போனதற்கு இதுவும் ஒரு முக்யமான காரணம் என்று தோன்றிற்று. ஆசார்யாளோடு அலாதியான ஆதி ஸம்பந்தம் அந்த ஊருக்கு இருப்பதான காரணம்-ராமருக்கு ஸூர்ய வம்சம் என்பதுபோல ஆசார்யாளுக்குச் சொல்வதானால் அந்த வம்சப் பூர்விகர்களுக்கு எது ஜன்மக்ஷேத்ரமோ அது கும்பகோண வட்டம் என்பது.

ஆசார்யாளுடைய ஜீவித முடிவுடன் முடிபோட்டுக் கொண்ட ஊர் காஞ்சி;அவருடைய ஜீவித ஆரம்பத்துடன்

முடிபோட்டுக் கொண்ட ஊர் கும்பகோண
ம்!எப்படியென்றால், ஆசார்யாள் ஸித்தியடைந்த க்ஷேத்ரம் காஞ்சி. அவர் அவதார ஜன்மா எடுப்பதற்காக எந்த ஊரில் தபஸிருந்து வரம் பெறப்பட்டதோ அந்த ஊரின் மூலமான ஊரை அங்கமாகக்கொண்டது கும்பகோணம். அவரைப் பிறப்பிக்க நிமித்த மாத்ரமாக இருந்தவர் யாரோ அவருடைய பெயரைக் கொடுத்ததும் கும்பகோணம் வட்டாரம்தான். ஆசார்யாளின் ஆதி மூதாதைகளின் ஜன்ம ஸ்தலமாக இருந்திருக்க கூடியது அந்த வட்டம்தான்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஆர்யாம்பா : காஞ்சி காமாக்ஷி**

**ஆர்யன் : ஐயப்பன்**

அப்பா பெயர் கும்பகோண ஸம்பந்தமுள்ளதென்றால் அம்மா பெயர் காஞ்சி ஸம்பந்தமுள்ளதென்று ஒரு விதத்தில் சொல்லலாம். 'சிவகுரு'மாதிரி 'ஆர்யாம்பா'வும் அபூர்வமான பேர்தான்.

மலையாளத்தில் ஆரியங்காவு சபரிமலை வழியிலிருக்கிறது. ஆர்யனுடைய காடு என்று அர்த்தம். ஆர்யன் என்பது சபரிமலை சாஸ்தாவைத்தான். 'ஆர்யன்'தான் தமிழில் 'ஐயன்'ஆயிற்று. அதை மரியாதையாகப் பன்மையில் சொன்னால் 'ஐயர்'அல்லது 'ஐயனார்'. ஐயனார், ஐயனாரப்பன் என்பதே தமிழ்நாட்டில் சாஸ்தாவின் பெயர். மலையாளத்தில் 'ஐயப்பன்'என்பதும் அதே வார்த்தைதான். த்ராவிடர்களின் க்ராம தேவதை என்று இக்கால ஆராய்ச்சிக்காரர்களால் சொல்லப்படுபவர்தான் 'ஆர்ய'ராகவும். 'ஐய'ராகவும் இருக்கிறார்!இந்த இன பேத ஆராய்ச்சியெல்லாம் எவ்வளவு தப்பான அடிப்படையில் உண்டானது என்பதற்கு இது மாதிரிப் பல சான்றுகள் இருக்கின்றன. அது இருக்கட்டும்.

ஆர்யா என்பது அம்பாளின்-பரமேச்வர பத்னியாக

இருக்கப்பட்ட பராசக்தியின்-பெயர். " **உமா காத்யாயநீ கௌரீ** "என்று ஆரம்பித்து அமரத்தில் அம்பாள் நாமங்களைச் சொல்லிக்கொண்டு போகும்போது " **ஆர்யா தாக்ஷாயணீ சைவ கிரிஜா** "என்று வருகிறது. குறிப்பாக த்ரிபுரஸுந்தரி என்கிற ரூபத்தில் தநுர்-பாண-பாச-அங்குசங்களுடன் செக்கச் செவேலென்று உள்ள அம்பாளையே 'ஆர்யா'என்று சொல்வதாகத் தெரிகிறது. அந்த ரூப லக்ஷணங்களோடேயே இருப்பவள்தான் காஞ்சி காமாக்ஷி, "காமாக்ஷிமஹா த்ரிபுரஸுந்தரி"என்றே அவளைச் சொல்வது. லலிதாம்பிகை என்பதும் இந்த ரூபத்தைத்தான்.

காஞ்சி காமகோஷ்ட பூஜா பத்ததியை அநுக்ரஹித்தவர் துர்வாஸர். அவர் அவளைப் பற்றி இருநூறு ச்லோகமுள்ள ஒரு ஸ்துதி செய்திருக்கிறார். அதற்கு 'ஆர்யா த்விசதி'என்றே பேர். (த்வி - சதி என்றால் இரு-நூறு.) காமாக்ஷியைக் குறித்த மிகவும் உத்தமமான இன்னொரு ஸ்துதி உண்டு. அது 'பஞ்சசதி', அதாவது 500 ஸ்லோகம் கொண்டது, மூகர் என்பவர் செய்தது. அதனால் 'மூக பஞ்சசதி'எனப்படுவது. அதிலும் முதல் நூறு ஸ்லோகங்களுக்கு ' **ஆர்யா சதகம்** ' â¡«ø î¬ôŠ¹, ªè£´ˆF¼‚Aø¶.

ஆகையால் காஞ்சி காமாக்ஷிக்கு விசேஷமாக உள்ள பெயரே ஆசார்யாளின் தாயாருக்கு வைக்கப்பட்டதாகத் தெரிகிறது. அம்பாளே அம்மாவாக வந்து ஆர்யாம்பா என்று பெயர் வைத்துக்கொண்ட மாதிரி த்வனிக்கிறது!

சிவனுக்கு குரு (அப்பா) சிவகுரு என்பதுபோல ஆர்யரான ஆசார்யாளுக்கு அம்பா (அம்மா) ஆர்யாம்பா என்றும் பொருத்தம் பார்த்தோம்.

இரண்டு பெரிய வம்சங்களில் வந்த தம்பதி.

---

அந்த வம்சங்களில் வந்த நம்பூதிரிகள் மலையாள தேசத்தில் வைதிக அநுஷ்டானங்களைப் புஷ்களமாக (நிறைவாக)ப் பண்ணிக்கொண்டு ஸதாசார ஸம்பன்னர்களாக வாழ்ந்து வந்தார்கள். அந்த வம்சத்துக்காரர்கள் மட்டுமில்லை;நம்பூதிரி ஸமூஹம் முழுதுமே அப்படி இருந்து வந்தது. மலைக்கு மறுபக்கம் நடக்கும் வ்யவஹாரங்களில் சிக்கிக்கொண்டு குழப்பம் அடையாமல் அவர்கள் ஒதுக்குப் புறமாக இருந்த தங்கள் தேசத்தில் நிச்சிந்தையாகப் பழைய வழிகளிலேயே போய்க்கொண்டிருந்தார்கள்.

அப்போதென்ன, 'சாஸ்த்ரமும் வேண்டாம், ஸம்ப்ரதாயமும் வேண்டாம்' என்று விட்டுவிட்டு, எல்லாம் கிரிசை கெட்டுக்கிடக்கிற தற்காலத்திலுங்கூட எங்கேயாவது கொஞ்சம் விதிவத்தாக அத்யயனம் நடந்து வைதிகஸ்ரீ இருந்துகொண்டிருக்கிறதென்றால் அது மலையாள தேசந்தான் என்றுதானே பார்க்கிறோம்? அங்கேதான் தற்போதும் அநேக நம்பூதிரி க்ருஹங்களில் கர்ப்பத்தைக் கூட்டி எட்டு வயஸில் பசங்களுக்கு உபநயனம் செய்து, அப்புறம் அஞ்சு ஆறு வருஷமாவது அவரவருக்கான (வேத) சாகையில் அத்யயனம் பண்ணுவதற்கு விடுகிறார்கள். இந்த (அத்யயன) காலத்தில் சாஸ்த்ரத்தில் சொல்லியுள்ளபடி ப்ரஹ்மசாரிப் பசங்கள் ஒரு கோவணத்தை மட்டும் கட்டிக் கொண்டு, தண்டம் வைத்துக்கொண்டு, மான்தோலில் படுத்துக்கொண்டு நியமமாக இருக்கிறார்கள். முதல் மந்த்ரியாயுள்ள கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சங்கரன் நம்பூதிரியோடு கூட இப்படி சாஸ்த்ரோக்தமாக அத்யயனம் பண்ணியவர்தான்!(சிரித்து) கம்யூனிஸ்ம் மாத்ரமென்ன?அதுவும் 'அபேதவாதம்'என்னும் ஸோஷலிஸத்தின் கெடுபிடி ரூபந்தான். 'அத்வைதம்' என்றாலும் 'அபேதம்'என்றாலும் ஒன்றுதான்!இவர் பேரும் ஆசார்யாள் பேராகவே இருக்கிறது!அதிலுங்கூட அத்வைதம்!

பிற்பாடு இங்கிலீஷ் படிப்புக்குப் போகிறவர்களும்கூட ஆரம்பத்தில் சில வருஷங்கள் அத்யயனம்

பண்ணாமலிருப்பதில்லை என்று ஸமீப காலம்வரை நம்பூதிரிமார்களிடையில்தான் நடந்து வந்திருக்கிறது.

இந்த இருபதாம் நூற்றாண்டின் புது நாகரிகக் கூத்தாட்டத்திலும்கூட இப்படி மலையாளத்தில் ஓரளவு வேதாத்யயனம் இருக்கிறதென்றால் இரண்டாயிரத்தைநூறு வருஷங்களுக்கு முந்தி எப்படி இருந்திருக்கும்?

அதனால்தான் அவதார பூமியாகப் பரமேச்வரன் அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தது. சாஸ்த்ர வழியை லோகத்துக்குக் காட்டுவதற்காக அவர் அத்யயனம், குருகுலவாஸம் செய்யணுமென்றால் அவை உள்ள இடத்தில் பிறந்து வளர்ந்தால்தானே முடியும்?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**பெற்றோரான புண்சாலிகள்**

மலையாளத்தில் மலபார் என்று சொல்லப்பட்ட பகுதியில் ஆல்வாய் ரயில்வே ஸ்டேஷனுக்குக் கிட்டே இருப்பது காலடி க்ராமம். திருச்சூருக்குத் தென் கிழக்கில் முப்பது மைல்.

அங்கே ஓடுகிற நதிக்கும் ஆல்வாய் என்றே பெயர். பெரியாறு என்பதும் அதுதான். ஸம்ஸ்க்ருதத்தில் பூர்ணா நதி என்றும் சூர்ணா நதி என்பதும் இரண்டு விதமாகச் சொல்வார்கள்.

அந்த க்ராமத்தில் நல்ல ஆசாரம், படிப்பு, செல்வ வசதி எல்லாம் வாய்ந்த ப்ராம்மணக் குடும்பத்தில் பிறந்தவர் சிவகுரு. வித்யாதிராஜா என்பவருடைய ஏக புத்ரர் அவர். பேருக்கு ஏற்ற மாதிரி வித்யாதிராஜர் எல்லா சாஸ்த்ரங்களும் அறிந்தவராயிருந்தார். சிவாவதாரத்தின் அப்பாப் பேர் 'சிவகுரு'என்று பொருத்தமாக அமைந்ததுபோலவே, 'ஸர்வஜ்ஞ'பீடம் ஏற்போகிறவரின் தாத்தாப் பேர் 'வித்யாதிராஜர்'என்று இருக்கிறது!வித்யை, அநுஷ்டானம்

ஆகியவற்றோடு ஸொத்து ஸ்வதந்திரங்களும் நிறையப் பெற்றிருந்த குடும்பம் அது.

பொதுவாகவே மலையாளத்தில் எவருக்கும் ஸுபிக்ஷத்திற்குக் குறைச்சலில்லை. அங்கே ஒவ்வொரு வீடும் ஒரு பெரிய தோப்பு. 'காவு'என்று சொல்வார்கள். சபரிமலை யாத்திரையினால் இப்போது 'ஆரியங்காவு'என்ற பேர் அடிக்கடி காதில் படுகிறது. இப்படி அநேகக் காவுகள். திருவானைக்கா, திருக்கோடிகா என்றெல்லாம் தமிழில் 'கா'என்று முடிப்பதுதான் மலையாளக் காவு. இப்படி ஒவ்வொரு வீடும் பெரிய பெரிய மரங்கள் கொண்ட காவுக்குள்ளேயே இருக்கும். அதன் எல்லையை 'அத்ருதி'என்பார்கள். ஒரு அத்ருதிக்குள்ளேயே அந்த வீட்டுக்கான ஸகல வஸ்துக்களும் விளைந்துவிடும். வெளியே போகவே வேண்டாம். ஒரு வேடிக்கை என்னவென்றால் மூலாதாரமான, stable food என்கிற, அரிசி வீட்டுத் தோப்பில் விளைவித்துக்கொள்வதில்லை. ஆனாலும் வீட்டிலே விளைகிற மிளகை 'எக்ஸ்சேஞ்ஜ்'(பண்டமாற்று) பண்ணியே அரிசி ஸுலபமாகப் பெற்றுவிடலாம். மற்றபடி அத்ருத்திக்குள்ளேயே வாழை, தென்னை, பலா முதலான மரங்கள், பூசணி, காராகருணை, மரத்தின் மேலேயே படரவிட்ட மிளகுக் கொடி, எல்லாம் இருக்கும். நாள்பட்டுக் கெட்டுப் போகாமல் நேந்திரங்காயையும் கருணைக் கிழங்கையும் வறுத்து, பூசணி வடாம் பண்ணி உரி கட்டிப்போட்டு வைத்து விட்டார்களென்றால், மூன்று நாலு மாஸம் விடாமல் மழை பெய்தாலும் சாப்பாட்டு வஸ்துக்களுக்காக வெளியில் போகவேண்டியதில்லை. ஸௌக்யமாக ஆத்தோடு 'மானேஜ்'செய்துகொண்டு விடுவார்கள்.

அலையாமல் திரியாமல் இப்படி வீட்டிலேயே இருந்து கொண்டிருக்கலாம் என்றால் நன்றாக அத்யயன, அநுஷ்டானங்கள் செய்து வரலாம்தானே?

இந்த மாதிரி எல்லாவித ஸௌகர்யமும் பெற்று, ஆர்யாம்பா என்ற உத்தம ஸ்தரீயைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு சிவகுரு என்ற ஸத்ப்ராமணர் இருந்துவந்தார். இவர் 'கைப்பள்ளி மனா'வைச் சேர்ந்தவரென்றும், அந்த அம்மாள்

'மேல்பாழூர் மனா'என்பதைச் சேர்ந்தவளென்றும் அந்தப் பக்கங்களில் சொல்கிறார்கள். எர்ணாகுளத்திலிருந்து கொல்லம் போகிற வழியில் மேல் பாழூர் மனை என்று இப்போதும் இருக்கிறது.

அந்த தம்பதி இரண்டு பேரும் ஈச்வர பக்தி நிரம்ப உடையவர்கள். நல்ல சீலத்தோடும், ஆசாரத்தோடும் வாழ்க்கை நடத்தி வந்தார்கள். அவர்களுக்கு எல்லாமிருந்தும் பெரிய குறையாகப் புத்ர பாக்யம் மட்டும் இல்லாமலிருந்தது. இப்படியிருந்தால்தானே அவர்கள் அவதாரம் ஏற்படுவதற்குத் தேவையான இரண்டாவது பெடிஷனைக் கொடுக்கமுடியும்?அதைத் தொடர்ந்து அவதாரமும் ஏற்படமுடியும்?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**திருச்சூரில் வேண்டுதல் ; க்ஷேத்ரச் சிறப்பு**

ஸத்புத்ரன் பிறக்கவேண்டுமென்பதற்காக அந்த இரண்டு பேரும் திருச்சூருக்குப் போய் ஸ்வாமிக்கு ப்ரார்த்தனை செய்துகொண்டு பஜனம் இருக்கலானார்கள்.

திருச்சூர் வ்ருஷாசலம் என்று பேர்பெற்ற மஹா சிவ க்ஷேத்ரம். வ்ருஷம் என்றால் நந்திகேச்வரர். ரிஷபம் என்பதும் வ்ருஷம் என்பதும் ஒன்றேதான். வ்ருஷபாரூடரான ஸ்வாமி நந்தி ஒரு மலை ரூபத்திலிருக்கும் இங்கு மலைக்கு மேலே வீற்றுக் கொண்டிருக்கிறார். நந்தி பெரிய ரிஷப ரூபத்திலும் அந்தக் கோவிலில் இருக்கிறார். மலையாளத்திலுள்ள சிவாலயங்களில் மிகவும் முக்யமானதும் பெரியதும் திருச்சூர் ஆலயம்தான். ஊருக்கே நடுநாயகமாக அது அமைந்திருக்கிறது. பெரிய மைதானத்துக்கு மத்தியில் பிரம்மாண்டமான மதில்களோடு உள்ள கோவில். பிற்பாடு மைதானமாகிவிட்டாலும் ஆதியில் இந்த இடமும் ஒரு "காவு"வாகத்தான் இருந்திருக்கிறது ஒரே தேக்கு மரமாக அங்கே இருந்திருக்கிறது. இப்போதும் அந்த இடத்திற்கு

'தேக்கிங்காடு'என்று பெயர் ஒட்டிக்கொண்டிருக்கிறது!ரிஷபமலை என்பதும் மலையென்று சருகலாக ஏறிப்போகிறமாதிரித் தெரியாது. மண்ணை வெட்டிக் கொட்டி ஸமமாகச் செய்தாற்போல அங்கே வ்ருத்தாகாரமாக (வட்டவடிவமாக) பூமி அமைந்திருக்கும்.

வடக்குன்னாதர் என்று ஜனங்கள் சொல்கிற வ்ருஷாசலேச்வரர், 'ஸ்ரீகோவில்'என்று மலையாளத்தில் சொல்லப்படும் ப்ரதானமான ஸந்நிதியில் இருப்பார். அந்த தேசத்தில் சதுரமாக ஸந்நிதி அமைத்து ஒன்றுக்கு மேல் ஒன்று அடுக்குக் கூரைகளாக ஓடு வேய்ந்து கோயில் கட்டுவது ஸஹஜமாயிருந்தாலும் இந்த ஸந்நிதி வட்டமாகக் கட்டப்பட்டு, குடை போன்ற ஒரே தளக் கூரையுடன் இருக்கிறது. இந்தக் கோவிலிலேயே சங்கரநாராயணருக்கும் ராமருக்கும் ஸ்ரீகோயில்கள் இருக்கின்றன. இவற்றின் சங்கரநாராயணர் ஸந்நிதியும் வ்ருத்தாகாரமானது (வட்டமானது). ஆனால் அது இரண்டு தளம் கொண்டது. ராமர் ஸந்நிதியோ இரட்டைத் தளத்துடன் சதுரமாக இருக்கிறது. சிவன் கோவிலில் இப்படி விஷ்ணு ஸம்பந்தமான ஸந்நிதிகள் இருப்பது கேரளத்தில் ஸஹஜமே. இது ஆசார்யாள் நிலை நாட்டிய தர்சனாத்வைதத்துக்கு-ஸமய ஸமரஸத்துக்கு-ஏற்றதாக இருக்கிறது. நாராயண ஸ்மரணத்துடனேயே கார்யங்களைச் செய்துவந்த சங்கரரின் அவதாரத்திற்காக வேண்டிக்கொண்ட கோவிலில் சங்கரநாராயணர் இருப்பதும் பொருத்தந்தானே?ஸ்வாமி ஸந்நிதிக்குப் பின்பக்கம் அம்பாள் ஸந்நிதி. 'பார்வதி'என்றே பெயர். அது தாரு மூர்த்தி (மரத்தாலான திருவுருவம்.)

மத ஸம்பந்தமான நாட்டிய நாடகங்கள் நடத்துவதற்கென்றே மலையாளக் கோவில்களில் 'கூத்தம்பலம்'என்ற மண்டபங்கள் உண்டு. திருச்சூர் கூத்தம்பலம்தான் அவற்றில் ரொம்பவும் புகழ் படைத்தது. மரவேலைப்பாடு மிக்கதான அது இருக்கிறது.

திருச்சூர் என்றவுடன் 'திருச்சூர் பூரம்'என்பதாக ஏகப்பட்ட யானைகளில் அநேக தெய்வ மூர்த்தங்கள் எதிரும் புதிருமாக அணிவகுத்து நிற்கும் உத்ஸவம் நினைவுக்கு வரலாம்.

ஆனால் அதற்கும் திருச்சூர் வ்ருஷாசலேச்வரருக்கும் ஸம்பந்தமில்லை என்றால் ஆச்சர்யமாயிருக்கும். இந்தக் கோயிலுக்குப் பக்கத்திலேயேதான் தேக்கிங்காட்டில் அந்த உத்ஸவம் நடந்தாலும் இந்த ஸ்வாமி அதில் கலந்துகொள்வதில்லை. அண்டைப்புறக் கோவில்களிலிருந்து வரும் அம்பாள்கள் தான் பூர விழாவில் கலந்துகொள்வது. இந்தக் கோவிலுக்கு கிழக்கே பார்மேகாவு பகவதி கோவில் இருக்கிறது. வடக்கே திருவம்பாடி க்ருஷ்ணன் கோவிலிலும் ஒரு பகவதி இருக்கிறாள். இந்த இரண்டு பகவதிகள் ஆளுக்கொரு யானை கோஷ்டியுடன் பவனி வந்து நடப்பதுதான் பூர உத்ஸவம்.

அந்த யானைகள் வ்ருஷாசலேச்வரர் ப்ராகாரத்துக்குள் நுழைந்து ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டுதான் வெளியிலுள்ள உத்ஸவ பூமிக்கு வரும். ஸ்வாமி உத்ஸவ மூர்த்தியாகப் போய் அதில் கலந்துகொள்வதில்லை. சிவராத்ரி உத்ஸவம்தான் அவருக்கு உண்டு. ரொம்ப விமரிசையக நடக்கும். அப்போதுங்கூட உத்ஸவ மூர்த்தி வெளியே வீதி உலா போவதென்பது கிடையாது.

இதைச் சொல்லும்போது இன்னொன்று நினைவு வருகிறது. ஸ்வாமிக்குப் பூஜை பண்ணும் அர்ச்சகர்களும் அவர்களுடைய முறைக்காலம் ('டெர்ம்') முடியும் வரையில் கோவிலைவிட்டு வெளியில் போகமுடியாது. ஒவ்வொரு அர்ச்சகருக்கும் ஒவ்வொரு டெர்ம் வரும். அந்தக் காலம் பூராவும் பூர்ண ப்ரஹ்மசர்ய நியமத்துடன் கோவிலுக்குள்ளேயேதான் ஈச்வர ஸ்மரணத்துடன் வஸித்துவருவார். முறை இன்னொருத்தர் கைக்கு மாறின பின்தான் அவர் வெளியிலே வருவது, வீட்டுக்குப் போவது. இம்மாதிரி ஆசார நியமம்தான் மலையாளத்துக் கோவில்களில் ஸாந்நித்யத்தை நன்றாகக் காப்பாற்றி வருகிறது.

திருச்சூர் கோவிலில் ஒரு விசேஷம் அங்கே மஹாலிங்கத்துக்கு எப்பொழுதும் சுத்தமான பசு நெய்யால் அபிஷேகம் பண்ணிக்கொண்டேயிருப்பது. இப்படி ஆயிரம் பதினாயிரம் வருஷமாகப் பண்ணிப் பண்ணி லிங்கமே தெரியாமல் ஒரே நெய்ப் பாறையாகத்தான் கர்ப்பக்ருஹத்துக்குள் தெரியும். நல்ல வெயில் காலத்திலும்,

கிட்டத்திலேயே நிறைய தீபங்கள் எரிந்துகொண்டிரு ந்தபோதிலும் நெய் உருகுவதில்லை!ஹிமலாயத்தில் சுற்றிலும் பனிப்பாறைகளுக்கு நடுவில் வாஸம் செய்யும் ஸ்வாமி இங்கே நெய்ப்பாறையில் அப்படியே புதைந்து வாஸம் பண்ணணுமென்று தீர்மானம் செய்துகொண்டிருப்பார் போலிருக்கிறது!பனி மலைக்குப் பதில் நெய் மலை. இன்னொரு ஆச்சர்யம் இத்தனை நெய் குன்றாகக் குவிந்திருந்தும் ஒரு ஈ, ஒரு எறும்பு அங்கே பார்க்க முடியாது!

மலையாள தேசத்தில் ஆயுர்வேத சிகித்ஸை நிறைய நடக்கிறதல்லவா?அதில் பலவித ரோகங்களுக்கு 'புராதன க்ருதம்' என்பதான பழம் நெய்யை மருந்துச் சரக்காகச் சொல்லியிருக்கிறது. திருச்சூர் கோவிலில் ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட நெய்கூடக் கிடைப்பதால் மலையாள வைத்யர்கள் அங்கே போய்தான் புராதன க்ருதம் வாங்கிக் கொள்கிறார்கள்.

இப்படிப்பட்ட க்ஷேத்ரத்திற்குத்தான் போய் சிவகுரு, ஆர்யாம்பாள் என்ற தம்பதி பஜனம் இருந்தார்கள். பஜனை, பஜிப்பது என்று சொல்வதெல்லாம் பக்தி பண்ணுவது என்பதையே குறிக்கும் வார்த்தைகள். 'பஜ்'என்ற தாதுவிலிருந்துதான் பஜனை, பக்தி என்ற இரண்டு வார்த்தைகளும் வந்திருக்கின்றன. பஜனம் என்றால் ஸேவை செய்வது. குறிப்பாக 'பஜனமிருப்பது'என்று சொன்னால், குறிப்பிட்ட ஒரு உத்தேசத்தை வேண்டி ஒரு புண்ய க்ஷேத்ரத்திற்குப் போய் ஒரு மண்டலம், இரண்டு மண்டலம் அங்கே இருந்து கொண்டு ஜபம் - பாராயணம் செய்வது, ப்ரம்மசர்யம் முதலிய நியமங்களோடு தினமும் புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து ஸ்வாமி தர்சனம் பண்ணுவது, அநுமதிக்கப்பட்ட ஆலயங்களில் ஸந்நிதியிலேயே நித்திரை பண்ணுவது என்று அர்த்தம். உத்தேசப் பூர்த்தி பற்றி ஸ்வப்னத்திலே ஸ்வாமி ஆஜ்ஞை கிடைக்கும். நம்பிக்கையிருந்தால் ஸங்கேதமாகவாவது கிடைக்கும்.

இவர்கள் வ்ருஷாசலத்தில் புத்ரனை உத்தேசித்து பஜனமிருந் தார்கள். பக்தி ச்ரத்தையுடன் வேண்டியபடி இருந்தார்கள்.

---

தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

## வரப் பிரதானம்

ஸ்வாமி ஒரு ராத்ரி சிவகுருவின் ஸ்வப்னத்தில் தோன்றினார். "புத்ர வரம் தருகிறேன்!" என்று சொல்லிவிட்டு, அவருடைய மனஸ் பக்குவத்தைப் பரீக்ஷிபார்ப்பதற்காக வரத்தில் இவருக்கும் choice தருவதாகக் கண்டிஷன் போட்டுக் கொடுத்தார். "உனக்கு நூறு பிள்ளை வேண்டுமா?ஒரே பிள்ளை வேண்டுமா?நூறு பிள்ளைகளானால் அவர்கள் தீர்க்காயுஸுடன் இருப்பார்கள். ஒரே பிள்ளையானால் அல்ப காலத்தில் ஆயுஸ் முடிந்துபோகும். இன்னொன்று: அந்த நூறு பிள்ளைகள் புத்தியில்லாத மண்டுக்களாக இருப்பார்கள். ஒரே பிள்ளையாயிருந்தாலோ மஹா புத்திமானாக, ஸர்வஜ்ஞனாகவே, இருப்பான். எப்படி வேண்டும்?"என்று கேட்டார்.

தீர்க்காயுஷ்மான்களாக நூறு பிள்ளைகளா, அல்பாயுஸ்காரரான ஒரு பிள்ளையா என்று மாத்திரம் கேட்டிருந்தால் எதைச் 'சூஸ்' பண்ணுவதென்ற குழப்பமே இருக்காது. ஒரே பிள்ளை, அதற்கும் அல்பாயுஸ் என்றிருந்தால் யார்தான் 'சூஸ்'பண்ணுவார்கள்?ஸ்வாமியோ அதோடு முடிக்காமல், நூறானால் முட்டாள்கள், ஒன்றானாலோ மஹாமேதை என்றும் கண்டிஷன் போட்டுப் பரீக்ஷைவைத்துவிட்டார்!

சிவகுரு உடனே, "என் பத்னியின் விருப்பத்தையும் தெரிந்துகொண்டு, கலந்தாலோசித்துச் சொல்கிறேன்"என்றார்.

இதிலிருந்து அந்தக் காலத்தில் ஸ்த்ரீகளுக்குப் புருஷர்கள் கொடுத்திருந்த ஸ்தானத்தைப் புரிந்துகொள்ளலாம்.

அந்த அம்மாளை எழுப்பி அவர் விஷயத்தைச் சொன்னார். அவள், "எனக்கும் அப்படியே ஸ்வப்னம் வந்தது. நீங்கள் எழுந்த பிறகு கேட்டுச் சொல்வதாகச்

சொல்லிவிட்டேன்"என்றாள்.

இரண்டு பேரும் கலந்தாலோசித்தார்கள். ஸ்வாமியே ப்ரஸன்னமாகி, வரம் கொடுத்து, தங்கள் அபிப்ராயப்படியே செய்வதாகச் சொன்னாரென்பதில் இரண்டு பேருக்கும் ரொம்ப அடக்கம் உண்டாகி விட்டது. 'அவர் மனஸ் எப்படியோ அப்படிப் பண்ணட்டும் என்றில்லாமல் பிள்ளை வேணும் என்று கேட்டதே தப்போ என்னவோ?அது போதாதென்று இப்போது எப்படிப்பட்ட பிள்ளை என்று வேறு நாம் முடிவு பண்ணி அந்தப்படி அவர் செய்யணுமென்றால் இன்னும் தப்பாக அல்லவா தோன்றுகிறது?' என்று நினைத்தார்கள்.

"இப்படியெல்லாம் கேட்டு எங்களை சோதனை பண்ணக் கூடாது. ஸ்வாமிக்கு எப்படி அபிப்ராயமோ அப்படியே செய்யணும்"என்று சொல்லி நமஸ்காரம் பண்ணினார்கள்.

அவதரிக்க வேண்டுமென்று ஸ்வாமி திவ்ய ஸங்கல்பம் செய்துவிட்டபின் இவர்களுடைய choice என்று ஒன்று எப்படி அதற்கு மாறாக ஏற்படமுடியும்?ஆனாலும் எல்லாம் மாநுஷமாக நடக்கிறாற்போலவே நடத்திக்காட்ட வேண்டும் என்று ஸ்வாமி நாடகமாடுவதில் இப்படி விளையாடினார். ஸதிபதி ஒற்றுமை எப்படி, பக்தி உள்ளத்தின் தன்மை எப்படி என்றெல்லாமும் உலகத்துக்குத் தெரிவிக்க இப்படி வரப்ஸாதத்திலேயே 'கண்டிஷன்', 'சாய்ஸ்'என்று வைத்து விளையாடினார்.

அவர் இஷ்டப்படி என்று இவர்கள் விட்டவுடன் ஸந்தோஷமடைந்து, "ஒரே புத்ரனை அநுக்ரஹிக்கிறேன். நானே அப்படி அவதாரம் செய்கிறேன். ஆனால் எட்டு வயஸூதான் இருப்பேன்" என்று சொல்லி ஸ்வாமி மறைந்து விட்டார்.

தராசில் ஒரு தட்டில் நூறு பிள்ளை, மறு தட்டில் ஒரு பிள்ளை என்றால் நூறுக்குத்தான் எடை ஜாஸ்தி. ஆனால் அது பௌதிகத்தில்தான். அதைவிட புத்தியின் எடைக்குத்தான் முக்யம். அப்படிப் பார்த்தால் நூறு பிள்ளைகளும் புததி பலத்தில் நூறு ஸைபர்தான். ஸைபரில் ஒன்றானால் என்ன,

நூறானால் என்ன?ஒரு பிள்ளையோ ஸர்வஜ்ஞன் என்பதால் புத்தியில் 'இன்ஃபினிடி'! எடை போடவே முடியாத அத்தனை புத்தி பலம்!இப்படி ஸைபர் ஒரு தட்டு, இன்ஃபினிடி (அனந்தம்) எதிர்த்தட்டு என்றால் கொஞ்சங் கூட ஸரியாயில்லையே என்றுதான், வயஸில் எடை கட்டும் போது, 100 பிள்ளைX100 வருஷம் என்பதற்கு எதிராக ஒரே பிள்ளைXஎட்டே வயஸு என்றும் ஸ்வாமி வைத்தார்!

புத்ர ப்ராப்தி, அதிலும் ஸ்வாமியே அப்படி வரப் போகிறார்-என்பதில் அந்த தம்பதி ஸந்தோஷப்பட்டுக் கொண்டு, ஆயுஸ் விஷயமாக விசாரப்படாமல், 'அப்புறம் எப்படிச் செய்கிறாரோ, செய்யட்டும்' என்று தேற்றிக் கொண்டார்கள். பஜனத்தைப் பூர்த்தி பண்ணிக் காலடிக்குத் திரும்பினார்கள்.

பஜனத்தை சுபமாக முடிக்க ஸமாராதனை பண்ணுவது வழக்கம். அப்படிப் பண்ணினார்கள். ப்ராம்மண சேஷத்தை ஆர்யாம்பாள் புஜிக்கும்போது ஐச்வரமான தேஜஸ் அவளுடைய வயிற்றில் புகுந்தது.

அது கர்ப்பமாக ஆகி ஆசார்யாளின் அவதாரம் ஏற்பட்டது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## ஜயந்திச் சிறப்புகள்

பரம புண்யமான அந்த அவதார காலம் ஒரு நந்தன வருஷத்தில் வைசாக சுத்த பஞ்சமியில் அபிஜித் முஹூர்த்தத்தில் ஏற்பட்டது. வைசாக சுத்த பஞ்சமி என்றால் வைகாசி மாஸத்து வளர்பிறைப் பஞ்சமி. அதாவது சித்திரை மாஸ அமாவாஸ்யை ஆனவுடன் வரும் பஞ்சமி. அபிஜித் முஹூர்த்தம் என்பது ஸூர்யன் நடு உச்சியிலிருக்கும் மத்யான வேளை. ஜயப்ரதமான (வெற்றி வழங்கவல்ல) முஹூர்த்தம். அன்றைக்குத் திருவாதிரை நக்ஷத்ரம்-பரம சிவனை அதி தேவதையாகக் கொண்ட நக்ஷத்ரம். ராமசந்த்ர

மூர்த்தியைப்போலவே ஐந்து க்ரஹங்கள் உச்சமாக இருக்கும் அபூர்வமான காலத்தில் ஆசார்யாள் அவதாரம் பண்ணினார். (ராமர் மாதிரியே ஆசார்யாளும் புனர்வஸூ நக்ஷத்ரம் என்றும் அபிப்ராயமிருக்கிறது. வைசாக சுத்த பஞ்சமி திருவாதிரை அல்லது புனர்வஸூ என்ற இரண்டிலொரு நக்ஷத்திரத்தில்தான் வருவதைப் பார்க்கிறோம்.)

ஸ்ரீ சங்கர ஜயந்திப் புண்ய காலத்துக்கு ஸமமாக எதுவுமில்லை. இப்படி நான் சொன்னால், "ப்ரக்ருத விஷயம் (தற்போது எடுத்துக்கொண்டுள்ள விஷயம்) ஆசார்ய சரித்ரமானதால் அதை விசேஷமாக ஸ்தோத்ரிக்கத்தான் வேண்டும் என்பதற்காக ஒரேயடியாய் உசத்தி வைத்துச் சொல்கிறாரா?இல்லாவிட்டால் நாமெல்லாம் ஆசார்யாளின் ஸம்ப்ரதாயத்தில் தானே வந்தவர்கள் என்பதால் சொல்கிறாரா?அல்லது அவருடைய மடத்தில் அவருடைய பெயரை வைத்துக்கொண்டுதானே இவர் ஸ்வாமிகளாக ஊர் கூட்டிக் கொண்டிருக்கிறார் என்பதனால் சொல்கிறாரா?"என்று தோன்றலாம். அதாவது (ஸ்வய) அபிமானத்தால் தூக்கி வைக்கிறேனோவென்று தோன்றலாம்.

இப்படிப்பட்ட காரணங்களுக்காக அந்த ஜயந்திக்கு நான் உயர்வு கல்பித்துச் சொல்லவில்லை. கல்பனையே இல்லை! மிகையோ, ஸ்தோத்ரமோ இல்லை! வாஸ்தவத்திலேயே அதற்கென்று இருக்கும் உயர்வினால்தான், 'எல்லாப் புண்ய காலங்களிலும் நம்முடைய ஆசார்யாளின் ஜயந்திதான் பரம புண்ய காலம்'என்று சொல்கிறேன். புண்ய காலங்கள் எவ்வளவோ இருக்கின்றன. சிவராத்ரி, கோகுலாஷ்டமி, ஸ்ரீராம நவமி, நரஸிம்ஹ ஜயந்தி, ஸரஸ்வதி பூஜை, விஜய தசமி, விநாயக சதுர்த்தி, ஸ்கந்த ஷஷ்டி, இன்னம் உத்தராயண புண்ய காலம், தக்ஷிணாயன புண்யகாலம் என்றெல்லாம் எத்தனையோ இருக்கின்றன. எல்லாமே உத்க்ருஷ்டமானவை (உயர்வு பொருந்தியவை)தான். என்றாலும் ஸ்ரீசங்கர ஜயந்திதான் ஸர்வோத்க்ருஷ்டமானது (எல்லாவற்றையும்விட உயர்வுபொருந்தியது) என்பது வாஸ்தவம்.

எப்படி?

மற்ற புண்ய காலங்கள் சொன்னேனே, வேதங்களாலேயும் புராணங்களாலேயும் அநேக சாஸ்த்ரங்களாலேயும் ஸித்தமான அந்தந் புண்ய காலங்களெல்லாம் தொன்று தொட்டு யுகங்களாக அநுஷ்டிக்கப்பட்டு வந்திருப்பவை இந்தப் புண்ய காலம் (ஸ்ரீ சங்கர ஜயந்தி) அவற்றுக்கெல்லாம் ரொம்பவும் பிற்பாடுதான் உண்டானது. ஆனாலும் இதுவே ஸர்வோத்க்ருஷ்டமானது என்றால் எப்படி?

ஸரி, இந்தப் புண்ய காலம் எதற்காக உண்டாயிற்று?

வேதங்களையும் புராணங்களையும் சாஸ்த்ரங்களையும் புனருத்தாரணம் பண்ணுவதற்காகத்தான்.

இந்தப் புண்யகாலம் (ஸ்ரீ சங்கராவதாரம்) ஏற்படாமலிரு ந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?

பௌத்தம் முதலான மதங்களும், ஈச்வர பக்தியைச் சொல்லாத ஸாங்க்யம், மீமாம்ஸை போன்ற மதங்களும் தான் ஒரேயடியாகப் பரவியிருக்கும். அப்படிப் பரவியிருந்தால் அப்புறம் சிவராத்ரியும், ஸ்ரீராம நவமியும், மற்ற புண்ய காலங்களும் யார் கொண்டாடியிருப்பார்கள்? அத்தனை புண்ய காலங்களையும் அவைதிகம் அடித்துக் கொண்டு போயிருக்கும். ஏறக்குறைய அப்படிப்பட்ட கட்டத்தில் மற்ற எல்லாப் புண்ய காலங்களும் தத்தளித்துக் கொண்டிரு ந்தபோதுதான் இந்த ஒரு புண்ய காலம் ஏற்பட்டது! ஏற்பட்டு வேத வழியை மறுபடி நன்றாக நிலைநாட்டி அந்தப் புண்ய காலங்கள் அத்தனைக்கும் புத்துயிர் கொடுத்து அவற்றை நிலை நிறுத்திற்று!இன்றைக்கும் சிவராத்ரி, ஸ்ரீராம நவமி, கோகுலாஷ்டமி இத்யாதியை நாம் புண்ய காலங்களாகக் கொண்டாடுகிறோமென்றால் அதற்கு ஆசார்ய ஜயந்தி என்ற புண்ய காலம் ஏற்பட்டதுதான் காரணம். இந்த ஒரு ஜயந்தி இல்லையென்றால் எந்த ஜயந்தியுமே இல்லாமல் போயிருந் திருக்கும்! ஜயந்திகளையெல்லாம் ரக்ஷித்துக் கொடுத்த ஜயந்தியாக இருப்பது ஸ்ரீ சங்கர ஜயந்தியே என்பதால்தான் அதைப் புண்ய காலங்கள் அத்தனையிலும் விசேஷமானது என்றது!

ஜய சப்தம் ஆசார்யாளோடு விசேஷமாகச் சேர்ந்து "ஜய

ஜய சங்கர"என்று உலகமெல்லாம் முழங்குகிறதென்று சொன்னேன். அதில் இந்த ஜயந்தி விசேஷத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## விமரிசையாக விழாக் கொண்டாடுக

எல்லா ஜனங்களும் இந்த விசேஷத்தைப் புரிந்து கொண்டு ஆசார்ய ஜயந்தியை மஹோத்ஸவமாகக் கொண்டாடவேண்டுமென்று எனக்கு ஆசை. அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு பிழைப்பதனாலோ என்னவோ, அத்தனை ஜயந்திகளைவிடவும் விசேஷமாக, அவை எல்லாவற்றையும் தக்கி நிற்கச் செய்த இந்த ஜயந்தியைக் கொண்டாட வேண்டுமென்று எனக்கு இருக்கிறது!ஆசார்ய ஜயந்தி இல்லாவிட்டால் க்ருஷ்ண ஜயந்தி ஏது?ந்ருஸிம்ஹ ஜயந்தி, ராமநவமி எல்லம் ஏது?ராமாயணம் இருந்திருக்குமா கீதை இருந்திருக்குமா?

எனக்குப் பேராசை-அது நிறைவேறுமோ, இல்லையோ, சொல்லிவிடுகிறேன்: சங்கர ஜயந்தி என்று எங்கே நடந்தாலும் அங்கே ஜனங்கள் படையெடுத்துப் போய்ப் பிரஸாத விநியோகத்தை அஸாத்யமாக்கிவிடவேண்டுமென்று பேராசை!இதை நான் சொல்லிக்கொண்டே போனால் என்றைக்காவது நிறைவேறாதா?

எதற்காக் கொண்டாடணுமென்றால், கொண்டாட்டத்தால் அவருக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நமக்கேதான் ச்ரேயஸ். அவரை ஸ்மரிக்கிற புண்யம் ஏற்பட்டுச் சித்தமலம் போகும். நன்றியுணர்ச்சி என்பது மநுஷ்யனாகப் பிறந்தவனுக்கு அவச்யமோ இல்லையோ?'நன்றி மறவாமை' என்பதைத்தானே பெரியவர்களெல்லாம் மநுஷ லக்ஷணத்தின் உச்சியில் சொல்கிறார்கள்?ஆகையால், நமக்கு இடைக்காலத்தில் அடைப்பட்டுப்போன மோக்ஷமார்க்கத்தை

மறுபடியும் திறந்துவிட்டு, ஸநாதன தர்மத்தைப் புத்துயிரூட்டிக் கொடுத்து, சிவராத்ரி என்றும் ஸ்ரீஜயந்தி என்றும் ராமநவமி என்றும் பண்டிகைகள் கொண்டாடும் ஆனந்தத்தைக் கொடுத்தவரிடம் நன்றிக்கு அடையாளமாக அவருடைய ஜயந்தியைப் பண்டிகைகளிலெல்லாம் பெரிய பண்டிகையாகக் கொண்டாடவேண்டியது நியாயந்தானே? தற்போது இந்த ஜயந்தியின் மஹத்வம் போதிய அளவு ஜனங்களுக்கு உணர்த்தப்பட்டிருக்கவில்லை. அதனால் தனியாக எங்கேயாவது யாராவது கொண்டாடினால் பத்துப் பேர்கூடச் சேர்வதில்லை. மடத்தில் கொண்டாடினால் கூட்டம் சேர்கிறது. மக்கள்மேல் குற்றமில்லை. முக்யத்வத்தை எடுத்துச் சொல்லி உணர்த்தாதது எங்கள் தப்புத்தான்.

ஆழ்வார்களுக்கும், ராமாநுஜர், தேசிகர், மணவாள மாமுனிகள் முதலானவர்களுக்கும் பெருமாள் கோவில்களில் பிம்பம் இருக்கிறது. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மதாபிமானமும் நிறைய இருப்பதால் அந்த பெரியவர்களுடைய அவதார தினங்களில் ஆலய பிம்பங்களுக்கு விசேஷ பூஜை, புறப்பாடு, சாத்துப்படி என்று விமர்சையாகப் பண்ணுகிறார்கள். அப்பர், ஸுந்தரர் முதலான 63 நாயன்மார்களுக்கும், உமாபதி சிவம் முதலிய சைவ சமயாசார்யர்களுக்கும் இதே போல ஈசவரன் கோவிலில் பிம்பங்களிருப்பதால் அவர்களுக்கும் விழா நடந்துவிடுகிறது. வைஷ்ணவ ஸம்ப்ரதாயமாகவோ, சைவ ஸம்ப்ரதாயமாகவோ இல்லாமல், எல்லா ஸம்ப்ரதாயங்களுக்கும் மூலமாகவும், அவை யாவற்றையும் ஒப்புக் கொள்வதாகவும் உள்ள ஸ்மார்த்த ஸம்ப்ரதாயக்காரராக நம் ஆசார்யாள் இருப்பதால்.....இரண்டு கோவில்களிலேயும் அவருக்கு பிம்பமில்லை!வைதிக பூஜை உள்ளதாகவோ, அவரால் யந்த்ர ப்ரதிஷ்டை போன்ற ஏதோ ஒன்று செய்யப்பட்டு அவருடைய விசேஷ ஸம்பந்தம் உள்ளதாகவோ இருக்கிற ஒரு சில கோவில்களில் மாத்ரந்தான் ஆசார்ய பிம்பமிருக்கிறது.

---

## காஞ்சி மண்டலத்தின் விசேஷத் தொடர்பு

இதற்கு விலக்காக உள்ள ஒரே ஒரு இடம் காஞ்சீபுரம் தான். அந்த ஊர் மட்டுமில்லை;காஞ்சி மண்டலம் முழுதிலுமே ஆசார்யாளுக்கு பிம்பங்கள் இருக்கின்றன. காமாக்ஷிகோவிலில் தனி ஸந்நிதியுடன் பெரிய மூர்த்தி இருப்பதோடு ஏகாம்ரேச்வரர், வைகுண்டப் பெருமாள், வரதராஜா ஆகிய கோவில்களில்கூட ஆசார்ய பிம்பங்கள் இருக்கின்றன. இதில் இன்னும் விசேஷமாக வரதராஜா கோவிலில் தாயார் ஸந்நிதிக்குப் போகும் வழியிலுள்ள மண்டபத்திலுள்ள தூணில் வ்யாஸரும் அவருக்கு சிஷ்யராக ஆசார்யாளும் இருப்பதில் வ்யாஸர் ஒற்றை விரலைத் தூக்கிக் காட்டி 'அத்வைதம்தான் ஸத்யம்'என்று அடையாளம் தெரிவிக்கிறார்!பெரிய கோவில்களில் மாத்ரமில்லாமல் சிவாஸ்தானம், செவிலிமேடு என்னும் சிவலிங்க மேடு, புண்யகோடி ஆலயம், ஐராவதேச்வரர் கோவில் (இங்கேயும் வ்யாஸ சிஷ்யராக ரொம்பவும் யுவாவாக ஆசார்யாள் இருக்கிறார்) என்று பல இடங்களில் ஆசார்யாளின் பிம்பம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

காமாக்ஷியை ஸௌம்ய மூர்த்தியாக்கி ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டை, காமகோடி பீட ப்ரதிஷ்டை ஆகியன ஆசார்யாள் செய்தாரென்று இங்கே அவரை அம்பாளுடன் ரொம்பவும் ஸம்பந்தப்படுத்திச் சொல்லியிருப்பதற்கு ஏற்றாற்போல, இவற்றில் சில சில்பங்களில் தபஸ் காமாக்ஷிஎன்னென்ன ஆஸனங்களோடும் முத்ரைகளோடும் வழக்கமாக பொறிக்கப்படுவதுண்டோ அதே ஆஸனங்களோடும் முத்ரைகளோடும் ஆசார்யாளையும் பொறித்திருக்கிறது.

ஸாதாரணமாக ஆசார்யாளை அவருடைய நாலு ப்ரதான சிஷ்யர்களான பத்மபாதர் முதலானவர்களுடன் சேர்த்து நினைப்பதே வழக்காமாயிருந்தாலும் அவருடைய காஞ்சி வாஸத்தைச் சொல்லும் புஸ்தங்களில் அந்த நாலு பேருக்கு வேறேயான ஆறு சிஷ்யாளைச் சொல்லி அவர்கள் அவர் ஸ்தாபித்த ஷண்மதங்களில் ஒவ்வொன்றையும் தேசத்தில் நன்றாக ஸ்திரப்படுத்திவிட்டு, அவர் காஞ்சீபுரத்தில் தமது சரித்ரத்தின் கடைசி பாகத்தில் தம்முடைய மடத்திலிருந்த போது அவரிடம் வந்து தெரிவித்துக்கொண்டார்கள் என்று

இருக்கிறது. அதற்கேற்க அவருடைய காமாக்ஷிஆலய விக்ரஹத்தின் பீடத்தில் வழக்கமான நாலுக்குப் பதில் ஆறு சிஷ்யர்களின் உருவங்களிருக்கின்றன. ஸ்ரீமடத்துப் பூஜா க்ருஹத்திலும் அவருக்கு இரண்டு பக்கத்திலும் பக்கத்துக்கு மூன்று பேர்களாக மொத்தம் ஆறு சிஷ்யர்களின் உருவங்களைப் பார்க்கிறோம்.

காஞ்சியில் மாத்ரமின்றி மெட்றாஸ் வரை பூந்தமல்லி, பாப்பான் சத்திரம், மாங்காடு, திருவொற்றியூர் என்று பல இடங்களில் ஆசார்ய பிம்பங்களைப் பார்க்கிறோம்.

பொதுவாகக் கோவிலில் இடமே பெறாதவர் இங்கே மட்டும் இப்படி நிறையக் காணப்படுவது காஞ்சியில் அவர் முடிவாக வாஸம் பண்ணி ஸித்தியடைந்ததால் இங்கே அவருடைய நினைவு ஆழமாக நிலைத்துவிட்டதாலேயே எனலாம்.

ஆனாலும் பொது உண்மை கோவில்களில் ஆசார்யாள் பிம்பமில்லை என்பதே!அதனால்தான் ஊருக்கு ஊர், கோவிலுக்கும் கோவில் அவருக்கு ஜயந்தி உத்ஸவம் என்று இல்லாமல் ஆகிவிட்டிருக்கிறது!எவரால்தான் இந்த தேசத்தில் ஆலய வழிபாடே புத்துயிர் பெற்றதோ அவருக்கு மூர்த்தியுமில்லை, விழாவுமில்லை. ஆனாலும் அவருடைய ஆத்மசக்தி மஹிமையால் தேசம் பூராவிலும் 'ஆசார்யாள்'என்றாலே சங்கராசார்யாள்தான் என்று ஜனங்கள் கொண்டாடுகிறார்கள். அந்தக் கொண்டாட்டத்தை உரிய அளவுக்கு வ்ருத்தி பண்ணித்தரவேண்டியது எங்களுடைய-மடத்தினுடைய-கடமையாயிருக்கிறது.

ஆலய மூர்த்தியில்லாத ஆசார்யாளுக்கு ஸ்தூல மூர்த்தியாக இருப்பது அவர் ஸ்தாபித்த மடங்கள்தான். ராமாநுஜர் உள்பட நான் சொன்ன அந்த வைஷ்ணவ-சைவப் பெரியவர் எவருக்கும் அவரே ஸ்தாபித்ததாக மடம் கிடையாது. ஆலய மூர்த்திதான் இருக்கிறது.

அதனால் மடம்தான் ஆசார்ய ஜயந்தியை அதற்குரிய கௌரவத்தோடு கொண்டாடி ஜனங்களுக்கு பக்தியெழுச்சியை ஊட்ட வேண்டும்.

---

## காமாக்ஷி ஆலயத்தில் சங்கர ஜயந்தி

மடத்தோடேயே ஸம்பந்தப்பட்டது காஞ்சி காமாக்ஷிஆலயம். ஆசார்யாளுடைய சரித்ர ஸம்பந்தமும் விசேஷமாக உள்ள ஆலயம் அது. அதனால் அங்கே ஆசார்யாளுக்கு பிம்பம் இருக்கிறது. உயரமாகத் தனி ஸந்நிதி, சிலா விக்ரஹம், உத்ஸவ விக்ரஹம் எல்லாம் இருக்கின்றன. சிலா விக்ரஹம் பெரிய மூர்த்தியாக இருக்கிறது. அவ்வளவு பெரிசாக எந்த ஆசார்ய புருஷருக்குமே விக்ரஹம் இருப்பதாகத் தெரியவில்லை. புருஷாக்ருதி என்னும்படி, அதிலும் இந்த நோஞ்சான் காலத்துப் புருஷாச்ருதியாக இல்லாமல் ஆசார்யாள் இருந்த அந்தப் பூர்வகாலத்தின் த்ருடகாத்ரமான கம்பீர புருஷாக்ருதியில் அந்த விக்ரஹம் இருக்கிறது. அங்கே மாத்ரம் சங்கர ஜயந்தி உத்ஸவமும் நல்லமுறையில் கொண்டாடப்பட்டு வருகிறது.

ஜயந்தி உத்ஸவங்களைக் கொண்டாடுவதில் இரண்டு வகை உண்டு. கர்ப்போத்ஸவம் என்பது ஒன்று. ஜன்மோத்ஸவம் என்பது இன்னொன்று. ஜயந்திக்கு முன்னால் உத்ஸவம் ஆரம்பித்து ஜயந்தியன்று பத்தாம் நாள் உத்ஸவம் பூர்த்தியாகும்படிக் கொண்டாடுவது கர்ப்போத்ஸவம். பத்து மாஸ கர்ப்பத்துக்குப் பதிலாகப் பத்து நாள் உத்ஸவம். ஜயந்தியன்றே ஆரம்பித்து அப்புறம் பத்துநாள் உத்ஸவம் நடத்திப் புண்யாஹவாசன தினத்தில் முடிக்கிற மாதிரிப் பூர்த்தி செய்வது ஜன்மோத்ஸவம் எனப்படும்.

ஆசார்ய ஜயந்தியை கர்ப்போத்ஸவமாகப் பண்ணும் இடங்களில் சுக்ல பஞ்சமியான ஜயந்திக்குப் பத்து நாள் முந்தி என்றால், 'க்ருஷ்ண பக்ஷத்தில் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறதே, தேய்ப்பிறை அவ்வளவு ச்லாக்யமில்லையே' என்று நாலைந்து நாள் தள்ளி அமாவாஸ்யையன்று ஆரம்பித்துப் பஞ்சமியோடு முடிக்கிறார்கள்.

காஞ்சி காமாக்ஷிகோவிலில் ஜன்மோத்ஸவமாகச் கொண்டாடுகிறார்கள். ஜயந்தியன்று ஆரம்பித்துப்

பூர்ணிமையன்று பூர்த்தி செய்கிறார்கள். அந்த உத்ஸவம் தேவஸ்தானத் திட்டத்திலேயே நடத்தப்பட்டு வருவது. வேறெங்கேயும் இப்படி தேவஸ்தானக் கட்டளையாக ஆசார்யாளுக்கு உத்ஸவமில்லை;தனிப்பட்ட உபயதார்கள் செய்யும் உத்ஸவம்தான் நடக்கிறது.

மற்ற ஆசார்ய புருஷர்களுக்கும் அடியார்களுக்கும் அநேக ஆலயங்களில் நடக்கிறதுபோல நம் ஆசார்யாளுக்கு நடக்காத குறைக்குக் கொஞ்சம் ஈடு செய்வதாகக் காஞ்சீபுரத்தில் மாத்ரம் விமர்சையோடு உத்ஸவம் நடக்கிறது. ப்ரதி தினமும் பகவத்பாதாளின் உத்ஸவ விக்ரஹத்தைப் புறப்பாடு செய்து அம்பாள் ஸந்நிதியான காயத்ரி மண்டபத்துக்கு வெளிப்பக்கம் பீடம்போட்டு எழுந்தருளப் பண்ணி அவர் பண்ணிய ஸ்தோத்ரங்களுக்குள் மிகவும் உயர்ந்ததான 'ஸௌந்தர்ய லஹரி'யிலிருந்து தினம் பத்து ஸ்லோகம் வீதம் அர்ச்சகர்கள் அர்ப்பணம் பண்ணுகிறார்கள். ஒவ்வொரு ஸ்லோகத்துக்கும் ஒரு தீபாராதனை செய்கிறார்கள். பத்து நாளில் இப்படி ஸௌந்தர்ய லஹரியின் நூறு ஸ்லோகங்களும் ஓதப்பட்டு அம்பாளுக்கு அர்ப்பணமாகப் பாராயணம் செய்யப்படுகின்றன. கடைசி நாளில் ஒரு வித்யாஸம்:வெளி ப்ராகாரத்தில் சுக்ரவார மண்டபம் என்று இருக்கிறது. விடாயாற்றி உத்ஸவம் முதலானவற்றில் அம்பாளை அங்கேதான் எழுந்தருளச் செய்து தீபாராதனை நடத்துவார்கள். ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவத்தின் பத்தாவது தினத்தில் இந்த மண்டபத்திலேயே உத்ஸவ காமாக்ஷி, உத்ஸவ ஆசார்யாள் இரண்டு பேரையும் எழுந்தருளப் பண்ணிக் கடைசிப் பத்து ஸ்லோகம் சொல்லிப் பூர்த்தி செய்கிறார்கள். ஆசார்யாளுக்கு அம்பாள் ப்ரஸாதமாகப் பரிவட்டம் கட்டி மரியாதைகள் செய்து உத்ஸவத்தை முடிக்கிறார்கள்.

இதுபோல ஊர் உலகம் பூராவும் அவருக்கு நடக்க வேண்டும்.

---

## மனத்தின் அர்ப்பணமும் மௌன மனனமும்

அது நடக்கிறபோது நடக்கட்டும். இப்போதைக்கு என்ன பண்ணணுமென்றால் ஆசார்ய ஜயந்தியன்று நம் மனஸை ஆசார்யார்ளுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். த்ரவ்யத்தால், தேஹத்தால் உத்ஸவம் பண்ணுவதற்கு முந்தி மனஸினால் பண்ண வேண்டும். த்ரவ்யத்தையும், தேஹத்தையும் அர்ப்பித்துப் பெரிசாக உத்ஸவம் பண்ணும் போதுங்கூட மனஸைப் பூர்ணமாக அவருக்குக் கொடுத்து சரணாகதி பண்ணுவதே பெரிய பூஜை. இப்படிச் சொல்வதால் வெளி உத்ஸவம் வேண்டாமென்று அர்த்தமில்லை. முழு மனஸோடுகூட வெளி உத்ஸவமும் செய்யணும்.

இப்போது கொஞ்ச நாழி மனஸை ஆசார்யாளுக்கென்றே கொடுப்போம். அவதார மஹிமை, அது, இது என்று நிறையப் பேசியும், பேசியதைக் கேட்டும் ஸந்தோஷப்படுவதைவிட, முடிந்தமட்டும் மனஸை ஆசார்யாளிடம் அர்ப்பணம் பண்ணுவோம். அதுதான் பெரிய ஸந்தோஷம். மனஸில் அவரைக் கொண்டுவந்து நிறுத்திக்கொண்டு கொஞ்சம் பார்த்தோமானால் அதுவே பெரிய ஸந்தோஷம். நம்முடைய தாபமெல்லாம் சமனமாகிற பெரிய சாந்தி அது தான்.

பகவத் ஸ்மரணத்தைவிட பகவத்பாத ஸ்மரணம் அதிக சாந்தி!நல்லது, கெட்டது எல்லாவற்றுக்கும் காரணமாயிருந்துகொண்டு, கெட்டதற்காக நம்மை தண்டிக்கவும் செய்யும் பகவானைவிட, நல்லதே செய்துகொண்டு, நாம் எத்தனை கெட்டுக் குட்டிச் சுவராயிருந்தாலும் நம்மை உத்தரிப்பதற்கென்றே வந்த பகவத்பாதாளை ஸ்மரிப்பதே நமக்குப் பெரிய சாந்தி.

'எப்படி மனஸை அர்ப்பிப்பது, அதாவது அது கண்ட கண்டதுகளை நினைக்காமல் அவரையே எப்படி மனஸில் கொண்டுவந்து நிறுத்திக்கொள்வது?' என்றால் ஸுலபமாக வழி சொல்லித்தருகிறேன். " **ஹர ஹர சங்கர, ஜய ஜய சங்கர** "என்று மனஸுக்குள்ளேயே சொல்லிக் கொள்வதுதான் வழி. அதன் வழியாக அவர் மனஸுக்குள்

வந்துவிடுவார். "வையகம் துயர் தீர" ஞானஸம்பந்தர் காட்டிக்கொடுத்த வழி ஹர நாம உச்சாரணந்தானே?

**ஆழ்க தீயதெல்லாம் ! அரன் நாமமே**

**சூழ்க, வையகமுந் துயர் தீர்கவே !**

அதனால் "ஹர ஹர"என்று சங்கர நாமாவோடு சேர்த்துச் சொல்வோம். அவர் திக்விஜய சங்கரராக இருந்ததால் "ஜய ஜய"என்றும் சேர்த்துச் சொல்வோம். வேறே உபந்நியாஸம் வேண்டாம். புத்தி ஸாமர்த்தியங்கள் வேண்டாம்.

"எதற்கு வ்ருதாவாக (வீணாக) சாதுர்ய வாதங்கள் பண்ணிக் கண்டக்ஷோபம் (தொண்டைக்கு உபத்ரவம்) விளைவித்துக் கொள்கிறாய்!நீ புத்திசாலி இல்லையா?பேசாமல் சம்புவின் பாத பத்மங்களை நினைத்துக்கொண்டு பரமானந்தத்தை அநுபவி"என்று அந்த சம்புவின் பாதமாக வந்த பகவத்பாதாளே சொல்லியிருக்கிறார்:

**வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்கவசஸா**

**பதாம்போஜம் சம்போர் பஜ பரம ஸௌக்யம் வ்ரஜ ஸுதீ :**

"ஸுதீ :"-'நல்ல புத்தியுள்ளவனே, சமர்த்துக் குழந்தையே!'என்று கூப்பிட்டு இப்படி உபதேசம் பண்ணியிருக்கிறார். அதனால் இந்தப் புண்ய காலத்தில் வேறே உபந்நியாஸம் ஒன்றும் வேண்டாம். அதிலும் ஏதாவது மாற்று அபிப்ராயம் வரத்தான் வருகிறது. அதனால் வேண்டாம்! கொஞ்சம் நாழி " **ஹர ஹர சங்கர, ஜய ஜய சங்கர** "என்று மனஸுக்குள்; வெளியில் சப்தம் வரவேண்டாம்!யோகம், த்யானம், ஸமாதி என்று முடியாவிட்டாலும் இந்த ஜபம் போதும். இதற்கே ஆசார்யாள் வந்து அநுக்ரஹம் பண்ணிவிடுவார்.

ஆசார்யாள் உத்ஸவமும் இந்த மடத்துக் கைங்கர்யமும் நீங்களெல்லாம் திரவியத்தாலும் தேஹத்தாலும் செய்யணுமென்று அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். 'வருஷத்தில் ஒரு வாரம் லீவு போட்டுவிட்டு வந்தாவது மட

கைங்கர்யம் பண்ணுங்கள்; வாரத்தில் week-end ஒருநாள் மடத்துக்குக் கொடுங்கள்' என்றெல்லாம் சொல்லியிருக்கிறேன். அதெல்லாவற்றையும்விட இன்றைக்கு இப்போது அஞ்சு நிமிஷம் " **ஹர ஹர சங்கர ஜய ஜய சங்கர** " என்று மனஸை நிறுத்தி மனஸுக்குள் சொல்லிவிட்டீர்களானால் அதுதான் மஹா உத்ஸவம், மஹா பெரிய மடத்துக் கைங்கர்யம். நீங்கள் நன்றாயிருக்க, உங்களை மடம் நன்றாகவைக்க-எல்லாவற்றுக்கும் இந்த ஜபத்தைவிட எதுவும் வேண்டாம்!பதார்த்தத்தால், கைங்கர்யத்தால் செய்வதைவிட மனஸால் செய்வது பெரிசு.

வாய்விட்டுச் சொல்லாமல் எல்லாரும் ஒரு அஞ்சு நிமிஷம், " ஹர ஹர சங்கர ஜய ஜய சங்கர " என்று ஜபித்துக் கொண்டிருங்கள்-நான், " அரோஹரா " என்று சொல்கிற வரை!

(ÞšMî‹ ÃP„ Cô GIûƒèœ â™«ô£¬ó»‹ ñ£ùRèñ£è üH,è„ ªêŒAø£˜èœ. Üî¡H¡ º‹º¬ø "Ü«ó£ýó£"ªê£™L Üõ˜è¬÷»‹ ªê£™ô ¬õˆ¶, " «è£M‰î ï£ñ úƒW˜ˆîù‹ "â¡Á î£‹ ÃP," «è£M‰î£ «è£M‰î£ "â¡Á ú¬ð«ò£˜ «è£S‚è, Ü¡¬øò àð‰Gò£úˆ¬î º®‚Aø£˜èœ.)

---

# தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

## நாமகர ணச் சிறப்பு

அவதாரமாகி விட்டது.

பெற்றவர்கள், ஊரில் இருந்தவர்கள் எல்லாருக்கும் ஸந்தோஷமாயிற்று.

லோகம் பூராவுமே அப்போது அநேக சுப சகுனங்கள் தோன்றியதாகவும், வைதிக விருத்தமாகப் பாஷண்ட மதங்களைப் பிரசாரம் செய்து கொண்டிருந்தவர்களுக்கு மட்டும் ஒரே துர்நிமித்தங்களாகத் தோன்றின என்றும் "சங்கர

விஜய"ங்களில் இருக்கிறது.

(பிறந்தவுடன் செய்யும் ஸம்ஸ்காரமான)ஜாதகர்மா சிவகுரு செய்தார்.

பதினோராவது நாள் புண்யாஹவாசனம் பண்ணி நாமகரணம் செய்ய எண்ணினார்கள்.

சங்கரர் என்று பிதா பேர் வைத்தார் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

எதனால் அந்தப் பேர் வைத்தார்?

ஈச்வரனுக்கு வேண்டிக்கொண்டு ஈச்வரனின் வரப்படி தானே பிள்ளை பிறந்திருந்தது?அதனால் ஈச்வர நாமாக்களில் ஒன்றான சங்கர நாமாவை வைத்தார்.

ஈச்வரனுக்கு எத்தனையோ நாமா இல்லையா?இதைத் தேர்ந்தெடுத்து வைப்பானேன்?

பெரியோர்களாக இருப்பவர்கள் (புத்தி பூர்வமாகத்) தெரிந்து ஒன்று பண்ணாதபோதிலுங்கூட அதில் அநேக உள்ளர்த்தங்கள் இருக்கும். அந்த மாதிரி, சும்மாயிருக்கும் சம்புதான் கார்யம் செய்யும் சம்கரராக, "சங்கரம் லோக சம்-கரம்" என்னும்படியாக லோகத்துக்கெல்லாம் நல்லதைச் செய்பவராக வந்திருக்கும்போது அவருக்கு அந்தப் பெயர் தான் வைக்கணுமென்று ஏதோ ஒரு உள்ளுணர்ச்சியில் அவருடைய பிதாவுக்குத் தோன்றியிருக்கலாம்.

ஒரு வஸ்துவுக்கு ஒரு பெயர் ஏற்படுவதில் 'ரூடி'என்றும் 'யோகம்'என்றும் இரண்டு விதம் உண்டு. ஏதோ ஒரு பெயர் சொன்னால்தானே புரியும்? அதனால் அப்படி ஏற்படும் பேர் 'ரூடி'. அப்படியில்லாமல் அந்த வஸ்துவின் குணம் அல்லது அது செய்யக்கூடிய கார்யத்தை வைத்து அதற்குப் பேர் வைப்பது 'யோகம்'அல்லது 'பௌதிகம்'. இதில் அந்த வார்த்தையை தாது பிரித்து அர்த்தம் சொல்ல முடியும்.

ஒருவருக்கு ஏதாவது ஒரு பெயர் வைத்துத்தானாக வேண்டுமென்பதால் ஏதோ ஒன்றை வைப்பதை 'ரூடி'என்றும்

அவருடைய குண - கர்மங்களைக் குறிக்கும் விதத்தில் வைப்பதை 'பௌதிகம்'என்றும் ஒரு தினுஸில் சொல்லலாமானால் அப்போது ஆசார்யாளுக்கு சங்கர நாமம் ரூடி, பௌதிகம் இரண்டுமாகி விடுகிறது. அப்பா பாட்டுக்குப் பேர் வைத்தார்;அதுவே அவருடைய லக்ஷணையாகவும் இருந்துவிட்டது!

'அப்பா பாட்டுக்கு வைத்தார்'என்றது அவ்வளவு ஸரியில்லை. அவரும் ஒரு காரணத்திற்காகத்தான் அப்படி வைத்தார். நல்லதைச் செய்கிறவர் சம்-கரர் என்கிற காரணத்திற்காக அல்ல. வேறே ஒரு காரணதிற்காக, அவதாரம் இன்ன மாஸம், இன்ன பக்ஷம், இன்ன திதி என்று ஸங்கேதமாகக் காட்டுவதற்காகப் பேரில் இன்ன அக்ஷரங்கள் இருக்கவேண்டும் என்று தேர்ந்தெடுத்து வைத்தார். சேர்த்துப் பார்த்தால் அதுவே 'சங்கர'என்றாகி ஆசார்யாளின் 'யௌகிக'ப் பேருமாகி விட்டது!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**கடபயா தியில் ஸித்தி நாள்**

ஆசார்யாள் அவதார தினத்தில் இந்த ஸங்கியையின் ஸம்பந்தத்தைச் சொல்வதற்குமுன் அவர் ஸித்தியடைந்த புண்யதினம் பற்றி 'கடபயாதி'சொல்கிறேன் :

ஆசார்யாள் உள்பட இந்த (காஞ்சி) மடத்தில் ஸ்வாமிகளாக இருந்தவர்களுடைய ஸித்தி தினங்களை வரிசையாகத் தெரிவிப்பதாக "புண்யச்லோக மஞ்ஜரி"என்று ஒரு புஸ்தகம் இருக்கிறது. அதில் 55வது பீடாதிபதிகள் வரை ஒவ்வொருவருடைய பேர், ஊர், ஸித்தி அடைந்த இடம், ஸித்தியான காலம் முதலியவை ச்லோகங்களாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதற்கப்புறம், ஐந்தாறு ஸ்வாமிகளுக்கு அப்புறம் வந்த ஒரு பெரியவர் அதற்குப் 'பரிசிஷ்டம்'என்பதான 'ஸப்ளிமென்ட்'(பிற்சேர்க்கை) ஒன்று

எழுதி 56-லிருந்து 60முடியவான ஐந்து ஸ்வாமிகளைப் பற்றியும் இதே போலப் புண்யச் ச்லோகங்களைக் கொடுத்திருக்கிறார்.

(மூல நூலான 'புண்ய ச்லோக மஞ்ஜரி'யில்) ஆசார்யாளின் ஸித்தி தினத்தைச் சொல்லும் புண்ய ச்லோகம் :

**மஹேசாம்சாத் ஜாத : மதுரம் உபதிஷ்டாத்வய நய :**

**மஹா-மோஹ-த்வாந்த ப்ரசமந ரவி : ஷண்மதகுரு :** *

**பலே ஸ்வஸ்மிந் ஸ்வாயுஷி சரசராப்தே (அ) பிசகலேர்**

**விலில்யே ரக்தாக்ஷிண்-யதிவ்ருஷ ஸிதைகாதசி-பரே** **

(இதில்) முதல் பாதி ஆசார்ய மஹிமையைச் சொல்வது. ஈச்வராம்சமாக பிறந்தது, அத்வைதத்தைத் தம் பாஷ்யத்தால் மதுரமாக்கி உபதேசித்து, ஷண்மத ஸ்தாபனம் செய்து, அஞ்ஞான இருட்டைப் போக்கி ஞான ஸூர்யனாக ப்ரகாசித்தது ஆகியவற்றைச் சொல்லியிருக்கிறது.

பின்பாதியில் தான் நம் ஸங்கியை ஸமாசாரம் வருகிறது.

ரக்தாக்ஷிவருஷத்தில் வ்ருஷ மாஸமாகிய வைகாசியில் சுக்லபக்ஷஏகாதசியில் ஸித்தியடைந்தாரென்று கடைசி வரியில் plain-ஆகவே சொல்லியிருக்கிறது. ரக்தாக்ஷிஎன்றால் அறுபது வருஷத்திற்கொரு தடவை வருமே, எந்த ரக்தாக்ஷி-என்பதைக் கலியுகத்தில் இத்தனாவது வருஷமாக இருந்த ரக்தாக்ஷிஎன்று மூன்றாவது வரியில தெளிவுபடுத்தியிருக்கிறது;ஸித்தியானபோது அவருடைய வயஸு என்ன என்றும் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு எண்ணிக்கைகளையுதான் கடபயாதி ஸங்க்யையில் வார்த்தைகளாகக் கொடுத்திருக்கிறது.

'சரசராப்தே'(saracharaabde) என்பதில் 'ச (sa)-ர-ச cha-ர என்ற வார்த்தைதான் கலியில் எத்தனாம் வருஷம் என்ற எண்ணிக்கையைச் சொல்வது. 'ச(sa)ர'என்றால் அம்பு. 'ச(sa)ர'என்றால் போவது. இப்படி ஏதோ வார்த்தைமாதிரி இருந்தாலும் உண்மையில் அது கடபயாதியில் ஒரு நம்பரைத் தெரிவிப்பதே. 'காதிநவ' ஸூத்ரத்தின் படிக் கொஞ்சம்

கணக்குப்போட்டுப் பார்க்கலாம்.

'ச(ஙணீ)என்பது 'யாத்யஷ்ட'வில் ய-ர-ல-வ-ச என்று ஐந்தாவதாக வருகிறது. அதாவது அது 5. 'ர'என்பது ய-ர என்று இரண்டாவதாக வருகிறது. அது 2. 'ச' (நீலீணீ)'காதிநவ' வில் ளீணீ-ளீலீணீ-ரீணீ-ங-நீலீணீ என்று வந்து 6 என்ற நம்பரைக் கொடுக்கிறது. கடைசி 'ர'வும் 2 தான். சேர்த்துப் பார்த்தால் ('சரசர'என்பது) 5262 என்றாகிறது. அதைத் தலைகீழாக்கணும் அல்லவா?அப்போது 2625 என்று கிடைக்கிறது. அதாவது கலி பிறந்து 2625 வருஷமாக வந்த ரக்தாக்ஷியில் வைகாசி சுத்த ஏகாதசியில் ஆசார்யாள் அவதாரத்தை முடித்தார் என்றாகிறது.

ஒரு காலத்தைக் குறிப்பிட்ட எழுத்துக்களையே எண்களாக்கி 'சரசர'என்பதுபோன்ற வார்த்தைகளாகச் சொல்வதுபோலவே மேல் நாட்டிலும் உண்டு என்று தெரிகிறது. அதை நீலீக்ஷீஷீஸீஷீரீக்ஷீணீனீ என்கிறார்கள். 'ரோமன் ந்யூமரல்'கள என்று சொல்லப்படும் இலக்கங்களில் மி என்பது, 'ஒன்று'ஆகவும் 'ஐ'என்ற எழுத்தாகவும் இருக்கிறது; க்ஷிஎன்பது 5 என்ற இலக்கமாகவும், 'வி'என்ற எழுத்தாகவும் இருக்கிறது; ஙீ என்பது 10 என்ற இலக்காகவும் 'எக்ஸ்'என்ற எழுத்தாகவும் இருக்கிறது. இன்னும் இப்படிப் பல இருக்கின்றன. இப்படியுள்ள எழுத்துக்களை வைத்தே வார்த்தைகளை அமைத்து எண்ணிக்கையைக் குறிப்பிடும் நீலீக்ஷீஷீஸீஷீரீக்ஷீணீனீ-களை உண்டாக்குகிறார்களென்று தெரிகிறது.

தமிழிலேகூட 'க'என்றால் 1, 'உ' என்றால் 2, 'ரு'என்றால் 5 என்று இருக்கிறது. 'அவலக்ஷணமே!'என்பதை அவ்வை இந்த ஸ்ங்கேதத்தில்தான், 'எட்டேகால் லக்ஷணமே'என்றாள். அ-8; வ-1/4.

ஆசார்யாள் ஸித்தியானது கலியுகத்தின் 2625-வது வருஷம் என்று பார்த்தோம். கலி கி.மு. 3102-ல் பிறந்தது. கலியில் 2625-வது வருஷம் என்றால் கி.மு. 477 ஆகும்.

அப்போது அவருக்கு என்ன வயஸு என்பதை "பலே ஸ்வஸ்மின் ஸ்வாயுஷி"என்று சொல்லியிருக்கிறது. 'பலே'என்பதில் வரும் 'பல' என்பதில் ஒரு சிலேடை இருக்கிறது. 'ப-ல' என்ற இரண்டு எழுத்துக்கள் இரண்டு

எண்களைக் குறிப்பதாக கொள்ளும்போது, 'தன்னுடைய ஆயுளில் அந்த எண்ணிக்கை கொண்ட வயஸில்'என்று அர்த்தம். 'விலில்யே' :லயமடைந்தார், அந்த வயதில் தமது நிஜஸ்வ ரூபமான ப்ரஹ்மத்தில் லயித்துவிட்டார். என்று அர்த்தம் கொடுக்கும்.

'பல' என்பதற்கு இன்னொரு அர்த்தம் 'பழம்'என்பது. ஒரு விதை போட்டால் அதிலிருந்து முளைவிட்டு, செடியாகி, மரமாகி, கடைசியில் முடிவான பலனாக எது வருகிறதோ அதுதான் பலம் என்னும் பழம். அப்படி, தம்முடைய ஆத்மாவாகவே உள்ள முடிவான பலனில் லயித்து விட்டார் என்பது இன்னொரு அர்த்தம். "பலே ஸ்வஸ்மின்" :தன்னிலேயே பலன், தான் தானாயிருப்பதிலேயே நிறைவு!யஜ்ஞும், தானம், தபஸ், பக்தி, ஞானம், இன்னம் என்னவெல்லாம் உண்டோ அத்தனைக்கும் பலமான தம்முடைய பரமேச்வர ஸ்வரூபத்திலேயே லயமடைந் துவிட்டார் என்று அர்த்தம்.

'பல'(ஜீலீணீறீணீ) என்பது எண்ணிக்கையாக இருக்கும் போது என்னவென்று பார்க்கலாம். 'ப'(ஜீலீணீ) என்பது 'பாதி பஞ்ச'என்றதில் ஜீணீ-ஜீலீணீஎன்று 2-ம் நம்பரைக் குறிக்கிறது. 'ல'என்பது 'யாத்யஷ்ட'லில் ய-ர-ல என்பதாக 3-ம் நம்பராயிருக்கிறது. இரண்டையும் சேர்த்தால் 23. இதை மாற்றிப் போட்டால் 32.

தம்முடைய முப்பதிரண்டாவது வயஸில் ஜீவ யாத்ரையை முடித்து லயமாகி விட்டாரென்று தெரிந்து கொள்கிறோம்.

---

## தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

### அவதார நன்னாள்

ஸித்தி தினத்திலிருந்து அவதார தினத்துக்குத் திரும்பலாம். கி.மு. 477-ல் ஸித்தி. அப்போது 32 வயஸூ என்றால் அவதாரம் கி.மு. 477 ப்ளஸ் 32-ல். அதாவது கி.மு. 509-ல் ஆசார்யாளின் அவதாரம்.

ஸித்தி ரக்தாக்ஷிவருஷம் என்றும், அவதாரம் நந்தன வருஷம் என்றும் புஸ்தகங்களில் இருக்கிறபடியே கி.மு. 477 ஒரு ரக்தாக்ஷியாகவும், கி.மு. 509 ஒரு நந்தனவாகவும் இருக்கின்றன. தற்போது நடக்கிற 60 வருஷ ஸைகிளில் இந்த (ரக்தாக்ஷி, நந்தன) வருஷங்கள் வருவது கிறிஸ்து சகாப்தப்படி எந்தெந்த வருஷம் என்று பார்த்து அறுபது அறுபதாகப் பின்னால் தள்ளிக் கணக்குப் போட்டுப் பார்த்தீர்களானால் தெரியும்.

ஒருவர் பிறக்கும் மாஸம், பக்ஷம், திதி ஆகியவற்றைக் கடபயாதி ஸங்க்யையில் குறிப்பிட்டே அவருக்கு நாமகரணம் செய்வதாக மலையாளத்தில் ஒரு வழக்கமுண்டு.

அங்கே ராஜாக்களுக்கு அவர்களுடைய ஜன்ம நக்ஷத்ரத்தையே பேராகச் சொல்வதுண்டு என்று தெரிந்திருக்கலாம். இப்போது (1960-ல்) இருக்கும் மஹாராஜா சித்திரைத் திருநாள். அதாவது சித்ரா நக்ஷத்ரத்தில் பிறந்தவர். இவருக்கு முந்தி இருந்தவர் மூலம் திருநாள். அதற்கும் முந்தி விசாகம் திருநாள் இருந்தார். ஸ்வாதித் திருநாள் பெயர் செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யரால் எல்லாருக்கும் தெரிந்தது. அவர் ஸ்வாதி நக்ஷத்ரத்தில் பிறந்தவர். திருவனந்தபுரம் மஹாராஜாவாக இருந்ததோடு ஸாஹித்ய கர்த்தாவாகவும் இருந்தார். இதெல்லாம் நக்ஷத்ரத்தை மாத்ரம் அப்படியே குறிப்பிட்டு வைத்த பெயர். இப்போது நான் சொன்னது ஸங்கேதமாக மாஸம்-பக்ஷம்-திதிகளை வைத்து நாமகரணம் செய்வது.

ஆசார்யாளுக்கு இந்த முறையில் பேர் வைக்க அப்பா, இன்னும் ஊர்ப் பெரியவர்கள் எல்லோரும் நினைத்தார்கள். அவர் பிறந்தது வைகாசி, அதாவது, இரண்டாவது மாஸம். அது சுக்லபக்ஷம், இரண்டு பக்ஷங்களில் சுக்லபக்ஷம் ஒன்று, க்ருஷ்ணபக்ஷம் இரண்டு. ஆசார்யாள் ஜனனம் ஒன்றாவது பக்ஷம். அன்றைக்கு திதி பஞ்சமி. அதாவது, ஐந்து. ஆகவே, 2-1-5. அதையே தலைகீழாக்கி 5-1-2 என்பவற்றைக் கடபயாதி முறையில் குறிப்பிடும் அக்ஷரங்களைச் சேர்த்து அவருக்குப் பெயராக வைத்துவிட வேண்டும் என்று நினைத்தார்கள். அது 'சரசர' என்று (2625-ஐ) சொன்ன மாதிரி தெளிவாக அர்த்தம் தராத எழுத்துத் தொகையாக இருக்கப்படாது; "பல"என்று

(32-ஐயும், பலனையும் ஒருங்கே குறிப்பதாகச்) சொன்னதுபோல் அர்த்தமுள்ள வார்த்தையாகவும், அதாவது வாஸ்தவத்திலேயே மநுஷ்ர்களுக்கு வைக்கும் தெய்வப் பெயராகவும் இருக்கவேண்டும் என்றும் நினைத்தார்கள்.

அப்படி ஸெலக்ட் பண்ணியதுதான் "சங்கர"என்பது.

2-ம் மாஸம், 1-ம் பக்ஷம், 5-ம் திதி என்பதைத் திருப்பி 5-1-2 என்பதற்கான எழுத்துக்களைக் கொண்டுதானே இந்தப் பெயரை வைத்ததாகச் சொன்னேன்?அதெப்படி என்று பார்க்கலாம். 'சங்கர'என்பதில் மெய்யெழுத்தான 'ங்'கை நீக்கிவிடவேண்டும். இந்த ஸங்க்யையில் எப்போதும் மெய்யெழுத்துக்கு வால்யூ கிடையாது. அதைத் தள்ளிவிட வேண்டும். அப்படிச் செய்தால் ச-க-ர என்று மூன்று எழுத்துக்கள் நிற்கின்றன. 'ச'என்பது 'யாத்யஷ்ட'பிரகாரம் ய-ர-ல-வ-ச என்று 5-ஐக் குறிப்பிடுகிறது. அதுவே பஞ்சமித் திதி. 'க' என்பது 'காதிநவ'வில் முதலாவது எழுத்து. அதனால் அது 1-ஒன்றாவது பக்ஷமான சுக்லபக்ஷத்தைக் காட்டுவது. 'ர'என்பது 'யாத்யஷ்ட'ப்ரகாரம் ய - ர என்பதாக 2. அதுதான் இரண்டாவது மாஸமான வைகாசி.

பரமேச்வரன் இப்படியொரு ஸமயத்தில் போய்ப் பிறந்தாலே, தான் லோக சங்கரனாக விளங்கப் போவதற்குப் பொருத்தமாகப் பேர் வைப்பார்கள் என்று திட்டம் போட்டே அவதார தினத்தை அமைத்துக் கொண்டிருக்கிறான்!

சங்கர ஜயந்தி எல்லா ஜயந்திகளிலும் விசேஷம்தான் என்று 'ப்ரூவ்' பண்ணுவதுபோல, ஜயந்தியே "சங்கர"என்று அமைந்திருக்கிறது!

சங்கர ஜயந்தி; **ஐயந்தியே ' சங்கர '!**

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**' சம் ' மைச் செய்வது ; பிரத்யக்ஷச் சான்று**

பரமசிவாவதாரமானதால் சிவநாமாவான 'சங்கர'.
வைசாக-சுக்ல-பஞ்சமி அவதார தினம் என்று காட்ட 'சங்கர'.
'சம்'என்ற உசந்த சாந்தத்தை உண்டாக்குவதால் 'சங்கர'.
ப்ரேமையினால் விளையும் உசந்த சாந்தம்.

மூன்றாவதாக சொன்னது எத்தனை நிஜமென்பதற்கு இப்போது நாம் கூடியிருக்கும் இந்தக் கூட்டமே ப்ரத்யக்ஷமான ஸாக்ஷி. அத்தனை பேருக்கும் எத்தனை சாந்தியாயிருக்கிறது?ப்ரேமை நிரம்பியிருக்கிறது?அவர் நேரில் இல்லை. மறைந்து போய் 2500 வருஷமாகப்போகிறது. ஆனாலும் நினைக்கும்போதே, நினைக்கும்போதெல்லாம், பரம சாந்தியைத் தரும் பரம புருஷனாக இருக்கிறார்!இதே மாதிரி ஸினிமாவிலும் கூட்டம் சேர்கிறது. ஆனால் சாந்தி உண்டா? ப்ரேமை உண்டா? இல்லை. காமத்தில் கிளறிவிட்டு அசாந்தி உண்டுபண்ணுவதாகவே இருக்கும். அரசியல் கூட்டம் என்றாலும் நிறைய ஜனங்கள் சேர்கிறார்கள். ப்ரேமை உண்டா? சாந்தி உண்டா?இல்லை. எந்தக் கட்சியை யாவது, கொள்கையையாவது திட்டி க்ரோதத்தைக் கிளறிவிடுவதாகவே இருக்கும். ஹர்த்தால், டெமான்ஸ்ட்ரேஷன் என்று ஊரின் சாந்தியையும் குலைப்பதற்குத் தூண்டுவதாகவே இருக்கும். இங்கே இத்தனை உத்ஸவப் பரபரப்பிலும் மனஸுக்குள் பரம சாந்தியாயிருக்கிறது. "சம் கரோதீதி சம்கர:"-இன்பத்தில் பெரிய இன்பமான 'சம்'என்னும் சாந்தியை உண்டுபண்ணுவதால் சங்கரர் என்ற பேர்-என்பதற்கு proof-ஆக இந்தக் கூட்டமே இருக்கிறது! இதைவிட பாக்யம் என்ன இருக்கிறது? பணத்திலும் பதவியிலும் இது இல்லை. அவை ஏற ஏற, இருக்கிற சாந்தியும் போய்விடு ம்!ஆசார்யாளை நினைத்தால் க்ஷணமானாலும் சட்டென்று ஒரு சாந்தி!நினைக்கணுமே! அதற்காகத்தான் உத்ஸவம் பண்ணுங்கள், எல்லாவற்றையும் விடப் பெரிய உத்ஸவமாகப் பண்ணுங்கள் என்கிறேன்.

---

## வஸந்தகால வைசாக மாதப் பொருத்தம்

ஆசார்யாள் அவதரித்தது வஸந்த காலம். மஹாத்மாக்கள் வஸந்த காலம் மாதிரி ப்ரதிப்ரயோஜனமே எதிர்பார்க்காமல் லோகத்துக்கு ஹிதம் செய்கிறார்கள் என்று சொன்னவர் அவர். அவரும் அப்படிப்பட்டவர் தான். அவர் அவதாரம் பண்ணியது வஸந்த ரிதுவாக இருக்கிறது!

அவர் பிறந்த மாஸம் வைசாகம்-நாம் வைகாசி என்பது. வைசாகம் என்றால் சாகை (கிளை) இல்லாதது. மரம் செடி என்றால் கிளை உண்டு. கொடிதான் கிளையில்லாதது.

வைசாகத்திற்கு மாதவ மாஸம் என்றும் ஒரு பெயர் உண்டு. சைத்ர மாஸம் 'மது';வைசாகம் 'மாதவம்'. மாதவி என்பது மல்லிகையின் பெயர். கிளையில்லாமல் மல்லிகைக் கொடியும் 'வைசாக'மாக இருப்பதால், அந்த மாஸத்தின் இரண்டு பேரும் மல்லிகை ஸம்பந்தமுள்ளதாயிருக்கிறது. அது மாத்ரமில்லை. 'வஸந்தம்'என்பதன் அடியாகப் பிறப்பது 'வாஸந்தி'என்ற வார்த்தை. வாஸந்தி என்றும் மல்லிகைக்கே இன்னொரு பெயர்கூட இருக்கிறது.

இப்படி ஒரே மல்லிகை ஸம்பந்தத்தோடு ஆசார்யாளின் அவதார காலம் இருப்பது ரொம்பவும் பொருத்தந்தான். வெள்ளை வெளேரென்று சுத்த ஸத்வ ரூபமாக மல்லிகை இருக்கிறது. வெயில் காலத்தில் குளிர்ச்சி தருவதாகப் புஷ்பிக்கிறது. ஆசார்யாள் ஸம்ஸார வெயிலில் குளிர்ச்சி தருகிற ஒரு பெரிய மல்லிகையாக, சுத்த ஸத்வ அவதாரமாக வந்தவர்.

ஞான மல்லிகையாக வந்து லோகத்துக்கெல்லாம் ப்ரேமை என்கிற 'சம்'மின் ஸுகந்தத்தைச் செய்த சம்கரரின் ஜயந்தியே வஸந்த மாதவ ஜயந்தியாயிருக்கிறது. அது நம் மனஸை எல்லாம் சுத்த வெளுப்பாக்கட்டும்!அன்பின் மணத்தினால் நம் மனஸை நிரப்பட்டும்!அன்பான சிவத்திலேயே ஊறிப்போய் சாந்தமான சிவஞானத்தை நாம் அடையும்படி அநுக்ரஹிக்கட்டும்!

ஞான வெளுப்பில் லயம் அடையவைக்கும் ப்ரேமையில் ஸுகந்தம்!ஸுகந்தத்தை உள்ளே தீர்க்கமாக இழுப்பது அப்படியே ப்ராணாயாமமாகி லயத்தை உண்டாக்குவது தானே?

மல்லிகை ஸம்பந்தம் மேலும் சொல்கிறேன் :மடத்தில் ஸ்ரீமுகம் கொடுக்கும்போது முதலில் ஆசார்யாளைப் பற்றி வர்ணிக்கிற வாசகம் நீளமாக வரும். அதன் நடுவில் " **அதுலித ஸுதாரஸ மாதுர்ய கமலாஸன-காமிநீ தம்மில்ல ஸம்புல்ல மல்லிகா மாலிகா நிஷ்யந்த மகரந்த ஜரீ ஸௌவஸ்திக வாக் விஜ்ரும்பணாநந்த துந்திலித மநீஷி மண்டலாநாம்** "என்று வருகிறது. என்ன அர்த்தமென்றால்: கமலாஸனரான ப்ரஹ்மாவின் காமினியாக ஸரஸ்வதி தேவி இருக்கிறாளே, அவளுடைய 'தம்மில்லம்'என்னும் கூந்தல் அலங்காரத்தில் மல்லிகை ஸரங்களை அணிந்திருக்கிறாள். அவற்றிலிருந்து பொழியும் தேன் பெருக்கும் நிகராகாது என்னும்படியாக அப்படிப்பட்ட அம்ருத ரஸம் போன்ற அருமையான வாக்கை ஆசார்யாள் ஆனந்தமாக மலர்த்திக் கொண்டு ஸமூஹத்தையெல்லாம் பூரிக்கும் செய்கிறாராம்!

ஆசார்யாளுடைய ஸர்வஜ்ஞத்வம் லோகத்திற்குத் தெரிவதற்காக ஸரஸ்வதியே அவரிடம் வாக்குவாதம் பண்ணித் தோற்றுப் போய்க் காட்டினாள். அவளை சாரதா பீடம் என்று ச்ருங்கேரியில் ஸ்தாபித்து அதில் ஸாந்நித்யத்துடன் இருக்கும்படியாக ஆசார்யாள் அமர்த்தினார். பத்து விதமான ஸந்நியாஸப் பிரிவுகளில் அவளுடைய பெயரிலேயே பாரதி, ஸரஸ்வதி என்று இரண்டை வைத்தார். ச்ருங்கேரியில் பாரதி ஸந்நியாஸிகள். இங்கே (காஞ்சி மடத்தில்) ஸரஸ்வதி ஸந்நியாஸிகள். ஸரஸ்வதி ஸந்நியாஸிகளிலேயே இரண்டு ஸம்ப்ரதாயங்கள்-ஆனந்த ஸரஸ்வதியென்றும், இந்த்ர ஸரஸ்வதியென்றும்.

இந்த மடம் இந்த்ர ஸரஸ்வதி ஸம்ப்ரதாயம். ச்ருங்கேரியில் பீடத்திற்குப் பேர் சாரதா பீடம். இங்கே நம் மடத்திற்குப் பேர் சாரதா மடம். ஸரஸ்வதி வெள்ளை வெளேரென்று மல்லிகை மாதிரி இருப்பவள். அவள் சூட்டிக்கொடுண்டுள்ள மல்லிகையின் மாதுர்யத்தையும் மிஞ்சுவதாக இருக்கிறதாம்

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசைலம் ; " அர்ஜுன " க்ஷேத்ரங்கள்**

அவருக்கு மூலமான பரமசிவனுக்கும் மல்லிகை ஸம்பந்தம் அதிம் உண்டு. அவனே வெள்ளை வெளேரென்று மல்லிகைபோல இருப்பவன்தான். மல்லிகார்ஜுனன் என்றே பெயர் வைத்துக்கொண்டிருக்கிறான். அந்தப் பெயரில் அவன் இருக்கிற க்ஷேத்ரம் ஸ்ரீசைலம். அந்த ஸ்ரீசைலத்திடம் ஆசார்யாளுக்குத் தனியானதொரு அபிமானம். 'சிவாநந்த லஹரி'யில் அவர் ஸ்ரீசைலத்தை விசேஷமாகக் குறிப்பிட்டு ஸ்துதித்திருக்கிறார். நூறு ச்லோகங்கள் கொண்ட அந்த ஸ்துதியில் நடுமையாக உள்ள 50, 51-வது ச்லோகங்களில் ஸ்ரீசைல மல்லிகார்ஜுனரைச் சொல்லியிருக்கிறார். பக்தி ஸ்தோத்ரமாகச் செய்த 'சிவாநந்த லஹரி'யில் மஹா சிவ க்ஷேத்ரமான ஸ்ரீசைலத்தைச் சொல்லியிருப்பது ஓரளவு எதிர்பார்க்கக்கூடியதே. இதைவிட விசேஷம்-ஒரே யோகமாக, ஞானமாக அவர் பண்ணியுள்ள 'யோக தாராவளி'என்ற ப்ரகரணத்தில்கூட, ஸ்ரீசைலத்தைக் குறிப்பிட்டிருப்பதுதான். "எப்போது என் உடம்பைச் சுற்றிக்கொண்டு கொடிகள் படர்ந்துகொண்டும், காதிலேயே பக்ஷிகள் கூடு கட்டிக்கொண்டும் இருக்கும்படி தன்னை மறந்து ஸமாதியில் முழுகி உட்கார்ந் துகொண்டிருப்பேன்?"என்று அதிலே கேட்கும்போது, "இந்த மாதிரி ஸ்ரீசைல மலையுச்சில் குஹையில் எப்போது உட்கார்ந் திருப்பேன்?"என்று கேட்கிறார்! " **ஸ்ரீசைல ச்ருங்க குஹரேஷு** "என்கிறார்.

மல்லிகையாக ஈச்வரனே இருக்கிறான்-ஸ்ரீசைலத்தில் அந்த மல்லிகைக் கொடி அர்ஜுன மரத்தைச் சுற்றிக் கொண்டு படர்ந்திருக்கிறது. அதுதான் மல்லிகார்ஜுனம். அர்ஜுனம்

என்பது மருத மரம். அதை ஸ்தல வ்ருக்ஷமாகக் கொண்ட மூன்று க்ஷேத்ரங்கள் இருக்கின்றன. வடக்கில் ஆந்த்ர தேசத்தில் இருப்பதுதான் ஸ்ரீசைலம், அது மல்லிகார்ஜுனம், பாதாள கங்கை என்கிற க்ருஷ்ணா தீரத்தை ஒட்டியிருப்பது அது. மத்தியில் இருப்பது திருவிடைமருதூர். மத்யார்ஜுனம், இடை மருதூர் என்றே பெயர் பெற்றது. காவேரிக் கரையில் சோழ மண்டலத்திலிருப்பது. தெற்கே இருப்பது திருப்புடைமருதூர் என்னும் புடார்ஜுனம். தென்பாண்டி நாட்டில், தாம்ரபர்ணிக் கரையில் அது இருக்கிறது.

மரத்தில் கொடி படர்கிறது என்றால் என்ன தாத்பர்யம்?
'ஸ்தாணு'என்று பட்ட சட்டையாக அசையாமலிருக்கிற சிவத்தை ஆச்ரயித்தே சக்தியான அம்பிகை படர்ந்து ஸ்ருஷ்டியை உண்டாக்குகிறாள் என்று தாத்பர்யம். நம்மிலே புத்தி சக்தி என்ற மேதாவாக இருப்பவள் அவள் தான். அந்த புத்தி சக்தி சுத்த ஆத்ம தத்வமான சிவத்தைச் சுற்றிப் படரவேண்டும். அதுதான் மல்லிகைக் கொடி அர்ஜுன வ்ருக்ஷத்தைச் சுற்றிப் படர்வது. அர்ஜுனம் என்றால் வெளுப்பு. பரம நிர்மலமாயிருக்கும் சிவ தத்வம் அப்படியிருக்கிறது.

அர்ஜுனமரம்-சிவம், மல்லிகைக் கொடி-அம்பாள் என்பது ஒரு விதத்தில். மல்லிகைக் கொடியில் புஷ்பித்த மல்லிகைக் புஷ்பமே சிவம், அந்தப் புஷ்பத்தை மொய்த்து மொய்த்து, அதன் தேனைக் குடித்து அதிலேயே மயங்கி லயித்துக் கிடக்கிற வண்டு அம்பாள் என்று இன்னொரு விதத்தில் சொல்வது. வண்டுக்குப் பேர் ப்ரமரம். ஸ்ரீசைலத்தில் அம்பாளுக்கு ப்ரமராம்பா என்றே பேர். மல்லிகார்ஜுனரை, ஈச்வர மல்லிகையை மொய்த்துக்கொண்டிருக்கும் ப்ரமர அம்பா!

இதைப் பற்றி நீளமான ச்லேஷாலங்காரமாக (சிலேடை அணியாக) ஆசார்யாள் சிவாநந்த லஹரியில் சொல்லியிருக்கிறார் :

**ஸந்த்யாரம்ப-விஜ்ரும்பிதம் ச்ருதி-சிரஸ்தாநாந் தராதிஷ்டிதம்**

**ஸப்ரேம-ப்ரமராபிராம-மஸக்ருத் ஸத்வாஸநா சோபிதம்** **

**போகீந்த்ராபரணம் ஸமஸ்த ஸுமந : பூஜ்யம் குணாவிஷ்க்ருதம்**

**ஸேவே ஸ்ரீகிரி மல்லிகாஜுந மஹாலிங்கம் சிவாலிங்கிதம் ****

ஒவ்வொரு phrase-கும் (சொற்றொடருக்கும்) இரண்டு அர்த்தம் வைத்துப் பண்ணியிருக்கிறார். ஒன்று மல்லிகையைக் குறிக்கும், மற்றது ஈச்வரனைக் குறிக்கும்.

''ஸந்த்யாரம்ப விஜ்ரும்பிதம்'' :மல்லிகையைக் குறிக்கும்போது, ஸந்தி வேளை ஆரம்பிக்கும்போது மலர்வது என்று அர்த்தம். ஈச்வரனைக் குறிக்கும்போது, ஸந்தி ஆரம்பத்தில் நாட்யம் பண்ணுவதால் தம்மை நன்றாக வெளிப்படுத்திக்கொள்பவர் என்று அர்த்தம்.

''ச்ருதி-சிரஸ்தாநாந்தராதிஷ்டிதம்''-மல்லிகையானால், 'காதிலும் தலையிலும் சூட்டிக்கொள்ளப்படுவது'. ஈச்வரனானால், 'ச்ருதியான வேதத்தின் சிரஸான உபநிஷத்தில் உறைபவர்'.

''ஸப்ரேம ப்ரமராபிராமம்''-மல்லிகையானால், 'ஆசையோடு வரும் வண்டினால் அழகுறுவது'. ஈச்வரனானால், 'ப்ரமை கொண்ட ப்ரமராம்பிகையினால் சோபிக்கிறவர்.

"அஸக்ருத் ஸத்வாஸநா சோபிதம்"-மல்லிகையானால், 'எப்போதும் ஸுகந்தத்தோடு விளங்குவது'. ஈச்வரனானால், 'எப்போதும் ஸாதுக்களின் புண்ய வாஸனையில் சோபை பெற்றவர்'. ஸாதுக்களின் பக்தி 'ஸெண்ட் போடுவது போல் ஸ்வாமிக்கு வாஸனையாக இருக்கிறது!

"போகீந்த்ராபரணம்"- மல்லிகையானால், 'நன்றாக போகங்களை அநுபவிப்பவர்கள் அலங்காரமாகச் சூட்டிக் கொள்வது'. (அல்லது) மல்லிகை வாஸனைக்காக பாம்புகள் வந்து அதைச் சூழ்ந்துகொள்வதாகவும் சொல்லலாம். ஈச்வரனாக வைத்து அர்த்தம் பண்ணும்போது, 'சிறந்த பாம்புகளை ஆபரணமாக உடையவர்'. 'போகி' என்றால் பாம்பு என்றும் அர்த்தம்.

"ஸமஸ்த ஸுமந : பூஜ்யம்"-மல்லிகையானால், 'எல்லாப் புஷ்பங்களுக்குள்ளும் உயர்வானதாகப் போற்றப்படுவது'. ஈச்வரனானால், 'ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்படுபவர்'. 'ஸுமன' ஸுக்கு ஒரு அர்த்தம் 'புஷ்பம்', இன்னொரு அர்த்தம் 'தேவர்'.

"குணாவிஷ்க்ருதம்"-மல்லிகையானால் 'கயிற்றால், நாரினால், நன்றாக எடுத்துக் காட்டப்படுவது."குணம்' என்றால் கயிறு. உதிரி உதிரியாயிருக்கும் புஷ்பத்தை நாரால் தொடுத்தால்தானே அது ஒன்று சேர்ந்து அழகாக விளங்குகிறது? அதனால் "குணாவிஷ்க்ருதம்". ஈச்வரனாக வைத்துச் சொல்லும்போது, உத்தம குணங்களால் சிறப்புற்று விளங்குபவர் என்று அர்த்தம்.

'இப்படிப்பட்டவராக, சிவா என்னும் அம்பாளால் ஆலிங்கனம் செய்யப்பட்டு விளங்குகிற ஸ்ரீசைல மல்லிகார்ஜுனரை வணங்குகிறேன்'என்று முடிக்கிறார் :

ஸேவே ஸ்ரீகிரி மல்லிகார்ஜுன மஹாலிங்கம் சிவாலிங்கிதம்

மல்லிகைப் புஷ்பம், மாம்பழம் இரண்டும் வஸந்த வைசாகத்தில் விசேஷமாக உண்டாவது. ஆசார்யாள் சுத்த ஸத்வ மல்லிகையாகவும், அத்வைத ரஸ பரிதமான ஞான மாம்பழமாகவும் இருந்தவர். 'ஞானப்பழம்' என்கிறார்களே அதுவாக!

---

## தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

### ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

அவதார தின, ஸித்தி தின ச்லோகங்களில் கி.மு. 6-5 நூற்றாண்டுகள் :ஆசார்யாள் அவதாரம் கி.மு. 509-ல் என்று சொன்னேன். "பலே ஸ்வஸ்மிந் ஸ்வாயுஷ்யம்பி சரசராப்தே (அ)பி கலேர்-விலில்யே"என்ற ('புண்ய ச்லோக மஞ்ஜரி') ச்லோகத்தைக் காட்டி, 'கலியில் 2625-ம் வருஷம், தம்முடைய

முப்பத்திரண்டாம் வயதில் ஆசார்யாள் ஸித்தியானதாக இதற்கு அர்த்தம். கலி கி.மு. 302-ல் பிறந்ததால் கலியில் 2625 என்றால் கி.மு. 477. அப்போது 32 வயஸு என்றால் அவதாரம் கி.மு. 509 என்றாகிறது'என்றேன்.

ஸித்தியான வருஷத்தைக்கொண்டு அதோடு 32 கூட்டித்தான் அவதார காலத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றில்லை. அவதார தினத்தையே நேராகச் சொல்வதாக இன்னொரு ச்லோகம் இருக்கிறது. ஸித்தி ச்லோகத்தை quote பண்ணும் ('ஸுஷமா'என்கின்ற) புஸ்தகத்திலேயே இதையும் quote பண்ணியிருக்கிறது. தற்போது முழுசாகக் கிடைக்காததும், ஆனாலும் ரொம்பப் பழமை வாய்ந்ததாகக் கருதப்படுவதுமான "ப்ராசீன சங்கர விஜய"த்திலுள்ள ச்லோகம் இது என்று தெரிகிறது.

**திஷ்யே ப்ரயாத்யநல-சேவதி-பாண-நேத்ரே**

**யோ நந்தநே திநமணாமவுதகத்வபாஜி** *

**ராதே(அ)திதேருடுநி நிர்கதம்-அஸ்த்ர-லக்நே**

('அஸ்த்ர லக்நம்'ஸரிதானா என்பதற்கு அப்புறம் வருகிறேன்.)

**(அ)ப்யாஹூதவாந் சிவகுருஸ்-ஸ ச சங்கரேதி** **

கடைசிப் பாதத்தில், 'இன்ன தினத்தில் பிறந்த குழந்தைக்கு சிவகுரு சங்கரன் என்று பேர் வைத்தார்' என்ற விஷயம் சொல்லியிருக்கிறது. அதற்கு முந்திய பாதத்தில் 'ராதே'என்றால் 'வைசாக மாஸத்தில்'என்று அர்த்தம். 'அதிதேருடு', அதாவது, 'அதிதே :உடு'என்றால் அதிதி என்ற தேவதையின் நக்ஷத்ரமான புனர்வஸு. வால்மீகியும் ராமாவதாரம் புனர்வஸுவில் நிகழ்ந்ததை 'நக்ஷத்ரே அதிதி தைவத்யே'என்றே சொல்லியிருக்கிறார். அஸ்த்ர-லக்னம் என்றால் தநுர் லக்னம். 'இது ஸரியான பாடமில்லை; 'அங்க லக்னம்'என்பதே ஸரி'என்று சொல்வதுண்டு. ஏனென்றால் வைசாக மாஸத்தில் தநுர் லக்னம் ராத்ரி வேளையில் தான் வரும். ஆசார்யாளோ நடு மத்யானம் பிறந்தவர். அப்போது மேஷம்-ரிஷபம்-மிதுனம்-கடகம் என்று நாலாவதாக வரும்

கடக லக்னமாகவே இருக்கும். அதுதான் அங்க-லக்னம் என்கிறார்கள்.

அங்கம் என்பது நான்கைக் குறிக்கும்.

'கடபயாதி'ஒருவிதமான ஸங்கேத எண்ணிக்கை என்றால், இன்னொரு விதமான ஸங்கேதக் கணக்கும் உண்டு. அதாவது ஒவ்வொரு எண்ணிலும் சிறப்பாக என்ன வஸ்து இருக்கிறதோ அதையே எண்ணுக்குப் பதில் சொல்லி விடுவது. கண்கள் இரட்டைதானே?அதனால் 'நேத்ரம்', 'நயனம்' என்று சொல்லிவிட்டால் 2 என்று அர்த்தம். 'முத்தீ'என்று சங்ககாலத் தமிழிலேயே சொல்லப்படும் மூன்று விதமான அக்னிகளை ப்ராம்மணன் உபாஸிக்க வேண்டும். ஆகையால் அக்னியின் பெயரைச் சொன்னால் 3. ஆறு ருதுக்கள் இருப்பதால் 'ருது'என்றால் 6. ஸப்த ரிஷிகள் இருப்பதால் 'ரிஷி'என்றால் 7. இம்மாதிரி சதுர் வேதங்கள் இருப்பதால் 'வேதம்'என்றால் 4. ரதம்-கஜம்-துரகம்-பதாதி என்று ஸைன்யத்தின் நாலு அங்கங்கள் இருப்பதால் அங்கம் என்றாலும் 4. 'அங்க லக்னம்'நாலாவதான கடகம்.

ச்லோகத்தின் இரண்டாம் பாதத்தில், நந்தன வருஷத்தில், தினமணியான ஸூர்யன் உதங்-முகம் எனப்படும் வடக்காக உத்தராயணத்தில் உள்ளபோது அவதாரம் என்ற விஷயம் சொல்லியிருக்கிறது.

முதல் பாதத்தில் கலியில் இத்தனாம் வருஷம் என்பது வருகிறது. 'திஷ்யே'என்று ஆரம்பிப்பதற்குக் 'கலியுகத்தில்'என்று அர்த்தம். 'திஷ்யம்'என்பதற்குக் கலி என்று ஒரு அர்த்தம்.

"திஷ்யே ப்ரயாதி அநல-சேவதி-பாண நேத்ரே"-'திஷ்யே ப்ரயாதி'என்றால் 'கலியுகம் முன்னேறிக்கொண்டு போகும்போது'.

'அநல-சேவதி-பாண நேத்ர' என்பதுதான் சற்றுமுன் நான் சொன்ன ஸங்கேதக் கணக்குப்படி எத்தனாம் வருஷம் என்று தெரிவிப்பது. 'அநல' என்றால் அக்னி. 'அக்னி'என்றால் 3 என்று தெரிந்து கொண்டீர்களல்லவா? 'சேவதி' என்றால் திதி. தவநிதிகள் உண்டாதலால் சேவதி என்பது 9. பாணம் என்றால் 5. பஞ்ச பாணம் என்று மன்மதன் ஐந்து பாணம் தானே

வைத்திருக்கிறான்? 'நேத்ர' என்பது 2 என்று சொன்னேன். அதனால் 'அநல-சேவதி-பாண நேத்ர' என்பது 3-9-5-2 : 3952. கடபயாதி ஸங்கியையில் 'அங்கானாம் வாமதோ கதி :' என்றாற்போலவே இங்கேயும் தலைகீழாகத் திருப்பிப் போடணும். அப்படிப் போட்டால் 2593. கலியில் 2593-ம் வருஷம். கலி பிறந்தது கி.மு. 3102. அப்படியானால் கலி 2593 என்பது 3102 மைனஸ் 2593. அதாவது கி.மு. 509.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**மாற்றுக் கருத்து (கி.பி. 788-820) :**ஆனால் இது ஒன்று தான் ஆசார்யாள் காலத்தைப்பற்றிய முடிவு என்றில்லாமல் இன்னும் பலவிதமான அபிப்ராயங்கள் இருந்து வருகின்றன. 'ஓரியன்டலிஸ்ட்'கள் என்பதாகக் கீழ்த்திசை நாட்டு விஷயங்களை ஆராய்ச்சி பண்ணும் மேல்நாட்டுக்காரர்கள் ஆசார்யாள் கி.பி. 788-ல் பிறந்து, 32 வருஷம் ஜீவித்து, கி.பி. 820-ல் ஸித்தியானாரென்று முடிவு செய்திருக்கிறார்கள். அந்த அபிப்ராயம் தான் ஸரியென்றே நம்மவர்களிலும் படிப்பாளிகளாகவுள்ளவர்களில் பெரும்பாலார் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சரித்ர புஸ்தகங்களிலெல்லாம் Sankara's Age என்றால் 788-820 A.D. என்றே போட்டு, அப்படித்தான் எல்லாரும் படித்து நம்பி வருகிறார்கள்.

கி.மு. 509-477 என்று நான் சொன்னதற்கும் கி.பி. 788-820 என்று சொல்வதற்கும் நடுவே சுமார் 1300 வருஷ இடைவெளி இருக்கிறது.

நம்முடைய தேசத்திலேயே ஆசார்யாளின் அவதார காலத்தைத் குறிப்பதாக இன்னொரு ச்லோகம் வழங்கி வந்திருக்கிறது. அதன்படி கி.பி. 788 என்றே ஆகும். வெள்ளைக்காரர்களும் இதைத்தான் அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு, அதற்கு மேலே தங்களுடைய ரிஸர்ச் முடிவுகளாகவும் அநேகம் சொல்லி, கி.பி. 788-820 தான்

என்று தீர்மானமாக முடித்திருக்கிறார்கள்.

இந்த ச்லோகத்தில் "நிதிநாகேபவஹ்ந்யப்தே"என்று கலியில் எத்தனாம் வருஷமென்பதைச் சொல்லியிருக்கிறது. "நிதி-நாக-இப-வஹ்நி-அப்தே." நவநிதிகளாதலால், நிதி-9 நாக:வாஸுகி, தக்ஷன் முதலாக அஷ்ட நாகங்கள் நாகம் என்றால் யானை என்றும் அர்த்தமுண்டு. அஷ்ட திக் கஜங்கள் என்பதாக அதுவும் எட்டுதான். அதனால் இங்கே 'நாக'என்பது 8. 'இப'என்றாலும் யானை தான். ஆகையால் அதுவும் 8. 'வஹ்நி'என்றால் அக்னி, அது 3. ஆகையால் இந்த சொற்றொடர் 9883 என்ற எண்ணிக்கையைத் தருகிறது. தலைகீழாக்க 3889. கலியில் 3889 என்றால் கிறிஸ்து சகாப்தப்படி 3889 மைனஸ் 3102. அதாவது கி.பி. 787.

ஆசார்யாள் அவதாரம் கி.பி. 788 என்று நம்பிக்கை இருப்பதைச் சொன்னேன். இந்த ச்லோகத்தை வைத்துத் தான் அந்த நம்பிக்கை.

788 என்றேன். 787 என்று ஒரு வருஷம் ஏன் குறைச்சலாக வருகிறதென்றால்...

இங்கிலீஷ் வருஷம் ஜனவரியிலும், இந்திய வருஷம் சாந்த்ரமானமானால் மார்ச் மத்தியிலிருந்து ஏப்ரல் மத்திக்குள்ளும், ஸௌரமானமானால் ஏப்ரல் மத்தியையொட்டியுமே பிறப்பவை. அதாவது எந்த 'மான'மானாலும் ஒரு இந்திய வருஷத்திலேயே இரண்டு இங்கிலீஷ் வருஷங்களின் பகுதிகள் வந்துவிடும். நம்முடைய தாநுர்மாஸம் பாதி வரையில் ஒரு இங்கிலீஷ் வருஷம், அப்புறம் பங்குனி முடிய இன்னொரு இங்கிலீஷ் வருஷம் என்று இருக்கிறது. அதனால் ஒவ்வொரு இந்திய வருஷத்துக்கும் '...' to '...'என்று அடுத்தடுத்த இரண்டு இங்கிலீஷ் வருஷங்களைக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. நடக்கும் நம்முடைய சுபக்ருத் வருஷத்தை 1962 to 1963 என்கிறோம். இம்மாதிரி கலி 3889 என்பதும் இங்கிலீஷ் வருஷம் கி.பி. 787 to 788-ஆக இருந்திருக்க வேண்டும்.

788 என்று நம் தேசத்திலுள்ள ச்லோகப்படி எடுத்துக்கொண்டு அப்புறம் ஓரியண்டலிஸ்டுகளும், அவர்கள் சொல்வதையே

வேதவாக்காக எடுத்துக்கொள்ளும் நம்மவர்களும் அதற்கு ஆதரவாக வேறு காரணங்கள் காட்டுகிறார்கள்.

'இன்னின்னாருடைய பேர்கள் அல்லது இன்னின்னாருடைய கொள்கைகள் பற்றி ஆசார்யாளின் புஸ்தகங்களில் வருகிறது. அதனால் அவர்களுக்குப் பிற்பாடுதான் ஆசார்யாள் வந்திருக்கவேண்டும். அவர்களுடைய காலத்தைப் பார்க்கும்போது ஆசார்யாள் காலம் கி.மு. 509 - 477 - ஆக இருக்கவே முடியாது'என்று அந்த ஆராய்ச்சிக்காரர்கள் சொல்கிறார்கள். இவற்றில் புத்தர் காலம் சாஸ்த்ரஜ்ஞர்கள் (ஆசார்யாளின் அவதாரமாகச்) சொல்லும் கி.மு. 509-க்கு ரொம்பக் கிட்டே வந்துவிடுகிறது. ரொம்பக் கிட்டே என்ன? ஸமகாலமே ஆகிவிடுகிறது. 'புத்தர் காலம் ஏறக்குறைய கி.மு.560 லிருந்து 480 வரை. அவர் எண்பது வயஸு இருந்தவர்' என்று இந்த ஆராய்ச்சிக்காரர்கள் முடிவு பண்ணி அப்படித் தான் ஹிஸ்டரிப் புஸ்தகங்களிலெல்லாம் ஏறியிருக்கிறது. அதாவது புத்தரின் ஐம்பதாவது வயஸில் ஆசார்யாள் பிறந்து ஏறக்குறைய அவர் நிர்யாணமாயிருக்கவேண்டும்!புத்தருக்குப் பிறகுதான், அதாவது, சாஸ்த்ரஜ்ஞர்கள் சொல்கிறபடியான சங்கரரின் காலத்துக்குப் பிறகுதான் புத்த மதம் அநேக ராஜாங்கங்களின் ஆதரவில் ப்ரசாரமாகி, இருநூறு முன்னூறு வருஷத்துக்கப்புறம் அசோக சக்கரவர்த்தியால் நாலா திசையிலும் பரப்பப்பட்டது. இப்படியிருக்கும்போது சங்கரர் காலத்திலேயே பௌத்தம் தலை சாய்ந்தது என்றால் எப்படி ஸரியாகும்?-என்று ஆக்ஷேபிக்கிறார்கள். பௌத்தமதம் நெடுங்காலம் பரவிய பிறகே குமாரில பட்டர் பிறந்து அதை நிறையக் கண்டனம் பண்ணி, அதற்கும் அப்புறம்தான் ஆசார்யாள் பாக்கியும் அதைக் கண்டித்தது என்று சாஸ்த்ரஜ்ஞர்களே ஏராளமான ஆதாரங்களைக் கொண்டு ஒப்புக்கொள்கிறார்கள். அப்படி ஒப்புக்கொண்டும் இப்படி புத்தருக்குக் காண்டெம்பரரியாக அவர்கள் ஆசார்யாளைச் சொல்வது ஒவ்வாருமலிருக்கிறது என்கிறார்கள்.

குமாரிலபட்டரின் கடைசிக் காலத்தில் ஆசார்யாள் அவரை ஸந்தித்திருக்கிறார். அதைக் கதை என்று விட்டு விட்டாலும் மீமாம்ஸையில் 'பாட்ட மதம்' எனும் குமாரில பட்டரின் கொள்கைகளை ஆசார்யாள் நன்றாகத் தெரிந்து

வைத்துக்கொண்டு பாஷ்யங்களில் கண்டித்திருக்கிறார். அதனால் இவர் அவருக்குக் 'காண்டெம்பரரி'அல்லது பிற்காலத்தவர். அந்தக் குமாரிலபட்டர் காளிதாஸனிலிருந்து மேற்கொள் காட்டியிருக்கிறார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**குமாரிலர் காட்டும் காளிதாஸனின் மேற்கோள் (மனஸ்ஸாக்ஷி ப்ரமாணம்) :** தர்மத்தை நிச்சயிப்பதற்கு எதெது ப்ரமாணம் என்று அவர் (குமாரிலர்) ஜைமினியின் மீமாம்ஸா ஸூத்ரத்திற்கு விளக்கமாக எழுதியுள்ள "தந்த்ர வார்த்திகத்"தில் அலசிப் பார்த்திருக்கிறார். மநு ஸ்ம்ருதியிலேயே இந்த விஷயம் விசாரித்து அபிப்ராயம் சொல்லப்பட்டிருக்கிறது. மநு,

**" வேதோ (அ)கிலோ தர்ம மூலம் ஸ்ம்ருதி சீலே ச தத்விதாம் ***

**ஆசாரச்சைவ ஸாதூநாம் ஆத்மநஸ்துஷ்டிரேவ ச "**

என்று தர்ம ப்ரமாணங்களை ஒன்றுக்குப் பின் ஒன்றாக, முதலில் வேதம், அப்புறம் தர்ம சாஸ்த்ரம். அப்புறம் ஸத்துக்களின் நடவடிக்கை, கடைசியாக நம் மனஸுக்கே, 'ஸரியாய்த்தாண்டாப்பா பண்ணியிருக்கோம்'என்று த்ருப்தி உண்டாக்கும் ஸொந்த அபிப்ராயம் என்று வரிசைப்படுத்திக் கொடுத்திருக்கிறார். ரூபத்தை அறிய நம்முடைய கண் ப்ரமாணமாயிருக்கிறது. சப்தத்தை அறியக் காது ப்ரமாணம். தர்மத்தை அறிய?அது நம் இந்த்ரியத்துக்கு அகப்படுமா?அகப்படாது. அதனால் ச்ருதிதான் ப்ரமாணம். தர்மாதர்மங்களை அறிய வேதத்தைப் பார்த்து அந்தப்படிதான் பண்ணணும். ஸரி, வேதத்தில் நாம் தேடுகிற தர்ம விஷயம் அகப்படவில்லையென்றால்?அப்போது

அடுத்த அதாரிடியான ஸ்ம்ருதியை பார். ச்ருதி, ஸ்ம்ருதி இரண்டிலும் முடிவு தெரியாவிட்டால்?இம்மாதிரி விஷயத்தில் ஸதாசார ஸம்பன்னர்கள் என்ன சொல்கிறார்கள், செய்கிறார்கள் என்பதைப் பார்த்து அதுவே ப்ரமாணம் என்று எடுத்துக்கொள். அவர்களும் இந்த விஷயத்தில் ப்ரவேசிக்கவில்லை, எதுவும் சொல்லவில்லை, செய்யவில்லை என்றால் என்ன செய்ய? ஸரி, உன் மனஸை நடுநிலையாய், நிஷ்பக்ஷபாதமாய் வைத்துக்கொண்டு அதற்கு என்ன தோன்றுகிறது என்று பார். ஸொந்த த்வேஷாபிமானங்கள் கலக்காமல் சுத்தமாக ஒரு அபிப்ராயத்துக்கு வா. உனக்குக் கொஞ்சங்கூட உறுத்தலில்லாமல் அது த்ருப்தி தரணும். அப்போது, 'வேறே வழியில்லாமல் இதோ என் அந்தஃகரண சுத்தமாக இப்படித் தோன்றுவதே ஸரி என்று அநுஸரிக்கிறேன்'என்று அப்படிப் பண்ணிவிட்டுப் போ. அதாவது உன்னுடைய அந்தஃகரணமே வேறொரு ப்ரமாணமுமில்லாதபோது ப்ரமாணம் என்று, பண்ணிவிட்டுப்போ!- இப்படி மநு சொல்கிறார்.

இந்த ரீதியில் கடைசியாய் வரும் மனஸ் ஸாக்ஷியின் ப்ராமாண்யத்தைக் குமாரில பட்டர் விசாரிக்கும்போது தான் காளிதாஸனை அதற்கு ஸாதகமாக quote செய்திருக்கிறார்.

சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தன் வாயிலாக இதைப் பற்றிக் காளிதாஸர் சொல்லியிருக்கிறார். க்ஷத்ரியனான துஷ்யந்தனுக்கு ரிஷி குமாரியாகக் கண்வரின் ஆச்ரமத்தில் வளரும் சகுந்தலையைப் பார்த்தவுடன் ப்ரேமை உண்டாகிறது. 'ப்ராம்மண கன்னிகையிடம் க்ஷத்ரியனுக்கு ப்ரேமை ஏற்படுவது தப்பல்லவா?என்று நினைக்கிறான். அப்போதுதான், 'ஸத்துக்களின் மனஸு (அந்தஃகரணம்) ஏதோவொன்றில் ப்ரவேசித்துவிட்டால், ஏதோவொன்றிடம் ப்ரியம் வைத்துவிட்டால், அது தர்ம விரோதமாயிருக்க முடியாது. நம்முடைய மனஸில் இப்படியொரு ப்ரேமை எழும்பிற்றென்றால் அது தர்மப்படியானதாகவே இருக்க வேண்டும்'என்று நினைத்துத் தன் ப்ரேமையில் தப்பிருக்காது. என்று தீர்மானிக்கிறான். வாஸ்தவத்திலும் சகுந்தலை விச்வாமித்ரர் ப்ராம்மண ரிஷியாக ஆவதற்குமுன்

ராஜரிஷியாகத் தபஸ் செய்துகொண்டிருந்த காலத்தில் அவருக்கும் மேனகைக்கும் பிறந்தவள்தான். அதனால் க்ஷத்ரிய துஷ்யந்தன் அவளிடம் ப்ரியம் கொண்டதில் சாஸ்த்ர விரோதமாக எதுவுமில்லை.

இந்த இடத்தில் துஷ்யந்தன், " **ஸதாம் ஹி ஸந்தேஹ பதேஷு வஸ்துஷு ப்ரமாணம்-அந்தஃகரண-ப்ரவ்ருத்தய** **:**"என்கிறான். "இப்படியா, அப்படியா என்று ஸந்தேஹமாயிருக்கும் விஷயங்களில் ஸத்துக்களின் அந்தஃகரணம் எப்படிப் போகிறதோ அதுவே ப்ரமாணம்"என்கிறான்.

மனஸ்ஸாக்ஷியும் கடைசி பக்ஷத்தில் ஒரு ப்ரமாணமாகிறது என்பதற்குக் குமாரிலபட்டர் காளிதாஸனின் இந்த வாக்யத்தை ப்ரமாணமாகக் காட்டுகிறார். அதனால் அவர் காளிதாஸனுக்கு அப்புறம் வந்தவர் என்பது நிச்சயமாகிறது. ஆகவே ஆசார்யாளும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். மேல் நாட்டு ஆராய்ச்சிக்காரர்களின் அபிப்பராயப்படி, காளிதாஸன் கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர் தான். அவர், விக்ரமாதித்யனின் காலத்தவர் என்றால் அந்த விக்ரமாதித்யன் இருந்தது கி.மு. முதல் நூற்றாண்டில். விக்ரம (விக்ரமாதித்ய சகாப்தம்) ஆரம்பிப்பது கி.மு. 57-ல் இதற்கு ரொம்பத் தள்ளி கி.பி. நாலாம் நூற்றாண்டுக் காரனான சந்த்ரகுப்த விக்ரமாதித்யனின் காலத்தில்தான் காளிதாஸர் இருந்தார் என்றும், அல்லது இன்னும் பின்னால்தான் இருந்தார் என்றுங்கூடச் சொல்ல ஆதாரங்களிருக்கின்றன.
'திங்நாக'என்று காளிதாஸன் 'மேக ஸந்தேச'த்தில் திக்-கஜங்களைச் சொல்வதில் பௌத்தத்தின் ஒரு பிரிவான 'வைபாஸிகம்'என்பதை உருவாக்கிய திங்நாகரையும் சிலேடையாகப் பரிஹாஸம் பண்ணியிருக்கிறாரென்று அபிப்ராயமிருக்கிறது. அந்த திங்நாகரோ கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்காரர். ஆகையால் அதுவரை காளிதாஸனின் காலத்துக்குக் கீழ்வரம்பு கட்ட இடமிருக்கிறது. ஆனபடியால் ஆசார்யாளின் காலம் கி.மு. ஆறாம் ஐந்தாம் நூற்றாண்டு என்ற சாஸ்த்ரஜ்ஞர் அபிப்ராயம் ஸரியில்லை என்கிறார்கள்.

---

## ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

### ஆசார்ய பாஷ்யத்தில் பௌத்தக் கொள்கைகள் :

திங்நாகருடைய வைபாஸிக்க கொள்கைகளை ஆசார்யாள் பாஷ்யங்களில் கண்டனம் பண்ணியிருக்கிறார். அந்தக் கொள்கைகளிலேயே சிலதை எடுத்துக்கொண்டு, சிலதை மாற்றி ஸௌத்ராந்திகம் என்று ஒரு பௌத்தப் பிரிவுண்டு. யோகாசாரம் என்றும் விஞ்ஞானவாதம் என்றும் மூன்றாவதாக இன்னொரு பிரிவு உண்டு. கி.பி. நாலாவது நூற்றாண்டுக்காரர்களாகக் கருதப்படும் அஸங்கரும் வஸுபந்துவும் உருவாக்கியது. இதையும் ஆசார்யாள் கண்டித்திருக்கிறார். மாத்யமிகம் அல்லது சூன்யவாதம் என்பதாக ஒரு நாலாவது பிரிவும் உண்டு. முக்யமாக அதை வளர்த்துக் கொடுத்தவர் நாகார்ஜுனர். அவரை கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்காரராகத் தீர்மானித்திருக்கிறார்கள். இந்த ஸித்தாந்தத்தையும் ஆசார்யாள் கண்டித்திருக்கிறார்.

'நாகார்ஜுனர், அஸங்கர், திங்நாகர் ஆகியவர்கள் முறையே கி.பி. இரண்டாம், நாலாம், ஆறாம் நூற்றாண்டுகளில் வந்தவர்களாக இருக்க இவர்களுடைய கொள்கைகளை க்ரிடிஸைஸ் செய்த சங்கரர் எப்படி கி.மு.வாக இருக்க முடியும்?' என்று கேட்கிறார்கள்.

கனிஷ்கரின் காலத்தில் பௌத்தம் மஹாயானம், ஹீனயானம் என்று இரண்டாகப் பிளந்தது. ஆசார்யாளின் நேர் சிஷ்யரான பத்மபாதர் (ஆசார்யாளின் ஸூத்ர பாஷ்யத்திற்குத் தாம் எழுதிய விளக்கமாகிய) 'பஞ்ச பாதிகாவில் மஹாயானத்தைப் பேர் குறிப்பிட்டுக் கண்டனம் செய்திருக்கிறார். கனிஷ்கரை அதிக பக்ஷமாகப் பின்னேகொண்டு போனாலும் கி.மு. முதல் நூற்றாண்டுக்குப் பூர்வ காலத்தில் தாங்களால் சேர்க்க முடியவில்லை என்று இன்னொரு காரணம் சொல்கிறார்கள்.

## ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

**ஆசார்ய ஸ்தோத்ரங்களில் கி.பி. குறிப்புக்கள் :** ஞான நூல்களான பாஷ்ய க்ரந்தங்களில் இப்படியெல்லாம் internal evidence (உட்சான்று) காட்டுவதுபோலவே பக்தி நூல்களான ஸ்தோத்ரங்களிலும் ஒன்றிரண்டு காட்டுகிறார்கள். பொதுவாக, 'ஞான மார்க்க ஆசார்யாள் பக்தி ஸ்தோத்ரமே பண்ணியிருக்க மாட்டார். வேறே யார் யாரோ பண்ணியதையெல்லாம் அவர் பேரில் ஏற்றிச் சொல்கிறார்கள்'என்றுதான் இந்த ஆராய்ச்சியாளர்கள் சொல்வது வழக்கம். ஆனாலும் (ஆசார்யாளின் காலம் குறித்த) சாஸ்த்ரஜ்ஞர்களின் மெஜாரிடி அபிப்ராயத்தைத் தகர்க்க வேண்டுமென்னும்போது, தங்களுக்கு ஸாதகமாக வருகிற பக்தி ஸ்தோத்ரங்களையும் அவருடையதாக ஒப்புக்கொண்டு பேசுகிறார்கள்!

"ஸௌந்தர்யலஹரி"யில் அம்பாளின் க்ஷீர மஹிமையைச் சொல்லும்போது, "வெள்ளை வெளேரென்ற ஸரஸ்வதியே உன்னுடைய க்ஷீர ரூபத்தில் பெருகுகிறாளென்று நினைக்கிறேன். உன் ஹ்ருதயத்திலிருந்து வரும் அநுக்ரஹ அம்ருத ப்ரவாஹமாகவும், ஸாரஸ்வதமான வாக்-அம்ருத ப்ரவாஹமாகவும் இருப்பது உன் க்ஷீரம். அதனால்தான் பரம தயையோடு நீ அதை ஒரு 'த்ராவிட சிசு'வுக்கு-த்ராவிட தேசக் குழந்தைக்கு-கொடுக்க, அது கவிகளுக்கெல்லாம் கவியாக ஆனது" என்கிறார் ஆசார்யாள். ஞான ஸம்பந்தருக்குத்தானே அம்பாள் பாலூட்டி அவர் மஹா பக்த கவியானது?அவர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிரு ந்தவரென்பதற்கு அழுத்தமான சான்றுகள் இருக்கின்றன. ஏழாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் ஆண்ட பல்லவ ராஜாவான மஹேந்த்ர வர்மா அப்பர் ஸ்வாமிகளால் சமண மதத்திலிருந்து வைதிக மதத்துக்கு மாற்றப்பட்டவன். அப்பரும் ஸம்பந்தரும் பல ஸ்தலங்களுக்கு சேர்ந்து போய்ப் பதிகம் பாடியிருப்பதால் ஸம்பந்தரும் அதே காலம்தான். அவரே பாண்டியராஜா ஒருவனை சமணத்திலிருந்து வைதிகத்திற்கு மாற்றியிருக்கிறார். நின்ற சீர் நெடுமாறன் என்ற

அவன் தான் மாறவர்மன் அரிகேசரி என்பதாகக் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் ஆட்சி நடத்தியவன். ஆகையால் ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளும் அந்த நூற்றாண்டுதான். அவரைப் பற்றி 'அல்யூஷன்'சொல்லும் ஆசார்யாள் அதற்கும் பிற்பட்ட காலத்தவராகத்தானே இருந்திருக்க வேண்டும்?
-என்கிறார்கள்.

மஹேந்தர வர்மாவுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தவன் நரஸிம்ஹ வர்மா. அவனிடம் ஸேநாதிபதியாயிருந்த மாமாத்திர ப்ராம்மணரான பரஞ்ஜோதிதான் அப்புறம் சிவனடியாராக ஆகிச் சிறுத்தொண்டர் என்ற நாயனாரானாது. அவரைச் சோதிப்பதற்காக ஈச்வரனே வடதேசத்து பைரவ உபாஸகர் ரூபத்தில் வந்து பிள்ளைக் கறி படைக்கச் சொன்னார். "உன்னுடைய பிள்ளையைக் கறி பண்ணிப் போடு"என்று அவர் சொல்லவில்லை. "ஒரு வீட்டுக்கு ஒரு பிள்ளையாக உள்ள ஒரு நர பசுவைப் பாகம் பண்ணிப் போட்டால் அதைத்தான் நாம் சாப்பிடுவது. ஆறு மாஸத்துக்கொரு தரம்தான் நமக்குச் சாப்பாடு. அது இந்தப் பிள்ளைக் கறிதான். இன்றைக்கு நாம் சாப்பிடும் தினம்" என்று சொன்னார். 'உக்ர வழியிலானாலும் சிவோபாஸகராக இருக்கப்பட்ட ஒருவர் எங்கேயோ வடதேசத்திலிருந்து ஆறு மாஸம் சாப்பிடாமலிருந்துவிட்டு இன்று நம் அகத்துக்கு வந்து இப்படிக் கேட்கிறார். நமக்கும் ஏக புத்ரனே இருக்கிறான். அதனால் நாம் வேறே யாரோ பிள்ளையைப் பிடித்து வரப்போவானேன்?'என்று சிறுத்தொண்டர் நினைத்தார். நினைத்த அப்புறம் கொஞ்சங்கூடத் தயங்கவில்லை. அவருடைய பத்னி-பிள்ளையைப் பெற்ற தாய்-அவளும் தயங்கவில்லை.

பைரவர் சொல்லியிருந்தபடியே, சீராளன் என்ற அவர்களுடைய ஏக புத்ரனான ஐந்து வயஸூப் பிள்ளையை அந்த அம்மாள் பிடித்துக்கொள்ளச் சிறுத்தொண்டர் அரிந்து, அப்புறம் பாகம் பண்ணி அதிதிக்குப் படைத்தார்கள். ஆனால் அது தங்கள் பிள்ளையென்று சொல்லவில்லை.

பைரவர், "நாம் தனியாகச் சாப்பிடுவதில்லை, அதனால், கூட உட்கார்ந்து சாப்பிடுவதற்கு உம் புத்ரனைக் கூப்பிடும்"என்றார்.

ஸ்வாமியை நினைத்துக்கொண்டார் சிறுத் தொண்டர். 'உன் உபாஸகர் இலையில் உட்கார்ந்து விட்டார். கூடச் சாப்பிடப் பிள்ளையைக் கூப்பிடச் சொல்கிறார். அவர் சொன்னபடி செய்யவேண்டியது என் கடமை, கூப்பிடுகிறேன். அவர் கோபித்துக்கொண்டு எழுந்திருந்து போகாமல் சாப்பிட்டுப் பசியாறிப் போகப் பண்ணுவது உன் பொறுப்பு' என்று ப்ரார்த்தித்துவிட்டு, "சீராளா!வா!"என்று கூப்பிட்டார்.

உடனே நிஜமாகவே அந்தப் பிள்ளை ஓடி வந்தான்!

எல்லாம் ஸ்வாமி ஆடிய நாடகம், புத்ர வாத்ஸல்யத்திற்கும் மேலே சிவனடியாரின் ஸேவையை உயிராக மதித்த பெரும் தொண்டர் இந்த சிறுத் தொண்டர் என்று காட்டவே ஸ்வாமி ஆடிய நாடகம், என்று தெரிந்தது.

'புஜங்க ப்ரயாதம்'என்பதாக அடிக்கு 12 அக்ஷரங்கள் கொண்டதாக உள்ள வ்ருத்தத்தில் (விருத்தத்தில்) ஆசார்யாள் செய்துள்ள அநேக ஸ்தோத்ரங்களில் "சிவ புஜங்கம்"ஒன்று. அதில் ஒரு ச்லோகத்தில், "உன்னை எப்படி ப்ரீதி கொள்ளச் செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. எனக்கோ பிறத்தியாருக்கு த்ரோஹம் செய்வதற்கு முடியவில்லை. நீயானால் கட்டின பெண்டாட்டிக்கும், பெற்ற பிள்ளைக்கும், பெற்றெடுத்த தகப்பனாருக்கும் த்ரோஹம் செய்தவர்களுக்குத்தான் ப்ரஸன்னமாகி அநுக்ரஹம் பண்ணியிருக்கிறாய்!"என்று நிந்தா ஸ்துதியாக வருகிறது. காந்தா த்ரோஹி, ஸுத த்ரோஹி, பித்ரு த்ரோஹி என்று இதில் மூன்று நாயான்மார்களைக் குறிப்பிட்டிருக்கிறது.

காந்தா த்ரோஹி என்பவர் இயற்பகை நாயனார்-ஈச்வரனே அடியார் வேஷத்தில் வந்து, 'உன் பெண்டாட்டியைக் கொடு' என்றபோது அப்படியே தத்தம் பண்ணியவர். 'இல்லையே என்னாத இயற் பகைக்கும் அடியேன்' என்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் 'திருத்தொண்டத் தொகை'யில் சொல்கிறார். அப்புறம் அந்தக் கதையும் சிறுத்தொண்டர் - சீராளன் கதை மாதிரியே ஸ்வாமி விளையாடின சோதனை நாடகமாகி ஸந்தோஷமாகவே முடிகிறது. இயற்பகை நாயனார் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்த வைச்யர் என்பது தவிர அவருடைய காலம் முதலியவை நமக்குத் தெரியவில்லை.

அடுத்தாற்போல் சொன்ன ஸூத த்ரோஹிதான் பிள்ளைக் கறி பண்ணிப்போட்ட சிறுத்தொண்டர். கி.பி. ஏழாம் நூற்றாண்டு மத்தியில் நரஸிம்ஹ வர்மா வாதாபி மேல் படையெடுத்துச் சாளுக்ய ராஜாவைத் தோற்கடித்த போது இவர் ஸேநாதிபதியாக இருந்திருக்கிறார். அப்புறம் இவர் பெரிய சிவபக்தர் என்று நரஸிம்ஹ வர்மாவுக்குத் தெரிந்து, இவரைப் போய்ச் சண்டையில் ஏவிக் கொண்டிருக்கிறோமே என்று வருத்தப்பட்டு, இவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மரியாதையுடன் 'ரிடையர்'பண்ணி நிறைய ஸம்பாவனை கொடுத்து அவருடைய ஊரான திருச்செங்காட்டங்குடிக்கு அனுப்பி வைத்தான். அதற்கப்புறம் தான் அவருக்குப் பிள்ளை பிறந்து, கதையெல்லாம் நடந்தது.

ஆகையால் சிறுத்தொண்டரின் காலமான ஏழாம் நூற்றாண்டின் பின்பாதிக்கு முன்னால் ஆசார்யாளின் அவதாரம் ஏற்பட்டிருப்பதற்கில்லை என்கிறார்கள்.

பித்ரு த்ரோஹி என்றது, சண்டிகேச்வரரை, அவர் பண்ணி வந்த சிவபூஜையில் பாலைக் குடம் குடமாக அபிஷேகம் செய்கிறாரே என்று அவருடைய பிதா ஆத்திரப் பட்டார். ஆத்திரத்தில் பால் குடத்தைக் காலால் உதைக்க வந்தார். உடனே அவருடைய காலையே சண்டிகேச்வரர் வெட்டினார். பரமசிவன் ப்ரத்யக்ஷமாகி "இனிமேல் நானே உன் பிதா"!என்றார்.

அதுவரை விசார சர்மா என்ற பெயரில் இருந்து வந்த அந்த ப்ராமண இளைஞருக்குச் சண்டிகேச்வரர் என்பதாக அப்போதுதான் பேர் கொடுத்து, சிவனடியார்களுக்கெல்லாம் தலைவராக்கி, தம் முடிமேலிருந்த கொன்றை மாலையை எடுத்து ஸ்வாமியே அவருக்குச் சூட்டினார் என்று கதை. பஞ்சமூர்த்திகளில் ஒருவராகவே சிவகுடும்பத்தில் இடம் பெற்றுவிட்டவர் சண்டிகேச்வரர். அவருடைய எத்தனையோ யுகங்களுக்கு முற்பட்டது. அதனால் ஆசார்யாள் கி.மு. ஆறாம் நூற்றாண்டு என்பதற்கு இந்த 'ரெஃபரென்ஸ்'ஆக்ஷேபமாகாது.

ஆக்ஷேபம் அவர் சிறுத்தொண்டரைக் குறிப்பிட்டிருப்பதற்குத்தான்.

இரண்டு ராஜாக்களை வைத்து இன்னும் இரண்டு ஆக்ஷேபம்

சொல்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**பூர்ணவர்மனைப் பற்றிய குறிப்பு :** ஸூத்ர பாஷ்யத்தில் ஓரிடத்தில் ஸத்துக்கும் அஸத்துக்கும் (இருக்கிற வஸ்துவுக்கும் இல்லாத வஸ்துவுக்கும்) ஸம்பந்தம் காட்டுவது அஸம்பாவிதம் என்று ஆசார்யாள் சொல்லிக்கொண்டுபோகும் போது, "பூர்ணவர்மனுக்குப் பட்டாபிஷேகம் ஆவதற்கு முன்னால் ஒரு மலடியின் பிள்ளை ராஜாவாக இருந்தான்"என்று (வாஸ்தவமாக உள்ள பூர்ணவர்மனை ஒருகாலும் இருக்க முடியாத மலடி மகனோடு ஸம்பந்தப்படுத்திச்) சொல்வது எத்தனை அஸம்பாவிதம் என்று உவமை காட்டியிருக்கிறார். அவர் குறிப்பிடும் ராஜாவான பூர்ணவர்மன் யார்?அவனுடைய காலத்தைத் கண்டு பிடித்துவிட்டால் அவனுக்கு ஸமகாலத்தவராகவோ பின் காலத்தராகவோ இருந்திருக்கக்கூடிய ஆசார்யாளின் காலத்தைக் கண்டுபிடித்து விடலாம், என்று ஆராய்ச்சி பண்ணியிருக்கிறார்கள்.

பூர்ணவர்மன் என்று பேருள்ள இரண்டு ராஜாக்களை இவர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

Far East-ல் (தூரக் கிழக்கு நாடுகளில்) பாரத கலாசாரம் வெகு நாட்களுக்கு முந்தியே பரவியிருந்ததென்று தெரிந்திருக்கலாம். அவற்றில் 'யாவகம்'எனப்படும் ஜாவாவில் கி.பி. நாலாம் நூற்றாண்டில் ஒரு பூர்ணவர்மன் ஆட்சி செய்திருக்கிறான். அங்கே அவனுடைய பாதத்தை ஒரு பாறாங்கல்லில் விஷ்ணு பாதம் மாதிரிச் செதுக்கியிருக்கிறது. அதிலேயே அவனுடைய சிலா சாஸனமும் பொறித்திருக்கிறது. விஷ்ணுவுக்கு ஸமானமானவன் என்று அவனை வர்ணித்திருக்கிறது.

'ஆனால் ஜாவா தேசத்துப் பூர்ணவர்மனை ஆசார்யாள் எதற்கு உதாஹரணம் காட்டியிருக்கப் போகிறார்?அவருடைய ஸூத்ர பாஷ்யத்தைப் படிக்கக்கூடிய நம் தேசத்து வித்வத் ஸமூஹத்துக்குத் தெரிந்த ஸ்வதேச ராஜா எவனையாவதுதான் அவர் குறிப்பிட்டிருக்கணும்' என்று சொல்லி ரிஸர்ச்காரர்கள் இந்தப் பூர்ணவர்மனைத் தள்ளிவிடுகிறார்கள்.

அவர்கள் கண்டு பிடித்துள்ள இன்னொரு பூர்ணவர்மன்தான் நம் தேசத்தவன். மகத தேசத்தின் மேற்குப் பகுதியில் ஆட்சி செலுத்தியவன். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முன்பாதியில் இந்தியாவில் 16 வருஷம் சுற்று ப்ரயாணம் செய்த ஹூவான் த்ஸாங் அந்த ஸமயத்தில் பூர்ணவர்மன் மகத நாட்டரசனாக இருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார். 'அதனால் ஆசார்யாள் refer பண்ணுவது இவனாகவே இருக்கவேண்டும். அவர் பாஷ்யம் எழுதியது காசியில். மேற்கு மகதம் அதன் கிட்டே வந்து விடுகிறது. காசியோடு ரொம்பவும் ஸம்பந்தப்பட்டது கயை. அங்கே (கயையில்) பௌத்த விரோதியான சசாங்கன் என்ற ராஜா வெட்டிவிட்ட போதி வ்ருக்ஷத்தைப் பூர்ணவர்மன் மறுபடி நட்டு, போஷித்து, துளிக்கப் பண்ணியதாகத் தெரிகிறது. அதனால் பாஷ்யத்தில் அவனையே சொல்லியிருக்கிறாரென்று வைத்துக்கொள்ளலாம்'என்கிறார்கள். அதாவது ஆசார்யாள் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு அப்புறம்தான் வந்தவர் என்பதற்கு இதுவும் எவிடென்ஸ் என்கிறார்கள்.

இரண்டு ராஜாக்களில் இன்னொருத்தன் யாரென்றால்....

'Far East ராஜாவைப்பற்றி நம்மூரில் ஆசார்யாள் பாஷ்யம் எழுதி ப்ரசாரம் பண்ணும்போது குறிப்பிடுவதற்கில்லை என்றாலும், அந்த தூர தேசத்தில் நம்முடைய வைதிக மதமும் பௌத்த மதமும் பரவியதால் அங்கே நம்முடைய தெய்வங்களுக்குக் கோவில், பௌத்த விஹாரங்கள் முதலியன இருக்கின்றன;அகஸ்த்யர், புத்தர், போதிஸத்வர் முதலியவர்களுக்கு விக்ரஹங்கள், அவர்களைப் பற்றி சாஸனக்குறிப்புகள் ஆகியவையும் இருக்கின்றன.

இப்படி இண்டியன் இன்ஃப்ளூயென்ஸைக் காட்டுவதாக அங்கே ஆசார்யாளைப் பற்றியும் குறிப்புக் கிடைக்கக்

கூடியது ஸாத்யமே. ஆசார்யாள் அந்த தேச ஸமாசாரத்தை பாஷ்ய புஸ்தகத்தில் குறிப்பிடுவதற்கில்லை என்பது மாதிரி அந்த தேசத்தினர் ஆசார்யாளைக் குறிப்பிடமாட்டார்கள் என்று சொல்லமுடியாது' என்ற அடிப்படையில் இந்த இன்னொரு ராஜாவைப் பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள்.

காம்போஜம் என்று சொல்லப்படும் கம்போடியாவில், ச்லோகரூபமான ஒரு ஸம்ஸ்க்ருத சாஸனம் அகப்பட்டிருக்கிறது. அது இந்த்ரவர்மன் என்ற காம்போஜ ராஜாவில் சாஸனம். அதில் அவனுடைய குருவின் பெயர் சிவஸோமன் என்று சொல்லி, அந்த சிவஸோமன் "பகவான் சங்கர"ரிடமிருந்து சாஸ்த்ரங்களைக் கற்றுக்கொண்டாரென்று சொல்லியிருக்கிறது: **யேநாதீதாநி சாஸ்த்ராணி பகவத்-சங்கராஹ் வயாத்** *அதற்கப்புறம் அந்த 'பகவத் சங்கர'ரின் தனிப் பெருமையை ரொம்பவும் கொண்டாடி ச்லோகத்தை முடித்திருக்கிறது. அதாவது அவருடைய பாதமாகிற தாமரையை மிச்சம் மீதியில்லாமல் அத்தனை வித்வத் ச்ரேஷ்டர்களின் சிரஸாகிற வண்டு வரிசைகளும் மொய்த்துக்கொண்டிருக்கின்றன என்று சொல்லியிருக்கிறது. அறிஞருலகம் முழுவதும் அவருடைய பாதத்தில் தலைவைத்து வணங்குவதாக அர்த்தம் : **நிச்சேஷ-ஸூரி மூர்த்தாலி-மாலாலீடாங்க்ரி-பங்கஜாத்** .

இந்த பகவான் சங்கரர் ஆசார்யாளாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறார்கள். அந்தப் பெயரில் இப்படி வித்வத் ஸமூஹம் முழுவதாலும் வணங்கப்பட்டவராகக் கம்போடியாவில் எவருமில்லை;இந்தியாவிலும் ஸ்ரீ சங்கர பகவத்பாதாளைத் தவிர எவருமில்லை என்று எடுத்துக்காட்டுகிறார்கள். "சங்கர பகவத:" என்று அவருடைய புஸ்தக colophonகளிலும் இருக்கிறதென்றேனல்லவா?அதற்கு இது ('பகவத் சங்கர'என்பது) அப்படியே ஒத்துப்போவதைக் காட்டுகிறார்கள்.

இந்த்ரவர்மனின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் பின்பாதி என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய குரு சிவஸோமன் அவனைவிட முப்பது, நாற்பது வருஷம்

பெரியவராயிருக்கலாம். அவர் ஆசார்யாளின் நேர் சிஷ்யராயிருந்து அவரிடமிருந்து எல்லா சாஸ்த்ரமும் அப்யாஸம் செய்திருக்கிறாரென்றால் ஆசார்யாள் காலம் கி.பி. 788-820 என்று கருத்து ரொம்பவும் ஸரியானதே என்று தோன்றுகிறது-என்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**மேல்நாட்டவரின் பரிஹாஸமும் உள்நோக்கமும் :** இப்படிக் காரணங்கள் காட்டிக் கால நிர்ணயம் பண்ணி நம்முடைய கணக்கைப் பரிஹாஸம் பண்ணுகிறார்கள்.

Old is gold என்று பழசையே கொண்டாடுவது நமக்கு வழக்கம். பூர்விகமாகப் போகப்போக ஒன்றுக்கு உயர்வு ஜாஸ்தி, தெய்விகம் ஜாஸ்தி, அதாரிடி ஜாஸ்தி என்று நமக்கு ஸூபர்ஸ்டிஷன் (மூடநம்பிக்கை) அதனால் மநுஷ்ய ஜீவ உற்பத்தியே ஏற்பட்டிருக்க முடியாத எத்தனையோ லக்ஷம், கோடி வருஷத்துக்கு முந்தியே மநு இருந்தார். மாந்தாதா இருந்தார் என்று கதை பண்ணுகிறோம். க்ருதயுகம் கிட்டதட்ட 18 லக்ஷம் வருஷம் (17, 28, 000), த்ரேதாயுகம் அதில் முக்கால் (12, 96, 000 வருஷம்) த்வாபரம் பாதி (8, 64, 000) வருஷம், கலி கால் (4, 32, 000 வருஷம்) என்றெல்லாம் சொல்லி க்ருத .யுகத்திலிருந்து ராஜ்வம்சங்கள் சொல்வதாக லிஸ்ட் கொடுத்து, அந்தக் காலத்தில் பல நூறு, பல ஆயிரம் வரும் ஜீவித்து ஆட்சி நடத்தியவர்களும் உண்டு எனறு ஒரே புரளியாகப் பண்ணிவருகிறோம். இப்படி ஏதோ 43 லக்ஷம் வருஷம் முந்தி க்ருதயுகம் ஆரம்பித்ததோடு மட்டும் நிறுத்தாமல், இதற்கும் முன்னாடி எத்தனையோ சதுர்யுக ஸைகிள்கள், மன்வந்தரம் கல்பம் என்றெல்லாம் லக்ஷத்திலிருந்து கோடிக்கணக்கான வருஷங்களுக்குத் தாண்டிப் புளுகு மூட்டைகளாகக் கட்டிவைத்திருக்கிறோம். அந்த ரீதியில் வருவதுதான் நாம் traditional ஆகச் சொல்லிவருகிற ஆசார்யாள் காலம்-என்று இவ்வாறாக (கி.மு.

509-477 என்ற) நம்முடைய அபிப்ராயத்தைத் தப்பு என்று சொல்லிப் பரிஹாஸம் செய்கிறார்கள்.

த்ரேதாயுக, க்ருதயுக விஷயங்கள் இங்கே ஸம்பந்தமில்லை. கலியில் கிட்டத்தட்ட 2600 வருஷமானபோதே ஆசார்யாள் அவதாரம் என்று நாம் சொல்வதால் பூர்வ யுக, மன்வந்தரச் சண்டைக்குப் போகவேண்டாம். இப்படிச் சொன்னதால் நமக்கு அந்த விஷயமாகப் பாயிண்ட் இல்லை என்று அர்த்தமில்லை.

அவர்களுடைய (மேல் நாட்டினருடைய) ஸிவிலிஸேஷன் (நாகரிக வாழ்வு) தோன்றியது சில ஆயிரம் வருஷம் முந்திதான். அதிலும் அது முன்னேறியது 2000 வருஷத்திற்கு முன்வந்த கிறிஸ்துவுக்கு அப்புறந்தான். இன்று நவநாகரிகம் என்பதன் உச்சியிலிருக்கிற இங்கிலீஷ்காரர்கள், ஜெர்மனிக்காரர்கள் முதலியவர்களெல்லாம் 1500 வருஷம் முந்திக்கூட pirate என்று கப்பல்களைக் தாக்கி அழிக்கும் கூட்டம் முதலியனவாக இருந்து அப்புறம்தான் இங்க்லாண்ட், ஜெர்மனி ஆகிய இடங்களில் 'ஸெட்டில்'ஆகி ஸமுதாய வாழ்க்கை என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய பாஷைகள் ரூபமானதும் அதற்கப்புறம்தான்.

அவர்களை மட்டம் தட்டுவதற்காகச் சொல்லவில்லை. (சிரித்து) யாரையும் மட்டம் தட்டிப் பேசுவதுதான் எல்லாவற்றையும் விட மட்டம்!தற்பெருமை அடித்துக்கொள்வதும் மட்டம்தான், அஹங்காரம்தான். ஆனால் நம்மை அவர்கள் தாக்கிக் கேலி பண்ணும்போது ஏன் அப்படிப் பண்ணுகிறார்களென்று பார்க்க வேண்டியதாகத்தானே இருக்கிறது?அந்த ரீதியில்தான் சொல்வது. 1500 வருஷத்துக்குள் இலக்கியம், அரசாட்சி, வியாபாரம், ஸயன்ஸ், ஹைஜீன் என்று எல்லாவற்றிலும் அவர்கள் எப்படி அதிசயமான அபிவ்ருத்தி கண்டிருக்கிறார்கள் என்பதைப் புகழ்ந்து பாராட்டவும்தான் வேண்டும். எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் அவர்கள் எப்படி விடாமுயற்சியுடன் அடிவரையில் போய் ஆராய்கிறார்கள் என்பதையும் போற்றிச் சொல்லவேண்டும்.

நஷ்டப்பட்டுப்போன நம்முடைய அநேக சாஸ்த்ரங்களை, எங்கெங்கேயோ ஏட்டுச் சுவடிகளில் அரிபட்டுப்போய்க்

கொண்டிருக்கும் போது தேடிக் தேடிக் கண்டுபிடித்துப் பெரிசு பெரிசாக Index, Concordanceஎன்றெல்லாம் அவர்கள்தான் புஸ்தகம் போட்டு ரக்ஷித்துக் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு நாம் அவர்களிடம் எவ்வளவோ நன்றிக்கடன் பட்டிருக்கிறோம்.

உழைப்பு, 'பங்க்சுவாலிடி'போன்ற பல விஷயங்களில் நாம் அவர்களிடம் கற்றுக்கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது.

ஆனாலும் அவர்களுடைய கண்ணோட்டத்திலுள்ள சில தப்பான போக்குகளையும் சொல்லாமலிருக்க முடியவில்லை-குறிப்பாக நம்மை அவர்கள் தாக்க வரும்போது. offensive-ல் போகாமல் (நாம் அவர்கள் மேல் முதல் தாக்குதலில் இறங்காமல்) defensive-ல் (நம்மை அவர்கள் தாக்கும் போது நம் தற்காப்புக்கான எதிரடியாக) தான் சொல்வது.

அவர்கள் (ஓரியன்டலிஸ்டுகள்) சொல்வதில் மூலாதாரக் கோளாறு மனோதத்வ ரீதியிலானது. அதோடு ஒரு உள்நோக்கமும் உண்டு.

என்னதான் 'ஸயன்டிஃபிக் ரிஸர்ச்', அது, இது என்று அப்படியே நடுநிலை தப்பாமல் சொல்வதாகச் சொல்லிக் கொண்டாலும் மநுஷர்களாகப் பிறந்தவர்களை 'ஸைகலாஜிகல்'அபிமானங்கள் விடுவதே இல்லை. நம்மூரிலேயே ப்ரத்யக்ஷமாய் பார்க்கிறோம்:'மூட நம்பிக்கைகளைக் குழி தோண்டிப் புதைக்கவேதான் நாங்கள் வந்திருக்கிறோமாக்கும்'என்று சொல்லிக்கொண்டு பகுத்தறிவு வாதிகள் என்றே ஒரு கட்சியாகப் புறப்பட்டிருப்பவர்களைப் பார்க்கிறோம். சாஸ்த்ர, புராணங்களை இவர்கள் பகுத்தறிவினால் ஆராய்ந்தே ஏகமாகக் கண்டனமும் கேலியும் செய்கிறார்கள். ஆனால் வெள்ளைக்காரன் வார்த்தையை நம்பிக் கொண்டு தங்களுடைய தனி இனம் என்று இவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிற இனம் என்றும், தாய் பாஷை என்றும் வந்துவிட்டால் இவர்களுடையை பகுத்தறிவு போன இடம் தெரிவதில்லை!ஜாதியிலே உசத்தி சொல்கிறவர்களென்று சில பேரைத் திட்டிக்கொண்டே,

'எங்கள் இனத்தைப் போல உசத்தி எதுவுமே கிடையாது'என்றும் இவர்கள் சொல்வது எப்படிப் பகுத்தறிவு என்று புரியவில்லை! தங்கள் பாஷையை விடவோ அதற்கு ஸமதையாகவோ எதுவுமே எங்கேயுமே கிடையாது, தங்களுடைய பண்பாட்டைவிடப் புராதனமாகவோ, அதற்குக் கிட்டே வரக்கூடிய லாயக்கோ உள்ளதாக எதுவுமே கிடையாது என்று ஒரே பிடிவாதமாகச் சாதிக்கிறார்கள். இதைப் பார்க்கும்போது சாஸ்த்ரஜ்ஞர்களைவிட இவர்களுக்குத்தான் ஜாஸ்தி ஸூபர்ஸ்டிஷன் என்று நினைக்கவேண்டிருக்கிறது. எந்த பாஷையில், எந்தப் பண்பாட்டில் உயர்வாக எது இருந்தாலும், 'அதெல்லாம் எங்களிடம் இரவல் வாங்கியது தான்'என்கிறார்கள். வாஸ்தவத்தில் கொடுக்கல் - வாங்கல் பரிவர்த்தனையில் கொஞ்சங்கூட குறுகிய நோக்கமோ, தயக்கமோ இல்லாமல் நல்லதுகளை எல்லாம் அன்போடு வரவேற்றுத் தனதாக்கிக் கொண்டிருப்பதில் முதலாவதாக நிற்பது தமிழ் பாஷையும் பண்பாடும்தான். ஆனாலும் 'நாங்கள் பகுத்தறிவாளர்கள்'என்று சொல்லிக் கொண்டே, நடுநிலைமையில் பார்க்காமல், தாங்கள் கொடுக்கல் மட்டுமே செய்தவர்கள், வாங்கலே கிடையாது என்கிறார்கள்! 'தன் இனம்'என்று ஒன்றை நினைத்துவிட்டால் அதில் இப்படி அறிவுவாதங்களை மீறிய அபிமானம் ஏற்பட்டு விடுகிறது!

'ஸயன்டிஃபிக் ரிஸர்ச்'என்று புறப்பட்ட ஓரியன்டலிஸ்ட்களையும் இந்த அபிமானம் விடவில்லைதான்!இன்றைக்குத் தாங்கள் மேல் கையாக ஓங்கியும், இந்தியா கீழ்க் கையாகத் தங்களிடம் தாழ்ந்தும் இருந்தாலும், ஆதியில் தங்களுக்கு நாகரிகம் என்றால் என்னவென்றே தெரியாத காலத்தில் இந்தியா மஹத்தான கலாசாரத்துடன் விளங்கியிருக்கிறது என்பதை அவர்களால் ஏற்று ஜீர்ணித்துக் கொள்ளமுடிவதில்லை!

அவர்கள் தற்காலத்தில் பார்த்த ஹிந்து ஸமுதாயத்தில் பல குறைகள் இருப்பதாக நினைத்தார்கள். அவர்களுடைய நவீன ஸயன்ஸ் அறிவு இங்கே இல்லை;அவர்கள் சொல்லிக் கொடுத்துத்தான் இவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது.

அவர்களைப்போல ஸுகாதாரமாயில்லாமல் ஏராளமான ஜனங்கள் ஒரே அசுசியான சூழ்நிலையில் வ்யாதியும் வக்கையுமாகச் சிறு வயதிலேயே செத்துப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களிடமுள்ள ஸமத்வம் இங்கே இல்லாமல், ஜாதி, கிளை ஜாதி என்று ஒரேயடியாகப் பிரித்துப் பிரித்து வைத்து, ஜாதியே இல்லாத பஞ்சமர் என்று வேறு ஒரு பெரிய கூட்டத்தை ஒதுக்கி வைத்திருந்ததும் அவர்களுக்குப் புரியவில்லை. நம்மில் கல்வியறிவு, ஸுகாதாரம் முதலியவற்றில் முன்னேறியுள்ள ஜாதிக்காரர்களுக்கும் அவர்களுடைய ஸயன்ஸுக்கு ஒத்துவராத சாஸ்த்ரக் கொள்கைகளையும், கார்யங்களையும் பின்பற்றி வருவதும் அவர்களுக்கு ஏற்கவில்லை.

இதையெல்லாம் பார்த்து இந்த தேசமே ரொம்ப backward (H¡ îƒAò¶) â¡Á ªê£™L, "àƒèÀ‚ªè™ô£‹ ÜP¾„ ²ì˜ ªè£Àˆ¶A«ø£‹. âƒèœ ñ£FK àƒè¬÷»‹ º¡«ùŸÁA«ø£‹" â¡Á Ýó‹Hˆî£˜èœ.

நவீன ஸயன்ஸ் கிறு கிறுவென்று அவர்களுடைய நாடுகளில் தோன்றி அபிவ்ருத்தி அடைந்த காலத்தில் நம் தேசம் துருக்கர் ஆட்சியில் இருந்து, கொஞ்சங்கூட முன்னேறாமல், நம்முடைய பழைய ஸயன்ஸுகளையும் மறந்துவிட்டது. இப்போது அவர்களுடைய ஸயன்ஸ் ஸாதனை நம்மவர்களுக்கு ப்ரமிப்பு உண்டாக்கிற்று. அதைப் பார்த்து, அவர்கள் காலடியில் விழுந்து அவர்கள் சொல்வதையெல்லாம் ஏற்றுக்கொள்ள ஆரம்பித்தோம்.

தங்கள் காலடியில் வந்து விழுந்து தங்களையே வழிகாட்டிகளாக எடுத்துக்கொள்ளும் இதே ஹிந்துக்கள்தான் மிகப் புராதனமான காலத்திலிருந்து சில நூற்றாண்டுகளுக்கு முந்தி வரை ஸகலதுறைகளிலும் முன்னேறி லோகத்துக்கே வழிகாட்டியாயிருந்திருக்கிறார்கள் என்பதை ஒப்புக் கொள்ள அவர்களுடைய ஸ்வயாபிமானம் விடவில்லை!

அது மட்டுமில்லை. உள்நோக்கம் என்றேனே, அதற்கு வருகிறேன். உறைக்குள் கத்தியை மறைத்து வைத்திருப்பது போல அவர்கள் ரஹஸ்யமாகப் போட்டு வந்த இன்னொரு திட்டத்துக்கு நம்முடைய புராதன கலாசாரத்தை ஒப்புக் கொள்வது இடைஞ்சலாயிருந்தது. அரசியல் ரீதியில் நம்மைத்

தங்களுடைய ஆட்சிக்குள் கொண்டு வருவது மாத்திரம் அவர்களுடைய லக்ஷ்யமாயிருக்கவில்லை. நம் ஸமுதாயம் முழுவதையும் தங்களுடைய மதத்துக்குத் திருப்பிவிட வேண்டுமென்பதே அவர்களுடைய ரஹஸ்ய உத்தேசம். மறைந்து போயிருந்த நம்முடைய சாஸ்திரங்கள் வெளிவர நமக்கே உபகாரம் செய்தவர்கள் என்று அவர்களில் பலரைச் சொல்கிறோமல்லவா?அவர்களிலேயே சிலருடைய ஜீவ்ய சரித்ரம், அவர்கள் நடத்திய கடிதப் போக்குவரத்து முதலியவற்றைப் பார்த்தால் நமக்கு தூக்கிவாரிப் போடும்! ஹிந்துக்களோடு விச்வாஸமாகப் போகிற மாதரிப் போயே அவர்களை வளைத்துப் பிடித்து அவர்களுடைய ஸ்வ மதாபிமானம் போகும்படிச் செய்து அவர்களைத் தங்கள் மதத்திற்கு இழுத்துவிட வேண்டும் என்று அவர்கள் ப்ளான் போட்டிருந்தது இவற்றைப் பார்க்கும்போது தெரியும். வெளியிலே மிஷினரிகள் பஹிரங்கமாகச் செய்தது குறைச்சல். உள்ளூரக் குழிபறித்ததுதான் ஜாஸ்தி. வெளியிலே 'அவரவருக்கும் மத ஸ்வதந்த்ரம் உண்டு. ஹிந்து சாஸ்த்ர விஷயங்களில் தலையிட மாட்டோம்'என்று விக்டோரியா ப்ரகடனத்திலிருந்து ஆரம்பித்துச் சொல்லி வந்தார்கள். ஆறாயிரம் மைலுக்கு ஆரம்பித்துச் சொல்லி வந்தார்கள். ஆறாயிரம் மைலுக்கு அப்புறத்திலிருந்து கொண்டு கோடிக் கணக்கான ஜனங்களை ஆளும் போது ஜாக்ரதையாகத்தானே இருக்க வேண்டும்?அதனால் வெளியில் நேர்மை மாதிரிப் பண்ணிக் கொண்டே உள்ளூர ஹிந்துக்களைத் தங்கள் மதத்திற்கு இழுக்க எல்லா ஸாமர்த்யமும் பண்ணினார்கள். 'நம் மதத்திற்கு வராவிட்டால்கூடப் பரவாயில்லை. ஸொந்த மதத்தை இவர்கள் விட்டுவிடும்படிப் பண்ணிவிட்டால் போதும்' என்ற ரீதியில் கார்யங்கள் செய்யலானார்கள். அதாவது ஹிந்துக்களுக்கு ஹிந்து மதத்தில் கௌரவ புத்திபோகும்படிப் பண்ணுவதைப் பல விதத்திலும் முயற்சி செய்தார்கள்.

பூர்வத்தில் எல்லாத் துறையிலும் இந்தியாவே முன்னேறியிருந்தது என்றேன். அது வாஸ்தவம். அதிலும் இந்தியா மிகவும் விசேஷமாக முன்னேறியிருந்தது ஆத்ம ஸம்பந்தமான ஸமய சாஸ்த்ரத்திலும் அநுஷ்டானங்களிலுமேயாகும். வாழ்க்கையின் ஸகல அம்சங்களிலும், கலாசாரத்தின் அத்தனை இழைகளிலும் ஸமயமே ஊறியிருக்கும்படியாக இங்கே ஏற்பட்டிருந்தது.

எதைத் எடுத்தாலும் அது ஆத்மாபிவ்ருத்திக்குக் கொண்டு விடுவதாகவே ரிஷிகளாலும், அப்புறம் வந்த பெரியவர்களாலும் அமைக்கப்பட்டிருந்தது. இப்படி மதவுணர்ச்சியையே ஸமயமாகக்கொண்டு, மற்ற எல்லாப் பூர்விக ஸிவிலிலேஷன்களும் அழிந்தபின்னும் தான் மட்டும் அழியாமல் ஹிந்து நாகரிகம் இருந்து வந்திருக்கும்போது இங்கே போய்ப் புதிய மதம் ஒன்றைப் புகுத்துவது என்றால் அதற்கு எவ்வளவோ தந்திரமும் தகிடுதத்தமும் பண்ணத்தானே வேண்டியிருக்கும்?

அதில் ஒன்றுதான்-(இன்னம் எத்தனையோ இருக்கின்றன. முக்யமாக ஆர்யன், த்ராவிடன் என்று ஒரு தாய் வயிற்றுக் குழந்தையாக இருந்தவர்களை பேதம் பண்ணியது. ஆனால் அதிலெல்லாம் இப்போது ப்ரவேசிக்க வேண்டாம். நமக்கு அவச்யமான அம்சத்தை மட்டும் பார்க்கலாம்.)-ஹிஸ்ட்ரி, ரிஸர்ச் என்று சொல்லிக்கொண்டே நம்முடைய மிகப் பழைய காலத்தை முடிந்தமட்டும் கிறிஸ்து சகாப்தத்துக்கு எவ்வளவு கிட்டே கொண்டு வரமுடியுமோ அப்படிக் கொண்டுவந்து விடுவது! 'நம்முடையது ரொம்பவும் தொன்மையானது'என்பதில் ஒரு பெரிய ஸைகலாஜிகல் நிறைவு இருக்கிறதென்று சொன்னேனல்லவா? 'ஹிந்துக்களுக்கு அந்த நிறைவு இல்லாமல் பண்ணிவிட வேண்டும்' என்று நினைத்தார்கள். நினைப்பைக் கார்யமாகச் செய்து கொள்ள அவர்களுக்குக் கிடைத்த ஒரு முக்யமான உபாயம் பௌத்த மதம்.

பௌத்தம் தற்காலத்தில் கிறிஸ்துவ மதத்துக்கு அடுத்த பெரிய மதமாகக் கிழக்காசிய நாடுகளில் ஜப்பான் வரை பரவியிருப்பதையும், ஆனால் அதன் பிறந்த வீடான இந்தியாவில் அதற்கு இடமில்லாலிருப்பதையும் பார்த்தார்கள். அதே ஸமயத்தில் புத்தரின் அன்புள்ளம், த்யாகம் முதலியவற்றால் ஹிந்துக்களுக்கு அவரிடம் ஒரு ரெஸ்பெக்ட் இருப்பதையும் அவரை தசாவதாரத்தில் ஒன்றாகவே சேர்ந்திருப்பதையும் கவனித்தார்கள். நம்முடைய ஹிந்து மதாபிமானத்தைக் குலைப்பதற்கு இதை நன்றாக ப்ரயோஜனம் செய்துகொள்ளலாமென்று ப்ளான் போட்டார்கள். நம் ஜன ஸமூஹத்துக்குப் பரிசயமில்லாத கிறிஸ்துவைக் காட்டுவதற்கு முந்தி, பரிசயமுள்ள புத்தரைக் காட்டியே நம் சாஸ்திராபிமானத்தை நலியப் பண்ண

ஆரம்பிக்கலாமென்று நினைத்தார்கள். 'எப்படியும் பௌத்த மதத்தில் இவர்களை மதமாற்றம் செய்வதற்கு அந்த மதத்தில் விசேஷமாக ஸ்தாபனம் எதுவும் இல்லை. ஆகையால் புத்தரை நாம் விசேஷித்துச் சொல்வதால் அந்த மதத்திற்கு யாரும் போய்விடமாட்டார்கள். இது நமக்கு ஸௌகர்யமாயிற்று. இவர்கள் அவதாரமாகச் சொல்பவரே வைதிக கர்மாக்கள், வர்ண தர்மம் முதலியவற்றை ஆக்ஷேபித்திருப்பதை எடுத்துக் காட்டியே ஹிந்து மதவுணர்ச்சியை நலிவிக்கலாம். கிறிஸ்து சகாப்தத்துக்கு அப்புறம்தான் இந்தியாவில் பெரிய நாகரிகம் உண்டாயிற்று என்று காட்டாமல் அதற்குக் கொஞ்சம் முந்தி புத்தரின் இன்ப்ளூயென்ஸால், அவரையொட்டித்தான் இண்டியன் ஹிஸ்டரியே ரூபமாக ஆரம்பித்ததென்று காட்டலாம். பாரத கலாசாரத்துக்கே முக்யமாக இருக்கப்பட்ட முதல் பெரியவர் அவர்தான் என்று காட்டலாம். "ராமன், க்ருஷ்ணன் எல்லாம் கதாபாத்ரங்கள் தான்;அவர்கள் சரித்ர பூர்வமாக இருந்ததாகச் சொல்வதற்கில்லை;புத்தர்தான் சரித்ராதாரப்படியே இருந்தவர்"என்று காட்டலாம். 'அத்வைதமா, மாயா டாக்ட்ரினா (மாயைக் கொள்கையா)-அவை பௌத்தத்திலிருந்துதான் வந்தன;சயனக் கோலத்தில் விஷ்ணு மூர்த்தியா, அது புத்தரின் மஹா பரிநிர்வாண சில்பத்திலிருந்துதான் வந்தது'என்றிப்படி எதை எடுத்தாலும் பௌத்தத்திலிருந்துதான் ஹிந்து மதத்திலுள்ள உசந்த அம்சங்களெல்லாம் வந்திருக்கின்றன என்று காட்டிவிடுவோம்.

'எல்லாவற்றுக்கும் அடிப்படையிலேயே ஞிக்ஷீணீஸ்வீபீவீணீஸீ சிஹ்ப்றீமீ ஹ்ஷக்ஷீமீ (த்ராவிடக் கலாசாரம்) என்று பேதமாக ஒன்றைப் பிரித்துச் சொல்லி அதிலிருந்தே வைதிக மதம் அநேக அம்சங்களை இரவல் வாங்கினதாகக் காட்டலாம்;மிஞ்சியதில் பல பௌத்தத்திலிருந்து கடன் வாங்கினதாகக் காட்டலாம்-ரொம்ப நைஸாக, எந்த ப்ரெஜுடிஸும் இல்லாமல் உள்ளது உள்ளபடி ஆராய்கிறாற்போலவே இப்படியெல்லாம் காட்டலாம். அப்படிப் பண்ணி இந்தியர்களுடைய ஹிந்து மதாபினமானத்தை உளுத்துப்போகப் பண்ணலாம். அப்புறம் நம் மிஷனரி இருக்கவே இருக்கிறது, நம்முடைய மதத்தில் இவர்களைத் தள்ளிக்கொள்ள' என்று நினைத்தார்கள்.

இந்தவிதமான எண்ணங்களோடுதான் அவர்கள் ஹிஸ்டரி எழுதியது. 'அநாதி என்று ஹிந்துக்கள் கொண்டாடும் வேதமே புத்தருக்கு ஆயிரம், ஆயிரத்தைநூறு வருஷத்துக்கு முந்தி ஏற்பட்டதுதான். அந்த வேதம்தான் ஹிந்து நாகரிகத்தின் அஸ்திவாரம் என்பது தப்பு. அதற்கும் சில நூற்றாண்டு முன்னால் வேறே ஹாரப்பா நாகரிகமென்று ஒன்று இருந்தது. அது த்ராவிட நாகரிகமாக இருந்தாலும் இருந்திருக்கலாம். அந்த ஜனங்களை அடக்கி ஒடுக்கி விரட்டிவிட்டு, ஆனாலும் அவர்களுடைய நாகரிகத்திலிருந்தே பல விஷயங்களை எடுத்துக்கொண்டு தான் வேத நாகரிகம் என்று ஏற்படுத்தினார்கள்'என்று ஹிஸ்டரியை ஆரம்பித்து மேல படிப்படியாய் இதே மாதிரியான 'கைங்கர்யங்கள்'பண்ணிக் கொண்டுபோயிருக்கிறார்கள்!

நம்முடைய பிள்ளைகளுக்குக் குழந்தைப் பருவத்திலேயே இந்த சரித்ர பாடத்தைச் சொல்லிக்கொடுப்பதால் அதுவே ஸத்தியம் என்று மனஸில் பதிந்துவிடுகிறது. பெரியவர்களான பின்னும் அந்த நம்பிக்கை போவதில்லை. நம் சாஸ்த்ரங்கள் யாவும் அறிவுக்குப் பொருந்தாதவை, ஸூபர்ஸ்டிஷன் என்ற எண்ணம் நன்றாகப் பரப்பப்பட்டு எல்லார் மூளையையும் ஆக்ரமித்துக் கொண்டிருப்பதால் அவற்றில் கொடுத்திருக்கும் சரித்ர விஷயங்களில் நமக்கே நம்பிக்கையில்லை. நம்முடைய புராணங்களில் விவரமாக வம்சாவளிகள் கொடுத்து, ஒவ்வொருவரும் இவ்வளவு வருஷம் என்றும் சொல்லியிருப்பது அத்தனையும் கல்பனைதான் என்று தள்ளியே விடுகிறார்கள். அவற்றை நம்பிக்கொண்டிருக்கும் சாஸ்திரஜ்ஞர்களும் ஒன்று, வறட்டு மூடநம்பிக்கைக்காரர்கள் அல்லது அசட்டு முத்தண்ணாக்கள் என்றே வர்ணிக்கபபட்டு, அந்த வர்ணனை இளம் தலைமுறையினரின் மனஸில் வேரூன்றி இருப்பதால் இவர்கள் என்ன எடுத்துச் சொன்னாலும் காதிலேயே போட்டுக்கொள்ளாமல் 'எங்கள் ப்ரொஃபஸர்கள், டாக்டர்கள் சொல்கிறதுதான் அதாரிடி' என்று நம்பிக்கொண்டிருக்கிறார்கள். இதுவும் ஒரு ஸூபர்ஸ்டிஷன்தான்! 'எதைக் கொண்டு புராணத்தைத் தப்பென்று ரிஸர்ச்காரர்கள் சொல்கிறார்கள்?அவர்கள் எது எதைக்கொண்டு இப்படி இப்படி என்று கால நிர்ணயம் செய்திருக்கிறார்கள்? இதற்கு வேறேயாகச் சொல்ல

ஆதாரமேயில்லையா?'என்றெல்லாம் யோசித்துப் பார்ப்பதில்லை. நவீனப் படிப்பாளிகள் எதைச் சொன்னாலும் அப்படியே அங்கீகரிப்பது, பூர்வகால அபிப்ராயத்தை அப்படியே திரஸ்கரிப்பது என்று இருக்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**கலியுகத்தில் நமது காலக் கணக்குகள் :** முன்னேயே சொன்னாற்போல பூர்வ யுகங்களின் ஸமாசாரத்தை விட்டுவிடுவோம். கலியுகத்தில் வந்த ராஜ வம்சங்களைப் பற்றி முழு விவரமும் புராணங்களில் கொடுத்திருக்கிறது. ஒவ்வொரு ராஜாவையும் பேர் சொல்லி இத்தனை வருஷம் ஜீவித்தான் என்றும் வரிசையாகச் சொல்லியிருக்கிறது. இதில் நம்பமுடியாததாக எதுவும் இல்லை.

விஸ்தாரமான இந்த தேசத்தில் போக்குவரத்து வசதிகள் குறைவாக இருந்த காலங்களிலே எழுதப்பட்டதால் ஒவ்வொரு ப்ரதேசத்தில் எழுதியவர்கள் இன்னொரு ப்ரதேசத்தைப்பற்றிச் சொல்லும்போது சில தவறுகள் நேர்ந்திருக்கும். அதனால் புஸ்தகங்களுக்கிடையில் ஒன்றுக்கொன்று முரணாகவும் தகவல்கள் இருக்கும்தான். ஆனாலும் எல்லாவற்றையும் எடுத்துப் போட்டுக்கொண்டு deep-ஆக comparative study பண்ணினால் நிச்சயம் ஏகோபித்த முடிவுகளுக்கு வரமுடியும். அப்படிப் பண்ணப் பொறுமையில்லை. அடிப்படையில் உண்மை என்ற நம்பிக்கையே போய்விட்டபின் என்ன பண்ணுவது?

தினமும் 'ஸங்கல்பம்'என்று எந்த வைதிக கார்யத்திலும் செய்துவருகிறோம். என்றைக்கு இந்த பழக்கம் ஆரம்பித்தது என்றே சொல்ல முடியாதபடி அத்தனை பூர்ணகாலத்திலிருந்து இந்த பரந்த தேசத்தின் அத்தனை இடங்களிலும் அன்றன்றும் இப்படி 'ஸங்கல்பம்'சொல்லி வருகிறோம், அதிலே ப்ரம்மாவின் வயஸிலிருந்து

ஆரம்பித்து, கலியுகத்துக்கு வந்து, நடப்பு வருஷம்-மாஸம்-திதிவரை ஒவ்வொரு நாளாகக் கூட்டிச் சொல்லி வந்திருக்கிறோம். இதிலே இந்த வருஷத்தை கலியுகப்படி 5064 என்றே காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரை வித்யாஸமில்லாமல் சொல்கிறோம். நம்பமாட்டேன் என்றால் எப்படி?

ஆசார்யாள் கால விஷயமாக சிவரஹஸ்ய இதிஹாஸத்தில் "ஸஹஸ்ர த்வியாத்-பரம்" என்று சொல்லியிருக்கிறது அப்படியென்றால் 'கலியில் இரண்டாயிரம் வருஷத்துக்கு அப்புறம்' என்று அர்த்தம். 'அப்புறம்'கரெக்டாக எந்த வருஷமென்று சொல்லவில்லை'நாமெல்லாம் போட்டு மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டுமென்றே இப்படிச் சொல்லி விட்டுவிட்டாற் போலிருக்கிறது!எப்படியும் கலியில் மூவாயிரம் வருஷத்துக்கு முந்தித்தான் அவதாரம் என்று இதிலிருந்து ஆகிறது.

பவிஷ்யோத்ர புராணத்தில் "கல்யாதௌ த்விஸஹஸ்ராந்தே" என்று இருக்கிறது. 'கலியில் இரண்டாவது ஆயிர்த்தின் முடிவுப் பகுதியில் என்று அர்த்தம்.

வேறு பல புராணங்கள, (சங்கர) மடங்களைச் சேர்ந்த புஸ்தகங்கள்-குருபரம்பரைகள்-சாஸனங்கள் முதலானதுகள், இதர ஆதாரங்கள் கர்ண பரம்பரையாக வந்துள்ள நம்பிக்கை ஆகியவற்றிலிருந்து நாங்கள் ஆசார்யாளின் காலம் கலியில் 2593லிருந்து 2625வரை என்று கருதி வருகிறோம். கலியின் இரண்டாவது ஆயிரம் வருஷங்களில் அறுநூறு வருஷத்துக்கு முன்னும் பின்னுமாக இது இருப்பதால் இதை "முடிவுப் பகுதியில்" என்று பவிஷ்யோத்தர புராணம் சொல்லியிருக்கலாம். கலி 259 -2625 என்பது கி.மு. 509-477 ஆகிறது...

---

**நமது சரித்ர ஆதார நூல்கள் :** ஜெனரலாகக் கொஞ்சம் சொல்கிறேன். நம் ராஜ வம்சங்களின் காலங்களைப் புராணங்களில் கொடுத்திருக்கிறது. அது தவிர ஸுமார் ஆயிரம் வருஷம் முந்தி கல்ஹணர் என்ற கவி காஷ்மீர ராஜ வம்சத்தைப்பற்றி ஆதியோடந்தம் விசாரித்து, கர்ண பரம்பரையாக வந்த தகவலையெல்லாமும் சேர்த்து "ராஜ தரங்கிணி என்று புஸ்தகம் எழுதியிருக்கிறார். ('கர்ண பரம்பரை'என்றவுடனேயே 'கதை' என்று தூக்கிப் போட்டு விடக்கூடாது. ஆதாரமில்லாமல் இப்படி வழிவழி வந்திருக்குமா என்று ஆராய்ந்து பார்த்து, மற்ற ஆதாரங்களோடு ஸரி பார்த்தால் அதில் ஏற்கத்தக்கதாக நிறைய இருக்கும்.) ஒரு ராஜா என்றால் பிற ராஜாக்களோடு யுத்தம் செய்வது, விவாஹ ஸம்பந்தம் வைத்துக்கொள்வது என்றெல்லாம் வரத்தானே வரும்?அதனால் காஷ்மீர வம்சாவளியை சொல்லிக்கொண்டு போகும் 'தரங்கிணி'அந்தந்தக் காலங்களில் இந்தியாவில் இருந்து வந்து இதர ராஜாக்களையும் பற்றித் தெரிவித்து விடுகிறது. அநேக இடங்களில் இதில் இருப்பதும் புராணங்களில் சொல்லியிருப்பதும் ஒத்துப்போய்விடுகின்றன.

நேபாளத்தில் ஆதியிலிருந்து ஆட்சி நடத்தியவர்களைப் பற்றி வரிசைவாரியாகக் காலம் சொல்லி ராஜ வம்சாவளி என்று இருக்கிறது. 'Chronicle of Nepal' என்று இங்கிலீஷில் சொல்கிறார்கள். பண்டிட் பகவான் லால் இந்த்ராஜி என்பவர் ஒரு புத்த பிக்ஷுவிடமிருந்து இந்த வம்சாவளியைப் பெற்று ப்ரகாசப்படுத்தியிருக்கிறார். மஹாபாரத காலத்திலிருந்து அதில் ராஜாக்களின் பெயர்களும் காலங்களும் கொடுத்திருக்கிறது. அதிலிருந்தும் நம் சரித்ர புருஷர்களின் காலத்தைப்பற்றி அறிய முடிகிறது. புராணம் முதலான மற்ற source -களிலிருந்து நாம் பெறும் தகவல்களில் பல இதோடு ஆச்சர்யமாக ஒத்துப் போகிறது.

லங்கையில் 'மஹாவம்சம்' என்று ஒரு புஸ்தகம். குறைந்தபக்ஷம் 1500 வருஷத்துக்கு முற்பட்டது. அந்த தேசத்தில் பௌத்த மதத்தின் வரலாறு என்ன என்று அது

தெரிவிக்கிறது. ஹிந்து புஸ்தகங்களைவிட பௌத்தப் புஸ்தகங்களுக்கு ஸத்யத்வம் ஜாஸ்தி என்று காட்டுவது ரிஸர்ச்காரர்களின் வழக்கம். அதனால் அவர்களும் மஹா வம்சத்தைப் பெரும்பாலும் நம்பலாமென்கிறார்கள்.

ராஜாவின் ஆதரவு அல்லது அநாதரவிலேயே மத வளர்ச்சி அல்லது நலிவு ஏற்பட்டிருப்பதால் 'மஹா வம்சம்'ராஜ வம்சங்களைப் பற்றியும் தெரிவித்துவிடுகிறது. ஆதியில் இந்தியாவினாலேயே லங்கையின் ஸமய கலாசாரம், அரசியல் வாழ்வு எல்லாம் ஏற்பட்டு, அப்புறமும் சண்டை ஸ்நேஹிதம் என்று இரண்டு விதத்திலும் இந்த இரண்டு நாடுகளும் ஸம்பந்தப்பட்டிருந்திருப்பதால் இதிலேயும் நம்முடைய தேசத்தவர்களைப் பற்றிய கால விவரங்கள் வருகின்றன.

புராணங்கள், வடக்கே ஒரு கோடியில் காஷ்மீரத்தின் ராஜ தரங்கிணி, இன்னொரு கோடியில் நேபாளி வம்சாவளி, தென்கோடியில் லங்கையின் மஹாவம்சம் என்று எல்லாவற்றையும் வைத்துக்கொண்டு அவை எங்கே ஒத்துப் போகின்றன என்று பார்த்து, அப்படிப்பட்டவற்றையாவது நாமும் ஒப்புக்கொள்வது என்று வந்தால் நன்றாயிருக்கும். இப்படிப் பல இருக்கவே செய்கின்றன.

நாம் சொல்வது History-யே இல்லை. வெறும் story-தான் என்று சொல்பவர்களும் நிஜமான History-ஐத்தான் சொல்லியிருப்பார்கள் என்று அப்படியே நம்பாமல் இதையும் அதையும் சேர்த்து அலசிப் பார்க்கலாம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**மையக் கேள்வி : மெகஸ்தனிஸ் சொல்லும் ' ஸன்ட்ர கோட்டஸ் ' யார் ? :** வேண்டுமென்று, மனஸறிந்து வெள்ளைக்காரர்கள் நம்முடைய சரித்ர காலங்களை

ரொம்பவும் பிற்காலத்துக்கு இழுத்துவிட்டு நமக்குப் புராதனப் பெருமை இல்லாமல் பண்ணியிருப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அவர்களையும் ஒரேயடியாகக் குறைசொல்வது ஸரியில்லைதான். அவர்களில் எல்லாருமே பக்ஷபாதிகள் தான் என்று நினைப்பதும் ந்யாயமில்லை. அதனால், அவர்களுக்கும் தெரியாமலே, உள்நோக்கமில்லாமலே, அவர்கள் ஸரியில்லாத ஒரு ஆதாரத்தை ஸரியென்று நிஜமாக நம்பி அந்த அஸ்திவாரத்தின் மேல் காலக் கணக்குகளை நிர்ணயித்திருக்கிறார்களோ என்று தோன்றும் ஒரு விஷயத்தையும் சொல்கிறேன்.

புராதன இந்திய சரித்ரத்தில் ஸர்வ நிச்சயமாக உறுதிப்படுத்தக்கூடிய தேதி என்று ஒன்றை அவர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த ஒன்றை அடிப்படையாக வைத்துத்தான் அதற்கு முன் பின்னாகப் பழைய கால நிகழ்ச்சிகளை நிர்ணயித்திருக்கிறார்கள். ஒரு மாதிரி அதுதான் பழைய சரித்ரத்திற்கே key-யாக இருக்கிறது.

அது என்ன?

அலெக்ஸாண்டருக்கு அடுத்தாற்போல் க்ரீஸில் (கிரேக்க நாட்டில்) ஆட்சிக்கு வந்த அவனுடைய ஸேனாதிபதி ஸெல்யூகஸ் நிகேடார் என்பவன் இந்தியாவின்மேல் படையெடுத்தான். ஆனால், பாடலிபுத்ரத்திலிருந்து ஆட்சி பண்ணிக்கொண்டிருந்த மகதச் சக்கரவர்த்தி ஒருவனிடம் தோற்றுப்போனான். இரண்டு பேரும் ஸமாதான உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்கள். விவாஹ ஸம்பந்தம் கூடப் பண்ணிக்கொண்டதாகவும் சொல்லப்படுகிறது. அப்புறம் அவன் பாடலிபுத்ர ராஜஸபைக்குத் தன்னுடைய அம்பாஸிடராக (அரசாங்க தூதராக) மெகஸ்தனிஸ் என்பவரை அனுப்பி வைத்தான். அந்த மெகஸ்தனிஸ் இந்தியாவில் தான் கண்டதையும் கேட்டதையும் எழுதி வைத்திருக்கிறார். அதுதான் வெள்ளைக்காரர்களுக்கு நம் தேச சரித்ரம் பற்றிக்கிடைத்த முதல் authentic document-ஆக (பூர்ண நம்பிக்கைக்குரிய சாஸனமாக) இருக்கிறது.

அலெக்ஸாண்டர், ஸெல்யூகஸ் நிகேடார், மெகஸ்தனிஸ் முதலியவர்களின் காலம் கி.மு. நான்காம் நூற்றாண்டு என்று

அவர்களுக்கு ஸர்வ நிச்சயமாகத் தெரியும். அதனால் மெகஸ்தனிஸ் குறிப்பிடும் பாடலிபுத்ர ராஜாவும் அந்தக் காலம்தான் என்று தீர்மானமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த ராஜா யார்?

Sandracottus என்று மெகஸ்தனிஸ் குறிப்பிட்டிருப்பவன்தான்.

இந்த ஸ்ன்ட்ரகோட்டஸ் மௌர்ய வம்சத்தை ஸ்தாபித்துச் சக்ரவர்த்தியாக இருந்த சந்த்ரகுப்தன் என்று வைத்துக்கொண்டே வெள்ளைக்காரர்கள் நம்முடைய பழைய சரித்ர காலங்களை நிர்ணயிருத்திருக்கிறார்கள். தங்களுக்குத் தீர்மானமாகத் தெரிந்த ஸெல்யூகஸ் நிகேடாரின் ஸமகாலத்தவனான சந்த்ரகுப்த மௌர்யன் கி.மு. நான்காம் நூற்றாண்டின் முன் பாதியில் இருந்தவன் என்று நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

அதைக்கொண்டே அவனுக்கு முன்னால் அரசாண்ட நந்த வம்சம், அதற்கு முந்தி ஆண்ட சிசு நாக வம்சம் என்றிப்படியும், அவனுக்குப் பின்னால் மௌர்ய வம்சத்தில் வந்த அவனுடைய பிள்ளையான பிந்து ஸாரன், பேரனான அசோகர் முதலானவர்கள், மௌர்யர் வம்சத்துக்கு அப்புறம் வந்த சுங்க வம்சம் முதலானவற்றுக்கும் காலம் நிர்ணயித்திருக்கிறார்கள்.

இது ஸரிதானா என்பதே கேள்வி. பெரிய கேள்வி!

'ஸன்ட்ர கோட்டஸ்'என்று, அதாவது 'சந்த்ர குப்தன்'என்று மட்டும் தான் மெகஸ்தனிஸ் சொல்லியிருப்பது;சந்த்ரகுப்த மௌர்யன் என்று அல்ல. அவன் என்ன வம்சம் என்பதைப் பற்றிச் சொல்லவில்லை. அவனுக்கு முன்னால் நந்த வம்சம் ஆட்சியில் இருந்ததென்றோ, அவனுக்குப் பிள்ளை பிந்துஸாரன் என்றோ எதுவும் சொல்லவில்லை.
பாடலிபுத்ரத்தை 'போலிபோத்ரா'(Polibothra) என்று சொல்லி, அங்கே இருந்துகொண்டு இவன் ஆட்சி செய்ததாகவும் அப்போது அவனுடைய ராஜ்யம் எத்தனை உன்னத ஸ்திதியில் இருந்தது என்பதையும் தான் விவரித்திருக்கிறார்.

அதனால்தான் கேள்வி வருகிறது. மெகஸ்தனிஸ் சொல்லும் ஸன்ட்ரகோட்டஸ் ஏன் மௌர்ய வம்ச சந்த்ரகுப்தனாக இல்லாமல் குப்த வம்சத்து சந்த்ரகுப்தனாக இருக்கக்கூடாது என்பதுதான் கேள்வி. குப்த வம்சமும் இதே பாடலிபுத்ரத்தைத் தலைநகராகக் கொண்டிருந்திருக்கிறது. அதிலே இரண்டு சந்த்ரகுப்தர்கள். இரண்டாமவன் தான் சந்த்ரகுப்த விக்ரமாதித்யன் என்று புகழ் பெற்றவன். மெகஸ்தனிஸ் ஏன் இந்த குப்த சந்த்ரகுப்தர்களில் ஒருத்தருடைய ஆட்சியின்போது இருந்திருக்கக் கூடாது?

புராணங்கள், ராஜதரங்கிணி, நேபாளி வம்சாவளி ஆகியவற்றிலிருந்து மகத தேசத்தை ஆண்ட வம்சங்களின் காலத்தை கணித்துப் பார்த்தால் மெகஸ்தனிஸின் காலமான கி.மு. நாலாம் நூற்றாண்டில் சந்த்ரகுப்த மௌர்யன் இருந்தானென்பது ஸரியாக வரவில்லை. இவற்றிலிருந்து நாம் பெறுகிற விவரப்படி மௌர்ய சந்த்ரகுப்தனுடைய காலம் கிட்டதட்ட கி.மு. 1500-ஆக இருக்கிறது. இப்போது ஓரியன்டலிஸ்டுகள் அவன் ஆட்சிக்கு வந்ததாகச் சொல்லும் கி.மு.-300க்கும் இதற்கும் 1200 வருஷ வித்யாஸம்!ஆசார்யாள் விஷயமாக நாம் சொல்வதற்கும் அவர்கள் சொல்வதற்கும் 1300 வருஷ வித்யாஸம்!

விஷ்ணு புராணத்தில் ஒரு இடத்தில் கலி ஆரம்பத்தில் ஆட்சிக்கு வந்த பரீக்ஷித்துக்கு 1500 வருஷத்துக்கப்புறம் நந்தன (சந்த்ரகுப்த மௌர்யனுக்கு முன் மகதாதிபதியாயிருந்த மஹாபத்மநந்தன்) பட்டத்துக்கு வந்தானென்று இருக்கிறது. அதாவது நந்தன் கி.மு. 1600-ல் ஆட்சிக்கு வந்திருக்கிறான். அடுத்தவன் சந்த்ரகுப்தன் என்றால் முன்னே சொன்னதற்குக் கிட்டத்தில்தானே, 3500 வருஷத்துக்கு முற்பட்ட ஸம்பவங்களை கணிக்கும் போது?

இப்படி வெவ்வேறு ஆதாரங்களிலிருந்து தெரியவருவதால் மெகஸ்தனிஸ் சொல்வது மௌர்ய சந்த்ரகுப்தனைத்தான் என்று முடிந்த முடிவாகத் தீர்மானம் பண்ணுவற்கில்லை என்றே தோன்றுகிறது.

அந்த ஸ்ன்ட்ரகோட்டஸ் குப்த வம்சத்தின் இரண்டு சந்த்ரகுப்தர்களில் ஒருத்தனாக இருக்க இடமுண்டு என்றும்

தோன்றுகிறது.

ரிஸர்ச்காரர்களின் முடிவுப்படி சந்த்ரகுப்த மௌர்யன் கி.மு. நாலாம் நூற்றாண்டின் ஆரம்ப காலம்;குப்த வம்ச சந்த்ரகுப்தர்களில் முதல்வன் கி.பி. நாலாம் நூற்றாண்டின் முற்பகுதி; இரண்டாமவன் அதே நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை இருந்தவன்.

அதாவது அதற்கும் இதற்கும் எழுநூறு எண்ணூறு வருஷ இடைவெளி இருக்கிறது.

இந்த எண்ணூறு வருஷ இடைவெளியிலும் இதே போல அநுமானங்களில் பலருடைய காலம் முன்பின்னாகப் போகக் கூடுமாதலால் எண்ணூறு என்பது ஆயிரமாகக்கூட, அதற்கும் அதிகமாகவும்கூட, ஆகலாம்.

ஆக, குப்த வம்ச சந்த்ரகுப்தனே மெகஸ்தனிஸின் காலத்தவன் என்றால் அதற்கு முற்பட்ட நம்முடைய சரித்ர நிகழ்ச்சிகளெல்லாமே சுமார் ஆயிரம் வருஷம் முந்திப் போய் விடும். நம்மவர் சும்மாவுக்காகப் பழம் பெருமை கொண்டாடிக் கொள்ளவில்லை, வாஸ்தவத்திலேயே வெகு புராதனமான காலத்திலிருந்தே நம் தேசத்தில் நாகரிக ஸமுதாய வாழ்க்கை இருந்துதானிருக்கிறது என்று prove ஆகிவிடும்.

வெள்ளைக்காரர்களிடம் நாம் சண்டைக்குப் போக வேண்டாம். ஸர் வில்லியம் ஜோன்ஸ், வில்ஸன் முதலானவர்கள் மெகஸ்தனிஸ் யாரோ ஒரு சந்த்ரகுப்தனைப் பற்றிச் சொல்லியிருக்கிறாரென்று கண்டுபிடித்துச் சொல்லியிருப்பது நாம் ஸரியாக ஆராய்ச்சி பண்ணிப் பார்க்க நிரம்ப உபகாரம் பண்ணும் ஒரு தகவலாகும். அதனால் அவர்களுக்கு நன்றி தான் தெரிவிக்கணும். மேற்கொண்டு அவர்கள் சொல்வதைக் காரணம் கேட்காமல் நம்பி விடும் அசடுகளாக நாம் இருப்பதுதான் தப்பு. அவர்களை வையவேண்டாம். 'நம் தேச ஸமாசாரம் பிறத்தியார் சொல்கிறார்களே!ஸரியாகத் தான், ஸரியான நோக்கங்களோடுதான் சொல்கிறார்களா?' என்று நாம்தானே ஆலோசிக்க வேண்டும்?

குப்த வம்சத்து சந்திரகுப்த விக்ரமாதித்யன் காலத்தில் ஃபா - ஹியன் என்ற சீன யாத்ரிகர் வந்து எழுதி வைத்திருக்கிறாரே, அதனால் அவன் கி.பி. 4-5 நூற்றாண்டுக்காரனாகத்தானே இருக்கணும்?அவனை எப்படிக் கி.மு. வுக்கு கொண்டுபோவது?'என்று கேட்கலாம். வேடிக்கை என்னவென்றால்:அந்தக் கி.பி. 'பீரிய'டில் அவர் (ஃபா - ஹியன்) இங்கே வந்து முழுசாக ஆறு வருஷம் பௌத்த ஸ்தலங்களுக்கு யாத்திரை பண்ணிக்கொண்டு, அந்த மத நூல்களைக் சேகரித்துக்கொண்டு, அப்படியே ப்ரயாண விவரங்களை எழுதி வைத்திருப்பது வாஸ்தவந்தான். ஆனால் அவர் அப்போது இங்கே இருந்த எந்த ராஜாவைப் பற்றியும் எதுவுமே சொல்லவில்லை!சந்த்ரகுப்தன் என்ற பெயரோ, வேறெந்த ராஜாப் பெயரோ அவருடைய நோட்ஸில் காணப்படவில்லை! பௌத்த விஷயங்களில்தான் அவருக்கு 'இன்டரஸ்ட்.'அதைப் பற்றியே முக்யமாகச் சொல்லும் போது இங்கேயிருந்த ஸமூஹ வாழ்க்கை பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார். ஆகையால் அவர் வந்த 'dKò'¬ì ¬õˆ¶ˆ î£¡ ÜŠ«ð£¶ î£ƒèœ ãŸèù«õ è£ôG˜íò‹ ð‡EJ¼‰îð® °Šîõ‹ê ê‰ˆó°Šî¡ Þ¼‰îî£è UvìK,è£ó˜èœ ªê£™½Aø£˜è«÷ îMó, ªñèvîQv å¼ ó£ü£M¡ ªðòó£è,, ªê£¡ù¬î, ªè£‡«ì Ü‰î ó£ü£¾,°, è£ô G˜íò‹ ð‡Eò ñ£FK Þƒ«è Þ™¬ô. çð£ - Uò¡ õ‰î«ð£¶ °Šîõ‹ê ê‰ˆó°Šî¡ î£¡ Þ¼‰î£¡ â¡Á Ü®ˆ¶,ªê£™õîŸ° Ýî£óI™¬ô.

இந்த விஷயத்தில் நான் முழுசாக ஆராய்ச்சிப் பண்ணி விடவில்லை. 'ஹிஸ்டரி'விஷயமாக அப்படிப் பண்ண க்வாலிஃபிகேஷனும் இல்லை. அதனால் ஹிஸ்டரி ஸ்காலர்களாக இருப்பவர்கள் இதை நன்றாக அலசி ஆராய்ந்து பார்க்கவேண்டும். பெஜவாடாவைச் சேர்ந்த கோடா வேங்கடாசலம் என்பவர் இதில் சற்று ஆழமாகப் பார்த்து ஸன்ட்ரகோட்டஸ் குப்த ராஜாதான், மௌர்யன் இல்லை என்று முடிவு செய்திருக்கிறார். (பிற்பாடு அவர் ஒரு அத்வைத மடத்தில் ஸந்நியாஸியாக ஆனவர்.) மைலாப்பூர் ஆயுர்வேத காலேஜைச் சேர்ந்த கே.ஜி. நடேச சாஸ்த்ரி என்பவரும் ஆராய்ந்து பார்த்து இதே முடிவுக்கு வந்திருக்கிறார்.

இன்னும் சில பேரும் ஸன்ட்ரகோட்டஸ் விஷயமாக இல்லாவிட்டாலும், வேறு புராணங்கள், ராஜதரங்கிணி, நேபாளி வம்சாவளி போன்றவற்றை ஆராய்ந்து, இப்போது சரித்ர புஸ்தகங்களில் சொல்லியிருப்பதற்கு அநேக நூற்றாண்டு, ஆயிரமாண்டுக்கு முன்னேயே நம்முடைய ஆதிகால ஸம்பவங்கள் நடந்தன என்று விவரம் தருகிறார்கள்.

குப்தர்களில் முதல் சந்த்ரகுப்தனுக்குப் பிள்ளையாகவும் இரண்டாம் சந்த்ரகுப்தனுக்குத் தகப்பனாராகவும் இருந்த ஸமுத்ரகுப்தன் தான் ஸன்ட்ரகோட்டஸாக இருக்குமோ என்று எனக்கு (அநுமானம்)! 'சந்த்ரகுப்தன்' என்பதில் முதல் எழுத்து ச (ீலீணீ). மெகஸ்தனிஸ் சொல்லும் 'ஸன்ட்ரகோட்ட'ஸில் முதல் எழுத்து ஸ (ஷணீ). ஸமுத்ர குப்தன் என்பதுதான் 'ஸ'வில் ஆரம்பிக்கிறது. க்ரீக் முதலிய மேல்நாட்டு பாஷைகளில் ச-ஸ வித்யாஸம் நன்றாகத் தெரிகிற ஒன்று. ஒரு பெயரில் முதல் எழுத்தாக வருவதையே மெகஸ்தனிஸ் தப்பாகக் கேட்டுக் கொண்டிருப்பாரோ?

மெகஸ்தனிஸ் நம்முடைய புஸ்தகங்களைப் பார்க்காமல், ஜனங்களின் பேச்சில் வார்த்தைகளைக் கேட்டுத்தான் எழுதியவர். வார்த்தையில் நடுவில் வரும் உயிர் மெய்யெழுத்துக்களைப் பேசிக்கொண்டு போகும் அவஸரத்தில் மெய்யெழுத்துக்களாகவே குறுக்கி விடுவது ஸஹஜம். அதிலும் நம் பெயர்களை வெள்ளைக்காரர்கள் சொல்லும் போது கேட்கவே வேண்டாம்-திருவல்லிக்கேணி 'ட்ரிப்ளிகேன்'என்று வரும்போது 'வல்லி'என்பது 'ப்ளி'யாகவும் 'கேணி'என்பது 'கேன்'என்றும் ஆகி விடுகிறதல்லவா?இப்படி, 'ஸமுத்ர'என்பது நம்முடைய ஜனங்களின் பேச்சு மொழியிலேயே 'ஸம்த்ர'மாதிரிதான் ஒலித்திருக்கும். 'மத்'என்பதைவிட 'ந்த்'என்று வருவதே நம்முடைய பாஷைகளின் இயல்பு. ஸம்ஸ்க்ருதத்தில் 'மந்த', 'நந்த', 'ஸுந்தர'போன்ற வார்த்தை அதிகம். நம்முடைய 'ந்த்' வெள்ளைக்காரர்களிடம் 'ன்ட்'ஆகிவிடும். கிஸீபீ, லீணீஸீபீ, ஷணீஸீபீ என்பதுபோல 'ன்ட்'வரும் வார்த்தைகள் மேல்நாட்டு பாஷைகளில் நிறையவுண்டு. அப்படித்தான் 'ஸமுத்ர'என்பது நம் ஜனங்களில் பேச்சிலேயே ஸம்த்ர-ஸந்த்ர என்றாகி மெகஸ்தனிஸ் காதில் 'ஸன்ட்ர'என்று விழுந்து, அப்படியே

அவர் 'ஸன்ட்ர கோட்டஸ்'என்று எழுதியிருப்பாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது!

மொத்தத்தில் இப்படி ஆயிரம் வருஷம் போல எல்லாம் முன்னே பேனால் அப்போது ஆசார்யாள் அவதாரம் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் என்பது மட்டும் எப்படி ஸரியாயிருக்கும்?அதுவும் ஆயிரம் வருஷம் முன்னே போய்விடும். புத்தர் காலமும் அவர்கள் (மேல் நாட்டினர்) சொல்லும் கி.மு. ஆறாம்-ஐந்தாம் நூற்றாண்டுக்கு ஆயிரம் வருஷம் முற்பட்டுபோய்விடும். அதாவது ஆசார்யாள் கி.மு. 6-5 நூற்றாண்டிலிருந்தாலும்கூட புத்தரின் ஸமகாலத்தவரில்லை என்றும், புத்த மதம் நன்றாக வேர் பிடித்துப் பல நூற்றாண்டுகள் தேசத்தில் இருந்த பிறகுதான் அவர் அவதரித்து அதை நிராகரணம் பண்ணினார் என்றும் ஏற்பட்டுவிடும்.

முன்னே நாம் புராணக் காலக் கணக்குப்படி மௌரிய வம்சம் கி.மு. 1500-ல் ஆரம்பித்ததல்லவா?அதற்கு ஸுமார் முன்னூறு வருஷம் முன்னாடி பிம்பிஸாரன் இருந்ததாக மத்ஸ்ய புராணத்திலிந்து தெரிகிறது. பிம்பிஸாரன் அவன் பிள்ளை அஜாதசத்ரு, அப்புறம் ஆட்சிக்கு வந்த மூன்று நாலு ராஜாக்கள், அதற்கப்புறம் மஹா பத்ம நந்தன், அவனை அடுத்து மௌர்ய வம்சம் என்று அதில் ஒவ்வொருவருக்கும் ஆட்சிக்காலம் இவ்வளவென்று கொடுத்திருப்பதில் பிம்பிஸாரன் சந்த்ரகுப்த மௌர்யனுக்கு முன்னூறு வருஷம் முற்பட்டவன் என்று ஏற்படுகிறது. அதாவது அவன் கி.மு. 1800-1700க்குள் இருந்தவன். புத்தர் அவன் காலத்தவராகையால் அவரும் அப்போதிருந்தவரே. நம்முடைய தேசத்தை சேர்ந்த மற்ற வஷீலுகூஷீநீமீ-களிலிருந்தும் இதை கோடா வேங்கடாசலம் போன்றவர்கள் நீஷீஸீயீவீகூஷீனீ செய்திருக்கிறார்கள். ஆகையால் புத்தருக்கு பஹுகாலம் கழித்தே கி.மு. 509-ல் ஆசார்யாள் அவதாரம் என்று ஆகும்.

இது ஒரு பக்கட்டும் இருக்கட்டும். (அதாவது குப்த சந்த்ர குப்தர்களில் ஒருத்தனோ, அவர்களுக்கு நடுவில் வந்த ஸமுத்ர குப்தனோதான் கி.மு. நாலாம் நூற்றாண்டில் மெகஸ்தனிஸுக்கு ஸமகாலத்தவனாக இருந்தது என்ற விஷயம் ஒரு பக்கம் இருக்கட்டும்.) ஆசார்யாள் காலம் கி.பி.

788-820 என்னும் கட்சிப்படி, அவர் அந்தக் கட்சிக்காரர்களின் அபிப்ராயப்படி மேலே சொன்ன குப்த ராஜாக்களின் காலமான கி.பி. நாலாம்-ஐந்தாம் நூற்றாண்டுகளுக்கு 350-400 வருஷம் பின்னால் வந்தவர். இந்த இடைக்காலத்திற்குள் குப்த ஸாம்ராஜ்யம் எடுபட்டுப்போய் இன்னம் அநேகம் நடந்து ஹர்ஷவர்தனின் ஆட்சியும் முடிந்து நூறு வருஷத்திற்கு மேல் ஆகிவிட்டது. ஹர்ஷனைப் பற்றி, மஹாகவியான பாணர் பெரிசாகவே 'ஹர்ஷ சரித்ரம்'என்று காவ்யம் பண்ணி வைத்திருப்பதால் அவன் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து நாற்பது வருஷத்திற்கு மேல் ஆட்சி நடத்தியவன் என்று தெரிகிறது.

நம்மூர்க்காரரான பாணர் சொல்வதைக்கண்டு கால நிர்ணயம் பண்ணப் பிடிக்காவிட்டாலும், ஹர்ஷனின் காலத்தில் இங்கே வந்து பதினாறு வருஷம் புத்த ஸ்தலங்களுக்கெல்லாம் யாத்ரை பண்ணிய ஹுவான்-த்ஸாங் என்ற சீனாக்காரர் எழுதிவைத்திருக்கும் குறிப்புகள் இருக்கவே இருக்கின்றன!அதனால் ஹர்ஷன் காலம் அதுதான் (கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பாதி தான்) என்று ஊர்ஜிதமாகிறது. அதற்கப்புறம் நடந்த ஸமாசாரங்களை ஆயிரம் வருஷம் முந்திக்கொண்டுபோக நியாயமில்லை என்று சொல்லலாம். 'குப்தர் காலம் வரை வேண்டுமானால் ஆயிரம் வருஷம் முந்திக்கொண்டு போங்கள். எங்கள் கணக்குப்படி அதன்போதே, அதாவது கி.பி. நாலாம் நூற்றாண்டிலேயே ஃபா - ஹியன் என்று சீன யாத்ரிகர் வந்து குறிப்புக்கள் எழுதி வைத்திருக்கிறார். ஆனாலும் அவர் பௌத்த மத விஷயத்திலேயேதான் கவனம் செலுத்தியிருக்கிறார். அவர் காலத்தில் இருந்த பெரிய பெரிய ராஜாக்களின் பெயரைக்கூடச் சொல்லாமல், 'தேசமும் அமைதியாயிருக்கிறது;ஜனங்களும் ரொம்ப அமைதியாயிருக்கிறார்கள். பெரிய குற்றங்களே நடப்பதில்லை. பயமில்லாமல் ஒரு கோடிக்கு மறு கோடி ஸஞ்சாரம் பண்ண முடிகிறது. பௌத்த மதம், ஹிந்து மதம் இரண்டுமே அநுஷ்டானத்தில் இருக்கின்றன'என்று ஜெனரலாகத்தான் கொஞ்சம் சொல்லி முடித்திருக்கிறார். ஆகையால் குப்த ராஜவம்ச கால நிர்ணயத்தில் அவரை ஸம்பந்தப்படுத்தாமல் வேண்டுமானாலும் விட்டுவிடுகிறோம். ஆனால் அப்புறம் ஹர்ஷர், ஹுவான்-த்ஸாங் காலங்கள்

நாங்கள் சொல்கிறதுபோல கி.பி. ஏழாம் நூற்றாண்டுதான் என்பது ஸர்வ நிச்சயமான யீணீநீமீ. அதை முற்காலத்துக்குக் கொண்டு போவதற்கேயில்லை. இதற்கும் 150 வருஷத்துக்கப்புறம் நாங்கள் ஆசார்யாள் காலத்தைச் சொல்வதால் அதில் கை வைப்பதற்கே இடமில்லை'என்று சொல்லலாம். ஆனபடியால் அவர்கள் 788-820 என்று ஆசார்யாளின் கால நிர்ணயம் செய்திருப்பதற்கு அநேக காரணங்கள் காட்டுவதாகச் சொன்னேனே, அவற்றையேதான் ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு ஸரியா தப்பா என்று பார்க்க வேண்டியிருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**காளி தாஸ ன் விஷய ம் :** அவர்கள் சொல்கிற ஒரு பாயின்ட் காளிதாஸனை ஆசார்யாளின் கால மூத்தவரான குமாரிலபட்டர் மேற்கொள் காட்டியிருக்கிறாரென்பது. காளிதாஸன் கி.மு. ஆறாம் நூற்றண்டு இல்லை என்கிறார்கள். ரொம்ப முந்தி அவருடைய காலத்தைக்கொண்டு போனால் கூட புஷ்யமித்ர சுங்கனின் பிள்ளையான அக்னிமித்ரனின் ஸமகாலத்தவராகத்தான் அவர் இருந்திருக்க முடியும்;ஏனென்றால் அவருடைய "மாளவிகாக்னிமித்ர"த்தில் கதாநாயகனே இந்த அக்னிமித்ரன்தான் என்கிறார்கள். 'புஷ்யமித்ரன் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுதான். அதனால் காளிதாஸனை கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்குக் கொண்டுபோக இடமில்லை'என்கிறார்கள்.

ஆனால் அவர்கள் சொல்லும் இந்த கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக் கணக்கும் மெகஸ்தனிஸை மையமாக வைத்து மௌர்ய காலத்தை நிர்ணயம் பண்ணி, மௌயர்களில் கடைசியாயிருந்த ராஜாவின் ஸேநாதிபதியாயிருந்த புஷ்ய மித்ரனே அப்புறம் அதிகாரத்தைக் கைப்பற்றினான் என்பதில்தான் அநுமானிக்கப்பட்டிருக்கிறது. மௌர்ய கால 'பேஸி'ஸே (அடிப்படையே) தப்பாயிருக்கக்கூடும் என்றுதான்

பார்த்தோமே!அதையொட்டி அவர்கள் தங்களுடைய கி.பி. நாலாம் நூற்றாண்டு நிர்ணயம் வரையில் நமக்கு விட்டுக்கொடுக்க ந்யாயமிருக்கிறது என்றும் பார்த்தோமே! இதுவும் (கி.மு. இரண்டாம் நூற்றாண்டு) அந்த காலகட்டத்துக்குள்ளேயே வந்துவிடுவதால், "இப்படித்தான்"என்று அவர்கள் அடித்துச் சொல்வதற்கில்லை.

நம் புராணாதிகளின் கணக்குப்படி கி.மு. 1500-ல் ஆரம்பித்த மௌர்ய வம்சம் அப்புறம் முன்னூறு வருஷத்துக்கு மேல அரசாண்ட பிறகு சுங்க வம்ச ஆட்சியைப் புஷ்யமித்ரன் ஏற்படுத்தியிருக்கிறான். எனவே அது கி.மு. 1200-ஐ ஒட்டியிருக்கும். காளிதாஸன் அவனுடைய 'காண்டெம்பரரி' என்றால் அவர் காலமும் அவ்வளவு முற்பட்டுப் போய்விடும். ஆசார்யாள் கி.மு. ஆறாம் நூற்றாண்டு என்ற நம் நம்பிக்கைப்படியே காளிதாஸன் அதற்கும் ஆறு நூற்றாண்டு முந்தியவர் என்றாகிவிடும்.

ஆனால் சுங்கர்களைப்பற்றி அவர் எழுதியிருப்பதால் அவரே அந்தக் காலத்தவர்தான் என்று சொல்லலாமா?இன் றைக்குங்கூட யாராவது புது ராமாயண காவியம் எழுதலாம். அதனால் இவர் ராமருடைய ஸமகாலத்தவர் என்பதா?சுங்கர் காலமே காளிதாஸன் காலத்துக்கு upper limit என்றுதான் சொல்ல முடியும்; அதற்கு முந்தி அவர் காலம் இருக்கமுடியாது என்றே அர்த்தம். பிந்தி இருக்கலாம். அதைப்பற்றி ஏதாவது தெரிகிறதா?

'காளிதாஸன் விக்ரமாதித்யனின் காலம், அவர் அவனுடைய ஸபையிலிருந்த நவரத்னங்களில் ஒருத்தர்'என்று நம் தேசத்திலேயே வெகு காலமாக நம்பிக்கை இருக்கிறது. விக்ரம சகாப்தம் கி.மு. 57-ல் ஆரம்பித்ததாகவே சாஸ்திரஜ்ஞர்களும் சொல்கிறார்கள். இப்படியிருக்க அவரை எப்படி கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்குக் கொண்டு போவது?' என்று கேட்கலாம்.

கி.மு. 57-லிருந்த விக்ரமாதித்யனுக்கு வேறாக இன்னொரு விக்ரமாதித்யன் கலியுகத்தின் 2500-வது வருஷத்தையொட்டி, அதாவது, கி.மு. ஆறாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்

இருந்தானென்றும், இவனைத்தான் 'ராஜ தரங்கிணி'யில் சொல்லியிருக்கிறதென்றும் ஒரு அபிப்ராயமிருக்கிறது. காளிதாஸன் அவனுடைய காலத்தவர்தான் என்றும் சொல்கிறார்கள். நம் நம்பிக்கைப்படி ஆசார்யாள் அந்த நூற்றாண்டு முடியும் ஸமயத்தில் (509-ல்) அவதரித்திருக்கிறார். குமாரிலபட்டர் அந்த நூற்றாண்டு மத்தியில் பிறந்திருப்பார்.

நம் தேச நம்பிக்கையே இருந்தாலும் ஸரி, சாஸ்த்ரஜ்ஞர்களின் அபிப்ராயமிருந்தாலும் ஸரி, விக்ரமாதித்தன் என்பவனைப் பற்றி ஒன்றும் நிச்சயப்படுத்திச் சொல்லத் தெரியவில்லை என்றுதான் நடுநிலையிலிருந்துகொண்டு பார்த்தால் ஒப்புக்கொள்ள வேண்டிவரும். அவனைப் பற்றி சொல்லும் 'ப்ருஹத்கதை,' 'காதா ஸப்தசதி'முதலியவை நாவல்கள் மாதிரியான கதைகளாகவே இருப்பவை. புராணங்கள், ராஜதரங்கிணி முதலியவற்றின் ப்ராமாண்யம் (மெய்ம்மை யுறுதி) இவற்றுக்கில்லை. வீர ஸாஹஸங்கள் செய்த ஒருவனுடைய ஆச்சர்யங்கள் நிறைந்த கதைகள் எந்த தேசத்து ஜனங்களுக்கும் வேண்டியிருக்கிற ஒன்று. அப்படி விக்ரமாதித்யன், மதனகாமராஜன் போன்றவர்களுடைய கதைகள் மிகுந்த ப்ரஸித்தி பெற்றுவிட்டன. இவர்களை சரித்ர புருஷர்களாக வைத்துக் கால நிர்ணயம் செய்யப் புறப்பட்டால் குழப்பமாகத்தானிருக்கிறது. ஒரு ஸமயத்தில் ஜனங்களை ரொம்பவும் வசீகரம் செய்யும் ஒருவன் தோன்றினால் அவன்மீது நிறையக் கதைகளை ஏற்றிவிடுவது வழக்கம். அப்படித்தான் உஜ்ஜயினியிலிருந்து ஆட்சி செய்த ஒரு விக்ரமாதித்யன், தாரா நகரத்திலிருந்து ஆட்சி செய்த போஜன் முதலியவர்களைப் பற்றி நடந்திருக்கிறது. போஜனின் காலத்தவனே காளிதாஸன் என்றும் நம் தேச நம்பிக்கையே இருக்கிறது. இப்படி நம் ஊரிலேயே இரண்டு வித நம்பிக்கை இருக்கும்போது ஒன்று தப்பாகத்தானே இருக்கவேண்டும்?நம் ஊர் நம்பிக்கை என்பதாலேயே நிஜம்தான் என்று சாதிக்கமுடியாதல்லவா?இதையெல்லாம் பார்த்துத்தான் சிலர் இரண்டு காளிதாஸர்கள் இருந்ததாக அபிப்ராயம் சொல்கிறார்கள். விக்ரமாதித்ய ஸபையிலிருந்த நவரத்னங்கள் தன்வந்திரி, க்ஷபணகர், அமரஸிம்ஹன், சங்கு, வேதாளபட்டர், கடகர்ப்பரர், காளிதாஸர், வராஹமிஹிரர், வரருசி ஆகிய ஒன்பது பேர் என்று சொல்லப்படுகிறது.

இவர்கள் எல்லாரும் ஸம காலத்தவர்கள் இல்லை என்று வேறு source -களிலிருந்து தெரிகிறது. இப்படியிருக்கும்போது எந்த விக்ரமாதித்யனை வைத்து எந்தக் காளிதாஸருக்கு எப்படிக் காலம் கணிப்பது? வல்லாளர் என்பவரின் "போஜ ப்ரபந்த"த்திலோ காளிதாஸரை போஜ ஸபையின் நவரத்னங்களில் ஒருவராகச் சொல்லியிருப்பதோடு, அவர்கூட இருந்த மற்ற ரத்னங்களில் பவபூதி, பாணர், தண்டி, ஸ்ரீஹர்ஷர் முதலிய எல்லாப் பெரிய கவிகளையும் சேர்த்திருக்கிறது!வேறு ஆதாரங்களிலிருந்து இவர்கள் நிச்சயமாக ஸமகாலத்தவரல்ல என்று தெரிகிறது!

சரித்ர புருஷனான சந்த்ரகுப்த விக்ரமாதித்யன் காலத்தில் காளிதாஸன் இருந்திருக்கலாம் என்பதுபோலச் சொல்லும் பல அபிப்ராயங்களும் 'அநுமானம்'என்று சொல்லக்கூடியவையாகத்தான் இருக்கின்றன; 'ப்ரமாண ம்'என்றல்ல.

புஷ்யமித்ர சுங்கனுக்கு முன்காலத்தில் காளிதாஸன் இருந்திருக்க முடியாது என்று ஙூஜீஜீமீகூஷீ ரீவீஙீவீமீ சொன்னாற்போல கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு அவர் காலம் இருக்க முடியாது என்று ரீஷீஷ்மீகூஷீ ரீவீஙீவீமீ கட்டுவதற்கதிகமாக எதுவும் சொல்லத் தெரியவில்லை. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முன்பாதியில் ஹர்ஷரின் ஆஸ்தான கவியாயிருந்த பாணர் "ஹர்ஷ சரித்ர"ஆரம்பத்தில் காளிதாஸனைப் பேர் சொல்லிப் புகழ்ந்திருக்கிறார். அதே காலத்தியதாக உள்ள ஒரு ராஜசாஸனத்திலேயே காளிதாஸனின் பெயர் ஒரு ச்லோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இரண்டாம் புலகேசியின் சாஸனம். ஐஹோளெ என்ற சில்ப முக்யக்வம் வாய்ந்த ஊரைச் சேர்ந்த சாஸனம். சக வருஷம் 556, அதாவது கி.பி. 634 என்று திருத்தமாகத் தேதி குறிப்பிட்டுள்ள சாஸனம். இதில் "ரவி-கீர்த்தி....பாரவி கீர்த்தி"என்று வார்த்தை விளையாட்டுச் செய்திருக்கிறது. கவிதையால் ஆச்ரயிக்கப்பட்ட காளிதாஸர் போலவும் பாரவி போலவும் கீர்த்தியுடன் ரவி கீர்த்தி என்பவர் விளங்குவதாக அந்த சாஸன ச்லோகம் தெரிவிக்கிறது:

ஸ விஜயதாம் ரவிகீர்த்தி :

கவிதாச்ரித காளிதாஸ பாரவி கீர்த்தி :

ஆகையால் காளிதாஸன் கி.பி. 634க்கு முன்னாடி என்று மட்டுமே தெரிகிறது. எவ்வளவு முன்னாடி?தெரியவில்லை!

நிச்சயமாகத் தெரியாத ஒன்றை வைத்து இன்னொன்றை எப்படி நிச்சயப்படுத்துவது? காளிதாஸர் கலாத்தைக் கொண்டு குமாரிலபட்டர், ஆசார்யாள் ஆகியோருடைய காலத்தை கணிக்கப் பார்ப்பது இப்படித்தான்!

கோலாப்பூரில் அப்பா சாஸ்த்ரி என்று வித்யா வாசஸ்பதி பட்டம் வாங்கிய ஒருவர் இருந்தார். அவர் கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே ஆரம்பத்தில் காளிதாஸர், மத்தியில் குமாரிலபட்டர், முடிகிற ஸமயத்தில் சங்கரர் என்று மூன்று பேரும் இருந்தார்கள் என்று அநேகப் புஸ்தகங்களைப் பார்த்து முடிவு பண்ணியிருக்கிறார். நம்முடைய புராணம், சமய இலக்கியம் ஆகியவற்றை மட்டுமின்றி ஜைனப் புஸ்தகங்களையும் பார்த்திருக்கிறார். மதம் என்று வரும்போது இரண்டுக்கும் ஒரே சண்டையாயிருந்துகூட, கால நிர்ணயங்களில் அவை எப்படி வித்யாஸமேயில்லாமல் ஒத்துப்போகின்றன என்பதை நாம் கவனிக்கும்போது, இப்படி ஷீஜீஜீஷீஉவீமீமீ உஷீ஢ஙுகூஷீநீமீ-களிலிருந்து கிடைக்கிற ஒன்றேயான அபிப்ராயத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியவர்களாகவே இருக்கிறோம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**கிறி ஸ்து ச காப்த பௌத்த நூலாசிரியர்கள் விஷயம் :**
அடுத்த பாயிண்டுக்கு வருவோம். திங்நாகருடைய வைபாஸிகம், அஸங்கரின் ஸௌத்ராந்திகம், நாகார்ஜுனரின் சூன்யவாதம் ஆகியவற்றை ஆசார்யாள் கண்டனம் பண்ணியிருப்பதால், கி.பி. இரண்டிலிருந்து ஆறாம் நூற்றாண்டுக்குள் வந்த பௌத்த ஸித்தாந்திகளுக்குப் பிற்பட்ட காலத்தவர்தான் ஆசார்யாள் என்ற

ஆர்க்யுமென்டைப் பார்ப்போம்:

மேற்படி ஸித்தாந்தங்களை ஆசார்யாள் கண்டித்திருப்பது வாஸ்தவந்தான். ஆனால் அவற்றைச் சொன்ன திங்நாகர், அஸங்கர், நாகார்ஜுனர் முதலிய ஸித்தாந்திகளில் எவர் பெயரையுமே ஆசார்யாள் குறிப்பிடவில்லை. இந்த ஸித்தாந்தங்களும் ஸரி, இன்னும் நம் தேசத்திலுள்ள அநேக ஸித்தாந்தங்களும் ஸரி, இப்போது அவை யாரார் பெயரில் ப்ரஸித்தமடைந்திருக்கின்றனவோ அவர்களாலேயேதான் தோற்றுவிக்கப்படவில்லை. அவர்களுக்கும் முந்தி எத்தனையோ காலமாக அந்த ஸித்தாந்தங்கள் இருந்திருக்கின்றன. ஆனால் நன்றாக ரூபம் பண்ணி, codify பண்ணி இல்லாமல் ஒரு மாதிரி vague-ஆக இருந்திருக்கும் அப்புறம் அவற்றை இப்போது நாம் தெரிந்துகொண்டுள்ள அந்த ப்ரஸித்தமான ஸித்தாந்திகளே நன்றாக ரூபம் பண்ணி, ஒரு கோட்பாடாக, சாஸ்த்ரமாக ஆக்கிக் கொடுத்திருக்கிறார்கள்.

அத்வைதமும் ஆசார்யாளுமே இப்படித்தானே?அநாதி காலமாக இருந்ததுவந்த அத்வைதத்தைத்தானே ஆசார்யாள் ஒரு கட்டுக்கோப்பான சாஸ்த்ரமாக்கிக் கொடுத்தார்?அவரே அதைத் தோற்றுவிக்கவில்லையே!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**பூர்வகால புத்தர்களும், ஜினர்களும் :** இப்போது ஆசார்யாள் கி.மு. ஆறாம் நூற்றாண்டு என்றால் புத்தரும் ஆசார்யாளும் ஸமகாலத்தவராகி விடுவார்களே என்ற ஆக்ஷேபணைக்குப் பதிலாக இன்னொரு காரணமும் கிடைக்கிறது. (அது என்னவென்றால்) புத்த மதத்தைக்கூட கௌதம புத்தர் என்பவர்தான் தோற்றுவித்தாரென்றால் அது தப்புத்தான் என்று அந்த மதஸ்தர்களே சொல்கிறார்கள். "சுத்தோதனரின் பிள்ளையாகிய கௌதம புத்தர் 24-வது

புத்தர்தான். அவருக்கு முந்தி 23 புத்தர்கள் இருந்திருக்கிறார்கள். அதனால் எங்கள் மதமும், நீங்கள் வேதத்தைச் சொல்லிக்கொள்கிற மாதிரி, அநாதிதான்"-என்று பௌத்தர்கள் சொல்வார்கள். இதற்கு ஆதரவாக நம்முடைய ராமாயணத்திலும் சான்று இருக்கிறது.

பரதன் காட்டுக்குப்போய் ராமரைத் திருப்பி அழைத்துக்கொண்டுவர முயற்சி செய்கிறானல்லவா?அவனோடு போனவர்களில் ஜாபாலி மஹர்ஷியும் ஒருத்தர். அவர் எதையாவது சொல்லி ராமரைப் பித்ரு வாக்ய பரிபாலனத்தை விடும்படிப் பண்ணி, அயோத்திக்குத் திரும்பும்படிப் பண்ணணும் என்பதற்காக-(அல்லது) ராமருடைய வைதிக அபிமானத்தை லோகத்துக்கு வெளிப்படுத்தணும் என்பதற்காக-ஒரே அவைதிகமாகவும் நாஸ்திகமாகவும் ஆர்க்யூ பண்ணுகிறார். ராமருக்கு மஹா கோபம் வருகிறது. அப்போது அவர் ஜாபாலியின் அவைதிக வாதத்தைக் கண்டிக்கும்போது அதை புத்தரின் கொள்கை என்றும், அப்பட்டமான நாஸ்திகமாகிய சார்வாகம் மாதிரிதான் அதுவும் ஒன்று என்றும் சொல்லி, 'இப்படிப்பட்ட கொள்கைக்காரர்களின் மூஞ்சியிலேயே முழிக்கப்படாது;திருடனை தண்டிப்பதுபோல இவர்களையும் தண்டிக்க வேண்டும்'என்கிறார். இங்கே புத்தர் என்ற பெயரோடு, புத்தருக்கு அந்த மதத்தில் வழங்குகிற இன்னொரு பெயரான 'ததாகதர்'என்பதையும் ராமர் சொல்கிறார். இதனால் அப்போதே பௌத்தம் இருந்திருப்பது தெரிகிறது. ஆனால் கௌதம புத்தர் சொன்ன நல்லொழுக்கங்கள், புலனடக்கம், உசந்த த்யானம் ஆகிய எதுவுமில்லாமல் 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்'என்ற கொள்கை போலிருந்திருக்கிறதென்றும், அதுதான் மாறி மாறிச் சார்வாகத்திற்கு ரொம்பவும் மாறுபட்ட ரூபத்தில் கௌதம புத்தரால் ப்ரசாரம் செய்யப்பட்டிருக்கிறதென்றும் தெரிகிறது.

ஜைனர்களும் தங்களுடைய கொள்கை ரொம்பப் புராதனமானது, தங்களுடைய இருபத்துநாலு தீர்த்தங்கரர்களில் கடைசியானவர்தான் இப்போது நாம் அந்த மத ஸ்தாபகராகச் சொல்லும் ஜினர் (மஹாவீரர்) என்கிறார்கள். புராணங்களிலேயே ஒரு அவதார புருஷராகச் சொல்லப்பட்ட

ரிஷபர்தான் அவர்களுடைய முதல் தீர்த்தங்கரர். இதை ஒப்புக்கொள்ள யோசிக்கும் ஓரியண்டலிஸ்ட்கள்கூட மஹாவீரருக்கு முந்தியவராக, 23-வது தீர்த்தங்கரராகச் சொல்லப்படும் பார்ச்வநாதர் கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே இருந்திருக்கக்கூடும் என்கிறார்கள்.

'ப்ரஹ்மஸூத்ரத்தில் பௌத்த கண்டனம் வருகிறதே!க்ருஷ்ண பரமாத்மா கீதையில் அந்த ப்ரஹ்ம ஸூத்ரத்தை " **ப்ரஹ்மஸூத்ர பதைச்சைவ ஹேதுமத்பிர் விநிச்சிதை :**"என்கிறாரே!அதனால் ப்ரஹ்ம ஸூத்ரம், கீதை எல்லாமே புத்தருக்குப் பிற்பாடுதான்'என்று வாதம் செய்கிறவர்கள் இந்த விஷயங்களைக் கவனிக்கவேண்டும். அவர்கள் சொல்லும் கௌதம புத்தருக்கு முந்தியும் அநேக புத்தர்கள் இருந்திருக்கிறார்கள்; அவர்கள் சொன்ன பௌத்த மதமும் இருந்திருக்கிறது. ஆகையால் ப்ரஹ்ம ஸூத்ரம் பண்ணிய வ்யாஸரும், கீதை உபதேசித்த க்ருஷ்ணரும் கௌதம புத்தருக்குப் பிற்பட்டவர்கள் என்று கொண்டுவிடவேண்டிய அவச்யமேயில்லை.

இதில் கீதை விஷயமாக இன்னொரு ஸமாசாரம். ஆசார்யாள் (கீதா) பாஷ்யத்தில் "ப்ரஹ்மஸூத்ர" என்ற வார்த்தையை அந்தப் பெயர் கொண்டதும், அவரே ப்ரஸித்தமான பாஷ்யம் எழுதியதுமான புஸ்தகம் என்றே அர்த்தம் பண்ணவில்லை! "ப்ரஹ்மண:ஸூசகாநி வாசகாநி ப்ரஹ்மஸூத்ராணி" என்று, அதாவது "ப்ரஹ்மத்தை ஸூசனை செய்யும் வாசகங்களாக உள்ளவை"என்றே அர்த்தம் பண்ணியிருக்கிறார். இதிலிருந்து கீதோபதேசத்துக்குப் பிறகே வ்யாஸர் கலி ஆரம்பத்தில் சதுர் வேத விபாகம் பண்ணித் கொடுத்தபோதோ அதற்கும் அப்புறமோதான் ப்ரஹ்மஸூத்ரம் இயற்றினாரென்று ஊறிக்கலாம். இதை உறுதிபடுத்துவதாக, ஸ்ம்ருதியாகிய கீதையின் கருத்துக்களையே சில இடங்களில் ப்ரஹ்மஸூத்ரத்திலும் சொல்லி, "ஸமர்யதே": "ஸ்ம்ருதியில் இப்படிச் சொல்லியிருக்கிறது"என்றும் தெளிவாக, கீதை அதற்கு முற்பட்ட நூல் என்று, தெரியவைத்திருக்கிறது.

சொல்ல வந்த விஷயம்: அநேக ஸித்தாந்தங்கள் இப்போதுள்ள புஸ்தகங்களைக்கொண்டு அவற்றுக்கு நாம்

நிர்ணயம் செய்கிற காலத்திற்கு ரொம்ப முந்தியே ஏதோ ஒரு ரூபத்தில் இருந்து வந்திருக்கின்றன. இப்படி ஸௌத்ராந்திகம், வைபாஸிகம், சூன்யவாதம் ஆகிய பௌத்த ஸித்தாந்தங்களும் ஆசார்யாளின் காலத்திலேயே இருந்து அவற்றை அவர் கண்டித்திருக்கலாம். அவருக்கு அப்புறமே அஸங்கர், திங்நாகர், நாகார்ஜுனர் முதலியவர்கள் அவற்றுக்குப் புத்துயிர் தந்து விஸ்தாரம் செய்திருக்கலாம்.

இன்னொரு முக்யமான பாயின்டும் கவனிக்கவேண்டும்: இந்த மூன்று பேரைக் கிறிஸ்துவ சகாப்தத்தில் இன்னின்ன நூற்றாண்டு என்று அவர்கள் சொல்லியிருப்பதும் காளிதாஸன் ஸமாசாரம் மாதிரி நிச்சயமில்லாத அநுமானங்கள்தான்.

"மேகஸந்தேச காவ்ய"த்தில் காளிதாஸனே அஷ்ட திக் கஜங்களை ஒதுக்கிவிட்டு அந்த மேகம் மேலே போக வேண்டும் என்று சொல்லுமிடத்தில், 'திக்-கஜம்'என்பதை 'திங்-நாக'என்று சொல்லியிருப்பதைக் காட்டி, பௌத்தரான திங்நாகரை ஒதுக்க வேண்டுமென்பதைத்தான் சிலேடையாகக் கூறியிருக்கிறாரென்று ஒரு அபிப்ரயமிருக்கிறது! ÜŠð®ò£ù£™ ïñ‚°, è£ô‹ ªîKò£î, Ýù£™ Ýê£˜ò£À‚° º‰Fòõó£ù è£Oî£úK¡ úñè£ô˜îõó£èõ£õ¶ Fƒï£è˜ Þ¼‰F¼‚è «õ‡´‹.

நேபாள ராஜ வம்சாவளியின்படி நாகார்ஜுனரின் காலம் கி.மு. பதின்மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்துக்கே போய் விடுவதாகவும் தெரிகிறது.

இப்படியெல்லாம், 'இதுதான்'என்று நிச்சயமாகச் சொல்ல முடியாதவர்களின் காலத்தைக்கொண்டு ஆசார்யாள் காலத்தை கணிக்கப் பார்ப்பது கண் தெரியாதவனுக்கு வழிகாட்டியாக இன்னொரு கண் தெரியாதவனை அனுப்பி வைப்பது போலத்தானிருக்கிறது!

---

## ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

**மஹாயான விஷயம் :** 'மஹாயானத்தைப் பத்மபாதர் குறிப்பிட்டிருக்கிறாரே: கிறிஸ்து சகாப்த ஆரம்பத்தில் இருந்திருக்கக் கூடிய கனிஷ்கரின் காலத்தில்தானே பௌத்தம் மஹாயானம், ஹீனயானம் என்று உடைந்தது?'என்று ஒரு பாயின்ட் பார்த்தோம். இப்படி முழுக்க வேறு வேறாக இரண்டு பிரிவுகள் உறுதிப்பட்டது கனிஷ்கர் காலத்தில் தானென்றாலும், புத்தர் மஹா பரிநிர்வாணம் அடைந்ததை அடுத்து ராஜக்ருஹத்தில் நடந்த முதலாவது பௌத்த மஹாநாட்டிலேயே இரண்டு விதமான அபிப்ராயக்காரர்கள் மோதிக்கொண்டார்களென்றும், அப்புறம் ஸ்தவிரவாதம் ('தேராவாதம்'என்று பாலிப் பெயரில் வழங்குவது) என்றும் மஹாஸங்கிகம் என்றும் இந்த இரண்டு பிரிவுகளும் விரிந்து கொண்டே போய்த்தான் முடிவில் (முறையே) ஹீனயான, மஹாயானங்களாக ஆயின என்றும் அவர்களுடைய மதப் புஸ்தகங்களிலிருந்து தெரிகிறது. முதலிலிருந்தே பல காலம் ஹீனயாம் மஹாயானம் என்ற இந்தப் பெயர்களும் ஓரளவு வழங்கியிருக்கலாம். அப்படியானால் பத்மபாதர் அந்தப் குறிப்பிட்டதில் chronological error (காலக் கணிப்பில் தவறுதல்) இல்லைதானே? மெகஸ்தனிஸ் ஸமாசாரத்தை நினைவு வைத்துக்கொண்டு ஹிஸ்டரி முழுதையும் முற்காலத்துக்குத் தள்ளினாலோ இந்தக் கேள்வியெல்லாமே அடிபட்டு விடும்!

---



## ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

**" த்ராவிட சிசு " விஷயம் :** 'த்ராவிட சிசு'ஸமாசாரத்தைப் பார்ப்போம். ஆசார்யாளே த்ராவிட சிசுதான்-தமிழ்க் குழந்தைதான்-என்று சொன்னேனல்லவா?அவரேதான்

குழந்தையாயிருந்த போது அம்பாளின் க்ஷீரத்தைப் பானம் பண்ணி அற்புதமான கவிதாவிலாஸம் பெற்றாரென்று மலையாள தேசத்தில் சொல்கிறார்கள்.

காலடிக்கு ரொம்பக் கிட்டேயே மாணிக்க மங்கலம் என்று க்ராமம் இருக்கிறது. அங்கே அம்பாளுக்குக் காத்யாயனி என்ற பெயரில் கோவிலிருக்கிறது. ஆசார்யாளின் அப்பா தினமும்

அங்கே போய்ப் பூஜை பண்ணுவாராம். பால் நைவேத்யம் பண்ணிப் புத்ரருக்கு கொண்டு வந்து கொடுப்பாராம்: "அம்பாள் ப்ரஸாதம்"என்று சொல்லிக் கொடுப்பாராம். குழந்தையாயிருந்த ஆசார்யாள், அப்பா கொண்டு போகும் பாலை அம்பாளே பானம் பண்ணிவிட்டு கொஞ்சம் நமக்காகப் பாக்கி வைத்து அனுப்புகிறாள் என்று நினைத்துக் கொண்டிருந்தாராம். ஒரு ஸமயம் அப்பா வெளியூர் போக நேர்ந்ததால் ஆசார்யாளே அங்கே போய்ப் பூஜை பண்ணி, "அம்மா, சாப்பிடு!" என்று சொல்லிப் பால் நைவேத்யம் செய்தாராம். ஒரு பெரிய அநுக்ரஹ லீலை செய்யவேண்டுமென்று உத்தேசித்திருந்த அம்பாள் பாக்கி வைக்காமல் அந்தப் பால் முழுவதையும் ஸூக்ஷ்மமாக ஸ்வீகரித்துக்கொண்டு விட்டாளாம்! அப்புறம் குழந்தை சேஷ ப்ரஸாதம் வைக்கக் காணோமே என்று வருத்தப்பட்டவுடன் தன் க்ஷீரத்தையே அநுக்ரஹித்தாளாம்.

இப்படி அங்கே ஐதிஹ்யம் இருக்கிறது.

'ஸௌந்தர்ய லஹரி'யின் ப்ரஸித்த பாஷ்யங்களான 'லக்ஷ்மீதரா', 'ஸௌபாக்ய வர்தநீ', 'அருணாமோதிநீ' ஆகிய புஸ்தகங்களிலும் 'த்ராவிட சிசு'என்பதற்கு இப்படித் தான் வ்யாக்யானம் செய்திருக்கிறது. 'லக்ஷ்மீதரா'வில் 'த்ராவிட சிசு'என்பதற்கு 'த்ராவிட ஜாதியில் அவதாரம் பண்ணிய குழந்தையான இந்த ஸ்தோத்ர கர்த்தா'என்று மட்டும் சொல்லி, விட்டிருக்கிறது. மற்ற இரண்டு பாஷ்யங்களிலும் விரிவாகவே (மேலே சொன்ன) கதையைக் கொடுத்திருக்கிறது.

ஆனபடியால், 'ஞானஸம்பந்தருக்கு அப்புறம்தான்;அதாதவது ஏழாம் நூற்றாண்டுக்கு

அப்புறம்தான் ஆசார்யாள்'என்று சொல்வதற்கில்லை.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**" ஸுத த்ரோஹி " விஷயம் :** "ஸுத த்ரோஹி"என்று ஏழாம் நூற்றாண்டுப் பிள்ளைக்கறிக்காரரைச் சொன்னதற்கு என்ன ஆன்ஸர்?

ஆசார்யாள் பக்தி ஸ்தோத்ரமே பண்ணியிருக்க முடியாது என்று சொல்வது கொஞ்சங்கூட ஸரியில்லைதான். ஆனாலும் ஆசார்யாள் பேரில் இப்போது வழங்கும் எல்லா ஸ்தோத்ரங்களுமே அவர் பண்ணியதாகத்தான் இருக்குமா என்றும் கொஞ்சம் யோசிக்கும்படியாக இருக்கிறது. 'ஸௌந்தர்ய லஹரி', 'சிவாநந்த லஹரி', 'பஜகோவிந்தம்', 'ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்', 'கநகதாராஸ்தவ ம்'போன்றதெல்லாம் அவர்தான் பண்ணியிருப்பார். ஆனாலும் ஒரு சில ஸ்தோத்ரங்களைப் பார்க்கும்போது வேறே விதமாக நினைக்கும்படி அகச்சான்று கிடைக்கிறது. (உதாரணமாக:) "தேவி அபராத க்ஷமாபந ஸ்தோத்ரம்"என்று ஆசார்யாள் இயற்றியதாக ஒன்று இருக்கிறது. அதில்தான் "கெட்ட பிள்ளை பிறப்பதுண்டு;ஆனால் கெட்ட அம்மா என்று ஒருத்தி ஒரு நாளும் இருப்பதில்லை"

**குபுத்ரோ ஜாயேத் க்வசிதபி குமாசா ந பவதி**

-என்று வருவது. அதிலே ஸ்பஷ்டமாக "எண்பத்தைந்து வயஸுக்கு மேலே ஆகிவிட்ட எனக்கு நீ க்ருபை பண்ணாவிட்டால் நான் யாரிடம் அடைக்கலம் புகுவனேம்மா?" என்று வருகிறது. முப்பத்திரண்டே வயஸு இருந்த ஆசார்யாள் இப்படிச் சொல்லியிருக்க முடியுமா?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**எது எந்த சங்கரர் செய்தது ?**:- ஆசார்யாள் ஸ்தாபித்த மடங்களிலெல்லாம் சங்கராசாரியார், சங்கராசாரியார் என்றே எத்தனையோ ஸ்வாமிகள் வந்தாயிற்று. இவர்களில் தங்கள் ஸந்நியாஸ நாமாவிலேயும் 'சங்கரர்'என்று இருப்பவர்களாகவே 'க்ருபா சங்கரர்', 'உஜ்-ஜ்வல சங்கரர்', 'மூக சங்கரர்', 'அபிநவ சங்கரர்'என்றெல்லாம் இருந்திருக்கிறார்கள். ச்ருங்கேரியில் 'வித்யா சங்கரர்'என்று விசேஷ மரியாதையோடு ஒரு ஸ்வாமிகளைச் சொல்கிறார்கள். இவர்களிலும் ஸ்தோத்ரங்கள் செய்தவர்கள் இருந்திருக்கலாம். அப்படிப்பட்ட ஸ்தோத்ரங்கள் ஆதி சங்கரர் செய்ததாகவே நாளாவட்டத்தில் நம்பிக்கை ஏற்பட்டிருக்கக்கூடியது ஸஹஜமே! "ஸுத த்ரோஹி"யைச் சொல்லும் "சிவ புஜங்க"ஸ்தோத்ரமும் அப்படி ஒன்றாக இருக்கக்கூடும். ஆகையால் இந்த ஒரு ரெஃபரன்ஸைக் கொண்டு மட்டும் கால நிர்ணயம் செய்வது ஸரியாகாது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**அநுக்ரஹமே லக்ஷ்யம் ஆராய்ச்சி அல்ல ! :**ஆசார்ய பீடத்திலேயே வந்தவர்கள் இயற்றிக்கொடுத்து, எத்தனையோ காலமாக ஆசார்யாள் செய்ததாகவே நினைத்துப் பாராயணம் பண்ணப்பட்டுப் பலனும் தந்து வந்து இருக்கிற உத்தமமான ஸ்தோத்ரங்களையும்-அதே போல ப்ரகரணங்களையு ம்-அவருடையவை என்றே வைத்துக்கொள்வதும் ந்யாயம்தான்! அவருடைய இன்ஸ்பிரேஷனில், அவரே உள்ளே புகுந்து பண்ணியவைதான் இவை!அதனால்

பொதுவாக இப்படியுள்ள நம்பிக்கைகளைக் குலைக்க வேண்டியதில்லை. ரொம்பவும் ஆராய்ச்சி என்று இறங்கினால் பக்தி போய்விடுவதில்தான் முடியும்!ஆனாலும் சிலர் சில தினுஸாக ஆராய்ச்சி பண்ணி அதுதான் ஸத்யம் என்று ஸ்தாபிக்கப் பார்க்கும்போது வேறே அபிப்ராயங்களும் உண்டு, அவற்றுக்கும் ஆதாரமுண்டு என்று காட்டாமலிருக்கக் கூடாது என்றும் தோன்றுகிறது. அப்படித்தான் இன்றைக்கு என்னவோ கால நிர்ணயம் என்று பார்க்க ஆரம்பித்துச் சொல்லும்போது ஆசார்யாள் போலிருக்கிற நூல்களைப் பற்றி சொல்ல நேர்ந்தது. ஆராய்ச்சிப் பூர்வமாக ஆதி ஆசார்யாள் செய்தது வேறே, பிற்கால ஆசார்யாள் செய்தது வேறே என்று வேறுபடுத்தி வைத்துக் கொண்டாலும், அநுபவ பூர்வமாக அவையெல்லாம் ஒரே குரு ப்ரஸாதத்தில் உண்டானவைதான்!அதனால் அவர்-இவர் என்று ஒன்றும் பேதப்படுத்தாமல் பாராயணம் பண்ணிப் பலன் அடைவோம் என்ற பாவம் இருப்பதுதான் நல்லது.

காலம் எதுவானால் என்ன?நமக்கு முக்யம் அநுக்ரஹம். ரொம்பப் பூர்வகாலத்தில் வந்திருந்தால்தான் அநுக்ரஹ மூர்த்தியாயிருக்க முடியும் என்றில்லை. எத்தனை பூர்வ காலமானாலும் அப்போதும் ஆசார்யாளுக்கு ஸமகாலத்தவர்களாகவே இருந்தவர்கள்தானே இப்போது நமக்கெல்லாம் கிடைப்பதைவிட ஜாஸ்தி அவருடைய அநுக்ரஹத்தைப் பெற்றிருக்கிறார்கள்? ஸமீபகாலத்தையும் தற்காலத்தையுமே சேர்ந்த மஹான்களிடமிருந்தும் நம்மால் அநுக்ரஹம் பெற முடியவில்லையா?

அதனால் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்ன, இன்னும் அப்புறம் ஆசார்யாள் வந்திருந்தாலும்கூட அதனால் நாம் பெறுகிற அநுக்ரஹத்திற்கு எந்த ஹானியுமில்லை!(நாம்) கதை கேட்பது அந்த அநுக்ரஹத்திற்குப் பாத்திரராவதற்குத்தான். அந்த முக்ய லக்ஷ்யம் மறந்து போகப்படாது.

அதற்காக யார் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் சொல்லி நிலை நாட்டிவிட விடக்கூடாதுதான். இதற்காக நாம் செய்யவேண்டியதையும் கொஞ்சம் கவனித்துதான்

ஆகவேண்டும். இப்படிப் பண்ணும்போது இரண்டு மூன்று ஸமாசாரங்கள் முக்யம்: ஒன்று, அவர்கள் பிடிவாதமாகச் சொல்கிறார்களே என்று நாமும் பிடிவாதமாக இருக்கக்கூடாது. நம் அபிப்ராயத்துக்கு மாறான ஒன்றுக்கு ப்ரமாணமிருக்கிறது என்றால் அதைத் திறந்த மனஸோடு அங்கீகரிக்கவேண்டும். இரண்டாவது, மாற்று அபிப்ராயக்காரர்களிடம் கோபமே கூடாது. ஆசார்யாளைக் குறித்த எந்த விஷயமும் பேதங்களைப் போக்குவாகத் தான் இருக்கவேண்டுமே தவிர கோபத்திலும் வெறுப்பிலும் கொண்டுவிடுவதாக இருக்கக்கூடாது. மூன்றாவது, அநுக்ரஹம்தான் நமக்கு முக்யம் என்ற நினைப்பு மறந்து போகாமலிருப்பது...

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**பூர்ண வர்மன் விஷயம் :**வெள்ளைக்காரர்கள் கால நிர்ணயம் பண்ணியிருப்பதற்குச் சொல்லும் அடுத்த பாயின்டைப் பார்க்கலாம். ஸூத்ர பாஷ்யத்தில் ஆசார்யாள் பூர்ணவர்மன் என்று ஒரு ராஜாவின் பெயரைச் சொல்லி, "அவனுக்கு முன்னால் ஒரு வந்த்யா புத்ரன் (மலடி மகன்) ஆண்டான் என்று சொல்வது எவ்வளவு அஸம்பாவிதம்"என்று சொல்வதைக் கொண்டு, 'மகதத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சி நடத்தியவன் ஒரு பூர்ண வர்மன்;அவனைத்தான் அவர் குறிப்பிடுகிறார்'என்று காட்டுவதாகச் சொன்னேன்.

ஆனால் நிஜமாகவே இருந்த ராஜாவைத்தான் அவர் சொல்லியிருக்கவேண்டும் என்று அடித்துச் சொல்ல முடியுமா?முடியாது. ஜெனரலாக மநுஷ்யர்களைக் குறிப்பிடும்போது, 'யாரோ ராமன் - கிருஷ்ணன் அல்லது சேஷன்-சுப்பன்'என்று நாம் பேச்சிலே சொல்கிறோம். Tom, Dick and Harryஎன்று இங்கிலீஷில் சொல்கிறார்கள். இந்தப்

பெயர்கள் வாஸ்தவத்தில் உள்ள எவரையும் குறிப்பிடுவன அல்ல. உதராணத்திற்கு ஏதோ பெயர் காட்டணும்;இந்தப் பேர்களைக் காட்டுகிறோம்!ஆசார்யாளே இப்படி பாஷ்யங்களில் தேவ தத்தன், யஜ்ஞ தத்தன் என்றெல்லாம் பெயர்கள் சொல்லியிருக்கிறார். அவர்கள் யார் என்று இது மட்டும் யாரும் ஆராய்ச்சி பண்ணிப் பார்க்கவில்லை!பொதுப் பேர்கள் என்றுதான் ஸரியாகப் புரிந்துகொண்டு, அதோடுவிட்டிருக்கிறார்கள். அப்படி (பூர்ணவர்மனைச் சொல்லும்) இந்த இடத்திலும் இருக்கலாம். ஸத்தை அஸத்தோடு (உள்ளதை இல்லாததோடு) ஸம்பந்தப்படுத்த முடியாது, அப்படிச் செய்வது அஸம்பாவிதம் என்று காட்ட வருகிறார். அப்போது பூர்ணவர்மன் என்ற பெயரில் பொதுவாக ஒரு ராஜாவைக் குறிப்பிட்டு, அந்த யாரோ ஒரு ராஜாவுக்கு முன்னால் என்றைக்குமே இருக்கமுடியாத-அ-ஸத்தான-ஒரு மலடி மகன் இருந்தான் என்றால் பொருந்துமா என்று கேட்கிறார். ஆகையால் இவனுக்கு 'ஸத்'தைக் குறிப்பதான பேர் வைத்தால் ரொம்பப் பொருத்தமாயிருக்குமல்லவா?அ-ஸத் என்பது சூன்யம். ஸத் அதற்கு நேரெதிர் என்றால் சூன்யத்துக்கு நேரெதிர் பூர்ணம்தானே?அதனால் 'பூர்ணவர்மன்'என்று போட்டிருப்பார் என்று சொல்லலாம்.

பூர்ணவர்மன் என்கிற மகராஜா தீவிரமான பௌத்தனென்று ஹுவான் த்ஸாங் சொல்வதிலிருந்து தெரிகிறது. புத்த கயையில் போதி வ்ருக்ஷத்தை மறுபடி துளிர்க்கப் பண்ணியவன் என்று சொன்னேனல்லவா?வேதாந்தத்தை நிலை நாட்டிய ஆசார்யாள் ஒரு பௌத்த ராஜாவை ஸூத்ர பாஷ்யத்தில் குறிப்பிட வேண்டிய அவச்யமில்லை. பௌத்த நூல் எதிலாவது அவன் பெயர் சொல்லியிருக்கிறதென்றால் அர்த்தமுண்டு. அப்படியாவது அவன் நிகழ்காலத்திலிருந்த ஒரு பெரிய சக்ரவர்த்தியாயிருந்தாலும் குறிப்பிட்டிருக்கலாம். அதுவுமில்லை. அவனோ கி.பி. 650-ஐ ஒட்டி இருந்தவன். அதுவும் ஒரு சிற்றரசனாகவே இருந்தவன். ஆசார்யாளின் காலம் என்று அவர்கள் சொல்வதோ கி.பி. 800ஐ ஒட்டி. அதாவது அவனுக்கு 150 லருஷத்திற்கு முந்தி இருந்த ஒரு பௌத்தச் சிற்றரசனையோ நினைவு வைத்துக்கொண்டிருப்பார்கள்?ஆசார்யாள் அவனை எதற்குக்

குறிப்பாக நினைவு வைத்துக்கொண்டு குறிப்பிடணும்?(சிரித்து) சூன்யவாதியான பௌத்த ராஜாவுக்குப் பூர்ணவர்மன் என்று பேர் இருப்பதை வைத்து ஹாஸ்யம் வேண்டுமானால் பண்ணியிருக்கலாம்!ஆனால் இங்கே ஆசார்யாள் ஜாடைமாடையாகக் கூட அப்படியொன்றும் பண்ணாமல் factual-ஆகத்தான் சொல்லிக்கொண்டு போகிறார்.

ஒன்றும் யோசனை செய்யாமல் 'ரிஸர்ச்'என்று எதையாவது சொல்லிவிட்டால் கேட்பவர்களும் யோசனை செய்யாமல் 'ஆமாம்'போட்டுவிடுவதாக இருக்கிறது.

அதனால்தான் அவர்களும் தீர்க்காலோசனை பண்ணாமல் எதையும் கேட்கலாமென்று சில ஆர்க்யுமென்ட்கள் எழுப்பியிருக்கிறார்கள். இப்படியொன்று: 'ஹுவான்-த்ஸாங் சங்கரர் என்ற பெயரையே சொல்லவில்லையே!இவர் எப்படி அவருக்கு முந்தி இருந்திருப்பார்?'என்பது.
ஹுவான்-த்ஸாங்குக்கு பௌத்த மதத்தில்தான் அபிமானம். அவர் உபநிஷத்துக்கள், ப்ரஹ்ம ஸூத்ரம், கீதை என்ற நம்முடைய ப்ரஸ்தான த்ரயங்களைக்கூடத்தான் குறிப்பிடவில்லை. ஆனால் இந்த ரிஸர்ச்காரர்களே அவையெல்லாம் அவருக்கு எத்தனையோ ஸெஞ்சுரி முற்பட்டவைதானென்று ஒப்புக் கொண்டிருக்கிறார்களா, இல்லையா?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**" அபிநவ சங்கரர் "**:-அவர்களுடைய ஆர்க்யுமென்டில் இன்னும் இரண்டு பாக்கி இருக்கின்றன. கம்போடியக் கல்வெட்டில் ஒரு 'பகவத் சங்கர'ரின் காலில் அறிஞருலகம் முழுதும் தாமரையை வண்டுகள் மொய்ப்பதுபோலத் தங்களுடைய சிரஸுகளைத் தாழ்த்தியிருப்பதாகச்

சொல்லியிருக்கிறதே, அது நம்முடைய ஆதி சங்கர பகவத்பாதாளைத் தவிர யாராயிருக்க முடியும்? "கல்வெட்டிலிருந்து அந்தக் காலம், கி.பி. எட்டாம் நூற்றாண்டின் முடிவு பாகத்திலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப பாகவம் வரை ஆசார்யாளின் காலம்'என்பதற்கும் ஒத்துப்போகிறதே! என்ன சொல்கிறீர்கள்?" என்பது ஒரு ஆர்க்யுமென்ட். இன்னொன்று நம் ஊரிலேயே வழங்கும் ஸங்கேதக் கணக்கு ச்லோகம் -கலியில் 3889-ம் வருஷமான கி.பி. 788-ஐச் சொல்லும் "நிதிநாகேபவஹ்ந்யப்தே"ச்லோகம்.

இந்த இரண்டும் ஒன்றையே, ஒருவரையே குறித்ததாகத் தெரிவதால் இரண்டு கேள்விகளுக்கும் ஒரே பதிலாகச் சொல்லி விடலாம்.

ஆசார்ய பீடங்களில் ஆதி பகவத்பாதாளுக்கு அப்புறமும் மஹாபெரியவர்களாக லோக ப்ரஸித்தயுடனிருந்த சில ஸ்வாமிகள் வந்திருக்கிறார்கள். இப்போது ஆசார்யாளின் க்ரந்தங்களாக, ஸ்தோத்ரங்களாக வழங்கி வருகிறவற்றில் சில இப்படிப்பட்டவர்களால் செய்யப்பட்டிருக்கலாம் என்றேன் அல்லவா?நமக்கு நல்ல சரித்ர ஆதாரங்களுடன் தெரிபவராக வித்யாரண்ய ஸ்வாமிகள் இருக்கிறார். பதிநாலாம் நூற்றாண்டில் அவதாரம் பண்ணிய அவர்தான் விஜயநகர ஸாம்ராஜ்யம் ஏற்படுவதற்கே காரணமாயிருந்தவர். அவர் அவதாரம் செய்திருக்காவிட்டால் தக்ஷிணதேசம் முழுவதையும் துருஷ்க மதம் கபளீகரம் பண்ணியிருக்கும். துருஷ்கர்களை அடக்கி ஹிந்து ஸாம்ராஜ்யம் ஏற்பட வழி வகுத்தார். ஹிந்து மதத்திலேயே அப்போது கர்நாடகம், அதையொட்டிய ஆந்த்ர ஸீமைப் பகுதிகள் ஆகியவற்றில் மத்வ மதமும் வீரசைவமும் அத்வைதத்தைக் கபளீகரம் பண்ணாமலும், அவர்தான் ரக்ஷித்துக் கொடுத்தார். ச்ருங்கேரி மடத்துக்கு ஒரு புது சோபையை உண்டாக்கித் தந்து இன்னும் அநேக மடங்களையும் அந்தப் பிரதேசத்தில் ஸ்தாபித்து நம் ஆசார்யாளின் ஸம்ப்ரதாயம் தழைத்தோங்கும்படிச் செய்தார். 'பஞ்சதசீ' 'ஜீவன் முக்தி விவேகம்', 'வையாஸிக ந்யாயமாலை' முதலான அநுபவ க்ரந்தங்களான உசந்த அத்வைத நூல்களை உபகரித்த அவரேதான் பூர்வாச்ரம ஸஹோதரருடன்கூட நாலு வேதங்களுக்கும் பாஷ்யம் ஏற்படவும் காரணமாயிருந்தவர். ஸாயண பாஷ்யம் என்று

அதற்குப் பேர். அவரை ஆசார்யாளுக்குள்ளது போலவே ஸ்தோத்ரங்களும் பிருதாவளிகளும் சொல்லி அந்த மடங்களில் கொண்டாடுகிறார்கள்.

இம்மாதிரி இங்கே "அபிநவ சங்கரர்"என்றே ப்ரஸித்தி பெற்ற ஒருவர் இருந்திருக்கிறார். (ஸ்ரீகாஞ்சி மடத்தின் முப்பத்தெட்டாவது பீடாதிபதிகளாக விளங்கியவர்). 'அபிநவ'என்றால் 'மறு அவதாரம்'என்று அர்த்தம். ஆதி ஆசார்யாளே இவராக மறுபடி வந்திருக்கிறார் என்று அவரை உலகம் கொண்டாடியிருக்கிறது. அதனால்தான் "தீர சங்கரேந்த்ர ஸரஸ்வதி"என்ற அவருடைய பெயர் மறைந்துபோய் "அபிநவ சங்கரர்" என்றே வழங்கலாயிற்று. 'சங்கரேந்த்ர விலாஸம்'என்பதும் 'ஸத்குரு ஸந்தான பரிமாளம்'என்பதும் அவருடைய சரித்ரத்தைச் சொல்லும் இரண்டு புஸ்தகங்கள்.

ஆசார்யாளுக்கு அப்புறம் சில நூற்றாண்டுகள் வைதிக மதம் மட்டும் கொடி கட்டிப் பறந்தாலும் அப்புறம் மறுபடி பௌத்தம் முதலிய மதங்களும், காபாலிகம் முதலான வாமசார மதங்களும் கிளம்பின. முன் மாதிரி இவை ஜன ஸமூஹத்தில் பெரிய சொல்வாக்குப் பெறமுடியாதபடி ஆசார்யாள் போட்டுக் கொடுத்த அஸ்திவாரமே உறுதியாயிருந்தது. ஆனாலும் ராஜாக்களிலும், தத்வ வாதத்தில் ப்ரியமுள்ளவர்களிலும் சிலர் பௌத்தத்துக்கு ஆதரவு தந்ததால் அது கணிசமான following பெற்ற மாதிரித் தெரிந்தது. நாகரிகம் போதாதவர்களும், 'ரஹஸ்ய அநுஷ்டானம்'என்று பெத்தப் பெயர் கொடுக்கும் சில பேரும் வாமாசார மதங்களில் போனார்கள். ஆசார்யாளுக்கு 1300 வருஷத்துக்கப்புறம் அபிநவ சங்கரர் தோன்றி ஆசார்யாளை போலவே தேசம் பூராவும் ஸஞ்சாரம் பண்ணி, அந்த மற்ற மதங்களை நிராகரணம் செய்து ஸர்வஜ்ஞ பீடமும் ஏறியிருப்பதாக அவருடைய சரித்ரங்களிலிருந்து தெரிகிறது. அவர் அந்நிய தேசங்களுக்கும் போய் தர்மோத்தரணம் செய்தாரென்றும் சொல்லியிருக்கிறது. சைனாக்காரர்கள், துருஷ்கர்கள், பாஹ்லீகர்கள் (Balk என்று ஆப்கானிஸ்தானில் உள்ள இடம்) முதலியவர்கள்கூட அவரைத் தங்கள் ஆசார்யராகப் பூஜித்தார்கள்- **சீன** -

**துருஷ்க** - பாஹ்லிகாத்யைஸ் - ஸ்வபராசார்யதயா ஸ்துதம் என்று "குரு ரத்ந மாலா"சொல்கிறது. (ச்லோகம்-66)

இவரையும் ஆதிசங்கர பகவத் பாதரையும் ஒன்றாகவே நினைத்துத்தான் சில சங்கரவிஜய புஸ்தகங்களிலேயே மாறுபாடான விஷயங்களைச் சொல்லியிருக்கக்கூடும்.

ஆதி ஆசார்யாளின் அவதார காலத்தைச் சொல்வதாக நினைக்கப்படும் "நிதிநாக"ச்லோகமும் வாஸ்தவத்தில் இந்த அபிநவ சங்கரரின் அவதாரத்தைச் சொல்வதுதான் என்று பண்டிதர்கள் அபிப்ராயப்படுகிறார்கள்...

"ஸுஷமா"வ்யாக்யானத்தில் சங்கரேந்த்ர விலாஸத்திலிருந்து இவருடைய அவதார காலத்தை ஹீஞுஃஷீமீமீ செய்திருக்கிறது. அதுவும் ஸங்கேத ஸங்கியையில்தான் இருக்கிறது.

"சேவதி-த்விப-திசா-(அ)நல வர்ஷே திஷ்ய"என்பது இங்கே கொடுத்துள்ள காலக் கணக்கு. 'சேவதி'என்றால் நிதி. 'நவநிதிகள்'என்பதால் அது 9-ஐக் குறிக்கும். 'த்லிபம்'-யானை. 'அஷ்ட கஜங்கள்'என்பதால் அது 8. 'திசா' என்றால் திசைதான். திசைகளும் 8 தானே?'அநல'-அக்னி. அது 3. அதனால் இந்த எண் 9883 என்றாகும். திருப்பிப் போட்டால் 3889. 'திஷ்ய'என்பது கலி. கலியில் 3889-ம் வருஷம். கி.பி. 787-788.

இப்போது ஹிஸ்டரி புஸ்தகங்களில் சொல்லும் கி.பி. 788 அபிநவ சங்கரரின் அவதார வருஷமே என்று ஏற்படுகிறது!இதே வருஷத்தைத்தான் "நிதிநாக"ச்லோகத்திலும் சொல்லியிருக்கிறது!அது ஆதி ஆசார்யாளின் அவதார காலமாக்கும் என்று நம்மிலேயே பலபேர் பல காலமாக நினைத்து வந்திருக்கிறார்கள்!

இதை அடிப்படையாக்ககொண்டே ஓரியன்டலிஸ்ட்கள் தங்களுடைய மீலீமீஷீக்ஷீஹ்-ஐ தீஞுஃவீறீபீ பண்ணியிருக்கிறார்கள்.

பக்கபலமான இன்னொரு பாயிண்டும் இருக்கிறது. "நிதிநாக"ச்லோகம், அபிநவ சங்கர சரித்ர ச்லோகம் இரண்டிலும் கல்யப்தம் (கலியில் இத்தனாம் வருஷம் என்று) சொல்லியிருப்பதோடு ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸரத்தில்

(ப்ரபவ முதலான அறுபது வருஷங்களில்) இன்ன வருஷம், மாஸம், திதி என்றும் சொல்லியிருக்கிறது. அதுவும் முழுக்க ஒன்றாகவே இருக்கிறது!விபவ வருஷம், வைசாக மாஸம், சுக்ல பக்ஷதசமி என்றே இரண்டிலும் இருக்கிறது!

ஆதி ஆசார்யாள் ஜனனம் நந்தன வருஷம் என்று மற்ற ஆதாரங்களிலிருந்து தெரிகிறது. இங்கேயோ விபவ வருஷம் என்று இருக்கிறது. நாம் சொல்கிற கி.மு. 509 ஒரு நந்தன வருஷமாகவும், அவர்கள் சொல்லும் கி.பி. 788 ஒரு விபவ வருஷமாகவுமே இருக்கின்றனவென்றும் கணக்குப் போட்டுச் சொல்கிறார்கள்.

அதைவிட இன்னொன்று :தெய்விக புருஷர்கள் எந்த ப்ரபவாதி வருஷத்தில் பிறந்தார்கள் என்று பெருமாபாலும் தெரியவில்லை. ராமர் எந்த வருஷம்?க்ருஷ்ணர் எந்த வருஷம்?பண்டிதர்கள் வேணுமானால் மண்டையை உடைத்துக்கொண்டு கண்டு பிடிக்கலாமே தவிர லோகத்தில் ஜயந்தி என்று கொண்டாடும்போது வருஷத்தை யாரும் நினைப்பதில்லை. மாஸம், பக்ஷம் திதி ஆகியவற்றை வைத்தே ஒவ்வொரு வருஷமும் ஜயந்தி கொண்டாட வேண்டியிருப்பதால் இவைதான் முக்யமாகத் தெரிகின்றன. ராமர் சைத்ர மாஸ சுக்ல பக்ஷநவமி, க்ருஷ்ணர் ச்ராவண மாஸ க்ருஷ்ண பக்ஷஅஷ்டமி-என்றிப்படி. அதிலும் திதிக்குத்தான் ரொம்ப முக்யம், ரொம்ப ப்ரஸித்தி-ராம நவமி, கோகுலாஷ்டமி, விநாயக சதுர்த்தி, ஸ்கந்த ஷஷ்டி என்பதாக ஜயந்தியின் பேரிலேயே திதிதான் இருக்கிறது.

ஆசார்யாள் விஷயமாக, இன்றைக்கும் தேசம் பூராவீலும் அவருடைய ஜயந்தி வைசாக மாஸத்தில் சுக்ல பக்ஷபஞ்சமியில்தான் கொண்டாடப்படுகிறது. இந்த இரண்டு ச்லோகத்திலுமோ பஞ்சமியைச் சொல்லாமல் தசமியைச் சொல்லியிருக்கிறது. அதனால் அந்த தசமியை அவதார தினமாகக் கொண்டவரும் பஞ்சமியை அவதார தினமாகக் கொண்டவரும் வெவ்வேறான இரண்டு பேர் என்று வைத்துக்கொள்ள இடமேற்படுகிறது.

நடைமுறையில் திதிதான் ஒரு ஜயந்திக்கு முக்யமாயிருந்தது. ப்ரபவாதி வருஷத்தையோ, கலியில் எந்த வருஷம் என்றோ எவரும் நினைத்துப் பார்க்காமலிருக்க, இங்கேயோ திதியை விட்டு விட்டு கலியில் இன்ன வருஷம் என்பதை மட்டும்

எடுத்துக்கொண்டு 788-தான் என்று நிர்ணயம் பண்ணியிருப்பது கொஞ்சம் ஆச்சர்யமாயிருக்கிறது!திதி மீணீறீறீஹ்-யாவது அவச்யம்.

இந்தக் காரணங்களைக்கொண்டு கி.பி. 788 என்று ஓரியண்டலிஸ்ட்கள் நிர்ணயித்திருப்பது அபிநவ சங்கரரை ஆதி சங்கரராக நினைத்ததால்தான் என்று கி.மு. 509 என்று நம்புகிறவர்கள் அபிப்ராயப்படுகிறார்கள்.

பாதுகாஸித்தி பெற்று அந்நிய தேசங்களிலும் திக்விஜயம் செய்த அபிநவ சங்கரரையே கம்போடியாக் கல்வெட்டில் இந்த்ரவர்மன் தன்னுடைய குருவான சிவஸோமரின் குரு என்று சொல்கிறானென்றும் கருதுகிறார்கள்.

ஆசார்யாளின் ப்ரதான சிஷ்யர்களாக இருந்த நாலு பேரோடு ப்ருத்வீதவர், சித்ஸுகர், சித்விலாஸர், ஞானகந்தர், விஷ்ணுகுப்தர், அனந்தானந்தர், உதங்கர் (இவரேதான் தோடகர் என்றும் ஒரு நம்பிக்கை உண்டு), க்ஷண் மதங்களைப் ப்ரசாரம் பண்ணிய ஆறுபேர் என்றெல்லாமும் அநேகம் சிஷ்யர்களின் பேர்கள் 'சங்கரவிஜய'ங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. சிவஸோமன் என்ற பெயர் எங்கேயும் காணோம். அந்நிய தேச ராஜாவின் குருவாயிருந்த ஒருத்தரின் பெயர் இப்படி விட்டுபோயிருக்குமா?

ஆராய்ச்சி என்று போகாமல் அநுக்ரஹம் என்று போகும்போது 'ஆதி'என்றும் 'அபிநவம்' என்றும் வித்யாஸப்படுத்தவே கூடாதுதான். 'ஆதி'யினுடைய புது அவதாரமே இவர் என்பதால்தானே 'அபிநவ'என்பது? அதனால் இவருக்கு உண்டான ப்ரக்யாதி எல்லாம் அவரைச் சேர்ந்ததாகவே சொல்லிவிடலாம். ஈச்வராவதாரமாக முதலில் வந்த ஆதி ஆசார்யாளிடமே அனன்ய பக்தியாகப் பண்ணும்போது அவருக்கும் அபராவதாரமான (அவரே எடுத்த பிற்கால அவதாரமான) இன்னொருவரை அஸலே அவராக வைத்துவிடலாம். எல்லா ஸ்துதியும் அந்த ஆதி புருஷருக்கே என்று வைத்துப் பார்க்கும்போது சிவஸோமன் அவருடைய சிஷ்யரே என்றால் நேர் சிஷ்யரென்று அர்த்தம் பண்ணாமல் சிஷ்ய பரம்பரையில் வந்தவர் என்று வைத்து விடலாம். இப்போது நாம்கூட, 'நாங்கள் ஆசார்யாள் சிஷ்யர்கள்'என்று சொல்லிக்கொள்ளவில்லையா? அது மாதிரி

நமக்கு 1200 முன்னாலிருந்த கம்போடிய ராஜகுருவை ஏன் சொல்லக் கூடாது?இதெல்லாம் பக்தி பாவத்தில். இப்போது நாம் பக்தியை மூட்டை கட்டி வைத்துவிட்டு கால நிர்ணயம் என்றல்லவா ஆராய்ச்சிச் சர்ச்சையில் இறங்கியிருக்கிறோம்?அதனால் அவர்-இவர் என்று வித்யாஸப்படுத்திச் சொல்ல வேண்டியிருக்கிறது!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**நவீன ஆராய்ச்சியாளரிடமே ஒரு மாற்றுக் கருத்து :** கி.பி. 788 என்பது ஸரியாயிருக்காது என்று நவீன கால ரிஸர்ச்காரர்களிலேயே சில பேர் சொல்லி அதற்கு ஒரு காரணம் காட்டுகிறார்கள்:

ஸூத்ர பாஷ்யத்தில் இரண்டு இடங்களில் ஆசார்யாள் சில ஊர்களின் பெயர்களை உதாரணமாகக் குறிப்பிடும்போது பாடலிபுத்ரத்தைச் சொல்லியிருக்கிறார்.

குபதர்கள் செல்வாக்கிழந்து, அப்புறம் தானேச்வரம், கன்னௌசி ஆகிய தலைநகரங்களிலிருந்து கொண்டு ஆட்சி செய்த ப்ரபாகர வர்தனர், ஹர்ஷ வர்தனர் ஆகியவர்களின் நாளிலேயே பாடலிபுத்ரம் பெருமை இழந்துவிட்டது. ஹர்ஷனின் காலம் 600-650 (சுமாராக) அப்போது இங்கே வந்த ஹுவான் - த்ஸாங் பாடலிபுத்ரம் ஒரே Ruins-ஆக (இடிபாடுகளாக) இருப்பதாக எழுதியிருக்கிறார். அப்புறம் கி.பி. 750-வாக்கில் வெள்ளம் வந்து அந்த ஊரை நன்றாக அழித்து விட்டிருக்கிறது. நூற்றாண்டுகளுக்குப் பிற்பாடுதான் மறுபடி அது ஒரு மாதிரி எழும்பி, அப்புறம் பெரிசாகி, இப்போது 'பாட்னா'வாக இருக்கிறது. ஆசார்யாள் காலம் என்னும் 788-820-ல் அந்த ஊரே இல்லை. தம்முடைய காலத்துக்கு 150-200 வருஷத்துக்கு முன்னாலிருந்தே பெருமைக் குன்றிப்போய், நாற்பது-ஐம்பது வருஷம் முந்திதான் வெள்ளம் அடித்துக்கொண்டு போய் விட்ட ஒரு

ஊரையா, அது தற்காலத்திலும் இருந்த மாதிரி உதாரணம் காட்டியிருப்பார்?-என்று கேட்கிறார்கள்.

இதைவிட இன்னொரு முக்யமான பெரிய காரணமும் காட்டுகிறார்கள். எத்தனையோ நூற்றாண்டுகளாக இந்த தேசம் முழுதிலும் ஆசார்யாளின் பெரிய ஸாதனையாகச் சொல்வது அவர் பௌத்த மதத்தை நிராகரணம் செய்ததைத்தான். அவருக்குக் கொஞ்சம் முந்தி குமாரிலபட்டரும் கொஞ்சம் பிந்தி உதயனரும் நிறைய பௌத்த கண்டனம் பண்ணினார்களென்றாலும் ஆசார்யாளும் அந்தப் பணியை சக்திகரமாகச் செய்துதானிருக்கிறார். பாஷ்ய புஸ்தகங்களில் அதிகம் எழுதாவிட்டலும் ஊர் ஊராக வாதம் செய்யப் போனதும், ஊர் ஊராக நம்முடைய ஆலய வழிபாட்டுக்குப் புத்துயிர் கொடுத்தபோதும் அவர் பௌத்தத்தை வன்மையாக எதிர்த்தே அகற்றி இருக்கிறார். அவர் காலத்தில் பௌத்தம் ஜன ஸமூஹத்தைக் கலக்கும் அளவுக்கு வீர்யத்துடனிருந்த அவரே ஸூத்ர பாஷ்யத்தில் தெரிவித்திருக்கிறார்:

**வைநாசிகை : ஸர்வோ லோக ஆகுலீக்ரியதே** -என்று. வைநாசிகர்கள் என்பது பௌத்தகளுக்கேதான் இன்னொரு பேர். அவர்கள் ஸர்வ லோகத்தையும் ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்கிறார். இதனால் அவருடைய காலத்தில் பௌத்தம் இங்கே ஒரு active force-ஆக இருந்தது என்று நிச்சயமாகிறது.

இதைக் கொண்டுதான் நவீன ஆராய்ச்சிக்காரர்களிலேயே ஒரு சிலர் கி.பி. 788 என்பது ஸரியில்லை என்று சொல்கிறார்கள். ஏனென்றால் அதற்கு முந்தியே இந்தியாவில் பௌத்தம் நன்றாகப் படுத்துப் போய்விட்டது. ஹர்ஷரின் காலத்தில் -788க்கு 150 வருஷம் முன்-வந்த ஹுவான்-த்ஸாங்கே பௌத்தம் க்ஷீணித்துப் போயிருப்பதைத் தெரிவித்திருக்கிறார். ஹர்ஷர் கொஞ்சம் புத்துயிரூட்டிப் பார்த்தார். ஆனால் அது ஜனஸமூஹம் முழுதையும் கவரவில்லை; பிக்ஷுக்கள், ஸமயவாதிகளை மட்டுமே கவர்ந்தது-சற்று முன்பே (இவ்விஷயம்) சொன்னேன். ஆசார்யாள் அவதாரம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு முடிவு என்றால், அப்போது வங்காளத்திலிருந்து வட இந்தியாவின் கணிசமான பகுதி அடங்கலாக ஆண்டு

வந்த பால வம்ச ராஜாக்கள் பௌத்த மத அபிமான முள்ளவர்கள்தான்.

ஆனாலும் அவர்களும் தங்களளவில் அபிமானத்தார்களே ஒழிய, 'லோகமெல்லாம் கலக்கப்படுகிறது'என்று சொல்லும்படி இல்லை என்று நவீன ஹிஸ்டாரிக்காரர்களே சொல்கிறார்கள். பௌத்தத்தில் அப்போது ரஹஸ்யமான தாந்த்ரிக உபாஸனைகளே ஜாஸ்தியாகிக் கொண்டு வந்து, அது இங்கே வேர் பிடிக்க முடியாமல் திபேத்துக்குப் போய்ச் சேர்ந்தது.

(சிரித்து) 'சங்கர மடத்து சாமியார் என்னவோ ஸ்வபக்ஷமாக (தன் கட்சிக்கு ஆதரவாக)ப் பேசுகிறார்' என்று நினைக்காமல் ஹிஸ்டரியில் ஸ்டான்டர்ட் புஸ்தகம் எதுவானாலும் எடுத்துப் பார்த்தால் தெரியும், ஆசார்யாளின் காலம் என்று அந்தப் புஸ்தகங்களில் சொல்லப்படும் காலத்துக்கு முந்தியே இந்தியாவில் பௌத்த மதம் "லோகத்தை கலக்குகிறது"எனத் தக்க force-ஆக (சக்தி வாய்ந்த அமைப்பாக) இல்லாமற்போய்விட்டதென்று.

நாலந்தா ஸர்வகலாசாலை போன்ற இடங்களிலும் சில பௌத்த மடாலயங்களிலும் மட்டுமே பிக்ஷுக்களிடமும், சில படிப்பாளிகளிடையிலும் அந்த மதம் இருந்து வந்தது. முஸ்லீம் படையெடுப்புவரைகூட அப்படித் தொடர்ந்து இருந்துவந்தது. ஜனஸமூஹத்தைப் போட்டுக் கலக்குவதாகவோ, ஆசார்யாள் போன்ற ஒருவர் அதை நிராகரணம் பண்ணியதுதான் அவருடைய மஹா பெரிய வெற்றிச் சாதனை கொண்டாடும் அளவுக்கோ அது நிச்சயமாக அந்தக் காலத்தில் சக்தியோடில்லை. ஆகையால் ஆசார்யாள் பௌத்தத்தோடு பெரிசாக யுத்தம் பண்ணினாரென்றால் அது shadow fight (நிழலுடன் சண்டை செய்வது) மாதிரிதானாகும்!

இந்தக் காரணம் சொல்லியே நவீன ஆராய்ச்சிக்காரர்களிலும் சில பேர் கி.பி. 788-829 என்பதை ஆக்ஷேபிக்கிறார்கள். அவர்களுடைய ஹிஸ்டரிப்படி, கி.பி. நாலாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் குப்த ஸாம்ராஜ்யம் தோன்றியபோதே நம் தேசத்தில் ஹிந்து மதம் பெரிய மறுமலர்ச்சி கண்டு பௌத்தம்

க்ஷீணதசை அடைந்திருந்தது. 'இதற்கு ஆசார்யாளே காரணமாயிருந்திருக்கலாம். அதனால் அவரை கி.பி. 800-லிருந்து ஐநூறு வருஷம் முற்காலத்திற்குக் கொண்டுபோக இடமிருப்பதாகத் தோன்றுகிறது என்று இவர்கள் சொல்கிறார்கள்.

"நாம் சொல்கிறபடி ஆசார்யாள் 2500 வருஷம் முந்தி என்றால் அவருக்குப் பிற்பாடும் 'குப்தா ஏஜு'க்குப் பிறகுங்கூட அநேக பீரியட்களில் பௌத்தம் இந்த தேசத்தில் இருந்துதானே இருக்கிறது?எத்தனையோ விஹாரங்களும் சைத்யங்களும் கிறிஸ்து சகாப்தத்திலும் சில நூற்றாண்டுகள் வரையில் தோன்றியதாக அழுத்தமான சான்றுகள் இருக்கின்றனவே? அவர் பௌத்தத்தை அப்படியே 2500 வருஷம் முந்தியே வெளியேற்றிவிட்டாரென்றால் எப்படி?"

அப்போது அவர் அனுப்பியது வாஸ்தவம்தான். அவருடைய காலத்தில் 72 மாற்று மதங்களையும் அவர் இல்லாமல் பண்ணி ஜகதாசார்யாளாக விளங்கியது வாஸ்தவந்தான்.

ஆனாலும் இந்த தேசத்தில் எப்போதும் ரிலிஜன், ஃபிலாஸஃபி ஆகியவற்றில் ஸ்வதந்த்ரமாகச் சிந்தனை பண்ணுவதற்கும், அநுஷ்டானம் பண்ணுவதற்கும் தாராளமாக இடம் கொடுத்தே வந்திருக்கிறது. அதனால் ஆசார்யாளுக்கு அப்புறமும் அவ்வப்போது பௌத்தம், ஜைனம் முதலியவற்றில் சிந்தனையைச் செலுத்திப் புஸ்தகம் எழுதியவர்கள் தோன்றியிருக்கிறார்கள். அந்த மதங்கள் மறுபடி தலைகாட்டியிருக்கின்றன. பல ராஜாக்கள் அந்த மதங்களைத் தழுவியிருக்கிறார்கள். பெரிய பெரிய விஹாரங்களும் பள்ளிகளும் கட்டிக்கொடுத்திருக்கிறார்கள். ஆனாலுங்கூடப் பொது ஜனங்கள் எல்லாருடைய மதமாக பௌத்தமோ சமணமோ பிற்காலங்களில் இல்லவே இல்லை. அந்த மதங்களைச் சேர்ந்த பிக்ஷுக்கள், அபிமானித்த ராஜாக்கள், 'யதா ராஜா ததா ப்ரஜா'என்று பயந்துகொண்டு ராஜாக்களைப் போலவே பண்ணியே கொஞ்சம் ப்ரஜைகள், நிஜமான கன்விக்ஷனிலேயே அந்த மதங்களை ஏற்றுக்கொண்ட இன்னும் கொஞ்சம் பேர்-என்றெல்லாம் கூட்டிப் பார்த்தாலும்கூட மொத்த ஸமுதாயத்தில் ஒரு சின்னப் பங்குதான் ஆசார்யாளுக்குப் பிற்காலங்களில்

அம்மதங்களை அநுஸரித்தது. இது நான் இட்டுக் கட்டிச் சொல்வதில்லை.

முன்ஷி போன்றவர்கள் இப்போது ஹிஸ்டாரிகலாக ரிஸர்ச் செய்தே இப்படிச் சொல்வதுடன் வெள்ளைக்காரர்களிலேயே சில சரித்ராசிரியர்கள் ஸமீப காலமாக இதை ஒப்புக்கொண்டு எழுதி வருகிறார்கள்.

ஆக, 2500 வருஷத்துக்கு உட்பட்ட பௌத்த சின்னங்கள் நம் தேசத்தில் இருந்திருப்பதால் ஆசார்யாளும் அதற்குள்தான் வந்திருக்க வேண்டுமென்பதில்லை. அவர் நாளில் அவர் நிராகரணம் பண்ணி, அப்புறம் சில நூற்றாண்டுகள் வைதிக ஹிந்து மதம் மாத்திரமே இங்கே இருந்துவிட்டு, அதற்கும் அப்புறம் அவ்வப்போது தலைதூக்கிய பௌத்தத்துக்கு அடையாளங்கள்தான் நாம் பார்ப்பது. பிற்காலங்களிலும் நம்முடைய மதபுருஷர்கள் பலர் பெரியவர்களாகத் தோன்றி அவைதிக மதங்களைக் களைந்திருக்கிறார்கள். க்ருஷ்ணர் தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணியும் அப்புறம் மறுபடி அதர்மம் ஓங்கியபோது ஆசார்யாள் அவதரித்து ஸரிப்பண்ணவேண்டி வரவில்லையா?அப்படியே ஆசார்யாளுக்குச் சில நூற்றாண்டுகள் பிற்காலத்திலிருந்தும் ஏற்பட்டது. முடிவாக ஒரு மாதிரி கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பௌத்தம் நன்றாக க்ஷீணித்து, பிக்ஷுஸங்கம், ஸர்வ கலாசாலைகள் ஆகியவற்றில் மட்டும் இருந்து வரும்படி ஆயிற்று. இதற்கும் நூற்றாண்டு தள்ளியே ஆசார்யாள் அவதாரம் செய்ததாக வெள்ளைக்காரர்கள் சொல்லி அவர்தான் ப்ரமாதமாக பௌத்தத்துடன் மோதி ஜயித்தாரென்றால் அது ஒன்றுக்கொன்று ஒவ்வவில்லை என்பதுதான் பாயின்ட்.

கி.பி. எட்டாம் ஒன்பதாம் நூற்றாண்டில் ஏதோ கொஞ்சம் ஒட்டிக் கொண்டிருந்த பௌத்தத்தையும் களைந்து, அதோடு ஹிந்து மதம் என்று சொல்லிக்கொண்டே மறுபடிக் கிளைந்திருந்த பல அவைதிக வழிகளையும் அகற்றியவர்தான் அபிநவ சங்கரர்; அதோடு தூரக் கிழக்கு நாடுகள் முதலியவற்றிலும் நம் மதம் பரவச் செய்தவர் என்று தெரிந்துகொள்ள முடிகிறது.

---

## ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்

**கி.மு. முதல் நூற்றாண்டு என்னும் கருத்து :**'ஆசார்யாள் காலம் கி.பி. 788-820 இல்லை; கி.மு. 509-477ம் இல்லை. கி.மு. 44-12 தான்'என்றும் ஒரு அபிப்ராயமிருக்கிறது. கன்னட தேசத்தில் இந்த அபிப்ராயம் இருந்து வந்திருக்கிறது. அதாவது நாம் சொல்வதைவிட 460-470 வருஷத்துக்குப் பிற்பாடு அவர்கள் ஆசார்யாளின் காலத்தைச் சொல்கிறார்கள்.

இந்த 460-470 வருஷ வித்யாஸத்திற்கு டி.எஸ். நாராயண சாஸ்த்ரி போன்றவர்கள் ஒரு காரணம் காட்டுகிறார்கள். அதாவது:ஜைனர்களும் பௌத்தர்களும் யுதிஷ்டிர சகம் என்று ஒன்றைப் பின்பற்றுகிறார்கள். இது கலியுகம் ஆரம்பித்து 468 வருஷத்துக்குப் பிறகு ஆரம்பிப்பது. யுதிஷ்டிரர் என்பது பாண்டவர்களில் மூத்தவரான தர்மபுத்ரர்தான். க்ருஷ்ணர் பரமபத ஆரோஹணம் செய்ததைக் கேள்விப்பட்டு உடனே அவரும் 'மஹாப்ரஸ்தானம்'என்பதாக ஜீவயாத்ரையை முடித்து ஸ்வர்க்கத்துக்குப் புறப்பட்டுவிட்டார். க்ருஷ்ணரின் பரமபத ஆரோஹணத்திலிருந்துதான் கலி பிறந்தது. அப்போது யுதிஷ்டிரர் 36 வருஷம் ஆட்சி நடத்தியிருந்தார். ஆகையால் நாம், அதாவது ஹிந்துக்கள், கலிக்கு 36 வருஷம் முன்னால் (கி.மு. 3138-ல்) யுதிஷ்டிர சகாப்தம் ஆரம்பிப்பதாகக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஜைன, பௌத்தர்கள் கலி ஆரம்பித்தபின் 468 வருஷத்திற்கு அப்புறமே தங்களுடைய யுதிஷ்டிர சகாப்தத்தை ஆரம்பிக்கிறார்கள். 'யூனிஃபார்மா'க அவர்களுடைய புஸ்தகங்களில் அப்படித்தான் இருக்கிறது.

ஜைனமதம் ஆதியிலிருந்தே கன்னடதேசத்தில் வேர்பிடித்திருக்கிறது. மௌர்ய சந்த்ரகுப்தனே கடைசி நாளில் ஜைன பிக்ஷுவாகி ச்ரவண பௌகொளாவுக்கு வந்துதான் ப்ரயோபவேசம் பண்ணி (உண்ணா நோன்பிருந்து) உயிரை விட்டானென்று சொல்வதுண்டு. அதனால் அங்கே ஜைனர்கள் பின்பற்றும் யுதிஷ்டிர சகம் பிறரிடமும்

வழக்குக்கு வந்தது என்றும், அதனால் கலியில் 2600 வருஷம் என்று ஆசார்யாள் காலத்தைச் சொல்லிருப்பதை ஜைன யுதிஷ்டிர சக 2600 என்று அவர்கள் நினைத்துக்கொண்டு 460-470 வருஷம் தள்ளிக்கொண்டுவந்து விட்டிருக்கலாம் என்றும் அவர் (நாராயண சாஸ்த்ரி) சொல்கிறார்.

'கி.மு. ஆறாம் நூற்றாண்டு என்ற அத்தனை முன்னேயும் போகவேண்டாம். கி.பி. எட்டாம் நூற்றாண்டு என்று அத்தனை பின்னுக்கும் தள்ளவேண்டாம்; (சிரித்து) 'காம்ப்ரமை'ஸாக இந்த கி.மு. முதல் நூற்றாண்டை வைத்துக்கொண்டு விடலாமே' என்று சிலர் சொல்கிறார்கள். இதற்கு அவர்கள் சொல்லும் ஒரு காரணம் :நம்முடைய மடத்தின் ஆரம்ப காலத்து ஏழெட்டு ஸ்வாமிகள் 80-90-100 வருஷங்களுக்கு பீடத்திலிருந்ததாக நம்முடைய குரு பரம்பரையில் இருக்கிறது. 'புண்ய ச்லோக மஞ்ஜரி'யில் அப்படித்தான் தேதிகள் கொடுத்திருக்கிறது. 'இது ரொம்ப ஜாஸ்தியாகத் தெரிகிறது. ப்ராசீனத்வம் (தொன்மை) கொடுக்க வேண்டுமென்றே, வாஸ்தவத்தில் 20-30-40 வருஷம் பட்டத்திலிருக்கக்கூடியவர்களுக்கு ஒரு அறுபது வருஷ ஸைகிள் கூட்டிச் சொன்னதாகத் தோன்றுகிறது. நிஜமாக அவர்கள் ஸித்தியான ப்ரபவாதி வருஷப் பெயர், மாஸம், பக்ஷம், திதி, ஆகியவற்றை மாற்றாமலே புண்ய ச்லோகங்களில் வைத்துக்கொண்டு, அவர்களுடைய பதவிக் காலத்தை ஸரியாகக் அறுபது, அறுபது வருஷம் சேர்த்துச் சொல்லியிருக்கலாம். தலா அறுபது வருஷமாக அந்த ஏழெட்டுப் பேருக்குக் குறைத்து விட்டோமானால் ஸரியாகிவிடும். அப்போது ஆசார்யாள் அவதாரம் கி.மு. 44 என்பதும் ஸரியாக வந்துவிடும்' என்று சொல்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**மேற்படி கருத்துக்கு மாற்றுக் கருத்து :**இதை அப்படியே

ஏற்றுக்கொண்டுவிடுவதற்கில்லை. ரொம்பவும் பால்யத்திலேயே பட்டத்துக்கு வந்து, அந்த ஆதி காலத்தில் நல்ல யோக நியமங்களோடு வாழ்ந்தவர்கள் புருஷாயுஸ் என்கிற 120 வருஷம் ஜீவித்திருந்தால்கூட அதில் ஆச்சர்யப்படுவதற்கு எதுவுமில்லை. அதனால் 80-90-100 வருஷம் என்பது மிகைப்படுத்தினதாக இருக்க வேண்டியதில்லை. நிஜமாகவே இருக்கும். நானே "போவேனோ பார்!" என்று 55 வருஷமாக ஸ்வாமிகளாக உட்கார்ந்திருக்க உட்கார்ந்திருக்கவில்லையா? 1963 -ல் கூறியது. தற்போது (1989) நம் பாக்யவசமாக ஸ்ரீசரணர்களது பீடாதிபத்யத்தின் 83-வது ஆண்டில் இருக்கிறோம். தொடக்க கால ஆசார்யர்களும் இதே போல நெடுங்காலம் பட்டம் வகித்திருக்கலாம் அல்லவா? ஆனபடியால் அந்தப் பூர்வாசார்யார்களின் பீடாதிபத்ய காலத்தில் கத்திரிக்கோல் போடத் தேவையில்லை!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**த்வாரகா ஸ்ரீமடத்தின் சான்று :**இந்த (காஞ்சி) மடத்து குரு பரம்பரை இருக்கட்டும். த்வாரகையில் ஆசார்யாள் ஸ்தாபித்த மடம் இருக்கிறதல்லவா?அதன் குரு பரம்பரையிலும் இப்படியே கிட்டத்தட்ட ஆதி ஆசாரியாள் காலத்தைச் சொல்லியிருக்கிறது. அங்கே இருந்த ஸ்வாமிகளில் முதலில் சிலருக்கு யுதிஷ்டிர சகாப்தப்படி வருஷங்கள் சொல்லியிருக்கிறது. (கி.மு. 3138ல் ஆரம்பிக்கும் 'நம்முடைய'யுதிஷ்டிர சகம்;ஜைன பௌத்தர்களுடையதல்ல.) இப்படி ஆரம்பத்தில் சில பட்டங்களுக்குச் சொன்ன பிறகு மற்றவர்களுக்கு (கி.மு. 57-ல் தொடங்கிய) விக்ரம சகப்படி வருஷம் தந்திருக்கிறது. அந்த லிஸ்டின்படி ஆசார்யாள் ஸித்தியானதாகச் சொல்லியிருக்கும் காலம் கிட்டத்தட்ட நாம் சொல்வதாகவே இருக்கிறது. அதே கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுதான். ஆனால் சில வருஷங்கள் முந்தியிருக்கிறது.

2500 வருஷ ஸமாசாரத்தில் சில வருஷம் முந்தி-பிந்தி என்பது பெரிய விஷயமேயில்லை. அதுவும் தவிர போன நூற்றாண்டில் அங்கே பீடாதிபதிகளாக இருந்த ஒருவரே 'விமர்சா'என்ற புஸ்தகத்தில் நாம் சொல்கிற கி.மு. 509-ஐயே அங்கீகரித்தும் எழுதியிருக்கிறார்.

இங்கே (காஞ்சி ஸ்ரீமடத்தில்) இதுவரை 68 ஸ்வாமிகள் இருந்திருக்கிறோமென்றால் அங்கே (த்வாரகை ஸ்ரீமடத்தில்) தற்போது (1963) இருப்பவர் 79-வது ஸ்வாமிகள் என்று வரிசையாக குரு பரம்பரை வைத்திருக்கிறார்கள். முதல் ஸ்வாமிகளிலிருந்து ஒவ்வொருவரும் இத்தனாம் வருஷத்திலிருந்து இத்தனாம் வருஷம்வரை பட்டத்தில் இருந்திருக்கிறார்களென்றும், நம் மடத்தைப் போலவே, கணக்கு வைத்திருக்கிறார்கள். இங்கே ஆரம்பத்தில் ஏழு ஸ்வாமிகள் அறுபது வருஷத்துக்கு அதிகமாகப் பட்டத்திலிருந்து கிறிஸ்து சகாப்த ஆரம்பத்துக்கு வருகிறோமென்றால், அங்கே அதற்குள் பதினோரு ஸ்வாமிகள் வந்துவிடுகிறார்கள்!அவர்களில் இரண்டு பேர்தான் அறுபது வருஷத்துக்குமேல் பட்டத்திலிரு ந்திருக்கிறார்கள்!

இப்படியிருக்கும்போது, 'அறுபது அறுபது வருஷம் வெட்டிவிடலாம்' என்றால் எப்படி ஸரியாகும்?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**முக்ய ஆதாரம் : சங்கர மடங்களிடையே ஒரே கருத்து :**ஆசார்யாளின் காலம் கி.மு. 500-ஐ ஒட்டியது என்பதற்கு ஒரு முக்யமான ஆதாரம் இந்த (காஞ்சி) மடம், த்வாரகை மடம், புரி மடம் ஆகிய ஆசார்யாளின் மூன்று ஸ்தாபனங்களிலும் அந்தப் 'பீரிய'டையே சொல்வதுதான்.

அறிஞர் என்று வெள்ளைக்காரர்களிடமும் பெயர் வாங்கிய

ஸர் ஸுப்ரஹ்மன்ய ஐயர் ரொம்ப வருஷம் முந்தி "தியாஸஃபிஸ்ட்"பத்திரிகையில் த்வாரகா மட ரிகார்டுகளை முக்யமாகக் காட்டியே, ஆசார்யாள் கி.மு. 6-5 நூற்றாண்டுதான் என்று எழுதியிருந்தார். அன்னி பெஸன்ட் உள்பட தியாஸாஃபிகல் ஸொஸைடியினர் எல்லாரும் அந்தக் காலத்தையே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். த்வாரகா மடத்துக்காரர்கள் தங்களுக்கு ஆதரவாக, இந்த்ரனின் அம்சம் என்று சொன்னேனே, அந்த ஸுதன்வா என்ற ராஜா நம்முடைய ஆசார்யாளுக்கு 'அட்ரஸ்'பண்ணியதாக ஒரு தாம்ர பத்ர சாஸனம் (செப்பேடு)கூடத் தங்களிடம் இருப்பதாகச் சொல்லி அதன் வாசகத்தை முன்னே சொன்ன "விமர்சா"புஸ்தகத்தில் 'பப்ளிஷ்'பண்ணியிருந்தார்கள்.

புரி ஜகந்நாதத்தில் ஆசார்யாள் ஸ்தாபித்த கோவர்தன மடத்தினரும் அவர் காலம் கி.மு. 6-5 நூற்றாண்டு என்றே சொல்கிறார்கள். அவர்கள் இன்று வரை 140-க்கு மேல் வரிசையாகத் தங்கள் மடத்து ஸ்வாமிகளின் லிஸ்ட் வைத்திருக்கிறார்கள்.

அங்கே ஏன் காஞ்சியிலும் த்வாரகையிலும் இருப்பதைப் போலக் கிட்டத்தட்ட இரண்டு மடங்கு ஸ்வாமிகளைச் சொல்லியிருக்கிறது என்று கேள்வி வரும். காரணம் இது தான்: மற்ற மடங்களில் பால ப்ரஹ்மசாரிகளே பீடாதிபத்யம் பெற்றுவிடுவதாக இருக்க புரி மடத்தில் மத்யம வயஸுக்கு மேற்பட்டவர்கள்தான் ஸ்வாமிகளாகிறார்கள். அதனால் அவர்கள் பட்டத்தில் இருக்கும் 'பீரியட்' மற்ற மடங்களில் இருப்பதைவிட சராசரியில் ரொம்பவும் குறைவாக இருக்கிறது. இதனாலேயே அங்கே குரு பரம்பரை எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது.

பதரிநாதத்தில் ஆசார்யாள் ஸ்தாபித்த மடத்திற்கு ஜ்யோதிர் மடம் என்று பேர். அந்த மடத்தினர் "மடாநுசாஸன ம்"என்பதாக (1946-ல்) ஒரு ப்ரசுரம் வெளியிட்டிருக்கிறார்கள். அதிலும் ஆசார்யாள் அவதாரம் கி.மு. 509 என்றே கண்டிருக்கிறது.

தக்ஷிணத்தில் ஒன்று (காஞ்சி), கிழக்கு ஸமுத்ர எல்லையில் ஒன்று (புரி ஜகந்நாதம்), மேற்கு ஸமுத்ர எல்லையில் ஒன்று (த்வாரகை), வடக்கே ஹிமாசல எல்லையில் ஒன்று

(பத்ரிநாதம்) என்று ஒன்றுக்கொன்று ஸுமார் ஆயிரம் மைல் தள்ளியுள்ள நான்கு சங்கர மடங்களிலும் அவர்களது மூல புருஷரின் காலம் கிறிஸ்து சகாப்தத்திற்கு ஐந்நூறு வருஷம் முன்னால் என்று ஏகோபித்துச் சொல்லி இருப்பதைக் கவனிக்க வேண்டும். 'நம்முடைய ஆசார்ய பீடங்கள் ஒருமுகமாகச் சொல்வது நம்பகமில்லாதது. ஓரியண்டலிஸ்ட்களின் ரிஸர்ச்தான் ஸத்ய ப்ரமாணமானது என்று சொல்லலாமா?' என்று அவரவரும் ஆலோசித்துப் பார்க்க வேண்டியது.

கி.மு. 44 என்று கர்நாடக தேசத்திலுள்ள அபிப்ராயம் கூட கி.பி. 788-ஐவிட கி.மு. 509க்குத்தான் கிட்டத்தில் இருப்பது. அப்படியிருக்கும்போது அதற்கும் (கி.மு. 44க்கும்) எண்ணூறு வருஷம் தள்ளி வெள்ளைக்காரர்கள் நிர்ணயம் பண்ணியதுதான் ஸரி என்று ஒரே தீர்மானமான முடிவு கட்டி விடலாமா?

இந்த மடங்களில் ஒன்றிலேயே உட்கார்ந்து கொண்டிருக்கும் நான் இதற்கு மேலே சொல்வது அழகாகாது. இவ்வளவு சொன்னதுகூட ஜாஸ்தியோ என்றால், மடம்-நீங்கள்-மடத்துச் சிஷ்யர்கள், எல்லாம் ஒரே குடும்பம்தான் என்ற பாத்யதையால் சொன்னேன்!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**ஹாலன்- பூர்ணவர்மன் : பல ஆதாரங்களின் சான்றுகள்**

**:**கர்ண பரம்பரையாக வந்த நம்பிக்கை, மடங்களின் ஆதாரம் என்பவை தவிர இன்னும் சிலதும் (ஆசார்யாள் காலம் கி.மு. 6-5 நூற்றாண்டே என்பதற்கு ஆதரவாக இருப்பதைச்) சொல்கிறேன்.

புராணங்களை ஒன்று சேர்த்துப் பார்ப்பதில் நமக்குத் தெரியும் 'ஜீனியாலஜி'ப்படி (ராஜ வம்சங்களின்படி) கி.மு. 1500லிருந்து

கி.மு. 1200 வரை (ஸுமாராகத்தான் சொல்கிறேன்) மௌர்யர்கள் ஆண்டபின் கி.மு. 900 வரை சுங்கர்களும், அப்புறம் சுமார் நூறு வருஷம் காண்வர்களும் ஆட்சி நடத்தி முடித்து, கி.மு. எட்டாம் நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்து ஐநூறு வருஷங்கள் "ஆந்த்ரர்"கள் என்று சொல்லப்படும் சாதவாஹனர்கள் ஆண்டிருக்கிறார்கள். 'டெக்கானி'ல் (தக்காணத்தில்)தான் சாதவாஹனர் ஆட்சி ஏற்பட்டாலும் அது வடக்கேயும் பரவியிருந்ததால் அவர்களையே விசேஷித்து மகதாதிபதிகளாகவும் சொல்லியிருக்கிறது. ஆசார்யாள் காலம்கி.மு. ஆறாம்-ஐந்தாம் நூற்றாண்டு என்றால், அப்போது இந்த ஆந்தர வம்சத்தின் ஆட்சியே நடந்திருக்கவேண்டும்.

"குரு ரத்னமாலா"விலிருந்து இப்படியே கன்ஃபர்ம் ஆகிறது. காசியில் விச்வநாதர் தீண்டாதானாக வந்தபின் ஆசார்யாள் குமாரிலபட்டரைப் பார்க்க ப்ரயாகைக்குப் புறப்பட்டதைப் சொல்லுமிடத்தில், "ஹால ராஜனால் ஆதரிக்கப்பட்டவராக இருந்தபோதிலும் அவர் காசியை விட்டுப் புறப்பட்டார்"என்று வருகிறது. ஹாலன் என்று சாதவாஹன (ஆந்த்ர) ராஜா இருந்ததைப் புராணப் பண்டிதர்கள், ஓரியன்டலிஸ்ட்கள் இருவருமே ஒப்புக்கொள்கிறார்கள். ஓரியன்டலிஸ்ட்களே அவனை கி.பி. முதல் நூற்றாண்டுகாரனாகச் சொல்லியிருப்பது கவனிக்க வேண்டிய விஷயம். அவனுக்குக் காசி வரை ஆதிக்யம் இருந்திருக்கக்கூடியதே என்றும் தெரிகிறது. தம் காலத்தில் ஸார்வபௌமன் இல்லை என்று ஆசார்யாள் சொல்லியுள்ள படி இந்த ஹாலனும் தேசம் பூராவும் பரவிய ராஜ்யத்தை ஆளாவிட்டாலும், கோதாவரி-கங்கை நதிகளுக்கு இடைப்பட்ட பெரிய பகுதியை ஆண்டிருக்கக்கூடும். அதனால் காசி அவன் ராஜ்யத்தில் இருந்திருப்பது ஸாத்யமே. ராஜா என்பதைவிடக் கவி என்று அவனுக்கு ப்ரஸித்தி உண்டு. ப்ராக்ருத பாஷையில் யதார்த்த வாழ்க்கையை இயற்கையாக வர்ணித்து இக்கால 'ஸமூஹக் கதைகள்'என்பவற்றைப் போல ஏழு சதகம் கொண்ட புஸ்தகம் எழுதியிருக்கிறான்.

கி.மு. எட்டாம் நூற்றாண்டிலிருந்து ஐநூறு வருஷம் ஆண்ட ஒரு வம்சத்தைச் சேர்ந்தவன் என்பதைவிடத் திட்டமாக

நம்முடைய புராணாதிகளிலிருந்து இவனுடைய காலத்தைச் சொல்லமுடியுமா என்றால், முடியும். அப்படியொரு ஆராய்ச்சி செய்து (கே.ஜி.) நடேச சாஸ்த்ரி "ஜிஜ்ஞாஸா"ஸஞ்சிகையில் எழுதியிருக்கிறார். கலியுக ஆரம்பத்திலிருந்து மகதத்தை ஆண்டவர்களில் ஹாலன் 74-வது ராஜா என்று அவருடைய ஆராய்ச்சியிலிருந்து தெரிகிறது. ப்ருஹத்ரதனின் வழியாக ஏற்பட்ட பார்ஹத்ரத வம்சத்தில் ஆரம்பித்துக் கலியில் மகதத்தை ஆண்ட வம்சங்கள் ஒவ்வொன்றிலும் வந்த ராஜாக்கள், அவர்களுடைய ஆட்சிக் காலங்கள் ஆகியவற்றைப் புராணம் முதலியவற்றிலிருந்து நிர்ணயிக்கும்போது, 74-வது ராஜவாக ஆந்த்ர வம்சத்து ராஜா ஒருவன் இருந்தானென்பது ஸரியாகவே இருக்கிறது என்கிறார்கள். ஆசார்யாளின் காலாமான கலி வருஷம் 2600 வாக்கில் இவன் இருந்திருப்பதாகச் சொல்வதும் பொருத்தமாக இருக்கிறது. எப்படியென்றால், சராசரியில் ஒரு ராஜா 35 வருஷ அளவுக்குப் பட்டத்திலிருந்தால் 74X35 என்பது 2600-க்கு ஸரியாகத்தானிருக்கும். சராசரி 35 வருஷமென்பது யதார்த்தமானதே என்று சொல்கிறார்கள். ஆனால் ஆசார்யாள் இவன் காலத்திலிருந்தாரென்பது நன்றாக ஒப்புக்கொள்ளும்படி இருக்கிறது.

இவ்வளவுக்கும் மேல், எதிர்பார்க்காததாக இன்னொரு 'டிஸ்கவரி'யும் செய்திருக்கிறார்கள். என்னவென்றால் 'வாயு புராண'த்தில் " **தத : ஸம்வத்ஸரம் பூர்ணோ ஹாலோ ராஜா பவிஷ்யதி** " என்று வருகிறதாம். "அப்புறம் பூர்ணன் என்கிற ஹாலன் ராஜா ஆவான்"என்று அர்த்தம். அதாவது ஹாலனுக்கே பூர்ணன் என்று ஒரு பேர் இருந்திருப்பதாகத் தெரிகிறது. ப்ராம்மணர்கள் 'சர்மன்'போட்டுக்கொள்வது போல, ஸகல க்ஷத்ரியர்களும் தங்கள் பேரோடு 'வர்மன்'என்று சேர்த்துக் கொள்ளவார்கள். தக்ஷிணத்திலேயே பல்லவர்களில் மஹேந்த்ரவர்மன் பாண்டியர்களில் ஜடாவர்மன் என்றெல்லாம் பார்க்கிறோமல்லவா? அப்படி 'பூர்ணன்'என்ற பேருக்கு 'வர்மன்'சேர்ந்தால்?Ì˜í õ˜ñ¡.

'பூர்ணவர்மனுக்கு முன்னால் மலடிமகன் ஆண்டான்'எனற ஆசார்யாள் ஸூத்ர பாஷ்யத்தில் சொல்லியிருப்பதை

வைத்து, "அவன் யார்?அவனா இவனா?"என்று நவீனவழி ஆராய்ச்சிக்காரர்கள் தோண்டித் துருவியதாகப் பார்த்தோமல்லவா? "அந்த எவனுமே இல்லை. நம்முடைய பழைய புஸ்தகங்களில் சொல்லியிருக்கும் ஆந்த்ர ராஜனான ஹாலன் தான் அந்தப் பூர்ணவர்மன். எங்கள் கணக்குப்படி இவனும் கி.மு. 500; ஆசார்யாளும் அதே 'பீரியட்'. ஒன்றுக்கொன்று கச்சிதமாக ஒத்துப் போகிறது" என்று ஒரு 'டிஸ்கவரி'நம்முடைய வழி வழி வந்த அபிப்ராயங்களை அநுஸரிப்பவர்கள் செய்திருக்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஸ்ரீசங்கரரின் கால நிர்ணயம்**

**பௌத்த-ஜைன நூல்களின் அத்தாட்சி :** ஹிந்து மதப் புஸ்தகங்களில் சொல்லியிருப்பதை ஊர்ஜிதப்படுத்துவதாக பௌத்த - ஜைனர்களின் பழைய புஸ்தகங்களிலும் இருந்து விட்டால் அதற்கு 'வால்யூ'அதிகம்;நிச்சயமாக அந்த ஸமாசாரம் நிலை நாட்டப்பட்டுவிடுகிறது என்றே சொல்லலாம்.

ஆசார்யாள் கி.மு. 509-477 என்பதற்கு அந்த இரண்டு மதஸ்தர்களின் நூல்களிலும் ஆதாரமிருக்கிறதாகக் காட்டியிருக்கிறார்கள்.

'நேபாள ராஜவம்சாவளி'என்பது பௌத்தர்களிடமிருந்து கிடைத்திருப்பது. அதில் ஆசார்யாள் நேபாளத்துக்கு வந்ததாகவும் அப்போது வ்ருஷதேவ வர்மா என்பவன் ராஜாவாயிருந்ததாகவும் சொல்லியிருக்கிறது. இந்த வ்ருஷ தேவ வர்மாவின் காலத்தை ஸரியாகக் கலி 2600 (அதாவது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு) என்றே அதில் கொடுத்திருக்கிறது.

ஜைனப் புஸ்தகத்துக்கு வருகிறேன். மஹாவீரரின் சரித்ரத்தைப் பற்றி "ஜின விஜயம்"என்று புஸ்தகம் இருக்கிறது. காளிதாஸன் கால விஷயத்தின்போது குறிப்பிட்ட கோலாப்பூர் சாஸ்த்ரி அந்தப் புஸ்தகத்தை ஆராய்ந்து

பார்த்தே பல தேதிகளை நிர்ணயம் பண்ணியிருக்கிறார். அதில் குமாரில பட்டர், ஸுதன்வா, ஆசார்யாள் முதலியவர்களைச் சொல்லியிருக்கிறது. ஜைனப் புஸ்தகமானதால் திட்டியே சொல்லியிருக்கிறது!நிச்சயமாக அவர்களைப் புராதன கால புருஷர்களாகக் காட்ட வேண்டுமென்ற உத்தேசம் அந்தப் புஸ்தகாரருக்கு இருந்திருக்காது. ஆனாலும் அவர் காட்டுகிற தேதிகள் நாம் சொல்லும் கி.மு. பீரியடாகவே இருக்கிறதென்றால் அது நிஜம்தான் என்று 'ப்ரூவ்'ஆவதாகக் கொள்ளலாமல்லவா?

குமாரில பட்டர் பிறந்த நாளை 'ஜின விஜய'த்தில் "ரிஷி-வாரஸ்-ததா-பூர்ணே மர்த்யாக்ஷௌ வாம-மேளநாத்"என்று ஸங்கேத ஸங்கியையயில் சொல்லியிருக்கிறது. 'ஸப்தரிஷி'கள் என்பதால் 'ரிஷி'என்பது 7. 'வார'மும் ஏழு நாட்களைக் குறிப்பதால் 7. 'பூர்ணம்'என்பது முழு வட்டமாக உள்ள 'ஸைபர்'. 'மர்த்யாக்ஷௌ'என்றால் மநுஷர்களுக்கு உள்ள கண்களின் எண்ணிக்கையான 2. (தேவர்களுக்கு முக்கண், பன்னிரண்டு கண், ஆயிரம் கண் என்பது வரைகூடப் போவதால் 'மநுஷக்கண் :மர்த்ய-அக்ஷம்'என்று 2-ஐச் சொல்வது.) நான் சொன்ன நம்பர்களைச் சேர்த்துப் பார்த்தால் 7702. 'வாமமேளனம்'என்பது 'திருப்பிப் போடுவது'. அப்படிப் போட்டால் 2077. ஜைனர்கள் ஒரு யுதிஷ்டிர சகத்தைப் பின்பற்றுவதாகவும், அது கலி 468-ல் ஆரம்பிப்பதாகவும் சொன்னேனல்லவா?இது ஜைனப் புஸ்தகம்தானே?Üîù£™ Ü‰î êè£Šî˜F¡ 2077-‹ õ¼û‹î£¡ °ñ£Kô ð†ì˜ üùùñ£è Þƒ«è ªê£™LJ¼Šð¶, Üî£õ¶ èLJ¡ 2545. Þ¶ A.º 557 ÝAø¶. Ýê£˜ò£œ A.º. 509 â¡A«ø£‹. ÜŠð®ò£ù£™ °ñ£Kô ð†ì˜ Üõ¬óMì 48 õòú§ ªðKòõ˜ â¡ø£Aø¶. Ýê£˜ò£œ ªò÷õù˜F™ °ñ£Kô¬ó ú‰F˜î«ð£¶ Üõ˜ š¼˜îó£è Þ¼‰î£ªó¡ðîŸ° Þ¶ ªð£¼˜îñ£è Þ¼‚Aø¶. Ýê£˜ò£œ î‹º¬ìò ðF¬ù‰î£‹ õòR™ Üõ¬ó ú‰F˜î£˜ â¡ÁƒÃì Ü‰îŠ ¹vîè˜F«ô«ò Þ¼‚Aø¶! ðFù£Á º®‰î¾ì¡ ú‰F˜î¬î å¼ õ¼û‹î£¡ °¬ø˜¶„ ªê£™LJ¼‚Aø¶.

பச்சாத் பஞ்சதசே வர்ஷே சங்கரஸ்யாகதே ஸதி *

பட்டாசார்ய-குமாரஸ்ய தர்சநம் க்ருதவான் சிவ :**

ஆசார்யாளைத் திட்டும் புஸ்தகத்திலும் "சிவ:"என்று அவருடைய அவதாரத்வத்தைச் சொல்லியிருப்பது விசேஷம்!

ஆசார்யாளின் ஸித்தி தினத்தையும் அதில் சொல்லியிருக்கிறது :

ரிஷிர்-பாணஸ்-ததா-பூமிர்-மர்த்யாக்ஷௌ வாம-மேளநாத் *

ஏகத்வேந லபேதாங்கஸ்-தாம்ராக்ஷஸ்-தத்ர வத்ஸர :**

ரிஷி-7; பாணம்-(பஞ்சபாணம் என்பதால்) 5; பூமி-(ஒரு பூமி தானே உண்டு?அதனால்)* ; மர்த்யாக்ஷம் (மநுஷக்கண்) 2. அதாவது 7512. மாற்றிப் போட்டால் 2517. ஜைன யுதிஷ்டிர சகம் 2157. அதாவது கல்யப்தம் 2625. இதுதான் நாமும் சொல்லும் ஸித்தி காலம்!கி.மு. கணக்கில் 477.

ப்ரபவாதி வருஷங்களில் அதைத் "தாம்ராக்ஷம்"என்று குறிப்பிட்டிருக்கிறது. தாமிரம் ரக்த வர்ணமானது. அதனால் இது ரக்தாக்ஷி வருஷமென்றாகிறது. நாமும் அப்படித் தான் சொல்கிறோம்! 'நந்தன'வில் பிறந்தவர் 32 வயஸில் விதேஹ முக்தி என்றால் அது 'ரக்தாக்ஷி'யாய்த்தான் இருக்க வேண்டும்.

இப்படி, எல்லாம் ஒன்றுக்கொன்று ஸரியாகப் பொருந்தியிருக்கிறது.

ஆக, ஆசார்யாள் கி.மு. 509-ல் அவதரித்து 477-ல் ப்ரஹ்மீபாவம் அடைந்தாரென்று அவருடைய மடங்களில் சொல்வதற்கு ஹிந்து-ஜைன-பௌத்த புஸ்தகங்கள் பலவற்றின் ப்ரமாணம் இருக்கிறது. கர்ண பரம்பரையாகவும் தலைமுறை தலைமுறையாக இப்படி நம்பிக்கை தொடர்ந்து வந்திருக்கிறது. கி.பி. 788-820 என்றோ, வேறே விதமாகவோ சொல்கிற எந்தக் காலக் கணக்குக்கும் இதனை ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை.

---

## அதிமேதைக் குழந்தை

ஆசார்யாள் குழந்தையாக வளர்ந்தார்.

குழந்தையாயிருந்தபோதே மஹாமேதையாக இருந்தார். மூன்றாவது வயஸு வரையில் அவர் தேச பாஷைகளைக் கற்றுக்கொண்டார். ஐந்தாவது வயஸு வரையில் ஸம்ஸ்க்ருத பாஷையை அப்யாஸம் செய்து தேர்ச்சி பெற்றாரென்று சொல்லியிருக்கிறது. மூன்றாவது வயஸு வரையில், ஐந்தாவது வயஸு வரையில் என்றால், அந்த வயஸுகள் முடிவதற்குள்ளேயே அந்த பாஷைகளை நன்றாகக் கற்றுக் கொண்டுவிட்டார். தேச பாஷைகள் என்பதில் முக்யமாகத் தமிழ்தான் இருந்திருக்கவேண்டும். மூன்று வயஸில்தான் ஞான ஸம்பந்தர் தமிழ் மறை என்கிற தேவாரம் பாட ஆரம்பித்தது.

இதெல்லாம் கட்டுக்கதை என்று சொல்லிவிடலாமா என்றால், கதையைவிட ஆச்சர்யமாக இப்போதும் அங்கங்கே கேள்விப் படுகிறோமே! சின்னக் குழந்தைகள் பத்து ஸ்தானம் பதினைந்து ஸ்தானம் இருக்கிற பெருக்கல் கணக்குகளை நிமிஷத்தில் போட்டுவிடுகிறதுகள்! ஸ்லேட்-கீட், பலப்பம், பென்ஸில் இல்லாமல் போட்டுவிடுகிறதுகள்!ஸ்கூல்களில் இந்தக் குழந்தைகளை வரவழைத்து டெமான்ஸ்ட்ரேஷன் காட்டுகிறார்கள். ஜன்மாந்தர வாஸனை என்று சொல்கிறோம். அதைத் தவிர என்ன காரணம் சொல்வது?ஜன்மாந் தரங்களையே வேறே சில குழந்தைகள் சொல்கிறதுகள்!முந்தின ஜன்மாவில் இன்ன ஊர், இன்னார் பந்துக்கள் என்று சொல்கிறதுகள். அழைத்துக் கொண்டு போய்க் காட்டினால் அப்படியே இருக்கிறது! Para-psychology என்று சொல்லி இதைப்பற்றி இப்போது ஸயன்ஸ் முறையிலேயே ஆராய்ச்சி பண்ணுகிறார்கள்.

அவைதிகமான ஜைன-பௌத்த மதங்களில்கூட ஜன்மாந்தர நம்பிக்கையுண்டு. புத்தரே 'ஜாதகக் கதை'கள் என்பதாக தம்முடைய அநேகப் பூர்வ ஜன்ம வரலாறுகளைச்

சொல்லியிருக்கிறார்.

ஆசார்யாளுக்கும் ஸம்பந்தருக்கும் ஜன்மாந்தரம் சொல்வது அஸம்பாவிதம். ஆனால், மநுஷ்ர்களாகப் பூர்வ ஜன்மத்தில் அடைந்த புத்தி வளர்ச்சியே அடுத்த ஜன்மத்தில் ஒரு குழந்தையை 'ப்ராடிஜி'என்று ப்ரமிக்கும்படியான மேதையாகக் முடிக்கிறதென்றால், ஸர்வஜ்ஞனான ஈச்வரனின் அநுக்ரஹத்திலிருந்தே தோன்றிய அவதாரக் குழந்தைகளுக்கு ஏன் அதிசயமான மேதாவிலாஸமிருக்கமுடியாது?

---

## தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

### பால்ய உபநயனச் சிறப்பு

ஐந்து வயஸிலேயே ஆசார்யாளுக்கு உபநயனம் செய்து விட்டார்கள்.

ஸம்பந்தர் கதையைப் பார்க்கும்போது அவருக்கும் மூன்று வயஸில் அவர் பதிகம் பாட ஆரம்பித்து, அப்புறம் சில க்ஷேத்ரங்களுக்கு யாத்ரை பண்ணிவிட்டு வந்தவுடனேயே உபநயனம் செய்துவிட்டாதாகப் பெரிய புராணத்திலிருந்து தெரிகிறது. " **உபநயனப் பருவம் எய்த** "என்று சொல்லியிருப்பதால் 'மினிமம்'எந்த வயஸில் பூணூல் போடலாமோ அப்போதே போட்டுவிட்டார்கள் என்று த்வனிக்கிறது. 'நித்ய உபநயனம்'என்பதற்கு மினிமம் எட்டு வயஸு; 'காம்ய உபநயனம்'என்பதற்கு அஞ்சே வயஸு...

'நித்யம்,"காம்யம்' என்று இரண்டு. 'நித்ய கர்மா'என்பதற்கு உள்ளூர ஏற்படுகிற ஆத்ம சக்திதான் பலன். வேறு அதனால் எந்த இஷ்ட லாபமும் அடையமுடியாது... உண்மையே சொல்வதால் லாபம் உண்டா?பொய் சொன்னால்தான் கொழுத்த லாபம் ஸம்பாதிக்க முடியுமென்றுதான் பார்க்கிறோம்!ஆனபோதிலும் உண்மை தானே நாம் சொல்லவேண்டியது என்று விதி இருக்கிறது? ஏன் அப்படி

இருக்கிறது?பொய் சொல்வதால் பாபம் உண்டாவதால்தான்;அதாவது ஆத்மா அசுத்தியடைவதால்தான். நித்ய கர்மாவும் இப்படித்தான். செய்யாவிட்டால் பாபம். செய்தால், நமக்குத் தெரியாமலே ஆத்மா சுத்தி ஆவது தவிர, தெரியும்படியாக தன லாபம், புத்ர லாபம் என்று எதுவும் காட்ட முடியாது. காம்ய கர்மா என்பது நம்முடைய ஏதோ ஒரு இஷ்ட லாபத்தை உத்தேசித்தே பண்ணுவது. பிள்ளை பிறப்பதற்காக தசரதர் புத்ர காமேஷ்டி பண்ணியது காம்ய கர்மா. ப்ரமோஷன் கிடைக்க வேண்டுமென்று நவக்ரஹத்தைச் சுற்றுவது காம்ய கர்மா. இவற்றைப் பண்ணித்தான் ஆகவேண்டுமென்றில்லை. நித்ய கர்மா பண்ணியே ஆகணும். பண்ணாவிட்டால் பாபம்.

'நித்ய உபநயனம்'எட்டு வயஸுக்குப் பண்ண வேண்டும். கர்ப்பத்தைக் கூட்டி எட்டு வயஸு. அதாவது, பிறந்து ஏழு வயஸும் இரண்டு மாஸமும் ஆனவுடன். இது 'மினிமம்'. 'மாக்ஸிம'மும் இதுவேதான் என்று சொல்லும் படியாகவே சாஸ்த்ராபிப்ராயம் இருக்கிறது. ஆனாலும், தவிர்க்க முடியாமல் ஏதாவது இடைஞ்சல் ஏற்பட்டால் என்ன பண்ணுவது என்று நினைத்து, போனால் போகிறதென்று இன்னொரு எட்டு வருஷம் கொடுத்துப் பதினாறு வயஸுவரை (பூணூல்) போடலாமென்று சொல்லியிருக்கிறது. **(இது பிராமணருக்கான விதி. க்ஷத்ரியருக்கான காலகட்டம் 11-22 ; வைசியருக்கு 12-24.)** அதற்கு மேல் போகவே படாது. போகவிட்டால் பாபம். 'நித்யம்'என்பதைப் பண்ணாவிட்டால் பாபம் என்று பார்த்தோமல்லவா?அப்படி, பதினாறு வயஸுக்குக்கூட ஒரு தகப்பனார்க்காரன் பிள்ளைக்குப் பூணூல் போடாவிட்டால் பாபம். ஒரு காரணமும, நியாயமும் இல்லாமல் தற்போது பெரும்பாலான தகப்பனார்க்காரர்கள் இந்தப் பாபத்தைத்தான் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்!

'பாயின்ட்'என்னவென்றால் ஒரு ப்ராம்மணப் பையனுக்குள் காமம் ப்ரவேசிப்பதற்கு முந்தி காயத்ரி ப்ரவேசித்து அவன் தினமும் ஸஹஸ்ராவ்ருத்தி (ஆயிரம் ஆவிருத்தி) அளவுக்கு ஜபித்து மந்த்ர ஸித்தி அடைந்தால்தான் அவன் தனக்கும் சித்த பரிசுத்தி பெறமுடியும்; லோகத்துக்கும் க்ஷேமகரமான

'வைப்ரேஷன்'களை 'ரேடியேட்'செய்யமுடியும் (ஆன்மிய அதிர்வலைகளைப் பரப்பமுடியும்.) இப்படித்தான் தன் புத்ரனுக்கு ஏற்படக்கூடிய ஆத்மக்ஷேமம், அவனால் வெளியில் ஏற்படக்கூடிய லோக க்ஷேமம் இரண்டும் ஏற்படவொட்டாமல் ஒரு பிதா பண்ணுவது பாவமா, இல்லையா?

â†´ õòú§î£¡ º,ò'è£ô‹ â¡ð¶. º,ò‹'â¡ø£™ èªó,ì£è MFŠð® Þ¼Šð¶. «ð£ù£™ «ð£Aøªî¡Á, ªúè‡ìKò£è M†´,ªè£´ˆ¶ ê£vˆóƒèO«ô«ò ªê£™LJ¼Šð¶ 'ªè÷í‹'. â†´,° «ñ™ ðFù£Á õ¬ó àðïòùˆFŸ° ªè÷í è£ôñ£°‹. Ü¶¾‹ î£‡®M†ì£™ å¼õ¡ 'šó£ˆò'ù£AM´õ£¡ â¡Á ñ¸ v‹¼F ºîô£ùõŸPL¼,Aø¶. šó£ˆò¡ â¡ø£™ ü£FŠówì¡.

கவர்மெண்ட் ஸர்வீஸுக்கு இருபத்தைந்து வயஸு ஏஜ் லிமிட் என்றால் பொய் ஸர்ட்டிஃபிகேட், அது, இது கொடுத்தாவது முயற்சி பண்ணத் தோன்றுகிறதோ இல்லையோ? சாஸ்த்ரத்தில் ஏஜ் லிமிட் சொல்லும்போது மட்டும் இஷ்டப்படிப் பண்ணலாம் என்றால் என்ன அர்த்தம்?

யாராவது ஒருத்தர் இரண்டு பேருக்காவது 'உறைக்காதா', சுரணை பிறக்காதா என்றுதான் ஓயாமல் சொல்லிப் பார்க்கிறேன்.

இக்காலத்தில் இப்படி இந்த விஷயத்தில் ஒரே அலக்ஷ்யமாயிருக்கிறோமென்றால், பூர்வ காலத்திலோ ரொம்ப புத்தி தீக்ஷ்ண்யமுள்ள குழந்தைகளைப் பெற்றவர்கள் அது நாலு, அஞ்சு வயஸிலிருந்தே சொல்லிக்கொடுப்பதையெல்லாம் நன்றாகப் பிடித்துக் கொள்வதைப் பார்க்கிறபோது, "எட்ட்ட்டு வயஸு வரையிலா பூணூல் போடாமல் வைத்திருப்பது?"என்று நினைத்திருக்கிறார்கள்!இதை உத்தேசித்தே 'காம்ய'உபநயனம் என்றும் ஒன்றை சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. அதற்கு மினிமம் ஐந்து வயஸு என்று குறைத்துக் கொடுத்திருக்கிறது.

பொதுவாக, ஸ்வதர்மக் கடமையாக சாஸ்த்ரங்கள் விதித்துள்ள 'நித்ய' கர்மாவைவிட நம்முடைய ஸொந்த இஷ்டத்திற்காகச் செய்யும் 'காம்ய'கர்மா மட்டந்தான் என்பார்கள். ஆனாலும் உபநயன விஷயத்தில் மட்டும்

'காம்யம்'என்னும்போது அந்தக் காமனை எதை உத்தேசித்து? "ப்ரஹ்ம வர்சஸகாமஸ்ய பஞ்சமே"என்று ஸ்ம்ருதிகளில் சொல்லியிருக்கும்படி, குமாரன் ப்ரஹ்ம தேஜஸை ஸம்பாதித்துக்கொண்டு தன்னையும் சுத்தி செய்து கொண்டு, ஊருக்கும் சுத்தி ஏற்படும்படிச் செய்யவேண்டுமென்பதுதானே. உத்தேசம்? இதை எப்படி மற்ற லௌகிகமான ஸொந்த ஆசைகளோடு சேர்க்கமுடியும்?

இயற்கையாக புத்தி தீக்ஷ்ண்யம் உள்ள குழந்தையாயிருந்தால் காயத்ரீ தேவதை உள்ளே போய் அது மழுங்காதபடி வ்ருத்தி பண்ணிக்கொடுப்பாள். அதோடு, புத்தி, சக்தி அதர்மமாகப் போகாமல் தார்மிகமாகவும், ஆத்ம ச்ரேயஸ்கரமாகவுமே போகும்படியும் செய்வாள். மந்தமான, ணீஸ்மீக்ஷீணீரீமீ-ஆன (நடுத்தரமான) குழந்தைகளானாலும் காயத்ரி மந்த்ர ஆவ்ருத்தியே அதுகளின் புத்தியையும் கூர் பண்ணி, ப்ரகாசமுடையதாக்கி, நல்ல வழிகளிலேயே போகும்படிப் பண்ணும். இப்படி எந்த லெவலில் இருப்பவருக்கும் உபகாரம் பண்ணுவதாக அந்த மந்த்ரம் இருக்கிறது.

ஆசார்யாள், ஸம்பந்தர் ஆகியவர்கள் தெய்வ சக்தி வாய்ந்த அவதாரங்கள். ஆனாலும் அப்படி வெளியில் காட்டிக்கொண்டிருக்கவில்லை-ஸதா காலமும் காட்டிக் கொண்டிருக்கவில்லை. அவச்யங்களில் மட்டும் கொஞ்சம் காட்டினார்கள். 'லீலா மானுஷ வேஷம்'என்று லோகத்தில் நாடகம் நடிக்கும்போது அப்படித்தான் ஒளித்து ஒளித்துக் காட்டுவது!அவர்கள் வழிகாட்ட வந்தது ஸாமான்ய மநுஷ்ய ஜீவர்களுக்கு. அதனால் மநுஷ்ய சக்தியையே ஸரியாக, முறையாக ப்ரயோஜனம் செய்துகொண்டால் என்னவெல்லாம் ஸாதிக்க முடியும் என்று ஜனங்களுக்குக் காட்டி அவர்களுக்கும் அப்படி செய்ய உத்ஸாஹம் தரும் வகையிலேயே தங்களுடைய வாழ்க்கையை மாநுஷமாக அமைத்துக்கொண்டார்கள்.

அதோடுகூட ஸ்வாமி ஜனங்கள் தன்னோடு கலந்து பழக வேண்டுமென்றும் ஆசைப்பட்டே அவதாரம் பண்ணுவது . ஒரே தெய்வ சக்தி மயமாயிருந்தால் மற்றவர்கள் கலந்து பழக வருவார்களா?தூரத்தில் நின்று கொண்டுதான் கன்னத்தில் போட்டுக்கொள்வார்கள். ஆசார்யாள் பரம சிவனாகவே தெரிந்துகொண்டிருந்தால் அப்பா அம்மா எப்படி அவரை

வாத்ஸல்யம் காட்டி வளர்ந்திருக்க முடியும்?

எல்லா அவதாரங்களிலும் இப்படித்தான் நிறைய மநுஷ்ரீதி போலவே பண்ணுவது. அத்யாவச்யத்திற்கு மட்டும் தெய்வ சக்தியைக் காட்டுவது, அதையும் தங்களுடன் வாழ்கிறவர்களின் நினைவிலிருந்து மறைந்து போகும்படிப் பண்ணுவது, என்று.

ஆனாலும் லோகம் பாழாய்ப் போய்க் கொண்டிருந்த போது மநுஷ ரீதியில் நிதானமாக அதைப் ஸரிப் பண்ண ஆசார்யாள், ஸம்பந்தர் ஆகியவர்களுடைய அருள் மனஸு அவர்களை விடவில்லை. தேசம் பூராவையும் முப்பத்திரண்டே வருஷத்தில் புனருத்தாரணம் பண்ணிவிட வேண்டுமென்று ஆசார்யாள் பறந்தார்; தமிழ்நாட்டை மட்டும் உத்தரிக்கப் பதினாறு வருஷத்திற்க்கு மேல் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று ஸம்பந்தர் பறந்தார். அதனால்தான் மநுஷ்யக் குழந்தைகளுக்கு ஸாதாரணமாக இல்லாத மேதையைக் காட்டிக் குழந்தைப் பிராயத்திலேயே அவர்கள் ஸம்பூர்த்தியாக வித்யாப்யாஸம் செய்தது.

ஸொந்த சக்தியால் செய்ததாக இல்லாமல் அருள் சக்தியால் செய்ததாக இருக்கட்டும் என்று ஸம்பந்தர் அம்பாளின் க்ஷீரத்தைப் பானம் பண்ணிய மஹிமையாலேயே ஞானியாக, பாண்டியத்யமுள்ளவராக ஆனார். ஆசார்யாளைப் பற்றியும் இப்படி கதை இருப்பதாக முன்னேயே சொன்னேன். அல்லத, 'ப்ராடிஜி'என்று மநுஷக் குழந்தைகளிலேயே எங்கேயாவது அபூர்வமாக இருக்கிறது போலத்தான் அவரும் தெரிந்தார்; அதாவது தெய்வாவதாரந்தான் என்று பெற்றவர்களும் மற்றவர்களும் தெரிந்துகொண்டு தூர நின்று பக்தி பண்ணாமல், அதி புத்திசாலியான மநுஷக் குழந்தை என்றே சீராட்டி ப்ரியம் காட்டும்படியாக இருந்தார்.

தேச பாஷை, ஸம்ஸ்க்ருதம் ஆகியவற்றின் மொழி இலக்கணம், இலக்கியம் ஆகியவற்றை அஞ்சு வயஸுக்குள் கரைத்துக் குடித்துவிட்ட ஆசார்யாள் அந்த வயஸில் உபநயனமானவுடன் குருகுலத்துக்குப் போய் வாஸம் பண்ணி எட்டு வயஸுக்குள் அத்யயனம் முடித்து மற்ற எல்லா சாஸ்த்ரஙகளையும் படித்துக் கரை கண்டுவிட்டார்.

ஐந்து வயதில் உபநயனம், எட்டு வயஸுக்குள் சாஸ்த்ரங்கள்

எல்லாம் 'மாஸ்டர்' பண்ணியாயிற்று, அந்த வயஸிலேயே ஸந்நியாஸமும் வாங்கிக்கொண்டாயிற்று, பன்னிரண்டு வயஸில் அத்தனை பாஷ்யமும் எழுதியச்சு-என்றிப்படி ஆச்சர்யமாக ஆசார்யாள் செய்திருக்கிறார்.

இன்னமும் முந்திக்கூட வித்யாப்யாஸம் முடித்திருப்பார்!ஆனால் பூணூல் போடாமல் வேதாத்யயனம் பண்ண முடியாது; வேதத்தின் ஸாங்க - உபாங்கங்கள் என்னும் சாஸ்த்ரங்களையும் படிக்க முடியாது; காம்யோபநயனம் என்றால்கூட ஐந்து வயஸுக்கு முன்னால் போட முடியாது- என்பதால்தான் சாஸ்த்ரோக்தமாகவே எல்லாம் நடத்திக் காட்ட நினைத்த ஆசார்யாள் ஐந்துக்குள் தேச பாஷை, தேவ பாஷை ஆகியவற்றின் 'க்ராமர்', காவ்யம் ஆகியவற்றை மட்டும் படித்து, சாஸ்த்ரங்களை ஐந்துக்கப்புறம் என்று 'போஸ்ட் போன்'பண்ணினார்.

'பூணூல் போடுவதற்கு முந்தியே காவ்ய-நாடகாதிகள் ஸகலமும் படித்து க்ரஹித்துக் கொண்ட பெருமை ஆசார்யாள் ஒருத்தருக்குத்தான் உண்டு'என்று சொன்னால் தேவலை போல் இருந்தாலும், உள்ளே இன்னொருத்தர் நினைவு நிமிண்க்கொண்டே இருக்கிறது!அதனால் அவர் யாரென்று சொல்கிறேன். வேறே யாரோ சொல்லாமல் அந்த ஒருவரே தமக்குப் பூணூல் போடுவதற்கு முன்பே இருந்த புலமையைக் குறிப்பிட்டு எழுதிவைத்துவிட்டுப் போயிருக்கிறார்.

அவர் பேர் ராஜசூடாமணி தீக்ஷிதர். முந்நூற்றைம்பது, நானூறு வருஷம் முன்னால் இருந்தவர். அப்பைய தீக்ஷிதரின் மைத்துனர் (மனைவியின் உடன்பிறந்தவர்). இவர் உபநயனத்திற்கு முந்தியே காவ்யங்கள் படித்தது மட்டுமில்லாமல் படைத்தும் விட்டாரென்று தெரிகிறது! "கமலிநீ கலஹம்ஸம்"என்று அவர் எழுதியுள்ள நாடகத்தில் "ப்ரஹ்மாவின் ஒரு பத்னியான காயத்ரி என்னை வந்தடைவதற்கு முன்னேயே அதாவது, உபநயனம் ஆவதற்கு முற்பட்டே-அவருடைய இன்னொரு பத்னியான ஸரஸ்வதி என்னிடம் வந்து சேர்ந்துவிட்டாள் (காவியப் புலமை ஏற்பட்டுவிட்டது)" என்று சொல்லியிருக்கிறார்!

அதற்குரிய பாலப்பருவத்திலேயே பூணூல் போட்டுக் கொண்டு காயத்ரி மஹிமையாலேயே கார்யமெல்லாம்

செய்ததாகக் காட்டவேண்டுமென்றே ஆசார்யாளும் ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளும், உபநயன ஸம்ஸ்காரமான பிறகுதான் அவதார கார்யங்களை விசேஷமாகப் பண்ணினார்கள். நமக்குப் பாடமாகவே அப்படிப் பண்ணியது. பர மதங்களை நிராகரணம் பண்ணி ஸநாதன தர்மத்தை நிலை நாட்டியதே இருவரும் செய்த அவதாரப்பணி. அதனால் இப்போதும் நாம் 'கன்வர்ஷன்'நடக்கிறதே என்று கணடனக் கூட்டம் போடுவது, கான்ஃபரன்ஸ் நடத்துவது, முற்றினால் பதிலுக்கு அடி-உதை என்று கிளம்புவது எல்லாவற்றையும்விட முக்யமாக, முதலாவதாக, நம் பசங்களுக்கெல்லாம் எட்டு வயஸில் தப்பாமல் பூணூலை மாட்டி, தாஜா கீஜா பண்ணியாவது தினம் ஸஹஸ்ராவ்ருத்தி ஜபம் பண்ணவைத்து விட்டால் போதும்-மந்த்ர சக்தியில் மதாந்தரங்கள் எல்லாம் ஓடிப்போய்விடும்!குழந்தைகள் கொஞ்ச நாள் பண்ண ஆரம்பித்துவிட்டால் போதும், காயத்ரி, அவளே, அதுகளைப் பிடித்துக் கொண்டுவிடுவாள். நாம் தாஜா பண்ணாமலும், அல்லது மிரட்டி உருட்டிக் கம்பெல் பண்ணாமலும் அதுகளாகவே ப்ரியமாகப் பண்ண ஆரம்பித்துவிடும்.

தம்மிடமுள்ள ஒரு பெரிய நிதியை ப்ரயோஜனம் பண்ணிக்கொள்ளாமல் வீணாகப் போகிறோமே ('வீணா ஆஆஆப் போறோமே!' என்று எல்லையில்லாத அங்கலாய்ப்புடன் கூறுகிறார்கள்) என்பதால்தான் முட்டிக் கொள்வது. ஆசார்யாள் சரித்ரம் கேட்பதற்கு இதைவிட நாம் செய்யக் கூடியது இல்லை.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**அனைத்து சாஸ்திர அறிவும்** ,

**அனைத்தும் அடங்கும் அத்வைதமும்**

மூன்று வருஷத்துக்குள் ஸாங்கோபாங்கம் வித்யாப்யாஸம் பூர்த்தி பண்ணிவிட்டார். உபவேதங்கள், இன்னும்

பாக்கியுள்ள எல்லா சாஸ்த்ரங்களும் படித்துவிட்டார்! ஆசார்யாள் அதி விரைவில் ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றுத் தேர்ந்ததைப் பற்றி ஒரு ச்லோகம் இருக்கிறது:

**ஆந்வீக்ஷிக்யைக்ஷி தந்த்ரே பரிசிதிரதுலா காபிலே காபி லேபே**

**பீதம் பாதாஞ்ஜலாம்ப : பரமபி விதிதம் பாட்ட கட்டார்த்த-தத்த்வம் ***

**யத்-தை : ஸௌக்யம் ததஸ்யாந்தரபவத்-அமலாத்வைத-**

**வித்யா ஸுகே(அ)ஸ்மிந் கூபே யோ(அ)ர்த்த : ஸ தீர்த்தே ஸுபயஸி விததே ஹந்த நாந்தர்-பவேத்-கிம் ****

ஆன்வீக்ஷிகி என்பது ராஜ்ய நிர்வாஹத்தைச் சொல்லும் சாஸ்த்ரம். 'ஆன்வீக்ஷிகி-ஐக்ஷி'என்பதற்கு அந்த சாஸ்த்ரத்தைக் கண்ணால் பார்த்த மாத்ரத்தில் தமதாக்கிக் கொண்டுவிட்டாரென்று அர்த்தம். 'ஈக்ஷ்'என்றால் பார்ப்பது. 'ஐக்ஷி':பார்ப்பதினால், பார்த்த மாத்ரத்தில்.

அப்புறம் கபிலர் செய்த சாஸ்த்ரம். 'காபிலே தந்த்ரே' என்று வருவது. அதுதான் ஸாங்க்ய சாஸ்த்ரம். அதிலும் ஈடிணையில்லாத பரி(ச்)சயம் பெற்றார்: 'பரிசிதி:அதுலா லேபே'. பாஷ்யத்தில் மீமாம்ஸைக்கு அடுத்தபடியாக ஆசார்யாள் திட்டியது அதைத்தான்!மாற்று ஸித்தாந்தங்களையும் கசடறக் கற்றே கண்டனம் பண்ண வேண்டுமாதலால் அப்படிப்பட்டவற்றையும் ஆசார்யாள் போன்றவர்கள் deep-ஆகப் படித்திருக்கிறார்கள். அதுவும் மன்னியில் மாற்று ஸித்தாந்தம் என்பவற்றிலும்கூட எல்லாமே கண்டனத்துக்குரியது என்று வைத்துவிடாமல் நல்லதை நல்லதென்று ஒப்புக்கொண்டு பெரியவர்கள் எடுத்துக்கொள்வார்கள். இப்படி ஸாங்க்யம், மீமாம்ஸை எல்லாவற்றிலும் உண்டு. அதற்காகவும் ஆழப் படிப்பது. வித்யா ஸம்பாதனம் என்று வரும்போது blas (பக்ஷபாதம்) இல்லாமல், "களவும் கற்று மற"என்றபடி எல்லாம் தெரிந்து கொள்வதே நம் பூர்விகர் வழி.

இதனால்தான் அத்தனை ஒதுக்குப்புறத்தில் வைதிக ஸம்ப்ரதாயத்தையே அநுஸரித்துவந்த மலையாளத்திலும் இந்த சாஸ்த்ரங்கள் தெரிய வந்து குருகுலத்தில் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்!அடியோடு தெரிய வேண்டாத எதிர்க்கட்சி என்று எதையும் வைத்துவிடாமல் திறந்த மனப்பான்மையோடு வித்யையை அணுகியது நம் புராதனப் பண்பாட்டில் மிகவும் பெருமைக்குரிய ஒரு அம்சம்...... ஆசார்யாள் ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றுக்கொண்டதில் பாக்கி பார்க்கலாம்.

"பீதம் பாதஞ்ஜலாம்ப:"என்றால் பதஞ்ஜலியின் யோக சாஸ்த்ரத்தை தீர்த்தம் குடிக்கிறதுபோல அத்தனை 'ஈஸி'யாக தமக்குள்ளே அனுப்பிவிட்டார் என்று அர்த்தம்.

"பாட்ட கட்டார்த்த-தத்த்வம்":குமாரில பட்டர் செய்ததான "பாட்ட சாஸ்த்ரம்"என்னும் பூர்வ மீமாம்ஸை. அதையும் ஒரு தீர்த்த கட்டத்தை லேசாகத் தாண்டிப் போகிற மாதிரி-ஆஞ்ஜநேயர் ஸமுத்ரம் தாண்டின மாதிரி-தாண்டிவிட்டார். 'î«ó£'õ£è` ªîK‰¶ªè£‡´ M†ì£˜: "ðóñH MFî‹"

ஆசார்ய பாஷ்யங்களைப் பார்த்து அறிஞருலகமெல்லாம், "அதெப்படி இத்தனை சாஸ்த்ரங்களில் பாரங்கதராக இருந்திருக்கிறார்!இத்தனை 'கொடேஷன்'எந்தெந்தப் புஸ்தகங்களிலிருந்தோ கொடுத்திருக்கிறாரே!"என்று ஆச்சர்யப்படுகிறது. இங்கே சொல்லியிருப்பது அதிசயோக்தியே இல்லை.

எந்த மதஸ்தரானாலும் தத்வத்தை ஆராய்கிறவர்கள், பின்னாலே ஒத்துக்கொள்கிறார்களோ இல்லையோ, ஆசார்யாளின் புஸ்தகங்களைத்தான் எடுத்துப் போட்டுக் கொண்டு பார்க்கிறார்கள். இன்றைக்கும் லோகம் முழுவதும் ஃபிலாஃஸபர்கள் நம்முடைய ஆத்ம சாஸ்த்ரமென்றால் ஆசார்யாளைத்தான் முதலில் பார்ப்பது, ஆழ்ந்து பார்ப்பது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அஹிம்ஸை, கருணை, ஸமத்வம் எல்லாம் பௌத்தம் முதலிய மதங்களில் தான் இருப்பதாக நினைத்துக்கொண்டு அவற்றைத் தழுவியவர்களில்கூட மஹா மேதாவிகளாக இருப்பவர்கள்

தத்வம் என்று வந்தால் ஆசார்யாளின் க்ரந்தங்களைப் பார்த்தே தலைமேல் வைத்துக்கொண்டு ஸந்தோஷப்படுகிறார்கள். ஆகையினால் அவருடைய கூர்ந்த அறிவை, பரந்த அறிவைப் பற்றி எத்தனை சொன்னாலும் யதார்த்தமன்றி வேறில்லை.

இப்படி ஆசார்யாள் ஆன்வீக்ஷிகி, ஸாங்க்யம், யோகம், மீமாம்ஸை-இந்த நாலு மட்டுமில்லை, 'இவை முதலான ஸகல சாஸ்த்ரங்களையும்'என்று அர்த்தம்-இப்படி எல்லா ஸித்தாந்தங்களையும் கற்றுக்கொண்டு விட்டாரானாலும், இவை அவருடைய ஆத்மார்த்தமான இஷ்ட சாஸ்த்ரங்களாக இல்லை. இவற்றின் கொள்கைகளை அந்தரங்க பூர்வமாக அவர் அங்கீகரித்துவிடவில்லை. 'எல்லாம் தெரிந்த ஸர்வஜ்ஞனாக இருந்து கொண்டு, அத்வைதத்தைச் சொன்னாலே அதை லோகம் ஏற்றுக்கொள்ளும். இல்லாவிட்டால் தனக்குத் தெரிந்த ஒரு ஸித்தாந்தத்தை மட்டும் அதுவே ஸத்யம் என்று வீம்பாக ஸ்தாபிக்கப் பார்ப்பதாகத் தோன்றும். அதற்காகவே மற்ற சாஸ்த்ரங்களையும் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும்' என்பதற்காகத்தான் அவர் இதர ஸித்தாந்தங்களையும் படித்தது. அவச்யம் நேர்ந்ததாலேயே படித்தாரேயன்றி, அவற்றில் பற்று வைத்து இல்லை. பின் அவருக்கு எதில் ஆத்மார்த்தமான பற்றுதல் இருந்தது?

யத்தை : ஸௌக்யம் ததஸ்யாந்தர பவதமலாத்வைத வித்யாஸுகே (அ)ஸ்மின்

"அமல அத்வைத ஸுகே" : கொஞ்சங்கூட மலம் அழுக்கு, தோஷம், குற்றம் குறை-இல்லாமல் பரம ஸுகமாக, நித்யஸுகமாக இருப்பது எது என்றால் அது அத்வைதம்தான். ஆசைதான் அழுக்கு. மனஸ் உள்ள மட்டும் ஆசை இருக்கத்தான் இருக்கும். உசந்த பக்தியிலுங்கூட, 'ஸ்வாமியோடு சேரணும், கொஞ்சணும்'என்று ஆசை இருக்கத்தான் செய்யும். எத்தனை உசந்த பக்தியானாலும் அதைப் பண்ண மனஸ் இருந்துதான் ஆகணும்; ஆனபடியால் ஆசை இருந்துதான் தீரும். ஸத்ய ஸத்யமாக, 'ஈச்வரன் வேறில்லை, நாம் வேறில்லை' என்று அத்வைதமாக ஆகிறபோதுதான் மனஸ் இல்லை; ஆசை இல்லை வேறாக எதுவுமில்லாதபோது எதனிடம் ஆசை

வைப்பது? அதனால் ஆசை என்ற அழுக்கு, அரிப்பு இல்லாமல், ஸுகம் என்றால் அதுதான் ஸுகம் என்னும்படியாக இருப்பது அத்வைதம் ஒன்றில்தான்-"அமல அத்வைத வித்யா ஸுகே." " ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள் "என்று அதனால்தான் திருமூலர் பாடினார்.

மீமாம்ஸையில் கர்மாநுஷ்டானம் செய்யவேண்டுமென்ற ஆசை, ஸ்வர்க்கம் போகணும் என்று ஆசை. இப்படி ஒவ்வொரு தத்வத்திலும் ஏதாவது ஆசை அழுக்கு ஈஷிக் கொள்ளத்தான் செய்யும்.

அந்தத் தத்வங்களை அநுஸந்தானம் பண்ணி அநுபவிப்பதிலும் ஓரொருவிதமான ஸந்தோஷம் இருக்கவே இருக்கும். அப்படி இல்லாமலா ஒவ்வொரு ஸித்தாந்தத்தையும் பல பேர் ஏற்றுக்கொண்டு பின்பற்றியிருப்பது?

M«êûªñ¡ùªõ¡ø£™ ÜŠð® ñŸø R˜î£‰îƒè÷£™ ªðø,Ã®ò Ýù‰îƒèª÷™ô£º‹ Ü˜¬õî£ù‰ˆFŸ°œ«÷«ò Üì,è‹î£¡!Ü˜î¬ù»ñ£èˆ «î£¡Áõ¶ å«ó Šóyñ‹. Ü¬î˜ îMó «õP™¬ô. ÜŠð®ò£ù£™ Üˆ¬õîñ£è å¼õ¡ Šóýñ£ù‰î‹ ªðÁAø£ªù¡ø£™ Ü˜î¬ù Mî Ýù‰îƒèÀ‹ ÜõÂ,°œ ÜìƒAM´ ‹î£«ù?

மற்ற சாஸ்தரங்களினால் கிடைக்கக்கூடிய ஸௌக்யங்களையெல்லாம் உள்ளடக்கியதான அமலமான அத்வைத சாஸ்த்ரத்தின் பரம ஸௌக்யத்தையே ஆசார்யாள் தமக்குள்ளே அடக்கிக் கொண்டிருந்தார். தேவையை முன்னிட்டுப் வேறே எத்தனை பாடம் அவர் படித்தாலும் அவருக்கு ஆத்மார்த்தமான இஷ்ட பாடமாயிருந்தது, மற்ற பாடங்களின் லக்ஷ்யங்களையெல்லாமும் தனக்குள் கொண்டதான அத்வைத வித்யைதான்! " யத்-தை : ஸௌக்யம் தத் அஸ்ய அந்தர் அபவத் அமல அத்வைத வித்யா ஸுகே அஸ்மின் ."குருகுலவாஸம் பண்ணி வித்யாப்யாஸம் செய்துகொண்டிருக்கும் குழந்தையாசார்யாளின் ஹ்ருதயத்துக்குள்ளே அந்த அத்வைத ஸுகமே நிறைந்திருந்தது.

இதர வித்யைகளின் ஸுகங்களெல்லாம் அத்வைத

ஸுகத்திலேயே கிடைத்துவிடுகிறது என்பதற்கு (ச்லோகத்தின் கடைசி வரியில்) உதாஹரணம் கொடுத்திருக்கிறது : கூபே யோ (அ)ர்த்த : ஸ தீர்த்தே ஸுபயஸி விததே ஹந்த ந (அ)ந்தர்-பவேத் கிம் ?

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**புரியாத ஸ்லோகம் புரிந்தது !**

கீதையில் ஒரு ஸ்லோகம் அர்த்தம் புரியாமலிருந்து வந்தது. அர்ஜுனனுக்கு ஸ்வாமி ஞான யோகத்தை உபதேசம் பண்ணிக்கொண்டு போகிறபோது, இருக்கிற ஒரே ஸத்வஸ்து அழிவில்லாத ஒரே ஆத்மாதான் என்று சொல்லி, "இதொன்றிலேயே நிச்சய புத்தியுடன் பிடிப்பு வேண்டும்;இல்லாவிட்டால் மீமாம்ஸகர்கள் சொல்கிற மாதிரி வேதத்தின் கர்மகாண்டத்தில் உள்ள பலவிதமான பலன்களைத் தரும் பலவிதமான க்ரியா விசேஷங்களில் ஒன்று மாற்றி ஒன்றாக ஈடுபட்டு நிச்சய புத்தி ஏற்படாமலே வீணாய்ப் போவதாகத்தானாகும்"என்கிறார். "வேதம் (வேதம் என்பதை இங்கே வேதத்தின் ஞான காண்டமான வேதாந்தத்திலிருந்து பிரித்துக் கர்மகாண்டம் என்ற அர்த்தத்திலேயே சொல்கிறார். கர்ம காண்டமாகிய வேதம்) ஸத்வ-ரஜோ-தமோ குணங்களில் பலவிதமாகக் கிளைவிட்டுச் செல்லும் கார்யங்களையே விஷயமாகக் கொண்டது. நீ இந்த முக்குணங்களும் தொடாத ஆத்மாவில் ஆடாமல் அசையாமல் இருந்துவிடு" என்று சொல்லி ஒரு ச்லோகத்தைச் சொல்கிறார். புரியாத புதிராக

இருந்த ஸ்லோகம் :

**யாவாந் அர்த்த உதபாநே ஸர்வத : ஸம்ப்லுதோதகே ***

**தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத :**
****

அர்த்தம் இன்னவென்று தாத்பர்யமாகப் புரியாவிட்டாலும் வார்த்தைகளைச் சேர்த்துப் பார்க்கும்போது என்னவாகுமென்றால், "எவ்வாறு பரந்து விரிந்து கிடக்கிற தண்ணீர்க் காட்டில் ஒரு சின்ன ஊற்றின் ப்ரயோஜனம் கிடைக்குமோ அவ்வாறே ஞானவானான ப்ராஹ்மணனுக்கு எல்லா வேதத்திலேயுமாம்."

'எவ்வாறு'- 'அவ்வாறு'(யாவான்-தாவான்) எனற என்னமோ நமக்கு நன்றாக த்ருஷ்டாந்தம் கொடுத்துப் புரிய வைக்கிறமாதிரி பகவான் ச்ரமப்பட்டிருந்தாலும் நாமும் அர்த்தம் புரியாமல்தான் ச்ரமப்படுகிறோம்! 'சின்ன ஊற்றினால் பெறக்கூடிய பயனைப் பெரிய ஜல ப்ரவாஹத்திலிருந்து பெறலாம்'என்பது ச்ரமமில்லாமல் புரிகிறது. ஆனால் "எவ்வாறு இதுவோ அவ்வாறே நல்ல ஞானமுடைய ப்ராஹ்மணனுக்கு எல்லா வேதமும்"என்றால், (சிரித்து) எவ்வாறு இவ்வாறு சொல்கிறார் என்று புரியாமல் இருந்தது. அப்புறம் இந்த சங்கர விஜய ச்லோகத்தைப் பார்த்த பின்தான் அந்த உபமானம் இங்கே சிக்கலில்லாமல் வருவதால் இதைக் கொண்டு அதுவும் தெளிவாயிற்று.

இங்கே ஆசார்யாள் அநேக சாஸ்த்ரங்கள் படித்தாலும் அவற்றின் சின்னச் சின்ன ஆனந்தங்களெல்லாம் அத்வைதப் பேரானந்தத்தில் அமிழ்ந்து கிடப்பவைதான் என்று கண்டுகொண்டு உள்ளூர அதிலேயே அமிழ்ந்திருந்தார் என்று சொல்லிவிட்டு, " **கூபே யோ அர்த்த : ஸ தீர்த்தே ஸுபயஸி விததே ஹந்த ந அந்தர்-பவேத் கிம் ?**"என்று அதே உவமையை கேள்வி ரூபத்தில் போட்டு முடித்திருக்கிறது.

'கூபம்'என்றால் கிணறு. 'அதிலே என்ன ப்ரயோஜனமுண்டோ அது'என்பதை 'கூபே யோ அர்த்த:ஸ'என்று சொல்லியிருக்கிறது. 'ஒரு கிணற்றைக் கொண்டு என்ன ப்ரயோஜனம் பெறலாமோ அது பரந்து விரிந்து கிடக்கும் ஒரு சுத்தமான தீர்த்த ப்ரவாஹத்துக்குள்ளிருந்து கிடைக்காதா என்ன?' என்று கேட்டு முடித்திருக்கிறது. 'விதத'என்றால் 'பரந்து விரிந்த'. 'ஸு பயஸ்' - ï™ô üô‹. "AíŸPù£™ A¬ì‚°‹

ðò¡ ªðKò ïF Šóõ£ý^F™ A¬ì,è£î£ â¡ù?"

"ஹந்த" என்றால் ஸர்வ ஸாமான்யமான ஒரு விஷயம் தெரியாவிட்டால், 'அடக் கஷ்டமே! இதுகூடவா தெரியலை?' என்று கொஞ்சம் குத்தலாகவும், கொஞ்சம் பரிதாபமாகவும் கேட்பதாக ஆகும். "மாதோ!"என்று தமிழ்ச் செய்யுளில் வரும்.

கிணற்றிலிருந்து கிடைக்கும் பயன் மஹாநதியிலிருந்து கிடைக்குமென்று சொல்லியா தெரியணும்? 'அடக் கஷ்டமே, இதுகூடவா தெரியாது?' என்று ஆச்சர்யம்-வருத்தம், கேலி எல்லாமுந்தான்-உண்டாகிறாற்போலவே, ச்லோகத்தில் முதல் பாதியில் சொன்ன விஷயம். அத்வைதாநுபவத்தின் மூர்த்தியான ஆசார்யாள் வேறே என்னென்னவோ சாஸ்த்ரங்களெல்லாம் கரைத்துக் குடித்திருந்தாலும் அவருக்கு அவற்றிலிருந்தே ஆத்ம லாபமாக எந்த ஆனந்த நிறைவும் கிடைத்திருக்காது. அவற்றின் ஆனந்தங்கள் அவருக்கு ஒரு பொருட்டாகவே இருந்திருக்காது. இதைச் சொல்லித்தானா தெரியணும்? ஹந்த!ஏனென்றால் இந்த சாஸ்த்ரங்கள் தரக்கூடிய சின்னச் சின்ன ஆனந்தங்களெல்லாம் அமுங்கிப் போய்விடும் பேரானந்த நிறைவான-ஒரே நிறைந்த நிறைவான-அத்வைதத்திலேயல்லவா அவர் உள்ளூர அமிழ் ந்திருப்பவர்?ஆசார்யாள் பெற்ற அத்வைதானந்தத்திற்கு முன்னே ஏனைய சாஸ்த்ர ஆனந்தங்களெல்லாம் மஹாநதிக்கு முன்னே கிணறுகள் மாதிரிதான்.

நதிப் பாசனத்துக்கு வசதியில்லாத ராமநாதபுரத்தில் வேண்டுமானால் பெரிசாக ஆழமாக கிணறு வெட்டி வயலுக்கு இறைத்துக்கொள்ள வேண்டியிருக்கும். காவேரி டெல்டாவில் எந்த வ்யவஸாயியாவது ஆழக் கிணறு வெட்டிப் பாசனம் பண்ணுவானா? "கூபே யோ அர்த்த:ஸ தீர்த்தே ஸுபயஸி விததே..."தானே?

'ஸுபயஸி தீர்த்தே'என்று அர்த்த புஷ்டியுடன் போட்டியிருக்கிறது. 'ஊற்று இத்தனூண்டு இருந்து, ஸமுத்ரம் எத்தனாம் பெரிசோ இருந்தாலும் சுத்த தீர்த்தமுள்ள ஊற்று ஜலம்தானே பான யோக்யமாயிருக்கிறது? உப்பு ஸமுத்ரம் தாஹம் தீர்த்துக்கொள்ள ப்ரயோஜனப்படுமா?'என்று அவ்வைப் பாட்டி பாடி வைத்திருப்பதைக் குழந்தை நாளிலேயே படித்திருக்கிறோம்-மறந்துகூடப் போயிருக்கும்:

மண்ணீரும் ஆகாது ; அதனருகே சிற்றூறல் கடல் பெரிது

உண்ணீரும் ஆகிவிடும்.

அதனால்தான் இங்கே கிணற்றின் ப்ரயோஜனம் ஸமுத்ரத்தில் கிடைக்காதா என்று கேட்காமல், "ஸு பயஸி": "நல்ல ஜலம் நிரம்பிய" (உப்பு ஜலமில்லை; சுத்த ஜலம் நிரம்பிய) ப்ரவாஹத்தில் கிடைக்காதா என்று கேட்டிருக்கிறது! கிணற்று ஜலம்தான் அழுக்குள்ளது-தூர், கீர் வாரவேண்டி இருப்பது. மஹாநதியில் தூர்வார வேண்டி வருவதுண்டா?அப்படி, அழுக்கற்ற அமல ப்ரவாஹமாக அத்வைத வித்யை இருக்கிறது. மற்ற சாஸ்த்ரங்கள் கொஞ்சமாவது தூர் வார வேண்டிய கிணறுகள்தான்.

இதைத்தான் கீதையிலும் பகவான் சொல்லியிருக்கிறார். "ஸகல வேதங்களும்-அதாவது, வேதங்களில் விரிவாக உள்ள கர்ம காண்டம் முழுதும்-சின்னச் சின்ன ஊற்றுக்களைப்போலக் கொஞ்சம் கொஞ்சம் பலனைக் கொடுக்கும் அநேக கர்மாக்களைத்தான் சொல்லியிருக்கிறது. 'உதபானம்' என்றால் குடிக்க ஏதோ கொஞ்சம் ஜலம் தரும் சின்ன ஊற்று, "சிற்றூறல்". அந்தப் பலன்களில் ஆசைக்காகவே அவற்றிலே நீ போனாயானால் (அர்ஜுனனைப் பார்த்துச் சொல்கிறார்...) ஆசை அழுக்கு, முக்குண அழுக்கு எல்லாம் படிந்து வீணாய்ப் போய்விடுவாய். நானாவிதமான ஆசைப் பூர்த்திகளில் ஓடிக் கொண்டு ஒரு நிச்சய புத்தியும் பெறாமல் கெட்டுப்போவாய். அப்படிப் பண்ணாதே!குணாதீதமாக, ஆசைகள் அற்றுப் போகும் நிலையாக, உள்ள அத்வைத ஆத்மாவையே பிடித்துக்கொள். அது சிற்றூறல் அல்ல; எங்கே பார்த்தாலும் பரவியுள்ள பெரிய ஜல ப்ரவாஹம். அது இருக்கும்போது இவற்றை ஏன் பிடித்துக்கொள்ள வேண்டும்?ஊற்றுக்களின் ப்ரயோஜனத்தை எல்லாம் கூட்டினாலும் அதைவிட ப்ரவாஹத்தின் ப்ரயோஜனம்தானே பெரிசு?அப்படி கர்ம காண்டத்தில் செய்யும் பலவற்றின் ப்ரயோஜனங்களுக்கும் மேலானது ஞான காண்டத்தினால் பெறும் ஆத்ம ஸித்தி. ஞானமடைந்த ப்ராம்மணன்-'ஞானம் வேண்டாம்;கர்மாவே எல்லாம்!'என்று பண்ணிக்கொண்டு போகும் ப்ராம்மணனைச் சொல்லவில்லை;அதனால்தான், 'ப்ராஹ்மண்ய விஜானத :'என்று சொல்கிறேன்; இப்படிப்பட்ட ஞானவானான

ப்ராம்மணன்-இதை நன்றாகத் தெரிந்துகொண்டு அதற்காகவே நடக்கிறான்...."

"எவ்வாறு விரிந்து கிடக்கிற தண்ணீர்க் காட்டிலிருந்து சின்ன ஊற்றின் பயனைப் பெற்றுவிடலாமோ, அவ்வாறு ஞானவானான ப்ராம்மணன் அகண்டமாயுள்ள ஆத்மானுபவத்திலிருந்தே ஸகல வேத கர்மாக்களின் பயனையும் பெற்று விடுகிறான்"என்றுதான் பகவான் சொல்லியிருக்கிறாரென்று தெளிவுபட்டது.

கீதை ச்லோகத்திற்கு அர்த்தம் தேடித்தேடி சங்கர விஜய ச்லோகத்திலிருந்து கண்டு பிடிக்கும்படி இருக்கிறது! பகவான் சொன்னதை மனஸில் வைத்துக்கொண்டுதான் சங்கரவிஜயக்காரர் ச்லோகம் பண்ணியிருப்பார் போலிருக்கிறது!

ஸாரமென்னவென்றால்:பெரிய ப்ரவாஹமாக, மஹாநதியாக இருப்பது அத்வைதம். பாக்கி சாஸ்த்ரங்கள், தத்வங்கள் எல்லாம் ஊற்று, கிணறு, குட்டை, வாவி மாதிரி தான். அந்த மஹாநதியினால் உண்டாகிற ப்ரயோஜனத்துக்குள்ளேயே இந்த ஊற்று, கிணறு, குட்டை, வாவி முதலானவற்றால் உண்டாகும் சிறு சிறு ப்ரயோஜனங்களும் அடங்கி விடும். அத்வைத வித்யா மஹாநதியிலேயே திளைத்துக் கொண்டிருந்த ஆசார்யாள் அவதார 'பர்பஸ்'சிலதை உத்தேசித்து ஊற்று முதலானவற்றிலிருந்தும் ப்ரோக்ஷணம் பண்ணிக்கொள்கிறதுபோல மற்ற சாஸ்த்ரங்களைப் பூர்த்தியாக அப்யாஸம் செய்தார். அகஸ்த்யர் ஸமுத்ரத்தையே ஆசமனம் பண்ணின மாதிரி ஸகல சாஸ்த்ரங்களையும் ஸுலபமாக ஜீர்ணித்துக் கொண்டுவிட்டார்.

குருகுலவாஸ காலத்தில் ஆசார்யாள் தாம் பாடம் படித்ததோடு, கோலத்திற்கெல்லாம் பாடமாக ப்ரஹ்மசர்ய தர்மங்களை நன்றாக அனுஷ்டித்தார். குரு சுச்ருஷை பண்ணிக் கொண்டு, க்ரமமாக வீடு வீடாகப் போய் பிக்ஷைஎடுத்து வந்தார்.

---

## பொன்மழை பொழிவித்தது ;

## லௌகிகத்திலேயே ஆத்மிகமும்

அந்த மாதிரி ஒரு நாள் காலம்பற-அன்றைக்கு த்வாதசி என்று சொல்வார்கள்-ஒரு வீட்டுக்குப்போய், முறைப்படி, "பவதி!பிக்ஷாம் தேஹி!"என்று கேட்டார்.

அது பரம தாரித்ரிய தசையிலிருந்த ஒரு ப்ராம்மணனின் வீடு. அவனுக்கு அநுக்ரஹம் பண்ணவே பால ப்ரஹ்மசாரி அங்கே போனார் போலிருக்கிறது!பிக்ஷைஎன்று சாக்காகப் போய், பெரிய அநுக்ரஹ பிக்ஷைபோடுவதற்காக!

மலையாளத்தில் எல்லாரும் ஸுபிக்ஷமாயிருந்தார்கள். 'அத்ருதி'க்குள்ளேயே குடித்தனத்துக்கு வேண்டிய ஆஹார ஸாமான்கள் கிடைத்துவிடும் என்றெல்லாம் சொன்னால்கூட, கர்மா என்று ஒன்று இருக்கோல்லியோ?அப்படியிருந்தால் கல்பக வ்ருக்ஷத்திற்குக் கீழேயே இருந்தால்கூட தரித்ரம்தான் பிடுங்கித் தின்னும்! ஜன்மாந்தர கர்மாவினால் இந்த ப்ராம்மணன் ரொம்பவும் ஏழ்மை நிலையிலிருந்தான். வீட்டுக்கு அத்ருதி இருந்ததேயொழிய அதற்குள் மரமா, செடியா எதுவும் பயிராகாமல் பொட்டலாயிருந்தது!

உஞ்ச வ்ருத்திக்கு (வீடு வீடாக அரிசி தானத்துக்கு) அந்த ப்ராம்மணன் போவான். ஸாதாரணமாக உஞ்ச வ்ருத்தி ப்ராம்மணன் வந்தால் போடாமலிருக்க மாட்டார்கள். ஆனாலும் கர்மா ப்ரதிகூலமாக இருந்தால் எங்கேயும் பழி வாங்காமல் விடாது.-இவன் போகிற வேளை அஸந்தர்பமாயிருந்து காலிப் பாத்ரமாகவே திரும்ப வேண்டி வரும். எப்படியோ அந்த தம்பதி உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இருந்து வந்தார்கள்.

ஆசார்யாள் பிக்ஷைக்குப் போயிருந்த அன்றைக்கு வீட்டுக்கார ப்ராம்மணன் வீட்டிலில்லை. அவனுடைய ஸம்ஸாரம் மட்டுமே இருந்தாள்.

பிக்ஷைபோடுவதற்கு அந்த வீட்டில் எதுவுமில்லை.

ஆசார்யாளைப் பார்த்த மாத்திரத்தில், "அடடா, எப்படிப்பட்ட தேஜஸ்வியான ப்ரஹ்மசாரி!இவருக்கு பிக்ஷைபோட்டால் ஸகல புண்யமும் உண்டாகும்!"என்று நினைத்தாள். ஆனால் போடத்தான் மணி அரிசி இல்லை. அவள் நல்ல உள்ளம் படைத்தவள். 'இருக்கிறவர்களை'விட 'இல்லாதவர்'களுக்கே கொடுக்கிற எண்ணம் இருப்பதுண்டு. இவளுக்கு அப்படி இருந்தது. 'அபர ஸூர்யனாக நிற்கிற குழந்தைக்குக் கொடுக்கிறதற்கு இல்லையே ! இப்படியொரு தெய்வக் குழந்தை நம் ஆத்து வாசலில் வந்து நிற்கிறபோது 'இல்லை போ!'ன்னு சொல்லுவாளா?'என்று மிகவும் வேதனைப் பட்டாள். என்னவாவது கிடைக்குமா என்று தேடித் தேடிப் பார்த்தாள்.

ஒரு புரையில் அழுகிப்போன நெல்லிக்காய் ஒன்று அகப்பட்டது. அந்தப் ப்ராம்மணன் பரம ஸாது. தோப்பில், கீப்பில் உதிர்ந்து கிடக்கிறதுகளில்கூட நல்லதாக உள்ளதை எடுத்தால், "ஏண்டா, எடுத்தே?"என்று யார் சண்டைக்கு வருவார்களோ என்று இந்த அழுகலைப் பொறுக்கிக் கொண்டு வந்து வைத்திருந்தான். அதுவும் அவளுக்குத் தெரியாது. இப்போது தேடியதில் அகப்பட்டது. த்வாதசியன்று போஜனத்தில் நெல்லி அவச்யம் சேர்க்கவேண்டும். அதற்காக அவன் 'சேமித்து'வைத்திருந்த நெல்லி!

"போயும் போயும் இதையா தெய்வக் குழந்தைக்குப் போடுவது?"என்று மனஸு குமுறி வேதனைப்பட்டாள். ஆனாலும் "பவதி பிக்ஷாம் தேஹி!"கேட்டுவிட்ட ப்ரஹ்மசாரியை வெறுமே அனுப்பப்படாதே என்பதால் வாசலுக்குப் போனாள். அங்கே மஹா தேஜஸ்வியாக நிற்கிற பால சங்கரரைப் பார்த்துச் சொல்லி முடியாத வெட்கத்தோடும் அழுகையோடும் திரும்ப உள்ளே வந்தாள். வந்த பிறகு, ஐயோ, தெய்வக் குழந்தைக்கு ஒன்றும் போடாமலிருப்பதா?"என்று நினைத்து வாசலுக்குப் போனாள்.

இப்படி வாசலுக்கும் உள்ளுக்குமாகத் தவித்துத் தடமாடி விட்டு, கடைசியில், 'அழுகலோ, மட்டமோ? நம்மிடம் இருப்பதைத் தானே நாம் கொடுக்க முடியும்?'என்று ஒரு மாதிரி மனஸைத் தேற்றிக்கொண்டு அழுகல்

நெல்லிக்கனியை ஆசார்யாளுக்குப் போட்டாள். தாரை தாரையாகக் கண்ணால் ஜலத்தைக் கொட்டிக் கொண்டு போட்டாள்.

பொருளில் தரித்ரமாயிருந்தாலும் அவளுடைய மனஸு எத்தனை பெரியது, அது ஆகாசம் மாதிரி விரித்து அதிலிருந்து தன்னிடம் எத்தனை அன்பு பொங்குகிறது என்பதை ஆசார்யாள் கண்டுகொண்டார். அவர் மனசு அவளுக்காக உருகிற்று.

உடனே அவளுக்காக மஹாலக்ஷ்மியை ப்ரார்த்தித்து ஸ்தோத்ரம் பாடினார். அதுதான் "கனக தாரா ஸ்தவம்"â¡ð¶. Ü‰îŠ «ð˜ ãŸð†ìîŸ°, è£óí‹ H¡ù£™ ªîK»‹.

ஆசார்யாளின் வாக்கிலிருந்து வந்த முதல் ஸ்துதி இதுதான்.

அந்த ப்ராம்மண குடும்பத்தின் தாரித்யத்தைப் போக்கி, ஸம்பத்தை அநுக்ரஹிப்பதற்காக லக்ஷ்மியை ஸ்துதித்தார்.

ஆகாசத்திலிருந்து அசரீரி வாக்குக் கேட்டது. "இந்த தம்பதி பூர்வ ஜன்மத்தில் பாவம் செய்தவர்கள். அதற்கு தண்டனைதான் தாரித்ரியம். பாவம் தொலைகிற காலம் வருகிற வரையில் இவர்களுக்கு ஸம்பத்தைத் தருவதற்கில்லை" என்று லக்ஷ்மி அசரீரியாகச் சொன்னாள்.

உடனே ஆசார்யாள், "இவர்கள் இப்போதிருப்பதை விட ஜாஸ்தியாக வேண்டுமானாலும் ஜன்ம ஜன்மாந்தரங்களாகப் பாவம் பண்ணியிருக்கட்டும்!அப்படியிருந்தால் கூட, இத்தனை அன்போடு அகத்திலிருந்த ஒரே பக்ஷ்யமான நெல்லிக்கனியை இவள் எனக்குப் போட்டிருக்கிறாளே, இந்த அன்பும் த்யாகமும் எத்தனை புண்யமானவை?சாப்பாட்டுக்கே இல்லாதவள் எனக்கு பிக்ஷைபோட்ட பலன் எத்தனை பாபத்தையும் சாப்பிட்டுவிடுமே!அதோடு, எத்தனை கர்மாவானாலும் நான் ப்ரார்த்தித்ததால் போய்விடாதா?"என்று கேட்டார்.

"அம்மா மஹாலக்ஷ்மி! இவளுக்கு இருக்கிற மாதிரி உனக்கும் அன்பு நிறைய உண்டாச்சே!அதனால், ரொம்பக் கண்டிப்போடு ந்யாயம் மட்டும் வழங்காமல், அன்பைக் காட்டி அநுக்ரஹம் பண்ணு!" என்று ப்ரார்த்தித்தார். "இவர்களுடைய துஷ்கர்மம் கடும் கோடைக்கால

வெய்யிலாக ஸம்பத்து ப்ராப்தியை வற்றடிப்பதாகவே இருக்க்ட்டும். ஆனால் எந்தக் கோடையையும் தணிவிக்கக்கூடியதாக ஒரு பெரிய காற்று மழைமேகத்தைக் கொண்டு வந்து விடலாமோ இல்லியோ? (மலையாளத்தில் 'எடவப் பாதி'என்பதாக வைகாசி மாஸ மத்தியில் நல்ல வெய்யில் நாளிலேயே தென்மேற்கிலிருந்து காற்றடித்து நல்ல மேகங்களைக் கொண்டு வந்து மான்ஸூன் கொட்ட ஆரம்பித்து விடும்!) இவர்களுடைய துஷ்கர்ம வெய்யிலைப் போக்க உன்னிடமுள்ள தயை எனற தயை என்ற காற்றினால் ஸம்பத்து மேகத்தை அடித்துக்கொண்டு வந்து கொட்டிவிடேன்!.... உன்னுடைய கடாக்ஷமாகிய கார்மேகத்தை தயை என்ற காற்றினால இவர்கள் பக்கம் திருப்பிவிட்டுப் பொருள் என்ற மழையைப் பொழியேன்!"என்று சொன்னார்.

ஏழை ப்ராம்மண ஸ்த்ரீக்காக அவர் லக்ஷ்மியிடம் முறையிட்டதற்கு "கனகதாரா ஸ்தவ"த்திலேயே வீஸீமீ மீக்ஷீஸீணீறீ மீஸ்வீபீமீஸீநீமீ இருக்கிறது:

தத்யாத் தயாநுபவநோ த்ரவிணாம்புதாராம்

அஸ்மிந் அகிஞ்சந விஹங்க சிசௌ விஷண்ணே *

¶wè˜ñ è˜ñ‹ Üðcò Có£ò Éó‹

நாராயண-ப்ரணயிநீ நயநாம்புவாஹ : **

ªð¼ñ£Oì‹ G¬ø‰î Š«ó¬ñ¬ò ¬õˆF¼‚°‹ î£ò£ó£ùî£™ " ï£ó£òí ŠóíJm !"â¡Á ÃŠH†´„ ªê£™Aø£˜. ÃŠH´õ¶ ï£ô£‹ õKJ™. â´ˆî¾ì¡ "îˆò£ˆ"-"ªè£´ˆ¶ Mì†´‹!"â¡Á ÜõÀ¬ìò Ü¼†è£ŸÁ Ü®ˆ¶ ñ¬öò£è ú‹ð¶ˆ îó «õ‡®ò¬îŠ ðO„ªê¡Á ªîKMˆ¶ M´Aø£˜.

"தயாநுபவனோ" -தயையாகிய காற்றோடுகூடிய; "நயனாம் வாஹ:"-நேத்ரமாகிய மேகம். அதாவது கடாக்ஷம். லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்பட்டுவிட்டால் அமோகமாக ஸம்பத்துப் பொழிந்து விடும். கர்மா பாதகமாயிருக்கும்போது அந்தக் கடாக்ஷம் எந்தப் பக்கமோ பார்த்துக் கொண்டிருக்கும். கருவிழி, மை இட்டுக் கொண்டிருப்பது இரண்டும் சேர்ந்து கறுப்பிலேயே பளபளவென்று ஜ்வலிப்பது அந்தக் கடாக்ஷம்.

அதனால் கார்மேகமாகச் சொல்வது வழக்கம். அந்த மேகம் எந்தப் பக்கமோ இருக்கிறது-ரொம்ப தூரத்தில். அதனாலென்ன?எங்கேயோ அந்தமான் தாண்டியிருக்கிற மழைமேகத்தை மான்ஸூன் காற்று நம் ஊருக்கு அடித்துக் கொண்டு வருகிறதா, இல்லையா?அப்படியொரு பெரிய காற்றாகத் தாயாருடைய தயை இருக்கிறதே!தயைக் காற்று கடாக்ஷமேகத்தை அடித்துக் கொண்டுவந்து இந்த துஷ்கர்மக்காரர்களிடமுந்தான் கொட்டட்டுமே!இம்மாதிரி தகுதி இல்லாதவர்களுக்கும் நல்லது செய்யத்தானே தயை, தயை என்று ஒன்று அவளிடம் இருக்கிறது? தகுதியுள்ளவர்களுக்குத் தகுதிக்காகவே செய்துவிட வேண்டியதுதான். 'தயை' காட்ட வேண்டியதில்லை. லௌகிகத்திலுங்கூட தகுதிப்படி நமக்குக் கிடைக்கவேண்டியதைக் கேட்கும் போது 'தயவு காட்டுங்கள்!' என்று சொல்வதில்லையே! 'அவன் தயவு இவனுக்கு வேண்டியிருக்கிறது' என்றால் இவனுடைய தகுதியைப் பார்க்காமலே அவன் உபகாரம் பண்ணுவானென்று அர்த்தம். வெய்யிலில் வறண்டு போன பூமிக்கு "தகுதி"என்ன இருக்கிறதென்று பார்த்தா மான்ஸூன் காற்று அங்கே மேகத்தைக் கொண்டுவந்து சேர்க்கிறது?

"î¬ò, è£Ÿ«ø£´Ã® à¡ èì£þ«ñèñ£ù¶ ˆóMí£‹¹ î£ó£‹ î˜ò£ˆ. 'ˆóMí‹' â¡ø£™ ªê™õ‹. 'Ü‹¹î£ó£' :'Ü‹¹', 'ÜŠ¹'Þó‡´‹ å¡Áî£¡-üô‹ â¡Á Ü˜ˆî‹. "Ü‹¹î£ó£"-üô‹ î£¬óò£è õ˜SŠð¶, Üî£õ¶ ñ¬ö. "à¡ èì£þ«ñè‹ è¼¬í, è£ŸPù£™ ªè£‡´õóŠð†´Š ªð£¼œ î£¬ó¬ò õ˜S,è†´‹!"

பொருளைப் பொன என்றே சொல்வது வழக்கம். 'பொன்னும் பொருளும்'என்றே சேர்த்துச் சொல்கிறோம். ரூபாயே ரீஷ்றீபீ வமீ ணீஸீபீணீக்ஷீபீ-படிதானே (பொன்னின் கையிருப்பை வைத்துத்தானே) இருந்திருக்கிறது? 'த்ரவிணம்'என்றால் பொதுவாக 'பொருள்'என்பதோடு 'பொன்'என்றும் அர்த்தம் உண்டு. ஸ்வர்ணம், ஹேமம், ஹிரண்யம், கனகம் என்பவை போல த்ரவிணம் என்றும் தங்கத்துக்கு ஒரு பேர். "த்ரவிண (அம்பு)தாரா"என்று இங்கே ஆசார்யாள் வாக்கில் வந்திருப்பதுதான் ஸ்தோத்ரத்தின் பேரில் "கனகதாரா"என்று இருக்கிறது!

"à¡ èì£þ«ñè‹ Ü¼†è£Ÿ«ø£´ Ã® õ‰¶ ˆóMíî£¬ó¬òŠ

ªð£Nò†´‹!" â¡ø£™ ò£¼,°?v«î£ˆó‹ ð‡µ‹ ð£ô
êƒèó¼,è£?Üõ¼,° âîŸ°?ªðKò ªê™õ, °´‹ðˆF™
õ‰îõó™ôõ£ Üõ˜?Ü¶¾ñ¡QJ™ ŠóyñêKò£è º¼°ôõ£ú‹
ð‡E, ªè£‡®¼Šðõ˜ ðí«ñ ¬õˆ¶,ªè£œ÷Šðì£«î!

அவருக்கில்லை. வேறே யாருக்கு? அதைச் சொல்கிறார்: " அஸ்மின் அகிஞ்சன விஹங்க சிசௌ விஷண்ணே ". அப்படியென்றால், 'மனஸ் சோர்ந்து வாடிப் போயிருக்கிற இந்த ஏழையான பறவைக் குஞ்சுக்கு'என்று அர்த்தம்.

மநுஷ்யர்களுக்கு என்றே சொல்லவில்லை!பக்ஷிக்கு, அதிலும் வளராமல் குஞ்சாகவுள்ள பக்ஷிக்கு என்கிறார்!'விஷண்ணே'-வாடிச் சோர்ந்துபோன; 'அஸ்மின்'-இந்த (கிட்டத்தில் இருக்கும் ப்ராம்மண ஸ்த்ரீயைக் காட்டிச் சொல்வதால் 'இந்த'என்கிறார்); 'அகிஞ்சன'-கொஞ்சங் கூட உடைமை இல்லாத. 'கிஞ்சன', 'கிஞ்சித்'என்றால் 'கொஞ்ச ம்போற'. 'கிஞ்சன'தான் 'கொஞ்ச'மாச்சோ என்னவோ? 'அகிஞ்சன'என்றால் அந்தக் கொஞ்சங்கூட இல்லாத முழு தரித்ரமாக என்று அர்த்தம். 'விஹங்கம்'என்றால் பக்ஷி, 'விஹங்க சிசு'என்றால் குஞ்சாக உள்ள பக்ஷி. 'விஹங்க சிசௌ':பக்ஷிக் குஞ்சினிடத்தில். "பக்ஷிக் குஞ்சினிடத்தில் உன் கடாக்ஷமேகத்தால் பொருள் மழையைக் கொட்டுவாயாக."

ப்ராஹ்மண பத்னியை உத்தேசித்துத்தான் சொல்கிறாரென்பது ஸ்பஷ்டம். ஆனால் ஏன் அப்படிச் சொல்லாமல் பக்ஷிக் குஞ்சு என்றார்?

அந்தச் சின்ன வயஸிலேயே அவருக்கு இருந்த கவி உணர்ச்சியால்தான் அப்படிச் சொன்னார்!ஆசார்யாளின் க்ரந்தங்களைப் பார்க்கப் பார்க்க நமக்கு ஆச்சர்யமாயிருக்கும் எத்தனை விஷயம் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கும் மஹாபுத்திமானாக அவர் இருந்திருக்கிறாரென்று மட்டுமில்லை;கவி என்ற ரீதியிலேயே எப்படியெல்லாம் வார்த்தைகளைக் கோத்திருக்கிறார், எப்படி அலங்காரங்களை (உபமானம் முதலான அணிகளை)க் கையாண்டிருக்கிறார், வார்த்தை விநோதங்கள் என்னவெல்லாம் பண்ணியிருக்கிறார், கவிகள் தங்களுக்குள் ஒரு 'ட்ரெடிஷ'னாக-மரபாக-பின்பற்றும் கருத்துக்களையெல்லாம் தாமும் எப்படிப்

பின்பற்றியிருக்கிறாரென்று ஆச்சர்யமாயிருக்கும். நிர்குண ப்ரஹ்மம் என்று கல்பனா ரஹிதமாக, வெட்ட வெளியாயிருப்பதைப் பிடித்துக் கொண்டிருந்தாலும் நூதன கல்பனைகளைத் தம்முடைய நூல்களில் கொட்டிக் கவி திலகமாக இருந்திருக்கிறார்!

குழந்தையாய் அவர் அநுக்ரஹித்த இந்த முதல் ஸ்தோத்ரத்திலேயே இப்படிப் பல இருப்பதில், ஜீஷீமீயீவீநீ மீகூஷீணீபீவீமீவீஷீஸீ ஒன்றின்படியே பக்ஷிக் குஞ்சு என்று "விஹங்க சிசு"என்று, சொல்லியிருக்கிறார்.

நம்முடைய கவி மரபிலே சகோரம், சாதகம் என்று இரண்டு பக்ஷிகளைச் சொல்வார்கள். இப்போது நாம் லோகத்தில் பார்க்க முடியாத இரண்டு விசித்ரமான பக்ஷிகள்! 'சகோர ம்'என்பது சந்த்ரிகையை (நிலவொளியை) மாத்ரமே ஆஹாரம் பண்ணும் பக்ஷி. வேறே எதுவும் சாப்பிடாது.

'ஸௌந்தர்ய லஹரி'யில் அம்பாளின் மந்தஹாஸ காந்தியை வர்ணிக்கும்போது சகோரத்தைச் சொல்கிறார். 'மதி வதனம்' என்பது வழக்கமல்லவா? அம்பாளுடைய மதி வதனத்திலிருந்து சந்த்ரிகையாக அவளுடைய சிரிப்பொளி வீசுகிறது. அந்த சந்த்ரிகையை சகோர பக்ஷிபானம் பண்ணிற்று. சொல்லி முடியாத தித்திப்பாக இருந்தது. இப்படியிருந்தால் திகட்டிவிடுமல்லவா?தித்திப்பில் அதன் அலகு மரத்தே போய்விட்டதாம்!திகட்டாமலிருக்க அப்பப்போ ஒரு வாய் புளிக் கஞ்சி குடிக்கலாமே என்று பார்த்தோம். ஆகாசத்திலே சந்த்ரனிலிருந்து நிலா அடித்துக் கொண்டிருந்தது. அதைச் அந்தச் சகோரம் ருசி பார்த்ததாம். அம்பாளுடைய முக சந்திரனிலிருந்து பெருகும் மந்தஸ்மித நிலாவின் தித்திப்பு ஏறிய அதன் அலகுக்கு ஆகாசத்துச் சந்த்ரனின் நிலா (அதற்குத் தேவைப்பட்ட) புளிக் கஞ்சி மாதிரியே இருந்ததாம்!மரத்துப்போன உணர்ச்சியும் போயிற்றாம்!அதறகப்புறம் தான் சகோர பக்ஷிநிலாவைக் குடிப்பது என்று ஏற்பட்டது என்று விநோதக் கல்பனையாகப் பாடியிருக்கிறார்.

வாஸ்தவத்தில் சந்த்ரிகையில் அம்ருதமே நிறைந்திருக்கிறது. அந்த அம்ருதத்தையும் புளிக் கஞ்சியாக்கிவிடும் அப்பேர்ப்பட்ட மாதுர்யத்தோடு அம்பிகையின் மந்தஹாஸ காந்தி இருக்கிறது என்று அங்கே சொல்லியிருக்கிறார்.

"கரஞ்ஜிக தியா"-'கஞ்சி என்ற எண்ணத்தால்'(நிலாவைச் சகோரம் குடிக்கலாயிற்று) என்கிறார். மலையாளத்தில்தான் கஞ்சி குடிப்பது ஸகல ஜாதியாருக்கும் வழக்கமாயிருக்கிறது. 'மலையாளம் கஞ்சி'என்றே இருக்கிறது.

'ஸௌந்தர்ய லஹரி'ரொம்ப வருஷத்துக்கு அப்புறம் ஜகதாசார்யாளாகக் கீர்த்தி பெற்ற பிறகு பண்ணினது. அதில் சகோரத்தைச் சொன்னவர் பால்யத்தில் மஹாலக்ஷ்மியைப் பாடினபோது சாதகத்தைச் சொல்லியிருக்கிறார். 'விஹங்க சிசு'என்பது சாதக பக்ஷியின் குஞ்சைத்தான்.

சாதகத்தைப் பற்றி, என்ன விசித்ரமென்றால், அதற்குத் தொண்டையிலே த்வாரம் இருக்கும். இப்படியிருந்தால் எப்படி சாப்பிடுவது?அலகினால் எதைச் சாப்பிட்டாலும் அது தொண்டை ஓட்டை வழியாக வெளியில் வந்து விடுமல்லவா?நாம் கையை வளைத்து வாயில் ஆஹாரம் போட்டுக் கொள்கிறதுபோல அது அலகை வளைத்து ஓட்டைக்குள் ஆஹாரத்தைப் போட்டுக்கொள்ளவும் முடியாது.

அதனால், இந்தப் பக்ஷிக்கு ஆஹாரம் என்னவென்றால் ஆகாசத்திலிருந்தே நேரே அந்தக் கண்ட த்வாரத்துக்குள்ளேயே விழுந்து வயிற்றுக்குள் போய்விடக் கூடிய மழைத் துளிதான். மழை இல்லாவிட்டால் அது பசியில் வாடவேண்டியதுதான். 'மழைக்காக ஏங்கும் சாதகம் போல் என்று அதனால்தான் சொல்வது.

லக்ஷ்மி த்ரவிண தாரையை வர்ஷிக்கவேண்டும் என்று சொன்னவுடன் பால ஆசார்யாளின் கலியுள்ளத்துக்கு, 'மழை தாரையைத் தவிர வேறே ஆஹாரமே இல்லாத சாதக பக்ஷிஇருக்கிறதே! அதைத்தான் இவளுடைய த்ரவிண வர்ஷத்திற்காக ஏங்கி வாடிக்கொண்டிருக்கிற இந்த ப்ராஹ்மண குடும்பத்திற்கு ரூபமாகச் சொல்ல வேண்டும்' என்று தோன்றி, அப்படியே பாடிவிட்டார். வாயால் சாப்பிடுவது கர்மாவை அநுபவிக்கிறமாதிரி, கர்மா ப்ரதிகூலமாயிருப்பதால், வாயால் முழுங்கினது தொண்டை ஓட்டையால் ஒழுகி விடுகிற மாதிரி, இவர்களுக்கு ஸம்பத்து சேராமல் நழுவிப் போய்விடும். கர்மாவைப் பார்க்காமல் அம்பாள் க்ருபை பண்ணும்போது, நேரே தொண்டை ஓட்டைக்குள்ளேயே ஆஹாரத்தைப் போட்டு உள்ளே

விடுவதுபோல, ஸம்பத்து நழுவாமல் சேர்ந்துவிடும்.

பக்ஷிஎன்று மட்டும் சொல்லாமல் சிசுவான பக்ஷிஎன்று, குஞ்சு என்று சொன்னார். குழந்தைக்குத்தான் பசி தாங்கவே தாங்காது. பசித்தால் அது 'வீல்', 'வீல்'என்று கத்துகிற மாதிரி நாம் கத்துகிறோமோ?அதோடு, ஒரு சின்னக் குழந்தை கஷ்டப்படுகிறது என்றால் எந்தக் கல் மனஸும் இறங்கும். லக்ஷ்மியோ 'தாயார்'என்றே சொல்லப்படுபவள். அதனால் குழந்தை, விஹங்க சிசு என்று சொல்லிவிட்டால் அவள் நிச்சயம் மனஸுருகி அருளுவாளென்று அப்படிச் சொன்னார்.

குழந்தையாயிருந்த ஆசார்யாள் அந்த ப்ராஹ்மண ஸ்த்ரீயைக் குழந்தையாகப் பார்த்து அவள் தீமீலீணீறீயீ-ல் வேண்டினார். அவளுக்கு அவளுடைய பதிக்கு (பதி, பத்னி என்று பேதமே இல்லாமல் பாப-புண்யங்கள் இரண்டு பேருக்கும் சேர்ந்துதான்) கர்மா கெட்டதாயிருப்பதால் அநுக்ரஹிப்பதற்கில்லையென்று லக்ஷ்மி சொன்னாளள்ளவா? அதனால் அவள் சார்பில் வாதாடினார் : 'துஷ்கர்ம-கர்மம் சிராயதூரம் அபநீய நயநாம்புவாஹ:த்ரவிணாம்புதாராம் தத்யாத்'. "துஷ்க(ளீணீ)கர்ம-க(ரீலீணீ)ர்மம்"-கெட்ட கர்மாவான கோடை காலம். கர்மம் என்றால் நல்ல வேனிற்காலம். "அப்படி இவர்களுடைய துஷ்கர்மம்தான் தரித்ரமாக வறுத்தெடுக்கிறது என்கிறாய்!அதனால் ஒன்றும் நிவர்த்தி கிடையாதா?கெட்ட கர்மாவின் 'நேச்சர்'கொளுத்தி எடுப்பது என்றால் உன்னுடைய கடாக்ஷத்தின் 'நேச்சர்'குளுகுளு என்று மழைமேகம் போல இருப்பதாயிற்றே!அது எங்கேயோ, இது எங்கேயோ இருக்கிற தென்பாயானால் அதை இங்கே அடித்துக் கொண்டு வரத்தான் தயை என்ற காற்று இருக்கிறதே!அந்த க்ருபா வேகத்தைவிட ஒன்று உண்டா?லோகம் தபிக்கும் போது கொட்டும் கோடை மழை மாதிரி, இந்தச் சாதகக் குஞ்சு தவிக்கிற இப்போது அருளைக் கொட்டு. சாதகக் குஞ்சு ஆஹாரத்துக்கு மட்டுமே தவிப்பது. இந்த தம்பதியோ பொருளில்லாமால் ஆஹாரம், வஸ்த்ரம், வீடு எல்லாவற்றுக்குமே தவிக்கிறார்கள். வீடு என்று பொக்கையும் போறையுமாக இடிந்து விழுகிற மாதிரி ஏதோ இருப்பது தான். இந்தக் குழந்தையை வறுத்தெடுக்கும் வெயிலான ஜன்மாந்தர பாபத்தை உன் குளிர்ந்த கடாக்ஷமானது, "அபநீய"-நிவர்த்தி பண்ணி,

"சிராய"-எத்தனையோ காலமாகச் சுமந்து வந்த பாபத்தை எங்கே போச்சு என்று தெரியாமல் நிரந்தரமாக, "தூரம் அபநீய"-ரொம்ப தூரத்துக்கு விரட்டி, 'த்ரவிணாம்புதாராம் தத்யாத்'-த்ரவ்ய மழையைக் கொடுக்கட்டும்"என்றார்.

தாரித்ரிய நிவ்ருத்தி என்று லோக வாழ்க்கைக்கான ஸமாசாரத்தை வேண்டுகிறாற்போல வேண்டும்போதே கர்ம நிவ்ருத்தி, பாப நிவ்ருத்தி என்பதான ஆத்ம ஸம்பந்தமான வேண்டுதலையும் கலந்து கொடுத்துவிட்டார்!

பணம், படிப்பு, எல்லாம் அதற்குத்தான் (ஆத்ம விஷயமாகக் கொண்டு விடுவதற்குத்தான்). காமம் உள்பட எல்லாமே அதற்குத்தான் ஸ்ருஷ்டியில் வைத்திருக்கிறது. ஸ்ருஷ்டியில் யாரும் சிரஞ்ஜீவியாக இருக்கமுடியாது-பகவானே ரொம்ப அபூர்வமாக அப்படி வைத்த ரொம்பக் கொஞ்சம் பேரைத் தவிர, பாக்கிப் பேர் செத்துத்தான் போகணமென்று ஸ்ருஷ்டி நியதி. ஆனால் செத்துப் போகும் போது கர்மா பாக்கி தீர்ந்து ஸீவீறீறீ தீணீறீணீஸீநீமீ-ஆக இருப்பதில்லையே!அப்படியிரு ந்தால்தானே ஸ்ருஷ்டியிலிருந்து விடுபட்டுப் பரமாத்மாவுடன் சேரலாம்!ஆனால் அப்படியில்லையே! இந்த மாதிரி இருக்கும்போது அந்த ஆவிக்கு இன்னொரு சான்ஸ், அதுவும் தப்பினால் அப்புறமும் பல சான்ஸ்கள் என்று ஜன்மா ஜன்மாவாகக் கொடுத்துத்தானே அவற்றிலாவது கர்மாவைக் கழித்துக்கொள்ள வாய்ப்புக்கள் தரவேண்டியிருக்கிறது?இப்படி ஒரு ஜீவன் ஜன்மாக்கள் எடுக்கணுமென்றால் அதற்காக ஒரு அப்பா, அம்மாவுக்குக் காமம் இருந்தால்தானே முடியும்?அதாவது, காமம் என்று வைத்திருப்பதும் இன்னொரு ஜீவன் கடைத்தேறச் 'சான்ஸ்'கொடுக்கும் நல்ல உத்தேசத்தில்தான் என்று தெரிகிறது. இப்படித்தான் பணத்தால், சாப்பாட்டால், வீட்டால், வைத்தியத்தால் சரீர ரக்ஷணை செய்துகொள்வதும், படிப்பால் அறிவு அபிவ்ருத்தி செய்துகொள்வதுங்கூட ஒவ்வொரு ஜ்டேஜ் வரை ஆத்ம விஷயமாகப் போவதற்கே உதவி செய்யத்தான். என்ன அளவில், எந்த, ஸ்டேஜ் வரையில் என்று தெரியாமல் நாம் 'மிஸ்-யூஸ்'பண்ணிக் கொள்வதில்தான் ஒரே அனர்த்தமாகிறது. "அர்த்தம் அனர்த்தம்"என்று ஆசார்யாளே "பஜ கோவிந்த"த்தில் இதைச் சொல்கிறார். அது "மூட மதி"க்கு 'அட்ரஸ்'பண்ணியது ("பஜ கோவிந்தம், மூட மதே"!) என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டு

ம்!புத்திசாலியாயிருந்தால் லௌகிகம் என்று இருக்கிறவைகளைக் கொண்டே, அவற்றைத் தக்க அளவில் தக்க காலம் வரை 'யூஸ்'பண்ணிக்கொண்டே, ஆத்மிகத்துக்குப் போய்ச் சேரலாம்.

நம் சாஸ்த்ரங்கள் எல்லாம் அப்படி வழிகாட்டுபவைதான். ஆசார்ய க்ரந்தங்கள் எல்லாமும் அப்படித்தான். பணம் கேட்டு லக்ஷ்மி ஸ்துதி பாடினாலும், வ்யாதி போகணுமென்று ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்கு "புஜங்கம்"பாடினாலும் ஆத்ம லக்ஷ்யத்தை அவர் மறக்கவே மாட்டார். அதற்காகவேதான் இவற்றைக் கேட்பது. அன்னம் போடும் அன்னபூர்ணேச்வரியிடம் "பிக்ஷாம் தேஹி!"என்று போய் நிற்கிறபோதும் "ஞான வைராக்ய ஸித்த்யர்த்தம்"என்றுதான் முடிப்பார்.

'அகிஞ்சன'என்று பணத்தில் ஏழ்மையைச் சொல்லும் போதும் 'கர்ம-கர்மம்'என்று அதையும் ஆத்ம ஸம்பந்தமான கர்மத்தோடு சேர்த்துக் காட்டி, ஏழ்மை நிவ்ருத்தி மாத்ரமல்ல வேண்டியது, கர்ம நிவ்ருத்தியும்தான் என்று புரியவைத்திருக்கிறார்.

இந்த ஸ்தோத்தரத்தில் ஒரு பாடப்படி 18 ஸ்லோகம், இன்னொன்றின்படி 20-21 ச்லோகம் என்று இருந்தாலும் இந்த ஒரு ஸ்லோகத்தில்தான் செல்வத்துக்கு அதிதேவதையான லக்ஷ்மியிடம் பொருட் செல்வம் வேண்டுவது. அடுத்த ஸ்லோகத்தில் வேண்டுமானால், "இஷ்டாம் புஷ்டிம் க்ருஷீஷ்ட மம"என்று தாம் விரும்பிக் கேட்கிற (தமக்காக அல்ல, அந்த ப்ராம்மண தம்பதியை முன்னிட்டுக் கேட்கிற) செழிப்பைத் தரட்டும் என்று சொல்லும்போதும் தனத்துக்கான ப்ரார்த்தனையை லீவீஸீமீ செய்திருப்பதாக வைத்துக்கொள்ளலாம். மற்றபடி ஸ்தோத்ரம் முழுக்கப் பெருமாளும் தாயாரும் எப்படிச் சேர்ந்து சேர்ந்து அநுக்ரஹ மூர்த்திகளாக இருக்கிறார்கள், (அவர் கார்மேகம் போல வ்யாபித்து இருக்கும்போது, மேகத்துக்கு நடுவில் மின்னுகிற மின்னலைப்போல் இவள் எப்படி அவருடைய வக்ஷஸ்தலத்தில் ஸ்வர்ண காந்தியுடன் ப்ரகாசிக்கிறாள்-என்பது போன்ற விஷயங்கள்), ஸர்வ சக்தியான பராசக்தியின் ஒரு ரூபமாகவே இருக்கப்பட்ட லக்ஷ்மி இன்னும் என்னென்ன மூர்த்திகளாக இருக்கிறாள்,

லக்ஷ்மீ ரூபத்தில் அவளுடைய வர்ணனை என்ன, பெருமை என்ன-என்றிப்படியான ஸமாசாரங்கள்தான் இருக்கின்றனவே தவிர திரவியத்திற்கான ப்ரார்த்தனை இல்லை.

இப்படி அநேக விஷயங்களை, கவிதை அழகுகளை, பக்தி பாவங்களைத் தெரிவித்து ச்லோகங்கள் சொல்லிக்கொண்டு போகும்போது ஒரு ச்லோகத்தில்தான், எதற்காக ப்ரார்த்திக்க ஆரம்பித்தாரோ அந்த விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். 'லோக மாதாவிடம் போய் ரொம்ப ஒன்றும் முறையிட வேண்டியதில்லை. துளிப்போறக் காட்டி விட்டாலே போதும்'என்கிற ரீதியில் பாடியிருக்கிறார். அதிலேயே முறையீட்டை ஸாரமாக வடித்துக் கொடுத்து விட்டார்! 'ரொம்ப தீனமாக, பக்ஷிக் குஞ்சு மாதிரி ஸ்வயமாக ஒன்றும் பண்ணிக்கொள்ளத் தெரியாமலிருக்கும் இந்த அம்பாளுக்கு அருள் மழையைக் கொட்டு' என்று சொல்ல வந்ததையும்கூட, 'அம்மாள்'என்று சொல்லாமலே வ்யங்கியமாகத் தெரிவித்திருப்பது ரஸமானது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**(முதல் துதியிலேயே**

**பிற்கால உபதேசங்களின் வித்து)**

(இதில் இரண்டு விஷயம் தெரிவிக்கணும். குழந்தையாக ஆசார்யாள் பாடிய இந்த முதல் ஸ்தோத்ரத்திலேயே பிற்காலத்தில் அவர் பெரிதாக 'டெவலப்'பண்ணிய இரண்டு கொள்கைகளுக்கு வித்து இருக்கிறது. ஒன்று-அவர் கர்மாவை பக்தியில் சேர்த்தது. 'கர்மா தானே பலன் தரவில்லை. ஈச்வரன்தான் பல தாதா. அவனுக்கே ஸகல கர்ம பலனையும் அர்ப்பணம் பண்ணிவிடு. அப்போதுதான் இந்தச் சின்னப் பலன் போய் சித்த சுத்தி என்ற ஆத்மாத்மார்த்தமான பெரிய பலன் கிடைக்கும்'என்றது. இது கர்ம மார்க்கக்காரர்களைப் பக்தி மார்க்கத்தில் சேர்ப்பதற்கு சொன்னது. இன்னொன்று-பக்தி மார்க்கக்காரர்களிடம், 'என்னுது,

உன்னது'என்று தெய்வ பேதம் பார்க்காமல், ஏதோ ஒன்றிடம் தான் உனக்கு இயல்பாக பக்தி சுரக்கிறதென்பதால் அதையே நீ இஷ்ட மூர்த்தி என்று பக்தி பண்ணினாலும் மற்றவற்றைத் தாழ்த்தியாக நினைக்காமல், எல்லாம் ஏக பரமாத்மாவின் ரூப பேதங்களே என்ற உணர்ச்சியை ஏற்படுத்திக்கொள்'என்று சொன்னது. முதலில் இப்படி ஸ்வாமிகளுக்குள் பேதமில்லை, எல்லா ஸ்வாமியும் ஒரே பரமாத்மாதான் என்று ஆரம்பித்தால்தான் அப்புறம் எல்லா ஆஸாமியுங்கூட அதுதான் என்ற ஞானத்துக்குப் போக முடியும். அதாவது, இது பக்தி மார்க்கக்காரர்களை ஞான மார்க்கத்தில் சேர்ப்பதற்காகச் சொன்னது. இந்த இரண்டு அபிப்ராயங்களையும் கனகதாரா ஸ்தோத்ரத்தில் பார்க்கிறோம்.

சாதகக் குஞ்சைச் சொல்லி ஸம்பத்து தாரை வேண்டியதற்கு அடுத்த ஸ்லோகத்தில்

**இஷ்டா விசிஷ்ட மதயோபி யயா தயார்த்ர**

**த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டப-பதம் ஸுலபம் லபந்தே**

என்று சொல்லுமிடத்தில் இஷ்டிகள் என்பதான யஜ்ஞ கர்மாக்களிலேயே உயர்ந்த அபிப்ராயத்தை வைத்து, அவற்றை ஸ்வர்க்க பலனை விரும்பிச் செய்கிறவர்களும் மஹாலக்ஷ்மியின் கருணாகடாக்ஷத்தால்தான் அந்தப் பலனை ஸுலபமாக அடைகிறார்களென்று சொல்கிறார். அவர்களுக்கு அப்படித் தெரியாமல் தங்கள் கர்மாவே பலன் தருகிறதென்று நினைத்தாலும், லக்ஷ்மி என்று ரூபம் கொடுத்துச் சொல்கிற பகவத் சக்திதான் அதை வாஸ்தவத்தில் பண்ணுவிக்கிறதென்று ஆசார்யாள் சொல்வது இங்கே ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

ஸகல தெய்வமும் ஏக பரமாத்மாவின் ரூப பேதங்களே என்று அவர் தெரிவிப்பது இதற்கு அடுத்த ஸ்லோகத்தில்:

**கீர்தேவதேதி கருட-த்வஜ-ஸுந்தரீதி**

**சாகம்பரீதி சசி சேகர-வல்லபேதி ***

**ஸ்ருஷ்டி-ஸ்திதி-ப்ரலய-கேலிஷு ஸம்ஸ்திதாயை**

தஸ்யை நமஸ்த்ரிபுவநைக-குரோஸ்-தருண்யை **

ஒரே பரமாத்மா த்ரிமூர்த்திகளாகி ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரம் (ப்ரளயம்) என்று விளையாட்டுப் பண்ணும்போது ("கேலிஷு") அவர்களுக்குள்ளே பத்னி ரூபத்தில் ஒவ்வொரு சக்தியாக இருப்பது மஹாலக்ஷ்மியேதானென்று சொல்கிறார். அப்படியுள்ள சக்திகளின் பெயர்களை கீர்தேவதை, கருட த்வஜ ஸுந்தரி, சாகம்பரி, சசிசேகர வல்லபா என்கிறார். மூன்று மூர்த்திகளுக்கு நாலு சக்திகளைச் சொல்லியிருக்கிறது!ஏன்?

ப்ரம்மா, விஷ்ணு, சிவன் என்கிறபடி முதலில் ப்ரம்ம பத்னி-'கீர்தேவதை'என்னும் வாக்தேவியான ஸரஸ்வதி; அடுத்தாற்போல் கருடக் கொடியுடைய மஹாவிஷ்ணுவின் ரூப லாவண்யம் மிக்க பத்னியான 'கருட த்வஜ ஸுந்தரி'(ஸ்தோத்ரத்தின் நேர் மூர்த்தியான லக்ஷ்மி);அப்புறம் ருத்ர பத்னிகளாக மட்டும் இரண்டு பேர் 'சாகம்பரி'என்றும் சசி சேகர வல்லபா என்றும் இருக்கிறது!

சாகம்பரி யாரென்று தேவீ புராணங்களில் இருக்கிறது. ஒரு பஞ்ச காலத்தில் அம்பாள் தன்னுடைய தேஹத்திலிருந்தே கறிகாய்கள், கீரை வகைகள் எல்லாவற்றையும் முளைக்கப் பண்ணி ஜனங்கள் பறித்துச் சாப்பிடுமாறு க்ருபை பண்ணினாள். அப்போது அவளுக்கு ஏற்பட்ட பேர்தான் சாகம்பரி, இவளும் சிவனுடைய சக்தியே.

"ஸ்ருஷ்டி-ஸ்திதி-ப்ரளய"என்று சொல்லியுபடி (ப்ரளயமான) ஸம்ஹாரத்துக்கு உதவி பண்ணாமல் ஸ்திதிக்கு உதவி செய்வதாக அல்லவா இவள் ஜனங்களுக்கு ஆஹாரத்தைக் கொடுத்து ரக்ஷித்திருக்கிறாள்?த்ரிமூர்த்திகளுக்கு த்ரிசக்திகள் என்றில்லாமல் நாலாவதாக ஒன்றை ஏன் இப்படிச் சொல்லணும்?

பொருத்தமாகத்தான் சொல்லியிருக்கிறார். ஜனங்களின் மனப்பான்மை ஆசார்யாளுக்கு நன்றாகத் தெரியும் தனலக்ஷ்மி, தான்ய லக்ஷ்மி அஷ்ட லக்ஷ்மிகளை சொன்னாலும், ஜனங்கள் 'லக்ஷ்மி'என்றால் தனத்தைத்தான்

நினைப்பார்களென்று அவருக்குத் தெரியும். ஆனால் ரூபாயைச் சாப்பிட முடியுமா?ஆனபடியால் சாப்பாடு போடுகிற அம்மாவாகத் லக்ஷ்மியைக் குறிப்பிட்டுச் சொல்லாமல் விடக் கூடாது என்று அவருக்கு இருந்தது. அதனால்தான் சாகம்பரியைச் சொன்னார். அப்புறம் ப்ரளயத்திற்கு ஸ்வாமியான ருத்ரனின் சக்தியாக 'சசி சேகர வல்லபா'என்றார் அப்படியென்றால் சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டிருப்பவரின் ப்ரிய பத்னி. ஸம்ஹார மூர்த்தியே மஹேச்வரனாக மாயா நாடகம் பண்ணும் போதும், ஸதா சிவனாக மோக்ஷானுக்ரஹம் பண்ணும்போதும்கூட சசி சேகரராகத்தான் இருக்கிறார். அதனால் 'சசி சேகர வல்லபா'என்னும்போது ப்ரளய சக்தி, திரோதான (திரோதானம், பஞ்ச க்ருத்யம் முதலியவற்றின் விளக்கம் "குருமூர்த்தியும் த்ரிமூர்த்திகளும்" எனும் உரையில் 'ருத்ரன்-சிவன் (சிவம், நடராஜா)-மஹேச்வரன்'என்ற பிரிவில் காணவும்) சக்தி, அநுக்ரஹ சக்தி எல்லாமும் அவளேதான் என்று வைத்துக்கொள்ளாலாம். இவளேதான் ப்ரம்ம சக்தி, விஷ்ணு சக்தி ஆகியவர்களும் என்று ஆரம்பத்தில் சொல்லிவிட்டதால் பஞ்ச க்ருத்யங்களுக்கும் மூலமான பரப்ரஹ்ம சக்தி ஒன்றுதான் இத்தனை மூர்த்தியுமாகியிருக்கிறது என்ற அத்வைதம் வந்து விடுகிறது.

லக்ஷ்மிதான் ஸரஸ்வதி, பார்வதி ஆகிய எல்லாரும் என்று இங்கே சொல்லிவிட்ட பிறகு சிவ-விஷ்ணுக்களை மட்டும் வித்யாஸம் மாதிரி விட்டுவிடலாமா? அதனால்தான் முடிக்கிற இடத்தில் 'த்ரிபுவநைக குரோஸ் தருணி'என்று சொன்னது. 'த்ரிபுவநங்களுக்கும் குருவாக இருக்கப்பட்டவர் மஹாவிஷ்ணு. அவருடைய ப்ரிய பத்னியான சக்தி லக்ஷ்மி'என்று அர்த்தம். தக்ஷிணாமூர்த்தியின் மூல குரு ஸ்வரூபத்திலிருந்து அவதாரம் பண்ணினவர் மஹா விஷ்ணுவை குருவாகச் சொல்லும்போது சிவ-விஷ்ணு அபேதமும் வந்துவிடுகிறது. குருவின் சக்தி என்று லக்ஷ்மியை சொல்லும்போது அவள் ஏதோ பணம், கிணம் கொடுப்பவள் மட்டுமில்லை, ஞான சக்தியாகவுமிருக்கிறவள் என்று காட்டியதாகிறது.

நம் குரு பரம்பரை நாராயணனிலிருந்துதானே ஆரம்பிக்கிறது நாரயணனிலிருந்துதானே ஆரம்பிக்கிறது? அதனால் 'த்ரி

புவந குரு'என்றார். அஷ்டோத்தரங்களைப் பார்க்கும்போது சிவாஷ்டோத்தரம் மாதிரி க்ருஷ்ணாஷ்டோத்தரம், ராமாஷ்டோத்தரம் ஆகியவற்றிலும் "ஜகத்குருவே நம:"என்று வருகிறது.

குரு என்று-த்ரிபுவன குரு என்று-இங்கே ஆசார்யாள் சொல்லும்போது ஞானோபதேசம் பண்ணுபவர் என்றில்லாமல் மூவுலகத்திற்கும் பிதாவாக இருப்பவரென்றும் அர்த்தம் செய்யலாம். தாயார், தாயார் என்று லக்ஷ்மியைச் சொல்வதால் மூவுலகத் தகப்பனாரின் பத்னி என்று சொன்னதாகவும் கொள்ளலாம்.

லக்ஷ்மி அஷ்டோத்தரத்தில் "ப்ரஹ்ம-விஷ்ணு-சிவாத்மிகாயை நம :"என்று கடைசி நாமாவுக்கு இரண்டு நாமா முன்னால் வருவதன் தாத்பர்யத்தையே இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.

இதற்கு அடுத்த ஸ்லோகம்

ச்ருத்யை நமோ(அ)ஸ்து சுப-கர்ம-பல-ப்ரஸூத்யை

ரத்யை நமோ(அ)ஸ்து ரமணீ-குணார்ணவாயை *

சக்த்யை நமோ(அ)ஸ்து சத-பத்ர-நிகேதநாயை

புஷ்ட்யை நமோஸ்து புருஷோத்தம-வல்லபாயை **

ச்ருதிதான் ஆசார்யாளுக்கு மூச்சு. அவைதிகம், அரைகுறை வைதிகம் ஆகியவற்றை விரட்டி, சுத்தமான ச்ருதி மார்க்கத்தையே ஸ்தாபனம் செய்ய வந்தவரல்லவா? "ச்ருதி-ஸ்ம்ருதி-புராணாநாம் ஆலயம்"என்றே அல்லவா அவரை ஸ்தோத்ரிப்பது?அப்படிப்பட்ட ச்ருதி வடிவமாக, வேத ஸ்வரூபிணியாகத் தாயாரைச் சொல்லாமல் தாம் பண்ணிய முதல் ஸாஹித்யத்தை முடிப்பாரா?"ச்ருத்யை நமோஸ்து"என்று ஆரம்பிக்கிறார். ஞானாவதாரமானாலும் வைதிக கர்மாநுஷ்டானத்திற்கு அதற்குரிய இடத்தைப் பெற்றுக் கொடுப்பதில் பாடுபட்டவரல்லவா?அதனால் (லக்ஷ்மியை) ச்ருதி ஸ்வரூபமாகச் சொன்னவுடன், அதில் சொல்லியிருக்கும் சுபமான கர்மாநுஷ்டானங்களின் பலனைப் பிறப்பிக்கிறவள் அவள்தான் என்கிறார் : "சுப கர்ம பல ப்ரஸூத்யை". இங்கேயும் மீமாம்ஸகர்களுக்கு பதில்

இருக்கிறது!

நல்ல குணங்களெல்லாம் ஸமுத்ரம் மாதிரி நிறைந்த இன்பங்களின் உருவமாகத் தாயார் இருப்பதை "ரத்யை நமோஸ்து, ரமணீய குணார்ணவாயை"என்று சொல்கிறார்.

எல்லாவற்றுக்கும் அடிப்படையாக நமக்கு ச்ருதி வேண்டும். நாம் செய்யும் கர்மங்கள் ச்ருதி ப்ரயுக்தமாக இருக்கவேண்டும். அப்போதுதான் அவை சுப கர்மாவாக இருக்கும். அப்படிப்பட்ட கர்மாவினாலேயே இன்பங்களை உலக இன்பங்களோ, ஆத்மாத்தமான இன்பங்களோ, எதுவானாலும் பெறவேண்டும்.

குணம்-கர்மம் எனற இரண்டு. ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்பட்டவை. "குண-கர்மங்களாலேயே நான்கு வர்ணங்களை (ஜாதிகளை) ஸ்ருஷ்டித்திருக்கிறேன்"என்று கீதையில் (பகவான்) சொல்கிறார். குணப்படியே கர்மா போகும். அதை சாஸ்த்ரத்தில் வகுத்துக் கொடுத்துள்ளபடி செய்து ஈச்வரார்ப்பணம் செய்தால் அந்த சுப கர்ம விசேஷத்தால் எப்படிப்பட்ட குணமானாலும் அது பக்வமாக ஆகும். முதலில் 'சுப கர்ம பலனைத் தருபவள்' என்று சொல்லி, அடுத்தாற்போல 'நல்ல குணங்களுக்கு ஸமுத்ரமாயிருப்பவள்'என்று ஒன்றோடொன்று பிணைத்துச் சொல்லியிருக்கிறார்.

அப்புறம், சக்திதானே எல்லாவற்றுக்கும் தேவை?அதுவும் அவள்தானென்று சொல்லி நமஸ்காரம் தெரிவிக்கிறார்: "சக்த்யை நமோஸ்து". 'சத பத்ர நிகேதனா'என்றால் கமலாஸனை, தாமரைப் பூவுக்குள் உட்கார்ந்திருப்பவள். 'சத பத்ரம்'என்றால் நூறு இதழ் (கொண்ட தாமரை) என்று கணக்காக நினைக்க வேண்டாம். சதம் என்பது எந்தப் பெரிய நம்பரையும் குறிப்பது. ஸஹஸ்ர தள பத்மம் என்றும் சொல்வதுண்டு. நம் சிரஸில் பராசக்தி ஸஹஸ்ர தள பத்மத்தில்தான் பரசிவத்தோடு கலந்தவளாக இருக்கிறாள் என்று குண்டலிநீ யோகத்தில் இருக்கிறது. இங்கே ஆசார்யாளும் பத்மவாஸினியாக லக்ஷ்மியைச் சொல்லும்போது "சக்தி"-"சக்த்யை நமோஸ்து:"-என்றே சொல்கிறார்!

"¹w†¬ò ï«ñ£v¶". «ð£SŠHù£™ ãŸð´‹ G¬ø«õ ¹w®.

# ðKð£ôù Í˜ˆFJ¡ ðˆQò£è, àôèˆ¶, °ö‰¬îèÀ,ªè™ô£‹ î£ò£ó£èŠ «ð£Sˆ¶ õ÷˜Šðõœ Üõœî£¡.

ரதி (இன்பம்), சக்தி, புஷ்டி எல்லாவற்றையும் தரும் மந்த்ரங்கள் ச்ருதியில்தான் அடங்கியிருக்கின்றன. அதனால் முதலில் அதைச் சொல்லி அப்புறம் இவற்றைச் சொன்னார். நம்முடைய திறமை (சக்தி), நிறைவு (புஷ்டி), ஆனந்த அநுபோகங்கள் (ரதி) ஆகிய எல்லாம் வேத வழியில் ஏற்பட்டதாக இருக்க வேண்டுமென்று, (இப்படிச்) சொன்னார்.

'ஒவ்வொரு ப்ராணிக்குள்ளேயும் ஆனந்த ஸ்வரூபமாக இருப்பது நீதான்!ஒவ்வொரு ப்ராணிக்குள்ளேயும் சக்தி ஸ்வரூபமாக இருக்கிறது நீதான்! நிறைவு என்கிறதாக இருக்கிறதும் நீதான்!'என்று சொல்லி, ஒவ்வொன்றுக்கும் 'நமோஸ்து, நமோஸ்து'என்று நமஸ்காரம் தெரிவிக்கிறார்.

முடிவாக மஹாவிஷ்ணுவுக்கே உரிய அஸாதாரண நாமாவான புருஷோத்தமன் என்பதைச் சொல்லி அவனுடைய சக்தியாக அவள் இருப்பதை "புருஷோத்தம வல்லபாயை"என்கிறார்.

பிற்காலத்தில் பெரிய ஸித்தாந்தமாக டெவலப் செய்த கருத்துக்களையும் உள்ளே வைத்து குழந்தையாசார்யாள் இப்படி பாடி முடித்தார்.

பாடி முடித்ததுதான் தாமஸம்!மஹாலக்ஷ்மி அந்தக் குடிசையைச் சுற்றிப் பாழாயிருந்த அத்ருதி முழுக்க ஸ்வர்ணத்தாலான நெல்லிக் கனிகளாகவே ஒரு முஹூர்த்த காலம் வர்ஷித்துவிட்டாள்!பளபளவென்று வர்ஷித்து விட்டாள்!

அவதாரக் குழந்தைக்குப் போட்ட ஒரு அழுகல் நெல்லி பழம் அனந்த கோடி மடங்கு தங்கப் பழங்களாகத் திரும்பின!

முதலில் ப்ராம்மண ஸ்த்ரீ கண்ணீர் தாரையைக் கொட்டினாள். அதைப் பார்த்து ஆசார்யாளின் வாக்கிலிருந்து ஸ்தோத்ர தாரை கொட்டிற்று. அதைக் கேட்டு லக்ஷ்மி கனகதாரையைக் கொட்டி விட்டாள்.

அந்த ஸ்தோத்ரத்துக்குக் கனகதாரா ஸ்தோத்ரம் என்றே பேர் ஏற்பட்டது. '(கனகதாரா) ஸ்தவம்'என்றும் சொல்வார்கள்.

ஸ்தவம் என்றாலும் ஸ்தோத்ரந்தான்.

ஆசார்யாள் மனஸால் நினைத்தாலே போதும், லக்ஷ்மி அதன்படிப் பண்ணியிருப்பாள். ஆனாலும் அவர் வாக்கினால் இப்படி ஒரு ஸ்துதி வந்து, தான் கேட்டு ஸந்தோஷப்படணும்,-தான் ஸந்தோஷப்படுவது மாத்ரமில்லை, ஜனங்களெல்லாம் ஸந்தோஷப் படணும்;அதைப் பாராயணம் பண்ணி அவர்களும் பொருள் கஷ்டம் நீங்கி, கர்மக் கஷ்டமும் நீங்கி ஸுபிக்ஷமாக இருக்கணும்-என்றே திவ்ய லீலையாக நடத்தினாள். "த்ரவிணாம்புதாராம் தத்யாத்"என்று சொன்னவுடனேகூட அவள் கனகதாரையைக் கொட்டிவிடாமல், அப்புறமும் அநேக ஸ்லோகங்கள் அழகு அழகாக அவர் செய்த பிற்பாடே அநுக்ரஹம் பண்ணினாள்.

நாமும் இந்த ஸ்தோத்ரதைச் சொல்லி தாரித்ரிய நிவ்ருத்தியும், "கர்ம கர்மம்"என்று சொன்ன பாப தாபத்திலிருந்து நிவ்ருத்தியும் பெறுவோம்!ப்ராம்மண தம்பதியை சாக்காகக் காட்டி நம் எல்லாருக்குமென்றே ஆசார்யாள் இந்த ஸ்தோத்ரத்தை அநுக்ரஹம் பண்ணியிருக்கிறார்.

ஐஹிகமாக (இக வாழ்க்கையில்) ஒரு பலனைத் தருகிற ஸ்தோத்ரம் என்னால் அது 'பாபுல'ராகத்தானிக்கும். அப்படி ஆசார்ய க்ரந்தங்களில் 'கனகதாரா ஸ்தவம்' ப்ரஸித்தமாக இருக்கிறது. ஆனாலும் இஹத்தோடு பரத்தையும் அதில் ஆசார்யாள் குழைத்துத்தான் கொடுத்திருக்கிறார். இதே போல, ரோக நிவாரணம் தருகிறதென்பதால் 'ஸுப்ரஹ்மண்ய புஜங்க'மும், ஸகல கார்ய ஸித்திக்குமானது என்பதால் 'ஸௌந்தர்ய லஹரி'யும் யீணீஷீஜீutuஉ-ஆக இருக்கின்றன. அவையெல்லாமும் அதோடுகூட, ஆத்மாவைக் கடைத்தேற்றுவதாகவும் இருப்பவை. ஆச்சர்யமென்னவென்றால், ஒரே வைராக்யமாக உபதேசம் பண்ணும் "பஜ கோவிந்தம்"தான் எல்லாவற்றைக் காட்டிலும் ப்ரஸித்தி பெற்றிருப்பதாகும்!மற்றதெல்லாம் ஆசார்யாள் நமக்காகச் கொஞ்சம் விட்டுக் கொடுத்தும் பண்ணியவை. "பஜ கோவிந்தம்"தான் அவர் மனஸை அப்படியே பூர்ணமாக ப்ரதிபலிப்பது. அந்த மனஸின் மஹிமைதான் அந்த ஸ்தோத்ரத்திற்கு ஏற்பட்டிருக்கும் ப்ரஸித்தி!

பவுன் மழையாகக் கொட்டிற்று. ஆசார்யாள் அதில் ஒரு

மணிகூடத் தொடாமல் அந்த ப்ராம்மண தம்பதிக்கென்றே அநுக்ரஹித்துவிட்டுப் போய்விட்டார்.

பொன்மழை பெற்ற வீடு காலடிக்குக் கொஞ்ச தூரத்திலுள்ள ஒரு கிராமத்தில் இருந்திருக்கிறது. அழுகல் பழத்தைப் போட்டுத் தங்கப் பழங்களாகப் பெற்றவர்கள் வாழ்ந்த அந்த இடத்தை இப்போது 'பழம் தோட்டம்'என்றே சொல்கிறார்கள். அங்கே 'ஸ்வர்ணத்துமனை'என்றே ஒரு குடும்பம் இருக்கிறது. அதைச் சேர்ந்தவர்கள் கனகதாரை பெற்ற தமப்தியின் வம்சத்தில் வந்தவர்களென்று நம்பிக்கை இருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**மாறி ஓடிய ஆறு !**

எட்டாவது வயஸில் வித்யாப்யாஸம் பூர்த்தி பண்ணி அகத்துக்கு ஆசார்யாள் திரும்பினார்.

தகப்பனார் காலமாகி விட்டார். (சிவகுரு சிவபதம் அடைந்து சங்கரரின் உபநயனத்திற்கு முன்பு என்றும், பின்பு என்றும் இருவிதமாக நூல்களில் கூறப்பட்டிருக்கிறது.)

தாயாருக்கு ஆதரவாக ஆசார்யாள் கொஞ்சநாள் இருந்து வந்தார். தாயாருக்கு எவ்வளவு முக்யமான ஸ்தானம் தரவேண்டும், அவளிடம் எவ்வளவு அன்பு காட்ட வேண்டும் என்று அவர் நடத்திக் காட்டியிருக்கிறார். வயஸூம் ஆகி-ரொம்ப வருஷம் புத்ர பாக்யமில்லாமலிருந்து அப்புறம் வேண்டிக்கொண்டுதானே ஆசார்யாளைப் பெற்றாள்?-பதியையும் இழந்திருந்த அம்மாவுக்கு வேண்டிய பணிவிடைகள் பண்ணினார்.

ஒரு நாள் அவளுக்கு ரொம்ப அசக்தமாக இருந்தது. அப்போதெல்லாம் ஆல்வாய்ப்புழை இப்போது போல் காலடியிலேயே ஓடிக்கொண்டிருந்தது. புண்ய தீர்த்தம் என்பதால் அந்த அம்மாள் அங்கே போய்த்தான் தினமும்

ஸ்நானம் செய்து வருவது வழக்கம். இப்போது தேஹ அஸௌக்யத்தால் போகமுடியவில்லை. வருத்தப்பட்டாள். "இன்னிக்குப் புண்யகாலம். புண்ய தீர்த்த ஸ்நானம் பண்ணமுடியாமலிருக்கே!"என்று குறைப்பட்டுக் கொண்டாள்.

"நான் ப்ரார்த்தனை பண்ணுகிறேன்" என்று ஆசார்யாள் சொல்லி அப்படியே செய்தார்.

ஈச்வராவதாரமானாலும் பக்தராகவே நடித்த அவதாரம் இது. அதனால்தான் முன்பு லக்ஷ்மியிடம் ப்ரார்த்தனை பண்ணினார்.

'அம்மா உடம்பு ஸரியாகி நதிக்குப் போகணும் என்று ப்ரார்த்தித்தால் அவளொருத்திக்கு நன்மை செய்ததோடு முடிந்துவிடும். அதற்குப் பதில் எங்கேயோ ஜன நடமாட்டமில்லா காட்டு வழியில் போய்க்கொண்டிருக்கும் நதியே இந்த க்ராமம் வழியாகப் போகும்படி ப்ரார்த்தித்துக் கொண்டால் எல்லா ஜனங்களுக்கும் நல்லதாகுமே!'என்று நினைத்தார்.

நதியை க்ருஹத்துக்குக் கிட்டே வரும்படி வேண்டிக் கொண்டார்.

அப்படியே வந்தது!

வரும் வழியில் ஒரு க்ருஷ்ணன் கோவில் இருந்தது. நதி தடம் மாறி வந்ததில் கோவிலுக்கு ஜீர்ணம் ஏற்பட்டுவிட்டது.

எந்த நல்லதானாலும் கஷ்டமாகவும் கொஞ்சம் கலந்து தானே வருவதாயிருக்கிறது?

ஒரு ப்ராம்மணக் குழந்தை ரொம்பச் சின்ன வயஸிலேயே ஸகல வித்யைகளையும் ஸ்வீகரித்தது, கனகதாரை பொழிய வைத்தது, தாயாருக்காக நதியைத் திரும்பிவிட்டது முதலான விஷயங்கள் சுற்றுப் புறங்களிலெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவ ஆரம்பித்து, அந்த பால்யத்திலேயே அவருக்கு நிரம்ப மரியாதை ஏற்பட்டது. ஸமாசாரங்கள் அந்த ப்ரதேசத்து ராஜாவின் காதுக்குப் போயிற்று. தர்சனம் செய்ய வந்தான். ஆசார்யாள் அவனிடம் சொல்லிக் கோவிலுக்கு ஜீர்ணோத்தாரணம் பண்ணுவித்தார். லோகத்திற்கே

தர்மோத்தாரணம் செய்ய வந்து, கணக்கில்லாத ஆலயங்களில் ஸாந்நித்யத்தைப் புதுப்பித்துக் கொடுத்து, வைதிக ஆராதனையை ஏற்படுத்தியவர் ஆசார்யாள். அதற்கு பால்யத்திலேயே தம்முடைய பிறந்த ஊரில் இப்படி இனாகுரேஷன் நடத்திவிட்டார்!

அந்த க்ருஷ்ணன் கோவில் இப்பவும் காலடியில் இருக்கிறது. ஆற்றுப் படுக்கையிலிருந்து கொஞ்சம் மேடான பூமியிலிருக்கிறது.

ஆசார்யாள் காலடியை விட்டு ஸந்நியாஸியாகப் புறப்படும்போதுதான் கோவில் ஜீர்ணோத்தாரணம் பண்ணி க்ருஷ்ணரை மறுபடி ப்ரதிஷ்டை பண்ணினதாகவும் கதை சொல்வதுண்டு.

இப்போது காலடியில் நதி ஓடுவதற்குக் கொஞ்ச தூரம் தள்ளியே அங்கே ஒரு காலத்தில் அது ஓடியதற்குத் தடயம் தெரிகிறதென்று சொல்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**உலகப் பணி அழைத்து !**

**மனித தர்மமும், அவதார மர்மமும் !**

லோகத்துக்கெல்லாம் பண்ணவேண்டிய கார்யத்தை ஆரம்பித்துவிட வேண்டுமென்று ஆசார்யாள் நினைத்தார். பிறந்தது முதற்கொண்டே அடி மனஸில் அந்த எண்ணம்தான் அவருக்கு ஸதாகாலமும் இருந்து வந்தது. ஆனாலும் 'ப்ரைவேட் லைப்'மாதிரி ப்ரம்மசர்ய நியமங்களைப் பண்ணுவதும், மாத்ரு சுச்ரூஷை பண்ணிக்கொண்டிருப்பதும்கூட லோகத்திற்குப் பாடமாகத்தானே என்பதால் செய்துவந்தார். அதற்காக உலகம் பூரா அம்மாக்கள் இருக்கும்போது இந்த ஒரு அம்மாவுக்கே பணி செய்து கொண்டிருந்தால் போதுமா என்று நினைக்க ஆரம்பித்தார். 'நாம் ஒரு தாயாருக்கு மட்டும்

குழந்தை இல்லை. லோகத்துக்குக் குழந்தை, லோகம் பூராவுக்கும் செய்யவேண்டியதை ஒரு தாயாரை முன்னிட்டு எத்தனை காலம் ஒத்திப் போட்டுக்கொண்டே போவது?லோகம் ஒரேயடியாகக் கெட்டுப் போயிருக்கிறதென்றுதானே வந்தோம்? ஜ்வரம் முற்றிக்கொண்டே போகிறபோது மருந்து கொடுக்கத் தாமஸம் செய்யலாமா?'என்று நினைத்தார்.

என்ன மருந்து?ஒன்று பண்ணாமல் சும்மா இருக்கும் மருந்து!அந்த நிலையை அடைவிக்கும் அத்வைத மருந்து! 'எல்லோருக்கும் சும்மா இருக்கிற தத்வத்தைச் சொல்வதற்காக ஒரு நிமிஷம்கூட சும்மாயில்லாமல் சுற்றவேண்டுமென்று வந்தோம்!எத்தனை காலம் இந்த க்ராமத்தையே சுற்றி வந்துகொண்டிருப்பது?'என்று மனஸிலே ஒரு முடிவு பண்ணிவிட்டார்.

தாயாருக்கு ஒரே குழந்தை என்பதால் அவளுக்கு ஆனதைச் செய்யாமலிருந்தால் எவ்வளவு தப்பு, அவள் எவ்வளவு கஷ்டப்படுவாள் என்று கொஞ்ச காலம் மாத்ரு ஸேவை செய்தார். அப்புறம் லோகத்தின் கஷ்டத்தைப் பார்த்து அதைத் தீர்ப்பதற்கானதைச் செய்யாமலிருப்பது எவ்வளவு தப்பு என்று நினைத்து அம்மாவை விட்டு, வீடு வாசலை விட்டு ஸந்நியாஸியாகப் புறப்பட முடிவு பண்ணினார்.

'வயஸானவள், விதந்து, இந்த ஒரு பிள்ளையை விட்டால் வேறே நாதி இல்லாதவள்-அவளுக்குக் குழந்தையாகச் செய்யவேண்டியதைச் செய்யாமல் விட்டுவிட்டுப் போகிறவர் லோகத்துக்குக் குழந்தை என்று மட்டும் அத்தனை பேருக்கும் என்ன ஸாதித்துவிடமுடியும்?'என்று தோன்றலாம்.

மநுஷ்ய ரீதியில் பார்த்தால் ஸந்தேஹந்தான் வரும்.

ஆனால் ஈச்வர லீலை, அவதாரம் என்று வரும்போது நமக்குப் புரியாமல், பதில் சொல்லத் தெரியாமல் அநேகம் நடக்கிறது. அவனுக்குத்தானே தெரியும், யாருக்கு என்ன கர்மம், எவருக்கு எத்தனை நாள் எப்படி (தன் அவதார காலத்தில்) பண்ணணும், எங்கே கருணை காட்டணும், எங்கே கருணை இல்லாத மாதிரி லோகத்துக்குத் தோன்றினாலுங்கூட

அப்படித்தான் நிர்தாக்ஷிண்யம் மாதிரிப் பண்ணணும்-என்பதெல்லாம்? அப்பா, அம்மா, பெண்டாட்டி, பிள்ளை என்று தனி மநுஷர்களுக்காகவா அவதரிப்பது?இல்லையோல்லியோ?லோகத்துக்காகத்தான் அவதாரம். அதிலே ஒரொரு தனி மநுஷ்யாளுக்கும் அவர்களுடைய பூர்வ புணயத்திற்காக, தபஸுக்காக, ப்ரார்த்தனைக்காகப் புத்ரன் என்றும், பர்த்தா என்றும், ஸகா என்றும் கொஞ்சம் பண்ணுவதுண்டு;அவ்வளவுதான். தசரதருடைய புத்ரகாமேஷ்டிக்காகப் புத்ரனாகப் பிறந்து ராமர் கொஞ்சகாலம் அவருடைய பிள்ளையாக வளர்ந்தார். அப்புறம் அவதார கார்யம் கூப்பிட்டுவிட்டது. தசரதருடைய புண்யமும் தீர்ந்து போயிருந்தது.

அதனால், நமக்குப் பார்த்தால் ரொம்பக் கடுமையாகத்தான் தோன்றினாலும், அவர் அழுது அழுது ப்ராணனை விட்டாலும் ஸரி என்று ராமர் வனவாஸத்துக்குப் போய்விட்டார். ப்ராணனை விட்டதுதான் நமக்குத் தெரியும். அப்புறம் அவருக்கு பகவான் பரலோகத்தில் எப்படியெல்லாம் அநுக்ரஹம் பண்ணியிருப்பானோ?அது தெரியாமா?

சிவகுரு-ஆர்யாம்பாளின் தபஸுக்காக ஆசார்யாள் அவர்களுடைய புத்ரனாக அவதாரம் பண்ணினார். இந்த லோகத்தில் அவரைப் பிள்ளை என்று கொஞ்சும் புண்யம் தகப்பனாருக்குக் கொஞ்சம் வருஷத்திலேயே தீர்ந்துவிட்டதால் காலகதி அடைந்துவிட்டார். அப்புறம் சிவலோகத்துக்குப் போனாரா, அத்வைதமாகக் கலந்துவிட்டாரா என்பது நமக்குத் தெரியாது. ஆகையினால் அவருடைய ஆயுஸை இப்படிப் பறித்திருக்கக் கூடாது என்று சொல்ல நமக்கு வாயில்லை.

அந்த அம்மாளுக்கு அவளுடைய கர்மாநுஸாரம் இன்னம் பல தினுஸாகப் புடம்போட்டுக் கடைசியில் ஆசார்யாள் கையாலேயே வைகுண்ட ப்ராப்தி உண்டாக்கணுமென்று ஈச்வரன் கணக்கு வைத்திருப்பான் போலிருக்கிறது!அதனால் இப்போது பிரிந்துதான் போகணுமென்று அவர் மனஸைக் கெட்டிப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

அவதாரமென்றால் பேருக்கு ஒரு மநுஷ்ய தம்பதிக்குக்

குழந்தை மாதிரி வருவதுதானே? அதனால் ஸ்ட்ரிக்டாக நம் ரூல்களை அவர்களுக்கும் (அவதாரங்களுக்கும்) பொருத்திப் பார்ப்பதற்கில்லை. மஹா பெரிய லோக கல்யாண கார்யம் காத்துக்கொண்டிருக்கும்போது, அம்மா அப்பா என்று ஸொந்த உறவைப் பார்க்காமல், ஒருத்தர் இரண்டு பேருக்குத் தன்னால் கஷ்டம் வந்தாலும் வரட்டும் என்று புறப்பட்டால் அதைக் கருணை, த்யாகம் என்றுதான் புரிந்துகொள்ள வேண்டும். இவர்களும் (அப்பா, அம்மா முதலானவர்களும்) அவர்களை (அவதாரமாக வந்தவர்களை) லோகத்திற்காகத் த்யாகம் பண்ணிப் பெரிய புண்யத்தை ஸம்பாதிக்கவே இப்படி நடப்பது என்று வைத்துக்கொள்ளலாம்.

இவர் ஸந்நியாஸியாகப் போகவேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தாரென்றால், தாயாரும் பந்துக்களுமோ கல்யாணம் பண்ணிவைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருந்தார்கள்!குருகுலவாஸம் முடிந்து வந்தவுடன் ப்ரஹ்மசர்யத்திலிருந்து அடுத்த ஆச்ரமத்திற்கு ஏற்றிவிடுவதே வழக்கம். இவர் பன்னிரண்டு வருஷத்தில் படித்து முடிக்கவேண்டியதை மூன்று வருஷத்தில் முடித்துவிட்டுக் குழந்தையாகவே திரும்பியிருந்தாரே என்றால், அந்த நாளில் பால்ய விவாஹமும் உண்டுதானே?குழந்தைகளுக்குக் கல்யாணம் பண்ணிவிடுவது, அப்புறம் அதுகள்பாட்டுக்கு மனஸில் விகாரமில்லாமல் பிள்ளை தன் வீட்டோடு இருப்பது, பெண்ணும் பிறந்தகத்திலேயே இருப்பது, 'பெரியவ'ளான அப்புறம் புக்ககம் வந்து குடித்தனம் ஆரம்பிப்பது என்று நடந்து வந்தது.

இரண்டு பக்கத்திலே இரண்டு தினுஸான உத்தேசங்கள். கல்யாணமென்றும், ஸந்நியாஸமென்றும் இருந்து வந்தன!அவதார உத்தேசப்படிதானே நடக்கும்?

தாய்க்குமேல் தெய்வமில்லை, அவள் உத்தரவுக்குமேல் சாஸ்த்ரமில்லை என்று சாஸ்த்ரமே சொல்கிறது. சாஸ்த்ரங்களை நிலைநாட்டவே ஆசார்யாளவதாரம். அதற்காக அவர் அம்மா இஷ்டப்படி கல்யாணம் பண்ணிக்கொண்டு அகத்தோடு இருந்துவிட்டால் ஆசார்யாளாகவே ஆக முடியாதே!ஸ்வாமி மநுஷ்ராக

வந்தால் இப்படியெல்லாம் ஏற்படுகிறது!அப்போது அவர் என்ன பண்ணுகிறாரோ அதுதான் அவதார தர்மம்.

ஒரு பிள்ளை அவனுடைய ஆதீனத்திலேயே தாயார் இருக்கும்போது அவளுடைய அநுமதி இல்லாமல் ஸந்நியாஸியாகக் கூடாது. மாதா பிதாக்களோ, பத்தினியோ யார் இருந்தாலும் அவர்களுக்கு ஒரு ஏற்பாடு பண்ணிவைத்து, அவர்களுடைய ஸம்மதத்துடன்தான் வீட்டை விட்டுப் போகலாம். இப்படித்தான் சாஸ்த்ரம். 'இதையாவது நாம் உதாரணமாகப் பண்ணிக்காட்ட வேண்டும்'என்று ஆசார்யாள் நினைத்தார். ஒரே வைராக்யமாக க்ஷணத்தில் ஏற்பட்டு, திட்டம் கிட்டம் போட முடியாமல் ஆச்ரமம் வாங்க்கிகொள்வது வேறே விஷயம்.

இப்போது இவர் நன்றாகத் திட்டம் போட்டுத்தானே அவதாரம் பண்ணியிருந்தது? அவதாரத்தில் ஒவ்வொரு கார்யமும் பண்ணியது?அதனால் தாயாரின் அநுமதி பெற்றே ஸந்நியாஸி ஆவதென்று நினைத்தார். 'எப்படிக் கேட்பது? கல்யாணம், கல்யாணம் என்பவளிடம் ஸந்நியாஸம் என்றால் ரொம்ப துக்கப்படுவாளே!'என்று நினைத்தார். 'ஸமயம் வரட்டும், வரும். அப்போ சொல்லிக்கலாம்'என்று உத்தேசத்தை உள்ளுக்குள்ளேயே வைத்துக்கொண்டிருந்தார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**துறவியானார் !**

கிட்டே வந்துவிட்ட நதியில் ஒருநாள் தாயாருக்கு ஸ்நானம் பண்ணி வைத்தார். அப்புறம் தாமும் ஸ்நானம் பணண இறங்கினார்.

அப்போது அவர் காலை ஒரு முதலை பிடித்துக் கொண்டு விட்டது. (இப்போதுங்கூட அந்தத் துறைக்கு 'முதலைக் கடவு'என்றே பேர் இருக்கிறது.)

கரையேறிருந்த தாயார் பரிதவித்துப்போய் விட்டாள். பர்த்தா காலமாகி விட்டார், ஏக புத்ரனுக்கு இப்படி ஆபத்து என்றால் ஒரு ஸ்த்ரீக்கு எப்படியிருக்கும்?

ஆசார்யாளானால் 'இதுதான் நாம் எதிர்பார்த்த ஸமயம்'என்று அவளைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார். "முதலை வாயிலிருந்து மீளுவது நடக்காத காரியம். இது ஸஹஜமான சாவில்லை. துர்மரணம். அபம்ருத்யுவுக்கு ஆளானவர்களின் ஆவி படுகிற கஷ்டம் எனக்கு உண்டாகும். உனக்கும் புத்ரகர்மாவினால் ஏற்படும் ஸத்கதி கிடைக்காது. இப்போது எனக்கு ஒன்று தோன்றுகிறது-இதிலிருந்து மீளுவதற்கு வழி ஏற்படட்டாலும் ஏற்படும்படியாக ஒன்றுதோன்றுகிறது. உனக்கும் அது ஸம்மதமானால் அப்படிப் பண்ணுகிறேன். அப்போது எனக்கும் அபம்ருத்யு தோஷம் வராது. உனக்கும் ஸத்கதி கிடைக்கும். என்னவென்றால்........

"இப்போது நான் ஸந்நியாஸாச்ரமம் வாங்கிக் கொண்டால் வேறே ஜன்மா வந்து விட்டது போலாகும். அப்போது இந்த ஜன்மாவுக்கு ப்ராரப்தமாக ஏற்பட்ட மரணமும் விலகிவிடலாம். காலை இழுக்கும் முதலை விட்டுவிடலாம். ஒருத்தன் முதலை விட்டுவிடலாம். ஒருத்தன் ஸந்நியாஸியானால் அவனுடைய இருபத்தோரு முன் தலைமுறைக்காரர்களுக்கு ஸத்கதி கிடைத்து விடும். அதனால் உனக்கும் அப்படிக் கிடைக்கும்.

"முதலை விடாமல் மரணமே ஏற்பட்டாலும் ஸந்நியாஸியாகிவிட்டால் அது துர்மரணம் என்று ஆகி ஆவியாய் திரியப் பண்ணாது.

"ஆகையால் எப்படிப் பார்த்தாலும் அதுதான் வழியென்று தோன்றுகிறது".

"ஜலத்திலிருந்து கொண்டுதான் ப்ரைஷ மந்த்ரம் (துறவற தீக்ஷைமேற்கொள்வதற்கான மந்த்ரம்) சொல்லி, மனஸினால் எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும். தற்செயலாக நான் ஜல மத்தியிலேயே இருக்கிறேன்".

"இந்த ஸந்தர்பத்தை விட்டுவிட்டால் முதலை முழுங்குவது

தவிர வேறே என்னவும் நடப்பதற்கில்லை. எனக்கும் துர்மரணம், உனக்கும் ஸத்கதி இல்லை என்றுதான் முடிந்துவிடும். அதனால் இதுதான் வழியென்று அபிப்ராயப்படுகிறேன். ஆனாலும் உன் அநுமதி இல்லாமல் ஸந்நியாஸம் வாங்கிக்கொள்வதற்கு எனக்கு உரிமையில்லை. அதனால் நீ தான் ஒரு முடிவுக்கு வரவேண்டும்" என்று சொன்னார்.

'எட்டு வயஸுக் குழந்தையை ஸந்நியாஸியாகப் போ என்று சொல்வதா என்று பார்த்தால், இல்லாவிட்டால் முதலை அல்லவா நிச்சயமாக இழுத்துக்கொண்டு போய்விடும்?' என்று அந்த அம்மாள் குழம்பினாள். 'தன்னோடு கூட வாஸம் பண்ணாவிட்டாலும் உயிரை வைத்துக்கொண்டு ("உசிரை வெச்சுண்டு"என்று ஒரு தாயின் பரிவுடன் கூறுகிறார்கள்) எங்கேயாவது ஸந்நியாஸியாக இருக்கட்டு ம்;கண்ணாலேயாவது எப்போதாவது பார்க்கலாம்; பார்க்காவிட்டால்கூட ஸரி, எங்கேயாவது குழந்தை இருந்து கொண்டிருந்தால் போதும்'என்று நினைத்தாள்.

ஆனாலும் 'ஸந்நியாஸம் வாங்கிக்கோ!'என்று சொல்ல நா வரவில்லை. "உனக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படியே பண்ணிக்கொள்ளு"என்று சொன்னாள்.

இப்படிச் சொல்வதா, அப்படிச் சொல்வதா என்று குழப்பமாக, dllemma என்கிறார்களே, அப்படி அந்த அம்மாளுக்கு ஏற்பட்டது இது இரண்டாம் தடவை. இதற்கு முந்தி, முதல் 'டைலம்மா'ஆசார்யாளுடைய பிறப்பைப் பற்றி ஏற்பட்டது. "மந்தர்களாக, ஆனால் தீர்க்காயுஸோடு நூறு பிள்ளைகள ா?மஹா மேதையாக, ஆனால் அல்பாயுஸாக ஒரே பிள்ளையா?எது வேண்டும்?"என்று ஸ்வாமி கேட்டது முதல் 'டைலம்மா'!அப்போது என்ன சொன்னாள்? உங்கள் இஷ்டப்படியே பண்ணிக்கோங்கோ!"என்றுதானே சொன்னாள்?இப்போது அவருடைய குறித்ததாக இரண்டாவது 'டைலம்மா'ஏற்பட்டபோதும் அதே பதிலைச் சொன்னாள்!

'ஒருவேளை அப்போது ஸ்வாமி சொன்ன அல்பாயுஸ் காலம் இப்போதுதான் முடிவதாயிருக்குமோ என்னவோ?இப்போது நாம் எதையாவது சொல்லிவிடாமல், அவருக்கே விட்டுவிட்டால் மனஸை மாற்றிக்கொண்டு ஆயுஸை நீடித்தாலும் நீடிக்கக்கூடும்' என்று நினைத்துச் சொன்னாள்.

"நீ என்ன செய்தாலும் ஸரி"என்று அவள் சொல்லிவிட்டதால் தாயாரின் அநுமதி இல்லாமலில்லை என்று ஆகிவிட்டது!இதுதானே அவருக்கு வேண்டியிரு ந்தது?அதனால் இது அர்த்தாங்கீகாரம்தான் (முழுச் சம்மதமாயில்லாத பாதிச் சம்மதம்தான்) என்று எடுத்துக்கொள்ளாமல், அநுமதி கிடைத்துவிட்டதாகவே வைத்துக்கொண்டு,

ப்ரைஷோச்சாரணம் பண்ணி ஸந்நியாஸாச்ரமம் வாங்கிக்கொண்டு விட்டார்.

'தன்னால் ஒரு ப்ராணிக்கும் ஒருவித பயமும் உண்டாகப்படாது'என்பதாகப் பரம ப்ரேமையைத் தெரிவிப்பது அந்த (ப்ரைஷ) மந்த்ரம். ஸந்நியாஸி என்றால் அவனைப் பார்த்து ஒரு ப்ராணி பயப்படக் கூடாது. ஜீவகுலம் முழுதற்கும் அவனைப் பார்க்கிறபோதே ஆனந்தம் ஏற்பட வேண்டும். க்ருஹஸ்தன் அவனுடைய தர்மத்தை உத்தேசித்துப் பல பேரை வேலை வாங்குவதில் விரட்டியடிக்க வேண்டியும் வரும், தண்டிக்கும்படியும் வரும். 'ஐயோ வந்துட்டானா?' என்று இரண்டு பேர் அவனிடம் பயப்பட நேரலாம். அவன் தான்யம் கொண்டு வருகிறான், காய்கறிகொண்டு வருகிறானென்றால் அப்பபோது அந்தப் பயிர், 'என்னைப் பிடுங்கவந்து விட்டானே?'என்று பயப்படும்; செடி, 'என்னைக் கிள்ளி (கறிகாய்) எடுத்துக் கொண்டுபோக வருகிறானே!'என்று நடுங்கும். ஸந்நியாஸிக்கோ இந்த மாதிரி ஹிம்ஸைக் கார்யம் எதுவுமே விதிக்கப்படவில்லை. யாராவது பிக்ஷைபண்ணிப் போட்டால்தான் அவன் ஆஹாரம் பண்ணலாமேதவிர, தானாக ஒரு இலையைகூடப் பறிக்கப்படாது என்று வைத்திருக்கிறது. யாருமில்லாத வனத்திலிருந்தால்கூட, அதுவாகவே உதிர்ந்து விழுந்த பழம், சருகு முதலியவற்றைத்தான் அவன் எடுத்துக் கொள்ளலாம். ஜைன-பௌத்தங்கள் சொல்லும் பூர்ண அஹிம்ஸை நடைமுறை உலகத்தில் இவனுக்குத்தான் ஸாத்யம் என்று நம்

தர்ம சாஸ்த்ரத்தில் இப்படி ஸந்நியாஸ தர்மத்தை வைத்திருக்கிறது.

ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதில் இரண்டு மூன்று விதம் இருக்கிறது. ஸந்நியாஸி ஆகவேண்டுமென்று ஒருத்தனுக்கு இருந்தால் சாஸ்த்ர ப்ரகாரம் பீமீமீ¨ணீவீறீமீபீ-ஆக ச்ராத்தாதிகள், ஹோமாதிகள் எல்லாம் பண்ணி குரு முகமாக ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதுதான் முறை. க்ரம ஸந்நியாஸம் என்பது. நோய் வாய்ப்பட்டு மரணத்தை எதிர்பார்த்திருக்கும்போது விரக்தி, வைராக்யம் ஏற்பட்டு ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதற்கு 'ஆதுர ஸந்நியாஸம்'என்று பேர். பலஹீன ஸ்திதியிலுள்ள இவன் விஸ்தாரமாக ஹோமம், ச்ராத்தம் என்று பண்ண முடியுமா?அதனால் சுருக்கி ஸுலபமாக்கி தீக்ஷாக்ரமத்தைக் கொடுத்திருக்கிறது. இதையும்விட இன்னொரு விதம், 'அத்யாதுர (அதி ஆதூர) ஸந்நியாஸம்'என்று இருக்கிறது. 'ஆபத் ஸந்நியாஸம்'என்று பொதுவாகச் சொல்வது அதுதான். வ்யாதி முற்றி ப்ராணாபாயமான நிலையே ஏற்படும்போதோ, அல்லது ஏதாவது பெரிய விபத்து ஏற்பட்டு சீக்ரமே மரணம் ஸம்பவிக்கலாமென்று இருக்கும்போதோ சட்டென்று ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு விடுவதுதான் ஆபத் ஸந்நியாஸம். இந்த நிலையில் ப்ரைஷோச்சாரணம் மட்டுமே போதும். (குரு முகமாக இன்றித்) தானே அதை ஸ்வீகரித்துக் கொள்ளலாம் என்று இருக்கிறது.

ஆசார்யாள் இப்போது ஸந்நியாஸியானது அப்படித்தான். ஆனாலும் கொஞ்சம் யதோக்த ஸந்நியாஸம் மாதிரியே ஜல மத்தியில் இருந்துகொண்டு ஆச்ரம ஸ்வீகாரம் செய்து கொள்ளும்படியாக அவருக்கு வாய்த்தது!

உடனே முதலை அவர் காலை விட்டுவிட்டது!

Ýè£ê˜F™, óî˜F™ å¼ è‰î˜õ¡ ªî¡ð†ì£¡.

முதலை அப்படி ஆனது.

பதினெட்டு தினுஸான தேவ ஜாதிகளில் கந்தர்வர் ஒன்று. கிந்நரர், கிம்புருஷர் முதலானவர்களைப் போல இவர்களும் தேவ ஜாதி. மநுஷ்ய ஜாதியைவிட ஜாஸ்தி அறிவுச் சக்தி, ஸூக்ஷ்மமான வ்யாபக சக்தி எல்லாம் உள்ள ஜாதிகள்.

நமக்கு தெரியாததெல்லாம் அவர்களுக்குத் தெரியும். நம் கண், காது முதலானவை சில விதமான லைட் வேவ், ஸௌண்ட் வேவ்களையே பிடிக்க முடிவதால் இதற்கு மேலே ஒன்றும் கிடையாது என்று எப்படிச் சொல்லலாம்?நம் காதுக்கு நேராகக் கேட்காததை க்ரஹித்து வந்து கேட்கப் பண்ண இப்போது ரேடியோ வந்திருக்கவில்லையா?வெளியிலே இப்படி ஒரு கருவியாயில்லாமல் ஈச்வரன் ஒரு சரீரத்திலேயே கரணமாக அந்த சக்தியையும் வைத்துச் சில ஜீவ ஜாதிகளைப் படைக்கிறானென்றால், அதெல்லாம் முடியாது என்று நாம் ஆக்ஷேபிக்கலாமா?ஸ்வாபாவிமாக இப்படி அவர்கள் சக்தி பெற்றிருப்பது மட்டுமில்லை. யோக சாஸ்த்ரங்களில் சிலதில் இருப்பதை ஸாதனை பண்ணி ஸித்தி பெற்றால் மநுஷ்ய ஜாதிக்கும் அந்த சக்தி வரும். நம் கண்ணுக்குத் தெரியாததைக் காட்டும் ரேடியோ லைட் மாதிரி நமக்கே வாய்க்கும்!யோக ஸித்தி பெற்றவர்களுக்கு கந்தர்வாதிகள் ப்ரத்யக்ஷமாகவே தெரிவார்கள். நாம் சாஸ்த்ர விஷயமென்றாலே ஒன்றும் ஆலோசித்துப் பார்க்காமல் குருட்டு நம்பிக்கை, ஸூபர்ஸ்டிஷன் என்று ஒரே வார்த்தையில் தள்ளி விடுகிறோம்!

முதலை கந்தவர்னாயிற்று. அது எப்படி என்பதற்கும் கதை சொல்லியிருக்கிறது.

கந்தர்வ ஜாதியினர் உத்ஸாஹ ஜீவிகள். குடி, பாட்டு, ஆட்டம் என்று இருப்பார்கள். இந்த கந்தர்வனும் அப்படி இருந்தவன்தான்.

அவனே தன் கதையை ஆசார்யாளிடம் சொல்லிக் கொண்டான்-(சிரித்து) ஆடோ-பயாக்ரஃபி!

"நான் பாட்டுக்கு ஸதா குடித்துக்கொண்டு, எங்கள் ஸ்த்ரீகளோடு ஆடிப் பாடிக்கொண்டு மதோன்மத்தமாகக் கிடப்பது வழக்கம். ஒருநாள் துர்வாஸ மஹர்ஷி வருகிற வழியிலே இப்படிக் கிடந்தேன். அவரோ இதற்கெல்லாம் நேர் விரோதம். நெருப்பாக இருப்பவர். சீலத்தில் மாத்ரமில்லை, கோபத்திலும் நெருப்பானவர். அவர் வருவதையும் லக்ஷ்யம் பண்ணாமல் முதலை கிடக்கிற மாதிரி ஜல க்ரீடை பண்ணிக்கொண்டு நான் கிடந்ததைப் பார்த்ததும் அவருக்கு மஹா கோபம் வந்துவிட்டது.

"முதலையாகப் போகக் கடவாய்!"என்று சபித்து விட்டார்.

உடனே அவர் காலில் விழுந்து அபசாரத்துக்காகக் கெஞ்சி மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன்.

"அவர் பரமசிவாம்சம் அல்லவா?அதனாலே ருத்ர கோபமும் வரும்; அது மாதிரியே, அந்தப் பரமசிவனை எப்படி 'ஆசுதோஷி'('ஆசு'-சடுதியில்;'தோஷி'-திருப்தியடைந்து மகிழ்பவர்) என்று சொல்லியிருக்கிறதோ அப்படியே இவரையும் ரொம்ப எளிதாக ப்ரீதிப்படுத்தி விடவும் முடியும். இப்போது நான் கெஞ்சியவுடன் இரக்கம் கொண்டுவிட்டார்.

"அதனால், 'ஸரி, சாபத்தை அப்படியே வாபஸ் வாங்கி கொள்ள முடியாதாகையால் இப்போதைக்கு முதலை ஜன்மா வரட்டும். ஆனால் பரமேச்வரனுடைய காலடியைப் போய்ப் பிடித்துக் கொள்ளு. விமோசனம் கிடைத்துவிடும்'என்றார்."

புராணங்களில் அநேகக் கதைகள் இப்படி வருவது தான் ஒரு கதாபாத்ரம் மதோன்மத்தமாயிருந்து அபசாரம் பண்ணுவது, தபஸ்வி ஒருத்தர் சாபம் கொடுப்பது, உடனே இந்தப் பாத்ரம் கெஞ்சுவது, அவர் கருணையோடு விமோசனம் சொல்வது என்று. ஸாதாரணமான ஒரு ஜீவனுடைய லக்ஷணம் தன்னிஷ்டப்படித் திமிராக இருப்பது;அப்படி இருப்பதில் கஷ்டம் வந்தால் பல்லைக் காட்டுவது-'மிஞ்சினால் கெஞ்சுவது'என்பதுதானென்றும்;தபஸின் லக்ஷணமும் தபஸ்வியின் லக்ஷணமும் என்னென்ன என்றும் இந்தக் கதைகள் காட்டுகின்றன. தபஸின் லக்ஷணம் சக்தி. அதனால்தான் ஒரு தபஸ்வி 'கல்லாகப்போ, முதலையாகப் போ'என்றால் தேவர்களுங்கூட அப்படியாகி விடுகிறார்கள். தபஸ்வியின் லக்ஷணம் என்ன? அந்த சக்தியை எப்படி உரியபடி 'ஹார்னெஸ்'செய்யணுமோ அப்படி நல்லதற்கே செய்வது. தப்புப் பண்ணினால் தண்டிக்க வேண்டியது தர்மமென்பதற்காக சாபம் தருவது. தப்பை உணர்ந்தபோது மன்னிக்க வேண்டியது தர்மமென்பதால் அப்போது கருணையோடு சாப விமோசனம் தருவது. அந்தக் கதைகளில் இப்படி ஒன்றுக்கொன்று ஈடு கொடுத்துக்கொண்டு போவதைப் பார்க்க அழகாக இருக்கும்.

"பரமசிவனின் காலடியைப் பிடித்துக்கொள் என்றால் அது எப்படி ஸாத்யம்?நான் முதலையானபின் ஏதாவது ஆற்றிலே

மடுவிலே கிடப்பேனாயிருக்கும். அவரானால் கைலாஸ உச்சியில் உட்கார்ந்திருப்பவர். எப்படிப் பிடிப்பது?"என்றேன்.

"அதற்கு அவர், 'அதைப் பற்றி நீ கவலைப்படாதே. அவருடைய காலடியே உன்னைத் தேடிக்கொண்டு வரும், போ!"என்று சொல்லி அனுப்பினார். 'நான் கொடுத்த சாபம் தப்பாது. உன் முதலை ஜன்மமே ஈவச்ரன் அவதாரம் செய்யப் போகிற ஸமயத்திலே அவருக்கு ஒரு ப்ரச்னையைத் தீர்த்து வைத்து, அவர் துரீயாச்ரமியாகப் புறப்பட உதவி பண்ணும். அவதார நோக்கம் நிறைவேற ஒரு கருவியாகும் பாக்யம் உனக்குக் கிடைக்கும்' என்றார்.

"அவர் சொன்னபடியேதான் இங்கே வந்து ஸாக்ஷாத் சிவாம்சமான தங்களுடைய காலடியைப் பிடித்தேன். எனக்கும் முதலை ஜன்மா தீர்ந்தது;தங்களுக்கும் ஒரு குடும்பத்து மநுஷ்யர் என்ற ஜன்மா தீர்ந்தது;என்று சொல்லி அந்த கந்தர்வன் ஆசார்யாளை நமஸ்கரித்து விட்டுப் போய்விட்டான்.

முதலையாக ஜன்மா எடுத்த அவன் அவர் காலடியைப் பிடித்து சாப விமோசனம் பெற்ற மாதிரி நாமும் பிடித்தால் ஜன்ம நிவ்ருத்தி பெறலாம் என்று காட்டத்தான் அந்த க்ராமத்துக்கே காலடி என்று பேர் வந்ததோ என்னவோ?பகவத் பாதரின் ஊர் கால்-அடி!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**அன்னையைப் பிரிந்து ஆசானைத் தேடி...**

முதலை வாயிலிருந்து குழந்தை மீண்டு வந்ததைப் பார்த்து தாயார் மிகவும் ஸந்தோஷமடைந்தாள். அந்த ஸந்தோஷத்தில் அவர் ஸந்நியாஸம் வாங்கிக்கொண்ட நினைவே போய்விட்டது!"அப்பா, பிழைத்து வந்தாயே! ஆத்துக்குப் போகலாம். நான் கண்ணை மூடுவதற்குள் உனக்கு ஒரு கல்யாணம் பண்ணிப் பார்த்துடணும்"என்றாள்.

அதைக் கேட்ட ஆசார்யாள், "அம்மா, நான் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள நீ அநுமதி தரவில்லையா? அதை மறந்து பேசுகிறாயே!இதுவரைக்கும் உன் ஒருத்திக்கு மாத்ரம் குழந்தையாயிருந்தேன். இனிமேல் லோகத்திலுள்ள அத்தனை தாயார்களுக்கும் நான் குழந்தை. ஆமாம் நான் லோகத்துக்கெல்லாம் குழந்தை. பிக்ஷைபோடுகிற ஸ்த்ரீகளெல்லாம் எனக்கு தாயார்கள். நீ மாத்ரம் தாயாரென்று நினைக்காதே. பல தாயார்களில் நீயும் ஒரு தாயார். நான் ஞானோபதேசம் வாங்கிக் கொள்ள குரு பரம்பரை இருக்கிறதே, அதிலுள்ளவர்களெல்லாம், எனக்குத் தகப்பனார். ஞானம் வந்து, நான் உபதேசம் பண்ணி, அது யாரார் மனஸுக்கு ஒரு ஸந்தோஷத்தைக் கொடுத்து அவர்ளை நல்ல வழிக்குக் கொண்டு வருமோ, அவர்கள் எல்லோரும் என் குழந்தைகள். குழந்தைகள் என்றால் பத்னி வேண்டுமே, நீயும் கல்யாணம் பண்ணிப் பார்க்கணும் என்றாயே, அப்படி ஒரு பத்னியையும் இந்த க்ஷணத்தில் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டேன். சாந்தி என்று அவளுக்கு பேர். மனஸ் ஏகாந்தமாக ஒன்றி இருக்கும் படியான ஸ்தானத்தில் சாந்தி என்ற வனிதையை விவாஹம் செய்து கொண்டிருக்கிறேன்.

**பிக்ஷா-ப்ரதா ஜநந்ய : பிதரோ குரவ : குமாரகா சிஷ்யா : ***

**ஏகாந்த - ரமண - ஹேது : சாந்திர்-தயிதா விரக்தஸ்ய ****

நீலகண்ட தீக்ஷிதரின் 'வைராக்ய சதக'த்தில் காணும் இச் ஸ்லோகத்தை ஆசார்யாளின் வாக்காக ஸ்ரீசரணர்கள் நயமாகக் கையாண்டிருக்கிறார்கள்.

(ஆசையை துறந்தவனுக்கு (துறவிக்கு) பிக்ஷையிடுபவர் யாவரும் அன்னையர்; குரவர் யாவரும் தந்தையர்; சீடர் யாவரும் மக்கள்;ஏகாந்தத்தில் இன்பம் காண ஏதுவாகவுள்ள சாந்தியே மனையாள்.)

"நீதான் நான் மற்ற தாயார்களிடத்தில் போய் அவர்களெல்லாம் கொஞ்சும்படிக் செய்வதற்கும், அப்பப்போ சாந்தி வனிதையோடு நான் ஏகாந்தத்தில் ஆனந்தமாயிருந்து கொண்டிருப்பதற்கும் அவகாசம் கொடுக்க

வேண்டும்"என்றார்.

"என்னை விட்டு விட்டா போகப்போறே?என் அந்த்ய காலத்திலேகூட உன்னைப் பார்க்காமல்தான் ஆவி பிரியணுமா?"என்று தாயார் ரொம்பவும் அழுதாள்.

"இல்லை இப்போது உன்னை ஏமாற்றிவிட்டுப் போகிறேனல்லவா?இதற்காகவாவது அந்த்ய காலத்திலே உன் மனஸ் ஸமாதானமாவதற்காக உன் பக்கத்திலேயே வந்து இருக்கிறேன். அப்பொழுது நீ என்னை ஸ்மரித்த மாத்ரத்தில் வந்து விடுகிறேன். (தஹன) க்ருத்யமும் பண்ணுகிறேன்"என்று ஆசார்யாள் வாக்குக் கொடுத்தார்.

ஒரு மாதிரி மனஸைத் தேற்றிக்கொண்டு அந்த அம்மாளும் ஆசார்யாள் புறப்படுவதற்கு அநுமதி கொடுத்தாள்.

ஸந்நியாஸி க்ருத்யம் பண்ணலாமா என்றால்..........

தாயார் என்பவளுடைய ஸ்தானம் எல்லாவற்றையும் விட உயர்வானது. அப்படி ஸகல சாஸ்த்ரத்திலும் இருக்கிறது. மாத்ரு ருணம் (தாயாருக்குப் பட்டுள்ள சாஸ்த்ரீயக் கடன்) யாரையும் விடவே கூடாது. பித்ரு ருணத்திலிருந்துகூட ஸௌத்ராமணி என்ற மஹா யாகத்தைப் பண்ணினால் விடுபட்டுவிடலாம்;மாத்ரு ருணத்திலிருந்து மட்டும் ஒரு புத்ரன் ஜீவனுள்ளவரை விடுபட முடியாது-என்று தர்ம சாஸ்த்ரத்திலேயே இருக்கிறது.

பெரிய குணம் அந்திம க்ரியை செய்து பரலோகம் சேர்ப்பதுதான். வேறே புத்ரர்களிலிருந்தால் அவர்களிடம் இந்தக் கடனைக் கட்டிவிட்டு ஒருவன் ஸந்நியாஸிக்கலாம். ஆசார்யாள் ஏக புத்ரர். அப்படிப்பட்டவர் ந்யாயமாகப் பார்த்தால் ஸந்நியாஸமே வாங்கிக் கொள்ளக் கூடாது தான். ஆனாலும் இது அவதாரம்-ஈச்வரன் தன் வாக்கால் 'ஒரே ஒரு புத்ரனா, நூறா?'என்று கேட்டு, ஒன்றாக அமைந்தது. அவனுடைய உத்தேசமோ ஸந்நியாஸ குருவாக தர்மோத்தரணம் பண்ணுவதாக இருந்தது. அதனால் ஸகல சாஸ்த்ரங்களுக்கும் மூலமானவனே தர்ம ஸம்ஸ்தாபனார்த்தம் பண்ணிய உத்தேசமென்பதால் ஏக புத்ரர் ஸந்நியாஸித்தார். ஆனால் இவர்தான் அவதார புத்ரரே தவிர அவள் அவதார

அம்மா இல்லையே!அதனாலே அவள் ருணத்தை அவள் எப்படி ஆசைப்பட்டாளோ அப்படி அவர் தீர்க்கவேண்டுமென்பதுதானே ந்யாயம்? அவள் த்ருப்திக்காக தஹனம் மாத்ரம்தான் செய்ய நினைத்தார். அப்புறம் கார்யங்கள், தர்ப்பணம், திவஸமென்று எதுவும் செய்ய நினைக்கவில்லை.

தர்ம சாஸ்த்ரங்களிலேயே இருக்கிறது, க்ருஹஸ்தனாயிருந்து புத்ரனைப் பெற்ற பிறகு ஸந்நியாஸியான ஒருவன் காலமானால் அப்போது அவனுடைய பூர்வாச்ரம புத்ரன் அவனுக்கு வேறே எந்தக் கர்மாவும் செய்யக் கூடாதானாலும் 11-வது அல்லது 12-வது நாளில் பார்வண ச்ராத்தம் என்பதைமட்டும் செய்யவேண்டுமென்று. ஸந்நியாஸிக்குப் பூர்வாச்ரம புத்ரனால் இப்படி ஒன்று நடக்கலாமென்றிருப்பதால் அந்த ஸந்நியாஸியும் ஏகபுத்ரனாக இருக்கும்போது பூர்வாச்ரமத் தாயாருக்கு தஹன ஸம்ஸ்காரம் மாத்ரம் பண்ணலாம் என்று ஆசார்யாள் நினைத்திருக்கலாம். **" தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ராமணம் தே "** ("ªêŒò^ î,è¶ â¶;ªêŒò^ îè£î¶ â¶ â¡Á º¬øŠð® G„êJŠðF™)ê£v^ó«ñ àù,°Š Hóñ£íñ£°‹" -W¬îXVI.24 â¡ð¬î«ò âŠ«ð£¶ ð£˜ˆî£½‹ õL»Á^F õ‰î Ýê£˜ò£œ ê£v^ó^F™ Þì‹ ªè£´,è£î å¡¬ø ªêŒ«îJ¼,èñ£†ì£˜. âŠð®J¼‰î£½‹ Ýê£˜ò£À,° ï£‹ ê£v^ó‹ ªê£™L,ªè£´,è «õ‡®òF™¬ô!Ü™ô¶, 'Üõ«ó ê£v^ó^¬î Kô£,v ð‡íô£ªñ¡Áî£¡ ÞŠð®ªò™ô£‹ ð‡Eù£˜. Üõ«ó Kô£,v ð‡Eù£ªó¡ø£™ ï£‹ M†´ƒÃì Mìô£‹'â¡Á Ü˜ˆî‹ ð‡E, ªè£œ÷,Ãì£¶!

தர்ம சாஸ்த்ரங்களிலேயே இன்னும் என்ன சொல்லியிருக்கிறதென்றால், ஒரு ஸந்நியாஸியின் பூர்வாச்ரமப் புத்ரன் உள்பட மற்ற எந்த பந்துக்கள் செத்துப்போனாலும் அப்போது அவன் ஸ்நானங்கூடச் செய்ய வேண்டியதில்லை; ஆனாலும் பூர்வாச்ரம மாதா-பிதாக்களின் மரணத்தின் போது மட்டும் அவன் கட்டின வஸ்த்ரத்தோடு ஸ்நானம் பண்ண வேண்டும் என்று இருக்கிறது. இங்கே மாதா பிதா இரண்டு பேருக்கும் ஸம ஸ்தானம் கொடுத்திருக்கிறதென்றால், இன்னொரு விதியோ பிதாவுக்கும் மேலே மாதாவை உயர்த்தி வைத்துச்

சொல்லியிருக்கிறது:" ஸர்வ-வந்த்யேந யதிநா ப்ரஸூர்-வந்த்யா ஹி ஸாதரம் ":எல்லோரும் ஸந்நியாஸியை நமஸ்கரிக்கணும். ஸந்நியாஸிகளிலேயே அவரைவிடக் குறைவாக வ்யாஸ பூஜை செய்துள்ளவர்கள் அவரை நமஸ்கரிக்க வேண்டும். மற்ற ஜனங்களில் ஸகலருமே அவரைவிட வயஸில் எத்தனை பெரியவர்களானாலும் நமஸ்கரிக்கணும். 'ஸர்வ'ஜனங்களும் என்று இப்படிச் சொல்லும்போது அதில் அப்பாவும் அடக்கம் தான். ஆனால் அம்மா மட்டும் அடக்கமில்லை. ஸந்நியாஸியாகிவிட்ட புத்ரனை அவள் நமஸ்காரம் செய்யவேண்டாம். அது மாத்ரமில்லை. அவளை இவர்-ஸந்நியாஸி-நமஸ்காரம் செய்ய வேண்டும் : "ப்ரஸூர் - வந்த்யா"

'ÞŠð® MF Þ¼,«è!'â¡Á å¼ èì¬ñò£è ñ†´‹, 'èì«ù'â¡Á ð‡Eù£™ «ð£î£¶. 'ú£îó‹'- 'ñKò£¬îò£ùÜ¡«ð£´Ãì'ïñvèK,èµ‹.

இப்படியெல்லாமிருப்பதால்தான் ஆசார்யாள் தாயாருக்கு அப்படி வாக்குக் கொடுத்தார்.

அப்புறம் அவளை நமஸ்காரம் பண்ணிவிட்டு குருவைத் தேடிக்கொண்டு புறப்பட்டுவிட்டார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## அவருக்கு குரு எதற்கு ?

அவரேதான் ப்ரைஷ மந்த்ரம் சொல்லி ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டாயிற்றே, அப்புறம் குரு எதற்கு என்றால் :ஆபத் ஸந்நியாஸம் என்று ப்ராணாபத்தில்தான் தானே தீக்ஷைஎடுத்துக்கொள்ளலாமே ஒழிய, அப்புறம் ஆபத்து போய்ப் பிழைத்துவிட்டால் யதோக்தமாக ஒரு ஆசார்யனை ஆச்ரயித்துத்தான் ப்ரணவோபதேசமும், மஹா வாக்யோபதேசமும் பெற்றுக்கொண்டு ஸந்நியாஸாச்ரமம் ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும்.

'ஆசார்யாள் ஈச்வராம்சமாச்சே, அவருமா குருவிடம் உபதேசம் பெற்றுக்கணும்?'என்றால், மநுஷ்ராக அவதரித்ததால் எல்லோருக்கும் எப்படி விதிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே தாமும் நடந்து காட்டவேண்டுமென்றுதான் இப்படிச் செய்தார். இப்போது, 'ஈச்வராம்சமானவருக்கு அவச்யந்தானா?' என்று கேட்பவர்களே அவர் குருவிடம் போகாமலிருந்திருந்தால், 'குரு, உபதேசம் என்றெல்லாம் அவரே பின்பற்றிக் காட்டவில்லை. அதனால் நமக்கும் அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். புஸ்தகத்தைப் பார்த்து, அல்லது அதுகூட இல்லாமல், நமக்குத் தோன்றினபடி பண்ணிவிட்டுப் போகலாம்'என்று ஆரம்பித்துவிடுவோம். 'நமக்கு வேண்டியிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஊரைக் கெடுத்ததாக ஆகக்கூடாது. அதற்காக விதி ப்ரகாரம் உபதேசம் பெறத்தான் வேண்டும்'என்றே ஆசார்யாள் ஒரு ஆசார்யாரைத் தேடிக்கொண்டு ஊரை விட்டுப் புறப்பட்டார்.

கீதையில் பகவான் சொல்கிறார் :

"ந மே பார்த்தாஸி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந"- "இந்த மூன்று லோகத்திலும் எனக்கு ஆக வேண்டிய கார்யம் எதுவும் இல்லை"என்கிறார். "ஆனாலும் பார் எப்படி ஸகல கார்யமும் பண்ணிக்கொண்டிருக்கிறேனென்று!இதோ உனக்கு ஸாரத்யம் பண்ணுகிறேன். அன்றைக்கு உங்களுக்காக தூது போனேன். இன்னும் எத்தனை சண்டை ஸல்லாபம் பண்ணியிருக்கிறேன்? இதனாலெல்லாம் எனக்கு ஏதாவது personal gain (ஸொந்த லாபம்) உண்டா? இதுகளைப் பண்ணாவிட்டால் யாருக்காவது நான் பதில்தான் சொல்லணுமா?இருந்தாலும் ஏன் பண்ணுகிறேனென்றால், நான் பண்ணாமல் போனால் என்னவாகும் தெரியுமா?"

**" ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹந்யாம் இமா : ப்ரஜா :** (ஸமூஹக் குழறுபடிக்கு நான் கர்த்தாவாகி விடுவேன். இந்த ஜீவ லோகத்தை அழித்துவனுமாவேன்!') 'க்ருஷ்ணரே ஒன்றும் செய்யாமலிருக்கிறார். நாமும் ஒன்றும் செய்ய வேண்டாம். கடமை, ஸ்வதர்மம் என்று ஒன்றும் எவரும்

பண்ணவேண்டியதில்லை'என்று எல்லோரும் நினைப்பார்கள். இன்னார் இன்னது செய்து தானாக வேண்டுமென்று ஜன ஸமூஹத்தில் வகையாகப் பிரித்து பிரித்து சாஸ்த்ரத்தில் கொடுத்துள்ளபடி யாரும் பண்ணாமல் போய், பிரிவுகளெல்லாம் கலந்தாங்கட்டியாகச் சேர்ந்து ஒரே குழப்பமாகிவிடும். இந்தப் பாபத்துக்கு நானே காரணமாக, கர்த்தாவாக ஆகிவிடுவேன். இப்படி ஒழுங்கு கெட்டுப் போன பின் ஒரு ஸமூஹம் இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? அதனால் அது அழிந்தே போன மாதிரிதான். அதாவது, அவதாரம் என்று ஜனங்களை தர்மத்தில் உத்தாரணம் பண்ணுவதற்கு வந்ததாகச் சொல்லிக் கொண்டு, வாஸ்தவத்தில் அவர்களை தர்மப்படிப் பண்ணாமலிருக்கத் தூண்டி, முடிவில் அழித்தே விட்டவனாகிவிடுவேன்!அதனால்தான் எனக்காக ஒரு கார்யமும் வேண்டாமென்றாலும் லோகம் நம்மால் கெட்டுப் போகப்படாது என்றே அநேக கார்யங்களை இழுத்துப் போட்டுக்கொண்டு பண்ணுகிறேன்''என்று முடித்திருக்கிறார்.

அந்த முறையில்தான் ஆசார்யாள் குருவைத் தேடிப் புறப்பட்டது.

ஈச்வர ஸங்கல்பப்படி மலையாள தேசத்திலிருந்து பஹு தூரம் போய் நர்மதா நதி தீரத்திலிருந்த கோவிந்த பகவத்பாதரே தம்முடைய குரு என்று சரணத்தில் விழுந்தார்

ஆசார்யாள் சரித்ரத்தைக் கூறுவதாக அநேகப் புஸ்தகங்களிருப்பதில், அவர் எந்த இடத்தில் குருவைக் கண்டு உபதேசம் பெற்றது என்பதில் வித்யாஸமான அபிப்ராயங்கள் காணப்படுகின்றன. நர்மதா தீரத்தில் என்றும், பதரிகாச்ரமத்தில் என்றும், காசியில் என்றும், சிதம்பரத்தில் என்றும் வெவ்வேறு புஸ்தகங்களில் இருக்கிறது.

அந்தப் புஸ்தகங்களின் பெயர்களைச் சொல்கிறேன்.

---

' சங்கர விஜய ' ங்களும்

ஆசார்யாள் குறித்த மற்ற நூல்களும்

ஆசார்யாளின் சரித்ரத்தைச் சொல்வதற்கென்றே ஏற்பட்டதாக 'சங்கர விஜய'ங்கள் என்று சொல்கிற பல புஸ்தகங்கள் பல பெரியவர்கள் எழுதியிருக்கிறார்கள். 'ப்ருஹத் சங்கர விஜயம்', 'ப்ராசீன சங்கர விஜயம்', 'ஆனந்தகிரீய சங்கர விஜயம்', 'வ்யாஸாசாலீய சங்கர விஜயம்', 'மாதவீய சங்கர விஜயம்', 'சித்விலாஸீய சங்கர விஜயம்', 'கேரளீய சங்கர விஜயம்', 'கோவிந்த நாதீய சங்கர விஜயம்'என்று இப்படி ஏழெட்டு இருக்கின்றன (''ப்ரஹ்மாநந்தீய சங்கர விஜயம்''என்று ஒரு நூலும் ப்ரஹ்மஸ்ரீ சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரிகளின் ''ஸ்ரீ சங்கர விஜய மகரந்தம்''எனும் நூலில் குறிபிடப்பட்டுள்ளது. ''மகரந்தம்''என்பது ஆசாரிய சரிதத்தைக் கூறும் எல்லா நூல்களினின்றும் தொகுப்பு செய்து, ஒன்றுக்கொன்று மாறுபட்ட விவரங்களையும் முடிந்தமட்டில் இசைத்துத் தரும் ஸமீப கால (1978) ஸம்ஸ்க்ருத நூலாகும்) ஸதாநந்தர் என்பவர் எழுதிய 'சங்கர திக் விஜயஸாரம்'என்றும் ஒரு ஆசார்ய சரித்ரம் இருக்கிறது.

'ப்ருஹத் சங்கர விஜயம்'என்றால் பெரிசான, விஸ்தாரமான சங்கர விஜயம் என்று அர்த்தம். அது முழுசாகக் கிடைக்கவில்லை. மற்ற புஸ்தகங்களில் அதிலிருந்து மேற்கோள்கள் கொடுத்திருப்பதிலிருந்தே அதைப் பற்றித் தெரிகிறது. ஏறக்குறைய ஆசார்யாளின் காலத்திலேயே செய்யப்பட்டதென்று தெரியவருகிறது. 'ப்ராசீன சங்கர விஜயம்'என்றாலும் 'புராதனமான சங்கர சரித்ர புஸ்தகம்'என்றே அர்த்தம். இதுவும் கிடைக்கவில்லை. 'கொடேஷன்'களிலிருந்து தெரிவதோடு ஸரி.

ஆனந்த கிரீயம், கோவிந்த நாதீயம் என்றெல்லாம் சொல்வது அவற்றை எழுதிய ஆனந்தகிரி, கோவிந்தநாதர் ஆகியவர்களின் பெயரிலேயே புஸ்தகத்துக்கு டைட்டில் சொல்வதுதான். ஆனந்தகிரியின் முழுப்பெயர் அனந்தா நந்தகிரி. சித்விலாஸீயம் என்பது சித்விலாஸர் என்பவருக்கும்

(விஜ்ஞான கந்தர் என்றே) இன்னொருவருக்கும் நடந்த ஸம்வாத (ஸம்பாஷணை) ரூபத்தில் எழுதப்பட்டிருப்பதால் அப்படிப் பெயர் பெற்றிருக்கிறது. 'கேரளீயம்'கேரள தேசத்தில் பண்ணப்பட்டது. கோவிந்த நாதீயத்திற்கும் இதற்கும் ஸ்வல்ப வித்யாஸமே. கோவிந்தநாதர் கேரளத்துக்காரர்.

எல்லாவற்றையும்விட அதிகமாக ப்ரசாரமாகியிருப்பது மாதவீய சங்கர விஜயம் என்பது.

'சங்கர விஜயம்'என்று குறிப்பிடும் இந்த க்ரந்தங்களைத் தவிர இன்னும் சில நூல்களும் ஆசார்ய சரித்ரத்தைக் கூறுபவையாக இருக்கின்றன. தமக்குள் காயத்ரி புகுவதற்கு முன் ஸரஸ்வதி புகுந்து விட்டாளென்று ராஜசூடாமணி தீக்ஷிதர் என்பவர் சொன்னதாகச் சொன்னேனல்லவா?அவர் "சங்கராப்யுதம்"என்று ஆசார்ய சரித்ரத்தை எட்டு ஸர்கங்களில் காவ்யமாக எழுதியிருக்கிறார். பதினாறாம் பதினேழாம் நூற்றாண்டுகளில் இருந்தவர். பதினேழாம் நூற்றாண்டுக் கடைசியிலிருந்த ராமபத்ர தீக்ஷிதரின் 'பதஞ்ஜலிசரி'தத்தில் ஆசார்யாளுடைய பரம குருவையும், குருவையும் பற்றி விரிவாகக் கதை சொன்னபின், கடைசி ஸர்கத்தில் சுருக்கமாக ஆசார்ய சரித்ரம் கொடுக்கப்பட்டிருப்பதை முன்பே சொன்னேன். ராஜசூடாமணி தீக்ஷிதர் அப்பைய தீக்ஷிதரின் மைத்துனரென்றால் இவர் அவருடைய (அப்பையருடைய) தம்பி பேரரான நீலகண்ட தீக்ஷிதரின் சிஷ்யர்.

வல்லீஸஹாய கவி என்பவர் 'ஸ்ரீ சங்கராசார்ய சம்பூ'என்று செய்திருக்கிறார். கவிதையும் வசன நடையும் கலந்து கலந்து வரும் காவ்ய வகைக்குச் சம்பூ என்று பெயர்.

சட்டம், ஸங்கீதம் இரண்டிலும் முக்யமான புள்ளியாயுள்ள டி.எஸ். வேங்கடராமய்யரின் தகப்பனார் லக்ஷ்மண ஸூரி என்பவர். ஸூரி என்றால் ஸூர்யன்தான். 'அறிவு ஜ்யோதி'என்கிறார்களே, அப்படிப் பட்டவர்களையே ஸூரி என்பது. வைகுண்டத்தில் பகவானோடு ஸதா காலமும் நித்யவாஸம் செய்பவர்களை வைஷ்ணவர்கள் 'நித்ய ஸூரிகள்'என்பார்கள். இவர் (லக்ஷ்மணஸூரி) ஆசார்ய பாஷ்யங்களை அநுஸரித்து ஈசோபநிஷத், மாண்டூக்யோபநிஷத் ஆகியவற்றுக்குக் காரிகைகள்

ஷாவோடு வாதம் பண்ணினாரென்றால்.....? ஆனாலும் அப்படியில்லாத இடங்களிலெல்லாம் ஏற்றுக்கொள்வதுதான் யுக்தம். ஏனென்றால், அவர் வாஸ்தவத்தில் அந்த மாதிரிப் பண்ணவில்லை என்றால்கூட பண்ணியதாக நாம் வைத்துக்கொள்வதனால் பெரிய தப்பு எதுவுமில்லை. ஆனால் அவர் பண்ணியிருந்தும், பண்ணவில்லை என்று நாம் தள்ளிவிட்டால் தப்புத்தானே?அவதாரமாக வந்து அவர் பண்ணிய ஒவ்வொன்றுக்கும் 'வால்யூ'உண்டு. அப்படிப்பட்ட ஒன்றை நாம் 'இல்லை'என்று தள்ளப்படாததுதானே?

போலகம் சாஸ்த்ரிகள் இந்த விஷயமாக, 'ஆசார்யாள் எப்படிப் பண்ணிக் காட்டியிருக்கிறாரோ, அதையே நாமும் பின்பற்றலாம்'என்று எழுதியிருக்கிறார். ஆசார்யாள் என்ன பண்ணியிருக்கிறாரென்றால்:சரீரத்திலிருந்து வெளியேறிவிட்ட யோகியின் ஜீவன் ப்ரஹமலோகம் போகும் வழிக்கு அர்ச்சிராதி மார்க்கம் என்று பெயர். அதில் பதின்மூன்று பர்வா, அல்லது ஸ்தானங்கள் இருக்கின்றன. இந்தப் பதின்மூன்றைப் பற்றியும் உபநிஷத்துக்களிலிருந்து தெரிகிறது. ஆனால் எந்த ஒரு உபநிஷத்திலும் பதின்மூன்றையும் வரிசையாகச் சொல்லியிருக்கவில்லை. ஒவ்வொன்றிலும் சிலதை விட்டிருக்கிறது; வரிசைப்படி இல்லாமல் முன் பின்னாகவும் சொல்லியிருக்கிறது. இப்படி இருப்பதை ஆசார்யாள் எடுத்துப் போட்டுக்கொண்டு எதுவும் விட்டுப்போகாமல் சேர்த்து, வரிசை க்ரமமும் தப்பாதபடி ஒழுங்குபடுத்தித் தம்முடைய ஸூத்ர பாஷ்யத்தில் கொடுத்திருக்கறார். இப்படியே அவருடைய சரித்ரத்திலும் ஒரு புஸ்தகத்தில் சொல்லி இன்னொன்றில் சொல்லாதது, ஸம்பவங்களை காலவாரியாயில்லாமல் முன் பின்னாகச் சொல்லியிருப்பது ஆகியவற்றை நாம் எதுவும் விட்டுப் போகாமலும், கால ரீதியில் ஆர்டர் தப்பாமலும் ஒழுங்குபண்ணிக்கொள்ள வேண்டுமென்று அவர் சொல்லியிருக்கிறார்.

2500 வருஷம் முன்னால் இருந்துவிட்டு ஆசார்யாள் போய்விட்டார். அவரோ ஸ்வசரிதை-ஒரு குறிப்பாகக்கூட-எழுயும் வைக்கவில்லை!பிற்காலத்தில் நூற்றுக்கணக்கான வருஷங்களுக்கு அப்புறம் வரையில் அவருடைய சரித்ர நூல்கள் எழுதப்படும்போது அங்கங்கே

வித்யாஸங்கள் வரக்கூடியதுதானே?அவரோ அந்தக் காலத்திலேயே தேசம் முழுவதும் ஸஞ்சாரமும் பண்ணியிருக்கிறார். ஒரு தடவைக்கு மூன்று தடவையாகப் பண்ணியிருக்கிறார். அதனால் தேசத்தின் எந்த மூல முடுக்கிலானாலும், 'இங்கே ஆசார்யாள் இன்ன இன்ன பண்ணினார்'என்று சொல்கிறார்கள். இது அத்தனையையும் எந்த க்ரந்த கர்த்தா சேகரித்து எழுதமுடியும்?இந்த நாளில் ரயில், ப்ளேன் எல்லா வசதியும் இருந்தும்கூட இப்படி யாராவது ஸாதிக்க முடியுமா என்று தோன்றுகிறது. அந்த நாளில் கேட்பானேன்?

ஆசார்யாளுக்குப் பிறகு மடங்களில் அவர் பெயரிலேயே மஹா பெரியவர்களாக சில ஸ்வாமிகள் வந்திருக்கிறார்களென்றும், இவர்களை ஆதி ஆசார்யாளாகவே நினைத்துக் கொஞ்சம் குழறிப் போயிருப்பதாகவும் முன்னேயே பார்த்தோம். இதனாலும் சில சரித்ர பேதங்கள் ஏற்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. உதாரணமாக, ஆசார்யாள் ஸர்வஜ்ஞ பீடமேறியது காஞ்சி என்றும், காஷ்மீர் என்றும் இரண்டு விதமாகப் புஸ்தகங்களில் இருக்கிறது. இதற்கு மூன்று விதமாக பதில் சொல்லும்போது, ஒன்று, காஞ்சி மண்டலத்துக்கே காஷ்மீரம் என்றும் பெயர் இருந்திருக்கிறது என்பது. "கோவிந்தநாதீ"யத்தில் இவ்விஷயம் ஸ்பஷ்டமாகவே சொல்லியிருக்கிறது. இன்னொரு பதில், "காஷ்மீரில் ஸர்வஜ்ஞ பீடம் மாதிரியே இருந்ததற்கு 'சாரதா பீடம்'என்று பேர்; காஞ்சியில் தான் ஸர்வஜ்ஞ பீடம் என்றே பேர் ஆசார்யாள் இரண்டிலும் ஏறினார் என்பது. மூன்றாவதாகச் சொல்வது, "ஆதி ஆசார்யாள் காஞ்சியில் ஸர்ஜ்ஞ பீடமேறினார்;அபிநவ சங்கரர் காஷ்மீரத்தில் ஸர்வஜ்ஞ பீடமேறினார். இதிலே மாறுபாடு ஏற்பட்டுவிட்டது"என்பது.

ஆசார்யாள் பெயரில் பலர் இருந்திருப்பது மட்டுமில்லை. அவர் கதையில் வருகிற சில பாத்ரங்களின் பெயரிலும் இரண்டு பேர் இருந்திருப்பதால் கொஞ்சம் குழறுபடி ஏற்படுகிறது. ஸாதரணமாக 40 பேர் படிக்கிற ஒரு க்ளாஸிலேயே இரண்டு பசங்களுக்கு ஒரே பேர் இருந்து, இனிஷியலுங்கூட ஒன்றாகவே இருந்து விடுவதால்,

ஒருத்தனுக்கு ஊர் பெயரையும் சேர்த்து இரண்டு இனிஷியலாக்குவதைப் பார்க்கிறோமல்லவா?இம்மாதிரி ஆனந்தகிரி, மண்டன மிச்ரர் என்றெல்லாமும் இரண்டிரண்டு பேர்கள் இருந்திருப்பதாக ஆராய்ந்து பார்த்துச் சொல்கிறார்கள். ஆசார்யாளின் நேர் சிஷ்யரான ஆனந்தகிரி வேறே, கொஞ்சம் பிற்பாடு சிஷ்ய பரம்பரையில் வந்து சங்கர விஜயம் எழுதிய (அனந்த) ஆனந்தகிரி வேறே என்கிறார்கள். 'ப்ரஹ்ம ஸித்தி'என்ற அத்வைத க்ரந்தமும், மூன்று மீமாம்ஸா சாஸ்த்ர புஸ்தகங்களும் எழுதிய மண்டன மிச்ரர் வேறே, மீமாம்ஸகராயிருந்து அப்புறம் ஆசார்யாளின் சிஷ்யராகி ஸுரேச்வராசார்யாள் என்று பெயர் பெற்று, 'நைஷ்கர்ம்ய ஸித்தி', வார்த்திகங்கள் ஆகிய அத்வைத நூல்கள் மட்டும் எழுதியவர் வேறே என்கிறார்கள். ஸுரேச்வர-மண்டனமிச்ரர் அப்படியே ஆசார்ய ஹ்ருதயத்தை ப்ரதிபலித்து எழுதியவர். இன்னொரு மண்டனமிச்ரரோ அத்வைதமே சில கோட்பாடுகளைச் சொல்பவர். அவரும் ஆசார்யாளின் காலத்திற்குச் சிறிது முற்பட்டவர்தானென்று தெரிகிறது.

ஒரே பெயரில் இரண்டு மநுஷ்யர்கள் இருந்திருப்பது போல, ஒருவருக்கே இரண்டு பெயர் இருந்திருப்பதாலும் கொஞ்சம் குழறுபடிக்கு இடம் கொடுத்திருக்கிறது. இந்த நாளில் 'ணீறீவீணீஷ' கூடபோட்டுக்கொண்டு ரொம்பப் பேர் இருக்கிற மாதிரி!இப்படி ஸுரேச்வர-மண்டனமிச்ரருக்கே விக்வரூபரென்றும் பெயர் இருந்ததாகத் தெரிகிறது......

இப்படிப் பலவிதமாக இருக்கும்போது, சரித்ரம் எழுதியவர்களில் அவரவரும் தாங்கள் கேள்விப்பட்டது, தங்களால் சேகரிக்க முடியாது, வித்யாஸமாக இருப்பதில் தங்களுக்கு ஸத்யமாகத் தோன்றியது ஆகியவற்றைக் கொண்டு எழுதியிருப்பார்கள். தங்களுக்கும் முன்பு இருந்த ஆசார்ய சரித்திரத்தைப் பார்த்து அதை தீணீஷமீ பண்ணி மேலே எழுதியிருப்பார்கள். இதில் அவரவர்கள் அபிமானப் படியும் கதையைக்கொண்டு போயிருக்கூடியது ஸஹஜமே.

தேசம் பூரா ஆசார்யாள் ஸஞ்சாரம் பண்ணிப் பல ஸ்தாபனங்களை ஏற்படுத்திவிட்டுப் போயிருப்பதில் ஒவ்வொன்றை ஆச்ரயத்தவர்களுக்கும் அதை விசேஷித்துச் சொல்லணுமென்று தோன்றக் கூடியதுதான். அதனாலும் கதா

வித்யாஸங்கள் ஏற்பட்டிருக்கும்.

அநேக புஸ்தகங்களுக்குள் இப்படி வித்யாஸம் ஏற்படுவது மட்டுமில்லை. ஒரே புஸ்தகத்துக்கே உள்ள பல ப்ரதிகளுக்குள்ளேயுங்கூட வித்யாஸங்கள் இருப்பதையும் பார்க்கிறோம். ஏட்டுச் சுவடிகளாகவே எழுதி வைத்துக் கிடைத்திருக்கிறவற்றில் பாட பேதங்கள் சிலவும் இருக்கின்றன.

'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்'என்று பழமொழி கேள்விப்பட்டிருக்கலாம். லேககர்களின்-'காப்பி'எழுதும் வநீக்ஷீவீதீமீகளின்-கவனக் குறைவால் பாட பேதும் ஏற்படுவது ஒன்று. சில ச்லோகங்களைக் காப்பி பண்ணாமல்கூட அவர்கள் விட்டிருக்கலாம். இப்படியெல்லாம் ஏற்படுவது ஒன்று. இன்னொன்று, அபிமானத்தைப் பொறுத்து மாற்றி எழுதுவது.

'ஆப்ஜெக்டிவ்'- ஆகத்தான் (ஸ்வயச் சார்பில்லாமல் விஷயச் சார்புடன் மட்டுமே) எழுத வேண்டும், அப்படி எழுதி வைத்ததை 'ஆப்ஜெக்டிவ்'-ஆகத்தான் பார்க்க வேண்டுமென்று பேச்சில், கருத்தளவில், சொன்னாலும் கார்யத்தில் வரும்போது அபிமானங்கள் விட்டுப்போவதென்பது ச்ரமமாகவே இருக்கும். 'லிவீளீமீவ' என்று சொல்கிற போதே பீவீஹறீவீளீமீவ-ம் தொக்கி நிற்பது வேறே!ந்யாயமாகப் பார்த்தால் ஆசார்யாள் - அத்வைதம் என்கிறபோது இதற்கெல்லாம் இடம் இருக்கப்படாதுதான். அவரைப்போல, 'கொள்கையபிமானம் என்று ஒன்று இல்லாமல் ஸத்யத்தை ஸத்யமாகப் பார்த்துச் சொல்லணும்'என்று நிஷ்பக்ஷபாதமாக அலசி அலசித் தத்வத்தை உருவாக்கியவர் எவருமில்லை. அதனால்தான் அவருடைய அத்வைதத்தில் த்வைதம், கர்மம், பக்தி, ஸாங்க்யம், யோகம், பௌத்தம், மீமாம்ஸை அத்தனைக்குமே இடம் கொடுக்க முடிந்திருக்கிறது...ஆனால் ஆசார்யாள் மாதிரி ஆசார்யாள்தான் இருக்க முடியும்!அதுதானே அவர் பெருமை?......

ஏற்கெனவே (ஆசார்ய சரிதங்கள்) எழுதி வைத்து விட்டது தீர்ந்துபோன விஷயம். எழுதியவர்கள் எல்லாருமே ஆசார்யாளிடம் நிரம்ப பக்தி வைத்திருந்த பெரியவர்கள். தங்களுடைய பக்தி தங்களோடு முடிந்து போகாமல்

லோகத்திலும் பரவுவதற்காகவே அவருடைய சரித்ரத்தை அழகாக எழுதிக்கொடுத்தவர்கள். அவர்கள் செய்துள்ள உபகாரம் பெரிசு. அவர்களெல்லாரையும் நாம் போற்றத்தான் வேண்டும்.

இன்றைக்கு அந்தச் சரித்ரங்களை நாம் எப்படி ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளப் போகிறோம் என்பதே கவனிக்க வேண்டியதாகிறது. எந்தச் சரித்ரமானாலும் அது மனஸை ஆசார்யாளிடம் இழுத்து வைக்கிறது என்ற முறையில் பக்தி நூல்களாக எல்லாவற்றையுமே நாம் ரஸிக்க வேண்டியதுதான். இங்கே கேள்வி வேண்டாம். பக்திக்குக் கேள்வியுமில்லை, பதிலுமில்லை. பக்திதான் நமக்கு முக்யம். ஆசார்யாளை நம்முடைய கல்லு மனஸ் நினைத்துக் கொஞ்சம் உருகும்படியாக எங்கே அவகாசம் (வாய்ப்பு) கிடைத்தாலும் அப்படிப் பண்ணிவிட்டுப் போக வேண்டியதுதான். அதனால் எல்லாச் சரித்ரங்களையும் பாராயணம் பண்ணுவோம்.

கதையாக இருப்பதில் எது வாஸ்தவம் என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டு அறிவினால் அலசிப் பார்க்கும்போது நிஷ்பக்ஷபாதமாகப் பண்ணவேண்டும். அவர் எப்படி ஸ்வயாபிமானமில்லாமல் ஸத்யத்தைப் பார்த்தாரோ-ஏகமான பரம ஸத்யத்தைப் பார்த்தாரோ அப்படி அவருடைய பரம ஸத்யத்தைப் பார்க்க அவரையே ப்ரார்த்திக்கொண்டு நடுநிலையிலிருந்து கொண்டு பண்ண வேண்டும்.

ஸத்யத்தோடு ப்ரேமையும் முக்யம். ஒன்றுக்காக இன்னொன்றை விட்டுக் கொடுக்கக்கூடாது. ஸத்யம் என்று நமக்கு ஒன்று முடிவாகத் தோன்றுகிறது என்பதற்காக, அந்த முடிவுக்கு வர முடியாதவர்களிடம் பேதம் பாராட்டக் கூடாது. அத்வைதம் என்றாலே அபேதம்தான். ஒன்றாய்ப் போய்விடுவது என்ற 'ஐக்ய'த்தையே சொன்னவர் ஆசார்யாள். அவர் விஷயமாகவே அபிப்ராய பேதம், மனோபேதம் என்று ஏற்படச் செய்தோமானால் அதைவிட அபசாரமில்லை.

'நமக்கு ஸத்யம் தெரியவேண்டும்;உள்ளது உள்ளபடி பார்த்துப் புரிந்து கொள்கிற தீரம் வேண்டும்;தீரம் என்பது சண்டைக்குப் போகும் சூரத்தனமாகாமல் இருக்கவேண்டும்; நம் மனஸில் கொஞ்சங்கூட ப்ரேமை மாறாமல்

மற்றவர்களுக்கும் எடுத்துச் செல்லவேண்டும்; அவர்களுக்கும் ஸத்யமான த்ருஷ்டியும் ப்ரேமையுள்ள மனஸூம் வாய்க்க வேண்டும்'என்று ஆசார்யாளையே ப்ரார்த்தித்துக் கொண்டு இந்த விஷயத்தில் ப்ரவேசிப்பதுதான் முறையான மனோபாவம்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**' சங்கர விஜய ' ங்களும்**

**ஆசார்யாள் குறித்த மற்ற நூல்களும்**

**" மாதவீய சங்கர விஜயம் " :**'மாதவீய சங்கர விஜயம' என்பது நிறைய ப்ரசாரமாகி இருப்பதாகச் சொன்னேன். காவ்ய ரஸங்கள் நிரம்பியதாக அது இருப்பது ஒரு காரணம். அதே ஸமயத்தில் தத்வங்கள், ஸித்தாந்தங்கள் முதலியவற்றையும், ஆசார்யாளுக்கும் மாற்று ஸித்தாந்திகளுக்கும் நடந்த வாதங்கள் முதலியவற்றில் deep-ஆக அலசி அதில் சொல்லியிருக்கிறது. சங்கர விஜயப் புஸ்தகங்களில் முதல் முதலில் அச்சுப்போட்டு தேசம் முழுவதிலும் விநியோகமான புஸ்தகம் அதுதான் என்பதாலும் ப்ரபலமாயிற்று. அதை நன்றாக ப்ரசாரம் செய்யவேண்டும் என்று ஈடுபாடு கொண்ட அபிமானிகள் இருந்தார்கள். நூறு வருஷம் முந்தியே முப்பது வருஷ இடைவெளிக்குள் பம்பாயிலிருந்து முதல் 'எடிஷ'னும், புனாவிலிருந்து இரண்டாவது 'எடிஷ'னும் போட்டு விநியோகமான புஸ்தகம் அது. இரண்டு வியாக்யானங்களோடு சேர்த்துப் பெரிசாக அசுசுப்போட்ட புஸ்தகம். அச்யுதராய மோடக் என்பவர் எழுதிய 'அத்வைத ராஜ்ய லக்ஷ்மி'என்பது ஒரு வ்யாக்யானம். இன்னொன்று 'டிண்டிம வ்யாக்யானம்'. தனபதி ஸூரி என்பவர் எழுதியது.

மாதவீய சங்கர விஜயம் எழுதியவர் அதற்கு 'ஸம்க்ஷேப (சுருக்கமான) சங்கர விஜயம்'என்று பேர் கொடுத்திருக்கிறார்.

புஸ்தக ஆரம்பத்தில் ஏற்கெனவே ஆசார்யாளைப் பற்றி இருப்பதான சரித்ரங்களிலிருந்து திரட்டிச் சுருக்கித் தாம் எழுதுவதாகத் தெரிவித்திருக்கிறார். வ்யாஸாசலரைப் பேர் குறிப்பிட்டுச் சொல்லி, 'அவருடைய சங்கர விஜயத்திலிருந்தும் இன்னும் மற்ற புஸ்தங்களிலிருந்தும் சேகரித்து எழுதுகிறேன்'என்று சொல்கிறார். "அந்தப் பூர்வ கவிகளுடைய ச்லோகங்கள் ரொம்பவும் மதுரமானவை. ரொம்பவும் தித்திப்பாகச் சாப்பிட்டால் திகட்டிப் போகுமல்லவா?அப்படி ஆகாமலிருப்பதற்கே உப்பு, உறைப்பு, புளிப்பு மாதிரி மாற்று ருசியாக என் ஸொந்த ச்லோகங்களையும் அவர்களுடைய ச்லோகங்களோடு கலந்து ஒரு விநோதமான 'ஸ்டை'லில் எழுதியிருக்கிறேன்" என்று விநயமாகச் சொல்கிறார். விநயத்தில் வாஸ்தவமும் கலந்திருக்கிறது. வாஸ்தவம் என்றது பூர்வ கவிகள் மதுரமாகப் பாடியிருப்பதாகவும் சொல்வதையல்ல. இவருடைய ஸொந்தக கவனமும் அவர்களுடையதைப் போலவே, அதை விடவுங்கூட மதுரமாக இருப்பவைதாம். பின்னே என்ன வாஸ்தவமென்றால் மற்றப் புஸ்தகங்களிலிருந்து இவர் நிறைய எடுத்துத் தம் புஸ்தகத்தில் கொடுத்திருக்காறாரென்பதுதான். வ்யாஸாசலீயத்திலிருந்து பெரிய பெரிய பகுதிகளாகவே எடுத்துத் தம் புஸ்தகத்தில் அங்கங்கே சேர்த்திருக்கிறார். ராஜ சூடாமணி தீக்ஷிதரின் 'சங்கராப்யுதம்', ராமபத்ர தீக்ஷிதரின் 'பதஞ்ஜலி விஜயம்', ஜகந்நாத கவியின் 'பகவத் பாத ஸப்ததி'ஆகியவற்றிலிருந்தும் அநேக ச்லோகங்களை எடுத்து இந்தப் புஸ்தகத்தில் கொடுத்திருக்கிறார். 'ஆனந்த கிரீய'மும் அவர் முக்ய source-ஆக எடுத்துக்கொண்டுள்ள இன்னொரு புஸ்தகம். ஆனால் அது ச்லோகம் கொஞ்சமாகவும் கத்யம் (உரை நடை) அதிகமாகவும் கலந்து எழுதப்பட்ட புஸ்தகமாகையால், முழுக்க ச்லோக ரூபமாகவே அமைந்த இந்தப் புஸ்தகத்தில் அதிலிருந்து அதிகம் சேர்க்க முடியவில்லை. ஆனாலும் அதிலிருந்தும் சில ச்லோகங்களைக் கையாண்டிருக்கிறார்;(அதன்) வசன நடைப் பகுதிகளிலிருந்தும் தாத்பர்யங்களை எடுத்துக்கொண்டு ச்லோகமாகப் பண்ணிக் கொடுத்திருக்கிறார். மொத்தத்தில், பல புஸ்தகங்களில் ஸாரமாயுள்ளதையெல்லாம் ஒரே இடத்தில் நாம் சேர்த்துப் படித்து ரஸிக்கும்படியாகத்

தம்முடைய நூலில் திரட்டிக் கொடுத்திருக்கிறார். மூலத்திலுள்ளதை அப்படியே கொடுப்பது, கொஞ்சம் மாற்றிக் கொடுப்பது, டெவலப் பண்ணிக் கொடுப்பது என்று மூன்று விதமாகவும் பண்ணியிருக்கிறார். ஆகையாலேயே அந்தப் புஸ்தகம் பண்டித பாமர ரஞ்ஜகமாக ப்ரஸித்தமாகியிருக்கிறது.

சில பேர் கேட்கிறார்கள்: 'அவரே பேர் சொல்லிக் குறிப்பிட்டுள்ள வ்யாஸாசலீயத்திலிருந்தும், பூர்வ சரித்ரங்கள் என்று அவர் சொல்வதில் புகழ் பெற்றுள்ள ஒன்றான ஆனந்த கிரீயத்திலிருந்தும் வேண்டுமானால் அவர் நிறைய எடுத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் 'சங்கராப்யுதயம்', 'பதஞ்ஜலி சரிதம்', 'பகவத்பாத ஸப்ததி'முதலியவற்றிலிருந்து அவர் எடுத்துக் கொண்டிருப்பார் என்பதைவிட அந்தப் புஸ்தக கர்த்தாக்கள்தான் இவருடைய புஸ்தகத்திலிருந்து எடுத்துத் தங்களுடைய புஸ்தகங்களில் சேர்த்துக் கொண்டிருப்பதாக ஏன் இருக்கக்கூடாது?'என்று கேட்கிறார்கள்.

ஆனால் அவரேதான் ஸ்பஷ்டமாக அநேக நூல்களிலிருந்து திரட்டியதாகச் சொல்லியிருக்கிறாரே!அது மாத்ரமில்லை. சங்கர விஜயங்கள் என்பவை காவ்ய ரீதியில் எத்தனை ரஸமாக எழுதப்பட்டிருந்தாலும் அவற்றுக்குக் காவ்யம் ('லிட்ரேசர்') என்பதைவிடப் பாராயணத்துக்கான மத க்ரந்தம் என்றுதான் முக்யத்வம். க்ரந்த கர்த்தாவின் நோக்கமே படிப்பவர்கள் ஆசார்ய பக்தியும், ஆஸ்திக்ய புத்தியும் பெறவேண்டுமென்பதே தவிர, 'இலக்கியம்'என்று ரஸித்து மகிழ்வதோடு நின்றுவிட வேண்டும் என்பதல்ல. இப்படி மத சாஸ்த்ரங்களில் சேர்க்கும்படியாக உள்ள புஸ்தகங்களில், 'வேறே கவிகள் சொன்னதை நாம் எடுத்துக் கையாண்டால் கௌரவ ஹானி இல்லையா?' என்ற கேள்வி எழும்புவதில்லை. "நம் 'பர்பஸ்'ஜனங்கள் பக்தியுடன் படித்துப் பாராயணம் பண்ணக்கூடியதான ஒரு க்ரந்தத்தைக் கொடுப்பதுதான். அதற்கு எது உதவுமானாலும் அதை ப்ரயோஜனப்படுத்திக்கொள்ள வேண்டியதுதான்"என்றே நினைத்து யீக்ஷீமீமீ-யாக மாற்றப் புஸ்தகங்களிலிருந்தும் எடுத்துக் கொள்வார்கள்.

ஆனால் ராஜ சூடாமணி தீக்ஷிதர், ராம பத்ர தீக்ஷிதர், ஜகந்நாத கவி முதலியவர்கள் கவிகள் என்றே பெயரெடுத்தவர்கள்; காவ்யங்கள் என்ற முறையிலேயே

தங்களுடைய புஸ்தகங்கள் பெயரெடுக்க வேண்டுமென்று ஆசைப்பட்டவர்கள். இப்படிப்பட்டவர்கள் எங்கேயாவது இன்னொரு புஸ்தகத்திலிருந்து எடுத்துத் தங்கள் புஸ்தகத்தில் சேர்ப்பார்களா?கவிகள் இதை கௌரவ ஹானியாகவே நினைப்பார்கள். (இப்படிச் செய்வதாகத் தங்கள் நூலில்) சொல்லாமலே செய்தால் குட்டு வெளியாகிறபோது 'சோர கவி', 'இலக்கியத் திருடர்'என்று மானமே போவதாகத்தான் ஆகும். ரஸவத்தாக இப்படியொரு சங்கர விஜயப் புஸ்தகம் இருந்தால் நிச்சயம் பல பேருக்கு-பண்டித ஸமூஹத்தினருக்காவது-தெரிந்ததாகத்தான் இருக்கும். அப்படியிருக்கும்போது கவி என்று பேர் வாங்கியவர்கள் அதிலே கை வைத்துத் தங்கள் புஸ்தகத்தில் நுழைய விட்டுக்கொள்ளத் துணிவார்களா?

இன்னொன்று:மாதவீய சங்கர விஜயம் ஸுமார் 2000 ச்லோகம் கொண்ட பெரிய புஸ்தகம். சங்கராப்யுதம், பதஞ்ஜலி சரிதம் ஆகியன அதைவிட ரொம்பவும் சின்னப் புஸ்தகங்கள். (பகவத் பாத) ஸப்ததியிலோ மொத்தம் எழுபதே ச்லோகம்தான். ஒரு பெரிய புஸ்தகத்தில் அங்கங்கே வேறே புஸ்தகங்களிலிருந்து ச்லோகங்கள் கொடுத்தால் வித்யாஸமாகத் தெரியாது. ஆனால் மூலமே சின்னதாயுள்ளபோது அதில் இரவல் சரக்கு நிறைய இருந்ததானால் அப்படிப்பட்ட புஸ்தகம் பண்டித ஸமூஹத்தில் எடுபடுமா?அந்தக் கவிக்குத்தான் பெயர் உண்டாகுமா? ஒரே ஸ்டைலில், ஒரே சீரான கதைப் போக்கிலும் கருத்துப் போக்கிலும் அந்த மூன்று புஸ்தகங்களும் போகும்போது ('மாதவீய'த்தில் காணப்படும்) இந்த ச்லோகங்களும் 'டெக்ஸ்'டோடு அங்கமாக இயற்கையாகப் பொருந்தியிருப்பதால், வேறே புஸ்தகத்திலிருந்து எடுத்துச் சேர்த்தது என்று சொல்வதற்கு இடமில்லை.

மாதவீய கர்த்தாவே கௌரவ ஹானி என்று நினைக்காமல் திறந்த மனஸோடு அநேக நூல்களிலிருந்து கோத்துக் கொடுத்திருக்கிறேனென்று சொல்லும்போது அப்படி இல்லை என்று நாம் ஏன் ஆக்ஷேபிக்க வேண்டும்?

---

**' சங்கர விஜய ' ங்களும்**

**ஆசார்யாள் குறித்த மற்ற நூல்களும்**

**வ்யாஸாசலீயம் :** அந்தப் புஸ்தகத்திலிருந்து தெரிவது வ்யாஸாசலீயத்திற்கு நிறைய ப்ராமாண்யம் (மெய்ம்மை) உண்டென்பது. அசலம் என்றால் மலையல்லவா?அதை வைத்து சிலேடையாக மாதவீயத்தின் ஆரம்பத்தில் அதைப் பண்ணியவர், "வ்யாஸ அசலர் முதலான பூர்வகாலப் பண்டிதர்கள் என்ற மலையில் ஆசார்ய சரித்ரம் ஒரு உன்னதமான வ்ருக்ஷமாக முளைத்திருக்கிறது. அதன் புஷ்பங்களில் நிரம்பியுள்ள தேனை (அர்த்த புஷ்டியை) வித்வத் ஸமூஹம் என்கிற வண்டுகள் பானம் பண்ணுகின்றன. உச்சத்திலுள்ள அந்தப் புஷ்பங்களில் என் சிற்றறிவு என்ற குட்டையான துறடுகோலுக்கு எட்டுகிற கொஞ்சத்தை மட்டும் ஈச்வர ஸ்வரூபமான ஸ்மரணையோடு பறித்து மாலையாகத் தொடுத்து இந்த 'ஸம்க்ஷேப சங்கர விஜய'மாகத் தருகிறேன்"என்று சொல்லியிருக்கிறார்.

இதே உபமானம் சொல்லி இதே வ்யாஸாசலீயத்தை கோவிந்த நாதரும் தம்முடைய சங்கர விஜயத்தில் கொண்டாடியிருக்கிறார் :

**அத்யுந்நதஸ்ய காவ்யத்ரோர் - வ்யாஸாசல - புவோ - (அ)கிலம் ***

**அர்த்த ப்ரஸூநாத் - யாதாதும் அஸமர்த்தோ - (அ)ஹம் அத்புதம் ****

"வ்யாஸாசல பூமியில் (வ்யாஸ அசலமாகிய மலை நிலத்தில்) மிகவும் உயர்ந்த காவ்ய மரமாக ஆசார்ய சரித்ரம் முளைத்திருக்கிறது. அதனுடைய அர்த்தமாகிய அத்புத புஷ்பத்தைப் பறித்து வர நான் சக்தியற்றவன்"என்று அர்த்தம்.

புஸ்தக ஆரம்பத்திலேயே வ்யாஸாசலரை ஸ்துதித்த மாதவீய

கர்த்தா அப்புறம் பத்துப் பதினைந்து ச்லோகங்களில் அவையடக்கமாகப் பல விஷயம் சொல்லிவிட்டு மறுபடியும், **" தந்யோ வ்யாஸாசல கவிரஸ் - தத் - க்ருதிஜ்ஞாச்ச தன்யா :"** என்பதாக, 'கவி ச்ரேஷ்டரான வ்யாஸாசலரும் பாக்யசாலி'; 'அவருடைய க்ரந்தத்தை அறிந்தவர்களும் பாக்யசாலிகள்'என்று பாராட்டுகிறார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**' சங்கர விஜய ' ங்களும்**

**ஆசார்யாள் குறித்த மற்ற நூல்களும்**

**ஆனந்தகிரீயம் :** முழுசாகக் கிடைத்திருக்கும் சங்கர விஜயங்களுக்குள் ரொம்பவும் பூர்வ காலத்தியதாகத் தெரிவது ஆனந்தகிரீயம். பல source-களிலிருந்து அதற்கு நிரம்ப ப்ராமாண்யம் உண்டென்பது உறுதியாகிறது. மாத வீயத்திற்கு இரண்டு வ்யாக்யானங்கள் சொன்னேனல்லவா? மாதவீயத்தில் அதற்கு ஆதி பூர்வ ஆதாரமாகச் சொல்லப்படும் ப்ருஹச்-சங்கர விஜயம், ப்ராசீன சங்கர விஜயம் என்பவற்றிலுள்ள விவரங்களெல்லாம் ஆனந்தகிரீயத்திலேயே அடங்கியிருக்கின்றனவென்றும் அதனால் இதையே ப்ருஹச் - சங்கர விஜயமென்றும் ப்ராசீன சங்கர விஜயமென்றும் சொல்வதுண்டு என்றும் அந்த இரண்டு வ்யாக்யானங்களிலிருந்து தெரிகிறது. மாதவீயத்தில் சொல்லாத விஷயங்களையும் சில இடங்களில் இந்த வ்யாக்யானங்களில் சொல்லியிருக்கிறார்கள். உதாரணமாக, அச்யுதராய மோடக் தம்முடைய 'அத்வைத ராஜ்ய லக்ஷ்மி'யில் ஆசார்யாளின் கடைசி நாட்களைச் சொல்லுமிடத்தில் 'சிவ ரஹஸ்ய'த்தின் ஒன்பதாவது அம்சத்தில் பதினாறாவது அத்யாயத்தில் வருகிற ஆசார்ய சரித்ரம் முழுவதையும், கடைசியில் அவர் காஞ்சியில் ஸித்தி பெற்றதுவரை quote பண்ணிவிட்டு, இந்த விஷயங்களெல்லாம் ஆனந்தகிரியின் ப்ருஹச்-சங்கர

விஜயத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன என்று மேலும் 'அதாரிடி'காட்டும் விதத்தில் சொல்லியிருக்கிறார். அவர் சொல்வதிலிருந்து ஆனந்தகிரிக்கு 'ஆனந்தஞானர்'என்று பெயரிருந்தது தெரிகிறது.

தனபதிஸூரி தம்முடைய ('டிண்டிம') புஸ்தகத்தில் ஆசார்யாளின் திக்விஜயத்தை வர்ணிக்கும் மாதவீயத்தின் 15-வது அத்யாயத்திற்கு வ்யாக்யானம் செய்யும் போது, என்னென்ன ஸித்தாந்தக்காரர்களோடெல்லாம் ஆசார்யாள் வாதம் பண்ணினார் எப்படி வாதித்தார் என்று 800 ச்லோகங்களுக்கு மேலே சொல்லிக்கொண்டு போகிறார். "அத்ர ப்ராசீநாநுரோதேன வ்யாக்யேயம்"- அதாவது, "ப்ராசீனமான மூலத்தை அநுஸரித்து இப்படி வ்யாக்யானம் பண்ணப்பட்டிருக்கிறது"என்றும் சொல்கிறார். அவர் ஆனந்தகிரீயத்தையே ரொம்பவும் க்ளோஸாக அநுஸரித்துத்தான் இந்த இடத்தில் எழுதியிருக்கிறாரென்பது அந்த சங்கர விஜயத்தைப் பார்த்தால் ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் தெரியும். திக்விஜயத்தில் ஆசார்யாள் எந்தெந்த ஊருக்குப் போனார், எந்த ஆர்டரில் போனார், யார் யாரைப் பார்த்தார், எங்கே எத்தனைகாலம் தங்கினார் என்ற விஷயங்களெல்லாம் நூற்றுக்குத் தொண்ணூறு ஆனந்த கிரீயத்திலுள்ளபடியே இந்த வ்யாக்யானத்தில் இருப்பது மட்டுமின்றி, ஒவ்வொரு ஸித்தாந்தக்காரரும் அவரோடு ஆசாயாளும் எப்படி வாத ப்ரதிவாதம் பண்ணினார்களென்பதும் அப்படியே ஆனந்தகிரீயத்தில் காணும் பாயிண்ட்களாக, அதே வாக்யங்களாகக்கூட, இருக்கின்றன.

ச்ருங்கேரி ஸ்வாமிகள் ஒருவருடைய உத்தரவிலும் மேற்பார்வையிலும் குருவம்ச காவ்யம் என்ற க்ரந்தம் எழுதப்பட்டதாகச் சொன்னேனல்லவா?அதை எழுதிய காசி லக்ஷ்மண சாஸ்த்ரிகளே அதற்கு வ்யாக்யானமும் எழுதியிருக்கிறார். மூல நூலின் ஆரம்பத்தில் அவர் ஆசார்யாளின் குலத்தைப் பற்றிச் சொல்லும்போது, 'இது ஏற்கெனவே கவீந்திரர்களால் விவரிக்கப்பட்டிருக்கிறது'- 'கவீந்த்ரை : உபர்சிதம்'என்று சொல்லியிருப்பதற்கு அவரே வ்யாக்யானம் பண்ணும்போது 'கவீந்திரர்களால்'என்பதற்கு,

'ஆனந்தகிரி முதலான யதீந்திரர்களால்'என்று ஆனந்தகிரி ஒருவரை மாத்திரம் பேர் குறிப்பிட்டு ஸ்தானம் கொடுத்துச் சொல்கிறார் : "ஆனந்தகிரி யதீந்த்ராதிபி :".

இண்டாலஜிஸ்ட்களுக்குள் ப்ரஸித்தி பெற்ற ஒருவர் (ஹெச்.ஹெச்.) வில்ஸன். ஸண்ட்ரகோட்டஸ் ஸமாசாரம் கண்டுபிடித்துச் சொன்னவர். அவரும் ஆனந்தகிரீயத்தின் ப்ராமாண்யத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார். பொதுவாக வெள்ளைக்காரர்களின் மனோபாவம் என்ன என்று முன்னே சொன்னேன். ஆகையால் அவர்கள் 'ஸர்டிஃஃபிகேட்'கொடுத்துத்தான் நாம் நம்முடைய புஸ்தகங்களையே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று இதைச் சொல்லவில்லை. அவர்களில் ரொம்பப் பேருக்கு நம்முடைய வழிகளிலும் நம்பிக்கைகளிலும் கௌரவமான பார்வை இருப்பதில்லை. தஞ்சாவூர் அரண்மனையைச் சேர்ந்த ஸம்ஸ்க்ருதச் சுவடிகளுக்கு 'இன்டெக்ஸ்'தயாரித்த பர்னெல் என்பவர் இப்படித்தான் ஆனந்தகிரீயத்தை ஒரே கண்டனமாகப் பண்ணியிருக்கிறார். அதில் சொல்லியே இல்லாத விஷயத்தைச் சொல்லியிருப்பதாக-'கோரமாண்டல் கோஸ்ட்' என்று அவர்கள் சொல்லும் சோழ மண்டலக் கடற்கரையிலேயே ஆசார்யாள் பல மடங்கள் ஸ்தாபித்ததாக ஆனந்தகிரீயத்தில் இல்லவே இல்லை. ஆனால் அப்படியிருப்பதாக-இவர் (பர்னெல்) சொல்லிக் கண்டனம் பண்ணியிருக்கிறார். வில்ஸனே ஆனந்தகிரீயத்தில் அநேக 'மிராகிள்'கள் சொல்லியிருப்பதை நம்பமுடியாமல், 'இதெல்லாம் ஒரே பொய்யாகப் புளுகியிருப்பது' என்று திட்டியிருக்கிறார். ஆனாலும் மொத்தத்தில் அவர் ஸம்மதமாகச் சொல்வதை ஏன் சொல்கிறேன் என்றால் அதுதான் நமக்கு 'அதாரிடி'என்பதற்காக அல்ல;அநேக விஷயங்களில் ஸம்மதமாகப் போக முடியாதவர்களே அப்படிப் போகிறார்களென்றால் அப்படிப்பட்டது நிச்சயம் ஸரியானதாக, ப்ரமாணமுள்ளதாகத்தானே இருக்கும் என்பதற்காகத்தான்! அவர்கள் கொள்கைப்படி ஆசார்யாள் கி.பி. 788-820 தானே?வில்ஸன் எழுதியது பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் (1832-ல்). அதாதவது அவரது எண்ணப்படி ஆசார்யாள் அவருக்கு ஆயிரம் வருஷம் முந்தி இருந்தவர். ஆனந்தகிரீயத்தை அவர் ஆராய்ந்து பார்த்து, அதுவும் கிட்டத்தட்ட அவ்வளவு காலத்திற்கு

முந்தையது, ஆசார்யாள் காலத்தையொட்டியே எழுதப்பட்டது என்பதற்கு மறுக்கமுடியாத உட்சான்று இருக்கிறது என்று அபிப்ராயம் தெரிவித்திருக்கிறார். அக்கால ஹிந்து மத நிலையை உள்ளபடி அறிவதற்கு இந்தப் புஸ்தகத்தை ஸ்மீக்ஷீஹ் ஷீயீமீ ரீஸ்ரீவீபீமீ-ஆக (மிகவும் நம்பகமான வழிகாட்டியாகப்) பின்பற்றலாம் என்கிறார்.

மோனியர் வில்லியம்ஸின் 'ஸான்ஸ்க்ரிட்-இங்கிலீஷ் டிக்ஷனரி'என்பது ஒரு பெரிய வால்யூம். நிறைய ஆராய்ச்சி பண்ணி எழுதியது. அதிலே அவர் தாம் பார்த்த மூன்று சங்கர விஜயப் புஸ்தகங்களுக்குள் ஆனந்தகிரீயத்தைத்தான் ஸம்பவங்களை, ஆசார்யாளின் திக்விஜயங்களை உள்ளபடி எழுதிய "க்ஷீமீநீஷீக்ஷீபீவீஸீரீ" என்று அபிப்ராயம் தெரிவித்திருக்கிறார்.

ஆதாரபூர்வமாக ஆசார்ய சரித்திரம் அறிய இப்படியாக ஆனந்தகிரீயத்திற்கும் வ்யாஸாசலீயத்திற்கும் நிரம்ப ப்ராமாண்யம் இருப்பதாகத் தெரிவதால் அந்த இரண்டை முக்யமாக எடுத்துக்கொண்டு, அப்புறம் அவற்றுக்கு விரோதமில்லாமல் மற்றப் புஸ்தகங்களில் என்ன அதிகப்படி விஷயங்கள் சொல்லியிருக்கிறதோ அவற்றையும் சேர்த்துக் கொண்டுவிட்டால் ஒருவாறு ஆசார்யாளின் சரித்ரத்தை உள்ளபடிப் பூர்ணமாகத் தெரிந்துகொண்டுவிடலாம்.

அந்த இரண்டு புஸ்கங்களுக்குள்ளேயே வித்யாஸமாக உள்ள இடங்களில் என்ன செய்வது?

இதோடுகூட-இதைவிட முக்யமாக என்றுகூடச் சொல்லலாம்-ஒரே புஸ்தகத்தில் பாடபேதங்கள் இருக்கிறதே, எந்தப் பாடத்தை ஸரியென்று ஏற்பது?......

ஆசார்யாளுடைய பல சிஷ்ய பரம்பரைக் கிளைகள் இருக்கின்றன. ஆசார்ய சரித்ர புஸ்தகங்களில் சில இவற்றில் ஒரொரு கிளையைக் குறிப்பாக அபிமானித்து, ஆச்சரயித்து வந்தவர்களுடைய ஸம்பந்தமுடையதாக இருக்கிறது. பொதுவாக, பொதுநோக்கோடு உள்ளவை சிவரஹஸ்யம், மார்க்கண்டேய ஸம்ஹிதை முதலிய இதிஹாஸ, புராணங்கள். ஆசார்யாளிடமோ அத்வைத ஸித்தாந்தத்திடமோ அவற்றுக்கு விசேஷப் பற்றுதலில்லை.

இதிஹாஸ-புராணங்கள் என்ற வகையில் அநேக தெய்வ

புருஷர்களின் கதைகளை அவை சொல்வதில் ஆசார்யாளைப் பற்றியும் சொல்கின்றன என்பதோடு ஸரி. எல்லா சங்கர விஜயங்களுக்கும் இந்த இதிஹாஸ-புராணங்கள் முற்பட்டவை என்பதும் ஆஸ்திகர்கள் அபிப்ராயம். கவிகளிலும் குறிப்பாக இன்னாரை ஆச்ரயித்து, அவர்கள் ஸம்பந்தமாக விசேஷம் கொடுத்து எழுதுவது என்றில்லாமல் பொது நோக்கோடு எழுதியவர்கள் உண்டு. சங்கராப்யுதயம், பதஞ்ஜலி விஜயம்ஸ சங்கராசார்ய சம்பூ எழுகியவர்களெல்லாம் இப்படிப் பொதுவாகக் கவிகள் என்று பெயர் வாங்கியவர்கள். இவர்கள் ஆசார்யாளைப் பற்றி எழுதும்போது வழிவழியாக வந்துள்ள நம்பிக்கைகள், கர்ணபரம்பரைக் கதைகள், தங்களுக்கு முன்பே இருந்துவந்துள்ள சங்கர விஜயக் கதைகள் ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவு பண்ணி அதன்படியே எழுதியிருப்பார்கள்.

ஆகையால் நாம் சங்கர விஜயப் புஸ்தங்களுக்குள்ளே இதுவா, அதுவா, ஒரு புஸ்தகத்திலேயே இந்தப் பாடமா அந்தப்பாடமா என்று பார்க்கும்போது, எந்த விவரங்கள் முந்தி வந்த இதிஹாஸ - புராணதிகளுக்கு மீணீறீறீஹ் ஆகிறதோ (ஒத்துப் போகிறதோ), பொதுக் கவிகள் இந்த (சங்கர விஜய) புஸ்தகத்துக்கு முந்தியவர்களாயிருக்கும் பக்ஷத்தில் அவர்கள் சொல்வதற்கும் மீணீறீறீஹ் ஆகிறதோ, அல்லது அந்தக் கவிகள் இதற்குப் பிற்பட்டவர்களானால் அவர்களும் இதிலிருந்தே எந்த விவரங்களை எடுத்துக் கொண்டிருக்கிறார்களோ-அப்படிப்பட்ட ஸமாசாரங்களை ஸத்ய ப்ரமாணமானவையென்று எடுத்துக்கொண்டுவிடலாம்.

எல்லாவற்றோடுகூட, (குறிப்பாக, ஒரு முடிவும் காணமுடியாதபோது) தேசம் பூராவிலும், அல்லது பெரிய பகுதியில் 'ஆழமான நம்பிக்கை'என்று சொல்லக்கூடிய நெடுங்காலமாக இருந்துவரும் கர்ணபரம்பரை விஷயங்களை அத்தை பாட்டிக் கதை என்று தள்ளிவிடாமல் மதிப்புக் கொடுத்து க்ரஹித்துக்கொள்ள வேண்டும்......

ஒரு சார்பான புஸ்தகம் என்று சொல்லும்படியில்லாமல் ஒன்றுக்கு மேற்பட்ட புஸ்தகங்கள் ஒரே விதமாகச் சொல்லி, அதற்கு இசைவாகவே ஜனஸமூஹத்தின் பொதுவான நம்பிக்கையும் உள்ளபோது அந்த விஷயம் ஸரியென்று

வைத்துக்கொண்டுவிடலாம்...

ஆசார்யாள் வேடிக்கை பார்க்கிற மாதிரி இருக்கிறது-பல விதமாகப் பல புஸ்தகங்களில் காட்டி!ஙிணீஉவீந் மீமீஜ்மீஉ (மூலாதார க்ரந்தங்கள்) என்று சொல்லியிருக்கும் சிவரஹஸ்ய - மார்க்கண்டேய ஸம்ஹிதைகளுக்குள்ளேயே வித்யாஸமிருக்கிறது!இரண்டிலும் ஆசார்யாள் பரமேச்வரனிடமிருந்து பஞ்சலிங்கங்கள் பெற்றுக்கொண்ட விஷயம் இருக்கிறது. ஆனால் சிவரஹஸ்யத்தில், காசி விச்வநாத லிங்கத்திலிருந்து ஸ்வாமி ஆவிர்பாவித்து லிங்கங்களைக் கொடுத்தாரென்று இருக்கிறது. மார்க்கண்டேய ஸம்ஹிதையிலோ ஆசார்யாள் கைலாஸத்துக்கே போய் ஸ்வாமியை நேரே தர்சனம் பண்ணி அவரிடமிருந்து லிங்கங்களை வாங்கிக்கொண்டாரென்று இருக்கிறது. ஆசார்யாள் கைலாஸத்துக்குப் போய் ஸ்வாமி தர்சனம் பண்ணி லிங்கங்கள் வாங்கிக்கொண்டதோடு, அப்போதுதான் 'ஸௌந்தர்ய லஹரி'யும் பெற்றுக் கொண்டாரென்று லோகத்தில் பொது வழக்காகக் கதை இருக்கிறது. அவர் கைலாஸத்துக்குப் போய் லிங்கம் வாங்கிக்கொண்டதாகச் சொல்லும் மார்க்கண்டேய ஸம்ஹிதையிலும் அப்போதே அவர் 'ஸௌந்தர்ய லஹரி'பெற்ற விஷயமும் இருக்கிறது. இப்படி மீணீறீறீஹ் ஆவதால் அதையே நாம் எடுத்துக்கொள்ளலாம். அதோடு மார்க்கண்டேய ஸம்ஹிதையில்தான் ஐந்து லிங்கங்களையும் எங்கெங்கே வைத்தாரென்றும் சொல்லியிருக்கிறது. ஆசார்யாள் ஜயந்தி வைசாக சுக்ல பஞ்சமி என்றே தேசம் முழுவதிலும் கொண்டாடப்படுவதால் அதையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று முன்னேயே சொன்னாற் போல, அவருடைய ஜன்ம ஸ்தலம் காலடி என்றே பொது அபிப்ராயமிருப்பதால் அதுவே ஸரியென்று வைத்துக் கொள்ளவேண்டும். பொதுவாக அத்தனை ஆசார்ய சரித்ரங்களிலுமே காலடியைத்தான் சொல்லியிருந்தாலும் ஆனந்த கிரீயத்தின் பாடபேதங்களில் ஒன்றில் (ஆசார்யாளின் ஜன்ம ஸ்தலம்) சிதம்பரம் என்று இருப்பதை எடுத்துக் கொள்வதற்கில்லை.

(சிதம்பரமும் ஆசார்யாளும்)

(சிதம்பர ஸமாசாரம் கொஞ்சம் சொல்லவேண்டும்.

ஆசார்யாளுக்கும் சிதம்பரத்திற்கும் ஸூக்ஷ்மமாக ஒரு ஸம்பந்தம் இருந்திருப்பதாகத் தெரிகிறது. அவர் பரமேச்வரனிடமிருந்து பெற்ற ஐந்து ஸ்படிக லிங்கங்களில் ஒன்றை ச்ருங்கேரியிலும், இன்னொன்றை இங்கேயும் (காஞ்சி ஸ்ரீமடத்திலும்) ஸ்தாபித்ததுபோல பாக்கி மூன்றை மூன்று ப்ரஸித்த க்ஷேத்ரங்களில் ப்ரதிஷ்டை செய்திருக்கிறார். அந்த மூன்றில் இரண்டு ஹிமாசலத்திலேயே உள்ள கேதாரிநாதமும், நேபாளத்திலுள்ள நீலகண்ட க்ஷேத்ரமுமாகும். மற்றது எதுவென்றால் சிதம்பரம்தான். தாம் ஸித்தி அடைகிற பர்யந்தம் தம்மிடமே ஆசார்யாள் வைத்துக்கொண்டிருந்த லிங்கத்தை அந்த ஸமயம் நெருங்கும்போது ஸூரேச்வராசார்யாளிடம் கொடுத்து சிதம்பரத்தில் ப்ரதிஷ்டை பண்ணச் சொன்னாரென்று ஆனந்தகிரீயத்தில் இருக்கிறது.

சிதம்பரம் பரம வேதாந்த தாத்பர்யங்களைக் குறிக்கும் க்ஷேத்ரம். (சிதம்பரம் என்ற) அந்தப் பேரே வேதாந்தமானது. "ஞான ஆகாசம்"என்று அர்த்தம். ஸாதாரணமாக க்ஷேத்ரப் பெயர்கள் புராணக் கதைகளைக் குறிப்பதாக இருப்பதே வழக்கம். காளஹஸ்தி, அருணாசலம், ஜம்புகேச்வர ம்-கஜாரண்யம்-திருவானைக்கா என்ற பெயர்கள் அந்தந்த ஸ்தல புராண ஸம்பந்தமுள்ளவைதான். 'சிதம்பரம்'என்ற பெயர் மாத்திரம் வேதாந்தமாக இருக்கிறது. வ்யாக்ரபுர ம்-புலியூர் என்று புராண ஸம்பந்தமுள்ளதாக அதற்கு ஒரு பெயர் இருந்தாலும் சிதம்பரம் என்பதுதானே ப்ரஸித்தமாயிருக்கிறது? "திருச்சிற்றம்பலம்"என்று திருமுறைகளை ஆரம்பிக்கிறார்கள்-அதுவும் வேதாந்தப் பேர்தான். 'தஹராகாசம்' என்று நம் ஹ்ருதய குஹையில் ஆத்ம ஸ்தானமாக இருப்பதைத்தான் 'சிறு அம்பலம்'என்பது. ஸ்வரூப நடராஜா பஞ்ச க்ருத்யம் செய்வதற்குப் பக்கத்திலேயே அரூபமாக, நிஷ்க்ரியமாக உள்ள ஆகாசத்தை 'ரஹஸ்யம்'என்று அங்கே வைத்திருக்கிறது. ஆகாச க்ஷேத்ரமென்றால் மீமீலீமீக்ஷீ என்ற ஸூக்ஷ்ம பூதத்தைக் குறிப்பது மட்டுமில்லை;ஆத்ம தத்வத்தையேதான் ஆகாசம் என்பது. யோக - வேதாந்த ப்ரகரணமான 'யோகதாராவளி'யில் ஆசார்யாள் ஸ்ரீசைலத்தைக் குறிப்பிட்டிருப்பதற்கு விசேஷமுண்டு என்பது போலவே, 'விவேக சூடாமணி'யில் அவர் 'சிதம்பரம்'என்ற வார்த்தையைக் குறிப்பிட்டிருக்கிறார். புஸ்தகத்தின் கடைசி

பாகத்தில் ஜீவன் முக்தனை வர்ணிக்கும்போது, வாஸ்தவத்தில் அவன் நிலைபெற்றிருப்பது ஞான ஆகாசத்திலேயே ஆனதால், வெளிப்பார்வைக்கு எப்படி வேண்டுமானாலும் கூத்தடிப்பான், பைத்தியம் மாதிரி இருப்பான், பச்சைக் குழந்தையாட்டம் இருப்பான், பிசாசு மாதிரிகூட இருப்பான், எல்லாவற்றையும் அவிழ்த்துப் போட்டுவிட்டுத் திரிவான், இல்லாவிட்டால் மான்தோல், புலித்தோல் எதை வேண்டுமானாலும் போட்டுக்கொண்டிருப்பான் என்று சொல்கிறார். அப்போது அவனை 'ஞானாகாசத்தில் நிலைபெற்றவன்'என்பதற்கு " சிதம்பரஸ்த :"என்றே போட்டிருக்கிறார்.

ஆசார்யாள் பிறந்த மலையாள தேசத்திற்கு ஒட்டினாற் போல கொங்கு நாட்டில் பேரூர் என்ற நடராஜ க்ஷேத்ரம் இருக்கிறது. ஆசார்யாள் அவதாரத்திற்காக மாதா பிதாக்கள் பஜனம் இருந்த திருச்சிவப்"பேரூர்"தானே?பேரூருக்கு ஆதி சிதம்பரம் என்றும் பெயரிருக்கிறது!

அம்பலம் என்று ஸந்நிதிகளைச் சொல்கிற வழக்கம் மலையாளத்தில்தான் இருக்கிறது. சிற்றம்பலம், பொன்னம்பலம், வெள்ளியம்பலம் என்றெல்லாம் நடராஜ ஸந்நிதியைத்தான் தமிழ் தேசத்தில் சொல்கிறோம். இந்த அம்பலத்தின் விமானமும் தமிழ்நாட்டில் இதர ஸந்நிதிகளிலுள்ள கோபுர பாணியில் இல்லாமல் மலையாளக் கூரை கட்டுமான பாணியிலேயே இருக்கிறது. சிதம்பரத்து தீக்ஷிதர்கள் குடுமியைப் பின்பக்கம் முடியாமல் நம்பூதிரிகளைப்போல் முன்பக்கம் முடிகிறார்கள். நம்பூதிரிகள் நேர் உச்சியில் ஊர்த்வ சிகையாக முடிந்தால், இவர்கள் இன்னம் முன்பக்கம் கொஞ்சம் பக்கவாட்டாகப் பூர்வ சிகையாக முடிகிறார்கள். ஆகக்கூடி, பின்னால் முடித்துக்கொள்ளாத ஒற்றுமை இருக்கிறது.

ஆசார்யாள் சிதம்பரத்தில் பிறந்ததாகச் சொல்லியுள்ள பாடத்தில் அவருடைய தகப்பனார் பெயர் விச்வஜித், தாயார் பெற்ற விசிஷ்டா என்று எல்லாமே வித்யாஸமாயிருக்கிறது! 'என்ன இப்படியிருக்கே?' என்று ஆராய்ந்து கொண்டு போனால் அபிநவ சங்கரர் என்று சொன்னேனே, கி.பி. 788-ம் காலத்தவர் என்று, அவருக்கு இதெல்லாம் பொருந்தியிருக்கிறது!அவர் சிதம்பரத்தில்தான்

அவதரித்திருக்கிறார். அப்பா பேர் விச்வஜித், அம்மா விசிஷ்டா. இரண்டு பேருக்கும் மாறாட்டம் ஏற்பட்டுப் பாடம் மாறியிருக்கிறதென்று புரிகிறது.

ஆனந்தகிரிக்கும் அலாதியாக ஒரு சிதம்பரப் பற்றுதல் இருந்ததாகத் தெரிகிறது. (ஆனந்தகிரீய) புஸ்தகத்தின் எல்லாப் பாடங்களிலுமே குழந்தை சங்கரர் வளர்ந்ததைச் சொல்லும்போது "ஸாக்ஷாத் சிதம்பரேச இவ விராஜமாந:- ஸாக்ஷாத் நடராஜாவைப்போலவே ப்ரகாசித்தவர்"என்று சொல்லியிருக்கிறது.

ஆசார்யாள் கோவிந்த பகவத்பாதரை ஸந்தித்து உபதேசம் பெற்றது சிதம்பரமென்றே ஆனந்கிரீயத்தின் எல்லாப் பாடங்களிலும் இருக்கிறது. ஆசார்யாள் பற்றிய இதர புஸ்தகங்களில் அந்த இடம் நர்மதா தீரம், பத்ரி, காசி என்றெல்லாம் வித்யஸமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் பரவலான ஐதிஹ்யம் நர்மதா தீரம் என்றே இருப்பதை கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

அந்த உபதேசத்தின்போது வெளிலோகத்திற்குத் தெரியாவிட்டாலும் உள்ளூரச் சிதம்பர ஸம்பந்தம் இருந்ததாக வைத்துக்கொள்ளலாம். எப்படியென்றால்.... கோவிந்த பகவத்பாதர் யார்?பதஞ்ஜலி அவதாரம்தான். பதஞ்ஜலி சிதம்பரத்தோடு இணைபிரியாமல் சேர்ந்தவர். (ஆசார்யாளின்) குரு இப்படியென்றால் பரமகுருவான கௌடபாதரும் சிம்பரத்தில்தான் பதஞ்ஜலியிடம் அவர் பதஞ்ஜலி ரூபத்திலிருந்தபோதே வ்யாகரண உபதேசம் பெற்றவர். ஆசார்யாளோ தத்வரீதியில் எப்போதும் 'சிதம்பரஸ்தர்.'அதனால் அவரை ஞானாகாசத்திலேயே வைத்து குரு உபதேசித்ததை "சிதம்பரத்தில் உபதேசித்தார்"என்று எழுதிவிட்டார் என்கலாம்!)

காசியில் தீண்டாதானின் ரூபத்தில் விச்வநாதரே வந்து ஆசார்யாளைப் பரீக்ஷித்தது, தாயாரின் மரண ஸமயத்தில் ஆசார்யாள் அவள்கிட்டே போய் விச்ராந்தி பண்ணிப் புண்ய லோகம் அனுப்பியது முதலான வ்ருத்தாந்தங்கள் ஆனந்தகிரீயத்தில் இல்லாவிட்டாலும், மற்ற புஸ்தகங்களில் இருப்பதாலும், லோக வழக்கிலும் ப்ரஸித்தமாயிருப்பதாலும் அவற்றைச் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான்.

ஆசார்யாள் ஷண்மத ஸ்தாபனம் பண்ணியதை விளக்கமாகச் சொல்கிற புஸ்தகம் ஆனந்தகிரீயம்தான். ஆனாலும் பொது அபிப்ராயத்தில் ஷண்மதம் என்றால் சிவன், அம்பாள் விஷ்ணு, பிள்ளையார், ஸுப்ரஹ்மண்யர், ஸூர்யன் ஆகிய ஆறு பேரைக் குறித்த உபாஸனை என்று இருந்தாலும் இதில் ஸுப்ரஹ்மண்ய மதமான கௌமாரத்துக்கு பதில் காபாலிகத்தைச் சொல்லியிருக்கிறது. இதே சரித்ரத்தில் முன்னாடி ஆசார்யாள் நிராகரணம் செய்த 72 மதங்களில் பலவற்றை ஒவ்வொரு ப்ரகரணத்தில் ஒவ்வொன்றாகக் கொடுக்கும்போது காபாலிகத்தை அவர் கண்டனம் செய்த கதையும் இருக்கிறது. ஆனால் பிற்பாடு அவர் ஐந்து சிஷ்யர்களைக் கொண்டு சைவம்-சாக்தம்-வைஷ்ணவ ம்-காணபத்யம்-ஸௌரம் ஆகியவற்றை ஸ்தாபித்த அப்புறம் காபாலிகரான வடுகநாதர் என்பவர் அவரிடம் வந்து தம்முடைய மதத்தையும் பரப்ப அவர் அநுக்ரஹிக்கணும் என்று கேட்டுக்கொண்டதாகவும், பூர்வ பக்ஷமாக-அதாவது, எதிர்க் கட்சியும் என்னவென்று கொஞ்சம் தெரிந்தால் நல்லதுதானே என்கிற ரீதியிலும் வைதிகாசாரங்களை அநுஸரிப்பதற்கில்லாமல் ப்ரஷ்டர்களாகப் போனவர்களை உத்தேசித்தும் அவர், "ஸரி, உன் மதத்தையும் கொஞ்சம் ப்ரசாரம் பண்ணி விட்டுப்போ!"என்று உத்தரவு கொடுத்ததாகவும் வருகிறது. அவர் (வடுகநாதர்) அப்படியே பண்ணிவிட்டு அங்கே திரும்பி வந்திருந்த மற்ற ஐந்து சிஷ்யர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாரென்று வருகிறது.

ஜன ஸமூஹத்தில் உள்ள ஐதிஹ்யமோ கௌமாரம் உட்பட்ட ஷண்மதங்களை ஆசார்யாள் ஸ்தாபித்தாரென்பதாகத்தான் இருக்கிறது. அந்த ஐதிஹ்யம் இருக்கட்டும். தர்ம சாஸ்த்ர நிபந்தன க்ரந்தம் என்பதாக ப்ராமாண்யம் பெற்றுள்ள 'பராசர மாதவீயம்'என்ற நூலிலும்,

சைவம் ச, வைஷ்ணவம், சாக்தம், ஸௌரம் வைநாயகம் ததா *

ஸ்காந்தம் ச பக்தி - மார்கஸ்ய தர்சநாநி ஷடேவ ஹி **

என்று முருக உபாஸனையான கௌமாரத்தையே 'ஸ்காந்தம்'என்று ஆறாவது மதமாகச் சொல்லியிருக்கிறது.

சாஸ்த்ர ப்ரகாரமே எல்லாம் பண்ணின ஆசார்யாள் கௌமாரத்தை விட்டிருப்பாரா?

ஆனந்தகிரீயத்திலேயே ஆரம்ப ப்ரகரணமொன்றில் ஆசார்யாள் அனந்தசயன க்ஷேத்ரத்திலிருந்து குமாரஸ்வாமி ஆவிர்பவித்த ஸ்தலமான ஸுப்ரஹ்மண்யம் என்ற க்ஷேத்ரத்திற்குப் போனார் (உடுப்பி கிட்டே கூகே ஸுப்ரஹ்மண்ய ஸ்தல என்று சொல்லப்படும் க்ஷேத்ரமாயிருக்கலாம்);அங்கே குமாரதாரை என்ற நதியில் ஸ்நானம் பண்ணிவிட்டு, ஸர்ப்ப ரூபத்திலிருக்கும் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியை பக்தியோடு வழிபட்டாரென்று வருகிறது. (நான் சொன்ன ஸுப்ரஹ்மண்ய ஸ்தலத்தில் ஸ்வாமி ஸர்ப்ப ரூபத்தில் தானிருக்கிறார். கர்நாடக-ஆந்த்ர தேசங்களில் அப்படித் தான் வழக்கம்.) தவிரவும் ஆசார்யாளின் ஸ்தோத்ரங்களில் ஸுப்ரஸித்தமாக இருக்கிற ஒன்று 'ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்'. பரம பக்தியும் கவித்வமும் லளிதமாகச் சேர்ந்து பாராயண க்ரந்தமாக அது இருக்கிறது. திருச்செந்தூர் முருகன்மேல் பாடியது. ஆசார்யாளும் நரலீலையாக அவதார விளையாட்டு விளையாடியதில், க்ரூர ஸ்வபாவம் படைத்த ஒரு எதிர் ஸித்தாந்தி அவருக்கு ஆபிசாரம் (செய்வினை) பண்ணியதை ஏற்றுக்கொண்டு சரீர உபாதைப்பட்டபோது திருச்செந்தூருக்கு வந்து ஸ்வாமியை ஆராதித்து, அந்த க்ஷேத்ரத்திற்கே உரியதான பன்னீரிலை விபூதியினால் ரோக நிவ்ருத்தி பெற்றார் என்று அங்கே ஸ்தல மாஹாத்ம்யம் சொல்கிறார்கள். பன்னீரிலையில் வைத்து அங்கே விபூதி தருவதை ஆசார்யாளே 'பத்ரபூதி'என்று சொல்லி, அதை இட்டுக்கணுமென்றுகூட இல்லாமல் பார்த்த மாத்திரத்திலேயே மஹா ரோகங்களும் ஆவி சேஷ்டைகளும் கூடப் பிசுபிசுவென்று தேய்ந்து போய்விடுமென்று 'புஜங்க'த்தில் சொல்லியிருக்கிறார் :

அபஸ்மார-குஷ்ட-க்ஷயார்ச-ப்ரமேஹ

ஜ்வரோந்மாத குல்மாதி-ரோகா மஹாந்த :*

பிசாசாச்ச ஸர்வே பவத்-பத்ரபூதிம்

விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே **

ú‹v,¼î˜F™ ú§Šóñ‡ò¬óŠ ðŸPò v«î£ˆó‹ â¡ø£«ô ºîL™

இதையெல்லாம் கவனிக்கும்போது அவர் ஷண்மதங்களில் ஒன்றாக கௌமாரத்தையே ஸ்தாபித்து, 'அடிஷன'லாகக் காபாலிகத்திற்கும் கொஞ்சம் இடம் கொடுத்திருக்கலாமென்று தோன்றுகிறது.

இப்படியெல்லாம் தீர ஆலோசித்து, பூர்வகாலத்திலும் பிற்காலத்திலும் தோன்றிய பொதுப்படையான நூல்களில் சொல்லியிருப்பவை, எல்லா நூல்களிலுமே பொதுவாகச் சொல்லியிருப்பவை, ஜனங்களிடம் பரவலாகவும் ஆழமாகவுமுள்ள ஐதிஹ்யங்கள் ஆகியவற்றை இசைத்துப் பார்த்துச் சேர்க்கவேண்டியதைச் சேர்த்து, எடுக்கவேண்டியதை எடுத்து விட்டு 'ஆனந்த கிரீய'த்திலும் 'வ்யாஸா சலீய'த்திலும் சுத்த பாடங்களை ஒருவாறு நிர்ணயம் பண்ணி, இரண்டுக்குள்ளேயே ஒன்றில் சொல்லி ஒன்றில் விட்டதை ஒன்று சேர்த்து விட்டோமானால் ப்ராமாண்யமுள்ள ஆசார்ய சரித்ரம் கிடைத்துவிடும் எனலாம்.

ப்ரமாணமுள்ள சரித்ரம் என்று ஒருவாறு நிர்ணயம் செய்ததற்கு விரோதமில்லாத வரையில் அதிகப்படியான எல்லாக்கதைகளையும், ஐதிஹ்யங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

புத்தியால் ஆலோசித்தால் மட்டும் போதாது. பக்தியும், விநயமும்-ஒன்று இருந்தாலே மற்றது வந்துவிடும்-ரொம்ப அவச்யம். 'நம் அபிமானம்''நம் அபிப்ராயம்'என்று வீம்பாகப் பிடித்துக்கொள்ளாமல், 'ஸத்யம் தெரியணும்'என்ற ப்ரார்த்தனையோடு ஆராய்ந்து பார்த்தால் நம் புத்தியைப் பொறுத்து, பக்தியைப் பொறுத்துத் தெரிகிற மட்டும் தெரியும்.

பக்தியோடு எல்லா சரித்ரங்களையுமே படித்துக் கதை வழியாக ஆசார்ய ஸ்மரணம் பண்ணி அவருடைய அநுக்ரஹத்தை அடையவேண்டியது. நமக்கு முக்யம் அந்த அநுக்ரஹந்தான்.

---

## குரு தர்சனம்-துறவறம்-ஸூத்ர பாஷ்யம்

குருவைத் தேடிக்கொண்டு புறப்பட்ட ஆசார்யாள் வடக்காக வெகுதூரம் போய் நர்மதைக் கரையை அடைந்தார்.

அங்கே கோவிந்த பகவத் பாதர் நிஷ்டையிலிருந்தார்.

நதியிலோ ஊரையெல்லாம் அடித்துக்கொண்டு போகிற மாதிரி வெள்ளம் வந்திருந்தது. சுற்றுப்பக்க க்ராமத்தவர்கள் அந்த மஹான் காப்பாற்றுவாரென்று அவரைத் தேடிக்கொண்டு வந்தார்கள்.

அவரோ தன்னை மறந்து உட்கார்ந்திருந்தார்.

ஆனால் பக்கத்திலே தேஜோ மயமாக ஒரு குழந்தை வந்திருப்பதைப் பார்த்ததும் ஜனங்களுக்குத் தன்னால் ஒரு நம்பிக்கை, பக்தி உண்டாயிற்று. வெள்ளத்தைப் பற்றிக் அந்தக் குழந்தையிடம் முறையிட்டார்கள்.

குழந்தையாசார்யாள் தன்னுடைய கமண்டலத்துக்குள் வரும்படியாக ப்ரவாஹத்துக்குக் கை காட்டினார்.

அப்படியே நதியும் அதற்குள் அடங்கிவிட்டது!

ஜனங்களெல்லாம் ஸந்தோஷப்பட்டார்கள்.

கோவிந்த பகவத்பாதரும் நிஷ்டையிலிருந்து எழுந்தார்.

ஆசார்யாளைப் பார்த்தவுடன் அவர், 'இந்தக் குழந்தைக்காகத்தானே காத்துக் கொண்டிருந்தோம்?'என்று நினைத்துக் கிட்டே வந்தார். கட்டிக்கொண்டார்.

இவர் அவர் சரணத்தில் விழுந்தார்.

தெரிந்தும் தெரியாத மாதிரி இருக்கும் அவதார விளையாட்டுப்படி அவர் இவரை, "யாரு, குழந்தை?"என்று கேட்டார்.

சொல்லியும் சொல்லாமல் அவதாரமென்று தெரிவித்து, அவதார மூலத்தையும் தெரிவித்து, எல்லாவற்றுக்குமே

மூலமான அத்வைத சிவத்தையும் தெரிவித்துவிட வேண்டுமென்று ஆசார்யாள் ச்லோகங்களாக பதில் சொன்னார். பத்து ச்லோகம். 'தச ச்லோகீ'என்றே பேர். ஒவ்வொரு ச்லோகத்தின் கடைசிப் பாதத்திலும்.

**தத் ஏகோ (அ)வசிஷ்ட : சிவ கேவலோ (அ)ஹம்**

என்று முடித்தார். 'அவசிஷ்டம்' :எல்லாவற்றையும் மாயை என்று தள்ளியபின் மிஞ்சுவது 'கேவலம்':கலப்படமில்லாதது. இன்னொன்று இருந்தால்தானே கலக்க முடியும்? ''அப்படிப்பட்ட 'அந்த ஒன்று': 'தத் ஏக':, சிவ ஸ்வரூபமாயிருக்கிறதே, அதுதான் நான்''என்று தெரிவித்துக் கொண்டார்.

யாருக்குமே தீக்ஷைஎன்பது இல்லாததைப் புதிதாகப் பிடித்துக்கொண்டு வந்து விடுவதில்லை!அடைகாத்துக் குஞ்சு பொரிப்பதுபோல உள்ளேயிருக்கிறதையே பூர்வ ஸம்ஸ்கார ஓட்டைப் பிளந்துகொண்டு வெளியில் வரப்பண்ணத்தான் தீக்ஷை!'அவதாரமான இவருக்கோ பூர்வ ஸம்ஸ்காரமே இல்லை. இருந்தும் குரு முக உபதேசத்தின் பெருமை தெரியவேண்டுமென்று இவருக்குத்தான் நாம் தீக்ஷைதரணுமென்று வ்யாஸர் அனுப்பிவைத்தது' என்று கோவிந்த பகவத்பாதருக்கு நிச்சயமாயிற்று.

சாஸ்த்ர ப்ரகாரம் ஆசார்யாளுக்கு அவர் ஸந்நியாஸ ஆச்ரமம் கொடுத்து உபதேசம் பண்ணினார்.

ஸந்நியாஸி முடிந்த முடிவாகத் தன் ஜீவன் என்பது ப்ரஹ்மமே என்று தெரிந்துகொள்ள வேண்டியவன். அதற்காக குரு அவனுக்கு ஜீவ - ப்ரஹ்ம ஐக்யத்தைத் தெரிவிப்பதான 'மஹா வாக்யம்'என்ற மஹா மந்த்ர உபதேசம் செய்வார். அவன் அதே த்யானமாயிருந்த அந்த ஐக்யத்தைப் பெற வேண்டும்.

வேத சாகை (ஒரு ஜீவனைக் கடைத்தேற்றுவதற்குப் போதுமானதாக விஸ்தாரமான வேதங்களைப் பல (கிளை)களாகப் பிரிந்துள்ளது. ரிக் வேதத்தில் 21, யஜுர் வேதத்தில் 101 (சுக்ல யஜுஸ்17, க்ருஷ்ணயஜுஸ்84), ஸாம வேதத்தில் 1000, அதர்வ வேதத்தில் 9 என்றும் மொத்தம்

1131 சாகைகள்.) ஒவ்வொன்றுக்கும் ஒரு மஹா வாக்யமுண்டு. அந்த சாகையின் முடிவில் வரும் உபநிஷத்தில் அது இருக்கும். இவற்றிலே முக்யமானவையாக ஒரு வேதத்துக்கு ஒன்று என்று நாலு மஹாவாக்யங்கள் சொல்லப்படுகின்றன. ஆசார்யாளுக்கு கோவிந்த பகவத்பாதர் அந்த நாலையும் உபதேசித்தாரென்று மாதவீய சங்கர விஜயத்திலிருக்கிறது. நம்முடைய (காஞ்சி) மடத்திலும் ஸ்வாமிகளாக வருகிறவருக்கு இப்படியே நாலு மஹாவாக்யங்களும் உபதேசிக்கப்படும் வழக்கம் இருந்து வருகிறது. ப்ரணவமும் 'ஸோஹம்'என்ற ஜீவ - ப்ரம்ம ஐக்ய வாசகத்தில் அந்தர்கதமாக (உள்ளடங்கி) இருப்பதால் அதுவும் மஹா வாக்யமே. அதையும் உபதேசிக்கும் வழக்கம் இருந்து வருகிறது.

கோவிந்த பகவத்பாதாள் ஆசார்யாளிடம் வ்யாஸ ஆஜ்ஞைப்படியே தாம் வந்து உபதேசம் பண்ணியதாகச் சொன்னார். வ்யாஸருடைய ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஸரியான தாத்பர்யத்தை விளக்கி ஆசார்யாள் பாஷ்யம் பண்ணி சுத்த வைதிகத்தையும், சுத்தாத்வைதத்தையும் ப்ரகாசப்படுத்தவேண்டும் என்ற ஆஜ்ஞையையும் தெரிவித்தார். பரமேச்வரனே அப்படி (ஸூத்ர பாஷ்யம் செய்வதாக) உத்தேசித்து தேவர்களிடம் சொல்லியிரு ந்ததுதானே?குரு பரம்பரையின் ஆஜ்ஞையாக அது வரவேண்டுமென்றே அவதாரத்தில் காத்துக் கொண்டிருந்தார்.

அப்படியே ஆசார்யாள் வ்யாஸ ஸூத்ரத்தின் தாத்பர்யமெல்லாம் ப்ரகாசிக்கும்படியாக பாஷ்யம் பண்ணி குருவின் சரணத்தில் வைத்து, அவருக்கு நிரம்பக் கைங்கர்யம் பண்ணிக்கொண்டு சில காலம் கூட இருந்தார். (நர்மதா தீரத்திலிருந்து ஆசார்யாள் காசிக்குச் சென்ற பிறகே பாஷ்யம் எழுதியதாகவும் கருத்துண்டு. இதனை ஸ்ரீசரணர்கள் அங்கீகரித்துப் பேசியதாகவும் சில உபந்நியாஸங்களில் காண்கிறது.)

வீட்டில் இருப்பதானால் எட்டு வயஸுதான் ஆயுஸ் என்றும், அப்புறம் ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டால் இன்னொரு ஜன்மா ஏற்பட்ட மாதிரி இன்னொரு எட்டு வருஷம் ஆயுஸைக் கூட்டிக்கொள்வதென்றும் ஸ்வாமி லீலை பண்ணியிருந்தார்.

அந்த எட்டு வருஷத்துக்குள் லோகமெல்லாம் எந்நாளும் ஸநாதன தர்மத்தில் நிற்பதற்கான பாஷ்யங்களை ஆசார்யாள் பண்ணவேண்டுமே என்பதால் கோவிந்த பகவத்பாதர் அவருக்கு விடை கொடுத்துக் காசிக்கு அனுப்பி வைத்தார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**காசி வாஸத்தில் வைதிக மதப் பிரசாரம்**

நம்முடைய தேசத்திற்கே மஹா க்ஷேத்ரமாக இருப்பது காசி. அது மட்டுமில்லாமல் பண்டித ராஜதானியாகவும் ஆதியிலிருந்து இருந்து வந்திருக்கிறது. தேசத்திலுள்ள அத்தனை மதங்களைச் சேர்ந்த பண்டிதர்களும் அங்கே இருப்பார்கள். அதனால் அங்கே போனால்தான் எல்லாரிடமும் எடுத்துச்சொல்லி, அவசியமானால் வாதம் பண்ணி, வேத மார்க்கத்தையும் அதன் உச்சியான அத்வைதத்தையும் சீக்ரத்தில் ஸ்தாபிக்க முடியுமென்றே ஆசார்யாளை அவருடைய குரு அங்கே அனுப்பினார்.

அப்படியே காசிக்குப்போய் ஆசார்யாள் கங்கையின் மணிகர்ணிகா கட்டத்திலுள்ள முக்தி மண்டபத்திலிருந்து கொண்டு உபதேசம் பண்ண ஆரம்பித்தார்.

ஏழு முக்தி க்ஷேத்ரங்களில் காசி ஒன்று. முக்தி க்ஷேத்ரம், மோக்ஷபுரி என்றால் அங்கே மரணமடைந்தால் யாரானாலும் மோக்ஷத்துக்குப் போய்விடுவார்கள் என்று ஐதிஹ்யம். அயோத்தி, வடமதுரை, ஹரித்வார், அவந்தி, த்வாரகை என்று இன்னும் ஐந்து வட தேசத்திலேயே இருக்கின்றன. பாக்கியுள்ளது காஞ்சீபுரம். ஸப்த மோக்ஷபுரிகளில் தக்ஷிணத்தில் இருப்பது இது ஒன்றுதான். " **முக்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி** "என்று ஸ்ரீவைஷ்ணவ ஆசார்ய புருஷரான வேதாந்த தேசிகர் சொல்லியிருக்கிறார். காசி மாதிரியே காஞ்சீபுரத்திலும் முக்தி மண்டபம் என்று இருக்கிறது. புரியிலும் (புரி ஜகந்நாதத்திலும்) முக்தி மண்டபம் உண்டு. கங்கைக் கரை முக்தி மண்டபத்திலிருந்து

உபதேசத்தை ஆரம்பித்த ஆசார்யாள் காஞ்சீபுரத்துக்கு வந்தபோது முதலில் ஸர்வ தீர்த்தக் கரை முக்தி மண்டபத்தில்தான் தங்கினார். அதனால் இப்போதும் வ்யாஸ பூஜையன்று காமாக்ஷிகோவிலிலுள்ள ஆசார்ய பிம்பம் அங்கு எழுந்தருளிவிக்கப் படுகிறது....

"ஸூத்ர பாஷ்யமோ?"என்று ப்ரமிப்பாகக் கேட்கிற வழக்கம் இன்றைக்கும் இருக்கிறது. அன்றைக்கு அதை ஆசார்யாளே உபதேசித்தாரென்றால் எப்படி இருந்திருக்கும்?

அங்கம், வங்கம், கலிங்கம் என்றுள்ள 56 தேசத்துப் பண்டிதர்களும் காசியில் ஆசார்யாள் உபந்நியாஸத்தைக் கேட்டார்கள். பாண்டித்யம், ஆஸ்திக்யம் இரண்டும் உள்ளவர்களாக இருந்த எல்லோரும், "இப்படி ஒரு அபார தேஜஸ்வி இத்தனை சிறு வயஸில் அபாரமான ஞானத்தோடு சொல்கிறாரே!"என்று சரணத்தில் விழுந்து பாஷ்யாம்ருதத்தில் திளைத்து ஆனந்தப்பட்டார்கள். மாற்று அபிப்ராயமுள்ளவர்களிலும் திறந்த மனஸுள்ளவர்கள், "இவர் சொல்வதுதான் தத்வம்"என்று எடுத்துக்கொண்டு சிஷ்யரானார்கள். அவர்கள் தாங்கள் தெரிந்து கொண்டதைத் தங்கள் தங்கள் ஊருக்குப் போய் ப்ரசாரம் பண்ணினார்கள்.

அதனால் சட்டென்று ஒரு பெரிய திருப்பம், நம்முடைய மதத்துக்குப் பெரிய மறுமலர்ச்சி ஏற்பட்டது. எதற்காக அவதாரம் ஏற்பட்டதோ அந்தப் பணி நடக்க ஆரம்பித்தது. இப்போது ஹிட்லரிடம் ஊர் ஊராக, தேசம் தேசமாக தடதடவென்று விழுந்து கொண்டிருக்கவில்லையா? அப்படி 56 தேசங்களும் ஆசார்யாள் காலில் விழ ஆரம்பித்தன. ஹிட்லர் ஜயிப்பதில் ஆச்சரியமில்லை-ஸாதாரணமாகக் கெட்டதுகள்தான் கிறுகிறுவென்று பரவுகிற வழக்கம். ஆனால் ஆசார்யாளின் ஆத்ம சக்தி, அறிவு சக்தி, அநுக்ரஹ சக்தி எல்லாம் சேர்ந்ததில் நல்லதற்கும் இப்படியொரு அதிசயமான வளர்ச்சி ஏற்பட்டது.

---

## ஆசார்யாளின் நூல்கள்

ஆசார்யாளும் எழுதித் தள்ளிக்கொண்டு போனார். உபநிஷத்துக்களுக்கும் கீதைக்கும் பாஷ்யம் எழுதினார். மிக நுட்பமான தத்வங்களையும், அபிப்ராயங்களையும் அநாயாஸமான தெளிவோடு விளக்கி எழுதினார். உபநிஷத்துக்களில் ஒன்றுக்கொன்று வித்யாஸமான மாதிரி விஷயங்கள் வரும். ஒரே கீதையிலேயே பகவான் ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு மார்க்கத்தை உசத்திப் பேசுகிறாற்போல இருக்கும். இப்படி mutually contradictory-யாக (ஒன்றுக்கொன்று முரணாக)த் தோன்றுவதையெல்லாம் அலசி, அலசி, ஒரே அபிப்ராயத்தில்தான் எல்லாவற்றுக்கும் பரம தாத்பர்யம், அதுதான் அத்வைதம் என்று ஆசார்யாள் உறுதிப்படுத்தியிருக்கும் அழகைப் பார்த்து அறிவாளிகள் எல்லாரும் ஆச்சர்யப்படுகிறார்கள்.

'ஸித்தாந்தம் இருக்கட்டும். அவர் கையாண்டிருக்கிற முறையினால் ஸம்ஸ்க்ருத பாஷைக்கே ஒரு புது மெருகு ஏற்றிவிட்டார். எப்படிப்பட்ட சிக்கலான அபிப்ராயங்களையும் அந்த பாஷையால் எவ்வளவு லாகவமாகத் தெரிவித்துவிடமுடியும் என்று காட்டிவிட்டிருக்கிறார்' என்றும் பல பேர் கொண்டாடுகிறார்கள்.

'Lingua franca' என்பதாகப் பல பாஷைக்காரர்களுக்கும் தொடர்பு மொழியாயிருக்கும் பொது பாஷையைச் சொல்கிறார்களல்லவா?நம் தேசத்தில் அப்படி இருந்து வந்திருப்பது ஸம்ஸ்க்ருதம்தான். குறிப்பாக, ஆதாரமான மத சாஸ்த்ரங்கள் அந்த பாஷையில்தான் இருக்கின்றன. அதனாலேயே தேசம் முழுவதற்குமாக எழுதிய ஆசார்யாள் அந்த பாஷையில் எழுதியது.

பாஷ்யங்கள், ஸொந்த நூலான ப்ரகரணங்கள் என்று இப்படி எழுதியதெல்லாம் ஞான மார்க்கம்.

பாஷ்யங்களில் ஸித்தாந்த ரீதியான ஆராய்ச்சி, வாதங்கள் எதிர் வாதங்கள் எல்லாம் விஸ்தாரமாக, ஆனால் துளிக்கூட

வளவளப்பில்லாமல் இருக்கும். தாம் சொல்ல வரும் அபிப்ராயத்துக்கு நேர் விரோதமாகப் 'பூர்வ பக்ஷம்'என்று எத்தனை சொல்ல முடியுமோ அத்தனையையும் அவரே சொல்லிவிட்டு அப்புறம் அதெல்லாம் எப்படித் தப்பு என்று ஆணித்தரமாகக் காட்டி 'ஸித்தாந்த'த்தை நிலைநாட்டுவார். இப்படித்தான் ஸாங்க்ய-மீமாம்ஸாதிகள், பௌத்த-சார்வாகாதிகள் முதலான மற்ற ஸித்தாந்தங்களையெல்லாம் நிராகரணம் பண்ணியிருப்பது. முன்னேயே நாம் பார்த்திருப்பதுபோல, 'மற்றதெல்லாம் அடியோடு உபயோகமில்லாதவை!'என்று தள்ளிவிடாமல் எதில் என்ன ஸாரமாக இருந்தாலும் எடுத்துக்கொண்டார். அது மட்டுமில்லை, அதெல்லாமே அத்வைதத்தில் அடக்கம்தான் என்கிறார். மாண்டூக்ய உபநிஷத் காரிகை என்று கௌடபாதர் செய்திருக்கிறார். அதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார் என்றேனல்லவா?அதிலே கௌடபாதர், 'அத்வைதிகளாக இல்லாத மற்ற ஸித்தாந்திகள் தங்களுக்குள்ளேயேதான் சண்டை போட்டுக்கொள்கிறார்கள்;நமக்கு அவர்களிடம் ஒரு விரோதமில்லை'என்று சொல்லியிருப்பதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது "அத்வைதத்திற்கு அந்த ஸித்தாந்தமெல்லாமும் கை, கால் மாதிரிதானே?"( **யதா ஸ்வஹஸ்த பாதாதிபி :**) என்கிறார். தன் கை காலுடனேயே எவனாவது விரோதம் பாராட்டுவானா?கை கண்ணைக் குத்தி வலி உண்டாக்கலாம். ஒரு கால் இன்னொரு காலைத் தடுக்கி, பல்லே நாக்கைக் கடித்து, வலி ஏற்படுத்தலாம். அது மாதிரி அவர்கள் தங்களுக்குள் மோதிக்கொண்டு போகட்டும். மொத்த மநுஷ்யனுக்கு எல்லாம் அங்கமானதால் எதனோடும் மோதலில்லாத மாதிரிதான் அத்வைதிக்கு அவர்கள். அடுத்த ச்லோக பாஷ்யத்திலே இன்னும் ப்ரேமையோடு, "அந்த த்வைதிகளுக்கெல்லாமும் ஆத்மாவாயிருப்பவன் அத்வைதி என்பது தானே பரம தாத்பர்யம்? **தத : பரமார்த்ததோ ப்ரஹ்மவித் ஆத்மைவ த்வைதிநாம் !**"என்கிறார்.

மாற்று ஸித்தாந்தக்காரர்களுக்கும் நிரம்ப மரியாதை கொடுத்தே சொல்லியிருக்கிறார். மீமாம்ஸா பாஷ்யக்காரர்களில் ஒருவரான சபரரை "ஆசார்யேண சபர

ஸ்வாமிநா"என்றும், இன்னொருவரான உபவர்ஷரை "பகவதோ உபவர்ஷேண"என்றும், கௌதமர் செய்த ந்யாய ஸூத்ரத்தைக் குறிப்பிடும்போது "ஆசார்ய ப்ரணீதம்"என்றும், அவர்களுக்கு 'ஆசார்யர்', 'ஸ்வாமி', 'பகவான்'என்றெல்லாம் அடைமொழி கொடுத்து ஸூத்ர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார்.

தாமே ஸொந்தமாக எழுதிய ஞான நூல்களான 'ப்ரகரண'ங்களில் ஸித்தாந்த வாதமாக அதிகம் இல்லாமல் தத்வங்களை பளிச் பளிச்சென்று மணிமணியாகக் கொடுத்திருக்கும். அதோடுகூட, அநுபூதிமானின் நிலையையும் ஸ்வச்சமாக வர்ணித்திருக்கும். ப்ரகரண க்ரந்தங்களில் மிகவும் பெரிதான 'விவேக சூடாமணி'யிலும், 'உபதேச ஸாஹ்ஸ்ரீ'யிலும் இப்படிப்பட்ட வர்ணனைகள் வருவதோடு 'ஜீவன் முக்தாநந்த லஹரீ', 'தன்யாஷ்டகம்', 'யதி பஞ்சகம்'முதலியவையும் அத்வைதாநுபவியின் ஆனந்த நிலையை வர்ணிப்பவைதான். 'ஒரு கோவணத்தைக் கட்டிக்கொண்டு தான் பாட்டுக்கு ஆத்மாராமனாகத் திரிந்து கொண்டிருக்கிறானே அவனைப் போன்ற பாக்யசாலி யார்?'என்று 'யதிபஞ்சக'த்தில் கேட்கிறார் : " கௌபீநவந்த : கலு பாக்ய வந்த :"-"பாக்யசாலி என்றால் அது இந்தக் கோவணாண்டி அல்லவா?"என்கிறார். நம் மனஸில் ஆழப் பதிகிற விதத்தில், அவனே தன்னை மறந்து தன் ஸ்திதியை, " தத் ஏகோ (அ)வசிஷ்ட : சிவ : கேவலோஹம் ", " ஸாக்ஷீநித்ய : ப்ரத்ய காத்மா சிவோஹம் ", " அஹமேவ பரம் ப்ரஹ்ம வாஸு தேவாக்யம் அவ்யயம் ", " அஹம் ஆநந்த ஸத்யாதி லக்ஷண : கேவல : சிவ :", " சிதாநந்த ரூப : சிவோஹம் சிவோஹம் " என்றெல்லாம் சொல்வதாக இருக்கும் (இவ்வைந்து மேற்கோள்கள் முறையே 'தச ச்லோகீ', 'அத்வைத பஞ்சரத்னம்', 'ப்ரஹ்மாநுசிந்தனம்', 'அத்வைதாநுபூதி', 'நிர்வாணஷட்கம்'ஆகியவற்றில் வருபவை.). இப்படிப்பட்ட க்ரந்தங்களைப் பாராயணம் பண்ணும்போது, அப்படிப் பண்ணுகிற நாழி வரையிலாவது நாமும் அழுக்கில்லாத ஆகாசம் மாதிரி, ஜ்யோதிர் மயமாக, ஆனந்த மயமாக இருக்கிறாற்போலவே இருக்கும்.

ஏக சைதன்ய ஜ்யோதிஸினால்தான் லோகத்திலுள்ள எல்லா ஒளிகளும், கட்சிகளும், காண்பானும் என்பதை இறுக்கி ஒரே

ச்லோகத்தில் அடக்கி 'ஏக ச்லோக ப்ரகரணம்' என்றும் ஒன்று அநுக்ரஹித்திருக்கிறார். அரை ச்லோத்திலேயேகூட உபதேச ஸாரத்தை வடித்துக் கொடுத்திருக்கிறார் (அரை ச்லோகமாவது:"ப்ரஹ்ம ஸத்யம் ஜகந் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:"-ப்ரம்மமே ஸத்யம்;உலகம் ஒரு நிலையில் ஸத்யம் போலிருந்தாலும் உண்மை நிலையில் பொய்யாகிவிடுவதான 'மித்யை';ஜீவன் ப்ரம்மமேயன்றி வேறல்ல.)

குழந்தைகளுக்கு வாத்தியார் உபதேசம் பண்ணுகிறது போல அடியிலிருந்து ஆரம்பித்து "பால போத ஸங்க்ரஹம்"என்று ஒன்று பண்ணியிருக்கிறார். இன்னொன்று, சின்னச் சின்னக் கேள்வியும் பதிலுமாக ஸகல விஷயங்களும் சொன்னதுதான் "ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா."

ஞானப் புஸ்தகங்களைப் போலவே பக்தி ஸ்தோத்ரங்களும் நிறைய எழுதினார். இது ஸகல ஜனங்களுக்குமான உபகாரம். பண்டிதர்களே ரஸிக்கக்கூடிய சிக்கல்களை ஞானப் புஸ்தகங்களில் அவிழ்த்துக் கொடுத்த அதே ஆசார்யாள் ஒரு குழந்தைகூட ப்ரியப்பட்டுச் சொல்லும்படியாக, அதற்கும் புரியும்படியாக, பக்தி ஸ்துதிகள் நிறையப் பண்ணிக் கொடுத்தார். இவற்றிலேயும் ரஸிகர்கள், ரஸஜ்ஞர்கள், விஷயஜ்ஞர்கள் ஆச்சர்யப்படும்படியாக அநேகம் உண்டு.

பாதாதி கேச வர்ணனை, கேசாதிபாத வர்ணனை என்று தெய்வங்களை விஸ்தாரமாக வர்ணிப்பது, பக்தி பாவம் பொங்கும்படியாக எப்படியெல்லாம் உபசாரம் பண்ணிப் பண்ணிப் பார்க்கலாமோ அத்தனையும் ச்லோக ரூபமாகப் பண்ணிவிடுவது(சிவபெருமானைக் குறித்துப் பாதாதி கேச: ஸ்தோத்ரம், கேசாதி பாத ஸ்தோத்ரம் இரண்டும் செய்திருக்கிறார். விஷ்ணுவைக் குறித்து பாதாதி கேச ஸ்தோத்ரம் உள்ளது, ஸௌந்தர்ய லஹரியில் அம்பிகையின் கேசாதி பாத வர்ணனையும்: ஸுப்ரஹ்மண்ய புஜங்கத்தில் முருகனின் பாதாதி கேச வர்ணனையும் உள்ளன. பலவித உபசாரங்களைக் கூறும் ஸ்தோத்ரங்கள். சிவ மாநஸ பூஜா, ம்ருத்யுஞ்ஜய மாநஸிக பூஜா, த்ரிபுரஸுந்தரீ மாநஸ பூஜா, தேவீ சதுஃஷஷ்ட்யுபசார பூஜா, மந்த்ர மாத்ருகா புஷ்பமாலா, பகவந் (க்ருஷ்ண) மாநஸா பூஜா-ஸ்தோத்ரங்கள், தத்வங்களையே திரவியங்களாக உருவகித்த 'நிர்குணமாநஸ

பூஜா ஸ்தோத்ர'மும் உள்ளது.) -என்று நிறையச் செய்து அவற்றைச் சொல்வதாலேயே பாராயணம் பண்ணும் நம் சித்தம் பரமாத்மா விஷயமாக ஒட்டிக் கொண்டிருக்கும்படிச் செய்திருக்கிறார்.

பாஷ்யங்கள் முழுக்க 'ப்ரோஸ்'. ப்ரகரண க்ரந்தங்களிலும் 'ப்ரோஸ்'உண்டானாலும் 'பொயட்ரி'தான் ஜாஸ்தி. ஸ்தோத்ரங்களெல்லாம் 'பொயட்ரி'தான். எதுவானாலும் அதே தெளிவு, அர்த்த புஷ்டி, ஹ்ருதயத்துக்குப் பரம சாந்தியைத் தருகிற தன்மை.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## மூன்று மார்க்கங்களையும் ஸ்தாபித்தவர்

ஞானப் புஸ்தகங்களிலேயே கர்மாநுஷ்டானத்தில்தான் ஆரம்பித்து சாஸ்த்ரோக்தமாக வர்ணாச்ரம தர்மங்களின்படி எல்லாம் பண்ணிக்கொண்டு போகவேண்டும் என்று நிறையச் சொல்லியிருக்கிறார்.

தற்காலத்தில் ஸமத்வம் என்று சொல்லி வெறும் லௌகிக விஷயங்களை மட்டும் கவனித்து நாம் reform (சீர்திருத்தம்) என்று சொல்லி deform செய்வதுபோல (உருக்குலைப்பதுபோல) ஆசார்யாள் பண்ணவே இல்லை. இப்போது நாம் கார்யத்திலேயே எல்லாம் ஒன்று என்று ஆரம்பித்திருக்கிறோம். ஆனால் நம் மனஸிலே ஒற்றுமை பாவம், எல்லாம் ஒன்று என்று லவலேசமாவது இருக்கிறதா? இருந்தால் இத்தனை போட்டி, பொறாமை, சண்டை, சச்சரவு இருக்குமா?சாஸ்த்ரங்கள் என்ன சொல்கின்றன?அவற்றையே அநுஸரித்துப்போன ஆசார்யாள் என்ன சொன்னார்? "ஸம்ஸ்கார வித்யாஸத்தினால் ஸ்ருஷ்டியில் குண கர்மாக்கள் வித்யாஸமாகத்தான் இருக்கும். அந்த வித்யாஸத்தை ஸமம் பண்ண ஆரம்பித்தால் ஜ்வரக்காரனுக்கு விருந்துச் சாப்பாடு போடுகிற மாதிரியும், ஆரோக்யசாலிக்கு மருந்து கொடுக்கிற மாதிரியுந்தான் ஆகும். அதனால் எப்படி வித்யாஸப்படுத்தி

அவரவரையும், மொத்தத்தில் ஸகலரையும் முன்னேற்ற வேண்டுமோ அப்படித்தான் கார்யங்களையும் அநுஷ்டானங்களையும் பிரித்துக் கொடுக்க வேண்டும். மனஸிலே 'எல்லாம் ஒரே சைதன்யம்'என்ற அத்வைத பாவமும் அதனால் ஏற்படும் ஏற்றத் தாழ்வில்லாத ப்ரேமையும் இருக்கவேண்டுமே தவிரக் 'கார்யத்தில் ஒண்ணு'என்று பண்ணக்கூடாது. ' **பாவாத்வைதம் ஸதா குர்யாத் ; க்ரியாத்வைதம் ந கர்ஹிசித்** -எப்போதும் மனோபாவத்தில் அத்வைதத்தை வளர்த்துக்கொள்; ஆனால் கார்யத்தில் ஒருபோதும் அத்வைதத்தைக்கொண்டு வராதே!' கார்யமில்லாத நிலைக்குத்தான் அத்வைதம் என்றே பேர்" என்பது தான் சாஸ்த்ரத்தைத் அநுஸரித்து ஆசார்யாள் செய்த உபதேசம். இப்போது நேர்மாறு! 'பாவாத்வைதம்'இல்லை, 'க்ரியாத்வைத'த்துக்கே முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறோம்!... க்ரியா லோகத்தில் வேத வழிப்படியான அநுஷ்டானந்தான் இருக்க வேண்டுமென்று ஆசார்யாள் வழிபோட்டுக் கொடுத்தார். அதாவது பழைய வழியை மறுபடிச் செப்பனிட்டுக் கொடுத்தார்.

இப்படி (ஞானம், பக்தி, கர்மா என்ற) மூன்று மார்க்கங்களையும் வைதிகமாக நிலைப்படுத்தியிருக்கிறார்.

பக்தி ஸ்தோத்ரமானாலும் ஞானத்தில், அத்வைதத்தில் கொஞ்சமாவது கொண்டு நிறுத்துவதாகவே இருக்கும். தெய்வங்களுக்குள் பேதமே இல்லாமல் சொல்வது, தெய்வம் என்றும் மநுஷ்யன் என்றுங்கூட பேதமில்லை என்று காட்டுவது-இப்படி இரண்டு விதமாக இருக்கும்.

அத்தனை தெய்வத்தையும் ஸ்துதித்துப் பாடினார். ஒவ்வொரு தெய்வத்தைச் சொல்லும் போதும் 'இதுவே பரப்ரஹ்மம், பரதெய்வம், இதற்குமேல் ஒன்று எனக்குத் தெரியவில்லை'-"ந ஜானே"-என்றே சொல்வார். லக்ஷ்மியை அவளே ஸரஸ்வதி, பார்வதி என்று கொண்டாடிய மாதிரியே மற்ற தெய்வங்களையும் சொல்லியிருப்பார்.

பக்தி எப்படி த்வைதம் மாதிரி இருந்தாலும் அத்வைதமாக முடிகிறது என்று அநேக இடங்களில் காட்டியிருக்கிறார்.

'சிவநந்தலஹரி'யில் பக்தி லக்ஷணத்தைப் பல விதமாகச் சொல்லி "ஸிந்து:ஸரித் வல்லபம்"-ஸமுத்ரத்தில் நதி கலந்து ஸமுத்ரமே ஆகிவிடுகிறாற்போல-என்று முடித்திருக்கிறார்.

'ஸௌந்தர்யலஹரி'யில் வேடிக்கையாகச் சொல்வார் : "பவாநி த்வம்"-"பவாநி, நீ (என்னைக் கடாக்ஷிப்பாயாக!)"என்று பக்தன் ஆரம்பிக்கும் போதே, "பாவநி த்வம்"â¡ø Ü‰î õ£˜ˆ¬îèÀ,° "ï£¡ c Ý«õ¡" â¡Á‹ Ü˜ˆî‹ ð‡íô£ñ£îô£™ Ü‹ð£œ ÜŠð® Ü˜ˆî‹ ð‡E,ªè£‡´ ð,îÂ,° Ü̂¬õî ú£»xò̂¬î, ªè£´ˆ¶ M´Aø£œ â¡Aø£˜.

நிர்குண ப்ரஹ்மமேதான் ஸகுண மூர்த்தியாக வந்திருப்பது என்று தம்முடைய ஸ்தோத்ரங்களில் ஞாபகப்படுத்திக்கொண்டே இருப்பார். "கோவிந் தாஷ்டகம்"என்று க்ருஷ்ணர் அடித்த கூத்தையெல்லாம் சின்ன ஸ்தோத்ரமாகக் கொடுத்திருக்கிறார். அதில் எல்லாக் கூத்தும் அடங்கிப்போன அத்வைத வஸ்துதான் இப்படி வந்தது என்றும் சேர்த்துச் சேர்த்துச் சொல்லிக்கொண்டு போயிருக்கிறார். ஆரம்பமே "ஸத்யம் ஞானம் அநந்தம் நித்யம்"என்று போட்டிருக்கிறார்!

ஆசார்யாள் 'விஷ்ணு ஸஹஸ்ர நாம'த்திற்கு பாஷ்யம் செய்திருப்பதே ஸகுண-நிர்குணங்களையும் பக்தி-ஞானங்களையும் ஒன்றுபடுத்திக் காட்டுவதற்குத்தான் என்று சொல்லலாம்.

அத்வைதத்தையும் பக்தியையும் இணைத்து கொடுத்திருப்பதற்கு நீங்கள் அவ்வளவாகக் கேள்விப்பட்டிராத ஒரு ஸ்தோத்ரத்தில் த்ருஷ்டாந்தம் காட்டுகிறேன். "லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பஞ்ச ரத்னம்"என்று அதற்குப் பெயர். ஆசார்யாள் நரஸிம்மர் விஷயமாகப் பண்ணியுள்ள "கராவலம்ப ஸ்தோத்ர"த்தின் அளவுக்கு இது ப்ரஸித்தியாக இல்லை. இதை ஆரம்பிக்கும்போதே ஆசார்யாள் சொல்கிறார்: கண்ணாடி இருக்கிறது. உள்ளே ப்ரதிபிம்பம் தெரிகிறது. பார்த்தால் நன்றாகவே இல்லை. திலகம் வைக்கணும் என்று தோன்றுகிறது. என்ன பண்ணணும்? கண்ணாடிக்கா பொட்டு வைப்பார்கள்?அது அழுக்காவதாகத் தான் ஆகுமே தவிர வேறே என்ன

நடக்கும்?பின்னே என்ன பண்ணுவார்கள்?ப்ரதி பிம்பத்துக்கு மூலமான பிம்ப ஆஸாமிக்குத்தான் பொட்டு வைப்பார்கள். அப்படி இந்த ஜீவலோகம் பூராவும் ஏக சைதன்யம் மாயைக் கண்ணாடியில் காட்டுகிற தினுஸு தினுஸான ப்ரதி பிம்பங்கள்தான். நீயும் அப்படித்தான். உனக்கு ஏதாவது நல்லது பண்ணிக்கொள்ள வேண்டுமானால் அது பொட்டு இட்டு அலங்காரம் பண்ணிக் கொள்கிற மாதிரி. நேரே உனக்கே-அதாவது மாயையில் ப்ரதிபலித்து உண்டான உன் தேஹ, இந்த்ரியாதிகளுக்கே-நீ நல்லது என்று ஒன்றைப் பண்ணிக்கொண்டால் அது கண்ணாடியில் கறுப்புப் பூசி அழுக்குப் பண்ணும் கார்யம் தான். 'மூல பிம்பம் சைதன்யம் என்றால் அதற்கு நான் பண்ணக் கூடியது என்ன இருக்கிறது? முதலில் அது என் மனஸுக்கே வரவில்லையே!'என்கிறாயா?ஸரி, அதுவேதான் ரூபங்களோடு, குணங்களோடு இந்த லக்ஷ்மி நரஸிம்ஹ மூர்த்தியாகவந்திருக்கிறது. அவனுக்கு பஜனை பண்ணு, பூஜை பண்ணு, ஸதா ஸ்மரணம் பண்ணு!அதுதான் உனக்குப் பண்ணிக்கொள்ளும் அத்தனை நல்லதும்-திலக தாரணம் முதலான அத்தனை அலங்காரமும்' என்று சொல்லியிருக்கிறார். இத்தனை நீட்டாமல் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கிறார்.

இதில் எல்லைக் கோடியாகத்தான் 'தக்ஷிணாமூர்த்தி அஷ்டக'த்தில் கூத்து, லீலை என்பதே இல்லாமல் ஒரே வேதாந்த தத்வங்களாகச் சொல்லி அந்த தத்வ ரூபகமாகவே, " ஸ்ரீகுரு மூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே " என்று ச்லோகம்தோறும் முடித்திருக்கிறார்.

பக்தி, ஞானம் இரண்டையும் சேர்த்த உபதேசமாக 'பஜ கோவிந்தம்'என்று தேசம் பூரா பஜனை பண்ணிக்கொண்டு போயிருக்கிறார்.

ஜனங்கள் நல்லதை நல்லபடி எடுத்துச் சொன்னால் உடனே அந்த வழியை ஏற்றுக்கொண்டு விடுவார்கள். இப்படி அந்தக் காலத்தில் ஆசார்யாள் கர்ம-பக்தி-ஞானம் என்று வேத சாஸ்த்ர வழியை மறுபடி நன்றாக ரிப்பேர் பண்ணி நடுவிலே புறப்பட்ட மதாந்தரங்களான சந்து, பொந்து முள்ளு வழி எல்லாவற்றையும் விட்டுவிட்டு இதில் போக ஆரம்பித்தார்கள்...

ஆரம்பத்தில் ஆசார்யாள் ஸஞ்சாரம் பண்ணவில்லை. இந்த தேசத்தில் எத்தனை பாஷைக்காரர்கள், மதக்காரர்கள் ஜாதிக்காரர்கள் உண்டோ அத்தனை பேரும் கூடுகிற காசியில் இருந்துகொண்டே நானாதிசை சிஷ்யர்களின் மூலமும் ஔபநிஷதமான (வேதாந்த) மதஸ்தாபனத்தைச் செய்ய ஆரம்பித்து விட்டார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**பத்மபாதரின் கதை ;**

**வேடனின் பெருமை**

ஆசார்யாளின் ப்ரதான சிஷ்யர்களில் ஒருவராக இருக்கப்பட்ட பத்மபாதாசாரியாள் ஆசார்யாள் காசிவாஸம் செய்துகொண்டு இருந்தபோதே அவரிடம் சிஷ்யராக வந்து சேர்ந்தார். ஆசார்யாளுக்குப் பதினாறு வயஸ்கூடப் பூர்த்தியாகாத ஸமயம்.

பத்மபாதருக்கு பூர்வாச்ரமத்தில் ஸநந்தனர் என்று பேர். அவர் சோழ தேசத்தைச் சேர்ந்தவர். அவரைப் பற்றி ஒரு கதை சொல்கிறேன். தம் ஊரில் இருந்த காலத்தில் அவருக்கு ஒரு பெரியவர் நரஸிம்ஹ மந்த்ரோபதேசம் பண்ணினார். நன்றாக ஜபம் பண்ணி ஸித்தி பெற்று நரஸிம்ஹ மூர்த்தியை தரிக்கணுமென்று அவருக்கு ஆசை உண்டாயிற்று. அகத்திலிருந்து புறப்பட்டார். ஏகாந்தமாக ஒரு மலையின் உச்சியிலிருந்த காட்டுக்குப் போய் தபஸ் பண்ண உட்கார்ந்தார்.

ஒரு வேடன் வந்தான். 'ஐயர் ஏன், பாவம், இங்கே வந்திருக்கிறார்?'என்று நினைத்தான். அவரிடம் வந்து, "எங்கள் மாதிரி பலசாலியான வேடர்கள் இங்கே வேட்டையாடிப் பிழைப்போம். பூஞ்சை ப்ராம்ணன் உனக்கு இங்கே எதுவும் கிடைக்காமல் கஷ்டப்படுவாய். எதுக்கு வந்தே?"என்று கேட்டான்.

நரஸிம்ஹர், தபஸ் என்றெல்லாம் சொன்னால் அவனுக்கு புரியாதென்று அவர், "இடுப்புக்குக் கீழே மநுஷ்யன் மாதிரியும் மேலே சிங்கம் மாதிரியும் ஒரு ப்ராணி உண்டு. எனக்கு அது தேவைப்படுகிறது. இந்தக் காட்டில் அது இருக்கிறதென்று கேள்வி. அதற்காகத்தான் வந்தேன்"என்றார்.

"நிஜமாகச் சொல்லு ஐயரே, அப்படியொரு மிருகம் இங்கே இருக்கா?இந்தக் காட்டிலே நான் பார்க்காத இடமோ, எனக்குத் தெரியாத மிருகமோ ஒண்ணும் கிடையாது. வேடர்களிலேயே என்னைப்போல இன்னொருத்தன் கிடையாது. ஆனால் நீ சொன்ன மாதிரி மிருகம் என் கண்களில் பட்டதே இல்லை. நீ சொல்வது மட்டும் நிஜமென்பாயானால் அதை நான் பார்க்காமல் விடுவதில்லை. நானே அதைப் பிடித்துக்கொண்டு வந்து கொடுக்கிறேன. நீ கஷ்ப்பட வேண்டாம் ஆனால் நிஜமாகவே அப்படி உண்டா, சொல்லு"என்றான்.

காட்டு ஜனங்கள் முரடு, நாம் ரொம்ப 'நைஸ்'என்று தோன்றினாலும், அவர்களுடைய எளிமை, உழைப்பு, தைர்யம், ஒத்தாசைக் குணம் எதுவும் நமக்கு வராது;நம்முடைய பித்தலாட்டங்கள் அவர்களுக்கு வராது!

நரஸிம்ஹ மூர்த்தியை இவன் பிடித்து வந்து கொடுப்பதாகச் சொல்கிறானே என்று அவர் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறாய்?வேடிக்கைக்குச் சொன்னாயா?"என்று அவன் கேட்டான்.

தம்மை ஏகாந்தமாக விட்டு அவன் நகர்ந்தால் போதுமென்று அவர், "நிஜமாக அது இங்கே இருக்கிறது. ஆனால் உன்னால் பார்க்கமுடியாது. உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ"என்றார்.

"அப்படியா சொன்னே?நாளைக்கு ஸாயங்காலத்துக்குள் அதை நான் பிடித்துக்கொண்டு வருகிறேனா, இல்லையா பாரு!அது மட்டும் முடியா விட்டால் இந்த உயிரை விட்டுவிடுவேன். இந்தக் காட்டுக்கே பெரிய வேடன் என்று இருந்து கொண்டு உன் மாதிரி ஐயர் கஷ்டம் பார்க்காமல்

எங்கள் இடத்துக்கு வந்திருக்கும்போது உதவி பண்ண லாயக்கில்லையென்றால் நான் உசிரை வைத்துக் கொண்டு என்ன ப்ரயோஜனம்?"என்று உசந்த மனஸோடு சொன்னான்.

"ஸரி, உன்னால் முடியாது என்று நான் சொல்லும் போது, முடியும் என்று நீ புறப்பட்டால் நான் என்ன பண்ணுவது?உன் இஷ்டம்!"என்று அவர் சும்மாயிருந்து விட்டார்.

வேடன் நரஸிம்மத்தைத் தேடிக்கொண்டு புறப்பட்டான். அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட அரை மநுஷ - அரை சிங்க ரூபத்தை விடாமல் நினைவில் வைத்துக் கொண்டு காடு பூரா தேடுதேடு என்று தேடினான். ஆஹார நினைவே இல்லாமல், களைப்பு பார்க்கமால் ஒரே குறியாய்த் தேடினான். அன்றைக்கு முழுதும் போய் விட்டது. மிருகம் அகப்படவில்லை. அவனும் விடவில்லை. மறுநாளும் தேடினான். ஸாயங்கால வேளையும் வந்துவிட்டது.

'ஸரி, ஐயரிடம் சொன்னதை நம்மால் செய்யமுடியவில்லை. அவர் பொய் சொல்லியிருக்கமாட்டார். நாம்தான் கையாலாகாதவனாகி விட்டோம். உயிரை விட்டுவிட வேண்டியதுதான்'என்று தீர்மானம் பண்ணினான்.

அங்கே படர்ந்திருந்த கொடிகளை அறுத்தான்!தூக்குப் போட்டுக்கொள்வதற்காகக் கிளையில் கட்டினான்.

அந்த ஸமயத்தில் எதிரே ஒரு மிருகம் நின்றது.

நரஸிம்ஹ மூர்த்திதான் வந்துவிட்டார் எத்தனை ஏகாக்ரமாக (ஒருமுனைப்பாட்டோடு) அவன் தன்னையே இரண்டு நாளாக ஸ்மரித்திருக்கிறான், ஸத்ய வாக்ய பரிபாலனத்திற்காக எப்படி ப்ராண த்யாகமும் பண்ணத் துணிந்துவிட்டான் என்பதில் ஸந்தோஷித்தே நரஸிம்ஹ ஸ்வாமி தர்சனம் கொடுத்தார்.

ஐயர் சொன்ன வர்ணனைப்படியே மிருகம் இருந்ததைப் பார்த்து அவனுக்கு ஒரே ஸந்தோஷமாயிற்று "பாழும் மிருகமே!நீ அகப்படுவதற்கு இத்தனை பாடா படுத்தினாய்?"என்று சொல்லி, தூக்காகப் போட்ட கொடியை அவிழ்த்து அதனால் நரஸிம்ஹத்தைக் கட்டினான்.

ஸ்வாமியும் அவனுக்குக் கட்டுப்பட்டு நின்றார். "கட்டுப்பட்டு"என்றால் இரண்டு அர்த்தத்திலேயும்!

கரகரவென்று நரஸிம்மத்தை இழுத்துக்கொண்டு அவன் சோழ தேச ப்ராமணரிடம் வந்தான். "ஓய், பாரும்! இதுதானே நீர் சொன்ன மிருகம்? என்று கேட்டான்.

இவன் காட்டினானே தவிர, அவரால் பார்க்கமுடியவில்லை! Üî£õ¶ ïóR‹ý võ£I Üõ¼,°, è£†C ªè£´,èM™¬ô!

அவனானால், "இந்தா, புடிச்சிக்கோ, உனக்காத்தான் கொண்டுவந்தேன். ஓட்டிக்கொண்டு சுகமாக ஊருக்குப் போ"என்றான்.

அவருக்கு துக்கம் துக்கமாக வந்தது. "ஹீனனான வேடனுக்குத் தெரிகிறாய், எனக்குத் தெரியமாட்டேன் என்கிறாயே!"என்று ஸ்வாமியிடம் நொந்து கொண்டார்.

அப்போது அசரீரி வாக்கு உண்டாயிற்று. "கோடி வருஷம் ஸ்வரூப த்யானம் பண்ணினாலே ஏற்படக்கூடிய சித்த ஐகாக்ரியம் (ஒருமுனைப்பாடு) இவனுக்கு ஒரே நாளில் உண்டாயிற்று. பசி, நித்ரை இல்லாமல், எங்கே சுற்றினாலும் ஒரே த்யானமாக, இப்படி ப்ராணனைப் பந்தயம் வைத்து ஸாதனை பண்ணினவராக எந்த ரிஷியிம் இல்லை. இந்த மஹா பக்தனின் ஸங்கம் உனக்கு ஏற்பட்டதால்தான். தர்சனம் கிடைக்கவிட்டாலும் கர்ஜனையும் இப்போது இந்த வாக்கும் கேட்கிற பாக்யமாவது கிடைத்தது. இதனாலேயே மந்த்ர ஸித்தியும் பெற்றுவிட்டாய். உனக்கு அவச்யமான காலந்த்தில் வந்து, ஆகவேண்டியதை அநுக்ரஹிப்பேன்"என்று பகவானின் வாக்கு சொல்லிற்று.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## கொலையாளிக்கும் கருணை !

ரொம்பவும் முக்யமான ஒரு ஸமயத்தில் பத்மபாதருக்கு

நரஸிம்ஹ மூர்த்தியின் ஆவிர்பாவம் ஏற்பட்ட கதையையும் கையோடு சொல்லி விடுகிறேன் :அவர் ஆசார்யாளின் சிஷ்யராகி ரொம்ப நாளான நடந்த ஸம்பவம்!

காபாலிகர்களின் தலைவன் ஒருவன் இருந்தான். சுடுகாட்டில் வாஸம் பண்ணுவது, நரபலி கொடுத்து மாம்ஸத்தையும் மஜ்ஜையையும் பச்சையாகத் தின்னுவது என்றிப்படி க்ரூரமாக 'வாமாசார'ங்களை பின்பற்றி வந்த காபாலிகர்களின் தப்பையெல்லாம் ஆசார்யாள் எடுத்துச் சொல்லி ஸாத்விக வழிக்கு வரும்படி உபதேசம் பண்ணிக் கொண்டிருந்தார். அநேகம் காபாலிகர்கள் மனஸ் மாறினார்கள். சில பேர் மாறாமல் ஆசார்யாளிடம் ஒரேயடியாக த்வேஷம் பாராட்டிக் கொண்டிருந்தார்கள். இவன் அப்படி ஒருவன். இவனால் அவருக்கு எதிர்வாதம் எதுவும் பண்ணமுடியவில்லை. அப்படித் எப்படித் தொலைக்கலாம் என்று பார்த்துக்கொண்டிருந்தான். 'ஒன்று பண்ணலாம். இவரோ மஹா கருணையுள்ளவர். அதனால் அவரிடமே போய் நம் இஷ்டத்தைச் சொல்லுவோம்'என்று நினைத்து, அவர் தனியாய் இருந்த ஸமயத்தில் அவரிடம் போய் நமஸ்காரம் பண்ணினான்.

"இதுவரை நான் விதவிதமாக பலி கொடுத்தும் கபாலி ப்ரத்யக்ஷமாகவில்லை. ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகமான ஒரு ராஜாவின் தலையையோ, அல்லது அஷ்ட மஹாஸித்தி பெற்ற ஒரு ஆத்மஞானியின் தலையையோ பலி கொடுத்தால் நிச்சயம் ப்ரத்யக்ஷமாவார். ராஜாவின் தலைக்கு நான் முயற்சி பண்ணினால் அவன் என் தலையை வாங்கிவிடுவான்!தாங்கள் மஹாஞானி, மஹா யோகஸித்தர். அதனால் என் மனோரதப் பூர்த்திக்காகக் கருணாமூர்த்தியான தங்களிடம் வந்தேன்"என்றான்.

இப்படிக்கூட ஒருத்தரிடம் தலையைக் கேட்பதுண்டா என்றால், ஆசார்யாள் அப்படிப்பட்டவராக இருந்திருக்கிறார்!

காபாலிகன் கேட்டதில் அவருக்கு ரொம்பவும் ஸந்தோஷம் உண்டாயிற்று: 'அட, ஒன்றுக்கும் உதவாதது என்று நினைக்கிற இந்த மநுஷ சரீரங்கூடவா ஒருத்தனுக்கு ஈச்வர தர்சனமே கிடைப்பதற்கு உதவுகிறதாம்!மரம் பட்டுப்போனாலும்

விறகாக உபயோகப்படுகிறது. மாட்டுக் கொம்பு ஈச்வர அபிஷேகத்துக்கே உபயோகமாகிறது. யானை தந்தமும் எத்தனையோ ப்ரயோஜனங்களைக் கொடுக்கிறது. மான் தோல், க்ரூரமான புலித் தோல்கூட, த்யானத்துக்கு ஆஸனமாகிறது. மநுஷ்ய சரீரம்தான் எதற்கும் ப்ரயோஜனப்படாதென்று நினைத்தால், இதை ஒருத்தன் கேட்டுப் பெற வருகிறானே!'என்று ஸந்தோஷித்தார்.

"உன் ஆசைப்படியே ஆகமட்டுமப்பா!ஆனால் என் சிஷ்யர்களுக்கு விஷயம் தெரியப்படாது. அவர்கள் பொல்லாதவர்கள்!உனக்கு ஏதாவது கஷ்டம் உண்டாக்குவார்கள். ஆகையால் நான் தனியாக த்யானத்தில் இருக்கும் ஸமயத்தில் வந்து சிரஸை எடுத்துக்கொண்டு போ"என்றார்.

அப்படியே அப்புறம் அவன் அவர் தனியாய் த்யானத்திலிரு ந்தபோது வந்தான். கத்தியை உருவினான்.

எங்கேயிருந்தோ பத்மபாதர் அங்கே வந்து குதித்தார்!

"ஹா ஹா!"என்று பெரிதாகச் சத்தம் கேட்டது.

ஆசார்யாள் கண்ணைத் திறந்து பார்த்தார்.

காபாலிகன் உடம்பு கிழிபட்டு எதிரே ம்ருத சரீரமாக (உயிர் நீங்கிய உடலாக)க் கிடந்ததைப் பார்த்தார்!

பக்கத்திலிருந்த பத்மபாதரிடம், "என்ன ஆச்சு?இது யார் பண்ணிய கார்யம்?"என்று கேட்டார்.

அவர், "எனக்கு ஒண்ணும் தெரியலை. கங்கையில் இருந்தேன். அப்புறம் எனக்கு என்னவோ மாதிரி ஆச்சு. இப்பத்தான ஸ்வய ப்ரக்ஞை வந்திருக்கு"என்றார்.

ஆசார்யாள், "ஓஹோ, உனக்கு நரஸிம்ஹ மந்த்ரம் உபதேசமாயிருந்ததா என்று?"கேட்டார்.

"இருந்தது. ஆனால் ஒண்ணும் ப்ரயோஜனமில்லை. ஸ்வாமி என்னை ஏமாற்றிவிட்டு ஒரு வேடனுக்கு தர்சனம் தந்தார்.

என்னவோ சொன்னார், 'அவச்யத்திலே வருவேன்'என்று"-என்று சொல்லும்போதே பத்மபாதருக்குச் சட்டென்று தெளிவாயிற்று. "ஓ, சொன்னபடிதான் இப்போது பண்ணியிருக்கிறார்!அவர் ஆவேசித்துத்தான் இந்தக் கார்யம் நடந்திருக்கிறது. இதைவிட ஆபத்தில் ரக்ஷணம் காட்ட ஸமயமுண்டா?"என்று ஸந்தோஷித்து நரஸிம்ஹர், ஆசார்யாள் இரண்டு பேரையும் நமஸ்காரம் பண்ணினார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**தாமரை தாங்கிய தாளர்**

இது பிற்காலத் கதை. பத்மபாதர் ஆசார்யாளிடம் வந்து கொஞ்ச நாளில் நடந்த இன்னொரு கதை சொல்கிறேன். ஏன் 'பத்மபாதர்' என்று பேர் வந்தது என்னும் கதை. மஹான்கள் பெயருக்குப் பின்னால் 'பாதர்'சேர்க்கிற மாதிரி, கௌடர்-கௌடபாதர் மாதிரி, பத்மர்-பத்மபாதர் இல்லை!பத்மபாதர் என்பதே முழுப் பெயர். காரணப் பெயர்

ஒரு நாள் அவர் கங்கையின் அக்கரையிலும் ஆசார்யாள் இக்கரையிலுமாக இருந்தார்கள். ஆசார்யாள் ஈர வஸ்த்ரத்துடனிருந்தார். பத்மபாதரிடம் காய்ந்த சுத்த வஸ்த்ரமிருந்தது.

சிஷ்யருடைய பக்தியை லோகத்திற்கு, மற்ற சிஷ்யர்களுக்கு ப்ரகடனம் பண்ணவேண்டுமென்று ஆசார்யாள் நினைத்தார். "வஸ்த்ரத்தை இங்கே கொண்டு வா!"என்று எதிர்க் கரையிலிருந்தவரிடம் சொன்னார்.

குரு ஆக்ஞை என்றால் தட்டாமல் உடனே பண்ணிவிட வேண்டும் என்ற ஸ்மரணைதான் பத்மபாதருக்கு!அதில், நடுவே கங்கை இருக்கிற ஸ்மரணையே போய்விட்டது!ஆளை முழுங்குகிற மாதிரி ஆழமாக நதி ஓடுவது தெரியாமல் ஸம பூமியில் நடப்பதுபோல அவர்

ஆசார்யாள் இருந்த பக்கமாக ப்ரவாஹத்தின் மேலேயே நடக்க ஆரம்பித்தார்!

அப்போது என்ன ஆயிற்றென்றால், அவர் எங்கேயெல்லாம் அடிவைக்க இருந்தாரோ அங்கேயெல்லாம் கங்கா தேவி ஒரு தாமரையைப் புஷ்பித்துப் பாதத்தைத் தாங்கினாள். அதன் மேலாகவே அவர் எதிர்க்கரைக்கு வந்து குருநாதரிடம் வஸ்த்ரத்தைக் கொடுத்தார்.

பத்மங்களால் தாங்கப்பட்ட பாதத்தை உடையவரானதால் 'பத்ம பாதர்'என்று பேர் வந்தது.

மற்ற சிஷ்யர்களெல்லாம், "என்னமாக கங்கையைத் தாண்டி விட்டாய்!" என்று ஆச்சர்யப்பட்டார்களாம். அவரானால், "இது எனன ஆச்சயர்ம்?எந்த குருநாதரை ஸ்மரித்தால் ஸம்ஸார ஸாகரமே முழங்காலளவு ஆகிவிடுகிறதோ, அவரே ஆஜ்ஞை பண்ணும்போது இந்த கங்கை என்ன ப்ரமாதம்?"என்றாராம்.

பத்மபாதர் விஷ்ணு அம்சம். ந்ருஸிம்ஹ ஸாக்ஷாத்காரம் பெற்றவர். அதனால், விஷ்ணுவின் அம்சாவதாரமான வ்யாஸரை ஆசார்யாள் அடையாளம் கண்டு கொள்வதற்கு முந்தியே இவர் கண்டுவிட்டாரென்று ஒரு ஸம்பவம் உண்டு. அதுவும் காசியில் நடந்ததுதான்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**வ்யாஸருடன் வாதமும்** ,

**ஆயுள் நீடிப்பும்**

லோகத்திலுள்ளவர்களுக்கெல்லாம் ஆசார்யாளுடைய ஸூத்ரபாஷ்யத்தின் பெருமையைத் தெரியப் பண்ண வேண்டுமென்று ஸூத்ரகர்த்தாவான வ்யாஸர் நினைத்தார். ரொம்ப ரொம்பச் சுருக்கமாக வார்த்தைகளை அடக்கி அவர் ஸூத்ரம் பண்ணிவிட்டதால், 'அர்த்தம் பண்ணுகிறேன்'என்று

சொல்லி அவரவரும் இஷ்டப்படி இழுத்து, நீட்டி இல்லாத அர்த்தத்தையெல்லாம் சொல்லி வந்தார்கள். அப்போது ஆசார்யாள்தான் வ்யாஸாசார்யாளின் எண்ணம் என்னவோ அதையே பரிபூர்ணமாகப் புரிந்துகொண்டு தம்முடைய பாஷ்யத்தை எழுதியிருந்தார். அதனால் ப்ரீதியடைந்த வ்யாஸாசார்யாள், 'இன்னும்கூட இவரை நன்றாகப் பரீக்ஷித்து முடிவில் இவர் செய்த பாஷ்யம்தான் நமக்கு ப்ரீதியானது என்று லோகம் புரிந்துகொள்ளச் செய்யணும்'என்று நினைத்தார்.

வ்யாஸ ரூபத்திலேயே போனால் ரொம்பவும் விநயகுணம் படைத்த ஆசார்யாள் வாயைத் திறக்க மாட்டார். மேதா விலாஸத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு பக்திதான் பண்ணுவார் என்பதால் யாரோ ஒரு வயோதிக ப்ராம்மணர் மாதிரி ரூபமெடுத்துக் கொண்டு வந்தார்.

"ஸூத்ர பாஷ்யம் பண்ணி இருக்கிறாராமேஇதற்கென்ன அர்த்தம், அதற்கென்ன அர்த்தம்?"-என்று ஆசார்யாளைக் கேட்டுக்கொண்டு போனார். ஆசார்யாளும் தயங்காமல் பதில் சொல்லிக்கொண்டு போனார். இவர் என்ன அர்த்தம் சொன்னாலும் அவர் உள்ளூர ஸந்தோஷப்பட்டுக் கொண்டே, "அதெல்லாம் இல்லை இப்படித்தான் அர்த்தம்" என்று எதையாவது சொல்லி ஆக்ஷேபித்தார். அவர் சொல்வது பொருந்தாது என்று ஆசார்யாள் விஸ்தாரம் பண்ணி வாயை அடைப்பார். ஒரு விஷயமாக வாயை அடைத்தாலும் அவர் இன்னொன்றைப் பிடித்துக்கொள்வார். அப்புறம் விதண்டாவாதமாக எல்லாங்கூட பண்ண ஆரம்பித்தார்.

'விதண்டாவாதம்' என்பது அவ்வளவு ஸரியில்லை. விதண்டை வேறே, வாதம் வேறே!...வாதம், ஜல்பம், விதண்டை என்று மூன்று. வாதம் என்பது நேர்மையாக, திறந்த மனஸோடு ஆர்க்யூ பண்ணுவது. 'ஜல்பம்'என்பது வீம்பாகத் தன் கட்சி என்று ஒன்றையே பிடித்துக்கொண்டிருப்பது. விதண்டை என்றால் எதையும் தர்க்கப்படி ரூபிக்காமல், தன் கட்சி என்று ஒன்றை ரூபிப்பதில்கூட அக்கறை காட்டாமல், எதிராளி என்ன சொன்னாலும் அது தப்பு என்று மட்டும் குதர்க்கமாகச்

சண்டை போடுவது. 'கொண்டி'என்று சொல்வார்களள.

ஆசார்யாளோடு நாள் கணக்கில் வ்யாஸர் வாதம், விதண்டை எல்லாம் பண்ணினார்.

இரண்டு மஹாமேதைகள் இப்படி பலத்த வாதம் பண்ணுவதைப் பார்த்து சிஷ்யர்கள், பண்டிதர்களெல்லாம் ஆச்சர்யப்பட்டார்கள். சிஷ்யர்களுக்கு அப்பப்போ அடித்துக் கொள்ளும், யார்டா, ''இந்தக் கிழவர்?நம் குருநாதரையே ஜயித்து விடுவார் போலிருக்கே!''என்று. அப்புறம் இவர் (ஆசார்யாள்) டாண் டாணென்று பாயின்ட்களைக் கொடுக்கும்போது, ''இந்தக் கிழம் என்னதான் பண்ணிப் பார்த்தாலும் ஆசார்யாளிடம் ஜம்பம் சாயுமா? மண்ணைக் கவ்வாமல் போகமுடியுமா?''என்று உத்ஸாஹம் அடைவார்கள்.

'ஆசார்யாளுக்குச் சளைக்காமல் இப்படியொரு மநுஷ்யர் வாதம் பண்ணுவதா?இவர் யாராயிருக்கும்?'என்று பத்மபாதர் நினைத்துக் கொஞ்சம் ஞானத்ருஷ்டியினாலே பார்த்தார். 'அட, வேத வ்யாஸ பகவானல்லவா வந்திருக்கிறார்!' என்று தெரிந்து கொண்டுவிட்டார்.

'ஸரிதான்!நம் குருநாதரோ பரமசிவன்- **சங்கர : சங்கர : ஸாக்ஷாத் !**வந்திருக்கும் வேத வ்யாஸரோ மஹாவிஷ்ணுவே: **வ்யாஸோ நாராயண ஸ்வயம் !** இப்படி சிவ-விஷ்ணுக்களே வாத விளையாட்டுப் பண்ணுவதென்றால் அது எப்போது முடியுமோ, எப்படி முடியுமோ?இப்படி ஆகணும், அப்படி ஆகணும் என்றெல்லாம் சிஷ்யரான நாம் ஆசைப்பட்டால் ஆகிவிடுமா?இங்கே நாம் ஒண்ணும் பண்ணிக் கொள்வதற்கில்லை. நாம் ஏதாவது மத்யஸ்தம், கித்யஸ்தம் பண்ணி முடிகிற விஷயமா இது?Üõ˜èœ ªîŒõƒèœ. ï£«ñ£ Ü®¬ñ, Aƒèó˜. êƒèó ðèõ£Â‹ ï£ó£òí ðèõ£Â«ñ Mõ£î‹ ïì˜¶õî£è ãŸð†®¼‚°‹«ð£¶ Aƒèóù£ù ï£‹ â¡ù ªêŒõ¶?

'' êƒèó : êƒèó : ú£þ£ˆ šò£«ú£ ï£ó£òí : võò‹ *

தயோர்-விவாதே ஸம்ப்ராப்தே கிங்கர : கிங்கரோம்யஹம் **"

'கிங்கர:கிங்கரோம்யஹம்'என்று வார்த்தையைத் திருப்பியிருப்பதில் 'கிங்கரோம்யஹம்' என்பதை 'கிம் கரோமி அஹம்?'என்று பிரித்துக் கொள்ளவேண்டும். 'நான் என்ன செய்வேன்?' என்று அர்த்தம்.

இப்படி ச்லோகமாகச் சொல்லி இரண்டு பேரையும் பத்மபாதர் நமஸ்கரித்தார்.

'அப்படியா?ஸூத்ரகாரரான வ்யாஸாசார்யாளேயா வந்திருப்பது?'என்று ஆசார்யாளுக்கு ஒரே பக்தியும், ஸந்தோஷமும், அடக்கமும் வந்துவிட்டது. "வாஸ்தவமாக இந்த பாஷ்யம் தங்கள் ஹ்ருதயத்தை அநுஸரிப்பதாக இருந்தால் எல்லாருக்கும் தெரிகிற மாதிரி ஸ்வஸ்வரூபம் எடுத்துக்கணும்"என்று ப்ரார்த்தித்துக்கொண்டார்.

கிழப்ராம்மணர் உடனே வ்யாஸ ரூபத்தில் தர்சனம் கொடுத்தார், ஆசார்யாளுக்கு நிரம்ப அநுக்ரஹம் செய்து, "லோகத்தில் நேர்மையாகவும் கொண்டி வழியிலும் யாரார் என்னவெல்லாம் ஆக்ஷேபித்துக் சொல்லமுடியுமோ அதற்கு மேலே நாமே சொல்லி, அத்தனைக்கும் உன் பாஷ்யம் பதில் சொல்கிறது என்று காட்டவே இப்படி வந்தேன். இந்த பாஷ்யத்திற்கு என் பூர்ண அங்கீகாரம் உண்டு"என்றார்.

ஆசார்யாள் தாம் எழுதினதையெல்லாம் அவருடைய பாதத்தில் வைத்தார். "தங்களுடைய அங்கீகாரம் கிடைத்துவிட்டபின் நான் செய்ய எதுவுமில்லை. தங்கள் அநுக்ரஹத்தில் இவை ப்ரசாரமாகிவிடும். இப்போது எனக்கும் பதினாறு வயஸ் பூர்த்தியாகிறது. எட்டைப் பதினாறாக்கி அதுவும் முடிகிறது யதாஸ்தானம் திரும்புவதற்கு அநுமதி தரவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

"இல்லை, இல்லை அப்படிப் பண்ணப்படாது. புஸ்தகங்கள் எழுதிவிட்டாலும், சிஷ்யர்களால் அவை ப்ரசாரமாகி விடுமென்றாலும் அதுமட்டும் போதாது. புஸ்தகமும் சிஷ்யர்களும் பண்ண முடியாமல் உன்னால்தான் முடியும் என்பதாகச் சில கார்யங்கள் இருக்கின்றன. நீயே தேசம் பூராவும் போய் நேரில் வாதம் நடத்தினால்தான் வழிக்கு வரக்கூடியவர்களாக அநேக பண்டிதர்கள்,

ஸித்தாந்தக்காரர்கள் இருக்கிறார்கள். அதைவிட முக்யமாக உன் ஸ்வரூப தர்சனம் அவர்களுக்கும், ஸர்வ ஜனங்களுக்கும் கிடைக்க வேண்டாமா?புஸ்தகமும், ஸித்தாந்தமும், ப்ரசாரமும் வாத ப்ரதிவாதமும் இருக்கட்டும். அவை பண்ணுவதையெல்லாம்விடப் பெரிசாக உன் தர்சனமே பண்ணிவிடுமே!ஜனங்களையெல்லாம்விடப் ஸந்தோஷப்படுத்தி, சுத்தப்படுத்தி நல்ல வழிக்குக் கொண்டுவ ந்துவிடுமே!ஆனதினாலே, எட்டைப் பதினாறாக்கிக் கொண்ட நீ இன்னும் பதினாறு வருஷம் இருக்கவேண்டும். பரதக் கண்டம் முழுதிலும் திக்விஜயம் பண்ணி, உன்னைப்போல திக்விஜயம் செய்தவர் எவருமில்லை என்னும்படியாகப் பண்ணி தர்மோத்தரணத்தைப் பூர்த்தி செய்யவேண்டும்"என்று வ்யாஸர் சொன்னார்.

இவர் 'சங்கர:ஸாக்ஷாத்', அவர் 'நாராயண ஸ்வயம் என்றாலுங்கூட அவதாரத்திலே மநுஷ்யர் மாதிரி அடங்கியிருக்கவேண்டும் என்று காட்டுவதற்காக வ்யாஸாசார்யாள் ப்ரம்மாவைக் கொண்டே ஆசார்யாளுக்கு இன்னும் பதினாறு வருஷம் ஆயுளை நீடிக்க நினைத்தார். ப்ரம்மாதானே ஜன்மா தந்து, இத்தனை ஆயுஸ் என்று எழுதுபவர்?

ப்ரம்மாவும் அப்படியே அங்கே தோன்றினார்.

த்ரிமூர்த்திகளும் சேர்ந்து விட்டார்கள்!

முதலில் சிவனின் வரத்தால் ஆசார்யாள் எட்டு என்று ஆயுஸ் பெற்றுப் பதினாறாக்கிக் கொண்டார். இப்போது விஷ்ணு, ப்ரம்மா இருவரும் இன்னொரு பதினாறு கொடுத்தார்கள்.

"ஈச்வராவதாரத்திற்கு நான் என்ன ரூல் பண்ணுவது!இஷ்டப்படி எவ்வளவு காலம் வேண்டுமானாலும் இருக்கலாம்"என்றும் ப்ரம்மா சொன்னார்.

அப்புறம் ப்ரம்மாவும் வ்யாஸரும் அந்தர்தானமானார்கள்.

ஆசார்யாளுடைய காசி வாஸத்தின்போது நாலு முக்யமான விஷயங்கள் நடந்தன. ஒன்று அவர் பாஷ்ய உபதேசம் பண்ணினது. இன்னொன்று, பத்மபாதர் அவரிடம் வந்து சிஷ்யராகி, ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு, அந்தப் பேர்

பெற்றது. மூன்றாவது, வ்யாஸர் வந்து பரீக்ஷித்து பாஷ்யத்தைப் பரிபூர்ணமாக அங்கீகரித்து ஆசார்யாளுக்கு இன்னொரு பதினாறு வயஸு நீடிக்கவைத்தது. நாலாவது இப்போது சொல்லப் போகிறது:

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**" ஞானியாயின் தீண்டாதானும் என் குருவே !"**

ஒரு நாள் ஆசார்யாள் கங்கா ஸ்நானத்திற்குப் பரிவாரத்தோடு போய்க்கொண்டிருந்தார். வழியிலே ஒரு பஞ்சமன் (தீண்டாதான்) வேண்டுமென்று அவர் பக்கத்தில் வந்தான்.

"தள்ளிப் போ, தள்ளிப் போ!"என்றார் ஆசார்யாள்.

உடனே அவன் சில கேள்வி கேட்க ஆரம்பித்தான்:

**அந்நமயாத் அந்நமயம் அதவா சைதந்யாத் ***

**த்விஜவர தூரீகர்தும் வாஞ்சஸி கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி ****

"த்விஜவர"என்று ஆசார்யாளைக் கூப்பிட்டுக் கேட்கிறான். "த்விஜவர"என்றால் ப்ராம்மண ச்ரேஷ்டர். "ஏ பெரிய ஐயரே!" என்று கூப்பிட்டிருப்பான். அதைத்தான் த்விஜவர என்று போட்டிருக்கிறது. "ஹீன ஜன்மா என்று ஒருத்தரை எட்டிப் போகச் சொல்லும் ஏ பெரிய ஐயரே! 'போ, போ'என்று எதையோ போகச் சொல்றயே, எதுகிட்டேயிருந்து எதை எட்டிப் போகச் சொல்றே?சோத்தைத் தின்னு எலும்பும் மாம்ஸமுமா மல மூத்ராதிகளோடு வளர்கிறதே, தேஹம் என்று ஒரு கூடு, அந்தக் கூட்டில் ஒண்ணு இன்னொண்ணின் கிட்டே வரப்படாது என்று உன் அபிப்ராயமா?

**அந்நமயாத் அந்நமயம்**

"இல்லாவிட்டால்; 'அதவா' :என்றால் இல்லாவிட்டால். இந்த இரண்டு தேஹக் கூட்டுக்குள் உயிர், உயிர் என்று ஒன்று இருக்கே!அதிலே ஏதோ இரண்டு இருக்கிற மாதிரி பிராமணனின் உயிர் கிட்டே பஞ்சமனின் உயிர் வரப்படாது என்ற அபிப்ராயத்தில் 'போ, போ'என்கிறாயா?"

அந்த உயிரைத்தான் ஆத்மா என்பது. ஞான மயமான சைதன்யம் என்பதும் அதுதான்.

**சைதந்யமேவ சைதந்யாத்**

அகண்டமாக ஏக சைதன்யம் ஒன்றுதான் இருக்கிறது. அதையே பல தேஹங்களுக்குள்ளும் பல உயிர்கள் என்று கண்டம் கண்டமாகப் பார்க்கிறோம். இதுதான் ஸர்வ வேதாந்தமும், அத்வைதமும். அதைச் சொல்லித்தான் அந்தத் தீண்டாதான் கேட்கிறான். 'இருப்பது ஏக சைதன்யம் தானானதால், இந்த தேஹத்திலுள்ள சைதன்யம் வேறே, அந்த தேஹத்திலிருக்கிற சைதன்யம் வேறே என்று ஆசார்யாள் நினைத்து, பெரிய ஐயரின் தேஹத்துக் கிட்டே ஹீன ஜாதி எனப்படுபவனின் சைதன்யம் வரப்படாது என்று சொன்னால் அவர் அத்வைதியே இல்லை;வடிக்கட்டின த்வைதிதான்'.

"பெரிய ஐயரே, நீ சொல்ற பாடம் என்ன?வேதாந் தந்தானே?அதிலே இப்படித்தான் அநேக உடம்புக்குள்ளே இருப்பது அநேக ஆத்மா ஒண்ணுக்குக் கிட்டே இன்னொண்ணு வரப்படாது என்று இருக்கா?"என்று கேட்காமல் கேட்கிறான்.

இருப்பதே ஒரே ஆத்மாதான் என்பதால் ஒரு ஆத்மாவுக்குக் கிட்டே இன்னொரு ஆத்மா வரப்படாது என்பது அபத்தம். அவர் அப்படி ஆத்மாவைச் சொல்லவில்லை என்றால், ஆத்மா குடியிருப்பதற்குக் கூடாக இருக்கிற தேஹங்களில்தான் ஒன்று இன்னொன்றின் கிட்டே வரப்படாதென்று சொன்னார் என்றாகும். ஞான நிலையிலிருந்து பார்த்தால் இதுவும் ஸரியில்லைதான். ஏனென்றால் ஞானிக்கு எல்லா தேஹமுமே துச்சம்தான். ஒரே மாதிரி, தோற்றால் அடித்த சுவர்தான். ஒரே மாதிரி, துளி மேல்

சதையைக் கீறிவிட்டாலும் பார்க்க ஸஹிக்காத ரக்த மாம்ஸாதிகளால் ஆனதுதான். ப்ராம்மண சரீரமானாலும், அந்த்யஜ சரீரமானாலும் எல்லாம் மல மூத்ர பாண்டம்தான். ஞானத்திற்கு வழியே சரீர ப்ரக்ஞையை ஒழிப்பதுதான். இப்படி நிக்ருஷ்டமாக இருக்கப்பட்ட சரீரங்களிலேயே ஒன்று இன்னொன்றின் கிட்டே வரப்படாது என்று 'ஞான மார்க்க ப்ரவர்த்தகர்'எனப்பட்டவர் சொன்னால் ஸரியாகுமா?

இந்த விஷயம் கீதையிலும் பகவான் சொல்லியிருக்கிறார். கல்வியறிவால் மட்டும் பண்டிதர் என்று பேர் வாங்காமல், 'பண்டா'எனப்படும் ப்ரஹ்ம ஞான ஸித்தியால் அப்படிப் பேர் வாங்கினவளைப் பற்றி அங்கே பகவான் சொல்கிறார்.

**வித்யா விநய ஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ***

சுநி சைவ ச்வபாகே ச பண்டிதா : ஸமதர்சிந : **

பண்டிதன் எனப்படும் ஞானியைப் பற்றி இங்கே பேச்சு :அவன் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்கும் ஸமதர்சி. எல்லாம் ஒரே ப்ரஹ்மம் என்று தெரிந்து கொண்டவன் வேறே எப்படிப் பார்க்கமுடியும்?ம்ருக ஜாதிகளை எடுத்துக்கொண்டால் நமக்கு, அதாவது அஞ்ஞானிகளுக்கு, பசு ரொம்ப உயர்ந்தது, கஜமும் ரொம்ப உயர்ந்தது என்று தோன்றுகிறது. நாய் என்றாலோ நிக்ருஷ்டமாக நினைக்கிறோம். அப்படியே மநுஷ்ய ஜாதிகளை எடுத்துக்கொண்டால் நல்ல படிப்பும் விநயமுள்ள ஒரு ப்ராம்மணனைப் பார்த்தால் உத்தமப் பிறவி என்று தோன்றுகிறது. அதுவே நாய் மாம்ஸத்தைத் தின்று கொண்டிருக்கும் ஒரு பஞ்சமனைப் பார்த்தால் தாழ்ந்தவன் என்று தோன்றுகிறது. இப்படி ம்ருகங்களில் எது எது உசத்தி - தாழ்த்தி, மநுஷ்யர்களில் எவனெவன் உசத்தி -தாழ்த்தி என்றிருப்பது மட்டுமில்லாமல், ம்ருக ஜாதி - மநுஷ்ய ஜாதி என்றே வேறே ரொம்ப வித்யாஸமாகத் தெரிகிறது. ஆறறிவு படைத்த மநுஷ்ய ஜாதியைவிட ம்ருக ஜாதி தாழ்ந்தது என்ற எண்ணம் இருக்கிறது. ஆனால் ஸமதர்சியான ஞானிக்கோ இப்படி ம்ருக ஜாதி, மநுஷ்ய ஜாதி என்ற வித்யாஸப் பார்வையே இல்லை, இதுவே இல்லாதபோது ஒவ்வொரு ஜாதிக்குள்ளேயும் இது உசத்தி, இது தாழ்த்தி என்ற பாவனையும் இல்லை. இந்த விஷயத்தை பகவான்

சொல்கிறார். வித்யா விநய ஸம்பன்னனான ப்ராம்மணனாகத்தான் இருக்கட்டும், அல்லது நாய் மாம்ஸம் தின்னும் ("ச்வபாகே") தீண்டாதானாகத்தான் இருக்கட்டும், பசுவாக ("கவி"), யானையாக ("ஹஸ்திநி") நாயாக ("சுநி") இருந்தாலும் இருக்கட்டும்-எல்லாவற்றையும் ஞானி ஸமமாகவே பார்க்கிறான் என்கிறார்.

அந்த அத்வைதத்தைச் சொன்னவர், அதற்காகவே பாஷ்யங்கள் கட்டுக்கட்டாக எழுதித் தள்ளியவர். ஸதாவும் அதையே உபதேசம் செய்து கொண்டிருந்தவர், 'அத்வைத ப்ரதிஷ்டாபனாசார்யார் என்றே' பெயரெடுத்தவர்-இவரானால் இப்போது ஸம தர்சனமில்லாமல் பேத த்ருஷ்டியோடு தன்னைத் தீண்டத் தகாதவன் என்று வைத்து தூரப்போகச் சொல்கிறாரே, இது எப்படி என்றுதான் அவன் கேள்வி கேட்டான். அவன் 'படே ஆஸாமி'யாக இருந்தான்! அதனால் இன்னமும் கேட்க ஆரம்பித்தான்.

ஸொந்தமான ரோஷத்தின் மீது, 'நீ என்ன கொம்பு? நான் என்ன மட்டம்?'என்று அவன் கேட்டிருந்தால்-இந்த நாளில் சீர்திருத்தவாதிகள் கேட்பது இப்படித்தான்;இம்மாதிரி அவன் கேட்டிருந்தால்-ஆசார்யாள் 'இவன் யாரோ வம்புக்கு வந்திருக்கிறான். அதனால் சாஸ்த்ர அபிப்ராயங்களைச் சொன்னால் கேட்டுக்கொள்ள மாட்டான். இவனிடம் வியவஹாரம் பண்ணி ப்ரயோஜனமில்லை. அவன் ஒதுங்கிப் போகாவிட்டால் நாம்தான் ஒதுங்கிப்போக வேண்டும். இப்படி வாதம் செய்பவர்கள் அப்போதும் விடமாட்டார்கள். மேலே விழ வருவார்கள். அப்படிச் செய்தால் கங்கையில் இறங்கிவிடலாம்' என்றே நினைத்திருப்பார். 'ஆனால் இவனோ மான ரோஷாதிகளில், ஸ்வய கௌரவ ப்ரச்னையாகப் பேசாமல் தத்வார்த்தமாகப் பேசுகிறான். அதனால், இவன் வம்புக்கு வந்தவனாயில்லாமல் வம்பையெல்லாம் தொலைக்கவந்தவனாக இருக்கலாமென்று தோன்றுகிறது. ஆகையால் பலாத்காரம் பண்ணமாட்டான். இப்படிப்பட்ட ஒருவன் என்ன சொல்கிறான் என்று கேட்டுக்கொள்ள வேண்டியது நம்முடைய கடமை'என்று பேசாமல் நின்று கேட்டுக்கொண்டிருந்தார், அவரே வித்யையோடு விநய ஸம்பன்னராகவும் இருந்ததால்!

அவன் மேலே கேட்டான் :

" A‹ èƒè£‹¹G H‹H«î (Ü)‹ðóñªí÷ ê‡ì£ì-õ£¯-ðò :

பூரே சாந்தரமஸ்தி காஞ்சந-கடீ-ம்ருத்-கும்பயோர் - வாம்பரே
*

ப்ரத்யக்-வஸ்துநி நிஸ்தரங்க-ஸஹஜாநந்தாவபோதாம்புதௌ

விப்ரோ (அ)யம் ச்வபசோ(அ)யம்-இத்யபி மஹாந்

கோ(அ)யம் விபேத-ப்ரம : **

"விப்ரோ (அ)யம், ச்வபசோ (அ)யம் இதி"- இவன் ப்ராம்மணன் இவன் பஞ்சமன் என்று-ப்ராஹ்மணே,...ச்வபாகே" என்று கீதையில் சொன்ன அதே ஸமாசாரம்தான். "இவன் ப்ராம்மணன், இவன் பஞ்சமன் என்கிற இந்தப் பெரிசான பேத ப்ரமை உமக்கு எப்படி ஐயா வந்தது?"இது கடைசி வரி. த்வைத மாயை, த்வைத மாயை ஆசார்யாள் கண்டித்ததுதான் பேத ப்ரமை. "விபேத ப்ரம :"என்று ச்லோகத்தில் இருப்பது. "அது உமக்கே எப்படி ஐயா வந்தது?"

இதற்கு முந்திய வரிகளில் என்ன சொல்கிறான்?ஆசார்யாளுக்குப் பிற்காலத்தில் அத்வைதத்தில் 'விவரண ப்ரஸ்தானம்'என்றும் 'பாமதி ப்ரஸ்தானம்'என்றும் இரண்டு ஸ்கூல் (கொள்கைப் பிரிவு) ஏற்பட்டது. அத்வைத லக்ஷ்யத்தில் இரண்டிற்கும் வித்யாஸம் கிடையாது. ஸாதனா க்ரமத்திலும் ஒரே மாதிரிதான். ஆனாலும் சில கொள்கைகளில் வித்யாஸம். அவற்றிலே ஒன்று பரமாத்மா எப்படி ஜீவாத்மா மாதிரித் தோன்றுகிறது என்பதாகும். அவித்யை (மாயை)தான் இதற்குக் காரணம் என்று இரண்டு இரு ஸ்கூல்களும் ஒப்புக்கொண்டாலும் அதிலேயே ஒன்றுக்கொன்று வித்யாஸமாகச் சொல்கின்றன.

ஆசார்யாளுடைய ஸூத்ர பாஷ்யத்தின் முதல் ஐந்து பாதங்களுக்குப் பத்மபாதர் எழுதியுள்ள வ்யாக்யானத்திற்குப் 'பஞ்சபாதிகா'என்று பெயர். அந்தப் பஞ்சபாதிகாவுக்கு ப்ரகாசாத்மன் என்பவர் 'பஞ்சபாதிகா விவரணம்'என்பதாகப் பத்மபாதர் கருத்தை அநுஸரித்தே வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். அதன் கொள்கைகள் தான் 'விவரண ப்ரஸ்தானம்'என்பது. ஸூத்ர பாஷ்யத்திற்கே வாசஸ்பதி மிச்ரா

என்ற பெரியவர் 'பாமதீ'என்று ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். அதன் கொள்கைகளைத் தான் 'பாமதீ ப்ரஸ்தானம்'என்பது.

ஸ்வாமி எப்படி நாமாகத் தோன்றுகிறார் (பரமாத்மா எப்படி ஜீவாத்மாவாகத் தோன்றுகிறது) என்பதைப் பற்றி அந்த இரண்டு ப்ரஸ்தானங்களில் சொல்லியிருப்பதையுமே அந்தப் பஞ்சமன் ச்லோகத்தின் முதல் இரண்டு வரிகளில், வரிக்கு ஒன்றாகச் சொல்லியிருக்கிறான். (இவ்விஷயத்தில்) விவரண-ஸ்கூலின் அபிப்ராயத்திற்கு 'அவச்சின்ன வாதம்'அல்லது, 'அவச்சேத வாதம்'என்றும் பெயர்.

ப்ரதிபிம்ப வாதம் என்னவென்றால்:ஸூர்யன் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும்போது நாம் தண்ணீரில் கையைத் தோய்த்துத் தரையில் தெளித்தால் எத்தனையோ துளிகளாக விழுகிறது. அத்தனை துளிகளுக்குள்ளும் ஒரே ஸூர்யனின் ஒவ்வொரு ப்ரதிபிம்பம் தெரிகிறது. ஸூர்யன் மாதிரி பரமாத்மா. தண்ணீர் மாதிரி அவித்யா (மாயை). அந்த அவித்யையில் உண்டான வித வித ஜீவ அந்தஃகரணங்கள்தான் தண்ணீர்த் துளிகள். இந்த அந்தஃகரணத்துக்குள்ளும் பரமாத்ம ஸூர்யனே ப்ரதிபிம்பித்து ஒளி (உயிர்) கொடுக்கிறது.

'அவச்சின்ன வாதம்'என்ன? 'அவச்சின்ன'என்றால் 'ஒன்றுக்கொன்று எல்லை கட்டிப் பிரித்தது'என்று அர்த்தம். ஆகாசம் வெளியிலே எங்கும் பரவியிருக்கிறது. எல்லாவற்றிற்கும் அது இடம் கொடுப்பதால் 'அவகாசஸ்து ஆகாசம்'என்பார்கள். திறந்த வெளியான அந்த ஆகாசத்தில் அநேக காலிக் குடங்களை வைத்திருந்தால் குடங்களுக்குள்ளேயும் அதே ஆகாசம்தான் இருக்கிறது. ஆனால் வெளியில் தனியாகப் பெரிசாக 'மஹாகாசம்'என்று ஒன்றும், ஒவ்வொரு குடத்துக்குள்ளும் தனித்தனியாகச் சின்னச் சின்ன 'கடாகாசங்கள்'பலவும் இருக்கிறாற்போலத் தோன்றுகிறது. இப்படித்தான் ப்ரஹ்மம் என்ற ஒரே அகண்ட சைதன்யம் மஹாகாசமாயிருக்கிறது.

அதில் அவித்யா என்ற குடம் பலவித ஜீவ அந்தஃகரணங்கள் என்ற பல 'ஸைஸ்'களில் மஹாகாசத்தை எல்லை கட்டி ஒன்றுக்கொன்று பிரித்ததுபோல் அவச்சின்னமாகக் காட்டுகிறது என்று இந்த வாதம் சொல்கிறது. "ஸூர்யன் ப்ரதிபலித்து ஒவ்வொரு துளியிலும்

ஒரு முழு ஸூர்யன் தெரிகிற மாதிரி என்று சொல்வது தப்பு. ப்ரம்மம் ப்ரதிபலிப்பது என்ற கார்யத்தைப் பண்ணாது. ஒவ்வொரு துளியிலும் முழு ஸூர்ய ப்ரதிபிம்பத்தைப்போல ஒவ்வொரு ஜீவனிலும் பூர்ண சைதன்யம் தெரிவதாகச் சொல்வதும் ஸரியில்லை. ப்ரதிபலிப்பு முதலிய எந்தக் காரியமும் பண்ணாமல் ஆகாசம் அது பாட்டுக்கு இருக்கிறபடி இருக்கும்போதே பல குடங்களுக்குள்ளேயும் சின்னச் சின்னதாகத் தெரிவதுபோல அகண்ட சைதன்ய ப்ரஹ்மமே ஜீவ அந்தஃகரணத்தில் கண்டம் கண்டம் மாதிரித் தெரிகிறது எனபதுதான் ஸரி"என்று அவச்சின்னவாதிகள் சொல்வார்கள்.

ஆகாசம் வெளியிலும், குடத்துக்குள்ளும் வ்யாபித்திருப்பதைச் சொல்வதுபோலவே இன்னொரு உபமானம் ஜலம் வ்யாபித்திருப்பதை வைத்தும் அவர்கள் சொல்வதுண்டு. கிணற்றில் குடத்தை முழுக வைத்து ஜலத்துக்குள்ளாகவே இருந்துகொண்டு வருகிறோம். அப்போது கிணற்று ஜலமும் குடத்து ஜலமும் ஒன்றேதான். ஆனால் குடம் எல்லை கட்டிக் கிணற்று ஜலத்தை அவச்சின்னமாகப் பண்ணுவதால், இது வேறே ஜலம், தனியாக வருகிறது என்று தோன்றுகிறது. பெரிய குடமாயிருந்தால் உள்ளே ஜலம் அதிகமாகவும், சின்ன குடமாயிருந்தால் அதில் பிடிக்கும் ஜலம் குறைவாகவும் தெரிகிறது. அப்படியே ஒரே பரமாத்மா அந்தஃகரண வித்யாஸத்தைப் பொருத்து ஒவ்வொரு ஜீவனில் ஒவ்வொரு விதமாகத் தெரிகிறார்.

இந்தக் கட்சிகள் ஒவ்வொன்றுக்கும் ஆதரவாக மற்றதை ஆக்ஷேபித்துச் சொல்லும் வாதங்கள் நமக்கு அவச்யமில்லை. வாதம் என்னவானாலும் ப்ரதிபிம்பக் கட்சி, 'துளித் துளி ஜலத்தை எல்லாம் அழித்துவிட்டால், ஒரே ஸூர்யனே நிற்பதுபோல மாயையால் உண்டான ஜீவாத்ம பாவத்தை (அந்தஃகரணம்தான் இந்த பாவத்தை உண்டாக்குவது;அதை)ப் போக்கிக்கொண்டால் பரமாத்மாவாகிவிடலாம்;அப்படி ஆகணுமென்கிறது. அவச்சின்னக் கட்சியும் குடத்தை உடைத்துவிட்டு மஹாகாசமாக, ஒரே நீர்ப்பரப்பாக ஆகிவிடவேண்டுமென்று இதே லக்ஷ்யத்தைத்தான் சொல்கிறது.

பஞ்சமன் இந்த இரண்டு வாதத்தையும் குறிப்பிட்டிருக்கிறான். முதலில் ப்ரதிபிம்ப வாதம்: " கிம் கங்காம்புநி பிம்பிதே அம்பரமணௌ சண்டாள வாடீ பய :......" "அம்பரமணி"என்பது ஆகாசத்தில் ஒரு வைரக்கல்லு மாதிரி ப்ரகாசிக்கும் ஸூர்யன். அது கங்கா ஜலத்திலும் ("கங்காம்புனி") பிரதிபிம்பமிடுகிறது ("பிம்பிதே"):எங்கள் சேரிக் குட்டை ஜலத்திலும்தான் ("சண்டாள வாடீ பயம்") ப்ரதிபிம்பிக்கிறது. இந்த இரண்டு ப்ரதிபிம்ங்களுக்குள்ளும் ஏதேனும் வித்யாஸமுண்டா?அப்புறம் அவச்சின்ன வாதம் பேசுகிறான்:ராஜா அரண்மனையில் தங்கக் குடத்தின் உள்ளேயும் ("காஞ்சன கட...அந்தரம்...") ஆகாசம் ("அம்பரம்") இருக்கிறது ("அஸ்தி"). எங்கள் சேரி வீடுகளிலும் மண் பானை ("ம்ருத் கும்பம்") வைத்திருக்கிறோம். அதற்குள்ளேயும் ஆகாசம் இருக்கிறது. தங்கக் குடத்திலே இருக்கிற ஆகாசத்திற்கும், பானையில் இருக்கிற ஆகாசத்திற்கும் வித்யாஸமுண்டா? ப்ராம்மண தேஹமோ, பஞ்சமன் தேஹமோ எதுவானாலும் அது ஒரு கடம். உள்ளே இருக்கிற ஆத்மாகாசத்தில் என்ன வித்யாஸம்?இரண்டு உடம்புகளும் இரண்டு அளவான ஜலத்துளிகள்;ஆனால் உள்ளே தெரியும் ப்ரதிபிம்பத்தின் மூலமான ஆத்ம ஸூர்யன் ஒன்றுதானே!

"ªðKò äò«ó!ˆMüõó«ó!ã¡ ªõOJ«ô ªîKAø üôˆ¶O¬ò»‹, °ì¬î»‹ ð£˜ˆ¶ Mˆò£ú𝑓èœ G¬ù,Aø£Œ?àœÀ,°œ«÷ ð£˜ˆî£™ â¡ù õv¶ Þ¼,Aø¶?('Šóò, õv¶'â¡Á „«ô£è˜F™ Þ¼Šð¶ 'àœ«÷ àœ÷ õv¶'î£¡.) î¡Q™ î£«ù Ýù‰F˜¶, ªè£‡®¼,°‹ ë£ù úº˜ó‹ å¡Áî£«ù àœ«÷ Þ¼,Aø¶?'úýü Ýù‰î Üõ«ð£î Ü‹¹F'î£«ù Þ¼,Aø¶?Ü¬ô«ò Þ™ô£î úº˜ó‹ ('Gvîó𝑓è‹')!ã¡ Ü¬ô Þ™¬ô?

லோகத்திலே உள்ள ஸமுத்ரத்தைத் தவிர அதற்கு மேலே இடமிருக்கிறது. அதனால் அலை அடிக்க முடிகிறது. இந்த ஆனந்த ஸமுத்ரத்தைத் தவிர இடம் இல்லையே!இது இல்லாத இடமே இல்லையே!எப்படி அலை அடிக்க முடியும்?ஒரு பாத்திரத்தில் வழிய வழிய ஜலம் விட்டு இறுக்க மூடிவிட்டால் எப்படி அலை உண்டாக முடியும்?ஆத்மாவுக்கு உபமானமே இல்லை. ஸமுத்ரம்

என்பதுகூட முழுக்கப் பொருத்தமான உபமானமில்லை. அதில் உப்பும் ஜலமும்தான் இருக்கின்றன. இதிலோ (ப்ரத்யக் வஸ்துவான ஆத்மாவிலோ) ஆனந்தமும் ஞானமும் அல்லவா இருக்கின்றன? ஆனந்தம், ஞானம் என்ற இரண்டு இல்லை. ஆனந்தமாகிய ஞானம், அல்லது ஞானமாகிய ஆனந்தமே நிறைந்தது இது. அதோடு இது இல்லாத இடமே இல்லை. இல்லாத இடமேயில்லை என்னும்படியாக உப்பு ஸமுத்ரம் எங்கேயும் நிறைந்திருக்கவில்லை. இப்போது இங்கே ஸமுத்ரம் இருக்கிறதா?அது இருக்குமிடத்திலுங்கூட ஒரு லெவலுக்கு மேலே இல்லை. பூமி மட்டத்தோடு ஸமுத்ர மட்டமும் முடிந்து அதற்கு மேலே திறந்த வெளியாகத் தானே இருக்கிறது?இருந்தாலும், இருப்பதற்குள் பெரிசு என்பதால் ஆனந்த ஞான ஸமுத்ரம் என்றேன். உள்ளே ஏகமான அது ஒன்றே இருக்க வெளியிலே பார்த்து பேதமாகப் பேசுகிறாய், ஐயரே!நீ சொல்லிக் கொடுக்கும் வேதாந்த பாடத்தில் இப்படித்தான் இருக்கிறாதா?"என்று கேட்டான்.

உடனே ஆசார்யாள், "தாங்கள் இப்பேர்ப்பட்டவரா?ப்ரஹ்மவித்தா?இப்படிப்பட்ட ஞானியாக இருக்கும் எவரும் எனக்கும் குரு ஸ்தானம். தங்களுடைய ஞான நிலையைத் தெரிந்து கொள்ளாததால் லோக ஆசாரங்களின் படிச் சொன்னேன். இப்போது தெரிந்து கொண்டேன். தாங்களை ஆசார்ய ஸ்தானத்தில் வைத்து நமஸ்காரம் பண்ணுகிறேன்" என்று சொல்லி அப்படியே நமஸ்காரம் செய்தார். ஐந்து ச்லோகம் சொல்லி நமஸ்காரம் செய்தார். அதற்கு 'மநீஷா பஞ்சகம்' என்று பேர். 'மநீஷா'என்றால் தீர்மானமான அபிப்ராயம், நிச்சயமான கொள்கை. "ஆத்ம ஞானியாயுள்ளவர் எந்த ஜாதி குலமானாலும் ஸரி, பஞ்சமனோ ப்ராம்மணனோ எவரானாலும் ஸரி, அவர் எனக்கு குரு. இதுவே என் மநீஷா. எனக்கு குரு என்பது மட்டுமில்லை. தேவேந்த்ரன்கூட அவருடைய பாதத்தில் விழவேண்டுமென்பது என் மநீஷா"என்றெல்லாம் அதில் சொல்வதால் 'மநீஷா பஞ்சகம்'என்று பெயர். அதன் முதல் ச்லோகம் :

ஜாக்ரத்-ஸ்வப்ந-ஸுஷுப்திஷு ஸ்புடதரா யா ஸம்வித்
உஜ்ஜ்ரும்பதே யா ப்ரஹ்மாதி-பிபீலிகாந்த-தநுஷு ப்ரோதா
ஜகத்-ஸாக்ஷிணீ * ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி

த்ருடப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்தி சேத் சாண்டாளோஸ்து ஸ து த்விஜோஸ்து குருரித்-யேஷா மநீஷா மம **

ப்ரஹ்மா முதற்கொண்டு எறும்பு வரை பேதமேயில்லாமல் எல்லா தேஹத்துக்குள்ளிருந்தும் குறுக்கிழையாக கோத்து வாக்கிக்கொண்டு ஜகத்தையெல்லாம் ஸாக்ஷிமாத்ரமாகப் பார்ப்பது ஒரே சைதன்யம்தான். 'பிபீலிகா' என்றால் எறும்பு. எல்லா ஜீவன்களுக்கும் இந்த்ரியங்கள், மனஸ் எல்லாம் இருக்கின்றன. இவையெல்லாம் ஸ்வதாவாக ஜடமே. ஜீவனில் நெடுக்கிழையாக இவையெல்லாம் இருக்கின்றனவென்றால் இவற்றைச் சேர்த்துப்பிடித்துக் கோத்து வாங்கி இவற்றுக்கு உயிரைக் கொடுக்கும் குறுக்கிழையாயிருப்பது ஆத்ம சைதன்யமே 'ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணீ'என்பதில் 'ப்ரோதா'என்றால் குறுக்கிழை. 'ஓத:ப்ரோதம்'என்பார்கள் ஓதம்-நெடுக்கிழை; ப்ரோதம்-குறுக்கிழை. (பாவும் ஊடும் என்பவை.) இந்த்ரியங்கள், மனஸ் எல்லாம் கார்யத்தில் அகப்பட்டுக்கொண்டு தடமாடிக் கொண்டிருப்பவை. சைதன்யமோ, அதனால்தான் உயிர் ஏற்பட்டுக் கார்ய சக்தியும் உண்டாகிறது என்றாலுங்கூட, தான் என்னவோ கார்யத்தில் மாட்டிக்கொள்ளாமல், ஒன்றிலும் பட்டுக் கொள்ளாமல் ஸாக்ஷிமாத்ரமாகப் பார்த்துக் கொண்டு மட்டும் இருக்கிறது: "ஜகத்ஸாக்ஷிணி." அடி உதைபட்டுக் கொள்கிறவன் வாதியும் ப்ரதிவாதியும்;பட்டுக்கொள்ளாமல் பார்த்துக் கொண்டிருப்பவன்தானே ஸாக்ஷி? ஸகல ஜீவ ஜந்துக்களிலும் ஒரே சைதன்யம் இருப்பது மட்டுமில்லை.

ஒவ்வொரு ஜீவனுக்குமே எண்ணி முடியாத நிலைகள் இருக்கின்றன அல்லவா? இவை முக்யமாக மூன்றில் அடங்கிவிடும். ஜாக்ரத் என்னும் விழிப்பு நிலை, ஸ்வப்னம் என்னும் கனவு நிலை, ஸுஷுப்தி என்ற தூக்க நிலை. இந்த மூன்று நிலைகளிலும்கூட பேதமேயில்லாமல் அந்த ஒரே ஞானவஸ்துதான் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது. இதைச் சொல்லித்தான் ஆரம்பிக்கிறார்: ' ஜாக்ரத்-ஸ்வப்ந ஸுஷுப்தி ஸ்புடதரா யா ஸம்வித் உஜ்ஜ்ரும் பதே .'

இப்படியுள்ள ஆத்மாதான் நிஜமான நாமான 'ஸ்ப்ஜெக்ட்'. பாக்கியெல்லாம்-வெளி லோகம் மாத்ரமில்லை;நம் தேஹம், இந்த்ரியம், அந்தக்ஃகரணம் ஆகிய எல்லாமுங்கூட- 'ஆப்ஜெக்ட்'தான்; நாமில்லை. பார்க்கிற உள் வஸ்து

ஆத்மாதான். பாக்கி யாவும் பார்க்கப்படுபவையான ஆத்மாவல்லாத வெளி வஸ்துக்கள்தான். "அவை 'தான்'இல்லை, ஆத்மாவே 'தான்'என்ற உறுதியான 'ப்ரஜ்ஞை,'அநுபவ அறிவு, எவனுக்கு இருக்கிறதோ அப்படிப்பட்டவன் பஞ்சமனானாலும் ஸரி, ப்ராம்மணனானாலும் ஸரி, அவன் என் குருவே என்று நிச்சயமாக அபிப்ராயப்படுகிறேன்-' ஸைவாஹம் ':ஸாக்ஷிமாத்ரமாயுள்ள அந்த சைதன்யமே நான்; ' ந ச த்ருச்ய வஸ்து இதி ': பார்க்கப்படும் கண், காது, மூக்கு, மனஸு, உலகம் முதலிய எதுவுமில்லை என்ற...., அதாவது ஏகப்பட்டதாக விஷயங்கள் இருந்தாலும் அவற்றையெல்லாம் அறிவது ஒரே அறிவு தானே? 'தான் இந்த அறிகிற அறிவுதானேயொழிய, அறியப்படுகிற எதுவுமில்லை'என்ற; ' த்ருட ப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்தி சேத் ' : அசைக்க முடியாத ஞானாநுபவம் எவனுக்கு இருந்தாலும்.... யஸ்யாஸ்தி சேத் :அவன் எவனாக வேண்டுமானாலும் இருக்கட்டும்;' சாண்டாளோஸ்து ': தீண்டாதானாகத்தானிருக்கட்டும், ' த்விஜோஸ்து ':அல்லது ப்ராம்மணனாகத்தானிருக்கட்டும்.... இந்த ஜாதி வித்யாஸம், மற்ற வித்யாஸம் எதுவும் அப்படிப்பட்ட ஞானியின் விஷயத்தில் இல்லை;ஆகையால் அவன் எவனாயிருந்தாலும்;' குருரிதி ஏஷா மநீஷா மம ' :நமக்கெல்லாம் குருவாக இருப்பவன் என்பது என் உறுதியான கொள்கை."

"இது முதல் ச்லோகம். (சிரித்து) முழுக்கச் சொல்லப்படுகிறேனாக்கும் என்று பயப்பட வேண்டாம்!கடைசி ச்லோகத்துக்கு வந்துவிடுகிறேன்:

ய-ஸௌக்யாம்புதி-லேச-லேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா

யச்சித்தே நிதராம் ப்ரசாந்த கலநே லப்த்வா முநிர் நிர்வ்ருத :*

òvI‰-G˜ò-ú§è£‹¹ªî÷ èLî-b˜-Šóy¬õ ï Šóyñ M˜-

ய : கச்சித்-ஸ ஸுரேந்த்ர-வந்தித-பதோ நூநம் மநீஷா மம **

"ஆனந்தா வபோதாம் புதி" என்று பஞ்சமன் பெரிய ஸமுத்ரம் மாதிரியான ஆத்மானந்தத்தைச் சொன்னானே. அதையேதான் ஆசார்யாளும் இந்த ச்லோகத்தில் இரண்டு இடத்தில் 'ஸௌக்யாம்புதி'என்றும், 'ஸுகாம்புதி'என்றும்

சொல்கிறார். சிஷ்யன் என்றால் குரு வசனத்தைத் திருப்பிச் சொல்லணும். ஜகதாசார்யாள் என்று நாம் சொல்கிறவர் எவனோ ஒரு பஞ்சமன் ஞானியாயிருக்கிறானென்று தெரிந்து கொண்டவுடன் அவனை குரு என்று சொல்லிவிட்டார்- மநீஷா, மநீஷா என்று திரும்பத் திரும்ப அடித்துச் சொல்லிவிட்டார். அவன் சொன்ன ஆனந்த ஸமுத்ரத்தையும் இங்கே இரண்டு தடவை சொல்லி விடுகிறார்!

நம்மைவிட ராஜாவுக்கு ஸந்தோஷானுபவம் ஜாஸ்தி இருக்கும். 'ராஜபோகம்' என்று அதனால்தான் சொல்வது. நம்முடைய லோகத்து ராஜாக்களுடைய ஸந்தோஷத்தையெல்லாம்விட, இன்ப லோகமாகவே இருக்கப்பட்ட தேவ லோக ராஜாவான இந்த்ரனுக்கு அதிக ஸந்தோஷம் இருக்கும். ('சக்ராதயோ'என்பதில்) 'சக்ரன்'என்பது இந்த்ரனைத்தான். அவனுடைய அந்த மஹத்தான ஸந்தோஷநுபவமுங்கூட ஞானி அநுபவிக்கும் ஆத்மானந்த ஸமுத்ரத்தின் ஒரு வெகு சிறிய துளிதானாம். 'லேசம்'என்றால் துளி. 'லேசு'என்கிறோமே, அப்படி கனமேயில்லாத திவலை. 'லேச லேச' என்று திருப்பியிருப்பதற்குத் திவலையிலும் திவலையாக என்று அர்த்தம். ஞானியின் ஆனந்தம் ஸமுத்ரமென்றால் அதன் திவலையிலும் திவலையாயிருப்பது தான் இந்த்ரனின் ஆனந்தமுங்கூட...

(லலிதா)ஸஹஸ்ர நாமத்தில் அம்பாளைப் பரம வேதாந்தமாக 'தத்-பத-லக்ஷ்யார்த்தா', 'சிதேக ரஸ ரூபிணி' (தத்-த்வமஸி முதலான வாக்யங்களில் 'தத்'எனும் 'அது'வாகிய பதத்திற்கு அர்த்தமான ப்ரஹ்மமாக இருப்பவள் 'தத் பத லக்ஷ்யார்த்தா'. ஒன்றேயான சைதன்ய ரஸத்தின் வடிவினள் 'சிதேக ரஸ ரூபிணி'.) என்று சொன்னவுடன், ப்ரம்மாதி தேவர்களின் ஆனந்தத்தையும் தன்னுடைய ஆத்மானந்தத்தில் லவலேசமாக்கி விடுபவள் என்று ஒரு பெயர் சொல்லியிருக்கிறது : " ஸ்வாத்மாநந்த - லவீபூத - ப்ரஹ்மாத்யாநந்த ஸந்ததி :"*உபநிஷத்திலும், "இந்த ஆனந்தத்தின் ஒரு மாத்திரையைக் கொண்டுதான் அத்தனை ஜீவ குலமும் ஜீவிக்கிறது"என்று இருக்கிறது.

இந்த்ரனுக்கு அந்த ஆனந்தம் என்னவென்று தெரியாது. ஆனால் ஞானிக்குத் தெரியும். ஞானியை 'முனி'என்று

(ச்லோகத்தின் இரண்டாம் வரியில்) சொல்லியிருக்கிறது. சித்தம் அப்படியே அடங்கி ப்ரசாந்தமாக உள்ள ஸ்திதியில் அவன் அந்தப் பேரானந்தத்தை ஸம்பாதித்துவிடுகிறான்: ' யச் சித்தே நிதராம் ப்ரசாந்த கலநே லப்த்வா முநிர்- நிர்வ்ருத :' . நிர்வ்ருதி என்றால் ஆனந்த த்ருப்தி. முதலில் 'சக்ராதயோ நிர்வ்ருதா:'என்று இந்த்ராதியரின் ஆனந்த த்ருப்தியைச் சொல்லிவிட்டு இங்கே ஞானியின் ஆனந்த த்ருப்தியைச் சொல்கிறார். இந்த்ராதியர் ஆனந்தப்படுவது, புத்தியை வைத்துக்கொண்டு, புத்தியால் வெளி ஆனந்தங்களைத் தனதாக நினைத்துக்கொண்டு, ஸப்ஜெக்டைவிட்டு ஆப்ஜெக்டைப் பிடித்துக்கொண்டு என்னவோ திவலை ஆனந்தம்தான் அவர்கள் அடைகிறார்கள். இவன் (ஞானி) ஸமுத்ரமான ஆனந்தத்தை அடைவதோ புத்தியினால் அல்ல. இவனுடைய புத்தியும் இவனுக்கு வேறான ஆப்ஜெக்டாக அந்த ஸமுத்ரத்தில் நழுவி விழுந்து கரைந்தே போய்விட்டது-'கலித தீ'என்றால் அதுதான் அர்த்தம். நித்யாநந்த ஸமுத்ரத்தில் ஞானியின் புத்தி கரைந்து போயாச்சு: ' யஸ்மிந் நித்ய ஸுகாம்புதெள கலித தீ '... புத்தியால் அறியும்போது, அது அறிகிற எல்லாம் அதற்கு வேறானவை. "புத்தி அழிந்து போனபின்தான் ப்ரஹ்மத்தை 'அறிய'முடியும், இப்படி 'அறிந்தவனே'ப்ரம்மவித்"என்று நாம் என்னவோ நமக்குப் புரிகிற பாஷையில் சொல்லிக் கொண்டிருந்தாலும், இங்கே அறியப்படும் வஸ்து, அறிகிற வஸ்து என்று இரண்டே இல்லையே! புத்தியால் அறியும்வரை ஸரி, புத்தி அறிகிறது, அது எவற்றை அறிகிறதோ அவை அறியப்படுகின்றன. இப்படி வித்யாஸமாய் இரண்டு இருக்கின்றன. அதுதான் த்வைதம். புத்தியே கரைந்து மறைந்து போய்விட்ட பிறகு? ப்ரஹ்மத்தை 'அறிவது'என்றால் எதைக்கொண்டு?புத்தியும் போனவிட்டு எஞ்சி நிற்கும் ஆத்மாவால் என்றால், ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றுதானே?அதற்கு 'அறியப்பட வேண்டிய'வேறாக ஒன்று கிடையவே கிடையாதே!ஆப்ஜெக்டே இல்லாத ஸப்ஜெக்ட் அல்லவா அது?ஆகையால், ஞானி அப்படியே ப்ரஹ்மானந்த ஸமுத்ரத்தில் முழுகி அதை 'அறிகிறான்'- ப்ரஹ்ம-வித் ஆகிறான் (ப்ரஹ்மத்தை அறிந்தவனாகிறான்)-என்று ஔபசாரிகமாகச் சொன்னாலும், வாஸ்தவத்தில் அறிகிற இவன் வேறு, அறியப்படும் ப்ரஹ்மம் வேறு என்று இல்லாமல் இவன் ப்ரஹ்மமாகவே ஆகி

விடுகிறான். ப்ரஹ்மவித் இல்லை;ப்ரஹ்மமே! " யஸ்மிந் நித்ய ஸுகாம்புதௌ கலித தீர்-ப்ரஹ்மைவ ந ப்ரஹ்மவித் ".

ஆசார்யாள் சொல்கிறார் : "இப்படிப்பட்ட ப்ரஹ்ம ஸ்வரூபன் எனக்கு குரு, உங்களுக்கு குரு என்பது மட்டுமில்லை. இவனுடைய ஆனந்தத்தின் லேச லேசத்தையே தெரிந்து கொண்ட இந்திரனும் இவன் காலில் வந்து சிஷ்யனாக விழத்தான் வேண்டும். இது என் தீர்மானமான அபிப்ராய ம்-மநீஷா : " ய கச்சித் ஸுரேந்த்ர வந்தித பதோ நூநம் மநீஷா மம ."' மநீஷா 'என்றாலே நிச்சயமான அபிப்ராயமென்று அர்த்தம். 'நூநம்'என்றாலும் நிச்சயம்தான், 'நூநம் மநீஷா'என்று போட்டுத் தம்முடைய முடிவைப் பாறங்கல் மாதிரி உறுதிப்படுத்திச் சொல்கிறார்!

அந்த முடிவு என்ன?ஞானிகளின் விஷயத்தில் ஜாதி, குலம், வயஸு அந்தஸ்து எதுவும் பார்க்காமல் குரு ஸ்தானத்தில் வைத்து மரியாதை பண்ணனும் என்பதே.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**ஞானியாயின் ஸமத்வம் வேறு ;**

**ஸமூஹ ஸமத்வம் வேறு**

இதை வைத்துக்கொண்டு தற்காலத்து ஸமத்வச் சீர்திருத்தவாதிகள் விபரீதமாக அர்த்தம் பண்ணுகிறார்கள். அதாவது ஆசார்யாள் வர்ணாச்ரம பேதங்களை ஒழிக்கச் சொல்லிவிட்டார், ஜாதி வித்யாஸமெல்லாம் பார்க்கவே கூடாது என்று காட்டிவிட்டார் என்று சொல்கிறார்கள். அப்படி ஆசார்யாள் சொல்லவேயில்லை என்பது அவருடைய பாஷ்யங்களைப் பார்க்கிற எவருக்கும் தெரியும். ஆனாலும் பாஷ்யங்களைப் பார்த்து, 'ட்ரான்ஸ்லேட்'பண்ணி, லெக்சர் பண்ணி, டாக்டர் பட்டம் வாங்கினவர்களும்கூட வேண்டுமென்றே தங்கள் நவீனக் கொள்கைக்கு ஸாதகமாக இருக்கிறது என்பதால் இப்படி வளைத்துத் திரித்துப் பேசுகிறார்கள். இவர்களுக்கு வர்ணாச்ரம தர்மம்

பிடிக்கவில்லையென்றால் அதற்குத் தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்களும் என்னென்ன காரணம் சொல்லமுடியுமோ (அவற்றைச்) சொல்வதுதான் முறையே தவிர ஆசார்யாளைப் பிடித்து வளைத்து அவர் சொல்லாததை அவர் வாயில் திணிப்பது கொஞ்சங்கூட ந்யாயமில்லை. ஆனாலும் நாம் நம் பெரியவர்களையெல்லாம் மறந்துபோய்விடவில்லையாக்கும், நம்முடைய 'ஸ்பிரிசுவல் ஹெரிடேஜ்'ஜை (ஆத்மிக பாரம்பர்யத்தை) ரொம்ப மதிக்கிறோமாக்கும் என்று காட்டுவதாக அப்பப்போ விழாக்கள் ஸெமினார்கள் நடத்துவதில் தலைவர்கள் என்கப்பட்டவர்கள் இந்த ஸம்பவத்தைச் சொல்லி, ஆசார்யாள் இக்காலத்தில் 'ஈக்வாலிடி'என்று சொல்வதைத்தான் ஸ்தாபித்திருக்கிறாரென்று 'ட்ரிப்யூட்'கொடுக்க (புகழஞ்சலி சொலுத்த)த் தவறுவதில்லை. நம்முடைய கொள்கையை அவர் சொல்வதாக ஆக்கி ட்ரிப்யூட் கொடுப்பதென்றால் அது நமக்கே ட்ரிப்யூட் கொடுத்துக்கொள்வதுதான்!

வாஸ்தவத்தில் ஆசார்யாளும் மற்ற பூர்விக சாஸ்த்ரகாரர்களும், ரிஷிகளும் சொன்ன ஸமத்வம் என்ன?ஸகல ஜீவர்களிடமும் கொஞ்சங்கூட ஏற்றத்தாழ்வேயில்லாத அன்பாகிய மனோபாவ ஸமத்வத்தைத்தான் அவர்கள் சொன்னார்கள். கார்யங்களை வைத்து, இவரிவருக்கு இன்னின்ன என்று ஸமூஹ வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக் கொடுக்கும் வர்ணாச்ரமங்களையெல்லாம் அழித்து ஒன்றாக்குவதுதான் ஸமத்வம் என்று நினைத்துக்கொண்டிருப்பதை அல்ல. பல ஜாதிக்காரர்கள் அவரவருக்குமென்று பல தொழில்களைப் பண்ணுவதில் ஸமத்வம் இல்லை என்று நினைப்பதே தப்பு. அந்தந்தத் தொழிலுக்கு ஏற்றபடி ஆஹாரம் முதலானவை இருக்கும். வித்யாஸமாயிருக்கிறதே என்று எல்லாவற்றையும் கலந்தால் எந்தத் தொழிலும் ஸரியாக நடக்காது. ஜ்வரக்காரனுக்கு வெந்நீர் வேண்டும். குடல் புண்காரனுக்கு ஜில்லென்று ஜலம் வேண்டும். பூஜைக்கு மடி ஜலம் தனியாயிருக்கும். 'பருப்பு வேகணும்' என்று சமையலுக்கு மாத்ரம் எங்கேயாவது போய் ஜலம் கொண்டுவந்து கொஞ்சம் வைத்திருப்பார்கள். குளிப்பதற்கு துணிகள் துவைப்பதற்கெல்லாம் வேறே ஜலம் இருக்கும். அந்த துவைத்த ஜலத்தைக்கூடச் சுருணையை அலசலாம் என்று

சேர்த்து வைத்திருப்பார்கள். இதெல்லாமே அவச்யமான கார்யந்தான். ஸமத்வம், உசத்தி தாழ்த்தி என்ற வார்த்தைகளுக்கே இங்கே இடமில்லை. ஆனால் இப்படிச் சொல்லி எல்லா ஜலத்தையும் கலந்து ஒன்றாக்கிவிட்டால் அத்தனை கார்யங்களும்தானே கெட்டுப்போகும்?

ஸமூஹ வாழ்க்கையில் ஸமத்வத்திற்கு வேறே என்ன நியாயம் சொன்னாலும் சொல்லட்டும். ஆனால் இதனால் தான் ஒற்றுமை ஏற்படும் என்று முதலிடம் கொடுத்துச் சொல்கிறார்களே, அது புரளிதான். மற்ற தேசங்களிலெல்லாம் வர்ண வியவஸ்தை இல்லைதானே?ஆனால் அங்கேயெல்லாம் ஒற்றுமைதான் நிலவுகிறதா?எத்தனை சண்டையும் கலகமும் உண்டோ அத்தனையுந்தான் நடக்கின்றன.

நம் தேசத்திலேயே இந்தக் கொள்கை கொண்ட எல்லாரும் ஒற்றுமையாகத்தான் இருக்கிறார்களா என்று அவர்களுக்கே தெரியும். தேசத்திலும் இந்த கோஷம் வந்த பிற்பாடு ஏற்பட்டிருக்கும் சண்டையும் போட்டியும் முன்னே ஒரு போதும் இருந்ததில்லை.

"அதெல்லாம் ஸரி, ஆனால் இப்போது கார்யத்தை வைத்துத்தான் ஜாதிகளைப் பிரிந்திருக்கிறதா?"என்று கேட்டால் இப்போது அப்படியில்லைதான். எல்லாரும் ஒரே லௌகிக லக்ஷ்யங்கள், லௌகிக ஸௌக்யங்கள், லௌகிகப் போட்டிகள் என்று இறங்கி விட்டதால், முன்னே ஆத்ம லக்ஷ்யத்தையும் ஆத்ம ச்ரேயஸையும் முக்யமாக வைத்து அதற்கு அநுகுணமாகவே Individual life (தனியார் வாழ்க்கை), social order (ஸமூஹ ஒழுங்குமுறை) இரண்டையும் போட்டியில்லாத பாரம்பர்ய க்ரமத்தில் வைத்துச் செய்திருந்த வர்ணாச்ரம விபாகங்களை உடைத்துக் கார்யங்களை ஒன்று கலந்திருக்கிறோம். இதற்காக ஆதியில் அவர்கள் அப்படிப் பண்ணியதே தப்பு என்றால் எப்படி?அல்லது அவர்கள் பண்ணவேயில்லை, பண்ணியிருந்தால் ரொம்ப பக்ஷபாதிகள் என்றால் எப்படி?

ஆக, சாஸ்த்ராபிப்ராயத்தையேதான் சொன்ன ஆசார்யாள் நம்முடைய கார்யலோகத்தில் 'ஈக்வாலிடி'என்று நினைத்து

இப்போது சொல்கிற எதையோ சொல்லவில்லை. நடுவில் சிதிலமாயிருந்த வர்ணாச்ரம தர்மத்தை அவர்தான் மறுபடி ஜீர்ணோத்தாரணம் பண்ணினார். இப்படி நான் சொல்வது இங்கேயே யாருக்காவது பிடிக்காமல் ஏமாற்றமாக, வருத்தமாக, கோபமாக இருக்குமானாலுங்கூட-'ஐயோ!அப்படியானால் அவரை புத்தர், ஜினர் காந்தியோடெல்லாம் சேர்த்துச் சொல்ல முடியுமா என்று துக்கமாக இருக்குமானுங்கூட-நிஜத்தை எப்படிச் சொல்லாமலிருப்பது?நடுவில் பௌத்தத்தால் வர்ண வ்யவஸ்தைகள் தப்பியிருந்தாலும் பிற்பாடு மறுபடி உறுதியாக ஏற்பட்டே ஹிந்து நாகரிகம் பலம் பெற்றது என்பதிலிருந்து சரித்ரம் அறிந்தவர்களுக்கும் இதுதான் நிஜம் என்பது தெரியும். ஆசார்ய பாஷ்யங்களைப் படித்தவர்களோ திரும்பத் திரும்ப அவர் வர்ணாச்ரம ரக்ஷணையை முக்யமாகச் சொல்லியிருப்பதிலிருந்து-வெளியில் அவர்கள் என்ன லெக்சர் பண்ணினாலும், புஸ்தகம் எழுதினாலும்-இதுதான் ஆசார்யாளின் நிஜமான அபிப்ராயம் என்று உள்ளூரத் தெரிந்துகொண்டேயிருப்பார்கள்.

ஆசார்யாள் வாஸ்தவத்தில் என்ன சொல்கிறார், அதற்கு என்ன காரணம் காட்டுகிறார் என்று கேட்டுப் அதைப் பின்பற்றுவதுதான் ஆசார்ய பக்தி. அவர் சொல்வது நம்மளவில் புரியாவிட்டால், பிடிக்காவிட்டால் அவரைத் திட்டுவதுகூடப் பரவாயில்லை. அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது. அவர் சொல்வதில் 'கன்விக்ஷன்'ஏற்படாவிட்டால் நம் மனஸுக்குப் பொய்யில்லாமல் திட்டினால் கூடப் பரவாயில்லை என்பேன். ஆனால் அவர் நம்முடைய அபிப்ராயங்களைத்தான் பின்பற்றுகிறாரென்று எப்படியாவது திரித்துக் காட்டி அவருக்கு பக்தி பண்ணுவது போலக் காட்டுவதுதான் எல்லாவற்றையும்விடப் பெரிய அபசாரமாக எனக்குத் தோன்றுகிறது. அவர் சொன்னது பிடிக்கவில்லை என்றால் அது உன் அபிப்ராய ஸ்வதந்த்ரம். ஆனால் அவரையே சொல்லாததைச் சொன்னவராகக் காட்டினால், நாம் வேஷம் போடுவது போதாதென்று அவருக்கும் வேஷம் போடுகிற பெரிய தோஷமல்லவா வரும்?அவருடைய அபிப்ராய ஸ்வதந்திரத்தைப் பறித்ததாக அல்லவா ஆகும்?நம்முடைய நாகரிகக் கொள்கையை அவர் சொல்கிறாரென்று அவருக்கு

வேஷம் போட்டுக் காட்டினால்தான் நாம் மரியாதை செய்யமுடியுமென்றால் அது அவருக்கும் அவ மரியாதை, நமக்கும் அவமரியாதைதான்!நாம் சொல்கிற புரட்சிக் கொள்கையை அவர் சொன்னாலே அவரிடம் பக்தி என்றால் உண்மையில் அது நம்மிடமே பக்திதான், நம் கொள்கையிடமே பக்திதான். அவரைத் தப்பாகக் காட்டினால்தான் புத்தர், காந்தி மாதிரி மாஸ் அப்பீல்-பாபுலாரிடி இருக்குமென்றால் அது அவருக்கு வேண்டவே வேண்டாம். எங்கள் மாதிரி நாலு obscurantist-கள் (சீர்திருத்தத்தை எதிர்க்கும் முரட்டுப் பழமைவாதிகள்) பூஜை பண்ணிக் கொண்டிருந்தாலே போதும்!

கார்ய லோகத்தில் இப்போது நாம் சொல்லும் அபேத வாதத்தை ஆசார்யாளும் சொல்லவில்லை, க்ருஷ்ணரும் சொல்லவில்லை, எந்த சாஸ்திரமும் சொல்லவில்லை. மனஸில் அபேத அன்புதான் அவர்கள் சொன்னது. இங்கேயோ ஆசார்யாள் மனஸையும் கழற்றி எறிந்துவிட்ட ஞானியைப் பற்றிச் சொல்லி அந்த ஞானிகள் விஷயமாகத்தான் 'அவனுக்கு ஸர்வமும் ஸமம். ஆகையால் அங்கே லோக சாஸ்திர வழக்குகள் இல்லை'என்கிறார். இது வேதமே சொல்வதுதான்: 'ஞானம் வந்துவிட்டால் அப்புறம் ஜாதி, படிப்பு, பெரியவர்-சின்னவர் என்ற எந்த பேதமுமில்லை. அங்கே வேதமே வேதமில்லை, பஞ்சமன் பஞ்சமனில்லை;தபஸ்வி, தபஸ்வியில்லை'என்றெல்லாம் சொல்கிறது. ஒன்றையும் தின்ன வேண்டுமென்ற அபேக்ஷயில்லாத நிலையில் எதை வேண்டுமானாலும் தின்னலாம், ஒன்றையும் தொடவேண்டுமென்ற அபேக்ஷயில்லாதபோது எதை வேண்டுமானாலும் தொடலாம் என்று சாஸ்த்ரம் சொல்கிறது. அந்த நிலை எங்கே?நாமுள்ள யதார்த்த லோகம் எங்கே?அதிலே ஆசார்யாள் சொன்னதை இதற்குப் பொருத்திக் காட்டுவது அபசாரம்.

கீதையில் வித்யா விநய ஸம்பன்னனான ப்ராம்மணனிடமும் நாயைத் தின்னும் புலையனிடமும் ஞானிக்கு ஸமமான பார்வை இருக்கிறது, அவன் ஸமதர்சியாக ஸாக்ஷிமாத்திரத்தில் இருக்கிறான் என்றுதான்

சொல்லியிருக்கிறதே தவிர, கார்யத்தில் ஒன்றாகப் பண்ணுவதைச் சொல்லவேயில்லை. "நீ க்ஷத்ரியன், உன் கார்யம் சண்டை போடுவது தான்" என்றுதானே எவருக்கு மேலே ஞானி இல்லையோ அந்த க்ருஷ்ணர் அர்ஜுனனை ஏவினார்? ஆசார்யாள் அத்வைத ஸ்வரூபம். அத்வைத சாஸ்த்ரத்தை பூர்ண ரூபம் பண்ணி ஸ்தாபித்தவர் அவர் தான் ஆனால் த்வைத லோகத்தில் மாட்டிக்கொண்டு இதிலிருந்து அதற்குப் போகவேண்டியிருப்பவர்களான நாம் எவ்வளவு தூரம், தொலை தூரம், த்வைத வித்யாஸங்களை அநுஸரித்து அநுஸரித்தே கார்யலோகத்தில் போய்த் தான் பக்குவப்பட வேண்டியிருக்கிறது என்பதை நன்றாகத் தெரிந்து வைத்துக்கொண்டு, ஜாக்ரதையாகப் பார்த்து வழி போட்டுக் கொடுத்திருக்கிறார். இக்காலத்திலோ அத்வைதாநுபவம் என்னவென்றே தெரியாதவர்கள் கார்ய லோகத்தில் அதைக் கொண்டுவிட்டு ஆத்மார்த்தமான சாஸ்த்ர விஷயங்களில் இஷ்டப்படிப் பண்ணி, போதாக் குறைக்குத் தாங்கள் செய்வதற்கு ஆசார்யாள் தலையிலேயே பழியைப் போட்டு 'ட்ரிப்யூட்'கொடுக்கிறார்கள்!

முன்பின் ஸம்பந்தமில்லாமலும், ஒருத்தருடைய அல்லது ஒரு சாஸ்த்திரனுடைய முழு அபிப்ராயமும் தெரியமாலும் நடுவிலே எங்கேயாவது இக்காலப் புரட்சி ஸித்தாந்தங்களுக்கு அநுகூலமாகத் துளி தெரிந்துவிட்டால், "ஹா ஹ! இன்னாரே சொல்லிவிட்டார், இன்ன சாஸ்த்ரமே சொல்லிவிட்டது. எங்கள் அபிப்ராந்தான் ஸரி"என்று ப்ரசாரம் பண்ணுவது தற்காலத்தில் ஜாஸ்தியாகி வருகிறது. ரொம்பவும் வருத்தப்படவேண்டிய விஷயம். ஒன்றை ஆக்ஷேபிப்பதுகூடத் தப்பில்லை, இந்த மாதிரித் திரித்துச் சொல்வதுதான் பெரிய தப்பு...

அந்தப் பஞ்சமன் ஆக்ஷேபம் பண்ணும் ஸாதாரண ஆளாகத் தெரிந்திருந்தால் ஆசார்யாள் தர்க்க ரீதியிலும் தர்மசாஸ்த்ர ப்ரகாரமும் பதில் சொல்லி ஸுலபமாக அவனை ஸரிப்பண்ணியிருப்பார். அவன், "இரண்டு தேஹமும் ஒரே மாதிரி உண்டானதுதானே?தேஹத்துக்குள்ளே இருக்கும் வஸ்துவைப் பார்த்தாலோ இரண்டும் அஸலே ஒன்றுதானே?"என்று கேட்டதற்கு அவர், "வாஸ்தவம் தானப்பா!ஆனால் அந்த உள் வஸ்து உனக்குத் தெரிகிறதா தெரியவில்லையோல்லியோ?ஏன் தெரியவில்லை?ஸம்ஸ்கார

தோஷத்தால். இப்படி ஒவ்வொருவருக்கும் ஸம்ஸ்கார தோஷங்கள் இருப்பதால்தான்-எல்லாருக்கும் ஒரே மாதிரி, ஒரே அளவு தோஷமாக இல்லாமல் வித்யாஸம் வித்யாஸமாக இருப்பதால்தான்- அதை அநுஸரித்தே அவரவருக்கும் ஜன்மா ஏற்படுகிறது. அந்த ஜன்மாவிலேயாவது அவர்கள் போக்கிக் கொள்வதற்கான கார்யங்களைப் பண்ணட்டும்; அப்படிப் பண்ணும்போதே ஸமூஹத்திற்கு தேவைப்படும் வித்யாஸமான எல்லாக் கார்யங்களும் அவர்களால் நிறைவேற்றப்பட்டதாகவும் ஆகட்டும், என்றுதான் சாஸ்த்ரங்கள் வர்ணாச்ரம தர்மங்களைக் கொடுத்திருக்கிறது.

அதன் அநுஷ்டானத்தில் பல பிரிவினர் பல வேறு ஆசாரங்களைப் பின்பற்றினால்தான் அவரவருக்கும் க்ஷேமம் விளைகிறது. ஆகையினால் அவர்கள் கலந்துவிடக்கூடாது. மனஸின் அன்பில்தான் கலக்கணுமே தவிர வாழ்க்கையில் கலந்துவிடக்கூடாது. எல்லாம் ஒரே மாதிரி சரீரமென்றாலுங்கூட ஒவ்வொரு சரீரத்திற்கும் அதன் ஸம்ஸ்காரத்தைப் பொருத்து ஒருவிதமான ஸூக்ஷ்மமான சக்தியோட்டம் இருப்பதால், ஸமூஹ நலனுக்காக மந்த்ர ரக்ஷணை பண்ணவேண்டிய தேஹத்திலிருந்து மற்ற தேஹம் விலகியிருக்க வேண்டியிருக்கிறது. தேஹம், ஸமூஹம், ஸம்ஸ்காரம் என்பதெல்லாமே அடிபட்டுப் போய்விட்ட நிலையில்தான் நீ சொல்வது ஸரிவரும்"என்று பதில் கொடுத்திருப்பார்.

இவன் ஸாதாரண ஆளாக இல்லாமல், எல்லாம் அடிப்பட்டுப்போன நிலைக்காரனாகத் தெரிந்ததால் கொஞ்சங்கூட வாதம் பண்ணாமல் அடக்கத்துடன் அவனை குருவாகச் சொல்லி நமஸ்கரித்தார். நாமும் அப்படிப்பட்டவர்களை அவர் மாதிரியே நமஸ்கரிக்கத் தயாராயிருக்க வேண்டும். அப்போதுதான் ஆசார்ய பக்தர்களாக, ஆசார்ய சிஷ்யர்களாக இருக்கிறோமென்று அர்த்தம்.

---

## விச்வநாதர் விளையாடல் !

உடனே தீண்டாதான் மறைந்து விச்வநாதராக தர்சனம் தந்தான்!ஆசார்யாளைப் பரிசோதித்து, அவர் தம்மளவில் ஞானியானாலும் உலக ஆசாரங்களைப் பின்பற்ற வேண்டியவர்களுக்காகத் தாமும் அப்படியே செய்வார், உலகத்திற்கு மேலே போனவர்களின் விஷயத்திலோ தம்முடைய குருத்வத்தை மறந்து சிஷ்ய பாவத்தில் அடங்கி நிற்பார் என்று காட்டவே ஸ்வாமி பஞ்சமனாக வேஷம் போட்டுக்கொண்டு வந்து விளையாடினது!ஒருவர் தாமே தம் மஹிமையைச் சொல்லிக்கொண்டால், மஹிமைக்குப் பதில் அஹங்காரி என்ற குறைவுதான் உண்டாகும். ஆசார்யாள் அப்படிச் சொல்லிக்கொள்ளமாட்டார். அதனால், லோகம் தானாக அவர் மஹிமையைத் தெரிந்து கொள்ளும்படியாக இப்படி ஸ்வாமி நாடகமாடினார்.

ஆசார்யாள் தமக்கு மூலமான பரமேச்வரன் ப்ரஸன்னமானதும் நமஸ்காரம், ஸ்தோத்ரம் எல்லாம் செய்தார். ஸ்வாமி நிரம்ப அநுக்ரஹம் பண்ணிவிட்டு மறைந்து போனார்.

---



## குமாரிலபட்டர் கதை;

## கர்மமும் ஞானமும்

தேசம் முழுதும் ஆசார்யாள் திக்விஜயம் செய்ய வேண்டுமென்று வ்யாஸர் சொல்லியிரு ந்தாரல்லவா?அதன்படி ஆசார்யாள் காசியிலிருந்து புறப்பட்டார்.

முதலில் அவர் போனது குமாரிலபட்டர் இருந்த ஊருக்கு. நிவ்ருத்தி மார்க்க ப்ரவர்த்தகர் நேரெதிரான ப்ரவர்த்தி மார்க்க

ப்ரவர்த்தகரைப் பார்க்கப் போனார்! அந்த ஊர் ப்ரயாகை. ருத்ரபுரம் என்று 'ஆனந்தகிரீயம்' சொல்கிறது. ஊர் எதுவானாலும் ஆசார்யாளுக்கும் குமாரிலபட்டருக்கும் நடந்த ஸந்திப்பு விவரம், பட்டரின் பூர்வகதை ஆகியவற்றை எல்லாப் புஸ்தகங்களிலும் ஒரே விதமாகத்தான் சொல்லியிருக்கிறது.

மீமாம்ஸகர்களில் முதலிடம் வஹித்த பட்டர் அத்வைத வேதாந்தத்தை ஏற்றுக்கொள்ளும்படிப் பண்ணிவிட்டால் தம்முடைய அவதார கார்யத்திற்குப் பெரிய பலமாகும் என்றே ஆசார்யாள் அவரிடம்போனார். அவஸர அவஸரமாகப் போனார். ஏனென்றால் அப்போது பட்டர் ஒரு ப்ராயச்சித்த கர்மாவைப் பண்ணித் தம்முடைய உயிரைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போக்கிக் கொண்டிருந்தார். ப்ராணன் அடங்கியே விடுவதற்குள் அவரை ஸந்தித்துவிட வேண்டுமென்றுதான் ஆசார்யாள் ஓடினார்.

எதற்குப் ப்ராயச்சித்தம், என்ன ப்ராயச்சித்தம் என்ற கதை பார்க்கலாம்.

குமாரஸ்வாமியின் அவதாரந்தான் குமாரிலபட்டரென்று ஞாபகமிருக்கலாம். அவருடைய அவதாரம் ஏற்பட்டபோது பௌத்தர்களின் ஆதிக்யம் அதிகமாயிருந்தது. அவர்கள் வேதாத்யயனம், யாக யஜ்ஞங்கள், வர்ணாச்ரம விபாகங்கள் எதுவும் இல்லாமலிருந்துகொண்டு ஜனங்களையும் அப்படியே நாஸ்திகமாகப் பண்ணிக்கொண்டு வந்தார்கள். இந்த நிலைமையை மாற்றுவதற்கே குமாரிலபட்டரின் அவதாரம் உண்டானது. இப்போது நான் சொன்ன விஷயமெல்லாம் கர்ம மார்க்கத்தில் பௌத்தம் ஏற்படுத்திய ஹானியாகும். இப்படியே ஈச்வரன், ஈச்வர பக்தி என்பவை இல்லாமல் பக்தி மார்க்கத்துக்கும் அது ஹானி செய்து வந்தது. எல்லாம் ஒரு பாழ்வெளியாகப் போய் முடிவதுதான் மோக்ஷமென்று சொல்லி, ப்ரஹ்ம ஸ்வரூபமாக ஆகிவிடுவதற்கு வழி சொல்லும் ஞான மார்கத்துக்கும் ஹானி இழைத்து வந்தது. இவற்றில் பக்தி, ஞான ஸமாசாரங்களை விட்டுவிட்டு வைதிகமான கர்ம மார்க்கத்தை மட்டும் நிலைப்படுத்தத்தான் குமாரஸ்வாமி குமாரிலராக வந்தது. அவதாரம் மநுஷ்ய ரீதியிலேயே நிறையப் பண்ணுவதுதானே வழக்கம்? அதனால் பௌத்தத்தைக்

கண்டிக்க அவர் நினைத்தபோது, முதலில் அந்த மதக் கொள்கைகள் எல்லாம் என்னவென்று மநுஷ்ய ரீதியிலேயே நன்றாகப் படித்தறிய வேண்டுமென்று எண்ணினார்.

ஒன்றைக் கண்டனம் பண்ணுவதற்குமுன் அந்த விஷயம் என்ன, எதனால் அதைச் சேர்ந்தவர்கள் அப்படிச் சொல்கிறார்கள் என்பதையெல்லாம் தீர்க்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டியதே முறை. இப்பொழுதுள்ள புதுக் கொள்கைக்கு மாறுதலாக ஒன்றை தர்ம சாஸ்த்ரம் சொல்கிறதென்றால் உடனே அது தப்பு என்று கண்டனம் செய்யப் புறப்படுகிறார்களே, இது ஸரியில்லை. சாஸ்த்ரம் ஏன் ஏற்பட்டது, அது ஏன் அப்படிச் சொல்கிறது, அதற்கு என்ன ப்ரயோஜனம் சொல்கிறது, அந்த ப்ரயோஜனத்தைப் பூர்விகர்கள் அடைந்தார்களா, இல்லையா, அப்படி அடைந்திருந்தால் இப்போது நமக்கு அது வேண்டாமா, வேண்டாமென்றால் ஏன் வேண்டாம், வேண்டுமென்றால் அப்போதும் நாம் 'புதுக் கொள்கைதான்' என்று பிடித்துக்கொண்டிருக்கலாமா என்பதையெல்லாம் ஆலோசித்துப் பார்த்தே முடிவெடுக்க வேண்டும். ஆனால் இந்தக் காலத்தில் "உங்கள் சாஸ்த்ரம் சுத்த நான்ஸென்ஸ். அதில் ஆராய்ந்து பார்க்க ஒன்றுமில்லை. எங்கள் கொள்கைதான் கொள்கை"என்று ஒரேயடியாகத் தள்ளிவிடுகிறார்கள்.

குமாரிலபட்டர் மாற்றுக் கட்சியையும் பூர்ணமாகத் தெரிந்துகொண்ட பிறகே கண்டிக்கப் போகணுமென்ற கருத்தை உடையவர். ஆனால் பௌத்தர்களோ வைதிகாசாரங்களோடு உள்ள ப்ராம்மணமனுக்குத் தங்கள் சாஸ்த்ரங்களைச் சொல்ல மாட்டார்கள். இந்த ஏறுமாறான ஸந்தர்பத்தில் என்ன பண்ணலாமென்று அவர் யோசித்து, 'ஸரி, வைதிகாசாரத்தை விட்டுவிட்டு, பௌத்தத்தில் உண்மையான பற்றுதல்கொண்டே அந்த சாஸ்த்ரத்தைக் கற்றுக்கொள்கிற மாதிரி வேஷம் போட வேண்டியதுதான். வேறே வழியில்லை'என்று நினைத்தார். பௌத்தர் வேஷம் போட்டுக்கொண்டு ஒரு பெரிய விஹாரத்திலிருந்த அவர்களுடைய வித்யாசாலையில் சேர்ந்தார். அது ஏழு மாடிகள் கொண்ட பெரிய விஹாரம்.

குமாரிலபட்டர் அத்யாவச்யமான கர்மாநுஷ்டானங்களை

மட்டும் ரஹஸ்யமாகப் பண்ணிக்கொண்டு பௌத்த குருமார்களிடம் படித்து எல்லாம் தெரிந்துகொண்டார்.

அவர்கள் ஒரேயடியாக வேதத்தை தூஷித்து ஆர்க்யூ பண்ணும்போது-" **வேத வேள்வியை நிந்தனை செய்துழல்** "என்று ஞானஸம்பந்தர் சொன்னதுபோலச் செய்யும்போது -இவருக்கு துக்கம் துக்கமாக வரும். 'வலிய வந்து, பொய் வேஷம் போட்டுக்கொண்டு, இப்படி நமக்கு உயிராயுள்ள வேதத்தின் தூஷணையைக் கேட்டுக் கொள்கிறோமே?'என்று அழுகை வரும். அடக்கிப் பார்ப்பார். சில ஸமயம் அடங்காமல் கண்ணில் ஜலம் வந்துவிடும். பிக்ஷுக்கள் இதை கவனித்தார்கள். 'இவன் வைதிகப் பார்ப்பானாயிருப்பானோ?என்று ஸந்தேஹித்திதார்கள். "ஏன் அழுகிறீர்?"என்று கேட்பார்கள். இவர், "ஆஹா!எத்தனை புத்திசாலித்தனமாகக் கண்டனம் பண்ணியிருக்கிறது!அதுதான் ஆனந்த பாஷ்பம் வருகிறது!"என்று ஸமாளிப்பார்.

எத்தனை நாள் ஒளிக்க முடியும்?அவர்கள் இவருடைய நடவடிக்கைகளைக் கூர்மையாகக் கண்காணித்து உண்மையைத் தெரிந்துகொண்டு விட்டார்கள். 'கெடுத்தானே பார்ப்பான்!இவன் விரட்டிவிட வேண்டியதுதான். எங்கே விரட்டுவது? இவன் கொஞ்சமாகத் தெரிந்துகொண்டிருந்தால் இந்த விஹாரத்திலிருந்து வெளியுலகத்துக்கு விரட்டி விட்டால் போதும். இவனோ பூர்ணமாகத் தெரிந்துகொண்டு விட்டான். அதனால் வெளியுலகத்துக்குப் போய்ப் பூர்ணமாகக் கண்டன ப்ரசாரம் பண்ண ஆரம்பிப்பான். ஆகையால் இவனை உலகத்தைவிட்டே விரட்ட வேண்டும்' என்று தீர்மானித்தார்கள்-"அஹிம்ஸா பரமோ தர்ம:"என்று உபதேசித்தவர்கள்!

உப்பரிகையிலிருந்து வேடிக்கை பார்க்கலாமென்று சொல்லி ஹிதவஞ்சனையாக அவரை ஏழாவது மாடிக்குக் கூட்டிக் கொண்டுபோய் அங்கேயிருந்து கிழே தள்ளிவிட்டார்கள்.

அவர் கீழே விழுந்தார்.

அந்த ஆபத்திலும் வேதம் கை கொடுக்கும் என்ற

நம்பிக்கையோடு "வேதம் ப்ரமாணமாக இருந்தால் எனக்கு எந்த ஹானியும் ஏற்படாமல் உயிருடன் இருப்பேனாக!"என்று சபதம் பண்ணிக்கொண்டே விழுந்தார்!

**" பதந் பதந் லௌத தலாந்யரோருஹம்**

**யதி ப்ரமாணம் ச்ருதயோ பவந்தி ***

**ஜீவேயம் அஸ்மிந் பதிதஸ்-ஸமஸ்தலே**

**மஜ்ஜீவநேந ச்ருதிமாநதா கதி : ** "**

அத்தனை நம்பிக்கையோடு அவர் விழுந்ததற்கேற்க அவருக்கு ப்ராணஹானி ஏற்படவில்லை!எலும்பு கிலும்பு முறியக்கூட இல்லை!கண்ணில் மட்டும் ஒரு கல் குத்திவிட்டது.

'இதுகூட எப்படி நேரலாம்?வேதத்தின் சக்திக்கு இந்த அளவுகூட ஒரு ஊனம் ஏற்படலாமா?'என்றே அவர் கோபித்துக் கொண்டாராம்!

அப்போது ஒரு அசரீரி வாக்கு உண்டாயிற்று. "வேதம் ப்ரமாணமாக இருந்தால் 'யதி ப்ரமாணம்'என்றீரே!'இரு ந்தால்'என்பதில் உமக்கு அதன் ப்ராமாண்யத்தில் கொஞ்சம் ஸந்தேஹம் இருந்ததாகத்தானே தொக்கி நிற்கிறது?அதனால்தான் இந்தச் சின்ன ஊனம்!"என்று அது சொல்லிற்று.

அப்புறம் குமாரிலபட்டர் க்ருஹத்துக்குத் திரும்பினார். பௌத்தத்தை அலசி அலசிக் கண்டனம் பண்ணிப் (பூர்வ) மீமாம்ஸை என்கிற கர்ம மார்க்கத்தை மறுபடி நன்றாக அநுஷ்டானத்துக்குக் கொண்டு வந்தார். தேசத்தில் மறுபடி வைதிக ஆசார, அநுஷ்டானங்கள் வ்ருத்தியாயின. அநேக வருஷங்கள் ஆகி அவர் நல்ல வ்ருத்தராகி விட்டார்.

'ஸநாதன தர்ம ஸம்ஸ்தாபனத்தில் நாம் ஆரம்ப கட்டமாகச் செய்யவேண்டியதெல்லாம் செய்தாயிற்று. அப்பாக்காரர் அவதாரம் பண்ணி பாக்கி செய்ய வேண்டியதை ஆரம்பித்து விட்டார். நாம் திவ்ய லோகத்துக்குத் திரும்பிவிட வேண்டியதுதான்'என்று எண்ணினார்.

'தம்முடைய தேஹ பரித்யாகத்திலும் லோகத்திற்கு சாஸ்த்ராபிமானம் ஏற்படும்படியாக ஒன்று பண்ணிக்காட்ட வேண்டும். ஜீவிப்பதற்கு மட்டுமில்லாமல் சாவதற்கும்கூட சாஸ்த்ரப்படிதான் செய்யணுமென்று காட்டவேண்டும்' என்று நினைத்தார்...

சாஸ்த்ரப்படித் தாம் கடுமையான ஒரு ப்ராயச்சித்தம் பண்ணிக்கொள்ள வேண்டியவர் என்று அவர் அபிப்ராயப்பட்டார். என்ன அப்படி பெரிய தப்புப் பண்ணினார், அதற்காக ப்ராயச்சித்தம் என்றால்..'ஒரே ஒரு எழுத்து சொல்லிக் கொடுத்தாலும் அவர் நமக்கு குரு. குருவுக்கு த்ரோஹம் பண்ணுவதை சாஸ்த்ரம் மஹா பாபம் என்கிறது. புத்த பிக்ஷுக்களோ நமக்கு அவர்களுடைய மத விஷயம் முழுவதும் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். நாமானால் பொய் வேஷம் போட்டுக் கற்றுக் கொண்டோம்!அப்புறம் அவர்கள் சொல்லிக்கொடுத்ததையெல்லாம் கண்டனம் பண்ணி அவர்களுக்கு மனவேதனை கொடுத்திருக்கிறோம். இப்படி குரு த்ரோஹியாகிவிட்டோம். கர்மாநுஷ்டானத்தை ஸ்தாபிக்க வந்த நாமே இதற்கான ப்ராயச்சித்த கர்மாவைப் பண்ணாமலிருக்கலாமா?'என்று நினைத்து, இதற்கு என்ன ப்ராயச்சித்தம் சொல்லியிருக்கிறதென்று தர்ம சாஸ்த்ரங்களைப் பார்த்தார்.

'இவர் ஸொந்த ஆதாயத்துக்காக வேஷம் போடவில்லை. லோகத்துக்கு ஸத்யம் தெரியவேண்டுமென்றே அப்படிப் பண்ணினார். சிஷ்யனுக்கு குருபக்தி மாதிரியே, குருவுக்கு சிஷ்ய ரக்ஷணம் பெரிய தர்மம். அவர்களானால் இவரை ஏமாற்றி ப்ராணஹானி பண்ணவே யத்தனித்தார்கள். இப்படிப்பட்டவர்களின் விஷயத்திலே குரு த்ரோஹம் என்பது ஸரியாகுமா?'என்று நமக்குத் தோன்றலாம்!ஆனால் பெரியவர்களோ பிறத்தியார் செய்த பெரிய தப்புக்களையும் மறந்துவிட்டுத் தாங்கள் செய்த சின்னத் தப்புக்களைத்தான் பெரிசாக நினைப்பார்கள். அதனால் நிஜமாக இல்லாத போலி குரு த்ரோஹத்திற்கும் தம்மைத் தாமே சாஸ்த்ர ப்ரகாரம் தண்டித்துக்கொள்ளத்தான் வேண்டுமென்று அவர் நினைத்தார்.

ப்ராயச்சித்தத்துக்காகப் புஸ்தகம் பார்த்தார். அதில்

ரொம்பவும் கஷ்டமான முறையில் மரணத்தை ஏற்பதே குரு த்ரோஹத்திற்கு ப்ராயச்சித்தம் என்பது போட்டிருந்தது. 'அப்படியா?ஸரி, சரீரத்தை அணு அணுவாகப் பொசுக்கிக்கொண்டு உயிரை விடுவோம்;'என்று உடனே முடிவு பண்ணிவிட்டார். நாமானால் அந்தப் புஸ்தகத்தை நெருப்பில் போட்டிருப்போம்!அவரோ, 'நல்ல வேளை!குரு த்ரோஹத்திற்கு ப்ராயச்சித்தமே இல்லை என்று சொல்லாமல் இப்படியொன்று சொல்லியிருக்கே!'என்று ஸந்தோஷமே பட்டார்.

உமியை நிறையக் கொட்டிக்கொண்டு அது சிறுகச் சிறுகக் கருகும்படி எரித்துக்கொண்டு அதற்குள்ளே அவர் இறங்கிவிட்டார். அணு அணுவாக எரிந்து சாவதற்கு இதுவே வழி என்று இப்படிப் பண்ணினார். 'துஷாக்னி ப்ரவேசம் செய்தார்'என்று சொல்லியிருக்கிறது. துஷம் என்றால் உமி.

உமிக் காந்தல் அக்னியில் அவர் இறங்கிவிட்டாரென்று ஆசார்யாள் கேள்விப்பட்டதால்தான், 'எந்த நிமிஷம் என்ன ஆகுமோ?நாம் சுருக்க (விரைவில்) போய் அவரை வேதாந்தம் சொல்லும் ஞானமார்க்கத்தை ஏற்கும்படிச் செய்ய வேண்டுமே!'என்று பதறிக்கொண்டு வந்து சேர்ந்தார். ப்ராயச்சித்தம் முடிந்தபின் ஆஸாமியையே பார்ப்பதற்கில்லையே என்பதால் நாலு நாளில் ஓடோடி வந்து சேர்ந்தார்.

அக்னியில் வெந்து கொண்டிருந்த குமாரிலபட்டருக்கு ஆசார்யாளின் தர்சனமே குளிர்ச்சியாக இருந்தது. அதுவும் போதாதென்று ஆசார்யாள் உபதேசமாக அவர் மேலே ஞானாம்ருதத்தையும் வர்ஷித்தார்.

உபதேச ஸாரம் என்னவென்றால்:வேதத்தில் சொன்னபடியே கர்மாநுஷ்டானம் அவச்யம் செய்யத்தான் வேண்டும் ஆனால் அது சித்தப் பரிசுத்தி ஏற்பட்டு ஞானவிசாரத்திற்குப் பக்வமாதற்குத்தானே தவிர, குமாரிலபட்டர் முதலான மீமாம்ஸகர்கள் சொல்கிறபடி அதுவே முடிவான ஸாதனம் என்று அல்ல கர்மாநுஷ்டானத்தால் அடையும் ஸ்வர்கம் முதலான இன்பப் பலன் எதுவும் சாச்வதமில்லை. ஆத்மாவை அறிந்து ஆத்மாவாகவே, ப்ரஹ்மமாகவே நிற்பதுதான் சாச்வதமான மோக்ஷம். அதுதான் ஸத்ய ஸத்யமான ஸ்திதி.

"ஜீவனை 'இன்ன இன்ன செய்'என்று கார்யத்தில் ஏவும் கர்ம காண்டமே வேதத்தின் பரம தாத்பர்யம். வெறுமே ஒரு கார்யமுமில்லாததாக சும்மா இருக்கும் ஆத்மாவைப் பற்றிச் சொல்லியிருக்கும் ஞான காண்டத்தில் நாம் எடுத்துக்கொள்வதற்கு எதுவுமில்லை. ஏன் பின்னே இப்படி ஒரு காண்டம் இருக்கவேண்டுமென்றால், கர்த்தாவை அவனேதான் ஸ்வாமி என்று தூக்கிவைத்து ஸ்துதித்தால்தான் அவனுக்கு உத்ஸாஹம் ஏற்படும் என்றுதான் இருக்கிறது. இதற்கு 'அர்த்தவாதம்'என்று பெயர். ஆனால் இதுவே பரமதாத்பர்யமாகாது"என்று மீமாம்ஸா மதம் சொல்லும். இதற்கு ஆசார்யாள் என்ன சொன்னாரென்றால்: கார்யத்தைச் சொல்வதாலேயே, சொல்கிறபோதே, வேதத்தை அங்கீகரிக்கிறோம் என்று மீமாம்ஸகர்கள் சொன்னாலும் உண்மையில் அந்தக் கார்யத்தால் ஏற்படும் ப்ரயோஜனமான ஆனந்த ப்ராப்திக்காகத்தான் அங்கீகரிக்கிறார்களே தவிர கார்யத்திற்காகவே அல்ல. 'இன்ன இன்ன செய்'என்று கார்யங்களில் ஏவும் "விதகிள்"கர்ம காண்டத்தில் இருப்பது போலவே 'இன்ன இன்ன செய்யாதே' என்று கார்யத்திலிருந்து விலக்குவதாகவுள்ள "நிஷேத"ங்களும்தான் இருக்கின்றன. கார்யமில்லாததைச் சொல்லும் இவற்றையும் மீமாம்ஸகர்கள் ஏற்றுக்கொள்ளத்தான் செய்கிறார்கள். ஏனென்றால் ஆனந்த ப்ராப்தி என்ற ப்ரயோஜனத்தை அடையவேண்டுமென்றால் இந்த நிஷித்த கர்மாக்களை (நிஷேதமாக உள்ள கர்மாக்களை) நாம் செய்யாமல் இருந்தால்தான் முடியும் என்பதால் இப்படி. கர்ம காண்டத்திலேயே சில கார்யங்களை விடச் சொல்லியிருப்பது அதன் ப்ரயோஜனத்தை உத்தேசித்து ஏற்கத்தக்கதாகிறது என்றால் ஞான காண்டத்தில் ஸகல கார்யங்களையுமே விட்டுவிட்டுச் சும்மா இருப்பதுதான் பரம ப்ரயோஜனம் என்று இருப்பதை எப்படி வெறும் அர்த்தவாதம் என்று தள்ளலாம்?கர்மாவின் ப்ரயோஜனம் என்ன, ஞானத்தின் ப்ரயோஜனம் என்ன என்று சீர்தூக்கிப் பார்த்துத்தானே முடிவு செய்யவேண்டும்?கர்மாவினால் அடையும் ஆனந்த ப்ராப்தி சாச்வதமே அல்ல. ஞானத்தினால் அடையும் ஆனந்த ப்ராப்தியோ-ஆத்மானந்தம், ப்ரஹ்மானந்தம் என்பதோ-சாச்வதமாக இருப்பது. அப்போது அதைத் தானே எடுத்துக்கொள்ள வேண்டும்?ஆகையால் கர்மாக்களையும் பண்ணவேண்டியவரை பண்ணத்தான் வேண்டுமென்றாலும்,

அவை தரும் சிறிய சிறய ஆனந்தங்களுக்காக இல்லாமல் இந்த ஆனந்த பலனை த்யாகம் பண்ணிவிடவேண்டும். அப்படிப் பண்ணினாலே பேரானந்தமான ஆத்ம லக்ஷ்யத்தில் சேர்க்கிற ஞானமார்க்கத்தில் ப்ரவேசிப்பதற்கான சித்த சுத்தி ஏற்படும்.

மீமாம்ஸையில் கர்மா என்பது அதுவே பலனைத் தருகிறது என்று சொல்லி, ஸ்வாமி வேண்டாமென்று தள்ளுவதும் அடியோடு ஸரியில்லை. பெரிய ப்ரபஞ்ச நிர்வாஹத்தைப் பார்த்தாலும், ஒரு புழுவிலிருந்து ஆரம்பித்து ஸகல ஜீவர்களுக்கும் இருக்கும் குணாதிசயங்களைப் பார்த்தாலும், அந்த ஜட ப்ரபஞ்சத்தை இந்த ஜீவ லோகத்தோடு கோடி தினுஸில் முடிச்சுப் போட்டு ஜீவ யாத்ரை நடப்பதைப் பார்த்தாலும் இதையெல்லாம் நடத்துவிக்கிற ஒரு பேரறிவு இருந்தே தீர வேண்டும், அதுதான் இன்ன கார்யத்திற்கு இன்ன பலன் என்று திட்டம் பண்ணி நடத்துகிறது என்று ஒப்புக்கொள்ள வேண்டியே ஏற்படும். அந்தப் பேரறிவைத்தான் ஸ்வாமி என்பது. சித்தி சுத்திக்காகவே கார்யமே தவிர இந்தக் கார்யத்தினாலேயே கிடைக்கும் பலனுக்காக இல்லை என்னும்போது, 'அப்பா, இந்தப் பலனை உன் பாதத்தில் அர்ப்பணம் பண்ணிவிட்டேன். எனக்கு சித்த சுத்தியைத் தா'என்று அவனிடம்தான் பலத்யாகம் பண்ண வேண்டும்.

'அவன் அத்வைதமான ஞானத்தை அநுக்ரஹிக்கும் வரையில் அவனிடம் அன்போடு பக்தி பண்ணிக்கொண்டு இப்படிக் கர்மபல த்யாகம் செய்து வரவேண்டும். அப்புறம் அவனாகவே ஆகிவிடலாம். பக்தி என்கிற இந்த அன்புக்கும் மீமாம்ஸையில் இடமே இல்லாமலிருப்பது ஒரு பெரிய குறை. இந்த அன்பின் அம்சமாக லோகத்திலுள்ள பல தினுஸான நல்ல அன்புகள் எதற்கும் அதில் இடமில்லை. ஒரு ஜீவன் என்றால் அவன் உடம்பால் செய்யும் கார்யம், மனஸால் செய்யும் அன்பு, மனஸூம் கழண்டு (கழன்று)போய் அப்படியே ஆத்மாவாக உள்ள சாந்தி நிலை என்று எல்லாமும் சேரும்படி, ஒன்றுக்கொன்று கைக்கொடுத்துப் போகும்படி வழி சொன்னால்தானே வீஸீமீ மீரீக்ஷீணீமீ மீபீ ஜீமீக்ஷீஉஷீஸீணீறீறீமீ ஹ் (ஒழுங்கு சேர்ந்த ஜீவ பூர்ணம்) உருவாக முடியும்?மனஸின் அன்பும் இல்லை, ஆத்மாவின் சாந்தியும் இல்லை, வறட்டு வறட்டு என்று உடம்பால் கார்யம்

பண்ணிக்கொண்டிருந்தால் போதும் என்றால் எப்படி ஒரு ஜீவனுக்கு நிறைவு கிடைக்கும்?

'கர்மம், பக்தி இரண்டையும் கலந்து ஈச்வரனுக்காகப் பண்ணவேண்டியதையெல்லாம் பண்ணவேண்டும். அவனுடைய ஸ்வரூபமாகவே லோகத்தையெல்லாம் பார்த்து அதற்கானதையெல்லாமும் பண்ணவேண்டும். கடைசியில் இதெல்லாமும், 'அவனுக்கானது, அவர்களுக்கானது'என்பதைவிட 'நமக்கேயானதுதான்'என்கிற மாதிரி நமக்கே ஞான நிஷ்டைக்கு ஏறுவதற்கான யோக்யதை ஸித்திக்கும், அப்போது எல்லாவற்றையும் நிறுத்திவிட்டு, கார்யமெல்லாம் போச்சு, மனசும் போச்சு என்று அப்படியே ஆத்மாவாக இருந்துகொண்டிருப்பதற்கான ஸாதனைகளை ஆரம்பிக்க வேண்டும். ஸாதனை பண்ணி முடிவில் அப்படி ஆகிவிடவேண்டும். அப்போதுதான் ஜன்மா இல்லை, ஸம்ஸார பந்தமில்லை என்று சாச்வதமாக விடுதலை பெற முடியும். ஏனென்றால் ஜன்மம், பந்தம் எல்லாம சரீரமும், மனஸூம் உள்ளவரைதானே ஸாத்தியம்?ரூபமுமில்லை, எண்ணமுமில்லை என்றால் எதற்குக் கர்மா, கர்ம பலன் ஆகியவற்றைக் கொடுத்து ஜன்மா உண்டாக்கி, ஸம்ஸாரத்தில் பந்தப்படுத்த முடியும்?அந்த சாச்வத சாந்தம் வேண்டாம், ஸதா கார்யங்களில் தான் சிக்கிக்கொண்டு ஏதாவது சஞ்சலப்பட்டுக் கொண்டிருப்பது என்றால் ஸரியா?

" மா தே ஸங்கோஸ்தவகர்மணி -கார்யம் செய்யாமலிருப்பதில் உனக்குப் பற்று வேண்டாம்;அதாவது கார்யம் பண்ணிக் கொண்டேயிரு"என்று பகவான் சொல்லவில்லையா என்றால் இது ஆரம்ப கட்டத்தில் இருக்கும் ஸாதகனுக்கே சொன்னது. இத்தனை காலமாக, ஜன்ம ஜன்மாவாக இந்த்ரிய போகங்களுக்காக இவன் ஓயாமல் கார்யம் பண்ணிக்கொண்டே இருந்தவன். தீடீரென்று நிறுத்து என்றால் எப்படி முடியும்?"கார்யத்தை விட்டுவிட்டு ஞானியாக ஸந்நியாஸியாக இப்பவே நான் ஆகி விடுவேன் என்று நினைத்தாலும் உன்னால் அப்படி முடியாது அதற்கான சக்தி உனக்கு இல்லை; ந ஹி (தேஹப்ருதா) சக்யம் -தேஹாபிமானமுள்ள மட்டும் கார்யத்தை விடச் சக்தி இருக்காது: ' ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்ய சேஷத :'

இந்த ஸ்டேஜிலேயே விடுவேனென்றால், உடம்பு கார்யம் பண்ணாவிட்டாலும் மனஸ் பழக்கப்பட்ட அந்த இந்த்ரிய போகக் கார்யங்களைப் பண்ணிப் பார்த்துக் கொண்டேதானிருக்குமேயொழிய, அடங்கி ப்ரசாந்தமாயிருக்காது. வெளியில் கார்யத்தை நிறுத்தின ஞானி மாதிரி இருந்து கொண்டு மனஸுக்குள்ளே இந்த்ரிய விஷயமானவற்றையே நினைத்துக்கொண்டிருப்பவன் மூடாத்மாதானே?மித்யாசாரன் என்கிற 'ஹிபாக்ரிட்'தானே?' கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரந் * இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார : ஸ உச்யதே **'அதனாலே, அப்பா அர்ஜுனா, இப்போது உன் நிலைமையிலே நீ ஏதோ ஒரு மோஹத்தில் (மதி மயக்கத்தில்) கார்யத்தை விடுவேன் என்றாலும் உன் இயற்கை குணம் உன்னைக் கட்டியிழுத்து, உன் வசமில்லாமலே உன்னைக் கார்யத்தில்தான் தள்ளும்:' ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த : ஸ்வேந கர்மணா * கர்த்தும் நேச்சஸி யந்-மோஹாத் கரிஷ்யஸ்-யவ சோ(அ)பி தத **'அதனால்தான் உன்னை இப்போது கார்யத்தை விட வேண்டாமென்றது. ஆனால் இப்படியே இஷ்டப்படிப் பண்ணாமல் சாஸ்த்ரப்படிப் பண்ணு என்கிறேன். பற்றோடு பண்ணுவதை விட்டு, பற்றை விட்டு பகவதர்ப்பணம் பண்ணு என்கிறேன்:' தத் குருஷ்வ மதர்ப்பணம் '. இப்படிப் பண்ணிக்கொண்டே போனாயானால் தாமரை இலைத்தண்ணீர் மாதிரிப் பாவம் உன்னைத் தொடமலிருக்கும் நிலை வரும் : ' லிப்யதே ந ஸ பாபேந பத்ம-பத்ரமிவாம்பஸா .' இப்படி அவனவனுக்கும் சாஸ்த்ரோக்தமாக வாய்த்த கர்மாவை நிஷ்காம்யமாகப் பண்ணிப் பலனை ஈச்வரனுக்கு அர்ப்பித்தானானால் அப்புறம் அவனுக்கு ஞான யோகத்தில் பிரவேசிக்கின்ற யோக்யதா ஸித்தி ஏற்படும்: ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ச ஸித்திம் விந்ததி மாநவ :*இது சின்ன ஸித்தி, இதற்கும் அப்புறம், கார்யத்தை விட்டுவிட்டு ஞான விசாரமே பண்ணிக்கொண்டு போகும்போதே சாச்வத மோக்ஷமான மஹா ஸித்தி-"ஸித்திம் பரமாம்" என்பது கிடைக்கும். ' நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸே நாதிகச்சதி '*ஒரு கார்யமுமில்லாத நிலையே அந்தப் பரம ஸித்தி. அதை ஒருவன் ஸந்நியாஸியாக ஆகி அடைகிறான்,"என்கிறார். ஆக கார்யம் பண்ணாமல் மனஸை அடக்கி சாந்தமாக இருக்க மநுஷ்யர்களுக்கும் பக்வம் போதாததால் தான்

சாஸ்த்ரோக்தமான ஸகல கார்யமும் பண்ணி அந்தப் பக்வத்தைப் பெறும்படி பகவான் சொன்னாரே தவிர அதுவே தான் முடிவு என்று சொல்லவேயில்லை. ஸாதனா மார்க்கத்தில் ஏற விரும்புகிறவனுக்கே கார்யம் உபயமாகிறது; அவனே ஏறிவிட்ட பிறகு 'சமம்'என்பதாகக் கார்யங்களை ஒழித்துவிட்ட நிலைதான் மோக்ஷோபாயமாகிறது என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார் :'
ஆருருக்ஷோர்-முநேர்-யோகம் கர்ம காரணம் உச்சயதே **
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம : காரணம் உச்யதே **'. "ஸகல கர்மமும் ஞானத்தில் போய் அடங்கித்தான் பூர்த்தியடைகிறது: ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிஸமாப்யதே .
ஞானிக்குக் கார்யம் கிடையவே கிடையாது: தஸ்ய கார்யம் ந வித்யதே "என்று தீர்மானமாக முத்தாய்ப்பு வைத்துச் சொல்லி விட்டார்.

கீதை கர்மயோகத்தை நிறையச் சொல்லியிருக்கிறதென்பதால் அதையே முடிவாகச் சொல்லியிருக்கிறதென்று அர்த்தமில்லை என்று ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்தில் நன்றாகத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

இதேபோல, ஆசார்யாளின் மதத்திற்கு ஆதாரமான உபநிஷத்துக்களிலும்கூட எங்கேயாவது கர்ம மார்க்கத்தை வலியுறுத்திச் சொல்லியிருந்தால் அதுவேதான் பரம தாத்பர்யம் என்று நினைத்துவிடக்கூடாது என்றும் ஆசார்யாள் விளக்கி வைத்திருக்கிறார். 'ஈசாவாஸ்ய (உபநிஷ)'த்தில் மநுஷன் நூறு வயஸும் வைதிக கர்மா பண்ணிகொண்டிருக்கட்டும் என்று ஆரம்பத்தில் மந்த்ரம் இருக்கிறது. ஆனால் இங்கே 'ஜிஜீவிஷேத்'என்று போட்டு, 'லோக வாழ்க்கை வாழ ஆசைப்படுபவன் இப்படிப் பண்ணட்டும்'என்றே இருக்கிறது. அதாவது நிவ்ருத்தி மார்க்கத்தில் போகாமல் ப்ரவருத்தியில் போகிறவனுக்கே இந்த உபதேசம். 'இஷ்டப்படிப் பண்ணாதே!சாஸ்தரப்படி ஸகலமும் பண்ணு'என்று அவனுக்குச் சொல்கிறது.

இது ஆசார்யாளுக்கும் பூர்ண ஸம்மதம்தான். அடுத்த மந்த்ரத்திலேயே ஆத்மாவைத் தெரிந்துகொள்ளாதவன், அதாவது ஞான மார்க்கத்தில் போகாதவன் ஆத்மஹத்தி (தற்கொலை)யே செய்து கொண்டவன்தான் என்றும் வருகிறது. அப்புறம் ஒரே அத்வைதமாக ஆத்ம

லக்ஷணத்தைச் சொல்லியிருக்கிறது. ஆகையால் வேதத்தில் கர்மாவைச் சொல்லியிருப்பது ஞானத்துக்குப் போவதற்குப் பூர்வாங்கமாகத்தான்.

இப்படியெல்லாம் ஆசார்யாள் குமாரிலபட்டருக்குத் தத்வங்களை எடுத்துச்சொல்லி உபதேசித்தார். ஒரேயடியாகக் கர்மா என்றே இருந்தவரின் மரண ஸமயத்தில் வந்து அவர் கர்மாவே தொடவே முடியாத சாந்தத்தில் சேரும்படியாக இப்படி உபதேசித்தார். அந்த சாந்தத்தின் அவதாரம்தான் ஆசார்யாள். அவதாரத்திலே அவர் கார்யமயமாகத்தான் ஸதாவும் தெரிந்து கொண்டிருந்தாலும் அப்போதும் அந்தரங்கத்தில் ஒன்றும் செய்யாத சாந்த தத்வமாகத்தான் இருந்து கொண்டிருந்தார். நிறையச் சொன்னேன்,-எவ்வளவுதான் சொன்னாலும், செய்தாலும் ஒன்றும் செய்யாமல் சும்மாயிருப்பதுதான் முடிவு. அதைத தெரிவிப்பதுதான் பெரிய உபகாரம் என்பதற்காகத்தான் அவர் அவதாரம் எடுத்திருந்தது.

ஆசார்யாள் அன்போடு கூட உபதேசிக்க உபதேசிக்க, கர்ம மார்க்கத்தையே முடிந்த முடிவாகப் பிடித்துக்கொண்டிருப்பது உபயோகமில்லை என்று குமாரிலபட்டருக்குப் புரிந்தது. ஈச்வர பக்தியில் போய் ஞானம் பெற்று ஆத்மாவைத் தெரிந்து கொண்டாலன்றி சாச்வதமான சாந்தி ஸௌக்யங்கள் இல்லை என்று புரிந்து கொண்டார்.

ஆசார்ய தர்சனமும், உபதேசமும் உமிக்காந்தல் அக்னியின் தஹிப்பை அடியோடு போக்கிவிட்டன. அப்பபர் ஸ்வாமிகளைச் சுண்ணாம்புக் களவாயில் போட்ட போதும் அவர் சிவ ஸ்மரணையிலேயே ஈடுபட்டிருந்ததால் " ஈசன் எந்தை இணையடி நிழலில் " தாம் ஜில்லென்று இன்பமாக இருந்ததாகப் பாடிய மாதிரிதான் குமாரிலபட்டருக்கும் இருந்தது. காளவாயில் வேகிறதைவிடவும் நீடித்த சித்ரவதையாகத் துஷாக்னியில் அணு அணுவாகப் பொசுங்குவதும் துன்பமாக இல்லை. "எந்தை இணையடி"என்று அப்பர் சொன்ன பகவத்பாதம்தானே சங்கர பகவத்பாதாள்?

குமாரிலபட்டர் ஆசார்யாள் மனஸ் உருகி, "தங்கள் தர்சனத்தாலும் தத்வோபதேசத்தாலும் க்ருதார்த்தனானேன். தங்கள் ஸித்தாந்தத்தை ஏற்றுக்கொள்கிறேன். தங்களுக்கே

தெரியும், ஞானத்தை ஏன் அப்படிக் கண்டனம் பண்ணினேன் என்று. பௌத்தத்துக்கு நேர்மாறாகச் சொன்னாலே எடுபடுமென்றுதான் நிவ்ருத்தியை இப்படி ஆக்ஷேபித்து, அவர்கள் சீர்குலைத்திருந்த ப்ரவ்ருத்தி கர்மாக்களை நிலை நிறுத்த முழு மூச்சோடு பாடுபட்டேன். கடைசியாக ப்ராயசித்த கர்மா பண்ணிக்கொள்ளும்போது பலனாகப் பலதாதாவான ஈச்வரனே எதிரிலே ஸத்கதி தர வந்துவிட்டீர்கள்!தங்கள் வழியைக் கண்டித்தவனுக்கும் அதன் லக்ஷ்யத்தை அநுக்ரஹிக்க ஓடோடி வந்திருக்கிறீர்கள்!அந்த்ய காலத்தில் ஸ்மரிக்காதவனையும் கடைத்தேற்ற வந்திருக்கிறீர்கள்!"

"தங்களுடைய அத்வைத வேதாந்தத்தை லோகம் பூரா தெரிந்து கொண்டு கடைத்தேறணும், எனக்கு அப்படி ப்ரசாரம் பண்ணும் பாக்யமில்லை;இன்னம் சிறிது நேரத்தில் உயிர் பிரிகிற ஸ்திதியிலிருக்கிறேன். தாங்கள் ஒன்று பண்ணணும்:என்னைக் காட்டிலும் தீவ்ர மீமாம்ஸகர் ஒருவர் இருக்கிறார். மண்டனமிச்ரர் என்று பேர். மாஹிஷ்மதி நகரத்தில் இருக்கிறார்.....(மண்டன மிச்ரர் இருந்தது ஹஸ்தினாபுரத்தை அடுத்துள்ள வித்யாலயம் என்ற ஊர் என்றும் அபிப்ராயம் இருக்கிறது. மாஹிஷ்மதி எது என்பது பற்றியே மூன்று நாலு அபிப்ராயங்கள் இருக்கின்றன. மண்டனமிச்ரர் குமாரிலபட்டரின் சிஷ்யர், சிஷ்யராயிரு ந்ததோடு மச்சினரும் என்றெல்லாமும் அபிப்ராயங்கள் இருக்கின்றன.

இதெல்லாம் எப்படியிருந்தாலும், குமாரிலபட்டர் விஷயமாகச் சொன்னதுபோல, மண்டனமிச்ரருடைய பூர்வகதை, ஆசார்யாளை அவர் ஸந்தித்தபோது நடந்த விஷயங்கள், அப்புறம் நடந்த கதை ஆகியவற்றை எல்லாப் புஸ்தகங்களும் அநேகமாக ஒரே மாதிரிதான் சொல்லியிருக்கின்றன...அவரைப் பற்றி ஆசார்யாளிடம் குமாரிலபட்டர் தொடர்ந்து சொன்னார்:)

"அவர் (மண்டன மிச்ரர்) நிரம்பச் செல்வமும் செல்வாக்கும் படைத்தவராயிருப்பதால் அந்தச் சீமை முழுக்க மீமாம்ஸா சாஸ்த்ரத்தை நன்றாகப் பரப்பியிருக்கிறார். பெரிய அநுஷ்டாதா. ஸோமயாகங்கள் உள்பட ஸதாகாலமும் பெரிசாக ஏதாவது கர்மாநுஷ்டானம் பண்ணிக் கொண்டிருப்பவர். அவரைத் தாங்கள் நிவ்ருத்தி

மார்க்கத்திற்குத் திருப்பி விட்டீர்களானால், ரொம்பப் பேர் திரும்பிவிடுவார்கள். இது தாங்கள் அவச்யம் பண்ண வேண்டியது"என்று கேட்டுக்கொண்டார்.

அப்படியே செய்வதாக ஆசார்யாள் சொன்னார்.

குமாரிலபட்டர் உமிக் காந்தல் அக்னியில் தேஹ விநியோகம் ஆகும்வரையில் ஆசார்யாள் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தார். ஆஞ்ஜநேயரின் வாலில் வைத்த நெருப்பு ஸீதையின் அநுக்ரஹத்தால் அவருக்குக் கொஞ்சங்கூடச் சுடாத மாதிரி, ஆசார்யாளின் ஸாந்நித்யத்தில் துஷாக்னி குமாரிலபட்டருக்குக் குளிர்ச்சியாகவே இருந்தது. சரீரம் மாத்ரம் ஜீர்ணமாயிற்று. அக்னி ஸ்வரூபமும், பரமேச்வரனின் நேத்ராக்னியிருந்து உண்டானவருமான ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் அவதாரம் அக்னி முகமாகவே பூர்த்தியாயிற்று!

தர்ம சாஸ்த்ரப்படி நடக்கவேண்டுமென்றே குமாரிலபட்டர் பரித்யாகம் பண்ணினார். இப்படிப்பட்டவர்கள் போட்டு வைத்த அஸ்திவாரம் நம் மதத்துக்கு இருக்கிறது. ஆகையால், தற்போது எத்தனை கோளாறு இருந்தாலும் சாஸ்த்ரானுஷ்டானம் மறைந்தே போய்விடாது என்ற நம்பிக்கையோடு இருக்கலாம். மஹான்களுடைய ப்ராண த்யாகம் வீண்போகாது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பாகம்)** ஸ்ரீசங்கர சரிதம்

**மண்டனரின் பண்டித நகரம்**

மண்டனமிச்ரரைப் பார்ப்பதற்காக ஆசார்யாள் மாஹிஷ்மதீ நகரத்திற்கு வந்தார். 'ஐயோ, இந்தக் கர்ம மார்க்கக்காரர்கள் நித்யமான ஆனந்தம் என்ன என்பதில் புத்தியைச் செலுத்தாமல் அநித்யமான ஆனந்தத்தையே தரும் கர்மாவைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்களே!மோக்ஷமார்க்கத்தில் சேராமல் திருப்பித் திருப்பி ஜன்மா எடுக்கிறார்களே!(வாதச்) சண்டை போட்டாவது இவர்களை நல்ல வழிக்குத் திருப்பணும்'என்ற

கருணையிலேயே ஆசார்யாள் அலையாய் அலைந்தது. கருணையினாலேயே சண்டை!

ஊருக்குப் வெளியிலே ஆற்றங்கரையில் ஸ்த்ரீகள் தீர்த்தம் எடுத்துக்கொண்டிருந்தார்கள். "மண்டன மிச்ரரின் க்ருஹம் எங்கே இருக்கிறது?"என்று ஆசார்யாள் அவர்களைக் கேட்டார்.

அந்த ஊர் முழுவதையும் எப்படி மண்டன மிச்ரர் பண்டித லோகமாக்கியிருந்தார், மீமாம்ஸை, ந்யாயம் முதலான சாஸ்த்ர விஷயங்கள் பாமரப் பெண்டுகளுக்கும், இன்னும் கிளி மாதிரியான பக்ஷிகளுக்குங்கூட அற்றுபடி ஆகிற விதத்தில் எப்படி ப்ரசாரம் பண்ணியிருந்தார் என்பதை 'சங்கர விஜய'ங்கள் இந்த இடத்தில் நயமாகச் சொல்கின்றன.

வழி கேட்ட ஆசார்யாளிடம் அந்தப் பெண்கள் ச்லோக ரூபமாகவே பதில் சொன்னார்களாம். சாஸ்த்ரக் கொள்கைகளில் பலவற்றை ஒவ்வொன்றாக அந்த ச்லோகங்களில் முதல் பாதத்தில் சொல்லி, மற்ற மூன்று பாதங்களில் ஒரே போல, "எந்த வீட்டு வாசலில் உள்ள கூண்டுகளிலிருந்து பெண் கிளிகள் இந்தக் கொள்கைகளைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கின்றனவோ, அதுதான் மண்டன மிச்ரரின் வீடு" என்று முடித்தார்கள். முதல் பாதத்தில் ஏதாவது ஒரு ஸித்தாந்தத்தின் பெயர் வரும். அப்புறம் மூன்று பாதங்களில் பொதுவாக,

**சுகாங்கநா யத்ர கிரம் வதந்தி**

**த்வாரே து நீடாந்தர ஸந்நிருத்தா :**

**அவேஹி தம் மண்டநமிச்ர தாம**

என்று வரும்.

'சுகாங்கனா'என்றால் பெண் கிளி. (ஆசார்யாளிடம் இச் ஸ்லோகங்களைச்) சொல்பவர்களும் பெண்கள்;அவர்கள் மண்டன மிச்ரனின் வாசல் குறட்டில் சாஸ்த்ர விசாரம் செய்வதாகச் சொல்கிறவையும் பெண் கிளிகள். புருஷர்கள் அளவுக்கு ஸ்த்ரீகள் வித்யாப்யாஸம் பண்ணாத

காலமானதால் அந்த ஊரின் பாண்டித்ய விசேஷம் தெரிவதற்காக இப்படிச் சொல்லியிருக்கிறது!

ப்ரமாணங்களைப் பற்றிய ரொம்பவும் சிக்கலான விஷயங்களைக்கூட அந்தக் கிளிகள் வாதம் பண்ணிக்கொண்டிருக்கும் என்று அந்த ஸ்த்ரீகள் சொன்னதாக 'மாதவீய சங்கர விஜய'த்தில் வருகிறது:

**ஸ்வத : ப்ரமாணம் பரத : ப்ரமாணம்**

**கீராங்கநா யத்ர ச ஸங்கிரந்தே ***

**த்வாரஸ்த நீடாந்தர ஸந்நிருத்தா**

**ஜாநீஹி தந்-மண்டந பண்டிதௌக : ****

(பின் மூன்று பாதங்களைப் பார்த்தால் 'ஆனந்த கிரீய'த்தை 'மாதவீயம்'எவ்வளவு நெருக்கமாக அநுஸரிக்கிறதென்பது தெரியும்.)

இது ப்ரமாணம், இது ப்ரமாணமில்லை என்று நிர்ணயிப்பது ப்ராமாண்ய வாதம் என்பது. ஸ்வத:ப்ரமாணம், பரத:ப்ரமாணம் என்று இரண்டு. ஒரு வஸ்துவை அது இன்னது என்று தெரிந்துகொள்கிறபோதே 'ஸரியாகத் தெரிந்கொண்டுவிட்டோம்'என்றும் தெரிந்துகொள்கிறோம்;சில ஸமயங்களில், 'இல்லை, தப்பாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம்'என்றும் தெரிந்துகொள்கிறோம்- உதாரணமாக, தகர டப்பா மேல் பளீரென்று வெய்யில் விழுந்து பார்க்கும்போது அது பளபளப்பதில் வெள்ளிப் பாத்ரமாகத் தெரிந்தாலும், 'இல்லை, நம்மாத்துத் தகர டப்பாவை அலம்பி வெயிலில் வைத்திருப்பதுதானே?'என்றும் தெரிந்துகொள்கிறோம். வெள்ளியாக அது மினுக்குவதாக அறிவுக்குத் தெரிந்தாலும், தெரிகிறபோதே இந்த அறிவு ப்ரமாணமில்லை, அப்ராமணந்தான் என்றும் தெரிகிறது!இப்படியே ஒரு வெள்ளிப் பாத்ரத்தையே வெள்ளியாக உள்ளபடித் தெரிந்து கொள்ளும்போது, அல்லது தகர டப்பாவைத் தகரம் என்றே ஸரியாகத் தெரிந்துகொள்ளும்போது நமக்குத் தெரிவது

ப்ரமாணம் தான் என்றும் தெரிகிறது. இப்படி ஒன்று தெரியும்போதே அது நிஜமான (ப்ரமாணமான) அல்லது பொய்யான (அப்ரமாணமான) ஞானம் என்றும் தெரிகிறதே, இது நம் அறிவிலிருந்தே-'úŠªü,®'õ£è, 'võî£'õ£è-ãŸð´õî£, Üî£õ¶ võî: Šóñ£íñ£, Ü™ô¶ ªõO õv¶ML‰ ¶-'ÝŠªü,®'õ£è,'ðóî'ú£è-ãŸð´Aøî£, Üî£õ¶ ðóî: Šóñ£íñ£ â¡ð¶ ðŸP ‰ò£ò‹, eñ£‹¬ú ºîô£ù î˜êùƒèO™ Mˆò£úñ£è ÜHŠó£òƒèœ àœ÷ù. ‰ò£ò ê£vˆóˆF¡ð® Šóñ£í ë£ù‹, ÜŠóñ£í ë£ù‹ Þó‡´«ñ ðóî: Šóñ£í‹î£¡, eñ£‹úè˜è«÷£ 'ï£‹ ªîK‰¶ ªè£œõ¶ úKò£ù¶ â¡Aø Šóñ£í ë£ùº‹ ï‹ ÜPML¼‰«î à‡ì£õ¶î£¡;Üî£õ¶ võî :Šóñ£í‹î£¡. Ýù£™ ï£‹ îŠð£è ªîK‰¶ªè£œAø¶‹ â¡Aø ÜŠóñ£í ë£ù‹ ªõO õv¶¬õŠ ªð£Áˆ«î ãŸð´õ¶ Üî£õ¶ ðóî: Šóñ£í‹' â¡ð£˜èœ.

இம்மாதிரி ஸமாசாரங்களை மண்டன மிச்ரருடைய அகத்துக் கிளிகள்கூட டிஸ்கஸ் பண்ணிக்கொண்டிருக்குமாம்.

இந்த அடையாளத்தை வைத்துக்கொண்டு ஆசார்யாள் அந்த வீட்டைத் தேடிக்கொண்டு போய்க் கண்டுபிடித்தார்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

உக்ர தெய்வங்களை சாந்தமாக்கியது

க்ரூரத்தை விட்டு சாந்தமாகும்படி ஜனங்களைப் பண்ணினார் என்பது மாத்ரமில்லை;தெய்வங்களையுமே உக்ர பாவத்தை விட்டு ஸௌம்யமாக இருக்கப் பண்ணினார். அந்தக் காலத்தில் என்ன ஆயிருந்ததென்றால்:அங்கங்கே ஸாந்நித்யமாகியிருந்த தெய்வ சக்திகளில் சிலதே, 'இப்படி ஜனங்கள் அநாதிகாலமாக இருந்து வந்திருக்கும் தர்ம வழிகளை விட்டுவிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு தப்பில் போக ஆரம்பித்துவிட்டார்களே!'என்று கோபம் கொண்டிருந்தன. தப்புக்குத் தண்டிக்கவும் வேண்டியதுதானே?அதனால் சில மஹா க்ஷேத்ரங்களில்கூட, அன்புக்கே உருவமான தாய்த் தெய்வமான அம்பாள் மூர்த்தங்களே கூட, உக்ர கலைகளோடு இருக்க ஆரம்பித்தன. அப்போது க்ரூரமான உபாஸனாக்காரர்கள் அந்த ஆலயங்களைக் கைப்பற்றி தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வந்தார்கள்.

இங்கேயெல்லாம் அந்த பூஞ்சை ப்ராம்மண ஆண்டி போனார். அவருடைய மஹிமை தெரியவேண்டும் என்றே தான் ஒரு வேளை அந்தத் தெய்வங்கள் உக்ரம் மாதிரி இருந்துகொண்டிருந்தனவோ என்னவோ?அவரானால், 'தன் மஹிமை என்றும் எதுவும் தெரியவேண்டாம்!மந்த்ர சாஸ்த்ர மஹிமை லோகத்துக்குத் தெரியட்டும்'என்று நினைத்து, அந்த இடங்களிலெல்லாம் மந்த்ர பூர்வமாக யந்த்ர ப்ரதிஷ்டை செய்து உக்ர கலைகளை சமனம் பண்ணி, அந்த மூர்த்திகளை ஸௌம்யமாக்கி விடுவார்!இப்படி அநேக இடங்களில் பண்ணியிருக்கிறார்.

காஞ்சிபுரத்தில் காமாக்ஷியே உக்ரம் மாதிரி இருந்த போது அவளுக்கு எதிரே ஸ்ரீசக்ரம் ஸ்தாபித்து அவளை ஸௌம்ய மூர்த்தியாக்கி இருக்கிறார். அவளுக்குப் பக்கத்துணையாக எட்டு காளிகள் எட்டு திசைகயிலும் போய் பலி வாங்குவார்கள். அந்த எட்டுப் பேரையும் அந்த ஸ்ரீயந்திரத்தின் எல்லைச் சுற்றிலேயே அடக்கிப் போட்டார்!அதனால் இன்றைக்கும் பரப்ரஹ்ம சக்தி என்று சொல்லப்படும் ஸாக்ஷாத் காமாக்ஷியின் உத்ஸவ மூர்த்தி புறப்பாடு செய்யும் போது ஆசார்யாள் ஸந்நிதிக்கு முன்னால் ஒரு நிமிஷம் நின்று அவரிடம் 'பெர்மிஷன்'வாங்கிக்

கொண்டுதான் வெளியே போவது!

ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்காலில்) அகிலாண்டேச்வரியின் உக்ர கலைகளை சக்ர ரூபமான தாடங்கங்களில் அடக்கி அவளுக்கே கர்ண பூஷணமாகச் சார்த்தி அலங்காரம் செய்துவிட்டார்.

கொல்லூரில் மூகாம்பிகை, அஸ்ஸாமில் காமாக்யா என்றிப்படிப் பல கதைகள் இருக்கின்றன. காமாக்யா விஷயமாக ஜனங்களின் மனஸு நுட்பம் தெரிந்து என்ன செய்தாரென்றால்: 'காட்டு வாஸிகளாக, மலை வாஸிகளாக இருக்கிற இவர்களுக்கு ஒரே ஸௌம்யமாக ஆராதனையைச் சொன்னால் ஏற்காது. இவளை அடியோடு விட்டுவிட்டு வேறே பிம்பம் வைத்துக்கொண்டு பழைய க்ரூர உபாஸனையையே தொடருவார்கள்' என்று நினைத்தார். அதோடுகூட லோகமென்றால் நல்லதோடு கெட்டதும் சேர்ந்து இருக்கும்தானே? அப்படி உக்ர சக்திகளும் உண்டுதான். அவற்றையும் கொஞ்சம் ப்ரீதிப் படுத்த வேண்டியதுதான் என்று நினைத்தார். அதனால் ரொம்பவும் க்ரூரமாகவும், அப்பட்ட வாமாசாரமாகவும் இருந்த உபாஸனையை அங்கே ஓரளவு அப்படி இருந்துவிட்டுப் போகட்டும் என்று தணித்துக் கொடுத்தார்.

மெட்றாஸ் திருவொற்றியூரில்கூட த்ரிபுரஸுந்தரியாக (வடிவுடையம்மனாக) அம்பாளை ஸௌம்யமாக்கியது ஆசார்யாள்தான். இங்கே உக்ர சக்தியைக் கிணற்றில் அடக்கினார். வருஷத்தில் ஒரு நாள் அதற்கும் பூஜை பண்ணும்படி ஏற்பாடு செய்தார். (வட்டப்பாறையம்மன் ஸந்நிதி அதுதான்.)

ஆசார்யாள் எல்லா ஆலயங்களுக்கும் க்ஷேத்ராடனம் செய்தவர்தான் என்றாலும் இம்மாதிரி அவருடைய விசேஷ ஸம்பந்தமுள்ள ஸந்நிதிகளில் 'வைதிக'பூஜையே நடக்கும். அதாவது, வேதத்திற்கு விரோதமில்லாவிட்டாலும் வேதத்தில் சொல்லாததாக அநேகம் உள்ள 'ஆகம' பூஜையாயில்லாமல், வேத அடிப்படை பூர்ணமாக உள்ளதான பூஜை முறை நடக்கும். பூஜகர்களும் ஆதி சைவர்கள் (குருக்கள்) முதலான ஆகம தீக்ஷைக்காரர்களாக இல்லாமல் வைதிக தீக்ஷைபெற்ற ஸ்மார்த்த ப்ராம்மணர்களாக இருப்பார்கள்.

ஆசாரங்களைக் காப்பதில் ரொம்பவும் தீவ்ரமானவர்கள் நம்பூதிரிமார்களே ஆதலால் சில இடங்களில் அவர்களையே பரம்பரைப் பூஜகர்களாக ஆசார்யாள் நியமித்து இன்றைக்கும் அப்படியே!நடந்து வருகிறது. திருவொற்றியூரிலேயே நம்பூதிரி உண்டு. ஹிமய மலையில் பதரிநாராயணர் ஆலயத்தில் 'ராவல்'என்று ராஜ மரியாதையுடன் நடத்தப்படும் பூஜகரும் நம்பூதிரிதான்.

உக்ர சமனத்துக்காகத்தான் என்றில்லாமல், பொதுவாகவே மங்கிக் கிடந்த ஸாந்நித்யம் புது சக்தியுடன் ப்ரகாசிப்பதற்காக அநேக க்ஷேத்ரங்களில் யந்த்ர ஸ்தாபனம் செய்திருக்கிறார்.

குருவாயூரப்பன் ஆலயம் உள்பட பல க்ஷேத்ரங்களில் பூஜா க்ரமம் முழுக்கவே ஆசார்யாள் வகுத்துக் கொடுத்த முறையில்தான் நடக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**தெய்வ பேதம் நீக்கியது ;**

**' பஞ்சாயதன ' மூர்த்திகள்**

இன்னொன்று விசேஷமாக அவர் பண்ணியது:- எத்தனையோ மஹான்கள், மஹாபக்தர்கள் இஷ்ட தெய்வம் என்று ஏதாவது ஒன்றைத்தான் ஸ்தோத்ரித்திருப்பார்கள்; அதன் உபாஸனையைத்தான் பரப்பியிருப்பார்கள். நம்முடைய ஆசார்யாள்தான் அத்தனை தெய்வங்களையும் ஸ்தோத்ரித்து, அத்தனை தெய்வங்களின் வழிபாட்டுக்கும் 'ப்ரபஞ்ச ஸார தந்த்ரம்'என்ற நூலில் வழிமுறைகளை விளக்கினார். அந்த ஞானிதான் இப்படியெல்லாம் பக்திக்கும் புது எழுச்சியைத் தந்தவர். குறிப்பாக ஈச்வரன், அம்பாள், விஷ்ணு, ஸூர்யன், விக்நேச்வரர், ஸுப்ரஹ்மண்யர் என்று ஆறு தெய்வங்களின் வழிபாட்டை ப்ரகாசப்படுத்தி நிலை நிறுத்தி **ஷண்மத ஸ்தாபனாசார்யாள்** என்று பெயர் பெற்றார்.

தம்முடைய வழியையே முழுக்க அநுஸரிப்பவர்களான ஸ்மார்த்தர்கள் என்பவர்கள் தெய்வ பேதம் பாராட்டாத ஸமரஸ பாவனை பெற்றவர்களாக இருக்கவேண்டுமென்று நினைத்தார். நினைத்து ஈச்வரன், அம்பாள், விஷ்ணு, விக்நேச்வரர், ஸூர்யன் ஆகிய ஐந்து ஸ்வாமிகளையுமே 'பஞ்சாயதனம்'என்பதாக வைத்து அவர்கள் பூஜிக்க வேண்டுமென்று விதித்தார். 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'யிலேயே இவ்விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த ஐந்தில் எந்த ஒரு ஸ்வாமி இஷ்ட தெய்வமோ அதை நடுவில் வைத்து மற்ற நாலை நாலு மூலைகளில் வைக்க வேண்டும். எது மத்தியிலிருந்தால் எதெது எந்த மூலையில் என்பதற்கு விதி உண்டு. இப்படி எந்த ஸ்வாமியையும் வைக்கலாமாயினும் தம்முடைய மடங்களில் சந்த்ரமௌளீச்வரன் என்ற ஈச்வரனை நடுவில் வைத்துப் பூஜை நடக்கச் செய்திருக்கிறார். அம்பாள் த்ரிபுரஸுந்தரியை மூலையாக இல்லாமல், பக்கமாக 'ஸம ப்ரதான்யம்'கொடுத்து வைத்து இங்கே பூஜை

தெய்வ பேதம் பார்க்காதவர் குறிப்பாக ஈச்வரனை ஏன் நடுவில் வைத்தார்?எனக்கு ஒன்று தோன்றுகிறது.....இந்த ஐந்து ஸ்வாமிக்கும் கண், காது, மூக்கு வைத்து நாம் பிம்பம் அடிக்கணும் என்றில்லாமல் இயற்கையில் கிடைக்கும் ஐந்து வகைக் கல்லுகளையே விசேஷ மூர்த்திகளாகச் சொல்லியிருக்கிறது. இவற்றில் விஷ்ணு மூர்த்தமான ஸாளக்ராமம் நேபாளத்தில் கண்டகி நதியில் கிடைப்பது. அம்பாள் மூர்த்தமான ஸ்வர்ண ரேகா சிலா, அதாவது தங்க 'ரேக்' ஓடும் கல்லு, தெலுங்கு தேசத்தில் மைக்கா சுரங்கங்கள் இருக்கும் கூடூர் பகுதிகளில் ஸ்வர்ணமுகி (பொன் முகலி) ஆற்றங்கரையில் கிடைப்பது. பிள்ளையார் மூர்த்தமான சோண பத்ரம் என்ற சிவப்புக் கல் ஸோன் நதியில் கிடைப்பது. 'துங்கபத்ரா'மாதிரி ஸோனுக்குப் பேரே 'சோணபத்ரா'தான். அது பாட்னாவுக்குப் இருபது மைல் மேற்கே கங்கையில் கலக்கிறது. அதன் கரையிலுள்ள கோயில்கார் என்ற க்ஷேத்ரத்திற்குப் போயிருந்தபோது நானே ஆற்றில் நிறைய சோணபத்ரம் எடுத்திருக்கிறேன். ஸூர்ய மூர்த்தம்தான் ஸ்படிகம். தஞ்சாவூர் கலெக்டர் ஆபிஸ் உள்ள

வல்லத்தில் யாரும் வெட்டாமல் இயற்கையாக அமைந்துள்ள ஏரியில் இந்த ஸ்படிகம் கிடைக்கிறது.

ஐந்தில் பாக்கி எது என்றால் ஈச்வர மூர்த்தியான பாணம் என்னும் இயற்கையான லிங்கம். அது எங்கே கிடைக்கிறதென்றால் நர்மதையில். அந்த நர்மதைதான் தேச மத்தியில் ஓடுகிறது. அதாவது, லோகத்துக்கே ஹ்ருதயமாகவுள்ள பாரத தேசத்தின் நடு மையத்தில் ஈச்வரன்தான் தாமே இயற்கையாக எழுந்தருளியிருக்கிறார்!அதனால், லோகம் முழவதன் க்ஷேமத்துக்காகவும் மடத்தில் பூஜை நட்க்கும்போது மத்ய மூர்த்தியாக ஈச்வரன்தான் இருக்க வேண்டுமென்று ஆசார்யாள் வைத்திருப்பார் போலிருக்கிறது!

ஆனால் நம்முடைய சந்த்ரமௌளீச்வரர் பாண லிங்கமில்லை;ஸ்படிகலிங்கம். ஏன் அப்படி என்று அப்புறம் கதை சொல்கிறேன்.

நாம் இந்தப் பஞ்சாயதன சிலாக்களை (கற்களைப்) பூஜையில் வைத்துவிட்டோமானால் நேபாளத்திலிருந்து தஞ்சாவூர் வரை, தேசம் முழுவதையும் நம்மகத்துக்குள் ஒன்று சேர்த்து வைத்துவிட்ட மாதிரி!

தேச மத்தியில் குடிகொண்ட பரமேச்வரன் இந்த தேசம் முழுவதிலுமே நாலு திசைகளிலுமாக ஸோமநாத். ஸ்ரீசைலம், உஜ்ஜயினி, ஓம்கார் மந்தாதா (இது நர்மதா தீரத்திலேயே இருப்பது), பரலி, நாகேசம், காசி, பீமசங்கரம், ராமேச்வரம் (தமிழ் நாட்டுத் தெற்கோரத்தில் இருப்பது), த்ரயம்பக் (நாஸிக் கிட்டே), கேதார்நாத், குஸ்ருணேச்வர் (எல்லோரா) என்ற பன்னிரண்டு மஹாக்ஷேத்ரங்களில் ஜ்யோதிர் லிங்கமாக வ்யாபித்திருக்கிறான். ஆசார்யாள் அத்தனை இடத்துக்கு ம்போய், ஒவ்வொரு லிங்கத்திற்கும் ஒரு ச்லோகமாக "த்வாதச லிங்க ஸ்தோத்ரம்"என்று அநுக்ரஹித்திருக்கிறார்.

மொத்தத்தில் ஸகல ஜனங்களையும் பக்தியினால் 'அரன் குடி மக்களாக்கி'ஆசார்யாள் ஒன்று சேர்த்தார்.

ஆனந்தகிரீயத்தில் அவர் ஒவ்வொரு எதிர் ஸித்தாந்தியாக ஜயித்து வைதிக மதத்திற்குத் திருப்பினதைச் சொல்லும்போது

பல இடங்களில் அவர்களை 'சுத்தாத்வைதி'(சுத்த அத்வைதி)களாக்கினாரென்று மட்டும் சொல்லாமல் (பஞ்சாயதன வழிபாடு செய்யும்) ''பஞ்ச பூஜா பராயணர்''களாக்கினாரென்றும் இருக்கிறது.

அதோடு 'நித்யகர்ம ஸக்தர்'களாக்கினார், 'ஸ்மார்த்த ச்ரௌத-ஸகல கர்ம சீலர்'களாக ஆக்கினார்-அதாவது ச்ருதி-ஸ்ம்ருதிகளிலுள்ள ஸகல கர்மாநுஷ்டானமும் செய்ய வைத்தாரென்றும் இருக்கிறது. இப்படி கர்மா-பக்திகளின் மூலம் எல்லாரையும் ஞானத்துக்கு மெள்ள ஏற்றினார்.

ஸ்வதர்மபடிக் கர்மா செய்வது, ப்ளஸ் பூஜை செய்வது என்று இரண்டு வைத்தது மட்டுமில்லை. ஸ்வதர்ம கர்மாவையே பூஜையாக ஈச்வரார்ப்பணம் பண்ணு என்றும் சொல்லியிருக்கிறார். 'ஸோபான பஞ்சக'த்தில், "கர்ம ஸ்வநுஷ்டீயதாம்"என்று சொல்லி உடனேயே, "தேந"-"அந்தக் கர்மாநுஷ்டானத்தாலேயே", "ஈசஸ்ய விதீயதாம் அபசிதி:""ஈச்வரனுக்குப் பூஜை பண்ணப்பட்டதாகட்டும்"என்கிறார். இதுதான் அவனே பல தாதா என்று பல த்யாகம் பண்ணும் நிஷ்காம்ய கர்ம யோகம். இப்படிக் கர்ம மார்க்கிகளையும் ஆசார்யாள் பண்ண வைத்தார். அதிலிருந்துதான் எந்தக் கர்மா ஆரம்பத்திலும் "பரமேச்வர ப்ரீத்யர்த்தம்"என்றும், முடிவில் "ஜனார்தன:ப்ரீயதாம்"என்றும் சொல்வதாத ஏற்பட்டது. ஈச்வர ப்ரீதிக்கு ஆரம்பித்து, ஜனார்தன ப்ரீதிக்கு முடிப்பதில் சிவ-விஷ்ணு அத்வைதமும்!

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

## அனைத்து மடத்தினருக்கும் ஆசார்யரான ஜகத்குரு

இப்படிக் கர்மா, பக்திகளையும் சொல்லி அவற்றின் மூலமே ஞானத்துக்குப் போகச் சொன்னவர் ஆசார்யாள். ஞானத்திற்காகவே கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம் ஆகியவற்றையும் ஸ்தாபித்தவரவர்.

**அத்வைத ஞானமார்க்க ஆசார்யர்** என்று மட்டுமே அவரை முடித்துவிடும் பரவலான அபிப்ராயம் ஸரியில்லாத ஒன்றாகும். அத்வைதந்தான் முடிவான லக்ஷ்யம் என்று அவர் நிலைநாட்டி ஏராளமாக அதற்காகவே எழுதியிருப்பது வாஸ்தவந்தான். ஆனாலும் நிவ்ருத்தியில் போகக்கூடிய ஸ்வல்ப ஜனங்களுக்கே அது அநுஷ்டான ஸாத்யமானது. யாராயிருந்தாலும் அத்வைதந்தான் ஸத்யம் என்று அடிப்படையாக ஒரு உறுதி இருக்கணும், அவர்கள் ஸாதனையில் முன்னேறி முன்னேறி முடிவாக அடைய வேண்டியது அதுதான் என்பதால் பரம ஸத்யமான அத்வைத ஸ்தாபனத்தை ஆசார்யாள் முக்யமாகப் பண்ணினார். ஆனால் ஸகல ஜனங்களையும் உய்விக்க வந்த அவர் இப்படி ஸ்வல்பம் பேருக்கு வழிபோட்டுக் கொடுத்ததோடு முடிந்து போய் விடவில்லை.

மற்ற ஃபிலாஸஃபர்களுக்கும் ஆசார்யாளுக்கும் முக்யமான வித்யாஸமே என்னவென்றால் அவர்கள் உசந்த லெவலில் இருப்பவர்கள் அநுபவித்துத் தெரிந்து கொள்ளவே ஃபிலாஸஃபி சொன்னார்கள்; மற்றவர்களில் அறிவாளிகளாக இருக்கப்பட்டவர்கள் புத்தி விஷயமாக அந்த ஃபிலாஸஃபிகளை ஆராய்ந்து ஸந்தோஷப்படும்படிச் சொன்னார்கள்;மற்ற ஜனங்களுக்கு ப்ரயோஜனமாக அவர்கள் ஒன்றும் பண்ணவில்லை. தம்முடைய ஃபிலாஸஃபியைப் புரிந்து கொள்ளவே முடியாமல் அடி நிலையில் உள்ளவர்களிலிருந்து ஆரம்பித்து, அநுஷ்டானமாகச் செய்து பார்த்து முன்னேறுவதற்கு விஸ்தாரமாக ஸாதனா க்ரமம் போட்டுக்கொடுத்துக் கார்யம், feeling, புத்தி எல்லாவற்றைக் கொண்டும் அநுபவத்துக்கு இஞ்ச் இஞ்சாக ஏற்றிவிட்டவர் நம் ஆசார்யாள்தான், கர்மா, பக்திகளால் மனஸின் அழுக்கும் ஆட்டமும் போனபின் ஸாதன சதுஷ்டயங்களை அப்யஸித்து, அப்புறம் ச்ரவண-மனன-நிதித்யாஸனங்களால் ஸாக்ஷாத்காரம் பெறும்படியாக விரிவாக ஸாதனா க்ரமம் வகுத்துக் கொடுத்திருக்கிறார்.

சில பேருக்கு மட்டும் ஃபிலாஸஃபி சொன்ன ஒருவராக நம் ஆசார்யாள் முடிந்து விடவில்லை. அவர் அத்தனை பேருக்குமானவர். அதனால்தான் ' **ஜகத்குரு** 'என்று பெயர். அத்தனை லெவகளிலுமுள்ள எல்லா ஜனங்களுக்கும்,

அவரவர் லெவலிலேயே ஆரம்பித்து, அவரவர் மனப் போக்குக்கு அநுகூலமான வழியிலேயே கொண்டு போய், படிப்படியாக அத்வைதத்தில் சேர்க்கும்படியாக ஸகல மார்க்கங்களையுமே ஸ்தாபித்தவர் அவர் என்பதுதான் அவரைப் பூர்ணமாகப் புரிந்துகொள்ளும் ஸரியான அறிவு, வேத சாஸ்திர அடிப்படையில் எல்லாவற்றையும் ஸ்தாபித்தார் என்பது அவருடைய விசேஷப் பெருமை.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

**அத்வைதம் உள்ளிட்ட மதங்களின் ஸாராம்சம்**

அத்வைதம் என்ன, மற்ற ஸித்தாந்தங்கள் என்ன என்று அப்பப்போ சொல்லிக்கொண்டு வந்தேன். "ஸம்-அப்"மாதிரி சுருக்கமாகச் சொன்னால்:

'கண்ணாலே பார்த்து அநுபவிக்கிற ஜகத்துக்கு மேலாக எதுவும் கிடையாது; எதுவும் தெரிந்துகொள்ள முடியாது. உயிரோடு இருந்துகொண்டிருக்கும்வரை நீ பாட்டுக்கு ஒரு கட்டுப்பாடும் இல்லாமல் இந்த்ரிய ஸௌக்யங்களை அநுபவித்துக் கொண்டிரு. சாவோடு உயிரும் 'க்ளோஸ்'. ஆத்மா புனர் ஜன்மா, ஸ்வர்க்கம், மோக்ஷம் என்பதெல்லாம் புரளி'என்கிற சார்வாகம்தான் Agnosticism என்றும் Materialism என்றும் சொல்வது.

'மெடீரியல்', 'ஸ்பிரிசுவல்'என்கிற ஆதாரமில்லாத கல்பனை ஓட்டந்தான். வாஸ்தவத்தில் எல்லாம் சூன்யந்தான்'என்கிறது பௌத்தம்-அதில் நாலு பிரிவு இருந்தாலும் முடிவில் எல்லாம் இந்த சூன்யத்தில் சேர்ப்பதுதான். அதைச் சொல்கிற பௌத்தம்-Nihillsm.

ஜைனர்களும் அரை பௌத்தர்கள்தான்-'அர்த்த வைநாசிகர்'என்றே ஆசார்யாள் அவர்களைச் சொல்லியிருக்கிறார். எப்படியென்றால், பௌத்தர்கள்,

'எதுவும் இல்லை, இல்லை'என்றால். இவர்கள் 'இருக்கவும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்'என்பதால். எதையும் தீர்மானிக்க முடியாது என்று அவர்கள் சொல்வது Scepticism. சரீரத்தை ஒரேயடியாகத் துன்புறுத்திக் கொணடுதான் ஆத்மாவிலிருந்து கர்மாவைப் ஒட்டப் பிழிந்தெடுத்துத் தள்ள முடியுமென்று அவர்கள் சொல்வது Stoicism.

ஆத்ம விஷயமாகப் போகாமல் ஈச்வர பக்தியும் இல்லாமல், வேத கர்மாவைப் பண்ணியே ஸ்வர்கலோக ஸந்தோஷத்தை அடையச் சொல்லும் மீமாம்ஸையை (சிரித்து) "வைதிகமான Materialism" என்று சொல்லலாமோ என்னவோ?

உயிரை எந்த குண-கர்மக் கலப்புமில்லாமல் தனியாகப் பிரித்துக் காட்டும் ஸாங்க்ய - யோக சாஸ்த்ரங்கள் Non-dualism என்று சொல்லப்படும் அத்வைதம் மாதிரி இருந்தாலும் இப்படி அநேக உயிர்கள் தனித்தனியாய் இருப்பதாகச் சொல்வதில் Dualism (த்வைதம்)-ஆகவும் வேடிக்கையாக இருக்கிறது!

தர்க்க சாஸ்த்ர அறிவாராய்ச்சியாகவே உள்ள ந்யாய-வைசேஷிகங்களை Intellectualism என்று சொல்லலாமோ என்னவோ?

இந்த எல்லா ஸித்தாந்தங்களுமே அறிவு வழியிலானவை தான். சார்வாகர்களும் புத்தியால் விசாரித்துத்தான் ஆத்மா இல்லை, ஸ்வாமி இல்லை, சாஸ்த்ரம் இல்லை என்கிறார்கள். இப்போதும் ' **பகுத்தறிவுவாதிகள்** 'என்றே சொல்லிக் கொள்கிறார்களல்லவா?

பக்தி மதங்களைப் பார்த்தால், ஸித்தாந்தம் என்றும் வரும்போது அறிவு ரீதியில்தான் கோட்பாடுகளைச் சொல்ல வேண்டும் என்று இருப்பதால் அவையும் சில 'Ism'-களாக-Dualism என்னும் த்வைதம், Qualified Non-dualism எனப்படும் விசிஷ்டாத்வைதம் என்றெல்லாம் இருந்தாலு ம்-அவற்றுக்கெல்லாம் தாய்ச் சரக்கு என்ன, அவற்றின் ஸாதனா க்ரமத்தில் உயிர் நிலையாயிருப்பது எது என்று பார்த்தால் பக்திதான். அதாதவது அன்பு. மற்றதெல்லாம்

அறிவு, இதுகள் அன்பு. மற்றவற்றில் மீனீஷீமீ வீஷீஸீ-கு (உணர்ச்சிக்கு) இடமில்லை. இது ணினீஷீமீ வீஷீஸீ. பகவானை யீமீமீறீ பண்ணப் போவது. லிஷீஸ்மீ.

ஆசார்யாளின் அத்வைதத்தை என்னவென்று சொல்வது?அது ஒரு 'மிஉனீ'-த்திலும் வராதது!வர முடியாதது!ழிஷீஸீ-பீஹுணீறீவீஉனீ என்பதுகூட முழு உண்மையைச் சொல்லவில்லைதான்!"அத்வைதம்"என்ற வார்த்தையுங் கூடத்தான்!அதைத்தானே அப்படியே 'ழிஷீஸீ-பீஹுணீறீவீஉனீ' என்று மொழி பெயர்த்திருக்கிறது? நாம ரஹிதமான ப்ரஹ்மத்தைச் சொல்லும் தத்வமும் நாம ரஹிதமானது தான்!

பரமாத்மா வேறே ஜீவாத்மா வேறே என்று "த்வைத"மாக நினைப்பது ஸரியில்லை என்பதற்காக 'அ-த்வைதம்' என்பதே தவிர, அது என்னவாக இருக்கிறதோ அதை வைத்துப் பெயர் கொடுக்க முடியவில்லை!பரிபூர்ண தத்வம் அதுதான். பரிபூர்ணத்தை, ஜீவனே ஸச்-சித்-ஆனந்த பரிபூர்ணமாவதைச் சொல்வது அது.

"கிதீஉஷீறீஹுமீ வீஉனீ" என்று (அத்வைதத்தைச்) சொல்லலாம் என்று ஒருத்தர் சொன்னார். எதையும் சார்ந்து இல்லாமல் தனக்குத்தானே பூர்ணமாக இருக்கும் ஸத்யத்தை அது சொல்வதால் இப்படிப் பேர் கொடுக்கலாம் என்றார். ஆனால் அதுகூட எனக்கு ஸரியாய்ப் படவில்லை. இது எதையும் சார்ந்து நிற்காத ஸத்ய பூர்ணமாயிருப்பது மட்டுமில்லை. பாக்கி நமக்குத் தெரிகிற அத்தனை அஸத்ய, அபூர்ணங்களும் இதைச் சார்ந்து இருப்பதாலேயே அவை இருக்கிற மாதிரி நமக்குத் தெரிகின்றன!இம்மாதிரி, ஸகலமும் தன்னைச் சார்ந்திருக்கும்படியாக அது உள்ளே அடக்கிக் கொண்டிருப்பதை-'ஸிமீறீணீமீ வீஸ்மீ' என்பதற்கெல்லாமும் இந்தத் தத்வமே ஆதாரம் என்பதை-கிதீஉஷீறீஹுமீ வீஉனீ என்பது காட்டாதல்லவா?

அப்புறம், இது மிஸீமீ மீறீமீநீமீ ஹுணீறீ-ஆ, ணினீஷீமீ வீஷீஸீணீறீ-ஆ?அல்லது மீமாம்ஸை மாதிரி கிநீமீ வீஷீஸீ-ஆ?ஞான மார்க்கம் என்பது புத்தி வாதம் என்று வைத்துத்தான் 'கீணீஹ் ஷீயீ ளீஸீஷீஷ்றீமீபீரீமீ' என்கிறார்கள். ஆனால் இந்த ஞானம் மூளையால் ஆராய்கிற மிஸீமீ மீறீமீநீமீ - ஸமாசாரம் இல்லவேயில்லை.

சாஸ்த்ரமாகப் படிக்கிற கட்டத்தில்தான் அப்படியிருப்பதே தவிர, படித்ததை உள்ளே உருட்டிக்கொள்ளும் போது கிடைக்கிற ஸௌக்யம், சாந்தி, ஆனந்தம் மூளை விஷயமே இல்லை. அப்படியானால் அது உணர்ச்சியா? ப்ரஹ்மத்தை யீமீமீறீ பண்ணுவதா?ஆனந்தானுபவம் ஒரு மீனீஷீமீ வீஷீஸீ-ஆ?அப்படியும் இல்லவே இல்லை!இதெல்லாம் மனஸின் அநுபவம். அத்வைதத்தில் மனஸே போயாகிவிடு ம்!மூளையும் போயாகிவிடும்!அப்படியும் ஸத்யத்தை அறிவது, ஆனந்திப்பது என்றால் அதற்கு என்ன வார்த்தைகளைப் போடுவது?இது கிநீமீ வீஷீஸீ இல்லை என்று தீர்மானமாகச் சொல்லத் தோன்றுகிறது. ஆனால் யோசித்துப் பார்த்தால், 'ஆசார்யாள் மாதிரியான பரமாத்வைதிகள் ஒரே கார்யமயமாக இருந்திருக்கிறார்களே!அதனால் இது கிநீமீ வீஷீஸீ-கும் இடம் கொடுக்கிறதே!' என்று, ஒன்றும் சொல்லத் தெரியாமலிருக்கிறது!நல்லதுமில்லை, கெட்டதுமில்லை என்று சும்மாவாகி விடுவதுதான் லக்ஷ்யமென்றாலும், லக்ஷ்ய ஸித்தியை அடைந்தவர்கள் சும்மாயிருப்பதாக நமக்குத் தெரியாமல் அபாரமாக அநுக்ரஹ கார்யத்தைப் பண்ணுகிறார்களே!இந்தத் தூங்காத தூக்கத்துக்கு என்ன பேர் வைக்க!வார்த்தையால் சொல்ல முடியாத பேர் கொடுக்க முடியாத தத்வத்தை அத்வைதம் என்கிறோம்!

ஒரு ஸித்தாந்தம் 'அறிவு'(ளீஸீஷ்றீமீபீரீமீ); ஒரு ஸித்தாந்தம் 'அன்பு'(லிஷீஸ்மீ,ஞிமீஸ்ஷீமீ வீஷீஸீ);இன்னொன்று கர்மா (கிநீமீ வீஷீஸீ) என்றிப்படிச் சொல்லும்போது அத்வைதம் என்னவென்று பார்த்தால் 'சாந்தி'(றிமீணீநீமீ) என்று சொல்லலாம் போலிருக்கிறது. ஆனால் நாம் நினைக்கிற சாந்தியாகவும் அது இல்லை!நமக்குத் தெரிந்த சாந்தி, எல்லாம் அடங்கிப்போன அமைதி. இதுவும் மஹா பெரிய அமைதிதானென்றாலும் அத்தனை அறிவும், அத்தனை அன்பும், கார்யங்களும் இதற்குள்ளேயே சக்தியோடிருக்கின்றன. ஆசார்யாள் ஆசார்யாள் அப்படித்தானே ஸர்வஜ்ஞராக, ஸர்வ பூத தயாகரராக, ஓயாமல் பணிசெய்துகொண்டு இருந்தார்?அதை என்ன பெயர் கொடுத்துச் சொல்வது?

ஜகத் ஒன்றே ஸத்யம், ப்ரம்மம் அஸத்யம் என்பது சார்வாகம்.

ஜகத்தும் அஸத்யம், ப்ரம்மமும் அஸத்யம் என்பது பௌத்தம். ஜகத்தும் ஸத்யம், ப்ரம்மமும் ஸத்யம் என்பது ந்யாயம். ஸாங்க்யம், 'ஜகத் அஸத்யம். ஏனென்றால் அது பொய்யான ப்ரக்ருதியின் சேஷ்டிதம்தான். ப்ரம்மம் ('புருஷன்'என்ற பெயரில் சொல்வது)தான் ஸத்யம்'என்னும்.

ஆசார்யாள் என்ன சொன்னார்?ப்ரம்மம்தான் ஸத்யம். ஜகத் மித்யை. அதாவது ஸத்யமில்லை. அப்படியென்றால், அடியோடு அஸத்யமா என்றால் அதுவுமில்லை. ஸத்யமான ப்ரம்மம் தெரியும் ஞானம் வருகிறவரை ஸத்யம் மாதிரி பொய்யாய்ப் போய் விடுவது. 'போய்விடுவது'என்று முடித்தும் விடுகிறதற்கில்லை. ஞானியும் பொய் ஜகத்தைப் பார்க்கிற மாதிரி பார்ப்பான். எப்படிப் பார்ப்பானென்றால் ஜகத்தே ஸத்யமான ப்ரம்மம்தான் என்று ஸமமாகப் பார்ப்பான். 'ப்ரம்மமே ஸத்யம்-ஜகத் மித்யா'என்பது மாத்ரமில்லை; 'ப்ரம்மமே ஸத்யம் - ஜகத்தும் அந்த ப்ரம்ம ஸத்யமே'என்று அப்போது ஆகிவிடும்!

பௌத்தம், மீமாம்ஸை ஆகியவற்றில் ஸகுண ப்ரம்மம் என்ற ஈச்வரன், நிர்குண ப்ரம்ம தத்வம் இரண்டுமில்லை. ஸாங்கியத்தில் ஸகுண ப்ரம்மமில்லை. யோகம், ந்யாய வைசேஷிகம் முதலியவற்றில் இரண்டும் இருந்தாலும் ஒன்றோடொன்றும், ஜகத்தோடும், ஜீவனோடும் ஸம்பந்தம் தெளிவாகச் சொல்லவில்லை. பக்தி மதங்களிலோ ஸகுண ப்ரம்மம்தான் உண்டு;நிர்குணம் கிடையாது.

அத்வைதத்தில் இரண்டும் இருக்கிறது. ஜட ப்ரக்ருதியான மாயை ஜகத்தை உண்டாக்குகிறது என்றால் அது ப்ரம்மத்தை ஆதாரமாகக் கொணிடுதான் என்று சொல்கிறது. அதாவது, 'நிர்குண ப்ரம்மமே மாயையைக் கைக்கொண்டு அதாவது, ஸகுண ப்ரம்மமாகித் தன்னையே ஜகத்தாகக் காட்டிக்கொள்கிறது. ஜட ப்ரபஞ்சமாக மட்டுமின்றி ஜீவ ப்ரபஞ்சமாகவும் காட்டிக்கொளகிறது'என்பதாக நாலையும் நிர்குண ப்ரம்மம், ஸகுண ப்ரம்மம், ஜீவாத்மா, ஜகத் என்ற நாலையும்-ஒன்று சேர்த்துக் கொடுக்கிறது!

ஜகத் ஸ்ருஷ்டியைப்பற்றி மீமாம்ஸகர்கள் 'ஸ்ருஷ்டி என்று எவனோ ஈச்வரன் எப்பவோ பண்ணினதாக ஏன் சொல்லணு ம்?இப்போது மாதிரி எப்போதுமே ஜகத்தானாகவே எப்போதும் இருந்துகொண்டிருக்கிறது. அதில் கர்மாப்படி

தானே பலன் விளைகிறது'என்பார்கள். 'உயிரில்லாத இயற்கை என்ற சக்தியால் ஜகத் தோன்றி நடந்துகொண்டிருக்கிறது;ஸ்வாமியுமில்லை, பூதமுமில்லை, கர்மாவுமில்லை, பலனுமில்லை'என்பது சார்வாகம். 'ஸத்யமான ஜகத் அணுமயமானது. அணுக்களை இப்படிப் பல தினுஸில் சேர்த்து முன்னே இல்லாத புது வஸ்துக்களை உண்டுபண்ணி வைப்பவனே ஈச்வரன்'என்று ந்யாய வைசேஷிகங்கள் சொல்லும். இதற்கு 'ஆரம்ப வாதம்'என்று பேர். ஸாங்க்ய-யோகங்களிலோ ஸ்ருஷ்டிக்கு ஈச்வர ஸம்பந்தம் கிடையாது. முன்னேயில்லாமலிருந்தது புதுசாக ஸ்ருஷ்டியானதாகவும் அவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். (மாயை, இயற்கை என்று சொல்லப்படும்) ப்ரக்ருதியேதான் ஜகத்தாக மாறியிருக்கிறது என்று அவர்கள் சொல்வார்கள். இதற்குப் 'பரிணாமவாதம்'என்று பேர்.

அத்வைதம் என்ன சொல்கிறதென்றால்: நிஜமாக ஸ்ருஷ்டி என்று ஒன்று பண்ணப்படவில்லைதான் அணுவும் ஸத்யமில்லை. அணுக்களைச் சேர்த்து ஸத்யமான ஜகத் என்பதும் இல்லை. ப்ரக்ருதியின் பரிணாமம் என்பதும் ஸரியில்லை. அப்படியானால் பரிணமித்தபின் மூல வஸ்து இல்லாமல் போய்விடுவதுபோல் ஸ்ருஷ்டிக்கப்புறம் ப்ரக்ருதியே போய் விட்டதாகிவிடும்!ஆக உண்டாவதுமில்லை, மாறுவதுமில்லை. பின்னே என்னவென்றால், ஒன்றே இன்னொன்று மாதிரித் தோன்றுவதுதான்! பழுதை பாம்பு மாதிரி இருட்டில் தோன்றுகிறது. அப்படி ப்ரம்மமே ஜகத் மாதிரி மாயையில் தோன்றுகிறது. (இன்னொரு விதத்தில் சொன்னால் நிர்குண ப்ரம்மமே மாயையோடுகூடி ஸகுண ப்ரம்மமாகித் தன்னையே ஜகத் மாதிரித் தோன்றும்படிச் செய்து கொள்கிறது.) பழுதையிலிருந்து பாம்பு ஸ்ருஷ்டிக்கப்படவில்லையா?பழுதை நிஜமாகவே பாம்பாகப் பரிணாமம் அடைந்தும் விடவில்லையல்லவா? அப்படித்தான் ஜகத், ஸ்ருஷ்டியாகவோ பரிணாமமாகவோ இல்லாமல் தோற்ற மாத்ரமாக இருப்பது. விளக்கைக் கொண்டு வந்தால் இருட்டு போய், பழுதையைப் பாம்பாகப் பார்த்த ப்ராந்தி மறைந்து பழுதையே தெரிவதுபோல், ஞான ப்ரகாசத்தில் மாயையிருட்டு போய், முன்னே ஜகத்தாகத் தெரிந்ததே ப்ரம்மமாகத் தெரிய ஆரம்பித்து விடும்.

ஸ்ருஷ்டி, பரிணாமம் முதலான எதுவுமாக இல்லாமல் ஒன்றே இன்னொன்று மாதிரி தோன்றுவதுதான் ஜகத் என்பதற்கு "விவர்த்த வாதம்"என்று பெயர்.

ஆசார்யாள் கொடுத்துள்ள விசேஷமான கொள்கைகளாக மூன்றைச் சொல்வார்கள். ஒன்று விவர்த்த வாதம். இன்னொன்று 'அத்யாஸம்'என்பது. அஸலாக ஸ்ருஷ்டி என்று ஒன்றில்லை, பரிணாமமும் இல்லை, பௌத்தர்கள் சொல்வதுபோல ஸத்ய ஆதாரமேயில்லாத பொய்த் தொடர் ஓட்டமுமில்லை. ஸத்யமான ப்ரம்மத்தின் மேலேயே, பழுதையில் பாம்புபோல, மாயை ஏற்றி வைத்திருக்கும் தோற்றமே இந்த ஜகத் என்பதுதான் 'அத்யாஸம்'. கலரேயில்லாத ஸ்படிக லிங்கத்தின்மேலே பின்னாலிருக்கும் செம்பருத்திப் பூவின் சிவப்பை ஏற்றிவைத்து அது சிவப்பாகத் தெரிவது அத்யாஸம்-ஷி஥ஜீமீக்ஷீ-வீனீஜீஷீஉவீமீ'வீஷீஸீ என்கிறார்கள். ஆசார்யாள் அநுக்ரஹித்த மூன்றாவது விசேஷ தத்வம், "ஸத்யம்-அஸத்யம் என்று இரண்டு இருப்பது மட்டுமில்லை. அஞ்ஞான தசையில் ஸத்யம் மாதிரியிருந்து ஞான நிலையில் அஸத்யமாகிவிடும் ஒன்றும் உண்டு. அதற்கு ப்ரதிபாஸிகம் என்று பேர்"என்பதாகும்.

மற்ற மதங்களுக்கும் அத்வைதத்திற்குமுள்ள வித்யாஸங்களைச் சொன்னேன். வித்யாஸம் பார்க்காமல் அவற்றிலிருந்தும் ஆசார்யாள் அநேகம் எடுத்துக் கொண்டிருக்கிறார். மீமாம்ஸகர்களின் கர்மாவிலிருந்து ஆரம்பித்து பௌத்தத்தில் ஜகத்தை அப்படியே அடித்து போடுவதுவரை எல்லாவற்றுக்கும் ஆசார்யாள் இடம் கொடுத்திருக்கிறார். பக்திக்கு நன்றாகவே, நிறையவே இடம் வைத்திருக்கிறார். தத்வ ஆராய்ச்சியில் ந்யாய-வைசேஷிக-ஸாங்க்ய-யோகங்களில் என்னவெல்லாம் ப்ரயோஜனப்படுமா அவற்றை எடுத்துக் கொண்டிருக்கிறார். பாட்ட மீமாம்ஸகர்களின் ஆறு ப்ரமாணங்களையேதான். தாமும் கைக்கொண்டிருக்கிறார். ஸாங்க்யத்தைப் பற்றி கீதா பாஷ்யத்தில் ஒரு இடத்தில், "அந்த சாஸ்த்ரம் பரமார்த்தத்தில் நமக்கு வித்யாஸமாகப் போனாலும், த்ரிகுணங்களையும் அவற்றைக் கொண்டு போக்தாவாயிருக்கும் ஜீவனைப் பற்றியும் அது சொல்வது ப்ரமாணமேயாகும்"என்கிறார்.

அவருடைய 'யோகதாராவளி'ப்ரகரணத்தைப் பார்த்தால் அத்வைத லக்ஷ்யந்தானானாலும் அதற்கே பலவிதமான யோக ஸாதனைகளை எவ்வளவு பீமீமீஜீ-ஆக ப்ரயோஜனப்படுத்திக் கொள்கிறாரென்று தெரியும். தமிழிலேயேகூட யோக சாஸ்த்ரமாக ஒரு சின்ன உலா அவர் பெயரில் இருக்கிறது. " சங்கராசாரியார் உலா " என்ற அந்தப் புஸ்தகம் மெட்றாஸ் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரிகாரர்கள் அச்சுப் போட்டிருக்கிறார்கள்.

எம்மதமும் ஸம்மதம் என்பது ஆசார்ய ஸித்தாந்தத்திற்கே பொருந்தும். ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொரு நிலைவரை ஏற்றிவிடுவதற்கு ஸத்யங்கள் இருக்கின்றன. அப்படி ஏறிப்போனால் கடைசியில் அத்வைத சாஸ்த்ரம் சிகரத்துக்கே ஏற்றி வைத்துவிடும்!

அவரைப்போலத் தாம் கண்டனம் பண்ணிய ஸித்தாந்தங்களையே உபயமாகவும் எடுத்துக்கொண்ட எவருமில்லை!

அநுஷ்டானத்தில் தப்பு மதங்கள் இருக்கப்படாதென்று அவர் அயராமல் பாடுபட்டாலும் அறிவாராய்ச்சிக்கு எல்லா மதப் புஸ்தகங்களும் இருக்கத்தான் வேண்டுமென்று நினைத்தார் என்பதற்குக் கதை சொல்லுவார்கள். ஜைனனான அமரஸிம்ஹன் அவரிடம் தோற்றுப்போனபின் தான் எழுதிய புஸ்தகங்களையெல்லாம் நெருப்பில் போட்டுக் கொண்டிரு ந்தானாம். இதை ஆசார்யாள் கோள்விப்பட்டதும், 'அடாடா!சித்தனா சக்தியில் தோன்றுகிற எதுவுமே அறிவாளிகளுக்காக எக்காலமும் ரக்ஷிக்கப்பட்ட வேண்டியதாயிற்றே! இவன் ஏன் ஜைனப் புஸ்தகங்களைக் கொளுத்தணும்?'என்று நினைத்தாராம்.

அவனைத் தடுப்பதற்காக ஓடினாராம். அதற்குள் அவன் ஒரு புஸ்தகம் தவிர பாக்கியெல்லாம் "ஸ்வாஹா"வாக்கிவிட்டானாம். கடைசியாகப் போட அவன் கையில் ஒரு புஸ்தகம் இருந்ததாம். ஆசார்யாள்தான் அவன் கையைப் பிடித்து, அதுவும் 'ஸ்வாஹா'வாகாமல் ரக்ஷித்துக் கொடுத்தாராம். அதுதான் நிகண்டுவான 'அமரகோச'மாம்!

அவர் நிராகரணம் பண்ணின 72 மதங்களில் பலவற்றுக்கு ஒரு புஸ்தகமும் இப்போது இல்லை. அவர் கண்டனம்

பண்ணின பூர்வகால ஸூத்ர பாஷ்யங்கள் ப்ருத்வீதவர் போன்றவர்கள் பண்ணினவை-நமக்குக் கிடைக்கவில்லை என்றால் அவர்தான் அழித்து விட்டாரென்று அர்த்தமில்லை. அந்தப் புஸ்தகங்களை எழுதினவர்கள், அல்லது அநுஸரித்தவர்களே ஆசார்யாளின் ஸத்ய ஸித்தாந்தம் வந்த பிற்பாடு அவை இருக்க வேண்டாமென்று அழித்து விட்டார்களென்றுதான் அர்த்தம்.

அத்வைதம் மற்ற ஸித்தாந்தங்களுக்கும் இடம் கொடுப்பதால்தான் பரமாத்வைதிகளான வித்யாரண்ய ஸ்வாமிகள், அப்பைய தீக்ஷிதர், வாசஸ்பதி மிச்ரர் போன்றவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

இது ஒரு பக்கம். இன்னொரு பக்கம் மாற்று ஸித்தாந்தக்காரர்களிலும், ஒரு ஸித்தாந்த முத்ரையும் குத்திக் கொள்ளாத பொதுக் கவிகளிலும்கூட மஹா அநுபவிகளாக இருந்தவர்கள் ஒரு உயர்ந்த நிலையில் அத்வைத ஸத்யங்களையே கொட்டியிருக்கிறார்கள்!புத்தி பூர்வமாக மற்ற ஸித்தாந்திகள் அவ்வளவு பேரும் ப்ரதான சத்ருவாகத் தாக்குவதும் அத்வைதம்தான்!அவர்களே அநுபவ பூர்வமாக உச்சாணிக்குப் போகும்போது தங்களை அறியாமலே ப்ரகடனம் பண்ணுவதும் அத்வைதந்தான்!

மத ஸித்தாந்திகள், கவிகள்தான் என்றில்லை. நவீன பௌதிக விஞ்ஞானிகளில்கூட ரொம்பப் பெரியவர்களாகவுள்ள ஐன்ஸ்டீன், ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்றவர்கள் அத்வைத பாஷையில்தான் பேசுகிறார்கள்!பௌதிக தாதுக்களெல்லாம் ஒன்றுக்கொன்று பேதமான வேறு வேறு வஸ்துக்கள் என்ற விஞ்ஞானம் இப்போது பழசாகி விட்டது. புது ஸயன்ஸின்படி ஏகமான சக்தியொன்றின் விதவிதமான தோற்றம்தான் எல்லாமும்!இந்த பௌதிக ப்ரபஞ்சத்தில் எதுவும் தன்னில் தானாகவே ஸத்யமாக இல்லாமல் ணீதீஷீறீusமீமீ-ஆக இல்லாமல்-ஒன்றோடு ஒன்று சார்புப்படுத்திப் பார்க்கும்போது ஸத்யம் மாதிரி இருக்கும் க்ஷீமீறீணீமீவீஸ்மீ க்ஷீமீணீறீவீமீஹ் உள்ளதுதான் என்று புது ஸயன்ஸ் சொல்வது ஆசார்யாளுடைய ப்ராதிபாஸிக ஸத்யக் கொள்கையின் ஒரு ரூபம் தான்!

இப்படி ஸகல மத ஸாரமாகவும், மதத்திற்கு விரோதமானது என்றே நினைக்கும் ஸயன்ஸூக்குங்கூட ஸாரமாகவும் உள்ள

பூர்ண ஸித்தாந்தத்தை ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்.

எல்லா இடத்திற்கும் திக்விஜயம் பண்ணி அந்த ஸித்தாந்தத்தை வர்ஷித்து சாந்தமும் ப்ரேமையும் ஆனந்தமும் எங்கேயும் எல்லாரிடமும் நிறைந்திருக்கும்படிப் பண்ணினார்.

ஆசார்யாள் என்றால் சாந்தம், ப்ரேமை, ஆனந்தம் என்றுதான் அர்த்தம். அந்த மூன்றையும் சேர்த்துத்தான் 'சம்'என்பது. சம்-கரர் செய்த 'சம்'! "ஒற்றுமை" என்பது அதுதான். ஒன்றாகப் போய்விடுவது ஒற்றுமை என்றால் ஸ்வாமியோடு ஒன்றாய் விடுவது மட்டுமில்லை;அதே ஸ்வாமிதானே இத்தனையும் என்பதால் ஜீவ ஸமூஹம் முழுதோடும் ஒன்றாய் விடுவதும்தான். ஒருமைப்பாடு, ஒருமைப்பாடு என்று சொல்வதை இப்படி அத்வைத அடிப்படையால் நிஜமாக ஏற்படுத்தினார்.

எல்லோரும் ப்ரேமையில் சாந்தியில் ஒன்றாகப் போகவே ஆசார்யாள். அப்பப்போ அவர் விஷயமாக ஆராய்ச்சி என்று இறங்கி, எந்தக் காலத்தில் பிறந்தார், எங்கெங்கே போனார். என்னென்ன பண்ணினார், பண்ணினாரா, இல்லையா என்றெல்லாம் பார்ப்பதில் அபிப்ராய பேதங்கள் புறப்படுவதைப் பார்க்கும்போது, "ஆசார்யாள் ஸமாதானத்துக்கே வந்தார். ஆராய்ச்சி என்று எதையாவது கிளப்பி அவர் விஷயமாகவே சர்ச்சை, சண்டை என்று கிளப்பிவிட்டால் இதைவிட அபசாரம் இல்லை போலிருக்கே" என்றுகூடத் தோன்றுகிறது!தோன்றியதைச் சொல்லணுமாதலால் சொன்னேன்.

நாம் ஆராய்ச்சியால் கண்டு பிடிப்பதையெல்லாம்விட முக்யம் அவர் பெயரில் நாம் அத்தனை பேரும் ப்ரேமையில் ஒற்றுமையாயிருப்பதுதான்!அப்போதுதான் நாம் நிஜமான ஆசார்ய சிஷ்யர்கள்.

---

**தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி)** (ஸ்ரீ சங்கர சரிதம்)

தாம் வேதாந்தத்தால் நிலைநிறுத்திய ஆத்மிய - ஸமூஹ ஒற்றுமையும் அந்த வேதாந்த மதமும் என்றென்றும் லோகத்தில் நிலையாக இருக்கவேண்டுமென்று ஆசார்யாள் நினைத்தார். அதற்காக அநேக மடங்களை ஸ்தாபித்துத் தம்முடைய சிஷ்யர்களை அவற்றில் ஆசார்யர்களாக வைத்தார். இவை அத்வைத வேதாந்தத்தைச் சொல்ல மட்டும் ஏற்பட்டவையல்ல. அதற்கு அதிகாரிகளாகக் கொஞ்சம் பேரே இருப்பார்கள். ஜன ஸமூஹம் முழுவதையும் அந்த goal பக்கம் திருப்பி விடுவதற்குக் கர்மாநுஷ்டானத்தையும், பக்தியையும், வேத சாஸ்த்ர நம்பிக்கையையும் வளர்த்துக் கொடுக்கவேண்டும்;சாஸ்த்ர ஜனங்களுக்கு ஏற்படும் ஸந்தேஹங்களை நிவர்த்தி செய்ய வேண்டும்;சர்ச்சைகளுக்குத் தீர்ப்புப் பண்ணவேண்டும். இவை எல்லாவற்றையும் செய்வதற்கே தர்ம பீடங்களாக ஆசார்யாள் மட ஸ்தாபனம் பண்ணியது.

ச்ருங்கேரி, த்வாரகை, புரி, பதரி, காஞ்சி என்ற ஐந்தும் ப்ரதான மடங்கள். இன்னம் பலவும் அவர் ஸ்தாபித்ததாகத் தெரிகிறது. இப்படி அநேகம் அவர் ஸ்தாபித்துத் தான் இருக்கவேண்டும். இத்தனாம் பெரிய உபகண்டத்தில் மத வளர்ச்சி குன்றாமல் ரக்ஷித்துக் கொடுப்பதற்குக், ரயிலா, தபாலா இல்லாத காலத்தில் ஆயிரம் மைலுக்கு ஒரு மடம் என்று ஐந்து ஸ்தாபித்திருந்தால் போதுமானதாயிரு ந்திருக்குமா? ஆர்யாவர்த்தம் என்று heart-land-ஆக விந்த்ய மலைக்கு வடக்கே உள்ள விஸ்தாரமான ப்ரதேசத்தில் ஹிமயக் கோடியில் (பதரி நாதத்தில்), இப்பவும்கூட ச்ரமப்பட்டே அடையக் கூடியதாக உள்ள இடத்தில் ஒரு மடம், கிழக்கு-மேற்கு ஸமுத்ரக் கரையோரங்களில் ஒவ்வொரு மடம் மட்டும் ஸ்தாபித்தால் போதுமென்று அவர் நினைத்திருக்க முடியுமா?அதனால் இன்னும் பல ஸ்தாபித்தே இருக்கவேண்டும். பிற்காலத்தில் துருஷ்கர்கள் பண்ணிய ஹகாஹதத்தில் எத்தனை ஆலயங்கள் தூள் தூளாயின?காசி விச்வநாதர் மந்திரமே எத்தனை தடவை இடிபட்டு இடிபட்டுக் கட்ட வேண்டியிருந்திருக்கிறது?ராமனும், க்ருஷ்ணனும் பிறந்து வளர்ந்த அயோத்தியில், மதுராவில் ஒரு ப்ராசீனமான

ஆலயமாவது இன்றைக்கு இருக்கிறதா? ஹிந்து மதம் என்று காட்டிக்கொள்ளவே பயப்படும்படியாக, வேத சப்தம் எழுப்பவே பயப்படும்படியாக எத்தனை கொடுமை, அக்ரமம் நடந்திருக்கிறது?முக்யமாக ஹிந்து தர்ம பீடங்களைத்தானே எதிரிகள் தாக்கியிருப்பார்கள்?இந்தப் பேயாட்டத்தில் அநேக மடங்களை மங்கிப் போயிருக்க வேண்டும். சில எடுபட்டே போயிருக்க வேண்டும்.

தேசம் முழுதிலும் ஐந்து ப்ரதான மடங்கள் என்பது போலக் காசியிலேயே ஐந்து மடங்களும், திருச்சூரில் ஐந்து மடங்களும் ஆசார்யாள் ஸ்தாபித்ததாகத் தெரிகிறது. காசி இந்த தேசத்திற்கே பண்டித ராஜதானியாகவும், ஆசார்யாளே பல காலம் வஸித்து உபதேசம் பண்ணிய க்ஷேத்ரமாகவும் இருந்திருப்பது. திருச்சூர்தான் ஆசார்யாள் அவதரிப்பதற்கே ஈச்வரன் வரம் கொடுத்த மஹா க்ஷேத்ரம். ச்ருங்கேரி ஸ்வாமிகள் ஒருவரின் ஆஜ்ஞைப்படியும், மேல் பார்வையிலும் எழுதப்பட்ட "குரு வம்ச காவ்ய"புஸ்தகத்தில்-"மஹாவிஷ்ணுக்கு நாலு புஜங்கள் மாதிரித் தமக்கு இருந்த நாலு சிஷ்யர்களுக்கென்றும், தமக்கே ஒன்று என்றும், மொத்தம் ஐந்து மடங்கள் வாராணஸியில் (காசியில்) ஆசார்யாள் ஏற்படுத்திவிட்டுச் சில காலம் தங்கியிருந்தார்"என்று இருக்கிறது.

போன நூற்றாண்டில்கூட " **இந்த்ர** "என்ற பட்டம் பெற்ற ஆசார்ய பரம்பரையைச் சேர்ந்த ஸ்வாமிகள் காசியில் இருந்திருக்கிறார்கள் என்று அங்கே சிவாலய காட்டில் (கட்டத்தில்) உள்ள ப்ரஹ்மேந்த்ர மடம் என்பதில் உள்ள சாஸனத்திலிருந்து தெரிகிறது. சந்த்ரசேகர ஸ்வாமிகள் என்பவரின் சிஷ்யரான விச்வநாத ஸ்வாமிகளை அது குறிப்பிடுகிறது.

ஸுமேரு மடம் என்றும் பாதுகா மடம் என்றும் சொல்கிற ஒன்று, காசியிலிருக்கிறது. அதன் ஜீர்ணோத்தாரண கைங்கர்யத்திற்காக ஒரு 'அப்பீல்'விடப்பட்டது. அநேக ஸ்வாமிஜிகள், மஹா மஹாபாத்யாயாக்கள், ப்ரமுகர்களின் பேரில் வெளியான அந்த அப்பீலில் அந்த மடம் ஆசார்யாளே தம்முடைய காசி வாஸத்தின்போது ஸ்தாபித்தது என்று சொல்லியிருக்கிறது.

ஹிமாலயத்திலேயே ஜ்யோதிர்மடம் தவிர, கங்கோத்ரியில் ஆசார்யாள் ஒரு மடம் ஸ்தாபித்ததாக போன நூற்றாண்டில் வெளியான "Light of the East"-வால்யூம் ஒன்றில் இருக்கிறது. விளம்பரமே போடாமலும், ரொம்ப குறைச்சல் விலை வைத்தும் கோரக்பூர் கீதா ப்ரெஸ்ஸில் பத்ரிகைகளும் புஸ்தகங்களும் போட்டு வருகிறார்களல்லாவா?அவர்களுடைய "கல்யாண்"பத்திரிகையின் 'தீர்த்தாங்க'மலரின் பூமிகை (முகவுரை)யிலும் ஸுமேரு மடத்தையும், கங்கோத்ரி மடத்தையும் சொல்லியிருக்கிறது.

"கொச்சின் ஸ்டேட் மானுவல்"என்ற புஸ்தகம் திருச்சூரிலுள்ள ஐந்து சங்கர மடங்களைப் பற்றிச் சொல்கிறது. 'தெக்கே (தெற்கு) மடம்,"வடக்கே மடம்'என்று ஒவ்வொரு திசையின் பெயரிலும் ஒன்று, மத்தியில் 'நடுவிலே மடம்',-என்பதாக ஐந்து மடங்கள் அங்கே இருந்திருக்கின்றன. தற்போது தெக்கே மடம், நடுவிலே மடம் இரண்டுதான் இருக்கின்றன. தெக்கே மடத்தில் இதுவரை எண்பது பேர் பட்டத்திலிரு ந்திருப்பதாகச் சொல்கிறார்கள். வடக்கே மடம் தற்போது 'ப்ரஹ்மஸ்வ மடம்'ஆகியிருக்கிறது-அதாவது வேத பாடசாலை.

புரிஜகந்நாதத்திலேயே ப்ராதனமாகவுள்ள கோவர்த்தன மடத்தைத் தவிர சங்கரானந்த மடம், சிவதீர்த்த மடம், கோபால தீர்த்த மடம் என்றும் மூன்று அத்வைத மடங்கள் இருக்கின்றன.

வித்யாரண்ய ஸ்வாமிகள் புது மடங்கள் ஸ்தாபித்தும் பழசுக்குப் புது சோபை கொடுத்தும் கன்னட தேசத்திலும் அதை ஒட்டிய தெலுங்குச் சீமைகளிலும் ஒன்பது மடங்களில் விசேஷ மரியாதை பெற்று 'நவமட நாதர்' â¡Á ªðò˜ ªðŸPJ¼Šðî£è Mûò‹ ªîK‰îõ˜èÀ,°ˆ ªîK»‹. Ýù£™ å¡ð¶ ñ†´I™¬ô, ðF¬ù‰¶ êƒèó ñìƒèœ è¡ùì, Ý‰ˆó, ñ¬ôò£÷, ñý£ó£wìó «îêƒèO™, ¹ù£õ¬óJ½ƒÃì, Þ¼Šðî£è "è™ò£‡"ð˜K¬èJ¡ "b˜˜î£ƒè"ñôK™ «ð˜ ªè£´ˆF¼‚Aø¶(ÃìL, Cõèƒ¬è, ÝõE, MÏð£þ, ¹wðAK,

êƒ«è„õó-èóió, ó£ñê‰ˆó¹ó, ýKýó¹ó, ð‡®è£®, âìc¼, «è£î‡ìó£ñ, võ˜íõ™L, ªïôñ£¾, «ò£è ïóR‹ý võ£I, ð£ô°‡´¼ ñìƒèœ.). Þ¬õ îMó¾‹ ÌI¬èJ™ ó£«ñ„õó‹, ÿ¬êô‹ àœðì Þ¼ð¶ ÞìƒèO½œ÷ ñìƒèœ "ÿ êƒèó£ê£˜ò£F Mˆò£-î˜ñ-dì£Fð-ðó‹ðó£èî ñì"ƒèœ â¡Á ªê£™LJ¼ŠðF™î£¡ ú§«ñ¼ ñì‹, èƒ«è£ˆK ñì‹ ÝAò¬õ ðŸP»‹ Þ¼‚Aø¶.

ஆசார்யாளின் நேர் சிஷ்யர்களின் பெயரிலும் இவற்றில் சிலதைச் சொல்கிறார்கள். திருச்சூர் மடங்களைப் பற்றியும் இப்படிப் பத்மபாத, ஸுரேச்வராசார்யார்கள் ஸ்தாபித்ததாக ஐதிஹ்யம் இருக்கிறது. (பதரியிலுள்ள) ஜ்யோதிர் மடத்தின் 'சாகா (கிளை) மட'மாகத் தோடகாசார்யாள் சகடபுரம் மடத்தை ஸ்தாபித்ததாகச் சொல்லப்படுகிறது.

எது, யார் ஸ்தாபித்தது என்று விசாரித்துக்கொண்டே போனால் முடிவேயிருக்காது. ஆத்ம லாபமாக, ஞானமாகவோ பக்தியாகவோ, இல்லாமல் அது பாட்டுக்கு ஆராய்ச்சி போய்க்கொண்டிருக்கும்!ஆசார்யாள் ஸ்தாபித்திருக்கவே முடியாது என்று சொல்வதற்குக் காரணமில்லாததாலும், இந்தப் பெரிய தேசத்தில் மதத்தைக் கட்டிக் காப்பதற்கு எத்தனை மடம் வேண்டுமானாலும் ஸ்தாபிக்க அவச்யம் இருந்ததாலும் அவர் அநேக மடங்களை ஸ்தாபித்ததாகவே ஒப்புக்கொண்டு எல்லாவற்றையும் குருபீடங்களென்று நமஸ்காரம் பண்ணலாம்.

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

**அன்னை மறைவு**

இப்படி லோகத்திற்காக ஆசார்யாள் எல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும் போது-உலகத்துக்கே குழந்தையாக, குழந்தை குருவாக அநுக்ரஹம் பண்ணிக்கொண்டிருக்கும்போது-பெற்ற தாயாருக்குக் குழந்தையாக, 'அந்திமத்தில் கடமையைப்

பண்ணுகிறேன்'என்று முன்னே வாக்குக் கொடுத்திருந்தார் அல்லா?அதைப் பண்ணும்படி ஆயிற்று.

அந்த அம்மாளுக்கு நிர்யாண ஸமயம் வந்தது. அது உடனே ஆசார்யாளுக்குத் தெரிந்தது. காலடியில் ப்ரஸன்னமானார். தாயாரை ஆச்வாஸப்படுத்தி அத்வைத உபதேசமாக ஸ்தோத்ரங்கள் சொன்னார். அந்த்ய ஸ்மரணை எப்படியோ அப்படியே மரணத்துக்கு அப்புறம் ஆகுமென்பதால் அவளுக்கு முக்தி கிடைக்கச் செய்யணுமென்று அப்படிச் சொன்னார்.

ஆனால் அது அவளுக்குப் பிடிபடவில்லை.

'பிடிபடுகிற மாதிரி பக்தியாய் சொல்லுவோம்' என்று சிவ ஸ்தோத்ரங்கள் சொன்னார்.

அவளைக் கைலாஸத்துக்கு அழைத்துபோக ப்ரமத (பூத)கணங்கள் வந்தன.

அவள் பயப்பட்டாள்.

இதுவும் ஸரியாய் வரவில்லையே என்று விஷ்ணு ஸ்தோத்ரங்கள் சொன்னார். "ச்ரியா ச்லிஷ்டோ விஷ்ணு:"என்று ஆரம்பித்து "க்ருஷ்ணாஷ்டகம்"சொன்னார் என்று சொல்வார்கள்.

ஸுகுமாரர்களான விஷ்ணு ஸேவகர்கள் வந்தார்கள்.

தாயாருக்கு சாந்தமாகவும் ஸந்தோஷமாகவும் ஆயிற்று.

அவர்கள் அவளுடைய உயிரை விஷ்ணு லோகத்துக்கு எடுத்துக்கொண்டு போனார்கள்.

கொடுத்த வாக்குப்படி ஆசார்யாள் தஹனம் பண்ண நினைத்தார்.

பந்துக்களும், புரோஹிதர்களும் ஸந்நியாஸியான ஏக புத்ரரின் தர்மம் என்ன என்று புரிந்துகொள்ளாமல் ஆக்ஷேபித்தார்கள். இப்போது தேசாபிமானிகள் பண்ணுவதெல்லாம் பண்ணினார்கள்-ஒத்துழையாமை பஹிஷ்காரம் எல்லாம் (பண்ணினார்கள்)!

ஆசார்யாள் ஒருவர் மாத்திரமாக இருந்துகொண்டு தாயார் சரீரத்தைச் சேதித்துத் தூக்கிக்கொண்டு போய் அகத்துக் கொல்லையிலேயே தஹனம் செய்யும்படி ஆயிற்று.

அதற்கு ப்ராயச்சித்தமாக இன்றைக்கும் அந்த சீமையில் நம்பூதிரிகளில் செத்துப்போனவரின் சரீரத்தை ஜாடையாகச் சேதித்துக் கொல்லையிலேயே தஹனம் செய்கிறார்கள்.

இன்னொரு விஷயம் அங்கே சொல்கிறார்கள். ஒத்தழையாமையும் பஹிஷ்காரமும் செய்யாமல் இரண்டு குடும்பத்தினர் மட்டும் துக்கம் கேட்க வந்து ம்ருத சரீரத்தின் தலை மாட்டிலும் கால் மாட்டிலுமாக நின்றார்களாம். இவர்களுடைய வம்ச பரம்பரையினர் என்று இன்றைக்கும் 'தலையாற்றுப் பள்ளி', 'காப்பள்ளி'என்ற இரண்டு இல்லத்துக்காரர்களைச் சொல்கிறார்கள்.

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

**அகில பாரத க்ஷேத்ராடனம்**

கொஞ்ச நாழி இப்படி ஒரு அகத்துக் குழந்தையாக இருந்துவிட்டு ஆசார்யாள் மறுபடியும் உலகத்தின் குழந்தையாகப் புறப்பட்டு விட்டார். ராமேச்வரத்திலிருந்து கைலாஸம்வரை ஒரு க்ஷேத்ரம் விடாமல் போனார். இப்படி அங்கங்கே அனந்தமாக விவரங்கள் இருக்கின்றன. மறைந்து போன விவரங்களும் அனந்தம் இருக்கும். சிலது சொல்கிறேன். த்வாதச லிங்க க்ஷேத்ரங்களுக்குப் போனதை முன்னேயே சொல்லிற்று

அனந்த சயனம் என்ற திருவனந்தபுரத்தில் வீரவைஷ்ணவர்களை ஸமரஸப்படுத்தி அத்வைதிகள ாக்கினார்.

(பழைய) மைஸூர் ராஜ்யத்தில் ஒரு விஷ்ணு க்ஷேத்ரம். சிவ ஸ்வரூபமாக இருந்த ஆசார்யாளைக் கோவிலுக்குள்ளேயே விட முடியாதென்று பட்டர்கள் ஆக்ஷேபித்தார்கள். "ஒரு

தரம் உள்ளேபோய் ஸ்வாமி தர்சனம் பண்ணி விட்டு வந்து அப்புறம் சண்டை போடுங்கள்"என்று ஆசார்யாள் கேட்டுக் கொண்டார். அவர்கள் அப்படியே போய்ப் பார்த்தபோது மூர்த்தியின் வலது பக்கம் சிவனாக மாறியிருந்தது! அவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ஆசார்யாளை மரியாதை பண்ணி உள்ளே அழைத்துக் கொண்டு போனார்கள். 'ஹரிஹர்'என்றே அன்றிலிருந்து அந்த ஊருக்குப் பேர் இருக்கிறது.

மதுரையில் மீனாக்ஷி-ஸுந்தரேச்வராளை தர்சனம் பண்ணிக்கொண்டு, அம்பாளுக்குப் பஞ்ச ரத்ன ஸ்தோத்ரம் அர்ப்பபணித்தார். வித்வத் ஸமூஹம் நிறைய இருந்த அந்த ஊரில் எல்லாரையும் அத்வைதத்தை ஏற்கும்படிப் பண்ணினார்.

திருச்சிராப்பள்ளி தாயுமானவர் கோவிலுக்கு ஆசார்ய ஸம்பந்தம் இருப்பதற்கு சாஸன ப்ரமாணமே இருக்கிறது!அங்கே ஸுகந்த குந்தளாம்பாள் ஸந்நிதிச் சுவரில் 'ஸௌந்தர்ய லஹரி'யின் பூர்வ பாகமான 'ஆனந்த லஹரி'ச்லோகங்கள் நாற்பத்தியொன்றும் கல்வெட்டாகப் பொறித்திருக்கிறது. 'ஆசார்யாளேதான் பொறிக்கச் செய்தார். அப்புறம் ஜம்புகேச்வரம்போய் அகிலாண்டேச்வரிக்குத் தாடங்க ப்ரதிஷ்டை பண்ணி சாந்தமூர்த்தியாக்கிய பிறகு அங்கே பாக்கி 59 ச்லோகமும் பண்ணி நூறாக்கி முடித்தார்'என்று ஐதிஹ்யம் இருக்கிறது...ஸௌந்தர்ய லஹரிக் கதை அப்புறம் சொல்கிறேன். அது ஆசார்யாளின் கைலாஸ யாத்ரையில் வருவது. காலவாரியாகச் சொல்லாமல் முன் பின்னாகச் சொல்லிக்கொண்டு போகிறேன்...

ஸ்ரீரங்கத்தில் கண்டனம் பண்ணிக்கொண்டு வந்த வைஷ்ணவர்களுக்கு உபதேசம் பண்ணி சாந்தப்படுத்தி ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார். அங்கே நிறைய பக்தர்கள்கூடி பூலோக வைகுண்டமென்று ஸந்தோஷப்படு ம்படியாக 'ஜனாகர்ஷண யந்த்ரம்'ஸ்தாபித்தார். திருவிடை மருதூருக்கு ஆசார்யாள் வந்ததை 'ஆனந்த கிரீய'த்தில் ரொம்பவும் முன்னாடி சொல்லியிருக்கிறது. சோழ தேசத்தின் அத்தனை சிவாலயங்களுக்கும் மத்யலிங்கமாக இருப்பவர் அந்த க்ஷேத்ரத்தின் "மஹாலிங்கம்"தான்.

வைஷ்ணவர்கள்தான் ஆசார்யாளை விரோதித்தார்கள் என்று நினைத்தவிடக்கூடாது. அவர் எந்த தெய்வத்தையுமே 'அது ஒன்றுதான் பரதெய்வம்'என்று சொல்லாமல் அத்வைதமாக ஸமரஸ பாவத்துடன் சொல்லி வந்ததால் தீவிர சைவர், தீவிர சாக்தர் முதலிய எல்லோருமே அவரிடம் சண்டைக்குத்தான் வந்தார்கள்!அதனால் மத்யார்ஜுனத்திலும் அவருக்கு எதிர்ப்பு ஏற்பட்டது.

'அவதாரான நம்மையே கத்த விட்டுவிட்டு மூலப் பரம சிவன் நல்ல பெயர் வாங்கிக்கொண்டு போகிறாரே!'எனற ஆசார்யாள் நினைத்தார். அவர் நினைத்தாரோ இல்லையோ நான் நினைக்கிறேன்!ஆகையால் மஹாலிங்க மூர்த்தியிடம், 'நீதான் இவர்களுக்கு ஸத்யம் தெரியும்படியாக பதில் சொல்லணும்!'என்றார்.

உடனே என்ன ஆச்சு என்றால், லிங்கத்திலிருந்தே "ஸத்யம் அத்வைதம்!"என்று வாக்கு உண்டாயிற்று!அதோடு கூடவே, கையைத் தூக்கி சபதம் பண்ணுவதாக லிங்கத்துக்குள்ளிலிருந்து வலது கையும் வெளியே வந்து தூக்கி நின்றது!

அத்தனை பேரும் ஆனந்தப்பட்டுக்கொண்டு வேதாந்த மதத்தில் சேர்ந்தார்கள்.

மாயவரத்துக்கும் ஆசார்யாள் போயிருக்கணும் என்பதற்கு 'சிவாநந்த லஹரி'யில் குறிப்பு இருப்பதாகச் சொல்லலாம். அதில் 'நீலகண்ட'ப் பேர் ஈச்வரன், மயில் இருவருக்கும் இருக்கிறதை வைத்து ஈச்வரனே ஒரு மயிலாக நர்த்தனம் பண்ணியதாக ஒரு ஸ்லோகம் இருக்கிறது. அதிலே பெண் மயிலான 'மயூரி'யாக அம்பாளச் சொல்லியிருக்கிறது. அம்பாள் மயிலாக வந்த இடம்தான் மாயூரம் அல்லது கௌரீ மாயூரம் என்னும் மாயவரம். திரு மயிலாடுதுறை என்று தமிழ்ப் பேர்.

மெட்றாஸ் மயிலாப்பூரிலும் அம்பாள் மயிலாகப் பூஜை பண்ணியிருக்கிறாள். திருவொற்றியூர் போன ஆசார்யாள் அங்கேயும் தான் போயிருப்பார்.

'சிவாநந்த லஹரி'ஸ்ரீ சைலத்தில் செய்திருப்பாராயிருக்கும். அங்கே கோபுர வாசல் கதவிலேயே ஆசார்யாள் பிம்பம் பொறித்திருக்கிறது. 'யோக தாராவளி'யில் ஆசைப்பட்டாற்போலவே ஸ்ரீசைலத்தை ஒட்டியிருக்கும் ஹாடகேச்வரம் என்ற இடத்தில் அருவியும் ஆலமரமுமாக உள்ள ஒரு ஏகாந்தமான இடத்தில் ஆசார்யாள் அடித்த சிலையாக நிஷ்டையில் சில காலம் இருந்திருக்கிறார்.

கண்ணப்பரை பக்தர்களுக்கெல்லாம் சிரோபூஷணமாயிருப்பவர்- "பக்தாவதம்ஸாயதே!"-என்று சொன்ன ஆசார்யாள் காளஹஸ்தியும்தான் போயிருப்பார். அதோடு அது அம்பாள் ஞானாம்பாளாக உள்ள க்ஷேத்ரமல்லவா?போகாமலிருப்பாரா?

திருப்பதியில் பெருமாளை தர்சனம் பண்ணி, அந்தக் கோவிலில் பக்தாள் காணிக்கைகளைக் கொண்டுவந்து கொட்டும்படியாக 'தனாகர்ஷண யந்த்ரம்'ஸ்தாபிததார். 'பாண்டுரங்காஷ்டகம்', 'ஜகந்நாதாஷ்டகம்'இரண்டும் அவர் மஹாராஷ்ட்ராவிலுள்ள பண்டரீபுரத்துக்கும் ஒரிஸ்ஸாவிலுள்ள புரிக்கும் போனதற்குச் சான்று, புரியில் ஒரு முக்ய மடமே ஸ்தாபித்திருக்கிறார்.

இன்னொன்று த்வாரகையில் ஸ்தாபித்ததும் தெரிந்து கொண்டோம். "அச்யுதாஷ்டகம்", "கோவிந்தாஷ்டகம்"என்று க்ருஷ்ண ஸ்துதிகள் அநேகம் ஆசார்யாள் பண்ணியது த்வாரகை, மதுரா, ப்ருந்தாவனம் ஆகிய இடங்களில் அவர் க்ஷேத்ராடனம் பண்ணின போது இருக்கலாம். இப்படியே அயோத்தியில் ""ராம புஜங்கம்"" பாடியிருக்கலாம்.....

சிவ ஸ்தோத்ரங்களில் பல காசியில் பண்ணியதாயிருக்கும் 'அன்னபூர்ணா ஸதோத்ரம்'அங்கேதான் பண்ணியது என்று சொல்லமலே தெரியும். க்ஷேத்ர, தீர்த்தங்களைப் பற்றியும் 'காசீ பஞ்கம்', 'கங்காஷ்டகம்', 'மணிகர்ணிகாஷ்டக ம்'என்றெல்லாம் ஸ்தோத்ரித்திருக்கிறார். யமுனை பற்றியும் அஷ்டகம் பாடியிருக்கிறார். நர்மதா தீரத்தில்தான் ஆச்ரமம் வாங்கிக்கொண்டார்?அதைப் பற்றியும் அஷ்டகம் பாடியிருக்கிறார்.

ஸகல க்ஷேத்ரங்களுக்கும் போய் காஷ்மீரத்தில் மஹா

பண்டிதர்களுடன் வாதம் பண்ணி ஜயித்தார். அங்கே சாரதா பீடத்தில் ஏறினார் என்று நம்பிக்கை இருக்கிறது. அங்கே மஹா பண்டிதையாக இருந்த ஒரு யுவதியை மெச்சித் தலையில் சூட்டிக்கொள்ள 'டர்பன்'மாதிரியான 'தரங்கம்'என்ற ஒரு சிரோபூஷணம் கொடுத்தாராம். இப்போதும் அங்கே அதை விசேஷ ஆபரணமாகச் சொல்லிச் சூட்டிக் கொள்கிறார்களாம்.

ஸ்ரீநகரில் 'சங்கராசார்ய கிரி'என்றே ஒரு குன்று இருக்கிறது. தேசத்தின் வடக்கு உச்சியில் ஆசார்யாளுக்கு உச்ச ஸ்தானம் கொடுத்திருப்பதற்கு அடையாளம்.

பத்ரிநாத் என்னும் பதரிகாச்ரமத்துக்கு ஆசார்யாள் போனது ஒரு முக்யமான ஸம்பவம். ஜ்யோதிர் மடம் அங்கேதான் ஸ்தாபித்தார் பதரி நாராயண மூர்த்தியே அப்போது அலகநந்தா நதியில் புதைந்திருந்தாகவும், ஸ்வாமி ஸ்வப்னத்தில் ஆசார்யாளுக்கு தெரிவித்தபடி அவர் தான் அதை எடுத்து வந்து ப்ரதிஷ்டை பண்ணினாரென்றும் ஐதிஹ்யம் இருக்கிறது. அங்கே சூடாக வெந்நீர் பொங்கும் ஒரு ஊற்று 'தப்த குண்டம்'என்று இருக்கிறது. அது ஸ்வாமியே ஆசார்ய பரிவாரத்தின் ஸ்நானத்திற்காக அநுக்ரஹித்தது என்று தெரிகிறது.

இதையெல்லாம்விட முக்யமானதாக ஆசார்யாள் நினைத்திருக்கக்கூடிய ஒன்றும் அங்கே நடந்தது. ஸர்வ ஜனங்களும் ஆசார்யாளின் சரணத்தில் விழுந்து ஜகத்குரு, ஜகத்குரு என்று கொண்டாடினாலும் அவருக்குத் தானும் சிஷ்யராக விழுந்து நமஸ்காரம் பண்ணணும், பண்ணணும் என்றுதான் இருந்தது. அந்த ஆசை பூர்த்தியாகும்படியாக பதரியில் ஆசார்யாளின் குருவும் பரம குருவுமான கோவிந்தபகவத்பாதரும், கௌடபாதரும் தர்சனம் கொடுத்தார்கள். அவரைத் தாங்கள் சிஷ்யர், ப்ரசிஷ்யர் என்று சொல்லிக் கொள்ளும்படியான பாக்யத்தைத் தங்களுக்குக் கொடுத்து, அவதார கார்யத்தை அமோகமாக நிறைவேற்றிக் கொண்டிருந்த ஆசார்யாளைப் பார்த்து அந்த இரண்டு பேரும் ரொம்ப ஸந்தோஷப்பட்டார்கள். ஆசார்யாள் "தக்ஷிணார்மூர்த்தி அஷ்டகம்"சொல்லி, அடிக்கு அடி அவர்களுடைய சரணங்களில்-திரு அடிகளில்!-நமஸ்கரித்தார். தக்ஷிணாமூர்த்தியிலிருந்தே

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஶ்ரீசங்கர சரிதம்)

**சிவ -சக்தி தர்சனம் ;**

**சிவலிங்கங்களும் சக்தி ஸ்துதியும்**

மாதா-பிதா-குரு என்பதில் குரு தர்சனம் ஆனதும் மாதா-பிதாக்களை பார்க்க ஆசைப்பட்டார். சிஷ்யராக அடங்கியிருந்த மாதரி, குழந்தையாக அடங்கியிருக்க ஆசைப்பட்டார். யார் மாதா?யார் பிதா? " **மாதா ச பார்வதீ தேவீ ; பிதா தேவோ மஹேச்வர :**"என்று அவரே சொல்லியிருக்கிறார். அவர்கள் சேர்ந்து பண்ணின அவதாரந்தான் அவரே என்றாலும் குழந்தையாக பக்தி பண்ண ஆசைப்பட்டார். இதுவரை நம்மெல்லாரையும் போலக் கோவில்களுக்குப் போய் அர்ச்சா மூர்த்திகளை (விக்ரஹ வடிவங்களை) தர்சித்தவர்-நாம் அர்ச்சையைத் தான் பார்க்கிறோமென்றால், அவர் அதிலேயே அந்தந்த ஸவாமியை நேராகப் பார்த்திருப்பார். அப்படிப் பார்த்தவர்-இப்போது பார்வதீ பரமேச்வராள் ஸாக்ஷாத்தாக எழுந்தருளியிருக்கும் கைலாஸத்துக்குப் போனார். யோக பலத்தால் போனார் என்று இருக்கிறது.

கைலாஸத்தில் ஈச்வரனையும் அம்பாளையும் தர்சனம் பண்ணி, பக்தி பண்ணி ஆனந்தப்பட்டார். ஒன்றே இப்படி ஈச்வரன்-அம்பாள் என்று இரண்டாகி, அப்புறம் நம்முடைய பகவத்பாதாள் என்று மூன்றாகி ஒன்றையொன்று பார்த்து ஆனந்தப்பட்டுக் கொண்டது!

அவர் தர்சனம் பண்ணினது அவர் ஆனந்தமடைந்ததோடு முடிந்துபோகக் கூடாது, இதிலிருந்து லோகத்திற்கெல்லாம் எந்நாளும் ஆனந்தமாக ஒன்று நடக்கவேண்டுமென்று பார்வதீ-பரமேச்வரர்கள் நினைத்தார்கள். வந்த குழந்தைக்கு

ஒரு 'ப்ரஸண்ட்'கொடுக்கிற மாதிரி கொடுத்து அதிலேயே லோகத்துக்குப் பரமானுக்ரஹத்தைச் சேர்த்து அனுப்பி விட்டார்கள்.

ஸ்வாமி ஆசார்யாளுக்கு ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கொடுத்தார். இந்த விஷயம் இதிஹாஸ-புராணங்களை (முறையே) சேர்ந்த 'சிவ ரஹஸ்யம்', 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'ஆகிய இரண்டிலும் இருக்கிறது. சிவ ரஹஸ்யத்தில் இது காசியில் நடந்ததாகச் சொல்லியிரு ந்தாலும், அவை கைலாஸ லிங்கங்கள் என்றே இருக்கிறது. இரண்டிலுமே பஞ்ச லிங்கங்கள் என்று ஒற்றுமையாகச் சொல்லியிருப்பதை கவனிக்கவேண்டும். ஒன்றில் ஐந்து என்று சொல்லி இன்னொன்றில் நாலு என்றோ ஆறு என்றோ இல்லை!இதைவிட கவனிக்கவேண்டியது, இரண்டிலுமே அந்த ஐந்து லிங்கங்களும் ஒரே பெயர்களைச் சொல்லியிருப்பது!யோகலிங்கம், போகலிங்கம், வரலிங்கம், முக்திலிங்கம், மோக்ஷலிங்கம் என்று அதே ஐந்து பேர் சொல்லியிருக்கிறது.

கூடுதலாக, அவற்றைப் பிற்பாடு ஆசார்யாள் எங்கெங்கே ப்ரதிஷ்டை பண்ணினாரென்ற விவரம் 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'யில் கொடுத்திருக்கிறது:யோகலிங்கம் இந்த (காஞ்சி) மடத்தில்;போகலிங்கம் ச்ருங்கேரி மடத்தில்;வரலிங்கம் நேபாளத்தில் நீலகண்ட க்ஷேத்ரத்தில்;முக்தி லிங்கம் கேதாரிநாத்தில்;மோக்ஷலிங்கம் சிதம்பரத்தில்.

அது ஸ்படிக லிங்கமாக இருந்ததில் ரொம்ப அர்த்தமுண்டு.

ஸ்ரீருத்ர ப்ரச்னம்தான் வைதிகமான சிவ ஸூக்தங்களில் முக்யமாக இருப்பது. அதில் த்யான ச்லோகத்தில் என்ன சொல்லியிருக்கிறதென்றால்:

**ஆபாதாள-நப : ஸ்தலாந்த-புவந-ப்ரஹ்மாண்ட மாவிஸ்புரஜ்-**

**ஜ்யோதி : ஸ்பாடிக-லிங்க-மௌளி விலஸத்**

பூர்ணேந்து வாந்தாம்ருதை :*

அஸ்தோகாப்லுத-மேக-மீச-மநிசம் ருத்ராநுவாகாஞ்-ஜபந்

த்யாயேதீப்ஸித ஸித்தயே (அ)த்ருத-பதம் விப்ரோ (அ)பிஷிஞ்சேச்-சிவம் **

வேத மந்த்ர பூர்வமான பூஜை பண்ணுவதற்குரியவனான ஒரு விப்ரன் பூஜையினால் இஷ்ட ஸித்தி அடைய வேண்டுமானால் இந்த ருத்ர ப்ரசனம் என்ற அநுவாகத்தை (வேதத்தின் 'ஸெக்ஷ'னை) ஒரே ஓட்டமாக ஓடாமல் ('அத்ருத பதம்'என்பதற்கு அதுதான் அர்த்தம்) சொல்ல வேண்டிய முறையில் ஜபம் செய்தபடி சிவனுக்கு அபிஷேகம் பண்ணணும் என்பது ச்லோகத்தின் கடைசியில் சொன்ன விஷயம். சிவனுக்கான பிம்பம் அநேகமாக லிங்கமாகத்தான் இருக்கும். அது ஸ்படிக லிங்கமோ, பாணலிங்கமோ, ஸுவர்ண லிங்கமோ, ரஸலிங்கமோ, மரகத லிங்கமோ எதுவாயிருந்தாலும் 'ருத்ரம்'ஜபித்தபடி அபிஷேகிக்கணும், வேறே நடராஜா மாதிரி மூர்த்தியாக இருந்தாலும் இதே விதிதான். இது (ச்லோகக்) கடைசியில் சொன்ன விஷயம். ""ஏகம் ஈசம் அநிசம்""என்று ஏக வஸ்துவான ஈச்வரனை ருத்ர ஜப த்யானத்தோடு ஸதா அபிஷேகிக்கணும் என்று சொல்லியிருக்கிறது.

இதற்கு முன் சிவ ஸ்வரூபத்தை எப்படி த்யானிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. பாதாளத்திலிருந்து ஆகாசம் வரை வ்யாபித்துக் கொண்டு, ப்ரம்மாண்டங்களையெல்லாம் ப்ரகாசப்படுத்திக் கொண்டிருக்கும் ஜ்யோதிஸ்ஸாக ஸ்வாமி இருக்கிறார். ஜ்யோதிர் லிங்கமாக இருக்கிறார். அது ஸ்படிக லிங்கமாக இருக்கிறது: " ஸ்பாடிக லிங்க !"ஸ்படிகத்தாலானது 'ஸ்பாடிகம்'. இப்படியொரு மஹா பெரிய ஸ்படிக லிங்கமாக ஸ்வாமியை பாவித்துக்கொள். அதன் சிரஸில் பூர்ண சந்திரன் ப்ரகாசிக்கிறது-"மௌளி விலஸத் பூர்ணேந்து."மான், மழு, ஜடை எல்லாமுள்ள ஸகள (உருவ) பிம்பத்தின் சிரஸில் மூன்றாம் பிறைதான் இருக்கிறதென்றால் ஸ்படிக மயமான இந்த ஸகள-நிஷ்கள (அருவுருவ) லிங்கத்தின் உச்சியில் பூர்ணசந்திரனே இருக்கிறது!அதனால்தான் குறிப்பாக ஆசார்யாள் ப்ரதிஷ்டை பண்ணியுள்ள இந்த லிங்கங்களுக்கு

சந்த்ரமௌளீச்வரன் என்று பேர் இருக்கிறது. அந்தப் பூர்ண சந்த்ரனுக்குள்ளேயிருந்து அம்ருதம் பெருகுகிறது: "வாந்தாம்ருதை:". அம்ருதம் "அஸ்தோக"மாகப் பெருகுகிறது-அதாவது நிறைய, தாரை தாரையாய்ப் பெருகுகிறது. மூன்றாம் பிறையானால் ஏதோ கொஞ்சம் அம்ருதம் தான் பெருகும். இது பூர்ண சந்த்ரனானதால் ஒரே தாரையாகப் பிரவஹிக்கிறது. தன் சிரஸிலுள்ள சந்த்ரனிலிருந்தே பெருகும் அம்ருத தாரையில் ஸ்வாமி அப்படியே முழுகியிருக்கிறார்-"ஆப்லுதம்"என்றால் முழுக்கப்பட்டு, அபிஷேகம் பண்ணப்பட்டு என்று அர்த்தம். அவர் நீயும் துளி ஜலம் விட்டு அபிஷேகம் பண்ணினால் ஆனந்தமடைகிறார்!

ஸ்படிகமாக இல்லாத லிங்கமாக, அல்லது வேறே ஸகள மூர்த்தியாயிருந்தால்கூட ருத்ர ஜபத்தோடு அபிஷேகம் பண்ணும்போது ஸ்வாமியை ஸ்படிக லிங்கமாகத்தான் த்யானிக்க வேண்டும் என்று இருப்பதால்தான் பரமேச்வரன் ஐந்து ல்படிக லிங்கங்களை ஆசார்யாளிடம் கொடுத்தார்.

ஸகளத்தைவிட ஸகள நிஷ்களம் அத்வைதத்திற்குக் கிட்டே. அதிலும் ஆதி அந்தமில்லாத லிங்கம் இன்னம் கிட்டே. அந்த லிங்கம் ஸ்படிகமாக இருந்துவிட்டால் ரொம்ப ரொம்பக் கிட்டே. அத்வைதம் பரமதத்வமாகச் சொல்வது நிர்குண ப்ரஹ்மம்.

ஸ்படிகம் ஒரு கலரிலும் வராமல் மீ'கூஷீணீஸீவஜ்ஜீணீகூஷீமீஸீமீ-ஆக (ஒளி ஊடுருவும்படி) இருந்து கொண்டு நிர்குண தத்வத்துக்கே ரூபகமாயிருக்கிறது. ஸ்ப்டிகம் பரப்ரஹ்மம் மாதிரி நிஷ்களங்கமானது, நிர்மலமானது, சுப்ரமானது. எந்தக் கலர் புஷ்பத்தால் அர்ச்சித்தாலும் உள்ளே அந்த 'டால்'அடித்து, அந்தக் கலர் மாதிரியே ஸ்படிக லிங்கம் தோன்றும். மாயை ஆரோபிக்கும் அத்தனை ரூபங்களுக்கும், குணங்களுக்கும் நிர்குண ப்ரஹ்மம் இடம் கொடுத்து, அது அதுவாகவும் தோன்றுவது போலத்தானே இது?

இப்படி ஞான மயமாயிருப்பது குளு குளு என்று சந்த்ரிகையின் அம்ருதத்தில் குளிர்ந்திருப்பது காருண்யத்தைக் காட்டுவதாக இருக்கிறது.

பஞ்ச பூதம், பஞ்ச ப்ராணன் என்று இருப்பதுபோல் பஞ்ச லிங்கம் ஸ்வாமி ஆசார்யாளுக்குக் கொடுத்தார். பஞ்ச க்ருத்யம் செய்பவர்!பஞ்ச முகம் உள்ளவர்!

அறிகிறவன்-அறியப்படும் அறியப்படும் வஸ்து-அறிவு என்ற மூன்றும் ஒன்று என்பது அத்வைதம். 'த்ரிபுடி'என்று இந்த மூன்றைச் சொல்வது. அப்படியொரு த்ரிபுடியாக இங்கே கொடுத்தவர்-சிவன்; வாங்கிக்கொண்டவர்-சிவன்! கொடுக்கப்பட்ட வஸ்துவும் சிவன்!

இங்கே ஆசார்யாளையே ஸ்படிக சந்த்ரமௌளீச்வரராக சொல்லியிருக்கும் ஒரு ச்லோகம் ஞாபகம் வருகிறது. 'மதாவீய சங்கர விஜய'த்தில் ஆசார்யாளின் அவதார ஸர்க்கத்தில் வரும் ச்லோகம் :

மூர்த்நி ஹிமகர சிஹ்நம் நிடிலே நயநாங்க-மம்ஸயோ :

சூலம் *

வபுஷி ஸ்படிக - ஸவர்ணம் ப்ராஜ்ஞாஸ்தம் மேநிரே

சம்பும் **

குழந்தை சங்கரரைப் பார்க்க வந்த ஞானிகளுக்கு சிவச் சின்னங்கள் அதனிடம் தெரிந்ததாம்!வடு மாதிரி, மச்சம் மாதிரித் தெரிந்தது என்பார்கள். " மூர்த்நி ஹிமகர சிந்ஹம் "-சிரஸில் சந்த்ரனின் சின்னம் ! அதுதான் சந்த்ரமௌளி !நெற்றியில் மூன்றாவது கண் மாதிரி அடையாளம்-"நிடிலே நயநாங்கம்". தோளில் சூலக் குறி-"அம்ஸயோ: சூலம்." தேஹமெல்லாம் ஸ்படிகமாக மின்னுகிறது : " வபுஷி ஸ்படிக-ஸவர்ணம் ". இப்படித் தோன்றிய குழந்தையை சம்பு என்றே அந்த ஞானிகள் தெரிந்து கொண்டார்கள்-"ப்ராஜ்ஞாஸ் தம் மேநிரே சம்பும்".......

பிதாவான மஹேச்வரன் பஞ்சலிங்க அநுக்ரஹம் பண்ணினபோது மாதா பார்வதி சும்மாயிருப்பாளா?அவள் ஒரு ஸ்தோத்ரச் சுவடியை ஆசார்யாளுக்குக் கொடுத்தாள். அதுதான் தேவீ ஸ்துதிகளில் முதல் ஸ்தானம் வஹிப்பதான "ஸௌந்தர்ய ஸஹரி"மார்க்கண்டேய ஸம்ஹிதையில் அதை "ஸௌந்தர்ய ஸாரம்"என்று சொல்லியிருக்கிறது. "பூத்யை"-அதாவது லோகத்திற்கு க்ஷேமம்

உண்டாக்குவதற்காக-அதை ஆசார்யாளுக்கு அநுக்ரஹம் பண்ணினாளென்று இருக்கிறது.

பஞ்சலிங்கம் கொடுத்தது, அவற்றின் பெயர்கள், அவற்றை ஆசார்யாள் எங்கெங்கே வைத்தார் என்பதையெல்லாம் 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'க்கு முழுக்க இசைவாகச் சொல்லும் 'ஆனந்தகிரீய சங்கர விஜய'த்தில் அம்பாள் கொடுத்த புஸ்தகத்தை 'அம்பிகா ஸ்தவ ஸாரம்'என்று குறிப்பிட்டிருக்கிறது. தேவீ பரமான ஸ்துதிகளுக்கெல்லாம் இதுவே ஸாரமாயிருப்பது என்று அர்த்தம். "ஜகதநுக்ரஹாய"கொடுத்தாளென்று இருக்கிறது. ஜகத்குருவுக்குப் பண்ணும் அநுக்ரஹம் ஜகத்துக்கே அநுக்ரஹம்தானே?

'ªú÷‰î˜ò ôýK'â¡ø£™ ÜöA¡ Ü¬ôèœ. Ü‹ð£œ Üö° úº˜óñ£J¼‚Aø£œ. Ü¬î v«î£ˆó‹ õ£‚° Ïðˆ F™ è£†®M´Aø¶. ÜŠ«ð£¶ åšªõ£¼ „«ô£èº‹ å¼ Ü¬ôñ£FK.

அம்பாளுக்குப் பல ரூப பேதங்கள் இருப்பதில் இது 'ஸுந்தரி'என்பவளைப் பற்றியது. அவள் தசமஹா வித்யா என்று பத்தில் ஸுந்தரி வித்யாவுக்கு தேவதையாக இருப்பவள். 'ஸ்ரீவித்யா'என்பது அதைத்தான்.

த்ரிபுரஸுந்தரி என்பது அந்த ஸுந்தரிதான் மூன்று லோகத்திலேயும் சிறந்த அழகி த்ரிபுரஸுந்தரி. ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணம் என்ற முப்புரங்களுக்குள்ளே ஞானமாகவும் காருண்யமாகவும் இருக்கும் ப்ரஹ்ம தத்வம்தான் இப்படி அழகு ஸ்வரூபமான தாயாக ஆகி த்ரிபுர ஸுந்தரி என்ற பெயரில் விளங்குவது. 'லலிதாம்பாள்'என்று சொல்வது அவளைத் தான்.

சந்த்ரமௌளீச்வர லிங்கத்தின் சக்தியாக ஸ்ரீசக்ர ரூபத்தில் பூஜை பண்ணுவது த்ரிபுரஸுந்தரிக்குத்தான். ஏனென்றால் அவர் மாதிரியே அவளுக்கும் பூர்ண சந்த்ர ஸம்பந்தம் நிறைய உண்டு. அவருடைய சிரஸில் பூர்ண சந்த்ரன் இருக்கிறதென்றால் இவள் வாஸம் பண்ணுவதே பூர்ண சந்த்ர மத்தியில்தான்! " சந்த்ர மண்டல மத்யகா "என்று ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. அவளுக்கு விசேஷமான திதியும் பூர்ணிமை!ஸாதனாந்தத்தில் (ஸாதனை) முடிவில் அவளே நம்முடைய சிரஸ் உச்சியில் பூர்ண

சந்த்ரனாக அம்ருதத்தைக் கொட்டுவாள்.

திவ்ய தம்பதி ஜிலுஜிலுவென்று அழகாக அம்ருத கிரணங்களைக் கொட்டிக் கொண்டிருக்கும் சந்த்ர ஸம்பந்தத்துடன் லோகத்தின் தாபத்தையெல்லாம் போக்கி ஆனந்தம் கொடுப்பதற்காகச் சந்த்ரமௌளியாகவும் த்ரிபுரஸுந்தரியாகவும் இருக்கிறார்கள். அவள் சிரஸிலும் சந்த்ர கலை உண்டு. " சாரு சந்த்ர கலாதரா "என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிறது. 'மஹாத்ரிபுரஸுந்தரி', 'சந்த்ர மண்டல மத்யகா', 'சாரு சந்த்ரகலாதாரா'என்ற நாமாக்கள் கிட்டக் கிட்டவே வந்துவிடுகின்றன.

"'ஸௌந்தர்ய லஹரி'ஆசார்யாளே பண்ணியது என்று தான் ப்ரஸித்தமாயிருக்கிறது. ஏற்கெனவே அது கைலாஸத்திலிருந்து, அம்பாள் கொடுத்தாள் என்றால் ஆசார்யாள் அதைப் பண்ணவில்லையா? ப்ரசாரம் மட்டும் தான் பண்ணினாரா?"என்று கேட்டால் இதற்கு ஒகு கதை பதில் சொல்கிறது. இந்தக் கதை சங்கர விஜயம் எதிலும் இல்லாவிட்டாலும் கர்ணபரம்பரையாக வந்திருக்கிறது. சிஷ்டர்களும் மதிப்புக் கொடுத்து ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். என்ன கதை என்றால்...

"மூன்று காலமும் பில்வார்ச்சனை பண்ணி லோக க்ஷேமத்தை உண்டாக்கு" என்று சொல்லி ஸ்வாமி பஞ்சலிங்கங்களைக் கொடுத்தார். அம்பாளும் லோகக்ஷேமத்திற்காக ப்ரசாரம் பண்ணச் சொல்லி ஸ்தோத்ரச் சுவடியைக் கொடுத்தாள். ஆசார்யாள் அவர்களை நமஸ்காரம் பண்ணிவிட்டுத் திரும்பினார்.

கைலாஸத்தின் வாசலிலிருந்த நந்திகேச்வரருக்கு மஹா மந்த்ர சாஸ்த்ரமாக இருந்த அந்த ஸ்தோத்ரம் கைலாஸத்தை விட்டுப் போவதா என்று இருந்தது. அவர் அப்பப்போ ரொம்பவும் ரோஷமாகக் கார்யம் பண்ணிவிடுவார். அதனால் யார் என்ன என்று பார்க்காமல் ஆசார்யாளின் கையிலிருந்த சுவடியைப் பறித்தார். எல்லா ஓலையும் அவர் கைக்குப் போகவில்லை. ஒரு பாகம் ஆசார்யாள் கையிலேயே இருந்தது. மொத்தம் இருந்த நூறு ச்லோகத்தில் பின் 59 நந்திகேச்வரர் கைக்குப் போயிற்று. ஆரம்ப பாகமான 41 ஸ்லோகத்தை ஆசார்யாள் இறுக்கப் பிடித்துக்கொண்டு சட்டென்று வெளியேறி விட்டார்!

பெரிய பாகம் நஷ்டமாகவிட்டதே என்று அவர் துக்கப்பட்டார். அப்போது அம்பாள் அசரீரி வாக்கில், "எல்லாம் என் லீலைதான். அந்த 59-ம் நீயே பூர்த்தி பண்ணிவிடு. உன் வாக்காலேயே ஸ்தோத்ரம் கேட்கணும்;அது கைலாஸ ஸொத்தான ஸ்தோத்ரத்தோடேயே, அதற்கு ஸமதையாகச் சேர்ந்து ப்ரகாசிக்கணும் என்றுதான் இப்படி நடக்கப் பண்ணினேன்"என்றாள்.

ஆசார்யாள் ரொம்பவும் ஸந்தோஷத்துடன் அப்படியே 41-ஐ நூறாக்கிப் பூர்த்தி பண்ணிவிட்டு, "என் வாக்கா? உன்னுடையதேயானே வாக்கால்தான் உனக்கென்றே இந்த ஸ்தோத்ரம் ஏற்பட்டது-த்வதீயாபிர் - வாக்பிஸ் - தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம்" என்று பரம விநயத்தோடு முடித்து அவளுக்கு அர்ப்பணம் பண்ணினார்.

இப்படிக் கதை இருக்கிறது.

ஆசார்யாள் பண்ணிய 59 ச்லோகங்களில்தான் அம்பாளின் ஸ்வரூப வர்ணனை, கேசாதி பாதம், அவளுடைய ஸௌந்தர்ய அலைகளாக வருகிறது. இதில் மூன்றாவது ச்லோகத்தில் (அதாவது முழு நூலின் 44-வது ச்லோகத்தில்) ""ஸௌந்தர்ய லஹரீ""என்ற பதப்ரயோகமே பண்ணியுருமிருக்கிறார். அதனால், மொத்த நூலையும் அந்தப் பெயரில் சொன்னாலும் முதல் 41 'ஆனந்த லஹரி'என்றும், பின் 59-மட்டுமே ஸௌந்தர்ய லஹரி என்றும் குறிப்பிடப்படுகின்றன. முதல் பாகத்தில் எட்டாவது ச்லோகத்தில் 'ஆனந்த லஹரி' என்று-"சிதாநந்த லஹரீம்" என்று வருகிறது.

கைலாஸத்தில் ஆசார்யாளுக்குக் கிடைத்த ஸ்தோத்ரத்திற்கு 'மார்க்கண்டேய ஸம்ஹிதை', 'ஆனந்த கிரீயம்', இரண்டிலுமே 'ஸௌந்தர்ய லஹரி'என்று பேர் சொல்லாமல் 'ஸௌந்தர்ய ஸாரம்'என்றும், 'அம்பிகா ஸ்தவ ஸாரம்'என்றும் சொல்லியிருப்பது கர்ண பரம்பரைக் கதையின் ப்ராமாண்யத்துக்கு பலம் சேர்ப்பதாகத் தோன்றுகிறது.

முதல் பாகம் ஸுந்தரியைப் பற்றிய மந்த்ர சாஸ்த்ர ஸாரம்.

பாக்கியை நந்திகேச்வரர் வழிப்பறி செய்தாரே என்று எனக்கு

ரொம்ப ஸந்தோஷமாக இருக்கிறது!அவருக்கு ரொம்ப நன்றி தெரிவிக்கணும் போலிருக்கிறது!அதனால் தானே, அம்பாளின் ரூப லாவண்ய மஹிமையையும், 'இதற்கு மேலே கவிதை இல்லை, பக்தி இல்லை' என்னும்படியாக ஆசார்யாளின் மஹிமையையும் தெரிவிக்கிற பின் பாகம் உண்டாயிற்று?

ஸ்வாமியின் ஆஜ்ஞைப்படியே ஆசார்யாள் நாலு லிங்கங்களை ச்ருங்கேரி, கேதாரம், நீலகண்டம், காஞ்சி ஆகிய க்ஷேத்ரங்களில் ப்ரதிஷ்டை செய்தார். நிர்யாணம் ஸமீபித்தபோது மோக்ஷலிங்கத்தைச் சிதம்பரத்தில் ப்ரதிஷ்டை செய்து வரும்படி ஸுரேவராசார்யாளிடம் கொடுத்தனுப்பினாரென்று 'ஆனந்த கிரீய'த்தில் இருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

**காஞ்சி மஹிமை**

திக்விஜயமெல்லாம் முடித்து முடிவாகக் காஞ்சீபுரத்துக்கு வந்தார். ' **கச்சி மூதூர்** 'என்று சங்க இலக்கியமான 'பெரும்பாணாற்றுப்படை'முதலியவற்றிலேயே சொல்லப்படும் அந்தப் புராதனமான நகரம் மஹாக்ஷேத்ரம் என்பதாக மட்டுமின்றி பெரிய வித்யா ராஜதானியாகவும் இருந்திருக்கிறது. வடக்கே காசி மாதிரி தெற்கே காஞ்சி. ''சான்றோர் உடைத்து''என்று சிறப்பிக்கப்படும் 'தொண்டை நன்னாட்டின்'தலைநகரம் அதுதான். ''கடிகா ஸ்தானம்''எனப்படும் ஸம்ஸ்க்ருத யூனிவர்ஸிடி இருந்த நகரம் அது. அப்பர் ஸ்வாமிகள் '' **கல்வியைக் கரையில்லாத காஞ்சி மாநகர்** ''என்கிறார். பல மத ஸித்தாந்திகளும் கூடியிருந்த இடம் அது என்று 'மணிமேகலை'யிலிருந்து தெரிகிறது. பௌத்தம், ஜைனம், காபாலிகம் முதலான எல்லா மதங்களும் அங்கே பிற்காலத்தில் இருந்ததென்று மஹேந்த்ர பல்லவனின் 'மத்த விலாஸ ப்ரஹஸன'நாடகத்திலிருந்து தெரிகிறது. சரித்ரத்தில் சக்கரம் ஒரு முழு சுற்றுச் சுற்றிப்

பழையபடியே மறுபடி நடக்கும்போது எந்த வட்டாரத்தில் எப்படியிருந்ததோ அப்படித்தான் திரும்பவும் நடக்கும். அதனால் ஆசார்யாள் காலத்திலும் அங்கே பல மதங்கள் இருந்திருக்க வேண்டும். இப்போதும் பௌத்த சிற்பங்கள் பல அங்கே அகப்படுகின்றன. காஞ்சி மண்டலத்துக்குள்ளேயே இருக்கும் திருப்பருத்திக்குன்றம் ஜினகாஞ்சி என்கிற சமண ஸ்தலமாகப் பேர் பெற்றிருக்கிறது.

க்ஷேத்ரம் என்று பார்க்கும்போது, 'ரத்ன த்ரயம்'என்கிற ஈச்வரன், அம்பாள், பெருமாள் ஆகிய மூன்று பேருக்கும் முக்யமான ஸ்தலமாயிருப்பது அது. எண்ணி முடியாத கோவில்கள் ஸகல தெய்வங்களுக்கும் அங்கே இருப்பதில் ஏகம்பம் பரமேச்வரனின் பஞ்சபூத ஸ்தலங்களில் ப்ருத்வீ க்ஷேத்ரமாயிருக்கிறது. அம்பாள் காமாக்ஷியின் காமகோஷ்டம்-'காமகோட்டம்'என்பது-அத்தனை அம்மன் ஸந்நிகளுக்கும் மூல சக்தி பீடமாயிருக்கிற பெருமாள் வரதராஜாவாக உள்ள விஷ்ணு காஞ்சியை-'அத்தியூர்'என்று வைஷ்ணவர்களின் திவ்ய தேசங்களில் சொல்வது: அதை-மூன்று முக்யமான க்ஷேத்ரங்களில் ஒன்றாகச் சொல்கிறார்கள். ஸ்ரீரங்கமும், திருப்பதியும் மற்ற இரண்டு.

விஷ்ணு காஞ்சியைத் தற்போது சின்ன காஞ்சிபுரம் என்கிறோம். பெரிய காஞ்சிபுரம் என்பது சிவகாஞ்சி. கச்சி ஏகம்பமும் காமகோட்டமும் உள்ள இடம்.

ரத்ன த்ரயம் மட்டுமில்லாமல் ஷண்மத தெய்வங்களுக்குமே முக்யமான க்ஷேத்ரம் காஞ்சி.

பிள்ளையார் கோவில்கள் இல்லாத ஊரே தமிழ் நாட்டில் கிடையாது. அப்படிக் காஞ்சிபுரத்திலும் அநேகம் உண்டு. அங்கே ஒரு பேட்டைக்கே பிள்ளையார் பாளையம் என்று பேர். காமாக்ஷிஆலயத்தியிலேயே ஆறு, ஏழு விகநேச்வர மூர்த்திகள் உண்டு.

ஸுப்ரஹ்மண்யருக்கு குமரக் கோட்டம் என்று தனிக் கோயில் இருக்கிறது. கச்சியப்ப சிவாசாரியார் கந்த புராணம் எழுதி அரங்கேற்றியதே அங்கேதான்!

கச்சபேச்வரர் கோவிலில் ஸூர்யன் ஸந்நிதியில் """மயூர

சதகம்""என்று நூறு ச்லோகம் கொண்ட ஸூர்ய ஸ்துதி கல்வெட்டில் பொறித்திருப்பதிலிருந்து அது ஒரு முக்யமான ஸூர்ய க்ஷேத்ரமாகத் தெரிகிறது.

இப்படி ஷண்மதங்களுக்கும் முக்யம் வாய்ந்ததாகக் காஞ்சிபுரம் இருக்கிறது. ஆசார்யாளுக்கு முந்தியே அப்படியிருந்து அவர் அதனாலேயே அங்கே வந்து தங்கியிருக்கலாம். அல்லது ஷண்மத ஸ்தாபனாசார்யாளாகிய அவர் வந்து தங்கியதாலேயே அது இப்படிப் பெருமை பெற்றிருக்கலாம்.

ஸப்த மோக்ஷபுரிகளில் தக்ஷிணத்தில் உள்ள ஒன்றே ஒன்று காஞ்சீபுரம்தான் என்பது அதன் தலையான சிறப்பாகும்.

ஸமய முக்யத்வம், வித்யா ஸ்தான முக்யத்வம், ராஜரீக முக்யத்வம், வ்யாபார முக்யத்வம் எல்லாமே அந்த ஊருக்கு இருந்ததால்தான் " **நகரேஷு காஞ்சி** "என்று புகழப்பட்டிருக்கிறது.

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

**காஞ்சியில் ஆசார்யாள்**

ஆசார்யாள் காஞ்சீபுரம் வந்ததை அநேகமாக அவரது அத்தனை சரித்ர புஸ்தகங்களுமே சொல்கின்றன. காஞ்சியிலிருந்து கொண்டுதான் அவர் ஆறு சிஷ்யர்களை தேசமெல்லாம் அனுப்பிவைத்து ஷண்மதங்களை நிலைப்படுத்தினாரென்று 'ஆனந்தகிரீயம்', '(ச்ருங்கேரி) குருவம்ச காவ்யம்'இரண்டிலும் இருக்கிறது.

ஆசார்யாள் காஞ்சிபுரத்தில் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் செய்தாரென்று 'சங்கராப்யுதம்', 'கோவிந்த நாதீயம்', 'சித்விலாஸீயம்', 'குரு ரத்னமாலா'ஆகிய புஸ்தகங்கள் தெரிவிக்கின்றன. ( ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதி ஸ்வாமிகள் என்ற ச்ருங்கேரி ஆசார்யாளின் சீடரான

ஸ்ரீலக்ஷ்மண ஸூரியின் "பகவத் பாதாப்யுதயத்"த்திலும் காஞ்சியில் ஆசார்யாளின் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் கூறப்பட்டுள்ளது(ஆறாம் ஸர்க்க முடிவு). 'ஸுஷமா'மேற்கோளிலிருந்து 'ப்ருஹச் - சங்கர', 'ப்ராசீன சங்கர' விஜயங்களிலும் இந்த விஷயம் இருப்பதாகத் தெரிகிறது. 'வ்யாஸாசலீய'த்தின்படி காஷ்மீரத்தில் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் என்று த்வனித்தாலும், கதைத் தொடர்ச்சியோ அவருடைய காஞ்சீ வாஸத்தைச் சொல்வதாக இருக்கிறது. இந்தக் குழப்பத்தைப் போக்குவதாகக் 'காச்மீரம் என்று காஞ்சி மண்டலத்துக்கே ஒரு பெயர் உண்டு'என்று கோவிந்த நாதீயத்தில் தெளிவுப்படுத்திச் சொல்லியிருக்கிறது. 'சிவரஹஸ்ய'இதிஹாஸத்தில் ஆசார்ய சரித்ரத்தை முடிக்குமிடத்தில் அவர் காஞ்சீபுரத்தில் தம்முடைய மடத்தில் வஸித்துவந்த காலத்தில் 'மிச்ரர்கள்'என்கிற மஹா பண்டிதர்களை ஸகல சாஸ்த்ர வாதத்திலும் ஸுலபமாக ஜயித்தார்.-" **விஜித்ய தரஸா(அ)க்ஷத சாஸ்த்ரவாதை : மிச்ராந்** " என்று சொல்வது ஸர்வஜ்ஞ பீடம் ஏறியதைக் குறிப்பதாகவே தெரிகிறது.

அவதாரத்தைப் பூர்த்தி பண்ணி ஆசார்யாள் காஞ்சியிலேயே ஸித்தியடைந்ததாக 'சிவரஹஸ்யம்'. 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'ஆகிய இதிஹாஸ-புராணங்களும், சில சங்கரவிஜயங்களும், ஆசார்யாள் பற்றிய இதர புஸ்தகங்கள் சிலவும் சொல்லியிருக்கின்றன. ஸித்தி ஸ்தலம் கேதாரிநாத், பதரிநாத் என்று வித்யாஸமாக அபிப்ராயப்படும் சங்கரவிஜயங்கள் முதலிய புஸ்தகங்களும் இருக்கின்றன.

ஒன்றுபடுத்தவே வந்த ஆசார்யாளின் சரித்ர விஷயமாகவே வித்யாஸமான அபிப்ராயங்களைச் சொல்வது மனஸுக்கு ஏற்கவேயில்லை. அவரொன்றும் ஸ்வசரிதையோ, உயிலோ எழுதி வைத்துவிட்டுப் போகவில்லை!பின்னால் வந்தவர்கள் ஒவ்வொருத்தர் ஒவ்வொன்றை ஆதாரம், ப்ரமாணம் என்று வைத்துக்கொண்டு முடிவு பண்ணுகிறோம்!அடிப்படை உண்மை நாமெல்லாரும் அவருடைய பக்தர்கள், சிஷ்யர்கள், குழந்தைகள் என்பதுதான். எல்லா ஆராய்ச்சியையும்விட அவரிடம் நம் எல்லோருக்கும் பக்தியும், நமக்குள்ளே கொஞ்சங்கூட த்வேஷலேசமில்லாத அன்பும் இருப்பதுதான்

முக்யம்;àJ˜G¬ô. ÜîŸ° ý£Q â¡ø£™ â™ô£ Ýó£Œ„C¬ò»‹ õ£ðv õ£ƒA,ªè£‡´ Mìô£‹…(CKˆ¶) " â¶ Ýê£˜ò£O¡ Rˆ F vîô‹ ?"â¡Á «è†ì£™, Cô Rˆî ¹¼û˜è¬÷ŠðŸP å¼ˆî«ó Í¡Á ï£½ Þìƒ èO™ úñ£Fò£ù£ªó¡Aø£˜è«÷, ÜŠð® Ýê£˜òÀ‹ Ýù£ªó¡Á ªê£™LMìô£‹ «ð£L¼,Aø¶!......

முக்தி க்ஷேத்ரமான காஞ்சீபுரத்தில் ஆசார்யாள் முக்தி அடைந்தாரென்று ஒரு நம்பிக்கை.......முக்தி "அடைவது" என்ன?அவரே முக்தி ஸ்வரூபம்! எப்பவும் ஜீவன் முக்தராக இருந்தவர். ஆனாலும் ஒரு நாள் அவர் அவதார சரீரத்தை த்யாகம் பண்ணி நம் கண்ணுக்குத் தெரியாமல் போய் விட்டாரல்லவா? அந்த விதேஹ முக்தியைத்தான் சொல்கிறேன்......அப்படி அவர் முக்தி அடைந்தது காஞ்சீபுரத்தில் காமாக்ஷியின் முன்னாலேயே என்று சில புஸ்தகங்களில் இருக்கிறது. 'ப்ருஹச் சங்கர விஜய'த்தில் " தேவ்யா : புர : பரதரே புருஷே விலில்யே "-'அம்பாளின் எதிரக்கே (எதிரில்) பராத்பரமான ப்ரஹ்ம தத்வத்தில் லயித்து விட்டார்' என்று இருக்கிறது. 'ப்ராசீன சங்கர விஜய'த்திலும் அப்படியே சொல்லியிருக்கிறது.

காமாக்ஷ்யா : ஸவிதே ஸ ஜாது, நிவிசந்-உந்முக்த-லோக-ஸ்ப்ருஹோ *

தேஹம் ஸ்வம் வ்யபஹாய தேஹ்யஸுகமம் தாம

ப்ரபதே பரம் **

"ஸ ஜாது காமாக்ஷ்யா:ஸவிதே நிவிசந்"-ஒரு ஸமயம் காமாக்ஷி ஆலயத்துக்குப்போய் அம்பாள் கிட்டே நின்று கொண்டிருந்தார். "உந்முக்த லோக ஸப்ருஹ:"- அப்போது உலகப்பற்று அப்படியே அவருக்கு விட்டுப் போயிருந்தது. எப்போதுமே ஸ்வார்த்தமாக அவருக்கு உலகப்பற்று கிடையாதுதான். ஆனால் அந்த உலகத்தைக் கடைத்தேற்றணும் என்று பரார்த்தமாகப் பற்று இருந்தது! " பற்றற்றான் "என்கிற ஈச்வரனுக்கே இப்படியொரு பற்று, ஆசை இருந்துதான் அவதாரம் பண்ணியது!ஆசையெல்லாம் அறுத்துப் போட்ட ஸந்நியாஸியாயிருந்தும் இந்த ஆசைக்காகத்தான் நாடெல்லாம் நின்ற இடத்தில் நிற்காமல் அலை அலை என்று அலைந்தார்!இப்போது ஒருவாறு

"லோகம் பிழைச்சுக்கும்" என்று நிம்மதிப்படும்படி அதை தர்மவழியில் நிறுத்தியாகிவிட்டது. அதனால் ஆசையும் போய்விட்டது; ""உந்முக்த லோக ஸ்ப்ருஹ:"". அப்படியே அம்பாளுக்குக் கிட்டே நின்றபடி தேஹத்தை விட்டுவிட்டார் : "தேஹம் ஸ்வம் வ்யபஹாய". உசந்த ஸ்தானமான தம் இருப்பிடத்துக்குப் போய்விட்டார்-"தாம ப்ரபேதே பரம்". அதென்ன உசந்த ஸ்தானமென்றால் ப்ரஹ்ம ஸ்வரூபமாயிருப்பதுதான். "கேரளீய சங்கர விஜய"த்திலும் இப்படியே சொல்லிக் கூடுதலாக, "இப்படி அகண்ட ஜ்யோதிஸ்ஸாக, ஆனந்த மயமாக, அக்ஷர ஸ்வரூபமாயுள்ள பரம பதத்தை அடைந்த பின்னும், ஸாது ஜனங்களுக்கு மோக்ஷதாதாவாகவுள்ள ஸ்ரீசங்கராசார்யாள் அங்கேயே-காஞ்சீபுரத்தில் அம்பாள் ஆலயத்திலேயே என்று அர்த்தம்;அங்கேயே-சைதன்யமே மூர்த்திகரித்தாற்போல இன்றைக்கும் இருந்து வருகிறார்" என்று முடித்திருக்கிறது. காமாக்ஷி ஆலயத்திலுள்ள ஆசார்ய மூர்த்தத்தையே சொல்லியிருப்பதாகத் தெரிகிறது.....

ஆசார்யாள் காஞ்சீபுரத்துக்கு வந்தபோது அங்கே ஸாங்க்யம், மீமாம்ஸை முதலிய அரைகுறை வைதிக மதஸ்தர்களும், பௌத்த ஜைனாதி அவைதிக மதஸ்தர்களும் நிறைய இருந்தார்கள். ப்ராசீனமான ஆலயங்கள் இருந்தாலும் பூஜா க்ரமங்கள் வேத விருத்தமாக (முரணாக)ப் போயிருந்தன. ஸாக்ஷாத் ராஜராஜேச்வரியான அம்பாள் காமாக்ஷியே உக்ர கலைகளோடு இருந்தாள் என்று சொல்லியிருக்கிறது.

ஆசார்யாள் ஸர்வதீர்த்தக் கரை வழியாக ஊருக்குள் ப்ரவேசித்தார். அங்கே காசி மாதிரியே விச்வேச்வரர் ஆலயமும் முக்தி மண்டபமும் உள்ளன. ஸர்வ தீர்த்த ஸ்நானம் பண்ணி ஆலய தர்சனம் முடித்து முக்தி மண்டபத்தில் தங்கிவிட்டு விஷ்ணு காஞ்சிக்குப் போனார். வரதராஜ ஸ்வாமி ஆலய பூஜையை முறை பண்ணிக் கொடுத்துச் சில காலம் அங்கேயே தங்கியிருந்தார். அங்கே பெருமாள் கோவிலுக்கு மேற்கே இப்போதும் நம் மடம் ஒன்று இருக்கிறது. (காஞ்சியில் ப்ரதானமான ஸ்ரீமடம் பெரிய காஞ்சிபுரத்தில் உள்ளது.)

அவர் இப்படி இருந்து கொண்டிருந்தபோது, லோக க்ஷேமத்தை உத்தேசித்து ராஜாவிடம் சொல்லி காஞ்சி

நகரத்தையே காமாக்ஷிஆலயம் மத்திய பிந்துவாக (புள்ளியாக) இருக்கும்படியான ஸ்ரீசக்கர ரூபத்தில் ஒழுங்குபடுத்தி நிர்மாணம் பண்ணச் சொன்னார். ராஜாவும் அப்படியே செய்தான். அவன் ராஜஸேனன் என்ற சோழ ராஜா என்று சொல்லியிருக்கிறது.

ஸ்ரீசக்கரம் வெளி இரண்டு சுற்றுக்கள் பத்ம தளங்கள் (தாமரை இதழ்கள்) விரிந்திருப்பதுபோல இருக்கும். உள்ளே அடுக்கடுக்காக வரும் கோணங்களும் அசப்பில் பார்த்தால் தாமரைப் பூவில் வரிசையாக இதழ்கள்மாதிரி இருக்கும். "பெரும்பாணற்றுப் படை"யில் காஞ்சியை இப்படித்தான் வர்ணித்திருக்கிறது.

அம்பாள் ஆலயத்துக்கும் அம்பாள் யந்த்ரத்துக்கும் ஏனிப்படி முக்யம் தந்தாரென்றால்...

பல மூர்த்திகளுக்கும் காஞ்சி முக்ய க்ஷேத்ரமாயிருந்தாலும் தேவீ க்ஷேத்ரம் என்றுதான் அதற்கு அதிமுக்யத்வம். சக்தி பீடங்களை மூன்று, பதினெட்டு, முப்பத்தாறு, ஐம்பத்தொன்று, ஐம்பத்தாறு, அறுபத்துநாலு, தொண்ணூற்றாறு, நூற்றியெட்டு, ஆறாயிரத்து நானூறு என்று பலவிதமாகச்சொல்வதுண்டு. இந்த எல்லாவற்றிலுமே முக்யமான ஒன்றாக வருவது காஞ்சியிலுள்ள காமபீடம் என்ற காமகோடி பீடம். அம்பாளின் நாபி பீடம் அது. சரீரத்தில் மத்ய ஸ்தானமாயிருப்பது நாபி. அப்படி லோகத்திற்கே இருப்பது காஞ்சி. காஞ்சி என்றால் ஒட்டியாணம். நாபிக்குக் கவசம்தான் ஒட்டியாணம். "மேரு தந்த்ரம்", "காமாக்ஷீவிலாஸம்", "காஞ்சீ மாஹாத்ம்யம்"ஆகிய நூல்களில் இப்படிச் சொல்லியிருக்கிறது.

ஸகல க்ஷேத்ரங்களிலுள்ள அம்பாளுடைய சக்தி கலைகளுக்கெல்லாம் கேந்த்ர ஸ்தானமாயிருப்பது காஞ்சி காமாக்ஷிதான்!(சிரித்து) அந்த எல்லா பல்புக்கும் இவள் தான் ஜெனரேட்டர்!இதைத் தெரிவிப்பதாகத்தான் காஞ்சீபுர வட்டாரத்தில் ஐம்பதுக்குமேலே சிவன் கோவில்கள் இருந்தாலும் எதிலேயும் அம்மன் ஸந்நிதியே இல்லை!காம கோஷ்டத்திலோ அம்பாள் மட்டுமாக இருக்கிறாள்!ஸு ந்தரேச்வரர் கோவிலில் மீனாக்ஷி, ஜம்புகேச்வரர் கோவிலில் அகிலாண்டேச்வரி, கபாலீச்வரர் கோவிலில் கல்பகாம்பா என்கிற மாதிரியெல்லாம் இல்லாமல், கூட ஈச்வர

ஸந்நிதியில்லாமல் அம்பாள் மட்டும் இருக்கிறாள். காஞ்சியில் ஏகாம்ரர், வரதர் உள்பட எவருக்கும் இல்லாத பெருமையாகத் தான் மட்டுமே நாலு பக்கமும் கோபுரமும், கோபுரவாசலும், ராஜ வீதிச் சுற்றுகளும் கொண்ட ராஜ ராஜேச்வரியாக இருக்கிறாள்!

இவள்தான் அம்பாளின் அநேக விதமான ரூப பேதங்களில் த்ரிபுரஸுந்தரியாக இருப்பவள். ஸுந்தரீ வித்யா என்ற ஸ்ரீவித்யா சாஸ்தரத்தில் சொல்லியுள்ளபடி சதுர்புஜையாக தநுர்-பாண-பாச-அங்குசங்களை வைத்துக் கொண்டிருப்பவள் இவள்தான். அந்த சாஸ்த்ரம்தான் ஆசார்யாளுக்கு அம்பாளே கைலாஸத்தில் கொடுத்து, அவர் 'ஸௌந்தர்ய லஹரி'யாகப் பூர்த்தி பண்ணியது. அந்த த்ரிபுரஸுந்தரிதான் அவருடைய மடத்து ஸ்வாமியான சந்த்ரமௌளீச்வரரின் சக்தியும்!

இந்தக் காரணங்களால் ஆசார்யாளுக்கு காமாக்ஷியம்பாள் ரொம்ப முக்யம்.

(சிரித்து) "இதென்ன ந்யாயம்?இவர் சொன்னது 'சும்மாக் கிடக்கிற'அத்வைதம்!அம்பாளோ ஒரே சக்தி ஒரே கார்யம் ஒரே மாயை!இவருக்கென்ன அவளைப் பற்றி?"-என்றால்,

சும்மாக் கிடந்ததை அவள்தானே இத்தனை வித விதமான சக்திகளோடு விதவிதக் கார்யங்கள் பண்ணும்படி செய்திருக்கிறாள்?சிவனே என்று, சிவமாகவே சும்மாயிருந்த இந்த சம்-புவையே சம்-கரர் என்று ஆக்கி, அவர் மித்யை என்று ஒதுக்கச் சொன்ன உலகத்திற்காகவே ஓயாமல் கார்யம் பண்ணச் செய்திருக்கிறாள்?

ஆகையால், ஒன்றிலிருந்து இத்தனையையும் கிளப்பிவிட்ட அவள்தான் அவற்றையெல்லாம் மறுபடி அந்த ஒன்றிலேயே, ஒன்றாகவே அடக்கவும் ஆஸாமியை ஏதோ செய்கிறார், பெரிய அவதார கார்யமே செய்கிறார்-என்றால் செய்கிறதற்கு சக்தி அந்த மூல பராசக்தியிடமிருந்துதானே வருகிறது?அதனால், ஒன்றிலிருந்து பலவற்றைச் செய்த அவளேதான் பலவற்றை ஒன்றாக்கவும் கருணையோடு மனஸ் வைத்து எல்லாம் செய்கிறாள் என்றாகிறது. அது மாத்ரமில்லை-ஸாதனை, கீதனை நிதித்யாஸனம் எது பண்ணினாலும் ஸரி, அவள் பிரித்து வைத்த இந்த ஜீவன்

மறுபடி மூலத்தோடு சேரணும் என்றால் பிரிந்தவள்தான் சேர்த்தும் வைக்கணும் இவனாகவா பிரிந்து வந்தான்? அவள்தானே பிரித்துக் காட்டினாள்?அப்போது அந்த மஹாசக்தியை மீறி இவனாக மறபடி ஒன்று சேரமுடியுமா என்ன?அவள்தான் சேர்க்கணும், ஒன்றாக்கணும். அப்படிப் பலபேரை, மஹாஞானிகளை, ப்ரஹ்மவித்துக்களை அவள் சேர்த்து ஒன்றாக்கி வைத்திருப்பதும் தெரிகிறது. ஆக, அவள் க்ருபைதான் அத்வைத மோக்ஷத்திற்கு வழி திறந்து விட்டாகணும், அப்படியும் அவள் பரமாநுக்ரஹம் பண்ணுபவள்தான் என்று ஆசார்யாளுக்கு நன்றாகத் தெரியும்-"அந்தஃசாக்த"ரான (உள்ளூரத் தாமே சக்தி ஸ்வரூபமான) ஆசார்யாளுக்கு நன்றாகத் தெரியும். மஹாமாயையேதான் ஞானப்பால் ஊட்டுகிற ஞானாம்பாள், ப்ரஹ்ம வித்யா ஸ்வரூபிணி என்பது அவருக்கு அநுபவமாகத் தெரியும்.

சிவ-சக்தி ஐக்யம் என்ற அத்வைதத்திலேயே கொண்டு விட்டுப் பூர்ணத்வத்தை அநுக்ரஹிக்கும் ஸ்ரீவித்யையும் ப்ரஹ்ம வித்யையும் ஒன்றுதான் என்பதாலேயே ஒரு பக்கத்தில் ஞான மார்க்கமாக நிறையச் செய்த ஆசார்யாள் இன்னொரு பக்கம் உபாஸனா மார்க்கமாக ஸ்ரீவித்யைக்கும் ஏற்றம் கொடுத்தார்......

தேவீ-வித்யைகளில் எதுவானாலும் ஸரி, பொதுவாக மஹாசக்தியாகவும் அதே ஸமயம் பரம கருணையுள்ள தாயாயும் இருக்கும் மோக்ஷதாயினி அவளே என்பதால்தான் தம்முடைய முக்ய மடங்களிலெல்லாம் ஒரு சக்தி பீடத்தைச் சேர்த்து வைத்தார். இந்த (காஞ்சி) மடத்துக்குக் காமகோடி பீடம். ச்ருங்கேரிக்கு சாரதா பீடம், புரி மடத்துக்கு விமலா பீடம். த்வாரகைக்கு காளிகா (பத்ரகாளி) பீடம். பதரிமடத்துக்குப் பூர்ணகிரி பீடம்.........

ஆசார்யாள் சொன்னபடி காஞ்சி நகர அமைப்பு ஸ்ரீ சக்ராகாரமாக ஒழுங்குபடுத்தப்பட்டவுடன் அவர் காமாக்ஷிஆலயத்திற்கு வந்தார். அம்பாளை சாந்தப்படுத்தி, ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டை செய்தார்.

பிலாகாசம் என்பதாக கர்ப்ப க்ருஹத்திலே குஹையில் ஆகாச மாத்ரமாகவும் அம்பாள் அங்கே இருக்கிறாள். பக்கத்திலேயே உக்ர தேவி உக்ர கலைகளோடு மூர்த்தியாக

இருந்தாள். ஆசார்யாள் தாமே ஸ்ரீயந்த்ரம் போட்டு அதில் அந்தக் கலைகளை ஆவாஹனம் செய்து அவளை ஸௌம்ய மூர்த்தியாக்கினார். "அப்படிப் பண்ணிய ஆசார்யாள் நம் புண்யங்களை வளர்க்கட்டும்!"என்று 'குருரத்ன மாலா'சொல்கிறது:

ப்ரக்ருதிம் ச குஹாச்ரயாம் மஹோக்ராம்

ஸ்வக்ருதே சக்ரவரே ப்ரவேச்ய யோ(அ)க்ரே *

Ü,¼î£„Kî-ªú÷‹ò Í˜ˆF‹-Ý˜ò£‹

ú§,¼î‹ ïvú C«ï£¶ êƒèó£˜ò :*

அம்பாளுக்கு நேர் முன்னால் சக்ர ராஜம் எனப்படும் ஸ்ரீயந்த்ரம் ஆசார்யாளே போட்டதை சித்விலாஸீயத்தில் " காமாக்ஷ்யா : புரதோ தேசே ஸ்ரீசக்ரம் ஸ்வயம் ஆலிகத் "என்று சொல்லியிருக்கிறது.

"ஆனந்தகிரீய"த்திலும் காமாக்ஷிவைபவம், ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டை முதலியவற்றை விரிவாகச் சொல்லியிருக்கிறது.

காமகோடி பீடத்தைப் பழையபடி ப்ரகாசிக்கும்படி ஆசார்யாள் ஜீவசக்தியோடு ஸ்தாபித்தார்.

அப்புறம் கச்சி ஏகம்பம் முதலானவற்றுக்கும் போய் ஆராதனா க்ரமத்தை தாந்த்ரிகமாக சுத்தப்படுத்திக் கொடுத்தார்.

ஆறு சிஷ்யர்கள் தேசம் முழுதும் போய் யாராருக்கு எது இஷ்ட தேவதையோ, அதை வைதிகமாக, இதர தேவதா நிந்தையில்லாமல் அவற்றோடு சேர்த்தே பூஜிக்கும்படியாகச் செய்தார்கள். இப்படி ஷண்மத உபாஸனையை நிலை நிறுத்திவிட்டுக் காஞ்சீபுரம் திரும்பி வந்து ஆசார்யாளுக்கு ஸேவை செய்து கொண்டிருந்தார்கள்.

உபாஸனையில் செய்யவேண்டியதையெல்லாம் இவ்வாறு செய்த பிறகு, வாதத்தினால் முடிவாக அத்வைதத்தை ஸ்தாபிக்க நினைத்து ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் செய்தார். முடிந்த முடிவாக எதிர்வாதம் பண்ணவந்த எல்லாரும் அத்வைதம்தான் ஸத்ய தத்வம் என்று ஏற்கும்படிச் செய்தார்.

ஸர்வமுமாக ஆனது ஒன்றுதான். அதனால் அந்த ஒன்றைத் தெரிந்துகொண்ட ஞானி ஸர்வஜ்ஞனாகி விடுகிறான். ஆசார்யாள் இந்த அர்த்தத்தில் ஸர்வஜ்ஞராக இருந்தது மட்டுமில்லை. ஒன்று பலவாக, அனந்தமாக ஆகியிருப்பதில் அவற்றைப் பற்றிய அறிவைத் தரும் அநேக சாஸ்த்ரங்கள் உண்டாயிருக்கின்றன. வாழ்க்கை நடத்துவதற்கும், அறிவு பல விதங்களில் ஸந்தோஷப்படுவதற்கும் உபாயங்களைத் தரும் ஏராளமான சாஸ்த்ரங்களும் கலைகளும் உண்டாயிருக்கின்றன. இவை அத்தனையும் தெரிந்தவனையே லோக ரீதியில் ஸர்வஜ்ஞன் என்பது. ஒவ்வொரு சாஸ்த்ரம், கலை, வித்யை தெரிந்த நிபுணனும் கேள்வி கேட்டு எல்லாருக்கும் பதில் சொல்கிறவர்தான் ஸர்வஜ்ஞ பீடம் ஏற முடியும். 'பரஹ்ம வித்தையோ?'என்று பேச்சு வழக்கிலேகூட எல்லா வித்யைக்கும் மேலே சொல்வதையே கரைத்துக் குடித்தவர் ஆசார்யாள்!ஸர்வஜ்ஞ பீட ஸிம்ஹாஸனத்தில் பல படிகள் இருக்கும். ஒவ்வொன்றும் ஒரு வித்யைக்கு ப்ரதிநிதி;அந்த வித்யை பற்றி கேட்பதற்கெல்லாம் பதில் சொல்லி, 'மாஸ்டர்'பண்ணியதாக நிரூபித்தால்தான் அடுத்த படிக்கு ஏற முடியும்;முடிவாக ஸரஸ்வதியே வந்து கேள்வி கேட்பாள்;அம்பாளுக்கும் பதில் சொன்னால்தான் 'ஸர்வஜ்ஞ பீடாரோஹணம்'என்பதாக அந்த ஆஸனத்தில் உட்கார முடியும்-என்று சொல்வார்கள். ஸர்வமுமான ஒன்றை அறிந்ததால் ஸர்வஜ்ஞரான ஆசார்யாள், அந்த ஸர்வ விஷயங்களைப் பற்றிய வித்யைகளில் ஒன்று விடாமல் அவ்வளவையும் அறிந்த ஸர்வஜ்ஞராகவும் இருந்தவர். ஆகையால் அநாயாஸமாக ஸகல சாஸ்த்ரக்காரர்களுக்கும் பதில் சொல்லி ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் பண்ணி விட்டார்.

ஆசார்யாள் க்ரந்தங்களைப் பார்த்தால் தெரியும், எத்தனை சாஸ்த்ரங்கள், வித்யைகள் அவருக்குக் கரதலப்பாடம் என்று. அவர் செய்ததாக "சங்கராசார்யம்"என்று ஒரு ஜ்யோதிஷ சாஸ்த்ரப் புஸ்தகம் இருப்பதாகத் தெரிகிறது....ஸங்கீத வித்வான் ஒருத்தர். "எங்களிலேயே ரொம்பக் கொஞ்சம் பேருக்குத்தான் ஸங்கீத 'க்ராம'ங்களைப் பற்றியும், இன்னும் கதி-கமகம்-கீதம் முதலான 'டெக்னிகல்'விஷயங்களும் தெரியும். 'ஸௌந்தர்ய லஹரி'யில் 'கலேரேகாஸ் - திஸ்ரோ'ச்லோகத்தில் இதெல்லாம் தெரிந்து வைத்துக்

கொண்டு ஆசார்யாள் சொல்லியிருக்கிறாரே!" என்று ஆச்சர்யப்பட்டுக்கொண்டு சொன்னார்.

'காந்தர்வ வேதம்'என்று ஸ்தானம் பெற்றது ஸங்கீத வித்யை. அம்மாதிரி உசந்த வித்யைகள்தான் என்றில்லாமல் நடைமுறை வாழ்க்கையில் தொழிலாளிகள் கையாளும் சின்னச் சின்ன 'டெக்னிக்கு'கள்கூட அவருக்குத் தெரியும். சாணார்களிடமிருந்து 'தென்ன மர வித்தை'கற்றுக் கொண்டதைச் சொன்னேன். இன்னொரு கதை உண்டு. "எல்லாம் தெரிஞ்வசர்-னா உமக்குச் செருப்புத் தைக்க வருமா?" என்று சக்கிலி கேட்டானாம். ஆசார்யாள் சாந்தமாக ஊசியை எடுத்து மூக்குத் தண்டில் தேய்த்துக்கொண்டு தைக்க ஆரம்பித்து விட்டாராம்! "எங்க ரஹஸ்யத்தை நல்லா தெரிஞ்சுண்டிருக்கியே!"என்று அவன் நெடுஞ்சாண் கிடையாக நமஸ்காரம் பண்ணினானாம்! மூக்கு மேலே ஊறுகிற ஒரு மாதிரியான எண்ணெய்ப் பசை ஊசியில் பட்டால் அது ஸுலபமாகத் துளைத்துக்கொண்டு போகும் என்ற ஸீஸீணீநீளீ தெரிந்து சக்கிலியர்கள் அப்படித்தான் தேய்த்துக் கொள்வார்களாம்.

ராஜா கேட்டுகொண்டதன் பேரில் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் செய்தார். உலகத்து ராஜா மோக்ஷராஜாவுக்குப் பண்ணிய பட்டாபிஷேகம்!

ஷண்மத ஸ்தாபனமும், அதற்கு சிகரமாக அத்வைத ஸ்தாபனமும் செய்ததற்குப் பட்டாபிஷேகம் மாதிரி ஸர்வஜ்ஞ பீடாரோஹணம். வாதச் சண்டையில் இனிமேல் எதிரியில்லை என்று ஜயித்தாகிப் பட்டம் சூட்டப்பட்டதாக அர்த்தம்!ராமாயணத்தில் ராம பட்டாபிஷேகம் மாதிரி இது ஆசார்யாள் சரித்ரத்தில். ஆனால் ராமர் ஆட்சி பட்டாபிஷேகத்திற்கு அப்புறம்தான் ஆரம்பித்தது. ஆசார்யாள் ஞான ராஜாவாக ஆட்சி பண்ணியதற்குப் பூர்த்தியாக இந்த வைபவம் இருந்தது!

அவதரித்ததிலிருந்து ஓயாமல் ஒழியாமல் ஓடிக்கொண்டிருந்தவர் கொஞ்ச காலம் நிம்மதியாகக் காமாக்ஷியை ஆராதித்துக் கொண்டிருந்தார். ஓடாமல் அவர் பண்ணிய ஆராதனையும் மூன்று லோகங்களுக்கும் க்ஷேமம் உண்டாக்கிற்று.

க ம்பாதீர-நிவாஸிநீம் அநுதினம் காமேச்வரீம் அர்ச்சயந் *

ப்ரஹ்மாநந்தம் அவிந்தத த்ரிஜகதாம் க்ஷேமங்கர : சங்கர :**

(கம்பைக் கரையில் குடிகொண்டுள்ள காமேச்வரியை தினந்தோறும் வழிபட்டு மூவுலகுக்கும் க்ஷேமம் புரியும் சங்கரர் ப்ரஹ்மானந்தம் அடைந்தார்) என்று 'சங்கராப்யுதய ம்'சொல்கிறது. நகை நகைகளாக த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரங்கள் பல செய்து அந்தத் தாயாருக்குப் போட்டு அழகு பார்த்தார்.

கைலாஸத்தில் பரமேச்வரனிடமிருந்து பெற்றுக் கொண்டு வந்ததில் யோக லிங்கமாகிய சந்த்ரமௌளீச்வரனை காஞ்சி மடத்தில் ப்ரதிஷ்டை பண்ணி அவர் பூஜித்துக் கொண்டிருந்ததைச் சரித்ரங்கள் சொல்கின்றன. இந்த யோக லிங்கத்தைப் பற்றி ஸ்ரீஹர்ஷரின் "நைஷத"த்தில் கூடச் சொல்லியிருக்கிறது.

முப்பத்திரண்டு வயஸு பூர்த்தியாயிற்று. நந்தன வருஷம் வைசாக சுக்ல பஞ்சமியில் அவதாரம் பண்ணி ரக்தாக்ஷிவருஷம் வைசாக சுக்ல பஞ்சமியோடு 32 முடிந்தது. வ்யாஸருடைய இஷ்டத்துக்காகக் கூட்டிக் கொண்ட பதினாறு வருஷமும் தீர்ந்து விட்டது. தொடர்ந்தாற்போல் வந்த ஏகாதசியோடு சரீர யாத்ரையை முடித்து அகண்ட சைதன்யமாகிவிட வேண்டுமென்று நினைத்தார்.

ஆசார்யாள் விதேஹ கைவல்யம் அடையப் போகிறாரென்றதும் சிஷ்யர்களெல்லாம் வந்து முடிவாக ஒரு உபதேசம் அநுக்ரஹிக்கும்படி ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.

ஆசார்யாள், "வேதோ நித்யம் அதீயதாம்"என்று ஆரம்பித்து, அடியிலிருந்து நுனிவரை செய்யவேண்டிய அத்தனை ஸாதனா க்ரமத்தையும் படிப்படியாக ஐந்தே ச்லோகத்தில் உபதேசித்தார். "ஸோபாந பஞ்சகம்"என்று பேர். 'ஸோபான ம்'என்றால் படி வரிசை. ('உபதேச பஞ்சகம்'என்றும் சொல்லப்படுகிறது.)

"வேத வழிப்படியான கர்மாக்களைப் பண்ணு. காம்யமாகப் பண்ணாமல் ஸ்வாமிக்குப் பூஜையாகப் பலனை த்யாகம் செய்து பண்ணு. இப்படிப் பண்ணிப் பண்ணிப் பாபத்தைப்

போக்கிக் கொள்ளு. பாபம் போகப் போகச் சித்தத்தின் தோஷங்களும் போகும். அப்போது ஸம்ஸார வாழ்க்கையிலுள்ள தோஷங்களை அலசித் தெரிந்து கொள்ளு. நன்றாக சித்த சுத்தி உண்டாகும். அப்புறம் ஞானமார்க்கத்தில் போய் ஆத்மாவைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தாபத்தை வளர்த்துக்கொள்ளு. அது கனிந்ததோ இல்லையோ சட்டென்று வீட்டைவிட்டுப் புறப்பட்டுவிடு".

"பந்து லிங்கத்தை விட்டு விட்டு ஸத்ஸங்கத்தில் சேர்ந்து பகவத் பக்தியை த்ருடமாக ஆக்கிக்கொள்ளு. அப்புறம் ஒரு நல்ல ஞானியிடம் போய், சுச்ரூஷைகள் பண்ணி ப்ரணவோபதேசம், மற்ற மஹா வாக்யோபதேசம் எல்லாம் பெற்றுக் கொள். 'ச்ரவணம்'பண்ணிய உபதேசத்தை 'மனன'மாக மனஸில் நன்றாக அலசிப் பார். குதர்க்க புத்தியோடு பார்க்காமல், வேதத்தில் நம்பிக்கையோடு தர்க்கம் பண்ணிப் பார்.

இப்படி நன்றாக அர்த்தமான பின் அதை உள்ளே ஊறப்போடுவதற்கு 'நிதித்யாஸனம்'(ஆழ்ந்த த்யானம்) ஆரம்பி. 'நாம் ஞான மார்க்கத்தில் போகிறோமாக்கும்'!என்ற கர்வத்தை அப்பப்பவும் அடித்துப் போடு. 'தேஹமே நான்'என்ற நினைப்பை விட்டு 'நான் ப்ரஹ்மம்'என்ற பாவனையை ஆரம்பி. தேஹமும் ப்ராரப்தம் உள்ள மட்டும் இருந்தாக வேண்டுமென்பதால், ஒரு வ்யாதி வந்தால் அதற்கு எப்படி ரொம்பவும் அளவாக மருந்து கொடுப்பார்களோ அப்படிப் பசி வ்யாதிக்கு மருந்தாகவே ஆஹாரம் போடு. ருசியான ஆஹாரத்தைத் தேடாமல் பிக்ஷைஎடுத்து என்ன கிடைத்தாலும் த்ருப்தியாகத் தின்னு, எதையும் பொருட்படுத்தாமல் உதாஸீனமாயிரு. ஜனங்களிடம் பாசமும் வைத்துக் கொள்ளாதே, த்வேஷமும் வைத்துக் கொள்ளாதே!பட்டுக்கொள்ளாமல் இரு. சீதம், உஷ்ணம் முதலானதுகளையும் இப்படியே பொருட்படுத்தாதே. பேச்சைக் குறைத்து மௌனமாக ஏகாந்தத்துக்குப் போ. பராத்பரமான ப்ரஹ்மத்திலே சித்தம் ஸமாதியாவதற்கு முயன்று ஆத்ம பூர்ணத்தை ப்ரத்யக்ஷமாகத் தெரிந்து கொண்டுவிடு. இந்த அநுபவத்தில் ஜகத் முழுக்க அடிபட்டுப் போய், ஸஞ்சிதம் என்ற முன்வினை அழிந்து போகப் பண்ணிக் கொள். ஆகாமி என்ற பின்வினை ஒட்டாமல்

பண்ணிக்கொள். பலன் கொடுக்க ஆரம்பித்துவிட்ட ப்ராரப்த வினை மட்டும் தீர்கிறவரை சரீரத்தில் ஜீவித்து, அதுவும் தீர்ந்தவுடன் பரப்ரஹ்மமாகவே நிலைத்து விடு-பரப்ரஹ்மாத்மநா ஸ்தீயதாம்!"என்று செய்யவேண்டிய எல்லாவற்றையும் ரத்னச் சுருக்கமாக 'ஸோபாந பஞ்சகத்தில் உபதேசித்து எல்லாருக்கும் சாந்தியை உண்டு பண்ணினார்.'

ஆசார்யாளின் சரீர தாரணத்திற்கு ப்ராரப்தம் காரணமில்லை. அது லோக கார்யத்துக்காக வந்த அவதார சரீரம். அந்தக் கார்யம் ஆகிவிட்டது. "பரப்ரஹ்மாத்மநாஸ்தீயதாம்"என்று உபதேசத்தை முடித்த மாதிரி அவரே ஆகி விட்டார்!

'ஆனந்தகிரீய'த்தில் ஆசார்யாள் ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்ம சரீரத்தில் கரைத்து, ஸூக்ஷ்ம சரீரத்தைக் காரண சரீரத்தில் கரைத்து அகண்ட சைதன்யமாகி விட்டார் என்று சொல்லியிருக்கிறது.

---

## **தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

### சரிதம் கேட்ட பலன்

ஒரு புண்ய சரித்ரம் கேட்டால் இன்னின்ன பலன் என்று முடிவில் 'பல ச்ருதி'சொல்வார்கள். ஆசார்ய சரித்ரம் கேட்டதன் பலன் நமக்கே நன்றாகத் தெரியும். எப்பவும் ஏதாவது அழுக்குப் பட்டுக்கொள்கிற மனஸ் அவர் சரித்ர ச்ரவணத்தில் நிர்மலமாக இருந்தது. அவருடைய சாந்தம், ப்ரேமை எல்லாம் நம் மனஸிலேயும் கொஞ்சம் 'டால்'அடித்துக் கொண்டேயிருந்தது.

'சரித்ர பலன்'என்பது சரித்ரம் நமக்கு அளித்த பலன் மட்டுமில்லை;அதைக் கேட்டதற்குப் பலனாக நாம் என்ன பண்ணப்போகிறோம் என்பதுதான்!ஆசார்யாளுக்கு நாம் பண்ணக்கூடிய ப்ரதிபலன் எதுவுமேயில்லை. அவருக்கு எதுவும் வேண்டவும் வேண்டாம். அவர் எதைப் பெரிய ப்ரதிபலனாக நினைப்பாரென்றால், சரித்ரம் கேட்கிற வரையில்

நாம் நிர்மலமாக, சாந்தமாக, ப்ரேமையாக இருந்ததை எக்காலமும் அப்படியே இருக்கும் விதமாக ஸ்திரப்படுத்திக் கொள்வதைத்தான். அப்படி ஆவதற்கு, சாஸ்த்ரோக்தமான கார்யம் எல்லாம் பண்ணவேண்டும். ஈச்வர பக்தி பண்ணவேண்டும். இதனால் மனஸ் நன்றாக சுத்தியாகி ஒன்றிலேயே நிற்க ஆரம்பித்தபின் ஞான விசாரத்திற்குப் போகலாம். இப்போது கர்மா, பக்திகளை விடக்கூடாது. ஆனாலும் அத்வைதத்திற்குத்தானே அவர் முக்யமாக வந்தார்?அதைப் பற்றி பாவனையாகவாவது ஒரு நினைப்பு தினமும் ஐந்து நிமிஷமாவது, இல்லை-இரண்டு நிமிஷமாவது-இருக்கவேண்டும். "நான அழுக்கே இல்லை; அழுகையும் பயமும், கோபமும், ஆசையும் போட்டு அழுக்குப் பண்ணுகிற வஸ்து இல்லை. பரம நிர்மலமாக, ப்ரசாந்தமாக இருக்கிற-எதுவும் படாத, அழுக்குக் கறையே இல்லாத-ஆகாசம் மாதிரி நான். என்னவோ இப்படி ஓயாமல் உழப்பறிந்து கொண்டிருந்தாலும் சும்மாயிருக்கிற பரம ஸுகமே நான்"என்று இரண்டு நிமிஷம் நினைத்துக் கொண்டால் ஆசார்யாள் ரொம்ப ப்ரீதியாகி விடுவார். இந்த பாவனை முற்றி அநுபவமாவதற்கு அநுக்ரஹிப்பார்.

ஆசார்யாள் இன்று இல்லாவிட்டாலும், தமக்குப் பதிலாக என்றைக்கும் இருக்கும்படியாக பக்தியாகவும் ஞானமாகவும் ஏராளமாக எழுதிவைத்துவிட்டுப் போயிருக்கிறார். அவற்றில் கொஞ்சமாவது தினமும் அவச்யம் பாராயணம் பண்ணணும். பண்ணினால் அவரையே நேரில் பார்க்கிற மாதிரி!பக்தியும் வரும், ஞானமும் வரும்...

எத்தனையோ ஆசார்யாள் உண்டு. ஒருத்தர், 'ஸ்வாமிக்கு ஸேவனாக ஸதா கைங்கர்யம் பண்ணிக் கொண்டிரு, அதுதான் மோக்ஷம்' என்பார். இன்னொருத்தர் 'சூன்யமாகப் போய்விடு, அதுதான் மோக்ஷம்'என்பார். இன்னொருத்தர், 'ஸ்வர்கம் என்ற இன்ப லோகத்திற்குப் எல்லா இந்த்ரிய ஸுகங்களும் யதேஷ்டமாக அநுபவித்துக் கொண்டிரு. அதுதான் மோக்ஷம்'என்பார். இன்னொருத்தர், 'உனக்கு ரொம்பப் பாப கர்மா இருக்கிறது. அதனால் உனக்கு மோக்ஷமே கிடையாது;நித்ய நரகம்தான்'என்றுகூடச் சொல்வார்!

ஆசார்யாள்தான், "அப்பா, நீ இப்பவும் எப்பவும் மோக்ஷத்திலேயே இருந்து கொண்டிருப்பவன்தான்!மாயையின் ப்ராந்தியில்தான் அது உனக்குத் தெரியவில்லை. இந்த ப்ராந்திக்கு ஆளாவது மனஸ்தான். ஞானத்தினால் அதை அழித்துப்போட்டு விட்டாயானால் அப்போதே மோக்ஷாநுபவம்தான். மோக்ஷத்திலே வேறே ஒரு ஸ்வாமியிடம் நீ போகவில்லை!நீயேதான் ஸ்வாமி, நீயே தான் பரமாத்மா!" என்றவர்.

பாபிகளுக்கு நித்ய நரகம் என்று அவர் சொல்லாதது மட்டுமில்லை. அவர்களுக்கும் உய்வு உண்டு என்று சொல்வதோடும் நிறுத்திக் கொள்ளவில்லை. இதற்கெல்லாம் மேலே பாபி, பாபி என்கிறவனும் பரமாத்மாவேதான் என்பதாக, பதிதோத்தாரணத்தின் உச்சிக்குப் போனவர் நம் ஆசார்யாள். தம்முடைய அத்வைதத்தால் பதிதனையும் பரப்ரம்மமாக்கிய ஆசார்யாளைப் போலப் பதித பாவனர் யாருமில்லை.

கன்னட பாஷையில் "மங்களம், குரு சங்கரா"என்று பாட்டு இருக்கிறது. அதில் " **பாதகனெனு பரமாத்மனு மாடிதே !**"(பாதகனையும் பரமாத்மாவாக ஆக்கியவர்) என்று வருகிறது!

அப்படிப்பட்ட ஆசார்யாளுக்கு, லோக மங்களகாரகரான சம்-கரருக்கு நாமெல்லாரும் மங்களம், ஜய மங்களம் சொல்லுவோம். "ஜய ஜய சங்கர" என்று மங்கள கோஷம் போடுவோம். அவருடைய சுப நாமத்திற்கே ஜய சப்தம் விசேஷமாக உரித்தானது. ஏன் அப்படிச் சொல்கிறேனென்றால் நம்முடைய தமிழ் தேசத்தின் மஹா பெரியவர் ஒருவர்-'நாவுக்கு அரசர்'என்று ஈச்வரனே பட்டம் கொடுத்த அப்பர் ஸ்வாமிகள்-சொல்லியிருப்பதன் ப்ரமாணத்தில்தான்!அவர் திருவாரூர்-திருத்தாண்டகம் ஒன்றில் என்ன சொல்கிறாரென்றால்: "ஏ நெஞ்சமே! ÞŠð® õ£, âƒA†«ì!c ªè£…êƒÃì G¬ô ªè£œ÷£ñ™ Ü¬ô‰îð® Þ¼‚A«ò!c G¬ôòò£ù vî£ù˜¬îŠ ªðø Ý¬êŠð†ì£™ â¡ù

ð‡íµªñ¡Á ªê£™A«ø¡. «è†´,ªè£œÀ! Fùº‹ M®õîŸ° º‰F võ£I «è£M½,°Š «ð£. ú‰GF¬òŠ ªð¼A ªñ¿°. võ£I,°Š ¹wðý£ó‹ úñ˜Šðí‹ ð‡µ. õ£,¹wðˆî£½‹ v«î£ˆó Üôƒè£ó‹ ð‡µ. õ£ò£óŠ ð£´ ! î¬ôò£ó, °‹H´ ! Ã˜î£´ ! ' êƒèó£ ! üò ! «ð£ŸP ! «ð£ŸP !'â¡Á‹, 'èƒè£üì£îó£!'â¡Á‹, 'ÝFŠ ªð£¼«÷, ÝÏó«ù!'â¡Á‹ ÜôP «è£û‹ «ð£´""â¡Aø£˜. êƒèó ï£ñ£«õ£´î£¡ üò êŠîˆ¬î„ «ê˜ˆ¶„ ªê£™L, Ü¶ «ð£î£ªî¡Á îIN½‹ å¡Á,° Þó‡ì£èŠ " «ð£ŸP "«ð£†®¼,Aø£˜...

மாணிக்கவாசகர்.......அவர் ரொம்ப அத்வைதமாகவே சொன்னவர், மஹா பெரியவர்.....அவரும் அந்தாதி க்ரமத்தில் பாடியிருக்கிற 'திருச்சத'கத்தில் ஒரு அடியை 'சங்கரா போற்றி போற்றி!'என்று முடித்துவிட்டு, அடுத்த அடியும் 'சங்கரா போற்றி!' என்றே ஆரம்பித்திருக்கிறார்...

அப்பர் ஸ்வாமிகள் 'ஜய, போற்றி!' போட்ட பாட்டு சொல்கிறேன்:

G¬ô ªðÁñ£ ªø‡µF«ò™ ªï…«ê, c õ£ !

நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்

புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்

பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்

தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்

' சங்கரா ! சயபோற்றி போற்றி !' யென்றும்,

' அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ !'யென்றும்,

' ஆரூரா !' என்றென்றே அலறா நில்லே !

ஆசார்யாளுக்கு எப்போதும் "ஜய ஜய, ஹர ஹர!"போட்டுக்கொண்டேயிருப்போம்!ஜய சப்தம் நமக்கு ஆத்ம ஜயத்தைக் கொண்டுவந்து கொடுக்கும். ஹர சப்தம் தப்பை தீமையை எல்லாம் போக்கிவிடும். 'சம்கர'சப்தமே 'சம்'மாகிய நித்ய மங்களத்தைச் செய்துவிடும்!ஸ்ரீ சங்கர மூர்த்தி ஸ்மரணமும்தான்!

நாம் எல்லோரும் நன்றாக, ஒற்றுமையாக இருக்க அவருடைய ஸ்மரனையே போதும்!

நம :பார்வதீ பதயே!

ஹர ஹர மஹாதேவ!

---

**தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி** (ஸ்ரீசங்கர சரிதம்)

**மங்களாரத்தி**

**அஞ்ஜனைச் செல்வன்**

**' அஜாட்யம் ' அருளட்டும் !**

ராமாயண பாராயணம் முதலானவற்றில் சொல்கிற ப்ரஸித்தமான ஆஞ்ஜநேய ஸ்தோத்ரங்களில் ஒன்று :

**புத்திர்-பலம் யசோ தைர்யம் நிர்பயத்வம் அரோகதா ***

**அஜாட்யம் வாக்-படுத்வம் ச ஹநூமத் ஸ்மரணாத் பவேத் ****

ஹநுமத் ஸ்மரணையாள் என்னவெல்லாம் கிடைக்கின்றன என்று சொல்கிறது :முதலில் 'புத்தி'-எல்லாவற்றுக்கும் முந்தி வேண்டியது அறிவுதான், அது; 'பலம்'-அப்புறம் தேஹ பலம்; 'யசஸ்-நல்ல கீர்த்தி; 'தைர்யம்'-தைர்யந்தான்!'நிர்பயத்வ ம்'-அஞ்சாமை என்பது...'தைர்யம்'என்றாலே அஞ்சாமையும்தானே அடக்கம்?ஏன், தனியாக வேறே சொல்லணும்?(பதில் :) 'தைர்யம்'என்பதற்கு இன்னும் பல அர்த்தம் உண்டு. மனோத்ருடம், சாந்தகுணம் முதலியவற்றைக்கூட 'தைர்யம்'குறிக்கும். இங்கே அப்படியொன்றாக இருக்கலாம். அல்லது தைர்யம் என்பது அவரை (ஆஞ்ஜநேயரை) ஸ்மரிப்பவனுக்கு ஏற்படும் அஞ்சாமை என்றும், 'நிர்பயத்வம்'என்றால் இவனைக்

கண்டால் மற்ற எவரும் பயப்படாத அபய ஸ்தானமாக இவன் இருப்பது என்றும் வைத்துக்கொள்ளலாம். ஸந்நியாஸி எந்த ப்ராணிக்கும் தன்னால் பயம் உண்டாகப்படாது என்று தீக்ஷைஎடுத்துக்கொள்வது மாதிரி!... 'அரோகதா'என்றால் ஆரோக்யம். அதுவும் ஆஞ்ஜநேய ஸ்வாமியை ஸ்மரிப்பவனுக்கு உண்டாகிறது. அப்புறம், 'அஜாட்யம்' என்று ஒன்று போட்டிருக்கிறது. அதற்கு 'ஜடமாக இல்லாத தன்மை' அர்த்தம். முடிவாக 'வாக்-படுத்வம்', அதாவது வாக்குதன்மை. 'நவ வ்யாகரண பண்டிதன்'என்றும் 'சொல்லின் செல்வன்'என்றும் வால்மீகியும் கம்பரும் சொல்கிறவர் பக்தர்களுக்கும் சொல்வன்மை அருளுகிறார்.

புத்தி, பலம், யசஸ், தைர்யம், அபயத்வம், ஆரோக்யம், வாக்-படுத்வம் என்ற இந்த ஏழும் அவச்யம் வேண்டிய விஷயங்கள்தான் என்று தெரிகிறது. யாரும் சொல்லிக் கொடுக்கணுமென்றில்லாமால் நாமே இதற்கெல்லாம் வேண்டிக்கொண்டுவிடுவோம். ஆனால் எட்டாவதாக இன்னொன்று, 'அஜாட்யம்'என்று சொல்லியிருக்கிறதே... ச்லோகத்தின் வரிசையில் அது எட்டாவது இல்லை;ஏழாவதாக வருகிறது. அப்புறம் 'வாக்படுத்வ'த்தைச் சொல்லி முடித்திருக்கிறது...அந்த அஜாட்யம் என்ன, அதை எதற்கு விசேஷமாக ப்ரார்த்தித்துப் பெறவேண்டுமென்று புரியாமலிருக்கலாம்.

ஆனால் எனக்கென்னவோ லோகம் போகிற போக்கில் இதுதான் அத்யாவச்யத் தேவை, இதற்குத்தான் ரொம்ப ப்ரார்த்தித்துக்கொள்ளவேண்டும், இதைத்தான் ஆஞ்ஜநேய ஸ்வாமி யதேஷ்டமாக வர்ஷிக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

'அஜாட்யம்'-ஜடமாயில்லாமலிருப்பது என்றால் என்ன அர்த்தம்?

புத்தி மந்தித்து, சுருசுருறுப்பில்லாமல், உத்ஸாஹமில்லாமல் சோம்பேறியாக மசமசவென்று இருப்பது. ஜடம் என்றால் உயிரில்லாத ஶீணீமீ மீமீசூஷீ. விணீமீ மீமீசூஷீ ஷ்ஜீவீசூஷீவீமீ என்று இரண்டு சொல்வதில் உயிரில்லாத பூதங்கள், தாதுக்கள் எல்லாம் ஜடம். ஷ்ஜீவீசூஷீவீமீ என்பது உயிர் என்னும் சைதன்யம். உயிராக, அறிவாக உள்ள 'சித்'திலிருந்து வருவது

'சைதன்யம்'. 'ஜட'த்திலிருந்து வருவது 'ஜாட்யம்'. மநுஷ்ய ஜீவனை 'சித்-ஜட க்ரந்தி'யால் உண்டானதாகச் சொல்வார்கள்.

உயிரில்லாவிட்டால் உடம்பு வெறும் பௌதிக தாதுக்களாலான ஜடம்தானே? இதை உயிரோடு முடிச்சுப்போட்டு ஜீவாத்மா என்று வைத்திருப்பதுதான் சித்-ஜட க்ரந்தி. ஞானிகள் என்ன சொல்கிறார்கள் என்றால் ஜட சரீர ப்ரஜ்ஞையை ஒழித்துக் கட்டிவிட்டு 'சின்மய'மாகவே போய்விடு என்கிறார்கள்.

அது நடக்கிறபோது நடக்கட்டும்!இப்போது இந்த ஜட சரீரத்திலேயே சித் விலாஸத்தினால் உத்ஸாஹத்தோடு ஸத் கார்யங்களைப் பண்ணிக்கொண்டிருப்பதற்கு வழியைப் பார்ப்போம்!ஜடம் மாதிரி பீஷூறீறீஆக, மசமசவென்று உட்கார்ந்துகொண்டிருக்காமல், சுருசுருப்போடு, விழிப்போடு இருக்கக் கற்றுக்கொள்வோம். இப்போது 'ஜாட்யம்'(ஜடத்தன் மை)தான் வந்து நம்மை நன்றாகக் கவ்விப் பிடித்துக் கொண்டிருக்கிறது. வேண்டாத விஷயங்களில் மஹா உத்ஸாஹத்தோடு ஈடுபட்டு ஈடுபட்டு, வெறும் அரட்டை, கார்யத்தில் லவலேசம் ப்ரயோஜனமில்லாத பாலிடிக்ஸ் டிஸ்கஷன், காப்பி, ஸினிமா, நாவல், கீழ்த்தரமான ரிக்ரியேஷன் என்று எனெர்ஜியையெல்லாம் வேஸ்ட் செய்துவிடுவதால், எது அவச்யமோ அதைச் செய்வதற்குச் சூடு பிறக்காமல் பீமீஜ்ஷீமீஉமீபீ - ஆக ஆகியிருக்கிறோம்! வீண் வ்யாபாரங்களில் சக்தியைச் செலவழித்துவிட்டு நல்லது செய்யணும் என்னும்போது தூங்கிவழிந்து கொண்டிருக்கிறோம்!ஜடமாக இருக்கிறோம்!

ஸயன்ஸ் என்றும், நவீன வசதி வாழ்க்கை என்றும் சொல்லிக்கொண்டு பாதி;சீர்திருத்தம், பகுத்தறிவு, புரட்சி என்று சொல்லிக்கொண்டு பாதி-இப்படிப் புறப்பட்டிருப்பவர்கள் மட்டும் கொஞ்சங்கூட ஜாட்யம் இல்லாமல் இஷ்டப்படிப் பண்ணிக்கொண்டிருப்பதைப் பார்த்தும்-தர்மம் என்ன கொள்ளை போகட்டும்; சாஸ்த்ரம்எப்டிப் பாழாகப் போகட்டும்; மதத்துக்கு, ஹிந்து கலாசாரத்துக்கு என்ன ஹானி வரட்டும், அத்தனையையும் பார்த்துக்கொண்டு பேடிகள் மாதிரி உட்கார்ந் திருக்கிறோம்!மஹாவீரனான அர்ஜுனன் யுத்த பூமியில் மனஸூ தளர்ந்து உட்கார்ந்திருந்போது, பகவான் அவனிடம்,

"அடேய்!பேடி மாதிரி இருக்காதேடா - க்லைப்யம் மா ஸ்ம கம : பார்த்த !"என்று கோஷம் பண்ணிக் கிளப்பிவிட்டார். இன்றைக்கு நமக்கெல்லாம் இந்த அநுக்ரஹத்தை ஆஞ்ஜநேய ஸ்வாமி நிரம்பப் பண்ண வேண்டும்.

'சதஷ்ஷஷ்டி கலா'என்று அறுபத்து நாலு கலைக்கான சாஸ்த்ரங்கள் நம் தேசத்தில் இருந்ததே!இஞ்ஜினீயரிங், டெக்னாலஜி எல்லாவற்றிலும் வல்லுநர்களாக நம்முடைய பூர்விகர்கள் எத்தனையோ ஸாதித்துவிட்டுப் போயிருப்பதற்கு ஆதார சாஸ்த்ரங்கள் இருந்ததே!அவற்றை ப்ராக்டிஸ் செய்பவர்கள்தான் இப்போதில்லை என்றால், அந்த சாஸ்த்ர புஸ்தகங்களைக்கூட அல்லவா காணோம்? இந்த மஹத்தான நஷ்டத்துக்கு நம்முடைய ஜாட்யம்தானே காரணமாயிருந்திருக்கிறது?இன்னும் பாக்கியிருப்பதையெல்லாமும் இப்படியே தூங்கி வழிந்துகொண்டு வாரிக் கொடுக்காமலிருக்க அவர் நமக்கு அஜாட்ய அநுக்ரஹத்தைத்தான் விசேஷமாகச் செய்ய வேண்டும்.

'வாக்படுத்வ'த்துக்கு முந்தி 'அஜாட்ய'த்தைச் சொல்லியிருக்கிறது. இன்றைக்கு நாமெல்லாம் 'வாக்'கிலே மஹா 'படு'க்கள்!வாய்ச் சொல் வீரர்கள்!கார்யத்தில் ஜாட்ய மூர்த்திகள்!ஆஞ்ஜநேய ஸ்வாமி நம்முடைய வாக்படுத்துவத்தைக் கொஞ்சம் குறைத்து அதையும் சேர்த்துப் போட்டுக்கொண்டு அஜாட்ய அநுக்ரஹம் பண்ணி நம்மைக் கார்யசூரர்களாக்கினால் தேவலை என்று தோன்றுகிறது!

அவர் அப்படியிருந்தவர்தான். ச்லோகத்தில் சொல்லியுள்ள புத்தி, பலம் எல்லாவற்றுக்குமே அவர் ஒரு ரூபம். எப்போதும் உத்ஸாஹமாக, சுரு சுரு விரு விரு என்று அஜாட்ய ஸ்வரூபமாக இருந்தவர் அவர், சில்ப-சித்ரங்களில் அப்படித்தான் இருக்கிறார்-மலையையே அநாயாஸமாகக் கையில் தூக்கிக்கொண்டு ஆகாசத்திலே பறந்து கொண்டு இருப்பார்!கொஞ்சம்கூடக் களைப்பு, சோம்பலே இல்லாமல் தர்மத்துக்காக ஸதா உழைத்தவர். முக்யமாக எத்தனை எதிர்ப்பு, விக்னம் வந்தாலும் அவர் கொஞ்சங் கூடத் தளராமலிருந்து எடுத்த கார்யத்தை வெற்றிகரமாக ஸாதித்ததைச் சொல்லவேண்டும்.

நாமா, நல்லதற்குப் புறப்படுவதே அபூர்வம்! அப்படி புறப்பட்டாலும் ஏதாவது கொஞ்சம் தடை, ஆப்போஸிஷன் வந்துவிட்டால் தளர்ந்து போய்விடுகிறோம். ஆனாலும் வாக்படுக்களாக இருப்பதால் அப்படிச் சொல்லிக் கொள்ளாமல், "இது கலி காலம். கெட்டதற்குத்தான் ஆதிக்யம் என்ற சாஸ்த்ரத்திலேயே இருக்கிறது. அதனால் நாம் பாட்டுக்கு ஒதுங்கியிருப்போம்!"என்று கதைப்போம்! இன்னும் மேலே போய், 'அத்வைதா', 'மாயா டாக்ட்ரின்'என்று முடித்துவிடுவோம்!ஆனால் அதற்காகவே அவதாரம் பண்ணி, புஸ்தகம் புஸ்தகமாக எழுதி அதை ஸ்தாபனம் பண்ணிய ஆசார்யாள் எல்லாருக்கும் அதைச் சொல்லவில்லை;அவரும் சும்மா இருக்கவில்லை!கார்ய சூரர்கள் என்று உச்சியில் வைத்துக் சொல்லக்கூடியவர்கள் இரண்டு பேர் என்றால் அதில் ஒன்று ஆஞ்ஜநேயர், மற்றது ஆசார்யாள்தான்!சும்மாயிருப்பதுதான் ரீக்ஷீணீரீ என்றாலும் அதில் நாமே போய் உட்காரமுடியாது. நாம் ஸரியாக அடிப்படியிலிருந்து ஆரம்பித்து மேலேறிப் போனால் அதுவே ஒரு கட்டத்தில் நம்மைச் சும்மா உட்கார வைப்பதுதான் நிஜ சும்மா!இப்போது நாம் சொல்லும் சும்மாவெல்லாம் (சிரித்து) 'சும்மாக்கோஸரம்'சொல்லும் சும்மாதான்!அது மனஸ் சும்மாயிருப்பது;இது உடம்பு மட்டும் சும்மாயிருப்பது. அதனால் மனஸ் இன்னும் ஜாஸ்தியாய் க்ருத்ரிம கல்பனைகள் பண்ணுவது;இல்லாவிட்டால் ஜடம் மாதிரி மரத்துப் போய்க் களைத்துத் தூங்கி வழிவது. மநுஷ்ய ஜன்மா எடுத்தவனுக்கு இரண்டுமே ரொம்பக் குறைவு. ரொம்ப கௌரவ ஹானி.

பாராயணம், ஜபம், உபவாஸம், ஆலய தர்சனம், பஜனை என்று எத்தனை பேர் ப்ரமாதமாக ஆரம்பித்து நாள் போகப் போகப் குறைத்துக்கொண்டே வந்திருக்கிறோம்? முத்ராதிகாரிகள் திட்டம் என்று ஜகத்தையே புரட்டிவிடுகிற மாதிரி நான் ஒன்று ஆரம்பித்ததில் நடந்து வந்த எத்தனை ஸத்கார்யங்கள், வாரவழிபாடு முதலியவை இன்றைக்குப் போன இடம் தெரியாமல் போயிருக்கிறது?சீட்டு, கூத்து என்று ஆரம்பித்த எந்த க்ளப்பாவது க்ஷீணித்ததாகக் கேட்கிறோமா?அதிலே அஜாட்யம் இருக்கிறது!

ஆஞ்ஜநேய ஸ்வாமியின் அஜாட்யம், அவருக்கு வந்த

விக்னம்-இந்த இரண்டு மாதிரியுமே எங்கேயும் பார்க்க முடியாது!அத்தனை விக்னத்தையும் தவிடு பொடியாக்கிய அஜாட்யம் அவருடையது!அவதாரம் பண்ணியவுனேயே, (பரிவோடு) பச்சைக் குழந்தை...விர்ர்ர்ரென்று ஒரே வேகமாக, உதய ஸூர்யனை சிவப்புப் பழமென்று நினைத்துக் கொண்டு ஸூர்ய மண்டலத்திற்கே தாவிவிட்டது!அப்பவே எதிர்ப்பும் வந்துவிட்டது. இந்த்ரன் வஜ்ராயுதத்தால் அடித்துத் தள்ளினான். தாடையே பிளந்து போயிற்று. 'ஹநு'என்றால் தாடை. தாடை போன விசேஷத்தால் ஹநுமான் ஆனார். அதற்காகச் சளைத்துவிடவில்லை. ஸூர்யனிடமே போய் நவ வ்யாகரணங்களையும் கற்றுக் கொண்டார். உதயகிரியிலிருந்து அஸ்தகிரி வரை சளைக்காமல், களைக்காமல் ஸூர்யனுக்கு எதிர்முகமாக ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டே கற்றுக்கொண்டார்.

குழந்தையாகவும் ஒரே உத்ஸாஹ விளையாட்டுப் பண்ணினார். துருதுருவென்று ரிஷிகளின் ஆச்ரமங்களுக்குள்ளே யெல்லாம் புகுந்து ஒரே விஷமமாகப் பண்ணினார். அவர்கள் கோபித்துக்கொண்டு, "உன் திவ்ய சக்தி உனக்கே மறந்து போய் ராமாவதார காலத்தில் அவருக்குக் கார்யம் பண்ணும்படி ஏற்படும்போதுதான் ஞாபகம் வரும்" என்று சபித்துவிட்டார்கள். அதற்காகவும் அவர் ஒன்றும் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டுவிடவில்லை. ஒரு வானரம் எத்தனை தொண்டு பண்ணமுடியுமோ அத்தனையும் ஸுக்ரீவனுக்குப் பண்ணிக் கொண்டிருந்தார். அங்கேயும் எதிர்ப்பு வந்தது. மஹாவீரனான வாலி ஸுக்ரீவனிடம் சண்டைக்கு வந்தான். அப்போதும் அவர் தளரவில்லை. ஒரு சாபம் காரணமாக வாலி வரமுடியாத ஒரு இடத்துக்கு ஸுக்ரீவனை அழைத்துக் கொண்டுபோய் ரக்ஷித்து வைத்துக்கொண்டு தொண்டு செய்து வந்தார். அப்புறம் ஸாக்ஷாத் ராமசந்த்ர மூர்த்தி வந்த பிறகு அவருக்கு திவ்ய சக்தியும் திரும்ப வந்தது. அஸாத்யமான கார்யமெல்லாம் பண்ணினார்-ஸமுத்ரத்தையே தாண்டுவந்து, மலையையே பறித்து எடுத்துக்கொண்டு வருவது, மஹா பலிஷ்டரான ராக்ஷஸர்களை ஹதாஹதம் பண்ணுவது என்றிப்படி.

ஸமுத்ரம் தாண்டிப் போகும்போதுதான் எத்தனை விக்னம்? ஸுரஸை, ஸிம்ஹிகை, ஸங்கிணி என்று குறுக்கே எத்தனை

ராக்ஷஸிகள்? ஸுரஸை இவரை முழுங்கப் பெரிசாக வாயைத் திறந்தால், இவர் கொசு மாத்ரமாகி வாய்க்குள் புகுந்து காதால் வெளியே வந்துவிடுகிறார்!அவளை அவர் சண்டை போட்டு வதைக்கமுடியும். "ஆனாலும் அத்தனை நாழி ஸ்வாமி கார்யம் 'டிலே'ஆகலாமா?" என்று கார்யத்தில் அத்தனை கண்ணாக-அதுவும் அஜாட்யந்தான்-இப்படி தந்த்ரமாகப் பண்ணிவிட்டார். அதற்கு எவ்வளவோ ஜீக்ஷீமீவமீஸீநீமீ ஷீயீ னீவீஸீபீ வேண்டும்-அறிவு பளிச்சென்று விழிப்பு நிலையில் இருக்கும் அஜாட்யம்!

கார்யத்திலேயே கண் என்பதால் களைப்பு, சலிப்பு, ஜாட்யம் கொஞ்சங்கூடத் தெரியாதவர். ஸமுத்ர மத்தியிலிருந்து மைநாகமலை எழுந்து, ஆகாச மார்க்கமாக வந்து கொண்டிருக்கும் அவரிடம் "கொஞ்சம் எங்கிட்டே தங்கி ரெஸ்ட் எடுத்துக் கொண்டுவிட்டு அப்புறம் போங்கோ!" என்றது. அவரோ, "முதலில் கார்யம் முடியட்டும். திரும்பி வரும்போது வேணுமானால் பார்த்துக்கலாம்"என்று அதகற்கு ஒரு ஷொட்டு கொடுத்துவிட்டு மேலே போய்விட்டார்-ராமஸரம் மாதிரியே வைத்த குறி தப்பாமல்!

அப்புறம் எத்தனை ராக்ஷஸர்கள் அவரை என்னப் பாடுபடுத்தினார்கள்?வாலிலேயே நெருப்பை வைத்து ஹிம்ஸித்தும்கூடக் கொஞ்சமாவது மனஸ் தளர்ந்தாரா?எடுத்த கார்யத்தை விட்டாரா?

இப்படியே கதை முழுக்க எதிர்ப்புக்கு மேலே எதிர்ப்பு, அப்படியும் சோர்வில்லாத கார்யம் என்றே போகிறது.

ரொம்ப உசத்தி என்னவென்றால், இத்தனை கார்யம், இத்தனை புத்தி, பலம், தைர்யம், அஜாட்யம் ஆகியவற்றில் ஒரு சின்னத் துளியாவது ஸ்வார்த்தமாக (அவருடைய ஸொந்த நலனுக்காக) ப்ரயோஜனம் பண்ணிக் கொண்டாரா?ஸொந்த வாழ்க்கை என்றே ஒன்று இல்லாதவர்! ஷிமீரீயீரீமீஉஉ ஷிமீக்ஷீஸ்வீநீமீ, ஷிமீரீயீரீமீஉஉ ஷிமீக்ஷீஸ்வீநீமீ என்று அடிக்கடி கேள்விப் படுகிறோமே, வாஸ்தவத்தில் அதற்கு உருவமாயிருந்தவர் ஆஞ்ஜநேய ஸ்வாமி!பெண்டாட்டியா, பிள்ளையா, குட்டியா என்ன இருந்தது அவருக்கு? முதலில் கொஞ்ச நாள் ஸுக்ரீவனுக்கு, அப்புறம் ஸ்ரீராமசந்த்ர மூர்த்திக்கு என்றே தன் வாழ்க்கையை அர்ப்பணம் பண்ணினார். அந்த ஸ்வயநலமின்மை, பக்தி,

பணிவு ஆகியவற்றோடு சேர்ந்ததாலேயே அவருடைய புத்தி, பலம் இத்யாதி எல்லாம் அப்படிப் பூர்ணமாக சோபித்தது.

"புத்திர்-பலம்-யசஸ்" என்று மூன்றாவதாக வருகிறது. அந்த யசஸ் (புகழ்) ஸ்வயநலமில்லாத பக்திப்பணி என்பதாலேயே ஏற்பட்டது.

யசஸ் போக பாக்கி எல்லாம்-புத்தி, பலம், தைர்யம், நிர்பயத்வம், ஆரோக்யம், அஜாட்யம் கூடத்தான், அப்புறம் வரும் வாக்படுத்தவம் ஆகிய எல்லாமும்-ராவணன், ஹிட்லர் போன்றவர்களுக்குக்கூடத்தான் இருந்தது. ஆனால் அவர்களுக்கு யசஸ் உண்டா?பேரைக் கேட்டாலே திட்டத்தானே செய்கிறோம்?ஆகையால் என்ன தெரிகிறதென்றால் புத்தி, பலம் ஆகியவற்றால் ஒருத்தருக்கு யசஸூம் வரவேண்டுமானால் அவர் அவை எல்லாவற்றையும் பரநலனாக ப்ரயோஜனப்படுத்தினால்தான் முடியும்.

அவரையும் நினைத்து நம்மையும் நினைத்தால்........

(சட்டென்று மிகுந்த கருணையுடன்) ஒருத்தரும் வருத்தமே படவேண்டாம்! 'தூங்குமூஞ்சி, அது இதுன்னு பெரியவா கோவமா திட்டறாளே!'என்று யாரும் துக்கப்படவேண்டாம் கோபமே இல்லை!ஆஞ்ஜநேயரைப் பற்றிச் சொல்லும்போது கோபமே வரப்படாது. அவர் கோபமே இல்லாதவர்.....ராமர் அவருக்கு ஞானோபதேசம் பண்ணினாரென்று இருக்கிறது. ஸீதையும் அவருக்கு உபதேசம் பண்ணியிருக்கிறாள்.

ராமர் ஞானம் உபதேசித்தார். ஸீதை என்ன உபதேசித்தாள்?ஸீதையென்றால் யார்?ஸாக்ஷாத் தாயார். அதனால் ப்ரேமையை உபதேசித்தாள்!ராவண வதமானதும், ஸீதையிடம் ஸந்தோஷ ஸமாசாரம் தெரிவிப்பதற்காக ஆஞ்ஜநேயர் அசோக வனத்துக்குக் குதித்துக்கொண்டு வந்தார். ராக்ஷஸிகளைப் பார்த்ததும், 'இத்தனை நாளாகத் தாயாரை என்ன பாடுபடுத்திக் கொண்டிரு ந்தார்கள்?இன்றைக்குத் தொலைத்துவிடலாம் அத்தனை பேரையும்'என்று புறப்பட்டார். அப்போது ஸீதை அந்த ராக்ஷஸிகளுக்கும் தாயாராக உபதேசம் பண்ணினாள். "அப்பா, உசந்தவர்களின் லக்ஷணம் கருணைதான்.

லோகத்திலே தப்புப் பண்ணாதவர்கள் யார்? இவர்களைத் தொடாதே!இவர்கள் என்ன பண்ணுவார்கள்?ராஜ ஸேவகிகள் ராஜாக்ஞைப்படிதானே பண்ணணும்?அதனால் ராவணன் சொற்படி ஹிம்ஸித்தார்கள். இப்போது விபீஷணன் ராஜாவானால் அவன் சொற்படி நமஸ்காரம் பண்ணுவார்கள்"என்றாள்.

அன்றிலிருந்து ஆஞ்ஜநேய ஸ்வாமி ஒரே கருணையாக, அன்பாக ஆகிவிட்டார். அதற்காக, தப்பு நடந்தால் சும்மாயிருப்பாரென்று அர்த்தமில்லை, அத்யாவச்யத்திலே தண்டிக்கவும் தண்டிப்பார், 'கோவிச்சுக்கவும் கோவிச்சுப்பார்'. இப்படி வெளியிலே இருந்தாலும் உள்ளே யாரானாலும் அவர்களிடம் பூர்ணமான அன்பு, 'இவா நல்லவாள ாகணுமே!'என்ற கவலைதான் இருக்கும்.

ஆகையினால் நான் நிஜமாகவே உங்களைக் கோபித்துக் கொள்கிறேனென்றால் எனக்கு அவரைப் பற்றி லெகசர் அடிக்கவே அர்ஹதை (அருகதை) இல்லை என்று அர்த்தம். இப்படிச் சொன்னால்தான் தூண்டிவிடும் என்பதற்காகவே... 'ஷாக் ட்ரீட்மென்ட்'என்கிற மாதிரி...... கொஞ்சம் 'புஸ்', 'புஸ்'என்கிறது!

கோபமே இல்லை!எங்கேயும் யாருக்கும் யாரிடமும் கோபம் வேண்டாம். சாந்தி, அன்புதான் ஸமஸ்த ப்ராணிகளிடமும் இருக்கணும். அதுதான் அவருக்குப் பிடிக்கும். ஆனால் அப்படிச் சொல்லிக் கொண்டு நல்லதெல்லாம் அழிந்து போவதைப் பார்த்துக்கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தால் அவர் ஸரியென்று சொல்ல மாட்டார். மனஸில் எவரிடமும் அன்பு குறையாமலே, கார்யத்தில் பண்ண வேண்டியதை முழு விழிப்போடு சுருசுரு என்று பண்ணிக் கொண்டிரு ந்தால்தான் ஸந்தோஷப்பட்டு எல்லா அநுக்ரஹமும் பண்ணுவார்.

முதலில் அவர்தான் இந்த அநுக்ரஹமே...நம்மைச் சுறுசுறுப்பாக்குகிற அநுக்ரஹமே...அஜாட்ய அநுக்ரஹமே பண்ணவேண்டும். அதற்கு எல்லாரும் ப்ரார்த்தனை செய்து கொள்வோம்!

மங்களம்

ஜெய் சீதாராம்

பதினாறும் பெற்று பெருவாழ்வு

எல்லா இடையூறும் நீங்க உபாயம்.

கல்வி ஆரம்பிக்கிற ஸமயத்தில், கல்யாண காலத்தில், ஒரு இடத்துக்குப் புதிதாக போகிறபோது, ஒரு இடத்திலிருந்து புறப்படும்போது, யுத்த ஸமயத்தில், இப்படி ஒவ்வொன்றாக சொல்லிக் கொண்டு போவானேன்?"ஸகல காரியத்திலும்", என்று சொல்லி விடலாம். ஸகல காரியத்திலும் எவனோ ஒருத்தனுக்கு இடைஞ்சல் என்பதே ஏற்படுவது இல்லை.

வித்யாரம்பே விவாஹே ச நிர்கமே ததாI

ஸங்க்ராமே ஸர்வ கார்யேஷு விக்நஸ்-தஸ்ய ந ஜாயதே II

"வித்யாரம்பே"- படிப்பு ஆரம்பிக்கும் போது, அதிலிருந்து ப்ரஹ்மச்சர்ய ஆச்ரமம். அந்த ஆச்ரமம் வஹிக்கிற காலத்தில் இடைஞ்சல் வராது.

"விவாஹே ச"- கல்யாணத்தின் போதும். அதாவது க்ருஹஸ்தாச்ரமத்திலும் இடையூறு வராது.

ரொம்ப ஸ்வல்பப் பேரே ஸந்நியாஸாச்சரமம் வாங்கிக் கொள்வதால், ப்ரஹ்மச்சர்ய - க்ருஹாஸ்தாச்ரமங்களைச் சொன்னதிலேயே ஒரு மநுஷ்யனின் வாழ்நாள் முழுவதையும் சொன்னதாக ஆகிவிட்டது. வாழ்க்கை பூரா அவனுக்கு இடையூறு இல்லை.

வாழ்க்கை என்கிறது என்ன?பல தினுஸான சலனங்கள் தான்;இப்போது இருப்பது நாளைக்கு இல்லை என்று மனஸாலேயும், வாக்காலேயும், சரீரத்தாலேயும், புத்தியாலேயும், பணத்தாலேயும் பல தினுஸான காரியங்களைப் பண்ணி மாறிக் கொண்டே இருப்பதுதான். ஆலோசித்துப் பார்த்தால் தெரியும். Lifeஎன்பது Movementதான் என்று. இதிலே சரீரத்தினால் தெரியும் மூவ்மென்டுகள்தான் பளிச்சென்று தெரிவது. அதிலேயும் சரீரம் முழுவதையும், ஒரிடத்திலிருந்து இன்னொன்றுக்கு

மாற்றிப் பிரயாணம் பண்ணுகின்றோமே, அதுதான் முக்கியமான 'மூவ்மென்டாக'தெரிகிறது. அதைத்தான் 'ப்ரவேஸ ரிர்கமே தாதா'என்று சொல்லியிருக்கிறது. 'ப்ரவேஸம்'ஒரு இடத்துக்குள்ளே போவது. 'நிர்கமம்'ஒரிடத்திலிருந்து புறப்பட்டு வெளியில் போவது.

இப்படியே எந்த விதமான மூமென்டாலும் ஏதோ ஒரு விஷயத்துக்குள் ப்ரவேச்சிக்கிறோம்;ஏதோ ஒன்றை விட்டுவிட்டுப் புறப்படவும் செய்கிறம். இவை எல்லாவற்றிலும் ஒருத்தனுக்கு இடைஞ்சல் வராது. வாழ்க்கையைச் சலனம் என்று சொன்னேன். இன்னொரு 'டெஃபனிஷன்' (இலக்கணமும்) சொல்லுகிறதுண்டு. பத்திரிக்கைகளில் அந்த 'டெஃபனிஷன்' தான் ரொம்பவும் அடிபடுகிறது. வாழ்க்கைப் போராட்டம், "வாழ்க்கைப் போராட்டம்"என்றே நிறையக் கேட்கிறோம். டார்வின் தியரி, ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் தியரி எல்லாமே போராடிப் போராடித்தான் ஜீவ குலம் உருவாயிருக்கிறது என்றே சொல்கின்றன.

யோசனை பண்ணிப் பார்த்தால் சலனமும், போராட்டமும் ஒன்றுக்கொன்று 'கனெக்ஷன்'உள்ளவை என்று தெரியும். யாரோ ஒரு ஜீவனுக்கு மட்டும் சலனம். மற்றதெல்லாம் சலனமில்லாமல் இருக்கிறது என்றால்தான் இந்த ஒருத்தன் தன்

இஷ்டப்படி ஸுமுகமாக ஸஞ்சாரம் பண்ண முடியும். (எல்லா தினுஸு ஸஞ்சாரங்களையும்தான் சொல்கிறேன்) ஆனால் வாஸ்தவத்தில் அப்படியா இருக்கிறது?அத்தனை ஜீவராசிகளுக்கும்தான் ஒயாத சலனமாக இருக்கிறது. அசேதன வஸ்துகளிலுங்கூட ஒரே சலனம்!ஒரு அணுவுக்குள்ளே எலெக்ட்ரிஸிடியின் வேகத்தோடு ஸதா ஸஞ்சாரம் நடந்துகொண்டே இருக்கிறது. இப்படிப் பல உயிர்களும், ஜட வஸ்துக்களும் ஒரே ஸமயத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தால் அவற்றுக்கிடையே மோதல்களும் உண்டானபடிதானே இருக்கும்?போராட்டம் என்பது மோதல்தானே?

இன்னும் அடிப்படைக்குப் போனால் ஒரு ஜீவனோ, ஜடமோ சலனம் அடைகிறதென்பதே போராடுவதுதான். சாந்தம் வந்து விட்டால் நிச்சலனமாக அடங்கிப் போய்விடுவோம் என்று நன்றாகத் தெரிகிறதோல்லியோ?ஆகையால் சலனம் இருந்தால் சாந்தி இல்லை என்று ஆகிறது. சாந்தி இல்லாமலிருப்பதுதான் போராட்டம். War and Peaceஎன்று எதிர்ப் பதங்களைச் சொல்கிறோமல்லவா?

வாழ்க்கையே போராட்டம் என்றாலும், குறிப்பாக அப்படித் தெரிவது ஒருத்தரோடொருத்தர் போட்டுக் கொள்ளும் சண்டைதான். அதைத்தான் "ஸங்க்ராமே"என்று சொல்லியிருக்கிறது. "úƒ‚ó£ñ‹"â¡ø£™ »ˆî‹.

யுத்தத்தில் ஒருத்தனுக்கு இடையூறு வராது. அவன் ஜயசாலியாக விளங்குவான்.

நீட்டி அர்த்தம் பண்ணிக் கொண்டால், வாழ்க்கையின் அநேக ப்ரவேச - நிர்கமங்களான போக்குவரத்துக்களிலேயும், ஸகல விதமான போராட்டங்களிலேயும் அவன் இடையூறு எதுவுமில்லாமல் வெற்றியோடு விளங்குவான்.

அர்த்தத்தை இன்னமும் கொஞ்சம் நீட்டி, ஒரு சலனமும் போராட்டமும் இல்லாத பூரண ஸ்திதியான ஆத்ம ஸமாதி நிலையை அடைவான் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். 'வித்யாரம்ப'த்தால் ப்ரஹ்மச்சர்யத்தையும், 'விவாஹ'த்தால் க்ருஹாஸ்தாச்ரமத்தையும் சொன்ன மாதிரி, அப்புறம் ஸமாதி நிலையில் கொண்டு சேர்க்கும் ஸந்நியாஸாச்ரமத்தைக் குறிப்பிடுகிற மாதிரியும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

இதிலே - அதிலே இந்த ஆச்ரமத்திலே - அந்த ஆச்ரமத்திலே என்று எதற்காகப் பலது (பலவற்றைச்) சொல்லனும்.?சுருக்கமாக அனைத்தும் அடக்கி எல்லாக் காரியத்திலேயும் - "ஸர்வ கார்யேஷு"அவனுக்கு இடைஞ்சல் இல்லை. அதாவது வெற்றிதான் என்று (ச்லோகத்தை) முடித்திருக்கிறது.

ஸர்வ கார்யேஷு விக்நஸ்தஸ்ய ந ஜாயதே

"தஸ்ய"அவனுக்கு, 'ஸர்வ ககார்யேஷு'- ஸகல காரியங்களிலேயும் "விக்ன"- இடைஞ்சல். "ந ஜாயிதே"உண்டாவதில்லை.

நமக்கு ஒன்றைப் பலசு சொல்லி விஸ்தாரம் பண்ணிக் காட்டினால்தான் மனஸில் பதிகிறது. "எல்லாவற்றிலும் இடைஞ்சல் உண்டாகாது"என்று சொன்னால் அவ்வளவு அழுத்தமாகத் தெரியாது. இதில் உண்டாகாது அதில் உண்டாகாது"என்று அநேகம்

சொல்லி அப்புறம் எதிலுமே உண்டாகாது என்றால்தான் மனஸில் அழுந்தப் படியும் என்றே அப்படிச் சொன்னது.

ஸர்வ கார்யேஷ விக்நஸ் - தஸ்ய ந ஜாயதே ஸகல கார்யங்களிலும் அவனுக்கு விக்னம் என்பது உண்டாவதில்லை.

அவனுக்கு எனறால் எவனுக்கு?

பதில்: முந்தைய அடியில் இருக்கிறது. அந்த அடி இப்படிச் சொல்கிறது.

ஷோடசைதாநி நாமாநி ய:படேச் - ச்ருணுயாதபி

ஷோடச ஏதாநி நாமாதி ய:படேத் ச்ருணுயாத் அபி.

'ஏதாநி"- இந்த அதாவது இதற்கு முன்னே சொன்ன;"ஷோடச நாமாதி"- பதினாறு பெயர்களை;"ய";- எவன்;"படேத்"- படிக்கிறானோ. "அபி"என்றால் இங்கே "அல்லது"என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும் - அல்லது. "ச்ருணுயாத்"- கேட்கிறானோ.....

இந்த பதினாறு பேரை எவனொருத்தன் படிக்கிறானோ, அல்லது இன்னொருத்தர் படித்துக் கேட்கிறானோ அவனுக்குத்தான் ஸர்வ காரியங்களிலும் விக்னம் ஏற்படுவதில்லை. - "விக்நஸ் - தஸ்ய ந ஜாயதே".

"படிப்பவர், கேட்பவர்"என்பது பொதுவாக வழங்குகிற சொற்றொடர். பெரிய பெரிய புராணம், உபாக்யானம் முதலியவற்றை ஒரு உபந்நியாஸ கர்த்தா படித்து அர்த்தம் சொல்வார். மற்றவர்கள் கேட்பார்கள். அதை வைத்தே

படிப்பவர் - கேட்பவர், 'வக்தா - ச்ரோதா'என்று வசனம் வந்து விட்டது.

ஆனால் இங்கே ஸப்ஜெக்ட் பெரிசான புராணக் கதை எதுவுமில்லை. பதினாறே பேர்கள்தான் ஸப்ஜெக்ட். ஆகையினால் அதைப் படிப்பது, கேட்பது என்று பொது வசனத்தை வைத்துச் சொன்னாலும் உள்ளே தாத்பரியம் ஒவ்வொன்றுக்கும் அந்தப் பதினாறு பேர்களை மடப்பாடம் பண்ணிச் சொல்ல வேண்டும் என்பதுதான்.

மனப்பாடம் பண்ணாதவர்கள் புஸ்தகத்தைப் பார்த்துப் படிக்கலாம். அல்லது இன்னொருத்தர் படித்துக் கேட்கலாம்.

இம்மாதிரி அந்த பதினாறு நாமாக்களைப் படித்தால், அல்லது கேட்டால், அல்லது இரண்டையும்விட ச்ரோஷ்டமாக, மனப்பாடமாகச் சொன்னால் - அப்படிப் பண்ணுகிறவனுக்கு வித்யாரம்பம், விவாஹம், ப்ரவேசம், நிர்கமம், ஸங்க்ராமம் முதலானவற்றில், ஸகல கார்யங்களிலுமே, விக்னம் உண்டாகாது.

அதென்ன பதினாறு நாமா?அவை எந்த ஸ்வாமியுடையவை?ஒரே ஸ்வாமியின் நாமாக்களா?பல ஸ்வாமிகளுடைய நாமாக்களா?ஒரே ஸ்வாமியுடையவைதான்.

"விக்னம் வராது"என்பதிலிருந்தே ஊகித்து விடலாம். அந்த ஒரு ஸ்வாமி யாரென்று. விக்நேச்வரர்தான்!

அவருக்கு அநேகம் பெயர்கள், ஸஹஸ்ர நாமா, அஷ்டோத்தர சத நாமா எல்லாம் உண்டு. இருபத்தியோரு தினுஸு பத்ரங்கள் (இலைகள்) அர்ச்ச்னை பண்ணுவதற்கென்று இருபத்தியோரு நாமா, அதே மாதிரி 21 தினுஸு புஷ்பம் அர்ச்சனை பண்ண 21 நாமா, இரட்டை இரட்டையாக 21 தடவை அருகம் புல் அர்ச்சனை பண்ணுவதற்கு 21 நாமா எல்லாம் அவருக்கு உண்டு. இங்கே நமக்கு ஸர்வ காரியத்திலும் விக்ன நிவ்ருத்திக்குப் பிறகு பேர் சொல்லியிருக்கிறது.

---

## பதினாறின் பெருமை.

பதினாறு உத்க்ருஷ்டமான (மிக்க உயர்வு பொருந்திய) நம்பர். "ஷோடச கலா பூர்ணம்"என்பது. ஷோடசம் - பதினாறு. அமாவாஸையில் ஆரம்பித்து பௌர்ணமி வரை பதினாறு கலைகள். பதினாறாவது கலையை அடைகிறபோதே சந்திரன் பூரண சந்திரனாவாது. ஒரளவுக்கு விரிவாக நாம் பண்ணுகிற பூஜை ஷோடசோபச்சாரம் என்கிற பதினாறு வித உபச்சாரங்களைக் கொண்டாக இருக்கிறது. ஸப்த மாதிருகா என்று ஏழு தேவிகளைச் சொல்கிற மாதிரி ஷோடச மாதிருகா என்னும் பதினாறு தேவதைகள் உண்டு. அம்பாள் ராஜராஜேஷ்வரி மந்த்ரங்களிலே ஷோடசாக்ஷரீதான் உச்சி. அதனால் அம்பாளுக்கு ஷோடாசீ என்று ஒரு பெயர். அம்பாளுக்கு ஷோடச அக்ஷரம், பிள்ளைக்கு பிள்ளையாருக்கு - ஷோடச நாமாக்கள்.

'பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழணும்'என்று ஆசீர்வாதம் பண்ணுவது தமிழ் தேச வழக்கு. வேதத்தில் ஒரு ஸுமங்கலிக்கு என்ன ஆசீர்வாதம் சொல்லியிருக்கிற தென்றால், பகவானே!இவள் பத்துக் குழந்தைகளைப் பெத்துக் கொண்டு (பெற்றுக் கொண்டு) அப்புறம் பதியையும் பதினோராவது குழந்தையாக 'ட்ரீட்'பண்ண வை!என்று உள்ளே ரொம்ப அர்த்தம் வைத்து அழகாகச் சொல்லியிருக்கிறது*. தமிழ் வழக்கில் "பதினாறும் பெற்று"என்று இருக்கிறது. 'ஃபாமிலி ப்ளானிங்'யுக ம்!சொன்னாலே உள்ளே தள்ளிவிடுவார்களோ?என்று பயமாயிருக்கிறது!

ஆனால் 'பதினாறும் பெற்று'என்பது குழந்தை பெற்றுக் கொள்வதை குறிக்கவில்லை என்றும், வாழ்க்கை நல்ல விதமாக இருப்பதற்கு வேண்டிய பதினாறு விஷயங்களையே குறிக்கின்றனவென்றும் சொல்கிறார்கள். 'பெரும் பேறு பெறுவது'என்று ஒரு phrase (சொற்றொடர்) இருக்கிறது. 'பெறப்படுவது'தான் பேறு. பிரஸவ காலத்தைப் பெரும் பேறு என்கிறபோது ரொம்ப பாக்ய வஸமான ஒன்று. அத்ருஷ்டவசமான ஒன்று என்ற அர்த்தத்தில் சொல்கிறோம். நாமாக ஒன்றும் பாடுபடாமல் ஈச்வராநுக்ரஹத்தால் பெற்றுக்

கொள்வதையே இங்கே 'பேறு'என்பது. Giftedஎன்று இதே அர்த்தத்தில் அவர்களும் (மேல்நாட்டினரும்) சொல்கிறார்கள். இம்மாதிரியான பதினாறு பேறுகளைப் பெறுவதில்தான் பதினாறும் பெற்று என்பது. ஈச்வரன் அருளில் தன்னியல்பாகக் கிடைப்பவை மட்டுமின்றி நாமாக முயற்சி பண்ணி, உழைத்துப் பெறக்கூடியதும் இவற்றில் உண்டு. யோசித்துப் பார்த்தால், நாம் ஒன்றும் செய்யாமல், பிறக்கும்போதே அவன் கொடையாகக் கிடைப்பதுங்கூட, பூர்வ ஜென்மாவில் நாம் இருந்ததையும் நாம் பண்ணினதையும் வைத்து அவன் கொடுத்ததுதான் என்று தெரியும். நம் கர்மாவுக்காக கிடைக்க வேண்டிய நல்லதுகளையே அவன் கருணையால் கொஞ்சம் 'கூடப் போட்டு'க் கொடுத்திருக்கலாம். அப்படிப் பேறு பெற்றவனை அத்ருஷ்டக்காரன் என்கிறோம். நம் அறிவால் காணமுடியாமல் அத்ருஷ்டமாக (அ-த்ருஷ்டம் என்றால் காணமுடியாதது என்றே நேர் அர்த்தம்)உள்ள பூர்வ ஸுக்ருத பலனைத்தான் சாஸ்திரம் அத்ருஷ்ட பலன் என்பதே!

எந்த ஒரு வழிபாடும் ஆரம்பிக்கும்போது 'இதற்காக இந்தப் பூஜை பண்ணுகிறேன்'என்று 'ஸங்கல்பம்'செய்து கொள்ள வேண்டும். 'எதற்காக'என்றால், ஸஹ குடும்பம் (தன் குடும்பம் முழுதும்) க்ஷேமம்-ஸ்தைர்யம் (ஸ்திரத் தன்மை, Stabilityஎன்பது) வீர்யம் - விஜயம் - ஆயுஸ் - ஆரோக்யம் - ஐச்வர்யம் ஆகிய எல்லாவற்றிலும் அபிவிருத்தி காண்பதற்காக என்று, ஏழு சமாச்சாரங்களைச் சொல்லி, அப்புறம் தர்ம - அர்த்த - காம - மோக்ஷம் என்று நாலு புருஷார்த்தங்கள்

ஸித்திப்பதற்காகவும் - ஏழும் நாலும் பதினான்றாச்சி - அப்புறம், இஷ்ட காம்யார்த்த

ஸித்யர்த்தம் என்பதற்காக மனோரதங்களின் பூர்த்தியை வேண்டி என்று ஒன்று-இதோடு பண்ணிரண்டாச்சி - ஸமஸ்த மங்களங்களும் கிடைப்பதற்காக, ஸமஸ்த துரிதங்களும் (அதாவது பாபங்களும்) ஒடுங்கிப் போவதற்காக என்று மேலும் இரண்டைக் கூட்டி, இதோடு பதினான்கு விஷயங்கள ாச்சி-அப்புறம் புத்ர பௌத்ரர்கள் அபிவிருத்தியாவதற்காக என்று பதினைந்தாவது;கடைசீயாக எந்த ஸ்வாமிக்குப்

பூஜையோ அவருக்கு ப்ரீதி ஏற்பட்டு அவர் ப்ரஸாதத்தால் நம் அபீஷ்டம் எல்லாம் நிறைவேறணும் என்று பதினாறு விஷயங்களைப் ப்ரார்த்தித்து ஸங்கல்பத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். இதில் லௌகிகம் ஜாஸ்தி இருக்கிறதென்று நினைப்பவர்கள் முடிவாக, இன்னும் இரண்டு சேர்த்துக் கொள்வார்கள். ஞானம், வைராக்யம் என்ற இரண்டு ஸித்திப்பதற்காக (ஞான வைராக்ய ஸித்யர்த்தம்) என்று சேர்த்துக்

கொள்வார்கள்.

"பதினாறும் பெற்று"என்று தமிழ் வழக்கில் சொல்லும் பதினாறில் ஏறக்குறைய இப்போது நான் சொன்ன பதினாறு ஸமாச்சாரங்களும் வந்துவிடுவதாக ஞாபகம். சரியாக நினைக்கவில்லை. 'வீர்ய - விஜய'என்று இதில் வருவது போலவே 'வீறு - விசயம்'என்று அதில் அடுத்தடுத்து வரும் என்று மட்டும் ஞாபகமிருக்கிறது.

பேறுகள் பதினாறு, பிள்ளையாருக்குப் பேர்கள் பதினாறு!

---



## ஷோடச நாம சுலோகங்கள்.

விக்நேச்வரருக்குப் பதினாறு பேர் முக்கியமாக சொல்லியிருக்கிறது.

ஸுமுகர், ஏகதந்தர், கபிலர், கஜகர்ணகர், லம்போதரர், விகடர், விக்நராஜர், விநாயகர், தூமகேது, கணாத்யக்ஷர், பாலசந்த்ரர், கஜானனர், வக்ரதுண்டர், சூர்ப்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்தபூர்வஜர் என்று பதினாறு பேர். "ஷோடச நாமா"என்று விசேஷமாகச் சொல்வது. ஸுலபமாக ஞாபகம் வைத்துக்கொண்டு ஸ்தோத்திரம் பண்ணுவதற்கு வாகாக இந்தப் பதினாறு பேர்களை இரண்டு ச்லோகங்களாக

வைத்துக் பண்ணியிருக்கிறது.

**ஸுமுகச் - சைகதந்தச்ச கபிலோ கஜகர்ணக : l**

**லம்போதரச்ச விகடோ விக்நராஜோ விநாயக : ll**

**தூமகேதுர் - கணாத்யக்ஷ : பாலசந்த்ரோ கஜாநந : l**

**வக்ரதுண்ட : சூர்பகர்ணோ ஹேரம்ப : ஸ்கந்`தபூர்வஜ : ll**

இதற்கப்புறம் நான் முதலில் சொன்ன ஸ்லோகம். வழக்கமாக உள்ள இரண்டு வரி ச்லோகத்துக்கு வித்யாஸமாக மூன்று வரி ஸ்லோகம்.

**ஷோடசைதாநி நாமாநி ய : படேத் ச்ருணுயாதபி l**

**வித்யாரம்பே விவாஹே ச ப்ரவேசே நிர்கமே ததா ll**

**ஸங்க்ராமே ஸர்வ கார்யேஷு விக்நஸ்தஸ்ய ஜாயதே ll**

விக்நேஸ்வரர் அநேக ரூபங்களை எடுத்துக் கொண்டிருக்கிறார். அதிலே ஷோடச கணபதி என்று பதினாறு ரூபங்கள் ஒரு 'க்ரூப்'பாக உண்டு. அந்தப் பதினாறு மூர்த்திகளுடைய பெயர்கள்தான் இந்தப் பதினாறு நாமாவா என்று பார்த்தேன். அப்படி இல்லை என்று தெரிந்தது. ஷோடச நாமாக்களில் மூன்றாவது கபிலர் என்பது. அப்படியென்றால் பாக்கு மாதிரி சிகப்பு நிறமாயிருப்பவரென்று அர்த்தம். ஆனால் ஷோடச ரூபங்களில் மூன்றாவதாக வருகிறவரையே சரத்கால சந்திரன் மாதிரியான நிறமுள்ளவரென்று த்யான ஸ்லோகம் சொல்லுகிறது. ஷோடச ரூபங்களிலோ பதினொன்றாமவராக வருகிறவருக்கே ஹேரம்ப கணபதி என்று பெயர் கொடுத்திருக்கிறது. இப்படிப் பல வித்யாஸங்கள். வரிசைக் க்ரமமாக இந்த ஷோடச நாமாக்களில் ஒவ்வொன்றுக்கும், ஷோடச கணபதிகளில் ஒவ்வொருவர் என்று இல்லை. இது வேறே. அது வேறே க்ளாஸிஃபிகேஷன் என்று தெரிந்தது.

பதினாறு நாமாக்கள்தான் இப்போது நமக்கு விஷயம்.

---

**ஸுமுகர்.**

அதிலே முதலில் ஸுமுகர். பதினாறில் முதலில், முகப்பில் வருகிற பேர் ஸுமுகர். வரவேற்கும்போது ஸுமுகமாக - முகமன் கூறுவது என்பார்கள். அப்படி -

அழைக்கிற மாதிரி முதல் பேர் அமைந்திருக்கிறது.

ஸமூஹத்தில் எல்லா ஜனங்களும் ஸுமுகமாக, அதாவது ஒற்றுமையுடன், வாழ வேண்டும் என்று சொல்கிறோம். ஸுமுகம் என்றால் நல்ல முகம். அன்பும் ஆனந்தமும் பொங்கிக் கொண்டிருப்பதுதான் நல்ல முகம். ஸுமுகம். தமிழில் இன்முகம் என்று சொல்லுவது. ஹ்ருதயத்தில் உள்ள அன்பும் ஆனந்தமும் முகத்திலே வெளிப்படுவது ஸுமுகம். mind-க்கு index- ஆக faceஇருக்கிறது என்றார்களல்லவா?அப்படி உலகத்திலுள்ள ப்ரேமையை வெளியில் காட்டும் ஸுமுகத்தை உடையவராக விக்நேச்வரர் இருக்கிறார். நல்ல மனஸைக் காட்டும் நல்ல முகம் ஸுமுகம். அப்படிப்பட்ட முகம் படைத்தவர் விக்நேச்வரர்.

சுக்லாம்பரதரம் ச்லோகத்தில் ப்ரஸன்ன வதனம் என்று வருகிறதல்லவா?அதுவேதான் ஸுமுகம் அன்பிலேயும், அன்பாக இருந்தால் ஏற்படும் ஆனந்தத்திலேயும் உள்ளம் அப்படியே மலர்ந்து அது முக மலர்ச்சியாக வெளியே தெரிவதுதான் ப்ரஸன்ன வதனம். தெளிவு, ப்ரகாசம் ஆகியவைதான் ப்ரஸன்னம். ஸுமுகத்தில் வருகிற ஸுவும் அந்த ப்ரஸன்னத்தைக் குறிப்பதுதான்.

விக்நேச்வரர் எந்த ரூபத்திலிருந்தாலும் அவருடைய உள்ளத்தின் அன்பும் ஆனந்தமும் முகத்தில் வெளிப்பட்டு அவர் ஸுமுகராகத்தான் இருப்பார். ஆனை ரூபத்தில் அவர் இருப்பதாலோ இவை அஸாதாரணமாக அளவுக்கு அவர்

முகத்தில் பொங்கிக் கொண்டிருந்தன. எத்தனை நாழி வேண்டுமானாலும் அலுக்காமல் சலிக்காமல் பார்த்துக் கொண்டிருக்கும்படியான ஏதோ ஒன்று ஆனைமுகத்துக்கென்றே விஷேசமாக உண்டு. விசாலத்திற்கு விசாலம். காம்பீர்யத்திற்கு காம்பீரம், பரம சாந்தம், இன்னும் இன்ன என்று சொல்லத் தெரியாத ஏதோ ஒன்று (சொல்லக்கூடியதாயிருந்தால் இத்தனை பெருமை இல்லை) இப்படிப் பலவிதமான லக்ஷணங்கள் சேர்ந்த அழகு ஆனைமுகத்துக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட ஆனைமுகராக இருப்பதால் விக்நேச்வரர் ஸுமுகர் என்ற பெயர் விசேஷமாகப் பொருந்துபவராக இருக்கிறார்.

---



## நரமுக கணபதி ஆனைமுகரானது

'அவர் எந்த ரூபத்தில் இருந்தாலும்'என்று சொல்கிற போது ஆனை ரூபத்திலில்லாமல் ரொம்பவும் அபூர்வமாக மநுஷ்ய ரூபத்தில் 'நரமுக கணபதி'என்றே அவர் இருப்பது நினைவு வருகிறது. சிதம்பரம் தெற்கு வீதியில், தம்முடைய ப்ரஸித்தமான ஆனை முகத்தோடு இல்லாமல், மற்றவர்கள் சொல்லியோ எழுதி வைத்தோதான் 'இவர் பிள்ளையார்'என்ற தெரிந்து கொள்ளும்படி மநுஷ்ய மூஞ்சியோடு 'நரமுக கணபதி'யாக இருக்கிறார். திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை கோவிலிலும் நரமுக கணபதி உண்டு. இதிலே ஒரு வேடிக்கை:யானை முகமில்லாத ஒரு பிள்ளையார் உள்ள கோவிலானாலும் அந்தக் கோவில் ஸ்வாமியை (சிவபெருமானை)ப் பற்றி ஸம்பந்தர் பதிகம் பாடும்போது, ஸ்வாமியின் பல லக்ஷணங்களில் ஒவ்வொன்றையும் சொல்லி, 'அந்த லக்ஷணத்தை உடையவனை' என்பதற்கு 'யானை''யானை' என்றே சொல்லி முடித்திருப்பதுதான்!'நன்றுடையானை, உமையொரு பாகம்

உடையானை, திருவுடையானை, சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூற என்னுள்ளம் குளிரும்மே!"

விக்நேச்வரரின் அநேக ஆவிர்பாகங்களைக் குறித்த கதைகளில் ஒன்றின்படி அவருடைய ஒரிஜினல் ரூபம் நரரூபம்தான். அம்பாள் தன்னுடைய அந்தஃபுரத்திற்கு ஒரு காவலாள் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று நினைத்தாள். தன்னுடைய திவ்ய சரீரத்தையே வழித்து அதிலிருக்கிற மஞ்சள் பொடி, குங்குமம், வாஸனைப் பொடி முதலானதுகளைத் திரட்டிப் பிசைந்து ஒரு பாலகனாக ரூபம் பண்ணி அதற்கு உயிரும் கொடுத்துக் காவலாக வைத்து விட்டாள். மநுஷ்யர் மாதிரி (தேவர் மாதிரியுந்தான்) கண், காது மூக்கு, நாக்கு முதலானவை உள்ள ரூபமே அது. அதாவது நரமுக ரூபந்தான். பிள்ளையார் என்றே பெயர் பெறப்போகிற அந்தப் பிள்ளையை - தன் உடம்பிலிருந்து தானே வழித்துப் பெற்ற அருமைப் பிள்ளையை அம்பாள் காவல் வைத்து விட்டு ஸ்நானத்துக்குப் போனாள்.

அம்பாள் ஸர்வ மங்களா. அவள் தன்னுடைய மங்கள சரீரத்திலிருந்து மங்கள வஸ்துவான மஞ்சள் பொடியை வழித்துப் பெற்ற அருமைப் பிள்ளையை அம்பாள் காவல் வைத்துவிட்டு ஸ்நானத்துக்குப் போனாள்.

அம்பாள் ஸர்வ மங்களா, அவள் தன்னுடைய மங்கள ஸரீரத்திலிருந்து மங்கள வஸ்துவான மஞ்சள் பொடியை வழித்து மூலப் பிள்ளையாரை ஸ்ருஷ்டித்ததால் தான் இன்றைக்கும் எந்த சுபகாரியத்தின் ஆரம்பித்தலும் மஞ்சள் பொடியைப் பிள்ளையாராகப் பிடித்து வைத்துப் பூஜை செய்கிறோம். 'மஞ்சள்'என்பதே 'மங்கள'என்பதிலிருந்து வந்திருப்பதுதான். 'இங்கே, அங்கே'என்பதைச்

சில பேர் 'இஞ்சே, அஞ்சே'என்று சொல்கிறார்களல்லவா?இலக்கணத் தமிழிலேயே 'தூங்கல்'என்பது 'துஞ்சல்'என்றும் வருகிறது. அப்படி, மங்கள

என்பதே மஞ்சள் ஆகியிருக்கிறது. ஸம்ஸ்க்ருதத்தில் மங்களம் என்பதற்கு மஞ்சள் என்பதற்கு மஞ்சள் என்று ஒரு அர்த்தம்.

பரமேச்வரன் அந்தஃபுரத்திற்கு வந்தார். 'இதுயார்டா பத்னியின் அந்தஃபுரத்தில் புருஷப் பிரஜை?' என்று அவருக்கு ஒரே கோபம் வந்து, ஒன்றும் தெரியாதவர் மாதிரி, அந்தப் பிள்ளையை சிரச்சேதம் பண்ணிவிட்டார். வாஸ்தவத்தில் எல்லாம் தெரிந்துந்தான் லோகாபகாரம் பண்ண வேண்டும், அதையும் விருவிருப்புள்ள நாடகமாகப் பண்ண வேண்டும் என்றே இப்படிச் செய்தார். என்ன லோகோபகாரமென்றால் - கஜமுகாஸுரன் என்ற யானைத்தலை அஸுரன் தன்னே அதே மாதிரி யானைத் தலை படைத்தவர்தான் வதம் செய்ய முடியுமென்றும், அதோடு அப்படி வதைக்கக்கூடிய சத்ரு ஸ்திரீ-புருஷ ஸம்பந்தத்தில் பிறக்காதவனாயிருக்க வேண்டுமென்றும் வரம் வாங்கி வைத்துக் கொண்டிருந்தான். அது ஒரு பக்கத்தில். இன்னொரு பக்கம், நாம் பார்த்த ஸம்பவம் நடந்த ஸமயம், கைலாஸத்திற்குப் பக்கத்தில் லோகத்திற்கு அமங்களம் உண்டாகும்படியாக ஒரு யானை வடக்கே தலை வைத்துப் படுத்துக் கொண்டிருந்தது. இந்த இரண்டையும் 'கம்பைன்'பண்ணித்தான் ஸ்வாமி நாடகமாடினார். அம்பாள் ச்ருஷ்டித்த அருமைக் குழந்தையைத் தாம் ஸம்ஹாரம் பண்ணியதற்காக அவளிடம் நன்றாக 'டோஸ்'வாங்கிக் கொண்டு ஸந்தோஷப்பட்டார். அப்புறம் வடக்கே தலை வைத்திருந்த யானையை சிரச்சேதம் பண்ணி, அந்த சிரஸைக் கொண்டு வந்த இந்தப் பிள்ளையின் முண்டத்தில் பொருத்தி, பிள்ளையாராக உயிர் கொள்ளும்படிச் செய்து அம்பாளை த்ருப்திபடுத்தினார். பிள்ளையார் மூலம் கஜமுகாஸுரன் வதமாகி லோக க்ஷேமம் உண்டாகும்படியும் செய்தார்.

---



## ஆனந்த வடிவர்.

விக்நேச்வரர் ஸுமுகர், சிரித்த முகமுடைய ஆனந்த

ஸ்வரூபர். ஆனந்தந்தான் நிறைவு. ஆனந்த பூர்ணம் என்பது வழக்கம். ஆனந்த பூர்வம் போதோஹம் - ஸததம் ஆனந்த பூர்ண போதோஹம், ஸச்சிதானந்த பூர்ண போதோஹம் என்று இரண்டு விதமாக (ஸதாசிவ) ப்ரஹ்மேந்த்ராள் பாடியிருக்கிறார். ஆனந்தம் வந்தால் சிரிப்பும், அதோடு பாட்டும் டான்ஸூம் வந்துவிடும். ஒருத்தன் துக்கமாயிருக்கும்போது கொஞ்சம் டான்ஸ் பண்ணு என்றால் பண்ணுவானா?ஆனந்த ஸ்வரூபியானதால்தான் பிள்ளையார் ந்ருத்த கணபதியாக, கூத்தாடும் பிள்ளையாராக இருக்கிறார். அநேக சிவாலயங்களில் மூலஸ்தான வெளிச்சுவரில் கோஷ்ட தேவதைகளாக உள்ளவர்களில் முதல்வர் இந்த

நர்தன விநாயகர்தான். ஆனந்தமாகச் சிரித்துக்கொண்டு அத்தநாம் பெரிய தொப்பையைத் தூக்கிக் கொண்டு ஆடுவார்.

அவருடைய ஆனந்தத்திற்கு முகம் மாதிரியே தொப்பையும் இன்டெக்ஸ் என்று சொல்லலாம். வயிறு வெடிச்சிடும் போலச் சிரிக்கிறது என்றுதானே வசனம்?அப்போது வயிறு நன்றாக புஸூ புஸூ என்று ஊதித் தொப்பையாகத்தானே ஆகனும்.

தொப்பைக்கு அப்புறம் வருவோம். பதினாறு நாமாவில் லம்போதரர் என்கிற நாமா வரும்போது அதைப் பார்ப்போம். இப்போது முகத்தில், ஸூமுகத்தில் அல்லவா இருக்கிறோம்?

முகம் எனறாலே ஆரம்பம் என்று அர்த்தம். புஸ்தகங்களில் கூட முதலில் முகவுரை என்று போடுகிறார்களல்லவா?ஆரம்ப நாமா ஸூமுகர் என்று இருப்பது ரொம்பப் பொருத்தமாயிறுக்கிறது.

---



நல்ல வாய் உடையவர்

முகம் என்பது முழு மூச்சிக்கு மட்டுமில்லாமல் அதிலே உள்ள வாய்க்கும் பேர். ஸம்ஸ்கிருதத்தில் வாய்க்குத் தனியாக பேர் கிடையாது. அத்தனை பேர்களையும் சொல்கிறதாகவும், பேச்சுக்கே கருவியாகவும் இருக்கிற வாய்க்குத் தனிப்பேர் இல்லாமல் முகம் என்றே தான் அதையும் சொல்ல வேண்டியிருக்கிறது. வேடிக்கையாக, தமிழிலே வாய்க்கு வாய் என்று பேர் இருந்தாலும் முகத்துக்குப் பேரே இல்லை. முகம் என்பது ஸமஸ்கிருக வார்த்தை. மூஞ்சி என்பது பேச்சு வழக்கிலே மட்டுமுள்ள கொச்சைதான். இலக்கண - இலக்கிய வார்த்தை இல்லை. அதனாலே, அந்தக் காலத்தில் ஸம்ஸ்க்ருத கடிகையில் படிக்கும் வித்தியார்த்திகளும் தமிழ்ப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களும் பரஸ்பரம் பரிஹாஸம் பண்ணிக் கொள்வார்களாம். இவன் அவனை முகம் இல்லாதவன் என்பானாம். அவன் இவனை வாய் இல்லாதவன் என்று திருப்புவானாம். பரிஹாஸமென்றாலும் இந்த நாள் மாதிரி ஒருத்தருக்கொருத்தர் பாஷா த்வேஷத்தில் ஏசிக்கொண்டார்களென்று அர்த்தமில்லை. Good-humoured banterஎன்கிறார்களே, அப்படி நல்லெண்ணத்தோடு சேர்ந்த ஹாஸ்ய உணர்ச்சியில் ஸ்வாதீனமாகக் கேலி பண்ணிக் கொள்வார்கள்.

முகம் என்றாலே வாய் என்று சொல்ல வந்தேன். ஸுமுகம், நல்ல வாய் என்றால் எது நல்ல வாய்?நல்ல விஷயங்களை, ஸத் வித்யைகளைச் சொல்கிற வாய்தான் நல்ல வாய். அதனால் நல்ல வித்வானுக்கு ஸுமுகர் என்று பேர் உண்டு. ஸுமுகர் எனறால் கற்றறிந்தவர். இந்த அர்த்தத்திலேயும் பிள்ளையார் ஸுமுகர். அவர் நல்ல வாயை உடைய மஹா வித்வான். ப்ரஹ்மணஸ்பதி, ப்ருஹஸ்பதி என்று வேதங்களில்

சொல்லப்படும் மஹா மேதாவிக்கும் அவருக்கும் பேதம் கிடையாது.

அவருடைய அநேக ரூப பேதங்களில் 'வித்யா கணபதி'என்றே ஒருத்தருண்டு. 21 கணபதி பேதங்களைச் சொல்லி, ஒவ்வொருத்தனுக்கும் ஒரு புஷ்பமாக 21 தினுஸு புஷ்பங்களை அர்ச்சனை பண்ணும்படியாக சதுர்த்தி பூஜா கல்பத்தில் விதித்திருக்கிறது. அதிலே வித்யா கணபதி என்ற பேரைச் சொல்லி அவருக்கு ரஸாள புஷ்பம் போடனும்

என்று இருக்கிறது. ரஸாளம் (ரஸாளு என்று பொதுவாகச் சொல்கிறது) தான் மாம்பழங்களுக்குள்ளேயே பரம மதுரமாக இருக்கப்பட்ட தினுஸு வித்யை என்பது அப்படிப்பட்ட ஆத்ம மாம்பழம். யார் லோகத்தை முதலில் சுற்றிக் கொண்டு வருகிறார்களோ அவர்களுக்கு என்று நாரதர் கொடுத்த பழத்தை வைத்துப் பரமசிவன் பந்தயம் நடத்தி அதிலே விக்நேச்வரர் ஜயித்துப் பெற்றுக் கொண்ட ஞானப்பழம் அந்த

மாம்பழம்தான்!

வித்வத், வித்யை, அதனால் அடையும் ஞானம் இவற்றை உடையவர் ஸுமுகர்.

---



## ஏகதந்தர் : ' என்பும் பிறர்க்குரியர் '

அடுத்தாற்போல், ஏகதந்தர் ஸுமுகச்-சைகதந்தச்ச. இரண்டாவது பேர் ஏகதந்தர். அப்படியென்றால் ஒரே தந்தமுடையவரென்று அர்த்தம். ஒற்றைக் கொம்பன். பொதுவாக ஆண் யானைக்கு இரண்டு கொம்பு இருக்கும். பெண் யானைக்குக் கொம்பே கிடையாது. இவருக்கோ ஒரே கொம்பு.

முதலிலே இவருக்கும் இரண்டு (கொம்பு) இருந்து, அப்புறம் வலது பக்கம் இருப்பதை இவரே ஒடித்துக் கொண்டு விட்டார். அதை விக்ரஹங்களில் வலது பக்கக் கீழ்க் கையில் வைத்துக்கொண்டிருப்பதைப் பார்க்கலாம்.

ஏன் ஒடித்துக்கொண்டார்?புராண ரீதியில் இரண்டு கதை சொல்கிறார்கள்.

வியாஸர் பாரதம் சொல்லுகிறபோது அதை உடனே விக்நேச்வரர் அவஸரமாக

ஹிமாசலப் பாறைகளில் எழுத வேண்டியிருக்கிறதென்றும், அப்போது எழுத்தாணிக்காகத் தேடிக்கொண்டு ஓடாமல் தந்தங்களில் ஒன்றையே முறித்து அதனால் எழுதினாரென்றும் ஒரு கதை. அறிவு வளர்ச்சிக்காகத் தம்முடைய பஹு அழகான அங்கத்தை யானையின் அங்களுக்குள்ளேயே இறந்தாலும் ஆயிரம் பொன் என்று ரொம்பவும் மதிப்புள்ளதாயிருப்பதை - உயிரோடு இருக்கும்போதே தியாகம் செய்த உத்தம குணத்தைக் காட்டும் கதை.

இன்னொரு கதை, மற்ற எந்த அஸ்திரத்தாலும் வதம் பண்ண முடியாத கஜமுகாஸுரனைத் தம்முடைய ஒரு தந்தத்தையே முறித்து ஆயுதமாக்கிப் ப்ரயோகித்து வதம் பண்ணினாரென்பது. லோக ரக்ஷணத்துக்காக என்பும் உரியர் பிறர்க்கு என்று காட்டிய கதை. ஸாதாரணமாக அந்தக் குறளுக்கு ததீசியைத்தான் த்ருஷ்டாந்தம் காட்டுவார்கள். தந்தமும் யானையின் எலும்புதான். அதனால் பிள்ளையாரும் என்பும் பிறர்க்கு உரிய'ரான அன்புடையார் தான்!

---



## பெண்ணாகவும் இருப்பவர்

அவர் ஏகதந்தராக இருப்பதற்குத் தத்வார்த்தமும் உண்டு. ஆண் யானைக்குத்தான் தந்தம் உண்டு. பெண் யானைக்குக் கிடையாது. தாம் ஆண், பெண் இரண்டும்தான். அதாவது ஈச்வர தத்வம் என்பது ஆண்தான், பெண்தான் என்று ஒன்றாக மாத்திரம் வரையறுக்க முடியாமல் இரண்டுமாக ஆகியிருக்கும் ஒன்று என்று காட்டவே முகத்திலே ஒரு பக்கம் யானை (களிறு என்றும்) மாதிரி தந்தத்துடனும், மறு பக்கம் பெண் யானை (பிடி என்பது) மாதிரி தந்தமில்லாமலும் இருக்கிறார். மாதா பிதாக்கள் பப்பாதி (பாதிப் பாதி) ஸ்திரீ புருஷர்களாக அர்த்த நாரீஸ்வர ரூபத்தில் இருக்கிற

மாதிரியே புத்ரரும் கொஞ்சம் இருந்து காட்டுகிறார். அப்படியே காப்பி பண்ணினதாக இருக்க வேண்டாமென்று அங்கே வலது பக்கம் புருஷ ரூபம், இடது ஸ்த்ரீ என்றிருந்தால் இவரோ வலது பக்கம் தந்தமில்லாமல் பெண் யானையாகவும் இடது பக்கம் தந்தமுள்ள ஆண் யானையாவுமிருக்கிறார்!

---



## விக்நேச்வர காயத்ரீ

ஒவ்வொரு தெய்வத்திற்கும் உரியதாக ஒரு காயத்ரீ மந்த்ரமுண்டு. உபநயனம் பண்ணி, ப்ரஹ்மோபதேசம் என்று செய்கிற காயத்ரீ மந்த்ரம் ஸூர்ய ஜ்யோதிஸ்ஸில் இருக்கப்பட்ட பரமாத்ம சக்தியான ஸவிதா என்கிற தெய்வத்திற்கான காயத்ரீ. காயத்ரீ என்பது 24 எழுத்துக் கொண்ட ஓர் மந்த்ரம். அந்த எண்ணிக்கையில் எல்லா தேவதைகளுக்கும் மந்த்ரங்கள் இருக்கின்றன. இந்த மந்த்ரங்கள் எட்டெட்டு எழுத்துள்ள மூன்று பதங்களாகப் பிரியும். ஒவ்வொரு பாதத்திலும் அந்த மந்த்ரம் எந்த தேவதைகளுக்கானதோ அந்த தேவதையின் ஒவ்வொரு பெயரைச் சொல்லியிருக்கும். முதல் பாதத்தில் ஒரு பெயரைச் சொல்லி, அப்படிப்பட்டவரை அறிவோம் என்று வரும். இரண்டாம் பாதத்தில் அந்த தெய்வத்திற்கே இன்னொரு பெயரைச் சொல்லி, அப்படிப்பட்டவரை தியானிப்போம் என்று வரும். மூன்றாம் பாதத்தில் மூன்றாவதாக இன்னொரு பெயரைச்சொல்லி, அப்படிப்பட்டவர் நம்மை நல்ல வழியில் தூண்டி விடட்டும் என்று ப்ரார்த்தனை வரும். மஹா நாராயணோபநிஷத்தில் உள்ளபடி, லோக வழக்கில் பிரஸித்தமாகியுள்ள இந்த காயத்ரி மந்த்ரங்களில் பரமசிவன், விக்நேச்வரர், ஸுப்ரமண்யர், நந்திகேஷ்வரர் ஆகிய நாலு பேரின் காயத்ரிகளிலும் முதல் பெயராக தத்புருஷ என்பதைத்தான் சொல்லியிருக்கிறது. ஆனால்,

விக்நேச்வரரைக் குறித்ததாகவே அதர்வ வேதத்தில் ஒரு உபநிஷத் இருக்கிறது. கணபத்யதர்வசீர்ஷம் என்று அதற்குப் பெயர். அதில் ஒரு கணபதி காயத்ரீ கொடுத்திருக்கிறது. இந்த காயத்ரீயில் முதல் பெயராக ஏகதந்த என்பதைத்தான் சொல்லியிருக்கிறது.

---



## கபிலர் : திருச்செங்கட்டான்குடி விநாயகர்

மூன்றாவது நாமா - கபிலர். பழுப்புச் சிவப்பு நிறமாக இருப்பவரென்று அர்த்தம்.

பல ரூப பேதங்களில் வெவ்வேறு நிறங்களாக விக்நேச்வரர் இருக்கிறார். சுக்லாம்பரதரம் ச்லோகத்தில் சசிவர்ணம் என்று நிலா மாதிரி வெளுப்பாகச் சொல்லியிருக்கிறது. கும்பகோணத்திற்கு கிட்டே இடும்பாவனத்திலும் வெள்ளைப் பிள்ளையார் - ச்வேத விநாயகர் இருக்கிறார். ஒளவையார், அகவ'லிலோ அவரை நீலமேனி என்று சொல்லியிருக்கிறாள். ஆவளே வாக்குண்டாம் பாட்டில் துப்பார் திருமேனி என்று பவள வர்ணமாகவும் பாடியிருக்கிறாள். பல ரூபங்களிலும் குழந்தை ஸ்வாமி அந்தக் கிழப்பாட்டிக்கு தர்சனம் தந்திருப்பார்.

வடக்கேயெல்லாம் விக்நேச்வரர் என்றாலே ஒரே சிவப்பாக ஸிந்தூரத்தைப் பூசித்தான் வைத்திருப்பார்கள்.

நம் சோழ தேசத்தில் கணபதீசுவரம் என்றே பேர் பெற்றிருக்கிற கோவில் இருக்கிற ஊருக்கு செங்காடு முன்னே திரு'வும் பின்னே குடி'யும் சேர்த்துக்கொண்டு திருச்செங்காட்டாங்குடி என்று பேர். டா 'வைக் குறிலாக்கித் திருச்செங்கட்டான்குடி என்று தமிழ் நூல்களில் இருக்கும். அது செங்காடு ஆனதற்குக் காரணம் விக்நேச்வரர்

கஜமுகாஸுரனை ஸம்ஹாரம் செய்தபோது அவனுடைய ரத்தம் அந்தக் காடு முழுதும் பாய்ந்ததுதான். அப்போது பிள்ளையாரும் செக்கச்செவேலென்று ஆகிவிட்டார். இல்லை. செக்கச் செவேல் இல்லாமல் கறுப்பான ஆனை உடம்பில் ரத்த வர்ணம் தோய்ந்து கபில நிறமாகி விட்டாரென்று வைத்துக் கொள்ளலாம்.

ஒரு மஹாவீரனை அடியோடு ரத்தம் போகப் பண்ணிக் கொன்றதால் தமக்கு வீரஹத்தி தோஷம் வந்ததாக விக்நேச்வரர் நினைத்தாராம். அவருக்கேது தோஷம்?நமக்கு வழிகாட்டத்தான் தெய்வங்களும் இப்படி எல்லாம் நடிப்பது!ராவணனைக் கொன்றதால் ராமர் தோஷம் வந்துவிட்டதாக நினைத்து ப்ராயச்சித்தமாக ராமலிங்கம் ஸ்தாபித்திருந்தாரல்லவா?அந்த மாதிரி பிள்ளையாரும் இந்தச் திருச்செங்காட்டாங்குடியில் லிங்கம் ஸ்தாபித்து சிவ பூஜை பண்ணி தோஷத்தைப் போக்கிக் கொண்டாராம். அதனால் ராமர் சிவ பூஜை பண்ணிய இடம் ராமேச்வரம் ஆனது மாதிரி அந்தக் கோயிலுக்கு கணபதீச்வரம் (தமிழிலக்கணப்படி கணபதீச்சுரம்) என்று பேர் ஏற்பட்டுவிட்டது.

---



## வாதாபி கணபதி : சரித்திர விவரங்கள்

அப்புறம் அந்த ஊருக்கே வாதாபி கணபதி வந்து சேர்ந்தார். அநேத கணபதி பேதங்களில் வாதாபி கணபதி என்று ஒருத்தருண்டு. வாதாபி என்ற அஸுரனை ஜெரித்துக் கொள்வதற்காக அகஸ்த்யர் உபாஸித்த கணபதி அவர். திருச்செங்கட்டான்குடிக்கு வந்து சேர்ந்தவர் இவரே. வாதாபி என்ற அசுர வதத்துக்குக் காரணமான அவர் எந்த ஊரிலிருந்து வந்தாரோ அந்த ஊருக்குப் பேர் வாதாபிதான். அஸுர வாதாபி வாழ்ந்துவந்த ஊருக்குப் பிற்காலத்தில் அவன் பெயரே ஏற்பட்டுவிட்டது. அது சாளுக்கிய ராஜ

வம்ஸத்தவர்களின் தலைநகராக ஆயிற்று.

சாளுக்கிய ராஜாக்களின் புலகேசி என்று பெயருள்ளவர்கள் இரண்டு பேர் இருந்திருக்கிறார்கள். புலிகேசி என்று தப்பாகச் சொல்கிறார்கள். புலியுமில்லை. எலியுமில்லை. சளுக்கிய சாஸனங்களில் செப்பேடுகள் ஸம்ஸ்க்ருதத்தில்தான் இருக்கும். கல்வெட்டுகள் கன்னடத்தில் இருக்கும். அப்படிக் கன்னடத்தில் பொலெகேசி என்று சொல்லியிருக்கிறது. அதை பல பேர் பல ரூபமாக தினுசு பண்ணி ஒவ்வொரு அர்த்தம் சொல்கிறார்கள். பொலே என்பதற்குக் தமிழ் மூலம், தெலுங்கு மூலம், கன்னட மூலம் எல்லாம் சொல்கிறார்கள். ஆனால் அந்த வம்சத்தினர்களில் ராஜாவான பிறகு எல்லாருமே ஸம்ஸ்க்ருதப் பெயர்தான் வைத்துக்கொண்டு இருப்பதால் இந்தப் பெயரைப் புலிகேசின், புலிகேசி என்று ஸம்ஸ்க்ருதமாகவே சரித்ராசிரியர்கள் தீர்மானம் பண்ணி, இங்கிலீஷில் அப்படித்தான் எழுதுகிறார்கள்.

புலிகேசி என்றால் புல(ள)காங்கிதம் அடைவதென்கிறோமே, அப்படி ஆனந்தத்தில் மயிர்க்கூச்சு எடுத்திருப்பவன் என்று அர்த்தம். 'ரிஷிகேசன்'என்று தப்பாகச் சொல்லும் ஹ்ருஷீகேசன் என்ற பெயருக்கும் அப்படி ஒரு அர்த்தமுன்டு. ஹ்ருஷீகம் என்றால் இந்திரியங்கள். அவற்றை அடக்கியாளும் ஈசன் ஹ்ருஷீகேசன் என்று ஆசார்யாள் (விஷ்ணு) ஸஹஸ்ர நாம பாஷ்யத்தில் ஒரு அர்த்தம் சொன்னாலும், ஸூர்ய சந்திர ரூபங்களில் பகவான் உள்ளபோது அவற்றின் கேசம் போன்ற ரச்மி(கதிர்)களால் உலகத்தை மகிழ்விப்பதாலும், இப்படிப் பெயர் என்று இன்னொரு அர்த்தமும் கொடுத்திருக்கிறார். ஹ்ருஷ் என்கிற தாது மயிர்க்கூச்செடுக்கும் அளவுக்கு மகிழ்ச்சி உண்டாக்கு வதைக் குறிக்கும். வீர தீர ஸாஹஸங்களை ஒரு ராஜா தானும் மயிர்க்கூச்செறிந்து செய்வான். அதைப் பார்க்கிற, கேட்கிறவர்களும் புளகமடையச் செய்கிறவனே புலிகேசி. புலம் என்றாலே புளகம்தான். புளகமுற்ற கேசம் உடையவன் புலகேசி. புலக+ஈச:புகளமடைந்தவனும், ராஜாவாக இருக்கிறவனும் என்று பிரித்துச் சொல்லலாம்.

எனக்கு ஒன்று தோன்றுகிறது. நாம் பார்க்கப்போகும் கதையிலே வரும் இரண்டாவது புலிகேசிக்குப் போட்டியாயிருந்த இரண்டு பெரிய ராஜாக்களில் ஒருத்தன்

மஹேந்த்ரவர்மப் பல்லவன். அவனைவிடப் பெரிய போட்டி வட தேசத்தில் ஸாம்ராஜ்யாதிபதியாயிருந்த ஹர்ஷவர்தனன். ஹர்ஷ் என்பதற்கும் ஆனந்தத்தில் மயிர் கூச்செடுத்திருப்பவன் என்பதுதான் அர்த்தம். அந்த ஹர்னையே புறமுதுகு காட்டும்படி பண்ணினவன் புலிகேசி. அதனாலேயே அந்த பெயரின் அர்த்தத்தைக் கொண்ட புலிகேசிப் பெயரைத் தானும் வைத்துக் கொண்டிருப்பான் போலிருக்கிறது. ராஜாவாவதற்கு முந்தி அவனுக்குப் பேர் எரெயம்மா என்பது. அது கன்னடப் பேர்.

ராஜாவான பிறகு ஸம்ஸ்கிருத பேர் வைத்துக் கொண்டபோது, தன் பாட்டனார் பேர் வைத்துக்கொண்ட போது, தன் பாட்டனார் பேர் புலிகேசி என்று இருப்பதையும் அது தன்னுடைய arch rivalஆன (முக்கியமான போட்டியாளனான) ஹர்ஷன் என்பதற்கே

இன்னொரு வார்த்தையாகவும் இருப்பதைப் பார்த்து அந்தப் பேர் சூட்டிக் கொண்டிருப்பானோ என்று தோன்றுகிறது.

கேசத்துக்கு அளகம் என்று ஒரு பேர். யக்ஷராஜனும், பணத்துக்குத் தேவதையுமான குபேரனுக்கு அளகேசன் என்று பேர். அவனுடைய ராஜதானி அளகாபுரி. ரோமோஞ்சம் உண்டாக்கும் சிறப்பை அளகேசன். ஹ்ருஷீகேசன், புலிகேசி முதலிய பெயர்கள் காட்டுகின்றன.

இரண்டாவது புலிகேசி ஸமாச்சாரத்திற்கு வருகிறேன். முதலில் சிற்றப்பாவால் வஞ்சிக்கப்பட்டு ராஜ்யாதிகார உரிமையை இழந்து கஷ்டப்பட்டான். அப்புறம் புஜ பல பராக்ரமத்தால் சிற்றப்பாவை வீழ்த்தி ஸிம்ஹாஸனம் ஏறினான். சளுக்ய ராஜாக்களுக்குள்ளேயே தலைசிறந்த இடம் பெற்றான். ஸத்யத்திற்கு புகலிடமாயிருப்பவன் என்ற அர்த்தமுள்ள ஸத்யாச்ரயன் என்ற பட்டத்தோடு ஆட்சி நடத்தினான். ராஜாதிராஜ ஹர்ஷவர்தனனும் தன்னை எதிர்த்துப் போராடாதபடி கலங்க அடித்து, அவன் நர்மதைக்கு வடக்கோடு ராஜ்யத்திற்கு எல்லை காட்டிக் கொண்டு திரும்பும்படிப் பண்ணினான்.

அப்போது தமிழ் தேசத்தில் பெரிய ராஜ்யாதிபதியாக இருந்தவன் பல்லவ ராஜாவான மஹோந்திர வர்மா. 'மஹேந்திர விக்ரம வர்மன்'என்பது அவனே அவன் எழுதிய

மத்த விலாஸ பாராயணம் என்ற ஹாஸ்ய நாடகத்தில் சொல்லிக் கொள்ளும் பெயர். சில்பக் கலையும், ஸங்கீதக் கலையும் எந்நாலும் கொண்டாடத்தக்க பெரிய கலைஞனாகவும், ரஸிகநாகவும் இருந்தவன். அவனே மேல் புலிகேசி படையெடுத்து, பல்லவ ஸைன்யம் காஞ்சிபுரம் கோட்டைக்குள்ளேயே முடங்கிப் போகும்படிச் செய்து ஜயித்துவிட்டான். இது தீர்மானமாக சாஸன ஆதாரங்களில் தெரிவதாகச் சரித்ராசிரியர்கள் சொல்கிறார்கள். மஹேந்திர வர்மாவுக்கு சில தலைமுறைகளுக்கு அப்புறம் ராஜ்யாதிகாரம் அந்த வம்ஸாவழியின் நேர் வழியில் போகாமல், தாயாதி வம்ஸாவளியில் வந்த நதிவர்மா என்பவனுக்கும் போயிற்று. அவன் ஸோம யாகம் செய்த பாரத்வாஜ கோத்ர ப்ராம்ணன் ஒருவனுக்கு பூதானம் செய்யும்போது சாஸனம் பண்ணிய செப்பேட்டுக்கொத்தை காசாக்குடி ப்ளேட்ஸ் என்று விசேஷித்துக் சொல்வார்கள். ஏனென்றால் அதில் தானம் தரும் ராஜாவான பல்லவனின் வம்ஸ பூர்விகர்கள் பற்றி அநேக விவரங்கள் இருக்கின்றன. அதில் மஹேந்திரவர்மா புள்ளலூரில் ஒரு பெரிய வெற்றி அடைந்ததாக இருக்கிறது. வெற்றி அடைந்தாக இருந்ததேயொழிய, யாரமேல் (வெற்றி) என்று அதில் இல்லை. பல்லவர்களின் ஜன்ம சத்ருவான சளுக்யர்களின் மேல்தான் இருக்க வேண்டுமென்று ஊஹம். ஊஹம்தானேயொழியத் தீர்மானிக்க முடிவாகவில்லை. ஆனால் புலிகேசியிடம் மஹேந்திர வர்மா அபஜயம் அடைந்தது தீர்மானிக்கத் தெரிகிறது என்கிறார்கள். புள்ளலூரில் பல்லவ ஸைன்யம் தெரிகிறது என்கிறார்கள். புள்ளளூரில் பல்லவ ஸைன்யம் சளுக்கிய ஸைன்யத்தை ஜெயித்திருந்தால்கூட, அது நம் எல்லைக்குள் வந்தவைகளை அவர்களுடைய ராஜ்ஜியத்திற்குத் திரும்பிப் போகும்படிச் செய்வதோடு

முடிந்து போயிருக்க வேண்டும். சளுக்கியர்கள் பல்லவ எல்லைக்குள்ளேயே வந்து ஜயித்த மாதிரி அப்போது பல்லவர்கள் சளுக்கிய எல்லைக்குள்ளேயே தொடர்ந்து போய் அவர்களை ஜயிக்கவில்லை. அன்னிய ராஜா ஒருத்தனை அவன் ஊருக்குள்ளேயே போய் வெற்றி கொள்வதற்குத்தான் பெருமை அதிகம்.

ஆனபடியால், புலிகேசியிடம் பட்ட பரிபாவம் (தோல்வி) பல்லவ வம்ஸத்திற்கு ஆறாக புண்ணாகிவிட்டது. ராஜ

ரத்தமா?பழிக்குப் பழி வாங்கனும் என்ற வர்மம்

உண்டாயிற்று. ஆனாலும் அது நிறைவேறாமலே மஹேந்திர வர்மா கண்ணை மூடிவிட்டான். அவன் பிள்ளை நரஸிம்ஹ வர்மா. மாமல்லன் என்று பேர் வாங்கிய அந்த வீராதி வீரன் காலத்தில்தான் பழிவாங்க முடிந்தது. அவன் வாதாபி மேலே படையெடுத்துப்போய் ஹதாஹதம் பண்ணி ஜயித்துவிட்டான். புலகேசி நேரே பல்லவ ராஜதானியான காஞ்சிக்கு உள்ளேபோய் அதை ஜயிக்கவில்லை. மஹேந்திரனை காஞ்சிக்கோட்டையை மூடிக்கொண்டு உள்ளே இருக்கும்படி பண்ணி, வெளியில்தான் ஜெயித்தான். மாமல்லனோ பதிலடி என்று அதைவிட உக்ரமாக சளுக்கிய ராஜதானியான வாதாபிக்கு உள்ளேயேபோய் அதோடு நகரத்தையே நாசப்படுத்தி விட்டான்.

க்ஷாத்ரம் க்ஷாத்ரம் என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். ஆந்திரம், க்ஷாத்திரம் என்று சேரத்துக் கொள்கிறோம். ஒருத்தரிடம் தீராத பகையோடு, பழிக்குப் பழி வாங்கணும் என்று இருப்பதை க்ஷாத்திரம் என்கிறோம். அந்த வார்த்தைக்கு நேர் அர்த்தம் க்ஷத்ரிய குணம் என்பதுதான். க்ஷத்திரியரின் தன்மை க்ஷாத்ரம். அந்த ஜாதிக்காரர்களிடம் எத்தனையோ உயர்ந்த தன்மைகளிம் பண்புகளும் இருந்தும்கூட தீராத த்வேஷம்தான் க்ஷாத்ரம் என்றாகியிருப்பதிலிருந்து ஆட்சியதிகாரம் எப்படி ஒருத்தரைக் கெடுக்கிறது, கத்தி பிடித்துவிட்டால் எப்படித் தலையைச் சீவுவதில் புத்தி போகிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

க்ஷத்திரிய ஜாதிக்காரர்கள் போட்டுக் கொள்ளும் அடைமொழி வர்மா என்பது. வர்மா என்றால் நேர் அர்த்தம் கவசம் என்பது. க்ஷத்திரியர்கள் கவசதாரியாக இருப்பதால் வர்மா என்கிறார்கள். அது மாத்திரமில்லை. கவசம் எந்த அடியையும் தான் வாங்கிக் கொண்டு ஒரு தேஹத்தை ரக்ஷிக்கிற மாதிரி ஒரு தேசத்தை ஆபத்துக்களிலிருந்து தங்கள் உயிரையும் பணயம் வைத்து ரக்ஷிப்பது க்ஷத்திரியர்களேயாகையாலும் அவர்கள் வர்மா ஆகிறார்கள். ஆனாலும் நாம் வர்மம் பாராட்டுவது என்று சொல்லும்போது இந்த நல்ல விஷயங்களை நினைத்தா சொல்கிறோம்?பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று

கறுவிக்கொண்டு இருப்பதைத்தானே வர்மம் என்கிறோம்?க்ஷாத்ரம், வர்மம் என்ற வார்த்தைகளின் நடைமுறை வழக்குகள் பதவியும் ஆயுத பலமும் மிதமிஞ்சினால் உண்டாகக்கூடிய க்ரூர குணத்தைக் காட்டுவதாக இருக்கின்றன.

ராஜாக்கள் ஒரே ஸத்வமாக, ஸாதுவாக இருக்க முடியாதுதான். நம்முடைய ராஜ நீதி சாஸ்திரங்களின்படி அப்படி இருக்க கூடாதும்தான். தர்ம யுத்தம், தங்களை ஜயித்தவனைத் திரும்பப் தாக்கி ஜயிப்பது எல்லாம் அவர்களுக்கு வீரக் கடமையாகவே சொல்லியிருக்கிறது. ஆனாலும் அதில் கட்டுப்பாடு வேண்டும். சத்ரு ராஜாவின் மேல்,

ஸைன்யத்தில் மேல் ராக்ஷஸதனமான நடவடிக்கை எடுக்கக் கூடாது. யுத்தத்தில் சேராத ஊரார் மேல், ஊர் மேல் ராக்ஷஸத் தாக்குதல் பண்ணவே கூடாது. லங்காபுரி வாஸிகள் அஸல் ராக்ஷஸர்களே யானதால் அந்த ஊரை ஹனுமார் தஹனம் பண்ணுனது. அது மற்ற ஊர்களுக்கும் ஸிவிலியன் பாபுலேஷனுக்கும் (படையில் சேர்ந்திராத ஏனைய பிரஜைகளுக்கும்) பொருந்தாது.

வேத ப்ராம்மணர்களை நிரம்ப ஆதரித்தவனும், ஸம்ஸ்கிருத கடிகைகளை நிரம்பப் போஷித்தவனும், தெய்வ வழிபாட்டை நன்றாக வளர்த்தவனும், அதன் உபாங்கமான லோகமெல்லாம் புகழும்படி சில்பக்கலைக்கு விசேஷ முன்னேற்றம் கொடுத்தவனுமான நரஸிம்ஹவர்மா மாதிரியான ராஜாவைக்கூட க்ஷாத்ரம், வர்மம் என்பது விட்டு வைக்கவில்லை. அதனால்தான் அவன் சளுக்கியர்களின் தலைநகரமான

வாதாபியை த்வம்ஸம் பண்ணித் தரைமட்டமாக்கினான். வாதாபி கொண்ட நரஸிங்கப் போத்தரையன் என்று பட்டப்பேர் சூட்டிக்கொண்டான். வாதாபியிலேயே அவன் அந்த ஊரை ஜயித்ததைப் பெருமையாக ப்ரகடனம் பண்ணிக் கொண்ட ஒரு சிலை சாஸனம் இன்றைக்கும் இருக்கிறது.

சளுக்கியர்கள் மாத்திரம் சளைப்பார்களா, க்ஷாத்ரத்தில்?பல்லவர்கள் மண்ணைக் கவ்வும்படிப் பண்ணி, பதிலடியாக, அவர்களுடைய ராஜதானியான காஞ்சீபுரத்தை மண்ணோடு மண்ணாக்கணும் என்பதே அந்த ராஜ

வம்ஸத்துக்கு ஸதா சிந்தனையாயிற்று. நரஸிம்ஹ வர்மாவுடைய வெற்றிக்கு சுமார் ஒரு நூற்றாண்டுக்கு அப்புறம் சளுக்கிய ராஜாவாக இருந்த (இரண்டாவது) விக்ரமாதித்தன் ஆசைப்பட்டபடியே பல்லவர்களை ஜயித்துவிட்டான். அப்போது மட்டும் விக்ரமாதித்யன் தன் க்ஷாத்ரத்தை நன்றாக தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று பிடிவாதமாயிருந்திருந்தால் காஞ்சியை தரைமட்டமாக, மண்ணோடு மண்ணாகவே பண்ணியிருக்க முடியும். அல்லது எரியூட்டுவிழா நடத்திச் சாம்பலே ஆக்கியிருக்க முடியும்.

அப்போது அங்கே சில்ப விசேஷத்துக்கு இதைவிட ஒரு கோயில் இருக்கமுடியாது என்று இன்றைக்கும் நாம் சொல்கிற கைலாஸநாதர் கோயிலும் முளைத்துவிட்டது. (இரண்டாவது) பரமேச்வரவர்மாவுக்கு predecessor- ஆக (முந்தைய அரசனாக) இருந்த அரசன் ராஜஸிம்ஹன் காலத்திலேயே அந்த அற்புதமான கோயில் எழும்பிவிட்டது. விக்ரமாதித்தன் நினைத்திருந்தால் அதைத் தரைமட்டமாகப் பண்ணியிருக்கலாம்.

அப்படிக்கூட ஒரு ஹிந்து ராஜாவே ஒரு ஹிந்து கோவிலை இடிப்பானா?என்றால், க்ஷாத்ரம் என்று சொன்னேனே, அதில் கண்மூடிபோய் இப்படியும் சில நடந்துதானிருக்கிறது. நம் (சங்கர) மடங்களில் ஒன்றிலேயே இந்த மாதிரி நடந்திருக்கிறது. நம்புவதற்குக்கூட முடியாமலிருக்கும். ஒரு துருக்க ராஜா அந்த மதத்திடம் ரொம்ப அபிமானம் - பக்தியே - வைத்திருந்தான். அவனுக்கு சத்ருவாக இருந்த ஹிந்து ராஜாவின் ஹிந்து கமான்டர் என்ன பண்ணினானென்றால், இந்த மடாதிபதி நம் விரோதி ராஜாவின் பக்தி விச்வாஸத்தைப் பெற்றிருப்பவரல்லவா?அதனால் இந்த மடத்தையும் தாக்க வேண்டும் என்று முடிவு பண்ணி அப்படியே

படைகளை ஏவி விட்டான்!அவர்களும் எல்லோரும் ஹிந்துக்கள்தான். நம்முடைய மதத்திற்கே புத்துயிர் தந்த பகவத்பாதாள் பெயரிலுள்ள மடமாச்சே என்றுகூடப் பார்க்காமல் மடத்திலே புகுந்து சூறையாடினார்கள். ஒரு புண்ய ஸ்தலத்திற்கு, குரு பீடத்திற்கு இப்பேர்ப்பட்ட அபசாரம் பண்ணினவர்கள் வாழமாட்டார்கள் அழிந்துதான் போவார்கள்!என்று அப்போது அந்த துருக்க ராஜா அந்த

மடத்து ஸ்வாமிகளுக்கு எழுதிவிட்டு, தானே திரவ்யம் அனுப்பி மடத்தை ஜீரணோத்தாரணம் செய்வதற்கு உபகரித்திருக்கிறான். ஆத்திர க்ஷாத்திரங்கள் எதுவரைக்கும் கொண்டுவிடுகிறது என்பதற்காகச் சொல்ல வந்தேன்.

க்ஷாத்ரத்தை மனஸாரத் தீர்த்துக் கொள்வதற்கு வாய்ப்பாகக் காஞ்சிபுரம் சளுக்கிய விக்ரமாதித்தனிடம் பிடிபட்டு விட்டது. வாதாபியை தரை மட்டமாக்கினதுக்கு அவன் பழி தீர்த்துக் கொள்ள நல்ல ஸந்தர்ப்பம். சத்ரு வம்ஸம் கட்டிய முதல் கட்டிடக் கோயிலான கைலாஸ நாதராலயம் சில்ப ஸௌந்தர்யம் அத்தனையையும் சொரித்துக் கொண்டு அவனுக்கு முன்னாடி நின்றது. அவன் ஒரு ஹூம் போட்டிருந்தால் ஸேனா வீரர்கள் அதைத் தூள் பண்ணியிருப்பார்கள். அப்படிப்பட்ட அந்த ஸமயத்தில்தான்

அவனுக்கு ஆச்சரியமாக மனஸு மாறிற்று. திடீரென்று, அவன் ஏற்கெனவே சிவ மந்த்ர தீக்ஷை பெற்றிருந்ததால் அதன் விளைவாக சிவ பக்திதான் பெருக்கெடுத்ததோ, அல்லது இரண்டும் சேர்ந்து வந்ததோ, கோவிலைத் தொடப்படாது என்று ஆக்ஞை பண்ணிவிட்டான். ஏதோ கல்லில் செதுக்கி வைத்த சில்பங்களிடம் மட்டும்தான் அவனுக்கு இப்படி நல்ல எண்ணம் வந்ததென்று இல்லை. சத்ரு பட்டிணத்தில் ஜனங்கள் இருந்தார்களே, அவர்களிடமே நல்ல மனுஷ்யாபிமானம் உண்டாகிவிட்டது. நாம் இந்த ஊரை எப்போது ஜயித்தோமோ, அப்போது இந்த ஊர்வாசிகள் நம் பிரஜைகளாகி விட்டார்கள். நம்முடைய பிரஜைகளுக்கே நாம் ஹிம்ஸை கொடுப்பதா?என்ற உசந்த நினைப்பு அவனுக்கு உண்டாயிற்று. அதனால், நெருப்பை வைத்துக் கொளுத்திக் கதறக் கதற அடிப்பதற்கு நேர் மாறாகக் காஞ்சீபுர வாஸிகளுக்கு யதேஷ்டமாக தான தர்மங்கள் செய்தான். கைலாஸநாதர் கோவிலுக்கும் நினையச் செய்தான். புதுஸாகப் புகுந்து கொள்ளையடிக்காமல் விட்டதோடு, ஏற்கெனவே கொண்டிருந்ததையெல்லாம், கூட நிறையப் போட்டு, அந்தக் கோயிலுக்குத் திருப்பி விட்டான். கைலாஸநாதர் கோயிலுக்கு முன்னாலுள்ள மண்டபத்தின் தூண் ஒன்றிலேயே இந்த விபரங்களை அவன் கன்னடத்தில் பொறித்து வைத்திருக்கிறான்.

கலிங்க யுத்தத்திற்கு அப்புறம் அசோகர் மனஸ் மாறினது

எல்லோருக்கும் தெரியும். அதோடு சேர்த்து நினைக்கிற விதத்தில் இப்படி ஒன்று எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன்.

கைலாஸநாதர் கோவிலின் அழகில் சொக்கிய விக்ரமாதித்யன் அதை இருக்கவிட்டது மட்டுமில்லை. அதற்கு ஜோடி சேர்க்கிற மாதிரி, ஏறக்குறைய அதன் அச்சாகவே தன் ஊருக்குத் திரும்பின பிறகு பட்டடக் கல்லில் விரூபாக்ஷர் கோவில் என்று கட்டினான். அதற்காகத் தமிழ்நாட்டுச் சில்பிகளை மரியாதை பண்ணி அழைத்துக் கொண்டு போனான்.

வாதாபி (இப்போது பாதாமி என்று சொல்லுகிறார்கள்) ஐஹொளே, பட்டடக்கல் என்று மூன்று ஊர்கள் கிட்டக் கிட்டக்க கன்னட தேசத்தில் பீஜப்பூர் ஜில்லாவில் இருக்கின்றன. ஐஹொளேதான் சளுக்கியர்களின் முதல் தலைநகரம், அப்புறம் வாதாபி தலைநகரமாயிற்று என்றுகூடச் சொல்லுகிறார்கள். பக்கத்திலேயே இருந்த பட்டடக் கல்லையும் ஸெகன்ட் காபிட'லைப் போல மதித்தார்கள். சில புது ராஜாக்கள் பட்டத்துக்கு வந்தபோது பட்டாபிஷேகங்களைப் பட்டடக் கல்லில் பண்ணியிருக்கிறார்கள். அந்த ஊர் பேரே அதனால்தான் அப்படி ஏற்பட்டதோ என்னவோ?

பிள்ளையாரைப் பற்றி ஆரம்பித்துவிட்டு வாதாபி, கீதாபி என்று எங்கேயோ சுற்றிக் கொண்டிருக்கிறானே, என்ன ஸம்பந்தமம் என்றால், ரொம்ப ஸம்பந்தம் இருக்கிறது.

---



## ஆனைமுகமும் அகத்தியரும்

விக்நேச்வரரோடு ரொம்பவும் ஸம்பந்தப்பட்டவர் அகஸ்திய மஹறிஷி. இரண்டு பேரும் தொப்பை வயிற்றுக்காரர்கள். அகஸ்தியர் அங்குஷ்ட மாத்ரர் (கட்டை விரல்

அளவேயானவர்) வாமன ரூப என்று சொல்லியிருக்கிறது.

வாமந-ரூப மஹேச்வர - புத்ர

விக்ந - விநாயக பாத நமஸ்தே

வாமன ரூப என்றால் குள்ள உருவம் - வாமனாவதாரம் மாதிரி வக்ரதுண்ட, மஹாகாய என்று ஒரு பக்கம் மஹா பெரிய சரீரமுடையவர் என்றும் சொல்லி இன்னொரு பக்கம் வாமன ரூபர் என்றும் வர்ணித்திருக்கிறது. பெரிசு சிறிசு எல்லாம் அவர்தான். அணுவும் அவர்தான். அகிலாண்டமும் அவர்தான் என்று தாத்பர்யம். அணுவுக்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய் என்று ஔவை (அகவலில்) சொல்லியிருக்கிறாள்.

ஹம்பியில் பெரிசு பெரிஸாக இரண்டு விக்நேச்வர மூர்த்திகள். ஒன்று பத்தடி உயரம், இன்னொன்று இருபதடி உயரம் இருக்கும். இப்படி மஹாகாயராக இருப்பவர்களுடைய பேர்களோ நேர்மாறாக வாமன ரூபத்தைக் காட்டுவதாக இருக்கின்றன. பத்தடிப் பிள்ளையாருக்கு சசிவுகல்லு என்று பேர். அப்படியென்றால் கடுகத்தனை அளவேயானவரென்று அர்த்தம். இருபதடிப் பிள்ளையாருக்கு கடலைக்கல்லு என்று பேர். கடலைப் பருப்பு அளவானவர் என்று அர்த்தம். இவருக்கு இத்தனை பெரிய விக்ரஹங்கள் இருக்கிறதே என்றே நினைக்கவேண்டாம். வாஸ்தவத்தில் விச்வரூபியாக உள்ள அவருக்கு life-sizeவிக்ரஹம் பண்ணி எவராலும் ஆகாது. முடிந்த அளவுக்கு இங்கே பண்ணி வைத்திருக்கிறோம். அது அவருடைய நிஜமான ரூபத்தோடு ஒப்பிட்டால் கடுகத்தனை, கடலையத்தனையாகத்தான் தெரியும் என்று அடக்கத்தோடு இப்படிப் பேர் வைத்திருக்கிறார்கள்.

அகஸ்தியருக்கும் விக்நேச்வரருக்கும் ஸம்பந்தம் சொன்னேன். அகஸ்தியர் கமண்டலத்துக்குள் அடைத்து வைத்திருந்த காவிரியைக் காக்கா ரூபத்தில் வந்து கவிழ்த்து விட்டு நதியாக ஒடப் பண்ணினவர் விக்நேச்வரர்தான். அந்த ஸமயத்தில் அகஸ்தியருக்கு காக்காயிடம் கணகோபம் வந்தாலும் அப்புறம் அது விக்நேச்வரர்தான் என்று தெரிந்துவிட்டதும் ஒரே பக்தியாகிவிட்டார். அவர்தான் காக்கா பிடித்தவர் போலிருக்கிறது. காக்காயை மனசுக்கு

ரொமம்பவும் பிடித்தவர்!அப்புறம் ஒரேடியாகப் பிள்ளையார் பக்தியில் ஈடுபட்டுவிட்டார்.

வாதாபி விஷயத்துக்கு வருகிறேன். அதிலே அகஸ்தியர் முக்கியமான கதாபாத்திரம். வாதாபி இல்வலன் என்று அண்ணன் தம்பியாக இரண்டு அஸுரர்கள்.... அநேகமாக எல்லோருக்கும் தெரியக்கூடிய கதைதான். நேரடியாகத் தாக்கிக் கொள்கிற அஸுரர்களை விடவும் ஒருபடி மட்டமாக நயவஞ்சனையால் ரிஷிகளைக் கொன்று தின்னுவது இவர்களது வழக்கம். பொதுவாகவே நரமாம்ஸமென்றால் அஸுரர்களுக்கு ரொம்ப இஷ்டம். அதும் வேத மந்த்ரத்தில் ஊறிப்போய் பரம மதுரமாகிவிட்ட ரிஷி சரீரமென்றால் ஹல்வா மாதிரி. அந்த ஹல்வா கிடைப்பதற்காக இந்த இரண்டு பேரும் ஒரு நயவஞ்சனை செய்வார்கள். இரண்டு பேரில் மூத்தவனான இல்வலன் ஒரு ப்ராம்மண ரூபம் எடுத்துக்கொண்டு யாராவது ரிஷியிடம் போய் ரொம்பவும் நமஸ்காரம் பண்ணித் தன் வீட்டில் அவர் போஜனம் வைத்துக் கொள்ள வேண்டும் என்று ப்ரார்த்திப்பான். ரிஷியும் ஒப்புக் கொண்டு போவார். அவர் என்ன பண்ணியிருப்பாரென்றால் வாதாபியையே மாம்ஸமென்று தெரிந்து கொள்ள முடியாத

விதத்தில் கறியாகச் சமைத்துப் பரிமாறுவார்கள். ரிஷிகள் அவசியமான ஸமயத்தில்தான் ஞான த்ருஷ்டியை ப்ரயோகிப்பார்கள். மற்ற ஸமயங்களில் ஸாதாரன மனிதர்கள் மாதிரிதான் இருப்பார்கள். அஸுர சூழ்ச்சி தெரியாமல் அவர்கள் வாதாபிக் கறியைச் சாப்பிட்டு விடுவார்கள். போஜனம் முடிந்தபின் இல்வலன் அவர்களுக்கு தாம்பூலாதிகள் கொடுத்து சிரம பரிஹாரம் பண்ணிக் கொள்ளச் சொல்லிவிட்டு, தம்பியை வாடா!என்று கூப்பிடுவான். உடனே ரிஷி வயிற்றில் போஜ்ய பதார்த்த ரூபத்தில் இருக்கும் வாதாபி ஆடு ரூபம் எடுத்துக்கொண்டு கொம்பால் அவர் வயிற்றை கிழித்துக் கொன்றபடி வெளியே வருவான். அப்புறம் இரண்டு பேரும் அந்த சரீரத்தை ஸந்தோஷமாக தின்று தீர்ப்பார்கள்.

அகஸ்தியருக்கும் இதே மாதிரி போஜன உபச்சாரம் பண்ணிவிட்டு, வாதாபி, வாடா வெளியிலே!என்று இல்வலன் கூப்பிட்டான். அவர் விக்நேச்வர ஸ்மரணையிலேயே இருந்து

கொண்டிருப்பவரல்லவா?அதனாலே அஸுரனுடைய கபடம் அவருக்கும் புரியும்படியாக விக்நேச்வரர் அநுக்ரஹம் செய்துவிட்டார். இதற்கு மாற்று பண்ணுவதற்கான உபாயமும் ஸ்புரிக்கும்படி அநுரஹித்து விட்டார். உடனே அகஸ்தியர் தொப்பையைத் தடவிக்கொண்டு, வாதாபி!ஜீர்ணோ பவ!என்றார். அஸுரன் வெளியிலே வரமுடியாமல் அவர் வயிற்றுக்குள்ளேயே வைச்வாநர அக்னியாயுள்ள பரமாத்மாவில் ஜீர்ணமாகி விட்டான்.

அதைப் பார்த்து இல்வலன் பயந்துபோய் அகஸ்தியரிடம் ச்ரணாகதி பண்ணி, பொன்னும் பொருளும் காணிக்கை கொடுத்தான் என்று ஒரு கதை. இன்னொரு கதைப்படி, தம்பியை ஜீர்ணித்துக் கொண்டுவிட்டாரே என்ற கோபத்தில் அவன் அவர் மேல் பாய்ந்தான். அவர் ஒரு தர்ப்பையை அபிமந்திரித்து அவன் மேலே போட்டார். அது அஸ்திரமாகி அவனை வதைத்துவிட்டது.

தான் வாதாபியை ஜீர்ணித்து அதன் வழியாக லோகத்துக்கு நல்லது செய்யும்படியாக அநுக்ரஹித்த பிள்ளையாருக்கு அகஸ்தியர் பூஜைகள் பண்ணினார். அப்போது விக்நேச்வரர் இருந்த அவஸரத்துக்கு (திருக்கோலத்துக்கு) வாதாபி கணபதி என்றே பேர் வந்துவிட்டது.

திருவாரூரில் அநேக கணபதி மூர்த்தங்கள் இருக்கின்றன. அங்கே வாதாபி கணபதியும் இருக்கிறார். தீக்ஷிதருடைய 'வாதாபி கணபதி(ம் பஜே) கீர்த்தனை இவர் பேரிலே தான். பல பேர் தப்பாகத் திருச்செங்காட்டான்குடிப் பிள்ளையார் பேரில் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். கீர்த்தனத்திலேயே மூலாதார க்ஷேத்ர ஸ்திதம் என்று வருகிறது. ப்ருத்வீ ஸ்தலமான திருவாரூர்தான் மூலாதார க்ஷேத்ரம். அகஸ்தியர் க்ஷேத்ராடனம் பண்ணிக் கொண்டு திருவாரூர் வந்தபோது மூலாதார க்ஷேத்ரமான அங்கே வாதாபி கணபதியை பிரத்ஷ்டை பண்ணி விட்டார். அந்த ஸமாசாரம் இருக்கட்டும்.

---

## பரஞ்ஜோதி (சிறுத்தொண்டர்) ; வாதாபி கணபதி.

மேற்கு டெக்கானின் சளுக்கிய ஸாம்ராஜ்ய ராஜதானியாருந்த வாதாபிதான் இல்வல - வாதாபிகள் இருந்த ஊர். அங்கேயும் ஓர் கணபதி இருந்தார். விக்ரஹ ரூபத்தில், வாதாபியிலிருந்ததால் அவரும் ஒரு வாதாபி கணபதி. அந்த ஊரை நரஸிம்ஹ வர்மா ஜயித்து, ஜய சாஸனம் நாட்டிய போது கமான்டர் - இன் - சீஃபாகப் போனவர் பரஞ்ஜோதி என்கிறவர். கலிங்கத்துப்பரணி என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். அது குலோத்துங்க சோழன் கலிங்க தேசத்தை ஜயித்ததாகச் சொன்னாலும் வாஸ்தவத்தில் வெற்றிக்குக் காரண புருஷனாக இருந்தது அவனுடைய ஸேனாதிபதியாக இருந்த கருணாகரத் தொண்டைமான்தான். அந்த மாதிரி நரஸிம்ஹ வர்மாவின் வாதாபி வெற்றிக்கு அவனுடைய ஸேனாதிபதியான பரஞ்ஜோதியும் காரணமாயிருந்தார்.

அவர் கணபதீச்சரம் என்ற சிவாலயமுள்ள திருச்செங்காட்டங்குடியைச் சேர்ந்தவர். அதனால் பிறவியிலிருந்தே பிள்ளையாரிடம் அவருக்கு ஒரு பிடிமானம் இருந்திருக்க வேணும். இதுவும் ஒரு ஈச்வர லீலை. அவரே ஜயசாலியாக வாதாபியை ஜயித்து அங்கேயுள்ள பொன், மணி, யானை, குதிரை எல்லாவற்றையும் கவர்ந்துக்கொண்டு ஊர்வலம் வருகிறபோது அங்கே வாதாபி கணபதியைப் பார்த்தார். பார்த்தவுடன் பக்தி பொங்கிக்கொண்டு வந்தது. அந்த மூர்த்தத்தைத் தமக்கென்று எடுத்துக்கொண்டு விட்டார்.

அசோகருக்கு நடந்த மாதிரி, சித்தே (சற்று முன்) சொன்னபடி சளுக்கிய விக்ரமாதித்தனுக்கு நடந்த மாதிரி, பரஞ்ஜோதி வாழ்க்கையிலேயும் இதைத் தொடர்ந்தால்போல் அவர் பல்லவ ராஜ்ஜியத்திற்குப் திரும்பிய பிறகு ஒரு பெரிய மாறுதல் நடந்துவிட்டது.

---

## மாமாத்திரர், அமாத்தியர்

பரஞ்ஜோதி ப்ராம்மண ஜாதியிலேயே வைதிகத்தை விட்டுவிட்டு லௌகிகப் பிரவிருத்திகளில் (தொழில்களில்) போனதில் தனியாகப் பிரிக்கப்பட்ட மஹாமாத்ரர் என்று பெரிய புராணத்தில் சொல்லியிருக்கிறது. மாமாத்திரர் மாதிரியே அமாத்தியர் என்று ஒரு ஜாதி. ஸம்ஸ்கிருதத்தில் அமாத்யன் என்றால் மந்திரி. அமாத்யன் தான் தமிழில் அமைச்சன் ஆயிற்று. மைதுனன் என்பது மச்சான் ஆன மாதிரி. இப்போது மந்திரி என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தை கூடாது என்று, அமைச்சர் தமிழ் வார்த்தை என்று நினைத்து அப்படிப் போட்டுக் கொள்கிறார்கள். மாணிக்க வாஸக ஸ்வாமிகள் அமாத்ய ப்ராம்மணர். பாண்டிய ராஜாவுக்கு அமாத்யராக (மந்திரியாக) இருந்து தென்னவன் பிரமராயன் என்று பட்டம் வாங்கியவர். பிராம்மணர் என்பதால் பிராம ராஜாவின் பிரதம அதிகாரி என்பதால் ராயன், சோழ ராஜாக்களும் பிராம்மண மந்திரிகளை வைத்துக்கொண்டு அவர்களுக்குப் பிராம்மராயப் பட்டம் கொடுத்திருக்கிறார்கள். வைதிக தொழிலை விட்டுவிட்டு ராஜாங்கத்தில் ஸிவில் அட்மினிஸ்ட்ரேஷன் செய்யும் எக்ஸிக்யூடிவ் ஸைடு க்குப் போன பிராம்மணர்களை அமாதித்யர் என்று பிர்த்து வைத்தது. பிராம்மணர்களிடையே இன்னும் ஒரு படி தள்ளி மிலிடரி ஸர்வீஸுக்குப் போனவர்களை மாமாத்திரர் என்று பிரிவினை பண்ணிற்று. அந்த ஜாதிக்காரர்கள் வைதிகத் தொழிலும் நிறையப் போயிருக்கிறார்கள். ஸேனையில் சேர்த்து உயிரை எடுப்பது, வைத்தியராக உயிரைக் கொடுப்பது ஆகிய இரண்டு பணிகளும் விநோதமாக அந்த ஜாதியாருக்கு இருக்கிறது. அந்த ஜாதிதான் பரஞ்ஜோதி. அவரை இப்போது வேளாள ஜாதிக்காரராக ஆக்கிப் பிரச்சாரம் நடக்கிறது.

---

## தவறான தனித்தமிழ் நாகரிகப் பிரிவினை

இந்தக் காலத்தில் தமிழ்ப் பண்பாடு வேறே, வைதிக நாகரீகம் வேறே என்று தப்பாக அபிப்ராயப்பட்டுக் கொண்டு முடிந்த மட்டில் தமிழ் தேசத்தில், முன்காலத்தில் உசந்ததாக எந்த விஷயம் இருந்தாலும், அல்லது எந்த விஷயங்கள் இருந்தாலும், அந்த விஷயம் அல்லது மநுஷ்யர் வைதிக நாகரீகத்தில் வராமல், தமிழினம் என்று ஏதோ ஒன்றை இவர்கள் பிரித்துச் சொல்லிக் கொண்டிருக்கிறார்களே, அதில் வந்ததாகவவே ஜோடனை பண்ணிக் காட்டுவதாக ஏற்பட்டிருக்கிறது. நல்ல அறிவும் ஆராய்ச்சித் திறமையும் உள்ளவர்கள், நாவல் எழுதுகிறவர்கள் எல்லோருமே இப்படித்தான் தமிழ் நாகரீகமென்று ஏதோ ஒன்று தனியாக இந்த திராவிட தேசத்தில் வைதிகத்துக்கு வித்யாஸமாக, அதை அமுக்கிக் கொண்டு, பிரகாசமாக இருந்ததாக ஜோடித்து எழுதுகிறார்கள். ஆனால் அந்த அந்தக் காலத்துக் கல்வெட்டுகளைப் பார்த்தாதாலும் சரி, கவிகளும் புலவர்களுகம் பாடிவிட்டுப் போயிருக்கும் தமிழ் நூல்களைப் பார்த்தாலும் சரி. இந்தப் புது அபிப்ராயத்துக்கு ஒரு ஆதாரமும் இல்லை. இதிலே ஒரு பக்கம் வேடிக்கையாகவும் இருக்கிறது. (வேடிக்கைக் கஷ்டம்) என்னவென்றால், வைதிகம் வேறே, த்ராவிடம் வேறே என்ற தப்பான அபிப்ராயம் பொது ஜனங்கள் மனஸில் அசைக்க முடியாமல் வேரோடி விட்டதாக நினைத்துக்கொண்டு, அவர்களுடைய ஆதரவைத் தாங்கள் ஸம்பாதிக்க வேண்டுமென்று பிராம்மணர்களிடையே அறிவாளிகளாக இருக்கப்பட்ட சிலபேர் இந்த பேதத்துக்கு பலம் கொடுத்து எழுதியும் பேசியும் வருகிறார்கள். தமிழ் தேசத்தில் பூர்வத்தில் ஆட்சி செலுத்தி வந்த மூவேந்தர்களும் ஸரி, பல்லவர்களும் ஸரி, வேத வித்யைகளுக்கும் வேத கர்மாக்களுக்கும் வேத ப்ராம்மணர்களுக்கும் பண்ணியிருக்கும் பெரிய

தொண்டுகளை அடியோடு மறைத்துவிட்டு, அவர்கள் தமிழ் நாகரீகம் என்று எதோ தனியாக இருந்த ஒன்றைப் போஷித்த மாதிரியே எழுதுகிறார்கள். பேசுகிறார்கள். சரித்திரத்தை baseபண்ணிக் கதை எழுதுகிறவர்கள் மாத்திரமில்லாமல் சரித்திர புஸ்தகமே எழுதுகிறவர்கள், தமிழிலக்கிய வரலாறு எழுதுகிறவர்கள், பண்டைத் தமிழ் நூல்களுக்கு இப்போது உரை எழுதுகிறவர்கள் ஆகியவர்களிலும் ரொம்பப் பேர் இந்த ரீதியில் எழுதுவதுதான் மிகவும் கவலையாயிருக்கிறது. இதனால் இவர்கள் இதுவரை ஜனங்களுக்கு இல்லாமலிருந்த பேத எண்ணங்களை உண்டாக்கி, வலிவு கொடுத்து வருகிறார்கள்.

பொதுவான பாரத கலாச்சாரத்துக்குள்ளேயே தான் அங்கங்கே வித்தியாஸங்களிருப்பது. இது ரீஜினல் (பிராந்திய) வித்யாஸம் தானே தவிர ரேஷியல் (இன) வித்யாஸம் இல்லவேயில்லை. தமிழ் ஜனங்களுக்குள்ளேயே பழக்க வழக்கங்களிலும் பேச்சிலும் தென்பாண்டி நாடு, கொங்குதேசம், சோழ தேசம், வடார்க்காடு - தென்னார்காடு - செங்கல்பட்டு சேர்ந்த பழைய நடுநாட்டு - தொண்டை நாட்டுப் பகுதிகள் ஆகியவற்றுக்குள் எத்தனை வித்தியாஸங்களிருக்கின்றன?அதிலும் சேராமல், அத்தனையையும் அவியலாக்கி, இன்னும் சிலதையும் சேர்த்ததாகப் சென்னப் பட்டினத்தில் இருக்கிறது. ஸ்மார்த்தப் பொம்மநாட்டிகள் (மடிசார்) கட்டிலேயே மூன்று நான்கு தினுஸு சொல்வார்கள். அதனாலே வேறே வேறே ரேஸ் என்றாகிவிடுமா என்ன?அத்தனையையும் சேர்த்துக் கவிந்து கொண்டு ஒரே பாரத நாகரீகம்தான் இருக்கிறது. அதற்குள்ளேயே பாஷையிலேயே, ஸங்கீதத்திலே, சில்ப சித்ர பாணிகளிலே, பழக்க வழக்கங்களிலே வித்யாஸங்கள் இருக்கிறது. அதனால்தான் போர் அடிக்காமல் வைசித்ரிய ருசி -வெரெய்டி அழகு -இருக்கிறது.

ஆனால் வெள்ளைக்காரர்கள் இரண்டு வெவ்வேறே ரேஸ் என்று தங்களுடைய divide and rule policy(பிரித்து ஆளும் கொள்கை) யிலே அதி ஸாமர்த்தியமாகக் கட்டி விட்டதில் நம் ஜனங்களுக்கே வைதிக வடக்கு, அவைதிகத் தெற்கு என்ற அபிப்ராயங்கள் வேரூன்றி, நம் பக்கத்தில் சிலபேருக்கு வைதிகாச்சாரமே கரித்துப்போய், தமிழ் மக்களுக்கு அந்த

வாடையே முடிந்த மட்டும் காட்டாமலிருக்க வேண்டும் என்ற முனைப்பு ஏற்பட்டிருக்கிறது.

இவர்களுக்கு வைதிகாச்சாரம் பிடிக்காமலே இருக்கட்டும். இவர்கள் வேதம் வேதியர்களுக்கு எதுவும் பண்ணால் போகட்டும். அது அவர்கள் இஷ்டம். ஆனால் இவற்றுக்காகவே அநேக மான்யங்கள் நிவந்தங்கள் விட்டும், இன்னும் வேறே தினுஸிலும் அந்தப் பூர்வ கால ராஜாக்கள் என்றைக்கோ பண்ணிவிட்டுப் போனதைக் கூடச் சொல்லாமல், மறைப்பதும், அது போதாதென்று அவர்கள் ஸ்வதந்த்ரமான ஒரு தமிழ்ப் பண்பாட்டுக்கே ஆதரவு கொடுத்து வளர்த்ததாகக் கல்பித்தும் சொல்வதும் கொஞ்சங்கூட நியாயமில்லை.

பழைய ராஜாக்களின் 'இன்ஸ்க்ரிப்ஷன்'களில் - சில சாஸனங்களிலும், அதைவிட ஜாஸ்தியாக தாம்ர சாஸனங்களிலும் - பாதிக்கு மேல் ப்ராம்மணர்களுக்கும் (வேத) பாடசாலைகளுக்கும் ராஜமான்யங்கள் விட்டதைப் பற்றித்தானிருக்கும். அவர்களுடைய யுத்த வெற்றிகளைப் பற்றிக் கூட அவ்வளவு இல்லை. இந்த தான ஸாகஸங்களிலேயேதான் அந்த யுத்த வெற்றிகளையும் சொல்லியிருக்கும். தெய்வங்களுக்கு அல்லது பூதேவர்கள் என்னும் ப்ராம்மணர்களுக்குப் பண்ணிய தொண்டுகளைத்தான் கல்லிலும் செம்பிலும் அவர்கள் முக்கியமாக வெட்டி வைத்தார்கள்.

பிரமதேயம் என்று பிராம்மணர்களுக்கு தானமாகப் பழைய தமிழ் மன்னர்கள் நிறையக் கொடுத்திருக்கிறார்கள். ஆகாசத்தை ஆகாயம் என்றும், வசத்தை வயம் என்றும் சொல்வது மாதிரி தேசத்தைத் தேயம் என்று சொல்வதுண்டு. இங்கே அப்படித்தான் சொல்லியிருக்கிறதென்று நினைத்து பிராம்மணர்களுக்குக் கொடுத்த தேசப்பகுதி பிரமதேயம் என்று சில பேர் தப்பாகச் சொல்கிறார்கள். இங்கே வரும் தேயத்துக்கும் தேசத்துக்கும் ஸம்பந்தமில்லை. 'தேயம்'என்ற (ஸம்ஸ்க்ருத) வார்த்தைக்கு 'தானமாகக் கொடுக்கப்படுவது'என்று அர்த்தம். அத்யயனம் பண்ணினவர்களுக்கு 'ச்ரோத்ரிய கிராமங்கள்'என்று அநேக கிராமங்களைப் பண்டைத் தமிழ் மன்னர்கள் ஸர்வமான்யமாக

விட்டிருக்கிறார்கள். 'சதுர்வேதி மங்கலம்'என்று முடிகிற பல ஊர்கள் இருக்கின்றன. இவையெல்லாம் தமிழ் ராஜாக்கள் 'நான்மறையாளர்'

எனப்பட்டவர்களுக்கு தானம் பண்ணினவைதான். 'அகரம்' என்று அநேக ஊர்ப் பெயர்கள்

முடிகிறதல்லவா?'அக்ரஹாரம்'தான் சுருங்கி 'அகர'மாயிற்று. இவையும் பிராமணர்களுக்குக் கொடுத்த ராஜமான்ய கிராமங்களே.

அந்தக்கால ராஜ சாஸனங்களில், எங்கேயாவது ஒரு இடத்திலாவது ஒரு ராஜா - அவன் சோழனோ, சேரனோ பாண்டியனோ, வேறே சிற்றரசனோ, யாரானாலும் - தமிழினம், தமிழ் மரபு, தமிழி நாகரீகம், தமிழ்ப் பண்பாடு என்ற வார்த்தைகளைச் சொல்லி, தான்அதைப் போஷிப்பதாகச் சொல்லியிருக்கிறானா என்றால், அப்படி

ஒன்றுகூட இல்லை. நான் ஒரளவுக்கு எனக்கு தெரிந்த மட்டில் துருவி துருவிப் பார்த்தும் அப்படி ஒன்றும் அகப்படவில்லை. மனுநீதி விளக்க மனுவாறு விளங்க (ஆறு என்றால் மார்க்கம்) அந்தணர் ஆகுதிக்கனல் ஒங்க, சாதி ஒழுக்கம் பிழறாது நிற்கத் தாங்கள் ராஜ்யபாரம் செய்ததாகவே அந்த ராஜாக்கள் சாஸனங்களில் வெட்டி

வைத்திருக்கிறார்கள்.

ஆரிய அரசர்களை எதிர்த்துச் செங்குட்டுவன் போராடி ஜயித்தான் என்பது போன்ற விஷயங்களைச் சிலப்பதிகாரம் போன்ற நூல்கள் சொல்லும்போதுகூட ஆரிய என்பது ரேஸைக் குறிப்பதாக இல்லவே இல்லை. தமிழ் மூவேந்தர்குள்ளேயே ஒருத்தரோடொருத்தர் சண்டை போட்டுக் கொள்ளவில்லையா?அப்போது அவர்கள் ஆண்ட ப்ரதேசத்தை வைத்து பாண்டிய நாட்டு ராஜாவை எதிர்த்தான் என்று சொல்கிறது போலவும், திராவிட தேசத்திலேயே அடங்கும் தெலுங்கு, கன்னட ராஜாக்களை எதிர்த்தான் என்பது போலவுந்தான் ஆர்யாவர்தம் என்ற பேரை வட இந்தியா முழுவதற்கும் விஸ்தரித்து அந்தப் பிரதேசத்தில் இருந்த ராஜாக்களை எதிர்த்ததை ஆரிய அரசர்களை எதிர்த்தான் என்று சொல்லியிருக்கிறது. ரேஸை வைத்துச்

சொல்லியிருந்தால், அந்த வட நாட்டிலே இருந்த ப்ராம்மணர்களும் நம்முடைய தெற்கத்தி ராஜாவுக்குச் சத்ருவாகத்தான் இருந்திருப்பார்கள். இப்போது தனித்தமிழ் நாகரீகத்தைச் சொல்கிறவர்களின் அபிப்ராயப்படி ஆர்ய ராஜாக்களை விடவும் அந்த ப்ராம்மணர்கள்தான் தமிழரசர்களுக்குப் பரம சத்ருவாக இருந்திருக்க வேண்டும். ஆனால் சிலப்பதிகாரத்தைப் பார்த்தாலோ, சேர ராஜா செங்குட்டுவன் வடக்கத்தி ராஜாக்களோடுதான் யுத்தம் பண்ணினானே தவிர அங்கே இருந்த ப்ராம்மணர்களுக்கு ஒரு ஹானியும் ஏற்படாமல் பார்த்துக் கொண்டான் என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. தேவ ரிஷிகள்- 'விசும்பு முனிவர்' என்று இருக்கிறது. அவனுக்கு முன்னே வந்து, ஹிமயமலை ராஜ்யங்களில் அருமறை அந்தணர்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பேணல் உன் கடமை என்று சொன்னதாக இருக்கிறது. அந்த ப்ராம்மணர்களுக்குச் சேர ராஜா செங்குட்டுவன் ஹானி பண்ணவில்லை என்பது மாத்திரமில்லை. தன் ஸைன்யத்திடம் அவன், வட திசையில் வேள்வித் தீ அவியாமல் மறை காத்து வருகிறவர்கள் அருள் குணத்தினால் தண்ணென்று இருக்கும் பெருவாழ்க்கை என்பார்கள். அவர்களைப் போற்றி ரக்ஷிக்க வேண்டும் என்று ஆக்ஞையிட்டதாகவும் இருக்கிறது.

வடக்கத்தி ராஜாக்களை ஜயித்து, ஹிமயமலையிலிருந்து கண்ணகி சிலை பண்ணுவதற்காகக் கால்லெடுத்து, அதைத் தோற்றுப்போன ராஜாக்களுடைய தலையில் ஏற்றி, சேர நாட்டுக்குத் திரும்பி வந்தவுடன் செங்குட்டுவன் யாகமே பண்ணினதாகவும் வருகிறது. யாகம் செய்யவேண்டும் அவனுக்கு தமிழ்நாட்டு பிராம்மணன் ஒருத்தன் (மாடல மறையோன் என்பவன்) எடுத்துச் சொன்னதை அவன் மனஸாரக் கேட்டுக் கொண்டானென்பதை, அந்த ப்ராம்மணன் ராஜாவின் காது என்கிற வயலில் உத்தமமான அர்த்தமுள்ள (வான்பொருள் என்று இருக்கிறது) தன் யோசனையாகிய விதைகளைத் தன்னுடைய வேதமயமான நான்கு என்ற ஏறினால் உழுது விதைத்தான். அதிலிருந்து விளைகிற ஸ்வர்க வாஸம் அல்லது மோக்ஷம் என்ற பெரும் பத்ததை அறுவடை செய்து அநுபவிக்கனுமென்ற வேட்கை ராஜாவுக்கு ஏற்பட்டு, உடனே அவன் நான்மறை மரபாகிற வேத ஸம்ப்ரதாயத்தின் ஸூக்ஷ்மங்கள் தெரிந்த யஜ்ஞ

ப்ராமணர்களைக் கொண்டு சாந்தி ப்ரதமான யாகம் அரம்பித்தான் என்று சிலப்பதிகாரத்தில் விவரமாகச் சொல்லியிருக்கிறது.

இதிலே ஆச்சரியமென்னவென்றால், சிலப்பதிகாரம் எழுதினவர் 'வேத வேள்வியை நிந்தனை செய்து உழல்' கிறவர்களென்று ஞானஸம்பந்தர் கண்டனம் பண்ணும் ஜைனர்களின் மதத்தைச் சேர்ந்த பிக்ஷு!.

அப்புறம் அவர் கண்ணகி விக்ரஹம் ப்ரதிஷ்டை யானதைச் சொல்கிறபோதும் -

இந்த நாளில், வேதமந்திரம் சொல்லித்தான் ப்ரதிஷ்டை பண்ணனுமா?அன்போடு தமிழில் சொன்னால் தெய்வசக்தி விக்ரஹத்தில் ஏறாதா?என்றெல்லாம் கேட்கிறார்கள். ஆனால் இவர்கள் தனித் தமிழ்த் தெய்வமாகச் சொல்லும் கண்ணகிக்கே செங்குட்டுவன் மூர்த்தி ப்ரதிஷ்டை செய்தபோது, அறக்களத்து அந்தணரைக் கொண்டு பண்ணியதாகவே இளங்கோ-அவர்தான் சிலப்பதிகாரம் எழுதியவர் சொல்லியிருக்கிறார். அறக்களத்து அந்தணர் என்பது ரொம்ப அழகான பதப் பிரயோகம். யுத்தம் என்கிற மறக்களத்தில் சேர ராஜா வீர தீரம் பண்ணி, கண்ணகி சிலைக்கான கல்லெடுத்து அதை வடக்கத்தி ராஜாக்கள் தலையில் வைத்துக் கொண்டுவந்தாச்சு. இனிமேல் அந்தக் கல் தெய்வமாக வேண்டும். இதற்கு மறக்கள ஸாமர்த்தியங்கள் பிரயோஜனப்படாது. வேத தர்மமான அறக்களத்தைச் சேர்ந்த அந்தணர்களால்தான் அதைப் பண்ண முடியும் என்ற இத்தனை அபிப்ராயத்தை ரத்னச் சுருக்கமாக அடக்கித்தான் அறக்களத்தந்தணர் என்று போட்டிருக்கிறார். முதலில் அவர்களைச் சொல்லி, அப்படிப்பட்ட அந்தணர், தன்னுடைய குரு(அதாவது புரோஹிதர்:அவரும் ப்ராம்மணர்) பெருங்கணி என்கிற ஜோஸ்யன், சில்பி ஆகியவர்களைக் கொண்டு மூர்த்திப் பிரதிஷ்டை பண்ணினான் என்று இருக்கிறது.

இத்தனைக்கும் சிலப்பதிகாரம் எழுதியவர் வேத பாஹ்யமான (வேதத்துக்குப் புறம்பான) சமண மதத்தைச் சேர்ந்த துறவி!இப்போது என்னடாவென்றால் வைதிகாச்சாரத்தில்

வந்த புலவர்கள், ஆராய்ச்சிக்காரர்கள், எழுத்தாளர்கள் முதலியவர்களே அந்தக் கால ராஜாக்களின் வைதிகப் பற்றை அடியோடு மறைத்துவிட்டு அது போதாதென்று அவர்கள் ஒரு நாளும் நினைத்துக் கூடப் பார்க்காத ஒரு தனித் தமிழ் கலாச்சாரத்தை அவர்கள் வளர்த்தாக வேறு ஜோடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஸத்யத்தை மறைக்கிறதும் அன்றைக்கு வாஸ்தவத்தில் இருந்ததை அடியோடு block - out(இருட்டடிப்பு) பண்ணி விட்டு, இன்றைக்குள்ள கொள்கைகளை அன்றைக்கிருந்தவர்கள் மீது ஆரோபித்து (ஏற்றி வைத்து) எழுதுவது நியாயமேயில்லை.

பிரதேச காலாச்சாரம் என்று அங்கங்கே கொஞ்சம் வித்யாஸமாகத்தான் இருக்கும். பேசுகிற பாஷையினாலும், வாழ்க்கைப் போக்குகளாலும், சீர்தோஷ்ணாதிகளைப் பொறுத்தும் பொதுவான பாரத மரபு என்ற ஒரே அடிமரத்திலிருந்து வெவ்வேறு கிளை மரபுகள் தோன்றத்தான் செய்யும். வேரும் அடிமரமும் ஒன்றேத்தான். மேம்போக்கானதுதான் மற்ற பிராந்திய வித்தியாஸங்கள்.

ஆனால் இன்றைக்கு நம்முடைய பண்டைய கலாச்சாரப் பெருமைகளைப் பிரகாசப்படுத்துவதாகச் சொல்லி அநேக மஹாநாடுகள், ஸெமினார்களெல்லாம் நடத்துகிறார்களே, இதிலே அநேகமாக வேராகவும், அடிமரமாகவும் இருக்கும்

பொதுவான வைதிக கலாச்சாரத்தை மறைத்தே விடுகிறார்கள். பிராந்திய கலாச்சாரங்களையே ஒரு தனியான முழு மரபு மாதிரி ஜோடித்து, ஆர்யன்-ட்ராவிடியன் என்ற கல்பிதமான பரஸ்பர-குஸ்தி நாகரிகங்களில் ட்ராவிடியனைத்தான் தூக்கிக் காட்ட வேண்டும் என்ற அபிப்ராயத்தில் இல்லாததையெல்லாம் ஸ்ருஷ்டி பண்ணிச் சேர்த்துப் பேசுகிறார்கள்;எழுதுகிறார்கள்.

பழைய சரித்திர புருஷர்களையும் ஸம்பவங்களையும் வைத்துக் கதை. கிதை அழகாகக் கட்டி ஜனங்களைக் கவரும் படியாக எழுதுகிறவர்களும் உண்மை நிலையை எழுதுவதில்லை. நிரம்ப மாஸ்-அப்பீல் உள்ள துறையிலிருப்பவர்கள் இப்படி

இருக்கிறார்களே என்று இருக்கிறது. இன்றைக்கு ஜனங்களில் பல பேர் புராணம், இதிஹாஸம், பழைய காலக் காவியங்கள்

எல்லாம் பொய்க் கதை என்று தள்ளிவிட்டு, ஆராய்ச்சி பண்ணி எழுதியது எனப்பட்ட இந்த நவீன காலக் கதைகளையே அதாரிட்டியாக நினைப்பதால், நம்முடைய பூர்வகால சரித்திரத்தைப் பற்றி அவர்கள் தப்பாக distortedஆக - புரிந்து கொள்ளும்படி ஆகியிருக்கிறதே என்று கஷ்டமாயிருக்கிறது. இன்றைக்கு நம் அபிப்பிராயம் எப்படி வேண்டுமானால் இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் பூர்வ விஷயங்களைச் சொல்வதாக நாம் புறப்படும்போது அன்றைக்கு எப்படி இருக்கிறதோ அதைத்தான் உள்ளபடிச் சொல்லணும். நம்முடைய அபிப்ராயங்களைப் பூர்வ காலத்தவர்கள் மேல் ஆரோபித்துச் சொல்லப்படாது என்ற அடிப்படை நியாயங்கூடத் தெரியாமலிருக்கிறார்களே என்று கஷ்டமாயிருக்கிறது.

ஒரு ராஜபாட்டை நீளநெடுகப் போகிறதுபோல வேத சாஸ்திர வழிதான் ஆதியிலிருந்தே இந்த பாரத தேசம் முழுதும் பரவலாக இருந்திருக்கிறது. அதிலிருந்தே கிளைச் சாலைகள் மாதிரிப் பிரதேச கலாச்சாரங்கள், ரொம்பவும் ஆதியிலேயே தமிழ்நாட்டினராக, தமிழ் மொழி பேசுபவர்களாக இருந்த தமிழர்களும் வைதிகாச்சாரத்தை ஏற்றவர்கள்தான். அதே சமயத்தில் இவர்கள்தான் கிளை மரபு என்றேனே, அப்படி தமிழ் நாட்டுக்கு மட்டும் உரிய சில பழக்க வழக்கங்கள், கலையம்ஸங்கள் முதலியவை ரூபமாவதற்கும் காரணமாக இருந்தவர்கள். இந்த ரீதியில் பார்க்கிறபோது சங்ககாலம் முடிய இருந்த முற்கால சேர சோழ பாண்டிய மூவேந்தர்களை வேண்டுமானால் தமிழ்க்கிளை மரபைப் பேணியவர்கள் என்று சொல்ல நியாயமுண்டு. அதுவும் கிளை மரபாகத்தான் இவற்றைப் பேணினார்கள். மூல மரபான மரமாக அவர்களும் பாரத தேசத்திற்கே பொதுவான வைதிக கலைச்சாரத்தைத்தான் பேணிணார்கள். மரத்திலிருந்து தனியாகத் துண்டித்து கிளை வரள முடியாது. இயற்கையாக களை வந்தது. அதையும் பேணினார்கள். தனித் தமிழ்ப் பண்பாடு என்று ஒன்றை அவர்கள் நினைக்கவேயில்லை.

ஆனால் இன்றைக்கு எழுதுகிறவர்கள், பேசுகிறவர்கள் அந்த மூவேந்தர்களுக்கும் அப்புறம் வந்த பல்லவர்களையும் தனித் தமிழ்ப்பண்பாட்டை வளர்த்தவர்களாகவே சித்தரிப்பதுதான் ரொம்ப ஆச்சர்யம்!மூவேந்தர்களும் தங்களை சூர்ய வம்ஸம்,

சந்த்ர வம்ஸம் சிபியின் பரம்பரை என்றெல்லாம்தான் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும் அவர்களில் பலருடைய பெயராவது நெடுஞ்சேரலாதன், சேரமான் பெருமாள், கரிகால் வளவன், கிள்ளி வளவன், நெடுஞ்செழியன், நெடுமாறன்

என்றெல்லாம் தமிழ்ப் பெயர்களாக இருக்கின்றன. ஆனால் பல்லவ ராஜாக்களுக்கோ ஸ்கந்த சிஷ்யன், குமார விஷ்ணு, ஸிம்ஹவர்மா, ஸிம்ஹ விஷ்ணு, மஹேந்திரன், நரஸிம்ஹன், பரமேச்வரன் நந்திவர்மா, தந்திவர்மா என்று எல்லாம் ஸம்ஸ்கிருதப் பெயர்களாக இருக்கின்றன. குடுமியாமலையில் ஸங்கீத விஷயமாக உள்ள மஹேந்திரவர்மாவின் கல்வெட்டும், இன்னும் அவர்களுடைய அநேக சாஸனங்களும் ஸம்ஸ்கிருதத்திலேயே இருக்கின்றன. அவர்கள் தங்களை பரம ப்ராஹ்மண்யர் என்று இந்த சாஸனங்களில் பொறித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஸம்ஸ்கிருத கடிகைகளை நிறையப் போஷித்திருக்கிறார்கள். பிராம்மணர்களை சர்மா என்கிற மாதிரி க்ஷத்திரியரை வர்மா என்று சொல்ல வேண்டும். அந்தப்படி பல்லவர்கள் மஹேந்திர வர்மா, நரஹிம்ம வர்மா, பரமேச்வர வர்மா என்று வர்மா போட்டுக் கொண்டவர்கள். தங்களை பாரத்வாஜ கோத்ரத்தினர் என்று சொல்லிக் கொண்டவர்கள்.

அவர்கள் காலத்தில்தான் அப்பர், ஸம்பந்தர், திருமங்கையாழ்வார் முதலியவர்களுடைய தெய்விகமாக தமிழ்ப் பாட்டுகளும் தோன்றிற்றென்பது வாஸ்தவம்தான். ஆனால் இந்தப் பாட்டுகளை அநுக்ரஹம் பண்ணிய பெரியவர்களும் வைதிக வழியை வளர்க்க வந்தவர்களே. வேதநெறி தழைத்தோங்க வைத்தவர்களே. அவர்களையும் சரி, அந்தப் பல்லவ ராஜாக்களையும் சரி, இந்த நாளில் ஆர்யன் வெர்ஸஸ் ட்ராவிடியன் என்கிற வெர்ஸஸில் கொண்டுவிட்டுத் தனித் தமிழ் நாகரீகத்தை வளர்த்தவர்கள் என்று சொல்வது கொஞ்சங்கூட ஸரியில்லை.

வேத ஸம்ப்ரதாயந்தான் உசத்தி என்று நிலை நாட்டுவதற்காக இதையெல்லாம் நான் சொல்ல வரவில்லை. வேதமோ, வேறே ஒன்றோ, எதுவானாலும் இந்த தேசம் பூராவுக்கும் ஒரே ஸம்ப்ரதாயந்தான் என்று எல்லோரும் புரிந்துகொண்டு பேதமில்லாமல் ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்ற

ஆசையில்தான் சொல்கிறேன். வேதம் வேணும் என்பதைவிட, நமக்குள் பேதம் வேண்டாம், வேண்டவே வேண்டாம். வெள்ளைக்காரர்கள் அவர்கள் கார்யம் நடப்பதற்காக கட்டி விட்ட ரேஸ் தியரியை நாமும் அப்படி நம்பிக் கட்சிகளாக உடைந்து நின்றுகொண்டு, த்வேஷமும் போட்டியுமாக இருக்க வேண்டாம். அல்லது இப்படி சண்டை வேண்டாமே என்பதற்காக ஸத்யத்தை விட்டுக் கொடுத்து இல்லாத ஒரு மரபை இருந்ததாகப் பெருமைப் படுத்திப் பிரகடனம் பண்ண வேண்டாம். தமிழ் மரபுக்காரர்கள் நடுவாந்தரத்தில் ஏதோ அசட்டுத் தனமாக ஏமாந்து போய் வேத மரபிலிருந்து அநேகம் எடுத்துக்கொண்டு விட்டதாகவும், இப்போது நாம் அதையெல்லாம் உரித்துப் போட்டுவிட்டுக் கலப்பில்லாக ஸ்வய மரபாகப் பண்ண வேண்டுமென்றும் முயற்சிகள் பண்ண வேண்டாம். கைலாஸத்திலிருந்து ராமேச்வரம் வரை உள்ள நாம் அத்தனை பேரும் அந்த இரண்டு இடத்திலேயும் ப்ரபுவாக உள்ள ஒரே பரமேச்வரனுடைய குழந்தைகளாக, ஸஹோதரர்களாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் சொல்கிறேன். இந்த உசந்த தமிழ் தேசத்தில் உலகத்திலேயே அதிகமான கோயில்களையும், பக்தி நூல்களையும் கொண்ட தேசத்தில் எத்தனையோ ஆயிரம் வருஷமாக ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருந்தவர்களுக்கிடையில் பேத எண்ணம் வலுக்காமல் ஒன்று சேர்ந்து வாழணும். அதே ஸமயம் ஸத்தியத்தை விட்டுக் கொடுக்காமல் யதார்த்தங்களை ஒப்புக் கொள்ளும் ஸத்யஸந்தர்களாக ஒன்று சேரணும் என்பதே என் பிரார்த்தனையாக இருக்கிறது. லோகம் முழுக்க நன்றாக இருக்கணும் என்று வேண்டிக் கொள்ளும்போதே

குறிப்பாக இந்த தமிழ் தேசத்திலே எல்லா ஒழிக!சப்தமும் போய் ஒன்றுக!êŠî«ñ, êŠîñ£è ñ†´I™ô£ñ™ è£˜òñ£è ïì‚è «õ‡´ªñ¡Áî£¡ ê‰ˆóªñ÷k„õóKì‹ åšªõ£¼ «õ¬÷»‹ º¬øJ´A«ø¡.

இப்போது நான் அலசினதில் யாரையாவது கண்டித்து, கிண்டித்துச் சொல்லியிருந்தால்கூட அந்தக் கண்டனத்தையெல்லாம் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். கண்டிக்கிறதும் பிரிந்து நிற்காமல் ஒன்றாக சேர்கிற நோக்கத்தில்தான். இல்லாததைச் சொல்லித்தான் ஒன்று சேரணும் என்றில்லை. ஒரு பெரிய உண்மையை

ஒளித்துத்தான் ஒன்று சேரணும் என்றில்லை. ஸத்தியம் வேண்டும். ஐக்கியமும் வேண்டும். ஸத்தியத்தோடேயே ஐக்கியம் ஏற்படட்டும் என்றுதான் சொல்வது. விபரீதமாகச் சிலது பண்ணுகிறபோது கண்டித்துச் சொன்னால்தான் எடுபடும் என்றே அப்படிச் சொல்வது. அடிப்படையில் ஆசை, நோக்கமெல்லாம் அத்தனை பேரும் அரன்குடி மக்களாக அன்போடு ஒன்று சேரனும் என்பதுதான். அரனுடைய மூத்த மகனைப் பற்றி சொல்ல ஆரம்பித்தது, நாம் எல்லோரும் அரன் குடி மக்களாக சேர அந்த மகனுடைய அருள்

ரொம்ப முக்கியம். நமக்குத் தெரியாமலே அவர் இதைப் பண்ணிக் கொண்டுத்தானிருக்கிறோம். எப்படியென்றால், அவருக்குத் தமிழ் தெய்வம் என்று இதுவரை யாரும் முத்திரை குத்தவில்லை. ஆனாலும் தமிழ் நாட்டில் அவருக்கு இருக்கிற அளவுக்கு வேறே எந்த ஸ்வாமிக்கும் கோவிலில்லை. ரேஸ் எண்ணங்கள் எழும்புவதற்கே இடம் கொடுக்காமல் நம் எல்லோரையும் அவர் பக்தியில் சேர்த்துப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறார். அறிவுக்கும் தெய்வமாக இருக்கப்பட்ட அவரே ஸரியான ஸத்தியமான ஒற்றுமை வழியில் நம்முடைய ஆராய்ச்சிகள் போவதற்கும், விபரீதமான முடிவுகள் பண்ணாமலிருப்பதற்கும் வழிகாட்ட வேண்டும்.

---



## மஹேந்திர பல்லவன் கலப்பு ஜாதியா ?

ஆராய்ச்சி என்ற பெயரில் எப்படியெல்லாம் விபரீதமாகப் பண்ணியிருக்கிறார்கள் என்பதற்கு ஒன்று சொல்கிறேன்;மஹேந்திர வர்மாவுக்கு அநேகப் பட்டப் பெயர்கள் உண்டு. அதில் 'ஸங்கீர்ண ஜாதி'என்று ஒன்று. அப்படியென்றால் 'கலப்பு ஜாதி'. இந்த நேர் அர்த்தத்தை

வைத்துக் கொண்டு நான் சொல்கிற ஆராய்ச்சியாளர்கள் என்ன பண்ணினார்களென்றால் 'மஹேந்திர வர்மா சுத்த க்ஷத்திரியரில்லை;கலப்பு ஜாதியில் பிறந்தவன் அதில் பெருமையும் பட்டவன். அதனால் சாஸனங்களில் அவனே அப்படி பிருதம் (விருது) போட்டுக் கொண்டிருக்கிறான் என்று முடிவு பண்ணிவிட்டார்கள். ஜாதிமுறையைப் பற்றி இன்றைக்கு என்ன அபிப்பிராயமிருந்தாலும் நம்முடைய பழைய ராஜாக்கள் மநு தர்ம சாஸ்திரப்படி வர்ணாச்ரமங்களைப் பரிபாலித்து வந்ததாகவே கல்வெட்டுகள், செப்பேடுகள், புலவர்களின் பாடல்கள் எல்லாம் திரும்பத் திரும்பச் சொல்கின்றன. அப்படிப்பட்ட காலத்தில் 'பாரத்வாஜ'கோத்திரக்காரர் என்று தங்களை பெருமையோடு சொல்லிக்கொண்ட பல்லவ வம்ஸ ராஜா ஒருத்தன் தன்னைக் கலப்பு ஜாதியில் பிறந்தவன் என்பதை ஒரு பிருதமாக ஒருநாளும் போட்டுக் கொள்ள மாட்டான். இப்போது நேருவை ப்ராம்மணோத்தமர், வர்ணாச்ரம ரக்ஷகர் என்று சொன்னால் அவருக்கு எவ்வளவு கோபம் வரும்?அப்படித்தான் பதிமூன்று ஸெஞ்சுரிக்கு முன்னால் இருந்த மஹேந்த்ர வர்மாவுக்கு அவன் நிஜமாகவே கலப்பு ஜாதியாயிருந்திருந்தால்கூட அப்படிச் சொன்னால் கோபம்தான் வரும். அவன் எழுதியுள்ள மத்த விலாஸ ப்ரஹஸனம் என்ற ஹாஸ்ய நாடகத்தில் முடிவாக பரத வாக்யம் என்று மங்கள ஸ்லோகம் சொல்கிறபோது, ப்ரஜைகளின் க்ஷேமத்திற்காக அக்னி பகவான் ஆஹுதிகளை தேவர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்துக் கொண்டிருக்கட்டும். அதாவது, என் ராஜ்யத்தில் யாக யஜ்ஞங்கள் நடந்து கொண்டிருக்கட்டும். ப்ராம்மணர்கள் வேதத்தை நன்றாக அப்யாஸம் பண்ணிக் கொண்டிருக்கட்டும். பசுக்கள் பாலைப் பொழிந்து கொண்டிருக்கட்டும் என்கிறான். க்ஷீர ஸ்ம்ருத்தியை (பால் செழிப்பைச் சொல்வதும் அக்னி ஹோத்திரத்துக்கு அது பிரயோஜனப் படுவதால்தான். கோ ப்ராஹ்மணேப்யோ என்றும் அந்தணர் (வானவர்) ஆனினம் என்று சேர்த்துச் சொல்வது அவர்களிடம் மட்டும் பக்ஷபாதத்தினால் அல்ல!ப்ராம்மணன், பசு இரண்டும் யாகத்திற்கு அவசியமாயிருப்பதால் அப்படிச் சொல்வது. இப்படி வைதிக ஆசரணைகளைப் போற்றியவன் தன்னை ஸங்கர (கலப்பு) ஜாதிக்காரன் என்று டைட்டில் போட்டுக் கொண்டிருக்கவே

மாட்டான்.

பின்னே ஸங்கீர்ண ஜாதி என்றால் என்ன?புரியாமல் கஷ்டப்படுத்திற்று. அப்புறம் ஸங்கீத ஆராய்ச்சிக்காரர்கள் புரிய வைத்தார்கள்.

மஹேந்திர வர்மா ஸங்கீதத்தில் மஹா நிபுணானாயிருந்து புதுக்கோட்டை கிட்ட குடுமியா மலையில் ஸங்கீத விஷயமாக புதிய கல்வெட்டு, லோகத்திலேயே அதுமாதிரி ஒன்று இல்லை என்னும்படிப் பொறித்து வைத்தவன். அதனால் ஸங்கீத ஆராய்ச்சிக்காரர்கள் இந்த டைட்டிலுக்கு ஸங்கீத சாஸ்திரத்தை வைத்து அர்த்தம் பண்ணினார்கள். தாளங்களில் கலப்பு வகையாக ஸங்கீர்ண ஜாதி என்று ஒன்று உண்டு. அதில் கெட்டிக்காரனாக, அல்லது அதைக் கண்டு பிடித்தவனாக அவன் இருந்திருப்பான். அதனால் அப்படி டைட்டில் என்று சொன்னார்கள். எனக்கும் ஆறுதலாக இருந்தது. சாஸ்த்திராபிமானமுள்ள ஒரு ராஜா தன்னைக் கலப்பு ஜாதிக்காரனென்று டைட்டிலே போட்டுக் கொண்டு ப்ரகடனப்படுத்தினான் என்கிறார்களே என்று வருத்தப்பட்டது ஸமாதானமாயிற்று.

அப்புறம் அந்த ஸமாதானம் மறுபடி குலைத்து போயிற்று. ஸங்கீத ரிஸர்ச்காரர்களிலேயே சில பேர் இன்னும் ஆழமாகப் பார்த்து ஸங்கீர்ண ஜாதித் தாளம் தற்போது இருக்கிற தாள முறையில் வருவதே. இந்த முறை தோன்றி 500 வருஷத்துக்குள்தான் ஆகிறது. 1300 வருஷம் முந்தி இருந்த மஹேந்த்ர வர்மா அதை ஒருகாலும் குறிப்பிட்டிருக்க முடியாது என்று நிறைய ஆதாரம் காட்டிச் சொன்னார்கள்.

இதென்னடா?என்று மறுபடி விசாரமாயிற்று.

மஹேந்திர வர்மா ரொம்ப வேடிக்கைப் பிரியன், witty.தன்னை பரிஹாஸம் பண்ணிக் கொள்கிற மாதிரிக்கூட டைட்டில்கள் போட்டுக்கொண்டவன். அதற்கேற்ற, விநோதமாக, பல தினுஸாக இருக்கறதுதான் தன் ஸ்வபாவம் என்று தெரிவிப்பதற்காக 'விசித்ர சித்தன்'என்றே ஒரு பிருதம் போட்டும் கொண்டவன். இன்னொரு பக்கம் இஷ்ட-துஷ்ட-ப்ரஷ்ட சரிதன் என்றும் போட்டுக் கொண்டிருக்கிறான்.

இஷ்ட சரிதன் ஸரி. எல்லோரும் இஷ்டப்படும் படியான நடத்தை உள்ளவனென்று அதற்கு அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். சத்ருக்களிடமும், குற்றவாளிகளிடமும் ரொம்பக் கடுமையாக இருப்பவன் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். ப்ரஷ்ட சரிதன் என்பதை எப்படி நல்லதாக அர்த்தம் பண்ணுவது?ஆனாலும் அதையும் டைட்டிலில் சேர்த்துக் கொண்டிருக்கிறான். வாஸ்தவத்தில் அவன் சரித்திரத்தைப் பார்த்தால் 'பிரஷ்டன்'என்னும்படி எதுவுமே இல்லாவிட்டாலும், வேண்டுமென்றே நம்மை மட்டமும் தட்டிக் கொள்வோமே!பட்டங்கள் உயர்வாகப் போட்டுக் கொள்வது எல்லா ராஜாக்களும் செய்வதுதான். நாம் அவர்களில் ஒருத்தனாக இல்லாமல் uniqueஆக இருக்கிற விசித்ர சித்தன் அல்லவா?அதனால் மட்டந்தட்டிக் கொண்டும் சிலது போட்டுக் கொள்வோம் என்று பண்ணினது போல இருக்கிற விசித்திர சித்தன் அல்லவா?அதனால் மட்டந்தட்டிக் கொண்டும் சிலது போட்டுக் கொள்வோம் என்று பண்ணுனது போல இருக்கிறது. ராஜா என்றால் இல்லாத உசத்தியெல்லாம் கற்பித்து நிறையப் பட்டம் போட்டுக் கொள்வது என்று வழக்கமாயிருந்தால், தானும் அப்படிப் போட்டுக் கொண்டபோதே, அந்த வழக்கத்தை parody-யும், அதாவது நையாண்டியும், செய்கிற விதத்தில் இப்படி மட்டமான விஷயத்தையும் போலிருக்கிறது. நையாண்டி பண்ணுவதில் அவன் எத்தனை சதுரன் என்பதற்கு அவன் எழுதின மத்த விலாஸம் என்ற ப்ரஹனதத்தை அதாவது farceஎன்கிறார்களே, அப்படிப்பட்ட கேலி நாடகத்தைப் பார்த்தாலே போதும். அந்த மனப்போக்கில்தான் அவன் மற்ற ராஜாக்களெல்லாம் தங்கள் வம்ஸத்தைப் பற்றி ஆஹா, ஊஹூ என்று சொல்லிக்கொண்டு, தாங்களே அப்பேர்ப்பட்ட வம்ஸத்தின் சூடாமணி, தினமணி, சிந்தாமணி என்றெல்லாம் பட்டம் போட்டுக் கொள்கிற வழக்கத்தைக் கேலி பண்ணி, நான் கலப்பு ஜாதி என்று இல்லாததைச் சொல்லி ஒரு டைட்டில் போட்டுக் கொண்டான் போலிருக்கிறது. என்று ஒரு மாதிரி என்னை ஸமாதானப் படுத்திக் கொள்ளப் பார்த்தேன். ஆனாலும் முழுக்க முழுக்க ஸமாதானமாகவில்லை.

வர்ணாச்ரம விபாகங்கள் (பிரிவினைகள்) இல்லாத ஜைன

மதத்தைத்தான் முதலில் அவன் தழுவியிருந்தான். அப்பர் ஸ்வாமிகளும் நடுவில் சில காலம் அந்த மதந்திலிருந்துவிட்டு அப்புறம் வைதிக மதத்துக்குத் திரும்பினவர் தான். அதற்காக அவன் படாத பாடு படுத்திவிட்டு, அது ஒன்றும் அவனைத் தொடவில்லை என்று அற்புதங்களுக்கு மேலே அற்புதமாகப் பார்த்துவிட்டு, அப்புறம் தானே வைதிக மதத்தைத் தழுவி விட்டான். இப்படிப்பட்ட புது கன்வெர்ட்கள்தான் எப்போதும் தீவிரமாயிருப்பது. அப்படியிருக்க இவன் நையாண்டியாகக்கூடத் தன்னை "ஸங்கீர்ண ஜாதிக்கார" னாக சொல்லிக் கொள்ளும் அளவிற்கு போயிருப்பானா என்ற கேள்வி தோன்றிக் கொண்டேயிருந்தது. 'பிரஷ்டன்'என்று சொல்லிக் கொண்டதுகூட ஒரு காலத்தில் தான் 'வேத பாஹ்யனாக'(வேத வழிக்குப் புறம்பாக) வேறு மதத்தில் இருந்ததை 'ஹின்ட்'பண்ணுவதற்கும் இருக்கலாம். ஸங்கீர்ண ஜாதிக்கு அடிப்படைக் கூடக் காரணம் காட்டுவதற்கில்லலையே என்று யோஜித்துக்

கொண்டிருந்தேன்.

முடிவாக, புதிருக்கு 'ஸொல்யூஷனும்'பிற்பாடு கிடைத்தது. ஸங்கீத ஆராய்ச்சிக்காரர்களேதான் நன்றாக அலசிப் பார்த்து இப்படி தீர்மானமாக 'ஸால்வ்'ð‡E, ªè£´ˆî£˜èœ. â¡ù ªê£¡ù£˜èª÷¡ø£™,

'ஸங்கீர்ண ஜாதி'என்பதில் ஜாதி என்று வருவது ராகத்தைக் குறிப்பதே தவிர, நீணீஉமீ்மீ-ஐ இல்லை என்று அவர்கள் எடுத்துக் காட்டினார்கள். பரத சாஸ்திரத்திலேயே ராகம் என்ற

பெயரில்லை. ஜாதி என்றுதான் இருக்கிறது. மஹேந்திர வர்மாவுக்கு சுமார் நூறு வருஷம் முன்னாலிருந்த 'மதங்கர்தான் ராகம்'என்ற பெயரைக் கொண்டுவந்தார். அவருக்கப்புறமும் கொஞ்ச காலம் பழைய பேர் எடுபட்டுப் போகாமல் இரண்டு பேரும் வழங்கி வந்திருக்கிறது. மதங்கர் ராகங்களில் ஸங்கீர்ணம் என்கிற ஒரு கலப்பு தினுஸைக் கொல்லியிருக்கிறார். மஹேந்திர வர்மா இப்படிப்பட்ட கலப்பு ராகங்களை ஸ்ருஷ்டி பண்ணுவதில் ஸ்பெஷலைஸ் பண்ணியிருந்தானென்று அவனுடைய 'குடுமியாமலைக்

கல்வெட்டில்'கொடுத்துள்ள 'ஸ்கேல்'(ஸ்வரக்கிரமம்) களிலிருந்து நிரூபணமாகிறது. அதை வைத்துத்தான் 'ஸங்கீர்ண ஜாதி'என்று பட்டம் பேட்டுக் கொண்டிருக்கிறான் என்ற ஆராய்ச்சிக்கு சுபமான முடிவு கட்டினார்கள்.

ஸங்கீர்ண ஜாதி அதாவது கலப்பு ராகம் என்னவென்று அவர்கள் காட்டியிருப்பதில் எனக்கு புரிந்த மாட்டில் சொல்கிறேன். இப்போது மேள (கர்த்தா) ராகம் என்று எழுபத்திரண்டை வைத்து, அவற்றிலிருந்தே பாக்கி அத்தனை ராகங்களும் வந்திருப்பதாக 'க்ளாஸிஃபை'செய்திருக்கிறார்கள். அந்த 72 ராகங்களை இரண்டு பெரிய டிவிஷன்களாகப் பிரித்திருக்கிறது. ஸப்த ஸ்வரங்களில் நடுவவே வரும் 'ம'வில் இரண்டு தினுஸு இரண்டில் தாழக்க (தாழ்வாக) இருப்பது சுத்த மத்யமம் - சங்கராபரணத்தில் வருகிற 'ம'(த்யமம்) தூக்கலாக இருப்பது ப்ரதி மத்யமம் கல்யாணியில் வருவது. இப்படி இரண்டு விதமாக உள்ள மத்யம வித்யாஸத்தை வைத்தே 72 மேளங்களை சுத்த மத்யம ராகங்கள் 36, ப்ரதி மத்யம ராகங்கள் 36 என்று இரண்டு டிவிஷன்களாகப் பண்ணியிருப்பது. கர்நாடக சங்கீதம் இப்போது இருக்கிற முறைகளிலும் சரி, அதற்கு ஆதாரமாகத் தேவார காலம் முதலானவற்றிலிருந்த தமிழ்ப் பண்களின் முறைபாட்டிலும் சரி. எந்த ஒரு ராகத்திலும் இரண்டு மத்யமங்களும் வராது. 'ம'மாதிரியே 'ரி','க','த','நி'ஆகிய ஸ்வரங்களிலும் ஒவ்வொன்றிலும் இரண்டு வகை உண்டு. இவற்றிலே ஒரு ராகத்தின் ஆரோஹணத்தில் (ஏறு வரிசையில்) ஏதோ ஒரு வகையான 'ரி','க','த','நி'வரும் ராகங்கள் அநேகமிருக்கின்றன. ஆனால் நம்முடைய தக்ஷிண தேச ஸங்கீதத்தில் வரும் ராகங்களில் மத்யமத்தில் மட்டும் வித்யாஸமில்லாமல், (ஏறு வரிசையில்) போகும்போதும் (இறங்கு வரிசையில்) வரும் போதும் ஒரே 'ம'தான் வரும். ஒரு ராகமென்றால் அது ஒன்று சுத்த மத்யம ராகமாக இருக்கும். இரண்டும் கலந்த ராகம் - அதாவது மத்யமத்தில் 'ஸங்கீர்ண'மாக இருக்கிற ஜாதி கிடையாது.

ஆனால் இப்படிப்பட்ட இரட்டை மத்யம ராகங்களையும் மஹேந்திர வர்மா ஸ்ருஷ்டித்திருக்கிறான். அவன் கல்வெட்டில் கொடுத்திருக்கிற ஏழு ராகங்களிலுமே இரண்டு மத்யமங்களும் வருகின்றனவாம். அதனால்தான் அவனுக்கே

ஸங்கீர்ண ஜாதி என்று பட்டப் பேர்.

அவனுடைய 'ஸங்கீக'வழியை அப்புறமும் தக்ஷிணத்தில் பின்பற்றவில்லை. ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தில்தான் இரண்டு மத்யமங்களும் வரும் ராகங்கள் இருக்கிறனவென்றும், அவை ரொம்பவும் 'ரஞ்ஜக'மாக இருப்பதால் பிற்காலத்தில் நம்முடைய ஸாஹித்ய கர்த்தாக்களும் வித்வான்களும்கூட அப்படிப்பட்ட வடக்கத்தி ராகங்களில் சிலதை எடுத்துக் கொண்டிருக்கிறார்களென்றும் தெரிந்து கொண்டேன்.

ஆராய்ச்சி என்ற பெயரில் நவநாகரீகக் கொள்கைகளைப் பூர்விகர்கள் மேல் அபிப்ராயத்தைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தேன். இப்போது கலப்பு மனம் உயர்ந்த

விஷயமாக சில பேருக்கு இருப்பதால் என்றைக்கோ இருந்த மஹேந்திரவர்மாவைக் கலப்பு ஜாதிக்காரர்களாகியதாகச் சொன்னேன். இப்படி ஒன்றுதான் அவனுடைய பிள்ளைக்கு ஸேநாதிபதியாயிருந்த மாமாத்திரப் பரஞ்ஜோதியை இன்றைக்குச் சில பேருக்குத் தனித் தமிழ்ப் பாரம்பர்யம் காட்டுவதில் ஆசை இருப்பதால் தமிழ்நாட்டு வேளாளராக்கியிருப்பது.

---



## மாமாத்திரப் பரஞ்ஜோதி

மஹாமாத்ரர் என்பது தமிழில் மாமாத்திரர் என்று ஆயிற்று. வைதிகத் தொழிலை விட்டு வைத்யத் தொழிலுக்கும், போர்த் தொழிலுக்கும் போய்விட்ட ப்ராம்மணர்களை ஜாதி ப்ராம்மணர்களிலிருந்து வேறுபடுத்தி மஹாமத்ரர்களென்று வைத்ததற்கு நிறைய ஆதாரமிருக்கிறது. ராஜீய விஷயங்களில் அவர்கள் ரொம்பவும் உசந்த ஸ்தானம் வஹித்து இன்னின்னவற்றில் பெரிய அளவு, அதாவது

பெரிய பங்கு பெற்றிருந்தால்தான் மஹாமாத்ரர் என்று பேர் என்று ச்லோகமிருக்கிறது. மஹா-பெரிய, மாத்ரா-அளவு, என்னென்னவற்றில்?

மந்த்ரே, கர்மணி, பூஷாயாம், வித்தே, மானே, பரிச்சதேI

மாத்ரா ச மஹதீ யேஷாம் மஹாமாத்ராஸ்து தே ஸ்ம்ருதா: II

'மந்த்ரே'என்றால் இந்த இடத்தில் மந்திர சாஸ்திரத்தில் என்றில்லாமல் ராஜாவின் மந்திராலோசனையில் என்று அர்த்தம் செய்து கொள்வதே பொருத்தம். மஹாமாத்ரருக்கு மந்த்ராலோசனையில் பெரிய பங்கு உண்டு. அப்புறம் கர்மணி-ராஜ கார்யங்களிலெல்லாம் அவருக்கு நிறையப் பங்கு உண்டு. பூஷாயாம் - பூஷணங்கள். அவருடைய ஆபரணங்களும் ராஜரீக தடபுடலோடு இருக்கும். வித்தே-செல்வத்திலும் பெரிய அளவு பெற்றவர். மானே-மரியாதை. ராஜாவுக்கு அடுத்தாற்போல் குடிபடைகளின் மரியாதைகளைப் பெறுபவர். பரிச்சதே-பரிவாரம். ராஜாவுக்குப் பரிவாரம் இருக்கிறாற்போல இவருக்குமுண்டு. பரிச்சதே என்பதற்கு வஸ்திரங்கள் என்றும் அர்த்தம். உயர்ந்த ரக உடுப்பு மஹாமந்த்ரர்களுக்கு உண்டு என்று அர்த்தம்.

மந்த்ராலோசனை, ராஜீய கார்யங்கள், ஆபரணங்கள், செல்வம், மரியாதை, பரிவாரம் எல்லாவற்றிலும்.,

மாத்ராச மஹதீ யேஷாம்- எவர்களுடைய அளவு மஹத்தானதாக இருக்கிறதோ, மேலே சொன்னவற்றிலெல்லாம் எவர்கள் ஹை லெவலில் இருக்கிறார்களோ,

மஹாமாத்ராஸ்து தே ஸ்ம்ருதா-அவர்கள் மஹா மாத்ரர்கள் என்று கருதப்படுகிறார்கள்.

இங்கே சொல்லியுள்ள ஸமாச்சாரங்கள் அந்தக் கால ஸெட்-அப் பில் வேளாளர்களுக்குப் பொருந்துவதில்லை.

ஸம்ஸ்கிருத அகராதிகளில் முதல் ஸ்நானம் பெற்றுள்ள 'அமர'த்தில் மஹாமாத்ரர்களைச் சொல்லியிருக்கிறது. ராஜாக்களில் சக்ரவர்த்தி, ஸார்வபௌமன், மண்டலேச்வரன்,

ஸம்ராட் என்ற பல வகைகளைச் சொல்லிவிட்டு அவனுடைய பரிவாரத்தைச் சொல்லும் போது மஹாமாத்ரா என்று வருகிறது. மந்த்ரி ப்ரதானி என்று பொதுவாகச் சொல்கிறோம். ப்ரதானி என்றால் ராஜாங்கத்தில் மந்த்ரிக்கு அடுத்தபடிப் பிரமானமாயிருக்கும் நிர்வாஹ அதிகாரி. இந்த ப்ரதானிக்கு முன்னதாகவே, மந்த்ரி மண்டலத்தைச் சொன்னவுடனேயே அமரத்தில் மஹாமந்த்ரர்களைச் சொல்லிவிட்டு அப்புறந்தான் ப்ரதானியையும், அதற்கும் அப்புறம் புரோஹிதரையும் சொல்லியிருக்கிறது.

மநுஸ்ம்ருதி ரொம்பப் புராதனமான புஸ்தகம். தர்ம சாஸ்திரத்துக்குள்ளே அதற்குந்தான் தலைமை ஸ்தானம். அதிலேயே மஹாமாத்ரர்களைப் பற்றிக் குறிப்பு இருக்கிறது. ஆனால் இதில் ஒரு விசித்ரம், நல்ல படியாக நடக்கிற மஹாமாத்ரர்களைப் பற்றி இல்லாமல் கெட்டுப்போன மஹாமாத்ரர்களைப் பற்றியே அதில் வருகிறது. ஒரு ராஜா எப்படி தண்ட நீதியை நடத்த வேண்டுமென்று சொல்லிக்கொண்டு போகிறபோது நீதித் தண்டத்திற்கு ஆளாக வேண்டிய விதவிதமான குற்றவாளிகளைப் பற்றி (மநு) சொல்கிறார். அப்போது வெளிப்பட்ட

அக்ரமம் என்று தெரியும்படிச் செய்யும் திருடன் முதலானவர்கள் மட்டுமில்லாமல், அப்படித் தெரியாமல், ஸமூஹத்தில் கௌரவ ஸ்தானத்திலிருப்பவர்கள் வஞ்சகமாக அக்ரமம் செய்வதையும் சொல்லியிருக்கிறார். யார் யாரென்றால், முதலில் மஹாமாத்ரர்கள், அப்புறம் வைத்தியர்கள், மூன்றாவதாகச் சிற்பிகள், கடைசீயாக நாட்டிய ஸ்திரீகள். ஒரு ராஜாவுக்கு, ராஜ்யத்துக்கு இந்த நாலு பேர் முக்கியம். நிர்வாஹத்திற்கு மஹாமாத்யர், தேஹாரோக்கியத்துக்கு வைத்யர். ராஜாவின் ஒரு முக்யமாக கடமை கோயில்கள் கட்டி

ஜனங்களின் பக்தியை வளர்ப்பது - அதற்கு அவசியமானவர் சில்பி. அந்தக் கோயிலில் ஸ்வாமி ஸமர்ப்பணத்திற்கு பூஜாபசாரமாக நாட்யமாடுவதற்காக தேவதாஸிகள். ராஜ ஸதஸிலும் பொழுது போக்குக்கு நாட்யம் ஆடுவதற்கு அவர்கள் வேண்டும். தங்கள் பொஸிஷனை துஷ்பிரயோகம் பண்ணக்கூடிய இந்த நாலு விதமான குற்றவாளிகளை மநு சொல்லி, இவர்களை தேசத்திற்கு முள்ளாக (லோக கண்டக

என்று இருக்கிறது. கண்டக என்றால் முள்;அப்படி) ராஜா கருதித் தண்டிக்கணும் என்கிறார். இங்கே நிர்வாக இலாக்காவின் முக்கியமான அதிகாரிகளுக்கு ப்ரதிநிதியாக அவர் மஹாமத்ரர்களையே சொல்லியிருப்பதால் அவர்களுடைய ஸ்தான விசேஷம் தெரிகிறது.

பிராம்மணர்களின் உயர்ந்த வைதிகாச்சாரங்களை விட்டு விட்டவர்கள் என்றாலும், வைத்திய சேவையோ எதுவானாலும் தாங்கள் எடுத்துக் கொண்டதைத் திறம்பட ஆற்றியதாலேயே அவர்களுக்கு மஹாமத்ரர் என்ற பெயர் உண்டாகியிருக்கிறது. மாத்ரர் என்றால் அளவுகோலாக இருப்பவர்கள். ஜனஸமூஹம் எப்படி நடக்க வேண்டும் என்பதற்கு உயர்ந்த, பெரிய அளவுகோளாக இருந்தவர்களை மஹாமாத்ரர் என்கலாம்.

அவர்கள் வேத அத்யயனம் விசேஷமாகப் பண்ணாவிட்டாலும் சாஸ்திர புஸ்தகங்கள் நன்றாகப் படித்தவர்கள். பரஞ்ஜோதியைப் பற்றிச் சேக்கிழார் (பெரிய புராணத்தில்) சொல்கிறபோது அவர் ஆயுர்வேதம் நன்றாக கற்றுக் கொண்டார். ஏராளமாக ஸம்ஸ்கிருதத்தில் இருக்கும் சாஸ்த்ரங்களும் படித்தார் என்று சொல்லியிருக்கிறார். ஆயுர்வேதம், தநுர்வேதம் இரண்டுமே மாமாத்ரர்கள் அப்பியாஸம் பண்ணியதற்கேற்க இவரும் யுத்த சாஸ்திரங்கள் படித்துத் தங்கள் ஜாதியார் அதில் குறிப்பாக ஸ்பெஷலைஸ் செய்திருந்த கஜ சாஸ்திர, அச்வ சாஸ்திரங்களில் ரொம்பவும் கெட்டிக்காரர்களாக விளங்கினார் என்றும் சொல்லியிருக்கிறார். அதாவது, யானைப்படை, குதிரைப்படை நிர்வாகத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார் என்கிறார்.

திருஞானசம்பந்தர் திருச்செங்காட்டங்குடிக்கு வந்தபோது பரஞ்ஜோதிக்கு அந்தப் பேர் போய் அவர் சிறுத் தொண்டர் என்ற நாயனாராகி விட்டார். நாயன்மாரில் ரொம்பப் பேர் போய் அவர் சிறுத் தொண்டர் என்ற நாயனாராகி விட்டார். நாயன்மாரில் ரொம்பப் பேர் க்ருஹஸ்தர்களாகி இருந்த மாதிரி இவரும் க்ருஹஸ்தர்களாகத்தான் இருந்தார். இவர் அந்தத் தெய்வக் குழந்தையை தம்முடைய க்ருஹத்துக்கு எழுந்தருளப் பண்ணியதைச் சேக்கிழார் வர்ணிக்கும்போது தம்முடைய பூணூல் போட்டுக் கொண்டுள்ள மார்பில்

ஞானஸம்பந்தருடைய பாதங்களைப் படுத்துக் கொண்டாரென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார். அதனால் அவர் நிச்சயம் வேளாளராக இருந்திருக்க முடியாது.

சிறுத்தொண்டரின் பிள்ளை சீராளன் பிறந்தவுடன் அவர் பத்து நாள் சடங்குகள் பண்ணினாரென்று பெரிய புராணத்தில் சொல்லியிருப்பதும் பிராம்மண ஆசாரத்தைத்தான்

உறுதிப்படுத்துகிறது. அந்த இடத்தில் உரிமைச் சடங்கை தச தினத்தில் செய்தார் என்று வருகிறது. ஜாதிப் பிராம்மணர்களிடமிருந்து மாமாத்திரர்களைப் பிரித்து வைத்திருந்தாலும் அவர்களுடைய சடங்கு, ஸம்ஸ்காரங்களில் அநேகம் இவர்களுக்கும் குல உரிமையாகக் கொடுத்திருந்தால்தான் உரிமைச் சடங்கு என்று போட்டிருக்கிறார். பிரஸவ தினத்தையும் சேர்த்துப் பதினோராம் நாள் ஒரு பிராம்மணக் குழந்தைக்குப் புண்யாஹவாசனம் பண்ணி நாமகரணம் செய்யப்படுகிறது. பிரஸவ தினத்தைச் சேர்க்காமல் அதைப் பத்தாம் நாளென்றே ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் சொல்லியிருக்கிறது. தசம்யாம் என்று அதிலிருக்கிறது. அந்தப்

பிரகாரம் சேக்கீழாரும் தச தினத்தில் சொல்லியிருக்கிறார்.

குழந்தைக்கு நெய்யாடல் விழா செய்தார்களென்றும் இங்கே வருகிறது. அது என்னவென்று சரியாகத் தெரியாவிட்டாலும், நல்ல வைதிக ப்ராம்மண ஜாதியில் கௌண்டின்ய கோத்திரத்தில் (கௌணியன்-என்று அவரே தம்மைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்) பிறந்த ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகளின் ஜனனோத்ஸவத்தைச் சொல்கிற இடத்திலும் சேக்கிழார் இதே நெய்யாடல் நடந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

அப்புறம் சீராளனின் மூன்றாம் வயஸில் அவனுக்கு சாஸ்திரப் பிரகாரம் சொன்ன ஸம்ஸ்காரம், அதாவது குடுமிக் கல்யாணம், பண்ணினார்களென்று வருகிறது.

இதுகளிலிருந்து ஜாதி ப்ராம்மணர்களுக்கு அடுத்தாற்போன்ற ஸ்தானம் மாமாத்ரர்களுக்கு இருந்தாகத் தெரிகிறது. அதை கன்ஃபார்ம் செய்வதாக ஒரு பெரிய எவிடென்ஸ் இருக்கிறது.

சேக்கிழார் சுவாமிகளின் புராணம் என்று அறுநூறு வருஷங்களுக்கு முற்பட்ட ஒரு பழைய நூல் இருக்கிறது. அது சித்தாந்த சைவத்தில் ஒரு ஆச்சார்ய புருஷனாகப் போற்றப்படுகிற உமாபதி சிவாச்சார்யார் செய்தது. உமாபதி சிவம் என்ற வேறே ஒருவர் பண்ணினது என்றும் ஒரு அபிப்பிராயம் இருக்கிறது. எப்படியானாலும் பழைய நூல். அதாரிடி உள்ளதாகக் கருதப்படுகிறது. அதில் 63 நாயன்மாரில் என்னென்ன ஜாதியில் எத்தனையெத்தனை பேர் இருந்தார்களென்று கணக்குக் கொடுத்திருக்கிறது.

அதில் முதலில் சுத்த வைதிக ப்ராம்மணர்களைக் குறிப்பிட்டு, நாயன்மார்களில் அந்த ஜாதியார் 13 பேர் இருந்தார்களென்றும், அப்புறம் ஆகம தீக்ஷை பெற்ற குருக்கள் என்றும் சிவ ப்ராம்மணர் என்று சொல்கிறோமே, அந்த வகுப்பைச் சேர்ந்த ஆதி சைவர்கள் இரண்டு பேர் என்றும் சொல்லிவிட்டு, மூன்றாவதாக குரை கழல் மாமாத்திர வகுப்பில் ஒருவர் என்று குறிப்பிட்டிருக்கிறது. குரை கழல் என்பது சப்திக்கிற வீரக்கழல் அணிந்தவர் என்று காட்டுகிறது. ஸாதாரணமாக அது க்ஷத்திரியர்களுக்கே உரிய அணியானாலும், இங்கே வைதிக ப்ராம்மணரையும், சிவ ப்ராம்மணர்களையும் சொன்னவுடன் வருகிற மாமாத்திரருக்கு அதைச் சொல்லி, அப்புறம் அஸல் க்ஷத்திரியர்களைச் சொல்லியிருக்கிறது. இதிலிருந்து பிரம்ம க்ஷத்திரியருக்கு இடைப்பட்ட ஸ்தானம் மாமாத்ரருக்கு இருந்தது தெரிகிறது. அப்புறம் க்ஷத்ரிய ஜாதியில் இடம் பெறுகிறவர்களில் பெரிய ராஜாக்களாக ஆறு நாயன்மார், குறுநில மன்னர்களாக ஐந்து பேர். பிரம்ம - க்ஷத்ரியர்களுக்கு அப்புறம் வைச்ய ஜாதியில் ஐந்து நாயன்மார். அதற்குப் பிறகுதான் வேளாளர் என்றே குறிப்பிட்டு 13 பேர் என்று லிஸ்ட் போகிறது. மாமாத்திரர் என்று பரஞ்ஜோதியாயிருந்து சிறுத்தொண்டரான ஒருவரைத்தான் பெரிய புராணத்தில் சொல்லியிருக்கிறது. சேக்கீழார் புராண லிஷ்டிலும் மாமாத்திரர் ஒருவரே என்று இருக்கிறது. அதிலிருந்து பிரித்து 13 வேளாள நாயன்மார்களைச் சொல்லியிருக்கிறது. முதலில் சுத்த வைதிக ப்ராம்மணர், அடுத்தாற்போல் ஆதி சைவ ப்ராம்மணர், அதை அடுத்து மாமாத்திரர், அப்புறம்தான் க்ஷத்ரியர், வைச்யர் என்று லிஸ்ட் போவதையும் கவனிக்கனும்.

ஆறுமுக நாவலர் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். ராமலிங்க ஸ்வாமிக்கு ஸம காலத்தவராகிய அவர் தமிழிலும் சைவத்திலும் மஹா பண்டிதர். நல்ல சிவ பக்தர். பட்டை பட்டையாக விபூதி போட்டுக்கொண்டு, தலையில் கூட ருத்ராக்ஷம் கட்டிக்கொண்டு இருப்பார். யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூரைச் சேர்ந்தவர். தமிழ் நாட்டிலும் நிறைய வாஸம் செய்திருக்கிறார். தமிழ் ஆரம்ப பாடத்திலிருந்து ஆழமுள்ள ஆராய்ச்சி நூல்கள் வரை அநேகம் எழுதியிருக்கிறார். மத விஷயமாக, எல்லோருக்கும் புரியும்படி பெரிய புராணம்,

திருவிளையாடல் புராணம் முதலியவற்றை வசன நடையில் செய்திருப்பதிலிருந்து சைவ சாஸ்திர விஷயங்களை அலசி விமர்ச்சிப்பது வரையில் பலது (பல) எழுதியிருக்கிறார். தமிழுக்கென்று பாடசாலைகள் வைத்துத் தாமே பாட புஸ்தகங்களும் அச்சுப் போட்டுக் கொடுத்திருக்கிறார். வேத பாடசாலை ப்ரம்மச்சாரிகள் அன்ன பிக்ஷை எடுத்தார்களென்றால், இவர் தாமே தமிழ்ப் பாடசாலைகளுக்காக வீடு வீடாகப் போய் அரிசி பிக்ஷை

எடுத்திருக்கிறார்.

தமிழுக்கும் பக்திக்கும் உயர்ந்த தொண்டு செய்திருக்கும் அவர் பெரிய புராண வசனம் எழுதியிருக்கிறாரென்றேன் அல்லவா?அதிலும் அறுபத்து மூவரில் எந்த ஜாதியில் எத்தனை பேர் என்று லிஸ்ட் கொடுத்திருக்கிறது. இதற்கும் உமாபதி சிவத்தின் லிஸ்டுக்கும் சில வித்தியாஸங்கள் இருக்கின்றன. ஆனால் நமக்கு விஷயமில்லை. நமக்கு என்ன விஷயமென்றால், அந்தப் புஸ்தகத்தின் முகவுரையில் (அது நாவலரே எழுதியதா, அல்லது அச்சுப் போட்டவர் எழுதியதா என்று தெரியவில்லை) சிவாகம தீக்ஷை பெற்றுக் கொண்ட ஆதி சைவர்கள்தான் மிகவும் உயர்ந்தவர்களென்றும், அப்படியிருக்கும்போது சைவர்களுங்கூட வைதிக ப்ராம்மணர்களுக்கு முதல் ஸ்தானம் கொடுத்து மரியாதை செய்வது தப்பு, பாபமே என்றும் காரஸாரமாகச் சொல்லியிருக்கிறது. அதாவது தனிப்பட்ட ப்ராம்மண த்வேஷமில்லாவிட்டாலும் ஆதி சைவர்களுக்கு அப்புறந்தான் வேத ப்ராம்மணர்கள் என்ற அபிப்ராயத்தைச் சொல்லும் புஸ்தகம் அது. அப்படிப்பட்ட புஸ்தகத்தில் ப்ராம்மணர்தானா என்று ஸந்தேஹமாயிருக்கிற

ஒரு நாயனாரை அப்படிச் சொல்லியிருக்காதுதானே?அந்தப் புஸ்தக ஜாபிதாவில் முதலில் ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் முதலான நாலு ஆதி சைவ நாயன்மார்களையும், அப்புறம் ஞானஸம்பந்தர், ஸோமாசி மாற நாயன்மார்களையும், ருத்ர பசுபதி நாயனார் முதலான பன்னிரண்டு வைதிக ப்ராம்மண நாயன்மார்களையும் சொல்லிவிட்டு, அடுத்தாற்போல சிறுத்தொண்டர் ஒருத்தரை மாத்திரம் மாமாத்திரப் பிராம்மணர் என்று போட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். அதற்கப்புறம் சேரமான் பெருமாள், நெடுமாற பாண்டியன், கொச்செங்கட் சோழன் முதலான மூவேந்தர்களை க்ஷத்ரிய நாயன்மார்கள் என்று குறிப்பிட்டு விட்டு, மற்ற அரச நாயன்மார்களையும் சொல்லிவிட்டு, பிற்பாடு வைச்யர் (காரைக்கால் அம்மாள், இயற்பகை நாயனார் போன்றவர்கள்) வேளாளர் (அப்பர் ஸ்வாமிகள் முதலிய பதின்மூன்று பேர்), குயவர் (திருநீலகண்ட நாயனார்) ஏகாலியர் (திருக்குறிப்புத்தொண்ட நாயனார்) என்று போய் புலயர் என்று திருநாளைப் போவாரை - அவர்தான் நந்தனார் - சொல்லி முடித்திருக்கும்.

---



## நந்தனார் - உண்மையை வென்ற கற்பனை

நந்தனாரைப் பற்றிச் சொன்னதால், காதை கற்பனை என்று எழுதுவதே எப்படி அதாரிடி மாதிரி ஆகி, அதுவே நிஜமென்று நம்பும்படி ஏற்பட்டுவிடுகிறது என்பதற்கும் சான்று காட்டிவிட்டேன். உங்களில் நந்தனார் கதை தெரிந்த எல்லோரும் அவர் ஒரு ஈவிரக்கமில்லாத ப்ராம்மணர் பண்ணையாரிடம் படாத பாடு பட்டவர் என்று தீர்மானமாக நினைத்துக் கொண்டிருப்பீர்கள். ஆனால் வாஸ்தவத்தில் அறுபத்து மூவர் சரித்திரங்களுக்கு அதாரிட்டியான பெரிய புராணத்தில் வருகிற நந்தனார் கதையில் அந்த வேதியல் பாத்திரமே கிடையாது. பெரிய புராணத்தில் திருநாளைப் போவார் நாயனார் புராணம் என்ற தலைப்பில் வருகிற

நந்தனாருடைய கதையைப் பார்த்தாலே தெரியும். அவர் எந்தப் பண்ணையாரிடமும் சேவகம் பண்ணியவரில்லை. தம் தம் குலாச்சாரப்படி தொழில் செய்யும் எல்லா ஜாதிக்காரர்களுக்குமே அந்தக் காலத்தில் ராஜமான்யமாக நிலம் சாஸனம் செய்யப்பட்டிருக்கும். நன்றாக எல்லை கட்டிய அந்த நிலத்துக்குத்துடவை என்று பெயர். அப்படிப்பட்ட பறைத் துடவையை நந்தனாரும் பெற்றுத் தம்முடைய ஸொந்த நிலத்தில்

பயிரிட்டு வந்ததாகத்தான் பெரிய புராணத்தில் வருகிறது. தீண்டாதவர்கள்தான் வாத்தியங்களுக்குத்தான தோல், வார், தந்தி, மாட்டு வற்றிலிருந்து எடுக்கும் கோரோசனை முதலியவற்றில் வியாபாரம் பண்ணுவது. இவரோ பிறந்ததிலிருந்து மறந்தும் சிவ சிந்தனை தவிர வேறே இல்லாதவர் என்று சேக்கிழார் சொல்லியிருக்கிறார். அதனால் நிலத்திலிருந்து கிடைப்பதை மட்டும் ஜீவனோபாயமாக வைத்துக் கொண்டு தோல், வார், தந்தி எல்லாம் தம்முடைய அன்புக் காணிக்கையாகவே சிவன் கோயில்களில் வாசிக்கும் பேரிகை, வீணை முதலானவற்றுக்காகக் கொடுத்தாராம். ஸ்வாமியின் கந்தோபச்சாரத்துக்கே கோரோசனையும் இலவசமாகக் கொடுப்பாராம். இப்படி க்ஷேத்திரம் க்ஷேத்திரமாகப் போய்க்கொண்டே அவர் சிவத்தொண்டு செய்துவந்ததாகத்தான் மூல நூலான பெரிய புராணத்திலிருக்கிறதே தவிர ஒரு கொடுங்கோல் ப்ராம்மணரிடம் அடிமைப்பட்டு ஒரே இடத்தில் ட்டிப் போட்டாற்போலகக் கிடந்தாரென்று இல்லை.

கொடுங்கோல் ப்ராம்மணர்களை ஸ்ருஷ்டி பண்ணியதும் ஒரு ப்ராம்மணர்தான் - போன நூற்றாண்டில் இருந்த கோபாலகிருஷ்ண பாரதி என்கிற பெரியவர். நம்முடைய மதிப்பு மரியாதைக்குரிய உரிய பெரியவர். சிவ பக்தியில் ஊறியவர். கேட்கிற எவருடைய நெஞ்சத்தையும் அந்த பக்தியில் கரைக்கும்படியான உசந்த பாட்டுகள் கவனம் செய்தவர். கடைசிவரை ப்ரம்மச்சாரியாகவே வாழ்ந்து மஹா சிவ ராத்திரி புண்யகாலத்தில் ஸ்வாமியோடு கலந்து விட்டவர். அவர் ஏழை எளியவர்களிடம் ரொம்பவும் இளகின ஸ்வபாவத்துடன் இருந்திருக்கிறார். அதோடு நல்ல நாடக உணர்ச்சி, உணர்ச்சியைப் பாராட்டித் தரும் ஸாமர்த்தியம் எல்லாமும் படைத்தவராக இருந்திருக்கிறார்.

அவர் நாளில் அந்தச் சீமையில் மிராஸ் பண்ணும் ப்ராம்மணர்களில் ஒருத்தர் இரண்டு பேர் உழவு செய்யும் ஆள்காரர்களை ரொம்பவும் கொடுமைப் படுத்தியதையும், அப்படியும் அந்த எளிய ஜனங்கள் எதிர்த்துச் சண்டை போடாமல், இப்படித்தான் நம் ஜன்மா என்று ஸஹித்துக்கொண்டு இருந்து வந்ததையும் அவர் பார்த்தார். ஏற்கெனவே அவருக்கு எந்த ஜாதியாரானாலும் பக்திச் செல்வத்தைக் குறைவறப் பெற்று ஈச்வரனுடனேயே இரண்டறக் கலக்கும் உன்னத நிலைவரை போய்விட முடியும் என்று காட்டும் திருநாளைப்போவார் சரித்திரத்தில் தனியான ஈடுபாடு இருந்திருக்கிறது. அந்த நினைப்பும் அவர் நேரில் கண்ட நிலவரமும் அவருடைய நாடகத் திறமையில் ஒன்றாகச் சேர்ந்து வேதியர் பாத்திரத்தை ஸ்ருஷ்டிக்கப் பண்ணிவிட்டது. பறைத் துடவை பெற்றிருந்த நந்தனாரை அந்த வேதியரின் கூலியாளக ஆக்கி அவரிடம் கொடுமைப் படுவதாகக் கதையை அழகாக ஜோடித்து மேலே மேலே ஸீன்களைக் கற்பனைப் பண்ணி நந்தன் சரித்திரக் கீர்த்தனை யாகப் பாட வைத்து விட்டது. அப்புறம் கதாகாலக்ஷபக்காரர்கள், காந்தீய தோசாபிமானிகள் எல்லோரும் அதை விசேஷமாக

ப்ராபல்யப் படுத்தியதில் மூலமான பெரிய புராணத்துத் திருநாளைப்போவார் கதையே எடுபட்டுப்போய் இதுதான் நந்தனார் கதை என்றே ஆகியிருக்கிறது. இது பார்ப்பவன் கொடுங்கோல் என்று வசைமாரி பாடுகிறவர்கள். இதோ பாருங்கள், ஒரு ஐயரே கொடுக்கும் ப்ரூஃப் எனறு காட்டுவதில் கொண்டு விட்டிருக்கிறது.

அந்தக் காலத்தில் மஹா வித்வான் மீனாக்ஷிஸுந்தரம் பிள்ளை தமிழறிஞர்களில் முக்கியமான ஸ்தானம் வஹித்தவர். அவர் ப்ராம்மணரில்லை. ஆனாலும் குறுகிய ஜாதி நோக்கில் பார்க்காமல் நடுநிலையாகப் பார்த்தார். பார்த்து, என்னதான் கல்பனா சக்தி. எளிய ஜனங்களிடம் அநுதாபம் இருந்தாலும் இப்படி ஒரு மூலக் கதையை மாற்றியிருப்பது சரியில்லை எனறு முடிவு பண்ணிவிட்டார். விஷயம் தெரியாமல் அவரிடமே சிறப்புப் பாயிரம் வாங்கவேண்டுமென்று கோபாலக்ருஷ்ண பாரதி போனார். வீடுதேடி வந்த பிராம்மணரிடம் தப்பெடுக்க வேண்டாமென்று நினைத்து, நீங்கள் இதை முக்யமாக ஸங்கீத நாடக பாணியில்

அமைத்திருக்கிறீர்கள். எனக்கோ ஸங்கீதம் பிடிக்காது. தமிழ்ப் புலமை, சிவ பக்தி ஆகியவற்றோடு நல்ல சங்கீத வித்வத்துவம் உள்ள எவரிடமாவது நீங்கள் பாயிரம் வாங்குவதுதான் பொருத்தம் என்று சொல்லி அனுப்பிவிட்டார். ஆனாலும் தம்மிடம் தமிழ்

கற்றுக் கொண்டிருந்த (உ.வே) ஸ்வாமிநாதையர் போன்றவர்களிடம் மனஸில் இருந்ததைச் சொன்னார். அதனால்தான் இப்போது உங்களுக்கு நான் இந்தக் கதை சொல்ல முடிகிறது.

அப்போதைக்கு பாரதி திரும்பிப் போனாலும் மறுபடியும் வந்தார். பண்டித-பாமர ரஞ்ஜகமாக நீங்கள் எழுதியிருக்கிற இந்த நூல் தானே ப்ரஸித்தி அடையும். என் பாயிரம் அவச்சியமேயில்லை என்று சொல்லிப் பிள்ளை அவரை அப்போதும் திருப்பியனுப்பி விட்டார்.

இப்படி பாரதி பல தடவை நடையாக நடந்து பிறகு ஒரு தடவை நடுமத்யான வேளையில் வந்தார். அப்போது வீட்டுக்குள்ளே பிள்ளை ச்ரம பரிஹாரம் பண்ணிக் கொண்டிருக்கிறாரென்று தெரிந்தது. அவர் எழுதியிருந்தது வருகிறபோது வரட்டும் என்று வாசல் திண்ணையில் பாரதி உட்கார்ந்து விட்டார். உட்கார்ந்தவர் தன்னையறியாமல் நந்தன் சரித்திர கீர்த்தனைகள் பாட ஆரம்பித்தார். உள்ளே அரைத் தூக்கமாயிருந்த பிள்ளையின் காதில் பக்தி பாவம், ராக பாவம் இரண்டும் பூர்ணமாக இருந்த அந்தப் பாட்டுக்கள் விழுந்தாலும் அவரும் அதில் ஆகர்ஷணமாகி விட்டார். அந்தப் பாட்டுகளில் இலக்கணப் பிழைகள் வழு என்பது இருப்பதாகவும் ஏற்கெனவே அவருக்கு இரண்டாவது குறை. இப்போது, பாடியவருடைய பக்தி ப்ரவாஹத்தில் அந்த வழுவெல்லாங்கூட அடித்துக்கொண்டு போய்விட்டாற்போலத் தோன்றிற்று. அந்த ப்ரவாஹத்தைத் தடைப்படுத்த வேண்டாமென்றே, அவர் தொடர்ந்து தூங்குகிற மாதிரி இருந்து கேட்டுக் கொண்டிருந்தார். வருகலாமா?என்ற பாட்டுக்கு பாரதி வந்தார்.

ஏற்கெனவே அந்த வார்த்தையை இலக்கண சுத்தமில்லை என்று பிள்ளை கண்டித்திருக்கிறார். வருகை-போகை என்று உண்டு. வருதல்-போதல் என்றும் உண்டு. அவை இலக்கண சுத்தமான ப்ரயோகங்கள். இரண்டுமில்லாமல் இதென்ன

வருகல்?ஆரம்ப வார்த்தையே ஸரியாயில்லையே!வரலாமோ? என்றாலே ஸரியாயிருக்குமே என்று சொல்லியிருக்கிறாராம்.

ஆனால் இப்போது நந்தனார் தூரத்திலிருந்து சிதம்பரம் கோவிலை தர்சனம் பண்ணி, ஒரு பக்கம் பக்தியிலே தாபமான தாபம். இன்னொரு பக்கம் தன்னுடைய பிறவியை நினைத்துத் தயக்கமான தயக்கத்தோடு கண்ணால் பிடித்து நிறுத்தி வைத்து, கண்ணுக்குத் தெரியாத நடராஜாவை மனக் கண்ணால் பிடித்து நிறுத்தி வைத்து, கண்ணுக்குத் தெரியும் அந்த ஸந்நிதானத்துக்குத் தானும் வரலாமா, வரலாமா என்று என்றைக்கோ உருகி உருகிக்

கேட்டதை, அதே தாபத்தோடு பாரதி உருக்கமாகப் பாடிக் கேட்டவுடன் மீனாக்ஷிஸுந்தரம் பிள்ளைக்கு இலக்கணப்பிழை திருமுறையை மாற்றிய பிழை எல்லாம் மறந்து போய் விட்டதாம். இப்பேர்ப்பட்ட பக்த சிகாமணி நாம் திரும்பத் திரும்ப விரட்டியடித்தும் பாயிரத்துக்காக வருகலாமோ?என்று நம்மிடமே கேட்டால் கேட்பதுபோல் பண்ணி விட்டோமே!என்று ரொம்பவும் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டு வாசலுக்கு ஓடி வந்தாராம். வருகலாமோ அவரையும் வரவழைத்து விட்டது. அவரிடமிருந்து பாயிரத்தையும் வரவழைத்து விட்டது.

தங்களை நடையாக நடக்க வைத்ததை மனஸில் வைத்துக் கொள்ளக்கூடாது. மற்ற விஷயங்கள் எப்படி யானாலும் உள்ளம் உருகி சிவபக்தி பண்ணுபவரென்று இன்று தெரிந்து கொண்டேன். மற்றவர்கள் உள்ளமும் பக்தியால் உருகும்படிப் பண்ணும் சக்தி பெற்றவர் என்றும் தெரிந்து கொண்டேன். அப்படிப் பட்டவரின் விருப்பத்தை நான் மறுக்கக்கூடாது. சிறப்புப் பாயிரம் தருகிறேன் என்று சொல்லி அப்படியே கொடுத்தாராம்.

ஆனாலும் மற்றவர்களெல்லாம் மூலக்கதைக்கு பாரதி புதுரூபம் பிரமாதமாகக் கொடுத்துவிட்டாரென்றே முக்யமாய்ப் புகழ்தார்களென்றால், பிள்ளையோ அந்த அம்ஸத்தைப் பற்றி பாராட்டாகவோ, மாற்று அபிப்ராயமாகவோ எதுவும் சொல்லாமல்தான் அந்தப் பாயிரத்தை ஆக்கியிருக்கிறார். ஸ்வாமிநாதய்யரின்

கோபாலக்ருஷ்ண பாரதியார் சரித்திரத்தில் பாயிரப் பாட்டு போட்டிருக்கிறது.

பிள்ளை முதலில் நினைத்தத்தில்-முடிவுரை அதை மாற்றிக் கொள்ளத்தான் இல்லை. அப்படி நினைத்தத்தில் ஸாரம் இருக்கிறது என்று இப்போது நன்றாகத் தெரிகிறது. தற்காலத்தில் நந்தனார் கதை என்றால் முதலில் ஸினிமா, ட்ராமா எதையாவது பார்த்துத் தெரிந்து கொள்ளத்தான் போவார்கள். இதெல்லாமும் பாரதி பாடியதையே இன்னமும் ஸ்ட்ராங்காகச் சொல்வதாகத்தான் இருக்கும். காலக்ஷேபத்திற்குப் போனாலும் ஏறக்குறைய இப்படியே இருக்கும். இலக்கியமாகப் பார்த்து தெரிந்த கொள்ள வேண்டுமென்று நினைப்பவர்களிலும் அநேகமாக எல்லோரும் நந்தன் சரித்திரக் கீர்த்தனைத்தான் பார்ப்பாரே தவிர (பெரிய புராணத்திலுள்ள) திருநாளைப் போவார் புராணத்தை யாராவது புரட்டுவார்களா என்பதே ஸந்தேஹம். திருநாளைப்போவார்தான் நந்தனார் என்பதுகூடத் தெரிந்திருக்குமா என்று யோசனையாயிருக்கிறது. நான் டெஸ்ட் பண்ணி. பார்த்திருக்கிறேன். இங்கே வருகிறவர்களில் சின்ன வயஸுக்காரர்கள், வயஸானவர்கள், வெவ்வேறு ஜாதிக்காரர்கள் எனறு பல தரப்பட்டவர்களிடம் விளையாட்டாக நந்தனார் பற்றி பேச்சுக் கொடுத்துப் பார்த்திருக்கிறேன். அதிலிருந்து ஸகலமான பேரும் வேதியரும் நந்தனார் கஷ்டப்பட்ட கதையைத்தான் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அதையே நிஜமாக நடந்த கதையாக நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டிருக்கிறேன்.

சரித்திரமாகவோ, அதாரிடி யில் அதற்குக் குறை வில்லாததாக மதிக்கப்படும் ஜீவித சரித்ர புராணமாகவோ இருக்கிற ஒனறாப் பிற்கால ஆராய்ச்சியாளர்கள் எனப்பட்டவர்கள், அல்லது இலக்கிய கர்த்தர்கள் தங்களுடைய அபிப்ராயப்படி ரூபம் பண்ணினால் எப்படி மூலமான உண்மைகளை அடிபட்டுப் போய்விடுகின்றன என்று காட்ட வந்தேன். பொயடிக் லைஸென்ஸுக்கு (கவி சுதந்திரத்துக்கு) ஏதாவது வரம்பு இருந்தால் தேவலையா என்று தோன்றுகிறது......

நாவலரின் புஸ்தகத்தில் நாயன்மார்களை ஆதிசைவர், சுத்த வைதிக ப்ராம்மணர், மாமாத்திர ப்ராம்ம ணர், க்ஷத்திரியர்,

வைசியர், வேளாளர், புலையர் என்று வரிசைப்படுத்திப் பட்டியல் கொடுத்திருக்கிறது என்பதைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். சுத்த வைதிக வ்ருத்தி போய்விட்டாலும் க்ஷத்திரியர்களுக்கு மேலே ஸ்தானம் கொடுக்கும் பசியாக மாத்திர ப்ராம்மணர்கள் இருந்திருப்பது அதிலுள்ள ஆர்டரிலிருந்து தெரிகிறதென்று காட்ட வந்தேன். அந்த வகுப்பைச் சேர்ந்தவர்தான் பூர்வாச்சிரமத்தில் பரஞ்ஜோதியாயிருந்து பிறகு சிறுத்தொண்டராவார்.

---



## படைத்தலைவர் பக்தித் தொண்டரானார்.

பூர்வாச்ரமப் பரஞ்ஜோதிக்கு ஒரு பக்கம் தநுர்வேதப் பயிற்சி இருந்தாலும் இன்னொரு பக்கம் நல்ல சிவபக்தியும் இருந்தது. பக்தியை உள்ளுக்குள்ளேயே வைத்துக் கொண்டு வெளியே வீர தீரங்கள் காட்டினார். நரஸிம்ஹ வர்மாவின் படையில் சேர்ந்து யானைப்படைத் தலைவராக்கி அவனுக்காக வாதாபி வரை போய் வெற்றி பெற்றார். அங்கே கவர்ந்த பொன், மணி, யானை, குதிரை முதலானதுகளை ராஜாவுக்கே ஸமர்ப்பணம் பண்ணிவிட்டு வாதாபி கணபதியை மாத்திரம் தனக்கென்று வைத்துக் கொண்டார்.

சளுக்கியர்களுடைய மஹா பெரிய யானைப்படையை ஜயிக்கும்படியான திறமை உமக்கு எப்படி வந்தது?என்று ராஜா ஆச்சரியப்பட்டு அவரைக் கேட்டான்.

அவர் ஒன்றும் சொல்லாமல் அடக்கமாக நின்று கொண்டிருந்தார். ஸேநாதிபதியாயிருந்தாலும் தன்னுடைய சொந்த விஷயம் எதையும் அவர் ராஜாவிடம் தெரிவித்ததில்லை. தன் கார்யத்தைக் கவனமாகச் செய்வாரே தவிர, கார்யம் செய்கிற தன்னைப் பிரகாசப்படுத்திக் கொண்டதில்லை. இப்போது ராஜா அவருடைய வீர ஸாஹஸத்துக்குக் காரணம் கேட்டபோதும் பேசாமலே

இருந்தார்.

ஆனால், கூடியிருந்த மக்களுக்கு விஷயம் தெரியும். ராஜாவுக்கே தெரியாத விஷயங்களெல்லாமும்கூட மந்திரிகள் நன்றாக துப்புத் துலக்கித் தெரிந்துகொண்டு மனஸுக்குள்ளேயே வைத்துக்கொண்டிருப்பார்கள்.

மந்த்ரி என்றாலே மனஸுக்குள் வைத்துக் காப்பாற்றுபவர். மந்-மனஸுக்குள், அதாவது வெளியே விடாமல் வைத்திருந்து, த்ர-ரக்ஷிப்பது எதுவோ அதுவே மந்திரம். நாம் மனஸுக்குள்ளேயயே ஸதாவும் வைத்திருந்து, சப்தம் போட்டு வெளியே சொல்லாமல் மனஸினால் மௌனம் செய்து ரஹஸ்யமாக உபாஸிப்பதால் எது நம்மை ரக்ஷிக்குமோ அதுவே மந்திரம் என்பது நாம் உபாஸனையானாக ஜபிக்கும் மந்-திரம் என்பதற்குச் சொல்கிற அர்த்தம். நம்மை ரக்ஷிக்கும் விஷயமாக இல்லாமல், ரஹஸ்ய ஆலோசனையாக மனஸுக்குள்ளேயே நாம் ரக்ஷிக்கும் விஷயத்துக்கும் மந்-த்ரம் என்று பெயர். இப்படி ராஜாங்க ரஹஸ்யங்களை ரக்ஷிப்பவரே மந்திரி. ரிஸர்ச் என்று இந்த நாளில் அரை குறை ஞானத்திலோ, அல்லது வேண்டுமென்றே க்ரித்ரிமமாகவோ செய்வதில் ஒருவர். க்ஷத்ரிய ராஜா மந்த்ர சக்தியில் கெட்டிக்காரர்களான ப்ராம்மணர்களை மந்த்ரி என்ற பெயரில் துணை சேர்த்துக் கொண்டே ஆட்சி பண்ண வேண்டுமென்று ப்ராம்மணர்கள் சாஸ்த்ரம் பண்ணிவிட்டார்கள். அதனால் வாஸ்தவத்தில் அப்படி சக்தி இருந்ததோ இல்லையோ, ராஜா ஆளுவது அவனுடைய ஆயுத பலத்தால் மட்டுமில்லை. அதைவிட அதிகமான அந்த ப்ராம்மண அதிகாரியின் மந்த்ர பலத்தால் தான் என்று லோகத்தை நம்பப் பண்ணி ப்ராம்மண ஏகாதிபத்யத்தை உண்டாக்கிவிட்டார்கள். ராஜாவே இவர் மந்த்ர சக்தியால் என்ன பண்ணிவிடுவாரோ?என்று பயந்து கொண்டு மந்த்ரி மண்டலத்தின் அபிப்ராயத்திற்குத் தான் ஸலாம் போட வேண்டியிருந்தது என்றெல்லாம் சொல்லியிருக்கிறார். அது அடியோடு தப்பு. ராஜாங்க அதிகாரியான மந்த்ரியிடமுள்ள மந்த்ரம் என்பது ரஹஸ்யாலோசனைதான். தர்ம சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம் ஆகியவற்றில் மாத்ரமின்றி ஸாதாரண டிக்ஷனரியில் பார்த்தால் கூடத் தெரியும். இந்த இடத்தில் மந்த்ரம் என்பது Confidential Counselஎன்றும், மந்த்ரி என்பவர்

அப்படிப்பட்ட Counsellor- ஏ என்றும்.

மந்த்ரிகள் கல்வி கேள்விகளில் வல்லவர்களாக இருப்பார்கள். நல்ல சாஸ்த்ரானுஷ்டானமுள்ளவர்களாக இருப்பார்களென்றாலும் மந்திர சாஸ்திரத்தில் மஹா கெட்டிக்காரர்களாக இருக்கவேண்டுமென்றில்லை. அப்படி இருப்பது ராஜாவின் குருதான். அப்படிப்பட்ட ஒரு குருவான வஸிஷ்டரிடம் சிஷ்ய ராஜாவான திலீபன், தேவர்கள், மநுஷ்யர்கள் ஸகலராலும் எனக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களைத் தாங்களே நிவிருத்தி பண்ணுகிறீர்கள். நான் கண்ணுக்குத் தெரிகிற சத்ருக்களைத்தான் அஸ்திரத்தால் அழிக்கிறேன். தாங்களோ அவர்கள் கண்ணுக்குத் தெரியாமலிருக்கும்போதும், என்னிடம் தங்களுக்குள்ள

அநுக்ரஹ சித்தத்தால், அவர்களை மந்த்ர பலத்தால் அடக்கி விடுகிறார்கள். தங்களால் அப்படி ஆக்கப்பட்டவர்களைத்தான் அப்புறம் என் அஸ்திரமும் சும்மாவுக்காகத் தாக்கி எனக்கு ஜயசாலி என்ற பெருமையை வாங்கித் தருகின்றன என்று சொன்னதாகக் காளிதாஸர் சொல்லியிருக்கிறார். மஹரிஷியாகப் போற்றப்பட்ட ஒரு ராஜகுருவைப் பற்றி இருப்பதை எல்லா மந்த்ரிகள் விஷயமாகவும் குழறுபடி பண்ணி ரிஸர்ச் என்று நடக்கிறது.

ரஹஸ்ய ஆலோசனைக்கு உரியவர்தான் மந்த்ரி. Secret-aryஸெக்ரடரி என்று இருப்பதும் இதே தாத்பர்யத்தால்தான். ஆனால் ஒரு ஸெக்ரடரிக்கும் மந்த்ரிக்கும் என்ன வித்யாஸமென்றால், ஸெக்ரடரி தன்னுடைய யஜமானனின் ரஹஸ்யமமான விஷயங்களைப் பிறருக்குத் தெரியாமல் காப்பாற்றுபவன். மந்த்ரியோ அநேக ராஜாங்க ரஹஸ்யங்களை யஜமானனான ராஜாவுக்கே தெரிமாமலும் காப்பாற்றுபவன் - சொன்னால் அவனுக்கு வீண் கவலையளிப்பதாக இருக்கும். அவன் மனதில் பாரத்தை ஏற்றும் என்ற ராஜ விச்வாஸத்தினாலேயே பல விஷயங்களைச் சொல்லாமல், தன்னுடைய மனஸுக்குள்ளேயே கெட்டியாக ஒளித்து வைத்திருந்து, அதாவது மந்-த்ரம் பண்ணி, அதே ஆலோசனையாக இருப்பதால் அவற்றைச் சமாளிப்பதற்கான நடவடிக்கைகளைக் கார்யத்தில் எடுத்து, அவச்யம் ஏற்பட்டால் அப்போதே வெளியிடுபவன். அநாவச்யமாக

ராஜாவுக்கு ஊர் ஸங்கதிகள் சொல்லாமல், ஆனால் தான் நாட்டில் நடக்கும் ஸகல விஷயமும் தெரிந்து கொண்டு, அவச்யம் ஏற்படும்போது அவனுக்குச் சொல்வது மந்த்ரி லக்ஷணம்.

அப்படி இப்போது அந்தப் பல்லவ ராஜாவின் மந்த்ரிகள், இந்தப் பரஞ்ஜோதி பெரிய சிவபக்தர். வெளியில் தெரியாமல் சிவனடியார்களுக்குத் தொண்டு செய்கிறவர். இப்படிப்பட்டவருக்கு முன்னாடி எந்த எதிரிப் படைதான் நிற்க முடியும்? என்கிறார்கள்.

அவருடைய தநுர்வேத சாதுர்யத்தையோ, புஜ பல, புத்தி பலங்களையோ அவர்கள் வெற்றிக்குக் காரணமாகச் சொல்லாமல் அவருடைய சிவ பக்தியே எதையும், யுத்தத்தில் ஜயத்தையுங்கூட, சாதித்துத் தந்ததாகச் சொன்னதைக் கவனிக்கணும். பரலோகத்துக்குத்தான் பக்தி வழிகாட்டுமென்று இல்லை. இஹலோக கார்யம் ஒருத்தரால் நடக்கவேண்டியிருக்கும்வரை அதற்கும் பக்தி உபகாரம் பண்ணும்.

மந்த்ரிகள் சொன்னதுதான் தாமஸம், ராஜா அப்படியே நடுநடுங்கிப் போய்விட்டான். ஐயையோ, ஒரு உத்தமமான சிவ பக்தரை, சிவநேசச் செல்வரையா படைத் தலைவராக வைத்துக் கொண்டு வேலை வாங்கி இருக்கிறேன்?பெரிய அபச்சாரம் பண்ணிவிட்டேனே!என்று அழுதுக்கொண்டு க்ஷமிக்கணும் என்று பரஞ்ஜோதிக்கு நமஸ்காரம் செய்தான். இதிலிருந்து அந்தக் காலத்து அரசர்களின் உசந்த பண்பாடு தெரிகிறது. நானாக ஒன்றும் சொல்லவில்லை. பெரிய புராணக் கதையைத்தான் சொல்கிறேன். ராஜா நமஸ்காரம் பண்ணியதும் அவனைத் தடுத்துக் கொண்டு அவனுக்கு நமஸ்காரம் செய்த பரஞ்ஜோதி, நீங்கள் இப்படியெல்லாம் வருத்தப்படக்கூடாது. நாங்கள் குலதர்மமாக உத்யோக ப்ராம்மணர்களாகி, அதிலேயும் யானைப்படை ஸேவகம் செய்வதென்று வைத்துக்கொண்டவர்கள்தான். அந்தக் குல வழக்கப்படி நானேதான் உங்கள் படையில் சேர்ந்தேன். இனிமேலேயும் இந்தப் பாரம்பர்யத் தொழில் தாராளமாகத் தொடர்ந்து பண்ணுவதற்கு நான் தயார்தான் என்று சொன்னார்.

அரைவேக்காடுகள் ஸந்நியாஸியாவது, ஒரேடியாக தீவிர பக்தி மார்கத்துக்கே போகப் பார்ப்பது ஆகியவை நம் சாஸ்திர ஸம்மதமல்ல. நன்றாகப் பக்குவம் அடைந்த பிறகே ஆஹாரப் பண்டம் வெந்து பக்குவம் ஆகிற மாதிரி மனஸ் முழுவேகக்காடு ஆன பிற்பாடே-ஸந்நியாச்ரமம், அதற்கு முந்தி க்ருஹாஸ்தாச்ரமம்தான் என்றே நம் சாஸ்திரங்கள்

வைத்திருக்கின்றன. யார் வேண்டுமானாலும் பிக்ஷுவாகலாம் என்று புத்தர் பண்ணினதால் அவர்களுடைய புத்த ஸங்கம் போகப் போக ஊர் சிரிக்கிற மாதிரி ஆகிவிட்டது. மஹேந்திர வர்மா அதை ஒரே பரிஹாஸமாகப் பண்ணி, மத்த விலாஸ ப்ரஸன்னத்தில் எழுதியிருக்கிறான்.

நாம் எந்த ஸ்திதியிலிருக்கிறோமென்று நம்மை நாமே அலசிப் பார்த்துக்கொண்டு அப்புறம்தான் ஸந்நியாஸம், அல்லது தெய்வ சம்பந்தமாகவே வாழ்க்கை முழுதையும் ஆக்கிக் கொள்வது என்று முடிவு செய்யணும். எட்டாது உயரத்துக்குத் தாவி விழுந்துவிட்டால், கை கால் முறிந்து, அப்புறம் எப்போதுமே ஏற முடியாதபடி ஆகி விடும்.

பரஞ்ஜோதி அப்போதே நல்ல பக்குவ ஸ்திதி அடைந்துதான் இருக்கிறார். யுத்தத்தைக்கூட பகவதி ஸ்மரணத்தோடு, பகவானுக்காகச் செய்கிற ஒரு கார்யமே என்று, மாம் அநுஸ்மர;யுத்ய ச என்று பகவான் சொன்னபடி செய்கிற நிலையில்தான் அவர் இருந்தார். அதனால் ராஜாவுக்கு gulity feeling(குற்ற உணர்ச்சி) இருக்க வேண்டாம் என்ற உதாரண எண்ணத்தில், இனியும் தொடர்ந்து ஸேநாதிபதியாக, கஜபதியாக இருக்கிறேன் என்று சொன்னார்.

அவர் அப்படிச் சொன்னாலும் ராஜா தனக்கு அவர் ஸேவகம் செய்பவராக இனிமேல் ஒரு க்ஷணங்கூட இருக்கக்கூடாது என்று நினைத்து, வேண்டாம் வேண்டாம். இனிமேலே தாங்கள் ஸதா காலமும் சிவ ஸ்மரணமும், சிவ புண்யமுமே பண்ணிக் கொண்டிருங்கள் என்று தீர்மானமாகச் சொல்லி, அவருடைய குடும்பத்தின் போஷணைக்காவும், அவருடைய சிவனடியார் பணி நன்றாக நடப்பதற்காகவும் ஏராளமாகப் பொன்னும் பொருளும் ஸமர்ப்பணம் பண்ணினான்.

இது ஒரு புது மாதிரிக் கதை. இவர் கஜபதி. சத்ருவிடமிருந்து

ஆர்ஜிதம் பண்ணிய

பொன்னையும் பொருளையும், எல்லாக் கதையும் மாதிரி, ராஜாவுக்கு ஸமர்ப்பித்தாரென்றால், புதுக் கதையாக ராஜாவும் திரும்ப அதே மாதிரி இவருக்குப் பண்ணியிருக்கிறான்.

அதெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு அவர் சொந்த ஊரான திருச்செங்காட்டாங்குடிக்கே வந்தார். அதோடு அவர் வாழ்க்கையில் பெரிய திருப்பம் ஏற்பட்டது. சிவ பக்தியை உள்ளூர வைத்துக்கொண்டு வெளிக்கார்யத்தில் படை எடுப்பது, வெட்டுவது, குத்துவது என்று இருந்தவர், வெளியேயும் பரம ஸாத்விகராகிவிட்டார். வாதாபி கணபதியைத் தம்மூரில் உள்ள கணபதீச்வரமாகிய சிவன் கோயிலில் பிரதிஷ்டை செய்தார். பத்தினியோடுகூட சிவோபாஸனை பண்ணிக்கொண்டு, சிவனடியார்களுக்கெல்லாம் நன்றாக பிக்ஷை பண்ணிக்கொண்டு இருந்தார். தான் அந்தத் சிவத்தொண்டர்களிலெல்லாம் ரொம்பச் சின்னவன் என்ற விநய மனோபாவத்தில் தன்னை சிறுத்தொண்டர் என்பதே அவர் பெயராக நிலைத்து விட்டது. பெரிய பல்லவ ஸாம்ராஜ்ஜியத்தின் ஸேநாதிபதியாக எந்தப் பெயரில் அவர் பிரஸித்தி பெற்றிருந்தாரோ, அந்தப் பெயரை மறந்து, சிவனடியார்களில் அடியார்கடியாராக அவர் தமக்கு வைத்துக் கொண்ட சிறுத்தொண்டர் என்ற பேரையே லோகம் எடுத்துக் கொண்டது என்பதிலிருந்து நம் ஜனங்கள் எப்படி லௌகிக ஸ்தானம், அந்தஸ்து எல்லாவற்றையும்விட தெய்வ ஸம்பந்தமாகப் பணி செய்வதைத்தான் பெரிஸாக மதித்திருக்கிறார்களென்று தெரிகிறது.

அவர் கதை சிறுத் தொண்ட நாயனார் புராணம் என்றே பெரிய புராணத்தில் வருகிறது. செங்கட்டாங்குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன் என்று ஸுந்தர மூர்த்தி திருத்தொண்டத் தொகையில் சொல்லியிருக்கிறார். ஸுந்தரமூர்த்தி அறுபத்து மூன்று நாயன்மார்களையும் குறித்தே திருத்தொண்டத் தொகை பாடியதால், அவர் சிறுத்தொண்டரைச் சொன்னதில் விசேஷமில்லை. விசேஷம் எதிலிருக்கிறதென்றால் ஞானஸம்பந்தரும் சிறுத்தொண்டரைச் சிறப்பித்துப் பாடியிருப்பதில்தான். அவர் திருச்செங்காட்டங்குடிக்குச் சிறுத்தொண்டர் இருந்த

காலத்திலேயே வந்து, அவருடைய பாதத்தை இவர் மார்போடு கட்டியணைத்ததாகச்

சொன்னேன். அவரும் இவரைக் கொண்டாடி, தான் பாடின தேவாரத்திலேயே இவரைச் சொல்லியிருக்கிறார். ஒரு பதிகத்தில் சிறுத்தொண்டரைப் பொடி பூசிக் கொண்டிருக்கிறாரென்று அவருடைய விபூதி தாரணத்தை விசேஷமாகச் சொல்லியிருக்கிறார். (தோடுடைய செவியன் என்ற) முதல் பாட்டிலேயே ஸ்வாமியை பொடிபூசி என் உள்ளம் கவர் கள்வன் என்றவர் இங்கே இந்த சிவத் தொண்டரை அப்படிச் சொல்லி அவருக்கு அருள் பண்ணுவதற்காகவேதான் ஸ்வாமி அந்த ஊரிலே கோவில் கொண்டிருக்கிறார் என்று பாடியிருக்கிறார். இன்னொரு பதிகத்தில் பத்து அடியில் ஒவ்வொன்றிலும் சிறுத்தொண்டரை ஏதாவதொரு புகழ்ச்சியான அடைமொழி சேர்த்துக் குறிப்பிட்டுவிட்டு, அப்படிப்பட்டவருடைய செங்காட்டாங் குடிமேய அதாவது திருச்செங்காட்டாங்குடியிலிருக்கிற ஸ்வாமியே என்று பாடியிருக்க்கிறார். ஒரு அடியில் அவருடைய பிள்ளை சீராளன் பேரையும் சேர்த்துச் சீராளன் சிறுத்தொண்டன் என்று சொல்லியிருக்கிறார்.

---



## பிள்ளைக் கறி : அதன் உட்கிடைகள்

உத்யோகததை விட்டுவிட்டு (இவராக விடவில்லை) ராஜா விடும்படிப் பண்ணினான். டிஸ்மிஸல் இல்லை. பெரிய ஆனராகப் பண்ணினான்) அப்படி உத்யோகம் போய் அவர் ஊரோடு வந்து சிவசர்மம் பண்ண ஆரம்பித்த அப்புறந்தான் அவருக்குப் பிள்ளை சீராளன் பிறந்ததே. அதுவரை தாம்பத்தியத்திலே மனஸ் போகாமல் உள்ளே சிவோபாஸனை, வெளியிலே கத்தியைச் சுழட்டிக் கொ ண்டு யுத்தம் என்றே இருந்திருக்கிறார்.

வயஸுக் காலத்தில் பிறந்த அந்த அருமைப் பிள்ளையைத்தான் பைரவ யோகி வேஷத்தில் வந்த பரமசிவன் கேட்டவுடன் இவர் கொஞ்சங்கூட யோசிக்காமல் கறி சமைத்துப் போட்டது.

கேட்கிறதற்கே கொடூரமாயிருக்கிறதென்றாலும் இதில் அநேக ஸமாச்சாரங்கள் ஒன்றுக்கொன்று கொத்துக் கொண்டு போகின்றன. சிறுத்தொண்டர் ஜயித்த ஊர் வாதாபி. ஊருக்குப் பேர் தந்த அசுரனைக் கறி பண்ணிப் போட்டான் அவனுடைய அண்ணா. அது தம்பிக் கறி. இது பிள்ளைக் கறி. அந்தக் கறியை அகஸ்தியர் ஜெரித்துக் கொள்ள சக்தி கொடுத்தது ஒரு கரி-கரிமுகர். அவர்தான் சிறுத்தொண்டரின் ஊர்க்கோயிலை கணபதீச்சரமாக்கியவர். சிறுத்தொண்டர் பரஞ்ஜோதியாக வாதாபியில் ரத்த வெள்ளம் ஓடப் பண்ணினாரென்றால் அந்தக் கரிமுகரோ இவருடைய பிறந்த ஊரில் அஸுரன் ரத்தத்தைப் பெருக்கெடுத்தோடப் பண்ணி அதைச் செங்காட்டாங்குடியாக்கித் தாமும் கபிலராக ஆகியிருக்கிறார். பைரவ யோகிக்கு வந்த ஸ்வாமிக்கு அந்தக் கோலத்திலேயே கணபதீச்சரத்தில் மூர்த்தம் இருக்கிறது. அவருக்கு உத்தராபதீச்வரர் என்று பேர். சிறுத்தொண்டரிடம் அப்படித்தான் அவர் பேர் சொல்லிக் கொண்டிருக்கிறார். வடதேசத்தில் சக்ரவர்த்தியாக இருந்த ஹர்ஷவர்தனுக்கு உத்தராபதீச்வரப் பட்டமுண்டு. அவனுடைய ஆட்சிக் காலத்தில்தான் புலிகேசி தென் தேசத்தில் சக்ரவர்த்தியாக இருந்து அந்த ஹர்ஷணையும் பின்வாங்கப் பண்ணி தக்ஷிணாபதீச்வர னாகத் தன்னைப் பிரகடனப் படுத்திக்கொண்டு பெருமைப்பட்டது. புலகேசியை த்வம்ஸம் பண்ணினவர் பரஞ்ஜோதி. அப்புறம் அதை அவர் அடியோடு மறந்து சிவனடியாராக இருந்தபோது அவரை சோதித்து அவர் பெருமையை ப்ரகடனம் பண்ணவவந்த ஸ்வாமி தமக்கு உத்தராபதீச்வரப் பேர் சொல்லிக் கொண்டிருக்கிறார். ஸேநாதிபதியாக ஒரு தக்ஷிணாபதீச்வரருக்கு ஜயித்தவர் பக்தராகி அந்த உத்தராபதீச்வரருக்கு யாரும் செய்ய முடியாத தொண்டு செய்து அருள் பெற்றிருக்கிறார்..

சோள ஸீமையிலுள்ள திருச்செங்காட்டாங்குடியில் உத்தராபதீச்சவரர் என்ற ஹர்ஷனுடய பட்டப் பெயர்

இருக்கிறதென்றால், பல்லவ ராஜதானியான காஞ்சீபுரத்திலேயே அவனுடைய ராஜதானியை ஞாபகப்படுத்தும் இரண்டு சிவாலயங்கள் இருக்கின்றன. பிறவாத்தானம், இறவாத்தானம் என் று இரண்டு சிவாலயங்கள். அங்கேயுள்ள மூல மூர்த்திகளுக்குப் பிறவாத்தானேச்வர் என்றும் இறவாத்தானேச்வரர் என்றும் பெயர். ஹர்ஷவர்தனின் ராஜதானிக்குத் தானேசர் என்றே பெயர். ஸ்தாண்வீச்வரம் தானேசர் என்றே பெயர். ஸ்தாண்வீச்வரம் என்பதன் கொச்சையே தானேசர். பட்ட கட்டைக்கு ஸ்தாணு என்று பெயர். அந்த ஸ்தாணு ஈச்வரனையும் ஹர்ஷ ராஜதானியிலிருந்து பல்லவ ராஜதானி ஸ்வீகரித்துக்கொண்டிருப்பதுபோல தெரிகிறது.

மூலத்தில் ப்ராம்மண ஜாதிக்காரர்களான பரஞ்ஜோதி யுத்தகளத்தில் எத்தனைப் பேர் தலையைச் சீவியிருக்கிறார். அதற்குப் பரிஹாரம் மாதிரித்தான் அவர் ஸொந்தப் புத்ரனை ஹத்தி செய்யும்படி ஈச்வரன் மாயமாகக் கேட்டிருக்கிறார். அர்ஜுனனுக்கு பகவான் சொல்ல வேண்டியிருந்தது. யாரும் சொல்லாமலே முதலில் பரஞ்ஜோதி ஸ்வதர்மத்திற்காக ஸொந்த ஆசாபாசங்களுக்காக இல்லை. மாமாத்ர ஜாதி என்று ஆகிவிட்ட பின் ஏற்பட்ட ஸ்வதர்மத்திற்காக சத்ரு ஸைன்யத்தை ஹதம் பண்ணினார். அப்புறம் சிவனடியார் அப்புறம்

சிவனடியார் பணியே ஸேவதர்மமாகிவிட்ட சிறுத்தொண்டரானபோது, சிவனே பைரவ யோகியாய் வந்தபோது கொஞ்சங்கூட ஸொந்தப் பாசமில்லாமல் ஏக புத்ரனையே அவருக்கு நேவைத்திய மாக்கினார். பைரவர் கேட்டது குறிப்பாக இவர் பிள்ளையே இல்லை. ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையுள்ள ஐந்து வயஸு நர பசு வேண்டுமென்றுதான் கேட்டார். சிறுத்தொண்டரேத்தான் அந்த நிபந்தனைக்கு ஏர்வையாயிருந்த (பொருத்தமாயிருந்த) தன் பிள்ளைச் சீராளனையே கறி சமைத்துப் போட்டார் - சொல்வதற்கே என் னவோ போல்தான் இருக்கிறது. அப்படிப்பட்டதைக் கார்யத்திலேயே ஸொந்தத் தகப்பனாரும், அடியார் பணியில் அவருக்குக் கொஞ்சங்கூடப் பின்தங்காத தாயாரும் சேர்ந்து பண்ணினார்கள் என்னும் போதுதான் நிஜபக்தியின் ஸ்வரூபம் தெரிகிறது.

புத்ரனின் மாம்ஸமென்று சொல்லாமலே பைரவருக்கு அவர்கள் பரிமாறினார்கள்.

அவரும் ஒன்றும் தெரியாத மாதிரி, கூட உட்கார்ந்துகொண்டு சாப்பிடுவதற்கு உம்ம பிள்ளையைக் கூப்பிடும் என்றார். அவன் இப்போது உதவான் என்று மட்டும் அதற்குச் சிறுத்தொண்டர் பதில் சொன்னார். அப்படியானால் நானும் இங்கே சாப்பிடாமல் போகிறேன். நான் சாப்பிட வேண்டுமானால், அவனைக் கூப்பிடும் என்று பைரவர் பொய்க் கோபத்தோடு சொன்னார். வேறே வழியில்லாமல் ஸதிபதிகள் வெளிப்பக்கம் போய்க் கூப்பிட்டார்கள். உடனே இத்தனை நாடகமும் ஆடின பரமேச்வரனின் அநுக்ரஹத்தால் அந்தப் பிள்ளை மேனி குறையாமல் நிஜமாகவே ஒடி வந்துவிட்டான். பைரவர் மறைந்து ரிஷபாரூடராக, அம்பாளோடும் பாலஸுப்ரம்மண்யரோடும் ஸோமாஸ்கந்தராக காட்சி கொடுத்தார் என்று கதை போடுகிறது. ஸதிபதிகளாக, பிள்ளையான குமார ஸ்வாமியையும் சேர்த்துக்கொண்டு வந்ததாகப் பெரிய புராணத்திவல் இருக்கிறது.

மூத்த பிள்ளை விக்நேச்வரர் ப்ராயச்சித்தமாக சிவபூஜை பண்ணியதால்தான் ஸ்வாமி அந்த ஊரில் கோவில் கொண்டதே. இதைச் சொல்லும்போது இன்னொரு பொருத்தம்கூடத் தெரிகிறது. சிறுத்தொண்டர் சீராளனின் சிரஸைச் சீவின மாதிரியேதான் பூர்வத்தில் ஸ்வாமியும் அம்பாள் படைத்த பிள்ளையின் சிரஸைத் சீவியிருக்கிறார்......

கபிலர் என்ற போருக்கு அர்த்தம் சொல்ல ஆரம்பித்தது. விக்நேச்வரர் சிவப்பு, ஊரையே சொல்ல ஆரம்பித்து, விக்நேச்வரர் சிவப்பு, ஊரையே சிவப்பாக்கி, செங்கட்டாங்குடியாக்கி, அங்கே வாதாபியிலிருந்து வேறே வந்து உட்கார்ந்து கொண்டார் என்ற கதை, ஆராய்ச்சி எல்லாம் ரொம்ப தூரம் போய்விட்டது.

---

## வாதாபி விக்கிரஹம் : வெவ்வேறு கருத்துக்கள்.

ஆராய்ச்சிக்காரர்களில் ஒரு சாரார் இன்னொன்றுகூடச் சொல்கிறார்கள். அதாவது, பெரிய புராணத்தில் பரஞ்ஜோதி வாதாபியிலிருந்து என்னென்ன கொண்டு வந்தார் என்று சொல்கிற இடத்தில் நவரத்னங்கள், பொற்காசுக் குவியல், யானைகள், குதிரைகள் ஆகியவற்றைத்தான் சொல்லியிருக்கிறதே தவிர விநாயக மூர்த்தத்தைக் கொண்டு வந்ததாக இல்லை. அதனால் அவர் அதைக் கொண்டு வந்ததாகச் சொல்வது சரியில்லை என்கிறார்கள். இதை ஆட்சேபித்து இன்னொரு சாரார், இந்த இடத்தில் சேக்கிழார், வாதாபியில் பரஞ்ஜோதி என்னென்ன சேகரம் பண்ணினார் என்று சொல்லவில்லை. அங்கே சேகரித்ததில் என்னென்னவற்றை ராஜாவுக்கு முன்னே கொண்டு வந்து சேர்த்தார் என்றுதான் சொல்கிறார். ரத்னம், காசு, யானை, குதிரைகளை அரசன் முன் கொணர்ந்தார். அதாவது அவனுக்கு ஸமர்ப்பித்தார் என்றே சொல்லியிருக்கிறது. விக்நேச்வரரை அவர் தனக்கென்றே வைத்துக்கொண்டு விட்டதால் அதைப் பற்றிப் பிரஸ்தாவமில்லை. என்ன காரணத்தாலோ சேக்கீழார் அதை வெளிப்படையாகச் சொல்ல மறந்து போயிருக்கிறார் என்று சொல்கிறார்கள்.

பரஞ்ஜோதி வாதாபி விநாயகரைக் கொண்டு வரவில்லை என்ற அபிப்ராயமுள்ளவர்கள் இன்னொரு ஆர்க்யுமென்டும் பண்ணுகிறார்கள். என்னவென்றால், அநேக ராஜாக்கள் தாங்கள் ஜயித்த சத்ரு பட்டணத்திலிருந்து சிலை, தூண் முதலானதுகளைப் பேர்த்தெடுத்துக்கொண்டு வந்து தங்கள் கோவிலில் அவற்றை நாட்டும் வழக்கமிருநந்திருக்கிறது. கங்கை வரையில் படையெடுத்துப்போய் பெங்காலில் பால வம்ஸத்து ராஜாவை ஜெயித்து கங்கை கொண்ட சோழன் என்று பெயர் பெற்ற ராஜேந்திரன் தஞ்சாவூர் ப்ருஹதீச்வரத்திற்கு ஸமதையாக கங்கைகொண்டசோழபுரத்தில் கட்டின கோயிலும், அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் இப்படிப் பல அன்னிய ராஜ்ய விக்ரஹங்களைப் பார்க்கலாம். சளுக்கியன் ஆர்ட்டைச் சேர்ந்த பெரிய மஹிஷாஸுர மர்த்தினி - நம் சீமையில்

இல்லாத விதத்தில் அவளுடைய பாதத்திலே முழு மஹிஷாஸுரனே முதுகைத் திருப்பிக்கொண்டு ஓடுகிற நிலையில் இருக்கிறான். அம்பாள் சூலத்தால் அவன் முதுகைக் குத்திக்கொண்டு, ஒரு கையால் அவன் நாக்கைப் பிடித்திழுக்கிறாள். இப்படியொரு சிற்பம் கங்கை கொண்டசோழபுரத்தில் ஒரு இடத்தில் இருக்கிறது. மெயின் கோவிலிலேயே அதன் சுற்றுக் கோயில் ஒன்றில் உள்ள துர்க்கையும் சளுக்கியன் ஆர்ட்டில் செய்த சிற்பமாகத்தான் தெரிகிறது. மெயின் கோயிலில் கமல யந்த்ர ரூபத்திலிருக்கும் அபூர்வமான நவக்ரஹத்தையும் அன்னியமென்றே சொல்கிறார்கள். அந்த ஊரில் இன்னொரு இடத்தில் சிவப்பு நிறக் கல்லில் உள்ள பைரவ - பைரவிகளைப் பார்த்தவுடனேயே வெளியூர்ச் சரக்கு என்று தெரியும். கலிங்கம் என்கிற ஒரிஸாவிலிருந்து ராஜேந்திர சோழன் அதைக் கொண்டு வந்திருக்கிறான்.

கங்கைகொண்டசோழபுரத்திற்கு பக்கத்தில் த்ரிலோகி என்ற இடத்தில் ரிஷபத்தின் மேல் பார்வதி பரமேச்வரர்கள் உட்கார்ந்துள்ள ஒரு கல் சிற்பம் இருக்கிறது. அது நுளம்பர்களை ஜயித்து, எடுத்துக்கொண்டு வந்தது. நுளம்பர் என்கிறவர்கள் ராயலஸீமையிலிருந்து கொண்டு ஆட்சி நடத்தியவர்கள். பெங்காலின் பால வம்ஸத்து சிற்பமான ஒரு விக்நேச்வரர்கூடத் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறார். கங்கை கணபதி என்றே அவருக்குப் பெயர் இருக்கிறது.

கும்பகோணம் நாகேச்வர ஸ்வாமி கோயிலில் அவர் இருக்கிறார். பாலர் பாணி சிற்பங்களில் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்ததில் outstanding என்று சொல்வதாக இருப்பது ஒரு நடராஜா. நடராஜா என்றாலே தமிழ்நாட்டு ஸொத்து என்று பெருமைப்படுகிறோம். ஆனால் இந்த நடராஜா பெங்காலிலிருந்து வந்திருக்கிறார். தாம்ரவிக்ரஹம். நந்திக்கு மேல் நின்று கொண்டு ஸ்வாமி தாண்டவமாடுகிறார். நம் நடராஜாவின் பிரஸித்த அடையாளமாக இடது காலைத் தூக்கி மடித்த ஆட்டமில்லை. இரண்டு கால்களையும் இடைவெளியில் குறுக்காக ஒரு சதுரத்தை வைத்த மாதிரி மைஸூர்ப் பாகு ஷேப் பில் இடைவெளி வருகிற மாதிரி - மடித்து வைத்து ஆடுகிற நடராஜா. அவருடைய நடனத்துக்குப் பேர் சதுர நடனம். தமிழ்நாட்டையே சேர்ந்த ப்ராசீன ப்ரதிமைகளிலும் சதுர நடன நடராஜா உண்டு. கூரம், நல்லூர், கொடுமுடி

முதலிய இடங்களைச் சேர்ந்த ப்ரஸித்தமான நடராஜ விக்ரஹங்களில் சதுர நடனமாகத்தான் இருக்கிறது. நான் சொன்ன பெங்கால் நடராஜா வேலைப்பாடுள்ள எடுப்பான திருவாசியோடு சிதம்பரத்துக்குக் கிட்டே மேலகக் கடம்பூரில் இருக்கிறார்.

சளுக்கியர்களில் மேலைச் சளுக்கியர், கீழைச் சளுக்கியர் என்று இரண்டு வம்ஸங்கள். வாதாபியிலிருந்து கொண்டு ஆண்டது மேலைச் சளுக்கியர். சீழைச் சளுக்கியர்களின் கல்யாணி என்ற தலைநகரிலிருந்து ஆட்சி செய்தார்கள். ராஜேந்திரனின் பிள்ளை ராஜாதிராஜன் கீழைச் சளுக்கியரைச் ஜயித்து, அவர்கள் நாட்டு ஆலயத் தூண், த்வார பாலகர் ஆகியவற்றைக் கொண்டு வந்திருக்கிறான். கும்பகோணம் பக்கத்தில் தாராசுரம் என்று இப்போது திரித்துச் சொல்லும் ராஜராஜேச்வரத்தில் அந்த ஊருக்குப் அப்படிப் பெயர் கொடுத்த இரண்டாம் ராஜராஜன் அவற்றை மறுபடி ஸ்தாபித்திருக்கிறான். கல்யாணியை ஜயித்துக் கொண்டு வந்தது என்றும் அடியிலேயே கல்வெட்டில் பொறித்தும் வைத்திருக்கிறான். திருவையாறு பெரிய கோயிலில்கூட நூளம்பர் பாணித் தூண்கள் உண்டு. அந்த பாணியில் ஒரு ஜன்னல் தஞ்சாவூர் ப்ருஹதீச்வரத்திலும் உள்ளது.

முன்னே குறிப்பிட்ட ஆக்ஷேபக்காரர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், இப்படி வெளி ராஜ்ஜியங்களை ஜயித்து ஒருத்தர் அங்கே இருந்து ஒரு விக்ரஹம், அல்லது வேறு ஒரு கலைப் பொருளைக் கொண்டு வந்து தம் ஊரில் நாட்டினால், ஒன்று தாங்களே அதைப் பற்றித் கல்வெட்டில் பொறித்து ப்ரகடனப்படுத்தியிருக்கிறார்கள். அல்லது, அவர்காலத்துப் புலவர்களின் உலா முதலான புகழ்க் கவிதைகளில் அதைப் பற்றி ரெஃபரன்ஸ் கிடைக்கிறது. திருச்செங்கடாடாங்குடியிலோ கல்வெட்டுமில்லை. இலக்கியச் சாண்றுமில்லை. பரஞ்ஜோதியிலிருந்து சிறுத்தொண்டரானவரின் கதையையே விரிவாகச்சொல்லும் பெரிய புராணத்திலும் வாதாபி விக்நேச்வரரைப் பற்றிப் பிரஸ்தாபமேயில்லை. அதானால் அந்த மூர்த்தி அங்கேயிருந்து வந்ததென்பதற்கு ஆராரமில்லை என்கிறார்கள்.

ஆனால் இங்கே ஒன்று கவனிக்க வேண்டும். மற்ற ராஜாக்கள்

அல்லது ஸேநாதிபதிகள் சத்ரு ராஜ்யத்திலிருந்து ஒன்றாக் கவர்ந்து வந்து தங்கள் ஊரில் நாட்டிய பிற்பாடும் ராஜரீகப் பெருமையோடேயே இருந்தவர்கள். தாங்கள் அடைந்த வெற்றியில் பூரிப்பு, தங்கள் பெயரும் புகழும் சாச்வதமாக இருக்க வேண்டுமென்ற ஆசை ஆகியவை அவர்களுக்கு இருந்தன. அதனால் தங்கள் சாதிப்பைக் கல்வெட்டில் பொறித்து வைத்துக் கொண் டார்கள். பரஞ்ஜோதியாக இருந்தவரோ இதற்கு நேர் மாறாக, மஹா பெரிய வெற்றி அடைந்தவுடன் யுத்த பூமியையும் ராஜாங்க பதவியையும் விட்டுவிட்டு எளிமையாகச் சிறுத் தொண்டர் என்று ஆகி, ஊர் வேண்டேன், பேர் வேண்டேன் என்று மாறி விட்டார். அப்படிப்பட்டவர் தன்னுடைய சாதனை என்று எதையோ கல்லில் வெட்டி வைப்பாரா எனறு தோன்றுகிறது.

திருச்செங்கட்டாங்குடியில் வாதாபி கணபதி என்று இருக்கும் மூர்த்தி சளுக்கிய பாணியில் இல்லை. தமிழ் நாட்டுப் பல்லவ பாணியைச் சேர்ந்த விக்நேச்வர மூர்த்தங்களைப் போல்தானிருக்கிறது என்று Iconography(விக்ரஹக் கலை) எக்ஸ்பெர்ட்டுகள் இரண்டொருத்தர் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். கிரீடம், மேல் கைகளில் பாசாங்குசம் முதலியவை சளுக்கியன் ஆர்ட்டாகத் தெரியவில்லை. நம் தக்ஷிண பாணியாகத்தான் இருக்கிறது என்கிறார்கள். உள்ளங்கால் இரண்டும் ஒன்றையொன்று பார்த்தாற்போலத் காலை மடித்துக் கொண்டிருப்பது புதுமையாக இருக்கிறதே என்று கேட்டேன். அதற்கு, பிள்ளையார்பட்டியிலுள்ள பிரஸித்தமான பிள்ளையாரும் அப்படித்தான் இருக்கிறார். இதைவிட அதில் உள்ளங்கால்கள் ஒன்றுக்கொன்று இன்னும் கிட்டம் இருக்கின்றன. கிரீடத்தின் அமைப்பு இரண்டிலும் ஒரே போல் இருக்கின்றன என்று சொன்னார்கள். பிள்ளையார்பட்டி பல்லவன் ஆர்ட் என்பது நிச்சயமான விஷயம். அந்தக் கோயில்களில் பல்லவர்களுடைய குடைவரை என்கிற குகைக்கோயில்களில் ஒன்று. ஆனால் அந்தப் பிள்ளையாரிடம் ஆபூர்வமான அம்சம், அவருக்கு இரண்டே கைதான். அதில் இடது கையை இடுப்பில் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த வித்யாஸத்திற்கு, எனக்கு தெரிந்த மட்டும் யாரும் காரணம்

சொல்லவில்லை.

விக்நேச்வர ஸம்பந்தமுள்ள வாதாபிக்குப் போய்ப் பெரிய ஜயம் பெற்ற பரஞ்ஜோதிக்கு அங்கே இருந்த விக்நேச்வர மூர்த்தியிடம் ரொம்பவும் பக்தி ஏற்பட்டிருக்கலாம். அதனால் அப்புறம் தம் ஊரோடு அவர் ஸெட்டில் ஆனபோது, அங்கே நம்மூர் சில்பியைக் கொண்டு நம்முடைய பல்லவ பாணியிலேயே மூர்த்தி அடித்துப் பிரதிஷ்டை பண்ணியிருக்கலாம். வாதாபிதான் அதற்குக் காரணமானதால் மூர்த்திக்கு வாதாபி கணபதி என்று பேர் வந்திருக்கலாம் என்று அந்த எக்ஸ்பெர்ட்களில் ஒருத்தர் சொன்னார்.இன்னொனறுகூடக் கேள்விப்பட்டிருக்கிறேன். பரஞ்ஜோதி வாதாபியிலிருந்து விக்நேச்வர மூர்த்தி கொண்டு வந்தது வாஸ்தவமாகவே இருக்கலாம். ஆனால் அதைத் திருவாரூர்தான் மூலாதார க்ஷேத்திரம் என்பதால் அங்கே ப்ரதிஷ்டை செய்திருக்கிறாரென்று தோன்றுகிறது. அங்கேயுள்ள வாதாபி கணபதி சளுக்கிய பணியா ாகக தெரிகிது என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

இப்படி-அப்படி நான் ஜட்ஜ்மென்ட் ெ துவும் தரவில்லை. பலவித அபிப்ராயங்களை மட்டும் சொன்னேன். (ஷோடச நாமாக்களில்) கபில நாமத்தில் இருக்கிறேம். தேன்மாதிரிச் சிவப்பாயிருப்பவர் கபிலர். அந்த நிறமுள்ள பசுவத்தைன் கபிலை என்று சிறப்பித்துச் சொல்வது. ஸாங்கிய சாஸ்த்ரத்தைக் கொடுத்தவர் ஒரு கபிலர். அவர் பஸ்பம் பண்ணிய அறுபதினாயிரம் ஸகர புத்ரரர்களைப் புண்ய லோகம் சேர்ப்பதற்காகத்தான் பகீரதன் கங்கையைக் கொண்டு வந்தது. கமண்டலுவைக் கவிழ்த்துவிட்டு காவேரியைப் பாய வைத்தவர் நம்முடைய (விக்நேச்வர) கபிலர். தமிழ்ச் சங்க காலப் புலவர்களில் நிறையப் பாடியுள்ள ஒருவரின் பெயர் கபிலர். அவருக்கும் விக்நேச்வரருக்கும் சம்பந்தமுண்டு. பாரி வல்லலின் ஆஸ்தானப் புலவர் அவர். பாரி இறந்துபோன பிறகு அவன் பெண்களுக்கு கார்டியன் மாதிரி இருந்திருக்கிறார். அவர்களுக்கு நல்ல அரச குடும்பத்தில் கல்யாணம் பண்ணி கொடுத்துவிட்டு தாம் ப்ராயோபவேசம் - வடக்கிருத்தல் என்று தமிழில் சொல்வார்கள். சாகும்வரை உண்ணாவிரதம் என்கிறார்களே, அது பண்ணி ஆயுஸை முடித்துக்கொள்ள வேண்டுமென்று அவர் உத்தேசம். ஆனால் அநாதைகளான அந்தப் பெண்களை யாரும் கல்யாணம் செய்து கொள்ள முன்வரவில்லை. பாரி இல்லாமல்

கபிலராலும் உயிர் வாழ முடியவில்லை. அதனால் ஸத்துக்களான ப்ராம்மணர்களிடம் அந்தக் கன்யாப் பெண்களை ஒப்படைத்து விட்டு ப்ராயோபவேசம் பண்ணி ஆயுஸை முடித்துக் கொண்டு விட்டார். சங்க நூல்களிலிருந்தும் அவற்றின் உரைகளிலிருந்தும் இந்தக் கதை தெரிகிறது. கபிலர் உயிர் விடுவதற்கு முன்னால் விக்நேச்வரரைத்தான் ஸ்தோத்திரம் செய்தார். மூத்த நாயனார் (சைவத் திருமுறைகள் பன்னிரண்டில்) பதினொன்றாம் திருமுறையில் அதைச் சேர்ந்திருக்கிறது. கபில தேவ நாயனார் செய்ததென்று அதிலிருக்கிறது. இவர் வேறே என்றும் அபிப்ராயமிருக்கிறது. அதெப்படியானாலும் கபிலர் என்று பெயர் படைத்த கணபதியைக் கபிலப் பெயரே உள்ள ஒரு கவி ஸ்தோத்தரித்திருக்கிறார். சங்க காலக் கபிலர் போன பிறகு பாரி மகளிருக்குப் பொறுப்பெடுத்துக் கொண்டு நல்லபடியாகக் கல்யாணம் செய்து வைத்தது விக்நேச்வரரின் கல்யாணம் செய்து வைத்தது விக்நேச்வரரின் பரம பக்தையான ஒளவைதான். கபிலருடைய அந்திம ஆசை விக்நேச்வரர் அருளாலேயே நிறைவேறியிருக்கிறது.

---



## கஜகர்ணகர்

அடுத்த பேர் கஜகர்ணகர் அப்படியென்றால் யானைக் காது உள்ளவர். கஜமுகர் என்று முகம் முழுதையும் சொல்லிவிட்டால் போதாது. அவருடைய யானைக் காதும் யானைக் காதுதான் என்று பிரத்யேகமாகச் சொல்ல வேண்டும் என்கிறார்போல் இப்படிப் பேர் சொல்லியிருக்கிறது.

யானைக் காதிலே அப்படி என்ன விசேஷம்?மற்ற ஸ்வாமிக்கெல்லாம் காதைச் சுற்றிப் பெரிஸாக ஒரு கால் வட்டம் மாதிரிப் போட்டுத் தோளோடு சேர்த்தே விக்ரஹங்கள் பண்ணியிருக்கும். இந்த வட்டப் பிரபைக்கு

உள்ளேயும், கிரீடத்துக்குக் கீழேயும் அந்த ஸ்வாமியின் காது எங்கே இருக்கிறது என்று நாம் தேடிக் கண்டு பிடிக்கும் படியே இருக்கும். அநேகமாக, பெரிஸாகத் தொங்கும் குண்டலத்தை வைத்துத்தான் காதைத் தெரிந்து கொள்ள முடியும். விக்நேச்வரர் ஒருத்தர்தான் இதற்கு விலக்கு. அவருடைய யானைக் காது அவருடைய பெரிய முக மண்டலத்துக்கு ஸம அளவாக இரண்டு பக்கமும் விரித்து விசாலமாக ப்ரகாசிக்கிறது.

நாம் பண்ணும் பிரார்த்தனையெல்லாம், நம்முடைய முறையீட்டையெல்லாம் கேட்க வேண்டியது ஸ்வாமியின் காதுதானே? அந்தக் காது தெரிந்ததும் தெரியாமலும் இருந்தால் என்னவோபோல்தானே இருக்கிறது?கஜகர்ணகராக விக்நேச்வரர்தான் தன்னுடைய பெரிய காதை நன்றாக விரித்துக்கொண்டு மற்ற தெய்வங்களுடையதைப் போல் மண்டைப் பக்கமாக ஒட்டிக் கொள்கிற மாதிரி இல்லாமல் முன் பக்கமாக விரித்துக்கொண்டு - நம் ப்ரார்த்தனைகளை நன்றாகக் கேட்டுக் கொள்கிறார் என்ற உத்ஸாஹத்தை நமக்குக் கொடுக்கிறார்.

மற்ற எல்லாப் பிராணிகளுக்கும் காது குழிவாகக் கிண்ணம் மாதிரி இருக்கிறது. யானைக்குத்தான் FLAT-ஆக விசிறி மாதிரி இருக்கிறது. கேட்கிற சப்தம் சிதறிப் போகாமல் பிடித்து உள்ளே அனுப்புவதற்காகவே மற்ற ப்ராணிகளுக்கு குழிந்து இருப்பது. யானைக்குக் கூர்மையான ச்ரவண சக்தி (கேட்கும் ஆற்றல்) இருப்பதால் சிதறாமல் பிடித்து உள்ளே அனுப்பணும் என்கிற அவசியம் இல்லை. பிள்ளையார் நம் வேண்டுதல்களை நன்றாகக் கேட்டுக் கொள்வார்.

யானை பெரிய காதை விசிறி மாதிரி ஆட்டிக் கொள்வது ரொம்ப அழகு. பிராணி வர்க்கத்திலேயே யானை ஒன்றால்தான் இப்படிக் காதால் விசிறி போட்டுக் கொள்ள முடிவது. ஏதாவது பூச்சி பொட்டை விரட்டுவதற்காக ஒரு தரம். இரண்டு தரம் வேண்டுமானால் மாடுகூடக் காதை ஆட்ட முடியுமே தவிர, யானை மாதிரி ஸதா பண்ண முடியாது. மாடு ஏதோ கொஞ்சம் ஆட்டுவதற்குக்கூட ஸ்ட்ரெயின் பண்ணிக் கொள்ள வேண்டியிருக்கிறது. யானைதான் அநாயாஸமாக, ரொம்ப இயற்கையாக எப்பப்

பார்த்தாலும் காதை ஆட்டிக் கொண்டே இருப்பது. கஜாஸ்பாலம் (கஜ ஆஸ்பாலம்) கஜதாளம் என்றே அதற்குப் பேர் கொடுத்து வைத்திருக்கிறது. தாளம் என்றால் பானை, அதாவது விசிறி. பாட்டுக்கு விரலால் போடுவதும் தாளம். ஆனை விசிறி மாதிரியுள்ள காதை ஒரே சீராகத் தாளம் போடுகிற மாதிரி அசைத்துக்கொண்டே இருக்கிறது.

மனிதர்கள் யானை மாதிரிக் காதை ஆட்டுவது சிரம ஸாத்தியமான ஒரு பெரிய வித்தை. அதைத்தான் கஜகர்ணம் போட்டாலும் நடக்காது என்று சொல்கிறோம். கஜகர்ணம் என்பதை கஜகரணம் என்று நினைத்துக்கொண்டு யானை மாதிரி குட்டிக் கரணம் போட்டாலும் நடக்காததாக்கும் என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்கள். அது ஸரியில்லை. யானை மாதிரி காதை ஆட்டுகிற வித்தைத்தான் கஜகர்ணம்.

கஜகர்ணம், கோகர்ணம் போடுவது என்பது முழு வசனம். கோகர்ணம் என்கிற வார்த்தையில் கர்ணம் என்றால் காது என்று அர்த்தமில்லை. கர்ண என்பது க்ரியா பதமாக (வினைச் சொல்லாக) வரும்போது துளைப்பது, குத்துவது என்று அர்த்தம். ஒரு மாட்டின் உடம்பில் விரலாலோ தார்க்குச்சியாலோ குத்தினால் உடனே அதன் உடம்பு முழுக்க சுழி

சுழியாக அலை மாதிரி ஒரு சலனம் பரவும். இதே மாதிரி ஒரு மநுஷ்யர் பண்ணிக் காட்டுகிற அபூர்வமான வித்தைத்தான் கோகர்ணம் கஜகர்ண வித்தையும் அதே மாதிரிதான், ஸுலபத்தில் கற்றுக் கொள்ள முடியாது.

நமக்கு ரொம்ப சிரமமாயிருப்பதை விக்நேச்வரர் விளையாட்டாகப் பண்ணுவதை கஜகர்ணர் என்ற பேர் காட்டுகிறது.

யானை காதை ஆட்டுவதில் அழகு இருப்பதோடு ஒரு ப்ரயோஜனமும் இருக்கிறது. மதம் பிடிக்கிற காலத்தில் அதன் முகத்தில் கன்னப் பிரதேசத்தில் மத ஜலம் ஸதாவும் துளித்துக் கொண்டிருக்கும். அதற்காக ஈ, எறும்புகள் ஏகமாக மொய்க்க வரும். அதுகளை விரட்டுவதற்கு வசதியாகவே பகவான் யானைக்கு விசிறிக்காதைக் கொடுத்து, அதனால் விசிறிக் விட்டுக் கொள்ளும் திறமையும் கொடுத்திருக்கிறார்.

விக்நேச்வரரின் கன்னத்தில் மத ஜலம் வழிந்து கொண்டு

இருப்பதை ஆச்சாரியாள் கபோல தான வாரணம் என்று (கணேச பஞ்சரத்தினத்தில்) சொல்லியிருக்கிறார். கபோலம் என்றால் கன்னம். தானம் என்றால் மத ஜலம்.

பிள்ளையார் பெருக விடும் மத ஜலம் என்பது ஆனந்த தாரைதான், க்ருபா தாரைதான். பரம மதுரமாக இருக்கும் அம்ருதம் அது. அந்த மாதூர்ய மத நீரை ருசி பார்ப்பதற்காக வண்டுகள் ஏகமாக வரும். இதையும் ஆச்சார்யாள் ஒரு ஸ்தோத்திரத்தில் சொல்லியிருக்கிறார்.

கலத்-தான கண்டம் மிலத் ப்ருங்க ஷண்டம்

மத ஜலத்தை மொய்க்கும் வண்டுகளை விரட்டுவதற்காகப் பிள்ளையார் விசிறிக் காதை ஆட்டிக் கொண்டே இருக்கிறார். கோபத்தில் விரட்டுவதல்ல. குழந்தை ஸ்வாமிக்கும் இது ஒரு விளையாட்டுதான். வண்டுகளும் அவரிடத்தில் இந்த விளையாட்டுக்காகத்தான் வருவது. அவருடைய தர்ஸனமே அவற்றுக்கு அம்ருதமாக இருக்குமாதலால் மத ஜலத்தை குடிக்க வேண்டுமே என்பதில்லை. விளையாடனும், அவர் தங்களுக்கு விசுறனும் என்றேதான் அதுகள் கன்னக்கண்டை வந்து மொய்க்கும். நாம் குழந்தை காதில் விளையாட்டாக ருர்ர் என்று கத்தி அது மயிர்கூச்சலெடுப்பதைப் பார்த்து ஸந்தோஷப்படுகிறோல்லியோ?அந்த மாதிரிப் பிள்ளையாருடைய பெரிய காதிலே அதிர அடிக்கிற மாதிரி தங்களுக்கே உரிய ஜங்கார சப்தம் போட்டு வேடிக்கை பண்ணனும் என்றே வண்டுக் கூட்டம் வரும். அந்த வேடிக்கை விளையாட்டை புரிந்து கொண்டு அவரும் காதை ஆட்டி ஆட்டி அதுகளை விரட்டுகிற மாதிரிப் பண்ணுவார். அந்தக் காற்றிலே அதுகள் மாற்றி மாற்றி ஒடிப் போவதும், மறுபடி வந்து மொய்ப்பதுமாக அமர்க்களம் பண்ணும், மதஜலத்திலே விசிறிக் காதின் காற்றுப் பட்டு ஸ்வாமிக்கு ஜில்லென்று ஆனந்தமாயிருக்கும்.

ராக சைதன்யர் என்று ஒருத்தர் மஹாகணபதி ஸ்தோத்திரம் என்று செய்திருக்கிறார். அதில் மந்த்ர சாஸ்திர விஷயங்களெல்லாம் வருவதோடு அழகான கவிதா வர்ணனையும் அழகான வாக்கில் வருகிறது. விக்நேச்வரர் விசிறிக் காதை ஆட்டி வண்டுக் கூட்டத்தை விரட்டுவது போல விளையாடுவதை அதில் நீள நெடுக வார்த்தைகளைக் கோத்து அழகாகச் சொல்லியிருக்கிறது.

தாநாமோத-விநோத-லுப்த-மதுப ப்ரோத்ஸாரணாவிர்பவத்

கர்ணாந்தோலன-கேலனோ விஜயதே தேவோ கணக்ராமணீ

தான ஆமோதம் என்றால் மதஜலத்தின் ஸுகந்தம். ஸ்வாமி பெருக்கும் மத ஜலம் கமகமவென்று வாஸனை அடிக்கிறது. அநேத விநோதமான, அதாவது இன்பமூட்டுகிற வாஸனையை மோந்ததில் வண்டுகளுக்கு ஒரே பேராசை உண்டாகிறது. மத ஜலத்தை அப்படியே குடித்துவிட வேண்டுமென்று, லுப்த மதுப என்றால் பேராசை கொண்ட வண்டுகள். அல்லது வாஸனையில் மயங்கிப்போன வண்டுகள் என்றும் அர்த்தம் பண்ணலாம். அந்த வண்டுகளை விரட்டணுமென்று ஒரு விளையாட்டு ஆவிர்பாவமாகிறது, விளைகிறது.

கேலனம் என்றால் விளையாட்டு. என்ன விளையாட்டு கர்ணாந்தோலன கேலனம் கர்ண ஆந்தோலனம் என்றால் காதை முன்னேயும் பின்னேயுமாக ஆட்டுவது.

ஊஞ்சலுக்கு ஆந்தோலம் என்று பெயர். தோலம் என்று மட்டும் சொன்னாலும் அதே அர்த்தம்தான். தோல உத்ஸவத்தைத்தான் டோலோத்ஸவம் என்று சொல்லி ஊஞ்சல் போட்டு ஸ்வாமியை ஆட்டி ஸந்தோஷபப் படுகிறோம். டோலி கூட இதோடு ஸம்பந்தப்பட்டதுதான்.

காதை ஆட்டி வண்டை விரட்டி விளையாடும்போது விக்நேச்வரர் கூடுதலான அழகாக விளங்குகிறார். வெற்றி வீரராக விளங்குகிறார். படையெடுக்கும் வண்டுக் கூட்டத்தை விரட்டியடிக்கும் வெற்றி வீரராக விளங்குகிறார்.

இங்கே பிள்ளையாரை கணக்ராமணி என்ற பெயரில் குறிப்பிட்டிருக்கிறது. க்ராமணி என்றால் ஒரு குறிப்பிட்ட கூட்டத்துக்குத் தலைவர். கிராமம் என்றால் சின்ன ஊர் என்ரு பொதுவாக நாம் எடுத்துக் கொள்ளும் அர்த்தம். அதில் தலையாரியாக இருப்பவர் கிராமணி. அப்படியிரு ந்தவர்களின் வம்ஸத்தினர்தான் இப்போதும் ஜாதிப் பெயராக கிராமணி என்று போட்டுக் கொல்கிறார்கள். சிவ கர்ணங்கலுக்கு தலைவராக, கணபதி-கணேசன்-கணாதிபன் கணநாயகன் என்றால்லாம் சொல்லப்படுபவரை இங்கே கணக்ராமணி என்று அழகான வார்த்தை போட்டுச்

சொல்லியிருக்கிறது.

கணக்ராமமணியாக ஏகப்பட்ட பரிவார கணங்கள் சூழ இருக்கிறவரானாலும், அவர்கள் யாரும் தனக்குச் சாமரம் போட வேண்டுமென்றில்லாமல் தானே தன் காதுகளையே ஆட்டிப் போட்டுக் கொள்கிறார். சாமர கர்ணர் என்று அதனால் பேர்.

மூஷிக வாஹன மோதக ஹஸ்த

சாமர கர்ண...."

கஜகர்ணராக இருப்பதால்தான் அப்படித் தனக்குத் தானே தன்னாலேயே சாமரம் போட்டுக்கொண்டு கரணம், காரணம், கர்த்தா, கருவி எல்லாமே தாம்தான் என்று காட்டுகிறார்.

---



## லம்போதரர்.

அடுத்த பேர் லம்போதரர் தொங்குகிற வயிற்றுக்காரர் என்று அர்த்தம். லம்பம்-தொடங்குகிறது. உதரம்-வயிறு. அதாவது தொந்தியுள்ளவர். பிள்ளையார் என்றாலே வெள்ளைக்காரர்கள் pot-belliedஎன்று அவருடைய பானை வயிற்றைத்தான் சொல்கிறார்கள். பேழை வயிறும் என்று அகவலில் வருகிறது. கையில் பூர்ணமுள்ள மேதகத்தை வைத்திருப்பவர், தாமே பூர்ணவஸ்து என்று காட்டத்தான் பானை வயிற்றோடு இருக்கிறார். நல்ல நிறைவைக் காட்டுவது அது. அண்டாம்டங்கள் அதற்குள்ளே இருப்பதால் அதுவும் அண்ட ரூபத்தில் உருண்டையாயிருக்கிறது.

மோதகத்தில் தித்திப்புப் பூர்ணத்தை மா(வு) மூடி யிருக்கிறது. மோதகம் என்றால் ஆனந்தம். ஆனந்தம் தருவது. விக்நேச்வரரே அப்படிப்பட்ட ஒரு மோதகம்தான். ஆனந்தமாயிருப்பவர். அன்பு என்ற தித்திப்பான வஸ்துவை

(ப்ரேமையை மதுரம் என்று சொல்வது வழக்கம். அப்படிப்பட்ட மதுரமான ப்ரேமயை) மற்றவர்களுக்கும் வழங்கி ஆனந்தமூட்டும் மோதகம் அவர். மா என்றால் ஆணை யானை என்று அர்த்தம். மோதகத்தில் மதுரமான வெல்லப் பூர்ணத்தை மூடிக்கொண்டு மா(வு)ச் சொப்பு இருக்கிற மாதிரி ப்ரேம ரஸம் நிறைந்த பூர்ண வஸ்துவான ப்ரம்மத்தின் மேல் ஆனை என்ற மாவின் ரூபத்தை வைத்து மூடிக்கொண்டு ஆனந்த ஸ்வரூபியான விக்நேச்வரர் உருவமெடுத்துக் கொண்டிருக்கிறார். உள்ளே பரம மதுரமான அன்புப் பூர்ணத்தை வைத்துக் கொண்ருப்பதைக் காட்டவே உருண்டைக் கொழுக்கட்டை உருவத்தில் வயிற்றை லம்போதகராக வைத்துக் கொண்டிருக்கிறார். உருண்டைக்கு ஆரம்பம், முடிவு சொல்ல முடியாது. அதனால் அது ப்ரம்மத்துக்கு ரூபகம் (உருவகம்) அதைக் காட்ட உருண்டையான தொப்பை வயிற்றோடு லம்போதரர் என்று விளங்குகிறார்.

தொப்பையும் தொந்தியுமாக உள்ள ஒருத்தைப் பார்த்தாலே நமக்கு ஒரு புஷ்டி, ஸந்துஷ்டி உண்டாகிறது. அதிலும் ஒரு குழந்தை அப்படி இருந்துவிட்டால் கேட்கவே வேண்டாம். எலும்பும் தோலுமாக நோஞ்சானாக உள்ள ஒருவரைப் பார்த்தால் நமக்கு இப்படி ஸந்தோஷம் உண்டாவதில்லை. ஸ்தூல சரீரம், க்ருசமான (ஒல்லியான) சரீரம் ஆகியவற்றை குணங்கள் ஸம்பந்தப்படுத்தியும் சொல்கிறோம். தொந்தியும் தொப்பையுமாக இருப்பவரைப் பார்த்தாலே வேடிக்கையாக இருக்கிறது. சிரிப்பாக வருகிறது. ஸுமுகரான பிள்ளையார் நாமெல்லாமும் சிரித்துக்கொண்டு ஸுமுகமாக இருக்க வேண்டுமென்றே தொப்பையப்பராக இருக்கிறார். எத்தனையோ தினுஸுக் கஷ்டங்களில் மாட்டிக் கொண்டு ஜனங்கள் திண்டாடுகிறதுகளே!அவர்களுக்கு ஃபிலாஸஃபி, கிலாஸஃபி சொல்லிக் கொடுத்தால் ஏறும், ஏறாதிருக்கும். அதனால் பார்த்த மாத்திரத்தில் ஒரு வேடிக்கை விநோதமாக அவர்கள் சிரித்து மகிழும்படி நாம் இருப்போம் என்றும் பிள்ளையார் லம்போதரராக இருக்கிறார்.

அதிலும் குழந்தைகளுக்குத்தான் பஹு ஸந்தோஷம். தொப்பைக் கணபதியைப் பார்ப்பதில், அதற்கேற்றாற்போல் (புரந்தர) தாஸர் ஸங்கீதத்தில் பால பாடம் ஆரம்பிக்கும் போது பிள்ளையார் கீதத்தை லம்போதர லகுமிகரா என்றே

ஆரம்பித்திருக்கிறார். லகுமிகரா என்றால் 'லக்ஷ்மிகரா';ஸௌபாக்கியங்களை உண்டாக்குபவர்.

---



## விகடர்.

அடுத்த பேர் விகடர். அப்படிச் சொன்னாலே எல்லோருக்கும் வாரப் பத்ரிகை ஞாபகம்தான் வரும். ஹாஸ்யத்திற்கு, பரிஹாரம்-கேலி சிரிக்கச் சிரிக்கப் பண்ணுவதற்கு விகடம் என்று சொல்கிறோம். அந்த ஹாஸ்யத்திலே புத்தி சாதுர்யமும் இருக்கும். விகடகவி என்று வேடிக்கை வேடிக்கையாக வார்த்தை விளையாட்டுப் பண்ணுபவரைச் சொல்லியிருக்கிறது. அந்தப் பேரிலேயே வார்த்தை விளையாட்டு இருக்கிறது. பின்னாலிருந்து திரும்பப் பார்த்தாலும் விகடகவி என்றே வரும். ஸாமர்த்தியமாகப் பேசி ஏமாற்றுப் பண்ணுவதை அகடவிகடம் என்பார்கள். ஏமாற்று என்றாலும் அதிலிருக்கிற ஸாமர்த்தியத்தில் ஆச்சரியப்பட்டு சிரிக்கும் படியும் இருக்கும். விகடக் கலை என்றே இருக்கிறது. அதிலே தேர்ச்சி பெற்று மிமிக்ரி முதலான அயிட்டங்களைக் கச்சேரியாகவே செய்பவர்கள் இருக்கிறார்கள்.

ஸம்ஸ்கிருத டிக்ஷனரியில் விகட என்பதற்கு அர்த்தம் பார்த்தால் ஹாஸ்யம், தமாஷ் என்று இருக்காது. கோரம், பயங்கரம் என்றுதான் போட்டிருக்கும். ஆனால் நடைமுறையில் ஹாஸ்யம் பண்ணுவது, சிரிக்க வைப்பது, சிரிக்கும் படியாக ஏமாற்று ஸாமர்த்தியம் செய்வது-இதெல்லாந்தான் விகடம் விதூஷகன் காமிக் பாத்திரமென்று இந்த நாளில் சொல்கிறார்கள். அவன்தான் விகடன் என்று வைத்துக்கொண்டிருக்கிறோம். டிக்ஷனரி அர்த்தப்படி ப்ரதிநாயகன் அதாவது வில்லன் என்று இருக்கிற பாத்திரம்தான் விகடன் கோர ரூபத்தோடும், க்ரூரமான

கார்யத்தோடும் இருப்பவன்.

ஆராய்ச்சிக்காரர்கள், 'ஆதிகாலத்தில் விநாயகர் க்ரூரமான உக்ர தேவதையாகக் குரூபமாகத்தான் இருந்தார்.
அப்புறந்தான் அவரை ஸௌம்ய மூர்த்தியாக்கியது'என்று சொல்வதுண்டு. நமக்கு அந்த ஆராய்ச்சியெல்லாம் வேண்டாம். நாம் உருப்படி, நம்முடைய உயிருக்கு ஒரு நிறைவும் நல்ல வழியிலான ஆனந்தமும் பெறுவதற்கு வேண்டியது பக்திதான். நம்முடைய அலைபாய்கிற அசட்டு மனஸை இழுத்து நிறுத்தி வைத்து அதற்கு நிறைவும், ஆனந்தமும் கொடுக்கிற ஒரு மூர்த்தி கிடைத்தால்தான் நமக்கு பக்தி சுரக்கிறது. விசாலமான யானை முகமும், தொப்பை வயிறுமாக இருக்கும் விநாயக மூர்த்தியைப் பார்த்தவுடனேயே நம் மனஸுக்கு இவை கிடைத்து தன்னால் பக்தி உண்டாகிறது. இந்த ப்ரத்யக்ஷமான தெரிகிற ஸமாச்சாரம். விக்நேச்வர மூர்த்தியைப் பார்த்தால் ஒரு குரூபியை அல்லது க்ரூர ஸ்வாபமுள்ளவரைப் பார்க்கிற மாதிரியா அருவருப்போ பயமோ ஏற்படுகிறது. கைப்புண்ணுக்கு கண்ணாடி வேண்டாம். ப்ரத்யக்ஷ அநுபவத்திற்கு எந்த ஆராய்ச்சியைக் கொண்டும் நிரூபணம் வேண்டாம். ஆகையால் அறிவாளிகள் என்கப்பட்டவர்கள் நம்மை மண்டு எனறு சொன்னாலும் சொல்லிவிட்டு போகட்டும். லோக வழக்கில் விகடம் பண்ணுவது என்றால் ஹாஸ்யம் பண்ணுவது என்று இருக்கற அர்த்தத்திலேயே நாம் விக்நேச்வரரை விகடனாக வைத்துக் கொள்வோம். அவர் நம்மை ஆனந்தமாகச் சிரிக்கப் பண்ணுகிற அழகு மூர்த்தியாக ப்ரத்யக்ஷத்தில் தெரிகிறபோது, ஆராய்ச்சி முடிவு சொல்கிறது என்பதற்காக அவர் பயமுறுத்துகிறவர், அசிங்கமாகத் தெரிகிறவர் என்று ஒப்புக் கொண்டால் அதுவும் மண்டுத்தனம் தான்.

விக்நேச்வரர் நிறைய பண்ணுபவர். அப்பா அம்மா ஸாக்ஷாத் பார்வதீ பரமேச்வராள் ஊடல் பண்ணிக் கொண்டு கோபமும் தாபமுமாக இருக்கும்போது அவர் ஏதாவது வேடிக்கை குறும்பு பண்ணி அவர்களை ஒன்று சேர்த்து விடுவார். காக்காயாகப் போய் அகஸ்தியரை விகடமாக ஏமாற்றி நமக்குக் காவேரி கிடைக்கும்படிப் பண்ணுவார். பிரம்மச்சாரியாகப் போய் விபீஷணரை ஏமாற்றி காவேரி தீரத்தில் ஸ்ரீரங்கநாதர் ப்ரதிஷ்டையாகும் படி லீலை

பண்ணுவார். கோகர்ண க்ஷேத்திரத்திலே அவனுடைய அண்ணாவான ராவணனையும் இதே மாதிரி அவர் ஏமாற்றி விளையாட்டுப் பண்ணித்தான் சிவலிங்கம் பிரதிஷ்டையாகும்படிச் செய்திருக்கிறார். இதெல்லாம் விகடர் பண்ணின Practical jokesஅதாவது அவர் விளையாட்டாகப் பண்ணினதே

இன்னொருத்தனுக்கு வினையாக முடிந்தது. ஆனாலும் ஒரு அகஸ்தியர், ஒரு ராவணன், ஒரு விபீஷணன் ஏமாந்தாலும், இந்த லீலைக்கெல்லாம் நோக்கம், இந்த லீலைகளுடைய விளைவு லோக கல்யாணம்தான். காவேரியும், ஸ்ரீரங்கநாதரும், கைலாஸ லிங்கமும் யாரோ ஒரு தனி மநுஷ்யருக்கு உடைமையாக இல்லாமல் லோகம் முழுவதற்கும் ப்ரயோஜனப்படுகிற விதத்தில் அவர் செய்த அருள் லீலை!விகடமாகப் பண்ணிவிட்டார்.

---



## திருத்தலங்களில் விகட விநாயகர்கள்

கள்ளவாரணப் பிள்ளையார் என்று அவருக்குத் திருக்கடையூரில் திருட்டுப் பேரே இருக்கிறது. தப்புப் பண்ணிய தேவர்களிடமிருந்து அம்ருத கலசத்தை அபேஸ் பண்ணிவிட்டு, அப்புறம் அவர்கள் தங்கள் தப்பை தெரிந்து கொண்டு பூஜை பண்ணிய பிறகு அதைக் கொடுத்தவர் அவர். இப்படி அநேக க்ஷேத்திரங்களில் விகடங்கள் பண்ணி, வேடிக்கை வேடிக்கையாய்ப் பெயர் வாங்கியவர்.

கடுக்காப் பிள்ளையார் என்று இப்படியொருத்தர். திருவாரூருக்குத் தெற்கே திருக்காறாயில் என்று ஒரு ஸப்தவிடங்க க்ஷேத்ரம். அதாவது தியாகராஜா ஏழு விதமான நாட்டியமாடும் ஏழு ஸ்தலங்களில் ஒன்று. அந்த ஊருக்கு வியாபாரி ஜாதிக்காய் மூட்டைகள் விற்பனை

பண்ணுவதறாகாக வாங்கிக் கொண்டு வந்தான்.

ஜாதிக்காய்க்கு வரி உண்டு. அதனால் அவன் டோல் கேட் என்ற சுங்கச் சாவடியியில் கடுக்காய் மூட்டை எனறு பொய்ச் சொல்லி-முன்னேற்பாடாக வண்டியில் முன்னாடியும் பின்னைடியும் கடுக்காய் மூட்டைகளும் போட்டுக் கொண்டு வந்திருந்தான். அதனால் அப்படிச் சொல்லி-வரியை ஏமாற்றிவிட்டு, கொண்டு வந்து விட்டான். விக்நேச்வரர் நீதி நியாயம் தப்பினால் தண்டனை கொடுத்து விடுவார். அதையும் விகடமாகப் பண்ணிவிடுவார். அதனால் நிஜமாகவே ராவோடு ராவாக பண்ணிவிடுவார். அதனால் நிஜமாகவே ராவோடு ராவாக எல்லா மூட்டைகளில் இருந்ததையும் கடுக்காயாகவே மாற்றிவிட்டார். மறுநாள் மூட்டைகளைப் பிரித்துப் பார்த்த வியாபாரி, ஐயோ என்று உட்கார்ந்து விட்டான். அப்புறம் புத்தி வந்து பிள்ளையாருக்கு வேண்டிக்கொண்டு, கடுக்காய் மறுபடி ஜாதிக்காயானால் அதற்குண்டான வரியும், வரிக்கு மேல் அபராதமும் கட்டுவததாக ஒப்புக்கொண்டான். அவரும் மனஸ் இறங்கி கடுக்காயை மாற்றிப் பழையபடியே ஜாதிக்காயாகப் பண்ணினார். தித்திக்கும் மோதகப் பிள்ளையாருக்கு அங்கே கடுக்காய்ப் பிள்ளையாரென்று பேர் வந்துவிட்டது.

கடுக்காய்க்கு நேர் எதிர் கரும்பு. ஒரு கரும்பிள்ளை, ஆயிரம் கரும்பைப் பெயரில் வைத்துக்கொண்டு, கரும்பாயிரப் பிள்ளையார் என்று கும்பகோணத்தில் ஒருத்தர். கும்பேச்வர ஸ்வாமி கோவிலுக்கு வடமேற்கே அவருடைய கோயிலிருக்கிறது. ஏன் அப்படிப் பேர், என்ன கதை என்றால், ஆதியில் அவருக்கு வராஹப் பிள்ளையாரென்று பெயராம். வராஹாவதாரத்தின்போது பகவான் அவரை வேண்டிக்கொண்டே பூமா தேவியை ஹிரண்யாக்ஷனிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்ததால் வராஹப் பிள்ளையார் என்று பெயராம். அந்தப் பிள்ளையார் கோவில் வாசலில் ஒருநாள் ராத்ரி ஒரு கரும்பு வண்டிக்காரன் ஆலைக்குச் சரக்கு எடுத்துப் போகிற வழியில் தங்கினானாம். வண்டியில் ஆயிரம் கரும்பைக் கடட்டுக் கட்டாகப் போட்டிருந்தாராம்.

விக்நேச்வரருடைய வாஸம் கருப்பஞ்சாற்று ஸமுத்ரத்துக்குள்ளேதான். கைலாஸம், வைகுண்டம் மாதிரி

அவருக்கென்று ஒரு லோகம் உண்டு. ஆனந்த ஸ்வரூபமான அவருடைய அந்த லோகத்தின் பேர் ஆனந்த புவனம் என்பது. மஹாவிஷ்ணு க்ஷீரஸாகரத்தில் சயனித்துக்கொண்டிருக்கிறார். அம்பாள் அம்ருத ஸாகரத்துக்குள் இருக்கிற மணி த்வீபத்தில் இருக்கிறார். பிள்ளையாருடைய ஆனந்த புவனத்தைச் சுற்றி இக்ஷுஸார ஸாகரம், அதாவது கருப்பஞ்சாற்றுக் கடல் இருக்கிறது. இவர் ரொம்பவும் ஸ்வீட் என்பதைக் கையிலிருக்கும் மோதகம் மட்டுமில்லாமல் அவரைச் சூழ்ந்திருக்கும் பெரிய ஸமுத்ரமே தெரிவித்துவிடுகிறது. அவரிடமிருந்தே கருப்பஞ்சாறு மாதிரி மத ஜலம் பெருகிக் கொண்டிருக்கும் என்றும், வண்டுக் கூட்டம் வந்து மொய்க்கும் என்றும் சொன்னேன்.

கருப்பங்கடலுக்கு நடுவிலிருப்பவர் வேடிக்கையாக ஒரு பாலப்பிரம்மச்சாரி வேஷம் போட்டுக்கொண்டு வந்து வண்டிக்காரனிடம் ஒரு கரும்பு கேட்டாராம். தரமுடியாது என்று அவன் சொன்னானாம். போகிறவர்கள் வருகிறவர்கள், வண்டி நிறைய இவ்வளவு வெச்சுண்டிருக்கே, அந்தக் குழந்தை வாயைத்திறந்து கேக்கிறச்சே ஒன்று குடுக்கப்படாதா?

என்றார்களாம். ஏதாவது சொல்லித் தப்பித்துக்கொள்ளனுமென்று அவன், இது ஒரு தினுஸுக் கரும்பு. அப்படியே சாப்பிட்டா கரிக்கும். ஆலையில் காச்சி வெல்லம் எடுக்கறப்போதான் தித்திப்பாகும் என்று அளந்தானாம். அப்படியா?என்று அவர்கள் போய்விட்டார்களாம். அப்படியா?என்று பிள்ளையாரும் சிரித்துக் கொண்டாராம்.

உங்களுக்கே புரிந்திருக்கும் - மறுநாள் அத்தனை கரும்பும் ஒரே கரிப்பாக கரிக்க ஆரம்பித்துவிட்டதாம். ஆலையில் அவன் கரும்பைக் கொண்டு போய் இறங்கியவுடன் அந்த விஷயம் தெரிந்தது. பிள்ளையார் கோவில் வாசலில் வந்து கரும்பு கேட்ட ப்ரம்மச்சாரி யாரென்று அவனுக்குப் புரிந்தது. ரொம்பவும் பச்சாபதாபப்பட்டு வேண்டிக்கொண்டாராம். ஸ்வாமியும் அநுக்ரஹம் பண்ணிக் கரும்பெல்லாம் பழையபடி தித்திப்பாக மாற்றினாராம். வராஹப் பிள்ளையார் என்று பேரும் கரும்பாயிரப் பிள்ளையார் என்று மாறிற்று.

இப்படி விகட அமசமிருப்பதாக அநேகக் கதைகள்.

இந்த மாதிரி விளையாடியே அவர் மோக்ஷ பர்தயம் எல்லா அநுக்ரஹமும் பண்ணுவாரென்பது ஔவ்வையார் கதையிலிருந்து தெரிகிறது. அவளைத் தன்னுடைய தும்பிக்கையை வளைத்துத்தூக்கி, விகட விளையாட்டாக அதை அப்படியே நீட்டிக் கொண்டு போய்தான் கைலாஸத்தில் தொப்பென்று போட்டிருக்கிறார். (தொப்புனு போட்டிருக்கார் என்று குழந்தைப்போல் அபிநயத்துடன் ஸ்ரீசரணர்கள் கூறிக் களுக்கென்று சிரித்துக் கொண்டார்கள்)

---



## கேலிக் கவிதைகள்.

தான் மற்றவர்களிடம் விகடம் செய்வது மட்டுமில்லை. தன்னை வைத்தும் பக்தர்களான கவிகள் விகடம் பண்ணுவதற்கென்று நிறைய இடம் கொடுத்திருப்பவர் அவர். சந்திரன் நிஜமாகவே அவரைப் பரிஹாஸம் பண்ணி தண்டனைக்கு ஆளான மாதிரியில்லாமல், நம்ப பிள்ளையார் என்று ஸ்வாதீன ப்ரியத்தின் பேரில் நிந்தா ஸ்துதியாகக் கேலி பண்ணினால் ரஸித்துக்கேட்டுக் கொள்வார்.

காளமேகப் புலவர் இப்படி நிறைய விகடமான சிலேடைக் கவிகள் பாடியிருக்கிறார். ஒரு பாட்டில் அம்பாள் விக்நேச்வரரைப் பெற்றதைக் கோட்டானையும் பெற்றாள் என்கிறாள். என்னது?பிள்ளையாரையா இப்படி தூக்கி வாரிப் போடுகிறாற் போலக் கோட்டான் என்கிறார்?என்றால் இங்கே, கோட்டானை என்றால் கோட்டு யானை, அதாவது தந்தமுடைய யானை என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். இன்னொரு பாட்டில் அவர் விக்நேச்வரர் மூஷிக வாஹனராக இருப்பதைப் பரிஹாஸம் பண்ணி ஆனையை எலி இழுத்துக்கொண்டு போகிறதே எனறு பாடியிருக்கிறார்.

ஔவையுங்கூடத் தனக்குப் பிள்ளையார் கொடுப்பதை விட, தான் அவருக்குக் கொடுக்கிறதுதான் ஜாஸ்தி என்று த்வனிக்கிற விதத்திலேயே, தான் நாலு கொடுக்கிறதற்கு ப்ரதியாக அவர் மூன்று கொடுத்தால் போதும் என்று பரிஹாஸமாகச் சொல்கிற விதத்திலேயே,

**பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை**

**நாலும் கலந்துனக்கு நான் தருவேன் -**

**.................... நீயெனக்குச்**

**சங்கத் தமிழ் மூன்றும் தா**

என்று பாடியிருக்கிறாள்.

அவருக்காக நாம் தலையில் குட்டிக் கொள்வது, தோப்புக்கரணம் போடுவது, சிதறுகாய் போட்டு லபோ லபோ என்று பல பேர் பொறுக்கப்போய் அதிலே சில பேர் ஏமாந்து போவது முதலிய எல்லாவற்றிலுமே ஒரு விகட அம்சம் இருக்கிறது.

---



## விகட சக்ர விநாயகர்

தோப்புக்கரணம் என்றதும் ஞாபகம் வருகிறது. அவர் விகடம் பண்ணிய சில க்ஷேத்திரங்கள் சொன்னேன். காஞ்சிபுரத்திலேயே விகட சக்ர விநாயகர் என்ற பெயரில் அவர் இருக்கிறார். தம்பி மூலவராகவுள்ள குமரக் கோட்டத்தில் அந்த விகட சக்ரர் இருக்கிறார். அதென்ன விகட சக்ரரர் என்றால், சக்ரபாணியான மாமா விஷ்ணுவிடமும் practical jokeஆகப் பிள்ளையார் விகடம் பண்ணியிருக்கிறார். ஒரு விநாயக சதுர்த்தியன்று மருமான்

பிறந்த நாளாச்சே!என்று மஹாவிஷ்ணு நிறைய ப்ரஸென்ட்களோடு கைலாஸத்துக்கு வந்தாராம். குழந்தை ஸ்வாமியானால் அந்த ப்ரஸன்ட்களையெல்லாம் தூக்கிப் போட்டுவிட்டு மாமாவின் சக்ரத்தைப் பிடுங்கிக் கொண்டு விட்டாராம். அந்த ஸுதர்ஸனம் இல்லாமல் மஹாவிஷ்ணு இருப்பாரா?பிள்ளையாரைப் பிடித்து அவரிடமிருந்து திரும்பி வாங்கிக் கொள்ள முயற்சி செய்தாராம். பிள்ளையார் அதை லபக்கென்று வாயில் போட்டுக் கொண்டு விட்டாராம். மஹாவிஷ்ணு தம்முடைய சதுர்புஜத்தால் இரண்டு காதையும் பிடித்துக்கொண்டு தொப்புத் தொப்பென்று தோப்புக்கரணம் போட்டாராம். அதைப் பார்த்துப் பிள்ளையார் குபீர் குபீரென்று சிரித்தாராம். அப்போது வாயில் அடக்கிக்கொண்டிருந்த சக்கரம் வெளியில் வந்து விழுந்ததாம். விஷ்ணு அதை எடுத்துக்கொண்டு விட்டாராம்.

விஷ்ணுவின் சக்கரத்தைத் தம்மிடம் வைத்துக் கொண்டு விகடம் செய்தவர்தான் விகட சக்ர விநாயகர். அவரிருக்கும் குமரக் கோட்டத்திலே மூலவரான குமாரஸ்வாமி பிரம்ம சாஸ்தா என்கப்பட்ட ரூபபேதத்தில் இருக்கிறார். ப்ரஹ்மாவை ப்ரணவர்த்தம் கேட்டு அவருக்கு ஸரியாகச் சொல்லத் தெரியாததால் ஜெயிலில் போட்டு விட்டு பாலஸுப்ரஹ்மண்யரே ஸ்ருஷ்டி பண்ணினாரென்று கதை இருக்கிறதல்லவா?அந்த ஸமயத்தில் ஸ்வாமி தாமே ப்ரஹ்மாவுக்குரிய ஜபமாலை கமண்டலங்களைக் கையிலே தரித்துக் கொண்டிருந்தார். குமரக் கோட்ட மூலவர் அப்படித்தான் இருக்கிறார். ப்ரஹ்மாவுக்கு ஆக்ஞை பிறப்பித்துத் தண்டித்ததால் ப்ருஹ்ம சாஸ்தா என்று அந்த அவஸரத்திற்குப் பேர். தம்பி ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மாவின் கையிலுள்ள வஸ்துக்களைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் கோவிலில் அண்ணாக்காரார் பாலன கர்த்தாவான விஷ்ணுவின் சக்ரத்தை அபஹரித்த விகட சக்ர விநாயகராக இருக்கிறார்.

கஜகர்ணர் விசிறிக் காதால் வண்டை விரட்டி விளையாடிச் சிரிக்கப் பண்ணுகிறவர். லம்போதரர் தொங்குகிற தொப்பையாலேயே பார்த்த மாத்திரத்தில் சிரிக்கப் பண்ணுகிறவர். விகடர் அநேக தமாஷ்கள், சேஷ்டைகள், குறும்புகள் செய்து சிரிக்கப்ப பண்ணுகிறவர். ஸுமுகராக சிரித்த மூகத்தோடு முதல் பேரில் வந்தவருக்கு அடுத்தடுத்து

இப்படி மூன்று பேர்கள் - கஜகர்ணர், லம்போதரர், விகடர்.

ஸதா ஏதாவது கஷ்டத்தில் மாட்டிக்கொண்டு தவிக்கிற லோக ஜனங்களை ஸந்தோஷப்படுத்துகிற விக்நேச்வரருக்கு மிஞ்சி தெய்வமில்லை.

---



## விக்ந ராஜர்

அடுத்த பேர் விக்ந ராஜர். அதாவது விக்நேச்வரர். விக்ந ஈச்வரரேதான் வித்நராஜா. ஈச்வரன் ராஜாவுக்கு ரொம்ப மேலே என்று தோன்றும். ஆனாலும் ரூட் மீனிங் பார்த்தால் ஈச்வரனும் ராஜா செய்கிறதைச் செய்பவன்தான். ஈச் என்கிற தாதுவுக்கு ஆட்சி பண்ணுவது என்றே அர்த்தம். ஆட்சி பண்ணுகிறவன் ஈச்வரன். ஸ்வாமி பெயர்களில் ராஜா, ஈச்வரன், நாதன் என்கிற வார்த்தைகள் ஒரே அர்த்தத்தில்தான் வரும். நடராஜா என்ற பேரையே நடேசன், நடேச்வரன் என்றும் சொல்கிறோம். ரங்கராஜா என்ற பேரையே ரங்கநாதன், ரங்கேசன் என்றும் சொல்கிறோம். திருநாவுக்கு அரசர் என்பதையே வாக்-ஈசர் என்கிறோம். அப்படி விக்ந ராஜா என்றாலும் விக்நேச்வரர் என்றாலும் ஒருத்தர்தான்.

பிள்ளையாருக்கு இருக்கப்பட்ட ப்ரத்யேகமான அதிகாரத்தைக் காட்டுவது

விக்நராஜா என்ற பேர்தான். அவர் ப்ரத்யேகமாக எதற்காக ஏற்பட்ட ஸ்வாமி?ப்ரம்மா ஸ்ருஷ்டிக்கு;விஷ்ணு ஸ்திதிக்கு:ருத்ரன் லயத்துக்கு;துர்க்கை வெற்றிக்கு:லக்ஷ்மி செல்வத்திற்கு;ஸரஸ்வதி படிப்புக்கு;தன்வந்தரி வியாதி நிவாரணத்திற்கு என்றெல்லாம் பரமேச்வரனின் ப்ரபஞ்ச சர்க்கார்களில் ஒவ்வொருத்தருக்கு ஒரு ஆபீஸ் இருக்கிற மாதிரி, பிள்ளையாருடைடை ய ஆபீஸ் என்ன?விக்னங்களைப்

போக்குவதுதான். எடுத்த காரியம் எதுவானாலும் அதில் விக்னம் - இடையூறு - உண்டாக்காமலிருக்கவே எடுத்த எடுப்பில் அவரைத் தொழுகிறோம். விக்ன நீக்கத்திற்கென்றே ஏகப் பரம்பொருள் எடுத்துக்கொண்ட ரூபம்தான் விக்நேச்வரர் அல்லது விக்நராஜா.

விக்னத்துக்கு ஈச்வரர், ராஜா என்றால் விக்னங்களை உண்டாக்குவதில் தலைவர் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளக்கூடாது. விக்னங்களை அடக்கி அழிப்பதால் அவர் விக்ன ராஜாவாக இருக்கிறார். ஒரு ராஜாவுக்கு முக்யமான வேலை சத்ருக்களை அடக்கி வைப்பது. அப்படி விக்னங்களை அடக்கி வைக்கும் விக்ன ராஜா அவர்.

ஆராய்ச்சிக்காரர்கள் ஆதியில் உக்ர தேவதையாகப் பிள்ளையார் இருந்தபோது அவர்தான் விக்னங்களை உண்டு பண்ணுபவராக இருந்தாரென்றும், அதனால்தான் விக்நேச்வரர் என்ற பேர் ஏற்பட்டதென்றும், அப்புறம் ஸௌம்ய மூர்த்தியாக அவரை வழிபட ஆரம்பித்த பிறகும் அந்தப் பெயர் நீடித்து விட்டதென்றும் சொல்கிறார்கள்.

---



## விக்னம் செய்வதும் உயர் நோக்கத்திலேயே !

அங்கங்கே அவர் விக்னமும் கொஞ்சம் உண்டாக்கித்தான் இருக்கிறார். பரமசிவனே திரிபுர ஸம்ஹாரத்திற்குப் புறப்படும்போது தம்மை நினைக்காமல் புறப்பட்டதால் அவருடைய ரதத்தின் அச்சு முறிந்து போகும்படிப் பண்ணியிருக்கிறார். ஆனால் இதெல்லாமும், பரமேச்வரனேயானாலும் அவருங்கூட லோக நிர்வாகத்தில் மற்ற தெய்வங்களுக்கு இருக்கிற அதிகாரத்தை மதித்து அதற்கு கீழ்படிந்து காட்டுவதுதான் முறை என்று புரிய வைப்பதற்குத்தானேயொழிய, கெடுதல் பண்ண வேண்டும் என்பதற்காகவே கெடுப்பதல்ல. சட்டத்திற்கு

Obeyபண்ணனும். தனி ஆஸாமியைவிட - அவன் ஸாமியாகவே இருந்தால்கூட - சட்டந்தான் பெரிது என்று புரியச் செய்வதற்கும், அடங்கிப் போகும் அடக்கக்குணம் எவருக்கும் இருக்க வேண்டும் என்று பாடம் கற்பிப்பதற்காகவுந்தான் அவர் எப்போதாகிலும் விக்னம் உண்டாக்குவது. அதனால் அப்போதைக்கு பாதிக்கப்பட்டவர்கள் முடிவிலே நாசமானதாகக் கதையே கிடையாது. ஏனென்றால் விக்னத்தையே உண்டாக்கிய விக்நேச்வரரே தத்-த்வாரா (அதன் வழியாக) அதனால் பாதிக்கப்பட்டவருக்கு, நாம் பராசக்தியின் ஆட்சியில் விக்ன நிவாரணத்துக்காக நியமிக்கப்பட்டுள்ள அதிகார புருஷரை மறந்து நாமே ஸாதித்துவிட முடியும் எனறு கார்யத்தில் இறங்கியதால்தான் இப்படி உபத்திரவம் உண்டாகியிருக்கிறது என்ற நல்லறிவையும் ஊட்டி, அவர் அடக்கத்தோடு ப்ரார்த்தனை பண்ணும்படிச் செய்து விடுவார். அப்புறம் ஒட்டிக்கு இரட்டியாக நிரம்ப அநுக்ரஹம் புரிந்து விடுவார். அவர்தான் விக்நராஜா.

---



## சொந்த அநுபவம்

புராண காலத்து த்ருஷ்டாந்தங்கள் இருக்கட்டும். சொந்தத்திலேயே எக்ஸ்பீரியன்ஸ் இருக்கிறது. இரண்டு சொல்கிறேன்.

வேலூருக்குப் போயிருந்தோம். அங்கே சேன்பாக்கம் என்ற இடத்தில் சக்தி வாய்ந்த மூர்த்தங்கள் இருக்கின்றன. ஒரு பிள்ளையார் இரட்டைப் பிள்ளையார் இல்லை. பதினோரு பிள்ளையார்கள். அதில் இன்னும் விசேஷம் என்னவென்றால் அவை சில்பி அடித்துப் பண்ணியதில்லை. பதினாறும் ஸ்வயம்பு மூர்த்திகள். ஏகாதச ருத்ரர்கள் உண்டு. இங்கே ஏகாதச விநாயகர்கள் இருக்கிறார்கள். பதினொன்றும்

அமைந்திருக்கும் அமைப்பு ப்ரவணவாகாரமாக இருக்கும்.

நடுவாந்திரத்தில் பூமி மட்டத்தோடு மட்டமாக அந்த மூர்த்திகள் மூடிப் போயிருந்ததாம். விக்நேச்வரர் ப்ருத்வீ தத்வத்துக்கு மூர்த்தி என்று காட்டவோ என்னவோ, இப்படி மண்ணுக்குள் புதைத்து விளையாட்டுப் பண்ணியிருக்கிறார். துக்கோஜி என்ற மஹாராஷ்டிர மந்திரி அந்த வழியாக ராத்ரி வேளையில் ஸாரட்டில் போய்க் கொண்டிருந்தாராம். டக்கென்று அச்சு முறிந்து வண்டி நின்றுவிட்டது. இறங்கிப் பார்த்தால் பூமியில் ரத்தக் கரை இருந்தது. ஆனால் ஆள் யாரையும் காணோம். என்னவென்று புரியாமல் மனஸ் கலங்கி ராத்ரி பூராவும் அங்கேயே இருந்தாராம். விடிந்துதான் ஸாரட்டுக்குத் தச்சுப் பார்த்து ரிப்பேர் பண்ண முடியுமென்பதால் அப்படி தங்கும்படி ஆயிற்று. பிரயாணத்துக்கு இப்படி பதிபந்தகம் (விக்னம்) வந்ததே என்று வருத்தப்பட்டு, விக்நேச்வரரை ப்ரார்த்தித்துக்கொண்டு தூங்கிப் போய் விட்டார். விக்நேச்வரர் ஸ்வப்னத்தில் வந்தார். அந்த இடத்தில் என்னுடைய ஏகாதச மூர்த்திகள் புதைந்து போயிருக்கின்றன. அதன்மேல் உன் வண்டிச்சக்கரம் இடித்ததினால்தான் ரத்தம் வந்துவிட்டது. அதைப் பற்றி வருத்தப்படாதே!மூடிக்கிடக்கிறதுபோதும், கோயில் கட்டிக் கொண்டு எல்லோரும் வரப்ரஸாதியாகப் பிரகாசிக்க வேண்டும் என்கிற ஸங்கல்பத்தில் நானேதான் பண்ணுவித்தது!அங்கே கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் பண்ணிப் பரம புண்ணியம் ஸம்பாதிச்சுக்கோ என்றார். துக்கோஜி எத்தனை வருத்தப்பட்டாரோ அதற்கு வட்டியும் முதலுமாக ஸந்தோஷப்பட்டுக் கொண்டு அப்படியே பண்ணினார்.

அந்தக் கோயில் இருக்கிற பக்கமாக நாங்கள் ஊர்வலமாகப் போய்க் கொண்டிருந்தோம். அப்போது என்ன ஆச்சு என்றால், சின்ன ஸ்வாமிகள் யானை மேல் வந்து கொண்டிருந்தார். அந்த யானை இடத்தை விட்டு மேலே போகாமல் அங்கேயே சுழண்டு சுழண்டு வந்தது. யானைப்பாகனும் மற்றவர்களுக்கும் எத்தனை தாஜா பண்ணும் கேட்காமல் ரொம்ப நேரம் இப்படி முரண்டு பண்ணிற்று. மேலேயானால் ஸ்வாமிகள் இருக்கிறார். இது இப்படிப் பண்ணுகிறதே!மதம் பிடித்து விட்டதா

என்ன?கூட்டமாக ஜனங்கள் சேர்ந்திருக்கிறார்களே!என்று எல்லோருக்கும் வயிற்றில் புளியைக் கரைத்தது.

அப்பறம்தான் சட்டென்று ஞாபகம் வந்தது. பக்கத்திலே சேண்பாக்கம் பிள்ளையார் இருக்கிறார். அவருக்கு 108 சிதறுகாய் போடுவதாக வேட்டிக்கொண்டிருந்தோம். ஆனால் ஸமயத்தில் அது மறந்து போயிடுத்து என்று!மறந்து போயிடுச்சு என்றால் என்ன?அசிரத்தை என்றுதான் அர்த்தம். பூர்ண கும்ப மரியாதை, மாலை மரியாதை, ஜனங்களுடைய நமஸ்காரம் எல்லாம் நிறைய வாங்கிக் கொள்வதற்காக பவனி வருவதற்கு மறந்து போகவில்லையே!பிள்ளையாருக்கு வேண்டிக் கொண்டதைச் செய்ய மட்டும் மறந்து போகலாமா?ஜனங்களுக்கு ச்ரத்தா - பக்திகளை உண்டு பண்ண வேண்டிய பொறுப்புள்ளவர்களே இப்படிப் பண்ணலாமா என்று பாடம் கற்பிக்கிறதற்காகத்தான் ஸ்வாமி இப்படிப் பண்ணியிருக்கிறாரென்று புரிந்தது. எனக்கே ஏதாவது கஷ்டம் உண்டாக்கினால்கூட அவ்வளவு மனஸில் தைக்காது எனறுதான் சின்ன ஸ்வாமிகள் ஏறி வந்த தம்முடைய ஸ்வரூபமான யானை மூலமே இடக்குப் பண்ணியிருக்கிறார் என்று தோன்றிற்று. அவர் (சின்ன ஸ்வாமிகள்) ஒன்றும் பயப்படாமல் தைர்யமாகத்தான் இருந்தார். வேண்டிக் கொண்ட எனக்கும், அதைத் தெரிந்து கொண்டிருந்த கார்யஸ்தர்களுக்குந்தான் பயம், பாடம் எல்லாம்!

உடனே பிள்ளையாருக்குச் சிதறுகாய் போட்டது. யானையும் சட்டென்று ஸரியாகித் தன் பாட்டுக்கு மேலே போக ஆரம்பித்தது. இது ப்ரத்யக்ஷத்தில் பார்த்தது. அப்புறம் ஒரு நாள் அந்தப் பிள்ளையாருக்குப் அபிஷேக ஆராதனைகளும் விசேஷமாகப் பண்ணினோம்.

சிதறுகாய், அபிஷேகம் ஆகியவற்றால் அவருக்கென்றும் நாம் புதுஸாக லாபம்,

ஸந்தோஷம் உண்டாக்கிவிடவில்லை. அவர் என்றைக்குமே ஆனந்த ஸ்வரூபி, நித்ய த்ருப்தர். இந்த வழிபாடுகள் தனக்குப் பண்ண வைத்து நமக்கேதான் ஆனந்தம், ஆத்ம லாபம் ஏற்படுத்துகிறார்.

நிர்விக்னமாக ஒரு கார்யம் நடந்தால் நல்லபடி நடந்தது என்று த்ருப்தி ஏற்படுகிறது. அது வாஸ்தவம்தான். ஆனாலும் அதைவிட த்ருப்தி, ஸந்தோஷம் எப்போது உண்டாகிறதென்றால், ஒரு விக்னம் உண்டாகி அப்புறம் அது நிவர்த்தியாகிக் கார்யம் நிறைவேகிறபோதுதான்!வெய்யில் இருந்தால்தான் நிழலருமை தெரியும். ஜரிகையை கறுப்புத் துணியில் அட்டாச் பண்ணினால்தான் இன்னும் பளிச்சென்று தெரிகிறது. அப்படி விக்னத்தோடு சேர்ந்து கார்ய பூர்த்தி வருகிறபோதே அதிலே கூடுதல் ஸந்துஷ்டி ஏற்படுகிறது.

கார்ய பூர்த்தி இருக்கட்டும். அதோடு, அதைவிட பக்தியானந்தம் ஏற்படுவது விசேஷம். நாம் மறந்து போனாலும் அவ்வளவு பெரிய ஸ்வாமி - எதுவும் தேவை இல்லாதவர், நம் தேவைகளையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பவர் - நம்முடைய அல்பப் பிரார்த்தனையை மறந்து போகாமல் நினைவு வைத்துக் கொண்டு, தெய்வ ஸஹாயமில்லாமல் நம்மால் முடியாது என்ற அறிவு அடக்கங்களையும் நமக்கு உண்டாக்கும் விதத்தில், இடைஞ்சல் என்ற பெயரில் பெரிய அநுக்ரஹமே பண்ணியிருக்கிறார் என்று பக்தியான ஒரு ஆனந்தம் உண்டாகிறது.

இடைஞ்சலைப் போக்குகிறவர், பின்னாடி போக்குவதற்காகவே எப்போதாவது இடைஞ்சலை உண்டு பண்ணுகிறவர் - அவர்தான் விகநராஜா.

---



## விநாயகர் ; இரட்டைப் பிள்ளையார்.

விக்நராஜோ விநாயக:- விக்நராஜர் என்ற பேருக்கு அடுத்தபடி விநாயகர் என்று வருகிறது. இரட்டைப் பிள்ளையார் எனறு பக்கத்தில் பக்கத்தில் இரண்டு

பிள்ளையார்களைப் பிரதிஷ்டை செய்கிற வழக்கம் இருக்கிறது. அநேக ஊர்களில் இரட்டைப் பிள்ளையார் கோயில் தெரு என்று இருக்கும். அங்கே ஒரே ஆலயத்தில் ஒரே சந்நிதியில் இரண்டு பிள்ளையார்கள் பக்கத்தில் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருப்பபார்கள். தனிக் கோவிலாக இல்லாமல் ஈச்வரன் கோவிலிலேயே இரட்டைப் பிள்ளையார் இருப்பதுமுண்டு.

வேறே எந்த ஸ்வாமிக்கும் இப்படி ஜோதி மூர்த்திகள் வைத்து ஆராதிப்பதாகக் காணோம். பிள்ளையாருக்கு மட்டும் இருக்கிறது. இரட்டைப் பிள்ளையார் என்றே சொல்வதாகவுமிருக்கிறது.

ஏனிப்படி என்றால் இவர் ஒருத்தர்தான் தாமே ஒன்றுக்கொன்று எதிரானதாகத் தோன்றும் இரண்டு காரியங்களைப் பண்ணுகிறார். எதிரானது என்று சொல்லவில்லை. எதிரானதாகத் தோன்றுகிற என்கிறேன். இதற்கு அப்புறம் வருகிறேன். ஆகக்கூடி இவர் செய்கிற இரண்டு கார்யங்களில் ஒன்று மற்றதற்கு நேர் மாதிரித் தெரிகிறது. அவற்றில் ஒவ்வொன்றுக்கும் ஒரு மூர்த்தியாகத் தான் இரட்டைப் பிள்ளையார் என்று வைத்திருப்பது.

அந்த இரண்டு மூர்த்திகளில்தான் ஒருத்தர் விக்நராஜர். மற்றவர் விநாயகர். அடுத்தடுத்து இரண்டு பிள்ளையார் மூர்த்திகள் உட்கார்ந்திருக்கிறார்ப்போலவே இந்தப் பேர்களும் (ஷோடச நாமாவளியில்) அடுத்தடுத்து வருகின்றன. விக்நராஜா விநாயக.

அதென்ன இரண்டு கார்யமென்றால் - ஒன்று விக்னங்களை உண்டு பண்ணுவது. மற்றொன்று விக்னங்களைப் போக்குவது. நேர்மாறாகத் தோன்றும் இரண்டு கார்யங்கள்.

விக்நேச்வரர், விக்நராஜர் என்றெல்லாம் சொல்லும்போது விக்னத்தை உண்டாக்குவதில் ஈச்வரர், ராஜா என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளக்கூடாது. ஈச்வரனே, ராஜாவோ எப்பதி கெட்டதை அடக்கி அழிக்கும் சக்தியோடு இருக்கிறார்களோ அப்படி இவர் விக்னம் என்ற கெட்டதை அழிப்பதாலேயே இப்படி பேர் பெற்றிருக்கிறாரென்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று சொன்னேன். பொதுவாக விக்நேச்வரர் என்று அவரைச் சொல்லி வணங்கும்போது

இந்த அர்த்தத்தில், பாவத்தில்தான் செய்ய வேண்டும்.

ஆனால் இரட்டைப் பிள்ளையார்களில் முதல்வராக அவர் விக்நராஜரைப் பேரில் இருக்கும்போது அவரை விக்னங்களை உண்டாக்குபவர் என்றுதான் வைத்துக் கொள்ள வேண்டும். வார்த்தையின் நேர் அர்த்தப்படி, (சிரித்து) திருட்டுப் பண்ணுவதில் மஹா கெட்டிக்காரனாக இருப்பவனைத் திருட்டு ராஜா என்கிற மாதிரி, விக்னங்களைப் பண்ணுவதில் மஹா கெட்டிக்காரர் என்பதாலேயே விக்னராஜா என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

அப்புறம் விக்னங்களைப் போக்கும் மூர்த்தியாக அவர் இருக்கும்போதுதான் அவருக்கு விநாயகர் என்று பெயர்.

விக்னங்களைப் பண்ணுகிறாரென்றால், பொல்லாத சாமியா?என்றால், அதுதானில்லை.

அதனால்தான் விக்னங்களைப் பண்ணுவதையும் போக்குவதையும் நிஜமாகவே எதிரெதிர் என்று சொல்லாமல் எதிர் மாதிரித் தோன்றுகிற என்று சொன்னது. இந்த இரண்டு காரியங்களுக்கும் ஸாரம் அநுக்ரஹம் என்ற ஒன்றேதான். அதுவே இரண்டு ரூபத்தில்,

விக்னம் பண்ணுவது, விக்னத்தை அழிப்பது எனறு இரண்டாயிருக்கிறது. அதனால் அடிப்படையில் எதிரெதிர் இல்லை.

விக்னத்தைப் பண்ணுவதா அநுக்ரஹம்?அதெப்படி என்றால்,

எத்தனையோ தப்புக் கர்மா பண்ணி நாமெல்லாம் நிறைய மூட்டை கட்டிக் கொண்டு வந்துள்ளோம். ஆனாலும் இப்போது ஏதோ கொஞ்சம் ஈச்வராநுக்ரஹத்தினால் கொஞ்சம் பிள்ளையார் பக்தி உண்டாகி, அவரை வேண்டிக்கொண்டு, நாம் ஆரம்பிக்கிற கார்யங்கள் விர்விக்னமாக நடக்க வேண்டும் என்பதற்காக அவரை வேண்டிக் கொண்டு ஆரம்பிக்கிறோம்.

சரி, இப்படி வேண்டிக்கொண்டோமென்பதற்காக நம் பழம் பாக்கியை அவர் அப்படியே ஒவர்லுக் பண்ணி நமக்குக் கார்ய ஸித்தியைத் தந்தால் ஸரியாயிருக்குமா? என்னதான்

கருணையினால் விட்டுக் கொண்டுக்கலாமானாலும் ஒரேடியாக பூர்வ கர்ம பலனை கான்ஸல் பண்ணினால் ஸரியாயிருக்குமா?அப்புறம் பாப பீதி ஜனங்களுக்கு எப்படியிருக்கும்?தர்ம நியாயம் ஒன்றுமில்லை என்பதாகத்தானே ஆகிவிடும். நாம் என்ன வேணா பண்ணலாம், பண்ணியிருக்கலாம். இப்போ குஞ்சம் பிள்ளையார் பூஜை பண்ணிட்டா போறும். அத்தனை தப்பும் அடிபட்டுப் போயிடும் என்றல்லவா ஆகிவிடும்?

இப்படி ஆக விடாமலிருப்பதற்காகத்தான் அவர் விக்ந ராஜாவாக இருந்து விக்னங்களை உண்டு பண்ணுவது. உண்டு பண்ணுவது என்றால் அவராகவே நம்மைக் கஷ்டப்படுத்துவதற்காக அநியாயமாக உண்டு பண்ணுவதில்லை. நாம் பூர்வத்தில் பண்ணியிருப்பதின் பயனாக நமக்குக் கார்ய ஸித்தி ஏற்படுவதற்கில்லை என்று கர்ம நியாயக் கனக்குப் படியே இருக்கும். ஆகவே அவர் பண்ணுவதாகத் தோன்றும் விக்னத்திற்கு மூலம் பூர்வத்தில் நாம் பண்ணின தப்புதான். அது எப்படியும் நமக்கு அநேக கார்யங்கள் நிறைவேறாமல் இடைஞ்சல் பண்ணத்தான் இருக்கும். அது தானாகப் பண்ணினால் எத்தனையோ உத்பாதமாகவே இருக்கும். இடைஞ்சலால் கார்யம் அடியோடு கெட்டுத் தோற்றே போய் நிற்போம். அல்லது அனேக சின்னச் சின்ன விஷயங்களில் வெற்றி உண்டாக விட்டு (இடமளித்து) அப்புறம் சேர்த்து வைத்து அத்தனையும் நொறுக்கி மண்டையில் ஒரே போடாகப் போய்விடும் - படு தோல்வியே!இப்படி நேராமல், வெள்ளம் அப்படியே நம்மை அடித்துக் கொண்டு போய்விடாமல், வருமுன் காப்பாக அணைபோட்டுக் கொஞ்சங் கொஞ்சமாக ஜலத்தை விடுகிறாற்போலவே, விக்நராஜா நம்முடைய கர்ம சேஷத்தால் உண்டாக வேண்டிய இடைஞ்சலை நாம் தாங்கிக் கொள்கிற அளவில் சானலைஸ் பண்ணி விடுகிறார். சானலைஸ் பண்ணுவது மட்டுமில்லாமல் ஜலத்தையே ஒரளவுக்கு வற்றவும் பண்ணுகிறார். என்றைக்கோ பெரிஸாகப் பழிவாங்க இருக்கற பெரிய விக்னத்தை இப்போதே தன்னுடைய தும்பிச்சுக்கையால் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து, பாக்கியையும் ஒரே வீச்சில் காட்டி விடாமல், சின்னச் சின்னதாப் பண்ணி நாம் தாங்கிக் கொள்ளும்படிப் பண்ணுகிறார். பழைய கர்மா எவ்வளவு சீக்கிரம் தீர்கிறதோ

அவ்வளவுக்கு நல்லதுதானே?அது தீர்ந்தால்தானே விமோசனத்துக்கு வழி திறக்கும்?தள்ளிப் போக போக நாம் இன்னமும் புதிஸாக எத்தனை மூட்டை சேர்த்துக்கொண்டு விடுவோமோ?இப்படி ஆகாமல் விக்னத்தை முன்னதாகவே இழுத்துக் கொண்டு வந்து, நமக்குக் கொடுமையானதாகத் தெரிந்தாலும் வாஸ்தவத்தில் பரம நல்லதே பண்ணுபவர்தான் விக்நராஜா.

விக்னத்தை இழுத்துக்கொண்டு வருபவர் விக்நராஜா. அப்புறம் அதைச் சிறிது பண்ணி, நாம் கொஞ்சம் அநுபவித்த உடனேயே, போதுமென்று அப்படியே போக்கி விடுபவர் விநாயகர். வியாதியைக் கிளறிவிட்டு ஸ்வஸ்தப்படுவதுண்டல்லவா?அப்படி,

கிளறிவிடுபவர்தான் வித்நராஜர். ஸ்வஸ்தப்படுத்துகிறவர் விநாயகர்.

விக்ந கர்த்தா (இடையூறு செய்பவர்) விக்ந ஹர்த்தா (இடையூறை அழிப்பவர்) என்று இரண்டு பேரும் அவருடைய அஷ்டோத்திரத்தில் அடுத்தடுத்து வருவதில், விக்நராஜா முன்னவர், விநாயகர் பின்னவர்.

விநாயகர் என்றால் விசிஷ்டமான, அதாவது விசேஷம் பொருந்திய நாயகர் - சிறப்புப் படைத்த தலைவர். எல்லா ஸ்வாமிகளுமே நாயகர்கள்தான். அவர்கள் வேறே என்வோ ஒரு அஸுர, ராக்ஷஸ சத்ரு செய்ததற்கு எதிராகச்செய்து, அந்தக் கொடுமையை மாற்றி நல்லது பண்ணியிருப்பார்கள். அப்படிப் பண்ணியதால் நல்லதில் முன்னின்று அழைத்துப் போகிறவர் என்ற அர்த்தம் கொண்ட நாயகர்களாக அவர்கள் ஆகியிருக்கிறார்கள். இவர் எப்படி அவர்கள் எல்லோரையும்விட விசேஷம் பொருந்திய விநாயகரானார் என்றால் - இவர் வேறு அஸுரர்கள் பண்ணிய கொடுமைகளைப் போக்குவது மாத்திரமில்லாமல், தாமே விக்ந ராஜாவாக இருந்து உண்டாக்கிய இடைஞ்சல்களையும் போக்குகிறார். தம்மைத்தாமே விஞ்சிய நாயகராக இருப்பதால்தான் விநாயகர் என்ற தனிப் பெருமை பெறுகிறார்.

விக்நராஜர் என்பது போலவே விக்நராஜர் என்றும்

சொல்வதுண்டு. விக்ந விநாயக பாத நமஸ் தே.

விக்நத்தை உண்டு பண்ணுவபருக்கும் விசிஷ்டமான நாயகர் என்று வைத்துக் கொள்ளலாம்.

விக்ந விநாயகர் நிக்ந விநாசகரும்தான். அதாவது விக்னங்களை அடியோடு நாசம் செய்கிறவர். ஸம்ஸ்கிருத 'ச'தமிழில் 'ய'ஆகிவிடும். ஆகாசம் - ஆகாயம் மாதிரி. இங்கேயோ ஸம்ஸ்கிருதத்திலேயே விக்ந விநாயகர் விக்ந விநாசகராகவும் இருக்கிறார்?

---



## பிரஸித்தமான பெயர்

ஸுமுகச் - சைகதந்தச்ச கஜகர்ணக:

லம்போதரச்ச விகடோ விக்நராஜோ விநாயக:

'விநாயகர் என்பது அடுத்த பேர்'பிள்ளையாரின் பிரஸித்த நாமாக்களில் ஒன்று விநாயகர். வட தேசத்தைவிட தக்ஷிணத்தில் அதிப்ரஸித்தமான நாமா. பிள்ளையார் சதுர்ச்சி என்று பேச்சில் சொல்வதையே விநாயக சதுர்த்தி எனறுதான் நாம் formal- ஆகக் குறிப்பிடுவோம். வடக்கே கணேஷ் சதுர்த்தி என்பார்கள். ஸித்தி விநாயகர், ச்வேத விநாயகர் என்றெல்லாம் பெரும்பாலும் விநாயக சப்தம் சேர்த்தே நம் தக்ஷிண தேசக் கோயில்களில் அவருக்குப் பெயர் சூட்டியிருக்கும். விநாயகர் அகவல் என்ற ஔவையின் பிரஸித்த ஸ்தோத்திரத்துக்குப் பெயர் இருக்கிறது.

வி-நாயகர். நாயகர் என்றால் தலைவர். பல பேருக்கு மேலே அவர்களைக் கட்டுப்படுத்துபவராக இருப்பவர்.

---

## எல்லா ஜாதியினருக்கும் உயர்வு மனப்பான்மை

நாயகர் என்று ஒரு ஜாதிப் பெயர் இருக்கிறது. ஜாதி முறையினால் தாழ்த்தப்பட்டவர்களும், அவர்களைத் தாழ்த்தி வைப்பவர்களும் வேரூன்றி விட்டார்கள் என்ற அபிப்ராயம் இப்போது இருக்கிறது. தாழ்த்தப் பட்டவர்களாக இருப்பதில் சலுகைகள், ஆதாயங்கள் கிடைக்கின்றன என்பதால் எல்லாரும் அப்படிச் சொல்லிக் கொள்வதாகவும் இருக்கிறது. ஆனால் முன்னாளில் இப்படிக் கொள்வதாகவும் இருக்கிறது!ஆனால் முன்னாளில் இப்படி இல்லை. அந்தந்த ஜாதியாரும் தாங்கள் ஜன ஸமுதாயத்தில் உயர்ந்த இடம் பெற்றிருப்பதாகவே கருதினார்கள். ஜாதிப் பெயர்களைப் பார்த்தாலே தெரியும். நாலாம் வர்ணத்தைச் சேர்ந்த ஒரு ஜாதிக்காரர்களுக்கு முதலியார் என்ற பேர் இருக்கிறது. ஸமூஹத்தில் முதலிடம் பெற்றவர்கள்தான் முதலியார். அதே மாதிரி வடக்கே 'அகர்வால்'என்கிறார்கள். அக்ர ஸ்தானம் என்றால் முதல் இடம். அப்படி ஜன ஸமுதாயத்தில் அக்ரமாக இருப்பவர் அகர்வால். பிள்ளை என்றாலும் மதிப்புக்கு உரியவர் என்று அர்த்தம். ரொம்ப உயர்ஜாதித் தேங்காயைப் பிள்ளைத் தேங்காய் என்பது வழக்கம். ஸ்ரீ வைஷ்ணவ குரு பரம்பரையைப் பார்த்தால் ப்ராம்மணர்களும் முதலி என்றும், பிள்ளை என்றும் சொல்லப்பட்டிருப்பதைத் தெரிந்து கொள்ளலாம். சைவ ஸம்ப்ரதாயத்தைப் பார்த்தாலு ம்-ஸம்பந்தர் வேத ப்ராம்மணர், ஸுந்தரர் ஆதிசைவர், அப்பர் வேளாளர்;இந்த மூன்று பேரையும் சேர்ந்து 'மூவர் முதலிகள்'என்று சொல்வது மரபு. 'ராஜ' என்ற வார்த்தைதான் ராய, ராவ் என்றெல்லாம் ஆயிற்று. தமிழ் தேசத்திலிருக்கிற நாம் 'ராவ்'என்றால் மாத்வ பிராம்மணரைத்தான் நினைக்கிறோம். ஆனால் மாத்வர்கள் அதிகமுள்ள கன்னட தேசத்திலும், அதே போல ஆந்திராவிலுள்ள நாலாம்

வர்ணத்தவர்களும் 'ராவ்'போட்டுக் கொள்கிறார்கள். அதுவே வடக்கே ராய், ரே என்றெல்லாம் இருக்கிறது. வைச்யர்களைச் செட்டியார் என்கிறோம். 'ச்ரேஷ்டி'என்பதுதான் செட்டி ஆயிற்று. ச்ரேஷ்டமானவர்கள் - உயர்ந்த நிலையில் இருப்பவர்கள்- என்று அர்த்தம். ச்ரேஷ்டிதான் வடக்கே 'ஸேட்'ஆயிற்று. ச்ரேஷ்டமானவர்கள் - உயர்ந்த நிலையில் இருப்பவர்கள்- என்று அர்த்தம். ச்ரேஷ்டிதான் வடக்கே 'ஸேட்'ஆயிற்று. கன்னட தேசத்தில் அதையே ஷெட்டி என்பார்கள். 'அவன் உசந்த ஜாதி'இவன் தாழ்ந்த ஜாதி'என்ற அபிப்ராயங்களும் போட்டிச் சண்டைகளும் இல்லாமல், யாரானாலும் பாரம்பர்யமாக ஏற்பட்ட தொழிலைச் செய்து ஒரு ஜன ஸமுதாயத்திற்கு வேண்டிய எல்லாவிதமான பணிகளையும் போட்டி பொறாமை இல்லாமல் பண்ணிக் கொடுத்ததோடு அவரவரும் முதல் ஜாதிதான், உயர் ஜாதிதான் என்ற pride-ஒடு நம் ஜனங்கள் இருந்து வந்ததை இந்தப் பெயர்கள் காட்டுகின்றன. பல வகுப்புக்காரர்களுக்கிடையில் இருந்து வந்த ஸௌஜன்யமும் இதில் தெரிகிறது. எப்படியென்றால் ஒரு ஜாதிக்காரர்கள் தங்களுக்கு உயர்வாகப் பேர் வைத்துக் கொண்டதை மற்றவர்களும் ஆட்சேபிக்காமல், அவர்களுக்கு அந்த pride இருக்கட்டும் என்றே எடுத்துக் கொண்டு, தாங்களும் அவர்களை அப்படித்தான் கூப்பிட்டிருக்கிறார்கள்.

தலைவர் என்ற அர்த்தமுள்ள 'நாயக'பதம் எல்லா வர்ணத்தினருக்கும் உரிய பெயராக இருந்து இந்த ஸமத்வத்தை - தற்காலத்தில் சொல்லும் காரிய ஸமத்வத்தை அல்ல;அதைவிட அவசியமான மனோபாவ ஸமத்வத்தை - நன்றாகக் காட்டுகிறது மஹாராஷ்ட்ராவில் 'நாயக்'என்று இருப்பவர்களில் பிராம்மணர்கள் இருக்கிறார்கள். தஞ்சாவூர் நாயக வம்சம், மதுரை நாயக வம்சம் என்கிற இடத்தில் நாயகர்கள் ராஜகுலத்தவர்கள். கன்னட தேசத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்த நாயக்கர்களும், ஆந்திரத்தில் இந்த 'நாயக'தாதுவின் அடியாகவே நாயுடு என்று சொல்லப்படுபவர்களும் நாலாம் வர்ணத்தைச் சேர்ந்தவர்கள்.

'நாயக'என்காமல் 'நாய'என்றே சொன்னாலும் போதும். 'பாலன்'என்பதையே 'பாலகன்'என்றும் சொல்கிற மாதிரி

அநேக வார்த்தைகளுக்கு ஸம்ஸ்க்ருதத்தில் 'க'சேர்ப்பதுண்டு. நாயன் என்றாலும் தலைவர்தான். மலையாளத்தில் நாயர் என்கிறார்கள். அவர்களும் நாலாம் வர்ணம்தான். தமிழ் தேசத்தில் உத்தமமான அடியார்களை 'நாயனார்'என்கிறோம். ஒருத்தர் நாயனார், பலபேர் நாயன்மார். அறுபத்துமூன்று நாயன்மார்களில் இல்லாத ஜாதியே இல்லை!அறுபத்து மூவரையும் பற்றி ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பாடிய திருவாரூர் கோவிலில் அர்ச்சகர்களுக்கே நயினார் என்றுதான் பேர்.

---



## வி எனும் அடை

விநாயகர் என்ற பெயரில் நாயகருக்கு முந்தி **வி** இருக்கிறது. சிவகணத் தலைவரான பிள்ளையார் நாயகர் என்ற பேருக்கு ரொம்பவும் பொருத்தமுடையவர் என்று தெரிகிறது. அதற்கு முந்தி **வி** போட்டால் என்ன அர்த்தம்?

ஸம்ஸ்கிருதத்தில் வார்த்தைகளுக்கு முன்னே சேர்க்கிற profix(முன்னடை) களில் **வி** என்பது ஒன்று. இந்த வி யின் விசேஷம் என்னவென்றால் அது பின்னாடி என்ன வார்த்தை வருகிறதோ அதன் அர்த்தத்தை இரண்டு விதங்களில் மாற்றக்கூடும். ஒன்றுக்கொன்று முழுக்க வித்தியாஸமான இரண்டு விதங்கள். மலம் என்றால் அழுக்கு. வி சேர்த்து விமலம் என்றால் சுத்தம். இந்த இடத்தில் வி என்பது பின்னே வரும் வார்த்தைக்கு ஆப்போஸிட் மீனிங் உண்டாக்கும்படிச் செய்கிறதென்று தெரிகிறது. ஆனால் சுத்தத்துக்கு வி போட்டு விசுத்தம் எனறு வார்த்தை இருக்கிறது. அதற்கு சுத்தமாக இல்லாதது என்று ஆப்போஸிட் அர்த்தம் பண்ணிக் கொண்டால் தப்பு. இந்த இடத்தில் வி என்பது பின்னே வரும் வார்த்தையை எதிப்பதமாகப் பண்ணாது. அதற்கு மேலும் வலியும் உயர்வுமே கொடுக்கும். விசுத்தம் என்றால் பரம

சுத்தமானது எனறு அர்த்தம். விபரீதம் என்று ஒரு வார்த்தையைச் சொல்கிறோம். பரீதம் என்றால் முறையாகச் சுற்றிக் கொண்டிருப்பது. விபரீதம் முறைகெட்டுத் தாறுமாக இருப்பது. இங்கே வி எதிப்பதமாக்கிவிடுகிறது. ஜயம் வெற்றி என்றால் விஜயம் அதற்கு எதிப்பதமான தோல்வியா என்றால், அப்படி இல்லையல்லா?விசேஷமான, அதாவது சிறப்புப் பொருந்திய வெற்றியே விஜயம்.

விசேஷம் என்ற வார்த்தையையே எடுத்துக் கொள்ளலாம். சேஷம் - விசேஷம். சேஷம் என்றால் மீந்துபோனது என்றே நாம் தெரிந்து கொண்டிருக்கிறோம். அதுவும் ஸரிதான். அதைவிட சிறந்த உள்ளர்தமும் உண்டு. மற்றதோடு சேராமல் தன்னுடைய உயர்வினால் அவற்றிடமிருந்து பிரித்து நிற்பதும் சேஷம் தான். சிஷ்டர் என்று சான்றோர்களைச் சொல்கிறோமல்லவா?சேஷ த்திலிருந்துதான் சிஷ்ட பதம் வந்தது.

ஸமூஹத்தில் சராசரி ஜனங்களில் ஒருவராக இல்லாமல் பிரிந்து உயர்ந்து, (சிரித்து) distinct- ஆக இருந்து distinction பெற்றவர்களே சிஷ்டர்கள். சேஷம் என்பதற்கு தன்னுடைய சிறப்பால் தனிப்பட்டு நிற்பது என்ற இந்த அர்த்தத்தைவிட மீந்து போனது என்ற அர்த்தமே வியாபகமாக ஆனதால்தான், அந்தச் சிறப்பை வலியுறுத்திக் காட்டுவதற்காக வி சேர்த்து விசேஷம் என்பது.

---



## இருபொருளிலும் வி-நாயகர் !

வி ப்ளஸ் நாயகர் என்னும்போது வி என்பது நாயகருக்கு எதிர் அர்த்தம் கொடுக்குமா?அல்லது அதை இன்னும் சிறப்புத் தந்து உசத்தி வைக்குமா?

இரண்டுந்தான்,

அதெப்படி என்று ஆச்சர்யமாயிருக்கலாம், சொல்கிறேன்.

தவன் என்றால் பதி. மாதவன் என்றால் மா என்கிற மஹாலக்ஷ்மியின் பதி. விதவா என்றால் பதி இல்லாதவள். அதே போல விநாயகர் என்றால் தலைவன் இல்லாதவர். எல்லோருக்கும் அவர்தான் தலைவர். அவருக்குமேல் தலைவர் இல்லை. அதனால் தலைவர் இல்லாதவர் வி-நாயகர்.

ஒரு பக்தர் பகவானிடம் போனாராம். நான்தான் அநாதன் (அநாதை) என்றால் நீயும் அப்படியே இருக்கியே என்றாராம். என்னையா அநாதன் என்கிறாய்?என்று ஸ்வாமி கேட்டாராம். ஆமாம். என்னைக் காப்பாற்ற ஒரு நாதன் இல்லாமல் நான் அநாதனாக இருக்கிறேன் என்றால் நீயும் உனக்கு மேல் நாதன் இல்லாததால் அ-நாதனாகத்தானே இருக்கே?என்றாராம் அந்த பக்தர்.

தம்மிலும் மேலான ஒரு தலைவர் இல்லாதவர் விநாயகர்.

இங்கே **வி** எதிர் அர்த்தம் கொடுக்கிறது.

இதற்கு நேர் மாறாக அதே **வி** சிறப்புக் குறியாகவும் இருக்கிறதல்லவா?அந்த விதத்திலும் விக்நேச்வரர் விநாயகராக இருக்கிறார். அவர் ஸாதாரணமான நாயகர் (தலைவர்) அல்ல. ரொம்பவும் சிறப்புப் பொருந்திய, விசேஷமான விசிஷ்டமான நாயகர் அதனால் விநாயகர்.

தமக்கு மேல் நாயகன் இல்லாததாலும் வி-நாயகர். தாமே மிக மேலான நாயகராக இருப்பதாலும் வி-நாயகர். இரண்டு அர்த்தத்திலும் பேர்ப் பொருத்தமுள்ளவராக இருக்கிறார்.

---

## அமரத்தில் பிள்ளையார்ப் பெயர்கள்.

அமர(கோச)த்தில் விக்நேச்வரரின் பெயர்களைச் சொல்லும்போது விநாயக என்றுதான் ஆரம்பித்திருக்கிறது. (மனத்திற்குள் அந்தப் பெயர்களைச் சொல்லிக்கொண்டு, விரல் விட்டு எண்ணியபடி) நம்முடைய சாஸ்திரங்களில் பதினாறு நாமாக்களை முக்யமாகச் சொல்லியிருக்கிறதென்றால், ஜைனனான அமரஸிம்ஹன் எழுதிய அந்தக் கோசத்தில் இதில் பேர் பாதி - எட்டுப் பெயர்கள் - சொல்லியிருக்கிறது.

விநாயகோ, விக்நராஜ, த்வைமாதுர, கணாதிபா: I

அப்-யேகதந்த, ஹேரம்ம, லம்போதர, கஜாநநா: II

இதிலே விநாயக, விக்னராஜ, ஏகதந்த, ஹேரம்ப, லம்போதர, கஜானன என்ற ஆறு பெயர்கள் நம்முடைய ஷோடசநாமாவிலும் இருக்கின்றன. கணாதிப என்ற பெயர் கணாத்யக்ஷ என்பதாக ஷோடச நாமாவில் இருக்கிறது. இதில் இல்லாமல் அமரத்தில் இருக்கும் ஒரே பெயர் த்வைமாதுர என்பது. அப்படியென்றால் இரண்டு தாயார்களை உடையவர். அம்பாள் ஒரு தாயார். கங்கை இன்னொரு தாயார். கங்கையிலுள்ள சரவணப் பொய்கையைச் சேர்ந்தே சிவநேத்ரத்தின் அக்னிப் பொறி ஸுப்ரஹ்மண்ய ஸ்வரூபமாக உத்பவித்ததால் ஸுப்ரஹ்மண்யருக்கு கங்கை நேர் தாயார் மாதிரி. அதனால்தான் அவரை காங்கேயன் என்பது. பிள்ளையாருக்கு அத்தனை நேர் சம்பந்தமில்லா விட்டாலும்,

அவருடைய தகப்பனாருடைய சிரஸில் கங்கை பத்னி ஸ்தானத்திலிருப்பதால், ஔபசாரிகமாக (உபசாரமாக) அவளையும் ஒரு தாயாராகச் சொல்வது. விநாயக நாமா அமரத்தில் பிள்ளையாரின் முதல் பெயராயிருக்கிறதென்று சொல்ல வந்தேன். ஒரு நிகண்டுவில் (அகராதியில்) ஒரு தெய்வத்தைப் பற்றிய பெயர் வரிசையில் முதலாக வருவதென்றால் அது முக்கியத்வம் வாய்ந்த நாமா என்று அர்த்தம்.

---

## தூமகேது

தூமகேது என்பது அடுத்த நாமா. தூமம் என்றால் புகை. சாதாரண விறகுப் புகை, கரிப் புகையை தூமம் என்றும் நல்ல ஸுகந்தம் வீசும் சாம்பிராணி, அகில் முதலியவற்றின் புகையை தூபம் என்றும் சொல்ல வேண்டும் என்பார்கள். பஞ்சோபசாரத்தில் தூபம் காட்டுகிறோம். தூமம். புகை. கேது என்றால் கொடி. புகையைக் கொடியாக உடையவர் தூமகேது. நெருப்பிலிருந்து புகை எழும்பிக் காற்றில் கொடி படபடவென்று அடித்துக் கொள்வதுபோலப் பரவுவதால் அக்னி பகவானுக்கு தூமகேது என்று பேர் இருக்கிறது. ஆனால் பொதுவில் தூமகேது என்றால் நல்ல அர்த்தத்தில் எடுத்துக் கொள்ளாமல் உத்பாதகாரகமாகவே (உற்பாதம் விளைவிப்பதாகவே) எடுத்துக் கொள்கிறோம். காரணம் தூமகேது என்றால் வால் நக்ஷத்ரம் என்றும் அர்த்தம் இருப்பதுதான். வால் நக்ஷத்திரம் லோகத்துக்கு அமங்கலத்தைக் குறிப்பது. லோக மங்கள மூர்த்தியான பிள்ளையாருக்கு அப்படிப் பேர் இருப்பானேன் என்று புரியாமலிருக்கிறது.

விநாயக புராணத்தைப் பார்த்தேன். விநாயகரைப் பற்றி இரண்டு புராணங்கள் இருக்கின்றன. ஒன்று ப்ருகு முனிவர் சொன்னது. அதனால் அதற்கு பார்கவ புராணம் என்று பேர். 'ரகு'ஸம்பந்தமானது 'ராகவ'என்பதுபோல ப்ருகு ஸம்பந்தமானது பார்கவ. முத்கலர் என்ற ரிஷி உபதேசித்ததால் முத்கல புராணம் எனப்படும் இன்னொரு விநாயக புராணமும் இருக்கிறது. ப்ருகு - பார்கவ என்கிற ரீதியில் முத்கலர் ஸம்பந்தமானது மௌத்கல்ய. ஆனாலும் அப்படிச் சொல்லாமல் முத்கல புராணம் என்றே சொல்கிறார்கள். நான் இப்போது தூமகேது விஷயமாகக் குறிப்பிட்டது பார்கவ புராணத்தை.

அதில் உபாஸனா காண்டம். லீலா காண்டம் என்று இரண்டு பாகம். லீலா காண்டத்தில் ரொம்பவும் ஆச்சர்யமாக

விக்நேச்வரருக்குப் பன்னிரண்டு அவதாரங்களைச் சொல்லி, ஒவ்வொன்றுக்கும் ஒரு பேர் கொடுத்திருக்கிறது. அதன்படி கணேசர் என்பது ஒரு அவதாரம்.

கணபதி என்பது இன்னொரு அவதாரம். ஷோடச நாமாவில் வரும் வக்ரதுண்டர், பாலசந்திரர், கஜாகர்னனர் என்பவை அதிலே வெவ்வேறு அவதாரங்களில் அவருக்குக் கொடுத்திருக்கும் பெயர்கள். அவற்றில் தூமகேது என்ற அவதாரத்தைப் பற்றிய கதையும் இருக்கிறது. அதைப் பார்த்தபின்தான் இந்தப் பேர் அவருக்கு ஏன் ஏற்பட்டது என்று புரிந்தது.

கதை என்னவென்றால்..... ரொம்ப நாளுக்கு முந்திப் பார்த்தது, நினைவு இருக்கிற மட்டில் சுருக்கமாகச் சொல்கிறேன். சுருக்கமாகச் சொன்னால்தான் ரொம்பத் தப்புப் பண்ணாமல் தப்பிக்க முடியும்.

தூமாஸுரன் என்று ஒருத்தன். பாகவதத்தில் வரும் வ்ருத்ராஸுரன், மஹாபலி மாதிரி சில அஸுரர்களிடம் மிக உத்தமமான குணங்களும் பக்தியும் இருக்கும். ஆனாலும் அஸுரப் போக்கும் தலை தூக்கிக் கொண்டுதானிருக்கும். அப்படி ஒருத்தன் இந்த தூமாஸுரன். அப்போது ஒரு ராஜா இருந்தான். கர்பிணியாயிருந்த அவனுடைய பத்னிக்கு மஹாவிஷ்ணுவின் அம்சமாகப் புத்ரன் பிறந்து அந்தப் பிள்ளையினாலேயே தனக்கு மரணம் என்று தூமாஸுரனுக்கு தெரிந்தது. உடனே அவன் தன் ஸேநாதிபதியை அழைத்து நல்ல ராவேளையில் அந்த ராஜாவின் சயனக்ருஹத்திற்குப் போய் ராஜ பத்னியைத் தீர்த்துக்கட்டிவிட்டு வரும்படி சொல்லியனுப்பினான். ஆனால், அங்கே போன ஸேநாதிபதிக்கு ஒரு உத்தம ஸ்த்ரீயை, அதுவும் கர்ப்பிணியாக இருப்பவளைக் கொல்ல விருப்பமில்லை. அந்த தம்பதியைப் பிரிக்கவும் மனஸ் வரவில்லை. ஆனபடியால் அவன் ஸதிபதிகளாகவே அவர்களைக் கட்டிலோடு தூக்கிக்கொண்டுபோய் ஒரு காட்டு மத்தியில் போட்டுவிட்டான். அங்கே விநாயக பக்தர்களான அந்த இரண்டு பேரும் ஸதா அவரை த்யானித்துக்கொண்டு அவரால்தான் கஷ்டங்கள் தீர்ந்து நல்லபடியாக ப்ரஸவமாகி ராஜ்யத்திற்குத் திரும்ப வேண்டும் என்று ப்ரார்த்தித்து வந்தார்கள்.

அவர்கள் வனாந்தரத்தில் தலைமறைவாக இருக்கிறார்களென்று தூமாஸுரனுக்குத் தெரிந்தது. உடனே அவனே அஸ்த்ரபாணியாக அங்கே போனான். அவன் ஸ்பெஷலைஸ்

பண்ணியிருந்த அஸ்த்ரம் என்னவென்றால், அவன் பேர் என்ன?தூமாஸுரன்தானே?தூமம் என்றால் புகைதானே?அவன் ஒரு விஷப்புகையாகக் கக்குகிற அஸ்திரத்தைப் போடும் வித்தையிலேயே கைத்தேர் ந்தவனாக இருந்தான்.

இந்த நாளும் கண்ணீர்ப்புகை என்கிற ஆபத்தில்லாத tear gas-லிருந்துgas shellஎன்ற ப்ராணாபத்தான விஷவாயுக் குண்டுகள் வரை இருக்கிறதல்லவா?இப்போது கெமிக்கல்ஸை வைத்துப் பண்ணுவதை அப்போது மந்த்ர சக்தியால் பண்ணியிருக்கிறார்கள்.

தூமாஸ்திரத்தால் கர்ப்பிணியை அவள் வயிற்றிலிருக்கும் சிசுவோடும், பக்கத்திலிருக்கும் பதியோடும் சேர்த்து ஹதம் பண்ணிவிட வேண்டுமென்கிற உத்தேசத்துடன் அவர் போய்ப் பார்த்தால், அப்போதே அவள் மடியில் குழந்தை இருந்தது. பிள்ளையார்தான் அந்த தம்பதியின் ஸதாகால ப்ரார்த்தனைக்கு இரங்கி வைஷ்ணவாம்சமான புத்ர ஸ்தானத்தில் தோன்றிவிட்டார். இதனால் தாம் ஸர்வதேவ ஸ்வரூபி என்று காட்டிவிட்டார். சிவகுமாரராகப்பட்டவர் விஷ்ணு அம்ஸமாகப் பிறந்தார் என்பதில் சைவ வைஷ்ணவ ஸமரஸமும் உசத்தியாக வந்துவிடுகிறது. சுக்லாம்பரதரம் விஷ்ணும் என்று ஆரம்ப ச்லோகத்திலேயே வருகிறதே!

தூமாஸுரன் சரமாரியாக தூமாஸ்திரம் விட, சீறிக் கொண்டு பெரிய பெரிய மேகம் மாதிரிப் புகை அவர்களை நோக்கிப் பாய்ந்தது. அத்தனையையும் குழந்தைப் பிள்ளையார் தன்னுடைய சரீரத்துக்குள்ளேயே வாங்கிக் கொண்டு விட்டார். இனிமேல் அஸ்த்ரம் போட முடியாதென்று அஸுரன் களைத்துப்போய் நின்று நிட்டான். அப்போது, அவனை ஸம்ஹாரம் பண்ணுவதற்கு பிள்ளையார் தீர்மானித்தார். அதற்காக நாம் புதுஸாக அஸ்த்ரம் எதுவும் போடவேண்டாம். அவனே போட்டு நாம் உள்ளே வாங்கு

வைத்துக் கொண்டிருக்கும் விஷப்புகையாலேயே கார்யத்தை முடித்து விடலாம் என்று நினைத்தார். உடனே உள்ளே ரொப்பிக் கொண்டிருந்த அத்தனை தூமத்தையும் குபுக் குபுக் என்று வாயால் கக்கினார். அதுபோய் துமாஸுரனைத் தாக்கி அழித்துவிட்டது.

தூமத்தை அஸ்திரமாகக் கொண்டே வெற்றிக்கொடி நாட்டிக்கொண்ட பிள்ளையாருக்கு தூமகேது என்ற நாமா உண்டாயிற்று. தூமம் என்பதை தூம்ரம் என்றும் சொல்வதுண்டு. தூமகேதுவையும் தூம்ரகேது என்பதுண்டு.

---



கணாத்யக்ஷர்

தூமகேதுர்-கணாத்யக்ஷ:. ஷோடச நாமங்களில் தூமகேதுவுக்கு அப்புறம் 'கணாத்யக்ஷர்'கண-அத்யக்ஷர். அத்யக்ஷர் என்றால் ஸுபர்வைஸ் பண்ணுகிறவர். தலைவர். (தலையை வைத்தேதான் வெள்ளைக்காரர்களும் Head of the Government, Head Priest என்றெல்லாம் சொல்கிறார்கள்!) ஸமீபகாலம் வரை வைஸ் சான்ஸ்லர்களை உப- அத்யக்ஷர் என்றே சொல்லி வந்தோம்.

கண-பதி, கணேசர் (கண-ஈசர்), கணாதிபதி (கண-அதிபதி), கணநாதர் என்றெல்லாம் சொன்னால் என்ன அர்த்தமோ அதுதான் கணாத்யக்ஷர் என்பதற்கும் அர்த்தம்.

பரமேச்வரன் தம்முடைய பூதகணங்களுக்கு அதிபதியாக விக்நேச்வரரையும், தேவகணங்களுக்கு அதிபதியாக இளைய பிள்ளை ஸுப்ரஹ்மண்யரையும் வைத்தார். 'கஜாநநம், பூதகணாதி ஸேவிதம்'என்கிறோம். இளைய பிள்ளையை தேவஸேநாதிபதி என்கிறோம். அவர் இரண்டு விதத்தில் அப்படி இருக்கிறார். தேவர்களின் ஸேனைக்கு

அதிபதி;தேவேந்திரனின் குமாரியான தேவஸேனைக்குப் பதி!தேவர்களுக்கு ஆதிபத்யம் தாங்குவதைவிட, பூதங்களைக் கட்டி மேய்த்து அடக்கியாளுவதுதான் கஷ்டம். மூத்தபிள்ளை இந்தக் கஷ்டமான பொறுப்பை 'ஈஸி'யாக ஆற்றிக் கொண்டு ஆனந்தமாயிருக்கிறார்.

தேவ கணம், மநுஷ்ய கணம் ஆகியவையும் அவருடைய மஹாசக்தியையும், அருள் உள்ளத்தையும் தெரிந்து கொண்டு அவருக்கு அடங்கி பூஜை பண்ணத்தான் செய்கின்றன. ஆனபடியால் அவர் கணாத்யக்ஷர் என்கிற போது ஸகலவிதமான ஜீவகணங்களுக்குமே அத்யக்ஷர் என்று சொல்லலாம்.

---



## பாலசந்த்ரர்

அடுத்த பேர் 'பாலசந்த்ரர்'. உச்சரிப்பை கவனிக்க வேண்டும்: Phaalachandra. முதலெழுத்து Phaa; Baa இல்லை. இப்போது Baalachandran என்ற பெயர் நிறையப் பேர் வைத்துக் கொள்கிறார்கள். என்ன அர்த்தம் என்று நினைத்துக் கொண்டு வைத்து கொள்கிறார்களோ தெரியவில்லை. இள வயஸுச் சந்திரனின் பெயர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ என்னவோ?பாலக்ருஷ்ணன், பால ஸுப்ரஹ்மண்யன் மாதிரி பாலசந்திரன் என்ற எண்ணமாயிருக்கலாம். பால்ய லீலா விசேஷங்கள் அந்த இரண்டு மூர்த்திகளுக்கும் நிறைய உண்டாதலால் அந்த இரண்டு பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. வால்மீகி ராமாயணத்தில் ராமருடைய பால லீலா வர்ணனையே இல்லை. அவதாரத்தைச் சொல்கிற அத்யாயத்திலேயே சட்டென்று 'தசரதர் நாலு பிள்ளைகளுக்கும் கல்யாணத்தைப் பற்றி யோஜிக்க ஆரம்பித்தார். அப்போது விச்வாமித்ரர்

வந்தார்'என்று ஒரே ஒட்டமாக ஒட்டி விடுகிறார். அதனால்தான் பாலக்ருஷ்ணன் மாதிரி பாலராமன் என்று பேர் எதுவுமில்லை. சந்த்ரனுக்கும் பால்ய லீலை விசேஷம் எதுவுமில்லை. பிறையை பாலசந்த்ரன் என்பதுண்டு. அது தேய்ந்து மூளியான ரூபம். அதனால் அந்தப் பெயர் வைத்துக் கொள்வது மங்களமில்லை.

ஸமீபத்தில் ஃபாஷன் பெயர்கள் வர ஆரம்பிப்பதற்கு முன் சந்திரன் என்று தனிப்பெயர் வைக்கும் வழக்கம் தக்ஷிண தேசத்தில் இல்லை. ஆனாலும் ராமசந்திரன் என்ற பெயரை 'ஆர்.சந்திரன்'என்று போட்டுக் கொள்வது கொஞ்சம் கொஞ்சம் இருந்திருக்கிறது. ராமசந்திரன், சந்திரமௌலி முதலான பேர்களை சந்துரு, சந்தர் என்று கூப்பிடுவதும் நிறையவே இருந்திருக்கிறது.

மொத்தத்தில், சந்த்ரன் மட்டுமில்லாமல், நவக்ரஹங்களில் ஸூர்யன் தவிர எவர் பெயருமே வைப்பது தென்னாட்டில் ஸ்ம்ப்ரதாயமில்லை. சிஷ்டாசாரம் அப்படியில்லை. தேய்வைக் காட்டும் பாலசந்த்ரன் பேரோ, பூர்ணசந்த்ரன் என்றேகூடப் பேரோ வைக்கும் வழக்கமில்லை. அங்காரகன், புதன் என்று பெயர் வைத்துக் கொள்வதுண்டா?'ப்ருஹஸ்பதி'என்று பரிஹாஸித்துச் சொல்வதுதான். சுக்ரன் என்றும் பெயர் வைப்பதில்லை. சனி? திட்டுவதற்குத்தான் அந்த சப்தம்!ராஹு, கேதுவும் அசுப க்ரஹங்களாதலால் அப்படியும் பேர் வைப்பதில்லை. நவக்ரஹங்களில் ஸூர்யன் ஒருவர் பெயர்தான் வைப்பது ஸம்பிரதாயம். அதுவும் ஸூர்ய நாராயணன் என்று மஹாவிஷ்ணு பெயர் சேர்த்துத்தான் வைப்பார்கள். ஸூர்யனின் நேர்ப் பேராக பாஸ்கரன் என்பது மட்டுமே தக்ஷிணத்தில் இருக்கிறது. வடக்கே ரவி, திவாகர், ப்ரபாகர், ஆதித்யா, மார்த்தாண்ட் ஆகிய பேர்கள் வைத்துக் கொள்கிறார்கள். இப்போதெல்லாம் தக்ஷிணத்திலும் வடக்கத்தி பேர்கள் நிறைய வந்துவிட்டது. அது இருக்கட்டும், நான் சொல்ல வந்தது, ஸூர்யன் தவிர மற்ற க்ரஹங்களின் பேர் வைப்பதில்லை. பஞ்சாயதன மூர்த்திகளிலேயே இருப்பவர் ஸூர்யமூர்த்தி. ஆசார்யாள் ஸ்தாபித்த ஷண்மதங்களில் ஒன்று

(ஸூர்யனை முழு முதற் தெய்வமாகக் கொண்ட) ஸௌரம்.

அதனால் அவர் மட்டும் விலக்கே தவிர, சந்திரனுக்கு விலக்கில்லை. ஆனாலும் பாலசந்திரன் என்ற பெயர் மாத்திரம் பஹுகாலமாகவே கொஞ்சம் கொஞ்சம் வழக்கிலிருந்து தற்போது நிறையவே அந்தப் பேர் வைப்பதாக இருக்கிறதே என்றால், இது வாஸ்தவத்தில் சந்திரன் பேரே இல்லை.

வேடிக்கையாக இருக்கலாம், பாலசந்திரன் என்பது சந்திரன் பேரும் இல்லை;அது இப்போது உச்சரிக்கிற மாதிரி, ஸ்பெல்லிங் போடுகிற மாதிரி Baalachandran-ம் இல்லை.

Phaala chandran - அதாவது Paa-வையே அழுத்தி ஸம்ஸ்க்ருதத்தில் இரண்டாவது Phaa-வாக முதல் எழுத்தைச் சொல்ல வேண்டும். அதுதான் ஸரியான பேர். Phaalam என்றால் கேசத்தின் முன் பக்கம். 'Phaalaசந்த்ரன்'என்றால் கேசத்தின் முன் பக்கத்தில் சந்திரனை உடையவன்.

சந்த்ரசேகரன், சந்த்ரமௌலி என்ற பேர்களுக்கு என்ன அர்த்தமோ அதுதான் Phaala-சந்த்ரன் என்பதற்கும்.

சந்த்ரனைத் தலையில் வைத்துக் கொண்டிருப்பவர் என்றால் பரமசிவன் என்றே நமக்குச் சட்டென்று தெரிகிறது. ஆனால் இன்னும் இரண்டு பேருக்கும் அந்தப் பெருமை உண்டு. ஒன்று அம்பாள். "சந்த்ரகலாவதம்ஸே" என்று காளிதாசன் ('ச்யாமளா தண்டக'த்தில்)சொல்கிறார். ஆசார்யாளும் அவள் பதியுடைய இடது பக்கத்தை மட்டுமில்லாமல் ரூபம் முழுதையும் தானே அபஹரித்து கொண்டுவிட்டாற் போலிருக்கிறது என்று வேடிக்கை பண்ணி ஸ்துதிக்கிற இடத்தில் அவளுடைய மகுடத்தில் சந்திரன் இருப்பதை 'சசி சூடால மகுடம்'என்கிறார். (லலிதா) ஸஹஸ்ர நாமத்திலும் 'சாரு சந்த்ர கலாதரா'என்று இருக்கிறது. பரமேச்வரனின் பத்னி மட்டுமின்றி மூத்த புத்ரரும் சந்திரனை சிரஸில் வைத்துக் கொண்டிருப்பவர்.

---

# பிள்ளையாரும் சந்திரனும்

விக்நேச்வரருக்கு சந்திரனோடு ரொம்ப சம்பந்தமுண்டு. தானே அழகு என்ற கர்வத்தில் அவன் அவரைப் பரிஹாஸம் பண்ணினான். அவர், "இனிமேல் உன்னை யாரும் பார்க்க மாட்டார்கள். பார்த்தால் வீண் பழிக்கு ஆளாவார்கள்"என்று சபித்துவிட்டார். அப்புறம் ஜனங்களெல்லாம் சந்திரனை கரித்துக் கொட்ட ஆரம்பித்தார்கள். "இவனைத் தப்பிப்போய் பார்த்து விட்டால் நாம் ஊர் அபவாதத்துக்கு ஆளாக வேண்டியிருக்கிறதே! இவன் யார் கண்ணிலும் படாமல் தொலைந்து போவதுதானே?" என்று வைதார்கள். அவமானப்பட்டுக் கொண்டு அவனும் ஸமுத்ரத்துக்குள்ளே போய் ஒளிந்து கொண்டு விட்டான். சந்திரன் ஸமுத்ரத்திற்கு
போய் ஒளிந்து கொண்டு விட்டான். சந்திரன் ஸமுத்ரத்திற்கு
மேலே இருந்தால் அமாவாஸ்யை, பௌர்ணமிகளில் ஸமுத்ரம் பொங்கி, லோகத்திற்கு அநுகூலமாகக் காற்று மழை உண்டாகும். இப்போது அதற்கு ஹானி வந்தது. சந்திரிகையில்தான் மூலிகைகள் வளருமாதலால், அதெல்லாமும் நசித்து, நோய் நொடிகள் நிறைய உண்டாயிற்று. ஆகையால் தேவர்களும், ரிஷிகளும் சந்திரனிடம், "நீயும் இப்படி ஒளிந்து வாழ வேண்டாம். லோகமும் நீ இல்லாமல் கஷ்டப்பட வேண்டாம். விக்நேச்வரரிடம் போய் மன்னிப்புக் கேட்டுக் கொள். கருணாமூர்த்தியான அவர் உனக்கு சாப விமோசனம் தருவார். ஜனங்களும் க்ஷேமம் அடைவார்கள்"என்று எடுத்துச் சொன்னார்கள். பட்ட கஷ்டத்தில் சந்திரனுக்கும் புத்தி வந்து அப்படியே பண்ணினான். கருணாமூர்த்தியான பிள்ளையாரும் அவனை மன்னித்து, ஆனாலும் யாருக்கும் தங்களைப் பற்றிய கர்வமும் பிறரைப் பற்றிய பரிஹாஸமான எண்ணமும் இருக்கப்படாது என்று தெரியவைப்பதற்காகத் தம்முடைய ஆவிர்பாவ தினமான சதுர்த்தி திதி ஒன்றில் மட்டும் சந்திரனைப் பார்க்கப் படாது என்றும், மற்ற தினங்களில் பார்க்கலாம் என்றும் சாப விமோசனம் கொடுத்தார். கருணை உள்ளம் உள்ளவராதலால் அதை

மேலும் 'ரிலாக்ஸ்'பண்ணி, சதுர்த்தியன்று பார்த்தவர்களும்கூட (அப்படிப் பார்த்து முதலில் வீண் பழிக்கு ஆளாகி, அப்புறம் தம்முடைய அநுக்ரஹத்தால் பழி நீங்கிய கிருஷ்ண பரமாத்மாவைக் குறித்த) ஸ்யமந்தக மணி உபாக்யானத்தை பாராயணம் செய்தால் தோஷ நிவ்ருத்தி உண்டாகும் என்று அநுக்ரஹித்தார். இதெல்லாவற்றையும் விடத் தம்முடைய கருணை பொங்கிக் கொண்டு தெரியும்படி, தம்மை அவமதித்த சந்திரனுக்கும் தமக்கான ஸங்கடஹர சதுர்த்தி பூஜையின் முடிவில் பூஜை பண்ண வேண்டும் என்று வைத்தார். அந்தக் கருணையின் top-ல் தான் சந்திரனையும் தம்முடைய top-ல், சிரஸில் தூக்கி வைத்துக் கொண்டு 'பா(Phaa)லசந்திரன்'ஆனார்.

Baa-வை அழுத்தி நாலாவது Bhaaஆக்கி Bhaalachandran என்றும் சொல்லலாம். Bhaalam என்றால் நெற்றிக்கு மேலேயுள்ள இடம்;முன்னந்தலை. அந்த இடத்தில் சந்திரனை தரித்திருப்பவர் ஸ்வாமி.

விக்நேச்வரரின் கருணையையும் க்ஷமையையும் (பொருத்தருளும் குணத்தையும்) காட்டும் பேர் பாலசந்திரன். தப்புப் பண்ணினவன், காலால்

உதைத்துத் தள்ள வேண்டியவன், மன்னிப்பு கேட்டதும் அப்படியே மனஸ் இரங்கி அவனைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்ட பெரிய கருணையைக் காட்டுவது பாலசந்திர நாமா.

---



**கஜானனர்**

**யானையின் சிறப்புக்கள்**

கஜானனர் என்பது அடுத்த பெயர். யானை முகர் என்று அர்த்தம். "கோலஞ் செய் துங்கக் கரிமுகத்துத் தூமணியே!"என்று ஒளவையார் கூப்பிட்ட கரிமுகர்.

ஆனைக்கு ஏகப்பட்ட சிறப்புக்கள். சரீர பலம்;புத்தி பலம்; தன்னுடைய பெரிய பலத்தினால் ஒரு தொகை தொகைத்தால் (துவை துவைத்தால்) சட்டினியாகப் போகிற மனிதனிடம் எளிமையாக அடங்கி அவன் பழக்குகிறபடி லோகோபகாரமாக பெரிய பெரிய மரங்களைத் தூக்கி வருவது, யுத்தத்தில் எதிரிப்படையை அழிப்பது, கோட்டை வாசலை மோதி உடைப்பது என்றிப்படியெல்லாம் கடினமாக உழைக்கிற பண்பு;ஸத்வ ஆஹாரமாகத் தாவரங்களைத்தான் புஜிக்கிறது;தான் செத்தாலும் அழியாத தந்தத்தால் 'இறந்தாலும் ஆயிரம் பொன்' என்ற கீர்த்தி பெற்றிருப்பது - என்றிப்படி யானைக்கு

உள்ள சிறப்புக்கள் எண்ணி முடியாது.

கையின் ஸ்தானத்தில் தும்பிக்கை என்ற விசேஷ அங்கத்தைப் பெற்றுள்ள மிருகம் அது ஒன்றுதான். வேறே எந்த மிருகமாவது ஸ்வாமிக்கு யானை சாமரம் போடுகிற மாதிரிப் போட முடியுமா?தும்பிக்கையைத் தூக்கி ஸலாம்தான் போட முடியுமா?

மற்ற மிருகங்கள் ஒருத்தரை முட்டித் தள்ளத்தான் முடியும்;தன் மேல் ஏற்றி வைத்துக் கொள்ள முடியாது. யானைதான் தும்பிக்கையால் அன்போடு அணைத்து ஒருத்தரைத் தனக்கு மேல் உசந்த ஸ்தானம் கொடுத்து ஏற்றி வைத்துக் கொள்ள முடியும். மஹா பலம், மஹா காயம் படைத்த அது இப்படி இருப்பது மிகவும் விசேஷம். போகிற வழியில் ஒருத்தர் குறுக்கே நின்றாலும் மோதித் தள்ளுவது தவிர வேறு வழியில்லை என்று இல்லாதது யானையே. அவரைத் தும்பிக்கையால் வளைத்தெடுத்து ஹிதமாக ஓரத்தில் போட்டுவிட்டு அது போகும்.

அதற்கு 'த்விபம்'என்று ஒரு பெயர். த்வி-பம் என்றால் இரண்டு தரம் குடிப்பது, சாப்பிடுவது என்று அர்த்தம். யானை எப்படி த்விபம்?முதலில் தும்பிக்கை நுனியால் ஜலத்தையோ,

மற்ற தீனியையோ எடுக்கிறது. அப்புறம் அதை வாய்க்குள் செலுத்திக் கொள்கிறது. மிருக புத்திப்படி தீனி என்றால் நேரே வாயால் விழுந்து பிடுங்காமல், இரண்டு ஸ்டேஜில் மனிதர்கள் கையால் எடுத்து வாயில் போட்டுக் கொள்வது போல் அது செய்வதாலேயே த்விபம். ஆனால் உமிழ்கிறபோதோ த்ருட பதார்த்தமானால் வாயால் மட்டுமே உமிழும். ஜலமானால் தும்பிக்கை நுனியால் மட்டும் ஃபௌண்டன் மாதிரிப் பீய்ச்சியடிக்கும். இதில் ஒரு பெரிய தத்வமே இருக்கிறது. நாம் ஒன்றை எடுத்துக் கொள்வதானால் ஒரு தரத்துக்கு இரண்டு தரம் ஆய்தோய்ந்து பார்த்தே ஏற்க வேண்டும்;ஆனால் தள்ள

வேண்டியதை ஒரே மூச்சில் இஷ்கா பிஷ்கா இல்லாமல் தள்ள வேண்டும் என்ற

பெரிய தத்வத்தை யானை த்விபமாக இருந்து காட்டுகிறது.

ஆச்சரியமாக ஒரு விஷயம் ஒருத்தர் எழுதியிருக்கிறார். இந்த நாளில் இல்லாத கருவிகளே இல்லை. ஆனாலும் இத்தனூண்டு ஊசியையும் கொந்தி எடுக்கக் கூடியதாகவும் எத்தனாம் பெரிய தேக்கு மர Beam-ஐயும் வளைத்துச் சுருட்டித் தூக்கக் கூடியதாகவும் இருக்கும் ஒரே கருவி உண்டா என்றால் இல்லை. பகவான் ஸ்ருஷ்டித்த யானையின் தும்பிக்கைதான் இரண்டையம் பண்ணுகிறது. சின்னது, பெரிசு எல்லாவற்றையும் நிர்வஹிக்கக் கூடியவர் பிள்ளையார் என்பதால்தான் அவர் கஜமுகராக இருக்கிறாரென்று அவர் எழுதியிருக்கிறார்.

லோகத்தையே எட்டு திசைகளிலும் எட்டு யானைகள்தான் முட்டுக் கொடுத்து நிறுத்தி வைத்திருக்கின்றன. அஷ்ட-திக்-கஜங்கள் என்பார்கள். இது பௌதிக பலம். புத்தி பலத்துக்கும் அஷ்ட-திக்-கஜங்கள் தான். 'எண் பேராயம்'என்று ராஜாங்க நிர்வாகத்திற்கு எட்டு statesmen-ஐ, ராஜதந்திர நிபுணர்களை வைத்துக் கொள்வதுபோல், சில ராஜாக்கள் எட்டு மஹா வித்வான்களைக் கொண்ட வித்வத் ஸதஸ் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். க்ருஷ்ணதேவராயர் அப்படி வைத்துக் கொண்டிருக்கிறார். அதிலுள்ள எட்டு மேதைகளை அஷ்ட திக் கஜம் என்றே சொல்வது வழக்கம்.

எல்லாவற்றுக்கும் மேல் அழகு, காம்பீர்யம் வாய்ந்த அழகு.

'கஜகதி'என்று அதன் நடை விசேஷித்துச் சொல்லப் படுகிறது. ஆண்மை, பெண்மை இரண்டும் அதிசயமாகக் கலந்தது கஜகதி. அதனால்தான் காம்பீர்ய புருஷர்களின் நடையை அதற்க ஒப்பிட்டு வர்ணிப்பது மட்டுமில்லாமல் உத்தம ஸ்த்ரீகளின் நடையழகையும் அப்படியே சொல்லி, அவர்களை "கஜகாமினி"என்பது.

தான் அழகாகவும் கம்பீரமாகவும் இருப்பது மாத்திரமில்லை. தனக்கு மேல் ஒருவன் உட்கார்ந்தால் அவனுக்கும் ஒரு புது சோபையை ஊட்டி விடுவதாக யானையின் கம்பீர ஸௌந்தர்யம் இருக்கிறது. அதனால்தான் யானை மேல் அம்பாரி வைத்து ஒருத்தரை ஊர்வலம் விடுவது. ஸ்வதாவாகவே கம்பீர அழகு கொண்ட ஸ்ரீராமசந்த்ர மூர்த்தியைக்கூட ராஜாவாக்கிப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்ட மந்த்ரி ப்ரதானிகளும் குடிபடைகளும் தசரதரிடம் குறிப்பாக, "கஜேந மஹதா யாந்தம்"என்று, அதாவது "யானை மேல் அவர் பவனி வரும் காட்சியைப் பார்க்க விரும்புகிறோம்"என்று சொன்னதாக ராமாயணத்திலிருக்கிறது. ஆனைமேல் பவனி வருகிற ராமனுடைய முகத்திற்கு மேலே வெண்கொற்றக் குடை அழகாக கவிந்திருக்க வேண்டுமென்றும் சொல்கிறார்கள். 'கஜேந மஹதா யாந்தம் ராமம் சத்ராவ்ருதானனம்'- நம்முடைய ஆனை ஸ்வாமிக்கோ சத்ர (குடை)உபசாரம் முக்யமாக இருக்கிறது. பிள்ளையாரோடேயே சேர்த்துக் குடையும் வாங்கி வந்துதான் பூஜை செய்கிறோம்.

கன்னங்கரேல் என்றிருக்கும் ஆனையின் பரந்த நெற்றியில் விபூதியோ,

திருமண்ணோ பெரிசாகப் போட்டு விட்டால் எத்தனை அழகாயிருக்கிறது?அல்லது முகடாம் பூட்டினால் எப்படியிருக்கிறது?ப்ராணி வர்க்கத்தில் வேறு எதற்காவது அப்படி உண்டா?

இன்னொன்று, முத்து. சிப்பயில் உண்டாவதாகவே நினைக்கிறோம். ஆனால் இன்னும் சில இடங்களிலும் அபூர்வமாக முத்து உண்டாகிறது. மூங்கிலுக்குள் முத்து விளைவதுண்டு. மிகவும் உத்தமமான முத்து எங்கே

உண்டாகிறதென்றால் கஜ கும்பத்தில்தான். ஆனை மஸ்தகத்தில் (தலையில்) இரண்டு பக்கமும் அதன் காம்பீர்யத்தை மேலும் உயர்த்துவதாக புடைத்துக் கொண்டு முண்டுகள் இருக்கிற தல்லவா? அதற்குத்தான் கஜ கும்பம் என்று பெயர்.

இன்னொரு பெரிய சிறப்பு, தெய்விகமான சிறப்பு, யானையின் மஸ்தகம் மஹாலட்சுமியின் வாஸ ஸ்தானமாயிருப்பது. தாமரைப் பூவின் உள்பக்கம், பில்வ இலையின் பின்பக்கம், ஸுமங்கலிகளின் வகிடு, பசுமாட்டின் பின்பக்கம், யானையின் மஸ்தகம் ஆகிய ஐந்தும் லக்ஷ்மி நித்ய வாஸம் செய்வதால் நித்யஸ்ரீயுடன் கூடிய மங்களமான இடங்கள்.

முன்னந்தலைக்கு இப்படிப் பெருமை இருக்கிறதென்றால் ஆனையின் பின்னால் தொங்கும் வாலின் மயிருக்கும் பெருமை இல்லாமலில்லை. அந்த ரோமம் ஆவி சேஷ்டைகளுக்குப் பெரிய ரக்ஷை. ஆரோக்ய ப்ரதமும் (ஆரோக்யமளிப்பதும்) அதனால் அதன் நறுக்கை மணி மாதிரி வைத்து மோதிரம் முதலிய நகைகள் செய்து போட்டுக் கொள்வதுண்டு. நகைக்கு நகை, ரக்ஷைக்கு ரக்ஷை!ஸாதாரணமாக ரோமமும் நகமும்தான் ரொம்பவும் தோஷமானவை. அவற்றை வைத்தே துர்மாந்த்ரிக ப்ரயோகம் பண்ணுவதுண்டு. ஒரு உடம்பிலுள்ளவரைதான் அவற்றுக்கு தோஷம் கிடையாது. உடம்பிலிருந்து ரோமம் உதிர்ந்தாலோ நகத்தை வெட்டி எடுத்தாலோ குப்பையில் தூரக்க (தொலைவில் போட்டு விட வேண்டும். ஆனால் விதி விலக்காக யானையின் ரோமம் துர்மாந்திரிகத்திற்குப் பரிஹாரமாக இருக்கிறது. அதே போலத்தான் புலி நகமும். தஞ்சாவூர் கிருஷ்ணன் படத்தில் ஸ்வாமிகூட புலிநகம் கோத்த சங்கிலி போட்டுக் கொண்டிருப்பார்.

---

## தெய்வத்தொடர்புள்ள விலங்கினம்

மடத்தில் இரண்டு மிருகங்களின் பேரில் நித்யம் பூஜை நடக்கிறது. கோபூஜை, கஜபூஜை என்ற இரண்டு. இவற்றில் கோவை ம்ருகத்தோடு சேர்க்காமல் மாதா என்றே வைத்திருக்கிறது. அப்படிப் பார்த்தால் மிருக வர்க்கம் என்றே இருப்பதில் கஜபூஜை என்றுதான் நடக்கிறது. வேறே எந்த மிருகத்துக்கும் இந்த பூஜை விசேஷமில்லை. நாளைத் தொடங்கும்போது நடப்பது கோபூஜை. கோபூஜையில் 'கோ'வுக்கு பூஜை நடக்கிறது. நாள்- அதாவது day-time, பகல்-முடிகிற சாயரக்ஷையில் நடப்பது கஜபூஜை. கஜபூஜையில் கஜத்தை மரியாதைப் பண்ணிப் பழங்கள் கொடுப்பதோடு அதைக் கொண்டு ஆசார்யாளுக்கு (ஆசார்ய பாதுகைகளுக்கு) சாமரம் போட்டுப் பூஜை பண்ண வைக்கிறோம்;தினப்படி வரவு- செலவுக் கணக்குகள் அப்போது அவர் முன்னே ஒப்பிக்கிறோம். அதை முடித்து நாம் நமஸ்காரம் பண்ணும் போது முடித்து நாம் நமஸ்காரம் பண்ணும் போது யானையும் தும்பிக்கையைத் தூக்கி அவருக்கு ஸலாம் போட்டுவிட்டு ஜயகோஷமாகப் பிளிருகிறது. இந்த பூஜைக்கே 'தீவட்டி ஸலாம்'என்றுதான் பேர் சொல்வது.

கோபூஜையில் கோவுக்குப் பூஜை என்பதோடு ஸரி. கஜ பூஜையில் அதற்கும் பூஜை, அதுவும் பூஜை பண்ணுகிறது. எல்லாப் பெரிய கோவில்களிலும் ஆனை வைத்திருக்கிறார்கள். மலையாளத்தில், திருச்சூர் மாதிரி இடங்களில், ஆனைகள்தான் ஸ்வாமியைவிடக் கூட உத்ஸவங்களில் பிரதானமாக இருப்பது.

அவ்வளவு தெய்விகம் பொருந்திய, தெய்வ ஸம்பந்தமுள்ள மிருகம் அது. "ஆதிமூலமே!" என்று கூப்பிட்டு பகவானையே வைகுண்டத்திலிருந்து இறங்கிவரப் பண்ணியிருக்கிறதல்லவா?

மிருகங்களுக்குள் உருவத்தில் ரொம்பவும் பெரியது என்பதோடு யானைக்கே இப்படி ஏகப்பட்ட சிறப்புக்கள் இருப்பதால்தான், எல்லா ஜீவ வர்க்கங்களும் சேர்ந்ததாக விக்நேச்வரர் என்ற ரூபம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று

பரமாத்மா தீர்மானித்தபோது மிருக வர்க்கத்தில் யானையைத் தேர்ந்தெடுத்தார்.

---



## அனைத்து உயிரினங்களும் இணைந்தவர்

எல்லா ஜீவ வர்க்கமும் அவரிடம் சேர்ந்திருப்பது எப்படியென்றொல்:அவர் தேவ வர்க்கம் என்று சொல்லவே வேண்டாம்!தெய்வங்களில் பிரதமமாகப் பூஜிக்கப்படுபவரல்லவா?அநுக்ரஹ சக்தி என்பது கொஞ்சங்கூட வற்றிப் போகாமல் பக்தர்களுக்கு சாச்வதமாக க்ருபை பண்ணுவதுதான் தெய்வம் என்பதற்கு முக்யமான லட்சணம். இந்த லட்சணம் பிள்ளையாரிடம் பூர்ணமாயிருக்கிறது.

பூத வர்க்கமாகவும் இருக்கிறார். எப்படியென்றால் தொப்பை, கட்டை, குட்டைக்கால் ஆகியன பூத ரூபத்திற்கு உரியதுதான்.

மநுஷ்ய வர்க்கமென்று அவரை எப்படிச் சொல்வது?மநுஷ்யர்தான் பக்வம் பண்ணின ஆஹாரம். அதாவது வேக வைத்துச் சமைத்த ஆஹாரம் சாப்பிடுவது. மிருகங்கள் பச்சைத் தாவரம் அல்லது பச்சை மாமிசம் உண்பவை. அஸுர, ராக்ஷஸர்களும் பச்சை மாமிஸம் சாப்பிடுபவர்களே. 'க்ரவ்யாதர்'என்பார்கள். க்ரவ்யம் என்றால் பச்சை மாமிஸம்.

தேவர்களுக்கு நாம் நைவேத்யம், ஆஹுதி என்று அநேக ஆஹார வகைகளைக் கொடுத்தாலும் அவர்கள் அதன் ஆவியை மட்டும்தான் புஜிப்பார்கள். ஸ்தூல பதார்த்தம் வெந்ததாகவே சாப்பிடுவது மனுஷ ஜாதிதான். விக்நேச்வரர் ஒருவர்தான் ஒரு தரத்துக்கு இரண்டு தரம் வெந்த மோதகத்தைப் புஜிப்பவர். முதலில் அரிசி மாவை

வேகவைத்துக் கிளறிச் சொப்புப் பண்ணி அப்புறம் அதற்குள் பூர்ணம் வைத்து மூடி மறுபடி ஆவியில் வேக வைப்பதால் மோதகம் இரண்டு தரம் வெந்தது. அது மடி தப்பு என்று, ஸோமாஸி மாதிரி நெய்யில் பொறித்த மோதகங்கூடப் பண்ணுவதுண்டு. மற்ற தேவர்களைப் போல் ஆஹுதி ரூபத்தில் அவருக்குக் கணபதி ஹோமத்தில் மோதகம் போடும் போது பொறித்ததாகத்தான் செய்வது வழக்கம். ஆஹுதியிலும் நாம் என்ன பண்டம் ஹோமம் செய்தாலும் ஆவி பாகத்தைத்தான் தேவர்கள் எடுத்துக் கொள்வார்கள். ஆனாலும் நாம் கொடுக்கும் ஹோம வஸ்து இரண்டு தரம் வெந்ததாக இருக்கக்கூடாது என்று பொறித்த கொழுக்கட்டை போடுவது வழக்கம். ஹோமமாக இல்லாமல் பிள்ளையாரை ஒரு ரூபமார வைத்துப் பூஜிக்கும்போதோ வெந்த கொழுக்கட்டைதான் யதேஷ்டமாக நைவேத்யம் செய்கிறோம். "மோதக ஹஸ்த"என்றே பேர் வாங்கியவராகக் கையிலேயே ஒரு சமைத்த பக்ஷணத்தை வைத்துக் கொண்டிருக்கும் ஒரு ஸ்வாமி அவர்தான்!கிருஷ்ணர் வெண்ணையை வைத்துக் கொண்டு, வெண்ணைய்த் தாழியை கட்டிக் கொண்டு இருக்கின்றார் என்றால் அவர் நர ரூபத்தில் நமக்கு நடுவில் அவதாரம் பண்ணியவர். அதுவுமில்லாமல் வெண்ணைய் சமைத்த பண்டமும் இல்லை. இப்படியே ஸுப்ரமண்யருக்கு நைவேத்யம் பண்ணும் தேனும் தினைமாவும் சமைத்த பண்டங்களில்லை. அன்னபூர்ணேச்வரி கையிலே பாயஸான்னம் வைத்து இருக்கிறாளென்றாலும், அது அவள் புஜிப்பதற்காக இல்லை;நமக்குப் போடுவதற்காகத்தான். நமக்குப் போடுவதோடு தாமும் பக்வ போஜ்யம் சாப்பிடுவது விக்நேச்வரர் ஒருத்தர்தான்.

இப்படி தேவ வர்க்கம், பூத வர்க்கம், மநுஷ்ய வர்க்கம் மூன்றும் சேர்ந்ததோடு, மிருக வர்க்கத்தையும் தம்மிடம் சேர்த்துக் காட்டணுமென்று நினைத்தார். மநுஷ்ய வர்க்கம் என்றால் அதைச் சேர்ந்த எல்லாருக்கும் ஒரே உருவ அமைப்புதான் இருக்கிறது. அப்படியே, தேவர், பூதர் என்றாலும் அததிலும் அத்தனைப் பேருக்கும் பொதுவாக ஒரு ர அமைப்புதான் இருக்கிறது. ஆனால் மிருகம் என்று எடுத்துக் கொண்டால், அந்த ஒரு வர்க்கத்திலேயே எத்தனை ப்ராணி ராசிகள் வேறு வேறு உருவ அமைப்பில்

இருக்கின்றன?ஆடு, மாடு முதலிய ஸாது மிருகங்கள், புலி, சிங்கம் மாதிரி துஷ்ட மிருகங்கள் என்று எத்தனை தினுசு?இத்தனை இருக்கும்போது யானை ரூபத்தை ஏன் ஸெலக்ட் பண்ணினாரென்றால் அதற்கு காரணம் அதற்குத்தான் ஏகப்பட்ட சிறப்புகள் இருப்பதே.

---



## ஆதி முதலின் வரிவடிவம்

இது அத்தனைக்கும் சிகரமாக ஒன்று. தாம்தான் எல்லாவற்றுக்கும் மூலம், முதல் என்று தெரிவிக்கும் ரூபமாக ஒன்றை எடுத்துக் கொண்டு, அந்த ரூபத்திலேயே எல்லாருடைய முதல் பூஜையையும் பெற வேண்டும் என்று பரமாத்மா நினைத்தார். தம்முடைய ரூபமே அந்த மூலத்தைத் தெரிவிப்பதாக இருக்க வேண்டுமென்று நினைத்தார்.

அத்தனை ஸ்ருஷ்டிக்கும் மூலம் என்ன? 'முதல்'என்றால் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது என்பதில் வருகிற ஆரம்பம் மட்டுமில்லை. ஆரம்பமும்தான். அதோடுகூட ஒரு தொழில் என்றால் மூலதனமாக, 'காபிட'லாக இருப்பது என்றும் அர்த்தம். இப்படி மூலமாக, ஆதியாக இரண்டு அர்த்தத்திலும் முதலாக இருப்பது ப்ரணவம்தான். அப்படிப்பட்ட ப்ரணவாகாரமான அமைப்பைக் கொண்டதாக ஸகல ஜீவ வர்க்கத்திலும் இருப்பது வலது பக்கமாகச் சுழித்த தும்பிக்கையுடன் கூடிய யானையின் முகம்தான்!இந்த சிகரமான சிறப்புக்காகவே அவர் கஜானனராக யானைத் தலையுடன் இருக்கிறார்.

---

© Copyright Shri Kanchi Kamakoti Peetham
may be reproduced without explicit permission from the Peetham. Some material put up
site are protected by individual copyrights of the concerned organisations.
re is powered by Google™ Freesearch. Google™ is a Trademark of Google Inc.

## முகமும் வாயும்

'கஜானன' என்பதில் ஆனனம் என்றால் முகம். 'வக்த்ராஸ்யம் வதநம் துண்டம் ஆநநம் லபனம் முகம்'என்று முகத்துக்கு 'அமர'த்தில் பல synonym சொல்லியிருக்கிறது. வக்த்ரம், ஆஸ்யம், வதனம், துண்டம், ஆனனம், லபனம், முகம் என்கிற ஒவ்வொன்றும் முகத்தையே குறிக்கும்.

இதைச் சொல்லும்போது, ஸம்ஸ்கிருதத்தில் வாய்க்குத் தனியாக வார்த்தை கிடையாது;முகத்துக்கு உள்ள பெயர்களையேதான் வாய்க்கும் சொல்வது'என்ற அபிப்ராயம் அவ்வளவு ஸரியில்லை என்று தோன்றுகிறது. 'வாக்''வசனம்' என்றெல்லாம் பேச்சைச் சொல்கிறோம். இதனடியாக 'வக்தா'என்று பேசுகிறவனுக்கும், 'வக்தவ்யம்'என்று பேச்சுக்கும் வார்த்தைகள் உள்ளன. ஆனபடியால் 'வக்த்ரம்'என்பதும் பேச்சுக் கருவியாயிருக்கும் வாயைத் தான் குறிப்பிடும். 'வதனம்'என்ற வார்த்தையும் பேசுகிற அவயவமான வாயைக் குறிப்பதே-'வத'என்றால் 'பேசு'. லபனம் என்பதும் தாதுப்படி வாயைக் குறிப்பதுதான். 'லப்'என்றால் பேசுவது. ஆலாபம், ஸல்லாபம், ஆலாபனை முதலான வார்த்தைகளுக்கு அதுதான் 'ரூட்'. ஆகையால் முகத்தின் பெயர்களேதான் வாய்க்கும் வந்தன என்பது முழு உண்மையில்லை. வாயின் பெயர்களான வக்த்ரம், வதனம் முதலியவையும் முகத்தின் பெயராயிருக்கின்றன. 'Man is the only talking animal' என்பதால் வசனேந்திரியமாக இருக்கப்பட்ட வாய்க்குத் தனி ஏற்றம் உண்டு. அந்த வாய் இருப்பது ஸர்வாங்கங்களிலும் ச்ரேஷ்டமான முகம். பார்க்கிற கண், கேட்கிற காது, மோந்து பார்க்கிற மூக்கு, ஸ்பர்ச ஸுகத்துக்கு விசேஷமாக இருக்கப்பட்ட கன்னம் ஆகிய அவயங்களும் அந்த முகத்திலேதான் உள்ளனவென்றாலும், மநுஷ்ய ஜாதியின் பிரத்யேக விசேஷணம் பேச்சு இந்திரியந்தான் என்பதால்தான் வாய், முகம் இரண்டுக்கும் ஒரே வார்த்தைகளை வைத்திருக்கிறது. அதோடு வாய்க்குத்தான் இரண்டு கார்யங்கள். கண், காது

முதலியவற்றோடு பஞ்ச ஞானேந்திரியங்களில் ஒன்றாக இருந்துகொண்டு சாப்பாட்டு ருசியை வாய் அறிகிறது. அப்போது வெளியில் உள்ள 'சுவை'என்பதை அது அறிகிறது- வெளியிலுள்ள ரூபங்களை கண் அறிவது போலவும் வெளியிலுள்ள சப்தத்தைக் காது அறிவது போலவும்;வெளி வாஸனை, வழ வழ, சொர,சொரக்களை மூக்கும் சர்மமும் அறிவது போலவும். அறியும் கருவி என்பதால் ஞானேந்திரியம். அதுவே கார்யம் செய்வதான கை, கால் முதலான பஞ்ச கர்மேந்திரியங்களில் ஒன்றாக, வெளி விஷயத்தை அறிவது என்றில்லாமல், தானே 'இன்டிபென்டென்'டாகச் செயலாற்றிப் பேச்சு என்பதைப் பேசவும் செய்கிறது. இன்னொன்றும் ருசி அறிவது மட்டுமில்லாமல் ஆஹாராதிகளைக் கடித்து, மென்று சாப்பிடுகிற கார்யத்தையும் வாய்தான் செய்கிறது. இத்தனை முக்யம் வாய்க்கு!'முக்யம்'என்றாலே 'முகத்தின் தன்மை'என்றுதான் அர்த்தம்!அதனால்தான் முகத்துக்கும் வாய்க்கும் வித்யாஸமில்லாமல் ஒரே பெயர்களைச் சொல்வது.

கஜ ஆனனர் - யானை முகம் படைத்தவர் விக்நேச்வரர். எண் சாண் உடம்புக்கு சிரஸே ப்ரதானம். ஒரு மனிதன் அழகு, அல்லது குரூபி என்பது முகத்தை வைத்துத்தான். பிள்ளையாரின் அப்படிப்பட்ட முகம்- அவருடைய சாந்தமான கண், விசிறிக் காது, தும்பிக்கை மூக்கு முதலியவற்றைக் கொண்ட முகம் - யானையினுடையதாக இருக்கிறது.

---



### வக்ரதுண்டர்

அடுத்தாற்போல வருகிற பேர் 'வக்ரதுண்டர்'. முகத்துக்கு

உள்ள பல பெயர்களை 'அமரம்'சொல்லும் போது 'துண்டம்'என்பதையும் பார்த்தோம். பொதுவாகத் துண்டம் என்றால் முகமானாலும், மூக்கு விசேஷமுள்ள வராஹம், கஜம் ஆகியவற்றின் விஷயத்தில் துண்டம் என்பது மூக்கையே குறிக்கும். வராஹத்தின் மூக்கு போக போகச் சின்னதாகிக் கொண்டுவந்து முடிகிறது. வராஹத்திற்கு முதலில் அதே மாதிரி சூம்பிக் கொண்டு வந்தாலும் முடிகிற இடத்தில் மூக்கு பெருந்து ஒரு விளிம்பு கட்டிக் கொண்டு முடிகிறது. யானைக்கோ மூக்கே தும்பிக்கையாகத் தொங்குகிறது. அந்தத் தும்பிக்கையைத்தான் துண்டம் என்பது. பக்ஷிகளுக்கு நீளமாகக் கூராகப் போய்ப் புள்ளியாக மூக்கு முடிகிறது. அலகு என்று அதற்கு தமிழில் தனிப் பெயர். ஸம்ஸ்க்ருதத்தில் அதையும் துண்டம் என்றுதான் சொல்வது.

உடம்பில் சிரஸ் ப்ரதானமென்றால் அந்த சிரஸில் மூக்குதான் ப்ரதானம். வாய் அதனுடைய function-ஆல் (செய்யும் காரியத்தால்) ப்ரதானமென்றால் உருவ ரீதியில் மூக்குதான் ப்ரதானமாயிருக்கிறது. சப்பை மூக்கு, கருட மூக்கு என்று ஒருத்தருடைய அழகையோ விரூபத்தையோ மூக்கை வைத்துத்தான் சொல்கிறோம். அந்த மூக்கிலும் ஸ்பெஷல் அமைப்பாக யானைக்கென்று அலாதியாயிருக்கப்பட்ட தும்பிக்கைக்குத் துண்டம் என்று பேர். வக்ரம் என்றால் வளைசல். "அவன் ஒரே வக்ரம்"என்று தாறுமாறாகப் பண்ணுபவனைச் சொல்கிறோம். "வக்ர குணம்"என்று இழுக்காகச் சொல்கிறோம். ஏன்?நல்லகுணத்தை நேர்மை என்கிறோம். நேராக இருப்பது நேர்மை. நேர் கோடு என்பதுதான். இரண்டு புள்ளிகளைச் சேர்க்கிற மிகச் சிறிய தூரம். வளைசல் என்பது சேர வேண்டிய புள்ளிக்குச் சுருக்கப் போய்ச் சேராமல் எங்கேயோ சுற்றிவிட்டுப் போவது. அந்த மாதிரி எதிலும் டைரக்ஷன் தப்பாமல், வழியை விட்டு போகாமல் goal- க்கு நேராகப் போவதே நேர்மைக் குணம். அப்படியே இங்கிலீஷிலும் straight-forwardness என்கிறார்கள். ஸம்ஸ்கிருதத்தில் straight என்ற அர்த்தமுள்ள 'ஆர்ஜவம்'என்ற வார்த்தையையே நேர்மைக் குணத்துக்கும் சொல்வது. 'ருஜு'என்று வேர்ச்சொல்லிலிருந்து அந்த வார்த்தை வந்திருக்கிறது.

நேராக இல்லாதது கோணலாக இருப்பதால் நேர்மை இல்லாதவரைக் கோணல் புத்திக்காரர் என்று சொல்கிறோம். அதையே, வளைசலும் நேராக இல்லாததுதான் என்பதால் வக்ர புத்தி என்றும் சொல்கிறோம்.

'வக்ரதுண்டம்'என்கிற இடத்தில் 'வக்ர'த்துக்குக் கெட்ட அர்த்தம் எதுவுமில்லை. 'வளைந்துள்ள தும்பிக்கை'என்றுதான் ' அர்த்தம். பிள்ளையார் தும்பிக்கையை பக்கவாட்டாக வளைத்துக் கொண்டிருப்பதால் வக்ரதுண்டர்.

ஒரு யானை தும்பிக்கை நுனியைப் பக்க வாட்டமாகக் கொண்டு போகாமலே வளைக்கலாமானாலும் பிள்ளையாரோ பெரும்பாலும்

இடம்புரியாகவோ, அபூர்வமாக வலம்புரியாகவோ நுனியை இடது வலது பக்கங்களில் கொண்டுபோய் வளைக்கிறார். அதனால் தான் 'வக்ரதுண்டர்'என்று குறிப்பிட்டு ஒரு பெயர் சொல்லியிருப்பது.

**வக்ரதுண்ட மஹாகாய**

என்று ஸ்தோத்ரம் சொல்கிறோம். "ப்ரணவ ஸ்வரூப வக்ரதுண்டம்"என்று தீக்ஷிதர் பாடியிருக்கிறார். வலம்புரியாகத் தும்பிக்கையை வளைத்தால் அதுவே ப்ரணவ ஸ்வரூபம்; ஓம் என்ற அக்ஷரரூபம் அப்போதுதான் வரும். ஆகக்கூடி அவர் தும்பிக்கையை நேராகத் தொங்கவிடாமல் பக்கவாட்டாக வக்ர துண்டமாகக் கொண்டு போயிருப்பதால்தான் ப்ரணவ ஸ்வரூபம் கிடைக்கிறது. "வக்ரதுண்டர்"என்று நாமம் கொடுத்திருப்பதன் விசேஷம் அதுதான்.

கிருஷ்ணன் பண்ணிய திருட்டுக்களை ஸ்மரித்தால் நமக்குத் திருட்டுப் புத்தி போகும்;அவன் ராஸகேளி பண்ணினதை ஸ்மரித்தால் நமக்குக் காமம் நசித்துப் போகும் என்று சொல்வார்கள். அப்படி, விக்நேச்வருடைய வக்ர துண்டத்தை ஸ்மரித்தால் நம்முடைய வக்ர குணங்கள் போய்விடும்.

கணபதி காயத்ரியிலேயே "வக்ரதுண்டரை த்யானிக்கிறோம்" என்று இந்தப் பேரைத்தான் த்யானத்திற்குரியதாகச் சொல்லியிருக்கிறது. நம் புத்தியை அவர் நேர் வழியில் தூண்டிவிடத்தான் அந்த மந்திரம் ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட மந்திரத்திலுள்ள 'வக்ரம்'என்றால் அது நம்முடைய வக்ரத்தைப் போக்குவதாகத் தானே இருக்கும்?

---



## சூர்ப்பகர்ணர்

**வக்ரதுண்ட : சூர்பகர்ணோ ஹேரம்ப ஸ்கந்தபூர்வஜ :**

"சூர்ப்பகர்ணர்'என்பது அடுத்த பேர். அதற்கப்புறம் இரண்டு பேர்கள்தான். சூர்ப்பகர்ணர் என்றால் முறம் போன்ற காதுகளை உடையவர். சூர்ப்பம் என்பது முறம். சூர்ப்பணகை என்றால் முறம் போன்ற நகம் உடையவள். 'சூர்ப்ப-நகா'என்பது ஸம்ஸ்க்ருதப் புணர்ச்சி விதிகளின்படி 'சூர்ப்பணகா'என்று ஆகும். நகமே முறத்தளவு என்றால் எவ்வளவு பெரிய ரூபமாக இருந்திருப்பாள் என்று ஊஹிக்கலாம்.

'கஜகர்ணகர்'என்று காதை வைத்து முன்னேயே ஒரு பேர் சொன்ன அப்புறம் 'சூர்ப்பகர்ணர்'என்று இன்னொரு பேர் வேறு சொல்வானேன்?'கூறியது கூறல்'என்ற தோஷமாகாதா என்றால், ஆகாது.

மடங்காத, குவியாத ஆனைக் காதை நன்றாக விரித்துக் கொண்டு ப்ரார்த்தனைகளையெல்லாம் விட்டுப் போகாமல் முழுக்கக் கேட்கிறார் என்பதால் கஜகர்ணகர் என்ற பெயர் ஏற்பட்டதாகப் பார்த்தோம். ஆனால் அவர் நம்

ப்ரார்த்தனையை மட்டுந்தான் கேட்கிறாரா?எப்போதும் எங்கேயும் உள்ள அவர் நாம் பேசுகிற இதரப் பேச்சுக்கள் எல்லாவற்றையுங்கூடத்தான் கேட்டுக் கொண்டிருக்கிறார். அதிலே முக்கால்வாசிக்கு அசட்டுப் பேச்சாகத்தான் இருக்கும். வேண்டாத வியவஹாரமாகத்தான் இருக்கும். ஏன், நம்முடைய ப்ரார்த்தனையிலேயே அநேகம் அசட்டு வேண்டுதலாகத்தான் இருக்கும்!அதெல்லாவற்றுக்கும் அவர் காது கொடுப்பது, செவிசாய்ப்பது என்றால் எப்படியிருக்கு ம்?ஆகையால் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டாலும் கேட்கும்போதே அவற்றில் தள்ள வேண்டியவற்றைத் தள்ளிவிட்டு, ஏற்க வேண்டியதை மட்டும் காதில் தங்க வைத்துக் கொள்வார். அதைக் காட்டத்தான் அவருக்கு சூர்ப்பகர்ணர், முறக்காதர் என்று ஒரு பெயர் ஏற்பட்டிருப்பது.

அதெப்படி?

முறம் என்ன பண்ணுகிறது?தான்யங்களைப் புடைத்து உமி, கல் முதலான வேண்டாத சரக்குகளைத் தள்ளிவிட்டு, வேண்டியதான தான்யமணியை மாத்திரந்தானே பிடித்து வைத்துக் கொள்கிறது?உருவ அமைப்பினால் முறம் மாதிரியுள்ள காதுகளை புடைக்கிறது போலவே அவர் ஸதாவும் ஆட்டிக் கொண்டு, இப்படித்தான் நம்முடைய வேண்டாத வம்பு தும்புகளைத் தள்ளிவிட்டு வேண்டிய - நாம் வேண்டுகிற - விஷயங்களை மட்டும் செவி கொள்கிறார். முதலில் 'வேண்டிய'என்கிற இடத்தில் 'வேண்டாம் என்று தள்ளுவதற்கில்லாத', 'ஏற்கவேண்டிய'என்று அர்த்தம். 'நாம் வேண்டுகிற'என்கிற இடத்தில் 'ப்ரார்த்திக்கிற'என்று அர்த்தம். இப்படி, ஏற்கக் கூடியதாக நாம் ப்ரார்த்திக்கிற

விஷயங்களை மாத்திரமே காதில் தங்கவைத்துக் கொள்கிறார்.

அவர் காதை ஆட்டுவதை விசிறுவதோடு ஒப்பிடும் போது, கன்ன மத நீரில் ஜில்லென்று காற்றடிக்கப் பண்ணி, வண்டுகளை விரட்டி விளையாடுவதாகப் பார்த்தோம். அதையே முறத்தால் புடைப்பதற்கு ஒப்பிடும்போது தாம் ஸகலத்தையும் கேட்டுக் கொண்டிருப்பதில் அவசியமில்லாததைத் தள்ளி, நல்லதை மட்டுமே காதில் வாங்கிக் கொள்கிறாரென்று தெரிந்து கொள்கிறோம்.

"மற்ற மிருகங்கள் மாதிரிக் குவிந்த காதாயில்லாமல், விரித்த காதாக இருந்து எல்லாப் பிரார்த்தனையும் கேட்டுக் கொள்கிறார் என்பதால் என்ன அசட்டுப்

ப்ரார்த்தனை வேண்டுமானாலும் பண்ணலாம்;நிறைவேற்றிக் கொடுத்து விடுவார் என்று நினைக்க வேண்டாம். எல்லாவற்றையும் கேட்பது வாஸ்தவம். ஆனால் கேட்கும்போதே எது ஸரியான ப்ரார்த்தனை, எது ஸரியில்லாத ப்ரார்த்தனை என்றும் சீர்தூக்கிப் பார்த்து, ஸரியானதை மட்டுமே காதில் நிறுத்திக் கொண்டு மற்றதைத் தள்ளி விடுவார்"என்று புரிய வைப்பதற்குத்தான் சூர்ப்பகர்ணர் என்று தனியாக ஒரு பெயரைச் சொல்லியிருக்கிறது.

---



## ஹேரம்பர்

'ஹேரம்பர்' என்பது அடுத்த பெயர். எனக்குத் தெரிந்தவரையில் அந்த வார்த்தைக்கு தாது பிரித்து யாரும் இதுவரை 'கன்வின்ஸிங்'காக அர்த்தம் சொல்லவில்லை. நான்தான் ஸரியாகத் தெரிந்து கொள்ளவில்லையோ என்னவோ?பாஸ்கர ராயர் என்று மஹான்கள் கோஷ்டியில் வைத்து மரியாதை செய்யவேண்டிய ஒரு மந்த்ர சாஸ்த்ர மஹாபண்டிதர். அவருடைய லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் ரொம்பவும் ப்ரக்யாதி வாய்ந்தது. அப்படிப்பட்டவர் கணேச ஸஹஸ்ர நாமத்திற்கும் பாஷ்யம் செய்திருக்கிறார். அதில் ஹேரம்ப நாமத்திற்கு என்ன பாஷ்யம் செய்திருக்கிறாரென்று பார்த்தேன். 'ஹேரம்பர்'என்றால் சைவ தந்த்ர ப்ரவர்த்தகர் (சைவ ஆகமத்தைத் தோற்றுவித்தவர்) என்றும், அபரிதமான சௌர்யம் (சூரத்தன்மை) படைத்தவர். என்றும் அந்த பாஷ்யத்தில் அர்த்தம் பண்ணியிருக்கிறது. பாஷ்யகாரர்

மஹா பெரியவர் தானென்றாலும், நிஜத்தைச் சொல்ல வேண்டுமானால், அதைப் படிப்பவருடைய குறையாலோ என்னவோ, அந்த இரண்டு அர்த்தமும் எப்படி அந்தப் பேருக்குக் கிடைக்கிறது என்று தெளிவுபடவில்லை!ஆராய்ச்சியாளர்களானால், தமிழ் 'எருமை'தான் 'ஹேரம்ப'ஆயிற்று என்கிறார்கள்!

ஸம்ஸ்க்ருதத்தின் பெருமை எல்லா வார்த்தைகளுக்கும், பெயர்களுக்கும் அவற்றின் அக்ஷரங்களை நன்றாக தாது பிரிந்து அர்த்தம் சொல்ல முடிவது தானென்றாலும் அப்படியில்லாத exception-களும் இருக்கின்றன. "இன்ன காரணத்தால் இப்படிப் பெயர்"என்று தாது பிரித்துச் சொல்ல முடிவதை 'யௌகிகம்'என்பார்கள்;Etymological-ஆக derive பண்ணக்கூடியது 'யௌகிகம்'.அப்படியில்லாமல், "என்ன காரணமோ தெரியாது, ஆனால் இந்த வார்த்தைக்கு இப்படித்தான் அர்த்தம்;இந்தப் பேர் இன்ன பேர்வழியைத்தான் குறிப்பிடுகிறது"என்று இருப்பவை 'ரூடி'. 'ஹேரம்ப'என்ற வார்த்தை இந்த 'ரூடி'யில் வருவதாகவே தோன்றுகிறது.

பஞ்ச பாண்டவர்கள் வனவாஸத்திற்கு முந்தி இந்த்ரப்ரஸ்தத்திலிருந்து ஆட்சி நடத்தினபோது தர்மபுத்ரர் ராஜஸூய யாகம் பண்ண ஆசைப்பட்டு, அதற்கு முன்னால் நாலு திசை ராஜாக்களையும் ஜயித்துக் கொண்டு வருவதற்காகத் தம்பிகளை அனுப்பினார். அப்போது தக்ஷிணத்திற்குப் போய் அங்கே இருந்த ராஜ்யங்களை ஜயித்தவன் ஸஹாதேவன். அவன் ஜயித்த அந்த ராஜ்யங்களில்

ஒன்றுக்கு ஹேரம்பம் என்று பாரதத்தில் பேர் கொடுத்திருக்கிறது. ஒருவேளை அதுதான் பிற்கால மைஸூரோ என்னவோ?மைஸூர் என்பது மஹிஷூர்-மஹிஷ ஊர் - என்பதன் திரிபுதான். மஹிஷம் (என்றால்) எருமை. 'ஹேரம்ப'த்திற்கு எருமை ஸம்பந்தம் சொல்கிறார்களே!அந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் ஸஹாதேவனிடம் தோற்றுப் போனார்கள். ஆனாலும் அவர்கள் தங்களைப் பற்றி ரொம்பவும் தற்பெருமை

அடித்துக் கொள்கிறவர்களென்று தெரிகிறது. அதனால் பெருமை பீற்றிக் கொள்பவர்களை ஹேரம்பர் என்று சொல்வதுண்டு என்று தெரிகிறது. அந்த தேசத்திலே விக்நேச்வரருடைய எந்த ரூப

பேதம் ரொம்பவும் பூஜிக்கப்பட்டதோ அதற்கே ஹேரம்ப கணபதி என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

இது வெறும் guess தான். தப்பாகவும் இருக்கலாம். முடிவாக என்ன தோன்றுகிறதென்றால், "அர்த்தம், கிர்த்தம் பார்க்காதே!ஹேரம்ப என்ற சப்தம் காதுக்கு நன்றாக இருக்கோ, இல்லியோ?என்னை மாதிரியே அதிலே காம்பீர்யம், மாதுர்யம் இரண்டும் இருக்கோ, இல்லியோ?என்னை அப்படிக் கூப்பிட்டால் பொருத்தமாக இருக்கோ, இல்லியோ?பின்னே கூப்பிட்டுவிட்டுப் போயேன்!டிக்ஷனரி பார்ப்பானேன்?"என்று விக்நேச்வரரே சொல்லி இப்படிப் பேர் வைத்துக்

கொண்டாற்போலிருக்கிறது!

ஹேரம்ப நாட்டு வாஸியாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் பாரத தேசம் முழுக்கவே ப்ரஸித்தமாகி விட்டவர் ஹேரம்பர். பாலகணபதியில் ஆரம்பித்து ஷோடச கணபதிகள் என்று பதினாறு மூர்த்திகள் இருப்பதிலும் ஹேரம்ப கணபதி இருக்கிறார்;நாம் பார்த்துக் கொண்டிருக்கும் ஷோடச நாமாக்களிலும் அந்தப் பேர் இருக்கிறது.

---



## சிங்கம் பூஜிக்கும் யானை

ஹேரம்பருடைய ஸ்வரூபம் விசேஷமானது. அவருக்கு ஐந்து முகங்கள். ஐந்தும் யானை முகந்தான். 'பஞ்ச மாதங்க முக'என்று ஒருத்தர் கீர்த்தனம்கூட பாடினார்.திருவாரூரிலுள்ள

அநேக விக்நேச்வர மூர்த்திகளில் பஞ்சமுகராக இருக்கப்பட்டவரின் மீது தீக்ஷிதர் பாடியது என்று தெரிகிறது.

சிவனுக்கு ஐந்து முகங்கள் உண்டு. சிவ பஞ்சாக்ஷரி த்யானத்தில் அப்படித்தான் இருக்கிறது. ஆசார்யாள் கூட அதை வைத்து வேடிக்கை பண்ணியிருக்கிறார். ஐந்து முகமிருப்பதால் ஈச்வரனுக்குப் 'பஞ்சாஸ்யன்'என்று பெயர். 'பஞ்சாஸ்யம்'என்று சிங்கத்திற்கும் பெயர். இந்த இடத்தில் 'பஞ்ச'என்றால் விரிந்த, பரவலான என்று அர்த்தம். 'ப்ரபஞ்சம்'என்றால் நன்றாக விரிந்து பரவியது என்று அர்த்தம். இங்கே 'பஞ்ச'என்றால் ஐந்து என்றும் அர்த்தம் பண்ணிக் கொண்டு ஐம்பூதங்களால் ஆனது ப்ரபஞ்சம் என்றும் சொல்லலாம். அது இருக்கட்டும் சிங்கம், சிவம் இரண்டுக்கும் பஞ்சாஸ்யப் பேர் இருக்கிறது. யானைக்கு சிங்கம் என்றால் ஒரு பயம். 'ஸிம்ஹ ஸ்வப்னம்'என்றே சொல்கிறோம். ஒரு யானை சொப்பனத்தில் சிங்கத்தைப் பார்த்தாலும் பயத்திலேயே ப்ராணனை விட்டுவிடுமாம். சிங்கத்துக்குத் தன்னைவிட உருவத்திலே ரொம்பப் பெரிசாக இருக்கும் யானையைத் தீர்த்துக் கட்டணும் என்று ரோஷம் பொங்கிக் கொண்டிருக்குமாம். ஒரு யானையைப் பார்த்துவிட்டால் தன் பலம் அத்தனையையும் திரட்டிக் கொண்டு அதன் மஸ்தகத்தைப் பேயறையாக அறைந்து பிளப்பதற்குப் பாயுமாம். இப்படிப் பட்ட பஞ்சாஸ்யம் (சிங்கம்) ஒரு யானையைப் பூஜை பண்ணினால் அது பெரிய ஆச்சர்யம்தானே?அந்த ஆச்சர்யத்தைத்தான் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

மஹாதந்தி-வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா

திருச்செந்தூரிலுள்ள ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் மேல் அவர் பாடிய புஜங்க ஸ்தோத்திரத்தில் முதல் ச்லோகமான விநாயக ஸ்துதியில் இப்படி வருகிறது.

ஸதா பாலரூபாபி விக்நாத்ரி - ஹந்த்ரீ

மஹா தந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா

விக்நேச்வரர் எப்போதும் குழந்தையாயிருப்பவர் - ஸதா பால ரூபர். ஆனாலும் - அபி என்றால் ஆனாலும்;'ஸதா பாலரூப

அபி';எப்போதும் குழந்தையாயிருந்தாலும், மலையாக இருக்கும் விக்னங்களையும் பிளந்து தள்ளுகிறார். 'விக்நாத்ரி'- விக்ன மலையை, 'ஹந்த்ரீ'- அழிக்கிறவர்.

அப்புறம்தான் அவர் யானையாக இருந்தும் சிங்கத்தால் பூஜிக்கப்படுவதாக

வருகிறது. **மஹா தந்தி - வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா**

'தந்தி'(Danti) என்றால் யானை. தந்தத்தை உடையதாயிருப்பதால் தந்தி. கணபதி காயத்ரீயில் தந்தி என்ற பெயரைச் சொல்லியே நமக்கு நல்லறிவைத் தூண்டி விடுமாறு பிரார்த்தித்திருக்கிறது. பிள்ளையார் 'மஹா தந்தி வக்த்ர அபி';பெரிய யானையின் முகத்தைப் பெற்றிருந்த போதிலும், 'பஞ்சாஸ்ய மாந்யா'- சிங்கத்தால் பூஜிக்கப் படுபவர். நடக்கமுடியாத ஸமாசாரங்கள் பிள்ளையாரிடம் சேர்ந்திருப்பதாக கவி சமத்காரத்துடன் ஆசார்யாள் பாடியிருக்கிறார். சின்னக் குழந்தை விக்ன மலையையே பிளந்து தள்ளுகிறது என்று முதலில் சொல்லிவிட்டு, அதே ரீதியில் நடக்க முடியாதது நடக்கிறது என்று தொடர்ந்து காட்டுவதாக 'யானையாயிருந்தும் பஞ்சாஸ்யத்தால் பூஜிக்கப்படுகிறது'என்று அவர் சொல்லும்போது, 'பஞ்சாஸ்ய ம்'என்றால் சிங்கம் என்றே கேட்கிறவர்களுக்குச் சட்டென்று தோன்றும். சிங்கம் எங்கே பிள்ளையாரைப் பூஜித்தது என்று யோசிக்கும் போதுதான், 'பஞ்சாஸ்யம்'என்பதில் சிலேடை பண்ணியிருக்கிறாரென்று புரியும் இங்கே பஞ்சாஸ்ய என்பது சிங்கம் அல்ல சிவன் என்று புரியும். த்ரிபுர ஸம்ஹாரத்துக்குப் பரமசிவன் புறப்பட்டுத் தேரச்சு முறிந்தபோது விக்நேச்வர பூஜை பண்ணினாரல்லவா?அதைத்தான் பஞ்சாஸ்யமான்ய என்று சொல்லியிருக்கிறாரென்று புரியும்.

---

## ஐந்து முகம்கொண்ட ஸிம்ஹவாஹனர்

பஞ்சாஸ்ய மான்யர் மட்டுமில்லை;தாமே பஞ்சாஸ்யராக ஐந்து முகத்தோடு

விளங்கும் ரூபம்தான் ஹேரம்பர். அற்புதமான மூர்த்தியாக இருப்பவர் அவர். ஐந்து கஜ சிரஸுகள்;பத்து கைகள். வாஹனம் என்னவென்றால் ஸிம்ஹம்;பஞ்சாஸ்யம்!ஸிம்ஹத்தைக் கண்டு யானை பயப்படாதது மட்டுமில்லை;அதை அடக்கி அதன் மேலேயே ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கிறது!பஞ்சமுகத்தால் தகப்பனாரை ஞாபகப்படுத்துவது போல ஸிம்ஹவாஹனத்தால் தாயாரை ஞாபகப்படுத்துகிறார். அம்பாள் தானே ஸிம்ஹவாஹினி?மஹா கணபதி என்ற மூர்த்திக்கும் பத்துக் கை உண்டு. ஆனால் ஐந்து முகமோ, ஸிம்ஹ வாஹனமோ கிடையாது. ஹேரம்பர்தான் அப்படியிருப்பவர். நாகப்பட்டினம் நீலாயதாக்ஷி கோவிலில் செப்புத் திருமேனியாக ஹேரம்ப மூர்த்தி இருக்கிறார். திசைக் கொன்றாக நாலு திசைக்கு நாலு முகமும், அந்த நாலுக்கும் மேலே சேர்த்துக் கிரீடம் வைத்தாற் போன்ற ஐந்தாம் முகமுமாக ஐந்து யானைத் தலைகளைப் பார்க்கிறபோதே ஆனந்தமாக இருக்கும்.

---



## ஸ்கந்த பூர்வஜர்

கடைசிப் பேருக்கு வந்துவிட்டோம். 'ஸ்கந்த பூர்வஜர்'என்பது ஷோடச நாமாவில் கடைசி. ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்குத் தமையனார் என்று அர்த்தம். முருகனுக்கு மூத்தவர்.

அதைவிட, 'முருகனுக்கு முன்னவர்'என்றால் அழகாக இருக்கிறது. 'பூர்வஜர்'என்றால் முன்னால் பிறந்தவர். 'அக்ரஜர்'என்றும் சொல்வதுண்டு.

'உடன்பிறப்பு'என்று தமிழில் சொல்வதுபோல் ஸம்ஸ்க்ருதத்தில் 'ஸஹோதரர்'. 'ஸஹ'என்றால் 'உடன்'.ஸஹோதரர் என்றோ உடன்பிறப்பு என்றோ சொன்னால் அண்ணாவா, தம்பியா என்று கண்டுபிடிக்க முடியாது. அண்ணா என்று குறிப்பிட்டுக் காட்டும் வார்த்தை 'பூர்வஜர்'இதேமாதிரி தம்பிக்கு 'அநுஜர்'. ராமாநுஜர் என்றால் ராமனுக்குத் தம்பியான லட்சுமணர். 'கஜமுகாநுஜர்'என்று ஸுப்ரம்மண்யருக்கு 'அமர'த்தில் ஒரு பெயர் சொல்லியிருக்கிறது. பிள்ளையாருக்குத் தம்பி என்றே முருகனுக்கு ஒரு பேர்;அவருக்கு அண்ணா என்றே இவருக்கும் ஒரு பேர்!அப்படிப்பட்ட ஸஹோதர பாந்தவ்யம்!

---



## முருகனின் தமையர் என்பதன் சிறப்பு

நாம் பார்த்துக் கொண்டிருக்கும் ஷோடச நாமாக்களில் விக்நேச்வரர் சிவனுடைய புத்ரரென்றோ அம்பாளுடைய புத்ரரென்றோ காட்டப் பெயர் எதுவுமில்லை. அதாவது, இன்னாருக்குரப் பிள்ளை என்று பேரில்லை. இன்னாருக்கப் பதி என்றும் பேர் இல்லை. அவருக்கு பிரம்மச்சாரியாகப் பல உருவ பேதங்கள் இருக்கிற மாதிரியே பத்னி ஸமேதமாகவும் இருக்கின்றன. வல்லபை என்பவளோடு வல்லப கணபதியாக இருக்கிறார். ஸித்தி, புத்தி என்பவர்களுக்கு அவர் பதி என்றும் கேள்வி பட்டிருக்கலாம். ஸித்தி-புத்திகளிடம் அவருக்குப் பிறந்த புத்ரர்களும் உண்டு. அவர்களுக்குத் தகப்பனார் என்று தெரிவிப்பதாகவும் பேரைக் காணோம். ஆனால் பேர் வரிசையைப் பூர்த்தி பண்ணுமிடத்தில்,

மங்களமான ஸ்தானத்தில் 'ஸ்கந்தனுக்குத் தமையன்'என்று மட்டும் உறவு முறையைச் சொல்லும் ஒரு பெயர் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறது. ஏன் அப்படி?

பொதுவாக, சின்ன வயஸுக்காரரொருத்தரை அவரைவிட வயசில் பெரியவரைச் சொல்லி, அவருக்கு இவர் இன்ன உறவு- பிள்ளை, மருமான், மாப்பிள்ளை, தம்பி என்று ஏதோ ஒன்று சொல்கிறதுதான் முறை. இங்கேயோ வித்யாஸமாகத் தம்பி பேரைச் சொல்லி, அவருக்கு அண்ணா என்று இருக்கிறது. ஏன் இப்படி?

ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் சரித்திரத்தோடு விக்நேச்வரருக்கு அவ்வளவு நெருங்கிய ஸம்பந்தம் இருப்பதால்தான்! தம்பியுடைய ஜனனம், விவாஹம், ஸந்நியாஸம் என்ற மூன்று ரொம்ப முக்யமான வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் அண்ணன்காரருக்கு முக்யமான பார்ட் இருக்கிறது. அதனால்தான்!

---



## முருகன் ஜனனத்தில் மூத்தவர் பங்கு

ஜனனத்தை எடுத்துக்கொண்டால், 'குமார ஸம்பவம்'என்பதாக முருகன் ஜனனம் எடுத்ததற்கு அலாதிப் பெருமை இருக்கிறது. வால்மீகி ராமாயணத்தில் ராம லக்ஷ்மணர்களுக்கு விச்வாமித்ரர் அந்தக் கதையைச் சொல்லி முடிக்கும்போது 'குமார ஸம்பவம்'என்ற வார்த்தையைப் போட்டிருக்கிறார் ஆதி கவியின் அந்த வாக்கை எடுத்துக் கொண்டுதான் மஹாகவி காளிதாஸரும் 'குமார ஸம்பவம்' என்றே தலைப்புக் கொடுத்து மஹாகாவ்யம் எழுதினார்.

அந்த ஸம்பவத்திலே அதாவது ஜனனத்திலே அப்படி என்ன விசேஷம்?

மற்றவர்கள் பிறந்து, வளர்ந்து, கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்ற அப்புறம்

பதவிக்கு வருவார்கள். ஆனால் மஹா பெரிய பதவி - தேவர்களுடைய ஸேனைகளுக்கெல்லாம் அதிபதியாக இருக்கும் பதவி- இந்தக் குமாரர் ஸம்பவிக்க வேண்டுமென்று இவருக்காகவே காத்துக் கொண்டிருந்தது!ஜன்மிக்கிறபோதே தேவர்களின் ஸேநாதிபதி அஸுரர்களிடம் அடி உதை பட்டுச் சொல்லமுடியாத கஷ்டத்திலிருந்த தேவர்கள் இவர் ஸம்பவித்தால்தான் தங்களுக்கு விடிவு, விமோசனம் என்று காத்துக் கொண்டு, எதிர்பார்த்துக் கொண்டு இருந்த நிலையில் ஏற்பட்டது அவருடைய 'ஸம்பவம்', அதாவது தோற்றம்.

சிவனுக்கு ஸமானமான ஒருத்தர்தான் தங்களை வதைக்க முடியும் என்று சூரபத்மாஸுரன், தாரகாஸுரன் ஆகியவர்கள் அந்த சிவனிடமே வரம் வாங்கி வைத்துக் கொண்டு விட்டார்கள். சிவனுக்கு ஸமானம் வேறே யார்?அவரே தான் அவருக்கு ஸமம். வரம் கொடுத்த அவரே வரம் வாங்கிக் கொண்டவர்களை வதம் பண்ணுவது நியாயமாகாது. அதனால்தான் இப்படி ஸாமர்த்தியமாக வரம் கேட்டு வாங்கிக் கொண்டு, அப்புறம் சத்ருபயம் என்பதே இல்லாமல் அந்த அஸுரர்கள் தேவர்களை ஹிம்ஸித்து வந்தார்கள்.

ஆலோசித்துப் பார்த்த பிறகு இதற்கு தேவர்கள் வழி கண்டு பிடித்தார்கள். 'ஆத்மாவை புத்ர நாமாஸி'என்ற ச்ருதி வாக்கியப்படி ஒருத்தனுக்கு ஸமதையாக இருப்பது அவனுடைய புத்ரன். இவன் வீர்யத்திலே அவன் உண்டாவதால் இரண்டு பேரும் ஒன்று சாஸ்த்ரம். ஆகையால் தங்களையெல்லாம் அஸுரர்களிடமிருந்து ரட்சிப்பதற்காக தங்களுடைய நாயகனாக,ஸேனா நாயகனாகப் பரமேச்வரன் ஒரு புத்ரனை உண்டு பண்ணித் தந்துவிட்டால் வழி பிறந்துவிடும், விமோசனம் கிடைத்து விடும் என்று தேவர்கள் முடிவு பண்ணி, அதற்காகத் தபஸிருந்தார்கள். ஸ்வாமியும் தக்ஷிணாமூர்த்தியாகத் தபஸிருந்த ஸமயம் அது. அவருக்குப் பணிவிடை செய்ய வந்த அம்பாள் பார்வதியும் தபஸிருந்தாள். இப்படி ஒரே தபோமயமான புண்ய background-ல் குமார ஸம்பவம் ஏற்பட்டது. அதுதான் அதன் பெருமை.

குழந்தையாகப் பிறந்தோமே என்பதற்காக ஆறு நாள் - ஆறே நாள்தான் - குமாரஸ்வாமி பால லீலைகள் பண்ணினார். அவருக்கு எல்லாம் ஆறு. முகம் ஆறு. அவர் மந்திரத்தில் அக்ஷரம் ஆறு. அவர் பிறந்தது ஆறாம் திதியான ஷஷ்டி. அவருக்குப் பால் கொடுத்தது க்ருத்திகா தேவிகள் என்று ஆறுபேர். வேடிக்கையாகச் சொல்வதுண்டு - அவர் உத்பவித்த கங்கையும் 'ஆறு'என்று!'குமாரர்'என்றே குழந்தை பேர் வைத்துக் கொண்டிருந்தாலும் அவர் குழந்தை விளையாட்டு ஆறே நாள்தான் செய்தார். ஆறு நாளிலியே அபரிமித லீலைகள் பண்ணினார். அப்புறம், உடனேயே, தேவ ஸேநாதிபத்யம் தாங்கி, சூராதி அஸுரர்களை ஸம்ஹாரம் பண்ணி தேவர்களையும், ஸர்வ லோகத்தையுமே ரக்ஷித்து விட்டார்.

மனு, கினு போட்டு 'அப்பாயின்ட்மென்ட்'என்றில்லாமல் ஸகல தேவ ஸமூஹத்திற்கும் ரக்ஷகனாக, 'கம்மான்டர்-இன்-சீஃப்'ஆகப் பெரிய்ய்ய அப்பாயின்ட்மென்ட்டோடேயே அவர் பிறந்ததுதான் குமார ஸம்பவத்தின் விசேஷம்!

"ஸரி, ஸ்வாமிகளே!இதிலே விக்நேச்வரருக்கு என்ன 'பார்ட்?" என்றால் ...

சிவனுக்கு ஸமானமானவர் சிவஸுதானே என்றால், விக்நேச்வரர் சிவஸுதர்தானே?அப்படியிருக்க, குமாரஸ்வாமி உண்டாகனுமென்று தேவர்கள் தபஸ் பண்ணினார்கள் என்றால் அப்போது விக்நேச்வரர் தோன்றியிருக்கவில்லையா?ஸுப்ரஹ்மண்யருக்கு அப்புறந்தான் அவர் தோன்றினாரா என்றால், இல்லை. இதை 'அன்டர்லைன்'பண்ணிக் காட்டத்தான் 'ஸ்கந்த பூர்வஜர்'என்று அவருக்குப் பேர் சொல்லி இருக்கிறது.

'ஸரி, அவர் அப்போதே இருந்தாரென்றால், அவரிருக்கும் போது இன்னொரு சிவஸுதருக்காக தேவர்கள் தபஸ் செய்வானேன்?ஸுதராயிருந்தும் அவர் அப்பாவுக்கு ஸமானமாயில்லாதவர் என்று அர்த்தமா?'

அப்படியில்லை. அவர் அப்பாவுக்கு ஸமதையானவர்தான். த்ரிபுர ஸம்ஹாரத்தின் போது அப்பாவும் தம்மைப் பூஜை பண்ணின பிறகுதான் கார்யஸித்தி பெறமுடியும் என்று காட்டியிருக்கிறாரே!

பின்னே ஏன் இன்னொரு சிவஸூதர் ஸம்பவிக்க வேண்டுமென்று தேவர்கள் நினைத்தார்கள்?சூரபத்மா கேட்டிருந்த வரத்தின் ஒரு நிபந்தனைதான் காரணம். தாங்கள் வரம் கேட்கிற காலத்தில் இருக்கிற எவருமே தங்களை வதம் பண்ண முடியாதபடிதான். அஸூரர்கள் ஸாமர்த்தியமாக நிபந்தனை போடுவார்கள். அப்படித்தான் இவனும் பண்ணினான். தன்னைக் கொல்லக் கூடிய சிவஸத்ருசன் (சிவனுக்கொப்பானவன்) ஸ்திரீ ஸம்பந்தமில்லாமலே பிறந்தவனாயிருக்கணும் என்று அவன் கண்டிஷன் போட்டிருந்தான். ஸர்வ சக்தரான பிள்ளையார் தன்னை வதம் பண்ண முடியாதபடி debar ð‡EMì «õ‡´ªñ¡«ø ÞŠð® ú£ñ˜ˆòñ£è, «è†®¼‰î£¡!

Üõ˜ ðô MîƒèO™ ðô ÝM˜ð£õƒèœ ªêŒF¼‚Aø£˜. ÜF™ ïœ¡ ªê£¡ù å¡P¡ð® Üõ˜ ¹¼û ú‹ð‰î‰î£¡ Ü®«ò£´ Þ™ô£ñ™ Ü‹ð£À¬ìò êgó ñ…êœ ªð£®JL¼‰¶«î, Üõ÷£«ô«ò õN˜ªî´‚,èŠð†´ v¼w®ò£ùî£èŠ ð£˜ˆ«î£‹. ¹ó£í£‰îóƒèO™ «õ«ø Üõî£ó, è¬îèÀ‹ Þ¼‚A¡øù. võ£I, Ü‹ð£œ Þó‡´ «ð¼‹ ¬èô£ú˜F½œô C˜ó ê£¬ôJ™ Üôƒè£óñ£è â¿FJ¼‰î Šóíõ£þó˜¬î å«ó úñò˜F™ ð£˜ˆî£˜èœ;ÜŠ«ð£¶ Üõ˜èÀ¬ìò iþíƒèœ (ð£˜¬õèœ) Ü‰î Üþó˜F™ å¡Á «ê˜‰î¶. àì«ù ÜFL¼‰¶ M,«ï,„õó võÏð‹ Üõî£ó‹ ð‡E¡Á â¡Á å¼ è¬î. å¼ úñò‹ Ü‹ð£œ ªð‡ ò£¬ù Ïð‹ â´ˆ¶, ªè£‡®¼‰î£œ;ÜŠ«ð£¶ võ£I»‹ Ý‡ ò£¬ùò£è Ïð‹ îKˆ¶, ªè£‡®¼‰î£˜;Ü‰î ò£¬ùèÀ,°Š Hø‰î °†®«ò èíðF â¡Á Þ¡ªù£¼ è¬î. ë£ùú‹ð‰î˜ F¼õ£Ï˜ A†«ì»œ÷ õLõô‹ â¡ø «þ˜ó˜F™ ð£®ò «îõ£ó˜F™ Þ¬î refer ªêŒF¼‚Aø£˜.

பிடியதன் உருஉமை கொமிகு கரியது

வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்

கடிகண பதிவர அருளினன்

'பிடி'என்றால் பெண் யானை. 'களிறு'என்றால் ஆண் யானை. சிவ சக்திகள் இப்படி யானைத் தம்பதியாக வந்ததை அப்பர் ஸ்வாமிகள் ப்ரத்யக்ஷ

தர்சனமாகவே பார்த்துப் பாடி வைத்திருக்கிறார்.

காதன் மடிப்படி யோடுங் களிறு வருவன கண்டேன்

கண்டேன் அவர்திருப் பாதம், கண்டறி யாதன கண்டேன்

பண்டாஸுரன் மேல் லலிதாம்பாள் படையெடுத்துப் போனபோது, அவன் விக்ன யந்த்ரம் போட்டு அவளுடைய படை முன்னேற முடியாதபடி ஸ்தம்பிக்க வைத்தான்;அப்போது அவள் காமேச்வரன் என்ற பெயரில் அவளைப் போலவே தநுர்-பாண-பாச-அங்குசங்களோடு ரூபம் எடுத்துக் கொண்டிருந்த பரமசிவனுடைய முகத்தைப் பார்த்தாள்;உடனே கணபதி விர்பவித்தார் என்று இன்னொரு கதை.

இப்படியுள்ள அநேகக் கதைகளில் எல்லாவற்றிலுமே அம்பாள் ஸம்பந்தத்தோடு விக்நேச்வரர் தோன்றியதாகத் தான் இருக்கிறது. ஆகையால் சூரபத்மா போட்ட 'கண்டிஷன்'படி அவரைக் கொண்டு அவனை வதைப்பது முடியாத கார்யமாகி விட்டது.

சிவனுக்காக, சூராதி அஸுரர்களுக்கோ விக்நேச்வரர் சக்தியில் குறைந்தவரில்லையானாலும், அவருடைய அஸுர ஸம்ஹாரம் நடப்பதற்கில்லாமலாயிற்று. அதனால் தான் தேவர்கள் இன்னொரு

சிவஸுதனுக்காக ப்ரார்த்திக்க ஸ்வாமியும் அம்பாள் ஸம்பந்தமில்லாமல் தன்னுடைய நேத்ரங்களிலிருந்து வெளியேவிட்ட அக்னி பொறிகளிலிருந்தே குமாரஸ்வாமியை உண்டு பண்ணினார்.

இதையே இன்னொரு விதத்தில் சொன்னால், விக்நேச்வரர் இடம் ஒழித்துக் கொடுத்தால்தான் குமாரஸ்வாமி என்று ஒருத்தர் ஸம்பவிக்கவே முடிந்தது!விக்நேச்வரருக்கே ஸர்வ சக்தியும் இருந்தும், தகப்பனார் அஸுரர்களுக்குக் கொடுத்த

வரத்தின் நிபந்தனையைக் காப்பாற்ற வேண்டுமென்றே அவர் அஸுர ஸம்ஹாரத்திற்குப் புறப்படாமலிருந்தார். அவர் அப்படிப் புறப்படாததால் தான் ஸுரஸேனைக்கு நாயகராக குமாரஸ்வாமி ஸம்பவிக்க முடிந்தது!தாம் ஸர்வ சக்தராயிருந்தும், 'மூத்தது மோழை, இளையது காளை'என்று பழமொழி ஏற்படும் படியாகத் தாம் ஒதுங்கியிருந்து கொண்டு, குழந்தைத்தம்பியே மஹா அஸுரர்களை ஜயித்து பெரிய கீர்த்தி பெறும்படி- 'வெற்றிவேல், வீரவேல்'என்று 'அப்ளாஸ்'வாங்கும்படி - பெருமை சேர்ந்து கொடுத்தார்.

தம்மைத் தாமே பல ரூபங்களில் பிறப்பித்துக் கொள்ளும் சக்தி அவருக்குண்டு. அவர் நினைத்திருந்தால் தகப்பனாருக்குள்ளே ஆவேசித்து அவரிடமிருந்து மட்டும், அம்பாள் ஸம்பந்தமில்லாமல் வேறே ஒரு ரூபத்தில் அவதாரமெடுத்து இருக்கலாம்;தாமே தேவ ஸேநாதிபதியாகி அஸுரர்களை வதம் செய்து மஹா கீர்த்தி. பெற்றிருக்காம். அவர் அப்படிச் செய்யாமலிருந்ததாலேயே லோகத்துக்கு ஸுப்ரஹ்மண்யம் என்ற திவ்யமூர்த்தி கிடைத்தது.

பிள்ளையாருக்கு குமார ஸம்பவத்தில் நேராகப் பங்கு இல்லாவிட்டாலும், இவர் அஸுர ஸம்ஹாரம் செய்யவில்லை என்பதால்தான் அது ஏற்படவே செய்தது என்பதால் 'நெகடிவ்'ஸம்பந்தமிருக்கிறது. வலுவான நெகடிவ் ஸம்பந்தம்!

---



## முருகன் திருமணத்தில் மூத்தவர் பங்கு

அடுத்தாற்போல் தம்பி ஸ்வாமியுடைய விவாஹம். வள்ளி கல்யாணம் என்று உத்ஸவமாகப் பண்ணும் விவாஹம். கதை, உபந்நியாஸம், ட்ராமா, ஸினிமா, டான்ஸ்-ட்ராமா என்றெல்லாம் அமர்க்களமாகப் பண்ணுகிறதற்கு இடம் கொடுக்கிற விவாஹம்.

அநேகமாக எல்லாருக்கும் தெரிந்திருக்கும்-விக்நேச்வரர் மதயானையாக வள்ளியைத் துரத்திக் கொண்டு வந்ததால் தான் அவள் ஸுப்ரம்மண்யரிடம் சேர்ந்தாள் என்ற கதை. இந்த இடத்திலே மூத்தது மோழையில்லை, காளைக்கு மேலே, மத்த கஜமே என்று அண்ணா ஸ்வாமி காட்டினார். வள்ளி சேரமாட்டேன் என்கிறாளே என்று தம்பிதான் அப்போது செயலில்லாமல் நின்றார். அப்புறம் தமையனாரைப் பிரார்த்தித்துக் கொண்டால்தான் இடையூறு நீங்கும் என்று மஹாசக்திமானான தேவஸேனாநாயகர் புரிந்து கொண்டார்;விக்நேச்வரரை ஸ்மரித்து வேண்டிக்கொண்டார். அவரும் உடனே தம்பிக்கு ஸஹாயம் செய்வதற்காக மத யானையாக வந்து வள்ளியை துரத்தியடித்து, தம்பியை அவள் சேரும்படிப் பண்ணினார். 'கைத்தலம் நிறைகனி'என்ற பிள்ளையார் வணக்கத் திருப்புகழில் இதைச் சொல்லித்தான் முடித்திருக்கிறது. அதிலே 'சிறு முருகன்'என்று சொல்லியிருக்கிறது. இதற்கும் முந்தி சின்னஞ்சிறு முருகனாக இருந்தபோதுதான் அவர் சூர ஸம்ஹாரமே பண்ணி, பிற்காலத்தில் 'ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த:'(படைத்தலைவர்களில் நான் முருகன்) என்று கீதையில் கிருஷ்ணர்கூட சொல்லும்படியான கீர்த்தியடைந்தது. அப்படிப்பட்டவர் இப்போது நல்ல கட்டிளம் காளைப் பருவத்திலே ஒரு ஸாதாரண வேடப் பெண்ணை அடைய முடியாமல் செயலற்றுப் போயிருந்தார். அந்த அசக்த நிலையை வைத்துத்தான்- வயஸை வைத்தல்ல - 'சிறு முருகன்'என்று அருணகிரிநாதர் போட்டிருக்கிறார். அப்போது அவருக்குக் கார்யஸித்தி ஏற்படச் செய்த 'பெரும்' ஆள் - பெருமாள்- விக்நேச்வரர்தான்.

அதனால்தான் திருப்புகழ்களின் முடிவில் ஸுப்ரம்மண்யருக்கே உரியதாக: வருகிற 'பெருமாளே'என்ற வார்த்தையை இந்தத் திருப்புகழில் மட்டும் விக்நேச்வரருக்குச் சூட்டி முடித்திருக்கிறார். தம்பியையே இஷ்ட தெய்வமாகக் கொண்ட அருணகிரிநாதர் அவரைச் 'சிறுவராக்கி' அண்ணாவைப் 'பெருமாள்' என்று பெருமைப் படுத்துவது விசேஷம்!

ஆக, ஸுப்ரமண்ய ஸ்வாமியின் விவாஹத்தில் நேராகவே

விக்நேச்வரருக்குப் 'பார்ட்' இருக்கிறது. Key roleஎன்றே சொல்லும்படியாக இருக்கிறது.

---



## முருகன் துறவில் மூத்தவர் பங்கு

ஸ்கந்த சரித்திரத்தில் இது விவாஹம். அந்தச் சரித்திரத்திலே ஸந்நியாஸமும் உண்டு. ஆனால் விசித்ரமாக, ஸுப்ரமண்ய ஸ்வாமி விவாஹத்துக்கு முந்தி ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டவர்!க்ருஹஸ்தாச்ரமத்துக்கு முந்தி ஸந்நியாஸாச்ரமம்!முதலில் ஸந்நியாஸம், அப்புறம் மஹாசக்திமானாக யுத்தம் செய்து சத்ரு ஸம்ஹாரம், அதற்கும் அப்புறம் அண்ணாவின் அநுக்ரஹ சக்தியைக்

கொண்டு கல்யாணம் என்று ஸ்கந்த சரித்ரம் வேடிக்கையாக, புதுமையாகப் போகிறது.

அவர் ஸந்நியாஸியான நிலைதான் தண்டாயுதபாணி. 'பழம் நீ-பழநிக் கதை தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள். வாஸ்தவத்தில் அது தண்டாயுதமில்லை. தண்டம்தான். நாங்கள் வைத்துக் கொண்டிருக்கிற, ஆயுதமாயில்லாத, மூங்கில் கழிதான். தண்டாயுதம் என்று ஆயுதமாக இருக்கப்பட்டது ஸேநா நாயகனின் ஆயுதம். லலிதாம்பாளுடைய ஸேநாநாயகிக்கு தண்டினி என்றே பேர். அப்படிப்பட்ட ஆயுத தண்டத்தை வீசிச் சண்டை போடுவதற்கு முந்தியே மனஸை அடக்கி வைப்பதற்கு அறிகுறியான சாந்தி தண்டத்தைப் பிடித்துக் கொண்டு பழநி மலை உச்சியில் நின்றவர் தண்டபாணி. நமக்கு வேண்டுமானால் மனஸை அடக்குவதுதான் மஹாயுத்தமாயிருப்பதால் இந்த தண்டமும் ஆயுதமாயிருக்கலாம். அவருக்கு அது ஒரு அலங்காரம்தான். நமக்கு reminder-ஆக (ஞாபகமூட்டியாக)

அவர் வைத்துக் கொண்டிருப்பதுதான்.

எந்த ஸ்வாமிக்குமில்லாத பரமஞானமான துறவறக்கோல ம்!இப்படி அதிபால்யத்தில் மொட்டை அடித்துக் கொண்டு, ஒரு சின்ன கோவணத்தைக் கட்டிக் கொண்டு தண்டமும் கையுமாக வேறே ஸ்வாமி உண்டா?அழகுக்கு ஈடில்லாதவர், சக்தியில் ஈடில்லாதவர், ஸ்தானத்தில் ஈடில்லாமல். தேவ நாயகனாக அவதரித்தவர் ஆறு நாள் பால்ய லீலைக்குள்ளேயே இப்படி ஆண்டி ஆகி, 'ஞானபண்டித ஸ்வாமி!'என்று பாடி மனஸ் உருகும்படியான சாந்தி ஸ்வரூபமாக நிற்கிறாரென்றால், அதற்கு யார் காரணம்?

விக்நேச்வரர்தான்!

இவர் அப்பா-அம்மாவைப் பிரதக்ஷிணம் பண்ணிப் பழத்தை அடித்துக் கொண்டு போனதால்தான் அவர் தோற்றுப் போய் ஆண்டியாகி விட்டார். லோகத்துக்கெல்லாம் பரம சாந்திக்கும் ஞானத்துக்கும் மூர்த்தியாக அவரை இப்படி ஆக்கின 'கிரெடிட்'பிள்ளையாருக்குத்தான்!

அப்புறம் தாயார்- தகப்பனார் போய் ஸமாதானம் பண்ணினார்கள். இதெல்லாம் ஒரு நாடகந்தானே?கோவணாண்டியும் தடபுடலாக யூனிஃபார்ம் போட்டுக் கொண்டு கமான்டர்-இன்-சீஃபாகக் கிளம்பினார். ஆனாலும் தாம் ஆண்டியாயிருந்த அவஸரம் (கோலம்) லோகத்தில் என்றைக்கும் இந்த்ரிய

நிக்ரஹத்தையும், ஞானத்தையும், சாந்தத்தையும் 'வைப்ரேட்'செய்து கொண்டிருக்கட்டுமென்று கிருபை கூர்ந்து அந்த அவஸரம் என்றைக்கும் பிம்பரூபத்தில் ஜீவகலையோடு இருக்கும்படியாக சார்ஜ் பண்ணிவிட்டுக் கிளம்பினார்.

தேவஸேநா நாயகன் என்ற உச்சமான அப்பாயின்மென்டுடனேயே ஸுப்ரஹ்மண்யர் பிறந்தது;அவர் வள்ளி கல்யாண மூர்த்தி என்ற கோலத்தில் தம்பதியாக, நமக்கு ஒரு கருணைத் தாயாரைச் சேர்த்துக் கொண்டே பிரபுத் தகப்பனாராக ஆனது;ஞான வைராக்ய ஸ்வாமியாகப் பழநியில் நித்ய ஸாந்நித்யம் கொண்டது

ஆகிய மூன்று முக்கியமான ஸம்பவங்களிலும் விக்நேச்வரரின் நெருங்கிய ஸம்பந்தமிருக்கிறது.

அதனால்தான் அந்தத் தம்பிக்கு இவர் தமையன் என்று தெரிவிக்கவே ஸ்பெஷலாக ஒரு நாமா இருக்கணுமென்று 'ஸ்கந்த பூர்வஜன்'என்று ஷோடச நாமாவளியில் கொடுத்திருக்கிறது.

பூர்வஜர் என்றால் முன்னவர், முதலில் தோன்றியவர் - ஆதி. இந்தப் பேரோ பதினாறில் கடைசியாக, அந்தமாக, வருகிறது. ஆதியையும் அந்தத்தையும் சேர்த்து ஸம்பூர்ணத்வத்தைக் காட்டுவதாகத் தோன்றுகிறது.

---



## பலச்ருதியின் அனைத்துப் பயனும் பெற்ற முருகன்

ரஸமாக ஒன்று தோன்றுகிறது:இந்த ஷோடச நாமாக்களைச் சொல்கிறவருக்கு, 'வித்யாரம்பே'(கல்வி கற்கத் தொடங்கு ம்போது), 'விவாஹே'(கல்யாணத்தின் போது) 'ப்ரவேசே' (ஒரிடத்திற்குள் செல்லும்போது), 'நிர்கமே'(ஒரிடத்திலிருந்து புறப்படும்போது), 'ஸங்க்ராமே'(சண்டை சச்சரவுகளில்) 'ஸர்வ கார்யேஷு (எல்லாக் கார்யங்களிலுமே) விக்கினம் உண்டாகாது என்று பலன் சொல்லியிருக்கிறது. இந்த ஒவ்வொன்றுக்குமே ஸ்கந்த சரித்திரத்தில் proof, சான்று, இருப்பதாகத் தெரிகிறது.

'வித்யாரம்பே:' பரமேச்வரனின் ஞான நேத்ர ஜ்யோதிஸிலிருந்து உண்டான ஸுப்ரம்மண்யருக்கு அக்ஷராப்யாஸம் என்ற அர்த்தத்தில் வித்யாரம்பம் அவசியமேயில்லை. அவரே 'ஓம் இத்-யேகாக்ஷரம்'என்ற பிரணவத்திற்கு அர்த்தமாக இருந்து கொண்டு, அதைப் பிதாவுக்கு உபதேசம் பண்ணினவர். ஆனபடியால் அவர்

விஷயத்தில் வித்யாரம்பம் என்பது ப்ரஹ்ம வித்யையை அநுபவமாக அநுஷ்டிக்கும் ஸந்நியாஸத்தை ஸ்வீகரிப்பதுதான். அப்படி அவர் ஸந்நியாஸி ஆனதற்கு விக்நேச்வரர் பழப் போட்டியில் ஜயித்ததுதான் காரணம்.

'விவாஹே':வள்ளி கல்யாண ஸமாசாரம். அதில் அண்ணாக்காரரின் முக்யமான பங்கை முன்னாலேயே பார்த்து விட்டோம்.

தம்பியின் இல்லறம், துறவறம் இரண்டிற்குமே அவர் தான் key கொடுத்திருக்கிறார். தம்பி குழந்தையாயிருந்த போது அவரை ஸந்நியாஸியாக்கி, அப்புறம் யௌவனத்தில் கிருஹஸ்தராக்கியிருக்கிறார்!தம்முடைய பரமபக்தையான ஔவையையோ அவள் நல்ல யௌவனத்தில் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டிய ஸமயத்தில் கிழவியாக்கி ஒரு ஸந்நியாஸினி மாதிரி செய்திருக்கிறார். பெரும்பாலும் பால ப்ரஹ்மசாரியாகவே நாம் பூஜிக்கும் ஸ்வாமியின் லீலை இப்படி வேடிக்கையாக இருக்கிறது!

'ப்ரவேச':இந்த லோகத்தில் இப்படி ஸுப்ரஹ்மண்யம் என்று ஒரு திவ்ய மங்கள் மூர்த்தி பிரவேசிப்பதற்கு-தோன்றுவதற்கு-காரணம் சூரபத்மாவின் நிபந்தனைப்படி விக்நேச்வரர் அவனுடைய ஸம்ஹாரத்திற்கு 'டிஸ்க்வாலிஃபை'ஆகியிருந்ததுதான். அதாவது, 'நெகட்டிவ்'ஆக ஸுப்ரஹ்மண்ய ப்ரவேசத்திற்குக் காரணம் அவர்தான்.

'நிர்கமே': 'ப்ரவேசம்'என்றால் ஒன்றில் புகுவது, 'நிர்கமம்'என்றால் ஒன்றைவிட்டுப் போய்விடுவது. வள்ளி கல்யாணம், பிள்ளையார் நடத்திக் கொடுத்து முடிந்தவுடன் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி தாம் பிரவேசித்திருந்த இந்த உலகத்தை விட்டுவிட்டு ஸ்கந்த லோகம் என்கிற தம்முடைய நித்யவாஸ ஸ்தானத்திற்குப் புறப்பட்டுப் போய் விட்டார். இரண்டு பத்னிகளோடும் புறப்பட்டுப்

போய் விட்டார். வள்ளி கதை வருவதற்கு முந்தியே தேவஸேனா கல்யாணமாகி இருந்தது. அவர் லோகத்தில் அவதாரம் பண்ணியதற்கு இரண்டு காரணம். சூரஸம்ஹாரம் ஒன்று. இன்னொன்று, அவருடைய மாமா மஹாவிஷ்ணுவின்

இரண்டு பெண்களில் ஒருத்தி தேவராஜன் பெண்ணாகவும், மற்றவள் வேடராஜன் பெண்ணாகவும் வளர்த்து வந்தவர்களை அவர் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்பது.

முதலில் திருச்செந்தூர் தாண்டி ஸமுத்ரத்தில் போய் அஸுரஸம்ஹாரம் முடித்தார். அப்புறம் திருப்பரங்குன்றத்தில் தேவஸேனையைக் கல்யாணம் பண்ணிக்கொண்டார். அங்கே அவளோடு இருந்து கொண்டிருக்கும்போது நாரதர் வந்து சித்தூரில் வள்ளி அவரே நினைவாக ப்ரேமையில் உருகிக் கொண்டிருப்பதை சொன்னார். ஆகையால் திருப்பரங்குன்றம் கோவிலில் அவர் வள்ளி-தேவஸேனா ஸமேதராக இல்லாமல், ஒரு பக்கம் தேவஸேனையும், மறுபக்கம் வள்ளிக்குப் பதில் அவளுக்காகத் தூது சொல்ல வந்த நாரதருமாகத்தான் இருக்கிறார். ஸத்குருவானவர் ஜீவாத்மாவிடம் பரமாத்மாவின் க்ருபையை திருப்பி விடுவதற்கு ரூபகமாக நாரதர் வள்ளியிடம் ஸுப்ரம்மண்யரைத் திருப்பிவிட்டார். அதனால் சிவனுக்கும் குருவான ஸ்வாமி, நாரத குருவுக்குத் தன்னுடைய ஸந்நிதியிலேயே ஒரு பக்கம் இடம் கொடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்.

நாரதர் சொன்னதன் மேல் அவர் புறப்பட்டுப் போய் வேடன், விருத்தன், வேங்கைமரம் எல்லாமாக வேஷம் போட்டு அப்புறம் அண்ணாவின் அருளால் வள்ளியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டார். அதற்கப்புறம் புக்தி-முக்தி என்கிற இம்மை மறுமைத் தத்வங்கள் இரண்டோடும் சேர்ந்துள்ள தம்முடைய ஸாந்நித்யம் பூலோகத்தில் இருக்க வேண்டும் என்று இரண்டு பத்னிகளோடும் 'ஹனிமூன்'மாதிரிக் கொஞ்சநாள் திருத்தணியில் இருந்தார். பிற்பாடு ஸ்கந்தலோகம் போய்விட்டார். அது தான் நிர்கமம். அதற்குப் படி போட்டுக் கொடுத்தது வள்ளி கல்யாணம். அதோடு அவருடைய அவதாரத்தின் இரண்டாவது 'பர்ப'ஸும் நிறைவேறி விட்டது. வள்ளி கல்யாணத்திற்குப் படி போட்டுக் கொடுத்தவர் யானையாக வந்து அவளைத் துரத்திய பிள்ளையாரேயாகையால், ஸுப்ரஹ்மண்யர் நம் லோகத்திலிருந்து ஸ்கந்த லோகத்திற்கு 'நிர்கமம்'பண்ணவும் அவர்தான் உதவி இருக்கிறார்.

'ஸங்க்ராமே:'ஸங்க்ராமம் என்றால் சண்டை, யுத்தம். 'ஸங்க்ராம சிகாவல'என்று 'கந்தரநுபூதி'யில்கூட வருகிறது. யுத்தத்தில் மஹா பராக்ரமம் காட்டிய ஸுர ஸேநாதிபதி ஸுப்ரம்மண்யர். அப்படி யுத்தம் ஆரம்பிக்கிறதற்கு பண்ணித் தானிருப்பார். ஏனிப்படிச் சொல்கிறேனென்றால் விக்நேச்வர பூஜை செய்யாமல் த்ரிபுர ஸம்ஹாரத்திற்குப் புறப்பட்ட தகப்பனார், பண்டாஸுர ஸம்ஹாரத்திற்குப் புறப்பட்ட தாயார் ஆகியவர்களுக்கும் விக்கினங்கள் ஏற்பட்டு, அவர்கள் அந்தப் பூஜை பண்ணிய பிறகுதான் விக்கினம் நிவிருத்தியாயிற்று என்பதால் தம்பிக்காரர்

முதலிலேயே ஜாக்ரதையாக முழித்துக் கொண்டு பூஜை பண்ணித்தானே இருப்பார்?அது மாத்திரமில்லை. சூரஸம்ஹாரத்திற்கு இவர் புறப்படுவதற்கு முன்னாடி அவரோடு பழத்துக்குப் போட்டி போட்டு பந்தயம் வந்ததில் தோற்றே போயிருக்கிறார். அந்த விரக்தியில் ஆண்டியானார். அந்த ஆண்டி வாழ்க்கையிலாவது ஜயித்தாரா, அதாவது அது தக்கி நின்றதா என்றால் இல்லை. மாதா பிதாக்கள் வந்து கேட்டுக் கொண்டு, அஸுர ஸம்ஹாரத்திற்காகவே அவர் அவதரித்திருப்பதை ஞாபகப் படுத்தியவுடன், ஸந்நியாஸத்திற்கு முழுக்கு போட்டுவிட்டுச் சண்டைக்குப் புறப்பட வேண்டியதாயிற்று. அதனால் அண்ணா அநுக்ரஹம் இருந்தால்தான் கார்யம் ஸித்தியாகும் என்று இப்போது அவருக்கு நன்றாக புரிந்திருக்கும். ஆனபடியால் அவரைப் பூஜை பண்ணிவிட்டுதான் புறப்பட்டிருப்பார்.

'ஸர்வ கார்யேஷு':அண்ணாவுக்குப் போட்டியாகப் பழத்துக்குப் பந்தயம் புறப்பட்டது பலிக்கவில்லை. அவரைப் பிரார்த்திக்காமல் ஆண்டியானதும் நிற்கவில்லை என்பதால் யுத்தத்திற்குப் போகும் போது அவரைப் பூஜை பண்ணினாலும் பிற்பாடு வள்ளியை அடைவதற்காகப் போனபோது அவரை மறந்துவிட்டார். ஆசைவேகம் எத்தனை பொல்லாதது என்று லோகத்திற்குக் காட்டுவதற்காகவே இப்படி ஏற்பட்டது. விக்னமும் நிறைய வந்தது. அப்புறம் அவரை ப்ராத்தித்தே கார்யஸித்தி பெற்றார். அதனால் அதற்கப்புறம் 'ஸர்வ கார்யேஷு'என்றபடி எந்தக் கார்யமானாலும் அதை ஆரம்பிப்பதற்கு முன்னால்

விக்நேச்வர பூஜை பண்ணித்தானிருப்பார். அதைப் பற்றி

ஸந்தேஹமேயில்லை.

ஆகையாலேயே பிள்ளையாரின் ஷோடச நாமாக்களை முடிக்கிறபோது, அதற்குப் பலச்ருதியில் சொல்லப்படும் அத்தனை விதங்களிலும் விக்நேச்வரரின் அநுக்ரஹத்தைப் பெற்ற ஸ்கந்தரைக் குறிப்பிட்டு, அவருடைய பூர்வஜரென்று பூர்த்தி பண்ணியிருக்கிறது.

---



## ஸ்கந்த நாமச் சிறப்பு

'ஸ்கந்தர்' என்றால் 'துள்ளிக் கொண்டு வெளிப்பட்டவர்'என்று அர்த்தம். பரமேச்வரனுடைய சக்தி நேத்ர ஜ்யோதிஸ்ஸாக ஒரே துடிப்போடு, லோகாநுக்ரஹம் பண்ண வேண்டுமென்ற துடிப்போடு, துள்ளிக்கொண்டு வெளிப்பட்டே ஸ்கந்தமூர்த்தி உத்பவமானார். அந்த விசேஷத்தால்தான் அவருக்கு ஸுப்ரஹ்மண்யர், கார்த்திகேயர், குமாரர், சரவணபவர் என்றிப்படி அநேக நாமாக்கள் இருந்தபோதிலும் அவரைப் பற்றிய புராணத்திற்கு ஸ்கந்த புராணம், ஸ்காந்தம் என்றே பெயரிருக்கிறது. அவருடைய லோகத்துக்கு ஸ்கந்தலோகம் என்றே பெயர். அவர் ஸம்பந்தமான விரதத்தை ஸ்கந்த ஷஷ்டி என்றே சொல்கிறோம். அம்பாளோடும் முருகனோடும் இருக்கும் பரமேச்வரமூர்த்திக்கும் ஸோமாஸ்கந்தர் என்றே பேர் இருக்கிறது. 'முருகன்'என்று அவருக்குச் சிறப்பாகத் தமிழ்ப் பெயர் கொடுத்திருக்கும் நம் பாஷையிலும் கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கந்தர் கலிவெண்பா என்றெல்லாம் ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. சென்னை பட்டணத்தின் சிறப்பாகக் கந்தக் கோட்டம் இருக்கிறது.

ச்ருதியிலே (வேதத்திலே) ஒன்று வந்துவிட்டதென்றால் அதற்குத் தனிப் பெருமை, தனி கௌரவம் உண்டு. அப்படி

இந்த ஸ்கந்த நாமத்திற்கு இருக்கிறது. புராணமான ஸ்காந்தத்தில் வள்ளி என்ற ஜீவனுக்கு நாரதர் குரு ஸ்தானமென்று வருகிறதென்றால், ச்ருதியைச் சேர்ந்த சாந்தோக்ய உபநிஷத்தில் அந்த நாரதருக்கு ஸுப்ரஹ்மண்யரின் பூர்வாவதாரமான ஸநத்குமாரர் ஞானோபதேசம் பண்ணியதாக வருகிறது. ஸநத் என்று பிரம்மாவுக்குப் பெயர். ஸ்ருஷ்டி ஆரம்பத்திலேயே பிரம்மாவின் மானஸீக புத்ரராகப் பிறந்தவர் ஸநத்குமாரர். ஸநக, ஸநந்தன, ஸநாதன, ஸநத்குமாரர் என்ற நால்வரில் முக்யமானவர். பிறக்கும்போதே ப்ரஹ்மஞானியாக இருந்த அவர்கள் நிவ்ருத்தி மார்க்கம் என்ற ஸந்நியாஸத்திற்கு ஆதர்ச புருஷர்கள். காமமே தெரியாத நித்ய பாலகர்களாக இருப்பவர்கள். ப்ரம்ம குமாரரான அந்த ஸநத்குமாரரே தான் சிவக்குமாரரான ஸுப்ரஹ்மண்யராக வந்தாரென்று சாந்தோக்யத்தில் இருக்கிறது. சிவகுமார அவதாரத்தில் அவர் வீராதிவீர ஸேநாதிபதியாகவும், இரட்டைப் பத்னிகளைக் கொண்டவராகவும் இருந்தபோதிலும் பழைய ஸநத்குமார 'வாஸனையால்'தான் நடுவிலே கொஞ்ச காலம் பழநியில் கோவணாண்டி ஸந்நியாஸியாக நின்றார் போலிருக்கிறது! இவர் கோவணாண்டி என்றால் ஸநத்குமாரருக்கு அந்தக் கோவணங்கூட கிடையாது. ஏனென்றால் இந்த சிவக்குமாரர் 'என்றும் இளையவர்'என்றால் அந்த ஸநத்குமாரரோ இன்னும் இளசாக என்றும் குழந்தையாகவே இருந்தவர். அது இருக்கட்டும். என்ன சொல்ல வந்தேனென்றால், ச்ருதி சிரஸான சாந்தோக்யத்தில், ஸநத்குமாரர்தான் ஸுப்ரஹ்மண்யர் என்று முடிக்கிற இடத்தில் ஒரு தரத்துக்கு இரண்டு தரமாக 'ஸ்கந்த, ஸ்கந்த'என்று இந்த நாமாவையே சொல்லியிருக்கிறது.

ஸ்கந்தன் என்பது லோகம் முழுக்கப் பரவி ப்ரக்யாதியான பெயர். 'ஸ்கூல்'என்பதை 'இஸ்கூல்'என்கிற மாதிரி இந்த ஸ்கந்த நாமாவைத்தான்

தேசாந்தரங்களில் 'இஸ்கந்தர்'என்று ஆக்கிக் கொண்டார்கள். 'அல்'என்பது ஸெமிடிக் பாஷைகளில் ஒரு குறிப்பிட்ட வஸ்துவைத் தெரிவிக்கும் definite article;இங்கிலீஷ் 'the'மாதிரி. மரியாதையைக் காட்டும் வாசகமாகவும் ஒரு

வார்த்தைக்கு முன்னே 'அல்'சேர்ப்பார்கள். இப்படி உருவான 'அல் இஸ்கந்தர்'தான் க்ரீஸ்வரை போய் 'அலெக்ஸாண்டர்'என்று ஆனது!

ஸிக்கந்தர் என்பதும் ஸ்கந்தர் என்பதன் இன்னொரு திரிபுதான். ஆகையால் ஸெகந்திராபாத் என்கிற ஸிக்கந்தராபாத்தில் ஸமீபத்தில் ஸ்கந்தகிரி ஆலயம் விசேஷமாகத் தோன்றியிருப்பதும் பொருத்தந்தான்.

ஸ்வீடன், நார்வே, டென்மார்க் எல்லாம் சேர்ந்து ஸ்கான்டிநேவியா என்றிருக்கிறதல்லவா?ஸ்கான்டியா என்ற பிரதேசத்தை வைத்துத்தான் அந்தப் பெயர் ஏற்பட்டது. ஹிந்து-இன்டியா மாதிரி ஸ்கந்த- ஸ்கான்டியா!

---



## அண்ணாவைக் கூறி அன்றாடம் தொடங்குவோம் !

பிள்ளையார் என்றவுடன் சிவ-சக்திகளின் பிள்ளை என்பது நினைவு வந்துவிடும். ஸ்கந்த பூர்வஜர் என்று ஷோடச நாமாவை முடிக்கிறபோது மற்ற பிள்ளையின் நினைவும் வந்து சிவ குடும்பம் முழுவதும் நிறைவு பெற்று விடுகிறது. அதனால்தான் அது கடைசிப் பெயராக மங்களம் பாடி சுபமாக முடிக்கிற இடத்தில் இருக்கிறது.

நாம் எல்லோருமே பார்வதி-பரமேச்வரர்களின் குழந்தைதான். நம் எல்லோருக்கும் பூர்வஜர், தலைச்சன் பிள்ளை விக்நேச்வரர். அவருடைய அநுஜர்களில் ச்ரேஷ்டராயிருக்கப்பட்ட ஸ்கந்தமூர்த்தியின் பெயரைச் சொன்னதில் நாம் எல்லோரும் அடக்கம். நமக்கெல்லாம் ஒரு அண்ணா விக்நேச்வரர் என்ற பந்துத்வத்தோடு தினமும் காலமே எழுந்தவுடன், கார்யங்களை ஆரம்பிப்பதற்கு முன்னால் அவருடைய ஷோடச நாமாக்களைச் சொல்லி,

'ஸர்வ கார்யேஷு விக்நேஸ்தஸ்ய ந ஜாயதே'என்றிப்படி எல்லாப் பணிகளையும் நிர்விக்னமாக நிறைவேற்றி எல்லோரும் ச்ரேயஸை அடைவோம்.

**ஸுமுகச்-சைகதந்தச்ச கபிலோ கஜகர்கண :|**

**லம்போதரச்ச விகடோ விக்நராஜோ விநாயக :||**

**தூமகேதுர்-கணாத்யக்ஷ : பாலசந்த்ரோ கஜாநந :|**

**வக்ரதுண்ட : சூர்பகர்ணோ ஹேரம்ப : ஸ்கந்தபூர்வஜ :||**

**ஷோடசைதாநி நாமாநி ய : படேச் - ச்ருணுயாதபி |**

**வித்யாரம்பே விவாஹே ச ப்ரவேசே நிர்கமே ததா ||**

**ஸங்க்ராமே ஸர்வகார்யேஷு விக்நஸ்-தஸ்ய ந ஜாயதே ||**

எல்லோரும் இந்தப் பதினாறு பேர்களைச் சொல்லி பதினாறு பேறுகளையும் அடைய வேண்டியது.

---



## குரு

### உபதேசகராகிய தேசிகர்

### வாழ்க்கையில் வழியும் திசையும்

வழி என்பது திசை ஸம்மந்தப்பட்ட விஷயம். ஒரு வழி இருந்தால் அது ஏதாவது திசையில் போய் ஒரு இடத்திற்குக் கொண்டுவிடும். இடம்-space-என்று ஏற்பட்டு விட்டால் உடனே திசையும் வந்துவிடும். வடக்குப் பக்கம், தெற்குப் பக்கம் என்றிப்படி திசை சம்பந்தப்படாமல் ஒரு இடமும் இருக்க முடியாது. ஒரு இடத்திலிருந்து இன்னொரு

இடத்திற்குப் போவதற்காகவே வழி என்பது இருக்கிறது. அதனால் அதுவும் திசையோடு ஸம்பந்தப்பட்டதாகவே இருக்கிறது.

வாழ்க்கை நடத்துவதிலும் வழியைச் சொல்லுகிறோம். நல்ல வழியில் வாழ்க்கை நடத்த வேண்டும், கெட்ட வழியில் கூடாது என்கிறோம். வாழ்க்கையில் ப்ரச்சனைகள் அநேகம் ஏற்படும்போது, 'அது தீர என்ன வழி?' என்று யோசிக்கிறோம். 'தை பிறந்தால் வழி பிறக்கும்'என்கிறோம். இப்படி வாழ்க்கையையும் ஒரு பயணமாக உருவகப் படுத்திக் கொண்டு அதில் வழி என்பதைப் பற்றிப் பேசுகிறோம். வாழ்க்கை நடத்துவது என்று சொல்லும் போதே நடை ஸம்பந்தம் வந்து விடுகிறது!'நடப்பது'என்றால் அதைச் செய்ய ஒரு வழி இருக்கத்தானே வேண்டும்?இங்கிலீஷிலும் 'way of life'என்று வழியை வைத்தே சொல்கிறார்கள். Space- இடத்தில் -ஒரு பாயின்டிலிருந்து இன்னொன்றுக்குப் போகிற மாதிரி, Time - காலத்தில் - ஒரு பாயின்டிலிருந்து இன்னொன்று, அப்புறம் இன்னொன்று என்று போய்க் கொண்டேயிருப்பதுதான் வாழ்க்கை. 'போய்க்கொண்டே இருப்பதுதான் வாழ்க்கை. 'போய்க்கொண்டே'என்று சொல்கிற போதும் மறுபடி வழி என்ற ரூபகம் (உருவகம்) வந்து விடுகிறது. அதேபோல எண்ணங்கள் ஒன்றிலிருந்து ஒன்றுக்குப் போய்க் கொண்டேயிருப்பதையும் வாழ்க்கையில் பார்க்கிறோம். இப்படி இருந்தது இருந்தபடி இல்லாமல் மாறிக் கொண்டே போவது ('போவது'என்று சொல்வதை கவனிக்கணும்) - மாறிக்கொண்டே போகிற கார்யம் என்பது போட்ட இடத்தி் கிடக்காமல் சலனப்பட்டு ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டேயிருப்பதற்கு ஸமதையாகத் தெரிகிறது. சலனம், movementஎன்ற எண்ணம் வாழ்க்கையின் அமைப்பிலும் தெரிவதால் அதை ஒரு பயணமாகச் சொல்லி அதில் வழி வழி என்று சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது.

திசை தெரிந்துதான் ஒரு வழியில் போக வேண்டும். தெரியாவிட்டால், போகவேண்டிய இடத்திற்கு போகாமல் எங்கேயாவது தப்பாகப் போய்ச் சேருவோம்.

வாழ்க்கையிலும் திசையிருக்கிறது!வாழும் வழி

இல்லாதவர்களை 'திக்கற்றவர்கள்'என்கிறோம். திக்கும் திசையும் ஒன்றேதானே?ஸம்ஸ்கிருதத்தில் 'திச்'என்ற வேர்ச்சொல்லிலிருந்துதான் 'திக்'வருகிறது. திச் நீண்டு திசா. அதாவது

திசை என்றாகிறது. திக் என்பதையே தமிழில் திக்கு என்கிறோம்.

---



## பூர்வோத்தரம் : கிழக்கு-வடக்கு

ஒருத்தருடைய பூர்வோத்தரம் என்னவென்று கேட்கிறோம். வாழ்க்கையில் அவர் முந்தி எப்படி இருந்தார். பிந்தி எப்படி இருந்தார் அல்லது இருப்பார் என்று விசாரிப்பதையே பூர்வோத்தரம் கேட்பது என்கிறோம். பூர்வம்-முந்தி;உத்தரம்-பிந்தி. ஒரு புஸ்தகத்தில் கூட முன் பகுதியைப் பூர்வபாகமென்றும் பின் பகுதியை உத்தரபாகமென்றும் சொல்கிறோமல்லவா?'பூர்வ' என்பதற்கு முன் என்றும், உத்தர என்பதற்கு பின் என்றும் அர்த்தம் சொல்கிறபோதும் இடத்தின் ரூபகம் வந்துவிடுகிறது. 'முன்னால்','பின்னால்'ஆகியவை space-ல் ஏற்படுபவைதானே?

ஸம்ஸ்க்ருதத்தில் நன்றாகவே அந்த வார்த்தைகளை திசையோடு ஸம்பந்தப்படுத்தியிருக்கிறது. 'பூர்வம்'என்றால் கிழக்கு;'உத்தரம்'என்றால் வடக்கு. ஆனால் பூர்வம் (கிழக்கு) 'முன்'என்றால் பச்சிமம் (மேற்கு) அல்லவா 'பின்'னாக இருக்கணும்?உத்தரம் எப்படிப் பூர்வத்திற்கு எதிர்ப்பக்கமாகும்?ஏனிப்படிப் 'பூர்வோத்தரம்'என்று வார்த்தை வந்தது?- என்று யோசித்தேன். அப்புறம் புரிந்தது.

வாழ்க்கைச் சகடம், life cycle என்கிற படி அது ஒரு வட்டம் மாதிரிச் சுழன்று கொண்டு போவதாகத் தெரிகிறது. அதோடு, குறுக்காகப் போகாமல் ப்ரதக்ஷிணமாகப் போவதே மரியாதையைக் காட்டுவதால் வாழ்க்கை வட்டத்திலும் ப்ரதக்ஷிணமாகக் கிழக்கில் ஆரம்பித்துப் பார்வையை விட வேண்டுமென்றும் தெரிகிறது. கிழக்கேயிருந்து குறுக்காக நேர் எதிரே போனால்தான் மேற்கு. ப்ரதக்ஷிணமாகப் போனால் கிழக்குக்கு அப்புறம் தெற்கு, அப்புறம் மேற்கு, அதோடு முடிந்து விடாமல் அதற்கும் மேற்கொண்டு வடக்கு வந்து, அதற்கப்புறம் மறுபடி கிழக்கிலேயே சேர்ந்துவிடும். ஆகவே வாழ்க்கை ஆரம்பம் கிழக்கு என்றால் முக்கால் வட்டம் தாண்டி ரொம்பப் பிந்தி வருவது வடக்கு தான்!

எதிர்த்திசையிலிருந்தால் எதிரி!எதிரி, எதிர்ப்பது என்ற வார்த்தைகளே அப்படித்தான் உண்டாயிற்று. ஆகையால் (கிழக்கு-மேற்கு என்று அர்த்தம் கொடுக்கும் படியாகப்) 'பூர்வ-பச்சிமம்'என்று வைத்திருந்தால் அமங்களமாயிரு ந்திருக்கும். கிழக்கு-முன், மேற்கு-பின் என்னும்போது மேற்கு ப்ருஷ்ட பாகம், புறமுதுகு ஆகிய அஸந்தர்பமான விஷயங்களை ஞாபகமூட்டுவதாக வேறு இருக்கிறது. உத்தரம்-வடக்கு என்பதோ கிழக்கிலிருந்து செங்குத்தாக உச்ச நிலையைக் காட்டிக்கொண்டு இருக்கிறது!அதோடு ஆதியந்தம்

ஒன்றாகிவிடும் மங்கள பூர்ணமாக மறுபடி கிழக்கிலேயே கொண்டுவந்து சேர்ந்து விடுகிறது. அதனால் தான் 'பூர்வோத்தரம்'- கிழக்கு - வடக்கு என்று வைத்திருக்கிறார்கள் என்று ஊஹம் பண்ணிக் கொண்டேன். கிழக்கும் வடக்கும்தான் ஜபம் பண்ண, பூஜையை எல்லாம் 'எடுத்த'திசைகள் என்பதும் 'பூர்வோத்தரம்' என்று சொல்வதன் பொருத்தத்தைக் காட்டுகிறது.

வாழ்க்கையில் 'பூர்வோத்தரம்'என்று வந்துவிட்டதாலேயே புஸ்தகம்

முதலான எல்லாவற்றிலும் முன்-பின் என்பதற்கு அப்படியே சொல்லும் வழக்கும் ஏற்பட்டிருந்திருக்கிறது.

---

## மேல்-கீழ் : மேற்கு-கிழக்கு

இதைச் சொல்லும்போது இன்னொன்றும் நினைவு வருகிறது. அது வாழ்க்கை வழி ஸம்பந்தப்பட்டதல்ல;space-ல் சொல்லும் வழி, திசை ஸம்பந்தமானது மட்டுமே என்றாலும், அதையும் சொல்லி விடுகிறேன். (சிரித்து) கூட்டம் சேர்ந்திருக்கிற இடத்தில் எனக்குத் தெரிந்த வித்தையெல்லாம் காட்டிவிட வேண்டாமா?தமிழில் மேல்-கீழ் என்ற வார்த்தைகள் ஸம்பந்தப்பட்டதாக மேற்கு-கிழக்கு என்று திசைப் பெயர்கள் இருக்கின்றன. ஆனால் மேற்கும் கிழக்குமோ மேலும் கீழுமாக இல்லாமல் பக்கத்தில் இருக்கின்றன!வடக்கும் தெற்கும் தான் மேலும் கீழுமாக உள்ள திசைகள். பூகோளத்தில் வட திசைமேலேயும், தென்திசை கீழேயும் இருக்கின்றன. கிழக்கு மேற்குகள் அப்படியில்லாமல் ஒன்றுக்கொன்று பக்கமாகவே இருக்கின்றன. பின்னே ஏன் 'கீழ்'ஸம்பந்தமாக 'கிழக்கு'என்றும், 'மேல்'ஸம்பந்தமாக 'மேற்கு'என்றும் பேர் வைத்திருப்பது?யோசித்துப் பார்த்தபோது புரிந்தது. தமிழ்நாட்டிலே மேற்குப்புறம் மேடாகப் போய் போய் அப்படியே ரொம்ப உயரமான மேற்குத் தொடர்ச்சி மலைகளில் முடிந்து விடுகிறது. கிழக்குப் பக்கம் தாழத்தாழப் போய் ஸமுத்ரத்தில் முடிகிறது. அட்லாஸில் ஸீ லெவலுக்கு (கடல் மட்டத்துக்கு) மேலே இத்தனை அடியிலிருந்து இத்தனை அடி உயரம் வரை இன்ன கலர் என்று பல உயரக் கட்டடங்களைச் சொல்லி ஒவ்வொன்றுக்கும் ஒரு கலர் கொடுத்து ஒரு Mapஇருக்கும். இப்போது எப்படி இருக்கிறதோ, எங்கள் நாளில் ஸீ லெவலுக்கு நல்ல பச்சையாகக் கலர் கொடுத்திருக்கும். அப்புறம் உயர்ந்து போகப் போக வெளிர் பச்சை, வெளிர் ப்ரௌன், டார்க் ப்ரௌன் என்று கொடுத்திருக்கும். தமிழ்நாடு 'மாப்'பைப்

பார்த்தால் மேற்கு ஓரம் - பார்டர்-முழுக்க ஒன்று டார்க் ப்ரௌன் அல்லது லைட் ப்ரௌன், அடுத்தாற்போல வருகிற வடார்க்காடு, சேலம், கோயம்புத்தூர், மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாப் பகுதிகள் வெளிர்பச்சை;அப்புறம் ஸமுத்திரக் கோடி மட்டும் வரும் செங்கல்பட்டு, தென்னார்காடு, தஞ்சாவூர், திருச்சி, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாப் பகுதிகள் நல்ல பச்சை என்று இருக்கும். சுருக்கமாகச் சொன்னால் மேற்கே மலைப்பாங்காகவும், கிழக்கே ஸமவெளியாகவும் இந்தத் தமிழ் தேசம் இருக்கிறது. அதாவது மேற்கு உயர்ந்த பூமி மட்டமாகவும், கிழக்கு தாழ்ந்த பூமி மட்டமாகவும் இருக்கிறது. இப்படி இருப்பது மேல், கீழ்தானே?அதனால்தான் மேற்கு-கிழக்கு என்று திசைப் பெயர்கள் ஏற்பட்டிருப்பதாகப் புரிந்தது. இந்த விஷயம் இருக்கட்டும்.

---



## ' திச் ': பெயர்ச்சொல்லாகவும் வினைச்சொல்லாகவும்

இடத்திலும் வழி-திசைகள் இருக்கின்றன, மனித வாழ்க்கையிலும் வழி-திசைகள் இருக்கின்றனவென்று பார்த்துக் கொண்டிருந்தோம். 'திச்'என்பதிலிருந்து திசை, திக்கு என்ற வார்த்தைகள் உண்டாவதாகச் சொன்னேன்.

'திச்'என்று பெயர்ச் சொல்லும் இருக்கிறது, வினைச்சொல்லும் இருக்கிறது. பெயர்ச்சொல்லாக இருக்கும்போதுதான் இட ஸம்பந்தப்பட்டதான 'திசை'என்று அர்த்தம் கொடுக்கிறது. வினைச் சொல்லாக இருக்கும்போது 'திச்'என்றால் 'இப்படிப் பண்ணு'என்று ஒருத்தன் செய்ய வேண்டியதைச் சொல்லிக் கொடுப்பதாக, உத்தரவு போடுவதாக ஆகும். சுருக்கமாகச் சொன்னால் 'வழி சொல்வது''வழி காட்டுவது'என்கிறோமே, அதைக் குறிக்கும். மறுபடி 'வழி'க்கு வந்துவிட்டோம்.

'இப்படியிப்படிப் பண்ணு'என்று வழிகாட்டுவதை 'டைரக்ட்'பண்ணுவது என்கிறோம். ஒரு மருந்தானால்கூட அதை எப்போது, எப்படி, எவ்வளவு சாப்பிட வேண்டும் என்று பாட்டில்மேல் ஒட்டியிருக்கும் குறிப்புக்கு 'டைரக்ஷன்'என்று பேர் கொடுத்திருக்கிறது, 'டைரக்ஷன்'என்றாலே திசை என்றும் அர்த்தமிருக்கிறது!நார்த்த(ர்)ன் டைரக்ஷன், ஸத(ர்)ன் டைரக்ஷன் என்றெல்லாம் திசைகளைச் சொல்கிறோம். லோகம் பூரா ஜன ஸமுதாயம் ஒரே சிந்தனைப் போக்குள்ளதாக இருக்கிறதென்று காட்டி எல்லாரையும் ஒரு குடும்பமாக ஒட்டி வைக்க இந்த மாதிரி வார்த்தையொற்றுமைகளே போதும்!நாம் 'திச்'என்பதற்குச் சொல்லும் அந்த இரண்டு அர்த்தங்களையே அவர்களும் டைரக்ஷன் என்பதற்குச் சொல்கிறார்கள். இதற்கு அடிப்படையாக வாழ்க்கையை ஒரு யாத்திரையாக பயணமாகப் பார்க்கும் ஒரே சிந்தனைப் போக்கு தெரிகிறது.

---



## தேசம், உபதேசம்

இடமாகவுள்ள 'திச்'சை வைத்தே 'தேசம்'என்ற வார்த்தை உண்டாயிருக்கிறது. தேசம் என்பது நாலு திசைகளும் வரையறுக்கப்பட்ட இடப்பரப்புதானே?'ப்ரதேசம்'என்பதும் இதேபோல் உண்டான வார்த்தை. செய்யவேண்டியதைச் சொல்லிக் கொடுக்கும் 'திச்'சிலிருந்து ஆதேசம், ஸந்தேசம், உபதேசம் என்ற வார்த்தைகள் வந்திருக்கின்றன. பொதுவாக எல்லா ஜனங்களுக்குமுள்ள திசைகளில் குறிப்பிட்ட ஜனங்களுக்கு மாத்திரம் உடைமையாக எல்லை கட்டித் தரும் பகுதி 'தேசம்'. ஆகையால் உடைமைகளையே பிரதானமாக நினைக்கும் மநுஷ்ய மனப்பான்மையின்படி அந்த வார்த்தை

இடப்பரப்புக்கு மட்டுமே உரியதென்று ஆகிவிட்டது. வினைச்சொல்லாகவும், நல்வினையில் ஒருவரைச் செலுத்தும் உத்தரவாகவும் உள்ள 'திச்'சிலிருந்து 'தேசம்'என்று இன்னொரு வார்த்தையைக் கொண்டு வராமல் 'தேச'த்திற்கு, 'ஆ"ஸம்', 'உப'என்று அடை போட்டு ஆதேசம், ஸந்தேசம், உபதேசம் என்ற வார்த்தைகளையே கொண்டு வந்திருக்கிறார்கள்.

ஆதேசம் என்றால் அதிகாரபூர்வமான உத்தரவு. தெய்வக் கட்டளையாக வெளிப்படவோ மனஸுக்குள்ளேயோ ஒன்று தோன்றுவதைக்கூட ஆதேசம் என்றே சொல்வது. ஸந்தேசம் என்றால் தகவல், செய்தி. உத்தரவு என்பதன் அதிகாரம் ஒட்டிக் கொள்ளாமல் ஸாதாரணமாக அநுப்பும் எல்லா 'மெஸ்ஸேஜு'மே ஸந்தேசந்தான். ஒன்றைச் சொல்லிக் கொடுப்பது என்பதன் ஸம்பந்தமில்லாமல், 'உத்தேசம்', 'ஏகதேசம்'என்றும் 'தேசம்'போட்டுக் கொண்டு இரண்டு வார்த்தைகள் இருக்கின்றன.

'உத்தேசம்'வெளியிலே உத்தரவாகவோ, ஸாதாரண செய்தியாகவோ சொல்லாமல் மனஸுக்குள்ளேயே ஒன்றை நினைப்பது. நிச்சயமாகத் தெரியாததை ஒரு குறிப்பாக அநுமானித்துச் சொல்லும்போதும், 'எத்தனை என்று ஸரியாகத் தெரியாது;உத்தேசமாகச் சொன்னேன்'என்கிறோம். பகவானே 'விபூதி யோக'த்தில் தாம் ஒவ்வொரு வர்க்கத்திலும் ச்ரேஷ்டமான எது எதுவாக இருக்கிறாரோ அதையெல்லாம் அடுக்கிக் கொண்டே போய்விட்டு, முடிவில், 'Þˆî¬ù ªê£¡ù¶ƒÃì â¡Â¬ìò Üè‡ì MÌFè¬÷Š Ìó£õ£è Üì,AMìM™¬ô;Þšõ÷¾ƒÃì å¼ °PŠ¹, è£†´õî£è,, ªê£¡ù¶ î£¡'â¡Â‹«ð£¶ 'à˜«îêî:Š«ó£,î:' â¡«ø ªê£™LJ¼,Aø£˜. Þƒ«è 'à˜«îê‹'â¡ð¬î Ýê£˜ò£œ 'ãè«îê‹'â¡Á (î‹º¬ìò ð£wò˜F™) Ü˜ˆî‹ ð‡EJ¼Šðî£™ ãè«îê‹ â¡ø õ£˜ˆ¬î,°‹ '°PŠð£è˜ ªîKMŠð¶'â¡ø Ü˜ˆîI¼Šðî£è˜ ªîKAø¶. º¿ê£ù å¡P™ å¼ ðƒè£è Þ¼Šð¬î 'ãè«îê‹'â¡ð¶. «ð,,² õö,A™ ñŸøõ˜èÀ,°Š ðƒ° îó£ñ™ å¼ˆî«ó º¿¬ê»‹ ªêŒî£™ 'ãè«îêñ£è Üõ«ó ð‡E†ì£˜'â¡A«ø£‹.

ஆகக்கூடி, உத்தேசம், ஏகதேசம் என்ற வார்த்தைகளில் நம் 'டாபிக்'கான 'வழி'ஸமசாரமில்லை. 'உத்தேசம்'வேண்டுமானால் ஒரு வழியை

யோசிப்பதாகவும் இருக்கலாம். 'ஸந்தேச'த்தில் கூட வழி சொல்வது இருந்து

தானாக வேண்டுமென்றில்லை. 'ஆதேசம்'ஏதோ ஒரு வழியில்தான் போகணுமென்று கட்டாயமாகவே கட்டளை போட்டு விடுகிறது. பாக்கி இருக்கிற வார்த்தை 'உபதேசம்'- அதைச் சொல்லத்தான் இத்தனை பீடிகையும் போட்டது.

'உபதேசம்'என்றவுடன் குரு-சிஷ்யர்கள் நினைவு வந்து விடுகிறது. உபதேசம் கொடுக்க குருவும், பெற சிஷ்யனும் இல்லாமல் உபதேசம் என்பதே கிடையாது.

எவரும் எவருக்கும் எதையும் சொல்வது ஸந்தேசம். கேட்பவனுக்கு நல்லதோ இல்லையோ அவன் கேட்டுத் தானாக வேண்டும் என்று ராஜா மாதிரி உயர்ந்த ஸ்தானத்திலிருப்பவனுக்குச் சொல்வது ஆதேசம். கேட்பவனின் நல்லதற்காகவே குரு என்பவர் சிஷ்யனுக்குச் சொல்வது உபதேசம்.

ஸ்தானத்தில் ராஜாவுக்கும் ப்ரஜைக்கும் இருப்பதை விடவும் குரு சிஷ்யர்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வு ஜாஸ்தி. குரு என்பவர் ஈச்வரனின் ஸ்தானத்திலேயே வைக்கப் பட்டிருப்பவர். ஒரு ப்ரஜை ராஜாவுக்குக் கட்டுப் பட்டிருப்பதை விடவும் சிஷ்யன் குருவிடம் அடங்கிக் கட்டுப்பட்டிருக்க வேண்டியவன்.

ஆனாலும் 'ஆதேசம்'என்பதன் கண்டிப்பு இல்லாமல், குரு செய்வதற்கு 'உபதேசம்'என்று மாதுர்யத்தை, ப்ரேமையை (மதுரம் மதுரம் என்றால் தேனும், சர்க்கரையுந்தானா மதுரம்?எல்லாவற்றையும் விட மதுரம் ப்ரேமைதான். அப்படிப்பட்ட ப்ரேமையை)த் தெரிவிப்பதாகப் பெயர் கொடுத்திருக்கிறது.

---

## ' உப ' என்பதன் உட்பொருள்

'உப'என்பதோடு 'தேசம்'என்பதைச் சேர்த்திருக்கிறது. 'தேசம்'என்பதை வினைச்சொல்லான 'திச்'சிலிருந்து derive பண்ணினால், ஒருத்தர் செய்ய வேண்டியதைச் சொல்வது. ஆனாலும் அப்படி ஒரு வார்த்தை இல்லை என்றும், 'ஆ"ஸந்', 'உப'என்று முன்னடை - prefix சேர்த்துக் கொண்டு தான் 'தேசம்'என்பது வரும் என்றும் சொன்னேன், அவற்றில் 'உப' வைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

'உப'என்பது பல அர்த்தங்களைக் கொடுப்பது. நாம் நினைக்கக் கூடியது, ஸ்தானத்தில் ஒன்றைவிடக் குறைந்த இன்னொன்றுதான் 'உப'என்று ஜனாதிபதி- உபஜனாதிபதி, அங்கம் - உபாங்கம், கதை -உபகதை என்றெல்லாம் இருப்பதைப் பார்த்து. அப்படியும் அர்த்தமுண்டானாலும், இன்னம் பலதும் (பலவும்) உண்டு. ஒன்றைவிட ஜாஸ்திச் சிறப்புள்ளதற்கேகூட 'உப'போடுவதுண்டு. 'பரார்த்தம்'என்பது ஒரு மிகப் பெரிய நம்பர்;1 போட்டு அப்புறம் 17 ஸைபர் போட்டால் கிடைக்கும் நம்பர். பகவானின் அனந்த கல்யாண குணங்கள் அதையும்விட ஜாஸ்தி என்பதை 'உப பரார்தேர்-ஹரேர்-குணா:' என்று சொல்லியிருக்கிறது.

'உப'என்பதற்கு இருக்கும் பல அர்த்தங்களில் இன்னொன்று, 'கிட்ட'. 'அருகில்'என்பதாகும். 'உபநயனம்'என்று பூணூல் கல்யாணத்தைச் சொல்வதற்கு அர்த்தம் 'அருகில் கொண்டு போய் சேர்ப்பது'. யாருக்கு அருகில் என்றால் குருவுக்கு அருகில். பூணூல் போட்டுப் பிள்ளையை அத்யயனத்திற்காக குருகுல வாஸத்தில் விட்டு விட வேண்டுமென்பதால் அப்படிப் பேர். 'உப'நயனத்தில் ஒரு பையனுக்கு 'உப'வீதத்தை (பூணூலை)ப் போட்டு, அவனுக்காகப் பொறுப்பெடுத்துக் கொள்ளும் குரு செய்வது 'உப'தேசம். அந்த குருவையே பொதுவாக உபாத்யாயர் ('உப'அத்யாயர்)

என்றுதான் சொல்கிறோம். ஒரு குரு தரக்கூடிய உபதேசத்தில் உச்சமாக முடிவது எது என்றால் 'உப'நிஷத்!இப்படி உயர்வு பொருந்திய எல்லாம் 'உப'ஸம்பந்தமுள்ளதா.ய் இருக்கிறது!

'உபநிஷத்'என்னும் போது 'உப'என்றால் ப்ரஹ்ம வித்யையை ஆச்ரயித்து;அதாவது அதனை 'அடுத்து', 'அணுகி', 'ஸமீபித்து'என்று ஆசார்யாள் கடோபநிஷத் பாஷ்யத்தை ஆரம்பிக்கும்போது சொல்லியிருக்கிறார். ('உபநிஷத்'என்பதில்) 'உப'வுக்கு அப்புறம் வரும் 'நி'என்பதற்கு வித்யையில் 'நிச்சய நிஷ்டை கூடி'என்று அர்த்தம் என்றும், முடிவாக வரும் 'ஸத்'என்பது அப்படிக் கூடுவதால் ஏற்படும் அஞ்ஞான அழிப்பைக் காட்டுவதாகவும் சொல்லியிருக்கிறார். 'ஸத்'என்பது 'அழிப்பது'என்று மட்டுமில்லாமல் 'ஒன்றைச் சென்றடைவது'என்றும் அர்த்தம் கொடுக்கும் என்று சொல்லி, அப்படிப் பொருள் கொண்டால் 'வித்யையை ஆச்ரயித்து, நிஷ்டை கூடி ப்ரஹ்மத்தைச் சென்றடைவதே உப-நி-ஷத்'என்று சொல்லியிருக்கிறார்.

ஆக, 'உப'என்பது ஒன்றின் கிட்டே போயிருப்பதைக் காட்டும். குருவின் 'கிட்டே'என்னும்போதே ஒரு நெருக்கம், ப்ரியம், ப்ரேமை உண்டாகிவிடுகிறது. பல தினுஸான மோக்ஷங்களில்கூட பகவானுக்கு ஸமீபத்தில் இருப்பதையே 'ஸாமீப்ய மோக்ஷம்'என்ற பெரிய ஆனந்த நிலையாகச் சொல்லியிருக்கிறது.

'உபதேசம்'என்னும்போது, குரு எதைச் செய்யச் சொல்கிறாரோ அதை சிஷ்யனே செய்யும்படி விட்டுவிடாமல், அவரும் கிட்டத்தில், பக்கத்தில் நின்று ஸஹாயம் பண்ணிச்

செய்விக்கிறார் என்று தொனிக்கிறது.

அன்பினால் சிஷ்யன் ஹ்ருதயத்தில் குரு கிட்டேயிருந்து சொல்லிக் கொடுப்பது 'உப'தேசம்.

அவர் ஒன்றைச் செய்யச் சொல்கிறார் என்றால் அந்த ஒன்று என்ன?அதுதான் முக்யமான விஷயம். அதைச் சொல்லாமல் எதையோ சொல்லிக் கொண்டிருக்கிறேன். வாழும் வழிதான் அவர் சொல்லித் தருவது. 'வாழ்க்கைப் பாதையில் இன்ன டைரக்ஷனில் போ!'என்பதுதான் அவர் கொடுக்கும் டைரக்ஷன்!உத்தம குரு கொடுக்கும் உபதேசம் இந்த

லோகத்திற்கான அநித்யமான வாழ்க்கைப் பாதையோடு முடிந்து விடாது. இதைக் கொண்டே நித்ய வாழ்க்கையான ப்ரஹ்மாநுபவத்தில் சேர்வதில்தான் அவர் முடிப்பார். அதற்காக சிஷ்யன் செய்ய வேண்டியதைச் செய்யும்போது அவரும் ஸ்தூலமாகவோ ஸூக்ஷ்மமாகவோ கூடவேயிருந்து அவனுக்குப் பக்க பலம் கொடுத்துத் தாம் சொல்வதை உபதேசமாக்குவார்.

உபகாரம் என்ற இடத்தில் உப என்பது அன்பையும் அக்கறையையும், தான் கஷ்டப்பட்டாவது இன்னொருவருக்கு நல்லது செய்யும் குணத்தையும் காட்டுகிறது. 'உபசாரம்'என்கிறபோதே பக்தியையும் மரியாதையுணர்ச்சியையும் தெரிவிப்பதாக 'உப'இருக்கிறது. குரு

உபதேசம் செய்யும்போது சிஷ்யனிடம் அன்பையும் அக்கறையையும் காட்டி, தன்னுடைய ச்ரமத்தைப் பார்க்காமல் அவனுக்கு எடுத்துச் சொல்லி விளக்கி உபகாரம் செய்கிறார். அதே ஸமயம் தாம் சொல்லிக் கொடுக்கும் வித்யையிடம் மரியாதையுடன், பக்தியுடன் இருந்து போதனையையே வித்யாதிதேவதைக்கு ஒரு உபசாரமாகவும் பண்ணுகிறார்.

நான் இப்போது பேசுவதை 'உபந்யாஸம்'என்கிறீர்கள். இதில் உப என்றால் என்ன, ந்யாஸம் என்றால் என்ன?ந்யாஸத்திற்கு அநேக அர்த்தங்கள் உண்டு. 'வைப்பது', 'பதிந்து வைப்பது' என்று ஒரு அர்த்தம். 'விட்டு விடுவது' என்று ஒரு அர்த்தம். 'ஸந்-ந்யாஸம்'என்றால் நன்றாக விட்டுவிடுவது, துறவு பூணுவது. 'கொடுப்பது'என்றும் இன்னொரு அர்த்தம். 'விஷயங்களை நன்றாகக் கொடுப்பது'என்ற அர்த்தத்திலேயே 'உபந்யாஸம்'என்கிறோம். வாய்ப் பேச்சால் கொடுப்பதை உபந்யாஸம் என்று வடக்கத்திக்காரர்கள் சொல்வதில்லை;எழுத்திலே எழுதிக் கொடுப்பதையே அப்படிச் சொல்கிறார்கள். நாமோ எழுத்தில் இருக்கும் வ்யாஸத்தை, கட்டுரையை அப்படிச் சொல்லாமல் வாய்ப் பேச்சையே 'உபந்யாஸம்'என்கிறோம். எதுவானாலும் சரி, 'ந்யாஸ'த்திற்குக் கீழ் ஸ்தானமாக 'உபந்யாஸம்'இல்லை. ஸாதாரணமாகக் கொடுக்கும் ந்யாஸத்தை இன்னம் உயர்ந்த முறையில் செய்வதே உபந்யாஸம். - அதாவது அதைவிட இது மேல் ஸ்தானம்.

உபதேசம் என்பதும் இவ்வாறே 'இப்படிச் செய்'என்று கட்டளையிட்டு வழிகாட்டுவதை உயர்ந்த முறையில் செய்வது என்று சொல்லலாம். இப்படி உபதேசம் பண்ணுபவரை உபதேசகர் என்று சொல்கிறோம். உபந்யாஸம் செய்பவர் உபந்யாஸகர் என்பது போல உபதேசம் செய்பவர் உபதேசகர்.

---



## இரு பொருளிலும் ' தேசிகர் '

அந்த உபதேசகரைத்தான் 'தேசிகர்'என்றும் சொல்வது. குரு என்றும் ஆசார்யர் என்றும் சொல்லப்படுகிறவருக்கு இப்படியும் ஒரு பெயர். அவர் வழிசொல்லி கொடுத்தக் கட்டளையிடுவதற்கு 'தேசம்'என்ற பெயரைத் தராமல் 'உப'சேர்த்தே சொன்னாலும், அவரைக் குறிப்பிடும்போதோ 'உபதேசகர்'என்பது போலவே, 'உப'போடாமல் 'தேசகர்'என்றும் வார்த்தை உண்டு. ஆனால் அதைவிடப் பிரபலமான பேர் 'தேசிகர்'என்பதே.

இடத்தை வைத்து ஏற்பட்ட தேசம் (நாடு) விஷயமாகவும் தேசிகர் என்று வார்த்தை உண்டு. அப்போது தேசிகர் என்பதற்கு ஸ்வதேசி, ஒரு தேசத்தை தமது பிறப்பிடமாகக் கொண்டவர், native என்று அர்த்தம். ஒரு தேசத்தின் நாலா இடங்களையும் அறிந்திருந்து வழி சொல்லக்கூடிய guide-க்கும் தேசிகர் என்று பெயருண்டு.

ஆனாலும் ஆத்ம வாழ்க்கைக்கு guide-ஆக உள்ள உபதேசகரான குருவையே முக்யமாக அந்த வார்த்தையால் குறிப்பிடுகிறோம். 'திச்'என்ற வினைச் சொல்லின் அடிப்படையில் கற்றுக் கொடுத்துக் கட்டளை பண்ணுவதால்

தேசிகராக இருப்பவர் வாழ்க்கைப் பயணத்தில் எந்த திசையில் எந்த வழியில் போக வேண்டும் என்றும் guideபண்ணுவதால் 'திச்'சைப் பெயர்ச் சொல்லாகக் கொண்டு உண்டான தேசிகராகவும் இருக்கிறார்.

கூடவே வந்து வழி காட்டும் guide என்பதால், 'உப'சேர்க்காமல் தேசிகர் என்றே சொன்னாலுங்கூட கிட்டக்கவே இருப்பவர் என்றாகிவிடுகிறது. மரியாதை ஸ்தானத்தில் நாம் மேலே பட்டுவிடாமல் விலகி நிற்க வேண்டியவர்;ஆனாலும் ப்ரியத்தினால் கிட்டவே இருக்கிறார்.

---



## ஒட்டுறவைக் காட்டும் பதம் !

குரு, ஆசார்யர், தேசிகர் என்று மூன்று வார்த்தை இருப்பதில் குரு என்றால் பெரியவர் என்று ஒரு அர்த்தமும் இருட்டை (அஞ்ஞான இருட்டை)ப் போக்குகிறவர் என்று ஒரு அர்த்தமும் இருக்கின்றன. ஆசார்யர் என்றால் ஆசாரம் என்பதாக ஒரு ஸம்ப்ரதாயத்தில் தொடர் வழக்கில் வந்துள்ள உயர்ந்த வழிகளைத் தானும் பின்பற்றி, சிஷ்யனையும் பின்பற்ற வைக்கிறவர் என்று அர்த்தம். இந்த இரண்டிலுமே அவர் செய்கிற முக்யமான கார்யமான உபதேசம் என்பதைக் காட்ட ஒன்றுமில்லை. தேசிகர் என்ற வார்த்தைதான் அதைக் காட்டுவதாக இருக்கிறது. பெரியவர், அஞ்ஞான இருட்டைப் போக்குகிறார், உசந்த வழிகளைப் பின்பற்றுகிறார் என்பதெல்லாமே சின்னவர்களாக இருக்கிற சிஷ்யர்களிடமிருந்து அவர்களை ரொம்பவும் வேறுபடுத்தி எட்ட நிறுத்தி விடுகின்றன. ஒரு தேசத்தில் guide என்பவன் கூடக் கூட வந்து எந்த இடத்தில் என்ன அழகு இருக்கிறது என்று காட்டுகிறது போல, என்ன ஆபத்து இருக்கிறது என்றும் சொல்லி நல்ல வழியாகவே அழைத்துப் போவது

போல, தேசிகர் என்னும் போதுதான் நம்மோடு ஒட்டியிருந்து கூடவே வழிகாட்டியாக வந்து நாம் இஹ லோக ஆபத்தில் மாட்டிக் கொள்ளாமல் ரக்ஷித்து, ஆத்ம லோகத்திலுள்ள அழகுகளை அநுபவிக்கும்படியாக உபதேசம் பண்ணுகிறவரின் ப்ரேம பாந்தவ்யத்தைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

---



## அன்னை தந்தைக்கும் மேல் ஆசானே !

அவர் பண்ணும் உபகாரம் யாரும் பண்ண முடியாது.

'கடைத்தேற வேண்டுமானால் அம்மா நமக்கு சரணமாக மாட்டாள். (அதாவது அம்மாவிடம் அடைக்கலம் புகுந்தால் அவளால் நம்மை மாயைக்கு அந்தண்டை தூக்கிப் போட முடியாது. நம்மிடம் எவ்வளவோ ப்ரியம் காட்டி நமக்காக எத்தனையோ த்யாகங்களெல்லாம் செய்கிறவள்தான் அவள் என்றாலுங்கூட அவளும் மாயைச் சேற்றில்தான் இருப்பவளா ாகையால் அதிலிருந்து நம்மை அவளால் தூக்கிப் போட முடியாது. தூக்கினால் பளு கூடுவதில் இரண்டு பேரும் இன்னம் புதைவதாகத்தான் ஆகும். அதே மாதிரிதான் அப்பாவும் சரணமாக மாட்டார். கூடப் பிறந்தவர்கள், மற்ற பந்துமித்ரர்கள் எவரும் சரணமாக மாட்டார்கள். குருபாதம் தான் சரணம் என்று ஆசார்யாள் நெஞ்சைத் தொடுவதுபோலச் சொல்கிறார்.

சரணம் ந பவதி ஜநநீ

ந பிதா ந ஸோதுராச்சாந்யே|

சரணம் தேசிக சரணம்.

'ச(sa) ரணம் தேசிக ச(cha)ரணம்'.Saranam என்றால் அடைக்கலம்;Charanam என்றால் பாதம். 'அடைக்கலம் குரு

பாதமே' என்பதை 'ச(sa)ரணம் தேசிக ச(cha)ரணம்'என்று சொல்லியிருக்கிறார். ஆசார்யாள் இங்கே தேசிக என்ற வார்த்தையை குருவுக்குப் போட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். அவர் இப்படிச் சொல்லியிருப்பதைத்தான் அவரையே தோடகாச்சார்யாள் ஸ்தோத்ரம் செய்தபோது 'பவ சங்கர தேசிக மே ச(sa)ரணம்'என்று திருப்பியிருக்கிறார்?

தாயார் தகப்பனார்கள் இஹ லோகத்தில் ஜன்மாவைக் கொடுத்து, இந்த லோகத்தில் நன்றாக வாழப்பண்ணி, இந்த லோகத்துக்கான ஸொத்தைக் கொடுப்பார்கள். ஆனால் இதெல்லாம் நிலையில்லாதவை. நிலையான சொத்தை- என்றும் அழியாத ப்ரஹ்மாநுபவத்தைத் தருபவர் குருதான். 'ஸொந்தப் பிள்ளையாட்டமா நெனச்சு ஆத்ம வித்யையை உனக்குக் கொடுத்திருக்கேம்பா', 'ஸ்வஸூதவத் அஸக்ருத்-த்வாம் பாவயித்வா': 'ஸொந்தப் புத்ரனாக பாவித்து திரும்பத் திரும்ப (உபதேசித்திருக்கிறேன்)'என்று குரு சிஷ்யனிடம் உபதேச முடிவில் சொல்வதாக ரொம்பவும் touching-ஆக 'விவேக சூடாமணி'யில் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். இந்த ச்லோகத்திற்கு ஒரு பாடபேதம் இருக்கிறது. அதன்படி 'தத்துலம் அஸக்ருத்-த்வம் பாவயேதம்'என்று இருக்கிறது. அதாவது சிஷ்யனிடம் குரு. 'ஈடிணை இல்லாத இந்த உபதேசத்தை நீ திரும்பத் திரும்ப பாவனை பண்ணிக் கொண்டிரு'என்று சொல்வதாய் அர்த்தமாகும். எனக்கென்னவோ அதைவிட குரு தாமே சிஷ்யனுக்குத் தாயும் தந்தையுமாகி, அலுக்காமல், சலிக்காமல் அவனுடைய உள்ளத்தில் நன்றாகப் பதியும் வரையில் திரும்பத் திரும்ப உள்ளத்தில் நன்றாகப் பதியும்வரையில் திரும்பத் திரும்ப உபதேசம் செய்வதாகச் சொல்லிக் கொள்ளும் பாடம்தான் ச்லாக்யமாகத் தோன்றுகிறது. 'திரும்பத் திரும்ப'என்பதைத்தான் 'அஸக்ருத்'என்று சொல்லியிருக்கிறது.

---

## ஆசாரிய தர்மம்

சிஷ்யனுக்குப் புரிகிறமட்டும் திரும்பத் திரும்ப உபதேசிக்க வேண்டியது ஆசாரிய தர்மம் என்று ஆசார்யாள் அபிப்ராயப் பட்டிருப்பதை கீதா பாஷ்ய முடிவிலேயும் தெரிவித்திருக்கிறார். கீதை உபதேசம் முடிந்த பிற்பாடு பகவான் அர்ஜுனனிடம், 'நான் சொன்னதையெல்லாம் மனஸு குவிந்து ஸரியாகக் கேட்டுக் கொண்டாயா?'என்று விசாரிக்கிறார். ஏன் அப்படிக் கேட்டாரென்று ஆசார்யாள் பாஷ்யம் பண்ணுமிடத்தில், 'தாம் சொன்னதை சிஷ்யன் பிடித்துக் கொண்டானா, இல்லையா என்று தெரிந்து கொள்வதற்காகவே பகவான் இப்படிக் கேட்பது. 'அப்படி இவன் பிடித்துக் கொள்ளவில்லையானால் நாம் மறுபடி வேறேதாவது உபாயம் பண்ணியாவது பிடித்துக் கொள்ளப் பண்ணணும்'என்ற அபிப்ராயத்தில் தான் கேட்கிறார்' என்று சொல்லி, அதற்கு மேலும் 'சிஷ்யன் உபதேச லக்ஷ்யத்தைப் புரிந்து கொண்ட க்ருதார்த்தனாக ஆவதற்குப் பல விதங்களில் முயற்சி பண்ண வேண்டியது ஆசார்ய தர்மம்'என்று சொல்லியிருக்கிறார். ஆசார்யாள் ஹ்ருதயத்தை அநுஸரித்தே அவருடைய பாஷ்யங்களுக்கு "டீகை'என்னும் விளக்கவுரை எழுதியவர் ஆனந்தகிரி. அவர் இங்கே, புத்தி மந்தத்தினால் உபதேசத்தை ஸரியாகப் பிடித்துக் கொள்ள முடியாத சிஷ்யனையும் ஆசார்யன் அலக்ஷ்யம் பண்ணிவிடாமல் விஷயத்தை நன்றாக எடுத்துச் சொல்லணும் என்பதே தாத்பர்யம் என்று காட்டியிருக்கிறார்.

தாயார் எப்படிச் சாப்பாடு இறங்காத குழந்தைக்கு விளையாட்டு கிளையாட்டு காட்டி எப்படியாவது உள்ளே ஆஹாரத்தைப் போட்டுவிடுகிறாளோ அப்படி உபதேசம் இறங்காத சிஷ்யனுக்கும் குருவானவர் எப்பாடு பட்டாவது உள்ளே இறக்குகிறாரென்றால் அவருடைய அபார கருணை தெரிகிறது. அம்மா போடும் சாப்பாடு அந்த வேளைக்குத்தான் ப்ரயோஜனமாவது. அடுத்த வேளை மறுபடி பசி வந்துவிடுகிறது, பலம் குறைகிறது. குரு செய்யும் உபதேசமோ அம்ருதமாக, சாச்வதமான ஆத்ம புஷ்டியைக்

கொடுத்து விடுகிறது.

அம்மாவின் சாப்பாட்டை விட சாச்வதமானது, அப்பாவின் ஸொத்தைவிட சாச்வதமானது குரு கொடுக்கும் உபதேசம்தான்.

---



## அன்னை தந்தையர் பெருமை

இப்படிச் சொன்னதால் அம்மா அப்பா உபயோகமில்லை என்று தள்ளிவிடக் கூடாது. முதலில் அவர்களைச் சொல்லி 'தேவோ பவ'என்ற அப்புறந்தான் வேதம் 'ஆசார்ய தேவோ பவ'சொல்கிறது. இன்னொன்று கூட அம்மா அப்பாவும் முதலில் ஒவ்வொரு விதத்தில் குருமார்களாக இருந்துதான் உபநயனத்தின் போது குரு என்றே சொல்லப்படுபவரிடம் பிள்ளையை ஒப்படைக்கிறார்கள். அதைப் பற்றி கொஞ்சம் சொல்ல வேண்டும்.

'ஆசார்யவான்'என்று ஒரு வார்த்தை உண்டு. 'நல்லாசிரியனை உடைய ஸச்சிஷ்யன்'என்று அதற்கு அர்த்தம். 'ஆசார்யவான் புருஷோ வேத'என்று சாந்தோக்யத்திலிருக்கிறது. நல்லாசானை உடைத்தாயுள்ள மனிதனே ஞானம் அடைகிறான்'என்று அர்த்தம். 'ஆசார்யவான்'என்ற இந்த வார்த்தைக்கு முன்னாடி 'மாத்ருமான்' 'பித்ருமான்'என்ற இரண்டு வார்த்தையையும் போட்டு ப்ருஹதாரண்யத்தில் மந்த்ரங்கள் இருக்கின்றன. யாக்ஞவல்கிய மஹரிஷியிடம் ஜனகர் தமக்குப் பல குருமார்கள் செய்த உபதேசங்களை ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு போகிறார். அப்போது அந்த ஒவ்வொரு குருவும் உபதேசித்தது ஸரிதான் என்று யாக்ஞவல்கியர் அப்ரூவ் பண்ணும்போது, அந்த ஒவ்வொருத்தரைப் பற்றியும், மாத்ருமானாகவும்,

பித்ருமானாகவும் ஆசார்யவானாகவும் இருக்கப்பட்ட ஒருவர் எப்படி உபதேசிக்க வேண்டுமோ அப்படி இவர் உபதேசித்திருக்கிறார் என்று பாராட்டிச் சொல்வதாக அந்த உபநிஷத்தில் இருக்கிறது. இதற்கு ஆசார்யாள், ஒரு தாயாரால் ஸரியானபடி புத்திமதி கற்பிக்கப் படுபவனே மாத்ருமான் என்றும் அப்படிக் குழந்தையாயிருக்கும்போது தாயார் செய்த பிறகு கொஞ்சம் விவரம் தெரிகிற ஸமயத்தில் தகப்பனாரால் அதேபோல் நல்வழியில் செலுத்தப்படுபவன் 'பித்ருமான்'என்றும் அதற்குப் பிறகு உபநயனத்திலிருந்து குருகுல வாஸம் முடியும்வரை ஆசார்யரால் நல்வழி கற்பிக்கப்படுபவனே ஆசார்யவான் என்றும் பாஷ்யம் செய்திருக்கிறார். இப்படி மூன்று காரணபூதர்களால் பரிசுத்தி செய்யப்பட்ட 'சுத்தித்ரய ஹேது ஸம்யுக்தன்'தான் பிற்காலத்தில் தானும் 'ஸாக்ஷாத் ஆசார்யன்' என்னும்படி அவ்வளவு யோக்யதையுடன் கூடிய குருவாகிறான்;அவன்தான் சாஸ்த்ர ப்ரமாணத்திலிருந்து வழுவாமல் சொல்லிக் கொடுப்பான் என்று ஏற்றம் கொடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆக, எட்டு வயஸில் குருகுலவாஸத்தில் சேர்கிறதற்கு முன்னாலேயே ரொம்பப் பிஞ்சாக இருக்கிற குழந்தையை நயமாகவும் பயமாகவும் நல்ல வழியில் நடத்தும் ஆசார்ய பொறுப்பை தாய் தந்தையர்களும் வஹிக்கிறார்கள் இதுவே ப்ருஹதாரண்யகத்தில் லேசாகக் காட்டப்பட்டு ஆசார்யாள் ப்ரகாசம் பண்ணி எடுத்துச் சொல்லியுள்ள விஷயம்.

கடோபநிஷத்தில் இதைவிடவும் லேசாக, 'ஹின்ட்'பண்ணுவதாக மட்டும், இந்த விஷயம் வருகிறது. அக்னி வித்யையை யமதர்மராஜா நசிகேதஸுக்கு உபதேசம் செய்கிறார். செய்து விட்டு, 'மூன்று தடவை இந்த க்ரியையைப் பண்ணி, மூன்றுடன் ஸம்பந்தப்பட்டு முத்தொழில் புரிபவன் ஜனன மரணங்களைக் கடக்கிறான்'என்று சொல்கிறார்.

ஸாதாரணமாக ப்ராம்மணனை ஆறு தொழில்கள் சிறப்பாகச் செய்யும் 'ஷட்கர்ம நிரதன்'என்றே சொல்வது. திருவள்ளுவர் போன்றவர்களும் 'அறு தொழிலோர்' என்று சொல்லியிருக்கிறார்கள். தான் வேதம் ஓதுவது-பிறருக்கு ஓதுவிப்பது, தான் யாகம் பண்ணுவது-பிறருக்கும்

பண்ணுவிப்பது, ஸத்பாத்திரத்திடமிருந்து தான் தானம் வாங்குவது. ஸத்பாத்திரத்திற்குத்தான் தானம் கொடுப்பது என்று ஆறு தொழில்கள். இதில் தான்-பிறர் என்று வரும் இரட்டைக் காரியங்கள் ஒவ்வொன்றையும் ஒன்றாக வைத்துக் கொள்ளும்போது ஆறு தொழிலே முத்தொழிலாகி விடுகிறது. அதைத்தான் இங்கு சொல்லியிருக்கிறது. ஆனால்

நமக்கு விஷயம் இந்த முத்தொழில் இல்லை.

'மூன்றுடன் சம்பந்தப்பட்டு', 'த்ரிபிரேத்ய'என்ற (மூலத்தில்) இருப்பதுதான் நமக்கு விஷயம். யமன் உபதேசித்த அக்னி காரியத்தை எந்த மூன்றுடன் ஸம்பந்தப்பட்டவன் மூன்று தடவை பண்ணி, ஷட்கர்ம நிரதனாயிருந்து ஜனன மரணங்களை கடக்கிறான்?வெறுமே மூன்று என்று சொல்லி உபநிஷத் விட்டிருக்கிறது. இதற்கு பாஷ்யம் பண்ணும்போது ஆசார்யாள், 'மாதா, பிதா, ஆசார்யன் ஆகிய மூன்று பேருடன் ஸம்பந்தப்பட்டு - அதாவது அந்த மூன்று பேராலும் நல்ல வழி கற்பிக்கப்பட்டு என்பதுதான் 'த்ரிபிரேத்ய'என்று தெளிவுபடுத்தியிருக்கிறார். சான்றாக 'மாத்ருமான், பித்ருமான், ஆசார்யவான்'என்று ப்ருஹதாரண்யத்தில் வருவதையும் காட்டியிருக்கிறார். வேறே இரண்டு, 'மூன்று'களையும் சொல்லி, யமன் சொல்வது அதுவாகவுமிருக்கலாம் என்கிறார். ஆனால் முதலில் அவர் சொல்வது தாய், தந்தை, குரு மூன்று பேராலும் நல்வழி கற்பிக்கப் படுவதைத்தான்.

எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் அம்மா சரணமில்லை, அப்பா சரணமில்லை, குருதான் சரணம் என்று ஆசார்யாள் சொல்கிறாரென்பதால் நாம் குருவுக்கு சரணாகதி பண்ணாவிட்டாலும், அம்மா அப்பாவை கழித்துக் கட்டுவதையாவது பண்ணி விடலாம் என்று யாரும் புறப்படாமலிருப்பதற்குத்தான்!ஏற்கெனவே லோகத்தில் மாத்ரு பக்தி, பித்ரு பக்திகள் ரொம்பவும் க்ஷீணமாகி விட்டிருக்கிறது. நிமீஸீமீக்ஷீணீமீ வீக்ஷீஸீ ரீணீஜ், அது இது என்று ஸமாதானமும் சொல்லியிருக்கிறது!இந்த நிலைமையில், ஆசார்யாள் சொன்னதில் நாமும் ஒன்றையாவது செய்ததாக இருக்கட்டும் என்று யாராவது அம்மா அப்பாவை கழித்துக் கட்ட அவர் வாக்கை ஆதாரமாக எடுத்துக் கொண்டுவிடப் போகிறார்களே

என்பதற்காகச் சொன்னேன்.

ஆத்ம லோகத்தில் கை தூக்கிவிட அம்மா அப்பாவிடம் முட்டிக் கொண்டு ப்ரயோஜனமில்லை என்ற அர்த்தத்தில் அவர் சொன்னதை, இந்த லோக விஷயமாகப் பண்ணிக் கொண்டால் அது அடியோடு தப்பாகி விடும். தாய் தந்தையிடம் எந்நாளும் பக்தி, விச்வாஸம், நன்றிகளோடுதான் இருக்க வேண்டும். ஆனாலும் ஆத்மாவை ரக்ஷித்து அதைப் பரம லட்சயத்தில் சேர்ப்பிப்பதற்கு அவர்களிடம் போய் நிற்காமல், குரு சரணத்தில் தான் போய் விழ வேண்டும்.

சரீரத்தை வளர்ப்பதையே அம்மா-அப்பா முக்யமாகப் பண்ணி, கொஞ்சம் நல்ல வழியும் சொல்லிக் கொடுப்பார்கள். நல்ல வழியேஏஏ சொல்லிக் கொடுப்பவர், ஆத்மாவையேஏஏ கவனித்து அதற்கான நல்ல வழியே சொல்லிக் கொடுப்பவர் ஆசார்யன்தான்!

அப்படி நல்ல வழி உபதேசித்து, கூடவே அவரும் ரீஹுவீபீமீ-ஆக அந்த வழியில் வருகிற பரமோபகாரத்தை வைத்து அவருக்குக் கொடுத்துள்ள பேர்தான் தேசிகன். அப்பா-அம்மா நமக்காக எத்தனையோ செய்தாலும் நம் ஆத்ம விஷயத்தில் அவர்களுடைய ஆசாபாசத்தினால் நம்மையும் திசை தவறுமாறுகூடப் பண்ணுவதாகவே நிறையப் பார்க்கிறோம். 'கல்யாணம் பண்ணிக் கொள்வதில்லை. ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று தங்கள் ஸந்ததி இருந்தால் அவர்களுக்கு ஏற்பதேயில்லை. பிள்ளை நிறைய ஸம்பாதிக்கணும் அவனுக்குத் தங்கள் நிறைய ஸொத்து வைத்துவிட்டுப் போக வேண்டும் என்றெல்லாம் ஆத்மாபிவிருத்திக்கு ஹானியான ஸமாசாரங்களையே அவனுக்குச் சேர்த்துக் கொடுக்கிறார்கள். ஒரு விரதம், உபவாஸம் பிள்ளை இருந்தால்கூட, இப்பவே பிடிச்சு ஏதுக்கு இதெல்லாம்?என்று கலைக்கிற மாதா பிதாக்கள் பலபேர். ஆகையால் அவர்களுடைய வாத்ஸல்யம், தியாகம் முதலியவற்றுக்காக நாம் அவர்களிடம் எந்நாளும் நன்றிக் கடன் பட்டு

நமஸ்காரம் பண்ணத்தான் வேண்டுமென்றாலும், அவர்கள் நம்மிடமுள்ள ஆசையாலேயே ஆத்ம மார்க்கத்தில் நம்மை திசை தவறச் செய்வதால் இங்கே தேசிகனைத்தான் ஒரே பிடி

என்று பிடித்துக் கொள்ள வேண்டும்.

ஆசை, திசை என்று சொன்னதில் வேடிக்கையாக ஒன்று நினைவு வருகிறது. 'திச்'சுக்கு இரண்டு இரண்டு அர்த்தமுண்டு என்றேனல்லவா?அப்படியே 'ஆசா'என்பதற்கும் இரண்டு அர்த்தமுண்டு. ஒரு அர்த்தம் எல்லோருக்கும் தெரிந்தது - 'ஆசா பாசம்'என்று சேர்த்துச் சொல்லும் அஞ்ஞானமான ப்ரியம். இன்னொரு அர்த்தம் திசை என்பதே. ஆசா என்றால் திசை என்றும் அர்த்தம். இதை வைத்து ராஜ கலியாண போஜன் 'ராமாயண சம்பூ'வில் ஒரு சிலேடை பண்ணியிருக்கிறான். அகஸ்திய மஹரிஷி ஹிமய மலையிலிருந்து தெற்கு திசைக்கு வந்து அங்கேயே நித்யவாஸம் செய்வது தெரிந்திருக்கலாம். இதைப் பற்றி சொல்லும்போது போஜன், "அபாஸ்த ஸமஸ்தாசம் அப்யுபகத தக்ஷிணாசம்'என்று சிலேடை செய்கிறான் - எல்லா ஆசைகளையும் துறந்தவராயினும் அகஸ்தியர் தக்ஷிண ஆசையை அடைந்தார்'என்கிறான்!தக்ஷிண ஆசை என்னும் இடத்தில் 'ஆசை என்றால் 'திசை' என்று அர்த்தம்.

ஒரு ப்ராம்மணன் ஏதோ வைதிக கார்யம் பண்ணினானாம். பண்ணி வைத்த வைத்தியர் சும்மா சும்மா தக்ஷிணை தக்ஷிணை என்று பிடுங்கி எடுத்தானாம். பிராம்மணனுக்குக் கோபம் வந்ததாம். 'தாக்ஷிண்யம் காட்டணும்;தாக்ஷிண்யம் காட்டணும்'என்று வாத்யார் சிலேடை பண்ணினாராம். 'தாக்ஷிண்யம்' என்பதை 'தக்ஷிணை கொடுக்கும் குணம்'என்று அர்த்தம் செய்யலாம். அப்படித்தான் அவர் சிலேடை செய்தது. அதை ரஸித்துப் பிராம்மணன் மறுபடி தக்ஷிணை கொடுத்தானாம். ஆனால் அதற்கப்புறமும் வாத்யார் பிடிக்குப் பிடி கேட்டுக் கொண்டே போனபோது பொறுக்கமுடியாமல் 'உம்ம தக்ஷிணை ஆசைக்கு முடிவேயில்லையா?'என்றானாம். 'எப்படி முடிவு இருக்கும்?ஆனானப்பட்ட அகஸ்த்யரே 'தக்ஷிணாசா'வில் முடிவில்லாமல் இருக்கிறாரே? (சிரஞ்சீவியாயிருக்கிறாரே!') என்று வாத்யார் மறுபடி சிலேடை பண்ணினார் என்று கதை -

ஸ்வய ஆசா பாசமுள்ளவர்களால் ஆத்ம மார்க்கத்தில் 'ஆசை-திசை-காட்ட முடியாது;திசை காட்டவே ஏற்பட்ட தேசிகன்தான் அதைச் செய்ய முடியும்.

அம்மா, அப்பா காட்டும் ப்ரியத்திற்கு, அவர்கள் செய்யும்

தியாகத்திற்கு குறைச்சலில்லாமல் சிஷ்யனிடம் அவரும் ஸ்வயக் கலப்பில்லாத ப்ரயம் காட்டுகிறார். த்யாகம் பண்ணுகிறார்.

---



## ஞானியின் வெள்ளரிப்பழ முக்தி

இந்திரஜாலமான இந்த த்வைத உலகம் அப்படியே வீழ்ச்சியடையும்படியான ப்ரௌடமான அநுபூதியில் இருக்கும் ஒரு மஹான், 'ப்ரௌடம்'என்றால் முற்றிக் கனிந்தது என்று அர்த்தம். 'ப்ரௌட ப்ரௌடம்'முற்றிக் கனிந்து காம்பையும் விட்டு விட்டது. ஆனாலும் இந்த இந்த்ர ஜால த்வைத லோகத்திலிருந்து அவர் 'இற்று விழுந்தார்' என்று சொல்வதுகூட அவ்வளவு ஸரியில்லை. அவருக்கு ஞானம் முற்றிக் கனிந்தவுடன் அவர் என்னமோ இற்றுப் போகிறது. விழுகிறது என்றெல்லாம்கூட பண்ணாமல் அவர் பாட்டுக்குத் தன்னுடைய அநுபூதி நிலையில்தான் ஸஹஜமாக இருந்தார். ஆனாலும் தானாகவே த்வைத லோக மாஜிக் - இந்த்ர ஜாலம் - அவரை விட்டு அந்தண்டை ஒடிவிட்டது. அதுவாகவே வீழ்ச்சியடைந்து விட்டது. ப்ரௌட ப்ரௌட நிஜாநுபூதிகளித த்வைதேந்த்ரஜால.

மாயையை விட்டு ஞானி விலகுகிறானென்றில்லாமல் ஞானியை விட்டே மாயை விலகுகிறது என்ற இந்த விஷயம் த்ரயம்பக மந்திரத்திலும் சொல்லியிருக்கிறது. 'பந்தத்திலிருந்து உர்வாருகம் மாதிரி விடுபடணும்'முக்கண்ணனான பரமேச்வரனைப் பிரார்த்திக்கும் மந்த்ரம் அது. பந்தம் என்பது ஸம்ஸார மாயை;அதுதான் த்வைத இந்திர ஜாலம். உர்வாருகம் என்பது வெள்ளரி.

வெள்ளரிப் பழம் மாதிரி விடுபட வேண்டும் என்றால் என்ன?சொல்கிறேன். அந்தப் பழம் முற்றிக் கனிந்த

பிற்பாடும் மற்றப் பழங்கள் மரத்திலிருந்து விழுகிறாற்போல் விழுவதில்லை. என்ன காரணமென்றால் அது பழுப்பது, காய்ப்பது எல்லாமே மரத்தில் இல்லை;கொடியில்தான். வெள்ளரி என்பது கொடியே தவிர செடியோ மரமோ இல்லை. அந்தக் கொடியையும் பந்தல் போட்டு படர விடும் வழக்கம் கிடையாது. முழுக்க பூ ஸ்பரிசம் இருந்தால்தான் அந்தக் கொடியின் வளர்ச்சிக்கு நல்லென்பதால் நிலத்திலேயேதான் படர விடுவது. அதனால் என்னவாகுமென்றால் ஒரு வெள்ளரிக்காய் நன்றாகக் கனிவதும் நிலமட்டத்தில்தான்;உசரக்க ஒரு கிளையிலோ, பந்தலிலோ இல்லை. இப்படிப் பழம் முற்றி கனிந்தவுடன் காம்பு தானே இற்றுப் போய்விடும். ஆனாலும் பழம் இருந்த இடத்திலேயேதான்

இருக்கும். ஏனென்றால் அதுதான் விழமுடியாமல் நில மட்டத்திலேயே இருக்கிறதே!கொடி பாட்டுக்கு படர்ந்து கொண்டே இருக்கும். அப்போது பழம் எந்த இலைப் பாகத்தோடும் காம்போடும் ஒட்டிக் கொண்டிருந்ததோ அவையும் அந்தண்டை நகர்ந்து போய்விடும். அதாவது காம்புதான் இதை விட்டு விலகிற்றே தவிர இது விலகுவது, விடுபடுவது என்ற கார்யத்தைக் கூடப் பண்ணுதில்லை.

இதே போலத்தான் - ஞானி ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதென்பது, அது ஒரு விருக்ஷம் மாதிரியும், இவன் அதில் முற்றிப் பழுத்து விழுவது மாதிரியும் இவன் அதில் முற்றிப் பழுத்து விழுவது மாதிரியும் இல்லை. ஞானத்தில் அவன் பழுத்த பழமான பின்னும் தான் பாட்டுக்கு இருந்தபடியேதான் இருப்பான். வெளியிலே கார்யம் பண்ணினாலும் உள்ளே அசலமாக, சலனமேயில்லாமல் தான் இருப்பான். ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு அப்புறம் மோக்ஷம் என்று எங்கேயோ ஒரு லோகத்திற்குப் போவது என்ற கார்யம் அவனுக்கில்லை.

த்வைதிகள் தான் அப்படி எங்கேயோ உள்ள ஒரு மோக்ஷத்திற்கு போவது. அத்வைத ஞானி இங்கேயே, இந்த லோகத்திலேயே, சரீரத்திலே இருப்பதாகத் தெரியும் போதே ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவன். அதுதான் விடுபட்ட நிலையான மோக்ஷம் என்பது. விடுபட்ட என்றாலும் இவன் ஒன்றும் விடுபடும் கார்யம் பண்ணவில்லை. இவன்

பண்ணியது ஆத்மாவே குறியாக விசாரம் செய்ததுதான். அதனால்

ஸாக்ஷாத்காரம் வந்து, தான் ஆத்மாவே என்று தெரிந்து கொண்டு அதுவாகவே இருப்பான். அப்போது பந்தம், ஸம்ஸார மாயை என்பது அதுவே கத்தரித்துப் போய்விடும். த்வைதம் நகர்ந்து ஓடிப்போய்விடும். வெள்ளரிப்பழம் பூமியிலே இருப்பது போல இவனும் லோகந்தில் முந்தி எங்கே இருந்தானோ அங்கேயே ஜீவன் முக்தன் என்ற பெயரில் தொடர்ந்தும் இருந்து கொண்டிருப்பதாகத் தெரியும்.

ஆனாலும் லோகத்தில் தனி ஜீவ மனஸின் வாழ்க்கை என்று வேரோடிப் படர்ந்திருந்த ஒரு கொடியோடு இவனுக்கு முந்தி இருந்த பிணைப்பு இப்போது கத்தரித்துப் போயிருக்கும். இவனாக விடுபடாமலே, இவனை விடுவித்துவிட்டு, அது ஓடிப் போயிருக்கும்!

இதுதான் வெள்ளரிப்பழ முக்தி!இது வழக்கமாக நான் சொல்வது. இதைக் கேட்டு விட்டு (இதற்கு) மேலேயும் ஒரு வித்வான் ஒன்று சொன்னார். ஆனால் 'மேலே'என்று இதோடு சேர்த்துக் கொள்ளும்படியாக அவர் சொல்லவில்லை. நான் சொன்னமாதிரியே, 'வெள்ளரிப்பழ முக்தி'என்பதற்கே இன்னொரு வித எக்ஸ்ப்ளனேஷனாக அவர் நினைத்து வந்ததைத்தான் சொன்னார். (அது) என்னவென்றால் - பழுத்த பழமாக இருந்த இடத்திலேயே கிடக்கும் வெள்ளரி அப்புறம் ஒருநாள் படாலென்று வெடித்து, என்ன ஆச்சு எங்கே போச்சு என்றே தெரியாமல் போய்விடுகிறதல்லவா?மற்ற பழங்கள் மாதிரி அது அழுகி, துர்கந்தம் பிடித்து, புழுத்து அற்றுப் போவதில்லையோல்லியோ?இப்படித்தான் ஞானம் என்பது ஒரு flash-ல் வந்தவுடனேயே மாயை அப்படியே பட்டென்று வெடித்துப் போய்விடுகிறது - கொஞ்சம் கொஞ்சமாக அழுகி அவிந்து போகாமல் ஒரே போட்டில் போன இடம் தெரியாமல் போய்விடுகிறதென்று தாம் அந்த மந்த்ரத்தைப் புரிந்து கொண்டு மற்றவர்களுக்கும் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணி வந்ததாக அவர் சொன்னார்.

'இருந்த இடத்திலேயே முக்தி என்று இதை நீங்கள் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணியிருப்பதே இன்னம் பொருத்தம்

என்று இப்போது தெரிகிறது. 'பந்தத்திலிருந்து விடுதலை'என்று மந்திரத்தில் வருவது ஸம்ஸாரக் கொடி பழத்தை விட்டு விலகி அதற்கு விடுதலை தருவதற்கே பொருத்தமாயிருக்கிறது. பழம் வெடிப்பதை 'விடுபடுவது'என்பது அவ்வளவு பொருத்தமாகத்தானில்லை'என்றார்.

அவர் அப்படிச் சொன்னாலும் எனக்கு அவர் நினைத்து வந்த விளக்கத்திலும் 'பாயின்ட்'இருப்பதாய் பட்டது. சித்தே (சற்று) யோசித்துப் பார்த்து நான் சொன்னதை அப்படியே வைத்துக் கொண்டு, அதற்கு மேலே அவருடைய அடிப்படைப் பாயின்டை - வெள்ளரிப் பழம் வெடித்துப் போய்விடுவதை - வேறே

மாதிரி அர்த்தம் பண்ணிச் சேர்த்து, நான் சொன்னது ஜீவன் முக்தி, அவர் சொன்னது அதற்கப்புறம் வரும் விதேஹ முக்தி என்று கம்ப்ளீட் பண்ணினேன்.

லோகத்தில் ஒருத்தர் இருக்கிற மாதிரித் தோன்றும் போதே ஞானம் வந்து மாயை விலகி, தனி மனஸின் வேலை அடங்கிப் போய் ஆத்மானுபவத்திலிருந்து கொண்டிருப்பது தான் ஜீவன் முக்தி. லோக மாயை இவனிடமிருந்து அப்போது கத்தரித்துப் போய்விடுவதைத்தான் வெள்ளரிக்கொடி பழத்திலிருந்து கத்தரித்துக் கொண்டு ஒடுவதற்கு உவமித்தது- அதாவது என் எக்ஸ்ப்ளனேஷன். இப்படி லோக மாயை போனாலும் அந்த ஜீவன் முக்தனுக்கு சரீரம் இருக்கிறது. அவனுக்கு சரீர ப்ரக்ஞை இல்லாவிட்டாலும் நாம் பார்ப்பதற்கு சரீரம் என்று ஒன்று தெரியத்தானே செய்கிறது?ப்ராரப்த கர்மா தீர்கிறவரை அதன் பலனாகப் பலபேர் அவனைப் பூஷிப்பது, தூஷிப்பது, வியாதி வக்கைப் படுவது, நல்லாரோக்யம் காண்பது முதலானவற்றுக்கு ஆஸ்பதமாக அந்த சரீரமிருக்கிறது. மனஸிலே அவன் இவற்றுடைய நல்ல - கெட்ட பாதிப்பு எதையும் அநுபவிக்காவிட்டாலும், கர்ம தர்மத்திற்காக அந்த சரீரமாவது அவற்றுக்கு target-ஆக (இலக்காக) ப்ராரப்தம் தீர்ந்து முடியும்வரை இருந்து கொண்டுதானிருக்கும். (ஞானி-ப்ராரப்தம் பற்றி வேறு அபிப்ராயங்களிருந்தாலும் பொதுவான அபிப்ராயம் இதுதான். அதையே வைத்துக்

கொண்டு சொல்கிறேன்) கொடியிலிருந்து பிரிந்த பின்னும் வெள்ளரிப் பழம் தன்னுடைய ரூபம் இருக்கிறபடியே இருப்பதுபோல லோகபந்தம் போன அப்புறமும் ஜீவன் முக்தன் ஒரு சரீரத்தோடு இருந்து கொண்டிருக்கிறான். பிற்பாடு ஒருநாள் - அவனுடைய சரீரம் மரணமடைகிறது. அதுதான் விதேஹ முக்தி தேஹத்திலிருந்து கொண்டே அவன் மாயை விலகி ஆத்மாவை அநுபவித்து வந்தது ஜீவன் முக்தி. அப்போது மனஸின் பந்தம் போனாற்போலவே இப்போது தேஹ பந்தமும் போய் மரணம் ஏற்படுவதால் இத வி-தேஹ முக்தி. ஞானியான அப்புறமும் அவனுக்கு இருந்த ப்ராப்த கர்மா இப்போது அடியோடு இல்லாமல் வெடித்து விட்டது.

அந்த வித்வான் நினைத்த மாதிரி இல்லாமல் இதிலும் (வெடிப்பதிலும்) பந்த மோசனம் இருக்கிறது. பழத்தை அதன் ரூபம் பந்தப்படுத்தத்தானே செய்கிறது?ஞானிக்கு என்னதான் பந்த உணர்ச்சி இல்லாவிட்டாலும், தேஹம் என்று இருக்கும் வரையில் அதை வைத்துக் கொண்டு நடப்பது, அதற்கு ஒய்வு கொடுப்பது, ஆஹாரம் போடுவது, குளிப்பது, இயற்கைக் கடன் தீர்ப்பது என்றெல்லாம் பல செய்யும்படி இருப்பது நம்முடைய பார்வையிலாவது அவனுக்குமுள்ள பந்தமாகத்தானே தெரிகிறது?மரணம் என்று நமக்குத் தெரியும். அவனுடைய விதேஹ முக்தியிலேயே இந்த தேஹ பந்தம் போகிறது. நமக்கெல்லாம் இந்த ஸ்தூல தேஹம் செத்த அப்புறமும் ஸூஷ்ம தேஹம் இருக்கவே செய்யும். அதுதான் லோகாந்தரங்கள் போய் ஸ்வர்க-நரக-பித்ரு லோகோதிவாஸங்களை அநுபவிப்பது. அப்புறம் மறுபடி இன்னொரு ஜன்மாவில் இன்னொரு தேஹத்தில் புகுந்து கொள்வது. ஞானிக்கு இப்படி ஸூக்ஷும சரீரமென்று ஒன்றில்லை;லோகாந்திர ப்ராப்தி, புனர் ஜன்மா ஆகியவை இல்லாமல், இந்த தேஹத்தின் மரணத்தோடேயே ஸகலமும் முடிந்து போகின்றன. நமக்கு அவை ஏற்படக் காரணம் கர்ம பந்தமே. கர்மாவினாலேயே அதற்கேற்றபடி ஸ்வர்க- நரகம் போவது, மறுபடி பிறப்பது என்று நமக்கு ஏற்படுகிறது. ஞானிக்கோ ப்ராரப்தம் தீர்ந்து தேஹம் செத்து விழுகிறபோது கர்மமும் முழுக்கத் தீர்ந்து விடுகிறது.

அதாவது ஸ்தூல தேஹ பந்தம் என்ற ஒன்று விடுபடும்போதே, அதற்கப்புறமும் ஸூக்ஷ்ம தேஹ பந்தம்

என்பதில்லாமல், அப்போதே ஸூக்ஷ்ம தேஹத்தையும் கூடச் சேர்த்துக் கொண்டு பட்டென்று சாவோடு அப்படியே போய் விடுகிறது;கர்ம பந்தம் துளிக்கூட பாக்கியில்லாமல் அப்படியே போய் விடுகிறது. இப்படி traceகூட இல்லாமல் அவை பட்டென்று போய்விடுவதற்கு வெள்ளரிப்பழம் பட்டென்று வெடித்து, என்னவாச்சு என்றே தெரியாமல் மறைந்துவிடுவது ஸரியான உபமானம்தானே?

மனஸின் பந்தம் போய் ஏற்படும் ஜீவன் முக்தி:கொடி கத்தரித்துப் போய் பழம் அப்படியே கிடக்கும் நிலை. ப்ராரப்த கர்ம பந்தமும்- அதிலேயே அடக்கமான தேஹ பந்தமும் - வெடித்துப் போய் ஏற்படும் விதேஹ முக்தி:கிடந்த பழம் வெடித்து இருந்த இடம் தெரியாமல் போய் விடுவது.

இன்னொருவித எக்ஸ்ப்ளனேஷன் கூடத்தோன்றிற்று. ஜீவன் முக்தர்களான ஞானிகளில் சில பேர் நம்முடைய ஆசார்யாள், மாணிக்கவாசகர் போன்றவர்கள் - ஜீவனம் முடிந்து, அதாவது தேஹத்திற்கான ஆயுஸ் முடிந்து மரணமடைந்து, விதேஹமுக்தர்களாகும்போது அந்த தேஹம் ரோகத்தினால் அழுகி, துர்கந்தமெடுத்து புழுத்து இழுத்துக் காலமானதாக இல்லை. அவர்களுடைய ஜேஹம் ஜீர்ணமடைந்து சவமாக ஆவது என்றில்லாமல் நல்ல ஆரோக்கியத்தோடு இருக்கும்போதே என்னவாச்சு எங்கே போச்சு என்றே தெரியாமல் அகண்டாகாரத்தில் அப்படியே மறைந்து விட்டதாக இருக்கிறது.

வெள்ளரிப்பழம் வெடித்து இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடுவது இந்த மாதிரித்தான்-அல்லது, அந்த மாதிரி தான் இது - என்று வைத்துக் கொள்ளலாம். அந்த மந்த்ரத்தில் முக்தி தரும் த்ரயம்பகேச்வரனை ஸுகந்தமுள்ளவன் என்றும் புஷ்டியை விருத்தி செய்கிறவனென்றும் சொல்லியிருக்கிறது. வெள்ளரிப்பழம் ஜீர்ணித்துப் போகாமல் நல்ல புஷ்டியுடனும், துர்கந்தமெடுக்காமல் ஸுகந்தமாகவும் இருந்து கொண்டே பட்டென்று வெடித்து, இல்லாமல் போய்விடுவது போல மேலே சொன்ன ஞானிகளின் சரீரத்திற்கும் ஏற்படுவதாகச் சொல்லலாம். வெள்ளரி விஷயத்தில் அது வெடிப்பதால் சத்தம் எழும்பும். இந்த மஹான்கள் விஷயத்தில் சத்தமாகச் சொல்லாமல், ஜ்யோதியோடு ஜ்யோதி கலந்தது என்று சொல்கிறார்கள். அதாவது ஒலிக்குப் பதில் ஒளியைச்

சொல்கிறார்கள். அப்படி ஜ்யோதியாகத் தெரிவதும் ஒரு க்ஷணந்தான். உபசாரத்துக்காக அப்படித் தெரிவது. அப்புறம் எங்கேயும் பரவிய அரூப நிலையான ப்ரம்மத்தின் அகண்டாகாரந்தான். அவுட் வாணம் விடும்போது வெடிச்சத்தம், ஜ்யோதிப்ரகாசம் இரண்டும் இருக்கிறதென்றால், வெள்ளரி 'அவுட்'ஆகிறபோது வெடிச்சத்தம் மட்டும் இருக்கிறது;மஹான்கள் 'அவுட்'ஆகும் போது ஜ்யோதி ப்ரகாசம் மட்டும் இருக்கிறது!ஞானத்தில் போய்தான் என்றில்லாமல் உசந்த பக்தியிலேயே போய் நந்தனார், மீராபாய் போன்றவர்களும் இப்படித்தான் உடம்பைச் சவமாக விட்டுப் போகாமலே, அப்படியே சரீரம்

மறைந்து அகண்டாகாரமானதாக இருக்கிறது. இதையும் வெள்ளரிப்பழ முக்தியாக உவமிக்கலாம்.

'ஜீவன் முக்தி, விதேஹ முக்தி என்ற இரண்டு நிலை இருப்பதில் மாயா பந்தம் தெறித்து ஏற்படும் ஜீவன் முக்திக்கு என் எக்ஸ்ப்ளனேஷனை வைத்துக் கொள்ளலாம்;அதற்கு மேலே சில மஹா ஞானிகள், மஹா பக்தர்கள் விஷயத்தில் ஏற்பட்டுள்ள விதேஹ முக்திக்கு உங்கள் எக்ஸ்ப்ளெனேஷனை வைத்துக் கொள்ளலாம்'என்று அவரிடம் சொன்னேன். பந்தயத்தில் 'ப்ரைஸ்'வைத்தால் சில ஸமயம் இரண்டு பேர் ஜயித்ததாகத் தீர்ப்பு பண்ணி இரண்டு பேருக்கும் அதைப் பிரித்துத் தருகிறார்களல்லவா?அப்படி எங்கள் இரண்டு பேருக்கும் ப்ரைஸ் கொடுத்துக் கொண்டேன்...

---



## குருவின் பிரியமும் தியாகமும்

சொல்ல வந்த விஷயம், ப்ரௌட ப்ரௌடமான அநுபூதி பெற்றதால் மாயை எவரைவிட்டு ஒடிவிட்டதோ அந்த மஹான் குருவாகி இருந்து காட்டும் பிரியமும் பண்ணும்

த்யாகமும்.

அவர் இஹத்திலிருக்கும்போதே உள்ளூர பூர்ணாநுபவத்தில் இருப்பவர். 'ஸ்வாந்தே ஸம்யக்-இஹ-அநுபூதம்'என்று இருக்கிறது. அப்படிப்பட்டவர் தன்னுடைய நிலையை வர்ணித்துப் பாடுவதாக ஆசாரியாள் ச்லோகங்கள் பண்ணியிருக்கிறார். அதற்குப் பேர் 'ப்ரௌடாநுபூதி'.

பூர்ணாநுபவத்தில் திளைத்துக்கிடக்கும் ஒரு ஜீவன் முக்தர் எதற்காக தம்முடைய நிலையை வர்ணிக்க வேண்டும்?அது அவருக்கு அவசியமில்லை. அப்படிச் செய்வதால் அவருக்கு ஒரு லாபமில்லை. **' யம் லப்த்வாசாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத :'** என்றபடி எதை அடைந்தபின் வேறெதையும் ஒருவன் லாபமாக நினைக்கமாட்டானோ அப்படிப்பட்ட ஸ்திதியிலுள்ள அவர் தமது நிலையை 'பொயட்ரி'பாடிக்கொள்வதில் ஒரு லாபமுமில்லை. அது ஒருவேளை அவருடைய உள்ளநுபவ ஆனந்தத்திலிருந்து அவரை கொஞ்சம் 'டிஸ்ட்ராக்ட்'பண்ணும் நஷ்ட ஸமாசாரமாக இருக்கலாமோ என்னமோ?ஜீவன்முக்தர் வெளியிலே என்ன செய்தாலும் உள்ளே டிஸ்ட்ராக்ஷன் இருக்கவே இருக்காதுதான். ஆனாலும் வெளிக்கார்யம் செய்வதால் அவருக்கு ஒரு லாபமுமில்லை என்பது நிச்சயம். வெளிக்கார்யம் அவர் எதற்காகச் செய்ய வேண்டும்?சரீரம் ஜீரணித்து விழுகிறபோது விழட்டும் என்று, பேசாமல் அவர் ஸமாதியிலேயே இருக்கலாம் தானே?பின்னே எதற்கு இந்த வர்ணனையில் இறங்கியிருக்கிறார்?

இதற்குக் காரணம், தாமே ப்ரௌட ப்ரௌட அநுபூதிமானாக இருந்தபோதிலும் கட்டுக் கட்டாக ஜீவன் முக்தவர்ணனை பண்ணும் ப்ரகரணங்களும், அது மட்டுமில்லாமல் அநேக வாத ப்ரதிவாதங்கள் பண்ணி இன்னம் பெரிய கட்டு கட்டான பாஷ்யங்களும் பண்ணிய ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். ஆட்டோபயாக்ராஃபிகல் நோட்டாக (ஸ்வய சரிதை குறிப்பாக), ஆனாலும் அப்படித் தெரியாமல் தம்முடைய விநயத்தினால் ஒளித்து, வேறே யாரோ ஞானியைப் பற்றிச் சொல்கிறார்போலச் சொல்லியிருக்கிறார்:

**' ஸச்சிஷ்ய போதாய '**- நல்ல சிஷ்யனுக்கு உபதேசிப்பதற்காக என்று அர்த்தம்.

ஞானி எப்பேர்ப்பட்ட நிலையில் இருக்கிறான் என்று ஸத்தான சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து. அதனாலேயே அவர்களும் அதற்கான ப்ரயாஸை எடுக்க உத்ஸாஹப் படுத்தும் பொருட்டே, ஸ்வயமாக எதனாலும் எந்தப் பயனையும் பெறுவதற்கில்லாத ஞானி, தன்னுடைய உசந்த மௌன ஸ்திதியைவிட்டு வர்ணிப்பில் இறங்குகிறாராம்!எல்லா உணர்ச்சியும்

மரத்துப்போனவிட்டும், ஸத்சிஷ்யர்களாகக் கூடிய ஜீவ குலத்தின் பொருட்டாக

அவரிடம் ப்ரேமை உணர்ச்சியும் தியாக உணர்ச்சியும் மாத்திரம் இருக்கும்படி ஈச்வரன் வைத்திருக்கிறானென்று தெரிகிறது. தாய் தந்தையர் போலவே ப்ரேமையும் தியாகமும் குருவிடம் இருப்பது தெரிகிறது.

'ஸச்சிஷ்ய போதாய ஸத்யம் ஸம்ஸ்ருதவான்'என்று சொல்லியிருக்கிறார்.

போதனை, உபதேசம் - வாயால் பண்ணுவது. அதற்கு முந்தி அவர் அநுபூதி நிலையை நன்றாக ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்- அதாவது-'ஸம்ஸ்மரணம்'

செய்யவேண்டும். ஏனென்றால் இவர் வாய் மட்டும் அடைத்துப்போன மௌனி இல்லை;மனஸூம் மௌனமாகிவிட்டவர்;ஒன்றையும் எண்ணாதவர்;எண்ணத்தை உற்பத்தி செய்வதும், ஞாபகம் என்று முன்பு நடந்தவைகளைப் பதிவு செய்து வைத்துக் கொள்வதுமான மனஸூ என்பது இவரிடம் செயலற்றுப்போய்விட்டது. அப்படிப்பட்ட அதீத நிலையிலுள்ளவர் முதலில் எண்ண லோகத்திற்கு வந்து தனக்கும் ஒரு நிலை இருந்ததென்றும் வைத்துக் கொண்டு அதில் ஸாக்ஷாத்காரத்தை உரசிக் கொண்டு மனஸ் அடியோடு அடைத்துப் போகிறதற்கு just முந்தி எப்படி எப்படியெல்லாம் feel பண்ணினோம் என்பதை ஞாபகப் படுத்திக் கொள்ளவேண்டும்.

நினைவுகளை விடுவது நமக்கு எவ்வளவு கஷ்டமோ, அத்தனை கஷ்டம் ஞானிக்கு நினைப்பூட்டிக் கொள்வது!கஷ்டப்பட்டாவது நாம் நினைவுகளை விட்டால் மஹத்தான லாபம் பெறுகிறோம்;ஆகையால் கஷ்டப்படலாம்தான் ஆனால் ஞானி கஷ்டப்பட்டு நினைப்பூட்டிக் கொள்வதாலோ அவனுக்கு எந்த லாபமுமில்லை. ஆனாலும் அப்படிச் செய்கிறான் எதற்காக?

**ஸச்சிஷ்ய போதாய !**

முதலில் மனஸை வேலை செய்யவிட்டு, ஸத்ய ஸாக்ஷாத்கார ஸ்திதியை ஸ்மரிக்கக்கூடிய அளவுக்கு நன்றாக ஸ்மரிப்பது, அதாவது நினைவூட்டிக் கொள்வது. அப்புறம் இன்னம் ஒரு படி இறங்கி வாயையும் வேலை செய்யவிட்டு ஸத்சிஷ்யனுக்கு அதை எடுத்துச் சொல்லி போதிப்பது, உபதேசிப்பது.

தான் கண்டுகொண்டது போதாது, சிஷ்யனையும் கண்டு கொள்ளச் செய்யவேண்டும் என்ற பரம கருணை வாய்ந்தவராக இருப்பதாலேயே எதுவும் வேண்டாத ஞானி இப்படி உபதேசத்தில் இறங்கி தேசிகராகிறார்.

'கண்டுகொள்வது', 'பரம கருணை'என்று சொன்னதில் ஐதரேய பாஷ்யம் நினைவு வருகிறது.

---



## குரு உபதேசமின்றி ஞானமில்லை

இது என்று கிட்டத்திலும் கிட்டேயாக ஆத்மாவைக் கண்டு கொண்ட ஜீவன் இதம் 'த்ரன்' ஆகிறான். கிட்டே உள்ளதை 'இதம்'என்று குறிப்பிடுகிறது. 'த்ர'என்பது த்ருஷ்டி ஸம்பந்தப்பட்டது. ஆகையால் 'இதம் த்ரன்' என்றால்

ஆத்மாவை தனக்கு அத்யந்தமான உள்வஸ்துவாகக் கண்டு கொண்டவன் என்று அர்த்தம். கண்டுகொண்ட பூர்ண ஞானி 'இதம் த்ரன்'என்றால் ஆத்மாவை தனக்கு அத்யந்தமான உள்வஸ்துவாகக் கண்டு கொண்டவன் என்று அர்த்தம். கண்டுகொண்ட பூர்ண ஞானி 'இதம் த்ரன்'ஆனாலும் பெரியவர்களுடைய பேரை அப்படியே சொல்லக்கூடாது. ரொம்பவும் பூஜிக்கத்தக்கவர்களின் பேரை அப்பட்டமாகச் சொல்வதற்கு பயப்பட வேண்டும். அதனால் 'இதம் த்ரன்'என்பதை ஒரு எழுத்து எடுத்து விட்டு 'இந்த்ரன்'என்று பேர் கொடுத்திருக்கிறது - இப்படி அந்த (ஐதரேய) உபநிஷத் சொல்கிறது.

உயிர் ஒரு உடம்பிலே உச்சந்தலை த்வாரத்தின் வழியாக உள்ளே போய் ஜன்மா எடுப்பது;அப்புறம் வஸ்துக்களை அலசி ஆராய்ந்து பார்ப்பது;அப்படிப் பார்த்து, ப்ரஹ்ம ஸ்வரூபமான தானேதான் எங்கேயும் வியாபித்திருப்பது என்று தெரிந்து கொண்டு, 'ப்ரஹ்மத்தை இதோ இங்கே கண்டு கொண்டேன்'என்பது;அப்படிச் சொன்னதால் 'இதந்த்ரன்'என்று பெயர் பெறுவது;அப்புறம் மரியாதைப் பண்பு காரணமாகவும், தேவர்களுக்கு ஒளிவு மறைவாயிருப்பதிலேயே ப்ரியமாதலாலும் 'இதந்த்ரன்'என்பது இந்த்ரனானது - என்றிப்படி உபநிஷத்து சொல்லிக் கொண்டு போகிறது. அந்த இடத்தில் குருவைப் பற்றி ப்ரஸ்தாவமே இல்லை.

ஆனால் ஆசாரியாள் பார்த்தார். 'அதெப்படிஒரு உயிர்தானே அலசி ஆராய்ந்து பார்த்து ப்ரஹ்ம ஞானம் பெற முடியும்?குருவின் உபதேசமும் அநுக்ரஹமும் இல்லாமல் அது நடக்காதே!' என்று பார்த்தார். சொல்லாமலே ஸகலமான பேருக்கும் தெரிந்த விஷயந்தானே என்பதால்தான் சொல்லாமல் விட்டிருக்கிறது. ஒரு பையனுக்குக் கலெக்டர் வேலை ஆச்சு என்றால், 'ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணி'என்று சொல்லாமல் தெரியுந்தானே?அப்படி ப்ரஹ்ம ஞானம் வந்தது என்றால் 'குரு உபதேசத்தால்' என்பது அதிலேயே 'அன்டர்ஸ்டுட்'தான். இருந்தாலும், நாம் பாஷ்யத்தில் வெளிப்படையாகவே தெரிவித்துவிட வேண்டும்

என்று ஆசார்யாள் நினைத்தார். அதனால், ஒரு சரீரத்தில் தலைக்குழி வழியாகப் பிரவேசித்துப் பிறவி எடுத்த உயிரானவன் வஸ்துக்களை அலசி ஆராய்ந்து பார்த்தான் என்று வருவதற்கு அப்புறம், 'ப்ரஹ்மமே எல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பதைக் கண்டு கொண்டான்'என்று வருவதற்கு முன்னால், குருவின் அநுக்ரஹத்தையும் உபதேசத்தையும் சேர்த்து, அதனாலேயே அவன் கண்டு கொண்டான் என்று முடித்திருக்கிறார். ரொம்பவும் சக்தி வாய்ந்த வார்த்தைகளில் குரு மஹிமை நன்றாகத் தெரியும்படி இங்கே பாஷ்யம் செய்திருக்கிறார். பரம கருணை வாய்ந்த ஆசார்யன் ஆத்ம ஞான விழிப்பை உண்டாக்கும் உபநிஷத் மஹாவாக்ய சப்தங்களை அந்த ஜீவனின் கர்ண மூலத்தில் - செவிப்பறைக்குள் -

பறையறைந்து, பேரிகை கொட்டி அவன் ப்ரஹ்மத்தின் ஸர்வ வியாபகத்வத்தைக் காணும்படி செய்கிறார் என்று சொல்லியிருக்கிறார். தூங்குகிற கும்பகர்ணனை பேரிகை கொட்டி எழுப்பின மாதிரி, அஞ்ஞான தமஸில் ஆழ்ந்து நித்திரை செய்கிற சிஷ்யனின் காதுக் குருத்திலேயே பேரிகை அடிக்கிறாற்போல ஜீவ ப்ரஹ்ம அபேதத்தைச் சொல்லும் உபநிஷத் மந்த்ரத்தை குரு உபதேசிக்கிறார்;பரம கருணாமூர்த்தியான ஆசார்யர் உபதேசிக்கிறார்;உபதேசித்து ஆத்ம விழிப்பை உண்டாக்குகிறார். விழித்துக் கொண்டவுடன் நாம் வஸ்துக்களைக் காண்பதுபோல சிஷ்யன் ப்ரஹ்மத்தைக் கண்டுகொள்கிறான்.

ஆசார்யாள் உபநிஷத்திடம் ரொம்பவும் ஸ்வதந்திரம் எடுத்துக் கொண்டு, இல்லாததை, சொல்லாததை ஸப்ளை பண்ணியதாக யாரும் நினைத்துவிடக் கூடாது. ஆசார்யன் மூலமாகத்தான் ஞானம் என்பதே உபநிஷத் மதம். பல இடங்களில் அப்படி இருக்கிறது. 'கண்காணா காட்டிலே கண்ணைக் கட்டிக் கொண்டுவிடப் பட்டவனுக்கு எப்படி ஏற்கனவே வழி கண்டவர்களே வழி சொல்லித் தந்து காப்பாற்ற முடியுமோ அப்படி அஞ்ஞான ஜீவிக்கு ஞானியான குருதான் ஞான ஸித்திக்கு வழி சொல்லித் தர முடியும்'என்று சாந்தோக்யத்தில் இருக்கிறது. அந்த இடத்தில்தான், 'ஆசார்யவானான மனிதனுக்கே ஞானம் உண்டாகும் - ஆசார்யவான் புருஷோ வேத'என்று வருகிறது.

'குருமேவாபிகச்சேத்'-"குரும் ஏவ அபிகச்சேத்"- 'குருவையே தேடிக்கொண்டு போய் அடையவேண்டும்'என்று முண்டகோபநிஷத் சொல்கிறது. வஸ்துக்களை அலசி ஆராய்ந்து பார்த்தவனை ஐதரேயத்தில் சொல்லியிருக்கிறதென்றால் இங்கே லோகங்களைப் பரீக்ஷித்துப் பார்த்தவனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இரண்டும் ஒன்றுதான் அப்புறம் அவனுக்குத் தானாக ஞானம் வந்தமாதிரி விஷயம் தெரியாதவர்களுக்குத் தோன்றும்படி ஐதரேய மந்திரங்கள் போகின்றன. ஆநால் இங்கேயோ, 'லோகங்களைப் பரீக்ஷித்துப் பார்ப்பவன், 'இவையெல்லாம் கர்ம ஸம்பந்தப்பட்டவையே. ஆத்வ தத்வமோ கர்ம ரஹிதமானது (கர்மம் இல்லாதது). அதைக் கர்ம ஸம்பந்தமுள்ளவற்றால் அடையமுடியாது'என்று புரிந்து கொண்டு லோகத்திடம் வைராக்யமடைய வேண்டும்;அப்புறம் ஆத்மாவை அடைந்து, அறிந்து, அநுபவிப்பதன் பொருட்டு

குருவையே தஞ்சம் புகவேண்டும் - குருமேவாபிகச்சேத்'என்று ஸ்பஷ்டமாக இருக்கிறது.

'குருவையே அடையவேண்டும்'என்று இருப்பதற்கு 'குருவை அடைந்தேயாகவேண்டும்'என்று அர்த்தம். வேறே வழி கிடையாது என்று அர்த்தம். அடுத்த மந்திரத்தில் ப்ரஹ்ம ஞானியான அந்த குரு அவனுக்கு ப்ரஹ்ம வித்யையை உள்ளவாறு உபதேசித்து உய்வு தருவார் என்று வருகிறது. ஆகையால் (ஐதரேய பாஷ்யத்தில்) ஆசார்யாள் ஹுஸீஷ்ணீக்ஷீக்ஷீமீஸீமீ மீபீ -ஆக எதையோ சேர்த்துச் சொல்லிவிட்டதாக நினைப்பதற்கு இடமில்லை.

'குருமேவாபிகச்சேத்'துக்கு பாஷ்யம் செய்யும்போது 'நன்றாக சாஸ்திரங்களறிந்த சாஸ்த்ரஜ்ஞன்கூட ஸ்வதந்திரமாகத் தானே ப்ரஹ்மஞான ஆராய்ச்சியில் இறங்கக்கூடாது என்று வலியுறித்தித் தெரிவிப்பதற்காகத்தான் 'குரும் ஏவ'- குருவையே - என்று போட்டிருக்கிறது'என்று ஆசார்யாள் தெளிவவுபடுத்தியிருக்கிறார்.

கண்டவரே நமக்கு வழிகாட்டியாக இருந்து காணச் செய்யமுடியும். அவர்தான் ஒஜீவீக்ஷீவீமீ ஹுணீறீ ரீஹுவீபீமீ-ஆன தேசிகர்.

---

## ' தேசிக ' பதத்தின் சிறப்புக்கள்

தேசிக பதத்திற்கு இருக்கும் விசேஷத்தால்தான் 'சங்கர **தேசிக** மே சரணம்'என்று அடிக்கு அடி இன்றைக்கும் நாமெல்லாரும் சொல்லி ஆசார்யாளை நமஸ்காரம் பண்ணும்படியாக அந்த ஆசார்யாளே தோடகாச்சார்யாளை ஸூக்ஷ்மமாகத் தூண்டி அஷ்டகம் பாடவைத்திருக்கிறார்.

'கந்தரநுபூதி'யில்கூட ஒரிடத்தில் 'சங்கர தேசிகனே'என்று வருகிறது. கைலாஸ சங்கரரான பரமேச்வரனுக்குக் குருவாக இருந்த குமாரஸ்வாமியைத்தான் 'சங்கரனின் குருவே'என்ற அர்த்தத்தில் அருணகிரிநாதர் அப்படி கூப்பிட்டிருக்கிறார். ஆகக்கூடி 'சங்கர தேசிக'என்ற பதப் ப்ரயோகத்தில் அவருக்கும் ஒரு ஸந்தோஷம் இருந்ததாகத் தெரிகிறது. 'என்னை இழந்த நலம்', 'சும்மாயிரு சொல்லற'என்னை விழுங்கி வெறுந் தானாய்'என்றெல்லாம் ஒரே அத்வைதமாக வரும் 'அநுபூதி'யில் அவர் அப்படிச் சொல்லியிருப்பதால் ஆசார்யாள் நினைவில் சொன்னதாகவே கூட இருக்கலாம்.

வைஷ்ணவர்களில் தேசிகன், தேசிகாச்சாரி என்று பெயரே வைத்துக் கொள்கிறார்கள். 'தேசிகாச்சாரி'என்ற பெயரில் 'தேசிகன்' என்ற ஆள் பெயர், ஆச்சாரி என்ற ஜாதிப் பெயர் இரண்டிற்குமே குரு என்ற அர்த்தமாயிருக்கிறது அவர்களுடைய முக்ய ஆசார்யர்களில் ஒருவரான வேதாந்த தேசிகர் ஞாபகத்திலேயே அப்படிப் பெயர் வைத்துக் கொள்வதாக தோன்றுகிறது.

வேதாந்தம் என்றேகூட அவர்கள் (ஸ்ரீவைஷ்ணவர்கள்) பேர் வைத்துக் கொள்கிறார்கள். ஒரு வேடிக்கை என்னவென்றால்:வெள்ளைக்கார தேசங்களில் 'வேதாந்

தா'என்றாலே அத்வைதம் என்றுதான் அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்கள். வேதாந்தம் என்றால் வேதத்தின் அந்திம பாகங்களான உபநிஷத்துக்கள் என்பதே நேர் அர்த்தம். அத்வைதம் மட்டுமில்லாமல் விசிஷ்டாத்வைதம், த்வைதம் முதலான மற்ற ஸம்பிரதாயங்களையும் உபநிஷத்துக்களான அந்த வேதாந்தத்தின் அடிப்படையில்தான் அந்தந்த மதாசாரியர்களும் ஸ்தாபிப்பதாகக் காட்டி, ஒவ்வொரு வரும் தங்கள் கொள்கைதான் வேதாந்தத்தின் உண்மையான தாத்பர்யம் என்று வாதம் பண்ணுவார்கள். நம் ஆசார்யாளும், மத்வாசாரியாரும் உபநிஷத் பாஷ்யம் எழுதிய மாதிரி ராமாநுஜாசாரியார் எழுதாவிட்டாலும், அவருடைய (ப்ரஹ்ம) ஸூத்ர பாஷ்யம், 'வேதாந்த தீபம்''வேதாந்த ஸாரம்'முதலான புஸ்தகங்களில் நிறைய உபநிஷத் மேற்கோள் காட்டியிருக்கிறார். விசிஷ்டாத்வைத கொள்கைக்கு ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் வரும் 'அந்தர்யாமி ப்ராஹ்மண'த்தைத்தான் முதுகெலும்பு மாதிரிச் சொல்வது. ராமாநுஜர் உபநிஷத் பாஷ்யம் எழுதாவிட்டாலும் விசிஷ்டாத்வைத பரமாக ரங்கராமாநுஜர் என்பவர் எழுதியிருக்கிறார். நான் சொல்ல வந்தது, 'உபநிஷத்'என்பதற்கு இன்னொரு பேரான 'வேதாந்தம்'என்றாலே அத்வைதந்தான் என்று லோகத்தில்

பிரபலமாயிருக்கிறது;அப்படியிருந்தும் அத்வைதிகள் 'வேதாந்தம்'என்று ஆள் பேர் வைத்துக் கொள்கிறார்கள். வேங்கடநாதர் என்று அம்மா அப்பா பேர் வைத்த அவர்களுடைய முக்ய புருஷர்களில் ஒருவருக்குத்தான் வேதாந்த தேசிகர் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டிருக்கிறது!

'வேதாந்தம்'மாதிரியே 'பாஷ்யம்'என்றும் அவர்கள் (ஸ்ரீ வைஷ்ணவர்கள்) மட்டுந்தான் ஆஸாமிக்குப் பேர் நாயுடு - எல்லாரும் வைஷ்ணவர்கள்தான். (ஸ்மார்த்தர்களான) நாமும், இன்னும் லோகம் பூரா அநேக அறிஞர்களும் (சங்கர) ஆசார்யாளுடைய பாஷ்யங்களைத் தலைக்கு மேலே வைத்துக் கொண்டாடுகிறோம். ஆசார்ய பக்தியில் உசந்த வைஷ்ணவர்கள் ராமாநுஜருடைய ஸூத்ர பாஷ்யத்தை 'ஸ்ரீ பாஷ்யம்'என்று பூஜிதையாகச் சொல்லி, அவருக்கே 'பாஷ்யகாரர்'என்று பிருது சொல்லி, தங்கள் ஸம்பிரதாயத்தில் 'பாஷ்யம்'என்பதை ஆஸாமி பேராகவும் வைக்கிறார்கள்.

குரு, ஆசார்யன், தேசிகன் என்று மூன்று இருப்பதில் ஸ்மார்த்த ப்ராமணர்களும், அப்ராமண சைவர்களும், குருஸ்வாமி, குருமூர்த்தி என்று மாத்திரம் பேர் வைத்துக் கொள்கிறார்கள். அநேகமாக ஸ்வாமிநாத ஸ்வாமியின் பெயரைத்தான் அப்படி வைப்பது.

'ஆசார்யர்' என்று ஒரு மநுஷ்யருக்குப் பெயராக வைக்கும் வழக்கும் எந்த ஸம்பிரதாயத்திலும் காணோம். ஆனால் ஜாதிப் பெயராக வைஷ்ணவ ப்ராமணர்கள், 'ராஜகோபாலாசார்யார்'என்ற மாதிரி வைத்துக் கொள்கிறார்கள், அப்ராம்மணர்களில் தட்டார் ஜாதியிலும், தச்சர் ஜாதியிலும் 'ஆசாரி' போட்டுக் கொள்கிறார்கள். 'ஆசாரிக்குச் சொல்லியனுப்பணும்'என்றே அவர்களைக் கூப்பிட வேண்டியிருக்கும்போது சொல்கிறோம். அவர்கள் பூணூலும் போட்டுக் கொள்கிறார்கள். மாத்வ ப்ராமணர்கள் 'ஆசார்'என்று போட்டுக் கொள்கிறார்கள்;'மைஸூர் வாஸுதேவாச்சார்' மாதிரி. ஒரு வேடிக்கை என்னவென்றால், தமிழ் தேசத்தில் இருக்கப்பட்ட மாத்வ ப்ராம்மணர்களை நாம் 'ராவ்' என்றே சொல்கிறோம்;அவர்களும் 'ராவ்'தான் போட்டுக் கொள்கிறார்கள்;ஆனால் மாத்வாசார்யாரே இருந்த கன்னட தேசத்திலிருக்கும் மாத்வ ப்ராம்மணர்கள் ராவ் போட்டுக் கொள்ளாமல் 'ஆசார்'என்று தான் போட்டுக் கொள்கிறார்கள். அங்கே அவர்களைத் தவிர மற்ற ஸம்பிரதாயஸ்தர்கள் எல்லாருமே ராவ் போட்டுக் கொள்வார்கள். மைஸூர் ஸதாசிவ ராவ் என்று ஸாஹித்ய கர்த்தா இருந்தார். அவர் தியாகைய்யர்வாளுடைய ப்ரசிஷ்யர் (சிஷ்யருடைய சிஷ்யர்) அவர் கீர்த்தனம் பண்ணியிருக்கிறார். நம்முடைய மடத்து சந்த்ரமௌலீச்வரரின் மேலே கூட அவர் கீர்த்தனம் பண்ணியிருக்கிறார். அப்போதிருந்த நமது மடத்து ஸ்வாமிகளையும் 'ஸ்ரீமன் மஹா தேவேந்திர ஸரஸ்வதி' என்று குறிப்பிட்டு, அவரால் பூஜிக்கப்படுபவர் என்று அதில் சொல்லியிருக்கிறார். 'ராவ்'என்று ஜாதிப் பேர் போட்டுக் கொண்ட அவர் மாத்வரில்லை;ஸ்மார்த்த ப்ராம்மணர்தான். கன்னடதேசம், தெலுங்கு தேசம் முதலியவற்றில் அப்ராம்மண ஜாதியினர் உள்பட

பல பேர் ராவ் போட்டுக் கொள்வதுண்டு. தமிழ்நாட்டில் 'ராவ்'என்றாலே மாத்வ ப்ராம்மணர்தான் என்று இருக்கிறது.

'ஆசார்யன்'என்று தனிப்பேர் இல்லாவிட்டாலும் அது ஜாதிப் பெயராக வைஷ்ணவ ப்ராம்மணர், மாத்வ ப்ராம்மணர், தட்டார், தச்சரோடு ஒட்டிக் கொண்டிருக்கிறதென்று சொல்லிக் கொண்டிருந்தேன்.

தேசிகர் என்று அப்ராம்மண சைவர்களில் பூஜகர்களைக் கொண்டதாக ஒரு ஜாதி இருக்கிறது. தனிப்பெயராக தேசிகன் என்றே ஐயங்கார்கள் வைத்துக் கொள்கிறார்கள் என்று சொன்னேன். அவர்களில் வடகலை ஸம்பிரதாயத்துக்கு முக்ய புருஷராக இருக்கப்பட்ட வரையே வேதாந்த தேசிகன், ஸ்வாமி தேசிகன் என்றும், வெறுமே தேசிகன் என்று மாத்திரமும் சொல்கிறார்கள். 'தேசிகர்'என்று 'ர்'போடாமல் - 'சிவர்'என்று சொல்லாமல் 'சிவன்'என்றே சைவர்கள் பக்தி மிகுதியாலேயே சொல்கிற மாதிரி - தேசிகன் என்றே சொல்கிறார்கள்.

ராமானுஜர் பெயரும் வைஷ்ணவர்கள் நிறைய வைத்துக் கொள்கிறார்கள். மாத்வர்கள் அவர்களுடைய மூல புருஷரான மத்வர் என்று பெயர் வைத்துக் கொள்வதில்லை. மத்வாசாரியாருக்கு ஆனந்த தீர்த்தர் என்று ஸந்நியாஸ பெயர். அப்படியும் அவர்கள் (மாத்வர்கள்) பேர் வைத்துக் கொள்வதில்லை. நம்மில் (ஸ்மார்த்தர்களில்) சங்கரப் பெயர் வைத்துக் கொள்கிறோம். ஆனால் இது நம்முடைய ஆசார்யாளான காலடிக்காரரை நினைத்து வைப்பதா, அவருக்கும் மூலமான கைலாஸக்காரரை நினைத்து வைப்பதா என்று சொல்லத் தெரியவில்லை. வைத்யநாதன், விச்வநாதன் என்றெல்லாம் பரமசிவன் பெயர்களை வைப்பது மாதிரியே 'சங்கர'ப் பெயர் வைப்பதும் ஒரளவுக்கு, பெருமளவுக்கே இருக்கலாம். 'ராமாநுஜ'என்பது ராமனின் தம்பிகளான லட்சுமணன், பரதன், சத்ருக்னன் மூன்று பேருக்கும் உரிய பேர். ஆனாலும், குறிப்பாக ராமரோடு 'கூடப் பிறந்தது'மட்டுமின்றி, கூடவே எப்போதுமிருந்த, 'இளையாழ்வார்'எனப்படும் லக்ஷ்மணன் பேராகவே அது நினைக்கப் படுகிறது. ஆனால் வைஷ்ணவர்கள் ராமாநுஜப் பெயர் வைக்கும்போது லக்ஷ்மணனையோ மற்ற ராம சகோதரர்களையோ நினைக்காமல் தங்கள் மூல புருஷரான ராமாநுஜாசார்யாரை நினைத்துத்தான் வைக்கிறார்கள். நம்மில் 'சங்கர'ப் பெயரை அந்த அளவுக்கு ஆசார்யாள் நினைவில்

வைப்பதாகத் தெரியவில்லை. (சிரித்து) ஸமீபகாலமாக (1957-ல்) நான் மெட்ராஸ் வந்ததிலிருந்து ஆசாரியாளின் பாப்புலாரிட்டி ஜாஸ்தியாயிருக்கிறது. இப்போது ஸுரேஷ், ரமேஷ், இன்னும் அநேக பாஷன் பெயர்கள் வந்திருந்தாலும் ஆசார்யாள் நினைவிலேயே 'ஷங்கர்'பேர் நிறைய வைக்கிறார்கள். 'சந்த்ரசேகர'என்றும் நிறைய வைக்கிறார்கள். ஷேகர் என்கிறார்கள். ஃபாஷன் உலகத்திலும் இப்படி இரண்டு கர்நாடகப் பெயர்கள். அதையும் ஃபேஷன் பண்ணி ஷங்கர், ஷேகர்...!.

---



## " பரமாச்சார்யர் "

'தேசிக போடும் வழக்கம் சைவ மடாலயங்களிலும் இருக்கிறது. ஆதீனகர்த்தர்களை 'தேசிக பரமாசார்ய ஸ்வாமிகள்'என்று சொல்கிறார்கள். நம் அத்வைத ஸம்ப்ரதாயத்தில் 'பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய'என்று மடாதிபதியைச் சொல்வதுபோல 'தேசிக பரமாச்சார்ய'என்பது பல சைவ மடங்களில்

வழக்கமாயிருக்கிறது.'பரமாச்சார்யார்'என்று ஒரு மரியாதையின்பேரில் குருஸ்தானத்திலிலுள்ள எந்த ஸ்வாமிகளையும் சொல்லலாம். ஆனால் இங்கேகூட பரமாச்சார்யார் என்றில்லாமல் பரமகுரு என்று சொல்வதே இந்த (காஞ்சி) மடத்து ஸம்ப்ரதாயம். குரு அவருடைய குருவான பரம குரு, குருவுக்கும் குருவான பரமேஷ்டி குரு, பரமேஷ்டி குருவுக்கும் குருவான பராபர குரு என்று குரு ஸம்பந்தப்படுத்தி சொல்வதுதான் இங்கே ஸம்ப்ரதாயம். ஆகையால் எப்போதாவது இந்த மடத்து ஸ்வாமிகளை பரமாச்சார்யார் என்று சொல்லலாமென்றாலும், அதையே முக்யமான பேர் மாதிரிச் சொல்வது அஸாம்ப்ரதாயிகமாக (ஸ்ம்பிரதாயத்திற்கு மாறாக)த் தோன்றுகிறது. நீண்டநாள்

வழக்கத்தில் 'பரமாச்சார்ய ஸ்வாமிகள்'என்று சைவ மட ஆதீனகர்த்தர்களையே இந்தத் தமிழ் தேசத்தில் சொல்லி வந்திருப்பதால், ஒரு ஸ்மார்த்த மடாதிபதிகளை அப்படியே முக்யமாகச் சொல்வது 'டெக்னிக'லாக ஸரியில்லை என்று தோன்றுகிறது. 'ஹிஸ் எக்ஸெலன்ஸி', ஹிஸ் ஹைனஸ், 'ஆனரபிள் ஜஸ்டிஸ்'ஆகியவை இன்னின்னாருக்குத்தான் போடுவது என்று குறிப்பிட்டு வைத்திருக்கிற மாதிரி மடாதிபதிகளில் எந்த ஸம்ப்ரதாயஸ்தரை எப்படிச் சொல்ல வேண்டும் என்று பார்த்துப் பண்ணினால் தேவலையோ என்பதால் சொன்னேன். மடாதிபதியைப் பொறுத்த மட்டில் அவர் ஞானியாயிருந்தால் எந்தப் பெயரில் சொன்னாலும் ஸரி, ஒரு பெயரும் சொல்லாவிட்டாலும் ஸரி என்றுதான் இருக்கவேண்டும். ஆனாலும் சிஷ்யர்களான ஜன ஸமூஹத்தைப் பொறுத்தமட்டில் இன்னொரு ஸம்ப்ரதாயத்திற்கு நெடுங்கால வழக்காக இருந்து வரும் பெயரில் தங்களுடைய ஆசார்ய பீடத்திலிருப்பவரைச் சொல்லக் கூடாது என்று தெரிந்திருப்பது நல்லது என்பதற்காகச் சொன்னது!

'பரமாசார்ய'வோடு 'தேசிக'வும் ஆதீனகர்த்தர்களின் பிருதமாகச் சேர்ந்திருக்கிறது. அதைத்தான் முக்யமாகச் சொல்ல வந்தேன்.

---



## தேசிக ரூபத்தில் தேவி

நம்முடைய மடத்துக்கு அம்பாள் காமாக்ஷி ரொம்ப முக்கியம்;ஜீவநாடி அவள்தான். அவளைப் பற்றி ஐநூறு ச்லோகம், 'மூக பஞ்சசதீ'என்று. அதைப் பண்ணிய மூகர் அவளையே முதல் சதகத்தில் ஒரு இடத்தில் 'குருமூர்த்தே'என்று கூப்பிட்டு 'உனக்கு நமஸ்காரம்மா!'என்று

சொல்லியிருக்கிறார். **குருமூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி** அவளுடைய க்ருபையாலேயே அத்வைத ஞானம் ஸித்திப்பதை பஞ்சசதீயில் அநேக இடங்களில் அவர் குறிப்பிட்டு இருக்கிறார். முதல் சதகத்தில் துர்காம்பாள், சாமுண்டேச்வரி, அன்னபூர்ணேச்வரி, வாராஹி முதலிய பல ரூப பேதங்களாகவும் காமாக்ஷியையே சொல்லிவிட்டு, ஏறக்குறைய முடிக்கும் இடத்தில், 'அம்மா!உன்னுடைய க்ருபையால் சிலபேர் குரு சரணத்தில் சரணாகதி பண்ணி, அதனால் ஸகுணாபாஸனையோ, நிர்குணோபாஸனையோ எதுவோ ஒன்றால் ஏணியில் ஏறிப்போவது போலப் போய் மோக்ஷம் என்னும் அரண்மனை உப்பரிகையில் வாஸம் செய்கிறார்கள்'என்று சொல்லியிருக்கிறார்.

ஸத்க்ருத-தேசிக-சரணா:ஸபீஜ-நிர்பீஜ-யோக-நிச்ரேண்யா|

அபவர்க-ஸௌத-வலபீம் ஆரோஹந்த்யம்ப கே(அ)பி தவ க்ருபயா||

'ஸௌதவலபி'என்றால் அரண்மனை மேல் மாடம். 'ஸௌதம்'என்றால் அரண்மனை நேர் அர்த்தம், 'சுதையால் ஆனது;சுதைக் கட்டிடம்'என்பது. ஸுதை, ஸுதா ஸம்ஸ்க்ருத வார்த்தை. அதற்கு அம்ருதம் என்பதுதான் முக்யமான அர்த்தம். ஜில்லென்று ஹிதமாக உள்ள அம்ருதப் பேரையே வெந்து வேக்காடாக்கும் சுண்ணாம்புக் கலவைக்குப் பேராகக் கொடுத்திருக்கிறது!நல்லதில்லாத ஒன்றை மங்களமாகச் சொல்லவேண்டும் என்று அதற்கு நேரேதிராக உள்ள நல்ல வஸ்துவின் பேரில் சொல்லும் வழக்கமுண்டு. அடிமண்டுவை 'ப்ருஹஸ்பதி'என்கிற மாதிரி. 'மங்கல வழக்கு','Euphemism என்று இதைச் சொல்வார்கள். வேதாந்தமாகப் பார்த்தால், கெட்டதைக் கூட நல்லதாகப் பார்க்கவேண்டும் என்ற ஸம பாவனை வருவதற்காக இப்படிச் சொல்வது என்கலாம்... ச்லோகத்தில் மோக்ஷத்தைச் சொல்லும்போது சுதை மாளிகை என்று 'ஸுதா'போட்டதில் உள்ளர்த்தமிருக்கிறது. ('ஸுதா'என்பதே பெயரெச்சத்தில் 'ஸௌத'என்றாயிருக்கிறது.) அம்பாளை யோக மார்க்கத்தில் உபாஸனை செய்யும்போது முடிவாக சிரஸ் உச்சியில் ப்ராணசக்தி பரமாத்ம சக்தியோடு இரண்டறக் கலந்து

மோக்ஷம் சித்திக்கும். அந்த ஸமயத்தில் அங்கே ஸுதாதாரை, அம்ருததாரை, பெருக்கெடுக்கும். அதையும் குறிப்பிடுவதாகவே 'ஸௌத'வலபி எந்று கவி போட்டிருக்கிறார். யோகம் என்று நிர்குணமாகப் பண்ணும்போது ஸுதாதாரை பெருக்கெடுக்கும் என்று தெரிந்து வைத்துக் கொண்டு ஸாதனை செய்யப்படுகிறது. அதைப்பற்றி ஒன்றும் தெரியாமல் ப்ரேம பக்தியிலேயே ஸகுணமாக உபாஸித்தாலும் அவள் அந்த உச்ச ஸ்தானத்துக்கு ப்ராண சக்தியை ஏற்றி அம்ருத தாரையில் முழுக்கடிக்கத்தான் செய்வாள். இந்த ஸகுணம்-நிர்குணம் இரண்டையுமே 'ஸபீஜம் நிர்பீஜம்'என்று ச்லோகத்தில் சொல்லியிருப்பது.

அடியிலிருந்து உச்சிக்கு ப்ராணசக்தி ஏறுவதால் ஏணியில் ஏறிப்போவதைச் சொல்வதும் பொருத்தமாயிருக்கிறது. 'நிச்ரேணி'என்ற வார்த்தைக்கு ஏணி என்று அர்த்தம். 'நிச்ரேண்யா'-'ஏணியினால்', 'ஏணி வழியாக'ச்ரேணி என்றால் வரிசை. அதிலிருந்துதான் ஏணி என்ற வார்த்தை வந்திருக்கிறது. 'ச்ரமணர்'என்பது 'அமணர்'என்றும் 'ச்ராவணி'என்பது 'ஆவணி'என்றும் ஆகிறமாதிரி 'ச்ரேணி'என்பது 'ஏணி'ஆகிறது.

பராசக்தியின் க்ருபை இருந்தால்தான் ஸத்குரு கிடைப்பதும், அவரிடம் சரணாகதி பண்ணத் தோன்றுவதும். அதைத்தான் 'ஸத்க்ருத தேசிக சரணா'.... தவ க்ருபயா'என்று சொல்லியிருக்கிறார்.

இங்கே ஸத்குரு என்பதற்கு 'தேசிக'என்ற வாரத்தையையே போட்டிருக்கிறது என்று காட்ட வந்தேன். மோக்ஷஉச்சிக்கு ஏற்றிவிடக்கூடிய சக்தியுள்ளவராக 'தேசிகர்'இருக்கிறார். அம்பாள் க்ருபையால் தேசிகர் கிடைத்து அவரிடம் சரணாகதி செய்வதையே மூகர் சொன்னாரென்றால், காளிதாசர் அம்பாளையே தேசிக ரூபிணியாகச் சொல்லியிருக்கிறார். 'ச்யாமளா தண்டகம்' பண்ணிய அவர் 'ச்யாமளா நவரத்னமாலா' என்ற ஸ்தோத்தரமும் செய்திருக்கிறார். அதில்,

தயமாந தீர்க்க நயநாம்

தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்

என்று குரு ஸ்வரூபிணியாக அவளைச் சொல்லியிருக்கிறார். 'தயமான'என்பதில் வருகிற 'தய'வை 'தர்சிதாப்யுதயாம்'என்று திருப்பி அழகாக சப்தாலங்காரம்-சொல்லணி-செய்திருக்கிறார்.

அம்பாளுடைய அழகான நீண்ட நேத்ரங்களில் தயை பெருகுகிறது. அப்படி தயாகடாக்ஷம் செய்கிறவள் தேசிக ரூபத்தில் - குரு ஸ்வரூபிணியாக-வந்து அப்யுதயத்தைக் காட்டுகிறாள் என்கிறார். 'அப்யுதயம்'என்றால் நல்ல எழுச்சி. 'ஸூர்ய உதயம்' என்பதை ஸூர்யன் எழுந்தான் என்கிறோம். 'உதயம்-எழுச்சி. அப்யுதயம்- உயர்வு பொருந்திய எழுச்சி. 'தர்சித அப்யுதயாம்'என்பதற்கு இரண்டு தினுஸாக அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அம்பாள் தன்னுடைய அனுக்ரஹத்தின் மேலான எழுச்சியை பக்தனுக்குக் காட்டுகிறாள் என்பது ஒன்று. இன்னொன்று - பக்தனுக்கு அவனுடைய மேலான அத்யாத்ம எழுச்சியைக் காட்டுகிறாள்;அதாவது 'த்சிக சப்தத்திற்கேற்ப, அவன் ஆத்யாத்மிகமாக உயரே எழும்ப வழிகாட்டுகிறாள் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

தயாகடாக்ஷத்தைச் சொல்லி உடனே தேசிக ஸ்வரூபத்தைச் சொல்வதில் நிரம்பப் பொருள் பொதிந்திருக்கிறது. கண்பார்வைதான் ஒருத்தரை வழிநடத்திச் செல்வது. கண்ணில்லாதவரை வேறெவராவது தானே பிடித்து நடத்திச் செல்ல வேண்டியிருக்கிறது?ஆகையால் கண்ணே நம்மை அழைத்துப் போவதாக ஆகிறது. கண் காட்டிக் கொடுக்கு ம்படிதான் கால் நடப்பது. 'நயனம்'என்கிற வார்த்தைக்கும் வழிநடத்திப் போவது, முன்னே சென்று வழி காட்டுவது, 'லீட்'

பண்ணுவது என்றுதான் அர்த்தம். நம் ஒவ்வொருவருடைய கண்ணும் அவரவருக்குத்தான் வழிகாட்டி அழைத்துப் போகிறது;அம்பாளுடைய கண்ணோ அதிலிருந்து பெருகும் தயாகடாக்ஷத்தால் லோகத்து ஜனங்களையெல்லாம் ச்ரேயா மார்க்கத்தில் வழிகாட்டி அழைத்துப் போகிறது!

உத்தம குருவாயுள்ள எவருமே சிஷ்யர்களுக்குக் கடாக்ஷமாத்திரத்தால் தீக்ஷை தந்து நல்வழி நடத்திச் செல்லமுடியும். அதற்கு 'நயன தீக்ஷை'என்றும் 'சக்ஷு தீக்ஷை'என்றும் பெயர். சக்ஷு என்றாலும் கண்தான்.

மீனாக்ஷியம்மன் சக்ஷு தீக்ஷை தரும் குருவாகவே மஹான்கள் அநுபவத்தில் கண்டிருக்கிறார்கள். ஒரு தாயார் மீன் தான் இட்ட முட்டையைக் கண்ணால் பார்த்தே பொறிக்க வைத்துவிடும் என்று நம்பிக்கை.முட்டை பொரிந்ததும் உள்ளேயிருந்த கரு முழு ப்ராணியாகிறது. அப்படியே மீன்போன்ற நயனங்களைக் கொண்ட மீனாக்ஷியுடையவையே. அவளைக் குறித்துத்தான் காளிதாஸர் இந்த நவரத்னமாலை பாடியது.. ஆகையால் அவளுடைய தயா கடாக்ஷத்தை அவர் சொல்லும்போதே குருவாக அவள் சக்ஷு தீக்ஷை தருவதை வ்யங்க்யமாக (மறைமுகமாக)த் தெரிவித்து விடுகிறார். அப்புறம் வ்யக்தமாகவே (வெளிப்படையாகவே) 'தேசிக ரூபேணே தர்சிதாப்யுதயாம்'என்று சொல்லிவிடுகிறார்.

ஞானாம்பிகையாக உள்ள அவள் தேசிக ரூபத்தில் எல்லோருக்கும் அருள்புரிந்து நல்லவழியில் போகப் பண்ணும்படி ப்ரார்த்தனை செய்வோம்.

---



## *அத்வைத ஸாதனை*

## மத ஸித்தாந்தங்களின் ஸாராம்சம்

'இந்த லோகத்துக்கெல்லாம் காரணமாக ஒரு பரம்பொருள் இருக்கிறது. நமக்கும் அதுதான் காரணம். நம்மை அதுதான் படைத்திருக்கிறது. நாம் அல்ப ஜீவாத்ம. அது மஹத்தான பரமாத்மா. ஜீவாத்மாகவுள்ள நாம் மறுபடி போய் அந்த பரமாத்மாவோடேயே சேர்ந்து விடவேண்டும். அப்போதுதான் ஸம்ஸாரம், சுற்றிச் சுற்றி வரும் ஜனன மரணச் சுழல், கர்மா நம்மைப் படுத்தியெடுக்கும் பாடு, இந்த மனஸின் ஓயாத உழப்பறிசல் எல்லாம் தீர்ந்து பேரின்ப நிலையை அடையலாம். ஸம்ஸாரச் சுழலிலிருந்து விடுபட்ட அந்த

நிலைக்குத்தான் வீடு என்றும் மோக்ஷம் என்றும் பெயர். அதை அடைத்துவிட்டால் அப்புறம் அழிவில்லாமல், சாவில்லாமல் சாச்வதமாக சாந்தி அநுபவிக்கலாம்'என்று சொல்லவும், என்ன பண்ணினால் நாம் அப்படிப் போய் பரமாத்மாவை அடையலாம் வழிகாட்டிக் கொடுக்கவுமே மதம் என்பது இருக்கிறது.

ஒவ்வொரு மத ஸித்தாந்தமும் பரமாத்மாவுக்கு ஒவ்வொரு பேர் கொடுத்திருக்கிறது. ஒன்று சிவன் என்கிறது. ஒன்று விஷ்ணு என்கிறது. சக்தி என்று இன்னொன்று சொல்கிறது. 'இப்படியிப்படிப் பண்ணினால் சிவன் இருக்கிற கைலாஸத்திற்குப் போகலாம். அதுதான் மோக்ஷலோகம் என்று ஒன்று சொல்லும். இன்னொன்று, 'விஷ்ணு இருக்கிற வைகுண்டம்தான் மோக்ஷலோகம். அதற்குப் போய்ச்சேர இன்னின்ன பண்ணவேண்டும்'என்று சொல்லும். இப்படியே 'அம்பாள் இருக்கும் ஸ்ரீபுரம் என்பதுதான் மோக்ஷஸ்தான ம்'பிள்ளையார் இருக்கும் ஆனந்த புவனம்தான் மோக்ஷம்'; 'ராமரும் க்ருஷ்ணருங்கூட அவதாரம் முடிந்த பிறகு வைகுண்டம் போய் விஷ்ணுவிடம் ஐக்யமாகிவிடவில்லை. ராமருக்கென்றே தனியாக ஸாகேதம் என்று திவ்ய லோகம் இருக்கிறது. அதுதான் மோக்ஷம்';இதே மாதிரி, 'க்ருஷ்ணருக்கென்றே தனியாக கோலோகம் என்று இருக்கிறது. அதுதான் மோக்ஷலோகம் என்று ஒவ்வொரு உபாஸனா மார்க்கத்தில் பரமாத்மாவுக்கும், அது இருக்கும் இடத்திற்கும் ஒவ்வொரு பேரைச் சொல்லி அங்கே போய்ச் சேர்ந்துவிட்டால் அப்புறம் ஸம்ஸாரக் கஷ்டமில்லை, சாச்வத ஸௌக்யந்தான் என்று சொல்லியிருக்கிறது.

மோக்ஷத்தில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் எப்படிப்பட்ட உறவு இறக்குமென்பதைப் பற்றி ஒவ்வொரு விதமாகச் சொல்லும். பரமாத்மாவுக்கு முழுக்க வேறாகவே மோக்ஷத்திலும் ஒரு ஜீவாத்மா இருந்துகொண்டு அதை சாச்வதமாக பக்தி பண்ணிக்கொண்டு, அதனால் சாச்வதமான ஆனந்தத்தை அநுபவிக்குமென்று ஒரு ஸித்தாந்தம் சொல்லும். அதற்குப் பேர் த்வைதம். இன்னொன்று (அப்படி) முழுக்க வேறாயில்லாமல், ஜீவாத்மாவுக்கென்று தனியாக ஒரு உயிர் மோக்ஷத்திலும் இருந்து அது பக்தி பண்ணிக்கொண்டிருக்குமென்பது வாஸ்தவந்தானென்றாலும்,

தன்னுடைய இந்த உயிருக்கு உயிராக அந்தப்

பரமாத்மா அந்தர்யாமியாக இருக்கிறது என்று உணர்ச்சியை அது பெற்றிருக்கும் என்று சொல்லும். அதற்குப் பேர் விசிஷ்டாத்வைதம். இன்னொன்று, ஸூர்யன் உதயமான அப்புறம் நக்ஷத்ரங்கள் எல்லாம் அழிந்து போய்விடுவதில்லை. ஆனாலும் தாங்கள் இருப்பதே தெரியாமல் ஸூர்ய ப்ரகாசத்தில் அழுந்தி மங்கிப்போய் விடுகிறதோல்லியோ?அப்படித்தான் மோக்ஷலோகத்தில் ஜீவாத்மா அழிந்து போய்விடாமல் இருந்தாலும் தன்னுடைய அல்பமான சைதன்ய (ஞானமயமான உயிருணர்வு) ப்ரகாசத்தை இழந்து பரமாத்மாவின் பேரறிவான சைதன்யத்தில் அழுந்திக் கிடக்கும்'என்று சொல்லும். அதற்குப்பேர் சைவ ஸித்தாந்தம். இப்படி இன்னும் பல இருக்கின்றன.

---



## அத்தனைக்கும் வித்தியாஸமான அத்வைதம்

ஆதிசங்கர பகவத்பாதாள் நிலைநாட்டியுள்ள ஸித்தாந்தத்திற்கு அத்வைதம் என்று பேர். அது என்ன சொல்கிறதென்றால், இத்தனைக்கும் வித்யாஸமாக ஒரே பெரிய போடாகப் போட்டு விடுகிறது!லோகத்திலேயிருந்து - அதாவது ஸம்ஸாரத்திலிருந்து;ஸம்ஸாரம் லோகத்தில்தானே நடக்கிறது?அப்படிப்பட்ட இந்த லோகத்திலேயிருந்து - தப்பித்து ஒரு ஜீவாத்மா பரமாத்மா இருக்கும் மோக்ஷ

லோகத்துக்குப் போய் அவரோடு சேர வேண்டும் என்ற பொதுவான அடிப்படைக்

கொள்கையில் வரும் இஹ லோகம், மோக்ஷலோகம் ஜீவாத்மா பரமாத்மாவைச் சேர்வது, அப்போது ஏற்படும்

உறவு என்ற எல்லாவற்றையுமே அது (அத்வைத ஸித்தாந்தம்) அடித்துத் தள்ளிவிடுகிறது. 'இஹ லோகமென்று ஒன்று அஸல் ஸத்யமாக இருக்கவேயில்லை. அது வெறும் மாயக் காட்சி தான்'என்கிறது. 'மோக்ஷம்' என்கிறதும் ஒரு லோகமேதான்'என்கிறது. 'மோக்ஷம் என்கிறதும் ஒரு லோகமோ இடமோ இல்லை. மனஸ் என்பதிலிருந்து ஆத்மா விடுபட்ட நிலைதான் மோக்ஷம். அது இங்கேயே, இப்பவே ஸித்தித்தாலும் ஸித்திக்கும். ஆகையால் செத்துப் போன அப்புறந்தான் மோக்ஷம் என்றில்லாமல் சரீரத்தில் ஒரு ஜீவன் இருக்கும்போது கூட முக்தனாகலாம். ஞானி என்று நாம் பார்க்கும் ஒருவன் நமக்கென்னவோ லோகத்திலிருக்கிறாற்போலத் தெரிந்தாலும் வாஸ்தவத்தில் அவன் மோக்ஷத்தில்தான் இருக்கிறான் என்கிறது.

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் சேர்வது, அப்போது அவர்களுக்குள் ஏற்படும் உறவு ஆகிய விஷயமாகவும், 'சேர்கிறது என்றே கிடையாது. உறவு என்றும் கிடையாது. இரண்டு பேர் இருந்தால்தானே ஒருத்தர் மற்றவரோடு சேர்ந்து, ஏதோ ஒரு உறவு ஏற்படுத்திக் கொள்ள முடியும்?வாஸ்தவத்தில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இரண்டு வெவ்வேறு ஆஸாமிகளே இல்லை. இருக்கிறது ஒரே ஆத்மா தான். ப்ரஹ்மம் என்பது அதுதான். அது தனக்கு வேறாக எதுவுமில்லாத ஒன்றாக, தான் தானாக இருக்கிற அநுபவத்தைத் தவிர ஒரு எண்ணமும் இல்லாமலிருப்பது. நிர்குண ப்ரஹ்மம் என்று அதனால்தான் சொல்வது. ஆனாலும் அந்த ப்ரஹ்மத்தின் ஆதாரத்தைக் கொண்டே அதே ஸமயத்தில் அந்த ப்ரஹ்மத்தையும் மறைப்பதாக ஒரு மாயா சக்திதான் லோகம் என்ற ஜாலக் காட்சியை-மாஜிக் ஷோவைக் காட்டுகிறது. வெள்ளை ஸ்க்ரீன் இல்லாமல் அந்தக் காட்சி கிடையாதல்லவா?ஆனாலும் அந்தக் காட்சியே ஸ்கரீன் தெரியாதபடி மறைத்தும் விடுகிறது. மறைத்தாலும் தன் மேல் ஒடுகிற காட்சி எதனாலும் பாதிக்கப்படாமல் ஸ்க்ரீன் தெரியாதபடி மறைத்தும் விடுகிறது. மறைந்தாலும் தன் மேல் ஒடுகிற காட்சி எதனாலும் பாதிக்கப்படாமல் ஸ்க்ரீன் இருக்கிறபடியே இருந்து கொண்டிருக்கிறது!அப்படித்தான் ப்ரஹ்மத்தின் ஆதாரத்தில் லோகமாயா நாடகம் நடப்பதும். இதிலே கூடுதலாக ஒரு பெரிய ஆச்சர்யம் என்னவென்றால், ப்ரஹ்மம்

ப்ரஹ்மமாகவே ஒரு பக்கம் இருந்து கொண்டிருந்தாலும், இன்னொரு

பக்கம் அதுவே மாயா சக்தியினால் தனித்தனி அந்தஃகரணங்களைப் பெற்று தனித்தனி ஜீவர்களாகவும் ஆகியிருக்கிறது. ஸாதனை பண்ணி அந்த

அந்தஃகரணத்தைப் போக்கிக் கொண்டுவிட்டால் ஜீவனே பிரம்மமாகிவிடுவான். அதாவது ஜீவாத்மா பரமாத்மா என்ற இரண்டு பேர் சேர்கிறது என்பதே இல்லை. இவனே தான் அவனாகத் தன்னைத் தெரிந்து கொள்கிறான். ஒருத்தனேதான் தன் நிஜமான ஸ்வரூபம் தெரியாதபோது ஜீவன் என்று சொல்லப்படுகிறவனாகவும், தெரிந்தபோது ப்ரஹ்மமாகவும் இருப்பது. இரண்டு வேறே ஆஸாமிகளே இல்லை. மனஸ் என்று கட்டைப் போட்டுக் கொண்டிருந்ததால் ஜீவன் என்ற பெயரில் இருந்த ப்ரஹ்மம் அந்தக் கட்டை உதறிவிட்டுத் தான் தானாக இருப்பதில் யாரும் யாரோடும் சேரவில்லை. அங்கே ஒருவிதமான உறவுமில்லை. நமக்கே நாம் என்ன உறவு?கட்டு அவிழ்ந்து விடுதலை கிடைப்பதுதான் மோக்ஷமாதலால் அதை மோக்ஷலோகம் என்று இடத்தை ஸம்பந்தப்படுத்திச் சொல்ல இடமே இல்லை'இப்படி அத்வைதம் ஒரே போடாகப் போட்டுவிடுகிறது!

'மனஸைக் கழட்டி'(கழற்றி)ப் போட்டுவிட்டால் நாமே ப்ரஹ்மம்;இங்கேயே மோக்ஷம்'என்றால், நமக்கு 'இத்தனை ஈஸியாக இப்பேர்ப்பட்ட ஸித்தியா?'என்று ஆச்சர்யமாயிருக்கிறது. நமக்கு மேலே பரமாத்மா என்று ஒருத்தர், அவருக்குக் கீழேதான் நாம் என்று இருக்கிற நிலையையே பேரானந்தமான முடிவு நிலை என்று சொல்லி, அதை அடைவதற்கும் எங்கேயோ எட்டாததாயிருக்கும் மோக்ஷ லோகத்திற்குப் போக வேண்டுமென்று மற்ற ஸித்தாந்தங்கள் சொல்வதாயிருக்க, நமக்கு மேலே ஒரு ஸ்வாமி, அதற்குக் கீழே நாம் என்றில்லாமல் நாமே ஸ்வாமியாயிருக்கிற மஹா மஹா பேரானந்தத்தை முடிவு நிலையாகச் சொல்கிற அத்வைதமோ, அதை அடைய எந்த எட்டாத லோகத்துக்கும் போக அவசியமில்லாமல் இங்கேயே அடையலாம் என்றும் சொல்கிறதே!எத்தனை ஸுலபமாக எத்தனாம் பெரிய லாபம்?என்று ஆச்சர்யமாயிருக்கிறது.

## எளிதாகத் தோன்றினாலும் கடினமானது.

ஆனால்- பெரிய 'ஆனால்'-மனஸைக் கழட்டி விட்டால்தானே அந்த அத்வைத ஸித்தி?அப்படிக் கழட்டுவதுதானே மஹா கஷ்டமாயிருக்கும்!கழட்டி விட்டால் உடனே பரம ஈஸியாக ப்ரஹ்மானந்த மோக்ஷம் என்பது வாஸ்தவம். ஆனால் கழற்றுவது?தொள தொளவென்று சட்டை போட்டுக் கொண்டிருந்தால் சுலபமாக கழற்றிப் போட்டுவிடலாம். இறுக்கமாக இருந்தால் சிரமம்தான். அதைவிட, மேல் தோலையே கழட்டிப் போடு என்றால் எத்தனை கஷ்டம்? அந்த மாதிரி நம் உடம்போடேயே ஒட்டிக் கொண்டு தோல் இருக்கிறது போலத்தான் உள்ளே மனஸ் கெட்டியாக ஒட்டிக் கொண்டிருக்கிறது. துணியில் அழுக்கு அப்படியே சிக்கு பிடித்திருக்கிற மாதிரி. சிக்கு போய்விட்டால் துணி சுத்தமாகிவிடும். புதுசாக சுத்தத் துணியை ஸ்ருஷ்டி பண்ணவில்லை. தற்போது பிடித்திருக்கிற சிக்கான மனஸைத் தேய்ந்து சிக்கைப் போக்கிவிட்டால் போதும்;அவனே தன்னுடைய நிஜ ஸ்வரூபமான ப்ரஹ்மமாக நிற்பான். ஆனால் அந்த சிக்கு நன்றாக, கெட்டியாகப்பிடித்துக் கொண்டிருப்பதைப் போகப் பண்ணுவதுதான் அஸாத்யமாக இருக்கிறது!மனஸ் லேசில் அழிய மாட்டேனென்கிறது. மனஸ் என்பது என்ன?எண்ணங்களை உற்பத்தி பண்ணும் கருவி. எண்ணம் நின்று போனால் மனஸூம் இல்லாமல் போய்விடும். ஆனால் எண்ணத்தைத்தான் நிறுத்தவே முடியவில்லை. அது ஸதா ஸர்வதா நாலு கால் பாய்ச்சலில் எங்கேயாவது பிய்த்துக்கொண்டு ஒடுவதாகவே இருக்கிறது. எத்தனையோ அநுபவங்கள், அநுபோகங்கள் நாம் கண்டிருக்கிறோம். கண்டு கொண்டேயிருக்கிறோம்;(நமக்குத்) தெரிந்து இந்த ஜன்மாவில்;தெரியாமல் எத்தனையோ பூர்வ

ஜன்மாக்களில்!அதுகள் ஒவ்வொன்றின் சுவடும் எண்ணத்தின் வேராக மனஸுக்குள் நன்றாக ஒடி, ஒயாமல் ஒழியாமல் ஏதாவது சிந்தனையை முளைக்கப் பண்ணிக் கொண்டேயிருக்கிறது. பெருங்காயம் செலவானவிட்டும் அது இருந்த பாத்திரத்தில் நெடி

விடாமலிருக்கிறதோல்லியோ?அந்த மாதிரி நாம் அநுபோகங்களை அநுபவித்துத் தீர்த்தபின்னும் அதன் நெடி விடாமல் இருக்கிறது. அதைத்தான் வாஸனை, ஜன்மாந்த்ர வாஸனை, ஸம்ஸ்கார வாஸனை என்றெல்லாம் சொல்வது. அது என்ன பண்ணுமென்றால் அந்த அநுபோகத்தைப் பற்றிய எண்ணத்தை மனஸில் கிளப்பிக் கொண்டேயிருக்கும். அதை மறுபடி அடைந்து அநுபவிக்க என்ன வழி என்ற மனஸை 'ப்ளான்'போட வைத்துக் கொண்டேயிருக்கும். இந்த நெடி அடங்கினால்தான் - 'வாஸனாக்ஷயம்'என்பது இதுதான் - மனஸ் நின்றுபோகும்.

நின்றுபோகும் என்றால் முடிந்து போகும் என்ற அர்த்தம். ஒடுகிற ஒன்று நிற்குமானால் அதுதானே ஒட்டத்திற்கு முடிவு?ஜல ப்ரவாஹம் ஒடிக் கொண்டே இருக்கும் ஒன்று. அணை போட்டு ஜலத்தை நிறுத்துகிறோமென்றால் - நின்று போகும்படிச் செய்கிறோம் என்றால் - அப்போது ஒட்டம் முடிந்து

விடுகிறதோல்லியோ?அப்படித்தான் ஸதா ஒடிக்கொண்டேயிருக்கும் மனஸ் நின்றது என்றால் அது முடிந்து போய்விட்டதென்று அர்த்தம்.

ஒரே விஷயத்தில் மனஸ் நிற்பது வேறு;இப்போது நான் சொல்கிற 'நிற்பது'வேறு. ஒரே விஷயத்தில் மனஸ் நிற்கும் போது மனஸில் பூராவாக அந்த விஷயமே வ்யாபித்துக் கொண்டிருக்கும். வேறே எந்த விஷயமும் அப்போது மனஸில் முளைக்காது. அப்படி மனஸை ஒன்றிலையே நிறுத்துவதும் மஹா கஷ்டந்தான். மனஸை இல்லாமல் பண்ணி முடிந்து விடுகிற நிறுத்தலுக்கு முந்தின படி இப்படி அதை ஒன்றிலேயே நிறுத்துவதுதான். ஒரு க்ரூரமான மிருகம் நாலா திசையிலும் பாய்ச்சுக்காட்டி ஒடிக்கொண்டே இருக்கிறவரையில் அதை எப்படி குறிவைத்து 'ஷுட் பண்ணமுடியும்?அது ஒரு இடத்தில் நிற்கும்படிப்

பண்ணினால் அப்போது 'ஷூட்'பண்ணிவிடலாமல்லவா?அப்படி நானா தினுசு சிந்தனைகளில் ஒடிக் கொண்டிருக்கும் மனஸை ஒரே விஷயத்தில் நிறுத்தினால்தான் 'ஷூட்'பண்ணமுடியும். இப்படி ஒரே விஷயத்தில் நிற்கிறபோது

மனஸ் என்பதே இல்லாமல் போய் விடவில்லை. அது இருக்கிறது. ஆனால் பல எண்ணங்களில் வாய் வைப்பதாக இல்லாமல் ஒரே எண்ணத்தில் தன்மயமாகியிருக்கும். நான் சொல்கிற மனஸின் அழிவாகிய நின்று போதலுக்கு இது பூர்வாங்கம். இதற்கு அப்புறம் மனஸே இல்லாமல் போய்விடவேண்டும். அப்போதுதான் ஆத்ம ஸாக்ஷாத்காரம் உண்டாகும். அதாவது, ஜீவபாவம் போய், தான் ப்ரஹ்மமே என்பது தெரியும்.

ஆனால் இப்படி ஒன்றிலேயே மனஸை நிறுத்துவது, அப்புறம் ஒன்று என்ற எண்ண வேரையும் பிடுங்கிப் போட்டுவிட்டு, மனஸையே ஸமூலம் (வேரோடு) அழிப்பது என்றால் - என்ன ப்ரம்ம ப்ரயத்னம் பண்ணினாலும் முடியுமா என்றிருக்கிறது. காரணம், 'அநாத்யவித்யா வாஸநயா ப்ரவர்த்தமானே'என்று சொன்னபடி, எப்போது ஆரம்பித்தது என்றே சொல்ல முடியாத காலத்திலிருந்து ஜன்ம ஜன்மாவாக மனஸூத் துணியின் மேலே ஏறிவிட்ட அஞ்ஞான வாஸனைச் சிக்கு அத்தனை தடிப்பாக ஆகியிருப்பதுதான்.

---



## ஈச்வரானுக்ரஹத்தினால் மோக்ஷம்

இருந்தாலும் முயற்சியைக் கைவிடாமலிருந்தால் ஈச்வரானுக்ரஹம் ஏற்பட்டு, இந்த மஹா பெரிய லக்ஷ்யமான, மஹா பெரிய ஆனந்தமான ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் - தான் ப்ரஹ்மமே என்று தெரிந்து கொண்டு அப்படியே இருக்கிற

சாச்வதமான நிலை ஸித்திக்கும்.

இப்போது ஈச்வரானுக்ரஹம் என்று சொன்னேனே அந்த ஈச்வரன் யார் என்றால் :ஜீவ-ஜகத்துகள் மாயையின் 'ஷோ'வாகவே இருந்தாலும், அந்த 'ஷோ'வில் எத்தனை ஒழுங்குகள் இருக்கின்றன?தாறுமாறான பைத்தியக்காரக் கூத்தாக இல்லாமல் அது அழகான நாடகமாக அல்லவா இருக்கிறது?அதில் ஒரு அல்ப அம்சமேயான இந்த மநுஷ்ய மனஸ் வேண்டுமானால் பைத்தியமாகக் கூத்தாடுகிறதே ஒழிய, மற்றபடி எத்தனையோ பெரிய ஸூர்ய-சந்த்ர-நக்ஷத்ர-க்ரஹ ஸஞ்சாரங்களிலிருந்து ஒரு சின்னஞ்சிறிய அணுவுக்குள் பரமாணுவின் ஸஞ்சாரம் வரை எல்லாம் எத்தனை ஒழுங்காக நடக்கின்றன?இந்த மனஸையுங்கூட நிறுத்திவிட்ட மஹா பெரியவர்கள் இருக்கிறார்களே அவர்களிடமிருந்து அப்படி நிறுத்தி வைப்பதற்கு வழியாக எத்தனை ஒழுங்குமுறைகள் தர்மம், தர்மம் என்ற பெயரில் வந்திருக்கிறது?இன்னும், இன்ன காரணத்துக்கு இன்ன விளைவு என்ற ஒழுங்கு தப்பாமல் எத்தனையோ கோடி ஸமாசாரங்கள் ஒன்றுக்கொன்று கைகொடுத்துப் பின்னிக் கொண்டு போவதால்தானே இந்த ப்ரபஞ்ச வாழ்க்கை ஒரு சீரில் ஏற்பட்டு, யுகாந்தரமாகத் தடம் புரளாமல் நடந்து கொண்டு போகிறது?இதையெல்லாம் கவனித்தோமானால் பரமார்த்த தசையில், அதாவது தத்வ த்ருஷ்டியில், ஜீவ ப்ரஹ்ம பேதமில்லை என்று பார்க்கும்போது ஜீவ-ஜகத்துக்கள் மாயை என்றாலும், நடைமுறையாகத் தெரியும் வ்யவஹார தசையில் பார்த்தோமானால், இதுகளையும் திறம்படத் திட்டம் போட்டு நடத்தி வரும் ஒரு மஹா பெரிய புத்தி, மஹா பெரிய சக்தி இருப்பதாகத் தெரியும். அதைத்தான் ஈச்வரன் என்பது.

ப்ரஹ்மந்தான் மாயையோடு கூடி (கூடி என்றால் அஸலே கூடி இல்லை;அது எதனோடும் கூட்டுச் சேர முடியாத தனித் தத்வம்;ஆனாலும் மாயையோடு கூடின மாதிரி இருந்து கொண்டு) ஜீவ -ஜகத்துக்களை ஆக்கி நிர்வாஹம் பண்ணும் ஈச்வரனாக இருக்கிறது. அவனுடைய ஆதீனத்தில் தான் ஜீவலோகம் பூராவும் இருப்பது. ஆகையால் நமக்கு மாயை விலகி, நாம் அவனுடைய ஆதீனத்திலிருந்து விடுபட்டு அவனுக்கும் ஆத்மாவுக்குள்ள ப்ரஹ்மமாக நம்மைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அதற்கு அவனுடைய

அநுமதி இல்லாமல் முடியாது. அதாவது ஈச்வராநுக்ரஹத்தால்தான் மனஸ் நின்றுபோய், ஒரு வழியாகத் தொலைந்துபோய், ஸாக்ஷாத்காரம் ஏற்படணும்.

மாயா லோகத்தில் ஸகல கர்மாவுக்கும் பலனைத் தருபவன் ஈச்வரன்தான். இதிலே இன்ன காரியத்திற்கு இன்ன விளைவு என்று எத்தனையோ கோடி விதிகள்

அவன் போட்டபடிதானே நடக்கின்றன?அப்படி நாம் பண்ணும் ஒவ்வொரு காரியத்திற்கும் விளைவாகக் கிடைக்கும் கர்ம பலனும் அவன் கொடுத்துத்தான் கிடைக்கிறது. கர்மா பண்ணுவதும், அதற்குப் பலன் அநுபவிப்பதும்தான் திரும்பத் திரும்ப ஜன்மங்களைக் கொடுத்து நம்மை ஸம்ஸார சக்கரத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கச் செய்வது. கர்மா நின்று போனால்தான் கார்யமேயில்லாத ப்ரஹ்மமாக இருக்க முடியும். கர்மாவில் ஜீவனைத் தூண்டிவிடுவது மனஸ்தான். மனஸின் விருப்பங்களின்படி, ஏவலின்படிதான் நாம் எந்தக் கார்யமும் செய்வது. ஆகையால் மனஸ் நின்றாலே கர்மா நிற்கும். மனஸோ தன்னால் நிற்கவே மாட்டேனென்கிறது. ஒரு வஸ்து எப்படி தன்னைத்தானே எப்படி ஷட் பண்ணிக் கொள்ளும்?ஆகவே மனஸ் செய்யக்கூடியது, தான் அழிய மாட்டோமா, மாட்டோமா என்ற தீவிரமான தாபத்தோடுகூட, தான் அழிந்த பிறகு உண்டாகிற ஜீவ-ப்ரஹ்ம அபேத நிலையைப் பற்றி ஸதாவும் நினைத்துக் கொண்டிருப்பதுதான். இதற்குப்பேர் 'நிதித்யாஸனம்'என்பது. விடா முயற்சியோடு இதைப் பண்ண வேண்டும். 'அத்வைத ஸாதனை'என்பதன் 'ஜிஸ்ட்'- ஸாராம்சம்- இப்படி விடா முயற்சியோடு நினைப்பதுதான். இதுவும் ஒரு கார்யந்தான். நடப்பது காலின் கார்யம், தின்பது வாயின் கார்யம் என்கிற மாதிரி, நினைப்பது மனஸின் கார்யம்.

எல்லாக் கார்யங்களையும் கவனித்துப் பலன் தருபவன் ஈச்வரன்தான் என்று சொன்னேனல்லவா?அவன் இந்த நிதிஸ்யானமாகிய நினைப்புக் கார்யத்தையும் கவனித்துக் கொண்டேயிருப்பான். விடாமல் அதை நாம் தொடர்ந்து கொண்டே போனால், 'தன்னுடைய பழைய கர்மா பாக்கி முழுவதையும் தீர்த்துக் கட்டி விடுகிற அளவுக்கு இவன்

அந்த நிதித்யாஸன கர்மாவைப் பண்ணி விட்டான்'என்று அவன் தீர்ப்புப் பண்ணி, நம்முடைய தனி மனஸை- நாம் ப்ரஹ்மத்திற்கு வேறான ஜீவன் என்று நம்மை தனிப்படுத்திக் காட்டும் மனஸை - இல்லாமல் போய்விடும்படியாக அநுக்ரஹம் பண்ணுவான்.

இதைத்தான் ஈச்வராநுக்ரஹம் ஏற்பட்டு ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திக்கும் என்று சொன்னது. நம்முடைய ஜன்மாந்த்ர கர்மா எல்லாம் தீர்கிற அளவுக்கு கணக்குத் தப்பாமல் நாம் ஸாதனை பண்ணினால்தான் அநுக்ரஹிப்பான். என்றில்லை. அப்படி துல்லியமாகக் கணக்குப் பார்த்துத்தான் அநுக்ரஹிப்பது என்றால் அதற்கு அநுக்ரஹம் என்றே பேர் சொல்லப்படாது. மெகானிகலாக கணக்கு ஸரி பார்த்து ஒரு வியாபாரி அல்லது அக்கவுன்டன்ட் பண்ணுகிற மாதிரிச் செய்வதற்கு அநுக்ரஹம் என்ற பேர் ஸரியில்லை. ப்ரேமை, கருணை, மன்னிக்கிறது, கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாலும் போனால் போகிறதென்று தூக்கிப் போடுகிற தாக்ஷிண்யம் இதெல்லாம் சேர்ந்திருப்பதுதான் அநுக்ரஹம்.

அநுக்ரஹம் என்ற வார்த்தைக்கு ஒரு அர்த்தம் தோன்றுகிறது. 'அநு'என்பது 'அநுஸரித்து' அதாவது 'தொடர்ந்து' போவது என்று அர்த்தம் கொடுக்கும்.

'க்ரஹம்'என்றால் பிடித்துக் கொள்வது. நாம் ஈச்வரனை அவனுடைய நிர்குணமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் தொடர்ந்து போய் பிடிக்க முயற்சி

பண்ணும்போது ஈச்வரனும் நம்மைத் தொடர்ந்து வந்து பிடித்துக் கொள்வதுதான் 'அநுக்ரஹம்'!அவனைப் பிடிப்பதில் ஒரு குறியாக இல்லாமல் இந்த மனஸ் மறுபடி எங்கேயாவது ஓடும். ஆனாலும் அவன் அதைத் தொடர்ந்து, அதாவது துரத்திக் கொண்டே வந்து பிடித்து, அது தன்னைப் பிடிக்கும்படியாகப் பண்ணுவதுதான் 'அநுக்ரஹம்'. தன்னை என்றால் மாயையோடு கூடிய நிலையிலுள்ள ஈச்வரனையு ந்தான்;மாயா ஸம்பந்தமில்லாத ப்ரஹ்மத்தையுந்தான். ஏனென்றால், நம் மாதிரி ஈச்வரனும் மாயா ஸம்பந்தமுள்ளவன்தான் என்றாலும் நாம் மாயைக்கு அடிமைப்பட்டு மதியிழந்து ஆத்மஸ்வரூபத்தை மறந்திருப்பது போல இல்லாமல் அவன் மாயையும் தனக்கு

அடிமையாக வைத்துக் கொண்டு, இத்தனை மாயா கார்யம் பண்ணுகிற போதிலும் பூர்ணமான ப்ரஹ்மாநுபவத்துடன் இருப்பவன். ஆகையால் அவனை மாயா ஸஹித ஈச்வரனாகவே நாம் பிடித்தாலும் அவன் மாயா ரஹித ப்ரஹ்மமாக நம்மைத் தன்னோடு ஐக்யம் பண்ணிக் கொள்வான்.

மாறி மாறி ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் 'ரன்னிங் ரேஸ்'எப்படி நடக்கிறதென்றால்:Þõ¡ (põ¡) Üõ¬ùŠ H®,è ºòŸC ð‡µAø«ð£¶ Üõ¡, 'ãèŠð†ì è˜ñ£ ð£,A àœ÷ ÞõÂ,° ï£‹ Ü^î¬ù ú§ôð^F™ â™ô£ ú‹ð^¶,èÀ,°‹ «ñŸð†ì ú£þ£^è£ó^¬î, ªè£´^î£™ î˜ñ Gò£ò«ñ Þ™¬ô'â¡Á H®ðì£ñ™ å´õ¶;Üîù£™ põ ñùú§, 'Üõ¡î£¡ H®ðì¬ô«ò!'â¡Á Ü½^¶Š «ð£Œ îù,°Š H®ð´Aø è‡ì è‡ì Mûòƒ èO™ å´õ¶;ÜŠ«ð£¶ ß„õó¡ è¼¬í«ò£´ Üõ¬ù^ ªî£ì˜‰¶ ¶ó^F, ªè£‡´ õ‰¶ H®^¶^ î¡¬ù Üõ¡ H®^¶, ªè£œÀ‹ð® ð‡µõ¶;Ýù£½‹ Þ¬î å«ó i„C™ ªó£‹ð 'hQò¡ì£'è„ ªêŒõ¶ è˜ñ î˜ñ^FŸ° ãŸøF™¬ô â¡ðî£™, î£¡ ªî£ì¼õ¬î»‹ H®^¶, ªè£œõ¬î»‹ põ¡ ªîK‰¶ ªè£œ÷£î Ü÷¾,° Ü^î¬ù ú¨zññ£è„ ªêŒ¶ ñù¬ú ÜŠðŠ«ð£ Ý^ñ Mûò^F™ ß´ð´‹ð® (Ü¶ î£¡ Üõ¬ùŠ H®^¶, ªè£œõ¶ - Ýù£½‹ ªó£‹ð «ôê£è^ ªî£´õ¶;ÜŠð®),„ ªêŒõ¶;«ôê£ù H®Š¬ð põ¡ ÞÁ,èŠ ð‡E, ªè£‡´ ÜîŸè£ù è£ô‹ õ¼õîŸ° º¡ù£®«ò M´ð†´Mì£ñ™ úñò^F«ô ÜõQìI¼‰¶ ï¿M M´õ¶;põ¡ ñù¬ú^ îPªèì M´õ¶;ÜŠ¹ø‹, 'ÜîŸ°œ«÷ Þõ¡ Ü‹¼î^F«ô º¿è, Ãì£¶ â¡Á ï£‹ MôA, ªè£‡ì£™, Þõù£ù£™ üô^F«ôÃì º¿è£ñ™ ê£,è¬ìJ™ «ð£Œ M¿Aø£«ù!'â¡Á ß„õó¡ ðKî£ðŠð†´ ñÁð® ªè£…ê‹ H®ð´õ¶- â¡PŠð® Þ¿^î®,è «õ‡®ò ñ†´‹ Þ¿^î®^¶ M†´, è£ô ,ó«ñí põ¡ ï¡ø£è«õ ñùv º¿¬î»‹ ôzò^F™ º¿,°‹ð®Š ð‡E ÜŠ«ð£¶ ß„õó¡ å«ó ¶ó^î£è^ ¶ó^F å«ó H®ò£èŠ H®^¶, Üî£õ¶ 'Ü¸óý‹'â¡ð¬îŠ Ì˜íñ£è„ ªêŒ¶ ú£þ£^è£ó^F™ «ê˜Šð¶ â¡Á ïì,Aø¶.

கர்ம பல தாதா என்பவன் ஒரு நியாயாதிபதியின் கார்யத்தைச் செய்வதால்

ரொம்பக் கண்டிப்புடனேயே கணக்குப்படி பலன் தரவும் உரிமை பெற்றவன். அவன் அப்படிச் செய்தால் நியாயமில்லை என்று சொல்ல நமக்கு உரிமையில்லை. ஆனாலும் பரம கருணையோடு அவன் கர்ம பலனை எவ்வளவோ குறைத்து 'கன்டோன்' பண்ணியே அநுக்ரஹம் செய்கிறான். ஒரே ஸ்டிரிக்டாக இல்லை என்பதற்காக ஒரே லீனியன்டாகவுமில்லை. உச்சத்திலெல்லாம் உச்சமான ஒரு நிலையை சாச்வதமாக கொடுக்கும்போது ரொம்பவும் தகுதியே பார்க்காமல் பண்ணினால் ஸரியில்லைதானே?பத்து வருஷம் ஜெயில் தண்டனை பெற வேண்டியவனுக்கு ஒரு வருஷம், இரண்டு வருஷம், மிஞ்சினால் ஐந்து வருஷம் வரை குறைத்து சிக்ஷை காலத்தை பாதியளவு வரை பண்ணுவதை வேண்டுமானால் 'ழீஞுபவமீ வீநீமீ மீமீனீஜீமீகூஷீமீபீ தீஹ் னீமீகூஷீநீஹ்'(கருணையால் கனிவிக்கப்பட்ட நீதி) என்று சொல்லலாம். அதற்கும் ஜாஸ்தி குறைத்தால் 'நீதி நியாயமே கிடையாதா?'என்று தானே கேட்கத் தோன்றுகிறது?இங்கேயோ தண்டித்து-கர்மா என்ற குற்றத்தைத் தண்டித்து - தீர்ப்பதோடு விஷயம் முடியவில்லை. கர்ம நாசம், மனோ நாசம் (கர்மத்திற்கு காரணமான மனஸின் நாசம்) இவைகளோடு கதை முடியாமல், ரொம்பப் பெரிய வெகுமதியாக ஸாக்ஷாத்காரம் என்பது வேறு கிடைக்கிறது என்னும் போது, ஒரு அளவுக்குத்தான் ஈச்வரன் மன்னிக்க முடியும் என்று தெளிவாகும்.

---



## காலம் செல்வதாயினும் முயற்சி தொடங்க வேண்டியதே

ஞானவான், ஞானி என்று இரண்டு பேர். ஞானவான் என்பவன் ஜீவாத்மா எனப்படுபவனின் ஆத்மா வாஸ்தவ்யத்தில் ப்ரஹ்மமேதான் என்று படிப்பறிவாலும்,

கேள்வியறிவாலும் நன்றாகத் தெரிந்து கொண்டு அதை ஸொந்த அநுபவமாக்கிக் கொள்ள முயற்சி பண்ணுகிறவன். ஸாதாரண ஜனங்களின் நிலைக்கு மேலே போன ஸாதகன். ஞானி என்பவன் அந்த ஸொந்த அநுபவத்தைப் பெற்றே விட்டவன்;உச்சி சிகரத்தையே பிடித்து விட்டவன். கீதையில் பகவான் சொல்கிறபோது, ப்ரஹ்ம ஞானத்திற்கு முயற்சி பண்ணுபவனான அந்த ஞானவான்கூட அநேக ஜன்மாக்களுக்கு அப்புறமே தன்னை வந்தடைகிறான்;அதாவது தனக்கும் ஆத்மாவுக்கு உள்ள ப்ரஹ்மமாக ஸித்தி பெறுகிறான் என்று சொல்கிறார்:

"பஹூநாம் ஜன்மநாம் அந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே"

"பஹூநாம் ஜன்மநாம் அந்தே"என்றால் 'அநேகம் பிறவிகளின் முடிவில்'என்று அர்த்தம். இன்னோரிடத்திலும் 'அநேக ஜன்ம ஸம்ஸித்தஸ் - ததோ யாதி பராங்கிதம்' என்று சொல்லியிருக்கிறார். அநேகம் பிறவிகளில் கொஞ்சங் கொஞ்சமாக ஸித்தி பெற்றே பரகதி பெறமுடியும் என்று அர்த்தம். இப்படி எத்தனையோ பிறவிகளுக்குப் பின்னர்தான் ஸாக்ஷாத்காரம் பெறுவது என்பதுங்கூட அவன் கருணையால் நம்மை ஒரளவுக்குத் தூக்கிவிடுவதால்தான். இல்லாவிட்டால் அந்த 'பஹூ'வும் 'அநேக'வும் இன்னம் பல மடங்கு ஜாஸ்தியாயிருக்கும்!

ஏனென்றால், முன்னேயே சொன்னாற்போல் லட்சியம் மஹாபெரிசாக இருக்கிறது. 'ப்ரஹ்மமாகவே ஆவது'என்றால் ஸாதாரண சமாசாரமா?அந்த லட்சியத்திற்காக முயற்சி செய்பவனோ மஹா சின்னவனாக இருக்கிறான்!அப்போது பஹு பஹு ஜன்ம காலம் பிடிக்குந்தானே?ஒரு பெரிய ராஜா இன்னொரு முஸ்தீபு பண்ண வேண்டியிருக்கிறது. அப்படியிருக்கும் போது ஸாதாரணமான ஒரு தனி ஆள் ஒரு ராஜ்யத்தைப் பிடிக்கிறேன் என்று புறப்பட்டால் எத்தனை ப்ரயத்னம் பண்ணனும்?அகண்டமான ஆத்ம ஸாம்ராஜ்யத்தை ஒரு ஜீவன் பிடிக்கப் புறப்படுவதும் அப்படித்தான்.

விஷயம் ஒரு பக்கம் பார்த்தால் ரொம்பவும் ஸிம்பிளாக

இருக்கிறது. நாம் எங்கேயோ வைகுண்டத்தில் கைலாஸத்தில் இருக்கும் ஒரு ஸ்வாமியிடம் போக முயற்சி எடுக்கணும் என்றில்லாமல் ஸ்வயம் ஸித்தமாக, இப்பவே நம்மிடம் இருக்கிற நம்மையே தெரிந்து கொள்வதுதான் லட்சியம் என்றால், இத்தனை ஸிம்பிளாகயிருக்கிறதே என்று தோன்றுகிறது. நாம் நாமாக இருப்பது என்ன

கஷ்டம் என்று தோன்றுகிறது. ஆனாலும் கார்யத்தில் பண்ணிப் பார்த்தாலோ இதை விட கஷ்டமான ஸாதனை எதுவுமிருக்க முடியாதென்று தெரிகிறது.

கத்திமுனை நடை மாதிரியாக்கும் இந்த ஸாதனை என்றே கடோபநிஷத்தில் சொல்லயிருக்கிறது. 'ஆனாலும் அதற்காகப் பின் வாங்கப்படாது.
எழுந்திருடா!முழிச்சுக்கோடா!உசந்த ஆசார்யர்கள் இருக்கா!அவாளைப் போய்ப் பிடிச்சுண்டு வழி தெரிஞ்சுக்கோப்பா!கத்தி முனையிலேயும் ஜோரா நடந்து பாஸ் பண்ணிடலாம்!என்று கஷ்டத்தையும் சொல்லி, அந்த கஷ்டத்தை ஸாதித்து ஜயிக்கிற வழியையும் சொல்லியிருக்கிறது. ஆகக்கூடி கடின ஸாதனைதான் என்று தெரிகிறது. ஆசார்யாளின் குருவுக்கு குருவான கௌடபாதாச்சார்யாளும் நன்றாகப் பயமுறுத்திச் சொல்லியிருக்கிறார். 'அத்வைதந்தான் அபய நிலை. ஆனால் அதை ஸாதிக்கவே யோகிகளில் பல பேர்கூட பயப்படுகிறார்கள். ஏனென்றால் ஒரு தர்ப்பை நுனியாலே தோய்த்துத் தோய்த்து உதறியே ஸமுத்ர ஜலம் அவ்வளவையும் காலி பண்ணுகிற அளவுக்கு விடாமுயற்சியோடு பிரயாஸை பண்ணினால்தான் மனஸிலிருந்து எண்ணத்தையெல்லாம் உதறிவிட்டு ஆத்மாவாக இருக்க முடியும்'என்று அவர் எழுதி வைத்திருக்கிறார். ஆனாலும் எழுதி வைத்ததற்கு காரணம் அப்படி உதறவும் முடியும் என்பதுதான்!அதே ஸமயம் இதிலிருந்தெல்லாம் என்ன தெரிகிறதென்றால், பொய் நானைப் போகப்பண்ணி நிஜ நானாக இருப்பது ரொம்ப ரொம்ப சிரம ஸாத்யம் என்பதே. பொய் நான்தான் மாயா ச்ருஷ்டியான மனஸ். நிஜ நான் ஸத்யமான ப்ரஹ்மம்.

எத்தனை கஷ்டமானாலும், எத்தனை ஜன்மா பிடித்தாலும்

அந்த முயற்சிக்கு நாம் இன்றைக்கே பிள்ளையார் சுழி போடவேண்டும். தள்ளிப்போடப் பட்ட ஜன்மாக்களும் நீண்டு கொண்டேதான் போகும்?ஆத்ம விஷயமான முயற்சியில் இப்பவும் நாம் இறங்கவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது என்ன பண்ணுவோம்?இன்னும் நிறைய தப்புத் தண்டாக்கள் பண்ணுவோம். புதுசாகப் பண்ணுகிற இந்த கர்மாக்களினால் உள்ளுக்குள்ளே மனஸின் சிக்கு இன்னும் அடை அடையாய் ஏறி, ஜன்மாக்களும் மேலே மேலே குட்டி போட்டுக் கொண்டுதான் போகும். அதனால் தப்பிப்பதற்கான பிரயாஸையை எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவில் ஆரம்பிப்பதுதான் புத்திசாலித்தனம்.

'தப்பிப்பதற்கான ப்ரயாஸை'என்று ஒரு வார்த்தை சொன்னேன்;முயற்சி பண்ணனும்'என்றும் நடுநடுவே சொன்னேன். இந்த இரண்டையும் தான் 'ஸாதனை''ஸாதனை' என்பது. என்ன பண்ணுவது என்று ஸரியாகத் தெரியாமல், புரியாமல் நாமாக ஏதேதோ ப்ரயாஸை, முயற்சி பண்ணித் திண்டாடுவதாக இல்லாமல், லக்ஷ்யத்தை அடைந்த பெரியவர்கள் க்ரமமாக இப்படியிப்படிப் பண்ணப்பா!என்று போட்டுக் கொடுத்திருக்கும் வழிமுறைப்படி முயற்சி பண்ணுவதற்குத்தான் ஸாதனை என்று பேர்.

---



## ஸாதன சதுஷ்டயம் : வேத வழியில் ஆசார்யாள் வகுத்த முறை

பரம கருணையோடு நம்முடைய ஆசார்யாள்-சங்கர பகவத் பாதாள் - அப்படி அத்வைத லக்ஷ்யத்திற்கு ஸாதனா க்ரமம் வகுத்துக் கொடுத்திருக்கிறார்.

எதுவும், எல்லாமும் அவர் ச்ருதியை (வேதத்தை)

அடிப்படையாகக் கொண்டுதான் செய்வார். 'எண் சாண் உடம்புக்கு சிரஸே ப்ரதானம்'என்கிறோம். அப்படி ச்ருதிக்கும் ப்ரதானமாக ஒரு சிரஸ் இருக்கிறது. உபநிஷத்துக்கள்தான் அப்படிப்பட்ட ச்ருதிசிரஸ். 'ச்ருதிசிரஸ்'என்று சொன்னால் உபநிஷத் என்று அர்த்தம். அப்பேர்ப்பட்ட உபநிஷத்துக்களில் சொல்லியிருப்பதன் அடிப்படையின் மேலேயே, அதை அஸ்திவாரமாகக் கொண்டே, ஆசார்யாள் பெரிசாகக் கட்டிடம் கட்டியிருக்கிறார்.

ஸாதன சதுஷ்டயம் என்பதாக நான்கு அங்கங்கள் கொண்ட ஒரு ஸாதனை க்ரமத்தை அவர் வகுத்துக் கொடுத்திருக்கிறார். அவருடைய நூல்களிலெல்லாம் சிகரமாகவுள்ள (ப்ரஹ்ம) ஸூத்ர பாஷ்யத்தில் முதல் ஸூத்ரத்தின் வ்யாக்யானத்திலேயே, 'எதற்கப்புறம் ப்ரஹ்மத்தைப் பற்றிய விசாரணை ஆரம்பிக்கலாமென்று சொல்கிறோம்'என்று சொல்லி, 'நித்யாநித்ய வஸ்துவிவேக'என்று ஆரம்பித்து இந்த சதுஷ்டயத்தின் நாலு அங்கங்களுடைய பெயரையும் தெரிவித்திருக்கிறார்.

ஏற்கனவே இருந்த மூல நூல்களுக்கு விளக்கமாக 'பாஷ்யம்'என்று அவர் எழுதியவற்றில் ஸூத்ரபாஷ்யத்திற்கு முதலிடம் என்றால், வேதாந்த விஷயத்தில் அவரே ஸொந்தமாக எழுதிய 'ப்ரகரண'ங்களில் முதலிடம் பெறுவது 'விவேக சூடாமணி'. அதில் ஸாதன சதுஷ்டயத்தின் எல்லா அங்கங்களுக்கும் நன்றாகவே டெஃபனிஷன்- லக்ஷணம் - சொல்லியிருக்கிறார்.

ஸாதநாந்யத்ர சத்வாரி கதிதாநி மநீஷிபி:|

யேஷு ஸத்ஸ்வேவ ஸந்நிஷ்டா யதபாவே ந ஸித்த்யதி||

என்று விஷயத்தை ஆரம்பிக்கிறார். 'ஸத்வஸ்துவில் நிஷ்டை கூடி நிலைப்பதென்பது இந்த நாலு உபாயமில்லாமல் நடக்காது'என்பதை 'ஸந்நிஷ்டா யத் அபாவே ந ஸித்த்யதி'என்பதில் தீர்மானமாகச் சொல்லி விடுகிறார். இந்த நாலும் கைகூடினால்தான் ஸத்வஸ்துவில் நிஷ்டை உண்டாகும் என்பதை 'யேஷு ஸத்ஸு ஏவ

ஸந்நிஷ்டா'என்று தெரிவிக்கிறார். 'இந்த ஆத்ம ஸாதனைக்கு நாலு ஸாதனங்கள் மநீஷிகளால் கூறப்பட்டுள்ளன:ஸாதநாநி அத்ர சத்வாரி தகிதாநி மநீஷிபி:' என்று ஆரம்பித்து, அவை மேற்கொள்ளப்பட்டால் ஸித்தி, இல்லாவிட்டால் இல்லை என்று முடித்திருக்கிறார்.

அது யார் மநீஷி என்றால், ஸாதாரணமாக இருக்கப்பட்ட நாமெல்லாரும் மநுஷ்யர்கள். நம்மிலே உசந்த புத்தி சக்தியுடன் ஸரி தப்புக்களை நன்றாகத் தீர்ந்து தீர்மானம் பண்ணி சாஸ்த்ரஜ்ஞர்களாகவும் சிஷ்டர்களாகவும் இருக்கும்

பெரியவர்களே மநீஷிகள். அவர்கள் வகுத்துக் கொடுத்ததே 'ஸாதன சதுஷ்டயம்'என்று ஆசார்யாள் ஸம்பிரதாய மரியாதையுடன் 'இன்ட்ரொட்யூஸ்' பண்ணுகிறார். இது விவேக சூடாமணியில்.

'அபரோக்ஷாநுபூதி'என்று ஒரு ப்ரகரணம் ஆசார்யாள் உபகரித்திருக்கிறார். 'அபரோக்ஷம்'என்றால் நேர்முகம். தானே ப்ரஹ்மம் என்பதை எவரோ சொல்லி, எதிலோ படித்துத் தெரிந்து கொள்ளாமல் ஸொந்தத்தில் நேர்முகமாக அநுபவித்துத்

தெரிந்து கொள்வது அபரோக்ஷாநுபூதி. அந்த பேர் கொண்ட ப்ரகரணத்திலும் இந்த ஸாதனை க்ரமம் பற்றிச் சொல்லியிருக்கிறார். அரிச்சுவடி மாதிரி சின்ன புஸ்தகமாக 'பால போத ஸங்க்ரஹம்'என்று எழுதியதில் கூட இவ்விஷயம் குறிப்பிட்டிருக்கிறார்.

எழுதியவர் பெயர் தெரியாமல் 'ஸாதன சதுஷ்ட்ய ஸம்பத்தி'என்ற தலைப்பிலேயே ஒரு புஸ்தகம் (தஞ்சாவூர்) ஸரஸ்வதி மஹால் ஸீரிஸில் இருக்கிறது. 'ஸம்பத்தி'என்றால் ஸம்பத்துத்தான். ஸாதனை முறை என்பது நமக்கு ஒரு பெரிய ஸம்பத்து, பெருஞ்செல்வம் என்று அர்த்தம்.

சதுஷ்டயம் என்றால் நான்கு விஷயம் சேர்ந்த அமைப்பு. நான்கு என்றாலும் இந்த ஸாதன சதுஷ்டயத்தில் மூன்றாவதான 'சமாதி ஷட்க ஸம்பத்தி'என்ற ஒரு அங்கத்திலேயே ஆறு அம்சங்கள் இருக்கின்றன - தலை என்ற ஒரு அங்கத்திலேயே கண்,காது,மூக்கு, வாய் என்று

பல இருக்கிறது போல!சதுஷ்டயம் என்ற நாலங்க அமைப்பிலே ஒரு அங்கமே ஆறு அம்சங்களைக் கொண்டதாயிருப்பதால், நாலோடு இன்னம் ஐந்து சேர்ந்து ஒன்பது படிகளைக் கொண்டதாக இந்த ஸாதனை க்ரமம் இருக்கிறது. அந்த ஒன்பதும் இன்ன இன்ன என்று சொல்லலாமென்றுதான் உங்களையெல்லாம் இப்போது உட்கார்த்தி வைத்திருப்பது.

ஒன்பது படிகள் என்று சொன்னேன். படி வரிசை மாதிரி இவற்றை ஒன்றுக்கப்புறம் அடுத்தது, அப்புறம் மூன்றாவது, அதிலிருந்து நாலாவது என்று ஏறிப்போவது போலத்தான் சொல்லியிருக்கிறது. ஆனாலும் முழுக்க அப்படியே வைத்துக் கொள்ள முடியவில்லை. கணக்கு, ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி மூன்றையும் சேர்த்து ஆரம்ப க்ளாஸில் கொஞ்சம் படித்து விட்டு அப்புறம் 'மெயின்'என்று ஒன்று மட்டும் எடுத்துக் கொண்டு டிகிரி வாங்குகிறது;அப்போதும் 'ஆக்ஸிலரி'யோ 'ஆன்ஸிலரி'யோ ஏதோ ஒரு பேரில் மற்றதையும் துணை சப்ஜெட்டுக்களாகப் படிப்பது என்று இருப்பது போல, ஸாதனை முறையின் எல்லா

அங்கங்களையுமே முதலிலிருந்து அடிப்படையாகத் தெரிந்து கொண்டு அப்புறம் ஒவ்வொன்றுக்கு முக்யத்வம் தந்து முன்னேற வேண்டியிருக்கும். விருந்து சமையல் பண்ணினால் இரண்டு மூன்று அடுப்பில் ஒன்றில் சாதம் கொதித்துக் கொண்டிருக்கிறபோதே, இன்னொன்றில் கறிகாய் வெந்து கொண்டிருக்கும்;

இன்னொன்றில் வாணலியில் எண்ணெய் சூடேறிக் கொண்டிருக்கும். கல்லுரலில் பாட்டுக்கு அரைவை நடந்து கொண்டிருக்கும். அப்புறம் ஒவ்வொரு ஸ்டேஜில் கறிகாயை மட்டும் கவனித்து, கொட்டிக் கலக்கி, அவியல் பண்ணுவது;

இன்னொன்றில் வடை தட்டி வாணலியில் போடுவது என்று நடக்கும். சாப்பிடும்போதும் அப்படியேதானே கலந்து கலந்தும் தனித்தனியாகவும் இரண்டு தினுஸூகளிலும் பண்ணுகிறோம்?ஒவ்வொரு வாய் ஒவ்வொன்றைத் தொட்டுக் கொள்வது, தனியாகப் பாயஸம், ஸ்வீட் சாப்பிடுவது, கறி கூட்டு ஊறுகாய்ளையும் நடு நடுவே ருசி பார்த்தபடி சாதத்தோடு கலந்து கொண்டு சாப்பிடும் ரஸத்தையும் மோரையும் தனியாக டம்ளரில் வாங்கிச் சாப்பிடுவது என்று

பண்ணுகிறோம். ஆரம்பத்தில் பருப்புஞ் சாதத்தில் ஸாம்பாரைக் கலந்து கொண்டு சாப்பிடும் போதே பச்சடியில் தயிரையும் ருசி பார்க்கிறோம். கடைசியில் அந்தத் தயிரையே சாதத்தில் கலந்து கொண்டு சாப்பிடும்போது ஸாம்பார் தொட்டுக் கொள்ள வருகிறது. இப்படி ஸாதனையில் ஒரு ஸமயத்தில் மெயினாகவும் 'பக்கவாத்ய'மாகவும் இருக்கிற அம்சங்களே அப்புறம் மெயின் பக்க வாத்தியமாகவும், பக்கவாத்தியம் மெயினாகவும் மாறி மாறி வருவதுண்டு. ஒரு ப்ராமணர் சொன்னார். பத்னி 'அகத்துக்கு இல்லாத'நாட்களில் சாதம் மட்டும் வடித்துக் கொண்டு விடுவாராம். முதலில் பருப்புப் பொடி சாதம், தயிர் தொட்டுக் கொண்டு சாப்பிடுவாராம்;அப்புறம் தயிர் சாதம் பருப்புப் பொடி தொட்டுக் கொண்டு சாப்பிடுவாராம். ஸாதனையிலும் இந்த மாதிரி வருவதுண்டு. அதன் அங்கங்கள் கலந்து கலந்தும் ஒவ்வொரு ஸ்டேஜில் ஒவ்வொன்று முக்யுமாயும் வரும்.

ஆனாலும் முதலில் பருப்பு, அப்புறம் ரஸம், கடைசியில் மோர் என்று க்ரமம் தப்பாத மாதிரி ஸாதனையிலேயும் ஒன்று இருக்கிறது. முதலில் ஆத்ம வித்யையை நன்றாக முறைப்படி தெரிந்து கொள்ள வேண்டும். முறைப்படி என்றால் குருமுகமாக என்று அர்த்தம். அப்போதுதான் அவருடைய அநுக்ரஹமும் உள்ளேபோய் நம்மை அந்த வழியில் ஸரியாகப் போகத்தூண்டிவிடும். அப்புறம் இரண்டாவதாக, உபதேசத்தை நம்முடைய புத்தியில் நன்றாக உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அதற்கப்புறம் மூன்றாவதாக, கடைசியாக புத்தியில் உறுதியானதை அநுபவமாக ஆக்கிக் கொள்வதற்காக ஆத்ம விசாரம் ஒன்றே தொழில் என்று உட்கார்ந்துவிட வேண்டும்.

---



## யானை வாயின் சிறப்பும் தத்துவப் பொருளும்

யானையின் வாயில் ஒரு விசேஷம். நமக்கும் இன்னும் ஆடு, மாடு மாதிரி எந்த ப்ராணியானாலும் அதற்கும் வாய் என்பது இந்தக் கோடிக்கு அந்தக் கோடி உதடு எப்போதும் வெளியில் தெரிகிற விதத்திலேயே இருக்கிறது. கண் என்ற ஒரு அவசியத்துக்குத்தான் அவசியமான ஸமங்களுக்காக ரப்பை எனறு முடிபோட்டு வைத்திருப்பதே தவிர காது, மூக்கு, வாய் ஆகியவை நன்றாக வெளியில் தெரிகிற விதத்திலேயே இருக்கின்றன. ரப்பை கண்ணை மூடுகிற மாதிரி உதடு நாக்கும் பல்லும் தெரியாமல் மூடுகின்றதென்றாலும் இவற்றுக்குள் வித்யாஸமும் இருக்கிறது. கண்ணின் கார்யமான பார்வை என்பதில் ரப்பைக்கு வேலையில்லை. பார்வையை மறைப்பதற்கே ஏற்பட்டது அது. உதடு அப்படியில்லை. பேச்சு என்ற கார்யத்திலேயே நேராக நிறையப் பங்கு எடுத்துக் கொள்வது அது. நாக்கு, பல், உதடு, மூன்றுமே சேர்ந்துதான் பேச்சு என்பதை உண்டாக்கு கருவியான வாய். 'ப', 'ம'முதலான சப்தங்கள் உதட்டாலேயே முக்யமாக உண்டாவதால் 'ஓஷ்ட்யம்'என்றே அவற்றுக்குப் பெயர். இங்கிலீஷிலும் 'Lip'-ஐ வைத்து 'Labial'என்கிறார்கள். நமக்கெல்லாம் வாயின் அங்கமாக உதடு எப்போதும் வெளியே தெரிகிறது.

யானை ஒன்றுக்குத்தான் வாயை மூடிக்கொண்டு தும்பிக்கை இருக்கிறது. வாயைக் கையால் பொத்திக்கொள்வது அடக்கத்திற்கு அடையாளம். நாம் கையை மடித்துக் கொண்டுபோய் ஒரு கார்யமாக வாயைப் பொத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. யானைக்கானால் ஸ்வாபாவிகமாகவே (தன்னியற்கையாகவே) அதற்குக் கையின் ஸ்தானத்தில் உள்ள தும்பிக்கை வாயை ஸதாவும் மூடிக் கொண்டிருக்கிறது. தும்பி என்றால் யானை. அதன் கை தும்பிக்கை. தும்பிக்கையால் ஆஹாரத்தை எடுத்து அது வாய்க்குள்ளே போட்டுக் கொள்கிறபோதும், தும்பிக்கையை உசரத் தூக்கிக் கொண்டு பிளிறுகிறபோதும் மட்டுந்தான் அதன் வாயைப் பார்க்க முடியும். இப்படிப்பட்ட வாய்க்காரராகப் பிள்ளையார் இருப்பதில் பெரிய தத்வார்த்தம் இருக்கிறது. எத்தனை வித்வானின் லக்ஷணம் என்று காட்டவே தும்பிக்கையினால் வாயை மூடிக் கொண்டிருக்கும் கஜ ரூபத்தில் இருக்கிறார். அத்தனை வித்வத்துக்கும் முடிவு மௌனம் தான் என்று காட்டுகிறார். விக்நேச்வரர் நிஜமான ஸுமுகர்.

## ஞானத்திற்குப் பூர்வாங்கம் : கர்மாவும் பக்தியும்

இன்னொரு மூன்று உண்டு - கர்மா, பக்தி, ஞானம் என்ற மூன்றுதான். இப்போது நாம் பார்க்கவிருக்கிற ஆசார்யாள் கூறியதான - அத்வைத ஸாதனை என்பது ஞான மார்க்கம்தான். ஆனாலும் இதில் ப்ரவேசிப்பவனுக்கு சித்தம் நன்றாக சுத்தமாகி, ஒரே விஷயத்தில் நிற்கக்கூடிய 'ஐகாக்ரதை'என்ற சக்தி ஏற்பட்டிருந்தால்தான். அவன் இந்த வழியில் சிரமமில்லாமல் போக முடியும். அழுக்கு மயமான சித்தத்தை எப்படி சுத்தம் பண்ணிக் கொண்டு ஞான யோக ஸாதனைக்குப் போவது?ஞான யோகம் மேற்கொள்வதற்கு மனஸை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று சொன்னால், அலைபாயும் மனஸை எப்படி ஒரு விஷயத்திலேயே நிறுத்துவது?

(சித்தத்தை சுத்தப்படுத்துவது, ஒருமுகப்படுத்துவது என்ற) இந்த இரண்டையும் ஸாதித்துக் கொள்வதற்காகத்தான், எல்லாவற்றுக்கும் முந்தி, ஆரம்பத்திலேயே ஆசார்யாள் (முறையே) கர்மாவையும் பக்தியையும் வைத்திருக்கிறார். ஞான யோகத்தை ஆரம்பிப்பதற்குப் பூர்வாங்கம் கர்ம பக்தி யோகங்கள் என்று வைத்திருக்கிறார்.

கட்டாந்தரையில் விதையைத் தூவினால் முளைக்குமா?முதலில் அதை உழ வேண்டும். அப்புறம் ஜலம் பாய்ச்ச வேண்டும். அப்போதுதான் விதை போட்டுப் பயிர் காண முடியும். கட்டாந்தரையாயிருக்கும் மனஸைக் கிளறவிட்டு லேசாக ஆக்குகிற உழவுதான் கர்ம யோகம். அதில் ஜலம் பாய்ச்சி ஈரிக்கப் பண்ணுவது பக்தியோகம். ஸ்வதர்மமாக அவரவருக்கும் சாஸ்திரப்படி ஏற்பட்ட கர்மாவை அப்பழுக்கில்லாமல் பண்ணப் பண்ணத் தன்னால்

சித்தத்தின் அழுக்குகள் விலகிக் கொண்டே வரும்.

ஸ்வாமியிடம் ப்ரேமையினால் நம்முடைய மனஸ் ஒருமுகப்பட்டு நிற்க பக்தியுபாஸனை ஸஹாயம் செய்யும். மனஸானது பக்தியால் ஒரு மூர்த்தியிடம் ஒருமுகப்படப் பழகிவிட்ட பிறகு அமூர்த்தமான தத்வத்திலும் அப்படியே ஒருமுகமாகி ஆத்ம விசாரம் செய்ய முடியும்.

கர்மாவால் சித்த சுத்தியும் பக்தியால் சித்த ஐகாக்ரியமும் ஏற்பட்ட அப்புறம் ஞான யோகத்தில் அதிக சிரமமில்லாமல் முன்னேறலாம்.

ரொம்பவும் ஸுலபமாகச் சொல்லிவிட்டேன், கர்மாவால் சித்த சுத்தியும் பக்தியால் அதன் ஐகாக்ரியமும் என்று. ஆனால் நாம் உள்ள நிலையில் எது ஸரியான கர்மா, எது ஸரியான பக்தி என்றே தெரியாமல் ஏதோ பண்ணிக் கொண்டு போவதில் அப்படியெல்லாம் ஒன்றும் ஏற்பட்டு விடவில்லையே

என்று தான் தோன்றும்.

---



## சிரத்தை (நம்பிக்கை) அவசியம்

ஆகையினால் இப்போதே சொல்லிவிடுகிறேன்;இதெல்லாம் ரொம்ப ரொம்ம்ம்ப காலம் பிடிக்கிற ஸாதனைதான்:ரொம்ப ரொம்ப ஸ்லோவாகத்தான் முன்னேற முடியும். ஆகையினால், முடியலையே, முடியலையே!நாம ஸரியாப் பண்ணலையோ?நமக்கு உய்வு கிடையவே கிடையாதோ?என்று யாரும் அழ வேண்டாம், அதைர்யப்பட வேண்டாம், அவநம்பிக்கைப் படவேண்டாம்'போறும் ஸாதனை!ஸாதனையுமாச்சு, இன்னூனுமாச்சு!நமக்கு

அதெல்லாம் பலிக்காது' என்று கைவிட்டுவிட வேண்டாம்.

'முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்'மனஸு தளராமல், நம்மால் முடிந்த முயற்சியை விடாமல் பண்ணிக் கொண்டே போனால், எத்தனை காலமானாலும் ஸரி, முறையான முன்னேற்றம் காண ஆரம்பித்து முடிவிலே லட்சியத்தை ச்சேர்ந்து விடலாம். நம்பிக்கை முக்கியம். ச்ரத்தை என்பது அதைத்தான். 'ஸ்வாமி கைவிட மாட்டார். சாஸ்திரமும் குருவும் காட்டும் வழி வீணாய்ப் போகாது'என்ற த்ருடமான நம்பிக்கைக்குத் தான் ச்ரத்தை, ச்ரத்தை என்று பெயர்.

நாம் பேச்சு வழக்கில் 'ச்ரத்தையாக ஒன்றை ஒருத்தர் பண்ணினார்'என்று சொல்லும்போது 'ஸின்ஸியராக'மனப் பூர்வமாக என்ற அர்த்தத்திலேயே அந்த வார்த்தையை உபயோகிக்கிறோம், வாஸ்தவத்தில் அது 'நம்பிக்கை'என்பதைத்தான் முக்யமான அர்த்தமாகக் கொண்டது. ஆழ்ந்த நம்பிக்கையால் ஏற்படுகிற 'ஸின்ஸிரிடி'யோடு ஒருத்தர் ஒன்றைப் பண்ணுவதே 'ச்ரத்தையோடு பண்ணுவது.

நேராக நமக்கு ப்ரூஃப் கிடைக்கும் விஷயங்களில் 'நம்பிக்கை'என்பது தேவையில்லை. ஆனால் மத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் அநேக விஷயங்களுக்கோ இப்படி ப்ரத்யக்ஷப்ரூஃப் இருக்காது;சிலது ப்ரத்யக்ஷத்திற்கு நேர்மாறாகக்கூடத் தோன்றும். 'புண்யம் பண்ணினால் நல்லது கிடைக்கும்'என்று எல்லா மதங்களிலும் இருக்கிறது. ஆநால் ப்ரத்யக்ஷத்தில் அநேக பாபங்கள் பண்ணுபவர்கள் நல்லபடி வாழ்வதையும், புண்ய கர்மாக்கள் பண்ணுபவர்கள் கஷ்டப்படுவதையும் பார்க்கிறோம். இப்படியிருக்கிறதே என்றால், அதற்கு நம் ஹிந்து சாஸ்திரத்தில், ஒரு ஜன்மாவுக்குள்ளேயே பாப-புண்ய பலன்கள் தெரிந்தாக வேண்டுமென்றில்லை. அநேக ஜன்மாக்களில் பலன்கள் தொடரும். இன்றைக்கு ஒரு பாவி ஸுகப்படுகிறான், புண்யவான் கஷ்டப்படுகிறான் என்றால் ஜன்மாந்தரத்தால் இந்த பாவி புண்யம் பண்ணியிருக்கிறான், அந்தப் புண்யவான் பாவம் பண்ணியிருக்கிறான் என்று அர்த்தம்'என்று சொல்லியிருக்கிறது. இதை நாம் ப்ரூவ்

பண்ணிக் கொள்ள முடியாது. இங்கேதான் நம்பிக்கை - அதாவது ச்ரத்தை - தேவைப்படுகிறது. இதே மாதிரி இன்னும் அநேகம் ச்ரத்தையின் மேலேயே ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது.

ஆஸ்திகர், நாஸ்திகர் என்ற இரண்டு பேர் பிரித்துச் சொல்கிறோமே, அதில் ஆஸ்திகர் என்றால் வெறுமனே ஸ்வாமி உண்டு என்று நினைக்கிறவர் மட்டுமில்லை. வெறுமனேக்காக, ஸகலத்துக்கும் காரண மூலசக்தியாக ஸ்வாமி என்று ஒருத்தர் இருக்கத்தான் வேண்டுமென்று நினைப்பதால் என்ன ப்ரயோஜனம்?அந்த ஸ்வாமி நம்முடைய கார்யங்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்து அதன்படி புண்ய-பாப பலன்களைக் கொடுக்கிறார்;அதோடு மாத்ரமில்லாமல் க்ருபா மூர்த்தியாக இருந்து கொண்டு நம்மை நல்லதிலேயே போகச் செய்வதற்காக ரிஷிகள் மூலம் சாஸ்திரங்களைக் கொடுத்திருக்கிறார்;போதாதென்று ஆசார்ய புருஷர்களை அனுப்பி வைத்தும், தானே அவதரித்தும் நல்லதற்கு வழி காட்டுகிறார்;ஆனபடியால் அவருடைய தீர்ப்புக்கு பயந்தும், சாஸ்த்ரப்படி ஆசார்யரின் உபதேசப்படி நடந்துகொண்டும் நாம் கடைத்தேற வேண்டும் என்ற நம்பிக்கை உறுதியாக இருந்து அந்தப்படி செய்தால்தான் ப்ரயோஜனமாகும். இந்த நம்பிக்கையைதான் ஆஸ்திகம் என்பது. அதாவது ச்ரத்தைதான் ஆஸ்திகம் என்பதே. சாந்தோக்ய உபநிஷத்தில் ச்ரத்தை இருக்கிறவன்தான் ஆத்ம சிந்தனை பண்ணுவான் என்ற மந்த்ரத்திற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது ஒரே சின்ன வாக்யத்தில் 'ஆஸ்திக்ய புத்தி-ச்ரத்தா'என்று இரண்டையும் ஒன்றுபடுத்திச் சொல்லி முடித்திருக்கிறார்.

இங்கே நம்மைவிட வெள்ளைக்காரர்கள் ஒரு படி மேலே போயிருக்கிறார்கள் என்று சொல்லத் தோன்றுகிறது. எப்படியென்றால் - நாம் மதம் என்று சொல்கிறோமே அதற்கு அர்த்தம் 'மதியினால் பெறப்பட்டது'என்பது. மதி நன்றாக ஆய்ந்து ஒய்ந்து பார்த்து ப்ரூவ் பண்ணி முடிவு கண்ட கொள்கையும் மதம்தான்;அது, 'நம்மால் ப்ரூவ் பண்ணிப் பார்த்துக் கொள்ள முடியாவிட்டாலும் சாஸ்திரங்களும் பெரியவர்களும் சொல்வதால் ஒன்று ஸரியாகத்தான் இருக்க வேண்டும்'என்று நம்புவதும் மதம்தான். இருந்தாலும், மதி,

அதாவது ஒரு மனித புத்தி, தானே சிந்தித்துப் பார்த்து கன்வின்ஸ் ஆகிற கொள்கை என்பதுதான் மதம் என்பதற்கு முக்யமான அர்த்தம். பிறத்தியார் வார்த்தையில் நம்பிக்கையால் இல்லை. அதற்குத்தான் ச்ரத்தை என்ற தனி வார்த்தை இருப்பது. ஆனால் இங்கிலீஷ்காரர்களோ 'ஸிமீறீவீரீவீஷீஸ்'என்பதையே 'திணீவீமீலீ'என்றும் சொல்கிறார்கள்!நம்பிக்கைக்கு அத்தனை முக்யத்வம் மத விஷயத்தில் கொடுத்திருக்கிறார்கள்!பிற்காலத்தில் அவர்கள்தான் மதத்திலும் 'ரீஸ'னுக்கு (பகுத்தறிவுக்கு) ரொம்பவும் இடம் கொடுத்து நம்மவர்களையும் அப்படி இழுத்துவிட்டவர்களென்றாலும் பூர்வத்தில் அவர்கள் சாஸ்திர நம்பிக்கையே மதம் என்று நினைத்துத்தான் அதை யீணீவீமீலீ என்று சொல்லியிருக்க வேண்டும்.

ச்ரத்தை அத்யாவசியம். இந்த ஸமாசாரத்தை அப்புறம் இன்னம் கொஞ்சம் எடுத்துச் சொல்கிறேன். 'எப்புறம்'என்றால், அத்வைத ஸாதனை க்ரமத்திலேயே

ஒரு உச்ச கட்டத்தில் ச்ரத்தை என்பது வரும்;அப்போது இன்னம் கொஞ்சம் அதைப்பற்றி சொல்கிறேன். அங்கே ஆழ வேர்விட்டுக் கொண்டு பெரிய மரமாக நிற்க வேண்டிய ச்ரத்தைக்கு ஆரம்பமாக ஒரு சின்னப் பதியன் போடுகிற

மாதிரிதான் இப்போது நான் சொன்ன ச்ரத்தை. ஆனால் இது இருந்தால்தான் அது வரும்;இந்தப் பதியன் தான் அந்த மரமாக வளர வேண்டியது. ஸமுத்ரத்தில் கரையோரமாகக் கொஞ்ச நாழி மூச்சைப் பிடித்துக் கொண்டு நீச்சலடிப்பதில்தான் ஆரம்பிக்க வேண்டும். அதுதான் அப்புறம் பலப்பட்டுக் கொண்டு, பலப்பட்டுக் கொண்டு போய் நல்ல ஆழத்தில் அடிவாரத்தில் ரொம்ப நாழி மூச்சைப் பிடித்துக் கொண்டிருந்து முத்துச் சிப்பிகளை சேகரம் பண்ணும் ஸாமர்த்தியத்தை உண்டாக்கும். கரையோர நீச்சல் மாதிரி இப்போது சொன்ன அடிப்படை ச்ரத்தை. முத்துக் குளிப்பு முழுக்கு மாதிரி அப்புறம் வரப்போகும் ச்ரத்தை.

முத்து என்று சொன்னதில் தன்னையறியாமல் ஒரு பொருத்தம் தெரிகிறது. 'முக்தம்'என்ற வார்த்தைதான் அப்படி ஆனது. 'முக்தம்'என்றால் விடுபடுவது. சிப்பியிலிருந்து தெறித்து விடுபட்டு வருகிற மணியே 'முக்தம்'என்கிற முத்து. ஸம்ஸாரத்திலிருந்து தெறித்து விடுபடுவது முக்தி. முக்தரைத்

தமிழில் முத்தர் என்றே சொல்வது வழக்கம். முக்தி பற்றிக் கதை என்றே சொல்வது வழக்கம். முக்தி பற்றிக் கதைபேச உட்கார்ந்த இடத்தில் முத்து உபமானம் வந்துவிட்டது.

அம்பாளுடைய சிரிப்பை ஒரு கவி பார்த்தாராம். வெள்ளை வெளேரன்று அவளுடைய தந்த காந்தி பரவுவதைப் பார்த்து சுப்ரமாயிருக்கிற சங்கின் ப்ரகாசம் மாதிரி இருக்கிறது என்று உவமை சொன்னாராம். உடனே இன்னொரு கவி அவரிடம் சண்டைக்கு போனாராம். 'எப்படிங்காணும் சங்கையும் அம்பாளுடைய மந்த ஸ்மித்தையும் (புன்னகையையும்) ஒன்றாகச் சொல்வீர்?சங்கு ஸ்மிதமோ முக்தர்களுக்குப் பரமப் பிரீதியை உண்டு பண்ணுகிறது. அதற்கும் இதற்கும் எப்படி

ஒப்பு'?என்று கவி பாடினாராம்:

º,î£ï£‹ ðK«ñ£êï‹ Mîîîv-î^ ŠgF Gwð£Fc

முத்து எடுப்பது போல முக்தியைப் பிடிக்கும் கட்டத்திற்கு முன்னால் ஸாதனைக் கிரமத்தில் ச்ரத்தையைச் சொல்லியிருந்தாலும் நான் ஸகலத்திற்கும் ஆரம்பத்திலிருக்க வேண்டிய ச்ரத்தையைப் பற்றித்தான் இப்போது சொல்லிக் கொண்டிருந்தது.

ச்ரத்தையோடு இன்றைக்கே ஒரு பிள்ளையார் சுழி போட்டு ஆத்ம வழியில் போக ஆரம்பித்தால், என்றைக்கோ ஒருநாள் லட்சியத்திற்குப் போய் சேரலாம். 'என்றைக்கானாலும் சரி, வேத உபநிஷத்துக்கள் முதலில் சொல்லி அப்புறம் க்ருஷ்ண பரமாத்மாவும் கீதையில் 'கன்ஃபர்ம்' பண்ணி, பிற்பாடு நம்முடைய பகவத்பாதாள் ஸாங்கோபாங்கமாக வகுத்துத் தந்துள்ள வழியானதால் நிச்சயமாக ஒரு நாள் நாமே பரப்ரஹ்மமாகிற பெரிய அநுபவம் நமக்கும் வாய்க்கும்'என்ற ச்ரத்தையுடன் ஸாதனையைப் பின்பற்ற வேண்டும்.

கர்ம, பக்தியில் ஆரம்பித்து ஞானத்துக்குப் போக வேண்டும். அழுக்கேறிப் போன ஒரு கண்ணாடி நிலைப்படாமல் ஆடிக்கொண்டேயிருக்கிற மாதிரி நம் மனஸ் இருக்கிறது. அதனால் இப்போது இதில் ஞானத்துக்கான விஷயங்கள்

ப்ரதிபலிக்காமலே இருக்கின்றன. கர்மா பண்ணிப் பண்ணி அழுக்கைத் துடைக்க வேண்டும்.பக்தி பண்ணி பண்ணி அது ஆடுகிறதை நிறுத்தி நிலை கொள்ள செய்ய வேண்டும் -

'நிலைக் கண்ணாடி'என்ற பெயர் பொருந்தும்படிச் செய்ய வேண்டும். அப்படி மனஸ் நிர்மலமாக, ஒன்றிலேயே ஸ்திரமாக நிற்பதாக ஆனால் அப்புறம் ஞான விஷயங்கள் அதில் ஸ்வச்சமாக 'ரிஃப்ளெக்ட்'ஆகும். நாமும் ஆத்மாவைப் பற்றி 'ரிஃப்ளெக்ட்'பண்ண லாயக்காவோம்.

---



## ஆத்ம ஸாதனைக்கான யோக்யதாம்சம்

ஒன்று மறக்கப்படாது. வாஸ்தவமாக, ஸீரியஸாக ஒருத்தன் ஆத்ம ஸாதனை க்ரமத்தை மேற்கொள்ள வேண்டியது மனஸின் அழுக்கும், தடுமாட்டமும் தீர்ந்த அப்புறந்தான் என்றே ஆசார்யாள் வைத்திருக்கிறார். அழுக்கையும், தடுமாற்றத்தையும் போக்கும் ஸாதனங்களான கர்ம, யோக, பக்தி யோகங்களில் தேர்ச்சி பெற்றவனுக்கே ஸாதன சதுஷ்ட்யம் கைகூடுகிறது என்று ஆசார்யாள் 'க்ளியரா'கச் சொல்லியிருக்கிறார்:

ஸ்வ-வர்ணாச்ரம தர்மேண தபஸா ஹரிதோஷணாத்|

ஸாதநம் ப்ரபவேத் பும்ஸாம் வைராக்யாதி சதுஷ்டயம்||

'ஸ்வ வர்ணாச்ரம தர்மம்'என்பதுதான் சாஸ்திரப்படி ஒருத்தனுக்கு ஏற்பட்ட கர்ம யோகம். 'ஹரிதோஷண ம்'என்பது ஈச்வர ப்ரீதி. 'ஈச்வர ப்ரீத்யர்த்தம்'என்றே ஸகல கர்மத்தையும் பண்ணுகிறோம். தனியாகப் பூஜை என்றில்லாமல், கீதோபதேசப்படி ஸ்வதர்ம கர்மாவை அவனுக்கு அர்ப்பணிப்பதே பக்திதான். ஸோபான பஞ்சாங்கம் என்று ஆசார்யாள் முடிவாகப் பண்ணிய உபதேசத்திலும் 'கர்மாவை நன்றாக அநுஷ்டித்து அதன் மூலமே ஈச்வர பூஜை பண்ணியதாக ஆக்கிக் கொள்ளுங்கள்'என்றுதான் சொல்லியிருக்கிறார். ஆனாலும்

அப்படி, செய்யும் கார்யமெல்லாம் ஈச்வராராதனை என்ற பாவத்தோடு செய்வது அவ்வளவு ஸுலபமில்லையாதலால் பக்தி என்று தனியாக அவனையே ப்ரேமையோடு நினைத்து உபாஸிப்பதையும் சொல்லியிருக்கிறார். சித்தத்தைத் துப்புரவு பண்ணக் கர்மா;அதை ஒருமுகப்படுத்த பக்தி என்று வைத்தார். பக்தியைதான் இங்கே ஹரிதோஷணம் என்றது. ஹரி என்றால் விஷ்ணு ஒருத்தர்தான் என்ற அர்த்தமில்லை. 'ஹரி:ஒம்'என்றே சொல்வது வழக்கம்;இங்கே ஹரி என்றால் எல்லா தெய்வத்தையும் குறிக்கும் ஸகுண ப்ரஹ்மம். அப்படித்தான் இங்கேயும் அர்த்தம். 'தோஷணம்'என்றால் த்ருப்திபடுத்துவது, ப்ரீதி உண்டாக்குவது. நாம் பகவானிடம் அன்போடு ப்ரீதி பண்ணினால் அவன் குழந்தை நல்ல வழிக்கு வருகிறான்'என்று த்ருப்தியும் ப்ரீதியும் அடைகிறான். ஆகையால் ஹரி தோஷணம் என்றால் பக்தி யோகம். ஸ்வதர்மம், ஹரி தோஷணம் இவற்றோடு 'தபஸா'என்றும் சொல்லியிருக்கிறார். தபஸ் என்று மூன்றாவதான ஒன்றாக அதை எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஸ்வதர்மம், ஹரி தோஷணம் இரண்டையுமே தபஸ் போல மெய்வருத்தம் பாராமல் நல்ல ஈடுபட்டோடு செய்ய வேண்டும் என்று எடுத்துக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்யும் மனிதர்களுக்குத்தான் 'ஸாதநம் சதுஷ்டயம் ப்ரபவேத்':"ஸாதன சதுஷ்டயம் என்பது கைகூடும்;ஏற்கத்தக்கது'. ஸ்கூல் படிப்பு முடித்தவனுக்குத்தான் காலேஜ் என்கிற மாதிரி, முதலில் மனஸை சுத்தமாக்கிக் கொள்ளு;ஒரே லக்ஷயத்தில்

நிற்கும்படியாக நிலைப்படுத்திக் கொள்ளு;அதில் முதலில் பாஸ் பண்ணிவிட்டு அப்புறம் என்னுடைய காலேஜ் வா, அட்மிஷன் தருகிறேன். அப்போது (ஆத்ம) விசார மார்க்கத்தில் அடியெடுத்து வைக்கலாம். அதற்கும் அப்புறம் ஆழ்ந்து

விசாரம் பண்ணலாம். விசாரம் அநுபவமாவது இன்னமும் அப்புறம். அதெல்லாம் காலேஜ் படிப்பை முடித்து எம்.ஏ.விலிருந்து பி.ஹெச்.டி போய்தான். அதாவது ஸந்நியாஸம் வாங்கிக் கொண்ட பிறகுதான்'என்றே ஆசார்யாள் சொல்கிறார்.

இப்படிச் சொன்னதால் ஒருத்தன் பூர்ணமாக சித்த சுத்தியும் ஐகாக்ரியமும் பெற்ற அப்புறந்தான் ஆத்ம வித்யையின் பக்கமே தலைவைத்துப் படுக்கலாமென்று அர்த்தம் பண்ணிக் கொண்டுவிடக்கூடாது. அவை மட்டும் பூர்ணமாக உண்டாகிவிட்டால் அப்புறம் ஸாதனை க்ரமம் என்று பெரிசாக எதுவுமே தேவைப்படாது;உடனேயே குரு உபதேசத்தில் மனஸ௳ டகாலென்று நின்ரு, ஸாக்ஷாத்காரம் பளீரென்று ஸித்தித்துவிடும். ஸாதனை என்ற ஒன்றுக்கே ஜாஸ்தி இடமிருக்காது. அப்படிப்பட்டவனுக்கு ஆசார்யாள் பொழுதை மெனக்கெடுத்துக் கொண்டு ஸாதனை க்ரமம் என்று படி வரிசை போட்டுத் தர அவசியமே இல்லை. அதனால், ஆசார்யாளின் அபிப்ராயம் என்னவென்று நாம் ஸரியாகப் புரிந்து கொண்டால் ஒரளவு, கணிசமான அளவு, சித்த சுத்தி- ஐகாக்ரியங்கள் உண்டான அப்புறம் ஆத்ம சாஸ்திரங்களைப் படித்து, ஸாதனை என்று ஒரு வழிமுறையில் ப்ரவேசித்தால்தான் அதில் அந்தரங்கப் பிடிப்போடு சுத்தமாக முன்னேற முடியும்;இல்லாவிட்டால் ஏதோ மேம்புல் மேய்ந்துவிட்டு, அதனாலேயே எல்லாம் தெரிந்து கொண்ட மாதிரி நினைப்பதாக ஆகும் என்பது தான்.

எல்லாருக்கும் வழியைத் திறந்து விட்டிருக்கிறோம்'என்று பௌத்தர்கள் பண்ணியது எத்தனை கேலிக்கூத்தில் முடிந்தது என்பதைக் கண்ணுக்கு முன்னால் பார்த்திருந்தவர் ஆசார்யாள். அதனால் இன்ன யோக்யதாம்சம் உள்ளவர்தான் ஸின்ஸியராக முன்னேற முடியுமென்று அப்படியே (யோக்யதாம்சங்கள்) வைத்தார்.

'(அத்வைத ஸாதனைக்கு) எல்லாருமே அதிகாரிகள்தான். யோக்யதாம்சம் என்று எதுவுமே வேண்டாம். தனக்கே ரொம்ப ரொம்ப சொந்தமான தன்னையே, தன் உண்மை நிலையையேதானே தெரிந்து கொள்ளப் போகிறான்?தான் தானாவதற்கு என்ன யோக்யதாம்சம் வேணும்?தன்னைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற நிஜமான தாபம் ஒன்றே போதும். அதன் வேகத்தில் மனஸை நானில்லை என்று பண்ணிக் கொண்டு விட்டால், அவ்வளவுதான், யாரானாலும் ஸாக்ஷாத்காரம் பெற்று விடலாம். Self-realisation

ஒவ்வொருத்தருக்கும் தீவீக்ஷீமீ லீ-க்ஷீவீரீலீமீ (ஆத்ம சாக்ஷாத்காரம் ஒவ்வொருவருக்கும் பிறப்புரிமை) அதற்கு 'க்வாலிஃபிகேஷன்'நிர்ணயிக்கவே படாது என்று சொல்கிறவர்களும் உண்டு. இவர்களில் சில பேர் நிஜமாகவே அப்படித் தெரிந்து கொண்ட ஞானிகளாகவும் இருக்கலாம். அவர்களை ஆச்ரயித்தவர்களிலும் சிறு

வயசில், க்ருஹஸ்தாச்ரமத்தில், பிஸினஸ் மாதிரிக் கார்யத்தில் இருந்த வெள்ளைக்காரர்கள் முதலான இரண்டொருத்தர்கூட ஒரே தாபத்தோடு, ஒரு முனைப்பாக ஆத்ம விசாரம் பண்ணி ஞானத் தெளிவு அடைந்தும் இருக்கலாம்.

ஆனாலும் இப்படிச் சொல்கிறவர்களிலும், கேட்கிறவர்களிலும் இந்த மாதிரி நிஜமாகவே ஸித்தி அடைந்தவர் நூற்றுக்கு ஒன்றிரண்டுதான் இருக்கும் - சொல்கிறவர்களில் இன்னம் கொஞ்சம் ஜாஸ்தி இருக்குமோ என்னவோ?கேட்கிறவர்களில் இன்னமுங்கூட (ஒன்றிரண்டு சதவிகிதம் என்பதை விடவுங்கூட)

ரொம்பக் குறைச்சலாகத் தானிருக்கும். வேதாந்த விஷயமாக நிறையப் படித்ததாலும், நல்ல புத்திசக்தியுள்ளதாலும் ஞானத்தைப் பற்றி, ஆத்மாவைப் பற்றி நன்றாகச் சிந்தனையைப் படரவிட்டு அநேகம் கருத்துக்களை அழகாக நிர்மாணித்து எழுதலாம்;பேசலாம்;பேப்பர் ப்ரெஸன்ட் பண்ணுவது, தீஸிஸ் ஸப்மிட் பண்ணுவது எல்லாம் செய்யலாம். அவர்கள் சொல்கிற ஸமாசாரங்களையும், சொல்லியிருக்கும் விதத்தையும் பார்த்தால் மற்றவர்களுக்கு ப்ரமிப்பாக அவர்கள் ஸாக்ஷாத்காரமே பெற்றவர்கள் என்று நினைக்கும்படிதான் இருக்கும். ஆனாலும் வாஸ்தவத்தில் அப்படி எழுதி, பேசிப் பண்ணுவர்களில் ஆயிரத்தில் ஒருத்தர்தான் கண்டவராக இருப்பார். அந்தக் கண்டவரையோ பொதுவாக 'விண்டிலர்'என்கிறார்கள். அதாவது ஒன்றும் சொல்லாமல் தக்ஷிணாமூர்த்தியாக இருப்பார்களென்று சொல்கிறார்கள்!லோகாநுக்ரஹத்திற்காக ஈச்வரனே தூண்டிவிட்டுத்தான் 'கண்டவர்'களில் சிலர் -நம் ஆசார்யாள் மாதிரி சிலர் - ஆத்ம வித்யை பற்றி எழுதி, பேசியும் இருக்கிறார்கள்... சொல்ல வந்த விஷயம் என்னவென்றால் - நிறையக் கர்மாநுஷ்டானம், பக்தி உபாஸனை பண்ணி அப்புறம் ஸந்நியாஸம் வாங்கிக்

கொண்டுதான் அத்யாத்ம வித்யையை அப்யஸிப்பது என்றில்லாமல், சில பேர் நேராகவே அந்த வழியில் போய் ஸித்தியடைந்து, ஆனபடியால் எவரும் அப்படிப் பண்ணலாம் என்று சொல்வதைப் பற்றித்தான். இப்படி ஸுலபமாக ஸித்தி அடைகிற அந்தச் சில பேர் விசேஷமான பிறவிகள்;அதாவது, உயர்ந்த பூர்வ ஸம்ஸ்கார பலமுள்ளவர்களாக இருப்பார்கள். இந்த ஜன்மாவில் அவர்களுக்கு ஈச்வரானுக்ரஹமும் விசேஷமாகக் கிடைத்து சட்டென்று ஈச்வரானுக்ரஹமும் விசேஷமாகக் கிடைத்து சட்டென்று ஸித்தி கூடியிருக்கும். இவர்கள் 'ஆர்டினரி ரன்'னை (ஸாமானிய வகையறாவை)ச் சேராதவர்கள். இப்படிப் பட்டவர்கள் ஆசார்யாளிடம் தனியாகப் போனால், அவரும் அவர்களுக்குத் தனிவழிதான் சொல்லிக் கொடுத்திருப்பார். ஆனால் ஜகத்குருவாக அவர் ஜகத்துக்குப் பொதுவாக எழுதி வைத்தபோது ஸாதாரண, ஸாமானிய நிலையை வைத்தே ஸாதனை சொன்னதால் கர்ம யோகம், ஞான யோகம் என்று பிரித்தே யோக்யதாம்சம் வைத்தார்.

அதன்படி, ஒரளவுக்கு சித்த சுத்தி- ஐகாக்ரதைகள் பெற்றவனே அத்வைத சாஸ்திரங்களை அநுஸரித்து எது நித்யம் எது அநித்யம் என்று அலசிப்பார்த்து, கொள்ள வேண்டியதைக் கொண்டு, தள்ள வேண்டியதைத் தள்ளும் விவேகத்திலிருந்து ஆரம்பித்து அந்த நித்யத்தை அடைந்தே தீர்வது என்ற ஒரே மூச்சான - முமுக்ஷுதா'என்ற - அதற்கான படிவரிசையை 'ஸாதன சதுஷ்டயம்'

என்று ஆசார்யாள் போட்டுக் கொடுத்தார்.

இதோடு (ஸாதனை க்ரமம்) முடிந்துவிடவில்லை. இதுவும் காலேஜில் பி.ஏ.,

எம்.ஏ. படிக்கிற மாதிரிதான். இதற்கும் மேலேதான் பி.எச்.டி - முமுக்ஷுதை என்ற முக்தி நாட்டம் அஸல் முக்தியேயான ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் ஒருவனைக் கொண்டு சேர்த்து ஃபுல் ஸ்டாப் வைப்பது!

---

## உச்ச கட்ட ஸாதனை துறவிக்கே!

முமுக்ஷுத்வம் என்பதோடு இரண்டாவது ஸ்டேஜ் முடிகிறது. மனஸின் அழுக்கையும் தடுமாட்டத்தையும் குறிப்பிடத்தக்க அளவுக்குக் கர்மா -பக்திகளால் போக்கிக் கொள்வது முதல் ஸ்டேஜ். ஸாதனா சதுஷ்டயம் இரண்டாவது ஸ்டேஜ். இதில் பின்பற்றும் ஸாதனங்களால் அழுக்கும் ஆட்டமும் மேலும் நன்றாக எடுபட்டுப் போயிருக்கும். ஏதாவது அஞ்சு, பத்து பெர்ஸென்ட் மிஞ்சியிருக்கலாம்.

அப்படிப்பட்ட, ஸந்தர்ப்பத்தில் விடுபவதொன்றே கார்யம் என்று feel பண்ணும் முமுக்ஷுவானவன் வீடு, வாசலிலிருந்து விடுபட்டு, அதாவது ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு மூன்றாவது ஸ்டேஜுக்கு - பி.எச்.டிக்கு போகிறான். அதாவது கடைசி கட்டத்தில் ஸந்நியாஸிதான் ஆத்ம ஸாக்ஷாத்கார ஸாதனைக்கு அதிகாரி என்பதே ஆசார்யாளின் ஸித்தாந்தம். மற்ற பாசம், பந்தம், லோக கார்யம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஸந்நியாஸியாகி ஆத்ம விசாரமே ஸதாகால ஸாதனையாக இருப்பவனுக்குத் பெரியதிலெல்லாம் பெரியதான, பேரின்பம் பேரின்பம் என்கிற ப்ரஹ்மானுபவம் ஸித்திக்கும் என்பதே ஆசார்யாள் கொள்கை - உபநிஷத்துக்களிலிருந்து எடுத்துச் சொன்ன கொள்கை.

ஆக, மூன்றாம் ஸ்டேஜில் குருமுகமாக ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு, அவரிடம் பிரஹ்ம அபேத விஷயமாக மந்த்ரோபதேசம் பெற்றுக்கொண்டு, அதையே சிந்தனை பண்ணிக் கொண்டிருந்து, அப்புறம் சிந்தனையும் நின்று லட்சியத்தோடேயே ஐக்யமாகிவிடும் பெரிய அநுபவத்தை அடையவேண்டியது என்று வைத்திருக்கிறார்.

சில பேர் கேள்வி கேட்கிறார்கள். 'ஜீவ ப்ரஹ்ம அபேதத்தைச் சொல்லும் மஹாவாக்ய உபதேசம் ஸந்நியாஸிக்கே ஆனது என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். ஆனால் அதில் ஸாமவேத மஹாவாக்யமே நடுத்தர வயசு ப்ரஹ்மச்சாரியான ச்வேதகேதுவுக்கு அவனுடைய தகப்பனார்

உபதேசித்ததாகத்தானே வருகிறது?'என்று.

வேதத்தின் ஒவ்வொரு சாகையிலும் ஒரு உபநிஷத்தும் அதில் 'மஹாவாக்யம்'என்ற ஜீவ ப்ரஹ்ம அபேத வாசகமும் உண்டு. ஆதியில் மொத்தம் ஆயிரத்துக்கு மேற்பட்ட சாகைகள் இருந்து, இப்போது கழுதை தேய்ந்து (அப்படிச் சொன்னால் மரியாதையாக இல்லை;யானை தேய்ந்து என்று வைத்துக்கொள்ளலாம்!) கட்டெறும்பாக ஏழே சாகைகள்தான் ஏதோ முணுக்கு முணுக்கு என்று மங்கலாக ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றன. ப்ரதி சாகைக்கும் ஒரு மஹா வாக்யமிருந்தாலும் முக்யமாக ஒவ்வொரு வேதத்துக்கு ஒன்றாக நா ு மஹா வாக்யங்களை ஸந்நியாஸத்தில் தீக்ஷோபதேசமாக கொடுக்கும் வழக்கம் இருக்கிறது. அப்படி ரிக் வேதத்தில் ஐதரேய உபநிஷத்தில் வருவது இன்னார் இன்னாருக்கு உபதேசம் பண்ணியது என்று இல்லாமல், மஹீதாஸ ஐதரேயர் என்ற

ரிஷி கொடுத்த அந்த உபநிஷத்தின் அநேக மந்த்ரங்களில் முடிவிலே வருகிறது. முடிவதற்கு முந்தின மந்த்ரத்தில் முடிகிற மந்த்ரத்தில் சொல்லியிருப்பதிலிருந்தும், இதற்கு முந்தின அத்யாயத்தில் கர்ப்பத்திலிருக்கிற போதே ப்ரஹ்மஞானம் பெற்ற வாமதேவர் என்ற ரிஷியைச் சொல்லியிருப்பதிலிருந்தும் இந்த மஹாவாக்யம் அவருக்குத் தானாகவே ஈச்வராநுக்ரஹத்தில் ஸ்புரித்தது என்ற ஊஹம் பண்ணலாம். அதாவது ஒரு ப்ரஹ்ம ஞானிக்கு ஈச்வரனே உபதேசம் பண்ணியது என்று சொல்லலாம். அதனால் அதை உசந்த ஸத்பாத்ரமான நாலாவது ஆச்ரமிக்கே (ஸந்நியாஸிக்கே) உபதேசிக்க வேண்டும் என்று சொல்ல நியாயமிருக்கிறது.

யஜுர்வேத மஹாவாக்யம் ப்ருஹதாரண்யகோபநிஷத் (முதல் அத்யாயத்)தில் புருஷவித ப்ராஹ்மணம் என்பதில் வருகிறது. இங்கேயும், இந்த மஹாவாக்யத்தில் சொன்னபடி எந்த தேவர்களும், ரிஷிகளும் மநுஷ்யர்களும் அநுபவத்தில் கண்டார்களோ அவர்கள் ப்ரஹ்மமாகவே ஆனார்கள் என்று சொல்லிவிட்டு வாமதேவரை மாத்திரம் பெயர் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த மஹாவாக்யத்தையும் ஈச்வரனே உபதேசம் பண்ணியது என்று சொல்லலாம். அதனால் அதை உசந்த ஸத்பாத்ரமான நாலாவது

ஆச்ரமிக்கே (ஸந்நியாஸிகளே இதற்கு அதிகாரிகள் என்று சொல்ல இடமிருக்கிறது.

அதர்வ வேத மஹாவாக்யம் மாண்டூக்யோபநிஷத்தில் வருகிறது. மோக்ஷ

நாட்டமுள்ள முமுக்ஷுக்கள் நிஜமாகவே மோக்ஷத்தில் சேருவதற்கு இந்த ஒரு உபநிஷத்தே போதுமென்று ராமர் ஹநுமாருக்கு உபேசித்ததாக இன்னொரு உபநிஷத்தில் இருக்கிறது. (அந்த உபநிஷத்துக்கு முக்திகோபநிஷத் என்று பெயர்) அதனால் அதர்வத்தில் வரும் வாக்யமும் ஸந்நியாஸிகளுக்கே உபதேசிக்கத்தக்கதென்று சொல்லலாம்.

ஸாமவேத மஹாவாக்யத்தைப் பற்றித்தான் கேள்வி. ஆக்ஷேபணைக்காரர்களும் அதை வைத்துத்தான் கேட்கிறார்கள். நான்கு முக்யமான மஹா வாக்யங்களில் நேராக ஒர குரு சிஷ்யனுக்கு உபதேசிப்பதாக இருப்பது இது ஒன்றுதான். அதனால் இதற்கு விசேஷ கௌரவம் கொடுத்திருக்கிறது. அப்படிப்பட்ட சிஷ்யன் யாரென்றால் நல்ல வாலிப தசையில் இருக்கப்பட்ட ஒரு ப்ரஹ்மசாரி. ஸந்நியாஸி இல்லை. அதை வைத்துத்தான் ஆக்ஷேபணை. 'ஒரு இருபத்திநாலு வயஸுக்கார ப்ரஹ்மசாரிக்கே ஒரிஜனலாகத் தரப்பட்ட உபதேசத்தை ஸந்நியாஸிக்குத்தான் தரணும் என்றால் எப்படி?என்று ஆக்ஷேபம்.

சின்ன வயசு, கிழ வயசு என்கிறது பாயின்ட் இல்லை. எது பாயின்ட் என்றால், ஞானப் பக்குவம் வந்திருக்க வேண்டும். பொதுவாக அந்தப் பக்குவம் வாழ்க்கையில் நன்றாக அடிபட்டுக் கர்ம யோகத்தைக் குறைவறப் பண்ணியவனுக்குத்தான் ஏற்படுமாதலால், ஆசார்யாள் பொது விதியாகச்

சொல்லும்போது, ஸந்நியாஸாஸ்ரமம் கொடுக்கிறபோதே மஹா வாக்யோபதேசம் என்று வைத்தார். பொதுவாக இருக்கப்பட்ட அறிவு நிலையை வைத்துப் பதினாலோ, பதினைந்தோ ஏதோ ஒரு வயசு வைத்து, அதற்கு மேலே ஆனவன்தான் எஸ்.எஸ்.எல்.ஸி. பரீக்ஷைக்கு உட்காரலாமென்ற விதி பண்ணியிருக்கிறார்கள். ஏழெட்டு வயஸிலேயே பி.ஏ.எம்.ஏ.காரர்களைவிட மேதையோடு யாரோ சில 'ப்ராடிஜிக்கள்'இருக்கிறார்கள் என்பதால் பொது

விதி தப்பு என்கலாமா?ஒரு விதி இருந்தால் அதற்கு விலக்கும் உண்டு - Every rule has its exception - என்று ஒப்புக்கொண்டு பரீக்ஷைக்கான வயஸு ரூலிலிருந்து அதிபுத்திசாலிக்கு exemption தருகிறார்களல்லவா?இந்த மாதிரி ப்ரஹ்மவித்யைக்கு ஸந்நியாஸியே அதிகாரி என்ற ரூலுக்கு exception-exemption-ல் வருகிறவன் தான் அந்த ஸாமவேதப் பையன் - ச்வேதகேது. முதலில் அப்பாவிடம் படித்துவிட்டு அப்புறம் பண்ணிரண்டு வருஷம் வேறு குருமார்களிடமும் படித்துவிட்டு, படிப்பில் தனக்கு நிகரில்லையென்று கர்வப்படுமளவுக்கு விஷயம் தெரிந்தவன். இப்படிப்பட்டவர்கள் கர்வ பங்கம் அடையும் போதுதான் ஒரேடியாக விநயம் வந்து பரிபூர்ண சரணாகத பாவம் வருவதும்!ஒரு நல்ல அறிவாளி தன்னுடைய அறிவத்தனையும் ப்ரயோஜனமில்லை என்று கண்டு கொண்டு தோற்றுப்போய் நிற்கிறபோது அநுபவத்துக்கு உள்ள உயர்வைப் புரிந்து கொண்டு அதற்காகத் தன்னை அப்படியே அர்ப்பணித்துக் கொள்ளுகிற மாதிரி மற்ற எவராலும் பண்ணமுடியாது. அந்த ஸாமவேத பையனுடைய கர்வத்தை அவனுடைய பிதாவே பங்கப்படுத்தி அவனை இந்த உசந்த மனோபாவத்துக்குத்தான் எழுப்பி, அந்த நிலையில்தான் மஹாவாக்யோபதேசம் பண்ணினார். ஆகையினால் அதை precedent (முன்னோடியாகக்) காட்டி எல்லோருக்கும் அந்த உபதேசம் கொடுக்கலாம் என்பது ஸரியில்லை.

ஆத்ம வித்யா அப்யாஸத்திற்கு பொது ரூல் - 'ப்ரஹ்ம ஸூத்ரத்தில் கொடுத்திருக்கும் ரூல்- அது ஊர்த்வரேதஸ்களுக்கே உரியது என்பது. அவர்கள் யாரென்றால் சக்தியைத் துளிக்கூட இந்த்ரியாநுபவத்தில் இறக்கி விரயம் பண்ணாமல் ஆத்மாபிவிருத்திக்கு ஸாதகமாகவே ஏற்றிக்கொண்டு போகிறவர்கள். அந்த மாதிரி காமத்தை அழித்துவிட்டவன் ஸந்நியாஸியாகத்தான் ஆவான். பால்யத்திலேயே கூட ஒருவன் நெருப்பு மாதிரி சுத்தமாயிருந்து கொண்டு அப்புறம் காமமே எழும்ப முடியாதபடி கொழுந்துவிட்டுக் கொண்டிருந்தால் அவனுக்கு ஸந்நியாஸமும் ஜீவ ப்ரஹ்ம அபேத வித்தையில் தீக்ஷையும் கொடுக்கலாம்தான். ஆசார்யாளே அப்படி எட்டே வயஸில் ஸந்நியாஸி ஆனவர்தானே?அவருடைய மடங்களிலும்

இப்படி பால்ய, யௌவன ப்ரஹ்மசாரிகளுக்கு தீக்ஷை கொடுத்து ஸ்வாமிகளாக வைக்கிற ஸம்ப்ரதாயத்தை ஏற்படுத்தியிருக்கிறாரே!ஸ்ரீபலி என்ற ஊரில் அவரிடம் வெறும் ஜடம் மாதிரி ஒரு பிள்ளையாண்டானைத் தகப்பன்காரன் அழைத்துக்கொண்டு வந்து உன்மாதத்தை தெளிவிக்கணுமென்று ப்ரார்த்தனை பண்ணினான். ஆசார்யாள் பார்வையிலோ அந்த உன்மாதத்துக்குள்ளே புதைந்திருக்கும் ஞானப் பக்குவம் தெரிந்துவிட்டது.

அந்த பிள்ளைக்கு ஸந்நியாஸம் கொடுத்து தம்மோடேயே வைத்துக் கொண்டார். அவருடைய நான்கு ப்ரதான சிஷ்யர்களில் ஒருத்தரான ஹஸ்தாமலகராக ஆனது அந்தப் பிள்ளைதான். அப்புறம், நம்முடைய ஸாமவேத பையனைவிட வயஸில் ரொம்பச் சின்ன ஒரு ஏழு வயஸுக்குழந்தை அவனை விடவும் மஹா புத்தியோடு ஆசார்யாளிடமே எதிர் வாதம் பண்ணிற்று. இவன் மாதிரியே அதுவும் தோற்றுப் போயிற்று. யாரானாலும் ஆசார்யாளிடம் எதிர் வாதம் பண்ணினால் தோற்றுப் போகாமல் என்ன செய்வது?தோற்றுப் போச்சோ, இல்லையோ, நான் சொன்னாற்போல ஒரே விநயம், சரணாகத புத்தி வந்து அப்படியே ஆசார்யாள் சரணங்களில் அந்தக் குழந்தை விழுந்துவிட்டது. ஆசார்யாளும் பரம ஸந்தோஷமடைந்து அதற்கு ஸந்நியாஸம் தந்து 'ஸர்வஜ்ஞாத்மா'என்ற பேரும் கொடுத்தார். எல்லாருக்காகவும் சட்டம் போட்ட ஆசார்யாள், சட்டத்துக்கு மேற்பட்ட அபூர்வப் பிறவிகள் விஷயத்தில் அதைத் தளர்த்தவும் தயங்கவில்லை என்பதற்காகச் சொல்லுகிறேன். ஸாமவேதப் பையன் இருபத்துநாலு வயஸில் நல்ல

யௌவனத்தோடு இருந்தாலும், மஹாவாக்ய உபதேசத்துக்குரிய பக்குவத்தைப் பெற்றிருந்ததாலேயே அப்பா ரிஷி அவனுக்கு உபதேசம் தந்தார்.

'எக்ஸெப்ஷன'லாக இருக்கிற சிலரைக் காட்டி ரூலை எடுக்கச் சொல்வது ஸரியில்லை. விதுரர் பிறந்த வழியை சாஸ்த்ரோக்தமாகப் பார்த்தால் ஞானத்துக்கு அவர் அர்ஹரில்லை (தகுதி பெற்றவரில்லை). ஆனாலும் ஞானியாயிருந்தார். தர்மவ்யாதர் கசாப்புக் கடையே வைத்திருந்தார். ஆனாலும் ஞானம் பெற்றிருந்தார்!ஸூத்ர

பாஷ்யத்தில் இவர்களுடைய எக்ஸாம்பிளை ஆசார்யாளே எடுத்துக் காட்டி அது அவர்களுடைய பூர்வ ஸம்ஸ்கார விசேஷத்தால் ஏற்பட்டது என்கிறார். 'விட்ட குறை தொட்டக் குறை'என்பது - ஜன்மாந்த்ரத்தில் பெருமளவு பக்குவம் பெற்று ஏதோ கொஞ்சம் தோஷமான கர்மாவும் பண்ணி அதனால் மறு ஜன்மா ஏற்படும்போது, விட்ட பக்குவ ஸ்திதி வந்து பிடித்துக் கொண்டு சுருக்க (சீக்கிரம்) அட்வான்ஸ்டான அத்யாத்ம நிலையில் சேர்த்துவிடும். அப்பேர்ப்பட்ட ஸம்ஸ்கார பலம் அபூர்வமாகச் சில பேருக்கே இருக்கும். அவர்களை அளவுகோலாக வைத்துப் பொதுச் சட்டம் பண்ண முடியாது.

ரொம்பவும் இரண்டுகெட்டான் ஸம்ஸ்காரமே பெற்றவர்களான 'ஜெனரல் ரன்'னுக்குக் கர்ம யோகம்தான் பொதுச்சட்டம். அதை ஒழுங்காகப் பண்ணவே அவர்கள் சிரமந்தான் படுவார்கள். அப்படியிருக்கும்போது குருவி தலையில் பனங்காய் என்று அவர்களிடம் அஸாத்ய இந்திரிய நிக்ரஹம், மனோ நிக்ரஹம் தேவைப்படும் ஞான யோகத்தைக் கொடுப்பதால் என்ன ப்ரயோஜனம்?

அதனால்தான் ஸகல கர்மக் கடமைகளையும் உதறிவிட்டு, ஞான விசாரத்திற்கு என்று தன்னை அர்ப்பணித்து கொள்ளக்கூடிய நாலாவது ஆச்ரமக்காரனுக்கு மாத்ரம் (அத்வைத) ஸாதனையில் மூன்றாவதும் கடைசியுமான ஸ்டேஜை வைத்தது. வெளியில் நடக்கும் வீட்டுக் கார்யம், வயிற்றுப்பாட்டுக்கான கார்யம் முதலானவற்றின் பாரத்தைத் தள்ளிவிட்டு, உறவுப் பாசம், பணம்-பதவிப் பாசம் முதலானவைகளை உதறிவிட்டு ஸந்நியாஸியாக ஆத்ம விசாரமே ஜோல்

டைம் கார்யம் என்று உட்கார்ந்தால்தான் கொஞ்சம் கொஞ்சமாக மனஸின் உள்கார்யமான எண்ணங்களையும் தள்ள முடியும்;உள்ளே ஏற்கெனவே பிடித்திருக்கும் பாசப் பாசியையும் உதற முடியும். ஒரு ஸ்டேஜ் வரை ஸத் கர்மா, ஸ்வதர்மம், கடைமைக் கார்யம் என்பதைச் செய்வதேதான் பழைய தப்புக் கர்ம அழுக்கைத் தேய்த்துக் கழுவ அவசியமாயிருக்கிறதென்றாலும், அப்புறம் அதுவும் ஒரு அழுக்காகி, மனஸை எண்ணம் நின்று போன சாந்தத்தில்

கரைய விடாமல் பிடித்துக் கொள்ளும்;பிசுக்கு மாதிரி. அழுக்குப் போவதற்காகப் புளி, மண்ணு போட்டுப் பாத்திரத்தைத் தேய்க்கிறோம் என்பதால் அந்தப் புளியையும் மண்ணையும் அப்படியே அதில் ஈஷி வைத்து விடுவதில்லையல்லவா?அதுகளையுந்தானே அப்புறம் அலம்பிக் கொட்டிவிடுகிறோம். அப்போதுதான் பாத்திரம் பளிச்சென்று சுத்தமாக ஆகிறது. அப்படி, கர்மா எல்லாம் ஜாடாகப் போனால்தான் அந்தஃகரணம் சுத்தமாவது, பளிச்சென்று ஆவது. இதற்கு வெளிக்கார்யத்திலிருந்து முதலில் விடுபட வேண்டும். அதுதான் ஸந்நியாஸம். ஸந்நியாஸியான பிறகு உள் கார்யத்தையும் நிறுத்தி முக்தனாக வேண்டும். கார்யம் என்பதால் அசாந்திகள் எதுவுமில்லாமல் பரம சாந்தமான ஒரு ஆனந்த ஸாகரத்தில் அப்படியே கரைந்து போய் ப்ரஹ்மமாக இருந்து கொண்டிருக்க வேண்டும். மாறாத சாந்த நிலை அது. நிரந்தரமான சாந்தி. ஸதா தத்தளித்துக் கொண்டிருக்கும் நமக்கும் அப்படிப்பட்ட நிலை கிடைக்க முடியுமென்றால் அதை அடைய நாம் மாக்ஸிமம் ப்ரயாஸை பண்ணுவது கடமையல்லவா?இல்லாவிட்டால் நாம் இந்த லோக வாழ்க்கையில் என்ன படித்திருந்தாலும், என்ன படித்திருந்தாலும், என்ன பதவியில் இருந்தாலும், எந்தத் துறையில் கொடிகட்டிப் பறந்தாலும் அசடு என்றுதான் ஆகும்.

---



## ஸந்நியாஸிக்கானதை ஸகலருக்கும் சொல்வானேன் ?

அசடு, பைத்தியம் என்று நான் என்ன பட்டம் கட்டினாலும் உங்களுக்குள் ஒரு கேள்வி எழும்பலாம்? யதார்த்தத்தைப் புரிந்து கொள்ளாமல் அசட்டுப் பட்டம் கட்டினால் என்ன அர்த்தம்?ப்ரத்யக்ஷமான நடைமுறையை புரிந்து கொள்ளாமல்

ஒருத்தர் பேசினால் அது மட்டும் சமர்த்தைச் சேர்ந்ததா என்ன? என்று கேட்கத் தோன்றலாம். சாச்வத சாந்தி என்றால் ஆசையாய்தானே இருக்கிறது. ஆனாலும் அதற்கானதை மூன்றாம் ஸ்டேஜில் செய்வதற்கு ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டால்தான் முடியுமென்றால், நடைமுறைக்கு ஸரிபட்டு வரவேயில்லையே! அதற்கு நாம் ரெடி இல்லையே!அதற்கு நாம் பக்குவமும் ஆகவில்லையே!சாந்தி அடைவதற்காகவே, 'உறவையெல்லாம் விடு. வேலையை விடு. வீட்டை விட்டு ஓடு என்றாலும் இதையெல்லாம் விட்டு விட்டுப் பராரியாக நின்றால் என்ன ஆகுமோ, என்ன ஆகுமோ என்ற பயத்தில் இருக்கிற சாந்தியும் போய்விடும் போல அல்லவா தோன்றுகிறது?நமக்கு இருக்கப்பட்ட ஆசாபாச இழுப்பிலே (ஸந்நியாஸ) ஆச்ரமம் வாங்கிக் கொண்டால், அதற்கு ஏற்றபடி பண்ணும்படிதானே ஆகும்?அந்த ஆச்ரமத்திலிருந்து கொண்டு அப்படிப் பண்ணினால் மஹா பெரிய அபசாரமாகிவிடுமே! நம்மையே நாம் ஏமாற்றிக்கொண்டாலொழிய இப்பவே ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு அதற்கேற்றபடி வாழமுடியுமென்று நினைக்க இடமுண்டா?சொல்கிறவரும் நாமெல்லாரும் ஸந்நியாஸியாகி ஸதாகால ஆத்மவிசாரம் ஆரம்பிக்க முடியுமென்று நினைக்கிற அளவுக்கு அசடாயிருக்க மாட்டாரே!(சிரித்து) அந்த அளவுக்கு அசடாயிருக்க மாட்டாரே! பின்னே எதற்காக வ்ருதாவாக நம்மையெல்லாம் இங்கே கட்டிப் போட்டு, வேலை மெனக்கெட்டு, நம் வேலையையும் கெடுத்துக்கொண்டு லெக்சர் அடிக்கிறார்?'என்று தோன்றலாம். அதாவது, ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளும் உத்தேசமும் அதற்கான பக்குவமும் உள்ளவர்களுக்கே சொல்ல வேண்டியதை ஸகல ஜனங்களுக்கும் எதற்காகச் சொல்ல வேண்டும் என்று தோன்றலாம்.

---

தோன்றுவது நியாயந்தான். எத்தனைதான் ஞானோபதேசம் செய்தாலும், 'அத்வைதா'கான்ஃபரன்ஸ்கள் நடத்தினாலும், இலவசமாகவோ மலிவு விலையிலோ. (அவ்விஷயமாகப்) புஸ்தகங்கள் போட்டாலும் அதற்காகப் பண்ணும் தடபுடலில் கூட்டம் கூடுமே தவிர, கார்யத்தில் எடுத்துக் கொண்டு அநுஷ்டானம் பண்ணுகிறவர்கள் ரொம்பவும் அபூர்வமாகத்தான் இருப்பார்கள். ஆயிரத்தில் ஒருத்தன்தான் முயற்சி பண்ணுவான். அதிலேயும் எவனோ ஒருத்தன்தான் விடாமல் ஸித்தி பண்ணி ஸித்தி அடைவான்'என்று பகவானே சொல்லியிருக்கிறார். மாயா நாடகம் அப்படித்தான் நடக்கிறது. பூர்வ ஸம்ஸ்கார பலம் நன்றாக உள்ள அபூர்வப் பிறவிகளைத்தவிர மற்றவர்கள் மனஸின் இழுப்புக்களிலிருந்தும், கார்ய அரிப்பிலிருந்தும் விடுபட முடியாதவர்களாக, விடுபடணும் என்று கொஞ்சம் ஸீரியஸாக நினைக்கக்கூட முடியாதவர்களாகத்தான் இருக்கிறார்கள்.

அதனால் பகவான் கர்மாவுக்கு மாத்திரமே அதிகாரமுள்ளவர்களாக இந்த சாரார் என்றும், ஞான மார்க்கத்திற்கு அதிகாரிகளாக வேறே - அபூர்வப் பிறவிகளான - அந்த சாரார் என்றும் நன்றாகவே பௌன்டரி கட்டி இரண்டாகப் பிரித்துத்தான் கீதோபதேசம் செய்திருக்கிறார். அது மாத்திரமில்லை. தாம்தான் இப்படிப் பிரித்தது என்றில்லாமல் பூர்வத்திலேயே இப்படி இரண்டு சாராருக்கு இரண்டு மார்க்கங்களாகப் பிரித்துப் போட்டு வைத்திருக்கிறது என்கிறார். 'புரா ப்ரோக்தா'என்கிறார். புரா என்றால் பூர்வகாலத்தில், ஆதியில் என்று அர்த்தம். புராணம் என்பதில் வரும் புரா. ஆதி சாஸ்திரமான வேதத்திலேயே இப்படி பிரித்துவிட்டதைத்தான் 'புரா ப்ரோக்தா'என்கிறார். ப்ரோக்தா என்றால் நன்றாகச் சொல்லப் பட்டது என்று அர்த்தம். ஈச்வரன்தான் வேதங்கள் வழியாக இப்படி உபதேசம் கொடுத்ததால் பூர்வ காலத்தில் என்னால் இப்படிச் சொல்லப்பட்டது - புரா ப்ரோக்தா மயா என்கிறார். என்ன இரண்டு மார்க்கங்கள் என்றால்,

ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம்.

ஞானயோகம், கர்ம யோகம் என்று இரண்டு (மார்க்கங்கள்). ஞானயோகம் என்பதுதான் நம் டாபிக்கான அத்வைத ஸாதனை. அது உசந்த ஸம்ஸ்காரமுள்ள சில பேருக்கே. அவர்களை ஸாங்க்யர், ஸாங்க்யர் என்று பகவான் சொல்வார். இதற்குப் பல தினுஸாக அர்த்தம் பண்ணுவதுண்டு. எனக்கு ஒன்று வேடிக்கையாகத் தோன்றுகிறது. ஸங்க்யை என்றால் எண்ணிக்கை. பாபுலேஷனை 'ஜனஸங்க்யை'என்கிறோமல்லவா?அதனால் ஸுலபமாக எண்ணிவிடக்கூடிய அளவுக்கே இருப்பவர்கள் 'ஸாங்க்யர்'கள் என்று ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது என்று தோன்றுகிறது. இவர்களுக்கானது, இவர்களுக்கு மாத்திரமே ஆனது ஞானயோகமாகிற அத்வைத ஸாதனை, மற்ற எல்லோருக்குமானது கர்ம யோகம்.

கர்மத்தை ப்ரவருத்தி என்றும், ஞானத்தை நிவ்ருத்தி என்றும் சொல்வது. இரண்டையும் நன்றாகப் பிரித்து வைத்து மநு - நமக்கு தர்மங்களைச் சொல்வதில் தலைமையான சாஸ்திரத்தைக் கொடுத்தவர் - **ப்ரவருத்தம் ச நிவ்ருத்தம் ச த்விவிதம் கர்ம வைதிகம்** என்று சொல்லியிருக்கிறார். இரண்டு விதமான மனப்பக்குவமும் ஸம்ஸ்காரமும் உள்ளவர்களுக்கு எனக் கர்மம் ஞானம் என்று இரண்டு வெவ்வேறு மார்க்கங்கள் என்று இவர்கள் சொன்னதைத்தான் ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் 'விபாக:சதவத்'என்று சொல்லியிருக்கிறது. நூறு ரூபாயை இரண்டாக ஐம்பது ஐம்பது ரூபாய் என்று விபாகம் பண்ணி இரண்டு பேரிடம் கொடுக்கிற மாதிரி ஆத்மாவுக்கான வழியைக்கர்மம், ஞானம் என்று இரண்டாக விபாகம் பண்ணி இரண்டு விதமான அதிகாரிகளிடம் கொடுத்திருப்பதைத்தான் அப்படி சொல்லி இருக்கிறது. இது ப்ரஹ்ம ஸூத்ரத்தில் முக்கால்வாசிக்கு அப்புறம் வருகிற விஷயம் ஆரம்பம், பொட்டில் குட்டிக்கொள்கிற முதல் ஸூத்ரமே இந்த ஸமாசாரத்தைத்தான் தெரிவிக்கிறது.

**அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா**

(என்பது அச்சூத்திரம்) 'அத அத:ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா'- 'அப்புறம், இனிமேல் ப்ரஹ்ம விஷயமாக ஆலோசனை (பண்ணுவோம்)'என்று அர்த்தம். எடுத்தவுடனே

"அப்புறம்"!எதற்கப்புறம் என்பதை ஆசார்யாள் பாஷ்யத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறார். முதல் ஸ்டேஜான கர்ம மார்க்கத்தில் ஸித்தி பெற்று, அப்புறம் ஞான மார்க்கத்தில் நாம் பார்க்கவிருக்கிற இரண்டாம் ஸ்டேஜின் ஸாதனங்களை எல்லாம் பண்ணிய அப்புறம் குருமுகமாக ஸந்நியாஸமும் மஹா வாக்ய உபதேசமும் பெற்று ஆத்ம விஷயத்திற்கே தன்னை whole time அர்ப்பணம் பண்ணிக் கொள்ளும் கட்டம் வருகிற ஸமயத்தில் ப்ரஹ்ம விஷயமாக ஆலோசனை பண்ணலாம் என்று அர்த்தம் பண்ணியிருக்கிறார்.

இங்கே கூடியிருக்கிற பேரெல்லாம் - ஒன்றிரண்டு பேர் விலக்கு இருக்கலாம்; மற்றவர்கள் - கர்ம யோகத்துக்கு அதிகாரிகள்தான். கர்மாவை விட முடியாதவர்கள்தான். "ஸரி, விடாமல், கர்மாவே பண்ணு. ஆனால் பலன், பலன் என்று அதே குறியாக, அதே இச்சையாக இல்லாமல் இது ஸ்வதர்மம், கடமை என்பதற்காக் பண்ணு. பலன் ஸமாசாரத்தை பலதாதாவான ஈச்வரனிடம் விட்டு விடு"

என்று சொல்லி இருப்பதுதான் கர்மயோகம்.

இப்படி நிஷ்காம்ய (பற்றில்லாமல்) கர்மம் பண்ணியதில் மனஸ் சுத்தமான அப்புறமே ஒருவன் ஞானயோகத்திற்கு தகுதி பெறுகிறான். கீதைக்கு ஆசார்யாள் பண்ணியிருக்கும் பாஷ்யத்தில் இதை ஸ்பஷ்டமாகத் தெரியப்படுத்தி இருக்கிறார். இந்தக் காலத்தில் பல பேர் திலகர், காந்தி முதலானவர்கள் - கர்மயோகமே நேரடி ஸாதனமென்பதுதான் கீதா தாத்பர்யம் என்று சொன்னாலும், அப்படியில்லை என்றே ஆசார்யாள் காட்டியிருக்கிறார். அந்த விஷயம் இப்போது நமக்கு வேண்டாமானாலும், தெரியாத்தனமாக அதை தொட்டுவிட்டதால் கொஞ்சம் 'கிளியர்'பண்ணி விடுகிறேன்.

"ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:'- 'ஒரு மநுஷ்யன் ஸ்வதர்மமாக ஏற்பட்ட கர்மாவை ஈச்வரார்ப்பணமாகப் பண்ணி ஸித்தி அடைகிறான்' என்று கீதை கடைசி அத்யாயத்தில் வருகிறது. இங்கே 'ஸித்தி' என்று வருவதை மோக்ஷ ஸித்தி என்று அர்த்தம்

பண்ணிக்கொண்டே, கர்மயோகமே மோக்ஷத்திற்கு அந்தரங்க (நேரடி) ஸாதனம் என்று சொல்கிறவர்கள் சொல்கிறார்கள். ஆனால் ஆசார்யாள், 'இங்கே சொன்ன ஸித்தி ஞான யோகத்தில் போவதற்கான யோக்யதா ஸித்தியைத்தான் குறிக்கும்;அதாவது கர்ம யோகத்தின் முடிந்த முடிவான பலனாக ஒருவன் பெறும் ஸித்தி என்பது இதுவரை கர்ம பலனை மட்டும் விட்ட அவன் இனிமேல் கர்மத்தையே அடியோடு விட்டு ஸந்நியாஸியாகி ஞான யோகத்தில் ப்ரவேசித்து ஸதாவும் ஆத்ம விசாரம் செய்வதற்கான யோக்யதையைப் பெறுவதுதான்'â¡Á M÷,AJ¼,Aø£˜. º¡«ù H¡«ù Üõ˜ ªî£ì˜„C è£†® ÝQˆîóñ£è õ£î¤ ð‡EJ¼Šðƒ™ Ü¶î£¡ úK â¡Á àÁFŠð´Aø¶. W¬îJ™ Üƒèƒ«è è˜ñ «ò£è˜¬î ªó£‹ð¾‹ CøŠHˆ¶, „ô£Aˆ¶„ ªê£™LJ¼Šðªî™ô£‹ 'Ü˜ˆîõ£î‹'â¡ð¬î„ «ê˜‰î¶ â¡Á‹ Ýê£˜ò£œ ÃPJ¼,Aø£˜. ï‹¬ñ àˆú£ýŠð´ˆF å¼ õNJ™ «ð£èŠ ð‡µõîŸè£è Ü¬î 'å«ý£' â¡Á ¹è›õ¶î£¡ Ü˜ˆîõ£î‹. ï™ô â‡íˆF™, ï™ô àˆ«îêˆF™ I¬èŠð´ˆF„ ªê£™õ¶. ë£ù‹î£«ù «ñ£þˆFŸ° «ï˜õN?ï£‹ ÜîŸ° ô£ò,A™ô£ñ™ è˜ñ£¬õ«ò è†®òö «õ‡®J¼,Aø«î!â¡Á ,«ôêŠð´AøõQì‹ 'ÜŠð®ªò™ô£‹ °¬øˆ¶ G¬ù,è£«îòŠð£! Þ‰î,è˜ñ «ò£è«ñ Þ¶õ£,°‹, Ü¶õ£,°‹, ÞŠð®ò£èŠð†ì ðô¡è¬÷ î¼ñ£,°‹ â¡Á ªê£™L ÜõÂ,è£ù õNJ™ Üõ¬ù àˆú£ýñ£èŠ «ð£èŠ ð‡í«õ ðèõ£¡ àêˆF„ ªê£™LJ¼,Aø£˜. Ýù£½‹ ë£Q¬òŠ ðŸP„ ªê£™½««ð£¶î£¡, ë£c ˆõ£ˆ¬ñõ «ñ ñî‹:ë£Q â¡ðõ¡ ï£«ùî£¡ â¡ð¶ â¡ àÁFò£ù b˜ñ£ù‹", "ë£Qèœ â¡Â¬ìò î¡¬ñ¬ò«ò Ü¬ì‰¶M†ì ñˆð£õñ£èî£: â¡ªø™ô£‹ òî£˜ˆîñ£è„ ªê£™Aø£˜.

நன்றாக எல்லை கட்டி ஸாங்க்யர்களுக்கு ஞானயோகம், யோகிகளுக்குக் கர்ம யோகம் என்று பகவான் வாக்கிலேயே இருக்கிறது.

கர்ம யோகத்திற்கு உரிய அதிகாரிகளை பகவான் 'யோகி' 'யோகி'என்றே சொல்வார். யோகி என்றால் நாம் ரொம்ப உசந்த நிலையில் மூச்சையடக்கி, மனஸையடக்கி உட்கார்ந் திருப்பவனை நினைக்கிறோமென்றால் அவர் ஞானத்திற்கு

பக்குவம் போதாதவன் என்பதால் கர்மாவிலேயே ஒரு நல்வழியில் செலுத்தப்படுகிறவனை ஏன் இப்படிச் சொன்னார்?இதற்கும் எனக்குப் புதுசாக ஒரு அர்த்தம் தோன்றுகிறது. 'யோகம்' என்றால் 'சேர்வது''சேர்க்கை'என்பதே நேர் பதப் பொருள். 'சேர்வது'என்றால் இரண்டு வஸ்து இருக்க வேண்டும். குறைந்த பக்ஷம் இரண்டு. அதற்கு மேல் மூன்று, நாலு, எத்தனை வேண்டுமானாலும் இருக்கலாம். அப்படியிருந்தால்தான் ஒன்றோடொன்று சேர்ந்து, சேர்க்கையாகிற 'யோகம்' ஏற்பட முடியும். ஒரே வஸ்துதான் இருக்கிறது எனும்போது அங்கே சேர்க்கைக்கு

இடமேயில்லை. அது அதுவாக இருக்கிறது. சேருவதற்கு வெளி வஸ்து இல்லை. இப்படிப் பார்த்தால் 'யோகி' என்கிறவன் இன்னொன்றைச் சேர்ந்தே, சார்ந்தே இருக்கக்கூடிய த்வைதி, அதாவது த்வைதமான மாயா லோகத்திலேயே உழப்பறிந்து கொண்டிருப்பவன்;தனியாய், தானாய் நிற்கக்கூடிய அத்வைதியில்லை என்று அர்த்தம் ஏற்படுகிறது. விளையாட்டாகச் சொன்னது!வித்வான்கள், விஷயம் தெரிந்தவர்கள் தப்பாக நினைக்கக்கூடாது......

நம்மைப் போன்ற பெரும்பாலான ஜனங்கள் கர்ம ஸாங்கிகளாக (கர்மத்தில் பற்றுள்ளவர்களாக) இருப்பவர்கள் தான். நம்மால் ரொம்பவும் அதிகபக்ஷமாகச் செய்யக்கூடியது, பலனில் பற்றில்லாமல் கர்மாக்களைச் செய்வதுதான். அதுவே ரொம்ப ச்ரமம். ஏதாவது ஒரு பலனுக்காகத்தான் நாம் உழைக்கிற உழைப்பெல்லாம். அப்படியிருக்கும்போது பலனை நினைக்காமல் கர்மா பண்ணுவது என்பதே பஹு ச்ரமந்தான். அதற்கும் மேலே ஒருபடி போய் - அந்த ஒரு படியே ஒரு மாடி உசரம்';அதற்கு எகிறிப் போய் - கர்மாவையே அடியோடு விட்டுவிட்டு, த்யானம் மாத்திரம் ஸதாவும் பண்ணிக் கொண்டிரு என்றால் என்ன ப்ரயோஜனம்?கர்ம ஸங்கிகளிடம் பகவான், ஆத்ம விஷயமாக நீ ஒன்றுமே பண்ண வேண்டாம். கர்மாவை யோகமாகப் பண்ணிகொண்டு போவதோடேயே நின்றுகொள். அதனால் சித்த சுத்தி வருகிறபோது வரட்டும். அதற்கப்புறம் நீ ஞான விஷயமாக ப்ரவேசித்தால் போதும் என்று சொல்கிற ரீதியில்தானே, 'ஸாங்க்யர்களுக்கு அது; உனக்கு இது என்று இரண்டு பாதையாகப் போட்டுக் கொடுத்திருக்கிறார்?ஒரு பாதையில் போகிறவன், அதிலேயே

ஸரியாகப் போகமுடியாமல் திண்டாடுகிறவவன், எட்டாத இன்னொரு பாதையைப் பற்றித் தெரிந்துகொண்டு என்ன ப்ரயோஜனம்?(சிரித்து) சுருக்கமாக, இப்போது இந்த உபந்நியாஸத் தவைவலி எதற்காக சொல்கிறேன்

---



## ஸகலருக்கும் சொல்வதன் காரணம்

நாம் செய்யவேண்டியது கர்மாவின் பலனில் ஆசையை விடுவது, அப்படி விடப் ப்ரயத்தனம் பண்ணுவதுதான். அதுவே மஹா கஷ்டமாயிருக்கிறது. பலனை நினைக்காமல் பழைய கர்மா தீர்வதற்காகவே இப்போது ஸ்வதர்ம கர்மாவைப் பண்ணிக்கொண்டு போவது, அதனால் சித்த சுத்தி பெறுவது என்றால் லேசில் முடியவில்லை. இப்படிப் பண்ணுவதற்கே - ஞான மார்க்கத்தில் நிதித்யாஸனம் செய்வதற்கு வழியாக அல்ல; கர்ம யோக மார்க்கத்தில் பலனில் பற்றைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டு வருவதற்கே - அநேக தத்வார்த்தங்கள் தெரிந்து கொண்டு தெளிவுபெற வேண்டியிருக்கிறது;அநேக அப்யாஸங்களைப் பயிற்சி பண்ண வேண்டியிருக்கிறது;கடைசியில் பார்த்தால் இதெல்லாம் ஞானயோகத்தில், அதாவது அத்வைத ஸாதனையில் போட்டுக் கொடுத்திருக்கும் அதே படிகளாக இருக்கிறது. ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ச்ரவண, மனன, நிதித்யாஸனம் செய்வதற்கு முந்தி அந்த ஸாதனா க்ரமத்தில் பல படிகள் சொல்லியிருக்கிறதல்லவா?அதெல்லாம் கர்ம யோகத்தை ஸரியான முறையில் அநுஸரித்து முன்னேறுவதற்கும் அவச்யமாயிருக்கின்றன. ஆனால் அத்தனை ஆழம் போக வேண்டாம். மேல் மட்டங்களில் நீச்சல் போட்டால் போதும் என்கிற அளவில் அவச்யமாயிருக்கின்றன.

நாலாவது படிக்கிற பையனின் சரித்திர புஸ்தகத்திலும் மோஹஞ்சதரோவில் ஆரம்பித்து, வேதகாலம், புத்தர் காலம், மௌர்யர் காலம், குப்தர்காலம், துருக்கர் காலம், வெள்ளைக்காரர் காலம் என்று எல்லா பாடங்களும் இருக்கின்றன;எம்.ஏ. இன்டியன் ஹிஸ்டரி படிக்கிறவனுக்கும் இதே பாடங்கள் இருக்கின்றன. இரண்டுக்கும் எத்தனையோ வித்யாஸம் இருந்தாலும் அங்கே சொல்வது இங்கேயும் தேவைப்படுகிறது. அப்படித்தான் ஞானமார்க்க எம். ஏ., பி.எச்.டிக்காரர்களுக்கான விஷயங்களே கர்ம மார்க்க ஸ்கூல் பசங்களுக்கும் சிறிய அளவில் கற்றுக் கொடுக்க வேண்டியவையாக இருக்கின்றன.

ஸ்விட்ஜர்லாண்டுக்குப் போய் பனியிலே சறுக்கி விளையாடுவது, ரம்யமான மலைக்காட்சிகளை நேரில் பார்ப்பது, நமக்கு எட்டாதவையாக இருக்கலாம். ஆனால் நல்ல கலர் போட்டோவில் அதையெல்லாம் பார்த்தாலே துளித்துளி நேரில் அநுபவித்த ஸந்தோஷம் உண்டாகிறது. அதோடு இப்படி பார்ப்பதே எப்போதாவது அங்கு நேரில் போகத்தான் வேண்டும் என்ற ஆசையையும் உண்டாக்கி அதைக் கார்யமாக்கிக் கொள்வதற்கான முயற்சிகளில் தூண்டிவிடுவது. ஸ்விட்ஜர்லாண்டுக்குப் போகலாம், போகாமலிருக்கலாம். போவதால் சாச்வதமான ஆனந்தம் நிச்சயம் கிடைக்கப் போவதில்லை. ஆனால் சாச்வத ஆனந்தம் தருகிற ஆத்ம லோகத்துக்கு யாரானாலும் போகப் பிரயாஸைப் படத்தான் வேண்டும். போய்ச் சேருகிற காலம் எப்போதாகவோ இருந்துவிட்டுப் போகட்டும்;ஆனாலும் போகத்தான் வேண்டும். அதுதான் பிறவி எடுத்த பயன்;இனிமேல் பிறவியே இல்லை என்று பண்ணிக் கொள்கிற பெரிய பயன். அதனால்தான் அதற்கான

வழியை, அதிலே ஒரு ருசியை உண்டாக்க ஒரு போட்டோவில் காட்டுகிற மாதிரியாவது இப்போதே பிடித்துக் கொஞ்சம் சொல்வது.

இன்னொரு காரணமும் உண்டு. மிகப் பெரும்பாலானவர் அத்வைத ஸாதனைக்கு இப்போதே அதிகாரிகளாக இல்லாவிட்டாலும் அவர்களிலும் என்றில்லை. கொஞ்சங் கொஞ்சம் சித்த சுத்தி, விவேகம், வைராக்யம் உள்ளவர்கள,

ஓரளவுக்கு நன்றாகவே விவேக வைராக்ய த்ரிகர்ண சுத்தி உள்ளவர்கள் என்று பல தரமானவர்கள் இங்கேயே இருக்கலாம். அவர்களுக்கு ஸாதனை க்ரமத்தை தெரிந்து கொள்வதே, "நாம் இன்னும் கொஞ்சம் ப்ரயாஸை எடுத்துக்கொண்டு நம்மை நன்றாக

ஸரிப் பண்ணிக்கொண்டு அந்த வழியில் போக வேண்டும்"என்ற ஆர்வத்தைத் தூண்டிவிடலாம். 'இப்படி ஒரு வழி'என்று சொல்வதாலேயே 'அது என்ன' சும்மா தெரிந்து கொள்வோமே!என்பதில் ஆரம்பித்து, அதில் போகத்தான் முயற்சி செய்வோமே!என்று முடிவு பண்ணும் வரையில் பலதரப்பட்டவர்களுக்கு ஒரு நல்ல விஷயத்தில் கவனத்தைத் திருப்பியதாகிறது. மந்த்ரங்கள் மாதிரியோ கொஞ்சம் தப்பாக பண்ணினால்கூட இசகுபிசகாகி விபரீதத்தில் கொண்டுவிடும் குண்டலினீ முதலான யோகங்கள் மாதிரியோ உள்ள விஷயங்களைப் பொதுவில் எல்லோருக்கும் சொல்லாமல் ரஹஸ்யமாகத்தான் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும். ஞானயோகம் அப்படியெல்லாமில்லாததால் எல்லாருக்கும் சொல்வதால் மஹா தப்பு என்றில்லை.

இங்கே ஒன்று முக்கியமாகச் சொல்லணும். ஞான யோகத்தையே ஸாதனை என்று எடுத்துக் கொள்கிறவனுக்குத்தான் ஸந்நியாஸாச்ரமத்தை ஆசார்யாள் சொன்னாரே தவிர அந்த யோக்யதாம்சம் இல்லாதவர்களும் (ஸாதனையாக அதை அப்யஸிக்கக்கூடாதென்றாலும்) ஆத்ம விஷயங்களைத் தெரிந்துகொண்டு கொஞ்சமாவது ஆத்ம சிந்தனையோடு இருக்கவேண்டுமென்று அவரும் அபிப்ராயப்பட்டிருக்கிறார்.

"பால போத ஸங்க்ரஹம்" என்று ஒரு சிறிய உபதேச நூல் அவர் அருளியிருக்கிறார். 'ஸங்க்ரஹம்'என்றால் சுருக்கம். 'பாலபோதம்'என்ற பேரே அது குழந்தைகளுக்கானது என்று தெரிவிக்கிறது. குழந்தைகளுக்கான போதனை 'பாலபோத ம்'.எட்டு வயஸுக் குழந்தையாயிருக்கும்போதே அந்தக் காலத்தில் உபநயனம் ஆகியிருக்குமல்லவா?அப்புறம் குருகுல வாஸத்தில் அத்யயனம் பண்ணும் காலத்தில் முதல் மூன்று, நாலு வருஷம் வரைகூட, அதாவது பிரம்மச்சாரிக்கு பதினொன்று, பன்னிரண்டு வயஸாகும் வரைகூட குழந்தை

என்று சொல்லலாமல்லவா?இம்மாதிரிக் குழந்தைகளுக்கு ஆசார்யாள் சுருக்கமாகத் தரும் உபதேசந்தான் 'பால போத ஸங்க்ரஹம்'. ஒரு சின்ன பையனுக்கு அவனே கேள்வி கேட்டு ஒரு குரு பதில் சொல்வது போல அந்த நூல் மூலம் ஆசார்யாள் உபதேசிக்கிறார். என்ன உபதேசமென்றால் பரம வேதாந்தமான அத்வைத உபதேசம்!அத்வைத வித்யையின் முக்ய பாயின்ட் அவ்வளவையும் ஸங்க்ரஹமாக அதில் கொடுத்து விடுகிறார். அத்வைத ஸாதனையின் அங்கங்கள் என்ன என்றும்

அதிலே சொல்லியிருக்கிறார். இதிலிருந்து தெரிகிறதல்லவா, ரொம்பப் பக்வப்பட்டு யோக்யதாம்சங்களெல்லாம் ஸம்பாதித்துக் கொண்டு உடனே ஞான வழியை ப்ராக்டிஸ் பண்ணக் கூடியவருக்கு மட்டுந்தான் அத்வைத ஸம்பந்தமான விஷயங்களைச் சொல்லலாமென்று ஆசார்யாள் நினைக்கவில்லை என்று?முடிவான பரம ஸத்யமான அந்தத் தத்வம் இன்னவென்று ஒரு அவுட்லைனாகக்கூட தெரியாதவர்களாக யாருமே இருக்கக்கூடாது என்பதே அவருடைய அபிப்ராயமென்று தெரிகிறதல்லவா?அதில் நேராக அப்யாஸம் என்று ஒருவன் இறங்குவது எப்போது வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும்;ஆனால் அந்த அப்யாஸ முறை - அதாவது ஸாதனை க்ரமம்- என்னவென்று எவரும் அறிந்திருக்க வேண்டும் என்றே அவர் நினைத்திருப்பதாகத் தெரிகிறது.

ஆசார்யாள் என்றாலே உடனே அத்வைதம் என்று ஸகலரும் நினைக்கிறோம். ஆனாலும் அவருடைய பெருமை அதை அவர் ஸகலருக்கும் வைக்காததுதான்;தாம் வெகு அழகாக, கெட்டியாக அத்வைத ஸித்தாந்தத்தை நிர்மாணித்துவிட்டோம் என்பதால் அதை எல்லாருக்கும் உடனடி அநுஷ்டானமாக அவர் வைத்து விடவில்லை. மநுஷ்ய நேச்சரைப் புரிந்துகொண்டு ரொம்பவும் 'ஸிம்பதி'யோடு கர்மாவுக்கென்று ஒரு சாராரை வைத்துவிட்டு, மற்றவர்களுக்கே அத்வைதத்தை வைத்தார்.

---

## பக்தியோக விஷயம்

ஒரு முக்யமான விஷயம் சொல்ல வேண்டும். 'ஆசார்யாளும் ஸரி, அவருக்கு முந்தி க்ருஷ்ண பரமாத்மாவும் ஸரி, கர்மயோக அதிகாரிகள், ஞானயோக அதிகாரிகள் என்று ஏன் இரண்டே பிரிவு பண்ணினார்கள்?பக்தி யோக அதிகாரிகள் என்று ஏன் மூன்றாவதாக ஒன்றை வைக்கவில்லை?"என்றால் - கர்மயோகி, ஞானயோகி இரண்டு பேருக்குமே பக்தி அவச்யந்தான்;அந்த இரண்டிலுமே ஒரு முக்யமான அங்கமாக இரண்டு பேரும் பக்தியும் பண்ணவேண்டியிருக்கிறது என்பதால்தான் அதைத் தனியாகப் பிரித்து வைக்கவில்லை. கர்மாக்காரன் ஒரு லெவலில் பக்தி பண்ணனும் என்றால் ஞானக்காரனும் இன்னொரு லெவலில் பண்ணத்தான் வேண்டும். ச்ரத்தையில் கீழ் மட்டத்தில் ஒன்று, மேல் மட்டத்தில் ஒன்று என்று இரண்டு லெவல் சொன்னேனல்லவா? 'பக்தி-ச்ரத்தை'என்று சேர்த்துச் சொல்கிறதற்கேற்ப பக்தியிலும் இப்படி இரண்டு லெவல்!டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கோர்ஸ்களில் ஹையர், லோயர் என்று இரண்டு இருக்கிற மாதிரி!கீழ் - லெவல்- கர்மாக்காரன் நம் கர்மாவை எல்லாம் பார்த்துத் தண்டிக்க ஒரு ஈச்வரன் இருக்கிறான் என்கிற ஞாபகம் இருப்பதற்காக பக்தி பண்ண வேண்டும். அந்த லெவலில் கொஞ்சம் முன்னேறி, சிதறி ஓடிக் கொண்டேயிருக்கும் மனஸைப் ப்ரேமையினால் ஒருமுகப்படுத்துவதற்காக பக்தி பண்ண வேண்டும். இன்னும் கொஞ்சம் முன்னேறி - ஆனாலும் 'லோயர்'தான்;'ஹைய'ருக்குப் போகவில்லை - பண்ணும் கார்யமெல்லாம் அவனுக்கே என்று 'பல த்யாகம்'பண்ணுவதான பக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்புறம் 'ஹையர்' போய் ஞானயோகம் பண்ணுகிறானே, அவன், தான் எந்த ஆத்மாவை - ப்ரம்மத்தை - அநுபவிக்க ஸாதனை பண்ணுகிறோமோ அதுவேதான் ஸகுணத்தில் ஈச்வரனாயிருப்பது, தனக்கு

அத்வைத வாஸனையைக் கொடுத்து இந்த வழியில் போகப் பண்ணியிருப்பவன் அந்த ஈச்வரன்தான், முடிவாக ஸித்தியும் அவன் அநுக்ரஹத்தால் தான் ஏற்பட வேண்டும் என்கிற எண்ணத்தில் பக்தி பண்ண வேண்டும்.

அதற்கு மேலே - மேலா, கீழா, 'ஹை'யா, 'லோ'வா எதுவுமே தெரியாத - அநுபூதியை அடைந்துவிட்ட ஸித்தர்களும்கூட பக்தி பண்ணுவார்கள், அதற்குக் காரணமே கிடையாது என்று அப்படிப்பட்ட ஒருவரான சுகாசார்யாள் சொல்லியிருக்கிறார்.

ஆக இப்படி எல்லா நிலையிலும், கர்மா, ஞானம் இரண்டிலும் பக்தி இருப்பதால்தான் அதைப் பிரித்துச் சொல்லவில்லை. அந்த விஷயம் இருக்கட்டும் -

---



## அனைவருக்கும் அடிப்படை அத்வைத அறிவு

இரண்டு சாராராக ஜன ஸமுதாயத்தைப் பிரித்து கர்மாக்காரன், ஞானக்காரன் என்று ஆசார்யாள் பாகுபடுத்தி, ஞானக்காரனுக்கே அத்வைத ஸாதனை என்று வைத்தார். ஸாதனை அவனுக்கே என்று வைத்தாலும் அந்த சாஸ்த்ரத்தைப் பற்றிய பொது அறிவு எல்லாருக்கும் - கர்மாக்காரனுக்கும் - இருக்க வேண்டுமென்றே அபிப்ராயப்பட்டார்.

அவர் பெயரை வைத்துக் கொண்டிருக்கும் நாம் அவர் மஹத்தான ஸித்தாந்தமாக ஸ்தாபித்திருக்கும் அத்வைத நிலையைப் பெறுவதற்காக வகுத்துக் கொடுத்திருக்கும் ஸாதனை பற்றி எல்லோருக்கும் தெரிவிக்க வேண்டிய கடமை இருக்கிறது என்றே பேச ஆரம்பித்தேன். ஸாதாரணமாக இந்த விஷயம் நான் பேசுவது இல்லை.

வெறும் வாய் பேச்சாக 'அத்வைதா, அத்வைதா'என்று எல்லாரும் பேசி, எவருமே அநுஷ்டானத்தில் எடுத்துக்

கொள்ளாமல், எல்லாரும் அத்வைதிகளாகிவிட்ட மாதிரி தப்பான, அசாஸ்த்ரீயமான ஸமத்வக் கொள்கை பரவி வருவதால், நாமும் பொதுமக்களின் இந்த ப்ரமையை ஜாஸ்தியாக்க வேண்டாம்' என்றே இந்த விஷயம் நான் பேசுவதில்லை. ஆனாலும் ஸமீபத்தில் ஆசார்யாள் ஜயந்தியாகி இங்கே பெரிய வித்வத் ஸதஸூம் நடந்ததில் சில பேர் வந்து, "எங்களுக்கு அத்வைதம் சொல்லவே கூடாதா?என்று விஞ்ஞாபனம் செய்து கொண்டதால் தான், அத்வைத ஸாதனை என்றால் அதில் எத்தனை கட்டுப்பாடு இருக்கிறது, அது யார் யாருக்கு எடுத்தது என்று தெரிவிப்பதற்காவாவது அதைப்பற்றி அத்வைத குரு என்றே பேர் வைத்துக் கொண்டிருக்கும் நாமும் பேசத்தான் வேண்டுமென்று நினைத்தேன். அப்படி விஞ்ஞாபனம் செய்தவர்களும் இப்போது இங்கே இருப்பதால், ஒத்திப்போட வேண்டாம் என்று ஆரம்பித்து விட்டேன்.

ஆத்மாவை பற்றிய நினைப்பு, அத்வைத சாஸ்திரத்தின் ஆதாரக் கோட்பாடுகள் எல்லாருக்கும் தெரிய வேண்டியதே என்று ஆசார்யாளும் நினைத்தது 'பால போதம்'என்று அரிச்சுவடி ரூபத்தில் அவர் எழுதியிருப்பதில் கூட வெளியாகிறது என்று சொன்னேன்.

"ப்ரச்னோத்தர ரத்ன மாலிகா"என்பது பொது ஜனங்களுக்கான அவருடைய இன்னொரு ப்ரகரணம். சராசரி க்ருஹஸ்தனை உத்தேசித்தே எழுதிய இதுவும் கேள்வி-பதில் ரூபத்தில் ('ப்ரச்னம்':)கேள்வி, 'உத்தரம்':பதில்;இரண்டிலும் அநேகம் சேர்ந்து ராகமாலிகை மாதிரி ப்ரச்னோத்ர மாலிகை ரூபத்தில்) அமைந்திருக்கிறது. அதில், இருந்தும் செத்தவன் யார்?என்று ஒரு கேள்வி: கோ ஹத:?அதற்குப் பதில் "க்ரியா ப்ரஷ்ட:" அதாவது தனக்குரிய கர்மாவை செய்யாமல் விலகியவன், ஸகல கர்மானுஷ்டானத்தையும் விட்டுவிட்டு ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு ஆத்ம விசாரம் செய்பவன்தான் பிறவிப் பயனைப் பெற்றவன். மற்றவர்கள் ஆத்மஹத்தி செய்து கொண்டவர்களே. அதாவது இருந்தும் செத்தவர்களே என்று 'விவேக சூடாமணி' முதலான முழு ஞான நூல்களில்

சொன்ன அதே ஆசார்யாள், இங்கே கர்மாதான் மநுஷ்யன்

செய்ய வேண்டியது, செய்யாவிட்டால் அவன் 'இருந்தும் செத்தவன்'என்பதால் இந்த நூல் 'ஆவரேஜ்' மநுஷ்ய ஸமூஹத்தை உத்தேசித்தே செய்ததென்று தெரிகிறது. ஒருவன் துக்கமில்லாமலிருப்பது எதனால்?"என்று அதில் ஒரு கேள்வி வருகிறபோதும், கீழ்ப்படிதலுள்ள பெண்டாட்டியால் என்று பதில் சொல்லியிருப்பதால்; அப்புறம், "மித்ரம் கிம்?" - "பார்யா":'ஒருத்தனுக்கு உண்மையான ஸ்நேஹிதர் யார்'என்ற கேள்விக்கு 'பத்னிதான்'என்றும் சொல்வதால் குடும்பம் நடத்திக் கொண்டிருக்கும் க்ருஹஸ்தர்களுக்கான உபதேசமாக பண்ணிக்கொண்டு போகிறாரென்று நன்றாகத் தெரிகிறது. இப்படிப்பட்ட புஸ்தகத்திலும் ஆசார்யாள் அத்யாத்ம ஸமாசாரங்களைச் சொல்லாமல் விடவில்லை. அதை ரொம்பவும் நயமாக பண்ணியிருக்கிறார். அதாவது ஞானிக்கான தர்மத்தை, அவனுடைய நிலையைச் சொல்கிற இடங்களில், "இது உனக்கு இல்லேடாயப்பா;அதாவது நீ இப்பவே இப்படி இருக்கணும்னு இல்லை. இது ஆத்ம ஸாதனையிலேயே இறங்கிவிட்டவனுக்குத்தான் பொருந்துவது"â¡ø ªê£™ô£ñ™ ªê£™Aø º¬øJ™ ë£Q,«è àK^î£ù å¼ ôþí^¬î,, ªê£™LJ¼Šð£˜. úèô¼,ºñ£ù ªð£¶ Mûòƒè¬÷,, ªê£™Aø Þì^F™ ÜŠð® å¼ ôþíº‹ ªê£™ô£ñ™ ªõÁ«ñ àð«îê‹ ñ£^Fó‹ ð‡EJ¼Šð£˜. àî£óí‹ è£†®ù£™ ¹K»‹.

எடுத்தவுடன் முறைப்படி குருவைப் பற்றிச் சொல்லிவிடுகிறார் - கேள்வி பதிலாகத்தான். அப்புறம் முதல் கேள்வியே "த்வரிதம் கிம் கர்த்தவ்யம் விதுஷாம்?"என்பதுதான். "அறிந்தவர்கள் விரைவாகப் பண்ண வேண்டியது என்ன?"என்று அர்த்தம். "அறிந்தவர்"என்று இங்கே லக்ஷணம் கொடுத்திருப்பதைக் கவனிக்க வேண்டும். 'வித்வான்' - அறிந்தவர். அதற்குப் பன்மை 'வித்வாம்ஸ:' அதற்கு ஆறாம் வேற்றுமை 'விதுஷாம்'"அறிந்தவர்களுடைய அவஸர காரியம் என்ன?"என்று கேள்வி. சிஷீனீஷீஸீ னீணீஸீ -ஐ பற்றிக் கேள்வியில்லை. அறிந்தவரான மேன்மக்களைப் பற்றியே கேள்வி. "அறிந்தவர் அவஸர உணர்ச்சியோடு செய்ய வேண்டியதென்ன?"என்று கேள்வி. பதில் :"ஸம்ஸார ஸந்ததிச் - சேத:"- 'ஸம்ஸாரத் தொடர் கதையை முறித்துப்

போடுவது!' செத்துச் செத்துப் பிறக்காமல் மோக்ஷமடைவது என்று அர்த்தம். மோக்ஷ மார்க்கத்தைக் 'காமன் மானு'க்கும் எடுத்த எடுப்பிலேயே ஞாபகப்படுத்திவிட வேண்டுமென்று ஆசார்யாள் அபிப்ராயப்பட்டிருப்பது இதிலிருந்து தெரிகிறதோல்லியோ?ஆனாலும் உடனே அதற்கு அவன் அவஸரப்படவேண்டியதில்லை என்பதால் அப்படி அவஸரப்பட வேண்டியவர் அறிந்தவரான வித்வானே என்றும் பாகுபடுத்திக் காட்டியிருக்கிறார்.

H¡ù£® å¼ Þì^F™ "èvñ£^ à^«õè: vò£^?" â¡Á å¼ «èœM. "â¬îŠ ð£~^¶ ï´ƒèµ‹?" Ü¶î£¡ «èœM. à^«õè‹ â¡ø£™ "ï´ƒ°õ¶"ðòŠð´õ¶'Ü¶î£¡ ÜîŸ° Ü~^î‹. ÞŠ«ð£¶, 'Ã´îô£ù «õè‹' Ü™ô¶ 'å¼ à‰îL¡ «ñ™ ãŸð†ì «õè‹'â¡ø Ü~^î^F«ô ðô«ð~ 'à^«õè‹','à^«õè‹'â¡Á â¿¶Aø£~èœ. Ü¶ îŠ¹. à^«õè‹ â¡ø£™ ï´ƒ°õ¶, ¶®Šð¶î£¡. "ï´ï´ƒ°îŸ°Kòªî¶?" â¡Á «èœM. ðF™:"ú‹ú£ó

அரண்யத: ஸூதிய:" என்று லக்ஷணம் கொடுத்துச் சொல்கிறார். "ஸூதிய:"என்றால் 'உயரறிவு பெற்றவர்கள்'. உசந்த ஞானம் ஸம்பாதித்துக் கொள்ளத் தகுதியடை ந்தவர்கள்தான் ஸம்ஸார வாழ்க்கையை ஒரு பயங்கரக் காடாக நினைத்து நடுங்கி, அதிலிருந்து விடுபட்டு ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள முடியும் என்பது தொக்கி நிற்கிறது. ஆனால் 'காமன் மானும்' அப்படி உயரறிவாளன் பண்ணுவானென்று தெரிந்தாவது வைத்துக் கொள்ள வேண்டுமென்று தான் இப்படி ஒரு கேள்வி பதிலைச் சேர்த்திருக்கிறார்.

'அறிந்த'வித்வான் ஸம்ஸாரத்தை முறிக்கணும், 'உயர்ந்த புத்தியுள்ள'ஸூதீ ஸம்ஸார அரண்யத்திற்கு பயப்படணும் என்பதை ஆவரேஜ் மநுஷர் - நம்மைப் போன்றவர்கள் - தெரிந்துகொண்டால் போதும் என்று ஆசார்யாள் நினைத்தது மட்டுமில்லை;ஸம்ஸார விஷயமாக நாம் ஸகலருமே பண்ணவேண்டிய ஒன்றையும் அவர் சொல்லியிருக்கிறார். ரஸமான முறையில் சொல்லியிருக்கிறார்.

"கிம் ஸம்ஸாரே ஸாரம்?"என்று கேள்வி:"ஸம்ஸாரத்தில் ஸாரமாக இருப்பது என்ன?"பதில் :"பஹுசோபி விசிந்த்யமாநம் இதம் ஏவ" - "திரும்பத் திரும்ப இதையே

நினைத்துக் கொண்டிருப்பதுதான்."

"எதை?" இப்போ கேள்வி கேட்டியே, 'ஸம்ஸாரத்தில் என்ன ஸாரம் இருக்கு?'ன்னு, அதையே நினைச்சு அப்படியே திருப்பித் திருப்பிக் கேட்டுண்டு இரு. பிறவி எடுத்த பயனே இந்தப் பிறவி எடுத்ததாலே ஏதாவது பயனுண்டா என்று அடிக்கடி விசாரிச்சுப் பார்த்துண்டு இருக்கிறதுதான். அதைத்தான் 'இதம் ஏவ பஹுசோபி விசிந்த்யமானம்'னு சொன்னது."

இப்படிக் கேட்டுக் கொண்டே இருந்ததால், அதாவது அறிவால் ஆராய்ந்து பார்த்துக் கொண்டேயிருந்தால் ஸம்ஸாரத்தில் ஸாரமேயில்லை என்று தெரியும். எது ஸாரமோ அந்த ஆத்மாவைப் பற்றி தெரிந்து கொள்ள ஆர்வமுண்டாகும். அந்த ஸமயத்தில், 'கிம் ஸம்ஸாரே ஸாரம்?'என்று நாம் கேட்டுக் கொண்டிருந்ததால் தானே இப்போது இந்த உத்தமமான விஷயத்திற்கு ஆர்வப்பட முடிந்திருக்கிறது?நாம் ஸம்ஸாரியாக இருந்துகொண்டு, அப்படி இருப்பதோடேயே நம் வாழ்க்கை நிறைந்து விட்டது என்று நினைத்துக் கொண்டிருந்த ஸமயத்தில் அந்தக் கேள்விதானே நம் கண்ணைத் திறந்துவிட்டுக் காப்பாற்றிற்று?ஆனபடியால் ஸம்ஸாரத்தில் ஏதாவது ஸாரமிருக்குமானால் அது அந்தக் கேள்விதான்;இடைவிடாத கேள்விதான்"என்று தெரியும். அதாவது ஆத்ம சிந்தனை எப்போதும் கொஞ்சமாவது இருந்து கொண்டிருக்க வேண்டும் என்று அர்த்தம். இங்கே வித்வான், ஸுதீ என்கிறார்போல லக்ஷணை எதுவும் கொடுக்காததால் இது ஸகல ஜனங்களுக்குமான உபதேசம். கர்மாவை விட்டால் இருந்தும் செத்தவனாகிவிடும் நீஷீனீஷீஸீ னீணீஸீ கூட ஸம்ஸார விடுதலையைப் பற்றி அவ்வப்போது நினைத்தபடியே இருக்க வேண்டும் என்று ஆசார்யாள் அபிப்ராயப்படுகிறார்.

இங்கே ஸம்ஸாரத்தில் ஸாரமென்ன என்று அடிக்கடி கேட்டுக்

கொண்டிருக்கணும் என்றவர் கொஞ்சம் தள்ளி "ராப்பகல் நினைக்கவேண்டியது என்ன?"என்றே ஒரு கேள்வி கேட்கிறார். 'கா அஹர்நிசம் அநுசிந்த்யா?'

ðF™ " ú‹ú£ó Üú£óî£ " -ú‹ú£ó‹ ú£óñŸø¶ â¡ð¶î£¡."

' ஸோபான பஞ்சகம் ' என்று ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார். அவர் சரீர யாத்திரையை முடித்து ப்ரஹ்ம நிர்வாணம் அடைய உத்தேசித்திருப்பதாக பக்தர்களுக்குத் தெரியவந்தபோது "எங்களை யெல்லாம் விட்டு விட்டுப் போகிறீர்களே!எத்தனையோ உபதேசம் தாங்கள் கட்டுக்கட்டாக எழுதி வைத்தாலும் நாங்கள் அதைப் படிக்க ஸாவகாசப்படுமோ படாதோ?அதனால் அவதாரத்தை முடிக்கு முன் எல்லாவற்றையும் சுருக்கி ஒரு உபதேசம் அநுக்ரஹிக்க வேண்டும்'என்று ப்ரார்த்தித்துக் கொண்டார்கள். அப்போது அவர் சொன்னதுதான் 'ஸோபான பஞ்சகம்'. 'உபதேச பஞ்சகம்'என்றும் அதற்கு இன்னொரு பேர் சொல்வதுண்டு. ஸோபானம் என்றால் படி வரிசை. அடிப்படியில் நம் மாதிரி ஸாமான்ய ஜனங்கள் எங்கே ஆரம்பிக்க வேண்டுமென்பதிலிருந்து பரப்ரஹ்மத்திலேயே ப்ரதிஷ்டையாகிவிடும் உச்ச ஸ்தானம் வரையில் அதில் டைரக்ஷன் வரிசையாய் கொடுத்துக் கொண்டு போயிருக்கிறார். ஆரம்பம் 'வேதோ நித்யம் அதீயதாம் தததிதம் கர்மஸ்வநிஷ்டீயதாம்'-'வேதத்தை தினமும் அத்யயனம் பண்ணி அதில் சொல்லியிருக்கும் கர்மாக்களையெல்லாம் அனுஷ்டியுங்கள்'என்பது. ஆகவே கர்ம மார்க்கத்தில் போக வேண்டியவனுக்கே இந்த உபதேசம் என்று தெரிகிறது. ஆனால் இந்த உபதேசத்திலேயே 'ஆத்மேச்சையை (ஆத்ம ஸம்பந்தமான ஆர்வத்தை வளர்த்துக்கோ!வீட்டை விட்டு ஒடு!குருவிடம் வேதாந்த மஹாவாக்ய உபதேசம் வாங்கிக்கோ!'என்றெல்லாம் சொல்லிக்கொண்டு போய், பரப்ரஹ்மத்திலேயே ப்ரதிஷ்டையாயிடு!"என்று முடித்திருப்பதால் தற்போது கர்மாவுக்குத்தான் அதிகாரியாயிருப்பவனுங்கூட ஞானயோகத்தைப் பற்றிய எல்லா விஷயமும் தெரிந்தவனாயிருக்கவேண்டுமென்பதே ஆசார்யாள் கருத்து என்று தெரிகிறது.

இப்படிப் பார்த்துக் கொண்டே போனால் நன்றாக கன்ஃபார்ம் ஆகிறது - ஸாங்க்யர், யோகி என்று பகவான் நன்றாகப் பிரித்து வைத்ததுபோலவே ஆசாரியாளும் ஞானத்திற்கு அதிகாரி வேறே, கர்மத்திற்கு வேறே என்று எல்லை கட்டி வைத்திருந்தாலும் கர்மத்திற்கு அதிகாரியான பெரும்பாலருங்கூட ஞானத்தைப் பற்றி ஒரு அடிப்படை

அறிவு பெற்றிருக்கவேண்டுமென்று நினைத்தார் என்று. பகவானுங்கூடத்தான் (இம்மாதிரியே நினைத்திருக்கிறார்). அர்ஜுனனை அவர் கர்ம யோகத்திற்கு அதிகாரியாகத் தான் நினைத்தார். "கர்மண்யேவ அதிகாரஸ்-தே"என்று அவர் அவனிடம் சொன்னது. அநேகமாக எல்லாருக்கும் தெரிந்த விஷயம். சண்டை போடமாட்டேன் என்று ஸந்நியாஸியாக ஓடிப்போகத் தயாராக இருந்த அவனை அவர் இழுத்துப் பிடித்து வைத்து "போடு சண்டை"என்று கர்மத்திலேயே ஈடுபடுத்தியிருக்கிறார். ஆனாலும் அப்போது அவனுக்கு உபதேசித்த கீதையிலேயோ கர்ம யோகத்தை மாத்திரம் சொல்லாமல் ஸவிஸ்தாரமாக ஞான யோகத்தையுந்தானே சொல்லியிருக்கிறார்?ஆரம்பமே ரொம்ப
ணீதீவமீ கூஷீணீநீமீ-ஆக

ஸாங்க்ய யோகத்தில்தானே இருக்கிறது?

இத்தனையும் எனக்கு 'ஜஸ்டிஃபிகேஷன்'.

úƒWîˆF™ è¬ó è‡ìõ˜èœ võóƒè¬÷ â´ˆ¶, ªè£‡´ â‰ªî‰î ó£è˜F™ â‰ªî‰î võóƒè¬÷ âŠð®Š H®,è «õ‡´‹, Þ¬ö,è «õ‡´‹, ‰ò£ú‹ M‰ò£ú‹ ªêŒò «õ‡´‹ â¡Á ÜôCŠ ð£˜ˆ¶ º®¾ ð‡µAø£˜èœ. Ýó‹ð C¬þ èŸÁ, ªè£œAø °ö‰¬î,°‹ Ü«î ú-K-è-ñ-ð-î-G- î£¡ ð£ìñ£J¼,Aø¶. Þ¬ö,Aø¶, c†´Aø¶ â™ô£‹ ªê£™L, ªè£´,è£ñ™ ªñ£†¬ì ªñ£†¬ìò£è H®ˆî£«ô «ð£¶‹ â¡Á Ýó‹H,Aø£˜èœ. „¼F îŠð£ñ™ võóvî£ùƒèO™ G¡ÁM†ì£«ô «ð£¶‹ â¡Á Ü‰î v«ìT™ ¬õˆ¶, ªè£œõ¶. ÞF™ Ýó‹H¶ˆî£¡ è¬ìCJ™ Ü‰î võó ú¨zñƒèO™ ¹°‰¶ ‰ò£ú‹, M‰ò£ú‹ ñ£FK ï‹ õ£›,¬èJ¡ è¬ìCJ™ ú‰Gò£ú‹. ÜF«ô â‰î î˜õ ú¨zñƒè¬÷»‹ ÜŠò£ú ú¨zñƒè¬÷»‹ ÜôC»‹ Ü¸ðM˜¶‹ ªîK‰¶ ªè£œ÷ º®»«ñ£ Ü¬î«ò£¡ ð£ô C¬þ ú-K-è-ñ-ð-î-G- ñ£FKò£õ¶ ÞŠ«ð£«ï úèô¼‹ ªîK‰¶ ªè£œ÷ «õ‡®ò¶ Üõ„ò‹ñ£J¼,Aø¶.

---

# நித்ய - அநித்ய வஸ்து விவேகம்

' ஸ'மாதிரி ஆரம்ப ஸாதனையில் முதலில் ஸாதனா சதுஷ்டயம் என்றேனே அதில் முதலாவதாக சொல்வது நித்யாநித்ய வஸ்துவிவேகம் என்பது.

சாஸ்திரப்படி நமக்கான கர்மாக்களையெல்லாம் சுத்தமாகச்செய்து, அதை ஈச்வரார்ப்பணம் செய்து, அந்த ஈச்வரனிடம் பக்தி செலுத்தி, இவற்றாலே அந்தஃகரணத்தில் ஒரு பரிசுத்தியும், ஒன்றிலேயே ஸ்டெடியாக நிற்கும் சக்தியும் உண்டாவது முதல் ஸ்டேஜ். முதல் ஸ்டேஜ் என்றால் ஞானயோகத்தில் முதல் ஸ்டேஜ் இல்லை. ஒரு ஜீவனின் ஆத்யாத்மிக பரிணாமத்தில் முதல் ஸ்டேஜ். இது கர்ம யோகத்தைச் சேர்ந்ததே. இதற்கப்புறம் ஜீவனுக்கு இரண்டாவது ஸ்டேஜாக ஆரம்பிப்பதுதான் ஞானயோகத்தின் முதல் ஸ்டேஜ். இது கர்ம யோகத்தைச் சேர்ந்ததே. இதற்கப்புறம் ஜீவனுக்கு இரண்டாவது ஸ்டேஜாக ஆரம்பிப்பதுதான் ஞானயோகத்தின் முதல் ஸ்டேஜ். அதில் முதல் விஷயமாக சொல்லியிருப்பதே 'நித்யாநித்ய வஸ்து விவேகம்'.இப்போது நாமெல்லாரும் கர்மா பக்திகளால் உண்டாகக்கூடிய பக்வத்தைப் பெற்றுவிட்டதாக வைத்துக் கொண்டு, மனப்பால் குடித்துக் கொண்டோ, நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டே அப்படி வைத்துக் கொண்டு ஞான யோக வழி முறையை தெரிந்து கொள்ள ஆரம்பிக்கலாம். என்னென்னவோ மனப்பால், ஸ்வய ஏமாற்று பண்ணிக் கொள்ளத்தானே செய்கிறோம்?இப்படி நல்லதாகத்தான் ஒன்று இருந்துவிட்டுப் போகட்டுமே!

ஆத்மா விஷயமாக ஒருத்தன் ப்ரவர்த்திக்கணுமென்றால் அதற்கு அடிப்படையாக இருக்க வேண்டியது என்ன? அந்த ஆத்மா ஒன்றுதான் நித்யமானது, மற்றதெல்லாம் அநித்யமானது என்று அறிவுதான். இந்த அறிவு இல்லாவிட்டால் ஒருத்தன் இந்த அநித்ய லோகத்திலே இப்போது ஸம்ஸாரியாக அவதிப்பட்டு அவதிப் பட்டு கொண்டிருப்பது போலவே எப்பவும் இருந்து விடுவான்.

ஆகவே 'இந்த லோகத்தில் நமக்கு ரொம்ப இன்பம் தருவது, பதவி, பெருமை முதலானதுகளைத் தருவது எல்லாமுங்கூட அநித்யந்தான்;அது எதுவுமே சாச்வத ஸௌக்கியத்தைத் தரவே தராது;சாச்வத ஸௌக்யத்தைத் தருகிற ஒரே பொருள் நித்ய வஸ்துவான ஆத்மாதான்' என்ற பேஸிக்கான எண்ணம், நம்பிக்கை ரொம்ப அவச்யம். பல வஸ்துக்கள் அவ்வப்போது மனஸை இழுக்கலாம், மயக்கலாம். அவ்வப்போதும் புத்தியை உஷாராக வைத்துக் கொண்டிருந்தது. இது ஸந்தோஷம் தருகிறது என்று தோன்றுவதால் இதில் ப்ரவேசிக்கலாமா?இது கலப்பில்லாத சந்தோஷந்தானா?அப்படியே கலப்பில்லாததாயிருந்தால்கூட சாச்வதமாயிருக்குமா?ஒரு தரம் இதில் ப்ரவேசித்து விட்டால் அந்த ருசி சித்தத்தில் புகுந்து மறுபடி அதற்கு முயற்சி பண்ணும்படியான ஒரு கட்டைச் சித்தத்துக்குப் போடுந்தானே?சித்தம் சுத்தமாகி, ஒய்ந்து சாந்தி பெறுவதற்கு ஒன்று உதவாததானால் அதிலே ப்ரவேசிக்கலாமா?என்றிப்படிப் பகுத்தறிந்து, எது சாச்வதம், எது அசாச்வதம் என்று சீர்தூக்கிப் பார்த்தால்தான் சாச்வதத்திற்கு எது வழியோ அந்த ஆத்ம மார்க்கத்தில் போகமுடியும்.

இப்படிப் பகுத்தறிந்து சீர்தூக்கிப் பார்ப்பதற்குத்தான் விவேகம், விவேகம் என்று பெயர். நித்யம் எது, அநித்யம் எது என்று பகுத்தறிந்து சீர்தூக்கிப் பார்ப்பதற்கு நித்யாநித்ய வஸ்து விவேகம் என்று பெயர். இதுதான் ஆத்ம ஸாதனையில் முதல் படி.

அநித்ய வஸ்துக்களைப் பற்றி நமக்கே நன்றாகத் தெரியும். நமக்கு நன்றாகத் தெரிகிற எல்லாமுமே அநித்ய வஸ்துக்கள்தான்!நித்ய வஸ்து மனோ, வாக்கு கடந்ததானாலும் ஒரு மாதிரி ஸூசகமாக அதை ஆத்ம சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன. அவற்றிலிருந்து நித்ய வஸ்துவான ஆத்மாவைப் பற்றியும் அடிப்படை அறிவு பெற வேண்டும். நித்ய சாந்தியும் நித்ய செளக்கியமும் தருவதான அதைப் பற்றிய நினைப்பைக் கொண்டே தற்கால சாந்தி ஸௌக்கியங்களை மட்டும் தரக்கூடிய அநித்ய வஸ்துக்களை தள்ள வேண்டும்.

இந்த ஆரம்ப நிலையில் அப்படியே ஒதுக்கி தள்ளிவிட வேண்டுமென்றில்லை. நித்ய வஸ்துவான ஆத்மாவாக இல்லாவிட்டாலும் நம்மை அந்த நித்யத்திடம் கொண்டு சேர்க்க ஸஹாயம் செய்வதாக அநித்ய வஸ்துக்களிலேயே அநேகம் உண்டு. ஆத்ம சாஸ்த்ரங்கள், அதைப் பற்றிப் பெரியோர்கள் செய்யும் உபதேசம், பரிசுத்தமான பாவத்தை உண்டாக்கும் புண்ய ஸ்தலங்கள், புராணம், ஸ்தோத்ரம் முதலானவை - என்றிப்படிப் பல இருக்கின்றன. இதுகளும் ஆத்மா இல்லைதான். இதெல்லாங்கூட அடிபட்டுப் போன ஸ்திதியில்தான் ஆத்ம சாக்ஷாத்காரம் உண்டாவது. எந்தக் கார்யமும் எண்ணமுமில்லாமல் ஆத்மா ஒன்றாக மாத்திரம் இருப்பது தான் நித்யானுபவமே தவிர மற்ற

எதுவுமேயில்லை;அது ஒன்றுதான் பரம ஸத்யானுபவமே தவிர வேறே எதுவுமில்லை. ஸ்வாமியே நேரே நின்று தரிசனம் கொடுத்தால்கூட, ஸாக்ஷாத் அம்பாள் மடியில் போட்டுக்கொண்டு தட்டிக் கொடுத்தால்கூட, அதெல்லாமும் ஆத்மானுபவமான நித்ய ஸத்யானுபவம் இல்லைதான். ஆனால் இதெல்லாம் அதற்கு ரொம்ப கிட்டே கொண்டுவிடக் கூடியவை. இப்படி ரொம்பக் கிட்டேயிருப்பதிலிருந்து ரொம்ப ரொம்ப ஆத்மாவுக்குத் தள்ளி தூரத்தில் நம்மைக் கொண்டு விட்டு விடுவதாகவும் அநேக ஸௌக்கியங்கள், அதாவது அப்போதைக்கு நாம் ஸௌக்கியமாக நினைப்பவை இருக்கின்றன. அவற்றில், இந்த ஆரம்பப் படியிலுள்ளபோது நல்லதாக இருப்பதையே விவேகத்தினால் தேர்ந்தெடுத்து அவற்றைக் கொண்டே நித்ய வஸ்துவிடம் சேர வழி செய்து கொள்ள வேண்டும். 'அநித்ய த்ரவ்யங்களைக் கொண்டு நித்யத்தை அடைந்தவனானேன்'என்று யமதர்மராஜா நசிகேதஸிடம் சொன்னாற்போல!

ஆத்மாவுக்கு ரொம்ப தூரத்தில், ஆத்மாபிவிருத்திக்கு ஒரே குந்தமாக இருக்கும் வெறும் இந்திரிய ஸௌக்யங்கள், வ்ருதாவாகச் சவுடால் பேசுகிற ஸௌக்யம், தூங்கு மூஞ்சியாக ஒன்றும் பண்ணாமலிருக்கும் ஸௌக்யம் முதலியவற்றிலிருந்து அஸல் ஞான மார்க்க ஸாதகன் பூராவாகத் தப்பித்துக்

கொண்டிருப்பான். ஆனால் நமக்கு இவற்றிலிருந்து ஆரம்பித்தே நித்ய -

அநித்யங்களைப் பாகுபடுத்திப் பார்த்துத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் விவேகம் தேவைப்படுகிறது. ஸினிமா, தீனி, திருப்பித் திருப்பி காபி சாப்பிடத் தோன்றுவது, கிரிக்கெட் காமென்டரி கேட்டுக்கொண்டே இருப்பது, அச்சுபிச்சு நாவல்களைப் படிப்பது, காரசாரமாக பாலிடிக்ஸ் பேசுவது - இப்படி எத்தனையோ ஸமாசாரங்கள் நம்மை பலமாகக் கவர்ந்தபடி இருக்கின்றன. இதெல்லாம் லவலேசமாவது ஆத்மாபிவிருத்திக்கு ப்ரயோஜனப்படுமா, இவற்றுக்கு இத்தனை முக்யத்வம் கொடுக்கலாமா என்ற நினைப்பு எப்போதும் விழிப்புடன் இருக்குமாறு வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி நித்ய வஸ்துவில் சேர்க்க உதவுவது எது, உதவாதது எது என்று கறாராக சீர்தூக்கிப் பார்ப்பதுதான் நித்யாநித்ய வஸ்து விவேகம். 'கறார்'என்று ஏன் சொன்னேனென்றால், நமக்கு இஷ்டமான ஒன்றைப் பண்ணுவதற்கும் நம் மனஸ் எப்படியாவது ஏதாவது நியாயம் கல்பிக்கப் பார்க்கும்;ஸமாதானம் சொல்ல பார்க்கும். அதற்கு இடம் கொடுக்காமல் சீர்தூக்கிப் பார்க்கும் ஜட்ஜ்மென்ட் சக்தியான விவேகம் என்பதைக் கறாராக வைத்துக் கொண்டு மார்க் போட வேண்டும். ஃபெயிலைப் பாஸ் என்று தூக்கிப் போடாமல் நிஜமாகப் பாஸ் பண்ண வேண்டும்.

இப்போது சொன்னது ஸாமான்ய தசையிலுள்ள மெஜாரிட்டி ஜனங்களுக்கானது. ஆத்ம ஸாதனை ஒன்றே பண்ணிப் பக்வம் பெற்றவர்கள் ஸினிமா, காபி, கிரிக்கெட் இத்யாதிகளின் கவர்ச்சியிலிருந்து விடுபட்டவர்களாக இருப்பார்களானாலும் அவர்களுக்கும் ஏதாவது ஸ்வல்பமான இந்திரிய ஸௌக்ய இழுப்புக்கள் இருக்கும். நம் ஸ்திதியில் நல்லதாகவும், ஆத்ம வழியில் போவதற்கு ஸஹாயமாகவும் உள்ள சில விஷயங்கள்கூட அவர்களுக்கு அவச்யமில்லாமலிருக்கும். அவற்றையும் அவர்கள் கறாராக கவனித்துத் தள்ளிவிட வேண்டும். ஆத்ம சாக்ஷாத்காரம் ஒன்றுதான் வேண்டியது;அதில்லாவிட்டால் மீனைத் தூக்கிக் கரையில் போட்ட மாதிரிதான் என்ற தாபத்தோடு பாக்கி எல்லாவற்றையும் - கர்ம யோகிகளுக்கு ரொம்ப நல்லதாக இருக்கும் ஸமூஹஸேவை, ஏன் க்ஷேத்ராடன தீர்த்தாடனம், பக்தி உபாஸனையே கூடத்தான்;அம்பாள் மடி வரைக்கும் சொன்னேனே- அத்தனையும் அநித்யந்தான் என்று அவன்

கழித்துக் கட்டிவிட்டு ஏதெது மாத்திரமே ஆத்மாவில் முழுக்கத் தோய்ந்து நிற்க உதவுமோ அதை மட்டும் தேர்ந்தெடுக்கும் விவேகத்தைப் பெற வேண்டும். பாக்கியெல்லாம் அநாத்மாதான். அத்தனையையும் தள்ளிவிட வேண்டும் என்ற தீவிரத்தைப் பெற வேண்டும்.

நித்யாநித்ய வஸ்து விவேகம் என்பதையே ஆத்மாநாத்ம வஸ்து விவேகம் அல்லது விவேசனம் என்றும் சொல்வதுண்டு. விவேசனம் என்றாலும் விவேகம்தான். விஷயங்களை நல்லது எது, கெட்டது எது என்று பகுத்துப் பார்த்து எடுத்துக் கொள்ளும் திறமை. ஆத்ம-அநாத்மாக்களைப் பகுத்துப் பார்ப்பதொன்றுதான் முடிவாக அத்வைத சாஸ்திரத்தில் ஒரே விவேகம். 'விவேக சூடாமணி'யை 'ஆத்மாநாத்ம விவேக சூடாமணி'என்று சொல்கிற வழக்கமுண்டு.

அதிலே மங்களாசரணம் - 'கடவுள் வாழ்த்து'மாதிரியான முதல் ச்லோகம்

ஆனவுடன் டெக்ஸ்டின் ஆரம்ப ச்லோகத்திலேயே ஸாதனாமார்க்கத்தைச் சொல்கிறபோது எல்லா மார்க்கத்தவர்களுக்கும் பொதுவான வைதிக தர்ம ஆசரணையையும், வேத வித்வத்தையும் முதலில் சொல்லி அப்புறம் ஞான மார்க்கக்காரர்களுக்கேயான வழியாக 'ஆத்மாநாத்ம விவேசனம்'என்ற ஒன்றை மாத்திரமே சொல்லி, அப்படியே ஸ்வாநுபூதி, முக்தி என்ற கொண்டுபோய் முடித்து

இதற்கே முக்யத்வம் தந்திருக்கிறார். அந்தப் புஸ்தகத்தில் பிற்பாடும் எது நித்யம், எது அநித்யம் என்று முடிவு செய்யும் விவேகத்தை 'ஹையஸ்ட் லெவ'லில் டிஃபைன் பண்ணியிருக்கிறார்.

**ப்ரஹ்ம ஸத்யம் ஜகந்-மித்யேத்-யேவம் ரூபோ விநிச்சய :|**

**ஸோ (அ)யம் நித்யாநித்ய வஸ்து-விவேக :** ú^ºî£y¼î : ||

'Šóyñ‹ å¡Áî£¡ ú^ò‹, üè^ â¡ð¶ Gü‹ «ð£ô^ ªîK‰î£½‹ ªð£Œò£ŒŠ «ð£ŒM´‹ I^¬òî£¡ â¡ø G„êò ¹^F Ïð^F™ àœ÷¶

â¶«õ£ Ü¶«õ Gˆò£Gˆò£ õv¶ M«õè‹ â¡Á Šóèìù‹ ð‡íŠ
ð†®¼‚Aø¶ â¡ø Üˆî‹. 'úºî£y¼î:' â¡ø£™ Šóèìù‹
ð‡íŠð†®¼‚Aø¶. ò£ó£™ Ü™ô¶ âF™ â¡ø£™ «õîˆF™î£¡

உண்மையான ஒன்றுக்குத்தான் உண்டு. அதையேதான் ஆசார்யாள் பின்பற்றியதால், வேதத்தில் என்று சொல்லாவிட்டாலும் அதுதான் என்று புரிந்து கொள்வார்கள் என்பதால் சொல்லாமல் விட்டிருக்கிறார்.

வேதத்தின் அந்தமாக முடிவாக, இருப்பதால் வேதாந்தம் எனப்படுகிற உபநிஷத்துக்களில் இந்த விஷயம் நிறைய இருக்கிறது. அவை ஏற்பட்டிருப்பதே அநித்ய லோகத்தில் மாட்டிக் கொண்டுள்ள ஜீவர்களை நித்ய வஸ்துவில், சேர்க்கத்தானே?நசிகேதஸ் போன்ற ஒரு சின்னப் பையனிலிருந்து ஆரம்பித்து இந்திரன் வரையில் பல பேர் அநித்யத்தை அநித்யம் என்று புரிந்து கொண்டு நித்ய தத்வத்தை தெரிந்து கொண்ட கதைகள் கடோபநிஷத்து, சாந்தோக்ய உபநிஷத்து முதலியவற்றில் வருகின்றன. யமதர்மராஜா கொடுக்க வந்த அத்தனை பஹுமானங்களையும், 'இதெல்லாம் அநித்யம். அப்புறம் ஒருநாள் உன் கைக்கே திரும்பி வரப்போகிறவைதானே?' என்று குழந்தை நசிகேதஸ் தள்ளிவிட்டு நித்யமான ஆத்ம தத்வோபதேசம் ஒன்றையே அவனிடம் வற்புறுத்தி வேண்டிப் பெற்றிருக்கிறான். 'நித்யோ அநித்யாநாம்'- 'அநித்ய வஸ்துக்களுக்கிடையிலுள்ள ஒரே நித்ய வஸ்து'என்று யமதர்மராஜா ஆத்மாவை வர்ணித்து அதைக் கண்டு கொள்ளுவர்களுக்குத்தான் சாச்வத சாந்தி;வேறே எவருக்கும் இல்லை என்று உபதேசிக்கிறான். செல்வமெல்லாம் அநித்யம். இம்மாதிரி அநித்ய வஸ்து எதைக் கொண்டும் நித்ய தத்வத்தை அடையமுடியாது என்றும் அதில் வருகிறது. சாந்தோக்ய கதையில் அஸுர ராஜனான விரோசனன், தேவராஜனான இந்த்ரன் இரண்டு பேரும் ஆத்மா எது என்று ஆராய்கிறார்கள். அஸுரன் தேஹமே ஆத்மா என்று முடிவு பண்ணி விடுகிறான். 'அஸுர வேதாந்தம்'! இந்த்ரனோ ஜாக்ரத்- ஸ்வப்ன- ஸுஷுப்தி (என்கிற விழிப்பு - கனவு - தூக்கம் ஆகியவை)-

களிலுள்ள அநுபவங்களைப் படிப்படியாகத் தெரிந்து கொள்கிறான். இங்கே அவன் அப்படித் தள்ளுவதும்

நித்யாநித்ய வஸ்து விவேசனந்தான். தைத்திரீயத்தில் ப்ருகு அன்னமய கோசத்திலிருந்து ஒவ்வொன்றையும் முதலில் ப்ரம்மமாக நினைத்து அப்புறம் இல்லையென்று புரிந்து கொண்டு கடைசியில் ஆனந்தமய கோசத்திற்கும் ஆதாரமான ஆத்மாதான் ப்ரஹ்மம் என்ற ஸரியான

ஞானத்தை அடைந்ததாக இருக்கிறது. இதையே இன்னொரு தினுசில் சொன்னால் பஞ்ச கோசங்களையும் அநித்யமென்று விவேகத்தினால் பகுத்துணர்வு தள்ளி ஆத்மாவையே நித்ய வஸ்துவாகத் தெரிந்து கொண்டார் என்கலாம்.

'நேதி நேதி'- 'ப்ரஹ்மம் இப்படியில்லை. இப்படியில்லை;அது பிடிபடுகிற எதுவுமில்லை. இன்னொன்றைப் போய் பற்றிக் கொள்கிறது இல்லை, கட்டுப்படுகிறது இல்லை. கஷ்டப்படுகிறது இல்லை, அழிகிறது இல்லை'என்று ப்ருஹதாண்யகத்தில் வருகிறது. இங்கே எது எதுவாக அது இல்லை என்று இருக்கிறதோ அப்படி இருப்பவைதான் லோக வஸ்துக்கள். அதாவது பிடிபடுவதாக, சிதைந்து போவதாக, பாக்கி சொன்ன எல்லாமாகவும் இருப்பவையே லோக வஸ்துக்கள். ஆகவே 'நேதி நேதி'பாகுபாடு பண்ணுவதென்பது அநித்யமான லோக வஸ்துக்களை அப்படிப் புரிந்துகொண்டு தள்ளி, மிஞ்சுகிற ஏக வஸ்துவான ஆத்மாவையே பற்றிக் கொள்வதாகவே ஆகிறது. 'அந்யத் ஆர்தம்'- 'பாக்கியெல்லாம் நசித்துப் போகிறவை', அதாவது ஆத்மாவைத் தவிர மீதி அத்தனையும் அழிந்து போகிறவை என்று ப்ருஹதாரண்யகத்தில் பல மந்திரங்களில் வருவதும் நித்யத்தை அநித்யத்திலிருந்து பிரித்துக் காட்டுவதுதான்.

பகவத் கீதையில் பகவான் உபதேச ஆரம்பத்திலேயே ஆத்மா ஒன்றுதான் நித்ய வஸ்து, அர்ஜுனன் எதைக் கொல்லுவதா என்று பின்வாங்குகிறானோ அந்த தேஹம் அநித்யமே;தேஹத்துக்கான எல்லா அநுபவமும் நிலையில்லாமல் வருவதும் போவதுமாக இருப்பவைதான்- 'ஆகமாபாயிந:அநித்யா:' என்று சொல்லியிருக்கிறார். நித்யமாய், நாசமற்றதாய், அளவிட முடியாததாய் இருப்பது ஆத்மா தான்: ' நித்யஸ்யோக்தா : சரீரிண : அநாசிநோ (அ) ப்ரமேயஸ்ய ' என்று விஸ்தாரம் பண்ணிக்கொண்டு போகிறார். அப்புறம் ' அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ' - அநித்யமான, துன்பமான இந்த

லோகத்தில் ஜன்மம் அடைந்துவிட்டாய். கடைத்தேற என்னை வழிபடு'என்கிறார். 'என்னை'என்றால்?அவர் தானே ப்ரஹ்ம ஸ்வரூபம், ஆத்ம ஸ்வரூபம்? ' அஹமாத்மா சூடாகேச ஸ்ரவபூதாயச ஸ்தித :' (எல்லா ப்ராணிகளின் ஹ்ருதயத்திலும் நான் ஆத்மாவாக நிலை பெற்றிருக்கிறேன்) என்று அவரே சொல்லியிருக்கிறாரே!ஆகையால் அவரை வழிபடுவதென்றால் ஆத்மாநுஸந்தானம் பண்ணுவதுதான். 'லோகத்தில் எல்லாம் அநித்யம், நித்யமான ஆத்மாவைப் பிடிச்சுக்கோ!' என்பதுதான் அவர் சொல்வதன் தாத்பர்யம். ' க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம் ' என்று கீதையின் பதின்மூன்றாவது அத்யாயத்திற்குப் பேர். க்ஷேத்ரம் என்ற தேஹம், க்ஷேத்ரஜ்ஞன் என்பதாக அந்த உடலுக்குள்ளே உள்ள

அறிவுமயமான ஆத்மா இவைகளைப் பாகுபடுத்தும் யோகம் அது. நித்ய அநித்யங்களைப் பிரித்துணரும் விவேகம்தான் இந்த க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம். க்ஷேத்ரம் என்பதைப் பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், இந்திரியங்கள் தேடிப் போகிற விஷயங்கள். இச்சை, துவேஷம், ஸுக-துக்கம் முதலானவற்றால் ஆனதாக ஸ்வாமி டிஃபைன் பண்ணும்போது அநித்ய வஸ்துக்களையே பிரித்து அப்படிக் காட்டியிருப்பதாகத் தெரிகிறது. அதே மாதிரி நித்ய வஸ்துவைத் தான் அவர் க்ஷேத்ரஜ்ஞன் என்கிறார் என்பதும், 'அதுவே ஸர்வ லோகத்தையும் வியாபித்து விளங்குவது உள்ளும் புறமுமாக அசைவதும் அசையாததுமாக, தூரமாகவும் கிட்டேயும் இருப்பது அது'என்றெல்லாம் அவர் சொல்வதிலிருந்து தெரிகிறது. அப்புறம் க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் என்பவற்றைப் பாகுபாடு பண்ணிக் கொண்டு போகும் பகவான், 'ப்ரக்ருதி - புருஷப் பாகுபாடறிந்தவன் மறு ஜன்மா இல்லாதவனாகிறான். அதாவது மோக்ஷம் அடைகிறான் என்கிறார். திடீரென்று வேறே இரண்டு பேரைச் சொல்கிறாரோ என்றால் ப்ரக்ருதிதான் க்ஷேத்ரம். புருஷன்தான் க்ஷேத்ரஜ்ஞன் என்று இந்த நீஷீஸீமீமீஜ்மீ-ல் தெளிவாகத் தெரியும் படிதான் சொல்லியிருக்கிறார்.

இங்கேதான் அவர் விஷயத்தையே - நாம் பார்த்துக் கொண்டிருக்கும் நித்யாநித்ய வஸ்து விவேகத்தையே கிட்டித்து ஸாரமாக கொடுத்திருக்கிறார். ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் புரஷன் எந்பதுதான் அத்வைத சாஸ்த்ரத்தில்

என்றும் ப்ரஹ்மம் என்றும் சொல்லும் ஸத்ய தத்வம். அதில் ப்ரக்ருதி என்பதுதான் இதில் மாயை. கொஞ்சம் வித்யாஸமுண்டென்றாலும் முக்காலே மூணு வீசம் அந்த இரண்டு (ப்ரக்ருதியும் புருஷனும்) தான் இந்த இரண்டும் (மாயையும் ஆத்மாவும்). மாயையால்தான் அநித்ய ப்ரபஞ்சம் முழுவதும் தோன்றுவது. ஆத்மாதான் நித்ய ஸத்யம் என்பது தெரிந்ததே. ஆகையால் நித்யாநித்ய வஸ்து விவேகம் என்பது அடிப்படையில் மாயா கார்யத்தை ஆத்மாவிலிருந்து பிரித்து உணர்வதுதான். ஆத்மாநாத்ம விவேசனம் என்பதில் அநாத்மா என்பது மாயைதான். ஆனபடியால் ப்ரக்ருதி - புருஷப் பாகுபாட்டை அறிவதென்பது எது அநாத்மா, எது ஆத்மா எந்று விவேசனம் பண்ணுவதுதான்.

ஆத்மஞானியான பின் அநாத்மா என்றே ஒன்று கிடையாது என்றாகிவிடும். அது பிற்பாடு நடப்பது. அத்வைதானந்தத்தில் அப்படியே மதம் பிடித்த மாதிரி ஊறிப் போய், கர்வம் என்றுகூட விஷயம் தெரியாதவர்கள். நினைக்கும்படி அவ்வளவு ராஜரீகமாக ஒரு ஞானி தன்னுடைய நிலையைச் சொல்லிக் கொள்வதாக 'ப்ரௌடாநுபூதி'என்று ஆசார்யாள் எழுதியிருக்கிறார். (சிரித்து) தலைப்புக்கு ஏற்றாற்போல, அநுபூதி பற்றி ஜீக்ஷீஷீஸுபீ-ஆகச் சொல்லிக் கொள்கிறாற்போலவே இருக்கும்!அதிலே ஸாக்ஷாத் ஆசார்யாளே, 'ஆத்ம-அநாத்ம விவேசனங்கிறதே பேத்தல். அநாத்மா-ன்னு ஒண்ணு உண்டா என்ன? அப்படி உண்டு-ன்னா இருக்கிற அந்த வஸ்துவை எப்படிப் பொய்னு தள்ளறதாம்?என்று ஒரே அடியாக அடித்திருக்கிறார். ஆனாலும் அது அநுபூதி கண்டவருடைய வார்த்தை!காண வேண்டியவருக்கோ, 'ஆத்மா - ன்னு ஒண்ணு

இருக்கா என்ன?அநாத்மாதானே, ஸர்வ வ்யாபகமா இருக்கிறதாத் தெரியறது? என்பதல்லவா கேள்வியாயிருக்கிறது!ஞான நிலையை அடையாத அப்படிப்பட்டவர்களெல்லாரும் அதை அடைய ப்ரயத்னம் செய்யும்போது முதலில் எது நித்யமான வஸ்து, எது அநித்ய அநாத்ம வஸ்து, எது எது அநித்யமாய் இருந்தாலும் நித்யத்தில் கொண்டு சேர்க்க உதவுவது, எது எது அநித்யச் சகதியிலேயே இன்னும் அழகாகப் புதைப்பது என்று நல்ல

பாகுபடுத்தி சீர்தூக்கிப் பார்த்துக் கொண்டேதானிருக்க வேண்டும்.

ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்

நித்யாநித்ய விவேக விசாரம்

என்று 'பஜகோவிந்த'முடிக்கிற இடத்தில் (கடைசி ச்லோகம் பலச்ருதி மாதிரி;அதற்கு முந்தைய ச்லோகத்தில்) இந்த ஆத்ம அநாத்மப் பாகுபாட்டை ரொம்பவும் கருத்தாகப் பண்ணவேண்டுமென்று உபதேசித்திருக்கிறார்.

நாம் அவ்வளவு புத்திசாலித்தனத்தோடு பண்ணுவோமோ மாட்டோமோ என்று ஆசார்யாளே எதெல்லாம் அநாத்மா என்று பெரிசாக லிஸ்ட் கொடுத்திருக்கிறார், ' அநாத்மஸ்ரீ விகர்ஹணம் ' என்கிற ப்ரகரணத்தில். அதன் ஒவ்வொரு ச்லோகத்திலும் முதல் மூன்று வரிகளில் ஒவ்வொன்றும் ' தத : கிம் ?' என்று முடியும். 'அதனாலாவதென்ன?அதனால் என்ன ப்ரயோஜனம்?'என்று அர்த்தம். ஒவ்வொரு வரியிலும் நாம் பெரிசாக நினைப்பதான ராஜகௌரவம், ஸம்பத், ஆடை அலங்காரம், தேஹ ஸௌந்தர்யம், புஷ்டி போன்ற ஒன்றைச் சொல்லி ' தத : கிம் ?' போட்டிருப்பார். இப்படி ப்ரதிச்லோகத்திலும் முதல் மூன்று வரிகள். நாலாவது வரியில் 'ஒருத்தனால் தன்னுடைய ஆத்மா ஸாக்ஷாத்கரிக்கப்படாமலிருந்து விட்டால்' - ' யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ (அ) பூத் ' என்பது திரும்பித் திரும்ப வரும். 'ஒருத்தனால் ஆத்மா ஸாக்ஷாத்கரிக்கப்படாதபோது ராஜகௌரவத்தால் என்ன ப்ரயோஜனம்?ஸம்பத்தால், அணி பணிகளால், அழகால், புஷ்டியால் என்ன ப்ரயோஜன ம்?'என்று சேர்த்து அர்த்தம் பண்ணிக் கொள்ளுமாறு ச்லோக அமைப்பு. தான் நிஜத்தில் யார் என்றே தெரியவில்லையாம்;அப்படித் தெரியாதவனுக்கு ராஜகௌரவம், ஸம்பத்து, அது, இது என்று சேர்த்து கொள்வதில் என்ன அர்த்தம் என்று தாத்பர்யம். 'அந்த ஆஸாமி யார் என்றே தெரியாது. ஆனாலும் அவனுக்கு கௌரவம் பண்ணப்போகிறோம். பணமுடிப்புக் கொடுக்கப் போகிறோம்'என்றால் எத்தனை பைத்தியக்காரத்தனமாய் இருக்கும்?அப்படித்தான் இதுவும் என்று காட்டுகிறார்.

ஆத்மாவான தன் உண்மை நிலையே தெரியாதவனுக்கு எதனால் என்ன ப்ரயோஜனம்?ஆத்மாவை ஒருவன் தெரிந்து கொண்டு விட்டாலும் இதெல்லாம் துச்சம்தான். இதெல்லாவற்றையும் துச்சமாகத் தள்ளினால்தான் ஒருவன் ஆத்மாவைத் தெரிந்து கொள்ளவே முடியும். ஆக, எந்த நிலையிலும் கௌரவம், ஸம்பத், அலங்காரம், ஸௌந்தர்யம், புஷ்டி, இன்னம் என்னென்னதையெல்லாம் பெரிசாக நினைக்கிறோமோ அதெல்லாம் வேண்டாடது

தான். இதெல்லாம் அநாத்மா என்று ஒதுக்குவதுதான் 'அநாத்மஸ்ரீ விகர்ஹணம்'. ஸ்ரீ என்றால் எல்லோருக்கும் தெரிந்த அர்த்தம் - லக்ஷ்மி, மங்கள வஸ்து, செல்வம். இன்னொரு அர்த்தம் விஷம். விஷத்தைக் கண்டத்தில் வைத்துக் கொண்டிருப்பதாலேயே பரமசிவனை ஸ்ரீ கண்டன் என்பது. இப்போது செல்வமாகத் தெரிகிற இன்பங்களை அநாத்மா என்ற விஷமாகத் தெரிந்துகொண்டு கண்டனம் பண்ணுவதே அநாத்மஸ்ரீ விகர்ஹணம். இது ஆத்மாநாத்ம விவேகம் என்னும் நித்யாநித்ய வஸ்து விவேகத்தின் இன்னொரு

பேர்தான்.

---



**வைராக்யம்**

நித்ய-அநித்யங்களைச் சீர்தூக்கிப் பார்த்து, கொள்ள வேண்டியதைக் கொண்டு, தள்ளவேண்டியதைத் தள்ளணும். கொள்ளுவதைவிடத் தள்ளுவது ரொம்ப முக்யம். வாழ்க்கையிலேயே பொதுவாக இன்ன செய்யணும் இன்ன செய்யக்கூடாது என்றிருப்பதில் செய்யவேண்டியதைச் செய்யாவிட்டால்கூடப் பரவாயில்லை;செய்யக் கூடாததை செய்துவிட்டால் மஹாகஷ்டம் என்று பார்க்கிறோம். ஒரு

ஜலதோஷம் வருகிறது. 'கடுகுப் பொடி சாதம் சாப்பிடு, ஜஸ்கிரீம் சாப்பிடாதே'என்று சொன்னால் கடுகுப்பொடி சாதம் சாப்பிடாவிட்டால்கூடப் பரவாயில்லை;ஐஸ்கிரீம் சாப்பிட்டாலோ கபம் ஒரேடியாகக் கட்டிக் கொண்டு ஜ்வரமே வந்துவிடுகிறது. இப்படி ஆகாததைச் சாப்பிட்டால் உடனே விபரீத பலன் உண்டாவதுபோல ஆகிறதை சாப்பிட்டால் உடனே அது நல்லது பண்ணுமா என்றால் பண்ணுவதில்லை. ஐஸ்கிரீம் சாப்பிட்டவுடன் கபம் கட்டிக் கொள்கிற அந்த வேகத்தில் கடுகுப்பொடி சாப்பிட்டவுடன் ஜலதோஷம் விடுவதில்லை. காவேரியில் கரையோரத்தில் ஸ்நானம் செய்தால் ஸௌக்யமாயிருக்கும். அந்த ஜலம் உடம்புக்கும் நல்லது, உள்ளத்திற்கும் நல்லது பண்ணும். ஆனால் நீச்சல் தெரியாதவர் ஆழத்துக்குப் போகப்படாது. போனால் சுழல் இழுத்துக் கொண்டு போய்விடும். காவேரி ஸ்நானம் பண்ணாவிட்டாலும் பரவாயில்லை. அப்படியே ஸ்நானம் பண்ணினாலும் அப்போதைக்கு சுத்தமாக, மனஸும் தெளிவாக இருந்தாலும் விசேஷமாக தேஹாரோக்யமோ, புண்ய விசேஷமோ தெரிந்து விடுவதில்லை. ஆனால் ஆழத்துக்குப் போனாலோ நிச்சயமாகச் சுழல் இழுத்து ப்ராணாபத்தில் கொண்டுவிட்டு விடுகிறது. மஹாமாயை விளையாட்டில் இப்படிக் கெடுதல் செய்கிற சக்திகளுக்கே ஜாஸ்தி பவர் இருக்கிறது.

ஆனபடியால் எது ஆத்மாபிவிருத்திக்கும் உகந்தது, எது குந்தகம் பண்ணுவது என்று அலசிப் பார்த்து தெரிந்து கொண்ட பிறகு குந்தகம் பண்ணுகிறவைகளை ஒதுக்கித் தள்ளுவதற்கு முதல் முக்யத்வம் கொடுக்க வேண்டும்.

முன்னேயே சொன்னாற்போல, 'பிறகு'என்றால் ஒவ்வொரு படியாக முதல் படியை முடித்த பிறகு இரண்டாவதாக இந்த ஸாதனாங்கத்தைப் பின்பற்ற வேண்டுமென்று அர்த்தமில்லை. சேர்த்துச் சேர்த்து, கலந்து கலந்தே எல்லா அங்கங்களையும் அப்யஸிக்கும்படி இருக்கும். அதில் ஒவ்வொரு ஸமயத்தில் எந்த ஒன்று பிரதானமாயிருக்கிறதோ அதை படிவரிசையில் 'பிறகு'வருகிற படி மாதிரி சொல்வது.

ஒரு கரு குழந்தையாகிறதென்றால் முதலில் கால் அப்புறம் வயிறு, அப்புறம் (மார்)பு, தலை என்றா ஒவ்வொரு

அங்கமும் வளர்கிறது?அப்படித்தான் side by side இந்த ஸாதனாங்கங்களும் - one after another இல்லை. அதில் ஒவ்வொரு நிலையில் ஒவ்வொன்றில் ஜாஸ்தி கான்ஸென்ட்ரேஷன்.

முதலில் நல்லது கெட்டதைச் சீர் பிரிக்கிறது. அப்படிச் சீர் பிரிக்கும்போதே கெட்டதைத் தள்ளுவதும் நல்லதைக் கொள்ளுவதும் கொஞ்சங் கொஞ்சம் அப்யாஸத்தில் வரும். அப்புறம் ஒரு மாதிரி இந்தச் சீர்ப்பிரிப்பு வேலை ஆடோமேடிக்காக ஆகிவிடும்- அத்தனைக் காலம் அதிலேயே பழகிவிட்டதால்!அப்போது தள்ளவேண்டியதைத் தள்ளுவதில் முக்யமாகக் கான்ஸென்ட்ரேஷனைத் திருப்ப வேண்டும்.

அதுதான் ஸாதன சதுஷ்டயத்தில் இரண்டாவது ஆசையை விடுவது வைராக்யம், விரக்தி.

ஆத்ம ஞானத்திற்குப் பெரிய குந்தகம் புலனின்பங்கள் தான்;இந்த்ரியானந்தங்கள் என்பவை. ஒரு இன்பத்தைத் தேடிப் போகிறோமென்றால் அதற்குக் காரணம் அந்த இன்பத்தை அடையவேண்டுமென்ற ஆசைதானே?ஆசை இல்லாவிட்டால் அப்படித் தேடிப் போவோமா?

ஆகையால் ஆத்மாபிவிருத்திக்கு குந்தகம் பண்ணுவதைத் தள்ளுவது என்பது உலக போகங்கள் ஸகலத்திலும் - ஒரு சுண்டல் திண்ணவேண்டும் என்பதிலிருந்து பாரத ரத்னா பெறவேண்டும் என்கிறவரை - இருக்கிற ஸகல ஆசைகளையும் விடுவதான வைராக்யமேயாகும்.

**ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள் !**

**ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள் !**

**ஆசைப்படப்பட்ட ஆய்வரும் துன்பம்**

**ஆசை விடவிட ஆனந்தமாமே !**

என்று வைராக்ய பராகஷ்டாவில் (உச்ச எல்லையில்) திருமூலர் ரொம்ப அழகாக சொல்லிவிட்டார். ஆசை அடியோடு போய்விட்டால் போதும், மோக்ஷம் 'லபக்'கென்று

அகப்பட்டுவிடும். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு'என்று நம்மாழ்வாரும் பாடிவைத்து இருக்கிறார்.

ஆசை - 'த்ருஷ்ணை'என்கிற தாஹம்;நாக்கு வறண்டால் ஜலம் குடிக்கணும் என்று தாஹமெடுப்பது போல் சிற்றின்பங்களை அநுபவிக்கணும் அநுபவிக்கணும் என்ற தாஹம் - அது போனால்தான் நிர்வாணம் என்பதே புத்தர் ஒரே மூச்சாக உட்கார்ந்து கொண்டு கண்டுபிடித்தது என்று அந்த மதப் புஸ்தகங்களில் இருக்கிறது.

நாகரிக ஸமுதாயங்களில் பிறந்த எந்த மதமானாலும் அது ஆசைகளை அழிப்பதற்கு முக்யம் தராமலிருக்காது.

நம்முடைய ஆசார்யாளும் ஆசையை அழிப்பதான வைராக்யத்திற்கு

ரொம்பவும் முக்யம் தந்திருக்கிறார். 'அபரோக்ஷாநுபூதி'யில் ஸாதனை க்ரமத்தைச் சொல்லும் போது 'வைராக்யாதி சதுஷ்டயம்'(வைராக்யம் முதலானவை கொண்ட நான்கு அங்க அமைப்பு) என்று இதைத்தான் 'சீஃஃபா'கக் குறிப்பிட்டிருக்கிறார்

வைராக்யத்தை ஆசார்யாள் எப்படி டிஃஃபைன் பண்ணியிருக்கிறாரென்றால் -

தத்-வைராக்யம் ஜுகுப்ஸா யா தர்சந ச்ரவணாதிபி: |

தேஹாதி-ப்ரஹ்ம பர்யந்தே ஹ்யநித்யே போக்ய வஸ்துநி ||

என்று சொல்லியிருக்கிறார்.

'அதுதான்டா வைராக்யம்!'- 'தத் வைராக்யம்' என்று 'ட்ரமாடிக்'è£è Ýó‹H^F¼,Aø£~.

'எது?'என்றால், 'பார்க்கிறது, கேட்கிறது முதலான எல்லாவற்றிலும் - இந்த மநுஷ்ய தேஹத்தால் பெறக்கூடிய இன்ப நுகர்ச்சிப் பொருள்கள் வரை அநித்யமான யாவற்றிலும் - வெறுப்புதான் வைராக்யம்'.

'ஜுகுப்ஸா'என்றால் அருவருத்து ஒதுக்கத் தோன்றுவது, அதாவது வெறுப்பு. 'ஜிஹாஸா'என்றும் பாடபேதம். அர்த்தம்

ஒன்றேதான்.

ஞானம் வந்துவிட்டால் அப்போது எல்லாவற்றிடமும் அன்பு ஏற்பட்டுவிடும். வெறுப்பு என்பதே இருக்காது. ஏனென்றால் அப்போது எந்தப் பெரிய, கெட்ட சபல வஸ்துவும் அவனைக் கலக்காது. ஆனால் அதற்கு முற்பட்ட நிலைகளில் அப்படியில்லை. நம்மைச் சறுக்கிவிடக் கூடிய ஸகல இன்ப நுகர்ச்சிப் பொருள்களையும் வெறுத்து ஒதுக்கினால்தான் ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்ள முடியும். பிற்பாடு அன்புருவம் ஆவதற்கே முதலில் வெறுப்புணர்ச்சி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்!

ñ¸wò˜èOì‹ ªõÁŠ¹ Þ™¬ô;Þ™ô«õ Þ™¬ô. Üõ˜è÷£™ ãŸðì‚Ã®ò ð£ê ð‰îƒèO«ô«ò ªõÁŠ¹. i†¬ì M†´ å´õ¶ Ü‹ñ£Mì‹, Üèº¬ìò£Oì‹, Hœ¬÷ ªð‡èOì‹ ªõÁŠð£™ Þ™¬ô;Þ™ô«õ Þ™¬ô. Üõ˜è÷£™ ïñ‚° ãŸð´‹ ð‰î ð£ê‹ ï‹¬ñ Ý˜ñ Mûò˜F«ô«ò «î£ò º®ò£ñ™ ŠóFð‰îè‹ ªêŒAø«î â¡ðî£™ ÜîQì«ñ ªõÁŠ¹. 'ã¡ šóî‹Â õJÁ è£ò«ø?'ã¡Á Ü‹ñ£ ñí‚è ñí‚è å¼ ê£Šð£†´ FÂ¬ú, è£†® Ý˜ñ «þñ˜FŸ° ý£Q ªêŒAø£«÷;Üèº¬ìò£¬÷Š ð‚è˜F™ ¬õ˜¶, ªè£‡ì£™ ñùv êL‚Aø«î;Hœ¬÷‚è£è ô…ê‹ ªè£´˜î£õ¶ Þ¡TmòKƒ «ê˜‚èµ‹;ªð‡ ÞwìŠð® ì£‚ì˜ ñ£ŠHœ¬÷ ð£˜˜¶ ÜîŸ«èŸè ªðKò âF˜ü£e¡ îóµ‹ - â¡PŠð® åšªõ£¡Á‹ è†®Š «ð£´Aø«î â¡Á ªõÁŠ¹. è£˜òƒèO™ ªõÁŠ¹, «ð£‚ò õv¶‚èO™ ªõÁŠ«ð îMó ñ¸wò˜èOì‹, Hó£E õ˜‚è˜Fì‹ ªõÁŠ¹ â¡ð¶ Þ™¬ô. Þƒ«è ï£‹ ð£˜˜î

ச்லோகத்திலும் ஸரி, 'போக்ய வஸ்துநி ஜுகுப்ஸா'- போகப் பொருள்களில் வெறுப்பு - என்றுதான் இருக்கிறதே தவிர ஜீவன்களிடம் என்றில்லை. அதாவது, ஜீவர்களை ஒதுக்குவது அவர்களிடம் வெறுப்பால் இல்லை;அவர்களால் நமக்கு போக்யத்தில் பிடிப்பு ஏற்படுவதால் தான்.

நித்ய அநித்ய வஸ்து விவேகத்தால் இந்த்ரிய அநுபோக விஷயங்கள் யாவும் அநித்யம் என்று தெரிந்து கொண்டு அநித்யமான அவற்றிடம் வெறுப்புக் கொள்வதே வைராக்யம். 'ஜுகுப்ஸா .....ஹ்யநித்யே போக வஸ்துதி'.

அநித்யே என்றில்லாமல் 'ஹ்யநித்யே'என்று இருக்கிறது. 'ஹி அநித்யே'என்பது ஸந்தியில் 'ஹ்யநித்யே'என்றாயிருக்கிறது. 'ஹி'என்பது சொல்லும் விஷயத்துக்கு அழுத்தம் கொடுப்பதற்காகப் போடுவது. தமிழில் 'மாதோ'என்று போடுகிற மாதிரி.

வெறுப்பை உண்டாக்கிக் கொண்டால்தான் மாயா பந்தத்தை உண்டாக்கும் விஷயங்களில் இறங்காமலிருப்போம். 'அது பாட்டுக்கு இருக்கட்டும்'என்று இந்த விஷயத்தில் இருந்தோமானால் அது ஸாத்விகமாகாது. அசட்டுத்தனமே ஆகும். 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை'என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். எதனிடமும் பயப்படாத தீரனாக மனிதன் இருக்க வேண்டும் என்றுதான் அவர் திருக்குறள் உபதேசித்தது. ஆனாலும் அப்படி நிஜமாகவே ஒருவன் ஆகிறதற்கு முந்தி அசட்டுத் தைர்யத்தில் ஒன்று கிடக்க ஒன்று செய்துவிடக் கூடாது என்பதால், 'இந்த லோகத்தில் பயப்பட வேண்டிய விஷயங்களுக்கு பயப்பட்டு ஒதுங்கித்தான் போக வேண்டும்;இல்லாவிட்டால் அது அசட்டுத்தனந்தான்'என்கிறார். பேதைமை என்றாலும் அசட்டுத்தனம் என்றாலும் ஒன்றுதான். ஸகலத்திடமும் ப்ரேமையை முடிவாகச் சொல்ல வந்த ஆசார்யாளும், ஆரம்ப நிலைகளில் ஆத்மாபிவிருத்திக்கு உதவாத- அதற்கு ஹானி பண்ணுகிற - விஷயங்களில் அருவருப்பை, வெறுப்பை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்கிறார்.

மனஸிலே தைக்கும் விதத்தில் இதற்கு ஒரு உபமானம் சொல்வார் - ரொம்ப அருவருப்பை உண்டாக்கும் உபமானமாகவே 'பால போத ஸங்க்ரஹம்', 'அபரோக்ஷாநுபூதி''ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம்'என்ற மூன்று புஸ்தகங்களிலும் அந்த ஒரே உபமானத்தைச் சொல்லியிருக்கிறார்:யதைவ காகவிஷ்டாயாம்'என்று அபரோக்ஷாநுபூதியிலும், பால போத ஸங்க்ரஹத்திலும்;'காகஸ்ய விஷ்டாவத் அஹஸ்ய புத்தி'என்று ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹத்தில் காக்கையின் எச்சத்தில் எப்படி அருவறுப்பான வெறுப்பு உண்டாகுமோ அப்படி போக்ய வஸ்துக்களில் உண்டாக வேண்டும் என்று உபமானம். மரத்தடியில் உட்கார்ந்து வன போஜனம் பண்ணிக் கொண்டிருக்கிறோம். பல தினுஸு

சித்ரான்னம், வ்யஞ்ஜனங்கள் பரிமாறியிருக்கிறது. அப்போது மேலே மரக்கிளையில் உட்கார்ந்திருக்கும் ஒரு காக்கையின் எச்சம் நேரே நம் இலையில் வந்து விழுந்தால், 'சீ'என்று எப்படி

அருவருப்படைந்து அந்தண்டை ஓடி விடுவோம்?அப்புறம் காக்காயை விரட்டி விட்டு வேறே இலையில் ஸரியாகப் பரிமாறிச் சாப்பிடக் கூப்பிட்டால் கூட ஒக்காளித்துக் கொண்டு சாப்பாடு உள்ளே போகாமல்தான் ஸ்ட்ரைக் பண்ணும்!அந்த மாதிரி வெறுப்பு விஷய போகங்களில் உண்டாவதுதான் வைராக்யம் என்று சொல்லியிருக்கிறார். அது நன்றாகத் தீவிரமாகிறபோது வனபோஜன விருந்து என்பதே காகவிஷ்டையாகத்தான் வெறுப்புத் தட்டும்!ஆசார்யாளே சொல்லியுள்ளபடி வியாதிக்கு மருந்து மாதிரி பசி நோய் தீர ஏதோ பிக்ஷயில் கிடைப்பதை அன்றன்றும் தின்று தொலைக்கணும் என்றில்லாமல் விருந்து சாப்பாடு என்ன என்று வெறுப்புத் தட்டும்.

ஏதோ இந்த மநுஷ்ய தேஹத்தால் அநுபவிக்கும் இந்த லோகத்து இன்பங்கள் தானென்றில்லை. ப்ரஹ்ம லோகத்திற்குப் போய் அங்கே திவ்ய தேஹத்தால் அநுபவிக்கக் கூடிய மஹா போகங்களில்கூட இப்படிப்பட்ட வெறுப்பு- ஜுகுப்ஸா - உண்டாக வேண்டும் : தேஹாதி ப்ரஹ்ம பர்யந்தே'

ப்ரஹ்மம் என்கிற நிர்குணமான, அரூபமான ஸத்ய தத்வம் ஒன்றுதான் வேண்டியதே தவிர, ப்ரஹ்மா என்கிற ரூபமுள்ள ஒரு ஸ்வாமி அவருடைய ப்ரஹ்ம லோகத்தில் அளிக்கக்கூடிய போகங்களையும் ஒதுக்கித் தள்ளத்தான் வேண்டும்.

ஸாதன சதுஷ்டயத்தில் 'வைராக்யம்'என்பதைச் சொல்லும்போது இதைத் தெளிவு செய்வதாக அதற்கு நீளமாக அடைமொழி போட்டு இஹாமுத்ரார்த்த போக விராகம் அல்லது 'இஹாமுத்ர பல போக விராகம் என்றே ஆசார்யாள் சொல்லுவார்.

'இஹ+அமுத்ர = 'இஹாமுத்ர'. 'இஹ'என்றால் இப்போது நாமிருக்கும் இந்த லோகம்; 'இகவுலகம்'என்பதில் வருவது. 'அமுத்ர'என்றால் 'இங்கே'என்று கிட்டக்க இல்லாமல்

'அங்கே'என்று 'எங்கேயோ'இருக்கும் பித்ரு லோகம், இந்த்ர லோகம் முதலியன. பலவிதமான தேவர்கள் உள்ள பல லோகங்களுக்கும், உச்சத்தில் ப்ரஹ்மா இருக்கும் ப்ரஹ்ம லோகமும் அதில் அடங்கும். 'இவ்வுலகம்', 'அவ்வுலக ம்'என்பதில் - பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை, அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை என்று திருவள்ளுவர் கூடச் சொல்வதில் - இவ்வுலகத்தைத் தான் 'இஹ'என்றது;அவ்வுலகத்தை 'அமுத்ர'என்றது. அந்த ப்ரஹ்ம லோக அநுபவங்கள்கூட ஆத்மாநுபவமில்லை;அங்கே பெறும் ஆனந்தங்கள்கூட ஆத்மானந்தமாகாது. ப்ரஹ்மலோக ஆனந்தமும் ப்ரஹ்மகல்ப்பப் பிரளயத்தோடு அழிந்து போவதுதான்;ஆத்மானந்தம் போல சாச்வதத்திலும் சாச்வதமானதல்ல. அதோடு அங்கேயும் ஜீவாத்ம பரமாத்ம பேதத்துடன் கூடிய ஆனந்தமே கிடைக்குமாதலால் அது ஐக்கியமாயிருப்பதன் ஸாக்ஷாத்காரப் பேரானந்தத்தில் கடுகத்தனைகூட இருக்காது. ஆகையால் 'இஹ அமுத்ர'ங்களில் ஒருவன் பெறக்கூடியதான 'அர்த்த'ங்களின் அதாவது

லஸ்துக்களின்;போகத்தில் அவ்வஸ்துக்களை அநுபோகம் பண்ணுவதில்;விராகம் அதாவது வைராக்யம் தான் இஹாமுத்ரார்த்த போக விராஹம். இதையே இன்னொரு விதத்தில் இம்மை, மறுமைப் பலன்களை அநுபவிப்பதில் வைராக்யம் என்னும் போது 'இஹாமுத்ர பல போக விராகம்' என்கிறார். 'அர்த்தம்'என்றால் வஸ்து;பலன் வஸ்துவிலிருந்து நாம் பெறுவது.

வைராக்யசாலிகளை 'வீதராகர்'என்பது. 'வீதாராகிணம் விநத யோகிநம்'என்று 'வாதாபி கணபதி' பாட்டில்கூட வருகிறது. முண்டகோபநிஷத்தில் ரிஷிகளை

ஞானத்தினால் த்ருப்தி கண்டவர்கள், ஆத்மாவை ஸாதித்துக் கொண்டவர்கள், வாதராகர்கள் என்று சொல்லி, முடிவாக ப்ரசாந்தர்கள் என்று வர்ணித்திருக்கிறது.

வைராக்ய வெறுப்புக்கே 'நிர்வேதம்'என்று ஒரு பேர். லோக விஷயங்களில் பூர்ணமாக உதாசீனம் ஏற்பட்டால் அதுவே நிர்வேதம். இந்த உணர்ச்சிதான் சாந்த ரஸம் என்பதற்கே காரணமாகிறதென்று அலங்கார சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. அது இருக்கட்டும். 'வைராக்ய

ம்'மாதிரியே இன்னொரு வார்த்தை 'நிர்வேதம்'என்று சொல்ல வந்தேன். வீதராகர்களைச் சொன்ன அந்த உபநிஷத்தில் இதைப்பற்றியும் வருகிறது. அங்கே ஆசார்யாள், 'வித்'என்கிற தாதுவுக்கு முன்னாடி 'நி'சேர்த்துக் கொண்டு உருவாயிருக்கும் இந்த நிர்வேதம் என்ற வார்த்தைக்கு 'வைராக்யம்' என்று அர்த்தம் என்றே பாஷ்யம் பண்ணியிருக்கிறார்:'வைராக்யார்த்தே'என்று. கர்ம மார்க்கத்தில் ரொம்பவும் உயர்வாகச் சொல்பவை இஷ்டா-பூர்த்தம் என்கிற யஜ்ஞங்களும் ஸமூஹப் பணிகளுமாகும். ஆனால் அதெல்லாமுங்கூட பிற்பாடு ஞான யோகத்தில் கொண்டு விட்டுவிட்டு விலக வேண்டிய 'ப்ரிலிமினரி'களே என்று புரிந்து கொள்ளாமல் அவையே லக்ஷ்யத்தில் சேர்ப்பவையென்று நினைப்பவர்களை அந்த ஸாதாரண 'மூடரில்லை', மஹா மூடரான 'ப்ரமூடர்'- என்று முதலில் சொல்லியிருக்கிறது. அப்புறம் இரண்டு மந்த்ரம் தள்ளி, 'ஒருத்தன் புத்திசாலி ப்ராஹ்மணனானால் அவன் எத்தனை உசந்த கர்மாவாலும் பெறக்கூடிய ஸ்வர்காதிகள் அநித்யம் என்று பரீக்ஷித்துப் புரிந்து கொண்டு, கார்யமில்லாத ப்ரஹ்மத்தைக் கார்யத்தால் அடையமுடியாது என்ற அறிவைப் பெற்று, நிர்வேதம் பெற வேண்டும்;அதாவது வைராக்யமடைய வேண்டும். அப்புறம் ப்ரஹ்ம நிஷ்டரான ஒரு குருவிடம் போய் உபதேசம் பெற்றுத் தானும் ப்ரஹ்ம ஞானம் பெற வேண்டும் என்று வருகிறது.

கர்மயோகம் முதல் ஸ்டேஜ், ப்ரஹ்ம ஞானத்திற்காக ஸந்நியாஸியாகி உபதேசம் வாங்கிக் கொள்வது மூன்றாவது ஸ்டேஜ் என்று பார்த்தோம். நடுவே இரண்டாவது ஸ்டேஜில் வருவதுதான் ஸாதன சதுஷ்டயம் என்றும், அதில் இரண்டாவது அங்கமாகச் சொல்லப்பட்டிருப்பது வைராக்யம் என்றும் பார்த்தோம். இங்கேயோ முதல் ஸ்டேஜான கர்மாவைச் சொல்லி, அப்புறம் இந்த வைராக்யம் ஒன்றை மாத்திரம் சொல்லி, 'டக்'கென்று மூன்றாவதான ஸ்டேஜான ப்ரஹ்ம ஞானோபதேசத்திற்குப் போயிருக்கிறது.

இதிலிருந்து வைராக்யம் ஒன்றை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டாலே ஸாதன சதுஷ்டயத்தின் ஸகல அங்கங்களும் அதிலேயே கரைந்து 'ஆடோமேடிக்'காக வந்து விடும் என்று ஆகிறது.

ஆசார்யாள் இந்த உபநிஷத்துக்கு பாஷ்யம் பண்ணும் போது, இதற்குப் பல மந்த்ரங்கள் முன்னாடி எது லௌகிகமான அபரவித்யை, எது ஆத்யாத்மிகமான பரவித்யை என்ற விஷயம் வரும்போதே, 'ப்ரஹ்ம ஞானத்தைக் கொடுக்கும் ப்ரஹ்ம வித்யையை எவரும் படித்து அர்த்த ஞானம் ஸம்பாதித்துவிடலாம்;ஆனால் அநுபவ ஞானம் ஸம்பாதிக்கணுமென்றால் வைராக்யத்தோடு குருவை ஆச்ரயித்து உபதேசம் பெற்றால்தான் முடியும்'என்று சொல்லியிருக்கிறார்.

வைராக்யம் என்பது 'தர்சன-ச்ரவணாதிபி:ஜுகுப்ஸா': 'பார்க்கிறவை கேட்கிறவைகளில் வெறுப்பு'என்று ஆசார்யாள் லக்ஷணம் கொடுத்திருப்பதைப் பார்த்தோம். 'பார்க்கிறவை, கேட்கிறவை'என்ற இரண்டு அவர் சொல்கிறாரென்றால் க்ருஷ்ண பரமாத்மா, 'கேட்க வேண்டியவை, கேட்டவை'- ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச - என்று இரண்டு சொல்கிறார். ஏற்கெனவே என்னென்னவோ அக்கப்போரெல்லாம் தெரிந்துகொண்டு மூளையில் திணித்து வைத்துக் கொண்டிருக்கிறோமே, அதுதான் 'கேட்டவை'. இன்னும் 'அதைத் தெரிஞ்சுக்கணும், இதைத் தெரிஞ்சுக்கணும்' என்று துருதுருத்துக் கொண்டிருக்கிறோமே, அதெல்லாந்தான் 'கேட்கவேண்டியவை'. இந்த இரண்டிலும் 'நிர்வேத ம்'வருவதைப் பற்றி பகவான் சொல்கிறார். இதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும் போதும் நிர்வேதம் என்றால் வைராக்யம் என்றே அர்த்தம் கொடுத்திருக்கிறார். மோஹச்சேற்றில் அழுக்காகிக் கிடக்கும் புத்தி அந்தச் சேற்றுக் குட்டையை விட்டு வெளியில் வந்தால் அப்போது கேட்டது, கேட்க வேண்டியது எல்லாவற்றிலும் வைராக்யம் வரும் என்று இங்கே பகவான் சொல்லியிருக்கிறார். மோஹத்தால் அழுக்கடைவது என்பதை ஆசார்யாள் 'ஆத்மாநாத்ம விவேக அறிவு குழம்பிப் போவது'என்றே ஸ்பஷ்டமாக விளக்கியிருக்கிறார். அதுதான் சதுஷ்டயத்தில் முதலில் சொன்னது. அடுத்தது வைராக்யம். பகவானும் இந்த ச்லோகத்தில் இந்த ஆர்டரிலேயே சொல்லியிருக்கிறார்!

ராகம், அதாவது ஆசை. இல்லாமலிருப்பது வைராக்யம். அப்படியிருப்பவன் வைராகி. பைராகி பைராகி என்று வடக்கத்தி ஆண்டிப் பண்டாரங்களைச் சொல்கிறோமே அது

வைராகிதான். அதாவது ஸந்நியாஸம் என்றாலே வைராக்யந்தான் என்ற அளவுக்கு 'ஈக்வேட்'பண்ணியிருக்கிறோம். ராகத்தை விட்டவன் வைராகி. விடாமல் ஆசைவயப்பட்டிருப்பவன் ராகி. ராகமுடையவன் ராகி. இப்படி ஆசைவயப்பட்டிருப்பவனை உபநிஷத்தில் 'காமயமானன்'என்று சொல்லியிருக்கிறது. ஆசைகளால் ஒருவன் அழிக்கப்பட்டே விடுவதால், ஹதமே செய்யப்பட்டுவிடுவதால் ஆசைக்காரனை 'காமஹதன்'என்றும் உபநிஷத்துக்கள் சொல்லும். இதேபோல அசைவயப்படாதவனை

'Üè£ñòñ£ù¡' â¡Á 'Üè£ñýî¡'â¡Á ªê£™½‹.

ராகம், காமம் இரண்டுக்கும் ஆசை என்று ஒரே அர்த்தம் பண்ணி இப்படி (அவ்விரண்டையும்) ஒன்றாகச் சொல்வது. ஆனால் அதுகளுக்குள் கொஞ்சம் வித்யாஸமும் உண்டு. 'காம-ராக விவர்ஜிதம்'என்று கீதையில் ஒரு இடத்தில் பகவான் சொல்லியிருக்கிறார். 'காமமும் ராகமும் இல்லாத'என்று அர்த்தம். இப்படி இரண்டு வஸ்துக்களாகச் சொன்னதால் காமம் வேறு, ராகம் வேறு என்று தெரிகிறது. என்ன வித்யாஸம்?இந்த மாதிரி நமக்குப் புரியாத இடங்களில் நம்முடைய ஆசார்யாள் தம்முடைய மஹாமேதையால் நமக்குப் புரியப் பண்ணி பரமோபகாரம் பண்ணுவார். இங்கே, 'காமம் என்பது இதுவரை அடையாத விஷயங்களில் ஏற்படும் த்ருஷ்ணை, அதாவது தாஹம். ராகம் என்பது அடைந்த விஷயங்களில் ஏற்படும் பற்று'என்று பிரித்துக் காட்டியிருக்கிறார். அவ்வளவு மைன்யூட் வித்யாஸங்கள் இங்கே வேண்டாம். காமம், ராகம் இரண்டுமே ஆசை என்று வைத்துக் கொண்டால் போதும்.

வைராக்யமில்லாதவன் 'காமயமானன்', வைராக்யமுள்ளவன் 'அகாமயமானன்'என்று உபநிஷத் சொல்கிறது. அவர்களைப் பற்றி என்ன சொல்கிறதென்றால் - காமயமானன் கர்மாவே எல்லாம் என்று நினைத்துக் கர்மாநுஷ்டானண் பண்ணி, அதன் பலனைப் பரலோகத்தில் அநுபவித்துவிட்டு, அது தீர்ந்தபின் இங்கேயே மறுபடியும் பிறந்து செக்குமாடு மாதிரி. மீளவும் கர்மத்திலேயே சுற்றுகிறான்;அகாமயமானனான வைராக்யசாலியோ ஆசையில்லாத அகாமனாக, நிஷ்காமனாக (ஆசை வேண்டாம் என்று இவன் உதறும்

போது 'அகாமன்'அப்புறம் இப்படி அவன் முயற்சி பண்ணி தள்ளுவது என்றில்லாமல் ஆசைகள் தானே ஓட்டம் பிடிக்கும் போது 'நிஷ்காமன்',இப்படி அகாமனாக, நிஷ்காமனாக) அதற்கப்புறம் 'ஆப்தகாம'னாக அதாவது தான் ஆசைப்பட்டதை அடைந்தவனாக.... இப்படி உபநிஷத் சொல்லிக் கொண்டு போகும்போது, அகாமயமானனுக்கு ஆசை ஏது?எதை ஆசைப்பட்டு அவன் அடைவது? என்ற கேள்வி வருகிறது. அதைஅடுத்தாற்போல் வரும் அடைமொழி தெளிவு பண்ணுகிறது....... அகாம, நிஷ்காம, ஆப்தகாமனாக இருப்பவனை அடுத்தாற்போல 'ஆப்தகாமன்'என்று சொல்லியிருக்கிறது;அதாவது ஆத்மா ஒன்றுக்குத்தான் அவன் ஆசைப்படுவது! அதை அடைந்த போது ஆப்தகாமனாகிறான். இப்படி அகாமனாக, நிஷ்காமனாக, ஆப்தகாமனாக, ஆத்மகாமனாக இருக்கும் வைராக்யசாலியோ செத்தபின் அவனுடைய ப்ராணன் பரலோகம் எதற்கும் போவதென்பதில்லை. இங்கே உயிர் வாழும்போதே அவன் ப்ரஹ்மமாக இருந்து உடம்பு செத்து விழுந்த பின்னும் ப்ரஹ்மத்திலேயே அடக்கமாகி விடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. காமமில்லாமலிருப்பதை, அதாவது, வைராக்யத்தைத்தான் அப்படிப் பட்ட ப்ரஹ்மாநுபவத்துக்கு யோக்யதாம்சமாகச் சொல்லியிருக்கிறது.

ஆழ்ந்த வேத அறிவு பெற்ற 'ச்ரோத்ரியன்'என்பவனாக மாத்திரமில்லாமல்,

ஆசைவாய்ப்பட்டு அழிந்த போகாத அகாமஹதனாகவும் இருக்கிறவனுக்குத் தான் இந்த ப்ருத்வி முழுதையும் கட்டியாள்பவனின் ஆனந்தத்தை நூறு நூறு மடங்காகப் பெருக்கிக் கொண்டே ஒவ்வொரு மேல் லோக ஆனந்தமாகக் கிடைத்துக் கொண்டே போய் முடிவில் ப்ரஹ்மானந்தம் ஸித்திக்கும் என்று தைத்திரீய, ப்ருஹதாரண்யகங்களில் (ஒன்றுக்கொன்று சற்று மாறுபாட்டுடன்) சொல்லப்பட்டிருக்கிறது. இங்கேயும் காமத்தை ஹதம் செய்வது, அதாவது வைராக்யமாயிருப்பதையே முக்யமான யோக்யதாம்சமாக வைத்திருப்பதைக் காட்ட வந்தேன்.

கீதையிலும் பகவான் "அப்யாஸம், வைராக்யம்'என்ற

இரண்டைத்தான் மிக முக்யமானதாக வற்புறுத்தியிருக்கிறார். ஓடிக்கொண்டேயிருக்கும் மனஸை இழுத்துப் பிடித்து நிறுத்தி வைப்பதற்கு விடாமல் பயிற்சி பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும். விடாமுயற்சி, விடாமுயற்சி கொண்டேயிருக்க வேண்டும். விடாமுயற்சி, விடாப் பயிற்சி - அதுதான் 'அப்யாஸம்'.மனஸை நிலை நிறுத்துவதற்கு அத்யாவசியமான இன்னொன்று வைராக்யம் என்று பகவான் சொல்லியிருக்கிறார்.

உபதேசம் ஆரம்பித்து ஸ்திதப்ரஜ்ஞ லக்ஷணம் சொல்லும்போது முதல் லக்ஷணமாக, ' ப்ரஜஹாதி யதா காமந் ஸர்வாந் பார்த்த மநோகதான் ' என்பதே வைராக்யந்தான். கடைசி அத்யாயத்தில், கர்ம மார்க்கத்தில் ஸித்தி பெற்ற அப்புறம் ஞான ஸித்திக்காக என்னென்ன செய்யணும் என்று சொல்லும்போதும், 'நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித:' : 'இடைவிடாமல் வைராக்யத்தை அப்யஸிக்க வேண்டும்'என்கிறார்.

பார்க்கிறது, கேட்கிறது எல்லாவற்றிலும் வெறுப்பு வைராக்யம் என்று ஆசார்யாள் (விவேக சூடாமணியில்) சொல்லியிருக்கிறார்;இதில் 'பார்க்கிற'தைத் தள்ளி, கேட்கிறது, கேட்கவேண்டியது'என்று பகவான் (கீதையில்) சொல்லியிருக்கிறார் என்றேன். இங்கே அதே கீதையில் 'நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித:'என்பதில் வரும் 'வைராக்ய'த்திற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும் போதோ, 'பார்க்கிறது, பார்க்காதது ஆகிய இரண்டு விஷயங்களிலும் ஆசைத் தாஹமில்லாமலிருப்பது வைராக்யம் - த்ருஷ்டாத்ருஷ்டேஷு விஷயேஷு வைத்ருஷ்ண்ய ம்'என்கிறார். அதென்ன பார்க்காததில் ஆசை என்றால் ஸ்வர்க்கபோகம். இந்திர பதவி மாதிரியான விஷயங்களில் ஆசைதான். வைதிக கர்மாநுஷ்டானத்தை அதுவே முடிவான ஸாதனம் என்று நினைத்துப் பண்ணினால் இப்படிப்பட்ட தேவலோக ஸௌக்யங்கள் கிடைக்கும். அது இப்போது நம் கண்ணுக்குத் தெரியாததால் 'அத்ருஷ்டம்'என்றே சொல்லப்படும். 'த்ருஷ்டம்'என்றால் பார்க்கக்கூடியது;கூடாதது அத்ருஷ்டம்.

இப்படி மூன்று விதமாக வைராக்யத்தைப் பற்றிப் பார்க்கிறோம் - ஒன்று:பார்க்கிற, கேட்கிற எல்லாவற்றிலும்

ஆசையை விடுவது;இரண்டு:கேட்டதில் கேட்கப் போவதில் ஆசையை விடுவது;மூன்று:பார்ப்பதில் பார்க்காததில்

ஆசையை விடுவது. எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்தால் 'ஸர்வான் பார்த்த மனோகதான்'என்று பகவான் சொன்னாற்போல ஒரு மநுஷ்ய மனஸில் இடம் பெறக்கூடிய அத்தனை ஆசைகளையும் தொலைத்து முழுகுவதுதான் வைராக்யம்.

அது ஸாதனையில் ரொம்பவும் முக்யமான அங்கம். பர்த்ருஹரி என்பவர் ரொம்பப் பெரியவர். அவர் துறவறத்தைப் பற்றி, துறவியைப் பற்றி ரொம்பவும் உணர்ச்சியோடும், காம்பீர்யத்தோடும் ஒரு சதகம் (நூறு ச்லோகங்கள்) செய்திருக்கிறார். அதற்குப் பேர் 'ஸந்நியாஸ சதகம்'என்று வைத்திருக்கலாம். ஆனால் அப்படி வைக்காமல் 'வைராக்ய சதகம்'என்றே வைத்திருக்கிறார். வைராக்யம் இருந்து விட்டால் போதும், அதுதான் ஸந்நியாஸம் என்ற அபிப்ராயம் இதிலிருந்தும் தெரிகிறது.

ஆமாம், 'ஸந்-ந்யாஸம்'என்றாலே என்ன?'பூர்ணமாகத் துறப்பது'தானே?ஆசை என்ற ஒன்றைத் துறந்தால்தானே பாக்கி அத்தனையையும் துறக்க முடியும்?ஆகையால் ஸந்-ந்யாஸம், துறவு என்றாலே வைராக்யம் என்றாகியிருப்பதில் ஆச்சர்யமில்லை. தமிழில் தர்மங்களைச் சொன்ன மஹாபெரியவர் திருவள்ளுவர். அவர் துறவு பற்றிச் சொல்லியிருக்கும் அதிகாரத்தில், பற்றற்றானான பரமாத்மாவையே பற்றிக் கொண்டு ஸகல பற்றுகளையும் விடுவதைத் துறவாகச் சொல்லியிருக்கிறார். ஆசையால், ராகத்தால் வருவதுதான் பற்று . அல்லது ஒன்றோடு நமக்குத் தொடர்பு, அதாவது பற்று உண்டானால் அதனிடம் ஆசை உண்டாகிவிடுகிறது. "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:" என்று பகவான் சொன்னாற்போல். ஆகக்கூடி ராகமும் பற்றும் பரஸ்பரம் காரிய காரணங்களாக இருக்கின்றன. ஆனதால் 'பற்று விடற்கு'என்று திருவள்ளுவர் சொல்வது வைராக்யம் உண்டாவதைத்தான். அதைத்தான் அவர் துறவு என்றே வைத்து, அந்த ('பற்று விடற்கு' என்ற) வார்த்தையோடேயே அந்த அதிகாரத்தை முடித்திருக்கிறார். அப்புறம் இதே துறவறவியலிலேயே 'அவா அறுத்தல்'என்றே ஒரு அதிகாரம் - பத்துக் குறள்கள் - பண்ணியிருக்கிறார். அவா அறுத்தல்

என்றாலும் வைராக்யம் என்றாலும் ஒன்றுதான்.

செல்வத்தையெல்லாம் திக்காரம் பண்ணிவிட்டுப் புறப்படுவதுதான் வைராக்யம். அப்படிப்பட்ட அந்த வைராக்யத்தையே பெரிய செல்வம், அதற்கு ஸமானமாக இஹ உலகிலும் ஒன்றுமில்லை, தேவலோகத்திலும் இல்லை என்று அழகாக சொல்லியிருக்கிறார்.

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை

ஆண்டும் அஃது ஒப்ப(து) இல்

இதே அபிப்ராயத்தை (ஸதாசிவ) ப்ரஹ்மேந்த்ராளும் சொல்லியிருக்கிறார். ஸந்நியாஸியையே ஒரு ராஜாவாக உருவகப்படுத்தி அவர் சொல்லும்போது அவன் 'ஸ்வீக்ருத வைராக்ய ஸர்வஸ்வன்'என்று சொல்லியிருக்கிறார். 'வைராக்யம்' என்ற சொத்து முழுவதையும் ஆர்ஜிதம் செய்துகொண்ட வன்'என்று

அர்த்தம்!அவரே அப்படியிருந்தவர்தான். பர்த்ருஹரி, திருவள்ளுவர், ப்ரஹ்மேந்தராள் முதலானவர்கள் தாங்களே உயர்ந்த வைராக்யசாலிகளாக இருந்ததால் தான் அவர்கள் வைராக்யத்தைப் பற்றிச் சொல்வது நம் மனஸையும் தொடுகிறது. அப்போதைக்காவது!வைராக்யத்தை ஸாதிப்பது நமக்கு மஹா கஷ்டமாயிருந்தாலும், அப்படி ஸாதித்துவிட்டால் நாமெல்லாரும் பெரிய ஸொத்துக்களாக நினைப்பவைகளையும் குப்பையாக நினைக்கும்படியான எப்பேர்ப்பட்ட ஆத்மானந்த ஸொத்தை அநுபவிக்க முடியுமென்பதை இந்த அநுபவசாலிகளின் வாக்கிலிருந்து அறிந்து கொள்கிறோம். நம்முடைய ஆசார்யாளும் - சொல்லவே வேண்டாம் - எட்டே வயஸில் வீட்டை விட்டு, ஊரை விட்டு, உயிராக நினைத்துச் செல்லம் கொடுத்துக் கொண்டிருந்த அம்மையை விட்டுப் பரம வைராக்யத்தோடு ஓடியவரல்லவா?அவரும், 'ஒரு கோவணாண்டியைப் போல பாக்யவான் எவன் உண்டு?' என்று ப்ரதி ச்லோகத்திலும் முத்தாய்ப்பு வைத்து ஒரு பஞ்சகம் பாடியிருக்கிறார். 'பஜகோவிந்த'த்திலேயும் எவனுக்குத்தான் பேரானந்தத்தை உண்டாக்காமலிருக்கும்?'என்று கேட்கிறார்.

வைராக்யம் என்றாலே இன்னொருத்தர் நினைவு வராமலிருக்காது. பட்டினத்தார்தான்!குபேரனின் அம்சமாகப்

பிறந்து கடல் வாணிபமெல்லாம் பண்ணிய ஐச்வர்யவான். ஆனால் வளர்ப்புக் குழந்தையாக இவரிடம் வந்து சேர்ந்த சிவாம்சமான பிள்ளை, "காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே!'

என்று ஒலை எழுதி வைத்துவிட்டு மறைந்து போன அப்புறம் அதைப் பார்த்தாரோ இல்லையோ, ஸகல ஐச்வர்யத்தையும் விட்டு விட்டு கோவணாண்டியாகப் புறப்பட்டு விட்டார்.

வீடு நமக்குத் திருவாலங் காடு விமலர் தந்த

ஒடு நமக்குண்டு

என்று வீட்டை விட்டு, ஒரு ஒட்டை பிஷா பாத்ரமாக எடுத்துக் கொண்டு கிளம்பிய வைராக்யசாலி அவர். அப்புறம் அந்த மாதிரி ஒரு ஒட்டை உடைமையாக வைத்துக் கொண்டிருப்பதுகூடத் துறவறத்துக்கு இழுக்கு என்று அதையும் போட்டு

உடைத்தாராம்.

ஊரும் சதமல்ல, உற்றார் சதமல்ல, (உற்றுப் பெற்ற)

பேரும் சதமல்ல ......

என்றெல்லாம் அவர் நிறைய பாடி வைத்திருப்பதைக் கேட்டாலே, ப்ரஸவ வைராக்யம், ச்மசான வைராக்யம் மாதிரி, அப்போதைக்காவது எவருக்கும் ஒரு விரக்தி ஏற்படும்.

பர்த்ருஹரி சொன்னேனே, அவரும் இவருக்கு சிஷ்யராக வந்து சேர்ந்தவர்தான் என்று கதை உண்டு. பர்த்ருஹரி என்பதை பத்திரகிரி என்கிறார்கள். மரியாதையாக பத்திரகிரியார் என்பது. உஜ்ஜயினியில்

ராஜாவாயிருந்த பத்திரகிரியார் ஆண்டியாகித் திருவிடைமருதூர் கோவில் மேலக் கோபுர வாசலில் பிக்ஷை வாங்கிக் கொள்வதற்காக ஒரு ஒடு மட்டும் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாராம். குருவான பட்டினத்தாருக்கும் சேர்த்து பிக்ஷை வாங்கிக் கொடுப்பாராம். பட்டினத்தார் கீழ்க் கோபுர வாசலில் உட்கார்ந்திருப்பாராம்.
குபேராம்சமானவரும், உஜ்ஜயினி ராஜ்யாதிபதியாகயிரு ந்தவருமான இரண்டு பேர் அப்பேர்ப்பட்ட வைராக்யத்தோடு

ஆண்டிகளாக இருந்திருக்கிறார்கள்!அப்படியும் பத்திரகிரியாருக்கு வைராக்யம் போதவில்லை என்றே பட்டிணத்தார் நினைத்தாராம்!ஏனென்றால் பிக்ஷை வாங்குவதற்குத் திரு ஒடு வைத்திருந் தாரல்லவா?அதனால்!பட்டினத்தாரிடம் ஒரு ஏழை போய் அன்னம் யாசித்தானாம். கோவிலிலிருந்த மஹாலிங்க ஸ்வாமியே தான் அப்படி ஏழை ரூபத்தில் போனது என்பார்கள். அவனிடம் பட்டினத்தார், நானே ஒண்ணுமில்லாதவன். என்னை வந்து கேக்கிறியே!மேலக் கோபுர வாசல்ல ஒடு குடும்பி இருக்கான். அவனைப் போய்க் கேளு. நான் இப்படிச் சொன்னதாகச் சொல்லிக் கேளு'என்றாராம். அவன் அப்படியே பத்திரகிரியாரிடம் போய்க் கேட்டானாம். 'நம்மைக் குடும்பி என்றாரா குருநாதர்?என்று க்ஷணம் நினைத்தவுடன் அவருக்கு புரிந்து விட்டதாம். ஒரே உடைமையாக அவரிடமிருந்த

ஒட்டையும் போட்டு உடைத்து விட்டாராம்!

இன்னும் ஸ்வாரஸ்யமாக இந்தக் கதையில் வருகிற ஸமாசாரமெல்லாம் நான் சொல்லவில்லை. அதிலே போனால் ஸாதனை ஸமாசாரம் சொல்லி முடிக்கப் போது இருக்காது. வைராக்யத்தைப் பற்றிச் சொல்லும்போது இப்படிப்பட்ட உதாரண புருஷர்களைச் சொன்னால் இன்னும் கொஞ்சம் ஆழமாக இறங்கலாம் என்பதால் கொஞ்சம் சொன்னேன்.

'ஒடு நமக்குண்டு' பாடியவரே அப்புறம் ஒடு வைத்துக் கொண்டவனும் ஸம்ஸாரிதான் என்ற அளவுக்குப் போன மாதிரி ப்ரஹ்மேந்த்ராள் வாழ்க்கையிலேயும் ஒரு ஸம்பவம் சொல்வதுண்டு. கையையே மடித்துத் தலையணையாக வைத்துக் கொண்டு, ஆகாசமே போர்வை, கட்டாந்தரையே மெத்தை, விரக்தி என்பவளே பத்னி என்று சயனித்துக் கொண்டிருக்கும் துறவி ஆனந்த பரவச ஸமாதி என்ற நித்ரையில் ஆழ்ந்திருக்கிறாள் என்று அவர் பாடியிருக்கிறார். அதில் பாடினபடி அவரே அப்படி ஏதோ ஒரு வயற்காட்டில் திறந்த வெளியில் கையை மடித்து அதிலே தலைவைத்துப் படுத்துக் கொண்டிருந்தாராம். நடுமத்யான வேளை. அப்போது அந்தப் பக்கம் உழவு வேலை செய்யும் சேரிப் பொம்மனாட்டிகள் சிலபேர் போனார்களாம். அதிலே ஒருத்தி ப்ரஹ்மேந்திராளை அந்த மாதிரிப் பார்த்ததும் பரிஹாஸமாகச்

சிரித்துவிட்டு, 'சன்னாஸியாமே சன்னாசி!தலைக்கொஸரம் கேக்கற நல்ல சன்னாஸிடீயம்மா!'என்று கூட வந்தவர்களிடம் சொல்லிக் கொண்டே போனாளாம். ப்ரஹ்மேந்த்ராளுக்குச் சுரீலென்று தைத்ததாம். 'ஆகக்கூடி தனக்கும் மற்ற அவயங்களைவிடத் தலையை உயர்த்தி வைத்துக் கொண்டாலே ஸௌக்யம் என்ற எண்ணம் போகவில்லையல்லவா?அது போகாதவரையில் நான் என்ன

ஸந்நியாஸி?அம்பாளே தான் அந்தப் பஞ்சமப் பெண் வாய் வழியாக உபதேசித்து விட்டுப் போயிருக்கிறாள்!'என்று நினைத்து, தலைக்கு வைத்துக் கொண்டிருந்த கையை எடுத்துவிட்டு, அப்படியே கிடந்தாராம்.

அந்தப் பொம்மனாட்டிகள் திரும்பிப் போகிற வழியில் மறுபடி அங்கே வந்தார்களாம். அப்போது முதலில் பரிஹாஸம் பண்ணின அவள் அதேமாதிரி மறுபடி சிரித்தாளாம். 'சாமியாருன்னா அவங்களுக்காகவே எப்படி இருக்கணும்னு தெரியவேணாம்?ஊர்லே போறவங்க, வரவங்க பேச்சையெல்லாம் கேட்டுப் பண்றவங்க இன்னா சாமியாருங்க?'என்றாளாம்.

அன்றிலிருந்துதான் ப்ரஹ்மம் என்றால் ப்ரஹ்மமாகவே, ஸதாசிவ ப்ரஹ்மமாக அவர் ஆனாராம்.

ஸந்நியாஸி என்றால் எப்பேர்ப்பட்ட வைராக்யத்துடன் இருக்க வேண்டும் என்று பாமர ஜனங்களும்கூட அத்தனை நன்றாகத் தெரிந்து கொண்டிருந்திருக்கிறார்கள்!அப்படிப்பட்ட தேசத்தில்தான் இப்போது காபி இல்லாமல் முடியாது, ஒவல்டின் இல்லாமல் முடியாது என்று சொல்கிற ஸந்நியாஸிகளும் ஏற்பட்டிருக்கிரார்கள். கேட்டால், "நாங்கள் ஸந்நியாஸத்திற்கும் மேலே போன அதிவர்ணாச்ரமிகள்!அந்த பஞ்சம ஸ்திரீ சொன்னாற்போல நாங்கள் என்ன பண்ணனும், பண்ணவேண்டாம் என்பது எங்களுக்கே தெரியும்'என்பார்கள்!

இந்த மாதிரிப் புரளி பண்ணாமல் நிஜமாக ஆத்மஞானம் அடைய வேண்டுமென்றால் அதற்கு வைராக்யம் ரொம்ப, ரொம்ப அவச்யம். 'பட்டென்று ஒரு வைராக்யம் மட்டும் வந்துவிட்டால் போதும், என்றைக்கு அப்படி வருகிறதோ, அன்றைக்கே ஸந்நியாஸியாக வீட்டை விட்டுப்

புறப்பட்டுவிடு:யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்'என்று சொல்லியிருக்கிறது.

இதொன்றும் சாச்வதமான ஆனந்தமாக இல்லையே என்ற வெறுப்பிலே மட்டும் வீட்டையும் கர்மாவையும் விட்டு ப்ரயோஜனமில்லை. அது ஒரே வறட்சியாகத்தான் போகும். சாச்வத ஆனந்தமாகவுள்ள ஆத்மாவைப் பற்றிய சிந்தனையோடுகூடச் சேர்த்தே இந்த வெறுப்பையும் ஏற்படுத்திக் கொண்டால்தான் ஸரியான ஸாதனையாகி அந்த நித்யானந்தத்தில் கொண்டு சேர்க்கும். ஸித்தியான அப்புறம் வெறுப்பும் அடியோடு மறைந்து ப்ரேம மயமாயிருக்க முடியும். அதாவது நித்யாநித்யங்களைப் புரிந்து கொண்டு அந்த விவேகத்தோடு வைராக்யத்தை அப்யஸிக்க வேண்டும். விவேகமில்லாத வைராக்யமும் ஸரி வராது;வைராக்யமில்லாத விவேகமும் ஸரி வராது என்று சொல்வார்கள். இரண்டும் சேர வேண்டும்.

முதலில் நித்யாநித்ய வஸ்து விவேசனம் செய்தது, அநித்யம் அத்தனையையும் வைராக்யத்தால் வெறுத்து அந்தண்டை தள்ளுவதற்குத்தான்.

ஆக, வைராக்யம் வருவதற்காகத்தான் அந்த முதல் படி. அதனால்தான் வைராக்யத்திற்கே இம்பார்ட்டன்ஸ் கொடுத்து அதையே (ஆசார்யாள்) 'அபரோக்ஷாநுபூதி'யில் முதலாகச் சொன்னது. 'விவேக சூடாமணி'யிலும் பின்னால் ஒரு இடத்தில் 'அநித்ய வஸ்துக்களில் அத்யந்த வைராக்யந்தான் மோக்ஷத்திற்கு முதல் காரணம் - மோக்ஷஸ்ய ப்ரதமோ ஹேது:'என்று இரண்டையும் கோர்த்து ஒன்றாக்கிச் சொல்லியிருக்கிறார்.

ஸாதன சதுஷ்டயத்தில் முதலில் சொல்லப்பட்டது இந்த இரண்டுந்தான். மூன்றாவதற்குப் போகலாம்.

விவேகம், வைராக்யம் நம்மில் யாருக்கும் வராவிட்டாலும், அவை வருவதற்காக நாம் விசேஷமாக ஒன்றும் பண்ணாவிட்டாலும் இந்த இரண்டு பெயர்களாவது நமக்கு நன்றாக தெரிந்தவையாயிருக்கின்றன. விவேக-வைராக்யம் என்று சேர்த்தச் சொல்கிறோம். இனிமேல் வரப்போகும் (ஸாதனாங்கங்களின்) பேர்கள்கூட ரொம்பப் பேருக்குத் தெரியுமா என்று கேள்வியாயிருக்கிறது.

---

## ஆறு சம்பத்துக்கள்

மூன்றாவது அங்கத்திற்கு 'சமாதி ஷட்க ஸம்பத்தி'என்று பெயர். நாலாவது "முமுக்ஷுத்வம்".

'சமாதி ஷட்க ஸம்பத்தி' என்பதிலேயே ஆறு அங்கங்கள் :'சமம்', 'தமம்', 'உபரதி', 'திதிக்ஷை', 'ச்ரத்தை', 'ஸமாதான ம்'என்று. இவற்றில் 'ச்ரத்தை'என்ற ஒன்றுதான் எல்லோருக்கும் தெரிந்ததாக இருக்கும். அதுவுங்கூட அவ்வளவு ஸரியான அர்த்தத்தில் இல்லாமல் என்று முன்னேயே சொன்னேன். 'கர்ம ச்ரத்தையா வந்து கோழி (கோள்) மூட்டிட்டுப் போனான்'என்ற மாதிரி சொல்லும் போது'ரொம்பவும் அக்கறையுடன், ஈடுபாட்டுடன்'என்ற அர்த்தத்தில் 'ச்ரத்தை'என்கிறோம். அது ஸரியில்லை. த்ருடமான நம்பிக்கைதான் ச்ரத்தை, ஆஸ்திக்யம்தான் ச்ரத்தை, சாஸ்த்ரங்களும் குருவும் சொல்கிறதை முழு மனஸுடன் நம்புவதுதான் ச்ரத்தை என்று சொன்னேன். 'ஸமாதானம்'என்ற ஒன்று ஆறில் சொன்னேனே, அதற்கும் அர்த்தம் தெரியுமென்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் நீங்கள் அர்த்தம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பது வேறே, நான் சொல்லப் போகிற அர்த்தம் வேறே. (சமாதி) ஷட்க ஸம்பத்தியில் அடங்கும் ஆறு விஷயங்களுக்கு ஒவ்வொன்றாக அர்த்தம் சொல்லும்போது கடைசியில் அதைச் சொல்கிறேன். காக்க வைத்து, எதிர்பார்க்க வைத்துச் சொன்னால் இன்டரஸ்ட் ஜாஸ்தியாகு ம்;அதனால் மனஸிலும் நன்றாகப் பதியும். டின்னர்களில்கூட சாப்பாட்டு வகையறாக்களைக் கண்களில் காட்டுவதற்கு முன்னாடியே 'மெனு'என்று பேர்களை மட்டும் கொடுத்து விடுகிறார்கள் அல்லவா?அப்படி முதலில் சமாசாரங்களை

எக்ஸ்ப்ளெய்ன் பண்ணாமல் - அஸலாகப் பரிமாறாமல் - மெனு மாதிரி பேர் லிஸ்ட் மட்டும் கொடுத்து விடுகிறேன்:சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ச்ரத்தை, ஸமாதானம். தெரியாத சாப்பாட்டு வகையறாப் பெயர்களோடு மெனு கொடுத்தால் அது என்ன, எப்படி ருசிக்கும் என்பதில் இன்ட்ரஸ்ட் கூடுதலாக ஆகும். அந்த மாதிரி கொடுத்திருக்கிறேன்.

**சமாதி ஷட்க ஸம்பத்தி**

சமாதி;ஸமாதி இல்லை. சங்கரர், சட்டை என்பதில் வரும் 'ச'. ஸ-ரி-க-மவில் வரும் 'ஸ' இல்லை.

சம+ஆதி = சமாதி. 'சமம் முதலான'â¡Á Ü˜ˆî‹. 'û†è'- ÝÁ úñ£ê£óƒèœ å¡Á «ê˜‰î Ü¬ñŠ¹. 'ú‹ð˜F'â¡ø£™ ú‹ð˜¶î£¡;ªê™õ‹. ªð£¼†ªê™õ‹ ñ£FK Ý˜Ièñ£ù ªê™õ‹. 'êñ£F û†è ú‹ð˜F'â¡ø£™ êñ‹ ºîô£ù ÝÁ Ü‹êƒèœ ªè£‡ì Ý˜Iè„ ªê™õ‹.

என்ன அந்த ஆறு?

முதலில் 'சமம்'. அப்புறம் 'தமம்'. மூன்றாவது 'உபரதி'நாலாவது 'திதிக்ஷை'. ஐந்தாவது 'ச்ரத்தை'. கடைசியில் 'ஸமாதானம்'ஆறாவது.

'சமாதி':'சமம் முதலான'என்று ஆறையும் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். அவர் பாஷ்யம் செய்துள்ள ப்ரஹ்ம ஸூத்ரத்தின் மூலத்தில் 'சம தமாதி':'சமம், தமம் முதலான என்று இருக்கிறது. 'சம தமாதி உபேத ஸ்யாத்'. ஞானம் பெறுவதற்கு ஒருவன் சமம், தமம் முதலானவற்றோடு கூடியவனாயிருக்க வேண்டும் என்று அர்த்தம். 'அப்படித்தான் விதி - தத் விதே:' என்றும் (ப்ரஹ்ம ஸூத்ரம்) சொல்கிறது. யார் விதி பண்ணியது என்றால், வேறே யார்?வேதம்தான். ஈச்வரனேதான் வேதங்கள் வழியாக விதி போட்டிருக்கிறார்.

சமதமாதிகளைக் கைக்கொள்ள வேண்டுமென்று வேதத்தில் எங்கே விதி இருக்கிறதென்றால் - ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் ஜனகருக்கு யாஜ்ஞ்யவல்க்யர் உபதேசம் பண்ணுகிற இடத்தில் ஞானி 'சாந்தனாக (சமத்தை

உடையவனாக), தாந்தனாக (தமத்தை உடையவனாக), உபரதனாக (உபரதி உடையவனாக) திதிக்ஷுவாக (திதிக்ஷை உடையவனாக), ஸமாஹிதனாக (ஸமாதானமுடையவனாக) இருப்பான்'என்று சொல்கிறார். அப்படிச் சொன்னால் இவற்றை அப்யாஸம் பண்ணி அடைந்தவன்தான் ஞானி ஆகமுடியும், ஞானம் பெற முடியும் என்றுதானே அர்த்தம்?இங்கே 'ச்ரத்தை'தவிர பாக்கி ஐந்தும் சொல்லியிருக்கிறது. இங்கே சொன்ன ஆர்டரிலேயேதான் பின்னாடி ஆசார்யாள் அவற்றை வைத்திருக்கிறார். ச்ரத்தைதான் எல்லாவற்றுக்கும் அடிப்படை. ச்ருதியில் வேறு பல இடங்களில் அதை விதித்திருக்கிறது. அதனால் அதையும் சேர்த்துக் கொண்டது. இப்படி சமம் முதலான ஆறு.

---



**' சமம் -தமம் '**

சமம் என்பது என்ன?

**வ்ரஜ்ய விஷய வ்ராதாத் தோஷ-த்ருஷ்ட்யா முஹுர்முஹு :|**

**ஸ்வலக்ஷ்யே நியாவஸ்தா மனஸ : சம உச்யதே ||**

- இது ('சம'த்துக்கு) ஆசார்யாள் கொடுத்திருக்கும் லக்ஷணம். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பதாக ஐம்புலன்களும் அநுபோகம் செய்ய விரும்புகிற எல்லாக் கூட்டமும் 'விஷய வ்ராதம்'எனப்பட்டிருக்கிறது. விவேகத்தாலும் வைராக்யத்தாலும் அடிக்கடி அலசிப் பார்த்து இவை யாவும் ஆத்மாவுக்கு ஹானியே செய்கின்றன என்று தெரிந்து கொண்டு வெறுத்துத் தள்ளுவதை 'முஹுர் முஹு:'- அடிக்கடி;'தோஷ த்ருஷ்ட்யா'-

விஷயானுபோகத்திலுள்ள தோஷத்தைப் பார்ப்பதால்;ஆத்மாவுக்கு அவை ஹானி செய்வதால் தோஷமானவை என்று தெரிந்து கொண்டு பார்ப்பதால்;'வ்ரஜ்ய'- வெறுப்படைந்து....

மனஸ் ஸதாவும் இன்பம் என்று நினைக்கும் விஷயங்களை நினைத்து நினைத்துதான் நிலை கொள்ளாமல் அலைபாய்ந்தபடி இருக்கிறது. அதனால்தான் நமக்கு சாந்த ஸௌக்யம் இன்னவென்று தெரியவில்லை. விஷயங்களில் தோஷ த்ருஷ்டி உண்டாகி அவற்றை வெறுத்து ஒதுக்கி விட்டோமானால் அப்புறம் மனஸை சாந்த ஸௌக்ய ஸ்வரூபமான, ஆத்மா என்பதான, ஸாதனையின் லக்ஷ்யத்தில் நிறுத்தலாம். அதாவது நானா விஷயங்களுக்காக ஆலாப் பறந்து கொண்டு நாலா திசையிலும் ஓடுகிற மனஸை அப்படி ஓடாமல் அடக்கி லக்ஷ்யம் ஒன்றிலேயே நிறுத்தலாம். அப்படி அடக்குவதற்குப் பேர்தான் சமம்.

'விஷய வ்ராத'த்திலிருந்து உண்டாகும் தோஷத்தை அடிக்கடி நினைத்துப் பார்த்து அவற்றைத் தள்ளி - அப்புறம், 'ஸ்வலக்ஷ்யே'- தன்னுடைய லக்ஷ்யத்தில் 'மனஸ: நியத அவஸ்தா - மனஸைக் கட்டுப்படுத்திய நிலையில் வைத்திருப்பது, 'சம உச்யதே'- சமம் என்று கூறப்படுகிறது.

சுருக்கமாகச் சொன்னால், மனஸை அடக்குவதே சமம். 'விஷய'ங்களைப் பற்றி மனஸ் படர்வதற்குக் காரணம் பழைய அநுபோகத்தின் சுவடு (நெடி, வாஸனை என்பது) ஜன்மாந்த்ரமாக அதற்கு இருப்பதுதான். அந்த ஜன்மாந்த்ர வாஸனை ஸ்தூல சரீரம் செத்துப்போன அப்புறமும் ஸூக்ஷ்ம சரீரத்துக்குள் இருந்து கொண்டேயிருந்து, மறுபடி உயிர் இன்னொரு சரீரத்தில் ப்ரவேசித்துப் புனர்ஜன்மா எடுக்கும்போது, மீளவும் தன்னுடைய வேலைத்தனத்தை ஆரம்பித்து விடுகிறது. ஆகையால் அந்த வாஸனைகளை அடியோடு விட்டு விட்டால் மனஸ் தானாக அடங்கிப் போகும். 'சம'த்துக்கு டெஃபனிஷனே இப்படித்தான் 'அபரோக்ஷாநுபூதி'யில் கொடுத்திருக்கிறார். (சற்று முன் சொன்னது 'விவேக சூடாமணி' டெஃபனிஷன்.)

**ஸதைவ வாஸநா -த்யாக : சமோ(அ)யமிதி சப்தித :**

மனஸை அடக்குவது சமம் என்று புரிந்து கொண்டால் போதும். அடுத்தாற்போல் வரும் 'தமம்'என்பது புலன்களை அடக்குவது. 'சம'த்தைப் பற்றிச் சொல்ல வேண்டியது நிறைய இருக்கிறது. ஆனால் மனஸடக்கமும், புலனடக்கமும் ஒன்றோனொன்று கைகோர்த்துக் கொண்டு வருவதால் 'தம'த்தைப் பற்றியும் பேஸிக்காக சொல்லி விட்டு அப்புறம் இரண்டையும் சேர்த்துக் கொஞ்சம் விஸ்தாரம் செய்கிறேன்.

புலன் என்பது இந்த்ரியம். கர்மேந்த்ரியம் ஐந்து, ஞானேந்த்ரியம் ஐந்து. கார்ய ரூபத்தில் ஒன்றைச் செய்ய சக்தி வாய்ந்தவை கர்மேந்த்ரியங்கள். கையினால் அநேக கார்யங்களைச் செய்கிறோம். கரம்-கார்யம் என்ற வார்த்தைகளே செயல் பண்ணுவதில் அந்த அவயத்திற்கு உள்ள முக்யத்தைக் காட்டுகின்றன. அது ஒரு கர்மேந்த்ரியம். காலால் நடந்து, ஒடி, குதித்துக் கார்யம் செய்வதால் அதுவும் ஒரு கர்மேந்த்ரியம். வாயால் பேசுகிறோம், பாடுகிறோம். ஆகையால் அதுவும் ஒரு கர்மேந்த்ரியமாகிறது. இன்னம் இரண்டு அவயங்கள் விஸர்ஜனம் செய்ய இருக்கின்றன. அவை ஒரு மநுஷ்ய உடம்பிலிருந்து கழிவடைகளையும், வீர்யத்தையும் தள்ளுகின்றன. இந்த ஐந்தும் கர்மேந்த்ரியங்கள்.

இப்படித் தானே ஒரு கார்யத்தை உண்டாக்கிப் பண்ணுவது என்றில்லாமல் வெளியே இருக்கிற ஒன்றை அறிந்து அநுபோகம் பண்ணுவதாக உள்ள இந்த்ரியங்களுக்கு ஞானேந்த்ரியம் என்று பெயர். இப்படி ஐந்து. வெளியிலே உள்ள சப்தத்தை அறிந்து அநுபவிக்கும் காது;வெளியில் வழ வழ, சொர சொர என்று சூடாக, ஜில்லிப்பாக - இப்படி பல தினுஸாக வஸ்துக்கள் இருப்பதாக அறிந்து அநுபவிக்கும் சர்மம் (தோல்);வெளிப்பொருள்களின் ரூபத்தை, வர்ணத்தைப் பார்வையால் அறிந்தநுபவிக்கிற கண்;பலவித ஆஹாரங்களின் ருசியை தித்திப்பு, கசப்பு, புளிப்பு என்றெல்லாம் அறிந்து அநுபவிக்கும் நாக்கு;பலவித வாஸனைகளை அறிந்து அநுபோகம் பண்ணும் மூக்கு என்று உள்ள இந்த ஐந்தும் ஞானேந்த்ரியங்கள்.

இந்த இந்த்ரியங்களைக் கட்டுப்பாட்டில் வைத்தில்லாததால்தான் அத்தனை அணர்த்த பரம்பரையும் உண்டாகின்றன. ஒவ்வொரு இந்த்ரியமும் கொடுக்கக்கூடிய

அநுபோகங்களில் உள்ள ஒரு ஆசையால்தான் ஒரு ஜீவன் இந்த மாயா லோகத்தோடேயே கட்டிப்போடப் படுவது. இவற்றை அடக்கி வைத்தால்தான் ஆத்மலோகத்தில் சேரலாம். அப்படி அடக்குவதுதான் 'தமம்'.

தமம், சமம் என்ற இரண்டுக்கும் நேர் அர்த்தம் வெறுமே அடக்குவது என்பது தான். மனஸை அடக்குவது, புலனை அடக்குவது என்றில்லை. ஆனாலும் வெளிப் பொருள்களை அறிந்து அநுபோகம் பண்ணுவதாகவும், அதற்கு ஸஹாயமாகக் கார்யம் பண்ணுவதாகவும் உள்ள இந்த்ரியங்களை அப்படிப் பண்ணாதபடி அடக்குவது தனி விஷயமாகவும், தனக்குத்தானே எண்ணங்களை உற்பத்தி பண்ணிக் கொண்டு ஸதா சஞ்சலித்துக் கொண்டிருக்கும்

மனஸை அடக்குவது தனி விஷயமாகவும் இருப்பதால் இந்த இரண்டுவித அடக்கத்திற்கும் வித்யாஸம் தெரியணும் என்று 'சமம்'என்பதை மனவடக்கம் என்றும், 'தமம்' என்பதை புலனடக்கம் என்றும் அர்த்தம் செய்து கொள்ளும்படி வைத்திருக்கிறார்கள். இரண்டுமே அடக்கம் தான் என்பதால்தான் ஆசார்யாளே 'ஷட்பதீ ஸ்தோத்ர'ஆர ம்பத்தில், வழக்கமான ப்ரயோகத்துக்கு மாறுதலாக 'மனஸை அடக்கு'என்கிற இடத்தில் 'தமய மன:' என்றும் வெளிவிஷய கானல் நீருக்கு ஒடும் புலன்களை அடக்கு என்கிற இடத்தில் 'சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம்'என்று போட்டிருக்கிறார்.

ஆசார்யாளின் ப்ரகரண க்ரந்தங்கள் அநுபூதி ஸ்திதியைச் சொல்வதில் தனிச்சிறப்பு பெற்றவை. ஸாதனை க்ரமமும் அவற்றிலிருந்து அழகாக ஜோடித்து, கோடித்து எடுத்துக் கொள்ள முடிகிறது. ஸித்தாந்தம் என்று கொள்கைகளை வகுத்து நிர்தாரணம் பண்ணுமிடத்திலோ அவருடைய பாஷ்ய க்ரந்தங்களுக்கே அதிக 'வெய்ட்'கொடுப்பது. இதைக் கவனிக்கும்போது உபநிஷத் பாஷ்யத்திலேயே அவர் சம-தமங்களுக்கு வழக்கமான அர்த்தத்தை மாற்றிச் சொல்லியிருப்பது கொஞ்சம் சர்ச்சைகூட எழுப்பியிருக்கிறது. ஷட்க ஸம்பத்தில் ச்ரத்தை நீங்கலாகப் பாக்கி ஐந்தையும் ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது என்றேனல்லவா? அந்த இடத்தில் பாஷ்யம் பண்ணும்போது ஆசார்யாள் 'சாந்தன்'(சமத்தோடு கூடியவன்) என்பதற்கு வெளி இந்த்ரிய வியாபாரங்களை அடக்கி

விட்டவன்'என்றும், அதாவது பொதுவாக 'தமம்'என்று நினைக்கப்படும் நிலையை அடைந்தவன் என்றும்;'தாந் தன்'(தமத்தோடு கூடியவன்) என்பதற்கு அந்தஃகரணமாகிய மனஸின் த்ருஷ்ணையிலிருந்து (தாஹத்திலிருந்து) நிவாரணம் பெற்று விட்டவன் என்றும், அதாவது பொதுவில் 'சமம்'என்று நினைக்கிற நிலையை அடைந்தவன் என்றும் அர்த்தம் கொடுத்திருக்கிறார். ப்ரகரணமான 'விவேக சூடாமணி'முதலானவற்றில் பொது வழக்கப்படி சொல்லியிருக்கிறதே என்பதற்காகச் சர்ச்சை எழுப்ப வேண்டியதில்லை. ஆச்ரமம் வாங்கிக்கொண்டவுடனேயே பால்யத்தில் ஆசார்யாள் எழுதிய பாஷ்யங்கள்தான். அப்போது, சமம்-தமம் இரண்டுமே அடக்கம்தான் என்பதைக் கவனித்து அந்த இடத்தில் முதலில் வெளிப் புலனடக்கத்தையும் அப்புறம் மனவடக்கத்தையும் சொல்வதே பொருத்தமாயிருக்கிறதென்று அபிப்ராயப்பட்டு அப்படி பாஷ்யம் பண்ணியிருக்கலாம். பிற்காலத்தில், தேசம் பூரா ஸஞ்சாரங்கள் நிறையப் பண்ணிய பிறகு ப்ரகரணங்கள் எழுதியபோது ஜன ஸமூஹ, வித்வத் ஸமூஹ வழக்குப்படியே நாமும் அர்த்தம் கொடுக்கலாமென்று நினைத்து அப்படியே பதப்ரயோகம் செய்திருக்கலாம். "ஷட்பதீ"பக்தி ஸ்தோத்திரம். அதில் வேதாந்த பரிபாஷைக்கு அவ்வளவு முக்யமில்லை. ஆர்யா வ்ருத்தம் என்ற சந்தத்தில் அதைப் பாடும்போது எப்படிப்போட்டால் ஒசை நயம் இருக்குமோ அப்படிப் போட்டிருப்பார்.

'தமம்', 'சமம்' இரண்டும் அடக்கம் என்ற ஒரே அர்த்தந்தான் என்பதால், மனவடக்கம் புலனடக்கம் இரண்டையும் சேர்த்துப் பொதுவாக 'அடக்கம்'என்னும்

போது அதை 'தமம்'என்று மட்டுமோ, 'சமம்'என்று மட்டுமோ சொன்னாலும் ஸரியானதே. ப்ருஹதாரண்யகத்திலேயே அப்படித்தான் தேவர்களிடம் பொதுவாக 'அடக்கத்தோடு இருங்கள்', என்று ப்ரம்மா உபதேசித்ததாக அவர்கள் தெரிவிக்கிறபோது தமம் என்று மட்டுமே சொல்லியிருக்கிறது. 'தாம்யத'- தமத்தோடு இருங்கள் என்று.

சகுந்தலை-துஷ்யந்தனின் பிள்ளையான பரதனுக்கு இன்னொரு பேர் 'ஸர்வதமனன்' - எல்லாரையும் அடக்கி ஆள்கிறவன் என்று அர்த்தம். மற்ற எல்லா யுவதிகளின்

ஸௌந்தர்யத்தையும் அடக்கும் ஸௌந்தர்யவதியாக இருந்ததாலேயே தமயந்திக்கு அப்படிப் பெயர். எந்தச் சக்கரவர்த்தியானாலும் ஸரி, காலம் வருகிறபோது தப்பிக்க முடியாமல் அடக்கி உயிரை யமன் பறித்துக் கொண்டு போவதால் அவனுக்கு சமணன் என்று பேர் இருக்கிறது.

'தம'த்திலிருந்து 'தமனம்', 'தாந்தி'என்ற வார்த்தைகளும், 'சம'த்திலிருந்து 'சமனம்','சாந்தி'ஆகிய வார்த்தைகளும் வந்திருக்கின்றன. தமனம்-தாந்தியைவிட சமனம் - சாந்தி அதிகம் வழக்கிலிருக்கின்றன. உஷ்ண சமனம், பித்த சமனம், கோபத்தை சமனம் பண்ணுவது என்றெல்லாம் சொல்கிறோம். 'அடக்குவது'என்பதுதான் அர்த்தமானாலும் அது கடுமையாகத் தெரியாமல், 'தணிப்பது'என்று ஸாஃப்ட்-ஆக த்வனிக்கிறது!'சாந்தி'என்கிற போதும் கொந்தளிப்பை அடக்குவது என்பதன் கடுமை தெரியாமல், ஸௌக்யமாக அடங்கி அமைதியாகிவிட்ட தன்மையையே குறிப்பதாக இருக்கிறது.

சாந்தி-மனஸ் அடங்கிய நிலை;தாந்தி- புலனடங்கிய நிலை. யதிகளாக இருப்பவர்களை 'சாந்தி தாந்தி பூம்நாம்'என்று சொல்வது வழக்கம்.

கண், காது முதலான இந்த்ரியங்கள் ஒன்றைப் பார்க்காமல், கேட்காமல் மூடிக்கொண்டு விடலாம். கண்ணுக்கு ரப்பை என்று இயற்கையாகவே மூடி இருக்கிறது. அதை மூடிக் கொண்டால் ஒன்றைப் பார்க்காமல் இருந்து விடலாம். காதில் பஞ்சை அடைத்துக் கொண்டால் கேட்காமலிருந்து விடலாம். கையை, காலைக் கட்டிப் போட்டால் கார்யம் பண்ணாமலிருப்பது விடலாம். ஆனால் அப்போதும் மனஸ் ஒரு கட்டுப்பாடும் இல்லாமல் ஓடிக்கொண்டுதான் இருக்கும். வெளிப்பொருள்களை இந்த்ரியங்களால் அநுபோகம் பண்ணாத போதிலும் மனஸ் அவைகளைக் கல்பனை செய்துகொண்டு அவற்றுக்காகத் தவித்துக் கொண்டு ஸதாவும் கொந்தளித்தபடிதான் இருக்கிறது. இந்த்ரியங்கள் செயல்படுவதுங்கூட மனஸின் ஏவலாலும், மனஸின் இஷ்ட பூர்த்திக்கும், அதாவது ஆசை நிறைவேற்றத்திற்கும்தான். ஆனபடியால் மனஸை அடியோடு அடக்கிப் போட்டுவிட்டாலே போதும். அத்தனை இந்த்ரியங்களின் ஆட்டங்களும் ஓட்டங்களும் நின்று போய்விடும்.

மனவடக்கத்துக்கு உள்ள முக்யத்வத்தால்தான் (ஸாதனாங்கங்களில்) முதலில்

சமத்தைச் சொல்லி அப்புறம் தமத்தைச் சொல்லியிருக்கிறது. சமம் ஸித்தித்துவிட்டால்தான் தமமும் அதிலேயே அடக்கமாக ஏற்பட்டுவிடுமே!ஆகையால் அது (சமம்) ஒன்றை மட்டும் சொன்னாலே போதுமே!'என்றால் -

மனஸின் பூர்ண அடக்கம், மனோ நாசம் என்பது ஸாதனையில் ரொம்பவும் கடைசி நிலையில்தான் வரும். அதற்கு முற்பட்ட நிலைகளைத்தான் இங்கே சொல்லியிருக்கிறது. ஆரம்பத்திலிருந்தே மனோ நிக்ரஹ முயற்சி பண்ணத்தான் வேண்டும். ஆனாலும் அப்போதைக்குத்தான் மனஸ் கட்டுப்பட்டு இருக்கும். ஒரு மைஸூர்பாக்குக்காகக் கால் ஓடும். கை அதை எடுக்கும். வாய் அதை மெல்லும். இப்படி, அநேக வஸ்துக்கள் இந்த்ரியங்களுக்குத் தெரிந்து இந்த்ரியங்கள் அவற்றுக்குப் பறப்பதாலேயே நடுவே கொஞ்சம் கட்டுப்பட்டிருந்த மனஸ் மறுபடி பிய்ந்துக் கொண்டு கிளம்பும். உச்சிமட்டங்களுக்குப் போகிற வரையில் இப்படி மனஸானது வெளியிலே கவர்ச்சியான வஸ்துக்கள் இல்லாதபோது ஒரளவு தன்பாட்டுக்கு அடங்கி இருப்பதாகவும், அப்படிப்பட்ட வஸ்துக்கள் இந்த்ரிய கோசரமாகும்போது மறுபடி சஞ்சரிப்பதாகவுமே இருக்கும். அந்த ஸமயத்தில் கண்ணை, மூக்கை, காலை, கையைக் கட்டிப் போட வேண்டும். இதனால்தானஅ 'சம'த்துக்கு அப்புறம் தனியாக 'தம'த்தைச் சொன்னது.

கடோபநிஷத்தில் மனஸையும், இந்த்ரியங்களையும் பற்றி அழகாக உவமை கொடுத்திருக்கிறது. ஜீவன் என்பவன் தேரில் உட்கார்ந்துள்ள யஜமான் மாதிரி. சரீரம் தான் தேர். தேருக்கு ஸாரதி யாரென்றால் புத்தி. அது பல குதிரைகள் பூட்டிய தேர். குதிரைகள் என்னவென்றால் அவைதான் இந்த்ரியங்கள். குதிரைகளை ஸாரதி ஏவி, வழி நடத்துவது லகானை (கடிவாளத்தை)ப் பிடித்துத்தானே? அந்த லகான் என்னவென்றால் மனஸ். புத்தியாகிற ஸாரதி (அதுதான் இதற்கு முந்தி சொன்ன இரண்டு ஸாதனாங்கங்களான விவேக வைராக்யங்களால் உறுதிப் பட்ட நல்லறிவு. அந்த நல்லறிவு என்ற தேர்ப்பாகன்) முறையான வாழ்க்கைப்

பாதையில் - ஆத்ம மார்க்கத்தில் - போகும் விதத்தில் மனஸ் லகானைக் கவனமாக இழுத்துப் பிடித்து, விடுகிற அளவுக்கே விட்டானானால் இந்த்ரியக் குதிரைகள் உத்தமமான அநுபோகங்களுக்கே போய், அப்புறம் இறங்க வேண்டிய ஸாக்ஷாத்கார ஸ்தானம் வரும். வந்ததும் குதிரை, லகான் எல்லாவற்றையும் அவிழ்த்து விட்டு, ஸாரதியையும் அனுப்பி வைத்துவிட்டு, ஜீவனான யஜமானன் ஆத்மாவைத் தான்பாட்டில் அநுபவித்துக் கொண்டிருக்கலாம்.

ஸாதாரணமாக தமம் என்பது இந்த்ரிய நிக்ரஹம் என்கிறபோது ஞானேந்த்ரியங்களை மாத்ரந்தான் குறிப்பது வழக்கம். மனஸ் சொன்னபடிதான் ஞானேந்த்ரியங்கள் ஆடுகிறது என்பதுபோல, ஞானேந்த்ரியங்களின் ஏவலில் தான்

கர்மேந்த்ரியங்களின் கார்யங்கள் ஏற்படுவது. அதனால் அவற்றை நிக்ரஹம் செய்வதைத் தனியாகச் சொல்வதில்லை. பஞ்சேந்த்ரிய நிக்ரஹம் என்னும்போது ஞானேந்த்ரிய நிக்ரஹமாகத்தான் அதை நினைப்பது வழக்கம். 'விவேக

சூடாமணி'யிலேயே, சற்றுத்தள்ளி, 'பஞ்சேந்த்ரியங்களில் காதால் கேட்கும் சப்தம் ஒன்றாலேயே மானுக்கு அழிவு (வேடர்கள் வேணுகானம் பண்ணும்போது மான் மயங்கி நின்றுவிடும். அப்போது தான் அதைப் பிடிப்பது), சர்மத்தால் அநுபவிக்கப்படுகிற ஸ்பர்சத்தால் யானைக்கு அழிவு (ஏற்கெனவே பழக்கப்பட்ட பெண் யானையை ஆண் யானையின் வழியிலே விட்டு, இதன் ஸ்பர்ச ஸுகத்திலே அது தன்னை மறந்துள்ள போதே அதைப் பிடிப்பார்கள்), கண்ணுக்கு பிடிபடுவதான ரூபத்தால் விட்டில் பூச்சிக்கு அழிவு (விளக்கு ஜ்வாலையின் ரூபத்தில் மோஹித்துத்தானே அது வந்து விழுந்து ப்ராணனை விடுகிறது?), நாக்கினால் ருசிக்கப்படும் ரஸத்தால் மீனுக்கு அழிவு (தூண்டிலுள்ள புழுவைத் தின்ன வேண்டும் என்ற சபலத்தாலேயே மீன் பிடிபடுகிறது), மூக்கால் முகரப்படும் வாஸனையால் வண்டுக்கு அழிவு (சம்பகப்பூவின் வாஸனையாலேயே வண்டு ஆகர்ஷிக்கப்பட்டு அதற்குள் போய் உட்காரும். மலர்ந்த பூ அப்புறம் இறுக்கமாகக் கூம்பிக்கொள்ளும் போதும் வாஸனை ஆசையால் வண்டு பறந்து போகாமல் அதிலேயே இருக்கும். அப்படியே கூம்பின பூவுக்குள் மூச்சு

விட முடியாமல் திணறி உயிரைவிடும்) - இப்படிப் பஞ்சேந்த்ரியங்களில் ஒவ்வொன்று ஒரு ப்ராணிக்குச் சபலமூட்டி அதன் அழிவுக்குக் காரணமாகிறது. மநுஷ்யனையோ ஐந்து இந்த்ரியங்களுமே சபலப்படுத்துகிற போது இவன் கதியை என்ன சொல்ல? என்று வருகிறது. இங்கே ஞானேந்த்ரியங்களை மாத்திரம் சொல்லி அவைகளையே அநர்த்த ஹேதுவாகக் காட்டி இருக்கிறது.

ஆனாலும் முதலில் 'தம'த்துக்கு டெஃபனிஷன் கொடுக்கிற இடத்தில் 'உபயேஷாம் இந்த்ரியாணாம்'- இருவகைப்பட்ட இந்த்ரியங்களையும், அதாவது கர்மேந்த்ரியங்கள், ஞானேந்த்ரியங்கள் என்ற இருவகைப் புலன்களையும் அததற்கு விஷயமாக உள்ள இன்ப நுகர்ச்சிகளிலிருந்து திருப்பி நிலை நிறுத்தி அடக்குவதே 'தமம்' என்று சொல்லியிருக்கிறார்:

விஷயேப்ய : பராவர்த்ய ஸ்தாபநம் ஸ்வஸ்வகோளகே ।

உபயேஷாம் இந்த்ரியாணாம் ஸ தம : பரிகீர்த்தித : ।।

Ü¸«ð£è õv¶,è÷£ù 'Mûòƒ'èœ â¡ðõŸPL¼‰¶ Þó‡´ FÂú§ Þ‰ˆKòƒè¬÷»‹ Þ¿ˆ¶ Üì,A Üîùîì¡ «è£÷ˆF™ G¬ô GÁˆ¶õ¶ - 'võvõ «è£÷«è vî£ðù‹'â¡ø£™ Üîùîì¡ õ†ìˆF™ G¬ô GÁˆ¶õ¶- ÜŠð®,, ªêŒõ‹î 'îñ‹'â¡Á M«êS¶,, ªê£™ôŠð´Aø¶ â¡Aø£˜.

'விஷயங்களிலிருந்து இந்த்ரியங்களை இழுத்து அடக்குவது'என்றால் புரிகிறது. 'அதனதன் வட்டத்தில் நிலை நிறுத்துவது'என்றால் என்ன?இந்த்ரியங்களின் அடக்கந்தான் தமமானதால் அதைச் சொன்னதோடு விட்டிருக்கலாமே!அவற்றை அவற்றுக்குரிய வட்டங்களில் நிறுத்துவது என்று ஒன்றை புரியாத ஒன்றை சேர்ப்பானேன்?

நான் இதை எப்படிப் புரிந்து கொண்டிருக்கிறேனென்றால் அல்லது புரிந்ததாக நினைத்துக் கொண்டிருக்கிறேனென்றால் 'ஒன்றையுமே பார்க்கக் கூடாது, ஒன்றையுமே கேட்கக்கூடாது, ஒன்றையுமே தின்னக்கூடாது, கையை காலை ஆட்டி ஒரு காரியமும் பண்ணக்கூடாது என்றிப்படி தசேந்த்ரியங்களையும் முழுக்க அடக்கும் படியாக ஆசார்யாள் சொல்லவில்லை. அப்படி ஒரேயடியாக இந்த்ரிய வியாபாரம் முழுதையும்

நிறுத்திவிட்டால் உயிர் வாழவே முடியாது. அப்படியானால் ஸாதனை எப்படிப் பண்ணுவது?சுவரை வைத்துத்தானே சித்ரம் எழுதணும்?சரீர யாத்ரைக்கு அத்யாவச்யமாக பார்க்க நடக்க வேண்டியது, எடுக்க

வேண்டியது முதலானவற்றைப் பண்ணத்தான் வேண்டும். இப்படி அத்யாவச்யத்தை லிமிட் பண்ணும் எல்லையைத்தான் கோளகம் - வட்டம்- என்று ஆசார்யாள் சொல்கிறாரென்று தோன்றுகிறது. உயிர் வாழ்வதற்கு அத்யாவச்யமாக எந்த அளவுக்கு ஒரு இந்த்ரியம் தொழில் படணுமோ அதுவே அதற்கு கோளகம்;அதற்கு மேலே போனால் ஆத்ம ஹானி. அந்த எல்லையை மீறப்படாது. கார் ஒரு குறிப்பிட்ட ஸ்பீடில் போகலாம் - போகவேண்டும். கார் இருப்பதே பல இடங்களுக்குப் போவதற்காகத்தான். ஆனாலும் ஸ்பீட்லிமிட் வைத்திருக்கிறதல்லவா?அப்படித்தான் சரீர யாத்ரை உள்ளவரை இந்த்ரியங்களுக்குக் கார்யமுண்டு. ஒரு கார்யமுமில்லாமல் முழுக்க அவற்றை அடக்கவிடப்படாது.

'ஒரு கார்யமுமில்லாவிட்டால் சரீர யாத்ரையே முடியாமல் போய்விடுமே!அப்படி வேண்டாம். நியதியானதைப் பண்ணு:நியதம் குரு கர்ம த்வம்... சரீர யாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேத் அகர்மண:' என்று பகவான் சொன்னதை இங்கே பொருத்திப் பார்த்து அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

கோளகம் என்பதை ஷீக்ஷீதீ (வட்டம்) என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளாமல் ஷீக்ஷீதீவீமீ (வட்டப்பாதை) என்று பண்ணிக் கொண்டால் ஸரியாயிருக்கும். க்ரஹங்கள் ஸுர்யனைச் சுற்றி அது அதற்கேற்பட்ட 'ஆர்பிட்'டில் போய்க் கொண்டிருக்கும் வரையில் ப்ரபஞ்ச நடப்பு ஸரியாய்த் தானிருக்கிறது. ப்ரபஞ்ச வாழ்க்கை ஸரியாய் நடக்க அந்த க்ரஹ ஸஞ்சாரம் அவசியமாகவே இருக்கிறது. ஆனால் 'ஆர்பிட்'டை விட்டு ஒரு க்ரஹம் விலகியோடினால் எத்தனை உத்பாகமாகி விடும்?இன்னொரு பக்கம், க்ரஹங்கள் ஸஞ்சாரமே பண்ணாமல் நின்று விட்டாலும் பெரிய உத்பாகமாகத்தான் ஆகும். அப்படித்தான் தசேந்த்ரியங்களும் ஒரு 'ஆர்பிட்'டில் ஓடிக் கார்யம் பண்ணினால்தான் ஜீவ யாத்ரையே நடக்கும். அவை நின்று விட்டால் சாவுதான்."புநரபி ஜனனம்"என்று மறுபடி

அடியிலிருந்து ஆரம்பித்தாகணும். 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?' என்று - இப்போது ஒரு கதையாகவாவது ஆத்மா, ஸாதனை என்று கேட்பதற்கு உட்கார்ந்திருக்கிறோமே, இதற்குக்கூட வழி, வசதி, அபிலாஷை இல்லாததாக என்ன ஜன்மா வாய்க்குமோ?ஆகையால் ஒரு சீராக இந்த்ரியங்கள் ஒரு கார்யவட்டத்தில் போகிற விதத்தில் அவற்றை நிலைப்படுத்த வேண்டும். அதுதான்

இங்கே சொல்லும் ஸ்தாபனம். நகரவே முடியாமல் நிறுத்திவிடும் ஸ்தாபனமில்லை;

ஜீவ யாத்ரைக்கு அவச்யமான கதியிலேயே போகும்படியான ஸ்தாபனம் - அதாவது, அந்த வழியிலேயே நிலைப்படுத்துவது.

இப்படி ஞானேந்த்ரியங்களை மாத்ரமில்லாமல் கர்மேந்த்ரியங்களையும் அடக்கும்படிச் சொல்கிறார் என்றும் சொன்னேன். மனஸ், கர்மேந்த்ரியம் ஐந்து, ஞானேந்த்ரியம் ஐந்து, எல்லாவற்றையும் கூட்டிப் பதினொரு இந்த்ரியங்கள் என்றும் சொல்வதுண்டு. ஏகாதச ருத்ரர்கள் என்று ஈச்வரனுக்குப் பதினொரு ரூபம் இருப்பது இந்தப் பதினொரு இந்த்ரியங்களின் அதிதேவதைகளாகத்தான் என்று சொல்வதுண்டு. ஏகாதசி பட்டினி என்பதே தத்வார்த்தத்தில் ஏகாதச இந்த்ரியங்களுக்கும் தீனி போடாமல் வைப்பதுதான். 'ஐந்தைந்தாக உள்ள இருவகைப்பட்ட இந்த்ரியங்களோடும் ஸம்பந்தப்படும் மனஸையும் பதினோராவது இந்த்ரியமாக அறிய வேண்டும். அந்த ஒன்றை ஜயித்து விட்டால் பாக்கிப் பத்தையுமே ஜயித்ததாகி விடும்'என்று மநு சொல்லியிருக்கிறார்.

ஏகாதசம் மநோ ஜ்ஞேயம் ஸ்வகுணேநோபயாத்மகம் ।

யஸ்மிந் ஜிதே ஜிதாவேதௌ பவத : பஞ்சகௌ கணௌ ।।

இன்னொரு விதமான க்ளாஸிஃபிகேஷனும் உண்டு. என்னவென்றால், ஞானேந்த்ரியம் ஐந்தோடு மாத்திரம் மனஸைச் சேர்த்து ஆறு இந்த்ரியங்கள் என்று சொல்வதுண்டு. கீதையில் பகவான், 'இந்த்ரியாணி மனச்சாஸ்மி' - இந்த்ரியங்களுக்குள் நான் மனஸாக இருக்கிறேன் என்று சொல்லி இன்னொரு இடத்தில்

இதையும்விட ஸ்பஷ்டமாக, 'மந: ஷஷ்டாநீந்த்ரியாணி'என்று ஆறு இந்த்ரியங்களில் மனஸூம் ஒன்று தெரிவித்திருக்கிறார்.

ஆசார்யாளும் இந்த அபிப்ராயத்தைக் காட்டும் இடங்களுண்டு. உதாரணமாக:இந்த்ரியத்தைக் 'கரணம்'என்றும் சொல்வதுண்டு. ஜீவனின் இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் காரியங்களைப் பண்ணும் கருவியாயிருப்பதால் அப்படிப் பெயர். எண்ணுவது, ப்ளான் போடுவது, துக்க ஸூக உணர்ச்சிகளை அநுபவிப்பது ஆகிய காரியங்களை ஒரு ஜீவனின் உள்ளுக்குள்ளேயே இருந்து கொண்டு மனஸ் பண்ணுவதால் அதற்கு 'அந்தஃகரணம்'என்று பெயர். இதை வெளிப்படக் காரியம் பண்ணும் ஐந்து ஞானேந்த்ரியங்களுடன் சேர்த்து, ஒரு வண்டாக ரூபகப் படுத்தி ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் சொல்லியிருக்கிறார்:'மஜ்ஜீவ:கரணசரண:ஷட்சரணதாம்'என்று ஏன் வண்டாக என்றால், வண்டுக்கு ஆறு கால்;அந்த மாதிரி ஜீவனுக்கு ஆறு காலாக இந்த ஆறு

கரணங்கள் இருக்கின்றன. காலால்தானே சலனம் செய்வது?வாழ்க்கையில் ஒரு ஜீவன் செய்கிற சலனங்களுக்கெல்லாம் ஆறு கரணங்களுமே காரணமாயிருந்தால் இவையும் கால்கள்தான். 'கரண சரணம்'என்பது அதைத்தான். ஆறுகால் உள்ள பிராணி வண்டே ஆகையால் இந்த ஆஸாமியும் வண்டுதான். வண்டு தாமரைப் பூவில்தான் போய் அப்படியே தன்னை மறந்து சொக்கியிருக்கும்?அதே போலத் தமது ஜீவன் அம்பாளின் பாத தாமரையில் படிந்து கிடக்கும் வண்டின் தன்மையை

அடைய வேண்டும் என்று அவளிடம் பிரார்த்தித்திருக்கிறார். அப்போது மனஸ், பஞ்சேந்த்ரியங்கள் இரண்டும் அடங்கி, அதாவது சமம், தமம் இரண்டும் கைகூடி ஜீவன் அவளிடம் லயித்திருக்கும் அம்பாளுடைய பாதத்தை ஆசார்யாள் சொல்கிறார்;அவளுடைய ஹஸ்தங்களில் கரும்பு வில்லும் பஞ்சபாணமும் வைத்துக் கொண்டிருக்கிறாளே, அவற்றிலும் வில் நம் மனஸை அடக்கி 'சம'த்தை உண்டாக்குவதுதான்;பாணம் பஞ்சேந்த்ரியங்களை அடக்கி 'தம'த்தை உண்டாக்குவது.

ஆக, மன அடக்கமும் புலனடக்கமும் ஒன்றோடொன்று கைகோத்துக் கொண்டு, காம்ப்ளிமென்டரியாக

ஒன்றையொன்று இட்டு நிரப்பிக் கொண்டு போக வேண்டும். ஸாதனாங்கங்களில் எல்லாமுமே சேர்ந்து சேர்ந்து, கலந்து கலந்து அப்யஸிக்கப்பட வேண்டியவை;அடியோடு பிரித்துப் பிரித்து, ஒன்றை முழுக்க முடித்து விட்டு அப்புறம் அடுத்தது என்று இல்லை என்று சொன்னேன். சம-தம விஷயமாக அதை மேலும் அழுத்தம் கொடுத்துச் சொல்லவேண்டியதாகிறது.

புத்தி பூர்வமாக இல்லாமல் 'இன்வாலன்டரி'என்கிறபடி சில ஸமயங்களில் தானாகவே இந்த்ரியங்கள் விஷய போகங்களுக்கு ஒடுவதை வேண்டுமானால் மனஸின் ஸம்பந்தம் இல்லாமல் நடப்பது என்று சொல்லலாமோ என்னவோ?மற்றபடி எந்த இந்த்ரியத்தின் ஒட்டம் நிற்பதும், மனஸின் ஒட்டம் நிற்பதும் மனஸினாலேயே ஸாதிக்கப்படும் ஸமாசாரங்கள். இந்த்ரியங்கள் ஒடுவதுங்கூட மிகப் பெரும்பாலும் மனஸ் 'டெலிபரேட்'டாகத் தன்னுடைய ஆசைப்பூர்த்திக்காக ஏவுவதால்தான். ஆனாலும் கொஞ்சங் கொஞ்சம் அவை 'இன்வாலன்டரி'யாகவும் ஒடலாம். இப்படித் தானாக கொஞ்சம் ஒடலாமே தவிர, தானாக நிற்பது என்பது அடியோடு இல்லை. மனஸுதான் இந்த்ரியங்களையும் அடக்கி நிறுத்த வேண்டும். ஆக, நேராக மனவடக்கமேயான சமம் மாத்ரமில்லாமல், புலனடக்கமான தமமும் மனஸின் கார்யந்தான். ஒரே மனஸ்தான் இரண்டையும் ஸாதிப்பது. ஆகையால்தான் சம-தமங்கள் ரொம்பவும் கலந்து இணைந்து வருவது.

'இந்த்ரியாணி மநஸா நியம்ய - புலன்களை மனத்தால் அடக்கி'என்று தமத்தை மனஸின் கார்யமாகவே க்ருஷ்ண பரமாத்மா சொல்லியிருக்கிறார். ஏறக்குறைய இதே சொல்லமைப்பிலேயே இன்னோரிடத்திலும் 'மநஸைவேந்த்ரிய க்ராமம் விநிம்ய'- மனஸினாலேயே (மனஸினால்தான், தன்னால் இல்லை என்று தெளிவுபடுத்துவதாக 'மநஸா ஏவ''மநஸைவ'என்று போட்டிருக்கிறார். மனஸினாலேயே) புலன்களின் கூட்டத்தை நன்றாக அடக்கி'என்கிறார். அப்படி அடக்கி, 'சநை: சநை: உபரமேத்', மெல்ல மெல்ல அமைதியாக அடங்கியிருந்துவிட வேண்டும் என்கிறார். அப்படியிருப்பது தான் ஷட்க ஸம்பத்தில் அடுத்த 'உபரதி'. 'உபரமேத்'என்றால் 'உபரதியுடன் இருக்க வேண்டும்'.

பகவான் சம தமங்களைச் சேர்த்துச் சேர்த்து சொல்லுவார். 'ஸர்வ த்வாராணி

ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்ய ச'என்கிற இடத்தில் 'ஸர்வ த்வாராணி ஸம்யம்ய'தான் தமம். 'மநோ ஹ்ருதி நிருத்ய'என்பது சமம். 'ஸர்வ த்வாராணி ஸம்யம்ய'என்றால் எல்லா ஒட்டையையும் அடைத்து'என்று அர்த்தம். ஒட்டை என்பது இந்த்ரியங்கள் தான். காது, மூக்கு, வாய் ஆகியவற்றில் கண்ணுக்குத் தெரியும்படி ஒட்டை இருக்கிறது. சர்மத்தில் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் மயிர்க்காலுக்கு மயிர்கால் ஒட்டைதான். கண் என்பதே கபாலத்திலுள்ள ஒட்டையில் யீவீஜ் ஆனதுதான். அதோடு கண்மணியிலுள்ள துளையின் வழியாகத்தான் ஒளிக்கதிர் உள்ளே போய் காட்சி என்பது ஏற்படுகிறது. ஆகையால் ஸர்வ த்வார ஸம்யமம் என்பது பஞ்சேந்த்ரிய நிக்ரஹமான தமம்தான்.

அடக்கி ஆத்மாவில் நிறுத்தும் சமம்தான் 'மநோ ஹ்ருதி நிருத்ய'.

"உயிர்களின் பலவிதமான பாவங்களும் என்னிடமிருந்தே உண்டாகின்றன:பவந்தி பாவா பூதானாம் மத்த ஏவ ப்ருதக்விதா:" என்று சொல்லி அப்படிப்பட்ட பாவங்களில் மிகவும் உசந்ததாக 'புத்தி, ஞானம், அஸம்மோஹம் (மோஹத்துக்கு ஆளாகாத நிலை), க்ஷமை (பொறுமை), ஸத்யம், தமம், சமம்'என்று பகவான் இந்த இரண்டையும் குறிப்பிட்டு விட்டு மேலே சிலது சொல்லிக்கொண்டு போகிறார். 'தைவி ஸம்பத்'என்பதாக தெய்வீக குணங்களுக்கு லிஸ்ட் கொடுக்கும் போதும் 'தாநம் தமச்ச'என்று தமத்தையும், 'த்யாக : சாந்தி'என்று சமத்தையும் அவற்றில் 'இன்க்ளூட்'பண்ணியிருக்கிறார். சமத்தினால் விளைவது சாந்தி, தமத்தினால் விளைவது தாந்தி - முன்னேயே சொல்லியிருக்கிறேன்.

ஸந்நியாஸியை 'யதி'என்றும் சொல்வதுண்டு என்று தெரிந்திருக்கலாம். 'எத்திராஜர்'என்று ராமாநுஜரைச் சொல்கிறார்கள்;'எத்திராஜ்'என்று பேர் கூட வைத்துக் கொள்கிறார்கள். அது 'யதி ராஜர்' என்பதுதான். யதி என்றால் துறவி. அந்த வார்த்தைக்கு நேர் அர்த்தம் என்னவென்றால்

'அடக்கியவர்'என்பதே. 'யம', 'யத' என்ற இரண்டும் அடக்குவதைக் குறிக்கும். மற்றவர்களை கிடு கிடு வென்று நடுங்கப் பண்ணி அடக்கி வைக்கிறவன் யமன். தான் இருக்கிற ஊருக்கு அவன் பிடித்துக் கொண்டு போகிறவர்களை அங்கே நன்றாக அடக்கி ஒடுக்கித் தண்டிப்பதால் அந்த ஊருக்கே 'ஸம்யம்னீ'என்று பெயர். அது யமன் ஸமாசாரம் - வெளியிலிருப்பவர்களை அடக்குவது. யதி ஸமாசாரம் - வெளியிலிருப்பவர்களை அடக்குவது. யதி ஸமாசாரம் - தன்னையே அடக்கி வைத்திருப்பது. அதனால் அவனை யதாத்மா, ஸம்யாத்மா என்றும் கீதாதி சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. பலாத்காரமான அடக்குமுறை உள்ள ஊர் ஸம்யமனீ என்றால் தன்னைத்தானே கடுமையாக அடக்கி வைத்துக் கொண்டுள்ள ஸந்நியாஸியை ஸம்யதாத்மா என்றும், ஸம்யமி என்றும் சொல்லியிருக்கிறது. எதை அடக்கி வைத்திருக்கிறானென்றால் மனஸையும் இந்த்ரியங்களையுந்தான். அதாவது சம தமங்களை ஸாதித்தவனே யதி எனப்படும் ஸந்நியாஸி.

'ச்ரத்தாவான் லபதே ஞானம் தத்பர:ஸம்யதேந்த்ரிய:' என்று பகவான் சொல்லும்போது ச்ரத்தையோடு கூட இந்த்ரியங்களை நன்றாக அடக்கி

'ú‹ò«î‰ˆKò'ù£è Þ¼Šðõ«ù ë£ùñ¬ìõ£¡ â¡Aø£˜. ú£îù ê¶wìò ˆF™ õ¼‹ „ó ˆ¬î, êñ, îñ‹ ÝAò â™ô£õŸ¬ø»‹ Ü¬ìˆ¶„ ªê£™LJ¼‚Aø£˜!

'ஆமை தலை, கால் ஆகியவற்றை ஆபத்துக் காலத்தில் ஓட்டுக்குள் இழுத்துக் கொள்கிற மாதிரி ஒருவன் இந்த்ரியங்களை இந்த்ரிய விஷயங்களிலிருந்து விடுவித்து உள்ளே இழுத்துக் கொள்ள வேண்டும்'என்று ஸ்தித ப்ரஜ்ஞ லக்ஷணங்களைச் சொல்லும்போது அழகாக உபமானம் கொடுத்து புலனடக்கத்தை வற்புறுத்தியிருக்கிறார். இந்த்ரியங்கள் தன் பாட்டுக்கு ஒடுகிற அத்தனை காலமுமே மநுஷ்யனுக்கு ஆபத்துக் காலம்தான்!அதனால் ஆமை எப்போதோ வரும் ஆபத்துக் காலத்தில் மட்டும் தலை, காலை உள்ளே இழுத்துக் கொள்கிறதென்றால் மநுஷ்யன் எப்போதும், எல்லா விதத்திலும் புலன்களை வெளிப்போக்கில் விடாமல் உள்ளே இழுத்துக் கொள்ள

வேண்டும் என்பதை 'ஸர்வச:'என்ற ஒரு சின்ன வார்த்தையை போட்டுத் தெரியப்படுத்தியிருக்கிறார்.

'யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்காநீவ ஸர்வச:"

ப்ருஹதாரண்யகத்தில் தேவஜாதி முழுதற்கும் உபதேசமாகச் சொல்லியிருப்பதே தமம்தான். 'தாம்யத - இந்த்ரியங்களை அடக்கி வைத்திருங்கள்' என்று உபதேசித்திருக்கிறது. கதை என்னவென்றால் தேவர்கள், மநுஷ்யர்கள் அஸுரர்கள் மூவரும் தங்களைப் படைத்த ப்ரஜாபதியிடம் போனார்கள்; உபதேசம் பெற்றுக் கொள்வதற்காகப் போனார்கள். அவர்களுக்கு ப்ரஜாபதி 'த' என்ற ஒற்றையெழுத்தை மட்டும் உபதேசித்துவிட்டு, 'புரிந்து கொண்டீர்களா?என்று கேட்டார்.

எவருக்குமே தனக்கு முக்யமாக உள்ள ஒரு குறை என்னவென்று தெரியாமலிருக்காது. ஆகவே ஒருத்தர் ஸங்கேதமாக ஏதாவது சொல்லி அதிலிருந்தே அவர்களை தங்களுக்கானதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று வைத்தால் புரிந்துகொண்டு விடுவார்கள். அப்படித் தாங்களாகவே புரிந்துகொள்ள விடுவதற்கு 'வால்யூ'வும் ஜாஸ்தி. அது நன்றாக மனஸில் தைக்கப் பண்ணும். 'குறையைச் சொல்கிறானே!' என்று சொல்கிறவனிடம் கோபம் வராமல் ஒரு விநோத உணர்ச்சி, 'க்யூரியாஸிடி'அடித்துக் கொண்டு போய்விடும்.

அப்படி இப்போது ப்ரஜாபதி 'த'என்று ஒரே அக்ஷரத்தைச் சொன்னபோது அந்த மூன்று ஜாதியினரும் ஒவ்வொரு விதத்தில் அதைப் புரிந்து கொண்டார்கள். தங்களுக்கு முக்யமாக தேவைப்படுகிற ஒன்றின் முதல் எழுத்து அது என்று அவர்கள் எடுத்துக் கொண்டார்கள். அப்படி எடுத்துக் கொள்ளும்போது தேவர்கள்

'த' என்பது 'தமம்'என்பதற்கு அப்ரீவியேஷன் என்றே எடுத்துக் கொண்டார்கள். அதனால் 'புரிந்து கொண்டோம். 'தாம்யத'- இந்த்ரிய நிக்ரஹத்தோடு இருங்கள்'என்று உபதேசித்திருக்கிறீர்கள். அப்படித்தானே?' என்று கேட்டார்கள்.

ப்ரஜாபதியும், "ஆமாம், ஸரியாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள்"என்றார்.

மநுஷ்யர்கள் ('த'என்பதை) 'தத்த': 'கொடுங்கள்'அதாவது 'தான தர்மம் பண்ணுங்கள், ஈகைக் குணத்தோடு இருங்கள்'என்று புரிந்து கொண்டார்கள். அதையும் ப்ரஜாபதி ஸரி என்றார். அஸுரர்கள் 'தயத்வம்':'தயையுடன் இருங்கள்'என்று புரிந்து கொண்டார்கள். 'ரொம்ப சரி'என்று பிரஜாபதி 'அப்ரூவ்' பண்ணினார்.

இங்கே தேவர், மநுஷ்யர், அஸுரர் என்று சொன்ன மூவருமே மநுஷ்யர்களில் மூன்று தினுசானவர்தான் ஆசார்யாள் பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். 'மற்ற நல்ல குணங்கள் இருந்தும் இந்த்ரியக் கட்டுப்பாடு போதாத மநுஷ்யர்களை இங்கே தேவர்களாகவும், ஒரே லோப குணத்தோடு - ஈகை எந்பதேயில்லாமல் - தனக்கே சேர்த்துக் கொள்வதுதான் பொதுப்படையாக மநுஷ்ய ஜாதியின் பெரிய தோஷமாதலால் அப்படி இருப்பவரை மநுஷ்யர் என்றேயும், தயையே இல்லாத, தயா தாக்ஷிண்யம் தெரியாத க்ரூர ஸ்வபாவிகளான மநுஷ்யர்களை அஸுரர்களாகவும் சொல்லியிருப்பதாக எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது மூன்று உபதேசமுமே மநுஷ்யனுக்கானதுதான்'என்று சொல்லியிருக்கிறார்.

இதிலிருந்து மற்றபடி ஸத்குண ஸம்பன்னர்களாக இருப்பவர்களுக்குக்கூட புலனடக்கம் போதாமலிருக்கும் என்று தெரிகிறது. ஜீவனை மாயையில் இழுக்கும் வலு வாயந்த சக்தியாகப் புலனாசைகள் இருப்பது இதிலிருந்து புரியும். ஆகையால் அதிலிருந்து விடுபடுவதும் ஸுலபமாக முடியாது;தமம் - சமமும்தான்;இரண்டையும் பிரித்துச் சொல்லவே வேண்டாம்;இங்கே தேவர்களுக்கும் மனஸடக்கம், புலனடக்கம் இரண்டுமையுமே சேர்த்து அப்யஸிக்கச் சொல்வதுதான் தாத்பர்யம்;அந்த அடக்கமானது - தீவிர ப்ரயத்தனத்தால் தான் கை கூடும். நாம் ஏதோ கொஞ்சம் முயற்சி பண்ணிவிட்டு பலனில்லையே என்று உடைந்துபோய் விட்டுவிடக் கூடாது. ஈச்வரனை நம்பிக்கொண்டு, தொடர்ந்து விடாமுயற்சி எடுக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு அப்யாஸம் செய்ய வேண்டும்.

வெளியில் வஸ்துக்கள் இருந்து அவற்றை கண், காது, நாக்கு முதலானவை அநுபோகம் பண்ணாத நிலையிலும் மனஸ் அந்த அநுபோகங்களின் ஆசையிலிலுள்ள அஸ்திவாரத்தின்

மேலேதான் ஸதா காலமும் எண்ணமிட்டுக் கொண்டு சஞ்சலப்படுவது. மனவடக்கம் என்பது அந்த எண்ணக் கட்டப்பாடுதான் - மீலீஷ்ஷ்ஷுரீலீமீ நீஷீஸீமீகூஷீஷ்றீ. அதை ஸாதிப்பது லேசில்லை. ஆதனால் முதலில் ஒரளவுக்கு வெற்றிகரமாகப் பண்ணக்கூடியது உள்ளே மனஸில் ஆசையெல்லாம் போகாவிட்டாலுங்கூட, வெளியேயாவது இந்த்ரியங்களைக் கொண்டு ஸ்தூல வஸ்துக்களை அநுபோகம் பண்ணாமல் கட்டிப்போடுவதுதான் - அதாவது தமந்தான். வ்ரதம், உபவாஸம் என்று கொஞ்சம் பட்டினி போடுவது, கண்ட

காட்சிகளைப் பார்க்காமலிருப்பது, அந்த நாட்களில் ரதி ஸுகத்தை விலக்குவது என்றிப்படிப் பிடிவாதமாகப் பண்ணினால் உள்ளேயிருக்கும் மனஸுமே அந்த ஆசைகளை அடக்கிவிட்டு இருக்கும் 'சம'அப்யாஸத்திற்குக் கொஞ்சம் பக்குவமாகும். விஷயங்கள்-அதாவது இந்த்ரிய போகத்திற்கான வஸ்துக்கள் - இல்லாத ஸமயத்தில்கூட மனஸ் அவற்றின் நினைப்பிலேயே அலைவதை முதலில் ஒரளவு அடக்கிவிட முடியும். அதாவது ஒரளவுக்கு மனஸின் ஒட்டத்தை நிறுத்தி வைக்க முடியும். ஆனாலும் அப்புறம் ஏகாந்தத்திலிருந்து விஷய ப்ரபஞ்சத்துக்கு வந்துவிட்டோமானால் உடனே காது ரேடியோவில் ஸினிமாப்பாட்டுக்கு பிய்த்துக் கொள்ளும், நாக்கு காப்பிக்குப் பிய்த்துக் கொள்ளும்!இப்படி ஒவ்வொரு இந்த்ரியமும், பழைய வாஸனையால் தானாகவே, மனஸின் தூண்டுதல் இல்லாமலே ஒவ்வொன்றுக்குப் பிய்த்துக் கொள்ளும்!லகானின் இழுப்புகளைப் பொறுத்து இல்லாமல், குதிரைகள் தாமே இஷ்டப்படி ஒடுகிற மாதிரி. அப்படி இந்த்ரியங்களை நிறுத்திய பிறகு அநுபோக வஸ்துக்கள் சுற்றிச் சூழ்ந்திருக்கும்போதிலும் கூட மனஸ் அவற்றுக்காகப் பறக்காமல் நிற்கும்படியாக சம ப்ரயோகம் பண்ணனும். இப்படி தம சமங்களை மாறி மாறி- அந்த மாற்றங்கள் ரொம்ப வேகத்தில் அடுத்தடுத்து வருவதால், சேர்ந்து சேர்ந்து என்றே தோன்றும் விதத்தில் - அப்யஸித்து முடிவாக 'ஸாதித்தேயாச்சு'என்று ஆக்கிவிட வேண்டும். அந்த முடிவு மனஸின் பரிபூர்ண அடக்கமான சமத்தின் நிறைவாகவே இருக்கும்.

முதலில் ஒரளவு ஸாதிக்கக்கூடியது, வெளிப் புலன்

அடக்கமான தமந்தான். 'நாராயணவல்லி'யில் ரொம்பவும் 'ஸிம்பதி'யுடன் ப்ரஹ்மசாரிக்கு தம அநுஷ்டானத்தையும், கடைசியில் முற்றும் துறந்து முனிவனாகிறானே அவனுக்கு சம அநுஷ்டானத்தையும் சொல்லியிருக்கிறது. 'தமமே பரம் என்று ப்ரஹ்மசாரிகள் அநுஷ்டித்து ஆனந்தப் படுகிறார்கள். சமமே பரம் என்று அரண்யவாஸிகளான முனிவர்கள் அநுஷ்டித்து ஆனந்தப்படுகிறார்கள்'என்று சொல்லியிருக்கிறது. ப்ரஹ்மசர்யத்திலிருந்தே இரண்டையும் ஆரம்பித்தால்தான் ஸந்நியாஸத்தின்போது மனஸின் பரிபூர்ண அடக்கமான சமம் பூர்ணமாக ஸித்திக்கும் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

அடங்கின மனஸ் எங்கே நிற்கிறதோ அந்த ஸ்தானம் தான் ஆத்மா. மனஸ் நின்றுபோனால் ஆத்மா ப்ரகாசிக்கும். முன் ஸ்டேஜிலேயே இந்த்ரியங்கள் தாங்களே இன்வாலன்டரியாகப் பழைய வாஸனை வேகத்தில் பிய்த்துக் கொண்டு கிளம்புவது ஒய்ந்துபோய், மனஸ் வாலன்டரியாகவும் அவற்றை அடக்கி ஒடுக்கி போட்டிருக்கும். அதற்கப்புறம் மனஸில் பாக்கி இருக்கிற வாஸனை அழுக்குகளை மாத்திரமே போக்க வேண்டியிருக்கும். அதாவது சமம்தான் முடிவாக வருகிற அடக்கக் காரியம். அப்படிப் பூர்ணமாக மனஸ் அடங்கிவிட்டால் ஆத்ம ப்ரபோதம் (விழிப்பு) உண்டாகும். இவ்வாறு சமமே முடிவான அடக்கமாயிருப்பதால்தான் 'சாந்தி:சாந்தி: சாந்தி:', 'ஆத்ம சாந்தி'என்றெல்லாம் சொல்வது. 'தாந்தி'என்ற வார்த்தை இதனால்தான் 'சாந்தி' மாதிரிப் பழக்கத்தில் இல்லை. அடக்குவது என்று பலமான கார்யமாகத் தெரியாமல், அடங்கிப்போன

விட்டு உண்டாகும் அமைதியையே சாந்தி என்று சொல்வதற்கு காரணம் அந்த அடக்கல் ஏற்பட்டவுடன் - 'உடன்'என்றால் உடனேயே அமைதி நிலை ஏற்படுவதுதான்!.

மனஸ் அடங்குவதைத்தான் எல்லா மஹான்களும் முக்யமாக ப்ரார்த்தித்திருக்கிறார்கள். க்ருஷ்ண பரமாத்மாவும் அப்படித்தான் உபதேசித்திருக்கிறார்.

யதோ யதோ நிச்சரதி மனச்-சஞ்சல - மஸ்திரம் ।

ததஸ்தோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத் । ।

மனஸின் நிலை கொள்ளாத தத்தளிப்பை நன்றாக எடுத்துக்காட்ட வேண்டுமென்பதால் 'கூறியது கூற'லாக 'சஞ்சலம்''அஸ்திரம்'என்று இரண்டு வார்த்தை போட்டிருக்கிறார். எந்தெந்த காரணத்தை உத்தேசித்து இந்த சஞ்சலமான ஸ்திரமில்லாத மனஸ் வெளியிலே ஒடுகிறதோ அந்தந்த காரணம் ஒவ்வொன்றிலும் அதை இழுத்துப் பிடித்து ஆத்மாவின் வசத்தில் ஒப்புவித்து விட வேண்டும் என்கிறார்.

---



## உபரதி

அப்படி ஆத்மாவிடம் வந்து நிற்கும் நிலைதான் ஷட்கத்தில் அடுத்ததான உபரதி. 'உபரதி' என்றால் 'ஸ்டாப்'ஆகிவிட்டது என்று அர்த்தம். சாவு என்றேகூட அர்த்தம் உண்டு. 'மனம் இறக்கக்'கற்க வேண்டும் என்கிற இடத்தில் இறந்துபோவதாகவே சொல்லியிருக்கிறதல்லவா?அப்படிப்பட்ட, ஒரு வேலையுமில்லாமல் மனஸு ஒய்ந்துபோய் விட்ட நிலை. சம, தம அப்யாஸத்தினால் மனஸ் வெளியிலுள்ள பிடிப்பு எல்லாவற்றிலும் விடுபட்டு, ஒரு செயலுமில்லாமலிருப்பது உபரதி. அப்படித்தான் 'விவேக சூடாமணி' டெஃபனிஷன்:

**பாஹ்யாவலம்பனம் வ்ருத்தே : ஏஷோ(உ)பரதிருத்தமா**

உத்தம நிலையான உபரதியை 'உபரதி: உத்தமா'என்கிறார். வெளிப்பிடிப்பு 'பாஹ்யஅவலம்பனம்'. ' வெளி'என்றால் கையை காலை ஆட்டியும் ஞானேந்த்ரியங்களால் பார்த்துக் கேட்டு, தின்னும் அநுபவிக்கும் வஸ்துக்கள் மட்டுந்தான் என்றில்லை. ஆத்மாவுக்கு வெளியான, ஆத்மாவுக்குப் புறம்பான, எல்லாமே வெளிதான். அதாவது மனஸ் எழுப்பும் எண்ணங்களெல்லாம்கூட 'வெளியைச் சேர்ந்தது'தான்.

இப்படி ஸகலத்திருந்தும் விடுபட்டு மனஸ் இருக்கிறது. 'இருக்கிறது'என்றாலும் இருப்பு என்றே சொல்ல முடியாமல் இறப்பு மாதிரி இருப்பதால் உபரதி என்பது. மனஸ் செயலற்றிருக்கிறது. ஆனாலும் ஆத்ம ப்ரபோதம் ஏற்படாத நிலை. ஏற்பட்டுவிட்டால் அது இறப்புக்கு நேர் எதிரான அம்ருத நிலை. இப்போது ஆத்மா தெரியாவிட்டாலும் மனஸ் உழப்பறிசல் இல்லாமல் செத்தமாதிரி, எந்த சஞ்சலமுமில்லாமல் இருக்கிறது.

உபநிஷத்துக்களில் வாத ப்ரதிவாதங்கள் வரும். அப்போது ஒரு கட்சிக்காரர் எல்லாக் கேள்விகளுக்கும் ஆணித்தரமாகப் பதில் சொல்லி எதிர்கட்சிக்காரர் வாயடைத்துப் போய் ஒய்ந்து உட்கார்ந்துவிடுவதை 'உபரராம'என்றே சொல்லியிருக்கும். அதாவது, 'உபரமத்தை அடைந்தார்'என்று அர்த்தம். உபரமம், உபரதி இரண்டும் ஒன்றுதான் - யமம், யதி இரண்டும் ஒன்று என்றேனே, அந்த மாதிரி! செயலற்றுப் போய் விடுவது 'உபரதி'.

உபரதி நிலையை அடைந்தவன் உபரதன். ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில் ஆசார்யாள் உபரதனை 'ஸர்வைஷணா விநிர்முக்த: ஸந்ந்யாஸீ'என்று வர்ணித்திருக்கிறார். 'ஏஷணா'என்றால் ஆசை. புத்ரனிடம் ஏஷணை, பணத்தில் ஏஷணை, லோக வாழ்க்கையில் ஏஷணை ஆகியவற்றை விட்டு ஞானி பிச்சைக்காரனாக சுற்றுகிறான் என்று அதே உபநிஷத்தில் இன்னோரிடத்தில் வருகிறது. பொதுவாக புத்ர ஏஷணா, தார (பெண்டாட்டி) ஏஷணா, வித்த (பணம்) ஏஷணா மூன்றையும் ஏஷணா த்ரயம் என்பார்கள். (லலிதா) த்ரிசதியில் 'ஏஷணா ரஹிதாத்ருதா'என்று அம்பாளுக்குப் பேர் இருக்கிறது. ஆசையற்றவர்களால் பூஜிக்கப்படுபவள் என்று அர்த்தம். வைராக்யம் என்பதும் ஆசை போன

நிலைதான். ஆனாலும் அப்போது விஷயங்களில் வெறுப்பு தலை தூக்கி நின்றது. வெறுத்து ஒதுக்கிய நிலை அது. இப்போது உபரதியில் வெறுப்புமில்லை, ஆசையுமில்லை.

வைராக்யம் என்னும்போது வெறுப்பு, வெறுப்பிலே ஒரே கார்யமாக ஆசையை ஒழிப்பது என்று இருக்கிறது. தமம், சமம்-களில் ஆசைகளைப் படுகிற மனஸையும், அந்த

ஆசைகளை நிறைவேற்றி வைக்கிற இந்த்ரியங்களையும் ஒரே காரியமாக அடக்குவதாக இருக்கிறது. அப்புறம் காரியமில்லை. வைராக்ய, சம தமங்களினால் மனஸ் ஒழிவடைந்திருக்கிறது. ஒழிவு என்றால் ஒரேடியாக ஒழிந்து விடவில்லை. அந்த ஒழிவு-அழிவு - ரொம்பக் கடைசியில்!இப்போதைய ஒழிவு என்பது ஒய்வு மாதிரி. ஆத்மாநுபவம், அதன் ஆனந்தம் (ஆகியவையும்) இல்லை. பாழாக, சூன்யமாக இருக்கிறாற்போன்ற நிலை. ஆனாலும் சஞ்சலங்கள் போட்டுப் பிடுங்காத ஒரு நிம்மதி நிலை.

ஆசைகள் விட்டுப் போய் விட்டதால் இதையே ஸந்ந்யாஸம் என்று (ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில்) ஆசார்யாள் சொல்லி விடுகிறார்;உபரதனை 'ஸந்ந்யாஸி'என்கிறார். இன்னும் அந்த ஷட்கத்தில் மூன்று பாக்கி இருக்கின்றன. ஆறில் (சமம், தமம், உபரதி என்ற) மூன்று தான் பார்த்திருக்கிறோம். (திதிக்ஷை, ச்ரத்தை, ஸமாதானம் என்ற) பாக்கி மூன்றை இன்னும் பார்க்கவில்லை. அவையும் ஆனவிட்டு முமுக்ஷுத்வம் என்ற மோக்ஷ நாட்டத்தில்

ஒருத்தன் தேறிய பிறகுதானே ஸந்நியாஸம்?அதற்குள் எப்படி அதைக் கொண்டு வந்தார்?-என்றால், முன்னே சொன்னதை மறுபடி ஞாபகப் படுத்துகிறேன். ஸாதனாங்கங்கள் ஒன்று முடிந்துதான் இன்னொன்று ஆரம்பமென்றில்லை. அவை கலந்து கலந்தே வரும். அப்படி வரும்போது இன்னும் முன்னே சொன்ன வைராக்யத்தில் ஒருவன் என்றைக்கு முழுத் தேர்ச்சி பெறுகிறானோ அன்றைக்கேகூட ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு விடலாமென்று - யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவரஜேத் என்று சொல்லியிருக்கிறது என்றேன் ஸாதனாங்கம் ஒன்றில் தீவரமாயிருந்தாலே அதைத் தொட்டுக்கொண்டு மற்றதெல்லாமும் வந்துதான் ஆகணும்;வந்தே தீரும். அதனால் உபரதி நன்றாக உறுதிப் பட்டு விட்டாலும் ஸந்நியாஸந்தான் என்று அபிப்ராயப்பட்டு அப்படிச் சொல்லியிருப்பார். அல்லது, ஸந்-ந்யாஸி என்பதற்கு நேர் அர்த்தம் 'நன்கு துறந்தவன்'என்பதேயாகையால் உபரதனை அப்படிச் சொல்லியிருக்கக்கூடும். ஏனென்றால் இனிமேல் வரப்போகிற திதிக்ஷை, ச்ரத்தை, ஸமாதானம் ஆகியவற்றில் 'துறப்பது'என்ற அம்சம் இல்லை - அவை என்னவென்று

நான் எக்ஸ்ப்ளெய்ன் செய்யும்போது தெரியும். 'பாஹ்யாவல ம்பனம்'வெளிப் பிடிப்புகள் -யாவும் விட்ட நிலை உபரதி என்றால், அப்படி ஸகலத்தையும் ந்யாஸம் செய்வதுதான் ஸந்நியாஸம் என்பதும். 'ந்யாஸம்'என்றால் விட்டு விடுவது. நன்றாக விட்டு விடுவது ஸந்நியாஸம்.

'விவேக சூடாமணி'ஆரம்பத்திலேயே ஸாதன சதுஷ்டயத்தைச் சொன்ன

ஆசார்யாள் அப்புறம் தள்ளி, ரொம்பத் தள்ளி எல்லாமும் மறுபடி விவேகம், வைராக்யம், உபரதி முதலியவைகளைச் சொல்வார். ஏன் இப்படி ஒருத்தர் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ஸாதனையில் உசந்த கட்டத்துக்குப் போவதைச் சொன்ன அப்புறம் இவற்றை மறுபடி சொல்கிறார் என்று தோன்றலாம். ஆலோசித்துப் பார்த்தால் புரியும். இந்த அங்கங்கள் ஒவ்வொன்றுமே ஒவ்வொரு கட்டமாக மேலே மேலே பழுத்துக் கொண்டு போய்தான் முழுமையை அடையும் என்பது. இப்படித்தான் ஆரம்பத்தில் சொன்ன விவேக- வைராக்யங்களையே மறுபடி ஒரு இடத்தில் சொல்லி இந்த இரண்டின் அதிரேகம் - அதாவது உபரி வளர்ச்சியாலேயே, மனஸ் சக்தியாகி முக்திக்குத் தகுதி பெறுகிறது என்கிறார். இன்னம் தள்ளி 'வைராக்யாந்- ந பரம் ஸுகஸ்ய ஜநகம் பச்யாமி வச்யாத்மந:- மனஸை வசப்படுத்தின யதிக்கு வைராக்யத்தைவிடப் பரம ஸுகமான இன்னொன்றை நான் அறியவில்லை'என்று ஒரே தூக்காகத் தூக்குகிறார். அதே மாதிரி வைராக்யத்திலிருந்து போதம் (ஞானம்), போதத்துக்கும் அப்புறம் உபரதி என்று உபரதியின் முழுமையை ரொம்பப் பின்னாடி காட்டியிருக்கிறார்.

மனஸ் இப்போது பார்க்கும் ஆரம்ப 'உபரதி'யில் ஒய்ந்து விட்டால் அப்படியே வெறுமையாக முடிந்து விடுமா?முடியாது. அப்போதைக்கு அப்படியிருந்தாலும் ஈச்வரானுக்ரஹம் என்பது அதை அப்படியே விட்டு வைக்குமா என்ன?ப்ரஹ்ம ஸத்யம் என்ன என்று தெரிந்து கொள்வதே லக்ஷ்யமாக ஒரு குழந்தை ஆசையெல்லாம் அடக்கிப் போட்டிருக்கும்போது மனஸு ஒய்ந்து நின்று விடும் நிலையோடு அவன் கதை முடியட்டுமென்று ஈச்வரன் விட்டுவிடுவானா?அதற்காக உடனே ஸத்ய ஸாக்ஷாத்காரத்தைக் கொடுத்து விடவும் மாட்டான்.

ஜீவனுடைய கர்மாவெல்லாம் அழிந்த அப்புறந்தான் அதைக் கொடுப்பான். அந்தக் காலம் வருவதற்குள் வெறுமையான உபரதி என்பது மஹாவாக்ய உபதேசத்திற்கு மேலும் யோக்யதை ஸம்பாதித்துக் கொள்வதற்கு வகையாக ஜீவனுள்ள 'ஸமாதான'நிலையை அடையும்படிப் பண்ணுவான். அப்புறம் ஸந்நியாஸம் பெற்று உபதேசம் என்று (ஸாதனை) மேலே போகும்.

'ஸமாதான'த்திற்கும் 'உபரதி'க்கும் நடுவே 'திதிக்ஷை' 'ச்ரத்தை'என்று இரண்டைச் சொல்லியிருக்கிறது.

---



## திதிக்ஷை

உபரதிக்கு அடுத்தாற்போல் திதிக்ஷை. திதிக்ஷை என்றால் ஸஹிப்புத்தன்மை, பொறுமை;'பொறை உடைமை'என்று திருக்குறளில் சொல்லியிருப்பது.

அடுத்தாற்போல் என்றால் உபரதியில் ஸித்தி பெற்றதற்கு அப்புறம் திதிக்ஷை

என்று அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. பல தடவை சொன்னதை - 'worth any number of repitition' என்கிறார்களே, அப்படி எத்தனை தடவை சொன்னாலும் தகும் விஷயத்தை - மறுபடி சொல்கிறேன்:ஆத்ம ஞானத்தை ஸாதித்துக் கொள்ள அநேகம் பண்ணவேண்டியிருக்கிறது, வைராக்யம் பெற வேண்டியிருக்கிறது, இந்த்ரிய நிக்ரஹம் மனோநிக்ரஹம் பண்ண வேண்டியிருக்கிறது, அப்படி பண்ணி மனஸ் எல்லாவற்றிலிருந்தும் கழன்று பட்ட கட்டை மாதிரி 'உபரதி'யில் ஆகுமாறு செய்ய வேண்டியிருக்கிறது. இன்னம் பலவும் பண்ண வேண்டியிருக்கிறதென்றால் இவற்றில் ஒன்றை ஆரம்பித்துப் பூர்ணமாக அதை

முடித்துவிட்டு, அப்புறம் இன்னொன்றை ஆரம்பித்து முடிப்பது, அப்புறம் இப்படியே அடுத்து அடுத்து சொன்னவைகளைப் பண்ணுவது என்று நினைத்துக் கொண்டுவிடக் கூடாது. போலீஸ் உத்யோகத்திற்கு இன்னின்ன யோக்யதாம்சம் - இவ்வளவு வயஸாயிருக்க வேண்டும், இன்ன படித்திருக்க வேண்டும், இவ்வளவு 'ஹைட்'இருக்க வேண்டும், வெய்ட் இருக்கணும், ரிஸர்வேஷன் கொள்கைப்படி இன்ன ஜாதியாயிருக்கணும், இப்படிப்பட்ட நடத்தை இருக்க வேண்டும் என்று யோக்யதாம்சங்கள் - வைத்தால் அவற்றில் ஒன்று ஆன அப்புறம் இன்னொன்று என்று அர்த்தம் பண்ணிக் கொள்வார்களா?அந்த வயஸு லிமிட்டை முதலில் பூர்த்தி பண்ணனும், அத்தனை வயஸான அப்புறம் படிக்க ஆரம்பித்து படிப்பு க்வாலிஃபிகேஷனைப் பூர்த்தி பண்ணணும், படித்து முடித்த அப்புறம் குறிப்பிட்ட 'ஹைட்'டுக்கு உசரணும், வெயிட் போடணும், அப்புறம் இந்த ஜாதியாகணும், அதற்கப்புறம் அந்த மாதிரியான நடத்தையை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தால் எப்படியிருக்கும்?ஓரளவுக்கு அந்த மாதிரி தான், நித்யாநித்ய வஸ்து விவேகத்திலிருந்து முமுக்ஷுத்வம் வரையிலுள்ள யோக்யதாம்சங்களை ஒன்றுக்கப்புறந்தான் இன்னொன்று வருகிறதென்று நினைப்பதும்!பல க்வாலிபிஃகேஷன்கள் தேவையாயிருப்பதால் அவை அத்தனையையும் ஸாதனாங்கங்களாக (ஆசார்யாள்) சொன்னார். கூடிய மட்டும் - கூடிய மட்டுந்தான் முழுக்க இல்லை - எந்த ஆர்டரில் அபிவிருத்தி க்ரமமோ அந்த ஆர்டரில் நித்யாநித்ய வஸ்து விவேகத்தில் ஆரம்பித்து முமுக்ஷுத்வம் என்று கொண்டு போய் முடித்திருக்கிறார். ஆனால் அந்த ஆரம்பத்திலேயே முமுக்ஷுத்வம் உள்பட எல்லாமும் கொஞ்சம் கொஞ்சம் அப்யாஸம் பண்ணித்தானாக வேண்டும், ஒவ்வொன்றும் தூக்கலாக அப்யஸிக்கப் படும் கட்டத்திலும் அந்த ஒன்றோடேயே - அந்த ஒன்றுக்குள்ளேயே என்று கூடச் சொல்லலாம்- பாக்கி அத்தனையும் கொஞ்சம் கொஞ்சம் வரத்தான் செய்யும்.

இன்னொன்று (சொல்ல வேண்டும்) விவேகம், வைராக்யம், சமம் என்றிப்படிப் பல அங்கம் சொன்னதில் எந்த ஒன்றிலுமே ஒருத்தன் கடைசியான

ஸாக்ஷாத்காரம் அடையும் வரையில் பூர்ண ஸித்தி அடைந்ததாகவும் இருக்காது. ஒவ்வொன்றிலும் கொஞ்சம் பாக்கி சாக்கி பூர்ணத்வத்துக்கு ஒரு படி கீழே இருக்கத்தான் செய்யும். ஏனென்றால் இவற்றில் எந்த ஒன்றிலாவது பூர்ண ஸித்தி என்றாலே அது கையோடு கையாக மற்றதுகளையும் இழுத்துக் கொண்டு வந்து அதுகளும் ஸித்திக்கும்படிப் பண்ணிச் சடேரென்று கடைசியான ஸாக்ஷாத்கார ஸித்திக்கே ஏற்றிவிடும்.

ஸாதனை அத்தனையும் பண்ணுவது மனஸு பூர்ணமாக சுத்தமாகி, அப்படியே அழி(வு)ப் பட்டுப் போவதற்காகத்தான்;மனஸு அழிபட்டுப் போவதென்றால் ஆசை விஷயவாஸனை- அழிபடுவதுதான். ஸாதனையின் முடிவு நிலையில்தான் இப்படி ஆசைகளும் விஷய வாஸனைகளும் அடியோடு அழிந்துபோய், உடனேயே ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்று இப்போது நான் சொன்னதுங்கூட ஸரியில்லை. ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் தான் உடனே விஷய ருசிகள் அடியோடு அழியும். அதாவது ஸாக்ஷாத்காரந்தான் முதலில்;அப்புறம், அப்புறம் என்றால் ரொம்ப காலத்திற்கு அப்புறமில்லாமல், உடனேயே - ஆனாலும் ஸாக்ஷாத்காரத்திற்கு பிறகுதான் - விஷய ருசி பூர்ணமாக நசிப்பது. கீதா

வாக்யம் இப்படித்தான் ஸ்பஷ்டமாக இருக்கிறது. ஒவ்வொரு இந்த்ரியத்திற்கும் ஆஹாரமாக இருக்கப்பட்ட விஷயங்களை அவற்றுக்குக் கொடுக்காமல் ஒருத்தந் இருந்து விட்டால், அந்த பழக்கத்தால் விஷயங்கள் அவனை விட்டுப் போய்விடும். (அதாவது ஸ்தூலமாக அவன் அவற்றை அநுபவிப்பது நின்று போய்விடும் என்று தாத்பர்யம்.) ஆனாலும் அநுபோக ரஸம் - ருசி கண்ட பூனை என்ற மாதிரி, அவன் பெற்ற அநுபவ ருசி - உள்ளுக்குள்ளே இருந்துகொண்டு தானிருக்கும். இது எப்போது விலகும் என்றால் பரம் பொருளை இவன் எப்போது தர்சிக்கிறானோ, அதாவது ஆத்மாவை எப்போது ஸாக்ஷாத்காரிக்கிறானோ அப்போது தான்'என்று (பகவான்) சொல்லியிருக்கிறார்.

விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: |

ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்டவா நிவர்ததே ||

'பரம் த்ருஷ்ட்வா'- பரமனைப் பார்த்தாலே பரம தத்வத்தை அநுபவித்தாலே;'ரஸ அபி நிவர்ததே'- அநுபவ ருசியும் நிவிருத்தியாகும்.

விஷய ருசியும் போய் மனஸ் அழிந்தால்தான் பரமதத்வ அநுபவம் என்று ஒரு பக்கம் சொல்லிவிட்டு இன்னொரு பக்கம் அந்த அநுபவம் வந்தால்தான் இந்த ருசி போகிறதென்றால், "பைத்தியம் தெளிஞ்சால் கல்யாணமாகும். கல்யாணமானால் பைத்தியம் தெளியும்"என்கிறார்போல் அல்லவா இருக்கிறது?இல்லை ருசியை அழித்து, மனஸை அழித்து, ஆத்ம தர்சனம் செய்ய இவனால் முடந்த ப்ரயாஸை அத்தனையையும் ஸாதனை என்ற பேரில் இவன் பண்ணிப் பாடுபடத்தான் வேண்டும். ஆனாலும் முழுக்க அழிக்கப் பண்ண முடியாது. அப்போது தான், இவன் முழு முயற்சியும் பண்ணிய நிலையில், ஈச்வரன் பரம

கருணையோடு இவனுக்கு ஆத்மாநுபவத்தைக் கொடுத்து, அதனாலேயே ருசியையும், ருசி காணும் மனஸையும் சேர்த்து அழிப்பது. முழுக்க இவன் ஸாதனையாகவே இருந்துவிட்டால் ஈச்வரனின் அநுக்ரஹ சக்திக்கு என்ன பெருமை?ஆகையால் கடைசிவரை இவன் தானாக முழுமை அடையாமல்தான் எல்லா ஸாதனாங்கங்களையும் அப்யஸித்தபடி இருக்க வேண்டும் என்றாகிறது.

மொத்தத்தில் பல ஸம்ஜெக்ட்களை எப்படி ஒரே ஸமயத்தில் கையோடு கையாக படித்துக் கொண்டே போய், கடைசிப் பரீக்ஷை வரையில் ஒவ்வொன்றிலும் பாக்கி சாக்கியும் வைத்துக் கொண்டு, பரீக்ஷையின் போது எல்லாவற்றையும் கம்ப்ளீட் பண்ணி எழுதி ஒவ்வொன்றிலும் பாஸ், எல்லாவற்றிலும் சேர்த்து மொத்தமாகவும் பாஸ் என்று வாங்குகிறோமா. அப்படித்தான் ஆத்ம ஸாதனையின் பல அங்கங்களை அப்யாஸம் செய்வதும்.

ஒன்றுக்கு அப்புறம் இன்னொன்று மாதிரி சொன்னது ஆரம்பத்தில் அவை இன்னவென்று பிரித்துக் காட்டி ஸரியாகப் புரிய வைப்பதற்காகத்தான். ஸங்கீதம்

பாலசிக்ஷையில் ஸ-ரி-க-ம-ப-த-நி என்று ஒரு ஸ்வரத்திற்கு அப்புறம் அப்புறம் இன்னொன்று என்பதாக வரிசை பண்ணிக் கொடுத்திருப்பது அந்த ஆரம்ப நிலையில் ஸ்வர ஸ்தானங்கள் பிடிபடுவதற்காகத்தான். ஆனால் அஸல் பாட்டு ஆலாபனை என்று வரும்போது இந்த வரிசை ஒன்றில்தான் ஸ்வரங்கள் போகணுமென்றில்லாமல் மேல் ஸ்வரங்களும் கீழ் ஸ்வரங்களும் கலந்து கலந்துதானே வருகின்றன?

'உபரதி'என்று மனஸ் எல்லாப் பிடிப்பையும் விட்டு விட்டு ஒய்ந்து போய்விட்ட அப்புறம் திதிக்ஷை என்ற பொறுமையை அப்யஸிக்கணும் என்று நினைத்துக் கொண்டால், 'மனஸ்தான் ஏற்கெனவே பட்ட கட்டையாக ஒய்ந்து உட்கார்ந்து விட்டதே!அதற்கப்புறம் பொறுத்துக் கொள்ள என்ன இருக்கிறது?தூங்குகிறவனிடம் 'பொறுமையாயிரு'என்று சொல்கிற மாதிரியல்லவா இருக்கிது?'என்ற கேள்வி எழும்பத்தான் செய்யும். அப்புறம் அப்புறம் என்பதையெல்லாம் அதோடுகூட, அதோடுகூட, ப்ளஸ், ப்ளஸ் என்று அர்த்தம் செய்து கொண்டாலே ஸரியாக வரும். எல்லா ஸப்ஜெக்ட்களையும் கொஞ்ங் கொஞ்சமாகச் சேர்த்துச் சேர்த்துப் படித்துக் கொண்டே போக வேண்டும் என்ற உதாரணத்தை மறக்கக் கூடாது....

உபரதிப் பாடத்தை ஒரளவுக்கு நன்றாகப் படித்து வெற்றிக் கண்டால், ஸாதாரணமாக வாழ்க்கையில் ஏற்படுகிற நார்மல் ஸுக துக்கங்களில் இப்போது நாம் ரொம்பவும் பாதிப்படைவது போலில்லாமல் மனஸ் விலகி வெறிச்சென்று இருக்கும். அப்படி இருக்கும்போது நார்மல் என்பதற்கு வித்யாஸமாக அப்நார்மலாகவோ ஸப்நார்மலாகவோ ஸுகதுக்கங்கள் நேர்ந்தால் அப்போது உபரத நிலையில் தடுமாற்றம் ஏற்பட்டு மனஸு பாதிப்புக்கு ஆளாகத்தான் பார்க்கும். இந்த இடத்தை நினைத்துத்தான் திதிக்ஷஸ்வ - பொறுத்துக் கொள்

என்று ஆசார்யாள் - அவருக்கு முன்னேயே உபநிஷத் ரிஷி - - வைத்தார்கள் என்று புரிந்து கொள்ள வேண்டும். "திதிக்ஷஸ்வ" â¡ð¶ ðèõ£¡ õ£,°. W«î£ð«îê Ýó‹ð^F«ô«ò Ü˜ü§ù¬ù, ÃŠH†´, "FFþvõ ð£óî!" -

ªð£Á^¶‚«è£Šð£!' â¡P¼‚Aø£˜.

சீதோஷ்ணம் என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். அது வாஸ்தவத்தில் சீதம், உஷ்ணம் என்ற இரண்டு வார்த்தை சேர்ந்தது. தீம் -குளிர்;உஷ்ணம் - சூடு, இது ஒரு இரட்டை;த்வந்த்வம், ஜீணீவீகூஷீ என்பது - எதிரெதிராக உள்ள ஜோடி. இதே மாதிரி ஸுக-துக்கம். 'சீதோஷ்ணங்களைப் பொறுத்துக் கொள். ஸுக துக்கங்களைப் பொறுத்துக் கொள்'என்று பகவான் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார்.

கீதையில் அங்கங்கே இப்படி இன்னும் அநேக த்வந்த்வங்களைச் சொல்கிறார். நீ அவற்றைக் கடந்த த்வந்த்வாதீதனாக இரு. கார்யம் ஸித்தியானாலும் ஸரி, ஆகாவிட்டாலும் ஸரி, ஸித்தி - அஸித்திகள் இரண்டிலும் ஸமமாயிரு'என்கிறார். ஸமமாயிருப்பது என்றாலும் பொறுத்துக் கொள்வது என்றே

அர்த்தம். இந்த ஸித்தி - அஸித்தி ஜோடியைக் கடைசி அத்யாயத்திலும் சொல்கிறார். ஸித்தி-அஸித்தி என்பது வெற்றி-தோல்வியைத்தான். 'ஸித்த்யஸித்யோர் நிர்விகார:கர்த்தா ஸாத்விக உச்யதே- வெற்றி தோல்விகளில் மாறுபாடு அடையாமலிருக்கும் ஜீவனையே ஸாத்விகன் என்பது'என்கிறார்.

ஆரம்பத்தில் சொன்ன சீதோஷ்ண, ஸுகதுக்கங்களை த்யான யோகம் உபதேசிக்கும்போதும் சொல்லி, கூட 'மாநோபமாநயோ:' என்று மான - அவமானம் என்ற இன்னொரு ஜோடியையும் சேர்க்கிறார். பல இடங்களில் 'சுப-அசுப'எதிரெதிர் ஜோடியைச் சொல்லியிருக்கிறார். புண்ய-பாபங்களையே சுப-அசுபம் என்பது. ப்ரியம்-அப்ரியம், இஷ்டம் - அநிஷ்டம், லாபம் - அலாபம், ஜயம் அபஜயம் என்று பல ஜோடிகளை அங்கங்கே சொல்லி இவை எல்லாவற்றிலும் ஸமமாயிருக்க வேண்டும் என்கிறார்.

இவற்றில் இப்போது கெட்டதாகத் தோன்றுவதைப் பொறுத்துப் பொறுத்துப் பழகி அப்புறம் அவற்றிடம் அசட்டையாக, உதாஸீனமாக ஆகிவிட வேண்டும். கடுங்குளிர், கடும் உஷ்ணம், துக்கம், அவமானம், அசுபம், அப்ரியம், அபஜயம் ஆகியவற்றில் இப்பேர்ப்பட்ட

திதிக்ஷயை அப்யஸிக்க வேண்டும். இப்போது நல்லதாகத் தோன்றும் ஹித உஷ்ணம், ஜித சீதம், ஸுகம், மரியாதை, சுபம், ப்ரியம், ஜயம் ஆகியவற்றிலுந்தான் திதிக்ஷ வேண்டும். இப்போது நல்லதாகத் தோன்றும் ஹித உஷ்ணம், ஹித சீதம், ஸுகம், மரியாதை, சுபம், ப்ரியம், ஜயம் ஆகியவற்றிலுந்தான் திதிக்ஷ வேண்டும். இல்லாவிட்டால் இரண்டையும் சேர்த்துச் சேர்த்து பகவான் சொல்ல மாட்டார். இரண்டிலும் ஒரே மாதிரி பாவம், ஸமமாயிருக்க வேண்டுமென்றால், இரண்டையும் சட்டை பண்ணாமல் உதாஸீனமாயிருக்க வேண்டுமென்று அர்த்தம்.

கெட்டதை ஸஹித்துக் கொள்வது, பொறுத்துக் கொள்வது என்றால் புரிகிறது. நல்லதை ஸஹித்துக் கொள்வதென்றால் (என்னவென்று) புரியவில்லை. கேட்டால் வேடிக்கையாகக்கூட இருக்கிறது. ஆனால் ஸாதனையில் ஓரளவுக்கு ஜயித்தால் புரியும். நல்லதென்று தோன்றுவதெல்லாங்கூட வேண்டாமே என்று தோன்றும். ஒரு மந்த மாருதம் வீசுகிறது, உடம்புக்கு ஹிதமாயிருக்கிறது என்றால், 'எதற்காக இப்படி ஒரு சரீர ஸௌக்யம் தெரிய வேண்டும்?மந்தமாருதமோ, சண்ட மாருதமோ இரண்டும் பொருட்டில்லை என்றுதானே இருக்க வேண்டும்?எப்படி இருக்கிறதோ, அப்படி இருந்து விட்டுப் போகட்டும் என்று நா  பழக்கிக் கொள்கிறபோது, எதற்காக இப்படி மந்தமாருதம் என்று ஒன்று வீசி அதில் ஸௌக்யமிருக்கிறது என்று தனியாகப் பிரித்து காட்டி அதை நாம் சட்டை பண்ணி சந்தோஷப்படும்படி இருக்க வேண்டும்?என்று தோன்றும். இப்படியே பணம் காசு வந்தால், மநுஷ்யர்கள் ரொம்பவும் ப்ரியத்தைக் காட்டுபவர்களாக வந்தால், 'தரித்ரமேதான் இருந்துவிட்டுப் போகட்டுமே! அப்ரியமாக, கரித்துக் கொட்டுபவர்களாகவேதான் ஜனங்கள் இருக்கட்டுமே!நாம்தான் பொறுத்துக் கொள்ள பழகுகிறோமே!அதிலிருந்து வித்யாஸமாக இப்போது நடப்பானேன்?நடந்தால் மறுபடி நல்லது கெட்டது என்று வித்யாஸ எண்ணங்களும் ஏற்படத்தானே இடம் கொடுத்துப் போகிறது?'என்று தோன்றும். அதாவது கெட்டது வேண்டாம் என்று இப்போது தோன்றுகிற மாதிரி ஸாதனையில் ஓரளவுக்கு முன்னேறிய அப்புறம் இப்போது நாம் நல்லது என்று நினைப்பதும் வேண்டாமே என்று தோன்றும் நிலையில் அந்த 'வேண்டாம்'எண்ணத்தைப் போக்கிக்

கொண்டு அதையும் சட்டை பண்ணாமலிருப்பதுதான் நல்லதை ஸஹித்துக் கொள்வது!நல்லதில் திதிக்ஷை புரிகிறதல்லவா?நல்லது- கெட்டது என்று வித்யாஸம் பார்க்காமல் எத நடந்தாலும் அதில் கருத்து செலுத்தாமல் விலகி இருக்கலாம் என்று நாம் நினைத்தாலும், நம்முடைய பூர்வ கர்மாவுக்காக நல்லதுகள் பிடிவாதமாக நடக்கலாம். எதிர்பார்க்காமல் பணம் வந்து கொட்டலாம். ப்ரியமாக பந்து மித்ரர்கள் வந்து சேரலாம். இப்படி இன்னும் அநேகம் நடக்கலாம். அப்போது 'இதெல்லாம் வேண்டாமே! இப்படி அநுகூலமான விஷயங்களாக இல்லாமல், ப்ரதிகூல நிலைமையிலிருந்தும் நாம் மனஸை ஸந்தோஷமாக, த்ருப்தியாக வைத்துக் கொண்டால்தானே ச்லாக்யமாயிருக்கு ம்?அதோடு நல்லதாகத் தோன்றுகிறவை நம்மை மாயையில் இழுக்கிறவைதானே?அதனால் இவை வேண்டியதில்லை'என்று நினைக்காமல் நல்லதையும் பொறுத்துக் கொள்ள, நல்லதிலும் திதிக்ஷையைக் காட்ட இடமிருக்கிறதென்று புரிகிறதா?

திதிக்ஷையை "ஸர்வ து:காநாம் ஸஹநம்"(எல்லா துக்கங்களையும் ஸஹித்துக் கொள்வது) என்று ஆசார்யாள் 'விவேக சூடாமணி'. 'அபரோக்ஷாநுபூதி'இரண்டிலும் ஒரே போல 'டிஃபைன்'செய்திருக்கிறார். அதனால் அது நமக்குத் துக்கமாகத் தோன்றுவதை ஸஹித்துக் கொள்வதாக மட்டுமே ஆகும்;ஸுகத்தையும் சட்டை பண்ணாமல் இருப்பதைக் குறிக்காது என்று நினைத்து விடக்கூடாது. தற்போது நாம் ஸுகம் என்று நினைப்பதில் வாஸ்தவத்தில் ஸுகமில்லை. ஞானம் ஒன்றுதான் ஸுகம். அத்வைத ஞானம்

ஒன்றில் விளைவதுதான் ஸுகம். த்வைத லோக அநுபவம் அத்தனையுமே அந்த ஞானத்திற்கு மாறானதால் துக்கந்தான். இதிலே நமக்கு இப்போதே துக்கமாகத் தெரிவதாவது, போதும் இந்த உலக உழப்பறிசல் என்று நம்மை ஞானப் பக்கம் போகச் செய்யும். ஸுகாநுபவமோ இன்னும் நன்றாக உலகத்தோடேயேதான் கட்டிப்போடும். ஆகையால் அந்த ஸுகத்தை ஸுகமாக நினைக்காத, அதாவது அதுவும் துக்கமே என்று நினைக்கிற மனப்பான்மை வரவேண்டும். அதற்கும் அப்புறம் தற்போது துக்கம் என்று நினைப்பதை ஸஹித்துக் கொள்வதைப் போலவே ஸுகம் எனப்படும் துக்கத்தையும், 'அது பாட்டு நடந்து விட்டுப் போகட்டு

ம்;அதனால் நாம் பாதிக்கப்படக்கூடாது'என்று அசட்டை மனப்பான்மையால் ஸஹித்துக் கொள்ள வேண்டும். அந்த ஸ்டேஜில் தற்போதைய ஸுகமும் துக்கமாகி விடுவதால்தான் ஆசார்யாள் 'து:காநாம் ஸஹநம்'என்று மாத்திரம் சொன்னது. நம்முடைய ஸ்டேஜில் ஸுக-துக்கம் என்ற இரட்டையை, த்வந்த்வம் என்பதை, ஒருபோல ஸஹித்துக் கொள்வதே திதிக்ஷை என்பதுதான் கீதாதி சாஸ்திரங்களிலிருந்து பெறப்படும் உண்மை. அதாவது, ஸுகத்தை - நல்லதாகத் தோன்றுவதையும் - 'போய்ட்டுப் போறது'என்று பொறுத்துக் கொள்ள வேண்டும்.

அது கொஞ்சம் நன்றாகப் பக்குவப்பட்ட அப்புறம் அதற்கு முன் ஸ்டேஜிலும், கீழ் நிலையிலும் இன்னொரு விதத்தில் 'நல்லதில் திதிக்ஷை'யை அப்யஸிக்க வேண்டும். (அது) என்னவென்றால் நல்லது என்பது நடக்கும்போது ஆனந்தத்தில் நம் மனஸ் பொங்குகிறது. அதுவும் மனக்கொந் தளிப்புதானே?கெட்டதிலும் துக்கத்திலும் ஒரு விதமாக மனஸு கொந்தளித்து ஸமநிலை கெடுகிறது என்றால் நல்லதில், ஸுகத்திலுந்தான் இன்னொரு தினுஸில் சாந்தமாய் அடங்கியில்லாமல் கூத்தாடுகிறது. இதுவும் கூடாது. மனஸ் ஆட்டமே இல்லாமல் ஆனால்தான் ஆத்ம தர்சனம் கிடைக்கும். ஆகையால் நல்லது என்பதில் ஏற்படும் ஸந்தோஷமான கொந்தளிப்பையும் அடக்க வேண்டும். இதுவும் ஒரு விதத்தில் 'பொறுத்துக் கொள்வது'தான். பொறுத்துக் கொள்வது என்பதைத் தாங்கிக் கொள்வது என்றும் சொல்கிறோம். இங்கிலீஷிலும் 'யீஷீக்ஷீ-தீமீணீக்ஷீணீஸீமீ'என்கிறார்கள். பாரத்தை பாரமாக நினைக்காவிட்டால் தாங்கிக் கொள்ள முடிகிறது என்று அர்த்தம். பாரம் வைக்காத போது தராசு முள் ஸம நிலையில் இருக்கிறது தராசின் இரண்டு தட்டில் ஒன்று நல்லது, மற்றது கெட்டது என்பது வைத்துக் கொண்டால் எந்தத் தட்டில் பாரத்தை வைத்தாலுந்தானே முள் அப்படியும் இப்படியும் ஆடிவிட்டுக் கோணலாக நிற்கிறது?அப்படி, கெட்டதுகளால் உண்டாகும் அநுபவம் என்ற பாரம் மாத்திரமில்லாமல் நல்லதுகளால் உண்டாகிற உணர்ச்சி பாரமுந்தான் மனஸை ஆடப் பண்ணிக் கோணிப் போக வைக்கிறது. அப்படி ஆடவிடக் கூடாது. நல்லது என்பதன் பாரத்தையும் பாரமாக நினைக்காமல் தாங்கிக் கொள்ள வேண்டும். அதாவது பொறுத்துக் கொள்ள வேண்டும். அதுதான் நல்லதிலும்

திதிக்ஷை.

நல்லது, நல்லது என்று இங்கே சொன்னதெல்லாம் ஆத்மாவுக்கு

அந்தரங்கமாக நல்லதை அல்ல;லோக வாழ்க்கையில் நல்லதாகத் தெரிவதைத்தான்;அப்படித் தெரிந்து இதிலேயே கட்டிப் போட்டு ஆத்மாவின் பக்கம் போகவிடாமல் பண்ணுபவைகளைத்தான்.

கெட்டது என்பதிலேகூட இல்லாத ஒரு பெரிய கெடுதல் இந்த நல்லதாகத் தோன்றுகிறவற்றில்தான் இருக்கிறது. என்னவென்றால் நல்லது என்பதில் உண்டாகும் ஸுகம் நமக்குப் பிடித்தமானதாக இருப்பதால் அது மறுபடி மறுபடி கிடைக்க வேண்டும் என்ற அவா, பற்று உண்டாகி அது வேறு மனஸை ஸதா அலைக் கழிக்கிறது. அந்த அவாவுக்கு 'ஸ்ப்ருஹா'என்று பெயர். அது ஏற்படாமல் தடுப்பதும் திதிக்ஷையின் 'பொறுத்துக் கொள்வதில்'சேர்ந்ததுதான்.

து:கேஷு அநுத்விக்நமநா :ஸுகேஷு விகித ஸ்ப்ருஹ: என்று சொன்னபடி துக்கம் ஏற்பட்டால் மனஸ் தவிக்காமலும், ஸுகங்கள் ஏற்படும்போது ஸ்ப்ருஹா உண்டாகாமலும் இருப்பதே திதிக்ஷை.

ஸுக துக்கம் முதலிய எல்லா த்வந்த்வ அநுபவங்களிலிருந்தும் விடுபட உதவுவது திதிக்ஷை. த்வந்த்வம் போவது என்றால் த்வைதம் போவது. அதாவது அத்வைதம். த்வந்த்வம் போனால் ஸம்ஸார பந்தமே போய் மோக்ஷத்திற்கு வழி திறக்கிறது. 'நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே': 'த்வந்த்வம் போனவன் பந்தத்திலிருந்து ஸுலபமாக விடுபட்டு விடுகிறான்'என்று பகவான் பரம லக்ஷ்யத்தையே திதிக்ஷையின் முடிவான பலனாகக் காட்டியிருக்கிறார்.

உபநிஷத் பாஷ்யத்தில் (திதிக்ஷையுடன் கூடியவனான) திதிக்ஷு பற்றி இதை 'கன்ஃபர்ம்'செய்வதாக, 'திதிக்ஷு : த்வந்த்வ ஸஹிஷ்ணு:' - 'எதிரெதிரான இரட்டைகளை ஸஹித்துக் கொள்பவன் திதிக்ஷு'என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். இரட்டை போனால் ஒற்றைதானே?ஒற்றை என்பது ஏக ஆத்மாதானே?

நேராக துக்கமாகத் தோன்றுவதோ, அல்லது ஸுகம் மாதிரித் தோன்றி உண்மையில் துக்கமாக இருப்பதோ எதுவானாலும் அதனால் சிந்தப் படக்கூடாது;அதாவது விசாரப்படக்கூடாது, புலம்பிக் கொண்டிருக்கக் கூடாது. இந்த துக்க ஸுகங்கள் நேராமல் தடுப்பதற்கு என்ன செய்யலாமென்று எதிர் உபாயங்களைத் தேடவும் கூடாது. பேசாமல் ஸஹித்துக் கொண்டிருக்க வேண்டும் - இதுவே ஆசார்யாள் உபதேசம்.

ஸஹநம் ஸர்வது:காநாம் அப்ரதீகார பூர்வகம்।

சிந்தா விலாப ரஹிதம் ஸா திதிக்ஷா நிகக்யதே ।।

'ÜŠóbè£ó Ì˜õè‹'- ñ£ŸÁ àð£ò‹ «îì,Ãì£¶. 'Šóbè£ó‹'â¡ø£™ ñ£ŸÁ ïìõ®,¬è. ¶,è˜¬î (ú§è˜¬î»‹ ÜF«ô«ò «ê˜ˆî£JŸÁ) ñ£ŸÁõîŸ° âF˜ ïìõ®,¬è G¬ù,è,Ãì£¶. Ü¶ ð£†´,° ïì‰¶ M†´Š «ð£è†´‹ â¡Á Üôzòñ£è M†´Mì «õ‡´‹. 'C‰î£ Mô£ðóUî‹'- C‰¬î, èõ¬ô Ãì£¶;Šóô£H,è, Ãì£¶;ÜöŠðì£¶;ÞšMî˜F™ 'ú˜õ ¶:è£ï£‹ úý‹'â™ô£ˆ ¶,èƒè¬÷»‹ ªð£Áˆ¶, ªè£œ÷ «õ‡´‹. Ü¶î£¡ FF¬þ â¡Á ªê£™ôŠð´õ¶:'ú£ FFþ£ Gè˜ò«î'. 'Ü¶î£¡ FF¬þ'â¡Á Ýê£˜ò£œ ªê£™ô£ñ™ 'Üõœ î£¡ FF¬þ'â¡Á ªð‡ð£L™ ªê£™LJ¼,Aø£˜!'FFþ£'â¡ð¶ ªð‡ð£™ õ£˜ˆ¬î.

'நித்யாநித்ய வஸ்து விவேக'த்தைச் சொல்லும்போது 'ஸோயம் நித்யாநித்ய வஸ்துவிவேக:', 'அவன்'- 'ஸோ (அ)யம், ஸ: அயம்'- என்று ஆண்பாலில் சொன்னார். 'விவேக:' என்ற வார்த்தை ஆண்பாலாகவே இருக்கிறது. ஸாதாரணமாக ஒன்றை ஆராய்ந்து பார்த்துச் செய்வது புருஷ குணமாகவே சொல்லப்படுவதால் அப்படி வைக்கப் பட்டிருக்கிறதோ என்னவோ?ஸ்த்ரீகளுக்குச் சபல புத்தி அதிகம்;ஆய் ந்தோய்ந்து பார்க்க மாட்டார்கள்;பின்னாடி 'பெண் புத்தி பின் புத்தி'என்று வருத்தப்படுவார்கள் என்று சொல்வது வழக்கம். நடைமுறை எப்படி இருந்தாலும் இப்படி ஒரு எண்ணமும், வசனமும் பொதுவாக இருந்து வருவதால் அப்படி (விவேகத்தை ஆண்பாலாக) வைத்திருக்கலாம்.

வைராக்யத்தை 'வைராக்ய'என்று (ஆண்பாலில்) சொல்லாமல் 'வைராக்யம்'என்று ஒன்றன்பாலாக - 'ந்யூடர் ஜெண்ட'ராக

ஆண் - பெண் என்றில்லாத ஜடமாகச்

சொல்வது. இது எடுப்பாக தெரியும்படி (ச்லோகத்தை) ஆரம்பிக்கும்போதே 'தத் வைராக்யம்'- 'அது வைராக்யம்'என்று ஆசார்யாள் போட்டிருக்கிறார். வைராக்யத்தில் மனஸ் மரத்து, மரமாக, ஜடமாகப் போய்விடணுமென்று காட்டுவதாகத் தோன்றுகிறது!

M«õè^F™ '¬õó£,ò:' â¡Á (Ý‡ð£L™) ªê£™ô£ñ™ '¬õó£,ò‹'â¡Á å¡ø¡ð£ô£è - '‰Îì˜ ªü¡ì'ó£è, Ý‡- ªð‡ â¡P™ô£î üìñ£è„ ªê£™õ¶. Þ¶ â´Šð£è^ ªîK»‹ð® („«ô£è^¬î) Ýó‹H,°‹«ð£«î 'î^ ¬õó£,ò‹'- 'Ü¶ ¬õó£,ò‹'â¡Á Ýê£˜ò£œ «ð£†®¼,Aø£˜. ¬õó£,ò^F™ ñùv ñó^¶, ñóñ£è, üìñ£èŠ «ð£ŒMìµªñ¡Á è£†´õî£è^ «î£¡ÁAø¶!

விவேகத்தில் சீர் தூக்கிப் பார்க்கும் கார்யம் நிறைய இருக்கிறது. அதன் விளைவாக ஆசையில்லாமல் பட்ட கட்டை மாதிரி இருக்கும் மனநிலைமையே வைராக்யத்தில் முக்யமாக இருக்கிறதே தவிரக் கார்யம் அதிகமாக இல்லை. நிறையக் கார்யம் பண்ணுவதற்கு பௌருஷம், ஆண்மை, தேவைப்படுவதால் 'ஸ:'

- 'Üõ¡' â¡Á Ý‡ð£L™ vðwìñ£è, °PŠH†ì£˜. è£˜òI™ô£ñ™ è†¬ì ñ£FK Þ¼Šð¬î 'î^'- 'Ü¶'â¡ø£˜.

சமம், தமம் என்ற வார்த்தைகள் 'சம:', 'தம'என்று ஆண்பாலில் இருக்கின்றன. அடக்குவது என்பதுதான் இரண்டிற்கும் நேர் அர்த்தம் என்று சொன்னேனல்லவா?அதற்கேற்றாற்போல் அந்த வார்த்தைகளும் ஆண்பாலாக இருக்கின்றன!

'சமம்'இன்னது என்று சொன்னபின் இதுவே 'மநஸ:சம உச்யதே'மனத்தின் சமம் எனப்படுகிறது' என்று முடித்திருக்கிறார். 'சமமுச்யதே'(சமம் உச்யதே) என்றிருந்தால்தான் (சமம் என்பது) நியூடராகும்;'சம உச்யதே'என்பதால் 'சம'- 'சமன்'என்று ஆண்பால்தான் ஆகிறது. ஆனாலும் விவேகத்தைச் சொல்லும்போது ஸ்பஷ்டமாக 'ஸ:' - 'அவன்'என்று போட்டது போல் இங்கே

போடவில்லை. இங்கே 'சம'த்தை வெறுமே மனவடக்கம் என்று டிஃபைன் பண்ணாமல், 'தன்னுடைய லக்ஷ்யத்தில் அடங்கியுள்ள நிலை - 'ஸ்வலக்ஷ்யே நியத அவஸ்தா'- என்றிருக்கிறார். சிந்தனை ஒட்டத்தை மனஸ் அடக்கும் ஆண்மை வாய்ந்த கார்யத்துக்கு அப்புறம், லக்ஷ்யமான ஆத்மாவில் அடங்கியிருக்கும் அமைதி நிலைமையைச் சொல்கிறார். அதனால் ரொம்பவும் பௌருஷத்தைக் காட்டும் ப்ரயோகம் வேண்டாம் என்று 'அவன்' போடவில்லை போலிருக்கிறது.

ஆனால் 'தம'த்தைச் சொல்கிறபோதோ 'ஸ:பரிகீர்த்தித:' 'அவன் தமன் எனப் போற்றப்படுகிறான்'என்று அழுத்தமாக ஆண்பால் ப்ரயோகம் பண்ணியிருக்கிறார். இந்த்ரியங்கள் அறுத்துக்கொண்டு ஒடும்போது இழுத்துப் பிடித்து அடக்குவதற்கு நிரம்ப ஆண்மை வேண்டுந்தானே?

'உபரதி'என்பது பெண்பால். செயல் துடிப்பு ஆண்மை என்றால் ஒரு செயலுமில்லாமல் ஒய்ந்து போய்ச் சும்மா இருப்பது பெண்பாலாகத்தானே இருக்க வேண்டும்?அதனால் 'உபரதிருத்தமா'(உபரதி:உத்தமா) 'உத்தமியான உபரதி'என்று சொல்லியிருக்கிறார். 'உத்தம:'என்று சொன்னால்தான் உத்தமன் - ஆண்பால். 'உத்தமா'என்றால் உத்தமி என்றே அர்த்தம்.

அப்புறம் அடுத்த 'திதிக்ஷா' வை 'ஸா'- 'அவள்'என்று ஸ்பஷ்டமாகப் போட்டுப் பெண்பாலாகத் தெரிவித்திருக்கிறார். பொறுத்துக் கொள்வது பெண்களின் - தாய்க்குலம் என்பதன் - தனிச் சிறப்பு. 'பொறுமைக்கு பூமாதேவி'என்று ஸ்த்ரீ தேவதையைத்தானே சொல்கிறோம்?

---

## ச்ரத்தை

(சமாதி ஷட்க ஸம்பத்தில்) அடுத்தது ச்ரத்தை. ஸம்ஸ்க்ருதத்தில் 'ச்ரத்தா', 'திதிக்ஷா'மாதிரியே 'ஆ' காரத்தில் முடியும் 'ச்ரத்தா'வும் பெண்பால்தான். நம்பிக்கையிலே - நேர் ப்ரூஃபில் இல்லை;ஒரு நம்பிக்கையின் மீது - 'சாஸ்திரம் சொன்னால் ஸரியாய்த்தானிருக்கும், சிஷ்டர்கள் சொன்னால் ஸரியாய்த் தானிருக்கும்'என்ற நம்பிக்கையின்மேல் ஒரு விஷயத்தில் மனப்பூர்வமாக ஈடுபட்டிருப்பதே ச்ரத்தை. புருஷர்கள் மாதிரி ஸ்திரீகளும் ரொம்பப் படிப்பு, ஆராய்ச்சி என்று போகாத வரையில் அவர்களே ச்ரத்தையில் உசந்து நின்றிருக்கிறார்கள். ஓரளவுக்கு அப்படிப் போனபின் இப்போதுங்கூட ச்ரத்தையில் ஸ்திரீகள் புருஷர்களைவிட ஒரு படி மேலே இருப்பதாகவே நினைக்கிறேன். போகப் போக எப்படியிருக்குமோ?

ச்ரத்தையினால்தான் ஆஸ்திக்யமே என்று முன்னாலேயே சொன்னேன். ஆண்களில் எவ்வளவு பேர் நாஸ்திகராகப் போயிருக்கிறார்களோ அதில் கால் பங்குகூட பெண்கள் இருக்க மாட்டார்கள். நாஸ்திகக் கட்சித் தலைவர்களின் பெண்டாட்டிகள்கூட கோவில், குளம், வ்ரதம், பூஜை முதலானதை விட்டுவிடவில்லை என்று பார்க்கிறோம். அதனால் ச்ரத்தையைப் பெண்பாலாக வைத்தது நியாயமாகவே தெரிகிறது.

ஆரம்பத்திலேயே ச்ரத்தை பற்றிச் சொன்னேன். சொல்லும்போதே, 'இந்த 'டாபிக்'மறுபடி ஸாதனாந்தத்திலும் (ஸாதனை முடிவிலும்) வரும்;அப்போது இன்னம் சிலது சொல்கிறேன்'என்றும் சொன்னேன். அந்த இரண்டாவது கட்ட - 'ஹையர் க்ரேட்'- ச்ரத்தைக்குத்தான் இப்போது வந்திருக்கிறோம்.

இப்போது ஒருவன் ஞானப் பக்குவம் பெறுவதற்காக அநேகம் பண்ணியாயிற்று. எது நித்யம் எது அநித்யம் என்று விசாரித்துத் தெரிந்து கொள்வது;அநித்யத்தில் வைராக்யம் ஸம்பாதித்துக் கொள்வது;சிந்தனை மயமாயுள்ள மனஸை அடக்கிக் கட்டுப்படுத்தி வெறுமையாக்கிக் கொள்வது,

பொறுமையாக்கிக் கொள்வது- ஆகியவற்றில் அவன் முன்னேறியாயிற்று. இப்போது எதற்கு 'ச்ரத்தை'யைக் கொண்டு வந்துவிட்டிருக்கிறது?அது ஆரம்ப ஸ்தானத்தில், ஃபௌன்டேஷன் போதே இருக்க வேண்டியதல்லவா?ஆரம்பத்தில் ஆத்ம ஸம்பந்தமாக ஒரு அப்யாஸமும் இல்லாதபோது. 'இந்த மார்க்கத்தில் அநேக விஷயங்கள் பகுத்தறிவு என்பதால், நோ ப்ரூஃபால், ஸரி பார்த்து எடுத்துக் கொள்ள முடியாது;சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களின் பேரிலும், குருவின் வார்த்தையின் பேரிலுமே அநேகத்தை நம்பி எடுத்துக் கொள்ள வேண்டும்'என்று சொல்லி, ச்ரத்தையை விதிப்பதற்கு அர்த்தமுண்டு. இப்போது ஒரளவு உச்சகட்டம் போனவிட்டு, அதை மறுபடி கொண்டு வருவானேன் என்றால் - இப்படி முன்னேறியதாலேயே 'ச்ரத்தை என்கிற நம்பிக்கைய ம்சத்திற்கு ஹானி ஏற்பட இடமிருப்பதால்தான்!

ஆரம்பத்தில் விவேகம், வைராக்யம், இந்த்ரிய நிக்ரஹம் எல்லாம் நமக்கும் கிடைக்குமா என்கிற ஸ்திதியில், ஒருவன் ஸைஃபராக இருந்ததாலேயே, அல்பமான நம் புத்திக்கு புரிபடாமல் அநேகம் அத்யாத்ம சாஸ்திரத்தில், ஸாதனையில் இருக்கத்தான் செய்யும். நம்மையும் கடைத்தேற்ற சாஸ்திரமும் பெரியவர்களும் என்ன சொல்கிறார்களோ அதை நம்பித்தான் எடுத்துக் கொள்வோமே!என்ற விநயமான மனப்பான்மை இருக்கும். அதனால் ச்ரத்தையோடு இருப்பான். ஆனால் (ஸாதனையில்) முன்னேறிய பிறகு, 'இப்போது நமக்கு புத்தி, மனக்குழப்பம் போய்த் தெளிந்து விட்டது. அதனால், இனிமேல் ஸாக்ஷாத்கார விஷயமாக நடக்க வேண்டியதெல்லாம் நமக்கே நன்றாகப் புரிந்துவிடும்'என்ற தப்பான - அஹங்காரம் என்றே தெரியாத ஒரு தினுஸூ அஹங்காரமான - அபிப்ராயம் ஏற்பட இடம் உண்டாகும். ஆனால் வாஸ்தவத்தில், ஸாக்ஷாத்காரம் கிடைக்கும் அந்த முடிந்த முடிவான நிலை வரையிலுங்கூட அநேக விஷயங்கள் எந்தப் பெரிய புத்திக்கும் புரிபடாத விஷயங்கள் எந்தப் பெரிய புத்திக்கும் புரிபடாத விதத்தில் நடந்து கொண்டுதான் போகும்! ஸாக்ஷாத்காரமே பெற்று ஞானியானவனாலுங்கூட அந்த விஷயங்களை புத்தி

மட்டத்தில் தெளிவு பண்ண முடியாமலே இருக்கும்! அதுவரை அநுஸரித்த வழிகளையே கேள்வி கேட்காமல் தொடர்ந்து கொண்டு போகும்போது என்னென்னமோ சிலது நடந்துதான் ஸாக்ஷாத்காரம் ஸூர்யோதயம் மாதிரி பளிச்சென்று பீறிக் கொண்டு வரும் அந்த விஷயங்கள் பராசக்தி ஒருத்திக்கே தெரிந்த ரஹஸ்யம்!அந்தச் சிலது நடக்கிறபோது புத்தியால் விசாரிக்காமல் எளிமையாக அடங்கி அப்படியே ஏற்றுக்கொண்டு கிடக்கணும்;அது நடந்துவிக்கிற படி நடக்கணும். 'இவ்வளவு தூரம் ஸாதனையில் வந்தோம். வருவதற்கு அநுக்ரஹித்த க்ருபா சக்தி இன்னம் மேலே ஏற்றிவிடாமல் போகாது. Final test -ஆக (இறுதிச் சோதனையாக)த்தான் நாம் புத்தியால் புரிந்து கொள்வதற்கில்லாமல் இப்போது ஒருவிதமாக நடத்துகிறது. நாம் புத்தியைக் கொண்டுவராமல் நம்பிக்கையோடு ச்ரத்தையோடு நடப்பதை ஏற்றுக்கொண்டு பாஸ் பண்ணி விடணும்'â¡Á Þ¼%oî£«ô º®õ£ù M«ñ£êù‹ ãŸð´‹. M«ñ£êù‹ ªðŸø Hø°ƒÃì, Ü%oî Mûòƒèœ ¹ˆF Mê£ó¬í,° â†ì£îî£è«õ Þ¼‚°‹. âõ¬óMì å¼ ñý£ê£˜ò˜ Þ™¬ô«ò£, Þ¼‚è º®ò£«î£, ÜŠð®Šð†ì ï‹º¬ìò Ýê£˜ò£œ - êƒèóðèõˆð£î£œ- Ãì Ü%oî óývòˆ¬î ¹ˆFJ¡ ð£¬ûJ™ ªê£™õîŸ° (º¡) õóM™¬ô. 'ï£Â‹ ªê£™õîŸA™¬ô;ï ‹H‚¬èJ¡ «ðK«ô«ò ªî£ì˜%o¶ ªè£‡´ «ð£!' â¡Áî£¡ Þƒ«è ú£î¬ùJ™ Ü†õ£¡ú£ù Hø° - ',,óˆ¬î'â¡ð¬î ¬õˆ¶M†ì£˜!

எல்லா ரஹஸ்யத்தையும் அவர் சொல்லியிருந்தாரானால் அப்புறம் ராமாநுஜாசாரியார் விசிஷ்டாத்வைதம் என்று ஒன்று ஸ்தாபிக்க அவச்யமே இருந்திருக்காது. அத்வைத ஸித்தாந்தத்தில் ராமாநுஜர் ஏதோ ஒரு இடத்தில் புத்தியாலே கேள்வி கேட்டு கேட்டுப் பதில் கிடைக்காததால்தான் வேறே எந்த தினுசாக நினைத்தால்தான் அவருக்குப் பதில் கிடைத்ததாகத் தோன்றிற்றோ அதை

விசிஷ்டாத்வைதம் என்று வைத்தார். ஸரி, அதாவது எல்லா ரஹஸ்யத்தையும் எல்லாருக்கும் அவிழ்த்து விட்டதா?இல்லை. அதனால் தான் மத்வாச்சார்யார் த்வைத ஸித்தாந்தத்தை ஏற்படுத்தும் படியாயிற்று. அதுவும் புத்தியின் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்லி விடவில்லை.

அதனால்தான் இன்னமும் நிறைய அத்வைதிகள், விசிஷ்டாத்வைதிகள் எல்லாரும் இருந்து கொண்டிருக்கிறோம். எல்லாருமாக ஒரே வாக்குவாதமாகப் பண்ணிக் கொண்டிருக்கிறோம். இப்படி ஒரு பக்கம் நாம் புத்திகார்யமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்தாலும் அந்தந்த ஸித்தாந்தத்திலும் பிற்பாடு வந்தவர்களில் சிலபேர், புத்தியின் உரைகல்லில் தேய்த்துப் பார்த்துத்தான் எடுத்துக் கொள்வதென்றில்லாமல், 'நாம் இப்படி ஸ்மார்த்தனாக, அல்லது ஸ்ரீ வைஷ்ணவனாக, அல்லது மாத்வனாகப் பிறந்திருக்குமோ?நமக்கு யார் ஆசார்ய புருஷரோ அவர் சொன்னதுதான் ஸரி என்ற நம்பிக்கை, விச்வாஸம் கெட்டியாக வைத்து அந்தப்படியே நடப்போம் நினைப்போம்'என்று ச்ரத்தையின் பேரிலேயே அந்தந்த வழிப்படி தொடர்ந்து பண்ணிக் கொண்டுபோய், அததற்கான ஒரு உயர்ந்த அநுபவத்தைப் பெற்றிருக்கிறார்கள்.

இப்படி மற்ற ஸம்பிரதாயஸ்தர்கள் அடையும் அநுபவம் என்ன இருந்தாலும் ஜீவப்ரஹ்ம ஐக்யாநுபவத்திற்குக் குறைந்ததுதான் என்று ஒரு ஸ்மார்த்தன் (அத்வைத ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவன்) சொன்னால் சொல்லிவிட்டுப் போகட்டும். ஆனால் ச்ரத்தையோடு ஸாதனை என்பதாக ஒன்றை அப்யஸிக்காத பெரும்பாலான ஸ்மார்த்தர்களைவிட அந்த இதர ஸம்ப்ரதாய அநுபவிகள் மேலே போனவர்கள்தான். இவன் (ஸ்மார்த்தன்) சொல்லும் உச்சாணிக் கொம்பான நிர்குண ப்ரஹ்மம் அவர்களுக்குத் தெரியாமல் போனாலும், அதுவே ஈச்வரன் என்று ஸகுண ப்ரஹ்மமாகவும் இருக்கிறதல்லவா?அந்த இதர ஸித்தாந்தங்களைச் சேர்ந்த அநுபவிகளுக்கு இந்த ஸகுண ப்ரஹ்மத்துடன் ஏதோ ஒரு தொடர்பு உண்டாகி, ஈச்வராநுபவம் ஏற்பட்டே இருக்கிறது. அதனால் அவர்களுக்கே ஒரு தெய்விக சக்தி, அநுக்ரஹ சக்தி, அருள் நெஞ்சு ஆகியன இருந்திருக்கின்றன. ஆத்ம விஷயமாகவேகூட, சும்மாவுக்காக 'நான்தான் உச்சாணி அத்வைத ஸம்பிரதாயக்காரன்'என்று சொல்லிக் கொண்டு வெறும் சரீரத்தையும், மனஸின் ஒட்டத்தையும் தவிர தன்னுடைய ஆத்மாவைப்பற்றி எதுவும் தெரிந்து கொள்ளாதவனைவிட, 'தங்களுடைய ஆத்மா பரமாத்மாவிடம் பக்தி பண்ணவே ஏற்பட்டது'என்று தீர்மானமாக நினைத்துக் கொண்டிருக்கும் இதர ஸித்தாந்த

அநுபவிகள் எவ்வளவோ மேலே போனவர்கள்தான். ஆத்மா இன்னதென்று எந்தவிதமான அநுபவமும் இல்லாதவனை விட பக்தி என்ற நல்ல விஷயம் நிரம்பிய சுத்த மனஸை ஆத்மா என்று நினைத்துக் கொண்டிருப்பது மேல்தானே?

அப்படி சுத்தமானால் அப்புறம் அந்த மனஸ் நசித்து நிஜமான ஆத்மாநுபவம் ஏற்படவும் முடியும். அப்புறம் ஆகவேண்டியது இருக்கட்டும். இப்போதே தங்களுடைய ஸம்பிரதாய சாஸ்திரங்களை ச்ரத்தையோடு பின்பற்றி அநுபவம் கண்டவர்களுக்கு தெய்வத் தொடர்பு, தங்களுக்கே கொஞ்சம் தெய்வ சக்தி, அருள்பான்மை ஆகியவை ஏற்பட்டு விடுகின்றன. அதனால்தான் எந்த

ஸம்பிரதாயத்திலும் மஹான்கள் என்று பொதுவாக உலகம் போற்றுபவர்களாகப் பல பேர் இருப்பது.

ஒரு கட்டத்தில் புத்தியின் பலத்தை விட்டுவிட்டு ச்ரத்தையின் பலத்தில் போனாலே அநுபவத்திற்கு கொண்டு விடும்படியாகப் பராசக்தியின் 'ஞானபிக்ஷை விளையாட்டு'நடக்கிறது! ஆகையால் அந்த கட்டத்தில் ச்ரத்தை ரொம்ப அவசியம் என்று காட்ட வந்தேன். ஆத்ம வழியில் நல்ல முன்னேற்றம் கண்டுவிட்ட ஸாதகனுங்கூட, தொடர்ந்து இதே வழியில், இதை அநுஸரித்து ஆசார்யர் உபதேசித்தபடி நாம்பாட்டுக்குக் கேள்வி கேட்காமல் போய்க் கொண்டே இருந்தால்தான் லக்ஷ்யத்தை அடைய முடியும். கேள்வி கேட்டால் நம் புத்திக்குத் தானாகவும் பதில் கிடைக்காது;ஆசார்யாரும் புத்திக்குப்புரிகிற விதத்தில் பதில் கொடுக்க மாட்டார், அல்லது முடியாது'என்று ச்ரத்தையின் மேலேயே மேற்கொண்டு ஸாதனையை நடத்திச் செல்ல வேண்டுமென்பதால்தான் மறுபடியும் ச்ரத்தையை ஸாதனாங்கமாக வைத்திருப்பது.

ஆரம்பத்தில் மட்டுமில்லாமல் முடிவு வரையிலுங்கூட, 'நாமே தெரிஞ்சுண்டுடலாம், புரிஞ்சுண்டுடலாம்'என்று இல்லாததாக, 'சாஸ்திரம் இப்படி சொல்கிறதா?குரு இப்படி சொல்கிறாரா?அந்தப்படி பண்ணிக் கொண்டு போவோம், நடுவிலே என்ன நடந்தாலும் நிறுத்தாமல் பண்ணிக் கொண்டு

போவோம். தானே அது லக்ஷ்யத்தில் கொண்டு சேர்த்துவிடும்'என்ற நம்பிக்கை வேண்டும் இந்த ச்ரத்தை ஸாதனையின் அநேக உபாயங்களில் ஒன்று மட்டுமில்லை. இதுதான் உச்சியான உபாயம்': 'ச்ரத்தா ச ப்ரஹ்ம விஜ்ஞானே பரமம் ஸாதனம்'என்றே ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில் ஒரு இடத்தில் ஆசார்யாள்

சொல்லியிருக்கிறார். 'சிரத்தையுள்ளவன்தான் ஞானம் அடைகிறான்:ச்ரத்தாவான் லபதே ஞானம்' என்று.

ஜீவ-ப்ரஹ்ம அபேதத்தைச் சொல்லும் 'மஹா வாக்யம்'எனப்படும் உபநிஷத் மந்த்ரங்களுக்குத் தனிப் பெருமையுண்டு. 'அந்த மஹாவாக்யங்களுக்கேயும் தனிப்பெருமை பெற்றது ஒரு மந்த்ரம் - ஒரு குரு சிஷ்யனுக்குப் பண்ணுவதாகவே நேர்ப்பட அமைந்திருக்கும் ஸாம வேத மஹாவாக்யம்;ஸந்நியாஸியாக இல்லாத கட்டை ப்ரஹ்மசாரிக்கு உபதேசிக்கப்பட்டது'என்று சொன்னேனே, 'அது'என்கிற பரமாத்மாவாகவே 'நீ'என்கிற ஜீவாத்மாவாக இருக்கிறாய் என்று ஆசார்யர் சிஷ்யனுக்குப் பண்ணும் உபதேசந்தான் அது. உபதேசம் பண்ணினவர் அப்பா உத்தாலக ஆருணி. அதை வாங்கிக் கொண்டவன் பிள்ளை ச்வேதகேது. ஒவ்வொரு மந்த்ரமாகச் சொல்லி அதன் முடிவில் 'அதுவே நீ'என்று முத்திரை குத்திக் கொண்டு போகும் அப்பா ரிஷி அதற்கு நடுவில் பிள்ளையிடம், 'ஒரு ஆலம்பழம் கொண்டு வா'என்கிறார்.

'இதோ பகவானே!' என்று பிள்ளை பழத்தை நீட்டுகிறான்.

'பிள'என்கிறார் அப்பா.

'பிளந்தாச்சு பகவானே!' என்கிறான் பிள்ளை.

(இனி தந்தை மகன் உரையாடலை ஸ்ரீ சரணர்கள் இரு பாத்திரங்கள் பேசுவது போலத் தொடர்கிறார்)

'பிளந்த பழத்திலே என்ன பார்க்கிறே?'

'அணு அணுவா விரைகள், பகவானே!'

'ஸரி கொழந்தே, அந்த விரையையும் பிள.'

'பிளந்தாச்சு, பகவானே!'

'உள்ளே என்ன பார்க்கிறே?'

'ஒண்ணுமில்லை, பகவானே!'

'ஒண்ணுமில்லைனு நீ சொல்றதிலேயேதான் கண்ணுக்குத் தெரியாத ஸூக்ஷ்ம ஸத்து இருக்கு. அதிலேருந்துதான் மஹா விருக்ஷமா ஆல மரம் உண்டாய் நிற்கிறது'என்று சொன்ன அப்பா ரிஷி அந்த இடத்தில் பிள்ளையை 'ஸௌம்யா!' என்று குளிர்ச்சியாகக் கூப்பிட்டு 'நான் சொல்றதை நம்பு. அதாவது ச்ரத்தை வை. ச்ரத்தஸ்வ' என்கிறார்.

பிற்காலத்தில் யதீச்வரர்களும் தலைக்கு மேல் வைத்துக் கொண்டு கொண்டாடும் மஹா வாக்யத்தில் முதல் முதலாக உபதேசம் பெறுகிற அத்தனை யோக்யதை உள்ளவனிடம் அந்த உபதேசத்தைப் பண்ணும்போதே 'ச்ரத்தஸ்வ' சொல்ல வேண்டியிருப்பதலிருந்து, கடைசி மட்டும் அதாவது ப்ரத்யக்ஷத்தில் ப்ரஹ்மாநுபவம் உண்டாகிற மட்டும் நம்பிக்கையில் மேலேயே ஏற்க வேண்டியதாகச் சில விஷயங்கள் இருக்குமென்று தெரிகிறது.

விஷயங்களை நம்புவது மட்டுமில்லை;அவற்றைச் சொல்லும் அந்த குறிப்பிட்ட குருவினால் தனக்கு நிச்சயம் வழி திறக்கும் என்ற நம்பிக்கையுந்தான். இது ரொம்ப முக்யமான ஒரு விஷயம். குரு ஞானியாக இருந்தாலும் இந்த லோகத்தில் அவர் பல விதத்தில் - ஈச்வராவதாரங்கள் பண்ணுவது போல - மாநுஷமாக நடிக்கவும் வேண்டிவரும். அதுவும் எவருக்கோ வழி காட்டுகிற உத்தேசத்தில்தான் இருக்கும். ஆனால் அப்படி மாநுஷமாக சிலது பண்ணும்போது

அவரிடமே சிஷ்யனுக்கு ஸந்தேஹம் வந்தாலும் வந்துவிடும். 'இவர் நிஜமா ஞானிதானா?பின்னே ஏனிப்படி ஸாமான்ய மனுஷா மாதிரி பண்றார்?'என்று இப்படி ஸந்தேஹப்பட்டு, அவரால் தனக்கு உய்வு உண்டாக முடியுமா என்று ஸம்சயிக்க மட்டும் ஆரம்பித்து விட்டானானால்

தொலைந்தது! அதுவே (அந்த ஸம்சயமே) விச்வாகாரமாக, ஒரு பேய் மாதிரி அவன் மூளையை ஆக்ரமித்துக் கொண்டு அவனை ஒரு ஸாதனையும் பண்ண விடாமல், 'ஏமாந்து போனோமே, ஏமாந்து போனோமே!என்று ஏங்க வைத்து லட்சியத்தைக் கோட்டை விடச் செய்துவிடும்!அதனால்தான் பகவான் 'ஸம்சயாத்மா விநச்யதி'- ஸந்தேஹப்படுபவன் அழிந்தே போய் விடுகிறான் என்கிறார். 'அச்ரத்ததானச்ச ஸம்சயாத்மா விநச்யதி'என்று முதலில் ச்ரத்தை இழந்தவனான 'அச்ரத்ததான'னை அவர் குறிப்பிட்டுக் கையோடு கையாக 'ஸம்சயாத்மா'என்று சொல்லியிருப்பதைக்

கவனிக்கணும். ச்ரத்தையற்றவனான அச்ரத்ததானன் ம்ருத்யுவின் வசப்படுத்தும் ஸம்ஸாரச் சுழலிலேயேதான் வட்டமடித்துக் கொண்டிருப்பானென்றும் இன்னோரிடத்தில் சொல்லியிருக்கிறார் - 'அச்ரத்ததாநா:புருஷா: ....நிவர்தந்தே ம்ருத்யு ஸம்ஸார வர்த்மநி'. பகவான் இப்படி ஒரே கோபமாக, அவநம்பிக்கைக்காரன் அழிந்து போவான், ம்ருத்யுவிடம் திரும்ப திரும்ப மாட்டிப்பான்'என்று சொல்வதையே, நம்பிக்கைக்காரனை வைத்து ரொம்பவும் ஹிதமாக தமிழ் வசனத்தில் அழுத்திச் சொல்லியிருக்கிறது. 'நம்பினோர் கெடுவதில்லை'அப்படியானால் நம்பாதவர்கள்?அதைச் சொல்வானேன்?எடுத்துக் கொள்ள வேண்டியது நம்பிக்கைதானே, என்று நம் வசனம் விட்டிருக்கிறது. பகவானோ அவநம்பிக்கைக்குத்தான் மநுஷ்யன் ஜாஸ்தி இடம் கொடுக்கிறான் என்பதால் கருணையாலேயே பயமுறுத்திச் சொல்கிறார்!பொய் பயமுறுத்தவில்லை. நம்பிக்கை போனால் அவர் சொல்வது நிஜமாகவே நடந்துதான் விடும். அதற்கு இடம் கொடுக்கவே கூடாது. 'ஒரு குருவிடம் வந்து விழுந்து விட்டோம். அவர் வெளியிலே எப்படித் தோன்றினாலும் தோன்றிவிட்டுப் போகட்டும். நம்மைப் பொறுத்த மட்டில் அவர் மூலமாக விமோசனம் தராமல் ஈச்வரன் கைவிட மாட்டான்'என்ற நம்பிக்கையை - ச்ரத்தையை - மனஸில் ஆணிவேரோட விட்டு சரணாகதி பண்ணிவிட வேண்டும். ஆரம்பத்தில் பாடம் சொல்லித் தரும் வித்யா குருவை விட கடைசியில் (ஸந்நியாஸ) ஆச்ரமம் தரும் தீக்ஷா குருவிடம் இந்த ச்ரத்தா பக்தி - சரணாகதி

ரொம்ப முக்கியம்.

குருவைப் பற்றி தீர விசாரித்துத்தான் ஆச்ரயிக்க வேண்டுமானாலும், ஏமாந்துபோய் ஒரு போலியிடமேகூட போய்ச் சேர்ந்திருக்கலாம். அப்படியிருந்தால்கூட ச்ரத்தை இழக்காமல் அவருக்கே சரணாகதி என்று பண்ணி விட்டால், அவருக்கு ஞானம் வராவிட்டாலுங்கூட, அவர் மூலமாக ஸர்வாந்தர்மியான ஈச்வரன் இந்த சிஷ்யனுக்கு ஞானாநுக்ரஹம் பண்ணி விடுவான்.

நேரே நாமே தெரிந்து கொள்வதில்தான் அது ஸத்யம் என்ற த்ருடமான புத்தி;இப்படி நாமே தெரிந்து கொள்ளாமல், சாஸ்திரம் சொல்லி அதை ஆசார்யன் எடுத்துச் சொல்லி நம்பிக்கையின் மேலே நாம் எடுத்துக் கொள்வதில் அவ்வளவு த்ருட புத்தி இல்லாமலிருப்பது என்றால் அது ச்ரத்தையே இல்லை. 'நம் புத்திக்கு, சிற்றறிவுக்கு, எட்டாததாலேயே இதுதான் நாமாகத் தெரிந்து கொள்ளக் கூடியதை விடவும் உசந்தது;ஸத்யமானது. ஈச்வரனே சாஸ்த்ரக்காரர்களான ரிஷிகளுக்கு 'ரிவீல்'செய்து அவர்கள் நமக்குக் கொடுத்திருக்கும் பெரிய ஸத்யம் என்ற த்ருட நிச்சயம் நமக்கு வேண்டும். அப்பேர்ப்பட்ட நம்பிக்கைக்குதான் ச்ரத்தை என்று பெயர். வேதத்திலுள்ள வார்த்தைகளுக்கு நன்றாக வேர் பிரித்து அர்த்தம் செய்வதாக 'நிருக்தம்'என்று ஒரு சாஸ்திரம் இருக்கிறது. வேதத்தின் ஆறு அங்கங்களில் அது ஒன்று. அதைப் பண்ணியவர் யாஸ்கர். அவர் ச்ரத்தா என்பதற்கு அர்த்தம் பண்ணும்போது அது 'ச்ரத்'என்ற ஒரு வேர்ச் சொல்லும் 'தா'

என்று இன்னொரு வேர்ச் சொல்லும் சேர்ந்து உண்டான வார்த்தை என்கிறார். 'தா'என்றால் 'fix' பண்ணுவது என்று அர்த்தமாகிறது. அதாவது 'த்ருட புத்தியோடு நம்புவது ச்ரத்தை.

'இப்படிப்பட்ட ச்ரத்தை நாம் மனஸில் ஆழ்ந்து நினைக்க வேண்டிய, கண்ணுக்குத் தெரியாத, தத்வத்திடம் இருந்தால்தான் ஒருத்தன் ஸரியாக அம்மாதிரி

நினைப்பான்;இல்லாதவன் அப்படி நினைக்கவே முடியாது

என்று சாந்தோக்யத்தில் மந்திரமிருக்கிறது - "எப்போது சிரத்தை வைக்கிறானோ அப்போதே ஸரியாக நினைப்பது"என்று.

ப்ரஹ்ம வித்யையை ச்ரத்தை உள்ளவர்களுக்கே உபதேசிக்க வேண்டுமென்று முண்டகோபநிஷத்தில் இருக்கிறது. யார் யார் அந்த வித்யைக்கு அதிகாரிகள் என்று அது பல யோக்யதாம்சங்களைச் சொல்லும்போது, க்ரியா வந்தர்களாக, ச்ரோத்ரியர்களாக, ப்ரஹ்மத்திலேயே நிலை பெறும் தாபமுடையவர்களாக, ச்ரத்தையுள்ளவர்களாக இருக்கிறவர்களே அதிகாரிகள் என்று சொல்கிறது. ப்ரச்னோபநிஷத்திலும் ஆத்மாவைத் தேடிக் கொண்டு போகிறவர்கள் தபஸாலும், ப்ரஹ்மசர்யத்தாலும், ச்ரத்தையாலும், வித்யையாலும் அதற்குத் தகுதி பெற்றவராகிறார்களென்று இருக்கிறது.

கீதையில் தெய்வகுணம், அஸுரகுணம் ஆகியவற்றை ஒரு அத்யாயத்தில் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணிவிட்டு முடிக்கிற இடத்தில், 'சாஸ்த்ர விதியை மீறித் தன்னிஷ்டப்படி பண்ணுகிறவனுக்கு ஸித்தியும் கிடையாது. ஸுகமும் கிடையாது, பரகதியும் கிடையாது. அதனால் அர்ஜுனா!சாஸ்த்ரத்தையே ப்ரமாணமாக வைத்துக் கொண்டு என்ன செய்யலாம், என்ன செய்யப்படாது என்று வழிவகுத்துக் கொள்'என்கிறார். இப்படிச் சொன்னவர் அடுத்த அத்யாய ஆரம்பத்திலேயே, சாஸ்த்ர ஸம்பந்தமே இல்லாமல் கூட மநுஷ்யனின் பிறவிக் குணமாக ஏதோ ஒரு தினுஸான ச்ரத்தை இருக்க முடியும் என்று சொல்லி, சாஸ்த்ர ஸம்பந்தமில்லாத அப்படிப்பட்ட ச்ரத்தையில் கூட ரஜஸ் , தமஸ் என்ற கெட்ட தினுஸுகள் மாத்ரமில்லாமல் ஸத்வமானாகவும் ஒரு தினுஸு இருக்கிறது என்கிறார். இதிலிருந்து ச்ரத்தைக்கு உள்ள தனியான இடமும் பெருமையும் தெரிகிறது.

சாஸ்திரத்திலும் குரு வாக்யத்திலும் தளராத ச்ரத்தையை ஆசார்யாள் எங்கே பார்த்தாலும் வலியுறுத்திக் கொண்டே போவார்.

ஸாதனா க்ரமத்தில் 'சமாதி ஷட்க ஸம்பத்'என்பதில் சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ஸமாதானம் என்ற ஐந்தோடு

ஆறாவதாக இந்த ச்ரத்தையையும் ஆசார்யாள் சேர்ந்திருக்கிறார். ஆனால் ஐந்துக்கப்புறம் ஆறாவதாக இது என்றில்லாமல், முதல் நாலை ப்ருஹதாரண்யகத்தில் சொல்லியுள்ள ஆர்டரை மாற்றாமல் சமம், தமம், உபரதி, திதிக்ஷை என்று அப்படியே வைத்துக் கொண்டு, திதிக்ஷைக்கு அப்புறம் ஐந்தாவதாக ச்ரத்தையை வைத்து இதற்கப்புறம்

ஸமாதானம் என்று முடித்திருக்கிறார்.

'ஸமாதானம்'என்பதற்குள்ள பல அர்த்தங்களில் ஒன்று, ஸந்தேஹங்களை நிவிருத்தி பண்ணி உண்மையான விஷயத்தை ஸ்தாபிப்பது என்பதாகும். ஒரு மதத்தில் ஒரு கொள்கை சொன்னால் இதர மதஸ்தர் அதற்கு ஆட்சேபமாக வாதம் செய்வார். அதற்குப் பேர் 'பூர்வ பக்ஷம்'. அப்புறம் இந்த மதக்காரர் அந்த ஆக்ஷேபத்துக்கெல்லாம் பதில் சொல்லி, ஸமாதானம் சொல்லி, தன் கட்சியையே நிலை நாட்டுவார். அதற்குப் பேர் 'ஸித்தாந்தம்'. இதர மதஸ்தரின் பூர்வ பக்ஷ

வாதங்களைக் கேட்கும்போது இந்த மதத்தில் ஸித்தாந்தம் செய்யப் போகிறவருடைய சிஷ்யர்களுக்கே, 'இவர் கட்சி தப்புதானோ?பூர்வபக்ஷி சொல்வதுதான் ஸரியோ?'என்று தோன்றக்கூடும். இதுவும் அவநம்பிக்கையில், அதாவது அச்ரத்தையில் சேர்ப்பதுதானே?அந்த அச்ரத்தையை குரு சொல்லும் 'ஸமாதானம்'தான் போக்குகிறது.

'ச்ரத்தை'என்று ஒரு ஸாதனாங்கத்தை ஆசார்யாள் சொல்லும்போதே அதில் அந்தர்கதமாக (உட்கிடையாக) அச்ரத்தையும் வந்துவிடுகிறது!ஒரு விஷயத்தைச் சொல்லி 'இதைப் பற்றி ஸந்தேஹப்படாதேள்!' என்று சொன்னால், உடனே அதுவரைக்கும் ஸந்தேஹப்படாதவர்களுக்குங் கூடக் கொஞ்சம் யோசனை உண்டாகிவிடும்!நம்பிக்கை என்பது அவநம்பிக்கையைத் தவிர்க்க முடியாத ப்ரதங்கமாக (எதிர் அங்கமாக)க் கொண்டிருக்கிறது. அந்த அவநம்பிக்கையை, அச்ரத்தையை எதிர்த்துப் போராடி ஜயிக்கும் கட்டத்திற்குப் போவதே 'ச்ரத்தை'என்ற ஸாதனாங்கம். அப்புறம் ஜயித்தே விட்ட நிலையில்

ஸமாதானமாயிருப்பது ஸமாதானம்!சண்டை முடிந்தால் ஸமாதானந்தானே?நடைமுறையிலேயே எல்லாரும் சொல்கிறது 'சண்டை - ஸமாதானம்'என்பது தானே?

அவநம்பிக்கையோடு நம்பிக்கை சண்டை போடக் கொஞ்சமாவது இடமிருக்கும் ஸ்டேஜில் 'ச்ரத்தை'அதற்கப்புறம் 'ஸமாதானம்'- சண்டையேயில்லாமல் 'ஸெட்டில்'ஆன ஸ்டேஜ்.

இதையே மாற்றிச் சொன்னால் ஸமாதானத்திற்கு முன்னால் ச்ரத்தை. அதனால்தான் 'பேஸிக்'காக ஆரம்பத்திலிருந்தே இருக்க வேண்டிய ச்ரத்தையை ஒருத்தன் ஆச்ரமம் வாங்கிக் கொள்ளப் போவதற்கு முன்னாடி 'ஹையர் க்ரேடி'லும் சொல்லி ஒரு ஸாதனாங்கமாக வைத்து விட்டால் தேவலையே என்று ஆசார்யாள் நினைத்தபோது ஸந்நியாஸ தீக்ஷைக்கு மனஸு நன்றாக ஸெட்டிலாகிவிடும் 'ஸமாதான'த்திற்கு முன் அதை வைத்தால் பொருத்தமாயிருக்குமென்று நினைத்து, ஷட்க ஸம்பத்தில் சம-தம-உபரதி-திதிக்ஷைகளைச் சொல்லிவிட்டு அடுத்ததாற்போல் அதை வைத்திருக்கிறார் என்கலாம்.

சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது;அப்படியும் விடாமல் ஏறிப் ஏறிப்

பார்த்து அப்யாஸம் பண்ணிச் சாண் ஏறினால் சாணளவே சறுக்குகிறது;மேலும் அப்யாஸத்தினால் சாண் ஏறினால் முக்கால் சாண்தான் சறுக்குகிறது;அரை சாண் தான் சறுக்குகிறது என்று ஸாதனை போவதில் முன்படி பின்படி என்றே ரொம்பவும் பிரித்துச் சொல்ல முடியாதுதான். மூன்றாம், நாலாம் படியிலிருந்துகூட முதல் படிக்கு உருளலாம்!ஸாதனா பலம், ஸங்கல்ப பலம், க்ருபா பலம் ஜாஸ்தியாக ஆகத் தவளை மாதிரி முதல் படியிலிருந்தே நாலாம் படிக்குக்கூடத் தாவலாம்!இப்படி மேலும் கீழுமாக, அடிக்கடி நான் சொல்லி வந்தது போல 'ஸைட்-பை-ஸைட்'கலந்து கலந்தும், ஸாதனையின் அங்கங்கள் இருந்தாலுங்கூட, 'லாஜிக'லாக அவற்றைக் கொஞ்சம் ஒரு சீரான வரிசையில் வைத்துப் பார்க்கும்

விதத்தில் ஆசார்யாள் வழியமைத்துக் கொடுத்திருப்பதில் இப்படி ச்ரத்தை ஸமாதானத்திற்கு முன்படியாக இருக்கிறது.

ஸமாதானத்திற்கு தீர்க்கமான அர்த்தம் - ஆசார்யாளே கொடுத்த டெஃபனிஷன் - இருக்கிறது. அதை அப்புறம் சொல்கிறேன். முதலில் ச்ரத்தையை எப்படி டிஃபைன் பண்ணியிருக்கிறாரென்று பார்த்து விடலாம். அதற்கு முந்தி, ஸமாதானத்திற்கு முன்னாடி அதை வைத்ததற்குக் காரணம் பார்த்தது போல, திதிக்ஷைக்கு அப்புறம் வைத்ததற்கும் பார்க்கலாம்.

நித்ய அநித்ய வஸ்து விவேகம் பண்ணியதால் அநித்யம் என்னவென்று நன்றாக உறுதிப்பட்ட அளவுக்கு நித்யத்தைப் பற்றி உறுதி ஏற்பட்டிருக்காது. நித்யம்

என்றால் ஆத்மாதானே?ஒன்றை அநுபவித்தாலன்றி அதைப்பற்றி முழு உறுதி எப்படி ஏற்படும்? ஆனால் ஆத்மாவை அநுபவிப்பதோ கடைசி கடைசியாகவே ஏற்படுவதல்லவா?விவேசனம் பண்ணியதில் - ஆத்ம வஸ்து விஷயமாக வித்யா குருமார்களின் உபதேசங்கள் கேட்டதில், உபநிஷத் மாதிரி புஸ்தகங்கள் - ஆசார்யாள் க்ரந்தங்கள் படித்து விவேசனம் பண்ணியதில் ஆத்மா என்று ஒன்று இருக்க வேண்டும். அது ஸச்சிதாநந்தகனமாக இருக்க வேண்டும் என்றெல்லாம் புத்தி மட்டத்தில் ஒரு உறுதி பிறந்திருக்குமென்றாலும் அநித்ய வஸ்துக்களை அநுபவத்திலேயே தெரிந்து கொள்வதால் அவை அநித்யந்தான் என்று நிச்சய உறுதி பெறுகிறாற்போல ஆத்மா விஷயமாகத் தெளிவு பெற முடியாது. ஆக எதில் சேரணுமோ அதைத் தெரிந்து கொள்வதைவிட, எதைக் கழித்துக் கட்ட வேண்டுமென்பதையே நன்றாக தெரிந்து கொள்வோம். அதனால் தள்ள வேண்டிய அநித்யத்தை வெறுக்க ஆரம்பிப்பதில் வைராக்யம் ஆரம்பிக்கிறது. அப்புறம் அநாத்ம - அநித்ய வஸ்துக்களைத் தேடிப் போகாமல் இந்த வைராக்யத்தாலேயேதான் இந்த்ரியங்களை அடக்குவதும் மனஸை அடக்குவதுமான தம சமங்கள். ஒரு மாதிரி அநித்ய வஸ்துக்களில் அநுபோக அரிப்புப் போய் மனஸ் வெறுமையாக ஆகிற உபரதி, அடுத்தாற்போல. இங்கேயும் ஆத்மாநுபவம் இல்லை. அநாத்ம அநுபவக் கஷ்டம் இல்லாத வெறுமையை தவிர ஆத்மாநுபவம்

ஏற்பட்ட ஆனந்த கனமில்லை. அப்போது வெளியிலிருந்து பெரிசான ஸுகதுக்காதிகள் தாக்கினாலும் பாதிக்கப்படாமல் ஸஹித்துக் கொள்வதான திதிக்ஷை. இதன்போதும் அநாத்ம நிராகரண ஸைடில்தான்

முன்னேற்றமே தவிர, அடைய வேண்டிய அநுபவானந்தத்தில் இல்லை.

இங்கே இன்னொன்றையும் சொல்லத்தான் வேண்டும். அதாவது ஆத்மானந்தத்தின் லேசான சாயையும் ஆரம்பித்திலிருந்தே கொஞ்சம் கொஞ்சம் இருக்கத்தான் செய்யும். வெய்யில் அடிக்கும்போதே எங்கேயோ பெய்கிற மழையினால் அப்பப்போ ஒரு ஜில் காற்று வருகிறாற்போல அது இருக்கும்!ஈச்வரன்தான் அப்படிக் கொஞ்சம் அனுப்பி வைப்பான். அப்புறம் தூவானம், தவிட்டுத் தூற்றல் மாதிரி முன்னேற்றம் அவன் அனுக்ரஹத்தில் கிடைத்துக் கொண்டிருக்கும். ஆனாலும் அடைமழையாகப் பிடித்துக் கொள்ளாது. நிறைய வெய்யில், நடுப்புற நடுப்புற கொஞ்சம் குளிர்காற்று. ஒன்றும் இரண்டுமாகத் தூற்றல் என்றே இருக்கும். எத்தனையோ ஜன்மாந்த்ர கர்மா தீர்ந்துதான் ஆத்மாநுபவமென்றால் இப்படித்தானே இருக்க முடியும்?ஆனாலும் அத்தனை ஜன்மத்தில் நாம் ஆத்மாவை விட்டு அநாத்மாவிலேயே உழன்று கொண்டிருந்தது நமக்குப் பெரிசாகத் தெரியாமல், இப்போது 'இத்தனை காலம் நாம் ஸாதனை என்று பண்ணியும் நின்று நிலைத்த பலனாக ஒன்றும் காணோமே!ப்ராணன் போகிற பசிக்குப் பருக்கை சாதம் கட்டுகிற மாதிரித் தெரிந்து, அதுவும் ஓடிப்போய் விடுகிறது?லக்ஷ்ய ஸித்தி என்பது ஒருநாளும் வருமென்று தோன்றவில்லையே!'என்று - கடப்பாரையைத் தின்றது பெரிசாகத் தெரியாமல் சுக்குக் கஷாயம் குடித்ததுதான் பெரிசாகத் தெரிந்து - ஏக்கமும், ஏமாற்றமும் உண்டாகும்!ஓரளவுக்கு நல்ல ஸஹிப்புத்தன்மை - திதிக்ஷை அதுதான் - வந்ததாக நினைத்துக் கொண்டிருக்கும் ஸமயத்தில் இப்படி ஸஹித்துக் கொள்ள முடியாத ஆதங்கம், எப்படி வந்தது என்றே தெரியாமல், ஏற்படுவதுண்டு!அநுக்ரஹம் பண்ணும் ஈச்வரனே பரீக்ஷையும் வைப்பதில்தான் இப்படி ஏற்படுவது!அந்த ஸமயத்தில் நம்பிக்கை தளர்ந்து ஸாதனையை விட்டு

விடாமலிருப்பதற்காகத்தான் திதிக்ஷைக்கு அப்புறம் ச்ரத்தையை - ஹையர் லெவல் ச்ரத்தையை - வைத்தது.

ச்ரத்தைக்கு ஆசார்யாள் எப்படி லக்ஷணம் சொல்லியிருக்கிறாரென்றால்:

**சாஸ்த்ரஸ்ய குருவாக்யஸ்ய ஸத்ய புத்த்யாவதாரணா |**

**ஸா ச்ரத்தா கதிதா ஸத்பிர் - யயா வஸ்தூபலப்யதே ||**

"சாஸ்திரமும் குருவாக்யமும் ஸத்யமே என்று புத்தியினால் உறுதியாகத் தீர்மானம் பண்ணுவதே ச்ரத்தை என்று ஸத்துக்களால் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்ரத்தையினால்தான் மெய்ப்பொருள் அடையப்படுகிறது"என்று அர்த்தம்.

தானே 'அதாரிடி'யாக இப்படிச் சொல்லவில்லை, ஸத்துக்களாகிற மேன்மக்கள் ஏற்கெனவே ஸொன்னதைத்தான் தானும் இப்போது எடுத்துச் சொல்வது என்று விநய குணத்தோடு சொல்கிறார்.

புத்தி வேலையைத் தள்ளிவிட்டு நம்பிக்கையிலேயே ஒன்றை எடுத்துக்

கொள்வதுதான் ச்ரத்தை என்று பொதுவாகச் சொல்வது. இங்கேயோ, சாஸ்திரமும் குரு வாக்யமும் ஸத்யம் என்று புத்தியினால் உறுதிப் படுத்திக் கொள்வதை - 'புத்த்யவதாரண' த்தை - அப்படிச் சொல்லியிருக்கிறது. ஆனாலும் பொதுவாகச் சொல்வதற்கு இது முரணில்லை.
எப்படியென்றால் - 'புத்தியால் உறுதிப் படுத்திக் கொள்வது'என்பதற்கு இங்கே, 'சாஸ்திரத்தையும், குருவாக்யத்தையும் சரிதானா என்று சொந்த புத்தியால் ஆராய்ச்சி பண்ணிப் பார்த்து சரியாகப்பட்டாலே எடுத்துக் கொள்வது'என்று அர்த்தமில்லை. பின்னே என்ன அர்த்தமென்றால், புத்தியே, நமக்கு எல்லா விஷயமும் தெரிய முடியாது;நம்மால் எல்லாவற்றையும் ஜட்ஜ் பண்ண முடியாது;பரலோக விஷயமாகவும் ஆத்ம ஸம்பந்தமாகவும் நமக்குப் புலப்பட முடியாத விஷயங்களை ஸொந்த அநுபவத்தினாலும், ஆச்வரநே கொடுத்த ஞான

திருஷ்டியினாலும் தெரிந்து கொண்டு சாஸ்திரக்காரர்களும், சாஸ்திரஜ்ஞரான குருவும் சொல்வதைத்தான் ஆராய்ச்சி பண்ணாமல் எடுத்துக் கொள்ள வேண்டும்'என்று உறுதிப் படுத்திக் கொள்வதைத்தான் 'புத்தியின் அவதாரணம்'என்று சொல்லியிருப்பது. புத்தி வேலை செய்து பார்த்து உண்மையை உறுதி செய்துகொள்வது இல்லை;புத்தி 'தனக்கு இங்கே வேலை இல்லை'என்று உறுதி செய்து கொள்வது!

புத்தி சக்தியே இல்லாதவன் எதை வேண்டுமானால் நம்பி ஏற்றுக் கொள்கிற மாதிரி இது இல்லை. அப்படியிருந்தால் ஏமாந்தும் போய்விடுவான். 'நித்யாநித்ய வஸ்து விவேகம்'என்று ஆரம்பிக்கும்போது நல்லது கெட்டதை அலசி ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்ப்பதைத்தானே சொன்னது?அதற்கு புத்தி சக்தி பலமாயிருந்தால்தானே முடியும்?புத்தியால் ஜட்ஜ் பண்ணக்கூடிய விஷயங்களை ஸரியாக ஜட்ஜ் பண்ணியே ஏற்றுக்கொள்வதற்காக இவன் (ஸாதகன்) புத்தி சக்தியை விருத்தி பண்ணிக் கொண்டு அதைக் கூராக, விழிப்பாக வைத்திருக்கத்தான் வேண்டும். ஆனால் இவனுடைய புத்திக்குப் புரிபடாததாக ஒன்றை சாஸ்திரங்களும், குருவும் சொல்லும்போது 'இங்கே தன் புத்தி வேலை பண்ணாமல், உபதேசத்தை அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டும்'என்று உறுதியோடு இருக்க வேண்டும். தனக்குள்ள புத்தி சக்தியைக் காட்டுவதில் உறுதியாயிருப்பதைவிட இப்படி காட்டாமலிருப்பதில் உறுதியாயிருப்பதுதான் கஷ்டம்!ரொம்பவும் விநயம் இருந்தால்தான் அது முடியும். அப்படி விநயத்தை வளர்த்துக் கொண்டு, ஒரு மண்டுவின் நம்பிக்கையாக இல்லாமல் புத்திமானின் நம்பிக்கையாக சாஸ்திர வாக்யத்தையும் குருவாக்யத்தையும் எதிர்க் கேள்வி இல்லாமல் எடுத்துக் கொள்வதுதான் இங்கே சொல்லப்பட்டிருக்கும் ச்ரத்தை.

'அவதாரணம்' என்றால் 'ஆழ்ந்த உறுதி'என்று ஒரு அர்த்தம். 'லிமிட் பண்ணுவது' என்று இன்னொரு அர்த்தம். இரண்டு அர்த்தத்தையும் கூட்டி இங்கே எடுத்துக் கொள்ளலாம். புத்தியானது, 'இது தன்னுடைய எல்லைக்கு அப்பாற்பட்டது'என்று தன்னை லிமிட் பண்ணிக் கொண்டு,

சாஸ்திர- குருவாக்யங்கள் ஸத்யமே என்ற ஆழ்ந்த உறுதியோடு இருப்பதே ச்ரத்தை என்று எடுத்துக் கொள்ளலாம்.

ச்ரத்தையாலேயே ஸத்யத்தைப் பிடிக்க முடியும் என்பதைத்தான் 'யயா வஸ்து உபலப்யதே'என்கிறார். 'யயா'- எவளால்;ச்ரத்தையால் என்பதைத்தான் 'எவளால்'என்றிருக்கிறது. எவளால் 'வஸ்து'என்கிற மெய்ப்பொருள் அடையப்படுமோ - 'உபலப்யதே'என்றால் அடையப்படும் - எவளால் மெய்ப்பொருள் அடையப்படுமோ அவளே 'ச்ரத்தை' எனப்படுபவள்;'ஸா'-அவளே : 'ச்ரத்தா'- ச்ரத்தை.

'வாஸ்தவம்' என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். 'நிஜந்தான்'என்று சொல்கிறதற்குப் பதில் 'வாஸ்தவந்தான்'என்கிறோம்.

'நிஜம்'என்ற வார்த்தைக்கு (சிரித்து) நிஜமான, வாஸ்தவமான அர்த்தம், நாம் சொல்கிற அர்த்தமில்லை!நாம் ஸத்யம், உண்மை என்ற அர்த்தத்தில் 'நிஜம்'என்ற வார்த்தையைச் சொல்கிறோம். அதற்கு அப்படி அர்த்தமில்லை. 'தன்னியற்கையாக இருப்பது', 'தனக்கே சொந்தமானது'என்பதுதான் அதற்கு ஸரியான அர்த்தம்.

பின்னே நாம் ஏன் இப்படி அர்த்தம் பண்ணிக் கொள்கிறோமென்பதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது. ஒருத்தர் வேஷம் போடும்போது இயற்கையாக இல்லாமல் செயற்கையாகப் பண்ணுகிறார். வேஷம் கலைந்தால் இயற்கையாக, அதாவது நிஜமாகிறார். வேஷம் என்பது பொய். 'எல்லாமே வெறும் வேஷம்' என்கிறபோது பொய் என்ற அர்த்தத்தில்தானே சொல்கிறோம்?'வேஷம்'பொய் என்றால், அதற்கு எதிர்பதமாக இருக்கும் 'நிஜம்'மெய் என்று எடுத்துக் கொண்டுதான் நாம் நிஜம் என்பது ஸத்யம் என்பதற்கு இன்னொரு வார்த்தையே என்று நினைத்துச் சொல்லி வருகிறோம். அது இருக்கட்டும் -

'வாஸ்தவம்'பற்றிச் சொன்னேன். 'வாஸ்தவம்'என்றால்

ஸத்யமான விஷயம் என்று எடுத்துக் கொள்கிறோம். அது சரிதான். அந்த வார்த்தை 'வஸ்து'என்பதிலிருந்து உண்டானது. 'வஸ்து'வின் தன்மை எதுவோ அது 'வாஸ்தவ ம்''வஸ்து'என்றால் பொருள்கள், things என்று மட்டுமே நாம் அர்த்தம் பண்ணிக் கொண்டாலும், அந்த அர்த்தமும் ஸரிதான் என்றாலும், அதற்கு முக்கியமான அர்த்தம் 'ஸத்யமாக இருக்கும் ஒன்று'என்பதுதான். பொருள்கள் வெறும் கல்பனையில்லாமல் உண்மையிலேயே இருப்பதால் அவற்றுக்கும் 'வஸ்து'என்று பெயர் ஏற்பட்டது. வஸ்து என்றால் ஸத்யமாக இருக்கும் ஒன்றாகையால்தான் உண்மைத்தன்மை உள்ளதை 'வாஸ்தவம்'என்கிறோம்.

நாம் பார்த்துக் கொண்டிருக்கும் ச்லோகத்தில் ச்ரத்தையாலேயே ஸத்யப் பொருள் அடையப்படும் என்பதை 'யயா வஸ்து உபலப்யதே'என்று சொல்லியிருக்கிறது. நாம் கல்பனையாக இல்லாமலிருக்கும் எல்லாப் பொருள்களையும் வஸ்துக்கள் என்று சொன்னாலும் ஞானம் வரும்போது இவை அத்தனையும் மாயா கல்பனைதான் - என்பதாக அடிபட்டுப் போய்விடும். ஸத் என்றும் மெய்ப்பொருள் என்றும் சொல்லப்படும் பிரம்மம் ஒன்றுதான் ஸத்யமாக

உள்ளது என்பதாக அப்போது நிற்கும். அதாவது அது ஒன்றுதான் நிரந்தரமான வஸ்து எந்பதாக நிற்கும். அதை அடைவதற்கு ச்ரத்தை அவசியம், அத்யாவசியம் என்பதைத்தான் ச்ரத்தையினாலேயே வஸ்து அடையப்படுகிறது என்கிறார்.

இங்கே, புத்தி தன்னுடைய குறுகிய எல்லையைப் புரிந்து கொண்டு சாஸ்த்ர வாக்யமும் குரு வாக்யமும் ஸத்யமென்று உறுதி கொள்வதுதான் ச்ரத்தை என்றவர், 'அபரோக்ஷாநுபூதி'யில் டெஃபனிஷன் கொடுக்கும்போது புத்தியின் கார்யத்தைப் பற்றி நாம் புத்திசாலித்தனமாகவோ அசட்டுத்தனமாகவோ ஒன்றும் வியாக்யானம் பண்ணிக் கொள்ள இடம் கொடுக்காமல் ஸிம்பிளாக, எல்லோரும் பொதுவாக நினைக்கிறபடியே லக்ஷணம் சொல்லியிருக்கிறார்.

**நிகமாசார்ய வாக்யேஷு பக்தி : ச்ரத்தேதி விச்ருதா**

'நிகமம்'என்கிற வேத சாஸ்திரங்களின் வாக்கிலும் ஆசார்யனின் வாக்கிலும் பக்தி காட்டுவதுதான் ச்ரத்தை என்று அர்த்தம். பக்தி என்றால் ப்ரியத்தோடு நம்பிக்கை வைத்து ஒன்றில் ஈடுபட்டிருப்பது.

பக்தி-ச்ரத்தை என்று சேர்த்துச் சொல்வது வழக்கம். அங்கே 'பக்தி என்பதிலேயே ப்ரிய ஆஸ்பெக்டையும், 'ச்ரத்தை'என்பதில் நம்பிக்கை ஆஸ்பெக்டையும் மட்டும் எடுத்துக் கொண்டு அப்படிச் சொல்கிறோம். ஆனால் ஒன்றிடம் ப்ரியம் இருந்தால்தான் அதனிடம் நம்பிக்கை வரும்;ஒன்று நம்பகமானதாக இருந்தால்தான் அதனிடமும் ப்ரியமும் வரும். இப்படி இரண்டும் பிரிக்க முடியாமலிருப்பதால் பக்தியும் ச்ரத்தையும் ஒன்றே என்றாகி விடுகிறது. சாஸ்திரமும் குருவும் சொல்லும் விஷயங்களில் நாம் ஹ்ருதய பூர்வமாக ஈடுபட்டிருப்பதுதான் ச்ரத்தை.

---



## ஸமாதானம்

'ச்ரத்தை'க்கு அப்புறம் 'ஸமாதானம்'என்பதைச் சொல்லியிருக்கிறார். 'சமாதி ஷட்க ஸம்பத்தி'என்று ஆறு சொன்னதில் இது ஆறாவது. 'ஸமாதானம்', 'ஸமாதி'என்ற இரண்டு வார்த்தைகளும் ஒரே அர்த்தமுள்ளவை. 'சமாதி'(சமம் முதலான) ஆறு ஆத்மிக ஸம்பத்துக்கள் 'ஸமாதி'யில் முடிகின்றன! ஆனாலும் -

ஸமாதி என்பதே கடைசியான லக்ஷ்ய ஸ்தானம். லக்ஷ்யமான ப்ரம்மத்தில் அப்படியே ஒன்றிப் போயிருக்கிற நிலையே ஸமாதி. ஆகையால் அது 'ஸாதனை'என்று ஒருவன் பண்ணுவதற்குள் வரும் விஷயமில்லை. ஸாதனையின்

முடிவில் பெறும் ஸித்தி நிலையே அது. ஆனபடியால் அதை ஆசார்யாள் ஞான மார்க்கத்தின் இரண்டாவது ஸ்டேஜான ஸாதன சதுஷ்டயத்திலும் சொல்லவில்லை;அதற்கப்புறம் மூன்றாம் ஸ்டேஜில் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு செய்ய வேண்டியவற்றிலும் ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் என்று சொல்லும் அப்யாஸங்களோடு இதையும் இன்னொன்றாகச் சொல்லவில்லை. இத்தனை ஸாதனையும் பண்ணிய பலன் அது. அங்கே, அந்த ஸமாதி நிலையில் அதை ஒருத்தன் அப்படியே அநுபவித்துக் கொண்டிருப்பானே தவிர ஸ்வய முயற்சியாக ஸாதனை என்று எதையும் பண்ண மாட்டான்;பண்ண முடியாது;பண்ண வேண்டிய அவச்யமுமில்லை!அதனால் 'ஸமாதி'என்பதை ஆசார்யாள் ஸாதனா க்ரமத்தில் அங்கமாகச் சொல்லவில்லை. ஆனாலும் -

ச்ரத்தையில் இரண்டு 'க்ரேட்'(grade), பக்தியில் இரண்டு 'க்ரேட்'என்கிறாற்போலவே, இப்போது நான் சொன்ன ஸமாதி ஹையர் க்ரேடாகவும், அதே போன்ற இன்னொன்று லோயர் க்ரேடாகவும் இருக்கின்றன. இந்த லோயர் க்ரேடைத்தான் சமாதி ஷட்க ஸம்பத்தியில் கடைசியானதான 'ஸமாதானம்'என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். 'ஸமாதி'என்றால் லக்ஷ்யத்திலேயே சொக்கிச் சொருகி ஒன்றாகப் போய்விடுவதைத்தான் பொதுவாக நினைப்பார்களாதலால் வித்யாஸம் தெரியும் படியாக இங்கே 'ஸமாதானம்'என்று பேர் கொடுத்துச் சொல்லியிருக்கிறார்.

ப்ருஹதாரண்யகத்தில் யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி சொன்ன ஐந்து சமாசாரங்களோடு ச்ரத்தை என்பதையும் சேர்த்து ஆசார்யாள் ஆறு ஸம்பத்துக்களாக வைத்தாரென்று சொன்னேனல்லவா?யாஜ்ஞவல்க்யர் அந்த ஸமாசாரங்களை லக்ஷணமாகக் கொண்ட ஆஸாமியை 'சாந்தன், தாந்தன், உபரதன்'என்றெல்லாம் சொல்லிக் கொண்டு போகிறார். ஆசார்யாள் அந்த ஆஸாமிக்கு லக்ஷணமாக இருக்கும் ஸமாசாரங்களை 'சமம், தமம், உபரதி' என்றெல்லாம் ஸாதனாங்கமாகச் சொல்லியிருக்கிறார். யாஜ்ஞ்யவல்க்யர் கடைசியாக அந்த ஆஸாமியை 'ஸமாஹிதன்'என்கிறார். அவன் எந்த லக்ஷணத்தால் ஸமாஹிதனாகிறோனோ அந்த

ஸமாசாரத்தைத்தான் ஆசார்யாள் 'ஸமாதானம்'என்கிறார். ஸம+ஆஹித= ஸமாஹித. ஸம+ஆதான= ஸமாதான.

'ÝUî, Ýî£ù'â¡ø Þó‡´ õ£˜ˆ¬îèÀ,°‹ å«ó Üˆî‰î£¡ - å¼ Þì̂F™ «ê˜ˆ¶ ¬õŠð¶;G¬ôò£è, àÁFò£è ¬õŠð¶'â¡ð«î Þó‡®Ÿ°‹ Üˆî‹.

'ஆஹிதாக்னி'என்று கேள்விப்பட்டிருக்கலாம். 'ஆஹிதாக்னி வம்சம்'என்று தங்களைப் பெருமையாகச் சொல்லிக் கொள்பவர்களுண்டு. அக்னியைக் காலம் தப்பாமல் குண்டத்தில் சேர்த்து வைத்து தன்னுடைய க்ருஹத்தில் அதனுடைய ஸாந்நித்யத்தை நிலையாக உறுதிப் படுத்திக் கொண்டவர்தான் 'ஆஹிதாக்னி'. ப்ரஹ்மசாரி தினமும் செய்யும் அக்னி கார்யத்திற்கு 'ஸமிதாதானம்'என்று பேர் சொல்கிறோம். ஸமித்+ஆதானம் தான் 'ஸமிதாதானம்'. அவன் ஸமித்தை (சுள்ளியை) அக்னியில் சேர்த்து வைக்கிறான். சேர்த்து வைப்பது, ஒன்றில் கொண்டு போய் வைப்பது 'ஆதானம்'.

'ஸமாதானம்'என்பதை அப்யாஸம் பண்ணுவதால் 'ஸமாஹிதன்'எனப்படுபவன் எதை எங்கே சேர்த்து வைத்து நிலைப்படுத்துகிறான்?'ஸம ஆதானம்'தான் ஸமாதானம். அது என்ன 'ஸம ஆதானம்?' .

'úñ‹'â¡ø£™ 'ß,õ™', ãŸø Þø,èƒèœ Þ™ô£ñL¼Šð¶ â¡Á â™«ô£¼,°‹ ªîK‰F¼,èô£‹. «õ«ø ðô Üˆîƒèœ à‡´. º¿ê£ùî£è, ðKÌ˜íñ£è Þ¼ŠðîŸ°‹ 'úñ‹'â¡«ø «ð˜.

'ஸமாதானம்'என்னும்போது ஒருத்தனுடைய சித்தத்தைப் பரிபூர்ணமாக ஒரே இடத்தில் சேர்த்து வைப்பது என்று அர்த்தம். கொஞ்சங்கூட அது அந்தண்டை, இந்தண்டை ஓடாமல் சேர்த்து வைக்கணும். ஒரே ஸமயத்தில் சித்தம் பல தினுஸாகக் கவடு விட்டுக் கொண்டு பலவற்றை நினைக்கிறதல்லவா?அப்படி விடாமல் ஒருமுகப்படுத்தி நிலையாக உறுதி கொள்ளும்படி செய்யவேண்டும். அதுதான் 'ஸம ஆதானம்', 'ஸமாதானம்'. அப்படிச் சித்தத்தை நன்றாகச் சேர்த்துத் திரட்டி ஒன்றிலேயே திரட்டி நிலைப்படுத்தும் ஸமாதானத்தினால், சாந்தி என்ற அர்த்தத்தில் சொல்லும் கொந்தளிப்பில்லாத ஸமாதானமும் ஏற்பட்டுவிடும்.

ஒன்றிலேயே நிலைப்படுத்துவது என்றால் அந்த ஒன்று என்ன?சித்தம் நானா திசையிலும் ஒடாமல் சேர்த்துப் பிடித்து ஏதோ ஒன்றிலேயே வைக்கப்பட வேண்டுமென்றால் அந்த ஒன்றுதான்.

"சுத்தே ப்ரஹ்மணி"

"ðK²ˆîñ£ù èôŠH™ô£î Hó‹ñˆF™"

ப்ரம்மத்திலேயே ஸதா ஸர்வதா சித்தத்தைப் பூர்ணமாக நிலை நாட்டுவதுதான் ஸமாதானம். ' ஸம்யக் ஆஸ்தாபனம் புத்தே : சுத்தே ப்ரஹ்மணி

ஸர்வதா । தத் ஸமாதானம் இத்யுக்தம் 'என்று இப்படித்தான் ஆசார்யாள் டிஃபைன் பண்ணியிருக்கிறார்.

'ஸம்யக்'என்றால் 'கரெக்டாக'என்றும் 'பூர்ணமாக'என்றும் இரண்டு அர்த்தம். இங்கே இரண்டையும் எடுத்துக் கொள்ள வேண்டும். 'ஆஸ்தாபனம்'என்றால் ஸ்தாபிப்பது தான்;அதாவது நிலைநாட்டுவது. 'புத்தியை அப்படி எக்காலமும் ('ஸர்வதா') சுத்தமான ப்ரம்மத்தில் பூர்ணமாகவும், வெகு ஸரியாகவும் ('ஸம்யக்') நிலை நாட்டுவதாக எது ஒன்று உண்டோ அதுதான் ('தத்') ஸமாதானம் என்று சொல்லப்படுகிறது. 'இத்யுக்தம்'- இதி உக்தம்'என்று சொல்லப்படுகிறது.

மாயை கலக்காதது ப்ரஹ்மம் ஒன்றுதான். ஸர்வ லோகத்திற்கும் ஆதாரமாக சொல்லும்போது ஆத்மா என்பது. ஆத்மாவாகிய ப்ரம்மம் ஒன்றுதான் மாயையின் கலப்பற்றது. அதனால்தான் அதை சுத்தமான ப்ரம்மம் - 'சுத்தே ப்ரஹ்மணி'- என்று சொன்னது. மாயை கொஞ்சம் கலந்து விட்டால்கூட கலப்படமாகிவிடும். ஈச்வரன்கூட அப்படி மாயைக் கலப்புள்ளவன்தான்! நன்றாகவே மாயை கலந்துவிட்ட லோகத்தை நிர்வாஹம் பண்ணுகிறவன் மாயா ஸஹிதனான அந்த ஈச்வரன். ப்ரஹ்மம் நிர்வாஹம், கிர்வாஹம் எதுவும் பண்ணுவதில்லை. லோக ஸமாசாரமே அதற்குத் தெரியாது. அதுதான் லோகாதாரம் (லோகத்திற்கு ஆதாரம்) என்றாலும், மாயை அதிலிருந்து லோகக் காட்சியை உண்டு பண்ணிற்றே தவிர, அதற்கு லோகத்தோடு ஸம்பந்தமில்லை.

அரையிருட்டு ஒரு கயிற்றைப் பாம்பு மாதிரி காட்டுகிறதென்றால், அதாவது அரையிருட்டு ஒரு கயிற்றின் ஆதாரத்திலிருந்தே பாம்புக் காட்சியை உண்டு பண்ணுகிறதென்றால், அதனால் கயிற்றுக்கு வாஸ்தவமாகப் பாம்பு ஸம்பந்தமுண்டா என்ன?அது கலப்படமில்லாத கயிறாகவேதானே இருக்கிறது?

அப்படிக் கலப்பில்லாத ஸ்வச்சமான தத்வமாயிருப்பதால் சுத்த ப்ரம்மம் என்றது.

ஸகுண மூர்த்தியாகவுள்ள ஈச்வரனைப் பற்றியில்லாமல், நிர்குணமான ப்ரம்மத்தைப் பற்றியே சித்தத்தை ஒருமுகப் படுத்துவதைத்தான் 'ஸமாதானம்'என்பது. பண்ணுவது ஆத்ம ஸாதனை. நிர்குணமான ஆத்ம தத்வமாக, ப்ரம்ம தத்வமாக இருப்பதை அநுபவத்தில் ஸாக்ஷாத்கரிப்பதற்கே ஸாதனை. அதனால் மாயா ஸஹிதனான ஈச்வரனை இல்லாமல், மாயாதீதமான ப்ரம்மத்தில்தானே சித்தத்தைச் சிதறாமல் வைக்க வேண்டும்?

ஈச்வரன் என்றால் எல்லா தெய்வ மூர்த்திகளுந்தான். ஆரம்பத்தில் அப்படி ஒரு மூர்த்தியை உபாஸித்துத்தான் சித்தம் ஒரே வஸ்துவில் நிற்கப் பழகி கொண்டது. அது முதல் ஸ்டேஜில். இப்போது இரண்டாம் ஸ்டேஜில் அமூர்த்தமான ப்ரம்மத்தைக் குறித்தே சித்தத்தை ஆதானம் பண்ண வேண்டும்.

அவ்வப்போது (ஸகுணமான) ஈச்வரன் நினைவு வராமல் போகாது. (அப்படி)

வந்தாலும் அவனை மாயா லோக நிர்வாஹகன் என்று நினைக்காமல் 'மாயையிலிருந்து ஞானத்துக்குப் போக வேண்டும் என்ற அறிவை நமக்குக் கொடுத்த 'அநுக்ரஹ ஸ்வரூபம்'(ரீக்ஷீணீநீமீ) என்று மாத்திரமே நினைத்து, அவனே நிர்க்குணத்தில் சேர்க்கும் ஞான வழியைக் காட்டும்போது நாம் ஸகுணமான அவனை இதற்கு மேல் பிடித்துக் கொண்டு தொங்கப்படாது என்ற தீர்மானத்துடன் ஆத்ம தத்வத்திலேயே சித்தத்தைத் திருப்பணும். 'நம்முடைய ஆத்மாவாக இருப்பதும் அவன்தானே?ஆகையால் ஆத்மாவைப் பிடித்துக் கொள்வதாலேயே அவனைப் பிடித்துக் கொள்வதாக - அதாவது பக்தி பண்ணுவதாக -

இருக்கட்டும்'என்று நிர்குண ஸாதனையிலேயே சித்தத்தைத் திருப்ப வேண்டும். ஸகுண ப்ரம்ம நினைவு வந்தாலும் அவனை நிர்குண ப்ரம்மத்திலே கரைத்து - சுத்த ப்ரம்மத்திலேயே சித்தத்தைச் சேர்க்கணும்.

'சித்தம்', 'சித்தம்' என்று நான் சொல்லி வந்திருக்கிறேன். ஆசார்யாளோ 'புத்தி'என்று போட்டிருக்கிறார்: 'ஸம்யக் ஆஸ்தாபநம் புத்தே'புத்தியை நன்றாகச் சேர்த்துப் பிடித்து எப்போதும் ப்ரம்மத்தில் ஸ்தாபிக்க வேண்டும் என்கிறார்.

'புத்தி'என்பது 'சித்தம்'என்பதன் ஒரு குறிப்பிட்ட அம்சம், 'ஆஸ்பெக்ட்'.

'C^'â¡ð¶ ÜP¾. ÜP¾ ú‹ð‰îŠð†ìî£è å¼ põQì‹ Þ¼‚°‹ àÁŠ¹ 'C^î‹'. Þ¶ àœÀÁŠ¹ - 'Ü‰îçèóí‹'â¡ð¶. Þƒ«è 'ÜP¾' â¡ð¶ intellect â¡ðî£è ¹^F¬ò, ªè£‡´ ªêŒõ¶ ñ†´I™¬ô. Ü¶¾‹ Þ‰î ÜPM™ Üì‚è«ñò£ù£½‹, C^î‹ â¡ð¶ Ü¶ ñ£^Fóñ™ô. ñùR™ à‡ì£°‹ àí˜„CèÀ‹ ÜF™ Üì‚è‰î£¡. ñùR¡ è£˜ò‹, ¹^FJ¡ è£˜ò‹- ñùv G¬ùŠð¶, àí˜õ¶ - ¹^F ÜPõ¶ â™ô£‹ «ê˜‰«î C^î‹ â¡ð¶. ÞŠð® Þó‡´… «ê˜õî£è Ü¶ Þ¼Šðî£™î£¡ Ü^¬õî ê£v^ó^F™ ñùv, ¹^F Þó‡¬ì»‹ ²^îŠð´^F, Þó‡¬ì»‹ å¼ºèñ£‚A, ªè£œ÷ «õ‡´ªñ¡ðîŸ°„ C^î ²^F, C^î äè£‚Kò‹'â¡ðî£è«õ ªê£™õ¶.

சித்தம், மனஸ், புத்தி, அஹங்காரம் என்ற நாலு. நாலும் சேர்ந்தேஅந்தஃகரணம் என்ற உள்ளுறுப்பு. நாலுக்கும் பொதுவாகவுள்ள 'எண்ணம்' என்பதற்குப் பிறப்பிடமாக இருப்பது சித்தம். எண்ணுவதான இந்த சித்தம் மற்ற மூன்றுடனும் சேருவதாகும். மனஸ் என்பது உணரும் கருவி. அதற்கு நல்லது கெட்டது தெரியாது. பலவித உணர்ச்சிகளிலும் அது போய் விழும். புத்திதான் இதில் நல்லது கெட்டதைச் சீர்தூக்கிப் பார்க்கிற கருவி. 'ஜட்ஜ்மென்ட் பவர்'அதற்குத்தான் உண்டு. அஹங்காரம் என்பது எல்லா எண்ணங்களுக்கும் முதலாவதான 'நான்'என்கிற பா வம். தன்னைப் பரமாத்மாவிலிருந்து பிரிந்த ஒரு தனி ஜீவனாக 'நான்' போட்டுக்கொண்டு நினைக்கும் எண்ணமே அஹங்காரம்.

அது எப்போது நசிக்கிறதோ அப்போதுதான் தனி ஜீவனாக

உள்ள நிலை - ஜீவாத்மா எண்ணும் நிலை - போய் ஆத்மாவை அறிந்து பரமாத்மாவாக இருக்க முடியும். இந்த அஹங்கார நாசந்தான் ஸாதனையில் உச்சிக் கொம்பு.

இங்கே (ஸமாதானத்திற்கு லக்ஷணம் தரும்போது) ஆசார்யாள், சித்தம் என்பது தீர்ப்புப் பண்ணும் திறமையைப் பெற்றிருக்கும்படியான புத்தி என்பதாக இருக்கும்போது, அந்த புத்தியை ப்ரம்மத்திலேயே ஆதானம் பண்ணனும் என்று சொல்லியிருக்கிறார்.

ஸாதாரணமாக, சித்தம் என்றாலே மனஸ் என்று தான் நினைப்பது வழக்கம். அதே மாதிரி, நன்றாகப் பூர்ணமாக இழுத்துப் பிடித்து 'ஸமாதானம்'பண்ண வேண்டியது மனஸையே என்றுதான் பொதுவில் சொல்வது. ஸரியாக அர்த்தம் தெரியாவிட்டால்கூட நாம், 'மனஸூ ஸமாதானமே ஆகமாட்டேங்கிறது','மனஸை ஸமாதானப்படுத்திக்கோ'என்றெல்லாந்தான் சொல்கிறோம். கர்மா பண்ணும் கர்த்தா 'மனஸ் ஸமாதீயதாம்'- 'மனஸை ஸமமாக, அதாவது அலையாமல், அமைதியாக அடங்கிய நிலையில் வைத்துக் கொள்ளுங்கள்'என்று கர்மாவை நடத்திக் கொடுக்கும் ப்ராம்மணர்களிடம் ப்ரார்த்தனை பண்ணுவான். அதற்கு அவர்கள் ப்ரதிவசனமாக (பதிலாக) 'அப்படியே இருக்கிறோம்'என்பதற்கு, 'ஸமாஹித மனஸ:ஸ்ம'என்பார்கள். கர்த்தா 'ஸமாதி'என்ற வார்த்தையைச் சொல்ல, பிராம்மணர்களோ அதே அர்த்தத்தில் 'ஸமாஹித'என்று சொல்வதையும் கவனிக்கணும்!இங்கேயும் மனஸின் ஸமாதி அல்லது ஸமாஹித நிலை என்றே இருப்பதையும் கவனிக்கணும்.

ஏனென்றால் பொதுவாக மனஸேதான் அந்தஃகரணம் என்கிற அளவுக்கு அதற்கு முக்யம் கொடுத்துச் சொல்கிறோம். 'மனஸை அடக்கணும்; மனமாயை அகலணும்;மன மாசு விலகணும்'என்றிப்படி மனஸை வைத்துத்தானஅ ஆத்யாத்மிக ஸாதனையை சொல்வது வழக்கமாயிருக்கிறது. காரணமென்ன என்றால் நானா உணர்ச்சிகளாலே ஒரு ஜீவனை நாலா பக்கமும் இழுத்து அவனுடைய அத்தனை போராட்டத்திற்கும் காரணமாயிருப்பது முக்யமாக மனஸ்தான். 'சமம்' என்று இந்த ஷட்கத்தில் சொல்லும்போது அதை 'மனஸ் ஆத்ம லக்ஷ்யத்திலேயே அடக்கி

வைக்கப்பட்டுள்ள நிலை' "ஸ்வலக்ஷ்யே நியாவஸ்தா மனஸ: சம உச்யதே" - என்றே டிஃபைன் பண்ணியிருக்கிறார்.

'தமம்'என்கிறதும் மனஸின் ஏஜென்டுகளேயான இந்த்ரியங்களை அடக்குவதுதான். 'உபரதி'யும் மனஸடக்கலில் இன்னொரு அங்கந்தான்.வ்ருத்திகளுக்கு வெளிப்பிடிப்பு இல்லாமல் பண்ணுவதுதான் 'உபரதி என்றால் 'வ்ருத்தி'என்பதும் மனஸின் போக்குதான்;மனஸின் ஓட்டம்தான்.

'திதிக்ஷை'யில் வரும் பொறுமையும் மனஸின் கார்யந்தான். ஆகையால் மனஸை ஸரிப்படுத்தும் ஸாதனைகள் தான் நாம் முன்னாலே பார்த்த எல்லாமும்.

இங்கே (ஸமாதனத்தைச் சொல்கையில்) புத்தியை நிலை நாட்டுவதைச் சொல்கிறார்.

'மனஸ் நிற்கணும், மனஸ் நிலைப்படணும், மனஸை இழுத்துப் பிடித்து ஒன்றிலேயே நிலைப்படுத்தணும்'என்றே நிறைய கேட்டிருப்பீர்கள். அதனால் புத்தியை அந்த மாதிரிப் பண்ணணுமென்று சொன்னால் வித்யாஸமாகத் தோன்றப்போகிறதே என்றுதான் எடுத்த எடுப்பிலேயே அப்படிச் சொல்லாமல், கொஞ்சம் ஸாமர்த்யம் பண்ணி, மனஸென்றும் சொல்லாமல், புத்தியென்றும் சொல்லாமல், இரண்டிற்கும் பொதுவாகச் 'சித்தம், சித்தம்' என்று சொல்லிக் கொண்டு வந்தேன். அதற்கும் ஆசார்யாளே வழிகாட்டியிருப்பதாலேயே அப்படிச் சொன்னேன். 'அபரோக்ஷாநுபூதி'யில் அவரே, ஸத்தாகிற லக்ஷ்யத்தில் சித்தத்தை ஐகாக்ரியப் படுத்துவதுதான் 'ஸமாதானம்'என்று நினைக்கப்படுகிறதுஎன்றுதான் லக்ஷணை கொடுத்திருக்கிறார்.

சித்தைகாக்ர்யம் சு ஸல்லக்ஷ்யே ஸமாதானமிதி ஸ்ம்ருதம் ।

இத்தனை பீடிகை போட்டுவிட்டதால் ஏன் இங்கே புத்தியை ஆசார்யாள் சொல்லியிருக்கிறாரென்பதை இப்போது பார்க்கலாம்.

'ச்ரத்தையை இதற்கு முந்தி சொன்னார். அங்கேயும் பொது அபிப்ராயம் 'ச்ரத்தை என்பதில் புத்திக்குக் கார்யமில்லை; ஙிறீவீஸிபீ யீணீவீமீலீ (குருட்டு நம்பிக்கை) என்பதாலேயே அங்கே புத்தியை ஒதுக்கியாயிற்று. நம்பிக்கை மனஸின்

கார்யந்தான் என்பதாகவே இருந்தாலும். ஆசார்யாளோ 'புத்தி அவதாரணம்'(புத்தியின் நிச்சயமான உறுதி) தான் ச்ரத்தை என்று சொன்னதைப் பார்த்தோம். 'இங்கே நமக்கு வேலையில்லை'என்று புத்தி உறுதிப் படுத்திக்கொண்டு சாஸ்திரத்தையும் குருவாக்யத்தையும் ஏற்றுக்கொள்வதையே ஆசார்யாள் சொல்கிறாரென்று அதை எக்ஸ்ப்ளெய்ன் பண்ணிக் கொண்டோம்.

அதன் தொடர்ச்சியாகவே இப்போதும் புத்தியை ஒன்று திரட்டி ப்ரம்மத்தில் நிலைப்படுத்துவதுதான் ஸமாதானம் என்கிறார். உணர்ச்சியால் இழுபடாமல், ஸரியாக விசாரித்து உண்மை பொய்களை உள்ளபடிப் பார்க்கிற அந்தஃகரணத்தின் அங்கமான புத்தியை லோகத்திலுள்ள அநேக ஸமாசாரங்களை ஜட்ஜ் பண்ணும் கார்யங்களிலிருந்து விடுவித்து, ஒன்றுதிரட்டி அடக்கி, ப்ரம்மத்தின் விஷயமாகவே வைக்க வேண்டும். அதுதான் ஸமாதானம் என்கிறார். உணர்ச்சிதான் நானா திசையும் ஒடுகிறதென்றில்லை. அறிவுந்தான் ஒடுகிறது. ஆனால் உணர்ச்சியோட்டத்தை மட்டுமே பொதுவாக தோஷமாக நினைக்கிறோம். அறிவின் ஒட்டத்தை அப்படி நினைப்பதில்லை. ஜீ�்ஷுபக்ஷீஉஷுபவீமீ ஷீயீ ளீ�்ஷீஷ்றீமீபீரீமீ என்றே அறிவு எந்த விஷயத்தைத் தேடிப் போய் சேகரம் செய்வதையும் கொண்டாடுகிறோம். "எல்லாம் தெரிஞ்சுக்கணும்;களவும் கற்று மற'; ஆசார்யாளே

ஸர்வஜ்ஞப் பட்டம் வாங்கினவர்'என்றெல்லாம் சொல்கிறோம். நானே இப்படி நிறையச் சொல்லித் தூண்டிக் கொடுத்துக்கூட இருக்கிறேன்!ஆனாலும் அதெல்லாம் ஆத்யாத்மிகமான ஸாதனையில் இரண்டாவது ஸ்டேஜில் அட்வான்ஸாகிறவனுக்குச் சொன்னதில்லை. அதற்கு ரொம்ப முற்பட்ட நிலையில் சொன்னதுதான். அப்போது புத்தியை நன்றாகப் பலதுறையிலும் பழக்கித் தீக்ஷண்யப் படுத்திக் கொண்டால் தான் அப்புறம் அத்யாத்ம வித்யையில் ப்ரவேசித்து அதில் முதலில் சொன்ன நித்யாநித்ய வஸ்து விவேகத்தை முறைப்படி ஸாதிக்க முடியும். இந்த வஸ்து விவேசனம் புத்தி கார்யந்தானே?ஆனால், அப்புறம் 'ஆத்ம ஸாதகன்'என்றே தன்னை ஆக்கிக் கொண்டுவிட்டவனுக்கு மற்ற எந்த 'நாலெட்ஜு'ம் வேண்டாம்.'ஸெல்ப் நாலெட்ஜ்'(ஆத்மாவைப் பற்றிய அறிவு) ஒன்றுதான்

வேண்டும். பாக்கி எந்த விஷயத்திலும் அவனுடைய புத்தி வாய் வைக்காமல் சுத்தமான ப்ரம்மம் ஒன்றின் விஷயத்தில் மட்டுமே அ ு போகும்படியாக அவன் கட்டுப்படுத்தி நிலைப் படுத்தணும்.

'யதேந்த்ரிய மநோ புத்தி'என்ற கீதையில் ரொம்பவும் தெளிவாகச் சொல்லியிருக்கிறார் - இந்திரியங்களையும், மனஸையும் மாத்திரமில்லாமல் புத்தியையும் கட்டுப் படுத்தணும் என்று. பல விஷயங்களில் (புத்தி) ஓடாமல் கட்டுப் படுத்தி பிரம்மத்திலேயே நிலை நாட்டணும்.

புத்தியை ப்ரம்மத்தில் நிலை நாட்டுவதை ஆசார்யாள் 'ப்ரஹ்மணி புத்தே:ஸ்தாபநம்' என்கிறார். ஆனால் உபநிஷத்திலோ புத்தி சக்தியான மேதையினால் ஆத்மாவை அடைய முடியாது என்று இருக்கிறது. ஒட்டிக்கு இரட்டியாக இரண்டு உபநிஷத்துக்களில் இப்படியே 'ந மேதயா' என்று அச்சடித்தாற்போலச் சொல்லியிருக்கிறது. மனஸ், வாக்கு, புத்தி எதாலேயும் ஆத்மாவைப் பிடிக்க முடியாது என்பது ப்ரஸித்தம். பின்னே ஆசார்யாள் இப்படிச் சொல்லியிருக்கிறாரே என்றால், இங்கே அவர் முடிவு நிலையான 'ஸமாதி'யைச் சொல்லவில்லை. அதற்குக் கீழ் நிலையிலுள்ள ஒன்றைச் சொல்வதால்தான் 'ஸமாதானம்'என்று பிரித்துக் காட்டியிருக்கிறாரென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மேதையாலோ, ஏராளமான வேதப் படிப்பாலோ பிடிக்க முடியாது என்று சொன்ன அந்த இரண்டு உபநிஷத்திலேயும் அப்படியானால் வேறே எப்படி அதைப் பிடிப்பது என்பதற்கும் உடனேயே பதில் இருக்கிறது. அந்த ஆத்மாவையே வரணம் பண்ணுவதுதான் அதைப் பிடிப்பதற்கு வழி என்பதே அந்த பதில். அதென்ன 'வரணம்'என்றால்-

'வரன்', 'வரன்'என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். பெண்ணுக்கு வரன் பார்க்கணும் என்கிறோம். 'வரன்'என்றால் தலை சிறந்தவன், ஙிமீஷீ என்று ஒரு அர்த்தம். இன்னொரு அர்த்தம். பல பேருக்குள்ளே தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவன் என்பது. பல பேரில் 'சூஸ்'பண்ணப் பட்டவன் வரன். 'ஸ்வயம்வரம்'என்கிறபோது இந்த அர்த்தம் நன்றாக வெளிப்படுகிறது. பல ராஜகுமாரர்கள் கூடியிருக்கும்

ஸபையில் ஒரு ராஜகுமாரி தனக்குப் பிடித்த ஒருவனை தானே சூஸ் பண்ணுவது ஸ்வயம்வரம். அப்படி வரிப்பதுதான் 'வரணம்'. ஸரியான குருவைத் தேடிக் கண்டு பிடித்துத் தேர்ந்தெடுத்து அவரிடம் போய்ச் சேருவது 'குரு வரணம்.' நல்ல சிஷ்யனைத் தேடி எடுப்பது 'சிஷ்யவரணம்'.

Þ%oî ñ£FK ð£,A úèô úñ£ê£ó^¬î»‹ îœO M†´ Ý^ñ£ å¡¬ø«ò ‹î˜%oªî´^¶, Ü¬î«ò "à¡¬ù c ªîKM„²,«è£. c«òî£¡ ï£ù£J¼%oî£½‹ âù,° Ü¶ ªîKò¬ô. ï£¡-Â G¬ù,Aø Þ%oî ¹^F («ñ«î), ñùv, õ£,° âî£«ô»‹ à¡¬ù^ ªîK…²,è º®ò¬ô. Üîù£«ô«ò c«ò à¡¬ù^ ªîKM„²,èµ‹"â¡Á Hó£˜^F^¶, ªè£‡«ìJ¼%oî£™ å¼ï£œ ðkªó¡Á Ü¶ ªõOò£AM´‹. ÞõÂ¬ìò ¹^F, ñùv, õ£,° â™ô£õŸ¬ø»‹ Þ™ô£ñ™ ð‡E, Þõ¡ Ý^ñ võÏðñ£è«õ võ£¸ÌF ªðÁ‹ð®Š ð‡EM´‹.

இவன் 'வரணம்'பண்ணியதற்குப் பதிலாக ஆத்மா பண்ணுவதை, 'வரண'த்துக்கு முந்தி ஒரே ஒரு எழுத்தைக் கூட்டி 'விவரணம்' என்றால் உள்ளேயிருப்பதை வெளிப்படுத்திக் காட்டுவது, மூடி வைத்திருந்ததைத் திறந்து விட்டுவிடுவது. ஸிமீஸ்மீறீணீமீ வீஷீஸீ என்கிறார்களே, அது.

ஆக, ஸாதகன் பண்ண வேண்டியது, மேதாவித்தனமெல்லாம் ப்ரம்மத்திடம் எடுபடாது என்று புரிந்து கொண்டு எல்லாவற்றையும் தள்ளி அதையே வரித்துப் பிரார்த்தனை பண்ணுவதுதான். வரணம் பண்ணுவதிலேயே 'ப்ரார்த்திப்பது'என்பதையும் அடக்கித்தான் ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்.

அதே ஆசார்யாள் இங்கே, "சுத்த ப்ரம்மத்தில் புத்தியை ஸ்தாபி" என்று சொல்லியிருக்கிறாரென்றால் என்ன அர்த்தம்?

அஸலாக ப்ரம்மத்திலேயே இல்லாமல் ப்ரம்மத்தைப் பற்றி, ப்ரம்மத்தைக் குறித்து வேதாந்த சாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறதோ, குரு என்ன உபதேசிக்கிறாரோ அதிலேயே புத்தியை ஏகாக்ரமாகப் பதிக்கணும் என்பதே அர்த்தம். நான் அப்படித்தான் அர்த்தம் பண்ணிக் கொள்கிறேன்.

புத்தியை அப்படியே ப்ரம்மத்திலேயே முழுக விடுவது

பிற்பாடு மூன்றாவது ஸ்டேஜின் கடைசியில். அது ஸமாதி.

இது ஸமாதானம். இங்கே 'ப்ரஹ்மணி', 'ப்ரம்மத்தில்', என்பதற்கு 'ப்ரம்மத்தைப் பற்றிய விஷயத்தில்- அதாவது அதைப்பற்றி சாஸ்திரம் என்னென்ன சொல்கிறதோ அதில்;குரு என்ன சொல்கிறாரோ அதில் - என்று அர்த்தம் பண்ணிக் கொண்டால் ஸரியாய் வரும். ப்ரஹ்ம வித்யா தத்வார்த்தங்களிலேயே ஸர்வதாவும் புத்தியைப் பூர்ணமாகச் செலுத்த வேண்டும் என்று அர்த்தம் பண்ணிக்

கொள்ள வேண்டும்

'ச்ரத்தை'யின் அப்யாஸத்தில் சாஸ்த்ரமும் குருவும் சொல்வதை ச்ரத்தையோடு புத்தியில் அவதாரணம் செய்ததன் தொடர்ச்சியாக, அதன் லாஜிகல் கன்க்ளூஷனாக அத்யாத்ம சாஸ்திரத்தை புத்தியுடைய குறுக்குக் கேள்விகளை எழுப்பாமல் ச்ரத்தையோடு அந்த புத்தியாலேயே நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். சாஸ்த்ரத்தில் எழுதி வைக்காததாகவும் குரு சிலது சொல்லலாம். அதையும் நன்ற்க அறிந்து கொள்ள வேண்டும்.

ப்ரம்மாநுபவம் வருவது பின்னாடி நிஜமான ப்ரம்ம ஞானம் அதுதான். இப்போது புத்தி ஞானமாக அதில் அறியக்கூடியதெல்லாம் அறிய வேண்டும். இந்த நாலெட்ஜ் ஒன்றுக்கே முழு புத்தியையும் ஒருமுகப் படுத்தி ஆழமாக ஈடுபடுத்த வேண்டும். 'ஸம்யக் ஆஸ்தாபனம்' பண்ண வேண்டும். எக்காலமும் இதைப் பண்ண வேண்டும்.

இப்போது இவன் அப்படியே ஆத்மாவில் புத்தி கரைந்து போகும்படியான த்யானத்தில் உட்காருவதற்கு பக்குவப்படவில்லை. இந்தக் கட்டத்தில் புத்தி கார்யம் பண்ணிக்கொண்டு தானிருக்கும். அப்போது அதைக் கொண்டு ஆத்மாபிவிருத்திக்கு எது நல்லதோ அதை மட்டுந்தானே பண்ண வேண்டும்?அது ஆத்ம சாஸ்திர விஷயங்களை நன்றாக அறிகிற கார்யத்தைத் தவிர வேறென்னவாக இருக்க முடியும்?மஹாவாக்ய உபதேசம் மட்டும் அப்புறம் ஸந்நியாஸத்தோடு ஃபார்மலாக வாங்கிக் கொள்ள வேண்டும். பாக்கி எல்லாம் இப்போது படித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

குருமுகமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இவர் வித்யா

குரு. அப்புறம் ஸந்நியாஸம் தந்து மஹாவாக்யோபதேசம் செய்பவர் ஆச்ரம குரு. அவர் ஸந்நியாஸியாகத் தானிருக்க வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமேயில்லை! முன்னாடி அவரையே வித்யா குருவாகவும் கொண்டு ப்ரஹ்ம வித்யா சாஸ்திரங்களைப் படிக்கலாம். அல்லது நல்ல சீலமும், அநுஷ்டானமும் உசந்த படிப்புமுள்ள வேறொரு ஸத்வித்வானிடமும் வித்யாப்யாஸம் செய்யலாம்.

---



## உபநிஷத் போதனை பெற அதிகாரி யார் ?

உபநிஷத் வித்யையிலேயே ஸந்நியாஸிக்குத்தான் அதிகாரமுண்டு என்றுகூட அபிப்ராயமுணடு. அதாவது, உபநிஷத்துக்களை ஸந்நியாஸி(யாயுள்ள) சிஷ்யர்களுக்குத் தான் ஸந்நியாஸி குரு உபதேசிக்க வேண்டும் என்று அபிப்ராயம். வேதாந்த பரமான மற்ற புஸ்தகங்களை மட்டும் ப்ரம்மச்சாரி, கிருஹஸ்தர் ஆகியோர் கற்றுக் கொள்ளலாமென்று சொல்வது.

ஒரு சாகையை பிரம்மச்சாரி பூர்ணமாக அத்யயனம் பண்ணும்போதே உபநிஷத்தும் கற்றுக் கொண்டுதான் விடுகிறான். அதிலுள்ள வித்யைகளில், உபாஸனைகளில் அநேகம் க்ருஹஸ்தர்களுக்கானதாகவே இருக்கிறது. இப்படியிருந்தாலும், அர்த்தம் தெரிந்து கொள்ளாமல் உபநிஷத் அத்யயனம் மட்டும் மற்ற ஆசாமிகள் பண்ணலாம்;அல்லது ஒரு அவுட் லைனாக மாத்திரம் வேண்டுமானால் அர்த்தமும் தெரிந்து கொள்ளலாம்;தீர்க்கமாக அலசி அர்த்தம் செய்து கொள்வதில் ஸந்நியாஸிக்கே அதிகாரம் என்று அந்த அபிப்ராயமு டையவர்கள் சொல்வார்கள்.

ஆனால் வெகுகாலமாக நல்ல சிஷ்டர்களின் ஸம்பிரதாயத்திலேயே ப்ரம்மச்சாரி, க்ருஹஸ்தர் ஆகியோர் உபநிஷத்துகளை ஆழமாகவும் கற்றுக்கொண்டு வந்திருப்பதால், மஹாவாக்யோபதேசம் மாத்திரமே ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டுதான் என்று வைத்துக் கொள்வதே ஸரியாகத் தோன்றுகிறது.

உபநிஷத் அத்யயனம் பண்ணும்போதே அதில் மஹா வாக்யமும் வந்துவிடத்தான் செய்யும். ஆனாலும் அதையே ஜபமாக அநுஸந்தானம் பண்ணுவதற்கு ஸந்நியாஸிதான் அதிகாரி.. இதற்காக அந்த (மஹாவாக்ய) மந்த்ரத்தில் மாத்திரம் அவன் ஸந்நியாஸ குருவிடந்தான் தீக்ஷை பெற வேண்டும்.

மற்றபடி உபநிஷத்துக்களை வேத வித்யையில் அதிகாரமுள்ள எல்லாரும் எந்த ஆச்ரமத்திலிருந்தாலும் குருமுகமாகக் கற்கலாமென்ற நல்ல சாஸ்த்ரஜ்ஞர்களின் வழக்கத்தில் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது.

ஆதியில் அந்த உபநிஷத்துக்களைச் சொன்னவர்கள், கேட்டவர்களிலேயே ரொம்பப் பேர் ஸந்நியாஸியாயில்லாதவர்கள்தான் என்பது இதற்கு ஸப்போர்ட்டாக இருந்தாலுங்கூட, அந்த பாயின்டை நான் எடுத்துக் கொள்ளப் பிரியப் படவில்லை.

(ஏனென்றால்) யுகதர்மங்கள் என்று யுகத்திற்கு யுகம் சில தர்மங்கள் மாறுபடுவதுண்டு. அதில், பூர்வ யுகத்துக்காரர்களின் ஆத்ம பலம் பின் யுகத்துக்காரர்களுக்கு இல்லாததால், அப்போது நடந்து வந்த சிலவற்றை இப்போது கூடாது என்று தர்ம சாஸ்திரங்கள் சொல்கின்றன. அந்த ஸ்ம்ருதிப் பிரமாணத்தை மீறக் கூடாது. ஆகையால் உபநிஷத் காலத்தில் ஏதோ ஒன்று நடந்தது என்பதை மாத்திரம் காரணம் காட்டி இப்போது நாமும் அப்படியே பண்ணலாம் என்பது ஒரு

பாயின்ட் ஆகாது. உபநிஷத் வித்யையில் ஸந்நியாஸிக்குத்தான் அதிகாரம் என்று ஸ்ம்ருதி ப்ரமாணம் இல்லைதான். இருந்தாலுங்கூட இந்த நாளில் கட்சி கட்டிக்கொண்டு ரைட், ரைட் என்று உரிமைப் போராட்டம் நடத்தி எதில் வேண்டுமானால் பிரவேசிக்கலாம் என்று

புறப்படுகிறவர்கள், வேத காலத்தில் அப்படி இருந்ததே, புராண காலத்தில் அப்படி இருந்ததே, இப்போது மட்டும் ஏன் கூடாது?என்று கேட்பதால் இங்கே நம் ஸமாசாரத்திலும் ஆதிகால வழக்கை இக்கால வழக்குக்கு ஓர் ஆதரவாகக் காட்ட நான் இஷ்டப்படவில்லை. சிஷ்டாசாரத்தில் நாலு ஆச்ரமிகளுக்கும் உபநிஷத் வித்யாப்யாஸத்தில் அதிகாரம் கொடுத்திருப்பதே நமக்குப் போதுமான ப்ரமாணம்.

உபநிஷத் பாராயணம் செய்யும்போது ஆரம்பத்திலும் முடிவிலும் 'சாந்தி பாடம்'என்று சில மந்திரங்களும் ச்லோகங்களும் சொல்வது ஸம்பிரதாயம். அதில் (ஆரம்பத்தில் சொல்லும்) பூர்வ சாந்தியில் ஒரு மந்திரம், "பூர்வத்தில் எவன் பிரம்மாவையும் ஸ்ருஷ்டித்தான, ஸ்ருஷ்டித்த அந்த பிரம்மாவுக்கு வேதங்களையும் கொடுத்தானோ அந்த தேவன்தான் நம் புத்திக்கு ஞானப் பிரகாசம் கொடுப்பவன்;அவனை முமுக்ஷுவான நான் சரணடைகிறேன்" என்று இருக்கிறது. மோக்ஷமொன்றே லக்ஷ்யமாகக் கொண்ட 'அட்வான்ல்ட்'ஸாதனைதான் முமுக்ஷு என்பது. 'ச்வேதாச்வதரோபநிஷத்'என்று ஒரு உபநிஷத்து. பிரஸித்தமான பத்து உபநிஷத்துக்களில் அது இல்லாவிட்டாலும், தசோபநிஷத் பாஷ்யம் பண்ணிய நம் ஆசார்யாளோ அதன் வாக்யங்களை ப்ரமாணமுள்ள மேற்கோள்களாகக் காட்டியிருக்கிறார். அதன் கடைசி அத்யாயத்தில், ச்வேதாச்வதர ரிஷி அதை அத்யாச்ரமிகளுக்கு உபதேசித்தார் என்று இருக்கிறது. அத்யாச்ரமம் என்பது ஸந்நியாஸம். அல்லது அதற்கும் மேலே போன அதிவர்ணாச்ரமம். இப்படிப்பட்ட விஷயங்களைக் காட்டித்தான் 'உபநிஷத்தில் ஸாமான்யப்பட்டவர்களுக்கு, க்ருஹஸ்தர்களுக்கு அதிகாரமில்லை'என்று சொல்வது. ஆனாலும் ஆசார்யாள் உபநிஷத்திலேயே பல விஷயங்களை மந்த அதிகாரிகளுக்கு என்று சொல்லி, இது நம் காலத்திற்குந்தான் என்கிற மாதிரியே விட்டிருக்கிறார். மந்த அதிகாரி என்பது நிச்சயமாக முமுக்ஷு இல்லை. ஸாதாரண க்ருஹஸ்தன் அல்லது ப்ரம்மசாரிதான். மொத்தத்தில், ஓரளவு ஞானம் வந்தபின்தான் உபநிஷத் கற்றுக் கொள்ளலாம் என்பதைவிட உபநிஷத் கற்றுக் கொள்வதனாலேயேதான் எவருக்கும் ஓரளவாவது

ஞானமோ, ஞானத்தில் ஆசையோ வரும் என்று ரிலாக்ஸ் பண்ணியே சிஷ்ட ஸம்பிரதாயத்தில் வந்திருக்கிறது.

---



## ' ஸமாதான ' த்தில் கண்டிப்பு

'ஸமாதானம்'என்பது பிரம்மம் ஸம்பந்தமான விஷயங்களிலேயே புத்தியைப் பூர்ணமாக ஸ்தாபனம் செய்வது.

**ஸம்யகாஸ்தாபநம் புத்தே : சுத்தே ப்ரஹ்மணி ஸர்வதா |**

**தத்-ஸமாதாநமித்யுக்தம் ந து சித்தஸ்ய லாலநம் ||**

"ந து சித்தஸ்ய லாலநம்". புத்தியைப் பற்றி ச்லோக ஆரம்பத்திலே சொன்ன ஆசார்யாள் இங்கே முடிகிற பாதத்தில் 'சித்தத்தைப் பற்றிச் சொல்கிறார். புத்தி, மனஸ், அஹங்காரம் என்ற மூன்றுக்கும் பொதுவான 'எண்ணம்'என்பதற்கு உற்பத்தி ஸ்தானமாயிருப்பதே சித்தம். ஆகையால் ஸந்தர்ப்பத்தைப் பொறுத்து அதுவே மனஸ் என்றும் புத்தி என்றுங்கூட அர்த்தம் கொடுக்கும். இங்கே புத்தியை ஐகாக்ரியப்படுத்துவதைச் சொன்னவுடன், சித்தத்தைப் பற்றிச் சொல்வதால், அதையும் புத்தி என்றே வைத்துக் கொள்ளலாம். அல்லது எண்ணத்தை உற்பத்தி செய்யும் கருவி என்று பொதுப்படையாக வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்.

'ந து சித்தஸ்ய லாலனம்'என்றால் சித்தத்திற்கு செல்லம் கொடுப்பதல்ல என்று அர்த்தம். லாலனம் என்றால் செல்லம் கொடுப்பது. ஒரு குழந்தை நாம் சொன்ன பேச்சைக் கேட்கும்படி செய்வதற்காக அதற்குத் செல்லம் கொடுத்து, 'மிட்டாய் தருகிறேன்' என்று தாஜாப் பண்ணிக் கார்யம்

வாங்கிக் கொள்வது லாலனம். இப்படி ஸாதகனுக்கும் ஆரம்ப தசையில் கொஞ்சம் விட்டுக் கொடுத்து, தாஜா கீஜா பண்ணி நல்ல வழியில் போகப் பண்ணுவதுண்டுதான். ஒரே தீவிரமாக நிர்குண ப்ரஹ்மத்தில்தான் அவன் ஸித்தத்தை வைக்க வேண்டுமென்று சொல்லாமல் அந்த தசையில் ஸகுணமாக ஒரு மூர்த்தியை, பல மூர்த்திகளை வேண்டுமானாலும், நினைத்து விட்டுப் போகட்டும் என்று அப்போது விட்டுக் கொடுத்து, தினுஸு தினுஸு நைவேத்யம் வரையில் - குழந்தைக்கு மிட்டாய் மாதிரி - அவனுக்குக் காட்டி ஒரு நல்ல வழியில் அப்போது 'லாலன'மாகவே அவனைத் திருப்பி விட வேண்டியதுதான். ஆனாலும் ஸாதனையில் அவன் 'அட்வான்ஸ்' ஆன தசையில் அப்படியெல்லாம் செல்லம் கொடுக்காமல், அதற்கெல்லாம் 'புல் ஸ்டாப்'வைத்துவிட்டு சுத்தமான நிர்குண ப்ரம்மத்திலேயேதான் அவனைக் கண்டிப்புடன் திருப்பிவிட வேண்டும். கண்டிப்பே காட்டாமல் மிட்டாயே கடைசிவரை கொடுத்துக் கொண்டுபோனால் நீர் வியாதிதான் வரும்! விட்டுப் பிடிக்க வேண்டிய மட்டும் முதல் ஸ்டேஜில் விட்டுக் கொடுத்துவிட்டு, இப்போது இரண்டாவது ஸ்டேஜில் முன்னேற்றம் கண்டு, மூன்றாவது ஸ்டேஜான ஸந்நியாஸத்திற்கு யோக்யதா ஸித்தி பெற வேண்டிய ஸமயத்தில் கொஞ்சங்கூடச் செல்லம் கொடுக்காமல் கண்டிப்பாக ப்ரஹ்ம தத்வத்தைப் பற்றிய உபதேசங்களிலேயேதான் ஒருத்தனுடைய சித்தத்தைத் திருப்பிவிட வேண்டும்.

இது யாரோ வெளி மநுஷ்யர்கள், குரு போன்றவர் பண்ணுவது மட்டுமில்லை. அவனுமே தன்னைத்தானே லாலனம் பண்ணிக் கொள்ளாமல், ப்ரஹ்ம வித்யை ஒன்றிலேயே நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும். அவனே தனக்குப் பண்ணிக் கொள்ள வேண்டிய விஷயமாகத்தான் இங்கே ஆசார்யாள் 'அட்வைஸ்'பண்ணியிருக்கிறார். "அப்பா! ஸ்வச்சமான நிர்குண ப்ரஹ்மத்திலேயே புத்தியை நன்றாக ஸ்தாபனம் பண்ணிக் கொள்ளு. அதுதான் ஸமாதானம். 'வேறே விஷயத்திலும் புத்தி கொஞ்சம் போனால் போகட்டும்;அதை ரொம்பவும் 'கம்பெல்'பண்ணி இதற்கே கொண்டு வரவேண்டாம்;கொஞ்சம் 'ஃப்ரீ'யாக அதை போக விட்டு, அப்புறம் இழுத்துக் கொள்ளலாம்'என்று

இன்னமும் லாவனம் பண்ணிக் கொண்டிருக்காதே. அதை-விட்டுக் கொடுத்து தாஜாப் பண்ணுவதை - ஏதோ ஒரு கட்டத்தில் நிறுத்தத்தானே வேண்டும்?அந்த கட்டம் வந்துவிட்டது. அதனால் இனிமேல் கறாராக ஏக ஆத்மா, நிர்குண ப்ரஹ்மம் என்று அத்வைதபரமாகவே புத்தியைச் செலுத்த ஆரம்பி"என்கிறார்.

---



## பரமாத்மாவின் ஆறும் ஜீவாத்மாவின் ஆறும்

சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ச்ரத்தை, ஸமாதானம் என்றிப்படி ஆறு. இந்த ஆறு ஆத்மிக ஸம்பத்தையும் ஷட்க ஸம்பத்தி என்று வைத்திருக்கிறார். நல்ல ஜீவனானவன் சமாதி ஷட்க ஸம்பத்தி என்று வைத்திருக்கிறார். நல்ல ஜீவனானவன் சமாதி ஷட்க ஸம்பன்னனாக இருக்க வேண்டும். ஷட்கர்ம நிரதன் என்று ஆறு தொழிலை க்ருஹஸ்தனுக்கு சாஸ்திரம் வைத்த மாதிரியே இந்த ஷட்குணங்களை ஆசார்யாள் ஸந்நியாஸாச்ரமத்திற்கு ஏறி ஆத்ம விசாரம் பண்ண இருப்பவனுக்கு வைத்திருக்கிறார். ஆனால் நான் முதலிலேயே சொன்னாற் போலவே இதிலெல்லாம் முடிந்த மட்டும் கொஞ்சங் கொஞ்சமாவது கிருஹஸ்தாச்ரமிகளும் அப்யாஸம் பண்ணி அடைந்தால்தான் வாழ்க்கையில் அப்யாஸம் பண்ணி அடைந்தால்தான் வாழ்க்கையில் சாந்தி ஸௌக்யங்கள் இருக்கும்;என்றைக்காவது ஒரு நாளாவது ஆத்ம விசாரத்தில் பிரவேசிப்பதற்கான யோக்யதை ஏற்படும்.

'பகவான், பகவான்'என்று ஸ்வாமியைச் சொல்கிறோமே, அவனுக்கு அப்படிப் பேர் இருப்பதற்குக் காரணம் அவனிடமும் ஆறு வஸ்துக்கள் இருப்பதுதான். ஆறு ப கங்கள் அவனிடம் இருப்பதால் அவன் ப கவான் என்று விஷ்ணு புராணத்தில் சொல்லியிருக்கிறது. பகம் என்றாலும் ஸம்பத்துதான் - குண ஸம்பத்து, சக்தி ஸம்பத்து. த்வாதச

ஆதித்யர்கள் என்பதாக பன்னிரண்டு ஸூர்யர்கள் உண்டு. அவர்களில் ஒருவனின் பேர் பகன். ஸூர்யன் ஜ்வலிப்பது போலக் கொழுந்து விட்டெரிகிற சிறப்புக் குணம், அல்லது சக்திக்கு 'பகம்'என்று பேர். இப்படி ஆறு கொண்டவன் பகவான். பரமாத்மாவும் ஜீவாத்மா மாதிரியே ஷட்க ஸம்பன்னனாக இருக்கிறான்!அந்த ஆறு பகங்கள் என்னவென்றால், முதலாவதாக ஐச்வர்யம் - ஈச்வரனாக அடக்கி ஆளும் சக்தி; அப்புறம் இரண்டாவது தர்மம்- இயற்கையில் இத்தனை ஆர்டரை ஏற்படுத்தி, மநுஷ்ய வாழ்விலும் எல்லாவிதத்திலும் ஆர்டர் இருக்கும்படியாக சாஸ்திரங்களைக் கொடுத்திருக்கிறானே, அதுதான் தர்மம். அதாவது ஒழுங்குப்பாட்டின் உருவமாயிருப்பவன் பரமாத்மா. மூன்றாவது பகம் யசஸ்- அதாவது கீர்த்தி. அவனுடைய கீர்த்தியைத்தான் எத்தனை ஸங்கீர்த்தனம் பண்ணுகிறோம்?வேத ரிஷிகளிலிருந்து ஆரம்பித்து இன்றுவரை எத்தனை ஆயிரம் பேர் அவன் புகழ் பாடியும் அதற்கு முடிவு ஏற்படவில்லையே!அப்பேர்ப்பட்ட கீர்த்தியை ஒரு பகமாகப் பெற்றவன்பகவான். அப்புறம் நான்காவதாக ஸ்ரீ - செல்வம். அத்தனை செல்வமும் அவனிடமிருந்து வருவதுதானே?நமக்குத் தெரிவதாக வெளியில் காணும் இவ்வளவு செல்வமுங்கூட அவனிடம் வாஸ்தவமாக உள்ள மஹா பெரிய ப்ரம்மானந்தச் செல்வத்தில் ஒரு பைஸா, இரண்டு பைஸா மாயையின் பிரதிபலிப்பில் செல்வம் மாதிரி மினுக்குவதுதான். அப்பேர்ப்பட்ட ஸ்ரீமான் அவன்! இத்தனை செலவம் இருந்தும் அதற்கு வசியமாகாமல், அதில் பற்றில்லாமல் நிற்கும் வைராக்யம் அவனுடைய இன்னொரு பகம் (ஐந்தாவது பகம்) கடைசியாக ஆச்வரனாக இருந்து கொண்டு ஸர்வலோகங்களையும்

கட்டியாளும் ஐச்வர்யத்தை முதல் பகமாகக் கொண்ட அந்தப் பரமாத்மாவே ஸர்வ லோகத்தையும் வெறும் மாயா செப்பிடு வித்தையாக தள்ளிவிட்டு மோக்ஷம் என்ற ஆறாவது பகத்தில் அந்த பகமாகவே, ப்ரம்மமாக இருந்து கொண்டிருக்கிறான். இப்படி ஆறு விஷ்ணு புராணத்திலிருக்கிறது.

பரமாத்வாவுக்கு ஆறு பக ஸம்பத்து, ஜீவாத்மாவுக்கு சமம் முதலான ஆறு ஸம்பத்து.

இந்த ஷட்கத்திற்கு அப்புறம் ஸாதன சுஷ்டயத்தில் கடைசியான, நாலாவது அங்கமாக வருவது முமுக்ஷுத்வம்.

---



## முமுக்ஷுத்வம்

"முமுக்ஷு"என்பதற்கு அர்த்தம் "மோக்ஷ

காங்க்ஷி" என்பார்கள். அதற்கு அர்த்தம் அர்த்தம் மோக்ஷத்தை விருப்புபவன்.

அந்த விருப்பம் பூர்த்தியாகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றுவிட்டவன் 'முக்தன்'. முமுக்ஷுவாக இருந்துதான் அப்புறம் முக்தனாக முடியும்.

எல்லோருக்குந்தான் இந்த ஸம்ஸாரக் கஷ்டம் நீங்கிப் பரமானந்தமான மோக்ஷத்தை அடைவதில் விருப்பம் இருக்கும். இப்படி அல்ப ஸ்வல்பமாக இருக்கும் விருப்பம் மட்டும் 'காங்க்ஷா'ஆகிவிடாது. தீவிர விருப்பம், தாபம், அதோடுகூட விரும்புவதை அடையத் தன்னாலான யத்தனம் செய்யத் தயாராக இருப்பது, எல்லாம் சேர்ந்தால்தான் 'காங்க்ஷா'. அப்படி மோக்ஷம் அடைவதில் ஆழ்ந்த நாட்டமுள்ளவனே முமுக்ஷு. அவனுடைய தன்மை என்னவோ, அவன் எப்படி இருக்க வேண்டுமோ, பண்ண வேண்டுமோ, அதெல்லாம் சேர்ந்தே 'முமுக்ஷுத்வ ம்'முமுக்ஷா, முமுக்ஷுதை என்றும் சொல்வார்கள்.

ஸம்ஸார பந்த நிர்முக்தி:கதம் ஸ்யாந் மே தயாநிதே |

இதி யா ஸுத்ருடா புத்திர் - வக்தவ்யா ஸா முமுக்ஷுதா||

- இப்படி ஆசார்யாள் "அபரோக்ஷாநுபூதி"யில் முமுக்ஷுதை

பற்றிச் சொல்லியிருக்கிறார்.

ஈச்வரனிடமோ, ஈச்வரனின் ப்ரதிநிதியாக நம்முடைய கண்ணுக்கு முன்னே தெரிகிற குருவிடமோ, ஒருத்தன் கதறுகிற ரீதியில் வார்த்தைகளைப் போட்டிருக்கிறார். "தயாநிதே!" என்று அவன் ஈச்வரனை, குருவைக் கூப்பிட்டு, "ஸம்ஸார பந்தத்திலிருந்து எனக்கு எப்போது விமோசனம் கிடைக்கும்?" என்று தவித்துக் கொண்டு கேட்கிறான். விமோசனம் பெறவேண்டுமென்பதில் த்ருடமான புத்தியோடுகூடக் கேட்கிறான். பணம் காசு போதாததாலோ, தேஹாரோக்யம் இல்லாததாலோ, சாவு, விரோதம் போன்றவை ஏற்பட்டதாலோ துக்கம் அல்லது வெறுப்பு வந்து, ஸம்ஸாரத்திலிருந்து விடுபட நினைப்பதை "ஸுத்ருடா புத்தி:", (அதாவது) த்ருடமான புத்தி பூர்வமாக ஏற்பட்ட முமுக்ஷுதையாகச் சொல்ல முடியாது. இந்த கஷ்டங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதையும், அதிலிருந்து விடுபடுவதையும் முக்யமாக நினைக்காமல், லோக ரீதியில் ஸுக ஜீவன்மாகவே இருந்தாலுங்கூட, இதுவும் மாயைதான். இந்த மாயா பந்தத்திலிருந்து விடுபட்டு ஸத்யமான ஆத்மாவைத் தெரிந்து கொள்ள வேண்டும்'என்ற உறுதியான அறிவோடு ஸம்ஸார நிவ்ருத்தியை விரும்பும் அறிவுதான் 'ஸுத்ருடா புத்தி'. மனஸின் உணர்ச்சியால் வாழ்க்கைக் கஷ்டங்களைப் பார்த்துக் கசந்து போய், ஆகவே விடுபட நினைக்காமல், அறிவினால் ஆலோசித்து மாயை என்பதற்காகவே ஸம்ஸாரத்தை - அது எத்தனை ஸௌக்யமாகத் தோன்றினாலும் -

விட்டு விடுபட வேண்டும் என்று தீர்மானமாக, ஒரே தாபமாக இருப்பதுதான் முமுக்ஷுத்வம். இந்தத் தாபமான முமுக்ஷுதாவைப் பெண்பாலாகவே சொல்லியிருக்கிறது - "யா வக்தவ்யா ஸா முமுக்ஷுதா".

'ஸம்ஸார பந்தத்திலிரந்து எப்போது விமோசனம் கிடைக்குமென்று தயாநிதியான ஆசார்யனிடம் ப்ரார்த்திக்கும் தவிப்பில் த்ருடப்பட்ட அறிவாக எவள் கூறப்படுகிறாளோ அவளே முமுக்ஷுதை என்று ச்லோகத்திற்கு அர்த்தம்.

'விவேக சூடாமணி'யில் (முமுக்ஷுத்வத்திற்கு லக்ஷணம்)

சொல்லும்போது, **" ஸ்வ-ஸ்வரூப அவபோதேந மோக்தும் இச்சா முமுக்ஷுதா "** என்கிறார். வெறுமே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டால் போதாது;ஸம்ஸார
பந்தத்திலிருந்து விடுபட்டால் போதாது;ஸம்ஸார பந்தம் போய் உயிர் ஏதோ ஜடம் மாதிரி ஆனால் போதாது. "ஸ்வஸ்ரூப அவபோதம்"வேண்டும்;அதாவது தன்னுடைய உண்மை நிலையான ஆத்மாவை அநுபவிக்கும் ஞான விழிப்பு ஏற்பட வேண்டும். அதுதான் முக்யம். அதற்காகவே தவித்து ஏங்க வேண்டும். மாயை போக வேண்டும் என்பதைவிட ஸத்யம் அநுபவத்திற்கு வரவேண்டும் என்பதையே முக்யமாக நினைக்கிற தவிப்பு தான் முமுக்ஷுத்வம். இது போனால்தான் அது வரும் என்பதற்காகத்தான் மாயா பந்த மோசனத்திற்காகப் பிரார்த்திப்பது.

---



## முடிவான நிலையை விடுதலை என்று மட்டும் சொல்வதேன் ?

ஆனாலும் பொதுவாகவே ஸத்ய ஸாக்ஷாத்காரத்தை விட பந்த மோசனத்திற்கே முக்யம் கொடுப்பதாக ஆகித்தான் முடிவாக அடையவேண்டிய பூர்ண நிலைக்கே 'மோக்ஷம்'என்றும் 'முக்தி'என்றும் பேர் கொடுத்திருக்கிறது. அந்த வார்த்தைகள் நாம் எந்த நிலையை அடைகிறோமோ அதைச் சொல்லவில்லை. எதை விடுகிறோமோ அதைத்தான் சொல்கிறது. 'விடுபட்ட நிலை'என்பதுதான் மோக்ஷம், முக்தி என்ற வார்த்தைகளுக்கு அர்த்தம். 'வீடு'என்று தமிழில் சொல்வதை விடுபடுவதை வைத்துத்தான். 'லிபரேஷன்'என்பதும் அப்படியே!'முச்'என்று ஒரு தாது, அதாவது வேர்ச்சொல். அதற்கு 'மோச்' என்றும் ஒரு ரூபம்

உண்டு. அந்த தாதுவுக்கு அர்த்தம் 'விடுபடுவது'. 'முச்'சை வைத்து உண்டான பெயர்ச்சொல் 'முக்தி'. அதிகம் வழக்கில் இல்லாவிட்டாலும் 'முகு'என்றும் ஒரு பெயர்ச்சொல் உண்டு. 'முகு'வான விடுதலையைத் தருபவனே 'முகுந்தன்', மோச்சை வைத்து உண்டான பெயர்ச்சொல் 'மோக்ஷம்', 'மோசனம், 'விமோசனம்'ஆகியன. ஆகக்கூடி இவை எல்லாமே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை பெறுவதைச் சொல்கிற வார்த்தைகளாக இருக்கின்றனவேயொழிய விடுபட்ட பின் கிடைக்கும் பேரானந்தத்தைச் சொல்கிறவையாக இல்லை!முடிவான நிலையை இப்படி விடுதலை என்று மாத்திரம், ஏதோ ஒன்றிலிருந்து விடுபடுவதாக மாத்திரம் சொல்வது ஏன்?விடுபட்டபின் எதையோ ஒன்றை அடைகிறோமே - ப்ரஹ்மமாகவே ஆகிற ஸாக்ஷாத்காரத்தை அடைகிறோமே - அதை வைத்துப் பேர் சொல்லாதது ஏன்?

ஏன் என்றால் இரண்டு காரணம் தோன்றுகிறது. ஒன்று:அந்தப் பேரானந்தத்தை உள்ளபடிச் சொல்ல வார்த்தை இல்லை என்பதாலேயே இப்படி வைத்து விட்டது என்று சொல்லலாம்.

இன்னொரு காரணம் என்னவென்றால் ..... ஒவ்வொரு மத ஸித்தாந்தத்திற்கும் முக்யமான ப்ரமாண நூலாக ஒரு ஸூத்ர புஸ்தகம் இருக்கும். அதில் அந்த ஸித்தாந்தக் கோட்பாடுகளையெல்லாம் ரொம்பவும் சுருக்கமான வாக்கியங்களில் சொல்லியிருக்கும். அப்படி நம்முடைய வேதாந்த ஸம்பிரதாயத்திற்கு உள்ள புஸ்தகம் 'ப்ரஹ்ம ஸூத்ரம்'என்பது. அதில் முதல் ஸூத்ரத்திலேயே புஸ்தகம் எதைக் குறித்தது, அதன் ஸப்ஜெக்ட் என்ன என்று சொல்லியிருக்கிறது. "ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸை"என்று அதைத் தெரிவிக்கிறது. "ஜிஜ்ஞாஸை" என்றால் அறிகிற ஆவல். இங்கே ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸை என்று சொல்லியிருப்பதற்கு ப்ரஹ்மத்தை அறியும் ஆவலோடு செய்யப்படும் விசாரணை என்று அர்த்தம். இப்படிப் புஸ்தகத்தின் ஸப்ஜெக்டாகச் சொல்லியிருப்பதுதான் அந்த புஸ்தகத்தைப் பிரமாணமாகக் கொண்ட மதஸ்தருக்கு லக்ஷ்யமான ஆப்ஜெக்ட் - வேதாந்த மதஸ்தர்களான நம்முடைய ஆப்ஜெக்ட்- அதாவது லக்ஷ்யம் - என்னவென்றால் ப்ரஹ்மத்தை அறிவதுதான். அறியணுமென்ற ஆவல் இருந்தால்தானே அறிய முயற்சி

செய்வோம்?அதனால் முதலில் அப்படிப்பட்ட

அறிகிற ஆவல் - ஜிஜ்ஞாஸை - இருக்க வேண்டுமென்றாகிறது. அதாவது நான் என்ன காட்ட வந்தேனென்றால்:நம்முடைய வேதாந்த மதத்தின் ப்ரமாண ஸூத்ரத்தில் நம்முடைய லக்ஷ்யமாக ப்ரஹ்மத்தை அறிவதே சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மத்தை அறிவதென்பது அநுபவிப்பதுதான். ஆகையால் ப்ரஹ்மஸாக்ஷாத்காரந்தான் நம்முடைய மதத்தின் லக்ஷ்யம். அந்த லக்ஷ்யத்தில் நம்மைச் சேர்ப்பிப்பதற்காகவே அந்த ஸூத்ர புஸ்தகம் ப்ரஹ்மத்தைப் பற்றி விசாரித்து, அதைக் குறித்த விஷயங்களை நமக்குச் சொல்லப் போகிறது என்று முதல் ஸூத்ரம் தெரிவிப்பதாகிறது. இதில் கவனிக்க வேண்டிய விஷயமென்ன என்றால், ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்ட மோக்ஷத்தைச் சொல்லப்போவதாக இங்கே புஸ்தக ஸப்ஜெக்டைச் சொல்லாமல், விடுபட்ட பின் கிடைக்கிற ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தைச் சொல்லியிருப்பதுதான். கெடுதலான ஸம்ஸாரம் போகிறது என்ற 'நெகடிவ்'அம்சத்தை மாத்திரம் தெரிவிக்கும் 'மோக்ஷ

ஜிஜ்ஞாஸையைச் சொல்லாமல், நல்லதான ப்ரஹ்மஞானம், ப்ரஹ்மாநுபவம் என்ற 'பாஸிடிவ்'அம்சத்தைத் தெரிவிப்பதாக 'ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸை'என்று சொல்லியிருக்கிறது.

வேதாந்த மதத்தின் ஆதார ஸூத்ரம் இப்படி இருந்தாலும், மோக்ஷம், மோக்ஷம் என்றே வெகுவாகச் சொல்வதாக ஏன் ஏற்பட்டதென்றால் .....முன்னே ஒன்று சொன்னேன்;இன்னொரு காரணமும் தோன்றுகிறது. வேத வேதாந்தக் கருத்துக்கள் தோன்றிய ஆதிகாலத்திலேயே பிற்பாடு பௌத்தம், பாதஞ்ஜலம் (அதுதான் யோக சாஸ்திரம்), நியாயம் (தர்க்கம்) என்றெல்லாம் உருவான மதங்களின் கருத்துக்களும் முளை விட்டிருக்கின்றன. மநுஷ்ய ஸமுதாயம் என்ற ஒன்று இருந்தால் அதில் எப்போதுமே பல தினுஸான அபிப்ராயங்களும் கொஞ்சம் கொஞ்சமாவது இருந்து கொண்டுதானிருக்கும். அப்படியிருப்பதில் வேதத்திலேயே 'வைதிகம்'என்று சொல்லப்படும் நம்முடைய மதத்திற்கு வித்யாஸமான அபிப்ராயங்களும் கொஞ்சங் கொஞ்சம் ஒவ்வோரிடத்தில் ஜாடைமாடையாகத் தெரிகிறது. பிற்காலத்தில் வித்யாஸம்

நன்றாகவே செய்யப்பட்டு, அதை உடைத்துக் காட்டியே வேறே மதங்கள் உண்டாயிருக்கின்றன. இவற்றில் அடிநாஸ்திகமான லோகாயத மதத்தைத் தவிர மற்ற எல்லா மதங்களுமே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதைத்தான் ஒரே மாதிரி மையமான விஷயமாகச் சொல்லியிருக்கின்றன. 'ஸ்வாமியுமில்லை, ஆத்மாவுமில்லை. சாவுக்கு அப்புறம் கர்மவை அநுபவிக்க எதுவுமில்லை. ஆகையினால் இஷ்டப்பட்டபடி உண்டு, உடுத்திக் கொண்டு கேளிக்கையாக இருக்கலாம்'என்று சொல்லும் லோகாயத்தை 'மதம்'என்று பொதுவாகச் சொல்லப் படுவதிலேயே சேர்ப்பதற்கில்லையாதலால் அதை விட்டு விடலாம். ஆகையால் சுத்த வேதாந்தத்திற்கு வித்யாஸமான எல்லா மதங்களும் ஸம்ஸார விடுதலையைச் சொல்கின்றன என்று சொல்லி விடலாம். ஆனால் எல்லா மதங்களும் அந்த விடுதலைக்கப்புறம் பிரம்ம ஸாக்ஷாத்காரமான ஸச்சிதானந்த நிலை கிடைப்பதைச் சொல்கின்றனவா என்றால், அதுதான் இல்லை!பௌத்தம் முடிவில் எல்லாம் சூன்யமாய் விடுகிற 'நிர்வாண'த்தைச் சொல்கிறது. ந்யாய மதம் - அதோடயே

சேர்த்துச் சொல்லப்படும் வைசேஷிக மதமும்தான் - துக்கம் நிவிருத்தியாகும் 'அபவர்கம்'என்பதை முடிவான லக்ஷ்யமாகச் சொல்கின்றன. அது துக்கம் நிவிருத்தியாகும் நிலை என்றுதான் சொல்கின்றனவே தவிர ஸுகம் நிறைந்த நிலை என்று சொல்லவில்லை. ஸம்ஸார பந்தம் போனதால் துக்க நிவ்ருத்தி. ஆனால் அதை ஸுக ப்ராப்தி என்று சொல்லாததால், ஒரு கஷ்டமும் தெரியாமல் ஜடமாக இருக்கும் நிலையாக நினைக்கவும் இடமிருக்கிறது. ஸாங்கியத்தின் லக்ஷ்யமான 'கைவல்யத்திலும்'பிரகிருதி என்கிற மாயையின் ஆட்டத்திலிருந்து விடுதலை மட்டுமே குறிக்கப் படுகிறதே தவிர பாஸிடிவான ஆனந்த ஸ்திதி சொல்லப் படவில்லை. பாதஞ்ஜல யோகத்திலும் முதல் ஸூத்ரத்தில் லக்ஷ்யத்தைச் சொல்லும்போதே ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் என்று பாஸிடிவாகச் சொல்லாமல் சித்த ஓட்டத்தை அடக்குவது என்று நெகடிவாகவே சொல்லியிருக்கிறது. மாயையின் பாதிப்பும், ஸம்ஸார பந்தமும் சித்த ஓட்டத்தினால்தானே நமக்கு உண்டாகிறது?ஆகையால் சித்தத்தைப் பட்ட கட்டை மாதிரி ஆக்கிக் கொண்டு விட்டால் கிடைக்கும் பந்த மோக்ஷத்தைத்தான் அந்த மதமும் சொன்னதாகிறது.

இந்த எல்லா மதங்களுக்கும் வித்து ஆதிகாலத்திலிருந்தே இருந்திருக்கிறது. அதனால்தான் நம்முடைய வேதாந்த மதமும் எல்லா மதங்களுக்கும் 'காம'னான ஸம்ஸார நீக்கமாகிற மோக்ஷம் என்பதையே லக்ஷ்யமாகச் சொன்னது. இப்படி ஒரு காரணம் தோன்றுகிறது.

வேதாந்த வழியில் போய் அந்த மோக்ஷத்தைப் பெறுகிற போது அது தன்னால் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமாகத் தானிருக்கும். அங்கே (பிரம்ம ஸாக்ஷாத்காரத்திலே) ஒருத்தன் புதுசாக ப்ரஹ்மம் என்று ஏதோ ஒன்றை ஸாக்ஷாத்கரிக்கவில்லை. ஸுக ப்ராப்தி என்று சொல்லும் படியாக எந்த ஆனந்த - ஸச்சிதானந்த - ஸ்திதயையும் அடையவுமில்லை. எப்போதுமே ஜீவன் ப்ரஹ்மமாக இருப்பவன்தான்;ஸச்சிதானந்த கனமாக இருப்பவன்தான். ஆனாலும் அப்படியிருப்பது அவனுக்குத் தெரியாதபடி மாயை பந்தப்படுத்தியிருந்தது. ஸாதனையெல்லாம் பூர்த்தியாகப் பண்ணியவுடன் அந்த பந்தம் கத்தரித்துப் போகிறது. மாயையிலிருந்து அவன் விடுபடுகிறான்;அதாவது மோக்ஷம் அடைகிறான். உடனே ஆடமேடிக்காகத் தன்னை நிஜ ஸ்வரூபமான ப்ரஹ்மமாக தெரிந்துகொண்டு விடுகிறான். ஸாதனையெல்லாம் மாயை போவதற்கே, மாயையிலிருந்து விடுதலைக்கே ஒழிய, ஸச்சிதானந்த ப்ரஹ்மத்தை உண்டு பண்ணவோ, அதை அடையவோ, அல்லது அது ஸம்பந்தமாக ஏதொன்றும் பண்ணுவதற்கோ இல்லை. அதை உண்டு பண்ண முடியாது. அழிக்கவும் முடியாது. எப்போதுமே இருப்பது அது. ஸ்வயம் ஸித்தமாக - கைவசத்திலேயே - எப்போதும் உள்ள அதை 'அடைவது'என்பதற்கும் இடமில்லை.

இப்படிப் பார்த்தால் ஸாதனையினால் நடப்பது மாயாபந்தத்தை உடைத்துப் போடும் விடுதலையே என்பதால் ஸாதனா லக்ஷ்யத்தை மோக்ஷம் என்று சொல்வதும் நியாயந்தான்.

---

## முமுக்ஷு : ஆசார்யாள் தரும் லக்ஷணம்

மாயையிலிருந்து விடுபட்டு ப்ரஹ்மமாவதிலேயே பூரா மனஸையும் செலுத்தி அதே ஈடுபாடாக இருப்பது தான் முமுக்ஷுதை. அப்படி இருப்பவன் முமுக்ஷு.

**அஹங்காராதி தேஹாந்தான் பந்தான் - அஜ்ஞாந கல்பிதான்**

**ஸ்வஸ்வரூபாவபோதேந மோக்துமிச்சா முமுக்ஷுதா ||**

என்பது ஆசார்யாள் விவேக சூடாமணியில் கொடுத்திருக்கும் டெஃபனிஷன். இங்கே ஆசார்யாள் விடுபட வேண்டிய மாயை, விடுபட்ட அப்புறம் அநுபவிக்கிற ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் இரண்டையும் சொல்லியிருக்கிறார்.

அஞ்ஞானம் என்பதே மாயை. மாயையால்தான் பரமாத்மாவுக்கு வேறேயாக தனியாக 'நான்'என்று ஒன்று இருப்பது போன்ற அஹங்காரம் கற்பிக்கப்படுகிறது. அனர்த்த பரம்பரைக்கு இந்த அஹங்காரம்தான் ஆரம்பம். ஸூக்ஷ்மமாக எண்ண ரூபத்திலே இருக்கும் அந்த அஹங்காரம்தான் ஆரம்பம். ஸூக்ஷ்மமாக எண்ண ரூபத்திலே இருக்கும் அந்த அஹங்காரத்திலிருந்து நன்றாகத் தெரிகிற ஸ்தூல தேஹம் ஈறாக அஞ்ஞானமானது பந்தங்களைக் கல்பித்து ஜீவனைக் கட்டிப் போட்டிருக்கிறது. இதைத்தான் 'அஹங்காராதி தேஹாந்தான் பந்தான் அஜ்ஞான கல்பிதான்'என்று சொல்லியிருக்கிறார். இதிலிருந்து, இந்தக் கட்டிலிருந்து விடுபடுகிற ஆசையே - 'மோக்தும் இச்சா': விடுபட வேண்டுமென்ற இச்சையே - 'முமுக்ஷுதா': முமுக்ஷுதை எனப்படுவது. இதுதான் மோக்ஷத்தின் நெகடிவ் டெஃபனிஷன். முடிவான நிலை பாஸிடிவாக என்ன என்பதையும் மறக்காமல் (ச்லோகத்தின்) நடுவிலேயே பதிந்து வைத்திருக்கிறார், 'ஸ்வஸ்வரூபாவபோதேன' என்று போட்டு!ஸ்வஸ்வரூப அவபோதம். 'அவபோதம்'என்றால் விழித்துக் கொள்வது. அஞ்ஞான இருட்டிலிருந்து ஞான

விழிப்புப் பெறுவது. எதைப் பற்றிய ஞானம்?'ஸ்வ-ஸ்வரூப'த்தைப் பற்றியதுதான் - அதாவது 'தன்னுடைய நிஜமான தன்மையான ஆத்மாவைக் குறித்து'.ஆத்மாவை குறித்த என்பதைவிட ஆத்மாவேயாகிய ஞான விழிப்பு என்பது இன்னும் பொருத்தம். Awareness என்கிறார்களே, அப்படிப்பட்ட விழிப்புற்ற தன்னறிவும் ஆத்மாவும் வேறேவேறே இல்லை;இரண்டும் ஒன்றுதான். மாயை என்பது அஞ்ஞானம் என்றால் ப்ரஹ்மம் என்பது ஞானம். அந்த ஞானம்தான் ஸ்வஸ்வரூப அவபோதம்.

பந்தத்திலிருந்து விடுபட வேண்டுமென்பது, அதோடு முடிந்து போகிற லக்ஷ்யமில்லை. 'பந்தம் கஷ்டமாயிருக்கிறது'அதனால் அது போகட்டும். அப்புறம் கஷ்டம் தெரியாமல் கல்லு, மண்ணு மாதிரி எப்படி வேண்டுமானாலும் இருப்போம்'என்பதாக பந்த மோக்ஷத்தையே முடிவாக - end in itselfஆக-நினைப்பவனை நம்முடைய ஆசார்யாள் முமுக்ஷு என்று சொல்ல மாட்டார். சித்தவ்ருத்தி நிரோதமே (சித்த ஓட்டத்தை அடக்குவதே) போதுமென்று பதஞ்சலி

சொல்லி, விட்டுவிட்ட மாதிரி ஆசார்யாள் விடமாட்டார். 'ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸை'அல்லவா அவருடைய மூல ஸூத்ரத்தின் ஸப்ஜெக்டும் ஆப்ஜெக்டும்?ஆகையால் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டாகவே - ஜீவாத்மா தன்னைப் பரமாத்மாவுக்கு அபேதமாக தெரிந்து கொள்ளும் ஸ்வஸ்வரூப அவபோதத்தின் பொருட்டாகவே - அஞ்ஞான பந்தத்திலிருந்து விடுபடத் தாபத்தோடு ஆசைப் படுவதைத்தான் அவர் முமுக்ஷுதை என்பார்;அப்படி ஆசைப் படுபவனைத் தான் முமுக்ஷு என்பார். இந்த ச்லோகத்திலிருந்து அது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

'ஸ்வஸ்வரூபாவபோதேன'என்றால் ஆத்ம ஞான விழிப்பினால் என்று அர்த்தம். அப்படிப்பட்ட விழிப்பால் அஞ்ஞான பந்தத்திலிருந்து விடுதலை பெற இச்சிக்க வேண்டும் என்கிறார். இப்படிச் சொன்னதால் முதலில் ஸாக்ஷாத்காரம் (அதுதான் இங்கே சொல்லியிருக்கும் அவபோதம்). அப்புறம் அதனால் பந்தமோக்ஷம். இத்தனை

நாழி சொன்னதற்கு நேர்மாறாகப் பாஸிடிவான ஸாக்ஷாத்காரமும் முடிந்த முடிவாக நெகடிவ் மோக்ஷத்தில் தான் கொண்டு விடுகிறது என்று அர்த்தம் பண்ணி விடக்கூடாது. வேதாந்த மதத்தின் லக்ஷ்யத்தை அறிந்த யாரானாலும், ஆசார்யாளின் புஸ்தகங்களையெல்லாம் பார்த்து அவருடைய ஹ்ருதயத்தை அறிந்த யாரானாலும் அப்படி அர்த்தம் பண்ணிக் கொள்ள மாட்டார்கள்.

பந்தமோக்ஷம், ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஆகிய இரண்டில் எது முன்னாடி, எது முன்னாடி, எது பின்னாடி என்பதே கிடையாது. இரண்டும் சேர்த்து 'ஸைமல்டேனிய'ஸாக உண்டாகிறவை. நல்ல இருட்டிலே ஒரு நெருப்புக் குச்சியைக் கிழிக்கிறோம். வெளிச்சம் உண்டாகிறது. இருட்டுப் போகிறது. வெளிச்சம் உண்டாகிக் கொஞ்ச நாழி கழித்தா இருட்டு போகிறது. இரண்டும் ஒரே காலத்தில்தான் நடக்கின்றன?

ஆனாலும் ஒன்று கவனிக்கணும். இருட்டு போய் அதே ஸமயத்தில் வெளிச்சம் உண்டாகித்தான் அதே ஸமயம் இருட்டுப் போகிறது!

இதில்தான் வேதாந்த மதத்தின் சிறப்பு இருக்கிறது. அது ஆத்ம ஜ்யோதிஸைக் கண்டுபிடித்துக் கொள்வதையே தான் மையமாக வைத்து நித்யாநித்ய வஸ்து விவேகத்திலிருந்து ஆரம்பித்து மேலே மேலே போகிறது. புத்தர் சொன்னமாதிரி துக்க நிவிருத்தி. பதஞ்சலி சொன்ன மாதிரி துக்கப்படுத்தும் சித்தத்தின் நிரோதம் என்று சொல்லாமல் ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பதைத்தான் உபநிஷத் ரிஷிகள், ப்ரஹ்ம ஸூத்ரகாரர், ஆசார்யாள் எல்லாரும் சொல்லி வந்திருக்கிறார்கள். அவர்கள் ஸத்ய அன்வேஷணம் என்றே புறப்பட்டுப் போகச் சொன்னவர்கள். அதாவது, 'எது உண்மையோ அதைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். ஸம்ஸாரம் நல்லதோ கெட்டதோ, துக்கமோ ஸந்தோஷமோ எப்படி வேண்டுமானால் இருந்துவிட்டுப் போகட்டும். இப்படி ஒருப்ரவாஹம் நிலை கொள்ளாமல் ஓடிக் கொண்டிருக்கிறதென்றால் இதற்கு ஆதாரமாக நிலையாயுள்ள

ஏதோ ஒன்றின் மேலேதானே இது நடக்க வேண்டும்?ஜீவன் என்றிருக்கிற நம் விஷயத்திலும் அதுபோலவே, அழிந்துபோகிற நமக்கு உயிரை, அறிவை, சக்தியைக்

கொடுக்கிற ஒரு அழியாத அடிப்படை இருக்கத்தானே வேண்டும்?அது என்ன என்று கண்டுபிடிக்கணும்'என்று, 'ஒரு மஹா ஸத்யத்தை நாம் பிடிக்க வேண்டும். அப்படி பிடிக்க முடியும்'என்ற உத்ஸாஹத்துடன், நம்பிக்கையுடன் கம்பீரமாக, தீரமாக தேடிக்கொண்டு புறப்பட்டவர்கள், நம்முடைய மூல புருஷர்கள். ஸத்யத்திற்காகவே ஸத்யம் என்று புறப்பட்டவர்கள். 'துக்கம் இருக்கே:த்ருஷ்ணை (வேட்கை) இருக்கே;இதுகள் கஷ்டப் படுத்துகிறதே!என்று அழுதுகொண்டு, அந்த அழுகையிலிருந்து விடுதலை காணவேண்டுமென்று, அந்த விடுபட்ட நிலை எப்படியானாலும் ஸரியென்று புறப்பட்டவர்களில்லை. சித்த விருத்திகள் போட்டுப் பிடுங்குகிறதே என்று நொந்து கொண்டு அதிலிருந்து விடுபட்டு, எப்படியாவது விடுபட்டு, அப்புறம் எங்கே போய்ச் சேர்ந்தாலும் பரவாயில்லை என்று புறப்பட்டவர்களில்லை. பொய்யான மாயை மறைத்துக் கொண்டிருக்கிற ஸத்யமான ஆத்ம ஜ்யோதிஸைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றே புறப்பட்டவர்கள்;மற்றவர்களையும் அப்படிப் புறப்படச் சொன்னவர்கள்.....

அழுது கொண்டு புறப்பட்டவர் என்று நான் சொன்னவரை-புத்தர்தான் அவர்;அவரை-ப் பற்றிக் கூட அந்த மதஸ்தர்கள் ஸ்தோத்ரிக்கும் போது 'போத'த்திற்காக, அதாவது பாஸிடிவான ஞானத்திற்காகத் தான் அவர் புறப்பட்டுப் போனது, அப்புறம் 'போதி'மரத்தின் கீழேயே ஞானம் பெற்றார், அதனாலேயே 'புத்தர்'என்று பெயர் பெற்றார் என்றுதான் சொல்கிறார்கள். அந்த மரத்திற்குக் கீழே உட்கார்வதற்கு முன்னால் அவரே சொன்ன வசனமாக அப்படி ஒரு ச்லோகம் சொல்லியிருக்கிறார்கள் - தீவிர முமுக்ஷுதைக்கு இதைவிட உதாரணமுண்டா என்று நாமும் கொண்டாடும்படியாக:

இஹாஸநே சுஷ்யது மே சரீரம்

த்வகஸ்தி மாம்ஸானி லயம் ப்ரயாந்து |

அப்ராப்ய போதம் பஹுகல்ப துர்லபம்

நைவாஸநாத் காயமிதம் சலிஷ்யதி ||

'இந்த ஆஸனத்திலேயே இந்த உடம்பு வற்றிச்சுக்காகப் போகட்டும். ('சுஷ்கம்'என்பதிலிருந்து தான் 'சுக்கு'வந்தது. இஞ்சி வற்றி வற்றிச் சுஷ்கமாவதால் அப்படிப் பேர்.) தோலும், எலும்பும், மாம்ஸமும் நசித்தே போகட்டும். 'போதம்'பெறாமல் - எத்தனையோ கல்ப காலத்திற்கு அப்புறமே அதைப் பெற முடியுமென்றாலும் ஸரி, அப்படிப் பெறாமல் - இந்த இடத்தைவிட்டு இந்த உடம்பு நகராதாக்கும்! என்று மஹா த்ருட ஸங்கல்பத்துடன் சொன்னாராம். அந்த விஷயம் எப்படியானாலும் நம்முடைய உபநிஷத் ரிஷிகள் தீரர்களாகப் பரம ஸத்யத்தைக் கண்டு கொள்ளவே ஸகலத்தையும் விட்டுப் புறப்பட்டவர்கள்.

இப்படியாக ஸத்யத்தைக் கண்டுபிடிப்பதையே லக்ஷ்யமாக வைத்து ஸாதனை பண்ணிக் கொண்டு போகிறவருக்கு அந்த ஸத்ய ஜ்யோதிஸின்

தரிசனம்தான் விஷயமாகத் தெரியும். அதிலிருந்தே மாயை இருட்டு போயிற்று என்று அவர்கள் அநுமானம் பண்ணிக் கொள்ளும்படியாக இருக்கும். தங்கள் அநுபவத்தை ஞானிகள் சொல்லும்போது எப்படி விவரித்திருக்கிறார்களென்று பார்த்தால், அதே குறியாக ஆத்ம விசாரம் பண்ணிக் கொண்டே போனதாகவும் டகாலென்று (சடேரென்று) ஆத்மா ப்ரகாசித்து விட்டது என்றுந்தான் சொல்லியிருப்பார்கள். மாயா பந்தம் என்று ஏதோ ஒன்று போனதாகத் தங்களுக்குத் தெரிந்து அப்புறம் ஆத்ம ஸாக்ஷாத்காரம் உண்டானதாகச் சொல்லியிருக்கவே மாட்டார்கள். ஏனென்றால், கௌட பாதாசார்யாள் (மாண்டூக்யோபநிஷத் காரிகையில்) சொல்லியிருப்பது மோல் மாயை என்றோ, மாயா பந்தம் என்றோ, பந்தமோசனம் என்றோ தெரியும்படியாக வாஸ்தவத்தில் அந்த விஷயங்கள் எதுவுமே கிடையாது. அந்த 'ஹை ஃபிலாஸபி'இப்போது உங்களுக்கு வேண்டாம். அதெப்படியானாலும் ஸரியான அத்வைத ஸாதகனுடைய ஒரே லக்ஷ்யம் ஆத்ம ஸாக்ஷாத்காரந்தான். அதற்காகவே அவன் ஸாதனாந்தத்தில் மஹாவாக்யங்களை ஸதாவும் த்யானம் பண்ணிக் கொண்டேயிருந்து அப்படியே அந்த வாக்யங்கள் சொல்லும் ஜீவ-ப்ரஹ்ம அபேத ஸ்திதியை ப்ரத்யக்ஷத்தில் அநுபவித்து விடுகிறான். அப்படி அநுபவம் ஏற்பட்டதாலேயே பந்தம்

போயிற்று என்று தெரிந்து கொள்ளும் படியாக ஆகிறது. அதனால் இதற்கப்புறம் அது (ஸாக்ஷாத்காரத்திற்கு அப்புறம் பந்தமோக்ஷம்) என்கிற மாதிரி ஆசார்யாள் போட்டிருக்கிறார். 'ஸ்வஸ்வரூப அவபோதேன மோக்தும்'என்று!அவ்வளவுதான்!

'அவபோதம்'என்றால் விழிப்பு என்றேன். தூக்கம் என்பது தானாக எங்கேயோ ஒடிப்போய்விட்டு அப்புறமா விழிப்பு உண்டாகிறது?டக்கென்று விழிப்பு உண்டாகிறது?டக்கென்று விழித்துக் கொண்டு விடுகிறோம். அதனாலேயே தூக்கம் போய்விட்டது என்று தெரிந்து கொள்கிறோம். அப்படித்தான் இதுவும்.

இன்னொன்றுகூடச் சொல்லலாம். 'ஸ்வஸ்வரூப அவபோதாய', அதாவது ஆத்ம ஞான விழிப்புக்காகத்தான், முமுக்ஷுவாக இருக்கிற நிலையில் ஒருவன் பந்த மோக்ஷத்தை இச்சிக்கிறான். அந்த நிலைக்கு மேலே போய் ஸித்தியே பெறுகிறபோதோ 'ஸ்வஸ்வரூப அவபோதேன'-தான் பெற்ற ஞான விழிப்பினாலேயே பந்த மோக்ஷம் ஏற்பட்டு விட்டது என்று தெரிந்து கொள்கிறான்.

---



## அடிநிலை, நடுநிலை முமுக்ஷு

ஒரே தீவிரமாக மோக்ஷத்திற்கு இச்சிப்பதுதான் முமுக்ஷுத்வம் என்று சொன்னேன். ('மோக்ஷத்திற்கு'என்று பொது அபிப்ராயப்படி சொன்னாலும் , 'ஸாக்ஷாத்காரத்திற்கு'என்றே அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். பொது அபிப்ராயப்படியும், ஆசார்யாளும் அதையே பின்பற்றிச் சொல்கிறபடியும், 'மோக்ஷம்' என்றே சொல்லிக் கொண்டு போகிறேன்.) மோக்ஷத்தில் தீவிரமான

தாபம் தான் முமுக்ஷுதை. ஆனாலும் கருணை மனஸ் கொண்ட ஆசார்யாள் அத்தனை தீவிரமாகத் தவிக்காதவர்களையுங்கூட மந்த, மத்யம தசை முமுக்ஷுகளாக அங்கீகரித்து அடுத்த ச்லோகத்தில் அவர்களையும் உத்ஸாஹப்படுத்தும் விதத்தில் சொல்லியிருக்கிறார்.

கீழ் மட்டத்திலிருப்பது மந்த தசை, நடுத்தரமாக இருப்பது மத்யம தசை. உச்ச மட்டத்திலிருப்பது உத்தம தசை. உச்ச மட்டத்திலிருப்பது உத்தம தசை. உபாஸனைகளில், ஸாதனைகளில் ஆளைப் பொறுத்து மந்தாதிகாரி, மத்யமாதிகாரி, உத்தமாதிகாரி என்று மூன்று சொல்வது வழக்கம்.

அத்வைத ஸாதனையில் ஒரளவு உசந்த கட்டத்திற்குப் போன நிலையில்தான் முமுக்ஷுதை ஆழமாக ஏற்படும். அதாவது உத்தமாதிகாரிதான் மற்ற எல்லாவற்றிலும் ஆசையைத் தள்ளி மோக்ஷமே குறி என்று இருப்பான். ஆனாலுங்கூட, கருணையினால் ஆசார்யாள் இதிலேயும் மத்ய-மத்யம அதிகாரிகளுக்கு இடம் கொடுத்துச் சொல்லியிருக்கிறார். அடிநிலையில் இருக்கிறவனுங்கூட மோக்ஷத்தில் ஒரு இச்சை வைத்துத்தானே ஸாதனை என்று

ஆரம்பித்திருக்கிறான்?அவனுக்கும் மந்த தசையில் முமுக்ஷுதை இருப்பதாக ஆசார்யாள் அருளோடு, அநுதாபத்தோடு நினைத்திருக்கிறார். அப்புறம் கொஞ்சம் ஸாதனை பண்ணிக் கொஞ்சம் பக்குவமடைந்தபின் அவன் ஆரம்பத்திலிருந்ததைவிட, இந்த வாழ்க்கை ஒரு மாயம்தான் என்று புரிந்து கொண்டு இன்னும் கொஞ்சம் நன்றாகவே மோக்ஷத்தைப் பற்றி நினைக்க ஆரம்பிப்பான். இது மத்யம தசை. ஆனால் இப்போதும் ஸ்டெடியாக அதிலேயே சித்தம் இல்லாமல் அலை பாய்ந்து கொண்டுதானிருக்கும். ஆரம்பத்தில் ரொம்பவும் க்ஷணிகமாக (க்ஷண காலத்ததாக) இருந்த முமுக்ஷதை இப்போது கொஞ்சம் நின்று நிலைத்ததாக இருக்குமென்றாலும், இதுவும் வேர் பிடித்து ஊன்றி நிற்காமல் மாயை பிடித்துக் கொள்ளத்தான் செய்யும். அதனாலே

அலுத்து சலித்து அந்த மத்யம தசை முமுக்ஷு, "நமக்காவது, மஹா பெரிய மோக்ஷ ப்

ப்ராப்தி கிடைப்பதாவது?" என்று நம்பிக்கை

இழந்துவிடுவதுகூட உண்டு. இவன் ஸமாசாரமே இப்படியென்றால் மந்த தசையிலிருப்பவனைப் பற்றி கேட்கவே வேண்டாம்!இவர்களையும் உத்ஸாஹப்படுத்தி ஸாதனை வழியை விடாமல் விடாமுயற்சி பண்ண வைப்பதற்காக ஆசார்யாள் கருணையோடு சொல்கிறார்:

மந்த-மத்யம - ரூபாபி வைராக்யேண சமாதிநா|

ப்ரஸாதேன குரோ:ஸேயம் ப்ரவ்ருத்தா ஸூயதே பலம் ||

"அப்பா?அழாதே!குரு ப்ரஸாதம் இருந்தால் எதுவும் நடக்கும். ஆனால் நீயும் அதற்குப் பாத்ரனாகும்படி முடிந்த மட்டும் வைராக்யத்தை அப்யாஸம் பண்ணு. சமாதி ஷட்கத்தை அப்யாஸம் பண்ணு. அப்படிப் பண்ணினால் உன் முமுக்ஷுதை மந்தமாகவோ, மத்யமமாகவோ இருந்தால்கூட குருவின் அநுக்ரஹத்தில் அது நன்றாக விருத்தியாகிப் பலன் தந்துவிடும்"என்று சொல்கிறார்.

மந்தம், மத்யமம், உத்தமம் என்று மூன்று இருப்பதில் உத்தமம் என்பதை 'ப்ரவ்ருத்தம்'- நன்றாக விருத்தியானது - என்று சொல்லியிருக்கிறார். தன்னால் முடியவில்லையே என்று அழாமல், முடிந்தமட்டும் முயற்சி பண்ணினால் குரு அநுக்ரஹமும் சேர்ந்து மந்த மத்யமங்கள்கூட ப்ரவ்ருத்தமாகி விடும் என்கிறார்.

---



## குரு ப்ரஸாதம்

குரு ப்ரஸாதம் முமுக்ஷுதைக்கு மட்டுமில்லை;ஸாதனா க்ரமத்தில் அகாராதி க்ஷகாராந்தம் (அடி ஆரம்பத்திலிருந்து முற்றிய முடிவுரை) ஒவ்வொன்றும் குருப்ரஸாதத்தாலேயேதான் பூர்ணமாக வேண்டும். சிஷ்யன்

அந்தரங்க சுத்தமாக முயற்சி பண்ணுவதன் மேல் குரு கருணைகொண்டு அநுக்ரஹம் பண்ணிப் பண்ணித்தான் ஒவ்வொரு படியிலும் அவன் ஜயித்து மேல் படிக்குப் போவது.

அடுத்தாற்போல் ஸாதனையின் மூன்றாம் ஸ்டேஜில் குருவிடம் சரணாகதியும், குருவின் பரிபூர்ணாநுக்ரஹமும் ரொம்பவும் முக்யம். இதுவரை கொஞ்சம் முன்னே பின்னே இந்த்ரிய வியாபாரம் முதலானதுகளில் ஒருவன் தப்புப் பண்ணியிருந்தால்கூட அது பெரிய தோஷமில்லை. ஆனால் ஸந்நியாஸாச்ரமம் வாங்கிக்கொண்டு, அநுபவத்திற்கெல்லாம் எவரெஸ்டான ப்ரம்மாநுபவத்தைக் கொடுக்கக்கூடிய மஹாவாக்ய மந்த்ரோபதேசம் வாங்கிக் கொள்ளும் ஸ்டேஜில் - அதற்கப்புறமுந்தான் - மனஸ் கொஞ்சம் தப்பாகப் போனால்கூட அது மஹாதோஷமாக, பாபமாகவே ஆகிவிடும். அந்த இடத்தில் 'தானே ஸரிப் பண்ணிக்கலாம்'என்று ஒருத்தன் நம்பிக்கொண்டிருந்தால் முடியாது. தன்னம்பிக்கை அவசியந்தான். ஆனாலும் அதை மட்டும் வைத்துக் கொண்டு இங்கே தற்காப்புப்பண்ணிக் கொள்ளப் பார்த்தால் போதாது. துளிக்கூடப் பாபம் ஸம்பவிக்காமல், ஸாதனா மார்க்கத்திலேயே ரயில் சக்கரம் அந்தண்டை இந்தண்டை இஞ்ச்கூடப் போகாமல் தண்டவாளத்தின் மேலேயே போகிறாற்போல இவன் போக வேண்டிய கட்டத்தில் தன்பலத்தோடுகூட அதை விடவும் ஜாஸ்தியாக, அநுக்ரஹ பலம் ரொம்பவும் அவசியம். அதனால்தான் இங்கே குறிப்பாக குரு ப்ரஸாதத்தைச் சொல்லியிருப்பது. முமுக்ஷுத்வத்தில் நல்ல பற்று வந்தவுடன் ஸந்நியாஸமும் மஹாவாக்ய ஸ்வீகரணமும் ஆனதால், இனிமேல் நடக்க வேண்டியதற்கெல்லாம் சேர்த்து இங்கே குரு ப்ரஸாதத்தை ஞாபகப்படுத்தியிருக்கிறது.

---

## முமுக்ஷு பற்றி ஆசார்யாளும் ஆதி நூல்களும்

முமுக்ஷுதைப் பற்றிப் பல இடங்களில் சொல்லியிருக்கும் ஆசார்யாள் குறிப்பாக சிலது விவேக சூடாமணியில் மனோமய கோசத்தைப் பற்றி விஸ்தாரம் பண்ணும்போது சொல்லியிருக்கிறார் - அன்னமயத்திலிருந்து ஆரம்பித்து ஒவ்வொரு கோசத்தையும் பற்றிச் சொல்லிக் கொண்டு போகும்போது மனோமயத்தைப் பற்றி வருகிற இடத்தில்.

சிரத்தை ஸமாதானங்களை புத்தி ஸம்பந்தப்படுத்தி (ஆசார்யாள்) சொன்னதாகப் பார்த்தோம். முமுக்ஷுதையைச் சொல்லும்போது மனஸை ஸம்பந்தப்படத்திச் சொல்லியிருக்கிறார். அதனால் முமுக்ஷுதை மனஸில்தான் ஏற்பட வேண்டியது என்று அர்த்தம் பண்ணிக் கொண்டுவிடக் கூடாது. மனஸ் என்று ஒன்று இல்லை என்று அடித்துப் போடுவதில் ஒருவன் ஆழமாகக் கவனம் வைத்தால்தான் ஸரியான முமுக்ஷுவாக ஆகி, அதற்கு மேல் ஸரியான வழியில் போக முடியும் என்றே காட்டுகிறார். ஒரு ஸ்டேஜ் வரையில், மனஸில் தோன்றுவதிலேயே நல்லதாக இருப்பவை கெட்டதாக இருப்பவை என்று சீர் பிரித்துக் கெட்டதைத் தள்ளி நல்லதை எடுத்துக் கொள்ள வேண்டியது. அப்புறம் மோக்ஷம் ஒன்றே குறி என்று தீவிர முமுக்ஷுதை ஏற்படப் பக்குவமாகும் போது, 'நல்லதென்பதும் மனஸில் உற்பத்தியாகி, மனஸின் அநுபவத்திற்குள் வருவதாகத்தானே இருக்கிறது?ஆத்மாவோ மனஸாலும் பிடிக்க முடியாதது;மனஸ் நசித்த அப்புறமே அதை அடைய முடியும். ஆகையால் நல்லதுகள் என்று இருக்கும் பலவற்றையும், அவற்றுக்கு ஆச்ரயமும் விஷயமுமாகிற மனஸையுங்கூட நாம் தள்ளிவிட்டு, நல்லதோ கெட்டதோ இருக்கிற ஒன்றேயான ஆத்மாவையேதான் தேடி நாடி எல்லாம் பம்ம வேண்டும்'என்பதில் உறுதிப் பட வேண்டும். அதனால்தான் மனோமய கோசத்தைச் சொல்லும்போது முமுக்ஷுவுக்கான 'அட்வைஸ்', 'வார்னிங்'எல்லாம் கொடுக்கிறார்.

'முமுக்ஷு முதல் கார்யமாக ('அக்ரே'என்கிறார். 'முதலில்'என்று அர்த்தம்;முதல் கார்யமாக) விவேக

வைராக்யங்களை த்ருடமாக ஆக்கிக்கொள்ள வேண்டும். ஏனென்றால் அந்த இரண்டும் 'அதிரேக'மாக, அதாவது முழுக்க முழுக்க, excessive -ஆக, இருந்தால்தான் சித்த சுத்தி உண்டாகும்'என்று பீடிகை போட்டுவிட்டு, 'மனஸ் என்பது பெரிய புலி - மஹாவ்யாக்ரம். போக்ய விஷயங்கள் என்கிற காட்டில் அது உலாவிக் கொண்டிருக்கிறது. முமுக்ஷுவான ஸாது அந்தப் பக்கமே போகக்கூடாது'என்கிறார். மனஸ் புலி என்றால் அதையே தள்ளவேண்டுமென்றுதானே அர்த்தம்?"நீ அதற்குத் தள்ளியே இரு"என்கிறார். மனஸை வைத்துக் கொண்டு நல்லதை எண்ணுவது, பண்ணுவது ஆகியவையும் கூடாதவை என்று ஆகிவிட்டதல்லவா?இதற்கு விவேக வைராக்யங்களும் அவற்றால் ஏற்படும் பரிசுத்தியும் அவசியம். 'போக்தா என்பவனாக இருந்து கொண்டிருக்கும் ஒரு மநுஷ்யனுக்கான அத்தனை விஷயங்களையும்

அசேஷமாக (மிச்சம் மீதியில்லாமல்) மனஸ்தான் உற்பத்தி செய்கிறது; கர்மாக்களிலேயும் அவற்றின் பலன்களை அநுபவிப்பதிலுமே ஒருவன் ஸதாகாலமும் சுழன்று சுழன்று வருவதற்கு மனஸ்தான் காரணம். சுருக்கமாகச் சொன்னால் அவித்யை (அதாவது, ஞானத்திற்கு நேர் ஆப்போஸிட்டான அஞ்ஞானம்) என்பதே மனஸ்தான்;தத்வம் உணர்ந்த பெரியவர்கள் அப்படித்தான் சொல்கிறார்கள் - அத:ப்ராஹுர்-மநோ(அ)வித்யாம் பண்டிதாஸ் - தத்வ தர்சின:. ஆகையினால் மனஸைத்தள்ள வேண்டும். தள்ளுவதற்கு பூர்வாங்கமாக ஒரு முமுக்ஷு அதைப் பரிசுத்தி பண்ணி லேசாக்கி விடவேண்டும். அசுத்த எண்ணங்களால் அழுக்குப் பிடித்துத் தடித்துப் போயிருப்பதை சுத்தி பண்ணி லேசாக்கணும். அப்புறம் முக்தி உள்ளங்கை நெல்லிக்கனியாகக் கிடைத்துவிடும்"என்றெல்லாம் சொல்கிறார்.

'விவேக சூடாமணி'உபதேசம் முழுதுமே முமுக்ஷுவுக்குத்தான் என்று அந்தப் புஸ்தகத்தை முடிக்கும்போது முத்தாய்ப்பு வைத்திருக்கிறார். அதிலிருந்து என்ன தெரிகிறதென்றால், முமுக்ஷுத்வம் என்பது அஸல் முக்தனாகவே ஆகிற க்ஷணம் வரையில் தொடர்கிறது என்று

தெரிகிறது. ஸாதனை க்ரமத்தில் இதற்கப்புறம் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ச்ரவண, மனன, நிதித்யாஸனங்கள் பண்ணி ஸத்ய ஸாக்ஷாத்காரம் பெற்று முக்தனாக வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி, இதற்கு அப்புறம் ச்ரவண, மனன, நிதித்யாஸனங்கள் பண்ணி ஸத்ய ஸாக்ஷாத்காரம் பெற்று முக்தனாக வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி, இதற்கு அப்புறம் ச்ரவண, மனனாதிகளைச் சொன்னாலும் அப்போதெல்லாமும் முமுக்ஷுதை - மோக்ஷம் அடையணும், அடையணும் என்ற தாபம் - தொடர்ந்து இருந்துகொண்டே இருக்க வேண்டும். நிதித்யாஸனத்தில் உச்சிக்குப் போய், ஸாக்ஷாத்காரத்திற்கு ரொம்பக் கிட்ட வந்துவிட்டவனையும் முமுக்ஷுவாக ஆசார்யாள் சொல்கிறார் என்பது அந்த புஸ்தக முடிவில் அவனுக்கு அவர் கொடுத்திருக்கும் லக்ஷணங்களில் இருந்து தெரிகிறது. என்ன சொல்கிறரென்றால்:

**ஹிதமிமமுபதேசமாத்ரியந்தாம்**

**(ஹிதம் இமம் உபதேசம் ஆத்ரியந்தாம்)**

**விஹித - நிரஸ்த - ஸமஸ்த - சித்ததோஷா : |**

**பவஸுக-விமுகா : ப்ரசாந்த- சித்தா :**

**ச்ருதிரஸிகா யதயோ முமுக்ஷவோ யே ||**

யாரை உத்தேசித்து 'விவேக சூடாமணி'யை எழுதினாரோ அவர்கள் ஹிதமான இந்த உபதேசத்தை ஆதரிக்க வேணும், ஹிதம் இமம் உபதேசம் ஆத்ரியந்தாம் என்று முதல் பாதத்தில் சொல்கிறார். அடுத்த மூன்று பாதத்தில் அவர்கள் யார், எப்படிப்பட்டவர்கள் என்று லக்ஷணங்கள் கொடுக்கிறார். 'விஹித நிரஸ்த ஸமஸ்த சித்த தோஷா:' என்றால் சாஸ்திர விதிப்படி ஸகல சித்த மலங்களையும் போக்கிக் கொண்டவர்கள்'. 'பவஸுக விமுகா:' - 'ஸம்ஸார

ஸௌக்யங்களிலிருந்து மூஞ்சியைத் திருப்பிக் கொண்டவர்கள்'என்று நேர் அர்த்தம்;அதாவது இந்த்ரிய அநுபோகங்களை வெறுத்துத் தள்ளியவர்கள். 'ப்ரசாந்த சித்தா:' நன்றாக அடங்கி சாந்தமான சித்தத்தை உடையவர்கள். 'ச்ருதி ரஸிகா:' - வேதத்தின் ரஸமறிந்தவர்கள்.

'யதய:'- யதிகள், அதாவது ஸந்நியாஸிகள். முடிவாக 'முமுக்ஷவ:' - முமுக்ஷுக்கள்.

கடைசி கடைசியாக 'யே'என்று வருவதற்கு 'எவர்கள்'என்று அர்த்தம். 'எவர்கள் சித்தமலத்தைப் போக்கிக் கொண்டவர்களாக, அநுபோகங்களைத் தள்ளியவர்களாக, பிரசாந்த சித்தர்களாக, வேத ரஸமறிந்தவர்களாக, ஸந்நியஸிகளாக, முமுக்ஷுக்களாக உள்ளனரோ அவர்கள் இந்த ஹிதோபதேசத்தை ஆதரிக்கட்டும்'என்று முன் பின்னாகச் சேர்த்து - பின்னாடி வரும் 'யே'யை எல்லாவற்றுக்கும் முன்னாடிக் கொண்டு வந்து - அர்த்தம் செய்து கொள்ளணும்.

இங்கே முமுக்ஷு என்று முடிக்கிறவனுக்குக் கொடுத்திருக்கும் லக்ஷணங்கள் அவன் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ஸாதனையில் உச்சிக்குப் போனவன் என்று காட்டுவதையே சொல்ல வந்தேன். ப்ரஹ்மாநுபவம் ஸமாதியில் ஏற்பட்டு முக்தனாக - ஜீவன் முக்தனாக - ஒருத்தன் ஆகிற க்ஷணம் வரையில்கூட அவன் முமுக்ஷு தான் என்று தெரிகிறது.

'விவேக சூடாமணி'உபதேசத்திற்கு ஒரு கதை - ஸெட்டிங் கொடுத்து (ஆசார்யாள்) அமைத்திருக்கிறார். ஒரு சிஷ்யன் போய் பெரியவராக இருக்கப்பட்ட ஒருவரை குருவாக வரித்து, 'கோ நாம பந்த:?கதமேஷ ஆகத:?கதம் ப்ரதிஷ்டா (அ)ஸ்ய?கதம் விமோக்ஷ:?- "ஸம்ஸார பந்தம் என்கிறது என்ன?அது எப்படி வந்து சேர்ந்தது?எப்படி நிலைப்பட்டது?அதிலேயிருந்து எப்படி விமோசனம்?' என்று கேட்கிறான். அதற்கு அந்த குரு சொல்கிற பதிலாகத் தான் நம்முடைய ஜகத்குரு ஆசார்யாள் 'விவேக சூடாமணி'உபதேசத்தைக் கொடுத்திருக்கிறார். நிஜமான முமுக்ஷுதையுடனும், நல்ல குரு பக்தியுடனும் அந்த சிஷ்யன் கேட்டுக் கொண்டதால் உபதேச முடிவின் போதே அதனால் ஏற்பட வேண்டிய ஞானம், அநுபவம் - உசந்ததிலெல்லாம் உசந்த பிரம்ம ஞானமும் பிரம்மாநுபவமும் - அவனுக்கு உண்டாகி, எந்த பந்தத்தைப் பற்றி அடி முதலில் கேள்வி கேட்டானோ அதிலேயிருந்து விடுபட்டு - "நிர்முக்த பந்தன:" என்று (மூலத்தில்) இருந்தது - குருவை நமஸ்காரம் பண்ணிவிட்டுக் கிளம்பினான்;குருவும்

அவருக்காக எங்கேயும் போகணும் வரணும் என்ற ஆசை இல்லாவிட்டாலும் லோகத்தைப் புனிதப்படுத்தணுமென்பதற்காகக் கிளம்பி அப்படியே ஸஞ்சரிக்க ஆரம்பித்தார் - என்று கதை ஸெட்டிங்கைப் பூர்த்தி பண்ணுகிறார். அதற்கப்புறம், 'இப்படியாக குரு- சிஷ்ய ஸம்வாத ரூபத்தில் ஆத்ம லக்ஷணம் என்னவென்பது முமுக்ஷுக்களுக்கு ஸுலபமாக ஞானம் உண்டாவதற்காக - முமுக்ஷுணாம் ஸுக போத உபபத்தயே - விளக்கிச் சொல்லப்பட்டது'என்று ஆசார்யாள் தம்முடைய வாக்காகவே சொல்கிறார்.

இதற்கு அடுத்ததுதான் 'சித்த மலத்தைப் போக்கிக் கொண்டவர்கள்'என்று ஆரம்பித்து 'யதிகள்'என்ற வரையில் முமுக்ஷுக்களை வர்ணிக்கும் ச்லோகம்.

முமுக்ஷுக்களிலும் அவர் மந்த, மத்யம, உத்தம அதிகாரிகளை ஒப்புக் கொண்டதில், லேசாக ஒரு மோக்ஷ

இச்சை கொண்ட நம் மாதிரியானவர்களிலிருந்து நிஜமான ஸந்நியாஸிகளாகிப் பிரசாந்த சித்தர்களாகி விட்டவர்கள் ரை எல்லாவிதமானவர்களும் அடங்கி விடுகிறார்கள். ரொம்பவும் விசால ஹ்ருதயத்தோடு இப்படி அவர் முமுக்ஷுப் பட்டத்தை ஜனங்களுக்கு வாரி வழங்கியிருக்கிறார்!ஆனாலும் அப்படி வாரி வழங்கும்போதே மந்த மத்யமர்களையும் உத்தமர்களாக உசத்துவதில் கவனம் வைத்து அவர்களும் வைராக்யம், சமாதி ஷட்க ஸம்பத்து ஆகியவற்றை நன்றாக ஸம்பாதித்துக் கொண்டாலே அவர்களுடைய முமுக்ஷுதையும் பூர்ணமாக அபிவிருத்தியாகும் என்று வழிகாட்டியிருக்கிறார். முன்னேயே சொன்ன விஷயம்.

ஸாதகனுக்குத் தீவிரமான முமுக்ஷுதா பலம், குருவுடைய அநுக்ரஹ பலம் இரண்டும் இருந்தால்தான் அவன் ஆத்மாவை அடைய முடியும் என்ற அபிப்ராயத்திலேயே, 'ஆத்மாவை பலஹீனனால் அடைய முடியாது'என்று ஒரு உபநிஷத்தில் சொல்லியிருக்கிறது.

குருவின் அநுக்ரஹம் என்று சொன்னால் ஈச்வராநுக்ரஹம் என்றே அர்த்தம். ஈச்வரன்தான் குருவாக வருவது என்ற நினைவு சிஷ்யனுக்கு மறக்கவே கூடாது. அதுவும் குறிப்பாக அத்வைத ஸாதனை பண்ணுகிறவனுக்கு ஈச்வரன்

என்பவனின் ஸகுணமான உபாஸனை இல்லாமல் நிர்குண ஞான ஸமாசாரமாகவே போவதால், 'குரு', 'குரு ப்ரஸாதம்'என்கிறவற்றை ஸாக்ஷாத் ஈச்வரனின், ஈச்வராநுக்ரஹத்தின் இடத்தில் அவன் தனக்குள்ளே வேர் பிடிக்க விட்டுக் கொள்ள வேண்டியது ரொம்ப அவச்யம். இந்த விஷயத்திற்குக் கொஞ்சம் அப்புறம் வருகிறேன். அதற்கு முந்தி முமுக்ஷுத்வ ஸமாசாரத்தை முடித்து விடலாம்.

பலஹீனத்தால் ஆத்மாவைப் பிடிக்க முடியாது என்று சொன்ன அந்த உபநிஷத்தில் அதற்கு முந்தின மந்திரங்களிலும் ஒரு விதமாக முமுக்ஷு லக்ஷணமே சொல்லியிருக்கிறது. கொஞ்சங்கூட வேறே காமனைகளே இல்லாமல் எவர்கள் தீரர்களாக இருந்துகொண்டு ஆத்மா ஒன்றையே வரிக்கிறார்களோ அவர்களுக்குத்தான் ஆத்மா தன்னைப் பிரகாசிப்பித்துக் கொள்கிறது என்று அங்கே இருக்கிறது.

'ஆத்மாவை மாத்திரமே வரிப்பது'என்று இங்கு சொல்லியிருப்பதுதான் முமுக்ஷுதாவின் பாஸிடிவ் ரூபம். ஸம்ஸாரத்தை வெறுத்து விடுபடுவது என்பதற்கு நேர் மாறாக , ப்ரியத்தோடு நமக்கு வேண்டியது இதுதான் என்று நாம் சேர்வதற்காக ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்குத்தான் வரிப்பது என்று பேர். 'ஸ்வயம் வர'மாக இங்கே ஒருத்தன் அநாத்ம வஸ்து அத்தனையையும் ஒதுக்கிவிட்டு

ஆத்மாவை வரிக்கிறான்!அழகான, ஆனந்தமான பாஸிடிவ் அபிப்ராயமாக இங்கே நிஷீணீறீ-ஐயும், அதில் நாட்டத்தையும் உபநிஷத் சொல்கிறது.

'ஆத்மேச்சா வ்ஸவஸீயதாம்'என்று முமுக்ஷுதையின் இதே பாஸிடிவ் ரூபத்தை ஆசார்யாளும் சொல்லியிருக்கிறார். ஆத்ம இச்சையை, அதாவது ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைய வேண்டும் என்ற இச்சையைத் தீர்மானமாகப் பழகிக்கணும் என்று அர்த்தம். கர்மா- பக்திளிலிருந்தே ஆரம்பித்து படிப்படியாக ஸாக்ஷாத்காரம் வரை அவர் கொண்டு போகிற 'ஸோபான பஞ்சக'த்தில், க்ருஹத்தைத் துறந்து ஸந்நியாஸியாகப் புறப்படுவதைச் சொல்வதற்கு முன் படியாக முமுக்ஷுதையைச் சொல்ல வேண்டிய இடத்தில், 'மோக்ஷத்தில் இச்சை வை'என்று தள்ள வேண்டியதைச்

சொல்லாமல், பெற வேண்டியதான ஆத்மாவில் பிரியம் வைப்பதையே சொல்லியிருக்கிறார்.

விட வேண்டியதைச் சொல்லாமல் பெற வேண்டியதைத் தேடிக் கொண்டே போவதை உபநிஷத்துக்களில் அநேக இடங்களில் சொல்லியிருக்கிறது - 'என்னுளே தேடிக்க கண்டு கொண்டேன்'என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்ன மாதிரி! ப்ரஹ்ம பரர்'களான (ப்ரம்மமே லக்ஷ்யமென்று கொண்டவர்களான), 'ப்ரஹ்ம நிஷ்டர்'களான (ப்ரம்ம விஷயமாகவே பற்றுதல் வைத்தவர்களான - இந்த இடத்தில் நிஷ்டை என்பது அநுபவப்பூர்வமாக ஸமாதியில் நிலைத்து நிற்பதில்லை;அந்த அநுபவத்திற்காக ஆர்வம் கொண்டவர்களைப் பற்றியே இங்கே பேச்சாகையால் நிஷ்டை என்பதற்கு பற்றுதல், 'டெடிகேஷன்'என்று இருக்கும் அர்த்தத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்), 'ப்ரஹ்ம அன்வேஷமாணர்'களான (ப்ரஹ்மத்தையே தேடிக் கொண்டிருப்பவர்களான) ஆறு பேர் மஹர்ஷியான ஒரு ஆசார்யனிடம் போனார்களென்று 'ப்ரச்னோபநிஷத்'ஆர ம்பிப்பதிலும் முமுக்ஷுக்களான அந்த ஆறு பேரைத்தான் பாஸிடிவாக வர்ணித்திருக்கிறது. இங்கே பரமாத்மாவைத் தேடிக் கொண்டிருக்கும் முமுக்ஷுக்களை 'அன்வேஷ்மாணர்'என்று சொல்லியிருக்கிறதற்கே சாந்தோக்யத்தில் அந்தப் பரமாத்மாவை 'அன்வேஷ்டவ்யன்'(தேடிக் கண்டுபிடிக்கப் பட வேண்டியவன்) என்று இருக்கிறது.

கடோபநிஷத் நசிகேதஸைப் பற்றிச் சொல்வது ஒரு 'ஐடியல்'முமுக்ஷுவை லோகத்துக்குக் காண்பிப்பதாகவே இருக்கிறது. ஆத்மாவைப் பற்றிய ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது ஒன்றே அந்தச் சின்னப் பையனுடைய ஒரே ஆசையாக, ஒரே குறியாக இருந்தது. ஏதோ ஸந்தர்ப்பத்தில் அப்பா ஏதோ கோபத்தில், 'உன்னை யமனுக்குத் தந்துட்டேன்!' என்று அவனிடம் சொன்னார். உடனே அவன் பித்ரு வாக்ய பரிபாலனமாக டக்கென்று யமபுரிக்கே போய்விடுகிறான். செத்துப் போனவிட்டு உயிரை யமன்தானே எடுத்துக் கொண்டு போகிறவன்?ஆகையாலே உயிருடைய உண்மை நிலையான ஆத்ம தத்வம் அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்று நசிகேதஸுக்கு ஒரு நிச்சயமான நம்பிக்கை. யமபுரியில் அதைப்பற்றி

யமதர்ம ராஜாவிடமிருந்து உபதேசம் பெற்று

விட வேண்டுமென்று தீர்மானம் பண்ணிக் கொள்கிறான். எவரானாலும் நினைத்தாலே நடுங்குகிற யமபுரியை குருகுலமாக நினைத்து அந்தப் பையன் போனானென்றால் காரணம் அவனுக்கு இருந்த நிஜமான முமுக்ஷுதைத்தான்!இவன் போன ஸமயம் அவன் (யமன்) க்ருஹத்தில் இல்லை. மூன்றுநாள் கழித்துத்தான் அவன் வந்தான். அந்த மூன்று நாளும் அங்கே இருந்தவர்கள் என்ன உபசாரம் பண்ணியும் அதையெல்லாம் ஏற்றுக் கொள்ளாமல் நசிகேதஸ் பூர்ண உபவாஸம் இருந்தான். 'பெற வேண்டிய உபதேசத்தைப் பெறாமல் சாப்பாடாவது, இன்னொன்றாவது?' என்று லக்ஷ்யத்திலேயே தாபமாக இருந்தான்.

அப்புறம் யமன் - லோகத்தையெல்லாம் கிடுகிடுவென்று நடுங்க வைக்கிறவன் - வந்து, 'அக்னி மாதிரி தாபத்தோடு இப்படியொரு பிரம்மசாரிப் பிள்ளை நம் க்ருஹத்தில் முழுசாக மூன்று நாள் வயிறு எரிய இருந்து விட்டானே!அது நம்மை எரித்துவிடப் போகிறதே!என்று அந்தச் சின்னப் பையனிடம் நடுங்கிக் கொண்டு, நாளுக்கு ஒன்றாக மூன்று நாளுக்கு மூன்று வரம் கொடுக்கிறான்.

அதிலே முக்யமான மூன்றாவது வரமாக நசிகேதஸ் கேட்டது ஆத்ம தத்வத்தைப் பற்றிய உபதேசந்தான்.

அந்தப் பரமோபதேசத்தைத் தருவதற்கு முன்னாடி அதிலே இவனுடைய முமுக்ஷுதா தீவிரத்தை இன்னும் நன்றாகத் தெரிந்து கொண்டு நிச்சயப்படுத்திக் கொள்வதற்காக - அல்லது அது அவனுக்கு (யமனுக்கு) அப்போதே நன்றாக நிச்சயப்பட்டிருக்கலாம்;ஆனாலும் ஒரு ஐடியல் முமுக்ஷு எப்படியிருப்பான் என்று லோகத்திற்குக் காட்டுவதற்காக - அவனுக்குப் பரீக்ஷை வைத்தான்.

'ஆத்ம தத்வம் என்பது தேவர்களையுங்கூட நிச்சயப் படுத்திக் கொள்ள முடியாமல் குழம்ப வைக்கிற விஷயமாக்கு ம்!அதனால் வேறே வரம் கேளு!என்றான்.

'நீ இப்படிச் சொல்கிறதாலேயே அப்பேர்ப்பட்ட தத்வத்தை தெரிந்து கொண்டுதானாக வேண்டுமென்ற ஆர்வம் ஜாஸ்தியாகிறது. அதனால் நான் கேட்ட அந்த வரத்துக்கு வேறே எந்த வரமும் துல்யமாகாது என்றும் ஆகிறது.

அதைத்தான் நீ உபதேசிக்கணும் . உன்னை விட்டால் எனக்குத் துல்யமாக அதை எடுத்துச் சொல்கிறவர் யார் தான் இருக்கிறார்கள்?'என்று நசிகேதஸ் விடாப்பிடி பிடித்தான்.

'ஆனை, குதிரை, ஸ்வர்ணம், பூமி, ஆதிபத்தியம், புத்ர பௌத்ராள், இஷ்டப்பட்டவரை ஆயுஸ் - அத்தனையும் தருகிறேன். நீ என்னவெல்லாம் ஆசைப்பட்டாலும் பூர்த்தியாக அநுக்ரஹம் பண்ணுகிறேன். மநுஷ்யர் எவருக்குமே கிடைக்கமாட்டாததாக, என்னுடைய பரிவாரங்களையே உனக்கு ரத

ஸாத்தியம் பண்ணவும், கீத வாத்யங்கள் வாசிக்கவும் அனுப்பித் தருகிறேன். நீ கேட்ட அந்த வரத்தை மட்டும் ப்ரெஸ் பண்ணாதேயப்பா!வேறென்ன வேண்டுமானாலும் கேட்டுக் கொள்!என்று யமன் தினுஸூ தினுஸாகச் சொல்கிறான். டெஸ்ட் வைக்கிறான். ஸ்வர்ண ஹாரத்தை அவனிடம் திணிக்கிறான். நசிகேதஸ் கொஞ்சங்கூட சலிக்கவில்லை. 'நீ கொடுக்கிற அத்தனையும் எத்தனை காலத்திற்கு அப்புறமானாலும் ஒரு காலத்தில் உன் கைக்கே திரும்புகிறவை தானே?எனக்கு எது என்றைக்கும் சாச்வதமோ அதுதான் - அது ஒன்றுதான் வேண்டும். இந்த நசிகேதஸ் வேறே ஒன்றை கேக்கமாட்டானாக்கும்'என்று அடித்துச் சொல்லி விடுகிறான். ஸ்வர்ணஹாரத்தையும் விரலால் கூட சீண்டாமல் ஒதுங்கி விடுகிறான்.

யமனுக்குப் பரமதிருப்தியாகிவிடுகிறது. 'அப்பா,குழந்தே! அத்தனை ஆசையும் அல்பமென்று ஒதுக்கினவன் நீ!வித்யை ஒன்றிலேயே மனஸை வைத்தவன் நீ!உன் மாதிரிக் கேட்கிறவனே இனியும் எனக்குக் கிடைக்கட்டும்!(இப்படிச் சொன்னால் அந்த மாதிரி கிடைப்பது அஸாத்தியம் என்று அர்த்தம்) நீதான் தீரன்!பிரம்ம லோக வாசல் உனக்குத் திறந்தாயிற்று!(பிரம்ம லோகம் என்றால் சதுர்முக பிரம்மா இருக்கிற லோகமில்லை. பிரம்மம் என்ற ஸத்யத்தைத் தெரிந்து கொள்வதற்கான வழி திறந்தாயிற்று என்பதையே இப்படி அலங்காரமாகச் சொல்கிறான்)' - இப்படியெல்லாம் கொண்டாடிவிட்டுத் தத்வோபதேசம் பண்ணுகிறான்.

உபநிஷத் முடிவில், முமுக்ஷூவாக வந்த நசிகேதஸ் முக்தனாகவே ஆனதைச் சொல்லியிருக்கிறது. அதோடு அவன் மாதிரித் தத்வத்தைத் தெரிந்து கொண்ட (ஏவம்

வித்'என்று இருக்கிறது;"இம்மாதிரி தெரிந்து கொண்ட"என்று அர்த்தம். அப்படித் தெரிந்து கொண்ட) எவருமே முக்தராவார்கள் என்று பூர்த்தி பண்ணியிருக்கிறது.

'நசிகேதஸ்'மாதிரி என்றால் தீவிர முமுக்ஷுதையோடு என்று அர்த்தம்.

சதுஷ்டயம் என்று நாலங்க (நான்கு அங்க) அமைப்பாகச் சொன்ன ஸாதனைக் கிரமம் முமுக்ஷுத்வத்தோடு முடிகிறது.

---



## ஆன்மியமான நால்வகைப் படை

நாலங்கம், சதுரங்கம். அப்படிச் சொன்னால் பாண்டவர்கள் கௌரவர்களோடு ஆடிய ஆட்டம் நினைவு வரும். ஸைன்யத்தில் ரதம், கஜம், துரகம் (குதிரை), பதாதி (காலாள்) என்று நாலு அங்கம் இருப்பதால் 'சதுரங்க ஸேனை'என்று சொல்வது. சொக்கட்டான் சதுரங்கத்திலும் இதே மாதிரி நாலு விதமான காய்களை நகர்த்தித்தான் வெற்றி தோல்விகள் ஏற்படுவதாக விளையாடுவது. செஸ்ஸும் இதை பேஸ் பண்ணினதுதான். 'இந்தியாவிலிருந்துதான் ரொம்ப காலம் முந்தி (இதை) இறக்குமதி பண்ணிக்கொண்டோம்'என்று வெள்ளைக்காரர்களே ஒப்புக் கொள்கிறார்கள். இந்தியாவிலிருந்து முதலில் பெர்ஷியாவுக்குப் போனதால் பெர்ஷியன் பாஷையில் ராஜாவுக்கு உள்ள பெயரை வைத்து செஸ் என்று பேர் ஏற்பட்டது என்கிறார்கள். அங்கே வேடிக்கையாக எப்படி மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்றால், நாலு வகை ஸைன்யமாகக் காய்கள் இல்லாமல் ராஜாவாகவே ஒரு காய் உண்டு.ராணிக் காயும் உண்டு. அதோடு யுத்த ஸம்பந்தமே இல்லாதவர் என்று தோன்றுகிற பிஷப் காயும் உண்டு. ஆனால் அவர்கள் (ஐரோப்பியர்கள்) சரித்திரத்தைப் பார்த்தால் முக்கால்வாசிச் சண்டைகளில் போப்களும்

பிஷப்களும் தான் ராஜாக்களோடு மோதியிருப்பார்கள். அல்லது தூண்டிக் கொடுத்திருப்பார்கள். ... அந்த விஷயம் இருக்கட்டும்..... கெட்டதுகளோடு போராடி மஹா பெரிய ஆத்ம ஸாம்ராஜ்யத்தைப் பிடிப்பதற்காகச் சதுரங்கம் கொண்ட ஸைன்யமாக இந்த ஸாதனாக்ரமம்!அதில் கடைசி முமுக்ஷுத்வம்.

ஸாதிக்கப்பட வேண்டிய ஒரு விஷயமாக அதை (முமுக்ஷுத்வத்தை) சொல்லியிருப்பதால், ஆரம்பத்திலிருந்து லேசாக இருந்து அப்புறம் கொஞ்சங் கொஞ்சமாக வலுப்பட்டுக் கொண்டுவந்த மோக்ஷ ஆசையை

இந்த கட்டத்தில் நன்றாக புத்தி பூர்வமாக, மனப்பூர்வமாகத் தீவிரப்படுத்திக் கொள்ள வேண்டும் என்றாகிறது. நமக்காவது பந்த மோக்ஷமாவது, ஸாக்ஷாத்காரமாவது?'என்று அவநம்பிக்கை உண்டாகிற தினுஸில் ஸாதனையில் அவ்வப்போது சறுக்கிவிட்டுக் கொண்டிருக்கும். அந்த மனப்போக்குக்கு இடம் கொடுக்கப்படாது.
அதுமட்டுமில்லாமல் 'விடுபட்டு முடியும்;ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள முடியும். அதுவே தாபமாக நாம் விடாப்பிடி பண்ணினால் அது சிக்கிக் கொள்ளாமல் போகுமா?நம்முடைய ஏற்ற இறக்கங்களை குரு ப்ரஸாதம் ஸமாளித்து ஸரிப்படுத்தாதா என்ன?ஆகையால் 'விடுதலை', 'ஸத்யம்' என்று ஆசையான ஆசைப்பட்டுத் தவிப்போம்!என்று அதை ஒரு பயிற்சியாகப் பண்ண வேண்டும். 'எங்கேயோ அஞ்ஞான பிண்டமாகக் கிடந்த நமக்கும் விவேகம், வைராக்யம், இந்திரிய அடக்கம், மனஸடக்கம், ச்ரத்தை ஆகியதெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாக வலுப்பட்டுக் கொண்டு வரவில்லையா?இத்தனை தூரம் வந்துவிட்டு வழிகெட்டுப் போக குரு ப்ரஸாதம் விடாது. ஆகையினாலே நம்மாலேயும் (விடுபட முடியும்) முடியும் -நாம் மட்டும் அதே தாபமாக இருந்துவிட்டால் என்ற அபிப்ராயத்தோடு முமுக்ஷுதையைப் பயிற்சி செய்ய

வேண்டும்;பயில வேண்டும்.

இதோடு ஸாதனா சதுஷ்டயம் பூர்த்தி. ஆனால் இதுவும் நடு

ஸ்டேஜ், இரண்டாம் ஸ்டேஜ்தான்;இதற்கும் மேலே உச்சமாக மூன்றாம் ஸ்டேஜ் இருக்கிறதென்று மறந்து போயிருக்க மாட்டீர்கள். அதையும் சொல்லி- இத்தனை கதை சொல்லியும் பூரா சொல்லவில்லை என்றில்லாமல் ஸொச்சத்தையும் சொல்லி - பூர்த்தி பண்ணுகிறேன்.

---



## மூன்றாம் கட்டத்தின் மூன்று அங்கங்களுக்கு முன்

ஸாதனா சதுஷ்டயத்தை நன்றாக அப்யாஸம் பண்ணிய பின் குருமுகமாக ஸந்நியாஸமும் மஹா வாக்யோபதேசமும் பெற்று, அவர் உபதேசிக்கிற மற்ற ப்ரஹ்ம வித்யா சாஸ்திர ஸம்பிரதாய - ப்ரத்யக்ஷ

அநுபவ ஸமாசாரங்களையும் கற்றுக்கொண்டு, அதையெல்லாம் புத்தி பூர்வமாக ஜீர்ணம் பண்ணிக் கொண்டு அப்புறம் புத்தியிலிருப்பது ஹ்ருதயத்தில் இறங்கி அநுபவமாவதற்காக ஸதா த்யானமாயிருக்க வேண்டும். அதுதான் மூன்றாவது ஸ்டேஜின் அங்கங்கள். அதே த்யானமாயிருந்தால் முடிவிலே ப்ரஹ்மாநுபவம் ஏற்பட்டுவிடும். அதுதான் பந்தத்திலிருந்து மோக்ஷம்;ஸத்ய ஸாக்ஷாத்காரம்.

இப்போது நான் சொன்ன இந்த ஸமாசாரங்களை நாலு அங்கம் என்று நடு ஸ்டேஜில் சொன்னாற்போல மூன்று அங்கங்களாக வரிசைப்படுத்திச் சொல்வார்கள். 'ச்ரவணம்', 'மனனம்', 'நிதித்யாஸனம்' என்று மூன்று பேர் கொடுத்துச் சொல்வார்கள்.

அதனால் இங்கேயிருப்பவர்களில் ஸாதனா க்ரமம் தெரிந்தவர்கள், முமுக்ஷுத்வத்தை முடித்துவிட்டு மூன்றாம் ஸ்டேஜ் பற்றி ஆரம்பிக்கப் போகிறேன் என்றதும்

'ச்ரவணம்'என்று ஆரம்பிப்பேன் என்று எதிர்பார்ப்பீர்கள். நான் ஏமாற்றப் போகிறேன். ஏன் ஏமாற்றப் போகிறேன் என்றால் ஸொந்த ஹோதாவிலே இல்லை!ஆசார்யாளே அப்படித்தான் ஏமாற்றியிருப்பதால்!ஏமாற்றுவது ஒன்றையாவது அவர் மாதிரி நாமும் பண்ணலாமே என்றுதான்!அவர் பண்ணாத வேறே அநேக விஷயங்களில் அதை (ஏமாற்றுவதை)ப் பண்ணிவிட்டு, அவரே பண்ணின இடத்தில் நாம் விடுவானேன் என்று!

என்ன ஏமாற்றியிருக்கிறாரென்றால், 'விவேக சூடாமணி'யைப் பார்த்துக் கொண்டு போனால் தெரியும். அதை ஃபாலோ பண்ணித்தான் (இதுவரை உபந்யஸித்த) விஷயங்களைச் சொல்லிக்கொண்டு போனது. ஏனென்றால் அதுதான் தீர்த்த முடிவாக ஆசார்யாள் அநுக்ரஹித்த ஸொந்த நூல். அதிலே முமுக்ஷுத்வத்தைச் சொல்லி மந்த-மத்யம நிலைக்காரர்களைக் குறிப்பிட்டு அவர்களையும் உத்ஸாஹப்படுத்திவிட்டு, வைராக்யமும் முமுக்ஷுதையும் தீவிரமாயில்லாமல் தூங்கி வழிந்துகொண்டு இருந்தால் மனஸ் அடங்கி ஆத்மா வெளிப்படாது என்பது வாஸ்தவந்தான். அந்த மந்த திசையில் மனஸ் அடங்கினாற்போலத் தோன்றினாலுங்கூட அது கானல் நீர்க்காட்சிதான். ஆனால் அதற்காக அதைர்யம் வேண்டாம்;நம்பிக்கை இழக்க வேண்டாம். வைராக்யத்தை உறுதிப்படுத்திக் கொண்டு, முமுக்ஷுதையையும் தீவிரமாக்கிக் கொண்டீர்களானால் மந்த மத்யமமான யாரானாலும் உத்தமமாக உசந்து மனஸை அடக்கிவிடலாம். அதன் பலனான ஸித்தியும் பெறலாம் என்று ஆச்வாஸம் பண்ணி ஸாதனா சதுஷ்டய விஷயத்தை முடிக்கிறார்.

அதற்கப்புறம் 'ச்ரவண'த்தைப் பற்றி ஆரம்பிப்பார் என்று பார்த்தால் ஏமாற்றுகிறார். 'பக்தி'என்று புதுசாக ஒரு டாபிக்கை ஆரம்பிக்கிறார்.

---

## பக்தி : ஞான மார்க்கத்தில் அதன் இடம்

மோக்ஷகாரண ஸாமகர்யாம் பக்திரவே கரீயஸி |

ஸ்வஸ்வரூபானுஸந்தாநம் பக்திரித்யபிதீயதே ||

முமுக்ஷு மோக்ஷத்தை விரும்புவன். அந்த மோக்ஷத்தை அடைவிக்கப் பல ஸாதனங்கள், உபகரணங்கள் இருக்கின்றன. ச்ரவண-மனன-நிதித்யாஸனங்கள் அப்படிப்பட்டவைதான். இதுவரை சொன்ன ஸாதனா சதுஷ்டயத்தின் அங்கங்களெல்லாமும் மோக்ஷம் ஏற்படக் காரணமான உபகரணங்கள்தான். அவற்றையெல்லாம் 'ஸாமக்ரீ'என்று சொல்வது. 'ஸாமக்ரியை'என்று தப்பாகச் சொல்கிறோமே அது!க்ரியை (kriyai) க்கும் இதற்கும் ஒரு ஸம்பந்தமுமில்லை. க்ரீ (gree) என்று முடியும் வார்த்தையாக 'ஸாமக்ரீ'(samagree) என்று சொல்ல வேண்டும். ஒரு விஷயத்தில் பிரயோஜனப்படுகிற எல்லா அவசியமான வஸ்துக்களையும் சேர்த்து ஸாமக்ரீ என்பது. உபகரணம் என்ற அர்த்தத்தில் அதையே சொல்வது வழக்கம்.. இங்கே 'மோக்ஷகாரண ஸாமக்ர்யாம்'என்கிற இடத்தில் மோக்ஷம் உண்டாகக் காரணமான உபகரணங்களில் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். 'கரீயஸி'என்றால் 'கனம் வாய்ந்தது'. அஷ்டமா ஸித்திகளில் ஒருவர் அப்படியே கல்லு மாதிரி கனத்துப் போகும் ஸித்திக்கு 'கரிமா என்று பேர். 'கரீயஸி'என்றால் கனமானது. கனமானது என்றால் முக்யமானது, ச்ரேஷ்டமானது என்று உள்ளர்த்தம். 'கனவான்'என்ற இடத்தில் அப்படித்தானே அர்த்தமாகிறது?மோக்ஷத்திற்குக் காரணமான உபகரணங்களில் ச்ரேஷ்டமானது'என்று எதைச் சொல்கிறாரென்றால்,

இங்கேதான் 'பக்தி'யைக் கொண்டுவந்து விடுகிறார்!

இந்த ஆசார்யாளே வகுத்துக் கொடுத்த கிரமத்தில் ஸாதன

சதுஷ்டயம், அப்புறம் ச்ரவண, மனன,

நிதித்யாஸனங்கள்;அதோடு அந்த வழி பூர்த்தி என்று பொதுவாக நினைக்கபட்டாலும், இங்கேயோ அவர் அதிலில்லாத பக்தியை 'திடுதிப்'பென்று கொண்டு வந்து விட்டு அதுதான் முக்யமான உபகரணம் என்கிறார்!

பக்தி, ஞானம் என்று வெவ்வேறாகவே வைத்த இரண்டு வழிகளில் ஞான வழியை உபதேசிக்கும் அத்வைத ஆசார்யராகத்தான் அவர் இந்த 'விவேக சூடாமணி'யை எழுதி, அதில் ஸாதனா க்ரமம் சொல்கிறார். அப்படியிருந்தும், பக்திக்கு இவ்வளவு முக்யத்வம் தந்திருக்கிறார்!மோக்ஷத்திற்கு முக்ய ஸாதனம் பக்தி என்கிறார்.

அவர் வழக்கமாகச் சொல்வதாக லோகத்திற்கு ஸுப்ரஸித்தமாகத் தெரியும் ஞானமார்க்கத்திலும் பக்திக்கு அடியோடு இடமில்லாமலில்லைதான். ஆனால்

எங்கே இடம் என்றால் ரொம்பவும் ஆரம்பத்தில் அடி நிலையில் தான். அதாவது ஸாதன சதுஷ்டயம் ஆரம்பிப்பதற்கும் முன்னாடி!அவருடைய ஞான காலேஜில் அட்மிஷன் கேட்பதற்கு முந்தியே முடிந்திருக்க வேண்டிய ஸ்கூலில் தான் கர்மாவும், பக்தியும் ஸப்ஜெக்டுகள்! ஞான மார்க்கத்தில் போவதற்குத் தகுதி சுத்தமான, ஒருமுகப்படக் கூடிய சித்தம். அதை ஸம்பாதித்துக் கொண்ட அப்புறந்தான் இந்த வழியில் பிரவேசிக்கலாம். அந்த ஸம்பாதனைக்காகவே சித்தத்தை சுத்தி பண்ணிக் கொள்ள நிஷ்காம்ய கர்மாவையும், ஒருமுகப்படுத்த பக்தியுபாஸனையையும் வைத்தார். அதாவது பக்தி என்பது (அத்வைத) ஸாதனையில் ரொம்பவும் தள்ளி, 'பஹிரங்க ஸாதனம்'எனப்படுவதாகவே நினைக்கப்படுகிற ஒன்றாக இருக்கிறது.

ஸாதனங்களில் அந்தரங்கம், பஹிரங்கம் என்று இரண்டு. அந்தரங்கம் (என்பது) லக்ஷ்யத்தை அடைவிப்பதில் நேரடியாக, டைரக்டராக உதவுவது; 'வீஸீமீ மீக்ஷீஸீணீறீ' என்று படைப்பாளிகள் சொல்கிறார்கள். பஹிரங்கம் மறைமுகமாக, தள்ளி அப்படி இருப்பது;'மீஜ்மீ மீக்ஷீஸீணீறீ' என்பது. ஒரு விருந்து நடக்கிறதென்றால் அதற்கு நேர்க் காரணம் விருந்தை நடத்துகிறவரும், அந்த விருந்துக்குக்

காரணமான வைபவமும். இவை 'அந்தரங்கம்'. அதில் ப்ரயோஜனமாகும் சாப்பாடு

தினுஸுகள் கிடைப்பதற்கு, பயிர் பண்ணிய விவஸாயி, ப்ரொக்யூர் பண்ணிய ஆபீஸர், விற்பனை பண்ணிய கடைக்காரர்கள், சமைத்துப் போட்ட பரிசாரகர், பாத்திரம் கொடுத்தவர் எல்லாம் காரணம் தானே?இவர்களில் பரிசாரகரை - பாத்திரக்காரரை வேண்டுமானாலும் அந்தரங்க லிஸ்டில் சேர்க்கலாம். மற்றவர்கள் மறைமுகக் காரணமான 'பஹிரங்க'த்தில் வருபவர்களே.

இப்படி மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனம் என்று ஞானத்தையே சொல்லி, அந்த ஞானம் உண்டாக ரொம்பவும் அந்தரங்க ஸாதனமாக ச்ரவண, மனன, நிதித்யாஸனங்களையும், அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் அந்தரங்கம் என்றே சொல்லும்படியாக ஸாதனா சதுஷ்டயத்தையும் வைத்து, இதற்கெல்லாம் தள்ளி பஹிரங்க ஸாதனமாகத்தான் கர்மாவையும் பக்தியையும் அத்வைத ஸம்பிரதாயத்தில் வைத்திருக்கிறதென்று பிரஸித்தம்.

அப்படியிருக்க இங்கே அந்த அத்வைத ப்ரதிஷ்டாபனாச்சார்யாளே பஹிரங்க ஸாதனமான பக்தியை 'ஸாமக்ரீகளில் கரீயஸி'என்று ரொம்பவும் அந்தரங்க ஸ்தானத்தில் கொண்டு வந்து விட்டிருக்கிறார். எப்படி என்ன அர்த்தம்?

நான் பாட்டுக்குச் சொல்லிக்கொண்டு போவதில் அத்வைத பீடத்து ஸ்வாமிகள் அத்வைதம் சொல்லப்படாதா?என்று நினைத்துப்போக, 'நிறுத்த மாட்டாரா?என்கிற அளவுக்கு தொணப்பிக் கொண்டு போவதில் - முதலிலே சொன்ன ஒரு விஷயம் சில பேருக்காவது ஞாபகமிருக்கலாம்:ச்ரத்தையிலேயும் பக்தியிலேயும் 'லோயர்''ஹையர்'என்று இரண்டு க்ரேட் சொன்னதுதான். ஸ்கூல் ஸப்ஜெக்டாகச் சித்த ஒருமுகப்பாட்டுக்கு பக்தியை ஸாதனமாகச் சொன்னது

'«ô£ò˜ ,«ó†'; Üƒ«èî£¡ ð,F ðAóƒè ú£îùñ£è Þ¼Šð¶. ÞŠ«ð£¶ è£«ôx º®ˆ¶ H.â,,.®. «êó«õ‡®ò úñòˆF™ 'ú£ñ,˜ò£‹ ègòR'â¡Á ªê£™½‹ ð,F '¬ýò˜ ,«ó†'; Ü‰îóƒè ú£îùñ£è«õ Þ¼Šð¶. ÞîŸ°‹ «ñ«ô '¬ýòv†'Ýè¾‹ å¼ å¼ ð,F

à‡´. Ü¶ Üˆ¬õî R ˆF«ò Ü¬ì‰¶M†ì ë£Q ð‡µõ¶. Ü¬îŠðŸP ã¡ âîŸè£èŠ ðíµAø£¡ â¡ð¶ ÜõÂ‚°ˆî£¡ ªîK»‹. Ü™ô¶ ÜõÂ‚°ƒÃì ªîKò£ñ™, Üõ¬ù ÜŠð® Š«ó¬ñJ™ à¼èŠ ð‡µAø ß„õóÂ‚°ˆî£¡ ªîK»‹. Ü¶ ï‹º¬ìò Hóúƒèˆ FŸ°œ õó£î Mûò‹.

(பிரஸங்கத்திற்குள்) வருவது மோட்சத்திற்கு அந்தரங்கமான, 'கரீய'ஸான உபகரணமாகச் சொல்லும் பக்திதான். இதை ஏன் இங்கே கொண்டு வந்துவிட்டார் என்று தெரிந்து கொள்வதற்கு, பக்தி என்றால் என்னவென்று முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

---



## பக்தி என்றால் என்ன ?

பக்தி என்றால் 'பரமாத்மாவை ஸகுணமான, ஸாகாரமான (உருவம் கொண்டதான) ஒரு தேவதா மூர்த்தியாக நினைத்து அன்பு செய்வது என்பதே பிரஸித்தமான பொது அபிப்ராயம். சும்மா மானஸிகமாக அன்பு செய்வதென்றால் முடியவில்லை என்பதால் பூஜை, ஆலய தர்சனம் ஸ்தோத்ர பாராயணம் என்றெல்லாம் கார்யத்தைச் சேர்த்துச் சேர்த்து செய்வது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். அது ஸரிதான்;தப்பென்று சொல்ல முடியாது. ஆனாலும் ஹையர் க்ரேடில் நினைக்கிறபோது ஸாகாரமாக, அதாவது உருவமாக பரமாத்மாவை ஒரு தேவதையாக நினைத்தால்தான் அன்பு செய்ய முடியும் என்றில்லாமல், நிராகாரமான - அருவமான - பரமாத்மாவாக அவன் இருக்கும்போதும் அன்பு செய்யப் பழகி அதில் தேறவேண்டும். ஸாகாரமாயுள்ள போது இப்படியிப்படி கண்ணு, மூக்கு, கை - நாலு கை, எட்டு கை - இப்படியிப்படி வஸ்த்ர பூஷணங்கள் என்று கண்ணுக்குத் தெரிவதாலும், அந்த மூர்த்தியின் குண கணங்களையும்

மஹிமைகளையும், பரம கருணையையும் புராணங்கள், ஸ்தோத்ரங்கள் முதலியவை தெரிவிப்பதாலும் அப்படிப்பட்ட ஒரு மூர்த்தியிடம் அன்பு வைக்க முடிகிறது. அன்புதான் பக்தி. பல தினுஸான அன்புகளில் ரொம்ப உசந்ததாக ஈச்வரனிடமும் வைக்கும் அன்பே பக்தி. கண்ணுக்கு இன்பமளிக்கும் ரூபம், மனஸுக்கு இன்பமளிக்கும் குணங்கள் கொண்ட ஸகுண மூர்த்தியிடம் அன்புருவான பக்தி வைப்பதென்றால் ஸுலபமாக முடிகிறது. ஆனால் ரூபமே கிடையாது, மனஸுக்கும் பிடிபடாது என்று இருக்கும் நிர்குண பரமாத்மாவிடம் அன்பு வை என்றால் எப்படி என்று தோன்றலாம்.

நம் நிலையில் அது முடியாமல் இருக்கலாம். இருந்து விட்டுப் போகட்டும். நமக்குண்டான மட்டில் ஒரு ஸாகாரமூர்த்தி, பூஜை, க்ஷேத்ராடனம் என்று பண்ணிவிட்டுப் போவோம். ஆனால் ஸாதன சதுஷ்டயத்தில் முன்னேறி ஸம்ஸ்க்ருதமான - அதாவது, refined, (சற்று யோசித்து) பண்பட்ட (பண்பட்ட என்பது நல்ல வார்த்தை;யோசித்தால்தான் வருகிறது!பண்பட்ட) ஸாதகர்களால் நிராகாரத்திடமும் நிர்குணக்கிடமுங்கூட அன்பு வைக்க முடியும். ஏனென்றால் அந்த ஸ்டேஜில் எதனிடம் அன்பு என்றோ - அந்த எதுவோ ஒன்றிடம் நல்ல ரூபம், குணம், லீலை என்றெல்லாம் இருப்பதே அதனிடம் நமக்கு அன்பை உண்டாக்கும்;இப்படி ஒன்று வெளியில் இருந்தாலே அதன் பொருட்டாக நம்மிடம் அன்பு உண்டாகும்;இல்லாவிட்டால் இல்லை என்றோ - விஷயம் போகாமல் தானாகவே ஸ்வாபாவிகமாக அன்பு உண்டாக முடியும். முடியக்கூடிய அதை வாஸ்தவமாகவே ஸாதிக்காவிட்டால் அந்த பண்பட்ட நிலையிலேகூட அத்தனை ஸாதனையும் அஹங்காரத்தில் போய் முட்டிக் கொண்டு முடிந்து விடும். செய்த ஸாதனைக்காக மோட்ச ஸித்தி கிடைக்குந்தான் என்றாலும் அது இப்போது என்றில்லாமல் எப்போதோ கோடி, கோடி வருஷத்திற்கப்புறம் ஏற்படக்கூடிய ஆத்யந்திக பிரளயத்தின் போதுதான் கிடைக்கும்படியாகத் தள்ளி , ரொம்பத் தள்ளிப் போவதாக ஆகிவிடும்!இப்போது நான் சொன்ன 'அஹங்காரம்'என்ன 'ஏதோ ஒரு ப்ரளயம்'என்ன என்பதற்கு அப்புறம் வருகிறேன்!முதலில் அன்பு என்னவென்று தெரிந்து

கொள்வோம்.



## அன்பு என்பது என்ன ?

அன்பு என்பது என்ன? ஒரே பரமாத்மாதான் எல்லா உயிர்களுமாக ஆகியிருக்கிறது. பல உயிர்களாகும்போது ஒன்றையொன்று வேறுபடுத்தி வைத்து மாய ப்ரபஞ்ச நாடகம் நடக்கிறது. இதிலேயே எதிர் டைரக்ஷனில், ரொம்பவும் உத்தமமான அம்சமாக, வேறுபட்டவற்றை ஒன்றாக ஐக்யப்பட வைக்கவும் பரமாத்மா அநுக்ரஹித்திருக்கிற forceதான் அன்பு. பொதுவாக மற்றவரிடமிருந்து நமக்கு ஒன்றைப் பெற்று லாபமடைவதாகவே மநுஷ்ய மனப்பான்மை இருக்கும். அதற்கு எதிர் மருந்தாக நம்மை இன்னொருவருக்குக் கொடுத்து அதில் நிறைவு பெறச் செய்வது அன்பு. ஆசைக்கும் அன்புக்கும் இதுதான் வித்யாஸம்:நாம் ஒன்றிடம் ஆசையாயிருக்கிறோமென்றால் நமக்கு அதனிடமிருந்து ஸந்தோஷம் தேடிக் கொள்கிறோம்;அன்பாயிருக்கும்போது நம்மால் அதற்கு ஸந்தோஷம் உண்டாக்குகிறோம். ஆசை என்பது வாங்கல்;அன்பு - கொடுக்கல். 'நமக்கு'ஸந்தோஷம் என்பது அந்த உயிரிடம் ரூப ஸம்பத்து, குண ஸம்பத்து- திரவிய ஸம்பத்து கூடத்தான் - இவை அல்லது இந்த மாதிரி வேறு எதை நாம் அதனிடமிருந்து பெற்றால் நமக்கு ஸந்தோஷம் உண்டாகுமோ அவை இருந்தால்தான் ஏற்படும். இவற்றுக்காகவே அதனிடம் நமக்கு உண்டாகிற பற்றுதான் ஆசை. தப்பாக அதை அன்பு என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

அன்பு என்பது அந்தஃகரணம் உசந்த நிலையில் உள்ளபோது உண்டாவது. அப்போது மனஸூம் புத்தியும்

அஹங்காரத்திற்குள்ளே இழுக்கப்பட்டு, அந்தஃகரணம் ஹ்ருதயத்திற்கு இடம் மாறி அங்கேயிருந்து வேலை செய்யும். அம்பாள் அன்பு மயமானவளாகையால் அவளுடைய ஸ்ருஷ்டியிலே ரொம்பவும் க்ரூரமான ஜீவராசிகளுக்குங்கூட ஒவ்வொரு ஸமயத்திலாவது அன்பு உண்டாகுமாறு அநுக்ரஹித்திருக்கிறாள். ஸாதனையால் மனஸூம் புத்தியும் பண்பட்டவர்களுக்கோ எப்போதுமே அன்பு சுரக்கக்கூடிய நிலை வாய்க்கிறது. அந்தஃகரணத்தின் பெர்மனென்ட் ஸ்தானமாகவே அப்போது ஹ்ருதயம் ஆகிவிடும்.

---



## அந்தஃகரணமும் ஹ்ருதயமும்

அந்தஃகரணம் என்பதற்கு பேரில் 'அந்த'('உள்') என்று இருந்தாலும், அது அந்தர்முகப்படாமல் (உள் நாட்டமில்லாமல்) பஹிர்முகப்பட்டுக் கொண்டே (வெளிப்போக்கு உடையதாகவே) தான் இருப்பது. கை, கால், கண், மூக்கு மாதிரி வெளியில் ஸ்தூலமாகத் தெரியாமல் உள்ளே ஸூக்ஷ்மமாக இருப்பதாலேயே அதற்கு அந்தஃகரணம் என்று பேர். த்வைதம்- த்வைத ப்ரபஞ்சமும் த்வைதமான அநுபோகங்களுந்தான் - அதற்கு விஷயம். பொதுவாக ஜீவர்களுக்கெல்லாம் அப்படித்தான் இருக்கும். அப்போது அது தன்னை அநுபோக அழுக்கினால் கெட்டிப்படுத்திக் கொண்டு, தடித்துப் போய், பாத்திரத்தில் களிம்பு பிடித்த மாதிரி இருக்கும். இது அந்தஃகரண ஸமாசாரம்.

ஹ்ருதயம் என்றேனே, அது என்ன என்றால், நமக்கெல்லாம் தெரிந்தபடி மநுஷ்ய சரீரத்திலே மார்பில் இடது பக்கம் உள்ள ஹ்ருதயமில்லை நான் சொல்வது. (முதுகுத் தண்டுக்குள் ஓடும்) ஸூஷூம்னா நாடியில், நட்ட நடு மார்புக்கு உள்

பக்கத்தில் உள்ள அநாஹத சக்ரமும் இல்லை. இந்த ஹ்ருதயம் ஸாக்ஷாத் ஆத்மாவின் ஸ்தானம்.

'ஸ்தானம்'என்று குறிப்பிட்ட ஒரு இடமுமில்லாமல் ஸர்வ வியாபகமாக இருப்பதே ஆத்மா என்பது வாஸ்தவந் தான்;'ஸர்வம்', 'வியாபகம்'என்கிறவற்றுக்கு ஆஸ்பதமான spaceஎன்பதே அடிபட்டுப் போன விஷயந்தான் ஆத்மா என்று சொன்னால் அதுவும் வாஸ்தவமே. ஆனாலும் பொதுவாக த்வைதத்திலேயே போகிற சித்தத்தை (அந்தஃகரணத்தை) ஈச்வரானுக்ரஹத்தில் ஒருவன் அத்வைதமாகத் திருப்பி ஆத்மாவை த்யானம் பண்ண நினைக்கும்போது பாவனைக்கு ஏதோ ஒரு பிடிப்பு வேண்டியிருக்கும். அதற்காக ஆத்மாவுக்கு ரூபமோ குணமோ கல்பித்து முழு ஸகுணமாக, த்வைதமாகப் பண்ணினால் எப்படி ஸரிப்பட்டு வரும்?பின்னே எப்படிப் பிடிப்பு ஏற்படுத்தித் தருவது?அரூபமாக எங்கேயும் பரவியிருப்பது, அல்லது spaceக்கு அதீதமானது என்றால் கொஞ்சங்கூட பாவனைக்கே கொண்டு வர முடியாமலிருக்கிறதே! அதனால்தான் ஆத்மாவுக்கு வேற ரூப, குணகல்பனைகள் ஏற்றாவிட்டாலும், இடத்திலே குறிப்பாக ஒரு பாயின்ட் ஜீவ சரீரத்திற்குள்ளேயே இருக்கிறார்போலக் காட்டி அங்கே ஆத்ம தத்வத்தை பாவிக்கும்படிச் செய்யலாமென்று அப்படி இந்த ஹ்ருதய ஸ்தானத்தை வைத்திருப்பது. யார் வைத்தது என்றால் பராசக்திதான்!த்வைத மாயை அத்தனையும் பண்ணும் அவளே அத்வைதத்திலே ஒருத்தனைச் சேர்ப்பிக்க க்ருபை கொள்ளும்போது ஆத்ம ஸ்தானமாக ஓரிடத்தில் அவனுடைய அந்தஃகரணம் தோய்ந்து நிற்பதற்காக அந்தப் பாயின்டை வைத்திருக்கிறாள். தனியான ஜீவ பாவத்தை உண்டாக்கி பலப்படுத்தி வாழ வைப்பதான அந்தஃகரணமும், சரீரத்திற்கு உயிரைக் கொடுக்கிற மூச்சும் எந்த ஏக மூலத்தில் - ஒன்றேயான வேரில் - ஒன்றுசேர்ந்து ஒடுங்கிப் போகுமோ அந்த ஸ்தானம் அது.

அப்படி ஒடுங்கியவுடன், ஆத்ம ஸ்புரணம் ஏற்படுவதும் (ஆத்மாநுபூதி துடிப்புடன் வெளிப்படத் தொடங்குவதும்) அந்த ஸ்தானத்தில்தான்.

அது ஒரு பாயின்ட். துளியூண்டு புள்ளி, த்வாரமாயிருக்கிற புள்ளி. 'நீவார சூகவத்'. (அதாவது) கூர்ப்பாக முடிகிற ஒரு செந்நெல்லுடைய அந்த கூர்நுனி மாதிரி- அவ்வளவு சிறிய புள்ளி என்று சொல்லியிருக்கிறது. தலை கீழான தாமரை மொக்கு மாதிரியான ஹ்ருதயத்திற்குள்ளே ஒரு ஸூக்ஷ்மமான த்வாரம்;அதிலிருந்து தேஹம் பூராப்பரவும் சூடான, உயிர்ச் சக்தியான அக்னி;அந்த அக்னியின் மத்தியிலே அணுமாத்ரமான ஜ்வாலை- மின்னல் கொடியான ப்ராணாக்னி- 'நீவார சூகவத்'தாக அது முடிவதே ஆத்ம ஸ்தானம் என்று இருக்கிறது.

ஹ்ருதயத்திற்குள்ளே ஆத்ம ஸ்தானமான த்வாரப் புள்ளி என்றதால் அந்தச் சின்னப் புள்ளியைச் சுற்றிலும் ஹ்ருதயம் இருக்கிறது என்று அர்த்தம். அதுவும் ஒரு சின்ன ஸ்தானம்தான். தஹரம் தஹ்ரம் என்று உபநிஷத் பாஷையில் இரண்டு வார்த்தைகள். இரண்டுக்கும் அர்த்தம் சின்னது என்பதே. பிற்காலத்தில் 'தஹ்ரம்' என்று 'தப்ரம்'என்று வந்தது. ஹ்ருதயத்தையும் அதற்குள் உள்ள ஆத்ம ஸ்தானத்தையும் 'தஹரத்திற்குள்ளே இருக்கும் தஹரம்'என்றும், 'தஹ்ரத்திற்குள்ளே இருக்கும் தஹ்ரம்'என்று உபநிஷத்துக்களிஸ் சொல்லியிருக்கிறது. அத்தனை சின்னதில்தான் ஆகாசமாக விரிந்துள்ள ஸத்யம் இருக்கிறது.

லோகம் முழுவதையும் விராட் புருஷன் என்கிற போது அந்தப் புருஷனுக்கு ஹ்ருதயமாக இருக்கப்பட்ட சிதம்பரத்தில் சித்ஸபைதான் அந்தப் பாயின்ட். 'அது ஒரு த்வாரமாக இருக்கிறது. அங்கே ஆகாசம் இருக்கிறது. அது ரஹஸ்யம் என்பதாக இருக்கிறது. பஞ்ச பூத க்ஷேத்ரங்களில் சிதம்பரந்தான் ஆகாச க்ஷேத்ரம்'என்றெல்லாம் சொல்வதன் தாத்பர்யம் இதுதான். சித்ஸபை என்பதையே 'தப்ரஸபா'என்றும் சொல்வார்கள். அதன் நேர் தமிழ் வார்த்தைதான் 'சிற்றம்பலம்'(சிறிய அம்பலம்) என்பது. ஆனபடியால், 'சிதம்பரம்'என்ற வார்த்தைதான் 'சிற்றம்பல ம்'ஆச்சு, அல்லது 'சிற்றம்பலம்'தான் 'சிதம்பரம்'ஆச்சு என்பது. ஆனபடியால், 'சிதம்பரம்'என்ற வார்த்தைதான் 'சிற்றம்பலம்'தான் ஆச்சு, அல்லது 'சிற்றம்பலம்'என்ற

வார்த்தைதான் 'சிதம்பரம்'ஆச்சு என்பது ஸரியில்லை. 'சித் அம்பரம்' என்றால் ஞான ஆகாசம். 'அம்பரம்'என்ற (ஸம்ஸ்க்ருத) வார்த்தைக்கு ஆகாசம் என்றும் (நம் விஷயத்திற்கு ஸம்பந்தமில்லாததாக, வஸ்திரம் என்றுந்தான்) அர்த்தமே தவிர 'ஸபை'என்ற அர்த்தம் கிடையாது. (ஸம்ஸ்க்ருத) 'அம்பர'த்திலிருந்து வந்திருக்கக்கூடிய தமிழ் அம்பலத்திற்குத்தான் ஆகாசம், ஸபை என்ற இரண்டு அர்த்தங்கள் இருப்பது. ஆகாச அம்பலமாக இருக்கிற தத்வமே நாட்யஸபையான அம்பத்தில் நடராஜாவாயிருப்பது.

அது விராட் புருஷ விஷயமென்றால், நம் ஒவ்வொருவர்

ஹ்ருதயத்திலேயும் சின்னூண்டு ஆகாசம் த்வாரமாகப் புள்ளியளவுக்கு இருக்கிறது.

ஜீவபாவம் அதற்குள்ளே போய்த் தேய்ந்து தேய்ந்து முடிவாக ஒடுங்குகிறதாகச் சொன்னேன். இது ஜீவன் சிவனாகிறபோது (நடப்பது). மிஸீஸ்ஷ்ரீஙூமீவீஷீஸ் என்று அழகாகச் சொல்கிறார்கள்; விரிந்து வெளிப்படுகிற ஒன்று மறுபடி குவிந்து உள்ளே போய் ஒடுங்குகிற கார்யம். மறுபக்கத்தில் ஸத்தாமாத்ரமான சிவன்- அதாவது, பரமாத்மா - ஜீவனாக தேஹம், இந்திரியம், அந்தஃகரணம் எல்லாம் போட்டுக் கொண்டு விரிகிற மீஸ்ஷ்ரீஙூமீவீஷீஸ்- ல் இந்த ஹ்ருதயத்துக்குள்ளேயேதான், 'நான் ஒரு தனி ஜீவன்'என்பதான 'அஹங்காரம்'என்பது முளைக்கிறது. 'அஹங்காரம்'என்னவென்று அப்புறம் சொல்கிறேனென்றேனே அந்த ஸமாசாரம்!ப்ரஹ்மத்திற்கு வேறாகத் தான் தனி ஆஸாமி என்று 'நான்'போட்டுக் கொண்டு நினைக்கிற நினைப்புத்தான் அஹங்காரம். அதுதான் சிவன் ஜீவனாக மீஸ்ஷ்ரீஸ்மீ ஆவதில் பிள்ளையார் சுழி!

ணிஸ்ஷ்ரீஙூமீவீஷீஸ்-கு 'ஸ்ருஷ்டிக்ரமம்'என்றும் வீஸீஸ்ஷ்ரீஙூமீவீஷீஸ்-கு 'லய க்ரமம்'என்றும் பெயர். லயத்தை 'ஸம்ஹாரம்'என்பது. அந்த வார்த்தையைச் சொன்னால் பயப்படப் போகிறீர்களே என்று பாலிஷ் பண்ணி லயம் என்றேன். அதற்கு (ஸம்ஹாரம் என்ற வார்த்தைக்கு) பயப்படுத்துகிற அர்த்தமேயில்லை!'ஹர'என்றால் எடுத்துக் கொள்வது;வலிந்து அப்படிப் பண்ணுவது - அதாவது பிடுங்கிக் கொள்கிறாற்போல!'ஸம்-ஹாரம்'என்றால் நன்றாக,

பூர்ணமாக நம்மை பரமாத்மா தனக்குள்ளேயே எடுத்துக் கொண்டு விடுவதுதான்!

ஸ்ருஷ்டியின் போது 'தான் ஒரு தனி வ்யக்தி'என்று ஜீவன் பிரிகிற அஹங்கார ஸ்தானமான ஹ்ருதயமேதான் ஸம்ஹாரத்தின் போது (பரமாத்மாவிடம் மீளவும் லயிக்கும் போது; தாற்காலிகமான 'லய'மாக இல்லாமல் சாச்வதமான 'ஐக்ய'மாக ஒன்றும்சேரும்போது) அப்படிச் சேர்வதற்கு நெருக்கமான நிலையில் அந்தஃகரணம் குவிந்து நிற்கிற ஸ்தானமாயும் இருக்கிறது. அப்புறம் இது இன்னமும் குவிந்து அந்த ஹ்ருதயத்திலும் மையமாக உள்ள கூர் பாயின்டில் நிற்கிற போதே ஆத்ம ஸ்புரணம். அது இருக்கட்டும். (பரமாத்மாவிலிருந்து) வேறுபட்டு ஜீவாத்மாவாக வெளியிலே வருவது, மறுபடி பரமாத்மாவாக ஒன்றுபட்டு உள்ளே போவது இரண்டிக்கும் ஸ்தானமே நான் சொன்ன ஹ்ருதயம். ஒரு வாசல் இருக்கிறதென்றால் அதன் வழியாகத்தானே உள்ள இருப்பவர் வெளியில் போவது. வெளியிலிருப்பவர் உள்ளே நுழைவது இரண்டும்?அப்படி!

அந்தஃகரணத்தில் சித்தம், மனஸ், புத்தி, அஹங்காரம் என்று நாலு விஷயங்கள் இருப்பதில் பொதுவாக மனஸின் ஸ்தானம் கழுத்து. அஹங்காரத்தின் ஸ்தானம் ஹ்ருதயம் என்றேன். புத்தியின் ஸ்தானம் முகம். சித்தம் என்பது 'தாரணம்'என்னும் ஞாபக சக்தியாகவே குறிப்பாகச் சொல்லப்படும். அப்படி (ஞாபக சக்தியாக) இருக்கும்போது அதன் ஸ்தானம் நாபி. ஆனால் வாஸ்தவத்தில்

மனஸ், புத்தி, அஹங்காரம் ஆகிய எல்லாவற்றுக்கும் அடிப்படைச் சரக்கான 'எண்ணம்'என்பதையே சித்தந்தான் உற்பத்தி செய்கிறது. அதனால் அதற்குத் தனியாக ஸ்தானம் கொடுக்க வேண்டியதில்லை. இப்படியா அப்படியா என்று மனஸினால் குழப்படி பண்ணிக் கொள்ளும்போது சித்தம் கழுத்தில் இருக்கும். 'இப்படித்தான்'என்று புத்தியினால் தீர்ப்பு பண்ணும் போது அது முகத்திலிருக்கும்.

'ï£¡'â¡Á ï‹¬ñ põù£è«õ G¬ô ï£†®, ªè£œÀ‹«ð£¶ Üýƒè£ó^F¡ vî£ùñ£ù y¼îò^F«ô«ò C^î º‹ Þ¼‚°‹.

---

## ' அஹங்கார ' மும் அன்பும்

இந்தத் தப்பு-'நான்'தான் நிஜ-'நானாக' வேண்டியதாகையால், ப்ரம்மத்திலிருந்து வேறுபட்டு வேறே வேறேயாக ஆன த்வைத லோகத்திலிருந்து அதைத் திருப்பி, ஒன்றுபடுதற்கு ஸஹாயம் செய்கிற ஒரு வஸ்துவிடம் பிடிப்புப் பெற்றுக் கொடுக்க வேண்டியிருக்கிறது. வேறு வேறாகப் பார்க்கிறவைகளிலிருந்து தனக்கென்று வஸ்துக்களை வாங்கி சேர்த்துக்கொண்டேயிருப்பதால் தடிப்பேறியிருக்கிற தப்பு-நானை-அஹங்காரத்தை;அஹங்காரத்தின் அடிப்படை ஏவுதலாலேயே தொழில் செய்கிற மனஸை, புத்தியை;எல்லாவற்றையும் சேர்த்துச் சுருக்கமாக அந்தஃகரணம் என்பதை-ஹ்ருதயத்திலுள்ள ஆத்ம ஸ்தானத்துக்குப் போகப் பண்ண வேண்டியிருக்கிறது. நன்றாகக் தடித்து குண்டாகிவிட்ட ஆஸாமியை எப்படிச் சின்னூண்டு வாசல் வழியாக உள்ளே விடமுடியும்?ஸ்தூல சரீரி என்பதற்கு 'வாசலை இடிச்சுக் கட்டணும்'என்று வேடிக்கையாகச் சொல்கிறோம்!ஆனால் இந்த வாசலையோ இடித்து, கிடித்து எதுவும் பண்ண முடியாது!ஆஸாமியைத்தான் ஒல்லி பண்ணியாகணும்!எப்படி ஒல்லி பண்ணுவது?

வேறே வேறேயாக, ஒரே த்வைத மயமாகப் பார்த்து அத்தனையிடமிருந்தும் வாங்கி வாங்கி வாரிப் பூசிக் கொண்டுதானே இந்த ஆஸாமி குண்டாகியிருப்பது?அந்த வெளிப் பூச்சையெல்லாம் கரைத்து, அப்புறம் உள்ளேயிருக்கிற தன்னையும், அதாவது தனி ஜீவனாக த்வைதப்படுத்திக் கொண்டிருக்கிற அஹங்கார அந்தஃகரணத்தையும், ஒல்லியாக்கிக் கொண்டால்தான்

ஹ்ருதயத்தின் வழியாக அதற்கும் உள்ளே இன்னமும் சின்னதாயிருக்கும் புள்ளி த்வாரத்திற்குள்ளே போய் அத்வைதப் பேரானந்தமான ஆத்ம நிலையை அடையலாம். எப்படி என்பதுதான் கேள்வி. எப்படி என்றால் அன்பு. அன்பு என்பதை அப்யாஸம் பண்ணுவதால்தான்!

அஹங்காரத் தப்பு நானுக்கு வாரி வாரி வாங்கிச் சேர்த்துக் கொண்டதை மாற்றித் தன்னை அன்பிலே கொடுத்துக் கொள்ளக் கொள்ள குண்டு நானும் இளைந்து இளைந்த ஒல்லியாகும். அது ஒன்றுதான் அதை ஒல்லியாக்கி ஆத்ம ஸ்தானத்திற்குப் போகப்பண்ண வழி.

வைராக்யம், சமம், தமம் முதலானதில் அந்தஃகரணத்தை தேய்க்கவில்லையா, அதாவது ஒல்லி பண்ணவில்லையா என்றால் - தேய்த்தது மனஸையும் புத்தியையுந்தான். சுத்தப்படுத்தி, தீட்டித் தீட்டி அந்த இரண்டையும் தேய்த்தது வாஸ்தவந்தான். ஆனால் அஹங்காரம் இருக்கிறதே, அது அந்த இரண்டையும்விட ஸூக்ஷ்மமான ஒன்று!அப்படியென்று இருப்பதாக, நமக்குத் தெரியாமலே நம்மைப் பழி வாங்கி த்வைதக் குழியிலே புதைத்துக் கொண்டிருக்கிற ஒன்று!ஆகையினால் நமக்கே வெளிப்பட கர்வமான

எண்ணமாக, திமிரான அபிப்ராயமாக, 'நமக்காக்கும் வைராக்யம் வந்துவிட்டது!சம தமாதிகள் ஸித்தித்து விட்டது!'என்று தெரியாவிட்டாலும் உள்ளுக்குள்ளே இந்த ஸித்திகளைத் தானே தனக்காகவே ஸாதித்து விட்டதாக அந்தக் கண்டிதமான (பரமாத்மாவிலிருந்து துண்டிக்கப்பட்ட) தனி அஹங்காரம் நினைத்துக்கொண்டு தனக்கே லாபம் பாராட்டிக் கொண்டிருக்கும். அதாவது தான் ஸாதனையிலே பெற்றிருக்கிற லாபங்களையும் ஆத்மாவில் கரைத்து, தன்னையும் கரைத்துக் கொள்ள வேண்டிய தனி-நான் (அஹங்காரம்) அப்படிப் பண்ணாமல் அந்த லாபங்களைத் தனதாகவே பாராட்டிக் கொள்ளும். அதாவது அதன் வாங்கலும் அதனால் பெருத்துப் போவதும் - (சிரித்து) வாங்கலும் வீங்கலும் - தொடரத்தான் செய்யும். அத்தனை எண்ணங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் முதலாவதாக உள்ள தனி-நான் -எண்ண உணர்ச்சி தன்னை தேய்த்து ஒல்லி

பண்ணிக் கொண்டு ஆத்ம ஸ்தானத்திற்குள்ளே போய் ஒடுங்க நினைக்காமலே இருக்கும். அதாவது ஸாக்ஷாத்காரத்திற்கு அதிமுக்ய விஷயமான ego surrender நடக்காமலே இருக்கும்.

அஹங்காரம் என்ற தனி நானுக்கு உத்தமமான ஸாதிப்புக்களெல்லாம் போய்ச் சேர்ந்து அதைக் கொழுக்கப் பண்ணிவிடாமல் இளைக்கப் பண்ணுவதற்கு வழிதான அன்பு-தன்னைக் கொடுத்துக் கொள்ள வேண்டும் என்ற உசந்த பா வம். நல்ல காலமாக அந்த வவேகஸ வைராக்ய, சம,தமாதி ஸாதிப்புக்களே அந்தஃகரணத்தைப் பயன்படுத்தியிருப்பதால் இவன் (ஸாதகன்) மட்டும் கவனமாக ஸங்கல்பம் பண்ணிவிட்டானானால் இப்போது அந்த மாதிரி நிஜமான அன்பை உண்டாக்கிக் கொள்ள முடியும். அஹங்காரத்தை - தனி ஆஸாமியாக இருக்கிறதை - அப்படியே கொடுத்து, egoவை surrender பண்ணி அன்பு பாராட்ட முடியும்.

---



## ஆத்ம ஸாதகனின் அன்புக்கு இலக்கு ஏது ?

உண்டாகிற அன்பை எதனிடமிடமாவது செலுத்தத் தானே வேண்டும்?அதற்கு ஒரு 'ஆப்ஜெக்ட்'இருக்கணுமே!அப்படி இவன் தன்னை எதற்குக் கொடுத்துக் கொள்வது, அர்ப்பணம் பண்ணுவது?வேறே மநுஷ்யர்களுக்கு, ஊருக்கு உலகத்துக்கு, தேசத்துக்கு இவன் தன்னைக் கொடுத்துக் கொண்டு அன்பு பண்ணலாமா என்றால், இந்த ஸ்டேஜில் அதெல்லாம் கூடாதுதான். ஏனென்றால் அப்படிப் போனால் அவற்றிடம் ஸங்கம் உண்டாகி மாயைக்கே மறுபடி இழுபட்டுவிடுகிற ஆபத்து இருக்கிறது!ஜட பரதர் கதையைவிட ஒன்று வேண்டாம்!முந்தைய ஸ்டேஜ்களில் பரோபகாரம், தேச

ஸேவை, உலகத்தொண்டு என்றிப்படி அன்பிலே தன்னை அர்ப்பணம் பண்ணிக் கொள்வது சித்த சுத்திக்கு ரொம்பவும் நல்லதுதான். ஆனால் அது கர்மயோகத்தில் சேர்ந்தது. இப்போது உலகமே மாயை என்று தெரிந்துகொள்வதற்காக ஞானயோகத்தில் போகிற போது, தள்ள வேண்டிய அந்த மாயாலோகத்திடமே அன்பு, (அதற்குத்) தொண்டு என்றால் அஸம்பாவிதம் அல்லவா?(ஸாக்ஷாத்கார) ஸித்தியே பெற்று ஞானியானான விட்டு மாயாலோக நிர்வாஹகனான ஈச்வரனின் ப்ரேரணையில் (தூண்டுதலில்) ஒருவன் உலகத் தொண்டு செய்வதுண்டுதான். ஆசார்யாளே அப்படிப் பண்ணினவர்தானே?ஆனால் அது மாயையால் தான் பாதிக்கப்பட மாட்டாமல், 'மாயா-proof ' ஆகி ஆணியடித்தாற்போலப் பிரதிஷ்டை ஆகிவிட்ட பிறகு!அதோடு, அது ஞானி தானாக உத்தேசித்துச் செய்யாமல் ஈச்வர ஸங்கல்பத்தினால் கருவி மாத்ரமாகப் பண்ணுவது. ஆகக்கூடி அத்வைத ஸாதனை ஸாதனை என்றே ஆரம்பிப்பதற்கு முன்னாடி, அல்லது ஸித்தி பெற்ற அப்புறம் லோகஸேவை அல்லது தனி மனுஷ்யர்களுக்குத் தொண்டு என்பதில் ஒருவன் அன்பைக் காட்டலாமேயொழிய இப்போது நாம் பார்த்துக் கொண்டிருக்கிற ஸாதனைக் காலத்தில் இல்லை. ஆயிரம் பதினாராயிரத்தில் ஒருத்தராக இப்படி ஸாதனையில் இறங்கியிருக்கிற சில பேர் ஸேவை, ப்ரேமை பண்ணாததால் லோகத்திற்குப் பெரிய நஷ்டமுமில்லை!பார்க்கப் போனால் அவர்கள்தான் (லோகத்திலுள்ள ஜனங்கள்தான்) 'நாமதான் மாட்டிண்டுட்டோம். விடுபடணும்னு இப்படி யாரோ அபூர்வமாகப் புறப்படறாளோ, அவாளுடைய ஜீவ யாத்ரைக்கு சிரமமில்லாதபடி என்ன செய்யணுமோ அதை நாம் செஞ்சு கொடுப்போம்' என்று இவர்களுக்கு அவச்யமானதைப் பண்ணித்தர வேண்டும்.

ஆகவே தனி மநுஷ்யர்களிடமோ, பொதுவான மநுஷ ஸமூஹத்திடமோ இவன் அன்பு பண்ணுவதற்கில்லை. இப்படிச் சொன்னதால் ஜன ஸமூஹத்திடம் த்வேஷமாயிருக்கணும் என்று அர்த்தமாகாது. அன்புமில்லை. த்வேஷமுமில்லை. அஹிம்ஸை அவனுடைய ப்ரதம லக்ஷணமானதால் - (ஸந்நியாஸ) ஆச்ரமம் வாங்கிக் கொள்ளும்போதே, எந்த உயிருக்கும் எங்கிட்ட பயம்

இருக்கப்படாது': அதாவது எந்த உயிருக்கும் என்கிட்ட பயம் இருக்கப்படாது. அதாவது எந்த உயிருக்கும் நான் எந்த விதத்திலும் தீங்கிழைக்கக் கூடாது'என்று அவன் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டியவனாதலால் - அவனுக்கு எந்த

ஜீவராசியிடமும் ஸமூஹத்திடமும் கொஞ்சங்கூட த்வேஷம் இருக்காது - ஸாதனா பலனாக உள்ளே இப்படி த்வேஷம் இல்லாமலிருப்பதை வெளியிலே அன்பாயிருந்து காட்டுகிறேன் என்று அவன் இறங்கக்கூடாது.

ஆனால், உள்ளே அன்பு ஊறக்கூடிய அந்த நிலையிலே அந்த அம்ருதத்தை யாரிடமாவது கொடுத்து அதன் வழியாகவே தன்னையும் கொடுத்துக் கொண்டால் தானே ஹ்ருதயத்தின் வாசலுக்குள் போகும்படியாக இவன் இளைக்க முடியும்?அது யார்?யாரென்றால் ஆத்மாவேதான்!அதையே வரிக்கணும் என்று முமுக்ஷுதையில் சொன்னோமல்லவா?அன்பு பொங்கிக்கொண்டு, தன்னையே ஆத்மாவுக்கு அர்ப்பணம் பண்ணிக் கொண்டு விடவேண்டுமென்ற சரணாகத புத்தியோடு வரிக்க வேண்டும். ஆட்கொள்வதாக மட்டுமில்லாமல் பிரிந்து நிற்கிற ஆளை(தனி-நானை)க் கொல்வதாகவே அது செய்ய வேண்டும் என்ற பா வத்துடன் அன்பு பண்ண வேண்டும். அது தன்னைத் தெரியப்படுத்திக் கொள்வதற்குள் என்னவெல்லாம் சோதனை வைத்தாலும், 'நான்னு ஒண்ணு ஒனக்குத் தராம மிச்சம் வெச்சுண்டிருந்தேன்னா தானே சோதனை, கீதனை எதுவும் தெரிய முடியும்?

என்னையே உன்னுல அழிச்சுக்கணும்னு அர்ப்பண புத்தியோட நான் நிக்கறச்சே சோதனைக்கு ஆளாக யார் இருக்கா?என்று நினைக்கும்படியான அப்படிப்பட்ட உத்தமமான ப்ரேமையோடு ஆத்மாவை வரிக்க வேண்டும்.

இங்கேதான் அன்பு என்பது பக்தியாகிறது.

உத்தம வஸ்துவிடம் வைக்கும் அன்புக்கே பக்தி என்று பேர். நமக்கு ஸமதையானவர்களிடம் வைக்கும் அன்பு-நட்பு;உத்தமர்களாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் வயஸில் பெரியவர்களிடம் வைக்கிற அன்பு-மரியாதை;சின்னவர்களிடம், நமக்குக்

கீழ்ப்பட்டவர்களிடம் வைக்கும் அன்பு- அருள்;கஷ்டப்படுபவர்களிடம் வைக்கும் அன்பு- கருணை. உத்தமமானவர்களிடம் நாம் நைச்சியத்துடன் (பணிவுடன்) வைக்கிற அன்பு பக்தி. பரம உத்தமம் ஸ்வாமிதானாகையால், குறிப்பாக அவரிடம் அடங்கிப் பணிந்து அன்பாயிருப்பதையே பக்தி என்கிறோம். அதற்கப்புறம் குரு பக்தி, மாத்ரு பக்தி, பித்ரு பக்தி, தேச பக்தி என்றெல்லாம் சொல்கிறோம். இவர்களில் ஸ்வாமியும் குருவும்தான் நாம் அன்பிலே அர்ப்பணிக்கிற தனி-நானை வாஸ்தவமாகவே எடுத்துக்கொண்டு ஒரே நாளில் அதைக் கரைக்கக்கூடியவர்கள்.

ஆனாலும் ஞான வழி ஸாதகனுக்கு ஸ்வாமியை அப்படி (ஸகுணமாக) இல்லாமல் நிர்குண ஆத்மாவாகவே பிடிக்கச் சொல்லியிருப்பதால் அந்த ஆத்மாவிடமே அன்பை -பக்தியை- செலுத்த வேண்டியது.

---



## நிர்குண, ஸகுண பக்திகள்

இப்போது சோதனை பண்ணும் ஆத்மா, தன்னை தெரியப் பண்ணிக்கொள்கிற ஆத்மா, சரணாகதனை அப்படியே ஆட்கொள்கிற காரியத்தைப் பண்ணும் ஆத்மா என்றெல்லாம் சொன்னதால், "அது நிர்குணமாக இல்லாமல் காரியம் பண்ணும் ஸகுணமா என்ன?ஸகுணம் என்றால் அது இல்லையே நம் லக்ஷ்யம்?அது அப்படி இருக்கவும் முடியாதே' என்று கேள்வி வரலாம். இங்கே தான் ச்ரத்தையைக் கொண்டு வரவேண்டும்!அதனால் தான் ச்ரத்தையைக் கொண்டு வரவேண்டும்!அதனால் தான் பரம கவனத்தோடு வழி காட்டும் ஆசார்யாள் அதை (ச்ரத்தையை)

முன்னேயே இங்கே நமக்கு bodyguard-ஆக ரக்ஷணத்திற்கு வைத்து விட்டார்!"ஸகுண-நிர்குண கேள்வியெல்லாம் கேட்காதே. நிர்குண ஆத்மாவையே நீள நெடுகச் சொன்ன உபநிஷத் இங்கே இப்படித்தான் சொல்லியிருக்கிறதென்றால், பேசாமல் பூர்ண நம்பிக்கையோடு அதை ஏற்றுக்கொண்டு ஆத்மாவுக்கு உன்னை அன்பினால் கொடுத்துக் கொள்ளு. அப்புறம் அது நிர்குணத்தில்தான் உன்னைச் சேர்க்கிறது என்றே அத்தனை உபநிஷத்துக்களும் சொல்வதால், இங்கே ச்ரத்தையின் மேலேயே போ"என்று தனக்குத்தானே எடுத்துச் சொல்லிக் கொண்டு அந்தப்படி நம்பிப் பண்ணணும்.

நிர்குண ப்ரம்மம் அந்த ஸமயத்தில் மட்டும் ஸகுணமாய் அநுக்ரஹம் மட்டும் ஸகுணமாய் அநுக்ரஹம் பண்ணி உன்னை உள்ளே தள்ளி விட்டு, அந்த உள்ளே நிர்குணமாகவே உன்னை ஐக்யப்படுத்திக் கொள்கிறது என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளு, அப்படியெல்லாம் எதுவும் வைத்துக் கொள்ளாமல் ச்ரத்தையின் மேலேயே போவதுதான் ச்லாக்யம்.

ஸகுணம் என்று கொஞ்சம் இடம் கொடுத்தாலும் அப்படியே அனந்த கல்யாண குணாநுபவம், லீலானந்தம் என்று மனஸு போய் ஒரே த்வைதத்தில் கொண்டு விட்டு விடும். அது எத்தனை நன்றாயிருந்தாலும் உன் லக்ஷ்யம் அத்வைதமே என்பதை மறந்து விடாதே!

(ஸகுண ப்ரம்மமான) ஈச்வரன் நினைவு வராமலிருக்காதுதான். நினைப்பு என்று ஒன்று இருந்து கொண்டிருக்கும் வரையில் நல்லதாக ஏதாவது எண்ணும்போது அத்தனை நல்லதுகளையும் சேர்த்து வைத்த ஈச்வரன் என்பவனைப் பற்றி எப்படி நினைக்காமலிருக்க முடியும்?அத்வைத ஸித்தாந்தம் ஒன்று தவிர பாக்கி எல்லா மதங்களும் முடிவாகச் சொல்கிற அவனை இவன் (அத்வைத ஸாதகன்) நினைக்காமலே இருக்க முடியுமா?நினைப்பு வரத்தான் வரும். வருகிறபோது, 'அப்பா, உன் க்ருபையால்தான் எனக்கு அத்வைதத்தில் மனஸ் போயிருக்கிறது. உன் க்ருபையால்தான் அதற்கானதில் ஏதோ கொஞ்சம் கொஞ்சம் பண்ணிக் கொண்டு போகிறேன். முடிவாக உன்னுடைய நிர்குண

ஸ்வரூபத்தில் இந்தக் குழந்தையை ஒன்றாக்கிக் கொள்ளணுமென்ற பரம க்ருபையால்தான் இதெல்லாம் நடத்துவிக்கிறாய்! ஆகையால் இப்போது உன்னை ஸகுணமாக உபாஸிக்க ஆரம்பித்தேனானால் உன் க்ருபையை, உன் ஸங்கல்பத்தை மறுத்தே அப்படிப் பண்ணுகிறதாகத்தான் தோன்றுகிறது. அப்படி ஆகாமல் மேலே இந்த வழியிலேயே போகும்படி க்ருபை பண்ணப்பா!என்று நன்றியோடு ப்ரார்த்தித்துக் கொண்டு நிர்குணத் தத்வத்திலேயே சித்தத்தைத் திருப்ப வேண்டும்.

நன்றி- அது ரொம்ப முக்கியம். நம்மைப் பரம உத்தமமான அத்வைதத்தில் செலுத்தியிருப்பது அவனே என்ற நன்றியில் உண்டாகிற இந்த பக்தி அப்பப்போ எழும்புமானாலுங்கூட எழும்புமானாலுங்கூட, ஆரம்பத்தில் சித்த ஐகாக்ரியத்திற்காகச் செய்த அத்தனை பக்தியுபாஸனையும் இதற்கு உறை போட காணாது. பக்தி என்றே விடாமல் பண்ணிக் கொண்டு போன அப்போது அது ஒரு 'ரொடீன்' மாதிரி ஸாரவத்தாக (ஸாரம் நிரம்பியதாக) இல்லாமலும் அநேக ஸமயத்தில் போயிருக்கும். இப்போது ஞான வழியில் போகிறபோது மாறுதலாகச் சட்டென்று ஒரு பக்தி - அதுவும் நன்றியோடுகூட - பீறிக்கொண்டு வரும்போது அது க்ஷணமே இருந்தாலும் ஸாரஸாரமாக இருக்கும். லக்ஷ்யம் நிர்குணமானதால் இதிலிருந்தும் அதில்தான் சித்தத்தைத் திருப்ப வேண்டும்.

இருந்தாலும் ஒரு ஸகுண மூர்த்தியிடம் அன்பு செலுத்தினால் தேவலை என்று ஆரம்ப கட்டத்தில் (அடி ஆரம்பமில்லை;இந்தப் பக்வ திசையின் ஆரம்பித்தில்) இருந்தால் அதற்குத்தான் குரு இருக்கிறாரே!அவரிடம் பக்தியைக் கொட்டு, உன்னையே கொடு!அவர் உன்னை நிர்குணத்திடம் அன்பு பாராட்டும்படித் தூக்கி விட்டு விடுவார். 'ப்ரஸாதேந குரோ:ஸேயம் ப்ரவ்ருத்தா ஸூயதே பலம்'என்று ஆசார்யாளே சொல்லியிருப்பதை பார்த்தோமே!

அன்பு என்பது என்ன?அப்படியே போய்ப் பற்றிக் கொள்வதுதானே?ஆனால் பற்றிக் கொள்ளப்படும் வஸ்துவை நம் உடைமையாக்கிக் கொள்வதற்காக இல்லை;நம்மை அது

உடைமையாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தாபத்தோடு கூடின பற்று. 'தனி-நான்'சொன்னேனே, அஹங்காரம் என்று, அது போக வேண்டும் என்ற எண்ணத்தோடு, அதற்காகவே எந்த ஒன்றிடம் வைக்கும் விடாத பற்றும் அன்புதான், பக்திதான்.

அன்பு, பக்தி என்பது ஒன்றிலேயே ஆழ ஈடுபடுவது தான் என்பதற்காக செஸ்ஸில், கிரிக்கெட்டில் ஒரே ஈடுபாடு என்றெல்லாமிருந்தால், அது அன்பா என்றால் இல்லை. ஏனென்றால் அதெல்லாம் தனி-நானின் திருப்திக்காக அதாவது அதைக் கொழுக்கப் பண்ணுவதற்காக ஏற்பட்ட ஈடுபாடுகளாகவே இருக்கின்றன. அப்படியில்லாமல், ஸ்வயம் என்று ஒன்று சொல்கிறோமே, அதற்கு ஆஹாரம் போடுவதில் ஈடுபாடாக இல்லாமல், அந்த ஸ்வயத்தையே ஆஹாரமாகக் கொடுப்பதற்காகக் காட்டும் ஈடுபாடுதான் அன்பு-பக்தி. ஆத்மாவை வரிக்கணும் என்றேன். அந்த'ஸ்வய ம்வரம்'இப்படி இருக்கிறது. வரன் மட்டுமே வதூவை ஆஹாரம் பண்ணிவிட்டு நிற்பதற்கான ஸ்வயம்வரம்!

---



## உயிர் கலந்த குளுகுளு அன்பு

இதில் இன்னொரு அம்சம். எதனிடம் ஈடுபாடு வைக்கிறோமோ அது உயிருள்ள ஒன்று;அதிலே நம் சிற்றுயிர் ஈடுபாடு என்ற பெயரில் உறவு கொண்டாடுகிறது;அப்புறம் உறவும் போய், தானும் போய், அதுவேயாகிவிட வேண்டும் என்று இருப்பதே அன்பு. உயிர்!அது முக்கியம்!ப்ராண ஸ்நேஹிதன், உயிர்த் தோழன் என்கிறோமே, அப்படி உயிரோடு உயிர் சேர்வது அன்பு.

உயிர்!அது முக்கியம்!ப்ராண ஸ்நேஹிதன், உயிர்த் தோழன் என்கிறோமே, அப்படி உயிரோடு உயிர் சேர்வது அன்பு.

செஸ்ஸுக்கு, கிரிக்கெட்டுக்கு உயிர் (இருப்பதாகத்) தெரிகிறதா?

ஸங்கீதம், நாட்யம், காவ்யம் ஆகியவற்றை உயிருள்ள தேவதையாக வைத்து தங்களையே அதற்குக் கொடுத்து ஈடுபாட்டுடன் அப்யாஸம் பண்ணுபவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அவற்றில் ரொம்பவும் உயர்ந்த கட்டத்தைத் தொடும்போது, 'மெய் மறந்து பண்ணினார்கள்'என்கிறோம். என்ன அர்த்தம்?அப்போதைக்குத் தனி - நானை அந்த கலைக்கே இவர்கள் கொடுத்து விடுகிறார்கள். அதைத்தான் 'மெய் மறந்து'என்கிறோம். அந்தக் கலைக்கு 'உயிர்'இருப்பதால் அதுவே இவர்களுக்குள்ளே புகுந்து இவர்களை அதில் உசந்த ஒன்றைப் பண்ணும்படிச் செய்கிறது.

ஸயன்ஸில்கூட இப்படி மெய் மறந்த நிலையில்தான் - இன்ட்யூஷனில் - ஐன்ஸ்டைன் போன்றவர்கள் 'டிஸ்கவரி'பண்ணுகிறார்களென்றால், அதெப்படி?கலைகளை அப்யஸிக்கிறவர்களைப் போல அவர்கள் ஒன்றும் ஸயன்ஸ் ஒரு உயிருள்ள தேவதை என்று நினைக்கவில்லையே என்றால்:எல்லா உயிர்களுக்கும் மேலே ஒரு பேருயிர் இருக்கிறதோ, இல்லியோ?அத்தனை கலை, ஞானம், கார்யம் கார்யம் எல்லாவற்றுக்கும் அதுதானே மூலம்?ஒரே ஈடுபாடாக, dedicated-ஆக இவர்கள் ஸயன்ஸுக்குத் தங்களை அர்ப்பித்துக் கொண்டிருப்பதை மெச்சி அந்தப் பேருயிரே அவர்களுடைய சிற்றறிவின் வேலைக்கு மேற்பட்ட இன்ட்யூஷனாக ஒரு உண்மையை அவர்களுக்கு தெரிவித்து விடும். செஸ்ஸில், கிரிக்கெட்டில் கூட டெடிகேஷன் பூர்ணமாயிருந்தால் இப்படி நடக்கலாம். ஆனால் இங்கேயெல்லாம் ஒரு உயிரின் அர்ப்பணம், மற்ற உயிர் தன்னை உயிராகத் தெரிவித்துக் கொண்டு உறவு கொண்டாட வைக்கும் பெரிய அழகு, மாதுர்ய ரஸம் ஆகியவை இருக்காது.

நித்யாநித்ய வஸ்து விவேசனம் என்று ஆராய்ச்சி பண்ணுவதிலிருந்து ஆரம்பித்து வைராக்யம், தமம், சமம், உபரதி என்றெல்லாம் போகிற ஸாதனை அத்தனையிலுமே ஜட வஸ்துக்கள் மாதிரி எல்லாவற்றையும் வைத்துத்

தன்னையும் ஜடம் மாதிரி அடக்கி, ஒடுக்கிப் போட்டுக் கொள்வதாயிருக்கிறதே தவிர உயிரோடு உறவு கொண்டாடுகிற ரஸம் இல்லை. அந்த வழி ஒரே dry-ஆகத் தான் தெரிகிறது. அப்படியே போனால் பௌத்தம் சொல்கிற சூன்யத்தில்தான் முடியும். வேதாந்தம் சொல்கிற ப்ரம்மமோ சூன்யமில்லை, (அது) பூர்ணம். அப்படியே ரஸமாயிருப்பது.

உபநிஷத்தே சொல்லியிருக்கிறது - ரஸ மயமான அதை அடைந்து ஜீவன் ஆனந்த மயமாகிறான் என்று. உயிர் மயமாக இருக்கப்பட்ட சித் வஸ்து அது. சிதானந்த ரஸம், சிதானந்த பூர்ணம் என்றெல்லாம் சொல்வது. அப்படிப்பட்ட உயிராக அதை நினைத்து, அது நம்மோடு உறவு ஏற்படுத்திக் கொண்டு தன்னிலேயே கரைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை நமக்கு ஊட்டவே இங்கே பக்தியைக் கொண்டு வந்து வைத்தது. Dry-ஆன ஸாதனை க்ரமத்திற்கு ஜலம் பாய்ச்சி குளுகுளு பண்ணவே பக்தி.

முன்னே dry-ஆக வைத்ததும் நியாயம்தான். காயக் காயப் போட்டு அப்புறமே மருந்து கொடுக்கிற சிகித்ஸை முறை உண்டு. பயிர்களில் கூட சிலவற்றுக்குத் தண்ணீரே விடாமல் வாடப் போட்டு அப்புறமே (தண்ணீர்) விட்டு அவற்றை ஒரே கிளுகிளுவென்று வளரப் பண்ணுவதுண்டு. அப்படித்தான் இங்கேயும். மனஸிலேயும், புத்தியிலேயும் அஹங்காரத்திற்கு ஆஹாரமாகவே எண்ணங்களும் உணர்ச்சிகளும் தீர்மானங்களும் தோன்றிக் கொண்டிருக்கிற நிலையிலேயே நாம் இருந்து வருவதால் அந்த ஆஹாரத்தைப் போடாமல் காயக் காய dry-பண்ணித்தான் ஆகணும்!அப்படி ஆக்கியதாலேயே அப்புறம் அஹங்காரத்தை இன்னொன்றுக்கு ஆஹாரமாகக் கொடுக்கக் கூடிய அன்பு உண்டாகும். அப்போது அதைப் பேருயிர் அல்லது ஒரே உயிரான பிரம்மத்திடம் பக்தியாக ஆக்கிவிட வேண்டும்.

பிரம்மம் என்கிற ஆத்மாவிடம் பக்தி, ஸகுணமாகக் கொஞ்சம் ஈச்வரனிடம் பக்தி, குருபக்தி, இன்னும் இன்னொரு முக்யமான விஷயத்திலும் பக்தி வைக்க வேண்டும். என்னவென்றால், அப்புறம் மஹா வாக்ய மந்திரோபதேசம் வாங்கிக்கொள்ளப் போகிறோம். உபநிஷத் மற்றும் பல அத்யாத்ம சாஸ்திர விஷயமெல்லாம் ஆழமாக தெரிந்து கொள்ளப் போகிறோம். இந்த மந்திரங்கள், தத்வார்த்தங்கள்

எல்லாமும்கூட உயிரோடு இருக்கிறவை என்பதைப் புரிந்து கொண்டு ஏதோ எழுத்து, எழுத்தின் வழியாகத் தெரிந்து கொள்ளும் விஷயம் என்று மட்டும் இவற்றை நினைக்காமல், இவையெல்லாம் ஜீவனோடு தெய்வமாக

இருக்கிறவை;விக்ரஹ ரூபம் மாதிரி இதெல்லாமும் ப்ராண ப்ரதிஷ்டையான அக்ஷர ரூபம் என்று புரிந்து கொண்டு அவற்றோடும் உறவு கொண்டாடும் முறையில் ப்ரயோஜனப்படுத்திக் கொள்ள வேண்டும். இவையும் நம்மை இல்லாமல் கரைக்கிற இடத்திற்குக் கொண்டு விடுகிறவை என்று அன்போடு உறவு கொண்டாடி, பக்தி பண்ணவேண்டும். குரு உபதேசித்து, அப்புறம் நாம் மனனமும் த்யானமும் பண்ண வேண்டிய வேதாந்த தத்வங்கள் லோகத்தில் தப்பாகச் சொல்கிறாற் போல் dry philosophy (வறட்டு வேதாந்தம்) இல்லவேயில்லை;உயிருள்ள மூர்த்திகளுக்கு ஸமதையாக இருக்கிறவை என்று புரிந்து கொண்டு பக்தியுடன் அப்யஸிக்க வேண்டும். இதுவரைக்கும் dry-யாக ஸாதனை பண்ணி வந்த நாம் இனிமேலே வரப்போகும் மூன்றாம் கட்ட ஸாதனாங்கங்களான ச்ரவண-மனன-நிதித்யாஸனங்களை குளுகுளுவென்று பக்தியோடு பண்ண வேண்டும்.

இனிமேல் முதலில் பண்ண வேண்டியது ஸந்நியாஸம் என்று கவனித்தோமோனால் இப்போதுதான் ரொம்ப dryகட்டமென்று தோன்றும். ஆனால் மாறாக இப்போது தான் ரொம்பக் கசிவு, அப்படியே 'சொத சொத'ஆர ம்பிக்கப்போகிறது!வெளிப் பார்வைக்கும், வெளி லோகத்தைப் பொறுத்த மட்டிலும் ஒரே dry-தான்!மாயாலோகமென்று அப்படியே அந்த 'வெளி'¬ò^ îœO M´Aø è†ì‰î£¡. Ý¡ô àœÀ‚°œ T½ T½ ªõ¡Á Š«óñ£‹¼î‹. ªõOJ«ô è£Œ‰î ñ†¬ì;àœ«÷ Þ÷c˜. Ü‰î Š«óñ£‹¼î^¬î â™ô£õŸÁ‚°‹ àœ«÷»œ÷ õv¶Mì‹ ²ó‚è «õ‡®ò è†ìñ£è Þ¬î Ýê£˜ò£œ è¼¬í«ò£´ è£†®, ªè£´ˆF¼‚Aø£˜.

---

## செருக்கு நீங்கும் பொருட்டும்

ஸாதனை செய்கிறவன் dry-யாகப் போய்விடக் கூடாது என்பது ஒன்று. இன்னொன்று, அவனுக்கு அஹங்காரம் வந்து விடப்படாது;ego, தற்பெருமை, தன் ஸமாசாரம் என்ற மானாபிமானம் உண்டாகிவிடக்கூடாது எந்பது. அந்தஃகரணத்தின் அங்கமாயுள்ள அஹங்காரம் போவது இருக்கட்டும் - அது பெரிய விஷயம்;முடிவாக நடக்க வேண்டியது. பேச்சு வழக்கில் 'அஹங்காரம்'என்கிற மண்டைக் கனத்தைத்தான் இப்போது சொல்கிறேன். வித்யாஸத்திற்காக இதை 'அஹம்பாவம்'என்று வேண்டுமானால் சொல்லலாம். சாஸ்திர புஸ்தகங்களில் அப்படி (வித்யாஸம்) இல்லை;clarity-க்காக நாம் வைத்துக் கொள்ளலாம். மூல 'நான்'- எண்ணமான அஹங்காரத்தை 'ஈகோயிஸம்'என்றும், மண்டைக்கன 'நான்'எண்ணமான அஹம்பாவத்தை 'ஈகோடிஸம்'என்றும் சொல்கிறார்களென்று நினைக்கிறேன். 'நாமாக்கும் மந்த-மத்யம அதிகாரிகளுக்கு மேலே போய், கர்மா-பக்திகளுக்கு மேலே போய் ஞான வழியில் முன்னேறிக் கொணேடிருக்கிறோம்'என்ற அபிப்ராயம் ஏற்பட்டதானால் போச்சு!அப்படி ஆகாமல் விநய ஸம்பத்தை ஊட்டுவதற்காகவும் பக்தியை ஆசார்யாள் வைத்திருக்கிறார். நாம் என்கிறது ஒன்றுமேயில்லாமலாகி அன்பிலே கரையணும் என்னும்போது கனத்துக்கு இடமே இல்லை. ரொம்பவும் லேசாக அது இவனை ஆக்கிவிடும். உத்தமாதிகாரிக்கே ஞானம் என்று உசத்திச் சொல்லப் பட்டிருக்கிறபடியால், அவனுக்கு அதிலே தலை கனத்துப் போய், அந்த பாரமே ஸாதனையை அழுத்தி உடைத்துவிடாமல் ஜாக்ரதை பண்ண பக்தியின் நைச்ய பாவம் (தாழ்ந்திருக்கும் பாங்கு) அவசியமாகிறது. நாம் அன்போடுகூட எத்தனை வரணம் பண்ணினாலும் அது (பிரம்மம்) தன்னை விவரணம் என்பதாக ரிவீல் பண்ணிக்

கொண்டாலொழிய கடைத்தேற முடியாது என்ற நினைப்பில், அந்த லக்ஷ்யத்தின் முன்னால் தாழ்ந்து கிடக்கும் நைச்ய பாவம் ஏற்பட பக்தியே உதவி பண்ணும். அந்த உச்சியநுபவந்தான் என்றில்லை;இதுவரை ஸாதனையில் கண்ட பலனெல்லாமும் பரமாத்மா அநுக்ரஹித்துக் கிடைத்ததுதான்!நாம் பண்ணினது முயற்சி மட்டுமே;பலன் அது (பரமாத்மா) கொடுத்ததே!அப்படி முயற்சி பண்ணத் தோன்றியதும், பண்ணிக்கொண்டே போனதுங்கூட அதன் அநுக்ரத்தால்தான் என்ற நைச்ய பக்தி இருந்தாலே, அடுத்தாற்போல் ஸந்நியாஸியாவதற்கு உடைமைகளைத் தியாகம் செய்ய வேண்டியிருப்பதில் ரொம்ப முக்ய உடைமையான அஹம்பாவத் தியாகம் செய்ய முடியும்.

---



## ஸாதனையில் அஹங்காரம் : இரு கட்டங்கள்

'அன்பு, உறவு என்றால் இரண்டு பேர் இருக்க வேண்டும். அதனால் அது த்வைதம், அத்வைத ஸாதனையில் கிட்டே வரப்படாது'என்பது பொது அபிப்ராயம். ஸாதனை ஆரம்பித்து பஹுகாலம் அப்படித்தான் (அன்புறவு கொள்வதென்பது த்வைதத்தில் சேர்ப்பதாக) இருக்கும். அதாவது அன்பு என்றால் ஏதோ பிரியமாக இருப்பதுதான் என்ற அளவிலேயே அதைப் புரிந்து கொண்டு கார்யத்தில் நடத்துகிறவரை அது கிட்டே வரப்படாதுதான். அப்புறம் ஸாதனை பண்ணப் பட்டதனாலேயே நிஜ அன்பைத் தெரிந்து கொள்ள முடியும். அப்படி உண்டாக்கிக் கொள்ளும் உறவு த்வைதமாக இல்லாமல் உறவு கொண்டாடுகிற தான் தன்னையே கொண்டாடப்படுகிற வஸ்துவுக்குக் கொடுத்துக் கொண்டு, கரைந்து போய், இரண்டு பேரில்லை அது ஒன்றேதான் என்று ஆக்குவதற்காகவே என்று தெரியும். தெரிந்ததை அப்யஸிக்கும் பக்குவமும் அப்போது

வந்திருக்கும். அங்கே தான் அந்த அன்பை பக்தி என்று பேர் கொடுத்து ஆசார்யாள் வைத்திருக்கிறார். அதை அப்.யஸித்துக் கொண்டே போய் பக்குவம் பரிபக்குவமாகப் பழுத்து விட்டால் அப்புறம் இரண்டில்லாத கரைப்புதான்!

ஸாதனை எதற்கு என்று நினைத்து ஒருத்தன் ஆரம்பிக்கிறான்?'நான் பிரம்மத்தை அடையணும். நான் ப்ரம்மமாகணும்'என்பதையே லக்ஷ்யமாக நினைத்துதான் ஆரம்பிக்கிறான். அப்புறம் தொடர்ந்து பண்ணிக் கொண்டும் போகிறான். ஆனால் அவன் லக்ஷ்யத்தை அடைகிற போது 'நான்'என்ற இந்த எவனோ ஒருத்தனா ப்ரம்மமாகிறான்?இல்லவே இல்லை. இப்படி நான் சொல்லிக் கொள்ள ஒருத்தன் அப்போது இல்லவே இல்லை. பிரம்மந்தான் இருக்கிறது. நான்-காரன் அழிந்தால்தான் ஸாக்ஷாத்காரம் என்பதும் ஔபசாரிகந்தான் (உபசாரத்திற்கு சொல்வதுதான்). பிரம்மத்தை ஒருத்தன் ஸாக்ஷாத்கரிக்கிறான்'என்கிறதே, பார்க்கப்போனால், பிசகுதான். பிரம்மத்தை எவனும், எதுவும் பண்ண முடியாது. 'ஸாக்ஷாத்'தும் கிடையாது, 'கரிக்கிறதும்'கிடையாது!அதனிடம் ஒன்றும் பலிக்காது!வாஸ்தவத்தில் என்ன நடக்கிறதென்றால் இந்த ஒருத்தனே அந்த முடிவு நிலையில் இல்லாமல் போய்விடுகிறான்! எவன் ஸாதனை பண்ணினானோ அவனே ஸாதனாந்தத்தில் இல்லாமல் போய், லக்ஷ்யம் மட்டுமே நிற்கிறது! இதைத்தான், உப்புப் பொம்மை ஸமுத்ரத்தை ஆழம் பார்க்கப் போன கதையாக (இவனுடைய ஸாதனை முடிகிறது) என்று ஒரு பெரியவர் சொன்னது.

அது இப்படித் தன்னை வாரி முழுங்கப் பண்ணுவதற்கு ஆர்வமாக, ஆசையாக இவன் தன்னை பலி கொடுத்து கொள்ளத் தயாராக வேண்டும். அதுதான் இங்கே சொல்லும் ஹையர் க்ரேட் பக்தி.

'நாம் விடுபட வேண்டும், நாம் பிரம்மத்தை அடைய வேண்டும். நாம் பிரம்மமாக வேண்டும்'என்றெல்லாம் 'நாம் போட்டுக் கொண்டுதான் ஸாதனை ஆரம்பிப்பது. அப்போதே அந்த நானை பலி கொடுக்க வேண்டுமென்றால் முடியாது. அப்படி நினைத்தாலே பயமாகக்கூட இருக்கும்.

புத்தி சக்தியிலும் தைர்யத்திலும் நல்ல பலசாலிகளாக இருக்கிற வெள்ளைக்காரர்களில் பல பேர் ஜீவ பாவத்தை - தனியாக நான் என்று இருப்பதை -அழித்து விட வேண்டுமென்றால், "ஐயையோ!இன்டிவிஜுவாலிடியை ஸாக்ரிஃபைஸ் பண்ணவாவது?'என்றுதான் பயப்படுகிறார்கள்!ஆரம்பத்திலிருந்தே ஒருத்தன் பயப்படாமல் இருந்தாலுங்கூட அதற்காக ஜீவபாவம் உடனே போய்விடாதுதான். பழைய கர்மா, வாஸனை தீர்ந்தால் தான் அது போகும். அதை (ஜீவபாவத்தை)க் கொண்டே தான் அவற்றைப் போகப் பண்ணிக் கொள்ளவும் வேண்டும். அதற்குத்தான் ஸாதன சதுஷ்டயம் . நாம் விவேகம்

ஸம்பாதிச்சுக்கணும்'என்று முயற்சி பண்ணி அப்புறம், 'நாம் ஓரளவு விவேகம் ஸம்பாதிச்சுண்டாச்சு'என்றிப்படி 'நாம்' போட்டுக் கொண்டு, நாம் என்பதை base பண்ணி முயற்சி எடுத்துத்தான் பண்ணிக் கொண்டு போக வேண்டும். முயற்சியில் நம்மை உத்ஸாஹப்படுத்தவே இந்தத் தனி-நான் என்கிற அஹங்கார உணர்ச்சி அப்போதெல்லாம் இருக்கலாம்தான். அதனால் தப்பேயில்லை. முன்னேறுவதில் உத்ஸாஹப்படுத்திக் கொள்வதற்கு மட்டுமில்லை. வழுக்கி விழுகிற ஸமயங்களில் வேதனை விசாரப்பட்டுத் திருத்திக் கொள்வதற்குந்தான். தான் தனி ஜீவன் என்கிற உணர்ச்சி இருந்தால்தான் வழுக்கிக் கொண்டு விட்டோமே!இனிமேல் இன்னும் ஜாக்ரதையாக, கண்டிப்பாக அப்யாஸம் பண்ண வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும். தநி ஜீவன் பொய்தானே இதிலே வழுக்கல் என்ன, ஸ்டெடியாயிருப்பதென்ன?என்று அசட்டு வேதாந்தம் கொண்டாடினால் அபிவிருத்திக்கு வழி இல்லாமலே போகும். 'நானே இல்லை'என்ற உச்ச பாவத்தை சும்மாவுக்காகக் கல்பனை பண்ணிக் கொண்டு, ஆனாலும் பூர்வ வாஸனை போட்டுப் பிடுங்கிக் கொண்டிருந்து, அதை போகப் பண்ண தன்முயற்சி வேண்டாமென்று இருந்து கொண்டிருந்தால் ஒரு பிடிப்பு இல்லாமல் வீணாகப் போவதாகத்தான் ஆகும். ஸாதனை என்று எப்போது ஏற்பட்டிருக்கிறதோ அப்போது அது அஹங்கார நான்-காரனுக்குத்தானே?இல்லாவிட்டால் அது ஆத்மாவுக்கு என்று ஆகிவிடும். ஆத்மாவே தன்னை அடைய ஸாதனை பண்ணிக் கொள்ள வேண்டுமா

என்ன?எதுவுமே பண்ணாமல் தான் தானாக இருந்து கொண்டிருப்பதல்லவா அது? ஆனபடியால் தனி ஜீவன்தான், அந்தத் தனித்தன்மைக்குக் காரணமான அஹங்காரத்தை வைத்துக் கொண்டேதான் ஸாதனை பண்ணிக் கொண்டு போகவேண்டும்.

ஆனாலும் அப்புறம் இந்திரிய மனோ புத்திகளை அடக்கும் முயற்சிகளில் நிறைய வெற்றி கண்டு, தள்ள வேண்டியவைகளைப் பெருமளவுக்குத் தள்ளிவிட்டு, சேர வேண்டிய ஆத்மாவைப் பற்றி உபதேசம் பெற்று, அதே அஹங்காரத்தையும் தள்ளவேண்டியவைகளில் ஒன்றாகத் தான் ஆக்கிவிட வேண்டும். இனி மேலே வரப்போகிறதெல்லாம் ஜீவனின் ஸாதனையாக இவன் ஸம்பாதித்துக் கொள்வதாக இல்லாமல், பரமாத்மாவின் கிருபையால் தன்னைக் கரைத்துக் கொள்வதற்காகச் செய்கிறவை. அதனால்தான் ஸாதன சதுஷ்டயம் என்பதை முமுக்ஷுத்வத்தோடு ஆசார்யாள் முடித்து விட்டார். அப்புறம் நடப்பதெல்லாம் இவனுடைய ஸம்பாத்தியம் இல்லை;இவனுக்கு ஸம்பாத்யமும் இல்லை;இவன் தன்னையே பறிகொடுத்துக் கொள்வதற்காகச் செய்ய வேண்டியவையே அவை;ச்ரவண - மனன நிதித்யாஸனம் என்கிறவை.

வாணம் முதலில் மருந்தெல்லாம் கிட்டித்து, அடைத்து வைத்துத்தான் தயார் செய்வது;கொரனாத் தகடெல்லாம் ஒட்டி அழகு பண்ணி வைப்பது. இதனையும் பண்ணியது எதற்கென்றால் முடிவில் திரியில் நெருப்பை வைத்து வாணேமே இல்லாமல் வெடித்துப் போய்விடுவதற்காகத்தான். வெடித்து இல்லாமல் போகிறதற்கே வாணம் பண்ணிய மாதிரிதான் இங்கேயும் அஹங்காரம் வெடித்து நிர்வாணம் ஆவதற்காகத்தான் அதைக் கொண்டே ஸாதனையெல்லாம் பண்ணியது.

ஆரம்பத்திலிருந்தே கிருபையால்தான் எதுவும் நடக்கிறதென்றாலும் அங்கேயெல்லாம் ஜீவாத்மா தன்னை சுத்தி செய்து கொள்கிற ஸாதனையே முக்யமாயிருந்து, அது நல்லபடி நடக்கக் கிருபையும் ஸஹாயம் செய்வதாக இருந்தது. இப்போது சுத்திகரண கார்யம் பெருமளவுக்கு ஆகிவிட்டது. சுத்தியான அந்தஃகரணம் அநுபவத்தைப் பெறப் படிப்படியாகப் போக வேண்டும் 'பெற'என்கிறதோ -

ரொம்பவும் விசித்ரமாக -
"கொடுக்கிறதாக"இருக்கிறது!அல்லது மாணிக்கவாசகர் சொன்னாற்போல் ரொம்பவும் ஸாமர்த்ய வியாபாரமாக ஜீவபாவத்தைக் கொடுத்து சிவ ஸ்திதியைப் பெறுவதாக இருக்கிறதென்று வேண்டுமானால்

வைத்துக் கொள்ளலாம் !பக்தி ரஸத்தில் கவி ரஸத்தில் வைத்துக் கொள்ளலாமே தவிர வாஸ்தவத்தில் ஜீவன் என்ற ஒருத்தன் இருந்துகொண்டு சிவனைப் பெறவில்லை. ஜீவன் போய்தான் சிவனே மிஞ்சி நிற்கிறான்.

அந்த அஹங்கார நசிப்புக்குப் பக்வம் பண்ண வேண்டுமென்றுதான் பக்தியை வைத்தது. 'ஸாதனை என்று பண்ணி ஷட்க ஸம்பத்துஸ, வைராக்ய ஸம்பத்து, விவேக ஸம்பத்து முதலானவற்றை நிறைய ஸம்பாதித்துச் சேர்த்துக் கொண்டு விட்டாய். இனிமேலே கொடுத்துக் காலியாவதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்காகத்தான் பக்தியை வைத்திருக்கிறேன்'என்று ஆசார்யாள் விதி செய்திருக்கிறார்.

---



## தெய்வத்தின் குரல் (ஐந்தாம் பகுதி) (ஸ்ரீ சங்கர சரிதம்)

### வஸந்தகால வைசாக மாதப் பொருத்தம்

ஆசார்யாள் அவதரித்தது வஸந்த காலம். மஹாத்மாக்கள் வஸந்த காலம் மாதிரி ப்ரதிப்ரயோஜனமே எதிர்பார்க்காமல் லோகத்துக்கு ஹிதம் செய்கிறார்கள் என்று சொன்னவர் அவர். அவரும் அப்படிப்பட்டவர் தான். அவர் அவதாரம் பண்ணியது வஸந்த ரிதுவாக இருக்கிறது!

அவர் பிறந்த மாஸம் வைசாகம்-நாம் வைகாசி என்பது. வைசாகம் என்றால் சாகை (கிளை) இல்லாதது. மரம் செடி என்றால் கிளை உண்டு. கொடிதான் கிளையில்லாதது.

வைசாகத்திற்கு மாதவ மாஸம் என்றும் ஒரு பெயர் உண்டு. சைத்ர மாஸம் 'மது';வைசாகம் 'மாதவம்'. மாதவி என்பது மல்லிகையின் பெயர். கிளையில்லாமல் மல்லிகைக் கொடியும் 'வைசாக'மாக இருப்பதால், அந்த மாஸத்தின் இரண்டு பேரும் மல்லிகை ஸம்பந்தமுள்ளதாயிருக்கிறது. அது மாத்ரமில்லை. 'வஸந்தம்'என்பதன் அடியாகப் பிறப்பது 'வாஸந்தி'என்ற வார்த்தை. வாஸந்தி என்றும் மல்லிகைக்கே இன்னொரு பெயர்கூட இருக்கிறது.

இப்படி ஒரே மல்லிகை ஸம்பந்தத்தோடு ஆசார்யாளின் அவதார காலம் இருப்பது ரொம்பவும் பொருத்தந்தான். வெள்ளை வெளேரென்று சுத்த ஸத்வ ரூபமாக மல்லிகை இருக்கிறது. வெயில் காலத்தில் குளிர்ச்சி தருவதாகப் புஷ்பிக்கிறது. ஆசார்யாள் ஸம்ஸார வெயிலில் குளிர்ச்சி தருகிற ஒரு பெரிய மல்லிகையாக, சுத்த ஸத்வ அவதாரமாக வந்தவர்.

ஞான மல்லிகையாக வந்து லோகத்துக்கெல்லாம் ப்ரேமை என்கிற 'சம்'மின் ஸுகந்தத்தைச் செய்த சம்கரரின் ஜயந்தியே வஸந்த மாதவ ஜயந்தியாயிருக்கிறது. அது நம் மனஸை எல்லாம் சுத்த வெளுப்பாக்கட்டும்!அன்பின் மணத்தினால் நம் மனஸை நிரப்பட்டும்!அன்பான சிவத்திலேயே ஊறிப்போய் சாந்தமான சிவஞானத்தை நாம் அடையும்படி அநுக்ரஹிக்கட்டும்!

ஞான வெளுப்பில் லயம் அடையவைக்கும் ப்ரேமையில் ஸுகந்தம்!ஸுகந்தத்தை உள்ளே தீர்க்கமாக இழுப்பது அப்படியே ப்ராணாயாமமாகி லயத்தை உண்டாக்குவது தானே?

மல்லிகை ஸம்பந்தம் மேலும் சொல்கிறேன் :மடத்தில் ஸ்ரீமுகம் கொடுக்கும்போது முதலில் ஆசார்யாளைப் பற்றி வர்ணிக்கிற வாசகம் நீளமாக வரும். அதன் நடுவில் " **அதுலித ஸுதாரஸ மாதுர்ய கமலாஸன-காமிநீ தம்மில்ல ஸம்புல்ல மல்லிகா மாலிகா நிஷ்யந்த மகரந்த ஜரீ ஸௌவஸ்திக வாக் விஜ்ரும்பணாநந்த துந்திலித மநீஷி மண்டலாநாம்** "என்று வருகிறது. என்ன அர்த்தமென்றால்:

கமலாஸனரான ப்ரஹ்மாவின் காமினியாக ஸரஸ்வதி தேவி இருக்கிறாளே, அவளுடைய 'தம்மில்லம்'என்னும் கூந்தல் அலங்காரத்தில் மல்லிகை ஸரங்களை அணிந்திருக்கிறாள். அவற்றிலிருந்து பொழியும் தேன் பெருக்கும் நிகராகாது என்னும்படியாக அப்படிப்பட்ட அம்ருத ரஸம் போன்ற அருமையான வாக்கை ஆசார்யாள் ஆனந்தமாக மலர்த்திக் கொண்டு ஸமூஹத்தையெல்லாம் பூரிக்கும் செய்கிறாராம்!

ஆசார்யாளுடைய ஸர்வஜ்ஞத்வம் லோகத்திற்குத் தெரிவதற்காக ஸரஸ்வதியே அவரிடம் வாக்குவாதம் பண்ணித் தோற்றுப் போய்க் காட்டினாள். அவளை சாரதா பீடம் என்று ச்ருங்கேரியில் ஸ்தாபித்து அதில் ஸாந்நித்யத்துடன் இருக்கும்படியாக ஆசார்யாள் அமர்த்தினார். பத்து விதமான ஸந்நியாஸப் பிரிவுகளில் அவளுடைய பெயரிலேயே பாரதி, ஸரஸ்வதி என்று இரண்டை வைத்தார். ச்ருங்கேரியில் பாரதி ஸந்நியாஸிகள். இங்கே (காஞ்சி மடத்தில்) ஸரஸ்வதி ஸந்நியாஸிகள். ஸரஸ்வதி ஸந்நியாஸிகளிலேயே இரண்டு ஸம்ப்ரதாயங்கள்-ஆனந்த ஸரஸ்வதியென்றும், இந்த்ர ஸரஸ்வதியென்றும்.

இந்த மடம் இந்த்ர ஸரஸ்வதி ஸம்ப்ரதாயம். ச்ருங்கேரியில் பீடத்திற்குப் பேர் சாரதா பீடம். இங்கே நம் மடத்திற்குப் பேர் சாரதா மடம். ஸரஸ்வதி வெள்ளை வெளேரென்று மல்லிகை மாதிரி இருப்பவள். அவள் சூட்டிக்கொடுண்டுள்ள மல்லிகையின் மாதுர்யத்தையும் மிஞ்சுவதாக இருக்கிறதாம் ஆசார்யாள் வாக்கு!மல்லிகை மாஸத்தில் பிறந்தவரின் வாக்விசேஷம்!

---



## ஹ்ருதய நாடிகள் : ஞானியின் உயிர் அடங்குவதும் ஏனையோர் உயிர் பிரிவதும்

வேடிக்கை!ப்ரேமையின் ஸம்பந்தமேயில்லாத ஸமாசாரங்களும் ஹ்ருதயத்திலிருந்தே நடக்கின்றன!அதுதான் ஈச்வரனுடைய அதி விசித்ரமான மாயா சக்தி!ஹ்ருதயமே அஹங்கார ஸ்தானம் என்று இருப்பதில்தான் இப்படி!அத்தனை ஜீவர்களின் தனி வாழ்க்கை விஷயங்களையும் நடத்தி வைத்து, கன்ட்ரோல் செய்கிற நாடிகள் அதிலிருந்தே புறப்பட்டு மற்ற அவையங்களுக்கு ஜீவஸத்தைத் தருகின்றன என்று பார்த்தோமே, அதனால் இப்படி!

இந்த ஹ்ருதயத்திலிருந்து பல ஸெமி-மாம்ஸ நாடிகள் நாலா பக்கங்களிலும் ஒடுகின்றன. அவற்றிலே நவத்வாரம் என்று உடம்பிலுள்ள ஒன்பது ஒட்டைகளில் போய் முடிகிறவைகளும் இருக்கின்றன. மநுஷ்யர்கள் மரணமடைகிறபோது, அவர்களுடைய கர்மாவையொட்டி மறுபடி ஜன்மா எடுக்க வேண்டிய அத்தனை பேருக்கும்- அதாவது, ஜன ஸமூஹத்தில் முக்காலே மூணுவீசம் பேருக்கு - இந்த த்வாரங்களில் ஒன்றின் வழியாகத்தான் ப்ராணன் போவது. இந்த ஒன்பதைத் தவிர உச்சந்தலையில் ஒரு த்வாரம் அணுமாத்ரமாக இருக்கிறது. ஸகல ஜனங்களுக்குமே கருப் பிண்டமாயிருக்கும்போது உயிர் உள்ளே ப்ரவேசிப்பது அதன் வழியாகத் தான். ஆனால் சாகிறபோது புனர்ஜன்மாக்காரர்கள் அத்தனை பேருக்கும் உயிர் போவது அது தவிர மற்ற த்வாரங்களின் வழியாகத்தான்!புனர்ஜன்மா இல்லாதவர்களில் ஞானி தவிர பாக்கி அத்தனை பேருக்கும் இந்த ஒன்பதில் சேராத சிரஸின் த்வாரம் வழியாக ப்ராணன் வெளியில் போகிறது. கபால மோக்ஷம் என்பது அதைத்தான்.

'ஞானி தவிர என்றால் அவன் ஸமாசாரம் என்ன?அவனைத் தவிர உள்ள மற்ற புனர்ஜன்மா இல்லாதவர்கள்'என்கிறவர்கள் யார்?

ஞானியின் பிராணன் தேக வியோகத்தின்போது வெளியில் எங்கேயும் போகிறதில்லை. எங்கேயோ போய் அடைய வேண்டிய மோக்ஷம் என்ற ஒன்று அவனுக்குக் கிடையாது. அதே மாதிரி, எங்கேயோ ஒரு காலத்தில், மரணம் என்பது ஏற்படும் காலத்துக்கு அப்புறந்தான், அவனுக்கு மோக்ஷம்

என்பதுமில்லை. என்றைக்கு ஞானம் வந்ததோ, அதாவது ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டதோ அப்போதே பந்தப்படுத்தும் ஜீவ மனஸ் (அந்தஃகரணம்) நசித்து, அவன் மாயையிலிருந்து விடுபட்டுவிடுவதால் முக்தனாக - ஜீவன்முக்தனாக - ஆகிவிடுகிறான். இப்படி சரீரத்திலுள்ள போதே அவன் முக்தனாகிவிட்டதால், சரீரம் விழுவதற்கப்புறம் ப்ராணன் எங்கேயோ போய் முக்தி பெறணும் என்று இல்லைதானே?

அவன் உயிராக, பேருயிராக, ஆத்மாவை நினைத்து பக்தி என்று தெரியாமலே, பரம உத்தமமான பக்தி பாவத்துடன் - தன்னுடைய அஹங்காரத்தைக் கரைக்கும் உத்தேசத்துடன் ஸாதனை பண்ணிக் கொண்டே

போகும் போது அது கரைந்து கரைந்து ரொம்ப ரொம்ப ஒல்லியான நிலைக்குப் போனவுடன், ஆத்ம ஸ்தானமான ஹ்ருதய த்வாரத்திற்குள்ளேயே போய், அப்படியே ஆத்மாவில் ஒடுங்கி, ஐக்யப்பட்டு அற்றுப் போய்விடுகிறது. உடனேயே அவன் முக்தனாகி விடுகிறான்.

ஆனாலும் அதற்காக அவனுடைய உயிர் போய் விடுவதில்லை. உயிர் வாழ்கிறபோதே அவன் முக்தி நிலையிலிருப்பதால்தான் ஜீவன் முக்தன் என்பது. அப்புறம் ஒருநாள் அவனுடைய உடம்புக்குச் சாவு வருகிறது. ஏன் முக்தி அடைந்த பிறகும் அவன் உயிரோடு இருக்க வேண்டும் அப்புறம் அவன் உயிர் பிரிவது எப்போது என்பதைப் பற்றியுள்ள அபிப்ராயங்களில் இப்போது நாம் இறங்க வேண்டாம். முக்யமான அபிப்ராயம் 'ப்ராரப்த ம்'தீர்வதற்காகவே அவன் (முக்திக்குப் பிறகும்) உயிரோடு இருக்கிறான்;அது தீர்ந்தவுடன் உயிரும் போய்விடுகிறது'என்பது. அதையே வைத்துக்கொள்ளலாம். ஆக, ஆத்ம ஸாக்ஷாத்காரம் (முக்தி) அடைந்த பிறகும் அவனுக்கு உயிர்-ப்ராணன்- இருக்கிறது. செத்துப் போகிறபோது அந்த ப்ராணன் என்ன ஆகிறது என்றால் ஏற்கெனவே எப்படி அஹங்காரம் (மனஸ், புத்திகளும் அப்போது அஹங்காரத்தில் ஒடுங்கி விடுவதால் 'அந்தஃகரணம்'என்றே சொல்லலாம், எப்படி அந்த அந்தஃகரணம்) ஹ்ருதய த்வாரத்திற்குள் போய் ஆத்ம

ஸ்தானத்தில் ஒடுங்கிப் போயிற்றோ, அப்படியே இப்போது மரணம் நேர்கிறபோது ப்ராணனும் அதற்குள்ளேயே போய்தான் ஒடுங்கிப் போய்விடுகிறது. அதாவது ஞானியின் சரீரம் சாகிறபோது அவனுடைய ப்ராணன் எந்த நாடி வழியாகவும் எங்கேயும் வெளியிலே போகவில்லை. உபநிஷத்திலும், ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் 'க்ளிய'ராக அப்படி இருக்கிறது.

பொது வழக்கில்கூட ஞானியின் உயிர் போனதாகச் சொல்லாமல் அடங்கினதாகத்தான் சொல்வது.

அவனைத் தவிர மறுபடி இந்த லோகத்தில் ஜன்மா இல்லாமல் பண்ணிக் கொண்ட மற்றவர்கள் யாரென்றால், பொதுவாக அவர்களை 'உபாஸகர்கள்'என்று சொல்வது. அவர்களில் பல வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள். அத்தனை பேருக்கும் பொதுவாக இருப்பது:இந்த லோகத்தோடு, தேஹத்தோடு எல்லாம் தீர்ந்து போய்விடவில்லை என்று அந்த எல்லோருக்கும் தீர்மானமிருக்கிறது. ஆதார ஸத்யம் ஒன்று இருக்கிறது என்பதில் அத்தனை பேருக்கும் நிச்சயமான நம்பிக்கை இருக்கிறது. லோகமும் ஜேஹமும் பந்தப்படுத்துகிற தங்கள் உயிரை விடுவித்து மோக்ஷமடைய வேண்டுமென்ற எண்ணம் அவர்கள் எல்லாருக்கும் இருக்கிறது. இதோடு பொதுவான அபிப்ராயம் முடிகிறது. இதற்கப்புறம் எல்லாம் தனித்தனி அபிப்ராயங்கள்;அவற்றை அநுஸரித்து வேறு வேறான அனுஷ்டானங்கள்.

ஒரு அபிப்ராயக்காரன் அத்வைதி மாதிரியே ஆதார ஸத்யத்தை நிர்குணமாக நினைக்கிறான். ஆனாலும் (அத்வைதிக்கு மாறாக) ஒவ்வொரு ஜீவனுக்கும் அப்படியொரு தனி ஆதாரம் இருப்பதாக நினைக்கிறான். நிர்குணமானாலும் அது ஸச்சிதாநந்த பூர்ணம் என்று அத்வைதி நினைக்கிறார்போலவும் அவன் நினைப்பதில்லை. அது பாட்டுக்கு ஏதோ வெறிச்சென்று இருப்பதாக நிநைக்கிறான். 'ஆதார ஸத்யமே இல்லை;எல்லாம் சூன்யம்'என்றும் (பௌத்தர் போல) நினைக்கவில்லை. மனோ நிக்ரஹம் பண்ணி அந்த வெறுமையான, ஆனாலும் இருக்கிற நிலையில் சேர்ந்துவிடுவதற்காக யோகாநுஷ்டானம் என்பதைப் பண்ணுகிறான். அவனை யோகி என்கிறோம்.

இவன் தனி ஜீவபாவம் - அஹங்காரம் நசித்தே போக வேண்டுமென்று நினைப்பவன்தான். ஆனாலும் ஏகமாக இருக்கிற பரம ஸத்யமான ஸ்திதியைப் பற்றி ஸரியாகத் தெரிந்து கொள்ளாதவன், மனோ நிக்ரஹத்தையும் அவன் நேரே அப்படிப் பண்ணிக் கொள்ளாமலிருக்கிறான். நாம் மனஸு இல்லையே!ப்ரம்மம் அல்லவா?இல்லாத வஸ்துவால் ஏன் இழுபறி படுகிறோம்?இருக்கிற ப்ரம்மமமே நாம் என்கிற ச்ருதி வாக்யமே நினைப்பாக இருந்து அதனாலேயே இத ஒழித்துக் கட்டுவோம் என்று (ஞான மார்க்கக்காரனைப் போல) நினைத்து அப்படிப் பண்ணிக் கொள்ளவில்லை. நேராக மனோ நிக்ரஹம் பண்ணுவது கஷ்டமாயிருக்கிறதேயென்று ச்வாஸ நிக்ரஹத்துக்கு ரொம்பவும் முக்யம் கொடுத்து, பண்ணி அதைத் துணைக்குக் கூப்பிட்டு வைத்துக் கொண்டேதான் நிக்ரஹம் பண்ணுகிறான்.

இப்படிப் பண்ணுவதில் ரொம்பவும் விசித்ரமாக இவனுடைய லக்ஷ்யமான ஸத்யம் வெறிச்சான கைவல்யமாயிரு ந்தபோதிலும், ச்வாஸ சக்தி அதன் மூலமான ப்ராண சக்தியில் சேர, அந்த ப்ராண சக்தி ஸகல ஜீவ வர்க்கத்தின் மூலமான மஹா ப்ராண சக்தியில் சேர அந்த சக்தி ப்ரபாவத்தினால் இவனுக்கு அற்புத சக்திகளெல்லாம் வருகின்றன. அவற்றில் இழுபட்டு லக்ஷ்யத்தைக் கோட்டை விடாமலிருக்கிற கஷ்டமான பொறுப்பு வேறு அவனுக்கு வாய்க்கிறது.

இன்னொரு அபிப்ராயக்காரன் ஆதார ஸத்யம் ஸகுணந்தான் என்று நினைக்கிறான். அதைப் போய்ச் சேர வேண்டும். சேர வேண்டுமே தவிர அதோடேயே ஐக்யமாகி விடக் கூடாது. ஏனென்றால் ஐக்யமாகி விடக்கூடாது. ஏனென்றால் ஐக்யமாகிவிட்டால் அதன் குணகணங்களை அநுபவித்து ஆனந்திப்பதற்கு இடமே இல்லாமல் போய்விடும். அதைப் பல பாவங்களில் ஏதோ ஒன்றில், அல்லது பலவற்றிலுமே அநுபவத்தில்தான் ஜீவாத்மாவின் நிறைவான ஆனந்தம் இருப்பதால் (அதோடு ஐக்யமாகி விடாமல்) வெளியிலிருந்து அப்படி சாச்வதமாகப் பண்ணிக் கொண்டிருப்பதுதான் முக்தி'என்று அவன் நினைக்கிறான். ஒன்றிடம் அன்பு வைத்தால்தானே அது எப்படி இருக்கிறதோ, என்ன பண்ணுகிறதோ அவற்றை அநுபவித்து ஆனந்திக்க முடியும்?ஆகையினால் அத்தனை பாவத்திற்கும்

è˜ñ «ò£A â¡ð¶.

இப்போது நான் சொன்னதிலிருந்து ஞான மார்க்கக்காரன் தவிர மற்ற மூன்று பிரதான மார்க்கக்காரர்களான யோகி, பக்தன், கர்மி ஆகிய மூன்று பேரும் 'உபாஸகர்'கள் என்று தெரிகிறது. வேதத்தை ஆக்ஷேபிக்காமலும், 'ஆதார ஸத்யமென்பதே கிடையாது, சூன்யந்தான்'என்று சொல்லாமலும் உண்டான அநேக தர்சனங்களை-அதாவது பிலாஸஃபிகளை-நன்றாக அனுஷ்டிக்கும் எல்லாரையுங்கூட இந்த கோஷ்டியில் சேர்த்துவிடலாம்.

இவர்கள் யாவரும் செத்துப்போன பிறகு ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு விடுகிறார்கள்;மறுபடி பிறப்பதில்லை. ஆனாலும் உடம்பிலிருந்து பிரிந்த அவர்களுடைய உயிர் உடனே பரமாத்மாவுடன் அபேதமாக ஐக்யமாகிவிடுவதில்லை. ஏனென்றால் இவர்களில் யாருமே அந்த அத்வைத ஐக்யத்தை லக்ஷ்யமாக நினைக்க வில்லையே!அதை ஸரியாகப் புரிந்து கொள்ளவில்லையே!அதற்கானதைச் செய்யவில்லையே!அது வேணுமென்று கேட்கவில்லையே! கேட்டாலே கிராக்கி பண்ணிக் கொண்டுதான் கொடுக்கிற

பரமாத்மா கேட்காதவர்களுக்கு எதற்குக் கொடுக்கப் போகிறார்?

ஆனாலும் இவர்களெல்லாம் ஸம்ஸார நிவிருத்தி, ஜனன நிவ்ருத்தி கேட்டு நல்ல நல்ல வழிகளிலேயே போவதால் அவர்கள் கேட்ட அந்த நிவ்ருத்தியான விடுதலையை மட்டும் கொடுத்துவிடுகிறார்.

எப்படியென்றால், சரீரத்திலிருந்து பிரிந்த அவர்களுடைய உயிர் மறுபடியும் இந்த லோகத்திற்குத் திரும்பாமல் ப்ரம்ம லோகத்திற்குப் போகும்படிப் பண்ணுகிறார். அதோடு இஹலோக ஸம்ஸாரத்தில் அவதிப்படுவதிலிருந்தும், பிறவிகள் எடுப்பதிலிருந்தும் விடுதலைதான் -அதாவது, மோக்ஷந்தான்.

ப்ரம்ம லோகம் என்றால் ப்ரம்மத்தின் லோகம் இல்லை என்று இத்தனை கதை கேட்ட பின் நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். ஆமாம், ப்ரம்மத்திற்கு லோகம் எதுவும் கிடையாது. இந்த ப்ரம்ம லோகம் ப்ரம்மா என்ற தெய்வத்தின்

லோகம்.

சதுர்முக ப்ரம்மாவின் லோகம் என்று வைத்துக் கொள்வதைவிட அதை ஸகுண ப்ரம்ம லோகம் என்றே வைத்துக் கொள்ளவேண்டும் (ப்ரம்மா என்கிறவரை) விஷயம் தெரிந்தவர்கள் ஹிரண்யகர்பன் என்றும் அந்த லோகத்தை ஹிரண்யகர்ப லோகம் என்றும் சொல்வார்கள்.

ஸூக்ஷ்ம தரமான நிர்குண ப்ரம்மமாக இருக்கிற நிலைக்கும், அது மாயா விநோதத்தினால் ஸ்தூல ஸ்ருஷ்டியை உண்டாக்கியிருக்கிற நிலைக்கும் இடைப்பட்ட நிலையைதான் ஹிரண்யகர்பன் என்று மூர்த்தமாகச் சொல்வது. ஸ்தூலமாக ஸ்ருஷ்டி வெளிப்படாவிட்டாலும் (மாயா ஸஹிதமான) ஸகுண ப்ரம்மம்

ஸங்கல்ப ரூபத்தில் ஸ்ருஷ்டியைத் தனக்குள்ளே கர்ப்பம் மாதிரி வைத்துக் கொண்டிருக்கும் நிலை. ஹிரண்யம் என்றால் ஸ்வர்ணம். அவித்யை எனப்படுகிற மாயை இருட்டு மாதிரியானதானாலும் ப்ரம்ம சைதன்யத்தின் ப்ரதிபலிப்பாலேயே அது இந்த அற்புதமான ஸ்ருஷ்டியைப் பண்ணுவதால், ப்ரதிபலிக்கிற அந்த தத்வத்தை ஹிரண்யமாகச் சொல்வது.

வெளியிலே போகிற வாசல்தான் உள்ளே நுழைகிற வாசலும் என்ற உதாரணப்படி ஹிரண்யகர்பன் வழியாக வெளியிலே வந்த ஸ்ருஷ்டி அவன் வழியாகவேதான் உள்ளே போவதும். எப்போது உள்ளே போகுமென்றால் ஹிரண்யகர்பனுக்கு நூறு வயஸு பூர்த்தியாகி அவன் நிர்குண ப்ரஹ்மத்திற்கு உள்ளே போய் ஐக்யமாகிறபோது. நம்முடைய கணக்கில் ஆயிரம் சதுர்யுகம் அவனுக்கு ஒரு பகல்;ஆயிரம் சதுர்யுகம் ஒரு ராத்திரி;அவனுடைய ஒரு முழு நாள் நமக்கு இரண்டாயிரம் சதுர்யுக காலம். இந்த மாதிரி ஒரு நாள் கொண்ட வருஷத்தின் கணக்கில் அவன் நூறு வருஷம் இருப்பான். அவ்வுளவு காலமும் ஸ்ருஷ்டியும் நடந்து கொண்டிருக்கும். நூறு வயஸானதும் அவன் ப்ரம்மத்தின் உள்ளே வாங்கிக் கொள்ளப் படுவான். அப்போது அவனோடு கூட லோகங்கள்,

ஜீவர்கள் முதலான ஸகல ச்ருஷ்டியும் ஜாடா (ப்ரம்மத்தின்) உள்ளே போய் ஐக்யமாகிவிடும். ப்ரம்மம் கேவலமாக

(தனித்து) நிற்கும். எத்தனை ஆயிரங்கோடி வருஷம் ஸ்ருஷ்டி நடந்ததோ அத்தனைக் காலம் ஸ்ருஷ்டியில்லாமல் ப்ரம்மம் மாத்திரமே இருக்கும். அதற்கப்புறம் மறுபடி ஸ்ருஷ்டி.

ஹிரண்யகர்பனின் ஆயுஸ் முடிந்து அவன் ஸ்ருஷ்டி முழுவதோடும் பரமாத்மாவில் சேர்வதற்கு 'ஆத்யந்திக ப்ரளயம்'என்று பெயர். (நடுவிலேயே அந்த வார்த்தையை சொல்லி, 'அப்புறம் அர்த்தம் சொல்கிறேன்'என்று சொன்னேன்)

நிறையக் கர்மா பாக்கி இருந்து அதைத் தீர்த்துக் கொள்ள கர்மமோ, பக்தியோ

யோகமோ, ஞானமோ எந்த வழியிலும் போகாமல் திரும்பிக் திரும்பப் பிறந்து செத்துக் கொண்டிருக்கும் பெரும்பாலான ஜீவன்கள் அந்த ப்ரளயம் ஏற்படுகிறவரை இஹலோகத்திலேயே லக்ஷக்கணக்காக ஜன்மாக்கள் எடுத்து அலைபடத்தான் வேண்டும். ஞானவழியில் போனவன் இந்த ஜன்மாவிலேயே ப்ரம்மத்துடன் ஐக்யமாகி விடுகிறான். மற்ற வழிக்காரர்கள் - 'உபாஸகர்'எனப்படுகிறவர்கள்- ஜனன மரணங்களிலிருந்து தப்பித்து ஆனாலும் அத்வைத முக்தி அடையாமல், ப்ரம்மலோகத்திற்குப் போய், அப்புறம் அங்கேயிருந்து ஆத்யந்திக ப்ரளயத்தின் போது ப்ரம்மாவோடுகூட ப்ரம்மத்திலேயே போய்க் கரைந்து விடுகிறார்கள்.

அந்த ப்ரம்மலோகம் எப்படி இருக்குமென்றால்:அங்கே போய்ச் சேர்ந்தவனுக்கு காம க்ரோதாதி உட்பகைகளோ, வியாதி, வக்கை, அஸுரர் முதலான வெளிப்பகைகளோ எதுவும் இல்லாமல் ஆனந்தமாக, சுத்தமாக இருக்கும். இது பொதுவாக அங்கே போகிற அத்தனை தினுஸு உபாஸகர்களுக்கும்.

அது தவிரத் தனித் தனியாக ஒவ்வொரு தினுஸுக்காரர்களுக்கும் அது

ஒவ்வொரு தினுஸாக இருக்கும்.

கர்மாக்காரன் தோஷமில்லாததாக என்னென்ன ஆசைப்பட்டாலும் அதெல்லாம் பூர்த்தியாகிற இடமாக அது

இருக்கும்.

பக்திக்காரன் எந்த இஷ்ட தெய்வத்தைச் சேர நினைத்தாலும் அந்த இஷ்ட தெய்வம் உள்ள லோகமாக அது இருக்கும். ப்ரம்ம லோகம் என்றதால் ப்ரம்மாதான் அங்கே இருப்பதாக அர்த்தமில்லை. அதற்கும் தாண்டி, உச்சியில் தங்களுடைய வைகுண்டம், கைலாஸம் என்று அந்தந்த பக்தர்கள் சொன்னாலும் இதுவேதான் அவரவருக்கும் அப்படியப்படித் தெரிவது. ஒரே பரமாத்மா தான் அந்தந்த லோகத்தில் விஷ்ணு, சிவன் என்றெல்லாம் தெரிவார்.

இப்படிப் பார்த்தால் ப்ரம்மா யாருக்குமே இஷ்ட தெய்வம் இல்லை!பின்னே ஏன் அவர் பேரில் சொல்லியிருக்கிறதென்றால் அவர் அப்படி இல்லாததேதான் காரணம் என்கலாம்!என்ன இப்படிச் சொல்கிறனே என்றால்:முக்யமாக, வைதிக கர்மாநஷ்டானங்களைப் பலனில் இச்சையில்லாமல் மோக்ஷமார்க்கமாக அநுஷ்டிக்கிறவனுக்குத்தான் இந்த ஹிரண்யகர்ப்ப லோக ப்ராப்தியை சாஸ்திரங்களில் மட்டுமில்லாமல் தர்மசாஸ்திரமான மநுஸ்ம்ருதி முதலியவற்றிலும் அவனை முக்யமாகக் குறிப்பிட்டே ப்ரம்மலோக ப்ராப்தி சொல்லியிருக்கிறது. அவனுக்கு இஷ்ட தெய்வம் என்று பக்திப் பிடிப்போடுகூட எதுவும் இல்லை. அதனால் ஸ்ருஷ்டியிலிருந்து மூலத்திற்கு அவன் திரும்புகிறான் என்பதை வைத்து இதற்கும் அதற்கும் நடுவே வாசலாக இருப்பதை ஸ்ருஷ்டி கர்த்தாவின் பெயரில் சொன்னது. இஷ்ட தெய்வங்களாக இருக்கப்பட்ட மற்ற தெய்வங்கள் எதன் பெயரிலும் அதைச் சொல்லி, அந்த தெய்வம் தவிர இருக்கிற பாக்கியுள்ள தெய்வங்களின் பக்தர்கள் சண்டைக்கு வராமலிருக்கவும் இது சௌகரியமாயிருக்கிறது.

கொஞ்சம் தாராளமாக இன்னும் சில பேரைக்கூட உபாஸகர்கள் லிஸ்டில் சேர்த்துக் கொள்ளலாம். ஆதியில் வேதந்தான் ஜக்த பூரா வியாபித்திருந்தாலும் அப்புறம் தேசாந்தரங்களில் ஏதேதோ விதத்தில் அது திரிந்து வீணாகப் போய், பிற்பாடு வேத வழி என்று ஒன்று இருப்பதாகவே தெரியாமல் போனபோது அங்கங்கே ஒவ்வொரு பெரியவர்கள் ஒவ்வொரு மதத்தை, ஃபிலாஸஃபியை ஏற்படுத்தியிருக்கிறார்கள்;தெய்வ பக்தி, நல்லொழுக்கம்,

ஆத்ம சிந்தனை ஆகியவற்றை விருத்தி செய்வதாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்த மதாந்தரங்களை, சாஸ்திராந் தரங்களை (அன்னிய மதங்களை, சாஸ்திரங்களை (அன்னிய மதங்களை, அன்னிய மதங்களை, அந்நிய சாஸ்திரங்களை) ச்ரத்தையோடு அநுஸரிக்கிற எல்லாரையும் 'உபாஸகர்'களாக வைத்துக் கொள்ளலாம். அவர்களும் ப்ரம்ம லோகம் போவார்கள் என்றும், அவர்களுடைய நம்பிக்கைப்படி லக்ஷ்யமாயுள்ள பரலோகமோ, விடுபட்ட நிலையோ எதுவாயிருந்தாலும் அதுவாக ப்ரம்மலோகம் அவர்களுக்கு இருக்கும் என்றும் வைத்துக் கொல்ளலாம். இன்னுங்கூட தாராளமாகப் போனால் ஆதியில் வேதத்தைக் கண்டித்தே வேறே மதங்களை ஸ்தாபித்த மூலபுருஷர்களின் விஷயம் எப்படியானாலும் ..... ஒரு ஸ்திதிக்கு மேலே போய்விட்டால் ஒருத்தனுக்கு வேதம் வேதமில்லை என்று அந்த வேதமே சொல்லியிருக்கிறதே, அப்படி வேத அநுஷ்டானத்திற்கும் மேலே தங்களளவில் அவர்களில் இரண்டொருத்தர் போயுமிருக்கலாம்;அந்தத் தனி மநுஷ்யர்களைப் பற்றித் தெரியாததால் தேசாந்தரங்களில் ஏற்பட்ட அவைதிக மதங்கள் மாதிரி இல்லாமல், வேத மதம் இருந்து வந்திருக்கும் நம் தேசத்திலேயே அதை ஆக்ஷேபித்து அவர்கள் ஏற்படுத்திய மதங்களில் பிற்காலங்களில் பிறந்தவர்களைப் பற்றித்தான் சொல்ல வந்தேன்...... அவர்களெல்லாம், நாம் வேதத்தை வைத்துக் கொண்டிருக்கிறதுபோல, தாங்கள் பிறந்த மதமாகிய அவைதிக மதத்தையே தங்கள் வேதமாக வைத்துக்கொண்டு அந்த மத ஸ்தாபகரையும் மற்ற முக்ய புருஷர்களையும் நாம்

நம்முடைய ரிஷிகள், ஆசார்யாள் முதலியவர்களை நினைக்கிற மாதிரி நினைத்து பக்தி விச்வாஸத்துடன் அதையே அநுஸரித்துக் கொண்டு போனால் அது பிசகு என்று தோன்றவில்லைதானே?அப்படிப்பட்டவர்களுக்கும் ப்ரஹ்மலோகம் கிடைக்கலாம். அவர்கள் லக்ஷ்யமாக நினைக்கும் சூன்யமோ, வேறே என்னவோ அதுவாக அந்த ப்ரஹ்மலோகம் இருக்கலாம். ஈச்வரன் அவர்களுக்கு ப்ரஹ்மலோக ப்ராப்தி தருகிறானோ இல்லையோ, நான் கொடுத்து தீக்ஷீஷீணீபீ-னீவீஸீபீமீபீ பட்டம் வாங்கிக் கொள்கிறேன்!கண்டிப்பான வைதிகர்களைக் கேட்டால், அவைதிக மதஸ்தர்கள் தங்கள் மதத்தை நல்லபடி அநுஷ்டித்தால் அதன் பலனாக அடுத்த ஜன்மாவில் வைதிக

மதத்தில் பிறந்து அதிலுள்ள உபாஸனைகளில் ஒன்றை நன்றாக அனுஷ்டித்துத்தான் ப்ரஹ்மலோகம் போகமுடியும் என்று சொல்லக்கூடும்.....

மோக்ஷ விஷயமாக இன்னும் ஒன்றிரண்டு விஷயங்கள் தெளிவுபடுத்த வேண்டும். பக்தி மார்க்கம் என்றே இருப்பதில் கடைசிவரை போகிற எல்லாருக்குமே இஷ்டதெய்வ லோகத்தில் த்வைதமான மோக்ஷந்தான் கிடைக்கிறது என்று நினைத்துவிடக் கூடாது. அத்வைதமாக இல்லாத ஒரு ஃபிலாஸஃபியால் கரை கட்டி வைத்து, அதற்குள்ளாகவே போகிற பக்தர்களை குறித்துத்தான் அப்படிச் சொன்னது. ஆனால் ஸ்வாபாவிகமாக ஹ்ருதயத்தைப் பொங்கவிட்டு பக்தி பண்ணுகிறபோது அதை ஒரு கரையாலும் கட்டி வைக்க முடியாது. அப்படிப்பட்ட பக்தர்கள்-ஆழ்வார்கள், நாயன்மார்களைப் போன்றவர்கள் - விசிஷ்டாத்வைதத்தையும் சைவ ஸித்தாந்தத்தையும் பார்த்துப் பார்த்துப் பண்ணனும் என்றில்லாமல், உசந்த பக்தி உணர்ச்சி எப்படியெப்படித் தங்களைக் கொண்டு போகிறதோ, அடித்துக்கொண்டு போகிறதோ, இன்னும் என்னென்ன அநுபவங்கள் வேண்டும் என்று தங்களைத் தவிக்கப் பண்ணுகிறதோ அப்படியே இருக்கட்டுமென்று 'ப்ரீ'யாக விட்டுவிடுவார்கள். அப்படி விட்டுவிடுவதில் பல பக்தர்களுக்கு, இப்படி வெளியிலிருந்து கொண்டு பக்தி பண்ணுவது போதாது. அவனுக்கு வேறேயில்லை என்று ஒன்றாகியேவிட வேண்டும் என்ற தவிப்பு வந்து அதைப் பாட்டிலும் கொட்டியிருக்கிறார்கள். வாஸ்தவமாகவே அந்த அத்வைத நிலை தங்களுக்கு வாய்த்ததைக்கூடப் பாடியவர்கள் உண்டு. இப்படி பக்தியிலேயே பராபக்தி என்ற ஐக்யாநுஸந்தானத்திற்குப் போனவர்கள் ப்ரம்ம லோகத்தில் ஸகுண ப்ரம்மத்துடன் சேராமல் ப்ரம்மமாகவே ஆகிற அத்வைத ஸாக்ஷாத்கார முக்தி அடைந்துவிடுவார்கள்.

தான் ஞான யோக ஸாதனை என்று பண்ணாமல் ஈச்வரனே தனக்கு அத்வைத மோக்ஷம் தரவேண்டுமென்று ஸதாவும் ஒருவன் பிரார்த்தித்து பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலே அந்த பக்தனுக்கும் பகவான் ப்ரஹ்ம லோகத்திற்கு மேற்பட்ட ப்ரஹ்ம நிர்வாணத்தை (அத்வைத முக்தியை) அநுக்ரஹித்து விடுவான். ஈச்வர ப்ரஸாதம் என்று நேரே தெரியாமல் ஸாதனைமூலம் ஞானவழிக்காரன் பெறுவதையே இந்த

மாதிரியான பக்தன் பிரார்த்தனை மூலம் ஈச்வர ப்ரஸாதமாகத் தெரிந்து கொண்டு பெற்று விடுவான். அவனுக்கு அப்படியே அத்வைத மோக்ஷத்தை பகவான் தூக்கிக் கொடுக்கமாட்டானென்றும், அவனையும் ஞான வழியில் திருப்பிவிட்டே அந்த லக்ஷ்ய ஸித்தி பெறும்படியாகத்தான்

செய்வானென்றும் நம்முடைய (அத்வைத) ஸம்பிரதாயத்துப் பெரியவர்கள் சில பேர் அபிப்ராயப்படுகிறார்கள்.

இப்படியே, அநேக விதமான யோகங்கள் இருப்பதில் ஒன்றில் ஆதார சக்தியைப் பிடித்து ஸுஷும்னா நாடியில் சக்ரம், சக்ரமாக ஏற்றிக் கொண்டே போய் முடிவிலே, அந்த சக்தியின் மூலம் அதற்கும் ஆதாரமான ப்ரம்மமாகிற சிவத்தில் இரண்டறக் கலப்பதற்கு வழி சொல்லியிருக்கிறது. அங்கே அத்வைதமாகத்தான் முக்தியைச் சொல்லியிருக்கிறது. ஆகையால் அந்த உபாஸகர்களுக்கும் ப்ரம்ம லோக ப்ராப்தி என்றில்லாமல் அத்வைத முக்தியே கிடைப்பதாகத் தீர்மானிக்கலாம்.

நிர்குணமான தத்வத்தில் ஸமாதி அடைவதை லக்ஷ்யமாக சொல்லும் அஷ்டாங்க யோக ஸித்தர்களும் ப்ரம்ம நிர்வாணமே (அத்வைத முக்தி) அடைவதாக ஒரு அபிப்ராயம். இருந்தாலும் கீதா வசனம் அதற்கு ஆதரவாக இல்லை. கிருஷ்ண பரமாத்மாவின் தீர்ப்புக்கு மேலாக, மாறாக இன்னொன்றை ஒப்புக் கொள்வதற்கில்லை. அவர் ஞானிகளைத்தான் ஸாங்க்யர் என்றும் ஸந்நியாஸி என்றும் சொல்கிறாரென்பது எல்லா ஸம்ப்ரதாய வித்வான்களுக்கும் தெரிந்த விஷயம். அத்வைத வழியில் போகிற இவர்கள் மட்டுந்தான் இஹத்தில் இருக்கும்போதே 'ப்ரஹ்மபூதர்'களாகி தேஹம் விழுந்தவுடன் 'ப்ரஹ்ம நிர்வாணம்'அடைகிறார்களென்று அவர் சொல்லியிருக்கிறார். ப்ரஹ்ம பூதராவது என்பதும் ப்ரஹ்ம நிர்வாணம்தான். தேஹமுள்ள போதே அப்படி ஜீவன் முக்தியிலிருப்பதால் சும்மா ஒரு வித்யாஸம் காட்டத்தான் ப்ரஹ்மபூதர் என்று சொன்னது. இதைத் தெளிவு செய்வதாக ஒன்றிரண்டு ச்லோகம் தள்ளி 'அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்ததே':இரண்டு இடத்திலும் அதாவது இஹம் பரம் இரண்டிலுமே ஞானிக்கு ப்ரஹ்ம நிர்வாணம் கிடைக்கிறது என்று சொல்லியிருக்கிறார்.

யோக மார்க்கம் என்றே பொதுவாகச் சொல்கிறோமே, அஷ்டாங்க யோகம் முதலானதுகளை, அவற்றில் போகிறவர்களுக்கு என்ன ஸித்திக்கிறது என்றும் அவர் சொல்லியிருக்கிறார். அவர் சொல்கிற யோகி அஷ்டாங்க யோகத்தை சுத்தமாக அப்யஸித்து நன்றாக ச்வாஸக் கட்டுப்பாடு, மனஸ் கட்டுப்பாடு இரண்டையும் பண்ணினவன். அதோடு கூடுதல் சிறப்பாக, அவன் நல்ல பக்தியுள்ளமும் படைத்தவன். யோக சாஸ்திரத்தில் சொன்னபடி கான்ஸன்ட்ரேஷனுக்கா ஏதோ கொஞ்சம் ஈச்வர ப்ரணிதானம் (பகவத் பக்தி த்யானங்கள்) பண்ணுவது என்று மட்டும் இல்லாமல் பகவானையே எப்போதும் தொடர்ந்து ஸ்மரிக்கிறவன். 'மாம் அநுஸ்மரன்' 'ஸததம் யோ மாம் ஸ்மரதி நிச்யச:' என்றெல்லாம் அவனைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்ட பக்தியும் சேர்ந்த அந்த யோகி வேதங்களிலெல்லாம் சப்த ப்ரஹ்மமாகச் சொல்லியிருக்கும் ப்ரணவத்தின் த்யானத்திலேயே தேஹத்தை விட்டால்கூட அவனுக்கு உடனே அத்வைத முக்தி கிடைக்கவில்லை என்றுதான் 'அக்ஷர ப்ரஹ்ம யோகம்'என்கிற (எட்டாவது) அத்யாயத்தில் பகவான் தெரிவித்திருக்கிறார். உத்தராயண ஸூர்ய கதியில் அவனுடைய உயிர் ப்ரஹ்மலோகத்திற்குப் போய் சேர்வதாகவே சொல்லியிருக்கிறார்.

---



## உத்தராயண மரணம் : அதன் சரியான பொருள்

உத்தராயண மரணம் என்பது ஓரளவு நல்ல பிரஸித்தி அடைந்து விட்டது. ஆனாலும் அதைப் பற்றியுள்ள பொது அபிப்ராயம் ஸரியாயில்லை. நான் சொல்லப் போகிற விஷயம் உங்களுக்கு ஆச்சர்யமாயிருக்கலாம். ஆனால் ஆசார்யாள் பாஷ்யத்தில் சொல்லியிருப்பதைத்தான் சொல்கிறேன். உத்தராயண மரணம் என்பதற்குத் தை

மாஸத்திலிருந்து ஆடி ஆரம்பிக்கிற வரை உள்ள ஆறு
மாஸத்திலிருந்து ஆடி ஆரம்பிக்கிற வரை உள்ள ஆறு
மாஸத்தில் செத்துப் போவது என்று ஆசார்யாள் அர்த்தம் பண்ணவேயில்லை. பின்னே எப்படிப்

பண்ணியிருக்கிறாரென்றால்:அந்த யோகி, (ஞானி தவிர நிஷ்காம கர்மி, பக்தன் முதலான எந்த உபாஸகனுமே) ஹ்ருதயத்திலிருந்து சிரஸுக்குப் போகிற நாடி வழியாக ப்ராண வியோகமாகி தேவயானம் என்ற தெய்வீக மார்க்கத்தின் வழியாக ப்ரஹ்ம லோகத்திற்குப் போகிறான். அந்த டெர்மினஸுக்குப் போகிறதற்கு முன்னாடி அநேக ஜங்க்ஷன்கள்!அவை ஒவ்வொன்றும் ஒரு தேவதையின் ஸ்தானம். அப்படி முதலில் அக்னியின் ஸ்தானம் வருகிறது அப்புறம் சுக்ல பக்ஷ

தேவதையின் ஸ்தானம். அதற்கப்புறம் உத்தராயண கல்யாணத்திற்கு தேவதைகளின் ஸ்தானம்- கவனமாகக் கேட்டுக்கொள்ள வேண்டும்;உத்தராயண காலம் இல்லை;அந்தக் காலத்திற்கு தேவதைகளாக இருக்கப்பட்டவர்களின் ஸ்தானம்- என்றிப்படி இன்னும் சில ஜங்க்ஷன்களையும் தாண்டி டெர்மினஸ் போய்ச் சேருவதாகவே ஆசார்யாள் விளக்கியிருக்கிறார். பகவானும் ஏற்கெனவே சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகம் முதலிய உபநிஷத்துக்கள் சொல்லியிருப்பதை அநுஸரித்துதான் கீதையில் சொன்னது. அவற்றுக்கு ஆசார்யாள் செய்துள்ள பாஷ்யங்களும், (கீதைக்கு)ப் பிற்காலத்தில் உண்டான ப்ரஹ்ம ஸூத்ரம், அதன் பாஷ்யம் ஆகியவையும் இந்த விஷயத்தை ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் தெளிவுபடுத்தும்.

இதே மாதிரிதான் புனர்ஜன்மா உள்ளவர்களுக்கு மரணமென்பதும் அந்தக் கால தேவதைகள் உள்ள (பித்ருயாணம் என்ற) மார்க்கத்தில் அவர்களுடைய உயிர் வெளியே போவதைச் சொல்வதுதான். ஆடியிலிருந்து தை பிறக்கிற வரையிலுள்ள ஆறு மாஸ காலத்தில் உயிர் விடுவதைச் சொல்வதில்லை.

இன்னொரு விஷயம்:இப்படி உத்தராயண தேவதைகள் முதலான தேவதைகளின் ஸ்தானங்கள் வழியாக ஜங்க்ஷன் ஜங்க்ஷனாகப் போய், ப்ரஹ்ம லோகம் சேர்ந்து, அப்புறம் ப்ரளயத்தின்போது ப்ரம்மத்திலேயே ஐக்யமாகிற ஸமாசாரம்

எதிலும் ஞானிக்கு அடியோடு ஸம்பந்தமில்லை. ஆகையினாலே அநேக ஞானிகளுடைய நிர்யாண (மரண)த் திதியைப் பார்த்து, அது உத்தராயணமாயில்லையே!அப்படியானால் அவர்கள் முக்தி அடையவில்லையா?என்று நினைப்பது ஸரியில்லை.

---



## கர்மயோகத்தின் மாறுபட்ட இரு பலன்கள்

கர்ம யோகம் சுத்தமாக அநுஷ்டித்து முடித்தால் அதன் பலனாகச் சித்த சுத்தி உண்டாகி ஞான யோகத்தில் போவதற்கான யோக்யதை ஸித்திக்கும் என்று பல தடவை சொன்னேன். அப்படி ஒரு கர்ம யோகி இந்த ஜன்மாவிலேயே, அல்லது அடுத்த ஒன்றிரண்டு ஜன்மாக்களிலோ சுத்தி பெற்று ஞான யோகம் ஆரம்பித்தால், அந்த ஜன்மாவோடேயே அத்வைத முக்தி பெற்றுவிடுவான். அப்படியிருக்க, இப்போது கர்ம யோகத்தையும் உபாஸனைகளில் ஒன்றாக்கி, அவன் ஞான யோகத்திற்குப் போவதற்குப் பதில் ப்ரஹ்ம லோகத்திற்குப் போவதற்குப் பதில் ப்ரஹ்ம லோகத்திற்கு போவதாகச் சொல்லி ஆத்யந்திக பிரளயம் ஏற்படும் வரையிலான எத்தனையோ கல்ப கோடி காலம் கழிந்து பிறகுதான் அத்வைத முக்தி பெறுவான் என்று சொன்னால் எப்படி?

எப்படியென்றால் அது அவன் உத்தேசத்தை, லட்சியத்தைப் பொறுத்தது. அவனுக்கு அத்வைத லட்சியத்தில் குறியிருந்து, ஆனாலும் ஞான யோகத்திற்கான பக்வமில்லாததால் அதில் பிரவேசிப்பதற்கான யோக்யதை ஸம்பாதித்துக் கொள்ளவே கர்ம யோகம் அனுஷ்டிக்கிற உத்தேசம் இருந்தால், அது இருந்தாலே, சித்த சுத்தி ஏற்பட்டவுடன் ஞான வழியில் ஆரம்பிப்பான்;அப்புறம் அத்வைத முக்திக்கும் சுருக்கவே போவான். ஆனால் அந்த வழியில் அவனுக்கு அபிருசி,

அபிநிவேசங்கள் (சுவையும், ஈடுபாடும்) இல்லாமல், "ஸம்ஸாரத்திலிருந்து விடுபடணும். அதற்கு நம்மால் முடிந்தது கர்மாநுஷ்டானந்தான். அதைப் பண்ணுவோம்"என்று புஷ்களமாகக் கர்ம யோகம் பண்ணி அதோடு நிறுத்திக் கொண்டானானால் ப்ரஹ்மலோக ப்ராப்திதான் கிடைக்கும். முன்னேயே சொன்னாற்போலக் கேட்காத பெரிய லக்ஷ்யத்தை பகவானாக வலிந்து தரமாட்டான்.

இந்த ஸமாசாரங்களெல்லாம் எதற்கு வந்ததென்றால் 'ஞான வழியில் பக்தி உண்டா என்ன?அது 'கரீயஸீ ஸாமக்ரீ'என்றது எப்படி?' என்ற அலசலில் வந்திருக்கிறது!இந்த்ரியங்கள், மனஸ், புத்தி இவற்றை அடக்கி அழிக்க வழி சொன்னபின், ஜீவபாவத்திற்கே ஆதாரமான அஹங்காரத்தை அடக்கி அழிப்பதற்காகத்தான் பக்தியை வைத்தது;அடிவேரையே வெட்ட அதுதான் ஆயுதமாயிருப்பதால் 'கரீயஸி ஸாமக்ரி'யாகச் சொன்னது-என்று அஹங்கார ஸ்தானம்;அதை பக்தி என்கிற அன்பின் ஸ்தானமாக்கி, அந்த பக்தியாலேயே அஹங்காரத்தைக் கரைத்துக் கரைத்து மெல்லிசு பண்ணினால் அது ஹ்ருதயத்தின் மத்தியிலுள்ள ஆத்ம ஸ்தானமான த்வாரத்திற்குள்ளே போய் ஜீவ பாவம் அடியோடு போய் ஆத்மாவாக நிற்கும் என்று பார்த்தோம்.

அந்தப் பேச்சில், 'ஞானி இப்படி ஆகிறானென்றால் மற்றவர்கள் என்ன ஆகிறார்கள்?அவர்களுக்கும் ஹ்ருதயத்தில்தானே அஹங்காரம் இருக்கிறது?அது ஆத்ம ஸ்தானத்திற்குள் போகாவிட்டால் வேறே என்ன பண்ணும்?என்ற

கேள்வி வந்தது. 'ஹ்ருதயத்திலிருந்து அநேக நாடிகள் போகின்றன. சரீரத்தின் நவத்வாரங்களில் முடிகிறவையும் அவற்றிலே உண்டு. கர்ம பந்தம் கத்தரித்துப் போகாத ஸாதாரண ஜீவர்களின் மனஸ், புத்தி, அஹங்காரம் எல்லாமே கடைசி மூச்சு வரை மெல்லிசு படாமல் பெருத்துத்தான் இருக்கும். அந்தக் கடைசி மூச்சு அப்பேர்ப்பட்ட பருமனான அந்தஃகரணத்தைத் தூக்கிக் கொண்டு ஒன்பது நாடிகளின் ஒன்றின் வழியாக வெளியே போகும். பிர்பாடு இன்னொரு

ஜன்மா ஏற்படும்போது அந்த சரீரத்திற்குள்ளே பிரவேசிக்கும். இந்த ஒன்பதைத் தவிர சிரஸூக்குப் போகிற நாடி ஒன்று உண்டு. ஞான வழியில் போகாமல், ஆனால் ஸம்ஸார பந்த நிவ்ருத்தியை லட்சியமாகக் கொண்டு பலவித உபாஸனை பண்ணுபவர்களுக்கெல்லாம் அந்த நாடி வழியாக உயிர் வெளியிலே போய் ப்ரஹ்ம லோகத்தை அடையும்' என்ற ஸமாசாரங்களெல்லாம் வந்துவிட்டன.

---



## தலை நாடி பற்றிய தவறான கருத்து

இன்னொரு ஸமாசாரம்:ஹ்ருதயத்திலிருந்து சிரஸுக்குப் போகிற நாடி பற்றியது. உத்தராயண மரணத்தைப் பற்றி ஸரியான அபிப்ராயம் இல்லாதது போலவே இதைப் பற்றியும் இருக்கிறது. உத்தராயண மரணம் என்பது வாஸ்தவத்தில் அதற்கேற்பட்ட தேவதைகளுடைய ஸ்தானம் வழியாகப் போவது என்று தெரிந்த விஷயஜ்ஞர்களுங்கூட (ரொம்பப் பெரியவர்கள், ஆசார்ய பாஷ்யங்களை இன்னம் விளக்கமாக புரியவைப்பதற்காக அவற்றுக்கு வ்யாக்யானம் எழுதிய பல பேர்கூட) இந்த நாடி விஷயத்தில் ஸரியான அபிப்ராயமில்லாமலே இருக்கிறார்கள். அதாவது, எல்லாரும் அந்த நாடியை யோக சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் ஸுஷும்னை என்றே நினைக்கிறார்கள்.

ஆனால் இது அந்த ஸுஷும்னை இல்லை. அது (யோக சாஸ்திர ஸுஷும்னை)முதுகுத் தண்டின் அடியில், மூலாதாரம் என்கிற இடத்திலிருந்து புறப்பட்டு நேர் மேலாக சிரஸுக்குப் போவது. உபநிஷத்துக்களிலும் பிரம்ம ஸூத்ரத்திலும் சொல்லி நாம் பார்த்ததோ ஹ்ருதயத்திலிருந்து புறப்படுவது. மூலாதாரத்திலிருந்து புறப்படும் ஸுஷும்னையில் ப்ராண சக்தியை ஏற்றிக்கொண்டு போவது அதற்கென்று ஸாதனை பண்ணும் யோகிகளை மட்டுமே

குறித்த விஷயம். அவர்கள் லோகாதார சக்தியைப் பிடித்து அதன் வழியாக சிரஸிஸ் சிவத்தில் ஐக்யமாகிறவர்கள். அது ஒரு குறிப்பிட்ட யோக ஸமாசாரம். ஔபநிஷதமான (உபநிஷத்துக்களின் ஆதாரத்தில் அமைந்த) நம்முடைய வேதாந்த மதம் அந்த ஸமாசாரங்களைத் தொடுவதில்லை. அது ச்வாஸம், சக்தி என்று சுற்றி வளைத்துக்கொண்டு போகாது. நேரே சின்ன நானைத் தள்ளி, இருக்கிற ஒரே நானாக ஆகவேண்டும் என்று ஸ்ட்ரைட் குறி வைத்து, ஞான விசாரத்தில் அலசி அந்த லக்ஷ்யத்தை அநுபவமாக்கிக் கொள்ளவே வேதாந்தம் வழிகாட்டும்.........ஹ்ருதயத்திலிருந்து புறப்படுவதாக வேதாந்தத்தில் சொல்லியுள்ள நாடிகள் ஜன ஸமூஹம் முழுவதற்கும் வாழ்க்கை நடப்பது, முடிவது முதலியவற்றுடன் ஸம்பந்தப்பட்டவை. அவற்றிலே உத்கிருஷ்டமாக இருப்பது தான் சிரஸுக்குப் போகிறது. அதை உபநிஷத, ப்ரஹ்ம ஸூத்ரங்களில் ஒரு இடத்திலும் ஸுஷும்னா என்று சொல்லியிருக்கவேயில்லை. மூர்த்த நாடி-அதாவது சிரஸில் இருப்பது, அங்கே முடிவது- என்றுதான் சொல்லியிருக்கிறது. ஆசார்யாளும் பாஷ்யத்தில் அப்படியேதான் சொல்லியிருப்பார். முக்யமாக இந்த விஷயம் வருகிற சாந்தோக்ய ப்ருஹதாரண்யக, ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யங்களில் ஆசார்யாள் 'ஸுஷும்னை'என்று சொல்லவேயில்லை. கீதையிலும் 'மூர்த்ன்யாத்மன:ப்ராண ம்'என்பதாக சிரஸில் பிராணனைச் சேர்த்து வைத்து அந்த வழியாக தேஹ வியோகமாவதைச் சொல்கிற இடத்தில் மூலம், பாஷ்யம் இரண்டிலுமே ஸுஷும்னையைப் பற்றிப் பேச்சில்லை ஆசார்யாள் ஒவ்வொரு உபநிஷத்தாக பாஷ்யம் பண்ணிக் கொண்டு போகும்போது முதலில் வரும் கடோபநிஷத், ப்ரச்நோபநிஷத், தைத்திரீயம் ஆகியவற்றில் மட்டும் ஸுஷும்னா என்று சொல்லியிருக்கிறார். அதோடு தைத்திரீயத்தில் ஹ்ருதயத்தை நம்

எல்லாருக்கும் தெரிந்த நல்ல ஸ்தூலமான அவயமாகவே கூடச் சொல்லியிருக்கிறார். ஏன் அப்படியென்றால்.............

ஞான வழிக்காரன் உச்சிக் கட்டத்தில் அஹங்கார நசிப்புக்காக பக்தி பண்ணுகிறபோது மனஸும் புத்தியும் அஹங்கார ஸ்தானமான ஸெமி-ஸ்தூல ஹ்ருதயத்திற்கு வருவது, ஹ்ருதயம் ஸூக்ஷ்ம பூதமான ப்ரேமையாலேயே ரொம்பி அஹங்காரம் மெல்லிசாவது, அப்புறம் மத்ய

த்வாரத்திற்குள்ளே போய் ஒடுங்குகிறது - என்று சொன்ன இந்த process எல்லாம் அவனுக்குத் தெரியாமலேதான் நடக்கிறது!ஆத்மா நிர்குணமானது என்றால் மனஸுக்கு அதில் பிடிப்பு இல்லாமல் vague-ஆக இருப்பதால், குரு சொல்லிக் கொடுத்தபடி மூச்சுக்கு, எண்ணத்திற்கு எங்கே வேர் என்று தெரிகிறதோ அந்த பாயின்டில் அது இருப்பதாக அவன் வைத்துக் கொண்டு அதில் கான்ஸன்ட்ரேஷனை வைப்பதோடு ஸரி. அதுதான் ஹ்ருதய மத்தி என்றும் குரு சொல்லி அவன் தெரிந்து கொண்டிருப்பான். ஆனாலும் வாஸ்தவமாகவே அவனுடைய சித்தம் நன்றாக நிற்பதோடு ஸரி, வாஸனைகள் முழுக்கத் தீர்ந்து, அஹங்காரம் முழுக்க அழிவுபட்ட அப்புறந்தான் நிலையாக நின்று, நின்றே போவது. 'நின்று'என்றால் 'ஸ்டான்ட்'பண்ணுவது, 'ஸ்டாப் ஆவது'என்று இரண்ட அர்த்தம் இருக்கோல்லியோ?அதில் முதல் அர்த்தத்தில் ஆரம்பித்து இரண்டாவதில் முடிவது. அப்படி முடிவதற்குள் ஹ்ருதயம், நாடி முதலியன ஸம்பந்தமாக நடக்கிற 'ப்ராஸஸ்' அவனுக்குத் தெரிந்து நடப்பதில்லை. அதாவது அது அவன் கவனத்திற்கு வரவே வராது. அவனுடைய ஒரே கவனம், ஒரே குறி அவன் பாவனையாக பிடித்துக் கொண்டிருக்கிற ஸ்தானத்தில் வாஸ்தவமாகவே ஆத்ம ஸ்புரணம் ஏற்படுவதில்தான் இருக்கும்?இருக்க வேண்டும். ஸாக்ஷாத்காரம் ஒன்றே குறி என்று அதே தியானமாகத்தான் அவன் இருப்பான்;இருக்கணும். அதற்குப் போகும் வழி என்று எதையோ கவனித்தால் அது 'டிஸ்ட்ராக்ஷன்'தான் (திசை திருப்பல்தான்) வழியைக் கவனித்தால் லக்ஷ்யமே போய்விடு ம்!அப்புறம் வழியும் போய்விடும்!பழைய குருடி என்று அலைபாய்கிற மனஸோடு நிற்கவேண்டியதுதான்.

அம்பாள் அதோ அங்கே ஆவிர்பவித்திருக்கிறாள் என்று யாரோ சொல்கிறார்களென்று வைத்துக் கொள்ளுவோம். உடனே என்ன பண்ணுவோம்?மானஸிகமாக அப்போதே அவன் இருக்கிற ஸ்தானமாக ஒரு இடத்தைப் பற்றி நமக்கு ஒரு பிடிப்பு உண்டாகிவிடும். மானஸிகத்தை வாஸ்தவமாக்கிக் கொள்வதற்காக அந்த இடத்திற்கு ஒட்டமாக ஒடுவோம்! அப்போது போகிற ரோட் என்ன தார் ரோடா, கப்பியா என்றெல்லாமா கவனித்துக்

கொண்டிருப்போம்?

ஆகையினால் ஸித்தியடைந்த ஒரு ஞானியிடம் போய் வேதாந்தம் சொல்கிற ஹ்ருதயம், நாடி, த்வாரம் என்றெல்லாம் கேட்டால் அவர் ஒன்றும் சொல்ல மாட்டார்!தன் ஸமாசாரமே தெரியாத அவருக்கு உபாஸகர், பாமர ஜனங்கள் ஆகியவர்களுடைய ஸமாசாரமும் தெரியாதுதான். தான் வந்து ரோடைப் பற்றியே

தெரியாதவனுக்கு அதன் ஓரத்திலே என்ன கடை கட்டிடங்கள் இருந்தது, அடுத்த ரோடில் என்ன இருந்தது என்றெல்லாம் தெரியுமா என்ன?

ஆனால் மஹா ஞானிகளான ரிஷிகள்தானே இதெல்லாம் உபநிஷத்துக்களிலேயே சொல்லியிருக்கிறார்களென்றால், அந்த ரிஷிகள் ஞானம் அடைந்த பிற்பாடு, ஒரு தரம் அடைந்த பிறகு ஒருபோதும் நழுவ முடியாத ஸித்தியைப் பெற்ற பிற்பாடு, பரமாத்மாவே தன்னுடைய ஸ்ருஷ்டி விசித்ரங்கள், ரஹஸ்யங்கள் ஆகியவற்றை அவர்களுக்குத் தெரிவித்துப் பெருமைப்படும் போதுதான் இந்த ப்ராஸெஸ் - இது மட்டுமில்லாமல் உபாஸகர்களுக்கான ப்ராஸெஸ், பாமரர்களுக்கான ப்ராஸெஸ் எல்லாமும் தெரியப்படுத்தியிருக்கிறான். அவன் என்னவெல்லாம் வேடிக்கைகள், அதிசயங்கள் பண்ணுகிறான் என்கிற ரஸாநுபவத்தில் அவர்கள் மற்றவர்களுக்கும் தெரியப் படுத்தியிருக்கிறார்கள்.

மற்றவர்களிடம் விஷயம் போன பிற்பாடு கொஞ்சம் குழறும்படியும் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். மாயை 'டச்'எதிலும் வரத்தானே செய்கிறது?அதனால்!குழப்பம் தெளிய யாராவது ஞானியிடம் போகலாமென்றால் அவனுக்கோ அந்த ஸமாசாரமே தெரியாமலிருக்கிறது!அல்லது எந்த அளவுக்குப் பரமாத்மா தெரிவித்து, விட்டு விடுகிறானோ, அவ்வளவுதான் தெரிகிறது!அதற்கு மேல் தெரிந்து கொள்ளணுமென்று இவனுக்கும் (ஞானிக்கும்) இல்லை!அந்த அளவுக்குக்கூட அவன் தெரிவிக்கிறானே என்பதால் இவன் தெரிந்துகொண்டானே தவிர இவனுக்காக அதில்

'இன்டரெஸ்ட்'Þ™¬ô!ÞŠð®ò£ù£™, °öŠð ÜP«õ úKò£ù ÜP¾ ñ£FK Þ¼‰¶ ªè£‡®¼‚è «õ‡®ò¶î£«ù?

அந்த மாதிரி, ஹ்ருதயத்திலிருந்து சிரஸுக்குப் போகிற மூர்த்த நாடியை யோக சாஸ்திரத்தின் ஸுஷும்னையாகப் பொதுவாக எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்த ஸமயத்தில் ஆசார்யாள் அவதாரம் பண்ணினார். அவர் பிறக்கிறபோதே ஸர்வஜ்ஞர்;அவருக்கு தெரியாத விஷயமில்லை என்றாலும் மநுஷராக வந்து மநுஷர்களுக்கு வழிகாட்டுகிறபோது குருமுகமாக வித்யாப்யாஸம் பண்ணித்தான் தமக்கு எதுவும் தெரிந்த மாதிரி பண்ணிக் காட்டினார். முதலில் ப்ரம்மச்சாரியாக குருகுலவாஸத்தில் பல சாஸ்திரங்களைப் படித்து, அப்புறம் ஸந்நியாஸி குருவிடமிருந்து ப்ரம்மவித்யா சாஸ்திரத்தை ஸ்வீகாரம் பண்ணிக் கொண்டார். அதற்கப்புறம் குருவின் ஆக்ஞைப்படி பாஷ்யங்கள் எழுதினார்.

அப்படி எழுதினபோது ரொம்பவும் விநயமாக ஒன்று பண்ணினார். என்னவென்றால், தாமே அநுபவியாகவும் ஸர்வஜ்ஞராகவும் இருந்தபோதிலும் அவர் ஸொந்த அநுபவத்தின் பேரில் ஸொந்த அறிவின் பேரில் எதையும் சொல்லாமல் சாஸ்திர, ஸம்பிரதாய சிஷ்டாசாரங்களின் அடிப்படையிலேயே, அவற்றால் அங்கீகரிக்கப்பட்ட விஷயங்களையே சொன்னார். ஸொந்த ஸோதாவில் சொன்னால் தமக்கு நடக்கிறமாதிரியே எல்லாருக்கும் நடக்குமானால்தானே அது ஸரியாக வரும்?அப்படி எங்கேயாவது நடக்குமா?ஸொந்த ஹோதாவிலேயே

சொன்னதால்தானே பௌத்த ஜைனாதி தர்சனங்கள் லோகம் முறை தப்பிப் போகும்படிப் பண்ணி, ஸரி செய்ய நாம் வந்திருக்கிறோம்?'என்று நினைத்து தம்மை அடக்கிக் கொண்டு, தம் மூலமாக ட்ரெடிஷனையே பேச விட்டார். அப்போது ஆத்மாபிவிருத்திக்கு ஸம்பந்தமில்லாத விஷயங்களில் 'ட்ரெடிஷனல் பிலீஃப்'ஸரியில்லாவிட்டால்கூட, 'அதில் கை வைக்க வேண்டாம்;தாம் கை வைத்தால் மற்றவர்களுக்கும் இடம் கொடுத்துப் போய் கட்டுவிடும்'என்று நினைத்து வழக்கில் வந்த நம்பிக்கைகளை அநுஸரித்தே தாமும் சொல்லிக் கொண்டு போனார்.

வேதாந்த சாஸ்திரம் சொல்லும் ஹ்ருதயம், நாடிகள் ஸமாசாரம் அப்படிப்பட்ட

ஒன்றுதான். அதுகளைப் பற்றித் தெரிந்து கொள்வதால் ஒருவித ஆத்ம லாபமுமில்லை;தெரியாததால் நஷ்டமுமில்லை. யோக சாஸ்திரங்கள் சொல்லும் ஸுஷும்னை முதலான நாடிகளுக்கும் இதற்கும் இது ஒரு பெரிய வித்யாஸம். அங்கே (யோக சாஸ்திரங்களில்) இப்படியிப்படி அப்யாஸம் பண்ணி இன்னின்ன நாடியில் ப்ராண சக்தியின் ஸஞ்சாரத்தை உண்டாக்கி, ஏற்றி கீற்றி, எல்லாம் பண்ணி, இன்னின்ன பலன் அடைந்துகொள்என்று ஜீவன் அவற்றைக் குறித்துச் செய்யக்கூடியதாகப் பல விஷயம் சொல்லியிருக்கிறது. அவற்றில் ஆத்மாபிவிருத்திக்கானவையும் உண்டு. ஆனால் நம்முடைய வேதாந்த சாஸ்திர நாடிகள், ஹ்ருதயம், மத்ய த்வாரம் இவை விஷயமாக ஒருத்தன் என்னவும் பண்ணி என்ன பலனும் பெற முடியாது. இவனுடைய வாழ்க்கை முறை எப்படியிருக்கிறதோ, உபாஸனையும் ஆத்ம விசாரமும் எப்படியிருக்கிறதோ அதற்கேற்க இவனுடைய ஜீவபாவம் ஆடோமேடிக்காக அந்த நாடிகளில் அல்லது மத்ய ஸ்தானத்தில் சேரும். அவ்வளவுதான். யோக சாஸ்திரத்தில், நாடிகளில் ஒருத்தன் தன்முயற்சியால் உண்டாக்குகிற பிராண ஸஞ்சாரங்களாலேயே அவனுடைய வாழ்க்கையும் ஸாதனையும் ரூபமாகின்றன. வேதாந்தத்திலோ அவனுடைய வாழ்க்கை முறையையும் ஸாதனையையும் பொறுத்தே அவன் வசமில்லாமல் நாடி இத்யாதிகளில் சிலது நடக்கிறது. ஆகையால் அந்தச் சிலதைத் தெரிந்து கொள்வதால் அவனுக்கு ஒரு லாபமுமில்லை. தப்பாகவே தெரிந்து கொள்வதாலுங்கூட ஒரு நஷ்டமுமில்லை.

யோக சாஸ்திர நாடிகள் ஸமாசாரம் ஒரு ஏணியில் ஜாக்ரதையாக ஏறிப்போகிற மாதிரி. அதில் பழு பழுவாகப் பார்த்து ஏறித் தன்முயற்சியில் போக வேண்டும். வேதாந்த நாடிகள் லிஃப்ட் மாதிரி. அதுவே தூக்கிக் கொண்டு போவது. அதில் இருப்பவன் ஒன்றும் பண்ண வேண்டாம். லிஃப்ட் எப்படி வேலை செய்கிறது என்றும் அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டியதில்லை. அதைப் பற்றி அவன் தப்பாக நினைத்துக் கொண்டிருந்தால் கூட அதற்காக அது

எங்கே போகுமோ அங்கே கொண்டு சேர்க்காது என்றும் இல்லை.

ஆகையினால்தான் ஆசார்யாள் பாஷ்யம் எழுதின போது ஆரம்ப காலத்தில் மூர்த்த நாடி பற்றிப் பொது அபிப்ராயம் எப்படி இருந்ததோ அப்படியே தாமும்

'ú§û§‹¬ù'â¡Á ªê£™L, ªè£‡´ «ð£ù£˜. å¡Á‹ Mvî£ó‹ ð‡í£ñ™ ²¼,èñ£è„ ªê£™L, ªè£‡´ «ð£ù£˜. ÜŠ¹ø‹ Þ‰î Mûò‹ ªè£…ê‹ ¯Šð£è«õ ê£‰«î£‚ò, Š¼ýî£ó‡òè àðGû˜èO½‹, Hó‹ñ ú¨ˆóˆF½‹ õ¼‹«ð£¶, ú§û§‹¬ù'â¡Á «ð˜ ªê£™ô£ñ™, Cóú§‚°Š «ð£Aø ï£® â¡Á ñ†´«ñ ªê£™L GÁˆF, ªè£‡ì£˜. ÜŠ«ð£¶Ãì Þ¶ ú§û§‹¬ù Þ™¬ô â¡Á vðwìñ£è ªê£™ô M™¬ô. Ü«î£´ º‰Fù àðGû˜¶‚èO™ î£‹ ú§û§‹¬ù â¡Á ªê£™LJ¼‰î¬î»‹ ñ£Ÿø£ñ™ ÜŠð®«ò M†´M†ì£˜. ÜõCòI™ô£î õ‹¹‚ªè™ô£‹ 'Þ‹ð£˜ªì¡v'îó£îõ˜!ï£¡ î£¡ Þ¬î ªðKò Ýô£ð¬ù ð‡E, ªè£‡®¼‚A«ø¡.

உத்தராயண-தக்ஷிணாயன விஷயமாக மட்டும் ஏன் பொது நம்பிக்கைக்கு மாறாக எது ஸரியோ அதை எடுத்துச் சொன்னாரென்றால் அதைத் தெரிந்து கொள்வதாலும் ஒருத்தனுக்கு ஆத்ம லாபமில்லைதான். ஆனாலும் தப்பாகத் தெரிந்து கொண்டதால், உத்தராயண காலத்தில் செத்துப் போகிற வெற்று ஆளைக் கூட உத்தம ஜீவனாக நினைப்பதாகவும் -இப்படி நினைப்பதைக்கூட பரவாயில்லை என்று விட்டுவிடலாம்;ஆனால் அப்படி விடமுடியாமல் - தக்ஷிணாயனத்தில் தேஹ வியோகமாகிற மஹாத்மாக்களைக்கூட மறுபடி பிறக்கவேண்டிய ஸாதா ஆஸாமியாக நினைப்பதாகவும் ஆகியிருப்பதைப் பார்த்துத்தான் இது அபசாரமாச்சே!என்று ஸரியானதைச் சொன்னார்.

பீஷ்மர் ஏன் உத்தராயண மரணத்துக்காக காத்துக் கொண்டிருந்தார் என்று பாஷ்யத்தில் சொல்லும் இடத்தில் ஆசார்யாளுடைய உசந்த மனோபாவமும் தெரிகிறது. 'ஆசார பரிபாலனார்த்தம்', அதாவது லோக வழக்குகளை நடத்திக் காட்டும் பொருட்டே பீஷ்மர் அப்படிப் பண்ணினார் என்கிறார்!

இன்னொரு வேடிக்கை என்னவென்றால் ஒரிஜனலாக ஸுஷும்னா என்ற பேரே வேதாந்தத்தில் சொல்லியுள்ள மூர்த்த நாடிக்குந்தான் இருந்திருக்கிறது!ஸுஷும்னா என்பது ஸூர்யனுடைய கோடிக்கணக்கான ரச்மிகளில் (கிரணங்களில்) முக்யமாக எடுக்கப்பட்ட ஏழில் முதலாவதாகும். அப்பைய தீக்ஷிதர் ஸூர்யனைப் பற்றிச் செய்துள்ள ஸ்தோத்திரத்தில் அதைக் குறிப்பிட்டிருக்கிறார். ஸூர்ய ரச்மிகள்தான் வேதாந்தம் சொல்லும் ஹ்ருதயத்திலிருந்து புறப்படும் நாடிகளின் வழியாக ஒரு சரீரத்தின் எல்லா பாகங்களிலும் பரவி ரத்தம், பித்தம், கபம் முதலியவற்றுக்கு மூலமான ஸெமி-ஸ்தூல ஜூஸ்களை அவற்றுக்கள் உண்டாக்குகின்றன. சாந்தோக்யத்தில் இந்த விஷயம் இருக்கிறது. இந்த நாடிகளில் ஸூர்யனுடைய ஸுஷும்னா ரச்மி பாய்கிற நாடிதான் ஹ்ருதயத்திலிருந்து சிரஸுக்குப் போவது. அதனால் ஒரிஜனலாக அதற்குத்தான் ஸுஷும்னா நாடி என்ற பேரே இருந்தது. அதைத் தான் யோக சாஸ்திரக்காரர்கள் தங்களுடைய யோகத்தில் முக்யமாக இருக்கும் மையநாடிக்கு பேராக வைத்துக் கொண்டார்கள். மூலத்தில் அது ஸூர்ய ஸம்பந்தமுள்ளதாக இருந்தாலும் இவர்களோ தங்களுடைய சாஸ்திரத்தில் வரும் ஸூர்யநாடிக்கு அந்தப் பேரைக் கொடுக்காமல், நடுநாயகமாக

இருக்கிறது என்பதால் அக்னி நாடிக்கு அப்படிப் பேர் வைத்தார்கள்.....

விஷயத்தை விளக்கிச் சொல்கிற ப்ருஹதாரண்யக, சாந்தோக்ய, ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யங்களில் மூர்த்த நாடி என்றே போட்ட ஆசார்யாள் முதலில் ஸுஷும்னை என்று போட்ட மூன்று இடங்களில் அதை மாற்றாமலே விட்டு விட்டதற்கு ஒரு காரணம் சொல்லலாம்:பாக்கி அத்தனை இடங்களிலும் அப்படிப் போடாமல் அந்த மூன்று இடத்தில் மட்டும் ஸுஷும்னை என்று போட்டதால் வேதாந்தம் சொல்லும் ஹ்ருதய நாடிக்குத்தான் அப்படி மூலத்தில் பெயரிருந்தது என்று எல்லாரும் புரிந்து கொள்ளட்டும் என்றே அப்படி விட்டிருக்கலாம். ஆனால் நேர்மாறாக அந்த மூன்று இடத்தில் சொல்லியிருப்பதை வைத்து பாக்கி அத்தனை இடங்களிலுமே யோக சாஸ்திரத்தின் மூலாதார ஸுஷும்னைதான் சொல்லப் பட்டிருப்பதாக பிற்காலத்தில்

அபிப்ராயம் ஏற்பட்டு விட்டது.

---



## பக்தி மார்க்க பக்தியிலும் சிறந்த ஞானமார்க்க பக்தி !

'ஞான மார்க்கத்தில்கூட பக்தி உண்டா என்ன?என்று கேட்டு விசாரணை பண்ண ஆரம்பித்தது கடைசியில் எங்கே கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறதென்றால், 'இந்த பக்திதான் இந்தப் பிறவியிலேயே சாச்வதத்திலும் சாச்வதமான அத்வைத மோக்ஷமேகூட அடைவதற்கு ப்ரயோஜனப்படுகிறது. ஆதார ஸத்யமான ப்ரம்மத்தோடேயே ஜீவனை ஒன்றாக்கிவிட ப்ரயோஜனப்படுகிறது. பக்தி மார்க்கம் என்றே சொல்லப்படுவதன் பக்தியோ, அந்த ஆதார ஸத்யம் மாயையோடு சேர்ந்து போட்டுக்கொண்ட வேஷத்துடன்தான் (ஸகுண ப்ரமமத்தின் குணங்கள் எத்தனை அழகாக, உசத்தியாக இருந்தாலும் வேஷந்தான். அப்படிப்பட்ட வேஷத்துடனே) ஜீவனைச் சேர்த்து வைப்பதோடு முடிந்து போகிறது. 'சேர்த்து'என்பதிலும் அதோடு (ஸகுண ப்ரம்மத்தோடு) அப்படியே ஒன்றாக்கி விடாமல், அதற்கு வேறேயாக இருந்து அநுபவிக்கிற சேர்க்கையாகத்தான் இருக்கிறது. எத்தனைதான் கல்ப கோடி காலம் அப்படி அநுபவித்தாலும், அதுவே பரம சாச்வதமான மோக்ஷம் என்றும் இல்லாமல் (அந்த வழியின் மூல புருஷர்கள் அதுவேதான் சாச்வதம் என்று சொன்னாலும் அப்படி இல்லாமல்) அப்புறம் ஒரு நாள் நிர்குண ப்ரம்மத்தின் உள்ளே ஸகுண ப்ரம்மம் வாங்கிக் கொள்ளப்படுகிறபோது முடிந்து போகிற அசாச்வத மோக்ஷத்தில் சேர்க்கத்தான் அந்த பக்தி ப்ரயோஜனப்படுகிறது என்று புரிந்து கொள்ள வைப்பதில் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது. 'நான் இப்படியே சாச்வதமா பக்தி பண்ணிண்டே இருக்கேனே!என்று பக்தன் சொன்னாலும், 'நீ சொன்னா

எப்படி?எனக்கு வேஷம் போறும்னு ஆயிடுத்து. ஒரு வேஷம்-னா அதையே சாச்வதமாப் போட்டுண்டிருப்பாளா என்ன?கலைச்சுட்டு ஸ்வதாவா இருக்கணும்னு ஒரு இடத்திலே தோணுந்தானே?இப்படித் தோணியாச்சு. லீலை அலுத்துப் போச்சு. வேஷம் போட்டுண்டு விளையாடினதுக்கு ஸமதையா அத்தனை காலம் இனிமேலே ரெஸ்ட்தான்'என்று ஈச்வரன் (ஸகுண ப்ரம்மம்) சொல்லி மாயையை 'டக்'கென்று அவிழ்த்துப் போட்டுவிட்டு நிர்குணத்திலே நின்று விடுவான். மாயையும் ஈச்வரனும் இல்லாமல் ஜீவன் ஏது?ஆகையால் உடனே இவனும் அவனோடு அத்வைத மோக்ஷத்திற்குப் போக வேண்டியதுதான்!அதுதான் சாச்வத மோக்ஷம். ஒரு ப்ரம்மாயுஸ் காலம் பரமாத்மா ரெஸ்ட் பண்ணிக்கொண்டுவிட்டு- அதாவது தன் நிர்குண நிலையில் தனியாயிருந்து விட்டு-மறுபடி ஸ்ருஷ்டி என்று ஆரம்பிக்கு ம்போதும் முன்னே அத்வைத முக்தி கண்டவன் புது ஸ்ருஷ்டியில் பிறக்கமாட்டான்.

இப்போது முக்யமாகத் தெரிந்துகொண்ட விஷயம், பக்தி என்பது அடி ஆதாரத்தில் அஹங்காரத்தை அன்போடு மூல வஸ்துவில் கரைத்து ஒன்றுசேர்கிறது என்பதே. சேர வேண்டிய வஸ்து நிர்குணமாக இருக்கும் போது, பகவத் குண ரஸங்களில் நம்மைக் கரைப்பது என்பதற்கு இடமில்லாததால் ரஸமெல்லாம் கடந்த அகண்ட சைதன்யத்தில் கரைப்பது என்று ஆகிறது. அகண்ட

சைதன்யம் என்றால் எந்த வரையறுப்புக்குள்ளும் அகப்படாத உயிர் மயமான வஸ்து என்று அர்த்தம். அப்படிப்பட்ட ஒன்றில் ஜீவ பாவத்திற்கு ஆணிவேராக உள்ள 'நான்'என்பதைக் கரைக்கணும், கரைக்கணும் என்பதே குறியாக ஞான வழிக்காரன் நினைக்கிறான். அப்படி நினைப்பதுதான் நிஜத்தில் பக்தி என்பது தெரியாமலே நினைக்கிறான். புரியாத ஒரு ஸ்திதியோடு சேர்வது, வெறுமையோடு சேர்வது, சேர்வதற்கே ஒன்றுமில்லாமல் சூந்யந்தான் இருப்பதால் அழிந்துபோவது - என்றெல்லாம் நினைக்காமல், ஸச்சிதானந்தம் என்பதாக உயிர் நிரம்பியிருக்கிற பூர்ணத்தோடு கரைவதற்காகவே சேர வேண்டுமென்றுதான் அத்வைத வித்யையைப் புரிந்து கொண்ட எவனும் (ஸாதனை) செய்வான். அந்த உயிரில்

இந்த உயிர் கரையணும் என்னும்போதே, இவனுக்கு அன்பு என்று தெரியாவிட்டாலும், அன்பு தானாகவே ஊற்றெடுத்துக் கொண்டு வரத்தான் செய்யும். இத்தனை நல்ல வஸ்துவான அன்பைத் தெரியாமல் பண்ணுவானேன்?இது தெரியாததாலேயே, தத்வரீதியாக அறிவால் மட்டும் ப்ரம்மத்தைப் பற்றி நினைத்து நினைத்து அறிவே இழுத்துக் கொண்டு போய்விடலாம்;ஹ்ருதயத்தைத் திறந்து அன்பு பண்ணி அதை ஹ்ருதயத்தில் ஊன்றியிருக்கிற அஹங்காரத்தின்

வேரை அறுப்பதற்கு வழியை அடைத்து விடலாம். ஆகையால் வெளிப்படவே

சொல்லிவிட வேண்டும்'என்றுதான் 'மோக்ஷகாரணஸாமக்ர்யாம் பக்திரேவ கரீயஸீ' என்று ஆசார்யாள் உச்ச ஸ்வரம் போட்டு சொன்னது.

அன்போடு அஹங்காரத்தைக் கரைத்து மூல வஸ்துவில் சேர்வதே பக்தி என்று சொன்னேன். அந்த மூல வஸ்துவின் ஸகுண ரூபத்திடம் அப்படிப் பண்ணுவதைத் தான் பொதுவாக பக்தி என்று சொல்வதாகவும், அந்த வழியையே ஞான மார்க்கத்திற்கு வேறான பக்தி மார்க்கம் என்று சொல்வதாகவும் ஏற்பட்டுவிட்டது. ஏனிப்படி என்றால்:

ஒரு பா வம் பா வமாக மாத்திரம் ஆணியடித்த மாதிரி ஒரே விதத்தில் இருந்து கொண்டிருக்கும் வரையில் அது ப்ரகாசமாக தெரிகிறதில்லை. அந்த பாவம் புதிசு புதிசாகக் கிளைவிட்டுக் கொண்டு கார்ய ரூபத்தில் ஜீவனோடு வெளியானாலே ப்ரகாசமாகத் தெரியும். ஸ,ரி என்று ஏதோ ஒரு ஸ்வரத்தையே நீட்டிக்கொண்டு போனால் எப்படியிருக்கும்?ஸப்த ஸ்வரம் வந்தாலே ரஞ்ஜகமாயிருக்கிறது. மனஸ் அடங்கி உண்டாகிற மௌன ஸமாதி தவிர, மனஸ் துளித்துளி வேலை பண்ணிலாங்கூட அப்போது உண்டாகிற பா வங்கள் இப்படிப் புதுப்புது ரூபங்கள் எடுத்துக் கொண்டாலொழிய ப்ரகாசமாகத் தெரியாது. தெரியாது என்றால், பிறத்தியாருக்குத் தெரியாது என்பது மட்டுமில்லை;அந்த ஆஸாமிக்கே அதைப் பற்றி 'கான்ஷி'யஸாக சோபித்துக் கொண்டு தெரியாது.

நிர்குணத்திடம் பக்தி என்கிறபோது இவன் பேருயிரிடம் தன்னுடைய சிற்றுயிர் கரைய வேண்டும் என்று ஒரே தாபமாக இருப்பதில், அந்த 'ஒரே தாபம்' என்பது ஒரே ஒரு ஸ்வரத்தை நீட்டிக்கொண்டு போகிறாற்போலத்தான் இருக்கிறது!

அதில் புதிசு புதிசாக ரங்கு (வர்ணம்) ஏற்ற இடமில்லை. புதிசு புதிசு பண்ணுவதெல்லாம் மனஸின் கார்யம். இவனோ மனோ நாசத்தில் குறியாயிருப்பவன். சம தமங்களால் அதை அடக்கிப் போட்டவன். அவனைப் பொறுத்தமட்டில் 'கான்ஷிய'ஸாக அதைத் தெரிந்து கொள்வதுகூட 'ஈகோ கான்ஷியஸ்னெஸ்'ஸின் (ஜீவபாவத்திலுள்ள தன்னுணர்வின்) கீழ்தான் வருவதால் வேண்டாத விஷயந்தான். ஆகவே அவனுக்கே இதிலுள்ள பக்தியம்சம் ப்ரகாசமாக தெரியாது. பிறத்தியாரைப் பற்றிக் கேட்பானேன்?இவனுடைய பக்தி அவர்களுக்கு அடியோடு தெரியாதுதான்!

இவன் எதைக் குறித்து பக்தி பண்ணுகிறானோ அதுவாவது பிரதியாக ஏதாவது பண்ணி ப்ரகாசமாக தெரிய வைக்கிறதா என்றால், அதுவும் இல்லை!அடியோடு இல்லை!நிர்குண ப்ரம்மம் எப்படி 'ரி-ஆக்ட்'பண்ணும்?ஸகல கார்ய லோகத்தையும் நிர்வாஹம் செய்யும் ஸகுண ஈச்வரன் இவனுடைய பக்தியை மெச்சி இவனை உள்ளூர மேலே மேலே பக்குவப் படுத்திக் கொண்டுதான் போவான். ஆனால் இவனை ஸகுணத்தில் திருப்பப்படாது என்பதே அவன் உத்தேசமாதலால், தான் செய்வதைத் தெரியாமலே தான் செய்வான். ஆக ஷீஸீமீ-உவீபீமீபீ ஆக அந்த ஷீஸீமீ-உவீபீமீக்குங்கூட ஸ்வச்சமாக தெரியாமலேதான் இந்த பக்தி நடக்கும். இதுதான் அடியோடு அஹங்காரத்தைக் கரைக்கும் உண்மையான, உச்சமான பக்தியாயிருந்தும் இப்படியிருக்கிறது. ஜீவனைக் கரைக்கிறது மட்டுமில்லாமல் தன்னையும் கண்ணுக்குக் காட்டாமல் கரைத்துக் கொள்கிற பக்தியாயிருக்கிறது!இவனுக்குத் தியாகத்தை ஊட்டுகிற பக்தி தானும் தியாகியாயிருக்கிறது.

ஸகுணத்திடம் பக்தி என்கிறபோது எப்படி இருக்கிறது?அனந்த கல்யாண குண நிலையமாக இருந்து கொண்டு, நூதன நூதனமான லீலா சரித்ரங்களைப் பண்ணிக் கொண்டிருக்கும் ஸகுண மூர்த்தியிடம் ஒருத்தனுக்கு

தோன்றும் பக்தி பா வம் விதவிதமாகக் கிளைவிட்டுக் கொண்டு புதுப்புது ருசிகளோடு பரவுவதற்கு யதேஷ்டமாக இடம் ஏற்படுகிறது.

எல்லாவற்றுக்கும் ஸாரமாக அன்பிலே உறவாடுவது என்பது இங்கேதான் கொழுந்துவிட்டு ப்ரகாசிக்கிறது. இடி விழுந்தாலும் தெரியாமல் ஸமாதி நிஷ்டையிலிருக்கிறவனிடம் உறவு கொண்டாடப் போகிற மாதிரிதான் நிர்குண ப்ரம்மத்திடம் அன்பை உறவு என்கிற ஜீவனுள்ள ரூபத்தில் காட்டப் போவது!ஸகுண மூர்த்தியிடமோ ப்ரபுவாக, புத்ரனாக, மாதாவாக, ஸகாவாக, பதியாகப் பல விதங்களில் அவனை வைத்து பக்தி செலுத்தி உறவு கொண்டாட முடிகிறது. அந்த பாவம் கார்ய ரூபத்தில் ஆடுவது, பாடுவது, பஜனை, ஸங்கீர்த்தனம், க்ஷேத்ராடனம், உத்ஸவம், உபந்நியாஸம் என்று தினுஸூ தினுஸாக வெளிப்பட வருகிறது. பக்தி பண்ணுவதே இந்த வழியின் ஜீவநாடி என்பதால் ரொம்பவும் கான்ஷியஸாக அப்படிப் பண்ணுகிறான்.

சிகரமாக, பக்திக்குப் பாத்ரமாகிற பகவானும் ரி-ஆக்ட் பண்ணுகிறான். பக்த

ஜனங்கள் எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாகப் பண்ணாவிட்டாலும் அவர்களில் உசந்த நிலைக்குப் போனவர்களுக்கு தர்சனம் கொடுத்து விதவிதமாக லீலைகள் பண்ணிக் காட்டி, இவர்கள் பண்ணும் பக்தி அத்தனையும் ஒரு பங்கு என்றால் அதைப் போல்

கோடிப் பங்கு அன்போது உறவு கொண்டாடி, கதறக் கதறவும் அடித்து, திட்டு திட்டு என்று திட்டக்கூட வைத்து, அந்தக் கதறல் திட்டல்களிலேயும் பக்தியம்ருதத்தைப் போட்டுப் பிசைந்து வைத்து, இப்படியெல்லாம் கூத்தடிக்கிறான். அவர்களுக்குப் பண்ணியதைக் கதையில் பாட்டில் கேட்பதே மற்றவர்களுக்கும் அவனோடு உறவு கொண்டாடும் ஆனந்தத்தைக் கொடுக்கிறது. அவர்கள் எல்லோருக்குங்கூட ஸூக்ஷ்மமாக, ஆனாலும் மனஸில் தைக்கும்படி, அவன் அருள்கள் பண்ணி உறவைத் தெரிவித்துக் கொண்டேதான் இருப்பான்.

இப்படி ஸகுண ப்ரம்மத்தோடு த்வைதமாகப் பண்ணும்

போதே பக்திபாவம் பளிச்சென்று தெரியும்படி இருப்பதால்தான் அதையே பக்தி மார்க்கம் என்றும், அதில் போகிறவனையே பக்தன் என்றும் சொல்லி ஞான மார்க்கத்திற்கும் ஞானிக்கும் வித்யாஸமாக வைத்திருப்பது.

ஆனாலும் பரமாத்மாவுக்கு ஆத்ம நிவேதனம் என்று தன்னை அடியோடு கொடுத்துக் கொள்வது என்று வருகிற போது ஞான மார்க்கக்காரன்தான் பக்தன் என்றே சொல்லப்படுகிறவனையும்விட உயர்ந்து நிற்கிறான். பக்தி வழிக்காரன் உலக விஷயங்களைப் பொறுத்தமட்டில் அஹங்காரத்தை அடியோடு அழித்துக் கொண்டு

விட்டவன் தான். உள்ளே தன்னுடைய மனோபாவத்திலும் பரம நைச்சியமாயிருந்து, அஹங்காரத்தைக் கல்லிப் போட்டவன் தான். ஆனாலும் மனஸுக்கும் உள்ளே தனி ஜீவனின் ஆணிவேராக இருக்கிற அஹங்காரத்தை அவன் முழுக்க அழிக்க ப்ரியப்படவில்லை. பக்தி பண்ணுவதற்காக, குணாநுவ ஆஸ்வாதத்திற்காக (சுவைப்புக்காக), உறவு கொண்டாடுவதிலுள்ள ஆனந்தத்திற்காக எப்போதும் தனி ஜீவ அஹங்காரம் இருக்கத்தான் வேண்டும் என்று நினைக்கிறான். அஹங்காரம், அஹம்பாவம் என்ற இரண்டு வித்யாஸப்படுத்திச் சொன்னதில் பின்னதைத்தான் அவன் பூர்ணமாக பலி கொடுக்க வருகிறானே தவிர இல்லை.

ஆகையால், பக்தி சாஸ்திரத்தில்தான் சரணாகதி, சரணாகதி என்று சொல்லியிருந்தாலும் அந்த வழிக்காரன் பூர்ண சரணாகதியாக அப்படியே ஆத்ம நிவேதனம் செய்து கொள்ளாமல், பரமாத்மாவை அநுபவிப்பதெற்கென்றே ஜீவாத்ம அஹங்காரத்தில் கொஞ்சதைத் தனக்கென்று பிடித்து வைத்துக் கொண்டு பாக்கியைத்தான் அவனுக்கு ஸமர்ப்பணம் பண்ணுகிறான்;பூர்ண சரணாகதி - ஜிஷீமீணீறீ ஷிஸ்ரீக்ஷீக்ஷீமீஸீபீமீக்ஷீ - இல்லை. அந்த வார்த்தைகளையே சொல்லாத ஞானவழிக்காரன்தான் உண்மையில் அப்படிப் பண்ணி ப்ரம்மாக்னியில் கர்ப்பூரமாக ஜீவாத்மாவை ஆஹுதியாக்கி விடுகிறான்!இதுதான் உண்மையான, முழுசான ஆத்ம நிவேதனம், சரணாகதி, பக்தி, ப்ரபத்தி எல்லாம்!

அத்வைத ஸித்திக்கு இப்பேர்ப்பட்ட அந்தரங்க ஸாதனமாக பக்தி இருப்பதாலேயே வார்த்தைகளை அர்த்த கர்ப்பம்

நிரம்பியதாக பொறுக்கியெடுத்துப் போடும் ஆசார்யாள், 'மோக்ஷகாரண ஸாமக்ர்யாம் பக்திரேவ கரீயஸீ'என்று அதன் பெருமை தெரியப் போட்டிருக்கிறார்.

---



## ஆத்மா உயிர் மயமானது ; தத்வப் பொருள் மட்டுமன்று

இது ச்லோகத்தின் முன் பாதி. பின் பாதியில் பக்தி என்பதென்ன என்று டெஃபனிஷன் கொடுத்திருக்கிறார்:

**ஸ்வஸ்வரூபானுஸந்தாநம் பக்திரித்யபிதீயதே**

'தன்னுடைய ஸ்வரூபத்தையே, அதாவது உண்மையில், இயற்கையாக நாம் யாரோ அந்த ஆத்மாவையே எப்போதும் இடைவிடாமல் சேர்ந்திருப்பதுதான் பக்தி என்று சொல்லப்படுகிறது'என்று அர்த்தம்.

'பக்தி:இதி அபிதீயதே'என்றால் 'பக்தி எனப் பெயரிடப்பட்டிருப்பது'ஸ்வஸ்வரூபத்தை 'அநுஸந்தான ம்'பண்ணனுமென்று சொல்கிறார். அதென்ன அநுஸந்தான ம்?'ஸந்தானம்'என்றால் ஒன்றோடு போய்ச் சேர்ந்து ஒட்டிக் கொண்டிருப்பது. 'சந்திப்பு'என்று சொல்கிறோமே, அது!விடாமல் தொடர்ந்து அப்படிச் சேர்ந்திருப்பது 'அநுஸ ந்தானம்'.

ஆத்மாவில் அப்படி சேர்ந்திருப்பதென்றால், ஆத்மா ஒன்று. அதில் சேர்த்து இழைத்துக்கொண்டிருக்கிற ஜீவாத்மா ஒன்று என்று இரண்டா?இல்லை. ஆத்மாவுடன் சேர்கிறது, இழைகிறது என்றெல்லாங்கூட எதுவும் பண்ண முடியாது. இந்த மாதிரி அல்ப ஸ்வல்ப த்வைதத்திற்குக் கூட அது இடம் கொடுக்காது. சேர விரும்புகிற, தாபத்தில் ப்ரேமையோடு

தவிக்கிற ஜீவனை - அதாவது அந்தஃகரணத்தை;குறிப்பாக அஹங்காரத்தை- அது அப்படியே முழுங்கி விட்டு தானாக நிற்குமே தவிர, சேர்ந்து இழைத்து குழைந்து இருப்பதெல்லாங்கூட இங்கே நடக்காது. ஆகவே வாஸ்தவமாகவே ஸ்வஸ்வரூபமான அந்த ஆத்மாவை அநுஸந்தானம் பண்ணாமல், அதைப் பற்றிய நினைப்பிலே.யே இடைவிடாமல் உள்ளத்தைச் சேர்த்து, இழைத்து, குழைத்துக் கொண்டிருப்பதைத்தான் 'அநுஸந்தானம்'என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். புத்தியை சுத்த ப்ரஹ்மத்திலே ஸ்தாபித்து ஸமாதானப் படுத்த வேண்டும் என்று வந்த இடத்தில், சுத்த ப்ரஹ்மத்தின் கிட்டேயே புத்தி போக முடியாததாகையால் அதைக் குறித்த விஷயங்களில், உபதேசங்களில், ஆத்ம வித்யா சாஸ்திரங்களிலேயே புத்தியைச் செலுத்தணும் என்று தானே அர்த்தம் பண்ணிக் கொண்டோம்?அதேபோல் இங்கேயும் ஆத்ம ஸ்வரூபத்தையே இடைவிடாமல் சேர்ந்திருக்கும் அநுஸந்தானத்தைப் பண்ண வேண்டும் என்பதற்கு அதைப் பற்றிய நம்முடைய நினைப்பிலேயே அநுஸந்தானம் என்று அர்த்தம் பண்ணிக்கணும்.

ஸந்நியாஸத்திற்கு முந்தியே ஆரம்பிக்கும் இந்த அநுஸந்தானம் ஸந்நியாஸத்திற்கு அப்புறம்தான் மேலும் மேலும் பலப்பட்டு, ஆழப்பட்டு முடிவாக ஸாதனை பண்ணுபவன் தன்னையே பூர்ணமாகக் கொடுத்து அழித்துக் கொண்டு, ஆத்மா பிரகாசிப்பதாகப் பூர்த்தியாகும்.

இடைவிடாமல் இழைந்து குழைவது என்றால் அது தானே ப்ரேம பக்தி?

ஜீவபாவத்தை பரப்ரம்மம் முழுங்கி ஆத்மாவாக நிற்கிறது என்னும்போது ஒன்று சொல்ல வேண்டும். ஒரே முழுங்காக அது முழுங்கித் தீர்த்துவிடுவதில்லை. முழுங்கும்;மறுபடி கக்கும்;மறுபடி முழுங்கும். ஸமாதியிலிருப்பது, கலைந்து எழுந்திருப்பது என்கிறவை இப்படி முழுங்கப்பட்ட, கக்கப்பட்ட நிலைகள்தான். ஒவ்வொரு தடவை முழுங்கப்பட்டு வெளிவருகிறபோதும் ஜீவபாவம் முன்னைவிட மெலிந்து கரைந்துபோயிருக்கும். ஆனாலும் இருக்கும். அப்போதெல்லாம் இன்னும் கரையணும் என்ற

பக்தியநுஸந்தானத்தைத் தொடர வேண்டும்.

முமுக்ஷுதையைச் சொல்லும்போது 'ஸ்வஸ்வரூப அவபோத'த்தைச் சொன்னார். இப்போது பக்தியைச் சொல்கிற இடத்தில் 'ஸ்வஸ்வரூப அநுஸந்தானம்'என்கிறார். 'அவபோதம்'என்பது 'விழிப்பு'. ஆத்ம விழிப்புக்காகவே விடுதலை பெறவேண்டும் என்று இச்சைப்படுவது தான் முமுக்ஷுதை என்றார். அப்படிச் சொல்லும் போது (ச்லோக) ஆரம்பத்திலேயே இத்தனை நாழி நான் சொல்லி வந்த அஹங்காரத்தைத்தான் குறிப்பிட்டிருக்கிறார். தனி ஜீவனுக்குப் பிள்ளையார் சுழியான, பரம ஸூக்ஷ்மமான அஹங்காரத்திலிருந்து ஆரம்பித்து நல்ல ஸ்தூலமான தேஹம் வரையிலான மாயா கல்பித பந்தத்திலிருந்து விடுதலை பெற வேண்டும்;வெறுமே அதிலிருந்து விடுபட்டால் போதாது;'võvõÏð Üõ«ð£î^FŸè£è, Üî£õ¶ Ý^ñ£M™ MNŠ¹ÁõîŸè£è«õ ÜŠð® M´ðì M¼‹ð «õ‡´‹'âùø£˜. ÞŠð®, MNŠ¹ÁõîŸè£è ('Üõ«ð£î£ò') M´î¬ô,° Ý¬êŠð†´^ îM^î£™, è¬ìCJ™ Ü‰î MNŠ¹ ãŸð†´ Üîù£«ô«ò ('Üõ«ð£«îù')M´ð†´ GŸèô£‹ â¡Á º®õ£è Ü˜^î‹ ð‡E, ªè£‡«ì£‹ -„«ô£è^F™ 'Üõ«ð£«îù'â¡Á Þ¼Šð¶ º®¾ G¬ôJ™ â¡Á‹, 'Üõ«ð£î£ò'õ£è Ýó‹HŠð«î ÜŠð® º®»‹ â¡Á‹ ð£˜^«î£‹.

அஹங்கார பந்தத்திலிருந்து விடுபடவேண்டும் என்ற முமுக்ஷுதைக்கு அப்புறம், பந்தப்படுத்துவதில் அஹங்காரத்திற்குள்ள பலத்தைப் போக்கி இளைக்க வைக்கும் பக்தியை ரீஷிரீவீநீணீறீ உமீஹீஞூமீஸீநீமீ- ஆக வைத்திருக்கிறார். அந்தஃகரணத்தில் அடங்கும் மனோ புத்தி-அஹங்காரங்களில் மனஸை சம தமாதிகளினால் அடக்கி, புத்தியை ச்ரத்தையாலும் ஸமாதானத்தாலும் அடக்கி, அப்புறம் அஹங்காரத்தை முமுக்ஷுதையால் அடக்கி, பக்தியால் நன்றாக மெல்லிசு பண்ணுவதாக உமீஹீஞூமீஸீநீமீ போகிறது.

வாஸ்தவத்தில் ஆத்மா விழித்துக்கொள்ளும் போது - அதாவது, எப்போதுமே அது விழிப்புடன் இருப்பது தானென்றாலும் இப்போது நமக்குத் தெரியாமலிருப்பதால்

தெரிகிற நிலையை விழித்துக் கொள்வதாகச் சொல்வது:அப்படி அது ஆகிறபோது - ஆஸாமியே (தனி ஜீவனாக இருக்கும் ஸாதகனே) காலிதான்!ஆனால் வாஸ்தவத்தில் இல்லாமல், இப்படி ஸ்வப்ரகாசமான ஆத்மா மாயையின் இருட்டால் நமக்குத் தூங்கினாற்போலாகி விட்டதே!அது விழித்துக்கொள்ள வேண்டும்'என்று நாம் நினைக்கிறபோது நாமும் இருப்போம்;ஆத்மா விழித்துக் கொண்டதாக ஒரு பாவனை, கல்பனை - இன்னவென்று வர்ணிக்க முடியாமல் - அப்படி ஒரு எண்ணமும் இருந்து கொண்டிருக்கும். அது வர்ணனாதீதந்தான். ஆனாலும் ஆத்மா, ப்ரம்மம் என்கிறபோது அகண்டமாக ஏதோ ஒன்று, பரம சுத்தமாக ஒன்று, ஸச்சிதானந்த மயமாக ஒன்று என்று ஒரு நினைப்பு இருக்கவே செய்யும். அகண்டம், ஸச்-சித் எதுவும் இன்னவென்று

வரையறுத்து 'கன்ஸீவ்'பண்ண முடியா விட்டாலும் அவற்றைப் பற்றிய ஏதோ ஒரு அபிப்ராயம் இருந்துகொண்டிருக்கும். அந்தஃகரணம் அடியோடு அடிபட்டுப் போகிற வரையில் ஏதாவது எண்ணம் இருந்து தான் தீரும் என்பதில், இப்படி ஆத்மாவைப் பற்றியும் பா வமோ, பாவனையோ எதுவோ ஒன்று இருக்கத்தான் செய்யும். இப்படி ஆத்மா விழித்துக்கொண்டதாக பா விக்கும்போது அதைத் தத்வமாக மாத்திரம் நினைக்காமல் உயிராக, உயிருள்ள தத்வமாக நினைக்க வேண்டும். அப்புறம் நம்முடைய சிற்றுயிரை அதற்கு அர்ப்பணித்துவிடும் பா வத்தைப் பெற்று இடைவிடாமல் அப்படி ஈடுபட்டிருப்பதுதான் பக்தி. அவபோதத்திற்கு அப்புறம் அநுஸந்தானம். தூக்கத்திலிருந்து முழிக்கப் பண்ணுவது முதலில்;முழித்துக் கொண்டுவிட்டு அதனிடம் உறவு கொண்டாடுவது அடுத்தாற்போல!உறவும் போய் ஒன்றே ஆகிவிட வேண்டும் என்பதை லக்ஷ்யமாகக் கொண்டு உறவு கொண்டாடுவது!

"(ஆத்மாவைப் பற்றி) இப்படி அப்படி என்று ஒன்றும் நீ 'கன்ஸீவ்'பண்ணாமல் அது வாஸ்தவத்தில் எப்படியிருக்கிறதோ அப்படித் தெரியட்டும், ஆட்கொள்ளட்டும் என்று வெறுமே பார்த்துக்கொண்டிரு. ஸத்-சித், அகண்டம் என்றெல்லாம் அடைமொழி எதுவுங்கூட கொடுக்காதே!'எப்படியோ அப்படி என்று விட்டுவிட்டு

இரு'என்று சொல்வதுண்டு. அப்படிப் பண்ணுவது கஷ்டந்தான் என்றாலும் அட்வான்ஸ்ட் நிலையில் முடியாததில்லை. அடைமொழி கொடுத்து பாவித்துக்கொண்டே போகும் போது, தானாகவேகூட ஒரு ஸ்டேஜில் இதெல்லாம் என்ன ஜோடிப்பு?என்று விட்டு விட்டு உள்ளபடி பார்ப்போமே!என்று தோன்றும். அப்படி எந்த பாவனையுமில்லாமல் வெறுமே பார்க்கிறபோது (ஆத்ம) தத்வம் ஒரு வெறுமையாக, பாழாக, சூன்யமாகத் தோன்றக்கூடிய ஆபத்து இருக்கிறது. ஆகையினாலே (ஆத்மாவைக் குறித்து) வேறே ஒரு கன்ஸெப்ஷனும் இல்லாவிட்டாலுங்கூட, அது வெறும் பாழில்லை, உயிர் என்ற அடிப்படையை மட்டும் விட்டு விடக்கூடாது. உயிர் என்றவுடனேயே நாமும் அடிப்படையில் உயிரேயாகையால், தானாக உறவு ஏற்பட்டு விடும். உறவு ஏற்படுகிறதென்றால் அன்பு வந்துவிட்டதென்று அர்த்தம். நிஜ அன்பாக அகை ஆக்கிக் கொள்ள வேண்டும் - சிற்றுயிருக்கு அந்தப் பேருயிரிலிருந்து எதையும் பெற்றுச் சேர்த்துக் கொள்கிற தப்பான அன்பாக இல்லாமல், இதை அதில் சேர்த்து, அது இதை அப்படியே உட்கொள்ள வேண்டும் என்று தவிக்கும் உண்மை அன்பாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

அந்த உறவு, உயிர் தெரிவதற்காகத்தான் 'ஸ்வஸ்வரூப அவபோதம்', 'ஸ்வஸ்வரூப அநுஸந்தானம்'என்று இரண்டு இடத்திலேயும் 'ஸ்வரூபம்'என்று போட்டிருக்கிறார். 'ஸ்வ-ஸ்வரூப'என்பதில் இரண்டு ஸ்வ வருகிறது. முதல் 'ஸ்வ'வுக்குத் தன்னுடைய என்று அர்த்தம். இரண்டாவது 'ஸ்வ'வுக்கு இயற்கையான என்று அர்த்தம். 'ஸ்வ-ஸ்வரூப ம்'என்பது தன்னுடைய இயற்கையான ரூபம் - இப்போது மாயை கலந்து செயற்கை ரூபத்திலிருக்கும் ஜீவனின் இயற்கையான, உண்மையான, மாயைக் கலப்பில்லாத ரூபமான ஆத்மா.

ஆத்மாவுக்கு ஏது ரூபம் என்றால், இங்கே ரூபம் என்பதற்கு உருவம் என்று அர்த்தமில்லை. உருவம் என்பதும் ரூபத்திலிருந்து வந்த வார்த்தைதான். ஸம்ஸ்க்ருத 'ர'வரிசை எழுத்துக்கள் தமிழில் வரும்போது முன்னாடி அ, இ, உ என்ற

ஏதாவதொன்றைச் சேர்த்துக் கொள்ளும். ரங்கன்-அரங்கன், ராமன்- இராமன், ருக்மணி -உருக்மணி இப்படி. அப்படித்தான்

ரூபம் என்பது உருவம் என்று ஆயிற்று.... "ஆத்மாவுக்கு ரூபம் ஏதையா?" என்றால் -ரூபம் என்றால் இங்கே யீஷீக்ஷீனீ, வடிவம் என்று அர்த்தமில்லை. ஒன்றின் தன்மை எதுவோ அதையும் ரூபம் என்றே சொல்வது. ரூபிப்பது, நிரூபிப்பது என்கிறபோது ஒன்றின் வாஸ்தவமான தன்மை என்னவென்பதைத்தானே வெளிப்படுத்திக் காட்டுகிறோம்?

ஆனாலும் பொதுவாக ரூபம் என்கிறபோது அந்த 'தன்மை'ஜடத்தன்மையாக இல்லாமல் உயிர் கலந்த தன்மையாகவே மனஸுக்கு வரும். 'ராகத்தின் ரூபத்தை பாகவதர் நன்றாகக் காட்டினார்'என்கிறோம். அதை ஒரு உயிருள்ள ஜீவனாக உள்ளுக்குள்ளே அபிப்ராயப்பட்டு அப்படிச் சொல்கிறோம். எல்லாக் கலைகளையுமே அப்படிச் சொல்கிறோம். ஸயன்ஸைச் சொல்வதில்லை. 'ஃபிஸிக்ஸ்'ரூபத்தை ப்ரொஃபஸர் நன்றாகக் காட்டினார் என்று சொல்வதுண்டா?காரணம், ஆர்ட் மாதிரி ஸயன்ஸை உயிருள்ள விஷயமாக நினைக்காததுதான். எதற்கு சொல்லவந்தேன் என்றால்

ரூபம் என்று ஒன்றின் தன்மையைச் சொல்லும்போது அங்கே உயிரின் தொடர்பு வந்துவிடுகிறது. முன்னாடி 'ஸ்வ'போட்டு 'ஸ்வரூபம்'என்னும்போதோ இன்னும் அழுத்தமாக 'ஜீவசக்தி உள்ள ஒன்று'என்று நடைமுறையில் அர்த்தம் செய்து கொள்கிறோம். 'ஆத்ம ஸ்வரூபம்'என்ற வார்த்தை காதில் படுகிறபோதே அது உயிருள்ள ஒன்றாக மனஸுக்குள் இறங்குகிறது. 'தனக்கென்றே இயற்கையாக ஏற்பட்டது'என்பதை 'ஸ்வ'என்கிற சின்ன வார்த்தை குறிப்பிடுகிறது. தனக்கென்றே என்று சொல்கிறபோதேஅந்த வஸ்துவின் உயிருள்ள தன்மையும் நம் மனஸுக்குள் இறங்கி விடுகிறது.

உயிரைப் பற்றிப் பேசுகிறோம்;சில வார்த்தைகளுக்கே அலாதியான உயிரிருக்கிறது!ஸத்-சித் ஆனந்தம் என்பதில் 'ஸத்'என்றால் உள்ளது. உள்ளது என்றால் 'உயிருள்ளது'என்றே அர்த்தம். அதை தீமீவீஸீரீ, மீஜ்வீவமீமீஸீநீமீ, ரீவீயீமீ என்று மூன்று வார்த்தைகளில் சொல்கிறார்கள். அப்படிச் சொல்லும்போது 'ஙிமீவீஸீரீ' என்கிற வார்த்தை, உயிரிருந்தாலும் ஒட்டி நிற்காமல் 'அகாடெமிக்'காக த் தனித்து நிற்கிற மாதிரி அர்த்தம்

கொடுக்கிறது. ணிஜ்வீவமீமீஸீநீமீ என்பதோ அதை விடவும் உயிரையே ஜடமாகச் சொல்கிறாற்போல் அத்தனை பீகூஷீஹ்-ஆக, மெடஃபிஸிகலாக இருக்கிறது. லிவீயீமீஎன்றால் அப்போதுதான் அப்படியே ஸாரபூதமாக உயிரைக் காட்டினாற்போலப் 'பொயட்டிக்'காக இருக்கிறது. அந்த வார்த்தைக்கே உயிரிருப்பதால் அதன் அர்த்தமான உயிரிலும் ஜீவஸத்து நன்றாக த்வனிக்கிறது!அப்படித்தான் 'ஸ்வரூபம்'என்னும் வார்த்தையும். ஆத்மா என்பது உயிர் ஸத்து, வறண்ட 'பீகூஷீஹ்' தத்வமில்லை என்று நமக்குப் புரிவிப்பதற்காகவே அதன் ஸ்வரூப அவபோதத்திற்காக நமக்கு முமுக்ஷுதையும், அவபோதமான பிறகு அந்த ஸ்வரூபத்தோடு உயிராக உறவு கொண்டாடி அநுஸந்திப்பதற்காக பக்தியும் வேண்டுமென்று உபதேசித்திருக்கிறார்.

இப்படி இரண்டு இடத்திலும் 'ஸ்வரூபத்'தையே சொன்னவர் மேற்கொண்டு, "ஆத்ம தத்வத்தை அநுஸந்தானம் செய்வதுதான் பக்தி என்பது சொல்கிறவர்களும் இருக்கிறார்கள்"என்பதாக, இன்னொரு விதமான அபிப்ராயத்தையும் தெரிவிக்கிறார். 'ஸ்வாத்மா தத்த்வாநுஸந்தானம் பக்திரித்யபரே ஜகு:'.

"Üð«ó ü°": â¡ø£™ "«õÁ Cô˜ ªê£™Aø£˜èœ". â¡ù ªê£™Aø£˜èœ?îù¶ Ý˜ñ î˜õ˜¬î˜ ªî£ì˜‰¶ C‰î¬ù ð‡E, ªè£‡®¼Šð«î ð,F â¡Á (ªê£™Aø£˜èœ):"võ£ˆñ î˜ˆõ£¸ú‰î£ù‹ ð,FKF."

'வேறே சிலபேர் சொல்கிறார்கள்'என்பதால் அது ஆசார்யாளின் அபிப்ராயமல்ல என்று தெரிகிறது. தன்னுடைய அபிப்ராயத்தைத்தான் முன் ச்லோகத்தில் 'ஸ்வ ஸ்வரூபாநுஸந்தானம்'என்றார். இப்போது இன்னொரு அபிப்ராயமிருப்பதையும் சொல்லாமலிருக்கக் கூடாது என்ற ஸத்யமான மனப்பான்மையினால், 'ஸ்வ ஸ்வரூபம் இல்லை;ஸ்வாத்ம தத்வம்' என்று ஒரு கருத்து இருப்பதையும் தெரிவிக்கிறார்.

என்ன வித்யாஸமென்றால் இவ்வளவு நேரம் உயிர், அன்பு, ஈரம் என்றெல்லாம் சொல்லி வந்ததற்கு மாறாக ஆத்மாவை வெறும் தத்வமாக - ணீதீவமீகூஷீணீநீமீ ஜீகூஷீவீஸீநீவீஜீறீமீ

ஆகவே - வைத்து அதைப் பற்றியே விடாமல் சிந்தனையை ஈடுபடுத்துவதான அநுஸந்தானம்தான் பக்தி என்று அந்த மாற்று அபிப்ராயக்காரர்கள் சொல்கிறார்கள். லக்ஷ்யமான ஆத்மாவை அன்பு செலுத்தக்கூடிய உயிரென்று வைக்காமல், அதற்காக ஸாதனை செய்கிறவனையும் அன்பினாலேயே தன் உயிரை அந்த பேருயிரில் கரைகிறவனாகச் சொல்லாமல் தத்வரீதியாகவே இடை விடாமல் ஈடுபட்டுச் சிந்திக்கிறதையே அந்த அபிப்ராயக்காரர்கள் சொல்கிறார்கள். 'உயிரோடு உறவு கொண்டாடும் அன்பைச் சொல்லாதவர்கள் பின்னே எப்படி இந்த தத்வாநுஸந்தானத்திற்கு பக்தி என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள்?என்றால், 'பக்தி என்பது ஒருமுகமாக ஒரு விஷயத்திலேயே ஈடுபட்டுக் கொண்டிருப்பதுதான்' என்று மாத்திரம் அவர்கள் குறுக்கி அர்த்தம் பண்ணிக் கொண்டு அப்படி வைத்திருக்கிறார்கள்.

ரூபம் என்றால் தன்மை. தத்-த்வம் என்றாலும் தன்மைதான். இன்னும் சொல்லப்போனால் 'தத்-த்வம்'என்கிறதுதான் நேராகத் 'தன்-மை'யைச் சொல்வது. ஆனாலுங்கூட 'ஸ்வ-ஸ்வரூப அநுஸந்தானம்'என்னும் போது இந்த சிற்றுயிர் தன்னுடையதேயான மூல உயிரின் தன்மையில் உள்ளுக்குள் ஊறி ஊறிக் கரைவதாகத் தெரிந்த மாதிரி 'ஸ்வாத்ம தத்த்வ அநுஸந்தானம்'என்பதில் இல்லை. இது என்னவோ ஒரு எட்டாத தத்வத்தை வெளியிலே இருந்து கொண்டு அநுபவிக்கிற மாதிரிதான் இருக்கிறது.

எப்படியானாலும் ஆசார்யாளின் 'வோட்டு' இதற்கில்லையாகையால் இதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டாம். வெறுமே ஒருமுகமான ஈடுபாட்டை மட்டும் நாம் பக்தி என்று எடுத்துக்கொள்ளாமல் உயிரோடு சேர்ந்த அன்பையே அப்படி நினைத்துப் பண்ணுவோம்.

(அத்வைதிகளுக்குள்ளேயே) இருக்கிற இன்னொரு அபிப்ராயத்தைச் சொல்லாமலிருக்கக்கூடாது என்ற நியாயத்திற்காகவே இதையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். நிஜத்தை சொல்லணுமானால் அந்த மாற்று அபிப்ராயந்தான் அதிகம் ப்ரசாரமாகிவிட்டது. ஆசார்ய பக்தர்கள், சிஷ்யர்களிலேயே ரொம்பப் பேருக்கு அப்படித்தான் அபிப்ராயம்!நானே இப்போது நம்முடைய ஞான மார்க்கத்திலே இதென்ன பக்தியைக் கொண்டு வந்து

விட்டிருக்கிறார்?'என்ற கேள்வியைப்

போட்டுவிட்டுத் தானே இத்தனை எக்ஸ்பிளனேஷன் கொடுக்க வேண்டியிருந்திருக்கிறது?

அன்போடு உறவு கொண்டாடும் ரீதியில் ஆத்ம சிந்தனை பண்ணுவது;ஆனாலும் உறவே எப்பவும் நீடிக்கணும் என்று த்வைதமாக, த்வைதத்திற்காகப் பண்ணாமல், அத்வைதமாகக் கரைந்து போவதற்கு வழிபண்ணுவதுதான் பக்தி என்பதே இத்தனை எக்ஸ்ப்ளனேஷனுக்கும் சுருக்கம்.

நிர்குணத்திடம் எப்படி பக்தி என்பது இப்போது புரிந்திருக்குமென்று நினைக்கிறேன். அது எப்படு 'கரீயஸி ஸாமக்ரீ என்றும் புரிந்து கொண்டிருப்பீர்களென்று நம்புகிறேன்.

---



## வேதமே விதிக்கும் ஞான மார்க்க பக்தி

ஞான வழியில் லக்ஷ்ய ஸித்தியை அடைவிக்கிற முடிவான நேர்ஸாதனத்திற்கு நிதித்யாஸனம் என்று பேர். அது த்யான யோகத்தைச் சேர்ந்ததுதான். அப்படிச் சொல்கிறபோது உயிர், உறவோடு வரணம் என்கிற அபிப்ராயங்களில்லாமல் தத்வமாகவே வைத்து அதே சிந்தனையாக இருப்பதாகத்தான் நினைக்கப்படுகிறது. அப்படியில்லை;உயிரோடு உறவு கொண்டாடி ஆத்ம ஸமர்ப்பணம் செய்வதான பக்தி யோகத்தையும் கரைத்துக் கொண்ட த்யான யோகமாகத்தான் அதை அப்யஸிக்க வேண்டும். 'விவேக சூடாமணி'யிலேயே இதை இன்னொரு இடத்தில் ஆசார்யாள் ஸ்பஷ்டமாகத் தெரிவித்திருக்கிறார். தாம்தான் தெரிவிக்கிறோமென்றில்லை;வேதத்தின் கட்டளையே அப்படியிருக்கிறதென்றும் சொல்லியிருக்கிறார்.

**ச்ரத்தா-பக்தி-த்யான-யோகாந் முமுக்ஷோ :**

**முக்தேர்-ஹேதூந் வக்தி ஸாக்ஷாச்-ச்ருதேர்கீ :|**

அடிப்படை ச்ரத்தை. அதோடு பக்தி யோகம், த்யான யோகம் இரண்டையும் கலந்து பண்ணுவதே - த்யான யோகத்திலேயே பக்தி **பா** வத்தையும் கரைத்துப் பண்ணுவதே - முமுக்ஷுவாக இருப்பவன் முக்தியைப் பெறுவதற்கு ஹேது. அதாவது உபாயம். 'இப்படி ஸாக்ஷாத் வேத வாக்கியமே சொல்கிறது:ஸாக்ஷாத் ச்ருதே:கீ:வக்தி'என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். 'ச்ருதே:கீ:'என்றால் வேதத்தின் வாக்கியம்.

அப்படியா?வேதத்திலேயேவா ஞான வழியிலும் த்யானம் மட்டுமில்லாமல் பக்தியும் உண்டு என்று சொல்லியிருக்கிறது?எந்த இடத்தில்?என்றால், கைவல்ய உபநிஷத் என்பதில் அப்படி இருக்கிறது. க்ருஷ்ண யஜுர் வேதத்தில் வருகிற உபநிஷத் அது. அதில் உபதேச ஆரம்பமே 'ச்ரத்தா-பக்தி-த்யான-யோகாதவைஹி'(சிரத்தையாலும் பக்தியாலும் த்யான யோகத்தாலும் (ப்ரம்ம ஞானத்தை) அடைவாயாக!) என்பதுதான். அந்த ச்ருதிசிரோ வாக்யங்களையே வைத்துத்தான் இங்கே ஆசார்யாளும் 'ச்ரத்தா பக்தி த்யான யோகான்'என்று ஆரம்பித்திருக்கிறார்.

---



**ஸூத்ர பாஷ்யத்திலும்**

'விவேக சூடாமணி'யில் மட்டுந்தான் ஆசார்யாள் ஞானத்தின் அந்தரங்க ஸாதனமாக பக்தியைச்

சொல்லியிருக்கிறாரென்றில்லை. (ப்ரஹ்ம) ஸூத்ர பாஷ்யத்திலேயே சொல்லியிருக்கிறார். 'திலேயே'என்று ஏன் சொல்கிறேனென்றால், ஆசார்யாள் பேரில் (ஆசார்யாள் செய்ததாக) இருக்கும் பாஷ்யங்கள், ப்ரகரணங்கள், ஸ்தோத்ரங்களில் அவர் பண்ணினதுதானா, பண்ணினதுதானா என்று ஒவ்வொன்றை ஒவ்வொருத்தர் கேட்கும் போதிலும், அத்தனை பேரும் ஏகோபித்து அவர் பண்ணினதுதான் என்று ஒப்புக் கொள்வதாக இருப்பது ஸூத்ர பாஷ்யந்தான். அதோடு அதுதான் அவர் அநுக்ரஹித்திருக்கும் அத்வைத சாஸ்திரப் புஸ்தகங்களுக்குச் சிகரமாயிருப்பது. அதனால் அதிலேயே ஒன்று சொல்லியிருந்தால் அதற்கு 'வால்யூ'ஜாஸ்தி.

ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ப்ரஹ்மாநுபவத்தை உண்டாக்கும் ஸாதனத்திற்கு 'ஸம்ராதனம்'என்று பேர் சொல்லியிருக்கிறது. 'ஆராதனம்', 'ஆராதனை'என்ற மாதிரியே அர்த்தம் கொடுப்பது 'ஸம்ராதனம்'என்ற வார்த்தை. பக்தி வழிபாட்டைத்தான் பொதுவாக ஆராதனை என்கிறோம். இங்கே ஞான வழிபாட்டை 'ஸம்ராதனம்'என்று சொல்லியிருக்கிறது. அந்த வார்த்தையை ஆசார்யாள் விளக்கி பாஷ்யம் பண்ணும் போது 'பக்தி -த்யான - ப்ரணிதானாதி அநுஷ்டானம்'என்றே சொல்லியிருக்கிறார். 'ப்ரணிதானம்'என்றால் 'ஸமாதி', 'ஸமாதானம்'முதலியவை மாதிரி 'பரிபூர்ணமாக ஒருமுகப்படுத்திச் சேர்த்து வைப்பது'என்று அர்த்தம். பொதுவாக, ப்ரஹ்மாநுபவத்திற்கான ஞான ஸாதனமென்றால் என்ன நினைக்கத் தோன்றுமென்றால் (ஆசார்யாள் சொல்லிச் சொல்லிக் கேட்டேதான் இப்படி நினைக்கத் தோன்றும். அப்படி என்ன தோன்றுமென்றால்) அந்தஃகரணத்தைப் பூர்ணமாக ஒருமுகப்படுத்தி த்யானம் செய்வதுதான் அந்த ஸாதனம் என்றே தோன்றும். ஆனால் அதே ஆசார்யாளே இங்கே பக்தியை முதலில் போட்டு அப்புறமே த்யானத்தைச் சொல்லி இரண்டிலும் இரண்டாலும் ப்ரணிதானம் பண்ணவேண்டும் என்கிறார்.

ஆராதனை என்கிற மாதிரியே உபாஸனை என்பதும் பொதுவாக ஸகுண வழிபாட்டைத்தான் சொல்வது.

'பொதுவாக'மாத்திரமில்லை;வேத, வேதாந்த சாஸ்திரத்திலேயே அப்படித்தான் குறிப்பிடுவது;கர்மா-பக்தி-ஞானம் என்கிறதை கர்மா-உபாஸனை-ஞானம் என்றே அந்த சாஸ்திரஜ்ஞர்கள் சொல்லியிருப்பார்கள்....

பிரம்ம ஸூத்ரத்தில் ஒரு இடத்தில் ஒருவன் தான் மேற்கொண்ட உபதேசத்தை விடாமல் பல ஆவிருத்தி மனனம் செய்ய வேண்டும் - அதாவது ஆலோசனை பண்ணி அலசி அலசி உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் - என்று வருகிறது. இங்கே மூல ஸூத்ரத்தில் பக்தி பா வத்துடன் செய்கிற உபாஸனை பற்றியோ, அறிவை முக்யமாகக் கொண்டு செய்கிற ஞான ஸாதனை பற்றியோ

எதுவுமில்லை. பொத்தம் பொதுவாக ஆவிருத்தி பண்ணனும் (உருப்போடணும்) என்றே இருக்கிறது. ஆனால் இதற்கு முன்னாலும், பின்னாலும் ஸூத்ரங்களை அமைத்திருக்கிற போக்கிலிருந்து ஞான மார்க்கத்தில் மஹாவாக்ய உபதேசம் பெற்ற பிறகு முமுக்ஷு பண்ண வேண்டிய மனனம்தான் இங்கே சொல்லியிருப்பது என்று தெளிவாகிறது.

ஆசார்யாள் ரொம்ப அழுத்தமாகத் தெளிவுபடுத்தி அப்படித்தான் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்.

ஆனால் இந்தக் குறிப்பிட்ட ஸூத்ரத்திற்கான பாஷ்யத்தை முடிக்கிறபோது அவராகவே உபாஸனா மார்க்கத்தையும் பற்றிச் சொல்லி, அறிவது உபாஸிப்பது என்ற இரண்டையும் வித்யாஸப்படுத்தாமல் ஒன்றாகவே உபநிஷத்தில் சில இடங்களில் சொல்லயிருப்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

ச்ரவணம் செய்த உபதேசத்தை விடாமல் மனனம் செய்து அர்த்தத்தைக் கண்டுகொண்ட அப்புறம் அந்த அர்த்தம் ஒன்றிலேயே மனஸை இடைவிடாமல் ஈடுபடுத்தி நிற்பதை த்யானம் என்கிறோம். இதே மாதிரி குரு என்ற ஒருவரிடமே சிஷ்யன் மனஸை இடைவிடாமல் ஈடுபடுத்தியிருப்பதாலோ அதை குரு உபாஸனை என்கிறோம்;ராஜாவிடம் ஒரு ப்ரஜை இதேபோல ஈடுபட்டிருந்தால் 'ராஜாவை உபாஸிக்கிறான்'என்கிறோம்;பர்த்தாவிடமே ஒரு பதிவ்ரதை ஈடுபட்டிருந்தால் பதி உபாஸனை என்கிறோம் - என்று

ஆசார்யாள் காட்டியிருக்கிறார். அதாவது (முறையே) பக்தி பா வங்களில் மிக உசந்ததாகச் சொல்லப்படும் ஆத்ம நிவேதனம், தாஸ்யம், மாதுர்யம் ஆகியவற்றை ஹின்ட் பண்ணியிருக்கிறார். இப்படிப் பண்ணின அப்புறந்தான், உபநிஷத்துக்களிலேயே அறிவது, உபாஸிப்பது என்ற இரண்டையும் வித்யாஸப்படுத்தாமல் ஒன்றாகத்தான் சொல்லியிருக்கிறதென்று சொல்லி இரண்டு த்ருஷ்டாந்தங்களும் கொடுத்திருக்கிறார். அதிலே முதல் த்ருஷ்டாந்தம் இத்தனை நாழி சொன்ன விஷயத்துக்கு - லக்ஷ்யத்தை தத்வம் என்று மட்டும் வைத்துவிடாமல், உயிருள்ள மூர்த்தி என்ற பக்தி ப்ரேமையோடு அநுஸந்தானம் பண்ண வேண்டும் என்ற விஷயத்துக்கு பலமான ஸப்போர்ட்டாக இருக்கிறது. அது என்ன என்றால்:ரைக்வர் என்ற ஞானியைப் பற்றி ஒரு ஹம்ஸ பக்ஷி இன்னொரு ஹம்ஸ பக்ஷியிடம் , 'ஸகலமான பேரும் அறிந்திருக்கிறதெல்லாமும் அவர் அறிந்திருப்பதற்குள் அடக்கமாகிவிடும்'என்று புகழ்ந்து சொல்லிக்கொண்டு ஆகாச வீதியிலே போகிறது. இதிலிருந்து அவர் ப்ரஹ்ம ஞானி என்று நன்றாகத் தெரிகிறது. பக்ஷி

சொன்னது 'வாலறிவு'என்று தமிழ் நூல்களில் சொல்லியிருக்கும் ஸர்வஜ்ஞதையான ப்ரஹ்ம ஞானந்தான். அந்த பக்ஷி சொன்னதை உப்பரிகையில் சயனித்துக் கொண்டிருக்கிற ராஜா - ஜானச்ருதி என்று அவனுக்குப் பேர் - கேட்டுக் கொண்டிருக்கிறான். அப்புறம் அந்த ஞானியைப் பார்க்க வேண்டும் என்று போகிறான். இங்கேதான் நம் டாபிக் வருகிறது. அவர் அறிந்திருக்கும் அந்த ஞான தத்வத்தை தனக்கும் உபதேசிக்கும்படி அவரிடம் பிரார்த்திக்க வேண்டும் என்று

போகிறான் ஆனால் போனவன் அவரிடம் 'தாங்கள் அறிந்திருக்கும் தத்வத்தைப் பற்றி உபதேசிக்க வேண்டும்'என்று சொல்லாமல் 'தாங்கள் உபாஸிக்கிற தேவதையைப் பற்றி உபதேசிக்க வேண்டும்'என்று சொல்லிப் பிரார்த்திக்கிறான். அதாவது தத்வ விசாரம், சோதனம், அநுஸந்தானம் என்றெல்லாம் ப்ரஹ்மவித்யா ஸம்பிரதாயத்தில் சொல்லப்படும் த்யானத்தை ஜீவனுள்ள ஒரு மூர்த்தியிடம் பக்தியோடு செய்கிற உபாஸனையின் பா

வத்தோடு செய்யவேண்டுமென்று இங்கே ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. உபநிஷத்தே அப்படிச் சொல்லி, இவ்வாறு சொல்லியிருப்பதைக் கொஞ்சம் ஷீஞூமீ ஷீயீ நீஷீஸீமீமீஜ்மீ மாதிரிகூடத் தோன்றக்கூடிய இடத்தில் ஆசார்யாளே ப்ரகாசப்படுத்திக் காட்டியிருப்பதற்கு ரொம்ப விசேஷமுண்டு.

எவ்வளவோ விஸ்தாரமாக ஆசார்யாள் பாஷ்யம் பண்ணுமிடங்களில்கூட மூலத்திலுள்ள விஷயத்தை மட்டுமே ஸரியானபடி புரியவைப்பதற்குத்தான் அத்தனை விஸ்தாரமும் தேவையானதாயிருக்குமே தவிர அநாவசிய சுற்றல், வளைசல் கொஞ்சங்கூட இருக்காது. 'ஸூத்ரங்களுக்கு அவர் பண்ணும் பாஷ்யங்களின் வாசகங்களும் ஸூத்ரம் மாதிரியேதான் ரத்னச் சுருக்கமாயிருக்கும். வ்யர்த்த விஸ்தார் கஹீம் நஹீம் கர்த்தே'என்றெல்லாம் விநோபாகூடச் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்டவர் இங்கே கொஞ்சம் வெளியிலேயிருந்தே ஒரு விஷயத்தை இழுத்துக் கொண்டு வந்துவிடுகிற மாதிரித் தோன்றுகிறதென்றால் அது அவருக்கு ரொம்பவும் முக்யமாகத் தெரிவதென்றுதானே அர்த்தம்?

ஆனால் ரொம்பவும் 'ட்ரெடிஷனை'ரக்ஷிப்பவராததால், அத்வைத சாஸ்திரத்தில் பக்தி என்று வெளிப்படையாக விஸ்தாரம் பண்ணி, விஷயம் புரியாதவர்கள் குழப்படி பண்ணிக் கொள்ள இடம் தரவேண்டாம். ஸமயம் வரும்போது அதை குருமார்களே சிஷ்யர்களுக்குத் தெரிவிக்கட்டும்'என்கிற அபிப்ராயத்திலாக இருக்கலாம், தம்முடைய புஸ்தகங்களில் சொல்லாமலே இருந்திருக்கிறார் போலிருக்கிறது. ஆனாலும் முடிவாக 'ஏஷ ஆதேச:ஏஷ உபதேச:ஏதத் அநுசாஸனம் - இதுவே ஆக்ஞை. இதுவே யீவீஸீணீறீ உபதேசம், இதுவே விதிமுறைக் கோட்பாடு என்கிற ரீதியில் 'விவேக சூடாமணி'யை அநுக்ரஹித்தபோது அதில் பக்தியை வெளிப்படச் சொல்லி அதுதான் ஞானயோக உபகரணங்களில் முக்யமானது என்று தெரியப்படுத்தியிருக்கிறார்.

---

# கண்ணன் காட்டும் ஞானமேயான பக்தி

ஞானத்திற்கு பக்தி முக்யமான உபகரணம் என்பதற்கும் மேலே, ஞானமேதான் பக்தி என்று க்ருஷ்ண பரமாத்மா காட்டியிருக்கிறார். நாலு தினுஸு பக்தர்களை அவர் சொல்லி, யாரார் என்று பேர் கொடுக்கும்போது ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தி, ஞானி என்று சொல்கிறார். ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்தார்த்தீ ஞாநீ ச பரதர்ஷப. ஆர்த்தன் என்றால் கஷ்டப்படுகிறவன். 'ஜிஜ்ஞாஸு': ஞானத்திற்கு ஆசைப்படுகிறவன். அதாவது தத்வம் தெரியவேண்டுமென்று ஆசையுள்ளவன், அதற்காக முயற்சி பண்ணுபவன். 'அர்த்தார்த்தி'என்றால் பணம், காசு, வீடு, வாசல், பதவி முதலானவற்றை வேண்டுகிறவன். நாலாவதாகச் சொன்ன 'ஞானி'- ஞானியேதான்!பக்குவப்படி பக்தர்களை வரிசை செய்யும்போது ஆர்த்தன், அர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு, ஞானி என்பதுதான் ஸரி. ஆனாலும் ச்லோக ரூபத்தில் சொல்லிக் கொண்டு போகிறபோது, ரஸனை ஸமஞ்ஜமாயிருக்க வேண்டுமென்று (சொல்லமைப்பு முறைபாட்டழகோடு இருக்க வேண்டுமென்று) ஜிஜ்ஞாஸுவை முன்னேயும் அர்த்தார்த்தியைப் பின்னேயும் வைத்தார் போலிருக்கிறது. நமக்கு விஷயம், இதில் நாலாவதான உச்ச ஸ்தான பக்தனை அவர் ஞானி என்று வைத்துக் கொள்ளலாமே!" என்று யாரும் திரிசமன் அர்த்தம் சொல்லமுடியாதபடி அவனை 'ஏக பக்திக்காரன்'என்று அடுத்தாற்போலவே சொல்லி, 'ஞானியும் நானும் ஒன்றே என்பது என் ஸித்தாந்தம்'- 'ஞானி - த்வாத்மைவ மே மதம்'என்று முத்தாய்ப்பு வைக்கிறார். அப்புறம் 'பக்தி யோகம்'என்றே (ஸகுண, த்வைத உபாஸனையை) உபதேசம் பண்ணும் போது, பக்தனை ப்ரியன், அதீவ (அதி)ப்ரியன் என்கிறாரே தவிர 'நானே அவன்'என்று சொல்லாததிலிருந்து இங்கே அத்வைத ஞானியைத்தான் சொல்கிறாரென்று தீர்மானிக்கிறது. 'பக்தியோக'உபதேசத்தில், 'நிர்குண ஸாதனை தேஹப் பிரக்ஞையுள்ளவர்களுக்கு க்லேசம் தருவது,

துக்கமானது'என்று சொல்லி ஸகுண உபாஸனையான பக்தியை விஸ்தரிக்கிறார். அதாவது தேஹ ப்ரக்ஞை ஜாஸ்தியுள்ளவர்களுக்கு ஞான வழி லேசில் வராது என்பதால்தான் ஸகுண பக்தியைச் சொல்கிறாரேயன்றி, ஞானத்தைவிட அதுதான் உத்தமானது என்ற அபிப்ராயத்திலில்லை என்று நன்றாகத் தெரிகிறது. அது இருக்கட்டும். அப்புறம் அந்த பக்தி உபாஸகனின் லக்ஷணங்களை "அத்வேஷ்டா ஸர்வ பூதானாம்'(எந்தப் பிராணியிடமும் வெறுப்பில்லாமலிருப்பது) என்று ஆரம்பித்து ஏழெட்டு ச்லோகங்களில் சொல்லி 'இப்படிப்பட்டவர்கள் எனக்கு அதி ப்ரியமானவர்கள்'என்று அத்யாயத்தை முடித்திருக்கிறார். இங்கே சொல்கிற லக்ஷணங்களெல்லாம் ஞானிக்குச் சொல்கிறவையாகத்தான் இருக்கிறது என்று நடுநிலையில் பார்க்கிற எவருக்கும் தெரியும். பக்தியிலே (பகவானின்) குண கணங்களை அநுபவிப்பது, அழுது, சிரித்து ஆடிப் பாடி மெய் சிலிர்ந்து மூர்ச்சை போடுவது, தாஸ்யம், வாத்ஸல்யம் முதலான பல பாவங்களில் உறவு கொண்டாடுவது, விதவித அபிஷேகம் அலங்காரம் பண்ணிப் பார்த்துப் பார்த்து ஸந்தோஷப்படுவது முதலானவற்றில் எதையுமே 'பக்தியோக'த்தில் ஸ்வாமி சொல்லக் காணோம்!ஸகல ப்ராணிகளிடமும் அன்பு-அருள்;அஹங்கார மமகாரம் இல்லாமலிருப்பது;

ஸுக-துக்கங்களில் ஸம-த்ருஷ்டி;பூரிப்போ, பொறாமையோ, பயமோ, மனக்குழப்பமோ இல்லாமலிருப்பது;எது கிடைத்தாலும் அதில் ஸந்துஷ்டனாக வீடு வாசலை விட்டுவிட்டு இருப்பது என்றெல்லாம் அவர் கொடுக்கிற லக்ஷணங்கள் ஞான மார்க்கக்காரனுடையதாகத்தான் இருக்கிறது. பொதுவாக பக்தர்களை வர்ணிக்கிற மாதிரியும் ஒரு ச்லோகம் கீதையில் சொல்லியிருக்கிறார்.

**மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த : பரஸ்பரம் |**

**கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ||**

'சித்தத்தை என் விஷயமாகவே ஆக்கிக் கொண்டவர்கள், என்கிட்டே ப்ராணனையே வைத்தவர்கள், ஒருத்தருக்கொருத்தர் என்னைப் பற்றியே ஸதாவும்

போதித்துக் கொண்டு என் கதைகளையே பேசிக்கொண்டு அதுவே த்ருப்தி, அதுவே ஆனந்தம் என்று இருப்பவர்கள்'என்று சொல்கிறார். ஆனால் அப்படிச் சொல்வது 'பக்தி யோக'த்தில் இல்லை;'பக்தர்கள்'என்று பொதுவாக நினைக்கப்படுபவர்களைப் பற்றியும் இல்லை. 'விபூதி யோகம்'என்பதில் தம்முடைய ஐச்வர்ய சக்தியே ஸகல விஷயங்களிலும் வியாபித்திருப்பதைச் சொல்கிறபோது தான் இவ்வாறாகத் தம் ஐச்வர்யத்தை எங்கும் தெரிந்து கொண்ட 'புதர்'கள் தம்மிடமே சித்தத்தையும் ப்ராணனையும் வைத்து கதை பேசிக் களிக் கூத்தாடுகிறார்கள் என்கிறார். புதர்கள் என்றால் அறிவு வழியில் போகிறவர்கள். ஆனாலும் வறட்டு வேதாந்திகளாக இல்லாமல் ' பா வ ஸமன்விதர்கள்'என்று அவரே சொல்கிறபடி அன்பு கலந்து ஈடுபாட்டோடு கூடியிருப்பவர்கள். அதாவது ஆசார்யாள் ஞானவழிக்காரன் எப்படி இருக்கணும் என்கிறாரோ அப்படி இருப்பவர்கள். மேற்கொண்டு ஸ்வாமி சொல்கிற போது, இவர்களுக்கு பக்தி யோகத்தைத் தாம் கொடுக்கப் போவதாகச் சொல்லவில்லை;புத்தி யோகமாகிற ஞான மார்க்கத்தையே அநுக்ரஹித்து ஞான தீபத்தால் அவர்களிடம் பாக்கி சாக்கி இருக்கும் அஞ்ஞான தமஸை அழித்துவிடப் போவதாகவே ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்.

முடிக்கிற அத்யாயத்திலும் 'பக்த்யா மாம் அபிஜானாதி'- பக்தியினால் என்னை ஸரிவர அறிகிறவர்'- என்று ஞான ஸமாசாரமாகத்தான் சொல்கிறார். '(ஜ்)ஞா'என்ற வேர்ச் சொல்லிலிருந்துதான் (ஜ்)ஞானம், 'ஜானாதி'என்ற இரண்டும் உண்டாவது. 'பக்தியினால் என்னை உள்ளபடி அறிந்து எனக்குள்ளேயே புகுந்து என் அநுக்ரஹத்தால் அழியாத சாச்வத பதத்தை அடைகிறான்'என்று அத்வைதமாகவே சொல்லியிருக்கிறார். தொடர்ந்து, அர்ஜுனனையும் அப்படி இருக்கும்படி உபதேசிக்கும்போது, 'புத்தி யோகத்தைக் கைக்கொள்ளு'என்றே சொல்கிறார். பக்தி யோகம் என்றில்லை.

ஆக, மணியடித்து பூப்போட்டுப் பூஜையில்லை;பல தினுஸு பா வங்களில் உறவு கொண்டாடுவதில்லை. ஆனாலும் அன்போடு தன்னையே மூல உயிருக்குத் தந்து கொள்கிற உணர்ச்சியாகிய பரம உத்தம பக்தியானது ஞான வழியில்

முக்யமான இடம் பெற்றிருக்கிறதென்று எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டியது.



## மூன்றாவது கட்டம்

ஸாதன சதுஷ்டயத்தில் தேறிய பிறகு மூன்றாவது ஸ்டேஜ், முடிவான ஸ்டேஜ், அதற்குப் போகிறவர்களாக இங்கே யாரும் இருக்க மாட்டார்கள். ஏனென்றால் அது வீடு வாசலை விட்டுவிட்டு ஸந்நியாஸம் வாங்கிக் கொண்ட அப்புறமே அநுஷ்டானம் பண்ணவேண்டிய ஸ்டேஜ். அதனால் அதை விஸ்தாரம் பண்ண வேண்டாந்தநான். ஆனாலும் அத்வைத ஸாதனை என்று ஆரம்பித்து இத்தனை சொன்ன பிறகு அதையும் கொஞ்சம் சொல்லிப் பூர்த்தி பண்ணலாமென்று........

அதில் வரும் அம்சங்களான உபதேசம் கேட்டுக் கொள்வது, கேட்டதை உருப்போட்டுப் போட்டு உறுதி பண்ணிக் கொள்வது, அப்புறம் அதிலேயே அந்தஃகரணத்தை நிறுத்தி தியானிப்பது ஆகிய விஷயங்கள் எல்லாருக்குமே, எந்த மார்க்கத்திலும் போகிறவருக்கும், அடிநிலையிலிருந்து ஆரம்பித்து எல்லா நிலையில் முயற்சி பண்ணுகிறவர்களுக்கும் அவரவர்களின் அவச்யத்திற்கும் சக்தி ஸாமர்த்யங்களுக்கும் ஏற்றபடி அநுஸரிக்கப்பட வேண்டியவையே. அதனால் (அவற்றைப் பற்றிச்) சொல்லாமல் விடக்கூடாது.

## துறவறம்

அத்வைத ஸாதனை என்று அஸலாக வரும்போது அதற்கு ஸந்நியாஸம் முதல் அங்கமாதலால், அதையும் (இங்கே யாரும் அப்படிப் போவார்கள், அல்லது போகணும் என்று இல்லாவிட்டாலும்) சொல்ல வேண்டியதாகிறது. அதில் பாச பந்தங்களை ஒரே போடாகப் போட்டுக் கத்தரிப்பது போல மற்றவர்கள் பண்ணுவதற்கில்லாவிட்டாலும் ஆத்மாபிவிருத்திக்காக எந்த வழியில் முயற்சி பண்ணுகிறவர்களும் ஒரளவாவது இப்படிப்பட்ட பற்றுக்களைக் குறைத்துக் கொள்ளத்தான் வேண்டுமாதலால், ஐடியல் நிலையான ஸந்நியாஸத்தைப் பற்றிக் காதாலாவது கொஞ்சம் கேட்டுக் கொள்வது நல்லதுதான்.

ஆத்மாவைத் தெரிந்து கொள்ளணுமானால் அதே குறியாய், கார்யமாய், சிந்தையாய் இருந்தால்தான் முடியும். மஹா பெரிய சக்தியான மாயையிலிருந்து விடுபடுவது, மஹா பெரிய ஸித்தியாக ப்ரஹ்மமாகவே ஆகிறது என்றால் அந்த லக்ஷ்யம் ஒன்றுக்கே டெடிகேட் பண்ணிக் கொண்டு அது ஒன்றிலேயே பற்றாக, அதுவே கார்யமாக இருந்தாலொழிய எப்படி முடியும்? மற்ற பற்றுக்கள், கார்யங்களையுமே வைத்துக் கொண்டு இதையும் பண்ணுவது என்றால் அந்த மாயையும் இந்த ஞானமும் எப்படி ஒரே ஸமயத்திலே சேர்ந்து வரும்?ஒரு பக்கம் அடுப்பிலே ஜலத்தைக் கொட்டிக் கொண்டே இன்னொரு பக்கம் விசிறி விசிறி மூட்டப்பார்க்கிற மாதிரிதானிருக்கும்!....... இப்படி மற்ற கார்யங்களையும், மற்ற பற்றுக்களையும் விடுவதுதான் ஸந்நியாஸம்.

அதைப் பண்ணினவிட்டுந்தான் (ஸந்நியாஸம் ஏற்ற பிறகுதான்) 'இந்த ஜீவன் ஸாக்ஷாத் ப்ரஹ்மம்தான்'என்று வேதமே சொல்கிற மஹாவாக்யங்களில் உபதேசம் பெற ஒருத்தருக்கு யோக்யதா ஸித்தி கிடைக்கிறது. ப்ரஹ்மம் என்றால் வேதம் என்றும் ஒரு அர்த்தம். ப்ரஹ்மமான வேதமே ப்ரஹ்மமாக ஜீவனைத் தெரிவிப்பதான 'மஹா வாக்யங்கள்'என்கிற மந்த்ரங்களுக்குத் தனிப்பட்ட சக்தி

உண்டு. 'ஜீவன் ப்ரஹ்மமே'என்ற கொள்கையை நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டு அதுவே த்யானமாயிருந்தால் மட்டும் அந்த லக்ஷ்யம் லேசிலே அனுபவமாகி விடாது. அந்தக் கொள்கையை இந்த வேத மந்த்ர அக்ஷர ஸமூஹங்களாலான மஹாவாக்யங்களின் மூலம் ஜபித்து ஜபித்து, த்யானித்து த்யானித்து அப்யஸித்தால்தான் லக்ஷ்ய ஸித்தி ஸுலபாகும். 'ஸுலபம்'என்றால் ரொம்ப 'ஈஸி'யில்லை;கம்பேரடிவ் ஆகச் சொன்னது. குளிக்க வேண்டுமென்றால் நம் புதுசாகக் கிணறு வெட்டிக் கொள்கிற மாதிரி நாமே அத்வைத சிந்தனையாயிருந்து ஸாக்ஷாத்ரிக்க ப்ரயத்தனப் படுவது. வெட்டி வைத்த கிணற்றிலிருந்து இழுத்துக் கொள்கிற மாதிரி, உபநிஷத் மஹாவாக்யத்தின் மூலம் அதே லட்சியத்தை அடைவது. இழுத்துத்தான் ஆகணும்!திருப்பி விட்டவுடன் குழாய் கொட்டுகிற மாதிரி இல்லை!குடத்தின் ஸைஸ், கிணற்றின் ஆழம் இவை அவரவர் ஸம்ஸ்காரத்திற்கேற்ப மாறும்!சின்னக் குடத்தாலே ஆழக்

கிணற்றிலிருந்து பல தடவை இழுக்கிறார்போலவும் சில பேர் ப்ரயாஸைப்பட வேண்டியிருக்கலாம். ஆனாலும் நாமே புதுசாகக் கிணறு வெட்டிக்கொள்வதோடு 'கம்பேர்'பண்ணினால்?

இது 'protected water' (பாதுகாவல் செய்த ஜலம்) (இதற்கு பாராக்காரன் போட்டிருக்கிறது!அவன் allow பண்ணினால்தான் ஜலம் எடுத்துக் கொள்ள முடியும்!அந்தப் பாராக்காரனுக்குத்தான் குரு என்று பெயர்!

சப்த ஸமூஹங்களான மந்த்ரங்கள் ஆகாசத்திலே பவியிருக்கிற பரமாத்ம சக்தியையும் அநுக்ரஹத்தையும் பல விதங்களில் இழுத்துப் பிடித்துக் கொண்டு வந்து பலவிதமான இஹ பர நலன்களை நமக்கு உண்டாக்குபவையாகும். அம்மாதிரி இருப்பவற்றில் உச்சிக் கொம்பில் ஜீவாத்மாவை அந்தப் பரமாத்மாவோடேயே அபேதமாக ஐக்யப்படுத்துகிறவையே 'மஹா வாக்யங்கள்'என்கிறவை. "ஆத்ம ஜ்ஞான ப்ரபோத க்ருச்-சப்திகாய ம்"-'(அஞ்ஞானத்தில் தூங்கிக் கொண்டிருக்கும்

ஜீவாத்மாவுக்குள் அத்வைதமான) ஆத்ம ஞானத்தை விழிப்புறுத்துகிற சப்தங்களைக் கொண்டவை'என்று ஆசார்யாள் மஹாவாக்யங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். தூங்குகிறவனை டமாரம் கொட்டி

எழுப்புகிறதுபோல குரு இந்த மஹாவாக்ய டமாரத்தைக் கொட்டி சிஷ்யனுக்கு ஞான விழிப்பைத் தருவதாகச் சொல்லியிருக்கறார்.

அந்த குரு யோக்யதை பார்த்துத்தான் ஒருத்தனை (சிஷ்யனாக) அங்கீகாரம் பண்ணி (ஸந்நியாஸ) ஆச்ரமம் கொடுத்து மஹாவாக்யோபதேசம் பண்ணுவார். ஸாதன சதுஷ்டயத்தில் பார்த்த விவேக வைராக்ய சம தமாதிகளில் ஒரளவு நன்றாக முன்னேறியிருப்பதுதான் அந்த யோக்யதை.

வேதத்திற்கு இருக்கப்பட்ட ஆயிரத்து நூற்றெண்பது சாகைகளில் (கிளைகளில்) ஒவ்வொன்றுக்கும் ஒரு உபநிஷத்தும் அந்த உபநிஷத்தில் ஒரு மஹா வாக்யமும் உண்டு. இப்படி ஆயிரத்து நூற்று சொச்சம் இருந்தாலும் ஒவ்வொரு வேதத்திற்கும் முக்யமான ஒன்றாக நாலு மஹா வாக்யங்களை எடுத்திருக்கிறார்கள். ஸந்நியாஸ தர்மங்களை விஸ்தாரமாக சொல்கிற 'விசேவச்வர ஸ்ம்ருதி', 'நிர்ணய ஸிந்து'என்கிற நிபந்தனம் (தர்ம சாஸ்திரத் தொகுப்பு நூல்), மற்றும் அநேக தர்ம சாஸ்திரத் தொகுப்பு நூல் மற்றும் அநேக தர்ம சாஸ்திரப் பிரமாணங்கள், ஸத் ஸம்பிரதாயங்களில் வந்துள்ள வழக்கு ஆகியவற்றிலிருந்து ஸந்நியாஸ தீக்ஷையின் போது இந்த நாலு மஹாவாக்யங்களையும் உபதேசிக்க வேண்டுமென்று தெரிகிறது. அதோடு கூட இன்னும் பல மஹாவாக்யங்களை குரு உபதேசிக்கவும் இடம் இருக்கிறது. தீக்ஷை வாங்கிக் கொள்கிறவன் பூர்வாச்ரமத்தில் எந்த சாகையைச் சேர்ந்தவனோ அந்த சாகையில் வருகிற மஹாவாக்யத்தையும் அடிஷனலாக உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்றும் ஒரு ஸம்பிரதாயத்திலிருக்கிறது. ப்ரணவத்தை முதலில் உபதேசித்து விட்டு, அப்புறம் மற்ற மஹாவாக்யங்களை உபதேசிக்கும் வழக்கமும் உண்டு.

இப்படி உபதேசம் கேட்டுக் கொள்வதற்குத்தான் 'ச்ரவணம்'என்று ப்ரம்ம வித்யா சாஸ்திரத்தில் பேர். 'ச்ரவணம்'

â¡ø£™ «ï˜ Ü˜ˆî‹ '«è†´, ªè£œõ¶'. Ü¬î ñý£õ£,«ò£ð«îê‹
ªðÁõ¶ â¡ø Ü˜ˆîˆF«ô«ò F¼Íô¼‹, 'ªîO¾ º¼M¡ F¼õ£˜ˆ¬î
«è†ì™'â¡Á ªê£™LJ¼‚Aø£˜. '«è†ì½ì¡ C‰Fˆî™
ªñŒªîOî™'â¡Á î£»ñ£ùõ¼‹ ªê£™LJ¼‚Aø£˜. „óõí - ñùù-
GFˆò£úùˆ¬î«òî£¡ «è†ì™, C‰Fˆî™ - ªñŒªîOî™ â¡Á
ªê£™LJ¼‚Aø£˜. F¼Íô¼‹ 'F¼õ£˜ˆ¬î «è†ì™'â¡ø¬îò´ˆ¶
'ªîO¾ º¾¾ C‰Fˆî™î£«ù!'â¡Á ªê£™LJ¼‚Aø£˜. Þƒ«è
'º¼ à¼'â¡ðîŸ° º¼ ªè£´ˆî ñ‰ˆó¬î à¼Š«ð£´õ¶ â¡Á Ü˜ˆî‹.
'à¼'â¡ðîŸ° ñ‰Fó üð‹, Üî£õ¶ ñùù‹, â¡«ø Þ¼‚Aø
Ü˜ˆ¬îˆî£¡ Þƒ«è â´ˆ¶‚,ªè£œ÷ «õ‡´‹. ãªù¡ø£™ Þ‰î‚,
ªêŒ»O¡ ºî™ ð£îˆF«ô«ò 'ªîO¾ º¼M¡ F¼«ñQ è£‡ì™'â¡Á
õ‰¶ M´Aø¶. 'F¼«ñQ'â¡ð¶ à¼õ‹ î£«ù? âù«õ Ü¬î«ò
ñÁð® ï£ô£‹ ð£îˆF½‹ ªê£™ô «õ‡®ò ÜõCòI™¬ô.
Üîù£™ Þƒ«è àð«îê ñ‰Fóˆ¬î à¼Š«ð£´õ¶ â¡«ø Ü˜ˆîñ£°‹.
ÞŠð® à¼Š«ð£´ Ü«î C‰î¬ùò£J¼Šð¶ î£ù£è«õ
GFˆò£úùñ£ù ªñŒ ªîOL™ ªè£‡´ «ê˜‚,°ñ£îô£™ Ü¶¾‹
ÞF«ô«ò ÜìƒAùî£è â´ˆ¶, ªè£œ÷ «õ‡´‹.

'ஸந்ந்யஸ்ய ச்ரவணம் குர்யாத்'- 'துறவறம் பூண்டு ச்ரவணம் செய்வாயாக'- அதாவது ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டுதான் ச்ரவணம் செய்ய வேண்டும் என்றே (ஆன்றோர் வசனம்) இருக்கிறது.

எங்கேயும் போகாமல் இருக்கிற இடத்திலேயே நிர்குண ப்ரஹ்மமாக முக்தி அடைவதே இந்த ச்ரவணத்தின் லக்ஷ்யம். இதற்குக் கீழ்பட்டதுதான் ஸூர்ய கதியிலே ப்ரஹ்ம லோகத்திற்கு உயிர் போய் ஸகுண ப்ரஹ்மத்தோடு சேர்வது. அதை அடையவுங்கூட நல்ல பக்குவமான ஒரு ஜீவன் - சாந்தனாகவும் வித்வானாகவும் இருப்பவன்- வீட்டைவிட்டு அரண்யத்திற்குப் போய் பிக்ஷை வாங்கி ஜீவித்துக்கொண்டு தபஸிருக்கணும்மென்று முண்டகோபநிஷத் சொல்கிறது. அப்படியானால் நிர்குண தத்வத்தில் உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டியவன் ஸந்நியாஸம் பெற்றுக்கொண்டுதானே ஆகவேண்டும்?அடுத்த மந்திரத்திலேயே இவனைப் பற்றியும் சொல்லிவிடுகிறது. லோகத்தையெல்லாம் அவன் பரீக்ஷை பண்ணிப் பார்த்து,

'இதிலே ஸகலமும் கர்மத்தில் கட்டுப்பட்டதாகவே இருக்கிறது. நம் லக்ஷ்யமான ஆத்மாவோ கர்மத்திற்கு அகப்படவே அகப்படாது. ஆகையால் ஸகல கர்மாவையும் விடுவோம்'என்று தீர்மானிக்கிறான். அதாவது ஸந்நியாஸி ஆவதற்கு தயாராகிறான். அதை குருமுகமாகவே பண்ணணும் என்று குருவைத் தேடிப் புறப்படுகிறான். 'குருமுகமாகவே, குருமுகமாகத்தான்'என்று தெரிவிப்பதற்காக 'குரும் ஏவ'என்று உபநிஷத் சொல்கிறது. 'விஷயமெல்லாம் தெரிந்த சாஸ்திரஜ்ஞனுங்கூடத் தானே ஸ்வதந்திரமாக ப்ரஹ்ம ஞானம் அடைந்து விடலாமென்று முயற்சி பண்ணக் கூடாது என்று தெரிவிக்கவே 'குரும் ஏவ'

போட்டது என்று ஆசார்யாள் விளக்கியிருக்கிறார்.

அந்த உபநிஷத்திலேயே பின்னாடி ஒரு இடத்திலே, 'ஏதோ ஆத்ம விஷயத்திலே பூஞ்சையாக இருக்கிறவனாலேயும், பிரமித்து நிற்கிறவனாலேயுந்தான் ஆத்மாவை அடைய முடியாது என்றில்லை;'அலிங்க'னாக (அதாவது, அதற்குரிய அடையாளம் இல்லாதவனாக) இருக்கும்வரை தபஸ் பண்ணுகிறவனால்கூட அதை அடைய முடியாது தான் என்று வருகிறது. அலிங்கம் என்பது ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளாமலிருப்பதுதான் என்று ஆசார்ய பாஷ்யம்.

ப்ருஹதாரண்யகத்திலும், 'ஆத்மலோகத்தை இச்சிக்கிறவன் இஹலோகத்து வீட்டைவிட்டு ஸந்நியாஸியாகப் புறப்படுகிறான். ஏனென்றால் பூர்வ காலத்தில் ஆத்மவித்யை அப்யஸித்த வித்வான்கள் அப்படித்தான் பிள்ளைக்குட்டி ஆசை சொத்து ஆசை, தேவலோகங்களை அடையும் ஆசை எல்லாவற்றையும் தூக்கி எறிந்துவிட்டுப் பிச்சைக்கார ஆண்டியாகப் புறப்பட்டு போனார்கள்'என்று ஸந்நியாஸ க்வாலிபிகேஷனை விதித்திருக்கிறது.

எதிலேயும் அபிப்ராய பேதம் மாதிரி ஒன்று வருவது, அப்புறம் (பேதமில்லை என்று) ஸமாதானம் பண்ணுவது - என்று சில ஸமாசாரம் வரத்தான் செய்யும். அப்படி இந்த ப்ருஹதாரண்யகத்திலேயே இதற்கு முன்னாடி ஒரு இடத்தில் 'ஆத்மாநம் விதித்வா'(அதாவது) ஆத்மாவைத் தெரிந்து கொண்டு பிள்ளைக்குட்டி ஆசை, சொத்து ஆசை, பரலோகங்களில் ஆசை முதலானதைத் தூக்கிப்

போட்டுவிட்டு ஆண்டிப் பிச்சைக்காரர்களாக ஓடுகிறார்கள் என்று இருக்கிறது. 'ஆத்மாவைத் தெரிந்துகொண்டு'என்றால் 'ஆத்ம ஞானம் ஸம்பாதித்துக் கொண்ட பிறகு என்றுதானே தோன்றுகிறது?ஸம்பாதித்துக் கொள்வதற்காகவே அதாவது அதற்கு முந்தி ஸந்நியாஸ தகுதியை வைத்திருப்பதாகச் சொன்னதற்கு மாறாக ஞான ஸம்பாதனைக்கு அப்புறமே ஸந்நியாஸம் என்றல்லவா இங்கே இருக்கிறது?- இப்படிக் கேள்வி வருகிறது. ஊன்றிப் பார்த்தால் பதில் கிடைக்கிறது. என்னவென்றால் அந்த மந்திரத்திலேயே அப்புறம், ஞானி எப்படி நடந்து கொள்வான்?என்று கேட்டு, எப்படி வேண்டுமானாலும் நடந்து கொள்வான். அதெப்படியானாலும் அவன் ஞானிதான்'என்று சொல்லியிருக்கிறது. அதாவது அவனுக்கு இதுதான் விதி, இப்படித்தான் இருக்கணும் என்ற சாஸ்திரக் கட்டுப்பாடு எதுவுமில்லை என்று அர்த்தம். அப்படிப் பட்டவன் சாஸ்திரோக்தமான நாலு ஆச்ரமங்களில் கடைசியான ஸந்நியாஸத்தை ஸ்வீகரிக்க வேண்டும் (ஏற்க வேண்டும்) என்பது பொருத்தமில்லைதானே?ஆனபடியால், (ஆத்மாவைத்) 'தெரிந்துகொண்டு'என்பதற்கு அநுபவத்தில் தெரிந்துகொண்டு'என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளாமல், புத்தியினால் தெரிந்து கொண்டு என்று அர்த்தம் பண்ணிக் கொண்டால் ஸரியாகி விடும். அத்வைத சாஸ்திர விஷயங்களைப் படித்தும் கேட்டும் அது ஸத்யந்தான் என்று புத்தியில் உறுதியாகத் தெரிந்து கொண்டவன் ஆசைகளை தூக்கிப் போட்டுவிட்டு ஸந்நியாஸியாகிறான் என்பதே இங்கே

சொல்லியிருப்பதென்று தெளிவுபடும்.

எனக்குப் பூர்ணகும்பம் கொடுக்கிறபோது - உங்கள் அகத்துக் கல்யாணம் கார்த்திகைகளில் ஆசார்ய ஸம்பாவனை பண்ணுகிறபோதுகூட - ஒரு மந்த்ரம் சொல்கிற வழக்கமிருக்கிறதே, அதில் ஸந்நியாஸ யோகத்தினால் ('யோகாத்') அந்தஃகரணம் சுத்தமானவர்கள் என்று ஞானியைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இதனாலும் முதலில் ஸந்நியாஸம் அப்புறம் அதன் மூலமே சுத்தியாகி ஞானம் பெறுவது என்றே உபநிஷத் விதி பண்ணியிருப்பது தெரிகிறது.

ஸந்நியாஸாச்ரமத்திலிருக்கிறவன், அவனுக்கும் மேலே

போய்த் தானே தனக்கு சாஸ்திரம் என்று இருக்கிற அஸல் ஞானி ஆகிய இரண்டு பேரையும் அத்யாச்ரமி என்று சொல்வது. 'ச்வேதாச்வதரோபநிஷத்' முடிவில் அப்படிப்பட்ட அத்யாச்ரமிகளுக்கே அதை உபதேசித்ததாக வருகிறது. கைவல்யோபநிஷத் என்று ஒன்று. அதிலிருந்து ஆசார்யாள் Quoteபண்ணுவதுண்டு. அதில் ஆரம்பத்தில், அத்யாச்ரமஸ்தன் ஏகாந்தமான இடத்திற்குப் போய், 'ஸ்ட்ரெய்'டாக ஆஸனம் போட்டுக்கொண்டு உட்கார்ந்து கொண்டு, நன்றாக இந்த்ரிய நிக்ரஹம் பண்ணி ஆத்மாவாகிய சிவ ஸ்வரூபத்தைத் தியானிக்கிறான் என்று இருக்கிறது.

ச்ரவணத்திற்கு அப்புறம் மனனமும், நிதித்யாஸனமும் அல்லவா?'ஸந்நியாஸியாகியே சிரவணம் செய்ய வேண்டும்'என்கிற மாதிரியே 'மனன - நிதித்யாஸனங்களில் ஸந்நியாஸிக்குத்தான் அதிகாரம்:மநநாதௌ ஸந்நியாஸிநாம் அதிகார:' என்றும் வாக்கியம் இருக்கிறது.

ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஸந்நியாஸிகளை 'ஊர்த்வரேதஸ் என்று சொல்லியிருக்கிறது. ஊர்த்வரேதஸ் என்றால் சக்தியைக் கீழ்த்தரமான இந்திரிய வியாபாரத்தில் வீணடிக்காமல் மேலான வழியில் கொண்டுபோனவர்கள். அதாவது, ஸந்நியாஸிகள். அந்த இடத்தில் வரும் ஸூத்ரங்களையும் ஆசார்யாள் பாஷ்யத்தையும் பார்த்தால் அவர்கள்தான் (அத்வைத ஸாதனையில்) மூன்றாம் ஸ்டேஜுக்கு க்வாலிஃபை ஆனவர்கள் என்று தெரியும். ஞானி ஸந்நியாஸியாகத்தான் இருப்பான், இருக்கணும் என்பது தெரியும்.

ப்ரஹ்மஸூத்ரத்திற்கே பிக்ஷுஸூத்ரம் என்றும் பேர். பிக்ஷு என்றாலும் ஸந்நியாஸி என்றாலும் ஒன்றுதான். வீட்டுச்சாப்பாடு இல்லாமல் பிக்ஷையால் ஜீவிப்பவன் பிக்ஷு. ப்ரஹ்மவிசாரத்திற்கே ஏற்பட்ட புஸ்தகத்திற்கு இப்படிப் பேர் இருப்பதும் ஸந்நியாஸிதான் அதிகாரி என்று காட்டுகிறது.

ஒரு விஷயம் கீதையில் வந்துவிட்டால் அதைவிட ஸர்டிஃபிகேட் இல்லை!ஸந்நியாஸிக்குத்தான் ச்ரவணாதிகளில் அதிகாரம் என்று பகவான் அபிப்ராயத்தில் வந்திருக்கிறதா என்று பார்த்தால், வந்திருக்கிறது. 'ஸகல

கர்மமும் கடைசியில் ஞானத்தில் போய்தான் ஸமாப்தியாகின்றன'என்று பகவான் சொல்லி, உடனேயே,

'தத்வ தர்சிகள் ஞானத்தை உபதேசிப்பார்கள். அவர்களுக்கு நமஸ்காரம், பணிவிடை பண்ணி நன்றாகக் கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்'என்கிறார். கர்மா ஸமாப்தியாயிற்றென்றால் அப்புறம் ஸந்நியாஸ ந்தானே?அப்படிப்பட்ட ஸந்நியாஸிக்குத்தான் ஞானோபதேசம் பெறத் தகுதியுண்டு என்றுதானே ஸ்வாமி சொல்வதற்கும் அர்த்தம்?

ஸத்யந்தான் பர தத்வம், தபஸ்தான் பர தத்வம்;இல்லை, தமந்தான்;சமந்தான் - என்பதாகப் பரதத்வம் எது என்பதைப் பற்றியுள்ள பல அபிப்ராயங்களை 'நாராயணவல்லி'யில் சொல்லி, ஒவ்வொன்றின் பெருமையையும் காட்டியிருக்கிறது. ஆனால் முடிவில், இது எதுவுமே பர தத்வம் இல்லை. ஸந்நியாஸந்தான் பர தத்வம். பர தெய்வமாக இருக்கப்பட்ட பிரம்மாவே அப்படிச் சொல்லியிருக்கிறார் என்று முடித்திருக்கிறது.

ஆத்மாவைத் தெரிந்து கொண்டேயாக வேண்டும் என்ற ஸாதனையில் மேல் கட்டத்திற்குப் போகும்போது கர்மாவை விட்டு ஸந்நியாஸியானால்தான் முடியும். கர்மா தொட முடியாத வஸ்து ஆத்மா. அதை அதே விசாரமாக த்யானித்து, த்யானித்து, அப்புறம் அந்த த்யான கர்மாவும் நின்றுபோய்விடுகிற நிலையில்தான் தெரிந்து கொள்ள முடியும். 'கர்மாவும் பண்ணிக் கொண்டே த்யானமும் வைத்துக் கொள்கிறேன்'என்றால் ஸரியாக வராது. கர்மாவிலிருக்கிற வரையில் அதை ஒட்டினதாகப் பல விதமான ஸங்கங்கள்- 'ரிலேஷன்ஷிப்'கள் - இருந்தே தாரும். 'ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: ...க்ரோத:'என்று ஸ்வாமி சொன்னபடி ஒன்றிலே அஸோஸியேஷன் ஏற்பட்டால் அதிலிருந்து காமம், க்ரோதம் என்று ஒவ்வொன்றாக ஏற்பட்டுக் கொண்டே போய் கடைசியில் 'புத்தி நாசாத் ப்ரணச்யதி'(அறிவு அழிந்து விநாசம் அடைகிறான்) என்றே முடியும். அதனால்தான் ஆசார்யாள் 'கர்ம கோடிபி:ந சக்ய:' - 'கோடி கர்மா பண்ணினாலும் பந்தத்தை வெட்டிப்போட

முடியாது. விவேக விஜ்ஞான மஹாஸிநா விநா

தாது:ப்ரஸாதேன சிதேன மஞ்ஜுநா- நித்யா நித்ய வஸ்து விவேகத்தில் ஆரம்பித்து அநுபவ ஞானம் என்கிற விஞ்ஞானத்தில் முடியும் ஸாதனை என்ற சாணை தீட்டிய பெரிய கத்தியால் ஈச்வர ப்ரஸாதத்தின் மூலமே வெட்ட முடியும்'என்று சொல்லியிருக்கிறார்.

இப்படி பந்தத்தைக் கத்தரிப்பதற்கே வாழ்க்கையை அர்ப்பிக்க வேண்டுமானால் குடும்பம், உறவுகள், உத்யோகம் ஆகியவைகளையும் வைதிக கர்மாநுஷ்டானங்களையுங்கூடக் கத்தரித்து போட்டுவிட்டுப் புறப்பட்டாலொழிய முடியாது.

ஆனால் ஒன்று மறக்கவே கூடாது. யார் வேணுமானாலும் கர்மாநுஷ்டானங்களை விட்டுவிட்டு "ஸந்நியாஸியாகிறேன்"என்று கிளம்பலாமென்று ஆசார்யாள் சொல்லவேயில்லை. சித்த சுத்தி ஸம்பாதித்துக் கொண்டவனுக்கு மட்டுந்தான் அந்த ரைட் உண்டு என்று அவர் ரூல் பண்ணியிருக்கிறார். எப்படி ஸம்பாதித்து கொள்வதென்றால், கர்மாநுஷ்டானம்

அத்தனையும் குறைவறப் பண்ணுவதன் மூலந்தான் என்றும் தீர்மானமாகச் சொல்லியிருக்கிறார். கோடி கர்மாவாலேயும் பந்தச் சேதம் ஏற்படாது என்றவர், அபக்குவிகள் இதைப் பிடித்துக் கொண்டு அவரவருக்கும் ஸ்வதர்மமாக ஏற்பட்ட கர்மாநுஷ்டானங்களை விட்டுவிட்டு அடியோடு வீணாகிவிடப் போகிறார்களோ என்ற கருணையினால் அடுத்த ச்லோகத்திலேயே விஷயத்தைத் தெளிவுபடுத்துகிறார்.

ச்ருதி ப்ரமாணைகமதே:ஸ்வதர்ம-

நிஷ்டா தயை வாத்ம விசுத்திரஸ்ய |

விசுக்தபுத்தே:பரமாத்ம வேதநம்

தேனைவ ஸம்ஸார - ஸமூல - நாச: ||

பின்பாதியில் 'சித்த சுத்தி பெற்றவனுக்குத்தான் பரமாத்ம ஞானமுண்டாகி அதன் மூலமே ஸம்ஸார பந்தம் என்பது

ஸமூலம் (வேரோடு) அழிந்து போகிறது'என்று சொல்கிறார். அந்த சுத்தி எப்படி உண்டாகும் என்பதை முன்பாதியில் சொல்கிறார். ஸ்வதர்மத்தில் எவன் 'நிஷ்டை'என்னும்படியான உறுதியாக நிலைத்த ஈடுபாடு பெற்றிருக்கிறானோ அவனுக்குத்தான் சித்தம் சுத்தியாகிறது என்கிறார். 'ஸரி, அந்த ஸ்வதர்மம் என்னவென்று எப்படித் தெரிந்து கொள்வது?' என்றால் அதற்கும் ச்லோக ஆரம்பத்திலேயே பதில் வைத்திருக்கிறார்:'ச்ருதி ப்ரமாணைகமதி:' அதாவது வேதம் என்ன சொல்கிறதோ அதுவே ப்ரமாணம் (அதாரிடி) என்ற ஒரே நம்பிக்கையால் ஸ்வதர்மத்தை அறிந்து அதைப் பூர்ணமாக நடத்தி (அதில்) நிஷ்டனாக வோண்டுமென்கிறார். வேதம் ஸ்வதர்மம் என்று சொல்வது ஸமுதாயத்தை வர்ண விபாகம் பண்ணி (ஜாதி முறையில் அமைத்து) இன்னின்னார் இன்னின்ன கர்மம் பண்ண வேண்டும், அதே மாதிரி, ப்ரம்மச்சாரி இன்ன பண்ணனும் என்றெல்லாம் முக்யமாகக் கர்மாக்களை எடுத்துச் சொல்வதுதான். ஆகையால் வேத ப்ரமாணத்தில் அமைந்த தர்ம நிஷ்டை என்றால் கர்மானுஷ்டானத்தில் நிஷ்டை என்றே அர்த்தம். இவ்வாறு பூர்த்தியாகக் கர்மாக்களைச் செய்துதான் சித்த சுத்தி பெறவேண்டும்;அப்படிப் பெற்றாலே பரமாத்ம ஞானம், பவ பந்த நாசம் என்று சொல்கிறார்.

வேத விதிப்படிக் கர்மாக்கள் செய்கிறபோது சரீர கார்யங்களின் மூலமே சரீரத்தைப் பிழிவது மாத்திரமில்லாமல் மனஸின் அழுக்குக்களையும் பிழிந்து தள்ள முடிகிறது. அப்புறம் கர்மாக்களை நிறுத்திவிட்டு, மனஸின் கார்யமான த்யானத்திலேயே போய், அதற்கும் அப்புறம் அதுவும் நின்றுபோன ஞான நிலையை அடையணும்.

தர்ம நிஷ்டை என்கிற கர்ம நிஷ்டையைப் பெற்ற அப்புறந்தான் ஞான நிஷ்டைக்கு முயற்சி பண்ணணும். இது இல்லாமல் அதற்குப் போகவும் கூடாது. அதற்குப் போகிற யோக்யதை உண்டான பிறகு இதில் ஸம்பந்தம் வைத்துக் கொள்ளவும் கூடாது. ஜலத்தை நிறைய விட்டுப் பிழிந்து தான் துணியிலிருக்கிற அழுக்கை எடுக்க வேண்டும். அதுதான் வழி. அதற்காக அழுக்குப் போன

அப்புறமும் ஜலத்திலேயே போட்டுப் பிழிந்து

கொண்டிருந்தால் என்ன ஆகும்?நைந்து போய்க் கிழிந்துதான் போகும். அப்புறம் காற்றுப் படப்போடுகிறதுதான் ஞான மார்க்கத்திற்குப் போவது!காற்று, ஸூர்ய வெளிச்சம் ஈரத்தை மட்டும் போவது!காற்று, ஸூர்ய வெளிச்சம் ஈரத்தை மட்டும் போக்கும். ஞானமோ துணியையே போக்கி விடும்!இது கிழிசலாக்கிப் போக்குவது போல அதோடு முடிந்து போவதில்லை. ஜீவத் துணியைப் போக்கி அதையே பிரம்மம் என்ற அழிக்க முடியாத தங்கத் தகடாக மாற்றி விடும்!நிஷ்டை என்று ஆத்மாவிலேயே நிலைத்து நிற்பது ஜீவனின் கார்யமாக இல்லாமல், ஜீவனே போய் நிஷ்டையிலே பெற்ற அநுபூதி ஸ்வரூபமான ஸத்வஸ்து மாத்திரமே எஞ்சி நிற்கும் ப்ரசாந்த தத்வமாக 'பராயணம்'என்கிற மேலான புகலிடமாக இருக்கும் ஸ்திதி அது.

---



## விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் தொடர் நாமங்கள்

'நிஷ்டா சாந்தி:பராயணம் என்று (விஷ்ணு) ஸஹஸ்ரநாமத்தில் வருகிறது. அதில் ஒரே விஷயத்தை அழகாக ஸம்பந்தப்படுத்திக்கொண்டு போவதாகச் சில நாமாக்கள் தொடர்ச்சியா வருவதுண்டு. அப்படி ஒரு ஏழெட்டு பேக் ஸந்நியாஸ விஷயமாகவே பூ பூவாகச் சேர்த்து மாலை தொடுத்தாற் போல் வருகிறது.

........................நிர்வாணம் பேஷஜம் பிஷக் |

ஸந்ந்யாஸக்ருத் சமோ சாந்தோ நிஷ்டா சாந்தி:பராயணம் ||

(விரல் விட்டு எண்ணி) இப்படி ஒன்பது நாமாக்கள் ஒரே விஷயமாக வருகின்றன. 'நிர்வாணம்'- அதுதான் ஞான

யோகத்தின் முடிவு. ஸகுணமாக விஷ்ணு என்று இருப்பவனேதான் அப்படி இருப்பவனும். பேஷஜம் என்றால் மருந்து. பவரோகத்திற்கு (ஸம்ஸார வியாதிக்கு) மருந்தான ஞானம் என்று அர்த்தம். 'அருமருந்தொரு தனி மருந்து'என்று பாடுகிற மருந்து.....

முத்துத்தாண்டவர் என்கிற நடராஜா பக்தரின் பாட்டு அது. அவர் (ஸங்கீத) த்ரிமூர்த்திகளுக்கு முற்பட்ட காலத்தில் இருந்தவர். அவரைப் பாம்பு கடித்தபோது நடராஜா தான் மருந்து என்று சொல்லி இந்தப் பாட்டைப் பாடினாராம். உடனே விஷமும் இறங்கி விட்டதாம்.....

கர்மா விஷம் ஏறியபோது ஞானமான விஷங்கொல்லிப் பூண்டாக வருகிறவன் பகவான்தான். மருந்தும் அவனே, மருந்து தருகிற வைத்தியனும் அவனே!அதைத்தான் 'பிஷக்'என்று சொல்லியிருக்கிறது. இங்கே திருவான்மியூரில் ஸ்வாமி மருந்தீச்வரராக இருக்கிறார். வைத்தீச்வரன் கோவில் என்றே பேர் உள்ள ஊரில் 'பவரோக வைத்யநாத ஸ்வாமி'என்று ஸம்ஸார வியாதியைத் தீர்க்கிற ஞானாச்சார்யனாக இருக்கிறார். 'கீதை என்ற மருந்தைக் கொடுத்த டாக்டர்'என்று ஆசார்யாள் (விஷ்ணு ஸஹஸ்ரநாம) பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார்.

கீதையின் ஸ்வாமி முடிவாகக் கொடுத்த மருந்து என்னவென்றால் ஸந்நியாஸந்தான். கர்ம யோகத்தின் வழியாக ஞான யோகத்தில் ஸந்நியாஸத்திற்குத்தான் அழைத்துக் கொண்டு போய் முடித்திருக்கிறார். ஆயுர் வேதத்தில் பேதிக்குக் கொடுத்துவிட்டு அப்புறம் மருந்து தருவதுண்டு அப்படிக் கர்மாக் கழிசடை எல்லாம் போகவே கர்ம யோகத்தை கொடுத்துவிட்டு, அப்புறண் மருந்தாக ஞானத்தைக் கொடுக்கும்போது ஸந்நியாஸ்த்தை விதித்திருக்கிறார். ஆதியில் நாலு ஆச்ரமங்களையும் அவர்தான் உண்டாக்கி, அந்த்யாச்ரமமாக (முடிவிலுள்ள ஆச்ரமாக) இதை ஏற்படுத்தியவர். 'ஸந்யாஸக்ருத்'என்ற நாமா அதைத்தான் தெரிவிக்கிறது.

ஸந்ந்யாஸக்ருத் சமோ

சமோ, சமம், சமம் என்று நிறைய பார்த்துக் கொண்டு

போனோமே அதுவும் பகவத் ஸ்வரூபம்தான். மனஸ் அடங்குவது - அதுதானே சமம்?-அதுதான் ஞான யோகத்தின் உயிர்நிலை. துளிக்கூட அடங்காமல் அடங்காப் பிடாரியாக இப்போது

நமக்கு இருப்பதிலிருந்து, துளித் துளியாக அது அடங்கிக் கொண்டே போவதில் எத்தனையோ ஸ்டேஜ்கள். முடிவில் துளிக்கூட மனஸ் என்று ஒரு வஸ்து இல்லாமல் அது அப்படியே ஆத்மாவிலே அடங்கிப் போவதுதான் ஸித்தி ஸ்தானம். அதுதான் ஸந்நியாஸிக்கு லக்ஷ்யம். நான்கு ஆச்ரமிகளில் ஒவ்வொருத்தனுக்கும் இதுதான் தர்மம் என்று சொல்கிற ஒரு ஸ்ம்ருதி 'கொடேஷன்'ஆசார்யாள் இந்த இடத்தில் கொடுத்திருக்கிறார். அதில், ஸந்நியாஸிக்கு சமம் தர்மம்;வான ப்ரஸ்தனுக்கு நியமம் என்ற கட்டுப்பாடான தபோவ்ரதங்கள் தர்மம்;க்ருஹஸ்தனுக்கு தானம் தர்மம்;ப்ர ம்மசாரிக்கு தர்மம் குரு சுச்ரூஷை என்று இருக்கிறது.

அப்புறம் சாந்த:என்று நாமா வருகிறது.'சமம்'என்பதோடு கூடியவன் சாந்தன்.

அதற்கடுத்தபடியாகத்தான் 'நிஷ்டா'என்றே நாமம் வருகிறது. ஸந்நியாஸியாகி, மனமடங்கப்பெற்ற சாந்தனாகி ஒருவன் ஞானுபவத்திலேயே நிலைத்து நிற்கிற நிஷ்டையில் நிற்கிறானே, அந்த நிலையும் பகவான்தான். ஸகுணத்தில் பகவானாக இருப்பவன் நிர்குணத்தில் இப்படி இருக்கிறான்.

அந்த நிலையிலிருக்கிற அமைதியை 'சாந்தி'என்றும் அதுதான் பரமான goal என்பதைப் பராயணம் என்றும் இரண்டு நாமாக்களாக் கொடுத்திருக்கிறது.

---

## வேதக் கட்டளையாகவே சிரவணம் முதலியன

ஸந்நியாசத்துடன் மஹாவாக்ய உபதேசம். அதைப் பெற்றுக் கொள்வதே ச்ரவணம். உபதேசத்தை உருப்போட்டு, அலசி, அலசி ஆராய்ந்து உறுதிப்படுத்திக் கொள்வதான 'மனனம்'என்பதும், அப்புறம் அதைப் பிரத்யக்ஷ

அநுபவமாக்கிக் கொள்வதற்காகச் செய்யும் த்யானமாகிய 'நிதித்யாஸனம்'என்பதும் ஸாதனையைக் கம்ப்ளீட்'பண்ணிவிடுகின்றன.

இந்த மூன்றும் (ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம்) வேதக்கட்டளையாகவே ஏற்பட்டவை. சமம், தமம், உபரதி, திதி, முதலியவற்றைச் சொல்லும் அதே உபநிஷத் வாயிலாகத்தான் இந்த மூன்றையும் வேதம் கட்டளையிட்டிருக்கிறது. சமம், தமம் முதலியவற்றை நேரே கட்டளையாக ஆர்டராக போடாமல் ஒரு ஞானி அந்த ஆத்ம ஸம்பத்துக்களை உடையவனாக - சாந்தனாக, தாந்தனாக, உபரதனாக எல்லாம் - இருப்பான் என்று சொல்வதன் மூலம் மறைமுக விதியாகத்தான் விதித்திருக்கிறது. ஆனால் இந்த மூன்றையோ 'இன்ஜங்க்ஷன்'என்கிறார்களே, அப்படி அதிகார பூர்வமான கட்டளையாகவே போட்டிருக்கிறது. 'ச்ரோதவ்யோ, மந்தவ்யோ, நிதித்யாஸிதவ்யோ - ஆத்ம தத்வமே ச்ரவணம் செய்யப்பட வேண்டும். மனனம் செய்யப்பட வேண்டும். நிதித்யாஸனம் செய்யப்படவேண்டும்'என்று ரூலாகவே கொடுத்திருக்கிறது.

ஒன்றிலிருந்து ஒன்றாக விஷயம் சுவடு விட்டுக் கொண்டு இடத்தில் கீதா ச்லோகங்கள் அமைந்துள்ள விதம் கர்மாவை எல்லாம் விட்டு ஸந்நியாஸியான பிற்பாடே குருவிடம் போய் ஞான யோகத்தில் உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று காட்டுவதாகவே இருக்கிறது. 'கர்மயோகத்தில் வெளி த்ரவ்யங்களை வைத்துக் கொண்டு செய்கிற யஜ்ஞத்தைவிட ஞானயோகமாகிற உள் யஜ்ஞத்தான் ச்ரேஷ்டமானது. எல்லாக் கர்மமும் ஞானத்தில்தான் பூர்த்தியாகிறது'என்று முந்தின ச்லோகத்தில் ஸ்வாமி சொல்கிறார். சொல்லிவிட்டு உடனேயே 'ஸத்ய தத்வத்தை ப்ரத்யட்சத்தில் கண்ட - அதாவது அநுபவித்த - ஞானிகள் உனக்கு ஞானோபதேசம்

செய்வார்கள். அவர்களிடம்போய் தடாலென்று விழுந்து, கேட்டுக் கேட்டு, தொண்டு பண்ணித் தெரிந்து கொள்'என்கிறார். இது வருகிற அத்யாயம் ஞான கர்ம ஸந்நியாஸ யோகம். இதையெல்லாம் பொருத்திப் பார்க்கும்போது கர்மாவை விட்டு, ஒரு ஞானியிடம் போய் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ப்ரஹ்ம வித்யா உபதேசம் பெறுகிறதைத்தான் சொல்லியிருக்கிறாரென்று தெளிவாக புரிகிறது.

காதால் கேட்டுக் கொள்வதைக் கீழ்ப்படிதலுடன் நடத்திக் காட்டுவதற்காகவே ச்ரவணம் செய்வதான சுச்ரூஷை, இதன் இணைபிரியாத அங்கமாக உண்டாகும் பணிவு, அதிலிருந்து உண்டாகும் பணிவிடைப் பணி என்று முறையாகத் தொடர்ந்து போகிறது!காதால் கேட்கும் சுச்ரூஷை எதில் கொண்டு விடுகிறதோ அந்தப் பணிவிடைக்கும் சுச்ரூஷை என்று பெயர் வந்துவிட்டது. கால க்ரமத்தில் பஹு பேருக்கு சுச்ரூஷை என்றாலே பணிவிடைதான் என்று `அர்த்தமாகி, அதற்கு முதல் அர்த்தம் கேட்டுக் கொள்வது என்பதே தெரியாமலாகி விட்டது.

மெய்வருத்தி ஒரு சிஷ்யன் செய்கிற எந்தப் பணிவிடை ரூபமான சுச்ரூஷையையும்விட, தாம் கொடுக்கிற உபதேசத்தை அவன் அதற்கான கௌரவம் கொடுத்துப் பணிவுடன், அந்தரங்க சுத்தத்துடன் அந்தப்படியே பண்ணனும் என்ற தீர்மானத்துடன் கேட்டுக் கொள்வதான சுச்ரூஷையைத்தான் குரு பெரிதாக நினைத்துப் ப்ரீதியடைவார். அவர் கொடுக்கிற ஆத்மதனத்தை இவன் உரியபடி ப்ரயோஜனப்படுத்திக்கொண்டு உயர்வு காண்பதைவிட அவருடைய ஸுக ஸௌகர்யங்களுக்காக இவன் செய்கிற எந்தத்தொண்டையும் பெரிசாக நினைக்கமாட்டார். அவரைப் பொறுத்தமட்டில் இவன் காதால் முறைப்படி கேட்டுக் கொள்கிற சுச்ரூஷையேதான் அவருக்காக இவன் செய்யக்கூடிய மிகப் பெரிய கைங்கர்ய சுச்ரூஷையுமாகும். தமக்கு அவனால் பணிவிடை நடக்கணும் என்பதைவிட தம்மைக் கருவியாக வைத்து வரும் உபதேசத்தால் அவன் உயரணும் என்பதையே அவர் விஷயமாக நினைப்பாராகையால் ச்ரவண சுச்ரூஷையையே பெரிதாகக் கருதுவார். சிஷ்யனைப் பொறுத்த மட்டிலோ அவனுக்கு இரண்டு தினுஸு சுச்ரூஷையும் ஸம ப்ரதான்யம்

(ஒரே போன்ற முக்யத்வம்) வாய்ந்தவையாயிருக்கணும் - உபதேசத்தையும் ஹ்ருதயபூர்வமாகக் கேட்டுக்கொண்டு கார்யத்தில் நடத்தணும்;உபதேசிக்கிற வரையும் ஈச்வரனே என்று புரிந்து கொண்டு அவரிடம் சரணாகதி பண்ணி, முடிந்த எல்லாப் பணிவிடையும் செய்ய வேண்டும்.

உபதேசிக்கப்பட்ட மந்த்ரம் பண்ணுவது பாதி என்றால் உபதேசிக்கிறவரின் அருள் பாதி பண்ணிவிடும்!

புஸ்தகத்திலிருந்து கற்றுக் கொண்டால் அப்போது இதற்கெல்லாம் இடம் ஏது?

---



### சிரவணமும் சுசுரூஷையும்

முதலில் ச்ரவணம். குரு செய்யும் மஹாவாக்யோபதேசத்தைக் கேட்டுக் கொள்வதையே அப்படி முக்யமாகச் சொல்வது. குரு அதோடுகூட உபதேசிக்கிற மற்ற ப்ரஹ்ம வித்யா சாஸ்திர ஸம்பிரதாய விஷயங்களையும் இப்படியிப்படி ஜீவ-பிரம்ம அபேதத்தைப் பற்றி அலசி த்யானம் செய்யவேண்டும் என்று அவர் வழி முறைகள் சொல்லித் தருவதையும், ஸொந்த அநுபவத்திலிருந்து அவர் கற்றுக் கொடுக்கக்கூடியவற்றையும் நன்றாகக் கேட்டுக் கொள்வதும் ச்ரவணந்தான்.

ச்ரவணம் என்றால் காதால் கேட்டுக் கொள்வதென்று மட்டும் அர்த்தமில்லை. அப்படியே ஹ்ருதயத்திலினாலேயே க்ரஹணம் பண்ணி குரு வாக்யத்தைப் பிடித்துக் கொள்வதைத்தான் 'ச்ரவணம்'என்று உபசாரமாகச் சொல்வது. 'சாப்பிடுவது'என்னும்போது வாயால் செய்யும் கார்யமாகத்தான் போஜனத்தைச் சொல்கிறோம். ஆனால் அதன் லக்ஷ்யம், ப்ரயோஜனம் அது வயிற்றுக்குள்ளே போய்

ஜெரித்து ரத்தமாவதுதானே?வாய் என்ற வெளி அவயத்தால் பண்ணுவதைப் போட்டுச் சொல்கிற மாதிரிதான் காது என்பதால் பண்ணும் ச்ரவணத்தைச் சொல்லும், காதால் சாப்பிட்ட உபதேச அம்ருதம் புத்தியிலேயும் போய்விடுவதுதான் தாத்பர்யம். 'என் செவியில் எல்லையில்லா ஆனந்தம் அளித்து'என்று விநாயகரகவ'லில் சொல்லியிருப்பது இப்படி செவி மூலமாகப் போய் முடிவில் ஹ்ருதயத்தில் ஆத்மானந்தம் உண்டாவதைத் தெரிவிக்கிறது.

ஸர்வ வியாபகமான ஆகாச தத்வம் சப்தம் என்பதற்கே உரியது. அதனால்தான் சப்தரூபமான உபதேசங்களைக் கேட்டுக் கொள்வதான ச்ரவணத்திற்கு முக்யத்வம். ஆகாசத்தில் ஈச்வரனின் ச்வாஸத்திலிருந்தே ஸூக்ஷ்ம சப்த வைபரேஷன்களாக வெளிப்பட்டவற்றை ரிஷிகள் அதீந்திரிய சக்தியால் கேட்டு, நம்முடைய ரிஷிகள் அதீந்திரிய சக்தியால் கேட்டு, நம்முடைய காதுகளும் கேட்கும்படிப் பிடித்துக் கொடுத்திருக்கும் சப்தக் கோவைகளே நம்முடைய வேத மந்திரங்கள். அவர்கள் உள் காதால் கேட்டதை நாமும் காதால்- வெளிக் காதால் - தான் கேட்டுக் கொள்ள வேண்டுமேயன்றி, எழுதி வைத்துக் கண்ணால் படித்தல்ல என்றே விதி பண்ணி வைத்திருக்கிறது. ஏனென்றால் அப்போதுதான் ஹ்ருதயாகாசத்திற்குள்ளே பேச வேண்டிய உபதேச தாதபர்யம் அகண்டாகாசம், பரமாத்ம ச்வாஸம், ச்வாஸிக்கும் பரமாத்மா என்பதாக அதன் மூலஸ்தானத்தையே தொட்டுக் கொண்டு, 'ட்ரேஸ்'பண்ணிக் கொண்டு போவதாக இருக்கும். அதனால்தான் ச்ரவணத்திற்கு முக்யத்வம்.

இன்னொன்று : புஸ்தகத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும்போது, புஸ்தகம் ஜட வஸ்து. அது எழுத்தைத் தான் காட்டுமே தவிர, அதன் அர்த்தமான உயிரை ஊட்டாது. உபதேச தத்வத்தை அநுபவித்தறிந்தவனான ஆசாரியன் என்ற உயிருள்ள ஒரு மீடியத்தின் வழியாக அந்த எழுத்துக்கள் வரும்போதே உபதேசம்

உயிரோடு உள்ளே போகும்.

இதெல்லாம் மட்டுமில்லாமல் குருமுக உபதேசம் என்கிறபோதுதான் ஒருவனுக்கு சிஷ்ய பாவம் ஏற்படுகிறது.

அதன் விநயமும், நைச்சியமும் அஹங்கார நசிப்புக்கு ரொம்பவும் அவச்யமாகும். 'கஷ்டமான ஞான யோக ஸாதனையாக்கும் நாம் பண்ணுகிறோம்'என்பதாலேயே தலை தூக்கக் கூடிய தலைக் கனத்தை தலையிலே போட்டு அடக்குவதற்கு குரு என்று ஒரு அநுபவியைக் காட்டி அவருக்கு இவனை சுச்ரூஷை பண்ண வைப்பதே உபாயமாக இருக்கிறது.

சுச்ருஷை என்று சொன்னேன். 'சிச்ரூஷை'என்று தப்பாக சொல்கிறார்களே அது!ரூட் படி அர்த்தம் சொன்னால் 'சுச்ரூஷா'என்பதே ச்ரவணம் ஸம்பந்தப் பட்டதுதான். 'ச்ரூ'என்ற தாதுவுக்கு கேட்பது என்று அர்த்தம். அதை வைத்தே ச்ரவணம். சுச்ரூஷா என்ற இரண்டு வார்த்தையும் உண்டாயிருப்பது. சுச்ரூஷா என்பதற்கு நேர் அர்த்தம் கேட்க விரும்புவது என்பதேயாகும்.

'கேட்க விரும்புவது'என்பதன் அர்த்தம் குரு ஸம்பந்தப்படு ம்போது, 'கேட்டுக் கொண்டபடி நடக்க விரும்புவது'என்று நீளுகிறது!வெறுமே கேட்டுக்கொண்டு (விட்டு) விடுவதில்லை. அது (கேட்டுக் கொள்ளும் விஷயம்) பிடிக்கவில்லை என்று தள்ளுவதோ, பிடித்திருந்தாலும் 'பேஷ்'சொல்லிவிட்டு அதோடு விடுவதாக இல்லை. 'பிடிச்சிருக்கு, பிடிக்கலை'என்பதற்கே இடமில்லாமல், என்ன கேட்டுக் கொள்கிறோமோ அதை அநுஷ்டித்தே காட்ட வேண்டும். ஆகையால், 'கேட்டுக் கொள்ளப் போகும் விஷயம் என்னவானாலும் அதை நடத்தியே காட்ட விரும்புவது'என்பதாக 'சுச்ரூஷை'க்கு அர்த்தம் ஒரே நீளமாக நீண்டு போகிறது!

'சொன்னதைக் கேளு!' என்கிறோம். 'சொன்ன பேச்சைக் கேட்கிறது கிடையாது'என்று திட்டுகிறோம். இங்கேயெல்லாம் கேட்கிறது என்றால் 'கேட்டபடி நடப்பது'என்றுதானே அர்த்தம்?அந்த மாதிரி, கேட்டபடி நடப்பதற்காகவே கேட்டுக்கொள்ள விரும்புவதுதான் சுச்ரூஷை.

சொன்ன பேச்சைக் 'கேட்பதற்கு' ரொம்பவும் பணிவுக் குணம் வேண்டும். பணிவுக் குணம் வந்துவிட்டால் யாரிடம்

பணிகிறோமோ அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று தன்னியல்பாக ஆசை ஏற்பட்டுவிடும். அதாவது, பணிவு உண்டானால் பணிவிடை செய்ய வேண்டுமென்று தோன்றிவிடும். அந்தப் பணிவிடை செய்ய வேண்டுமென்று தோன்றிவிடும். அந்தப் பணிவிடையே தான் உலக வழக்கில் சுச்ரூஷை என்றாகிவிட்டது.

'குரு கிட்டே போ!தடால்னு விழு!நன்னாக் கேட்டுக்கோ!தொண்டு பண்ணு!பண்ணி அவரிடமிருந்து ஞானோபதேசம் பெறு!'- 'தத் வித்தி

ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா'- என்று பகவான் சொல்லியிருக்கிறார். 'த்த வித்தி'தான் 'ஞானோபதேசம் பெறு'. "ப்ரணபாதம்"- தடாலென்று விழுவது. 'பாதம்' - விழுவது;'நிபாதம்'நன்றாக விழுவது. ப்ர- நிபாதம் (ப்ரணிபாதம்) - ரொம்ப நன்றாக ஒரே விழலாக, சரணாகதி என்று விழுவது. 'பரிப்ரச்னேன'- நன்றாகக் கேட்டுக் கொள்வது. விஷயத்தைத் துருவி துருவிக் கேட்டுத் தெரிந்து கொள்வது. அதுதான் சுச்ரூஷை. அதைச் சொன்னவுடனேயே 'ஸேவயா'என்கிறார்;'தொண்டு பண்ணு'என்கிறார்.

ஒன்றிலிருந்து ஒன்றாக விஷயம் சுவடு விட்டுக் கொண்டு போவதில் இங்கே ஒன்று தெரிகிறது. இந்த இடத்தில் கீதா ச்லோகங்கள் அமைந்துள்ள விதம் கர்மாவை எல்லாம் விட்டு ஸந்நியாஸியான பிற்பாடே குருவிடம் போய் ஞான யோகத்தில் உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று காட்டுவதாகவே இருக்கிறது. கர்ம யோகத்தில் வெளி த்ரவ்யங்களை வைத்துக் கொண்டு செய்கிற யஜ்ஞத்தைவிட ஞானயோகமாகிற உள் யஜ்ஞந்தான் ச்ரேஷ்டமானது. எல்லாக்கர்மமும் ஞானத்தில்தான் பூர்த்தியாகிறது என்று முந்தின ச்லோகத்தில் ஸ்வாமி சொல்கிறார். சொல்லிவிட்டு உடனேயே "ஸத்ய தத்வத்தை ப்ரத்யக்ஷத்தில் கண்ட - அதாவது அநுபவித்த - ஞானிகள் உனக்கு ஞானோபதேசம் செய்வார்கள். அவர்களிடம்போய் தடாலென்று விழுந்து, கேட்டுக் கேட்டு, தொண்டு பண்ணித் தெரிந்து கொள்'என்கிறார். இது வருகிற அத்யாயம் ஞான கர்ம ஸந்நியாஸ யோகம். இதையெல்லாம் பொருத்திப் பார்க்கும்போது கர்மாவை விட்டு, ஒரு ஞானியிடம் போய் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு ப்ரஹ்ம வித்யா உபதேசம்

பெறுகிறதைத்தான் சொல்லியிருக்கிறாரென்று தெளிவாக புரிகிறது.

காதால் கேட்டுக் கொள்வதைக் கீழ்ப்படிதலுடன் நடத்திக் காட்டுவதற்காகவே ச்ரவணம் செய்வதான சுச்ரூஷை, இதன் இணைபிரியாத அங்கமாக உண்டாகும் பணிவு, அதிலிருந்து உண்டாகும் பணிவிடைப் பணி என்று முறையாகத் தொடர்ந்து போகிறது!காதால் கேட்கும் சுச்ரூஷை எதில் கொண்டு விடுகிறதோ அந்தப் பணிவிடைக்கும் சுச்ரூஷை என்று பெயர் வந்துவிட்டது. கால க்ரமத்தில் பஹு பேருக்கு சுச்ரூஷை என்றாலே பணிவிடைதான் என்று 'அர்த்தமாகி, அதற்கு முதல் அர்த்தம் கேட்டுக் கொள்வது என்பதே தெரியாமலாகி விட்டது.

மெய்வருத்தி ஒரு சிஷ்யன் செய்கிற எந்தப் பணிவிடை ரூபமான சுச்ரூஷையையும்விட, தாம் கொடுக்கிற உபதேசத்தை அவன் அதற்கான கௌரவம் கொடுத்துப் பணிவுடன், அந்தரங்க சுத்தத்துடன் அந்தப்படியே பண்ணணும் என்ற தீர்மானத்துடன் கேட்டுக் கொள்வதான சுச்ரூஷையைத்தான் குரு பெரிதாக நினைத்துப் ப்ரீதியடைவார். அவர் கொடுக்கிற ஆத்மதனத்தை இவன் உரியபடி ப்ரயோஜனப்படுத்திக்கொண்டு உயர்வு காண்பதைவிட அவருடைய ஸுக ஸௌகர்யங்களுக்காக இவன் செய்கிற எந்தத்தொண்டையும் பெரிசாக நினைக்கமாட்டார். அவரைப் பொறுத்தமட்டில் இவன் காதால் முறைப்படி கேட்டுக் கொள்கிற சுச்ரூஷையேதான் அவருக்காக இவன் செய்யக்கூடிய மிகப் பெரிய கைங்கர்ய சுச்ரூஷையுமாகும். தமக்கு அவனால் பணிவிடை நடக்கணும் என்பதைவிட தம்மைக்

கருவியாக வைத்து வரும் உபதேசத்தால் அவன் உயரணும் என்பதையே அவர் விஷயமாக நினைப்பாராகையால் ச்ரவண சுச்ரூஷையையே பெரிதாகக் கருதுவார். சிஷ்யனைப் பொறுத்த மட்டிலோ அவனுக்கு இரண்டு தினுஸு சுச்ரூஷையும் ஸம ப்ரதான்யம் (ஒரே போன்ற முக்யத்வம்) வாய்ந்தவையாயிருக்கணும் - உபதேசத்தையும் ஹ்ருதயபூர்வமாகக் கேட்டுக்கொண்டு கார்யத்தில் நடத்தணும்;உபதேசிக்கிற வரையும் ஈச்வரனே என்று புரிந்து கொண்டு அவரிடம் சரணாகதி பண்ணி, முடிந்த எல்லாப்

பணிவிடையும் செய்ய வேண்டும்.

உபதேசிக்கப்பட்ட மந்த்ரம் பண்ணுவது பாதி என்றால் உபதேசிக்கிறவரின் அருள் பாதி பண்ணிவிடும்!

புஸ்தகத்திலிருந்து கற்றுக் கொண்டால் அப்போது இதற்கெல்லாம் இடம் ஏது?

---



## அநுபூதி பெற்ற குரு கிடைப்பாரா?

குருவை அநுபவியாகத்தான் சாஸ்திரங்கள் காட்டுகின்றன. 'ப்ரம்ம நிஷ்டம்'என்று உபநிஷத்தில் 'தத்வ தர்சின:'என்று கீதையில் அப்படிப்பட்டவர், நிஜமாகவே ப்ரஹ்ம ஸாட்சாத்காரம் பெற்றவர், இந்த நாளில் கிடைப்பாரா என்று யோஜனை பண்ண வேண்டாம். நிஜமான முமுக்ஷுதாவோடு தவியாகத் தவித்தால் ஈச்வரன் நிச்சயம் அப்படி ஒருவரைக் காட்டிக் கொடுக்காமல் விடமாட்டான். ஸதாகால ப்ரஹ்ம நிஷ்டரோ இல்லையோ, இருக்கிறதற்குள் ச்ரேஷ்டரான ஒருவரைக் காட்டி அவருக்குள்ளே இவனுக்கு மஹாவாக்யம் தருகிற ஸமயத்தில் ஸாக்ஷாத் அந்த ஈச்வரனே ஆவிர்பாவம் ஆகி உபதேசம் பண்ணிவிடுவான். அப்படித்தான், அப்படித்தான்;அதிலே ஸந்தேஹமே வேண்டாம். இந்த நாளிலும் அநுபவியான குரு கிடைப்பாரா என்று இவன் ஏங்கிக் கொண்டிருக்கிற மாதிரியே, இந்த நாளிலும் நிஜமான முமுக்ஷு கிடைப்பானா என்று ஸ்வாமியும் ஏங்கிக்கொண்டுதான் இருப்பாராதலால் அப்படிப்பட்டவனை விட்டுவிட மாட்டார். வெளியிலே ஸ்தூல ரூபத்திலே ஒரு மநுஷ குருவுக்குள்ளேதான் என்றில்லாமல் இவனுடைய அந்தராத்மாவிலேயே அவர் ஸூக்ஷ்ம குருவாக ஆவிர்பவித்தும் அநுக்ரஹிப்பதுண்டுதான். ஆனால் அதை நான் சொல்லப்போனால் இந்த அடங்காப் .....(சட்டென்று

வார்த்தையை மாற்றி) அடக்கம் போதாத ஸ்வதந்திர யுகத்தில், குரு என்றே ஒரு ஆள் வேண்டாம். ஈச்வரன் தானே நேராக அப்படி நமக்குள்ளேயே அநுக்ரஹம் பண்ணி விடுவான். சங்கரசார்யாரே சொல்லிவிட்டார் என்று ஆரம்பித்துவிடக்கூடும். வெளி குரு இல்லாமல் உள் குருவாக அவனே வருவதென்பது அபூர்வத்திலும் அபூர்வம். ரொம்பவும் அபூர்வமான உசந்த முமுக்ஷுக்களுக்கே அப்படி வருவது. அல்லது ரொம்பவும் அபூர்வமான பூர்வ ஸம்ஸ்காரம் இருக்கிறவனுக்கு அவன் முமுக்ஷுவாக இல்லாமல் ஸாமான்ய நிலையிலிருந்தால்கூட ஈச்வரனே இழுத்துப் பிடித்துத் தடுத்தாட்கொள்வதுமுண்டு. அதை ஜெனரல் ரூலாக்குவது அடியோடு பிசகு.

---



## ஒரே குறியில் ஈடுபாடு

ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு குருவிடமிருந்து உபதேசம் பெற்றுக் கொண்டாகிவிட்டது. அப்புறம் ஒரு ஸந்நியாஸி என்ன பண்ணவேண்டுமென்றால், நான் என்ன பண்ணிக் கொண்டிருக்கிறேனோ அந்த மாதிரி பண்ணவே கூடாது. நான் ஊர் விஷயமெல்லாம் உழக்கால் அளந்து கொண்டிருக்கிறேனோல்லியா?ஹிஸ்டரி, ஜாகரஃபி, இன்னும் ஊர் அக்கப்போர் எல்லாம் அடித்துக் கொண்டிருக்கிறேனோல்லியோ?நிஜ ஸந்நியாஸிக்கு இதெல்லாம் உதவவே உதவாது. அவன் ஸதா ஸர்வகாலமும் ஆத்மாவே நினைப்பாக, பேச்சாக, குறியாக இருக்க வேண்டும். "ஆத்மாவுக்கு அந்நியமான வார்த்தையை விடு. ப்ரணவத்திலேயே (அதாவது மஹாவாக்யத்திலேயே) தநுஸில் ஒரு அம்பைக் கோக்கிற மாதிரி உன்னைக் கோத்துக் கொண்டு ப்ரஹ்மம் என்பதே குறியாகப் போய் அப்படியே பதிந்துவிடு"என்று ஒரு உபநிஷத் சொல்கிறது.

'திருவார்த்தை'என்கிற ஜீவப்ரஹ்ம அபேத வாக்யமான ஒரு வார்த்தை தவிர எதையும் நினைக்கப்படாது. மற்ற பேச்செல்லாம் தொண்டைக்கு ச்ரமந்தான் என்கிறது இன்னொரு உபநிஷத். க்ருஷ்ண பரமாத்மா அடுக்கிக் கொண்டே போகிறாரே, 'தத்-புத்தய:, தத் ஆத்மான:, தந்-நிஷ்டா:, தத்-பராயணா:' என்று அப்படி ஆத்மாவிலேயே புத்தியை வைத்து, உயிரை வைத்து, அதிலேயே நிஷ்டை என்று சொக்கிச் சொருகிக் கொண்டு அதுதான் நாம் சேரவேண்டிய உசந்த புகலிடம் என்று இருக்க வேண்டும். இது 'ஸந்நியாஸ யோக' த்திலே சொல்லும்போது, அவர்தான் ஸகலமுமாக ஆகி விளையாடுவது என்று தெரிந்து கொண்டவர்கள் அவரே சித்தமாக, அவரே உயிராக, அவருடைய தத்வங்களையே ஒருவருக்கொருவர் போதித்துக் கொண்டும், அவருடைய மஹிமைகளையே கதை பேசிக் கொண்டும் பரமதிருப்தியாகக் களிக்கூத்தாடுகிறார்கள் என்கிறார்.

மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த:பரஸ்பரம்|

கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்திச ||

இதே நினைவில் சொன்னாற்போல் வித்யாரண்ய ஸ்வாமிகள் நிர்குண உபாஸனை பற்றி (அதுதான் ஸந்நியாஸி பண்ண வேண்டியது;அதைப்பற்றிச்) சொல்லும்போது , ப்ரம்மமே சிந்தனை, அதொன்றைப் பற்றியே ஒருத்தருக்கொருத்தர் பேசிக் கொள்வது, போதித்துக் கொள்வது':'தத்-சிந்தனம் தத்-கதனம் அந்யோந்யம் தத்-ப்ரபோதநம் என்கிறார். இப்படி அந்த ஒரே குறியில் முழு கவனமுமாக ஸந்நியாஸி இருக்க வேண்டும்.

பல ஸந்நியாஸிகள் ஸங்கமாயிருந்தால் ஒருத்தருக்கொருத்தர் 'போதயந்த:பரஸ்பரம்', 'அந்யோந்யம் தத் ப்ரபோதன ம்'எல்லாம். ஆனால் ஒருத்தருக்கு மேலே ஸந்நியாஸிகள் கூட்டம் போட்டுக்கொண்டு ஸங்கமாக வஸிக்கிறதைக் கூட சிலாக்யமாகச் சொல்லியிருக்கவில்லை. பலபேர் ஒன்றுகூடி இருந்தால் பாசம், த்வேஷம், போட்டி, பொறாமை, அபிப்ராய பேதங்கள் வர இடமுண்டுதானே?

அதனால் ஸந்நியாஸியானவிட்டு அவனவனும் ஏகாந்தமாக ஓடிவிட வேண்டும்;ஒரு இடத்திலேயும் பாசபந்தம் ஏற்பட்டு விடப்படாது என்பதால் மூன்று நாளுக்கு மேல் தங்காமல், பரிவ்ராஜகன் என்பதாக இடம் விட்டு இடம் ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டே இருக்கணுமென்றுதான் உயர்நிலை பரமஹம்ஸ ஸந்நியாஸி தர்மமாக வைத்திருக்கிறது.

மொத்தத்தில் உபதேசம் வாங்கிக் கொண்டபின் ஒரு ஸந்நியாஸி என்ன செய்ய வேண்டுமென்றால் அந்த உபதேச பொருளான அத்வைத அநுபவத்தை, பிரம்மாநுபவத்தை ஸொந்தத்தில் பெற வேண்டும் என்பதிலேயே ஸதாவும் குறியாக இருக்க வேண்டும்.

இதை ஸாதிப்பதற்காக மனனம், நிதித்யாஸனம் என்று இரண்டு வைத்திருக்கிறது. (நிதித்யாஸனம் என்பதை) நிதித்யாஸம் என்று சொன்னாலும் ஸரிதான்.

ச்ரவண - மனன-நிதித்யாஸனத்தோடு ஸாதனை என்று ஸவிஸ்தாரமாகச் சொல்லி வந்த ஸமாசாரம் பூர்த்தியாக முடிந்து போகிறது.

---



## ச்ரவண - மனன - நிதித்யாஸன லக்ஷணம்

உபதேசத்தைத் திரும்பத் திரும்ப மனஸிலே புரட்டிப் புரட்டி அலசி ஆராய்ந்து தெளிகிறது. 'மனனம்', அப்புறம் புரட்டல், அலசல், ஆராய்ச்சி என்று பலதுக்கு இடம் கொடுக்காமல் எந்த ஆத்ம தத்வத்தைப் பற்றித் தெளிவு ஏற்பட்டதோ அதிலேயே சித்தத்தை ஆடாமல் அசையாமல் வைத்துத் தன்மயமாகப் போவது 'நிதித்யாஸனம்'.

கேள்வியும் பதிலுமாக வசனநடையில் 'ஆத்மாநாத்ம

விவேகம்'என்று ஆசார்யாள் (ஒரு பிரகரண நூல்) அநுக்ரஹித்திருக்கிறார். அதில் ச்ராவணம் என்ன மனனம் என்ன, நிதித்யாஸனம் என்ன என்று ரத்ன சுருக்கமாக லக்ஷணம் கொடுத்திருக்கிறார். ஒரு விஷயத்தை நிலைநாட்டுவதற்கான ஆறு அங்கங்களாலும் அத்வைத ஸத்யத்தைத்தான் வேதம் சொல்லியிருக்கிறதென்று குரு உபதேசிப்பார்.

அதைக் கேட்டுக்கொள்வதுதான் ச்ரவணம். அவ்வாறு ச்ரவணம் செய்த அத்விதீய வஸ்துவை வேதசாஸ்திரங்களை அநுஸரித்தே போகும் யுக்தியால் ஆராய்ந்து ஆராய்ந்து தெளிவதுதான் மனனம். "வேத சாஸ்திரங்களை அநுஸரித்தே போகிற யுக்தி"என்பதை குறிப்பாகக் கவனிக்க வேண்டும். ஸாதன சதுஷ்டயமும், குறிப்பாக அதில் வரும் ச்ரத்தையும், அப்புறம் சொன்ன பக்தியும் ஒருவனுடைய புத்தியை இந்த விதமாகவே யுக்தி செய்யும்படி பண்படுத்தியிருக்கும். சிற்றறிவுக்குப் பகுத்தறிவு என்று பெத்தப் பேர் கொடுத்துக் குயுக்தி பண்ணாமல் குரு(வின்) உபதேசத்தை மனனம் செய்ய வேண்டும். 'குயுக்தியை விட்டொழி!ச்ருதி தாத்பர்யத்திற்கு இசைவான யுக்தியையே மேற்கொண்டு அலசிப் பாரு!துஸ்தர்காத்- ஸுவிரம்யதாம்;ச்ருதி மதஸ்-தர்கோநுஸந்தீயதாம்'என்று ஸோபான பஞ்சகத்திலும் (ஆசார்யாள்) சொல்லியிருக்கிறார். அதுதான் மனனம். அப்படி அறிவால் தெளிந்ததை அநுபவிப்பதற்காக, வேறே எந்த சிந்தனையும் கலக்காமல், ஏகப் பிரவாஹமாகச் சித்தத்தை ஒருமுகமாக்கி நினைப்பது தான் நிதித்யாஸனம். இப்படி ('ஆத்மாநாத்ம விவேக'த்தில்) டிஃபைன் செய்திருக்கிறார்.

நடுப்பற (பேச்சின் நடுவில்) ஆறு அங்கத்தால் ஒரு விஷயத்தை நிலைநாட்டுவது என்றேனே, அந்த ஆறு என்னவென்றால், ஒரு புஸ்தகத்தில் ஆரம்பமும் முடிவும் பார்த்தாலே இரண்டிலும் சொல்லியிருப்பதிலிருந்து அந்தப் புஸ்தகம் ஸ்தாபிக்கும் ஸப்ஜெக்ட் என்னவென்று தெரிந்து விடும். இதற்கு உபக்ரம உபஸம்ஹாரம் என்று பேர். ஆறு அங்கத்தில் இது முதல். இரண்டாவது திரும்பத் திரும்பப் புஸ்தகத்தில் ஒரு விஷயம் சொல்லியிருந்தால் அதுதான் ஸப்ஜெக்ட் எந்பது ஸ்பஷ்டம். இதற்குப் பேர் அப்யாஸம்.

மூன்றாவது, புதுசான முறையில் ஒரு கருத்தை அழுத்தம் கொடுத்துச் சொன்னால் அதுதான் ஸப்ஜெக்ட். இது அபூர்வம். நான்காவது, ஏதோ ஒன்று சொல்லி, அது இன்னின்ன நல்ல பலன்களைத் தரும் என்று சொன்னால் அந்த ஒன்றே ஸப்ஜெக்ட் என்று அர்த்தம். இதற்குப் பேர் பலம். ஐந்து, ஆஹா, ஒஹோ என்று ஒரு விஷயத்தை ஸ்தோத்தரித்தால் அதுவே ஸப்ஜெக்ட். இப்படி ஸ்தோத்தரிப்பது 'அர்த்தவாதம்'. கடைசியாக ஆறாவது, உபபத்தி என்பது. காரணம் காட்டி, பொருத்தம் காட்டி யுக்தியால் இதுதான் ஸப்ஜெக்ட் என்று நிலைநாட்டுவது......

---



## ஸித்திக்கு முன்னிலையில்

ஆத்மாவைப் பற்றியதாக மனனத்தின்போது பல விஷயங்கள் தெளிவுபட்டு, அதுவே ஏகமான ஆத்மாவை மாத்திரம் தியானிப்பதான நிதித்யாஸனத்தில் கொண்டு விடும்.

Deep-ஆன மனன-நிதித்யாஸனங்களில் ஈச்வரனுக்கும் (ஸாதகன் என்ற) அந்த ஒரு ஜீவனுக்குமே தெரிந்ததாக அநேகம் நடக்கும்;நடக்கலாம். ஜீவனுக்குங்கூடப் புரியாததாகவும் சிலது நடக்கலாம். இங்கே அவன் புரியவில்லையே என்று குழம்பிக்கொண்டு நிற்கக் கூடாதென்று தான் முந்தியே ஆசார்யாள் ச்ரத்தா பக்திகளை அவனுக்குள்ளே நன்றாக இஞ்ஜெக்ட் பண்ணி விட்டது!அதனால் அவன் தனக்கு ஒன்று புரியவில்லையே என்று எதைப் பற்றியும் குழம்பிக் கொண்டிருக்காமல் குரு காட்டிக் கொடுத்த வழியிலேயே தான் பாட்டுக்குத் தொடர்ந்து போய்க் கொண்டிருப்பான். ஈச்வரனும் அவனை முடிவான லக்ஷ்ய ஸ்தானத்தில் கொண்டு போய் நிறுத்துவதற்கு முன்னாடி என்னவெல்லாம் பண்ணி அவனிடம் இன்னமும்

ஒட்டப் பிழிய வேண்டுமோ அதையெல்லாம் பண்ணுவான். அதெல்லாம் தொலையத் தொலையத்தான் அந்தஃகரணம் ஹ்ருதயத்துக்குள் போவது, அந்த பிராஸஸில் மற்ற ஹ்ருதய நாடிகளிலும் இந்தப் பிழிச்சல் கார்யம் - 'நாடி மதனம்'- நடந்தே அந்தஃகரணம் நன்றாக (ஹ்ருதய) அந்தரங்கத்தில் தோய்வதாக இருக்கும். இதையெல்லாம் சொல்வதே ஸரியில்லையோ என்றுகூடத் தோன்றுகிறது. இவனுடைய ஒரே எண்ணம் ப்ரம்மானுபவம் என்பதாகத்தான் இருக்கவேண்டுமானதால், நாடி, ஹ்ருதயம், மதனம் என்றெல்லாம் சொன்னால் கடைசல் உண்டாகிறதா?அதில் (ஹ்ருதய மத்தியில்) ஒடுங்குகிறதா?என்ற அநாவச்ய ஆப்ஸர்வேஷன்கள் ஏற்பட்டு ஏக சிந்தனை தாரையைப் பிசிற வைத்துவிடும். இதெல்லாம் ஒருத்தனுக்குத் தெரியாமலே நடப்பதால் ஒன்றும் நஷ்டமில்லை. போகிற வழியிலிருக்கிற தோட்டத்தை அழகு பார்த்துக் கொண்டேயிருந்து, உள்ளேயிருக்கிற வீட்டுக்குப் போகாமலிருக்கிற மாதிரியான காயந்தான் இது (நாடி மதனம் முதலியவற்றில் கவனம் செலுத்துவது)

அதுவுமில்லாமல் ஈச்வரன் எல்லாருக்கும் ஒரே மாதிரிச் செய்யாமல் பல தினுஸாகச் செய்வதாக இருக்கலாம். எல்லாருக்கும் ஒரே மாதிரி பழம் பாக்கி இல்லாததால் அதை ஈச்வரன் தீர்த்து வைக்கிறதும் பல தினுஸாக இருக்கலாம் அல்லவா?அதோடு அவனோ வித விதமாக விளையாடி ஸந்தோஷப்படுகிறவன்!இவனை (ஸாதகனை) லக்ஷ்யத்தில் சேர்ப்பித்த பிறகு தன் விளையாட்டு எதற்கும் இவனிடம் ஸ்கோப்பே இல்லை என்பதால் இப்போது ஒவ்வொருத்தருக்கும் நூதனமாக என்னென்ன பண்ணுவானோ?சிலபேருக்கு இந்தப் பிழிச்சல், கடைசல்கள் இல்லாமலே கூட இருக்கலாம். ஏன் ஆத்ம ஸ்தானமென்றே, 'எது மூச்சு மூலம் மாதிரித் தெரிகிறது?' என்று முதலில் கண்டுபிடித்து அந்த ஹ்ருதய (மத்ய) பாயின்டில்தான் சித்தத்தை ஒருமுகப் படுத்தணுமென்றுகூட இல்லாமல், சில பேரால் (ஆத்மாவை) அகண்டமாகவே நினைத்துக் கான்ஸன்ட்ரேட் பண்ணக்கூட முடியலாம்.

இதையெல்லாம் கவனித்துத்தான் ஆசார்யாள் ஒருத்தன் ஸ்வயமாக உத்தேசித்துப்

பண்ணும் நிதித்யாஸனத்தைச் சொல்லி 'அதுவே நினைப்பாக ஆழ த்யானம் பண்ணிக்கொண்டே போ?' என்று சொல்லி, அப்புறம் டக்கென்று முடிவாக ஏற்படுகிற பிரம்ம ஸாக்ஷாத்காரத்தை மாத்திரமே தெரிவித்து முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறார்.

---



## சிற்றறிவு கடந்த மனனம் ; மனவுணர்ச்சி கடந்த நிதித்யாஸனம்

ச்ருதி, யுக்தி, அநுபவம் என்ற மூன்று வித ப்ரமாணங்களான ஸத்யத்தைத் தெரிந்துகொள்வது என்பதில் ச்ருதி- 'ச்ரவணம்', யுக்தி - 'மனனம்', அநுபவம்- 'நிதித்யாஸனம்'என்று சொல்வதுண்டு. ச்ருதியிலுள்ள மந்த்ரங்களையும் வைதிகமான ப்ரம்மவித்யா விஷயங்களையும் குரு சொல்லி சிஷ்யன் ச்ரோத்ரத்தால் (காதால்) கேட்டுக் கொள்வதால் ச்ரவணத்தை ச்ருதி என்று சொல்வது ரொம்ப ஸரியாகவே தெரிகிறது.

'யுக்தி'என்கிறபோது கொஞ்சம் விளக்கி ஸரியாகப் புரிந்து கொள்ள வைக்கவேண்டியிருக்கிறது. ஸாமான்ய தசையில் நமக்கு இருக்கப்பட்ட புத்தி வாதமாக - rational thinking(பகுத்தறிவுச் சிந்தனை). அது இது என்கிறார்களே, அப்படிப்பட்ட புத்தி வாதமாகப் பண்ணி ஒரு விஷயத்தை எடுத்துச் கொள்வதல்ல, இங்கே சொல்லும் யுக்தி. அநுபவம் என்பதும் அப்படியே. நமக்கெல்லாம் வெறும் மனஸின் லெவலில் மாறி மாறி ஏற்படுகிற 'எக்ஸ்பீரியன்ஸ்'இல்லை இங்கே சொல்வது. ஸாதனை பண்ணி, அடங்கி ஒடுங்கி, பரிசுத்தியாகி, ச்ரத்தா பக்திகளால் ரொம்பியிருக்கும் மனோ புத்திகள் அஹங்காரம் அழிவுபட வேண்டும் என்ற உத்தேசத்திலேயே அஹங்கார ஸ்தானத்தில் குவிவதற்காகப்

போய்க் கொண்டிருக்கும்போது எப்படி உசந்த லெவலில் அலசி ஆராய்ந்து அறியுமோ, எண்ணுமோ அப்படிப்பட்டதையே இங்கே 'யுக்தி'என்று சொன்னது. 'அநுபவம்'என்பதும் பண்பட்ட மனோ புத்திகள் இந்த யுக்தியினாஸ் தெரிந்து கொண்டவற்றை மனத்தின் அடி ஆழத்தில், அஹங்கார base-லிருந்தே எக்ஸ்பீரியன்ஸ் செய்வதாக இருக்கும். அதையெல்லாம் பற்றி நான் ஒன்றும் லெக்சர் அடிப்பதற்கில்லை. நம்மிலே யாராவது பாக்யசாலிக்கு அப்படி வாஸ்தவத்தில் வாய்த்தால் - தான் தெரிந்து கொள்ள வேண்டியதுதான்.

சாந்தமாக நடுநிலையில் இருப்பதற்கு சாத்வீகம் என்று பெயர். அப்படியில்லாமல் இப்போது நாம் எப்படி இருக்கிறோமோ அப்படி உணர்ச்சி வேகத்தில் தடுமாறிக் கொண்டே இருப்பதற்கு ராஜஸம் என்று பெயர். இப்போது நம்முடைய புத்தி பண்ணும் யுக்தி ராஜஸமானது. அதனால் தப்பானது. நாம் பார்த்துக் கொண்டிருக்கும் மூன்றாம் ஸ்டேஜ்காரனின் புத்தியோ ராஜஸம் நசித்துப் போய் ஸாதவிகமாகிவிட்டது. ஆகையால் அது செய்கிற யுக்தியே வேறு தினுஸாக இருக்கும். ஸத்யத்தையும் சாஸ்திரத்தையும் ஆக்ஷேபித்துப் பகுத்தறிவு என்ற சின்ன எல்லைக்கு உள்ளேயிருந்து கொண்டு நாம் செய்கிற யுக்தியாக இல்லாமல் அவற்றை (ஸத்யத்தையும் சாஸ்திரத்தையும்0 அநுஸரித்தே பகுதத்றிவுக்கு மேற்பட்ட விஞ்ஞானத்தினால் செய்யும் யுக்தியாக இருக்கும். அந்த புத்தியைப் பற்றி ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

**மோகைஷக-ஸக்த்யா விஷயேஷு ராகம்**

**நிர்மூல்ய ஸந்நியஸ்ய ச ஸர்வகர்ம |**

**ஸச்ச்ரத்தயா ய : ச்ரவணாதிநிஷ்டோ**

**ரஜ : ஸ்வபாவம் ஸ துநோதி புத்தே :||**

'விடுபடணும் என்பதொன்றே ஈடுபாடாக இருந்து விஷயப்பற்று எல்லாவற்றையும்

நிர்மூலம் பண்ணி, அதனடியாக ஸர்வகர்மாவையும் விட்டு ஸந்நியாஸியாகி எவன் ச்ரத்தையோடுகூட ச்ரவணம்

முதலியவைகளில் (முதலியவை என்பது மனன, நிதித்யாஸனங்களைத்தான்) ஸ்திரமாக ஊன்றியிருக்கிறானோ அவன் புத்தியுடைய ராஜஸிக குணத்தை அடியோடு தள்ளிவிடுகிறான்'என்று அர்த்தம். (இங்கே முமுக்ஷுத்வம், ஸந்நியாஸம், அப்புறம் சிரவணம் என்ற ஸாதனா க்ரமமும் வந்துவிடுகிறது) அந்த நிலையில் யுக்தியே அலாதியாக இருக்கும்.

அப்படியே (அந் நிலையில்) அநுபவம் என்பதும் இந்திரிய ஸம்பந்தப்பட்ட- தாயில்லாமல் அந்தராத்ம ஸம்பந்தப்பட்டதாக இருக்கும்.

ப்ரொ∴பஸர் பாணியில் சொல்கிறேன்:அந்த யுக்தி 'ஸூபர்-ராஷன'லாகவும் அந்த அநுபவம் 'மிஸ்டிக்'காகவும் இருக்கும்!

மனனம் எதற்கென்றால் உபதேசத்தையே திருப்பித் திருப்பி உருவேற்றிக் கொண்டிருந்தால்தான் மனஸ் வேறே ஒன்றுக்கும் இடம் கொடுக்காமல் அதிலேயே நிலைக்கும். இந்த மனனத்தைத்தான் 'ஆவ்ருத்தி'- 'உருப்போடுவது'- என்று ப்ரஹ்மஸூத்ரம் சொல்கிறது. ஹாஸ்யமாக, 'திரும்பத் திரும்ப உருப்போடணும் என்று திரும்பத் திரும்ப வேதம் சொல்லிருக்கிறது'- ' **அஸக்ருத் உபதேசாத்** '- என்கிறது. எதுவரை இப்படி மனனம் செய்யணும் என்பதற்கு ஆசார்யாளும் ஹாஸ்யமாக பதில் சொல்கிறார். "நெல்லைத் திரும்பத் திரும்பக் குத்தணும்'என்றால் 'â¶õ¬ó‚°‹ °ˆ¶õ¶?'â¡Á «è†ð¶‡ì£?ÜKCñE ªîP˜¶ õ¼Aøõ¬ó °ˆî «õ‡®ò¶î£«ù?Ü‰î ñ£FK ÜM˜¬òJ«ôJ¼‰¶ Ýˆñ£ ªîP˜¶ õ¼Aøõ¬ó Ü«î ñùùñ£è, vñóíñ£è, ˆò£ùñ£è˜ F¼‹ð˜ F¼‹ð à¼†®, ªè£‡®¼‚è «õ‡®ò¶î£¡'â¡Aø£˜.

---

## மாறுபாடான இரு பாவனைகள் விலக

எத்தனைதான் பக்வப்பட்ட மனோ புத்திகளானாலும் ஸாக்ஷாத்காரம் உண்டாகும்வரை மாயை விட்டு வைக்காது .... மாயையின் தலையில் பழியைப் போடுவது கூட அவ்வளவு ஸரியில்லை. ஸாக்ஷாத்காரம் என்பது அநுபவத்தின் உச்சிக் கொம்பு. கர்மா முழுக்கத் தீர்ந்தாலொழிய அதை பிடிக்க முடியாது. இத்தனை ஸாதனை பண்ணியிருந்தாலும் (பூர்வத்தில்) பண்ணின கர்மா அதைவிட எத்தனையோ மடங்கு இருந்தால் என்ன பண்ணுவது?அதுவும் தீர்கிறதற்காகவே இப்போது- மாயா சேஷ்டிதமாக இல்லை;ஈச்வர ப்ரஸாதமாகவே என்று வைத்துக் கொள்ளலாம். இவனை (ஸாதகனை) ஒரு ஆட்டு ஆட்டிவைப்பதாக வேண்டாத எண்ணங்கள் கிளம்பக்கூடும். அப்படியென்றால் காம, க்ரோதாதிகள் இல்லை. அதுகளை முன்னேயே துடைத்துப் போட்டாயிருக்கும். ஆனால் வேறே வேண்டாத எண்ணங்கள் இரண்டு. ஒன்றை 'அஸம்பாவனா' என்பார்கள். மற்றது 'விபரீத பாவனா'என்பது. 'என்னவோ ஸாதனை, ஸாதனை என்று பண்ணிக் கொண்டு போகிறோமே, நாமாவது பிரம்மாவதாவது?எத்தனூண்டு ஆஸாமி நாம்?பிரம்மம் எத்தனை பெரிசு?அகண்ட மஹாதத்வமாக இருக்கப்பட்ட அதுவாக நாம் ஆகிறதாவது?இது எங்கேயாவது ஸம்பவிக்கக் கூடிய ஸமாசாரமா?என்ற எண்ணந்தான் அஸம்பாவனா. அத்வைதாநுபவம் ஸம்பவிப்பது ஸாத்யமா என்ற கேள்வி இன்னும் முற்றி, கேள்வியாயில்லாமல் பதிலாகவே, 'ஸாத்யமில்லை. த்வைதம் தான் ஸாத்யம், ஸத்யம். ஜீவன் வேறேதான்;ப்ரம்மம் வேறேதான்'என்றே தோன்றும் எண்ணம் 'விபரீத பாவனா'இத்தனை பாடுபட்டும் நாம் தனி ஜீவனாகத் தானே இருந்து கொண்டருக்கிறோம்?என்பதனால் நாம் இப்படியே தனியாக, த்வைதமாகத்தான் எப்போதும் இருக்க முடியுமென்று தோன்றி, அதனால் உண்டாகும் பாவனை.

இந்த இரண்டில் 'அஸம்பாவனை'போகவே மனனம்;'விபரீதபாவனை'போக த்யானம் (நிதித்யாஸனம்) என்று சொல்லியிருக்கிறது.

பாசி மூடுவதுபோல் அஸம்பாவனை வந்து மூடினாலும் பண்பட்ட, பக்குவப்பட்ட புத்தியால் அப்போது வேதாந்த சாஸ்திர வாசகங்களை அலசிக் கொண்டும், வீர்யவத்தான மஹாவாக்ய மந்திரங்களை உருவேற்றிக் கொண்டுமிருந்தால், அஸல் அநுபவம் உடனே வராவிட்டாலுங்கூட அது ஸம்பவிக்கக் கூடியது ஸாத்யந்தான் என்ற தெளிவு பிறந்துவிடும்.

(ஸாக்ஷாத்காரம்) ஸம்பவிக்கக்கூடும் என்று மனன அலசல் உறுதிப்படுவது ஸரி!ஆனால் ஸம்பவித்தே விட்டது என்று கண்டுகொண்டு ஸம்சயம் அடியோடு தீர்வதற்கு அது எப்படிப் போதும்?த்வைதம் இப்போது ப்ரத்யக்ஷ அநுபவ

அநுபவமாயிருக்கிறது. ப்ரம்மம் வேறே, நாம் வேறே என்றுதானே இப்போது நிதர்சனமாக எக்ஸ்பீரியன்ஸ் பண்ணிக் கொண்டிருக்கிறோம்?அத்வைதந்தான் ஸத்யமென்றால் அதுவும் எப்படி ப்ரத்யக்ஷஅநுபவமாக வாய்த்தாலொழிய எப்படி உறுதிப்படும்?அதாவது ஸாக்ஷாத்காரம் ஸம்பவித்தே விட்டது என்று ஆனாலொழிய விபரீத பாவனை எப்படிப் போகும்?ஒரே த்யானமாக நிதித்யாஸனத்தால்தான் அந்த ஸொத்த அநுபவம் வரும். வறே வழியே இல்லை. பஞ்சாம்ருத்தின் காம்போசிஷனைத்

தேன், பால், நெய் என்று தெரிந்து கொண்டு, ஆகையால் அது தித்திப்பாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவு பண்ணுவது மனனம். ஆனாலும் ஏதோ ஒரு ஸம்சயம், 'அது தித்திக்கத்தான் செய்யுமா?தித்திப்பு வஸ்துக்களே ஒன்றோடு ஒனறு சேர்ந்தால் கசப்பாகக்கூட ஆகுமோ என்னமோ, யார் கண்டா?என்று விபரீத ஸந்தேஹம் உண்டானால், அப்போது தானே அதை ருசித்துப் பார்த்தாலொழிய எப்படித் தெளிவு உண்டாகும்?

இருந்துதான் ஆகணும் என்ற மனனத்தால் முடிவு கண்ட அந்த ஸத்வஸ்து அநுபவத்திற்கு வந்தேயாகணும் என்று பூரண 'டெடிகேஷ'னோடு நிதித்யாஸனம் செய்தால் அது அப்பப்போ டேஸ்ட் காட்டியே தீரும். டேஸ்ட் காட்டுவது என்று சொன்னாலும், டேஸ்ட், டேஸ்ட், பண்ணுகிறவன்

அதைக் கொடுக்கிறவன் எல்லாம் ஒன்றாகப் போய்விட்டிருக்கும்!அந்த ஸ்திதி அப்புறம் கழன்றுவிட்டாலுங்கூட, 'நிச்சயமாக அத்வைதானுபவம் உண்டு'என்று உறுதிப்பட்டு விடும். அப்புறம் விபரீத பாவனை எப்படி நிற்கும்?

அந்த மூன்றாம் ஸ்டேஜில் இப்படிப்பட்ட மாறு பாடான பாவனைகள் தோன்றுவதே ஒரு விதத்தில் இவனுக்குப் பெரிய ஸஹாயமாக ஈச்வரன் அனுப்பி வைப்பதுதான் என்றுகூடச் சொல்லலாம். அதனால்தான் ஒருவன் அத்வைதம் நிச்சயம் உண்டு என்று தத்வமாக அந்தஃகரண லெவலிலும் ஸொந்தமாகவே அதன் அநுபவச் சாயைகளை அந்தராத்ம லெவலிலும் தெரிந்து கொள்வதற்காக முழுமூச்சோடு மனன நிதித்யாஸனங்கள் செய்யத் தூண்டுதல் பெறுகிறான்!இல்லாவிட்டால் கொஞ்சம் ஈஸிகோயிங் - ஆக இருந்து ஸித்தியைக் கோட்டை விடக்கூடும். கோட்டை விடாவிட்டாலகூட ரொம்பத் தள்ளிப் போடுவதாக ஆகிவிடும். எதிராகவும் ஒன்று தோன்றினால்தான் 'இரண்டில் ஒன்று தீர்ந்து விடுகிறேன்'என்று கச்சை கட்டிக் கொண்டு கொண்டு களத்தில் குதிப்பது. அப்படித்தான் இந்த எதிரிடை எண்ணங்களான அஸம்பாவனையும் விபரீத பாவனையுமே 'இன்ஸென்டி'வாக அநுகூலம் பண்ணுவது!

---



## மனன-நிதித்யாஸனங்களின் பெருஞ்சிறப்பு

விஷயமாக ஒன்றை அலசிப் பார்த்துத் தெளிகிற மனனம் அவ்வப்போது அதையே அநுபவமாகத் தெரிந்து கொண்டு அடங்கிப் போகிற நிதித்யாஸனத்தில் கொண்டு கொண்டு சேர்க்கும். அப்புறம் அலசல் கிலசல் இல்லாமல் அதே சிந்தனைதான், த்யானந்தான். அதைச் சொல்ல

ஆசார்யாளுக்கு favourite- ஆன ஒரு வாக்கியம் உண்டு. 'ஸமாந -ப்ரத்யய - ப்ரவாஹகரணம்'என்பார். பல இடங்களில் இந்த வாக்கியத்தைப் போட்டிருக்கிறார். ஜலப் பிரவாஹம் எப்படி ஒரே திசையாக ஒருமித்துப் போவது தான் த்யானம் என்று அர்த்தம். பிசிரே இல்லாமல் எப்படி எண்ணெயை விட்டால் கம்பி மாதிரி ஒரே சீராக விழுகிறதோ அப்படி - 'தைலதாரவத்'- என்றும் சொல்வார்.

முனிவர் என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். பரம ஞானியாகவும், மஹா சக்தர்களாகவும் இருக்கிற மஹான்களை அப்படிச் சொல்கிறோம். 'முனி'என்பதுதான் மூலமான (ஸம்ஸ்கிருத) வார்த்தை. தமிழ்மொழிப் பண்புப்படி மரியாதையைக் காட்டும் விகுதியைச் சேர்ந்து 'முனிவர்'என்கிறோம். எதனாலோ தமிழிலே 'முனி'என்றால் கிராம தேவதை, உக்ரதேவதை என்று அர்த்தமாகி விட்டது. தமிழில் 'முனிவு'என்றால் மஹா கோபம் என்று அர்த்தமிருப்பதால் அதை வைத்து இப்படி உண்டாயிற்றோ என்னவோ?அதிருக்கட்டும். ரிஷி ச்ரேஷ்டரான முனி ஸமாசாரத்தைச் சொல்ல வந்தேன். 'மனனம்'பண்ணுகிறதில் சிறப்பு வாய்ந்தவருக்கே 'முனி'என்று பெயர் ஏற்பட்டது. 'மனனான் முதிரிதி (ச்) வ்யுத்பத்தி ஸம்பவாத்'என்று அந்த வார்த்தை இப்படித்தான் ஏற்பட்டதாக ஆசார்யாள் ஸூத்ர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். முனி என்கிற சப்தத்திற்கு ஞானத்தில் சிறப்பான தாத்பர்யம் இருப்பதாகவும் அங்கே சொல்கிறார். 'ஞான அதிசய அர்த்தத்வாத்'என்று. ஆகையிநாலே மனனம் என்பது வெறுமனே உருப்போட்டுக் கொண்டிருப்பதோ அல்லது நமக்கெல்லாம் தெரிகிற முறையில் புத்தியினால் தர்க்க யுக்தி பண்ணி மூளை மட்டத்தில் மாத்திரம் அத்யாத்ம ஸத்யங்களை இறக்கிக் கொள்வதோ இல்லை. அதற்கு ரொம்ப மேலே இன்ட்யூஷனை தொட்டுக் கொண்டு தெளிகிற விஷயாலோசனையாகவே அது இருக்கும்.

குருவிடமிருந்து பெறும் உபதேச ச்ரவணத்திற்கு ரொம்பவும் பூஜிதையான ஸ்தானம் கொடுத்தவர் நம்முடைய ஆசார்யாள். அப்படிப்பட்டவரே, 'ச்ரவணத்தை விட மனனம் நூறு மடங்கு உசத்தி என்று தெரிந்துகொள்ள வேண்டும்:ச்ருதே:சதகுணம்

வித்யான் மனனம் என்கிறாரென்றால் அது எத்தனை உயர்ந்த லெவலாக இருக்க வேண்டும்?

அதோடு அவர் முடித்தவிடவில்லை. ச்ரவணத்தை விட மனனம் நூறு மடங்கு உசத்தி என்றால் மனனத்தை விடவோ நிதித்யாஸனம் லட்சம் மடங்கு உசத்தி என்கிறார்:"மனனாதபி நிதித்யாஸம் லக்ஷகுணம்".

மனனம் வெற்றறிவு இல்லை, உயிரறிவு என்றாலுங்கூட அந்த அறிவும் அநுபவம் என்பதன் முன் அல்பந்தான். சர்க்கரையைப் பற்றி மூட்டை மூட்டையாகவே வாங்கி வைத்துக்கொண்டு அது எத்தனை உசத்தி ரக பூரா என்று விஸ்தாரமாகத் தெரிந்து

கொண்டிருந்தாலும் ஒரு சிட்டிகை வாயிலே போட்டுக்கொண்டு ருசியநுபவம் பெறுவதற்கு ஈடாகுமோ?அதனால்தான் மனனத்தைவிட நிதித்யாஸனம் லட்சம் மடங்கு என்றார்.

நிதித்யாஸனத்திலும் ஒரே போடாகப் போட்டு இவன் சாச்வதமாக ப்ரம்மாநுபவத்தில் நிலைத்து விடுவதில்லை. தன்முயற்சி என்று ஒன்று இருந்தே இவன் நிதித்யாஸம் என்று ஒன்றைப் பண்ணுகிறான், இவன் பண்ணுகிறான், பண்ணி ப்ரம்மாநுபவத்தின் flash-களைப் பெறுகிறான் என்றெல்லாம் சொல்லும்போது த்வைதம் இருக்கத்தான் செய்கிறது. இப்படி ப்ரம்மாநுபவம் மினுக்கி விட்டுப் போகாமல் அந்த மின்னல் இவனை அப்படியே 'எலெக்ட்ரோக்யூட்'பண்ணி, தனி ஜீவனாக இவன் இருப்பதை சாக அடித்து, அம்ருதமான ப்ரம்மமாகவே ஆக்குகிறதுதான் முடிவு. அதுதான் ஸித்தி ஸ்தானம். ஸாதனை அப்படியே நின்றுபோய் ஸாதகனே ஸாத்யமாகிவிடும் ஸ்தானம்!

கை, கால் கார்யம் செய்கிற மாதிரி ஒருத்தன் செய்கிற நினைப்புக் கார்யந்தானே நிதித்யாஸனமும்?அது எத்தனை உசத்தியாகத்தானிருக்கட்டும் , கார்யம் என்றும் கர்த்தா என்றும் இருக்கிறவரை அது எப்படி ஏக- ஸத்யமாக தன்னில் தானாகவே இருந்து கொண்டிருப்பதாகும்?

ஆனாலும் ஜீவன் என்று ஒருத்தன் இருந்து

கொண்டிருக்கும்வரை, அப்படி இருக்க வேண்டாமே என்பதற்காக அவன் பண்ணக்கூடிய உச்சியான கார்யம் ப்ரம்மத்தையே நினைத்துக் கொண்டிருபதுதானாகையால் அந்தக் கார்யமான நிதித்யாஸனத்தை இறுகப் பிடித்துக் கொண்டு இடைவிடாமல் செய்ய வேண்டியதுதான்.

---



## புழு குளவியாவது ; புழுவைக் குளவியாக்குவது

ப்ரம்மத்தையே நினைத்துக் கொண்டிருக்கிற கார்யத்திலிருந்து அப்புறம் ப்ரம்மமே ஆகிக் கார்யமில்லாமல் இருந்துவிடும் நிலை ஸித்திக்கும்.

'ப்ரமர-கீட ந்யாயம்'என்று ஒன்று. கூட்டுப்புழு ஸதா ஸர்வ காலமும் 'குளவியாகணும், குளவியாகணும்'என்று நினைத்துக் கொண்டேயிருக்குமாம். அந்த ஸதா கால நினைப்பாலேயேதான் அப்புறம் அது ரூபம் மாறி இறக்கையெல்லாம் முளைத்துக் கூட்டைப் பிளந்து கொண்டு போய் விடுகிறதாம்!கீடம் என்றால் புழு. ப்ரமரம் - குளவி. புழு நிதித்யாஸனம் பண்ணியே குளவியாவது ப்ரமர-கீட நியாயம். அந்த மாதிரிதான் ஜீவன் ப்ரம்மமே நினைப்பாக, தான் அதுவாக ஆகணும், இப்பவுங்கூடத்தான் 'அதுதான்' என்றே அல்லும் பகலும் அனவரதமும் நிதித்யஸித்தால் அப்படி ஆகிவிடுகிறான் என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

ஸகுண ப்ரம்மத்தின் பக்கம் ஞான வழிக்காரனை திசை திருப்ப வேண்டாமென்பதற்காக அவர் அப்படிச் சொல்வது. அதாவது, இவனுடைய ஸதாகால நினைப்பின் சக்தியாலேயே ஆடோமேடிக்காக இவன் ப்ரஹ்ம ஸ்வரூபமாகிவிடுகிறதாகக் கதையை முடித்திருப்பது. வாஸ்தவத்தில் அது வாய்ப்பது

ஈச்வராநுக்ரஹத்தில்தான்!அவன் ப்ரஸாதமாகத்தான் ஜீவாத்மா பரமாத்மாவாக ஆவது!இது ஆசார்யாளுக்குத் தெரியாததில்லை;நன்ன்றாகத் தெரியும்!''எந்தக் கார்யமும் அதுவே பலன் தராது;ஈச்வரன் தான் பலனைத் தருபவன்'என்பதுதான் ஆசார்யாள் கர்ம மீமாம்ஸகர்களை ஜயிப்பதற்காகப் போட்ட ப்ரம்மாஸ்திரமே. அப்படியிருக்கு ம்போது, நிதித்யாஸ நினைப்புக் கார்யமே ஆடோமாடிக்காக மஹா பெரிய பலனான ப்ரம்ம நிர்வாணத்தைத் தரும் அவர் நினைத்திருக்கவே மாட்டார்.

மாயையின் மறைப்புக் கார்யத்திற்குத் 'திரோதானம்' என்று பேர். இப்போது நமக்கு நிஜ நாமான பிரம்மம் அப்படி மறைபட்டுத் 'திரோஹித'மாயிருக்கிறது. மறைந்த அந்த வஸ்து பரமாத்ம த்யானத்தால் வெளிபட்டுவிடும் என்று 'ப்ரஹ்மஸூத்ர'த்தில் சொல்லி, உடனேயே, இது ஏதோ ஆடோமேடிக் கார்யமென்று நினைத்துவிடப் போகிறார்களே என்று, இப்படி மறைத்து பந்தப் படுத்தியதும் ஈச்வரன்தான். நாம் நிதித்யாஸனம் பண்ணினால் மறைப்பை நீக்கி ஸத்யத்தை ஆவிர்பவிக்கச் செய்து மோக்ஷம் தருவதும் அவன் தான்'என்று உடைத்தே சொல்லியிருக்கிறது. இதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது, இன்னும் வெளிப்படையாக, ''எவருக்கு வேண்டுமானாலும் ஸ்வாபாவிகமாக, அதாவது இயற்கையாக, ஆடோமேடிக்காக இந்த ஆவிர்பாவம் ஏற்பட்டு விடாது;நன்றாகப் பிரயத்னம் செய்து நிதித்யஸிக்கிற எவனோ ஒருத்தனுக்குத்தான் ஈச்வர ப்ரஸாதத்தால் அப்படி ஏற்படுகிறது'என்று சொல்லியிருக்கிறார். 'ந ஸ்வபாவத ஏவ ஸர்வேஷாம் ஜந்தூனாம்:எல்லாருக்கும் இயற்கையாக 'ரெவலேஷன்'ஏற்படாது;

ஈச்வர கிருபையால் உசந்த ஸித்தி பெற்ற எவனோ ஒருவனுக்குத்தான் 'ரிவீல்'ஆகிறது என்கிறார்.

அத்வைத சாஸ்திரங்களில் ஈச்வராநுக்ரஹத்தைப் பெரும்பாலும் குரு அநுக்ரஹமாகவே காட்டிவிடுவது வழக்கம். ஆனால் ஆசார்யாளோ தம்முடைய

ப்ரகரணங்களில் சிரோமணியாக அநுக்ரஹித்துள்ள 'விவேக சூடாமணி'யில் குரு க்ரபைக்கும் மேலே ஈச்வர க்ருபையைச் சொல்லியிருக்கிறாரே என்று ஒருத்தர் கேட்டார். 'ஸம்ஸார ஸாகரத்தில் எப்படி நீச்சலடித்துக் கடப்பது என்பதற்கு குருமார்கள் கரையிலிருந்து கொண்டேதான் வழிமுறையெல்லாம் சொல்லித் தருவார்கள். சிஷ்யனேதான் ஸ்வயமாக ஸத்ய அறிவான ப்ரஜ்ஞா என்பதைப் பெற்று, அதைப் படகாக வைத்துக் கொண்டு ஸமுத்ரத்திலேயே போய்க் கடக்கணும்'என்று ஆசார்யாள் சொல்லி அந்த ப்ரஜ்ஞையை ஈச்வரனே அநுக்ரஹிக்கிறான் என்கிறார். இதைப்பற்றித்தான் அவர் கேட்டார்.

'வரப்போகிற காலங்களில் (அத்வைத) ஸித்தி கண்ட ஞான குருக்கள் அதிகம்

கிடைக்காமல் போகலாம். ஆனாலும் சிஷ்யர்களைப் பொறுத்தமட்டில் அப்படிப் பட்டவர்களுக்குள்ளிருக்கிருந்தும் ஈச்வரனே உய்வு தருவான்' â¡Á G¬ù^«î º¼ñ£˜è¬÷, è¬óèì,è£îõ˜è÷£è,, ªê£™L, Ýù£½‹ ß,,õó£,,óý^F™ Cwò˜èœ èìŠðî£è,, ªê£™LJ¼,Aø£˜ «ð£L¼,Aø¶.

இன்னொரு காரணமும் சொல்லலாம். தன்னைப் பரிபூர்ணமாக குருவிடமே ஒப்படைத்து, 'அவர் என்ன செய்தாலும் செய்யட்டும்'என்று விட்டுவிட்டுக் கிடக்கிற உண்மையான சரணாகத புத்தி ஒரு சிஷ்யனுக்கு வந்தால் அப்போது அவருடைய க்ருபையே படகு, அநுகூலமான காற்று எல்லாமாக இருந்து அவனை அக்கரைக்குக் கொண்டு தள்ளி விடும். ஆனால் அப்படி (பூர்ணமாக சரணாகதி) பண்ணுவது எல்லோருக்கும் முடியாது. ஆனாலும், தான் சரணாகதி பண்ணாவிட்டாலும், "எப்படியும் அவர் குருதானே?உபதேசம் தந்தவர்தானே?அப்படி இருக்கும்போது அவர் க்ருபையே நம்மை உபதேச லக்ஷ்யத்தில் கொண்டு சேர்க்காமல் விட்டுவிடுமா?என்று இவன் ஸாதனையின் கொஞ்சம் ஏனோதானோஎன்று இருந்துவிட்டால் என்ன ஆவது?சரணாகதியும் ஸரியாகப் பண்ணாமல், ஸாதனையின் 'பெர்ஃபெக்'டாகப் பண்ணாமல், 'குரு பார்த்துக் கொள்வார்'என்று மெத்தனமாக இருந்துவிட்டால்?அது கூடாது என்றுதான், அப்படிப் பட்டவனை உத்தேசித்தே-குரு

க்ருபையை ஒருத்தன் ஸால்ஜாப்புக் காட்டி ஸ்வய ப்ரயத்தனத்தை விட்டுவிடக் கூடாது என்று தெரிவிப்பதற்காகவே- 'குரு கரையிலிருந்துதான் வழி காட்டுவது. நீதான் அஸலே ஸமுத்ரத்தில் படகு ஓட்டிக் கொண்டு போகணும்'என்று சொல்லியிருப்பார்.

இப்படி நீயே பண்ணிக்கணும் என்றாலும் 'கடைசியில் நம் யத்னத்திற்கேதான்

அந்த சக்தி இருக்கிறதா?என்று 'ஈகோ'வந்துவிடப் போகிறதே என்பதையும் (ஆசார்யாள்) கவனித்திருக்கணும். அதனால்தான் நீ பண்ணுகிறாய் என்றாலும்,

அதுவும் ஈச்வராநுக்ரஹம் அதற்கு அநுகூலமாக உன்னைத் தூண்டிவிட்டு, துணையாக வந்து கொண்டிருப்பதால்தான் என்றும் சொல்லியிருக்கிறார்.

பகவான் கீதையில் சொல்லியிருக்கிறதைப் பார்த்தால் அதையேதான் ஆசார்யாளும் சொல்லியிருக்கிறாரென்று தெளிவுபடும். (கீதையை) முடிக்கும்போது ஸ்வாமி, 'எங்கிட்ட சரணாகதி பண்ணிட்டுக் கிடடா!நான் பார்த்துக்கிறேன்!என்கிறார். அதற்குக் கொஞ்சம் முன்னாடி, 'ஈச்வரன் கிட்டே ஸர்வபாவ சரணாகதி பண்ணு. அவனருளால் உத்தம சாந்த லக்ஷ்யம் ஸித்தித்து விடும்'என்றும் சொல்லியிருக்கிறார். அவரே இன்னோரிடத்திலே, 'உத்தரேத் ஆத்மநாத்மாநம்' - 'தானேதான் தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று ஸ்வய முயற்சியைப் பெரிசாக சொல்லியிருக்கிறார். 'டோட்டல் சரண்டரானாலொழிய தன் முயற்சி பண்ணித்தான் ஜயித்தாகணும் என்பதே தாத்பர்யம். இதுகளுக்கு உள்ளேயெல்லாமும் ஈச்வராநுக்ரஹம் ஒளிந்து கொண்டுதானிருக்கிறது!

'டீப்'பாக நிதித்யஸிக்கிறவன் அப்பப்போ தன்னை மறந்து பிரம்மத்திலே சொருகிக் கொள்வதும் விடுபடுவதுமாக இருக்கிறானென்றால் அவற்றைப் பண்ணுவிப்பது ஈச்வரன்தான். நித்யாநித்ய வஸ்து விவேகம் என்று ஒருத்தன் ஆரம்பிப்பதிலிருந்தே - இன்னும் அடியிலே ஒழுங்காகக் கர்மா செய்வது, பக்தி பண்ணுவது என்று பொட்டில் குட்டிக்கொள்ள ஆரம்பித்ததிலிருந்தே - ஒருவருடைய

முயற்சிக்குப் பலனாக அவனை இஞ்ச் இஞ்சாக முன்னேற்றிக்கொண்டு போவது ஈச்வரன்தான். ஆனால் கொஞ்சங்கூட அவன் பண்ணுவதாக வெளிப்படக் காட்டிக் கொள்ள மாட்டான். 'நமக்கும் சித்தே (சிறிதே) சித்த சுத்தி வந்திருக்கே, வைராக்யம் வந்திருக்கே மனஸைத் துளியாவது நிறுத்த முடியறதே'என்றிப்படி ஸாதனைக்காரன் தெரிந்துகொண்டு அதிலிருந்து ஊஹமாகத்தான் ஈச்வரக் கிருபையை அநுமானிக்க முடியும். ஆனால் நிதித்யாஸனம் என்று இவன் பண்ண, இவன் ஒன்றும் பண்ணாமல் சொக்கிச் சொருகிக் கிடக்கிறதோ அவனேதான் நேராகச் செய்விக்கிறது. இதற்கு முந்தியெல்லாம் முன்னேறுகிற கார்யம், மேலும் மேலும் பக்வமாகிற கார்யம் ஜீவனுக்கு இருந்தது. இப்போது கார்யமில்லாத ஸ்திதிக்குப் போக அவன் என்ன கார்யம் செய்வது?அதைப்பற்றி நினைக்கலாமே தவிர அதாகவே ஆகிறதை ஒரு கார்யமாக அவன் எப்படிப் பண்ண முடியும்?

'பரீக்ஷை பாஸ் பண்ணினேன்'என்கிறோம். வாஸ்தவத்தில் 'பாஸ்'நாமா பண்ணினோம்?நாம் பண்ணினது பரீக்ஷை எழுதினதுதான். அதை நன்றாகப் பண்ணினோம். ஆனால் நாமே பாஸ் போட்டுக் கொள்ள முடியுமா என்ன?பரீக்ஷாதிகாரி போட்டுத்தானே அது கிடைக்கிறது?பரீக்ஷை எழுதுவதோடு நாம் சும்மா இருக்க வேண்டியதுதான். பாஸ் அவர்தான் போடணும். (ஸ்வதந்திர யுகத்திற்கு முன் கால நடப்புப்படி சொல்கிறேன்!பாஸ் போடப் பண்ணுவதற்காக 'மூட்டை'நகர்த்துவதோ, மிஞ்சிப் போனால் துப்பாக்கியைக் காட்டுவதோ தெரியாத காலம்!) கார்ய லோகத்திலேயே இப்படி -பரீக்ஷை எழுதும் காரியந்தான் நம் வசம்,

அதற்குப் பலன், பாஸ் வாங்குவதற்கு பலதாதா பரீக்ஷாதிகாரி என்று இருக்கிறது!கார்யமில்லாமல் நின்று போகிற லோகத்திற்குள் நாம் 'பாஸ்'பண்ண - பலதாதாவான ஈச்வரனின் அநுக்ரஹமே மூலதனமாகவும் செய்விக்கும் கருவியாகவும் இருக்கிறது.

நாம் எழுதுகிற பரீக்ஷையில் பாஸ் பண்ணுவது வெறுமனே ஒரு வார்த்தையாக இருக்கிறது. அதற்கப்புறம் மேலே படிப்பதில் அல்லது உத்யோகம் பிடிப்பதில் அதற்கு

வால்யூவே தவிர, அதற்கென்றே எதுவுமில்லை. ஸாதனையில் அதன் முடிவான நிதித்யாஸனத்தில் பாஸ் என்பதோ அதுவே மஹாநுபவமாக இருக்கிறது!அதற்குமேலே எதுவுமே கிடையாது. ப்ரம்ம நிர்வாணமாக, அத்வைத மோக்ஷமாக, நித்யானந்தமாக அது இருக்கிறது!

ஜீவாத்மாவின் ஸதாகால நினைப்புக்குப் பலனாக ஈச்வரன்தான் அவனைப் பரமாத்மாவாக்கிவிடுகிறான் என்பதே ஸத்யம்.

தமிழில் ப்ரமர-கீட நியாயத்தைவிடப் பொருத்தமாக ஒன்று சொல்வார்கள். 'கொட்டிக் கொட்டிக் குளவி தன் நிறம் ஆக்கிற்றாம்'என்று!புழு தானாகவே குளவியாய் ஆவதாக இல்லை;வண்டாகணும் என்று தபஸிருக்கும் புழுவை ஒரு குளவியே கொட்டிக் கொட்டி அதையும் தன் ரூபமாக மாற்றிவிடுவதாக இந்த வசனம் காட்டுகிறது. அதே மாதிரிதான், ஈச்வரனே நிதித்யஸிக்கும் ஜீவாத்மாவைப் பண்ணுகிறான்.

இப்படிச் சொல்வதிலேயும் ஒரு வித்யாஸம்!ரூப மாற்றம் பண்ணுபவன் ஸகுண ப்ரம்மமான ஈச்வரன். அவன் பண்ணும் ரூப மாற்றமோ அரூபமான நிர்குணப் ப்ரம்மமாக!ஜீவன் த்யானிப்பதும் அப்படி ஆகத்தானே ஒழிய, ஈச்வரனாகனும் என்றில்லை!ஆக, உபமானமே சொல்வதற்கில்லாத விஷயமாக இது உயர்ந்து நிற்கிறது.

ஆரம்பத்திலிருந்தே தன்னைக்காட்டிக் கொள்ளாமல் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேற்றத்தை அநுக்ரஹித்துக் கொண்டு போன ஈச்வரன் இப்போதும் தன்னைக்காட்டிக் கொள்ளாமல்தான் கண்ணாமூச்சியாக அவ்வப்போது ஸமாதியில் ஆழ்த்திக் கொண்டுபோய், அப்புறம் சாச்வதமாகவே ஜீவன் முக்தனென்றும் விதேஹ முக்தனென்றும் ஆக்கிவிடுகிறான். ஆனாலும் பெரிய வித்யாஸம் என்னவென்றால், முன் ஸ்டேஜ்களில் அவன் இவனுடைய சித்தத்திலேயே ஏற்படும் சுத்தி, மெருகு, நகஸ்களுக்குக் காரண பூதனாக இருந்தான். இப்போதோ இவனுடைய சித்தத்தை அழித்தே விடுகிறான்!சித்தம் அழிந்த பின் இவனால் அவனை - அதாவது ஸகுண ப்ரம்மத்தை - எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?அதனால்தான்

இப்போதும் ஜீவனுக்குத் தெரியாத கண்ணாமூச்சியாக ஈச்வரனுடைய கார்யம் இருக்கிறது. கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அதைவிட கோடி மடங்கு அத்யந்தமாகத் தானும் அவனும் ஒன்றே என்பதாக நிர்குணத்தில் ஐக்யம்

பண்ணிக்கொண்டு விடுகிறான். ஜீவனை இல்லாமல் பண்ணுகிற ஈச்வரன் (ஸகுணமான) தன்னையும் இல்லாமல் பண்ணிக் கொண்டு ஸத்யம், ஞானம், அனந்தம் என்றிருக்கிற ப்ரம்ம தத்வம் மட்டுமே பிரகாசித்துக் கொண்டிருக்கச் செய்கிறான்!பிரகாசம் என்றால் என்ன?ஆயிரம் 'வாட்'பல்பு போட்ட மாதிரி வெளிச்சமாகவா இருக்கும்?என்னவோ நம்ம பாஷையில், நம்முடைய எண்ணத்தின் லெவலில் புரிந்து கொள்வதற்காக இப்படியெல்லாம் சொல்வது!

வாக்கால் வர்ணிக்க முடியாத, மனஸால் பிடிக்க முடியாத - அதைவிட ஆனந்தமில்லை, சாந்தமில்லை, ஞானமில்லை, ஸ்வதந்திரமில்லை என்றிருக்கும் - அகண்டமான ஏக வஸ்துவாக இருக்கும் ஸத்ய ஸத்யமான, நித்ய நித்யமான நிலை!அதுதான் ஆசார்யாள் ஞானவழி என்றும், அத்வைத ஸாதனை க்ரமம் என்றும் அற்புதமாக மராமத்துப் பண்ணிக் கொடுத்திருக்கும் பாட்டை நம்மைக் கொண்டு சேர்க்கும் முடிவான இடம்.

அவருடைய அநுக்ரஹத்தால் அதைப் பற்றிப் பேசி, கேட்டு, நினைக்கும்படியான பாக்யம் கிடைத்தது. அந்த வழியிலேயே அடியெடுத்து வைத்துக் கொஞ்சம் கொஞ்சமாக முன்னே போகவும் அவரையே ப்ரார்த்திக்க வேண்டியது.

---



## உடன் செய்ய வேண்டியது

முதலில் பண்ணவேண்டியது கர்மாநுஷ்டானம்;சாஸ்திரத்தில் சொல்லியுள்ள ஆசார விதிகள் வழுவாமல் செய்கிற

கர்மானுஷ்டானம். இப்போதெல்லாம் 'அத்வைதா'என்றாலே உடனே கர்மானுஷ்டானத்தை விட்டுவிட வேண்டும், ஆசாரங்களையெல்லாம் விட்டுவிட வேண்டும் என்பதுதான் அபிப்ராயமாயிருக்கிறது!அநாசாரமாயிருப்பதற்கு 'ஃப்ரீ லைஸன்ஸ்'தான் 'அத்வைதா' என்று ஆக்கிக் கொண்டு, 'இதிலேயெல்லாம் என்ன இருக்கு?' என்று என் மாதிரி கட்டுப்பெட்டிகளுக்கு உபதேசிப்பதாயிருக்கிறது!அத்வைத அநுபவம் - ஜீவ-ப்ரம்ம அபேத அநுபவம் -லவலேசங்கூட வாய்க்காமலே, வாய்க்க எந்த முயற்சியும் பண்ணாமலே, 'ஆத்மாவுக்கு ஏது கர்மா?ஏது ஆசாரக் கட்டுப்பாடு?வர்ணாச்ரம வித்யாஸமெல்லாம் பார்த்தால் அத்வைதத்திற்கு அடியோடு விரோதமில்லையா?'என்று சவுடால் பண்ணுவது நிறைய வழக்கத்திற்கு வந்திருக்கிறது!அதாவது, தாங்கள் சாஸ்திரத்தையெல்லாம் விட்டுவிட்டு இஷ்டப்படி இருப்பதற்காகவே 'அத்வைதா'வை சந்திக்கு இழுப்பதாகத்தான் இருக்கிறது. இந்த பாபத்துக்கு நாமும் ஆளாவானேன் என்றுதான் நான் (அத்வைத விஷயமாக உபந்நியாஸம் சொல்வதில்லையென்று) வாயை மூடிக் கொண்டிருந்தேன். இன்றைக்கு என்னமோ பேச வைத்து விட்டது. தப்பானால் .......... இவ்வளவு பேசிவிட்டுக் கடைசியில் வருத்தமாக, guilty-யாக முடிக்க வேண்டாம். முடிவான லக்ஷ்யமான அத்வைதத்தைப் பற்றி எல்லாருக்குமே ஒரு அவுட்லைன் தெரியத்தான் வேண்டும் என்பதே ஆசார்யாளின் அபிப்ராயமாதலால் அவர் அநுக்ரஹத்தில்தான் ஏதோ எனக்குத் தெரிந்த மட்டும் சொன்னதாக நினைத்து த்ருப்தி அடையப் பார்க்கிறேன்.

இப்போது உடனே ஸீரியஸாக மேற்கொள்ள வேண்டிய ஸமாசாரம் என்று இதை (அத்வைத ஸாதனையை) யாரும் எடுத்துக் கொள்ள வேண்டாம். அடி மனஸில் ஜீவனும் ப்ரம்மமும் ஒன்றுதான் என்பதை நன்றாகப் பிடித்துப் போட்டுக் கொள்ளுங்கள். அது தன்னால் வேலை செய்யும். நீங்கள் 'தெரிந்து'செய்ய வேண்டியது, சாஸ்திரோக்தமாகக் கர்மாக்களை அநுஷ்டிப்பதுதான்.

அநுபூதிமான்கள் வளர்த்துக் கொடுத்து ஸம்ப்ரதாயமாக வந்துள்ள அத்வைத சாஸ்திரத்தில், முதலில் வைதிக

கர்மாநுஷ்டானத்தைச் சொல்லி அதில் ஸித்தி கண்ட பிறகுதான் ஸீரியஸாக அத்வைத ஸாதனைக்கு போகச் சொல்லியிருக்கிறது.

எல்லாவற்றுக்கும் அடிப்படையாக நாம் நல்லவர்களாக இருப்பதற்கு முயற்சி ஆரம்பிக்க வேண்டும். நாம் 'ஏகம் ஸத்'தாகிறது இருக்கட்டும். பெத்தப் பேரில் அந்த ஸத்தாகிறதற்கு ஸாதனை ஆரம்பிக்கிறோமாக்கும் என்று இதை விட்டுவிடக்கூடாது!'ஸத்' என்பதற்கு மெய்ப் பொருளான ப்ரம்மம் என்பதோடு நல்லது (நல்லகுணம்) என்றும் அர்த்தமுண்டு என்று கிருஷ்ண பரமாத்மாவே எடுத்துக் காட்டியிருக்கிறார்;'ஸத்பாவே ஸாது பாவே ச ஸதித்யேதத்ப்ரயுஜ்யதே'. நல்லவராக இருப்பவரை 'ஸாது'என்கிறோமல்லவா?அது ஸத் என்பதன் அடியாகத்தான் பிறந்திருக்கிறது. "அவர் நல்ல ஸத்து. அவனா அஸத்தாச்சே!"என்கிறபோது நல்லதைத்தானே 'ஸத்'என்கிறோம்?ஆகவே முதலில் இந்த ஸத்தைப் பிடித்துக் கொண்டு அப்புறம் இதன் வழியாக அந்த ஸத்துக்குப் போகலாம்!

ஸத்குணமும் ப்ரம்ம ஞானமும் ஸம்பந்தமில்லாதவை அல்ல. இது இருந்தால்தான் அது. அதற்கு இது 'úýè£Kè£óí‹'â¡«ø Ýê£˜ò£œ ªê£™LJ¼,Aø£˜. ÜŠð®ªò¡ø£™, '¶¬í,è£óí‹', '«ê˜‰¶ å^¶¬öŠ¹Š ðô¬ù M¬÷M,Aø è£óí‹'â¡Á Ü˜^î‹. ðô¡ M¬÷M,Aø¶ â¡ø¾ì¡ ñ£‹ðö‹ M¬÷MŠð¶ G¬ù¾ õ¼Aø¶. ñ£‹ðö^F™ ªó£‹ð ¼C å†´ ñ£‹ðö‹î£¡. Þó‡´ FÂú§Š ðöõ¬èèœ «ê˜‰¶ å^¶¬ö^¶, å†® à¬ö^¶ à‡ì£õ¶ Ü¶. å†´ ñ£‹ðö^FŸ° 'úýè£ó‹'â¡«ø «ð˜. è£…Y¹ó^F™ å¼ ñ£õ£ù å†´ ñ£ Ü®J«ôî£¡ ãè£‹«ó,,õó«ó£´ Ü‹ð£œ Ü^¬õîñ£è å†®, ªè£‡®¼Šð¶. ÜŠð® ú^°í º‹ ë£ùº‹ å†®, ªè£‡´î£¡ «ñ£þŠ ðö‹ ð¿,è «õ‡´‹. W¬îJ™ å¼ Þì^F™ ë£ù‹ â¡ð¶ Þ¡ù â¡Á võ£I ªê£™Aø«ð£¶, 'îŸªð¼¬ñ ð£ó£†ì, Ãì£¶, ì‹ð‹ Ãì£¶, ÜU‹ú£ °í^«î£´‹ ªð£Á¬ñ«ò£´‹ «ï˜¬ñ«ò£´‹ Þ¼,è «õ‡´‹'â¡ªø™ô£‹ Ýó‹H^¶ Þ¡ù‹ G¬øò Lv† ªè£´^¶, ªè£‡´ «ð£Aø£˜. Üƒ«èî£¡ Ýê£˜ò ð£wò^F™, 'Þªî™ô£‹ âŠð®

ë£ù‹?â¡Á âFó£O â¿Š¹õî£è Ý«þð¬í¬òŠ «ð£†´M†´, ðFô£è, Þªî™ô£‹ ë£ù^FŸ° úýè£K è£óíñ£îô£™ ÞõŸ¬ø«ò ë£ù‹ â¡ø¶' â¡Aø£˜. Ü«î£´ ë£ù‹ ãŸðì Þ‹ñ£FKò£ù ï™ô °íƒè«÷ GI^îñ£°‹ â¡Á‹ ªê£™LJ¼‚Aø£˜.

'தற்பெருமை பாராட்டப்படாது'என்பது விநயத்தைத்தான்;அடக்க குணத்தைத்தான். நாமும் அப்படி அடக்கமாக ஆரம்பித்து நல்லவர்களாக இருக்க முயற்சி பண்ணுவோம். அந்த ஸத்தின் நினைவை அடி நெஞ்சில் வைத்துக் கொண்டு, ஆசார்யாளைப் பிரார்த்தித்துக் கொண்டு இந்த ஸத்துக்கானதைச் செய்வோம்!

"ஸத்"என்ற வார்த்தையோடுதான் பூர்த்தி பண்ணுவது. அப்படி உங்கள் எல்லாருக்காகவும் மனஸுக்குள் சொல்லிக் கொள்கிறேன்.

---



## அவதார புருஷர் ஆசார்யாள்

ஆசார்யாள் என்று நாம் பூஜிக்கிற ஆதிசங்கர பகவத் பாதர்கள் 'ஸாக்ஷாத் பரமேச்வரரின் அவதாரம். தன்னுடைய சித்சக்தி (ஞான சக்தி)யை உள்ளுக்குள்ளே அடக்கிக் கொண்டு ஒரு கார்யமும் இல்லாமல் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்த தக்ஷிணாமூர்த்திதான் அப்படி அவதாரம் பண்ணினார். எத்தனைக்கெத்தனை மௌனமாக இருந்தாரோ அத்தனைக்கத்தனை பாஷ்யம், ஸ்தோத்ரம், வாதம் என்று பேசித் தீர்த்தார். எத்தனைக்கெத்தனை காரியமே இல்லாமலிருந்தாரோ அத்தனைக்கத்தனை காரியம் பண்ணினார். இடத்தை விட்டு நகராமல் ஆலவிருக்ஷத்தடியில் உட்காரந்திருந்தவர் மூன்று தரம் காலால் நடந்தே ஆஸேது ஹிமாசலம் (ராமேச்வரத்திலிருந்து

இமயமலை வரை) ஸஞ்சாரம் பண்ணினார்.

கார்யமில்லாத ப்ரம்மம்தான் சிவன்;காரியம் பண்ணுகிற ப்ரம்மம் சக்தி. சித்சக்தி விலாஸத்தால்தான் காரியப் பிரபஞ்சம் நடக்கிறது. ஆசார்யாள் இத்தனை காரியம் பண்ணினார் என்றால், தக்ஷிணாமூர்த்தியாக இருந்தபோது உள்ளே அடக்கிக் கொண்டிருந்த சித்சக்தியான அம்பாள் இப்போது வெளியிலே ஆவிர்பவித்து விட்டாள் என்றே அர்த்தம். ஆகையால் ஆசார்யாளை ஈச்வரன், அம்பாள் இரண்டு பேரும் சேர்ந்த அவதாரம் என்று சொல்ல வேண்டும். மாதா, பிதா, குரு என்கிறோம். ஜகன்மாதாவும் ஜகத்பிதாவும் சேர்ந்து இப்படி ஜகத்குருவாக வந்தார்கள்!

கார்யம் பண்ணாத தக்ஷிணாமூர்த்திக்குள் கார்யசக்தியான அம்பாள் இருந்த மாதிரியே, ஆசார்யாள் ஓயாமல் ஒழியாமல் எத்தனையோ கார்யம் பண்ணிக் கொண்டிருந்தாலும் உள்ளுக்குள்ளே ஒரு கார்யமும் பண்ணாத ப்ரசாந்த நிலையில்தான் இருந்து கொண்டிருந்தார். "கார்யமில்லாமல் தான் தானாக இருப்பதுதான் ப்ரம்மம்:அதுவேதான் ஜீவனுடைய ஆத்மாவின் ஸத்யமான நிலையும்"என்ற அத்வைத வேதாந்தத்தை அசைக்கமுடியாத ஸித்தாந்தமாக நிலைநாட்டிய அவர், தாமும் அப்படிப்பட்ட ப்ரஹ்மானுபவத்திலேயே உள்ளூர இருந்தார்.

அப்படி பிரம்மமாக இருந்துகொண்டே, வெளியிலே மநுஷ்யாவதாரம் எடுத்ததால் மநுஷ்ய ரீதியிலே அநேக கார்யங்களைச் செய்தார். ட்ராமாவில் எந்த வேஷத்தை எடுத்துக் கொள்கிறோமோ அதற்குத் தகுந்தபடிதான் ஆட வேண்டும்;ஸொந்த ரூபத்தைக் காட்டக்கூடாது. லக்ஷாதிபதியான நடிகனானாலும் குசேலர் வேஷ் போட்டால் கிழிசல் வேஷ்டிதான் கட்டிக் கொள்ள வேண்டும்!ஆனாலும் அவன் எத்தனை உருக்கமாகக் குசேலர் வேஷம் போட்டாலும் அவனுக்கு வாஸ்தவத்தில் தான் தரித்திரன் இல்லை என்பது தெரியும். இப்படித்தான் இந்த ப்ரபஞ்ச நாடகத்தில் அவதார புருஷர்கள் 'ஆக்ட்'பண்ணுவார்கள். தங்களுடைய யதார்த்த ஸ்வரூபத்தை உள்ளுக்குள்ளே கொஞ்சங்கூட மறக்காமலே, வெளிப்பார்வைக்கு மறந்த மாதிரி மனுஷ்ய ரீதியில் ஆக்ட் பண்ணுவார்கள்.

தங்களுடைய யதார்த்த ஸ்வரூபத்தை உள்ளுக்குள்ளே கொஞ்சங்கூட மறக்காமலே, வெளிப்பார்வைக்கு மறந்த மாதிரி மனுஷ்ய ரீதியில் 'ஆக்ட்'பண்ணுவார்கள். 'மாயா மாநுஷ', 'லீலா மாநுஷ', 'கபட நாடக வேஷ'என்றெல்லாம்

இதை வைத்துத்தான் கிருஷ்ண பரமாத்மா போன்றவர்களைச் சொல்கிறோம். ராமர் மஹாவிஷ்ணுவின் அவதாரமானாலும், ஸீதையை ராவணன் தூக்கிக் கொண்டு போன போது ஸாமான்ய மநுஷ்யர் மாதிரி துக்கப்பட்டார். லங்கையில் யுத்தபூமியில் லக்ஷ்மணர் மூர்ச்சையானபோது ஒரேடியாக அழ ஆரம்பித்து விட்டார்.

அவதாரங்கள் ஏன் இப்படிப் பண்ண வேண்டுமென்றால், அவர்கள் அவதரித்ததே ஜனங்களுக்கு வழி காட்டத்தான். ஜனங்கள் தங்களுடைய மநுஷ்ய சக்தியை வைத்துக் கொண்டே, ஸ்வபாவத்தை ஒட்டிப் போயே, 'நேச்ச'ரை 'வயலண்டா'க (பலாத்காரமாக) எதிர்க்காமல், படிப்படியாக உயர்த்திக் கொண்டு போயே முடிவிலே பூர்ணநிலை அடைய வேண்டும். இதிலே அவர்களுக்கு வழிகாட்டுவதற்காகத்தான் - ப்ரக்ருதி வேகங்களில் மாட்டிக் கொண்டு திண்டாடுகிற தாங்களும் அபிவிருத்தி அடைய முடியும் என்ற நம்பிக்கையையும் உத்ஸாஹத்தையும் அவர்களுக்கு ஊட்டுவதற்காகத்தான் - அவதாரங்களும் மநுஷ்யர் மாதிரி நடக்கிறது;நடிக்கிறது.

இந்த மாதிரி ஆசார்யாளும் மநுஷ்யவேஷம் போட்டார். லோகமெல்லாம் அடிபட்டுப் போய் மனஸும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து, இரண்டாவதாக இன்னொன்று இல்லாத அத்வைத ப்ரம்மமாகி நிறைந்து விடுகிற ஞான நிலையை உபதேசம் பண்ணத்தான் அவர் அவதாரம் பண்ணினார். அப்படியிருக்கும்போதே, மநுஷ்ய ஸ்வபாவத்துக்கு அநுகூலமாக லோகத்தையும் நிஜம் மாதிரி, மனஸையும் நிஜம் மாதிரி ஒப்புக்கொண்டே, இதெல்லாம் அடிபட்டுப் போகிற நிலைக்குப் படிப்படியாகக் கொண்டுபோகிற தினுஸிலேயே அவர் வழி போட்டுக் கொடுத்திருக்கிறார்.

ஸகலத்தையும் நடத்துகிற சக்தி ஒன்று இருக்கிறது. ப்ரஹ்மத்தைத் தவிர வேறே எதுவும் இல்லை என்பதால், அதற்குள்ளேயேதான் இந்த கார்ய மஹாசக்தியும் இருக்கிறது

என்று ஆகிறது. ஆகையால் நிர்குணமான ப்ரம்மத்தை உபாஸிக்க முடியாதவர்கள் அதன் சக்தியிடம் மனஸை பக்தியில் திருப்பிவிட்டால் அப்புறம் அதன் கார்யமில்லாத ஸ்வ-ஸ்வரூபத்தைப் பற்றிய ஞானத்தைப் பெற முடிகிறது. லோக வ்யாபாரங்களைச் செய்கிற கார்ய ப்ரம்மமே இந்த ஞானத்தையும் அநுக்ரஹித்து விடுகிறது என்பதால் நம் ஆசார்யாள் பக்தி மார்க்கத்தைத் தம்முடைய ஞான மார்க்கத்துக்குப் பூர்வாங்கமாக வைத்து போஷித்து, விருத்தி பண்ணினார். இதற்காகத்தான் ஷண்மத ஸ்தாபனம் என்று தேவதா ஆராதனா மார்க்கங்களை ஸ்தாபிதம் பண்ணினார். அநேக பக்தி க்ரந்தங்களைப் பண்ணினார். இந்த தேசத்தில் ஒரு மூலை முடுக்கு பாக்கி இல்லாமல் க்ஷேத்ராடனமும் தீர்த்தாடனமும் பண்ணி அங்கங்கே யந்த்ரங்களை ஸ்தாபித்தார். ஆலய பூஜாக்ரமங்களை ஏற்படுத்திக் கொடுத்தார்.

---



## பக்தி-கவிதைச் சிகரம் ' ஸௌந்தர்ய லஹரி '

இப்படி பக்தி மார்க்கத்திலே அவர் அநேகம் பண்ணியதற்கெல்லாம் சிகரமாக இருப்பதுதான் 'ஸௌந்தர்ய லஹரி'. ஆசார்யாளைப் பற்றித் தெரிந்தவர்களுக்கெல்லாம் அவரைப் பற்றி வேறென்ன தெரிந்திருக்குமோ தெரிந்திருக்காதோ - அவர் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் என்று தம்முடைய ஸித்தாந்தமான அத்வைதத்தை முடிந்த முடிவாக ஸமர்த்தனம் பண்ண (நிலைநாட்ட) எழுதியிருக்கிறாரென்பது கூடத் தெரிந்திருக்குமோ தெரிந்திருக்காதோ - அவர் பெயரைச் சொன்னாலே 'ஸௌந்தர்ய லஹரி'பண்ணினவர் என்று தெரிந்திருக்கும். ஆசார்யாள் என்றாலே பொது ஜனங்களுக்கு நினைவு வருவது 'பஜ கோவிந்த'மும்

'ஸௌந்தர்ய லஹரி'யுந்தான்.

அவருடைய பக்திப் பணிக்கு மட்டுமில்லாமல் கவி என்கிற முறையில் அவருக்கு உள்ள ப்ரதிபா சக்தியை (மேதையை)க் காட்டும் சிகரமான ஸ்ருஷ்டியும் 'ஸௌந்தர்ய லஹரி'தான்.

அதை அவர் அமைத்திருக்கும் மீட்டருக்குப் பேரும் 'சிகரிணி'என்றே பொருத்தமாக இருக்கிறது. வரிக்குப் பதினேழு அக்ஷரமுள்ள மீட்டர்களில் அது ஒன்று. காளிதாஸர் நிரம்பக் காவ்ய ரஸத்தோடு எழுதியிருக்கும் 'மேக ஸந்தேச'மும் பதினேழு அக்ஷர மீட்டர்களில் இன்னொன்றுதான். அதற்கு மந்தாக்ராந்தா என்று பேர். அதிலே பதினேழு அக்ஷரங்கள் 4-6-7 என்று மூன்றாகப் பிரியும். 'சிகரிணி'வ்ருத்தத்தில் அதே பதினேழு 6-11 என்று பிரியும்.

ஸங்கீத வித்வான்களும், நாட்ய சாஸ்திரகாரர்களும் சொல்வார்கள். இரட்டைப் படையாக ஆதிதாளம் மாதிரி இருப்பதைவிட மிச்ரம் என்று இரட்டைப் படையோடு ஒற்றைப் படையும் சேர்ந்தால்தான் அதிலே மிடுக்கு வேண்டிய ஸமயத்தில் மிடுக்கும் ஜாஸ்தி, விச்ராந்தி வேண்டிய இடத்தில் விச்ராந்தியும் ஜாஸ்தி என்று. அதே மாதிரி கவிதையிலும் வார்த்தைகள் பிரிகிறபோது இரட்டைப் படையோடு ஒற்றைப் படையும் சேர்ந்தால் அழகு ஜாஸ்தியாகிறது.

காவ்ய ரூபம், காவ்ய ரஸம் இரண்டுக்கும் 'ஸௌந்தர்ய லஹரி'யைச் சிறப்பித்துச் சொன்னாலும் அதன் முக்யமான சிறப்பு பக்தி ஸ்தோத்திரம் என்ற முறையில்தான்.

---

## ஞானியும் பக்தியும்

ஃபிலாஸஃபி (தத்வ சாஸ்திரம்) எனறு தனியாக எடுத்துக் கொண்டே இந்த நாளில் பார்ப்பதால் "அத்வைத ஞானத்தைச் சொன்ன ஆசார்யாள் பக்தி மார்க்கத்தை அபிவிருத்தி பண்ணியிருப்பாரா?இதெல்லாம் வெறும் புரளி. எவரோ பண்ணின ஸ்தோத்திரங்களை ஆசார்யாள் பேரில் ஏற்றி விட்டார்கள். யந்த்ரஸ்தாபனம் முதலானதும் அவர் செய்திருக்க முடியாது'என்கிறார்கள். ஆனால் நம் ஆசார்யாள் ப்ரொபஸர் பாடம் சொல்கிற மாதிரி ஃபிலாஸஃபி என்று பிரித்துக் கொண்டு போனவரில்லை. ஃபிலாஸஃபி வராத ஸாதாரண ஜனங்கள் முதற்கொண்டு ஸகலரையும் அவரவர் இருக்கிற நிலையிலிருந்து, அந்த நிலையை அநுஸரித்துக் கொண்டு போயே, கொஞ்சங் கொஞ்சமாவது தூக்கிவிட வேண்டும் என்றுதான் அவர் வந்தார். அதனால், ஞானமார்க்கத்தில் போகக் கூடியவர்களுக்கு ஒரே அத்வைதமாகத் தம்முடைய பாஷ்யங்களிலும் ப்ரகரண க்ரந்தங்களிலும் உபதேசம் பண்ணினாலும், மற்ற ஜனங்களை உத்தேசித்து அவரவர் ஸ்வதர்மப்படியான கர்மாவையும், பக்தியையும் நிரம்பப் போஷித்து விருத்தி செய்து கொடுத்தார். இதற்காக க்ஷேத்ரம் க்ஷேத்ரமாகப் போவது ஆலய ப்ரதிஷ்டையும் யந்த்ர ஸ்தாபனமும் பண்ணுவது ஸ்தோத்ரம் செய்வது முதலானவற்றைப் பண்ணினார்.

'எல்லாம் ஒன்று என்கிறவன் தான் ஞானி, பகவான், பக்தன் என்று இரண்டாகப் பிரிந்துள்ளபோதே பக்தி இருக்க முடியும். அதனால் ஒரு ஞானி பக்தனாக இருக்கவே முடியாது'என்று 'ஆர்க்யூ'செய்கிறார்கள். அப்படி செய்கிறவர்கள் தங்களுக்கே அத்வைத ஞானம் வந்துவிட்டதாக சொல்லிக் கொள்ள முடியாது!ஆனால் நிஜமாகவே அப்படிப்பட்ட ஞானத்தைப் பெற்றிருந்த சுகப்ப்ரம்மம் எப்படி இருந்தார், ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் எப்படி இருந்தார் என்று பார்த்தால் அவர்களெல்லாம் பரம பக்தர்களாகவும் இருந்துகொண்டு பக்தி நூல்களை உபகரித்திருக்கிறார்கள். ராமகிருஷ்ண பரமஹம்ஸாகூட அத்வைதத்தை ஒப்புக் கொண்டவர்தான். ஆனால் 'காளி, காளி' என்றே பக்தியாக இருந்திருக்கிறார். ஸமீபத்தில் ரமண ரிஷியும் அருணாசலேஸ்வரரை ஸ்துதி

பண்ணியிருக்கிறார்.

இன்னொரு பக்கம் மாணிக்கவாசகர், நம்மாழ்வார், அருணகிரிநாதர், தாயுமானவர் மாதிரி பக்தியிலே உருகி உருகி பாடியவர்கள் அத்வைத அநுபூதிமான்களாகவும் இருந்திருக்கிறார்களென்பது அவர்களுடைய பாடல்களில் அங்கங்கே flash ஆகிறது.

ஞானி பக்த க்ரந்தம் பண்ணக்கூடாது என்றால், அவன் ஞான கர்ந்தமும்தான் பண்ணக் கூடாது என்பேன்!இவர்களுடைய வாதத்தின்படி ஞான நூல்களைப் பண்ணினவர்கள், ஞான உபதேசம் பண்ணினவர்கள் அத்தனை பேரும்

ஞானியில்லை என்றுதான் ஏற்படும் என்பேன்!ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால்:ஞானி லக்ஷணம் என்ன?'லோகமெல்லாம் மாயை;தங்களைத் தனித்தனி ஜீவாத்மா என்று ஜனங்கள் நினைத்துக் கொண்டிருப்பதெல்லாம் அஞ்ஞானம்'என்று அநுபவத்தில் தெரிந்துகொண்டு இப்படிப்பட்ட லோகத்தையும், அதிலே அஞ்ஞானத்துக்கு ஆஸ்பதமாக இருக்கிற மனஸையும் தொலைத்து முழுகிவிட்டு அப்படியே அகண்ட ஆத்மாவில் அத்விதீயமாக, 'எல்லாம் தானாக'தனக்கு வேறல்லாமல் இருக்கிறதுதானே ஞானி லக்ஷணம்?அப்படிப்பட்டவன் உபதேசம் பண்ணுகிறான் என்றால், புஸ்தகம் எழுதுகிறான் என்றால், அது ஞான விஷயமான விஷயமான பிரஸங்கம், புஸ்தகம் என்றால்கூட, எப்படி ஸரி வரும்?இவனுக்கு வெளியிலே நிஜமாகவே லோகம் இருக்கிறது. இவனுக்கு வேறாக நிஜமாகவே தனித்தனியாக அநேக ஜீவாத்மாக்கள் இருக்கிறார்கள் என்று இவன் நினைத்தால்தானே அப்படி இவனுக்கு வேறாக உள்ள லோகத்தை உத்தரிப்பதற்கும் ஜீவர்களுக்கு ஞானம் தருவதற்கும் இவன் எழுத்து மூலமாகவும் பேச்சு மூலமாகவும் உபதேசம் பண்ண நினைப்பான்?இப்படிப் பார்க்கும்போது அத்தனை ஞானாச்சாரியார்களும் வாஸ்தவத்தில் ஞானியில்லை என்றுதானே ஆகிவிடும்?அந்த மாதிரி சொல்லலாமா?சொன்னால் எத்தனை அபசாரம்?ஞானிகளாக இல்லாதவர்கள் தந்த உபதேசத்திற்கு என்ன சக்தியிருக்கு

ம்?அநுபவியாக இல்லாத ஒருத்தனின் வாக்குக்கு என்ன பவர் இருக்கும்?ஆனால் பிரத்யக்ஷத்தில் பார்த்தாலோ, பகவத்கீதையில் ஞானத்தைப் பற்றி வருகிற அத்யாயங்கள், அல்லது நம் ஆசார்யாள் பண்ணின விவேக சூடாமணி, அள்லது (தத்தாத்ரேயரின்) 'அவதூத கீதை', (வஸிஷ்டர் உபதேசித்த யோக) வாஸிஷ்டம்;அல்லது ஒரு தாயுமானவர் பாடல் - ஆகியவற்றைப் படிக்கிறபோதே, படிக்கிற மட்டுமாவது அது நம்மையும் இந்த மாயையைத் தாண்டி சாந்த ஸமுத்ரமாயிருக்கிற ஏதோ ஒன்றுக்குத் தூக்கிக் கொண்டு போகிறதே!பக்குவ ஸ்திதியில் இவற்றைப் படித்துவிட்டே ஒரு வேகம் வந்து வீடு வாசல் எல்லாவற்றையும் விட்டு விட்டுக் காட்டுக்கு, குகைக்கு போய் ஏகாந்தத்தில் ஆத்மாராமர்களாக உட்கார்ந்து கொண்டவர்களும் இருந்திருக்கிறார்களே!இவற்றை எழுதியவர்கள் அநுபவ சிகரத்திலிருந்து கொண்டு எழுதா விட்டால் இந்த சக்தி அவர்கள் உபதேசத்துக்கு எப்படி வரும்?

அதனால் ஏதோ தர்க்க ரீதியில் ஞானிக்கு எப்படி பக்தி வரும், ஞானி எப்படி உபதேசம் பண்ணுவான் என்றெல்லாம் கேட்டு, இதெல்லாம் ஸாத்யமில்லாதது என்றாலும் ஸாத்யம், அஸாத்யம் எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட ஈச்வர லீலையில் இப்படியெல்லாம் நடந்து கொண்டு தானிருக்கிறது!

ஞானி உள்ளுக்குள்ளே அத்வைதமாக இருந்து கொண்டே எப்படி வெளியில் த்வைதமாகக் கார்யம் செய்கிற மாதிரித் தெரிகிறான் என்றால், ஈச்வர லீலை என்றுதான் சொல்ல வேண்டும். அவனுக்கு (ஞானிக்கு) மனஸ் போய்விட்டது, மாயை போய்விட்டது என்றால் அதற்காக வெளியிலே இருக்கிற லோகமும், ஜீவப் பிரபஞ்சமும் அப்படியே இல்லாமல் போய்விடுகிறதா என்ன?இதிலிருந்து என்ன ஆகிறது?வேறு ஏதோ ஒரு பெரிய மனஸ்தான் இது அத்தனையையும் பண்ணி,

எத்தனையோ விதிகளைப் போட்டு பிரபஞ்சத்தை ஒரு சீரில் ஆட்டி வைத்து கொண்டிருக்கிறது;ஜீவர்களைச் சீர்கெட்டு அவரவர் மனம் போனபடி மாயையில் ஆட்டி வைத்துக் கொண்டும் இருக்கிறது என்று தானே ஆகிறது?அந்த

சக்தியையத்தான் அத்வைத சாஸ்திரத்திலே ஸகுணப் பிரம்மம், ஈச்வரன் என்று சொல்கிறது. சாக்த சாஸ்திரங்களிலும், சைவ சாஸ்த்ரங்களிலும் காரியமில்லாத நிர்குணப் பிரம்மத்தை 'சிவம்'என்கிறபோது இந்த ஸகுணப் பிரம்மத்தைத்தான். சக்தி, பராசக்தி, அம்பாள் என்பது. நிர்குண ப்ரமஹ்மமே இப்படி ஸகுண ப்ரஹ்மமாயும் வெளிவ்யவஹாரம் பண்ணுகிறாற்போலத்தான், நிர்குணாநுபவத்தில் ஸித்தியடைந்த ஞானியும் வெளி வ்யவஹாரம் பண்ணும்படி அந்த ஸகுண ப்ரம்மமே வைத்திருக்கிறது என்றே சொல்லணும்.

மாயை போகவேண்டும், மனஸ் போக வேண்டும் என்று ஒருத்தன் தானாக த்யான, விசாராதிகளால் பிரயத்தனம் பண்ணுவது ஞான மார்க்கம். இன்னொரு வழி அந்த மனஸை, அதையும் இத்தனை மாயையையும் பண்ணின பராசக்தியிடம் பக்தியில் அர்ப்பணம் பண்ணுவது - திருடன் கையிலேயே சாவியைக் கொடுக்கிற மாதிரி!லீலா நிமித்தமாக அது இத்தனை மாயை பண்ணினாலும், மனஸை ஆட்டு ஆட்டு என்று ஆட்டினாலும் உண்மையில் அது பரம கருணாமயமானது. பிரிந்திருந்து பிறகு சேர்ந்தால்தான் சேருவதின் அருமை தெரியும், பெருமை தெரியும்;அப்படிச் சேர்த்துக் கொள்ளும்படி ஒரு ஜீவன் பிரார்த்திப்பதில் பக்தியின் ரஸமும், பிரார்த்தனையைக் கேட்டு அதன்படி சேர்த்துக் கொள்வதில் தன்னுடைய பரமப் பிரேமையான அநுக்ரஹ ரஸமும் தெரியும் என்பதற்காகத்தான் பராசக்தி த்வைத விளையாட்டு விளையாடுவது!ஆகையால் ஒருத்தன் இதிலிருந்து விடுபடவேண்டும் என்று அவளையே பக்தி பண்ணுகிறபோது அவளே ஞானப் பாலைக் கொடுத்து விடுவித்து விடுவாள்.

பக்தி என்றாலே அதன் லக்ஷ்யம் (ரீஷீணீரீ) பகவானைப் பிரிந்திருந்து உபாஸிக்கும் த்வைத பாவம்தான் என்ற தப்பான அபிப்ராயத்திலேயே, ஞானி(அத்வைதி) எப்படி பக்தி வழியைச் சொல்லுவான் என்று கேட்கிறார்கள். (பகவான், பக்தன் என்று) பிரிந்திருந்து உபாஸிக்க உபாயமாக இருக்கிற பக்தி வழியில் போகிறவனே, 'உன்னிடமிருந்து பிரிந்தில்லாமல் ஒன்றாகப் போய்விட வேண்டும்'என்று வேண்டிக்கொள்கிற நிலைக்கும் அந்த பக்தியே அவனை அழைத்துக் கொண்டு போகும் என்பது தெரியாததால்

இப்படிச் சொல்கிறார்கள். அந்த நிலை அவனுக்கு வரும்போது கார்ய பிரம்மம், ஸகுண ப்ரம்மம் என்று சொல்லும் பராசக்தியே அவனுக்குக் காரண ப்ரம்மம், நிர்குண ப்ரம்மம் என்று சொல்லும் அத்வைத வஸ்துவிடம் கொண்டு சேர்க்கும் ஞானத்தை ப்ரஸாதிப்பான்.

ஞான மார்க்கத்தில் போகமுடியாதவர்கள் பக்தி பண்ணிப் பண்ணியே ஈச்வரப் பிரஸாதமாக ஞானத்தை அடையமுடியும் என்று ஒரு ஞானி தெரிந்து கொண்டிருக்கும்போது அவர்களுக்கு உபகாரமாக பக்தி ஸ்துதிகள், யந்திர ஸ்தாபனம் எல்லாம் பண்ணுவான்;பூஜா பத்ததிகளைச் சீர்ப்படுத்திக் கொடுப்பான்;

பூஜை பண்ணுவான்;கோவில் குளம் கட்டிக் கொடுப்பான்;எல்லாம் பண்ணுவான்.

ஜீவ-பிரம்ம அபேதத்தைச் சொல்லும் மஹாவாக்யங்களை சிரவண, மனன நிதித்யாஸனங்களால் பிரத்யக்ஷஅநுபவமாக ஆக்கிக் கொள்கிற ஞானமார்க்கம் எல்லாருக்கும் கைவராது. மனஸ் தொலைந்தால்தான் ஆத்மாவை பிரம்மமாக தெரிந்துகொள்ள முடியும் என்றால், அந்த மனஸை எதனால் தொலைப்பது என்று தெரியமாட்டேன் என்கிறது. அதுதான் தொலைக்கிற முயற்சியையும் மனஸேதானே

செய்கிற மாதிரி இருக்கிறது!அதுவே எப்படித் தன்னையே தொலைத்துக் கொள்ள முடியும்?உள்ளங்கையால் இன்னொருவரை அடிக்கலாம்;அதையே அடித்துக் கொள்ளச் சொன்னால் எப்படி முடியும்?இப்படி ஒன்றும் புரியாத தசையில் திண்டாடிக் கொண்டிருந்தாலும் இத்தனை மனஸ்களையும் பண்ணிவிட்டிருக்கிற ஒரு பெரிய சக்தி இருக்க வேண்டும் என்று புரிகிறதோ இல்லையோ?எனவே நாம் நம் மனஸை அடக்கிக் கொள்கிற பிரம்ம பிரயத்னத்தை விட்டுவிட்டு - சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சம்மன்காரன் காலிலேயே விழலாம் என்று- அந்தப் பராசக்தியின் காலிலேயே போய் விழுந்தால் அவளே இந்த மனஸை அடக்கி விடுவாள்;அதற்கான ஞானத்தை அநுக்ரஹித்து விடுவாள்.

ஒன்று மனோநாசம் என்று ஜீவ மனஸை அடியோடு

இல்லாமல் பண்ணித் தன்னுடைய சாந்தமான சிவ நிலையைத் தந்து 'சிவோஹம்'என்று ஆக்கலாம்;அல்லது 'எல்லாம் என் விளையாட்டுதானேடா?விளையாட்டு வினையானதெல்லாம் மாயா த்ருஷ்டியால்தான். அதை அழுத்தித் துடைத்து எடுத்து விடுகிறேன். அப்புறம் நீயும் என் மாதிரியே உள்ளே சாந்தம்-சிவம் - அத்வைதமாக இருந்துகொண்டு, வெளியிலே மாயை தொடாத ஒரு சுத்த மனஸை வைத்துக் கொண்டு, நான் அடிக்கிற இத்தனை கூத்தையும் ரஸித்து ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கலாம். அப்படி உன்னை எனக்குள்ளேயும், என்னையே இத்தனை பிரபஞ்ச ஆட்டத்திலேயும் பார்த்துக் கொண்டு - மனஸை நிர்மூலமாக்கிக்

கொள்ளாமல் பரிபூரணமாக ரொப்பிக் கொண்டு - ஆனந்தமாகக் கிடடா!''என்று சொல்லி அப்படி பண்ணியும் விடலாம்..

எத்தனை யத்தனம் பண்ணினாலும் மாயை போகவில்லையே. லோகம் போகவில்லையே, மனஸ் போக வில்லையே என்று வெட்கப்பட்டுக்கொண்டு அவமானப் பட்டுக்கொண்டு, அவமானப் பட்டுக்கொண்டு அழுதால் அவள், 'ஏம்ப்பா அழறே?' 'ஏம்பா அவமானப் படறே?லோகம் போகலியே-ன்னா, நீ அதை பண்ணியிருந்தாத்தானே உன்னால் போக்கிக்க முடியும்?நீயா அதைப் பண்ணினே?இந்த ஸூர்ய சந்த்ராதிகளை, மலையை, மரத்தை, செடியை, கொடியை, ஸமுத்ரத்தை, புழு,பூசசி-ம்ருகம் பக்ஷின்னு லக்ஷக்கணக்கான ஜீவராசிகளை, மநுஷ்ய வர்க்கத்தை நீயா பண்ணினே?இதையெல்லாம் நீ பண்ணாலை-ன்னா, நீ நீ-ன்னு சின்னதா ஒன்னை நினைச்சு அழுதுண்டிருக்கியே அதை மட்டும் நீயேவா பண்ணிண்டே?இது எல்லாத்தையும் ஒண்ணான என்னோட வேஷந்தான் தெரிஞ்சுக்காம வேறே வறே வஸ்துக்கள் -னே நெனக்கிற

மாயா த்ருஷ்டியையும் நீயேவா உண்டாக்கிண்டே?அப்பா, கொழந்தே!லோகம், மனஸு, இதுகளிலே மாட்டிண்டு முழிக்கிற நீ நீ-ங்கிறது, மாட்டி வைக்கிற மாயை எல்லாம் நான் பண்ணினதுதான். ''மம மாயா துரத்யயா''- ன்னே தானே

க்ருஷ்ணன் வாயாலே சொல்லியிருக்கேன்?"தைவ"ன்னும் அங்கே சொல்லியிருக்கேனே?(தெய்வ சக்தியால் ஆனது என்று அர்த்தம்) நீயே பண்ணிண்டது-ன்னா நீயே போக்கிக்கவும் முடியும். பூர்ண திவ்ய சக்தியான நான் பண்ணினது-ன்னா?என் விளையாட்டுலே நான் மட்டுமே ஸர்வ சக்தியாகவும், உன் மாதிரி ஜீவன்களை கிஞ்சித்-சக்தர்களாயும் (அற்ப சக்தியுள்ளவர்களாகவும்) வெச்சிருக்கிற போது நான் பண்ணின மாயை, மனஸு, லோகம் முதலானதுகளை நீயாப் போக்கிக்க முடியலை-ன்னா அதுக்காக ஏண்டா அழணும், அவமானப் படணும்?அது உன் சக்தியிலே இல்லாத ஸமாசாரம். என் க்ருபையால்தான நடக்கவேண்டிய விஷயம்!பண்ணின நானேதான் அதுகளைப் போக்கடிக்கவும் முடியும். எங்கிட்ட பக்தியிலே வா!கொஞ்சங் கொஞ்சமாகப் போக்கடிக்கிறேன்.

"ஒருத்தன் மனஸை, இந்த்ரியங்களை அடக்கி ஞான வழியிலே போறான்-னா அதுவும் என் அநுக்ரஹத்தினாலேதான்;நான் allowபண்ணறதாலேதான் நடக்கிறது. வேறே வேறேயாகத் தெரியறதை விட்டுட்டு ஒண்ணையே பிடிச்சுக்கணும், அதுவே ஆகணும்-கிற ஆசை, அத்வைத வாஸனை என்கிறது - அது ஒத்தனுக்கு வரதே என் அனுக்ரஹத்தாலேதான்."

(அம்பிகையின் வாக்காகவே பேசி வந்த ஸ்ரீ சரணர்கள் தமது வாக்காகத் தொடர்கிறார்.) இன்னொரு வேடிக்கை கூட!ஒன்றாக ஆகி அத்வைதாநுபவம் பெற்ற ஞானியுங்கூட அப்புறமும் மாயைக் கூத்தைப் பார்த்து ரஸிக்கிறதுண்டு:வேறே வேறேயும் தெரியும்;ஒன்றேதான் இப்படி ஆகியிருக்கிறதென்றும் தெரியும்:கூத்தில் ஆக்ட் பண்ணாமல் பார்த்து ஸந்தோஷப்படுகிற மாதிரி அந்த ஞானி பட்டுக் கொள்ளாமல் மாயா விநோதத்தை ரஸித்துக் கொண்டு, அதைப் பண்ணும் பராசக்தியை பக்தி பண்ணிக் கொண்டு இருப்பான். இப்படி அவனைத் தன் மாதிரியே தன் கூடவே த்வைதாத்வைதமாக வைத்துக் கொண்டிருப்பதும் அம்பாள் கார்யம்தான். இங்கே கவனிக்க வேண்டிய அம்சம் என்னவென்றால், இந்த ஞானி ஞானம் வராத மற்ற ஜனங்களின் பொருட்டாக மாத்திரம் பக்தி பண்ணிக்

காட்டுபவனில்லை. தானே வாஸ்தவமாக, "அத்விதீயமான அந்த ஒன்று எப்படியெல்லாம் த்வைதக் கூத்தடிக்கிறது?இதிலே எத்தனையோ கெடுதலிருந்தாலும் நல்லது நல்லதாகவும் எத்தனை தினுஸு அழகும், எத்தனை தினுஸு அன்பும் இருக்கிறது?என்று ஆச்சர்யபட்டு, போற்றி, ரஸித்து ரஸித்து அப்பேர்ப்பட்ட சக்திக்கு நமஸ்காரம் பண்ணி, அதனிடம் ஹ்ருதயபூர்வமாகவே பக்தி செலுத்துகிற ஞானி அவன். சுகாசார்யாள் (இவ்விதமாகவே) ஸ்பஷ்டமாக சொல்லியிருக்கிறார். ஞானம் வராத பக்தன் மோக்ஷம் கிடைக்க வேண்டும் என்று ஸ்வய கார்யத்திற்குக் காரணமாகத்தான் பக்தி பண்ணுகிறானென்றால், ஞான ஸித்தியினால் லோகத்திலிருக்கும் போதே மாயா மோசனம் (மாயையிலிருந்து விடுதலை) பெற்ற மோக்ஷநிலையிலிருக்கும் ஞானிதான் ஒரு காரணமுமில்லாமல்

பக்திக்காகவே பக்தி பண்ணுகிறானென்று 'ட்ரிப்யூட்' கொடுத்துச் சொல்லியிருக்கிறார்.

(மீண்டும் அம்பிகையிந் வாக்காகப் பேசுகிறார்:) 'இப்படி அவனுக்கு ஞானத்திலிருந்தே ஒரு புது தினுஸு பக்தியைக் கொடுக்கிறதும் நான்தான். அந்த நானே உனக்கு, அதுக்கான காலம் வரப்போ, பக்தியிலேருந்து ஞானத்தைக் கொடுத்துட்டுப் போறேன். ஏன் அழறே?எங்கிட்டே 'அம்மா'ன்னு வந்துட்டியோல்லியோ?உன்னை நான் பார்த்துக்கிறேன். நான் பண்ணி வெச்ச பந்தத்துலேருந்து நானே மீட்டு விடறேன். 'மீளணும், மீளணும்'னு அழாதே!எல்லாம் என் கார்யம், எல்லாத்துலேயும் நான் தான் இருக்கேன்னு மனஸிலே நன்னா, கெட்டியா வெச்சுக்கோ!எல்லாம் நான் என்கிறபோது எதுலேருந்தும் மீளவே வேண்டாம்!

"ஞான வழி-ன்னு விசாரம் - ஆராய்ச்சி- பண்ணிண்டு போறவா, பலவா(க)ப் பார்க்கிற த்வைதப் பார்வை போனாத்தான் அதிலேருந்து வர அத்தனை உபத்ரவமும் போய் ஒண்ணா அடங்கியிருக்கிற சாந்தி கிடைக்கும்னு, அப்படி போனா போகட்டும் உனக்கு அதுக்கான த்ராணி

இல்லேன்னா அதுக்காகக் கொறைப் பட்டுண்டு அழாதே, அவமானப்படாதே அப்பா!அன்பு வழியிலே வா. பலதையும் பாரு. ஆனா ஒரேடியாப் பிரிச்சுப் பார்க்காம அத்தனைக்கும் அடிப்படை ஒரே நான் தான் என்கிற ஞாபகம் மறக்காமப் பாரு. எங்கிட்ட அன்பு வெச்சு, அந்த அன்புப் பார்வையாலேயே ஸகலத்தையும் அணைச்சுப் பாரு. நானும் என் அன்பிலே ரொம்பவும் உசந்த அநுக்ரஹத்தைப் பண்ணி உன்னை ஞானத்துக்கு தூக்கிவிடுகிறேன்"- என்று இப்படி அம்பாள் பக்தி வழியில் போனாலும் நிறைவான அநுபவத்தைக் கொடுத்து விடுவாள்.

அம்பாள் என்றால் பரமாத்மா, கடவுள் என்பது. அவரவர்களுடைய இஷ்டமூர்த்தியுந்தான். அப்படிப்பட்ட பரப்ரஹ்ம சக்தி மாயையும் பண்ணுவாள்;பக்தியிலே ஸகுணமாயும் அநுக்ரஹம் பண்ணுவாள்;ஞானத்திலே நிர்குணமாயும் மோக்ஷம் கொடுப்பாள்;பக்தியினாலேயேகூட ஞானத்தில் சேர்க்கவும் சேர்ப்பாள்.

மொத்தத்தில் இப்போது என்ன தோன்றுகிறதென்றால், 'ஞானப் புஸ்தகம் எழுதினவர் எங்கேயாவது பக்தி ஸ்தோத்திரம் பண்ணுவாரா?என்று கேட்கிறவர்கள்

கேட்டாலும், எனக்கென்னவோ, 'ஞானப் புஸ்தகம் எழுதினதாலேயே அவர் பக்தி ஸ்தோத்ரமும் எழுதித்தான் இருக்க வேண்டும். அப்போதுதான் அவர் ஆசார்யாள் என்றே முடிவு கட்டத் தோன்றுகிறது. அத்வைத ஸாக்ஷாத்காரம் பெற்ற அவர், அப்படிப் பெற்றுங்கூட, எப்போது ஜனங்களைத் தமக்கு வேறேயாக நினைத்து, அல்லது அப்படி நினைத்த மாதிரி, அவர்களை உத்தேசித்து ஞான புஸ்தகம் எழுதினாரோ, அப்போதே அவர் த்வைதப் பிரபஞ்சத்தை ஒப்புக்கொண்டு அதை ஸரிப்படுத்தி நல்லதாக்க வேண்டும் என்று நினைத்ததாகத்தான் அர்த்தம். ஆசார்ய ரூபமாக இந்த அவதாரம் ஏற்பட்டதென்பதற்கே அதுதானே அர்த்தம்?இதிலே

மாட்டிக் கொண்டிருக்கிறவர்களுக்கு உபதேசிப்பவர், இதற்குக் காரணமான சக்தியை பக்தி பண்ணி ஸ்துதிக்கவும் சொல்லிக் கொடுக்கத்தானே வேண்டும்?லோகத்திடம்

அவருக்கு இருக்கிற அன்பால், தயையால்தானே அது திருந்த வேண்டும் என்று உபதேசம் பண்ணுகிறார்?அப்போது இத்தனை அன்புக்கும் மூலகாரணமான "தயாமூல தத்துவம்"என்கிறார்களே, அதை மட்டும் அன்போடு ஸ்தோத்திரம் பண்ணாமலிருப்பாரா?ஞானிக்கு ஒன்றாலும் ஒன்றும் ஆகவேண்டுமென்பதில்லை என்றாலும் லோக உத்தாரணம் என்று அக்ஷதை போட்டுக் கொண்டு உபதேசம் பண்ணும்போது, தன்னை மீறிய ஒரு சக்திதான் அப்படிப் பண்ணுவிக்கிறது என்று தெரியுமோ இல்லியோ?அப்போது அதற்கு முன் அடங்கி விநயமாக ஸ்தோத்திரம் பண்ணுவதில் முரணாக என்ன இருக்கிறது?

'ஞானி ஞான உபதேசம் பண்ணுகிறதுகூட நம் பார்வையில்தான்;அவனுக்கு கர்த்ருத்வ புத்தி (தான் செய்கிறோம் என்ற உணர்வு)இல்லை'என்று சொன்னால் அப்போதும் இதே மாதிரி ஏன் அவன் கர்த்ருத்வமே இல்லாமல் பக்திப் புஸ்தகமும் எழுதக்கூடாது?' என்ற நியாயமான கேள்வி வருகிறது. லோக கல்யாணமாக, அதாவது ஜனங்களை உத்தேசித்து ஈச்வரனே ஞானி மூலம் ஞான உபதேசம் பண்ணுகிறான் என்றால், இதே போல ஜனங்களுக்காக வேண்டியே அவன் மூலம் ஈச்வரன் பக்திப் புஸ்தகமும் எழுதப் பண்ணலாம்தானே?ஒரு ஞானியை ஈச்வரன்தான் லோக கல்யாணத்துக்காக அவனுடைய பிராரப்த கர்மா தீர்கிற வரையில் காரியம் பண்ண வைக்கிறான் என்றால், லோக கல்யாணம் ஞான உபதேசத்தின் வழியாக மட்டுமா ஏற்படும்?முக்கால்வாசிப் பேர் ஞானமார்க்கம் என்றாலே, 'பெரிய விஷயம்;ந ம்மாலாகாது'என்று ஒதுங்கித்தானே போவார்கள்?அதனால் லோக கல்யாணம் பண்ணுவது என்றால் பக்திப் பணியும் பண்ணத்தான் வேண்டும்;ஸ்தோத்ரப் புஸ்தகம், க்ஷேத்ராடணம், யந்திர ஸ்தாபனம், பூஜை எல்லாம் ஜனங்களை உத்தேசித்துப் பண்ணத்தான் வேண்டும்.

ஞானிக்குப் பிராரப்தமும் கிடையாது என்று இன்னொரு அபிப்ராயம். இப்படி வைத்துக் கொண்டாலும், 'பின்னே ஏன் அவன் வெளிக்கார்யம் பண்ணுகிறான்?'என்று கேட்டால்,

'ஈச்வரன்தான் லோக ஸங்க்ரஹத்துக்காக (உலகை நலமுறச் செய்ய) அவனைப் பண்ண வைக்கிறான்'என்றே பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. இப்போது சொன்ன 'ஆர்க்யுமென்ட்'படி இதிலே பக்திக் காரியமுந்தான் அடக்கம்.

இத்தனையும் சொன்ன பின், முடிவாக ஞானியைப் பற்றி நாம் எதுவும் தீர்மானிப்பதற்கில்லை. 'ஞானி லக்ஷணம்'என்று நாம் எதெதையோ சொன்னாலும் ஒரு ஞானி எப்படியிருப்பான் என்பது அவனுக்குத்தான் தெரியும் - அல்லது அவனுக்குக்கூடத் தெரியாது!ஆகையால், 'ஞானி கர்ம மார்க்கத்தை ஆதரிப்பானா?பக்தி மார்க்கத்தை விருத்தி பண்ணுவானா?'என்று கேட்பதற்கெல்லாம் முடிவில் அர்த்தமேயில்லை. அவன் எதுவும் செய்யலாம்; செய்யாமலிருக்கலாம்;கார்யத்திலேயே அகாரியமாகவும் அகாரியத்திலேயே

காரியமாகவும் இருக்கலாம். ஞானியின் லக்ஷணம் ஒரு லக்ஷணமுமே சொல்லமுடியாதவனாயிருப்பதுதான்!

ஆசார்யாளோ ஈச்வராவதாரம். அதனாலே அவருக்குப் பூர்வ கர்மா என்றே ஒன்று இல்லை. அவதாரங்களெல்லாம் லோக உத்தாரணத்துக்காகவே நடக்கின்றன. எப்போது லோகத்தை உத்தரிக்கவேண்டுமென்று ஈச்வரன் நினைத்து அவதாரமெடுக்கிறானோ அப்போதே அவன் தனக்கு வேறாகத்தான் லோகத்தைப் பார்க்கிறான் என்றாகிவிடுகிறது. வேறேயாக இருப்பவர்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிட்டக் கொண்டுவந்து தானாகப் பண்ணிக் கொள்வதற்காகத்தான் அவதரிக்கிறான். ஸ்வதர்மப்படியான கர்மா, பக்தி இதுகள் வழியாக 'க்ராஜுவ'லாக (படிப்படியாக) முன்னேறிய பிறகுதான் ஞானத்திலே போய் அத்வைதமாக ஆக முடியும். அதனால் ஒரு அவதார புருஷன் இது எல்லாவற்றையும் விருத்தி பண்ணித்தான் ஆகவேண்டும். எல்லா அவதாரங்களும் ஜனங்களுக்கு வழிகாட்டியாக வாழ் ந்துகொண்டு, வைதிக கர்மாவையும், பக்தியையும், நன்றாகப் போஷித்துத்தான் இருக்கின்றன. அதனால் ஆசார்யாள் க்ஷேத்ராடனம் பண்ணினதிலோ, யந்திரப் பிரதிஷ்டை பண்ணினதிலோ, ஆராதனா க்ரமங்களை ஏற்படுத்தித் தந்ததிலோ, ஸ்தோத்ர புஸ்தகங்கள் எழுதினாலோ,

விருத்தமாக (முரணாக) எதுவுமில்லை.

---



**கவிதை பிறந்த கதை**

ஆசார்யாள் மநுஷ்யாவதாரம் எடுத்து மநுஷ்யர்கள் மாதிரியே க்ஷேத்ரம் க்ஷேத்ரமாகப் போய், அங்கங்கே தம்முடைய திவ்ய சக்தியால் தெய்வ ஸாந்நித்யம் பலமாக ஸ்திரப்படுவதற்கு யந்திர ஸ்தாபனம் முதலானதைச் செய்து கொண்டே கைலாஸத்துக்குப் போய்ச் சேர்ந்தார். பார்வதி பரமேச்வரர்களை தரிசனம் பண்ணினார். அவர்களுடைய அவதாரம்தான் இவர்.

ராமர் இன்னொரு அவதாரமான பரசுராமரை ஸந்தித்துச் சண்டையே போட்டார். கிருஷ்ணர் இன்னொரு அவதாரமான பலராமருடன் ஸஹோதரராகச் சேர்ந்திருந்தார். இப்படி அவதாரத்திலே பல விசித்ரம்.

இங்கே அவதாரமான ஆசார்யாள் மூலமான பார்வதீ-பரமேச்வரர்களை தரிசனம் பண்ணினார்.

அப்போது ஈச்வரன் அவரிடம் ஐந்து ஸ்படிக லிங்கங்களையும் ஒரு சுவடிக் கட்டையும் கொடுத்தார். சுவடியை அம்பாள் கொடுத்ததாகவும் சொல்வதுண்டு.

சுவடியில் என்ன இருந்தது என்றால், அம்பாளைப் பற்றிய நூறு ச்லோகங்கள். அது பரமேச்வரனே தேவியை ஸ்தோத்திரித்துப் பண்ணினது என்றும், 'லலிதா ஸஹஸ்ரநாம'த்தை வசின்யாதி வாக்தேவதைகள் செய்த மாதிரி இந்த நூறு ச்லோகங்களையும் வாக் தேவதைகளே செய்தன என்றும் இரண்டு விதமாகச் சொல்வதுண்டு. ஸ்வாமியே ஒரு பக்தனின் பாவத்திலிருந்து கொண்டு அம்பாளைப் பாடியது என்று சொல்வதில்தான் ஜாஸ்தி

மஹிமை ஏற்படுகிறது.

பஞ்ச லிங்கங்கள் ஈச்வர ஸ்வரூபமானவை. ஸ்வரூபம் என்று சொன்னாலும் கை, கால், தலை என்றில்லாததால் அருவுருவமானவை. சுவடியிலிருந்தே ச்லோகங்களோ அம்பாள் ஸ்வரூபம். எப்படியென்றால் அம்பாளுக்கு இருக்கப்பட்ட பலவித ரூபங்களில் மந்த்ர மயமாகவும் அவளுக்கு ஒரு ரூபம் இருக்கிறது. அந்த நூறு ச்லோகங்களில் தேவியைக் குறித்த மந்திர சாஸ்திர விஷயங்கள்தான் முக்யமாக இருந்தன. ஆகையால், பஞ்சலிங்கம் எப்படி ஈச்வர ஸ்வரூபமோ, அப்படி இந்த ஸ்தோத்ரச் சுவடி அம்பாள் ஸ்வரூபமாயிற்று. ஆனபடியால் லிங்கங்களை ஈச்வரனே கொடுத்த மாதிரி, ஸ்தோத்திரத்தை அம்பாளே கொடுத்தாள் என்றால் பொருத்தமாயிருக்கிறது.

கொடுத்தவர், வாங்கிக் கொண்டவர், கொடுக்கப் பட்ட வஸ்து எல்லாமே ஒன்றுதான்!இதிலேயே அத்வைதம், த்வைதம் இரண்டும் கலந்து விடுகின்றன.

இந்தப் பஞ்ச லிங்கங்களில் ஒன்றுதான் (ஸ்ரீ காஞ்சி காமகோடி) மடத்துப் பூஜையிலிருக்கிற சந்திரமௌளீச்வரர். இதற்கு யோக லிங்கம் என்று பெயர். பாக்கி நாலில் முக்தி லிங்கம் கேதாரநாத்திலும், வரலிங்கம் நேபாளத்தில் நீலகண்ட க்ஷேத்ரத்திலும், போகலிங்கம் சிருங்கேரியிலும், மோக்ஷலிங்கம் சிதம்பரத்திலும் ஆசார்யாளால் ப்ரதிஷ்டை பண்ணப்பட்டன. அதெல்லாம் பிற்பாடு நடந்த கதை.

பஞ்ச லிங்கங்களையும், ஸ்தோத்ரச் சுவடியையும் பெற்றுக் கொண்ட ஆசார்யாள் லோகத்தில் ஈச்வராராதனத்தையும், அம்பாள் ஸ்மரணத்தையும் பிரகாசப்படுத்துவதற்காகக் கைலாஸத்திலிருந்து புறப்பட்டார்.

வெளி வாசலில் காவலில் இருந்த நந்திகேச்வரர்ஆசார்யாள் கையிலிருந்த சுவடிக் கட்டைப் பார்த்தார். 'ஸ்வாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுப்பதில்லை'என்று சொல்வதுண்டல்லவா?அந்த மாதிரி நந்திகேச்வரருக்கு மஹா பெரிய ஸொத்தான மந்திர சாஸ்திர சுவடி கைலாஸத்தை விட்டுப் போகிறதா?என்று தாபம் ஏற்பட்டது.

அவருக்கு அவ்வப்போது ரொம்ப வேகம் வந்துவிடும். அந்த

மாதிரி இப்போதும் வந்தது. தாபம் கோபமாயிற்று. ஆசார்யனை மறித்து அவர் கையிலிருந்த சுவடியைப் பிடித்து இழுத்தார்.

ஆசார்யாள் ஸமாளித்துக் கொண்டு வெளியிலே வந்து விட்டார். ஆனால் நந்திகேச்வரர் உருவியதிலே சுவடியில் பாதிக்கு மேலே அவர் கைக்குப் போய்விட்டது. நூறு ச்லோகத்தில் ஐம்பத்தொன்பது அவரிடம் போய்விட்டன. அது சுவடியின் பின் பாகம். ஆசார்யாள் கையில் முதல் நாற்பத்தியொரு ச்லோகம் மட்டுமே மிஞ்சி நின்றது.

உங்களுக்கெல்லாம் நந்திகேச்வரர் மேலே கோபம் கோபமாக வருகிறதோ என்னவோ?ஆனானப்பட்ட ஆசார்யாள் மேலே பாயவாவது?. அம்பாளே பூலோகத்தில் ப்ரசாரமாகணுமென்று அவரிடம் கொடுத்த புஸ்தகத்திலே பாதிக்கு மேலே நமக்குச் சேர முடியாதபடி அபேஸ் பண்ணவாவது?என்று கோபம் வரலாம். ஆனால் எனக்கென்னவோ அந்த நந்தியம்பெருமானை ரொம்ப 'தாங்க்'பண்ணனுமென்று இருக்கிறது. ஏனென்றால் ஸொச்சம் கதை கேளுங்கள்.

'அம்மா அநுக்ரஹம் பண்ணிக் கொடுத்தாள். அதிலே பாதிக்கு மேலே கோட்டை விட்டு விட்டோமே!ஜனங்களை உத்தேசித்து டிரஸ்டியிடம் தர்ம ஸொத்தை கொடுக்கிற மாதிரிக் கொடுத்தாள். தவற விட்டுவிட்டோமே!' என்று ஆசார்யாள் ரொம்ப மனக்லேசம் அடைந்தார். 'சங்கரம் லோக சங்கரம்'என்று உலக நலனையே ஸதாவும் பண்ணிக் கொண்டிருந்தவர் அதற்கே தம்முடைய ஜீவிதத்தில் ஒவ்வொரு க்ஷணத்தையும் செலவிட்டவர், 'கடைசியில் இப்படி லோகமாதா அள்ளிக் கொடுத்ததில் பாதிக்கு மேல் லோகத்துக்குச் சேரவிடாமல் பறி கொடுத்து விட்டோமே!'என்று ரொம்ப வருத்தப்பட்டார்.

அப்போது அம்பாள் ஆஜ்ஞை பண்ணினாள். "தவறிப் போன ஐம்பத்தொன்பது ச்லோகங்களையும் நீயே பூர்த்தி பண்ணிவிடு. அதுதான் என் ஸங்கல்பம். அதுதான் எனக்கு ப்ரீதி. இதற்காகவேதான் அதைத் தவற விடும்படிப் பண்ணயது."என்று அம்பாளுடைய உத்தரவாயிற்று.

உடனே கடல் மடை திறந்ததுபோல ஆசார்யாள் அம்பாளை சிரஸிலிருந்து பாதம் வரையில் அங்கம் அங்கமாக வர்ணித்துப் பாடி நூறு ச்லோகமாகப் பூர்த்தி பண்ணி விட்டார்.

முதல் நாற்பத்தியொரு ச்லோகம் மந்திர சாஸ்திரம். அதைக் கொஞ்சம் பேர்தான் ரொம்பவும் கடுமையான நியமங்களோடு அநுஸந்தானம் பண்ணி அநுபவிக்க முடியும். மந்திரயோகம், குண்டலநீயோகம் முதலியன அந்த பாகத்தில் வரும். இதில் கொஞ்சம் தப்பு வந்தாலும் விபரீதமாகும். தாயின் உபாஸனையில் எப்படிப் பண்ணினால் என்ன என்று நினைப்பது ஸரியில்லை. அவளுடைய லீலை பல விதம். அதனால் ஸுலபமான, ஸௌக்யமான ஸாதனா மார்க்கம் போலவே, கடுமையாக உக்ரமாக உள்ள மார்க்கத்தையும் ஏற்படுத்தியிருக்கிறாள். அதனை அப்படி அப்படித்தான் அநுஷ்டானம் பண்ண வேண்டும். ஆலய தரிசனம், ஸ்தோத்திர பாராயணம், கீர்த்தனம் பாடுவது. பஜனை பண்ணுவது, கதை புராணம் கேட்பது என்ற ஸுலபமான வழிகள் இருக்கிறபோது, அது போதாது என்று ஜபம், யோகம், ஸ்ரீ சக்ர பூஜை என்பவற்றை எடுத்துக்கொண்டு, ஆனாலும் "இதுகளை நியமம் இல்லாமல் பண்ணுவேன்"என்றால் அம்பாள் அதைப் போக்கிரித்தனம் என்றுதான் நினைப்பாள். முடிந்த சில பேருக்குத்தான் இவை என்று விட்டுவிட வேண்டும்.

இப்படிப்பட்ட சில பேரிடம் மட்டுமின்றி ஆசார்யாளோ ஸமஸ்த ஜனங்களிடமும் பரம கருணை கொண்டவர். 'பாபியையும் பரமாத்மா ஆக்கியவர்'என்று கன்னடத்தில் அவரைப் பற்றிய பாட்டில் வருகிறது. அதனால் அவர் அம்பிகையை மந்திர ஸ்வரூபமாக இல்லாமல், ஸுந்தர ஸ்வரூபமாக கேசாதி பாதம் (கூந்தலிலிருந்து திருவடி வரை) ஸகல ஜனங்களும் கல்பித்துப் பார்த்து ஸந்தோஷப்படு ம்படியாக ஒரே வர்ணனை மயமாக மீதி ஐம்பத்தியொன்பது ச்லோகங்களையும் பாடி அநுக்ரஹம் பண்ணிவிட்டார். அம்பாளுடைய ஸௌந்தர்ய ஸ்வரூபமே அவருடைய கவிதா வாக்காக அவதாரம் பண்ணிவிட்டது.

இந்த ஐம்பத்தியொன்பது ச்லோகங்களுக்கு மட்டுமே

குறிப்பாக 'ஸௌந்தர்ய லஹரி'என்று முதல் நாற்பத்தியொன்றிலிருந்து பிரித்துப் பெயர் சொல்கிறதும் உண்டு. முதல் நாற்பத்தியொரு ச்லோகங்களுக்கு 'ஆனந்தலஹரி'என்று பெயர் சொல்வார்கள்.

இரண்டையும் சேர்த்தே நூறு ச்லோகமுள்ள ஒரே ஸ்தோத்ரமாகக் கொண்டுதான் பாராயணம் செய்ய வேண்டும். இப்படி ஒரே நூலாகக் கொள்ளும்போது முதல் பாகத்துக்கு 'ஸௌந்தர்ய லஹரி'என்றும் பெயர். மொத்தமாக இரண்டும் சேர்ந்த முழு நூலுக்கும் 'ஸௌந்தர்ய லஹரி'என்றுதான் பெயர்.

ஆசார்யாள் கைலாஸத்துக்குப் போய் பார்வதீ பரமேச்வராளிடமிருந்து பஞ்ச லிங்கமும் ஸௌந்தர்ய லஹரிச் சுவடி கட்டும் பெற்றுக்கொண்டு வந்தாரென்று நான் சொன்ன கதை 'மார்க்கண்டேய ஸம்ஹிதை'யில் இருக்கிறது. அதில் ச்லோகமாக இருப்பதையே 'க்ளோ'ஸாக 'çð£«ô£'ð‡E 'Ýù‰î Agò ê$f$èó Müò'^F™ 'Š«ó£'ú£è,, ªê£™LJ¼,Aø¶.

ஸௌந்தர்ய லஹரியின் அவதாரிகை (தோற்றுவாய்) பற்றி வேறே கதைகளும் உண்டு. முதல் நாற்பத்தியொன்று உள்பட நூறு ச்லோகமும் ஆசார்யாளே பண்ணியதுதான் என்றும் பல பேருக்கு அபிப்ராயமிருக்கிறது.

முதல் நாற்பத்தியொன்று உட்பட நூறு ச்லோகமும் ஆசார்யாளே பண்ணியதுதான் என்றும் பல பேருக்கு அபிப்ராயமிருக்கிறது.

முதல் நாற்பத்தொன்றை அவர் கைலாஸத்திலிருந்து கொண்டு வந்திருந்தால்கூட முழுப் புஸ்தகத்தையும் அவர் பேரிலேயே சொல்வதில் தப்பில்லை. ஏனென்றால் நமக்கு எட்டாமல் கைலாஸத்திலிருந்ததை லோகத்தில் பிரசாரத்துக்குக் கொண்டு வந்தவர் அவர்தானே?ரிஷிகள்கூடத் தாங்களே மந்த்ரங்களைப் பண்ணாமல் ஏற்கெனவே ஆகாசத்தில் வியாபித்திருந்த சப்தங்களையே நாம் கேட்கிற மாதிரி நமக்குப் பிடித்துக் கொடுத்துப் பிரசாரம் பண்ணினவர்கள்தான். ஆனால் ஒவ்வொரு மந்த்ரத்துக்கும் இன்னார் ரிஷி என்று, அதைப் பிரசாரம் பண்ணினவரின் பேரிலேயேதான் சொல்லிக் கொண்டிருக்கிறோம். அந்த

நியாயத்தில் மந்த்ர சாஸ்திரமாகவே அமைந்துள்ள நம்முடைய முதல் பாக 41 ச்லோகங்களையும் ஆசார்யாள் தான் நம்முடைய லோகத்திற்குக் கொண்டு வந்ததால் அவர் பேரிலேயே தாராளமாகச் சொல்லலாம்.

இன்னொன்று பரமேச்வரனே செய்த ஸ்துதிதான் அந்தக் கைலாஸ சங்கரன்தானே காலடி சங்கரராக வந்தது?அதனால் அவன் பண்ணினதை இவர் பேரில் சொல்வதில் குற்றமில்லை.

முதல் நாற்பத்தியொரு ச்லோகங்கள் மந்திர சாஸ்திர ஸூக்ஷ்மங்கள், குண்டலிநீ யோக தத்வங்கள், ஸ்ரீவித்யா என்கிற மஹாத்ரிபுர ஸுந்தரி ஆராதனை பற்றிய ரஹஸ்யங்கள் முதலியவற்றைச் சொல்கின்றன. அதில் உபாஸகர்களுக்கு ரொம்பவும் உபயோகமான விஷயங்கள் இருக்கின்றன.

ஆனாலும், பின்னாலுள்ள, ஆசார்யாள் வாக்கிலிருந்த வந்த 59 ச்லோகங்களின் அழகே அழகு. காம்பீர்யத்துக்கும் ஸரி, மாதுர்யத்துக்கும் ஸரி இந்த வாக்குதான் சிகரம் என்று சொல்கிற மாதிரி அப்படிப்பட்ட அத்புதமான ச்லோகங்கள் அவை. சொல்லழகு, பொருளழகு இரண்டிலுமே ஈடிணை இல்லாமலிருப்பவை. ஸகல ஜனங்களுமே படித்துப்

படித்து ஆனந்தப்படக் கூடியது இந்த பாகம்தான்.

பழங்காலத்தில் செய்த அதிஸுந்தரமான விக்ரஹங்களிலும், சில்பங்களிலும் நகத்தளவு பங்கமானாலும்கூட, பிற்காலத்தவர்களால் அதே மாதிரி வேலைபாட்டோடு செய்து ஒட்டுப்போட முடியவில்லை. இந்த மாதிரிதான், ஆசார்யாளின் ஸௌந்தர்ய லஹரி ச்லோகத்தில் ஒரு வார்த்தையை எடுத்துவிட்டு அதற்குப் பதில் இன்னொரு வார்த்தையை யாரும் போடமுடியாது!

அம்பாள் கொடுத்த மூல ஸ்தோத்ரத்தில் பாதிக்கு மேலே ஆசார்யாள் நந்திகேச்வரரிடம் நஷ்டப்பட்டதே நமக்கு லாபமாயிற்று. அந்த நஷ்டம் ஏற்பட்டிருக்கா விட்டால் ஆசார்யாளின் வாங் மஹிமை (வாக்குச் சிறப்பு) எத்தனை அற்புதமானது என்று நமக்குத் தெரிந்திருக்குமா?அதனால்தான் நந்திகேச்வரரைத் தாங்க் பண்ணத் தோன்றியது. அவர் மட்டும் வழிப்பறி

பண்ணாதிருந்தால் நாம் படித்துப் படித்து ஆனந்தப்படுவதற்கும், அதன் வழியாகவே அம்பாளிடம் பக்தி கொள்வதற்கும் இப்பேர்ப்பட்ட ச்லோகங்கள் கிடைத்திருக்குமா?

---



## நந்திகேச்வரர் நாடகம் எதற்கு?

'ஆனால் அம்பாள் ஏன் இதற்காக ஏதோ ஒரு பழைய ஸ்தோத்ரதைக் கொடுத்து, அதிலே ஒரு பாகத்தை இவர்பறிகொடுக்கப் பண்ணி, பறிபோனதை இவரே பாடி ஈடுகட்ட வேண்டும் என்று செய்யணும்?முழுசாக, புதுசாகவே இவரை ஒரு ஸ்தோத்ரம் பண்ணும்படி ஆஜ்ஞை பண்ணியிருக்கலாமே?வேறே புஸ்தகத்தைக் கொடுத்து அதிலே ஒரு பாகம் மட்டும் லோகத்துக்குக் கிடைத்து இன்னொரு பாகம் கிடைக்காமல் பண்ணுவானேன்?'என்றால்- அவளுடைய ஸங்கல்பம், லீலா விநோதம் நமக்குத் தெரியாது. இருந்தாலும் சில காரணம் தோன்றுகிறது.

அம்பாளை உபாஸிப்பதற்கு மந்த்ர யோகமும் இருக்கிறது, பக்தி மார்க்கத்தில் கவிதா லக்ஷணங்கள் பொருந்திய ஸ்தோத்ரமும் இருக்கிறது. மந்த்ர யோக உபாஸகர்கள் பக்தி ஸ்தோத்ரம் படிப்பவர்களைத் தங்களுக்கு மட்டமாக நினைக்கப்படாது-'நம்ம மாதிரி ஒரு நியமமா, ஆசாரமா, தீவிர உபாஸனையா?ஒண்ணுமில்லாமல் ஸ்தோத்ரம் பாடிண்டு!'என்று நினைக்கப்படாது. அதே மாதிரி ஸ்தோத்ர பாராயணம் பண்ணுகிறவர்களும் மந்த்ரோபாஸர்களைப் பற்றி, 'நம்ம மாதிரி அன்போடு, 'அம்மா'என்று ஜகன்மாதாவைப் பார்க்கத் தெரியாமல் - காவ்ய ரஸனையோடு அவளுடைய ரூப ஸௌந்தர்யம், குண

ஸௌந்தர்யம், லீலா ஸௌந்தர்யம் முதலியவைகளை அநுபவித்து ஸுகமான வழியிலேயே அவளிடம் லயித்திருப்பதற்குத் தெரியாமல் - இதென்ன வறட்டு வறட்டு என்று மந்த்ரமும் யந்த்ரமும்?'என்று நினைக்கக்கூடாது. அவரவர் மனப்பான்மைக்கு ஏற்க அப்படி அப்படி மார்க்கங்கள். ஒருத்தருக்கே மந்த்ர-யந்த்ர உபாஸனையிலும் ஈடுபாடு, கவிதையாக ஸ்துதிப்பதிலும் ஈடுபாடு என்று இரண்டும் இருக்கலாம் ஆனதினாலே இரண்டு வழிக்காரார்களும் ஒன்று சேர்ந்து படிக்கும்படியாக ஒரே க்ரந்தம் இருந்தால் நல்லதென்று அம்பாள் நினைத்திருக்கலாம். ஆதி கைலாஸ ஸ்தோத்ரத்தில் முதல் நாற்பத்தோரு ச்லோகங்களை மந்த்ரோபாஸனை என்று தீக்ஷைஎடுத்துக்கொள்ளாதவர்கள்கூட ஸ்தோத்ரமாகப் படித்தாலே ஓரளவுக்குப் பலன் பெறுவார்கள் என்பதாலும், மந்த்ர சாஸ்த்ரம், குண்டலீநீ யோகம், ஸ்ரீசக்ரம் என்றெல்லாம் புராதனமாக நம் தேசத்துக்கு என்று இருந்து வரும் ஆத்மிக குல தனத்தைப் பற்றிக் கொஞ்சம் அடிப்படை அறிவாவது பெறுவார்கள் என்பதாலும் அதோடு காவ்ய லக்ஷணங்கள் நிறைந்த ஒரு பக்தி ஸ்துதியையும் சேர்த்து ஒரே புஸ்தகமாக இருக்கப் பண்ணலாம் என்று நினைத்திருக்கலாம்.

'இரண்டும் சேர்ந்த ஒரே புஸ்தகமாக ஆசார்யளே புதுசாக ஒன்று பண்ணும்படி ஆஜ்ஞாபித்திருக்கலாமே!அவருக்குத் தெரியாத மந்த்ர சாஸ்த்ரமா?'என்றால் அதற்கும் பதில் இருக்கிறது!

கைலாஸ ஸ்தோத்ரத்தில் நாற்பத்தியோரு ச்லோகங்களுக்கு அப்புறம் என்ன இருந்ததோ?மந்த்ர சாஸ்திரத்திலேயே இன்னும் ஸூக்ஷ்மமாக, ரஹஸ்யமாக நம்முடைய நரலோகத்துக்கு இல்லாததாகவும், திவ்ய லோகங்களுக்கே உரியதாகவும் அநேக விஷயங்கள் அவற்றில் இருந்திருக்கலாம். அதனால்தான் அதிலே நரலோகத்திற்கான பாகத்தோடு கவிதையாக இன்னொரு பாகம் சேர்க்கும்படி அம்பாள் நினைத்திருக்கலாம்.

இதற்கெல்லாம் மேலாக, இப்படிப் பண்ண வைத்தால்தானே, 'ஜாயின்ட் ஆதர்'களாக ஒரே புஸ்தகத்தில் முன் பாகம் கைலாஸ சங்கரரும் பின் பாகம் காலடி சங்கரருமாக ஆக்கி,

அவரும் இவரும் ஸமம், ஒன்றே என்று புரியவைக்க முடியும்?

தெய்வமே செய்த ஸ்துதி, தெய்வம் அவதாரமாகிச் செய்த ஸ்துதி என்ற இரண்டையும் ஒட்டிவைத்து ஏக ஸ்துதியாக்கி லோகத்துக்குக் காட்டவேண்டுமென்ற எண்ணத்திலேயே அம்பாள் இப்படி நந்திகேச்வரரைக் கொண்டு நாடகம் நடத்தியிருக்கலாம்.

இங்கே இன்னொரு கேள்வி வரலாம்: நந்திகேச்வரர் வழிப்பறி பண்ணும்படி வைப்பானேன்?அம்பாளே கைலாஸ ஸ்தோத்ரத்தில் நாற்பத்தொரு ச்லோகங்களை மட்டும் ஆசார்யாளிடம் எடுத்துக் கொடுத்து, "இது ஒரு சதகத்திலேயிருந்து எடுத்தது. இதற்கு மேலிருப்பது பூலோக வாஸிகளுக்கு வேண்டாமென்று கொடுக்கவில்லை. ஆனாலும் சதகத்திலிருந்து விண்டு கொடுத்ததால் நீ இன்னொரு ஐம்த்தொன்பது ச்லோகம் பண்ணிச் சேர்த்து நூறாகவே பூலோகத்தில் பிரசாரம் பண்ணு"என்று சொல்லியிருக்கலாமல்லவா?

இப்படிக் கேட்டால், [அம்பாள் அப்படிச்]சொல்லியிருக்க முடியாது என்றே பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனென்றால் - கைலாஸ ஸ்துதியைச் செய்த சங்கரனேதான் இந்த சங்கரர் என்றாலும் அவதகாரம் வேஷத்தில் இவர் விநய ஸ்வரூபமானவர். அதனால்தானே பார்வதி-பரமேச்வராளைத் தேடிக்கொண்டு கைலாஸம் போய் நமஸ்காரம் பண்ணியிருக்கிறார்?அப்படிப்பட்டவரிடம் அம்பாளே ஈச்வரன் பண்ணிய ஸ்தோத்ரத்திலிருந்து ஒரு பாகத்தை மட்டும் கொடுத்து, 'பாக்கியை நீ பூர்த்தி பண்ணு'என்று ஈச்வரனோடு அவருக்கு ஸாம்யம் [ஸமத்துவம்] காட்டிச் சொன்னால் அது அவதார வேஷத்தில் அவர் 'ஐடிய'லாகக் காட்ட வேண்டிய விநய ஸம்பத்தை அவளே புரிந்து கொள்ளாத மாதிரியாகும். அதுவே, அவர் ஒரு பாகத்தை நஷ்டப்பட நேர்ந்து, அதற்காகக் கஷ்டப்படுகிற ஒரு 'ஸிசுவேஷன்'உண்டானால் அப்போது, 'அதனால் பரவாயில்லை. நஷ்டமானதையும் நீயே பாடி ஈடு கட்டிவிடு'என்று சொல்வது இயற்கையாக -

ஈச்வர ஸாம்யம் என்ற எண்ணத்தைக் கொடுக்காமல், அநேக 'R²«õû'Q™ ÞòŸ¬èò£è„ ªêŒò«õ‡®òð® - ªêŒîî£AM´‹ â¡ðî£™î£¡ ï‰F«è„õó¬ó ¬õˆ¶ ï£ìè‹ ð‡Eò¶.

ஒரு ராஜா இருக்கிறான். அவனுக்கு ஒரு புத்ரன் இருக்கிறான். எல்லா விதத்திலும் அவன் பிதாவுக்கு ஸமதையாக இருக்கிறான். இது எல்லோருக்கும் தெரிகிறது. இருந்தாலும் அவன் தர்மப்படி பிதாவுக்கு அடங்கியே இருக்கிறான். இதுவும் ஸரிதான் என்றே உலகம் எடுத்துக் கொள்கிறது. இப்படியிருக்கும்போது ராணி தன் பிள்ளை ராஜாவுக்கு ஸமதையாயிருக்கிறானென்பதால் அவனிடம், "நீ பாதி ராஜ்யத்தை ஆளு"என்று சொன்னால் எவ்வளவு அயுக்தமாயிருக்கும்?அதுவே சத்ரு ராஜா எவனோ வந்து படையெடுத்து இந்த ராஜ்யத்தில் பாதியைப் பிடித்து விட்டால் அப்போது அவள் பிள்ளையிடம், "நீ போய் அதை மீட்டு அப்புறம் நீயே அங்கே காவல் பண்ணிக் கொண்டிரு"என்றால் அது யுக்தமாகத்தானே தோன்றுகிறது?

ஒரு விஷயத்தைப் போட்டு உடைக்காமல் வ்யங்க்யமாக (மறைமுகமாக)ப் புரியவைப்பதிலேயே ரஸமிருக்கிறது. ஆசார்யாள் ஈச்வராவதாரம் என்பதை இரண்டுபேரும் பங்கு கொள்வதாக ஒரே ஸ்துதி ஏற்படச் செய்தபோது அம்பாள் இப்படி வியங்கியமாகவே நடத்திக் காட்டியிருக்கிறாள். நாரதர் கலகம் மாதிரி நந்திகேச்வரரின் முன்கோபம் எல்லாருக்கும் தெரிந்ததுதான். முடிவிலே இரண்டும் நல்லதற்காகத்தான் இருக்கும். அதனால் நந்திகேச்வரரைப் பாத்திரமாக்கி, வழிப்பறி பண்ணவைத்து, ஒரு ஸந்நியாஸிக்கு சத்ருவிடங்கூடக் கோபம் வரப்படாது, எதிர்க்கிறவனைக்கூட அவன் எதிர்த்துச் சண்டை போடக் கூடாது என்ற தர்மத்தை அப்போது ஆசார்யாள் அநுஸரித்துக் காட்டும்படியாக வைத்து, அப்புறம் அவரே ஸ்தோத்ரத்தை பூர்த்தி பண்ணும்படியாக ஆஜ்ஞாபித்தாள்.

இதனால் லோகத்திலுள்ள இலக்கிய ஸ்ருஷ்டிகளிலேயே ஒரு அதியமாக ஒரே ஸ்தோத்ரத்தில், "இது மாதிரி ஒரு ஸ்தோத்ர ரூபத்திலே சாஸ்த்ர ஸூக்ஷ்மங்களை எங்கேயுமே பார்க்க முடியாது"என்று சொல்லும்படியான பூர்வ பாகமும், "இதுமாதிரிக் கவிதா கல்பனையுள்ள ஸ்தோத்திரம் எங்கேயுமே பார்க்க முடியாது"என்று சொல்லும்படியான

உத்தர பாகமும் கொண்டதாக 'ஸௌந்தர்ய லஹரி'நமக்குக் கிடைத்திருக்கிறது. சாஸ்த்ரத்திற்கு சாஸ்த்ரம், ஸ்தோத்ரத்திற்கு ஸ்தோத்ரம், கவிதைக்குக் கவிதை என்று மூன்றும் சேர்ந்ததாகக் கிடைத்திருக்கிறது.

கிட்டதட்ட இப்படி மூன்றும் சேர்ந்ததாக இன்னொன்றைச் சொல்ல முடியுமானால் அது லலிதா ஸஹஸ்ரநாமம்தான்.

ஸௌந்தர்ய லஹரியில் ஒரு விஷயம் என்னவென்றால், சாஸ்த்ரமாக இருக்கப்பட்ட பூர்வ பாகத்திலும் பக்தி உணர்ச்சிக்குப் பிராதான்யம் கொடுத்து ஸ்தோத்ரமாக இருக்கும் ச்லோகங்கள் இருக்கின்றன;காவ்ய ரஸப் பிராதான்யமுள்ளதான ச்லோகங்களும் இருக்கின்றன. பக்தியின் உச்சியில் சரணாகதி பண்ணி ஸகலமும் அவள் செயல் என்று ஆத்மார்ப்பணம் பண்ணிவிட்டுக் கிடப்பதைச் சொல்லும் 'ஜபோ ஜல்ப:'ச்லோகம், 'பவாநி'என்ற வார்த்தையை வைத்தே த்வைதத்தில் தாஸ்யமாயும் அத்வைதத்தில் ஸாயுஜ்ய நிலையிலும் இருப்பதை சிலேடை பண்ணும் ச்லோகம், இன்னும் இப்படிச் சிலது சாஸ்த்ர விஷயங்களைச் சொல்லும் அந்த பாகத்தில்தான் வருகின்றன. ஆனால் பக்திக் கவிதையாகவே இருக்கும் உத்தர பாகத்திலோ சாக்த சாஸ்த்ர நுணுக்கம் எதுவுமே இல்லை. தேடித் தேடிப் பார்த்தால் 'கதாஸ்தே மஞ்சத்வம்'என்ற ச்லோகத்தில் அம்பாள் காமேச்வரியாகக் காமேச்வரனுடன் பஞ்ச ப்ரஹ்மாஸனத்தில் வீற்றிருக்கிறாள் என்று சொல்லியிருப்பதைப்போல ஒன்று இரண்டு அகப்படலாம். மூன்று அவஸ்தைகளுக்கு மேலே துரீயம் என்ற வேதாந்தக் கருத்து ஒரு இடத்தில் வருகிறது. மற்றபடி அது ஒரே 'பொயட்ரி'தான், 'டிவோஷனல் பொயட்ரி'தான் என்று சொல்லும்படியாக இருக்கிறது. 'ஸௌந்தர்ய'த்தை வைத்தே டைட்டில் இருப்பதும் சாஸ்த்ரத்தைவிடக் காவ்யத்திற்குத்தான் இந்த ஸ்தோத்ரத்தில் முக்யத்வம் என்று காட்டுகிறது. பாஷ்யம் எழுதியவர்களில் சில பேர் பின் பாக ச்லோகங்களும் சாஸ்த்ர ஸூக்ஷ்மங்களைச் சொல்வதாக வியாக்யானம் பண்ணியிருந்தாலும் எனக்கென்னவோ இதை பக்திக் கவிதை என்றே வைத்துக் கொள்வதுதான் ச்லாக்யமென்று தோன்றுகிறது. இன்னும் என் மனஸை விட்டுச் சொன்னால் - அப்படி எனக்குத் தோன்றலாமோ கூடாதோ?ஆனாலும் தோன்றிவிட்டதால் (அதை)மனஸை

விட்டுச் சொன்னால் - 'கைலாஸ ஸ்தோத்ரத்திலே அத்தனை ஏடுகளையுமே நந்திகேச்வரர் பறித்துக்கொண்டு, நூறு ச்லோகமுமே அம்பாளின் ஸ்வரூப வர்ணனையாக ஆசார்யாள் பண்ணியிருக்கக்கூடாதா?சாஸ்த்ரம் என்றேதான் தனியாக மந்த்ர, யந்த்ரங்களைச் சொல்ல இருக்கே!அப்புறம் அதை ஸ்தோத்ரத்தில் கொண்டு வருவானேன்?'என்றுகூடத் தோன்றுகிறது அந்த அளவுக்குக் கவிதா லக்ஷணங்களால் ஜனங்களின் மனஸை ஆகர்ஷித்து பக்தியில் ஈடுபடுத்துவதாகப் பின் பாகத்தில் ஆசார்யாளின் வாக்கு உயர்ந்து நிற்கிறது.

ஆக பக்திக் கவிதையாகவே உயர்வு கொள்வது இந்த ஸ்தோத்ரம். அதனால்தான் ஸர்வஜ்ஞனான பரமேச்வரன் ஒரு அம்பாள் உபாஸகன் மாதிரி இருந்துகொண்டு ஒரிஜினல் கைலாஸ ஸ்தோத்ரத்தைப் பண்ணும்போதே, அது நரலோகத்துக்குப் போகும்போது அதன் பின் பாகத்தை தன்னுடைய அவதாரமான ஆசார்யாள் கவிதா ரஸம் தளும்பும்படியாகப் பூர்த்தி பண்ணப் போகிறார் என்பதையும் தெரிந்துகொண்டு அதற்கேற்கத் தானும் அதே பாவங்களில், ரஸங்களில் நடையில் சில ச்லோகங்களை முன் பாகத்திலும் பண்ணிவைத்து விட்டானென்று தோன்றுகிறது!முழு ஸ்தோத்ரத்திலும் ஒரே 'கம்போஸ'ரின் முத்ரை, 'ஸ்டைல்' தெரியும்படியாக!

இன்னொரு விஷயமும் சொல்லணும். பின் பாகம் பக்திக் கவிதை என்றே நான் சொன்னாலும் அந்த ச்லோகங்களுக்கும் மந்த்ர சக்தி உண்டு. 'ஸௌந்தர்ய லஹரி'நூறு ஸ்லோகங்களில் ஒவ்வொன்றையுமே மந்த்ரமாக ஜபித்தால் ஒவ்வொரு விதமான பலன் உண்டு;பின் பாகத்தில் அழகு வர்ணனையாகவே வருகிற ச்லோகங்களையு ந்தான்!ஆசார்யாள் வாக்கானதால் அவருக்குள்ளே புகுந்து அம்பாளே கொண்டுவந்த வாக்கானதால், அதுவே சாஸ்த்ர விஷயம், பீஜாக்ஷரம் என்று இல்லாவிட்டாலுங்கூட மந்த்ரமாக இருக்கிறது. மைடாஸ் தொட்டதெல்லாம் தங்கம் என்கிறாற்போல ஆசார்யாள் வாக்குப் பட்டதெல்லாம் மந்த்ரந்தான். நம்மகத்துக் கிணற்று ஜலம் என்றால் அதை மந்திரித்துத்தான் புண்ய தீர்த்தமாக்க வேண்டும். கங்கா ஜலமோ ஸ்வயமாகவே புண்ய தீர்த்தமாயிருக்கிறதல்லவா?விச்வநாதருக்கு அபிஷேகமாகிற

போது மட்டுமில்லாமல், நமக்கு ஸ்நானம் பண்ணுவிக்கும் போதும், வயல் வரப்புக்குப் பாயும்போதும், 'போனவர்'களைக் கழுவிக் குளிப்பாட்டுகிறபோதுங்கூட அது புண்ய தீர்த்தமாகத்தானே இருக்கிறது?அப்படி, ஆசார்யாள் எடுத்துக்கொண்ட 'ஸப்ஜெக்ட் மாட்டர்'மந்த்ர விஷயமாகத் தெரியாமல், அழகு வர்ணனையாக, கவிதையாக இருக்கிற போதுங்கூட அவருடைய வாக்கு மந்த்ர சக்தி பொருந்தியதாக இருக்கிறது. அவருடைய வாக்கில் வந்த ஸகலமுமே அப்படியென்றாலும் அதில் விசேஷமாக 'ஸௌந்தர்ய லஹரி'யும் 'ஸுப்ரஹ்மண்ய புஜங்கமும்'இப்படி இருக்கின்றன.

முழுக்க மந்த்ர சாஸ்த்ரமாகவே இருந்த ஒரு ஆதி ஸ்தோத்ரத்தில் 'மிஸ்'ஸான பாகத்தை அவர் மறுபடி ஸரிப் பண்ணி ஸௌந்தர்ய லஹரியை ஆக்கினாரென்பதால் அந்த ஸ்லோகங்களுக்கு இப்படி மந்த்ர வீர்யம் விசேஷமாக இருக்கிறது. அவருக்கே ரோகம் வந்துபோது, 'ரோகிகள் எல்லாரும் ஸ்தோத்ர பாராயணம் செய்து நிவிருத்தி பெறுவதற்கு நாம் உபகாரம் பண்ணவே நமக்கு இந்தக் கஷ்டம் ஸம்பவித்திருக்கிறது'என்று நினைத்து, ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் மேலே புஜங்க ஸ்தோத்ரம் பாடினார். அதனாலேயே அது ரோக நிவ்ருத்திக்கு மந்த்ரமாக இருக்கிறது. ரோக நிவ்ருத்தி மாத்திரமல்லாமல் இன்னம் அநேக பலன்களையும் தரவல்லதாக ஸௌந்தர்ய லஹரி இருக்கிறது.

---



## உத்தம துதிகள் மூன்று

ஜகன்மாதாவை லலிதாம்பிகை என்ற ரூபத்தில் அநேக மஹான்களும் கவிகளும் ஸ்தோத்ரம் பாடி ஆராதித்திருக்கிறார்கள். துர்க்கை, காளி, அன்னபூர்ணேச்வரி,

புவநேச்வரி, இன்னும் பல ரூபங்களும் அவளுக்கு உண்டு. லலிதாம்பாள் விஷயமாக மட்டுமே இப்போது சொல்கிறேன்.

ராஜராஜேச்வரி, காமாக்ஷி, காமேச்வரி, த்ரிபுரஸுந்தரி என்ற பெயர்களில் சொல்லப்படும் ஸ்ரீவித்யா தந்த்ர ப்ரதிபாத்யமான [ஸ்ரீவித்யை எனும் வழிபாட்டு நெறிமுறைப்படி ஆராதிக்கப்படும்]தேவதை இந்த லலிதாதான். லலிதா ஸஹஸ்ரநாமம், லலிதா த்ரிசதி, லலிதா அஷ்டோத்தரம் என்றெல்லாம் அந்தப் பேரில்தான் ஸ்ரீவித்யையின் அதிதேவதைக்கு நாமாவளிகள் இருப்பதைப் பார்க்கிறோம்.

அவளைப் பற்றிய ஸ்தோத்ர நூல்களில் மூன்று மிகவும் ச்ரேஷ்டமானவை:துர்வாஸர் பண்ணிய 'ஆர்யா த்விசதி', மூகர் பண்ணிய 'பஞ்ச சதி', ஆசார்யாளுடைய 'ஸௌந்தர்ய லஹரி'என்று மூன்று. கால க்ரமத்தில் வரிசைப்படுத்தினால் முதலில் துர்வாஸர் பண்ணியது, அப்புறம் ஆசார்யாள் பண்ணியது, கடைசியில் மூகருடையது. மூன்றுக்கும் நடுவாக, நடுநாயகம் என்று சொல்லும்படியாக 'ஸௌந்தர்ய லஹரி'இருக்கிறது.

அந்த மூன்று ஸ்தோத்ர கர்த்தாக்களும் [சிரித்து]'ந ம்மவர்'கள்;நமக்கு ரொம்ப ஸொந்தமானவர்கள்! நம்முடைய பீட அதீச்வரியாக இருக்கப்பட்ட காமாக்ஷியிடம் மூன்று பேருக்கும் விசேஷ ஸம்பந்தமுண்டு. துர்வாஸர்தான் [காமாக்ஷிஆலயமாகிய] காமகோஷ்டத்திற்கான பூஜா கல்பத்தைப் பண்ணிக் கொடுத்தவர். அந்தப் பிரகாரந்தான் இன்றைக்கும் அங்கே அம்பாளுக்குப் பூஜை நடக்கிறது. ஆசார்யாளுக்கு காமாக்ஷியிடம், அங்கேயுள்ள காமகோடி பீடத்திடம் உள்ள ஸம்பந்தம் எல்லாருக்கும் தெரிந்தது. மூகர் கவியானதே காமாக்ஷிஅநுக்ரஹத்தில் தான்;அவர் 'பஞ்சசதி'யில் ஸ்தோத்திரித்திருப்பதும் அவளைத்தான்.

மூன்றில் 'ஆர்யா த்விசதி'தான் மிகவும் புராதனமானது. த்வி-சதம் என்றால் இருநூறு. 'ஆர்யா த்விசதி'யில் இருநூறு ச்லோகங்கள் இருப்பதால் அப்படிப் பெயர். 'ஆர்யா'என்ற அபூர்வமான சந்தஸில் (மீட்டரில்) அது பண்ணப்பட்டிருக்கிறது. அதோடு அது ஸ்தோத்ரிப்பதும்

'ஆர்யா'என்ற அம்பாள்.

இப்படிச் சொன்னால் அம்பாள் ஆர்யக் கடவுள், திராவிடக் கடவுளில்லை என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது!ஆர்யர் என்றால் உயர்வு பொருந்தியவர் என்று அர்த்தமேயொழிய, அப்படி ஒரு ரேஸுக்கும் பேரில்லை. வெள்ளைக்காரர்கள் பண்ணிய விபரீதந்தான் 'ஆர்யன் ரேஸ்'என்று ஆக்கியது. அம்பிகை உயர்ந்ததிலெல்லாம் உயர்ந்தவளாதலால் ஆர்யா. தமிழ்மொழி வழக்கில் 'ஆர்யை'. பழந்தமிழில் அதை இன்னும் நன்றாகத் தமிழ் பாஷை விதிகளின்படி ரூபம் கொடுத்து ஐயை என்று சொல்லியிருக்கிறது. ஆர்யன்-ஐயன்;Ý˜¬ò-ä¬ò.

'ஐயனே என்று எந்த ரேஸிலும், எந்த ஜாதியிலும் உயர்ந்தவர்களாக இருப்பவர்களைக் கூப்பிடுவதுண்டு தானே?இருந்தாலும், பொதுவாக ப்ராம்மணர்கள் கல்வி கேள்விகளாலும், ஆசார ஸம்பத்தினாலும், குண சீலங்களாலும் மற்றவர்கள் உயர்வு தரும்படி இருந்ததால் - (சிரித்து)அந்த நாளில் இருந்ததால் - அவர்களைக் குறிப்பாக ஐயர் என்று சொல்வதாக ஆயிற்று. அப்போதுங்கூட அது ஜாதிப் பேர்தானே ஒழிய ரேஸ் பேரில்லை என்பதைக் கவனிக்கவேண்டும். ஒரே ரேஸில்தான் நாலு ஜாதிகளும்;ஸரியாகச் சொன்னால் நாலு வர்ணங்கள். நான்கு வர்ணங்களிலிருந்து உண்டானவையே நூற்றுக் கணக்கான ஜாதிகள்.

ஐயர், ஐயங்கார், மாத்வர் ஆகிய மூன்று வர்ணங்களும் ஒரே பிராம்மண வர்ணத்தில் உண்டானவை. நாட்டுக்கோட்டை செட்டியார், தேவாங்கச் செட்டியார், பேரிச் செட்டியார், ஆர்ய வைச்யர்கள் என்று அநேக ஜாதிகள் ஒரே வைச்ய வர்ணத்திலே இருக்கின்றன. கீதையிலும் தர்ம சாஸ்திரங்களிலும் 'சாதுர்வர்ண்யம்'என்ற நாலு வர்ண ஏற்பாட்டைச் சொல்லியிருக்கும் எந்த இடத்திலுமே அதில் முதல் வர்ணம், அல்லது முதலிரண்டு அல்லது முதல் மூன்று வர்ணங்கள் ஒரு ரேஸ் (அதாவது ஆர்யன் ரேஸ்) என்றும், நாலாவது வர்ணம் வேறே ரேஸ் (த்ராவிட ரேஸ்) என்று சொல்லியிருக்கவேயில்லை...

ஆர்யா என்று அம்பாளின் பேர். ஆர்யாம்பா என்றே

ஆசார்யாளின் தாயாருக்குப் பேர். துர்வாஸர் பண்ணிய இருநூறு ச்லோக ஸ்தோத்ரம் ஆர்ய மீட்டரில் இருப்பதோடு ஆர்யா என்ற அம்பாளைக் குறித்ததாக இருப்பது. அதனால் இருபொருள்பட 'ஆர்யா த்விசதி'என்று அதற்குப் பெயரிருக்கிறது. அதற்கே இன்னொரு பேர் 'லலிதா ஸ்தவ ரத்னம்'என்பது. ஸ்தவம் என்றாலும் ஸ்துதிதான். லலிதாம்பாளைப் பற்றிய ஸ்துதிகளுக்குள் ரத்னம் போலிருப்பது 'லலிதா ஸ்தவ ரத்னம்'.

பட்டாரிகா என்று அம்பிகையைச் சொல்வது வழக்கம். தமிழில் பட்டாரிகை என்று ஆகும். பட்டாரகர் என்றால் பூஜிக்கத் தக்கவர். அதற்குப் பெண்பால் பட்டாரிகா. பட்டாரர், பட்டாரி என்றே சொன்னாலும் போதும். பழைய காலத்தில் இந்தத் தமிழ் தேசத்தில் பிடாரி கோவில்களுக்குச் செய்யப்பட்ட 'என்டோமென்ட்'களை 'பட்டாரிகா மான்யம்'என்றே சாஸனங்களில் குறித்திருக்கிறது. இதிலிருந்து பட்டாரிதான் பிடாரி ஆகியிருக்கிறதென்று தெரிகிறது.

அம்பாள் பட்டாரிகா. அதனால் ஒரு தனி அர்த்தத்தில் அவளுடைய தலை சிறந்த மூன்று உபாஸகர்களுக்கு 'பட்டாரகர்'என்று பட்டம் கொடுத்திருக்கிறது. யார் யாரென்றால் ஒன்று ஸாக்ஷாத் ஈச்வரனே அவரைப் 'பரமசிவ பட்டாரகர்'என்று சொல்லியிருக்கிறது. இன்னொருவர் மஹாகவி காளிதாஸர். உஜ்ஜயினி மஹாகாளியின் அநுக்ரஹத்தாலேயே வாக் ஸித்தி, கவிதா சக்தி பெற்றவர். அம்பாள் ஸ்தோத்ரம் என்று எடுத்தவுடன் எல்லாரும் படிக்கும் 'ச்யாமளா தண்டக'மும் 'நவரத்ன மாலா'வும் பண்ணியவர். அவரை 'ச்ருங்கார பட்டாரகர்'என்று சொல்லியிருக்கிறது. ஒரு பட்டாரகர் மநுஷ்யர்களில் கவியாக இருந்தவர்... கனம், லகு என்று இரண்டு, கனமாயில்லாமல் லேசாக இருப்பது லகு. தெய்வம் கனம்;மநுஷ்யன் லகு. லகு பட்டாரகர் என்ற ஒருத்தர் 'பஞ்ச ஸ்தவி'என்று அம்பாள் பேரில் செய்துள்ள ஐந்து ஸ்தோத்ரங்கள் இருக்கின்றன. காளிதாஸரான மநுஷ்ய பட்டாரகருக்கே லகு பட்டாரகர் என்றும் பெயராக இருக்கலாம் என்று ஒரு அபிப்ராயமுண்டு..... தெய்வம், மநுஷ்யர் இரண்டோடும் சேர்க்காமல் ரிஷி என்ற வர்க்கத்தைத் தனியாகச் சொல்வது வழக்கம். தேவரிஷிகள் என்ற நாரதர் போன்றவர்கள் தேவ

ஜாதியில் பிறந்தவர்களாக இருக்கிறார்கள். மநுஷ்ய ஜாதியில் பிறந்து பூலோகத்திலேயே அநேகம் ரிஷிகள் இருந்திருக்கிறார்கள். பிறந்தது எந்த ஜாதியிலானாலும் எவரொருவர் ஆகாசத்தில் அநாதியாக ஸூக்ஷ்ம ரூபத்தில் பரவியிருக்கும் மந்த்ரங்களை நாம் கேட்கக்கூடிய சப்த ரூபத்தில் பிடித்துக் கொடுக்கிறாரோ அவர் ரிஷி என்ற தனி ஜாதியாகி விடுகிறார். தர்ப்பணம் முதலான வைதிக கார்யங்களில் தேவர்களுக்குச் செய்வது, ரிஷிகளுக்குச் செய்வது, மநுஷ்யர்களான பித்ருகளுக்குச் செய்வது என்று இப்படி மூன்று வர்க்கமாகவே சொல்லியிருக்கிறது. மூன்று பட்டாரகர்களில் ஈச்வரன் தேவர், காளிதாஸர் மநுஷ்யர் என்பதால் மற்றவர் ரிஷியாயிருந்தால்தானே பொருத்தமாயிருக்கும்?அப்படிப்பட்ட மூன்றாவது பட்டாரகர் யாரென்றால் ரிஷி வர்க்கத்தைச் சேர்ந்த துர்வாஸர்தான். ரிஷிகளுக்குள் அம்பிகையின் ப்ரஸாதத்தைப் பரிபூர்ணமாக அடைந்தவர் அவர். அவருடைய கோபம் ப்ரஸித்தமானதல்லவா?அதனால் அவரை 'க்ரோத பட்டாரகர்'என்றே சொல்வது. பரமசிவ பட்டாரகர், ச்ருங்கார பட்டாரகர், க்ரோத பட்டாரகர் என்றிப்படி மூன்று பேர்.

க்ரோத பட்டாரகரான துர்வாஸர்தான் முதன் முதலில் அம்பாளை ஸ்துதித்த பூலோகவாஸி. அவர் 'த்விசதி'பாடினதோடு 'சக்தி மஹிம்ந ஸ்தோத்ரம்'என்றும் அம்பாள் மஹிமை பற்றி ஒரு உத்தமமான ஸ்துதி செய்திருக்கிறார். இவற்றுக்கு அப்புறந்தான் மற்றக் கவிகளின் வாக்குகள் உண்டாயின. அவர் வாக்கிலேயே அம்பிகை ஆவிர்பாவித்திருப்பது 'த்விசதி'யை அநுபவித்துப் படிப்பவர்களுக்குத் தெரியும்.

ஒரு மையப் புள்ளியைச் சுற்றி அடுக்கடுக்காக நாற்பத்து மூன்று கோணங்கள் கம்பாக - நீஷ்ஸீமீ ஒலீணீஜீமீல் - எழும்பி அமைந்த ஸ்ரீசக்ரம் என்ற யந்த்ரத்தில், 'ஆவரண'ங்கள் என்னும் சுற்றுக்களில் (மூல ஸ்தானத்தைச் சுற்றி பஞ்ச ப்ராகாரம், ஸப்த ப்ராகாரம் என்றெல்லாம் இருப்பதுபோல ஸ்ரீசக்ரத்தில் உள்ள சுற்றுகளில்) அநேக தேவதைகள் சூழ்ந்திருக்க, அதன் உச்சியாக உள்ள மையப் புள்ளியான பிந்து ஸ்தானத்தில் காமேச்வரனுடைய வாம பாகத்தில் எழுந்தருளியிருக்கிற காமேச்வரியான ராஜராஜேச்வரியை அந்த எல்லா முக்கோணங்களையும்,

'ஸ்டைல்'மாறிற்று;மீட்டரும் மாறிற்று. வரிக்குப் பதினேழு எழுத்துக் கொண்ட நாலு வரி ச்லோகங்களாக 'சிகரிணி'என்ற மீட்டரில் 'ஸௌந்தர்ய லஹரி'யைப் பண்ணியிருக்கிறார். அம்பாளின் அழகை வாயாரச் சொல்லிக்கொண்டு ஆனந்தப்படுவதற்கு ஏற்ற விதத்தில் 'சிகரிணி'சந்தஸை சிகரமாக்கிக் கையாண்டிருக்கிறார்.

நாற்பத்திரண்டாவது ச்லோகத்திலிந்து ஆரம்பித்து நூறு முடியப் பண்ணியிருக்கிற ஸ்வரூப வர்ணனையில், அம்பாளே நம் நேரே தரிசனம் கொடுத்தால் எந்த மாதிரி ஆனந்தமாயிருக்குமோ அந்த மாதிரி ஆனந்தப்படும்படியாக வார்த்தைகளையும், வர்ணனைகளையும் ரஸபாவங்களையும் பொழிந்து அநுக்ரஹித்திருக்கிறார்.

ஒரு பெரிய சில்பி அர்ப்பண புத்தியோடு ஒரு தெய்வச் சில்பத்தைப் பண்ணுகிறபோது அதிலே எப்படி அந்த தெய்வமே வந்து குடிகொண்டு விடுகிறதோ, அப்படி உயர்ந்த நிலையில் அநுபவித்து அநுபவித்து, அந்த அநுபவமும் வாக்கும் அவளே கொடுத்தது என்ற அர்ப்பண புத்தியோடு ஆசார்யாள் இதைப் பண்ணியிருப்பதால் ஸ்தோத்திரமே ஸ்தோத்திரிக்கப்படுகிற அம்பாளின் ஸ்வரூபமாக இருக்கிறது.

கொண்டைமாலை கட்டும்போது பூ பூவாக ஸரம் கோத்து, அந்த ஸரங்களை ஒன்றோடொன்று முறுக்கிச் சேர்த்து ஜரிகை, ஜிகினா தைக்கிறதுபோல, அக்ஷரங்களைப் பதமாகத் தொடுத்து, பதங்களை வாக்கியமாகத் தொடுத்து ஒவ்வொரு ச்லோகத்தையும் பண்ணி, ச்லோகத்துக்கு ச்லோகம் ஸம்பந்தப்படுத்தி முழு ஸ்தோத்திரமாகப் பண்ணியுள்ள கலைஞராக, கவியாக ஆசார்யாள் இங்கே தர்சனம் தருகிறார். பூமாலை - பாமாலை என்று சொல்கிறோமல்லவா?பூ மாலை கண்ணுக்கு அழகான ரூபமாகத் தெரிகிறது என்றால், பாமாலை காதுக்கு அழகான சொல்லும் சந்தமுமான ரூபத்தில் இருக்கிறது. பூமாலைக்கு வாஸனை மாதிரிப் பாமாலைக்கு அதன் அர்த்தம். பூவிலிருந்து தேன் வருகிறதென்றால் பாவிலிருந்து கிடைக்கிற ரஸாநுபவம்தான் மனஸுக்குத் தேன். ஒரு பெரிய வித்யாஸம் - பூமாலை வாடிப் போவது;பாமாலை லோகமுள்ள அளவும் வாடாது!

---

## அருட்கவி :இரு பொருளில்!

ஸாதாரண மநுஷ்யக் கவிகளுக்கும் மஹான்கள் கவிகளாக இருப்பதற்கும் வித்யாஸம் உண்டு. ஆசார்யாள், ஞானஸம்பந்தர், நம்மாழ்வார், ஸதாசிவ ப்ரம்மேந்திராள் மாதிரியானவர்களிடம் கவிதையோடு அருளும் சேர்ந்திருக்கிறது. ஒரு கவிக்கு ஈச்வரன் தூண்டிவிட்ட இன்ஸ்பிரேஷனில் கவிதை பிறந்தால் அதை 'அருட்கவி'என்று சொல்கிறோம். இந்த இடத்தில், 'கவிதையைக் கவி தன்னுடைய புத்தி, கல்பனா சக்தி, அநுபவம் ஆகியதுகளைக் கொண்டு பண்ணவில்லை;அவனுக்கு ஈச்வரன் பண்ணிய அருளால் தன்னுடைய ஸொந்த புத்தி, யுக்தி, அநுபவங்களுக்கும் அதீதமாகக் கவிதை பண்ணி விட்டான்' என்று அர்த்தம். மஹான்களுடைய கவிதை இன்னொரு அர்த்தத்தில் - இன்னொரு அர்த்தத்திலும் - என்று சொல்லணும் - அருட்கவியாக இருக்கிறது. எப்படியென்றால் அந்தக் கவிதையே அதைப் படிக்கிறவர்களுக்குக் கவிதா ரஸத்தைக் கொடுப்பதோடு அருளையும் வழங்கி அநுக்ரஹம் பண்ணுகிறது!பொதுவாக 'அருட்கவி'என்பது கவிக்கு அருட்சக்தி கிடைத்துப் பாடினதைக் காட்டுகிறதென்றால், மஹான்களுடைய அருட்கவிகளோ படிக்கிற பேருக்கு அருட்சக்தியை ஊட்டுவதாக இருக்கிறது!

இவற்றைச் செய்து பெரியவர்கள் அநுபவ ஆனந்த நிலையில் தங்களை மறந்து பாடினதால் இவை ஈசன் 'inspired' அருளில் ஆகப் பாடிய அருட்கவிதான். "எனது) உரை தனது) உரையாக"என்றே ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் சொல்கிறார். ஆசார்யாளும் "ஸௌந்தர்ய லஹரி"யை முடிக்கும்போது

"த்வதீயாபி:வாக்பி:தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம்"- "அம்மா, உன்னுடையதேயான வாக்குகளால் ஆன இந்த உன் ஸ்தோத்ரம்"என்கிறார். இவ்விதத்தில் அருட்கவியாக இருப்பதோடு இவற்றை செய்த மஹான்களே அநுக்ரஹமயமான அருளாளர்களாக இருப்பதால் இந்த ஸ்தோத்திரங்கள் 'அருளால் பிறந்த கவி'யாக மட்டுமில்லாமல் நமக்கு 'அருளைச் செய்கிற கவி'யாகவும் இருக்கின்றன.

இந்த அருளாளர்கள் கவிதை பண்ணவேண்டுமென்பதே இல்லை. அருளையே நேராக வழங்கத் தெரிந்த பிறகு அருளைத் தர வழியாக இருக்கிற கவிதையைப் பண்ணவேணடுமென்பதில்லையல்லவா?ஆனாலும் ஏன் கவிதை எழுதினார்களென்றால், அவர்களை நேரில் தரிசனம் செய்கிறவர்களுக்குத்தானே நான் சொன்ன அந்த அருள் கிட்டும்?சரீரம் போனாலும் அவர்கள் எப்போதும் ஸூக்ஷ்மமாக அநுக்ரஹம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும், நம் மாதிரி ஜனங்களால் அதை கிரஹிக்க முடியவில்லையே!பரமாத்மாவைகூட நாம் ஒரு ரூபத்தில் தானே பாவிக்க முடிகிறது? ஆசார்யாளையும் ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளையும் நேரில் தரிசனம் பண்ணினவர்கள் தரிசன மாத்திரத்திலேயே அருள் பெற்றிருப்பார்கள். ஆனால் அந்த தர்சனம் சாச்வதமாக இல்லையே!ஆசார்யாள் தர்சனம் லோகத்துக்கு முப்பத்திரண்டு வருஷங்கள்தான் கிடைத்தது. ஸம்பந்தர் தர்சனமோ அதிலேயும் பாதிதான். தங்களுடைய சரீரம் விழுந்த அப்புறம் வரப்போகிற ஜனங்களையும் விட்டுவிடக் கூடாது என்ற கருணையால்தான் அவர்களைப் போன்ற மஹான்கள் தங்களுடைய அருளையெல்லாம் திரட்டி, அடக்கி, அடைத்து வாக்காக்கி, ஸ்தோத்திரங்களும் கீர்த்தனங்களும் பாடி வைத்திருக்கிறார்கள். அவை பின்னால் வருகிற எத்தனையோ தலைமுறைகளுக்கும் சாச்வதமாக அநுக்ரஹம் பண்ணிக் கொண்டிருக்கின்றன;அதாதவது ஈச்வரானுக்ரஹத்தை அந்த மஹான்களுடைய அநுக்ரஹத்தின் மூலம் பெற்றுத் தருகின்றன.

ஸௌந்தர்ய லஹரி வழியாக ஆசார்யாளின் அருள் லஹரியைப் பெறுகிறோம். இப்படிச் சொல்லும்போது

இன்னொன்றும் அர்த்தமாகிறது:ஆசார்யாள் அருள் மூர்த்தி. 'கருணாலயம்'என்றபடி அருளே உருவான மூர்த்தி. அதனால் அவருடைய அருளைப் பெறுவது என்பது அவருடைய மூர்த்தியையே தர்சனம் பண்ணுவதுமாகி விடுகிறது!ஆனபடியால் இந்த ஸ்துதிவழியாக அவர் அம்பாளை நமக்கு தர்சனம் பண்ணி வைப்பது மாத்திரமில்லை;தாமும் தர்சனம் தந்துவிடுகிறார் என்றாகிறது!கடைசியில் அவள் யார், அவர் யார்?å¡Áî£¡!Ýè, ð£…ê ªð÷Fèñ£ù êgó^F™ Ýê£˜ò£œ â¡Á Þ¼‰îõK¡ î˜êù‹ «ô£è^¶,° ºŠð^Fó‡´ õ¼û‰î£¡ A¬ì^î^ªî¡ø£½‹, Ü¸óý Ïð^¬î ê£Šî (åL) Ïðñ£,A Üõ˜ â´^¶,ªè£‡´œ÷ ªú÷‰î˜ò ôýK â¡ø êgó^F™ Üõ˜ î˜êù‹ àôè‹ àœ÷÷¾‹ ÜNò£îð®, A¬ìŠðî£è ÝAJ¼,Aø¶!

அருளைத் தருகிற அருட் கவிதை பற்றி இன்னம் கொஞ்சம் சொல்லணும். பக்தியோடுகூட எந்த ஸ்தோத்ரத்தைச் சொன்னாலும், ஏன், உளறிக் கொட்டினாலுங்கூட பகவானுடைய அருள் கிடைத்துவிடும். ஆனால் அப்படிப்பட்ட பக்தி உண்டாவதுதான் கஷ்டமாயிருக்கிறது!இந்த இடத்தில்தான் அநுக்ரஹ சக்தியுள்ள அருட் கவிதைகள் நமக்கு ரொம்பவும் ஸஹாயம் செய்கின்றன. என்னவென்றால், அந்தக் கவிதைகளே அவற்றைப் படிக்கிற பேருக்கு பக்தி பாவத்தையும் ஊட்டிவிடுகின்றன!அப்பர் தேவராமென்றால், அவர் உருகி உருகிச் சொல்லியிருக்கிற வார்த்தைகளை நாம் சொல்கிறபோதே அவை நம்மையும் உருக்கி பக்தி ரஸத்தை ஊட்டிவிடுகின்றன. 'ஸௌந்தர்ய லஹரி'யில் உருக்கம் ஜாஸ்தி என்று சொல்ல முடியாது. அது காவ்ய ரஸங்களாலேயே நம் சித்தத்தை ஆகர்ஷித்து அம்பாளிடம் ஈடுபடுத்தி பக்தி ரஸத்தை ஊட்டிவிடுகிறது.

அருட் கவியில் இன்னொரு தினுசு... இங்கே கவி என்பதைக் கவிதை என்ற அர்த்தத்தில் சொல்கிறேன். ஸம்ஸ்கிருதத்தில் கவி என்றால் கவிதை பண்ணும் ஆஸாமியைத்தான் குறிக்கும்;அவன் பண்ணுவது காவ்யம், அல்லது கவிதை. தமிழில், பண்ணுகிற ஆஸாமி, பண்ணப்படும் செய்யுள் இரண்டையும் கவி என்று சொல்கிறோம் - பண்ணுகிறவனே

இப்படி வாக்ரூபம் எடுத்துக்கொண்டு விட்டான் என்கிற மாதிரி!... அருட் கவியில் ஒரு தினுஸைப் பற்றிச் சொல்ல வந்தேன். அதாவது, நமக்குப் போதிய பக்தி இருக்கிறதா, இல்லையா என்பதைப் பற்றிக் கேள்வியில்லை. அது எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். நம் பக்தியை வைத்து அந்தக் கவிதை நமக்கு அநுக்ரஹ பலன் தருவது, அல்லது நமக்கு பக்தியையும் அதுவே உண்டாக்கி அருள் தருவது என்றெல்லாம் இல்லாமல், தன்னுடைய சப்த விசேஷத்தாலேயே, சொல்கிறவருக்கு அருளைப் பெற்றுத் தந்துவிடுவதாக ஒரு தினுசு உண்டு. நம்முடைய பக்தியைப் பொறுத்ததாக இல்லாமல் அந்தக் கவிதைகளின் சப்தங்களுக்கே திவ்ய சக்தி இருக்கும். நமக்கு விசேஷமாக பக்தி இருக்கவேண்டும் என்றில்லை;அந்தக் கவிதைக்கும் அர்த்த பாவம், உருக்கம் காவ்ய ரஸம் விசேஷமாக இருக்கணுமென்றில்லை. ஆனாலுங்கூட அந்த வார்த்தைகளின் ஒலிக்கே உள்ள சிறப்பால் அருளைக் கட்டிப்பிடித்துக் கொண்டுவந்து கொடுத்துவிடமுடியும். மந்த்ர சக்தி என்பது அதுதான்!மந்த்ரமயமான இப்படிப்பட்ட வாக்குகளை நாம் உணர்ச்சியே இல்லாமல், அர்த்தமே தெரியாமல் சொன்னாலும், திருப்பித் திருப்பிச் சொல்லி 'ஜபம்'என்று பண்ணி விட்டோமானால் அதன் சப்தங்களே அவற்றிலுள்ள திவ்ய சக்தியால் பலவித அநுக்ரஹங்களைப் பண்ணிவிடும். அநேக மஹான்களுடைய அநேக ஸ்துதிகளில் அர்த்த பாவம், காவ்ய ரஸம், மனஸின் உருக்கம் முதலானவற்றோடு கூடவே இப்படிப்பட்ட மந்த்ர சப்த விசேஷமும் சேர்ந்திருக்கிறது. சில ஸமயங்களில் அவர்களுடைய ஸ்துதிகளில் அர்த்த விசேஷத்தால் உத்தமமானது வேறே, சப்த விசேஷத்தால் அருளைத் தந்து மந்த்ர மயமாயிருப்பது வேறே என்று இருப்பதையும் பார்க்கிறோம்.

ஆசார்யாளின் ஸ்துதிகளில் அர்த்த விசேஷத்தில் குறைந்ததாக எதுவுமே கிடையாது. அத்தனையுமே ரத்னச் சுரங்கம்!ஸாதா மணி, இமிடேஷன் கல்லு எதுவுமே கிடையாது!அப்படியிருப்பதோடுகூட, 'பொன் மலர் நாற்றமுடைத்து'என்று, ப்ரதி ச்லோகத்துக்கும் சப்த விசேஷத்தாலேயே மந்த்ர சக்தியும் இருப்பதாக இரண்டு ஸ்தோத்ரங்களைப் பெரியவர்கள் எடுத்திருக்கிறார்கள். முன்னேயே சொன்னேன்:ஒன்று, 'ஸுப்ரஹ்மண்ய

புஜங்கம்';இன்னொன்று 'ஸௌந்தர்ய லஹரி'தான். மந்திர சாஸ்த்ரமாகவே உள்ள முதல் 41 ச்லோகத்துக்கு மாத்திரமில்லாமல் நூறு ச்லோகத்துக்குமே மந்த்ர சக்தி இருக்கிறது! பின் பாதியான அம்பாளுடைய ஸ்வரூப வர்ணனை ச்லோகங்களுங்கூட ஒலிச் சிறப்பாலேயே திவ்ய சக்தியை க்ரஹித்துக் தரக்கூடிய மந்த்ர மஹிமையும் வாய்ந்தவையாக இருக்கின்றன. அந்த ஸ்லோகங்களிலும் ஒவ்வொன்றையும் ஜபம் பண்ணினால் ஒவ்வொரு பலன் கிடைக்கும். அப்படிப் பண்ணி எத்தனையோ பேர் எத்தனையோ பரம்பரையாகப் பலன்பெற்றும் வந்திருக்கிறார்கள். குருமுகமாக, அந்தரங்கமாகத் தெரிந்து கொண்டு அநுஷ்டானம் பண்ண வேண்டிய விஷயம்.

பக்தி ஸ்துதி, கவிதை என்கிற ரீதியில் யாரும் படித்துப் பயன் பெறலாம். ஆனால் அதையே மந்த்ர சாஸ்த்ரம் என்று வைத்துக்கொண்டு பயன் பெறவேண்டும் என்கிறபோது ஆசார்ய முகமாக அதற்கான நியமங்களோடுதான் அநுஷ்டிக்க வேண்டும்.

நாம் அம்பாளிடம் நீங்காத நிஜ பக்தி வேண்டும் என்ற ஒரு பலனை உத்தேசித்துப் பாராயணம் செய்தாலே போதும்!பாக்கி பலனெல்லாம் அதற்குள்ளே வந்துவிடும். அவளே தருவாள். அப்படி வராவிட்டாலும், அவள் தராவிட்டாலும் கவலைப்படத் தோன்றாது. பக்தி நிஜமாக ஏற்பட்டுவிட்டால் வேறெந்தப் பலனையும் எதிர்பார்க்கத் தோன்றாது...

சிவன், விஷ்ணு, அம்பாள் முதலான எல்லா தெய்வங்களையும் பற்றி நம்முடைய ஆசார்யாள் பண்ணியிருக்கும் எல்லா ஸ்துதிகளுமே நான் சொன்ன இரண்டு அர்த்தத்திலும் அருட்கவிகளாகும். அம்பாள் பரமாக 'ஸௌந்தர்ய லஹரி'யின் முதல் பாகமான 'ஆனந்த லஹரி'தவிர, இன்னொரு 'ஆனந்த லஹரி'யும் முழு ஸ்தோத்ரமாகப் பண்ணியிருக்கிறார். இன்னம் 'தேவீ புஜங்கம்', 'த்ரிபுர ஸுந்தரி மானஸ பூஜா ஸ்தோத்ரம்', '(த்ரிபுரஸுந்தரி)சதுஷ்ஷஷ்ட்யுபசார பூஜா ஸ்தோத்ரம்', '(த்ரிபுரஸுந்தரி) வேத பாத ஸ்தவம்'முதலான பெரிய ஸ்தோத்ரங்களும், 'அன்னபூர்ணாஷ்டகம்', 'அம்பாஷ்டகம்', 'பவானி புஜங்கம்'முதலான சின்ன ஸ்தோத்ரங்களும் அம்பாள் மேல் செய்திருக்கிறார். மதுரை மீனாக்ஷி, ச்ருங்கேரி

சாரதாம்பா, ஸ்ரீசைலம் ப்ரமராம்பா முதலான க்ஷேத்ர மூர்த்திகள் மேலும் ஸ்தோத்ரம் பண்ணியிருக்கிறார். ஆசார்யாளுடைய 'சிவாபராத க்ஷமாபன ஸ்தோத்ரம்'மாதிரியே நம்முடைய அபராதங்களை அம்பாளிடம் சொல்லி மன்னிப்புக் கேட்பதாகக் 'காளி ஸ்துதி'என்று ஒன்று - 'காள்யபராத பஞ்ஜன ஸ்தோத்ரம்'என்றும் அதற்குப் பேர் சொல்கிறார்கள்;அப்படியொரு ஸ்தோத்ரம் - சாக்தத்துக்குப் பேர் போன பெங்காலில் ஆசார்யாள் பண்ணியதாக விஷயஜ்ஞர்களும் சொல்லிப் பாராயணம் பண்ணுகிறார்கள்.

பல தேவதைகளின் மேல் நூற்றுக்கணக்கில் ஆசார்யாள் ஸ்தோத்ரங்கள் பண்ணியிருந்தாலும், அதற்கெல்லாம் 'டாப்'பாக ஸௌந்தர்ய லஹரியைத்தான் லோகம் கொண்டாடி வந்திருக்கிறது. ஆசார்யாளின் அஷ்டோத்ரத்திலேயே "ஸௌந்தர்ய லஹரீ முக்ய பஹு ஸ்தோத்ர விதாயகாய நம:" (ஸௌந்தர்ய லஹரியை முக்யமாகக் கொண்ட அநேகத் துதிகளை அளித்தவருக்கு நமஸ்காரம்)என்று இதைத்தான் அவருடைய முக்யமான துதி நூலாகச் சொல்லியிருக்கிறது. மற்ற எந்த ஸ்தோத்ரம் பற்றியும் அதில் ரெஃபரன்ஸ் இல்லை முன்னேயே இருந்த மூல நூல்களுக்கு விளக்கவுரையாக அவர் எழுதிய பாஷ்ய க்ரந்தங்களில் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யமும், வேதாந்தத்தில் அவரே ஒரிஜினலாகச் செய்த 'ப்ரகரண க்ரந்தங்கள்'என்பதில் 'விவேக சூடாமணி'யும் சூடாமணியாக இருக்கிற மாதிரி அவர் செய்த பக்தி ஸ்துதிகளில் மிக உயர்ந்த இடம் 'ஸௌந்தர்ய லஹரி'க்கே இருக்கிறது.

அவரவர் அநுபவம், பக்குவம், படிப்பு, பண்பு, வாழ்க்கை நிலை ஆகியவற்றைப் பொறுத்து 'ஸௌந்தர்ய லஹரி'மாதிரியான உசந்த நூல்களுக்கு ஏராளமான உள்ளர்த்தங்கள் தோன்றும். எத்தனையோ பேருக்கு எத்தனையோ தோன்றியிருக்கிறது;இனிமேலும் தோன்றும். இதோடு முடிந்துவிட்டது என்று சொல்ல முடியாமல் புதுப்புது ஒலீணீபீமீகள் (சாயைகள்)தோன்றிக் கொண்டேயிருக்கும் - தோண்டத் தோண்ட ஊற்று ஜலம் வந்து கொண்டேயிருக்கிற மாதிரி!இப்போது நான் எனக்குத் தோன்றுகிற அர்த்தத்தைச் சொல்வதால் இதோடு முடிந்துவிட்டது என்று சொல்ல முடியாது. இன்னம் ஆழ ஆழத் தோண்டிக் கொண்டே, முழுகிக்கொண்டே போகிறவர்களுக்கு இன்னம் என்னென்ன

ரத்தினங்கள், முத்துக்கள் கிடைக்குமோ?அம்பாள் கிருபையில் உங்களில் யாராவது, ஒருத்தரோ பல பேரோ அப்படிக் கொண்டுவந்து கொடுத்தால் அது எனக்குப் பெரிய ரத்னாபிஷேகம், முக்தாபிஷேகம்.

---



## இத் துதியின் பாஷ்யங்கள் முதலியன

இலக்கிய சுவையோடு கூடிய கவிதைகளை அவரவர்கள் பக்குவப்படி வியாக்யானம் பண்ணிக் கொள்வது ஒன்று. ச்லோகங்களில் மந்த்ர சாஸ்த்ர தத்வங்கள் வரும்போது, ஸம்க்ஷிப்தமாக [சுருக்கமாக]ச் சொல்லியிருப்பதை விவரித்து வியாக்யானம் பண்ணுவது இன்னொன்று, 'ஸௌந்தர்ய லஹரி'யில் கவிதா நயம், மந்த்ர ஸூக்ஷ்மம் இரண்டும் இருப்பதால்தான் அதற்கு ஏகப்பட்ட வியாக்யானங்கள் ஏற்பட்டிருக்கின்றன. முப்பத்தாறு வியாக்யானங்கள் கிடைத்திருக்கின்றன. இவற்றுக்குள் லக்ஷ்மீதரர் பண்ணினது அதிகப் பிரக்யாதி பெற்றிருக்கிறது. இப்போது ஸ்ரீவித்யா தந்த்ரம் என்கிற லலிதோபாஸனையில் தெரிய வந்திருக்கிற அநேக விஷயங்கள் முக்யமாக 'லலிதா ஸஹஸ்ரநாம'த்துக்கு பாஸ்ரராயர் பண்ணின பாஷ்யத்திலிருந்து கிடைத்திருப்பதுதான். ஸஹஸ்ரநாமத்துக்கு பாஸ்கரராயர் போல, ஸௌந்தர்ய ஸஹரிக்கு லக்ஷ்மீதரர். வேறு இரண்டு பெரியவர்கள் செய்த 'ஸௌபாக்ய வர்த்தினி', 'அருணாமோதினி'என்ற பாஷயங்களும் ஓரளவு பிரஸித்தியடைந்திருக்கின்றன. நேபாள ராஜாங்கத்தின் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரியிலிருந்து [கைப்பிரதி நூல் நிலையத்திலிருந்து]ஆனந்தகிரி பாஷ்யம் என்று ஒன்று ஸமீபத்தில் கிடைத்திருக்கிறது. மந்த்ர சாஸ்த்ரத்தில் நல்ல தேர்ச்சி பெற்ற அந்த ஆனந்தகிரி என்பவர் இந்த

பாஷ்யத்தைத் தன்னுடைய நாளிலிருந்த ஒரு சங்கர மடத்தின் ஆசார்ய ஸ்வாமிகளுடைய ஆக்ஞையின்பேரில் எழுதியதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார். ஆசார்யாளின் நேர் சிஷ்யர்களில் ஆனந்தகிரி என்று ஒருத்தர் இருந்திருக்கிறார்;தோடகாசார்யார் என்பது அவர்தான் என்று நம்பிக்கை ஆசார்ய பாஷ்யங்களில் பலவற்றுக்கு 'டீகை'என்ற விளக்கவுரை செய்தவராகவும் ஆனந்தகிரி என்று ஒருவர் இருக்கிறார். 'சங்கர விஜய'ங்கள் என்ற ஆசார்யாள் சரித்ரங்களைச் செய்தவர்களிலும் ஒரு ஆனந்தகிரி இருக்கிறார். 'ஸௌந்தர்ய லஹரி'யின் பழைய பாஷ்யகாரர்களிலும் அந்தப் பெயர் கொண்ட ஒருவர் இருப்பதாக இப்போது தெரியவந்திருக்கிறது.

ஸௌந்தர்ய லஹரிக்கு இருக்கும் பல பாஷ்யங்களில் "கோபாலஸுந்தரீ"என்று ஒன்றுக்குப் பேர். அதில் என்ன வேடிக்கையென்றால், ச்லோகங்களுக்கு தேவீபரமாக பாஷ்யம் பண்ணியிருப்பதோடு அவை விஷ்ணுவையும் ஸ்துதிக்கின்றன என்று காட்டி விஷ்ணுபரமாகவும் அர்த்தம் பண்ணியிருக்கிறது!லலிதாம்பாளையும் கிருஷ்ணரையும் கோபாலஸுந்தரீ என்று இணைத்து விசேஷமாக மந்த்ரமும் இருக்கிறதற்கேற்றாற்போல் இப்படி நம் ஸ்துதிக்கு விஷ்ணு பரமான வ்யாக்யானமும் இருக்கிறது!மதுஸூதன் ஸரஸ்வதி என்று அத்வைத சாஸ்திரத்தில் பெரியவராக இருக்கப்பட்டவர் "சிவ மஹிம்ந ஸ்தோத்ர"திற்கு இதேபோல விஷ்ணு பரமாகவும் பாஷ்யம் பண்ணியிருக்கிறார்.

இங்கே தஞ்சாவூரில் ஸரஸ்வதி மஹால் லைப்ரரி, பூனாவிலுள்ள பண்டர்கார் ஓரியண்டல் இன்ஸ்டிட்யூட் பரோடா லைப்ரரி என்றிப்படி தேசம் பூராவும் ஸௌந்தர்ய லஹரி ஏட்டுச் சுவடிகளும், பாஷ்யங்களும் கிடைப்பதிலிருந்து அதன் பிரக்யாதி தெரிகிறது. காஷ்மீர்க்காரர்கள் தங்கள் ஊரில்தான் அதை ஆசார்யாள் பண்ணினார் என்று பெரிசாகக் கதைசொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள்.

சுவடியில் எழுதி வைப்பதற்கு மேலே இதைக் கல்வெட்டாகவும் பொறித்து வைத்திருக்கிறது!திருச்சி மலைக்கோட்டை மாத்ருபூதேச்வரர் கோவிலில் ஸுகந்த

குந்தளாம்பாள் ஸந்நிதி ரொம்பவும் ஸாந்நித்ய விசேஷத்தோடு இருக்கிறது. 'மட்டுவார் குழலி'என்று அந்த அம்பாளைத் தமிழில் சொல்வார்கள்.

'மாத்ருபூதேச்வரர்'என்பது தாயுமானவர் - 'தாயும் ஆனவர்'- என்று ரொம்ப அருமையாகத் தமிழில் இருக்கிறது. அங்கே தாயாகவே இருப்பது மட்டுவார்குழலி.

இந்த அம்பாள் ஸந்நிதியே ஸ்ரீசக்ராகாரமானது [ஸ்ரீசக்ர வடிவிலானது]. ஆசார்யாள்தான் பக்கத்தில் ஜம்புகேச்வரத்தில் [திருவானைக்காவில்]அகிலாண்டேச்வரிக்கு ஸ்ரீசக்ர தாடங்கம் பிரதிஷ்டை செய்தமாதிரி, இங்கே ஸந்நிதியை இப்படிப் புனர் நிர்மாணம் பண்ணிக கொடுத்தார் என்று சொல்கிறார்கள். இந்த ஸந்நிதியில் 'ஸௌந்தர்ய லஹரி'J¡ 'Ýù‰îôýK'Š ð°Fò£ù ºî™ 41 „«ô£èƒè¬÷»‹ ªõ°è£ôˆ¶‚° º¡«ð è™L™ ªõ†® ¬õˆF¼‚Aø¶. Ýê£˜ò£œ àˆîóM«ô«ò ÜŠð®„ ªêŒîî£è„ ªê£™Aø£˜èœ. 'ªú÷‰î˜ò ôýK'J™ «èê£Fð£î õ˜í¬ùJ™ Ýó‹ðˆF«ô«ò [„«ô£. 43] Ýê£˜ò£œ 'C°ó G°¼‹ð‹…ôýü ª÷úóŠò‹'- 'ÞòŸ¬èò£è«õ ú§è‰î º¬ìò °‰î÷‹'(°‰î÷‹î£¡ °öL™ õ¼‹ °ö™) â¡Á Ü‹ð£O¡ «èêð£óˆ¬î„ CøŠHˆF¼Šðî£™ Þ‰î ú‰GF‚° Ýê£˜ò ú‹ð‰î‹ ªê£™õ¶ ªð£¼ˆîñ£è«õ ªîKAø¶.

கைலாஸத்தில் பார்வதீ பரமேச்வராளுடைய ப்ராஸாதத்தின் (மாளிகையின்)ப்ராகாரத்திலேயே 'ஸௌந்தர்ய லஹரி'யைப் பொறித்திருப்பதாகவும், மஹாபாரதத்தை மேருவில் எழுதின பிள்ளையாரேதான் இதையும் பொறித்து வைத்தார் என்றும் ஒரு நம்பிக்கை இருக்கிறது. 'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்'செய்த கந்தர்வரான புஷ்பதந்தர் கைலாஸச் சுற்றுச்சுவரில் ஸௌந்தர்ய லஹரியைக் கல்வெட்டில் எழுதியதாக இன்னொரு கதை இருக்கிறது.

இப்படிப் பல கதை இருப்பது இந்த ஸ்தோத்திரத்தின் சிறப்பைக் காட்டுகிறது.

இதிலெல்லாம் வெறும் கதையும் இருக்கக்கூடும் என்று நினைக்கிற நவீனர்கள்கூட ஆச்சர்யப்படும்படியாக

இன்னொரு யதார்த்த உண்மையைச் சொல்கிறேன். இந்த ஸமாசாரம் கைலாஸத்துக்கெல்லாம் ரொம்பவும் தாண்டி அமெரிக்கா வரைக்கும் 'ஸௌந்தர்ய லஹரி'யைக் கொண்டு போய்விடுகிறது அமெரிக்காவில் பென்ஸில் வேனியா ஸ்டேட்டில் ஃபிலடெல்ஃபியா ஸிடி என்று இருக்கிறதல்லவா?அங்கேயுள்ள ஃபிலடெல்ஃபியா மியுஸீயம் ஆஃப் ஆர்ட் என்ற கலைக்கூடத்தில் அநேக ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இவற்றில் 'ஸௌந்தர்ய லஹரி'யைப் பற்றிய ஒன்றும் இருக்கிறது! இதிலே விசேஷம் என்னவென்றால் ஒவ்வொரு ச்லோகத்துக்கும் அதனுடைய கருத்துக்கு ஏற்றபடி அம்பாளின் ஒவ்வொரு சித்திரமும் பக்கத்திலேயே எழுதியிருக்கிறதாம். ஒவ்வொரு ஏட்டிலும் மூன்று ச்லோகம், மூன்று சித்திரம் வீதம் மொத்தம் 36 ஏடோ என்னவோ இருக்கிறதாம். (பாரதப் பண்பாடு ஸம்பந்தப்பட்டதான)'இன்டாலஜி'யில் 'இன்ட்ரெஸ்ட்'உள்ளவர்கள் அங்கே இருக்கிறார்கள். கிக்ஷீமீ மீக்ஷீமீணீவஹிக்ஷீமீ (கலைப் பொக்கிஷம்) என்று சொல்லி நிறையப் பணம் கொடுத்து இதுகளை வாங்கி வைத்திருக்கிறார்கள். அதில் மூன்று ச்லோகங்கள் கொண்ட ஒரு ஏட்டை பென்ஸில்வேனியா யூனிவர்ஸிடியின் ஸம்ஸ்க்ருத ப்ரொஃபஸர் இங்கே மெட்ராஸ் யூனிவர்ஸிடியிலிருந்த ராகவனுக்கு அனுப்பி, இந்தச் சித்திரங்களில் ச்லோக தாத்பர்யங்கள் எப்படித் தெரிவிக்கப் பட்டிருக்கின்றன என்று விளக்கம் கேட்டு அனுப்பியிருந்தார். நானே யூனிவர்ஸிடி லைப்ரரிக்குப் போனபோது அந்த மூன்று ச்லோக-சித்திர ஏட்டைப் பார்த்தேன். அதில் ஒவ்வொரு ச்லோகத்துக்கும் பக்கத்தில் ஒவ்வொரு சித்திரமும் இருந்தது. அதிலே ரூபவர்ணனையாக இல்லாமல், 'நீதான் மனஸ்;நீதான் ஆகாசம், வாயு முதலான பூதங்கள் என்றெல்லாம் தத்வமாகச் சொல்லியிருக்கிற "மநஸ்த்வம்"என்ற (35-வது) ச்லோகமும் ஒன்று;இதற்குக்கூட 'ஸிம்பாலிக்'காக (உருவகமாக)சித்திரம் போட்டிருந்தது.

இந்த ஏட்டுச் சுவடியுடைய இன்னொரு பிரதி பரோடா மியுஸீயத்தில் இருக்கிறது. ஒரு காப்பி எப்படியோ அமெரிக்காவுக்குப் போய்ச் சேர்ந்திருக்கிறது!

தமிழ்நாட்டில் ஸௌந்தர்ய லஹரி எப்போதுமே

பிரஸித்தமாயிருந்திருக்கிறது. கவிதா ரூபத்திலேயே அதை ரொம்ப நாள் முந்தி வீரை கவிராஜ பண்டிதர் என்பவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். தற்போது 'ஸௌந்தர்ய லஹரி'க்கு ரொம்ப மவுஸு ஏற்பட்டிருக்கிறது. இதை ஸ்திரீகள் கோஷ்டி சேர்ந்து ராகமாலிகையாகப் பாடுவது ஊருக்கு ஊர் வளர்ந்துவருகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக, நமக்கு விசேஷம்: அம்பாளுக்கு இருக்கப்பட்ட பல ரூபங்களில் 'ஸௌந்தர்ய லஹரி'சொல்கிற ஸுந்தரியான ராஜராஜேச்வரி மூர்த்தமாக அவள் இருப்பது நம் மடத்துக் கோவிலான காஞ்சி காமகோஷ்டத்தில்தான். அங்கே இருக்கப்பட்ட காமாக்ஷிதான் ராஜராஜேச்வரி. அந்த ஆலயத்திற்கு ஆசார்ய ஸம்பந்தம் நிறைய உண்டு. அங்கேதான் நடுவிலே மங்கிப் போயிருந்த காமகோடி பீடத்தை மறுபடி ஜீவசக்தியோடு ஸ்ரீசக்ரத்தில் ஆசார்யாள் ஸ்தாபனம் பண்ணினார். அங்கேயேதான் ஸர்வஜ்ஞ பீடமும் ஸ்தாபித்து ஆரோஹணம் பண்ணினார். விதேஹ மூக்தியும் அங்கே தான் அடைந்தார். வேறெங்கேயுமில்லாதபடி, பெரிய மநுஷ்யாக்ருதியில் அங்கே ஆசார்யாள் பிம்பரூபத்தில் ஸந்நிதி கொண்டிருக்கிறார். காஞ்சி காமாக்ஷிகோவிலில் அவருக்கு முக்யத்வம் அதிகம். அவருடைய ஜயந்தியை ஜனனோத்ஸவமாக வைசாக சுக்ல பஞ்சமியிலிருந்து ஆரம்பித்து பத்து நாட்கள் கொண்டாடுகிறார்கள். அப்போது பிரதி தினமும் ஆசார்யாளின் உத்ஸவ விக்ரஹத்தைப் புறப்பாடு பண்ணி, காயத்ரி மண்டபத்துக்கு வெளியில் அம்பாளுக்கு நேரே பீடம் போட்டு அமர்த்தி, இந்த 'ஸௌந்தர்ய லஹரி'யின் நூறு ச்லோகங்களைத்தான் தினமும் பத்து வீதம் பாராயணம் பண்ணுகிறார்கள். கடைசி பத்து ச்லோகங்களை மட்டும் வெளிப் பிராகாரத்தில் சுக்ரவார மண்டபத்தில் இதே மாதிரி ஆசார்யாளையும் அம்பாளின் உத்ஸவ விக்ரஹத்தையும் எழுந்தருளப் பண்ணி அர்ப்பணம் செய்கிறார்கள். பூர்த்தி பண்ணி ஆசார்யாளுக்குப் பரிவட்டம் சூட்டி மரியாதை செய்வது வழக்கமாயிருக்கிறது. ஆசார்யாளுக்குப் பரிவட்டம் பட்டாபிஷேகம் எல்லாம் முக்யமாக இந்த 'ஸௌந்தர்ய லஹரி'பண்ணினதாலேயே என்று நினைக்கும் படியிருக்கிறது!

இதற்கு இத்தனை சிறப்பு, வசீகரம் இருப்பதற்கு என்ன காரணம் என்று பார்த்தால், முக்யமாக இது மாத்ரு ரூபத்தில் -

அம்மா என்கிற உருவத்தில் - பரமாத்மாவை நம் முன் நிறுத்துவதுதான்.

---



## அன்னை வழிபாடு

ஔவை 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'என்கிறாள். வேதமும் மாதா பிதாக்களை தெய்வமாக நினைக்கச் சொல்கிறது. இரண்டிலும் அப்பாவுக்கு முன்னாடி அம்மாவைத்தான் தெய்வமாகச் சொல்லியிருக்கிறது.

தாயாரைத் தெய்வமாக நினைப்பதையே திருப்பி வைத்து தெய்வத்தையே தாயாராக பாவிக்கும் போதுதான் அம்பாள் அம்பாள் என்று வழிபடுகிறோம். மற்ற எந்த ரூபத்தையும்விடப் பரமாத்மாவை இப்படித் தாயாராக நினைக்கிறபோதே ஜாஸ்தி ஆனந்தம் உண்டாகிறது. ஏன்?அம்மாவைவிட அன்பானவர்கள் இல்லை. அவளிடம் நமக்கு ஸ்வாதீனம் ஜாஸ்தி. கொஞ்சங்கூட பயப்பட வேண்டாம். வெட்கப்பட வேண்டாம். பயத்துக்கும் வெட்கத்துக்கும் காரணமாக இருப்பதெல்லாம் தன்னால் அவள் முன் அடிபட்டுப் போகிறது!எத்தனை பயம் வந்தாலும் குழந்தை "அம்மா" என்று அவளைத்தான் கட்டிக் கொள்கிறது. வயஸு ஏறும்போது ஒருத்தருக்கு ஏற்படும் மனோவிகாரத்துக்கு வெட்கப்பட வேண்டியில்லாமல், அம்மாவின் முன்னால் தானாக அது நசித்துவிடுகிறது.

தாயன்பைப் போலக் கலப்படமில்லாத பூர்ண அன்பை எங்கேயும் காணமுடியாது. பிள்ளை எப்படி இருந்தாலும், தன் அன்பைப் பிரதிபலிக்காவிட்டாலுங்கூட, தாயாராகப்பட்டவள் அதைப் பொருட்படுத்தாமல் பூர்ண அன்பைச் செலுத்திக்

கொண்டேயிருக்கிறாள். 'பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு'என்கிறோம். "துஷ்டப் பிள்ளை இருப்பதுண்டு;ஆனாஸ் துஷ்ட அம்மா என்று ஒருத்தி கிடையவே கிடையாது"என்று 'தேவி அபராத க்ஷமாபன ஸ்தோத்ர'த்தில் சொல்லியிருக்கிறது. பிறக்கிற போதே அம்மாவிடம்தான் ஒட்டிக்கொள்கிறோம். அவள் உயிரில், அவள் உடம்பில் அவள் உணவில் நாம் உண்டாகிறோம். பிறந்த பிறபாடும் ஆஹாரம் தருவதிலிருந்து ஸகலத்துக்கும் அவள்தான் கதியாய் இருக்கிறாள். பால்யத்தில்தான் தாயார்-குழந்தையின் பரஸ்பர அன்பு ரொம்பவும் அதிகமாக இருப்பது. அவளையே முழுக்க நம்பியிருப்பது அப்போதுதான். காமாதி விகாரங்கள் தொடாத போதுதான் அம்மாவே கதியாயிருப்பது. 'எல்லாம் அவள் செய்வாள்'என்று திட உறுதியோடு கவலையில்லாமல் ஒப்புக்கொடுப்பது குழந்தைப் பிராயத்தில்தான்.

பரமாத்மாவை மாதாவாக பாவிப்பது அதனால் தான். நமக்கு எத்தனை வயஸாயிருந்தாலும் அங்கே குழந்தையாகிவிடுகிறோம். பூர்ண நம்பிக்கை, சரணாகதி என்று ஒட்டிக் கொண்டிருப்பது, மனோவிகாரமில்லாமலிருப்பது-இப்படிக் குழந்தைத் தன்மையிலுள்ள தெய்வத்தன்மையெல்லாம் நம்மிடம் வருவதற்காகத்தான் பரமாத்மாவை அம்பாளாக பாவிப்பது. பசியாக இருக்கட்டும், ஒரு வஸ்து வேண்டும் என்றிருக்கட்டும், வெளியே போக ஆசையாயிருக்கட்டும், நோவு நொடி ஏதாகட்டும் - எதுவானாலும் "அம்மா, அம்மா"என்று அந்த ஒருத்தியையே குழந்தை பிடித்துக் கொண்டிருக்கிறது. அதுபோல நாம் பரமாத்மாவை விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்ள அவரை ஜகன்மாதாவாகவும் நம்மைக் குழந்தைகளாகவும் ஆக்கிக்கொள்ள வேண்டும். "குழந்தையாகி விடவேண்டு ம்"என்று உபநிஷத்தும் உபதேசிக்கிறது.

பரமாத்மாவை ஜகஜ்ஜனனியாக பாவிப்பது என்றால், இது இல்லாத ஒன்றை நாமே கல்பித்துக்கொண்டு ஸந்தோஷப்படுவது என்று அர்த்தமில்லை. வாஸ்தவத்திலேயே ஸகல குணங்களுக்கும் ஆச்ரயமாக

இருக்கப்பட்ட பரமாத்மாவிடம் பூர்ணமான மாத்ருத்வமும் இருக்கத்தான் செய்கிறது. இத்தனை அம்மாக்களுக்கும் அந்த அம்மாக்களுடைய வாத்ஸல்யத்துக்கும் தியாகத்துக்கும் அந்தப் பரமாத்மாதானே மூலம்?அதனால் நாம் பாவிக்காவிட்டாலும் யதார்த்தத்திலேயே பரமாத்மா மாத்ரு தத்வம் நிரம்பியவர்தான். 'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!'என்று மாணிக்கவாசகர் சொல்வது இதைத்தான். 'அம்மையே அப்பா, ஒப்பிலா மணியே'என்றும் சொல்கிறார். அப்பர் ஸ்வாமிகளும் 'அப்பன் நீ, அம்மை நீ'என்கிறார். பரமாத்மாவின் மாத்ரு பாவத்தை அநுபவித்துத் தான் இப்படியெல்லாம் சொல்லியிருக்கிறார்கள்.

நம் சரீரத்தின் அம்மா எத்தனை அன்பாயிருந்தாலும், அவளுடையதோ, நம்முடையதோ யாருடைய சரீரம் முதலில் போனாலும் அதோடு அந்த ஸம்பந்தம் போய் விடுகிறது!வெவ்வேறு ஜன்மாவில் வெவ்வேறு அம்மா வருகிறாள். இத்தனை அம்மாக்களுக்கும் உள்ள அன்பின் மூலமான பரமாத்மா மட்டும் எப்போதும் சாச்வதமாகத் தொடர்ந்து வருகிறார். இதனால்தான் "தொடர்ந்து வரும் தாயானை"என்கிறார்கள். அழிந்து போகிற உடம்புக்கு மட்டும் அம்மாவாக இல்லாமல் அழியாத உயிருக்கு அம்மாவாக இருந்து, இஹத்திலும் பரத்திலும் ரக்ஷிக்கிற பரம கருணை கொண்ட தாய் பரமாத்மாவே!ஒரு ஐந்து பேர், பத்துப் பேருக்குக் கொஞ்ச காலம் மட்டும் தாயாராக இல்லாமல், புழு பூச்சியிலிருந்து யானை, சிங்கம் வரை, மநுஷ்யர்களிலிருந்து தேவர்கள் வரை இத்தனை ஜீவராசிகளுக்கும் எத்தனை காலத்துக்கும் அம்மாவாக இருப்பது பரமாத்மாவே. ஒவ்வொன்றுக்கும் வேண்டிய ஆஹாராதிகளை, போக்ய வஸ்துக்களை லோகத்தில் பண்ணி வைப்பது அந்தப் பெரிய அம்மாதான். குழந்தைக்காகத் தாயாரிடம் பால் உண்டாகிறது;வயிற்றிலிருக்கும்போதே தொப்புள் கொடி வழியாக அவளிடமிருந்து அதற்கு ஆஹாரம் போகிறது என்றால், இந்த ஏற்பாட்டை ஒவ்வொரு தாயாரும் தானாகவா செய்து கொண்டாள்? மஹாமாதாவாக ஒரு பராசக்தி இருந்து கொண்டுதான் இப்படியெல்லாம் ஏற்படுத்தி வைத்திருக்கிறது.

பரமாத்மா நம்முடைய உடலை மட்டுமின்றி உயிரையும்

வளர்க்கிற அம்மா. அறிவை வளர்த்து ஆத்மானுபவத்தைத் தருகிற அம்மா. வயிற்றுக்குப் பால் தருகிற மாதிரி ஞானப்பால் கொடுத்து, அம்மா பிள்ளை என்ற பேதமில்லாமல் ஒன்றாகச் செய்துகொள்கிற அம்மா.

ஆனதால் நம் மனஸுக்குப் பிடித்திருக்கிறது என்பதற்காக மட்டுமில்லாமல், இந்த ஜன்மத்துக்கு ஏற்பட்ட தாயையே தெய்வமாக வழிபடவேண்டும் என்கிற நியாயத்தையொட்டி வாஸ்தவமாகவே எந்தெந்த ஜன்மத்துக்கும், ஜன்மாவே நீங்குவதற்கும் துணையாக இருக்கிற பரமாத்மாவையும் தாயாக வணங்கத்தான் வேண்டும்.

எல்லாமாக ஆகியிருக்கிற பரமாத்மா நாம் எப்படி நினைத்தாலும் அப்படி வந்து அருள் செய்கிறது. அப்படி ஸாக்ஷாத் பரப்பிரம்மமே தாயாகி, அம்பிகையாக இருந்து கொண்டு நமக்கு அநுக்ரஹம் செய்யவேண்டும் என்று நாம் பிரார்த்தித்தால் அவ்விதமே வந்து அருள்புரிகிறது.

அரூபத்துக்கு ஏன் ரூபம் வேண்டுமென்றால், ரூபமுள்ள நாம் அனைவரும் அந்த மூலத்திலிருந்தே பிறந்து, அது நமக்குத் தாயாராகவும் நாம் அதற்குக் குழந்தைகளாகவும் இருப்பதால்தான்!நமக்கும் ரூபமில்லை, நாமும் ஆத்மாதான் என்கிறது இருக்கட்டும் - இப்போது நமக்குத் தெரியாத கதை அது!இத்தனை ரூபங்கள் - பசு, பக்ஷி, மிருகம் என்று நானா விதம், ஒவ்வொரு ஜாதியும் ஒரே மாதிரி - இருந்து கொண்டிருப்பதால் இவற்றுக்கெல்லாம் ஒரு மூலம் உண்டு என்று மட்டும் இப்போதும் புத்திக்குத் தெரிகிறது. மூலம் - தாயார்;மூலத்திலிருந்து வந்த எல்லாம் குழந்தைகள்.

குழந்தை என்றால் அதற்கு அம்மாவைப் பார்த்தாக வேண்டும். அவள் பக்ஷணத்தை எடுத்து வைத்துவிட்டு உள்ளேயிருந்தால் போதாது!குழந்தை பக்ஷணத்தைத் தொடாது. அவளே கண்ணுக்கு முன்னால் வந்து ஊட்டினால்தான் தின்னும். பக்ஷணமே வேண்டாம்;Üõœ è‡µ,° º¡ù£™ Þ¼‰¶M†ì£™ «ð£¶‹!àœ«÷J¼‰¶, "è‡«í ó£ü£!"â¡Á Üõœ °ó™ ªè£´ˆî£™ÃìŠ «ð£î£¶. Üõ¬÷Š ð£˜ˆ«îò£è «õ‡´‹!Üõœ É‚A ¬õˆ¶, ªè£œ÷«õ‡´‹!

அவள் முகத்தைப் பார்த்தால்தான் அது 'களுக்''களுக்'என்று

சிரிக்கும். நாமும் குழந்தைகள்தானே, பராசக்திக்கு?அதனால் அரூபமாக, தத்வமாக ஒரு பராசக்திதான் நம்மை ரக்ஷிக்கிறது என்று தெரிந்தால் போதமாட்டேன் என்கிறது;ரூபமாக, பிரேமையாக ரக்ஷிக்கிறாள் என்று பார்க்கும் படியாக அது வந்தால்தான் மனஸ் நிறைகிறது.

பரமாத்மாவைப் பரம கருணாமூர்த்தியாகப் பார்க்க வேண்டுமானால் அதற்கு அம்பாள் ரூபத்தைவிட வேறில்லை. குழந்தைக்குத் தாய், கன்றுக்குப் பசுவைப் போல எந்த ஜன்மத்திலும் எந்தக் காலத்திலும் எல்லாப் பிராணிகளுக்கும் தாயாராக இருக்கும் பரதேவதையின் பாதாரவிந்தத்தில் நிறைந்த அன்பு இருந்துவிட்டால் வாழ்க்கையே நிறைந்து பரிபூர்ண ஆனந்தம் உண்டாகிவிடும். அம்மாவாக உபாஸிக்க ஆரம்பித்தால் இப்படிப்பட்ட நிறைந்த அன்பு வெள்ளம் இயல்பாக நம்மிடமிருந்து பெருக ஆரம்பித்து விடும்.

அம்பாளுடைய தியானம் இடைவிடாத தாரையாக நம்மிடமிருந்து பெருக ஆரம்பித்துவிட்டாலும் அதுவே ஸகல தாப சமனமான, ஸமஸ்த பாப நிவாரகமான புண்ய தீர்த்தமாகும். அன்புக்கெல்லாம் ஊற்றாக இருக்கிறது அதுதான்.

'ஸஹோதர ஸஹோதரிகளே!'என்று இப்போது நாம் வாய் வார்த்தையில் மட்டும் பிரஸிங்கிப்பதும், எழுதுவதும் நிஜ அநுபவமாவது, இத்தனை பேருக்கும் நிஜமாக ஒரே அம்மாவாக - 'நமஸ்தே ஜகத் ஏக மாத:'என்று காளிதாஸன் ('சியாமள தண்டக')த்தில் சொன்னதுபோல ஒரே அம்மாவாகப் - பரமாத்மா இருப்பதை உணரும் போதுதான். எல்லா ஜீவ ஜந்துக்களையும் நம் உடன் பிறப்புக்களாகத் தழுவுகிற அன்பானது இத்தனைக்கும் பொதுவாக இருக்கும் மாதாவை உணரும்போதுதான் ஸித்தியாகும்.

---

## பெயர் வந்த காரணம்:

இரு "லஹரி"களுக்குமே!

"ஸௌந்தர்ய லஹரி"என்று ஏன் பெயர்?

'ஸௌந்தர்யம்'என்றால் அழகு. ஸுந்தரமாக இருப்பது ஸௌந்தர்யம். 'லஹரி'என்றால் பிரவாஹம். 'லஹரி'என்றால் அலை, பெரிய அலை என்றும் சொல்வதுண்டு. அடுக்கடுக்காக அலை வீசிப் பொங்கி வரும் பிரவாஹம் என்பதுதான் இங்கே பொருத்தம். ஸௌந்தர்ய லஹரி என்றால் அழுகுப் பெருக்கு. அழகே ஒரு பிரவாஹமாக வெள்ளமடித்துக் கொண்டு வருகிறது என்று அர்த்தம்.

லோகத்திலிருக்கிற இத்தனை அழகுகளும் எங்கே பிறந்ததோ அந்தப் பரமாத்ம சக்தியை மாதா ரூபத்தில் தலையிலிருந்து கால்வரை அழகு ஸ்வரூபமாக, அங்க அங்கமாக வர்ணிக்கிற ஸ்துதியானதால் 'ஸௌந்தர்ய லஹரி'என்று பெயர்.

ஸாதாரணமாக நூறு செய்யுள் கொண்ட துதியானால் அதற்கு 'சதகம்'என்று பெயர் வைப்பார்கள். 'மயூர சதகம்'என்று ஸூர்யனைப் பற்றி இப்படியொன்று இருக்கிறது. மூக பஞ்சசதியில்கூட நூறு, நூறாக உள்ள ஐந்து பாகங்களுக்கும் சதகம், சதகம் என்றே பெயர் இருப்பதாகச் சொன்னேனல்லவா?'பஞ்ச சதகம்'கொண்ட முழு நூலுக்குப் 'பஞ்ச சதி'என்று பெயர் இருக்கிறது. இப்படியே 'த்வி (இரண்டு) சதம்'ச்லோகமுள்ள துர்வாஸருடைய நூலுக்கு 'த்விசதி' என்று பெயர் சொன்னேன். தமிழிலும் 'தொண்டை மண்டல சதகம்', 'குமரேச சதகம்'என்றெல்லாம் உள்ளன.

ஆனால் ஆசார்யாள் நூறு, நூறு ச்லோகம் கொண்டதாக ஈச்வரனைக் குறித்து ஒன்றும் அம்பாளைக் குறித்து ஒன்றுமாக இரண்டு ஸ்தோத்ரங்கள் செய்துள்ள போதிலும் இதில் ஒன்றுக்கும் 'சதகம்'என்று பேர் வைக்கவில்லை. இரண்டுக்கும் இரண்டு 'லஹரி'ப் பெயர்களையே

வைத்திருக்கிறார். அவர்தான் வைத்தாரோ, மற்றவர்கள் வைத்தார்களோ, தானாக அமைந்ததோ, அவர் பண்ணின இரண்டு சதகங்களும் 'லஹரி', 'லஹரி'என்றே வழங்குகின்றன.

இவற்றில் ஈச்வரனைப் பற்றியது "சிவாநந்த லஹரி";அம்பாளைக் குறித்ததுதான் "ஸௌந்தர்ய லஹரி".

கரை புரண்ட வெள்ளமாக ஆசார்யாளிடமிருந்து இந்த இரண்டும் பக்தியநுபவத்தின் உச்சியிலிருந்து பெருகி வந்திருக்கின்றன. இவற்றை அவர் யோஜித்து யோஜித்துக் கவனம் பண்ணவில்லை. அப்படியே அநுபவ நிலையிலிருந்து, ஒரு ஊற்றிலிருந்து ஜலம் பொங்குகிற மாதிரி அலை அலையாகக் கொட்டியிருக்கிறார். அதனால் 'லஹரி'என்பதுதான் பொருத்தம்.

வெள்ளமான லஹரியாக இருப்பதால் நாமும் அதிலே மிதக்கிறோம். 'சதகம்'என்று பேர் வைத்துவிட்டால் நூறாவது ச்லோகத்தோடு கரை கட்டியாச்சு என்று அர்த்தம். லஹரியிலேயோ நாம் கரையேறாமல் ஜலப் பெருக்கோடேயே இஷ்டப்பட்டவரை மிதந்துகொண்டு, நீந்திக் கொண்டு, படகு விட்டுக்கொண்டு போகலாம். அதாவது, ஆசார்யாள் முடித்திருக்கிற நூறாவது ச்லோகத்தோடு நாம் 'டக்'கென்று நிறுத்திவிடாமல், அதுவரை பாராயணம் பண்ணியதில் நமக்கு உண்டான அநுபவத்தினால் இன்னம் மேலே அம்பாளுடைய அழகு வெள்ளத்தையும் ஈச்வரனுடைய லீலைப் பிரவாஹத்தையும் பாவித்து பாவித்துப் பார்த்துக் கொண்டே போகலாம்.

இப்படி, பக்த மனஸின் பாவனையை நூறு என்று ஒரு கோடு கட்டி நிறுத்தி விடாமல், "இந்த ஸ்தோத்ர அநுபவத்திலே அவாளவாள் மனஸுக்குத் தோணுகிறபடி இன்னம் அந்த தெய்விக அப்பா அம்மாவைச் சுற்றிச் சுற்றி எப்படி நினைப்பை ப்ரவாஹமாக விடலாமோ அப்படிப் பண்ணிக் கொண்டு போங்கோ!" என்று சொல்லாமல் சொல்வதாகவே 'லஹரி'என்ற பெயர் வைக்கப்பட்டிருக்கிறது என்கலாம்.

ஆசார்யாள் எத்தனைக்கெத்தனை பெரியவரோ, மஹா சக்திமானோ அத்தனைக்கத்தனை அடக்கமானவர்;விநய ஸ்வரூபமானவர். அதனால், தனக்குப் பெரிய அநுபூதி நிலை வந்து அது இப்படிக் கவிதைப் பிரவாஹமாக, லஹரியாகப்

பெருகிற்று என்று அவர் சொல்லிக் கொள்ளவில்லை.

ஆனாலும் இந்த இரண்டு ஸ்துதிகளின் தலைப்பான "சிவாநந்த லஹரி", "ஸௌந்தர்ய லஹரி"என்ற பெயர்கள் அந்த ஸ்துதிகளிலேயே அவருடைய ஸாக்ஷாத் வாக்கில் வந்திருக்கிறது. இது ஒரு பெரிய சிறப்பு. வேறெந்த நூல் பெயரும் இப்படி நூலுக்குள்ளேயே வந்திருப்பதாகத் தெரியவில்லை. "பஜகோவிந்த ஸ்தோத்ரத்துக்கும் அதன் ஆரம்ப வார்த்தையை வைத்துத்தானே பெயர் இருக்கிறது?"என்று கேட்டால், வாஸ்தவத்தில் அந்த ஸ்தோத்ரத்திற்கு 'பஜகோவிந்தம்'என்று பெயரில்லை. 'மோஹ முத்கரம்'என்பதே அதன் டைட்டில். முத்கரம் என்றால் சம்மட்டி. மோஹத்தைப் பிளக்கும் சம்மட்டி மோஹ முத்கரம். ஆனால் அந்த ஸ்தோத்ரத்தை ஒரு பல்லவியும் அதற்கு அநேக சரணங்களும் சேர்ந்து அமைந்த ஒரு கீர்த்தனத்தைப் பாடுவது போல, ஒவ்வொரு ச்லோகத்தை முடித்தவுடனும் "பஜகோவிந்தம் பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே!"என்று திருப்புவது வழக்கமாயிருப்பதால் 'பஜ கோவிந்த'சப்தமே அதற்கு அடையாளமாகி அதையே ஸ்தோத்ரத் தலைப்பாக ஜனங்கள் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். இரண்டு லஹரி ஸ்துதிகளில்தான் உள்ளே வரும் வார்த்தையே தலைப்பாயிருப்பது. ஆசார்யாள் வாக்கினால் உள்ள ச்லோகத்தில் வந்த "சிவாநந்த லஹரி", "ஸௌந்தர்ய லஹரி"என்ற வார்த்தைகளேதான் அப்புறம் முழு ஸ்தோத்திரத்துக்கும் டைட்டில் ஆகியிருக்கிறது!

இந்த வார்த்தைகளை அவர் எந்த ஸந்தர்பத்தில் சொல்கிறார் என்று பார்க்கலாம். முதலில் 'சிவாநந்த லஹரி'யைப் பார்க்கலாம். 'ஸௌந்தர்ய லஹரி'நூறு ச்லோகங்களில்கூட முதலாவது "சிவ:சக்தயா யுக்தோ" என்று சிவன் பெயரில்தான் ஆரம்பிக்கிறது. உள்ளுக்குள்ளேயும், சிவ மஹிமைகளை ஸரஸ்வதி பாடிக் கேட்பதிலேயே அம்பாளுக்குப் பரம ஸந்தோஷம் [66-வது ச்லோகத்தில்]வருகிறது. அதனால்"சிவாநந்த லஹரி"யை முதலில் பார்ப்பதுதான் அம்பாளுக்கே ப்ரீதியாயிருக்கும்!

"சிவாநந்த லஹரீ" என்றால் "சிவனை அல்லது சிவத்தை

அநுபவிப்பதன் ஆனந்த வெள்ளம்" என்று அர்த்தம். காம தஹனம், கால ஸம்ஹாரம், திரிபுர ஸம்ஹாரம் தாருகாவனத்தில் பிக்ஷாடனம், பார்வதீ கல்யாணம், கைலாஸ தர்சனம், நடராஜ தாண்டவம், அடி முடி தேட நின்றது, கிராதனாக (வேடனாக) வந்தது முதலான லீலைகளைப் பண்ணின பரமேச்வரனின் அனந்த குணங்களையும், மஹிமைகளையும், அருளையும், சக்தியையும் அநுபவிப்பதே சிவன் என்ற மூர்த்தியை அநுபவிக்கிற ஆனந்த வெள்ளத்தைத் தருகிறது.

அதே சிவனை அமூர்த்தமாக உள்ளுக்குள்ளே அநுபவித்துக் கொள்ளும்போது அவனுக்கு 'சிவம்'என்று பெயர். [மாண்டூக்ய]உபநிஷத்தில் சொல்லியிருக்கிறபடி விழிப்பு, கனா, தூக்கம் இவற்றைத் தாண்டி, ஆத்மா ஏகமானதே என்கிற அறிவால் அறியத்தக்கவனாக, பிரபஞ்சங்கள் லயிக்கிற துரீய சாந்த நிலையில் அத்வைதமாக சிவனை அநுபவிக்கிறபோது அவனே 'சிவம்'ஆகிறான். இப்படி இருவகைப்பட்ட, சிவனைக் குறித்த லீலானந்தம், சிவத்தைக் குறித்த ஆத்மானந்தம் இரண்டையும் வெள்ளமாகப் பெருக்குவதால் "சிவாநந்த லஹரி"க்கு அந்தப் பெயர் ரொம்பப் பொருந்துகிறது.

ஆசார்யாள் எந்த ஸந்தர்ப்பத்தில் [சிவாநந்தலஹரி என்னும்]இந்த சொற்றொடரைப் பிரயோகிக்கிறார் என்றால்:ஆரம்ப ச்லோகமாக, முதல் முதலில், பார்வதீ-பரமேச்வராள் சேர்ந்திருக்கிற திருக்கோலத்தைச் சொல்லி நமஸ்காரம் பண்ணுகிறார். அதுதான் ஸம்பிரதாயம். ஸாம்பமூர்த்தி, ஸாம்ப சிவன் என்பதாக அம்பாளோடு கூடினவனாகவே (ஸ+அம்ப=ஸாம்ப. 'அம்பாளோடு சேர்ந்த'என்று அர்த்தம். அப்படித்தான்) ஈச்வரனை எப்போதும் சொல்லியிருக்கிறது. அதனால் முதலில் சிவ-சக்தி ஜோடியாகச் சொன்னார். அடுத்த ச்லோகத்திலேயே 'சிவாநந்த லஹரீ'என்ற பதத்தை ப்ரயோகித்திருக்கிறார். "வஸந்தீமச்-சேதோ ஹ்ரத புவி சிவாநந்தலஹரீ" என்ற இந்த இரண்டாம் ச்லோகம் முடிகிறது. இதில் என்ன சொல்கிறார்? பரமேச்வர ஸம்பந்தமான பக்தியால் ஏற்படுகிற ஆனந்தப் பிரவாஹம் எந்த உற்பத்தி ஸ்தானத்திலிருந்து பொங்கி வந்து,

தான் ஓடும் வழியிலே என்னென்ன செய்து, எந்த ஸங்கம ஸ்தானத்தில் முடிகிறது என்பதைச் சொல்கிறார். பரமேச்வரனுடைய லீலா சரித்ங்களிலிருந்து இந்த ஆனந்தம் ஸரித்தாக - நதியாக - உற்பத்தியாகிறதாம். ஒரு ஆறு வருகிற வழியில் தூசி, கீசிகளை அடக்கிக்கொண்டு வருவதுபோல் இந்த சிவானந்த ஆறு பாபம் என்கிற தூசியை அடக்கிக் கொண்டு ஓடுகிறதாம். தூசியை அடக்குகிறதோடு, ஜனங்களுக்கெல்லாம் தாப நிவிருத்தியாக, ஜில்லென்று குடிக்கவும், குளிக்கவும், பயிர் பச்சைகளை வளர்க்கவும் ஆறுதானே உதவுகிறது?அதுமாதிரி இந்த [சிவானந்த]நதியும் பாவத்தைப் போக்குவதோடு தாபத்தை - தொண்டை, வயிறுடைய தாபத்தை அல்ல;ஸம்ஸார தாபத்தையே - போக்கிக்கொண்டு ஓடி வருகிறது. அப்புறம் கவடு கவடாக விட்டுக்கொண்டு வெளி விஷயங்களை அறிகிற புத்தியின் அத்தனை வழிகளையும் 'டெல்டா'வாகப் பண்ணிக்கொண்டு உள்ளே பிரவேசித்து, "அப்படியே என் சித்தம் என்கிற மடுவில் வந்து ஸங்கமித்து விடுகிறது"என்கிறார்.

ஆறு என்றால் ஒரு இடத்தில் ஸங்கமிக்கத்தானே வேண்டும்?அநேகமாக நதிகள் ஸமுத்ரத்தில்தானே கலக்கும் என்றாலும், சிலது [சில ஆறுகள்]ஏதாவது ஒரு ஏரியில் போய்ச் சேர்ந்து விடுவதும் உண்டு உண்டு. புழலேரியில் கூட இப்படிச் சிற்றாறுகளும் கால்வாய்களும் விழுந்து முடிகின்றன. ஒரு நதி ஸமுத்ரத்திலே விழுந்துவிட்ட பின் அது பாசனத்துக்கோ, குடிப்பதற்கோ பிரயோஜனமில்லை. ஆனால் ஏரியில் முடிந்தாலோ எப்போதும் லோகத்துக்குப் பயனாகிறது. ஆசார்யாளுக்குக் கிடைத்த சிவானந்த வெள்ளம் ச்லோக ரூபமாக என்றென்றும் லோகத்துக்குப் பிரயோஜனமாகிறதோ, இல்லையோ?இதை இப்படி அப்பட்டமாகச் சொன்னால் அஹம்பாவமாயிருக்கும் என்பதால் வியங்கியமாகச் சொல்கிற மாதிரி, "என் சித்தமென்ற ஏரியில் வந்து சிவானந்த லஹரி தேங்கிவிட்டது"என்கிறார். "மத்-சேதோ-ஹ்ரத" என்றால் "என் சித்தமென்ற ஏரி"என்று அர்த்தம். சிவ சரித்திரத்தால் உண்டான நதியான லீலானந்தம் பக்தரின் சித்தத்தில் ஸங்கமித்துக் தேங்கி சாந்தமான ஆத்மானந்தமாகிறது.

"ஸௌந்தர்ய லஹரீ" என்ற phrase-ஐ [சொற்றொடரை]அம்பாளுடைய கேசாதி பாத வர்ணனையில் மூன்றாவது ச்லோகத்தில், அதாவது முதலிலிருந்து நாற்பத்து நாலாவது ச்லோகத்தில் ப்ரயோகித்திருக்கிறார். நாற்பத்து மூன்று முக்கோணம் கொண்டது ஸ்ரீசக்ரம் என்று பொதுவாகச் சொன்னாலும், அதன் நடுப்புள்ளியான பிந்துவும் கோணம் என்ற அபிப்ராயத்தில் மொத்தம் நாற்பத்துநாலு கோணம் என்று குறிப்பிடுவதும் உண்டு. "ஸௌந்தர்ய லஹரி"யிலேயே "சதுச்-சத்வாரிம்சத் வஸுதள கலாச்ர"என்பதாக 44 கோணமாகத்தான் [பதினோராவது ச்லோகத்தில்]சொல்லியிருக்கிறது. ஸ்ரீசக்ரம் என்பது அம்பாளின் வாஸ ஸ்தானம் மட்டுமில்லை;அவளுடைய ஸ்வரூபமே யந்திர ஸ்வரூபம்.

இந்த யந்த்ர-மந்த்ர-தந்த்ர ஸமாசாரங்களை 41-ம் ச்லோகத்தோடு முடித்துவிட்டு, எல்லாரும் கஷ்டமில்லாமல் ரஸித்து அநுபவிப்பதற்காக ஆசார்யாள் தேவியின் ரூப வர்ணனத்தைப் பண்ணினாலும், சாஸ்திரத்தில் தமக்குள்ள பற்றுதலையும் பக்தியையும் சொல்லாமல் சொல்கிறமாதிரி அவளுடைய யந்திர ரூபத்தைக் குறிக்கிற 44 என்ற எண்ணுடைய ச்லோகத்திலேயே அவயவ ரூப ஸௌந்தர்ய வெள்ளத்தைக் குறிப்பிட்டு "ஸௌந்தர்ய லஹரீ"என்கிறார் போலத் தோன்றுகிறது.

"சிவ ஸம்பந்தமான இன்பப் பிரவாஹம்"என்ற அர்த்தத்தைக் கொடுக்கிற"சிவாநந்த லஹரீ"என்ற பெயரைத் தாம் எழுதிய ஒரு சதகத்தில் சொன்னார். 'சிவ'என்ற பேரை அங்கே வெளிப்படச் சொல்லியிருக்கிறது. ஆனால் இந்த சதகத்திலோ 'அம்பாள் ஸம்பந்தமான', 'அம்பாளுடைய'என்றெல்லாம் அடைமொழி போடாமல், வெறுமே 'அழகுப் பிரவாஹம்'என்ற அர்த்தத்தைத் தருவதான 'ஸௌந்தர்ய லஹரீ'என்ற பெயரைக் கொடுத்திருக்கிறார். 'அம்பாஷ்டகம்', 'அம்பா பஞ்சரத்னம்', தேவீ புஜங்கம், தேவீ சதுஷ்ஷஷ்டி உபசார பூஜா ஸ்தோத்ரம்'என்று தம்முடைய மற்ற ஸ்தோத்ரங்களுக்கு டைட்டில் கொடுத்தது போல இங்கே

'அம்பா ஸௌந்தர்ய லஹரீ'என்றோ 'தேவீ ஸௌந்தர்ய லஹரீ'என்றோ கொடுக்கவில்லை.

ஏன் என்றால் 'ஸௌந்தர்யம்'என்றாலே அம்பாள் தானே?பானகம் என்று சொன்னால் போதாதா?வெல்லப் பானகம் என்று சொல்ல வேண்டுமா?இத்தனை தித்திக்கிற பானகம் வெல்லம் போட்டதுதான் என்று தானே தெரிந்து கொள்கிறார்கள்!

எலுமிச்சம்பழம், ஆரஞ்ஜு, ஆப்பிள் என்று எதையாவது பிழிந்தால் மைலம் ஜூஸ், ஆரஞ்ஜ் ஜூஸ், ஆப்பிள் ஜூஸ் என்று அடைமொழி கொடுத்துச் சொல்லணும். அதற்கெல்லாமும் வெல்லம், அல்லது அதன் இன்னொரு ரூபமான சர்க்கரை சேர்த்துத்தானாகணும். இப்படி மற்ற தேவதைகளின் ஸௌந்தர்யத்தைச் சொல்ல வேண்டுமானால் அவர்களைப் பெயர் குறிப்பிடவேண்டியிருக்கும். அப்போதுங்கூட அந்த ஸௌந்தர்யத்துக்கு மூலச் சரக்காயிருப்பது அழகு மூலமான அம்பாள்தான்.

சாதம் என்று சொன்னால் போதாதா?அரிசி சாதம் என்று சொல்ல வேண்டுமா என்ன?கோதுமை சாதம், எள்ளு சாதம், தேங்காய் சாதம் என்றால்தான் அடைமொழி போட்டுச் சொல்லவேண்டும். லோகத்திலிருக்கிற அழகுகளையெல்லாம் எது அழகாகப் பண்ணுகிறதோ, இத்தனை அழகுகளுக்கும் மூலமும் முடிவும் எதுவோ அதுவேயான அம்பாளுடைய ஸௌந்தர்யந்தான் அஸல் ஸௌந்தர்யம். அதனால் 'அம்பாளுடைய'ஸௌந்தர்யமென்று அடைமொழி சேர்த்துச் சொல்ல வேண்டியதில்லை.

---

இன்னொன்றும் தோன்றுகிறது. அம்பாளைச் சொன்னால் நம்முடைய மதஸ்தர்களுக்கு, அதிலும் அம்பாள் பக்தர்களுக்கு மட்டுந்தான் 'நம்முடைய மதப் புஸ்தகம் என்று அதில் ஒரு இன்டரெஸ்ட் உண்டாகும். பிற தெய்வ பக்தர்களுக்கும் பிற மதஸ்தர்களுக்கும் நாஸ்திகர்களுக்கும் அதில் ஈடுபாடு உண்டாகாது. ஆனால் வெறுமே அழகு என்றால் - அழகு வெள்ளம், ஸௌந்தர்ய லஹரி என்று டைட்டில் போட்டால் - அதிலே தேவாந்தர [பிற தெய்வ]பக்தர்கள், மதாந்தரஸ்தர்கள், நாஸ்திகர்கள் உள்பட ஸமஸ்த ஜனங்களுக்கும் ஒரு கவர்ச்சி ஏற்படும். அழகு என்பது லோக ஜனங்கள் அத்தனை பேரையும் கவர்வது. காஷ்மீரில் இயற்கைக் காட்சி அழகாயிருக்கிறதென்று அமெரிக்காக்காரர்களும் இங்கிலீஷ்காரர்களும் வருகிறார்கள். ஸ்விட்ஜர்லான்டின் அழகைப் பார்ப்பதற்கு நம் தேசத்து ப்ரபுக்கள் போகிறார்கள். இயற்கைதானென்று இல்லை. மநுஷ்யன் பண்ணின அழகான சிலை, சிற்பங்களைப் பார்க்க லோகத்து ஜனங்களெல்லாம் வித்தியாஸமில்லாமல் சேருகிறார்கள். ஆக அன்பு, த்யாகம் முதலான உசந்த உள் பண்புகளைவிடக்கூட வெளியிலே தெரிவதான அழகுதான் ஸர்வ ஜன வசீகரணமுள்ளதாக இருக்கிறது!எதிரெதிராகச் சண்டை போட்டுக் கொண்டிருப்பவர்களும் அழகினால் ஒரே மாதிரி கவரப்பட்டுவிடுகிறார்கள்.

'மதம், மதப்பிரிவு, ஆஸ்திகம், நாஸ்திகம் என்ற பேதம் எதுவும் பாதிக்காமல் எல்லோருக்கும் ஆகர்ஷணமுள்ளதாகவுள்ள அழகின் பேரில் புஸ்தகத்துக்கு டைட்டில் போடுவோம். அப்போது எல்லாரும் அதைப் படிக்க ஆரம்பிப்பார்கள். ஆரம்பித்த அப்புறம், பரம ஸௌந்தர்யமான ஒரு ஸ்த்ரீ ரூபத்தை நல்ல கவிதா த்ருஷ்டியோடு புஸ்தகத்தில் வர்ணிதிருப்பதால் அதில் யாரானாலும் ஈடுபட்டுவிடுவார்கள். சர்க்கரை பூசிய மாத்திரை மாதிரி உள்ளே ஆத்மாபிவிருத்திக்கான மருந்தை வைத்து வெளியில் ஸௌந்தர்ய வர்ணனையாகப் புஸ்தகத்தைப் பண்ணினால் அழகுக்காகவே படிக்க வந்தவர்களும் தங்களையறியாமல் அம்பாள் பக்தியில் ஈடுபட்டுவிடுவார்கள். அம்பாள் பெயரைச் சொன்னால் வராதவர்களுங்கூட அழகு என்பதற்காக வந்து தத்-த்வாராகவே [அதன்

வழியாகவே]அந்த அம்பாளிடம் ஈடுபட்டுவிடுவாகள்!'கவிதை'என்று ரஸித்துப் படிக்க வந்தவர்களும் 'ஸ்தோத்ரம்'என்று பக்தியுடன் பாராயணம் பண்ண ஆரம்பித்து விடுவார்கள்!அம்பாள் பக்தர்கள் என்றே உள்ள சின்ன ஸர்க்கிளுக்காக மட்டுமில்லாமல் ஸகல ஜனங்களையும் அவளிடம் இழுக்க வேண்டுமானால் அதற்கு முதலில் அவள் பெயரை ஒளித்து அழகுப் பெயரை மட்டும் காட்டுவதே நல்ல வழி'என்றே ஆசார்யாள் இப்படித் தலைப்புப் போட்டாரோ என்னவோ?.....

ஸௌந்தர்யம் என்றாலே அம்பாள் ஸம்பந்தமானது தான். எப்படியென்றால், ஸுந்தரி என்றால் அது அவள்தான். த்ரிபுரஸுந்தரி - இன்னமும் நீட்டி மஹாத்ரிபுரஸுந்தரி - என்றெல்லாம் அவளுக்கு மஹிமை பரிமளிக்கத் தெரியணுமென்று பேர் சொன்னாலும் மூலமாக நிற்கிற பேர் வெறும் ஸுந்தரிதான். பரமசிவன், ஸதாசிவன், ஸாம்பசிவன் என்றெல்லாம் சொன்னாலும் மூலப் பேர் வெறும் சிவன்தான் என்கிற மாதிரி! 'ஸுந்தரி'யைக் குறித்தது 'ஸௌந்தர்யம்'. அம்பாளின் அநேக ரூப பேதங்களில் இந்த ஸுந்தரியாகிய மஹாத்ரிபுரஸுந்தரியைக் குறித்ததுதான் 'ஸௌந்தர்ய லஹரி'- ஸ்ரீ வித்யா மந்த்ர-தந்த்ரம், ஸ்ரீயந்த்ரம் [ஸ்ரீசக்ரம்]ஆகியவற்றின் அதிதேவதை அந்த ஸுந்தரியாகிய த்ரிபுரஸுந்தரி தான்.

பார்வதி, துர்க்கை, காளி, பாலை புவநேச்வரி என்று அம்பாளுக்குப் பல ரூப பேதங்கள் உள்ளன அல்லவா?சிலது ஸௌம்யாக, சிலது உக்ரமாக, சிலது இரண்டுங் கலந்து?இப்படி 'தச மஹா வித்யா'என்று பத்து பேரைச் சொல்கிறது. அதில் ராஜராஜேச்வரியான மஹா த்ரிபுர ஸுந்தரிக்கு உரிய ஸ்ரீவித்யா சாஸ்திரத்தை 'ஸுந்தரீ வித்யா'என்றே சொல்லியிருக்கிறது. அம்பாளுடைய அத்தனை மூர்த்திகளிலும் பரம ஸௌம்ய மூர்த்தியாக, உச்சியான அழகு படைத்தவள் அவள்தான். அதனால்தான் ஸுந்தரி என்று பேர்.

பரமஹம்ஸா [ஸ்ரீ ராமகிருஷ்ணர்]கூட, 'நான் எத்தனையோ தேவதா ரூபங்களை தர்சித்திருக்கிறேன். ஆனாலும்

த்ரிபுரஸுந்தரி மாதிரி ஒரு அழகு ரூபம் எங்கேயும் பார்த்ததில்லை'என்று சொன்னதாக அவரைப் பற்றிய புஸ்தகங்களில் இருக்கிறது.

---



## தேவிபரமான புண்ணி இலக்கியம்

இதனாலெல்லாம்தான் வேதகாலத்திலிருந்து ஸ்திரீ ரூபத்தில் மாதாவாகப் பரமாத்மாவை உபாஸித்து வந்திருக்கிறார்கள். ஸ்ரீஸூக்தம், துர்கா ஸூக்தம், உஷஸைப் பற்றினது, அதிதியைப் பற்றினது, ராத்ரி ஸூக்தம், தேவி ஸூக்தம் முதலான வேத மந்திரங்கள் இப்படிப்பட்டவை தான். 108 உபநிஷத்துக்களில் அம்பாள் பரமாகவே மூன்று இருக்கின்றன. மஹாபாரதத்தில் அர்ஜுனன் துர்கா தேவியை ஸ்தோத்திரித்திருக்கிறான். பாகவதத்தில் கோப ஸ்திரீகளும் பிற்பாடு ருக்மிணியும் நல்ல பதி கிடைக்க வேண்டுமென்று அம்பாளைத்தான் பூஜிக்கிறார்கள். ஹயக்ரீவர், அகஸ்த்யர், துர்வாஸர் முதலான மஹா பெரிய ரிஷிகள் அவளை ஸ்தோத்திரித்திருக்கிறார்கள். காளிதாஸாதி கவிகளும் தேவிபரமாக நிறைய ஸ்துதிகளைச் செய்திருக்கிறார்கள்.

தேவார திருவாசகத் திருமுறைகளிலும், திவ்யப் பிரபந்தங்களிலும் சிவனையும் விஷ்ணுவையும் போற்றுகிற போதெல்லாம் அம்பாளையும் லக்ஷ்மியையும் சேர்த்துச் சேர்த்தேதான் சொல்லியிருக்கிறது. அருணகிரிநாதரும் 'திருப்புகழ்', 'திருவகுப்பு'களில் பல இடங்களில் அம்பாள் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறார். ஐந்திணைகள் என்கிற பாகுபாட்டில் தொன்றுதொட்டுத் தமிழகத்தில் பாலைக்குக் 'கொற்றவை'என்ற அம்பாளையே அதிதேவதையாக வழிபட்டு வந்திருக்கிறார்கள். சமண காவியமான சிலப்பதிகாரத்தில்கூடக் கொற்றவை என்ற துர்கையின்

ஸ்துதியாக ஒன்று நீள நெடுக, அழகாக, மனஸை அப்படியே கவ்வுகிற மாதிரி வருகிறது. தமிழ்நாட்டுக் கோவில்களில் அம்மன் சந்நிதி, சுக்ரவார ஸேவை என்பவை தனி விசேஷம் பெற்றிருக்கின்றன. திருமூலரின் திருமந்திரத்தில் சக்தி மஹிமைகள் நிறையச் சொல்லப்பட்டிருக்கின்றன. தாயுமானவர் பர்வதவர்த்தினி மீதும் அகிலாண்டேச்வரி, பிருஹந்நாயகி மீதும் பாடியிருக்கிறார். ராமலிங்க ஸ்வாமிகள் திருவொற்றியூர் த்ரிபுரஸுந்தரி மீது பாடியிருக்கிறார். குமரகுருபரர் மீனாக்ஷியை ஸ்துதித்திருக்கிறார். இப்போது 'அபிராமி அந்தாதி'பிரஸித்திமடைந்திருக்கிறது. பாரதியும் 'சக்தி சக்தி'என்றே நிறையப் பாடியிருக்கிறார். பிற்காலத்தில் அதிகம் வழிபாட்டிலில்லாத வாராஹி மேல்கூட பிராசீனமாகத் தமிழில் ஒரு துதியிருப்பதாகத் கேள்விப்பட்டிருக்கிறேன்.

இப்படி நம் மனஸுக்கு ரொம்பவும் பிரியமாக ஒட்டிப் போன தாயைப் பற்றி, அவள் அநுக்ரஹத்தாலேயே, அவளுடைய அம்சமேயான ஆசார்யாள் பண்ணினது என்பதுதான் 'ஸௌந்தர்ய லஹரி'யின் ஏற்றத்துக்கு முக்யமான காரணம். நாமரூபமற்ற தத்வத்தைச் சொல்லும் அத்வைதத்தின் மஹா ஆசார்யரான அவர் இப்படி அம்பாளைப் பாடினதே அதற்குப் பெரிய பெருமையைத் தந்திருக்கிறது.

---



## நாமங்கள் குறைவாக வரும் நூல்

வேடிக்கையாக, ஆச்சர்யமாக ஒன்று:டைட்டிலில் த்ரிபுரஸுந்தரியின் பேரை நேராகச் சொல்லாத இந்தப் புதுமை ஸ்தோத்ரத்தின் முழு டெக்ஸ்டிலும் தொடர்ந்து வந்திருக்கிறது!நூறு ச்லோகத்திலும் ஒரு இடத்தில்கூட த்ரிபுரஸுந்தரி என்றோ வெறும் ஸுந்தரி என்றோகூட

வரவேயில்லை!இந்த ரூபபேதத்துக்கே இன்னம் சில பேர்களும் உண்டு. சிவனுடைய அநேக ரூப பேதங்களில் ஒன்றான நடராஜாவுக்கே ஸபாபதி, சிதம்பரநாதன், சித்ஸபேசன், தாண்டவராயன் என்றெல்லாம் பேர்கள் இருக்கிற மாதிரி த்ரிபுரஸுந்தரிக்கு லலிதாம்பா, ராஜராஜேச்வரி, காமாக்ஷி, காமேச்வரி என்றெல்லாம் பேர்கள் உண்டு. அந்தப் பேர்களிலேயும் எதுவுமே 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஒரு இடத்திலுகூட வரவில்லை!

அடுத்தாற்போல் 'சிவாநந்த லஹரி'யை எடுத்துக் கொண்டால் ஈச்வரனுக்கே என்று இருக்கப்பட்ட சிவ, பரமசிவ, ஸதாசிவ, சம்பு, சங்கர, பசுபதி, மஹாதேவ, கிரிச, ஸாம்ப முதலான நாமாக்களில் எதுவாவது ஒன்று ஒவ்வொரு ச்லோகத்திலும் வந்திருக்கும். அப்படி ஒன்றில் இல்லாவிட்டால்கூட ஈடுகட்டுகிற மாதிரி இன்னொன்றில் இரண்டு மூன்று நாமாக்கள் வந்துவிடும். ரொம்ப ஜாஸ்தி வருவது சம்பு. 'சம்போ', 'சம்போ'என்று கூப்பிட்டு அநேக ச்லோகங்கள் பண்ணியிருக்கிறார். அடுத்தபடி ஜாஸ்தி வருவது பசுபதி, சிவ முதலிய நாமாக்கள். சிவனக்கென்று ப்ரத்யேகமாக இல்லாமல் எந்த தெய்வத்துக்கும் பெயர் மாதிரிச் சொல்லும் ஸ்வாமி, விபு முதலான பதங்களும் கொஞ்சங் கொஞ்சம் வருகின்றன.

ஆனால் வித்யாஸமாக 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஸுந்தரி வித்யைக்கு அதி தேவதையாக இருக்கப்பட்டவளின் ப்ரத்யேக நாமாக்கள் எதுவும் வரவில்லை!அம்பாளின் மற்ற ரூபபேதங்களுக்கு இருக்கப்பட்ட நாமாக்களும் ரொம்பவும் கொஞ்சமாகவே வருகின்றன. இருப்பதற்குள் ஜாஸ்தி வருவது கிரிஸுதா, ஹிமகிரிஸுதா என்ற பேர்கள். சிவா, பவானி, உமா, ஸதி, பார்வதி, சண்டி முதலான பேர்கள் ஒன்று இரண்டு இடங்களில் வருகிறது. அம்பாளுடைய அதாவது பரமேச்வரனுடன் அபின்னமாக இருக்கப்பட்ட பராசக்தியுடைய பிரத்யேகப் பெயர் என்று சொல்ல முடியாமல் எந்த ஸ்த்ரீ தெய்வத்திற்கும் சொல்கிற ஜனனி, மாதா, அம்பா, தேவி என்ற பேர்கள் ஓரளவுக்கு வருகின்றனவென்றாலும் அதெல்லாம் கொஞ்சம்தான். ப்ரத்யேகப் பெயர், பொதுப்பெயர் எதுவுமே இல்லாமல் தான் ரொம்ப ச்லோகங்கள் இருக்கின்றன.

நாம ரஸம் அதிகம் வந்துவிட்டால் கவிதா ரஸத்தை அடித்துக்கொண்டு போய்விடுமென்றே, இந்த ஸ்தோத்ரம் கவிதா ரஸ ப்ரதானமாகவே இருக்கணுமென்று அம்பாள் ஸங்கல்பமாயிருந்து, நாமாக்களுக்கு ரொம்ப இடம் கொடுக்காமல் ஆசார்யாளை பாடப் பண்ணினாளோ என்னவோ?

'சிவ சக்தயா'என்று [நூறு ச்லோகங்களில் முதலாவது]ஆர ம்பிக்கிறபோது அம்பாளின் பரம தாத்பர்ய நாமாவான 'சக்தி'என்பது வந்துவிடுகிறது. சைவம், வைஷ்ணவம் மாதிரி அம்பாள் மதத்துக்கு 'சாக்தம்'என்றே பேர். 'சக்தியினுடையது'என்றே அதற்கு அர்த்தம். ப்ரஹ்மத்தின் சக்திக்குத்தான், அதாவது 'பவ'ருக்கு, 'எனர்ஜி'க்குத்தான் அம்பாள், அம்பாள் என்று பேர் சொல்கிறோமாதலால் சக்தி என்பதுதான் அவளுடைய ஸாரபூதமான நாமா. அந்தப் பேர் ஆரம்ப ச்லோகத்திலேயே வந்துவிடுகிறது. அப்புறம் வரவில்லை.

ஒரு ஸ்த்ரீக்கு மூன்று பருவங்களில் மூன்று விதமான உறவுகள் முக்கியமாயிருக்கின்றன. முதலில் ஒரு தாயார் - தகப்பனாருக்குப் பெண்ணாக இருக்கிறாள். அப்புறம் பதிக்குப் பத்னி. அதற்கும் அப்புறம் குழந்தைகளுக்குத் தாயார். நம் ஸ்தோத்ரத்தில் ரொம்பவும் கொஞ்சமாகவே நாமாக்கள் வந்தாலும் இந்த மூன்றையும் விட்டுவிடவில்லை. அம்பாளை ஸாக்ஷாத் பரமேச்வர பத்னியாகவும், நம் அத்தனை பேருக்கும் தாயாராகவும் அதில் சொல்லியிருப்பது அவ்வளவு விசேஷமில்லை. தேவிபரமான எந்த ஸ்துதியிலும், எந்த பாஷையிலுள்ளதானாலும், இந்த இரண்டை நிறையச் சொல்லியிருக்கும். ஆனால் ஸௌந்தர்ய லஹரியில்தான், அதன் அநேகப் புதுமைகளில் ஒன்றாக இந்த இரண்டைவிட அவளைப் புத்ரியாகச் சொல்லும் நாமாக்களே அதிகம் வருகிறது!

பர்வதராஜன் புத்ரி என்பதால் கிரிஸுதா, ஹிமகிரிஸுதா, சைலதனயா, தரணிதரகன்யா, பார்வதி என்றெல்லாம் பேர்கள் வருகின்றன. தான் பிறந்த மலை வம்சத்துக்கே அவள் வெற்றிக்கொடி என்ற அர்த்தத்தில் 'நகபதி பதாகா', 'துஹிநகிரி

வம்ச த்வஜபடி'என்றெல்லாங் கூடப் பேர்கள் வருகின்றன. ஸர்வலோக ஜனனி, வாஸ்தவத்தில் அந்த ஹிமவானுக்கும் தாயாரானவள், தானும் குழந்தையாக வந்த அதிசயத்தை நினைத்து, அம்மாவைக் குழந்தையாக்கி அநுபவிக்கிற பாவத்தில் [ஆசார்யாள்]இந்தப் பேர்களை அதிகம் சொன்னார் போலிருக்கிறது.

தெய்வத்தைப் பல பாவங்களில் வழிபடுவதில் நாம் குழந்தையாகவும் தெய்வம் தாயாகவோ, அல்லது தந்தையாகவோ இருப்பதற்கு 'அபத்ய'ð£õ‹ â¡Á «ð˜. ë£ùú‹ð‰î˜ ÜŠð®Š ð£®ùõ˜î£¡. Þ¡ªù£¼ «è£®J™ ªîŒõˆ¬î, °ö‰¬îò£,A ï£‹ î£ò£è, î‰¬îò£è, ªè£…²õîŸ° õ£ˆú™ò ð£õ‹ â¡Á ªðò˜. ªðKò£›õ£˜ ÜŠð® G¬øòŠ ð£®J¼,Aø£˜. ˆK¹óú§‰îK °ö‰¬îò‹ð£œ Þ™¬ô. «îõ˜èœ ð‡Eò ò£è˜F™ ë£ù£,Qò£ù Cî,QJ™ «î£¡ÁAø«ð£«î è™ò£í õòú§ Ü¬ì‰î »õFò£è ÜõîK˜îõœ ˆK¹óú§‰îK. ð£ô£î£¡ °ö‰¬î Ü‹ð£œ. Üîù£™ v«î£ˆó˜F¡ ªì,v®'™ Ü‹ð£¬÷ ð˜Qò£è, ñ£î£õ£è, ñý£ê,Fò£è â™ô£‰î£¡ õ˜E˜F¼,Aø¶. Þ¼‰î£½‹ õ£ˆú™ò‹ M†´Š«ð£èŠ ðì£ªî¡«ø Üõœ «ð¬ó,, ªê£™Aø ÞìƒèOô£õ¶, Þ¼ŠðîŸ°œ G¬øò ¹ˆK â¡Á ªê£™ôµªñ¡«ø ÞŠð®Š «ð˜èœ «ð£†ì£˜ «ð£L¼,Aø¶!Ýê£˜ò£«÷ ð‡Eù¶ Ü‰î ð£è‹î£¡ â¡Á ðô «ð˜ G¬ù,Aø à˜îó£ƒè‹ [HŸð°F]ºî™ „«ô£è˜F™ «èê£F ð£î õ˜í¬ù Ýó‹H,Aø«ð£«î "UñAKú§«î!"["ðQ ñ¬ô ñè«÷!"]â¡Á °ö‰¬îò£è˜î£¡ ÃŠH´Aø£˜. Ü´ˆîF™ "C°ó G°¼‹ð‹ îõ C«õ"â¡Á Cõ ð˜Qò£è,, ªê£™LJ¼,Aø£˜. v«î£ˆó˜¬î º®,°‹«ð£¶ è¬ìC „«ô£è˜F™ î£ò£ó£è "üùQ"â¡Á ÃŠH†´ "à¡Â¬ìò«îò£ù õ£,è£ô£ù Þ‰î v¶F àù,«è Ü˜Šðí‹ - ˆõbò£H˜-õ£,Hv-îõ üïG õ£ê£‹ v¶FKò‹"â¡Aø£˜. ¹ˆKò£Œ Ýó‹H˜¶Š ð˜Qò£è, ªè£‡´«ð£Œ˜ î£ò£ó£è º®˜F¼,Aø£˜.

தாயாராகச் சொல்லும்போது 'அம்பா', 'மாதா'என்று ஏதோ ஒன்று, இரண்டு இடத்தில் சொல்லியிருந்தாலும் "ஜனனி", "ஜனனி"என்றே நிறையச் சொல்லியிருக்கிறார். ஸகலமும் ஜனித்தது அவளிடம்தான், ஸகல ஜனங்களும் அவள்

குழந்தைகளே என்பது மனஸில் பதிந்து நிற்பதற்காகவே 'ஜனனி'பதப்ரயோகம் பண்ணியிருக்கலாம்.

பூர்வார்த்தமான (முதற் பாதியான)ஆனந்த லஹரியின் கடைசி ச்லோகக் கடைசி வரியில் ஈச்வரனையும் அம்பாளையும் சேர்த்துச் சொல்கிறபோதும் "ஜனக-ஜனனி"என்றே சொல்லியிருக்கிறது. மாதா-பிதா என்பதைவிட ஜனக-ஜனனிக்கு விசேஷம் இருக்கிறது. என்னவென்றால், மாதா, பிதா என்கிற வார்த்தைகளுக்கு 'ரூட்'வெவ்வேறாக இருக்கிறது. அதனால் அர்த்தங்களும் வேறாய் இருக்கின்றன.

'ñ£î£'â¡ø£™ îù,°œ«÷ Üì,A, ªè£‡®¼Šðõœ. 'Hî£'â¡ø£™ 'ðKð£L,Aøõ˜'. üùè üùQ â¡ø õ£˜ˆ¬îèœî£¡ å«ó 'Ï†'®™ Hø%oî¬õ. 'HøŠHŠð¶'â¡Á Ü˜ˆî‹ ªè£´Šðî£ù 'ü¡'â¡ø å«ó 'Ï†'®™ Ü%oî Þó‡´ õ£˜ˆ¬îÀ‹ à‡ì£J¼,A¡øù...

இந்த ஸ்தோத்ரத்தில் அம்பாளுடைய பெயர்கள் ரொம்பவும் குறைச்சலாகவே வருகின்றனவென்று சொல்லிக் கொண்டிருந்தேன். இது திவ்ய நாமாக்களிடம் எத்தனை கௌரவமும் பயபக்தியும் காட்ட வேண்டுமென்று நமக்குத் தெரிவுப்பதாகவுமிருக்கிறது. ஏதோ கிளிஞ்சலை வாரியிறைக்கிற மாதிரி நாமாக்களை அள்ளி வீசிவிடாமல் ரத்னத்தைக் கொஞ்சூண்டு கண்ணில் காட்டிவிட்டு ஜாக்ரதைப்படுத்தி விடுவதுபோல்தான் நாம ரத்னத்தையும் அதன் மதிப்பறிந்து லேசாகக் காட்டி ரக்ஷிக்க வேண்டும் என்று தெரிவிக்கிறதாக வைத்துக் கொள்ளலாம். பதியின் பெயரை, குருவின் பெயரை சொல்வார்களா? அந்த மாதிரி! 'ஆனால் இது அம்மான்னா?அம்மாவிடம் ஸ்வாதீனம் எடுத்துக் கொள்ளலாமே?' என்றால், 'அம்மா என்று எத்தனை அன்பும் உரிமையும் எடுத்துக்கொண்டாலும் மரியாதை கெட்டுப் போகக்கூடாது. இந்த அம்மா ப்ரேமை மயமான அம்மா மட்டுமில்லை. மஹாசக்தி படைத்து ஸர்வலோகங்களையும் அடக்கியாள்கிற ராஜராஜேச்வரியாயும் இருக்கிறவள் - ஸஹஸ்ர நாமத்திலேயே 'ஸ்ரீ மாதா'என்றவுடனேயே அடுத்தாற்போல 'ஸ்ரீ மஹாராஜ்ஞி'(மஹாராணி)'ஸிம்ஹாஸனேச்வரி'என்று அவளுடைய அதிகார தோரணையைச் சொல்லும் பேர்கள்தானே வருகின்றன?அந்த ராஜ மரியாதை கெட்டுப் போகப்படாது'என்று காட்டவே அதிகமாகப் பேர்

சொல்லவில்லை என்று தோன்றுகிறது. ரொம்பவும் அத்யாவசியம் தவிர ராணி சொல்வதில்லை 'ஹெர் மெஜஸ்டி'என்றுதான் சொல்கிறது!

---



## 'ஆனந்த லஹரி'பற்றி

முதல் பாகமான 'ஆனந்த லஹரி'என்ற தலைப்பைப் பார்த்தாலும்..... 'சிவ'போட்டு ப்ளஸ் 'ஆனந்த லஹரி'= 'சிவாநந்தலஹரி'என்று மற்ற ஸ்தோத்ரத்திற்குத் தலைப்புக் கொடுத்த மாதிரி இல்லாமல், நம்முடைய இந்த ஸ்தோத்ரத்தின் முதல் பாகத்திற்கும் அம்பாள் ஸம்பந்தமான அடைமொழி எதுவும் இல்லாமல் வெறும் 'ஆனந்த லஹரி'என்றே தலைப்புக் கொடுத்திருக்கிறது. இதற்கும் மேலே சொன்ன காரணத்தையே சொல்லலாம். அதாவது ஸௌந்தர்யம் என்றாலே அம்பாள்தான் என்பதால் அவள் பேரைச் சேர்க்காமல் 'ஸௌந்தர்ய லஹரி'என்று மாத்திரமே சொன்னால் போதும் என்ற மாதிரி ஆனந்தமும் அவளேதான்!பல விதமான ஸௌந்தர்யங்களுக்கும் மூலம் அவள்தான் என்கிறாற் போல அத்தனை விதமான ஆனந்தங்களுக்கும் அவள்தான் தாய்ச் சரக்கு. தாயேயான தாய்ச் சரக்கு!ஆனந்தத்தில் பல வரிசைகளைத் தைத்திரீயம், ப்ருஹதாரண்யகம் ஆகிய உபநிஷத்துக்கள் அடுக்கிக் கொண்டே போகின்றன. நாமும் லீலானந்தம், ப்ரமோனந்தம், ஆத்மானந்தம், [சிரித்து]காஃபியானந்தம், ஸினிமானந்தம். கிரிக்கெட்டானந்தம், பேச்சானந்தம் - இதுகளெல்லாம் அடங்கும் இந்த்ரியானந்தம், ச்ரோத்ரானந்தம், நேத்ரானந்தம் என்று பலதைச் சொல்கிறோம். அவற்றிலிருந்து வித்யாஸம் தெரிவிப்பதற்காகத்தான் பரமேச்வர பரமான சதகத்தில் 'சிவானந்தம்'என்று பிரித்துச் சொல்லவேண்டியிருக்கிறது.

ஆனால் வெறுமே ஆனந்தம் என்று சொன்னால் அதுவும் அம்பாளுடையதுதான். அம்பாள் என்றால் என்ன? 'ஸத்'தாக இருக்கிற பரமேச்வரனுடைய 'சித்', அதாவது அறிவிலிருந்துதான் அத்தனை ஆனந்த அநுபவமும் உண்டாகிறது. அந்த சித்தசுத்திதான் அம்பாள். வெறுமே இருக்கிற ஸத், தன்னைத்தானே அறிகிற சித்தினால் பெறுகிற நிறைவான அநுபவம்தான் ஆனந்தம். அந்த சித்தின் ஆபாஸத்தினால் [பிரதிபலிப்பு ஒளியினால்]தான் நாம் பெறுகிற பலவித ஆனந்தங்களும்!இதற்கெல்லாம் முடிவு, நிறைவு அந்தச் சித்திலேயே கரைந்து நாம் ஞானமயமாகிப் பெறுகிற அத்வைத ஆனந்தம்தான். அதிலேயே நிலைத்துவிட்டவள் அம்பாள். "ப்ரம்மாதியர்கள் பெறுகிற ஆனந்தத்தையும் தன்னுடைய ஆனந்தத்தில் ஒரு துளியாகக் கொண்டவள் - ஸ்வாத்மாநந்த - லவீ - பூத - ப்ரஹ்மாத்யாநந்த - ஸந்ததி:"- என்று [லலிதா]ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. அதனால் தான் அம்பாள் பரமான இந்த 'ஸௌந்தர்ய லஹரி'யின் பூர்வ பாகத்துக்கும் அவள் பெயரைச் சேர்க்காமல் வெறுமே 'ஆனந்த லஹரி'என்று பெயர் சொன்னாலே போதும் என்று விட்டிருக்கிறது. 'ஆனந்த லஹரி'என்று இன்னொரு ஸ்துதியும் ஆசார்யாள் செய்ததாக தேவீ பரமாகவே இருக்கிறது. 'Cõ Ýù‰î ôýK'â¡ø ñ£FK Þ™ô£ñ™, Þ‰î Þó‡®½«ñ Ü‹ð£À¬ìò «ð¬ó,, ªê£™ô M™¬ô. 'C˜'võÏð˜Fù£™ ªðÁAø Ì˜í£ù‰î‹ â¡Á ªî£Q,Aø º¬øJ™, 'ªú÷‰î˜ò ôýK'Ì˜õ ð£è˜F™ å¼ Þì˜F™ [8-‹ ,,«ô£è˜F™]Cî£ï‰î ôýg‹ â¡Á õ¼Aø¶. 'C˜'¬î,, ªê£™ô£ñ™ 'Ýù‰î‹'â¡Á ñ£˜ó«ñ ªê£¡ù£½ƒÃì Ü‹ð£œ Mûòñ£ù¶ â¡Á ãŸð† ´M´‹ â¡ðî£™ Ü‰î ð£è˜¶,º 'Ýù‰î ôýK'â¡Á ñ£˜Fó‹ «ð˜ õ‰¶M†ì¶.

தன்னை மறந்து அப்படியே நிஷ்டையில் கிடப்பது தான் ப்ரஹ்மாநுபவம் என்கிறார்கள். அதுதான் 'ஸத்'. அது ஒரு தினுஸில் தன்னை மறந்த நிலை என்றால், இன்னொரு தினுஸில் தன்னை அறிந்த நிலையாயிருக்கிறது!ஜீவபாவத்தில் சரீர-இந்த்ரியாதிகளோடு ஸம்பந்தப்பட்டிருக்கும் தன்னை மறந்து, சிவ பாவத்தில் இதற்கெல்லாம் ஆதாரமாகவுள்ள

ஒரே 'தானை'அறிகிற நிலை அது. அறிகிறவன், அறியப்படுவது, அறிவு என்று மூன்று வேறு வேறாயில்லாமல், மூன்றும் சேர்ந்து அநுபவ ஆனந்த ஸ்வரூபமாக இருக்கப்பட்ட நிலை. வெறும் இருப்பான ஸத் சிவமென்றால் அதிலே இப்படி அறியும் சித்தாகவும், அநுபவிக்கும் ஆனந்தமுமாக இருப்பதே அம்பாள். தான் இருப்பதையே அறிந்தநுபவிக்காத ஒரு ஸத் இருந்தும் செத்த மாதிரிதானே?அப்படியில்லை என்னும்போதுதான் ஸத்தான ப்ரஹ்மத்திற்கு சக்தி இருப்பதாக ஏற்படுகிறது. இந்த சக்தியிருப்பதால் தன்னைத்தானே ஏகமாக அறிந்து ஆனந்திருப்பது ஒரு நிலை. இன்னொரு நிலை - இதே சக்தியினால் மாயை பண்ணித் தன்னையே பல மாதிரி ப்ரபஞ்சங்கள், ஜீவர்கள் என்று ஸ்ருஷ்டிப்பது, பரிபாலிப்பது, ஸம்ஹரிப்பது எல்லாம்!தன்னைத் தானே உள்ளூர அறிவதிலிருந்து, தனக்கு வெளி மாதிரி ஸ்ருஷ்டியைப் பண்ணி அதை நிர்வாஹம் செய்வது வரை எல்லாமே கார்யந்தான்.

இந்தக் கார்யங்களில் சேர்ந்ததுதான் ஸத்தாமாத்ரமான சிவமே சிவன் என்று மூர்த்தியாவதும், அப்புறம் அந்த சிவன் அநேக லீலா சரித்ரங்களை நடத்திக் காட்டுவதும். இதவ்வளவும் உள்ளேயிருக்கும் சக்தியின் விலாஸம்தான் - னீணீஸீவீயீமீவமீ ணீமீ வீஷீஸீதான்!ஆனபடியால், சிவானந்தத்திற்குக் காரணமாக சிவசரித்ரம் இருக்கிறது என்று அங்கே, 'சிவானந்த லஹரி'யில், ஆசார்யாள் சொல்கிறாரே, அப்போதும் சிவம் சிவனாகி, அவனுக்குச் சரித்ரங்கள் ஏற்பட்டதே அம்பாளின் கார்யந்தான்!கார்ய ப்ரபஞ்சம் முழுக்க அவளையே சேர்ந்ததாதலால், சிவனாக, விஷ்ணுவாக, மற்ற மூர்த்திகளாக, அசடுகளான நாமாக இன்னம் புழு, பூச்சி என்று எந்த ரூபத்தில் யாராக இருந்து என்னென்ன செய்கிறதும் அவளைச் சேர்ந்ததுதான்;அவள் பண்ணுவிப்பதுதான்!இதைத்தான் 'ஸௌந்தர்ய லஹரி'நூறில் முதல் ச்லோகமே சொல்கிறது. ஆக, நாம் இப்போது வருகிற 'கன்க்ளூஷன்', சிவானந்த லஹரியில் சொன்னபடி சிவ சரிதம் ஆனந்த ஸரித்தாக வருகிறதென்றாலும் அதற்குக் காரணம் அம்பாள்தான்;அதன் பெருமையும் அவளைச் சேர்ந்ததுதான். சிவானந்தம் கல்லாகக் கெட்டித்துக் கிடக்காமல் லஹரி என்று வெள்ளமாகப் பெருகுவது அவள் ஸமாசாரந்தான்!

அம்பாள் எல்லாவற்றிலும் வெள்ளம்தான், லஹரிதான்! ஸௌந்தர்ய லஹரியாக, ஆனந்த லஹரியாக இருக்கிற அவளை 'ச்ருங்கார லஹரி' (ச்லோ-16)'ஆஹ்லாத லஹரி'(ச்லோ-21)என்றெல்லாமும் சொல்லியிருக்கிறது.

ஜகத் வியாபாரம் செய்வது, இதிலிருந்து விமோசனம் தருவது என்ற இரண்டு காமங்களையும் (ஆசைகளையும்)பரப் பிரம்மத்துக்கு உண்டாக்கி, அதோடு அவன் கூடியிருப்பதைத்தான் பரமேச்வரன் காமேச்வரியோடு தாம்பத்தியம் நடத்துவதாகச் சொல்வது. அந்த காமேச்வரிதான் ஸ்ரீவித்யா அதிதேவதையான லலிதா த்ரிபுரஸுந்தரி. ஈச்வரனுக்கு இப்படிக் காமம் உண்டு பண்ணியதால் "ச்ருங்கார லஹரி"ஆகிறாள். ஈச்வரனுக்கு ஸ்ருஷ்டித் திறமை ஏற்பட்ட மாதிரிதானே கவிகளுக்கும் கல்பனா ஸ்ருஷ்டித் திறமை ஏற்பட்டிருக்கிறது?ஆகையால், அம்பாள் அநுக்ரஹத்தால் கவிதா ஸாமர்த்யம் பெற்றவர்களிடம் இந்த ச்ருங்கார ரஸ ப்ரவாஹமே பெருகுவதாக இந்த ஸ்தோத்ரத்தில் சொல்லி, அந்த இடத்தில்தான் 'ச்ருங்கார லஹரி'என்று போட்டிருக்கிறார்.

'ஆஹ்லாத லஹரி'என்றாலும் 'ஆனந்த லஹரி'என்று தான் அர்த்தம். மல மாயை நீங்கியவர்கள் குண்டலிநீ யோகத்தின்படி அம்பாளுடைய கலையைக் காணும்போது பரமானந்த வெள்ளத்தில் திளைக்கிறார்கள் என்னும்போது "பரம ஆஹ்லாத லஹரி"என்கிறார்.

---



## அழகு ரஸனையே அதற்குப் பலனும்

சிவானந்த வெள்ளம் பரமேச்வரனின் சரித்திரத்திலிருந்து உண்டாயிற்று. பாப அழுக்கைப் போக்கிற்று, தாபமான ஸம்ஸாரத்தைச் சமனம் செய்தது, சித்த மடுவில் வந்து

நிறைந்தது என்றெல்லாம் ['சிவானந்தலஹரி'யில்]சொன்ன மாதிரி 'ஸௌந்தர்ய லஹரி'யைப் பற்றி இந்தப் பதப்பிரயோகம் செய்துள்ள [44-ம்] ச்லோகத்தில் ஒன்றுமே சொல்லவில்லை. அம்பாளுடைய முகத்தின் ஸௌந்தர்ய வெள்ளத்துக்கு ஒரு வாய்க்கால் மாதிரி அவளுடைய வகிடு ஓடுகிறது என்று மட்டும்தான் சொல்லியிருக்கிறார். அழகைக் காவிய ரஸத்தோடு வர்ணனை செய்வதற்கு அதிகமாக விளக்கம் ஒன்றும் சொல்லிப் பிரகடனப்படுத்த வேண்டாம்;தத்வம், allegory (உருவகம்) ஒன்றும் சொல்லாமல், அழகைத் தெரிந்துகொண்டு ரஸிக்கத் தெரிந்தவர்கள் அந்த அழகுக்காகவே ரஸித்துக் கொண்டிருந்தால் போதும் என்கிற மாதிரி விட்டிருக்கிறார்.

அம்பாளுடைய ஸௌந்தர்ய வெள்ளமும் நம் பாப, தாபங்களைப் போக்குவதுதான்;நம் ஹ்ருதய ஏரியில் நிரம்பி நிறைவதுதான். ஆனால் இதையெல்லாங்கூட அதற்குப் பலனாகச் சொல்லி, அதனால் அந்த அழகுக்கு ஏற்றம் கொடுக்க வேண்டியதில்லை;அது அத்தனை அழககாக இருப்பதே அதற்குப் பெரிய ஏற்றம்!கங்கையில் முழுகினவுடன் தத்க்ஷணமே பாபம் போய்விடுகிறது, தாபம் போய்விடுகிறது. ஆனால் உடனே எழுந்து வரத் தோன்றுகிறதோ?அப்புறமும் ரொம்ப நாழி அந்த வெள்ளத்தில் முழுகி முழுகி நீச்சலடித்துக் கொண்டே இருக்கவேண்டும் என்றுதானே தோன்றுகிறது?பாப ஹரணம், தாப சமனம் என்ற பலன்களுக்காக இல்லாமல், கங்கா லஹரியில் ஸ்நானம் செய்கிற ஆனந்தத்துக்காகவே, அந்தப் பலனுக்காகவே, ஆனால் பலன் கிலன் என்ற எண்ணங்கூட இல்லாமல் நீராடிக் கொண்டிருப்பதுபோல்தான் அம்பாளுடைய ஸெந்தர்யப் பிரவாஹத்திலும் அதற்காகவே முழுகி ஆனந்தப்படவேண்டும் என்று சொல்கிறார்.

ஈச்வர சரித்திரத்திலிருந்து சிவானந்தலஹரி வந்ததாகச் சொன்னார். இங்கே "வதன ஸௌந்தர்யலஹரி"என்று அம்பாளின் முகத்திலிருந்து லாவண்ய வெள்ளம் பெருகுவதாகச் சொன்னாலும், முகம் மட்டுமின்றி கேசாதிபாதம் அம்பாள் அழகுப் பிரவாஹமாகத்தான் இருக்கிறாள். இன்னொரு ச்லோகத்தில் "த்வதீயம் ஸௌந்தர்ய

ம்"என்று அம்பாளின் முழு ரூபத்தையும் அழகுமயமாகச் சொல்லியிருக்கிறது. ஈச்வரனின் லீலைகளான, காரியங்களான சிவசரித்திரத்திலிருந்து ஆனந்த லஹரி பெருகியதுபோல, அம்பாளின் ஸ்வரூபத்திலிருந்து ஸௌந்தர்ய லஹரி பெருக்கெடுக்கிறது. ஈச்வரன் சரித்ரங்களை நடத்திக் காட்டினதுபோல் அவள் எதுவும் செய்ய வேண்டியிருக்க வேண்டியிருக்கவில்லை;வெறுமே அவள் இருக்கும் போதே அவளுடைய ரூபத்திலிருந்து அழகு வெள்ளம் பிரவஹிக்கிறது.

ஈச்வரனுடைய அநேக லீலைகளை 'சிவானந்த லஹரி'யில் சொல்லியிருப்பது போல இங்கே அம்பாளின் பண்டாஸுர வதம் முதலான ஒரு சரித்ரத்தையும் சொல்லாமல், அவளுடைய ஸ்வரூபத்தை மட்டும் சித்ரமாகத் வடித்துக் கொடுத்து இதுவே பேரானந்தம் என்று பண்ணிவிட்டார்!இதிலேயுள்ள ஸ்வரூப வர்ணனை மாதிரி அதில் ஈச்வரனை அங்க அங்கமாக வர்ணிக்கவில்லை! ஒவ்வொன்றில் ஒவ்வொரு 'டெக்னிக்'கைக் கையாண்டிருக்கிறார்!

அவயங்களை வரிசையாக வர்ணிப்பதில் புருஷ தெய்வங்களுக்கு ஒரு க்ரமம்;ஸ்த்ரீ தெய்வங்களுக்கு வேறே க்ரமம். புருஷ தெய்வங்களைப் பாதத்திலிருந்து ஆரம்பித்து மேல் வரிசையில் கணுக்கால், முழங்கால் என்று சிகை வரை வர்ணிக்கணும். 'பாதாதி கேசாந்தம்', 'ஆபாத மஸ்தகம்', 'நக சிகா பர்யந்தம்'என்றெல்லாம் சொல்வது இந்த க்ரமத்தைத் தான்.

ஸ்த்ரீ தேவதையானால் இதை மாற்றிக் கேசபாரத்தில் ஆரம்பித்து நெற்றி, கண் என்று கீழ் வரிசையில் பாதம் வரை கொண்டு வந்து முடிக்கவேண்டும். இதற்குக் 'கேசாதி பாதாந்தம்'என்று பேர். லலிதா ஸஹஸ்ரநாம ஆரம்ப பாகத்தில் இப்படியே வர்ணனை வருகிறது. ஸௌந்தர்ய லஹரியிலும் இதே 'ஆர்டர்'தான் பார்க்கிறோம்.

சிவானந்த லஹரியில் ரூப வர்ணனை என்று பண்ணவில்லை. ஆனால் ஆசார்யாளே ஈச்வரனைப் பற்றித் தனியாக ஒரு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரமும் பண்ணியிருக்கிறார். அதோடு

அவர் திருப்தியடைந்து விடவில்லை. அவன்தான் 'மாதிருக்கும் பாதிய'னாச்சே, அதனால் அவனைப் பற்றிக் கேசாதிபாதாந்த வர்ணனையாக இன்னொரு ஸ்தோத்ரம் பண்ணுவதும் ந்யாயந்தான் என்று அப்படியும் ஒன்று பண்ணியிருக்கிறார்.

'ஸௌந்தர்ய லஹரி'யில் அம்பாள் அவனுடைய அர்த்த சரீரம் மட்டுமில்லை முழு சரீரமுந்தான் என்பதாக "சரீரம் த்வம் சம்போ:"(ச்லோ 34)என்று சொல்லியிருக்கிறார். நிஷ்கரியமான, அரூபமான சிவம்தான் சக்தி மஹிமையால் சிவனானது என்று பார்க்கும்போது அவனுடைய சரித்ரம், சரீரம் இரண்டும் அவளால்தான்! அவனைப்பற்றிய லஹரியில் சரித்ர ஸௌந்தர்யத்தையும் அவளைப் பற்றிய லஹரியில் சரீர ஸௌந்தர்யத்தையும் விவரித்தே ஆனந்த ரஸம் பெருகும்படி இரண்டு தினுஸில் பண்ணியிருக்கிறார்.

அம்பாளின் ஸௌந்தர்யத்தை, அழகை நமக்குள்ளே வாங்கிக்கொண்டே நாம் ஆனந்தத்தில் ரொம்பி விடுகிறோம். சரித்ரம், கார்யம் என்கிறபோது அவற்றை நாம் விமரிசிக்கிற மாதிரி இங்கே எதுவும் பண்ண வேண்டியதில்லை. தரிசனம் பண்ணினாலே போதும். பரம ஸுந்தரமான ஒன்றை அப்படியே பார்த்துக்கொண்டே நிற்கிறோம். அதிலேயே நிறைவாக நிறைந்துவிடுகிறோம்!துளிக்கூட சிரம ஸாதனை இல்லாமல், மனஸுக்குப் பேரானந்தமாக, தர்சன மாத்திரத்தில் பூர்ணமாகி விடுகிறோம்!

ரொம்ப ஸுலபமாக தெய்வத்தைப் பிடிப்பதற்கு ஸ்வரூப த்யானம், நாமோச்சாரணம் என்ற இரண்டை வைத்திருக்கிறது. நாம-ரூபம் என்று இந்த இரண்டைத்தான் சொல்லியிருக்கிறது. நாமாவைச் சொல்லிக்கொண்டே இருப்பதில் சிரம ஸாதனை எதுவுமில்லை. வாயால் பண்ணுவது அது. மனக்கண்ணாலோ, புறக்கண்ணாலோ ஒரு பரம மங்களமான மூர்த்தியை தரிசனம் பண்ணுவது கஷ்டமில்லாத இன்னொரு வழி. மஹான்கள் ஜீவனோடு இருக்கிற திவ்ய ரூபங்களைப் புறக்கண்ணுக்கு முன்னாடி காண்பார்கள். நம்மால் சிலா ரூபங்களை, விக்ரஹங்களைத் தான் புறக்கண்ணால் தரிசிக்க முடிகிறது. ஜீவசக்தியோடு ஸஞ்சாரம் முதலானதுகளைப் பண்ணும் மூர்த்தியை நாம் மனக்கண்ணில்தான் காணமுடிகிறது. விக்ரஹமும் பிராணப் பிரதிஷ்டை

ஆகியிருப்பதால் ஸாக்ஷாத் ஜீவ ஸ்வரூபம்தான்; வைஷ்ணவர்கள் 'அர்ச்சாவதாரம்'என்றே சிறப்பித்துச் சொல்வார்கள். அதனால் கோவிலுக்குப் போய் மூர்த்தி தரிசனம் பண்ணி அந்த அழகிலே சொக்கி, கஷ்டமில்லாமல் பகவத் ஸ்மரணை பெறுகிறோம்.

நாம மாஹாத்மியம் என்று எத்தனையோ சொல்லியிருந்தாலும் அதுகூட ஸாமான்யமாக நாம் இருக்கப்பட்ட நிலையில் ஒரு ரூபத்தோடு சேர்த்துச் சொன்னால்தான் மனஸை இன்புறுத்தி இழுத்துப் பிடித்து நிறுத்துகிறது. 'ராம ராம'என்று சொன்னால் 'ஆடோமாடிக்'காக, மரகதப் பச்சையாக, கோதண்டத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீராமசந்திர மூர்த்தியை மனஸ் நினைக்கிறது. அந்த ரூபத்தோடு சேர்க்காமல் நாமாவை மட்டும் சொன்னால் வறட்டு வறட்டு என்றுதான் ஸாதாரண ஜனங்களுக்குத் தோன்றும்.

நாம ஜபம் முறையாகப் பண்ணுகிற போதும் த்யான ச்லோகம் சொல்லி ரூபத்தை நன்றாக மனஸுக்குள் நிறுத்திக் கொள்ளச் சொல்லியிருக்கிறது.

ரூபத்தைப் பார்ப்பது என்பதைவிட நாமாவைச் சொல்கிறது என்கிறதில் நம் பிரயாஸை ஜாஸ்தியாகத் தோன்றுகிறது. ஸுந்தரமான ஒரு ஸ்வரூபத்தை நினைத்துப் பார்ப்பதே எல்லாவற்றையும்விட ஸுலபமாகவும் ஆனந்தமாகவும் இருக்கிறது.

இதனால்தான் இந்த லஹரியின் உற்பத்தி ஸ்தானம், போகிற வழி, ஸங்கம ஸ்தானம் என்றெல்லாம் ஒன்றும் சொல்லவில்லை!உசந்த ரஸாளு மாம்பழம் என்றால் அதை சாப்பிடுவதேதான் ஆனந்தம். அது எங்கே பழுத்தது, எப்படிப் பழுத்தது, வயிற்றுக்குள் போய் என்ன பண்ணுகிறது என்பதையெல்லாம் பற்றியா நினைக்கிறோம்?

தேவாம்ருதத்தில் ஊறப்போட்ட ரஸாளு மாம்பழமாக நமக்கு 'ஸௌந்தர்ய லஹரி'ஸ்தோத்ரம் கிடைத்திருக்கிறது. அம்பாளுடைய ஸ்வரூபத்தை வர்ணிக்கிற இந்த ஸ்துதியே அம்பிகையின் ஸ்வரூபமாக இருக்கிறது!ஸ்தோத்திரிக்கப்படும் விஷயம், ஸ்தோத்திர கர்த்தா, ஸ்தோத்திரம் எல்லாம் ஒன்றாகவே இருக்கிறது!

அதிலே ஊற ஊறிப் பாராயணம் செய்தால், பாராயணம் செய்பவர்களும் அதுவே ஆகி, அம்பாளாகி, எல்லாமாகிற தானான தனி நிலை என்கிற மோக்ஷத்தில் சேர்ந்து விடலாம்.

---



## அழகு என்றால் என்ன?

இப்படிச் சொன்னால் மிகைப்படுத்திச் சொல்கிறேன், அதிசயோக்தி என்று தோன்றலாம். "அழகாக ஒன்று இருக்கிறதென்று பார்த்தால் அப்போதைக்கு ஆனந்தமாயிருப்பது வாஸ்தவம்தான். ஆனால் 'அம்பாளின் அழகுப் பிரவாஹத்தைப் பார்த்தோலே போதும்;நிறைந்த நிறைவாகி விடலாம். அதிலேயே ஊறி ஊறி அத்வைத மோக்ஷானந்தத்துக்குப் போய்விடலாம்'என்றால் அதெப்படி?தாமரைப் புஷ்பத்தைப் பார்க்கிறோம், பூர்ண சந்திரனைப் பார்க்கிறோம், ஆனந்தமாகத்தான் இருக்கிறதென்றால் இதனாலேயே மோக்ஷம் என்கிற பேரானந்தம் வந்துவிடுமா என்ன?"என்று கேட்கலாம்.

தேறித் தெளிந்த ரஸாநுபவம் உள்ள கவிகள் அழகிலேயே தெய்வத்தைப் பார்ப்பதாக, பிரம்மானந்தத்தை அநுபவிப்பதாகத்தான் தெரிகிறது. அவர்கள் இயற்கை வர்ணனை செய்வதைப் பார்க்கும்போது, அதன் த்வாராவே அவர்கள் அகண்டானந்தம் அநுபவித்ததாகத் தெரிகிறது.

காவ்ய ரஸாநுபவம் என்பது என்ன?அழகை ரஸிப்பதில் ஏற்படுகிற ஆனந்தந்தான். இதுவே, நிரந்தரமாக இல்லாவிட்டாலும் தாற்காலிகமாகவாவது ப்ரம்மான ந்தத்தையே தருமளவுக்குப் போய்விடும் என்று அலங்கார சாஸ்த்ரக்காரர்களான அபிநவகுப்தர், ஜகந்நாத பண்டிதர் ஆகியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அத்வைதத்துக்குக்

கிட்டே கிட்டே வருகிற காஷ்மீரி சைவத்தின் அடிப்படையில் அபிநவகுப்தர் இப்படிச் சொல்லியிருக்கிறார். (அந்த சாஸ்த்ரம் பற்றி அப்புறம் இன்னும் சிலது சொல்கிறேன்.) காவ்ய ரஸானுபவம் ப்ரம்மானுபவம் வரை போகிறது என்று அத்வைத அடிப்படையிலேயே ஜகந்நாத பண்டிதர் சொல்லியிருக்கிறார்.

காவ்யம் என்பது என்ன? இயற்கை விசேஷசங்களையும் மநுஷ்ய இயற்கையான குணங்களையும் அழககாச் சொல்வதுதானே?இந்த இரண்டு இயற்கைகளையும் நாம் நித்யமுந்தான் பார்த்துக்கொண்டு, அவற்றுக்கு நடுவிலேயே சுழன்று கொண்டு வருகிறோமானாலும் நம் வாழ்க்கையில் இவற்றிலே அப்படியொன்றும் ரொம்பவும் ரஸித்து ஆனந்தம் பெறும்படியாக இருந்துவிடவில்லை. ஆனால் இதுகளையே காவ்ய நாடகாதிகளில் பார்க்கிறபோது ரஸானுப ஆனந்தம் பெறுகிறோமென்றால் எதனால்?இதுகளை அவை அழகுபடுத்திக் காட்டுவதால்தானே?ஆகையால் காவ்யானுபவம் என்கிறது ஸௌந்தர்ய அநுபவந்தான். அது மோக்ஷபர்யந்தம் கொண்டு சேர்க்கிறதென்று நான் சொன்ன பெரிய ஆலங்காரிகர்கள் [அலங்கார சாஸ்திரக்காரர்கள்]காட்டியிருக்கிறார்கள்.

வெள்ளைக்கார தேசங்களிலும் Nature Poets என்று இயற்கை அழகில் முழுகியே ஈச்வரத்வத்தைக் கண்டவர்கள் இருக்கிறார்கள். ரவீந்த்ரநாத் தாகூர் ஸௌந்தர்ய அநுபவத்தாலேயே ஸாக்ஷாத்காரம் என்கிற அபிப்ராயத்தில் எழுதியிருக்கிறார். ஸத்-சித்-ஆனந்தம் என்கிறபோது ஸத்யத்தோடு அபின்னமாக [பிரிவில்லாமல்] ஞானமும் ஆனந்தமும் இருக்கிறாற் போலவே நல்லதும் அழகானதுங் கூட ஸத்தயத்தோடு இரண்டறச் சேர்ந்திருக்கிற தத்வங்களாகும் என்பதே தாகூர் அபிமானித்த ப்ரம்ம ஸமாஜிகளின் கொள்கை. அதனால்தான் அவர்கள் ஸத்-சித்-ஆனந்தம் என்கிற மாதிரியே ஸத்யம்-சிவ ம்-ஸுந்தரம் என்றும் சேர்த்துச் சொல்வது. 'சிவம்'என்றால் இங்கே 'நல்லது'. 'ஸுந்தரம்'அழகு என்று எல்லாருக்கும் தெரியும் அதாவது பரப்ரஹ்ம தத்வத்திலேயே அங்கமாக இருப்பது அழகு என்று தாத்பர்யம். ஆனபடியால் அழகை

சரியானபடி, பூர்ணமாக அநுபவிப்பதே ப்ரஹ்மாநுபவ ஆனந்தத்தைத் தரும் என்பது தாத்பர்யம்.

ஆனால் அந்த 'சரியானபடி'என்னவென்றே நம்மில் ரொம்பப் பேருக்குத் தெரியவில்லை. நம் மனஸை அப்படி பூர்ணமாக அழகுக்குக் கொடுத்து அநுபவிக்க நமக்குத் தெரியவில்லை. அழகிலேயே ஈச்வரத்வத்தை அநுபவிக்கும் பக்குவம் நம் எல்லாருக்கும் ஸித்திக்கக் கூடியதில்லை. ஏதோ அழகாயிருக்கிறது என்று கொஞ்ச நாழி ரஸித்து ஸந்தோஷப்படுவதற்கு அதிகமாக அதை மோக்ஷோபாயமான உபாஸனையாக ஆக்கிக்கொள்ள நம்மில் எல்லோராலும் முடியவில்லை.

நமக்கு எது அழகாகத் தெரிகிறது?எது நமக்கு ஆனந்தத்தைத் தருகிறதோ அதைத்தான் அழகு என்கிறோம். நாம் திரும்பத் திரும்ப விரும்பிப் பார்க்கும்படியாக ஒன்று இருந்தால் அது அழகு என்று அர்த்தம்...

இங்கே ஒரு முக்யமான qualifying clause (நிபந்தனை). அதாவது நாம் அநுபவிக்கும் ஆனந்தம் மனோ விகாரத்தில் ஏற்படுகிற ஸந்தோஷமாக இல்லாமல் மனஸில் சுத்தமான, சாந்தமான இன்பத்தை ஏற்படுத்துவதாக இருக்கிறபோது தான் அதற்குக் காரணபூதமானது அழகாயிருக்கிறதென்று அர்த்தம். க்ரூரமான கார்யங்களையும், ஆபாஸமான ச்ருங்கார சேஷ்டைகளையும் ரொம்பவும் இஷ்டத்தோடு பார்த்து ஒருவன் ஆனந்தம் பெறுகிறானென்பதால் அவை அழகானவையாகிவிடாது. அழகை அநுபவிக்கிறவனின் மன நிலை நல்லபடி இருப்பது முக்யம்.

இன்னொன்று. ஒன்று அழகாய் தெரிகிறதென்பது நமக்கு பயம் தராததாக, துக்கம் உண்டாக்காததாக, கோப மூட்டாததாக அது இருப்பதைப் பொறுத்தேயிருக்கிறது. ஒரு பெரிய மலைப் பள்ளத்தாக்கு பச்சைப் பசேலென்று விஸ்தாரமாயிருக்கிறது. அல்லது ஒரு அருவி பெரிசாக நாலு தென்ன மர உசரத்திலிருந்து தடாலென்று கொட்டுகிறது என்றால் அவற்றைத் தள்ளி நின்று பார்க்கும்போதுதான் நமக்கு ஸௌந்தர்ய ரஸாநுபவ ஆனந்தம் உண்டாகிறது. கிட்டே அந்தப் பள்ளத்தின் விளிம்புக்கே, அல்லது அருவி கொட்டுகிற இடத்துக்கே போனால், எங்கே விளிம்பிலிருந்து

வழுக்கி விழுந்துவிடுவோமோ, அருவி அடித்துக் கொண்டு போய்விடுமோ என்றுதான் உள்ளுக்குள்ளே அடித்துக் கொள்கிறது!பயம்!அப்போது ரஸிக்கத் தோன்றவில்லை!ஒரு பாம்பைப் பார்த்தால் வழவழவென்று, தேர்ந்த சைத்ரிகன் எவனோ வர்ண குழைத்துப் போட்ட மாதிரி வரி வரியாகப் போட்டுக்கொண்டு, பளபளவென்று அழகாக நெளிந்து நெளிந்து போகிறது. ஆனாலும் இத்தனை அழகான அந்த ஜந்துவைப் பார்த்து ரஸித்துக்கொண்டு நிற்கத் தோன்றுகிறதோ?உளறியடித்துக் கொண்டு இந்தண்டை ஓடி வந்துவிடுகிறோம்!ஒரு வரிப் புலி அல்லது சிறுத்தையை எடுத்துக் கொண்டாலும் அதன் சர்மத்தின் 'டெக்ஸ்சர்', அதில் போட்டிருக்கிற 'டிஸைன்'ஆகியவற்றின் அழகுக்குக் குறைவேயில்லை. ஆனாலும் நமக்கா, அது மட்டும் கூண்டிலில்லாமல் திரியட்டும் வயிற்றைத்தான் கலக்குகிறது!உசந்த அபய நிலைக்குப்போன ஒரு ஸித்தரால்தான் ஸந்தோஷமாக 'Ý´ ð£‹«ð!'ð£ì º®Aø¶;ñý£ èMò£ù£™ ¹L¬ò»‹ óR^¶ õ˜E^¶Š ªð£ò†K'â¿F Ýù‰îŠðì º®Aø¶. ï‹ñ£™ º®ò£¶. ðò^¬î à‡´ ð‡í£îî£è â‰îMî Ýð^FŸ°‹ ÞìI™ô£îî£è å¼ õv¶ Þ¼‚°‹«ð£¶î£¡ Üî¡ Üö° ïñ‚° Üöè£è^ ªîKõ¶. å¼ î£ñ¬óŠ Ì, å¼ Ì˜í ê‰Fó¡ ÞŠð®J¼‰î£™ õ˜í‹, °O˜„C, ñ£˜îõ‹ [ªñ¡¬ñ], Ïð Ü¬ñŠ¹, õ£ú¬ù Þ¶èO¡ Üö¬è óR‚A«ø£‹. ñ™LŠ Ì Üöè£J¼‚è†´‹. Ü‰îŠ ð‰îL™ ²Šðó£ò¡ (ð£‹¹) Þ¼‚Aø£ªó¡ø£™ óR‚è^ «î£¡ÁAøî£?æ†ì‹ H®^¶M´A«ø£‹!

இன்னும் மநுஷ்ய வர்க்கத்தை எடுத்துக்கொண்டால் அங்கே அன்பு இருக்கிற இடத்தில்தான் நமக்கு ஸௌந்தர்ய ரஸானந்தம் ஜாஸ்தி ஏற்படுகிறது. ஒரு ப்ரபு, முதலாளி ரொம்ப அழகாக இருக்கிறான். ஆனால் அவன் நம்மிடம் கோபமாகத் கத்துகிறான், ஏதாவது 'விக்டிமைஸ்'பண்ணிக் கொண்டேயிருக்கிறானென்றால் அவனுடைய அழகை ரஸித்து ஆனந்தப்பட முடிகிறதா?

ஜட வஸ்துவாகப் புஷ்பம், ஸந்த்யா மேகம், பொன், மணி என்றிப்படி இல்லாமல் ஜீவ ப்ராணிகளாக உள்ளவற்றின் விஷயத்தில், அன்பு என்பதை அந்த அழகான பிராணி - மநுஷ்யனோ, மிருகமோ, பக்ஷியோ - காட்டி உறவாடுகிற

போதுதான் அழகைப் பூர்ணமாக நம்மால் ரஸிக்க முடிவதாகத் தெரிகிறது. அன்பாக இல்லாவிட்டால் கூடப் பரவாயில்லை. விரோதமாக, பயப்படுத்துவதாக, அல்லது சோகமாக இல்லாத வரையில் மநுஷ்யர்களின் அழகை ஓரளவு ரஸிக்கவே செய்கிறோம். ஆனாலும் அவர்களே நம்மிடம் அன்பாகவும் இருந்துவிட்டாலோ ஜாஸ்தி ரஸித்து ஸந்தோஷப்படுகிறோம்.

அன்பு ஜாஸ்தியாக ஆக, ரூப அழகைப் பார்ப்பது கூடக் குறைத்து கொண்டே வர ஆரம்பிக்கிறது. அன்பே உருவானவர்களை, அவர்களுடைய ரூபம் எப்படியிரு ந்தாலும், திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டே இருக்கிறோம் என்றால், அப்போது அன்புதான் அழகு என்று ஆகிவிடுகிறது!கன்னங்கரேலென்று, பல்லும் பவிஷூமாக ஒரு தாயார்க்காரி இருந்தால்கூட, அவளுடைய குழந்தை அவளை விட்டு யாரிடமும் போக மாட்டேன் என்று பிடித்துக் கொள்கிறது. அசலார் யாராவது ரொம்ப அழகானவர்கள் தூக்க வந்தால் அவர்களிடம் பயந்துகொண்டு வந்து, குரூபமான அம்மாவைத்தான் கட்டிக்கொள்கிறது. காரணம் என்ன?அவளுக்குத் தன்னிடம் உள்ள பெரிய அன்பை அது தெரிந்து கொண்டிருக்கிறது!அஷ்டாவக்ரர் எட்டுக் கோணலாக, மஹா குரூபமாக இருந்தார்;அவரை வித்வான்கள் தேடித் தேடிப் போய் தரிசனம் பண்ணினார்கள். இன்னும் எத்தனையோ மஹான்கள், ஞானிகள், ஸித்தபுருஷர்கள் ரூபத்தைப் பார்த்தால் விகாரமாக அசடு மாதிரி, பயப்படுகிற மாதிரியெல்லாம் இருக்கும். ஆனாலும் தர்சனம், தர்சனம் என்று அவர்களை ஜனங்கள் சூழ்ந்து கொள்கிறார்கள்;திரும்பத் திரும்பப் பார்க்கிறார்கள்;வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார்கள் ஏன்? அவர்களுடைய அன்புள்ளம், அருளுடைமைதான் காரணம். "நாம் திரும்பித் திரும்பிப் விரும்பிப் பார்க்கும் படியாக இருப்பதுதான் அழகு"என்ற பீமீயீவீஸீவீமீ வீஷீஸீபடி இவர்கள்தான் அழகு என்று சொல்லவேண்டும். "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்"என்று, இவர்களுடைய உள்ளத்திலிருக்கிற அன்பு சரீரத்தின் அவலக்ஷணங்களையும் மீறி ஏதோ ஒரு அழகை அள்ளிப் பூசிவிடுகிறது என்று அர்த்தம்.

மொத்தத்தில் என்ன ஏற்படுகிறதென்றால், 'உயிருள்ள ரூபமாக இருக்கிற ஒன்றின் அழகு அது அன்பாக இருக்க இருக்க

ஜாஸ்தியாகிறது;அன்பு ரொம்பவும் முதிர்ச்சி அடைந்திருக்கிற நிலையில் ரூப அழகே எடுபட்டுப்போய் அன்புதான் அழகாகத் தெரிகிறது' என்று ஆகிறது.

நமக்குப் ஒன்றைப் பார்ப்பதில் ஆனந்தம் ஏற்படுவதால்தான் திரும்பத் திரும்பப் பார்க்கிறோம். ஆனந்தத்தை அளிக்கவல்லதில் தலை சிறந்தது அன்புதான். அன்பு தருகிற ஆனந்தத்துக்கு ஸமமாக எதுவும் இல்லை. இதனால் ஆனந்தத்தைத் தரும் அன்பே அழகாகிவிடுகிறது;திரும்பத் திரும்ப ஆசையோடு பார்க்கப் பண்ணுகிறது.

---



## அம்பாள் : அழகு - அன்புகளின் முழுமை

அம்பாள் எப்படிப்பட்டவள்?

அவள் அழகே உருவானவள் என்பதுபோல அன்பே உருவானவளும்!அன்பே அழகாக ஆகி உருவானவள். எந்த பக்ஷணமானாலும் அதற்குத் தித்திப்பைத் தருவது சர்க்கரை என்கிறமாதிரி, நாம் எங்கெங்கே எந்தெந்த அழகைக் கண்டாலும் அதையெல்லாம் அழகாக்கும் தாய்ச் சரக்கு அவள்தான்!பிரம்ம சக்தியான அவளுடைய பூர்ண அழகின் துளித்துளிதான் மற்ற அழகுகளிலெல்லாம் தெறித்திருக்கிறது. இப்படியே நாம் பார்க்கிற அத்தனை அன்புகளுக்கும் மூலமாயிருப்பதும் அவள்தான்.

அவளுடைய அருள் உள்ளமேதான் அழகு வெள்ளமான ரூபமாக ஆகியிருக்கிறது.

அன்பு என்பது ரூபமில்லாத தத்வம். நாம் பார்க்கிற லோகத்திலே அன்போடு இருப்பது வெளி ரூபத்தில் அழகில்லாமலும் இருக்கிறது;அன்பு இல்லாமலிருப்பது

வெளி ரூபத்தில் அழகாகவும் இருக்கிறது. ஆனாலும் அன்பு வந்துவிட்டால் எந்த ரூபத்திலும் அது அவயவ லக்ஷணத்தை மீறி ஒரு ஸௌந்தர்ய சோபையைக் கொடுத்து விடுகிறது. அதாவது அரூபமான அன்பு எப்படியோ ரூபத்திலேயே பிரதிபலித்துவிடுகிறது. இப்படி ரூபத்தில் பிரதிபலிக்க மட்டும் செய்யாமல் அன்பே ரூபமாக, அன்பே அவயவங்களாக ஆனதுதான் அம்பாள். அரூப அன்பே அவளுடைய ஸ்வரூப ஸௌந்தர்யமாயிருக்கிறது. அவளிடம் அன்பின் முழுமை அழகின் முழுமையாக ரூபம் கொண்டிருக்கிறது.

அரூபமாக இருக்கிற தன்னைக் குழந்தைகள் புரிந்து கொள்ள முடியவில்லையே என்பதற்காகத்தானே பரப்ரஹ்ம சக்தியானது அம்பாள் என்ற ரூபமே எடுத்துக் கொண்டிருப்பது?இப்படி அன்பு எண்ணத்தின் மேலேயே எடுத்துக் கொண்டதால் அந்த ரூபமே ப்ரேமஸ்வரூபம் தானே? பார்ப்பதற்குப் பரம ஸௌந்தர்யமான ரூபமாக இருந்தால்தான் பாமர ஜனங்களிலிருந்து, கொஞ்சங்கூடப் இருந்தால்தான் பாமர ஜனங்களிலிருந்து கொஞ்சங்கூடப் பக்குவமில்லாதவர்களிலிருந்து, எல்லாரும் இந்த தேசத்தின் சின்ன அழகுகளை விட்டுத் தன்னிடம் திரும்புவார்கள் என்பதால்தான் அவள் பரம லாவண்யமான சரீரத்தை எடுத்துக் கொண்டாள். அவளுடைய காருண்யத்தினாலேயே உண்டான லாவண்யம் அது! காருண்யத்தின் லாவண்யமே அம்பாளுடைய சரீரம். மநுஷ்யர்கள் விஷயத்தில் உள்ளன்பும் வெளி அங்க லக்ஷணமும் ஸம்பந்தப்படாமாதிரி இல்லாமல் உள்ளன்பே வெளி அவயவ அழகாக ஆன உருவந்தான் அம்பிகை;குறிப்பாக ஸ்ரீவித்யா அதிதேவதையான த்ரிபுரஸுந்தரியாயிருக்குகம் அம்பாளின் ரூபம். திரிலோகத்திலும் அவள்தான் மஹா அழகு என்பதால்தான் த்ரிபுரஸுந்தரி என்று பேர். அதற்கு வேறே தத்வார்த்தங்களும் உண்டு. அது இருக்கட்டும்....

அழகும் அன்பும் ஒன்றுதானென்பதைப் பல வார்த்தைகள் காட்டுகின்றன. 'ஸு'என்கிற அடைச்சொல்லுக்கு நல்லது, அழகானது என்று இரண்டு அர்த்தமும் இருக்கிறது. ஸுகணம் என்றால் நல்ல குணம்; ஸுரூபம் என்றால் அழகான ரூபம். நல்லது, நல்லது என்றால் எது நல்லது?அன்புதான் மிகவும் நல்லது. 'அன்பே சிவம்'

என்கிறோம். சிவம் என்றாலும் சுபம் என்றாலும் ஒன்றுதான். சுபம் என்றால் நன்மை. நல்லதுகளில் உயர்ந்த நன்மை எது?அன்புதானே?ஆகையால் சுபம் என்றால் அன்பு. 'சுப'த்திலிருந்துதான் 'சோபை'என்ற வார்த்தை வந்திருக்கிறது. 'சுப சோபனம்'என்று சேர்த்துக் சொல்வது வழக்கம். 'சோபை'என்றால் 'அழகு'. 'சுப'த்திலிருந்து 'சோபை'என்கிறபோது அன்பிலிருந்தே அழகு வருகிறதென்றாகிவிடுகிறது!சுப நிகழ்ச்சிகளில் கல்யாணம் என்பதை முக்யமாகச் சொல்கிறோம். 'சுப முஹூர்த்தப் பத்திரிகை'என்று இன்விடேஷனில் போடுகிறோம்.

'கல்யாணம்'என்ற வார்த்தைக்கு உள்ள அநேக அர்த்தங்களில் ஒன்று 'நல்லது', அதாவது 'Ü¡¹';Þ¡ªù£¡Á 'Üö°'! 'Cõ‹-ú§‰îó‹'â¡Á ªê£™õ¶ ÞŠð®ˆî£¡ ãŸð†ì¶. Cõˆ¶‚«è ú§‰î«ó„õó¡ â¡Á‹ «ð˜ Þ¼‚Aø¶ àœ÷ˆF¡ Ü¡«ð à¼õˆF™ ú§‰îóñ£A ãŸð†ì Í˜ˆF!

அம்பாள் இப்படி அன்பே அழகானவளானதால் தான் அவளுடைய அழகு வெள்ளத்தில் ஊறியிருப்பதே அன்பு வெள்ளத்தில் கரைவதாகவும் ஆகிறது!அது அப்படியே அவளுடைய உள் நிலையான அத்வைதத்துக்கு, ஆத்மானந்தத்துக்கு அழைத்துக்கொண்டு போய்விடுகிறது!அன்புக்கு வேறேயாக அழகு இருந்தால் அது தாற்காலிக ஆனந்தத்தோடு முடிகிறது. அன்பே அழகாகிவிட்டால்?பராசக்தியின் அன்பு அல்லது அருளைவிட சாச்வதப் பேரானந்தமான மோக்ஷத்துக்கு என்ன உபாயமிருக்கிறது?இந்த அன்பையே நாம் அழகாக அநுபவிப்பதால்தான் அது மோக்ஷோபாயமாகிறது.

அன்பே சிவமாவ(து) ஆரும் அறிந்தபின்

அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே (-திருமந்திரம்)

என்றபடி, இந்த அமைப்பில் நன்றாக உருகிக் கரைந்தபின் அதுவாகவே, அவளாகவே, அத்வைதமாகி விடலாம். ''பவாநித்வம்'' (ச்லோ. 22), ''ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா'' (ச்லோ. 99) ஆகிய ச்லோகங்களில் இந்த அகண்ட பரிபூர்ண நிலையைத்தான் சொல்லியிருக்கிறது.

ஆகையால் அழகு வழியாக மோக்ஷமே பெறலாம் என்பது அதிசயோக்தியே இல்லை.

ஸாக்ஷாத் அம்பாள் எப்படியிருப்பாள் என்பதை நாம் எப்படி ரூபப்படுத்திப் பார்ப்பது? பச்சையாயிருப்பாளா, சிகப்பாயிருப்பாளா, கறுப்பாயிருப்பாளா?இந்த எல்லாக் கலரிலும்தான் அவளுக்கு ரூப பேதங்கள் சொல்லியிருக்கிறது. பிரம்மாவுக்கு நாலு தலை, சிவனுக்கு ஐந்து தலை, ஸுப்ரஹ்மண்யருக்கு ஆறு தலை என்கிற மாதிரி அவளுக்கு எத்தனை தலை என்று வைத்துக்கொள்வது?விச்வரூபத்தில், விராட் ரூபத்தில் ஆயிரம் தலை - "ஸஹஸ்ர சீர்ஷம்"- என்று வேதம் சொல்கிறதென்றால் அந்த மாதிரிக் கணக்குப் போட்டுக் கண்ணுக்குள் கொள்கிற விதத்தில் நினைக்கவே முடியவில்லையே!இரண்டு கை மீனாக்ஷியிலிருந்து பதினெட்டுக் கை மஹிஷாஸுரமர்த்தினி வரை அவளுக்குப் பல ரூபம், அந்தந்த ரிஷிகள் கண்ட விதத்தில், சொல்லியிருப்பதால் எத்தனை கை என்று கல்பித்துப் பார்ப்பது?சடைவிரி கோலமாக இருக்கிறாள் - அழகாகக் கிரீடம் வைத்துக் கொண்டிருக்கிறாள்;ஸர்வாபரண பூஷிதையாக இருக்கிறாள் - துணியே கட்டிக்கொள்ளாமல் ரத்தத்தைப் பூசிக்கொண்டு கபாலமாலையோடு திரிகிறாள் என்றெல்லாம் வித்யாஸமாகச் சொன்னால் எப்படி அவள் ரூபத்தை பாவிப்பது?

இப்படிக் கேட்டால்-

எந்த ரூபமானாலும் அன்புதான் அப்பா, முக்கியம். அதனால் பரம அன்புருவாகக் கல்பித்துப் பார்.

"பரம அன்பு என்றால் எப்படியிருக்கும் தெரியல்லியே!"

எங்கேயாவது ஒரு நல்ல ஆத்மா ஒரு பிரதிப் பிரயோஜனமும் எதிர்பார்க்காமல் மனஸார அன்னதானம் பண்ணினால் அங்கே போய் நின்று அவன் முகத்தைப் பார். தானம் வாங்கிக் கொள்கிறவர்களைவிட, போடுகிற அவனுக்கு எத்தனை ஆனந்தம் உண்டாகிறது, பார்!அதைப் பார்த்தால் உன் மனஸ்கூடக் கொஞ்சம் உருகுகிறதல்லவா?இப்படி ஒரு வேளை, இரண்டு வேளை நூறுபேருக்கு, ஆயிரம் பேருக்குப் போடுகிறவன் முகத்தில்

இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கிறதென்றால் லோகத்திலுள்ள கோடானுகோடி ஜீவன்களுக்கும் - மஹாபாவங்களைச் செய்கிற - காரியத்தில் செய்யாவிட்டாலும், மனஸினாலாவது நினைக்கிற - நம் அத்தனை பேருக்கும் கல்பகோடி காலமாக வேளாவேளை சோறு போடுகிறவளின் அன்பும் ஆனந்தமும் எப்படியிருக்கும் என்று னீஸூபறீமீ வீஜீறீஹ பண்ணி (பெருக்கி)ப் பார்த்துக்கொள்! அதுதான் அப்பா, அம்பாள் ரூபம்!

காருண்யம் தானப்பா லாவண்யம். பாக்கி சரீர அழகு ஒரு அழகல்ல. கொஞ்சம் கோபம் வரட்டும், அழுகை வரட்டும். அப்போது கண்ணாடியில் நம் மூஞ்சி தட்டுப் பட்டால் நமக்கே பார்க்கப் பிடிக்கவில்லை. துளி ஜ்வரம் வந்தால் சரீர அழகு போய்விடுகிறது. கோபம், அழுகை, நோய், நொடி எதுவுமில்லாமல் அன்பே உருவாயிருக்கிற அம்பாளுடைய சரீரமொன்றுதான் நிஜ அழகு. ஆனதால் நம் கல்பனையில் அன்பை எத்தனை உத்க்ருஷ்டமாக [உயர்வாக]உருவமாக்கிப் பார்க்கமுடிகிறதோ அப்படிப் பாரப்பா!அதுதான் அம்பாள் ரூபம் என்று வைத்துக்கொள்.

"சாந்தமாக இருக்கிற பிரம்மத்தின் அத்தனை சக்தியும்தான் அம்பாள் என்று சொல்லிவிட்டு, அதை அன்பு என்று சொல்லிவிட்டு, அதை அன்பு என்று சொல்லிவிட்டு, அதை அன்பு மட்டும் ஏன் விசேஷித்துச் சொல்ல வேண்டும்!லோகத்தில் கஷ்டம், த்வேஷம், பயம் எல்லாம் இருக்கிறதென்றால் இதெல்லாமும் பரமாத்ம சக்தியிலிருந்து வருவதுதானே?பின்னே அதை - அவளை - அன்பாக மட்டும் எப்படிச் சொல்வது?"

அது ஸரி, ஆனால் லோகத்தில் தாயன்பு, ஸஹோதர பாசம், ஸ்நேஹிதர்களின் மைத்ரி [நட்பு], புருஷன் பெண்டாட்டியின் பிரேமை, அடியார்களின் பக்தி, மஹான்களின் கருணை என்று பல ரூபங்களில் அன்பும் இருக்கோ இல்லியோ? இது எல்லாமும் பராசக்தியிடமிருந்து, அவளுடைய அன்பிலிருந்து வந்ததுதானே?அதனால் இப்படித் தியானம் பண்ணு. எல்லாமாக - கோபமாக, பயமாகக்கூட - அவள் இருந்தாலும் உனக்கு அப்படியெல்லாம் பாவனை

பண்ணினால் மனஸுக்கு சாந்தி ஸௌக்யங்கள் ஏற்படவில்லையே!இப்படி அன்புருவாக பாவித்தால்தானே உன் மனஸுக்கு ஹிதமாக, பிரியமாக, ஸந்தோஷமாக இருக்கிறது?அதனால் உன் லிமிடேஷனால், உனக்கு ஏற்க, லிமிட் இல்லாத பராசக்தியை அன்பு என்று லிமிட் பண்ணு. ஆனால் அந்த அன்பு லிமிட் இல்லாதது, எல்லையில்லாதது என்று தியானம் பண்ணு. கோமுகியிலிருந்து கங்கா ஸாகரம் வரை அவ்வளவு தூரமும் கங்கை கங்கைதான். ஆனால் அது ஹிமோத்கிரியில் மேட்டில் பள்ளத்தில் "ஹா ஹூ"என்று விழுகிற இடங்களில் உன்னால் ஸ்நானம் பண்ணமுடியுமா?ஸமநிலமாக அது பாய்கிற இடங்களில்கூட ரொம்ப ஆழமில்லாத இடத்தில், சுழல் இல்லாத இடத்தில் முதலை இல்லாத இடமாகப் பார்த்துத்தானே ஸ்நானம் பண்ணுகிறாய்?எல்லாம் கங்கையானாலும் உன்னால் அதை எங்கே ஸௌக்யமாய் அநுபவிக்க முடிகிறதோ அங்கேதானே இறங்குகிறாய்?அந்த மாதிரி பராசக்தி நல்லது கெட்டது எல்லா குணங்களும் என்றாலும், உனக்கு ஸௌக்யமாக ஆராதிக்க வேண்டுமானால் அவளை ரொம்ப நல்லவள், அன்பானவள் என்றே தியானம் பண்ணு. பெரியோர்களெல்லாம் இதனால்தான் அவளை முக்யமாகப் பரமாத்மாவின் க்ருபா சக்தி என்றே வைத்திருக்கிறார்கள்.

பரமாத்மா-பராசக்தி என்கிற ஸர்வலோக ராஜா-ராணிகளை தாய் தந்தையாக சிவன்-அம்பாள என்றும், விஷ்ணு-லக்ஷ்மி என்றும் வழிபடும்போது ஸித்தாந்த சைவத்தில் அம்பாளை முக்கியமாக சிவத்தின் அருளாற்றல், "அருளது சக்தியாகும் அரன் தனக்கு"என்றே சொல்லியிருக்கிறது. வைஷ்ணவ சாஸ்திரங்களிலும் மஹா விஷ்ணுவைக் கருணை பண்ணும்படியாகத் தூண்டிவிடும். 'புருஷகாரம்'லக்ஷ்மியே என்று சொல்லியிருக்கிறது. 'ஸ்ரீவைஷ்ணவம்'என்பதாக ஸ்ரீயான லக்ஷ்மியின் கருணையை முதலில் வைத்தே மதத்துக்குப் பேர் கொடுத்திருக்கிறார்கள்.

பராசக்தியின் அநேக குணங்களில் ஒன்றுதான் அன்பு என்பதுகூட ஸரியில்லை. அதுதான் பிரதானமான குணம். இந்த அன்பைக் கறுப்பு வெல்வெட்டில் வைத்த வைரம் மாதிரிப் பளிச்சென்று எடுத்துக்காட்டுவதற்கேதான் மற்ற

குணங்களைக் கொண்டிருக்கிறாள்.

ஆகையால்தான் கோர ரூபங்களில் வந்தாலும் அன்பு வெள்ளமாக, அழகு வெள்ளமாக இருக்கிறாள். இல்லாவிட்டால் பெங்காலிலும் மலையாளத்திலும் இப்படி ஸகல ஜனங்களும் காளி போன்ற ரூபங்களை "மா!மா"!, "பகவதி!"என்று பக்திபண்ணிக் கொண்டிருப்பார்களா? அப்படிபட்டவள் ஸௌந்தர்ய ரூபத்திலேயே வந்துவிட்டால் கேட்பானேன்?

நம்முடைய காம க்ரோதாதி அழுக்குகள், அழுகை, பயம் - எல்லா பயங்களிலும் பெரிய ஸம்ஸார பயம் - ஆகியவற்றை அடித்துக் கொண்டு போய்விடும் ஸௌந்தர்ய வெள்ளமாக அம்பிகை இருக்கிறாள். அந்த அழகே நமக்கு ஸகல ஸௌபாக்யங்களையும் அளித்துவிடுகிறது. 'பகம்'என்பதிலிருந்து 'பாக்யம்'வந்திருக்கிறது. 'பகம்'என்றால் சிறப்பானது, excellence என்று அர்த்தம். எல்லா பகங்களும் எவரிடம் நிறைந்திருக்கிறதோ அவரே 'பகவான்';பெண் பாலானால், 'பகவதி'. 'பாக்ய'த்தை மேலும் மங்களமாகத் தெரிவிப்பதற்காக 'ஸௌபாக்யம்'என்பது. 'ஸு'என்றால் நல்லது. 'ஸு'விலிருந்து வருவது 'ஸௌ'. ஸுகம்-ஸௌக்யம் என்கிறோமல்லவா? ஸௌபாக்யங்கள் யாவும் ஸௌந்தர்ய ரூபத்தில் ஒன்று கூடியிருக்கிற மூர்த்தியே த்ரிபுரஸுந்தரியான அம்பாள். ஆகையினால் அவளுடைய ஸ்வரூபத்தை ஸ்மரிப்பதாலேயே ஸகல ஸௌபாக்யங்களும் - க்ஷேமங்களும் - நமக்குக் கிடைத்துவிடும் "தநோது க்ஷேமம் ந:தவ வதந ஸௌந்தர்ய லஹரீ"என்றே ஆசார்யாள் சொல்கிறார். "உன் முகத்திலிருந்து பொங்கி வழியும் அழகு வெள்ளம் எங்களுக்கு க்ஷேமங்களை உண்டாக்கட்டும். அம்மா!"என்கிறார். க்ஷேமங்களை உண்டாக்குவது என்பதால் அவளுடைய ஸௌந்தர்யமே ஸௌபாக்ய ப்ரதம் [நற்பேறுகளை நல்க வல்லது]என்று தெரிகிறது.

"க்ஷேமங்களை எங்களுக்கு உண்டாக்கட்டும்"என்கிறார். "ந:"என்றால் 'எங்களுக்கு'. ஆசார்யாள் தனக்கு மட்டும் க்ஷேமத்தைக் கேட்கவில்லை. நம் எல்லோருக்கும்

கேட்கிறார். எல்லோருக்கும், தரிசனம் பண்ணமுடியாதவர்களுக்கும், 'எல்லோர்க்கும் பெய்யும் மழை' என்பது போல க்ஷேமம் உண்டாகட்டும் என்று ஸர்வ பூத தயையினால் பிரார்த்திக்கிறார். காயத்ரீ மந்திரத்திலேயே இப்படித்தான் எல்லாருக்கும் புத்தி நல்லதில் தூண்டிவிடப்படவேண்டும் என்று பிரார்த்தனை வருகிறது.

குயுக்திக்காரன் ஒருத்தன் இருந்தானாம். "எல்லோருமாகச் சேர்த்துத்தானே பிரார்த்தனை இருக்கிறது?அதனால் எவனாவது ஒருத்தன் காயத்ரீ பண்ணிவிட்டால் போதுமே!நான் ஏன் பண்ணணும்?"என்றானாம்.

அது ஸரியில்லை [சிரித்து] அந்த எவனோ ஒருத்தன் இன்னொருத்தனாக இருக்கட்டுமே என்று அத்தனை பேருமே நினைத்துவிட்டால்?

"எல்லோருக்கும்"என்று ஏன் சொல்லியிருக்கிறதென்றால் காயத்ரீ ஜபிக்க அதிகாரமில்லாத பல பேர் இருக்கிறார்கள். ஸ்திரீகள், குழந்தைகள், ரொம்பவும் நோய் வாய்ப்பட்டிருப்பவர்கள், பிணத் தீட்டிலிருப்பவர்கள் காயத்ரீ பண்ணுவதற்கில்லை. இப்படிப்பட்டவர்களை உத்தேசித்துத்தான் "எங்களுடைய புத்தியை"என்று இருப்பது. அதிகாரமிருந்தும், வேறே எந்தவிதமான தவிர்க்க முடியாத தடையும் இல்லாதபோது, "ந:"என்றிருப்பதைக் காட்டி யுக்தி பண்ணி ஜபிக்காமலிருந்தால், ஸ்வாமியும் அதற்குமேலே யுக்தி பண்ணி "நஹி" [அநுக்ரஹமில்லை]என்று இருந்துவிடுவார்!.....

"எங்களுக்கு, அதாவது ஸமஸ்த ஜனங்களுக்கும், உன் வதன ஸௌந்தர்யம் க்ஷேமத்தை உண்டுபண்ணட்டும்"என்று அம்பாளிடம் ஆசார்யாள் வேண்டிக் கொண்டதைச் சொன்னேன். கண்ணுக்கு நன்றாக இருப்பதே க்ஷேமகரமாகவும் இருக்கிறதென்றால் அழகும் அருளும் ஒன்றாயிருக்கிறதென்று தெரிகிறது. ஜனங்களுக்கெல்லாம் க்ஷேமம் உண்டாக்கணும் என்ற அம்பாளின் கருணை ஹ்ருதயமே ஸௌந்தர்ய லஹரியான ரூபமாகி இருக்கிறது - அருள் உள்ளமே அழகு வெள்ளமாயிருக்கிறது - என்று

நிச்சயமாகிறது.

---



## அம்பிகையின் வடிவேயான துதி

அவளுடைய குணம் வேறே, ரூபம் வேறே இல்லை. இந்த ஸ்தோத்ரமும் அவளுக்கு வேறே இல்லை. அவளுடைய அனந்த கல்யாண குணங்கள் கேசாதி பாதமாக அவயவங்களில் ஒரு ரூபம் எடுத்துக் கொண்டது போலவே, அந்த அவயவ வர்ணனையைக் கேசாதி பாதம் பண்ணியுள்ள இந்த ஸ்தோத்ரமாகவும் வாக்கு ரூபம் - சொல்லுருவம் - எடுத்துக் கொண்டிருக்கிறது.

ஒரு ஸ்தோத்ரத்தை முடிக்கும்போது 'இதைப் பாராயணம் செய்தால் இன்ன பலன் கிடைக்கும்'என்று சொல்வது வழக்கம். அதற்கு 'பலச்ருதி' என்று பெயர். 'ஸௌந்தர்ய லஹரி'கடைசி ச்லோகமோ, வாங்மயீயாக - சொற் பிரபஞ்சம் முழுதுமாக - உள்ள அம்பாளிடமிருந்தே ஏதோ ஸ்வல்ப வாக்குகளை எடுத்து அவளுக்கே ஸ்தோத்ரம் என்று பண்ணிய அசட்டு ஸாஹஸம்தான் இந்த ஸ்தோத்ரம் என்று ஜகதாசார்யாள் ஒரே அடக்கமாகச் சொல்லி ஸமர்ப்பணம் பண்ணுவதாக இருக்கிறது. அதற்கு முந்தின ச்லோகந்தான் பலச்ருதி மாதிரியிருக்கிறது. பலச்ருதி 'மாதிரி'என்று சொல்கிறேனென்றால் 'இதைப் பாராயணம் பண்ணுவதால் இன்ன பலன்கள்'என்று அதிலும் சொல்லியிருக்கவில்லை. பொதுப்படையாக, 'உன்னை உபாஸிப்பவன் இன்ன பலன்கள் அடைகிறான்'என்றே சொல்லியிருக்கிறது. அவை என்ன என்று அப்புறம் அந்த ச்லோகத்திற்கு வருகிறபோது பார்த்துக்கொள்ளலாம்!இங்கே சொல்ல வந்தது, ஆசார்யாள் "இந்த ஸ்தோத்ர பாராயண பலன்"என்று போடவேண்டிய

இடத்தில் "அம்பாளை உபாஸிப்பதன் பலன்" என்று போட்டிருப்பதைத்தான். ஏன் அப்படிப் போட்டார்? இரண்டு காரணம் சொல்லலாம். ஆசார்யாளுக்கு அஹம்பாவ லேசமும் இல்லாததால் தாம் பண்ணிய ஸ்தோத்ரத்திற்கு அந்தப் பலன்களைத் தருகிற சக்தி இருப்பதாகச் சொல்லிக் கொள்ள எண்ணமில்லை என்பது ஒரு காரணம். இன்னொரு காரணம், இந்த ஸ்தோத்ரமே அம்பாளுடைய ஸ்வரூபந்தான், அவளுடைய சொல் வடிவந்தான்;ஆனபடியால் இதைப் பாராயணம் பண்ணுவதே அவளை உபாஸிப்பதுதான் - என்பதே. ஸ்தோத்ரமே ஸ்தோத்ரிக்கப்படும் தேவி ஸ்வரூபமாயிருக்கும்போது அதன் பாராயண பலனே தேவி உபாஸனையின் பலனைத் தரத்தானே செய்யும்? இதைத் தான் அந்த ச்லோகத்தில் குறிப்பால் உணர்த்தியிருப்பதாக அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

ஸாக்ஷாத் பராசக்தியின் ரூப ஸௌந்தர்யமே நம்முடைய பகவத்பாதாளின் வாக்[கு] ஸௌந்தர்யமாக அவதாரம் பண்ணியிருப்பதுதான் "ஸௌந்தர்ய லஹரி."

'தேவாம்ருதத்தில் ஊறப்போட்ட ரஸாளு'என்று நடுவிலே சொன்னேனே, அது இதைத்தான். அநுக்ரஹ ரஸம் நிறைந்த அழகு ரூப மாம்பழம் அம்பாள். அவளே அதைப் பாட ஆசார்யாளுக்குக் கொடுத்த வாக்கு தேவாம்ருதம். ஆசார்யாளின் கவிதா வாக்கான தேவாம்ருதத்தில் ரஸாளுவான அம்பாளின் அழகு - கனி போல [சிரித்து]கன அழகு ஊறி வருகிறது!

---



''ஆனந்த லஹரி''என்ற தலைப்பு;

'ஸௌந்தர்ய லஹரி'யின் பின் பாகம் அம்பாளுடைய அழகைச் சொல்கிறது. முன் பாகம் முக்யமாக அவளுடைய சக்தியைச் சொல்கிறது. பின் பாகம்தான் அஸல் 'ஸௌந்தர்ய லஹரி';முன்பாகம் 'ஆனந்த லஹரி'.

சக்தி மஹிமையை 'ஓஹோ'என்று போற்றியே முதல் ச்லோகம் ஆரம்பிக்கிறது. பின்னே 'சக்தி லஹரி'என்று தலைப்புப் போடாமல் 'ஆனந்த லஹரி'என்பானேன்? இந்த ஆனந்தம் 'சித்'என்ற அறிவிலிருந்து உண்டாகிறது. அந்த சித்-அறிவு என்னவென்றால் ப்ரஹ்மம் தன்னைத் தானே தெரிந்து கொள்வதான அறிவுதான். ஞானம் என்றால் அதுதான் ஞானம் ஸரி, தன்னைத் தானே தெரிந்து கொள்வது என்றாலென்ன?தன்னுடைய உள்நிலையான, ஆடாத அசையாத சாந்தத் தன்மையைத் தெரிந்து கொள்வதுதான் என்று அத்வைத சாஸ்திரம் முடித்துவிடும். ஆனால் சாக்த சாஸ்திரங்களில் - குறிப்பாக ஸ்ரீவித்யையில் - என்ன சொல்லயிருக்கிறதென்றால், இங்கேயும் அந்த ஆடாத, அசையாத சாந்தத் தன்மையைச் சொல்லியிருக்கிறது; கார்யமில்லாத, குணங்களில்லாத அந்த நிர்குண தத்வத்தைச் சொல்லியிருக்கிறது. அதோடுகூட, 'இத்தனாம் பெரிய கார்ய லோகத்துக்கும் அந்த ப்ரஹ்மமேதானே அடிப்படையாயிருக்கிறது?இதிலே உள்ள குணங்களெல்லாவற்றுக்கும் அதுதானே ஆதாரமாயிருக்கிறது?'என்ற விஷயத்தையும் [சாக்தம்]கவனிக்கிறது. கார்யலோகத்திற்கு ஆதாரமாக இருந்து நிர்வாஹம் பண்ணுவதென்பது ஒரு மஹா பெரிய சக்தியைக் கொண்டு தானே நடக்கக்கூடும்?சாந்த ப்ரஹ்மத்துக்கே இப்படிப்பட்ட மஹாசக்தி இருக்கிறது என்பதை வலியுறுத்தி ஸித்தாந்தம் பண்ணியிருக்கிறது.

அந்த ரீதியில் - 'ஸௌந்தர்ய லஹரி'யை சாக்த ஸ்தோத்ரமாகவே ஆசார்யாள் அநுக்ரஹித்திருப்பதால் அந்த ஸித்தாந்த ரீதியில் - பார்க்கும்போது ப்ரஹ்மத்தின் சித்தான தன்னைத்தானே அநுபவித்தறியும் ஞானமென்பது அதன்

உள் நிலையாயிருக்கும் அத்வைதமான சாந்தத்தின் அறிவாக இருப்பது மாத்திரமில்லை. அதோடுகூட த்வைதமான ப்ரபஞ்சம் வெளிப்படும்படியான ஆதாரமாயிருப்பதில் தான் எப்பேர்ப்பட்ட சக்தி மயமாக இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டிருக்கும் அறிவாகவும் இருக்கிறது. ப்ரஹ்மத்தின் ஞானாநுபவத்தில் இப்படி சக்தி மயமாக இருக்கிற 'ஆஸ்பெக்டு'க்கே சாக்தம் முக்யத்வம் தருகிறது. சக்தியை வைத்தே ஏற்பட்ட மதம் வேறே எப்படி இருக்கும்?அந்த சக்தியை சித் ஸ்வரூபமாக அது சொல்கிறது.

ஒருத்தருக்கே இரண்டு அறிவு இருக்க முடியாதாதலால் ப்ரஹ்மத்தின் உள் சாந்த அறிவும் அவள்தான் என்று சாக்தம் சொல்கிறது. ப்ரஹ்மம் ஸத்-சித் ஆனந்தமாயிருக்கிறதென்பதில் ஸத் என்கிற ஆதாரமான நித்ய தத்வமே சிவன், அதன் அறிவான சித்தே அம்பாள் என்கிறது. அறிவில்லாமல் ஒரு ஸத் இருப்பதென்பதோ, ஸத்யமான ஆதாரமில்லாமல் ஒரு சித் இருப்பதென்பதோ நினைத்துக் கூடப் பார்க்க முடியாத விஷயம்;இல்லையா?அதனால் ஸத்-சித் என்ற சிவ-சக்தி எப்போதும் சேர்ந்திருப்பவர்கள்;ஒருத்தரில்லாமல் மற்றவர் கிடையாது.

[ஸத்-சித்-ஆனந்தத்தில்]ஆனந்தம் என்பது என்ன?'ஆனந்த லஹரி'â¡Á «ðªó¡ø£™ Ü‰î Ýù‰îªñ¡ù â¡ð¶î£«ù ï‹ «èœM?Šóyñ‹ î£¡ C˜ Ì˜íñ£è Þ¼Šð¬î ÜP‰¶ Ü¸ðMŠðF™ ªðÁAø ªðKò G¬ø¾î£¡ Ýù‰î‹. Ü˜¬õîŠð®, Šóyñ‹ î¡Â¬ìò G˜°íñ£ù ê£‰î G¬ôJ¡ ë£ù¸ðõ˜F™ ªðÁAø G¬ø¾î£¡ ÞŠð®Šð†ì Ýù‰î‹.

ஸ்ரீவித்யையும் இதை ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் சித் விஷயமாகச் சொன்னாற்போலேய இங்கேயும் சக்தி விலாஸத்திற்கு முக்யம் கொடுத்து, அதையும் சேர்த்துச் சொல்கிறது. என்ன சொல்கிறதென்றால், 'ப்ரஹ்மத்தின் அறிவாக இருக்கப்பட்ட சித் தன் சக்தியை வெளிப்படுத்தி த்வைதப் பிரபஞ்ச லீலை செய்வதிலும் நிறைவைப் பெறுகிறது;அதனால் சிதானந்தம் என்பது சக்தி விலாஸ ஆனந்தமுந்தான்'என்கிறது.

ஆனாலும் ஒன்று கவனத்துக்கு வருகிறது. சிவானந்தம், சாந்தானந்தம் என்பது போல சக்த்யானந்தம் (சக்தியான ந்தம்)என்று வழக்கில்லை. சிவ சப்தமும் சாந்தமான ஸத்வஸ்துவைக் குறிப்பதனால் சிவானந்தம் என்பதும் சாந்த அநுபவ ஆனந்தந்தான். ப்ரஹ்மானந்தம் என்கிற போதும் சாந்தமான ஆனந்தத்தைத்தான் நினைக்கிறோம். ஆத்மானந்தம் என்னும்போதும் இப்படியே சக்தி, குணம், கார்யம் ஆகியவற்றை ஸம்பந்தப்படுத்தாமல் சாந்தமாக, நிர்குணமாக, நிஷ்க்ரியமாக இருக்கும் அநுபவமாகவே நினைக்கிறோம். ஏனப்படி என்றால் - ஒரு சக்தி இருக்கிறதென்றால் அது இருப்பது எப்படித் தெரியும்?அதைக் காட்டி (வெளிப்படுத்தி)க் கார்யம் பண்ணினால்தான் தெரியும். சும்மாயிருந்தால் எப்படி சக்தி தெரியும்? சக்தியின் அநுபவம் தெரியும்? சக்தியிருப்பதை அநுபவித்தறிய முடியும்? ஜீவாத்மாக்களான நம்மைப் பொறுத்தமட்டில், இப்படிக் கார்யத்திலே போனோமானால் நம் உள்நிலையான சாந்தத்தைத் தெரிந்து கொள்ளவே முடிவதில்லை. கார்யத்தில் போகும்போது நமக்கு சாந்தி கலைந்து விடுகிறது. வெளியிழுப்புக்களிலேயே இழுபட்டுக் கொண்டு ஸதாவும் சஞ்சலப்படும்படி ஆகிறது. 'இது ஓயாதா?கார்யமில்லாமல் அமைதியாக ஆகமாட்டோமா?'என்று இருக்கிறது. ஆசார்யாள் அத்வைத ஸித்தாந்தம் பண்ணிய போது அதனால்தான் கார்யப் பிரபஞ்சத்தை ஒரு மாயமான கானல் நீராகப் பார்த்து, அடியோடு ஒதுக்கிவிட்டு, சாந்தமான ஆத்மாவிலேயே நிலைத்து நிற்கும்படிச் சொன்னார். அப்போதுதான் ஜீவன் ப்ரஹ்மமாகவே இருப்பதும். அத்வைதம் சொல்லும் கார்யமில்லாத சாந்த ப்ரஹ்மமாகத்தான் ஜீவன் இருக்க முடியுமே தவிர ஸகல கார்யத்திற்கும் மூலமான ஸர்வசக்தியாக இருக்க முடியாது என்பது வெளிப்படை. இப்படிச் சாந்தத்திலே ஜீவனும் ப்ரஹ்மமும் அபேதாமாக ஐக்யமாகிற மோக்ஷத்தை ஸ்ரீவித்யாதி (ஸ்ரீவித்யை முதலான)சாக்த தந்த்ரங்களில் சிலவும் சொல்கின்றன. ஜீவாத்மாவுக்கு இப்பேர்ப்பட்ட மோக்ஷத்தைப் பராசக்தியே அநுக்ரஹிப்பதாகவும் அவை சொல்கின்றன. இவ்வாறு ஜீவாத்மாவுக்கு முடிந்த முடிவான பூர்ணானந்தம் சக்தியில் இல்லாமல், சாந்தத்திலேயே இருப்பதால்தான் சிவானந்த-சாந்தானந்தங்களே சொல்லப்படுகின்றன;சக்த்யானந்தம்

என்று ஒன்றைச் சொல்வதில்லை.

ஆனால் சாக்தத்தில் 'சிதானந்தம்'என்கிறபோது அது முக்யமாக சக்த்யானந்தந்தான்.

சின்மயமாக, பேரறிவாக ப்ரஹ்மம் இருப்பதன் ஆனந்தமே சிதானந்தம். அதேதான் ஞானானந்தம் என்பதும். சாக்தத்தில் இந்தச் சிதானந்தத்தைச் சொல்லும் போது அந்த சாஸ்த்ரப்படி அம்பாளே சித் ஸ்வரூபிணியானதால் அவள் தன்னுடைய சக்தி விலாஸத்தால் த்வைதப் பிரபஞ்ச லீலை செய்வதில் அடையும் நிறைந்த ஸந்தோஷமும் விசேஷமாகக் குறிக்கப்படுகிறது.

சக்தி ஸம்பந்தத்தை வெலளியிட்டுச் சொல்லாமல் 'ஏன், எப்படி?'என்று சொல்லத் தெரியாத ஒரு மாயையாலேயே த்வைதப் பிரபஞ்சம் ஏற்படுகிறது என்று சொல்கிற அத்வைத சாஸ்த்ரத்தில் சிதானந்தமும் சாந்தானந்தமே தான். சாக்தத்திலேயோ அம்பாள் தன்னுடைய லீலானந்தத்திற்காகவே பிரபஞ்ச வியாபாரம் பண்ணுகிறாள் என்று சொல்லி, உள்ளும் வெளியும் ஸகலமுமான அவள் சாந்தமான கார்யமில்லாத உள் ஞானம், சக்திமயமான கார்யமயமான வெளிஞானம் இரண்டிலும் ஆனந்திக்கிற சிதனந்த ரூபிணியாயிருக்கிறாளென்று சொல்லியிருக்கிறது.

அத்வைதப்படி பரப்ரஹ்ம தத்வத்துக்கு வெளி ஞானம் வராது, வரமுடியாது, வரக்கூடாது. அதை த்வைதத்தோடு (வெளியில், அதாவது தனக்குப் புறம்பாக, ஒன்று இருப்பதுதான் த்வைதம்.) ஸம்பந்தப்படுத்தினாலே இழுக்கு, அபசாரம்!சாக்த்தத்தில் அப்படியில்லை. லீலானந்த ரஸாஸ்வாதத்துக்காக (சுவையைப் பருகுவதற்காக)அசையாத அந்தர்முக (உள்முக)ப்ரஹ்மம் அசைந்து கொடுத்து பஹிர்முகமாகவவதும் (வெளிமுகப்படுவதும்)சக்தி மஹிமையாகவே அதில் போற்றி ஸ்தோத்ரிக்கப்படும். நம்முடைய ஸ்தோத்ரத்தின் முதல் ச்லோகமே இந்த விஷயத்தைத்தான் 'ஓஹோ'என்று போற்றிப் புகழ்கிறது.

ஜீவாத்மா தன்னுடைய தனி சக்தி கார்ய ரூபத்திலேயே தெரிவதால், சாந்தத்தைக் குலைக்கும் அதிலே சாந்தம் கண்டு நிறைவடைதற்கில்லைதான் என்றாலும் அம்பாளுடைய சக்தி விலாஸத்தை அவனும் ரஸித்து ஆனந்தப்படுவதற்கு

வழியாக சாக்த மதம் இருக்கிறது. அத்வைதத்தில், நமக்குப் புரிபட முடியாத மாயை என்று தள்ளிய த்வைதப் பிரபஞ்சத்தையே சாக்தமானது அம்பாள் பண்ணும் 'லீலை'என்று ரஸிக்கும் படியாகச் சொல்கிறது. ஆகையால், 'ஜீவன் ஸர்வ சக்தியாக அத்வைத ஐக்கியம் பெற முடியாது;அவன் சாந்த ப்ரஹ்மத்தில்தான் ஐக்கியம் பெறமுடியும்'என்றாலும், அவனுங்கூட அவளுடைய சிதானந்தமான சக்தி விலாஸ் ஆனந்தத்தை அவள் கூடவே தானும் பங்கு போட்டுக் கொண்டு அநுபவிக்க முடியும் என்று சாக்தம் காட்டுகிறது.

ஆசார்யாளைப்போல் அத்வைத அநுபூதி பெற்றவர்களும் இந்த மாதிரி நிலையில்தான் லோக கார்யங்கள் பண்ணியதும், பக்தி பண்ணியதும். ஆனாலும் ஒரு ஜீவனை சாந்த லக்ஷ்யத்திலேயே ஒரே குறியாகப் போகப் பண்ண வேண்டும் என்பதே அத்வைத சாஸ்திரங்களைப் பண்ணியவர்களின் லக்ஷ்யமாதலால் இந்த அம்சத்தை அவர்கள் விஸ்தாரம் செய்வதில்லை. அப்படிப் போக முடியாதவர்களுக்காக ஏற்பட்ட சாக்தம் முதலிய பக்தி ஸம்பிரதாயங்களில்தான் நன்றாக உடைத்து பகவத் லீலாநுபவ ஆனந்தத்தைச் சொல்வது. சில இடங்களில் இதுவே அத்வைதான ந்தத்துக்கும் மேலே என்றுகூடச் சொல்லியிருக்கும்.

சக்தியிலிருந்தே லீலை உண்டாவது. லீலை செய்வதிலேயே ஆனந்தம், பேரானந்தம். அதனால்தான் அம்பாளுடைய சக்தியைச் சொல்ல வந்த பாகத்துக்கே 'ஆனந்த லஹரி'என்று பேர் இருப்பது.

சக்தியையும் சித்தையும் 'ஐடென்டிக'லாகச் சொல்லியிருக்கிறது என்றேனல்லவா?அதற்கேற்க 'ஆனந்த லஹரி'ச்லோகம் ஒன்றில் (ச்லோ. 8)'சிதானந்த லஹரி'என்றே வருகிறது - "பஜந்தி த்வாம் தந்யா:கதிசந சிதாநந்தலஹரீ ம்"என்று. "ரொம்பவும் பாக்யசாலிகளாக இருக்கப்பட்ட சிலரே உன்னை சிதாநந்த ப்ரவாஹமாகத் தெரிந்து கொண்டு உபாஸிக்கிறார்கள்"என்று அர்த்தம்.

ஸௌந்தர்ய லஹரி - அழகு ப்ரவாஹம் - அம்பாளை ப்ரத்யக்ஷதர்சனம் பண்ணுகிறவர்களுக்குத் தான் தெரியுமென்றில்லாமல் ஆசார்யாளுடைய வர்ணனையைக் கொண்டே எல்லோரும் மனக்கண்ணால் பார்த்துத்

தெரிந்துகொண்டு அநுபவிக்கும்படிக் கிடைக்கிறது. ஆனால் அவளுடைய சக்தி லஹரியான சிதானந்த லஹரியோ "கதிசந தந்யா"என்று சொன்னபடி அபூர்வமான சில பாக்யசாலிகளுக்கே அநுபவத்தில் கிடைக்கிறது.

சித்-ஆனந்தம் என்கிற பெரிய தத்வம் நமக்குத் தெரியாமல், புரியாமல் இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும். அவளுடைய ஸௌந்தர்யமே நமக்கு ஆனந்தம் தரத்தானே செய்கிறது? அந்த ஸௌந்தர்ய ஸ்வரூப தரிசனமே பேரானந்தமான மோக்ஷபர்யந்தம் எல்லாம் தரக்கூடியதுதானே?அதனால் நம்மாலும் அறியக்கூடிய அதிலேயே த்ருப்தி, ஸந்துஷ்டி பெறுவோம்.

அத்வைதம், ஸ்ரீவித்யா சாஸ்த்ரம் இரண்டுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமை பற்றிச் சொல்ல நிறைய உண்டு.

ஒற்றுமை என்றால் ஒற்றுமைதான். ஒன்றாகப் போய் விடுவதுதான்!அப்படி ஸாதனாந்தத்தில் (ஸாதனை முடிவில்)ஜீவன் பிரஹ்மமாகவே ஒன்றி ஒற்றுமை அடைகிறான் என்று அத்வைதமாகவே முடிப்பதில் பிரஹ்ம வித்யா என்ற அத்வைத சாஸ்திரம், ஸ்ரீ வித்யா என்ற சாக்த சாஸ்திரம் இரண்டும் ஒற்றுமையாயிருக்கின்றன!முடிவான நிலை பற்றி ஒற்றுமயாகச் சொன்னாலும் ஸ்ருஷ்டியைப் பற்றி இரண்டும் கொஞ்சம் வேற்றுமையாக அபிப்ராயப்படுகின்றன. ஒன்று - ப்ரஹ்மவித்யை - 'விவர்த்த வாதம்'என்பதாகவு ம்;மற்றது - அதுதான் ஸ்ரீவித்யை - 'ஆபாஸ வாதம்'என்பதாகவும் சொல்கின்றன. 'விவர்த்தம்'என்றால் போலித் தோற்றம். கயிறு பாம்பு போலத் தோன்றுவது போலித் தோற்றம். கயிறுதான் நிஜம். பாம்பு பொய். கயிறு, பாம்பு என்று இரண்டு வேறு வேறாகவே இல்லை. அந்த நிஜமேதான் இந்தப் பொய்யாகத் தெரிகிறது. அப்படி நிஜ ப்ரஹ்மமே தான் பொய்யான ஜீவ ஜகத்தாகத் தெரிகிறது - என்பது அத்வைதக் கொள்கை. 'ஆபாஸம்'என்றால் ப்ரதிபிம்பப் பிரகாசம். ஸூர்யன் ஜலத்திற்குள் ப்ரதிபிம்பமாக ப்ரகாசிப்பது ஆபாஸம். இப்படித்தான் அகண்டமான சித்சக்தியே ஒரு கட்டுப்பாட்டுக்குள் ப்ரதிபிம்பித்து ஜீவ-ஜகத்துக்களாக ஆகிறது என்பது சாக்தக் கொள்கை. மூல ஸூர்யன் இல்லாமல் ப்ரதிபிம்பம் இல்லவேயில்லை. அதுவேதான் இப்படித் தெரிவது. அதாவது உள்ளூர

அத்வைதந்தான். ஆனால் வெளியிலே ஸூர்யன் வேறே, ப்ரதிபிம்பம் வேறே என்று இரண்டு இருக்கத்தானே செய்கின்றன?அநேக அளவுக்கு ப்ரதிபிம்பத்திற்கும் ஒரு ஸத்யத்வம் இருக்கத்தானே செய்கிறது?இதே மாதிரி ஜீவ-ஜகத்துக்களுக்கும் ஒரு ஸத்யத்வம் உண்டு என்று சாக்தம் சொல்கிறது. அத்வைதம் மாதிரி அவை 'மித்யை'(பொய்)என்று சொல்லவில்லை.

எப்படி எதற்காக மாயைத் தோற்றம் ஏற்பட்டது என்ற கேள்விக்கே இடமில்லாமல் அத்வைத சாஸ்திரம் அடித்துத் தள்ளுவதால் மித்யை என்று ஒதுக்கச் சொல்கிறது. சித்சக்தியே லீலா நிமித்தம் பலவாகப் பிரதிபிம்பித்து ஆட்டம் போடுகிறாள் என்று சொல்லும் சாக்த சாஸ்திரம், ஜீவ-ஜகத்தை வைத்துக்கொண்டே - நம்முடைய இந்த்ரியங்கள், ஜகத் தருகிற வெளி ஸாமான்கள் முதலியவற்றை உபகரணங்களாக உபயோகப்படுத்திக் கொண்டே - இவற்றை விட ரொம்ப நிஜமான, நிரந்தர நிஜமான ப்ரஹ்மத்தில் ஐக்யம் அடையவேண்டுமென்கிறது.

அந்த ஐக்யமான முடிவு ஸ்தானம்தான் நமக்கு வேண்டியது. நாம் ஸாதனை என்று எதுவும் செய்யக் கூடியதும் அதற்காகத்தான் ஆரம்ப ஸ்தானம் - 'நாம் எப்படி தனி ஜீவன் என்று உண்டானோம்?ஜகத் எப்படி உண்டாச்சு?'என்பது - பற்றி நாம் ஒன்றும் பண்ணிக் கொள்வதற்கில்லை! அது விவர்த்தமாயிருப்பதாலும் நமக்கு லாபமில்லை;ஆபாஸமாயிருப்பதால் நஷ்டமுமில்லை!அதனால் அங்கே இந்த இரண்டு சாஸ்திரங்களும் மாறுபட்டுப் பேசுவதற்கு 'இம்பார்டன்ஸ்' தர வேண்டாம். நடக்க வேண்டியதை, நடக்கப் பண்ணி முடிவாக அடைய வேண்டிய நிலையைப் பற்றி இரண்டும் ஒன்றாகவே சொல்வதால் அதையே எடுத்துக் கொள்வோம். மித்யை என்று எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டுப் போகக்கூடிய தீரர்கள் அப்படிப் போகட்டும். நாமோ குழந்தைகள்!சொப்பே நிஜம் என்று விளையாடுகிற குழந்தைகளாக அம்மாவுடன் விளையாடுவோம்! அவளே தர வேண்டியதுகளை அந்தந்த ஸமயத்தில் தந்து அப்புறம் அவளும் நாமும் ஒன்றாகிவிடும் அநுக்ரஹத்தைப் பண்ணுவாள்.

அத்வைத-சாக்த சாஸ்த்ரங்களின் ஒற்றுமை வேற்றுமைகளில்

'பேஸிக்'காக ஏதோ கொஞ்சம் சொன்னேன் இவ்வளவு போதும். ரொம்ப அதிகம் போனால் ஒரே அறிவாராய்ச்சி, எட்டாத தத்வங்களைப் பற்றிய 'ஹைபொதெடிகல்'(அறுதியிட்டு முடிவு செய்யாத) அபிப்ராயங்களையே முடிந்த முடிவு மாதிரி பிடித்துக் கொண்டு குஸ்தி பிடிக்கிறது என்றுதான் போகிறது. இப்போது நமக்கு விஷயம் அழகு ரூபமான தாயாராக இருக்கப்பட்ட அம்பாளிடம் அன்போடு மனஸைப் பதிப்பது. அதற்காகத்தான் 'ஸௌந்தர்ய லஹரி'யை எடுத்துக் கொண்டது. அதில் தவிர்க்க முடியாமல்தான் தத்வார்த்தங்கள் சொல்ல நேர்வது.

சுருக்கமாக தெரிந்துகொள்ள வேண்டியது - அத்வைதத்தில் 'ப்ரஹ்மம்'என்பதாகச் சொல்லப்படும் கார்யமில்லாத ஆதார தத்வத்தின் இடத்தில் 'சிவம்' என்பதை சாக்தம் சொல்கிறது. கார்யமில்லாவிட்டாலும் சின்மயமாக (சித்-மயமாக), அதாவது ஞானமயமாக இருப்பது ப்ரஹ்மம் என்பது அத்வைத வேதாந்தம். சாக்த ஸித்தாந்தத்தில் இந்த சித்தின் இடத்தில் சக்தியைச் சொல்லியிருக்கிறது. அவள் ஞானமயம் மட்டுமில்லை, சக்தி மயமுமானவள் என்று அழுத்திச் சொல்லி, அதனால்தான் அவளுக்கே சக்தி என்று பேர் கொடுத்திருக்கிறது. அத்வைத ப்ரஹ்மம் சாந்தமாக அப்படியே தன்னில் தானே அடங்கியிருக்கிறது. சாக்தத்திலோ சாந்த சிவனுக்கு உள்ளே உள்ள சக்தியை, ஜீஷ்ஷ்மீக்ஷீ-ஐ, மீஸீமீக்ஷீரீஹ்-ஐச் சொல்லி, அறிவோடுகூட ஆற்றலாகவும் இருக்கப்பட்ட அவளது விலாஸம் த்வைத லீலைகளாக வெளிப்படுவதைச் சொல்லியிருக்கிறது. அத்வைதத்தில், அதன் பெயரே காட்டுகிறபடி, ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யம், அதற்கு இன்னொன்றாக - த்வைதமாக - தெரிகிற எதுவும் மாயையால் ஏற்பட்ட பொய்த் தோற்றம் தான்;அந்த மாயையோடு ப்ரஹ்மத்திற்கு ஸம்பந்தம் கிடையாது;அந்த மாயை என்ன, எப்படி உண்டாச்சு என்பதெல்லாம் விளக்கமுடியாத புதிர். 'நமக்கு இந்த ஆராய்ச்சி வேண்டியதுமில்லை'என்கிறது. நமக்கு வேண்டியது மாயை அழிந்துபோய், இருக்கிற ஒரே ஸத்யத்தின் ஸாக்ஷாத்காரத்தை (பிரத்தியக்ஷஅநுபவத்தை)ப் பெறவேண்டியதுதான் என்று சொல்லி அதற்காக ஞான மார்க்கத்தை வகுத்துக் கொடுக்கிறது. சாக்தத்தில் சக்தி ஸஹிதமான சிவத்தின் இச்சையின் மீதே, லீலானந்த

நிமித்தமாக த்வைதம் உண்டாக்கப்பட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறது. இதிலேயும் மாயா சக்தி ஒரு அம்சமாக வருகிறது. அந்த விஸ்தாரங்கள் இப்போது வேண்டாம்.

ப்ரஹ்மமேதான் மாயையால் ஜீவனாகத் தோன்றுவது. ஞான மார்க்கத்தைப் பின்பற்றி மாயையைப் போக்கிக் கொண்டால் ஜீவனே ப்ரஹ்மமாவிடுவான் என்று அத்வைத சாஸ்திரம் சொல்கிறது. அடிப்படையில் ஜீவனும் சிவனும் ஒன்று, முடிவான மோக்ஷத்திலும் ஒன்றாகி விடுகிறார்கள் என்று சாக்தத்தில், குறிப்பாக ஸ்ரீவித்யா தந்த்ரத்தில் நன்றாகவே ஒப்புக் கொண்டிருக்கிறது. த்வைதம், விசிஷ்டாத்வைதம், ஸித்தாந்த சைவம் (சைவ ஸித்தாந்தம்), ஸ்ரீகண்ட சைவம் (சிவாத்வைதம்), காஷ்மீர சைவம் என்று உள்ள மத ஸம்பிரதாயங்கள் நான் சொன்ன ஆர்டரில் அத்வைதத்திற்கு அடியோடு வித்யாஸமாக ஆரம்பித்து, கொஞ்சங் கொஞ்சமாக அதற்குக் கிட்டப் போய், காஷ்மீர சைவம் ரொம்பவே கிட்ட வந்துவிடுகிறது. அதைவிடவும் அத்வைதமாகவே ஜீவ-ப்ரஹ்ம ஐக்யத்தை ஸ்ரீவித்யையில்தான் சொல்லியிருக்கிறது. த்வைத ஸ்ருஷ்டி பற்றித்தான் இரண்டுக்கும் வித்யாஸம். மோக்ஷத்தைப் பற்றி வித்யாஸமில்லை. அத்வைதத்தில் த்வைதமென்பது வெறும் மாயா கல்பிதந்தான் என்று ஒரே அடியாக அதை அடித்துத் தள்ளச் சொல்லியிருக்கிறது. ஸ்ரீவித்யை முதலான சாக்த தர்சனங்களில் அதை ப்ரஹ்ம சக்தியான பராசக்தியினால் உண்டாக்கப்பட்டதாகச் சொல்லியிருக்கிறது.

"Þˆî¬ù ˆ¬õîƒèÀ‹ Ü‰î å«ó ðó£ê‚F à‡«÷ ¹°‰¶ ªè£‡´ ð‡µ‹ M¬÷ò£†´î£¡. Þ¬î ÜŠð®«ò, M¬÷ò£†ì£è«õ ð£˜ˆ¶Š ðö°. ï¡ø£èŠ ðöAù ÜŠ¹ø‹, - c ñ†´‹ â¡ù?Ü«î ê‚FJù£™, ÜFL¼‰«î, Ü¬î, ªè£‡«ì à‡ì£ùõ¡î£«ù?Þ¶ ªîKò£ñ™ Üõ«÷î£«ù å¼ ñ£ò£ ê‚Fò£™ à¡¬ù «õ«øò£è G¬ù‚è, ªêŒF¼‚Aø£œ?Þ‰î ñ£ò£ ð‰îîˆ¬î»‹ Üõ¬÷Š Hó£˜ˆF˜¶, Þ‰î ÿMˆò£ ê£vFóŠð® ú£î¬ùèœ ð‡EŠ «ð£‚A, ªè£‡´M´;ñ£¬ò¬ò, èì‰¶ Ýî£ó ê‚FJ«ô«ò å¡Áð†´, ÜŠð®«ò Ü‰î Ýî£ó ê‚FJ«ô«ò å¡Áð†´, ÜŠð®«ò Ü‰î Ýî£ó ê‚F»‹ å¡Áð†®¼‚Aø Ýî£óñ£ù ê£‰îˆF™ Üˆ¬õîñ£è ä‚òñ£ŒM´"â¡Á ªê£™L º®ˆF¼‚Aø¶.

அத்வைதத்திற்கும் சாக்தத்திற்கும் - குறிப்பாக அதைச் சேர்ந்த ஸ்ரீவித்யா தந்த்ரத்திற்கும் - இப்படி நெருக்கம் இருப்பதால் நம்முடைய ஆசார்யாள் ஞானமாக அத்வைத வழியில் போக முடியாதவர்கள் லீலை என்று த்வைத ஸ்ருஷ்டியை வைத்திருப்பதிலிருந்து ஆரம்பித்து ஸ்ரீவித்யையை அநுஸரித்து, அப்யஸித்துக்கொண்டு போயே அத்வைதமான முடிவு நிலையில் சேரட்டும் என்று நினைத்திருப்பதாகத் தோன்றுகிறது. அதனால்தான் அவர் சிவன், விஷ்ணு ஆகியவர்கள் பேரிலும் ஸ்தோத்ரங்கள் பண்ணியுள்ள போதிலும் அவற்றில் சிவாகமங்கள், வைஷ்ணவ தந்த்ரங்கள் ஆகியவற்றின் கோட்பாடுகள் எதுவுமே இல்லை;பொதுப்படையான பக்தி உணர்ச்சியுடனும் காவ்ய த்ருஷ்டியுடனும் ஸ்தோத்திரிப்பதாகவே அவை இருக்கின்றன தேடிப் பார்த்தால் அப்படியும் ஒன்றிரண்டு (சைவ, வைஷ்ணவ சாஸ்திர விஷயங்கள்) அகப்படலாம் அவ்வளவுதான். ஆனால் 'ஸௌந்தர்ய லஹரி'யிலோ பெரிதாக ஒரு பாகம் - அதிலும் ஆரம்ப பாகம் - சாக்த சாஸ்த்ரமாகவே இருக்கிறது. அது ஆசார்யாள் பண்ணவில்லை என்று வைத்துக் கொண்டாலுங்கூட, அதோடு ஆசார்யாள் பண்ணிய பாகத்தைச் சேர்த்து, இரண்டும் சேர்ந்து ஒரே நூலாக இருப்பதாலேயே, "அத்வைத ம்;இல்லாவிட்டால், அடுத்தபடி ஸ்ரீவித்யை"என்றுதானே ஆகிறது? ஆசார்யாள் பண்ணியதாக உள்ள தேவீ ஸ்தோத்ரங்களில் இன்னும் சிலதிலும் ஸ்ரீவித்யா தந்த்ர ஸமாசாரங்கள் நன்றாகச் சொல்லியிருக்கிறது.

இந்த மடத்திலேயே - ஆசார்யாளுடைய மடங்கள் எல்லாவற்றிலுமேதான் - அம்பாளுக்கும் ஈச்வரனுக்கும் பூஜை பண்ணும்போது ஈச்வரனுக்கு சைவ தந்த்ரமாக இல்லாமல் வைதிகமாகவே பூஜை நடக்கிறது;அம்பாளுக்கும் வைதிக பூஜைதான் என்றாலும் ஸ்ரீவித்யா தந்த்ரத்தை நிறைய அநுஸரித்தே எங்கள் பத்ததி இருக்கிறது.

(சிரித்து) அத்வைதத்தையும் த்வைதத்தையுமே அத்வைதமாகச் சேர்த்து வைப்பதாக ஸ்ரீவித்யை இருக்கிறது!இரண்டாவது தெரியாமல் சாந்தமாக இருக்கிற அத்வைத சிவனையும், த்வைத ப்ரபஞ்ச காரணியான சக்தியையும் பிரிவறச் சேர்ந்தவர்களாக அது சொல்கிறது.

"லலிதாம்பா"என்று ஸஹஸ்ரநாமத்தை முடிப்பதற்கு முந்தைய நாமா "சிவ-சக்தி ஐக்ய-ரூபிணி"என்பதுதான்.

இங்கே 'ஸௌந்தர்ய லஹரி'யில் (அதன் முதற்பாகமான 'ஆனந்த லஹரி'யில்)ஆரம்ப ச்லோகத்தின் ஆரம்ப வார்த்தையே "சிவ:சக்த்யா யுக்த:"என்பதுதான்! ஸ்தோத்ரத்தின் ஆரம்ப வார்த்தை யாரோ எடுத்துக் கொடுத்த மாதிரி, டக்கென்று வந்தவிட்டது. அதனால் பீடிகை போட்டதை இதோடு நிறுத்திக்கொண்டு ச்லோகம், ச்லோகமாக அர்த்த சொல்ல ஆரம்பிக்கிறேன்.

---



## 'சிவ'எனத் தொடங்கும் சக்தித் துதி

சிவ:சக்த்யோ யுக்தோ யதி பவதி சக்த:ப்ரபவிதும்

ந சேதேவம் தேவோ ந கலு குசல:ஸ்பந்திதுமபி *

அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி

ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருத புண்ய:ப்ரபவதி **

[(சிவ:தேவ:) இறைவனான சிவபெருமான் (சக்த்யா யுக்த:பவதி யதி) சக்தியுடன் சேர்ந்திருப்பவராக இருந்தாலே (ப்ரபவிதும்) உலகை ஆக்குவதற்கு (சக்த:) ஆற்றல் படைத்தவராவர். (ஏவம் ந சேத்) இவ்வாறு சேர்ந்திராவிடில் (ஸ்பந்திதும் அபி) அசைவதற்குங்கூட (குசல:ந கலு) ஸாமர்த்தியமுள்ளவராக இல்லையல்லவா?(அத:) ஆகையால் (ஹரி ஹர விரிஞ்சாதிபி:அபி) திருமால், ருத்திரன், பிரம்மா முதலானோராலுங்கூட (ஆராத்யாம்) ஆராதனை செய்யப்படுபவளான (த்வாம்) உன்னை (அக்ருத புண்ய:)

புண்ணியம் பண்ணாதவன் (ப்ரணந்தும்) நமஸ்கரிக்கவோ (ஸ்தோதும் வா) ஸ்தோத்திரிக்கவோ (கதம் ப்ரபவதி) எங்ஙனம் முடியும்?]

நம்முடைய ஸ்தோத்ரம் இந்த ச்லோகத்துடன் ஆரம்பிக்கிறது.

இந்த ச்லோகத்தில் 'லோகங்கள் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பது, ரக்ஷிப்பது, ஸம்ஹரிப்பது ஆகிய காரியங்களைச் செய்யும் ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் முதலியோருக்கும் மேற்பட்ட சக்தி அம்பாள்தான்;ஸாக்ஷாத் பரப்ரம்ம ஸ்வரூபமாக இருக்கப்பட்ட சிவனும் அவள் செயல்படுத்தி நடத்தி வைத்தால்தான் தன்னுடைய அசலமான [அசைவில்லாத]நிர்குண அத்வைத நிலையிருந்து அசைந்து கொடுத்து, த்ரிமூர்த்திகள் முதலியவர்களைக் கொண்டு த்வைத ப்ரபஞ்ச வ்யாபாரத்தைப் பண்ணமுடிகிறது'என்ற முக்யமான சாக்த தத்வம் சொல்லியிருக்கிறது.

"த்ரிமூர்த்திகளும், இன்னும் மற்ற தேவர்கள் முதலான சக்திமான்கள் எல்லாரும் உன்னைப் பூஜை பண்ணுகிறார்கள். ப்ரம்மத்தையே நீ ஆட்டிப்படைக்கிறாய். அந்த ஆட்டம் உன்னுடையதே!அதிலிருந்தே லோகத்திலுள்ள அத்தனை தினுஸான ஆட்டங்களும்... ஆட்டம் என்றால் கார்யம்... ஒரு ஈ, எறும்பு அடியெடுத்து வைப்பது முதற்கொண்டு ஸகல கார்யமும் உன் சக்தியால்தான், உன் ஸங்கல்பத்தால்தான் நடக்கிறது. அப்படியிருக்கும்போது உன்னை ஒருத்தன் நமஸ்காரம் பண்ணுகிறான், ஸ்தோத்ரம் செய்கிறான் என்றால் அது மட்டும் தன்னால் ஆகிவிடுமா?

"எனக்கு உன்னிடம் அன்பு, பக்தி உண்டாகி நான் உன்னை நமஸ்காரம் பண்ணுவது என் செயலா?என் ஸங்கல்பமா?உன்னை ஸ்துதிக்க ஆரம்பித்திருக்கிறேனே, இது உன் சக்தியும் ஸங்கல்பமும் அருளும் ஸம்மதமும் இல்லாவிட்டால் நடக்கக் கூடுமா?"

இப்படி ஆசார்யாள் அம்பாளிடம் கேட்கிறார். வெளிப்படப் பொத்தைப் பூசணிக்காயாகக் கேட்காமல் நாசூக்காக உள்ளே இந்த அர்த்தத்தை வைத்து வ்யங்க்யமாகக் கேட்கிறார்.

இதே [வ்யங்கிய]ரீதியில் இன்னும் கேட்கிறார்:"ஸ்தோத்ரிக்கும் சக்தியை நீதான் தருகிறாயென்றாலும் யாருக்கு வேண்டுமானாலும் தந்துவிடுவாயா என்ன?மாட்டாய்!ஏனென்றால் நீ என்னதான் தாயாரானாலும் கர்மாவைப் பார்த்துத்தான் பலன் தருவாய். ஆகையால் யோக்யதையில்லாதவனுக்கு உன்னை ஸ்துதி செய்யும் மஹா பாக்யத்தை தரமாட்டாய்!என்ன யோக்யதை?ஜன்மாந்தரங்களில் நிறைய ஸத்கர்மா பண்ணிப் புண்யம் ஸம்பாதித்திருக்க வேண்டும் - அதுதான் யோக்யதை. பூர்வ புண்யசாலியைத் தவிர உன்னை நமஸ்கரிக்கவும், ஸ்துதிக்கவும் எவருக்கு முடியும்?"

- இப்படி, எல்லாவற்றையும் plain-ஆகச் சொல்லாமல் அநேகம் வீஸீபீவீக்ஷீமீநீமீ-ஆகவும் இந்த ச்லோகத்தில் சொல்லி இருக்கிறது.

கவிதைக்கு இது முக்ய லக்ஷணம். வசன நடை மாதிரி எல்லாவற்றையும் ஜீறீணீவீஸீ-ஆக மீஜ்ஜீறீணீவீஸீ பண்ணிவிடக் கூடாது!சில விஷயங்களைக் 'கூறாமல் கூறுவது'என்ற முறையில் உள்ளே மறைத்து வைத்தே சொல்லவேண்டும். அப்போது தான் ரஸம்!ஒரு பழம் இருந்தால் அதில் ரஸம் வெளியிலே சொட்டாமல் உள்ளுக்குள்ளேதானே தேங்கி தோய்ந்து இருக்கிறது? அந்த மாதிரி!கவிதையென்றால் 'ரஸவத்'தாக இருக்கவேண்டும். 'ஸாரவத்'என்றும் சொல்வார்கள். அதாவது, வேண்டாததையெல்லாம் தள்ளிவிட்டு சாற்றை மட்டும் பிழிந்து தரவேண்டும் என்று அர்த்தம். இப்படிச் சொல்லும்போது வளவளப்பு இல்லாமல் 'சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது'என்று அர்த்தம். ஒரு கூடை எலுமிச்சம் பழத்தைச் சாறு பிழிந்து ஒரு சின்ன ஜாடிக்குள் அடக்கி வைக்கிறதுபோல அபிப்ராயங்களைச் சுருக்கி எஸ்ஸென்ஸாகத் தந்தாலே அது கவிதை. ஒரு சின்னப் பல்லவியை வித்வான்கள் ஸங்கதிகள் போட்டுப் பலுக்கிப் பலுக்கி விஸ்தாரம் பண்ணுவது போல, ரஸிகர்கள் உள்ளர்த்தத்தையும் நயங்களையும் தாங்களே விளக்கித் தெரிந்து கொள்ளும்படியாகக் கவிதைகளே இயற்ற வேண்டும்.

அப்படி இந்த ச்லோகத்தில் இன்னொன்றும் உள்ளர்த்தமாக ஊஹித்துப் புரிந்துகொள்ள வேண்டும். என்னவென்றால்:"ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதம் அக்ருத-புண்ய:ப்ரபவதி?": "உன்னை எப்படிப் புண்யம் பண்ணாதவன் நமஸ்கரிக்கவும் ஸ்தோத்ரிக்கவும் முடியும்?"என்று இதில் கேட்கிறார்; அப்படிக் கேட்பவரே ஸ்தோத்ரிக்கிறார் என்பதால் தாம் ரொம்பப் புண்யசாலி என்று ஆசார்யாள் தம்மையே காட்டிக் கொள்கிறார் என்று அர்த்தம் பண்ணிக் கொண்டால் அது அனர்த்தந்தான். பின்னாடி தம்மை ஒன்றுமே இல்லாதவனாக ஆசார்யாள் குறைத்துக்கொண்டு "எனக்குங்கூட உன் கடாக்ஷத்தைக் கொடு", "என் சிரஸிலுங்கூட உன் சரணத்தை வை"என்று ரொம்ப அடக்கமாகச் சொல்கிறார். அப்படிப்பட்டவர் எடுத்த எடுப்பில், "நான் நிறையப் புண்யம் பண்ணினவன்;அதனால்தான் உன்னைப் பற்றி ஸ்தோத்ரம் பண்ண முடிந்திருக்கிறது"என்று ஒரு நாளும் சொல்லமாட்டார். ஆகையால், இங்கேயும் என்ன உள்ளர்த்தம் 'ஸ்ஜெஸ்ட்' பண்ணுகிறார் என்று ஆலோசித்துப் பார்த்துப் புரிந்து கொள்ளவேண்டும்.

முதலில் என்ன சொன்னார்?அசைய முடியாத அசல தத்வமான சிவனையும் அவள் அசைவிக்கிறாள் என்றார். அதையே அநுஸரித்து இங்கேயும் 'புண்யமே பண்ணாத எனக்கும் புண்யம் பண்ணியவர்களுக்கே உரியதான ஸ்தோத்ரம் இயற்றும் சக்தியைக் கொடுத்திருக்கிறாள்'என்றுதான் அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும்!

'உன்னை எப்படிப் புண்யம் பண்ணாதவன் ஸ்தோத்ரம் பண்ண முடியும்?'என்பதற்கு, 'அப்படியிருந்தும், எப்படிப் புண்யமே பண்ணாத நானும் ஸ்தோத்ரிக்க முடிகிறது?எதையும் செய்யும் உன் ஸாமர்த்தியந்தான்!அசல சிவனையே அசையப் பண்ணும் உன் ஸாமர்த்தியந்தான் புண்யம் பண்ணாத எவனையும் உன்னை ஸ்தோத்ரிக்கும்படி என் நாக்கை, வாக்கை அசைத்திருக்கிறது'என்றே அர்த்தம் செய்து கொள்ள வேண்டும். அதுதான் ஆசார்யாளின் ஹ்ருதயத்தை அநுஸரித்தது.

'ப்ரணந்தும்'(நமஸ்கரிக்க)என்பது உடம்பால் பண்ணும்

கார்யம். 'ஸ்தோதும்'(ஸ்தோத்ரிக்க)என்பது வாக்கால் பண்ணும் கார்யம். மனோ-வாக்-காயம் என்ற மூன்றில் பின்னிரண்டும் "ப்ரணந்தும் ஸ்தோதும்"என்பதில் அடங்கிவிடுகின்றன. மனஸால் அம்பாளை நினைத்துத்தானே அப்புறம் அவளை நமஸ்கரிப்பதும், ஸ்தோத்ரிப்பதும்?ஆதலால் அதுவும் 'அன்டர்ஸ்டுட்'தான் (உள்ளுறை பொருளாயிருப்பதுதான்). இப்படி முதல் ச்லோகத்திலேயே அம்பாளுக்கு மனோ-வாக்-காய ஸமர்ப்பணம் நடந்து விடுகிறது. இங்கே போட்ட விதைதான் கடைசியில் நூறாம் ச்லோகத்தில் பரிபூர்ணமான சரணாகதியாக, ஆத்ம ஸமர்ப்பணம் செய்யும் பழமாகப் பழுத்து முடிகிறது.

பூர்வ புண்யமில்லாதவன் நமஸ்கார ஸ்தோத்ராதிகள் பண்ணமுடியாதென்றால் பக்தி பண்ணமுடியாதென்றே அர்த்தம். பக்தி மார்க்கத்தில் இப்படிச் சொன்னவர், ஞான மார்க்கத்தில் போவதற்கும் இப்படியே 'விவேக சூடாமணி'யில் சொல்லியிருக்கிறார்: "முக்திர்-நோ சதகோடி ஜன்மஸு க்ருதை:புண்யை விநா லப்யதே". அப்படி யென்றால், நூறு கோடி ஜனமங்களில் புண்யம் பண்ணியிருந் தாலொழிய ஞான வழியில் போய் முக்தி அடைய முடியாது என்று அர்த்தம்.

இதிலே வேடிக்கை, தெய்வானுக்ரஹத்தினால்தான் ஒருத்தனுக்கு பக்தியோ, ஞானமோ ஏதோ ஒரு நல்ல வழியில் போகத்தோன்றும் என்று பக்திப் புஸ்தகமான ஸௌந்தர்ய லஹரி ஆரம்பத்தில் ஆசார்யாள் வெளிப்படையாகச் சொல்லவில்லை. ஆனால், தெய்வத்தை அந்தண்டை மூட்டை கட்டி வைத்துவிடுவதாக உலகம் நினைக்கும் ஞான வழிக்காக எழுதின விவேகசூடாமணி ஆரம்பத்தில் தான் "ஒருத்தன் மநுஷனாகப் பிறந்து, முக்திக்கு ஆசைப்பட்டு, உத்தம ஆசார்யனைச் சேர்வது தெய்வானுக்ரஹத்தால்தான் உண்டாவது - "தேவானுக்ரஹ ஹேதுகம்"என்று சொல்லியிருக்கிறார். "அவனருளாலே அவன் தாள்வணங்கி"என்பதாக, பக்தி பண்ணும் எண்ணமும் தெய்வ ப்ரஸாதமாகத்தான் கிடைக்க வேண்டும் என்று மாணிக்கவாசகர் சொல்லியிருக்கிறார்......

"சிவ:சக்த்யா"என்று ஸ்தோத்ரம் ஆரம்பிக்கிறது. பரம மங்களம் என்று அர்த்தமுள்ள 'சிவ' சப்தத்தோடு சுபமாக

ஆரம்பிக்கிறது. சக்தியோடு சேர்ந்திருந்தால்தான் சிவனால் அசையக்கூட முடியும், இல்லாவிட்டால் ஒன்றுமேயில்லை என்றுதான் ச்லோகம் சொல்கிறதென்றாலும் முதல் வார்த்தை 'சக்தி'என்று இல்லாமல், 'சிவ'என்றே இருக்கிறது. ஸதி-பதி, விக்ஷீவ-ணீஸீபீ-விக்ஷீஎன்று எப்படிச் சொன்னாலும் முதலில் பத்னி, அப்புறம் புருஷன் என்றே உள்ள போதிலும், சக்தி மஹிமையையே சொல்லி, அவள் ஸம்பந்தமில்லாவிட்டால் அந்த சிவனுக்கு மஹிமையே இல்லை - அவன் கால கூட விஷத்தைச் சாப்பிட்டுங்கூட உயிரோடு இருக்கிறானா?அதுகூட அவளுடைய தாடங்க மஹிமைதான் என்கிற அளவுக்குப் போய்விடுகிற ஸ்தோத்ரத்தின் ஆரம்பத்தைப் பார்த்தாலோ முதலில் அவன் பேர், அப்புறந்தான் அவள் பேர் என்று இருக்கிறது!

ஏனிப்படி என்றால் லோகத்துக்கு தர்ம சாஸ்த்ர வழிகளை எப்போதும் ஞாபகப்படுத்திக் கொண்டேயிருப்பதில் ஆசார்யாள் ரொம்பவும் கவனமாயிருந்தவர். லோகத்திலுள்ள பதி-பத்னிகள் மாதிரி இல்லாமல் ஈச்வரனும் அம்பாளும் அநேக விதங்களில் வித்யாஸமாயிருப்பவர்கள். லோகத்தில் ஸ்த்ரீகளை 'அபலா'என்கிறது வழக்கம். பலம் குறைந்தவர்கள் என்று அர்த்தம். புருஷன் தான் தன் பலத்தினால் அவளுக்கு ரக்ஷையாக இருப்பவன். பலம் என்றாலும் சக்தி என்றாலும் ஒன்றுதான். சிவ-சக்தி ஜோடியை எடுத்துக் கொண்டாலோ 'சக்தி'என்பதே அவள் பெயராகத்தானிருக்கிறது!அவளில்லாவிட்டால் அவன் ஒன்றும் செய்வதற்கில்லாமல் கிடக்கவேண்டியிருக்கிறது!பௌராணிகர்கள் வேடிக்கையாகச் சொல்கிறாற்போல:ஒன்றும் செய்யாமல் இரு என்பதற்கு 'சிவனேன்னு கிட'என்றுதான் சொல்கிறோம். ரொம்பவும் கார்யத் துடிப்போடு ஒன்று பண்ணக் கிளம்பினால் 'சக்தியோடு புறப்பட்டான்'என்கிறோம். 'சக்தியே இல்லை;அதனாலே சிவனேன்னு கிடந்தேன்'என்று ஸஹஜமாக யாரும் சொல்கிறோம்.

லோக ரீதிக்கு வழிகாட்டுவதான தர்ம சாஸ்த்ரங்களில் பதியை வைத்துத்தான் பத்னி, பதிக்கு அடங்கித் தான் பத்னி என்று வைத்திருக்கிறது. ஈஸ்வரன்-அம்பாள் என்பதை தத்வார்த்தமாக (முறையே)நிஷ்க்ரியமான நிர்குண ப்ரஹ்மம், ஜகத் வியாபார மஹாசக்தி (மாயாசக்தி என்கிறதுந்தான்)

என்று பார்க்கிறபோதோ நேர்மாறாக இருக்கிறது!

தத்வார்த்தமாக சிவன் ஜீஷீஷ்மீக்ஷீறீமீஉ, சக்தியே ஜீஷீஷ்மீக்ஷீயீஹுறீ என்று இருப்பதுமட்டுமில்லை. காவ்ய மரபை எடுத்துக் கொண்டாலும் ச்ருங்கார கேளியில் நாயகி என்கிறவளுக்கே நாயகனுக்கு மேலே ஸ்தானம் கொடுத்து வர்ணிப்பது வழக்கமாயிருக்கிறது.

இரண்டு பேருக்கும் நடுவில் மனஸ்தாபம் வந்து, தீருகிறபோது முடிவில் அவன்தான் அவள் காலில் போய் விழுந்தான் என்று கவிகள் எழுதுகிறது வழக்கம். 'கீத கோவிந்த'த்தில் அப்படித்தான் வருகிறது. "பெரிய மனஸு பண்ணி என் தலைக்கு அலங்காரமாக அதன் மேலே உன் பாதத்தை வை!"என்றே கிருஷ்ணர் ராதையிடம் வேண்டிக்கொண்டதாக அதில் இருக்கிறது. இதையே சிவன்-அம்பாள் ஊடலிலும் காவ்யங்களில் புராணங்களில் சொல்லியிருக்கிறது. இந்த ஸௌந்தர்ய லஹரியிலேயேகூடப் பின்னாடி அப்படி வருகிறது. பாத்யம் என்று ஒரு உபசாரம். ஒரு தேவதைக்குப் பூஜை பண்ணும்போது அதை எழுந்தருளப் பண்ணினவுடன், நம் அகத்திற்கு வந்தவர்களுக்குக் கால் அலம்ப ஜலம் கொடுப்பதுபோல, அந்த தேவதையின் பாதத்தில் ஜலம் விட்டு அலம்பி உபசரிப்பது பாத்யம். அம்பாளுக்கு இப்படிப்பட்ட பாத்ய தீர்த்தமாக ஈச்வரனின் ஜடையிலுள்ள கங்கையே இருக்கிறது என்று பின்னாடி ஆசார்யாள் சொல்கிறார். என்ன அர்த்தம்?இவள் பாதத்தில் அவர் சிரஸ் இருக்கிறது என்றுதானே?அப்போதுதானே அவருடைய சிரஸிலுள்ள கங்கை இவளுடைய பாத தீர்த்தமாக முடியும்?

இன்னொரு ச்லோகத்திலும் இன்னும் வ்யக்தமாகவே (வெளிப்படையாகவே)சொல்கிறார். கவி மரபு என்னவென்றால் தன் காலில் நாயகன் விழுந்தால்கூட உடனே நாயகி, 'ஐயையோ, பதி இப்படிப் பண்ணுகிறாரே!'என்று வாரிச் சுருட்டிக்கொண்டு அவனோடு ஸ்நேஹமாய் விட்டாள் என்று சொல்லமாட்டார்கள். நமக்குக் கேட்கவே என்னவோ போலத்தானிருக்கும், ஆனாலும் காவ்யம் என்று வரும்போது ச்ருங்காரத்துக்கு ஏற்றம் கொடுக்க வேண்டும் என்ற அபிப்ராயத்தில், என்ன சொல்வார்களென்றால் - அவன் அவள் காலில் விழுந்தான்

அப்பவும் அவள் கோபம், அல்லது பொய்க் கோபம், தணியாமல், அல்லது தணியாத மாதிரி அவன் தலையைக் காலால் உதைத்தாள்;அதற்கும் அவன், 'ஐயோ உன் காலை வலிக்கப்போகிறதே!'என்றுதான் அழுதான்;அப்புறந்தான் அவள் ஸமாதானமானாள் என்று வர்ணிப்பார்கள். கவிதா லக்ஷணங்கள் பூர்ணமாக இருக்கும்படியான ஒரு ஸ்துதியாக இது ('ஸௌந்தர்ய லஹரி')ஆசார்யாள் வாக்கில் வரவேண்டுமென்று திவ்ய ஸங்கல்பமிருந்ததால் இந்த ஸமாசாரத்தைக்கூட அவர் அம்பாள்-ஈச்வரனை ஸம்பந்தப்படுத்திச் சொல்லியிருக்கிறார்.

ஜகத்குரு என்ற கடமைப்படி அவர் லோகம் முழுவதற்கும் முதலில் முக்யமாகச் சொல்லவேண்டியது தர்ம சாஸ்திர ஒழுக்கங்களைத்தான் என்று வைத்துக் கொண்டிருந்தார். அப்புறம் பக்வம் பார்த்து பக்தி காவ்யம், அதற்கும் அப்புறந்தான் தத்வம், ஞானம் என்றெல்லாம் சொல்லவேண்டியது என்று வைத்துக் கொண்டிருந்தார். அப்படிப்பட்டவர் அம்பாள் ப்ரேரணையில் இப்போது இந்த ஸ்தோத்ரம் பண்ணும்படி ஆனபோது ஒரு பக்கம் சாக்த தத்வ சாஸ்த்ரத்தின்படி பதியான பரமசிவனுக்கு மேலே பத்னியான அம்பாளுக்கு மஹிமை சொல்ல வேண்டியதாயிற்று. இன்னொரு பக்கம் கவி மரபின்படி அவள் நாயகி அவர் நாயகன் என்று வைத்து, இங்கேயும் பதிக்கு மேலே பத்னியை உயர்த்திக்காட்ட வேண்டிவந்து விட்டது. "என்னடா (இ)து?அத்தனை தர்ம சாஸ்த்ரங்களும் 'கல்லானாலும் கணவன்'என்றுதான் ஒரு ஸ்த்ரீ அவனிடம் பவ்யமாக இருக்கணுமென்று சொன்னால், தர்ம பீடத்தில் ஆசார்யராக இருக்கிற நாம் இதற்கு வித்யாஸமாக அம்பாள் இருப்பதைச் சொல்லி எல்லா ஸ்த்ரீகளும் அதுதான் தங்களுக்கும் 'எக்ஸாம்பிள்'என்று எடுத்துக் கொண்டுவிட்டால் என்ன ஆவது?"என்று ஆசார்யாள் பார்த்தார். அதனால்தான், அதற்கு 'காம்பன்ஸேட்' பண்ணுகிற மாதிரி, 'எடுத்த எடுப்பில் பதி-சிவன் பேரைப் போட்டு அப்புறமே அவள் பேரைப் போடுவோம். இவள் சேர்ந்தால்தான் அவனுக்குப் பெருமை என்று உள்ளே சொன்னாலும், அவளுக்கு முந்தி அவன் பேருக்கு முதலிடம் கொடுத்துப் போட்டாலே அவனை அநுஸரித்து, பின்தொடர்ந்து போவதுதான் அவளுக்கும் பெருமை என்று ஸ்த்ரீ ஸமூஹத்துக்குத் தெரியப்படுத்திவிடுவோம்' என்கிற

உத்தேசத்திலேயே "சிவ:சக்த்யா"என்று ஆரம்பித்ததாகத் தோன்றுகிறது.

அப்புறமும் ஸ்தோத்திரத்திற்குள், அம்பாள் தர்ம சாஸ்திரபடியான பரம பாதிவ்ரத்யத்தை அநுஷ்டிப்பவள் என்று நன்றாகவே உடைத்துக் காட்டியும் சில ச்லோகங்கள் பண்ணியிருக்கிறார். ராஜராஜேச்வரியாக ஸமஸ்த தேவர்களும் நமஸ்காரம் பண்ணக் கொலுவிருக்கும் அம்பாள் ஈச்வரன் வருகிறாரென்றால் உடனே ஒரே மரியாதையாக, ஒரே பரபரப்பாக, ப்ரியமாக எழுந்திருந்து ஓடிப்போய் வரவேற்பாள்;அப்போது வழியிலே அவளுக்கு நமஸ்காரம் பண்ணிக்கொண்டிருக்கும் தேவர்களின் கிரீடத்தில் அவள் இடறிக் கொண்டுவிடப் போகிறாளே என்பது ஸகிகள் எச்சரிக்கை பண்ணிக்கொண்டேயிருப்பார்கள் என்று ஒரு இடத்தில் சொல்கிறார் (ச்லோ. 29). இன்னொரு இடத்தில் (ச்லோ. 64) "பதியின் குண கணங்களைப் பற்றி ஓயாமல் பேசிப் பேசி உன் நாக்கு செம்பருத்திப் பூவாகச் சிவந்து விட்டது"என்கிறார். இன்னொரு ச்லோகத்தில் (66)பரமேச்வரனின் வித விதமான லீலைகளை ஸரஸ்வதி வீணாகானம் செய்வதைக் கேட்டு கேட்டே அம்பாள் ஸந்தோஷப்படுகிறாள் என்கிறார். பதிக்கு நமஸ்காரம் பண்ணிப் பண்ணித்தான் அவளுடைய முழங்கால் கெட்டிப் பட்டுப் போயிற்று என்று ஒரு இடத்தில் சொல்கிறார் (ச்லோ. 82). கடைசி ச்லோகங்களில் ஒன்றில் (96) "ஸதீநாம் அசரமே!"என்றே அவளைப் பெருமைப்படுத்திக் கூப்பிடுகிறார்:"பதிவ்ரதைகளில் நம்பர்-1"என்று அர்த்தம்.

சாஸ்த்ரத்திற்கு விரோதமாக ஒன்றை ஜன ஸமூஹம் 'ஐடிய'லாக நினைக்கும்படிப் பண்ணிவிடக் கூடாதென்றே பதி-ஈச்வரன் பேரைச் சொல்லி ஆரம்பித்திருக்கிறார். "அன்னையும் பிதாவும்"- வேதத்திலேயே "மாத்ரு தேவோ"வுக்கு அப்புறந்தான் "பித்ரு தேவோ"- என்றே இருந்தாலுங்கூட, உள்ளே ஸ்தோத்ரத்தில் ஈச்வரனுக்கு மேலே அம்பாள் என்று நிறையக் காட்டவேண்டியிருப்பதால் 'காம்பன்ஸேஷ'னாக எடுத்தவுடன் சிவ நாமாவைப் போட்டு அப்புறம் சக்தியைச் சொன்னாற்போல இருக்கிறது!சக்தியோடு சேர்ந்தால்தான் சிவனுக்குப் பெருமை என்று இந்த ச்லோக தாத்பர்யம். ஆனால் வார்த்தையைப் போட்டிருக்கும்

விதத்தாலேயே அவனோடு சேர்ந்திருந்தால்தான் அவளுக்குப் பெருமை என்று தெரிவிப்பதாக முதலில் அவன் பேர் அப்புறமே அவள் பேர் என்று வைத்திருக்கிறார்:முதலில் 'சிவ', அப்புறம் 'சக்த்யா'.

இவளால் அவன், அவனால் இவள் என்று ஒருத்தருக்கொருத்தர் பெருமை சேர்த்துத் தருபவர்களாக ஆதி தம்பதி இருக்கிறார்கள். வாஸ்தவத்தில் ஏற்றத் தாழ்வேயில்லாமல், அவர்கள் ஒருத்தருக்கு மற்றவர் ஸமம் என்று இருப்பவர்கள். 'அன்யோன்ய ஸத்ருசம்'என்று சொல்வது. ஈச்வரனும் அம்பாளும் ஸமமான மஹிமை உடையவர்கள்.

ஸமயம், ஸமயம் என்று மதத்துக்கு ஒரு பேர் சொல்கிறோம். இந்து சமயம், சமண சமயம், சமய குரவர் என்றெல்லாம் படிக்கிறோம். மதத்திற்கே பொதுப் பெயராகிவிட்ட இந்த 'ஸமயம்'என்ற வார்த்தை சிவ-சக்திகளின் ஸமத்வத்தை வைத்து உண்டான பேர்தான். சாக்த, சைவ சாஸ்த்ரங்களில் 'ஸமயாசாரம்'என்பது உபாஸனா மார்க்கங்களில் ஒன்று;வெளிப் பூஜையாயில்லாமல் ஹ்ருதயத்திலே பாவனா ரூபமாகப் பண்ணும் உசந்த உபாஸனை. அதற்கு ஏன் ஸமயம் என்று பேர் என்றால் அதில் அம்பாளையும் ஈச்வரனையும் ஐந்து விதத்தில் ஸமமானவர்களாக பாவிக்க வேண்டும். 'பஞ்ச ஸாம்யம்' என்பார்கள். ஒன்று - அவர்களுடைய நாமம் ஸமம். அவர் சிவன் என்றால் அவள் சிவா. அவர் ஹம்ஸன் என்ற பேருடன் இருக்கிறபோது அவளுக்கு ஹம்ஸி என்று பேர். அவர் பைரவர் என்ற பேரில் இருந்தால் அப்போது அவள் பைரவி. ஸமயன் என்றேகூட அவருக்கு ஒரு பேர். அப்போது அவள் பேரும் ஸமயா. இரண்டு - அவர்கள் ரூபத்திலேயும் ஒரேமாதிரி ஸமமாக இருப்பவர்கள் - காமேச்வர-காமேச்வரிகளில் இரண்டு பேருக்குமே சிவப்பு வர்ணம், சதர்புஜம், த்ரிநேத்ரம், சிரஸில் சந்த்ர கலை, சதுர்புஜத்தில் அதே நாலு ஆயுதங்கள்: தநுர் பாண-பாச-அங்குசங்கள்.

மூன்று - அவர்கள் இருக்கிற இடமும் ஒன்றே. அதே மேரு சிகர மத்தி; அம்ருத ஸாகரத்தில் மணித்வீபத்தின் மத்தி; ஸ்ரீசக்ரத்தின் மத்ய பிந்து. நாலு இரண்டு பேரும் செய்யும் கார்யமும் ஒன்றே. பஞ்ச க்ருத்யம் என்ற ஐந்தொழில்.

ஐந்து-அவர்களால் லோகம் பெறுகிற அநுக்ரஹங்களும் ஒன்றாகவே இருக்கின்றன.

இப்படியெல்லாம் ஸமத்வம் சொல்கிறது ஒரு பக்கம். நம் மனஸின் ஆழத்தில் அந்த அபிப்ராயந்தான் இருக்க வேண்டும். ஜீவகோடிகளைப் பார்க்கும்போதுகூட ஸம பாவந்தான் இருக்கவேண்டும் என்கிறபோது தெய்வங்களுக்குள்ளே உசத்தி தாழ்த்தி சொல்லப்பட்டதுதான். அதிலும் தம்பதியாக, நமக்குத் தாயும் தந்தையுமாக இருக்கிறவர்களிடம் வித்யாஸம் பண்ணுவது ஸரியேயில்லைதான். ஆகையினால் அடி மனஸில் (இருவரும்)ஒன்று என்ற எண்ணமே இருக்கவேண்டும். ஆனாலும் 'அம்மா'!என்று கொஞ்சப் போகிறபோது, அல்லது 'அப்பா'!என்று கொஞ்சப் போகிறபோது யாரிடம் போகிறோமோ அவருக்கு ஈடு, ஸமம் எவருமேயில்லை என்றுதான் ஆசையிலே தோன்றும். அப்பாவைவிட அம்மா உசத்தி, அல்லது அம்மாவைவிட அப்பா உசத்தி என்று வைத்துக் கொண்டால்தான் அன்பு பூர்ணமாகப் பொங்கி வருவதற்கு அநுகூலமாக இருக்கும். அந்த நீஷீஸீமீ மீஜ்மீ-ல் அந்த விதமாகக் குழந்தைகள் நினைப்பதை அந்த அப்பா-அம்மாவும் தப்பாக எடுத்துக்கொள்ளவே மாட்டார்கள். குழந்தை எப்படி ஆசைப்படுகிறதோ அதற்கு அநுஸரணையாகவே அம்மாவுக்கு அப்பா தாழ்ந்து போவார்;அல்லது அப்பாவுக்கு அம்மா தாழ்ந்து போவாள். காவ்ய ரீதியில் ஒரு கவிக் குழந்தை இப்படிப் பண்ணி ஸந்தோஷப்படும்படி லீலைகள் செய்வார்கள். தத்வ ரீதியாக ஒரு புத்திசாலிக் குழந்தை பார்த்துக்கொண்டு போகும்போதும் அதேமாதிரி அதன் பாவனைக்கு அநுஸரணையாக ஒருத்தர் மற்றவரை விட உசத்தியாகத் தெரிகிற விதத்தில் காட்டுவார்கள்.

இந்தப்படி சாக்த தத்வ சாஸ்தரமாயும், கவிதா ஸ்தோத்ரமாயும் ஒருங்கே இருக்கப்பட்ட "ஸௌந்தர்ய லஹரி"யில் அம்பாளையே மஹிமை உச்சியில் காட்டுவதாகத்தான் பொதுவில் இருக்கும். இது பதி-பத்னிகளைக் குறித்த பொது தர்மாசாரத்திற்கு வித்யாஸமான அபிப்ராயங்களில் ஜனங்களைக் கொண்டு சேர்த்துவிடப் படாதே என்பதில் நம்முடைய ஜகதாசாரியாளுக்கு விசாரம் இருந்ததால் அங்கங்கே ஈச்வரனுக்கு ஏற்றம் கொடுத்துச் சொல்லி

ஸரிகட்டியிருக்கிறார். ஆரம்பத்திலேயே அப்படித்தான் சிவ நாமாவைப் போட்டு அதை சக்தி நாமா 'ஃபாலோ' பண்ணுவதாகக் காட்டியிருக்கிறார்.

---



## சிவத்துக்கும் ஜீவசக்தி;ஆண்-பெண் பெயர்கள்

ஆனால், வேடிக்கையாக, இப்படி சிவநாமாவில் ஆரம்பித்திருந்தாலும், அந்த நாமாவிலேயேகூட சக்தி மஹிமையைத்தான் அம்பாள் பக்தர்கள் காட்டுவார்கள்!என்ன சொல்வார்களென்றால் : 'சிவனும் சக்தியும் சேர்ந்திருக்கிறது போல இங்கே முதலில் வரும் சிவ நாமாவோடு அடுத்ததாக 'சக்த்யா'என்று வருவதில் சக்தி நாமா சேர்ந்திருப்பது மாத்திரமில்லை. 'சிவ'என்கிறதிலேயே 'சி'என்ற முதல் அக்ஷரத்தில் சக்தி சேர்ந்திருக்கிறாள். அப்படிச் சேர்ந்திருப்பதால்தான் அந்த சிவ நாமாவுக்கு ஜீவனே ஏற்பட்டிருக்கிறது'என்பார்கள்.

எப்படியென்றால்... உங்களுக்குத் தெரியாத விஷயம் சொல்கிறேன்: 'சிவ என்கிறதில் முதல் அக்ஷரமான 'சி'யில் 'இ'காரம் இருக்கிறதல்லவா? 'ச்'என்ற மெய்யெழுத்தோடு இந்த உயிரெழுத்தான 'இ' சேர்ந்துதானே 'சி'ஆகியிருக்கிறது? இந்த 'இ', 'ஈ'என்பதே அம்பாள் பேர்தான் மெய்யெழுத்துக்கள் சிவ அக்ஷரங்கள், உயிரெழுத்துக்கள் சக்தி அக்ஷரங்கள் என்று பொதுவிதி. அது மட்டுமில்லாமல் உயிரெழுத்துக்களிலும் 'இ-ஈ'க்கள் அமபாள் ஸ்வரூபமே. காரியமில்லாத பிரம்மத்திற்குப் பிரணவம் பேர் என்கிறது போல, காரியமில்லாத பிராம்மமான சிவனோடு காரியப் பிரம்மமான சக்தியும் சேர்நதுள்ளதான சிவ-சக்திக்கு ஒரு பிரணவம் உண்டு. அதிலே சக்திக்கான அக்ஷரம் 'ஈ'தான் ச்ருதி [வேத]ப்

பிரமாணமே இருக்கிறது, 'ஈ'காரம் அம்பாள் என்பதற்கு. ஹ்ருதய பத்மத்தில் லக்ஷ்மி ஸ்வரூபமாக உள்ள அம்பாளுக்கு [வேதத்திலுள்ள]ஸ்ரீஸூக்தத்தில் பத்மினி என்று பெயர் சொல்லி, "ஈ'è£óñ£è Þ¼,°‹ ÜõOì‹ êóí£èF ªêŒA«ø¡"â¡Á Šóð^F ð‡EJ¼,Aø¶. 'ÿ'â¡ð¶‹ ßè£óñ£è^î£«ù Þ¼,Aø¶?

புருஷப் பெயர்களில் 'அ'காரத்தில் முடிவதே ஜாஸ்தி இருக்கின்றன - சங்கர, நாராயண, ராம, க்ருஷ்ண, ஸுப்ரஹ்மண்ய, கணேச என்ற மாதிரி. ஸம்ஸ்கிருதத்தில் விஸர்கம் சேர்த்து சங்கரஹ, நாராயணஹ என்றெல்லாம் சொல்வார்கள். தமிழில் சங்கரன், நாராயணன் என்கிறோம். ஹிந்திக்காரர்கள் சங்கர், நாராயண் என்கிறார்கள். வர வரத் தமிழ்தேசத்திலும் அப்படிச் சொல்வதே ஃபாஷனாகிக் கொண்டு வருகிறது.

பெண்பால் பெயர்கள் 'இ'யில் முடிவதே ஜாஸ்தி:சங்கரி, நாராயணி, லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி, காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி. புருஷ தெய்வங்களின் சக்தியை, பத்னியைச் சொல்லவேண்டுமானால், 'அ'-வில் முடியும் பேரை 'இ'ஆக்கிவிடுவதைப் பார்க்கிறோம்:சங்கர-சங்கரி, ஈச்வர-ஈச்வரி, நாராயண-நாராயணி, நரஸிம்ஹ-நாரஸிம்ஹி... நாராயணி, வைஷ்ணவி என்ற இரண்டு பெயர்களில் மட்டும் ஒரு விசேஷம். அவை நாராயண பத்னியை, விஷ்ணு பத்னியைவிடக் குறிப்பாக அவருக்கு ஸஹோதரியாயுள்ள அம்பாளைத்தான் குறிப்பிடுகின்றன. அம்பாளுக்கும் விஷ்ணுவுக்குமுள்ள நெருக்கம் அப்படி!அதனால்தான் ரொம்பவும் வேடிக்கையாக சங்கர-சங்கரி மாதிரி ஹர-ஹரி என்னும்போது அந்த ஹரி, அம்பாள் பேராக இல்லாமல் விஷ்ணு பேராகவே இருக்கிறது!தேவ-தேவி, ஸஹோதர-ஸஹோதரி, புத்ர-புத்ரி என்றிப்படி ஆண்பால் 'அ'காராந்தம் (அகார முடிவு)பெண்பாலில் 'இ'காராந்தமாயிருக்கிறது. வெள்ளைக்காரர் பெயர்களிலும் பொம்மனாட்டிகளுக்கு மேரி, லூஸி, அன்னி, ஜூலி என்று 'இ'காரப் பெயர்கள் நிறைய இருக்கின்றன. நம் தேசத்திலேயே 'அ'காராந்தப் புருஷப் பெயர்களை ஒரு பாஷையில் சங்கரன், நாராயணன் என்று (முடிவில்) ன்'இன்னொன்றில் ஷங்கர், நாராயண் என்று ஒடித்தும், இன்னொன்றில் சங்கருடு, நாராயணுடு என்று

இன்னொரு விதமாக முடித்தும் சொன்னாலும் இகாரந்த ஸ்த்ரீ லிங்க பெண்பால் பெயர் முடிவுகளை மட்டும் மாற்றாமல் எல்லா பாஷைகளிலும் காமாக்ஷி, மீனாக்ஷிஇத்யாதியாகவே தான் சொல்கிறோம்.

சங்கர-சங்கரி, ஈச்வர-ஈச்வரி மாதிரி 'ருத்ர'என்றால் 'ருத்ரி'என்று சொல்லாமல் ருத்ராணி என்று சொல்லணும். இப்படியே சிவ-சிவாநி, சர்வ-சர்வாணி, பவ-பவாநி, இந்த்ர-இ ந்த்ராணி, ப்ரஹ்ம-ப்ரஹ்மாணி என்று அநேகம். இங்கேயும் ஸ்த்ரீ நாமங்கள் 'இ'யில்தான முடிகின்றன.

'சிவ'வுக்கு 'சிவாநி'மட்டுந்தான் பெண்பால் என்றில்லை;'சிவா'என்றாலும் சிவ பத்னிதான். சிவன்-ஸ்வாமி, சிவா-அம்பாள். இப்படியே ராம-ராமா, க்ருஷ்ண-க்ருஷ்ணா. அதாவது அகராந்தப் புருஷப் பெயர் ஸ்த்ரீ பெயராகும்போது ஒன்று, 'இ'ஆகிறது;இல்லாவிட்டால் 'ஆ' ஆகிறது. 'ராம'ஆகாரமாக 'ராமா'என்று ஆனாலும் 'அபிராம'என்பது இகாரமாக அபிராமி என்று ஆகியிருக்கிறது.

'இ-ஈ'க்களைப் போலவே 'ஆ'வில் முடிவதாகவும் நிறையப் பெண்பால் பெயர்கள் இருக்கின்றன - உமா, ரமா, துர்கா, பாலா, லலிதா, சாரதா.

'அமரம்'(அமரகோசம்) என்ற ஸம்ஸ்கிருத நிகண்டுவிலே அடுக்கிக் கொண்டே போயிருக்கிற அம்பாள் நாமாக்களைப் பார்த்தால் ஒன்று அது 'ஈ'யில் முடியணும், இல்லாவிட்டால் 'ஆ'வில் முடியணும் என்று தெளிவாகத் தெரிகிறது.

உமா, காத்யாயநீ, கௌரீ, காளீ, ஹைமவதீ, (ஈ)ச்வரீ

சிவா, பவாநீ, ருத்ராணீ, சர்வாணீ, ஸர்வமங்களா

அபர்ணா, பார்வதீ, துர்கா, ம்ருடாநீ, சண்டிகா, (அ)ம்பிகா

ஆர்யா, தாக்ஷாயணீ, சைவ கிரிஜா, மேநகாத்மஜா

கர்மமோடீ, து சாமுண்டா, சர்மமுண்டா, து சர்சிகா

'சைவ', 'து'என்பதெல்லாம் பேரில்லை. 'மேலும்'என்று அர்த்தம்.

லக்ஷ்மியின் பெயர்களை (அமரத்தில்)பார்த்தாலும் இப்படியே

இருக்கும்.

லக்ஷ்மீ : பத்மாலயா பத்மா கமலா ஸ்ரீர் ஹரிப்ரியா

இந்திரா லோகமாதா மா க்ஷீரோத-தநயா ரமா

பார்கவீ லோகஜநநீ க்ஷீரஸாகரகந்யகா

ஸரஸ்வதி பேர்களும் ஆ அல்லது ஈ அந்தமாகவே இருக்கிறது.

ப்ராஹ்மீ து பாரதீ பாஷா கீர் வாக் வாணீ ஸரஸ்வதீ

'வாக்'என்பதற்கு மூலம் 'வாச்'. அதுவும் 'கீர்'என்பதும் மட்டும் மெய்யெழுத்தில் முடிகிறது. ஆனால் இது ரொம்ப அபூர்வம். பொதுவாகக் காணப்படுவது ஸ்த்ரீ நாமாக்கள் ஆகராந்தமாகவோ ஈகாரந்தமாகவோ இருப்பதைத்தான்.

தமிழிலும் பெண்பாலைக் குறிக்க 'இ'தான் போடுகிறோம். அரசன்-அரசி, அண்ணன்- அண்ணி, இறைவன்-இறைவி இப்படி ஆனால் 'ஆ'காரந்தமாகத் தமிழில் பொம்மனாட்டிப் பேர்கள் முடிவதில்லை. ஸ்மஸ்கிருதத்தில் 'ஆ'வில் முடிவதைக்கூடத் தமிழில் 'ஐ'ஆக்கியிருக்கிறோம்:ஸீதா-ஸீதை, லலிதா-லலிதை என்று. ஸம்ஸ்கிருதத்தில் 'ஐ'என்று பேர் முடியவே முடியாது. ஐகாரத்தில் சப்தமே (வேற்றுமை உருபுகளைச் சேர்த்துப் பெயர்ச் சொற்களைக் கூறும் அமைப்பு)கிடையாது. ஆனாலும் மந்த்ர சாஸ்திரத்தில் அம்பாளை வாக்தேவியாகச் சொல்லும்போது இது வருகிறது.

'ஆ'காரம் ஸ்த்ரீ நாமங்களுக்கு மட்டுமே ஆனது. (சிரித்து)எக்ஸ்க்ளூஸிவ்! 'ஆ'வில் முடியும் புருஷப் பேரே கிடையாது.

அந்நிய தேசங்களிலும் டயானா, ஜூலியானா, ஃபாதிமா, கதிஜா என்று ஸ்த்ரீகளின் பெயர்கள் 'ஆ'வில் முடிவதாக நிறைய இருக்கின்றன. வெள்ளைக்கார ஸ்த்ரீ-புருஷப் பெயர்கள் பல தினுஸாக முடிகின்றன.

ஆனால் அங்கேயும் ஒரு புருஷப் பெயரை ஸ்த்ரீ பெயராக்கும்போது 'ஆ'காரமாக்கியே முடிக்கிறார்கள் - அலெக்ஸாண்டர்:புருஷப் பெயர்;அதையே பொம்மனாட்டிப்

பேராக்கும் போது அலெக்ஸான்ட்ரா;விக்டர்-விக்டோரியா. நம்மில் அடியோடு 'ஆ'காரந்தமாகப் புருஷப் பேரே இல்லையென்றால் அங்கேயும் அபூர்வமாகவே ஜோஷுவா, ஜெரிமியா மாதிரி ஒன்று இரண்டு தவிர 'ஆ'வில் முடியும் புருஷப் பெயரில்லை.

'இ'காரந்தமாக ஸ்த்ரீ பெயர்கள் மட்டுந்தான் என்றில்லாமல் ஹரி, கணபதி, ராமமூர்த்தி என்றிப்படி பல புருஷப் பெயர்களும் முடிகின்றன. ஆனால் 'ஆ'காரந்தமாக பெண் பெயர்கள் மாத்திரமே இருக்கின்றன. புல்லிங்கத்தில் (ஆண்பாலில்)ஆகாரந்தமான பேரே கிடையாது என்று சப்த புஸ்தகத்தைப் பார்த்தால் தெரியும். புருஷ சப்தங்களில் 'அ'காரந்த 'ராம'சப்தத்துக்கு அடுத்தாற் போல 'இ'காரந்த 'ஹரி'சப்தம்தான் போட்டிருக்கும். 'ஆ'வில் முடிவதாக எதுவுமே கிடையாது. ஸ்த்ரீ சப்தங்களிலோ 'அ'காரந்தமே இருக்காது. எடுத்தவுடனேயே 'ரமா'என்று 'ஆ'வில் முடிவதுதான். அப்புறம் 'இ'யில் முடியும் 'மதி'சப்த ம்;அதற்கப்புறம் 'ஈ'யில் முடியும். கௌரீ சப்தம்.

நாம் தமிழில் லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி என்று 'இ'யாகக் குறிலில் எழுதும் எல்லாமே (ஸம்ஸ்கிருத)மூலத்தில் லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, பார்வதீ என்று (நெடிலான)'ஈ'யில்தான் முடிவது. இ-ஈ வித்யாஸம் பார்க்காமல் நான் சேர்த்தே சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். 'ஈ'யில் முடியும் மிகப் பெரும்பாலான பெயர்ச் சொற்கள் பெண்பாலாகவே இருக்கின்றன:'இ'காரந்தத்தைவிடவும் குறைவாகவே ஆண்பாலில் 'ஈ'காராந்தம் இருக்கிறது - ஸேநாநீ (ஸேநாதிபதி), க்ராமணீ (கிராமணியார் என்கிற கிராமத் தலைவர்), ஸுதீ (நல்லறிவுள்ளவர்) முதலான ஒரு சில.

"ப்ரஹ்மா, தாதா, கேசிஹா, தர்பஹா, த்வஷ்டா, ஆத்மா ('அயோத்யா', 'அப்ரமேயாத்மா'முதலிய நாமங்கள் 'ஆத்மா'என்று முடிவதைக் கருத்தில் கொண்டு கூறியிருக்கக்கூடும்.) என்றெல்லாம் 'ஆ'காராந்தமாக விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் பேர்கள் வருகிறதே! இவரானால் ஆகாராந்த புல்லிங்க சப்தமே இல்லை என்கிறாரே!"என்று நினைக்கலாம். இங்கே 'ஆ'வில் முடிவதாகச் சொன்ன எல்லாப் பெயர்களுக்கும் மூல ரூபம் அப்படி முடியாமல் வேறே விதமாகவே முடியும். 'ப்ரஹ்மா'வின் மூல ரூபம்

'ப்ரஹ்மன்';'ஆத்மா'வின் மூல ரூபம் 'ஆத்மன்';இப்படியே 'கேசிஹா', 'தர்பஹா'என்பதும் 'கேசிஹன்', 'தர்பஹன்'தான். 'தாதா', 'த்வஷ்டா'என்பவை மூலத்தில் 'தாத்ரு', 'த்வஷ்ட்ரு'என்றே முடியும். அதாவது ஆகாரத்தில் அந்தப் பெயர்கள் முடியவில்லை.

'பிதா'என்று ஆண்பாலான தகப்பனாரைச் சொல்கிறோம். இதுவும் 'பித்ரு'என்ற மூலத்திலிருந்து வந்ததே. மாத்ரு-மாதா;பித்ரு-பிதா, சர்மா, வர்மா, குப்தா என்று சொல்லும் (முறையே பிராமண, க்ஷத்ரிய, வைசிய)ஜாதிப் பெயர்களும் மூலத்தில் 'ஆ'வில் முடியாமல் சர்மன், வர்மன் என்றும் குப்த என்று (குறிலான)அகாரந்தமாக முடிவதாகவுமே இருக்கின்றன. 'ஸகா'- தோழன் - என்ற புருஷ சப்தத்தைக்கூட 'ஆ'காரந்தமாகச் சொல்லாமல், ரொம்பவும் வேடிக்கையாக 'ஸகி'என்றே மூல ரூபம் காட்டி 'இ'காரந்தமாகவே 'டிக்ளைன்'செய்திருக்கும் (வேற்றுமை உருபுகளைச் சேர்த்துக் கொடுத்திருக்கும்).

(முன்னேயே)சொன்னாற்போல் 'அ'காரத்தில் முடியும் ஸ்த்ரீலிங்கப் பெயரும் இல்லை. 'ஆ'காரத்தில் முடியும் புல்லிங்கப் பெயரும் இல்லை. இ-ஈ இரண்டிலும் முடிவதாக ஸ்த்ரீலிங்கப் பெயர்களே அதிகம் இருக்கின்றன.

புருஷர்கள்தான் ஸ்த்ரீகளைவிட நெட்டையாக இருப்பவர்கள். ஆனாலும் ஆனா ஆவன்னாவை எடுத்துக் கொண்டாலோ குட்டை (குறில்)அகாராந்தமே புருஷர்களுக்கு, நெட்டை (நெடில்) ஆகாராந்தம் ஸ்த்ரீகளுக்கு என்று இருக்கிறது. இங்கே ஸ்த்ரீகளைத்தான் புருஷர்களை விட (சிரித்து) 'உயர்த்தி'ச் சொல்லியிருக்கிறது!

குட்டை நெட்டை இ-ஈ இரண்டுமே ஸ்த்ரீ பெயர் முடிவுகளில் அதிகம் இருக்கின்றன.

'சக்தி'என்பதே 'இ'யில் முடிவதுதான்!'தேவீ', 'ஈச்வரீ'என்பவை 'ஈ'யில் முடிகின்றன. 'அம்பா'வும் 'அம்பிகா'வும் 'ஆ'வில் முடிகின்றன.

'ஆ'முடிவுதான் ஸ்த்ரீகளுக்கு 'எக்ஸ்க்ளூஸிவ்'என்றாலும், இகார ஈகாரங்களையே சக்தி ஸ்வரூபமாகச் சொல்வதுதான் வழக்கம். அதன் ரஹஸ்யம் மந்த்ரவித்துக்களுக்குத் தெரியும். இந்த விஷயம் ரஹஸ்யமாகப் போஷித்து அதிகாரிகளுக்கே

(உபாஸிக்கத் தகுதி பெற்றவர்களுக்கே)சொல்ல வேண்டியது. சுருக்கமாக:அத்தனைக்கும் ஜீவ சைதன்யத்தை (உயிரியக்கத்தையும் அறிவொளியையும்)தருவது 'ஈ'காரந்தான்.

'சிவ'என்கிறபோது முதல் எழுத்தான 'சி'யிலேயே அம்பாள் 'இ'காரமாகப் பிரிவற ஒட்டிக்கொண்டு உயிர் தருகிறாளென்று சொல்ல வந்தேன்.

'சிவ'த்தில் இந்த 'இ'போய்விட்டால் என்ன ஆகும்?புருஷப் பெயராச்சே என்று இகாரத்தை அகாரமாக்கினால் என்ன ஆகும்?பரம மங்களமான சிவ நாமாவே பரம அமங்களத்தைக் குறிப்பதாகிவிடும்! 'சி'யிலிருந்து 'இ'யை மைனஸ் பண்ணினால் அது 'ச' என்றுதானே ஆகும்? அப்போது 'சிவம்'?'சவம்'என்றல்லவா ஆகிவிடும்? 'இ'என்ற உயிரெழுத்துதான் ஈச்வரனுக்கே ஜீவனை உயிரைத் தருகிறது. இது போனால் உயிர் போன சவம்தான்!

இதைச் சொல்லும்போதே இன்னொன்று கண்டு பிடித்திருக்கிறேன்!'ஈச்வரன்'என்றாலும் முதலில் 'ஈ'தான் உட்கார்ந்திருக்கிறது!வேதாந்தத்தில் ஈச்வர சப்தந்தான் ஸகுண ப்ரஹ்மத்தை - அதாவது கார்ய ஸம்பந்தமுள்ள ப்ரஹ்மத்தை - குறிப்பது. கார்யமெல்லாம் சக்தி பீஜமான 'ஈ'யில்தான் ஆரம்பிக்கிறது.

பீஜம் என்றால் விதை. ஒரு சின்ன விதைக்குள் எப்படி மரமே மறைந்திருக்கிறதோ, அப்படி மஹா மந்த்ர சக்தியை உள்ளுக்குள்ளே வைத்துக் கொண்டுள்ள திவ்ய அக்ஷரங்களையே 'பீஜம்', 'பீஜாக்ஷரம்'என்பது.

சக்தி சேராவிட்டால் சிவம் சவம் என்பதை நம் தமிழ் வழக்கில் ஒலிகளுக்கு அழகாகப் பெயர் கொடுத்திருக்கும் முறையில் பார்க்கிறோம். சிவ-சக்தி ப்ரணவத்தில் 'ஈ'வருகிறது;இதுதான் அம்பாளுக்கான அக்ஷரம் என்றேன். 'ஈ'என்பது தமிழ் வழக்கில் உயிர் எழுத்து. இதோடுகூட சிவ-சக்தி ப்ரணவத்தில் ஈச்வரனின் சப்தரூபமான மெய்யெழுத்து சேர்ந்திருக்கிறது. மெய் என்று உடம்புக்குப் பேர். ஆக, சிவ-சக்தி ப்ரணவத்தில் ஸ்வாமி உடம்பு எழுத்தாகவும் அம்பாளே உயிர் எழுத்தாகவும் இருக்கிறார்கள். உயிர் இல்லாத உடம்பு என்ன?'சிவம்'

மைனஸ் 'இ'என்னவென்று பார்த்தோமே, அதுதானே?

சக்தி இல்லாவிட்டால் சிவம் சவம் என்றால் என்ன அர்த்தம் (சிரித்து) யசமானியம்மாள் இல்லாமல் ஐயாவுக்குச் செயலே இல்லை என்று அர்த்தம்! பேச்சு வழக்கைக்கூடச் சொன்னேனே, "உனக்குப் இதைப் பண்ண சக்தி இருந்தா பண்ணு!இல்லாட்டா சிவனேன்னு கிட"என்கிறோம்!செயல் புரியும் திறமை இருந்தால் 'சக்தி'; ஒன்றும் செய்ய முடியவில்லை என்றால் 'சிவனே'என்று!இதிலிருந்து அவளின்றி அவனுக்குச் செயலில்லை என்று ஆகிறதல்லவா?யாரானாலும் தங்களுடைய சக்தி (மீஸீமீக்ஷீரீஹ்) போய்விட்டால் ஒன்றும் செய்யத்தானே முடியாது?ப்ரஹ்மமாகிற சிவத்துக்கும் அதன் சக்தி இல்லாவிட்டால் இப்படித்தானே இருக்கவேண்டும்?

தன் சக்தியை பிரம்மம் அறிந்ததால்தான் அதைக் கொண்டு ஸ்ருஷ்டியை உண்டாக்க முடிந்தது. சக்தி இருப்பதாக அது அறியும்படி செய்ததும் அதனுடைய சக்தி தானே?இதைத்தான் ஸ்தோத்திரத் தொடக்கத்தில் "சிவனும்கூட சக்தியான உன்னோடு கூடியிருந்தால்தான் பிரபஞ்ச வியாபாரம் நடத்தத் திறமையுள்ளவராகிறார். இல்லாவிட்டால் அவரால் துளி அசையக்கூடஸாமர்த்தியமில்லாமல் கிடப்பார்"என்று சொல்லி, இது ஸர்வ நிச்சயம் என்று உறுதிப்படுத்த, "ந கலு" - அப்படித்தானே?"என்கிறார்.

சிவ:சக்தா யுக்தோ யதி பவதி சக்த:ப்ரபவிதும்

ந சேத் ஏவம் தேவோ ந கலு குசல:ஸ்பந்திதும் அபி

'ஸ்பந்திதும்'- அசைவதற்கு;'அபி'- கூட;'குசல:கலு'- ஸாமர்த்தியமில்லாமல் திராணியில்லாமல்தானே இருப்பார்?

சக்தியில்லாவிட்டால் சிவம் சவமாகத்தானே கிடக்க வேண்டும்?

---

## இரு மார்க்கத்திற்க்கும் ஆசாரியர்

'ஜகத்தே கூடாது, ஜகத் வியாபரமே மாயை. ஒரு காரியமும் இல்லாமல் இருக்கிற ஸத்ய சிவமான நிர்குணப் பிரம்மமாக ஆகிவிட வேண்டும்'என்றுதான் ஆசார்யாள் ஏகப்பட்ட அத்வைத பாஷ்யங்களும் ப்ரகரண க்ரந்தங்களும் எழுதி ஸித்தாந்தம் செய்தார். அசையாத சிவம்தான் அங்கே அவருக்கு முக்யமாக, லக்ஷ்யமாக இருந்தது. அது அசைகிற மாதிரிச் செய்கிற சக்தியை மாயை மாயை என்று சொல்லி, கரித்துக் கொட்டிக் கண்டனம் பண்ணினார். இங்கே அதே சக்தியிடம் 'நீ இல்லாவிட்டால் சிவன் அசைவானா?'என்று ஸ்தோத்திரம் பண்ணுகிறார்!சிவனை அசையப் பண்ணி ஜகத் வியாபாரத்தை உண்டாக்கினதற்காக ஸந்தோஷப்பட்டு, "இது உன்னால் அல்லவா அம்மா ஆச்சு?"என்று கொண்டாடுகிறார்!

"ஒருத்தரே இப்படி இரண்டு தினுஸாகப் பேசலாமா?இரண்டு விதமாகப் பேசினால் எது ஸத்யம்?ஒன்றுதான் ஸத்யம், இன்னொன்று அஸத்யம் என்றாகிவிடுமே?ஆசார்யாள் இப்படிப் பண்ணலாமா?"

அப்படியில்லை இரண்டும் ஸத்யந்தான்.

"அதெப்படி நேர் விரோதமாயிருக்கிற இரண்டு ஸ்டேட்மென்டும் ஸத்யமாயிருக்க முடியும்?"

தர்க்க ரீதியில் இருக்க முடியாதுதான். ஆனால் ஸத்யத்துக்கு லக்ஷணம் தர்க்கப்படி வராது. யாராருக்கு எதெது நல்லது பண்ணுமோ அதைப் பிரியமாகச் சொல்வதுதான் ஸத்யம். அதனால், ஆசார்யாள் மநுஷ்யர்களில் ஞான மார்க்கமாகப் போகக் கூடியவர்கள், பக்தி மார்க்கமாகப் போகக் கூடியவர்கள் என்று பாகுபடுத்தி ஞான மார்க்கத்தில் போகக்கூடியவர்களுக்கு எதை எப்படிச் சொல்ல வேண்டுமோ அதை அத்வைத கிரந்தங்களில் சொன்னார்.

மூலமான ஒன்றையே பார்க்கப் பிரயத்னப்படுகிறவர்கள் அதற்கான பக்குவம் அடைகிற ஸ்திதியில், பல பலவாகப் பிரிந்திருக்கிற இந்தப் பிரபஞ்சத்தையும், அதைப் பல வித ஸுக துக்கங்களாக அநுபவிக்கிற தங்களுடைய தேஹம், இந்திரியம், மனஸ் முதலியவற்றையும் கொஞ்சங்கூட கவனிக்கக் கூடாதென்பதால் இது எல்லாவற்றையும் அடித்துத் தள்ளிவிட்டு அந்த மூலத்துக்கே போய்ச் செயலில்லாமல் ஒடுங்கச் சொன்னார். அதுதான் ஞான மார்க்கம். அந்தப் பக்குவம் வருவதற்கு முந்தி, அதற்கு வழியாகவே, இதெல்லாவற்றையும் ஒரேயடியாக ஒதுக்கச் சொன்னால் செய்ய முடியாதவர்களுக்கு பக்தியை உபதேசம் பண்ணினார். இந்திரிய-மனோ வியாபாரத்தையும், வியவஹாரப் பிரபஞ்ச திருஷ்டியையும் விடமுடியாதபோது, அதற்காக ஒரேயடியாக மூலத்தை மறந்து, மனஸ்போனபடி இந்திரிய ஸௌக்யத்திலும், அழுகையிலும், பயத்திலுமே ஜனங்கள் மாட்டிக்கொண்டு வீணாகப் போகாமலிருப்பதற்காக ஒரு வழி சொன்னார் - இதெல்லாவற்றையும் அந்த சாந்தமான மூலமே சக்தியுள்ள ஈச்வரனாக நிர்வாஹம் பண்ணுகிறது என்று காட்டி, ஜகத் வியாபாரத்தை அவன் லீலையாகப் பார்க்கப் பண்ணி மனஸ் இந்திரியம் எல்லாவற்றையும் அவனுடைய தியானம், பூஜை, கதா சிரவணம், ஸங்கீர்த்தனம் இவற்றிலே ஈடுபடுத்தப் பண்ணி பக்தியை உபதேசம் செய்தார். இப்படி ஜகத்தையும், மனஸையும் இந்திரியங்களையும் கொண்டே காரியப் பிரம்மத்தைப் பிடித்தவிட்டால், அப்புறம் காரணப் பிரம்மமாகச் செயலில்லாமலிருக்கிற ஸ்திதிக்கு இதை எல்லாம் விட்டுவிட்டுப் போவதற்குரிய யோக்யதா ஸித்தி அவனருளாலேயே பிறந்துவிடும் என்பதால் பக்தியை உபதேசித்தார்.

ஒரு தாயார் சாப்பிட அடம் பண்ணும் சோனிக் குழந்தைக்கு நல்ல வார்த்தை சொல்லி, கதை சொல்லி, காக்காயைக் காட்டி விதவிதமான ஆஹாரத்தை ஊட்டுகிறாள்; அஜீர்ணத்தில் கஷ்டப்படுகிற இன்னொரு குழந்தைக்கு, 'கஞ்சிதான் எல்லாவற்றையும்விட உசந்தது'என்று அதைவிட நல்ல வார்த்தை சொல்லிப் போட்டுகிறாள். அவள் வித்யாஸமாகச் செய்கிறாள், ஸத்யமாக நடக்கவில்லை என்று சொல்லலாமா?

அவரவர் மனோபாவத்துக்கு ஏற்றபடி ஆசார்யாள் இரண்டு விதமாகச் சொன்னார் என்றால் மட்டும் போதாது. அவர் சொன்ன இரண்டுமே இரண்டு விதமான 'ஸ்டேஜ்'களில் (நிலைகளில்) ஸத்யம்தான். வியவஹார தசையில் லோகம், ஸ்ருஷ்டி இவற்றை ஆக்கிப் படைத்து ஆட்டிவைக்கிற ஈச்வரனும் மனஸூ-இந்திரியங்களோடு கூடிய தனி ஜீவனும் இரண்டு வேறு வஸ்துக்களாக இருப்பதும் ஸத்யம். இந்த வியவஹாரத்துக்குக் காரணம் என்ன, மூலம் என்ன என்று பார்க்கிறபோது இதற்கெல்லாம் அப்பாற்பட்டு, இதையெல்லாம் ஒரு மாயா விளையாட்டாகவே, செப்பிடு [செப்படி] வித்தையாகவே பண்ணிக்கொண்டு, ஆனால் ஒன்றும் பண்ணாமல் தன்னில் தானாக ஒரே ஸத் வஸ்து இருப்பதும் ஸத்யம்.

அந்தந்த மார்க்கத்தில் போகிறவர்களுக்கு, அதிலேயே பிடிப்பு ஏற்பட வேண்டும்;அதற்கான பக்வம் ஏற்படாத போது இன்னொன்றில் தலையை விட்டு ஐகாக்ரியம் [சித்த ஒருமுகப்பாடு]சிதற விடக் கூடாது என்பதால் அத்தையும் சொல்லும்போது அதைக் கொஞ்சம் கூடவே உயர்த்தி வைத்தும், இன்னொன்றைக் கொஞ்சம் மட்டம் தட்டுகிற மாதிரியாகவும் சொல்ல வேண்டியதாகும். அதனால், 'லாஜிக'லாக ஸரியா, தப்பா என்று இதையெல்லாம் விமரிசிக்காமல், 'லாஜிக்கு'க்குள் வராத மனோபாவ பேதம் ('லாஜிகல்'இல்லை;'ஸைகலாஜிகல்'தராதரம்), அதிகாரி பேதம் முதலியவற்றை அநுஸரித்து அவாளவாளுக்கும் அநுகூலமாக ஆத்மாபிவிருத்திக்கு வழி சொல்ல வேண்டுமானால் இப்படி வித்யாஸமாகத்தான் சொல்ல வேண்டும் என்று புரிந்துகொள்ள வேண்டும்.

சோனிக் குழந்தையிடம் ஒரு தாயார்க்காரி கசப்பு மருந்தைக் தித்திக்கும் என்று சொல்லி வாயைத் திறக்கப் பண்ணி அடி நாக்கில் தடவிவிட்டால், அவள் சொன்னது ஸத்யந்தான். பேதியாகிற குழந்தையிடம் மைஸூர்ப் பாகை அரப்புக் கட்டி என்று சொல்லித் தின்னவிடாமல் தடுப்பதும் ஸத்யந்தான். ஸத்ய லக்ஷணம் என்னவென்றால்:பிறத்தியார் ஒருவருடைய நலனே நோக்கமாயிருக்கணும்;அதற்காக வேறே யாருக்கோ கெடுதல் பண்ணி இவர்களுக்கு நன்மை செய்வதாகவும்

இருக்கப்படாது அதாவது எவருக்கும் கெடுதல் உண்டாக்காததாக இருக்க வேண்டும்;ஸ்வய லாபம், ஸ்வய நலம் கலக்காமல் இருக்க வேண்டும்;யாருடைய நலனை உத்தேசிக்கிறோமோ அவர்கள் பிரியமாக ஏற்று ஸௌக்யமாகப் பின்பற்றும் படியாகவும் இருக்க வேண்டும்.

இந்த நோக்கத்தில், நன்னோக்கத்தில், ஒன்றை மட்டம் தட்டி இன்னொன்றை உசத்திச் சொல்ல நேர்ந்தாலும் அப்போது 'மட்டம் தட்டினது வாஸ்தவமாகவே மஹா மட்டம்'என்று கழித்துக் கட்டுவது லக்ஷ்யமில்லை;'உசத்திச் சொன்னதுதான் தனக்கானாது'என்று அந்த ஆஸாமி புரிந்து கொண்டு எடுத்துக்கொள்ளப் பண்ணுவது தான் லக்ஷ்யம். இவனுக்கு இதுதான் ஏற்றது, ஒத்து வரும் என்பதால் அப்படிப்பட்டதில் அவனுக்கு ஒருமுகமான பிடிப்பு ஏற்படுத்தித் தரும் நல்ல எண்ணத்தில்தான், வேறே ஒன்றில் அவன் இறங்கிக் குழறுபடி பண்ணிக் கொள்ளாமல் தடுக்குமுகமாக அந்த இன்னொன்றை மட்டம் தட்டுவது. வேறே விதமான மனப்பான்மை, ஸம்ஸ்காரம் உள்ளவனுக்கோ இவன் விஷயமாக எதை உசத்திச் சொல்லிற்றோ அதை மட்டம் தட்டியும், இவனுக்கு எதை நிஷித்தமாகக் காட்டிற்றோ அதை உத்கர்ஷமாகவும் சொல்ல வேண்டியதாகும். இப்படித்தான் புராணங்களில், ஸ்தோத்ரங்களில் அந்தந்த தெய்வத்தைப் பற்றிச் சொல்லும் போதும் அதுவே மற்ற எல்லா தெய்வங்களுக்கும் மேலானது என்று உத்கர்ஷம் சொல்வது.

அத்வைதத்தில் எதை விட்டுவிடும்படி ஆசார்யாள் சொன்னாரோ அதையே பக்தியில் 'கெட்டியா பிடிச்சுக்கோ!'என்று ஸ்தோத்ரித்திருப்பது இந்த நியாயத்தில்தான். மாயை என்று அங்கே திட்டியது பக்தி பண்ண வேண்டாதவர்களுக்கு;பக்தி மார்க்கத்தில் போக வேண்டிய அவச்யமில்லாதவர்களுக்கு!பக்தியாயிருப்பது என்றால் பக்தனாக இருப்பவன் பகவானிடமிருந்து கொஞ்சமாவது பிரிந்திருந்தால்தானே முடியும்?இப்படிக் கொஞ்சம்கூடப் பிரியாமல் ஒன்றாகி விடுவதற்கான ஞான (அத்வைத) வழியில் போகக்கூடியவர்கள் நாம் சொல்கிற அர்த்தத்தில், நாம் நினைக்கிற ரீதியில் பக்தி பண்ண வேண்டிய அவச்யமில்லைதான். அவர்கள் விஷயத்தில் ஸ்வ-ஸ்வரூபாநுஸந்தானமேதான் (தனது மெய்யான உயிர்ப் பொருளை உன்னி உணர்ந்திருத்தலேதான்)பக்தி என்று

ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். ஆனால் அப்படி இருப்பவர்கள் ரொம்பக் கொஞ்சம் பேரே.

பெரும்பாலானவர்களாக நாம் எப்படியிருக்கிறோம்?சித்தமும், புலன்களும் ஓடுகிற வழியில் ஓடிக்கொண்டு நியாயாநியாயம், தர்மாதர்மம் பார்க்காமல் நாம் ஸந்தோஷம் என்று நினைப்பதையே ஸரியானது என்றும் நினைத்துப் பலவிதமான தப்புக்களை, பாபங்களைப் பண்ணுகிறோம். பிரம்மாதி தேவர்களையும் ஆட்டிப் படைக்கிற ஒரு சக்தி, பிரம்மத்தையே அசைக்கிற பராசக்தி, ஒன்று இருப்பதாக நமக்கு அடக்கம், பக்தி, பயம் உண்டாகித் தப்புத் தண்டாக்களைக் குறைத்துக்கொள்ள நினைப்பு வரும். 'செயலேயில்லாத சிவம்தான் ஸத்யம்; அங்கே நியாயமும் இல்லை, அநியாயமும் இல்லை; தர்மும் இல்லை, அதர்மமும் இல்லை பாபமும் இல்லை, புண்ணியமும் இல்லை. இதெல்லாமே மாயை. அது (சிவம்) இது இது எதோடும் ஸம்பந்தமே படாதது. அது தண்டிப்பதும் இல்லை; வரம் தருவதுமில்லை'என்று அத்வைதமாகச் சொன்னால், அதை நாம் குயுக்தி பண்ணிக்கொண்டு, 'நம் இஷ்டப்படி, மனம் போகிற போக்கில் எது வேண்டுமானாலும் செய்யலாம்'என்று யீக்ஷீமீ ரீவீநீமீஸீநீமீ-ஆகத்தானே வைத்துக்கொள்வோம்?அதனால்தான் ஸ்தோத்ரத்தை ஆரம்பிக்கிறபோதே ஆசார்யாள் நமக்கு அஹம்பாவம் போகவேண்டுமென்பதற்காக, நமக்கு அடக்கம் ஏற்படும் விதத்தில், "சிவத்தையும் அசைவிக்கிறதாக, திரிமூர்த்திகளும் ஆராதிக்கிறதாக 'ஹரி ஹர விரிஞ்சாதிபி:அபி ஆராத்யாம்':விஷ்ணு, ருத்ரன், ப்ரம்மா இவர்களாலும் ஆராதிக்கப்படுகிறவளாக - மஹாசக்தியாக அம்பாள் இருக்கிறாள். அவளை நாம் நமஸ்காரம் பண்ண முடியும், ஸ்தோத்ரம் பண்ண முடியும் என்று நினைப்பதற்குக்கூட நமக்கு சக்தி இல்லை. இந்த ஸ்துதி-நுதிகளுங்கூட (துதிப்பதும் தொழுவதுங்கூட)அவள் அநுக்ரஹத்தால்தான் நடக்கவேண்டும். நடப்பதற்கு நாம் தர்மமாக, நியாயமாக, பக்தியாக நடந்துகொண்டு புண்யங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்"என்று அர்த்தம் கொடுக்கிற ச்லோகத்தைச் செய்திருக்கிறார்.

---

## பஞ்ச க்ருத்யமும்காமேச்வரி-காமேச்வரர்களும்

ஹரி-ஹர-விரிஞ்சன் என்று த்ரிமூர்த்திகளைச் சொல்கிறார். இவர்கள் அம்பாளை வழிபடுவதாகச் சொல்கிறார். இதற்கு முன்னாடி, 'சிவனும் உன்னோடு கூடினால்தான் அசையக்கூட முடிகிறது - அதாவது, பிரபஞ்ச நிர்வாஹத்தைப் பண்ண முடிகிறது'என்றார். அப்படியானால் மும் மூர்த்திகளில் சொன்ன 'ஹரன்'வேறு, முதலில் சொன்ன 'சிவன்'வேறு என்றாகிறது; இல்லையா?

எல்லாம் ஒன்று என்பது இருக்கட்டும். அந்த அத்வைதம் இங்கே எடுபடாது என்றுதானே ஸ்தோத்திரமே ஏற்பட்டிருக்கிறது?இந்த நிலையில் - உள்ளே எல்லாம் ஒன்றாயிருந்தாலும், வெளியில் வேறாகக் காண்கிற நிலையில் - ஹரன் வேறு, சிவன் வேறுதான்.

'ஹரன்'என்றால் போக்குகிறவன், நீக்குகிறவன், இல்லாமல் பண்ணுகிறவன் என்று அர்த்தம். அபஹரணம், ஸம்ஹரணம் என்பதில் வரும் 'ஹர'இதுதான். இதுவே 'ஹாரம்'என்றும் வரும் - அபஹாரம், ஸம்ஹாரம். ஸ்ருஷ்டிக்கும் ப்ரம்மா, ரக்ஷிக்கும் விஷ்ணு, ஸம்ஹாரம் செய்யும் ருத்ரன் என்ற மூன்றில் ஸம்ஹார ருத்ரனைத்தான் ஹரன் என்கிறார்.

ஒரே பரமாத்மாதான் முத்தொழிலுக்காக இப்படி மும்மூர்த்தியாயிற்று. அவர்களுக்கு அந்தத் தொழில்களைப் பண்ணுவதற்கான சக்தி பரமாத்மாவின் மூலமான சக்தியிலிருந்துதான் வந்திருக்கிறது. அந்த மூல சக்தியே அம்பாள். பரமாத்மா என்கிற பரப்ரம்மத்தின் சக்தி அவள். மும்மூர்த்தி மாத்திரமின்றி ஈ, எறும்பிலிருந்து அத்தனை ஜீவராசிகளின் சக்தியும் அவளிடமிருந்து வந்ததுதான்;ஸகல ஜகத்திலுள்ள ஜட வஸ்துக்களின் சக்தியுந்தான்!

பரப்ரம்மத்தின் சக்தி என்றால் அதுவும் பரப்ரம்மமேதான். எது ஒன்றும் அதுவாக இருக்கக் காரணம் அதன் சக்திதானே?ஒரு வஸ்துவின் சக்திபோய்விட்டதென்றால் அந்த வஸ்துவின் பயனே போய்தானே விடுகிறது?பத்து ஹார்ஸ் பவர் மோட்டார் என்றால் அந்த ஹார்ஸ் பவர்தானே அந்த மோட்டாரை மோட்டாராக்கியிருக்கிறது?அந்தப் பவர் போய்விட்டால்?அதுவே போன மாதிரிதானே?அப்புறம் மோட்டார் என்று பேர் வைத்துச் செய்த கார்யம் எதுவாவது அது செய்ய முடியுமா?அதன் உள்ளேயே கையைவிட்டு விளையாடினால்கூட 'ஷாக்'அடிக்காது. ஒரு ஆஸாமி அந்த ஆஸாமியாயிருப்பதே அவனுடைய சக்தியினால்தான். ஆனபடியால் பரப்ரம்ம சக்தி என்பது பரப்ரம்மமேதான். ஆனாலும், யாரானாலும் தன் சக்தியைக் காட்டாமல் சும்மாயிருக்கவும் செய்யலாமல்லவா? அப்படி வெளி வ்யாபாரத்தில் ஈடுபடாமல் சாந்தமாக, தன்னில் தானாக பரப்ரம்மம் இருப்பதையே 'சிவம்' என்பது.

அப்படிப்பட்ட சிவ நிலையிலிருந்துதான் வெளியிலேயே ஓடிக்கொண்டிருக்கும் மனஸ், வெளி வ்யாபாரங்களிலேயே விழுந்துகொண்டிருக்கிற இந்திரியங்கள் ஆகியவற்றைக் கொண்ட ஜீவ நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். நம்முடைய நிஜத்தன்மையை நாம் அடைந்து, மாயா கார்யமும் ஸம்ஸார பந்தமும் போய் மோக்ஷத்தில் எப்போது சேர்வோம் என்றால் அந்த சாந்த சிவத்திலேயே மறுபடி இரண்டறக் கலக்கிறபோதுதான். நமக்கு மிகவும் உயர்ந்த ஆனந்தத்தைக் கொடுப்பதான மோக்ஷம் இப்படி சாந்தமாயிருப்பதால், அப்போது நாம் இரண்டறக் கலந்திருக்கும் ப்ரம்மமும் சாந்தமாக, செயலில்லாமல், சக்தியைக் காட்டாமல் இருப்பதாகவே ஏற்படுகிறது. அதனால்தான் ப்ரம்மம், பரப்ரம்மம் என்றாலே செயலடங்கியுள்ள ஒன்றாகச் சொல்கிறோம். ஒரு செயலுமில்லாமல் ஒருத்தர் சித்தப்ரமை பிடித்து உட்கார்ந்திருந்தால் "ப்ரம்மமாயிருக்கு" என்கிறோம்!

இப்படிப் பார்த்துக்கொண்டு போகிறபோது சிவன் பரப்ரம்மம், அம்பாள் பரப்ரம்ம சக்தி என்று பாகுபடுத்திச் சொல்ல இடமேற்படுகிறது - இது இல்லாமல் அது இல்லை என்றாலும், இரண்டையும் வேறு வேறு மாதிரிப் பிரித்துக் காட்ட

இடமேற்படுகிறது.

இப்போது ப்ரம்ம சக்தியினால் நடக்கும் கார்யங்களில் முத்தொழிலோடுகூட இன்னும் இரண்டைச் சேர்த்துக் கொள்ள வேண்டியதாகிறது. சாந்த சிவ ஸ்வரூபமாகவே இருந்த நமக்கு அந்த ஸ்வரூப ஞானத்தை மறைத்து அதனிடத்தில் அஞ்ஞான ஜீவ பாவத்தைத் தோன்றப் பண்ணி ஸம்ஸார மாயையில் பிடித்துத் தள்ளியிருக்கிற ஒரு தொழிலையும் ப்ரம்ம சக்தி செய்விக்கிறாள் என்று தெரிகிறது. இந்த மாயையிலிருந்து தப்பித்துப் பல மஹான்கள் தங்களுடைய நிஜ ஸ்வரூபமான சிவ ஸ்வரூப ஞானம் பெற்று சாந்த ஸமாதியான மோக்ஷநிலையை அடைந்திருக்கிறார்களென்பதிலிருந்து இப்படிப்பட்ட மோக்ஷஅநுக்ரஹத்தைச் செய்வதான தொழிலையும் பராசக்தி - ப்ரம்மசக்தி - செய்வதாக ஏற்படுகிறது. ஆக, ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரத்தோடு இன்னும் இரண்டு தொழில் சேர்கிறது:ஒன்று - நமக்கு நம்முடைய நிஜமான ஆத்ம ஸ்வரூபம் தெரியாமல் மாயா சக்தியால் மறைப்பது. இன்னொன்று - மாயையிலே மாட்டிக்கொண்டிருக்கிற நம்மை அதிலிருந்து விடுவித்து, 'சிவமாக்கி எனையாண்ட்'என்று மாணிக்கவாசக ஸ்வாமிகள் பாடின மாதிரி பரமாத்ம ஸ்வரூபத்தில் சேர்த்து மோக்ஷத்தை அநுக்ரஹிப்பது. இந்த இரண்டு தொழிலுக்கும் முறையே 'திரோதானம்'என்றும் 'Ü,,óý‹'â¡Á‹ «ð˜. F«ó£î£ù‹ â¡ð¬î ˆ F«ó£ð£õ‹ â¡Á‹ ªê£™õ¶‡´. 'Fóv'â¡Aø î£¶¾,° 'óývòŠð´ˆ¶õ¶', 'ñ¬øŠð¶'â¡Á‹ Ü˜ˆî‹. 'FóvèKE'â¡Á å¼ Mˆ¬î «èœMŠð†®¼,èô£‹ - å¼ õv¶¬õ ñ¬ø‰¶«ð£°‹ð®Š ð‡µ‹ Mˆ¬î. 'Fóv'RL¼‰¶î£¡ 'F¬ó'õ‰F¼,Aø¶. å¼ õv¶¬õ ïñ,°ˆ ªîKò£îð® F¬ó M¿‰¶ ñ¬øˆîM´Aø «î£™L«ò£?ñ£¬òˆ F¬ó¬òŠ «ð£†´ ï‹ Ýˆñvṏð˜¬î ñ¬øˆ¶ ú‹ú£óˆF™ Ý†ð´ˆ¶Aø ðó£ê,FJ¡ ªî£N™ F«ó£î£ù‹. F¬ó¬ò ÜÁˆ¶ «ñ£þ‹ ªè£´,°‹ ªî£N™ Ü,,óý‹. ðó£ê,F v¼w®, vFF, ú‹ý£óƒèÀ,° ÜFè£Kò£è Šó‹ñ£, Mwµ, ¼ˆó˜è¬÷ ¬õˆF¼Šð¶ ñ£FK F«ó£î£ùˆFŸ° ¬õˆ¶œ÷ ÜFè£K,°Š «ð˜î£¡ ß,,õó¡. ñ«ý,,õó¡ â¡Á‹ ªê£™õ¶‡´. ºîL™ ªê£¡ù º^ªî£N½‹ ñ£¬ò,° à†ð†ì¶î£¡. Ü‰î ñ£ò£ «ô£è G˜õ£ý‹ º¿,è ß,,õóQ¡ ÜFè£óˆF™ Þ¼,Aø¶.

ñ£¬ò¬ò Gš¼ˆF ð‡E «ñ£þ¬î, ªè£´‚°‹ Ü¸óý ªî£N¬ôŠ ð‡µ‹ ÜFè£KJ¡ «ð˜ úî£Cõ¡.

ஐந்தொழில் - பஞ்சக்ருத்யம் - என்று இவற்றைச் சொல்வது. சைவ ஸித்தாந்தம் முதலான சிவ மதங்களிலும் இது உண்டு. ஆக்கல், அளித்தல் (காப்பு அளித்தல்), அழித்தல், மறைத்தல்;அருளல் என்று தமிழில் சொல்வார்கள். சைவர்கள் இப்படி பஞ்ச க்ருத்யம் புரிவது பரமசிவன்என்று சொல்வார்கள். நடராஜாவின் நாட்டியத்தையே 'பஞ்ச க்ருத்ய பரமானந்த தாண்டவம்'என்று விளக்குவார்கள். சாக்தத்தில் அம்பாளைத்தான் பஞ்ச க்ருத்யம் புரிபவளாகச் சொல்வார்கள். "பஞ்ச க்ருத்ய பராயணா"என்று ஸஹஸ்ரநாமத்தில் பேர் வருகிறது.

எடுத்துக்கொண்ட விஷயம் சாக்தமான ஸ்தோத்ரம் என்பதால் மட்டுமில்லாமல், நடுநிலையாகப் பார்த்தாலுங்கூட பஞ்சக்ருத்யங்களையும் ஒவ்வோர் அதிகாரிகளைக் கொண்டு செய்கிற தலைமை ஸ்தான அதிகாரி அம்பாள் என்பதே அதிகப் பொருத்தம் என்று தெரியும். எப்படியென்றால், க்ருத்யம் - கார்யம் செய்வது -என்பது சக்தியைக் கொண்டு நடப்பதுதானே? சக்தியைக் காட்டினால்தானே கார்யம் நடக்கும்? சக்தி என்றாலே அம்பாள் தானே? சைவ சாஸ்திரங்களிலும் சக்தி ஸஹிதனாகவே தான் சிவனைச் சொல்லியிருக்கிறது - அதாவது சிவ பத்னிக்குத்தான் சக்தி என்று பேர் கொடுத்து, அவளோடு அவன் சேர்ந்திருப்பதாகவே சொல்லியிருக்கிறது.

அத்வைதத்திற்கும், நம்முடைய 'ஸௌந்தர்ய லஹரி'யின் அபிப்ராயங்களுக்கும் ரொம்பக் கிட்ட வந்துவிடுகிற காஷ்மீர சைவத்தில் உச்சாணியான பரமாத்மாவை 'சிவ-சக்தி'என்றே சேர்த்துச் சொல்லியிருக்கிறது. ஆகையினால், வெறும் தத்வமாக, ஸமாதி மாதிரியான கார்யமில்லாத உள்ளநுபவமாக இல்லாமல் கார்யம், பஞ்ச 'க்ருத்யம்'என்று வரும்போது அதைப் பராசக்தியான அம்பாளின் அதிகாரத்தில் சொல்வதுதான் பொருத்தம்.

ஐந்து அதிகார தேவதைகளைக் கொண்டு அவள் பஞ்ச க்ருத்யம் பண்ணுகிறாள் என்றாள் அப்போது அவள் அந்த ஐந்துக்கும் மேலே, ஐவருக்கும் மேலே இருக்கிறாள் என்றாகிறது. பரப்ரஹ்மத்தின் பரிபூர்ண சக்தியிலிருந்து

தானே இந்த ஐந்து சக்திகளும் வந்திருக்கின்றன?அப்போது அதுதானே எல்லாவற்றுக்கும் மேலானதாக இருக்க வேண்டும்?

அந்த மூலசக்திதான் நம் ஸ்தோத்ரத்தின் லக்ஷ்யமான ஸுந்தரி. அத்தனை தொழில்களுக்குமே அவள்தான் ஆதார சக்தி. க்ருத்ய மூர்த்திகள் ஐந்து பேருக்குமே அவள்தான் (சிரித்து)யசமானியம்மா!ஞானத்தை, மோக்ஷத்தை அநுக்ரஹிக்கும் ஸதாசிவனுக்குங்கூட அவள் மேலே அவன் வெறும் ஞான ஸ்வரூபமாக இருக்கிறபோது -'ழீஹுஸுஷமீ ஙிமீவீஸீரீ'என்கிறார்கஙே, அப்படி, 'இருக்கிறதுதான்', 'செய்கிறதில்லை'என்று தன்னில் தானாக இருக்கும்போது அவனுக்கு மேலே, கீழே ஒன்றும் கிடையாது. ஆனால் அவனும் ஞானத்தை அநுக்ரஹிப்பது என்ற கார்யத்தைப் பண்ணும்போது அப்படி அவனைப் பண்ணுவிக்கிற சக்தி அவனுக்கும் மேலே இருக்கத்தானே செய்கிறது?

"«ñ«ô"â¡ð¬î vÉôñ£è«õ Ü‰î ä‰¶ «ð¼,°‹ «ñ«ô Üõœ à†è£˜‰¶ ªè£‡®¼Šðî£è ú£è£ó^F™ [à¼õ^F™]è£†®, Ü¸ðMèÀ,°‹ ñ‰^ó R^F ªðŸøõ˜èÀ,°‹ î˜êù‹ ªè£´^F¼,Aø£œ. âŠð®ªò¡ø£™ Üõœ ó£üó£«ü,,õKò£è, ªè£½ iŸP¼,°‹ Ýúù^F¡ ï£½ è£™è÷£è Šóyñ-Mwµ-¼^ó ñ«ý,,õó˜èœ Þ¼Šð£˜èœ. ï£½ è£¬ô»‹ «ê˜^¶ à†è£˜õîŸè£ù «ñ™ ðô¬è Þ¼,°ñ™ôõ£? Ü‰îŠ ðô¬èò£è úî£Cõ¡ Þ¼Šð£˜.

இப்படி ப்ரஹ்மாதி பஞ்ச க்ருத்ய மூர்த்திகளை ஆஸனமாக்கிக் கொண்டிருக்கும் அம்பாளை, அதாவது பூர்ண ப்ரஹ்ம சக்தியைக் காமேச்வரி என்று சொல்வது. அந்த அவஸரத்தில் பரப்ரஹ்மத்தை அவளுடைய பதியான காமேச்வரன் என்று சொல்வது.

"அவள்தான் ஸகலமும் பண்ணுகிறவள் என்னும் போது அவளுக்கு எதற்குப் பதி என்று ஒருத்தனைச் சொல்லி, காமேச்வரன் என்று அவனுக்குப் பேர் கொடுத்து வைக்க வேண்டும்?"

அவள்தான் ஸகலமும் என்றாலும் அவளுக்குள்ள அநேக ரூப பேதங்களில் இப்படி ஶ்ரீவித்யா தேவதையாக

இருக்கும்போது மாதா என்ற பாவமே அவளுக்கு முக்யமானது. நாம் எல்லோரும் அவளை ஒரு குழந்தை அம்மாவிடம் அன்போடு போய் ஒட்டிக்கொள்கிறது போல அன்பு பண்ண வேண்டும் என்பதாலேயே மஹாசக்தியான அவள் சக்தியைவிட ஸௌந்தர்யமும் லளிதமும் பொங்கித் ததும்பும்படியாக இப்படி ரூபம் கொண்டது. அதனால்தான் ஸஹஸ்ரநாமத்தில் ஆரம்பப் பேரே "ஸ்ரீமாதா"என்று இருப்பது. நம்மை ஸ்ருஷ்டித்து, பரிபாலித்து, ஜன்மாக்களுக்கு நடு நடுவே ஸம்ஹாரம் என்ற பெயரிலே 'ரெஸ்ட்'கொடுத்து, மாயா மறைப்பு விளையாட்டுகளும் காட்டி, முடிவிலே மோக்ஷாநுக்ரஹத்தில் தன்னோடு ஒன்றுபடுத்திக் கொள்ளும் தாயாக இருப்பவள் அவள். தாயார் என்று 'பார்ட்'(வேஷம்) போட்டுக் கொண்டால் தகப்பனாரைக் காட்டியே ஆக வேண்டும்.

தகப்பனாரில்லாத தாயாரென்றால் ... இரண்டு தினுஸாகவும் 'அந்த மாதிரி'ஜகன் மாதாவை நினைக்க விடலாமா? கன்னியான பாலா, கன்யாகுமாரி ஆகியவர்களின் ஸமாசாரம் வேறே. அஸுரசக்திகளை அடக்கவே ஏற்பட்ட துர்கை விஷயமும் வேறே. இவள் முக்யமாக ஸ்ரீமாதா. அப்போது பிதாவும் இருந்துதானே ஆகணும்?அதனால்தான் காமேச்வரனைப் பசியாகக் கொண்டது;அந்த 'உப்புக்குச் சப்பாணி'அகமுடையானுக்கு லோக தர்மத்தை அநுஸரித்து உசந்த ஸ்தானமும் கொடுத்தது. "(லலிதா)த்ரிசதி"யில் அவள் காமேச்வரன் பத்னி என்பதற்கே பதினைந்து பேர்களை அடுக்கிக் கொண்டு போயிருக்கிறது.

ராஜராஜேச்வரி, லலிதா, த்ரிபுரஸுந்தரி முதலான பெயர்களைக் கொண்டவளும் அவளேதான் என்றாலும் காமேச்வரி நாமாவுக்குத் தனிச் சிறப்பு உண்டு. என்னவென்றால், சைவத்தில் சிவன் எப்படி சக்தி ஸஹிதனாகவே இருக்கிறானோ, அப்படியே சாக்தத்திலும் இந்த ஸ்ரீவித்யா தந்த்ரத்தில் சக்தியானவள் சிவ ஸஹிதையாகவே பக்தியோடு இருக்கிறாள். பூர்ண ப்ரஹ்ம சக்திக்கு யார் பதியாக இருக்க முடியும்? அதைத் தவிர எதுவுமே இல்லாதபோது யார் பதி ஆகமுடியுமென்று ஆலோசித்துப் பார்த்தால் சக்தியைக் காட்டாமல், கார்யம் பண்ணாமல், சாந்தமாக இருந்து கொண்டிருக்கிற ப்ரஹ்மமான சிவன்தான் அந்த சக்திக்கு வேறே மாதிரி, இன்னொன்று

மாதிரி தெரிவதால் அதுதான் பதியாயிருக்க முடியுமென்று தெரிகிறது. அதாவது சாந்த சிவனின் சக்தி ப்ரபாவம் அந்தப் பத்னி மூலம் பஞ்ச க்ருத்யங்களாக வெளிப்படுவதாக ஆகிறது.

இதிலிருந்து இன்னும் என்ன ஆகிறதென்றால், அந்த சிவனே நேராக சக்தி விலாஸத்தைக் காட்டும் கார்யத்தைப் பண்ணாவிட்டாலும், அப்படிப் பண்ணவேண்டும் என்று ஆசைப்பட்டதாக ஆகிறது. "ஒன்றாக இருந்த ப்ரம்மம் பலவாக ஆக ஆசைப்பட்டது" என்றே உபநிஷத்துச் சொல்கிறது. சாந்த ப்ரம்மம் அப்படியே இல்லாமல் கார்ய ப்ரம்மமாயிற்று என்றால், அப்போது அந்தக் கார்யத்துக்கெல்லாம் முந்தி, அது கார்ய ப்ரம்மமாகணும் என்று ஆசைப்பட்டிருக்கணும்தானே?'ஆசைப்பட்டது'- 'அகாமயத' என்றே உபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. எப்போதும் சித்சக்தியான ஞானசக்தியை உள்ளே வைத்துக் கொண்டுள்ள ப்ரஹ்மம் - சிவம் - சக்தியை வெளிப்படுத்தி ப்ரபஞ்ச லீலை பண்ணவேண்டும் என்று ஆசைப்பட்டதே அதனுடைய இச்சா சக்தி எனப்படுகிறது. அப்புறம் வாஸ்தவமாகவே பஞ்ச க்ருத்ய லீலை செய்தது க்ரியா சக்தி. அது இருக்கட்டும். இப்போது விஷயம், தன்னில் தானாயிருந்த ப்ரம்மம் வெளிமுகப்படும்போது முதலில் தோன்றியது அதன் இச்சை, ஆசை;'காமம்'என்று உபநிஷத் சொல்வது. 'காமம்'என்பது இங்கே தப்பர்த்தம் தருவதில்லை. சுத்தமான இச்சைக்கே அப்படிப் பேர். பூர்ண ப்ரஹ்ம சக்தி ப்ரஹமத்திலிருந்து வேறே மாதிரி கொண்ட முதல் ஆவிர்பாவம் அந்தக் காமம். அதுவேதான் அவனுக்குப் பத்னி ஸ்தானம். அப்பா அம்மா சேர்ந்து ப்ரஜைகள் உண்டாகிறாற்போல சாந்த ப்ரஹ்மமான சிவன் இந்த இச்சா சக்தியோடு சேர்ந்தால்தான் ப்ரபஞ்ச லீலை, பஞ்ச க்ருத்யங்கள் எல்லாம் என்பதால் அவர்கள் பதியும் பத்னியும் ஆகிறார்கள். அவனுடைய இச்சையின், காமத்தின் ஸ்வரூபமானதால்தான் அவளுக்குக் காமேச்வரி என்று பெயர்.

அதுதான் முதல் பெயர். ப்ரஹ்மத்திடமிருந்து முதல் மீஸ்ஷீர்஌பமீமீ (பரிணாம தத்வம்) காமம் என்றால் அதை வைத்து ஏற்பட்ட (காமேச்வரி என்ற)பேர்தானே ப்ரஹ்ம சக்தியின் முதல் நாமாவாக, ப்ரதான நாமாவாக இருக்க

வேண்டும்?எவன் இப்படி ஆசைப்பட்டானோ அவன் காமேச்வரன். வெறும் ப்ரஹ்மமாக இருந்த அவன் ஆசைப்பட்டதோடு ஸரி. அந்த ஆசையைக் கார்யமாக்கி ப்ரபஞ்ச லீலையாகப் பஞ்ச க்ருத்யம் என்று வாஸ்தவமாகவே பண்ணிக் காட்டுவது முழுக்க முழுக்க சக்தியான அவள்தான். அதாவது, காமேச்வரிதான் விக்டோரியா, எஸிபெத் ராணிகள் மாதிரி, தானே பூர்ண ஆட்சியதிகாரத்துடன் இருப்பவள்;ஸமஸ்த ஜகத்துக்களையும் ஜீவர்களையும், தேவர்களையும் ஆள்கிறவள்.

ஆள்கிற ராஜாவுக்குப் பெண்டாட்டியாயிருப்பதால் மட்டும் ராணியில்லை;தானே நேராக ஆட்சிப் பொறுப்பு வஹிக்கிற ராணி!ஸஹஸ்ரநாமத்தில் முதல் நாமாவாக 'ஸ்ரீமாதா'என்று அவளை அன்போடு அம்மாவாகக் கூப்பிட்டவுடனேயே அடுத்த இரண்டு நாமாக்கள் அவளுடைய ஆட்சியதிகாரத்தை - அவள் அகிலாண்ட, ப்ரம்மாண்ட சக்ரவர்த்தினியாக இருப்பதைத்தான் - 'ஸ்ரீமஹாராஜ்ஞி'என்றும், 'ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரி'என்றும் சொல்லியிருக்கிறது.

அவள் ஸிம்ஹாஸனேச்வரியாக சிம்மாஸனத்தின் மேலிருப்பது ஒரு கோலம். அது எல்லா ராஜா-ராணிக்கும் உண்டானதுதான். அவளுக்கென்று ஸ்பெஷலாக இருப்பது பஞ்ச ப்ரஹ்மாஸனம் என்று சொன்னேன். அதற்கு மேலே காமேச்வரியாக அவள் உட்கார்ந்திருப்பதைச் சொன்னேன். அவள் தனியாயில்லாமல் பதியான காமேச்வரனோடு கூட இருக்கிறாளென்று சொன்னேன். பஞ்ச ப்ரஹ்மாஸனத்தின் மேலே அந்தக் காமேச்வரனின் மடியின் மேலேதான் அவள் உட்கார்ந்திருக்கிறாள். அதனால் அவனும் அவளுக்கு ஆஸனம்!

ப்ரஹ்மத்திலிருந்து முதலில் தோன்றியது ப்ரபஞ்ச லீலையில் வெளிப்பட வேண்டுமென்ற காமமே ஆதலால் காமேச்வர-காமேச்வரிகள் என்பதே ஆதி தம்பதியரின் ஆதிப் பேர்;முதலான முக்கியப் பேர்.

அவளை லலிதாம்பாள் என்றாலும் அவனை லலிதேச்வரன் என்பதில்லை. லலிதம் என்றால் பரம நளினம், ரொம்ப ம்ருது. பெண்பாலான அவள்தான் அப்படியிருக்க முடியுமே தவிர அவன் அப்படியிருக்க முடியாது. அதே மாதிரி அவளை

ராஜராஜேச்வரி என்றாலும் அவனை ராஜராஜேச்வரன் என்பதில்லை. தஞ்சாவூரில் ராஜராஜேச்வரம் இருக்கிறதென்றால் அது கோவில் கட்டின ராஜா (ராஜராஜ சோழன்)பேரை வைத்து ஏற்பட்ட பெயர்;ஸ்வாமியை வைத்து அந்தக் கோவிலுக்கு ஏற்பட்ட பேர் ப்ருஹதீச்வரம் என்பதே. ராஜராஜேச்வரிக்கு ஜோடியாக ராஜராஜேச்வரன் என்று இல்லை. ஏனென்றால் இப்போது சொன்ன மாதிரி, அவள் தான் ஆட்சி அதிகாரம் பெற்ற அசல் மஹாராஜ்ஞி. (சிரித்து) விக்டோரியாவின் அகமுடையானான ஆல்பெர்ட் மாதிரி, இப்போது எலிஸபெத் அகமுடையான் ஃபிலிப் மாதிரிதான் இந்த மஹா ராஜ்ஞியம்மாளின் பதியும்!இந்த உபமானங்கூட அவ்வளவு ஸரியில்லை. ஏனென்றால் விக்டோரியா, அவளை விடவுங்கூட இப்போதிருக்கிற இங்க்லான்டின் ராணி ஆகியவர்கள் பார்லிமென்டுக்குக் கட்டுப்பட்டவர்கள்தான். ராஜராஜேச்வரி அப்படியில்லை - 'ஸாவரின் பவர்'என்கிற பூர்ண அதிகார ஸ்வதந்திரம் பெற்றவள்.............

'ஸவரன்'என்று பவுனைச் சொல்கிறோம். பவுன் என்பது 'பவுனட்'என்கிற இங்கிலீஷ் வார்த்தைதான். அது ஒரு எடைக்கும் பெயராயிருக்கிறது. ஆதியில் அந்த எடையுள்ள வெள்ளிக்கும் அதே பேர் உண்டாயிற்று. அப்புறம் எப்படியெப்படியோ மாறிப்போய் 72 குந்துமணி எடையுள்ள தங்க நாணயத்திற்கு அந்தப் பேர் வந்துவிட்டது. அதிலே 'ஸாவரி'னான ராஜா தலை போட்டிருக்கும் அதனால் ஸாவரின் என்றும் அந்தக் காசுக்கே பேர் வந்து, தமிழில் ஸவரன் என்றாகிவிட்டது. 'ஸவரன்'என்பதும் 'ஸ்வர்ணம்'என்பதும் ஏறத்தாழ ஒரேபோல ஒலிக்கின்றன. ஸ்வர்ணத்துக்கு ஸவரன் என்று பேர் இருப்பதில் இப்படி இரட்டிப்புப் பொருத்தமிருக்கிறது!.....

அம்பாள்தான் ஆட்சியதிகாரமுள்ள ஸாவரின் ராணி. அதனால் ராஜராஜேச்வரி. ஸ்வாமிக்கு அந்த அதிகாரமில்லை. அதனால் அவரை ராஜராஜேச்வரன் என்று சொல்ல நியாயமில்லை. த்ரிபுரஸுந்தரி என்பது அவளுடைய இன்னொரு முக்யமான பேர். 'ஸௌந்தர்ய லஹரி'என்பதே அந்த த்ரிபுர'ஸுந்தரி'யை வைத்துத்தான் என்று சொன்னேன். இதற்கும் ஜோடிப் பெயராக ஸ்வாமிக்கு த்ரிபுரஸுந்தரன் என்று பேர் கிடையாது.

நேர்மாறாக, பயமுறுத்துகிற மாதிரி, த்ரிபுராந்தகன் (த்ரிபுர அந்தகன்)என்றுதான் இருக்கிறது!ஏனென்றால், மூன்று லோகத்திலும் அவள்தான் ஈடற்ற அழகு. அவனுடைய அழகும் அவள் அழகுக்கு ஈடாகாததால் அவனுக்கு அழகும் அவள் அழகுக்கு ஈடாகாததால் அவனுக்கு அப்படி பேரில்லை. த்ரிபுரஸுந்தரி என்றால் த்ரிலோகங்களிலும் அழகில் முதல் அவளே என்று அர்த்தம். அப்படி அவளை முதல் என்று சொன்னவிட்டு, அவன் எத்தனை அழகாயிருந்தாலும் அவனையும் முதல் என்று எப்படிச் சொல்ல முடியும் அவன் (அழகில்) உசந்த பக்ஷம் போனாலும் இரண்டாவதாகத்தானே இருக்க முடியும்?அதனால் அவனுக்கு த்ரிபுரஸுந்தரன் என்று பேர் கிடையாது.

ஆனால் இரண்டு பேர் (இருவர்)இருந்தால்தானே பரஸ்பரம் ஆசை (காமம்) கொள்ள முடியும்?அதனால் காமேச்வர-காமேச்வரி என்பதுதான் அழகான ஜோடிப் பேராக இருக்கிறது. பஞ்ச ப்ரஹ்மாஸனத்தின் மேலே பூர்ண ப்ரஹ்ம சக்தியானவள் ப்ரஹ்மத்தின் பஹிர்முகப்படும் (வெளிமுகமாகும்)காமத்தை ஹேதுவாகக் கொண்டு காமேச்வரி என்ற பெயரில் ஆவிர்பாவம் கொண்டு, காமேச்வரன் என்ற பதியான அந்த ப்ரஹ்ம சிவத்தோடு ஸ்ருஷ்டி லீலா நாடகம் அத்தனையும் பண்ணுகிறாள்.

பிரபஞ்சம் ஸ்ருஷ்டியாகி நடப்பதற்கே பஞ்ச க்ருத்யம் என்று தெரிகிறது. வெளியில் தன்னையே பல ரூபமாக விட வேண்டுமென்று அவளுக்கு ஆசை - காமம் - இருப்பதால் தான் இப்படி நடத்துகிறாள். இப்படிக் காமமுடையவள ரயிருப்பதால் அவள் காமேச்வரி.

'தன்னையே பலவாக்கித் தன்னிடமிருந்தே பிரித்து வைக்கணும்;மாயையினால் பிரித்து வைக்கணும் என்று இப்படியும் ஒரு காமமா?க்ரூரமான காமமாக அல்லவா இருக்கிறது?' என்றால் - அப்படியில்லை. முடிவிலே எத்தனை யுகாந்தரம், கல்பாந்தரமானாலும் அதற்கப்புறம் பிரித்து வைத்த எல்லாவற்றையும் தன்னிடம் ஏகமாக ஐக்யப்படுத்திக் கொள்ளத்தான் அவளுக்கு உத்தேசம். பிரித்து வைத்து அப்புறம் சேர்த்துக் கொள்வதில்தான் கூடுதலான ஆனந்தம் உண்டாகிறது!நம் கூடவே ஒருத்தர் இருந்து கொண்டிருந்தால்

ப்ரியம் பொங்கிக் கொண்டு வருவதில்லை. அவரே பிரிந்து வெளியூர், வெளிதேசம் போய் விட்டு பஹு காலம் கழித்துத் திரும்பி வந்தால் ப்ரியம் பொங்கிக் கொண்டு வருகிறது. அம்பாள் தன்னையே நாமாக்கிப் பிரித்து மாயையிலே தள்ளியிருக்கிற காமமும் இந்த மாதிரி, அப்புறம் ஒன்று சேர்த்துக் கொள்வதிலுள்ள அதிப்ரேமையின் ஆனந்தத்தைக் காரணமாகக் கொண்டது தான். எந்தத் தாயாரும் குழந்தையிடம் 'ஒளிஞ்சு-ப்ளே' விளையாடவில்லையா?

ஸமுத்திரத்திலிருந்து ஆவியாகப் போகிற ஜலம் மேகமாகி எத்தனையோ நூறு மைல் தள்ளி நதியாக உற்ப்த்தியானாலும், அந்த நதி ஊரெல்லாம் சுற்றித் திரிந்தாலும் முடிவிலே தன்னை பிறப்பித்த தாயான ஸமுத்ரத்திலேயே ஸங்கமித்துத்தானே தீர்கிறது?........

காமேச்வர ஸஹிதையான காமேச்வரி பஞ்ச ப்ரஹ்மாஸனத்தில் வீற்றிருக்கிறாள். ப்ரஹ்மமும் அதன் பூர்ண சக்தியும் - குறிப்பாக இச்சா ரூபத்திலிருக்கிற பூர்ண சக்தியும் - எல்லாவற்றுக்கும் மேலே. அந்த ஜோடியிலிருந்தே பஞ்ச க்ருத்யங்களும் ஏற்பட்டு ஸ்ருஷ்டி விசித்ரம், ப்ரபஞ்ச நாடகம் நடக்கிறதென்று தாத்பர்யம்.

இதையே ஸ்தூலத்தில் ரூபம் கொடுத்துக் காட்டும் போது பஞ்ச ப்ரம்மாஸனத்தின் மேலே காமேச்வரனுடைய இடது மடியிலே காமேச்வரி உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். அவர்கள் கிழக்குப் பார்க்க உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். அதற்கேற்றபடி அந்த ஆஸனத்தைப் போட்டிருக்கும்போது ஆக்நேய திக்கில் (தென் கிழக்குத் திசையில்) உள்ள அதன் கால்தான் ப்ரஹ்மா;நிர்ருதியில் (தென் மேற்கில்) உள்ள கால் விஷ்ணு; வாயு (வடமேற்கு) திக்குக் கால் ருத்ரன்;ஈசான்யத்தில் (வடகிழக்கில்) உள்ள கால் பெயர் பொருத்தத்தோடு ஈச்வரனாகவே இருக்கும்.

நாலு கால்களையும் சேர்த்துப் போட்ட மேல் பலகை ஸதாசிவன். ப்ரம்ம சக்தியிலிருந்து, ப்ரம்ம சக்தியால், ப்ரம்ம சக்தியை ஐந்து தொழில் பிரித்துக் காட்டுகிற இந்த ஐந்து பேரையும் பஞ்ச ப்ரம்மம் என்றே சொல்லி இவர்களாலான ஆஸனத்தைப் பஞ்ச ப்ரம்மாஸனம் என்று சொல்லியிருக்கிறது.

ப்ரம்மம் என்று உச்சஸ்தானத்தில் பேர் சொன்னதற்கு நேர்மாறாக, தூக்கிவாரிப் போடுகிற மாதிரி, இந்த ஐந்து பேரை 'ப்ரேதம்'என்றும் சொல்வதுண்டு. "பஞ்ச ப்ரஹ்மாஸன ஸ்திதா"என்று அம்பாளுக்குப் பேர் சொன்ன அதே ஸஹஸ்ரநாமம் "பஞ்ச ப்ரேதாஸநாஸீநா", "பஞ்ச ப்ரேத மஞ்சாதிசாயினி"என்றும் பேர்கள் சொல்லியிருக்கிறது. என்ன தாத்பர்யமென்றால், இவள் அவர்களுக்கு அந்தப் பஞ்ச க்ருத்ய சக்திகளைக் கொடுக்காமலிருந்தால் அவர்கள் ப்ரேதத்துக்கு ஸமம்தான் என்பதே!ஹார்ஸ் பவர் போன மோட்டார், ஃப்யூஸான பல்பு மாதிரி!

காமேச்வரனுக்கும் அவள்தான் பிராண சக்தி. "காமேச்வர ப்ராண நாடி"என்றும் நாமா இருக்கிறது. ஸஹஸ்ரநாமம், த்ரிசதி இரண்டிலும் அந்தப் பேர் வருகிறது. ஆனாலும் லோக தர்மத்தில் ஒரு ஸ்த்ரீயானவள் பதிக்கு மேல் ஸ்தானம் கொடுத்து அவனோடு சேர்ந்து இருப்பதே பெருமை என்றிருப்பதால் மஹாசக்தி வாய்ந்த பராசக்தியும் தனக்கு மேல் ஸ்தானத்தில் காமேச்வரனைப் பதியாகக் காட்டிக் கொண்டு விளங்குகிறாள்.

---



## 'சிவ'னும் 'ஹர'னும்

'சிவன் அசையக்கூட முடிவது உன்னுடைய ஸங்க மஹிமையால்தான்;அப்படிப்பட்ட உன்னை ஹரன் ஆராதிக்கிறான்'என்று சிவன், ஹரன் என்பதாக இரண்டு பேர் சொல்லி, ஒருத்தன் அசைந்து கொடுப்பது, மற்றவன் நமஸ்காரம் பண்ணுவது என்று இரண்டு கார்யங்களை ஆசார்யாள் [ஸௌந்தர்ய லஹரி முதல்

ச்லோகத்தில்]சொல்லியிருக்கிறார். அந்தப் 'பல்லவி'யை எடுத்துக் கொண்டுதான் இவ்வளவு நிரவல், ஸ்வரம் போட்டேன்.

'ஏன் இரண்டு பேர் - சிவன், ஹரன் என்று? கார்யத்திலும் ஏன் வித்யாஸம் - அசைவது, நமஸ்காரம் பண்ணுவது என்று?'என்பதைச் சொல்ல ஆரம்பித்தேன்.

அசைவதாக மாத்திரம் சொன்ன சிவன்தான் சாக்த-சைவ சாஸ்த்ரங்களில் முதல் தத்வமாக ப்ரஹ்மம், பரம்பொருள் என்றெல்லாம் சொல்லப்படும் ஸ்தானத்திலுள்ள சிவன்; நம்முடைய காமேச்வரியின் பதியான காமேச்வரன். பஞ்ச ப்ரஹ்மங்களுக்கும் மேலே இருப்பவன். அவன் அவளுக்குப் பதியானதால் அவளை ஆராதிப்பதாக, நமஸ்காரம் பண்ணுவதாகச் சொல்லவில்லை. அந்த ஸ்தான விசேஷம் மட்டும் காரணமில்லை. தன்னைத் தெரிந்து கொள்வது, அப்புறம் தன்னை பஹிர்முகமாக்கிக் கொள்ள ஆசைப்படுவது என்பது தவிர வேறே எந்தக் கார்யத்திலும் அவன் பிரவேசிக்க முடியாதவன்!சித் சக்தியாக அவனுக்குள்ளே எப்பவும் உள்ள அம்பாள் இச்சா சக்தியில் அவனை ஈடுபடுத்தியதோடு நிறுத்திக் கொண்டு விட்டாள். க்ரியா சக்தியும் கொடுத்து அவனைக் கார்யத்தில் ஈடுபடுத்தவில்லை. அதற்கு [க்ரியா சக்தி பெற்றுக் கார்யங்கள் செய்வதற்கு]பஞ்ச க்ருத்ய மூர்த்திகளை அவள் உண்டாக்கினாள். ஆகையால் எந்த வெளிக் கார்யமும் தெரியாத, முடியாத, இல்லாத சிவன் ஆராதனை செய்வது, நமஸ்காரம் செய்வது என்பதற்கெல்லாம் இடமேயில்லை. அலையெழாத சாந்த ஸமுத்ரமாயிருந்தவனிடத்தில் இச்சை என்ற ஒரு அலை மட்டும் எழுந்ததோடு ஸரி. தகடு மாதிரி அசையாத ஸமுத்ரத்தில் அந்த அலை ஏற்பட்டபோது அசைவு ஏற்பட்டு விடுகிறது!ஒரு சக்தி, driving force, இருந்தாலொழிய எப்படி எந்த ஒரு அசைவும் ஏற்பட முடியும்? ஆகையால் இப்போது அவன் சக்தி ஸஹிதனாகி விட்டானென்று அர்த்தம் ... இப்போது [சிரித்து]சைவன் அசைவன்!சிவ ஸம்பந்மானதற்கு 'சைவ'என்று பேர் தெரியுமோல்லியோ?அஸல் சைவன் அசையமாட்டான். சக்தி ஸஹிதமான சைவன்தான் அசைவான். சைவன் அசைவன்!

'ஹரன்'என்பது பஞ்ச க்ருத்ய மூர்த்திகளில் ஸம்ஹரணம் பண்ணும் ருத்ரன். [பஞ்சக்ருத்யங்களில் முறையே பாலனமும் ஸ்ருஷ்டியும் செய்பவர்களான]ஹரி, விரிஞ்சன் என்ற விஷ்ணு, ப்ரம்மாக்களின் பேர்களுக்கு நடுவில் ஹரன் என்ற பேரை "ஹரி-ஹர-விரிஞ்சாதிபி:"என்று போட்டு இதை ஆசார்யாள் ஸ்பஷ்டமாகத் தெரியப்படுத்தியிருக்கிறார்.

ஸித்தாந்த சைவத்தில் [சைவ ஸித்தாந்தத்தில்]முழு முதலான சிவனுக்கே ஹர நாமமும் கொடுத்திருக்கிறது. "சிவன், அரன்"என்று இரண்டையும் ஸமமாகச் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறது. அது மாத்திரமில்லாமல் தொன்று தொட்டு இந்தத் தேசம் பூராவும் சிவனுக்குப் புண்டரீகம் போடுவதாக பலர் சேர்ந்து கோஷம் போடும் நாமமாக "ýóýó ñý£«îõ£"â¡ø êŠî«ñ Þ¼‰¶ õ‰F¼‚Aø¶. îI›ï£†®™ "Ü«ó£ýó£"â¡A«ø£‹.....

---



## புண்டரீகம் :நாமம்

'புண்டரீகம் போடுவது'என்று ஒரு வார்த்தை சொன்னேன். சொன்ன ஸந்தர்ப்பத்தை வைத்து, அது கோஷ்டியாகப் பல பேர் நாம கோஷம் போடுவது என்று புரிந்து கொண்டிருப்பீர்கள்.

பகவன் நாமத்தை கோஷ்டியாக கோஷம் போடுவதைப் புண்டரீகம் போடுவது என்று ஏன் சொல்லணுமென்றால் இரண்டு காரணம் தோன்றுகிறது. நான் guess பண்ணிச் சொல்கிறதுதான்.

கூட்டங் கூட்டமாக பக்தர்கள் நாம பஜனை பண்ணிக்

கொண்டு கோஷம் போடுவது எங்கே ரொம்பவும் ஜாஸ்தி என்றால் பண்டரீபுரத்தில்தான். ஒரே "ஜெய், ஜெய் விட்டல்!"மயம்தான்!ஒவ்வொரு நாமாவளியையும் முடித்தவுடன் "ஜெய் புண்டரீக வரத!ஹரி விட்(டே )டல!"என்றே அத்தனை கூட்டமும் உரக்க, உணர்ச்சியோடு கோஷம் போடும் தஞ்சாவூரில் மஹாராஷ்டிரர்களின் ஆட்சி ஏற்பட்ட பின் அவர்களுடைய ஹரிகதை லாவணி, [சிரித்து]ரஸ்வாங்கி, டாங்கர் பச்சடி எல்லாம் இங்கேயும் பரவியபோது பஜனை ஸம்ப்ரதாயங்களிலும் இந்த 'இன்ஃப்ளுயென்ஸ்' ஏற்பட்டது. கோஷ்டி நாமோச்சரணத்தில் "ஜெய் புண்டரீக வரத"புதுசாகச் சேர்ந்தது. புதுசாகச் சேர்ந்ததாலேயே ஜனங்கள் மனஸில் முக்யமாக நின்றது. அதனால் எந்த ஸ்வாமியைப் பற்றின நாம கோஷமாகத்தான் இருக்கட்டும் - "நம:பார்வதீ பதயே!ஹரஹர மஹாதேவா!"வாகத்தானிருக்கட்டும். "கோபிகா ஜீவன ஸ்மரணம்!கோவிந்தா, கோவிந்தா!"வாகத்தானிருக்கட்டும் - எதுவானாலும் புண்டரீகம் போடுவது என்றே பேர் வந்துவிட்டது. சைனாவிலே பஹு காலமாக டீ குடிக்கிற வழக்கம் இருந்திருக்கிறது. ஆனால் ரொம்ப நாள் பிற்பட்டு, வெள்ளைக்காரர்கள் ஆசியாவில் வியாபாரம், ஆட்சியைப் பிடிப்பது என்று புறப்பட்ட அப்புறமே, டீ ஐரோப்பாவுக்குப் போயிற்று. புதுசாக அவர்களுடைய ஆஹார தினுஸுகளில் சேர்ந்ததாலேயே அது ரொம்பவும் முக்யமாகி விட்டது. சிற்றுண்டி விருந்துக்கே 'டீ பார்ட்டி'என்று பெயர் வந்துவிட்டது. டீயே 'ஸெர்வ்'பண்ணாத பார்ட்டிகூட டீ பார்ட்டி தான்!அது மாதிரி முழுக்க சிவ பஜனையே பண்ணி "நம:பார்வதீ பதயே!ஹரஹர மஹாதேவா!"போடுவதுகூட 'புண்டரீகம் போடுவது'என்று பேர் பெற்றுவிட்டது!

இன்னொரு காரணம் என்ன தோன்றுகின்றதென்றால் - புண்டரீகம் என்றால் தாமரைப் பூ ஸகல ஜகத்துக்கும் ஹ்ருதய கமலமாக உள்ள சிதம்பரத்திற்குப் 'புண்டரீகபுரம்'என்று ஒரு பேர். சாஸ்த்ரங்களில் "ஹ்ருத் புண்டரீகம்"â¡«ø ªê£™LJ¼‚Aø¶. î£ñ¬ó, è‡íù£ù ðèõ£¬ùŠ ¹‡ìgè£þ¡

â¡A«ø£‹.

"Üªî™ô£‹ Þ¼‚è†´‹;ï£ñ¬î úƒèñ£è «è£û‹ «ð£´õ¬îŠ ¹‡ìgè‹ â¡ð£«ù¡?"

நாமம் என்று இப்போது ஒரு வார்த்தை வந்தது. பெயர் என்பதைத்தான் இங்கே நாமம் என்றது. வைஷ்ணவர்களில் நெற்றியில் இட்டுக் கொள்வற்கு - அவர்களில் சிஷ்டாசாரமுள்ளவர்கள் 'த்வாதச நாமம்'என்று உடம்பில் பன்னிரண்டு இடங்களில் போட்டுக் கொள்வதற்கும் - நாமம் என்று பேர் சொல்கிறோம். ஏன் அப்படி அதற்கும் நாமம் என்று பேர் வந்ததென்றால் பகவானுடைய கேசவாதி த்வாதச நாமங்களைச் சொல்லிக் கொண்டுதான் அப்படி உடம்பில் த்வாதச அடையாளங்கள் போட்டுக் கொள்வார்கள். பகவந் நாமத்தை மந்த்ரமாகச் சொல்லிக் கொண்டு போட்டுக் கொள்வதால் அதற்கே நாமம் என்று பேர் வந்துவிட்டது - 'ஸாவரின்'என்னும் ராஜாவின் முத்திரை காசுக்கே ஸாவரின் பேர் வந்தது போல!

ஆதியிலே நெற்றிக் இட்டுக் கொள்வது ஒரு தாமரைப் பூ, அல்லது இதழ் மாதிரி டிஸைனாகவே இருந்தது. நெற்றியில் இட்டுக் கொள்வதைத் திலகம் என்கிறோமல்லவா? திலகம் என்றால் திலகம்தான், அதாவது எள்ளு. 'ஷேப்'பில் எள்ளும் தாமரை இதழும் ஒரே மாதிரி தானே இருக்கின்றன?

இது அலங்காரம், அதாவது அழகுபடுத்திக் கொள்கிற அடையாளம். சாஸ்திரோக்தமாக சரீரத்தைப் பரிசுத்தி பண்ணிக் கொள்வதற்காக நெற்றிக்கு இட்டுக் கொள்ளும் போது முப்பட்டையாக விபூதி தாரணம் பண்ணினார்கள். அழக்கு, அலங்காரத்துக்கு நல்ல ஸுகந்தமான சந்தனத்தைத் தாமரை வடிவத்தில் நெற்றிக்கு இட்டுக் கொண்டார்கள். சாஸ்த்ரீயமான சின்னம் விபூதி தாரணம். எதிலும் காலம் போகப் போகப் பல பிரிவுகள் ஏற்படும் போது ஒவ்வொரு பிரிவையும் வைத்து வித்யாஸமான அடையாளங்கள் ஏற்படுவது வழக்கம். அப்படி சாஸ்த்ரோக்கமான விபூதி தாரணத்திலும் ஆயிற்று. ஸ்மார்த்த ஸம்ப்ரதாயஸ்தர்களிலேயே ஒரு பிரிவினர் விபூதி தாரணத்தை விட்டுவிட்டு கோபி சந்தனம் என்று ஒரு தினுஸான களிமண் வகையைக் குழைத்து இட்டுக் கொள்ள

ஆரம்பித்தார்கள். பட்டையாக இல்லை;தாமரையை ஞாபகப்படுத்துகிற ஷேப்பில்தான். ஸ்மார்த்தர்கள், வைஷ்ணவர்கள் என்று பிரிவு ஏற்பட்டதில் வைஷ்ணவர்களும் விபூதிப் பட்டையை விட்டுவிட்டு திருமண் என்னும் ஒருவிதமான மண்கட்டியால் நாமம் போட்டுக்கொள்ள ஆரம்பித்தார்கள். இதிலேயும் ஆராய்ச்சிக் கண்ணோடு பார்த்தால் தாமரை 'ஷேப்'அடிப்படையாயிருப்பது தெரியும். அதைப் பெருமாளின் திருவடிச் சின்னம் என்கிறார்கள். திருவடியையும் தாமரை என்றுதானே சொல்வது?

தாமரைக்குப் புண்டரீகம் என்று பேர் சொன்னேன், புண்டரீகம் என்பதைப் புண்ட்ரம் என்றும் சொல்வதுண்டு. சில பிரிவினர்கள் பட்டை விபூதியை அடியோடு விட்டு விட்டு, அலங்காரமாக மட்டுமில்லமால் சாஸ்த்ரோக்தமான தங்கள் ஸம்ப்ரதாயச் சின்னமாகவே தாமரை ஷேப்பில் கோபியும் திருமண்ணும் இட்டுக்கொள்ள ஆரம்பித்த பிறகு, பட்டை விபூதி இட்டுக்கொள்வது உள்பட நெற்றிச் சின்னங்கள் எல்லாவற்றுக்குமே ஜெனரலாக 'புண்ட்ரம்'என்று பேர் உண்டாய்விட்டது!தாமரை 'ஷேப்'ஜாடைக்குக்கூட இல்லாவிட்டாலும் முப்பட்டை விபூதிக்கு த்ரிபுண்ட்ரம் என்றும், அப்படி நெற்றியில் குறுக்கு வாட்டாக இல்லாமல் நெடுக்கு வாட்டத்தில் கோபியும் திருமண்ணும் போட்டுக் கொள்வதற்கு ஊர்த்வ புண்ட்ரம் என்று பேர்கள் ஏற்பட்டன. புதுசாக ஒரு இயக்கம் ஆரம்பித்தால் அது ரொம்ப 'ஆக்டி'வாக இருந்து எல்லார் கவனத்தையும் இழுக்கத்தானே செய்கிறது?அப்படி, தனி ஸம்ப்ரதாயமாகக் கொஞ்சம் பெரிய அளவிலேயே வைஷ்ணவர்கள் என்று ஏற்பட்டு ஆக்டிவாக அதைப் பரப்பியபோது அவர்களுடைய தனிப்பட்ட ஆசரணைகள் லோகத்தின் கவனத்துக்கு நிறையவே வந்திருக்க வேண்டும். அதனாலேயே அவர்கள் போட்டுக் கொண்ட புண்ட்ர தாரணம் எல்லாவிதமான நெற்றிச் சின்னத்துக்கும் பொதுப் பேராயிருக்கலாம்.

இப்போது வேடிக்கையாகே ஸர்க்கிள் தலைகீழாக ஒரு சுற்றுச் சுற்றியிருக்கலாம். என்னவென்றால்:பகவந் நாமத்துடன் போட்டுக்கொண்ட நெற்றி அடையாளமும் நாமம் என்று பெற்றதா?அதே நெற்றி நாமத்துக்குப் புண்ட்ரம், புண்டரீகம் என்று இன்னொரு பேர் இருந்ததா? அதாவது நாமம்

=புண்ட்ரம்தானே? இதிலே நெற்றி நாமம், பகவந் நாமம் என்ற வித்யாஸங்கள் எடுபட்டுபோய் புண்ட்ரம் = பகவந் நாமம் என்று ஆகியிருக்கலாம்!கூட்டங்கூட்டமாக வைஷ்ணவர்கள் "கோவிந்தா!"போட்டுக்கொண்டு மத ப்ரசாரம் பண்ணியபோது அப்படி பகவந் நாம கோஷம் போடுவதைப் புண்ட்ரம் போடுவது, புண்டரீகம் போடுவது என்றே சொல்கிற வழக்கம் ஏற்பட்டிருக்கலாம். அப்புறம் பரமசிவன் உள்பட எந்த ஸ்வாமியானாலும் ஸஹஜமாகப் பலபேர் அந்த ஸ்வாமி பேரை கோஷிப்பதற்கு புண்டரீகம் போடுவது என்று பெயர் வைத்திருக்கலாம்.......

"ஹரஹர மஹாதேவ"என்று புண்டரீகம் போடுகிறோம் என்று சொன்னேன். சிவ நாமாவுக்கு ஸமானமான பெருமை பெற்றதாக, ஹர நாமாவும் இருப்பதால்தான் "அரன் நாமமே சூழ்க!"என்று "வாழ்க அந்தணர்"பதிகத்தில் ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் சொல்லியிருக்கிறார். ஆனாலும் இந்த ஸௌந்தர்யலஹரி ஆரம்ப ச்லோகத்தில் ஆசார்யாள் ஹரன் ஸம்ஹரணத் தொழில் மட்டுமே செய்யும் ருத்ரன் என்றுதான் வைத்திருக்கிறார். தனக்குத் தொழிலைக் கொடுத்து, தொழில் பண்ணச் சக்தியையும் கொடுத்த அம்பாளை அந்த ஹரனும் ப்ரஹ்ம விஷ்ணுக்களுடன் நமஸ்காரம் பண்ணுகிறான், ஆராதிக்கிறான் என்று சொல்கிறார்:அதஸ்-த்வாம் ஆராத்யாம் ஹரிஹர விரிஞ்சாதிபிரபி.

---



## சிவத்தின் ஸ்பந்தனம் (அசைவு)

ஹரனாகிய ருத்ரனை அம்பாள் நன்றாகவே ஸம்ஹார கார்யத்தில் ஏவியிருக்கிறாள். ப்ரஹ்ம ஸ்வரூபமான சிவனை அசைத்து மட்டும் இருக்கிறாள். அசைவு - 'ஸ்பந்தன ம்'என்பது. ச்லோகத்தில் 'ஸ்பந்திதும்'- 'அசைவதற்கு'என்று

வருகிறது. ஒரு எண்ணமும் இல்லாமல் பரம சாந்தமாக அலையெழாத தடாகம் மாதிரி இருந்த பரப்ரஹ்ம சிவனில் ஏற்பட்ட முதல் அலை, முதல் அசைவு தான் பஹிர்முகமாகிற இச்சை, காமம், ஆசை. முதல் அசைவு ஆசை. வெறுமனே போட்டது போட்டபடி இருந்த சிவனுக்குள்ளே ஆசைப்படுவது என்ற ஒரு அசைவு உண்டாயிற்றென்றால், ஆசைப்படுவது என்ற ஒரு கார்யம் நிஷ்கரியமான சிவ தத்வத்தில் உண்டாயிற்றென்றால், இதைச் செய்விக்கவும் ஒரு சக்தி தொழில்பட்டுத்தானே இருக்க வேண்டும்?ஞான மயமாய், உயிர் மயமாய் எப்போதுமே ப்ரஹ்மத்துக்குள் இருக்கும் சித்சக்தியானவள் இச்சாசக்தி, க்ரியாசக்தி என்ற இரண்டாகவும் ஆனாளென்பது மட்டுமில்லை. இச்சையை ப்ரஹ்மத்துக்குள்ளே எழுப்புவது என்பதையே ஒரு க்ரியையாக [செயலாக]அவள் பண்ணியிருக்கிறாள்!

இன்னும் அடிமட்டத்திற்குப் போனால், ஒருத்தனுக்கு ஒரு இச்சை உண்டாகிறதென்றால் அவன் முதலில் தான் இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். நல்ல தூக்கத்திலே நாம் இருப்பது நமக்கே தெரியவில்லை. அப்போது ஏதாவது இச்சை எழும்புகிறதா?மூர்ச்சை போட்டுக் கிடக்கிறோம், அல்லது டாக்டர் மயக்கம் கொடுத்திருக்கிறார். அந்த ஸமயத்தில் நமக்கு ஆசை உண்டாவதுண்டா?ஆனபடியால் ப்ரஹ்மத்துக்கு இச்சை உண்டாயிற்று என்றால் அதற்கும் முன்னாடி அது 'தான் இருக்கிறோம்'என்று தெரிந்து கொண்டிருக்க வேண்டும். தன்னில் தன்னாக இருந்துகொண்டு மட்டுமிருந்த ப்ரம்மம். 'ப்ரம்மமென்று நாம் ஒரு வஸ்து இருக்கிறோம்'என்ற 'நான்'-அறிவைப் பெறுவதும் ஒரு கார்யந்தானே?சாந்த நாடகத்திலே ஆசை அலையும் எழுகிறதற்கு முந்தி ஏற்பட்ட அசைவு அதுதானே?அந்தக் கார்யம் மட்டும் சக்தி தூண்டாமல் எப்படி நடந்திருக்க முடியும்?சிவனுக்கு 'நாம் ஒருத்தன் இருக்கிறோம்'என்று தெரியப் பண்ணியதே சக்திதான் என்றாகிறது!அவனுக்கு அப்படி உண்டான 'நான்'அறிவை, 'நான்'அநுபவத்தைப் 'பராஹந்தா'என்பார்கள். நாமெல்லாரும் 'நான்', 'நான்'என்று நினைப்பதை அஹந்தை என்கிறோமல்லவா?இதுதான் 'அஹந்தா'. ஆத்மாவுக்கு

வேறேயான பொய்யான சரீர - அந்தஃகரணாதிகளைத் தப்பாக நம்முடைய வாஸ்தவ ஸ்வரூபமான 'நான்'என்று நினைப்பது அஹந்தா. இப்படியில்லாமல் அத்தனை சிற்றுயிர்களுக்கும் மூலமாக இருக்கிற பேருயிர், பரம் பொருள் என்கிறோமே அது தன்னை 'நான்'என்று தெரிந்து கொள்வது 'பர அஹந்தா'- 'பராஹந்தா'. பராசக்தியைப் பரமசிவனான பரப்ரஹ்மத்தின் 'பராஹந்தா ஸ்வரூபிணி'என்றே சொல்வதுண்டு. அம்பாளைப் பரமேச்வரனுடைய 'ஆஹோபுருஷிகா'என்று ஸௌந்தர்ய லஹரியில் ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறது. 'நான்'என்று மார்தட்டிக் கொண்டு தற்பெருமைப் படுவதுதான் பொதுவாக 'ஆஹோபுருஷிகா'என்பதற்கு அர்த்தம். கிஞ்சித்-சக்தர்களான (அற்ப சக்தர்களான)நாம் 'நான்'என்று தற்பெருமைப்படுவது தப்பு. ஆனால் ஸர்வ சக்தியும் வாய்ந்த 'நானை'ப் பற்றிப் பரமசிவன் எவ்வளவு தற்பெருமைப்படவும் ந்யாயமிருக்கத்தானே செய்கிறது?அதோடு ரொம்பவும் விசித்ரமாக, சிவன் 'நான்'என்று பெருமைப்படுவதே இன்னொருத்தராக, அதாவது சக்தியாக இருக்கிறது! 'நான்'என்பது சிவனுக்கு தெரிகிறது என்றால் அது சக்தி விலாஸந்தான் என்று பார்த்தோமல்லவா?அதனால் 'நான்'என்று அவர் ஒன்றைப் பற்றி பெருமைப்படுவதும் சக்தி ப்ரபாவத்தில் பெருமைப்படுவதாகவே ஆகும்.

'ï£¡ ò£˜ â¡ð«î ªîKò£ñ™ î£ù£è Þ¼‰î ïñ,° ï£¡-ÜPõ£è Þ¼,°‹ ú˜õ ê,Fò£J¼,Aø£«÷!'â¡Á Ü‹ð£¬÷Š ðŸP ß,,õó¡ [Cõ¡]ªð¼¬ñŠð´õ«î Üõ¼¬ìò Ý«ý£¹¼Sè£õ£è Þ¼,Aø¶! ªú÷‰î˜òôýK' ð£wòè£ó˜èO™ ðô «ð˜ Þƒ«è Ý«ý£¹¼Sè£ â¡ð¶ ðóŠóyññ£ù CõQ¡ ðó£ý‰î£ võÏðñ£è Ü‹ð£¬÷,, ªê£™õ«î â¡Á â¿FJ¼,Aø£˜èœ.

கேவல (கலப்பறற)ஞான ஸ்வரூபமாயிருந்த சிவன் தன்னை ஞான ஸ்வரூபமாகத் தெரிந்துகொண்டதுதான் அசையாத பிரம்மத்தின் முதல் அசைவு. வெளிக் கார்யத்தில் அசைவது இல்லை;கையை, காலை அசைத்துக் கார்யம் எதுவும் இதில் இல்லை. ஆனால் எண்ணமேயில்லாத ஞான பூர்ணத்தில் 'நான்'என்ற எண்ணம் ஏற்பட்ட அசைவு.

சிவனை வெளியிலேயிருந்து அம்பாள் அசைக்கவில்லை.

அவனுக்குள்ளேயே அந்த 'நான்'என்கிற எண்ணமாக அசைத்தாள்.

உள்ளுக்குள்ளேயிருந்து குமறிக்கொண்டு ஒரு வஸ்து தானே 'வைப்ரேட்'ஆகிற அசைவுதான் இங்கே சொல்லும் 'ஸ்பந்தம்'ஆசார்யாள் ரொம்பவும் ஜீக்ஷீமீநீவீஜமீ-ஆகத்தான் அந்த வார்த்தையைப் போட்டிருக்கிறார். ஸ்பந்தம் வெளியிலிருந்து அசைப்பதில்லை. அது உள்ளுக்குள்ளேயே அதிர்வது, குமறுவது, பொருமுவது. நமக்குள்ளேயே நாடி துடிக்கவில்லையா? அப்படிப்பட்ட ஜீஹுஜீவணீமீ வீஷீஸீ-தான் ஸப்ந்தம். பிறத்தியாரால் இல்லாமல் தனக்காகவே, தனக்குள்ளேயே ஏற்படுகிற அசைவு ஸ்பந்தம்; தானே வைப்ரேட் ஆவது.

ஸ்ருஷ்டி மூலமே வைப்ரேஷன்தான். பரப்ரஹ்ம வைப்ரேஷன் சப்த ரூபமான வேத மந்த்ரங்களாகி, அதிலிருந்துதான் ஸ்தூல வஸ்துக்கள் அத்தனையும் உண்டானது. நவீன கால ஸயன்யஸ் இந்த அபிப்ராயத்திற்கு ரொம்பவும் ஆதரவாக வந்துவிட்டது. ஏதோ ஒரு ஸென்ட்ரல் ந்யூக்ளியஸ் (மையக் கரு)படாரென்று வெடித்து ஸ்ருஷ்டி ஏற்பட்ட தென்றால், அப்போது அது உள்ளே குமறித்தான் அந்த வெடிப்பு ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி ஏகமான ஆதார வஸ்து தானே உள்ளுக்குள் வைப்ரேட் ஆவதே ஸ்பந்தனம்.

ஆனாலும் சிவ-சக்தி என்று த்வைதம் மாதிரி வைத்து சாக்த ஸ்தோத்ரமாகப் பண்ணிக்கொண்டு போகிற இங்கே 'தானே'என்று சொல்லலாமா?சிவனை அம்பாள்தான் அசைவித்ததாகச் சொல்லணும். அப்படித்தான் சொல்லியிருக்கிறார். அப்படிச் சொல்லும்போதே த்வைதம் மாதிரி இருப்பதற்குள் உள்ள அத்வைதம் தெரியத்தான், தனக்குள்ளேயே ஏற்படும் சலனத்திற்கான 'ஸ்பந்தம்'என்ற வார்த்தையைப் பொறுக்கியெடுத்துப் போட்டிருக்கிறார்!

சாக்தப்படியுங்கூட அவனை விட்டு அவளை வேறே என்று தனியாகப் பிரித்து வெளிவஸ்துவாகவே வைக்க முடியவில்லையே!சிவமும் சக்தியும் தீபமும் அதன் ப்ரகாசமும் போல, புஷ்பமும் அதன் ஸுகந்தமும் போல, தேனும் அதன் மாதுர்யமும் போல, பாலும் அதன் வெளுப்பும் போல, சொல்லும் அதன் பொருளும் போல

ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கவே முடியாதபடி அல்லவா சேர்ந்திருக்கிறவர்கள்?அதனால் அவனுடைய அசைவுக்காக அவளுக்குத் தனி க்ரெடிட் கொடுத்தாலுங்கூட அவளையே அவனிடமிருந்து தனியாகப் பிரித்துவிட முடியாது. சிவ சக்திகளுடைய இந்த அன்யோன்ய உறவு நம் ஹ்ருதயத்தின் அடியில் எந்நாளும் இருக்க வேண்டும். (மீண்டும்) சிவன், சக்தி என்பவர்களுடைய அன்யோன்ய உறவு நம் ஹ்ருதயத்தின் அடிவாரத்தில் எந்நாளும் இருக்க வேண்டும்.

தத்வத்தைக் கவிதையாக்கிச் சொல்லும்போது காவ்ய ருசிக்காகவும், பக்தர்கள் தெய்வத்தோடு உறவு கொண்டாடும் ஸ்வாதீனத்தில் ஏற்றி யிறக்கிப் பரிஹாஸாதிகள் பண்ணுவதில் ஒரு ஆனந்தம் கிடைப்பதாலும், ஒரு தெய்வத்தை ஸ்துதிக்கும்போது அதற்கே ஸர்வோத்கர்ஷம் (எல்லாவற்றுக்கும் மேலான நிலை)சொன்னால்தான் அதனிடமே மனஸ் ஆழப் புதைகிறது என்பதாலும், 'சிவனைவிட அம்பாள் உசத்தி', அல்லது 'அம்பாளைவிட சிவன் உசத்தி'என்று சொன்னாலும், அவர்கள் பிரிக்கவே முடியாமல் ஒன்றாக இருக்கிறவர்கள் என்ற எண்ணத்தை நம் ஹ்ருதயத்தின் அடி மூலையில் ஊறப் போட வேண்டும். அந்த உயர்ந்த எண்ணத்தில்தான் ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி' ஆரம்பிக்கும்போதே சக்திதான் சிவனை அசைத்தாள் என்று அவளுக்கு உத்கர்ஷம் சொன்னாலுங்கூட அசைப்பதற்கு 'சலனம்'முதலான பல பழக்கமான வார்த்தைகள் உள்ள போதிலும், 'அதெல்லாம் அவனுக்கு வெளியில், வேறாக, இருந்து அவள் அசைத்தாள் என்று அர்த்தம் கொடுத்துவிடுமே!அது கூடாது. அவனுக்கு உள்ளேயே உள்ளவள் அவள் என்று இந்த ஆரம்பத்திலேயே காட்டிவிட வேண்டும்'என்றுதான் உள்ளசைவைக் குறிப்பிடும் ஸ்பந்தம் என்ற வார்த்தையைப் போட்டிருக்கிறார்.

காஷ்மீர சைவம் என்று அவ்வப்போது சொன்னேனே, அதிலே இந்த 'ஸ்பந்தம்'என்ற வார்த்தை, வீஸீமீ மீக்ஷீஸீணீறீ ஸ்வீதீக்ஷீணீமீ வீஷீஸீ(உள்ளதிர்வு)என்கிற கருத்து ஆகிய இரண்டும் ரொம்பவும் முகயம். அந்த ஸித்தாந்தம் காஷ்மீரில் தோன்றி ப்ராபல்யமடைந்ததால் காஷ்மீர சைவம் என்று அதற்குப் பேர் சொன்னாலும் அந்த ஸித்தாந்த ப்ரவர்த்தகர்கள் அதற்கு அப்படிப் பேர் கொடுக்கவில்லை. அவர்கள் வேறே சில பேர்தான் கொடுத்திருக்கிறார்கள். 'த்ரிக

சைவம்'என்பது ஒரு பேர். பசு-பதி-பாசம் என்ற மூன்று தத்வங்களைச் சொல்வதால் அப்படிப் பேர். 'ப்ரத்யபிஜ்ஞா சாஸ்த்ரம்'என்று இன்னொரு பேர். முடிவில் சிவ தத்வத்தையே ஜீவனின் ஆத்ம ஸ்வரூபம் என்று தெரிந்து கொள்வதால் 'ப்ரத்யபிஜ்ஞா'என்ற பேர். 'ப்ரத்யபிஜ்ஞா'என்றால் 'இன்னது என்று ஸத்யமாகப் புரிந்து கொள்வது'அந்த தர்சனத்திற்கு (சாஸ்திரத்திற்கு)இன்னொரு பேர் என்னவெறால் 'ஸ்பந்த சாஸ்த்ரம்'என்பதேயாகு ம்!சிவமும் சக்தியும் ஒன்று சேர்ந்த பரப்ரஹ்மத்தின் ஆபாஸமாக ('ஆபாஸம்'என்றால் அசிங்கம் என்று அர்த்தமில்லை. அந்த வார்த்தைக்கு அப்படி அர்த்தமே கிடையாது. ஆபாஸம் என்றால் பிரதிபலிக்கின்ற, பிரதி பிம்பமாக்கப்பட்ட ஒளி என்றே அர்த்தம். 'பாஸ்'என்றால் ப்ரகாசிப்பது, ஸுர்யனை 'பாஸ்கரன்'என்கிறோம். ப்ரகாசித்தின் ப்ரதிபலிப்புதான் ஆபாஸம் அப்படி ப்ரம்மத்தின் ஆபாஸமாகவே) நானா தினுஸான இத்தனை த்வைத ப்ரபஞ்சமும் தோன்றியிருப்பாக அந்த சாஸ்திரம் சொல்லும். அப்படிச் சொன்னதால் ப்ரகாசமான மூல வஸ்துவுக்கு வேறாக, அதற்கு வெளியிலே ப்ரதிபிம்ப ஒளி இருப்பதாகத்தானே எண்ணம் உண்டாகும்?இப்படி ப்ரபஞ்சம் ப்ரஹ்மத்துக்கு வெளியில் இருக்கிறது என்றால் அது ஸரியில்லை. ப்ரஹ்மம் வெறும் சிவ ஸ்வரூபமென்றால் அதற்கு ப்ரபஞ்ச ஸம்பந்தமேயில்லை. அதனால் ப்ரபஞ்சம் அதற்கு வெளியிலிருப்பதாகச் சொல்லலாம். ஆனால் அந்தக் கேவல சிவம் ஆபாஸிக்கவும் பண்ணாதே!காஷ்மீர சைவத்தின்படி ப்ரஹ்மம் சிவமாக மட்டுமில்லாமல் சிவ-சக்தி ஸ்வரூபமாயிருப்பதில் சக்தியால்தான் ஆபாஸம் உண்டாவது. ஆனால் அப்போதுங்கூட 'லைட்'டுக்கு வெளியில் 'ரிஃப்ளெக்ஷன்' என்ற மாதிரி அவளுக்கு வெளியில் ப்ரபஞ்சம் இல்லை. ஏனென்றால் அவளுக்கு வெளியில் எதுவும் இருக்க முடியாது. எதற்குமே சக்தியாக அதன் உள்ளே இருந்து கொண்டும், அதை வெளியிலேயும் தாங்கிக் கொண்டும், அத்தனையையும் சேர்த்துக் கவ்விக் கொண்டும் அவள் இருக்கிறாள் - சக்தி தத்வம் இருக்கிறது. 'சிவ-சக்தி என்ற ஏகத்திற்கு உள்ளேயேதான் ஏகம் அநேகமாகிற உள் குமறலில், அதாவது ஸ்பந்தத்தில் இத்தனை த்வைத ப்ரபஞ்சமும் உள்ளடங்கியிருக்கிறது. வெளிப்படுவது என்பது இல்லை. கண்ணாடிக்குள்ளே ஒரு தீபத்தின் ப்ரதிபிம்பம்

தெரிகிறது போல - கண்ணாடி இல்லா விட்டால் அந்த ப்ரதிபிம்பமே இல்லைதானே?அப்படி என்று அந்த சாஸ்திரம் சொல்கிறது.

'vð‰î‹'â¡ø õ£˜ˆ¬î Šó‹ñˆ¶,° ªõOJ«ô, Üî£õ¶ ÜîŸ° «õø£è, Šóð…êI™¬ô â¡Á è£†´õ¶ ñ†´I™¬ô. Šó‹ññ£Aò Cõ îˆ¶õˆ¶,° ªõOJ«ô, «õø£è ê‚F Þ¼‰¶ Ü‰îˆ îˆõˆFL¼‰¶ Šóð…êˆ «î£Ÿøˆ¬î à‡´ð‡íM™¬ô;Ü‰î ê‚F»‹ Cõ îˆõˆ«î£«ì«ò ÜH¡ùñ£è [HKõø] Þ¼Šð¶î£¡ â¡Á‹ è£†´Aø¶. vð‰î‹ â¡ð¶ self movement-ä, võòñ£è«õ Ü¬ê‰¶ ªè£´Šð¬î, °PŠð¶. ªõOˆÉ‡´îô£™ Ü¬êõF™¬ô.

சைவ தர்சனங்களுக்குள் நம்முடைய ஆசார்யாளின் அத்வைதத்துக்கு ரொம்ப நெருக்கமாக வருவது ஸ்பந்த சாஸ்த்ரம் என்று பேர் பெற்ற இந்த காஷ்மீர சைவம்தான். முடிவாக அத்வைத மோக்ஷத்தையே அதுவும் சொல்கிறது. ஆனாலும் ஆசார்யாள் ஜகத்தை மாயா ஸ்ருஷ்டியான மித்யை (பொய்) என்று சொன்னது போலச் சொல்லாமல் ஸத்யமான ப்ரஹ்மத்தின் ப்ரதிபலிப்பானதால் இதுவும் ஸத்யம்தான் என்று சொல்லும். ஜகத்துத் தோற்றத்தை உண்டாக்கும் மாயை, ஜகத்தை நிர்வாஹம் செய்யும் ஈச்வரன் என்று ஆசார்யாள் சொன்ன இரண்டு தத்வங்களையும் இன்னம் அநேக அம்சங்கள் சேர்த்து 'சக்தி'என்று அந்த தர்சனத்தில் சொல்லி, சிவ-சக்தியையே ப்ரஹ்ம ஸ்தானத்தில் வைத்திருக்கிறது. அதில் 36 தத்வம் என்று சொல்லிக் கொண்டு போகும்போது முதல் தத்வம் சிவன். இரண்டாம் தத்வம் சக்தி என்றே சொன்னாலுங் கூட, அப்படிச் சொன்னவுடனேயே, 'சிவ தத்வத்திலேயும் சித்சக்தி உள்கலந்து இருக்கத்தான் செய்கிறது. 'ஸத்'தான (ஆதார ஸத்யமான)சிவ தத்வம் எப்போதும் சித்சக்தியும் கூடி ஸத்-சித்தாக இருப்பதுதான். ஆனால் ஸத்-சித்-ஆனந்தம் என்பதில் ஆனந்தம் என்பது ப்ரபஞ்ச நாடகமாக சக்தி விலாஸம் வெளிப்படும்போதுதான் பரிமளிக்கத் தெரிவதாலேயே, முதலில் ஸத்-சித்தாக சிவ தத்வம், அடுத்து ஆனந்த சக்தியாக சக்தி தத்வம். என்று வைத்திருப்பது'என்றும் விளக்கம் கொடுத்திருக்கிறது.

---

## திறந்த மனத்துடன் செய்த துதி

அத்வைத மார்க்கத்தில் போக முடியாதவர்களுக்காக நம்முடைய ஆசார்யாள் பக்தி மார்க்கத்தில், சக்தி மார்க்கத்தில் 'ஸௌந்தர்ய லஹரி'பண்ணும்போது காஷ்மீர சைவத்தில் வரும் ஸ்பந்தம் அதில் மட்டுமில்லாமல் மற்ற சைவ ஸம்ப்ரதாயங்களிலும் வரும் பசு-பதி-பாசம் முதலியவற்றையும் சொல்லியிருக்கிறார். கடைசி ச்லோகத்துக்கு முதல் ச்லோகத்தில், அம்பாளை பஜிப்பவன் பசு-பாசப் பற்று அற்றுப்போய்ப் பரமானந்த ரஸத்தை சாச்வதமாக அநுபவிப்பான்: 'க்ஷபித பசு பாச வ்யதிகர:'என்கிறார்.

அம்பாள் ஸ்துதியானதால் பாராயணம் பண்ணும் அவளுடைய பக்தர்களுக்கு அவளிடமே அநன்யமான [வேறு தெய்வத்தை நாடாத]பக்தியை உண்டாக்கும் பொருட்டு அவளுடைய மஹிமையை உச்சமாகக் காட்ட வேண்டும்; அழகான கவிதையாக, காவ்ய மரபுகளை மதித்துப் பண்ணிய கவிதையாக இதைப் பண்ண வேண்டும்;ஸ்ரீவித்யா தந்த்ர ரீதியிலும் அதற்குப் போஷாக்குக் கொடுக்க வேண்டும்;இதிலே அத்வைதத்தை அழுத்திச் சொல்லாவிட்டாலும் ஸ்ரீவித்யைக்கும் அது உடன்பாடுதான் என்பதால் அங்கங்கே கோடி காட்ட வேண்டும்;கவி மரபிலும், தத்வ ரூபத்திலும் உள்ள விஷயங்கள் லோகத்திற்கான ஸ்த்ரீ தர்மத்திற்கு மாறான எண்ணங்களைப் பக்குவம் போதாதவர்களிடம் ஏற்படுத்த விடாமல் அங்கங்கே அந்த தர்மங்களையும் எடுத்துக் காட்ட வேண்டும் - என்ற ஸங்கல்பத்தில் உண்டானதே 'ஸௌந்தர்ய லஹரி'. ஆசார்யாள் அப்படி ஸங்கல்பித்தார் என்று

சொல்வதைவிட அம்பாள் ஸங்கல்பித்து அந்தப்படி அவரைப் பாடப் பண்ணினாள் என்பது தான் ஸரி. இப்போது சொன்ன நோக்கங்களை basic-ஆக வைத்துக் கொண்டாலும் அதற்காக அவர் இப்படியிப்படிதான் சொல்வது என்று ஒரேயடியாகக் கட்சிக் கட்டிக் கொண்டு பண்ணாமல் தம்முடைய ஆதாரமான அத்வைத அநுபூதியின் மேலே, ஸ்ரீவித்யா தந்த்ர ஞானத்தின் மேலே பக்தியும், கவிதா ப்ரதிபையும் எப்படியெப்படி பாவங்களை ரஸங்களை ப்ரவாஹமாகப் பெருக்க விட்டனவோ, அப்படி bias இல்லாமல், மனஸை விசாலமாகத் திறந்து வைத்துக் கொண்டு ரொம்பவும் இயற்கையாகக் கொட்டிவிட்டார். லஹரி என்றால் ப்ரவாஹந்தானே?அது மேல் நோக்கிப் போக முடியாது, பாறைகளுக்கு இடுக்கில் மாட்டிக் கொண்டால் அதுகளை உடைக்க முடியாமல் தானே குறுகித்தான் ஓடும் - என்பது போலச் சில கட்டுப்பாடுகள் இருந்தாலும், மற்றபடி இப்படிப் போகணும், அப்படிப் போகணும் என்று ரூல் போட்டுக் கொள்ளாமல் எப்படி ஸ்வயேச்சையாகப் போகிறதோ, அப்படியே ஆசார்யாள் 'பேஸிக்'கான சில கட்டுப்பாடுகள் தவிர மற்றபடி சிந்தனா சக்தி, கல்பனா சக்தி போகிறபடி போக விட்டு இந்த ஸ்துதியைப் பண்ணியிருக்கிறார். அதனால் அந்த ப்ரவாஹப் போக்கில் பிற்காலத்தில் சைவ ஸித்தாந்தம், காஷ்மீர சைவம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்றெல்லாம் நன்றாக இறுதி ரூபமான கொள்கைகளின் சில அம்சங்கள்கூட அலை பரப்பிக் கொண்டு வந்தபோது அவற்றையும் ச்லோகமாகப் பாடிக் கொடுத்து விட்டார்.

நான் இப்போது சொன்ன நாலைந்து மத ஸம்பிரதாயங்களும் தற்போது இருக்கும் ரூபத்தில் முழுசாக உருவானது ஆசார்யாளுக்குப் பிற்காலத்தில்தான் அவற்றின் தலைமை ஆசார்யராக இப்போது நாம் சொல்கிறவர்கள் ஆசார்யாளுக்கு அப்புறம் வந்தவர்கள் தான். ஆசார்யாளுடைய அத்வைதத்தை நன்றாகக் குறிப்பிட்டுத்தான் அதற்கு மாறான ஸித்தாந்தங்களை அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனாலுங்கூட இந்த ஸம்பிரதாயங்களுடைய மூலமான கருத்துக்கள் ரொம்பவும் முன்காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கின்றன. அத்வைதமும் ஆசார்யாளுக்கு முன்பே இருந்ததுதான். ஆனால் அவர்தான் அதை ஸாங்கோபாங்கமான ஒரு

ஸித்தாந்தமாக எடுத்துச் சொல்லி ஸ்தாபித்தது.

இதே மாதிரிதான் இப்போது நாம் மற்ற ஸம்பிரதாயங்களின் பிராதன ஆசார்யர்களாக நினைப்பவர்களும் தங்களுக்கு முந்தியே இருந்த மூலக் கொள்கைகளைத்தான் நன்றாக ரூபம் பண்ணி ஒவ்வொரு மதமாகத் தந்திருக்கிறார்கள். ஸர்வஜ்ஞரான நம்முடைய ஆசார்யாள் அந்த மூலக் கொள்கைகள் எல்லாம் தெரிந்தவரானதால், இங்கே அவருடைய சிந்தனைப் போக்கில் அந்தத் தத்வங்களும் அங்கங்கே கொஞ்சம் வந்திருக்கின்றன.

கரையையும் உடைத்துக்கொண்டு ப்ரவாஹம் பரவுவது போல, இந்த மனோபாவத்தின் உச்சத்தைத் தான் முதல் ச்லோகத்தில் ப்ரஹ்மம் ஸ்பந்தித்தற்காக ஸந்தோஷப்பட்டுக்கொண்டு அப்படி ஸ்பந்திக்க வைத்தவளை ஓஹோ என்று கொண்டாடிக்கொண்டு அவர் ஸ்தோத்திரிப்பதில் பார்க்கிறோம்!அத்வைதப்படி அசையாமல், 'ஸ்தாணு'என்று பெயர் சொல்லும்படிப் பட்ட கட்டையாக சிவன் உட்கார்திருக்கிற நிலைதான் ஸத்ய ஸத்யம். நிர்குண ப்ரஹ்மம் என்று சொல்லும் நிலை, ஏகமாக அத்வைதமாக இருக்கிற நிலை. அதை மாயா சக்தி த்வைத ப்ரபஞ்சமாகக் காட்டுகிறது. ப்ரஹ்மத்துக்குள்ளேயே அந்த மாயை இருந்து அதை ஸ்பந்திக்கச் செய்வதாக ஆசார்யாள் சொன்ன அத்வைத சாஸ்திரத்தில் கிடையாது!வெளியிலே இருந்து மாயை ப்ரஹ்மத்தை அசைத்து த்வைத ப்ரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதாகக்கூட அத்வைதத்தில் கிடையாது!அத்வைத ப்ரஹ்மம் அசையவே முடியாது. அது பாட்டுக்கு இருக்கிறபடி இருக்கும். அதன் ஆதாரத்தில் மட்டுமே மாயை ஜகத்தைக் கல்பித்துக் காட்டுகிறது என்றுதான் அத்வைத சாஸ்திரம் சொல்லும். அங்கே மாயையைக் கரித்துத்தான்
கொட்டுவது!ஏனென்றால்:நம்முடைய ஆத்மா என்பதும் அந்த நிர்குண ப்ரஹ்மமேதான். அதை நாம் தெரிந்து கொள்ள முடியாமல் மறைத்து - திரோதானம் பண்ணி - உடம்பையும் மனஸையுமே நாமென்று நினைத்துக்கொண்டு லோகத்தில் அவஸ்தைப்படுவதற்குக் காரணம் மாயைதானே?அதனால் அதைக் கரித்துக் கொட்டுவது.

அங்கே மாயை என்று கரித்துக் கொட்டிய சக்தியையே இங்கே 'மாயா'என்று அடைமொழி போடாமல் 'சக்தி'என்று கொண்டாடுகிறார்!சிவனுடைய அசைவு முடிவில் த்வைத ப்ரபஞ்ச ஸ்ருஷ்டிக்கே காரண இதைப் பண்ணுவிக்கும் சக்தி அத்வைதத்தில் சொன்ன மாயையாகத்தானே இருக்க வேண்டும்? ஆனாலும் அதைப் போற்றித் துதிக்கிறார்! அத்வைதத்தில் நிர்குண ப்ரஹ்மமும், லோகத்தை மாயா சக்தியால் நிர்வாஹம் பண்ணும் ஈச்வரனான ஸகுண ப்ரஹ்மமும் ஸம்பந்தப்படாதவை. ஏனென்றால், நிர்குணப்ரஹ்மம் தான் தானாயிருப்பது தவிர எதனுடனும் சேர முடியாதது. அது பாட்டுக்கு இருக்கும். ஒருத்தர் வம்புக்கும் போகாது. அதனிடமும் யாரும் போய் வம்பு பண்ண முடியாது. எப்படியென்று எவராலும் சொல்லத் தெரியாத அதிசயமாக, எப்படியோ ஒரு விதத்தில் மாயை அந்த நிர்குணத்தை த்வைத ப்ரபஞ்சமாகக் காட்டுகிறது. ஸந்தியா கால மூட்டம் ஒரு கயிறைப் பாம்பாகக் காட்டுகிறதென்றால் கயிறு வாஸ்தவத்தில் ஏதாவது மாறுதலாக ஆச்சா என்ன? பாம்பு அதிலிருந்தே உண்டான தோற்றந் தானென்றாலும் அந்தப் பாம்போடு கயிற்றுக்கு ஏதாவது ஸம்பந்தமுண்டா என்ன?

ஆனால் இங்கே ஆசார்யாள் பின்பற்றிக் காட்டும் சாக்தத்தில் மாயா சக்தி என்று ப்ரஹ்ம ஸம்பந்தமில்லாமல் ஏதோ ஒன்று இருப்பதாக இல்லை. அத்வைதத்திலே ப்ரஹ்ம சக்தி என்பதை முக்யம் கொடுத்துச் சொல்வதே கிடையாது. இங்கே அதுதான் முக்யம்:பராசக்தி, அம்பாள் என்பது!அவளுடைய ஒரு 'ஆஸ்பெக்ட்'தான் மாயா கார்யம். அவளே மாயைக்கு நேரெதிரான ஞானமாகவும் இருக்கிற சித்சக்தி. இன்னும் க்ரியா சக்தி, இச்சா சக்தி எல்லாமுந்தான். நிர்குண ப்ரஹ்மத்தின் ஸ்தானத்திலிருக்கும் சிவனோடு ஒன்றாக, பிரிக்கவே முடியாமல் ஸம்பந்தப்பட்டிருப்பவள் அவள். சிவ-சக்தி ஐக்யம் இங்கே ரொம்ப முக்யம். ஐக்யம் என்றால் 'ஏதோ'சேர்ந்திருப்பதில்லை; ஒன்றே என்கிற அளவுக்கு ஒட்டிப் போயிருப்பது. 'ஏகம்'என்றால் ஒன்று அல்லவா?'ஏக'மாக இருக்கும் தன்மை 'ஐக்யம்'.

லலிதா ஸஹஸ்ரநாமத்தை முடிக்கிற இடத்தில் அவளை

'சிவா'என்று கூப்பிட்டுவிட்டு, அடுத்தாற்போல 'சிவ சக்தி ஐக்ய ரூபிணி'என்று சொல்லியிருக்கிறது. இந்த சிவன் கிட்டடத்தட்டத்தான் அத்வைத சாஸ்திரப் ப்ரஹ்மமாகையால் இவனையும் சேர்த்துக் கொண்டு, ஸம்பந்தப்படுத்தி, அசைத்துத்தான் அவள் தம்பதியாக ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி, நிர்வாஹாதிகளைப் பண்ணுவது. ஒரு சக்தி இருக்கிறதென்றால் அதற்கு ஆச்ரயமான ஒரு அடிப்படையும் இருக்கத்தானே வேண்டும்?பத்து வீசை எடை என்றால் அந்த சக்தி அந்த எடையுள்ள இரும்புக் குண்டாகவோ, வேறொன்றாகவோ தானே இருக்க வேண்டும்?ஆச்சரயமில்லாமல் எப்படி எடை மட்டும் இருக்க முடியும்?வாஸனை என்று ஒரு சக்தி இருக்கிறது, வர்ணம் என்று ஒரு சக்தி இருக்கிறது என்றால் புஷ்பம் மாதிரி ஒரு ஆச்ரயத்தைச் சார்ந்துதானே அது இருக்க முடிகிறது?அந்த ஆச்ரயமில்லாமல் அது உண்டா?அப்படி எல்லா சக்திக்கும் மூலமான பராசக்திக்கு அதனிடமிருந்து பிரிக்க முடியாத ஆச்ரயமாக இருப்பதே சிவமான ப்ரஹ்மம். அந்த சிவத்தின் 'எனர்ஜி'தான் இந்த சக்தி என்கிறபோது எப்படிப் பிரிப்பது? 'பாலிலிருந்து வெள்ளையைப் பிரி;பாலிலிருந்து அதன் ருசியை பிரி' என்றால் முடியுமா? ஆகையால் சக்தி விலாஸத்தால் என்ன பண்ணினாலும் அதிலே சிவனுந்தான் சேர்ந்து இருக்கிறான். கஷாயத்தின் உறைப்பைக் குறைப்பதற்காக பாலுடைய மதுரமான ருசியைச் சேர்க்கே வேண்டும் என்றால் பாலிலிருந்து அந்த ருசியை மட்டும் பிரித்தெடுத்துச் சேர்க்க முடியுமா?சக்தி கார்யம் அத்தனையிலும் சிவ ஸம்பந்தமில்லாமல் செய்ய முடியாது.

ஜீவனுக்கு அம்பாள் அளிக்கிற மோக்ஷாநுக்ரஹத்தில் அந்த ஜீவன் செயலேயில்லாத, சாந்தம் மட்டுமேயான நிர்குண அத்வைத ஸ்திதியை அடைவதாகத்தான் ஸ்ரீவித்யை முதலான சில சாக்த தர்சனங்கள் காட்டுகின்றன. ஜீவாத்மா அப்படியானாலும் முழு முதல், மூலப் பொருள் என்பது சாந்தத்தோடு சக்தியும் சேர்ந்த தம்பதியாகவே அந்த தர்சனங்களில் இருக்கிறது!

அந்த சக்தி தன் வீச்சு எத்தனை அத்புதமானதென்று தன்ககுத் தானே பார்த்துக் கொண்டு ரஸித்து ஆனந்தப்படுவதற்காகத்தான் த்வதை ப்ரபஞ்சமாக விரிந்து கூத்தடிப்பது. மூலப் பொருளின் லீலானந்தத்திற்கே ஸ்ருஷ்டி

என்பது.

ஆனந்தப்படுவதற்காக ஸ்ருஷ்டி, லீலானந்தத்திற்காக ஸ்ருஷ்டி என்பதுகூட அவ்வளவு ஸரியில்லை. ஆனந்தமடைவது என்ற காரணத்திற்காக அம்பாள் ஸ்ருஷ்டி பண்ணுகிறாளென்றால், ஸ்ருஷ்டி பண்ணாமல் வெறுமனே இருக்கும்போது அவள் ஆனந்தமில்லை என்றாகிவிடுமே! ஸச்சிதானந்த ரூபிணியை அப்படிச் சொல்லலாமா?ஆகையால் ஆனந்தத்திற்காக ஸ்ருஷ்டி லீலை செய்கிறாள் என்பதைவிட, தன்னுடைய ஸ்வபாவமான ஆனந்தத்தினாலேயே இப்படி லீலை செய்கிறாள் என்பதே ஸரி.

---



## அத்வைத மாயையும், சைவ-சாக்தங்களின் சக்திகளும்

சாக்த சாஸ்திரங்கள் சொல்கிற ஸ்ருஷ்டி க்ரமத்திலும் மாயை இருக்கிறது. இந்த க்ரமத்தில் சாக்த சாஸ்திரங்களும் சைவ சாஸ்திரங்களும் பெரும்பாலும் ஒத்துப் போகின்றன. ஆனால் அத்வைதத்தில் ப்ரஹ்மம் என்று ஒன்று, மாயை என்று ஒன்று. மாயையால் 'ப்ரஹ்மம் மறைந்து அதனிடத்தில் அதன் ஆதாரத்தில் ப்ரபஞ்சம் தோன்றுகிறது'என்று முடிந்துபோய்விடுகிறது போல இங்கே இல்லை. சக்தி உள்கலந்த சிவமான ப்ரஹ்மத்தில் ஆரம்பித்து ஐந்து சுத்தமான தத்வங்களைச் சொன்ன அப்புறமே சாக்தத்தில் மாயா தத்வம் ஆறாவதாக வருகிறது. காஷ்மீர சைவத்திலும் அப்படித்தான். அவற்றில் முதலில் ஐந்து சுத்த தத்வங்கள் என்பவற்றைச் சொல்லி, அப்புறமே மாயையில் ஆரம்பித்து முப்பத்தோரு அசுத்த தத்வங்களைச் சொல்லியிருக்கிறது. தமிழ்நாட்டில் வழங்கும் சைவ ஸித்தாந்தத்திலும் மொத்தம் முப்பத்தாறு தத்வங்கள்தான் என்றாலும் அதில்

முப்பத்தாறையும் மாயையோடு ஸம்பந்தப்படுத்தி, ஆனாலும் முதல் ஐந்து தத்வங்கள் சுத்த மாயை என்றும், மீதி முப்பதொன்று அசுத்த மாயை என்றும் பாகுபடுத்தியிருக்கிறது. நாம் அஸல் சாக்தத்தையே பார்ப்போம்.

அதில் சித்தாகிற ஞான சக்தியை உள்ளே வைத்துக் கொண்டு செயலில்லாமலிருக்கும் சிவ தத்வம் முதலில் அடுத்ததாக நன்றாக வெளிப்பட்டுவிட்ட சக்தி தத்வம். மூன்றாவதாக, இச்சா சக்தியுடன் கூடிய ஸதாசிவ தத்வம். நாலாவதாக ஞான சக்தியோடு கூடிய ஈச்வர தத்வம். ஐந்தாவதாக, க்ரியா சக்தியோடு கூடிய சுத்த வித்யா தத்வம். அதற்கப்புறந்தான் ஆறாவது தத்வமாக மாயை வருகிறது.

முதல் தத்வமான சிவனோடேயே சித் சக்தி இருப்பதாகச் சொன்னேன். சித் சக்திதான் ஞான சக்தி என்றேன். மறுபடி நாலாவதான ஈச்வர தத்வம் ஞான சக்தியோடு சேர்ந்திருப்பதாகவும் சொன்னேன். இரண்டாவது தத்வமாக சக்தி என்றே சொன்னதும் சித் சக்திதான். இப்படிப் பல தினுஸாகச் சொன்னால் எப்படிப் புரிந்து கொள்வது என்றால்,-

'ஸத்'தான இருப்பு நிலையாகிய சிவன் முக்யமாயிருந்தது, அதில் அந்தர்கதமாக [உள்ளூறை வஸ்துவாக]சித் சக்தி இருப்பதை முதல் தத்வமாகவும், சித் சக்தி முக்யமாயிருந்து ஸத் [சிவ]தத்வம் அதற்கு back-ground-ஆக [பின்னணியாக]இருப்பதை இரண்டாம் தத்வமாகவும் காட்டி வித்யாஸப்படுத்தியிருக்கிறது. சித் என்னும் இந்த ஞானம் அறிவு என்று சொல்லும் knowledge மட்டுமில்லை. இது உணர்ச்சியாக, உயிராக உள்ள அறிவு. ஜடம், சேதனம் என்று ஒரு பாகுபாடு கேள்விபட்டிருப்பீர்கள். இதில் 'சேதனம்'என்பது 'சித்'திலிருந்து வந்ததுதான். உயிரும், உணர்ச்சியும் அறிவுமில்லாத வஸ்துக்களை ஜடம் என்பது. கல், மண், தங்கம், வெள்ளி முதலியவை கூடப் ஜடப் பொருட்கள். ஜடம் என்பதை அசேதனம் என்றும் சொல்வதுண்டு. உயிருள்ள, உணர்ச்சி படைத்த, அறிவு கொண்ட ஜீவராசிகளைச் சேதனம் என்பது. நாமெல்லாம் சேதனம், பசு, பக்ஷிகள் சேதனம். சேதனத்திலிருந்து 'சைதன்யம்'என்ற வார்த்தை வந்திருக்கிறது. 'சைதன்ய

ஸ்வரூபிணி'என்று அம்பாளைச் சொல்வது. மூலப் பரம்பொருளின் உயிர் சக்தியாக இருப்பவள் அவள். அப்படி ப்ராண சக்தியாக இருப்பதன் அங்கந்தான் அறிவாகவும் உணர்ச்சியாகவும் இருப்பது. அறிவதே உணர்வதாக, அதாவது அறிவதே அநுபவிப்பதாக இருப்பதுதான் அந்த ஞானம்; சித் என்பது. சர்க்கரை தித்திக்கும் என்று புஸ்தகத்தில் படித்து அறிவது ஞானமில்லை.

அதைத் தின்று பார்த்து ருசியை அநுபவித்து அறிவதே ஞானம். உயிரிருந்தால்தான் அறிய முடியும் அந்த ப்ராண சக்தியும் சேர்ந்தே சித். ப்ராணன்தானே ஆதார சக்தி?அதனால் சக்தி என்றாலே சித் சக்திதான்;ப்ரஹ்மத்தின் உயிரான, ஸ்வாநுபவ அறிவான சித்சக்தி தான்.

அறிவுக் கார்யமாக மாத்திரமில்லாமல், உயிர் வாழ்வது என்பதாகவும், உணர்ந்து அநுபவிப்பவது என்பதாகவும் 'ஞானம்'இருப்பதால் இங்கிலீஷில் அழகாகப் பத ப்ரயோகம் பண்ணுகிறவர்கள் அதை knowledge என்று சொல்லாமல் Consciousness என்கிறார்கள். ஒன்றைப் பற்றி நாம் conscious-ஆக இருக்கிறோமென்றால் அதில் ஸ்வாநுபவம் இருக்கிறதென்று அர்த்தம். ஸ்வாநுபவம் நாம் ஜீவசக்தியோடு இருந்தால்தானே ஏற்படும்? சிவன் முதலாவது தத்வம், சக்தி - அதாவது சித்சக்தி- இரண்டாவது தத்வம் என்று ஏன் வைத்தது, என்றால்:ஒரு ஸான்டோ இருக்கிறானென்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் தூங்கும்போதும் அவனுடைய பலம் இருக்கத்தான் செய்கிறது. ஆனாலும் முழித்துக் கொண்ட பின்னால்தான் அந்த பலம் தெரிவது;அதைக் காட்ட முடிவது. சிவ தத்வம் தூங்குகிற ஸான்டோ மாதிரி. சக்தி தத்வம் முழித்துக்கொண்ட ஸான்டோ மாதிரி. முழித்துக்கொண்ட ஸான்டோவுக்குத் தன் பலத்தைக் காட்ட வேண்டும் என்று தோன்றுகிறது. அதாவது அப்படி அவனுடைய இச்சை. இதுதான் மூன்றாவதான இச்சா சக்தி, அதை உடையவன் ஸதாசிவன்.

நாலாவதாக ஈச்வரன் என்று சொல்லி அவனும் ஞான சக்தியோடு சேர்ந்தவன் என்று சொன்னது குழப்பமாக இருக்கலாம். முதல் தத்வத்திலேயே சித் என்று ஞான சக்தியைச் சொல்லி விட்டு இப்போது மறுபடி நாலாவதுடனும்

ஞானசக்தி என்கிறேனே என்று குழப்பம் தோன்றலாம். முதலில் சொன்ன சித் என்பது ஏகமான மூலப்பொருளின் ஏகமான ஞானம்;உள்ளே அடங்கியிருந்த ஞானம். இரண்டாவது ஸ்டேஜில் அது முழித்துக் கொண்டு தன்னைத்தானே அறிவதாக, உணர்வதாக இருந்தது. மூன்றாவது ஸ்டேஜில் தன் வீச்சை வெளிப்படுத்திப் பார்க்க வேண்டும் என்று இச்சைப்பட்டது. அப்புறம் நாலாவது ஸ்டேஜில் தன்னுடைய ஏகமான உள்முக ஞானத்தை அநேகமாக விரியப்போகும் ப்ரபஞ்சமாக வெளிப்படுத்த 'ப்ளான்'போட்டது. அநேக ப்ரபஞ்சத்தை ப்ளான் பண்ணிற்று என்றால் அப்போது அதன் ஞானமும் ஏகமாக உள்ளே இல்லாமல் அநேக விதமாக வெளிப்படுவதற்கு அஸ்திவாரமாயிருக்கிறது என்றுதானே அர்த்தம்?ஏகஞானமாயிருந்ததையே முதலில் 'சித்'â¡Á‹ Ü«ïè ë£ùƒèÀ‚° Ü®Šð¬ìò£è Ü¶«õ Ýù ï£ô£‹ v«ìT™ Ü¬î«ò 'ë£ù‹'â¡Á‹ M˜ò£ú‹ ªîK»‹ð® «õÁ «õÁ õ£˜ˆ¬îèO™ ªê£™LJ¼‚Aø¶.

நாலாவது ஸ்டேஜில் ப்ளான் போட்டதையடுத்து, ஐந்தாவதில் அதன் 'எக்ஸிக்யூஷன்'. அறிவால் போட்ட திட்டம் கார்யமாகிறது. அதுதான் க்ரியா சக்தியுடன் சேர்ந்த சுத்த வித்யா தத்வம். இப்படிச் சொன்னதால் பிரம்மம் ப்ரபஞ்சமாக வெளிப்படுவதற்கே ஆரம்பித்து விட்டது என்று அர்த்தமில்லை. அப்படி ஆரம்பிக்கத் தன்னைத் தானே முஸ்தீபு பண்ணிக் கொள்வதுதான் இந்த ஐந்தாவது ஸ்டேஜ். தூங்கி முழித்துக் கொண்டவுடன் வெளிக் கார்யம் பண்ணுவதற்கு முன்னாடி, அப்படிப் பண்ணுவதன் பொருட்டே, நம் உடம்பையே சோம்பல் முறித்துக் கொள்கிறோமல்லவா?அது மாதிரியான நிலை. ஸான்டோ கோதாவிலே இறங்கி இன்னொருத்தனோடு மல்யுத்தம் பண்ணுவதற்கு முன்னாடி, அதற்குத் தயார்ப்படுத்திக் கொள்வதற்காகத் தன்னுடைய தோள், தொடைகளையே தட்டிவிட்டுக் கொள்கிற நிலை!ப்ரஹ்மத்திற்கு வெளியிலே ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி என்ற க்ரியை இன்னம் ஆரம்பமாகவில்லை. ஆரம்பிப்பதற்காகத் தன் க்ரியா சக்தியை அது திரட்டிக் கொள்வதே ஐந்தவாது ஸ்டேஜ். வெளியிலே வேறே மாதிரி ஆகாமல் சிவ-சக்தியான ப்ரஹ்மத்திற்குள்ளேயே க்ரியா சக்தி திரண்டிருப்பது.

ஆனாலும் வெளியாவதற்கு ஸங்கல்பித்து, திட்டம் போட்டு, ஸித்தமும் ஆகியாயிற்று.

ஏகமான தான் த்வைதமாக (அநேகமாக)ஆகப்போகிறோம் என்பதாகத் 'தான்', தன்னுடைய னீணீஸீவீயீமீவணீமீ வீஷீஸீ (வெளிப்பாடு) என்ற இரண்டையும் ஸம எடை கட்டிப் பார்க்கும் அறிவோடு, உணர்ச்சியோடு அது இப்போது இருக்கிறது. இந்த ஞானத்தைத்தான் "சுத்த வித்யா"என்பது.

வித்யா, ஞானம், சித் மூன்றுக்கும் ஒரே அர்த்தமானாலும் மூன்று ஸ்டேஜில் சித்தின் மூன்று வித பரிணாமங்கள் ஏற்படுவதால் ஒரே வார்த்தையைச் சொல்லிக் குழப்பக் கூடாது என்றே அத்விதீயமாயுள்ள (ஏகமாயுள்ள)சிவ சக்தி விஷயத்தில் என்றும், அது த்வைத அறிவுகளுக்கு மூலமாக இருக்கும்போது ஞானம் என்றும், கார்ய ரூபத்தில் த்வைதத்தைச் செய்வதற்கு முன் தன்னுடைய அத்வைத நிலையையும் தான் னீணீஸீவீயீமீவமீ செய்யப் போகும் த்வைத ப்ரபஞ்சத்தையும் ஸரிஸமனாக உணர்ந்தறியும் போது வித்யா (சுத்த வித்யா)என்றும் சாக்த, சைவ சாஸ்த்ரங்களில் வெவ்வேறு பேர் கொடுத்துச் சொல்லியிருக்கிறது........

இப்போது நான் சொன்னவற்றிலிருந்து இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி என்று ஒன்றையடுத்து ஒன்றாக மூன்று தெரிகிறது. அந்த ஆர்டர்தான் ஸரி என்பதற்கு நடைமுறை த்ருஷ்டாந்தம் காட்டுகிறேன். ஒரு குழந்தை பிறக்கிறது. உடனே அதற்குப் பால் குடிக்கணும் என்ற இச்சை உண்டாகிறது. அந்த இச்சை இல்லாவிட்டால் அது குடிக்காது. இச்சை இருப்பதால்தான் 'வீல் வீல்'என்று கத்துகிறது. அப்புறம் வாயைச் சப்பினால்தான் குடிக்க முடியும் என்ற அறிவு, அதாவது ஞானம், அதற்கு உண்டாகிறது. அந்த ஞானமில்லாவிட்டால் அது எப்படிச் சப்பிக் குடிக்க முடியும்?'சப்பணும்'என்ற ஞானம் அதற்கு உண்டாவது இதிலிருந்து 'ப்ரூவ்'ஆகிறது. அதற்கும் அப்புறம் க்ரியையாகவே வாயினால் சப்பிக் குடிக்கிறது.

அத்வைதம் மாதிரி இல்லாமல் சாக்தத்தில் (சைவத்திலுந்தான்) ப்ரஹ்மத்திற்கு நாலு ஸ்டேஜ் தாண்டி ஐந்தாவது தத்வமான சுத்த வித்யைக்கும் அப்புறந்தான் ஆறாவது தத்வமாக மாயை வருகிறதென்று சொல்லிக் கொண்டிருந்தேன்.

த்வதைமாக வெளிப்படுவதற்கு முஸ்தீபு முடித்தபின் அஸலான த்வைத ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி. இந்த ஆறாவது ஸ்டேஜில்தான் ஜீவர்கள் வருவது. இதுவரைக்கும் ஏகமான சிவ-சக்திதான். அது எங்கேயாவது மாயையால் பாதிக்கப்படுமோ? ஜீவர்கள் என்று தன்னிடமிருந்தே 'மானிஃபெஸ்டேஷன்'களை (வெளிப்பாடுகளை)உண்டாக்கின அப்புறந்தான் விளையாட்டுப் பார்ப்பதற்காக, ஒளிஞ்சு-'ப்ளே' விளையாடி ஸந்தோஷப்படுவதற்காக ஜீவர்களை மாயையால் கட்டுவது;கட்டி அவர்களுக்குத் தாங்களும் அந்த ஏக வஸ்துதான் என்று தெரியாதபடி செய்வது;தாங்கள் தேஹமும் இந்த்ரியாதி அந்தஃகரணமுந்தான் என்று ப்ரமை ஏற்படும்படிச் செய்வது.

சக்தி வீச்சின் அற்புதம் எப்படிப்பட்டது என்பதை ஸந்த்யா கால மேகங்கள், ஹிமோத்கிரி மாதிரியான பர்வதங்கள், ஸப்த ஸாகரங்கள் - இத்தனை பெரிசு பெரிசாகத்தான் இருக்கணுமென்றில்லை, ஒரு புல் நுனியிலே சூரிய வெளிச்சம் சிதறி வைரமாக மினுக்குகிற ஒரு பனித்துளியிலேகூடத்தான் - இப்படியெல்லாம் ஜட ப்ரபஞ்சமாக விரித்துப் பார்த்து மட்டும் சிவ-சக்திக்கு லீலா நாடக ரஸிப்பு பூர்ணமாக ஏற்படாததாலேயே சேதனமான ஜீவர்களைப் பண்ணி அவர்களுக்குச் சைதன்யம் இருந்துங்கூட தங்களுடைய மூலம் தெரியாமல் மயக்கி மாயக் கூத்தடிக்கிறது!

'அது ஸரி, இப்படிப் பண்ணுவது அம்பாளுக்கு ரஸமாக இருக்கலாம்;அவள் ரஸித்து ஆனந்தப்படலாம். ஆனால் நமக்கு மாளாத அவஸ்தையாயல்லவா இருக்கிறது?அவளுக்குக் கொண்டாட்டம் என்பது நமக்குத் திண்டாட்டமாக அல்லவா இருக்கிறது? மாயையக்கு மேலே சுத்தமான நாலைந்து 'ஆஸ்பெக்ட்'கள் அவளுக்கு இருக்கிறதென்றால், அதனால் நமக்கென்ன லாபம்?ஜீவர்கள் என்று இருக்கிற நம்மை மாயை நன்றாக இறுக்கிக் குறுக்கிப் போட்டிருப்பதுதானே நம் வாழ்க்கையில் அச்சு முளையாக இருக்கிறது?'என்று கேட்கலாம்.

வாஸ்தவம். அதனால்தான் மாயைக்கே முக்யம் கொடுத்து, அதாவது அதை ஒழிப்பதற்கே முக்யம் கொடுத்து ஆசார்யாள் அத்வைதம் என்று ஃபிலாஸஃபி பண்ணினார்.

சாக்த தர்சனங்களும் மாயை ஆறாவதாக வந்தாலும் அதன் முக்யத்வத்தை ஒப்புக் கொள்ளாமலில்லை. எந்த தர்சனமானாலும் அது ஜீவனுக்கு வழி காட்டுவதாகத்தான். அப்போது அவனுக்கு முக்யமான 'ப்ராப்ள'த்தைத்தானே அதுவும் முக்யமாகக் கவனிக்கணும்?அம்பாள் வேறே சுத்த தத்வங்களாக மாயைக்கு மேலே இருந்தாலும் ஜீவனுக்குத் தெரிவது அவள் மாயையாகத் தன்னை ஸம்ஸாரத்தில் பந்தப்படுத்தியிருப்பதேயாதலால் இதை சாக்தமும் 'அன்டர்லைன்'பண்ணாமலிருக்க முடியவில்லை. அதனால்தான் பரப்ரஹ்ம தத்வத்துக்கு ப்ரணவம் மாதிரி சக்தி தத்வத்துக்கென்று இருக்கிறது பீஜாக்ஷரத்துக்கு 'சக்தி பீஜம்'என்று பெயர் கொடுத்ததோடு 'மாயா பீஜம்'என்றும் பெயர் கொடுத்திருக்கிறது. ஜீவன்-நீமீஸீமீ௴ஷீமீபீ-ஆகத்தான் (ஜீவனை மையப்படுத்தினான்)ஜீவர்களுக்கு சாஸ்திரம் சொல்ல வேண்டுமென்பதால் அம்பாளை மாயை, மஹாமாயை என்றேதான் அதிகம் சொல்வது. ('துர்கா)ஸப்தசதீ'யில் அதற்குத்தான் அழுத்தம் கொடுத்துச் சொல்லியிருக்கும். (முத்துஸ்வாமி)தீக்ஷிதரும் "மாயே!"என்றே பாடியிருக்கிறார்.

"அதெல்லாம் ஸரி. அம்பாள் மாயையாக நம்மை மயக்கிக் கட்டிப்போட்டிருக்கிறாள் என்று சாக்த சாஸ்த்ரமே ஒப்புக்கொண்ட பிறகும் அந்த சக்தியைக் கொண்டாடி உபாஸிப்பது என்றால் எப்படி ஸரி?நம்மை நம்முடைய நிஜ ஸ்வரூபமே தெரியாமல் மறைத்து, மனஸையும் இந்திரியங்களையும், லோகத்தையும், லோக வஸ்துக்களையும் கொடுத்து ஒரேயடியாக ராக-த்வேஷ (விருப்பு-வெறுப்பு) இழுபறியில் இழுத்து விட்டிருக்கும் ஒரு 'பவ'ரை ஆசார்யாள் அத்வைதத்தில் கரித்துக் கொட்டின மாதிரிப் பண்ணுவதுதானே நியாயமாகத் தோன்றுகிறது?அதற்கு என்ன பூஜை, கொண்டாடிக்கொண்டு ஸ்தோத்ரம்? அதே ஆசார்யாள் இப்படியும் பண்ணினாரென்றால் எப்படி?"

மாயா சக்தியாக மாத்திரம் மஹா சக்தி தீர்ந்துபோய் விட்டால் இந்தக் கேள்வி ஸரிதான். ஆனால் அவளே ஞான சக்தியாயும் இருக்கிறாளே!நமக்கும் ஞானத்தை தந்து மாயையிலிருந்து விடுவித்து அருள்கிற அநுக்ரஹ சக்தியாயும் இருக்கிறாளே!முன்னேயே சொன்னேன் - ஜீவாத்மா என்று ஒன்றை அவள் மாயையால் பந்தித்து,

தள்ளினாற்போல் வைக்கிறாளென்றால் அதுவும் பிரித்து வைத்துச் சேர்த்துக் கொள்வதில் ஏற்படும் 'எக்ஸ்ட்ரா'ஆன ந்தத்திற்காகத்தான்!ஆக, மாயா சக்தியாக மாத்திரமில்லாமல் ஞான சக்தியாக, அநுக்ரஹ சக்தியாக, ப்ரேம சக்தியாக, ஸௌந்தர்ய சக்தியாகவும் இருந்து நம்மை ரக்ஷிப்பவள் அவள்.

"சித்தில் ஆரம்பித்து முன்னே சொன்ன சக்திகளில் இல்லாததாக இதென்ன புதிசு புதிதாக ப்ரேம சக்தி, அநுக்ரஹ சக்தி, ஸௌந்தர்ய சக்தி என்றெல்லாம்?"- என்றால் இதெல்லாமும் இச்சா சக்தி என்றேனே அதில் அடக்கந்தான். இச்சையென்பது ஆசை. அன்பாக, ப்ரேமையாக இருப்பது என்றால் என்ன? அதுவும் ஆசைதானே?ஜீவர்களாகத் தன்னையே விரித்துக் கொள்ள வேண்டும், பிரித்துக் கொள்ள வேண்டும் என்ற முதல் இச்சை அதோடு தீர்ந்து போய்விடவில்லை. அந்த ஜீவர்களிடமும் அவளுக்கு இச்சை, அதாவது ப்ரேமை தாய்க்குக் குழந்தையிடமுள்ள வாத்ஸல்யம் என்ற மிக உயர்ந்த அன்பு உண்டு. தன்னிடமிருந்தே உண்டான ஜீவர்களிடம் அம்பாளுக்கு எப்படி அன்பு இல்லாமலிருக்கும்?தாய், குழந்தை, வாத்ஸல்யம் என்று லோகத்தில் ஏற்பட்டதே அப்புறம்தான்; அவளுடைய மூல வாத்ஸல்யத்தின் ஆபாஸமாகத்தான் (பிரதிபலிப்பு ஒளியாகத்தான்)! இப்படி ஜீவர்களிடம் அவளுக்கு இச்சை இருந்துந்தான், பிரிந்திருந்து அப்புறம் சேருவதன் எக்ஸ்ட்ரா ஆனந்தத்திறாகாக அவர்களை மாயை பண்ணித் தள்ளினாற்போல வைப்பது. இப்படி மாயா மோஹம் பண்ணவேண்டும் என்பதும் ஒரு இச்சை. அப்புறம் மாயையிலிருந்து அவர்களை விடுவிக்கணும் என்ற அநுக்ரஹ இச்சை.

இதற்காகக் கொஞ்சங் கொஞ்சமாக மாயையிலிருந்து அவர்களைத் தன் பக்கமாகத் திருப்பிக் கொள்ள வேண்டுமென்று இச்சை. அப்படி ஜீவ லோகத்தை ஆகர்ஷிப்பதற்காகவே ஸௌந்தர்ய ஸ்வரூபமாகி - ரூப ஸௌந்தர்யம், குண ஸௌந்தர்யம் இரண்டும் படைத்தவளாகி - லீலைகள் பண்ணுவது. இப்படி ஆகி, இப்படி பண்ணணும் எனற முதலில் இச்சை;அப்புறமே அது கார்யமாவது. எந்தக் கார்யமானாலும் அதற்கு வித்து அதைப் பண்ணவேண்டுமென்று இச்சிப்பதுதான். நாம்

வேண்டுமானால் இச்சையில்லாமலே ஏதோ கெடுபிடிக் கட்டாயத்தின் மேலோ, அல்லது நம்மை மீறிய ப்ரக்ருதி வேகத்திலோ சில கார்யங்கள் பண்ணலாம். ஸாக்ஷாத் பரப்ஹ்ம சக்தியானவள் இஷ்டப்பட்டு இச்சித்துத்தான் எதுவும் பண்ணுவது. இப்படி இச்சா சக்தியின் பல ரூபங்களாகத் தோன்றுவதுதான் ப்ரேம சக்தி, அநுக்ரஹ சக்தி, ஸௌந்தர்ய சக்தி ஆகிய எல்லாமும்.

அன்பு என்று பொதுவாக இருப்பட்ட ப்ரியாதை ப்ரேமை என்றும், அன்பினால் செய்யக்கூடிய சிகரமான கார்யமாக ஒரு ஜீவனை மாயையிலிருந்து விடுவித்து மோக்ஷம் தருவதையும் அதற்கு மார்க்கம் காட்டுவதையும் அநுக்ரஹம் என்றும் சொல்வது. நமக்கு ஒரு பரீக்ஷைபாஸாவதற்குக்கூட அவள் அநுக்ரஹம் பண்ணுகிறாளென்றாலும், நிஜமான அநுக்ரஹம் என்றால் அது மாயையின் அக்னிப் பரீக்ஷையில் நாம் பாஸ் பண்ணி, (சிரித்து)ஞானத்துக்குப் பாஸ் பண்ணுவதுதான்;அப்படி அவள் பண்ணுவிப்பதுதான். துக்கக் கலப்பேயில்லாத சாச்வத ஆனந்தத்தை அளிக்கிற பேரருள் அது.

அநுக்ரஹமென்றால் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே நம்மை ஆக்குவதுதான். ஆனாலும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மறைத்து, அதை நாம் மறந்து, ஜீவாத்மாவாக இருக்கிறபோது நமக்கு உள்ள உடம்பு, உடம்பைக் கார்யத்தில் ஏவும் அந்தஃகரணம் (அதாவது மனஸு என்று வைத்துக கொள்ளலாம்), நாம் கார்யம் பண்ணுகிற லோகம், அதிலே நம் மனஸாலும் உடம்பாலும் செய்யும் கார்யத்தால் நாம் பெறும் அநுபோகம் ஆகியவற்றை நமக்குக் கொடுத்திருப்பதையே அநுக்ரஹம் என்று சாக்த-சைவ சாஸ்திரங்கள் சொல்வதுமுண்டு. இதை, தநு-கரணம்-புவனம்-போகம் என்ற நாலை ஜீவனுக்கு அநுக்ரஹிப்பது என்று சொல்லியிருக்கும். தநுதான் உடம்பு, கரணம் அந்தஃகரணமான மனஸ், புவனம் என்பது லோகம். போகம் என்பது ஜீவாத்மா அடையும் அநுபோகங்கள். "இதென்ன அநியாயம்?நம்முடைய நிஜமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மறந்து நாம் ஜீவாத்மாவாகத் திண்டாடுவதற்குக் காரணமான நாலையும் தருவதையா அநுக்ரஹமென்பது? இந்த நாலும் தொலைந்தாலல்லவா மோக்ஷம்?"என்று கேட்டால், அதற்கு அந்த சாஸ்திரங்கள், "ஜீவாத்மா என்று எப்படியோ நீ ஆன அப்புறம் உன்னைக் கர்மா பிடித்துக்

கொண்டுவிடுகிறதோல்லியோ?கர்மா தீர்ந்தாலொழிய மோக்ஷம் இல்லையோல்லியோ?கர்மா எப்படித் தீரும்? அநுபவித்துத்தானே அதைத் தீர்த்தாகணும்?எப்படி பழைய கர்ம பலனை அநுபவிக்கிறது?மறுபடி ஜன்மா எடுத்து, மனஸினால் நல்லதை நினைத்து, உடம்பால் நல்ல கார்யத்தைப் பண்ணித்தானே!அப்படிப் பண்ணுவதற்கு லோகம் (புவனம்) என்பது இருக்கத்தானே வேண்டும்? புவனத்தில் தநு கரணங்களைக் கொண்டே கார்யம் பண்ணிப் பலவித அநுபோகம் பண்ணித்தானே கர்மாவைத் தீர்த்துக் கொள்ள முடியும்?அதனால்தானே இவற்றைத் தருவதை அநுக்ரஹம் என்பது"என்று பதில் சொல்கிறது. கர்ம, பந்தத்தில் நாம் சிக்கிக் கொள்ளக் காரணமான நாலுமேதான் அதிலிருந்து நாம் விடுபடவும் ஸாதனமாகிறது என்பதால் அப்படிப்பட்ட ஸாதனங்களைக் கொடுப்பதை அநுக்ரஹம் என்கிறது. ஆனாலும் இந்த நாலை நாம் நல்லபடியாகப் ப்ரயோஜனப்படுத்திக் கொள்வதென்பது எத்தனை கஷ்டமாயிருக்கிறது?அதற்கான நல்லறிவை அவள் தந்து, நாம் கர்மாவை நாசம் பண்ணிக் கொள்ள வைத்து, அப்புறம் மோக்ஷானந்தம் தருவதான நிஜமான அநுக்ரஹம்.

மோக்ஷானந்தம் - ஆனந்தம்!கர்மா நாசமான பின் ஜீவாத்மா ஒரு உணர்ச்சியுமில்லாமல் போய் விடாமல், நிறைந்த வஸ்து என்று தன்னைத் தெரிந்து கொள்ளும் ஆனந்தம்!அதை அவள் அருள்வதே நிஜ அநுக்ரஹம்.

இப்போது நான் சொன்ன சக்திகளோடு அத்தனையையும் சேர்த்துப் பிடித்து இன்னொரு சக்தியையும் சொல்லப்போகிறேன். அதாவது ஆனந்த சக்தி. தானாக இருக்கிற ஆத்மானந்தத்திற்கு மேலே எதுவுமே இல்லை. அதைத்தான் மோக்ஷத்தில் அவள் நமக்குத் தருவது. ஆனால் அவள் ஸமாசாரத்தை எடுத்துக் கொண்டால் ஆத்மானந்தத்தில் சிவ ஸ்வரூபமாக இருந்ததோடு அவள் நிற்கவில்லை. நமக்குத் நிறைந்த நிறைவான அந்த நிலையோடு அவள் நின்று விடாமல், தன் சக்தியை மலர்த்தி லோக விளையாட்டு விளையாடுகிறாள். தானே ஆனந்தகனமாக இருப்பவள் வெளிக்கார்யமாகவும் ஆனந்தமாக விளையாடுகிறாள். தான் தானாக ஆத்மானந்தம் அநுபவித்துக் கொண்டே, விளையாட்டாக அதே தன்னை த்விதீயமாகவும் - தனக்கு வேறாக, வேறான மாதிரி - ஆக்கி

த்வைத ப்ரபஞ்சமாக னீணீஸீவீயீமீவமீ பண்ணிக் கூத்தடிக்கிறாள். ஆனந்தம் ஜாஸ்தியானால் நாம் கையிலகப்பட்டதை உயரப் போட்டுப் போட்டுப் பிடித்து விளையாடுகிறோம்!கட்டையிலே பலகையிலே மிருதங்கம் வாசிக்கிறோம், விளையாட்டாக!ஒரு குழந்தையிடம் இது இன்னும் நன்றாகத் தெரியும். ஆனந்தத்தில் அது என்ன விளையாட்டெல்லாமோ விளையாடுகிறது!ப்ரஹ்மத்தின் மஹா சக்தியும் ஆனந்தம் பொங்குவதில் விளையாடுகிறாள்.

விளையாட்டு (திருவிளையாடல்), லீலை என்று அதை ஏன் சொல்வதென்றால் வேறே ஒரு காரணமும் இல்லாமல் ஒரு பயனும் இல்லாமல் வெறும் ஆனந்த மேலீட்டிலேயே ஒன்றும் பண்ணுவதை வேறே எப்படிச் சொல்வது?ஏற்கெனவே அவள் ஆனந்த பூர்ணமாயிருப்பதால் த்வைத ஸ்ருஷ்டியால்தான் அவளுக்கு ஆனந்தம் உண்டாகி, அதற்காக வெளிப்படுகிறாள் என்று காரணம் சொன்னால் அது தப்பாகிறது;ஆனந்தம் என்ற பயனை அடைவதற்காக ஸ்ருஷ்டி பண்ணுகிறாள் என்றால் தப்பாகிறது. அவள் அடைய வேண்டியதாக எதுவுமே இல்லை. எதன் தேவையும் இல்லாத நிறைவான நிறைவு அவள். அப்படிப்பட்டவள் ஸ்ருஷ்டி பண்ணுகிறாள் என்றால் அது நாம் ஆனந்த உத்ஸாஹத்தில் ஒரு காரணமுமில்லாமல் விளையாடுகிற மாதிரிதான். அப்படி விளையாடுவதிலும் நமக்கு ஆனந்தம் ஏற்படுகிறது. அதனால் தொடர்ந்து கொண்டே விளையாடிக் கொண்டே போகிறோம். அப்படித்தான் அவளும் பண்ணுகிறாள். த்வைத லீலையைத் தொடர்ந்து கொண்டே போகிறாள். (சிரித்து) நாம் பண்ணுகிற மாதிரி அவள் பண்ணுகிறாள் என்று சொல்வது பிரதிபிம்பம் மாதிரி பிம்பம் பண்ணுகிறது என்கிறாற்போலத்தான் - தலைகீழாகச் சொல்வது!அவளுடைய ஸ்ருஷ்டி லீலா விநோதத்திலிருந்துதான் நமக்கு விளையாட்டு இன்பம் என்ற ஒன்று உண்டாவது. இதற்குக் காரணமில்லை. பலனை உத்தேசித்து அதைப் பண்ணவில்லை. "விளையாட்டுக்குச் சொன்னேன்"என்கிறோமல்லவா?காரணம், பலன் ஆகியவற்றின் ஸம்பந்தமில்லாமல் பண்ண ஆரம்பித்தாலும், ஆரம்பித்த பின் அது கொடுக்கும் ஆனந்தத்தினால் ஸ்ருஷ்டி லீலையைத் தொடர்ந்து கொண்டு போகிறாள். மொத்தத்தில், விளையாட்டு என்பது ஆனந்த ஸமாசாரம். அதனால்தான் ஆனந்த பூர்ண வஸ்து ஒரு

காரணமுமில்லாமல் காரிய ரூபத்தில் ஸ்ருஷ்டி என்று செய்வதை விளையாட்டு என்று, லீலை என்று சொல்வது.

இத்தனாம் பெரிய ப்ரஹ்மாண்ட விளையாட்டு கல்பகோடி காலமாக நடக்கிறது, இன்னும் அப்படியே நடக்கப் போகிறது என்றால் அதன் ஆதார ஊற்றான அவள் எப்பேர்ப்பட்ட ஆனந்த சக்தியாக இருக்க வேண்டும்!"அலகிலா விளையாட்டு"அது!அதாவது அளவு கடந்தது- என்றால் விளையாடுகிறவள் அலகிலா ஆனந்த ரூபிணியாயிருக்க வேண்டும்.

ஆனந்தத்துக்கு நேர் விரோதமான சோகம், பயம், கோரம், க்ரூரம் ஆகியவையும் லோக வாழ்க்கையில் அலகிலாமல் இருந்துங்கூட, அவள் பாட்டுக்கு அந்த விளையாட்டைப் பண்ணி கொண்டிருக்கிறாளென்பதைப் பார்க்கும்போது, அவளுக்கு வேறே எத்தனையோ வித சக்திகளைச் சொன்னாலும் எல்லாவற்றையும்விடப் பெரிசாக ஆனந்த சக்தியே இருப்பதாகத் தோன்றுகிறது. அவளுடைய மஹா பெரிய ஆனந்தப் பொங்கலின் - பொங்குதலின் மட்டுமில்லை;சர்க்கரைப் பொங்கலின் - ருசி மாற்றத்திற்குத் துளியூண்டு ஊறுகாய் மாதிரிதான் இத்தனை க்ரூரம், அழுகை, பயம் எல்லாமே என்னும்படியாக அத்தனை சக்திகளையும் சேர்த்துப் பிடித்த ஆனந்த சக்தியாக அம்பாள் இருக்கிறாள்!நமக்குச் சின்னச் சின்ன ஆனந்தங்களிலிருந்து, ஒரு ஐஸ்க்ரீம் சாப்பிடும் ஆனந்தத்திலிருந்து அகண்ட ஆனந்தமான ஆத்ம ஸாக்ஷாத்காரம் வரையில் சிற்றின்பங்கள், பேரின்பம் அத்தனையும் தருகிற ஆனந்த சக்தி அவள்.

பரப்ரஹ்ம தத்வத்தை ராதா-கிருஷ்ண தம்பதியாகப் பார்ப்பவர்கள் ராதையைக் கிருஷ்ணனுடைய ஹ்லாதினீ சக்தி என்றே சொல்வார்கள். 'ஹ்லாதம்'என்றால் ஆனந்தந் தான். ஆனந்தம் என்றால் என்ன அடையாளம்?சிரிப்பு, 'ஹீஹீஹீ'பண்ணுவது. 'ஹீஹீஹீ' என்ற வார்த்தைக்கு மூலம் ஜெர்மன் வழியாக இந்த ஸம்ஸ்கிருத 'ஹ்லாத்'தான்.

உயிரின் ஸ்வபாவமே ஆனந்தத்தான். ப்ரேமையும், ஸௌந்தர்யமும் ஆனந்தம் தரத்தான்;ஆனந்தம் பெறவுந்தான். உயிரும் உணர்ச்சியும் அறிவுமாக இருக்கிறதைத் தானே 'சித்'என்று சொன்னது?

(லலிதா)ஸஹஸ்ரநாமத்தில் 'சித்கலா'என்றவுடனேயே அடுத்த பேர் 'ஆனந்த கலிகா'என்று வருகிறது. ('கலிகா':மொட்டு.)அதற்கு அடுத்த பேர் 'ப்ரேமரூபா'. ஒன்றுக்கொன்று வீஸீமீமீக்ஷீ-றீவீஸீளீமீபீ.

---



## மாயா உபகரணங்களாலேயே ஞான நிலை அடைய

இப்படியெல்லாம் இருப்பவளை மாயா சக்தி என்று மட்டும் பார்த்துக் கரித்துக்கொட்டி 'அவளுக்கு என்ன பூஜை?' என்றால் ஸரியில்லைதானே?ஆனால், "நம்மை மாயையிலேதானே கட்டிப்போட்டு வைச்சிருக்கா, ஸ்வாமீ?"என்றால், அதற்குத்தான் சாக்த தர்சனத்தில், - பக்தி மார்க்கத்தின் எல்லா தர்சனங்களிலுமே - எதெல்லாம் மாயையாகக் கட்டுகிறதோ, அதையெல்லாமே தெய்வ ஸம்பந்தமாக்கிக் கொடுப்பது. மாயையும் ஞானமும் 'ஆப்போஸிட்'டாக இருந்தும், ஞானத்துக்கு வழியாகவே மாயா லோகத்தையும் இந்த்ரியங்களையும் மனஸையும் ப்ரேமையிலும் சுத்தமான ஸௌந்தர்யத்திலும் ஈடுபடுத்தி அவள் நினைப்பிலேயே ஆனந்தமாகத் தோய்ந்திருக்கும் படியாகப் பூஜை, ஸ்தோத்ரம் இத்யாதியைக் கொடுத்திருப்பது. மனஸ் இப்படி நல்லதில் ஒருமுகப்பட்டு சித்த ஐகாக்ரியம் உண்டாகிவிட்டால் அப்புறம் ஞான விசாரம் தன்னால் 'ஈஸி'யாக வந்துவிடும். மாயாலோக உபகரணங்களாலேயே ஞானத்துக்குப் போகத்தான் ஆசார்யாள் பக்தி மார்க்கத்தைச் செப்பனிட்டுக் கொடுத்திருக்கிறார்.

ஆரம்பத்திலிருந்தே மனஸையும் இந்த்ரியங்களையும் கட்டுப்படுத்தி ஒரே வைராக்யமாயிருக்க முடியும் என்று இருப்பவர்களுக்கு அதுகளை வைத்துக்கொண்டே பண்ண வேண்டியதான பக்தியும் பூஜையும் வேண்டியதில்லை.

அவர்கள் மாயையை அப்படியே உதறுவதற்கு அப்யாஸம் பண்ணி 'ஷார்ட்-கட்'டில் ப்ரஹ்மத்துக்குப் போகக் கூடியவர்கள். அப்படிப்பட்டவர்களுக்குத் துச்சமாக ஒதுக்கித் தள்ள வேண்டிய மாயையையும், லக்ஷ்யமாக அடைய வேண்டிய ஆத்மாவையும் பற்றி மாத்திரம் ஆசார்யாள் வலியுறுத்திச் சொல்லி ஞானம், ஆத்மவிசாரம், அத்வைத ஸாதனை என்று வைத்தார். மற்றவர்களுக்குக் கீழ்த்தரமான இன்பங்களில் போய்ப் போய் மாயைக் கட்டில் மேலும் மேலும் கெட்டியாக மாட்டிக்கொள்ளும் மனஸை உசந்த, பரிசுத்தமான இன்பங்களான தெய்வ ஸ்மரணம், பூஜை, கதா ச்ரவணம், ஆலய தர்சனம், பகவத் குண கணாநுபவம் முதலியவற்றில் ஈடுபடுத்தித் தத்-த்வாரா [அதன் மூலம்]ஞானத்துக்குப் பக்குவப்படுத்துவதற்காக பக்தி மார்க்கத்தைக் காட்டினார். அந்தக் கணக்கில்தான் மாயையைத் திட்டிய ஆசார்யாளே மஹாமாயையான அம்பாள் விஷயமாக ஸ்தோத்ரம் பண்ணியதும்.

அத்வைதத்தில் மாயை என்று ஒதுக்கச் சொல்வதை ஒதுக்க முடியாதவர்களுக்காக பகவத் லீலை, பராசக்தி லீலை என்று பார்த்து தெய்வ ஸம்பந்தப்படுத்தி நினைக்கப் பண்ணுவதற்கே பக்தி மார்க்கத்தில் பூஜா, ஸ்தோத்ராதிகள் என்று வைத்தது. மாய ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்கள், அவற்றை ஆண்டநுபவித்துக் குட்டிச்சுவராக ஆகிற நம்முடைய இந்த்ரியங்கள் மனஸ் ஆகிய எல்லாவற்றையுங் கூடப் பூஜை, ஸ்தோத்ரம், புராணம், ஆலய தர்சனம், ஜபம், த்யானம் என்று அந்த மாயைக்கு அதிகாரியாயிருக்கப்பட்ட மஹாசக்தி விஷயமாகவே ஈடுபடுத்தி சுத்தமாக்குவது. பக்தியுபாஸனையில், நமக்கு போக்யவஸ்துவாக - 'மைனர்'என்று பரிஹாஸம் பண்ண வைக்கிற - ஜவ்வாதுப் பொட்டை அம்பாளுக்கு கந்தோபசாரம் என்று பண்ணுவது; வஸ்த்ர-ஆபரணாதிகளைச் சார்த்துவது வாஹனாதிகளில் ஏற்றி ஊர்வலம் விடுவது;வெறும் சாப்பாட்டைப் பிரஸாதமாக்கி வடை, பாயஸம், சித்ரான்னம், சர்க்கரைப் பொங்கல் என்று நைவேத்யம் பண்ணுவது;நமக்கு உல்லாஸமூட்டுகிற ந்ருத்த, கீத, வாத்யங்களை வெறும் கேளிக்கையாயில்லாமல் அவளுக்கு மனஸுருகி அர்ப்பணம் பண்ணுவது;

சில்ப, சித்ரங்கள் நம்மைக் கன்னாபின்னா எண்ணங்களில் கொண்டு போகாதபடி தெய்வ ஸம்பந்தப்படுத்துவது. பஞ்சேந்திரியங்களும் பஞ்ச பூதங்களும் ஸம்பந்தப்பட்டதாகவே, அவற்றையும் பகவத் பரமாக்குவதாகவே, 'கந்த-புஷ்ப-தூப-தீப-நைவேத்யம்'என்ற பஞ்சோபசாரம் விதிக்கப்பட்டிருக்கிறது. வாக்கை ஸ்துதியிலும், காதைக் கதா ச்ரவணத்திலும், கண்ணை தரிசனத்திலும் ப்ரயோஜனப்படுத்தவது;சரீரத்தை நமஸ்காரம் என்று கீழே கிடத்துவது, அங்க ப்ரதக்ஷிணம் என்று உருள்வது;மனஸை ஜபம், த்யானம் என்பதில் உருட்டுவது - இப்படியாக பக்தி மார்க்கம் நாம் மாயையில் இருக்கும்போதே மாயா வஸ்துக்களாலேயே மாயா காரண மஹாசக்தியிடம் பிடிப்பை உண்டுபண்ணித் தருகிறது.

மாயா ஸமாசாரங்களை லேசிலே தொலைத்து முழுக முடியாது. ரொம்பவும் விவேக வைராக்யப் பக்வம் பெற்றவர்களைத் தவிர மற்ற எல்லாரையும் லோகமும், இந்திரியங்களும், இரண்டும் சேர்ந்து உண்டாக்குகிற பாச பந்தங்களும் வலிந்து வலிந்து இழுத்துக் கொண்டே தானிருக்கும். அபக்வ நிலையிலிருப்பவர்கள் நேராக அந்த இழுப்பைத் துண்டிக்க வேண்டுமென்று யத்தனம் பண்ணினாலும் லேசில் முடியாது. தொலைத்து முழுகுவது நம்மால் முடியாத கார்யம் என்று ஆத்திரப்படுவதும், 'நாம் விமோசனமே பெற முடியாது'என்று 'ஹோப்லெஸ்'ஸாக நிற்பதுதாகவே ஆகும். அதற்காகத்தான் தொலைத்து முழுகாமல் மாயா ஸமாசாரங்களையே தெய்வ ஸம்பந்தமாக்கிக் கொடுப்பது. மாயைக்கு, ஸகலத்திற்குமே, காரணமான வஸ்துவிடம் 'பக்தி'என்று அன்பு வைக்கச் சொல்லி, அதைக் கார்யத்தில் பூஜை, த்யானம், கானம் என்று பல தினுசில் மாயா ஸாம்க்ரிகளைக் கொண்டே செய்வதற்குச் சொல்லிக் கொடுப்பது. இப்படி மாயை ஸமாசாரங்களையும் தெய்வ ஸம்பந்தப்படுத்திக் கொண்டே போனால் அவை நம்மை பாதிக்காது, பந்தப்படுத்தாது. மின்ஸாரக் கம்பியை வெறுங் கையால் தொட்டால் 'ஷாக்'அடிக்கிறது. அதுவே gloves போட்டுக் கொண்டால் பயப்படாமல் தொடமுடிகிறதல்லவா?அப்படி மாயா ஸமாசாரங்களையே

தெய்வ நினைப்பு என்ற glovesபோட்டுக்கொண்டு கையாளும்போது அவை பாதிக்காது.

நான் நினைப்பது, சொல்லப் போவது விசித்ரமாக இருக்கலாம். ஆனாலும் அப்படி நினைப்பு வந்து, சொல்லத் தோன்றுவதால் சொல்கிறேன்:மாயா ஸமாசாரம் என்றேனே, அதில்தான் ப்ரத்யக்ஷஆத்ம அநுபவம் பெறும் ஸித்தியான உச்ச கட்டம் தவிரப் பாக்கி எல்லாமே இருக்கிறது. ஞான ஸாதனை என்கிறதுமேகூடத்தான்! ஸாதானை என்று பண்ண ஒன்று, அதைப் பண்ணும் ஸாதகன் என்கிற ஒருத்தன், பண்ணவது என்ற கார்யம் ஆகியவை வேறே வேறேயாக இருப்பதால் அதுவும் த்வைதந்தான். அதாவது மாயைதான். மாயா ஸமாசாரங்களாலேயே மாயையைப் போக்கிக் கொள்வதில் ஒரு அங்கந்தான் அத்வைதத்திற்கான ஸாதனைகூட!இது ஒன்றும் நான் புதுசாகச் சொல்கிறதில்லை. ஏற்கெனவேயே சொல்வதுதான்- 'குரு உபதேசிக்கிறதும் த்வைதந்தான். ஆனாலும் அதனால் அத்வைத ஸித்தி அடையலாம். எப்படியென்றால் ஸ்வப்னத்திலே ஒரு சிங்கம் கர்சிக்கிறது. அது ஸ்வப்னந்தான். ஆனால் ஸ்வப்னம் கண்டவனோ உளறியடித்துக் கொண்டு நிஜமான (நனவு)நிலையில்முழித்துக் கொண்டுவிடுகிறான். ஸ்வப்ன சிங்கமே இவனை ஜாக்ரத் என்னும் விழிப்பு நிலைக்குக் கொண்டு வருகிறது போலத்தான் மாயக் கனாவான த்வைத வாழ்க்கையில் குரு உபதேசிப்பதே ஒருத்தனை ஞானமான விழிப்பில் சேர்த்து விடுகிறது' என்று சொல்வதுண்டு. அதனால்தான், 'ஸாதனை என்பதே த்வைதந்தான் என்றுள்ளபோது அத்வைத லக்ஷ்யத்திற்கு மாறான லக்ஷ்யங்களை உடைய ஸாதனைகளையுங்கூடத்தான் நம்முடைய எண்ண ஓட்டத்தில் அவை இயற்கையாக வருகிறபோது சொல்லி விட்டுப் போவோமே! தெய்வபரமாகப் பிரயோஜனப்படுத்தும்போது எந்த த்வைத விஷயமும் ஞான மார்க்கத்திற்கு யோக்யதா ஸித்தியைக் கொடுக்கிறது என்னும்போது எந்த இதர மார்க்க ஸாதனையும், அதனுடைய சடங்குகள், சாஸ்திரங்கள் ஆகியவையும் அப்படிக் கொடுக்கத்தானே செய்யும்?

அதனால், நாம் பாட்டுக்கு 'ரிஸர்வேஷன்'இல்லாமல் எந்த ஸித்தாந்த ரீதியில் சிந்தனை போனாலும் அப்படியே

ச்லோகம் பண்ணிக்கொடுத்து விடுவோம்'என்று ஆசார்யாள் நினைத்தே ஸௌந்தர்யலஹரியை அநுக்ரஹித்திருக்கிறார் என்று சொல்லலாம். அதனால் தான் இதில் வைதிகம், தாந்தரிகம், அத்வைத-த்வைத-விசிஷ்டாத்வைதங்கள், சைவம், சாக்தம் என்று எல்லாம் அங்கங்கே குரல் கொடுக்கின்றன.

---



## அத்வைத சாஸ்திரத்திலும் சக்தி, லீலை முதலியன

இங்கே ஒரு முக்யமான விஷயம் சொல்லாமல் விடப்படாது. அத்வைதத்தில் ஸ்ருஷ்டி ஸமாசாரம் முழுவதையும் மாயை என்று வைத்துவிட்டதால் சக்தி என்பதை அடியோடு சொல்லாமல் விட்டுவிட்டதாக நினைக்கப்பட்டது. ஞான வழியில் போகிறவனை சக்தி விஷயமாகத் திருப்பவேண்டாமென்பதால் அதைக் குறிப்பிட்டு இம்பார்டன்ஸ் கொடுத்துச் சொல்வதில்லையே தவிர, சக்தி என்ற ஒன்றையே அது பிரஸ்தாவிக்கக்கூட இல்லை என்று இல்லை. சாந்தோக்யத்தில் ஒரு இடத்தில் பரமாத்மாவைச் சொல்கிறபோது ஸர்வ கர்மாவும், ஸர்வ காமமும், ஸர்வ கந்தமும், ஸர்வ ரஸமும் படைத்தது அது என்று இருக்கிறது. பரமாத்மா ஆசைப்பட்டதால் - "அகாமயத"- அந்த ஆசையிலேயே ஏக வஸ்து அநேகமாயிற்று என்று தைத்திரீய உபநிஷத்தில் வருவதை முன்னேயே சொன்னேன். "தன்னந்தனியாக இருப்பதில் ஸந்தோஷம் காணாமல் பரமாத்மா தனக்கு ஒரு கூட்டாளி வேணுமென்று ஆசைப்பட்டது;ஆசைப்பட்டு தானே பதி-பத்னி என்ற இரண்டு பேர்களாயிற்று"என்பதாகக் காமேச்வர-காமேச்வரி தத்வத்திற்கு ரொம்பக் கிட்டே ஒரு அபிப்ராயம் ப்ருஹதாரண்யகத்தில் வருகிறது. அந்த இரண்டு பேரையும் தாய் தந்தையராகக் கொண்டுதான் ஸகல இனங்களும்

ஸ்ருஷ்டியானது என்று மேற்கொண்டு அந்த உபநிஷத் சொல்கிறது.

உபநிஷத்துக்களில் இப்படிப் பரமாத்மா ஸர்வ சக்தியும் படைத்திருக்கிறது என்று சொல்லியிருப்பதை ப்ரஹ்ம ஸூத்ரமும் "ஸர்வோபேதா ச தத் தர்சநாத்"என்று எடுத்துக் காட்டியிருக்கிறது.

இந்த மாதிரி இடங்களை நம் ஆசார்யாள் பாஷ்யத்தில் மழுப்பிக் கொண்டு போவதேயில்லை. தாம் மாயைக் கொள்கையைச் சொல்வதால் சக்தி ஸம்பந்தத்தைத் தொட்டும் தொடாமலும் அர்த்தம் பண்ணிவிட்டு மேலே ஓடுவதில்லை. மேலே சொன்ன ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் அவர் ஸ்பஷ்டமாகவே 'ஸர்வ சக்தி-யுக்தா பரா தேவதா'என்று சொல்லியிருக்கிறார். மாயை என்பதை அவரே டிஃபைன் பண்ண முடியாத 'அநிர்வசனீய'வஸ்து என்று வைத்துவிட்டால், 'சக்தி எங்கேயிருந்து வந்தது?'என்கிற மாதிரி கேள்விகளுக்கு பயப்படவேண்டி இருக்கவில்லை. "லோகத்தின் மற்ற வஸ்துக்களோடு ஒப்பிட்டு 'அதெப்படி முடியும்?' என்று ப்ரஹ்ம தத்வத்தின் விஷயத்தில் கேட்பதற்கில்லை;அதிகம்பீரமான, அதாவது ரொம்பவும் ஆழம் வாய்ந்த, ப்ரஹ்மத்தை ச்ருதி சொல்லியிருப்பதைக் கொண்டுதான் ஆழங்காண முடியுமே தவிர, தர்க்கத்தாலல்ல"என்று அவர் அடித்துச் சொல்லியிருக்கிறார்.

ப்ரஹ்மமாகவே இருக்கிற ஸமாதி நிலையாயில்லாமல், ப்ரஹ்மத்தைப் பற்றி பேசுகிற, நினைக்கிற நிலையில் தான் ஸ்ருஷ்டி விஷயமே வருகிறது. சுத்த ஞானமாக இருக்கும் போது நிர்குண ப்ரஹ்மமாக இருப்பதே இவ்வாறு ஸ்ருஷ்டி என்று அவித்யா [மாயா]கல்பித விஷயத்தோடு ஸம்பந்தப்படுத்தப் பெறும்போது 'ஸர்வசக்தி யோகம்'பெறுகிறது என்று இங்கே ஆசார்யாள் சொல்கிறார்.

"சிவ:சக்த்யா யுக்த:"என்பதேதான் 'ப்ரஹ்மம் ஸர்வ சக்தி யோகம் பெறுகிறது'என்பதும்!

லீலையாக ஸ்ருஷ்டியைச் சொல்வதும், ப்ரஹ்ம ஸூத்ரத்தில் இதையடுத்தே சொல்லப்பட்டிருக்கிறது: "லோகவத்து லீலா

கைவல்யம்"என்று அங்கே பாஷ்யத்தை முடிக்கும்போது ஆசார்யாள், "ஸ்ருஷ்டி விஷயத்தை ச்ருதி சொல்வது நிர்குணமான பரம ஸத்ய தத்வத்தைச் சேர்ந்ததில்லை;இது அவித்யா கல்பிதமான நாம-ரூபமான த்வைதப் பார்வையில் பார்க்கிற வியவஹார ஸத்யம்தான்"என்று அத்வைதமாகவே கொண்டு போனாலும், வியவஹாரம் என்று ஒப்புக்கொள்கிற நிலையில் ஸ்ருஷ்டியைச் செய்யும் ஈச்வரனின் லீலையை ரொம்பவும் ரஸித்து, சிலாகித்தே எழுத்யிருக்கிறார். "ஜகத் ரசனை [பிரபஞ்ச நிர்மாணம்]நமக்கு வேண்டுமானால் மஹா பெரிய சாதிப்பாகத் தோன்றுகிறதே தவிர ஈச்வரனுக்கு வெறும் விளையாட்டு மாத்ரந்தான் - அவனுக்கு அபரிமித சக்தி இருக்கிறபடியாலே!"என்று சொல்லியிருக்கிறார்.

'ஸ்பந்தம்'என்ற உள்-வைப்ரேஷனாலேயே அத்விதீய ப்ரஹ்மம் த்வைத ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியை உண்டாக்குகிறது என்பதற்கும் உபநிஷத்தின் ஆதாரம் இருக்கிறது. "இந்த ஜகத் பூராவும் ப்ராணன் என்ற ஒரு உயிர்ச் சக்தியிலேயே உண்டாகி அசைகிறது"என்று கடோபநிஷத்தில் வருகிறது. 'அசைகிறது'என்பதற்கு 'ஏஜதி'என்று அங்கே போட்டிருக்கிறது. 'ஏஜனம்'என்பதற்குக் கம்பனம் என்று அர்த்தமென்று பாஷா சாஸ்திரம் சொல்கிறது. 'கம்பனம்' என்றால் அசைவது. அசைவதிலும், வெளியேயிருந்து பிடித்து உலுக்கி அசையாமல் தானே அசைவது, 'வைப்ரேட்'ஆவது என்று ஓரளவு அர்த்தம் கொடுப்பது. இதை 'கம்பனாத்'என்று ப்ரஹ்ம ஸூத்ரம் சொல்கிறது. இதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது, 'இப்படி வைப்ரேட் செய்விக்கிற ப்ராணன் என்பது மூச்சுக் காற்றான வெறும் வாயு இல்லை;அது ஸாக்ஷாத் ப்ரஹ்மமேதான்'என்று நிர்தாரணம் பண்ணியிருக்கிறார்.

இந்த மாதிரி இன்னும் அநேகம், தேடிப் பார்த்தால் கிடைக்கும் - வியவஹார ஸத்யம் என்பதாக மாயா ஸ்ருஷ்டியை அத்வைதமும் ஒரு நிலையில் ஒப்புக்கொண்டு பேசும்பொழுது சாக்த சாஸ்திர அபிப்ராயங்களுக்கு ரொம்பவும் ஆதரவாகவே சொல்கிறது என்று தெரிந்து கொள்வதற்கு.

---

## ஸ்தோத்திரத்தை நாம் அணுகவேண்டிய முறை

பல ஸித்தாந்த விஷயங்களை ஆசார்யாள் மனஸு திறந்து அது அது இயல்பாக வரும்போது கொட்டியிருப்பதை 'கலந்தாங்கட்டியாகச் சொல்லியிருக்கிறாரே!'என்று நாம் தப்பாக எடுத்துக்கொள்ளக் கூடாது. நாமும் அவர் மாதிரியே மனஸைத் திறந்து வைத்துக் கொண்டு, மனஸை அப்படியே ஸ்தோத்ரத்திற்குக் கொடுத்து, லஹரி அதன் போக்குப்படி அடித்துக் கொண்டு போகும்படியாக விட்டு, அடக்கத்தோடு அம்பாளையும் அவரையும் வேண்டிக் கொண்டு - 'இந்த ஸ்தோத்ரத்தினால் நாம் நல்லபடிப் பயனடைய வேண்டும்'என்று வேண்டிக் கொண்டு - பாராயணம் பண்ணவேண்டும். பண்ணினால், ஸ்தோத்ர கர்த்தாவின் பாவத்திலேயே நாமும் லயித்து, ஒரேயடியாக லயித்துவிட்டாலுங்கூட அந்த பாவத்தைப் புரிந்து கொண்டு, அதில் திவ்யமான ஸந்தோஷம் பெறமுடியும்.

வித்யாஸமான ஸித்தாந்தங்கள் வந்தபோதிலும் நாம் வித்யாஸமான மனப்பான்மை இல்லாமல் ஸ்தோத்திரத்தின் ப்ரயோஜனத்தை அடைய வேண்டும் என்பது ஒன்று. இன்னொன்று: சாஸ்த்ரத்தில் தத்வங்கள் தெய்வ ஸ்வரூபங்களாக இருப்பதில் allegory-யாக [உருவகமாக]சில வர்ணனைகளும் விஷயங்களும் சொல்வதைக் கன்னாபின்னா என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளக்கூடாது. அந்த ஸமாசாரங்கள் கன்னாபின்னா என்று இருப்பதாக அர்த்தம் எடுத்துக் கொள்ளக்கூடாது. 'அல்லிகரி'என்பது அவ்வளவு ஸரியான வார்த்தை இல்லை. தத்வங்களை நாம் வேண்டுமென்றே கதாபாத்ரங்களாக நம்முடைய கல்பனையால் ரூபகப்படுத்துவதுதான் 'அல்லிகரி'. சாஸ்திர-புராண விஷயங்கள் அப்படி யாரோ சாஸ்த்ரகாரரோ,

பௌராணிகரோ தன்னுடைய கல்பனா சக்தியினால் இட்டுக் கட்டியதில்லை. பராசக்தியேதான் அந்தத் தத்வங்களை அந்த ரூபங்களாக அந்த மஹான்களுக்கு, மந்த்ர ஸித்தர்களுக்கு, ரிஷிகளுக்குக் காட்டியிருக்கிறாள். இந்த லோகம் நிஜம் என்றால், இதேபோல, அல்லது இதை விடவும், இதிலிருந்து நம்மை விடுவித்து நம்முடைய நிஜ ஸ்வரூபத்தில் கரைப்பதற்கு ஸஹாயம் பண்ணும் அந்தத் த்தவ ரூபங்களும் கதைகளும் ரொம்பவும் நிஜமானவை. இன்றைக்கும் யதோக்தமாக ஜப, த்யானாதிகள் பண்ணினால், பக்தியில் நம் ஹ்ருதயத்தை உருக்கிக் கரைத்தால், அந்த ரூபங்களை தர்சனம் பண்ண முடியம்;நாம் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிற மாதிரிப் பார்க்கமுடியும். ஆனால் நாம் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வதில் ஏற்படும் உணர்ச்சிகள் ஒன்றுமே இல்லை என்னும்படியாக இப்படி திவ்ய ரூப தர்சனம் பெறும்போது ஹ்ருதயத்திலிருந்து ப்ரேமையும் ஆனந்தமும், பொங்கிக் கொண்டு வந்து நம்முடைய ஆதார வஸ்துவான நிஜ ஸ்வரூபானுபவத்தின் நிறைவான சாந்தி ஸந்தோஷங்கள் வரை கொண்டு சேர்க்கும். ஆகையால் 'அல்லிகரி'என்பது ஸரியில்லை....

சொல்லவந்தது என்னவென்றால், தத்வ ரூபங்களான தேவதாமூர்த்திகளைப் பற்றிய ஸமாசாரங்களில் சிலது லோகத்தில் மநுஷ்ய ஜீவர்களான நமக்கு எது வாழ்க்கை முறை என்றும், ஒழுங்கு என்றும், ஸரியானது, நல்லது, அழகு என்றும் வைத்திருக்கிறதோ அதற்கு மாறாகவும் இருக்கலாம். அப்படியிருப்பதால் அவை அஸலே ஸரியில்லை, ஒழுங்கில்லை என்று நினைத்துவிடக் கூடாது. தத்வார்த்தம் என்ன என்று பார்த்தால் அது ரொம்ப ஸரி, ரொம்பவும் ஒழுங்கானது என்று தெரிந்துவிடும்.

இதேபோலக் காவ்ய மரபுகளை மதித்துச் சில விஷயம் சொல்கிறபோதும் லோக வாழ்க்கைக்கான அளவு கோலால் அதை முழம் போட்டுப் பார்த்து ஸரியில்லை, ஒழுங்கு தப்பினது என்று தள்ளிவிடக்கூடாது. 'யதார்த்தத்தை அப்படியே காட்டுவது லோகதர்மி;இது வெறும் கார்பன் காப்பிதான்;ரஸம் இல்லாதது.

அதை நாடகத்தில் ரஸமாகக் காட்டுவதற்காக சில அம்சங்களை மெல்லிசு பண்ணி, சில அம்சங்களைப் புஷ்டி

பண்ணிக் காட்ட வேண்டும். இப்படிக் காட்டுகிறதே நாட்ய தர்மி'என்பார்கள். நாட்ய தர்மி என்று ஒரு மரபாக வந்திருப்பதை நாடகாசிரியர் ஒவ்வொருவரும் தன்னுடையே ஸொந்த மனோதர்மப்படி மெருகுபோட்டு நாடகங்கள் எழுதுவார்கள். நாடகத்துக்குச் சொன்னது கவிதைக்கும் தான்;சில்பம், சித்ரம் எல்லாவற்றுக்குமேதான். லோக வாழ்க்கையை 'ஈயடிச்சான் காப்பி'யாக 'இமிடேட்' பண்ணாமல் ரஸம் கூடுதலாகத் தெரிவதற்கு அந்தக் கலை மரபுப்படி என்ன மாதிரி மாற்றியிருக்கிறதோ அதைக் கலைஞன் தன் மனோதர்மத்தில் இழைத்துக் கொடுக்க வேண்டும். இந்த மரபிலே நமக்குச் சிலது ரஸம் போதாதது, ரஸக் குறைவானது, மிகையானது என்றெல்லாங்கூடத் தோன்றலாம். ஆனாலும் ஒரு பெரிய கவி-பாரம்பர்யமோ, சில்பி-பாரம்பர்யமோ அந்த மரபுப்படி வழிவழியாகச் செய்து கொண்டுவரும்போது, புதுசாக வருகிற கீழ்க் கன்றுகளும் அதை அநுஸரித்துப்போவதுதான் மரியாதைப் பண்பு என்பதையும், அதுதான் மரபை ரக்ஷித்து நீடித்துக் கொடுக்க உதவும் என்பதையும் நாம் புரிந்து கொண்டு, ஏற்றுக்கொள்ளவேண்டும்.

ஸௌந்தர்லஹரியை நாம் உரியபடி ரஸிப்பதில் இது இரண்டாவது விஷயம். முதல் விஷயம், பலவித ஸித்தாந்தக் கருத்துக்கள் அதில் வருவதை வித்யாஸமில்லாமல், 'இந்த இடத்தில் ஸந்தர்பத்தில் இந்தக் கருத்து ஸரி. முன்னே பின்னே இதே ஸித்தாந்தம் வருகிறதா என்று பார்க்க வேண்டாம்'என்ற எண்ணத்துடன் பார்த்து ஒவ்வொரு வித அபிப்ராயத்தையும் ஒப்புக்கொள்வது. இரண்டாவது விஷயம், தத்வ ரூபமாக - உருவகம், உருவக் கதை என்று இந்த நாளில் சொல்வது மாதிரி - சில ஸமாசாரங்கள் வரும்போதும், கவி மரபை அநுஸரித்துச் சில ஸமாசாரங்கள் வரும்போதும் நம்முடைய யதார்த்த லோகவாழ்க்கையின் ஒழுங்கு முறைகளை 'ஸ்டான்டர்டா'க வைத்துக்கொண்டு அவற்றை அளந்து பார்த்து ஸரியாயில்லை, ரஸமாக இல்லை என்று தள்ளிவிடக்கூடாது.

இந்த 'அப்ரோச்'சோடு [அணுகுமுறையோடு] நாம் 'ஸௌந்தர்ய லஹரி'மாதிரியான சாஸ்திரமாகவும் கவிதையாகவும் சேர்ந்து இருக்கப்பட்ட ஸ்தோத்ரங்களைப்

படித்துப் பாராயணம் செய்தால்தான் அவற்றிலிருந்து முழுப் பலனும் அடையமுடியும்.

இதெல்லாம் எதற்குச் சொல்கிறேனென்றால் 'ஸௌந்தர்ய லஹரி'யில் இப்படிப்பட்ட விஷயங்களும் கொஞ்சம் இருப்பதால் நாம் சுத்தமான மனஸோடு, அடக்கத்தோடு 'அப்ரோச்'ð‡E, ÜŠð®Š ð‡Eù£«ô Ü¬ìò‚Ã®ò à^îññ£ù ðô¬ù Ü¬ìò «õ‡´ªñ¡ðîŸè£è^î£¡. Šóyñ^F¡ vî£ù^F½œ÷ Cõ¡, ÜîÂ¬ìò Þ„¬êJ¡ Ïðñ£ù è£«ñ„õK ÝAò Þó‡´ «ð¼‹ «ê˜‰¶ v¼w® à‡ì£õ¬î î^õ Ïðè „¼ƒè£óñ£è«õ ÿ M^ò£ êvFó^F™ ªê£™LJ¼‚Aø¶. Þ¶ ñ£FKò£ù Mûòƒèœ ï‹ v«î£^Fó^F½‹ Þ¼‚°‹. î^õ£˜^î^¬î«ò â´^¶‚ªè£‡´ ²^îñ£ù ñù«ú£´î£¡ Þ^î¬ù è£ôñ£è àð£úè˜èœ Ü¸wì£ù‹ ð‡E, Üîù£™ è£ñ£F «î£ûƒè¬÷Š «ð£‚A‚ªè£‡´ àê‰î Ü¸ðõƒè¬÷ Ü¬ì‰F¼‚Aø£˜èœ. Íè˜ ['ð…ê êF'J™]Ü®‚è® ªê£™õ£˜: "Ü‹ñ£!c è£ñ¬ù ðvñ‹ ªêŒî CõQì«ñ è£ñ^¬î à‡´ ð‡Eù£Œ. Ü«î c è£ñ£F «î£ûƒèÀœ÷ põ˜èO¡ è£ñ^¬îŠ «ð£‚A ë£ù^¬î, ªè£´^¶ M´Aø£Œ!"â¡Á.

இதற்கு ஒரு முக்ய காரணம், நம் ஜனங்களின் 'அப்ரோச்'சும் நல்லபடி இருந்ததுதான். அப்படியிருந்துங் கூட உபாஸனை, ஸாதனை என்று தீவிரமாக இந்த விஷயங்களை அப்யாஸம் பண்ணுவது என்று வருகிற போது குரு-சிஷ்ய க்ரமத்தில் ரொம்பவும் யோக்யதை பார்த்துப் பக்வி (பக்குவம் பெற்றவர்)களுக்கு மாத்திரமே உபதேசம் செய்து வந்தார்கள். தப்பாக நினைக்க இடம் தருகிறவர்களையும் ஸரியாகவே எடுத்துக்கொள்ள முடிபவர்களுக்கு மாத்திரமே சொல்வது என்று குரு-சிஷ்ய க்ரமத்தில் ரஹஸ்யமாக ரக்ஷித்து வந்தார்கள்.

சாஸ்த்ரார்த்தமாகவும் ஸரி, காவ்ய ரீதியிலுங்கூட ஸரி, எல்லா விஷயங்களையும் விஸ்தாரம் பண்ணாமல், பொதுவாக இருக்கப்பட்ட ஜனங்களுக்குச் சிலதைத் தொட்டும் தொடாமலும் சொல்லிவிட்டு மேலே போய் விடுவார்கள்.

இங்கே 'அன்டர்லைன்'பண்ணிச் சொல்ல வேண்டிய விஷயம் என்னவென்றால் இத்தனை காலமாக நம் ஜனங்களின் 'பேஸிக் அப்ரோச்'சும் (அடிப்படையான அணுகுமுறையு

ம்)ரொம்ப நல்லபடியாகவே இருந்து வந்திருக்கிறது. 'நாம் ஒரு ஸ்தோத்ரம் பாராயணம் பண்ணுகிறோமா?அல்லது புராணம் கேட்கிறோமா?அல்லது ஒரு கோவிலுக்குப் போகிறோமா?இதுகளை எதற்குப் பண்ணுகிறோமென்றால் நாம் சுத்தி ஆவதற்காகத் தான்;நம்முடைய காமாதி தோஷங்களைப் போக்கிக் கொண்டு பக்தியை வளர்த்துக்கொண்டு ஈச்வராநுக்ரஹத்தைப் பெறுவதற்காகத்தான்'என்று அவர்கள் தீர்மானமாக வைத்துக்கொண்டிருந்தார்கள் ஆகையினால், அவர்களுடைய ஸ்திதியில் அந்த லக்ஷ்யத்திற்கு வேறேயாகத் தோன்றும்படி ஒரு ஸ்தோத்திரத்தில் வர்ணனை வந்தாலோ, அல்லது புராணத்திலே கதை வந்தாலோ, அல்லது ஆலயத்திலே சில்பங்கள் இருந்தாலோகூட அவற்றில் ரொம்ப கவனத்தை விடாமல், 'எதற்காகவோ பெரியவர்கள் இதற்கெல்லாமும் இடம் கொடுத்திருக்கிறார்கள். நம்மை இதுகள் பீவீஉமீ'கூஷீணீநீமீ' பண்ண (திசை திருப்ப)வேண்டாம். நம் லக்ஷ்யம் சுத்தியாவது, பக்தி பண்ணுவது, அநுக்ரஹத்துக்குப் பாத்திரமாவது என்று இவற்றிலேயே குறியாக இருந்து மற்றவற்றை லேசாக எடுத்துக்கொண்டு, அல்லது தள்ளிவிட்டு, தங்களுக்கு எது ஆத்மாபிவிருத்திக்கு ஸஹயாமாகத் தெரிந்ததோ அதிலேய கவனம் செலுத்தினார்கள். ஸமய ஸம்பந்தமான விஷயங்களில் ஒரு விநயம், எடுத்ததற்கெல்லாம் கேள்வி கேட்டுக்கொண்டும் ஆராய்ச்சி பண்ணிக்கொண்டும் போகாத எளிமை இருந்ததால், தங்களுக்கு ஸரியாக வராத விஷயங்களைக் கூட அஸலே ஸரியில்லை என்றே வைக்காமல், அதே ஸமயத்தில் அவை ஸரியில்லாமலில்லை என்பதால் அவற்றைத் தாங்களும் பீமீமீஜீ-ஆக எடுத்துக் கொள்ளலாமென்றும் நினைக்காமல் தங்களுடைய வ்யவஸ்தையை அறிந்து நல்ல கட்டுப்பாட்டோடு 'அப்ரோச்'பண்ணி வந்தார்கள். வர்ணனைகள் அவர்களுந்தான் படித்தார்கள்;சில்பங்கள் அவர்களுந்தான் பார்த்தாகள். ஆனாலும் தங்கள் பரிசுத்திக்கு ஆனதை மட்டுமே குறிப்பாக எடுத்துக் கொண்டு, மற்றவற்றை மேம்போக்காகப் பார்த்துவிட்டு மேலே போனார்கள். தெய்வங்கள் காம க்ரோத வசப்பட்ட மாதிரி வருவதெல்லாங்கூட நம் நிலையில் பண்ணியதில்லை என்ற உறுதியான தீர்மானம் அவர்களுக்கு இருந்ததால், அதற்கு

என்ன தத்வார்த்தம், இல்லாவிட்டால் காவ்ய ரீதியில் அதற்கு என்ன 'வால்யூ'என்றெல்லாம் ஆராய்ச்சியில் இறங்காமலே நல்லபடியாக எடுத்துக் கொண்டு தங்கள் வழியைப் பார்த்துக் கொண்டு போனார்கள். வழிவழியாக இத்தனை ஆயிரம் வருஷங்களாகப் புராண ச்ரவணம், ஸ்தோத்ர பாராயணம், தேவாரம்-திவ்யப் பிரபந்தம் ஓதுவது, ஆலய தர்சனம் பண்ணுவது என்று நம்முடைய ஜனங்கள் பின்பற்றி வந்திருப்பதில் கிஞ்சித் (சிறிதளவு)கூட விகாரமான மனோபாவங்களுக்கோ, விகல்பான கல்பனைகளுக்கோ இடமே கொடுக்காமல்தான் இருந்து வந்திருக்கிறார்கள். தத்வார்த்தம் தெரிந்த உபாஸகர்களும், கலையறிவு பெற்ற ரஸிகர்களும் பீமீமீஜீ-ஆகப் பார்த்துப் புரிந்துகொண்ட விஷயங்களையும், அப்படி பீமீமீஜீ-ஆகப் பார்ப்பது தங்கள் வேலையில்லை என்று மற்றவர்கள் புரிந்து கொண்டு 'லைட்'டாக எடுத்துக்கொண்டு தங்கள் லக்ஷ்யத்தைப் பார்த்துக்கொண்டு போனதால் இத்தனாயிரம் காலமாக எல்லாம் நல்லபடி இருந்து வந்தது.

ஒரு டாக்டர் நோயாளியின் அவயவங்களையெல்லாம் பரிசோதனை பண்ணுகிறார். அப்போது அவர் பார்க்கிற கண்ணே வேறே. அவருடைய 'பர்பஸு'ம் உசந்தது. அதனால் அவர் அப்படிப் பண்ணுவது தப்பில்லை. 'லாபரடரி'யில் அவர் மலப் பரிசோதனை கூடப் பண்ணுகிறார்.

சுத்தமாக வெள்ளை வெளேரென்று ட்ரெஸ் போட்டுக்கொண்டு ஹைஜீன் விதிகள் எல்லாம் 'ஃபாலோ'பண்ணும் அவர் கண்ட காலராக்காரன் 'ஸமாசார'த்தைக்கூட 'டெஸ்ட்'பண்ணுகிறார். 'தொத்து வியாதி நோயாளி கிட்டேயே போகப் படாது!'என்று நம்மையெல்லாம் தடுக்கிறவர். அவரே அந்த வியாதிக் கிருமிகளை 'மைக்ராஸ்கோப்'பில் பார்த்து ரிப்போர்ட் எழுதுகிறார். அவர் பண்ணுவதையெல்லாம் நாமும் பண்ணுவோமே என்கலாமா?அல்லது அவர் அப்படிப் பண்ணப்படாது என்றோ, இந்த மாதிரி அஸிங்கமெல்லாம் வைத்ய சாஸ்திரத்திலேயே இருக்கக்கூடாது என்றோ சொல்லலாமா?

இந்த நல்லறிவு அநாதி காலமாக நம் ஜனங்களுக்கு மத ஸம்பந்தமான விஷயங்களில் இருந்து வந்ததால் எல்லாம்

நல்லபடி இருந்தது. நன்றாக வரப்பு கட்டிய நிலம் மாதிரி, பாகுபாட்டு வரம்புகளுடன் கூடியிருந்ததால் நம் தேசம் லோகோத்தர கீர்த்தியுடன் விளங்கி வந்தது.

ஆனால் ப்ரின்டிங் ப்ரெஸ் வந்து, யார் வேண்டுமானாலும் எதைப் பற்றி வேண்டுமானாலும், எத்தனை காப்பி வேண்டுமானாலும் புஸ்தகம் போடலாம் என்று ஆனவிட்டு நிலைமை துக்கப்படும்படியாக மாறியிருக்கிறது. ரஹஸ்ய சாஸ்திரங்களைக்கூடப் புஸ்தகம் போட்டுப் பக்குவம் பார்க்காமல் ஸர்வ ஜன விநியோகமாகச் செய்வதால் தாறுமாறாக அர்த்தம் பண்ணிக்கொள்வது பரவிவருகிறது. பொதுவாகவே ஜனங்களின் வியவஸ்தை, கட்டுப்பாடு, விநயம் என்பதெல்லாம் அடிப்பட்டுக் கொண்டு வருவதாலும், தாங்கள் ஸ்வதந்திரப் பிரஜைகளானதால் இப்படித்தான் இருக்க வேண்டுமென்று அபிப்ராயமிருப்பதாலும் தலைக்குத் தலை தோன்றினபடியெல்லாம் அர்த்தம் பண்ணுவது என்ற பெயரில் அனர்த்தம் விளைவிப்பதாக இருக்கிறது. புஸ்தகம் போடுகிறவர்களிலும் பல பேர் அந்த சாஸ்திரத்தை அப்யாஸம் பண்ணி அநுபவம் கண்டவரில்லை; இது ஒரு தொழில், 'கிதாப்'கிடைக்கிறது என்பதற்காகவே போடுகிறார்கள். வாங்கிப் படிப்பவர்களிலும் ரொம்பப் பேர் அநுஷ்டானம் பண்ணும் உத்தேசத்துடன் படிக்கிறதில்லை. ஒரு பொழுதுபோக்காகவோ, 'என்ன இருக்கு?'என்று பார்க்கும் 'க்யூரியாஸிடி'யிலோ இல்லாவிட்டால் ஆராய்ச்சி பண்ணி 'தீஸிஸ்', 'கீஸிஸ்'எழுதி, அல்லது தாங்களும் புஸ்தகம் போட்டுக் 'கிதாப்'வாங்குவதற்காகவோ படிக்கிறார்கள். எந்தவிதமான பக்தி ஸ்திதி அடைந்து, எப்படிப்பட்ட பாவத்தோடு ஒரு சாஸ்திரத்தைக் கற்பிக்கவேண்டுமோ, கற்க வேண்டுமோ அவை இல்லாமலே எழுதுகிறவர் எழுதி படிக்கிறவரும் படித்தால் அதன் மூலம் ஆத்மார்த்தமான பலன் எப்படி ஏற்படும்? எழுதுகிறதும், படிக்கிறதும் மட்டுந்தானென்றில்லை. உபதேசம் கொடுப்பது, வாங்கிக் கொள்கிறது என்பதிலுங்கூட நியமம் தப்பியே நிறைய நடக்கிறது.

இன்றைக்கு நடக்கும் இரண்டு பெரிய கோளாறுகள்:ஒன்று பரம்பரையாக உபாஸனைகள் செய்துவந்தவர்களும், அதற்கு அதிகாரிகளாக (தகுதி பெற்றவர்களாக) இருப்பவர்கள அது

வேண்டாம் என்று ஒரே ஸௌகிகமாகப் போயிருப்பது. இன்னொன்று, தங்கள் தகுதியையும் பார்க்காமல், சாஸ்திர நியமங்களையும் அநுஸரிக்காமல் இஷ்டப்பட்டவர் யார் வேண்டுமானாலும் எந்த உபாஸனையை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுவது. செய்யவேண்டியவன் செய்யாமலிருப்பது, செய்யக் கூடாதவன் செய்வது - இந்த இரண்டில் எது பெரிய கோளாறு என்று சொல்லத் தெரியவில்லை.

சொல்ல வந்தது, தற்போதைய நடைமுறையில், தங்களுடைய சித்த விகாரத்தால் தோன்றுகிறபடியெல்லாம் தத்வ ரூபகங்களைத் தப்பர்த்தம் பண்ணிப் புஸ்தகங்கள் போடுவதாகவும் ஆராய்ச்சிக் கட்டுரைகள், பிரஸங்கங்கள் என்று பிரசாரம் செய்வதாகவும் நிறைய நடந்து வருகிறது.

இதனால் ஒன்று, மதாபிமானமுள்ளவர்களென்று தங்களை நினைத்துக் கொண்டிருப்பவர்களிலேயே பல பேர் காபாலிகம், கெட்டுப்போன வாமாசாரம் ஆகியவை மாத்திரமில்லாமல் சிஷ்டர்கள் (ஆசார சீலர்கள்)என்கப்பட்டவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உபாஸனைகளிலேயும் தப்பாகப் பல அம்சம் இருப்பதாகவும் அவற்றைக் கழித்துக் காட்டினால்தான் நம்முடைய மதம் சுத்தமாகும் என்றும் நினைக்கிறார்கள். அல்லது - இப்படி நினைப்பதே தேவலை என்னும்படியாக 'அசிங்கம், ஆபாஸம், க்ரூரம் என்று பூச்சி பிடிக்காமல் சாஸ்த்ரங்களிலேயே 'நேச்ச'ரை மதித்து அநேகம் சொல்லியிருக்கிறது. ஆகையினால் நாமும் கூச்ச நாச்சமில்லாமல் 'ரியலிஸம்'என்று என்ன வேண்டுமானாலும் கதை-கட்டுரை எழுதலாம், படம் போடலாம், படம் பிடிக்கலாம்'என்று நினைக்கிறார்கள். இன்னொன்று என்னவென்றால் மதாபிமானமில்லாதவர்கள் சாஸ்திர, புராணங்களில் மலை மலையாக இருக்கும் நல்லது எல்லாவற்றையும் தள்ளிவிட்டு, இப்படிப்பட்ட விஷயங்களையே தேடி எடுத்து பூதக் கண்ணாடியில் "மதமே குப்பை" என்ற நாஸ்திகப் பிரசாரம் பண்ணுகிறார்கள்.

இத்தனை விபரீதங்களுக்கும் காரணம் எல்லா விஷயங்களையும் தரம் பார்க்காமல் 'டெமாக்ரடைஸ்'செய்திருக்கும் காலப்போக்குதான். இதை

எப்படி ஸரிப் பண்ணுவது, நான் சொல்வதால் ஸரி ஆகிவிடுமா, 'சங்கராச்சாரி ஸ்மீவமீ'மீபீ வீஸீமீ'மீக்ஷீமீவமீ'-ல் (ஒரு வகுப்பாரின் சுயநலத்தின் மீது)கூப்பாடு போடுகிறார்'என்ற அபிப்ராயத்துக்கு இடம் கொடுப்பது தவிரப் பலன் இருக்குமா என்று தோன்றாமலில்லை. ஆனாலும் 'ஸௌந்தர்ய லஹரி'யைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்து விட்டு, இந்த மாதிரி சாஸ்திர ரஹஸ்யங்களும் அடங்கியுள்ள ஒரு புஸ்தகத்தைப் 'பாபுலரைஸ்'பண்ணுவதில் கவனிக்கவேண்டிய 'ப்ரிகாஷன்'களை (முன்னெச்சரிக்கைகளை)ச் சொல்லாமலிருந்தால் - மனஸில் தோன்றியுங்கூடச் சொல்லாமலிருந்தால் - அபசாரம் என்பதாலேயே சொன்னேன்.

ரஹஸ்ய விஷயங்களும் அடங்கிய 'ஸௌந்தர்ய லஹரி'மாதிரியான ஸ்தோத்ரங்களை ஸ்ரீவித்யோபாஸகர்கள் மாத்திரந்தான் என்றில்லாமல், எல்லோருமே ஒரு பக்தி ஸ்துதி என்ற அளவில் எடுத்துக்கொண்டு, 'இதன் வழியாகக் கொஞ்ச நாழி அம்பாளிடம் மனஸை வைப்போம்'என்று பாராயணம் பண்ணுவதில் தப்பில்லை;தாராளமாகப் பண்ணலாம். அவர்களையும் உத்தேசித்துத்தான் சாஸ்திரத்தை ஸ்தோத்திரமாக்கியிருப்பதே. நமக்கு என்ன சாஸ்திரங்கள் இருக்கின்றன என்று எல்லாருக்கும் தெரிவிக்கவே இப்படிப்பட்ட சாஸ்திர கர்பமான ஸ்தோத்திரஙள் இருப்பது. ஆனால் என்ன சாஸ்திரம் இருக்கிறது என்று எல்லாருக்கும் தெரிந்தால் போதும்;சாஸ்திரத்தில் என்ன இருக்கிறது என்ற ரஹஸ்யங்கள், அதிலே பீமீமீஜீ-ஆகப் போய் அநுஷ்டானம் பண்ண நினைக்காத எல்லாருக்கும் தெரிய வேண்டியதில்லை. இப்படிப்பட்ட ச்லோகங்களும், அர்த்தம் தெரியாவிட்டாலும் அவற்றுடைய சப்தங்களில் இருக்கப்பட்ட மந்த்ர சக்தியாலேயே ஸகல ஜனங்களுக்கும் நல்லது பண்ணும். பொதுவாக மனஸில் ஒரு பக்தி பாவத்தோடு பாராயணம் பண்ணும்போது எந்த ஒரு ஸ்தோத்ரமும் நல்லது பண்ணத் தான் செய்யும். ஸ்தோத்ரம் என்பது வெறும் சப்தங்களும் வார்த்தைகளும் மட்டுமில்லை. 'எல்லாரும் இதனாலே ப்ரயோஜனம் அடையவேண்டும்' என்ற உத்தம எண்ணத்தாலேயே அதைச் செய்து கொடுத்திருக்கும் ஸ்தோத்ர கர்த்தாவின் உயிரும் அதில் இருக்கிறது. அதனால் அதைப் படிக்கிறவர்களுக்கு உயிருள்ள அந்த ஸ்தோத்ரம் நல்லது பண்ணவே செய்யும். அதோடு ஸ்தோத்ர லக்ஷ்யமான

பரசிவத்தோடு ஐக்யமாகி ஜீவ ப்ரஹ்ம ஐக்யம் ஏற்படும் - என்பதுதான் ஸாரமான விஷயம். இதைத் தெரிந்து கொண்டால் போதும்;இவ்வளவு தெரிந்து கொண்டால் போதும்.

நம் தேசத்தில் எப்பேர்ப்பட்ட சாஸ்திரங்கள், உபாஸனா மார்க்கங்கள் இருக்கின்றன என்று ஒரு அரிச்சுவடியாவது தெரிந்தால்தானே இதிலே பிறந்திருக்கிற நமக்குக் குறைவு இல்லாமல் இருக்கும்?அதற்காகத்தான் குண்டலிநீ யோகம் என்று இப்படியொரு சாஸ்திரம் இருக்கிறது என்று நான் இப்போது சொன்னேனே, அந்த அளவுக்குத் தெரிந்து கொள்ளவேண்டும். அதற்கு மேல் வேண்டாம். அது அவசியமில்லை.

ஏனென்றால் நம்மிலே ஆயிரத்தில் ஒருவர் - இல்லை, லக்ஷம் பத்து லக்ஷத்தில் ஒருவர்கூட முறைப்படி அந்த ஸாதனை பண்ணுவதற்கு முடியாது அப்படியே பண்ணினாலும் முறைப்படி முன்னேறி ஸித்தி அடைகிறது ஸாதகர்களிலும் அபூர்வமாக இரண்டொருத்தரால்தான் முடியும் - "யததாமபி கச்சிந்"என்று பகவான் சொன்னாற் போல. அதனால்தான் 'அதற்கான யோக ஸாதனை பண்ணினால்' என்று அழுத்திச் சொன்னது. 'பண்ணினால்'என்பது ஸரி. ஆனால் பண்ணுவதுதான் முடியாத கார்யம்!இந்த ஜீவாத்மாவின் சின்ன சக்தி பரமாத்மாவின் மஹாசக்தியிலே கலப்பது - அல்லது அந்த மஹாசக்தியாகத் தானே விகஸிப்பது [மலர்வது]- லேசில் நடக்கிற விஷயமில்லை.

சாந்தத்திலே ஒன்றாகக் கலந்து ப்ரஹ்மமாவதை விடவும் சக்தியிலே கலப்பதைக் கஷ்டமானதாகவே அந்தப் பராசக்தி வைத்துக்கொண்டிருக்கிறாள்!

பக்தி பண்ணுகிறவனையும், ஞான வழியில் போகிற, வனையுங்கூடத் தன் பக்கத்திலேயே வைத்துக்கொண்டு தன்னுடைய சக்திக் கூத்தைப் பார்க்கும்படியும், அதை அவர்கள் வழியாகவும் கொஞ்சம் செலுத்தி அவர்களால் லோகத்துக்கு அநுக்ரஹம் கிடைக்கும்படியும் அவள் பண்ணுவதுண்டுதான். ஆனாலும் இவர்கள் [பக்தரும், (ஞானியும்)தாங்களாகச் சக்திக்கு ஆசைப்படவில்லை. பக்தன்

ப்ரேமைக்கு, ப்ரேமானந்தத்திற்குத்தான் ஆசைப்படுகிறான். அப்படிப்பட்டவர்களிடம், அவளே, 'பார்த்தாயா என் சக்தி ப்ரபாவம்!என்று 'போனஸ்' மாதிரி அதைக் காட்டிக் கொஞ்சம் கொஞ்சம் அவர்களுக்கும் அதை, லோக கல்யாணத்தை உத்தேசித்து, தருகிறாள். ஆனால் .யோகி என்கிறவன் சக்தியில் ஸித்தியாவதற்கே குண்டலிநீ யோகம் என்று பண்ணும்போது, (சிரித்து)அவள் இல்லாத கிராக்கியெல்லாம் பண்ணிக்கொண்டு அப்புறந்தான் கொஞ்சங் கொஞ்சமாக ஏதோ இண்டு இடுக்கு வழியாகத் தன் சக்தியை அவிழ்த்து விடுகிறாள்.

இன்றைக்கு குண்டலிநீ தீக்ஷைபல பேர் கொடுத்து, பெற்றுக் கொண்டவர்களிடம் தூங்குகிற குண்டலிநீ முழித்துக் கொண்டுவிட்டதாகச் சொல்வதெல்லாம் இந்த இண்டு இடுக்குக் கீற்று வெளிப்படுவதுதானே யொழிய பூர்ணமான சக்தி ஜ்யோதிஸ் ஸூர்யோதயத்தைப் போல வெளிப்படுவது இல்லை. அரைத் தூக்கம், கால் தூக்கம் என்று சொல்கிறோமே, அப்படி ஸாதாரணமாக நமக்குள் எல்லாம் முக்காலே மூணு வீசம் தூக்கத்துக்கும் மேலே ப்ராண சக்தி ரூபத்தில் பராசக்தி தூங்கிக்கொண்டிருக்கிறாளென்றால், குண்டலிநீ தீக்ஷையாகி, அது 'ரைஸ்'ஆகிவிட்டது என்று சொல்பவர்களில் பெரும்பாலானவர்களிடம் முக்கால் தூக்கம் என்கிற அளவுக்கு நம்மைவிடக் கொஞ்சம் முழித்துக் கொண்டிருப்பாள்!அவ்வளவுதான். அதிலேயே (இந்தக் குறைந்த அளவு மலர்ச்சியிலேயே)உச்சந்தலை வரை ஒரு வைப்ரேஷன், ப்ரூமத்தியில் (புருவ மத்தியில்)ஒரு கான்ஸன்ட்ரேஷன் அப்போதப்போது உண்டாவதை வைத்துக்கொண்டு, குண்டலிநீ பூர்ணமாக முழித்துக்கொண்டு லக்ஷ்யமான உச்சிக் சக்ரத்திற்குப் போய்விட்ட மாதிரி நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். வாஸ்தவத்தில் ஏதோ கொஞ்சம் சக்தி, கொஞ்சம் ஏறுவது, மறுபடி விழுவது என்றுதான் நடக்கிறது. ஏறும்போதும் அங்கங்கே உண்டாகிற அத்புத சக்திகளில் (ஸித்திகளில், சித்து என்று சொல்வது இந்த சக்திகளைத்தான். அப்படிப்பட்ட சக்திகளில்) சித்தத்தை அலைபாய விடாமல், லக்ஷ்யத்திலேயே ஈடுபடுத்துவது ஸாமான்யமான ஸாதனை இல்லை. அவளேதான் இப்படிப்பட்ட சின்ன ஸித்திகளைக் கொடுத்து பெரிய, முடிவான ஸித்தியிலிருந்து டிஸ்ட்ராக்ட் பண்ணி மயக்குவது. இதெல்லாம் போதாதென்று குண்டலிநீ ஸஞ்சாரம் அதற்கான

வழியில் போகாமல் இசகு பிசகாகப் போனால் பலவிதமான வியாதிகள், புத்திக் கலக்கம் ஏற்படுவது வேறே.

லோகத்தில் பலவிதமான மாயைகள், மாயையிலிருந்து மீளுவதற்குப் பலவிதமான ஸாதனைகள் என்று அவள் பரப்பி வைத்திருப்பதில் நேரே அவளுடைய சக்தியைப் பிடிப்பது என்பதற்காக் குண்டலிநீ யோகம் என்று ஒரு ஸாதனையை வைத்திருக்கும்போது அதிலேயே நிறைய மாயையையும் பிசைந்து வைத்திருக்கிறாள். ஏன் அப்படி என்றால் என்ன சொல்வது?ஒரு பயிர் ஸுலபத்தில் பயிர் பண்ணி மகசூல் காணும்படி இருக்கிறது. இன்னொரு பயிருக்கு ஏற்ற நிலம், சீதோஷ்ணம், எரு ஆகிய எல்லாமே கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஏனென்று கேட்டால் என்ன பதில் சொல்வது?பல தினுஸாக அவள் லீலா நாடகம் ஆடுவதில் இதெல்லாம் அங்கம். அப்படி குண்டலிநீ யோக ஸாதனை என்பதை ரொம்பவும் சிரம ஸாத்யமாகவே வைத்திருக்கிறாள்.

'பக்தி, ஞான மார்க்கங்களில் போகிறவர்கள் மட்டும் ஸுலபமாக ஸித்தி அடைந்து பிரத்யக்ஷதரிசனமோ, ஆத்ம ஸாக்ஷாத்காரமோ பெற்றுவிடுகிறார்களோ என்ன?'என்று கேட்கலாம். நியாயமான கேள்வி. ஆனாலும் எந்த அளவுக்கு அவர்கள் ஸாதனை பண்ணியிருந்தாலும், பண்ணுகிறமட்டும் அது (குண்டலிநீ யோகம் போல)இத்தனை ச்ரமமாகவோ, சிக்கலாகவோ இருப்பதில்லை.

அதோடுகூட ஸாதனையில் தப்பு ஏற்படுவதால் இத்தனை விபரீதமாகவும் அவற்றில் நடந்துவிடுவதில்லை. காம யோகத்தைப் பற்றி - அதாவது பலனில் பற்று வைக்காமல் ஸ்வதர்மமான கடமைகளை ஈச்வரார்ப்பணமாகப் பண்ணுவதைப் பற்றி - பகவான் சொல்லியிருப்பதெல்லாம் பக்தி, ஞான யோகங்களுக்கும் பெரும்பாலும் பொருந்துவதுதான். 'யோகம்'என்றாலே நினைக்கப்படும் குண்டலிநீ முதலான மார்க்கங்களுக்குத்தான் அது அவ்வளவாகப் பொருந்தாமலிருக்கிறது. என்ன சொல்கிறாரென்றால்,

நேஹாபிக்ரம நாசோஸ்தி ப்ரத்ய்வாயோ ந வித்யதே *

ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் **

என்கிறார். என்ன அர்த்தமென்றால் 'இந்த வழியில் நாம் பண்ணும் முயற்சி பலன் தராமல் வீணாகப் போவது என்பது இல்லை. ஏறுமாறாக, விபரீதமாகப் பலன் ஏற்படுவது என்பதும் இல்லை. ஏதோ ஸ்வல்பம்தான் ஸாதனை பண்ணினாலுங்கூட ஸரி, 'நமக்கு ஸம்ஸாரத்திலிருந்து விடிவே இல்லையோ?'என்கிற பெரிய பயத்திலிருந்து அது நம்மை ரக்ஷித்து விடும்'என்கிறார். ஆனால் குண்டலிநீ மாதிரி ரொம்பவும் சிரமமாக, சிக்கலாக உள்ள ஒரு ஸாதனையில் போக ஆரம்பிக்கிறவர்களில் பலபேர் ஒவ்வொரு ஸ்டேஜுக்கு அப்புறம், 'நம்மால் இதில் ஜயிக்க முடியாது'என்று விட்டு விடுவதைப் பார்க்கிறோம். என் கிட்டேயே வந்து எத்தனையோ பேர் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள். அதாவது 'அபிக்ரம நாசம்'- 'முயற்சி வீணாவது'- என்று பகவான் சொன்னது நடந்துவிடுகிறது. 'ப்ரத்யவாயம்'- 'விபரீத பலன்'- உண்டாவது என்கிறாரே, அதற்கும் இந்த வழி நிறையவே இடம் கொடுக்கிறது.நடுவாந்தரத்தில் "விட்டுவிடுகிறேன்"என்று இவர்கள் வருவதற்கே முக்யமாக அதுதான் காரணமாயிருக்கிறது. கடைசி வரையில் பயமும் போக இடமில்லை. 'ஸரியாகப் பண்ணி பலன் பெறுவோமா, அல்லது இசகு பிசகாக ஆகிவிடுமா?'என்ற பயம். அது மட்டுமில்லாமல் நடுவாந்தரப் பலன்களாகச் சில அத்புத சக்திகள் கிடைப்பதே பெரிய பலனைக் கோட்டைவிடும்படி திசை திருப்பிவிடுமோ என்ற பயம்!ஸ்வல்பம் அநுஷ்டித்தாலும் பயத்தைப் போக்கும் என்று பகவான் சொன்னது இந்த வழிக்கு ஏற்கவில்லை.

அதோடு பகவான் சொல்லாத இன்னொன்றும் இதில் சேருகிறது. என்னவென்றால், ஸாதனை பலிக்குமா என்று கடைசி மட்டும் பயம் ஒரு பக்கம் இருக்கிறதென்றால் இன்னொரு பக்கம் ஏதோ ஸ்வல்ப பலன் கிடைத்ததிலேயே தாங்கள் முடிவான ஸித்தி அடைந்து விட்டதாக ஏமாந்து போவதும் இதில் இருக்கிறது. பக்தி பண்ணுகிறவர்களும், ஞான விசாரம் பண்ணுகிறவர்களும் தங்களுக்கு நிஜமாகவே தெய்வ ஸாக்ஷாத்காரமோ, ஆத்ம ஸாக்ஷாத்காரமோ ஏற்படுகிற வகையில் அவை ஏற்பட்டு விட்டதாக நினைப்பதற்கில்லை. ஆனால் குண்டலிநீ பண்ணுபவர்கள் ஏதோ கொஞ்சம் சக்ரங்களில் சலனம் ஏற்பட்டு விட்டால்கூட

ஸித்தியாகி விட்டதாக நினைத்து விடுகிறார்கள் - தூரக்க (தூரத்தில்) அவுட்லைனாக கோபுரம் தெரிவதைப் பார்த்தே கர்பக்ருஹத்தில் இருக்கிறோம் என்று நினைக்கிற மாதிரி!

நான் குண்டலிநீ யோகம் தப்பு வழி என்று சொல்லவேயில்லை. நிச்சயமாக அத்வைத ஸமாதிவரை கொண்டு சேர்க்கக் கூடிய உசந்த வழிதான். இல்லாவிட்டால் யோகீச்வரர்கள், ரிஷிகள் இப்படியொரு சாஸ்திரத்தைக் கொடுத்திருப்பார்களா?அதெல்லாவற்றையும்விட, நம்முடைய ஆசார்யாள் அந்த விவரங்கள் சொல்லியிருப்பாரா?வழி ஸரிதான். ஆனால் அந்த வழியிலே போகிற அளவுக்கு நாம் ஸரியாயில்லை என்பதாலேயே, தீரர்களாக இருக்கப்பட்ட யாரோ சில பேரைத் தவிர, நமக்கு அது வேண்டாம் என்கிறேன். ஸித்தி பெற்ற குருவின் இடைவிடாத கண்காணிப்பிலேயே விடமுயற்சியுடன் பரிச்ரமப்பட்டு அப்யஸிக்க வேண்டிய ஒரு வழியைப் பற்றிச் சும்மாவுக்காக எதற்காகப் பேசவேண்டும் என்பதால் சொல்கிறேன்.

நாம் எதற்காகக் கூடியிருக்கிறோம்?நம்மால் முடிந்த முயற்சிகளைப் பண்ணி ஸத்ய தத்வத்தைத் தெரிந்து கொள்ள என்ன வழி என்று ஆலோசனை பண்ணத்தான். அப்படியிருக்கும் போது நம்மால் முடியாத முயற்சிகளைப் பற்றிப் பேசி எதற்காகப் பொழுதை வீணாக்க வேண்டும்?முடியாத முயற்சி என்பதோடு அவசியமும் இல்லாத ஸமாசாரம். பக்தியாலோ, ஞானத்தாலோ அடைய முடியாத நிறைவு எதையும் குண்டலிநீயால் அடைந்தவிட முடியாது. ஆகையால் முடியாத, அவசியமில்லாத அந்த வழியைப் பற்றி விசாரம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டாம். காஞ்சீபுரத்திற்கு வழி கேட்டால், நாம் ஸுலபமாகப் போய்ச் சேரும்படி, 'இப்படியிப்படி ப்ராட்வேயிலிருந்து பஸ் இருக்கு. பீச்சிலிருந்து ரயில் இருக்கு'என்று சொன்னால் அர்த்தமுண்டு. 'திருவொற்றியூரிலிந்து காஞ்சீபுரம் வரை பல்லவராஜா காலத்தில் போட்ட அன்டர்-க்ரவுன்ட் டன்னல் இருக்கு. அங்கங்கே தூர்ந்து போயிருக்கும். அந்த வழியாகப் போகலாம்'என்றால் அர்த்தமுண்டா?வாஸ்தவமாகவே அப்படியும் வழி இருக்கலாம் - வாஸ்தவத்தில் இல்லைதான்;ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன் - டன்னல் இருக்கலாம். அதிலே துணிச்சலோடு போகிற

ஸாஹஸக்காரர்களும் இருக்கலாம். ஆனால் அதைப் பற்றி வழி கேட்கிற ஸாதாரண ஜனங்களுக்குச் சொல்லி என்ன ப்ரயோஜனம்?

ஸர் ஜான் உட்ராஃப் (குண்டலிநீ யோகம் குறித்து)'ஸர்பென்ட் பவர்'முதலான புஸ்தகங்கள் போட்டாலும் போட்டார், வகை தொகையில்லாமல் அதில் ஸித்தியான யோகிகள் என்று பல பேர் தோன்றி 'க்ளாஸ்'நடத்துவதும், இன்னும் பல பேர் ஒரு அப்யாஸமும் பண்ணாமலே, பண்ணும் உத்தேசமும் இல்லாமலே, 'மூலாதாரா, ஸஹஸ்ராரா'என்றெல்லாம் எழுதி, பொது ஜனங்களிலும் பல பேர் தாங்களும் விஷயம் தெரிந்தவர்கள் என்று காட்டிக் கொள்வதற்காக இந்த வார்த்தைகளைச் சொல்வதாகவும் ஆகியிருக்கிறது. எல்லாரும் பேசுகிறதாக ஆகியிருதாலும், பண்ணமுடியுமா-ஸரியாக, அதற்கான கட்டுப்பாடுகளோடு, விடாமுயற்சியோடு ஒரு பெரிய பவர் ரிலீஸாகிறதைப் பக்குவமாகத் தாங்கிக் கொள்கிற தைர்யத்தோடு பண்ண முடியுமா - கடைசிப் படிவரை டிஸ்ட்ராக்ஷன் இல்லாமல் பண்ணிக் கொண்டு போய் ஜயிக்க முடியுமா என்கிறது பெரிய கேள்வியாக இருக்கிறது. சும்மாவுக்காக அதைப் பற்றி பேசுவது புரளிதான். அதைவிட விபரீதம், சும்மாவுக்காகப் பேசுவதாக இல்லாமல் தப்பும் தாறுமாகப் பண்ணிப் பார்த்துப் பல தினுஸான கஷ்டங்களுக்கு, ப்ரமைகளுக்கு ஆளாகிறது. அதனால்தான் இந்த ஸப்ஜெக்டில் இறங்க நான் ப்ரியப்படுவதில்லை. ஆனாலும் "ஸௌந்தர்ய லஹரிக்கு அர்த்தம் சொல்றேண்டா!"என்று ஆரம்பித்து விட்டு, இதை அப்படியே மூடி மறைப்பதென்று பண்ணப் பார்த்தால் நீங்கள் வேறே வழியில் தூக்கிப் பார்க்கத்தான் செய்வீர்களென்பதால் என் அபிப்ராயத்தை இளக்கிக் கொண்டு ப்ரஸ்தாபம் பண்ணுகிறேன்;'வார்னிங்'கோடு சேர்த்தே ப்ரஸ்தாபிக்கிறேன்....

உட்ராஃபை நான் குற்றம் சொல்லவேயில்லை. 'தாங்க்'தான் பண்ணுகிறேன். 'யோக சக்தி, யோக ஸித்தி என்பதெல்லாமே பொய். எங்கள் ஸயன்ஸூக்குப் பிடிபடாததாக அப்படியெல்லாம் எதுவுமே கிடையாது'என்று மேல் நாட்டார்களும், அவர்கள் சொல்வதையே வேத வாக்காக எடுத்துக்கொண்ட நம்மவர்களும் சொல்லி வந்தபோது உட்ராஃப்தான் அது ஸத்யமானது, ஸயன்ஸூக்கு மேலான

ஸூபர்ஸயன்ஸாக இப்படியிப்படி ஆகப்பட்ட ஒழுங்கில் அதன் கார்யக்ரமம் இருக்கிறது என்று விளக்கமாக எழுதி எல்லார் கண்ணையும் திறந்து வைத்தார். அவர் அப்படிப் பிரசாரம் பண்ணியில்லா விட்டால், நிஜமாகவே அந்த மார்க்கத்துக்கு அதிகாரிகளாக இருக்கப்பட்டவர்கள்கூட அதைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியாமல் போயிருக்கும். அந்த அளவுக்கு அந்தக் காலத்தில் இந்த மார்க்கம் மங்கிப் போயிருந்தது.

அவர் எழுதினதில் நம்பிக்கை உண்டாக்கித்தான் பல பேர் அப்போது நிஜமாகவே யோக ஸித்தி பெற்றிருந்த யோகிகளிடம் போய் அந்த வழியைக் கற்றுக்கொண்டு, அதற்கப்புறம் மங்கிப் போன வழிக்குப் பிரகாசமான காலம் பிறந்தது. இன்றைக்கு வரை நல்ல யோக ஸித்தர்களும் உண்டாகாமலில்லை. அவர்களிடம் முறைப்படி கற்றுக் கொண்டு, முன்னேறும் ஸாதகர்களும் இல்லாமலில்லை. ஆனாலும் போலிகளும் சேர்வது, பிரகாசம் என்றேனே, அது கண்ணைக் குத்தும் அளவுக்கு வெறும் பேச்சில் மட்டும் பளபளப்பது என்றெல்லாமும் நிறைய ஆகியிருக்கிறது. இதைப் பார்க்கும்போதுதான் ஆத்மாவுக்கு நல்லதைத் தேடிக்கொண்டு போக்க வேண்டிய பொழுதை நாம் அப்யாஸம் பண்ணுவதாக இல்லாத ஒரு வழியைப் பற்றிய பேசி விருதாவாக்குவானேன் என்று தோன்றி (இதுவரை தெரிவித்த அபிப்ராயத்தை)ச் சொன்னேன்.

இவ்வளவு சொன்னதாலேயே, அதில் சிலருக்கு இன்ட்ரெஸ்ட் உண்டாக்கியிருப்பேனோ என்னவோ? அதனால் ஒரு தடவைக்குப் பல தடவையாகப் எச்சரிக்கிறேன்:'நிச்சயமாக ஸித்தியானவர் எந்தவிதமான ஸொந்த ஆதாயத்தையும் கருதாதவர், சிஷ்யர்களைக் கைவிடாமல் கண்காணித்து மேலே மேலே அழைத்துப் போகக் கூடியவர் என்று உறுதியாக நம்பக்கூடிய ஸத்குரு கிடைத்தாலொழிய யாரும் ஸ்வயமாகவோ, அல்லது இப்போது எங்கே பார்த்தாலும் புறப்பட்டிருக்கிற அநேகம் யோகிகள் என்கிறவர்களிடம் போயோ இந்த யோகத்தை அப்யாஸம் பண்ணப்படாது. இது அதிஜாக்ரதை தேவைப்படுகிற ஸமாசாரம்' என்று எச்சரிக்கை பண்ணுகிறேன்.

இந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் மந்த்ர யோகத்திலும்

ஜாக்ரதையாகவே இருக்கவேண்டும். குண்டலிநீ யோக ரிஸல்ட்களையே மந்த்ர யோகமும் சப்தங்களினால் உண்டாகிற நாடி சலனங்களின் மூலம் உண்டு பண்ணுவதுண்டு. குருமுக உபதேசம் இங்கேயும் அத்யாவசியமானது. இந்தக் காரணங்களால் மந்த்ர சாஸ்திர ஸமாசாரங்களையும் உபாஸகர்கள், அல்லது ச்ரத்தையாக உபாஸிக்க வேண்டுமென்று இருப்பவர்கள் தவிரப் பொத்தம் பொதுவில் விஸ்தாரம் செய்வது உசிதமில்லை.

க்ரமமாக உபதேசமில்லாமல் மந்திரங்களைத் தெரிந்து கொள்வதால் ஒரு ப்ரயோஜனமுமில்லை. வீட்டுக்குள்ளே உசந்த ஒயர், ஸ்விட்ச், 'இம்போர்ட் பண்ணின பல்பு எல்லாம் போட்டாலும் பவர்ஹவுஸிலிருந்து கனெக்ஷன் இல்லாமல் விளக்கு எரியுமா? அப்படித்தான் குருவின் பவர் - உயிர் பவர் - இல்லாமல் மந்த்ர சப்தங்களை ஸ்வயமாக எடுத்துக் கொள்வதும்.

ஒரு ப்ரயோஜனமும் இல்லாவிட்டால்கூடப் பரவாயில்லை. சப்த வீர்யம் முறையாக க்ரஹிக்கப்படாவிட்டால் விபரீத பலனும் உண்டாகலாம். அதனால் உதாரணத்தை மாற்றிச் சொல்கிறேன்: மந்த்ர சப்தங்களே எலெக்ட்ரிஸிடி மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்கள். அதை நாமே போய்த் தொட்டு வெளிச்சத்தைக் கொண்டுவர முடியுமா? 'ஷாக்'தான் அடித்துக் கஷ்டப்படுவோம். குரு என்ற ஒயர் வழியாக உபதேசம் என்ற பல்பில் வந்தால்தான் மின்சார வீர்யம் கட்டுப்பாட்டில் வந்து வெளிச்சம் கிடைக்கும். எலெக்ட்ரிஸிடி எங்கேயிருக்கிறதென்றே தெரியாமல் ஒயருக்குள் வருகிறது போல ரஹஸ்யமாகவே மந்த்ரமும் வரவேண்டும்.

---



## பொதுச்சபையில் விளக்கும் முறை

இந்த விஷயங்களை பொது ஸபையில் உபந்நியாஸங்கள் பண்ணும்போது விஸ்தாரம் செய்யாமல், கோடி காட்டி விடுவதே முறை.

புஸ்தகமாகப் போடும் போதும் ரஹஸ்யமான விஷயங்களைச் சேர்க்காமல் பாபுலர் எடிஷனாக ஒன்றும்;அந்த விஷயங்களையும் விளக்கி லிமிடெட் ஸர்க்குலேஷனாக உபாஸகர்கள், உபாஸனை மேற்கொண்டிருப்பவர்கள் ஆகியவர்களுக்கு மட்டுமே இன்னொரு எடிஷனுமாகப் போடலாம். இந்த [பின்னால் கூறிய]புஸ்தகக் காப்பி, தக்க பெரியவர்களிடமிருந்து 'ஆதரைஸேஷன்'பெற்று வந்தவர்களுக்கே தருவது என்று வைத்துக் கொள்ளலாம்.

டெமாக்ரஸி!ஸகல ஸமாசாரமும் நாற்சந்திக்கு வந்தாக வேண்டுமென்ற அபிப்ராயம் பரவிக்கொண்டு வரும்போது நான் நினைப்பது வேர் பிடிக்குமா என்று தோன்றாமலில்லை. ஆனாலும் குரு பட்டம் கட்டி வைத்திருப்பதால் என் 'ட்யூடி', சொல்ல வேண்டியதைச் சொன்னேன். விதையைத் தூவ முடிவதால் தூவியிருக்கிறேன். அது வேர் பிடிக்கப் பண்ணுவது என் கையில் இல்லை.

உபாஸகர்களாக ஆகணுமென்று ஸின்ஸியராக நினைக்கிறவர்களுக்குத்தான் சாஸ்த்ர ரஹஸ்யங்களைச் சொல்ல வேண்டுமென்பது போலவே, கவி மரபில் வரும் சில ரூப வர்ணனைகள், நாயக நாயகி சிருங்காரத்தில் சில ஸமாசாரங்கள் ஆகியவற்றை 'இலக்கியக் கண்ணோட்ட ம்'என்றும் 'ஸஹ்ருதயத்வம்'என்றும் சொல்லும் ரஸிக த்ருஷ்டி படைத்தவர்களுக்கு மட்டுந்தான் சொல்லவேண்டும். பொத்தம் பொதுவான கூட்டத்தில் சொல்லப்படாது.

ஆனாலும் 'ஸௌந்தர்ய லஹரி'போன்ற ஒரு ஸ்தோத்ரத்தில் சாஸ்த்ரார்த்தங்களை அடியோடு, அறவே, விட்டுவிட்டு அர்த்தம் சொல்வது;ஸதி பதி உறவுகளில் கவி மரபை அறவே விட்டு [சிரித்து]ரொம்ப 'மடி'பண்ணித் தான் சொல்வது என்று வைத்துக்கொண்டால் ஆழமான தத்வார்த்தங்கள் அநேகம் விட்டே போய்விடும்;அநேக அழகான கவிதா கல்பனைகளும் விட்டுப்போய்விடும்.

அதனால் ஜாக்ரதையாக, ரொம்பவும் ஜாக்ரதையாக ஒரு அளவுக்கு, ஒரு அளவுக்குத்தான் இம்மாதிரி விஷயங்களையும் தெரிவிக்க வேண்டியதாகிறது. 'மேல் நோக்காகப் பார்க்கும்போது இதில் ரொம்பவும் ச்ருங்காரமாக, அல்லது பீபத்ஸமாக [அருவருப்பாக], விகல்பமாகத் தெரிவது ஆழ்ந்து பார்த்தால் அப்படியில்லை'என்று எங்கே பளிச்சென்று புரியவைக்க முடியுமோ- ரொம்பவும் ஸமய சாஸ்திரச் சிக்கலிலோ, அலங்கார சாஸ்திரச் சிக்கலிலோ போகாமலே புரியவைக்க முடியுமோ - அப்படிப்பட்ட இடங்களில் தத்வார்த்தம், காவிய மரபு இவற்றை எடுத்துச் சொல்லி விளக்கலாம். குண்டலிநீ யோக ஸமாசாரங்களைச் சொல்லும் ச்லோகங்களிலும் அந்த ரஹஸ்யங்களைச் சொல்லாமல் பக்தி உணர்ச்சி உண்டாகக்கூடியதாக, அழகான வர்ணனையாக உள்ள விஷயங்களை மட்டும் எடுத்துக் காட்டலாம்.

ஸௌந்தர்யலஹரிக்கு அர்த்தம் சொல்லும்போது அதன் தேவதையான அம்பாள் பஞ்ச ப்ரஹ்மாஸனத்தில் வீற்றிருக்கிறாள் என்பது போன்ற அடிப்படை விஷயங்களைக்கூடச் சொல்லாமலிருக்க முடியுமா?கேட்பவர்கள் 'ஐந்து பேரை ஆஸனமாகப் போட்டுக் கொண்டு உட்காரவாவது?அதோடு பஞ்ச ப்ரேதம் என்று வேறு அவர்களைச் சொல்லியிருக்கிறதே!'என்று நினைப்பார்கள் என்பதற்காக விஷயத்தை விட்டேவிடலாமா?அந்த இடத்தில், 'இதில் அநுசிதமில்லை, பீபத்ஸமில்லை;இதற்கு இப்படியிப்படி தத்வார்த்தம்'என்று எடுத்துச் சொல்லவேண்டும்.

அம்பாள் பாத மஹிமையை [ஆசார்யாள்]அழகாகச் சொல்கிறார். அங்கே, 'அந்தப் பாத தீர்த்தம் எப்படிப் பட்டது தெரியுமா?ஸாக்ஷாத் ஈச்வரனுடைய சிரஸிலுள்ள கங்கையாக்கும் அப்படி இருக்கிறது!'என்கிறார். அவள் பாதத்தை நம் சிரஸில் தியானித்து, அப்போது அதிலிருந்து கங்கை நமக்குள்ளே பெருகி நம்முடைய மாசு மலங்களையெல்லாம் அடித்துக்கொண்டு போவதாக பாவித்து நாம் சுத்தி பெறுவதற்கு வழியாக இப்படி அழகாகச் சொல்லியிருக்கிறார். இதிலேயே நாயக-நாயகி ஊடல்

விஷயமான கவி மரபும் வரத்தான் செய்கிறது. நாயகரான ஸ்வாமி நாயகியான அம்பாளின் ஊடலை ஸமாதானப்படுத்துவதற்காக அவள் காலில் விழுவதால்தான் அவர் சிரஸிலுள்ள கங்கை அவளுடைய பாத தீர்த்தமாகிறது என்று சொல்லாமல் சொல்லியிருக்கிறார்!இதைச் சொல்லாமல் கங்காம்ருதமாக அவளுடைய சரணாம்ருதம் நமக்குள்ளே குளு குளு என்று பய்ந்து நம் சித்த அழுக்குகளை நீக்கும் என்பதை மட்டும் எப்படிச் சொல்லமுடியும்?அதனால் இதையும் சொல்லத்தான் வேண்டிவரும். ஆனால் அப்படிச் சொல்லும் போது அபக்குவிகள் அனர்த்தங்கள் பண்ணிக் கொள்ளவிடாமல் நல்ல தினுஸில் விளக்கம் தர வேண்டும். ''நம் மாதிரியானவர்கள்கூட 'இவரா இப்படிப் பண்ணுவது?என்று சொல்லும் லெவலுக்கு ஆனானப்பட்ட ஈச்வரனே போய்விடுகிறார் என்பதிலிருந்து ஆசை வேகம் எத்தனை பொல்லாதது, அதனிடம் நாம் எத்தனை ஜாக்ரதையாயிருக்க வேண்டும் என்று பாடம் பெறவேண்டுமென்பதுதான் தார்பர்யம்'என்ற மாதிரி விளக்கத்தை வளைத்துக் கொண்டு போகவேண்டும்!

மூன்று பேருக்கு ஜாஸ்தி யீக்ஷீமீமீ நீவீநீமீஸீநீமீ கொடுத்திருக்கிறது. யார் யார் என்றால் பக்தர், கவி, விதூஷகன் என்பவர்கள். ஒரு விதூஷகன் ராஜா-ராணியையே அவர்களுக்கு முன்னாடியே நட்ட நடு ஸதஸில் என்ன வேண்டுமானாலும் பரிஹாஸம் பண்ணலாம். பக்தரும் கவியும் ஸ்வாமியிடமே ஸர்வ ஸ்வாதீனம் எடுத்துக் கொள்வார்கள். பக்த கவியாக இருப்பவர்கள் - ஆசார்யாள் இங்கே அப்படித்தான் இருக்கிறார் - பக்தி பாவத்துக்கும், காவ்ய த்ருஷ்டிக்கும் தொன்றுதொட்டு ஒரு நாகரிக ஸமுதாயத்திலேயே கொடுத்துள்ள ஸ்வாதந்திரியத்தினால் நாம் சொல்லக்கூடாத சிலவற்றை, சொல்லத் தயங்கும் சிலவற்றைக்கூடச் சொல்வார்கள். பணிவோடு மனஸு திறந்த ராஸிக்யத்தோடு பார்த்தால் நாமுங்கூட ஸரியாக எடுத்துக்கொண்டு ஸந்தோஷப்படும் விதத்தில் சொல்வார்கள். நிந்தா ஸ்துதி செய்வது பரிஹாஸம் செய்வது, (தெய்வ)தம்பதியில் ஒருத்தரைத் தூக்கி வைத்து மற்றவரை இறக்குவது, இரண்டு பேருக்கும் நடுவே கோழி மூட்டுவது என்றெல்லாம் அவர்கள் பண்ணுவதை நாம் தப்பாக நினைக்கக்கூடாது. நம்மால் அதை ரஸிக்க முடியாவிட்டாலுங்கூட அவர்களுக்கு அது தப்பில்லை

என்றாவது ஒப்புக்கொள்ள வேண்டும்.

இத்தனை ஏன் சொல்கிறேனென்றால் 'ஸௌந்தர்ய லஹரி'ஆரம்பிக்கிறபோதே ச்லோககர்த்தாவோடு ஸஹ்ருதய பாவம் இல்லாதவர்களுக்கு 'என்னவோ போல'இருக்கலாம்.

('ஸஹ்ருதயத்வம்'என்பதை மக்களுக்குப் புரிய வைக்க வேறு பதமுண்டா என்று சிலரை வினவுகிறார்கள். 'ஸிணீஜீஜீஷீக்ஷீமீ' என்று ஒருவர் சொல்ல, 'அது நல்ல வார்த்தை தான். என்றாலும் எல்லோருக்கும் அர்த்தமாகாது'என்கிறார்கள். 'மன இணக்கம்'என்று ஒருவர் சொல்ல மகிழ்ச்சியடைந்து, 'மனோபாவ இணக்கம் என்று சொல்வது இன்னும் சிலாக்கியம்'என்கிறார்கள்.)

"Cõ¡ ðF, Ü‹ð£œ ðˆQ. ÜõÀ¬ìò ê‚Fò£™ î£¡ Üõ˜ Ü¬êAø£˜ â¡Á ºî™ „«ô£è‹ ªê£™Aø¶. ÞŠð®„ ªê£¡ù£™ ªð‡ì£†®î£¡ ¹û¬ù Ý†® ¬õ‚Aø£œ â¡ø£Aø¶. ú£þ£ˆ võ£I ªð‡ì£†® Ý†® ¬õ‚Aøð® Ý´Aø£˜. Üõœ ú‹ð‰îI™ô£M†ì£™ Üõó£™ å¡Á‹ ªêŒò º®ò£¶. Ü¬êò‚Ãì º®ò£¶. 'Îvªôv'â¡Aø ªôõ½‚° «ð£Œ M´Aø£˜ â¡ø£Aø¶.

இது ஸரியாயில்லையே!ஆரம்பிக்கும் போதே அம்பாள் மஹிமையைச் சொல்லணும் என்பதற்காக ஸ்வாமியை இப்படியா ஒரேயடியாக குறைக்க வேண்டும்?"என்று மனோபாவ இணக்கம் இல்லாதவர்கள் நினைக்கக்கூடும். அப்படி விகல்பமாக நினைக்கக்கூடாது என்பதற்குத்தான் தத்வார்த்தம்,கவி மரபு ஆகியவற்றைப் பற்றி இவ்வளவு சொன்னேன்.

இதில் தத்வார்த்தம், கார்யமில்லாத ப்ரஹ்மம் சித்சக்தி விலாஸத்தால்தான் கார்யத்தில் அசைகிறது என்பது. தன்னை நான் என்று அது தெரிந்து கொள்வதே கார்யந்தான் என்றும் சொன்னேன். கவிதை என்ற அடிப்படையிலும் நாயகிக்கு அடங்கியவனாகவே நாயகனைச் சொல்வது மரபானதால் அவள் அசைத்தாலே இவன் அசைகிறான் என்று சொல்வது அங்கீகரிக்கத்தக்கதாகிறது.

இப்படி இரண்டு அடிப்படையிலும் விளக்கம் தருவதோடு

நவீன ஸயன்ஸ் கொள்கைப்படியும் சிவ-சக்தி தத்வங்களைச் சொன்னால் மேலும் 'கன்வின்ஸிங்'காக இருக்கும்.

---



## சாக்த தத்வத்திற்கு ஸயன்ஸின் சான்று

அசையாத சிவனும் அம்பாளால்தான் அசைந்து காரியத்தில் ஈடுபடுகிறார் என்று வருவதை ஸயன்ஸ்படி கொஞ்சம் விளக்கிப் பார்த்தால்:'மாட்டர்'என்று பதார்த்தத்தைச் சொல்கிறார்கள். அதன் ஸ்வபாவம் 'இனர்ஷியா'என்கிறார்கள் அதாவது சலனமில்லாமல் போட்டது போட்டபடிக் கிடப்பதுதான் என்கிறார்கள். அதனால் 'இனர்ட் மாட்டர்'என்றே சேர்த்துச் சொல்வதாக இருக்கிறது. ஆனாலும் அப்படிப்பட்ட இனர்ட் மாட்டர் பல தினுஸில் சலனப்பட்டு, பல தினுஸில் ஒன்று சேர்ந்துதான் ப்ரபஞ்சம் உண்டாயிருக்கிறதென்று நன்றாகத் தெரிகிறது. அப்படியானால் ஏதோ ஒரு பவர், சக்திதானே சலனமில்லாத மாட்டரைச் சலிக்கும்படியாகப் பண்ணியிருப்பதாக ஆகிறது?அந்தச் சலனமில்லாத மாட்டரைத்தான் சிவன் என்றும் அதைச் சலிக்க வைக்கும் சக்தியைப் பாரசக்தி, அம்பாள் என்றும் சொல்லியிருக்கிறது.

நிச்சலனமான சிவனும், க்ரஹ நக்ஷத்ரங்களில் ஆரம்பித்து அணுவுக்குள் உள்ள பரமாணுவரை எல்லாம் ஸதா சலித்துக்கொண்டேயிருப்பதற்குக் காரணமான சக்தியும் பிரிக்க முடியாமல் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்பதை அவர் 'மாட்டர்', அவள் 'எனெர்ஜி'என்று ஸயன்ஸ் அடிப்படையில் விளக்கிச் சொல்லலாம். இணைபிரியாத இரண்டு பேர் என்றாலும் அவர்கள் அடிப்படையில் இரண்டுகூட இல்லை, ஒன்றேதான் என்பதையும் அடாமிக்

ஸயன்ஸில் 'மாட்ட'ரே 'எனர்ஜி'யாவதாகச் சொல்லியிருப்பதைக் காட்டி உறுதிப்படுத்தலாம்.

ஆனால் ஒரு வித்யாஸம், பெரிய வித்யாஸம். என்னவென்றால், அங்கே ஒரு மாட்டரை எனர்ஜி ரூபமாக்கிய அப்புறம் மாட்டர் இல்லாமல் போய்விடும். இங்கேயோ சிவனும் சக்தியும் எப்போதுமே சாச்வத ஸத்யமாக இருக்கிறார்கள். சக்தியோக எனெர்ஜி வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கும் போதும் சிவ மாட்டர் அழியாமலே இருந்து கொண்டிருக்கிறது!ஏனென்றால் இங்கே 'மாட்டர்'என்பதே ஜடமாக இல்லாமல் உயிரான 'ஸ்பிரிட்'டாக இருக்கிறது;அழியாத, அழிக்க முடியத ஆத்ம தத்வமாக இருக்கிறது;சைதன்ய பூர்ணமாக இருக்கிறது. ஜடத்திலேயே ஆரம்பித்து ஜடத்திலேயே முடிந்துவிடும் ஸயன்ஸ்படியான மாட்டருங்கூட இந்தச் சைதன்யத்திலிருந்து வந்ததுதான். இப்போது மெள்ள மெள்ள ஐன்ஸ்டீன், ஸர் ஆலிவர் லாட்ஜ், எடிங்டன் போன்ற பெரிய ஸயன்ஸ் மேதைகள் அந்த சைதன்ய ஆதாரத்தின் பக்கமாக ஸயன்ஸைத் திருப்பி விட்டிருக்கிறார்கள். ஆனாலும் அதை லாபரடரியில் எக்ஸ்பெரிமென்ட் பண்ணி நிரூபிக்கவோ, அநுபவிக்கவோ முடியாது. மதாநுஷ்டானத்தினால்தான் அதன் நிரூபணமும், ப்ரத்யக்ஷஅநுபவமும் கிடைக்கும்.

ஸயன்ஸுக்கும் மதத்துக்கும் மாறுபாடுகள் இருந்தாலும் ஒப்புவமை காட்டும்படியும் அநேகம் இருக்கின்றன. ஐன்ஸ்டீனின் ரிலேடிவிடி தியரியிலிருந்து நடந்துள்ள அணு ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகள் மத சாஸ்த்ரங்கள் - குறிப்பாக அத்வைத வேதாந்தமும் சாக்த நூல்களும் - சொல்வதற்குக் கிட்டக் கிட்ட வந்து கொண்டிருக்கின்றன.

லோகத்தில் 'டைம்', 'ஸ்பேஸ்'என்பவை உள்பட எதுவுமே தன்னுடைய ஆதாரத்திலேயே ஸத்யமாக இருப்பதல்ல, 'ரிலேடிவா'க இன்னொன்றைச் சார்ந்தே எல்லாமும் ஒரு ஓட்டத்தில் ஓடுகிறபோது அந்த ஓட்டத்தின் தொடர்ச்சியாலேயே அது அதுவும் ஸத்யம் மாதிரி

நடைமுறைக்கு இருக்கிறது என்பதுதான் நான் புரிந்து கொண்ட மட்டும் 'ரிலேடிவிடி தியரி'. ப்ரஹ்மம் தான் ஒன்றேயான ஆதார ஸத்யம்;அதைச் சார்ந்திருப்பதாலேயே ஸத்யம் மாதிரித் தோற்றமளிக்கும்படியாக மாயை கல்பித்துக் காட்டுகிறதுதான் இந்த லோகம் பூராவும் என்று அத்வைதம் சொல்கிறது.

அந்த மாயையாகவே அம்பாளை சாக்த சாஸ்த்ரங்களும் குறிப்பிடுவதாகச் சொன்னேன். மாயா தத்வந்தான் 'ரிலேடிவிடி'என்று கொள்வதற்கு நிறைய இடமிருக்கிறதல்லவா?இந்த ரிலேடிவுக்கு ஆதாரமான 'அப்ஸொல்யூட்'என்னவென்று ஸயன்ஸ் கண்டுபிடிக்கவில்லை. மத நூல்களும் தத்வ சாஸ்திரங்களும் அதைத்தான் ப்ரஹ்மம், சிவன் என்கின்றன. (மதம் 'ரிலிஜன்', தத்வ சாஸ்திரம் 'ஃபிலாஸஃபி'என்று ஒரு பாகுபாடு சொல்லப்பட்டாலும் நம்முடைய மதத்தில் இந்த இரண்டும் பிரிக்க முடியாமல் (சிரித்து)சிவ-சக்திகள் மாதிரி ஒன்று சேர்ந்துதான் இருக்கின்றன.) புஸ்தகத்தில் சொன்னது மட்டுமில்லை;அந்த அப்ஸொல்யூட்டை மஹான்கள் ஆத்ம ஸ்வரூபமாக அநுபவித்தும் இருக்கிறார்கள். அதுதான் உயிருக்கெல்லாம் உயிராக இருக்கும் ஒரே உண்மையான உயிர்.

அதை ஸயன்ஸ் இதுவரை சொல்லவில்லை. இனிமேலும் ஸயன்டிஸ்ட்கள் எல்லாரும் 'தியரி'யில் அதை ஒப்புக்கொள்ளும் நாள் வந்தாலும், 'அதன் ஜீக்ஷீஷீயீ' எங்கள் ஸாமர்த்தியத்துக்குள் வராத ஸமாசாரம். அதைத் தெரிந்து கொள்ள ஆத்ம சாஸ்திரத்திற்குப் போங்கள்'என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். பராசக்தியின் 'ரிலேடி'வான சலன நாடகத்தில் சிலவற்றைத்தான் விதிகளைக் காட்டி ஸயன்ஸ் விளக்குமேயொழிய, லோகத்தின் அத்தனை சலனத்தையும் சேர்த்து ஒரேயடியாகச் சஞ்சலிக்கிற இந்த ஜீவ மனஸைச் சலிக்காமல் சமனப்படுத்தி ஜீவன் நிஜமான தன்னை தெரிந்துகொண்டு 'அப்ஸொல்யூட்'டாக ஆவதற்கு வழி சொல்ல அதனால் ஆகாது. அது ஸயன்ஸின்

லக்ஷ்யமுமில்லை. மத சாஸ்திரங்களே அந்த வழியைச் சொல்லும். அவை சொன்னாலும், அவை சொல்கிற வழியில் நாம் போனாலும், கடைசியில் 'ரீஷீணீறீ'-ஆக இருக்கிற இடத்தைத் திறந்து விடுவது அம்பாள்தான். 'அப்ஸொல்யூட்'டிலிருந்து பிரித்து விளையாட்டுப் பண்ணினவளைத் தவிர வேறே யார் மறுபடி அதோடேயே சேர்த்து வைக்க முடியும்?

ஸயன்ஸின் எல்லைக்கு அந்தண்டை இருக்கும் விஷயத்தில் ஸயன்ஸை நாம் இழுத்துக் குறை சொல்வது தப்பு. அதே மாதிரி ஸயன்ஸ்காரர்களும் தங்களுக்கு ஒரு எல்லை கட்டியிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அதற்கு அதீதமான விஷயங்களைச் சொல்லும் சாஸ்திரங்களைப் பொய் என்று அவர்கள் நினைப்பது தப்பு. இரண்டும் காம்ப்ளிமென்டரியாக ஒன்றுக்கொன்று இட்டு நிரப்பிக் கொண்டு போகமுடியும் என்ற எண்ணம் இரண்டு தரப்புக்கும் இருக்க வேண்டும். ஸயன்ஸ் கண்டுபிடிப்புகளையே சாஸ்த்ர தத்வார்த்தங்கள் எப்படி வேறே பாஷையில் சொல்லியிருக்கின்றன என்று பார்த்தால் எத்தனையோ ருசியான விஷயங்கள் அகப்படும்.

த்ருஷ்டாந்தமாக:ஒரு அணுவுக்குள்ளே பாஸிடிவ் எலெக்ட்ரிஸிடி சார்ஜாகியுள்ள மத்ய ந்யூக்ஸியஸான ப்ரோடானை சிவன் என்றும், அதைச் சுற்றிவரும் நெகடிவ் சார்ஜுள்ள எலெக்ட்ரானை அம்பாள் என்றும் வைத்துக் காட்டலாம்.

'ஸ்டில் ஸென்டர்'என்பதாக எதற்கும் மத்யமாக ஒரு சாந்த ஸ்தானமிருக்கிறது. சலனமில்லாவிட்டாலும் அது சக்தியற்ற சூன்யமில்லை என்பதை கவனிக்க வேண்டும். நல்ல கனத்தை ஸம எடைக் கட்டும் 'ஈக்விலிப்ரியம்'இப்படிப்பட்ட சாந்த ஸ்தானந்தான் ஒரு பதார்த்தத்தின் கனம் குவிந்து ஒருமுகப்படும் 'ஸென்டர் அஃப் க்ராவிடி'சாந்த ஸ்தானந்தான். பயங்கரமான புயலில்கூட 'ஸ்டார்ம் ஸென்டர்'என்று இருக்கிறது. மத்யமான ஒரு சாந்த

ஸ்தானத்திலிருந்து சக்தி பரவியே, வெளிப்பட்டே, வெடித்தே பதார்த்தங்கள் அமைகின்றன, கார்யங்கள் சக்திகரமாக நடக்கின்றன. அந்த சாந்தத்தைத்தான் சிவன் என்றும், அதை மையமாகக் கொண்டு சுழன்று வெளிப்படுகிற சக்தியை அம்பாள் என்றும் சொல்வது.

ஒன்றுக்குள் மையமாயிருக்கும் பாஸிடிவ், அதைச் சுற்றி நெகடிவ் என்பதை ஸ்வாமி-அம்பாள் என்று பார்க்கும்போது இரண்டு பேரும் ஸமம், இணைந்து செயல் புரிகிறவர்கள் என்று அபிப்ராயம் கொடுக்காததால் இன்னொரு விதமாகச் சொல்லியிருக்கிறது.

அதாவது ஒன்று மத்தியிலிருப்பது, மற்றது சுற்றியிருப்பது என்பதற்குப் பதில் இரண்டும் பேர் பாதி, பேர் பாதி என்று சொல்லியிருக்கிறது. அதுதான் அர்த்தநாரீச்வர ஸ்வரூபம் - வலது பக்கம் பாஸிடிவ் ஸ்வாமி, இடது பக்கம் நெகடிவ் அம்பாள். இப்படிச் சொல்வதிலும் புஷ்டியான காரணம் தெரிகிறது. என்னவென்றால், இடது பக்கம்தானே ஹ்ருதயம் இருக்கிறது?தேஹம் பூராவுக்குமே அதுதான் சக்தி தருகிறது. அது ஸரியாக வேலை செய்யாவிட்டால் வலது பக்கமும் ஒன்றும் பண்ண முடியாது - "ந கலு குசல ஸ்பந்திதுமபி"தான்!

இதில் ஒரு ஸ்வராஸ்யம் என்னவென்றால், இடது பக்கமுள்ள ஹ்ருதயந்தான் தேஹம் பூராவுக்கும் சக்தி கொடுக்கிறது என்றாலும், ஒரு தேஹத்தில் இடது பக்கத்தை விடவும் வலது பக்கம்தான் ஜாஸ்தி பலத்தோடு, 'பவ'ரோடு கார்யத்துக்கு உதவுவதாக இருக்கிறது. வாகாக வேலை செய்ய வலது பக்கம்தான் உகந்ததாக இருக்கிறது. வலது கையால் செய்ய முடிகிற மாதிரி இடதால் முடியாது. நொண்டி 'ப்ளே'யில் கூட வலது காலைத்தான் பலத்துக்காக ஊன்றிக் கொள்வது! நடராஜாவே 'இடதுகால் உதவாமல்'வலது காலை மட்டுமே ஊன்றிக் கொண்டிருப்பதாகப் பாடி வைத்திருக்கிறார்கள்!

இதிலேயே அம்பாள்தான் சக்தி தருபவள் என்பதைத்

தெரிவிப்பதாகவும் ஒரு அம்சமிருக்கிறது. சரீரத்தின் வலது-இடது பக்க வியாபாரங்களை எது எது நடத்தி கன்ட்ரோல் செய்கிறது என்று பார்த்தோமானால், வலது பக்க வியாபாரத்தை மூளையின் இடது பக்கம் கன்ட்ரோல் பண்ணுகிறது என்றும், இடது பக்க வியாபாரத்தை மூளையின் வலது பக்கம் கன்ட்ரோல் பண்ணுகிறது என்றும் தெரிகிறது. அதாவது ஜாஸ்தி சக்திகரமாகக் கார்யம் பண்ணும் நம்முடைய சரீரத்தின் சிவ ஸைடுக்கு அப்படி சக்தி கொடுத்து கன்ட்ரோல் பண்ணுவது மூளையின் சக்தி ஸைடே என்றாகிறது!

இதில்தான் அம்பாளுடைய பாதிவ்ரத்ய (கற்பு நெறி)அழகு இருக்கிறது. அவள்தான் பதிக்கும் சக்தியாயிருக்கிறாளென்றாலும், தன்னைவிடவும் அவரையே சக்தராகக் காட்டுகிறாள். அவருடைய ப்ரளய தாண்டவமென்றால் அகிலாண்டங்களெல்லாம் கிடுகிடுகிடுவென்று நடுங்கிப் பொடித்துப் போகும்படி அப்படி ஒரு சக்தி!ப்ரளய தாண்டவந்தான் என்றில்லை. ஆனந்தத் தாண்டவம் செய்வதையே 'அஷ்ட திசையும் கிடுகிடென்று' என்று கோபாலக்ருஷ்ண பாரதி பாடியிருக்கிறார்!அவரே நேரே செய்ய வேண்டுமென்றில்லை - அவருடைய ஜடையை பூமியிலடித்து ஒரு வீரபத்ரர் புறபட்டால் போதும், புறப்பட்ட ஆஸாமி காட்டும் சக்தியைப் பார்த்தே, இன்றைக்கும் புராணத்தில் கேட்டே, நடுங்கும்படி இருக்கிறது!ஒரு அறை விட்டாரானால் ஸூர்யனின் பல்லெல்லாம் உதிர்ந்து போகிறது!பரமேச்வரன் ஒரு சிரிப்புச் சிரித்தாலே எத்தனையோ 'ஹிரோஷிமா பாமு'க்கு மேலே சக்தி வெளிப்பட்டு த்ரிபுரங்கள் பஸ்மமாகின்றன!பதிக்கு அப்பேர்ப்பட்ட சக்தியை அம்பாள் தருகிறாள்!

'சக்தி என்ற பெயரே பெண் தெய்வத்துடையதாக இருக்கிறது. அப்படியிருக்கும்போது பெண்களை 'அபலா', 'மெல்லியல்'என்று சொல்லி ஆண்கள் அடக்கி வைப்பது அக்ரமம்'என்கிறவர்கள் இதைக் கவனிக்க வேண்டும். சக்தி என்று பெண்பால் பேர் கொடுத்த அதே சாஸ்திரங்கள் தான் பராசக்தி பரமேச்வரனுக்கு அதிக சக்தி தந்து, அவர் அடக்கி

வைத்து இவள் அடங்கினாள் என்றில்லாமல், தானே அடங்கியிருந்து அப்டியிருப்பதுதான் பெண்களுக்கு அழகு என்று காட்டுவதையும் சொல்கின்றன. சிதம்பரத்தில் பார்த்தால் தெரியும். முன்னேயே சொன்னாற்போல் பஞ்ச க்ருத்யம் அம்பாளுக்கானதுதான். அதையே அங்கே அவள் நடராஜாவுக்குக் கொடுத்துவிட்டு, தான் பரம சாந்தையாக இருக்கிற இடம் தெரியாமல் இருப்பாள்.

ஒரே சரீரத்தில் வலதில் பதி, இடதில் தான் என்று இருக்கும்போது வலதுக்கே அதிக சக்தி தருகிறாள் என்றேன். வலது பக்கத்தை தக்ஷிண பாகம் என்றும், இடது பாகத்தை வாம பாகம் என்றும் சொல்வது. 'தக்ஷிணம்'என்றால் திறமையோடு கூடியது.

பொருத்தமாக வலது பக்கத்திற்குப் அப்படிப் பெயர் இருக்கிறது. 'வாமம்'என்றால் அழகாக இருப்பது. அழகியாக, ஸுந்தரியாக அம்பாள் இருப்பதே அவளுக்கு ஸாரபூதம் என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'பண்ணியிருப்பதற்கேற்க அழகுப் பிரதானமான வாம பாகம் அவளுடையதாக இருக்கிறது. சக்தி என்றே இருப்பவள் சக்தியைப் பதிக்கு அதிகம் தந்துவிட்டு, தான் முக்யமாக ஸுந்தரமாக நிற்கிறாள்.

அவர் அசையாதவர், இவள்தான் அசைக்கிறவள் என்பதற்கு ஓரளவு மாறாக இது (தக்ஷிணம், வாமம் என்ற ஸம்ஸ்கிருத வார்த்தைகள்)இருக்கிறதென்றால், தமிழிலும் இங்கிலீஷிலும் அடியோடு மாறாக இருக்கிறது. வலம்-இடம் என்பதில் 'வலம்'என்றாலே 'பலம்'தான்!'இடம்'என்பதோ இருப்பாக இருக்கிற ஸ்தானம், ஸ்டேஷன். 'ஸ்டேஷனரி'என்றாலே அசையாமல் இருப்பது என்று தான் அர்த்தம்!இங்கிலீஷில் இன்னும் ஒரு படி மேலே போயிருக்கிறது. 'லெஃப்ட்'என்பது 'பாரலைஸ்'ஆகி ஒன்றுமே ஒன்றுமே செயலில்லாமலிருப்பது என்ற அர்த்தமுள்ள வேர்ச் சொல்லிலிருந்து வந்தது என்றும், அது 'வீக்னெஸ்'ஸைக் குறிப்பது என்றும் சொல்கிறார்கள். 'ரைட்' என்பது 'ஸ்ட்ரெய்ட்'ஸம்பந்தப்பட்டது என்றும் நேராக,

செங்குத்தாக இருப்பது என்று அர்த்தம் என்றும் சொல்கிறார்கள். 'ரைட் ஆங்கிள்'என்கிறபோது இந்த அர்த்தம் தெரிகிறது. அதில் கீழ்க்கோட்டுக்கு 90 டிகிரியில் ஒரு செங்குத்து கோடு நிற்கிறது. ஒருத்தனுக்கு பலம், சக்தி இருந்தால்தானே நேராக ஜோராக நிற்க முடியும்?சக்தி போதாவிட்டால் சுருண்டு படுத்து விடுகிறோம். பலம் குறைந்தபோது முதுகு கூனிப் போகிறது. நேராக நிற்பது பலசாலிகளின் அடையாளம். தேஹ சக்தி, மனோ சக்தி இரண்டையும் இணைத்து அபிவிருத்தி செய்வதற்காக முறைப்படி யோகாஸனம் சொல்லிக் கொடுக்கும்போது முதலில் நேராக நிமிர்ந்து நிற்கத்தான் கற்றுக் கொடுப்பார்கள். அதற்கு உத்தானாஸனம் என்று பெயர். ஆகையால் 'ரைட்'என்றால் சக்தி, 'லெஃப்ட்'என்றால் செயலில்லாமல் கிடப்பது என்பதாக அம்பாள்-ஸ்வாமி தத்வங்களுக்கு நேரெதிராக இருக்கிறது!அம்பாள் தன் சக்தியையெல்லாம் பதிக்குக் கொடுத்துவிட்டு, தனக்கென்று செயலில்லாமல் அவனிடம் சரணாகதி பண்ணிவிட்ட மஹா பதிவ்ரதையாக இருப்பதைச் சொல்கிற மாதிரி!

லெஃபட், ரைட்டின் ரூட் மீனிங் இப்படியிருந்தாலும் பாலிடிக்ஸில் பார்த்தால் லெஃப்டிஸ்ட் - இடது சாரி - கட்சிகள்தான் ஒரே புரட்சி பண்ணிக் கொண்டிருப்பதாகவும், ரைட்டிஸ்ட் - வலதுசாரி - கட்சிகள், 'இருக்கிற படி இருக்கட்டும்'என்று கன்ஸர்வேடிவாக சாந்த வழியில் போவதாகவும் இருக்கிறது!இங்கே வலப் பக்கம் சிவ சாந்தம், இடப் பக்கம் சக்தியின் கார்யத் துடிப்பு என்பது பொருத்தமாக இருக்கிறது!

தத்வார்த்தம், கவி மரபு, ஸயன்ஸ் ஆகியவற்றோடு பாலிடிக்ஸையும் கொண்டு வந்துவிட்டேன்!மனஸில் விஷயங்களை ஆழமாகப் பதிப்பதற்கு இப்படிப் பல விதத்திலும் அர்த்த பலம் கொடுத்தால்தான் முடிகிறது!

வலது-இடது விஷயமாக இன்னொரு ஸமாசாரம். பிம்பத்தில் வலதாக இருப்பது ப்ரதி பிம்பத்தில் இடதாகி விடுகிறது;அதே

மாதிரி இதில் இடது அதில் வலதாகி விடுகிறது. நிர்குண ப்ரஹ்மம் சைதன்யம் என்ற அத்வைதமான த்தவம் மாயைக் கண்ணாடியில் பிரதிபிம்பிக்கும்போது த்வைத லோகத்தை நிர்வாஹம் செய்யும் ஸகுண ப்ரம்மமாகிறது என்று அத்வைத சாஸ்திரங்களில் ஒரு கொள்கை உண்டு. அதாவது சிவனேதான் மாயைக் கண்ணாடியில் தெரியும்போது அம்பாளாகிறார்!அந்த மாயை என்ன என்று கேட்டால் அத்வைதத்திலே, 'என்ன என்று கேட்காதே!ஏனென்றால் அது என்னவென்று சொல்லவே முடியாது. அதுதான் மாயம் பண்ணுவதாச்சே!நாம் அதை என்னவென்று புரிந்து கொள்ள விடுமா?'என்று முடித்து விடுவார்கள். சாக்தத்தில், 'அந்த மாயையும் அம்பாள்தான், அம்பாளுடைய ஒரு அம்சம்தான்'என்று சொல்லியிருக்கிறது. முன்னேயே சொன்னேன்; சாக்தத்தில், சிவனை ஜீவனாக வெளிப்படுத்துகிற கட்டத்தில்தான் மாயை வருகிறது என்று சொன்னேன்.

ஜீவனுக்குத் தான் சிவனே என்பது தெரியாமல் மயக்கி வைத்திருப்பதுதான் மாயை. இருக்கிற சாச்வத வஸ்துவான சிவனை ஜீவனுக்குத் தெரியாதபடியும், இல்லாமல் அழிந்து போகிற வஸ்துக்களே இருப்பதாகத் ஜீவனுக்குத் தெரியும்படியும் செய்வதுதான் மாயாசக்தியின் வேலை. இங்கே பிம்பம்-பிரதிபிம்பம் என்பது மறுபடி பாஸிடிவ்-நெகடிவில் கொண்டு விடுகிறது. ஆனால் முந்தி சொன்னது எலெக்ட்ரிஸிடியின் பாஸிடிவ்-நெகடிவ். இப்போது சொல்லப்போவது ஃபோட்டோக்ரஃபியின் பாஸிடிவ்-நெகடிவ். ஃபோடோவின் பாஸிடிவில் வெளிச்சம் வெளிச்சமாகவும், இருட்டு இருட்டாகவும் உள்ளபடி இருக்கும். நெகடிவில் வெளிச்சம் இருட்டாகவும், இருட்டு வெளிச்சமாகவும் இருக்கும். அதுதான் இருப்பது இல்லாததாகவும், இல்லாதது இருப்பதாகவும் தெரிகிற அஞ்ஞானம்;மாயையின் கார்யம்! இப்போது நாம் இந்த அஞ்ஞானப் புதைச் சேற்றுக் குழியில்தான் அழுந்திக் கிடப்பதால் இதற்கும் அம்பாள்தானே காரணமென்பதால் அவளை முக்யமாக மாயை, மாயை என்றே சொல்கிறோம்.

ஆனால் ஒன்றை மறக்கப்படாது, மறக்கவேபடாது. அதனால்தான் ஏற்கெனவே சொன்னாலும் மறுபடி சொல்கிறேன். இல்லாததை இருப்பதாகக் காட்டி மாயம் பண்ணும் அம்பாள் ஒருநாள் பரம கருணையோடு அதை இல்லாததாகவே பண்ணி, இருக்கிற ஒன்றிலேயே நம்மை ஒன்றாகச் சேர்க்கவும் செயவாள். அவளே கதி என்று அவளுடைய காலைப் பிடித்துக் கொண்டு - மானஸிகமாகத்தான், விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு - விமோசனம் வேண்டினால் நிச்சயம் அப்படி அநுக்ரஹிப்பாள்.

இப்படிச் சொல்லிக்கொண்டு போகிறபோது பாஸிடிவ், நெகடிவ் விஷயமாக இன்னொரு பாயின்ட் அகப்படுகிறது. இந்த இரண்டு வார்த்தைகளுக்கே என்ன அர்த்தம்? 'பாஸிடிவ்'என்றால் இருப்பது; 'யெஸ்'என்பது. 'நெகடிவ்'என்றால் இல்லாதது;'நோ'என்பது. சக்தி லீலை எத்தனை நன்றாயிருந்தாலும் சாச்வத ஸத்யமாக இருப்பது இல்லை. அதனால் அவளையே நெகடிவ் என்று சொல்ல ந்யாயமுண்டு. சிவ சாந்தந்தான் சாச்வத ஸத்யமாக என்றும் இருப்பது. ஆகையினால் பாஸிடிவ். ஆனால் இப்படி நெகடிவ்களுக்கெல்லாம் ஆதாரபூதமாக இருக்கப்பட்டவளே நம்மை அந்தப் பாஸிடிவில் ஐக்யப்படுத்துபவளாகவும் இருக்கிறாள்.....

எல்லாருக்கும் ஏற்காததாக இருக்கும் ஸமாசாரங்களிலும் ஸயன்ஸ், தத்வார்த்தம், கவி மரபு முதலியவற்றைக் காட்டி ஏற்கும்படியாகப் பண்ணக்கூடியவற்றை அப்படி விளக்கலாம். ஆனாலும் பொது ஸபையில் சொல்வதற்கேயில்லை என்கிற மந்த்ர, தந்த்ர, யந்த்ர விஷயங்களையும், சில கவிதா வர்ணனைகளையும் அடியோடு தொடாமல் விட்டுவிட வேண்டும். உசந்த நிலைகளில் நம்மைச் சேர்ப்பதற்கென்றே ஏற்பட்ட ஸ்தோத்ரத்துக்கு அர்த்தம் சொல்லப் போய், கேட்பவர்களுக்கு ப்ரயோஜனமில்லாத விஷயங்களையோ, அவர்களுக்கு விபரீத பலன் உண்டாக்குகிற விஷயங்களையோ, அவர்கள் மனஸில் விகல்பம் தோன்றும்படியான விஷயங்களையோ சொல்வது பெரிய

குற்றம்;அம்பாளுக்கும் ஆசார்யாளுக்கும் பண்ணும் அபசாரம்.

---



## முதல் ச்லோகத்தின் பாடம்

"உன்னுடன் சேர்ந்தில்லாவிட்டால் சிவன் அசையக் கூட முடியுமா?"என்று ஆசார்யாள் ஆரம்பிக்கும் போதே கேட்கிறதற்கு உள்ளர்த்தமாக, நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய உபதேசமாக, பாடமாக, எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், "உன்னுடைய க்ருபை இல்லாவிட்டால் நாங்கள் அந்த அசையாத நிலையை அடையமுடியுமா?"என்று நம் சார்பில் அவர் கேட்பதாகத்தான் தோன்றுகிறது. அசையாததை அசைத்த மஹாசக்தி அவள் - பரப்ரஹ்மத்துக்குத் தான் இருப்பதாகத் தெரிந்த உணர்ச்சியான அசைவிலிருந்து அவள் லீலை ஆரம்பித்தது!

முதல் ச்லோகம் காட்டுகிறபடி, பரப்ரஹ்மம் தன்னைத் தானே அறிந்துகொள்ளும் சின்மயமான ஆதி சலனமே அம்பாளால்தான் நடக்கிறது. அப்புறம் சலனத்துக்கு மேல் சலனமாக ஒரேயடியாக நடந்துதான் நம்முடைய நித்ய சலன வாழ்க்கையில் வந்து முடிந்திருக்கிறது! பிரம்மத்திலிருந்து ஜீவ-ஜகத்துக்கள் வரையிலான இந்தச் சலனங்களை அவரோஹண க்ரமத்தில், அதாவது படிப்படியாகக் கீழ் நிலைகளுக்கு இறக்கி 36 தத்வம், 24 த்தவம் என்றெல்லாம் ஒவ்வொரு சாஸ்திரத்தில் ஒருவிதமாகச் சொல்லியிருக்கிறது. இந்த அவரோஹணத்தை Evolution என்கிறார்கள். டார்வின் சொன்னது இல்லை. அவன் மேலே மேலே உயர்ந்து பரிணாமம் பெறுவதைச் சொல்கிறான். இதுவோ உச்சாணியான பிரம்ம நிலையிலிருந்து தாழ்ந்து தாழ்ந்து

நாமாயிருக்கும் ஸமாசாரம். பிரம்ம தத்வம் மேலே மேலே வெளிமுகமாகி அதிலிருந்து மற்ற தத்வங்கள் 'இவால்வ்'ஆவதால், அதாவது உண்டாவதாலேயே இதை 'இவல்யூஷன்'என்பது. இப்போது ஜீவ தத்வமான நாம் பிரம்ம தத்வமாகி அந்த நம் நிஜ நிலையை அடைவதே நமக்கு மோக்ஷம். இப்படி வெளிமுகப்பட்ட எல்லாமும் உள்முகப் படுவது ஆரோஹணம். ப்ரம்மத்திலிருந்து ஜீவன் - அவரோ ஹணம்;ஜீவனிலிருந்து பிரம்மம் - ஆரோஹணம். ஆரோஹணம் ஏறு வரிசை - ஸரிகமபதநி என்று ஏறுவது. அவரோஹணம் இறங்கு வரிசையில் ஸநிதபமகரி. மேல் 'ஸ' வாயிருந்த ப்ரஹ்மம் இறங்கி இறங்கி 'ரி'ஆனது தான் ஜீவன். இவன் மோக்ஷமடைவதற்கு இந்த 'ரி' யிலிருந்து கமபதநி வழியாக ஏறி 'ஸ'ஆகணும். ஏறுவது, இறங்குவது என்பதை விட விரிவது, அடங்குவது என்பது இன்னும் ஸரியாகத் தோன்றுகிறது. ப்ரஹ்மம் வெளிமுகப்பட்டுப் பட்டு, அதாவது விரிந்து விரிந்து ஜீவ ஜகத்துக்களாவதை இவல்யூஷன் என்கிறார்கள். விரிந்து உண்டான ஜீவன் உள்முகப்பட்டுப் பட்டுக் குவிந்து பிரம்மமாக அடங்க வேண்டும். இதை 'இன்வயூஷன்'(Involution) என்று அழகாகச் சொல்கிறார்கள் - விரிந்தது சுருங்கிச் சுருங்கி involveஆகிக் கொண்டேபோய் மூலதார மையத்திலேயே முடிந்துவிடுவது. இதற்கு நம் பிரயாஸை அவசியம் வேண்டுந்தான் என்றாலும் அது மட்டும் போதாது. அப்பேர்ப்பட்ட பிரம்ம வஸ்து இந்த நாமாக இவால்வ் ஆயிற்றென்றால் அது நாமாகப் பண்ணிக் கொள்ளாமல், அவள் நிமித்தமாகப் பண்ணி ஏற்பட்டதுதானே?அப்படியிருக்கும்போது நாமே பிரயாஸைப்பட்டு மாத்திரம் எப்படி பிரம்மமாக இன்வால்வ் ஆக முடியும்?ஜீவர்களை வைத்து நாடகம் - லீலை - செய்வதில் அவள் நமக்கும் பிரயாஸை பண்ணுவதாகப் பார்ட் கொடுத்திருப்பது வாஸ்வந்தானென்றாலும் நாமாகவே [பிரம்மமாக ஆகிற]முக்தியை ஸாதித்துக் கொண்டுவிட முடியாது. அவள் அநுக்ரஹத்தினால்தான் அதை ஸம்பாதித்துக் கொள்ள முடியும். எந்த சக்தி வெளியிலே பிடித்துத் தள்ளிற்றோ அதுவேதான் மறுபடி உள்ளுக்குள்ளே இழுத்துக் கொண்டும் ஆக வேண்டும். ஸ்விட்ச் வேலை பண்ணித்தான் ஃபான் சுற்ற ஆரம்பிக்கிறதென்றால், அப்புறம்

அந்த ஃபான் தானாகவே நிற்க முடியுமா?வேறு யாராவது பிடித்துத்தான் அதை நிறுத்தி வைக்க முடியுமா? அந்த ஸ்விட்சே வேலை பண்ணித்தானே அதை நிறுத்தவும் வேண்டும்?

சிவனின் இவல்யூஷனுக்கு அம்பாள்தான் காரணம் என்று ஆசார்யாள் ஆரம்பித்திருப்பதிலேயே அதற்கு மறு பக்கமாக - ஒரு காசு இருந்தால் அதற்கு இரண்டு பக்கம் இருக்கிற மாதிரி, மறுபக்கமாக - ஜீவன் சிவனாக இன்வல்யூஷன் பெறவும் அவள்தான் காரணம்;அதற்காக அவள் கிருபையையே நாம் வேண்டி வேண்டிப் பெற வேண்டும் என்று நம் எல்லோருக்கும் அவர் உபதேசிப்பதாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இதில் நாம் பிரயாஸைப்படுவதற்கும் இடம் கொடுத்திருக்கிறாள் என்றேன். என்ன பிரயாஸை, எப்படிப் படுவது என்றால் கர்மம், பக்தி, ஞானம், யோகம் என்றெல்லாம் உள்ள பலவித பிரயாஸைகள்தான். அவற்றிலே ரொம்பவும் ஸௌக்யமாக இருக்கப்பட்ட பக்தி பாராயண வழியைத் தான் ஸௌந்தர்யலஹரியில் காட்டிக் கொடுக்கிறார்.

எட்டாத தத்வத்தை நம் மனஸுக்கு எட்டும்படியான ஒரு ரொம்பவும் அன்பான ரூபத்தில் பாவித்தாலே போதும், அந்தத் தத்வம் நாம் எட்டிப் பிடிக்கும்படி இறங்கி வந்து விடும். அப்படி பாவிக்கிறதுதான் பக்தி. அந்த பக்தி ரஸத்தை ப்ரேமையின் பலவிதமான மாதுர்யங்களில் ஒன்றான வாத்ஸல்ய ரஸமாக்கிக் காவிய ரஸத்தில் கலந்து ஆசார்யாள் இந்த ஸ்தோத்ரத்தைக் கொடுத்திருக்கிறார். வாத்ஸல்யப் பிரேமை பொழிகிறவள் மாதா என்றால், அப்போது பிதாவும் இருக்கவேண்டுமே என்பதால் "சிவ சக்த்யா"என்று எடுத்த எடுப்பிலே அப்பா-அம்மா ஜோடியை தர்சனம் பண்ணுவித்திருக்கிறார். அப்படிப் பண்ணும்போதே அப்பாவுக்கும் சக்தி தருபவளாக அம்மாவே இருக்கிறாளென்று அவளுடைய உத்கர்ஷத்தையும் காட்டியிருக்கிறார்.

---

**அடிப்பொடி கொண்டே அகிலாண்ட வியாபாரம்**

**தநீயாம்ஸம் பாம்ஸூம் தவ சரணபங்கேருஹபவம்**

**விரிஞ்சி:ஸம்சிந்வந் விரசயதி லோகாந்-அவிகலம் ***

**வஹத்யேநம் சௌரி:கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்**

**ஹர:ஸம்க்ஷுத்யைநம் பஜதி பஸிதோத்தூளந விதிம் ****

[(தவ) உனது (சரண பங்கேருஹ பவம்) பாத தாமரையில் உண்டான (தநீயாம்ஸம்) மிக நுண்ணியதான (பாம்ஸூம்) தூளியை (விரிஞ்சி:) பிரம்மன் (ஸஞ்சின்வன்) ஸம்பாதித்து [அதைக் கொண்டே](லோகான்) எல்லா உலகுகளையும் (அவிகலம்) முழுமையாக (விரசயதி) நிர்மாணிக்கிறார். (ஏனம்) இதனை [பாததுளியை, அதாவது அதைக் கொண்டு படைக்கப்பட்ட உலகுகளை] (சௌரி:) மஹாவிஷ்ணு (கதம்பி) எவ்வாறோ (ஸஹஸ்ரேண சிரஸாம்) ஆயிரம் தலைகளால் (வஹதி) தாங்குகிறார். (ஏனம்) இதனை (ஹர:) ருத்திரன் (ஸம்க்ஷுத்ய) நன்கு பொடியாக்கி (பஸித உத்தூளன விதிம்) திருநீறு பூசிக்கொள்ளும் முறையை (பஜதி) அநுஷ்டிக்கிறார்.]

இது இரண்டாவது ச்லோகம். முதல் ச்லோகத்தில் "ஹரி-ஹர-விரிஞ்சாதிபிரபி ஆராத்யாம்"என்று சொன்னதையே இங்கே விஸ்தரித்து, த்ரிமூர்த்திகளும் அம்பாளுடைய க்ருபா லேசத்தால் (அருள் திவலையால்) தான் தங்களுடைய ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற பெரிய கார்யங்களைச் செய்கிறார்கள் என்கிறார்.

அம்பாளுடைய ஒரு பாத துளியைக் கொண்டே ப்ரம்மா இத்தனை லோகங்களையும் படைக்கிறாராம்! 'பாம்ஸு'என்றால் பாத தூளி. அந்தப் பாத தூளியிலேயுங் கூட ரொம்பவும் பொடியூண்டு தூளி என்பதாகத் 'தநீயாம்ஸம்'என்று போட்டிருக்கிறார். பரப்ரஹ்மத்தின் பூர்ண சக்தி ஒரு ரூபம் எடுத்துக் கொள்ளும்போது அதன் பாதத்தின் பொடியத்தனை தூளியே பதிநான்கு லோக ஸ்ருஷ்டிக்கும் தேவையான மூலப் பதார்த்தத்தைக் கொடுத்து விடுகிறது!இது ஸ்ருஷ்டி ஸமாசாரம்.

அப்புறம் பரிபாலனம். அனந்த பத்மநாபன் என்று சொல்லப்படும் விஷ்ணுவின் ஒரு ரூபமேதான் அவர் சயனித்துக் கொண்டிருக்கும் அனந்தனும் - [அதாவது] ஆதிசேஷனும். அவன் ஆயிரம் தலைமேல் தாங்கிக் கொண்டு பரிபாலிக்கிறானே. இந்த லோகம், இது அம்பாளுடைய அந்த ஒரு அங்க்ரிரேணு [அடிப்பொடி]தான்!விஷ்ணுவுக்கு இங்கே 'சௌரி'என்று பேர் சொல்லியிருக்கிறார். திருக்கண்ணபுரத்தில் சௌரிராஜப் பெருமாள் என்று ஸ்வாமிக்குப் பெயர். யதுவம்சத்தில் சூரன் என்கிறவனின் பிள்ளைவழிப் பேரனாகப் பிறந்ததால் கிருஷ்ண பரமாத்மாவுக்கு சௌரி என்று பேர். பலராமனுக்கும் அதே பேர் கொடுக்க நியாயமுண்டு. இவருக்கும் அவர் அண்ணாவானதால் அதுவே அதிக நியாயங்கூட!அவரை தசாவதாரத்தில் ஒன்றாகவும் சொல்கிறோம். சேஷாவதாரம் என்று சொல்கிறோம். அதனால் மஹாவிஷ்ணுவையே சேஷனாகச் சொல்லி, அவர் ஆயிரம் தலையாலும் லோகங்களைத் தாங்குவதாகச் சொல்வதும் தப்பில்லை தானே?புருஷோத்தமனான பகவானை பற்றிப் புருஷஸூக்தம் ஆரம்பிக்கிறபோதே ஸஹஸ்ர சிரஸுக்காரன் என்றுதான் சொல்கிறது!

தலையினால் தாங்குகிறார் என்றால் லோகங்கள் உருண்டு போகாமல் ஸ்திரப்படுத்தித் தூக்குகிறார் என்பது நேர் அர்த்தம். உள்ளர்த்தம் பரிபாலிக்கிறார் என்பதே. "கதமபி"- "எப்படியோ"- இந்தக் கார்யத்தை அவர் பண்ணுகிறார் என்று [ஆசார்யாள்]சொல்கிறார். கஷ்டமான ஸாதனைதான்;

ஆனாலும் 'எப்படியோ'(èîñH) Ü¬î õ£F,Aø£˜ â¡Á î£ˆð˜ò‹.

பாததூளியைக் கொண்டு ப்ரம்மா ஸ்ருஷ்டிக் கார்யம் பண்ணுவதற்குக் 'கதமபி'போடவில்லை; அப்புறம் ருத்ரன் ஸம்ஹாரம் பண்ணுவதைச் சொல்லும்போதும் போடவில்லை. இங்கே மட்டும் போட்டிருக்கிறார். ஏனென்றால் ஸ்ருஷ்டி என்பது கொஞ்ச நாழி பண்ணி முடிந்து போகிற கார்யம். ஸம்ஹாரமோ அதைவிடக் குறைச்சல் நாழியே பிடிப்பது!ஒன்றை உண்டாக்குவதைவிட அழிப்பது ஸுலபந்தானே?ஆனால் ஜகத்பரிபாலனம் என்பதுதான் ரொம்ப நீண்ட காலம் - யுகங்கள், கல்பங்கள் - பண்ண வேண்டியதாயிருக்கிறது. இத்தனை நீண்ட காலம் விஷ்ணு ஜகத்தைத் தாங்குகிறாரே என்பதால்தான் இங்கே மாத்திரம் 'கதம்பி'போட்டிருக்கிறார்.

பெரியவர்களுடைய பாத தூளியை சிரஸில் வஹிப்பதே முறை, அதுவே பெரிய பாக்யம். பதிநாலு லோகமாகவும் ஆகியுள்ள அம்பாளுடைய பாத தூளியை மஹாவிஷ்ணு சிரஸில் ஸஹிக்கிறார்.

இவர் சிரஸில் வஹிக்கிறாரென்றால் ஈச்வரனோ ஸர்வாங்கத்திலும் பஸ்மோத்தூளனமாகப் பூசிக் கொண்டிருக்கிறார். "முழு நீறு பூசிய முனிவர்'என்று பெரிய புராணம் சொல்லும் தொகையடியார்களில் ஈச்வரவனையும் சேர்த்து விடலாம்போலிருக்கிறது!பாத தூளி சதுர்தச லோகங்களாகவும் ஆயிற்றல்லவா?ஸம்ஹார காலத்தில் அதவ்வளவையும் ஈச்வரன் பொடிப் பொடியாக பஸ்மம் பண்ணி, "இதற்கு மூலம் அம்பாளின் பாதூளியானதால் இதுவே அதுதான்"என்ற எண்ணத்தில் அதை சரீரம் பூராவும் பூசிக்கொள்கிறாராம்!

செக்கச் சிவந்த அம்பாளுடைய பாதத்தின் தூளி ஸ்வபாவத்தில் சிவப்பாகத்தானிருக்கும். வேதமாதா அம்பாளின் பாதத்தில் தலை வைத்து நமஸ்காரம் பண்ணும்போது அந்தச் சிவப்புப் பொடி அவள் வகுட்டிலே குங்குமமாக ஒட்டிக்கொள்கிறது என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிறது: ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீ க்ருத பாதாப்ஜ தூளிகா. அந்தக் குங்குமப் பொடிகளில் ஒன்று அப்புறம் ப்ரளயாக்னியில் பஸ்ம விபூதியாக உருமாறியிருக்கிறது!ஸ்வாமி பிரஸாதமாக விபூதி, அம்பாள்

பிரஸாதமாகக் குங்குமம் கொடுப்பது வழக்கம். இங்கே அம்பாள் குங்குமமே ஸ்வாமிக்கு விபூதியாகியிருக்கிறது!

திரிமூர்த்திகளும் அவளை ஆராதிக்கிறார்கள் என்று மேல் ச்லோகத்தில் சொல்லிவிட்டு இங்கே அவர்களுடைய (த்ரிமூர்த்திகளுடைய) க்ருத்யங்களைச் சொல்லியிருப்பதால், அந்த ஆராதனா பலனாகப் பெற்ற அவளுடைய அநுக்ரஹ பலத்தின் மேல்தான் அவர்கள் இந்தக் காரியங்களைச் செய்ய முடிகிறது என்ற உண்மை தொக்கி நிற்கிறது.

---



## பாதத்தில் தொடங்கலாமா?

முதல் ச்லோகம் மங்கள ச்லோகம் மாதிரியானது. இரண்டாவதில்தான் ஸ்தோத்ரம் - 'டெக்ஸ்ட்'- ஆரம்பிக்கிறதென்று சொல்லலாம் பாததூளி மஹிமையோடு ஆரம்பித்திருக்கிறது.

'புருஷ தெய்வ வர்ணனையில்தானே பாதத்திலிருந்து ஆரம்பிக்கவேண்டும்?ஸ்திரீ தெய்வத்திற்கு சிரஸில் அல்லவா ஆரம்பிப்பது ஸம்பிரதாயம்?ஏன் வித்யாஸமாகப் பண்ணியிருக்கிறது?'என்று தோன்றலாம்.

அங்க அங்கமாக ஒரு ஆர்டரில் முழு ஸ்வரூபத்தையும் வர்ணித்துக் கொண்டு போகும்போது தான் [புருஷ தெய்வத்திற்குப்]பாதாதி கேசம், [பெண் தெய்வத்திற்கு] கேசாதி பாதம் என்பது. இங்கே, இந்த 'ஆனந்த லஹரி'ஸெக்ஷனில், அப்படிப் பாதத்திலிருந்து ஆரம்பித்து மேல் வரிசையில் வர்ணித்துக் கொண்டு போவதாக ச்லோகங்கள் இல்லை. 'ஸௌந்தர்ய லஹரி'என்றே சொல்லப்படும் பின் ஸெக்ஷனில்தான் வரிசைக் கிரமமாக

அங்க வர்ணனை வருவது. அங்கே எப்படி ஸம்பிரதாயமோ அப்படி சிரஸிலுள்ள கிரீடத்தில் ஆரம்பித்திருக்கிறார்;அப்புறம் இறங்கு வரிசையாகப் பாதம் வரை கொண்டு முடித்திருக்கிறார்.

பூர்ணமான ஸ்வரூப வர்ணனைக் கிரமம் என்று எடுத்துக் கொள்ளதபோது எந்தத் தெய்வமானாலும் முதலில் அதன் பாதத்தைப் பிடிக்கத்தான் போக வேண்டும். சரணாகதி என்று விழவது பாதத்தில்தான். பக்தனின் சிரஸில் பாதத்தை வைத்துத்தான் குரு ரூபமாக தெய்வம் தீக்ஷைகொடுப்பதும். அம்பாள் அம்மாவுக்கு அம்மா;குருவுக்கு குரு. அதனால் "அம்மா!"என்று அவள் காலைக் கட்டிக் கொள்வதானாலும் சரி, குரு என்று தீக்ஷைகேட்டாலும் சரி பாதத்தைத்தான் பிடிக்கணும். ஆகையால் [ஸ்தோத்திரத்தை]இப்படி ஆரம்பிப்பது முறையானதுதான்.

இன்னொன்றுகூட. சிவன் சக்தியுக்தன் என்றால் சக்தியும் சிவயுக்தைதான். அவர்கள் அர்த்தநாரீச்வரர்களாக இருப்பதால் சிவனைப் பற்றிக் கேசாதிபாத வர்ணனையும் பண்ண நியாயமுண்டென்று அப்படி ஒரு ஸ்துதி ஆசார்யாள் செய்திருக்கிறார். அதே நியாயத்தில் அம்பாளைப் பாதாதிகேசமாகக்கூட வர்ணிக்கலாம்தான். இங்கே அப்படி வர்ணனை தொடர்ந்து போகாவிட்டாலும் பாதத்தில் ஆரம்பித்ததிலேயே சிவாபின்னையாக [சிவனிடமிருந்து பிரிவற்றவளாக]அம்பாள் இருப்பதையும் காட்டிய மாதிரி வைத்துக் கொள்ளலாம்.

எந்த விஷயத்திற்கும் ஆரம்பத்தை 'அடி'என்று சொல்வது வழக்கம் - 'அடியிலிருந்து நுனிவரை'என்று சொல்கிறோம். அந்த ரீதியிலும் அம்பாளின் 'அடி'யில் ஆரம்பித்துக் கொண்டு போவதுதானே முறை?

அடுத்த இரண்டு ச்லோகங்களுங்கூட அம்பாளுடைய பாதமஹிமையைத்தான் சொல்கின்றன. திருவடிக்கும் அடியிலுள்ள தூளியின் மஹிமையை முதலில் சொல்லிவிட்டு அப்புறம் திருவடி மஹிமையைச் சொல்கிறார்.

---

## இஹ-பர நலன் தரும் இணையடிப் பொடி

திருவடித் தூளி என்னவெல்லாம் அநுக்ரஹம் செய்கிறதென்று மூன்றாம் ச்லோகத்தில் சொல்கிறார். ப்ரபஞ்ச வியவஹாரம் முழுக்க அதனாலேயே என்று இரண்டாவது ச்லோகத்தில் சொன்னபின் ப்ரபஞ்சத்திலுள்ள ஜீவர்களுக்கு அது எப்படியெல்லாம் அநுக்ரஹிக்கிறது; ப்ரபஞ்சத்திலிருந்தே விடுவித்தும் அநுக்ரஹிக்கிறது என்று சொல்கிறார்.

அவித்யாநாம் அந்தஸ் - திமிர - மிஹிர - த்வீபநகரீ

அவித்யா என்றால் அஞ்ஞானம். அது ஒரு பெரிய இருட்டு; 'திமிரம்'என்று ச்லோகத்தில் சொல்லியிருக்கும் இருட்டு. ஸ்வயஞ்ஜோதியாக உள்ள ஆத்மா தெரியாதபடி அஞ்ஞான இருட்டு செய்கிறது. இப்படி அஞ்ஞானியாக இருப்பவர்களுக்கு ஸூர்யோதய ஸ்தானமான ஒரு பிரகாசமான நகரம் மாதிரி ஞான வெளிச்சத்தை அம்பாளின் பாததூளி கொடுக்கிறது. 'மிஹிரன்'என்றால் ஸூர்யன். 'த்வீப நகரம்'என்பது ஒரு தீவிலுள்ள நகரம். உதய காலத்தில் பார்த்தால் ஸூர்யன் ஸமுத்ர மத்தியிலிருக்கும் ஒரு தீவிலிருந்து எழும்புகிறமாதிரி தோன்றும். அதை வைத்தே இங்கே சொல்லியிருக்கிறது.

"அஞ்ஞான தமஸுக்கு ஸூர்யனாக அம்பாளின் பாததூளி இருக்கிறதென்று சொன்னாலே போதுமே!'ஸூர்யன உதிக்கிற தீவிலிருக்கும் நகரமாக'என்பானேன்?"என்று நினைப்பவர்கள் வேறே பாடபேதம் சொல்கிறார்கள்: "திமிர மிஹிரோத்தீபநகரீ"என்று. திமிர மிஹிர உத்தீபந-கரீ (உத்தீபந-க(ka)ரீ ;த்வீப-நக(ga)ரீ) என்று சந்தி பிரியும். 'உத்தீபன

ம்'என்றால் பிரகாசமாகத் தூண்டிவிடுவது. ஆகையால், இப்படி வைத்துக் கொண்டால் 'அஞ்ஞானம் என்ற உள்ளிருட்டைப் போக்கி ஞானப் பிரகாசத்தை தூண்டி விடும் ஸூர்யன்'என்று அர்த்தம் கொடுக்கும்.

ஸப்ரபஞ்சம், நிஷ்ப்ரபஞ்சம் என்று இரண்டு. ப்ரபஞ்ச விஷயங்களோடு ஸம்பந்தப்பட்ட ஸகுண ப்ரம்மம் 'ஸப்ர பஞ்சம்'. ப்ரபஞ்சமும், அதற்கு ஹேதுவான மாயையும் அடிப்பட்டுப்போய் ஸத்தாமாத்ரமாயிருக்கும் நிர்குண ப்ரம்மம் நிஷ்ப்ரபஞ்சம். ஸப்ரபஞ்சமான ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு அம்பாளின் பாதத்தூளியைக் காரணமாகச் சொல்லி முந்தின ச்லோகத்தில் அவளை ஸகுண ப்ரம்மமாகக் காட்டினார். இந்த ச்லோகத்தில் அவளை மாயையிருள் நீக்கும் ஸூர்யப் பிரகாசம் என்று சொல்லி, நிஷ்ப்ரபஞ்சமாக, நிர்குண ப்ரம்மமாகக் காட்டுகிறார்.

அவருக்கு அத்வைத நினைப்பு துருத்திக் கொண்டு அப்பப்போ வந்துவிடும்!பக்தி ஸ்தோத்ரமானாலும் வந்துவிடும்!உடனேயே, 'த்வைத பாவத்தில் இருக்கிறவர்களுக்கல்லவா சொல்ல வந்தோம்?அதனால், எதுதான் முடிந்த முடிவான ஸத்யமோ, லக்ஷ்யமோ அதை [அத்வைதத்தை]எல்லாருக்கும் அங்கங்கே தெரிவிக்கத்தான் வேண்டுமென்றாலும் விஸ்தாரம் பண்ணப்படாது'என்று த்வைதமாக ச்ருதியை இறக்கிவிடுவார்!அப்படித்தான் இங்கே அவித்யா தமஸ் நிவ்ருத்தியானதைச் சொன்னவிட்டு, லோகத்தில் எல்லாரும் ஆசைப்படுகிற புத்திசாலித்தனம், ஐச்வர்யம் ஆகியவற்றைச் ஆரம்பிக்கிறார்.

அவித்யை என்பது ஆத்மாவைத் தெரிந்து கொண்ட மஹான்களைத் தவிர பாக்கி அத்தனை பேரையுமே பிடித்திருப்பது. மஹா புத்திமான்கள், கெட்டிகாரர்களுங்கூட அவித்யையிலிருந்து விடுபட்டவர்களாக இருக்க மாட்டார்கள். அம்பாளின் பத ரஜஸ் [தூளி] அவித்யைப் போக்கி ஆத்ம ஞான பிரகாசத்தை அளிக்கிறது என்று உச்ச ஸ்தானத்தைச் சொன்னதற்கு அப்புறம் அதற்கு அடுத்த படியில் அது புத்திப் பிரகாசமான உயர்ந்த த்வைத ஞானத்தை மந்த புத்தியுள்ளவர்களுக்கு கொடுக்கிறது

என்கிறார்:

ஜடாநாம் சைதந்ய-ஸ்தபக-மகரந்த-ஸ்ருதிஜரீ

'ஜடாநாம்'என்றால் 'ஜடம் மாதிரி அறிவு மந்தித்து இருப்பவர்களுக்கு'. அவர்கள் அறிவு வறண்டு போயிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது அதற்குள்ளே அம்பாளின் பாததூளி ஒரு தேனான ப்ரவாஹத்தை ஃபௌன்டனாகப் பீய்ச்சியடித்து பசுமையாகப் பண்ணுகிறது. 'ñèó‰î v¼Füg'â¡ø£™ «î¡ Šóõ£ý^F¡ çªð÷¡ì¡. «îªù¡ø£™ Ü¶ å¼ ¹wð^F«ôî£«ù áÁ‹? Þƒ«è ÜŠð®Šð†ì ¹wð‹ â¶? â¶ªõ¡ø£™, '¬êî¡ò vîðè‹'- põ æ†ìºœ÷ ÜPªõ¡Aø Ìƒªè£^¶. ¬êî¡ò‹ â¡ð¶ C^ â¡Aø ðóñ ë£ù‰î£¡. Ü¶«õ ñ‰î ¹^Fè£ó˜èÀ,° ¹^FŠ Hóè£ê^¬î «îù£èŠ ð£Œ„²Aø Ìƒªè£^î£è Þ¼‚Aø¶.

(லலிதா)ஸஹஸ்ரநாமத்திலேயும் 'சைதன்ய குஸுமம்'என்று வருகிறது. குஸுமம் என்றால் புஷ்பந்தான். 'ஞானப் பூங்கோதை'என்றே காளஹஸ்தியில் அம்பாளைச் சொல்கிறது. சைதன்யமே அம்பாளுக்கு அர்க்யோபசாரம், சைதன்யமே அவளுக்கு அர்ச்சனையாகிற புஷ்பம் - "சைதன்யார்க்ய ஸமாராத்யார், சைதன்ய குஸுமப்ரியா"என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிறது. சேர்ந்தாற்போலவே "ஸ்தோதிதா", "தருணாதித்ய பாடலா"என்றெல்லாமும் நாமாக்கள் வருகிறது. எப்போதும் உதயகாலம் போலப் பிரஸன்னமாக இருப்பவள் 'ஸ்தோதிதா'. உதய ஸூர்யன் ஜோதிச் சிவப்பாக இருப்பவள் 'தருணாதித்ய பாடலா'. ஆசார்யாள் 'திமிர மிஹிர த்வீப நகரீ'என்றும் 'சைதன்ய ஸ்தபகம்'என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லியிருப்பது ஸஹஸ்ரநாமத்தின் இன்ஸ்பிரேஷனிலேயே இருக்கலாம்.

அவருக்கு ஸஹஸ்ரநாம நினைவு என்றால். மூகருக்கு அவர் சொல்லியிருப்பதன் நினைவு! 'சைதன்ய ஸ்தபகம்'என்று ஆசார்யாள் சொன்னதன் நினைவிலேயே மூகர் 'பஞ்ச சதி'யின் ஆரம்ப ச்லோகத்திலே அம்பாளை 'பர-சித்-ரூபா'என்று சொல்லி, அந்த சித்தே கருணை வடிவமாகிக் 'காச்மீர ஸ்தபகம்', அதாவது குங்குமப்பூவின் பூங்கொத்து மாதிரி அத்தனை கோமளமான சரீரம் எடுத்துக்

கொண்டிருக்கிறது; காஞ்சீபுரத்தில் காமகோடி பீடத்தில் ஒரு கொடி படர்கிற மாதிரி எழுந்தருளியிருக்கிறது என்று பாடியிருக்கிறார்:

காரண-பரசித்ரூபா காஞ்சீபுரஸீம்நி காமபீடகதா *

காசந விஹரதி கருணா காச்மீர-ஸ்தபக-கோமலாங்க-லதா **

ஸாதரணமாக லோக ஜனங்களுக்கு வேண்டியது அறிவும் செல்வமுந்தானே?(அம்பாளின் பாததூளி)அறிவுப் பிரகாசம் தருவதைச் சொன்னவுடனேயே செல்வம் தருவதையும் சொல்கிறார்:

தரித்ராணாம் சிந்தாமணி-குணநிகா

சிந்தாமணி ஒருததர் இஷ்டப்படுவதையெல்லாம் கொடுக்கும் தெய்வாம்சமுள்ள மணி. எதைச் சிந்தித்தாலும் தந்துவிடுகிற மணியானதால் அப்படிப் பெயர். றிலீவீறீஷீஉஷீஜீலீமீக்ஷீ'உ உமீ்ஷீஸீமீ என்று வெள்ளைக்காரர்கள் ஒன்றைச் சொல்கிறார்கள். ஆனால் அது வேறே, இது வேறே. ஃபிலாஸஃபர்'ஸ் ஸ்டோன் என்பது நம் 'ஸ்பர்ச வேதி'என்று சொல்கிற மாதிரியான ஒன்று. அது பட்டால் பித்தளை, ஈயம் இரும்பு எதுவானாலும் தங்கமாக மாறி விடும். அது (உ)லோஹ கன்வர்ஷன் மட்டுமே பண்ண முடியும். சிந்தாமணி அப்படியில்லை. நாம் என்ன இஷ்டப்பட்டாலும் அதை உண்டாக்கிக் கொடுத்துவிடும்.

இப்படி மூன்று - காமதேநு, கல்பக வ்ருக்ஷம், சிந்தாமணி என்று. சிந்தாமணி அசேதனமான ஜட பதார்த்தத்தைச் சேர்ந்தது - கல்லு, மண்ணு மாதிரியான பதார்த்த வகை. கல்பக வ்ருக்ஷம் சேதனமும் ஜடமும் சேர்ந்த தாவர வகை. தாவரங்கள் ஜலத்தைக் குடிக்கிறது, வேர் கிளை என்று வளர்கிறது, இனவிருத்தி பண்ணிக் கொள்கிறது ஆகிய அம்சங்களால் சேதன ஜாதியில் வருகின்றன. ஆனால் அவை இருந்த இடத்தை விட்டு நடக்க முடியாது; மிருகங்களுக்கும் மநுஷ்யர்களுக்கும் உள்ள பலவிதமான அறிவு-உணர்ச்சிகளும் அவற்றுக்கு இல்லாததால் ஜட ஜாதியிலும் வருகின்றன. காமதேநு பூர்ணமான சேதன ஜீவன். ரூபத்தில் மிருகமான பசுவாயிருப்பது. அறிவிலோ மநுஷ்யர்களுக்கும் மேலே திவ்யமான நிலையிலிருப்பது.

இப்படி, இஷ்டத்தைக் கொடுப்பதில் மூன்று தினுஸான ஸ்ருஷ்டியினங்களில் ஒவ்வொன்றிலும் ஒன்று. கிஸீவீனீணீறீ ரிவீஸீரீபீஷீனீ, கூஷிமீரீமீமீ'ணீதீறீமீ ரிவீஸீரீபீஷீனீ, விவீஸீமீகூஷீணீறீ ரிவீஸீரீபீஷீனீ என்ற மூன்றில் ஒவ்வொன்றிலும் ஸகல இஷ்ட பூர்த்தி பண்ணுவதாகக் காமதேநு, கல்பக வ்ருக்ஷம், சிந்தாமணி என்று ஒவ்வொன்று இருக்கின்றன.

அதில் அம்பாளின் பாததூளி தரித்ரர்களுக்கு இஷ்டப்பட்ட செல்வத்தையெல்லாம் தருவதில் சிந்தாமணியாக இருக்கிறது - சிந்தாமணி குணனிகா!'குணனிகா'என்றால் ஹாரம்.

பின்னாடி இந்த ஸௌந்தர்ய லஹரியிலேயே ஒரு இடத்தில் ருத்ராக்ஷமாலை, ஸ்படிக மாலை மாதிரி சிந்தாமணிகளைக் கோத்துச் செய்த ஜப மாலையையே உருட்டிக் கொண்டு சில மஹா பாக்யசாலிகள் அம்பாள் மந்திரத்தை ஜபிக்கிறார்களென்று வருகிறது: பஜந்தி த்வாம் சிந்தாமணி குண நிபந்தாக்ஷவலயா:. காமதேநுவின் பிரஸ்தாவமும் அந்த ச்லோகத்திலே வருகிறது. அந்த பாக்யசாலிகள் அம்பாள் மந்த்ரத்தால் ஹோமம் பண்ணும்போது ஸாதாரணப் பசு நெய்யால் பண்ணாமல் காமதேநுவின் பாலிலிருந்து எடுத்த நெய்யாலேயே பண்ணுகிறார்களாம்:சிவாக்நௌ ஜுஹ்வந்த:ஸுரபிக்ருத தாராஹுதி சதை:. 'ஸுரபிக்ருத ம்'என்றால் காமதேநுவின் நெய். ஸுரபி என்பது காமதேநுவின் இன்னொரு பெயர்.

ஒரு சிந்தாமணியே கேட்டதையெல்லாம் கொடுத்து விடும். கேட்டதற்கும் மேலே எத்தனையோ பங்கு (மடங்கு)அம்பாள் பாததூளி கொடுக்குமாதலால் பல சிந்தாமணிகளைக் கோத்த மாலையாக அதைச் சொல்லியிருக்கிறார்.

கல்பக வ்ருக்ஷம் பற்றியும் ஒரு ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார் (தற்போது பொருள்கூறும் மூன்றாவது ச்லோகத்திலேயே "சைதன்ய ஸ்தபகம்"என்பதை "சைதன்யமென்கிற கல்பக விருக்ஷத்தின் பூங்கொத்து"என்றுதான் லக்ஷ்மிதரரின் புகழ்பெற்ற உரை விளக்கும்.). அதுவும் பாத மஹிமையைச் சொல்வதுதான். அங்கே கல்பகம் மாதிரியே இன்னும் நாலு தேவலோக விருக்ஷங்களும் கேட்டதையெல்லாம் கொடுப்பவையாதலால்

எல்லாவற்றையும் சேர்த்து 'தேவலோக தருக்கள்'("தரூணாம் திவ்யாநாம்") என்கிறார். அந்த நாலு என்னவென்றால் பாரிஜாதம் ஒன்று. மந்தாரம் இன்னொன்று. பக்த ஜனங்களுக்கு பகவான் கேட்டதெல்லாம் கொடுப்பதால்தான் "ச்ரித ஜன மந்தாரா!"என்று பஜனைப் பாட்டுகளில் வருவது. ஸந்தானம், ஹரிசந்தனம் என்பவை பாக்கி இரண்டு (தெய்விகமான மர வகைகள்):

பஞ்சைதே தேவதரவோ:மந்தாரா: பாரிஜாதக: *

ஸந்தாந் கல்பவ்ருக்ஷச்ச பும்ஸி வா ஹரிசந்தநம் **

என்ன சொல்கிறாரென்றால், "கல்பக விருக்ஷம் முதலான ஐந்தும் அதன் கீழே வந்து நிற்பவர்களுக்கு அந்த ஸமயத்தில் மாத்திரம் தங்கள் ஹஸ்தங்களான கிளை நுனியிலுள்ள துளிர்கள் மூலம் இஷ்ட பூர்த்தி தருகின்றன. தேவலோகவாஸிகள் மாத்திரந்தான் அப்படி அந்த விருக்ஷங்களுக்குக் கீழே போய் நிற்க முடியும். ஆனால் ஸர்வ ஜனங்களுக்குமே, எங்கேயோ குச்சில் குடிசையில் கிடக்கும் தரித்ரனுக்குங்கூட உன் பாதங்கள் ஸதாகாலமும் இஷ்ட பூர்த்தி தருகின்றன"- என்று சொல்லி, இன்னும் சில சமத்காரங்களும் பண்ணியிருக்கிறார். இங்கே விட்டுப்போன Vegetable Kingdomஅங்கே வந்துவிடுகிறது என்பதற்காகச் சொல்ல வந்தேன்.

[மூன்றாம் ச்லோகப்படி]அம்பாளின் பாததூளி அவித்யை இருட்டுக்கு ஸூர்யோதயமாயும், ஜடத் தன்மை போக்கும் சைதன்யத் தேனாகவும், தரித்ரம் போக்கும் சிந்தாமணியாகவும் இருக்கிறது.

இன்னும் என்ன பண்ணுகிறது அந்தப் பாததூளி?நமக்கு முக்யமாகத் தெரிவது அறிவாளியாவதும், ஐச்வர்யவானாவதுந்தான். ஆனால் ஆசார்யாளுக்கு முக்யம் நம்முடைய அவித்யை போய் நாம் ஸம்ஸார நிவ்ருத்தி பெறுவதுதான். அவித்யா தமோ நிவ்ருத்தியில்தான் [இந்த ச்லோகத்தை] ஆரம்பித்தார்.

முடிக்கிறபோதும் அதையே ஸம்ஸார நிவ்ருத்தி என்ற பெயரில் சொல்கிறார். நமக்காக விட்டுக் கொடுத்து நடு

இரண்டு வரியில் புத்திசாலித்தனம், ஐச்வர்யம் என்கிறவற்றைச் சொன்னாலும், அதற்கு இரண்டு பக்கமும் காவல் போடுகிற மாதிரி ஆரம்ப-கடைசி வரிகளில் அஞ்ஞான நிவ்ருத்தியையே சொல்லியிருக்கிறார். "தரித்ராணாம் சிந்தாமணி குணநிகா"என்றவர் அடுத்தாற் போல "ஜந்ம ஜலதெள நிமக்நாநாம் தம்ஷ்ட்ரா முராரிபு வராஹஸ்ய பவதி"என்று சொல்லி முடித்திருக்கிறார்.

'பிறவிப் பெருங்கடல்'என்று திருவள்ளுவர் சொல்கிறாரே, அதுதான் 'ஜன்ம ஜலதி'. 'பொய்ம் மாயப் பெருங்கடல்'என்று அப்பர் ஸ்வாமிகள் சொல்கிற ஸம்ஸார ஸாகரமும் அதுதான். அதிலே நாம் அப்படியே முழுகிப் போயிருக்கிறோம். "நிமக்நாநாம்"என்றால் 'முழுகிப்போனவர்களுக்கு'. ஸம்ஸார ஸாகரத்தில் முழுகிப் போனவர்களுக்கு அம்பாளுடைய பாததூளி என்னவாக இருக்கிறது என்றால், - "முராரிபு வராஹஸ்ய தம்ஷ்ட்ரா பவதி":வராஹமாக வந்த மஹாவிஷ்ணுவின் கோரைப் பல்லாக இருக்கிறது. 'தம்ஷ்ட்ர ம்'என்றால் கோரைப் பல். வராஹாவதாரத்தின் கோரைப் பல்லாக இருக்கிறதென்று சொன்னால் என்ன அர்த்தம்?

சில்பங்களில் பார்த்தால் தெரியும் - பூவராஹ ஸ்வாமி பூமாதேவியைக் கோரைப் பல்லின் மேலேதான் தூக்கி வைத்துக் கொண்டிருப்பார். ஹிரண்யாக்ஷன் பூமா தேவியை அபஹரித்துக் கொண்டு போய் ஒரு பெரிய ஸமுத்ரத்துக்குள்ளே ஒளித்து வைத்துவிட்டான்!அப்போது ஸ்வாமி வராஹாவதாரம் பண்ணிக் குடைந்து கொண்டு போய் அந்த பூமாதேவியை - பூமியைத்தான் - தன்னுடைய அழகான கோரைப் பல்லால்தான் நெம்பியெடுத்து அப்படியே அதன் உச்சியில் நிறுத்திக் கொண்டு வெளியிலே கொண்டுவந்து விட்டார். அப்படி, ஸம்ஸார ஸாகரத்தில் முழுகியுள்ள நம்மையெல்லாம் அதிலிருந்து வெளியிலே கொண்டுவந்து தூக்கி நிறுத்தும் கோரைப் பல்லாக அம்மாளின் சரண பாம்ஸு [பாததூளி]இருக்கிறது: "ஜந்ம ஜலதெள நிமக்நாநாம் தம்ஷ்ட்ரா முராரிபு வராஹஸ்ய பவதி."

விஷ்ணுவின் அவதாரமான வராஹம் என்பதற்கு 'முராரிபு வராஹம்'என்று போட்டிருக்கிறார். முரன் என்ற அஸுரனை

ஸம்ஹரித்தவராகையால் 'முரரிபு'என்று பேர். 'முராரி'என்றாலும் அதே அர்த்தந்தான். [ரிபு அரி என்ற இரு பதங்களுக்கும் விரோதி என்று அர்த்தம்.]முரன் நரகாஸுரனின் கூட்டாளி. க்ருஷ்ண பரமாத்மாதான் நரகாஸுர வத ஸமயத்தில் அவனுக்கு ஸஹாயமாக வந்த இவனையும் வதம் செய்தார். மஹாவிஷ்ணுவின் ஸாக்ஷாத் நாமாக்களில் எதையும் சொல்லாமல் முந்தைய ச்லோகத்தில் க்ருஷ்ணாவதாரத்தில் ஏற்பட்ட சௌரி என்ற பேரைச் சொன்னாற் போலேயே இங்கேயும் முரரிபு என்று போட்டிருக்கிறார். ஆசார்யாளுக்கு க்ருஷ்ணாவதாரத்திடம் ஒரு அலாதியான பக்தி உண்டு என்ற அபிப்ராயத்திற்கு இந்த மாதிரியான சான்றுகள் பலம் கொடுக்கின்றன.

---



## கையால் கொடுக்காத வர, அபயம்

அடுத்த ச்லோகத்திலும் பாத மஹிமையையே ஸ்தோத்ரிக்கிறார். ஆனால் அதை முதலிலேயே அவிழ்த்து விடாமல் ஸஸ்பென்ஸ் வைத்துப் பண்ணியிருக்கிறார்.

த்வதந்ய:பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:

த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்யபிநயா *

பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சா ஸமதிகம்

சரண்யே லோகாநாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ **

[(லோகானாம் சரண்யே) அனைத்துலகங்களுக்கும் புகலிடமே!(த்வத் அன்ய:) உன்னைத் தவிர ஏனைய (தைவத கண:) தெய்வங்களின் கூட்டம் (பாணிப்யாம்) கரங்களால்

(அபய வரத:) அபயமும் வரமும் தருவது. (த்வம் ஏகா) நீ ஒருத்தியே (ப்ரகடித வர அபீதி அபிநயா) அபிநயத்தால் [கர முத்திரையால்]வர-அபயத்தை ப்ரகடனம் செய்பவளாக (ந ஏவ அஸி) இல்லவே இல்லை. [ஏனெனில்](பயாத் த்ராதும்) பயத்திலிருந்து காக்கவும் (வாஞ்சா ஸமதிகம்) [வரத்தால் பெற]விரும்புவதற்கும் கூடுதலாகவே (பலம் தாதும் அபிச) பலனை வழங்குவதற்குங்கூட (தவ) உனது (சரணௌ ஏவ) பாதங்களே (நிபுணௌ ஹி) திறம் பெற்றவையன்றோ?]

"உன்னைத் தவிர மற்ற எல்லா ஸ்வாமிகளும் கைகளில் அபய வரத முத்ரைகளோடு இருக்கிறார்கள். அதாவது, பக்தர்களுடைய பயத்தைப் போக்குவதாகவும், அவர்கள் வேண்டுகிற வரத்தைத் தருகிறதாகவும் ஹஸ்த முத்திரை காட்டுகிறார்கள். நீ ஒருத்திதான் ஒருபோதும் அந்த மாதிரி வராபயங்களை [வர அபயங்களை]அபிநயித்துக் காட்டி ப்ரகடனம் பண்ணாமலிருக்கிறாய்"என்று ச்லோகத்தின் முதல் பாதிக்கு அர்த்தம்.

"என்ன இப்படிச் சொல்கிறாரே!அப்படியானால் அம்பாள் அபயம் தரமாட்டாளா?அபயாம்பிகை என்ற பேரோடு மாயவரத்தில் இருப்பவளாச்சே!('அவயம்' 'அவயம்'என்று அங்கே பெண்டுகளுக்குப் பேர் வைப்பது 'அபயம்'தான்!) வர ப்ரதாயினி என்றும் அவளை விசேஷித்துச் சொல்வதுண்டே!"

வராபயம் அம்பாள் தர மாட்டாளென்று ஆசார்யாள் சொல்லவில்லை. மற்ற ஸ்வாமிகள் மாதிரி ஹஸ்தத்தினால் தரமாட்டாளென்றுதான் சொல்கிறார்.

"அப்படீன்னா?"

அப்படி என்றால் அவள் பாதங்களினாலேயே வராபயம் தருகிறாளென்று அர்த்தம். அதைத்தான் பின் பாதியில் சொல்கிறார். "தவ ஹி சரணௌ ஏவ நிபுணௌ";உன் பாதங்களே அந்த ஸாமர்த்தியம் - வராபயம் தருகிற ஸாமர்த்தியம் - பெற்றவையாக இருக்கின்றன;அதிலே நிபுர்ணர்களாக, 'ஸ்பெஷலிஸ்ட்'களாக இருக்கின்றன!

தேவலோக விருக்ஷங்கள் கையான கிளையால் பண்ணுவதை அம்பாள் காலாலேயே பண்ணுகிறாள் என்று பின்னாடி ச்லோகத்தில் வருவதை முன்னாடி சொன்னேனே, அதே அபிப்ராயம்! "பக்தர்களை பயத்திலிருந்து ரக்ஷிக்கவும் ("பயாத் த்ராதும்"), Üõ˜èœ «è†Aø õóƒè¬÷ ñ†´I™ô£ñ™ ÜîŸ°‹ ü£vFò£è õ£K õöƒè¾‹ ("ðôñH ê õ£…ê£ úñFè‹ î£¶‹") à¡ êóíƒè«÷ ¬ï¹‡ò‹ [M«êûˆ Fø¬ñ]ªðŸP¼,A¡øù"â¡Aø£˜.

ஹஸ்தத்தால் செய்வது ஒருவர் மெனக்கிட்டு, உழைத்து, கிழைத்துச் செய்யும் கார்யம். வேலைக்குக் 'கார்யம்'என்று பேர் இருப்பதே 'கர'த்தை வைத்துத்தான். அப்படி மற்ற ஸ்வாமிகள் மெனக்கிட்டு, ஸ்ட்ரெய்ன் பண்ணிக்கொண்டு ஹஸ்த முத்ரை காட்டித்தான் வராபயங்களை அளிக்க முடிகிறது. நீயோ ஸர்வசக்தை. லோசாக ஸங்கல்பித்தே எதையும் பண்ணிவிடுவாய்.

லோகத்தின் ஸ்ருஷ்ட்யாதி (படைப்பு முதலான)பஞ்ச க்ருத்யங்களையுங்கூட க்ஷணகாலப் புருவ நெரிப்பினாலேயே அம்பாள் பண்ணுவித்துவிடுகிறாளென்று பின்னாடி சொல்கிறார்:"க்ஷண-சலிதயோ:ப்ரூ-லதிகயோ:" - 'கொடி மாதிரியுள்ள புருவத்தை க்ஷணம் நெரித்தே'என்று அர்த்தம். அப்பேர்ப்பட்டவள் அபய வர ப்ரதானத்தை கைக் கார்யமாக முயற்சி பண்ணிச் செய்ய வேண்டியிருக்கவில்லை!அவள் பாட்டுக்கு இருந்தாலே போதும். அவள் எப்படி இருக்கிறாள்?என்ன ஸ்வரூபம்?

"லோகாநாம் சரண்யே!"

என்கிறார். உலகமெல்லாம் அடைக்கலம் புகுகிற இடமாக, புகலிடமாக இருக்கிறாள் அதனால் - லோக ஜனங்கள் "ச(sa)ரணம் என்று வந்து அவளுடைய ச(cha)ரணங்களில் தானே விழுகிறார்கள்?அவள் பாட்டுக்கு ஸ்வாபாவிகமாக இருக்கிறபடி சரணாலயமாக இருந்து கொண்டிருக்கிற போது அவளுடைய அந்தச் சரணங்களே சரண் புகுந்தவர்களுக்கு வராபயம் வழங்கிவிடுகின்றன. ஒரு கார்யமாக இல்லாமல் ஒரு புஷ்பம் வாஸனை வீசுகிற மாதிரி!

பயம் போகவேண்டும் என்று குறிப்பிட்டுக் கேட்கும் போது கேட்டபடி அபயந்தான் தரமுடியும்;அதற்கு மேல் ஒன்று தருவதற்கில்லை. ஆனால் இது வேண்டும், அது வேண்டும் என்று ஏதாவது வரம் கேட்டால் வேண்டியதற்கும் ஜாஸ்தியாகத் தர இடமுண்டு. L.I.G. ஃப்ளாட் கேட்டால் H.I.G. தர இடமுண்டு. அந்த மாதிரி "வாஞ்சா ஸமதிக"மாக - விரும்பியதற்கும் மேலாக - அம்பாள் பாதங்களே கொடுத்துவிடுகின்றன.

ஒரு கேள்வி தோன்றலாம். "அநேக வரங்கள் கொடுப்பதில் ஒன்றாகவே அபயத்தையும், அதாவது பயமில்லாமலிருக்கிற நிலையையும் கொடுக்கலாந்தானே?இது வேணும், அது வேணும் என்று அநேகம் கேட்கிறாற் போல 'பயமில்லாமல் இருக்கணும்' என்பதையும் ஒரு வரமாகக் கேட்டால் ஸ்வாமி கொடுத்துவிட்டுப் போகிறார். ஆகையால் வரத்திலிருந்து தனியாகப் பிரித்து அபயம் என்று வைப்பானேன்?"என்று தோன்றலாம்.

அபயம் என்பது கொடுத்து வாங்கிக் கொள்ளும் ஒரு சரக்கு இல்லை. அத்வைதத்திற்கே அது இன்னொரு பெயர். "த்வைதம் இருந்தால்தான் பயம்"என்று உபநிஷத்து சொல்கிறது. ஒன்றேதான் இருப்பது என்றால் அப்போது எதனிடமிருந்து பயம் வரமுடியும்?இரண்டாம் வஸ்து இருந்தாலே அதன் நிமித்தமாக பயமும் உண்டாகிறது. "பிரம்த்தில் ஒருவன் கிஞ்சித்தேனும் பேதத்தை நினைத்து விட்டாலும் பயம் உண்டாகிறது. பெரிய வித்வானுங்கூட பிரம்மத்தை இப்படி வேறே வஸ்துவாக நினைத்து விட்டால் அதனிடமே பயப்பட ஆரம்பித்துவிடுகிறான்!"என்று தைத்திரீயத்தில் இருக்கிறது. ஸகுணமாக ஈச்வரன் என்று நமக்கு வேறாக பிரம்மத்தை நினைக்கிறபோது "பயபக்தி"என்றே சொல்லும்படியான பாவந்தானே ஏற்படுகிறது?'God-fearing' என்பதையே மநுஷ்யனின் உசந்த லக்ஷணமாக அவர்களும் [மேல் நாட்டினரு ம்]சொல்கிறார்கள். அந்த பயம் எப்போது போகிறதென்றால் அந்த ஈச்வரனுக்கு வேறாக ஜீவாத்மா என்று நாம் ஒருத்தரில்லை என்று அத்வைதமாக ஆகிறபோதுதான். ஒரு

வஸ்துதான் இருக்கிறது என்ற அந்த ஸ்திதியில் வரம் கொடுப்பவர் என்று ஒருவர், வாங்கிக் கொள்வதற்கு என்று ஒருவர் என்பதாக ஆஸாமிகள் - இரண்டு பேர் - கிடையாது. ஏதோ ஒரு அடையாளம் தெரிய வேண்டுமென்பதற்காக ஒரு ரூபத்தின் ஹஸ்தத்திலே காட்டும் அபய முத்ரை வாஸ்தவத்தில் அரூபமான தத்வந்தான். கொடுக்கல்-வாங்கல் 'வர'பிஸினஸ் நடக்க முடியாத பரம தத்வமான நிலைக்கு அந்த முத்ரை ஒரு அடையாளம். சின்னச் சின்ன பயங்களிலிருந்து ஜனன மரண பயம், த்வைதமாகப் பிரிந்திருக்கிற பயம் வரையில் எல்லாவற்றையும் ஸ்வாமி போக்கினாலும் அபயம் என்றால் அது அத்வைத ஸ்திதிதான். ஆகையால்தான் அதை வரத்தோடு சேர்க்காமல் தனியாக வைத்திருக்கிறது.

'வராபயம்'என்று இரண்டாக வைப்பானேன் என்றால் மற்ற [த்வைத]ஸித்தாந்திகள், 'பவ வீதி'என்கிற ஸம்ஸார பயத்தைப் போக்குவதுதான் மிக உயர்ந்த அநுக்ரஹமாதலால், அதன் முக்யத்வத்தைக் கருதி 'அபயம்'என்று தனியாக வைத்திருக்கிறது என்று சொல்லி நிறுத்திக் கொண்டுவிடுவார்கள்.

அபயத்தில் வலது கை மேல் பக்கமாக நீட்டிக் கொண்டிருக்கும். அது மேல் உலகமான வைகுண்ட-கைலாஸாதிகளைக் குறிப்பதாக அவர்கள் சொல்வார்கள். ஆகாசம் மாதிரி அகண்டமான அத்வைத ஸ்திதியைக் குறிப்பதாக நாங்கள் [அத்வைதிகள்]சொல்கிறோம்.

வரஹஸ்தத்தைப் பார்த்தால் அது கீழ்ப்பக்கமாக நீட்டிக் கொண்டிருக்கும். " 'அது வேணும், இது வேணும்'ஸமாசாரமே கீழானதுதான். அதனால்தான் இப்படி. அதோடு இதைக் கொடுப்பதும் இடது கை. இடது கையால் கொடுப்பது கௌரவமில்லை"என்று சொல்வதுண்டு. ஆனால் இதுகளையே நல்லபடியாக எடுத்துக்கொள்ளவும் இடமிருக்கிறது. அம்பாளே இடது பாகமாக இருப்பவள் தானே?செயலில்லாத அபய ஸ்திதிக்கான ஹஸ்தம் செயலில்லாத சிவபாகத்தைச் சேர்ந்ததாக இருக்கிற மாதிரி, அநுக்ரஹச் செயலைச் செய்கிற வர ஹஸ்தம் சக்தியுடைய

பக்கத்தில் பொருத்தமாக இருக்கிறது. கீழே நீட்டிக் கொண்டிருக்கும் அந்தக் கை எதைக் காட்டுகிறது என்று பார்த்தால் ஸாக்ஷாத் சரணாரவிந்தத்தைத்தான் காட்டுகிறது! "என் பாதத்தைத் தருகிறேன். பிடிச்சுக்கோ! அதுதான் பெரிய வரம்"என்று தெரிவிக்கிறது. இப்படி [வரமுத்திரையை]உசத்தியாகவும் அர்த்தம் செய்து கொள்ளலாம்.

---



## ஸ்தோத்திர மூர்த்தியைக் குறிப்பாலுணர்த்தல்

ஆனால் இந்த ஹஸ்த ஸமாசாரமே அம்பாள் தவிர மற்ற ஸ்வாமிகளுக்கானதுதான் என்று ஆசார்யாள் இந்த ச்லோகத்தில் சொல்கிறார். "நீ இப்படி வராபய முத்ரைகளை ஹஸ்தத்தால் காட்டுவதேயில்லை: த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்யபிநயா".

லலிதா த்ரிபுரஸுந்தரியாக அம்பாள் இருக்கும் ரூபத்தை மனஸில் நினைத்துக்கொண்டே அவர் இப்படிச் சொல்வது. அவள்தானே இந்த ஸ்தோத்ரத்திற்கு விஷயமானவள்?

சிவன் அசைவதும் அவளாலேதான் என்றதால் எல்லா ஸ்வாமிகளுக்கும் இருக்கிற எல்லா சக்தியும் அவளிடமிருந்து வந்ததுதான் என்றாகிறது. அப்படியிருக்கும்போது அவர்களெல்லாம் வராபயம் கொடுக்கிறார்களென்றால் அவர்களுக்கு அந்த சக்தி வந்திருப்பதும் அவளிடமிரு ந்துதான். அப்போது அவள்தான் உச்சமான வராபய தாயகியாயிருக்க வேண்டும் என்றுதானே ஆகிறது?மற்ற ஸ்வாமிகள் கையால் செய்யும் அந்தக் கார்யத்தை அவள் அலக்ஷ்யமாக, லேசாகக் காலாலேயே பண்ணி விடுகிறாள். ஹஸ்த முத்ரை காட்டிக்கொண்டு பண்ணவில்லை. ஆனால்

இந்த அம்பாளே புவநேச்வரியாக இருக்கும்போது அவளுக்கு வராபய ஹஸ்தங்கள் உண்டு. த்ரிபுரஸு ந்தரியேகூட குழந்தையம்பாளாக பாலா என்று தனக்குத் தானே புத்ரியாக ஆனபோது அவளுக்கு வர ஹஸ்தம், அபய ஹஸ்தம் உண்டு.

"த்வத்-அந்ய:பாணிப்யாம் அபய வரதோ தைவதகண:"'உனக்கு அந்நியமான மற்ற தைவதகணங்கள் [தெய்வக் கூட்டம்]வராபய ஹஸ்தங்களோடு இருக்கின்றன'என்று ஆசார்யாள் சொல்லும்போது பாக்கி எல்லா ஸ்வாமிகளுக்குமே அந்த இரண்டு ஹஸ்தங்கள் உண்டு என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளக் கூடாது. மற்ற ஸ்வாமிகளிலும் அந்த இரண்டு ஹஸ்தமில்லாமல் எத்தனையோ இருக்கின்றன. எந்த முக்கு முகனை திரும்பினாலும் நாம் பார்க்கிற விக்நேச்வர மூர்த்திக்கு வராபயம் இருக்கிறதா?இல்லை. நடராஜாவுக்கு?அபயம் இருக்கிறதே தவிர வரம் இல்லை. பெரும்பாலான ஆலயங்களில் நாம் பார்க்கும் விஷ்ணு துர்க்கைக்கும் அபயந்தான் இருக்கிறது. மீனாக்ஷிக்கு இரண்டும் இல்லை. மஹாவிஷ்ணுவைப் பார்த்தாலும் சங்க சக்ர கதா பத்மங்களோடு இருக்கிறாரே தவிர வரம், அபயம் இரண்டும் இல்லை. வரதராஜா என்றே பெயர் வைத்துக்கொண்டு காஞ்சீபுரத்தில் இருக்கிறவருக்கு அபயஹஸ்தந்தான் இருக்கிறது;வரஹஸ்தமில்லை!அந்தக் கையால் கதையைப் பிடித்துக் கொண்டிருப்பார். மஹாலக்ஷ்மிதான் எங்கே பார்த்தாலும் வராபய ஹஸ்தையாக இருக்கிறாள். ஸரஸ்வதிக்கு இரண்டுமே இல்லை. ஸாதாரணமாக துர்கை - ஸுப்ரஹ்மண்ய மூர்த்தங்களில் சிலதுகூட - வலது பக்கம் அபய ஹஸ்தமும், அதற்கு நேரான இடது ஹஸ்தம் தொடையில் 'ஊரு ஹஸ்தம்'என்றும் இருக்கின்றனவென்றால் வேங்கட ரமண ஸ்வாமியோ வலது ஹஸ்தத்தில் வரமுத்ரையும் அதற்கு நேர் இடது ஹஸ்தம் ஊருவிலுமாக இருக்கிறார்.

லலிதா த்ரபுரஸுந்தரிக்கு வராபயம் கிடையாது. அதற்குப் பதில் இக்ஷுதநுஸும் [கரும்பு வில்லும்]புஷ்ப பாணமும் இருக்கும். ஆனாலும் பின் ச்லோகமொன்றில் ஆசார்யாள் இந்த அம்பாளின் ஒரு கை மட்டுமில்லாமல் நாலுமே அபய

ப்ரதமானது என்ற அபிப்ராயத்தைத் தெரிவித்திருக்கிறார். ஆதியில் ப்ரம்மாவுக்கும் பரமசிவன் மாதிரி ஐந்து சிரஸ் இருந்தது. அப்புறம் அவர் ஒரு பிசகு பண்ணிவிட்டதால் சிவன் அவருடைய சிரஸுகளில் ஒன்றைக் கிள்ளிப் போட்டுவிட்டார்.

பாக்கி நான்கு சிரஸுகளுக்கு ஆபத்து வராமல் ஒரே காலத்தில் ஒவ்வொரு சிரஸுக்கு அம்பாளின் ஒவ்வொரு ஹஸ்தம் அபயம் தரும் என்ற நம்பிக்கையோடு ப்ரம்மா அம்பாளுடைய சதுர் புஜங்களை ஸ்தோத்ரம் பண்ணுகிறாரென்று அங்கே [ஆசார்யாள்]சொல்லியிருக்கிறார். பதிக்கு மாறாகத் தான் பண்ணும் போது, அதைக் காலாலேயும் பண்ணினால் அபசாரமாகிவிடுமென்று அப்போது மட்டும் கையால் அபய தானம் செய்வாள் போலிருக்கிறது!......

ஆகக்கூடி, அம்பாளுக்கே த்ரிபுஸுந்தரியைத் தவிர மற்ற ரூபங்களில் சிலதில் அபய வரத ஹஸ்தமும் உண்டு;அம்பாளைத் தவிர மற்ற ஸ்வாமிகளில் பல பேருக்கு அந்த இரண்டு ஹஸ்தங்கள் இல்லாமலும் இருக்கிறது. இருந்தாலும் கவிக்கு இருக்கிற ஸ்வாதந்திரியத்தால், எடுத்துக் கொண்ட விஷயத்திற்குத் தனி மஹிமை காட்ட வேண்டும் என்ற அபிப்ராயத்தில், "உன்னைத் தவிர மற்ற தைவத கணங்கள் வராபய முத்ரை காட்டுகிறார்கள்;நீதான் ஒருபோதும் அப்படிப் காட்டிப் பிரகடனம் பண்ணாதவள்"என்று கொஞ்சம் exaggeration-ஆகவே [மிகையாகவே]சொல்லியிருக்கிறார்.

முத்ரை காட்டுவதை 'அபிநயம்'என்று சொல்லியிருக்கிறார்:'வராபீத்-யபிநயா'. நாட்ய சாஸ்திரத்தில் அபிநயங்களைச் சொல்லும்போது மந்திர சாஸ்திரத்தில் வரும் முத்ரைகளையேதான் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். உள்ளேயிருக்கும் பாவத்தை வெளியிலே முகக் குறிப்பாலோ, கையை காலை ஆட்டியோ தெரிவிப்பது 'அபிநயம்'. அதில் கையால் முக்யமாகக் கை விரல்களால், பிடிக்கிற அபிநயம் 'º^¬ó'.

முன்னாடி வந்துள்ள மூன்று ச்லோகங்களில் அம்பாளுடைய

அநேக ரூப பேதங்களில் இந்த ஸ்தோத்ரம் யாரைக் குறித்தது என்று வெளிப்படச் சொல்லவில்லை. டைட்டிலைப் பார்த்தாலும் கண்டுபிடிக்க முடியாதபடி 'ஸௌந்தர்ய லஹரி', 'ஆனந்த லஹரி'என்றே இருக்கிறது. இங்கே (நான்காவது ச்லோகத்தில்)தான் கொஞ்சம் நீறீ஖ூமீகொடுக்கிற மாதிரி வராபயம் இல்லாத மூர்த்தி என்ற அளவுக்குச் சொல்லியிருக்கிறார். ஆனாலும் என்ன இல்லை என்று சொல்லியிருக்கிறாரே தவிர என்ன இருக்கிறதென்று - அவளுக்கு எத்தனை ஹஸ்தங்கள்?அவற்றில் என்னென்ன இருக்கிறது?என்று - சொல்லவில்லை. அதனால் பல தினுஸாக ஊஹம் பண்ண இடம் கொடுக்கிறது. அடுத்த இரண்டு ச்லோகங்களிலும் ரஹஸ்யத்தை உடைத்து விடாமல், ஆனாலும் மேலே மேலே 'க்ளூ'கொடுக்கிறார். அதற்கும் அப்புறந்தான் (ஏழாவது ச்லோகத்தில்)இன்ன மூர்த்தி என்று த்யான ச்லோகம் மாதிரி லக்ஷணங்களை மடமடவென்று வர்ணித்து ஸ்ரீ வித்யா தந்த்ரத்திற்கு அதிதேவதையாயிருக்கப்பட்ட லலிதாம்பிகை - த்ரிபுர ஸுந்தரி - தான் ஸ்தோத்ர தேவதை என்று ஸ்வச்சமாகத் தெரிவித்திருக்கிறார். ஆனால் அப்போதுங்கூட அந்தப் பேரைச் சொல்லவில்லை. ஸ்தோத்ரம் பூராவிலுமே ஒரு இடத்திலேயும் சொல்லவில்லை. எடுத்த எடுப்பிலேயே முழுக்க உடைத்துச் சொல்லாமல் படிப்பவர்களின் ஆர்வத்தைத் தூண்டிக் கொண்டே போய்க் கொஞ்சங் கொஞ்சமாகத் திறந்து காட்டி அப்புறம் அப்படியே அவிழ்த்துக் கொட்டிவிடும் கவி 'டெக்னிக்'கை ஆசார்யாள் அழகாகப் பின்பற்றியிருக்கிறார்.

---



## காமமும் அநுக்ரஹமாகுமா?

அடுத்த ச்லோகத்தில் [ஐந்தாவது ச்லோகத்தில்]முதல்

பாதியில், அம்பாளைப் பூஜை பண்ணித்தான் மஹாவிஷ்ணு திவ்ய மோஹனமான மோஹினி ஸ்வரூபம் பெற்றுப் பரமசிவனின் த்ருட மனஸையும் கலக்கித் தன்னிடம் ப்ரேமை கொள்ளும்படிப் பண்ணினார் என்று சொல்லியிருக்கிறது.

அம்ருத மதன காலத்தில் பகவான் [விஷ்ணு]மோஹினி ரூபமெடுத்து அஸுரர்களை மயக்கி, அவர்களுக்கு அம்ருதம் போடாமலே தன்னுடைய ரூப லாவண்யத்திலும் பேச்சு ஸாமர்த்தியத்திலும் மயங்கியிருக்கும்படிப் பண்ணி தேவர்களுக்கு மட்டுமே போட்டார் என்ற கதை தெரிந்திருக்கலாம். அப்புறம் மோஹினியிடம் பரமேச்வரனே மோஹித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டார். அப்போது மோஹினிக்குப் பிறந்த குழந்தைதான் ஐயப்ப சாஸ்தா என்று ஒரு கதை சொல்வதுண்டு. அம்மா-அப்பா பேரை வைத்து அவரை ஹரி-ஹரபுத்ரன் என்றும் சொல்கிறது. 'சிவபாதாதி கேசாந்த ஸ்தோத்ர'த்தில் ஆசார்யாள் பிள்ளையாரோடும் ஸுப்ரஹ்மண்யரோடும் சாஸ்தாவையும் மூன்றாவது சிவ குமாரராகச் சொல்லி ஸ்தோத்திரித்திருக்கிறார். ஆசார்யாள் அவதாரம் பண்ணின மலையாள தேசத்தில் தான் ஐயப்ப சாஸ்தாவுக்கு அதிக ப்ரக்யாதி இருந்து வந்திருக்கிறது.

ப்ரஹ்மத்திடம் ஜகத்வியாபார இச்சை தோன்றியதை ச்ருங்காரமாக வைத்தே ப்ரஹ்மத்தையும் ப்ரஹ்ம சக்தியையும் காமேச்வர-காமேச்வேரி ஜோடியாகச் சொல்வது என்றேனல்லவா? மஹாவிஷ்ணு மோஹினியாகப் பரமேச்வரனை ச்ருங்காரத்தில் ஈடுபடுத்தியது அம்பாள் ஆராதனையின் பலன்தான் என்று இங்கே சொல்வதால் நம் ஸ்தோத்திரத்திற்குப் பாத்திரமான மூர்த்தி காமேச்வரியாகவே இருக்கலாம் என்ற 'க்ளூ'கிடைக்கிறது. வராபய ஹஸ்தங்கள் இல்லாத மூர்த்தி என்று மேல் ச்லோகத்தில் சொன்னது இதற்குப் பக்க பலம் கொடுக்கிறது.

ச்லோகத்தின் பின் பாதி நம் ஊஹம் ஸரிதான் என்று உறுதிப்படுத்துகிறது. அதில் என்ன சொல்லியிருக்கிறதென்றால், "மன்மதனும் உன்னை நமஸ்கரித்து உன் அநுக்ரஹத்தை ஸம்பாதித்துத்தான் ரதியின் கண்கள் மொய்க்கும்படியான - அதாவது, அவள் கண்ணுக்கு மாத்திரம் தெரிகிற - ரூபத்தைப் பெற்று, ஜிதேந்திரியர்களான முனிவர்கள் உள்பட எல்லார் மனஸுக்குள்ளேயும் புகுந்து

மோஹத்தை உண்டு பண்ணுகிறான்"என்று சொல்லியிருக்கிறது.

ஈச்வரன் பஸ்மம் பண்ணிய மன்மதனை மறுபடி உயிர்பித்து, பழையபடி பதவியில் அமர்த்தியது காமேச்வரியின் கார்யமேயாகையால் இது நம் ஊஹத்தை உறுதிப்படுத்தப் பெரிய பக்கபலமாகிறது.

காமாதி தோஷங்கள் போகத்தான் நாம் பக்தி பண்ண வேண்டும். அப்படியிருக்கும்போது பக்திக்கு லக்ஷ்யமான தெய்வமே ஞானமூர்த்தியான ஈச்வரன் காமத்தில் விழுவதற்கும், முனிவர்களும் அப்படி மோஹிப்பதற்கும் சக்தி கொடுத்ததாகச் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணினால் ...? 'ஆசார்யாள் பேரில் சொல்கிற உசந்த ஸ்துதியாச்சே, [அதில்]குற்றம் கண்டுபிடிக்கலாமா?'என்று தயக்கமாக இருந்தாலும் அப்படியும் கேள்வி கிளம்பத் தானே செய்கிறது?ப்ரபஞ்சத் தோற்றம் போனால்தான் ஞானம். ஆனால் இங்கேயோ ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி அம்பாளால்தான் என்று ஸ்தோத்ரம்!காமம் போனால் தான் ஞானம். இங்கேயோ காமனுக்கே 'பவர்'கொடுத்தவளாக்கும் என்று அம்பாளுக்கு ஸ்தோத்ரம்!'இப்படி இருக்கலாமா?இப்படித்தான் என்றால் காமமே அநுக்ரஹமா?'என்று உள்ளே கொஞ்சம் குடையத்தானே செய்கிறது?

இப்படிக் கேட்டால் - எதிரெதிர் சக்திகள் இருக்க வேண்டும். முட்டிக்கொண்டு, மோதிக்கொண்டு, மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டும். அந்த எதிரியைப் போராடி ஜயிக்க வேண்டும். உள்ள சண்டையும் கெட்ட சக்திகளோடு போட்டே அப்புறம் ஜயக்கொடி நாட்ட வேண்டும். அதுதான் பெருமை. அதில்தான் ரஸம். எதிர்ப்பே இல்லை, அதுபாட்டுக்கு எல்லாம் 'ஸ்மூத்'தாகப் போய்க் கொண்டிருப்பது என்றால் நல்ல ஸ்திதியில் இருக்கிற நல்லதுங்கூடத் தெரியாமல் ஒரே 'போராக'த்தான் ஆகும்!நிழலருமை வெயில் இருந்தால்தான் தெரியும் என்கிறோமல்லவா?

எதிரெதிர் சக்திகளின் பரஸ்பரச் சிண்டுபிடியானது முடிவில் நல்லது ஜயிப்பதற்கே என்று காட்டத்தான் தன் பாட்டில் இருந்து கொண்டிருந்த ப்ரஹ்மத்திற்குள் ப்ரபஞ்சமும், காமாதிகளும் வந்தது. ப்ரஹ்மத்தின் காமத்தினால் ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி ஏற்பட்டது. அப்புறம் ஜீவ ப்ரபஞ்சம் வளர்ந்து கொண்டே போவதற்காக ஒவ்வொரு ஜீவனுக்கும் காமம் என்று வைத்தது.

நல்லது கெட்டது என்று எதிரெதிர் சக்திகள் என்பதில் ஒரு பெரிய விசித்ரம் என்னவென்றால் நல்லதிலேயே கெட்ட அம்சமும் இருக்கும்;கெட்டதில் நல்ல அம்சமும் இருக்கும்!அதுகளை ஸூக்ஷ்மமாகப் புரிந்து கொண்டு போராடுவதில்தான் ப்ரபஞ்ச நாடக ரஸம் பூர்ணமாகிறது. காமம், க்ரோதம் தப்பு என்பது 'ஜெனரலைஸ்ட் ஸ்டேட்மென்ட்'. உள்ளே புகுந்து பார்த்தால் அவற்றிலேயும் நல்லது உண்டு. நல்ல விஷயங்களில் காமம் வேண்டும்;கெட்ட விஷயங்களிடம் க்ரோதம் வேண்டும் - அப்போது அவை தப்பில்லை, அவச்யமானவையே என்றாகிவிடுகிறது. இதே மாதிரி இன்னொரு பக்கம், நல்லதாகத் தெரிகிறவற்றுக்குள்ளும் கெட்டது ஒளிந்து கொண்டிருக்கும்.

எல்லாவற்றுக்கும் மேலே இரண்டு உசந்த விஷயங்கள்:ஸ்வாமி கருணை பண்ணுவது என்று ஒன்று, ஆஸாமி அவரிடம் அப்படியே சரணாகதி பண்ணிவிடுவது என்று ஒன்று. இந்த இரண்டும் ஸ்ருஷ்டி இருந்தால்தான், அந்த ஸ்ருஷ்டியிலே கெட்டவைகளும் இருந்து அவற்றோடு போராட வேண்டியிருந்தால்தான் ஸாத்தியம். அவர் ஸைடில் அவர் பண்ணும் 'ஹையஸ்ட்'கருணைதான். நம் ஸைடில் நாம் பண்ணக்கூடிய 'ஹையஸ்ட்'சராணாகதிதான். (சிரித்து)நம்மால் ஒன்றும் பண்ணமுடியாதென்று கிடப்பது தான் நாம் பண்ணக்கூடிய சிகரமான கார்யம்!பண்ணிப் பார்த்தால் அந்த நிறைவே பதில் சொல்லும்.

இப்படி இரண்டு ஸ்ருஷ்டி இல்லாவிட்டாலோ, ஸ்ருஷ்டி இருந்தும் ஜீவர்களைக் காமாதிகள் பிடுங்கி எடுத்து குஸ்திக்கு வராவிட்டாலோ கருணைகாட்ட அம்பாளுக்கு ஏது ஆப்பர்சூனிடி?ஒரு திண்டாட்டமுமில்லை என்று

அவாளுவாளும் த்ருப்தர்களாக, ஸ்வஸ்தமாக இருந்துவிட்டால் கருணையை யார் 'கேர்'பண்ணப் போகிறார்கள்? எதிர் சக்திகளோடு போராட முடிகிற மட்டும் போராடி, அப்புறம் நம் சக்தியால் ஜயிக்க முடியாது என்று புரிந்து கொண்டு "நீதான்!"என்று கிடக்கும்போதுதான் சரணாகதி என்ற பேரின்பம் கிடைக்கும். அப்போதுதான் அவளும் ரக்ஷணைக்கு ஓடோடி வருவதில் கருணைக்கு முழு ஸ்கோப்பும் கிடைத்து அவளுக்கும் பேரின்பம் கிடைக்கும். அந்த ரக்ஷணை கார்யமாகிறபோது அந்த ஸைடின் கருணையும், இந்த ஸைடின் சரணாகதியும் ஸைட் எல்லாம் எடுப்பட்டுப் போய் ஒரே பேரின்ப ப்ரவாஹமாக ஸங்கமாகி நிற்கும். ஜயக்கொடி பறக்கும். ஜீவன் ஜயித்தானா, அம்பாள் ஜயித்துக் கொடுத்தாளா என்ற ஆராய்ச்சிகளுக்கே இடமில்லாமல் அப்போது இவனே அவளாக இருப்பான்!

லக்ஷம், கோடிப் பேர் கெட்டதிலேயே போய், கெட்டுப் போய் வீணாகப் போனாலும் பரவாயில்லை. கோடியில் ஒருத்தர் புறப்பட்டு இப்படி ஜயசாலியாகி ஸ்ருஷ்டிக்கு அந்தண்டை போய்விட்டால் அதுவே போதும். ஒரு மரத்தில் உண்டாகிற அத்தனை கொட்டைகளும் மரமாக வேண்டும் என்று உண்டா?ஒரு மநுஷ்யனின் ஜீவ பிந்து அத்தனையும் பிரஜைகளாவதுண்டா?

அப்படி, ஜீவ லோகத்தில் கோடியில் ஒருத்தர் பூர்ணத்வம் பெற்றாலும் போதும்தான். அதிலேயே ஸ்ருஷ்டியின் 'பர்பஸ்'பூர்த்தியானதாகத்தான் அம்பாள் நினைக்கிறாள்.

வீணாய்ப் போனவர்கள் எல்லாருங்கூட நிரந்தரமாக வீணானவர்களில்லை. ணிமீமீகூஷீஸீணீறீ பீணீனீஸீணீமீவீஷீஸீ (மீட்சியற்ற நிரந்தர தண்டனை)நம்முடைய சாஸ்திரத்தில் இல்லை. மத்வாச்சாரியார்தான் அந்த மாதிரி அபிப்ராயத்தில் சொன்னவர். பயமுறுத்தியாவது நல்லதில் திருப்பவேண்டுமென்று சொன்னதாக வைத்துக்கொள்ளலாம். மஹா பாபிக்கும் உயர்வு உண்டு என்பதுதான் பொதுக் கொள்கை. அப்படி யுக யுகாந்தரங்களுக்கு அப்புறமாவது அவள் அத்தனை வீணாகப் போன குழந்தைகளையும் ஸரிப்பண்ணி தன் மடியில் இழுத்துப் போட்டுக் கொள்ளாமல் விடமாட்டாள்.

ராஜா யுத்தத்திற்குப் போனானாம். ஒரு ஸாதாரண ப்ரஜையை ஏதோ முக்ய கார்யமாக அங்கே தன் 'காம்ப்'பில் வந்து பார்க்கச் சொன்னானாம். "தண்டு இறங்கின இடத்திலே தங்களைப் பார்க்க யாரையும் விடமாட்டாளே!முத்ரை மோதிரம் மாதிரி ஏதாவது தரணும்"என்று அந்த ஆள் கேட்டானாம். ராஜாவும் கொடுத்தானாம். பார்த்தால் அது சத்ரு ராஜாவின் முத்ரை மோதிரமாக இருந்ததாம்!அந்த ஆளுக்கு ஒன்றும் புரியவில்லையாம். ராஜாவே சிரித்துவிட்டுப் புரிய வைத்தானாம். "அந்தக் கார்யம், இந்தக் கார்யம் என்று ஏகப்பட்ட பேர் என் ஸொந்த முத்ரை வாங்கிக் கொண்டிருக்கா. அதனாலே அந்த க்யூவே பெரிசாப் போயிடும்!அதிலே நின்னு நீ என்னைப் பிடிக்கிறதுக்குள்ளே அவஸரக் காரியம் ஆறியே போய்விடும்!அதனால்தான் சத்ரு பக்ஷத்து மோதிரம் கொடுத்தேன். இப்படி சிலது அவாளோட சாரர்கள் (ஒற்றர்கள்)கிட்டேயிருந்து பறிமுதல் பண்ணி வெச்சிருக்கோம். அதுலே ஒண்ணு கொடுத்தேன். இதை நீ ஒளிச்சு வெச்சுண்டு என் பாடி-கார்டுகள் கண்ணில் படறமாதிரிப் பதுங்கிண்டு வரதா பாவனை பண்ணினாலே போறும். 'டக்'னு பிடிச்சு, பரிசோதனை பண்ணை சத்ரு மோதிரத்தைப் பார்த்து, எல்லாருக்கும் முன்னாடி உன்னை எனக்கு முன்னே கொண்டு வந்து நிறுத்திடுவா!"என்றானாம்.

அப்படித்தான் அம்பாள் காமம், க்ரோதம் முதலான எதிர்த்தரப்பாகத் தோன்றுகிற முத்ரை மோதிரங்களைக் கொடுத்தே நம்மை அவளிடம் வரும்படிப் பண்ணிக் கொள்கிறாள்!உனக்கு என்ன வேண்டும் என்று கிருஷ்ண பரமாத்மா குந்தியைக் கேட்டாராம். "கஷ்டந்தான் வேண்டும். அதைக் கொடு. அப்போதுதான் உன்னை நினைப்பேன்!"என்று அவள் பதில் சொன்னாளாம். கஷ்டம் எப்படி வரும்?காம க்ரோதாதிகளால்தான். அவற்றின் பிடுங்கல் இருந்தால்தான் அவனை நினைத்து ப்ரார்த்திப்போம். இப்படிப் பார்த்துக் கொண்டு போனால் ஸ்ருஷ்டி, காமாதிகள். எல்லாமே அநுக்ரஹந்தான் என்று புரியும்.

பிற்பாடு ஒரு ஜீவனுக்குக் காருண்யத்தைக் காட்ட ஆப்பர்சூனிடியாகவே காமத்தைக் கொடுப்பது என்பது அந்த ஒரு ஜீவனோடு முடிந்துபோகிற விஷயமில்லை.

அவனுடைய காமத்தினால் உண்டாகப் போகிற ஜீவர்களுக்கும் அவளுடைய காருண்யம் பாயவே இந்த ஏற்பாடு. அவர்களுக்கு இவனால் ஜன்மா ஏற்படுவதே அந்தக் காருண்யத்தால்தான். இப்படிச் சொல்லும்போது, பொதுவாக நினைப்பதற்கு ஆப்போஸிட்டாகவே இதுவரை சொன்ன சில ஸமாசாரங்களோடு இன்னொன்று சேர்கிறது! "பிறவி கொண்டேன்!"என்று பெரியவர்கள் அலறிக்கொண்டு பாடி வைத்திருக்க, ஒருத்தனின் காமத்தால் பல ஜீவர்கள் பிறப்பதே அவர்களுக்கு அநுக்ரஹம் என்றால் எப்படி?

'பிறவி வேண்டேன்'ஸரிதான். ஆனாலும் மூட்டை மூட்டையாய் கர்மா பாக்கி இருக்கிறவர்கள் அப்படிச் சொல்லி விட்டால் தப்பித்துக் கொண்டுவிட முடியுமா? பாக்கியைத் தீர்த்துக் கொள்வதற்கும் பிறவிகள் எடுத்து நல்லபடி வாழ்ந்துகொண்டு போனால்தானே முடியும்? லோகத்தில் காமமில்லை என்றால், கர்மா பாக்கியோடு செத்துப்போனவர்கள் மறுபடி பிறப்பது எப்படி?

வாய்க்கிற பிறவியில் அவர்கள் பழசை (பழைய கர்மாவை)க் கழுவிக் கொள்ளாமல் அழுக்கு மேலும் தடிப்பேற விட்டால் அது அவர்களுடைய குற்றந்தான். பிறவியைப் போக்கிக் கொள்ள ஆப்பர்சூனிடியாகவே பிறவி என்று புரிந்து கொண்டு, அதற்கானதைச் செய்வதுதான் முறை.

ஜீவர்கள் பிறவியிலிருந்து தப்பிப்பதற்கான பிரயாஸைகளைச் செய்வதற்குத் வாய்ப்புத் தரவேண்டும் என்ற கருணையுள்ளத்தால்தான் அம்பாள் லோகத்தில் காமத்தை வைத்து, அதற்கு அதிகாரியாக மன்மதனை அப்பாயின்ட் செய்தது. தர்ம-அர்த்த-காமம் என்று புருஷார்த்தங்களிலேயே ஒன்றாக அதை வைத்து மத்யம வயஸில் க்ருஹஸ்தாச்ரமத்தில் சாஸ்ரோக்தமான வியவஸ்தைகளோடு அதையும் அநுபவிக்கலாம் என்று வைத்திருக்கிறாள். வியவஸ்திகமாக (வரையறை ஒழுங்கோடு)அப்படிப் பண்ணிக்கொண்டு போனால் அப்புறம் அதுவே விடுகிற காலத்தில் ஜாடாவாக விட்டுப்போய், சுத்தி ஏற்பட்டு ஸந்நியாஸத்திற்கு ஏற்றிவிடும்.

ஸ்ருஷ்டியிலே எதை எடுத்தாலும் விதிவிலக்கு இருப்பதற்கேற்க பால்யத்திலிருந்து கடைசிவரை சுத்த ப்ரஹ்மசர்யம், ஸந்நியாஸம் என்றிருக்கும்படியாகவும்

கொஞ்சம் பேரை, ரொம்பக் கொஞ்சம் பேரை, படைத்திருக்கிறாள்.

"இந்த ஸமாதானங்களெல்லாம் ஸரி. ஆனால் ஞான மூர்த்தியாக இருக்கப்பட்ட ஈச்வரனைக் காமத்தினால் கலக்கிக் களங்ப்படுத்துவானேன்?ஜிதேந்த்ரியர்களான முனிவர்களை அப்படிப் பண்ணுவானேன்?இப்படிப் பண்ணுவதற்காக அவளைப் புகழ்வானேன்?"

அவர்கள் அப்படி ஆனது அதோடு முடிந்துவிடவில்லை. அப்புறம் அவர்கள் மறுபடி பரிசுத்த மூர்த்திகளாகவும் ஆகத்தான் ஆனார்கள். ஒரு ஸமயத்தில் அப்படி அவர்கள் ஆனார்களென்றால் அதுவும் பெரிய லோக கல்யாணம் ஏற்படவேதான் நடந்தது. இப்படி ஹரிஹரபுத்ரனாக ஒருத்தன் பிறந்தால்தான் தன்னைக் கொல்ல முடியுமென்று ஒரு அஸுரன் வரம் வாங்கிக் கொண்டிருப்பான். விச்வாமித்ரர் மேனகையிடம் மோஹித்திருக்காவிட்டால் சகுந்தலையும், சாகுந்தலமும் கிடைத்திருக்குமா? வ்யாஸர் க்ருதாசியிடம் வசீகரமானதால்தான் ப்ரஹ்மசர்யத்தில் ஒப்பில்லாத சுகாசார்யாளின் உத்பவம் ஏற்பட்டது.

பராசக்தியின் ஸஹாயமில்லாவிட்டால் யாரானாலும் தடுக்கிவிழ வேண்டியதுதான் என்பதையும் இந்த விருத்தாந்தங்கள் நமக்கு ஞாபகப்படுத்தி, 'நாமாக ஸாதித்துவிடலாம்' என்று மிதப்பாக நினைக்காமல் அவள் அருள் துணையை எப்போதும் நாடி அடங்கியிருக்கு ம்படியாகவும் செய்கின்றன.

இன்னொரு விஷயம் என்னவென்றால், யாரொருவர் ஒன்றை ஆக்குவதற்குச் சக்தியும் அதிகாரமும் பெற்றிருக்கிறாரோ அவரேதான் அதை அழிப்பதற்கும் சக்தி, அதிகாரம் பெற்றவராவார் என்பது. லிஜிஸ்லேஷன் செய்ய (சட்டம் போட)ராஜாங்கத்திற்குத்தான் சக்தி உண்டு என்றால் அதை ரிஸைன்ட் பண்ணவும் (ரத்து செய்யவும்)அதற்குத் தான் அதிகாரமுண்டு. ராஜாங்கச் சட்டத்தை நாம் மாற்ற முடியுமா?ஸ்ருஷ்டியையும், காமத்தையும் உண்டாக்கும் அதிகாரமும் சக்தியும் அம்பாளுக்கு உரியவை என்றால் ஸ்ருஷ்டியிலிருந்து மோசனம் கொடுக்கவும் அவளால்தான் ஆகும்;காமத்திலிருந்து கைதூக்கி வெளியேற்றிவிடவும் அவளால்தான் ஆகும்.

காமனை அதிகாரியாக வைத்து அவள் முனிவர்களையும் மோஹிக்கப் பண்ணுகிறாள் என்னும்போதே அதற்கு மறுபக்கமாக, - ஒரு காசு இருந்தால் அதில் நமக்குத் தெரிகிற பக்கமாக 'ஆப்வெர்ஸ்'என்று ஒன்று இருக்கிறதோடு தெரியாததாக 'ரிவர்ஸ்'என்று இன்னொரு பக்கம் இருக்கிற மாதிரி, முனிவர்களையும் அவள் மன்மத அதிகாரியைக் கொண்டு மயக்கப் பண்ணுகிறாள் என்கிற ஆப்வெர்ஸுக்கு ரிவர்ஸாக - அதே மன்மதனிடம், "இவர்களிடம் உன் கைவரிசையைக் காட்டாமல் ஓடிப்போ"என்று அவள் சில ஜீவர்களை உத்தேசித்துச் சொன்னால் அவன் அவர்களைக் களங்கப்படுத்தாமல் ஓடவேண்டியதுதான் என்றும் ஏற்படுகிறது. நமக்குத்தான் அவன் அதிகாரியோயொழிய அவளுக்கு ஸர்வென்ட்தான். நாம் காம ஜயம் பண்ணவேண்டுமானால் நாமாக ஸாதித்துக்கொள்ள முடியாது. அவள் அவனுக்கு உத்தரவு போட்டுத்தான் அது நடக்க வேண்டும். அவனை ஏவுகிற அவளேதான் அவனைத் தடுக்கவும் அதிகாரம் உடையவள். அவனை ஏவுவதை மட்டுமே ச்லோகத்தில் சொல்லியிருந்தாலும் அதன் ரிவர்ஸையும் நாம் புரிந்து கொண்டு அவளே காம நாசம் அருள்கிறவள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

---



## காமனை வெற்றி வீரனாக்கிய காடக்ஷசக்தி

அடுத்த [ஆறாவது]ச்லோகம் முழுக்கவும் மன்மதன் விஷயமாகவே பண்ணியிருக்கிறார். அத்வைதத்திலிருந்து காமத்தால் (இச்சையால்) த்வைதத்தைக் காட்டி அப்புறம் கருணையால் த்வைதத்தை அத்வைதமாக்குவதே அம்பாளின் லீலையில் மைய ஸ்தானமாயிருப்பதால் காமத்துக்கு ரூபகமான காமனுக்கு இங்கே முக்யம்

ஜாஸ்தி!அவளுக்கே காமேச்வரி, காமாக்ஷிஎன்று திவ்ய நாமாக்கள் சொல்கிறோம்.

தநு:பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்சவிசிகா:

வஸந்த:ஸாமந்தோ மலய-மருத் ஆயோதந ரத: *

ததாப்யேக:ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்

அபாங்காத் தே லப்த்வா ஜகதிதம் அநங்கோ விஜயதே **
[(ஹிமகரிஸுதே) இமயமலையின் மகளே![மன்மதனுடைய] (தநு:)வில் (பௌஷ்பம்) புஷ்பங்களாலானது. (மௌர்வீ) வில்லின் நாண் (மதுகரமயீ) தேனீக்களாலானது. (விசிகா:) அம்புகள் (பஞ்ச) ஐந்து [தான்]. (ஸாமந்த) [மன்மத மன்னனுக்கு அடங்கித் துணையாகவரும்]சிற்றரசன் (வஸந்த:) இளவேனிற் பருவம். (ஆயோதந ரத:) போர்த்தேர் (மலயமருத்) மலய மாருதமாகிய பொதியத் தென்றல். (ததா அபி) இவ்வாறெல்லாமிருந்தும் (தே) உனது (அபாங்காத்) கடைக்கண்ணிலிருந்து (காம அபி க்ருபாம்) ஏதொவொரு அருளை (லப்த்வா) அடைந்தே (அனங்க:) உடம்பே இல்லாதவனான மன்மதன் (ஏக:) ஒருவனாகவே (இதம் ஜகத் ஸர்வம்) இவ்வுலகம் முழுவதையும் (விஜயதே) வெற்றி கொள்கிறான்.]

'அடியோடு வலிவே இல்லாத உபகரணங்களை வைத்துக் கொண்டே மன்மதன் லோகம் பூராவையும் ஜயித்துவிடுகிறான். அந்த சக்தியை அவனுக்குத் தருவது எது என்றால் அம்பாளுடைய கடாக்ஷலேசந்தான்'என்ற விஷயம் இந்த ச்லோகத்தில் சொல்கிறார்.

என்ன உபகரணங்கள்?முதலில் "தநு: பௌஷ்பம்". அப்படியென்றால் 'புஷ்பத்தாலான வில்'.

ஜகத்திலிருக்கும் ஜீவ ஸமூஹம் முழுதையும் ஜயிக்க வேண்டும் - அதாவது அவர்களைக் காமத்தின் வாய்ப்படுத்த வேண்டும் - என்று யுத்தத்திற்குப் புறப்படுகிறான் மன்மதன், தேரிலேறிக் கொண்டு. கையிலே தநுஸும் பாணமும் எடுத்துக் கொண்டு புறப்படுகிறான். அந்த தநுஸ் என்ன,

பாணம் என்ன, கூட்டாளி யார், தேர் என்ன என்று பார்த்தால் சிரிப்பாக வருகிறது!அவை ஒன்றைவிட ஒன்று திராபையாக இருப்பதைப் பார்க்கிறோம்.

முதலில் தநுஸைப் பார்த்தால் அது புஷ்பங்களைக் கோத்துப் பண்ணியதாக இருக்கிறது. தநு:பௌஷ்பம்.

மன்மதனுக்குக் கரும்பு வில் என்று பிரஸித்தம். எல்லாருக்கும் இரும்பு வில் என்றால் இவனுக்குக் கரும்பு வில்!கொஞ்சம் ஜாஸ்தி வளைத்தாலும் 'மளுக்'கென்று முறிந்துவிடும். ஆனால் ஆசார்யாளோ அதை விடவும் அதி பூஞ்சையான புஷ்பவில் என்கிறார். இரும்பளவு இல்லா விட்டாலும் கரும்பும் கரும்பும் கனமானதுதான். அதனால் ஒரு போடு மண்டையில் போட்டால் போதும்!'அதற்காக ஆசார்யாள் இப்படிப் புஷ்பம் என்று மாற்றலாமா?

ஒரு தேவதைக்கு கண்ணு, மூக்கு முதலான அங்கங்களைப் போலவே ஆயுதங்களும் ஜீணீகூஷீமீ ணீஸீபீ ஜீணீகூஷீநீமீறீ (அங்கமாகவே உள்ளடங்கியவை)ஆச்சே! "ஸாங்காயை ஸாயுதாயை" (அங்கங்களோடு, ஆயுதங்களோடு)என்று சேர்த்தே பூஜையும் நமஸ்காரமும் ஹோமமும் பண்ணுவது வழக்கமாச்சே!பின்னே ஏன் ஆயுதத்தை மாற்றிச் சொல்லியிருக்கிறார்?'பௌஷ்பம்'என்பதன் ஸரியான ரூபம் 'பௌண்ட்ரம்' என்று இருக்குமோ? 'புண்ட்ர இக்ஷு' என்கிற நாமக் கரும்புதான் காமனுக்கும் காமாக்ஷிக்கும் தநுஸு. 'ச்யாமாளா தண்டக'த்திலேயே அப்படித்தான் வருகிறது:புண்ட்ரேக்ஷுபாசாங்குச புஷ்ப பாணஹஸ்தே. புண்ட்ரேக்ஷுவைத்தான் 'பௌண்ட்ரம்'என்று சொல்லி, அது தப்பாக 'பௌஷ்பம்'என்று வந்து விட்டதோ?'- இப்படியெல்லாம் யோஜித்துக் கொண்டிருந்தேன். அப்புறம் 'அமர'த்தில் என்ன சொல்லியிருக்கிறதென்று ஞாபகப்படுத்திக் கொண்டு பார்த்தேன். பார்த்தால் பௌஷ்பமே ஸரிதான்;ஆசார்யாள் மாற்றவில்லை அப்படி நினைத்ததே அபசாரம் அல்லது அவர் 'பௌண்ட்ரம்'என்று ஸரியாகச் சொல்லியும் 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்'என்கிறபடி யாரோ சுவடி எழுதியவர்தான் தப்புப் பண்ணி விட்டார் என்று நினைத்ததும் தப்பு - என்று தெரிந்தது. மன்மதனின் பல பேர்களை 'அமரம்'அடுக்கிக் கொண்டு போகும்போது "புஷ்பதந்வா ரதிபதிர் - மகரத்வஜ ஆத்மபூ"என்று வருகிறது.

'புஷ்ப தந்வா'தான் ஆசார்யாள் சொல்லும் 'தநு:பௌஷ்ப'த்தை வைத்துக் கொண்டிருப்பவள். 'அமர'த்தில் இக்ஷு(கரும்பு)பிரஸ்தாபமேயில்லை.

ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்கு இரண்டு மயில் சொல்வார்கள். குழந்தை நாளிலிருந்தே அவருக்கு மயில் வாஹனம் உண்டு. அப்புறம் சூரஸம்ஹாரம் பண்ணி அந்த சூரனையும் மயிலாக்கி வாஹனமாகக் கொண்டார். இப்படி இரண்டு மயில் அவருக்கு இருக்கின்றன. ஒருசில க்ஷேத்ரங்களில் அவருக்கு இடது பக்கத்தில் மயிலின் சிரஸும் வலது பக்கத்தில் தோகை வாலுமாக இருப்பதைப் பார்க்கிறோம். அதுதான் சூரனாயிருந்து மயிலான வாஹனம். சூர்மயில் என்றே சொல்வார்கள். ஆனால் பெரும்பாலான இடங்களில் ஸ்வாமிக்கு வலது பக்கம் மயில் சிரஸும் இடது பக்கம் தோகை வாலுமாகவே இருக்கும். அது ஆதியிலிருந்தே அவருக்கென்று ஏற்பட்ட தெய்விகமான மயில் என்பார்கள். (மூன்றாவதாக இந்திரன் ஸுப்ரஹ்மண்யரை மயிலாகித் தாங்கியதாகவும் சொல்வதுண்டு. இவ்விதமான மயில் நம்மை நோக்கி நிற்க, ஸ்வாமியும் அதன் மீது நம்மை நோக்கி வீற்றிருப்பார்.) இந்த மாதிரி மன்மதனுக்கும் இரண்டு தநுஸ் - இக்ஷுவால் ஆனது ஒன்று புஷ்பத்தால் ஆனது ஒன்று என்று தோன்றுகிறது.

அவனுடைய அம்பும் புஷ்பத்தாலானதுதான். "குஸுமேஷு:"என்பது 'அமர'த்திலுள்ள அவன் பெயர்களில் ஒன்று. 'குஸுமம்':புஷ்பம். 'இஷு': அம்பு. 'குஸுமேஷு:'என்றால் புஷ்ப பாணக்காரன். நம்முடைய ச்லோகத்தில் 'பஞ்ச விசிகா:'என்று வருகிறது. ஐந்து பாணங்கள் என்று அர்த்தம். எத்தனை பாணம் என்று கணக்குக் கொடுத்திருக்கிறதே ஒழிய எதனால் ஆனது என்று சொல்லவில்லை. ஸாதாரணமாக வீரர்கள் அம்பறாத்தூணியில் ஏகப்பட்ட பாணங்கள் வைத்திருப்பார்கள். இவனுக்கோ ஐந்தே பாணங்கள்தான்!அவையும் மெல்லிசான பூக்கள்!அந்த ஐந்து பூக்கள் அரவிந்தம் (தாமரை), அசோகம், சூதம் (மா), நவமல்லிகை, நீலோத்பலம் என்பவை என்று 'அமர'த்தில் இருக்கிறது. ஐந்து பாணங்களை உடையவன் என்ற அர்த்தத்தில் 'பஞ்சசரன்' என்றும் மன்மதனுக்கு அதில் ஒரு பேர் சொல்லியிருக்கிறது.

காடின்யமே (கடினத்தன்மையே)இல்லாத புஷ்ப வில். ஐந்தே ஐந்து பாணங்கள்தான். அந்த பாணங்களும், 'அம்பாகத் துளைத்தன'என்று உபமானத்தில்கூடச் சொல்கிறோமே, அப்படித் துளைக்கக் கூடியவையோ என்று பார்த்தால் நேர் மாறாயிருக்கிறது!ஸ்ருஷ்டியிலேயே ம்ருதுத் தன்மைக்குப் பேர் போன புஷ்பங்களே இவனுக்கு பாணங்கள்!குத்தித் துளைப்பதற்குப் பதில் எவருக்கும் பார்த்த மாத்திரத்தில் எடுத்து நம் அவயவங்களிலேயே ரொம்பவும் நுட்பமாயுள்ள கண்ணில் ஒற்றிக் கொள்ள வேண்டும் என்று தோன்றச் செய்கிற விசித்ரமானஸ பாணம்!

வில்லில் அம்பைப் பூட்ட நாண் வேண்டுமே, அது என்ன என்று பார்த்தால் வரிசையாக தநுஸின் அடி நுனிகளைக் குறுக்கே சேர்க்கிற வண்டுகள், தேன்வண்டுகள். "இவை மட்டும் கொஞ்சம் பயமுறுத்துகிறவைதானே? கொட்டினால் வலி தாங்க முடியாதே!" என்றால் இவை மன்மதனின் 'டார்கெட்'டான (குறியான)ஆஸாமியைக் கொட்டுவதற்காக ஏற்பட்டவையல்ல. டார்கெட் ஆஸாமியிடம் வண்டு போய்விட்டால் மன்மதன் எப்படி நாண் இல்லாமல் பாணத்தை விடமுடியும்?பின்னே இவை எதற்கு இருக்கின்றனவென்றால் கரும்பு வில் - அல்லது புஷ்ப வில் - புஷ்ப பாரணம் இவற்றின் ஸுகந்தத்தை ரஸித்துக்கொண்டு ரீங்காரம் செய்து கொண்டிருப்பதற்குத்தான்.

லோகத்திலுள்ள அத்தனை தித்திப்பு பக்ஷணத்திற்கும் அந்தத் தித்திப்பைத் தரும் வெல்லம் அல்லது சர்க்கரைக்கு மூலமான கரும்பாலான பரம மதுர வில் .......... ச்லோகத்தில் புஷ்பவில் என்றிருந்தாலும் கரும்பு வில் என்றுதான் வாயில் வருகிறது. அம்பாள் கையில் அதுதானே இருக்கிறது? காமனுக்கும் காமேச்வரிக்கும் ஒரே தநுஸ் என்பதால் இப்படிச் சொல்வதும் சரிதான். ருசிகளில் மாதுர்யம் மாதிரி உணர்ச்சிகளில் அன்பு என்பது. அன்புக்கு எதிரான த்வேஷத்திற்கு உறைப்பு ருசியை உபமானமாகச் சொல்கிறோம். "அவர் ரொம்பவும் காரமாகப் பேசினார்"என்றால் த்வேஷமாகப் பேசினாரென்றுதானே அர்த்தம்?அதனால் ஒருத்தரிடம் சண்டைபோட்டு ஜயிக்கப் போகிறோமென்றால் மிளகாயால் ஆயும் பண்ணி எடுத்துக் கொண்டு போனால் பொருத்தமாயிருக்கும்!மன்மதனோ நேர்மாறாகக்

கரும்பாயுதம் எடுத்துக் கொண்டு போகிறான்!

லோகத்தில் பரம மதுரம் கரும்பு. லோகத்தில் பரம ம்ருது புஷ்பம். ஒரு மரம் இருந்தால் அதன் பட்டை ஒரே கரடு முரடு. கொஞ்சம் தேய்பட்டால் நம் கையில் ரத்தமே வந்துவிடும். சிலதில் முள் வேறே!துளிர் மெல்லிசாக, கோமளமாக இருந்தாலும் அதில் அஹிதமாகக் கொஞ்சம் பிசுக்கும் இருக்கும். முற்றினால் மழமழப்பு எல்லாம் போய்ச் சருகாகிக் குத்துகிறது. பிஞ்சைப் பார்த்தால் சொர சொர, காய் கொஞ்சம் மழ மழவாகவும், பழம் நல்ல மழ மழவாகவும் இருந்தாலும் கைக்குக் கனமாயிருக்கின்றன. காம்பிலிருந்து வரும் பாலின் கசகசப்பு வேறே அஹிதமாக இருக்கிறது. புஷ்பந்தான் பரம சுத்தம், பரம லேசு, பரம ம்ருது, பரம அழகு என்று எல்லாமாகவும் இருக்கிறது. ஒரு மநுஷ்யன் என்ன காட்டாளாயிருந்தாலும் அவனுடைய கண் மட்டும் எப்படி நுட்பமாக, ஒரு தூசி பட்டால்கூடச் சிவக்கிற அளவுக்கு மென்மையாக இருக்கிறதோ, அப்படி முண்டும் முடிச்சுமாக வஜ்ரம் பாய்ந்திருக்கிற ஆல் மாதிரி விருக்ஷத்தில் கூடப் புஷ்பமானது பதர் மாதிரி லேசாக, ம்ருதுவாக இருக்கிறது. அப்படிப்பட்ட புஷ்பத்திலே ஐந்து மன்மதனுக்கு பாணாயுதம் என்றால் வேடிக்கைதானே?

ஐந்து பாணம் எதற்கென்றால் ஐம்புலன்களில் ஒவ்வொன்றையும் இழுக்கத்தான். அரவிந்தம், அசோகம், சூதம், நவமல்லி, நீலோத்பலம் ஆகியவற்றில் எதெது எந்தெந்த இந்திரியத்திற்கு உருவகம் என்றுகூடச் சொல்வதுண்டு. அம்பாள் கையிலுள்ள இதே பஞ்ச பாணங்களை ஸஹஸ்ர நாமத்திலும் பஞ்சேந்திரிய ஸம்பந்தப்படுத்தித் தான் சொல்லியிருக்கிறது. "பஞ்ச தந்மாத்ர ஸாயகா"என்று. தன்மாத்ரை என்பவை பஞ்ச இந்த்ரியங்களால் அநுபவிக்கப்படும் ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களான சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்கிறவை.

ஐந்து பாணங்கள் ஐம்புலனைக் குறிப்பதென்றால் அந்த பாணத்தைத் தொடுத்துப் பிரயோகிப்பதற்கு ஆதாரமாகவுள்ள தநுஸ் எது?பஞ்சேந்திரியங்களுக்கும் ஆதாரமான மனஸ்தான்! "மநோ ரூபேக்ஷுகோதண்டா"(மனத்தின் உருவமான கரும்புவில்லை உடையவள்)என்று முதலில் சொல்லிவிட்டு அப்புறந்தான் ஸஹஸ்ரநாமம் "பஞ்ச தந்மாத்ர

ஸாயகா"என்கிறது.

ஒவ்வொரு புஷ்பமும் ஒவ்வொரு இந்திரிய ரூபமாக இருப்பது மட்டுமில்லை. எந்த ஒரு புஷ்பத்திலுமே பஞ்ச தன்மாத்ரைகளும் ஸம்பந்தப்பட்டு விடுகின்றன. புஷ்பமிருந்தால் அங்கே வண்டு வந்துவிடும். பஞ்ச தன்மாத்ரைகளில் புஷ்பத்துக்கே நேராக இல்லாத ஒன்றே ஒன்றையும் அது பூர்த்தி பண்ணிவிடுகிறதென்று நான் நினைக்கிற வழக்கம். ஸ்பர்சத்திற்கு ம்ருதுவாகவும், ரூபத்தில் அழகாகவும், ரஸமான தேனைத் தருவதாகவும், நல்ல கந்தம் வீசுவதாகவுமுள்ள புஷ்பம் சப்த ஸௌக்யத்தை மட்டும் தருவதில்லையல்லவா?அந்தக் குறையைத்தான் அதைத் தேடி வரும் வண்டு தன்னுடைய ரீங்கார சப்தத்தால் பூர்த்தி பண்ணுகிறதென்று நான் நினைக்கிற வழக்கம். "அடி! கொல்லு!"என்ற அவசப்தங்களைப் போட்டுக் கொண்டு போகிற சண்டைக்காரனாக இல்லாமல் ரீங்கார ஸங்கீதம் பாடும் வண்டு நாணோடு சண்டைக்குப் போகிறான்!

"î¸:ªð÷wð‹ ªñ÷˜i ñ¶èóñJ ð…ê MCè£:"-ÞŠð® î¸ú£, Üî¡ ï£í£, Ü‹ð£ â¶¾«ñ õö,èñ£è âŠð® Þ¼,èµ«ñ£ ÜîŸ° Mˆò£úñ£è, à,ó Ü‹ê«ñJ™ô£ñ™, õ½«õJ™ô£ñ™ Þ¼,A¡øù. å¼ «õ¬÷ ... Cô «ê£Š÷£ƒA ó£ü£,èœ Üõ˜èÀ,°, èŠð‹ è†®,ªè£‡´, Ýù£½‹ ï™ô ðLwì˜è÷£è àœ÷ ú£ñ‰î˜ â¡ø °ÁGô ñ¡ù˜èO¡ ðôˆF«ô«ò î£ƒèÀ‹ ªõŸPõ£¬è Å®, ªè£‡´ «ð£õ¶‡´. ÜŠð® Þ‰î, è£ñó£ü£¾,° ÜRvªì¡ì£è ò£ó£õ¶ ºó†´ ðLwì¡ Þ¼Šð£«ù£ â¡Á ð£˜ˆî£™, Üƒ«è»‹ ãñ£Ÿø‰î£¡!

வஸந்த:ஸாமந்த:

மன்மதனின் ஸாமந்தன், அஸிஸ்டென்டு கூட்டாளி யாரென்றால் வஸந்தன் என்பவன். வஸந்த காலமே ஒரு ஆக்ருதி எடுத்துக்கொண்டு ஜனங்களுக்குக் காமத்தைத் தூண்டிவிட்டு மன்மதனுக்கு ஸேவை பண்ண வஸந்தன் என்ற பெயரில் கூட்டாளியாகக் கூட வருவதாகச் சொல்வார்கள். குளிருமில்லாமல், வெயிலுமில்லாமல் பரம ஹிதமாக இருக்கப்பட்ட 'இளவேனில்'என்பதன் மூர்த்தியாக இருப்பவன் அவன். அவன் வந்துவிட்டால் இலையுதிர்ந்த

விருக்ஷங்களெல்லாம் பச்சென்று ட்ரெஸ் போட்டுக்கொண்டு நிழல் கொடுக்க ஆரம்பித்துவிடும். ஏகமாகப் பூக்கவும் ஆரம்பித்து விடும். 'புஷ்ப ஸமயம்'என்றே வஸந்த ரிதுவுக்கு ஒரு பேர். வெயிலும் உக்ரமில்லாமல், குளிரும் கடுமையாயில்லாமல் கண்ணுக்கும் மூக்குக்கும் விருந்தாக இருக்கிற ரிது அது. இந்த குணங்களோடு ஒருவன் சண்டைக்காரனுக்குக் கூட்டாளியாகப் போனால் ரொம்ப வேடிக்கைதானே?ஆக்நேயாஸ்த்ரம், அல்லது உடம்பெல்லாம் ஜில்லிட்டு மரத்துப் போகும்படியாகச் செய்கிற ஸ்தம்பனாஸ்த்ரம் போடுவது சத்ருக்களின் வழக்கம். இங்கேயோ பரமஸௌக்யமான சீதோஷ்ணத்தைப் பரப்பும் வஸந்தன் சத்ரு பக்ஷத்தில் கூடப் போகிறான்!

மன்மதன் ஏறிப் போகிற ரதம் என்னவென்று பார்த்தால் இன்னும் சிரிப்பு வருகிறது!

மலய மருத் ஆயோதந ரத:

'ஆயோதன'- யுத்தத்திற்கான;'ரத:'- ரதம்; 'மலய மருத்'- மலய பர்வதம் என்கிற பொதிய மலையிலிருந்து வீசுகிற காற்று. அதாவது சந்தன வாஸனையோடு குளுகுளு வென்று வீசுகிற தென்றல். விஷ gas-களைப் பரப்பிக் கொண்டு வருவதற்குப் பதில் இந்த சண்டைக்காரன் ரொம்பவும் ரம்யமான மந்த மாருதத்தையே ரதமாக்கிப் பரப்பிக்கொண்டு போகிறான். 'மந்தம்'என்பதால் அதுவும் உக்ரமில்லை, வலிவானதில்லை என்று தெரிகிறது. (மூலத்தில் மந்தமாருதம் என்றில்லாவிட்டாலும் மலயமாருதத்தை அப்படிக் குறிப்பதும் பொது வழக்கு.)

ஆயுதங்கள் கண்ணுக்காவது வில்லு, அம்பு என்ற ஸ்தானத்தில் தெரிந்தன. ஸகாவான வஸந்த ரிதுவும், ஏறி வருகிற தென்றல் தேரும் கண்ணுக்கே தெரியவில்லை! மொட்டை மொட்டையாய் நிற்கிற மரங்கள் குப்பென்று துளிர்ப்பதையும், மல்லியும் மாம்பூவும் மணக்க ஆரம்பிப்பதையும் பார்த்துத்தான் வஸந்தன் வந்ததைப் புரிந்து கொள்ள வேண்டும். ஹிதமாக நம் மேலே படுவதைக் கொண்டுதான் மந்த மாருதத் தேர் வந்திருப்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். மேலே முட்டி மோதி அரைத்துக் கொண்டு போகிற 'டாங்க்'குக்குப் பதில் இப்படி ஒரு

சத்ருவாஹனம்!

எல்லாவற்றையும்விடப் பெரிய விசித்ரம், - அந்த யுத்த வீரன் இருக்கிறானே, மன்மதன், அவன் எப்படி இருக்கிறான்?

அநங்க:

அவன் அனங்களாக இருக்கிறான். மதனன், மன்மதன், மாரன், கந்தர்பன், காமன் என்றிப்படி அவனுக்கு அநேகம் பேர் இருந்தாலும் ஆசார்யாள் அர்த்த புஷ்டியோடுதான் இந்த இடத்தில் அனங்கன் என்ற பேரைப் பொறுக்கி எடுத்துப் போட்டிருக்கிறார்.

அந்தப் பேருக்கு என்ன அர்த்தம்? 'அனங்கன்'என்றால் 'அன் + அங்கன்', அதாவது அங்கமில்லாதவன். ரூபமே இல்லாதவன் மன்மதன். பரமேச்வரன் அவனை பஸ்மீகரம் பண்ணியதற்கப்புறம் அம்பாள் அவனுக்கு மறுபடி ஜீவன் கொடுத்தாலும் ரூபம் கொடுக்கவில்லை. அகத்துக்காரர் பண்ணியதை அப்படியே மாற்றிப் பண்ணினதாக இருக்க வேண்டாமென்று அவனுடைய ஜீவனை மாத்திரம் உயிர்பித்துக் கொடுத்து விட்டு உருவத்தை மறுபடி ஸ்ருஷ்டித்துக் கொடுக்காமல் நிறுத்திக் கொண்டாள். அவனுடைய பத்னியான ரதியிடம் பரிதாபத்தினால் அவளுக்கு மட்டும் அவன் ரூபத்தோடு தெரியும்படி அநுக்ரஹித்தாள். ரூபமில்லாமலே லைட், ஸவுன்ட் முதலிய force-கள் - காற்றுகூட - இருப்பது போல அவனையும் ஒரு force-ஆக வைத்தாள்.

யுத்தவீரன் என்றால் நல்ல புஷ்டியாக, கரணை கரணையாகக் கைகாலும், வாட்டசாட்டமான உடம்பாகவும் இருப்பான். மீசையை முறுக்கிவிட்டுக் கொண்டு, பார்த்தாலே பயப்படும்படி இருப்பான். நம் கதையில் பார்த்தால் அப்படியெல்லாம் இல்லாதது மட்டுமில்லை. ஆஜாநுபாஹுவாக இல்லாவிட்டாலும் சோனியாகக்கூட 'மன்மதன்'என்று காட்டவே ஒரு உருவமில்லாமலிருக்கிறான்! 'உருவிலி'என்றே சொல்லப்படுபவனாக இருக்கிறான்!

வஸந்தனுக்கு ரூபமில்லையென்றாலும் 'நேச்ச'ரின் செழுமையிலிருந்து guess பண்ணிக் கொள்ளலாம். மலய

மாருதத் தேரையும் மேலே படும் தென்றலிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இதையெல்லாம் அங்கமாகச் சேர்த்துக் கொண்டு மூலமான அங்கியாக இருக்கிறானே, அவனைத் தான் ஒரு விதத்திலும் guess-ம் பண்ண முடியாமல் முழு அனங்களாக இருக்கிறான். தெரிந்து கொள்ள முடியாமலே உள்ளே புகுந்துகொண்டு ஆட்டுவிக்கிற அதிஸூக்ஷ்ம force!

எத்தனை வேடிக்கை?சரீரமே இல்லாமலே ஒருத்தன் சக்தியே இல்லாத உபகரணங்களைக் கொண்டே ஸர்வ லோகத்தையும் ஜயிக்கிறானே!

திரிபுர ஸம்ஹார காலத்தில் பரமேச்வரனுக்கு ரொம்ப பலமான, சக்தி வாய்ந்த மேரு, தநுஸ், வாஸுகி நாண், ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவே அம்பு, ஸூர்ய சந்திரர்கள் ரத சக்ரம், பூமி தேர்த்தட்டு, ஸாரதியாக ப்ரம்மா என்று ஜமா சேர்ந்தது. அப்படியிருந்தும் அதொன்றையும் ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளாமலே அவர் ஒரு சிரிப்புச் சிரித்தார். அவ்வளவுதான்!கையை காலைத் தூக்கி குஸ்தி, மல்லு போடவில்லை. சும்மா சிரித்தார். 'பராசக்தியை உள்ளே வைத்துக் கொண்டிருக்கும் எனக்கா ஸஹாயம் தேவை என்று இதுகளெல்லாம் வந்திருக்கின்றன?'என்று நினைத்துச் சிரித்துக் கொண்டார். உடனேயே த்ரிபுராஸுரர்கள் பஸ்மமாகி விட்டார்கள்!

சக்தி வாய்ந்த உபகரணங்கள் இருந்தும் அவற்றை அவர் ப்ரயோஜனம் செய்து கொள்ளாமலே ஜயித்தார். சக்தியே இல்லாத உபகரணங்களை வைத்துக்கொண்டு மன்மதன் ஜயிக்கிறான். இரண்டிற்கும் காரணம் ஒன்றே தான்!ஒரே அம்பாள்தான்!ஸ்வாமிக்கு உள்ளேயே அவள் பராசக்தியாக இருந்துகொண்டு [வெற்றியை]ஸாதித்துக் கொடுத்தாள். இங்கே மன்மதனுக்கு அவள் தன் சக்தியில் லவலேசம் கடாக்ஷத்தால் அநுக்ரஹித்தே ஜகத் முழுவதிலும் அவனை ஜயசாலியாக்கியிருக்கிறாள்.

ஒரே திராபையான உபகரணங்களை வைத்துக் கொண்டும், அவனே உடம்பில்லாத அனங்களாக இருந்த போதிலும், "ததாபி"- இப்படியெல்லாம் இருந்த போதிலும் ஏக - தான்

ஒருவன் மாத்திரமாக இருந்து கொண்டே - பேருக்கு வஸந்தன் என்று ஒரு கூட்டாளி இருந்தாலும் ஸேனை, ஆனை, குதிரை எதுவுமில்லாமல், மன்மதன் ஒருவன் மாத்திரமாக இருந்து கொண்டே, "காமபி க்ருபாம்"- என்னவென்றே சொல்லத் தெரியா உன் க்ருபையில் ஏதோ கொஞ்சத்தை ...... "உன்"என்பது அம்பாளை;"ஹிமகிரிஸுதே!"என்று கூப்பிட்டு, "உன்னுடைய க்ருபையில் ஏதோ கொஞ்சத்தை"என்கிறார். அந்தக் க்ருபையை அவளுடைய கடாக்ஷத்தின் மூலம் மன்மதன் பெறுவதை "தே அபாங்காத் லப்த்வா"என்கிறார். "அபாங்காத் தே" என்று ச்லோகத்தில் வருவதை, "தே"-'உன்னுடைய', "அபாங்காத்"-'கடாக்ஷத்தால்'என்று அர்த்தம் செய்துகொள்ள வேண்டும் அம்பாளுடைய கடாத்தால் ஏதோ கொஞ்சம் க்ருபை பெற்றே மன்மதன் தனியொருவனாக, த்ராபை உபகரணங்களை வைத்துக் கொண்டும் "ஜகதிதம்"- "இதம் ஜகத்"- இந்த ஜகத்தை, "ஸர்வம்"ஜகத்து பூராவையும், "விஜயதே"- ஜயித்து விடுகிறான்.

இப்படி ஸ்ருஷ்க்கு அநுக்ரஹம் பண்ணுவது ஸப்ரபஞ்சத்தைச் சேர்ந்த மாயா கார்யம். இதற்கு கடாக்ஷலேசம் போதும். த்ரிபுர ஸம்ஹாரம் என்பது ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண சரீரங்களை நிராகரணம் பண்ணி [நிராகரிகத்து] மஹா காரணமான ப்ரஹ்மமாக நிற்பது. அது நிஷ்ப்ரபஞ்சத்தில் சேர்க்கும் கார்யம். அதற்கு அவளே உள்ளே பூர்ணசக்தியாக இருந்து நடத்திக் கொடுத்தால்தான் முடியும். த்ரிபுர தஹனம் பண்ணியவர் இந்தக் காமனையுமே தஹனம் பண்ணினாரென்றால் அதற்குக் காரணம் அவரிடம் இருந்த பரிபூர்ண சக்தி விலாஸத்திடம் இவன் பெற்றிருந்த துளிப்போர அநுக்ரஹ சக்தி எடுபடாமல் அமுங்கிப் போனதுதான்.

காமன் ஜயித்ததை, அவனை அம்பாள் ஜயிக்க வைத்ததை, சொல்லும்போது அதோடு விட்டுவிடக்கூடாது. அவனை நாம் ஜயித்தாக வேண்டும்;காம ஜயம் பண்ணியாக வேண்டும். ஈச்வரன் விஷயத்தில் அதற்கும் அம்பாளே உள்ளே நின்று சக்தி கொடுத்திருக்கிறாள் என்பதையும் இங்கே நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். நமக்கு

வேண்டியது அந்த அநுக்ரஹந்தான். ஆக்கின சக்திதான் அழிக்கவும் முடியும் என்பதற்காகத்தான் இங்கே ஆசார்யாள் ஆக்கின சக்தியைச் சொல்வது.

அவனுக்கு சக்தியே இல்லாத உபகரணங்களை அவள் தந்திருப்பதும் உயர்ந்த தாத்பர்யத்தின் மேலேதான். அவற்றை வைத்துக்கொண்டும் ஜயித்தால்தான் அவனுக்கு அம்பாள் பிச்சையால்தான் ஜயிக்கிறோம் என்ற அடக்கம் இருக்கும். இல்லாவிட்டால் அஹம்பாவம் வந்துவிடும் என்ற கருணையாலேயே இந்த மாதிரி ஸாமக்ரிகளைக் கொடுத்தது.

அனங்கனான அவன் ஒரு காலத்தில் ஸர்வாங்க ஸுந்தரமான சரீரம் பெற்றிருந்தவன்தான். "மன்மதன் மாதிரி"என்று இன்றைக்கும் வசனம் இருப்பதற்குக் காரணம் அன்றைக்கு அவன் அழகிலே முதலான சரீரம் பெற்றிருந்ததுதான். அந்த அஹம்பாவம் அவனுக்கு அப்போது இருந்தது. அப்போது தேவர்கள் சூரபத்மா ஸூரனிடம் அவதிப்பட்டுக் கொண்டிரு ந்தார்கள். ஈச்வரனுக்கு ஒரு புத்ரன் உண்டானால்தான் சூரனைக் கொல்ல முடியுமென்பதால், அப்போது தக்ஷிணாமூர்த்தியாகத் தபஸ்விக் கோலத்திலிருந்த ஈச்வரனுக்குப் பர்வத ராஜகுமாரியாக அவதரித்திருந்த அம்பாளிடம் ப்ரேமையைத் தோற்றுவிக்க வேண்டுமென்று மன்மதனிடம் சொல்லி அனுப்பி வைத்தார்கள். நம்முடைய ச்லோகத்தில் "ஹிமகிரிஸுதே!"என்று வருகிறது. பர்வத ராஜகுமாரியைத்தான் அப்படிச் சொல்வது. அம்பாள் எடுத்துக் கொண்ட அநேக அவதாரங்களில் இதன்போதுதான் ஈச்வரன் முதலில் மன்மதனை தஹனம் பண்ணிவிட்டு, அப்புறம் மனஸ் மாறி அவளிடம் ப்ரேமை கொண்டு கல்யாணம் செய்துகொண்டதால் அந்தப் பெயரை இங்கே போட்டதில் தனிப் பொருத்தம் இருக்கிறது. அது பின்கதை. முதலில் தேவர்கள் ஸ்வாமியிடம் ச்ருங்கார எண்ணத்தை உண்டாக்கச் சொல்லி மன்மதனை அனுப்பினார்கள். 'ஓ!நாம் பரமேச்வரன் மனஸையே கலக்கி ஜயிக்கக்கூடிய மஹாசக்திமானா?'என்ற அஹம்பாவமும் அவனுக்குச் சேர்ந்தது. 'மன்மதன்'என்றால் 'மனஸைக் கலக்குகிறவன்'என்றுதான் அர்த்தம். கடைவதை 'மதனம்'என்பது. 'க்ஷீராப்தி மதனம்'என்று [பாற்கடலைச் கடைந்ததைச்]சொல்கிறோமல்லவா? மனஸை மதனம் பண்ணுபவன் மன்மதன். கலக்கமுடியாத வைராக்ய

பர்வதமாயிருந்த ஸ்வாமியைக் கலக்க முடியும் என்ற அஹம்பாவத்துடன் போனான். அப்புறம் என்ன ஆச்சு?அவர் இவனை இருந்த இடம் தெரியாமல் பொசுக்கிவிட்டார். பிற்பாடு அம்பாள் புத்துயிர் கொடுத்தாள். ஆனால் இப்போது தன்னால் எதுவும் முடியும் என்ற அஹம்பாவம் அவனுக்குப் போய் விட்டிருந்தது. அப்புறம் ஸ்வாமியையும் அவன் ஜயித்து அதுதான் முக்யமாகக் காமாக்ஷிவிஷயமான "காமாக்ஷி விலாஸம்"என்ற புராணமாக ஆனாலும் அது மன்மத புராணமாயில்லாமல் காமாக்ஷிபுராணமாக இருப்பதாலேயே அந்த ஜயத்திற்கான சக்தி முழுவதும் அவள் தந்ததாலேயே என்று தெரிந்து கொள்ளலாம். இதை ரொம்பவும் அடக்கத்துடன் மன்மதனும் தெரிந்து கொண்டிருந்ததாகவே அந்தப் புராணக் கதை காட்டுகிறது. "என் சக்தியால் ஜயிக்கப் போகிறேனாக்கு ம்"என்று இப்போது அவன் ஸ்வாமியிடம் போகாமல், "என் தாயாரின் அநுக்ரஹ சக்தி எனக்கும் ஜயம் வாங்கித்தரப் போகிறது!"என்ற 'ஸ்பிரிட்'டிலேயே போய், அப்படியே ஜயித்தான். அதாவது அவன் சிவநேத்ராக்னியில் பஸ்மமானபோதே அவனுக்கு ஸொந்த சக்தியில் இருந்த அஹம்பாவமும் பஸ்மமாகிவிட்டது! தன்னுடைய ரூப ஸம்பத்தைப் பற்றி அவனுக்கிருந்த அஹம்பாவமும் போக வேண்டுமென்றுதான், மறுபடி அம்பாள் அவனை உயிர்ப்பித்தபோது உயிர்ப்பிக்க மட்டும் செய்தாளேயொழிய உடம்பைக் கொடுக்கவில்லை.
[சிரித்து]உயிர்ப்பித்தாளேயொழிய 'உடற்பிக்க'வில்லை!உருவிலியாகப் பண்ணிவிட்டாள்.

'வல்லவனுக்குப புல்லும் ஆயுதம்'என்று பழமொழி. தர்ப்பையும் புல் தினுஸைச் சேர்ந்ததே. தூய புல்லானதால் தூப்புல் என்று அதற்குப் பேர். காஞ்சீபுரத்தில் தர்ப்பை நிறைய மண்டி வளர்ந்த ஒரு இடத்திற்குத் தூப்புல் என்றே பெயர். வேதாந்த தேசிகர் அங்கேதான் பிறந்தார். காகாஸுரனை வதம் பண்ணுவதற்காக ராமர் ஒரு தர்ப்பைப் புல்லைத்தான் அஸ்திரமாகப் போட்டார். அதற்கு ஈடு கொடுக்க முடியாமல் அவன் அவர் காலிலே வந்து விழுந்தான். அபயந் தந்து "பிழைத்துப் போ!"என்று அனுப்பி வைத்தார்.

அங்கே வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்று நிரூபித்துக் காட்டினார். அவர் பல தினுஸில் வல்லவரானாலும் இங்கே மந்திரத்தில் வல்லவராக இருந்து மந்த்ர சக்தியாலேயே புல்லை ஆயுதமாக்கினார். ஸாக்ஷாத் பராசக்தியின் கடாக்ஷசக்தியால் மன்மதனுக்குப் பூவும் ஆயுதமாயிருக்கிறது.

பஸ்மமான அவனுக்குப் புனர்ஜீவனம் தந்ததே அந்தக் கடாக்ஷந்தான். அக்னி நேத்ரத்தால் பதி பஸ்மமாக்கியிரு ந்தாரே, அந்த சாம்பலை அவள் அம்ருத நேத்ரத்தால் பார்த்தாள். உடனே மன்மதனுக்கு உயிர் வந்து விட்டது. 'காமாக்ஷி'என்ற பெயருக்கு ஒரு அர்த்தமே தன்னுடைய அக்ஷத்தால், கடாக்ஷத்தால், காமனை உண்டு பண்ணியவள் என்பதுதான்.

---



## சிவனைக் காமன் வென்றதைச் சொல்லாதது

காமனுக்குச் சக்தியும் பதவியும் தந்தவள் காமேச்வரியாகிய லலிதாம்பாளே யாகையால் நம்முடைய ஸ்தோத்ரம் அவளைக் குறித்ததே என்று இந்த ச்லோகம் ஓரளவுக்கு நன்றாகவே தெரியப்படுத்திவிடுகிறது. இருந்தாலும் முழுக்க உடைத்துச் சொல்லவில்லை. பொதுப்படையாக, காமன் ஜகத்தை ஜயிக்கிறான் - "ஜகதிதம் அநங்கோ விஜயதே"- என்று சொல்லியிருக்கிறதே தவிர ஈச்வரனை ஜயித்ததாக இல்லை. அந்தப் பெரிய வெற்றியையும் அவனுக்கு ஏற்படுத்தித் தந்ததுதான் காமேச்வரியின் முக்யமான லீலை. அதைச்சொல்லவில்லை. காம தஹனம் நடந்த ஸமயத்தில், அதாவது அவன் ஈச்வரனிடம் தோற்று, தோற்று மட்டுமில்லாமல் உயிரையே இழந்து பஸ்மமான ஸமயத்தில் அம்பாளுக்கு ஏற்பட்டிருந்த பார்வதி அவதாரத்தைத்தான் 'ஹிமகிரிஸுதே'என்கிற பேர் காட்டுகிறது. பிற்பாடு ஸ்வாமி

அவளிடம் ப்ரேமை கொண்டு கல்யாணம் பண்ணிக் கொண்டாரென்றாலுங்கூட அதைக் காமனின் கார்யமாக, அவனுடைய வெற்றியாக, சொல்வதில்லை. அம்பாளுடைய சுத்தமான ப்ரேமையும், அவள் பண்ணிய அத்புதமான தபஸுந்தான் தக்ஷிணாமூர்த்தியையும் இளக்கிக் கல்யாண ஸுந்தரராக ஆக்கிற்று என்றே அந்தக் கதை போகிறது. 'ஸ்காந்த'த்தில் சொல்லி, காளிதாஸனும் 'குமார ஸம்பவ'த்தில் 'அடாப்ட்'பண்ணியிருக்கிற விருத்தாந்தம் இதுதான் முந்தைய ச்லோகத்திலும் காமன் மஹா முனிவர்களையும் மோஹிக்கச் செய்கிறானென்று இருக்கிறதே தவிர ஈச்வரனையே அவன் ஜயித்து மோஹிக்கச் செய்ததாகச் இல்லை. மஹாவிஷ்ணு மோஹினி ரூபமெடுத்து அந்தக் கார்யம் செய்ததைத்தான் அங்கே சொல்லியிருக்கிறது. அவர் [விஷ்ணு]இவனுடைய பிதா மானஸிக புத்ரனாக அவருடைய மனஸிலிருந்தே இவன் தோன்றியதால் இவனுக்கு மனஸிஜன் என்ற பெயருமுண்டு. அவர் க்ருஷ்ணாவதாரம் பண்ணியபோதும் மன்மதன் அவருக்கு ப்ரத்யும்னன் என்ற பிள்ளையாகப் பிறந்தான். ஆக அப்பாக்காரரான அவரே நேராகப் பரமசிவனை மோஹிக்கப் பண்ணினார் என்றும், மற்ற அத்தனை பேரையும், மஹா முனிவர்களையுங்கூட மன்மதன் மோஹிக்கப் பண்ணுகிறான் என்றுந்தான் பிரித்து வைத்தாற்போல அங்கே சொல்லியிருக்கிறது. 'ஸௌந்தர்ய ஸஹரி'என்றே உள்ள உத்தர பாகத்தில்தான் மன்மதனே ஸ்வாமியை ஜயித்ததைச் சொல்லியிருக்கிறது. அம்பாளின் குண்டலங்கள் இரண்டு, அவை அவளுடைய கண்ணாடி மாதிரியான கன்னத்தில் காட்டும் பிரதிபிம்ப குண்டலங்கள் இரண்டு என்பதாக இந்த நாலையுமே நாலு சக்கரமாகக் கொண்ட அவளுடைய முகம் என்ற ரதத்தில் ஏறிக்கொண்டு மன்மதன் ஈச்வரனிடம் சண்டைக்குப் போகிறானென்று ஒரு ச்லோகத்தில் [59]வருகிறது. அம்பாள் ஈச்வரனைப் பார்க்கும் ப்ரேம வீக்ஷணம் ஈச்வரனின் மேல் மன்மதன் செய்யும் பாண ப்ரயோகமே என்று ஒரு ச்லோகத்தில் ... [சற்று யோசித்து]இரண்டு ச்லோகங்களில் [52, 58] வருகிறது. ரதத்தில் கிளம்பியது, பாண ப்ரயோகம் பண்ணியது மட்டுமில்லாமல் ஸ்வாமியை அவன் ஜயித்தேவிட்டு ஜயகோஷம் போடுவதையும் ஒரு ச்லோகத்தில் [86]சொல்லியிருக்கிறார் - அம்பாளுடைய சலங்கை கிலுங்,

கிலுங் என்று சப்திப்பது மன்மதன் போடும் ஜயகோஷந்தான் என்கிறார். ஆனால் இந்தப் பூர்வபாகத்தில் அந்த விஷயம் [பரமசிவனை மன்மதன் ஜயித்த விஷயம்]சொல்லவில்லை. காவ்யரஸம் அதிகமுள்ள பின் பாகத்திற்கே அதை ரிஸர்வ் செய்து விட்டாற்போலிருக்கிறது!

என்ன சொல்ல வந்தேனென்றால், நம் ஸ்தோத்ரத்தின் தேவதை காமேச்வரி என்பதை இன்னமும் உடைத்துச் சொல்லாமல், ஆனாலும் நன்றாகவே ஊஹித்துவிடும்படி இதுவரை ச்லோகங்கள் கொடுத்துவிட்டார். இனிமேலும் காக்க வைக்கவேண்டாமென்று தோன்றி, அடுத்தச்லோகத்தில் த்யான ச்லோகம் மாதிரி ஸ்பஷ்டமாகவே காமேச்வரி ரூபத்தை வர்ணித்துவிடுகிறார்.

---



## சிவ, சக்திகளாக இன்றி சிவசக்தி ஒன்றாகவே

காமேச்வரி என்றால் காமேச்வரனையும் கூடக் காட்டி, அவனுடைய இடது மடியிலே அம்பாள் இருப்பது போல வர்ணனை இருந்தால்தான் முழுக்க ஸரி. ஆனால் சில்ப, சித்ரங்களில் அப்படிப் பண்ணுவது ரொம்பவும் அபூர்வமே!ஸ்தூலமாக அந்த மாதிரிப் பண்ணிக் கண்ணால் பார்த்தால் அம்பாளுக்கு முழு முக்யத்வமில்லாமல் பாதி ஸ்வாமிக்குப் போய்விட்டாற்போலத் தோன்றுவது காரணமாயிருக்கலாம். காஞ்சீபுரத்திலேயே அம்பாள் தான் மட்டுந்தானே தனியாயிருக்கிறாள்?அதற்கு வேறே காரணமுமுண்டு என்றாலும் (மன்மதனுக்கு சிவபெருமானின் மீது வெற்றியீட்டித்தருவதற்காகவே அம்பிகை செய்த லீலையில் இதுவும் ஓர் அங்கம்.) காமேச்வரன் என்று ஒருத்தனை நடு நாயகமாக உட்கார்த்தி வைத்து அவனுக்கு வாமாங்கத்தில் அம்பாள் என்றால் அவளுடைய

இம்பார்டன்ஸ் தெரியாமல்தான் போகும். அதனால்தான் பொதுவாக ரவிவர்மாவின் ராஜராஜேச்வரி உள்பட, லலிதாம்பாள் பிம்பம் என்றால் அவளை மட்டும் காட்டுவதாகவே இருக்கிறது. ஒரு 'சேஞ்சு'க்குக் காமேச்வர ஸஹிதையான காமேச்வரியாக யாராவது போட்டுப் பார்க்கமாட்டோமா என்றுகூட இருக்கிறது! இரண்டு பேர் நெருக்கியடித்துக் கொண்டு ஒரே மாதிரியான நான்கு ஆயுதங்களைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும்போது இரண்டு தநுஸ், இரண்டு பாணம் என்றெல்லாம் பார்க்கிறவர்கள் குழம்பாதபடி சில்பம் பண்ணுவது, சித்ரம் போடுவது கஷ்டந்தான். அந்தக் கஷ்டத்தை சமாளித்து அழகாகப் பண்ணிக் காட்டுவதில்தான் கலைஞன் என்கிறவனின் ஸாமர்த்யம் இருக்கிறது!

'காமேச்வரி என்ற பெயரைச் சொன்னால் உடனே காமேச்வரன் நினைப்பும் வந்துவிடுகிறது! ஒருத்தியாகக் காட்டிவிட்டு அந்த பேரைச் சொன்னால் ஸரியாயில்லை என்பதால்தானோ என்னவோ காமாக்ஷி, ராஜராஜேச்வரி, லலிதாம்பா, த்ரிபுரஸுந்தரி, வடிவுடையம்மன் என்றே பெயர்களும் சொல்வதாயிருக்கிறது! ரொம்ப நுணுக்கமாக மந்த்ர சாஸ்த்ரத்தைப் பார்த்தால் ராஜராஜேச்வரிக்கு தநுர்-பாண-பாச-அங்குசங்களோடு, இன்னும் நாலு கைகளில் புஸ்தகம்-அக்ஷரமாலை-வரம்-அபயம் ஆகியவையும் உண்டு. அதோடு மார்[பு]மேலே வீணையைச் சார்த்திப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். லலிதா த்ரிபுர ஸுந்தரி இரண்டு காலையும் மடித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதாகவும், ராஜராஜேச்வரி வலது காலை மடித்து இடது காலைத் தொங்கப்போட்டுக் கொண்டிருப்பதாகவும் பாவிக்கிறது ஸம்பிரதாயம். காமேச்வரனுடைய வாமாங்கத்தில் காமேச்வரியாக உள்ளபோது [தநுர்-பாண-பாச-அங்குசங்களை தரித்த]நாலே கை, ஆனால் இதே போல வலது காலை மடித்து, இடதைத் தொங்கப் போட்டு உட்கார்ந் திருப்பதாக பாவிக்கிறது. ஸ்வாமி வலது காலைத் தொங்கப் போட்டுக்கொண்டு இடதை மடித்துக் கொண்டிருப்பார். மடித்துக் கொண்ட மடியில் - இரண்டு 'மடி!'- அந்த மடியில்தான் அம்பாள் உட்கார்ந்திருப்பது.

த்யான ச்லோகம் என்று பார்த்தால் லலிதா [மஹா]த்ரிபுரஸுந்தரி, ராஜராஜேச்வரி இரண்டு பேரையுமே பதியின் வாமாங்கத்தில் [இருப்பதாகச்]சொல்லாமல், தனி மூர்த்தியாகத்தான் சொல்லியிருக்கிறது. மந்த்ரத்தின் அதி தேவதை எனறு நிறைய நாழி த்யானம், ஜபம் என்று மனஸை ஒருமுகப்படுத்த வேண்டியபோது இரட்டை மூர்த்தியாகச் சொல்வதே 'இரண்டுமுக'ப் படுத்துகிறதாகத்தானே ஆகும்?

அம்பாள் மாத்திரம் ஏகமூர்த்தியாகச் சொல்வதற்கு ஸௌந்தர்ய லஹரியிலேயே ஆசார்யாள் யுக்தியாக நியாயங்காட்டி ஒரு ச்லோகம் [23]கொடுத்திருக்கிறார். ஒரே மூர்த்தியான அர்த்த நாரீச்வர ரூபத்தில் பதியின் இடது பக்கத்தைத் திருடிக் கொண்டது மட்டும் அம்பாளுக்குத் திருப்தி தரவில்லையாம். அதனால் அவருடைய வலது பக்கத்தையும் அவளே கவர்ந்து கொண்டு விடுகிறாளாம்.

அதனால்தான் ஏக மூர்த்தியாகத் தன்னுடையதான அருணச் சிவப்பு நிறமாகவே இருந்து கொண்டு, ஆனால் ஈச்வர லக்ஷணமாக நினைக்கப்படும் லலாட நேத்ரம் [நெற்றிக்கண்], சந்த்ரகலை ஆகியவற்றையும் தரித்துக்கொண்டு காட்சி கொடுக்கிறாளாம்!

அம்பாளுடைய உபாஸனா மார்க்கங்களில் ஒன்றில் (உத்தர கௌலம் என்பது.), 'ஈச்வரனுக்குத்தான் ஸ்வதாவாக [ஸ்வயமாக]ரூபம் கிடையாதே!கார்யமும் கிடையாதே!அவை அம்பாள் கொடுத்துத்தானே அவனுக்கு ஏற்பட்டவை? ஆகையால் அவளுக்கு வேறாக அவன் என்று பூஜை பண்ண ரூபம் ஏது?பூஜையை ஏற்றுக்கொண்டு அநுக்ரஹம் என்ற கார்யம் பண்ணவுந்தான் ஆஸாமிக்கு சக்தி ஏது?அதனால் அவனைச் சேர்க்கவே வேண்டாம். ரூபமும் கார்யமும் இருக்கிற அவளுக்கு மட்டுமே பூஜை பண்ணலாம்'என்று வைத்திருக்கிறது.

இப்படிப் பலவித அபிப்ராயங்கள் இருப்பதை அநுஸரித்தே த்யான ச்லோகத்தின் ஸ்தானத்தில் ஆசார்யாள் ஒன்று பண்ணும்போது அம்பாளை மாத்திரம் (காமேச்வர ஸஹிதையாக இல்லாமல்) வர்ணித்துப் பண்ணியிருக்கிறார்.

சிவ-சக்தி என்று இரண்டு மூர்த்தியாகத்தான் ஸ்தோத்ரத்தை ஆரம்பித்தார். ஆனாலும் சிவனின் சக்தியாக இருக்கப்பட்ட ஒரு மூர்த்தியை ஸ்துதிப்பதுதான் லக்ஷ்யம். ஆகையால், அம்மா, அப்பா என்று ஜோடியாகச் சொல்லி ஆரம்பிக்கணும், அவளுடைய ஸௌமாங்கல்யம் தெரியும்படி பதியைச் சொல்லி ஆரம்பிக்கணும், அவளுடைய பாதிவ்ரத்யம் தெரியும்படி பதியை முதலில் சொல்லி அப்புறம் அவளைச் சொல்லணும் என்றெல்லாம் நினைத்து முதல் ச்லோகம் செய்தாலும், அப்புறம் 'இம்பார்டன்'ஸை அவர் 'ஷேர்'பண்ணிக் கொள்ள விடப்படாது என்று அவளை மாத்திரம் வர்ணித்து ச்லோகம் கொடுத்திருக்கிறார் - சிவ, சக்தி என்ற இரண்டு பேராயில்லாமல், சிவசக்தியான ஒருவரை மட்டும் சொல்லி. (அந்த ச்லோகமே அடுத்து வருவது.)

---



**ஸ்வரூப வர்ணனை**

**க்வணத்-காஞ்சீ-தாமா கரி-களப-கும்ப-ஸ்தந-நதா**

**பரிக்ஷீணா மத்யே பரிணத-சரச்சந்த்ர-வதநா ***

**தநுர்-பாணாந் பாசம் ஸ்ருணிமபி ததாநா கரதலை:**

**புரஸ்தாத் ஆஸ்தாம் ந:புரமதிது-ராஹோபுருஷிகா ****

[(க்வணத்) கிலகிலுக்கும் (காஞ்சீதாமா) மணிச்சிலம்புகள் அமைந்த ஒட்டியாணச் சரட்டை அணிந்தவளும், (கரி-களப-கும்ப-ஸ்தந-நதா) யௌவனமான யானையின் கும்பத்தை [தலையிள்ள குடம் போன்ற புடைப்பை]நிகர்த்த நகிலால் வணங்கிய [உடலுள்ள]வளும், (மத்யே)

இடைப்பிரதேசத்தில் (பரிக்ஷீணா) மிகவும் நுண்ணியவளும், (பரிணத-சரத்-சந்த்ர-வதநா) சரத் காலத்துப் பூர்ண சந்திரன் போன்ற முகத்தினளும், (தநுர் பாணன் ஸ்ருணியும் அபி) வில், அம்பு இவற்றோடு பாச அங்குசங்களையும் (கரதலை:) கைத்தலங்களில் (ததாநா) பிடித்துக் கொண்டிருப்பவளும், (புரமதிது:) திரிபுரங்களை அழித்தவனின் [சிவபெருமானின்] (ஆஹோபுருஷிகா) அஹங்கார வடிவானவளுமானவள் [அதாவது அம்பிகை](ந:)நமக்கு (புரஸ்தாத்) எதிரே (ஆஸ்தாம்) எழுந்தருளட்டும்.]

க்வணத் காஞ்சீ தாமா. 'க்வணத்'என்றால் சலங்கை கிணுகிணு என்று ஓசை பண்ணுவது. சப்தத்தை வைத்தே வஸ்துவுக்குப் பெயர் சொல்லும் 'சப்தாநுகரண'வார்த்தை, சலங்கை கட்டிய ஒட்டியாணத்திற்குக் 'காஞ்சீ'என்று பெயர். வெறும் ஒட்டியாணம் 'மேகலை'. அதிலே சலங்கை கட்டியிருந்தால் 'காஞ்சீ'. ஸஹஸ்ரநாமத்தில் "ரணத் கிங்கிணி மேகலா" என்று "க்வணத் காஞ்சீ தாம"த்தையே தான் சொல்லியிருக்கிறது. சலங்கையை மணி என்றும் சொல்வதுண்டு. அதனால் காஞ்சியை மணிமேகலை என்றும் சொல்வது. தமிழில் பஞ்சகாவியத்தில் 'மணிமேகலை'ஒன்று. அதில் கதாநாயகியாக வரும் மணிமேகலை கடைசியில் காஞ்சீபுரத்திற்குத்தான் வந்து அங்கே பஞ்சத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த மக்களுக்குத் தன்னிடமிருந்த அக்ஷய பாத்திரத்தினால் ஆஹாரம் போட்டாள் என்று சொல்லியிருக்கிறது. அது பௌத்த மதச் சார்பான காவியம். அதனால் மணிமேகலை காஞ்சீபுரத்தில் ஒரு பௌத்த குருவிடம் தீக்ஷைபெற்றே வாழ்க்கைப் பயனை அடைந்தாளென்று இருக்கிறது. ஆனால் அக்ஷய பாத்திரத்திலிருந்து அவள் அன்னம் போட்ட ஸமாசாரமோ நம்முடைய அம்பாள் காமாக்ஷிபண்ணிய லீலையைக் காப்பி பண்ணியதாக இருக்கிறது!'இரு நாழி நெல் கொண்டே எண்நான்கு அறம் இயற்றியவள்'என்று காமாக்ஷியைப் பற்றிப் புராண வசனம் இருக்கிறது. நாழி என்றால் அரைப்படி. "உண்பது நாழி, உடுப்பது நாலு முழம்"â¡Á å÷¬õ ð£†®™Ãì õ¼Aø¶. ÜŠð®Šð†ì Þ¼ ï£N [å¼ ð®]ÜKC Üþòñ£è õ÷ó Ü¬î,ªè£‡«ì Ü‹ð£œ Ü¡ùî£ù‹ ñ†´I™ô£ñ™ Þ¡Â‹ ºŠð^«î£¼

î˜ñƒèÀ‹ ð‡Eù£÷£‹. ÜÁð˜¶ì£½ î˜ñ‹ â¡Á å¼ èí,°. ÜF™ õó£î î˜ñ«ñ Þ™¬ô. Ü¬îŠ ð£Fò£è, è‡ªì¡v ð‡E ºŠð˜Fó‡´ â¡ð¶º‡´. Ü¬î˜î£¡ "â‡ ï£¡° Üø‹"â¡ø¶. ñE«ñè¬ô, è¬î¬ò ¬õ˜¶˜î£¡ è£ñ£V¹ó£í‹ â¿FM†ì£˜èª÷¡ÁÃì Þ‰î ï£O™ ªê£™ôô£‹!Ýù£™ è£ñ£VJ¡ ªðò˜ ñE«ñè¬ô â¿FòîŸ° ªó£‹ð º‰F êƒè è£ô˜F«ô«ò Þ¼‰F¼,Aø¶. 'è£ñ, è‡Eò£˜ ïŠðê¬ôò£˜'â¡Á êƒè è£ôŠ ªð‡ ¹ôõ˜ å¼ˆF,°Š «ð˜.

'è£ñ,è‡E'â¡ð¶ 'è£ñ£V«ò'î£¡ è£ñ£VõNð£´ ÜŠ«ð£«î à‡´ â¡ø£™ Ü‰î, è£ñ£VJ¡ è¬î»‹ - Üõœ Ü¡ù î£ù‹ ºîô£ù¶ ð‡Eò è¬î»‹ - ÜŠ«ð£«î Þ¼‰¶î£Q¼,è «õ‡´‹. ó£ñ¡ «ð˜ Þ¼‰î è£ôªñ¡ø£™ ÜŠ«ð£¶ ó£ñ£òí, è¬î»‹ Þ¼‰¶î£«ù Þ¼,èµ‹?ñE«ñè¬ô â¡ø «ð¼¬ìòõœ Ü«î Ü˜ˆî‹ ªè£‡ì 'è£…Y'â¡ø «ð¬ó, ªè£‡ì á¼,° º®õ£è õ‰¶ «ê˜‰î ªð£¼ˆî¬î,, ªê£™ô õ‰«î¡..........

க்வணத் காஞ்சீ தாமா. 'காஞ்சீ'என்று சொன்னதிலேயே ஸ்தோத்ரத்தின் தேவதை லலிதாம்பாள் என்பதற்கு 'ஹின்ட்'இருக்கிறது. இந்தப் பெரிய தேசத்திலே தென் கோடிக் கன்யாகுமாரியிலிருந்து காஷ்மீரில் க்ஷீரபவானி வரையில் பகவதி, சாமுண்டேச்வரி, சாரதாம்பா, மீனாக்ஷி, அகிலாண்டேச்வரி, தர்மஸம்வர்த்தினி, கமலாம்பாள், பாலாம்பாள், சிவகாமஸுந்தரி, ஞானாம்பா, ப்ரமராம்பா, கனகதுர்கா, துளஜா, பவாநி, அம்பாஜி, விந்த்யவாஸினி, அன்னபூர்ணேச்வரி, காளி, காமாக்யா வைஷ்ணவி (பகவதி-கேரளம்;சாமுண்டேச்வரியும், சாரதாம்பாளும்-கர்நாடகம்;ஞானாம்பாளும், ப்ரமராம்பாளும், கனகதுர்கையும்-ஆந்திரம்;துளஜா பவாநி-மஹாராஷ்டிரம்;அம்பாஜி-குஜராத்;விந்தியவாஸினியும், அன்னபூர்ணியும்-உத்தரப்பிரதேசம்; காளி-வங்காளம்;காமாக்யா-அஸ்ஸாம்; வைஷ்ணவி-ஜம்மு;ஏனைய மூர்த்தங்கள்-தமிழகம்.) என்றிப்படி அம்பாள் மூர்த்தங்களிலிருந்தாலும் ஸ்ரீவித்யா தந்த்ரத்தில் சொல்லியிருக்கிறபடி லலிதா த்ரிபுரஸுந்தரிக்குரிய அங்க லக்ஷணங்களோடும் ஆயுதங்களோடும் உள்ள ஒரே மூர்த்தி காஞ்சீபுரத்தில் இருக்கும் காமாக்ஷிதான். அதனால்தான் 'ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லக் கூடாது' என்று, இந்த ஸ்தோத்திரத்தில் எங்கேயுமே அவள்

பேரைச் சொல்லாவிட்டாலும் ஊரையாவது சொன்ன மாதிரி இருக்கட்டுமென்று "காஞ்சீதாமா"என்று போட்டார் போலிருக்கிறது!

லோகத்தையே ஒரு ஸ்திரீ தேவதையாக - பூமா தேவி என்றுதானே சொல்கிறோம்?அப்படி - ஒரு ரூபத்தில் பார்த்தால் அப்போது அதன் மத்தியாக அவளுடைய நாபி ஸ்தானமாக உள்ள இடமே காஞ்சீபுரம். ஒட்டியாணத்தின் முகப்பு நாபிக்கு மேலேயே வருமாதலால் 'காஞ்சி'என்று அந்த க்ஷேத்திரற்குப் பெயர் ஏற்பட்டது.

காஞ்சீதாமா - 'தாமம்'என்றால் கயிறு மாதிரி இழைகளால் முறுக்கிய சரடு. யசோதை க்ருஷ்ணனின் உதரத்தைச் சுற்றிக் கயிற்றால் கட்டிப் போட்டதாலேயே 'தாமோதரன்' என்ற பெயர் வந்தது. சலங்கைகள் பூட்டிய மேகலாபரணமான காஞ்சியானது தங்க இழைகளை முறுக்கி அழகாகச் செய்யப்பட்டிருப்பதால் 'காஞ்சீதாமா'என்கிறார்.

அம்பாள் நடந்து வரும்போது பாதச் சிலம்பு மட்டுமில்லாமல் ஒட்டியாண மணிகளும் ஜல்ஜல் என்று சப்தம் பண்ணும்.

லோக மத்தியிலிருந்து ஆரம்பித்து ஒரு சுற்றுச் சுற்றி அதிலேயே முடிகிற ஒட்டியாணம் என்றால் அது ரொம்ப ரொம்பப் பெரிசாக இருக்க வேண்டும். அந்த நகைதான் அம்பாளுடைய இடுப்புப் பிரதேசத்தைச் சுற்றியிருப்பது என்றால் அந்த இடுப்பும் ரொம்ப விஸ்தாரமாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் வாஸ்தவத்தில் பார்த்தால் எப்படி இருக்கிறது?

பரக்ஷீணா மத்யே

அந்த இடுப்பு ரொம்ப மெலிந்ததாக இருக்கிறது!'க்ஷீணம்'- மெலிந்த. 'பரி'என்று முன்னாடி சேர்த்தால் 'ரொம்பவும் மெலிந்த'என்று அர்த்தம். அப்படி இருப்பதுதான் உத்தம ஸ்த்ரீ லக்ஷணம். துடியிடை, கொடியிடை என்றெல்லாம் சொல்வார்கள். விசித்ரமெல்லாம் அவளிடம் ஒன்று சேர்கின்றன!அணுவுக்குள் மஹத் என்றபடி துடியிடைக்குள்ளே எல்லா லோகங்களும்!

இடுப்பழகு இருக்கட்டும் அவளுடைய முகம் எப்படி இருக்கிறது? அதல்லவா ஸர்வாங்கங்களிலும் முக்யம்?'முக்ய

ம்'என்பதே 'முகம்'என்ற வார்த்தையிலிருந்துதான் வந்திருக்கிறது!'எண் சாணுடம்புக்கு சிரஸே பிரதானம்' என்கிறோம். அந்தப் 'பிரதான'ந்தான் 'முக்யம்'என்பதன் அர்த்தமாகவுமிருக்கிறது!அம்பாளுடைய முகம் எப்படியிருக்கிறது?

பரிணத சரச் சந்த்ர வதநா

'பரிக்ஷீணா'என்பதில் 'பரி'என்று அந்த வரியின் முதல் பாதியை ஆரம்பித்தாற்போலவே இரண்டாம் பாதியையும் 'பரி'ணத என்று ஆரம்பித்திருக்கிறார். இம்மாதிரி இயற்றுவது கவிதைக்கும் அழகு, ஞாபகம் வைத்துக் கொள்ளவும் வசதி. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் கூட இப்படி நிறைய வரும். 'மோனை'என்று இந்த அணிக்குப் பெயர்.

Ü‹ð£œ ºè˜¬î õ˜E‚°‹«ð£¶ 'ðKíî êó˜ ê‰˜ó õîïî£'â¡Aø£˜. ê‰Fó¡ «ð£¡ø õîù‹. ÜF½‹ M«êûñ£ù î£õœò˜«îî£´‹ [ªõ‡¬ñ«ò£´‹]Uî Yî÷˜«î£´‹ Þ¼‚Aø êó˜è£ô ê‰Fó¡ «ð£¡ø¶. 'ðKíî'â¡ø£™ 'º¿ õ÷˜„C Ü¬ì‰î'. Üî£õ¶ Ì˜E¬ñ ê‰Fó¡. êó˜è£ô˜¶Š Ì˜E¬ñ ê‰Fó¬ùŠ «ð£ô Ü‹ð£O¡ ºè‹ ²Šóñ£è, Šóè£êñ£è, Ü¼œGô¬õ T™ªô¡Á ªð£Nõ¬î U¡† ð‡µAø£˜. HŸð´ "vÎî x«ò£˜vï£ ü£ô‹ îõ õîï ê‰˜óvò Hðî£‹" â¡ø „«ô£è˜F½‹ Þ«î è¼˜¬î ªó£‹ð¾‹ võ£óvòñ£è MõK˜F¼‚Aø£˜.

மேகலாபரணம், அதை அணிந்த இடுப்பு, முக்யமான முகம் ஆனவற்றைச் சொல்லியாயிற்று. ஹஸ்தங்களைச் சொல்ல வேண்டாமா?ஒவ்வொரு தேவதைக்கும் எத்தனை ஹஸ்தம், அதில் என்ன ஆயுதம் என்பதை வைத்துத்தான் அது குறிப்பாக இன்ன தேவதை என்று நிர்ணயம் பண்ணுவதே. அதைச் சொல்கிறார்.

தநுர்-பாணாந் பாசம் ஸ்ருணிமயி ததாநா கரதலை:

தநுஸையும் பாணத்தையும் பாசத்தையும் அங்குசத்தையும் ('ஸ்ருணி'என்றால் 'அங்குசம்') கரதலங்களில் தரித்துக் கொண்டிருக்கிறாள் என்கிறார். ஸ்ரீவித்யா தந்த்ரத்தின் அதிதேவதைக்கு இதுதான் முக்ய அடையாளம். லலிதா மஹாத்ரிபுரஸுந்தரி, காமேச்வரி என்பது அவள் பெயர்.

ரொம்ப 'டெக்னிக'லாகப் பார்க்காவிட்டால் ராஜராஜேச்வரி என்பதும் அவள்தான். அம்பிகை இப்படி உள்ளபோது அவளுக்கு நாலு ஹஸ்தங்கள் - மேல் இரண்டில் பாசம், அங்குசம்;கீழ் இரண்டில் தநுஸு, பாணம். மன்மதனுடைய அதே கரும்பு வில்லும், புஷ்ப பாணமும்.

ராகம்-த்வேஷம் என்று இரண்டு. விருப்பு-வெறுப்பு என்பவை. ராகம்-விருப்பு, த்வேஷம்-வெறுப்பு. வேண்டும்-வேண்டாம், கொள்ளுவது-தள்ளுவது என்று செய்யச் செய்கிற இரண்டு உணர்ச்சிகள். நன்றாக ஆலோசித்துப் பார்த்தால் ராக-த்வேஷம் என்ற இரண்டுக்குள்ளேயே லோக வாழ்க்கை பூராவும் அடங்கிவிடுகிறது என்று தெரியும். ராக-த்வேஷம் என்பதையே காம-க்ரோதம் என்றும் சொல்வது. இரண்டையும் அடக்கிக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும். இவையும் அம்பாளின் மாயா லீலையில் உண்டானவையே;அவளுடைய அநுக்ரஹ லீலையில் மறைந்து போகிறவையே - அந்த அநுக்ரஹத்தால்தான் மறைகிறவை - என்று ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தாலே அவற்றை அடக்கிக் கட்டிவிடலாம். "ராக ஸ்வரூப பாசாட்யா"- 'ஆசை வடிவான பாசத்தை உடையவள்';"க்ரோதாகாராங்கு சோஜ்ஜ்வலா"- "க்ரோத ஆகார அங்குச உஜ்ஜ்வலா"- 'கோபரூபமான அங்குசத்தால் பிரகாசிப்பவள்'என்று ஸஹஸ்ரநாமத்தில் வருகிறது.

காம-க்ரோதங்களில் காமத்திற்கு ரூபகமாயிருப்பது அம்பாளுடைய பாசம். பாசம் என்றால் கயிறு. யமன் வீசுகிற கயிற்றை யம பாசம் என்கிறோமல்லவா? 'ஆசை'என்பதற்கும் 'பாசம்'என்கிறோம். தாய்ப்பாசம் என்கிறோம். ஆசைதான் காமம். கயிறு போட்டுக் காட்டுகிற மாதிரி ஆசை நம்மை பந்தப்படுத்துகிறது. க்ரோதத்திற்கு ரூபகம் அங்குசம். கோபம் என்பது அங்குசத்தால் போட்டுக் குத்துகிற மாதிரியானது.

பிறத்தியானை இல்லை!அவன் நம் கோபத்தை லக்ஷ்யமே பண்ணாமல்கூடப் போவான்! நம்மையேதான் நாமே நம்முடைய கோபத்தால் குத்திக்கொண்டு - அங்குசக் குத்தாகக் குத்திக்கொண்டு புண்படுத்திக் கொள்கிறோம்!கோபத்தில் ஒருத்தன் எனெர்ஜி எவ்வளவு வேஸ்ட் ஆகிறது என்று நவீன ஸயன்ஸ்படிச் சொல்கிறார்கள். இதிலே வேடிக்கையாக, சாஸ்திரங்களுக்கும் ஒத்துப் போவதாக, இன்னும் என்ன சொல்கிறார்களென்றால் நமக்கு

ஒன்றைப் பிடிக்காமல் புகைந்து கொண்டு கோபப்படுவது நம் சக்தியை வேஸ்ட் செய்கிறாதென்றால், ரொம்பவும் பிடித்து ஸந்தோஷமாகக் காமத்தில் போகிற போதுதான் அதைவிடவும் ஜாஸ்தி சக்தி வேஸ்ட் ஆகிறது என்கிறார்கள். 'ஹித சத்ரு'என்பார்கள் - அப்படி நல்லது மாதிரி இருந்துகொண்டே குழியைப் பறிப்பது காமம்.

அங்குசம் என்றால் யானை ஞாபகம் உடனே வருகிறது. பாசமும் யானை ஸம்பந்தப்பட்டதுதான். யானையை எப்போதுமே கட்டுத் தறியில் சங்கிலி போட்டுக் கட்டித்தான் வைக்க வேண்டும். அந்தச் சங்கிலி பாசந்தான். காமமும் க்ரோதமும் யானையளவு பெரிய பரிமாணமுடையவை என்பதாலேயே பாசாங்குசத்தால் அவற்றை அடக்குவதாகக் காட்டுவது. காம க்ரோதங்களை அடக்குவது என்றால் என்ன?அவை முளைக்கிற மனஸை அடக்குவது என்றே அர்த்தம். அந்த மனஸை மதயானையாகவே ஆசார்யாள் 'சிவாலந்தலஹரி'யில் சொல்லியிருக்கிறார்;''ஹ்ருதய மதேபம்''என்று. ('மத இபம்'-மதயானை.)

அம்பாள் பாசாங்குசையாக இருப்பதற்கு ஒரு விளக்கம் - இவையுங்கூட அவள் லீலை, அவளுடைய மாயையின் பிரதான அங்கங்கள் என்று பார்க்க வேண்டும் என்பது. இன்னொரு விளக்கம் - அம்பாள் நம்மிடம் பாசம் வைத்து, தன் கையிலுள்ள பாசத்தால் நம்மைக் காட்டி நம்முடைய மற்ற பாசங்களிலிருந்து இழுத்து அவளை ஆசையுடன் ''அம்மா!''என்று கட்டிக் கொள்ளும்படிப் பண்ணுகிறாள்; 'பற்றற்றான் பற்'றைத் தருகிறாள்;அதேபோல, நம்முடைய கோபத்தின் மேல் அவள் கோபித்துக் கொண்டு, அந்தக் கோபத்திற்கு உருவமான அங்குசத்தால் அதைக் குத்தி அடக்கி சாந்தமாக்குகிறாள் என்பது.

இந்த இரண்டையும் சொல்லிவிட்டு அப்புறமே தநுர் பாணங்களைப் பற்றி ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. பொதுவாகச் சொல்வது 'தநுர்-பாண-பாசாங்குசம்'என்றாலும், மாற்றி பாசாங்குசத்தை முதலிலும் அப்புறம் தநுர் பாணத்தையும் சொல்லியிருக்கிறது. இதுதான் யுக்தமாகவும் தெரிகிறது. முதலில் 'தநுர் பாணம்'எனாறால் அந்த இரண்டும் மன்மதனுக்கே முக்யமாக நினைக்கப்படுபவையல்லவா?அதையே அம்பாளுக்கும்

சொன்னால் அவளுடைய முக்யமத்வம் தெரியாது. அது மாத்திரமில்லை. மன்மதனால் ஏற்படும் ஸ்ருஷ்டிக்கு, பந்தத்துக்கு அம்பாள்தான் நிஜமான காரணம் என்பதால் அந்த இரண்டு (ஆயுதங்கள்)இவள் கையிலிருந்தாலும், பந்த மோசனியும் அவள்தான் என்பதை மறக்கவிடக் கூடாது. மன்மதனின் தநுர்-பாணங்களேகூட அவள் கைக்கு இடம் மாறியபோது பந்தமோசனத்தைக் குறிப்பவைதானென்றாலும் - இந்த விஷயத்திற்கு அப்புறம் வருகிறேன் - அந்த இரண்டை முதலில் சொன்னால் மன்மதனுக்கு இவள் ஒரு காப்பிதான் என்ற மாதிரியான எண்ணமே ஏற்படும். அப்படி ஆகாமலிருக்கத்தான் அம்பாளுக்கென்றே புவநேச்வரி முதலான ரூபங்களில் உள்ள பாசாங்குசங்களை முதலில் சொன்னது. அநேக காமங்களில் ஒன்றான ச்ருங்கார காமத்திற்கு மாத்திரம் (அதுதான் ரொம்ப வலிமையாக ஒருத்தனைச் சறுக்கிவிழப் பண்ணுகிறது என்பதால்) இக்ஷுதநுஸ், புஷ்ப பாணங்கள் என்று தனியாக வைத்திருக்கிறதென்றால், அத்தனை விதமான காமத்திற்குமாகப் பாசத்தையும், அது மாத்திரமில்லாமல் அதற்கு எதிர்ச் சக்தியான கோபத்தைக் காட்டுவதாக அங்குசத்தையும் வைத்திருக்கிறது. அவற்றை முதலில் சொல்லிவிட்டால் அவளை நன்றாகத் தெரியப் பண்ணுவதாக - (சிரித்து)இன்ட்ரொட்யூஸ் பண்ணுவதாக - ஆகிறது.

காமத்தின் நிறைவேறாத ரூபந்தான் க்ரோதம். ஆசை நிறைவேறவில்லை, தோற்றுப் போச்சு என்றாலே கோபம் உண்டாகிறது.

அவளிடமே ஆசை, கோபத்திடம் கோபம் என்று அர்த்தம் பண்ணும்போது அந்த பாசாங்குசமே பந்த மோசனமும் ஆவதால் அம்பாள் தத்வத்தை முற்றிலும் சொன்னதாக ஆகிவிடுகிறது.

ராகத்திற்குப் பாசம், க்ரோதத்திற்கு அங்குசம் என்று சொன்னதற்கப்புறம் ஸஹஸ்ரநாமத்தில் "மநோ-ரூபேக்ஷுகோதண்டா", "பஞ்ச தந்மாத்ர ஸாயகா"என்று இரண்டு பெயர்கள் தநுஸையும் பாணத்தையும் குறித்துச் சொல்லியிருக்கிறது. "மனஸின் ரூபமான இக்ஷுகோதண்டம் (கரும்பு வில்)", "ஐந்து தன்மாத்ரைகளின் ரூபமான பாணங்கள்"- "இவற்றை உடையவள்"என்று

அர்த்தம். 'தன்மாத்ரை'என்றாலும் இங்கே தன்மாத்ரைகளை அநுபோகம் பண்ணும் பஞ்சேந்திரியம் என்றுதான் அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். மன்மதனின் கையில் உள்ள இரண்டேதான். அவனைத் தன்னுடைய அதிகாரியாகக் கொண்டு லோகத்தில் சிற்றின்பக் காமத்தை உண்டுபண்ணுபவள் அகிலாண்ட சக்ரவர்த்தினியான அம்பாள்தான் என்று தெரியப்படுத்துவதற்காக அந்த இரண்டும் இவளிடமும் இருக்கின்றன. ஆனால் அது மட்டுமில்லை. பாசாங்குசங்கள் எப்படி பந்தம், மோக்ஷம் இரண்டையும் காட்டுவதாகச் சொன்னேனோ, அப்படியே இந்த இரண்டுங்கூட!மன்மதன் கையிலுள்ள போது சிற்றின்பக் காமத்தில் மநுஷ்யனின் மனஸை அந்த தநுஸும், பஞ்சேந்திரியங்களை அந்த பஞ்ச பாணங்களும் தள்ளுகின்றனவென்றால், அம்பாளுடைய ஹஸ்தத்திலுள்ளபோதோ அதே தநுஸ் பேரின்பமான மோக்ஷகாமத்தில் மனஸை இழுத்துச் சேர்க்கிறது. அந்த பாணங்களும் மோக்ஷகாமத்தில் அம்பாளுடைய ஸ்தோத்ர கீர்த்தனங்களையே கேட்க வேண்டும், அம்பாளுடைய சரணாரவிந்தங்களை ஸ்பர்சிக்க வேண்டும். அவளுடைய ரூபத்தை தர்சிக்க வேண்டும், அவளுடைய சரணதீர்த்தாம்ருதத்தை ருசிக்க வேண்டும், அவளுடைய நிர்மால்ய புஷ்பங்களை வாரிப் போட்டுக்கொண்டு திவ்ய ஸுகந்தத்தை அநுபவிக்க வேண்டும் என்பதாகப் பஞ்சேந்திரியங்களையும் திருப்பி விட்டுப் பரிசுத்தப்படுத்திவிடுகின்றன. மன்மதனிடம் இருந்தபோது எந்த தநுர்பாணங்கள் நம் மனஸையும் புலன்களையும் வெளிமுகப்படுத்தி அல்பமான விஷய ஸுகங்களில் கொண்டு தள்ளிற்றோ, அந்த தநுர் பாணங்களே அம்பாளிடம் இருக்கும்போது அந்த விஷயங்களுக்குக் காரணமாகவும், நித்ய ஸுகமாகவும் இருக்கும் அவளிடம் நம் மனஸை, இந்திரியங்களைத் திருப்பிவிடுகின்றன. அதே ஆயுதங்கள்;இடம் மாறினதால் பிரயோஜனமே மாறி விடுகிறது!நம்மை தீர்த்துக் கட்டி விட வேண்டுமென்று திருடன் கத்தியைக் காட்டுகிறான்;அதே கத்தி நம் கைக்கு வந்துவிட்டால்? அவன் ஓட்டம் பிடிக்க வேண்டியதுதானே?

மன்மதன் கையிலிருந்தபோது கருப்பஞ் சாறாகவும், புஷ்பங்களிலிருந்து தேனாகவும் காமரஸம் பொழிந்து லோகத்தை மயக்கிச் சிற்றின்பத்தில் சிக்க வைத்தது. அம்பாள்

கையில் அதே இரண்டு ஆயுதங்கள் அவளுடைய கருணா ரஸத்தைப் பொழிகின்றன. ப்ரதியாக நமக்குத் தாயாரிடம் பக்திரஸம் பெருகுகிறது. அவளுடைய கருணையும் நம்முடைய பக்தியும் ஒன்று சேர்ந்து ஏற்படும் ஆனந்த ப்ரவாஹத்தில் தன்னை மறந்து பேரின்பத்தை அநுபவிக்கிறோம். தான் மயங்குவது மாயை - மஹா கெட்டது. தன்னை மறப்பது ஞானம் - நல்லதிலெல்லாம் நல்லது.

இப்படி அம்பாளிடம் ஒன்றை இடம் மாற்றினால் நிக்ருஷ்டமானதே (நீசமானதே)உத்க்ருஷ்டமாகிறது (உயர்ந்ததாகிறது)என்பதைப் பார்க்கும்போது நாம் பண்ணிக் கொள்ளும் அலங்காரத்தையெல்லாம் இடம் மாற்றி அவளுக்குப் பண்ணிவிட்டால் உயர்ந்த ப்ரயோஜனத்தை அடையலாம் என்று புரியும். நாமே அலங்காரம் பண்ணிக் கொண்டால் அது அஹங்காரத்தை அவளுக்குப் பண்ணிப் பார்த்தாலோ அது அஹங்காரத்தைக் கெடுக்கிறது.

சுருக்கமாகச் சொன்னால், இந்திரிய நிக்ரஹத்தை அம்பாள் கையிலுள்ள புஷ்ப பாணமும் மனோ நிக்ரஹத்தை இக்ஷுதநுஸும் அநுக்ரஹித்துவிடுகின்றன. இது ஏற்பட்டுவிட்டால் அப்புறம் ஞானந்தான்ஸ, மோக்ஷந்தான். வேறே ஒன்றும் வேண்டாம்!

பஞ்சபாணம் சுத்தப்படுத்துகிற பஞ்சேந்திரியங்களையும், இக்ஷுதநுஸ் சுத்தப்படுத்துகிற மனஸையும் சேர்த்து ஆறு கரணங்கள் என்று சொல்வதுண்டு. வண்டுக்கு ஆறு கரணங்கள் இருப்பதுபோல ஒரு ஜீவனுக்கு இந்த ஆறு கரணங்கள். தம்முடைய ஜீவன் ஒரு ஆறு கரண-சரண வண்டு என்றும், அது, எப்படி ஒரு வண்டு தாமரைப் பூவுக்குள்ளே போய் அப்படியே புதைந்துவிடுமோ அப்படி அம்பாளின் பாத தாமரையில் புதைந்துவிட வேண்டும் என்றும் நம்முடைய ஸ்தோத்ரத்திலேயே ஆசார்யாள் கடைசியில் சொல்கிறார்: "நிம்ஜ்ஜந் மஜ்ஜீவ :கரண சரண:ஷட்சரணதாம்"(ச்லோ. 90).

என்ன கவனிக்கணுமென்றால் அங்கே இந்திரியங்களும் மனஸும் அவள் ஹஸ்தத்திலுள்ள தநுர்பாணங்களால் அடங்கவேண்டுமென்று சொல்லவில்லை. அவளுடைய சரணத்தில் அடங்கவேண்டும் என்றே சொல்லியிருக்கிறது. "நீ

ஹஸ்தத்தால் அபய வரதம் தர வேண்டியதில்லை; உன் சரணமே அதைப் பண்ணி விடுகிறது"என்று முன்னாடி சொன்னார். இங்கே ("க்வணத் காஞ்சீ தாமா"ச்லோகத்தில்)வராபயங்களுக்குப் பதிலாக அந்த இரண்டு ஹஸ்தங்களிலிருக்கும் தநுர் பாணங்களைச் சொல்லியிருக்கிறார். இவை தருகிற மனோ நிக்ரஹ, இந்த்ரிய நிக்ரஹங்களை மட்டும் அவளுடைய சரணாரவிந்தம் கொடுக்காதா என்ன என்ற கேள்விக்குப் பதிலாகத் தான் பின்னாடி மனஸும் பஞ்சேந்திரியங்களும் ஒன்று சேர்ந்த ஜீவனான வண்டு அந்த அரவிந்தத்திலே புதைந்து போவதையும் சொல்லியிருக்கிறார். (மீதமிரு கரங்களிலுள்ள)பாச அங்குசங்கள் அடக்குகிற நம்முடைய காம, க்ரோதங்களும் அவள் பாதத்தைப் பிடித்தாலே அடங்கிவிடும்தான்! பின்னே எதற்கு நாலு ஹஸ்தமென்றால், அப்படி ஒரு ரூபத்தைப் பார்க்கும்போது எத்தனை ஸௌந்தர்யமாக இருக்கிறது?அதற்காகத்தான். அவள் ஸௌந்தர்யவதி என்பதோடு சக்ரவர்த்தினி. அந்த காம்பீர்யமும் தெரியத்தான் ப்ரதானமாக தநுர்-பாணம் முன்னிரண்டு ஹஸ்தங்களில் ராஜா என்றால் தநுர் பாண தரனாகத்தான் சித்தரிப்பது. ராமர், அர்ஜுனன் என்றால் அப்படித்தான் போடுவது. எட்ட இருக்கிறவர்களையும் தாக்குவதற்கான ஆயுதம் அதுதான். அஸ்திர சாஸ்திரத்திற்கே தநுர்வேதம் என்றுதானே பேர் இருக்கிறது?அதனால் இந்த மஹா மஹா ராணிக்கு தநுர் பாணங்களை முக்யமாகக் கொடுத்தது.

அவள் ஞான ஸாம்ராஜ்ய ராணி, மோக்ஷத்தைத் தருகிறவள் என்பதைத் தெரிவிப்பதற்காக எந்த இரண்டு தொலைந் தால்தான் ஞானம் வருமோ அந்த ராக-த்வேஷங்களைத் தொலைக்கிற பாசாங்குசங்களை மற்ற இரண்டு ஹஸ்தங்களில் கொடுத்திருப்பது.

பாதத்திலே நாமாக ஸமர்ப்பிக்க வேண்டிய மனோ இந்திரியங்களை அவள் தானாக இழுத்துக்கொள்வதைக் காட்டவே ஹஸ்தத்திலே தநுர்பாணங்களாக வைத்துக் கொண்டிருக்கிறாள் - "குழந்தை ஏன் காலில் விழணும்?"என்று தூக்கிக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிற மாதிரி!

எந்த தநுர்பாணங்களைக் கொண்டே அம்பாள்

ஞானமயமாயிருக்கும் ஈச்வரனை லோகக்ஷேமார்த்தமாக லீலாநுக்ரஹமூர்த்தியாக்க வேண்டுமென்று காமத்தில் திருப்பிவிட்டு சிவகாமஸுந்தரியானாளோ, அதே தநுர் பாணங்களால் ஜீவ ஸமூஹத்தின் மனஸையும் பஞ்சேந்த்ரியங்களையும் தன் கைப்பிடிப்பில் அடக்கிக் கொண்டு ரக்ஷிப்பதை இங்கே தியான ச்லோகம் மாதிரிச் சொல்லி ஞாபகப்படுத்தியிருக்கிறார். கடைசியில் பார்த்தால் இந்த தநுர்பாணம் பண்ணும் கார்யத்தையும் அவளுடைய சரணமே பண்ணி விடுகிறது என்று முடித்திருக்கிறார்!

என்ன அர்த்தமென்றால் - ஒவ்வொரு ஆயுதத்திற்கு ஒவ்வொரு சக்தி என்றால் அந்த சக்தி எல்லாமும் எங்கேயிருந்து வந்தது?அம்பாள் கொடுத்துத்தான் வந்தது. நாமெல்லாம் நமக்கு பலமில்லாமல், ஆயுத பலத்தால் ஜயிக்கிறோம். அம்பாளிடமோ, பலம் முழுக்க அவளிடமேதான்!அந்த பலத்தையே அவள் கையிலுள்ள ஆயதங்கள் அவள் எப்படி, என்ன ரூபத்தில், அளவில் கொடுக்கிறாளோ அப்படி வாங்கிக் கொண்டு அவளுடைய ஸங்கல்பத்தைக் கார்யத்தில் பண்ணுகின்றன!அவள் ஸங்கல்பித்தாலே போதும், கார்யம் நடந்துவிடும் என்றாலும் லீலானந்தத்திற்காக கருவி, கரணங்களைக் கொண்டு நடத்திக் காட்டுவதாக விளையாடுகிறாள்!

அவளுடைய சரணத்தைப் பிடித்துவிட்டால் போதும்!கருணா ஸங்கல்பம் பண்ணி அபயமா, வரமா, பஞ்சேந்திரிய நிக்ரஹமா, மனோ நிக்ரஹமா எதுவானாலும் அநுக்ரஹித்து விடுவாள். இருந்தாலும் லீலையில் ஒப்புக்கு இதற்கெல்லாம் ஆயுதம், முத்திரை முதலியனவும் காட்டுவாள்;காட்டாமலும் இருப்பாள்;மற்றவர்கள் கையிலிருந்தால் என்ன அர்த்தமோ அதற்கு மாறாகவும் (தன் கையிலுள்ளபோது)காட்டுவாள்!

பரமசிவன் ஞானியாய் உட்கார்ந்துவிட்டால் லோகம் நடக்காதே, லீலை நடக்காதே என்பதால் காமனும் தோற்றுப்போன இடத்தில் தானே காமேச்வரியாகி அந்த தநுர் பாணங்களை எடுத்துக்கொண்டு ஸ்வாமியை வசீகரித்து லீலையில் சேர்த்தாள். தான் எடுத்துக் கொண்டது மட்டுமில்லை, அந்த சிவனுங்கூட அதே ஆயுதங்களை எடுத்துக்கொண்டு காமேச்வரன் என்ற ச்ருங்கார மூர்த்தியாகும்படிப் பண்ணினாள். அப்புறம் காமனையும்

உயிர்பித்து அவனுக்கே ஜீவ ஸமூஹத்திடம் காமத்தை உண்டாக்கும் அதிகாரத்தை மறுபடியும் தந்தாள். தந்துவிட்டும் அந்த ஆயுதங்களை விடாமல் தானும் வைத்துக் கொண்டாள்.

ஆனால் இப்போது அவற்றின் கார்யத்தை மாற்றி விட்டாள். இந்திரியங்களையும் மனஸையும் விஷயாநு போகத்தில் இழுத்துவிட்ட அந்த ஆயுதங்களைக் கொண்டே இப்போது அவற்றைத் தன்னிடம் இழுத்துக் கொள்ள ஆரம்பித்தாள். கர்மாநுஸாரம் காமாதி அநுபோகங்களை ஜனங்கள் பெற வேண்டியதற்காக மன்மதனிடம் அந்த ஆயுதங்கள் ஒரு மாதிரி கார்யம் பண்ண வைத்தவள், அவர்கள் கர்மாவையே பெருக்கிக் கொண்டு போகாமல் தன்னிடம் திருபம்ப வேண்டிய ஸமயத்தில் அப்படி திருப்புவதற்கு உபகரணமாகவே அவற்றைத் தன் ஹஸ்தங்களில் தரித்துக் கொண்டாள்.

ஆக அவள் மன்மதனின் அஸ்திரங்களை வைத்துக் கொண்டிருந்தாலும், அவள் மன்மதாரி (மன்மத சத்ருவான பரமசிவன்)ஒருத்தருக்குத்தான் காமம் உண்டாக்குகிறாள்;மற்றவர்களுக்குக் காமத்திலிருந்து விமோசனமே தருகிறாள். ஞான மூர்த்தியான ஸ்வாமி விஷயத்தில் மாத்திரம் அவள் சிவகாமஸுந்தரியாக இருந்துகொண்டு, பக்தர்களுக்கு ஞானாம்பாளாக இருக்கிறாள். மன்மதன் கதையைப் பார்த்தாலோ இதே ஆயுதங்களால் அவன் ஜீவ ஸமூஹத்தைக் காமத்தில் தள்ளுகிறான்;ஆனால் ஈச்வரன் ஒருத்தனிடம் மட்டும் ஜம்பம் சாயாமல் அவனே பஸ்மமாகப் போனான்.

அம்பாளுடைய சதுர்புஜங்களையும் ஒட்டியாணத்தையும் ஸூக்ஷ்மமான இடுப்பையும் சரச்சந்த்ர வதனத்தையும் வர்ணித்துவிட்டு - இது அவயவ ஸ்வரூபம் இதை வர்ணித்துவிட்டு - தத்வ ஸ்வரூபமாக அவள் என்ன என்று எஸென்ஸ் பிழிந்து கொடுக்கிறார், "புரமதிது:ஆஹோ புருஷிகா"என்று. "த்ரிபுர ஸம்ஹாரனுடைய தற்பெருமையின் ஆகாரம் (வடிவம்)"என்பது இதற்கு மேலெழுந்த வாரியான அர்த்தம். ஆழமாகப் பார்த்தால் அவனுக்கு ஏற்பட்ட 'நான்'என்ற உணர்ச்சியின் உருவமே அவள். காமனுடைய தநுர் பாணங்களை வைத்துக் கொண்டிருப்பவளானாலும்

இவளே பரப்ரஹ்மத்தினுடைய ஸாக்ஷாத் சித்சக்தியாக இருக்கிற ஞானாம்பாள் என்று அர்த்தம். இந்த விஷயம் முந்தியே சொன்னேன்.

புரஸ்தாத் ஆஸ்தாம். "புரஸ்தாத்"- எதிரில்;"ஆஸ்தாம்"- இருக்கட்டும், விளங்கட்டும். "சப்திக்கிற காஞ்சீ தாமாவைப் பூட்டிக் கொண்டுள்ள ஒடிந்து போகிற மாதிரியுள்ள இடுப்பும், சரத்கால பூர்ண சந்திரன் மாதிரியான முகமும், தநுர்-பாண-பாசாங்குசங்களை தரித்த ஹஸ்தங்களும் கொண்ட அம்பாள் - பரமசிவனின் பராஹந்தா ஸ்வரூபிணி - நம் எதிரில் விளங்கட்டும்"என்கிறார். நமக்கெல்லாம் முன்னால் நின்று அவள் காட்சி கொடுக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறார். தனக்கு மாத்திரமில்லாமல் நம் எல்லோருக்கும் சேர்த்து ப்ரார்த்திக்கிறார். "புரஸ்தாத் ஆஸ்தாம் ந:"என்கிற இடத்தில் "ந:"என்பதற்கு "நமக்கு"என்று அர்த்தம். "எனக்கு"இல்லை;"நமக்கு".

அப்படி அவளை மனக்கண்ணின் முன்னால் நிறுத்திப் பார்ப்பதற்குத்தான் இந்த ச்லோகத்தை அழகான ஸ்வரூப வர்ணனையாகப் பண்ணிக் கொடுத்திருக்கிறார்.

அவளுக்கு வேறே சில லக்ஷணங்களும் உண்டு - சிரஸில் சந்த்ரகலை, லலாட நேத்ரம் (நெற்றிக்கண்), பஞ்ச ப்ரஹ்மாஸனம்.... முக்யமானதை மறந்து விட்டேன், செக்கச் செவேல் என்று ஜோதிச் சிவப்பாக வர்ணம் - இப்படி லக்ஷணங்கள் உண்டு. பின் ச்லோகங்களில் அந்த விஷயங்கள் இல்லாமலே இந்த ச்லோகம் நம்முடைய ஸ்தோத்ர மூர்த்தி இன்னார் என்று ஸ்பஷ்டமாக உறுதி செய்துவிடுகிறது.

அந்த லலிதாம்பாளின் வாஸ ஸ்தானத்தை அடுத்த ஸ்லோகத்தில் ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார்.

அபிராமி அந்தாதியும் இதே லலிதாம்பாளைக் குறித்ததுதான். (திருக்கடவூர்)அபிராமியம்மனைப் பார்த்தால் தநுர் பாண பாசாங்குசங்களோடு இருக்கமாட்டாள். சோழ தேசக் கோவில்களின் வழக்கப்படி வராபயம், புண்டரீகம், அக்ஷமாலையோடுதான் இருப்பாள். ஆனாலும் (அபிராமி)பட்டருக்கு அவள் தர்சனம் தந்தது இப்படித்தான் (லலிதாம்பிகையாகத்தான்). அந்தாதியின் இரண்டாவது

பாட்டிலேயே அவர் தியான ச்லோகம் மாதிரி வர்ணித்து தநுர் பாண பாசாங்குச ஹஸ்தையாகத் தான் சொல்லியிருக்கிறார்;முடிக்கிற கடைசிப் பாட்டிலும் இந்த லலிதாம்பா லக்ஷணத்தையே சொல்லியிருக்கிறார்.

---



## அம்பிகையின் இருப்பிடம்

**ஸுதாஸிந்தோர்-மத்யே ஸுரவிடபி-வாடீ-பரிவ்ருதே**

**மணித்வீபே நீபோபவநவதி சிந்தமாணி-க்ருஹே ***

**சிவாகாரே மஞ்சே பரமசிவ-பர்யங்க நிலயாம்**

**பஜந்தி த்வாம் தந்யா:கதிசந சிதாநந்த லஹரீம் ****

[(ஸுதா ஸிந்தோ:) அம்ருதக் கடலின் (மத்யே) நடுவில் (ஸுர-விடபி-வாடீ-ப்ரிவருதே) கல்பக விருக்ஷவனத்தினால் சூழப்பட்ட (மணித்வீபே) ரத்தின மணியாலேயே ஆன தீவாகிய மணித்வீபத்தில் (நீப-உபவநவதி) கதம்ப விருக்ஷச்சோலையுடன் கூடியதாயுள்ள (சிந்தாமணி க்ருஹே) நினைத்ததை அளிக்கும் சிந்தாமணிகளையே இழைத்து ஆக்கிய மாளிகையான சிந்தாமணி க்ருஹத்தில் (சிவாகாரே மஞ்சே) சிவ வடிவமான மஞ்சத்தில் (பரமசிவ பர்யங்க நிலயாம்) பரமசிவனாகிய மெத்தையில் எழுந்தருளியுள்ள (சிதாநந்த லஹரீம்) ஞானானந்தப் பெருக்காகிய (த்வாம்) உன்னை (கதிசந) எவரோ சில (தந்யா:) பாக்கியசாலிகள் (பஜந்தி) வழிபடுகிறார்கள்.]

சிவனுக்குக் கைலாஸம், விஷ்ணுவுக்கு வைகுண்டம் மாதிரி லலிதாம்பாளுக்கும் தனி லோகம் உண்டு. அவர்களுக்கு ஒவ்வொரு வாஸ ஸ்தானந்தான். இவளுக்கோ இரண்டு.

அதில் ஒன்று பிரம்மாண்டம் என்கிறதற்குள்ளேயே எல்லா க்ரஹங்களும் தன்னைச் சுற்றி வரும்படி மத்தியிலிருக்கும் மேரு சிகரத்தில் இருப்பது. அந்த மேருவிலேயே வேறே மூன்று சிகரங்களில் ப்ரம்ம லோகம் விஷ்ணு லோகம், சிவலோகம் ஆகியவை இருப்பதாகவும் அந்த மூன்றுக்கும் நடுநாயகமான பிரதான சிகரத்திலே அம்பாள் லோகம் இருப்பதாகவும் சொல்லியிருக்கிறது. "ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்தா" என்று ஸஹஸ்ர நாமத்தில் இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. இது ஒன்று. இது தவிர இந்த ப்ரஹ்மாண்டத்திலேயே அடங்காமல் தனி லோகோமாக ஸ்ருஷ்டி பண்ணிக்கொண்டு அதற்குள்ளே ஒரு த்வீபத்திலும் (தீவிலும்) வஸிக்கிறாள். "ஸுதா ஸாகர மத்யஸ்தா, காமாக்ஷீ, காமதாயிநீ"என்று ஸஹஸ்ரநாமத்தில் இந்த அம்ருத ஸாகர இருப்பிடத்தைச் சொன்னவுடனேயேதான் காமாக்ஷிநாமத்தையும் சொல்லியிருக்கிறது. ஆசார்யாள் வர்ணிப்பதும் இந்த வாஸ ஸ்தானத்தைதான். இதுதான் அம்பாளே நிர்மாணித்துக் கொண்ட லோகம். மேரு மத்ய சிருங்கத்திலிருப்பது தேவத்தச்சனான விச்வகர்மா நிர்மாணித்தது - அம்பாள் கொடுத்த சக்தியால்தான்!தேவர்களுடைய சத்ருவான பண்டாஸுரனை வதம் பண்ணுவதற்காக அம்பாள் ஆவிர்பவித்தாள். உடனே, "இவள்தான் நம் ராணி, ராஜராஜேச்வரி"என்று தேவர்கள் பட்டாபிஷேகம் பண்ணினார்கள். ராணிக்கு ராஜதானியாகவே விச்வகர்மா ஏகப்பட்ட கோட்டை கொத்தளங்களோடு தேவ லோகங்களெல்லாம் இருக்கும் மேரு பர்வத்தில் அம்பாளுக்கும் ஒரு ஸ்ரீபுரத்தை நிர்மாணித்துக் கொடுத்தான். ஆனால் ஆசார்யாள் வர்ணிப்பது அம்பாளே ஸ்ருஷ்டித்துக் கொண்ட அம்ருத ஸாகர ஸ்ரீபுரத்தைத்தான்.

மேரு மத்தியானாலும் ஸரி, அம்ருத ஸாகரமானாலும் ஸரி அதில் அவளுடைய ஊருக்கு போய்விட்டால் அங்கே ஒன்றும் வித்யாஸமில்லை. வெளிக் கோட்டையிலிருந்து ஆரம்பித்து அரண்மனையில் அவள் கொலுவிருக்கும் இடம் வரையில் இரண்டிலும் ஒரே மாதிரியான பிராகாரங்கள், வனங்கள், தடாகங்கள், பரிவாரங்கள்தான். அந்த ராஜதானிக்கு [தலைநகரத்திற்கு]ஸ்ரீபுரம் அல்லது ஸ்ரீநகரம் என்றே இரண்டிலும் பெயர். அது இருபத்தைந்து கோட்டைகளும் பிரகாரங்களும் சூழ்ந்தது. முதலில்

இரும்பிலிருந்து ஸ்வர்ணம் வரை ஒவ்வொரு லோஹத்தால் ஒவ்வொரு கோட்டை. அப்புறம் நவரத்தினங்கள் ஒவ்வொன்றாலும் ஒவ்வொரு கோட்டை.

இப்படியே ஸூக்ஷ்மமாகப் போய் மனஸாலேயே ஆன கோட்டை, புத்தியாலேயே ஆன கோட்டை, அஹங்காரத்தாலான கோட்டை எல்லாங்கூட உண்டு. கடைசியில் ஸூர்ய தேஜஸ், சந்திர தேஜஸ், மனமத தேஜஸ் இவற்றைக் கொண்டே ஒவ்வொரு கோட்டை. கோட்டைகளுக்கு நடுவே திவ்ய வ்ருக்ஷங்கள் உள்ள பல வனங்கள், பல ஓடைகள் எல்லாம் தாண்டிப் போனால் இருபத்தைந்தாவது ஆவரணத்தில் - ஆவரணம் என்றாலும் ப்ராகாரம்தான் - மஹா பத்மவனம் என்று ஒரே தாமரை மயமாய்ப் பூத்த ஓடை வரும். அது அகழி மாதிரி. அதற்குள்ளே செங்கலுக்குப் பதில் சிந்தாமணிக் கல்களையே வைத்துக் கட்டியதான அம்பாளின் அரண்மனை வரும். (துர்வாஸரின் 'ஆர்யா த்விசதி'யிலும் 'லலிதோபாக்யான'த்தின் பிற்பகுதியிலும் ஸ்ரீபுரத்தின் விரிவான வர்ணனை காணலாம்.)

அரண்மனையில் இருக்கிற ராணி, ராஜராஜேச்வரி என்பது ஒரு பக்கம். அப்படிப் பார்க்கிறபோது ஸதஸில் ஸிம்ஹாஸனம் போட்டுக்கொண்டு தர்பார் நடத்துவாள். முன்னேயே சொன்னாற்போல பஞ்ச ப்ரம்மங்களை நாலு காலாகவும் மேல் பலகையாகவும் கொண்ட ஸிம்ஹாஸனம். அதில் காமேச்வரன் மடியில் உட்கார்ந்து கொண்டு தர்பார் நடத்துவாள். ராணி என்ற அதிகார ஸ்தானத்தை முக்யமாக வைக்காமல் ப்ரஹ்ம தத்வத்தை லீலையில் திருப்பிய ச்ருங்காரமூர்த்தி என்று பார்க்கிறபோது பஹிரங்கமான ராஜ ஸதஸாக இல்லாமல் ஏகாந்தமான அந்தஃபுரத்தில் தர்சனம் தருவாள். அந்த தர்சனம் பெறுவதற்கு ரொம்பவும் உசந்த இந்திரிய நிக்ரஹம் பெற்றிருந்தால்தான் முடியும். தத்வார்த்தமான ச்ருங்காரத்தைப் புரிந்துகொண்டு தத்வத்துக்குள்ளே முழுகிப்போகிற பக்வமிருக்கிறவருக்கு மட்டுமே அப்படி தர்சனம் கிடைக்கும். ஸதஸில் ஸிம்ஹாஸனமாயிருந்த பஞ்ச ப்ரஹ்மாஸனம் இங்கே (அந்தஃபுரத்தில்) மஞ்சமாக இருக்கும். அதிலே காமேச்வரனோடு அம்பாள் இருப்பாள்.

மேரு மத்தியிலேயுள்ள ஸ்ரீபுரத்தில் தேவர்களுக்கெல்லாம்

மேலே ராஜதர்பார் நடத்துகிற ராணியாகவும், அம்ருத ஸாகர மத்தியிலே உத்தமமான ஸாதகர்களுக்குக் காமேச்வர பதிவ்ரதையான தாயாகவும் இருப்பாள். தாயாரும் தகப்பனாரும் ஒன்றிப்போய், அதிலேயே குழந்தையும் ஒன்றாகப் போய்விடும் பரம ஸாயுஜ்யம் வரை எல்லாம் அநுக்ரஹிப்பாள்.

அப்படிப்பட்ட அம்பாளுடைய வாஸத்தைத்தான் அம்ருத ஸாகரத்திலிருந்து ஆரம்பித்துக் காமேச்வரனுடைய மடி வரையில் சுருக்கமாக இந்த [8-வது]ச்லோகத்தில் ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார்.

[ச்லோகத்தின் மூல வார்த்தைகள் ஒவ்வொரு சொற்றொடராக மனத்திற்குள் சொல்லிக் கொள்கிறார்களென்று தோன்றுகிறது. சொற்றொடர்களின் பொருளை மட்டும் வெளிப்பட மொழிகிறார்கள்.]

அம்ருத ஸாகர மத்தியில் -

தேவலோக வ்ருக்ஷங்கள் என்று ஐந்து - மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பகம், ஹரிசந்தனம் என்று. அப்படிப்பட்ட மரங்கள் அடர்ந்த அரண்யத்தினால் சூழப்பட்ட -

சூழப்பட்டதாக உள்ள மணித்வீபம் என்ற தீவிலே - நிலம் முழுக்க மண்ணாகவோ கல்லாகவோ இல்லாமல் ரத்ன மயமாகவே இருப்பதால் அப்படிப்பேர் - அந்தத் தீவிலே -

நீபம் என்ற மரங்களைக் கொண்ட உபவனத்திலே - கதம்பம் என்பதைத்தான் நீபம் என்றும் சொல்வது, பூலோகத்திலே அம்பாளுக்கு பெரிய வாஸமான மதுரையும் கதம்பவனமாக இருந்ததுதான். தமிழில் கடம்பம், கடப்பம் என்பது. முருகனுக்கும் அது ரொம்ப ப்ரீதி. கடம்பன் என்றே தமிழ் நூல்களில் அவருக்குப் பெயர் சொல்லியிருக்கிறது:மணித்வீபத்தில் கதம்ப வ்ருக்ஷங்களாலேயே ஆன உபவனம் இருக்கிறது. "கதம்ப வந வாஸிநீம்", "கதம்ப வந சாரிணீம்", ["கதம்ப வந சாலயா", "கதம்ப வந மத்யகாம்"]என்றெல்லாமே அடிக்கு அடி ஆரம்பித்து ஆசார்யாள் அஷ்டகம் பாடியிருக்கிறார் (த்ரிபுரஸுந்தர்யஷ்டகம்);

குழந்தைகளுக்குக்கூடச் சொல்லிக் கொடுத்து அவை ஆசையாகக் கற்றுக் கொண்டு சொல்லும்..... கதம்ப வனத்தில் ஆனந்தமாக அம்பாள் ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டிருப்பாள். மதுரையில் கதம்ப வனம், மணித்வீபத்தில் உபவனம். உபவனம் என்றால் சிறிய வனம். ப்ளான் பண்ணி மனிதர்கள் வைத்த பார்க். முதலில் தீவு ஓரத்தில் கல்பகாதி திவ்ய விருக்ஷங்கள் காடாகவே இருக்கின்றன. அப்புறம் ராஜதானிக்குக் கிட்டே கதம்பம் உபவனமாயிருக்கிறது........

எங்கே பார்த்தாலும் டவுன், டவுன்ஷிப் என்று கட்ட ஆரம்பித்து மரத்தையெல்லாம் வெட்டினோம். அப்புறம் மரமில்லாவிட்டால் லோக வாழ்க்கைக்கே அநேக தினுஸில் ஹானி வந்து விடுகிறதென்று புரிந்துகொண்டு இப்போது வன மஹோத்ஸவம் கொண்டாடுகிறோம்!அந்த உத்ஸவமும் பேப்பரில்தான் ஜாஸ்தி நடப்பதாகத் தெரிகிறது!ஆதி காலத்தில் இத்தனை டவுன்கள் இல்லாத போதே எந்த ஊராயிருந்தாலும் எல்லையில் உபவனம் இருக்கும். கோட்டையோடு கூடிய ராஜதானி என்றால் நிச்சயமாக இருக்கும். 'நேச்சர் அப்ஸெட்'ஆகாமல் அது காப்பாற்றியதோடு சத்ரு ஸைன்யத்திடமிருந்தும் ஊரைக் காப்பாற்றிக் கொடுத்தது.......

நீப உபவனம் சூழ்ந்த சிந்தாமணி க்ருஹத்திலே - உத்யான வனத்திற்குள் அம்பாளுடைய அரண்மனை. சிந்தாணிமணிகளாலேயே நிர்மாணம் பண்ணி ஜ்வலிக்கிற அரண்மனை. நம்முடைய எண்ணங்களையெல்லாமே மணியாக்கி - மணி மணியான சிந்தனைகளாகப் அவளைப் பற்றியே நினைத்து அந்த மணிகளாலேயே - ஆலயம் கட்டினால் அதுவும் சிந்தமாணி க்ருஹந்தான். அதற்குள், அதாதவது நம் சிந்தைக்குள், அவளே வந்து குடிகொண்டு விடுவாள். அப்படிப் பண்ணுவதற்கு வழியாகத்தான் வெளியிலே அவளுக்கு வாஸஸ்தானம் சொல்லி அதை த்யானிப்பது. முடிவில் அவள் நமக்குள்ளேயே வரவேண்டும். அபிராமி பட்டர் அப்படித்தான், "உன் கோவில் அங்கே இருக்கா, இங்கே இருக்கா?"என்று பல தினுஸாகக் கேட்டுவிட்டு "என்றன் நெஞ்சகமோ?"என்று முடித்திருக்கிறார். இன்னொரு பாட்டில், ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்து இவ்வுலகம் முழுவதுமாக

வியாபித்திருப்பவள், அந்த உலகமெல்லாம் அடிபட்டுப் போன பின் நிற்கும் ஆத்ம ஸ்வரூபமாகவும் இருப்பவள், எப்படியோ என் இத்தனூண்டு நெஞ்சுக்குள்ளே ஸ்திரவாஸம் செய்கிறாளே!"என்று ஆச்சர்யப்படுகிறார்.

சிந்தாமணி க்ருஹத்திற்குள்ளே சிவ ஸ்வரூபமான மஞ்த்திலே - பஞ்ச ப்ரஹ்மாஸனம் சொன்னேனே, அதன் மேலே -

அந்த ஐந்து பேருக்கும் மேலே பரசிவம் என்றும் பரமசிவம் என்றும் பர ப்ரஹ்ம ஸ்வரூபமாக இருக்கப்பட்ட காமேச்வரனின் மடியிலே - "பரமசிவ பர்யங்க"என்று சொல்லியிருக்கிறது. "அங்" (ணீஸீளீணீ) என்று மாத்திரம் சொன்னால்தான் 'மடி'. 'பர்யங்க' என்றால் பொதுவாக படுக்கை, கட்டில், இடுப்பையும் மடியையும் சேர்த்துக் கட்டின வஸ்திரம் என்றெல்லாம் அர்த்தம். படுக்கை, கட்டில் என்ற அர்த்தம் நீண்டு கொண்டே போய், சிவிகையில் போகிறவவர்கள் அதிலேயே படுத்துக் கொள்வதால் அதற்கும் பர்யங்கம் என்று பேர் வந்து, அது திரிந்து திரிந்து 'பல்லக்கு', ஜீறீணீஸீஹீஞுவீஸீ என்றெல்லாம் ஆகிவிட்டது. "சயநம், மஞ்ச, பர்யங்க, பல்யங்கா:"என்று 'அமர'த்திலேயே வருகிறது. அந்தப் 'பல்யங்கம்'தான் ஜீணீறீணீஸீஹீஞுவீஸீ என்றும் பல்லக்கு என்றும் ஆனது. வைநாகரம் ராமநாதன் செட்டியார் என்று பெரிய சிவ பக்தராகவும் புலவராகவும் ஒரு பிரமுகர் இருந்தார். அவர் 'பல்லக்கு'என்பது 'பல் அக்கு'என்பதிலிருந்து வந்தது;அதாவது 'பல அக்ஷங்கள்'(பல கண்கள்)ஒரு பல்லக்கில் போகிறவரின் மேல் குவிந்திருக்குமாகையால் அந்த வாஹனத்திற்கே அப்படிப் பேர் வந்து விட்டது என்று சாதுர்யமாகப் பாடினார். வாஸ்தவத்தில் 'பர்யங்கம்'தான் பல்யங்கம்-பல்லங்க ம்-பல்லக்கு என்றானது.......

காமேச்வரனின் மடியான மெத்தை அம்பாளுக்குப் பர்யங்கம்.

அதில் உட்கார்ந்திருப்பவளை காமேச்வரி, ராஜேச்வரி என்று ச்ருங்கார ஸுந்தரியாகவோ, ராணியம்மாளாகவோ சொல்லாமல் ஞானத்தின் உச்சிக்குத் தூக்கி "சிதாநந்த லஹரி"என்று பெயர் கொடுத்திருக்கிறார்!அதுதான் ஆசார்யாள் வாக்கின் பெருமை!ச்ருங்கார ஸ்வரூபமாக அவள் ஸ்வாமியோடு இருக்கிறாளென்றாலும் அது ஆத்ம ச்ருங்காரம் அல்லவா?ஸத்தை விட்டுப் பிரியாத சித்தின்

ஆனந்த வெள்ளமாக இருக்கும் ப்ரேமையல்லவா?அதனால்தான், இப்படியிப்படி ஆகப்பட்ட லோகத்தில், ஊரில், க்ருஹத்தில், இன்ன ஆஸனத்தில் உட்கார்ந்திருப்பது வாஸ்தவத்தில் சிதானந்த ப்ரவாஹமேயாக்கும் என்று முடித்திருக்கிறார்.

ÞŠð®ªò£¼ õ£ú vî£ù^F™ Cî£ï‰î ôýKò£è àœ÷ à¡¬ù ò£«ó£ Cô ð£,òê£Lèœ õNð´Aø£˜èœ â¡Aø£˜: "ðü‰F ^õ£‹ î‰ò£:èFêï". úKò£è Š«ó£v Ý˜ì˜ ð‡Eù£™, "èFêï î‰ò£:^õ£‹ ðü‰F' - â¡ðîŸ° 'å¼ Cô ð£,òê£Lèœ à¡¬ùŠ ÌT,Aø£˜èœ'â¡Á Ü˜^î‹.

"ஏன் 'ஒரு சில'?தேவீ பூஜை பண்ணுபவர்களாக ரொம்பப் பேர் இருக்காளே!அதுவும் இப்ப நாளுக்கு நாள் ஜாஸ்தியாயிண்டு வரதே!"

பூஜை என்று ரொம்பப் பேர் பண்ணலாம் ஆனால் சும்மா 'மொண மொண'பண்ணிவிட்டு ஒரு கல்பூரத்தைக் காட்டி விட்டால் அது நிஜமான பூஜையாகி விடுமா?

"ÜŠð®ò£ù£ â¶ Güñ£ù Ì¬ü?"

எதுவென்றால் - முன் ச்லோகத்திலே அவள் ரூபத்தை வர்ணித்ததோல்லியோ?அதை நன்றாக மனஸில் வாங்கிக்கொண்டு நிறுத்திக் கொள்ள வேண்டும். இப்போது வர்ணித்த அவளுடைய வாஸ ஸ்தானத்திலேயே நாம் இருப்பது போல நினைக்க வேண்டும். அவளுடைய அருளே அம்ருத ஸாகரமாகவும், கல்பகக் காடாகவும் நம்மைச் சுற்றிச் சூழ்ந்திருப்பதாகவும், அந்த அருளில் நாம் இருக்கும் பூமியே ரத்னமயமாகி விட்டதாகவும், நம்முடைய பூஜா க்ருஹம் இஷ்டமானதையெல்லாம் தரும் சிந்தாமணியாலேயே கட்டியதாகவும் பாவனை ஏற்பட வேண்டும். அதுதான் ஸாலோக்யமோக்ஷம் என்பது இஷ்ட தெய்வத்தின் லோகத்திற்கு நாம் ஸாலோக்யமோக்ஷம் என்று பொதுவில் சொல்வது. நாம் எங்கேயிருந்தாலும் அதுவே அந்த லோகம் என்று ஆக்கிக் கொண்டால் இன்னும் விசேஷம் என்று தோன்றுகிறது.

ஸாலோக்யத்திற்கு அப்புறம் ஸாமீப்யம்:ஸமீபத்திற்குப் போவது. அம்ருத ஸாகரக் கரையிலிருந்து வனம், உபவனம்,

ஊர் எல்லாம் தாண்டி அரண்மனையில் அவளுடைய மஞ்சம் இருக்கிற இடத்திற்கே போய்விட்டால் ஸாமீப்யம். மானஸிகமாக அந்த ஸாமீப்யத்தை ஸாதிக்க வேண்டும்.

ஸாலோக்ய-ஸாமீப்யங்களுக்கு அப்புறம் ஸாரூப்யம். குளவி ரூபத்தை நினைத்து நினைத்துப் புழுவும் அப்படி ஆகிறது போல அம்பாள் ரூபத்தை நினைத்து நினைத்து நாமும் அப்படி ஆகிவிடுவது ஸாரூப்யம். முன் ச்லோகத்தில் சொன்ன ரூப வர்ணனையில் ஊறி ஊறி, அந்த ரூபத்தைப் பரமசிவ பர்யங்கத்தில் உட்கார்ந்திருப்பதாக அப்படியே த்யானித்தபடி இருந்தால் ஸாரூப்ய முக்தி உண்டாகும்.

அப்புறம் முடிவாக ஸாயுஜ்ய முக்தி. ரூபத்தில் ஒரே மாதிரி இருப்பதற்கு முடிவாகத் தத்வஸாரத்தில் ஒன்றாகவே ஆகிவிடுகிறது. அந்தத் தத்வஸாரம் என்ன என்பதைத்தான் 'சிதாநந்த லஹரி'என்றார். அந்த லஹரியிலேயே வித்யாஸமில்லாமல் கரைந்து போய்விட வேண்டும். அதுதான் ஸாயுஜ்யம்.

கரைந்த பிற்பாடு பூஜையே இல்லை. அதனால் பூஜை என்று பண்ணும் நிலை இருக்கிறவரையில் மானஸிகமாக அந்த பாவனை - கரைந்து போகிற அத்வைத பாவனை - இருக்க வேண்டுமென்று அர்த்தம்.

வாஸ்தவமாக அவளுடைய லோகத்திற்குப் போவது, ஸ்வரூப தர்சனம் பண்ணுவது, தத்வத்தில் கரைவது எல்லாம் நடக்கிறபோது நடக்கட்டும். இப்போது மானஸிகமாக அதையெல்லாம் பாவனையில் பண்ணிப் பார்த்துக் கொள்ள வேண்டும். பூஜை என்று உட்கார்ந்தால் மனஸ் முழுக்க ஈடுபட்டிருக்க வேண்டும். 'ஆபீஸுக்கு நாழியாச்சா?கான்டீனில் இன்னிக்குத் தவலை அடையா?'என்ற ஞாபகம் எதுவும் வராமல் மனஸை அந்த அம்ருத ஸாகர அலையில் ஆரம்பித்து சிதாநந்த ஸாகர அலையாக இருக்கிற பரமதத்வம் வரையில் கொண்டு போய் அப்படியே முழுக்க வேண்டும்.

இப்படியா நாமெல்லாம் பூஜை பண்ணுகிறோம்?எவரோ சில பேர்தானே, பூர்வ புண்யசாலிகள்தானே அம்பாளின் ஸ்வரூபத்திலேயே சிதாநந்த ரஸத்தைத் தெரிந்து கொள்கிற அளவுக்கு மனஸொன்றிப் பூஜை செய்வது?அதனால்தான்

"கதிசந தந்யா:"என்றார்.

---



## குண்டலிநீ ரூபத்தில்

இதற்கப்புறம் சில ச்லோகங்களில் அம்பாளைக் குண்டலிநீ முதலான யோகங்களாலும் மந்த்ர யோகத்தாலும் வழிபடுவது, அப்படி வழிபடுவதால் கிடைக்கிற பலன் முதலியவற்றைச் சொல்லியிருக்கிறது.

குண்டலிநீ ஆறு சக்கரங்களில் (அந்த சக்ரங்களையே கமலங்கள் என்றும் சொல்வதுண்டு. அந்தக் கமலங்களில்) கீழேயிருந்து மேலே போகிற க்ரமத்தில் முதல் ஐந்தில் பிருத்வி முதல் ஆகாசம் முதலான ஐந்து தத்வங்களாகவும், ஆறாவதில் மனஸ் தத்வமாகவும் அம்பாள் இருக்கிறாளென்றும், [அச் சக்ரங்களுள்ள]ஸுஷும்நா நாடி முடிவில், சிரஸில் இருக்கிற ஸஹஸ்ர தள பத்மத்தில் பதியான சிவனோடு ஐக்கியமாகிறாளென்றும் - அதாவது அங்கே ஒரு ஜீவன் குண்டலிநீ சக்தியைக் கொண்டு சேர்க்கிறபோது அத்வைதானந்தம் ஸித்திக்கச் செய்கிறாளென்றும் - அடுத்த ச்லோகத்தில் சொல்கிறார். "அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்"என்பார்கள். அப்படி, ப்ரபஞ்சமாக அம்பாள் விரிந்திருக்கும்போது அதில் பஞ்ச மஹா பூதங்கள் என்றும், அந்த லோகங்களைக் கல்பித்த மஹா மனஸான மஹத் என்றும் இருப்பவையே ஒரு ஜீவனுடைய குண்டலிநீ சக்ரங்களிலும் முறையாக யோகம் பண்ணினால் அநுபவத்திற்கு வந்துவிடுகின்றன. அந்த மஹா மனஸும் மேலே ஸஹஸ்ர தள பத்மத்தில் சிவமான ப்ரம்ம ஸ்வரூபத்திலே ஐக்யமாகி அத்வைதாநுபவம் ஸித்திக்கிறது.

அத்வைத ரஸாநுபவம் அம்ருத ரஸாநுபவமாகக் கிடைக்கிற ஸமாசாரத்தை அதற்கடுத்த ச்லோகத்தில் சொல்கிறார்.

ஸ்வச்சமான அத்வைதானுபவத்தில் ரஸம் ஒன்று என்று, அதைத் தருகிற ஒன்று (அதுதான் அம்பாள்), பெறுகிற ஒன்று (ஜீவன்) என்ற வித்யாஸங்களில்லை. அது வர்ணனாதீதம். உபசாரத்துக்கு 'ரஸானுபவம்'என்பது. ஆனாலும் அது ஏற்படுவதற்கு முன்னாலும், கலைந்த பிற்பாடும் கிட்டத்தட்ட அந்த அநுபவத்திற்கு ஸமமான ஒரு ஸ்திதியில் ரஸம் என்றும், அதைத் தருகிறவர் என்றும், பெறுகிறவர் என்றும் ஒரு த்ரிபுடி [மும்மை]இருக்கும். கமலங்கள் சொன்னேனே, அவை நம்மூர் குளத்துத் தாமரைப் பூக்கள் இல்லை. குளத்துத் தாமரை ஸூர்ய வெளிச்சத்தில்தான் மலரும். சந்திரிகையில் கூம்பிப் போகும். அக்னிச் சூடு பட்டால் வாடிப்போகும். ஆனால் இந்த [குண்டலிநீ]கமலங்களிலோ அக்னி கண்டம், ஸூர்ய கண்டம், சந்தர கண்டம் என்று இருக்கிற மூன்றிலுமே அந்தந்த கண்டத்திற்கான தாமரைகள் மலர்ச்சியடையு ம்!முடிவில் ஸஹஸ்ர தள பத்மத்தை மலர்த்துவதாக பூர்ண சந்த்ரனே சிரஸிலே இருக்கும். அதிலிருந்து சந்த்ரிகையாக அம்ருதம் பெருகும். அதுதான் ரஸம். அந்த ரஸத்தைத் தருவது யார் என்று பார்த்தால் அம்பாளாயிருக்கும். சந்திர பிம்பத்தில் ஸத்குரு சரணமாக அவளுடைய திவ்ய சரணமே இருக்கும். அதிலிருந்துதான் வாஸ்தவத்தில் அம்ருதம் பெருகுவது. அதையே சந்திரன் பெருக்குவதாகக் காட்டுவது. அந்த அம்ருத ரஸத்தைப் பெறுபவனாக, அறிபவனாக ஜீவன் இருக்கிறான். ஆனாலும் 'அவளேதான் ரஸமாயும், ரஸாஸ்வாதம் பண்ணும் தானாகவும் இருப்பதும்'என்ற அத்வைத பாவமும் இருந்து கொண்டிருக்கும்.....

---



## எந்த உபாஸனையிலும் யோகாநுபவ,

## ஞானாநுபவ, ப்ரேமாநுபவங்கள்

"குண்டலிநீ கிட்டேயே போக மாட்டேன் என்கிறாரே, நம்மையும் போகவிட மாட்டேன் என்கிறாரே!பின்னே, இந்த உசந்த அநுபவங்களெல்லாம் நமக்கு எப்படிக் கிடைக்கும்?இதையெல்லாம் சொல்லாமலாவது இருக்கப்படாதா?"என்றால் -

அப்படி [குண்டலிநீ]யோகமாகத்தான் பண்ண வேண்டுமென்றில்லை. எந்த வழியில் போனாலும், குண்டலிநீ யோக வழிமுறைகளைப் பின்பற்றாமல் எந்த உபாஸனையில் போனாலும் அதிலேயே ஒருமுகமாக, ஸின்ஸியராக, நம்பிக்கை விச்வாஸங்களோடு பண்ணிக் கொண்டு போனால் ஒரு நிலைக்கு உயரும்போது ச்வாஸகதிகள் யோக ஸாதனையில் எப்படி ஆகுமோ அப்படித் தானாகவே மாறிவிடும். நமக்கு அது தெரியக் கூடத் தெரியாது. ஆனாலும் தானாகவே மாறிவிடும். இன்னும் உசந்த நிலையில் உபஸனா லக்ஷ்யத்திலே நாம் தன்மயப்படும்போது ச்வாஸம் கும்பகமாக அப்படியே நின்றும் விடும். ஸாதாரணமாக லௌகிக ப்ரவருத்திகளில் நாம் இருக்கிறபோது இடது நாஸியிலேயே மூச்சு வருவதாக இருக்கும். அதுவே ஒரு உத்ஸவத்தில் தர்சனம் பண்ணி ஒருவிதமான ஸந்தோஷம் அடைகிறபோதோ, ஒரு மஹானின் ஸந்நிதியில் மனஸு சாந்தப்பட்டு இருக்கிற போதோ மூச்சைக் கவனித்தால் வலது நாஸியில் வருவதாகக் தெரியும். இன்னும் உசந்த நிலையில் இரண்டு நாஸியிலும் ஸமமாக - அதற்கும் மேலே போனால் கும்பகமாக அப்படியே [மூச்சு]நின்றுவிடுவதாக, ஆனாலும் மூச்சடைப்பாகத் திணறாமல் ஹாயாக, லைட்டாக இருப்பதாக - இப்படியெல்லாம் ச்வாஸகதி தன்னால் மாறத்தான் செய்யும். அதில் முடிவாக - அல்லது அத்வைத முடிவுக்கு முந்தின நிலையாக - ச்வாஸ சலனம் உச்சி நாடிகளில் முட்டி அம்பாள் பாதத்தைத் தொட்டு அம்ருத ரஸதாரையைப் பொழியவும் வைத்துவிடும். லோக வாழ்க்கையிலேயேகூட ரொம்பவும் ஸந்தோஷம் ஏற்பட்டால் மூச்சடங்கி மூர்ச்சை போடுகிறோமே அது கும்பகத்தின் ரஸபாஸம்தான். அப்படியே, "உச்சி குளிர்ந்து போச்சு!"என்கிறோமே, அதுவும் அந்த அம்ருதத்திலே லேச லேசம் [துளியிலும் துளி]உச்சி நாடியில் துளிப்பதால்தான்!

பக்தி மார்க்கத்திலேயும் அத்தனை உத்தமாநுபவங்களும் உண்டு என்பதற்காகச் சொன்னேன்.

வேறே ஸாதனைகளில் போகாமல் பக்தி வழியிலேயே "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி"என்று அப்படியே போனவர்களின் பாட்டுக்களைப் பார்த்தால் நம் தமிழ் நாட்டுச் சிவனடியார்கள், விஷ்ணு பாகவதர்கள்தான் என்றில்லை, மஹாராஷ்டிரம், பெங்கால், வடதேசம், இன்னும் ஸூஃபிகள், கிறிஸ்துவ பக்திமான்களின் பாட்டுகளில்கூட ஒரே யோகாநுபவமாகவும், ஞானாநுபவமாகவும் அங்கங்கே flashபண்ணிக்கொண்டு போவதைப் பார்க்கிறோம்.

இங்கே ப்ரேமாநுபவத்தையும் சொல்லணும். இச்சாசக்தி, காமேச்வர-காமேச்வரி என்றெல்லாம் மூல தத்வத்தைப் பற்றிச் சொன்னது ரொம்ப ஸூக்ஷ்மமான, பரிசுத்தமான ச்ருங்காரத்தைச் சேர்ந்தது. காமம், காமம் என்று பேர் இருக்கிறதே என்று நமக்கு என்னவோ போலிருந்தாலும் - குரு, ஸந்நியாஸி என்று இருந்து கொண்டு ஏதோ கொஞ்சம் சொல்வதுகூட அஸப்யம் [பொதுவில் கூறுவதற்கு ஒவ்வாதது]போலிருந்தாலும் - வாஸ்தவத்தில் அதில் தத்வார்த்தமாக ஒரு தோஷமுமில்லை. ஒரு சாந்தமான ஆதாரத்தோடேயே சக்தி பின்னிக் கொண்டு ஸகல ஸ்ருஷ்டியும் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தான் அப்படி 'ஸிம்பாலிக்'காகத் தெரிவித்திருக்கிறது.

இதிலே தோஷமே இல்லை என்பதால்தான் ஸாதனாந்தத்திலே [ஸாதனை முடிவிலே]அநேக மஹான்களுக்கு யோகாநுபவ, ஞானாநுபவங்களைப் போலவே இந்த ச்ருங்காரநுபவமும் ஏற்படும்படியாக அம்பாள் பண்ணியிருக்கிறாள்!மூல தத்வத்தின் இவல்யூஷனில் முதலிலே இச்சையும், ச்ருங்கார ஜோடியும் வருகிறார்களென்றால், ஸாதனாந்தத்தில் ஜீவனின் இன்வல்யூஷனிலும் அநேக மஹான்களுக்கு ஐக்யத்திற்கு முன் ஸ்டேஜில் நாயிகா பாவம் ஏற்பட்டிருக்கிறது!அது சக்தியோடு ஐக்யமாகிவிட்ட நிலை. அப்போது [நாயகனான]சிவனோடு ஐக்யமாக வேண்டுமென்ற தாபம் உண்டாகிறது. அந்தத் தாபத்திலேயே, "நான் ஒன்றும்

பண்ணிக் கொள்வதற்கில்லை. உன் இச்சைதான்"என்று சரணாகதி பண்ணுவது. அப்புறம் சிவனோடு சேரவேண்டும் என்ற இச்சையும் போய் சிவனின் இச்சை மாத்திரமே நிற்கிறது. அதாவது ஜீவன் பிரயாஸைப் பட்டுச் செய்துகொண்ட இன்வல்யூஷன் சிவனுடைய முதல் இவல்யூஷனில் ஸங்கமித்து விடுகிறது. அந்த இடத்தில் அந்த ஒரு ஜீவனைப் பொறுத்தமட்டில் சிவனே இவல்யூஷனில் விரியாமல், இன்வல்யூஷனில் குவிந்து அவனை உள்ளுக்குள்ளே வாங்கிக் கொண்டு விடுகிறான். ஸாதாரணமாக ஒரு பிரவாஹத்திலே ஒன்றைப் போட்டால் அலையடித்து, அலையடித்து அதை வெளியிலேதான் ஓரத்திற்குத் தள்ளுமானாலும், அந்தப் பிரவாஹத்திலேயே ஒரு சுழல் சுழித்துக் கொள்கிறபோது போடும் வஸ்துவை அது உள்ளுக்கு வாங்கிக் கொள்கிற மாதிரி இங்கே நடக்கிறது.

சிவனின் ஆரம்ப இச்சை, ஜீவனின் கடைசி இச்சை இரண்டும் ச்ருங்கராமாக ஸிம்பலைஸ் ஆகிறது!இதுவும் எல்லா தேசத்து, எல்லா மதத்து மஹான்களின் பாடல்களைப் பார்த்தாலும் தெரிகிறது. ஸூஃபிக்கள், கிறிஸ்துவ மிஸ்டிக்குகள் ஆகியவர்கள் வாக்கிலேயும் திருக்கோவையார் (மாணிக்கவாசகர்), மீராபாயி போன்றவர்களின் பாட்டுக்களுக்கு அப்படியப்படியே 'பாரலல்'கள் [இணைகள்]அகப்படுகின்றன!யோகானுபவம், ஞானானுபவம், ப்ரேமானுபவம் எல்லாருக்கும் பொதுவாக ஏற்படுகிறது......

சிவன், ஜீவன் [ஆகியவர்களின்]இச்சை என்றாலும் அந்த சித்தசலனமும் அம்பாள் கார்யந்தான்!உள்ளுக்குள்ளே போன அப்புறந்தான் சிவமாக இருப்பதே தவிர, உள்ளுக்குள்ளே அவன் வாங்கிக் கொள்வதாகச் சொல்வதும் அவள் கார்யந்தான்......

பக்தியிலே உசந்த யோகானுபவங்களும் உண்டாவதைச் சொன்னேன். யோக ஸாதனை, தாந்த்ரிக ஸாதனை என்று போகாமல், "நம் சக்திக்கு அதெல்லாம் அப்பாற்பட்ட விஷயம். ஏதோ, அம்மா பராசக்தி, நீதான் கதி!' என்று கிடப்போம்''என்று நாம் அன்போடு நினைத்து பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் 'ஏதோ பெரிய ஸாதனை

பண்ணுகிறோமாக்கும்!'என்ற தற்பெருமை ஏற்பட இடமிருக்காது. தழைந்து கிடக்கிறவனை அந்தத் தாயாரே தூக்கி என்னென்ன உச்சி அநுபவமோ எல்லாம் கொடுப்பாள்.

ஸஹஸ்ராரத்திலே (ஸஹஸ்ர தள கமலம் என்று முன்னர் கூறியது)ப்ராண சக்தி சேருகிறபோது அங்கே பூர்ண சந்திர ப்ரகாசம் வீசுகிறது;அம்ருத தாரை கொட்டுகிறது என்று சொன்னால், அந்த அநுபவம் நமக்கு இல்லையா என்று ஏன் அழணும்?'பரிணத சரச்சந்த்ர வதநா'என்று (ச்லோ. 7-ல்)பார்த்தோமல்லவா?அப்படிப்பட்ட அம்பாளுடைய பூர்ண சந்த்ர முகத்தை ஸுலபமாக அப்படியே நினைத்தபடி இருந்தாலே போதும்;அதிலிருந்து பெருகுகிற கடாக்ஷாம்ருதம், மந்தஸ்மிதாம்ருதம் (புன்னகை யமுதம்)ஆகியவற்றை நினைத்துக் கொண்டிருந்தாலே போதும், நினைத்ததை நிஜமாகக் கொடுத்து, உள்-சந்த்ரன், உள்-தாரை எல்லாமும் ஸித்திக்கப் பண்ணிவிடுவாள்.

சக்தி ஸாமர்த்யம் உள்ளவர்கள் அப்படி (குண்டலிநீ யோகத்தில்)போய்க்கொள்ளட்டும் நமக்கு எளிசாக ஒரு பக்தி, 'அம்மா' என்று ஒரு பிடிவாத நம்பிக்கை போதும். அவர்களுக்குக் கிடைப்பவையெல்லாம் நமக்கும் அவளே கிடைக்கப் பண்ணுவாள்.

ஒரு ஸ்டேஜுக்கு அப்புறம் நாமும் அந்த வழியில் போயுங்கூட அந்த அநுபவங்களைப் பெறும்படியாகவும் அவள் பண்ணலாம். இன்னொரு பக்கத்திலே கடினமான யோக ஸாதனைகள் பண்ணினவர்களை, "போதும் இதெல்லாம்!"என்று பேசாமல் கிடக்கும்படியும் பண்ணலாம்.

நாடிகளிலே அம்பாள் அம்ருத ரஸம் பெருக வைப்பதாகச் சொன்ன ச்லோகத்தை எப்படி முடித்திருக்கிறாரென்பதைக் கவனிக்க வேண்டும். ப்ராண சக்தியை சிரஸுக்கு ஏற்றி அங்கே ரஸ தாரையை உண்டாக்குகிறவள், அப்படியே அத்வைதமாக ஜீவனை ஐக்யப்படுத்தி விடுகிறாள் என்று முடிக்காமல், மறுபடி அந்த ப்ராண சக்தி ரூபத்தில் சிரஸிலிருந்து சக்ரம் சக்ரமாக இறங்கி வந்து மூலாதாரத்தில் சக்தியெல்லாம் மங்கிச் சுருட்டிக்கொண்டு தூங்கிப் போகிறாளென்று முடித்திருக்கிறார்.

சுருட்டிக் கொண்டு படுத்திருப்பதிலிருந்துதான்

'குண்டலிநீ'என்ற பெயரே வந்தது. ஒரு குண்டலம் எப்படி வளையமாக இருக்கிறதோ, அப்படி ஒரு ஸர்ப்பமானது தூங்கும்போது உடம்பைச் சுருட்டிக்கொண்டுதான் படுக்கும். நாம் கையை காலை நன்றாக நீட்டிக் கொண்டாலே ஹாயாகத் தூங்குவதாக இருக்கிறது. அப்பப்போ கொஞ்சம் புரண்டு, சுருண்டு, கிருண்டு படுத்துக்கொண்டாலும், "அடிச்சுப் போட்டாப்பல தூக்கம்"என்னும்போது நன்றாக உடம்பை நீட்டிக் கொண்டுதான் கிடப்போம். ஆனால் ஒரு பூனையிலிருந்து ஆனைவரை எதைப் பார்த்தாலும் உடம்பை ஒரு மாதிரி வளைத்துக்கொண்டு முன்னங்காலில் மூஞ்சியை வைத்துக் கொண்டுதான் தூங்குகின்றன. இதற்கு உச்சத்தில் ஒரு ஸர்ப்பம் நித்ரை பண்ணும்போது ஒரே சுருட்டாகச் சுருட்டிக்கொண்டு குண்டலாகாரமாகவே படுக்கும். பராசக்தியின் சக்தியில் ரொம்ப ரொம்ப அல்ப பாகமே நம்மெல்லாரிடமும் வெளிப்பட்டு பாக்கி அத்தனையும் செயல் படாமலிருப்பதால் நம்முடைய மூலாதாரத்தில் அவள் இப்படிச் சுருட்டியடித்துக்கொண்டு தூங்குகிற ஸர்ப்பமாகவே இருப்பதாக வைத்து, குண்டலிநீ என்று சொல்வது. காற்றைக் குடித்துக்கொண்டே பாம்பு உயிர் வாழ்வதாக ஐதிஹ்யம். அதனால் 'பவநாசி'என்றே அதற்கு ஒரு பேர். ('பவனம் - காற்று;'அச்'- உண்பது.)மூச்சுக் காற்றைக் குடித்தே நாம் உடம்பில் ப்ராண சக்தியைத் தக்கவைத்துக் கொள்வதால் அதையும் ஸர்ப்பமாகச் சொல்வது.

அந்த விஷயங்கள் இருக்கட்டும். கிட்டத்தட்ட அத்வைதாநுபவமாக அம்ருதாஸ்வாதம் (அமுதத்தை ருசிப்பது)நடப்பதைச் சொன்னவர் தடதடவென்று ஒரே இறக்காக இறக்கி வெறும் பாமர ஜீவன்களாக நாம் இருக்கிற நிலையில் தூங்கும் ஸர்ப்பமாக அம்பாள் ஆவதைச் சொல்லி முடித்திருக்கிறார். என்ன தாத்பர்யம்?'நாம் பண்ணும் பெரிய யோக ஸாதனை'என்கிற நினைப்பு உள்ள மட்டும் அம்ருதாஸ்வாதம் பண்ணிய யோகிகளையுங்கூட அவள் உருட்டித் தள்ளி விடலாம். ஆகையால் குண்டலிநீ யோகம் என்றே போனாலுங்கூட "நானில்லை;நீ!"என்கிற சரணாகதிதான் முடிவில் பூட்டைத் திறக்கும் சாவி!

---

## ஸ்ரீசக்ரம் :அதன் சிறப்புக்கள்

அடுத்த ச்லோகத்தில் ஸ்ரீசக்ரத்தை வர்ணிக்கிறார். ஸ்ரீயந்த்ரம் என்றும் அதைச் சொல்வதுண்டு. 'ஸ்ரீவித்யா பூஜை'என்றாலே "ஸ்ரீசக்ரம் வெச்சுப் பூஜை பண்றாளா?"என்றுதான் கேட்கிறோம். "ஆமாம்"என்றே பதில் வரும். எல்லா ஸ்வாமிக்கும் - ஒவ்வொரு ஸ்வாமிக்கும் - ப்ரத்யேகமாக யந்த்ரம் உண்டு. ஆனாலும் சிவ பூஜை, விஷ்ணு பூஜை என்றெல்லாம் பண்ணுகிறவர்கள் பெரும்பாலும் அந்த மூர்த்திகளுக்கான யந்த்ரங்கள் வைத்துப் பண்ணுவதில்லை. ஆலயங்களில் வேணுமானால் ஸந்நிதிகளில் விக்ரஹங்களுக்குக் கீழே அந்தந்த யந்த்ரம் பூமிக்குள் - சில இடங்களில் வெளியிலேயேகூட - ப்ரதிஷ்டையாகி இருக்குமே தவிர அகங்களில் அப்படியில்லை. [சிவனுக்கு]பாணம், [விஷ்ணுவுக்கு] ஸாளக்ராமம் என்று வைத்துப் பூஜை பண்ணுபவர்களே நிறைய இருக்கிறார்கள். இப்படிப் பஞ்சாயதன மூர்த்திகளில் அம்பாளுக்கு இயற்கையில் கிடைக்கிற கல் 'ஸ்வர்ண ரேகா சிலா'என்பது. ஆனால் அதை வைத்துப் பூஜிப்பவர்கள் துர்லபமாகவே இருப்பார்கள். ஸுப்ரஹ்மண்ய பூஜை செய்கிறவர்கள் வேலை வைத்தே பூஜிப்பதுண்டு. ஆனாலும் பொதுவில் மற்ற ஸ்வாமிகளுக்கு ஒன்று, அவயவங்களோடு கூடின மூர்த்தி, அல்லது இயற்கையில் கிடைக்கும் கல்லு ஆகியவற்றை வைத்தே பூஜிப்பது வழக்கமாயிருக்க அம்பாளுக்கு மாத்திரம் ஸ்ரீசக்ரம் என்றே இருக்கிறது. கொஞ்சம் கொஞ்சம் அதோடுகூட - தனியாயில்லை, ஸ்ரீசக்ரத்தோடு கூட - அவயங்களோடு கூடிய விக்ரஹமும் வைப்பது வழக்கத்திலிருக்கிறது.

ஒவ்வொரு தேவதைக்குமான எந்த தந்த்ரத்தை [வழிபாட்டு முறையை]எடுத்துக் கொண்டாலும் அதில் 'மந்த்ரம்', 'யந்த்ரம்'என்று இரண்டு இருக்கும். ஒவ்வொரு விதமான

சப்தக் கோவையை ஜபித்து ஜபித்து ஸித்தி பெற்றால் அதற்குரிய தேவதையை ஸாக்ஷாத்கரிக்கலாம். அப்படியுள்ள சப்தக் கோவையே அந்த தேவதைக்கான மந்த்ரம் கர சரணாகதிகள் கொண்ட அவயவ ரூபம் போலவே ஒரு தேவதைக்கு இந்த அக்ஷர ஸமூஹமும் ஒரு ரூபம்;சப்த ரூபம், மந்தர ரூபம் என்பது. அதோடுகூட யந்த்ர ரூபமும் இருக்கிறது. ஏதோ கோடும், கோணமும், கட்டமும், வட்டமுமாகத் தெரிகிற யந்த்ரத்தில் அந்த ஒவ்வொன்றுக்கும் அர்த்தமுண்டு; அபார சக்தியுண்டு. ஒவ்வொரு யந்த்ரமும் பரமாத்மாவை ஒரு குறிப்பிட்ட தேவதையாகப் பிடித்துத் தர ஏற்பட்டது. மந்த்ரத்தை மனஸுக்குள் ஜபிப்பது மாத்திரமின்றி யந்த்ரத்திலும் அர்ச்சன, ஆவாஹனாதிகளில் ப்ரயோஜனப்படுத்துவதுண்டு. அந்தந்த யந்த்ரத்தின் கோணங்களுக்கும், தளங்களுக்கும் உள்ளேயே அந்த தேவதைக்கான மந்த்ராக்ஷரங்களைப் பொறித்து வைப்பதும் உண்டு. அவயங்களோடுள்ள விக்ரஹ ரூபத்திற்குப் பண்ணுவதுபோலவே யந்த்ரத்திற்கு அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்யம் என்று எல்லா உபசாரங்களுடனும் பூஜை பண்ணவேண்டும். ஏனென்றால் அந்த விக்ரஹத்தின் உயிராகவுள்ள தேவதையேதான் இப்படி யந்த்ர ரூபத்தில் இருப்பதும். அந்த தேவதை மட்டுமில்லாமல் அதனுடைய வாஸ ஸ்தானம், அதனுடைய ஸகல பரிவாரங்கள் எல்லாவற்றையும் சேர்த்து வைத்து இந்த யந்த்ர ரூபம் ஏற்பட்டிருக்கிறது.

அம்பாளுக்குப் பல ரூபமிருப்பதில் ஒவ்வொன்றுக்கும் ஒரு யந்த்ரமும் உண்டு. ஆனாலும் மீனாக்ஷி, துர்கை, புவனேச்வரி, சாரதாம்பிகை என்று மூர்த்தி வைத்திருப்பவர்களுங்கூட [அந்தந்த மூர்த்திக்கான யந்த்ரமாக இன்றி]ஸ்ரீசக்ரமே வைத்துப் பூஜை பண்ணுவதையும் பார்க்கிறோம். அகங்களில் மாத்திரமில்லை;ஆலயங்களிலும் இப்படி இருக்கிறது. திருவண்ணாமலை கிரிப்ரதக்ஷிணத்தில் ஒரு ப்ரஸித்தமான துர்க்கையம்மன் கோவிலிருக்கிறது.

அங்கே யந்த்ரத்தைப் பார்த்தால் ஸ்ரீசக்ரமாகவே இருக்கிறது. சிருங்கேரியில் சாரதாம்பாள் மூர்த்தியாக இருந்தாலும் ஸ்ரீசக்ரமே பூஜை நடக்கிறது.

இப்படி மற்ற எந்த ஸ்வாமியையும்விட அம்பாளுக்கே யந்த்ரம் விசேஷமாகவும், அம்பாளுக்கே இருக்கப்பட்ட அநேக ரூபங்களுக்கான யந்த்ரங்களிலும் ஸ்ரீயந்த்ரத்திற்கே விசேஷம் என்றும் இருக்கிறது.

கோடுகள், வட்டங்கள், சதுரங்கள், அந்தக் கோடுகளாலான கோணங்கள் இவை எல்லாம் ஒரு சக்ர ரூபத்தில் அமைந்து, மத்ய பிந்துவோடு [நடுப் புள்ளியோடு]இருப்பதே யந்த்ரம் என்பது. இந்த மாதரி டிஸைனுக்கே ஒவ்வொரு தேவதையின் சக்தியை க்ரஹித்துக் கொடுக்கும் சக்தி - அபரிமிதமான சக்தி - இருக்கிறது. [சிரித்து]Divine Design!கெட்ட சக்திகளைத் துரத்தியடிக்கவும், திவ்ய சக்திகளை ஆகர்ஷித்துத் தருவதற்கும் சக்தி படைத்தவையாக அந்த டிஸைன்கள் இருக்கின்றன.

ஸ்ரீ சக்ரத்தில் சக்ரம் என்று வட்டமாக இருக்கும் மத்ய பாகத்தில் ஒன்பது முக்கோணங்கள் ஒன்றையொன்று வெட்டிக் கொள்வதில் நாற்பத்து மூன்று முக்கோணங்கள் உண்டாயிருக்கும். மத்ய பிந்துவையும் கோணமாகவே சேர்த்து நாற்பத்து நான்கு கோணங்கள் ஆறு ஆவரணங்களாக அமைந்திருக்கின்றன. ஆவரணம் என்றால் மறைப்பு என்பது நேர் அர்த்தம். இங்கே சுற்று, ப்ராகாரம், rowஎன்று அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். ஒருத்தரைச் சுற்றிப் பல பேர் நின்றால் ஆஸாமி தெரியாமல் மறைக்கத்தானே செய்யும்?அதனால் ஆவரணம் என்று பேர். மத்ய பிந்துவையும் கோணம் என்று சொன்னாற் போலவே ஆவரணம் என்றும் சொல்கிறது. வாஸ்தவத்தில் அதைச் சுற்றி நாற்பத்து மூன்று கோணங்களே ஐந்து ஆவரணங்களாக அமைந்திருக்கின்றன. அதையும் சேர்த்து ஆறு ஆவரணம். 'நவாவரணம்', 'நவாவரணம்'என்று ஒரு வார்த்தை பல பேர் கேட்டிருக்கலாம். இப்போது தீக்ஷிதரின் நவாவரண க்ருதிகளுக்கு மவுஸு ஏற்பட்டு ரேடியோவில் ஒலி பரப்புவதால் அந்த வார்த்தை ப்ரசாரத்தில் வந்திருக்கிறது. நவாவரணம் என்பது ஸ்ரீசக்ரத்திலுள்ள ஒன்பது சுற்றுக்கள் தான். அந்த ஆவரணம் ஒவ்வொன்றிலும் யாரார் இருக்கிறார்கள், என்னென்ன தத்வங்கள் இருக்கின்றன, அதற்கு அதிதேவதை யார், அவர்கள் என்ன அநுக்ரஹம் செய்கிறார்கள், அங்கே என்ன முத்ரை காட்ட வேண்டும்

என்றெல்லாம் சாஸ்திரங்களில் இருக்கிறது. அதையே சுருக்கமாக தீக்ஷிதர் கீர்த்தனத்தில் கொடுத்திருக்கிறார். ஒவ்வொரு ஆவரணத்திற்கு ஒரு க்ருதி. இப்போது அதில் ஆறு சொன்னேன். இந்த ஆறில் தான் 44 கோணங்கள் இருப்பது. இந்த ஆறுக்கு வெளியிலே இன்னும் மூன்று சுற்று. அதையும் சேர்த்தாலே நவாவரணம். அதிலே இரண்டு, தாமரை இதழ்கள் வட்ட வடிவமாக அமைந்துள்ள சுற்றுக்கள். இந்த எட்டு ஆவரணத்திற்கும் சேர்த்து வெளி மதிலாக ஒரு ஆவரணம். அது மூன்று காம்பவுண்டுச் சுவர்கள் எழுப்பினாற்போல மூன்று கோடுகளாக வெளியே இருக்கும். அவை சக்ராகாரமில்லை. சதுரம், சதுரமாகவே இருக்கும். இப்படி ஒரு டிஸைன், அபரிமிதமான திவ்ய சக்தியோடு....

ஆனால் இதில் ஜாக்ரதை வேண்டும். ஒரு யந்த்ரம் என்றால் அதில் ஒவ்வொரு கோடும், கோணமும் என்ன பரிமாணத்தில் இருக்க வேண்டுமோ அப்படிக் கணக்காக இருக்க வேண்டும். கொஞ்சங்கூட முன்னே, பின்னே இருக்கக் கூடாது. ஒரு மந்திரத்தில் சப்தம் கொஞ்சம் மாறுபட்டால்கூடப் பெரிய தோஷமாகிவிடலாம் என்பது போலவே யந்த்ரத்திலும் டிஸைனில் சின்னத் தப்பிதம் இருந்தாலும் கெடுதல் உண்டாகிவிடும். டிஸைன் முழுக்க ஸரியாயிருந்தால் கூட, ஸ்ரீ யந்திரத்தில் நடு முக்கோணம் கிழக்கு நோக்கி இல்லாமல், மேற்கு நோக்கியிருக்கும்படி வைத்துவிட்டால் பலனே மாறிவிடும். (பூஜா மூர்த்திகளைக் கிழக்குப் பார்க்க வைப்பதே கிரமம். எனவே ஸ்ரீசக்ரத்தையும் அவ்வாறே வைக்கவேண்டும். அதாவது நடு முக்கோணத்தின் கூர்முனை கிழக்குப் பார்க்க இருக்கவேண்டும்.

அதற்கு எதிரே அமர்ந்து பூஜகர் பூஜிக்கும்போது, ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது முக்கோணங்களில் நடு முக்கோணம் உள்பட ஐந்தின் முனை அவரை நோக்கியும், மீதம் நான்கின் முனைகள் எதிர்த் திசை நோக்கியும் இருக்கும்.)

இன்னொரு அம்சம், ஜாக்ரதை தேவைப்படும் அம்சம், என்னவென்றால், விக்ரஹம் வைத்துப் பூஜை செய்வதை விடவும் யந்திரத்திற்குச் செய்யும்போது சாஸ்திரோக்தமாகவும், மடி ஆசாரங்களோடும் செய்ய வேண்டும்.

தற்காலத்தில் தெரியாத்தனத்தால் கொஞ்சம், ஜம்பத்துக்காகக் கொஞ்சம், இது ஒரு ஃபாஷன் என்று கொஞ்சம் என்பதாகப் பல 'கொஞ்சம் பேர்'. «ê˜‰¶ Ü¶«õ 'G¬øò'ÝA, ªó£‹ð i´èO™ ÿ ê‚ó Ì¬ü â¡ø «ðK™ å¡Á ïì‚Aø¶. Ýù£™ Gòñƒèœ «ð£î£îî£™ ¶˜Hþ‹, Üê£‰FèÀ‹ M¼ˆFò£A, ªè£‡«ìJ¼‚A¡øù!

ஆசைப்பட்டால் மட்டும் போதாது, அது அதற்கு எப்படி சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதோ, பெரியவர்கள் செய்து காட்டியிருக்கிறார்களோ அப்படி நாமும் செய்தால்தான் பலன் வரும். ஸ்ரீசக்ரத்தின் விசேஷத்தைப் பற்றி சாஸ்திரத்தில் நிரம்பச் சொல்லியிருப்பது வாஸ்தவம். ஆனால் அதை எப்படிப் பூஜிக்க வேண்டுமென்றும் அதே சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதைத் தள்ளிவிட்டு, "இஷ்டப்படி, ஸௌகர்யப்படி (பூஜை)பண்ணுவேன்!"என்றால் பலன் கிடைக்காது. விபரீத பலனே கிடைக்கலாம்....

யந்த்ரம் என்பது ஒரு தேவதையின் இருப்பிடமாகவும், அது மாத்திரமில்லாமல், ஸாக்ஷாத் அந்த தேவதைக்கு ப்ரதிநிதியாகவுமே இருப்பது 'ப்ரதி'நிதி என்பதுகூட ஸரியில்லை. 'ப்ரதி'- 'காப்பி'- இல்லை; அஸலே அந்த தேவதைதான் இப்படி டிஸைன் ரூபத்திலிருப்பதும்.

அதிலும் அம்பாள் ஸ்ரீவித்யா தேவதையாக இருக்கும் போது யந்த்ர ரூபத்திலேயே விசேஷமாக ஸாந்நித்யம் கொண்டிருக்கிறாளென்பதால்தான் அந்த ஸ்ரீயந்த்ரத்திற்கு அலாதியான சிறப்பு இருக்கிறது. அம்பாளுடைய பரம ஸௌந்தர்யமான அவயவ ரூபத்தைவிடக் கூட இந்த யந்த்ர ரூபத்திற்கே சிறப்புத் தந்து பூஜிப்பதாக இருக்கிறது. (நாமம், ரூபம் என்ற இரண்டை விசேஷமாகச் சொல்கிறோம். ஆனால் பொதுவாகவே தாய்த் தெய்வத்தின் மந்திரங்களில் நாமம் என்பதே மிகப் பெரும்பாலும் இல்லை. ஸ்ரீவித்யா மந்திரங்களிலோ அடியோடு இல்லை. பீஜாக்ஷரங்களே உள்ளன. அவ்வாறே ஸ்ரீவித்யா தேவதை த்ரிபுர ஸுந்தரி என்று அழகு உருவத்தாலேயே பெயர் பெற்றிருந்தும் அவளுக்கு உருவம் அமைக்காமல் யந்திரத்திலே வழிபடுவதே அதிகம் காண்கிறது. ஏன் இவ்வாறு நம் அன்னை விஷயத்தில் மட்டும் நாமம், ரூபம் இரண்டும்

முக்யம் பெறாமலுள்ளன என்று ஸ்ரீசரணர்களிடம் கேட்கப்பட்டதுண்டு. ஆனால் அவர்களோ இவ்விதம் இருப்பதைத் தாமும் திரும்பச் சொல்லி வியந்து கொள்வதாகக் கட்டினார்களே தவிர விளக்கம் ஏதும் அளிக்கவில்லை.)

அம்பாளுக்கு இரண்டு வாஸ ஸ்தானம். அம்ருத ஸாகரத்தில் ஒன்றும், மேரு மத்தியில் ஒன்றுமாக என்றேனல்லவா?அதோடு மூன்றாவது வாஸஸ்தானமாக ஸ்ரீசக்ரத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.....

இப்போது நான் சொன்னதில் இரண்டு தப்பு. ஒன்று, ஸ்ரீ சக்ரம் அம்பாளுடைய வாஸஸ்தானம் மட்டுமில்லை;அவளுமேதான்!வாஸஸ்தானம் + வஸிக்கிற ஆஸாமியாக அது இருக்கிறது!இன்னொரு தப்பு என்னவென்றால் அம்ருதஸாகரம் மாதிரியும், மேரு சிகரம் மாதிரியும் இது மூன்றாவது (வாஸ ஸ்தானம்)இல்லை. அம்ருத ஸாகரமானாலும் ஸரி, மேரு சிகரமானாலும் ஸரி, அங்கே சிந்தமணி க்ருஹம் என்ற அரண்மனையிலே இந்த ஸ்ரீ யந்த்ரம் இருக்கும். நம் அகங்களில் ஒரு கையளவு இருக்கும் யந்த்ரம் அங்கே ஆயிரம், பதினாயிரம் மடங்கு பெரிசாக ஆவரணம் என்று சொல்லும் ஒன்பது சுற்று அங்கணங்களோடு இருக்கும்.

அந்த ஒன்பதிலும் அநேக தேவதைகள், தத்வங்கள் அம்பாளின் பரிவாரங்களாக இருப்பார்கள். ஒன்பதாவதாக உள்ள மத்ய பிந்துதான் பஞ்ச ப்ரம்மாஸனத்தில் அம்பாள் இருக்கிற இடம்.

மேரு சிகரத்திலே அம்பாள் இருக்கும்போது இந்த ஒவ்வொரு ஆவரணமும் அந்த சிகர மத்தியிலே சிகரத்திற்கு மேல் சிகரங்களாகத்தானே எழும்பியிருக்கும்?அந்த அமைப்பில்தான் ஸ்ரீ சக்ரத்தையே ஸமதளத்தில் நீளம், அகலம் ஆகிய இரண்டு பரிணாமத்தில் பண்ணுவது மாத்திரமில்லாமல் உயரமும் சேர்த்து, அடுக்கடுக்காக, மூன்று தளத்தில் நீஷீஸீமீ-ஆக (கூம்பாக)ப் போய்முடிகிற விதத்திலும் பண்ணுவதாக இருக்கிறது. இப்படி மூன்று பரிணாமத்தில் உள்ள ஸ்ரீ சக்ரத்திற்கு மேரு ப்ரஸ்தாரம் என்றே பேர். மேரு என்று மாத்திரம் அதைச் சொல்வதாகவும் ஏற்பட்டுவிட்டது. ஸமதளமாக பூமி மட்டத்தோடு இருக்கும்

ஸ்ரீசக்ரத்திற்கு பூப்ரஸ்தாரம் என்று பெயர். இரண்டும் கலந்து, ஆரம்ப ஆவரணங்கள் உயரவாட்டிலும் பிற்பாடு வருபவை ஸம தளமாகவும் அமைந்ததை அர்த்த மேரு என்பார்கள். எல்லா ஆவரணமும் மேரு ப்ரஸ்தாரமாயிருந்தால் பூர்ண மேரு. காஞ்சீபுரத்தில் காமகோஷ்டத்தில் இருப்பது பூப்ரஸ்தாரம். நம் மடத்தில் பூர்ண மேரு. மாங்காட்டில் அர்த்த மேரு. திருவிடைமருதூர் மூகாம்பாள் ஸந்நிதியில் பூர்ண மேரு.

---



## தனிப் பெயரில்லாத யந்திரம், தந்திரம், தலைநகரம்

அம்பாள் பக்தர்கள் பெருமையாக ஒன்று சொல்லிக் கொள்வார்கள். மற்ற ஸ்வாமிகளின் யந்த்ரங்களுக்கு அந்தந்த ஸ்வாமியின் பெயரையோ வேறே அந்த ஸ்வாமிக்கு உள்ள அடையாளத்தையோ சேர்த்து சிவசக்ரம், மேதா தக்ஷிணாமூர்த்தி யந்த்ரம், ஸுதர்சன யந்த்ரம், ஷடக்ஷர சக்ரம் என்றிப்படிப் பெயர் சொல்ல வேண்டியிருக்கிறது. லலிதா த்ரிபுரஸுந்தரியின் யந்த்ரதிற்கு மட்டும் இப்படி ஒரு பெயரும், அடைமொழியும் கொடுக்காமல், பூஜிதமானது மங்களமானது என்பதால் 'ஸ்ரீ'மட்டும் போட்டு 'ஸ்ரீசக்ரம்'என்றே சொல்லியிருக்கிறது. சக்ரம் என்றாலே இதுதான், தனியாகப் பெயர் கொடுக்க வேண்டாம் என்கிற மாதிரி இருக்கிறது.

அதேபோலத்தான் அவளுடைய உபாஸனா மார்க்கந்தான் மார்க்கம் என்று காட்டுகிற மாதிரி அதற்கும் 'ஸ்ரீவித்யை'என்றே பெயர் கொடுத்திருக்கிறது. இங்கேயும் 'ஸ்ரீ'என்பது பூஜிதமான அடைமொழியே தவிர ஸ்ரீதேவி என்ற லக்ஷ்மியைக் குறிப்பிடுவதில்லை. உபாஸனா மார்க்கங்களை வித்யை என்றும் தந்த்ரம் என்றும் சொல்வது.

அப்படிச் சொல்லும்போது மற்ற ஸ்வாமிகளின் உபாஸனைக்கு அந்த ஸ்வாமியின் பெயரையோ அல்லது அதன் ப்ரவர்த்தகரான ரிஷியின் பெயரையோ வைத்துப் பெயர் கொடுத்திருக்கும். ஆனால் த்ரிபுரஸுந்தரி வித்யைக்கு மட்டும் தனிப்பெயர் வைக்காமல் ஸ்ரீவித்யா என்றே சொல்வதாக இருக்கிறது.

அந்த ஸ்ரீவித்யா மந்திரத்திலேயே சிலசில வித்யாஸங்களோடு பல தினுஸான மந்திரங்கள் இருக்கிறது. இங்கே மட்டும் எப்படி ஸ்ரீவித்யா மந்திரம் என்று ஒரே பேரைச் சொல்வது?வித்யாஸம் தெரியும்படியாக வேறே வேறே பேர் சொன்னால்தானே ஸரியாயிருக்கும்?அதனால் அந்த மந்திரத்தின் முதலெழுத்தை வைத்தோ, அதன் ப்ரவர்த்தகரான ரிஷியின் பெயரை வைத்தோ, காதி வித்யா, ஹாதி வித்யா, லோபாமுத்ரா வித்யா, துர்வாஸ வித்யா என்று சொல்லவேண்டியிருக்கிறது. ஆனால் எல்லாவற்றுக்கும் சேர்த்துப் பொதுவாக லலிதா தந்த்ரம் என்பதை 'ஸ்ரீவித்யா'என்றே சொல்லியிருக்கிறது.

யந்த்ரம், தந்த்ரம் மட்டுமின்றி அவள் இருக்கிற ராஜதானிக்கும் தனிப் பெயரில்லை!'ஸ்ரீபுரம்'அல்லது 'ஸ்ரீநகரம்'என்றே அந்த இடத்திற்குப் பெயர். புரம், நகரம் என்றால் வெறுமே ஊர் என்றுதான் அர்த்தம். அப்படிச் சொன்னாலே போதும், அது அத்தனை ஊர்களும் இருக்கும் ஜகத்துக்கு ஜனனியாக இருக்கப்பட்ட அவளுடைய தலைநகரந்தான் என்று தெரிவிப்பதாக இப்படி ஸ்ரீபுரம், ஸ்ரீநகரம் என்றே பேர் இருக்கிறது!

நித்யஸ்ரீயை, [அதாவது]என்றும் அழியாததான ஆத்மானந்தச் செல்வத்தை தருகிறவள் அம்பாள் என்பதால் அவளுக்கு [ஸஹஸ்ரநாமத்தில்]முதல் பேரே 'ஸ்ரீமாதா'என்று சொல்கிறோம். அதற்கேற்க, ஸ்ரீவித்யை, ஸ்ரீசக்ரம், ஸ்ரீபுரம் என்றே அவளுடைய ஸம்பந்தமான விஷயங்களெல்லாம் இருக்கின்றன......

ஸ்ரீசக்ரம் என்ற ஸ்ரீயந்த்ரத்தைப் பற்றி ஸௌந்தர்ய லஹரியில் ச்லோகம் வருவதைச் சொல்லிக் கொண்டிருந்தேன். ஆறு ஆவரணங்களாக உள்ள ஒன்பது முக்கோணங்கள்

ஒன்றையொன்று 'கட்'பண்ணிக்கொண்டு நாற்பத்து நாலு முக்கோணம் ஏற்படுவதாகச் சொன்னேனல்லவா?இந்த ஒன்பதிலே நாலு சிவ சக்ரங்கள் என்று ஐந்து சக்தி சக்ரங்கள் என்றும் சொல்லப்படும். பிந்துவைச் சுற்றியிருக்கும் நடு முக்கோணம் சக்தி சக்ரங்களில் சேர்ந்ததுதான். அகங்களில் பூஜிக்கும் போது அது பூஜிப்பவருக்கு அபிமுகமாக இருக்க வேண்டும்.

சிவ சக்திகளின் ஐக்யமான அத்வைதத்தைக் காட்டுவதாக ஸ்ரீ சக்ரத்தில் இரண்டு பேருடைய சக்ரங்களையும் குறுக்கும் நெடுக்குமாகப் பின்னி வைத்திருக்கிறது. அதனால் ஏற்படும் கோணங்கள், அவற்றுக்கு வெளிச் சுற்றுக்களில் உள்ள பத்ம தளங்கள், வட்டக்கோடுகள், சதுரக் கோடுகள் ஆகியவற்றுக்கெல்லாம் இந்த [11வது]ச்லோகம் கணக்குக் கொடுக்கிறது.

இதெல்லாம் ஏதோ நாவல் படிக்கிற மாதிரியோ, அல்லது academic interest-காகவோ தெரிந்து கொள்கிற விஷயமில்லை. குருமுகமாக உபதேசம் பெற்று குப்தமாக [பஹிரங்கப்படுத்தாமல்]ரக்ஷிக்கப்பட்ட வேண்டிய விஷயம். அடியோடு சொல்லாமல் விடவேண்டாமென்று கொஞ்சம் சொன்னேன். அதனால் 'லைட்'டாக நினைத்துவிடக்கூடாது!

---



**உவமிக்கவொண்ணாத உருவழகு; காண்பதற்கொண்ணாத காட்சி!**

யந்த்ர ரூபத்தைச் சொன்னவுடனே, "இது ஸௌந்தர்ய லஹரி-ன்னா?அம்பாளுடைய பரம ஸூந்தரமான அவயவ ரூபத்தைச் சொல்லிடணும்"என்று வேகம் வந்தாற்போல

த்வதீயம் ஸௌந்தர்யம் என்றே அடுத்த ச்லோகத்தை [ச்லோ. 12]ஆரம்பித்திருக்கிறார்!"த்வதீயம் ஸௌந்தர்யம்"என்றால் "உன்னுடையதான லாவண்யம்"என்று அர்த்தம். "யந்திர ரூபத்தில் இத்தனை கோணம், தளம், வட்டக்கோடு சதுரக்கோடு என்றெல்லாம் முழு detailகொடுத்துப் பாடினேனே, அப்படி உன்னுடையதான லாவண்ய ரூபத்தைப் பாடலாமென்றால் முடிகிற கார்யமாயில்லையே!இது வரைக்கும் எந்தக் கவியும் அதை உள்ளபடி வர்ணிக்க முடியவில்லையே!"[என்கிறார்.]

ப்ரம்மாதான் ஆதிகவி. "ஆதி கவியே"என்றே பாகவதத்தின் ஆரம்ப ச்லோகத்தில் அவரைச் சொல்லியிருக்கிறது. ஸரஸ்வதியே அவருடைய சக்திதான் என்றால் அவரைவிடப் பெரிய கவி எவர் இருக்க முடியும்?அவர் எல்லா தேவதைகள் மேலும் ஸ்தோத்ரங்கள் செய்திருப்பது புராணங்களைப் பார்க்கும்போது தெரிகிறது. கஷ்ட காலத்தில் தேவர்கள் அவரிடந்தான் போய் அழுவார்கள். உடனே அவர் அவர்களை சிவனோ, விஷ்ணுவோ, அம்பாளோ யாரோ ஒரு ஸ்வாமியிடம் அழைத்துக் கொண்டுபோய் அவர்களுடைய கஷ்டத்தைச் சொல்லி, நிவ்ருத்தி பண்ணணும் என்று வேண்டிக் கொள்வார். அப்போது அந்த ஸ்வாமியை ஸ்தோத்ரம் பண்ணுவார். அவருக்கே கஷ்டம் வருகிறபோதும் அப்படித்தான்!அப்படி அம்பாளைப் பற்றியும் பண்ணியிருக்கிறார். [துர்கா] ஸ்பதசதீயில்கூட மது-கைடபாஸுரர்கள் அவரை ஹிம்ஸிக்க வந்தபோது அம்பாள் மேல் ஸ்தோத்ரம் பாடியிருக்கிறார். ஆனாலும் அவருங்கூட அவளுடைய லாவண்யத்தை உள்ளபடி வர்ணிக்க முடியவில்லை.

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹிநகிரி-கந்யே துலயிதும்

கவீந்த்ரா:கல்பந்தே கதமபி விரிஞ்சி-ப்ரப்ருதய: *

"விரிஞ்சி ப்ரப்ருதய:"என்றால் 'பிரம்மா முதலனோர்'. அவர்கள் உன்னுடைய ஸௌந்தர்யத்தை வர்ணிக்கப் பார்த்தார்கள். 'துலயிதும்'என்றால் 'எடை போடுவதற்கு'என்று அர்த்தம். 'துலா'என்றால் தராசு அல்லவா? எடை எப்படிப்

போடுகிறோம்?ஒரு தட்டில் இருப்பதற்கு ஸமமாக இன்னொரு தட்டில் எடைக் கல்லைப் போட்டுக் கண்டு பிடிக்கிறோம். நேராக ஒரு வஸ்துவின் எடையை கணிக்க நமக்குத் தெரியவில்லை. அதனால் இன்ன எடை என்று தெரிகிற ஒரு எடைக் கல்லைப் போட்டு அதைக்கொண்டு இதன் எடையைத் தெரிந்து கொள்கிறோம். அப்படி ஸாக்ஷாத்தாக அம்பாளுடைய ஸௌந்தர்யத்தை வர்ணிக்க அந்த விரிஞ்சி ப்ரப்ருதிகளான கவிகளுக்குத் தெரியவில்லை. அதனால் தங்களுக்குத் தெரிந்த ஒரு எடைக் கல்லைத் தேடினார்கள். அது என்ன?àðñ£ù‹ â¡ð¶î£¡! ê‰Fó¡ ñ£FK ºè‹, î£ñ¬ó ñ£FK è‡, õ‡´,Ã†ì‹ ñ£FK «èê‹ â¡ªø™ô£‹ àðñ£ù‹ è£†®M†ì£™ â¬ì, è™ «ð£†´ â¬ì ªîK‰¶ ªè£œ÷ º®Aø¶ «ð£ô 'ÞŠð®Šð†ì ô£õ‡ò‹'â¡Á ªîK‰¶ ªè£œ÷ º®Aøî™ôõ£?ÞŠð®Šð†ì â¬ì,è™, àðñ£ù‹ â¡ð¬î Ü‰î, èMèª÷™ô£‹ «î®ˆ «î®Š ð£˜ˆ¶, ðô FÂú£è, è™Hˆ¶,, ªê£™LŠ ð£˜ˆ¶‹ Ü‹ð£O¡ Üö¬è àœ÷ð®, è£†ì º®òM™¬ô. àõ¬ñòŸøî£è Þ¼,Aø¶, ÜõÀ¬ìò Üö°! "èîñH è™ð‰«î"- ñ‡¬ì¬ò, °¬ì‰¶, ªè£‡´ Üõ˜èœ âŠð®ªòŠð®«ò£ àõ¬ñ è™Hˆ¶ˆî£¡ ð£˜,Aø£˜èœ.

ஆனாலும் முடியவில்லை! "ஆனாலும் முடியவில்லை என்பதை ஆசார்யாள் உடைத்துச் சொல்லாமல், "கதமபி கல்பந்தே - எப்படியோ கல்பித்துப் பார்க்கிறார்கள்"என்று மட்டும் சொல்லி நிறுத்திவடுகிறார். அதுதான் சொல்லாமல் சொல்கிற 'த்வனி அழகு'. "ப்ரதோஷ தீபாராதனை நேரம் தப்பாமல் போய்ப் பார்க்கணும்னு ஓடினதென்னவோ வாஸ்தவந்தான்!"என்று சொல்லி, நிறுத்தி விட்டாலே போதும், "ஆனாலும் பார்க்க முடியவில்லை"என்று அர்த்தம் கொடுத்துவிடும்!விண்டு சொல்வதைவிடவும், இப்படிச் சொல்லாமல் சொல்கிற போதே மனஸில் நன்றாகப் பதியவும் செய்கிறது.

"யந்த்ர ரூபத்தைச் சொன்னோமே, ஸௌந்தர்ய ரூபத்தைச் சொல்லலாமென்று பார்த்தால் அது வர்ணனாதீதமாக இருக்கிறது. நேரே (வர்ணிக்க)முடியாவிட்டாலும் உபமான எடைக் கல்லைப் போட்டாவது ஒரு மாதிரி காட்டலாமென்று பார்த்தால் அந்த ப்ரயாஸையும் ப்ரம்மாதிகளே பண்ணி

ஓய்ந்து போயாயிற்று"என்றிப்படிச் சொல்வதன் மூலமே அம்பாளுடைய அழகு எவ்வளவு உயர்வானது ஈடு இணை இல்லாதது என்று காட்டி விடுகிறார்.

வர்ணிப்பது இருக்கட்டும்;முதலில் அவளுடைய ஸ்வரூபத்தை அந்த கவி அல்லது பக்தர் - கவியாக இருக்கும் பக்தர் - தாமே நன்றாகப் பார்த்து அந்த முழு ஸௌந்தர்யத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்!அப்படி யாராவது பார்த்திருக்கிறார்களா என்றால் அதுவும் இல்லை!முதலுக்கு எந்த கவியுமே அந்த ஸௌந்தர்ய ஸ்வரூபத்தைப் பார்த்ததில்லை என்னும்போது அதைப் பிறத்தியாருக்கு வர்ணித்துச் சொல்ல இடமேது?

ஏன் அம்பாளுடைய ஸ்வரூபத்தை எவரும் பார்த்ததில்லை?அடியோடு பார்த்ததில்லை என்று சொல்ல முடியாது. தர்சனம் என்று பல பக்த கவிகள் பண்ணித் தான் இருக்கிறார்கள். ஆனாலும் ஸம்பூர்த்தியாக எவரும் தன்னைப் பார்க்க விடாமல் ஏதோ கொஞ்சம் - க்ஷண காலம் - மின்னல் மின்னுகிற மாதிரி தர்சனம் கொடுத்து விட்டு மறைந்து போய் விடுவாள். ஒரே பக்தியாக அவளிடமே மனஸை அர்ப்பணித்தவர்களுக்குங்கூட அவளுடைய சரணாரவிந்தம், கடாக்ஷத்தைப் பொழியும் நேத்ரம், மந்தஸ்மிதம் செய்யும் ஆஸ்யம் (திரு வாய்)என்றிப்படி ஏதாவது ஒரு அவயவந்தான் ஸதாவும் கண்களில் கட்டி நிற்குமே தவிர கேசாதி பாதம் முழு ரூபமும் இல்லை.

தன்னுடைய முழு ரூப ஸௌந்தர்யத்தையும் அவள் காட்டுவது ஒருத்தரிடந்தான். அந்த ஒருத்தர் யாரென்றால் பதியான பரமேச்வரன்தான். அவரை தன்னோடு சேரும்படிப் பண்ணி லோக லீலையில் ஈடுபடுத்தவேண்டும் என்பதற்காகத்தான் அவள் இந்தப் பரம ஸுந்தரமான சரீரத்தை எடுத்துக்கொண்டு த்ரிபுர ஸுந்தரியானது. அந்த சரீரத்தை அவரொருத்தருக்கே பூராவாக அர்ப்பணம் பண்ணிய மஹா பதிவ்ரதையா யிருப்பவளவள். மற்றவர்களுக்கு ஏதோ கொஞ்சம் தரிசனம் கொடுப்பாளே தவிர பூராவாகத் தன் ஸௌந்தர்யத்தைக் காட்டமாட்டாள். கருணைய பக்தர்களுக்குப் பூர்ணமாகக் காட்டுவாள். ஆனால் ஸௌந்தர்யம் பூரா என்னும்போது அது ஸ்வாமிக்குத்தான் ஸொத்து என்று வைத்திருக்கிறாள்.

இப்படிச் சொன்னால் இங்கே பின் ஸெக்ஷனில் ஆசார்யாள் பார்த்து வர்ணிக்கிற ஸௌந்தர்ய லஹரிகூட அவளுடைய ஸௌந்தர்யத்தை ஸம்பூர்த்தியாகச் சொல்லவில்லை என்றுதான் ஆகுமோ, என்னவோ?அப்படியும் இருக்கலாம். ஒரு தாயார் தன்னுடைய குழந்தைக்கு அன்பை ஸம்பூர்த்தியாகக் காட்டுகிற மாதிரி அழகைக் காட்டுவாள் என்றில்லை. அவள் அலங்காரம் பண்ணிக் கொள்வது பதியை ஸந்தோஷப்படுத்தத்தானேயொழிய குழந்தையை அல்ல. அலங்காரம் (என்பது)அழகு'படுத்தி'க் கொள்வது. 'படுத்தி'க்கொள்ள அவசியமில்லாமல் ஸ்வாபாவிகமாகவே அழகாக உருவெடுத்தவள் அம்பாள். ஆனபடியால் அதன் முழு நிலையை அவள் பதிக்கு மாத்திரமே காட்டுவது.

இப்படியிருக்கும்போது மற்றவர்கள் எப்படி அவளை உள்ளபடி வர்ணித்துப் பாடமுடியும்?முதலுக்கு அவர்களுக்கே அவளுடைய பரிபூர்ண ரூப ஸம்பத்து தெரியாது. தெரிந்தமட்டில் பாடலாமென்றால் அதற்குங்கூட நேராக வர்ணிக்க வார்த்தை கிடைக்காமல், அப்பேர்ப்பட்ட அழகாயிருக்கிறது!நேராக வர்ணிக்க முடியாவிட்டாலும் உபமானமாவது காட்டலாமா என்று பார்த்தால் அதற்கு உவமை காட்டும்படியாகவும் லோகத்தில் எதுவுமேயில்லை.

பரமேச்வரன் ஒருத்தனுக்குத்தான் அம்பாள் தன்னுடைய பூர்ண ஸௌந்தர்யத்தைக் காட்டுவாள் என்பதை ரொம்பவும் கவி நயத்தோடு ஸூசனையாகவே சொல்லியிருக்கிறார். எப்படிச் சொல்லியிருக்கிறாரென்றால்:

யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலநா யாந்தி மநஸா

தபோபி:துஷ்ப்ராபாமபி கிரிச-ஸாயுஜ்ய-பதவீம் **

"Üñó ôôï£" â¡Á õ¼õîŸ° '«îõ vFgèœ'â¡Á Ü˜ˆî‹. ó‹¬ð, á˜õC, «ñù¬è, F«ô£ˆî¬ñ ºîô£ù «îõ v^gè¬÷ˆî£¡ ï£‹ ñý£ ÜöAè÷£è,, ªê£™A«ø£‹. Üõ˜èÀ‹ Ü‹ð£O¡ Üö¬è Üõœ è£†´Aø CPò Ü÷M™ ð£˜ˆ«î, "Üõœ º¡ù£® ï‹º¬ìò Üö° â‹ñ£ˆFó‹?"â¡Á G¬ù,Aø£˜èœ. "ï£‹ ð£˜Šð¶‹ ªè£…ê‰ î£«ù?ÜõÀ¬ìò ÜöA¡ Ì˜í Ïð‹ âŠð®J¼,°‹?"â¡Á ð£˜,è «õ‡ªñ¡Á Ý¬êŠð´Aø£˜èœ. å¼ úƒWî M˜õ£¡ î¡¬ùMì ï¡ø£è

Þ¡ªù£¼ˆî¡ ð£®ù£™, 'ÜF«ô â¡ù M««êû‹ Þ¼‚Aø¶?Ü¬î î£Â‹ ªîK‰¶ ªè£œ÷ «õ‡´'â¡Á G¬ùŠð£¡. åšªõ£¼ ¶¬øJ½«ñ ÞŠð®. Ü‰î gFJ™ ªú÷‰îˆòõFè÷£ù «îõ v˜gèœ ˆK¹óú§‰îKJ¡ Ì˜í ªú÷‰î˜òˆ¬î ªîK‰¶ ªè£œ÷«õ‡´ªñ¡Á Ý¬êŠð´Aø£˜èœ. Ü‹ð£À¬ìò º¿ õ®õˆ¬îŠ ð£˜‚è M¼‹¹Aø£˜èœ. "ò ˆ Ý«ô£è å÷ˆú§,ò£ˆ"â¡ø£™, 'â‰î ªú÷‰î˜òˆ¬î, è£µ‹ ÝõLù£™'â¡Á Ü˜ˆî‹. "ˆõbò‹ ªú÷‰î˜ò ‹"â¡Á „«ô£è Ýó‹ðˆF™ ªê£¡ù¬î«ò "òˆ"(â‰î ªú÷‰î˜ò«ñ£ Ü¶) â¡Á ºPH†®¼‚Aø£˜.

அம்பாளுடைய ஸௌந்தர்யத்தைப் பூராவும் பார்க்க வேண்டும் என்று ஆவல் கொண்ட தேவ ஸ்த்ரீகள் என்ன செய்கிறார்கள்? "நாம் ஆசைப்பட்டு என்ன ப்ரயோஜனம்?தன்னுடைய சரீரம் ஈச்வரனுக்கே உடைமை என்று அவள் அர்ப்பணம் பண்ணியிருப்பதால் அவனொருத்தன்தான் அந்த ரூப ஸம்பநத்தைப் பூராவாகப் பார்க்க முடியும். ஆனபடியால் நாம் என்ன பண்ணவேண்டுமென்றால் அந்த ஈச்வரனோடு ஐக்யமாகிவிட வேண்டும்;சிவ ஸாயுஜ்யம் என்பதைப் பெற்று விடவேண்டும். அப்போது நாமும் அம்பாளின் லாவண்யத்தை உள்ளபடி பூர்த்தியாகப் பார்த்துவிடமுடியும்"என்று நினைக்கிறார்கள்.

சிவனிடம் பக்தியாலேயே பக்தர்களும், சிவமாக ஆகவேண்டும் என்ற ஞான தாஹத்தாலேயே ஞானிகளும் சிவ ஸாயுஜ்யம் வேண்டியிருக்கிறார்கள். அதற்காகப் படாதபாடு பட்டிருக்கிறார்கள். அங்கே சிவஸாயுஜ்யம் மீஸீபீ வீஸீ வீமீ'வமீறீயீ(அதுவே முடிவான குறிக்கோள்). அப்பேர்ப்பட்ட அந்த உசந்த ஸ்திதியை இந்த தேவ ஸ்திரீகள் விரும்புவதோ, அதுவேமீஸீபீ, லக்ஷ்யம் என்பதாலில்லை!அதை உபாயமாக னீமீணீஸீவ-ஆக, வைத்துக்கொண்டு அதன் மூலம் அம்பாள் அழகைப் பார்க்க வேண்டுமென்பதே இவர்களுடைய லக்ஷ்யம்!மஹா பெரிய சிவஸாயுஜ்யத்தையும் ஸாதனமாக்கிக் கொண்டு ஸாத்யமாக நிற்கிறது, அம்பாளின் ஸௌந்தர்ய தர்சனம்!

ஸரி, அந்த ரம்பையும் மேனகையும் அப்படி ஆசைப்பட்டு விட்டார்களளென்பதால் சிவ ஸாயுஜ்யம் கிடைத்து விடுமா என்ன?லேசில் கிடைக்கக்கூடியதா அது?

"தபோபி:துஷ்ப்ராபாமபி"என்றே அதைச் சொல்கிறார் "எத்தனை தபஸ் பண்ணினாலும் பெற முடியாதது"என்று அர்த்தம். தேவ ஸ்திரீகள் தபஸ் பண்ணுகிறவனைக் கலைத்து வசியப்படுத்தத்தான் போவார்கள்!தபஸ் பண்ணுவதற்கான இந்திரிய நிக்ரஹம் அவர்களுக்கு ஏது?அதனால் என்ன பண்ணுகிறார்களென்றால்....

மானஸிகமாக நம்மை எப்படி வேண்டுமானாலும் நினைத்துப் பார்த்துக் கொள்ளலாமல்லவா?மனக் கோட்டை என்னதான் கட்ட முடியாது?அப்படி அந்த ரம்பை, மேனகை முதலானவர்கள் தாங்களே பரமசிவன் என்று மானஸிகமாக நினைத்துப் பார்க்கிறார்களாம்!"யாந்தி மநஸா கிரிச ஸாயுஜ்ய பதவீம்"என்றால் 'சிவ ஸாயுஜ்ய நிலையை மானஸிகமாக அடைகிறார்கள்'என்று அர்த்தம்.

வாஸ்வத்தில் அது மனஸால் அடைய முடியாத நிலை! "யத் மநஸா ந மநுதே"- எதை மனத்தால் எண்ணிப் பார்க்க முடியாதோ அது. ஆகையால் அவர்கள் மானஸிகமாக சிவ ஸாயுஜ்யம் அடைகிறார்கள் என்றால், 'வாஸ்தவத்தில் அடையாமலே நிற்கிறார்கள்'- அதாவது, அம்பாளுடைய ஸௌந்தர்யத்தை அவர்களும் ஸமபூர்த்தியாக அறியமுடியவில்லை என்றே அர்த்தம்.

ப்ரம்மா முதலான கவிவாணர்கள் தங்களுக்கு அம்பாளின் ஸௌந்தர்யம் தெரிந்த அளவில் அதற்கு உவமை தேடி என்னென்னமோ கல்பனை பண்ணிப் பார்க்கிறார்கள் என்று முதல் பாதியில் சொன்னதற்கு 'ஆனாலும் ஸரியான உவமை கண்டுபிடிக்க முடியவில்லை'என்பதுதானே உட்பொருள்?அப்படியே இந்தப் பின் பாதியில், தபஸ் பண்ணியும் பெற முடியாத சிவஸாயுஜ்யத்தை ரம்பையும் மேனகையும் மனஸால் கல்பித்துப் பார்க்கிறார்கள் என்பதற்கும் 'ஆனாலும் முடியவில்லை'என்றுதான் அர்த்தம். கருணை, உள்ளம் கொண்ட ஆசார்யாளுக்கு 'விரிஞ்சி ப்ரப்ருதி'களும், 'அமரலலனா'க்களும் தோற்றுப் போனார்கள் என்று வாய்விட்டுச் சொல்ல மனஸ் வரவில்லை போலிருக்கிறது!

அம்பாளுடைய ஸௌந்தர்யச் சிறப்பை ஒரே தூக்காகத் தூக்கி இப்படி 'ஸௌந்தர்ய லஹரி'யின் 'ஆனந்த லஹரி'பாகத்தில் ச்லோகம்!

## கால ஸ்வரூபமாக

அப்புறம் கால ஸ்வரூபமாக அம்பாளைச் சொல்லி ஒரு ச்லோகம் - "க்ஷிதௌ ஷட்பஞ்சாசத் த்விஸமதிக பஞ்சாசத் உதகே". ஒரு வருஷத்தில் ஆறு ரிதுக்கள், மொத்தம் 360 நாள் என்று இருக்கிறதோல்லியோ?இந்த 360 நாளுங்கூட குண்டலிநீ சக்தியின் ஜ்யோதிஸிலிருந்து வெளிப்படும் 360 கிரணங்கள்தான் என்றும், ஆறு சக்ரங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு ரிதுவாக அந்த ரிதுவுக்கு எத்தனை நாளோ அத்தனை கிரணங்கள் பிரகாசிக்கின்றன என்றும் அந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார். "க்ஷிதௌ ஷட்பஞ்சாசத்"என்றால் ப்ருத்வீ தத்வத்தில், அதாவது மூலாதாரத்தில், 56 கிரணங்கள் என்று அர்த்தம். அதாவது அங்கே 56 நாள் கொண்ட வஸந்த ரிதுவாக அம்பாள் இருக்கிறாள். இப்படியே ஒவ்வொரு சக்ரத்திற்கும் கணக்கு சொல்கிறார்.

இப்படித் தன்னை ஒவ்வொரு ரிதுவாகக் காலத்திற்குள் குறுக்கிக் கொண்டு, சுருக்கிக் கொண்டிருக்கும்போது அம்பாள் கால ஸ்வரூபமாயிருக்கிறாள். ஆனால் வாஸ்தவத்தில் அவள் காலாதீதமானவள் [காலத்திற்கு அப்பாற்பட்டவள்]. அந்தக் காலாதீத நிலையில் ஆறு சக்ரத்திற்கும் மேலே ஸஹஸ்ர தள பத்மத்தில் அவளுடைய சரணாரவிந்தங்கள் குருபாதமாக விளங்குகின்றன. இதை "மயூகாஸ்-தேஷாம் அப்யுபரி தவ பாதாம்புஜ யுகம்"என்று சொல்யிருக்கிறார். 'மயூகம்'என்றால் கிரணம்;கிரண வடிவான நாள். இப்படியுள்ள 360-க்கும் மேலே - "தேஷாம் அபி உபரி":அவற்றுக்கும் மேலே - அதாவது ஸஹஸ்ரார பத்மத்தில், 'தவ பாதாம்புஜ யுகம்';உன்னுடைய இரு தாமரைப்

பாதங்கள்;இணையடித் தாமைரைகள். அம்பாளைப் பார்த்துச் சொல்வதால் "உன்னுடைய"என்கிறார்.

---



## வாக்குவன்மை அருள்வது; சாக்தத்தில் சப்தத்தின் விசேஷம்

இந்த [ஆனந்தலஹரி]ச்லோகங்களுக்கு நடுவே சிலதில் லலிதாம்பாள் ரூபத்திலில்லாமல், ஆனாலும் ஸ்ரீவித்யா தந்த்ரத்திற்கு ஸம்பந்தமான வேறு தேவதா ரூபங்களில் அம்பாள் அநுக்ரஹம் செய்வதைச் சொல்லியிருக்கிறது. அப்படி ஒன்று [ச்லோ.15] சொல்கிறன்:

சரஜ்-ஜ்யோத்ஸ்நா-சுத்தாம் சசியுத ஜடாஜூட-மகுடாம்

வரத்-த்ராஸ-த்ராண-ஸ்படிக-குடிகா-புஸ்தக-கராம் *

ஸக்ருத்-ந த்வா நத்வா கதமிவ ஸதாம் ஸந்நிதததே

மது-க்ஷீர-த்ராக்ஷா-மதுரிம-துரீணா:பணிதய: **

[(சரத் ஜ்யோத்ஸ்நா சுத்தாம்) சரத்கால நிலவு போல் தூயவளும் (சசியுத ஜடாஜூட மகுடாம்) சந்திரனுடன் கூடிய ஜடாமுடியை மகுடமாயுடையவளும், (வர) வர முத்திரை, (த்ராஸ-த்ராண) பயத்திலிருந்து காப்பதான அபய முத்திரை, (ஸ்படிக-குடிகா) ஸ்படிக அக்ஷமாலை, (புஸ்தக கராம்) புஸ்தகம் ஆகியவற்றைக் கரத்திற் கொண்டவளுமாகிய (த்வா) உன்னை (ஸக்ருத்) ஒருமுறை (நத்வா) வணங்கினாலே (ஸதாம்) ஸத்துக்களான மேன்மக்களுக்கு (மது க்ஷீர த்ராக்ஷா) தேன், பால், திராக்ஷைஆகியவற்றின் (மதுரிம துரீணா:) இனிமையை வகிக்கும் சிறப்புப் பொருந்தியவையான

(பணிதய:) வாக்குகள் (கதமிவ) எவ்வாறு (ந ஸந்நிததே)
கைகூடாமற் போகும்?[எவ்வாறு வாக்குத்திறன்
ஸித்தியாமலிருக்கும்?]]

வீணை இல்லாத ஒருவித வாக்தேவி ஸ்வரூபமாக அம்பாளை [இங்கே]சொல்லியிருக்கிறது. வாக்தேவி என்றால் ஸரஸ்வதிதான்.

அம்பாள் விஷ்ணுவுக்கு ஸஹோதரி என்கிற மாதிரியே இன்னும் இரண்டு - ரொம்பப் பேருக்குத் தெரியாதது:லக்ஷ்மி ப்ரம்மாவுக்கு ஸஹோதரி, ஸரஸ்வதி பரமசிவனுக்கு ஸஹோதரி. அண்ணா - தங்கை என்றால் ஒரே ஜாடை, ஒரே மாதிரி மனோபாவம், ஒரே மாதிரிக் கார்யம் பண்ணுவது என்றுதானே இருப்பார்கள்?அப்படி ஸரஸ்வதி பரமசிவன் மாதிரியே வெள்ளை வெளேரென்று இருப்பவள். "சரத் ஜ்யோத்ஸ்நா சுத்தாம்" என்றால் சரத் கால சந்திரிகை மாதிரி சுப்ரமாக, வெள்ளை வெளேரென்று இருப்பவள். சரத் காலத்தில்தான் அவளுக்கு ஸரஸ்வதி பூஜையும் பண்ணுகிறோம். 'சரத்'தை வைத்துத்தான் அவளுக்கே 'சாரதா'என்று பேர் இருக்கிறது.

ஆசார்யாளுக்கு சாரதா நாமத்தில் விசேஷமான பிடிப்பு உண்டு. வித்வத்திலே சிகரத்துக்குப் போய் பாஷ்யம், ஸ்தோத்ரம், வாதம் என்று ஏராளமாகப் பண்ணியவராதலால் அவருக்கு ஸரஸ்வதி ரொம்பவும் முக்யம். அந்த ஸரஸ்வதிக்கு உள்ள அநேகம் பெயர்களில் சாரதா நாமத்தில் அவருக்குத் தனியான ஈடுபாடு!வெள்ளை வெளேர் என்று பரம பரிசுத்தத்தையும், ஹித சீதமாக இருப்பதில் அருளின் குளிர்ச்சியையும் காட்டுகிற பெயராக இருப்பதால் இருக்கலாம்! 'ச'வும் 'ஸ'வும் ஒன்றுக்கொன்று மாறி வருவதுண்டு. அப்படிப் பார்க்கும்போது 'சாரதா'என்பது 'ஸாரதா'என்றாகும். வடக்கே அப்படியும் சொல்கிற வழக்கமிருக்கிறது. 'ஸார-தா'என்றால் 'ஸாரமான தத்வத்தை அநுக்ரஹிப்பவள்'என்று அர்த்தம். ஞானந்தான் ஸார தத்வம். அதனாலும் ஆசார்யாளுக்கு அந்தப் பேரில் தனியான பிடிமானம் இருந்திருக்கலாம். ச்ருங்கேரியில் சாரதாம்பாள் என்றே அம்பாளை ப்ரதிஷ்டித்திருக்கிறார். அதை சாரதா

பீடம் என்றே சொல்கிறது. நம் (காஞ்சி)மடத்துக்கும் சாரதா மடம் என்றே பேர்.

காமகோடி பீடம்;சாரதா மடம் அந்தப் பேரில் அவருக்குத் தனிப் பிடிப்பு இருந்தாலும், நம்முடைய ஸ்தோத்ரத்தில் ஒரு இடத்தில்கூட லலிதாம்பாள், த்ரிபுரஸுந்தரி முதலான பெயர்களையே சொல்லாததால் இந்தப் பெயரையும் சொல்லவில்லை போலிருக்கிறது!ஆனலும் 'சரத்-ஜ்யோத்ஸ்நா'என்று ஆரம்பத்திலேயே சாரதாவை ஞாபகப்படுத்துகிறார்!

ஈச்வரன் மாதிரியே அவள் சுத்த வெளுப்பு. அவர் மாதிரியே ஜடாமகுடம் தரித்துக் கொண்டிருப்பவள். அதோடு அதில் அவர் மாதிரியே சந்திர கலையையும் வைத்துக் கொண்டிருப்பவள். தானே சந்த்ரிகை மாதிரியான தாவள்யத்தோடு இருப்பவள் ஜடா மகுடத்திலும் சந்த்ரகலை வைத்துக்கொண்டிருக்கிறாள்:"சசியுத ஜடாஜூட மகுடாம்".

சதுர்புஜையாக இருக்கிறாள். இரண்டு ஹஸ்தங்களில் வராபய முத்ரை - "வர த்ராஸ த்ராண"என்று சொல்லியிருக்கிறது. 'அபயம்'என்பதற்குப் பதில் 'த்ராஸ த்ராணம்'என்று மோனையழகோடு போட்டிருக்கிறார். 'த்ராஸம்'என்றால் பயம்தான். 'த்ராணம்'ரக்ஷிப்பது பயத்லிருந்து ரக்ஷிப்பதென்றால் அபயந்தானே?

"à¡¬ùˆ îMó â™ô£ «îõ¬îèÀ‹ Üðò õóí ºˆ¬ó è£†´A¡øù"â¡Á º¡ù£® ªê£¡ù£ó™ôõ£?Üîù£™î£¡ ÜŠ¹ø‹ ôLî£‹ð£À‚º «õø£ù å¼ Ïð «ðîˆ¬î Þƒ«è ªê£™½‹«ð£¶ õó£ðò‹ è£†´‹ ú£óvõî [úóvõFJ¡ ªî£ì˜¹œ÷] Ïðñ£è õ˜EˆF¼‚Aø£˜. i¬í, AO â¡PŠð® Ü‰î ývîƒèO™ ¬õˆ¶, ªè£œ÷£ñ™ õó‹, Üðò‹ è£†´‹ Ïðñ£è,, ªê£™LJ¼‚Aø£˜.

அப்புறம் ஸரஸ்வதிக்கே உரிய அக்ஷமாலை, புஸ்தகம் இரண்டையும் சொல்லியிருக்கிறார்.... "ஸரஸ்வதிக்கே உரிய"என்றதற்கு ஒரு 'அமென்ட்மென்ட்'(திருத்தம்) - அவளுடைய ஸஹோதரரான ஈச்வரன் தக்ஷிணாமூர்த்தியாக உள்ளபோது அவருக்கும் இந்த இரண்டும் உண்டு, "ஸ்படிக குடிகாம், புஸ்தக கராம்"என்பதில் 'ஸ்படிக குடிகா'என்பது ஸ்படிக அக்ஷமாலையைக் குறிப்பிடுவது.

அக்ஷமாலை என்பது அக்ஷர மாலைதான். 'அ'விலிருந்து 'க்ஷ'வரையிலான 51 அக்ஷரங்களில் அக்ஷரத்திற்கு ஒன்றாக 51 மணிகளைக் கோத்துப் பண்ணியதே 'அக்ஷ'மாலை.

சாக்த சாஸ்திரத்தில் ஒரு முக்யமான ஜீவ நாடியாக இருக்கிற விஷயம் சொல்லவேண்டும். அதுதான் அக்ஷரங்களுக்கு அதிலுள்ள முக்யத்வம்;அந்த அக்ஷரங்கள் எல்லாவற்றுக்கும் அடிப்படையான சப்தம் என்ற தத்வத்துக்கு உள்ள முக்யத்வம். வைப்ரேஷனால்தான் ஸ்ருஷ்டி என்று பார்த்தோம். ஆகாச தத்வத்தில் அந்த வைப்ரேஷன் ஸூக்ஷ்மமான சப்தங்களாக இருந்து, அவற்றிலிருந்தே ஸ்ருஷ்டி, அவற்றிலிருந்தே மந்த்ரங்களும், மந்த்ரமயமான வேதமும் என்றும் சொல்லியிருக்கிறேன். ஆகாசத்திற்கான ஸூக்ஷ்ம சக்தியான தன்மாத்ரையே சப்தந்தான் என்றும் சொன்னேன். ஆனபடியால், ஸ்ருஷ்டி லீலையும், ஸ்ருஷ்டி மறுபடி மூலத்தில் லயிப்பதும் ஆகிய இவல்யூஷன்-இன்வல்யூஷன்களே சாக்த சாஸ்திரத்தின் முதுகெலும்பாக இருப்பதால், அதில் ஓடுகிற ப்ராண நாடி மாதிரியான முக்யத்வத்தை சப்த தத்வம் பெற்றிருக்கிறது. சாக்தத்தில் ஒரு பக்கம் அர்த்த ப்ரபஞ்சம், அல்லது வஸ்து ப்ரபஞ்சம் சொல்லி அதில் சிவ தத்வம், சக்தி தத்வம், ஸதாசிவ தத்வம், ஈச்வர தத்வம், சுத்த வித்யா தத்வம் என்று ஐந்தை வைத்து பரப்ரஹ்மத்திலிருந்து ஸ்தூல பூத ஸ்ருஷ்டி வரை கொண்டுவந்து விட்டிருக்கிறது. அதே மாதிரி, அதற்கு ஏர்வையாகவே சப்த ப்ரபஞ்சம் என்றும் வைத்து அதில் சப்தத்தின் அதி ஸூக்ஷ்மமான 'பரா'என்ற தத்வத்தில் ஆரம்பித்து, அதையும் சேர்த்து ஐந்து விதமான சப்த தத்வங்களைச் சொல்லியிருக்கிறது. பராவுக்கு அப்புறம் பச்யந்தி, மத்யமா என்று இரண்டு. மநுஷ்யக் காதுக்குக் கேட்காததாகவும், மநுஷ்யன் வாயால் சொல்ல முடியாததாகவும் உள்ள சப்த மூலமே பரா. அந்த அதி ஸூக்ஷ்ம தத்வம் ஒருமுகப்பட்டு சித்தே (சிறதளவே)ஸ்தூலமான சப்தமாக ஆகும்போது 'பச்யந்தி'எனப்படுகிறது.

ஒரு நோக்கமுமில்லாமல் கேவல (வெறும்)சப்தமாயிருந்த 'பரா'வெளிப்படப் பேசிக் கேட்கக்கூடிய சப்தமாக ஆகவேண்டுமென்ற நோக்கத்தோடு கொஞ்சம் இறுகுகிற

நிலைதான் 'பச்யந்தி'. 'பார்க்கிறது'என்று அர்த்தம். 'நோக்கம்'என்பது நோக்குவது, பார்ப்பது என்பதைக் குறிப்பதுதான். எந்த நோக்கமும் இல்லாத 'பரா'வுக்கு நோக்கம் வந்து நோக்குகிறபோது 'பச்யந்தி'ஆகிறது! தமிழில் 'பைசந்தி'என்பார்கள். அதற்கப்புறம், மநுஷ்ய யத்னத்தின் மீது இல்லாமல் தானாகவே அது சப்தமாக எழும்பும். அந்த நிலையில் அதற்கு 'மத்யமா'என்று பெயர். ஸூக்ஷ்ம சப்தத்திற்கும் ஒரு மநுஷ்யன் வாயால் எழும்புகிற ஸ்தூல சப்தத்திற்கும் மத்தியில் அது இருப்பதால் 'மத்யமா'என்று பெயர். இப்படித் தானாகவே உண்டாகும் சப்தத்திற்கு 'அநாஹத சப்தம்'என்றும் பேர். 'அடிக்கடிப் படாமல் உண்டான ஒலி'என்று அர்த்தம். 'ஆஹதம்'- அடிக்கப்பட்ட;'அநாஹதம்'- அடிக்கப்படாத.

இப்படிச் சொன்னால், "அப்படீன்னா இப்போ நாமவாயிட்டுப் பேசறதெல்லாம் அடிச்சு உண்டாகிற சப்தமா என்ன?"என்று கேள்வி வரும். ஆமாம், நாம் எழுப்பும் சப்தம், வாத்யங்கள் எழுப்பும் சப்தம், இன்னும் காதுபடக் கேட்கிற எந்த சப்தமாயிருந்தாலும் அதெல்லாம் அடிக்கப்படுவதால் உண்டாகிறவைதான். வைப்ரேஷனாலேயே சப்தம். வைப்ரேஷன் என்பது ஹ்ருதயம் அடித்துக் கொள்கிற (லீமீணீக்ஷீமீ-தீமீணீமீ என்கிற) மாதிரியான ஒன்றுதான். அதோடு காற்று பல தினுஸாகத் தொண்டைக் குழலில் அடித்தும், நாக்கு உதட்டில், பல்லில் அடித்துந்தான் நாம் பேசுகிற, பாடுகிற சப்தங்கள் எழும்புகின்றன. ஹார்மோனியம், ஃபிடில், புல்லாங்குழல், நாயனம் எல்லாமும் காற்று அடித்து மோதி சப்தம் உண்டாக்குபவைதான். அதோடு, புல்லாங்குழலில் விரலாலேயே த்வாரங்களை மூடித் திறப்பதும் அடிக்கிற மாதிரிதானே?வீணையில் தந்திகளை விரலால் மீட்டுவதும் அடிதான். இதெல்லாம் 'செல்ல அடி'என்று வேண்டுமானால் சொல்லலாம்!ஃபிடில் தீஷீஷ்ஒரு தினுஸாக (தேய்ப்பது போல)அடிக்கிறது!ம்ருதங்கம், கடம், கஞ்ஜிரா என்றால் நன்றாக மாக்கு மாக்கு என்றே அடி வாங்கித்தான் சப்தம் கொடுக்கின்றன!கையால் அடித்தால் போதாது என்றே தவில், முரசு, பேரிகை முதலியவற்றுக்குக் கொட்டுக் கொம்பு வேறு வைத்துக் கொண்டு அடிக்கிறார்கள்!ஜாலராவில் ஒரு பாதியும் இன்னொரு பாதியும் தங்களுக்குள்ளேயே அடித்துக் கொள்கின்றன!இதெல்லாம் ஆஹதம். இப்படியில்லாமல்

தானாகவே எழும்புவது அநாஹத த்வனி. அதுதான் மத்யமா.

பரா, பச்யந்தி, மத்யமா என்ற மூன்றுக்கப்புறம் நல்ல ஸ்தூல சப்தமாக நாமும் யத்னம் பண்ணி வாயைக் கொண்டு எழும்பும் வாக்கு. அதற்கு 'வைகரி'என்று பெயர். நாலாவதாக உள்ள இதிலேயே வெறும் சப்தமாக மட்டும் உள்ள 'த்வனி', இன்ன சப்தம் என்று நிர்ணயமான 'வர்ணம்'என்று இரண்டு இருப்பதால் நாலு என்பதே ஐந்தாகி விடுகிறது. வர்ணம் என்பதே அக்ஷரம். இப்படி ஐம்பத்தோரு நிர்ணயமான, ஸ்பஷ்டமான அக்ஷரங்கள்.

ஒரு குழந்தை அதுபாட்டுக்கு என்னென்னமோ சப்தம் போடுகிறது. அதில் க, ங, ச, ஞ என்கிற மாதிரியான நிர்ணயமான அக்ஷர ரூபங்களில்லை. வெறும் சப்தமாக மாத்திரம் இருக்கிறது. அதுதான் த்வனி. நம்மையே எடுத்துக் கொண்டாலும் நாம் அழுகிறபோது, சிரிக்கிறபோதெல்லாம் ஏதோ சப்தங்கள் எழுப்புகிறோம். 'குய்யோ, முறையோ'என்று அழுவது, 'கடகட'என்று சிரிப்பது என்கிறோம். ஆனால் வாஸ்தவத்தில், 'கு-ய்-யோ'என்றோ, 'க-ட'என்றோ உள்ள அக்ஷரங்களைச் சொல்லி நாம் அழுது சிரிப்பதில்லை. த்வனி மாத்திரந்தான் எழுப்புகிறோம்.

'பரா'விலிருந்து வைகரியின் இரண்டு ரூபங்கள் வரையில் சப்த தத்வங்கள் ஐந்து. அர்த்த ப்ரபஞ்சத்தின் ஐந்து தத்வங்களில் ஒவ்வொன்றுக்கும் '='போடுவதாக சப்த ப்ரபஞ்சத்தின் இந்த ஐந்தும் இருக்கின்றன.

அதைவிடவும் இதுதான் (அர்த்த ப்ரபஞ்சத்தை விடவும் சப்த ப்ரபஞ்சந்தான்)முக்யமானது என்று கூடச் சொல்லலாம் - இந்த வைப்ரேஷன்களால்தான் அந்த அர்த்த ப்ரபஞ்ச வஸ்துக்களே உண்டாவதால்.

முடிவாக உண்டாகிற ஸ்தூல லோகத்திலுள்ள ஸ்தூல வஸ்துக்களுக்கு என்ன பேர் சொல்லுகிறோம்?'பதார்த்த ம்'என்றே சொல்கிறோம். பாமர ஜனங்களுங்கூட "கடைக்குப் போயி பதார்த்தம் வாங்கியாந்தேன்"என்கிறார்கள். ஸ்தூல வஸ்துவைப் பதார்த்தம் என்பது இதிலிருந்து தெரிகிறது. 'பத அர்த்தம்'என்றால் 'சொல்லின் பொருள்'என்றே அர்த்தம். பதம், சொல் என்பது சப்த ப்ரபஞ்சந்தான். அதிலிருந்து பொருள் உருவில் (ஸ்தூலமான)வஸ்துவாக உண்டாவதுதான்

'அர்த்தம்'. அர்த்த ப்ரபஞ்சம் என்பது சப்தமாகிற சொல்லுக்கு உள்ளே இருக்கிற 'அர்த்தம்'தான் - 'மீனிங்'தான்!

அம்பாள் தினுஸு தினுஸாக என்னென்னவோ மாயா விசித்ரங்கள் பண்ணுவதில், பஞ்சபூத தத்வங்களாகக் குண்டலிநீ சக்ரங்களில் உள்ளபோது எப்படியிருக்கிறாளோ அதற்குக் தலைகீழாக அவற்றிலே சப்தத்தின் ஐந்து பரிணாமங்களாக உள்ளபோது இருக்கிறாள். அடி மூலாதார சக்ரத்தில் ரொம்பவும் ஸ்தூலமான ப்ருத்வீ தத்வமாகவும், அப்புறம் அப், தேஜஸ், (குண்டலிநீ சக்ர க்ரமத்தில் ப்ருத்வியை அடுத்துத் தேஜஸும் அதற்கப்புறம் அப்பும் வரும்.) வாயு என்றும் ஸூக்ஷ்மமாக ஆகிக் கொண்டே போய், நெஞ்சாங்குழியிலுள்ள விசுத்தி சக்ரத்தில் ஆகாசமாக அங்கே இருக்கிறாள். இங்கே, சப்த ப்ரபஞ்சத்திலோ, மூலாதாரத்தில்தான் ஆகாசத்தில் இருக்கும் பரா வாக்காக இருக்கிறாள். அது அதி ஸூக்ஷ்மம். நெஞ்சாங் குழியிலேயே ஸ்தூல சப்தமான வைகரி ஆகிறாள்!

வெளிப்படப் பேசிக் கேட்கிற ஸ்தூல சப்தம் என்பதால் இது மட்டம் என்று ஆகாது. இந்த ஐம்பத்தோரு அக்ஷரங்களுக்கு மாத்ருகைகள் என்றே பேர். மாத்ருகை என்றால் தாயார்தான். பெரிய அந்தஸ்து அம்மாவாக, மஹா ராஜ்ஞியாக இருந்தால் 'மாதா'. அவளே நம்மோடு ஸமானமாகக் கலந்து பழகும் அன்பான குட்டியம்மாவாக வந்தால் 'மாத்ருகா'.

"மாத்ருகா வர்ணரூபிணி"என்பதாக அந்த மஹா ராஜ்ஞியையே இந்த வர்ணங்களின் உருவமாக ஸஹஸ்ர நாமம் காட்டிக் கொடுக்கிறது. "ஸர்வ வர்ணாத்மிகே!"என்று ச்யாமளா தண்டகத்தில் காளிதாஸன் சொல்கிறார்.

சாக்த தந்த்ரத்தில் ரொம்பவும் முக்யத்வம் கொண்ட சப்த ப்ரபஞ்சத்திற்குத்தான் அக்ஷமாலையும், புஸ்தகமும் அடையாளமாயிருக்கின்றன. 51 மாத்ருகைகளுக்காக அத்தனை மணி கோத்து அக்ஷமாலை.

நாமாவாக இல்லாமல் பீஜம் என்ற சுத்தாக்ஷரங்கள ாலேயேதான் ஸ்ரீவித்யா மந்த்ரங்களெல்லாம் அமைந்திருக்கின்றன. அதாவது ஸாக்ஷாத் பரதேவதை இப்படி சப்த ரூபம் கொண்டிருக்கிறாள். அதோடு, (மந்த்ர ஜபம் என்ற அப்பியாஸத்தில்)இந்த பீஜாக்ஷரங்களை

அநுஸந்தானம் பண்ணுகிறவனுக்குள்ளும் அந்த சப்த ரூபத்தில் ப்ரஸன்னமாகி அநுக்ரஹம் செய்கிறாள். பெரிய அநுக்ரஹம் அந்த சப்தங்களினால் உண்டாகும் நாடி சலனத்தாலேயே குண்டலிநீ யோகம் தரக்கூடிய ஸாக்ஷாத்காரத்தைக் கொடுப்பது. அது தவிர, நாம் ப்ரார்த்திக்கும் இதர காமிதார்த்தங்களையும் (விரும்பிய பொருட்களையும்)மந்த்ர அப்யாஸத்தாலேயே செய்கிறோம். இதெல்லாம் மட்டுமில்லை. அவளுடைய இந்த சப்த ரூபத்தை ஜபித்தாலே அவயங்களோடு கூடிய அவளுடைய கேசாதிபாத ஸ்வரூபத்தின் தர்சனமுங்கூடக் கிடைத்துவிடுகிறது. இப்படி இஹ-பரங்களில் ஸகலத்தையும் ஸாதித்துத் தருவதாக சப்த ப்ரபஞ்சத்தில் அவள் லீலை நடக்கிறது. இதுவரை சொன்னதெல்லாம் வெறும் அக்ஷரங்கள் குறித்தே.

அந்த அக்ஷரங்களையே பல தினுஸாகச் சேர்த்துப் பதமாக்கி, வாக்கியமாக்கித்தான் நாம் பேசுவது எழுதுவது எல்லாம். காவ்யம், ஸ்தோத்ரம், சாஸ்த்ரம் - வேதம் முதற்கொண்டு எல்லாமே - இப்படி உண்டானதுதான். அதற்கெல்லாம் அடையாளம் (வாக்தேவியின் ஒரு கரத்திலுள்ள)புஸ்தகம்.

ஸ்ரீவித்யா மந்த்ரத்தில் 'கூடங்கள்'என்று மூன்று பிரிவுகள் (கூறுகள்)உண்டு. அதில் முதலாவதற்கு 'வாக்பவம்'என்றே பேர். அப்படியென்றால் 'வாக்கிலிருந்து உண்டானது'என்று அர்த்தம். முழு மந்த்ரமும் அம்பாளின் முழுஸ்வரூபம். அதில் அவளுடைய முகம் 'வாக்பவ'கூடம். முகத்திலுள்ள வாயால்தானே பேசுவது?

இதற்கு இவ்வளவு முக்யத்வம் கொடுத்திருக்கிறது. சாக்த சாஸ்திரங்களிலும் ஸ்தோத்ரங்களிலும் அவள் பக்தர்களுக்கு விசேஷ வாக்குவன்மை கொடுத்துக் கவிகளாக்குவாள் என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கும். இந்த ஸௌந்தர்ய லஹரியிலேயே அப்படி நிறைய வருகிறது. இதற்கென்ன இவ்வளவு முக்யத்வமென்றால்:

வேறு எந்த ப்ராணி வர்க்கத்திற்கும் இல்லாமல் மநுஷ்ய ஜாதி ஒன்றுக்குத்தானே வாக் சக்தி என்று ஒன்றைப் பராசக்தி கொடுத்திருக்கிறாள்?அவளுடைய ஷஜீமீநீவீணீறீ ரீவீயீமீ என்றால் அது முக்யமானதுதானே?நல்லறிவு இருந்தால், அது (பேசும் திறன்)நம்மைப் பரம ச்ரேயஸில் சேர்க்கவே

கொடுக்கப்பட்டுள்ளது என்று புரிந்துகொண்டு அந்த வகையில்தான் அதை ப்ரயோஜனப்படுத்திக் கொள்ளத் தோன்றும். அவள் கொடுத்த வாக்கை அவள் விஷயமாகவே ப்ரயோஜனப்படுத்தி அவளையே அடைய வேண்டும் என்பதுதான் வாக்கின் பரம லக்ஷ்யம்.

வாக்கின் உயர்வு எதில் என்றால், ஒருத்தன் தான் மாத்திரம் உசந்த அநுபவங்களைப் பெறுவது என்றில்லாமல் பிறத்தியாருக்கும் அவை கிடைக்கும்படிப் பண்ணும் மிக உயர்ந்த தொண்டு அதனால்தான் நடக்கிறது. "சேர வாரும் செகத்தீரே!"என்று தன்னுடைய ஒரு குழந்தை மற்ற குழந்தைகளையும் கூப்பிட்டுக் கூப்பிட்டு திவ்ய அநுபவங்களை, திவ்யமான அழகுகளை, உசந்த எண்ணங்களை 'ஷேர்'பண்ணிக் கொள்ள வழியாகவே அம்பாள் வாக் சக்தி, கவித்வ ப்ரதிபை முதலியவற்றை வழங்குகிறாள். இதைவிட என்ன புண்யம் உண்டு?அதனால்தான் இதை ஃஜீமீநீவீணீறீ ரீவீயீமீ"என்று விசேஷித்துச் சொல்வது.

ஸாதனா மார்க்கம் என்று ஒரு குரு போட்டுக் கொடுக்கும்போது அதில் எத்தனையோ கடினமான கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அந்த ஸாதனை லக்ஷ்யத்தையே ஒரு கவியோ ஸகல ஜனங்களும் ஸௌக்யமாக, ஸந்தோஷமாகப் பெறும்படி ஸ்வராஸ்யமுள்ளதான பொருளில் பாட்டாக்கிக் கொடுத்து விடுகிறான்!இப்படி ஒரு அநுக்ரஹம் - தனி ஆஸாமியின் உடைமையாயில்லாமல், எல்லோருக்குமான ஸோஷலிஸ உடைமையாக - வாக்கைக் கொண்டு அம்பாள் பண்ணுவிக்கிறாள் என்பதாலேயே அதைப் போற்றிப் போற்றிச் சொல்வது.

லலிதாம்பிகையாகவே அதைப் பண்ணுவிப்பவள், வாக்தேவி என்றே உள்ள தனி ரூபத்தில் பண்ணுவதாக இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.

வராபயமும், ஜப மாலையும், சுவடியும் வைத்துக் கொண்டிருக்கும் அந்த வாக்தேவியை ஸாது ஜனங்களாயிருப்பவர்கள் ஒரு தரம் நமஸ்கரித்துவிட்டாலே போதும். "ஸதாம்"என்றால் 'ஸாது ஜனங்களுக்கு'என்று அர்த்தம். "ஸக்ருந்நத்வா"(இது ஸக்ருத் நத்வா எனப் பிரியும்)

என்பதில் வரும் "ஸ்கருத்"என்பதற்கு ஒரு தடவை -ஒரே தடவை - என்று அர்த்தம். "நத்வா"- நமஸ்கரித்தால். ஒரே தடவை நமஸ்கரித்துவிட்டால் போதும்?யார் என்பது முக்யம்!யாரானாலும் ஒரு தரம் நமஸ்கரித்தாலே போதும் என்று சொல்லவில்லை. ஸாதுக்களாக, அதாவது உயர்ந்த சீலங்களுள்ளவர்களாக, இருப்பவர்கள்தான் ஒரு நமஸ்காரம் பண்ணினாலும் போதும். அவர்களுக்கு "மது க்ஷீர த்ரக்ஷாமதுரிம துரீணா:பணிதய:".... மாதுர்யத்திற்குப் பேர் போன மூன்றைச் சொல்கிறார் - தேன், பால், த்ராக்ஷைஎன்று. அவை மதுரமாயிருப்பது மட்டுமில்லை;ஸுலபமாக முழுங்கி ஸுலபத்தில் ஜீர்ணம் செய்துகொண்டு நிரம்பப் புஷ்டி பெற இந்த மூன்றுக்கு மிஞ்சி இல்லை. அந்தராத்மாவுக்குள்ளே முழுங்கி ஜீர்ணித்து, பாரமார்த்திகமாகப் புஷ்டி பெறச் செய்கிற வாக்குக்கு இப்படி உபமானம் கொடுத்திருக்கிறார்.

ஸாது ஜனங்களுக்கு தேன் போலும், பால் போலும், த்ராக்ஷைபோலும் மதுரமான வாக்கை வர்ஷித்துக் கவிபாடும் சக்தி வாக்தேவியை ஒரு தரம் நமஸ்காரம் பண்ணினாலே அவள் அநுக்ரஹத்தால் உண்டாகிவிடுகிறதாம்.

"அவர்களுக்கு அப்படிப்பட்ட வாக்சக்தி உண்டாகிறது"என்று அப்படியே யீணீநீமீ-ஆகச் சொல்லிவிடாமல், கவி நயத்தோடு "எப்படி உண்டாகாமல் இருக்க முடியும்?"- "கதமிவ ந ஸந்நிததே:?"என்று கேள்வி ரூபத்தில் கேட்டிருக்கிறார்.

கொஞ்சம் வார்த்தை விளையாட்டும் பண்ணியிருக்கிறார். "ஸக்ருந்நத்வா நத்வா"என்று 'நத்வா'வை இரண்டு தரம் திருப்பி சப்தாலங்காரம் பண்ணியிருக்கிறார். இரண்டு 'நத்வா'வுக்கும் வெவ்வேறே அர்த்தம். இரண்டில் ஒரு 'நத்வா'வுக்கு 'நமஸ்காரம் பண்ணி'என்று அர்த்தம். இது ஒரே வார்த்தை. இன்னொரு 'நத்வா'வோ 'ந'என்ற ஒற்றை அக்ஷரமாகவும் 'த்வா'என்ற வார்த்தையாகவும் பிரியும். 'ந', 'த்வா'என்று இங்கே இரண்டு வார்த்தை சேர்ந்து 'நத்வா'ஆகியிருக்கிறது. 'ந' என்றால் நெகடிவ், இல்லை என்ற அர்த்தம் கொடுப்பது. 'வாக்வன்மை உண்டாகாமல் இருக்குமா?'என்று நெகடிவ்வாகச் சொல்லும்போது, 'ஸந்நித்தே'என்பதுடன் இந்த 'ந'சேர்ந்தே அந்த அர்த்தத்தைக் கொடுக்கிறது. வசன நடையில் பின்னாடி 'ந

ஸந்நிததே'என்று வரவேண்டிய 'ந'வை முன்னாடி 'ஸக்ருத்'தோடு சேர்த்து 'ஸக்ருந்ந'என்று போட்டு வார்த்தை விளையாட்டுப் பண்ணியிருக்கிறார்! 'த்வா'என்றால் 'உன்னை'. 'த்வா நத்வா' : 'உன்னை நமஸ்கரித்தால்'.

கவீந்த்ராணாம் சேத:கமல-வன பாலாதபருசிம்

பஜந்தே யே ஸந்த:கதிசித்-அருணாம்-ஏவ பவதீம்

விரிஞ்சி-ப்ரேயஸ்யாஸ்-தருணதர-ச்ருங்கார லஹரீ-

கபீராபிர்-வாக்பிர்-விதததி ஸதாம் ரஞ்ஜநமமீ**

((கவீந்த்ராணம்) பாவேந்தர்களுடைய (சேத:கமலவன) சித்தமாகிய தாமரைக் காட்டிற்கு (அதனை மலர்த்தும்)(பால ஆதப ருசிம்) இளஞ் சூரிய ஒளியாக இருப்பவளும், (அருணாம் ஏவ பவதீம்) (சிவந்தவள் என்று பொருள்படு ம்)அருணா என்றே கூறப்படுபவளுமான உன்னை (யே கதசித் ஸந்த:) எந்த ஒரு சில சான்றோர்கள் (பஜந்தே) வழிபடுகிறார்களோ (அமீ) அவர்கள் (விரிஞ்சி ப்ரேயஸ்யா:) ப்ரம்மாவின் ப்ரிய பத்னி(யான ஸரஸ்வதி)யின் (தருண-தர) இளமை நலமிக்க (ச்ருங்கார லஹரீ) பிரேமப் பிரவாஹமான (கபீராபி:வாக்பி:) ஆழமிக்க சொற்களால் (ஸதாம்) நன்மக்களுக்கு (ரஞ்ஜனம் விதததி) உவகையூட்டுகிறார்கள்.)

வெள்ளை வெளேரென்ற ஸத்வ ஸ்வரூபமான வாக்தேவியைச் சொன்னவர் அடுத்த ச்லோகத்தில் அவளுக்கே செக்கச் செவேல் என்று இருக்கும் ரஜோகுண ஸ்வரூபத்தைச் சொல்கிறார். ஸூர்யோதயத்திற்கு முன் கிழக்குத் திசை செக்கச் செவேலென்று இருப்பதை அருணோதயம் என்கிறோம். அருணம் என்றால் அந்தச் சிவப்பு நிறந்தான். ஸூர்யனுடைய ரத ஸாரதி அந்த நிறமானதால் அவனுக்கு அருணன் என்று பெயர். முதலில், ரதத்தின் முன்னே உட்கார்ந்திருக்கும் அவன் தெரிகிறான். அதுதான் அருணோதயம். அப்புறம் ரத மத்தியிலிருக்கும் ஸூர்ய பகவானும் தெரிவது ஸூர்யோதயம். இங்கே 'அருணா'என்ற சிவப்பு நிற ஸரஸ்வதீ ரூப பேதத்தைச் சொல்கிறார். இப்படி த்யானிப்பவர்களுக்கு அவள் ச்ருங்கார ரஸ ப்ரதானமான வாக் தாரையை அருள்கிறாள் என்கிறார். ச்ருங்காரமும் ரஜோ குணத்தைச் சேர்ந்ததுதான். அதையும் சிவப்பாகவே உருவகப்படுத்துவது வழக்கமாதலால்

அருணாம்பாள் இப்படி அநுக்ரஹிப்பது பொருத்தமாகவே இருக்கிறது.

ஆனால் இது ப்ராக்ருதமான (உலக இயற்கைப் படியான)ச்ருங்காரமில்லை;காமேச்வர-காமேச்வரி தாம்பத்தியம் என்று சொன்ன தத்வார்த்தமான ச்ருங்காரம். அதை ஸரியானபடி புரிந்துகொண்டு ஸந்தஷோப்படக் கூடியவர்கள் யாரென்றால் ஸாது ஜனங்கள். முந்தின ச்லோகத்தில் வெள்ளை ஸரஸ்வதியை ஒரு தரம் நமஸ்கரித்தே ஸாது ஜனங்கள் கவித்திறமை பெறுவதாகச் சொன்னார்.

அவர்கள் பாடும் கவியும் வெள்ளையாக - ஸாத்விகமாக - ஞான, வைராக்யங்களில் சேர்ப்பதாக இருக்கும். அந்த ஞான வைராக்யங்களையே ச்ருங்காரமாக அநுபவிக்கும் ஒரு ஸ்திதியும் உண்டு. அது அந்த ஸாது ஜனங்களுக்கே கைவருவது. ஆகையால் அவர்கள் மகிழும்படி இந்தச் சிவப்பு ஸரஸ்வதி உபாஸகர்கள் பாடுகிறார்கள். போன ச்லோகத்தில் "ஸதாம்"('ஸாது ஜனங்களுக்கு') மது, க்ஷீர, த்ராக்ஷாரஸங்களுக்கு ஸமானமான வாக்கு ஸித்திப்பதைச் சொன்னார். இந்த ச்லோகத்தில் "விததி ஸதாம் ரஞ்ஜனம் அமீ"என்று அதே ஸாது ஜனங்களுக்கு இந்தச் சிவப்பு ஸரஸ்வதி உபாஸகர்கள் தங்கள் கவிதை ஸ்துதிகளால் ஸந்தோஷமுண்டாக்குகிறார்கள் என்கிறார். அங்கே கவியாக இருந்தவர்கள் இங்கே ரஸிகர்கள்.

அப்படியானால், இங்கே கவிகளாக இருப்பவர்கள் யாரென்றால், அவர்கள் அந்த ஸாதுக்களிலேயே இன்னும் மேலே போன ஸாது ச்ரேஷ்டர்கள்தான். வெள்ளை ஸரஸ்வதியிடமிருந்து பொதுவான காவ்ய சக்தியைப் பெறுபவர்கள் பொதுப்படையான எல்லா ஸத்துக்களுமாவர். 'ஸதாம்'என்று பொதுவாக அங்கே சொன்னார். இங்கேயோ அதிலேயே ச்ருங்காரமாக யார் பாடுகிறார்கள் என்னும்போது "கதிசித் ஸந்த:"- 'யாரோ சில ஸத்துக்கள்'- என்கிறார். அதாவது, ஸத்துக்களிலும் உசந்த நாயிகா பாவ நிலைக்குப் போன ஒரு சில பேரே என்று அர்த்தம். பரம பக்குவம் வாய்ந்த ஸாதுக்களே அந்த பாரமார்த்திகமான ச்ருங்காரத்தை முறைப்படிக் கையாள முடியும். மற்ற ஸாதுக்களே அதை முறைப்படி கேட்டு ஸந்தோஷப்பட முடியும்.

அவர்கள் பெறும் ஸந்தோஷத்திற்கு 'ரஞ்ஜனம்'என்று வார்த்தை போட்டதில் ச்லேஷை (சிலேடை)இருக்கிறது. 'ர'என்றாலே சிவப்புதான். சிவப்பாக உள்ள அக்னி. காமாக்னி என்றே சொல்லும் ப்ரேமை இரண்டுக்கும் 'ர'என்று பேர். 'ரம் +ஜனம்'என்றால் சிவப்பை உண்டாக்குவது, தழல் மாதிரி ஒரு பிரேமையை உண்டாக்குவது என்று அர்த்தம். நல்ல பக்குவ ஸ்திதியைக் காட்டும் செம்மை அது. ஒரு பழம் நன்றாகப் பழுத்தால் சிவப்பாகிறதல்லவா?அப்படி. 'செம்மை செய்தல்'என்றாலே நன்றாகப் பக்குவம் பண்ணி முழுமையாக்குவது தானே?அப்படிப்பட்ட மனச் செம்மையை உண்டாக்கும் ஆனந்தமே 'ரம்+ஜன'மான ரஞ்ஜனம். சிவப்பு ஸரஸ்வதியின் அருள் பெற்றுப் பாடும் பரம பக்குவம் வாய்ந்த கவிவாணர்கள் அதனால் மற்ற ஸாது ஜனங்களும் செம்மையான ஸந்தோஷம் பெற வைக்கிறார்கள். அவள் 'அருணா'என்றால் இவர்களும் 'ரம்'மை ஜனிக்கச் செய்கிறார்கள்!ச்ருங்கார ஸஹரியாகக் கவிதை செய்து பாடுகிறார்கள். அந்த ச்ருங்கார லஹரிக் கவிதையை "கபீராபி:வாக்பி:"என்கிறார் அப்படியென்றால் 'ஆழமுள்ள வாக்குகள்'என்று அர்த்தம். அதாவது ஆழ் பொருள் கொண்டது. மேல் மட்டத்தில் பார்த்தால் வெறும் ச்ருங்கார அலையாக இருக்கும்;ஆழத்தில் போய்ப் பார்த்தால் ஒரே தத்வ முத்தும் பவளமாக இருக்கும்.

ஸாக்ஷாத் காமேச்வரிக்கே அருணா என்று பெயருண்டு. "அருணாம் கருணா-தரங்கிதாக்ஷீம்"என்றுதான் அவளுடைய த்யான ச்லோகமே. ஆனால் இங்கே ஆசார்யாள் சொல்வது காமேச்வரிக்குரிய தநுர்-பாண-பாசாங்குசங்களோடு நாலு ஹஸ்தங்களும் ஸரஸ்வதிக்குரிய அக்ஷமாலை, புஸ்தகம், வராபயம் (வரம் அபயம்)ஆகியவை கொண்ட நாலு ஹஸ்தங்களுமாக மொத்தம் எட்டுக்கையுள்ள அருண ஸரஸ்வதி என்று பெரியவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

அடுத்த ச்லோகத்தில் (ச்லோ. 17)வாக்தேவதைகள் புடைசூழ இருப்பவளான ஸாக்ஷாத் லலிதா த்ரிபுரஸுந்தரியையே த்யானம் செய்தால் எப்பேர்ப்பட்ட ஸாரஸ்வதமான ஸித்தி உண்டாகும் என்று சொல்கிறார்.

வாக்தேவி என்று ஏக வசனத்தில் (ஒருமையில்)சொன்னால் ஸரஸ்வதி ஒருத்தி மட்டுமே. வாக் தேவதைகள் என்று பஹு

வசனத்தில் (பன்மையில்)சொன்னால் எட்டு பேர். 'அ'முதலான பதினாறு உயிரெழுத்துக்களுக்கு ஒரு வாக்தேவதை; ளீணீ,ளீலீணீ,ரீணீ, ரீலீணீ, ங-வுக்கு ஒருத்தி;இப்படியே 'ச'வர்க்கத்திற்கும் 'ஞ'வுக்கும் ஒருத்தி;'ட'வர்க்கத்திற்கும் 'ண'வுக்கும் ஒருத்தி;'த'வர்க்கத்திற்கும் 'ந'வுக்கும் ஒருத்தி;'ப'வர்க்கத்திற்கும் 'ம'வுக்கும் ஒருத்தி;ய, ர, ல, வ-வுக்கு ஒருத்தி;ச (வ்ணீ), ஷ, ஸ, ஹ, ள, க்ஷ-வுக்கு ஒருத்தி - என்று 51 அக்ஷரங்களுக்குமாக எட்டு வாக்தேவதைகள். அதிலே முதலாமவளாக 'அ'வரிசைக்கு இருப்பவளுக்கு வசிநி என்று பெயர். அதனால் அந்த எட்டுப் பேரை 'வசிந்யாதி தேவதைகள்'என்பார்கள். இவர்கள்தான் அம்பாளே உத்தரவிட்டதன் மேல் லலிதா ஸஹஸ்ரநாமத்தைப் பாடியவர்கள். ஸ்ரீசக்ரத்தில் ஏழாவது ஆவரணத்திலுள்ள எட்டுக் கோணங்களில் இந்த எட்டுப் பேரும் அம்பாளைச் சுற்றி உட்கார்ந்திருப்பார்கள்.

இவர்களே வாக்கைப் பிறப்பிக்கும் தாயார்களாதலால் "ஸ்வித்ரீபி:வாசாம்"என்று (ச்லோகத்தை)ஆரம்பிக்கிறார். சந்திரனின் நிலவு பட்டால் உருகுகிற ஒரு வித ஸ்படிகம் இருப்பதாகவும் அதற்குச் சந்திரகாந்தக் கல் என்று பேர் என்றும் புஸ்தகங்களில் இருக்கிறது. அந்தச் சந்திர காந்த ஸ்படிகம் மாதிரி உள்ளுக்குள்ளே நிலா டால் அடிக்கும் ஸ்படிக வர்ணத்தில் அந்த வாக்தேவதைகள் இருக்கிறார்கள். ஒரு ச்லோகத்தில் 'சரத் ஜ்யோத்ஸ்நா சுத்தாம்'என்றார்;இன்னொன்றில் 'அருணாம்'என்றார்;இங்கேயோ நடுவே அருணாவான அம்பாள் வீற்றுக் கொண்டிருக்க, சுற்றி சரத் ஜ்யோத்ஸ்நா மாதிரியான வாக் தேவதைகள் சூழந்து கொண்டிருப்பதைச் சொல்கிறார்!இப்படி ராணியான அம்பாளை சேடிகளான வாக் தேவதைகளோடு சேர்த்து த்யானிப்பவன் - "ஸஞ்சிந்தயதி ய:"- 'எவன் நன்கு சிந்திக்கிறனோ அவன்'- மஹா காவ்யங்கள் எழுதகக்கூடிய அளவுக்கு ஸாஹித்ய கௌசல்யம் (இலக்கிதயத் திறமை)பெற்று விடுகிறான். மஹான்களுடைய சொல்லோட்டத்துக்கு உள்ள சுவை (தமிழ்ப் புலவர் பாஷையில் சொல்லிவிட்டேன்!) அவனுடைய வாக்குக்கு ஏற்பட்டுவிடுமாம்! "மஹதாம் பங்கி ருசி"என்கிறார். ருசி, சுவை, மீணீவமீமீஎன்று எந்த பாஷையிலும் சாப்பாட்டிற்குச் சொல்வதையே இலக்கியத்திற்கும் சொல்லியிருக்கிறது!

நாக்கால் அறியக்கூடிய ருசியை மாத்திரம் சொல்வானேன் என்று மூக்கால் அறியக்கூடிய வாஸனையையும் இங்கே ஆசார்யாள் சேர்த்துக்கொள்கிறார். 'மது, க்ஷீரம், த்ராக்ஷைபோன்ற மாதுர்ய ருசியோடு வாக்கு இருக்கிறது என்கிற மாதிரி எதன் வாஸனையோடு அது இருப்பதாகச் சொன்னால் சிறப்பாயிருக்கும்?'என்று யோசித்து, 'எட்டு வாக்தேவதைகளையும் கூட்டி ஒரே வாக்தேவியாக ஸரஸ்வதி இருக்கிறாளே, அவளுடைய வதன கமலத்திலிருந்து எப்பேர்ப்பட்ட திவ்ய பரிமளம் எழும்பும்?- அந்தப் பரிமளத்திற்கு ஒப்பான ஒரு இன்ப உணர்ச்சியை இந்த மஹாகவியின் வாக்கும் உண்டாக்கி விடும்'என்று ச்லோகம் பண்ணிவிட்டார்: "வசோபி:வாக்தேவீ வதந கமலா மோத மதுரை:"!ஸரஸ்வதி சுத்த ஸத்வ மூர்த்தி, அத்தனை கலைகளுக்கும் ஆச்ரமாயிருக்கப்பட்டவள். அப்படிப்பட்டவள் வாயைத் திறந்தாலே திவ்ய பரிமளம் வீசும்;தாம்பூலம், ஜின்டான் மாத்திரை போட்டுக் கொள்ளாமலே வீசும்!பூ வைத்துக் கொள்ளாமலே அம்பாளுடைய கேசம் வாஸனை அடிக்கும் என்கிறாற் போல - அந்த ஸமாசாரத்திற்கு அப்புறம் வருகிறேன் - ஏலக்காய், ஜாதிபத்ரி எதுவும் போட்டுக் கொள்ளாமலே வாக்தேவியன் வாய் வாஸனை வீசும். அந்த வாஸனையை இந்த மஹாகவியின் வாக்கும் அதைத் யாரார் சொல்கிறார்களோ அவர்களுடைய வாய்க்குக் கொடுத்துவிடும் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம். ஸரஸ்வதியின் வாயிலுள்ள இயற்கை மணம் இவனுடைய சொல்லுக்கு இருப்பதால் அதைச் சொல்கிறவர்களின் வாயும் அப்படி மணக்கும் என்று வைத்துக் கொள்ளலாம். "வள்ளால்!உன்னைப் பாடப் பாட வாய் மணக்குதே!"என்று வள்ளலார் என்றே சொல்லப்படுபவரும் பாடியிருக்கிறார்.

அம்பாள் வாக்சக்தியை அநுக்ரஹிப்பதைப் பிற்பாடு 'ஸௌந்தர்ய லஹரி'ஸெக்ஷனிலும் பல இடங்களில் சொல்லியிருக்கிறார் - அவளுடைய ஸ்தன்ய பானம் (பாலூட்டு)அபார கவித்வத்தைத் தருகிறதென்று ஒரு இடத்தில் (ச்லோ. 75);ப்ரம்மாவே அஸூயையைப் படுகிற அளவுக்கு அவள் ஒரு பக்தனுக்கு ஸரஸ்வதி கடாக்ஷத்தை அருள்கிறாளென்று ஒரு இடத்தில் (ச்லோ. 99);ஊமைக்குக் கூடக் கவிபாடும் ஸாமர்த்யத்தை அவளுடைய பாத தீர்த்தம்

தருகிறதென்று ஒரு இடத்தில் (ச்லோ. 98)- இப்படியெல்லாம் அம்பாள்-பக்தர்கள் ஸாரஸ்வதமாகப் பெறும் அநுக்ரஹத்தைப் பல இடங்களில் சொல்லியிருக்கிறது. ஆசார்யாள் தாம் கண்டுகொண்ட திவ்ய ஸௌந்தர்ய தர்சனத்தை இந்த ஸ்தோத்ர வாக்குகளால் சொல்லி மற்றவர்களோடு 'ஷேர்'பண்ணக் கொள்ளும்போது அதிலுள்ள பரமானந்தத்தை, இப்படியொரு பரோபகாரம் பண்ணுவதில் பரம ஸந்துஷ்டியை அடைந்திருப்பார். அதனால்தான் தம்முடைய ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்களும் அவளை பக்தி பண்ணி இந்த வாக் ஸித்தியைப் பெற்று, ஸ்தோத்ரம் பாடி, பெரிய பரோபகாரம் பண்ணட்டும் என்று நினைத்து அம்பாளின் வாக் ப்ரதான அநுக்ரஹத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கிறாரென்று தோன்றுகிறது.

---



## அம்பாளின் தாடங்கம்

அந்தத் தாலி பாக்யதைதான் அவளுடைய "தாடங்க மஹிமா'என்று சொல்லியிருக்கிறார். வேதம் ச்ருதி என்றால், ரிஷிகள் பண்ணிய தர்ம சாஸ்திரங்களும், கிருஷ்ண பரமாத்மா உபதேசித்த கீதையும் ஸ்ம்ருதி என்பார்கள். ஆசார்யாள் வாக்கையும் ஸ்ம்ருதியோடு சேர்க்கலாம். ஸ்வாமிக்கு அம்பாள் மருந்து என்ற ச்ருதி வாக்கைத்தான் ஆசார்யாள் இங்கே ஸ்ம்ருதி வாக்காகக் கொடுத்திருக்கிறார். அப்படியே காப்பியடித்தால் அழகில்லை என்பதால், ஸ்வாமியின் உயிரை ரக்ஷிப்பது அம்பாள் என்றே திருப்பிச் சொல்லாமல், (அவ்வாறு ரக்ஷிப்பது) அவளுடைய ஸௌமாங்கால்யச் சின்னமான தாடங்கம் என்று நூதன நயம் சேர்த்துச் சொல்லியிருக்கிறார்!'தாலி பாக்யம்'என்று பொதுவில் சொல்வதைத் 'தாடங்க மஹிமை'என்கிறார்.

வேடிக்கையாக, அந்தத் தாடங்கமும் தாலிதான்! இதென்ன

புதிர் போடுகிறேனே என்றால், நான் ஒன்றும் புதுசாகச் சொல்லவில்லை. காளிதாஸன் சொன்னதைத் தான் ஒப்பிக்கிறேன். 'தாலீ பலாச தாடங்காம்'என்பது காளிதாஸன் வாக்கு. தாலம், தாலீ என்றால் பனை, பலாசம் என்றால் புரசு என்று ஒரு அர்த்தம். 'பலாச'தான் திரிந்து 'புரசு'ஆயிற்று என்று தோன்றுகிறது. இன்னொரு அர்த்தம். எந்த இலைக்குமே 'பலாசம்'என்று பெயர். 'தாலீ பலாசம்'என்றால் பனையோலை என்று அர்த்தம். ஆதிகாலத்தில் ஜனங்கள் படாடோபமில்லாமல் எளிமையாயிருந்தபோது ஸ்த்ரீகளுடைய பரம ஸௌமாங்கல்ய ஆபரணங்களான மங்கள ஸூத்ரப் பதக்கம், காதுத்தோடு இரண்டுமே பனையோலையால் ஆனதாகத்தான் இருந்திருக்கின்றன. அதனால் மங்கள ஸூத்ரப் பதக்கமாயிருந்த ஒலை நறுக்குக்கே தாலி என்று பெயர் வந்துவிட்டது. 'தோடு'என்பதும் பனையோலையின் பெயர்தான். காதிலும் அந்த ஒலையைச் சுருட்டித்தான் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நானே பார்த்திருக்கிறேன். அநேக குடியான ஸ்திரீகள் அப்படி போட்டுக்கொண்டு. பிற்கால ஜம்ப வழக்கங்கள் வராத ஆதி நாட்களில் ப்ராஹ்மண ஸ்திரீகள் உட்பட- காளிதாஸன் வாக்குப்படி ஸாக்ஷாத் பராசக்தி உள்பட-எல்லோரும் ஒலைத்தோடு போட்டுக் கொண்டிருந்திருக்கிறார்கள். அதனால்தான் பிற்காலத்தில் ஏக செலவில் வைரத் தோடு போட்டுக் கொண்டபோது கூட அதை வைர ஒலை என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது.

கம்மல் என்றும் தோட்டைச் சொல்வது. 'கமலம்''கமல்'என்பதுதான் அப்படி ஆனது. நடுவே ஒரு கல், சுற்றிலும் ஆறு என்று, நடுவே கர்ணிகையும் சுற்றி இதழுமாக ஒரு தாமரை இருக்கிறார்போலத் தோடு கட்டியதால் 'கமலம்'என்று பேர் வைத்து 'கம்மல்'ஆயிற்று. அப்படிக் கட்டப் படுகிற வைரக் கல்லுக்கும் அதனாலேயே 'கமலம்'என்று பெயர் வந்தது. 'நல்ல உடானி கமலம்'என்று உசந்த வைரத்தைச் சொல்வார்கள்.

இத்தனை ஜம்பம், டம்பம், டாம்பீகம் வந்துவிட்ட இன்றைக்கும் அம்பாள் பூஜையில் அவள் போட்டுக் கொள்கிற பரம எளிமையான கருகுமணியும் பச்சோலையும் ஸுமங்கலிகளுக்குக் கொடுக்கிறோம்.

'தாலி' யில் தாலம் (பனை) என்று தெளிவாகவே தெரிகிறதென்றால், தாடங்கம் என்ற ச்ரோத்ராபரணமும் (காதணியும்) 'தால'த்தின் அடியாகப் பிறந்ததுதான். 'தாலம்'â¡ð¶ 'î£ì(da)‹'â¡Á‹ Ý°‹. 'Üƒè‹'â¡ø£™ C¡ù‹. î£ì˜î£ô£ù ñƒè÷,, C¡ù‹ 'î£ìƒè‹'î£ì ð˜ó‹ â¡ÁÃì Ü‰î Ýðóí˜¬î,, ªê£™õ¶‡´. 'î£h ðô£ê‹'â¡ø ð¬ù«ò£¬ô«ò 'î£ì ð˜ó‹'â¡ð¶‹. 'î£ì(da)ƒè‹'â¡ð«î ÜŠ¹ø‹ 'î£ì(ta)ƒè‹' â¡Á õ‰F¼,Aø¶. «î£´, ÜîŸ° «õø£è, °‡ìô‹ (Þ‰î ï£œ «ô£ô£,°, TI,A) â¡Á Þ™ô£ñ™, «î£´ °‡ìô‹ Þó‡´‹ «ê˜ˆ¶Š ð‡Eò ï¬è î£ìƒè‹ â¡Á «î£¡ÁAø¶.

தாலி, தோடு இரண்டும் விசேஷமான ஸௌமாங்கல்யாபரணங்களாகும். ஸுமங்கலித்வம் போனால் கழுத்தை விட்டுத் தாலி இறங்குவது போலவே காதை விட்டுத் தோடோ தாடங்கமோ இறங்கிவிட வேண்டும். அதனால் ஒரு புருஷனின் நல்ல ஆயுர்பாவத்தை, பெரிய கண்டத்தில் கூட அவன் பிழைப்பதைத் 'தாலி பாக்கியம்' என்று சொல்கிற மாதிரி 'தாடங்க பாக்யம்'என்றும் சொல்ல ந்யாயமுண்டு. அதைத்தான் ஆசார்யாள் 'தாடங்க மஹிமை'என்கிறார். பங்கு போட்டுக் கொண்டு அம்ருதம் சாப்பிட்ட அத்தனை தேவர்களும் அழிந்து போனார்கள். யாருக்கும் பங்கில்லாமல் தானே மிச்சம் மீதியில்லாமல் விஷத்தைச் சாப்பிட்ட உன் பதி அழிவே இல்லாமலிருக்கிறானென்றால் அது உன் மஹிமை தானம்மா! - 'தவ ஜநநி தாடங்க மஹிமா!' என்கிறார்.

ச்ரோத்ரத்திற்கு விசேஷம் ஜாஸ்தி. பஞ்ச பூதங்களில் உசந்ததான ஆகாச தத்வத்தில் எழுகிற சப்தத்தை க்ரஹிப்பதாகப் பஞ்சேந்திரியங்களில் இருப்பது அதுவே. வேதம் பூராவுமே இப்படி ச்ரோத்ரத்தால் க்ருஹிக்கப்பட்டதால் தானே ச்ருதி என்றே பேர் பெற்றிருப்பது?உபதேசங்களையெல்லாம் கேட்டுக் கொள்வது ச்ரோத்ரந்தான். அம்பாள் தான் குரு ஸ்வரூபிணியானாலும் அத்தனை ஆகமங்களையும் மந்திரங்களையும் அவள்தான் சிஷ்யையாயிருந்து பதியும் குருவுமான ஈச்வரனிடமிருந்து தன்னுடைய ச்ரோத்ரத்தினால் கேட்டுக் கொண்டாள். எல்லாவற்றுக்கும் மேலாக நம்முடைய ப்ரார்த்தனை,

ஸ்தோத்ர கீர்த்தனை எல்லாவற்றையும் அவள் கேட்டுக் கொள்வது ச்ரோத்ரத்தினால் தானே?

Þîù£ªô™ô£%oî£«ù£ â¡ù«õ£ Ü‹ð£À¬ìò î£ìƒè^F™ ï‹º¬ìò Ýê£˜ò£À‚° ªó£‹ð ð‚F‚ ðŸÁî™. 'ú˜õ ñƒèÿ£' âùŠð´‹ Ü‹ð£À‚° ñƒèÿ„ C¡ù‹ Ü¶. ú¨˜ò ê%oFó˜è«÷ ÜõÀ¬ìò Þó‡´ î£ìƒè‹ â¡Á úývóï£ñ^F™ õ¼‹:"î£ìƒè-»èk-Ìî îð«ù£´ð ñ‡ìô£ â¡Á. Ü«î ú¨˜ò ê%oFó˜è¬÷ ïñ‚°Š ð£™ ªè£´‚Aø

அம்மாவின் இரண்டு வக்ஷோருஹங்கள் என்று ஆசார்யாள் இதே ஸௌந்தர்ய லஹரியிலேயே சொல்லியிருக்கிறார். ஆகையால் அந்தத் தாடங்கங்களும் ஒரு பக்கம் பரமேச்வர பத்னியின் ஸௌமாங்கல்ய சின்னம், இன்னொரு பக்கம் குழந்தைகளான நமக்கெல்லாம் பாலூட்டுகிற மாத்ரு வாத்ஸல்யத்தின் சின்னம் ஆகிறது. ஆகையாலேதான் ஜம்புகேச்வரத்திலே அகிலாண்டேச்வரியின் சக்தி ஜனங்கள் தாங்க முடியாத அளவுக்கு ஆனபோது அவர் ஸ்ரீசக்ரம் பிரதிஷ்டை பண்ணி அதில் அதிகப்படி சக்தியை ஆகர்ஷணம் பண்ணி அம்பாளை சமனப்படுத்த நினைத்தபோது அந்த ஸ்ரீசக்ரத்தை தாடங்க ரூபத்தில் பண்ணி அவளுடைய ச்ரோத்திரத்திலேயே ப்ரதிஷ்டித்து விட்டார். ப்ருத்வி க்ஷேத்ரமும், ப்ருத்வியின் மத்ய ஸ்தானமுமான காஞ்சீபுரத்தில் அம்பாள் காமாக்ஷியின் சக்தி இதே மாதிரி அபரிதிமாயிருந்தபோது அவளுக்கு எதிரே ப்ருத்வியிலேயே - பூமியிலேயே - ஸ்ரீ சக்ர ஸ்தாபனம் பண்ணினார். அது அவருடைய ஜீவிதத்தின் கடைசியில். ஜம்புகேச்வரம் அப்பு க்ஷேத்ரம். அதற்காகக் காவேரியில் யந்த்ரம் ஸ்தாபிக்க முடியுமா?அப்பு மட்டுமில்லை; தேயு, வாயு, ஆகாசம் எதிலுந்தான் (யந்த்ரம் ஸ்தாபிக்க) முடியாது. ப்ருத்வியில் மட்டுமே முடியுமாதலால் அப்படிக் காஞ்சியில் பண்ணினார். ஜம்புகேச்வரத்தில் என்ன பண்ணினாரென்றால் காவேரிக்கும் மேலே ப்ரவாஹமாக அம்பாளுடைய மங்களமான சிவசித்தமும் பெருகவேண்டும் என்று நினைத்து இரண்டுக்கும் பொதுச் சின்னமாக இருக்கிற தாடங்கத்திலேயே ஸ்ரீசக்ரத்தை அடக்கி யந்த்ரத்திற்கு யந்த்ரம், ஆபரணத்திற்கு ஆபரணம் என்பதாக அதை அவளுக்கு சார்த்தி விட்டார். எப்படி இந்த ஸௌந்தர்ய லஹரி தந்த்ர சாஸ்த்ரமாயும் தத்வத்தைத்

தெரிவித்துக்கொண்டு, காவ்ய ஸ்தோத்ரமாகவும் அழகைத் தெரிவிக்கிறதோ, அப்படியே அந்தத் தாடங்கங்களும் சாஸ்த்ர ரீதியில் ஜனங்களுக்கு ரக்ஷணை கொடுத்துக் கொண்டு அதே ஸமயம் அம்பாளுக்கும் அழகு செய்கிற ஆபரணமாகவும் இருக்கும்படியாகப் பண்ணிவிட்டார்.

ஸ்ரீ சக்ர, சிவசக்ர ரூபமான தாடங்கங்கள் என்று அவற்றைச் சொல்வது. ஸ்ரீ சக்ரத்திலேயே ஒன்பது ஆவரண சக்ரங்கள் இருப்பதில் நாலு சிவ சக்ரங்கள்தான்:ஐந்து அம்பாளுடையது. நம்முடைய ஸ்தோத்திரத்திலேயே முன் ச்லோகமொன்றில் (ச்லோ-11) "சதுர்பி:ஸ்ரீகண்டை:சிவயுவதிபி:பஞ்சபிரபி" என்று இதையும் சொல்லியிருக்கிறார். இங்கே ஸ்வாமியை 'ஸ்ரீகண்டன்'என்றும் அம்பாளை 'சிவயுவதி'என்றும் சொல்லியிருப்பது 'தாடங்க மஹிமா'ச்லோகத்தோடு பொருத்தமாக அன்வயிக்கிறது. 'ஸ்ரீ கண்டன்' என்றும் அம்பாளை 'சிவயுவதி'என்று பேர் இருப்பதை வைத்துத்தான் 'ஸ்ரீகண்டன்'என்பது. தாடங்க மஹிமை ச்லோகத்தில் விஷம் சாப்பிட்டவன் அழிவில்லாமலிருக்கும் அதிசயத்தைத்தான் சொல்கிறார். 'சிவயுவதி'என்று அவளை அவனுடைய பத்னி என்று பேர் கொடுத்துச் சொல்லியிருப்பது அவளுடைய ஸௌமாங்கல்யத்தையும் உக்ரமில்லாத ரௌத்ரமில்லாத சிவமான அநுக்ரஹ சித்தத்தையும் தெரிவிப்பதாக இருக்கிறது.

இவளை 'ருத்ரஸ்ய பேஷஜீ'என்று வேதம் சொல்லிற்று. ஆசார்யாள் நாளில் இவளுடைய சக்தியே ஜனங்களுக்கு ரொளத்ரமாகித் தாங்க முடியாமல் ஆயிற்று. வாஸ்தவத்தில் அது ரௌத்ரமாகவில்லை. கலி கால ஜனங்களின் சக்தி குறைந்து போனதால்தான் அம்பாள் மூர்த்தத்தில் ஆதியில் பிரதிஷ்டையாயிருந்த நிறைவான ஜீவ கலா சக்தியை அவர்களால் தாங்க முடியவில்லை. நமக்கு உடம்புக்கு வந்து பலஹீனமாகிறபோது புஷ்டியும் ஆரோக்யமும் தரும் நல்ல ஆஹார வஸ்துக்களே ஜெரிக்க முடியாமலாகிக் கஞ்சிதான் நல்லது என்று ஆகிறதல்லவா? அப்படி!அம்பாளுடைய அநுக்ரஹ சக்தியையே அப்போது 'டைல்யூட்'பணணினால் தான் தாங்கிக்கொள்ள லோகத்திற்குச் சக்தி இருந்தது. அப்போதுதான் ஆசார்யாள் எக்ஸ்ட்ரா சக்தியை ஸ்ரீ சக்ர தாடகங்களில் அடக்கி அதையும் அவளுக்கே ஆபரணமாகப் போட்டார்.

ச்லோகத்தில் அவர் சொல்கிற விஷ பானக் கதையில் அவருக்கு மூலவரான ஈச்வரனுக்கு அவள் உக்ரமான விஷத்தைக் கண்ட பூஷணமாக்கினாளென்றால், அவரோ அம்பாளுடைய உக்ரத்தையே - அதாவது ஜனங்களின் அபல ஸ்திதியில் உக்ரமாகத் தோன்றிய ஜீவகலையையே அவளுக்கு கர்ண பூஷணமாக்கினார்!

ஒரு விஷயத்திற்குச் சின்னமாக ஏதோ ஸிம்பல் என்று வைக்காமல், மனஸிலே ஆழமாகப் பட்டு - முக்யமாக மஹான்கள், ரிஷிகள் மனஸில் ஆழமாகப் பட்டு - அந்த ஸிம்பலை வைக்கும்போதுஅந்த மூலமான விஷயத்திற்கே ஹானி உண்டாக்குகிறது. சின்னத்திற்கே ஒரு ஜீவசக்தி உண்டாகி விடுவதால் இப்படி நடக்கிறது. ப்ரஹ்மண்யத்திற்குச் சின்னமான உபவீதம் (பூணூல்)போட்டுக் கொண்டால் ப்ரஹ்மண்யமே விருத்தியாகிறது, அது அறுந்து போனால், காணாமல் போனால் ஏதோ தீட்டு வந்துவிட்ட மாதிரி காயத்ரிகூட மங்கிப் போகிறது!மஹான்கள், ரிஷிகள் என்றில்லாமல் பஹு ஜனங்கள் மனஸாழத்தில் மதிப்பாக வைக்கிற சின்னங்களைப் பார்த்தாலுங்கூட இப்படியே இருக்கிறது. தேசியக் கொடி என்பது ஒரு சின்னந்தான். அதற்கு அவமதிப்பு நடக்கிறது என்றால் தன்னால் மனஸ் பதறுகிறது. அது அறுந்து விழுந்தால் நிஜமாகவே தேசத்திற்கு ஆபத்து வருகிறது. இந்தப் பகுத்தறிவு யுகத்திலும் கொடி, கான்ஸ்டிட்யூஷன் புஸ்தகம் முதலியவற்றை அவமதித்தால் கடுமையாக சிக்ஷிக்க வேண்டுமென்று சட்டம் பண்ணியிருக்கிறார்கள். பைபிள் புஸ்தகம் ஒரு சின்னந்தான். ஆனாலும் நல்ல வழியிலே போவதற்கான புஷ்டியை கொடுக்கும் ஜீவ சக்தி அதற்கே இருக்கிறது என்ற அபிப்ராயத்தில்தான் அமெரிக்கா ப்ரெஸிடன்ட்கூட அதைக் கையில் வைத்துக் கொண்டு விச்வாஸ ப்ரமாணம் எடுத்துக் கொள்கிறான். நாஸ்திகர்கள் கறுப்பு அல்லது கறுப்பு-சிவப்பில் உயிரையே வைத்துப் பெறுகிற மனோ புஷ்டி, ஆஸ்திகர் என்று சொல்லிக்கொள்ளும் நாம் நம்முடைய ஸமயச் சின்னங்களில் வைக்கிறோமா, பெறுகிறோமா என்று இருக்கிறது.

சின்னதால் அது ஸிம்பலைஸ் செய்யும் விஷயத்திற்கே ஹானி-விருத்திகள் ஏற்படுவது என்பதற்காகச் சொல்ல

வந்தேன். தாடங்க விஷயம் அப்படித்தான்.

அதாவது, பதிக்கு ஹானி என்றால் தாடங்கம் இறங்க வேண்டும் என்பது மட்டுமில்லை;அந்த தாடங்கம் இறங்காதிருந்தால் பதிக்கு ஹானியே ஏற்பட முடியாது!அம்பாளுக்குக் கல்யாணத்தின்போது ஸுமங்கலி என்று சின்னம் பூட்டுகிறபோது தாடங்கம் போட்டிருப்பார்கள். ஸாக்ஷாத் அம்பாளும் ஸ்வாமியுமே அதை எப்படி (ஸௌமாங்கல்ய சின்னமாக) நினைத்திருப்பார்கள். அப்போது அதற்கு வாஸ்தவமாகவே எப்படிப்பட்ட 'வால்யூ'வும், 'பவ'ரும் ஏற்பட்டிருக்கும்?ஈச்வரனுக்கு அம்பாள் ஜீவ ரக்ஷை என்றால் அவளுக்கு அந்தத் தாடங்கம் ஸௌமாங்கல்ய ரக்ஷையாக ஆகியிருக்கும்! அதற்கே ஒரு ஜீவ சக்தி உண்டாகி அப்படி ரக்ஷித்திருக்கும். அந்த ரக்ஷை அவளைவிட்டு எங்கேயாவது சுழலுமா, இறங்குமா?இறங்கவே இறங்காது. ஸாக்ஷாத் அம்பாளுக்கு ரக்ஷையாக இருக்கும் ஸ்தானத்தை அது கொஞ்சங்கூட விட்டுக் கொடுக்காதுதானே?அது அப்படிப் பிடிவாதமாக "இறங்க மாட்டேன்"என்று உட்காந்திருக்கும்போது ஸ்வாமிக்கு விஷத்தாலோ, ப்ரளயத்தாலோ ஒரு ஹானியும் வரமுடியாது. அதுதான் ஆசார்யாள் சொல்லும் தாடங்க மஹிமா.

ஆனால் 'அல்டிமேட்'டாக எல்லா மஹிமையும் ஸகல சக்தி மூலமான அவளைச் சேர்ந்ததுதான். அவள் கொடுத்தே ஒவ்வொரு வஸ்து ஒவ்வொரு மஹிமையைப் பெறுகிறது. மஹிமை வாய்ந்த எது இருந்தாலும் அது 'மம தேஜோம்ச ஸம்பவம்'('என் சக்தியின் அம்சமாகத் தோன்றியதே')என்று கிருஷ்ண பரமாத்மா சொல்லியிருக்கிறார். அதனால்தான் ஆசார்யாளும் 'தவ ஜநநி தாடங்க மஹிமா', 'அம்மா, உன்னுடைய தாடங்க மஹிமை'என்று குறிப்பாலுணர்த்திச் சொல்லியிருக்கிறார்.

---

## விஷ்ணுவை விட்டதேன்

ப்ரஹ்மா, இந்திரன் முதலான எல்லா தேவலோக வாஸிகளும் அழிகிறார்கள்:'விபத்யந்தே விச்வே விதிசதமகாத்யா: திவிஷத:'என்று இங்கே சொல்லியிருக்கிறது. 'விதி'என்றால் ப்ரஹ்மா. 'சதமகன்'என்றால் நூறு அச்வமேதம் பண்ணினவரான இந்த்ரன். முன்னே 'முகுந்த-ப்ரஹ்ம-இ ந்த்ர'என்று விஷ்ணுவைச் சேர்ந்து கிரீட நீராஜனம் கொடுப்பவர்களைச் சொன்னார். அங்கே ருத்ரனை மட்டும் சொல்லாமல் விட்டார். இங்கே மஹா ஸம்ஹாரத்தில் அழிபவர்களைச் சொல்லும்போது விஷ்ணுவையும் விட்டிருக்கிறார். "மஹா ஸம்ஹாரே அஸ்மின்"என்ற இரண்டு, மூன்று ச்லோகம் முந்திச் சொல்லி அப்போது யாரார் அழிகிறார்கள் என்று லிஸ்ட் கொடுக்கும்போது "ஹரிராப்னோதி விரதிம்"என்பதாக மஹாவிஷ்ணுவுக்கும் அப்போது முடிவு ஏற்படுவதைச் சொன்னாலும், இங்கே அவரைச் சொல்லவில்லை. அம்பாளின் ஸஹோதரரான அவரை மறுபடி மறுபடி அப்படி சொல்ல மனஸ் வரவில்லை போலிருக்கிறது!

அதுவுந்தவிர அம்ருதத்தைச் சாப்பிட்ட தேவர்களைப் பற்றித்தான் இங்கே பேச்சு. 'ஸுதாமப்யாஸ்வாத்ய...... திவிஷத:'என்று வருவதற்கு "அம்ருதத்தையே சாப்பிட்ட தேவர்களும்"என்று அர்த்தம். மஹாவிஷ்ணு அம்ருத மதனத்தின் போது பண்ணாத ஒத்தாசையில்லை. அம்ருதம் கடைந்து சாப்பிட்டால் அமரமாயிருக்கலாமென்று தேவர்களுக்கு யோஜனை சொன்னதே அவர்தான். அப்புறம் அவரும் அவர்களோடு சேர்ந்து கடைந்தார். மத்தாயிருந்த மந்தர மலை கடைக் கயிற்றிலிருந்து நழுவித் 'ததிங்கிணதோம்'போட்டபோது அவர்தான் கூர்மாவதாரம் பண்ணி அதை முதுகுமேலே ஸ்டெடியாகத் தாங்கிக் கொண்டார். கடைசியில் அம்ருதம் வந்தபோதும் அவர்தான் அதை ஸமுத்ரத்திற்குள்ளிருந்து தன்வந்த்ரி ரூபத்தில் ஒரு கலசத்தில் கொண்டு வந்தது. அதற்கப்புறம் அவரே மோஹினி ரூபம் எடுத்துக் கொண்டு அஸுரர்களுக்குக் கிடைக்காமல் தேவர்களுக்கே ஸாமர்த்யமாக பறிமாறினது

ம்!அவர்தான் பரிமாரினார் என்பதாலேயே பந்தியில் அவர் உட்காரவில்லை என்று ஆயிற்று. ஆகவே மற்ற எல்லா தேவர்களுக்குந்தான் அவர் அம்ருதம் போட்டாரே தவிர அவர் சாப்பிடவில்லை. பாகவதத்தில் அப்படி (அவர் அம்ருதம் சாப்பிட்டதாக) இல்லை. அதனால்தான் அவரை இங்கே சேர்க்கவில்லை.

நித்ய ஸுமங்கலியாக அம்பாள் இருப்பதால் பரமசிவனை சேர்க்கவில்லை. ருத்ரன்- மஹேச்வரன்- ஸதாசிவன்- காமேச்வரன் என்ற எல்லாரையும் பரமசிவனுடன் ஸம்பந்தப்படுத்தி நினைப்பதால் அந்த மூர்த்திகளில் எவரையும் இங்கே சேர்க்கவில்லை. 'மங்களம்'என்று அர்த்தம் கொடுக்கும் சிவனையும் தான்'ஸுமங்கலி'யாக இருப்பதாலேயே காத்துக் கொடுப்பவளான தாயாரின் நித்ய கல்யாண ஸௌந்தர்யத்தைக் காத்துக் கொடுப்பதில் ஆசார்யாளுக்கு அத்தனை கவனம்!

---



## அம்பாளுடைய திருட்டு

'சிவா தநு'என்பதாக ஸ்வாமிக்குள்ள இரண்டு சரீரங்களில் ஒன்று முழுசாகவே அம்பிகையுடையதாக இருக்கிறதென்று வேதம் சொன்னது;அர்த்த நாரீச்வர ஸ்வரூபத்தில் அவர்கள் ஏக சரீரத்தில் பப்பாதியாக இருப்பது - ஆகிய இரண்டு அபிப்ராயங்களையும் சேர்த்து ஆசார்யாள் அம்பாளுக்குத் திருட்டுப் பட்டம் கொடுத்து ஒரு ச்லோகம் பண்ணியிருக்கிறார்!சிவனும் சக்தியும் பிரிந்திருக்கிற மாதிரியும் சேர்ந்திருக்கிற மாதிரியும், தனித்தனி சரீரங்களிலும் ஒரே சரீரத்திலும் அவஸரங்கள் இருந்தாலும் பரம ஸத்யம் என்னவென்றால் இரண்டும் அபின்னமாகச் சேர்ந்து ஏகம் ஸத்தாக, ஏக சைதன்யமாக இருக்கிறது என்பதுதான்.

தனித்தனியாக இரண்டு பேர், பப்பாதி சேர்ந்து ஒரே சரீரம், லிங்கரூபமாக அவர் இருக்கும்போது நாகர் ஸ்வரூபமாக அவள் சுற்றிக் கொண்டிருப்பது, அவளை வெளியிலே காட்டாமல் உள்ளுக்குள்ளே வைத்துக் கொண்டு அவர் மாத்திரமாக தக்ஷிணாமூர்த்தி என்று இருப்பது, இதற்கு எதிர்வெட்டாக துர்கா ஸ்வரூபம் - என்றெல்லாம் அவர்கள் இருப்பது ஒவ்வொன்றும் தத்வார்த்தமாக ஏற்பட்டதாகும். தத்வத்தையே கதையாகச் சொல்வதுமுண்டு. கவிகள் அதை வைத்தே விளையாட்டு, பரிஹாஸம் பண்ணுவார்கள். அப்படித்தான் அம்பாளைத் திருடியாக ஆசார்யாள் பாடியிருப்பது.

மஹாபெரிய திருட்டு!'பதியுடைய சரீரத்தையே முழுக்கத் திருடிக் கொண்டு விட்டாள்!திருட்டுச் சொத்தை ஒளித்துத் தானே வைப்பார்கள்?அப்படி இவன் அந்த சரீரத்தைத் தனக்குள்ளேயே ஒளித்துக் கொண்டு விட்டாள்!திருடினது மட்டுமில்லை, முழுங்கியேவிட்டாள்!' என்று கோடி காட்டுகிற அளவுக்குக் கொண்டுபோய் நிறுத்தி ச்லோகம் செய்திருக்கிறார். (ச்லோ-23)

**த்வயா ஹ்ருத்வா வாமம் வபு-ரபரித்ருப்தேந மநஸா**

**சரீரார்தம் சம்போ-ரபரம் அபி சங்கே ஹ்ருதம் அபூத் |**

**யத் ஏதத் த்வத்ரூபம் ஸகலம் அருணாபம் த்ரிநயநம்**

**குசாப்யாம் ஆநம்ரம் குடில-சசி-சூடால-மகுடம் ||**

( (யத்) எக்காரணம் பற்றி (ஏதத் த்வத் ரூபம்) இந்த உனது உருவம் (ஸகலம் அருணாபம்) முழுதும் செவ்வொளியுடனும் (த்ரிநயனம்) முக்கண்ணுடனும் (குசாப்யாம் ஆநம்ரம்) நகில்களால் வளைந்தும் (குடில சசி சூடால மகுடம்) பிறை மதியைக் கொண்ட கேச மகுடத்துடனும் (உள்ளதெனில்) (சம்போ) சிவபெருமானுடைய (வாமம்வபு:) இடப்பக்கச் சரீரம் (த்வயா) உன்னால் (ஹ்ருத்வா) அபஹரிக்கப்பட்டு (அபரித்ருப்பதேன) (அப்படியும்) பூர்ண திருப்தி காணாத (மநஸா) (உன்) மனத்தினால் (அபரம்) மற்ற (சரீரார்தம் அபி) பாதி சரீரமுங்கூட (ஹ்ருதம்) அபஹரிக்கப்பட்டதாக (அபூத்) ஆனதால்தான் (என்று) (சங்கே) ஐயுகிறேன். )

" த்வயா ஹ்ருத்வா"என்று ஆரம்பிக்கிறபோதே அம்பாளுக்குத் திருட்டுப் பட்டம் கட்டிவிடுகிறார்!

'த்வயா'- உன்னால்;"வாமம் வபு:"- ஸ்வாமியுடைய சரீரத்தின் இடது பக்கம்;"ஹ்ருத்வா" - திருடப்பட்டு. "திருடப்பட்ட பின்னும்" என்று ஸந்தர்பத்தைப் பொறுத்து அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். "அம்மா உன்னால் பரமேச்வரனின் இடது பாகம் திருடப் பட்டதற்குப் பின்னும்". பின்னும் என்ன?"மநஸா": பரிபூர்ணா திருப்தி ஏற்படாத மனஸினால்; ஸ்வாமியுடைய வாமபாகத்தைத் திருடியதோடு உன் மனஸ் முழு த்ருப்தி அடையாததால்;"சம்போ: அபரம் சரீரார்தம் அபிஹ்ருதம் அபூத்" - சம்புவின் மறு சரீரப் பாதியும், சரீரத்தின் மறு பாதியும், திருடப்பட்டதாக ஆயிற்று. ஒரு பாதியைத் திருடியதில் த்ருப்தி அடையாத நீ மறு பாதியையும் திருடி விட்டாய்.

வார்த்தை விளையாட்டு ஆசார்யாள் ஸ்தோத்ரங்களில் நிறைய இருக்கும். இங்கே முதல் வரியில் 'அபரித்ருப்தேன', என்கிறபோது ஒரு 'ÜðK'õ¼Aø¶. 'õ¹'+'ÜðK ˆ¼Š«îï'â¡ð¶ 'õ¹óðKˆ¼Š«îï'â¡ø£J¼,Aø¶. Ü´ˆî õKJ™ 'êñ«ð£óðó‹'â¡Á õ¼‹ 'ê‹«ð£:Üðó'ˆF½‹ å¼ Üðó‹ Þ¼,Aø¶. Ýù£™ Ü‰î ÜðK,°‹ Þ‰î Üðó¾,°‹ ªõš«õ«ø Üˆî‹!

பூர்ணம்-பரிபூர்ணம், த்யாகம் - பரித்யாகம் என்கிற மாதிரி ஒன்றுக்கு முழு நிறைவைத் தரும் முன்னடையாக, prefix-ஆக, பரி என்பது வருவதுண்டு. அப்படி த்ருப்தியை முழு த்ருப்தியாக்குவதற்குப் பரித்ருப்தி என்று சொல்வது. 'பரித்ருப்தி'க்கு எதிர்பதம் 'அபரித்ருப்தி'அந்த அர்த்தத்தில்தான், பாதி உடம்பைத் திருடி எப்படி முழு த்ருப்தி உண்டாகும்?பாதி த்ருப்திதான் உண்டாச்சு என்ற உள்ளர்த்தத்தில் முழு த்ருப்தி அடையாத மனஸால் என்பதற்கு அபரித்ருப்தேந மநஸா என்று போட்டார். 'சரீரார்தம் அபரம்'என்கிற இடத்தில் அபரம் என்றால் மற்ற என்று அர்த்தம். 'சரீரத்தின் மற்ற பாதி' என்று இங்கே அர்த்தம்.

ஸ்வாமிக்கு வாமபாகம் மட்டுமே அம்பாள் என்பது பிரஸித்தி. அப்படித்தான் நினைத்து ஆசார்யாள் தர்சனம் பண்ணப் போனார். அர்த்தநாரீச்வரராகப் பார்ப்போமாக்கும் என்று நினைத்துக் கொண்டுப் போனார். ஆனால் அவர் பார்த்தது என்ன?மாதா-பிதாக்களைச் சேர்த்துப் பார்க்கப் போகிறோம், இதிலே பாதியும் அதிலே பாதியுமாக ஒன்று சேர்ந்த ரூபத்திலே, என்று நினைத்துப் போனார். ஆனால் முழுவதுமே மாதா ஸ்வரூபமாகத்தான் இருந்தது! தக்ஷிண பாகம் என்கிற வலது பக்கமுந்தான்!பிதா ஒரே வெளுப்பு (ஸ்படிக ஸங்காசம்), அம்மா சிவப்பு என்று அவர் கேள்விப்பட்டிருக்கிறார். அப்போது பாதி பாதி அந்தக் கலர்களாக இருக்க வேண்டும். இவள் அர்த்தங்கானா என்றால் அப்படித்தான் இருக்கணும். ஆனால் அவர் பார்த்த ரூபத்திலோ அப்படியில்லை. அதைத்தான் "ஸகலம் அருணாபம்", 'முழுக்கவும் சிவப்பாக பிரகாசிப்பது"என்று சொல்லியிருக்கிறார். புருஷ சரீரமாக ஒரு பக்கம் வக்ஷஸ்தலம் ஸமனாயிருக்கிறதா என்றால் அதுவுமில்லை. "குசாப்யாம் ஆநம்ரம்"என்று அதைத்தான் சொல்கிறார்.

அம்மாதான் இருக்கிறாள். அப்பா காணோம்!அப்பாப் பக்கமும் அம்மாவாகவே இருக்கிறது.

அர்த்தநாரீச்வரர் என்பது அநேக திவ்ய ரூபங்களில் ஒன்றுதானே?அப்படியில்லாமல் பரமசிவன்-பார்வதி, நடராஜா-சிவகாம சுந்தரி, நம் விஷயமான

ஸ்ரீவித்யையையே எடுத்துக்கொண்டால் காமேச்வர -காமேச்வரிகளாக ஜோடி தர்சனம் என்றால் அதில் அவளுடைய முக்யத்வம் அமுங்கிப் போய்விடுகிறதென்பதால் அவள் மாத்திரம் தனியாக தரிசனம் தருவதே அதிககம். காஞ்சிபுரத்திலேயே அப்படித்தான் இருக்கிறாள். ஆனால் இதெல்லாம் தமக்குத் தெரியாத மாதிரி ஆசார்யாள் நடிக்கிறார். அப்பா பாதி, அம்மா பாதி என்று சேர்ந்த ஒரு ரூபந்தான் நமக்குத் தெரியும் என்கிற மாதிரி நடிக்கிறார் - அம்பாளை நிந்தா ஸ்துதி பண்ணணும், திருட்டுப் பட்டம் கட்டிக் கவி பாடணும் என்பதற்காக!

தக்ஷிண பாகமும் அம்மாவுடையதாக இருப்பதைப் பார்த்தார்.

பாதி ராஜ்யம் பெற்றவன் அதோடு த்ருப்தி பட்டுவிட மாட்டான். மற்றப் பாதியையும் பிடிக்கத்தான் பார்ப்பான். ஒன்றுமே இல்லாதவன் அவன் பாட்டுக்கு இருந்துவிடுவான். ஆனால் ஒரு ராஜ்யத்தில் ஒருத்தனுக்கு எப்படியோ பாதி கிடைத்துவிட்டால் அவனைச் சும்மாயிருக்க விடாது. பாக்கியையும் பிடிக்கவே பார்ப்பான். அப்படித்தான் பரம உதாரமாக ஸ்வாமி எங்கேயும் இல்லாத தாராள மனஸோடு அர்த்த சரீரத்தையே பத்னியான அம்பாளுக்குத் தோன்றி விட்டது. வாஸ்தவத்தில் தோன்றிற்றா என்ன?வேடிக்கை, கேலி செய்து பாடுவதற்காக அப்படித் தோன்றிய மாதிரி காட்டுகிறார்!

அரைத் திருடன், முக்கால் திருடன், முழுத் திருடன் என்பதுபோல அரைத் திருடி முழுத் திருடியாகி விட்டாள்- ஸாதாரணத் திருட்டில்லை;பதியும் பரமேச்வரனுமாக இருப்பவனின் சரீரத்தையே திருட்டுப் பண்ணி விட்டாள் - என்று நினைத்து விடுகிறார்.

'தஸ்கராணாம் பதி'(திருடர் தலைவன்) என்பது வேதமே ஸ்வாமிக்குக் கொடுத்த பெயர். என்ன தஸ்கரம் பண்ணுகிறான் என்பதை ஸம்மந்தக் குழந்தை முதல் பாட்டிலேயே சொல்லிவிட்டது. "உள்ளங் கவர் கள்வன்"!அந்த உள்ளங் கவர் கள்வனுடைய உடலை அப்படியே கவர்ந்த திருடி அம்பாள் என்று ஆசார்யாள் பாடிவிட்டார்!

ஆனால் திருடியதாக தாம் ஜட்ஜ்மென்டாகவே சொல்லிவிட வேண்டாம்..... "ரொம்ப ரொம்பப் பெரிய இடத்து ஸமாசாரம். அதனால் நாம் ஜட்ஜ்மென்டாகச் சொல்லி மாட்டிக்க வேண்டாம்!எதை வேணாலும் சொல்லலாமென்றிருக்கிற அரசியல் தலைவர்களே பல ஸமயங்களில் பத்திரிக்கைகாரன் கேள்வி கேட்டால் எப்படிச் சொல்கிறார்கள்?'நாம ஏன் மாட்டிக்கணும்?' என்று மழுப்பத்தானே செய்கிறார்கள்?'question-ஐparry பண்ணி விட்டார்'என்றே பேப்பரில்

போடுகிறான். குற்றவாளி என்று நன்றாகத் தெரிந்தவனைக்கூட கோர்ட்டிலே அப்படித் தீர்ப்பு

பண்ணும்வரை 'குற்றவாளி என்கப்பட்ட', 'alleged' என்று தானே போடுகிறான்?அதனால் நாமும் ஜாக்ரதையாகவே சொல்வோம்'என்று ஆசார்யாள் நினைத்து,

"சரீரார்தம் சம்போரபரமபி ஹ்ருதமபூத்" - 'ஸ்வாமியின் மறு பாதி சரீரமும் உன்னால் திருடப்பட்டது' என்று தீர்மானமாக முடிவு பண்ணிச் சொல்லாமல், சரீரார்தம் சம்போரபரமபி சங்கே ஹ்ருதமபூத்'என்று ஒரு 'சங்கே'யை நடுப்புற சேர்த்திருக்கிறார். "சங்கே"என்றால் "ஸந்தேஹிக்கிறேன்"என்று அர்த்தம். "அந்தப் பாதியும் உன்னால் தஸ்கரம் பண்ணப்பட்டதோ என்று எனக்கு ஒரு சந்தேஹம்"என்று ஸாமர்த்தியமாகப் போட்டிருக்கிறார். இப்படி ஒரு ஸந்தேஹத்தைக் கிளப்பினாலே போதும், அது ஜட்ஜ்மென்டையே விடக்கூட நன்றாகக் கேட்பவர்கள் மனஸில் பதிந்துவிடும் என்பதால் அப்படிப் போட்டிருக்கிறார்!குற்றவாளி என்றே கன்ஃபர்ம் பண்ணி ஒருத்தனைக் காட்டினால் அதோடு போய்விடும்;அது மனஸிலே நின்று வேலை செய்யாது. ஆனால் 'ஸந்தேஹாஸ்பதமான நபர்'என்ற அளவோடு நிறுத்திக் கொண்டால், அப்போதுதான் ஒவ்வொருத்தரும் அதைப் பற்றியே நினைத்து ஆஸாமி அப்படித்தான் இருக்கணும் என்று ஸ்வய முடிவாகவே கன்ஃபர்ம் பண்ணிக் கொள்வார்கள். தானே எடுத்த முடிவு என்பதால் இதுவே மனஸில் நன்றாக நிற்கும்!அம்பாளைத் திருடி என்று ஜட்ஜ் பண்ணி அபசாரம், கிபசாரம் தமக்கு வராமல் அதே ஸமயம் கேட்கிறவர்கள் அப்படித்தான் (அம்பாள் திருடிதான்) என்று

தீர்மானமாக அபிப்ராயப்படத் தூண்டியும் கொடுத்து ஆசார்யாள் ஸாமர்த்தியம் செய்திருக்கிறார். கவிதையென்று எடுத்தாலும் fact-ஆக அப்படியே சொல்லாமல் பூடகமாக ஏதாவது வைக்க வேண்டும். அதனாலும் 'சங்கே'போட்டிருப்பார்.

'சங்கே'-'ஸந்தேஹப்படுகிறேன்'- என்றால் அதற்குக் காரணம் சொல்ல வேண்டுமல்லவா?போதுமான முகாந்தரமில்லாமல் ஸந்தேஹப்பட்டு விடலாமா?அதுவும் ஸாக்ஷாத்

பராசக்தியைப் பற்றி திருடி என்று?

நிறையக் காரணமும் சொல்லியிருக்கிறார். முழு ஸ்வரூபமும் சிவப்பு, வக்ஷத்தின் அமைப்பு இரண்டு பக்கமும் ஸ்திரீயுடையதாக இருக்கிறது என்று காரணம் காட்டியதைப் பார்த்தோம். ஆனால் அது மாத்திரம் எப்படிப் போதும்?சிவனைத் திருடினாள் என்றால் அவன் ஸமாசாரமாக ஏதாவது இவளிடத்தில் இருந்தால்தானே அப்படி ஸந்தேஹப்படுவது நியாயம்?திருட்டுப்போன பண்டத்தில் கொஞ்சமாவது ஒருத்தனிடமிருந்தால்தானே அவனை சார்ஜ்-ஷீட் பண்ணலாம்?அம்பாளே முழு ஸ்வரூபமாயிருக்கிறாளென்றால், ஒருவேளை அவளுடையதான இடது பக்கமே எப்படியோ வலது பக்கமும் வ்ருத்தியாகி முழு ஸ்திரீ ரூபமாய் ஆகியுமிருக்கலாம். அப்படியே வலது பக்க ஸ்வாமியின் சரீரமும் இன்னொரு பக்கம் வளர்ந்து முழு புருஷ ஸமாசாரமாயிருக்கலாம். ஆசார்யாள் தரிசன பண்ணப் போன ஸமயம் அந்த ஸ்வாமி எங்கேயாவது வெளியிலே போயிருக்கலாம். இவள் மாத்திரம் இருந்திருக்கலாம். ஆகையினாலே ஸ்வாமி

ஸமாசாரமான திருட்டு ஸொத்து ஏதாவது இவளிடம் இருந்தாலொழிய இவளைக் குற்றம் சொல்லக் கூடாது தானே?

அந்த ந்யாயம் ஆசார்யாளுக்குத் தெரியாததில்லை. சிவ சரீரத்தைச் சேர்ந்த இரண்டு அம்சங்களை அம்பாளிடம் ப்ரத்யக்ஷமாகப் பார்த்துவிட்டுத்தான் அவர் ஸந்தேஹப்பட்டிருக்கிறார். என்ன இரண்டு?ஒன்று "த்ரிநயநம்";இரண்டு "குடில சசி சூடால மகுடம்". "த்ரிநயநம்"என்றால் தெரிந்திருக்கும்; 'முக்கண்'. 'குடில சசி சூடால மகுடம்' என்றால் 'சந்திரப் பிறையுடன் கூடிய மகுடம்'. முக்கண்ணன், சந்த்ரமௌளீச்வரன் ஸ்வாமி தானே?அந்த இரண்டும் அவனுக்குரியவைதானே?'த்ரயம்பகன்'என்று வேதமே அவனுக்குப் பேர் சொல்லியிருப்பதற்கு 'முக்கண்ணன்'என்றுதான் அர்த்தம். ருத்ராபிஷேகத்தில் சொல்லும் த்யான ச்லோகத்தில் "ஜ்யோதி ஸ்பாடிக லிங்க மௌளி விலஸத் பூர்ணேந்து"என்று வருவது அவன் சிரஸில்

சந்திரன் இருப்பதைத் தெரிவிக்கிறது. இங்கே சொல்வது ஸ்படிக லிங்காகாரமான ஸ்வரூபம். அப்படியிருக்கும்போது லிங்கத்தின் உச்சியில் பூர்ண சந்திரனே இருக்கிறான்;'பூர்ணே ந்து'என்று அதையே ச்லோகம் சொல்கிறது. அதே ஸ்வாமிக்கு முகம், கண், காது என்று அவயவங்களோடு உள்ள ரூபத்திலேயோ உச்சியில் பூர்ண சந்திரனாக இல்லாமல் பிறையாக இருக்கும்.

ஆக, முக்கண்ணும் சந்த்ர கலையும் ஸ்வாமியைச் சேர்ந்தவை. ஆனால் ஆசார்யாள் தர்சனம் பண்ணியபோது அம்பாளிடமே இந்த இரண்டையும் அவர் பார்த்து விட்டார்!இது ஸர்வ நிச்சயமாக ஸ்வாமியை அபேஸ் அடித்ததுதானே?இதை வைத்தே 'சார்ஜ் ஷீட்'கூடக் கொடுக்கலாமாயினும் 'ஸந்தேஹம்'என்று நாம் ஜட்ஜ்மெண்ட் கொடுக்கிற அளவுக்கு உறுதி பண்ணிவிடுகிறார்!

இவர் போனபோது அவள் ஸௌந்தர்யலஹரிக்கு தேவதையான காமேச்வரியாகவே இருந்தாள். காமேச்வரிக்கு லலாட நேத்ரம் (நெற்றிக் கண்) உண்டு;அதாவது அவளுக்கு மொத்தம் மூன்று நேத்ரங்கள். லலிதா ஸஹஸ்ரநாம ஆரம்பத்தில் சொல்லும் "ஸிந்தூராருண விக்ரஹாம்"ச்லோகத்தில் வரும் ஸிந்தூர அருண விக்ரஹந்தான் இங்கே சொல்லும் "ஸகலம் அருணாபம்" என்று முழுச் சிவப்பு ரூபம். "ஸிந்தூராருண விக்ரஹாம் த்ரிநயநம்"என்று அங்கே வருவதையே இங்கே "ஸகல மருணாபம் த்ரிநயநம்"என்று கொடுத்திருக்கிறார். அதாவது காமேச்வரிக்கு உரியதாகவே அங்கே சொன்ன சிவப்பு ரூபம், முக்கண் இரண்டையும் இங்கே ஆசார்யாளும் சொன்னாலும் முன்னது மட்டும் அவளுக்கு ஸொந்தமாகச் சேர்ந்தது என்றும் பின்னது பதியிடமிருந்து தஸ்கரம் பண்ணினது என்றும் வைத்து வேடிக்கை செய்திருக்கிறார்!அதற்கப்புறம் அந்த த்யான ச்லோகத்திலே "தாராநயக-சேகராம் ஸ்மிதமுகீம் ஆபீந - வக்ஷோருஹாம்"என்று வருகிறது. "தாராநாயக சேகரா"என்றால் சந்த்ரசேகரி என்றே அர்த்தம். ஸாக்ஷாத் அம்பாளுக்கே முக்கண்ணைப் போலவே இதுவும் உரியதானதால்தான் த்யான ச்லோகத்தில் இப்படி லக்ஷணம்

கொடுத்திருக்கிறது. அந்தத் "தாராநாயக சேகரா" என்றாஸ் சந்திரசேகரி என்றே அர்த்தம். ஸாக்ஷாத் அம்பாளுக்கே முக்கண்ணைப்

போலவே இதுவும் உரியதானதால்தான் த்யான சேலோகத்தில் இப்படி லக்ஷணம் கொடுத்திருக்கிறது. அந்தத் 'தாராநாயக சேகரா' மையே தம்முடைய ச்லோக முடிவில் ஆசார்யாள் "குடில-சசி-சூடால மகுடம்"என்று போட்டிருந்தாலும் இங்கே அதையும் திருடிச் சேர்த்துக் கொண்டதாகப் பட்டம் கொடுத்துவிடுகிறார் - அல்லது, ஜாக்ரதையாக அப்படி "ஸந்தேஹிக்கிறார்"!"ஆபீந வக்ஷோருஹாம்"என்று அங்கே ஸ்திரீ சரீரமாகச் சொன்னதையே இங்கே "குசாப்யாம் ஆநம்ரம்"என்று சொல்லி இது அம்பாளுக்கே உரித்தானதுதான் என்று வைத்துவிடுகிறார்.

ஆக அம்பாளைச் சேர்ந்ததாகவே அங்கே சிவப்பு ரூபம், முக்கண், சிரஸில் சந்த்ரகலை, ஸ்த்ரீ சரீரம் என்று நாலு சொல்லியிருப்பதில் நாலையுமே ஆசார்யாளும் இங்கே சொன்னாலும் இரண்டுதான் அவளைச் சேர்ந்தது, இரண்டு பதியிடமிருந்து அபஹரித்தது என்று திருட்டுச் சொத்தாக ஸாக்ஷியம் காட்டி நிந்தா ஸ்துதி செய்திருக்கிறார். அவள் பாதிக்கு மேலேயும் பதி சரீரத்தை அபஹரித்து விட்டாள் என்று குற்றப் பத்திரிக்கை எடுக்கிற ஆசார்யாள்தான் அவளுக்கு உடைமையான நாலில் பாதியை அவளிடமிருந்து அபஹரித்திருக்கிறார்!

"தேஜோவதீ, த்ரிநயநா"என்று ஸஹஸ்ரநாமத்திற்குள்ளேயே அம்பாளுக்குப் பேர் சொல்லியிருக்கிறது. "சாருசந் த்ரகலாதார"என்பதாகவும் அவளை சந்த்ரசேகரியாக வர்ணித்து ஒரு நாமா வருகிறது. ச்யாமளா தண்டகத்தில் ஸ்ரீ மடம் ஸமஸ்தானம் ஸ்ரீவித்யாதி தேவதையாக அம்பாளைச் சொல்லும் ச்லோகத்திலும் "சதுர்புஜே சந்த்ரகலாவத ம்ஸே"என்று வருகிறது;சந்த்ரகலையை சிரோபூஷணமாகக் கொண்டவள் என்று அர்த்தம்.

அதாவது அம்பாளுக்கே சந்த்ரகலை, த்ரிநேத்ரம் உண்டுதான். சாஸ்த்ரம் அப்படித்தான் வர்ணித்திருக்கிறது. பழைய காலச் சித்ரங்களில்கூட அப்படிப் போட்டுப் பார்த்திருக்கிறேன்.

ஆனாலும் ஸர்வஜ்ஞரான ஆசார்யாள், "ஸர்வஜ்ஞத்வம்"கிடக்கட்டம். அம்மாவை ஸ்தோத்ரம் செய்கிறோம்;ஸ்வாதீனம் எடுத்துக் கொள்ளாமல், அந்த ஸ்வாதீனத்தில் நிந்தா ஸ்துதி செய்யாமல் என்ன அம்மா-ஸ்தோத்ரம்?என்றுதான் இந்த விஷயம் தமக்குத் தெரியாதமாதிரி அந்த இரண்டும் அப்பாவையே சேர்ந்தது. அவரிடமிருந்தே இவள் திருடியிருக்க வேண்டும் என்று தாம் ஸந்தேஹப்படுவதாகப் பாடிவிட்டார். லோகத்துப் பொது ஜனங்கள் முக்கண், சந்த்ரகலை என்றால் சிவனுடையது என்றுதானே நினைத்துக கொண்டிருக்கிறார்கள்?ஸர்வஜ்ஞரான தாமும் அந்தக் கோஷ்டியோடு சேர்ந்ததுபோல இப்படிப் பாடியிருக்கிறார்.

ஸ்வாமியின் சரீரத்தைத் திருடியவள் திருட்டு ஸொத்தை ஒளித்து வைக்கிற ரீதியில் அதை ஒளிக்கப் பார்த்திருக்கிறாள். எங்கே ஒளிப்பது?தனக்குள்ளேதான், தனக்குள்ளேயேதான் ஒளித்து வைத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்திருக்கிறாள். சிவத்துக்குள்ளே சக்தி என்கிற மாதிரி சக்திக்குள்ளேயும் சிவந்தான்!அப்படி ஆக்க வேண்டுமென்பதற்காகத்தான் ஒரு பாதியை அவள்

முழுங்கியே விட்டதுதான் அர்த்த நாரீச்வர அவஸரம். கோபாலகிருஷ்ண பாரதிகூட,

பார்வதியென்றொரு சீமாட்டி - அதில்

பாதியைத் தின்றதுண்டு

என்றே பாடிவிட்டிருக்கிறார்!"யானாகிய என்னை விழுங்கி"என்று அருணகிரிநாதர் வாக்கும் இருக்கிறது. யாரைவிட ப்ரியம் செய்கிறவர்கள் இல்லையோ, அப்படிப்பட்ட அம்மாமார்களே குழந்தையை "கடிச்சுத் தின்னுடணும்

போலிருக்கு"என்று கொஞ்சுகிறார்கள். அன்பு வேகத்தில் திருட்டு மட்டுமில்லாமல் மர்டர் கேஸ் வரை போய்விடுகிறது. ஆசார்யாள் திருட்டுக் கேஸாக சொன்னதை, அதைக்கூட doubtful- ஆக "சங்கே" போட்டே சொன்னதை நான் மர்டர்

கேஸாகவே கொண்டுவந்து விட்டேன் அவரே சிவானந்த லஹரியில் சொல்லியிருக்கும் ஒரு மர்டர் கேஸின் ஞாபகத்தில், அதன் அடிப்படையில் தான் இப்படிப் பண்ணுகிறேன்!அதென்ன மர்டர் என்றால் ஒரு மர்டரில்லை;அநேக மர்டர்கள். அத்தனையும் ஸம்ஹார மூர்த்தியான சிவன் பண்ணின மர்டர்கள்;ஆனையை வதம் பண்ணி மேலே போர்த்திக் கொண்டு கஜ ஸம்ஹார மூர்த்தியானது ஒன்று - 'கரீந்திரபங்க'என்று அதைச் சொல்லியிருக்கிறார். புலித்தோலை உரித்து இடுப்பிலே கட்டிக் கொண்டது இன்னொன்று - 'கந சார்தூல விகண்டந'என்கிறார். இன்னும், கிராத ரூபத்தில் வந்தபோது காட்டுப் பன்றியை!ஸம்ஹார காலத்தில் அத்தனை ஜந்துக்களையும் வதைக்கிறார்!"அஸ்த ஜந்து"என்று அதை ஜெனரலாகச் சொல்கிறார். உத்தரீயமாக யானைத்தோலும், இடுப்பு வஸ்திரமாக புலித்தோலும், இதெல்லாம் போதாதென்று கையிலே ஒரு மானையும் வைத்துக் கொண்டிருக்கிற ஸ்வாமியைப் பார்த்தவுடன் ஆசார்யாளுக்கு ஒரு சிங்கம் தான் க்ளோஸ் பண்ணின ஆனை, புலித்தோல்களைப் போட்டுக்கொண்டு அப்புறம் தின்னலாமென்று ஒரு மானைப்பிடித்துக் கொண்டு போகிற மாதிரித் தோன்றிவிட்டது. சிங்கம் குகையில் வஸிக்கிறது போலவே ஸ்வாமியும் ஹ்ருதய குகையிலே வஸிக்கிறார். இரண்டு பேருக்கும் 'பஞ்சமுக'ப் பேரும் உண்டு. பரந்து விரிந்த முகத்தைக் கொண்டதால் சிங்கத்திற்குப் 'பஞ்சமுகம்'என்று பெயர். ஐந்து முகம் படைத்தவரானதால் ஸ்வாமிக்கும் அப்படிப் பெயர். சிங்கத்துக்கும் ஸ்வாமிக்கும் சிலேடை வைத்து இப்படி ச்லோகம் பண்ணியிருக்கிறார். அங்கே ஆனை, புலிகளைத் தின்று தீர்ந்துவிட்டு அவற்றுக்கு வெளி அடையாளமாக அந்தச் சர்மங்களை மாத்திரம் தன்னிடம் ஸ்வாமிச் சிங்கம் வைத்துக் கொண்டிருக்கிறதாக வர்ணித்திருக்கிறாரோல்லியோ?அதுதான் இங்கே எனக்கு ஞாபகம் வந்து, அதே மாதிரி அந்த ஸ்வாமியையே அம்பாள் முழுங்கி விட்டு அதற்கு அடையாளமாக லாட நேத்ரத்தையும் சந்த்ரகலையையும் வெளியிலே காட்டுகிறாளென்று சொல்லத் தோன்றிற்று. சர்மத்தை வர்க்கு வர்க்கென்று தின்ன வேண்டாமென்று சிங்கம் விட்டிருக்கு

ம்!இங்கே அம்பாள்-ஸ்வாமி விஷயத்தில் நாம் எப்படி வைத்துக் கொள்ளலாமென்றால், அந்த சரீரம் முழுக்க இவள் சரீரத்திற்குள் போன பிற்பாடு, யாருக்குமில்லாமல் அதிகப்படியாக அவருக்குள்ள

லலாட நேத்ரம் மட்டும் பிதுங்கிக் கொண்டு வெளியிலே வந்துவிட்டது;சரீராவயங்களோடு சேராமல் சிரஸில் தனியாயிருந்த சந்த்ர கலையும் அப்படியே தனிப்பட வெளிப்பட்டுவிட்டது என்று வைத்துக் கொள்ளலாம்!

வாஸ்தவத்தில் மார்டருமில்லை, திருட்டுமில்லை!அந்த மஹா ம்ருத்யஞ்ஜயனை இவளுடைய தாடங்க மஹிமை மஹா ப்ரளயத்திலும் அழியாதவனாக ஆக்குகிறது என்கிறபோது அந்த நித்ய ஜீவியை எப்படி மார்டர் பண்ணுவது?திருட்டும் வாஸ்தவத்தில் அவர்தான் இவள் விஷயத்தில் பண்ணியிருக்கிறாரென்று கவிகள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அதென்ன ஸமாசாரமென்றால், வாஸ்தவத்தில் அவளுடைய ப்ரபாவத்தினால் நடந்த ஒன்றரை விஷயங்களில் அவளுக்கு உரியதான கீர்த்தியை அவரே தமக்கென்று திருடிக்கொண்டுவிட்டார்!அதென்ன ஒன்றரை விஷயமென்றால், ஏற்கெனவே சொன்ன காம தஹன, கால ஸம்ஹாரங்களைப் பற்றிய விஷயந்தான். அர்த்தநாரீச்வர ரூபத்திலே இரண்டு பேருக்கும் பொதுவாக உள்ள லலாட நேத்ரமே காமதஹனம் பண்ணியதால் அதற்கான கீர்த்தியில் பாதி அம்பாளுக்குச் சேர வேண்டும். ஆனால் காமதஹன மூர்த்தி என்று அவரே முழு கீர்த்தியையும் தஸ்கரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்!கால ஸம்ஹாரமோ முழுக்கவே அவளுடையதான இடது பாதத்தால் நடந்ததால் அதற்கான கீர்த்தி பூராவுமே அவளுக்குரியதுதான். ஆனால் இதையும் முழுக்க அவரே தஸ்கரம் பண்ணிக் கொண்டு காலஸம்ஹாரமூர்த்தி என்று டைட்டில் போட்டுக்கொண்டிருக்கிறார்!அட்ட வீரட்டானம் - 'அஷ்ட வீரஸ்தானம்'என்று நாம் செய்த எட்டு வீர பராக்ரம லீலைக்காக அவர் எட்டு க்ஷேத்ரங்களில் இருப்பதில் திருக்குறுக்கையில் காமதஹன மூர்த்தியாகவும் திருக்கடவூரில் காலஸம்ஹார மூர்த்தியாகவும் அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கிறார். அம்பாள் தான்

திருட்டுக் கொடுத்தவள்!அவள் விஷயத்திலேயே அவளுடைய பதி தஸ்கராணாம் பதியாயிரு
ந்திருக்கிறார்!ஆனாலும் அவருக்கே தன்னுடைய சரீரம், ஆத்மா எல்லாவற்றையும் அர்ப்பணம் பண்ணிய மஹா பதிவ்ரதையாக இருப்பவள் அவள்.

அவளைத்தான் கவிக்கண்ணில் பார்த்து காவ்யரஸம், இலக்கியச் சுவை என்கிறார்களே அது பெருகும்படியாகப் பதியின் சரீரத்தைப் பூரணமாகத் திருடியதாக ஆசார்யாள் பாடிவிட்டார்.

ஸ்வாமியையும் ப்ரேமையினாலே தனக்குள்ளேயே அடக்கிக் கொண்டு விட்டாள் என்பதுதான் தாத்பர்யம் இவளுக்குள்ளேயே அவரும் அடங்கிவிட்டதால்தான் காமாக்ஷி மாதிரி அவளை மட்டும் முழு ரூபத்தில் பார்க்கிறபோதும் நமக்குக் குறையே இருக்கவில்லை. மாதா-பிதா என்று வழிபடுவதில் ஒரு ஆனந்தமென்றால் இப்படி மாதாவிலேயே பிதாவும் என்று பார்க்கும்போது இதுவும் ஒரு
ஆனந்தமாகத்தானிருக்கிறது!'தாயுமானவர்'என்று அவரை வைத்து ஸந்தோஷப்படுவதைப் போலவே
'தந்தையுமானவன்'என்று அவளை வைத்து ஸந்தோஷிப்பதாக இருக்கிறது.

ப்ரம்மம், ப்ரம்ம சக்தி என்ற இரண்டு, இரண்டு ரூபத்தில்தான் இருக்க வேண்டுமென்றில்லாமல் அம்பாளே சிவசக்தி ஐக்ய ரூபிணியாக உள்ள அத்வைதம்தான் முடிவாக ச்லோகத்தின் உட்பொருள்.

(சிறிது நேரம் மவுனமாகக் கண் மூடி இருந்து, மிகவும் உள்ளடங்கிய குரலில் கூறுகிறார்கள்) ஸ்வரூபம் ஒரே சிவப்பு ஜ்யோதிஸாக இருக்கிறது. ஸரி, அம்பாள், அம்பாள் மாத்திரம் என்று நினைத்து அந்தச் சிவப்பிலே அவயங்களாகப் பிரித்துப் பார்த்தால் நெற்றிக் கண் தெரிகிறது. சந்திரகலை
தெரிகிறது!த்ரயம்பகனை, நமக்கு (ஸ்ரீ சங்கர மடங்களுக்கு) ஸ்வாமியான சந்த்ரமௌளீச்வரனை அந்த இரண்டும் ஞாபகப் படுத்துகின்றன. அவர் தெரிகிறாரா என்று பார்த்தால் இல்லை. இந்த இரண்டைத் தவிர அவர் சரீரத்தில் எதுவும் தெரியவில்லை. இப்படிப்பட்ட அனுபவ நிலையிலே

பார்த்துத்தான் ஆசார்யாள், (பலத்த குரலில்) "ஒஹோ!பாதி சரீரமே உன்னுடையது என்று பூர்வத்தில் ஆக்கிக் கொண்டவள், போகப் போக அதுவும் போதவில்லை என்று மீதியையும் அபஹரித்துவிட்டாயா?"என்று கேட்டிருக்கிறார்.

சிவாம்ருதத்தைப் பங்கு போட முடியாது!பூராவாகவே புஜித்துவிட வேண்டும். அதுதான் அம்பாள் பண்ணியது.

---



## ஸர்வ ஸமர்ப்பணம்

சரீரம், ஆத்மா எல்லாவற்றையும் அம்பாள் ஈச்வரார்ப்பணம் பண்ணுவது பற்றி நடுவாந்தரத்தில் பேச்சு வந்தது. இந்த விஷயத்தையே அம்பாளிடம் நம்மை அர்ப்பித்துக் கொள்வதாக

ஜபோ ஜல்ப:சில்பம் ஸகலம் அபி முத்ரா விரசநா

கதி ப்ராதக்ஷிண்ய - க்ரமணம் அசனாத்- யாஹுதி விதி:

ப்ரணாம:ஸம்வேச:ஸுகம் அகிலம் ஆத்மார்பண- த்ருசா

ஸ்பர்யா-பர்யாய: தவ பவது யந்-மே விலஸிதம்||

என்ற (27வது) ச்லோகத்தில் விளக்கமாகச் சொல்கிறார்.

நாம் பண்ணுகிற ஸகல காரியமும் அம்பாளுக்கு அர்ப்பணமாகி விடவேண்டும் என்பது சுருக்கமாக இதன் தாத்பர்யம். பூஜை, ஜபம், அதிலே கைவிரல்களால் முத்ரை காட்டுவது, பிரதக்ஷிண நமஸ்காரம், தேவி மந்த்ரங்களால் சண்டி ஹோமம் போன்றவற்றில் ஆஹுதிகளைக் கொடுப்பது என்று அம்பாள் பரமாக அநேக காரியங்களை உபாஸகர்கள் பண்ணுகிறார்களல்லவா?இவை எல்லாம்

பண்ணவேண்டியதுதான். ஆனாலும் இந்த பூஜை, ஜபம், ஹோமம் முதலியவை அததைக் கொஞ்ச காலம் பண்ணுவதோடு முடிந்து போவதாகவும், அப்புறம் தன் பாட்டுக்கு லௌகீக பிரவிருத்திகளிலே ஈடுபட்டு இந்திரிய ஸுகங்களைத் தேடிக் கொள்வதாகவும் இருக்கிற நிலைமை மாற வேண்டும். கொஞ்சம் வேளை அம்பாள், மிச்சம் வேளை ஸம்ஸாரம் என்றில்லாமல் ஸதா காலமும் அவள் பூஜையாக, ஜபமாக ஹோமமாக இருக்கும்படிப் பண்ணிக் கொள்ள வேண்டும். உபாஸகர்கள் என்பவர் மட்டுமில்லாமல் எல்லாருமே இப்படிச் செய்யவேண்டும்.

"அதெப்படி எப்போதும் இவற்றைப் பண்ண முடியும்?குளிக்க வேண்டாமா?சாப்பிட வேண்டாமா?தூங்க வேண்டாமா?லோக வாழ்விலே நாலு பேரிடம் பிரியமாகப் பேச வேண்டாமா?நல்லது சொல்ல வேண்டாமா?நாலு இடத்துக்கு ப் போக வேண்டாமா?கையை காலை அசைத்து ஏதோ பரோபகாரமாக காரியம் பண்ண வேண்டாமா?மஹா ஞானிகளாக இருக்கப் பட்டவர்களிடங்கூட இவையெல்லாம் இருக்கத்தானே செய்கிறது."

ஆமாம். இதெல்லாம் இருக்கட்டும். அவள் லீலையில் இருந்துதான் ஆகவேண்டும். ஆனால் அந்த ஞானிகள் எப்படி இதையெல்லாம் லீலை என்று தெரிந்துகொண்டு பண்ணியும் பண்ணாமலிருக்கிறார்களோ, அப்படி நீயும் ஆகப் பாரு. இப்போதே அப்படி இருப்பதென்றால் முடியாது. கொஞ்சம் கொஞ்சமாக யத்தனம் செய்து, அப்யாஸத்தால் அந்த நிலைக்கு வா. இப்போதைக்கு குளிப்பது, சாப்பிடுவது, பேசுவது, தூங்குவது, நடப்பது மற்ற வேலை செய்வது எல்லாமே

அவளுடைய சக்தியால் நடக்கிறது - நாமாக ஒன்றும் பண்ண முடியாது என்ற நினைப்பை அப்பப்போ உண்டாக்கிக் கொள்ளு. இந்த நினைப்பை விருத்தி பண்ணிக் கொண்டே போ. அம்பாள் கொடுத்த சக்தியால் சாப்பிடுகிறோம் என்று நினைக்கும் போது கெட்ட பதார்த்தங்களை உள்ளே தள்ளத் தோன்றாது. அம்பாள்தான் நடக்க சக்தி தருகிறாள் என்ற ஞாபகம் இருக்கும்போது ரேஸுக்கும், ஸினிமாவுக்கும் போகத் தோன்றாது. அவள் கொடுப்பது வாக்கு

என்னும்போது விருதாவாக அரட்டை பேசவோ, வையவோ கெட்ட விஷயங்களை 'டிஸ்கஸ்'பண்ணவோ மாட்டோம். கர சரணாதிகள் அவளால்தான் வேலை செய்கின்றன என்ற பிரக்ஞை இருக்கும்போது தப்புக் கார்யம் பண்ணவே மாட்டோம். இப்படி ஆனால், போக போகப் அவள்தான் எல்லாம் செய்விக்கிறாள் என்பதில், சரீரக் கார்யம் மாத்திரமில்லாமல் நாம் மனஸினால் எண்ணுவது, ப்ளான் போடுவது முதலான செயல்கள் எல்லாங்கூட நாம் பண்ணுகிறோம், பண்ணவேண்டும் என்றில்லாமல் அவள் பண்ணுவிக்கிறபடி ஆகட்டும் என்று விட்டுவிடத் தோன்றும். முடிவாகப் பார்த்தால், மனஸினால்தான் மாயா விகாரங்கள், ஸம்ஸார பாதை முழுதும் உண்டாயிருக்கின்றன. அதை ஞானமார்க்கத்தில் சொன்னபடி மனோ நாசம் என்று பண்ணுவது முடியாமலிருக்கிறது. அதனால் இப்படி பக்தியிலே அம்மாவிடம் அதை ஒப்புக் கொடுத்து விட்டாலே போதும், அதன் பாதிப்பு போய் விடுகிறது. அதற்கப்புறம் நம்மைப் பேசிக்கொண்டும், கார்யம் பண்ணிக் கொண்டும், ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டு இருக்கும்படியாக அவள் வைத்தாலும் சரி, அல்லது இதெல்லாம் இல்லாமல் வைத்தாலும் சரி, இரண்டிலும் நாம் உள்ளுக்குள்ளே ஒரே மாதிரிப் பிரசாந்தமாகவே இருப்போம். அந்த நிலைக்குப் பிரார்த்திக்கும் படியாகத்தான் இந்த ச்லோகத்தை ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்.

ஜபோ ஜல்ப:"ஜல்ப:" என்றால் பேச்சு. உளறிக் கொட்டுவது உள்பட எல்லாம் 'ஜல்பம்'தான். இந்த ஜல்பமே ஜபமாக இருக்கிற நிலை அது. "நான் பேசுவதெல்லாம் உன் ஜபமாயிருக்கட்டும்!"

"பாலா, பஞ்சதசீ, ஷோடசீ என்று உன் மந்திரங்களாகச் சிலதை எடுத்துக் கொண்டு ஜபக்கிற ஸ்திதி போய் - முதலில் இதெல்லாம் அவசியம்தான்;தப்புத் தண்டாப் பேச்சிலிருந்து நம்மைத் திருப்ப ஜபம் முதலியவை வேண்டுந்தான்; ஆனாலும் கடைசியில் தனியாக ஜபிப்பது என்ற ஒன்று போய் - நான் பேசுகிறதெல்லாம் உன் ஜபம் என்ற ப்ரக்ஞை ஏற்படட்டும்"

ஸகலம் சில்பம் அபி முத்ரா விரசநா- "நான் கையில் செய்கிற

ஸகல காரியமும் உன் பூஜையில் பிடிக்கிற ஹஸ்த முத்திரைகளாகட்டும்". "முத்ரா விரசநா"- 'முத்ரை பிடிப்பது'. 'அது என்னுடைய எல்லா சில்பமுமேயாகட்டும்.'சில்பம் என்றால் பொதுவாக எல்லாத் தொழிலுந்தான். தமிழில் அது சிற்பத்தொழில் என்கிற Sculpture மட்டுமாகி விட்டது. இதில்தானே பிரம்மா ஸ்ருஷ்டிக்கிற மாதிரி மநுஷ்யனும் ரூபங்களைத் தானாகப் படைக்கிறான்?' அதனால் போலிருக்கிறது.

"தனியாக உள் கோயில் என்று ஒரு இடத்தைத் தேடி ப்ரதக்ஷிணம் பண்ணுவது என்றில்லாமல் 'கதி:ப்ராதக்ஷிண்ய க்ரமணம்':நான் நடக்கிற நடையெல்லாம் க்ரமமாக உன்னை ப்ரதக்ஷிணம் செய்வதாக - உன்னை வலம் வருவதாக - இருக்கட்டும். நான் எங்கே ஸஞ்சாரம் பண்ணினாலும் உன்னைத்தான் சுற்றி வருகிறேன் என்ற எண்ணம் இருக்கட்டும். சாப்பிடுகிறேன் அல்லவா?அந்தச் சாப்பாடு'..........'அசனாதி'என்றால் 'அசனம் முதலியன' என்று அர்த்தம்; உணவு. 'அசனம்'என்றால் உணவு. 'அசனம்' என்று மட்டும் சொல்லாமல் 'அசனாதி' அதாவது உணவு முதலியவை என்கிறார். இதனால் வாயால் சாப்பிடுவது போல, கண்ணால் சாப்பிடுவதான பேச்சு பாட்டு முதலியன, தேஹத்தால் சாப்பிடுவதான ஸ்பரிசானந்த விஷயங்கள் முதலிய எல்லா இந்திரிய அநுபவங்களையும் குறிப்பிட்டதாகிறது. "இந்தச் 'சாப்பாடு'கள் யாவும் - ஆஹுதி விதி:' - உனக்கு ஹோமத்தில் ஆஹுதி கொடுக்கிற முறையாக ஆகட்டும்."

சாதம் சாப்பிடுவதை நமக்குள் உள்ள பஞ்சப் பிராணன்களுக்கு ஆஹுதியாகக் கொடுத்துவிட்டுத்தான் ஆரம்பிக்கிறோம். கீதையிலும் பகவான், தானே பிராணிகளின் தேஹத்தில், வயிற்றில், வைச்வாநரன் என்ற ஜாடராக்னியாக இருந்துகொண்டு ஆஹாரத்தை ஜெரிப்பதாகச் சொல்கிறார். அவர் உள்ளே உட்கார்ந்து கொண்டிருக்கிறார் என்ற உணர்ச்சி வந்தால் தப்பு வஸ்துக்களை, வெங்காயம், மதுபானம், மாம்ஸம் முதலியவற்றை உள்ளே போடத் தோன்றுமா?இப்படியே கண்ணும், காதும், மூக்கும், சர்மமும் அவரால்தான் அநுபோகம் பண்ண முடிகிறது என்னும்போது இவற்றைக்

கெட்டதுகளில் செலுத்தத் தோன்றுமா?

'ஸம்வேச:'- படுத்துக் கொள்கிறேனே, அது' ப்ரணாம:' -உனக்குப் பண்ணும் நமஸ்காரமாக இருக்கட்டும். படுக்கும்போது அம்பாள் பாதத்தில் கிடக்கிறோம் என்று நினைத்துக் கொண்டுவிட்டால் எத்தனை சாந்தமாக நாள் முடியும்?அப்படி ஆகட்டும்.

'லிஸ்டை நீட்டிக்கொண்டே போவானேன்?சுருக்கமாகச் சொன்னால், ஸாதனை என்று தனியாக, கஷ்டமாக நான் முயற்சி பண்ணி ஜப ஹோமாதிகள், தியானாதிகள், பிரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்வது என்றில்லாமல் நான் பாட்டுக்கு ஸௌக்யமாக எதையோ பண்ணிக் கொண்டிரு ந்தாலும், எதைப் பண்ணிக் கொண்டிருந்தாலும், --

ஸுகம் அகிலம் ........யந்மே விலஸிதம்

-'ஸுகமாக நான் பண்ணிக் கொண்டிருக்கும் ஸகல காரியமும்'என்று அர்த்தம் - என்னுடைய எல்லாச் செயலும்,

தவ ஸபர்யா பர்யாய:பவது

- 'உன்னுடைய பூஜைக் கிரமமாக ஆகட்டும்'.

'ï£¡ ð‡µAø ªêò™èœ Ü^î¬ù»‹ à¡ Ì¬üò£è Þ¼‚è†´‹.'

'ஸபர்யா'என்றால் பூஜை. பர்யாயம் என்பதற்குப்பல அர்த்தங்கள் இருப்பதில் ஒன்று 'மறு பெயர்', 'ஷிஹுபதீவமீவீமீஹுமீமீ' என்பது. "உனக்குப் பண்ணும் பூஜைக்கு மறுபெயராக அதனிடத்தைப் பெறும் ஸப்டிட்யூட்டாக என் ஸகல கார்யமுமே ஆகிவிடட்டும்!" "ஸபர்யா பர்யாய"என்று ஒரே சப்தங்களைத் திருப்பும் போது 'யமகம்'என்கிற சொல்லணியைக் கையாண்டிருக்கிறார்.

'ஸுகம்'- ஸுகமாக, ஸௌக்யமாக, வமீக்ஷீணீவீஸீ இல்லாமல், ஸீணீமீஹுபக்ஷீணீறீ- ஆக - இப்படிச் சொன்னதில் நிரம்பவும் அர்த்த புஷ்டி இருக்கிறது. இப்போது மனஸ் கட்டுப்படாததால் அதை 'மொராலிடி'யில் (தர்மமான நடத்தையில்) கொண்டு வருவது ரொம்ப வமீக்ஷீணீவீஸீ ஆக இருக்கிறது. "எல்லாம் உன்னுடைய செயலே"என்று தாயுமானவர் சொன்னாற்போல, செய்விப்பது அனைத்தும்

அம்பாளே என்ற நினைப்பை வளர்த்துக்கொண்டு மனஸை அவளிடம் கொடுத்தாலோ மொராலிடி என்பது நாம் ரொம்பவும் முயற்சி பண்ணி உண்டாக்கிக் கொள்ள வேண்டிய ஒழுங்கு முறையாகக் கஷ்டப்படுத்தாமல் ஸ்வாபாவிகமாக, 'நாச்சுரலா'கக் கைகூடிவிடும். இயற்கைப்படி இருப்பதுதானே ஸௌக்யம்?இப்போதும் கர்மாக்களங்கம் பிடித்த மனஸின் இயற்கை ஸௌக்யமாக இருப்பதால்தான் அதன்படி அலைகிறோம். ஆனாலும் இந்த ஸௌக்யம் தாற்காலிகமாகத்தான் இருக்கிறது;சாச்வத ஸௌக்யத்தைத் தடுக்கிறது. அப்போது - அம்பாளிடம் ஸர்வஸங்க பரித்தியாகம் பண்ணும்போது நிஷ்களங்கமான சுத்த மனஸுக்கு எது இயற்கையோ அந்த தர்மான நடவடிக்கைகளே நமக்குத் தானாக வந்து சாச்வத ஸௌக்யங்களைக் கொடுக்கிறது. மொராலிடி என்று ஒன்று தெரிந்தது, அந்தப்படி நாம் நடக்கிறோம் என்றுகூட புத்தி பூர்வமாக நமக்குப் புரியாமலே வருகிற நிலை!

பாகவதத்தில் ஒன்பது தினுஸான பக்தி வகைகளின் உச்சியில் எதை வைத்திருக்கிறதோ அந்த "ஆத்ம நிவேதன"த்தைத் தான் - கீதையின் முடிவில் பகவான் சொன்ன பரிபூர்ண சரணாகதியைத்தான் - இந்த ச்லோகத்தில் ஆசாரியாள் சொல்லியிருக்கிறார்.

'ஆத்மார்பண த்ருசா'என்று ஒரு வார்த்தை நடுவிலே போட்டிருக்கிறாரே, 'ஸுகமகிலம் ஆத்மார்பண த்ருசா'என்ற இடத்தில், அதுதான் இந்த ஆத்ம நிவேதனத்தை, பரிபூர்ண சரணாகதியைத் தெரிவிப்பது. இந்த ச்லோகத்திற்கு அதுதான் உயிர் நிலை. இந்த ச்லோகத்திற்கு மாத்திரமில்லை; ஸகல ஸமய சாஸ்திரங்களுக்கும் அதுதான் உயிர் நிலை. உயிருக்கே அதுதான் உயிர்நிலை!'ஆத்மார்பண த்ருஷா'என்றால் இந்த உயிரை அப்படியே அம்பாளுக்கு ஸமர்ப்பணம் பண்ணிவிடும் பாவனையால்'என்று அர்த்தம். அந்த பாவனை இருந்தால்தான் பேச்செல்லாம் ஜபமாயும், செயலெல்லாம் அப்படியப்படியாயும், இன்னும் பாக்கி சொன்னதெல்லாம் அப்படியப்படியாயும் ஆகும். 'ஆத்ம ஸமர்ப்பண புத்தியால் இப்படியெல்லாம் ஆகட்டும்'என்பதற்குத்தான் பின்னாடி

'ðõ¶'â¡Á «ð£†®¼,Aø£˜. Ý˜ñ úñ˜Šðí,è£ó¡, Güñ£ù

êóí£èî¡ âŠð® Þ¼Šð£¡ â¡Á „«ô£è^F™ ðì‹ H®^¶, è£†®J¼‚Aø£˜. Üƒ«è õ£›‚¬è º¿‚è«õ Ì¬üò£AM†ì¬î - 'úð˜ò£ ð˜ò£ò'ñ£è 'MôR'Šð¬î - ð£˜‚A«ø£‹.

இதே ரீதியில் இதே அபிப்ராயங்களை, ஏறக்குறைய இதே வார்த்தைகளில் "சிவ மாநஸ பூஜா ஸ்தோத்திர"த்திலும் ஒரு ச்லோகமாக ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்.

ஆத்மா த்வம் கிரிஜா மதி : ஸஹசரா : ப்ராணா : சரீரம் க்ருஹம்

பூஜா தே விஷயோப - போக- ரசநா நித்ரா ஸமாதி ஸ்திதி : ।

ஸஞ்சார : பதயோ : ப்ரதக்ஷிணவிதி : ஸ்தோத்ராணி ஸர்வா கிரோ

யத்-யத் கர்ம கரோமி தத்-தத்-அகிலம் சம்போ தவாராதனம் ।।

இப்படி ஸகலத்தையும் தனக்கு அர்ப்பணம் பண்ணும்படி பகவானே கீதையில் சொல்கிறார். "எதைச் செய்தாலும் எதைத் தின்றாலும் எதை ஹோமமோ தானமோ செய்தாலும், எந்தத் தபஸ் பண்ணினாலும் (எதிலே நீஷீஸீநீமீஸீமீ"கூஷீணீமீ"மீ பண்ணினாலும் என்று அர்த்தம். எந்த விஷயத்தையும் தீவிரமான ஈடுபாட்டோடு பண்ணினால் அது தபஸ்தான்) அதையெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்'என்கிறார்.

யத் கரோஷி யத் அச்நாஸி யத் ஜுஹோஷி ததாஸி யத் ।

ò^ îðvòR ªè÷‰«îò î^ º¼wõ ñ^ Ü˜ðí‹ ||

'â¡ ªêòôŒõ¶ ò£¶ å¡ÁI™¬ô', 'ï¡«ø ªêŒõ£Œ, H¬ö ªêŒõ£Œ ï£«ù£ ÞîŸ° ï£òè«ñ?' â¡ªø™ô£‹ ï£™õ˜, Ý›õ£˜èœ, Þ¡ù‹ ñî£‰îóƒèO™ àœ÷ ªðKòõ˜èœ â™ô£‹ ÞŠð®Šð†ì total surrender -ä (ðKÌ˜í êóí£èF¬ò),, ªê£™LJ¼‚Aø£˜èœ. HøMJ¡ î¬ôò£ò ðòù£ù põ¡ º‚F¬ò^ î¼õ¶ Ü¶î£¡.

ஞானத்தில் போனால் 'மனோ நாசம்'என்பதுதான் பக்தியில் போகிறபோது 'சரணாகதி'ஆகிறது. இரண்டும் ஆத்மார்ப்பணந்தான். இரண்டிற்கும் ஒரே

பலன்:உயிருள்ளபோதே மோக்ஷானந்தம் பெறுவதான ஜீவன் முக்தி.

---



**சிவன் சக்தி : உயிர் - உடல்**

உயிருள்ளவரைதான் நம் ஜபமோ ஜல்பமோ, முத்ரையோ சில்பமோ, வெறும் நடையோ ப்ரதக்ஷிணமோ, சாப்பிடுவதோ ஹோமம் செய்வதோ, படுத்துக் கொள்வதோ நமஸ்காரம் பண்ணுவதோ - எதுவுமே செய்ய முடியும். இந்த ஜீவ உயிருக்கு உயிராக அம்பாள் இருந்துதான் இதை இத்தனையும் செய்விக்கிறாள் என்று ஆத்மார்ப்பண புத்தியினால் தெரிந்து கொள்ளும்போது ஜல்பமே ஜபமாக, எந்த சில்பமும் முத்ரையாக இதேபோல மற்றக் கார்யங்களும் பூஜாங்கங்களாகின்றன. பல காரியங்களைச் செய்யும் சரீரத்திற்குச் செய்விக்கும் உயிர் மாதிரி, இந்த ஜீவ உயிர் இத்தனை செய்விப்பதாகத் தோன்றுவதையும் இந்த உயிரையே சரீரம் மாதிரிக் கொண்ட பேருயிரான அம்பாள்தான் வாஸ்தவத்தில் செய்விக்கிறாள் என்ற பாவனை ஏற்பட வேண்டும். இதேபோல, நம் ஒருத்தரின் உயிரை மட்டுமில்லாமல் லோகம் முழுதையும் தன் சரீரமாக கொண்டு அந்த பேருயிர்தான் உயிர் கொடுத்து வருகிறது என்று தெரிகிறபோது லோகத்தில் நடக்கும் ஸகல காரியமுமே அதனால்தான் ஆகிறது - "அவனன்றி அணுவும் அசையாது"- என்று புரிந்துகொண்டு அதனிடம் அடங்கி ஸர்வ ஸமர்ப்பணம் பண்ணும் புத்தி நன்றாக உறுதிப்படும். இப்படி அம்பாள் விச்வாகாரமாக இருப்பதை அடுத்தடுத்து இரண்டு ச்லோகங்களில் (34,35) சொல்கிறார். முதலாவது:

**' சரீரம் த்வம் சம்போ : சசி-மிஹிர- வக்ஷோருஹ - யுகம்**

**தவாத்மானம் மந்யே பகவதி நவாத்மானம் அநகம் |**

அத : சேஷ : சேஷீத்யயம் - உபய-ஸாதாரணதயா

ஸ்தித : ஸம்பந்தோ வாம் ஸமரஸ - பராநந்த-பரயோ : ||

((பகவதி) இறைவியே!(சசி மிஹிர வக்ஷோருஹயுகம்) சந்திரனையும் ஸூரியனையும் இரு நகில்களாகக் கொண்ட (த்வம்) நீ (சம்போ) சிவபெருமானுக்கு (சரீரம்) உடல் எனவும் (அநகம்) குற்றமற்ற (நவாத்மானம்) ஒன்பது வ்யூஹ வடிவனான. (ஆனந்தபைரவன்) எனப்படும் அவன் (தவ) உனது (ஆத்மானம்) ஆத்மா எனவும் (மன்யே) கருதுகிறேன். (அத:) இதனால் (சேஷ:சேஷீ இதி) உடைமை-உடைமையாளரெனும் (அயம் ஸம்பந்த:)இத்தொடர்பு (ஸமரஸ பரானந்த பரயோ:) ஸமமான ஆனந்த ரஸத்தை அநுபவிக்கும் பரனும் பரையுமாகிய (வாம்) உங்களிடையே (உபய ஸாதாரணதயா) பரஸ்பரம் பொதுமையாக (ஸ்தித:) நிலைபெற்றுள்ளது.)

'சம்போ:' – டபரமேச்வரனுடைய' :'சரீரம் த்வம்'- 'சரீரமாக இருப்பது நீயே'என்று ஆரம்பிக்கிறார். ஈச்வரனுடைய சரீரம் அம்பாள் என்கிறார். அவனுடைய முழு ரூபத்தையும் இவள் திருடிக்கொண்டு விட்டாள் என்று முன்னால் சொன்னதற்குப் பொருத்தமாக அர்த்த சரீரம் என்காமல் பூர்ண வர்ணமும், ஸ்திரீ சரீரமும், பிறைச் சந்திரனும் நெற்றிக் கண்ணும் உள்ளதல்ல. அகிலாண்ட கோடி பிரம்மாண்டங்களையே ஈச்வரனுடைய சரீரமாக இருக்கும் அம்பிகை என்று

இங்கே சொல்கிறார். அதாவது விராட் ஸ்வரூபம் என்கிறார்களே, அதாகச் சொல்கிறார்.

பரமாத்மாவுக்கு ஸர்வப் பிரபஞ்சங்களைமே சரீரமாக இருக்கிறது. அந்த உடலுள் உயிராக, தேஹத்துக்குள் ஆத்மாவாகப் பிரபஞ்சத்துக்கு உயிரையும், அறிவையும், ஸத்யத்வத்தையும், காரியங்களையும் கொடுத்துச் செய்வித்துக் கொண்டிருப்பது பரப்பிரம்ம தத்வமே.

இங்கே சொல்வது "ஸௌந்தர்ய லஹரி"யின் ஆரம்ப ச்லோகத்தில் சொன்னதற்கு வித்யாஸமாகத் தோன்றுகிறது. அங்கே சக்தியில்லாவிட்டால் சிவன் அசையக்கூட மாட்டான்

என்றார். அதனால் சிவன் ஜட சரீரம் என்றும் அம்பாள்தான் அதை இயக்குகிற சைதன்யமான உயிர் என்றும் ஆயிற்று. சக்தியில்லாத சிவம் சவமே என்கிறபோது உயிரில்லாத உடம்பைச் சொல்வதாகத்தானே ஆகிறது?இங்கேயோ அதை மாற்றி " அம்மா, நீதான் சம்புவுக்கு சரீரம்"என்கிறாரே, என்றால் -

இரண்டும் வெவ்வேறு view point-ல் (காட்சிக் கோணத்தில்) சொன்னது. நன்றாக ஊன்றிக் கவனித்தால் முதல் ச்லோகத்தில் சவத்தின் ஸ்தானத்தில் வைக்கவில்லை என்று புரியும். அம்பாளுக்கு உத்கர்ஷம் கொடுப்பதற்காகவே அவள்தான் ஜீவ சைதன்யம், அவர் அது இல்லாது போனால் சவம் என்று அதை அர்த்தம் பண்ணினாலும் - அந்த இடத்தில் நானே அப்படித்தான் பண்ணினேன் - அது அப்படியே ஸத்யமில்லைதான்!அங்கே ஸ்வாமியை ஜடம், அதாவது சைதன்ய ரஹிதமான ஒன்று என்று சொல்லியிருப்பதாகக் காட்ட ஆதாரமில்லை. அத்வைதத்தில் ஆசார்யாள் சொன்ன குணம் குறியற்ற, செயலற்ற நிர்குணப் பிரம்மமாகத்தான் அங்கே சிவனைச் சொன்னார். அந்தப் பூர்ண நிலை ஒருநாளும் சைதன்ய விலாஸமில்லாத உயிரற்ற நிலையாகாது. ஆனால் பூர்ணநிலையில் இருப்பதாக அதற்கே தெரியாவிட்டால் அது இருந்தும் இல்லாத மாதிரிதான்- செத்துப்போனாற்போலத்தான். 'மாதிரி' 'போல' தானே ஒழிய வாஸ்தவத்தில் அது செத்த நிலையுமில்லை, சாகாத நிலையுமில்லை, ஒரு நிலையுமில்லை. அப்படிப்பட்ட தன்னையுமறியாத நிலையில் பிரம்மம் இல்லாமல் தன்னை அறிந்திருக்கிற நிலையில் இருப்பதற்குக் காரணமான ஞான சக்தியை அம்பாள் என்றார். அதோடு அப்புறம் ஞான சக்தியே இச்சா-கிரியா சக்திகளோடு ஈச்வரனை ஸம்பந்தப்படுத்தி, காரியமுற்றவனைக் காரியம் பண்ணுவிப்பதாகச் சொன்னார். நிர்குணப் பிரம்மத்துக்குத் தன்னையே அறிவதுதான் உயிர் மாதிரி என்கிற அர்த்தத்தில் அங்கே சிவனுக்கு அம்பாள் உயிராக இருப்பதாகச் சொன்னார்.

இங்கே சொல்வது காரியப் பிரம்மத்தை;ஸகுண பிரம்மம் என்கிற ஈச்வரனை காமேச்வரி தூண்டி வைக்கிறபடி ஈச்வரனே காரியப் பிரம்மமாக ஜகத்வியவஹாரம்

பண்ணுகிறான் என்னும்போது, ஜகத்தெல்லாம் அவனுடைய சரீரமாகவும் அதற்குள் இருக்கிற காரிய சக்தியான உயிர் ஈச்வரனாகவும்

ஆகின்றன.

காமேச்வரி என்று ஒரு இச்சா சக்தி;அது மூல ஸத்யமான ப்ரஹ்மத்தைத் தூண்டுகிறது..... என்கிற மாதிரி விஸ்தாரம் பண்ணாமல், 'ப்ரஹ்மமேதான் மாயையால் ஈச்வரன் என்று ஸகுணமாக ஆகி ஜகத் வ்யாபாரம் செய்கிறது. அந்த மாயைக்குத் தனியாக சைதன்யம் - உயிர் - கிடையாது. அது ஜடந்தான். ப்ரஹ்மத்திடமிருந்தே சைதன்யம் பெற்று அந்த ப்ரஹ்மத்தையே இந்த மாயை மறைத்து அதனிடத்தில் ஜகத்தைக் காட்டுகிறது. இந்த ஜகத்தை அந்த ப்ரஹ்மமே மாயா ஸஹிதமான ஈச்வரனாக இருந்து கொம்டு நிர்வாஹம் பண்ணுகிறது'â¡Á Ü^¬õî ê£vFóƒèO™ ªê£™LJ¼,Aø¶. Šóyñ‹ â¡ø£™ C¡ù Mûòƒèœ º¡ù£®«ò ªê£™LJ¼,A«ø¡. ñ£¬òJù£™î£¡ üè^ «î£¡ÁAø¶ â¡ðî£™ üè^¬î«ò ñ£¬òò£è, Üî£õ¶ Ü‹ð£œ Ïðñ£è,, ªê£™ôô£%oî£¡. Ü%oî ñ£¬ò üì‹;Šóyñ ¬êî¡ò^î£«ô«ò Ü¶ Šóè£C,Aø¶ â¡Aø«ð£¶ Ü¬î, Üî£õ¶ Ü‹ð£¬÷, àì‹¹ â¡Á‹ Šóyñ^F¡ vî£ù^F½œ÷ Cõ¬ù àJ˜ â¡Á‹ ªê£™ôªôô£ªñ¡Á ªîKAø¶. Þ¶î£¡ "êgó‹ ˆõ‹ ê‹«ð£:" - "c ß,,õóÂ,° àì‹ð£J¼,Aø£Œ'- â¡ð¶.

ஸாங்க்ய மதத்திலும் கிட்டத்தட்ட இதே அபிப்ராயந்தான். புருஷன் என்ற ஜீவ ஆதாரமான ஸத்யமும் ஜகத்துத் தோற்றத்தின் காரணமான 'ப்ரக்ருதி'என்பதும் உயிரும் உடம்பும் மாதிரி என்று அந்த மதப்படி ஆகும். ஒருத்தர் சொன்னார்:'ப்ரஹ்மத்தை மறைப்பது, அதை ஜகத்தாகத் தோன்றும்படிச் செய்வது என்ற இரண்டு கார்யம் இருப்பதில், மாயை என்கிறபோது மறைப்பதற்குதான் அழுத்தம் கொடுக்கிறோம். பேச்சில்கூட 'மாயமா மறைஞ்சு போச்சு'என்கிறோம். ப்ரக்ருதி என்பதோ வெறுமே மறைக்காமல் ஒரு கார்யம் செய்யப் படுவதற்கு அழுத்தம் கொடுக்கிறது. ப்ரக்ருதி என்பது இயற்கை, ழிணீமீ ஖ஷுமீ என்றெல்லாம் அர்த்தம் கொடுப்பதைப் பார்த்தாலும் மூல ஸத்யத்தின் இடத்தில் ஜகத் என்பது கார்ய ரூபத்திலே கல்பிக்கப்பட்டிருப்பதற்கே முக்யத்வம் தெரிகிறது.

பஞ்சபூதம், பஞ்ச சன்மாத்ரை, ஜீவாத்மாவின் இந்திரியாதிகள் என்றெல்லாம் இருபத்துநாலு தத்வங்களை முக்யம் கொடுத்து அந்த சாஸ்திரத்தில் விளக்குவதும் ஜகத் க்ருத்யத்திற்கு ஜாஸ்தி இடம் கொடுத்திருப்பதைத்தான் காட்டுகிறது. அறிவாளிகள் ஸமூஹத்திலே அந்த சாஸ்த்ரத்திற்கு பெரிய ஸ்தானம் கிடைத்துவிட்டதே என்பதால்தான் அத்வைதத்திலும் இந்த இருபத்துநாலை அப்படியே திருப்பிச் சொல்லியிருக்கிறதே தவிர, ஸாதனா க்ரமம் என்று எடுத்துக் கொண்டால் இதுகளைத் தெரிந்து கொள்வதால் அத்வைதிக்கு ஒரு லாபமுமில்லை;தெரியாததால் நஷ்டமுமில்லை. மொத்தத்தில் ப்ரக்ருதி ஜீவ ஜகத்தாகப் பரிணமித்திருப்பதற்கு ஸாங்க்யத்தில்தான் இம்பார்டன்ஸ்'- இப்படி அவர் சொல்லி, இன்னும் அநேக காரணமும் சொல்லி, அம்பாளை ஈச்வரனுடைய அநேக காரணமும் சொல்லி, அம்பாளை ஈச்வரனுடைய சரீரமாகவும், அப்புறம் அவளை 'சசி மிஹிர வக்ஷோருஹ யுகம்'என்று ஜகத் ஸ்வரூபமாகவும் வர்ணிப்பது

அத்வைதத்தை விடவும் ஸாங்க்யத்தைத் தான் ஆதரிக்கிறது என்றார்.

இந்த ச்லோக ஆரம்பத்தில் இப்படி அத்வைத, ஸாங்க்ய சாஸ்த்ரங்களின் அடிப்படைப்படி அர்த்தம் செய்யும்படி வந்தாலும் பின்னாடி வருகிற ஸமாசாரங்களெல்லாம் சாக்தத்திலேயே கௌலம், ஸமயம் என்று இருக்கும் இரண்டு ஸம்ப்ரதாயங்களில் வருகிறவையாகத் தானிருக்கின்றன. இந்த ஆரம்ப அபிப்ராயத்திற்கும் (ஸ்வாமிக்கு அம்பாள் சரீரம் என்பதற்கும், அவளே ஜகத் ஸ்வரூபம் என்பதற்கும்) சாக்த ஆதாரமுண்டு. பாஹ்ய பூஜை என்று வெளியிலே யந்த்ரம், மூர்த்தி வைத்துப் பூஜிப்பது கௌலம். தனக்குள்ளேயே ஹ்ருதயாகாசத்தில் தத்வார்த்தமாகப் பூஜை பண்ணிக் கொள்வது ஸமயம். ஸ்வாமிக்கும் அம்பாளுக்கும் ஐந்து இனங்களில் ஸமத்வம் கொடுக்கிற உபாஸனையை அது சொல்வதால் ஸமயம் என்று பெயர்.

---

## ஸூர்ய சந்திரரைக் கொண்டு பாலூட்டும் தாய்

ஸித்தாந்தங்கள் நமக்கு எட்டும், எட்டாது!எட்டாமல் போனாலும் தோஷமில்லை. அன்பு எவருக்கும் எட்டாமல் போகாது!அதுதான் நமக்கு வேண்டியது. அந்த அன்பை - ஜகத்துக்கெல்லாம் மாதாவாக அந்த ஜகத்ஸ்வரூபமாகவே இருக்கிறவளின் அன்பை- ஸ்வாமி என்ற உயிருக்கு உடம்பாக அவளைச் சொல்லும்போதே ஆசார்யாள் தாய்ப்பாலாகக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறார்!அம்பாளை அவயவ சரீரமாக இல்லாமல் விச்வாகாரமாக, விராட் ஸ்வரூபமாகச் சொன்னாலும் அது ஜடம் என்று சொல்ல அவருக்கு மனஸ் வரவில்லை. அம்பாளுடைய மாத்ருத்வத்தை அவரால் மறக்க முடியவில்லை. அதனால்தான் ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் பால் கொடுக்கிற தாயாக இந்த விராட் ஸ்வரூபத்திலேயே என்கிறார். அதாவது ஸூர்யன் சந்திரன் இரண்டும் அவளுடைய (விராட் ரூபத்தில்) ஸ்தனங்களாக இருக்கின்றன என்கிறார்.

குழந்தைகளுக்குத் தாய் ஸ்தன்யபானம் பண்ணுவிக்கிற மாதிரி லோகமாதா அத்தனை ஜீவராசிகளுக்கும், தாவரங்களுக்குங்கூட ஸூர்ய சந்திரர்களின் கிரண தாரைகளால் பாலூட்டுகிறாள். தாவரங்களுக்கும் ஜீவன் உண்டு. ஜதீஷ் சந்திரபோஸ் இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் இதை ஸயன்ஸ்படி நிரூபித்துக் காட்டுவதற்கு ரொம்ப முன்னால், வேத காலத்திலிருந்தே தாவரங்களுக்கு உயிரும் உணர்ச்சியும் உண்டு என்பது நமக்குத் தெரியும்.

'ஸூர்ய சந்திரர்களின் பிரகாசத்தால் உணவூட்டுகிறாள்: உயிரூட்டுகிறாள்'என்றால் என்ன அர்த்தம்? ஸூர்ய ரச்மியிலிருந்துதான் தாவரங்கள் ஜீவன் பெறுகின்றன என்பது தெரிந்த விஷயம். ஸூர்ய வெளிச்சமில்லாத இருட்டான இடத்தில் விதை போட்டால் செடி வராது. தாவரங்கள் நேராகத் தாங்களே ஜீவ ஸத்தை ஸூர்யனிடமிருந்து பெறுகின்றன. அதோடு நிற்காமல் பரோபகாரமாக, இப்படி நேரே ஸூர்யனிடமிருந்து ஜீவ ஸத்தைப் பெற முடியாத

நமக்காகவும் தாவரங்களே நாம் அடுப்பு மூட்டிச் சமைக்கிற மாதிரி ஸூர்ய உஷ்ணத்தில் அந்த ஸூர்ய சக்தியையே நமக்கு ஜீர்ணமாகிற மாதிரி ரூபத்தில் சேமித்து வைத்துக் கொள்கின்றன. ஸோலார் குக்கர்!காய்கறிகளையும், அரிசி முதலான தானியங்களையும் நாம் சாப்பிடும்போது இந்த ஸூர்ய ப்ரஸாதமான சக்திதான் நமக்கு உள்ள போய் ஜீவஸத்தைத் தருகிறது.

ஸூர்ய சக்தியாலேயே biosphere என்கிறதாக இந்த லோகம் ஜீவ லோகமாக இருக்கிறது. ஸூர்யனுடைய வெளிச்சத்திலே ஓயாமல் ரிலீஸாகிக் கொண்டேயிருக்கும் சக்தி ஸகல அணுக்களுக்குள்ளேயும் வியாபித்தும், தாவர வர்க்கத்தில் மேலே சொன்னாற்போல ஃபோடோஸிந்தஸிஸ் உண்டாக்கியுந்தான் ஜீவ ப்ரபஞ்சத்தை நடத்துகிறது என்று இப்போது ஸயன்ஸில் சொல்வதை எத்தனையோ யுகம் முந்தியே நம்முடைய வேத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. தாவரம் மாதிரியே நாமும் நேரே அந்தச் சக்தியைப்

பெறுகிறதற்குத்தான் காயத்ரீ முதலான மந்த்ரங்களைக் கொடுத்திருக்கிறது. (ஸயன்ஸூக்கும்) பல படி மேலே போய் தேஹ சக்தியோடு நிறுத்திக் கொள்ளாமல் புத்தி சக்தி, பாரமார்த்திகமான ஸாதனா சக்தி ஆகியவற்றையும் அவனிடமிருந்து க்ரஹித்துக் கொள்வதற்கு காயத்ரீயைக் கொடுத்திருக்கிறது. அங்கே 'ஸவிதா', 'ஸாவித்ரி'என்று நம்மைப் பெற்றெடுத்து வாழ்வு தருகிற ப்ரியமான தாயாகவே ஸூர்ய சக்தியைச் சொல்லியிருக்கிறது. இந்த சக்தியும் ஆதி சக்தியான பராசக்தி என்ற மூலமான தாயாரின் அங்கந்தான் - பாலூட்டும் அங்கந்தான் - என்கிறார் ஆசார்யாள்.

சந்திரனையும் ஏன் அப்படிச் சொன்னார்?சந்திர கிரணத்தினால் என்ன உணவு கிடைக்கிறது?அது ஜிலு ஜிலு என்று இருப்பதைப் பார்த்தால் ஆனந்தமாயிருக்கிறதே, இதுவே சாப்பாடுதான்!அது மட்டுமில்லை. மூலிகைகள், மருத்துவ சக்தியுள்ள ஒஷதி வகைகள் சந்திரிகையிலிருந்துதான் ஸத்து பெறுகின்றன. ஸூர்ய ரச்மியில் உண்டான பதார்த்தங்களை வகைதொகை இல்லாமல் சாப்பிட்டு நாம் வியாதியை உண்டாக்கிக்

கொள்ளும்போது மருந்துகளைத் தேடிப் போகிறோம். மருந்துகளைச் செய்யும் மூலிகை வர்க்கம் சந்திர கிரணத்திலிருந்துதான் போஷாக்கு பெறுகிறது.

இந்த மூலிகைளுக்கு உச்சியிலே ஸோமலதையை வேதமே சொல்லியிருக்கிறது. 'ஸோமன்'என்றாலே 'சந்திரன்'தான். ஸோம ரஸத்தை பூலோகத்தின் அம்ருதம் என்றே சொல்லலாம். அந்த ஆஹுதிதான் ஸோம யாகங்கள் என்றே ப்ரஸித்தமான யஜ்ஞங்களில் மையமான அம்சம். யோகிகளுக்கு

சிரஸ் உச்சியில் அம்ருதம் கொட்டுவதும் சந்திரனிலிரு ந்துதான்.

ஸமுத்ரம் பொங்குவதும் அடங்குவதுமாக tide என்று ஏற்படுவது முக்யமாக சந்திரனின் இழுப்பினால்தான். பருவம், பருவக்காற்று, மழை என்பவையெல்லாமே இப்படிச் சந்திரனுடன் ஸம்பந்தப்பட்டு விடுகின்றன. ஸூர்ய ரச்மிகள் ஸமுத்ர ஜலத்தை ஆவியாக்கி அந்த ஆவிதான் மழையாகப் பொழிந்து ஸஸ்ய ஸம்ருத்தி (தானியச் செழிப்பு) ஏற்படுகிறது. இந்த விதத்திலும் ஸூர்யன் நம்கசுச் சாப்பாடு போட்டு உயிர் கொடுக்கிறது- என்ற விஷயம் எல்லாருக்கும் தெரியும். ஆனால் அந்த மழையை உண்டாக்குவதில் சந்திரனுக்கே ஜாஸ்திப் பங்கு என்கிறபோது அவனுந்தான் நமக்குச் சாப்பாடு போடுகிறான் என்றாகிறது.

ஆக, அன்னபூர்ணேச்வரியாக நமக்குச் சாப்பாடு போட்டு ரக்ஷிக்கிறவள் ஸூர்ய சந்திரர்களைக் கொண்டே பாலூட்டுகிறாள் என்பது ரொம்பவும் பொருத்தமாக இருக்கிறது. ஸூர்யனுடைய உஷ்ண தாரை, சந்திரனுடைய சீதள தாரை இரண்டாலும் அம்பிகை ஜீவ ஸமூஹத்திற்கு ஸ்தன்ய பானம் கொடுத்து வளர்க்கிறாளென்று சொல்வது ஸயன்ஸின் உண்மைகளையே பக்தி பாஷையில் சொல்வதுதான். ஸூர்யன் புத்தி ப்ரகாசத்தை உண்டாக்குகிறானென்றால் சந்திரன்தான் மனஸூக்கு அதி தேவதை. பௌர்ணமி, அமாவாஸ்யைகள் உப்பு

ஸமுத்ரத்தில் tideஉண்டாக்குகிறாற்போலவே சித்தத்தின் எண்ண ஸமுத்ரத்திலும் பாதிப்பு உண்டாக்குவது ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. சித்தக் கோளாறு உள்ளவர்கள்

விஷயத்தில் அது நன்றாகத் தெரிகிறது. அவர்களை 'lunatic' என்பது சந்திர ஸம்பந்தப் படுத்தி வைத்த பெயர்தான். (லத்தீனில் 'luna' என்றால் சந்திரன்).

அமாவாஸ்யையில் தர்ப்பணம், அதை நிறைந்த நாள் என்பது, க்ரஹண காலத்தில் மந்த்ர ஜபத்திற்கு வீர்யம் கூடுதலாவது முதலானவை ஸூர்ய சந்திரர்களுக்கு இஹலோக பரலோகங்களின் உள்ள அநுக்ரஹ சக்தியைக் காட்டுகின்றன. அந்த அநுக்ரஹமெல்லாமும் முடிவிலே காட்டுகின்றன. அந்த அநுக்ரஹமெல்லாமும் முடிவிலே அம்பாள் கொடுக்கும் ஞானப்பாலின் சொட்டுக்கள்தான்!

இதையெல்லாம் அடக்கித்தான் "சசி மிஹிர வக்ஷோருஹ யுகம்"என்றார்.

ஸூர்ய - சந்திரர்களைப் பரமாத்மாவின் வலது-இடது கண்களாகச் சொல்வது வழக்கம். "ஸூர்யனாயிருந்து கொண்டு உன்னுடைய வலது கண் பகல் வேளையைப் படைக்கிறது;சந்திரனாயிருந்து கொண்டு இடது கண் ராத்ரியைப் படைக்கிறது"என்று நம் ஸ்தோத்திரத்திலேயே ஒரு ச்லோகம் சொல்கிறது. அம்பாளுடைய தாடங்கங்களாக ஸூர்ய சந்திரர்களை ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருப்பதையும் முன்னாடி சொன்னேன். இதெல்லாவற்றையும் விட நம்மைக் குழந்தைகளாக்கி அவள் பால் கொடுக்கிற வக்ஷோருஹங்களாக அவற்றைச் சொல்வதே நெஞ்சைத் தொடுகிறது.

---



## சேஷ-சேஷீ : உடைமையும் உடைமையாளரும்

இதற்கப்புறம் ரொம்பவும் தத்வங்களாகச் சொல்லிக் கொண்டு

போவதில் அம்பாளையும் ஈச்வரனையும் 'சேஷ-சேஷீ'ஸ ம்பந்தமுள்ளவர்களாகச் சொல்லியிருப்பதைக் கொஞ்சம் explain செய்கிறேன்.

சரீரம் என்ற உடலுக்குள் சரீரியான உயிர் இருக்கிறது. "சரீரம் த்வம் சம்போ:"என்பதால் அம்பாளும் ஈச்வரனும் சரீர-சரீரி ஸம்பந்தமுள்ளவர்கள் என்று ஆகிறது. சரீரம், உயிர் என்ற இரண்டில் சரீரத்துக்குள் உயிர் இருப்பதால், உயிர்தான் சரீரத்தின் உடைமை என்று நினைத்துக் கொண்டு விடக்கூடாது. நம் கோட்டுப் பாக்கெட்டுக்குள் பர்ஸ் இருப்பதால் நாம் உடைமையாளன், அது உடைமை என்று நினைக்கிறதுபோல இங்கே நினைத்துவிடக்கூடாது. அப்படி நினைத்தால் ஆசார்யாளே "ஷட்பதீ ஸ்தோத்ர"த்தில் சொல்வதுபோல அலைகளுக்குத்தான் ஸமுத்ரம் உடைமை;அலைகள் ஸமுத்ரத்தின் உடைமையல்ல என்று நினைக்கிற அசட்டுத்தனம் மாதிரியே ஆகும். வெளியிலே அலையும், உள்ளே ஸமுத்ரத்தின் அலையில்லாத ஜல பாகமும் இருப்பதால் அப்படி நினைத்துவிடலாமா?அப்படித்தான் உடலும் உயிரும்!உயிர்தான் உடலை நடத்தி வைக்கிறது. அது வெளியே போனால் உடல் நாற்றமெடுத்து அழுகிப் போகிறது. அப்புறம் இந்த உயிர் இன்னொரு உடலை எடுத்துக் கொள்கிறது. அதனால் உயிர்தான் உடைமையாளன், உடல் அதன் உடைமை என்றாகிறது. உடைமை என்பது "ஸ்வம்"எனப்படும். "ஸ்வத்து", "ஸொத்து"என்று அதிலிருந்து தான் வந்தது. உடைமை "ஸ்வம்"என்றால் உடைமையாளனே "ஸ்வாமி""எல்லாம் உன் உடைமையே"என்று தாயுமானவர் சொல்கிறபடி அகிலாண்ட சராசரங்களையும் தன் உடைமையாகக் கொண்டவன் பரமேச்வரனே.

'சேஷி'தான் உடமையாளனான ப்ரபு:'சேஷன்'அவனுக்கு உடைமையாக, அடிமையாக இருப்பவன். 'எல்லாம் உன் உடைமையே'என்பதற்கு முந்தித் தாயுமானவரும் "எல்லாம் உன் அடிமையே"என்றுதான் ஆரம்பித்திருக்கிறார். உயிர் ஆட்டி வைக்கிறபடி, உயிரின் ஏவலைச் செய்து

கொண்டிருக்கும் அடிமைதான் உடம்பு.

ஜீவ ஜகத்துக்களையும் ஸ்வாமியையும் சரீர-சரீரிகளாகவும், அதே அடிப்படையில் சேஷ-சேஷியாகவும் சொல்வது ராமாநுஜாசார்யாரின் விசிஷ்டாத்வைதத்தில் முக்யமான tenet (கொள்கை).

அத்வைதப்படி நிர்குணப் பிரம்மமாகப் பரமேச்வரன் இருந்ததால் அவனுடைய I-Consciousnessஎன்று சொல்கிறார்களே அந்த (தன்னுணர்வு என்ற) தத்வமாக அம்பாளை ஆசார்யாள் முதலில் சொன்னார். ஆரம்ப ச்லோகத்தின் முதல் பாதிக்கே அதுதான் உள்ளர்த்தம். அப்புறம் ஒரு இடத்தில் வ்யக்தமாகவே அம்பாளை அவனுடைய 'ஆஹோபுருஷிகா'என்றார். அந்த நிலையிலே

சேஷ-சேஷி பாகுபாடே பண்ண முடியாமல் சிவ-சக்திகள் அபின்னமாகக் கலந்திருக்கிறார்கள். ஆனால் அப்புறம் வியவஹார ஸத்யமான த்வைத ப்ரபஞ்சத்தை ஒப்புக்கொண்டு பார்க்கும்போது த்ரிமூர்த்திகள், பஞ்ச கர்துய மூர்த்திகள் ஆகியவர்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறாரல்லவா?இந்த நிலையில் அவளுடைய சக்தியின் லேசத்தால்தான் இவர்கள் எதுவும் செய்ய முடிகிறது. அவளுடைய பாதரேணுவைக் கொண்டே இவர்கள் க்ருத்யம் பண்ணுவது அவள் புருவத்தை க்ஷணம் அசைத்தாலே ஐந்து பேரும் அவரவர் க்ருத்யத்தைப் பண்ணுவது என்றெல்லாம் சொல்லும்போது அவளே மஹா யஜமானியான சேஷி, இவர்கள் அவளுடைய ஏவலைப் பண்ணும் சேஷர்கள் என்றாகிறது. இவர்களில் சிவனின் அபர மூர்த்திகளேயான ருத்ரன், மஹேச்வரன், ஸதாசிவன் மூன்று பேரும்

இருக்கிறார்களாதலால் அவர்களுக்கும் இவள் சேஷியாகவும், அவர்கள் இவளுக்கு சேஷர்களாகவும் இருக்கிறார்களென்பதுதான் குறிப்பாக நம்முடைய ச்லோகத்திற்கு விஷயம்.

இதற்கெல்லாம் மேலாக, ஒரு புழு பூச்சியிலிருந்து ஆரம்பித்து பஞ்ச க்ருத்ய மூர்த்திகள் உள்பட அத்தனை உடம்புகளையும் படைத்து அவற்றுக்குள்ளே உயிராக

இருக்கிறவளே அந்த ஏக சக்திதானே?அதனால் நாமெல்லாரும் அந்த சேஷிக்கு சேஷர்களாக இருக்கிற மாதிரியேதான் ஈச்வரனும்.

இவற்றோடு சாக்த தத்வங்களைக் கொண்டும் அவள் சேஷீ, அவர் சேஷன் என்பதை "தவாத்மாநம் மந்யே பகவதி நவாத்மாநம் அநகம்"என்பதால் தெரிவிக்கிறார். காலம் என்ற தத்வத்தில் ஆரம்பித்து ஜீவாத்மாவில் முடிவதாக ஈச்வரனை ஒன்பது அங்கம் கொண்டவனாகச் சொல்லியிருக்கிறது. அதுதான் 'நவாத்மா'அதெல்லாவற்றுக்கும் உயிர் கொடுத்து ஆட்டிப் படைப்பவள் அம்பாளேயாகையால் இவள் சரீரி, சேஷீ என்றும் அதையெல்லாம் அங்கமாகக் கொண்ட ஈச்வரன் இவளுக்கு சரீரம், சேஷன் என்றும் ஆகிறது.

இதெல்லாம் ஒரு பக்கம். இன்னொரு பக்கம் ஒரு சக்தி என்றால் அதை உடைய ஒருவன் இருந்தாகணு ம்;பராசக்தியை உடைய அவனே சிவன் என்பது. அந்த இன்னொரு பக்கத்தில் எல்லாம் மாறிப்போய் அவன் சேஷியாகவும் இவள் சேஷையாகவும் ஆகிறார்கள். ஈச்வரன் என்றே சொல்லப்படும் அவனைக் காரியப் பிரம்மம், ஸகுணப் பிரம்மம் என்று வைத்துக் கொள்ளும்போதும் அவனையே உயிராகவும் அவனது காரியமான சராசரங்களை அம்பாள் என்ற அவனுடைய உடலாகவும் ஒப்புக்கொள்ள வேண்டியதாகிறது. அதாவது அவன்தான் சேஷீ. அவள் சேஷை என்றாகிறது.

'சேஷம் என்பது பாக்கி (கூஷீமீனீணீவீஸீபீமீகூஷீ) என்ற அர்த்தத்தையே பொதுவில் தருவது. மீந்து போனதை 'சேஷம்'என்கிறோம். அப்போது அதற்கு மூலமாக 'நிறைய'ஒன்று இருக்க வேண்டுமல்லவா?எதனுடைய மிகுதி இதுவோ அந்த மூல வஸ்து இருக்கவேண்டுமல்லவா?அதுதான் 'சேஷி'. பரமாத்மாவை மூலச் சரக்கு

என்று சொன்னால் அதிலிருந்து துளித்துளி வெளிவந்திருப்பதுதான் அத்தனை லோகமும். இதனால் லோகத்தையும் ஈச்வரனையும் சேஷ-சேஷீ என்று சொல்லலாம். நிஜமாகவே பூர்ணமாயுள்ள பிரம்மத்திலிருந்து பார்வைக்கு பூர்ணமாகத் தோன்றுகிற பிரபஞ்சம் வந்திருக்கிறது;இது வெளியிலே வந்தவிட்டும் அது

பூர்ணமாகவே இருக்கிறது என்கிறபோது உபநிஷத்தே இந்த சேஷ-சேஷியைத்தான் சொல்லியிருக்கிறது. பிரபஞ்ச ரூபமான வெளி சரீரமாக சக்தியைக் காட்டிக்கொண்டு சாந்த சிவமாக உள்ளே பிரம்மமான உயிர் இருக்கிறது என்கிற 'வ்யூ'வில் 'சரீரம் த்வம் சம்போ:'என்றபடி அம்பாள் சேஷம், ஸ்வாமி சேஷீ.

தீவிர சைவமாக இருப்பவர்கள் ஸ்வாமிதான் உயிர், அம்பாள் உடல் என்கிறது போலவும், தீவிர சாக்தர்கள் இதையே மாற்றி அவள்தான் உயிர், அவர் உடல் என்கிறது போலவும் சொல்வார்கள். நல்ல அநுபவிகளான சைவர்களும் சாக்தர்களும் செய்த சாஸ்திரங்களிலோ இரண்டு பேருக்கும் ஸம ப்ராதான்யம் கொடுக்கச் சொல்லியிருக்கிறது. அந்த ஸமத்வத்தில் ஒரு அம்சமாகத்தான் அவர்கள் பரஸ்பரம், ஒருத்தருக்கொருத்தர், சரீர-சரீரிகளாக, சேஷ-சேஷிகளாக இருப்பது.

சைவம், சாக்தம், விசிஷ்டாத்வைதம், ஸாங்கியம், அத்வைதம் என்று பேதம் பாராட்டாமல், அத்வைதத்தில் மாயை என்று தள்ளுகிற ஜகத்தைப் பரமாத்மாவின் சரீரம் என்றும் உடைமை என்றும் இங்கே சொல்கிறார். நிர்குணப் பிரம்மம் எதிலும் ஸம்பந்தப் படாதாகையால் அத்வைதத்தில் சரீர-சரீரி, சேஷ-சேஷி என்று இரண்டை ஸம்பந்தப்படுத்திச் சொல்கிற பா வங்களுக்கு இடமில்லை. ஆனால் வியவஹார தசையில் ஜனங்கள் இருக்கிற நிலையிலிருந்து ஜகத்தைப் பார்த்து இங்கே ஜகத் என்பது சரீரமாகவும் அதற்கு அந்தர்யாமியான பரமாத்மா சரீரியாகவும் இருப்பதாக விசிஷ்டாத்வைதம் மாதிரிச் சொல்லியிருக்கிறார்.

இந்த சேஷ-சேஷீ பா வம் " உபய ஸாதாரண "மானது என்கிறார். உபய ஸாதாரணத்வம் என்றால் இரண்டு பேருக்கும் ஸமமானது என்று அர்த்தம். இருவரும் ஸமம் என்பதை ஐந்து விதத்தில் காட்டுவதால்தான் சாக்தத்தில் 'ஸமயம்'என்றே ஸித்தாந்தம் இருக்கிறது. இரண்டு பேருக்கும் ஒரே வாஸ ஸ்தானம், ஒரே மாதிரி ரூபம், ஒரே தொழில், ஒரே மாதிரி நிலை, பேர்கூட ஒரே மாதிரி (சிவன்-சிவா, பைரவர்-பைரவி) இப்படி ஐந்து வித ஸமத்வம். அவற்றோடுகூட பரஸ்பர சேஷ-சேஷீ பா வத்தாலும் ஆசார்யாள் ஸமத்வம் காட்டியிருக்கிறார்.

நிர்குண ப்ரஹ்மமாக சிவனை வைத்து உயிராகச் சொல்லும்போது ஸகுண ப்ரஹ்மமான அம்பாளே தன் ஸர்வாங்கங்களிலும் ஸகல நாடி நரம்புகளிலும், நக சிகா பர்யந்தம் அந்த உயிர் ஓடுகிற உடம்பு. நம் எல்லார் விஷயத்திலும் உடம்பை உயிர் விட்டுவிட்டு ஒருநாள் போய்விடுகிற மாதிரி இங்கே கிடையாது. சைதன்ய ரஸமே பூரா பூரா பரவியிருக்கிற அந்த அம்பாள் என்ற சரீரத்திற்கு

அழிவேயில்லாததால் அதை விட்டு உயிராகவுள்ள சிவம் பிரிந்து போவதேயில்லை. பரமேச்வரனுக்கு அம்பாள் உடம்பாக மாத்திரமில்லாமல் உடம்பின்மேலே பிரிக்க முடியாமல் சாத்தியுள்ள கர்ணகவசம் மாதிரியும் இருக்கிறாள்.

வெளியிலே தெரிகிற உடம்பு மாதிரி வெளியே தெரிகிற ஜகத். மனஸ் உள்ளமட்டும் ஜகத் தெரியத்தான் செய்யும். மனஸ் வேலை செய்யாத தூக்கத்தில், மயக்கத்தில், ஸமாதியில் ஜகத்தே இல்லை;ஜீவ லோகத்து இந்திரிய வியாபாரங்களும் இல்லை. அப்போது எது சரீரம், யார் சரீரி?சேஷம் எது, சேஷீ எது?தூக்கத்திலும் மயக்கத்திலும் ஒன்றுமே தெரியவில்லை என்பதால் த்வைதமாக இரண்டு இருக்கவில்லை. ஸமாதி நிலை அடைந்து மனஸே இல்லாத ஸ்திதியில் இருக்கிற ஞானிக்கோ மனோ வியாபாரமில்லாததால் ஜகத், அதை நடத்துகிற சக்தி இரண்டும் இல்லை;ஜீவாத்மா என்ற உடைமையைப் பரமாத்மா என்ற உடைமையாளன் ஆள்கிறதாகவும் இல்லை!இப்படி இரண்டு பேர் ஸம்பந்தப்பட்டிருப்பதை அறியவும் மனஸ் இருந்தால்தானே முடியும்?அதுதான் போய்விட்டதே!அவன் தூக்கம், மயக்கம் மாதிரி ஒன்றும் இல்லாத நிலையிலிருக்கிறானா என்றால் அதுவும் தப்பு. அது ஒன்றும் இல்லாத நிலை இல்லை;ஒன்றேயான நிலை-என்றுதான் ஆசார்யாள் அத்வைதத்தை ஸ்தாபித்திருக்கிறார்.

ஆனால் அந்த ஞானி தவிர மற்ற எல்லார் அநுபவத்திலும் இருக்கிற மனஸிலிருந்து ஆரம்பித்து பஞ்ச பூதங்கள் முடிய இருக்கிற எல்லாவற்றையும் அம்பாள் மயமாகப் பார்ப்பதற்கு அவர்களுக்குப் பழக்கித் தருகிறார். இதற்கு ஆரம்பமாகத்தான் பிரம்மம் உயிர் என்றால் ஜகத்து உடம்பு என்று வைத்துக்கொள் என்றார். ஜகத்தை அம்பாள் என்றார்.

த்வைதத்துக்குக் காரணமாயிருக்கிற மனஸையும் அம்பாளேதான் என்கிறார். அடுத்த ச்லோகத்தை இப்படித்தான் ஆரம்பிக்கிறார். மனஸ்-த்வம்.

'ˆõ‹'- c;'ñùv'- ñùñ£è Þ¼,Aø£˜. 'Ü‹ñ£, Þ‰î ñùv - Þˆî¬ù ,¼ˆKñƒèÀ,°‹ àðˆóõƒèÀ,°‹ è£óíñ£J¼,Aø õv¶ - Þ¶¾‹ cî£¡'.

'அம்மா, நீ யார்?என்று நான் கேட்டால், இந்தக் கேள்வி எங்கே எழும்புகிறது?என் மனஸில்தானே?அதுவே நீ தான்!

ஞானத்தில் போனால் மனோ நாசம். இங்கேயோ மனஸே அம்பாள் என்று தெரிந்து கொள்ளப் பழக்கிக்கொள்வது!இதையே நினைக்கப் பழக்கிக் கொள்வதில் அது வேறு ஒன்றையும் நினைத்து க்ருத்ரிமம் பண்ணவும் உபத்ரவத்தை வரவழைத்துக் கொள்ளவும் இடமில்லாமல் பண்ணிவிடுவது!அவளே அப்புறம் மனஸ் இல்லாத இடத்துக்குக் கொண்டு போய்விடுவாள். அதைப் பரவெளி, ஞான ஆகாசம் என்கிறது.

"அது இப்போது தெரியல்லையே!"அதனால் பரவாயில்லை. இப்போது வானவெளி, நீல ஆகாசம் என்று ஒன்று விசாலமாகத் தெரிகிறதோல்லியோ?இதுவும் அம்பாள்தான் என்று பார். மனஸூம் அந்த ஆகாசம் மாதிரி விரிந்து, திறந்து போட்டாற்போலாகி விடும்.

வ்யோம த்வம்

"ˆõ‹ - c«ò; 'š«ò£ñ'- Ýè£ê‹.

'Ýè£ê‹ ñ†´‹ î£ù£?ð…ê Ìîƒèì‹ cî£¡. Ýè£êˆ¶,° Ü´ˆîî£è Þ¼,Aø«î ñ¼ˆ, Üî£õ¶ õ£», Ü¶¾‹ cî£ù‹ñ£!'

மருத்துக்குப் பிள்ளையானதால்தான் வாயுகுமாரன் என்கிற ஆஞ்ஜநேயருக்கு 'மாருதி'என்று பேர் இருக்கிறது.

மருத் அஸி 'வாயுவுக்கு அடுத்ததான அக்னி மட்டும் என்ன?உன் இன்னொரு ரூபம்தான். 'அக்னி வர்ணமாயிருப்பவள், தபஸால் ஜ்வலிப்பவள்'என்று உன்னை வேதமே சொல்கிறதே!'

மருத் ஸாரதி : அஸி

அக்னிக்கு வாயு ஸாரதி. காற்று அடிக்கிற போக்கில் தானே நெருப்பு பரவுகிறது?மருத்தை ஸாரதியாகக் கொண்டதால் அக்னி மருத்ஸாரதி.

**த்வம் ஆப : , த்வம் பூமி :**

'ஜலமும் நீதான்!நாங்கள் வாழ்கிறோமே, அந்த ப்ருத்வியும் நீதான்!'

மூலாதாரத்திலிருந்து விசுத்தி வரையில் உள்ள ஐந்து குண்டலிநீ சக்ரங்களில் அம்பாள் ப்ருத்வி முதல் ஆகாசம் வரையான பஞ்ச பூதங்களாக இருக்கிறாள்;அதற்கு மேலே ஆஜ்ஞை என்ற சக்ரத்தில் மனஸாகவும் இருக்கிறாள். 'மஹீம் மூலாதாரே'என்ற (9-ம்) ச்லோகத்தில் இதைச் சொன்னார்.

'சும்மா வளர்த்தி வளர்த்திச் சொல்வானேன்?நீயில்லாத வஸ்து ஒன்றுமேயில்லை;த்வயி பரிணதாயாம் ந ஹி பரம்.'

'பரிணதாயாம்'என்பதால் அம்பாளே எல்லாமாகப் பரிணமித்ததாகச் சொல்கிறார். 'ந ஹி பரம்'என்றால் 'உனக்குப் பரமாக - வேறாக - எதுவுமே கிடையாது'என்று அர்த்தம்.

இதுவரைக்கும் சொன்னதெல்லாம் ச்லோகத்தின் முதல் இரண்டு வரிகள்.

மநஸ்-த்வம் வ்யோம த்வம் மருதஸி மருத்ஸாரதிரஸி

த்வமாபஸ்-த்வம் பூமிஸ்-த்வயி பரிணதாயாம் ந ஹி பரம்

பின் இரண்டு வரிகளில், "உன்னையே பிரபஞ்ச சரீரமாகப் பரிணமிக்கப்

பண்ணுவதற்காக நீயேதான் பரமேச்வர பத்னி என்கிற பா வத்தில் ஞானாநந்த ஸ்வரூபத்தை எடுத்துக் கொள்கிறாய்"என்கிறார்.

த்வம் ஏவ ஸ்வாத்மாநம் பரிணமயிதும் விச்வ வபுஷா

சிதாநந்தாகாரம் சிவயுவதி பாவேன பிப்ருஷே ||

ஸத்-சித்-ஆனந்தம் என்பதுதான் பரிபூர்ணாநுபவம். சிவன் வெறுமே 'ஸத்'தாக இருந்து கொண்ட மாத்திரம் இல்லாமல், சித்தாக, ஞானமாக அறிந்து கொண்டும், ஆனந்தமாக அநுபவித்துக் கொண்டும் இருப்பதைத்தான் அம்பாளின் கார்யம் என்று முதலிலிருந்து சொல்லிக் கொண்டு வந்திருக்கிறோம். 'சிதானந்த லஹரி'என்றே ஓரிடத்தில் (ச்லோ-8) வந்தது. இப்படித் தத்வங்களாக 'ஸத்'என்று ஒன்று, 'சித்' என்ற ஒன்று, இரண்டும் சேர்ந்து ஆனந்தம் என்பதைத்தான் சிவன் என்றும் சிவபத்னி என்றும் இரண்டு சேருவதாகச் சொன்னோம். இங்கே சிவயுவதி என்பதற்கு சிவபத்னி என்றே அர்த்தம். சித்விலஸத்து ஆனந்தம் ஏற்பட்டதற்கும், அது சிவபத்னியானதற்கும் என்ன காரணம் என்று இங்கே சொல்கிறார். என்ன காரணம்?

த்வம் ஏவ ஸ்வாத்மாநம் பரிணமயிதும் விச்வ வபுஷா

"உன்னையே நீ விச்வ ரூபமாகப் பரிணமித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் - இதுதான் காரணம்;இந்தக் காரணத்துக்காகத்தான் நீ சிவ பத்னி பா வத்தில் சிதாநந்த வடிவத்தை எடுத்துக் கொண்டாய்"

'பிரம்ம ஸ்வரூபம் தன்னை அறிந்து கொண்டு ஆனந்தித்தது தன்னில் தானாக முடிந்து போவதற்கில்லை;தன்னைவிட வேறு மாதிரியான விச்வமாகப் பரிணமிக்க வேண்டும் என்றே அது சித்தத்தையும் ஆனந்தத்தையும் அடைந்தது'என்று இங்கே சொல்வது அப்படியே சாக்த ஸித்தாந்தந்தான் - அதாவது அத்வைதத்தில் சொல்லாத, இல்லாத அபிப்ராயம். விச்வ ஸ்ருஷ்டி என்பது அத்வைதத்தில், "அதென்னமோ, மாயையாலே உண்டானது. எப்படி, ஏன், எதுக்காக என்றால் ஒண்ணும் சொல்றதுக்கில்லை. இதை மாயைன்னு தள்ளிப்பிட்டு ஆதாரத்திலே ஒடுங்கறதுதான் கார்யம்-ங்கிறபோது, இது எப்படி, எதுக்காக வந்தது-ன்னு என்ன ஆராய்ச்சி?"என்று முடிந்துவிடுகிற விஷயம். சாக்தம் முதலான பக்தி ஸம்ப்ரதாயங்களில்தான் விச்வ கல்பனைக்குக் காரணம் சொல்வது. ஒரே சித்- பேரறிவு - பல

சிற்றறிவுகளாகவும், அந்த ஒரே ஆனந்தம் - பேரானந்தம் - பல சின்ன ஆனந்தங்களாகவும் ஆதி நாடகம் போட்டு விளையாட்டுப் பார்ப்பதற்குத்தான் விச்வ ஸ்ருஷ்டி என்று அவை சொல்லும். நாடகத்தையே முழு நிஜம் என்று நாம் நினைக்கிறபோது மாயையில் முழுகி வீணாகப் போய் விடுகிறோம். இந்த மாயா ஜகத்தக்குள்ளேயும் முழுக்க சிதானந்த ரஸமே ஒடுகிறது;ஸத்தான ஆதாரத்திற்குப் பத்னி ஸ்தானத்தில் 'சிவயுவதி'என்கிறாரே, அப்படி!'அவள் விளையாட்டு ஆனந்தம், நாடகம் பார்க்கிற ஆனந்தம், சக்தி விலாஸத்தைப்

பார்க்கிற ஆனந்தம் பெறவே இந்த ஸ்ருஷ்டி'என்று புரிந்து கொண்டு பார்த்தோமானால் நாமும் அதை விளையாட்டாக, நாடகமாக, பராசக்தியின் அற்புத கல்பனையின் பரிணாமமாகப் பார்த்துப் பார்த்து, அப்படியே அந்த சிதானந்தத்தில் ஊறி ஊறி ஸத்தில் ஐக்யப்பட்டு விடுவோம்.

ச்லோகத்தில், 'த்வயி பரிணதாயாம் ந ஹி பரம்' (விச்வமாகப் பரிணமித்த உன்னையன்றி வேறு எதுவும் இல்லை), த்வமேவ ஸ்வாத்மாநம் பரிணமயிதும் விச்வ வபுஷா'(விச்வம் என்ற ரூபத்தில் உன்னையே நீ பரிணமிக்கச் செய்வதற்கு) என்று இரண்டு இடத்தில் பரிணாமத்தைச் சொல்லியிருக்கிறார். அத்வைதத்தில் பரிணாமம் கிடையாது. பால் தயிராகிறதுபோல ஒன்று இன்னொன்றாக மாறுவது பரிணாமம். ப்ரம்மம் இப்படிப் பரிணமிப்பதாக அத்வைத சாஸ்த்ரம் சொல்லாது. ஒரு மாறுதலுமில்லாத ப்ரம்மம்தான் மாயையால் ஜகத் மாதிரிப் பொய்த் தோற்றம் காட்டுகிறது என்றே அது சொல்லும். ஸாங்க்யந்தான் ஜகத்தை ப்ரக்ருதியின் பரிணாமமாகச் சொல்வது. அதுவும் புருஷனே பரிணமித்ததாகச் சொல்லாமல், ப்ரக்ருதியின் பரிணாமம் என்றே சொல்கிறது. இங்கே அந்த tenet-தான் ஆசார்யாளும் சொல்லியிருக்கிறார். சாக்த தந்த்ரம் அதற்குக் கொடுத்துள்ள ரூபத்தையே தாமும் எடுத்துக் கொண்டு சொல்லியிருக்கிறார்.

வெவ்வேறு மனோபாவம் கொண்ட ஸமஸ்த ஜனங்களின் அபிவிருத்தியையும் உத்தேசித்து ஆசார்யாள் தம்முடைய ஸ்தோத்ர கிரந்தங்களில் எவ்வளவு தூரம் அத்வைதத்தை விட்டுக்கொடுத்துப் பேசுகிறார் என்று 'ரிஸர்ச்'பண்ணினால்

ஸ்வாரஸ்யமாக நிறையக் கிடைக்கும். 'ஆசார்யாள் இப்படிப் பண்ணியிருப்பாரா?'என்று கேட்டால், 'பரம கருணாமூர்த்தியான ஆசார்யாள் தான் இப்படிப் பண்ண முடியும்'என்று பதில் சொல்லத் தோன்றுகிறது!

கௌலம் என்று சாக்தத்தில் சொன்னேனே, அதில் ஒரு பிரிவின் ஸித்தாந்தப்படி 'சிவயுவதி'என்பதற்கு வ்யாக்யானங்கள் செய்திருக்கிறார்கள் - (அதாவது) 'சிவயுவதி'என்றால் சும்மா சிவன் பெண்டாட்டி, அவருடைய Mrs என்பதில்லை;சிவ தத்வத்தையுமே தனக்குள்ளே அடக்கிக்கொண்டு சிவமே யுவதி பா வத்தில் இருப்பதுதான் இங்கே சொல்லும் சிவயுவதி என்று. 'ஸ்வாதீந வல்லபா'என்று ஸஹஸ்ரநாமத்தில் இருக்கிறது. பதியைத் தன்னுடைய ஆதீனத்தில் வைத்துக் கொண்டிருப்பவள் என்று அர்த்தம். அதை இன்னும் கொஞ்சம் நீட்டினால் அவரே அவளுக்குள் அடக்கம் என்றாகிவிடும். 'ந ஹி பரம்'- அவளன்றி வேறில்லை - என்று ஆசார்யாள் சொல்வது நம் நினைப்பில் ஸ்திரப்படுவதற்கு இப்படியெல்லாம் சொல்வது ஸஹாயம் பண்ணும்.

நினைப்பு மனஸில் உண்டாவது. அந்த மனஸே அவள்தான் - மனஸ்த்வம் என்று ஆரம்பித்திருக்கிறார். அனர்த்த பரம்பரை அத்தனைக்கும் ஜன்ம ஸ்தானமான மனஸையே இப்படி அம்பாள் என்று நினைக்கப் பழகிவிட்டால் நாம் ராஜாதான். மாயையை ஜயித்து ஆத்ம ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணிக் கொள்ளக்கூடிய

ராஜாதான். மனஸை உள்முகப்படுத்தணும், உள்ளே ஒடுக்கி ஒடுக்கி ஒழித்துவிடணும் என்றெல்லாங்கூட இல்லை. அது வெளிமுகப்பட்டே லோகத்தைப் பார்த்தாலும், இந்த பஞ்சபூத லோகம் பூராவும், "வ்யோமஸ்த்வம்"- "ஆகாசம் நீதான்", "மருதஸி"- "வாயு நீதான்", "மருத் ஸாரதிரஸி"- "அக்னி நீதான்"; 'எல்லாமே நீதான், உன்னுடைய பரிணாமமில்லாமல் எது ஒன்றும் இல்லவே இல்லை - த்வயி பரிணதாயாம் நமஸ்காரம் ஹி பரம் என்று அம்பாள் மயமாகப் பார்த்துக் கொண்டு, பார்த்துக் கொண்டு, பார்த்து அநுபவிக்கிற மனஸூம் அவளே என்று இருந்தோமானால், அப்படியே போய்ப் போய் நமக்கும் அவளுடைய சிதானந்த அநுபவமே

இந்த ஸ்ருஷ்டி நாடகத்திலுங்கூட உண்டாகிவிடும். நம்முடைய சிற்றறிவு பேரறிவான அந்த சித்தத்திலும், நாம் அடைகிற சிற்றின்பங்கள் அந்த பேரின்பமான ஆனந்தத்திலும் ஐக்யமாகி சிதானந்த ஸ்வரூபமாகவே ஆகிவிடுவோம். அது ஸத்தான சிவனுக்குப் பத்னி ஸ்தானமானதால் சிவயுவதியாகி அவனோடேயே ஐக்யமாகி ஸச்சிதானந்த கனம் என்று ப்ரஹ்மமாகி விடுவோம். அதற்கு மேலே என்ன இருக்கிறது?

பரோடா ஸம்ஸ்தான ம்யுஸீயத்தில் ஸௌந்தர்ய லஹரி ஏட்டுச் சுவடி ஒன்று ப்ரதி ச்லோகத்திற்கும் சித்ரம் போட்டு இருக்கிறதென்றும் அதன் ஒரு காப்பி ஃபிலடெல்ஃபியா ஆர்ட் ம்யூஸியத்தில் இருக்கிறதென்றும் சொன்னது ஞாபகமிருக்கலாம். அதில் மூன்று ஏடுகளின் ஃபோட்டோவை பென்ஸில்வேனியா யூனிவர்ஸிடியில் ஸம்ஸ்க்ருத ப்ரொஃபஸராக உள்ள வெள்ளைக்காரர்நம் மெட்ராஸ்

யூனிவர்ஸிடி ஸம்ஸ்க்ருத ப்ஃரொபஸருக்கு அனுப்பி வைத்து 'க்ளாரிஃபிகேஷன்'கேட்டிருக்கிறார். அந்த ஏட்டில் ஒன்று சித்ரம் போடக்கூடிய காட்சியாக எதுவும் இல்லாததாகத் தோன்றும் இந்த 'மநஸ்த்வம்'ச்லோகத்திற்கும் சித்ரம் போட்டு காட்டுவதாக இருக்கிறது.

---



## இரு ச்லோகங்களின் ஸாரம்

இதுவரை நான் சொன்னது, ஒருவேளை சொல்லாமல் விட்டுப் போனது, எல்லாவற்றுக்கும் சேர்த்து ('சரீரம் த்வம்', 'மநஸ்த்வம்'என்ற) இந்த இரண்டு ச்லோகங்களின் gist (ஸாராம்சம்) என்னவென்றால்:அம்பாள்தான் ஈச்வரனின்

சரீரமாயிருக்கிறாள். சரீரம் என்றால் ஸ்தூலமானது மட்டுமில்லை. பரம ஸூக்ஷ்மமான மனஸூம் அதில் சேர்ந்ததுதான். ஒரு ச்லோகம் ரொம்ப ஸ்தூலமாக "சரீரம் த்வம்"என்று ஆரம்பிக்கிறது. இன்னொன்று "மனஸ் தவம்"என்று அதி ஸூக்ஷ்மத்தில் ஆரம்பிக்கிறது. இதை நம்முடைய மனஸ் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். அல்லது ஆகாசாதி பஞ்சபூதங்களுக்கும் காரணமாக அவற்றைக் கல்பித்த மஹத் என்ற மஹா மனஸ் என்றும் வைத்துக் கொள்ளலாம். அந்த மூலமான மனஸிலிருந்து ஸூக்ஷ்மமான ஆகாசம் உண்டாகிறது. அது மேலும் மேலும் ஸ்தூலமாகிக் காற்று, அக்னி, ஜலம், மண் எல்லாம் வந்தன. "இதெல்லாமும் நீதான்"என்கிறார். "நீ இல்லாமல் வேறு வஸ்து எதுவுமே இல்லை"என்கிறார்: **த்வயி பரிணதாயாம் நஹி பரம்** . "சம்பு என்ற உயிருக்கு நீ சரீரம் என்று சொன்னாலும், உயிர்- உடல் என்ற பேதமில்லாமல் ஒன்றாக இருந்ததும் நீதான். நீயேதான் விச்வம் என்ற சரீரமாகப் பரிணமித்தாய் - **த்வம் ஏவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வவபுஷா ".**

இங்கே ராமாநுஜ ஸித்தாந்தம் மாதிரி உயிர்-உடம்பு என்ற வித்யாஸம், அதாவது த்வைதம், த்வனித்தாலும் "சிதானந் தாகாரம்"என்று முடிப்பதால் எல்லாம் அத்வைதமாகி விடுகிறது. ஸச்சிதானந்தத்தில் என்னதான் ஸத்தைவிட்டுச் சிதானந்தங்களைப்பிரிகிற மாதிரிக் காட்டினாலும் மூன்றும் சேர்ந்து ஒன்றுதான். ஒரு தித்திப்பு பக்ஷணத்துக்கு ரூபம் இருக்கிறது. வாஸனை இருக்கிறது, ருசி இருக்கிறது என்றால் இந்த மூன்றில் ஒன்றை விட்டு ஒன்றைப் பிரிக்க முடியுமா?சிதானந்தம் என்று ஞான மூலமாயும், ஆனந்த மூலமாயும் சொல்லப்படும் அம்பாள் ஸத்தாகவும் இருக்கிற அத்வைதந்தான். மூலமான பரமஞானமும், பரமானந்தமும் ஸத் என்ற ஆதாரமில்லாமல் எப்படியிருக்க முடியும்?இந்த ஞானத்தையும் ஆனந்தத்தையும் வெளிப்பட அநுபவிக்கவே, அல்லது இந்த ஞான ஆனந்த அநுபவங்களை ஜீவ லோகக் குழந்தைகளும் பெறுவதற்காக வெளியிலே காட்டுவதற்கே, ஒன்றாக இருப்பவள் இரண்டு மாதிரி சிவயுவதி என்ற **பா** வத்தைத் தாங்கி சிவன் என்ற பதியோடு சேர்ந்திருக்கிறாள் என்கலாம். 'சிவயுவதி **பா** வேன'என்பதால் இது

பாவனைதான். வாஸ்தவத்தில் சிவனும் அவளும் ஒன்றுதான். விச்வ சரீரமும் அதன் உயிரான அம்பாளும் ஒன்றுதான். அந்த அம்பாளும், அவளையே சரீரம் மாதிரி ஆக்கிக் கொண்டிருக்கிற ஸத்தின் மூர்த்தியான அந்த சிவனும் ஒன்றுதான். அத்வைதம்தான்.

---



## சக்ரங்களில் சிவ-சக்தி

"மநஸ் த்வம்" ச்லோகத்துக்கு அப்புறம் அந்த மநஸிலிருந்து ப்ருத்வி வரை உள்ள தத்வங்களாக அம்பாள் இருப்பதான குண்டலிநீ சக்ரங்களில் அந்த ஸதி-பதி எப்படியெப்படி இருக்கிறார்கள் என்பதைச் சொல்கிறார்.

ஒவ்வொரு சக்ரத்திலும் அவர்களுக்கு வேறே வேறே பேர், கார்யம், குணம் எல்லாம் சொல்லியிருக்கிறார். ஆனால் அத்தனைக்கும் பொதுவாக இருப்பது பரம காருண்யம். ஒன்றிலே "தபந-சசி-கோடி- த்யதி"என்பதாகக் கோடி ஸூர்ய -சந்த்ர ப்ரகாசத்தோடு தாங்கள் இருந்து கொண்டு பக்தனை ஸூர்யன், சந்த்ரன், அக்னி எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட மோக்ஷ ஸ்தானத்துக்குத் தூக்கி விடுகிறார்கள்.

இன்னொன்றிலே சுத்த ஸ்படிக ஸங்காசமாக இருந்து கொண்டு சந்த்ரிகை மாதிரி ஜிலுஜிலுப்பைப் பொழிகிறார்கள் - அக இருள் என்கிறார்களே, அந்த அஞ்ஞானத்தைப் போக்குகிற சந்திரிகை!சந்திர கிரணங்களைச் சகோரம் என்ற பக்ஷி சாப்பிடுகிறார்போல உபாஸகர்கள் அதைச் சாப்பிடுகிறார்களாம். அப்புறம் இன்னொரு சக்ரத்தில் ஸ்வாமியும் அம்பாளும் ஹம்ஸ தம்பதியாக இருப்பதாகச் சொல்கிறார். ஹம்ஸர், பரமஹம்ஸர் என்றால் ஸந்நியாஸி, ஞானி, அத்வைத ஸித்தர்கள் என்ற அர்த்தத்தை இங்கே பொருத்திக் கொள்ள வேண்டும். அவர்களிருக்கும்

சக்ரந்தான், ப்ரணவம் தானாகவே பிறக்கிற அநாஹத சக்ரம். ப்ரணவந்தானே ஸகல சப்தங்களுக்கும் மூலம்?அதனால் இந்த ஹம்ஸ தம்பதிகளின் ஸம்பாஷணையே அஷ்டாதச வித்யா ஸ்தானங்களாக ஆயிற்று என்கிறார். (வேதங்கள் நாலு, அதன் அங்கங்கள் ஆறு, உபாங்கங்கள் நாலு, இதுவரைக்கும் மொத்தம் பதினாலு;இதோடு நாலு உபவேதங்கள் சேர்ந்தால் அந்தப் பதினெட்டில் மத சாஸ்திரம் முழுக்க அடங்கிவிடும். அவற்றைத்தான் அஷ்டாதச வித்யாஸ்தானம் என்பது.) ஹம்ஸங்கள் பேசிக் கொள்வதிருக்கட்டும். அவை நீந்தத் தடாகம் வேண்டுமே!ஹிமய உச்சியிலுள்ள மானஸ ஸரஸில் ஸாதாரண ஹம்ஸங்கள் நீந்துமென்றால் இந்த திவ்ய ஹம்ஸ தம்பதி மஹான்களின் மனஸான மானஸத்தில் நீந்துகிறார்களாம். 'மானஸம்'என்றால் 'மனஸுக்குரியது'என்றே அர்த்தம். ஹம்ஸம் பத்மத்தில் ஊறும் தேனைக் குடிக்கிற மாதிரி இந்த ஹம்ஸ ஜோடி ஞானத் தாமரையில் ஊறும் ப்ரஹ்மானந்தத் தேனைக் குடிக்கிறார்களாம். ஹம்ஸத்திற்கு ஒரு அத்புத சக்தி சொல்வதுண்டு;பாலில் ஜலத்தைக் கலந்து வைத்து விட்டால் அது ஜலத்தைப் பிரித்துப் பாலை மட்டுமே குடிக்குமாம். அப்படி இந்த தம்பதி நாம் பண்ணுகிற தப்பை எல்லாம் ஜலமாகப் பிரித்து ஒதுக்கிவிட்டு நல்லதையே பாலாக நினைத்து ஸ்வீகரித்துக் கொண்டு அநுக்ரஹம் பண்ணுவார்களாம். 'நமக்குப் பால் வார்த்தாளே!'என்று தப்பையெல்லாம் மறந்து, அநுக்ரஹம் செய்வது!ஆனால் முழு ஜலமாகவே, அழுக்கு ஜலமாகவே வைத்தால் அவர்களுக்கு அத்தனை தயை இருந்துங்கூட என்ன பண்ண முடியும்?

ஒரே மாதிரியாகவே அந்த ஸதி-பதி பண்ணினாலும் ஒரு சக்ரத்தில் மட்டும் "என்னதான் இருந்தாலும், தான் அம்மா;தன் கருணை ஸ்வாமிக்கு வராது' என்று அம்பாள் காட்டுகிறாள். பஞ்ச பூதங்களில் அக்னிக்கான அந்த சக்ரத்தில் அவர் அக்னி நேத்ரத்தைத் திறந்து ஸம்ஹாரம் பண்ணுகிறார். அப்போது அந்த அம்மாவோ 'தயார்த்ராத்ருஷ்டி'என்பதாக தயையினால் அப்படியே குளிர்ந்திருக்கும் பார்வையாலே லோகத்திற்கு

சைத்யோபசாரம் (குளிர்விக்கும் உபசாரம்) செய்கிறாள்!"அப்பா இந்த அம்மாவுக்கு ஸமமாவாரா?"என்று நாம் நினைக்கிற இங்கேதான் அவளுக்கு 'ஸமயா'என்ற பெயரை போட்டு வேடிக்கை பண்ணியிருக்கிறார். வேடிக்கையிலேயே பரம தத்வம்!அவர்கள் இரண்டு பேரும் வெளியிலே எத்தனை வித்யாஸமாயிருந்தாலும், உள்ளே ஒன்று தான, ஸமந்தான் என்று அந்தப் பேரால் காட்டுகிறார். அப்புறம் ஸ்வாமியே ஒரு சக்ரத்தில் குளிர் மேகமாக இருக்கிறார். ஸம்ஹரித்த லோகத்தை மறுபடி ஸ்ருஷ்டி பண்ணுவதற்காக ப்ரளயாக்னியை அணைக்கும் மழை மேகமாக அங்கே ஸ்வாமி இருக்கும்போது அந்த மேகத்தில் ஜ்வலிக்கும் மின்னலாக அம்பாள் இருக்கிறாள்.

இப்படி ஐந்து சக்ரங்களில் சிவ-சக்திகளைச் சொல்லி ஆறாவதான ப்ருத்வீ தத்வமான மூலாதார சக்ரத்தோடு 'ஆனந்த லஹரி'என்ற பாகத்தை முடித்திருக்கிறது. மூலாதார தத்வமான மஹா கணபதியோடுதான் ஆரம்பிப்பது வழக்கம். இங்கே அதுவே முடிவாக இருக்கிறது. ஆரம்பமும் முடிவும் ஒன்றானால் அதுதான் அத்வைதம்!அந்த ச்லோகத்தை (ச்லோ.41) சொல்கிறேன்.

---



**ஜனக - ஜனனி**

**தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்ய-பரயா**

**நவாத்மாநம் மந்யே நவரஸ - மஹாதாண்டவ-நடம் |**

**உபாப்யாம் ஏதாப்யாம் உதய - விதிம் உத்திச்ய தயயா**

**ஸநாதாப்யாம் ஜஜ்ஞே ஜநக- ஜநநீமத் ஜகத் இதம் ||**

((தவ) உனது (ஆதாரே மூலே) மூலாதார சக்ரத்தில் (லாஸ்ய பரயா) (பெண்பாலருக்குரிய) லாஸ்யம் எனும் நடனத்தில் ஈடுபட்டிருப்பவளும் (ஸமயயா ஸஹ) 'ஸமயா'எனப்படுபவளுமான உன்னுடைய உருவ பேதத்துடன் (நவரஸ மஹாதாண்டவ நடம்) (ஆண்பாலருக்குரிய) தாண்டவம் எனும் நடனத்தை நவரஸங்களுடன் மஹத்தான முறையில் ஆடுகின்ற (நவாத்மாநம்) ஆனந்த சிவனின் உருவ பேதத்தை (மந்யே) த்யானிக்கிறேன். (உதயவிதிம்) ஸ்ருஷ்டியை ஆரம்பிக்கும் முறைமையை (தயயா) தயையுடன் (உத்திச்ய) உத்தேசித்து (ஸநாதாப்யாம்) ஒருவருக்கொருவர் ஆச்ரயமான தம்பதியாக ஆன (ஏதாப்யாம் உபாப்யாம்) இந்த உங்களது ஜோடியால் (இதம் ஜகத்) இவ்வுலகு (ஜநக ஜநநீமத்) தந்தையும் தாயும் உடையதாக (ஜஜ்ஞே) ஆகிறது.

மூலாதாரம் என்ற அடிச் சக்ரத்தில் அம்பாளை ஸ்வாமியோடு ஆராதித்து முடிக்கிற ச்லோகம் ஸ்வாமியை 'நவாத்மானம்'என்று குறிப்பிட்டிருக்கிறது. அந்த திவ்ய தம்பதியைச் சேர்த்துச் சேர்த்துச் சொல்கிற ச்லோகங்களில் முதலாவதான 'சரீரம் த்வம் சம்போ:'வில் இதே நவாத்மா பேர் வந்தது. முடிவான ச்லோகத்திலும் அதையே திருப்பியிருக்கிறார். இங்கே அது மூலாதார சக்ரத்திலுள்ள ஈச்வரனின் ரூப பேதமான ஆனந்த பைரவரைச் சொல்வதாகும். இதோடு சக்ர ஸமாசாரம் பூர்த்தியாவதால் 'நவாத்மா'என்பதற்குக் காலம் முதலான நவ வ்யூஹம் உடையவர் என்பது மட்டுமில்லாமல் சக்ரங்கள் 6 ப்ளஸ் அவற்றில் இருக்கும் க்ரந்திகள் என்ற முடிச்சுகள் 3, இரண்டும் சேர்ந்த ஒன்பதற்கு ஆத்மாவாயிருப்பவர் என்றும் அர்த்தம் பண்ணலாம்.

இங்கே 'ஆனந்தபைரவ'ருக்கு ஸ்திரீ லிங்கமான (பெண் பாலான) ஆனந்தபைரவி என்ற பெயரோடு அம்பிகை இருக்கிறாள். அவருக்கு ஸமமானவளானதால் 'ஸமயா'என்ற பெயரை ஆசார்யாள் போட்டிருக்கிறார்.

'தவாதாரே மூலே'என்ற ஆரம்பம் proseorder-ல் 'தவ மூலாதாரே': 'உன்னுடையதான மூலாதாரத்தில் என்று

அம்பாளைப் பார்த்து ஆசார்யாள் சொல்வதாக ஆகும். 'ஸமயயா ஸஹ'என்றால் 'ஸமயாம்பாளான ஆனந்தபைரவியுடன்'. அவளுக்கு லக்ஷணம் சொல்லியிருக்கிறது, 'லாஸ்யபரா'என்று. ஒருத்தர் த்யானத்தில் 'த்யானபரர்'என்கிறோமல்லவா?அப்படி 'லாஸ்யபரா'என்றால் லாஸ்யத்தில் பூரணமாக ஈடுபட்டவள் என்று அர்த்தம்.

'லாஸ்யம்'என்றால் பெண்கள் செய்கிற நாட்டியம். அது லளிதமாக இருக்கும். புருஷர்கள் ஆடுகிற நாட்டியம் கொஞ்சம் ஆர்ப்பாட்டமாக இருக்கும். அதற்குத்

தாண்டவம் என்று பெயர். நடராஜா தாண்டவம்;சிவகாம ஸுந்தரி லாஸ்யம். 'ந்ருத்தம்'என்கிற தாள விந்நியாஸமும் ஜதிபேத கதிபேதங்களும் தாண்டவத்தில் முக்கியம்.

லாஸ்யத்தில் **பா** வம், மனோ **பா** வம் முக்கியம்;அபிநயம் முக்கியம். இந்த இயல்புகளை ஒட்டியே அந்த நாட்டிய வகைகளை னீணீஉந்ஞ்றீவீஸீமீ, யீமீனீவீஸிவீஸீமீஎன்று (ஆண்பால், பெண்பாலாக) வைத்திருக்கிறார்கள். இதெல்லாம் பழைய நாளில்!இப்போது எல்லாமே னீணீஉந்ஞ்றீவீஸீமீ ஆகிக் கொண்டு வருகிறது!

பரமேச்வரனுக்கு 'மஹாநடன்'என்று பெயர். அமரகோசத்தில் 'மஹாகாலோ மஹாநட:'என்று வருகிறது. அவர் ஆடாவிட்டால் இந்த உலகம் ஆடாது, அசையாது. இது அழியவேண்டுமானால் அதற்கும் அவர் ஸம்ஹாரத் தாண்டவம், ஊழிக்கூத்து என்று 'டான்ஸ்'ஆட வேண்டியிருக்கிறது!அவரை அசைப்பதே அம்பாள்தான் என்று முதல் ச்லோகத்திலேயே சொல்லி விட்டபடியால் அவள் இப்படி அமர்க்களமாக ஆடுகிறார் என்பதும் அவள் காரியந்தான் என்று ஏற்படுகிறது. அவரை ஆர்ப்பாட்டமாக ஆடவிட்டுவிட்டு, அவளும் வந்து கூடச் சேர்ந்து பரம கோமளமாக லாஸ்ய நடனம் செய்கிறாள். நாம் வெளி லோகத்தில் கையால் காலால் ஆடுவது ஓடுவது;உள்ளுக்குள்ளே எந்த பா வம் ஏற்பட்டாலும், கோபமோ சோகமோ காமமோ எது வந்தாலும் அதற்கேற்றபடி நம் நாடி நரம்புகள் ஆடுவது எல்லாவற்றுக்கும் காரணம் இப்படி அந்த அகமுடையான் பெண்டாட்டி ஆடுகிற ஆட்டம்தான். சோகம் வந்தால் கண்

ஏன் துடிக்க வேண்டும்?கோபம் வந்தால் உதடு ஏன் துடிக்க வேண்டும்?நம் எல்லோருக்குள்ளும் அந்தர்யாமியாகப் பரமேச்வரன் தானே இருக்கிறான்?அவன் நவரஸங்களோடும் ஸம்பந்தப்படுவது போல ஆடுதால்தான் நமக்கு இந்த ஆட்டங்கள் ஏற்படுகின்றன. இதெல்லாம் பா வப் பிரதானமான லாஸ்யத்தைச் சேர்ந்தது;ஆகையால், பரமேச்வரன் அம்பாளின் லாஸ்யத்தோடு ஸம்பந்தப்பட்டு நவரஸங்களைக் காட்டுகிற நிலையைச் சேர்ந்தது. பா வம் இல்லாமல், அநேக ஆட்டங்கள் இயற்கையில் இருக்கின்றன லோகங்கள் எல்லாம் அததன் அச்சில் தன்னைத்தானே சுற்றிக் கொண்டு ஆடுகின்றன. கிரஹங்கள் ஸூரியனைச் சுற்றி டான்ஸ் பண்ணிக் கொண்டு வருகின்றன. காற்று அடிக்கிறதே அது ஒரு டான்ஸ். நெருப்பு தலையை விரித்துக் கொண்டு கொழுந்துவிட்டு பரவுகிறது ஒரு டான்ஸ். ஜலம் வெள்ளமாகப் பாய்கிறதும் டான்ஸ். இதெல்லாம் பா வம் சேராத தாண்டவம். ஆனால் இவற்றால் நம்மிடம் பல பா வங்கள், ரஸாநுபவங்கள் உண்டாகின்றன. தென்றல் அடித்தால் ஸந்தோஷமாயிருக்கிறது. அதே காற்று புயலானால் பயமாயிருக்கிறது. புயல் நம்மை பாதித்தும்விட்டால் ஒரே அழுகை, சோகம் உண்டாகிறது. சந்திரன் அதுபாட்டுக்கு என்னவோ நிலாவைக் கொட்டிக் கொண்டிருந்தாலும், நிலாவினால் தான் விரஹம், அது, இது என்று கவிகள் பெரிசாகக் கட்டுகிறார்கள். ஆகவே தாண்டவமும் லாஸ்யமும் சிவ-சக்திகள் மாதிரிப் பரஸ்பர ஸம்பந்தப்பட்டுத்தான் இருக்கின்றன.

இந்த ச்லோகத்தில் இதைத்தான் சொல்லியிருக்கிறது. லாஸ்யபராவான ஸமயாவோடு ஆனந்தபைரவ மூர்த்தி நவரஸ பரிதமான மஹா தாண்டவ நாட்யமாடுகிறார் என்று சொல்லியிருக்கிறது.

'ñ«ý,,õó ñý£è™ð ñý£ î£‡ìõú£VE'â¡Á (ôLî£)

ஸஹஸ்ரநாமத்தில் பெயரிருக்கிறது. ஆனால் அங்கே சொன்னது ஸம்ஹார தாண்டவம்;இங்கே அங்கே சொன்னது ஸம்ஹார தாண்டவம்;இங்கே சொல்வது ஸ்ருஷ்டி தாண்டவம். அங்கே ஸ்வாமி அப்படி ஸம்ஹார தாண்டவம் ஆடும்போது அம்பாள், தாயாரில்லையா?அதனால் - அதை வெறுமே ஸாக்ஷிமாத்ரமாகப் பார்த்துக் கொண்டு

மட்டுமிருக்கிறாள். ஸ்ருஷ்டி நாட்யத்தின்போதோ தானும் பதியின் தாண்டவத்தோடு கூடச் சேர்ந்து தன்னுடைய பங்காக லாஸ்யம் பண்ணுகிறாள்.

'ஸாக்ஷிணீ'- ஸாக்ஷியாய் பார்த்துக்கொண்டு மாத்திரமிருக்கிறாள் - என்று ஸஹஸ்ரநாமம் சொன்னாலும், அந்த ஸம்ஹாரத்தின்போதுகூட அவர் அக்னி ப்ரவாஹமாகப் பொங்கவிட்டுப் பொசுக்கும்போது அவள் அருள் மழை பெய்து குளிரப் பண்ணுகிறாளென்றே ஆசார்யாள் சொல்வதாகச் சொன்னேன். அதனால் ஸம்ஹாரம் நடக்காமல் பண்ணிவிட்டார்களென்று அர்த்தமில்லை. லோக லீலையில் அதுவும் ஒரு அங்கமாக நடந்தாக வேண்டுமென்று அவளேதான் திட்டம் போட்டு, அதற்கு ருத்ரனை அதிகாரியாக அப்பாயின்ட் பண்ணியது. அதனால் அங்கே குளிரப்பண்ணுவதென்பது, ஆபரேஷன் பண்ணும்போதே மயக்க மருந்து கொடுக்கிற மாதிரிதான். ராணுவம் சண்டைத் திட்டங்கள் போட்டுப் பண்ணுவதைக் கூட 'ஆபரேஷன்'என்றுதான் சொல்வது. அப்படி இது ருத்ரனுடைய ஸம்ஹார ஆபரேஷன்!

அப்புறம் மறுபடி ஸ்ருஷ்டி - அவரே ஆனந்த பைரவராகி ஆனந்த பைரவியான அம்பாளுடைய கோ-ஆபரேஷனோடு நாட்யமாடியே ஸ்ருஷ்டிப்பது!

'மூலாதாரத்தில் ஆனந்தபைரவ - ஆனந்தபைரவிகளின் தாண்டவ- லாஸ்யத்தைத் தியானம் செய்கிறேன்'என்கிறார். ஆனந்தபைரவி என்பது ராகத்தின் பெயராக இருக்கிறது. அது பாட்டு இங்கே ஆட்டமும் சேர்ந்திருக்கிறது.

ஆனந்தம் வந்தால்தான் ஆடுவது பாடுவது எல்லாம். வெள்ளைக்காரர்கள் குடித்து, குதித்து தீணீறீறீ பீணீஸீநீமீஎன்று ஆடுகிறார்கள். ஆனந்தப்படத் தெரியாத நாம் மூக்கைச் சிந்திப் போட்டுக் கொண்டுதானே இருக்கிறோம்?ஸாக்ஷாத் ஈச்வரனும் அம்பாளும் ஆனந்தப் பூரிப்பில் நாட்டியம் ஆடுகிறார்கள். அவர்கள் அப்படி இருக்கிறார்களே என்று நாம் ரொம்ப ஸ்வாதீனம் எடுத்துக் கொண்டுவிடக்கூடாது. அதனால் தான் ஆனந்தத்தோடு பைரவம் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். பைரவம் என்பது பயமுறுத்துவதை, கோபத்தை, உக்ரத்தை காட்டுவது, நம்மை நல்ல கட்டுப்பாட்டில் கொண்டு வருவதற்காக இப்படி!

பைரவ குணம் டெம்பரரிதான். ஆனந்தந்தான் அவர்களுடைய பெர்மனன்ட் குணம். பெரிய ஆனந்தம் என்ன?அன்பாயிருப்பதுதான். ஸர்வ பூத தயைதான் இந்த தம்பதியின் ஆனந்தம். 'தயயா'- தயையினால் என்று மூன்றாம் வரியின் முடிவில் வருகிறது.

தயையால் என்ன பண்ணுகிறார்கள்?லோக ஸ்ருஷ்டியைப் பண்ணுகிறார்கள். 'இது என்ன தயை?ஸ்ருஷ்டியால்தான் அத்தனை அனர்த்தமும். இதைப் பண்ணுவது தயையே இல்லை;க்ருரரந்தான்'என்று தோன்றலாம். அப்படியில்லை. இப்போது

ஸ்ருஷ்டி பண்ணாமல் இவர்கள் நிறுத்திவிட்டாலும் இதற்கு முன்னாடி ஸ்ருஷ்டி என்று எப்போதோ ஏற்பட்டு விட்டதே!ஒரு ஸ்ருஷ்டி முடிந்ததும் பிரளயத்தில் எல்லாருக்கும் ரெஸ்ட்;மறுபடி ஸ்ருஷ்டி. 'இப்படி மறுபடி பண்ண வேண்டாம் என்பதுதான் ஸ்வாமி, எங்கள் கட்சி'என்றால் அதில் இருக்கிற தப்பைச் சொல்கிறேன். ஏழு நாளானால் ஒரு வாரம், முப்பது நாள் ஒரு மாஸம் என்கிற மாதிரி, ஸ்ருஷ்டி காலம் என்றும் இத்தனை லக்ஷோபலக்ஷம் வருஷம் என்று ஒரு கணக்கு உண்டு. அது ஆனவுடன் ப்ரளயம் வந்தாகணும். இப்படி ஒரு குறிப்பிட்ட காலத்திலே ப்ரளயம் வருகிறதென்றால் ஸரியாக அந்த ஸமயத்திலேயே ஸகல ஜீவ ராசிகளுக்கும் கர்மாவெல்லாம் தீர்ந்து அவர்கள் மோக்ஷத்திற்கு அர்ஹராகி (அருகதை பெற்றவர்கள ாகி)யிருப்பார்களா என்ன?அதெப்படி ஸாத்யம்? ஒவ்வொரு ஜீவனும் ஒவ்வொரு தினுஸில் ஏராளமான கர்மா பாக்கியுடன் இருக்கறபோதேதான் ப்ரளயம் வருகிறது. வந்து, அது வெளிப் பார்வைக்கு க்ரூரமானதாக் தெரிந்தாலும், வாஸ்தவத்தில் பரம க்ருபை பண்ணுகிறது. என்ன க்ருபை என்றால், யாருக்கு எத்தனை வண்டி கர்மா பாக்கி இருந்தாலும் அதை கவனிக்காமல் மறு ஜன்மாக்களிலிருந்து விடுவித்து, ஸம்ஹாரம் என்ற பெயரில் ரெஸ்ட் கொடுக்கிறது. ஆனால் இந்த ரெண்டும் சாச்வத மோட்சமில்லை. போனால் போகிறதென்று ரொம்ப நீண்ட காலம் கொடுக்கிற ரெஸ்ட்தான். சாச்வத மோட்சம் ஜீவாத்மாக்களே புண்யம் பண்ணி, ஸாதனை பண்ணிக் கர்மாவைக் கழித்துக் கொள்ளும்போது ஈச்வரனும் ஒட்டிக்கு இரட்டியாகக் க்ருபை

காட்டி ஏற்பட வேண்டியதுதான். ஜீவனுக்கு அந்த யோக்யதை ஸம்பாதித்துக் கொள்ள சக்தி உண்டு என்று ஈச்வரன் நம்பி இப்படி வைத்திருக்கிறான். இது மநுஷ ஜாதிக்குப் பெரிய பெருமையில்லையா? அந்தப் பெருமையாய் புரிந்து கொள்ளாமல் கர்மா மூட்டையை பெருக்கிக்கொண்டு போகிறோம்;

ஓயாமல் ஜன்மா எடுக்கிறோம். அப்போதுதான் நாமாக ஸம்பாதித்துக் கொள்ளாத மோக்ஷத்திற்கு ஒரு ஸப்ஸ்டிட்யூட் மாதிரி ஈச்வரன் பரம கருணையோடு ப்ரளயத்தினால் ரெஸ்ட் தருகிறான். ஆனால் கர்மா, பாக்கி இருக்கிறதே, அதைத் தீர்த்துக் கொண்டாலொழிய சாச்வத மோக்ஷம் என்ற ப்ரஹ்மானந்தம் எப்படிக் கிடைக்கும்?அதற்காகத்தான் மறு ஸ்ருஷ்டி ஏற்படுத்துகிறான். அதுவும் நாம் கர்மாவைக் கழித்துக் கொண்டு ஆனந்தத்திற்கெல்லாம் மேலான மோக்ஷானந்தத்தை ஸாதித்துக் கொள்ள சான்ஸ் கொடுப்பதுதான். இப்படியொரு சான்ஸ் கொடுப்பது பரம கருணைதானே?

இதை உத்தேசித்துத்தான் ஆனந்த-பைரவ-பைரவிகள் தங்கள் நாட்டியத்தின் மூலமே மறு ஸ்ருஷ்டியை உண்டு பண்ணுகிறார்கள். ஜீவர்கள் கர்மாவைப் போக்கிக் கொண்டு மோக்ஷம் போக வாய்ப்புத் தரவேண்டும் என்றே பண்ணுவதால்தான் 'தயயா'என்று போட்டார். லோகத்தை உண்டு பண்ணும் தம்பதியானதால் ஜனக-ஜனனி நம் எல்லோருக்கும் அவர்கள் தந்தையும் தாயும் ஆவார்கள் என்று உறவு சொல்லி நம்மை அவர்களோடு அன்பில் கட்டிப் போடுகிறார்.

**உமாப்யாம் ஏதாப்யாம் உதய-விதிம் உத்திச்ய தயயா**

**ஸநாதாப்யாம் ஜஜ்ஞே ஜனக-ஜநநீமத் ஜகத் இதம் ||**

'ஏதாப்யாம், உபாப்யாம்'- இப்படிப்பட்ட தாண்டவ லாஸ்யங்களைச் செய்பவர்களான உங்கள் இரண்டு பேராலும்'; 'உதயவிதிம் உத்திச்ய' - 'உலகை மறுபடி

உதயம் செய்யும் முறையை உத்தேசித்து'('அந்த உத்தேசத்தை நீங்கள் காரியமாகவே பண்ணிவிட்டதால்'என்பது தொக்கி,

நிற்கிறது. ஸாக்ஷாத் பரதேவதையும் பரமேச்வரனும் ஒரு உத்தேசம் பண்ணிவிட்டால் அது நிச்சயம் காரியத்தில் பலிதமாகிவிடும். காரியத்தில் அது நடந்தது என்று சொல்ல வேண்டியதே இல்லை); 'இதம் ஜகத்'- 'இந்த லோகமானது'

(அதாவது ஸமஸ்தப் பிராணிகளும்) "ஜநக-ஜநநீமத்"- 'தந்தையும் தாயும் உடையதாக'; "ஜஜ்ஞே"- ஆகிறது.

"ஐயோ, ஸ்ருஷ்டியில் மாட்டிக்கொண்டோமே!மாயை இழுக்க ஆரம்பித்துவிடுமே! என்று பயப்படுகிற நம்மைப் பார்த்து ஆசார்யாள்
"பயப்படாதேயப்பா!அழாதேயப்பா!என்று ஆறுதல் சொல்லி "ஸ்ருஷ்டியை மட்டும் ஏன் பார்க்கிறாய்?பார்த்தால் பயந்தான். யார் ஸ்ருஷ்டி செய்தது என்பதை நினைத்துப் பார். அப்பாவும் அம்மாவுமாக ஈச்வரனும் அம்பாளுந்தான் இதை உண்டு பண்ணியிருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பார். தாய் தந்தை எங்கேயாவது கெடுதல் பண்ணுவார்களா?நம் நல்லதற்குத்தான் இதைச் செய்திருக்கிறார்கள். அவர்களை நினைத்தாயானால் கெட்டது நம்மைத் தொடாமல் ரக்ஷித்து நல்லதிலேயே சேர்ப்பார்கள். நீ நாதியற்று அநாதையாகக் கிடப்பதாக நினைத்தால்தான் உன்னை மாயை வந்து தாக்கும். உனக்கு பலமாக இருக்கிற பராசக்தியைப் பரமேச்வரனோடு சேர்த்துத் தாயும் தந்தையுமாகத் துணைக்கு இருக்கிறார்களென்று நினைத்துப் பார் மாயை ஓடிப்போய்விடும் . நீஅநாதன் இல்லை;அந்த மாதா-பிதாக்களை ரக்ஷகர்களாகக் கொண்ட ஸநாதன் நீ'என்கிறார்.

குழந்தைகளான நமக்கு மாதா பிதா என்று இரண்டு பேரும் இருப்பதாகச் சொன்னால்தான் நாம் ஸநாதர்கள் என்று தோன்றுகிறது. லோகத்தில் எப்படி இருக்கிறது?தகப்பனார் மட்டும் இருந்து அவர் என்ன சவரணையாகப் பார்த்துக் கொண்டாலும் தாயாரில்லாவிட்டால், ஐயோ பாவம், தாயில்லாக் குழந்தை'என்று அலாதியாக ஒரு பரிதாபம் உண்டாகத்தான் செய்கிறது. அதே மாதிரி அம்மா மட்டுமிருந்து எத்தனை வசதியாக பராமரித்தாலும், 'தகப்பனாரில்லாத அநாதைக் குழந்தை'என்ற பரிவு

ஏற்படுகிறது. "பராசக்தி என்றோ பரமேச்வரன் என்றோ ஏதோ ஒரு ரூபத்தில் பரப்பிரம்மம் லோகத்தை ரக்ஷிக்கிறது என்று சொன்னால் போதாதா? எதற்காக உமா-மஹேச்வரன், லக்ஷ்மி -நாராயணன், ராதா- கிருஷ்ணன், ஸீதா-ராமன் என்று இரண்டு பேரைச் சொல்ல வேண்டும்?'என்று கேட்பதற்கு இதுதான் பதில். நாம் எல்லாரும் குழந்தையானதால் ஜனக ஜனனி இரண்டும் வேண்டும். ஜனகன்-பிதா;ஜனனி-மாதா. இவர்களில் ஒருத்தர் இல்லாவிட்டாலும் அநாதை மாதிரிதான் தோன்றும். இரண்டு பேரும் இருந்தால்தான் 'ஸநாதர்'என்று அழுத்தமாகப்படும்.

ச்லோகத்தில் 'ஸநாதாப்யாம்'என்று வருகிறது. ஆனால் வேடிக்கை என்னவென்றால், அது அநாதைகளாட்டமா (அநாதை போல) இருக்கிற நம்மைக் குறித்துச் சொன்னதில்லை;நமக்கு நாதனும் நாதையுமாக உள்ள ஸ்வாமியையும் அம்பாளையும் குறித்துச் சொன்னது!அந்த இரண்டு பேரையுமே பார்த்து 'உபாப்யாம், ஏதாப்யாம், ஸநாதாப்யாம்'என்கிறார். 'ஸநாதர்களாக இருக்கிற உங்கள் இருவராலும் என்று அர்த்தம். இப்படிச் சொன்னால் அம்பாளுக்கும் ஈச்வரனுக்கும் மேலே ப்ரபு

ஸ்தானத்தில் யாரோ இருந்துகொண்டு அவர்களுக்கும் ரக்ஷணம் தருகிறாரென்று அல்லவா ஆகிறது? இது விசித்ரமாயிருக்கிறதே! நாம் எல்லாம் அநாதையில்லை. நமக்கு நாதனாக ஈச்வரன் இருக்கிறான். அவனுக்குத்தான் நாதனில்லை. அவனை ரக்ஷிக்க என்று அவனுக்கு மேலே ஒரு ப்ரபு இல்லாததால்!அதனால் அவன்தான் அநாதை என்று ஒரு பெரியவர் சொன்னார். இதை ஆசார்யாள் மாற்றி விட்டாரா?

இல்லை. இவர்களுக்கு மேலே வேறு யாரோ இருந்து இவர்களை ஸநாதர்களாக்கவிட வில்லை. இவர்களுக்குள்ளேயே தான் பரஸ்பரம் ஒருத்தருக்கு மற்றவர் நாதராக இருக்கிறார்கள். சக்தியின்றி சிவனில்லை;சிவனின்றி சக்தி இல்லை. ஒரு பா வத்தில் அவள் சேஷம் - அவன் சேஷீ, இன்னொன்றில் அவன் சேஷம் - அவன்

சேஷீ - அவள் சேஷீ என்று முன்னே ஆசார்யாளே சொன்னாரல்லவா?அப்படி, அவர்களுடைய லீலா விநோதத்திலே இவள் அவனுக்கு மேலே இருந்து கொண்டு காலகூட விஷத்திலிருந்தும் மஹாப் பிரளயாக்னியிலிருந்தும் அவனை ரக்ஷிக்கிறாள்;தாக்ஷாயணி, பார்வதி முதலிய ரூபங்களில் இவள் அடங்கி ஒடுங்கி இருக்கிறபோது அவன் கிருஹத்தின் யஜமானாக இவளை ரக்ஷிக்கிறான். தத்வ ரீதியிலும் சிவம் சக்திக்கு மேலாகவும், சக்தி சிவத்துக்கு மேலாகவும் இருந்து பரஸ்பரம் பரிபாலனம் பண்ணிக் கொள்வதை மந்திர சாஸ்திரங்களும், சிவாகமங்களும், திருமந்திரம் முதலியனவும் சொல்கின்றன. இரண்டும் பல உறவுகளில் பின்னிப் பிணைந்தவை. இருவர் அநுக்ரஹமாகவும் ஒரே பரமாத்மாவின் அநுக்ரஹத்தை நாம் பெற வேண்டும். இதற்காகத்தான் ஜனக-ஜனனியாக உபாஸிப்பது. அப்போதுகூட அவன் அநுக்ரஹித்தால்தான் அவள் அநுக்ரஹம் பண்ணுவாள், அவள் அநுக்ரஹம் இருந்தால்தான் அவன் அநுக்ரஹம் கிடைக்கும் என்று சொல்லியிருக்கிறது:

சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாம்

சத்தி அருள் தரிற் சத்தன் அருளுண்டாம்

(திருமந்திரம் - 333)

(சத்தன்-சக்தியோடு கூடிய ஈசன்;சத்தி-சக்தி)

பரமேச்வரனுடைய தாயுமானவர் என்று சொல்கிற போதுகூட, தாய் என்ற வார்த்தையைச் சொல்லி, 'அதுவும் ஆனவர்' என்பதாலேயே தாய்-தந்தை என்ற இரண்டாகவும் நினைப்பூட்டியிருக்கிறது. இவரேதான் தாயுமாகி இருக்கிறார் என்பதால் மலைக்கோட்டையில் அம்மன் சன்னதி இல்லாமலிருக்கிறதா என்ன?அங்கேயும் பரம ஸாந்நித்யத்தோடு ஸ்ரீ சக்ராகாரமான ஸந்நிதியில் ஸுகந்த குந்தளாம்பிகையாக ஒரு தனி அம்பாள் இருக்கத்தான் செய்கிறாள். அங்கே 'ஆனந்த லஹரி'ச்லோகங்கள் பொறித்திருப்பதை முன்பே சொன்னேன்.

நாம் கடைத்தேறும் பொருட்டே அம்மையும் அப்பனுமாகி

வந்து இம்மையும் மறுமையும் தரும் ஜனக-ஜனனிகளைப் பற்றிச் சொல்வதோடு ஆனந்த லஹரி பாகம் பூர்த்தியாகிறது.

'இந்த ஜகத் ஏதோ அறிவுகெட்டுக் குட்டிச்சுவராகப் போவதற்கு ஏற்பட்டதில்லை.

இது ஜனக-ஜனனீமத் ஆக்கும்!அதாவது ஸாக்ஷாத் பரமேச்வரனையும் பராசக்தியையும் நம்மைக் கட்டிக் காக்கிற பெற்றோராகக் கொண்டதாக்கும்!'என்று ஆசார்யாள் தைர்யம் கொடுக்கிறார். பெருமை கொடுக்கிறார், உத்ஸாஹப்படுத்துகிறார். 'ஜனக-ஜனநீமத்' என்றால் 'தாய் தந்தையைப் பெற்றிருக்கும்படியான தன்மை'என்று அர்த்தம். குழந்தைகளுக்கு வேண்டிய பெரிய உறவு அதுதான். அது லோகத்து ஜனங்கள் அத்தனை பேருக்கும் இருக்கிறது என்று பெரிய அபயவாக்கு சொல்கிறார்.

நடுநடுவே ஸ்ரீ மடம் ஸமஸ்தானம் யந்த்ரம், மந்த்ரபீஜம், குண்டலிநீ முதலிய விஷயங்களைச் சொன்னாலும் இந்த பாகத்தையும் பூர்த்தி பண்ணும்போது எல்லாவற்றுக்கும், மூலாதாரமாக நம்முடைய மூலாதார சக்ரத்தில் பிரியமாகக் கிட்டே போனால் பக்தி பண்ணும்படி பரம ஸுலபமாக ஒரு அப்பா-அம்மா இருப்பதைக் காட்டி நம்மை அவர்களுடைய ரக்ஷணையிலே இருக்கிற குழந்தைகளின் நிர்விசாரமான நிலையில் வைத்து ஆசீர்வாதம் பண்ணியிருக்கிறார். ஆனந்த லஹரி இப்படித் தன் தாய் தந்தைகளைக் கண்டுபிடித்துவிட்ட குழந்தையின் நிர்மலமான ஆனந்தத்தோடு பூர்த்தியாகிறது.

---



**பல நிலைகளில் சிவ சக்திகள்**

தாயும் தந்தையும் என்று அந்த அம்பாளையும் ஸ்வாமியையும் அடிமனஸில் இறுக்கிப் பிடித்து நினைக்க

வேண்டியதே பொதுவான பா வம். அதற்குள்ளேயே ஆசார்யாள் அவர்களைப் பல நிலைகளில், பலவிதமான உறவுகளில் சொல்லியிருக்கிறவைகளை உப- பா வங்களாகக் கொண்டால் ரஸம் ஜாஸ்தியாகும். 'ஸ்தாயி'என்ற அடிப்படையாக ஒரு நிரந்தர பா வம், 'ஸஞ்சாரி'என்று அதற்கு அழகு பண்ணவே அப்பப்போ வந்து போகிற பல பா வங்கள் என்று நாடகத்தில் வைத்திருக்கிறார்கள்;அந்த மாதிரி!இந்த 'ஆனந்த லஹரி'பாகத்தில் அந்த இரண்டு பேரையும் எப்படியெல்லாம் காட்டியிருக்கிறதென்று கொஞ்சம் பார்க்கலாம்.

அசையக்கூட முடியாத தகப்பனாரை அவளே அசையச் செய்வதுதான் அவள் மஹிமைக்கு சூடாமணி. அதுதான் முதல் ச்லோகம். லோகத்தின் பார்வையில் அவர் முக்யமாக ஸம்ஹாரகர்த்தாவாக இருக்கிறாரென்றால் அங்கேயும் அவள் மஹிமையையே 'ஓஹோ'என்று அடுத்த ச்லோகம் சொல்கிறது. அவளுடைய ஒரு பாதரேணுதான் அவருக்கு அந்த சக்தியைக் கொடுத்தது என்கிறது. இங்கே தெய்வமும் நாமும் எப்படி இருக்கிறோமோ அப்படி அம்பாளும் ஸ்வாமியும் இருக்கிறார்கள் - ஸ்வாமிக்கே அம்பாள் தெய்வத்தின் ஸ்தானத்தில் இருக்கிறாள். முதல் ச்லோகத்திலேயே அவரை த்ரிமூர்த்திகளில் ஒருத்தராக 'ஹரி-ஹர-விரிஞ்ச'என்கிறபோது அவரால் அவள் பூஜிக்கப்படுகிறாள்- 'ஆராத்யாம்'என்று அவளை அவருக்கும் தெய்வத்தின் ஸ்தானத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. கொஞ்சம் தள்ளி (ச்லோ-7) அவளே ஸ்வாமிக்கு "ஆஹோபுருஷிகா", அதாவது அவர் தன்னை தானென்று தெரிந்து கொண்டிருக்கும் உணர்ச்சி என்று ஏறக்குறைய முதல் ச்லோக அபிப்ராயத்தை ஒட்டிச் சொல்லியிருக்கிறது. அவரை முழுக்க அம்பாள் தன்னொத்த ஜோடியாக்கிக் காமேச்வரன் என்று வைத்து அவன் மடியில் காமேச்வரியாகப் பத்னி என்று உட்கார்ந்திருப்பதை அடுத்த ச்லோகத்தில் 'பரமசிவ பர்யங்க நிலயாம்'என்று சொல்லியிருக்கிறது. முத்தொழிலுக்கு மேலே இரண்டைக் கூட்டிய பஞ்ச க்ருத்யத்திற்கு மேலதிகாரிகளாக ஸாக்ஷாத் ஸகுண ப்ரம்மத்தின் இரட்டை வடிவான சக்ரவர்த்தினியாகவும் சக்ரவர்த்தியாகவும் இங்கே அவர்கள்

இருக்கிறார்கள். அவள் மாத்திரமே ஸகுண ப்ரஹ்மமாயிருந்து நிர்குண ப்ரஹ்மமான அவனில் அப்படியே இழைந்து கொண்டிருக்கும் நிலையை அடுத்த ச்லோகம் (ச்லோ-9) "ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே" (ஸஹஸ்ரார பத்மத்தில் பதியுடன் கூட ரஹஸியத்தில் களிக்கிறாய்) என்கிறது. அப்புறம் ஒரு ச்லோகம் (ச்லோ-11) ஸ்ரீசக்ர ரூபத்திலும் அவர்கள் எப்படிச் சேர்ந்திருக்கிறார்கள் என்பதைச் சொல்கிறது. அதில் நாலு சக்ரம் அவருடையது, ஐந்து அவளுடையது என்று. அவள் பரம பதிவ்ரதையாகத் தன்னுடைய பூர்ண ஸ்வரூபத்தை அவரொருத்தருக்கே காட்டுகிறாள் என்று அடுத்த ச்லோகத்தில் சொல்கிறார். இங்கே பதிக்கு அடங்கின பத்னியாக அவள் இருக்கிறாள். ஆனால் அப்புறம் பத்துப் பன்னிரண்டு ச்லோகம் தள்ளி (23வது ச்லோகத்தில்) அவளே ஒரே அடாவிடியாகக்

கிளம்பி, அவருடைய பாதி சரீரத்தை அபஹரித்தது போதாதென்று இன்னொரு பாதியையும் அபஹரித்து விட்டதாக ஆசார்யாள் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்கிறார்.

அதற்கடுத்த ச்லோகத்தைப் பற்றிக் கொஞ்சம் detailed-ஆகச் சொல்லணும். இரண்டாம் ச்லோகத்தில் த்ரிமூர்த்திகள் தங்கள் தங்கள் தொழில் செய்வதைச் சொன்னாற்போலவே இங்கே ஆரம்பித்திருக்கிறார். 'ஜகத் ஸூதே தாதா'- 'ப்ரஹ்மா லோகத்தைப் பிறப்பிக்கிறார்'; "ஹரி:அவதி"- 'விஷ்ணு பரிபாலிக்கிறார்'. "ருத்ர:க்ஷபயதே"- 'ருத்ரன் அழிக்கிறார்'. Ýù£™ Ü«î£´ º®,è£ñ™ ð…ê,¼ˆò Í˜ˆFèO™ ð£,A»œ÷ Þó‡´ «ðK¡ è£˜òƒè¬÷»‹ ªê£™Aø£˜. ÜF™ å¼õ˜ ß,,õó¡. "ßúv-FóòF" â¡Á ,,«ô£èˆF™ õ¼Aø¶. "ßê¡ ñ£¬òò£™ ñ¬ø,Aø£¡"â¡Á Üˆˆî‹. 'ßê¡'â¡ø£½‹ 'ß,,õó¡'â¡ø£½‹ å¡«ø. Ý†C ªê½ˆ¶Aø 'ô£˜†'â¡Á Üˆˆî‹. õ£vîõˆF™ Þõ¡ ð…ê ,¼ˆò Ýdú˜èO™ å¼ˆî¡î£¡. Güñ£ù òüñ£Qò‹ñ£ ðó£ê,Fî£¡. Üõœî£¡ Ü‰î ä‰¶ ÜFè£Kè¬÷»‹ î¡Â¬ìò ó£xòˆF™ ÜŠð£J¡† ð‡E «õ¬ô õ£ƒ°Aøõœ.

வேலை வாங்குவது என்றால் ஸர்குலர், மெமோ அனுப்பிக் கொண்டோ, வாய்ப் பேச்சால் உத்தரவு போட்டோ ஒன்றும் பண்ண மாட்டாள்!மஹா ராஜ்ஞி!அப்படியெல்லாம் அலட்டிக்

கொள்ள மாட்டாள்!அவள் துளி ஏதாவது சைகை காட்டினால் போதும், அதுவே உத்தரவு என்று அந்த அதிகாரிகள் கிறுகிறுவென்று கார்யம் ஆரம்பித்து விடுவார்கள். அப்படித்தான், கொடி மாதிரி உள்ள தன் புருவத்தை ஒரு ஸெகண்ட் ஒரு மாதிரி அசைக்கிறாள் - "க்ஷண-சலிதயோ:ப்ரூ லதிகயோ:" என்று பளிச்சென்று வார்த்தை விழுந்திருக்கிறது. அதையே உத்தரவு என்று சிரஸால் வஹித்துத்தான் - "ஆஜ்ஞாம் ஆலம்ப்ய": 'அவளுடைய ஆஜ்ஞை என்று கெட்டியாகப் பிடித்துக் கொண்டு'- பஞ்ச க்ருத்ய மூர்த்திகள் ஸ்ருஷ்டி முதலான கார்யங்களைச் செய்வது.

இத்தனை கார்வார், ராஜாங்க தடபுடல் அவளுக்கு இங்கே இருந்தாலும், த்ரிமூர்த்திகள் அவளை தெய்வமாகப் பூஜிக்கிறார்கள் என்று ஆரம்பத்தில் சொன்னதை விட இது ஒரு படி குறைச்சல்தான். அங்கே அவள் தெய்வம். அவர்கள் பக்தர்கள் என்று இருந்தார்கள். இங்கே அவள் எத்தனைதான் ராணித்தனம் காட்டி அவர்களும் ஸலாம் போட்டாலும் அவள் ராணியும் அவர்கள் கிங்கரர்களுந்தான்!ராஜா-ஸேவகர் என்பதைவிட தெய்வம் -பக்தர்தானே உசத்தி?

இப்படி ஸேவகராக இருக்கப்பட்டவர்களில் ஒருவர் தான் - திரோதானத் தொழில் செய்கிறவர்தான்- 'ஈச்வரன்'என்று பெத்தப் பெயர் வைத்துக் கொண்டு விட்டார். 'லோகம் முழுவதையும், மற்ற த்ரிமூர்த்திகளையுங்கூட மாயையில் அப்படியே கட்டிப் போட்டிருக்கும் தொழில் நாம்தானே செய்கிறோம்?என்று அப்படிப் பெயர் வைத்துக் கொண்டுவிட்டார். 'திரஸ்குர்வன் ஏதத்'என்று அந்த

த்ரிமூர்த்திகளையும் அவர் மாயைக்கு ஆட்படுத்தியிருப்பதைச் சொல்லியிருக்கிறது. அது மட்டுமில்லை;தான் இப்படிச் செய்வது தெரியாமல் தன்னையும் தானே அவர் மாயா சக்தியால் மறைத்து, ஒளித்துக் கொண்டிருக்கிறார்!இதை "ஸ்வம் அபி வபு:ஈசஸ்-திரயதி" என்று சொல்லியிருக்கிறது.

இத்தனை சக்தி, ஸாமர்த்தியம் அவருக்கிருந்தாலும் அதெல்லாமும் அம்பாள் கொடுத்ததுதான். அவள்தான் நிஜத்தில் ஈச்வரி. இவர் ஈச்வரப் பெயர் வைத்துக் கொண்டது நியாயமில்லைதான்.

ஆனாலும் பெருந்தன்மையாக அம்பாள் "போய்ட்டு போகட்டும்!பேராவது அப்படி வெச்சுக்கட்டும்"என்று விட்டுவிட்டாள்.

இருந்தாலும் இன்னொருத்தர் பாக்கி இருக்கிறாரே!ஐந்து பேரில் நாலுதானே பார்த்தோம்?ஐந்தாவதாக அநுக்ரஹ க்ருத்யத்திற்கு ஒருவர் இருக்கிறாரே!"இவர் பண்ணியதைப் பார்த்து அவர் இதற்கும் ஒரு படி மேலே ஏதாவது பேர் வைத்துக் கொண்டுவிடப் போகிறார்!நமக்கும் மேலே அவர் என்று காட்டுவதாக வைத்துக் கொண்டுவிடப் போகிறார். நமக்கு மேல் எதுவுமில்லை. ஸமம் என்று வேண்டுமானால் ஒருத்தரைச் சொல்லலாமென்றால் அது சிவன்தான் - ஐந்தொழிலுக்கும் மேலே நமக்குப் பதியாகவுள்ள சிவன். அந்தப் பெயரை இவர் வைத்துக் கொண்டுவிடப் போகிறாரே!என்று அம்பாள் நினைத்தாள்.

அதனால் அவரைக் கூப்பிட்டு, "ஒய்!உமக்கு ஒரு பேர் வெச்சுக்கும். ஆனா சிவன்-னு வெச்சுண்டுடாதீர்!"என்று சொல்லியனுப்பினாள்.

பெருமாளிடம் ரொம்ப பக்தியாக ஒரு பண்ணையார் - வைஷ்ணவர் - இருந்தார். அவரிடம் வேலை பண்ணிக் கொண்டிருந்த பண்ணையாட்களில் ஒருவன் பறை ஜாதி.

'என்னப்பா பேரு?'என்று கேட்டார். 'பெருமாளு'என்று அவன் சொன்னான். 'இவனுக்குப் போய் இப்படிப் பேர் இருக்கே!இவனையா பெருமாள் என்று கூப்பிடுவது?என்று அவருக்கு இருந்ததாம். "வேறே பேர் மாத்திக்கோ" என்றார்.

'சுளுவிலே அப்படி பண்ண முடியாதுங்களே!நாட்டாமையிலே சொல்லி, பணம் கட்டி, அப்புறம் எங்க சாமிங்களுக்கு ஆடு, கோழி 'பண்ணி'த்தானே பேர் மாத்திக்க முடியும்?ரொம்ப செலவாகுங்களே!' என்று அந்த ஆள் சொன்னான்.

"என்ன ஆனாலும் நான் தரேன்"என்று அவர் சொல்லி அவன் கேட்ட அத்தனை வராஹனும் கொடுத்தனுப்பினார். அவனைப் பெருமாள் என்று கூப்பிடாமலிருக்க வழி பிறந்தால் ஸரி என்று அவருக்கு!

பேர் மாற்றிக் கொண்டு அவன் திரும்பி வந்தான். "என்ன புதுப் பேர் வெச்சுண்டே?என்று கேட்டார். 'பெத்த பெருமாள்'என்றானாம் அவர்.

'பெருமாள் போய் பெத்த பெருமாள்'என்று வசனமே சொல்வது.

வைஷ்ணவர்கள் பரிபாஷையில் பெருமா(ள்) கோவில்'என்றால் காஞ்சிபுரம். வெறுமனே 'கோவில்'என்றால் ஸ்ரீரங்கம். ஆனால் ஸ்ரீரங்கநாதரை பெருமாளுக்கும் 'பெரிய'அடைமொழி சேர்ந்து 'பெரிய பெருமாள்'என்பார்கள். 'பெரிய பெருமாள் அரங்கூர்'என்று திருப்புகழில்கூட வருகிறது. 'பெரிய பெருமாள்'தான் 'பெத்த பெருமாள்'. தமிழ் தேசம் பஹுகாலம் தெலுங்கு வார்த்தைகள் தமிழோடு கலந்துவிட்டன. அப்படி வந்ததுதான் 'பெத்த'. 'பெரிய என்று அர்த்தம்.

அநுக்ரஹ க்ருத்யக்காரர் சிவன் என்று பெயர் வைத்துக் கொண்டுவிடப் போகிறாரே என்று அம்பாள் நினைத்து வேறே பெயர் வைத்துக் கொள்ளச் சொன்னதில் தான் இத்தனை கதையும் வந்தது.

அவர் என்ன பண்ணினார், என்ன பெயர் வைத்துக் கொண்டார் என்பதை ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். "ஸதா-பூர்வ-சிவ:"என்று. அப்படியென்றால், 'ஸதா'என்ற அடைமொழியை முன்னாலே கொண்டுள்ள சிவன் என்று அர்த்தம். அதாவது 'ஸதாசிவன்'.அதுதான் அநுக்ரஹ க்ருத்யத்திற்கான மூர்த்தி வைத்துக் கொண்ட பெயர். ஆனால் ஆசார்யாள் ஏன் 'ஸதாசிவன்'என்று இப்படி ஜீரீணீவீஸீ-ஆக சொல்லாமல் 'ஸதா என்று முன்னாலே அடைமொழி சேர்த்துக் கொண்ட சிவன்'என்று முன்னாலே அடைமொழி சேர்த்துக் கொண்ட சிவன்'என்று நீட்டிச் சொல்கிறாரென்றால், குறும்பகத்தான் அப்படிப் பண்ணியிருக்கிறார்!அம்பாளிடம் - அம்மா என்றால் அவளிடம் கொஞ்சம் விஷமம் பண்ணினால்தானே அழகு என்பதால் - குறும்பு பண்ணியிருக்கிறார்!அவள் சிவன் பேராக இருக்கப்படாது என்று நினைத்து அநுக்ரஹ க்ருத்யக்காரரிடம் "அப்படி வெச்சுக்காதீர்"என்று சொல்லப்போக அவர், 'வெறும் சிவனில்லை;ஸதாசிவன்;எப்போதுமே சிவன்;எப்போதுமே

சிவன் என்பதால் அதை ஒரு காலத்திலும் மாற்றிக் கொள்ளும்படிச் சொல்ல முடியாது' என்கிற மாதிரி 'ஸதாசிவன்'என்று பேர் வைத்துக் கொண்டு வந்து அவளை ஏமாற்றிவிட்டார்!அவள் ஏமாந்த அந்தக் கதையைச் சொல்லி குறும்பு பண்ணனும்; ஒஹூபதீமீறீமீ-ஆக, மறைமுகமாகச் சொல்லி படிக்கிறவர்களே "இதென்ன இப்படியிருக்கே!" என்று யோஜித்துக் காரணத்தைக் கண்டு பிடிக்கும்படிப் பண்ணினால் தான் அது இலக்கிய நயமாகும்;படிக்கிறவர் மனஸிலும் ஆழமாக 'இம்ப்ரெஸ்'ஆகும் என்றுதான், பஞ்ச க்ருத்ய மூர்த்திகளில் ஒவ்வொருத்தர் பேரையும் சொல்லிக் கொண்டு வரும்போது 'ஸதாசிவன்' என்று நேராகச் சொன்னால் படிக்கிறவர்கள் அதை விசேஷமாக கவனிக்க மாட்டார்களென்பதால் அப்படிச் சொல்லாமல், 'ஸதா பூர்வ சிவன்' என்று சொல்லி, அதை விசாரிக்கப் போயே அம்பாள் ஏமாந்த கதையை எல்லாரும் தப்பாமல் தெரிந்து கொள்ளட்டும் என்றே இப்படி ஆசார்யாள் போட்டிருக்கிறார்.

சொல்ல வந்த விஷயம், அம்பாளுக்கும் ஸ்வாமிக்கும் எத்தனை விதமான ரிலேஷன் சொல்லியிருக்கிறதென்பது. த்ரிமூர்த்திகளில் ருத்ரனாகவும், ஈச்வரனாகவும், ஸதாசிவனாகவும் உள்ள ஸ்வாமிக்கு அம்பாள் யஜமானியாயிருந்து அவர் ஸேவகராக இருக்கிறதாக இங்கே (ச்லோ-24-ல்) ரிலேஷன்ஷிப் காட்டியிருக்கிறார். அடுத்த ச்லோகத்தில் முக்குணங்களுக்கு முத்தொழில்கள், மும்மூர்த்திகள் என்ற பொது அபிப்ராயத்தையே - ஆரம்ப ச்லோகங்களில் சொன்ன அபிப்ராயத்தையே- எடுத்துக் கொண்டு, "உன்னொருத்திக்குப் பண்ணும் பூஜையே அவர்களுக்கும் பண்ணியதாகிறது. எப்படியென்றால் உன் சரணத்தில் அவர்களுடைய சிரஸ் இருக்கிறது. தங்கள் தலைக்கு மேலே அவர்கள் கையைக் கூப்பிக் கொண்டு அந்தத் தலையை உன்னுடைய சரணத்திலே சாய்த்து நமஸ்கரித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் கைகளான கூம்பின தாமரைகள் உன் சரணத்தில் அர்ச்சனை பண்ணிய புஷ்பங்களாக இருக்கின்றன. அந்த அர்ச்சனைப் புஷ்பங்களின் மேலேயும் மற்ற ஸகல பக்தர்களும் உன்னுடைய சரணத்தில் அர்ச்சனை செய்யும் புஷ்பங்கள் விழுந்துதானே ஆகணும்? இப்படி உன்னொருத்திக்குச் செய்யும் பாதபூஜையே த்ரிமூர்த்திகளின் சிரஸுக்கும் கரத்துக்கும் செய்த பூஜையுமாகிவிடுகிறது'என்கிறார்.

பூஜிக்கிறவர்களே பூஜிக்கப்படுபவர்களுமாகி விடுகிறார்கள்!இங்கேயும் த்ரிமூர்த்தியில் ஒருவரான - சிவாம்சமான- ருத்ரன் அம்பாளுக்கு பக்தராகவும் அவள் அவருக்கு தெய்வமாகவுமிருக்கிறாள்.

அதோடு அவளுடைய குழந்தையாகவும் அவர் இருப்பதாகச் சொல்லலாம். எப்படியென்றால் - ' த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாநாம் தவ சிவே 'என்று ஆசார்யாள் சொல்கிறார். 'சிவா' என்ற பெயரை அர்த்த புஷ்டியோடு போட்டிருக்கிறார். 'சிவம் சதுர்த்தம்'என்று மாண்டூக்யம் சொல்கிறது. த்ரிகுணங்களுக்கு மேலேயுள்ள துரீயம் என்ற ப்ரஹ்ம நிலைதான் சதுர்த்தம். சிவமாக உள்ளபோது அது கார்யமில்லாத ப்ரஹ்மம். சிவாவாக உள்ளபோது கார்ய ப்ரஹ்மம். சிவம் த்ரிகுணங்களில் பட்டுக் கொள்ளாது. அதன் சித்சக்தி இச்சையாகக் கிளம்பி காமேச்வரியாகித்தான் த்ரிகுணங்களைப் பிறப்பித்து முத்தொழில்களென்ற க்ரியைக்காக த்ரிமூர்த்திகளை அந்த த்ரிகுணங்களிலிருந்து பிறப்பித்தது. 'தவ த்ரிகுண ஜநிதாநாம்'- 'உன்னுடைய த்ரிகுணங்களில் ஜனித்தவர்களே த்ரிமூர்த்திகள்'- என்கிறார். அப்படியென்றால் அவளுக்கு ஜனித்தவர்கள்தான். த்ரிமூர்த்திகளுக்கும் அவள் ஜனனி. ஸ்வாமிக்கு அம்பாளை மாதாவாகவும் தத்வ ரீதியில் சொல்வதுண்டு. ருத்ரனான தமோகுண மூர்த்தியாக அவர் இருக்கும்போது, தத்வம் அவ்வளவு புரியாதவர்கள்கூடப் புரிந்து கொள்ளும் படியாக - "ஒரு மூலசக்தியிலிருந்துதானே முக்குணங்கள் பிறந்து, அவற்றுக்கு பெர்ஸானிஃபிகேஷனாக மும்மூர்த்திகள்?அப்போது அந்த சக்தி அம்மாதானே?"என்று புரிந்து கொள்ளும்படியாக - இருக்கிறாள்.

பாட்டி என்றுகூடச் சொல்லலாம். ஸ்வாமிக்கும் அவள் அம்மா என்பது பல

பேர் சொன்னது. யாரும் சொல்லாதது நான் 'நாவ'லாகச் சொல்வது, பாட்டி என்று!முதலில் த்ரிகுணங்கள் துரீய பராசக்தியின் குழந்தைகளாகப் பிறந்தன; அந்த த்ரிகுணங்களின் குழந்தைகளாக, 'த்ரிகுண ஜநிதாநாம்'என்று ஆசார்யாள் சொல்கிறபடிப் பிறந்தவர்கள் த்ரிமூர்த்திகள் என்றால் அவளுக்குப் பேரக் குழந்தைகள்தானே?இப்படி ஒரு ரிலேஷன் ருத்ர சிவனுக்கு அம்பாளுடன்!

அடுத்த ச்லோகத்தில் (26) மற்ற எல்லா தேவர்களும் முடிந்துபோகிற மஹா ஸம்ஹார காலத்திலும் அம்பாளோடு ரமித்துக் கொண்டிருப்பவராக ஸ்வாமியைச் சொல்லியிருக்கிறது. அங்கே பஞ்சமூர்த்திகளுக்குங்கூட முடிவுதான். ஸம்ஹார ருத்ரனும் முடிந்து போகிற மஹா ஸம்ஹாரம் அது. அதைப் பண்ணுவது டைரக்டாகப் பராசக்தியே. போதும் விளையாட்டு என்று த்வைத ப்ரபஞ்சத்திற்கு அவள் அப்படியே கடை கட்டிவிடுகிற காலம் அது. அப்போது திரோதான- அநுக்ரஹங்கள் பண்ணவும் ஏது இடம்?அதனால் சிவ ஸாம்யர்களாகவே நினைக்கப்படுகிறவர்களில் மூன்று பேர் (ருத்ரனும், மஹேச்வரனும் ஸதாசிவனும்) அப்போது முடிந்து போக வேண்டியதுதான். 'அம்பாளுடைய பஞ்ச ப்ரஹ்மாஸனத்தைப் பஞ்ச ப்ரேதாஸனம் என்றும் சொல்வதுண்டு;இவள்தான் அந்த

ஐந்து மூர்த்திகளுக்கும் வேலையும் அதற்கான சக்தியும் கொடுப்பது;இவள் அப்படிக் கொடுக்காவிட்டால் அவர்கள் வெறும் ப்ரேதத்துக்கு ஸமானந்தான் என்பதாலேயே என்று சொன்னேன். ஞாபகம் இருக்கிறதோ, இல்லையோ?அந்த (வேலை கொடுக்காத) ஸ்டேஜ்தான் மஹா ஸம்ஹார காலம். அப்போதும் அந்த மஹா ஸம்ஹாரத்தைப் பண்ணிப் பார்க்க வேண்டும் என்பதாகப் பண்ணுவது என்ற க்ரியையும், பார்க்க வேண்டும் என்ற இச்சையும் பராசக்திக்கு இருப்பதால் அவள் காமேச்வரியாக இருக்கிறாள். அந்த நித்ய ஸுமங்கலிக்கு எப்போதும் பதி இருந்தேயாக வேண்டுமாதலால் காமேச்வரனும் இருக்கிறான். "சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்'என்று ரொம்ப முந்தி ஒரு ச்லோகத்தில் (ச்லோ-8) சொன்னதில் பஞ்ச ப்ரேத. அல்லது பஞ்ச ப்ரஹ்ம, வைத்துக் கொண்டிருக்கும் அந்தப் பரம சிவன் இந்த காமேச்வரன்தான். அவர்களை ஆனந்தமாகச் சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கிற தம்பதியாக இங்கே (ச்லோ-26-ல்) காட்டுகிறார். ஸம்ஹாரத்திலே என்ன ஆனந்தம் என்றால், வெளியிலே அது கோரமாகத் தெரிந்தாலும், வாஸ்தவத்திலே அவர்கள் தங்கள் குழந்தைகளான ஸகல ஜீவ கோடிகளையும் கர்ம பாதையிலிருந்து விடுவித்துத் தங்களுக்குள்ளே இழுத்து வைத்துக் கொள்கிற கார்யந்தானே?அந்த ஆனந்தம்தான்!

ஒன்று தோன்றுகிறது:இங்கே "மஹா ஸம்ஹாரே (அ)ஸ்மிந் விஹரதி ஸதி த்வத்-பதி-ரஸௌ". "மஹா ஸம்ஹார காலத்தில் உன் பதி விஹரணம் பண்ணுகிறார்" என்று போட்டிருக்கிறார். 'விஹ்ரணம்'என்றால் விளையாடி ஸந்தோஷப்படுவது, கூடிக் களிப்பது என்ற அர்த்தத்தில் இத்தனை நாழி சொன்னேன். அது மட்டுமில்லாமல் அந்த வார்த்தைக்கே 'ஸம்ஹார ம்'என்றும் அர்த்தமுண்டு. ஹரணம், ஆபஹரணம், ஸம்ஹரணம், விஹரணம். அபஹாரம், ஸம்ஹாரம், விஹாரம் என்ற எல்லா வார்த்தைக்களையுமே பொதவாக நாம்

ஸம்ஹாரம் என்று சொல்கிற வார்த்தைக்குப் பதிலாகப் போடலாம். அப்படி இங்கே காமேச்வரன் மட்டுமே, காமேச்வரியைச் சேர்த்துக் கொள்ளாமல் அவன் மட்டுமே, மஹாஸம்ஹாரம் செய்கிறான் என்பதைத்தான் 'த்வத் பதி:விஹரதி'என்று சொல்லியிருக்கிறார் என்றுகூட ஒரு அர்த்தம் பண்ணலாமோ என்று தோன்றுகிறது. அம்பாளோடுகூடச் சேர்ந்து அவன் ஸம்ஹார விளையாட்டுச் செய்கிறானென்றோ, அல்லது ஸம்ஹாரத்தின் ப்ரஸ்தாபமில்லாமல் அவன் பாட்டுக்குப் பத்னியோடு ரமித்து விளையாடுகிறானென்றோ காட்ட ச்லோகத்தில் வார்த்தையில்லை. "அந்த மஹாஸம்ஹாரத்தின்போது இந்த உன் பதி விஹரணம் பண்ணுகிறான்"என்று மட்டும்தான் வாக்கியம் இருக்கிறது. "மஹா ஸம்ஹாரே (அ)ஸ்மிந்த விஹரதி ஸதி த்வத் பதி-ரஸௌ."அதனால் அவனேதான் அந்த ஸம்ஹாரத்தைப் பண்ணுகிறான் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள நன்றாக இடம் கொடுக்கிறது.

இப்படி எதற்கு அர்த்தம் பண்ணுகிறேன் என்றால், அம்பாளுக்குப் பரிந்துகொண்டுதான்!அவளுக்கு நல்ல பேர் வாங்கி வைப்பதற்குதான்!வெளிப் பார்வைக்கு கோர க்ருத்யமாகத் தெரியும் மஹா ஸம்ஹாரத்தை அவள் பண்ணவில்லை. திட்டம் அவளுடையதுதானென்றாலும், எக்ஸிக்யூஷன் - அதுதானே க்ரூரமாகத் தெரிகிறது?அது- அந்தத் தாயாருடையதில்லை. ஸ்ருஷ்டியில் இதுவரை அந்த ராணிக்கு உப்புக்குச் சப்பாணி ராஜாவாகவே இருந்திருக்கும் காமேச்வரன் இப்போது ஸ்ருஷ்டியை முடிக்கும்போது மட்டும் நன்றாக அதிகாரம் பெற்று அவன்தான் அதைப் பண்ணுவது என்று காட்டி அவளுக்கு நல்ல பேர் வாங்கி

வைப்பதற்குத்தான் இப்படி அர்த்தம் பண்ணினேன்!

எனக்கு லலிதா ஸஹஸ்ரநாமத்தின் ஸப்போர்ட்டே இருக்கிறது!அதனால் யாரும் இவர் என்ன இஷ்டப்படி அர்த்தம் பண்ணுவது?என்று கேட்க முடியாது. ஸஹஸ்ரநாமத்தில் என்ன இருக்கிறது. 'மஹேச்வர மஹா கல்ப மஹா தாண்டவ ஸாக்ஷிணி'என்று இருக்கிறது. 'மஹா கல்ப மஹா தாண்டவம்'என்பதை அத்தனை கல்ப காலங்களும் முடியும் ப்ரளயத்தின்போது மஹேச்வரன் ஆடுகிற பெரிய ஆட்டம் என்றும் அர்த்தம் பண்ணலாம்;அல்லது, மஹேச்வரனால் மஹத்தான முறையில் கல்பனை பண்ணப்பட்ட மஹா பெரிய ப்ரளயக் கூத்து என்றும் அர்த்தம் பண்ணலாம். கல்பனை, கற்பனை என்றாலே நாம் நினைக்கிறபடி வெறும் இட்டுக்கட்டல், இமாஜினேஷன் என்று அர்த்தமில்லை. நன்றாகத் திட்டம் போட்டுக் கார்யமாகப் பண்ணுவதும் கல்பனைதான். அப்படி மஹேச்வரனேதான் மஹாப்ரளயத்தைப் பண்ணுகிறானென்று அர்த்தம் சொல்லலாம். இங்கே மஹேச்வரன் என்றால் திரோதான மூர்த்தி என்று அர்த்தமில்லை. இந்த ஸந்தர்பத்தில் அந்த அர்த்தம் கொஞ்சங்கூட பொருந்தாது. 'மஹிமை வாய்ந்த ஆளும் ப்ரபுவாக இருப்பவன்'என்பதே இங்கே 'மஹேச்வர'னுக்கு அர்த்தம். இப்படி அவன், அவன் மாத்ரமே மஹாப்ரளயத்தில் விஹரணம் பண்ண, அம்பாள் வெறுமனே அதைப் பார்த்துக் கொண்டு மட்டும் ஸாக்ஷியாயிருக்கிறாள் என்பதுதான் 'மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணி'க்கு அர்த்தம்

ஆக இது ஒரு புது, ரொம்ப விநோதமான, பொதுவாக சொல்வதற்கு

நேர்மாறான ரிலேஷன் - அம்பாளுக்கும் ஈச்வரனுக்கும் (இடையில்) பொதுவாகச் சொல்வதென்ன?அவள்தான் கார்யம் பண்ணுபவள், சிவன் ஸாக்ஷிமாத்ரமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் ஆத்ம ஸ்வரூபம் என்பதுதான். இங்கேயோ அவன்தான் கார்ய சக்தியாக மஹா ஸம்ஹாரம் செய்ய அவள் ஸாக்ஷியாயிருக்கிறாள்!

முத்தொழிலில் வருவதான ருத்ரன் செய்யும் ஸம்ஹாரத்திற்கு

மேலே அந்த ருத்ரனும் ஸம்ஹாரம் செய்யப்படும் மஹா ஸம்ஹார ஸமாசாரம் இப்படி இருக்கிறதென்றால் ஐந்தொழில் (பஞ்ச க்ருத்யம்) என்று ஒன்று பார்த்தோமே, அது விஷயமாகவும் இதேபோல ஸ்வாமிதான் கார்ய சக்தி, அம்பாள் ஸாக்ஷி மாத்ரமே என்று சிதம்பரத்தில் - சைவ க்ஷேத்ரங்களிலேயே முதலாவதாக உள்ள மஹாக்ஷேத்ரத்தில் - பண்ணியிருக்கிறது! பஞ்ச க்ருத்ய பரமானந்த தாண்டவம் என்பதாக ஐந்து தொழில்களையுமே நடராஜாதான் அங்கே பண்ணுகிறார். ராஜா என்றால் அதிகாரமுள்ள அஸல் ஸாவரின் ராஜாவாகவே அவர் அங்கே ஒரே கூத்து அடித்து அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்க, பராசக்தி தன்னுடைய சக்தியையெல்லாம் அடக்கிக் கொண்டு பரமசாந்தையாக, இருக்கிற இடமே தெரியாமல் இருப்பாள். "ஐயா, ஐயா"என்று அங்கே யஜமானருக்குத்தான் விசேஷமெல்லாம். எதிர்வெட்டாக "அம்மா, அம்மா"என்று அவளுக்கே முதலில் பூஜை, நைவேத்யம் அவர் back-ground-ல் என்று மதுரையில் இருக்கிறது. ஒரு க்ருஹத்தில் புருஷன் வைத்தது சட்டமா அல்லது பெண்டாட்டிதான் நாட்டாண்மையா என்று கேட்பதற்கு 'சிதம்பரமா, மதுரையா?'என்றே கேட்பதுண்டு!.....

ஸௌந்தர்ய லஹரியில் அம்பாள் - ஸ்வாமிகளின் பலவித ரிலேஷன் சொல்லிக் கொண்டிருந்தேன். அதிலே பொது அபிப்ராயத்திற்கு வித்யாஸமாக ஸ்வாமியே மஹா ஸம்ஹார க்ருத்யம் செய்ய, அவள் பார்த்துக் கொண்டு, அவர் actor, அவள் spectator என்றும் ஒரு ரிலேஷன் த்வனிக்கிற மாதிரி இந்த ச்லோகத்தில் வார்த்தை விழுந்திருக்கிறது:"மஹா ஸம்ஹாரேஸ்மின் விஹரதி ஸதி த்வபத்பதிரஸௌ."

இன்னோரிடத்தில் அம்பாளை 'விஹரஸி'என்கிறார். அங்கே விளையாடுகிறாய்;பதியோடுகூடிக் களிக்கிறாய் என்றே ஸ்பஷ்டமாக அர்த்தம் கொடுக்கும் படியாக 'பத்யா ஸஹ விஹரஸே'என்கிறார்:

**ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே**

ஒரு யோகி மூலாதாரத்திலிருந்து சக்ரம் சக்ரமாக குண்டலிநீ

சக்தியை எழுப்பிக் கொண்டு சிரஸ் உச்சியை அடைகிறபோது அந்த சக்தியாக இருக்கிற அம்பாள் பூர்ணமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு பதியோடு சேர்ந்து விளையாடுகிறாள்;(அதாவது) சிவ-சக்திகள் ஐக்யமாகின்றன என்ற விஷயத்தை அங்கே தெரிவித்திருக்கிறார். அதுதான் இன்வல்யூஷனில் கடைசி ஸ்டேஜ். அதோடு ஜீவாத்ம- பரமாத்ம ஐக்யம் உண்டாகி மோக்ஷப்ராப்தி ஏற்பட்டு விடுகிறது.

ஸம்ஹாரம், மாதிரி வெளிப்பார்வைக்குக்கூட க்ரூரமாகத் தெரியாமல், இப்படி ஒரே ஆனந்தமாக அம்ருத ப்ரவாஹத்தை (ஒரு ஜீவனுக்குள்) கொட்டிக் கொண்டு, அப்புறம் அம்ருதம் (என்பது) ப்ரவாஹமில்லை, அநுபவம் என்பதாக அவனையே அம்ருதமாக (அமரமாக) ஆக்குகிறபோதுதான் ப்ரேம மயமான அந்தத் தாயார் விஹாரம் பண்ணுவதாகச் சொல்லியிருக்கிறார்;ஸம்ஹாரத்தின் போது ஸ்வாமியைச் சொல்லியிருக்கிறார் என்று வைத்துக் கொள்ளலாம்.

அவர்களுடைய ரிலேஷன்களில் குரு-சிஷ்ய ரிலேஷனும் உண்டு. ஸ்வாமி குருவாகவும் அம்பாள் சிஷ்யையாகவும் இருப்பார்கள். ஆகமங்களென்றும் தந்த்ரங்களென்றும் ஸம்ஹிதைகளென்றும் சொல்லப்படும் வழிபாட்டு முறைகளெல்லாமே ஸ்வாமி உபதேசித்து அம்பாள் கேட்டுக் கொண்டதாகத்தான் இருக்கின்றன. ஞானாம்பிகையேயான அவள் வித்யையின் மஹிமை லோகத்திற்கு தெரியவேண்டும் என்பதற்காகவும், ஒரு பெண்ணுக்குப் பதியேதான் குரு ஸ்தானமும் என்பதை கொச்சைப் படுத்துவதற்காகவும் இப்படி சிஷ்ய பாவத்தில் இருந்துகொண்டு ஸாக்ஷாத் பதியிடமிருந்தே உபதேசம் பெற்றுக் கொள்கிறாள். அந்த ரிலேஷனும் ஸௌந்தர்ய லஹரியில் (ச்லோ.31) சொல்லியிருக்கிறது. அறுபத்து நாலையும் ஸ்வாமி உபதேசித்து அம்பாள் கேட்டுக் கொண்ட விஷயம் இதில் வருகிறது. நேரே அந்த விஷயத்தை அதற்காகவே சொல்லவில்லை. எதையுமே ஒரு நூதனமான கோணத்தில் சொல்வதுதான் ஸௌந்தர்ய லஹரியின் சிறப்பு. அப்படி, இங்கே ஸ்வாமி ஒவ்வொரு விஷயத்தில் ஸித்தி தரவல்ல ஒவ்வொரு தந்த்ரமாகவுள்ள அறுபத்து நாலை உபதேசித்துவிட்டு அதோடு பேசாமல் இருந்து விட்டார்.

அப்போது நீ பார்த்தாய்! 'இதென்னடா, இப்படி ஏதோ ஒவ்வொரு பலனைத் தரும் மற்ற தேவதோபாஸனைகளான அறுபத்து நாலை மட்டும் நம் குழந்தைகளுக்குக் கொடுத்து விட்டு, தர்மார்த்த காம மோட்சங்களாகிய எல்லாப் பலன்களையும் தரவல்லதான நம்முடைய ஸ்ரீவித்யோபாஸனையில் வருகிற ஸமயாசார தந்த்ரத்தை மட்டும் உபதேசிக்காமல் வாயை மூடிக்கொண்டு விட்டாரே!தர்ம, அர்த்த, காம பலன்களும் அதற்கு உண்டுதானென்றாலும், முக்யமாக பாஹ்ய (புற) பூஜையையெல்லாம் ஆந்தரமாக்கி (அக வழி பாடாக்கி) அப்படியே அந்தஃகரணத்தையும் ஆத்மாவிலே ஒடுக்கிவிடும் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்திற்கு வழியாயிருப்பது இந்த தந்த்ரமேயல்லவா?இதைக் குழந்தைகளுக்குக் காட்டாமல் பூட்டி வைத்துக் கொண்டு தனக்கும் வாய்ப்பூட்டு போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டாரே!இதென்ன அந்யாயம்?என்று பார்த்தாய்!'என் குழந்தைகளுக்கு என் தந்த்ரத்தைச் சொல்லிக் கொடும்!கொடுக்காவிட்டால் விடமாட்டேன் அவரை நிர்பந்தப் படுத்தினாய்' (என்று அந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.)

'நிர்பந்தம்' என்ற வார்த்தையையே ஆசார்யாள் போட்டிருக்கிறார். 'புநஸ்-த்வந்-நிர்பந்தாத்'.....

ப்ரஹ்மமாக அடித்து வைத்திருந்த ஸ்வாமியை இவள்தான் லீலையில்

இழுத்துவிட்டது!ஆனாலும் அப்புறம் அதிலே அவர் அசதியாகவே போய்விட்டார். எவரைப்போல் அசலமாக ஒருத்தர் உட்கார்ந்ததில்லையோ அவர் ப்ரபஞ்சமெல்லாம் கிடுகிடுக்கும்படி ஆனந்தக் கூத்தாட ஆரம்பித்துவிட்டார். அது பஞ்ச க்ருத்ய பரமானந்த தாண்டவம். அப்புறம், ஸம்ஹார தாண்டவம் வேறு - அதுவும் அந்த மஹா பராசக்தியை வெறும் ஸாக்ஷியாக்கிவிட்டு அவரே ஆடு ஆடு என்று ஆடிக்கொண்டு!அஜபா நடனம், குக்குட நடனம் என்றெல்லாம் வேறு ஏழு தினுஸு ஆட்டங்கள்!இதில் சேராமல் நவதாண்டவம் என்ற ஒன்பது தினுஸாக அமர்க்களம்!மற்ற லீலைகளும் கொஞ்ச நஞ்சமில்லை.

பிக்ஷாடனம், த்ரிபுர தஹனம், ஜலந்தர வதம் என்றெல்லாம் அறுபத்து நாலு லீலைக்கு அறுபத்து நாலு மூர்த்தங்கள் கொடுக்கும்படியாக அப்படிப் பண்ணியிருக்கிறார். மதுரை ஒரு ஊரிலேயே அதுபாட்டுக்கு ஒரு அறுபத்துநாலு திருவிளையாடல் பண்ணியிருக்கிறார். தாமே இப்படிப் பண்ணுபவர் ஜனங்களையும் லீலையைவிட்டு, த்வைதத்தை விட்டு, ஞானத்திற்கு அத்வைத மோக்ஷத்திற்குப் போக விடாமல் வேறே என்னென்னவோ பலன் தருகிற அறுபத்து நாலு தந்த்ரங்களை மட்டும் உபதேசித்து விட்டு நிறுத்திக் கொண்டு விட்டார்.

அப்போதுதான் பரம கருணையோடு அந்த அம்மா, 'நீர் நன்றாகக் கூத்தடியும் ஸ்வாமின்!உள்ளே ஆடாமல் அசங்காமலே வெளியிலே அத்தனை கூத்தும் அடிக்க உம்மாலாகும். என் குழந்தைகளுக்கு ஆகுமா?அதனால் அவர்களையும் ஆடப் பண்ணி ஒரு ஸ்டேஜ்வரை வேடிக்கை பார்த்தாலும், அந்த ஆட்டமெல்லாமும் கர்ம நாசத்திற்கும், சித்த சுத்திக்குமே ஸஹாயம் பண்ணும் படியாக ஆக்கி, அப்படியே ஞானத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் ஆடாமல் அசையாமல் செய்வதான என்னுடைய உபாஸனா மார்க்கத்தை அவிழ்த்துவிடும். விடுகிறீரா, இல்லியா?விடாவிட்டால் உம்மை நான் விடமாட்டேன்' என்று அம்பாள் போட்டு நிர்பந்தப்படுத்தினாள். இப்பேர்ப்பட்ட உசந்த அம்பாள் தந்த்ரத்தை இந்த பித்துக்குளி லோகத்துக்குத் தருவதாவது என்றுதான் அவர் அதை இறுக்கி பூட்டி வைத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவள் விடாப்பிடியாக நச்சரித்ததன் மேலே அவர் அந்த தந்த்ரத்தையும் உபதேசித்து லோகத்திற்குக் கொடுக்க வேண்டியதாயிற்று.

இவளுடைய வழிபாட்டுமுறைதான் அது. ஆனாலும் இவளே அதை ப்ரகடனம் பண்ணாமல் பதியும் குருவுமான ஸ்வாமிதான் பண்ணனும் என்று இருந்ததில் பதிவ்ரதா லக்ஷணத்தையும் சிஷ்ய லக்ஷணத்தையும் காட்டியிருக்கிறாள். அதே ஸமயத்தில் குழந்தைகளான நமக்கெல்லாம் அந்த பரம மோக்ஷோபாயம் கிட்டாமலிருக்கலாமா என்பதில் ஒரு பதிவ்ரதையோ சிஷ்யையோ அடங்கிக் கிடக்கிற மாதிரியில்லாமல் அவரைப் போட்டு நிர்பந்தப்படுத்தி அதை

வெளியிடப் பண்ணியிருக்கிறாள். இங்கே பதி பக்தி, குரு பக்தி எல்லாவற்றுக்கும் மேலே மாத்ரு வாத்ஸல்யந்தான் தன்னுடைய லக்ஷணம் என்கிறது போல் காட்டியிருக்கிறாள்.

அந்த ஸமய தந்த்ரத்தின் பல விசேஷங்களில் ஒன்று என்னவென்றால்

அதுதான் வேத வழிக்கு ரொம்ப அநுஸரணையாக இருப்பது. எல்லா தந்த்ரங்களுமே வைதிகமாக 'அடாப்ட்'பண்ணிக் கொள்ளக் கூடியவை தான். வைதிகம் -தாந்த்ரிகம் என்று இரண்டு தனித்தனி மார்க்கம் என்கிற மாதிரி பிரிப்பது ஸரியில்லைதான். ஆனாலும் முழுக்கவும் வைதிகம் என்று எடுத்துக் கொள்ள முடியாது. அநேக வழக்குகள் பல தந்த்ரங்களில் இடம் பெற்று விடத்தான் செய்திருக்கின்றன. இப்படி இருப்பவற்றை வைதிகத்திலிருந்து பிரித்துத்தான் இரண்டாகச் சொல்வது. நம் ஆசார்யாள்தான் சுத்த வைதிக பூஜா மார்க்கத்தை மறுபடி ஜீவ சக்தியோடு ஸ்தாபித்தார். இந்த வைதிக பூஜையிலும் தந்த்ரங்களிலுள்ள மந்த்ரங்கள் வரத்தான் வரும். வேடிக்கை என்னவென்றால் அந்த மந்த்ரங்களுக்கும் வைதிக basisஇருக்கவே செய்யும். சிவ பஞ்சாக்ஷிரி மாதிரிச் சிலது வேதத்திலேயே ஸ்பஷ்டமாக வருகிறதென்றால், அப்படித் தெரியாதவற்றைக் கூட ஸம்ஜ்ஞையாக (ஸமிக்ஞையாக) வேதம் சொல்லித்தான் இருக்கிறது. இப்படி ஸ்ரீவித்யோபாஸனை விஷயமாக ஆசார்யாள் வைதிக ஆராதனையை ஸ்தாபிக்க நினைதத்த போது ஸமயாசாரத்தைத்தான் எடுத்துக் கொண்டு பண்ணியிருக்கிறார்

அதை ஆசார்யாள் அம்பாளுடையதேயான தந்த்ர் என்பதாக 'தே தந்த்ரம்'என்கிறார். 'உன் தந்த்ரத்தை ஸ்வாமி வெளிப்படுத்தித்தானாகணும் என்று வலுக்கட்டாயப்பபடுத்தி ஸாதித்துக் கொண்டாய்!' என்கிறார். விசேஷம் என்னவென்றால் அம்பாள் தந்த்ரங்கள் பலதில் அவளுக்கே எல்லா முக்யமும் கொடுத்து ஸ்வாமியை இரண்டாம் பக்ஷம், மூன்றாம் பக்ஷம், அதம பக்ஷம் என்றுங்கூட வைத்திருக்கு ம்;இந்த 'அம்பாளுடையதே'எனப்படும் ஸமயாசாரத்தில்தான் அப்படிப் பண்ணாமல் இரண்டு பேருக்கும் ஸமப் பிராதான்யம் தந்திருக்கிறது!தன்னையே ஒரே உசத்தியாக

அவருக்கு மேலே சொல்லியிருக்கும் தந்த்ரங்களை அம்பாள் தன்னுடையதே என்று அங்கீகரிக்காமல், பதியைத் தனக்கு ஸமமாகச் சொல்வதைத்தான் அப்படிக் கருதுகிறாள் என்பதிலும் அவளுடைய பாதிவ்ரத்ய விசேஷம் தெரிகிறது.

அவர் இவளுக்கும் உயரே இவளே அடங்கிக் கிடக்கும் யஜமானனான பதி, ஸம ப்ராதானமுள்ள பதி, உப்புக்குச் சப்பாணி அகமுடையான், குரு, இவள் வைத்த அதிகாரி, தாஸன், பக்தன், பிள்ளை (பேரன் வரைகூட இழுத்துவிட்டு விட்டேன்) இவள் அர்த்தாங்கனா, அவருடைய பூர்ண சரீரத்தையுமே எடுத்துக் கொண்டவள், அவர் உயிருக்கே ரக்ஷை, அவரையே ஆட்டிப் படைக்கிற ஜீவசக்தி என்றிப்படி சிவனையும், சிவ ஸாம்யமுள்ள மூர்த்திகளையும் அம்பிகையோடு ஸம்பந்தப்படுத்தி இந்த ஆனந்த லஹரி ஸெக்ஷனில் பலவிதமாகச் சொல்லியிருக்கிறது.

இதெல்லாமிருந்தாலும் ஸ்ரீவித்யா தந்த்ர விசேஷங்கள் தான் அந்த ஸெக்ஷனுக்கு முக்யம். அந்தத் தந்த்ரத்தில் வரும் இரம்டு மந்த்ரங்களையும் அதில் சொல்லியிருக்கிறது. அந்த இரண்டு ச்லோகங்களும் (32, 33) தான் இந்த பாகத்திற்கு உயிர் நிலை என்று அபிப்ராயமுண்டு. பின்பாதியில் அவயவ ஸ்வரூப வர்ணனை என்றால் இது அதே அம்பாளை அக்ஷர ஸ்வரூபத்தில் பிடித்துக் கொடுப்பது.

தேவதைகளுக்கு சரீர ரூபம், சப்த ரூபம் என்று இரண்டு இருப்பதில் பின் பாகம் சரீர பாகம், இது சப்த ரூபம். அது கண்ணால் பார்க்கும் த்ருச்ய ரூபம். இது காதால் கேட்கும் ச்ராவ்ய ரூபமாகவும் வாக்கால் சொல்லும் வாச்ய ரூபமாகவும் இருப்பது. இந்த ரூபத்திலிருந்துதான் அந்த ரூபமே உண்டாயிற்று;இதை ஜபிப்பதாலேயே அது ப்ரத்யக்ஷமாகிறது என்று (சப்த ரூபத்திற்கு) உத்கர்ஷம் சொல்வதுண்டு.

இதனாலும் அதைத்தான் பிடிக்கிறது என்றால் அப்போது இது உபாயந்தான், அதுவே லக்ஷ்யம் என்று அதற்கும் உத்கர்ஷம் சொல்லலாம்தானே?இதிலிருந்தே அது உண்டாகிறதென்னும்போது அதுதான் பலன், பழம் என்று உத்கர்ஷம் சொல்லலாம்தானே?மற்ற ஸமயங்களில் என்ன சொல்வேனோ?'ஸௌந்தர்ய லஹரி" என்று எடுத்துக் கொள்ளும்போது அம்பாளுடைய அழகான அவயவ சரீர

ரூபத்துக்குத்தான் full mark!.

தத்வமெல்லாம் சொல்லிப் பூர்வ பாகத்தை முடிக்கும் போது ஜனக-ஜனனி என்று தந்தை-தாயில்தான் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார். 'ஜனகன்', அப்புறம் 'ஜனனி'. அந்தத் தாயாரிடம் அத்தனை தந்த்ரமும் தத்வமும் பூர்த்தியாகிவிடுகின்றன. குழந்தைக்குத் தாயாரென்றால் அவளுடைய ஆகாரம்தான் (வடிவம்தான்) 'முகம் பார்க்கிறது'என்று ஒரு குழந்தை முதலில் தெரிந்து கொள்வது தாயாரின் ரூபத்தைத்தான். பச்சை, சிப்பு, கலர் கலராகப் பார்த்து ஸந்தோஷப்படுவது தாயாரின் ரூபத்தைப் பார்த்துத்தான். அதனால் ஜனக-ஜனனி என்று அந்த ஜகத்ஜனனியை முடிவாகச் சொன்னதோடு தத்வ சாஸ்திரத்தை மூட்டைக் கட்டி வைத்துவிட்டு தாயாரின் ரூபத்தை கேசாதிபாதம் வர்ணிக்க ஆரம்பித்துவிடுகிறார்.

இங்கேதான் 'ஸௌந்தர்ய லஹரி'என்றே சொல்லப்படும் பாகம் அம்பாளுடைய லாவண்ய வெள்ளத்தை அலை அலையாக வர்ணிக்கும் பாகம் ஆரம்பிக்கிறது.

---



## சந்திர-ஸூர்ய மௌளீச்வரி

எடுத்த எடுப்பில் அம்பாளுடைய சேகரத்தை (சிரஸை) வர்ணிப்பதற்கு ஏற்கக் கவித்வ சிகரமாகக் கல்பனைகளைக் கொட்டியிருக்கிறார். தகதக என்று ஸூர்யனின் பிரகாசம் மாதிரியான கம்பீரமும், குளுகுளுவென்று சந்திரனைப் போன்ற மாதுர்யமும் கூடின கல்பனையையும் வாக்கையும் பார்க்கிறோம். ஸூர்ய-சந்திரர்கள் இரண்டு பேரையும் அம்பாள் சிரஸிலே சேர்ப்பதாகவே ச்லோகம் அமைந்திருக்கிறது. (ச்லோ 42)

கதைர் மாணிக்யத்வம் ககநமணிபி:ஸாந்த்ர-கடிதம்

கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே கீர்தயதி ய:|

ஸ நீடேயச் - சாயாச்-சுரண-சபலம் சந்த்ர - சகலம்

தநு:சௌநாஸீரம் கிமிதி நமஸ்காரம் நிபந்தநாதி திஷணாம் ||

(ஹிமகிரிஸுதே)இமயமலையின் மகளே!(மாணிக்யத்வம்) ரத்னமாக இருக்கும் தன்மையை (கதை:) அடைந்துள்ள (ககநமணிபி:) (பண்ணிரண்டு) ஸுர்யர்களால் (ஸாந்த்ர-கடிதம்) நெருக்கமாக இழைக்கப்பட்ட (தே) உனது (ஹைமம் கிரீடம்) பொற் கிரீடத்தை (ய:) எவன் (கீர்த்தயதி) வர்ணிக்கிறானோ (ஸ:) அவன் (சந்த்ர சகலம்) (அக் கிரீடத்திலுள்ள) சந்திரப் பிறையை (நீடேயச் சாயாச் சுரண) அக்கூட்டின் (கூடு போன்ற கிரீடத்தில் உள்ள மேற்படி ஸுர்யர்கலான ரத்னங்களின்) சாயையினால் முலாம் பெற்று (சபலம்) நானாவண்ண விசித்ரம் கொண்ட (சௌநாஸீரம் தநு:) இந்த்ர தநுஸ் (எனப்படும் வானவில்) (இதி) என்ற (திஷணாம்) சிறந்த கருத்தை (கிம் நமஸ்காரம் நிபத்நாதி) எப்படிப் பொருத்தாதிருக்க இயலும்?)

ஆற்றொழுக்கு, தேனொழுக்கு என்று சொல்கிற மாதிரி லளிதமான வாக்குகளால் ரம்யமான அபிப்ராயங்களைச் சொல்வதை ஸம்ஸ்க்ருதத்தில் 'வைதர்பீ ரீதி'என்பார்கள். 'விதர்ப தேசத்து Style' என்று அர்த்தம். அந்தச் சீமையின் கவிவாணர்கள்தான் ஆதியில் இந்த ஸ்டைலில் தேர்ச்சி பெற்றிருந்திருக்க வேண்டும். 'கௌடீ ரீதி' என்கிற ஸ்டைல் கௌடதேசமான வங்காளத்தில் தோன்றி ப்ரஸித்தி அடைந்திருப்பது. இதில் அபிப்ராயங்கள் எளிதில் புரியாததாக இருக்கும்;வாக்கும் ஆர்பாட்டமாக இருக்கும். 'ஸௌந்தர்ய லஹரி'யில் இரண்டு ஸ்டைலையும் கலந்துதான் பண்ணியிருக்கிறார். 'ஜனனி'என்று முன் ச்லோகத்தில் ரொம்பக் கிட்டக்கே கொண்டு வந்து விட்டதால், அவளுடைய கம்பீரம், மஹிமை தெரியாமல் போக விடப்படாது என்ற மாதிரி இங்கே தடபுடலாக கொஞ்சம் கடபுடவென்றே ஆரம்பித்திருக்கிறார். அபிப்ராயமும்

(ச்லோகத்தின் கருத்தும்) complicatedஆகத்தான் இருக்கிறது. லஹரி-பிரவாஹம்- அடித்துப் புடைத்துக் கொண்டு வருகிற மாதிரி இந்த ஸெக்ஷனின் ஆரம்பம் இருக்கிறது.

தேலவோகத்திலிருந்து தடதடவென்று வந்த கங்கை ஈச்வரனுடைய சிரஸில்

சேர்ந்த பிறகு வேகத்தைக் குறைத்துக் கொண்ட மாதிரி, அம்பாளுடைய சிரஸு ஸம்பந்தமான வர்ணனை முடிந்த அப்புறம் அடுத்த ச்லோகங்களின் style தணிந்து சாந்தமாகிறது.

ஸூரிய சந்திரர்களை அம்பாளின் சிரஸில் சேர்த்திருப்பதாகச் சொன்னேன். அவள் சந்திரசேகரி என்ற விஷயம் முன்னாடியே சொல்லியிருக்கிறது. ஸூர்யசேகரி என்பது புது விஷயம்!அதிலும் ஒரு ஸூர்யன் மாத்ரமில்லை;பன்னிரண்டு ஸூர்யர்களையும் தலையில் வைத்துக் கொண்டிருக்கிறாள் என்கிறார்.

சந்திரசேகரன் என்று ப்ரஸித்தமாயுள்ள ஸ்வாமிக்கும் ஸூர்யசேகரன் என்று பெயரிருக்கிறது. பாநுசேகரன்-தற்காலத்து 'பாநுஷேகர்'என்ற பெயருக்கும் அந்த அர்த்தந்தான். உதயஸூர்ய ரச்மி லிங்கத்தின் தலையில் விழுகிற தினுசில் அநேக க்ஷேத்ரங்களில் இருக்கிறதல்லவா?அப்போது ஸ்வாமி ஸூர்யசேகரனாயிருப்பதாகச் சொல்லலாம்.

தலைஞாயிறு என்றே பெயரோடு தஞ்சாவூர் ஜில்லாவிலேயே இரண்டு சிவக்ஷேத்ரங்கள் இருக்கின்றன. ஒன்று வைத்தீச்வரன் கோவிலுக்கு மேற்கே இருப்பது. தேவாரத்தில் அதற்குக் கருப்பறியலூர் என்று பெயர். இன்னொரு தலைஞாயிறு திருத்துறைப்பூண்டி தாலுகாவில் இருப்பது. அங்கே சிவலிங்க சிரஸில் ஸூர்ய கிரணம் இருப்பதாலேயே 'தலை ஞாயிறு' என்று பெயர் ஏற்பட்டதாகச் சொல்கிறார்கள்.

'நபோமணி', 'ககனமணி'என்றெல்லாம் சொன்னால் ஆகாசத்தில் மணி மாதிரிப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஸூர்யன் என்று அர்த்தம். "ககனமணிபி:"என்று இந்த ச்லோகத்தில் ஜீறீ�்ஙுகூஷீணீறீ-ல் (பன்மையில்) சொல்கிறார்.

நம்முடைய பூலோகமும் நவக்ரஹங்களும் ஒரு ஸூர்யனைச் சுற்றி வருவதால், ஞூஸீவீஸ்மீக்ஷீவமீ(விச்வம்) என்பதிலேயே ஒரு ஸூர்யன்தான் உண்டு என்றில்லை. இன்னும் எத்தனையோ ஸூர்யர்கள். நக்ஷத்ர மண்டலங்கள் உண்டு. த்வாதச ஆதித்யர்கள் என்பதாகப் பன்னிரண்டு ஸூர்யர்கள் இருப்பதாக சாஸ்திரம் சொல்கிறது. விச்வாகாரிணியான அம்பாளுடைய சிரஸில் உள்ள கிரீடத்தில் ரத்னகற்களாக இழைக்கப் பட்டிருப்பதெல்லாம் அந்த நாலா ஸூர்யர்களுந்தான் என்கிறார். 'ஸாந்த்ர கடிதம்'என்றால், 'நெருக்கமாக இழைக்கப்பட்ட'என்று பொருள். இப்படி அவள் ஸூர்யசேகரியாக இருப்பதைத்தான் முதல் வரி சொல்கிறது.

வர்ணனை ஆரம்பத்திலேயே இவ்வளவு கண்ணைக்கூசும்- கண்ணைப் பறிக்கும் என்றே சொல்ல வேண்டும் - பிரகாசத்தை, உஷ்ணத்தைச் சொன்னதற்கு மாற்றாக அடுத்த வரியில் அம்பாளைக் குளிச்சியாக 'ஹிமகிரிஸுதே!என்கிறார்.

ரக்தஜ்யோதிஸாக ஆயிரம் உதய ஸூர்யகாந்தியோடு இருக்கிற

காமேச்வரியை, முதலிலேயே ஏகப்பட்ட ஸூர்யர்களைச் சொல்லி விட்டதால், பச்சைப் பசேல் என்ற ஹிமகிரி குமாரியான பார்வதியாகச் சொல்லிக் கூப்பிடுகிறார். ஏறக்குறைய ஸ்தோத்ரம் முடிகிற இடத்தில் (ச்லோ-96) பார்வதியாக ஆவிர்பவிப்பதற்குப் பூர்வாதாரத்தில் தக்ஷன் பெண்ணாக வந்தபோது அவளுக்கு இருந்த 'ஸதி'என்ற பேரைச் சொல்லி, 'தவ ஸதி ஸதீநாம் அசரமே'என்று கூப்பிடுகிறார். ஸதி தக்ஷனின் யஜ்ஞகுண்டத்தில் சரீரார்ப்பணம் பண்ணினவள். ஆனால் சாம்பலாக முடிந்து போகாமல், நேர்மாறாக ஜீவ ஸாரமான பச்சை நிறத்தில் பச்சென்று பார்வதியாக அவதாரம் செய்தாள்!அக்னி குண்டத்திலிருந்து நேரே ஐஸ் மலைக்குப் போய் அங்கே பசுமையாக ரூபம் எடுத்துக் கொண்டாள்!சமணர்களோடு வாதம் பண்ணினபோது ஞானஸம்பந்தர் அக்னியில் போட்ட தேவார ஏடு எரிந்துபோகாமல் பச்சோலையாக வெளியில் வந்ததும் இந்த மாதிரிதான்!இங்கே அம்பாளை ஆசார்யாள் ரொம்பவும் உஷ்ணத்துக்கு அப்புறம் 'பனி மலையின் பெண்ணே'என்றவுடன் ஜில்லென்றாகி கிரணங்களைப்

பொழியும் 'சந்த்ர சகலம்'என்ற பிறைச் சந்திரனைச் சொல்லி நன்றாகத் தாபசமனம் செய்து விடுகிறார்.

அம்பாளுடைய கிரீடத்தில் 'சந்த்ர சகலம்' இருக்கிறது. அந்தக் கிரீடம் தங்கத்தாலானது. 'ஹைமம் கிரீடம்'என்று இருக்கிறது. 'ஹேமம்'என்றால் தங்கம். 'ஹைமம்'தங்கத்தாலானது. ஹிமம் என்றால் பனி. இவள் ஹிமகிரிஸுதாவாக இருக்கிறாள். கேநோபநிஷத்திலே பிரம்ம வித்யா ஸ்வரூபிணியாக வந்து இந்திரனுக்கு உபதேசம் செய்யும் அம்பாளை 'ஹைமவதி'என்று சொல்லியிருக்கிறது. அதற்கு ஹிமகிரிஸுதா என்றும், ஹேமகாந்தியோடு ப்ரகாசிக்கிறவள் என்றும் இரண்டு அர்த்தமும் ஆசார்யாள் பண்ணியிருக்கிறார். இங்கே ஸௌந்தர்ய லஹரி முதல ச்லோகத்திலேயே உபநிஷத் ஸம்பந்தம் காட்டிவிடவேண்டுமென்று ஹிமகிரி, ஹேமம் இரண்டையும் பிரஸ்தாபித்திருக்கிறார். அது மட்டுமில்லை. அங்கே இந்த்ரனுக்குத்தானே உபதேசித்தாள்?இங்கேயும் 'தநு:ஸௌநாஸீரம்'என்பதாக வானவில்லை அந்த இந்த்ரனின் தநுஸாகவே சொல்கிறார்.

'ஹைமம்-ஹிம'என்று அடுத்தடுத்துப் போட்டிருக்கிறார்; 'சபலம்'-'சகலம்' என்று அடுத்த வரியில் வருகிறது. எதுகை, மோனை முதலிய அணிகளை இப்படி ஸ்தோத்ரம் பூராவும் ஏராளமாகக் கொட்டியிருக்கிறார்.

ஸூர்யர்களை மாணிக்கங்களாக இழைத்த அம்பாளுடைய தங்க கிரீடத்தில் சந்திரகலை இருக்கிறது. நாம் பார்க்கிற சந்திரன் ஸூர்யனைவிட மஹா சின்னது. ஆனால் இங்கேயோ ஸூர்யர்கள் கிரீடத்தில் சின்னச் சின்ன கல்லு என்றால், அந்தக் கிரீடத்திலேயே பெரிசாகப் பூசணிப் பத்தை மாதிரியான பிறைச் சந்திரன் இருக்கிறது!சந்திரன் அம்ருதம், பனி இரண்டையும் பெருக்குகிறவன். பனியை உற்பத்தி பண்ணுவதால் அவன் 'ஹிமகரன்'. நாலஞ்சு ச்லோகம் தள்ளி (46) 'ராகா ஹிமகர'என்று வருகிறது. அது பூர்ணிமை. இது மூன்றாம் பிறை - வளைந்து வில் ரூபத்திலுள்ள பிறை. அதன் நிலா பனித்திவலைகளாகப் பரவியிருக்கிறது. ஸூர்ய மணிகளின் ஒளி அந்தப் பனிப்படலத்தில் படுகிறது. 'நீடேயச்சாயா'என்பதில்

'ci‹'â¡ø£™ ðV‚Ã†®¡ Ïð^F½œ÷ Agì‹. ÜF½œ÷ ñEèO¡

'ê£ò£'â¡ð¶ ú¨˜ò Šóè£ê‹. ú¨˜ò Šóè£ê‹ ðQŠ ðìôˆF¡ «ñ«ô ð†ì¾ì¡ â¡ù ÝAø¶? c¼‡ì «ñèˆF¡ «ñ«ô ú¨˜ò ªõO„ê‹ ð†ì¾ì¡ â¡ù Ý°‹?õ£ùM™ «î£¡Á«ñ£™L«ò£?úŠî õ˜íº‹ «ê˜‰î Ü‰î õ£ù M™½,° úñ£ùñ£è õ˜í MCˆó Üö°,° â¶¾I™¬ô. Ü‹ð£O¡ AgìˆF½œ÷ ðQ Gô£M¡ «ñ«ô ú¨˜ò ñEèO¡ ªõO„ê‹ ð†´ º£‹ ãŸPò¶‹ - '²óí‹'â¡ø£™ ºô£‹ «ð£´õ¶;ÜŠð® «ð£†ì¾ì¡ - refraction-™ (åO„ CîøL™) Ü‰î M™½ Ïðñ£ù H¬ø úŠîõ˜íº‹ ªðŸÁ - 'êðô‹'â¡ø£™ 'õ˜í MCˆó‹'- úŠî õ˜í «ðîƒè¬÷»‹ ðôðôªõ¡Á ªè£†´Aø¶. Üî£õ¶ Ü¶ õ£ùM™ ñ£FK ÝAM´Aø¶.

'சந்திரன் ஸ்வய ப்ரகாசமில்லாத ஒரு ஸாடலைட் ஸூர்ய வெளிச்சம் பட்டுத்தான் அது நிலா என்ற சந்திரிகையைப் பெறுகிறது. ஸன்லைட் பட்டுத்தான் ஸாடலைட்டில் மூன்லைட் உண்டாவது'என்பது ஸயன்ஸ் பாடம். கவிதை சொல்லும் பாடலிலோ ஸ்வப்ரகாசமான சந்த்ரகலை மேலே ஸூர்ய வெளிச்சம் பட்டு அது வானவில்லாகி வர்ண ஜாலம் பண்ணுகிறது!ஸாக்ஷாத் அம்பிகையின் சிரஸிலே பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகும் குளுமையும் கொண்ட வானவில்லாகப் பிறைச் சந்திரனைக் காட்டி இப்படியொரு அதீத கல்பனை மஹாகவியான ஆசார்யாள் கொடுத்திருக்கிறார். ஆனால் இது ஏதோ தமக்குத்தான் உதித்த அபார கல்பனை என்று நினைக்காமல், உன் கிரீட மணி ஒளிகள் சந்திரனில் சேர்ந்து விசித்ர வர்ணங்களை உண்டாக்குவதை வர்ணிக்கிற எவன்தான் அதை வானவில்லோடு பொருத்தி உவமை சொல்லாமலிருப்பான்?என்று கேட்கிறார். ' சௌனாஸீரம் தநு : இதி திஷணாம் கிம் நமஸ்காரம் நிபத்நாதி ? 'என்று நாலாம் வரியின் ஜீக்ஷீஷீவமீ ஷீக்ஷீபீமீக்ஷீ. 'வானவில் என்ற அபிப்ராயத்தை எப்படிக் கவிதையில் பொருத்தாமலிருக்க முடியும்?'என்று அர்த்தம். ' ய : கீர்த்தயதி ' என்று இரண்டாம் வரியில் சொல்வதற்கு 'எவன் வர்ணித்தாலும்'என்று அர்த்தம். பெரிய கவியோ, சின்ன கவியோ எவனானாலும் தன் வர்ணனையில் இந்தக் கருத்தைச் சொல்லாமலிருக்க முடியாது என்கிறார். 'ஸௌந்தர்ய லஹரி'ஆரம்பத்திலேயே இப்படித் தம்மைக் குறைத்து அடக்கிக்கொண்டு பேசும் ஆசார்யாள் முடிவு வரையில் இந்த விநய ஸம்பத்தை

வெளிப்படுத்திக் கொண்டு போகிறார்.

மழைக்கு அதிபதி இந்த்ரன். அவனுடைய வஜ்ராயுதம் போடு போடென்று போடுவதுதான் இடி. அவன் கை வில்லுதான் வானவில். அதை 'இந்த்ர தநுஸ்'என்றே சொல்வது. இங்கே 'சௌநாஸீரம் தநு:' என்று அதைத்தான் சொல்லி இருக்கிறார். ஸேனையிலே முதலாக, யீக்ஷீஷீஸீமீ-ல், நின்று யுத்தம் செய்வதால் இந்த்ரனுக்கு 'சுநாஸீரன்'என்று பேர்- 'அமர'த்திலேயே இருக்கிறது. அவனுடைய தநுஸே 'சௌநாஸீரம்'தநு:'

நிர்குண பிரம்மத்திலிருந்து பராசக்திப் பிரபாவத்தால் இத்தனை ஸ்ருஷ்டி

விநோதமும் வந்திருப்பதையே க்ஷீமீயீக்ஷீணீநீமீ வீஷீஸீ-ல் சுத்த வெளுப்பு நானா வர்ணங்களாகப் பரிணமிப்பதோடு ஒப்பிடலாம். அம்பாள் ஸௌந்தர்யத்தை வர்ணிக்க ஆரம்பிக்கும் முதல் ச்லோகத்திலேய இந்த அபிப்ராயமும் வந்துவிடுகிறது.

இங்கே சொல்வது க்ஷீமீயீக்ஷீணீநீமீ வீஷீஸீ இல்லை, க்ஷீமீயீறீமீநீமீ வீஷீஸீ (பிரதிபலிப்பு) தான் என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். ஸூர்ய ஒளி சந்திரப் பிறையில் பட்டு அதன் பனிக் கசிவில் பல வர்ணங்களாகப் பிரிந்தது என்று எடுத்துக் கொள்ளாமல், பல ஸூர்யர்களும் பல்வேறு கலர்களில் இருப்பதாகவும், அவை எல்லாம் கண்ணாடி மாதிரி உள்ள சந்திரகலையில் பிரதிபலித்து (க்ஷீமீயீறீமீநீமீ-ஆகி) அதை இந்திர தநுஸாக்கிவிடுகிறது என்றும் வைத்துக் கொள்ளலாம்.

இப்படி ஸ்வரூப வர்ணனையின் முதல் ச்லோகத்திலேயே லோக வாழ்க்கை பூராவுக்கும் ஸத்துத் தரும் சந்திர ஸூர்யர்களை அம்பாளின் சிரஸிலே காட்டி சந்த்ர-ஸூர்ய மௌளீச்வரியாகக் கிரீடம் தரித்துக் கொண்டு சந்திர ஸூர்யர்களை அதிலேயே வைத்துக் கொண்டிருக்கிற ராஜ கம்பீரமான தர்சனம்!ஆனால் அப்போதும் தாயார் என்ற நினைப்பும் வரும்படியாகத்தான் முன் ச்லோகம் ஒன்றிலேயே (ச்லோ-34) "சசி மிஹிர வக்ஷோருஹ யுகம்": சந்திர ஸூர்யர்களால் லோகத்துக்குப் பாலூட்டுகிறாள்'என்று போட்டிருக்கிறார்.

இங்கே ஒன்றுக்குப் பதில் அநேக ஸூர்யர்களைச் சொல்லியிருந்தாலும் அவற்றின் பிரகாசமும் முடிவாகப் போய்ச் சேருகிற சந்திரனுக்குத்தான் சிறப்பு!அதாவது ஜகன்மாதாவை சந்திரமௌளீச்வரியாக தரிசனம் பண்ணி வைத்திருப்பதே சிறப்பு.

கைலாஸத்தில் ஆசார்யாளுக்கு ஈச்வரன் தந்த பஞ்ச லிங்கங்களுக்கு சந்திரமௌளீச்வரர் என்றே பெயர். அதே ஸமயத்தில் அவர் பெற்றுக்கொண்டதுதான் 'ஸௌந்தர்ய லஹரி'என்றும், அதில் நந்திகேச்வரர் உருவிக் கொண்டதைப் பூர்த்தி செய்யவே அவர் இந்த 42ம் ச்லோகத்திலிருந்து நூறு வரை செய்து முடித்தார் என்றும் முன்னே கதை சொன்னேன். சந்திரமௌளீச்வரர் ஈச்வர ஸ்வரூபம் என்பதுபோல இந்த ஸ்தோத்திரமும் அம்பாளுடைய ஸ்வரூபமே என்று சொன்னேன். ஆகையால் அவளைச் சந்திரமௌளீச்வரியாக வர்ணிப்பதிலேயே ஆரம்பிப்பது ரொம்பவும் பொருத்தமாயிருக்கிறது.

---



## இருட்டைப் போக்கடிக்கும் கறுப்பு

ஒரே ஜகத்ஜ்யோதிப் பிரவாஹமாக கிரீட வர்ணனையை ஆரம்பித்த ஆசார்யாள் அதே ச்லோகத்தில் போகப் போக cooling glassபோட்டுக் கொள்வது போல பனிமலை, பனிமதி இவற்றைச் சொல்லி மழைக் காலத்திலேயே தோன்றும் வானவில்லோடு முடித்தார். அடுத்ததில் முழு மாற்றாகக் கன்னங்கரேல் என்றிருக்கும் அம்பாளுடைய கேசபாரத்தை வர்ணிக்கிறார்.

துநோது த்வாந்தம் நஸ்-துலித-தலிதேந்தீவர-வநம்

கந-ஸ்நிக்த- ச்லக்ஷ்ணம் சிகுர- நிகுரும்பம் தவ சிவ |

யதீயம் ஸௌரப்யம்- ஸஹஜம் உபலப்தும் ஸுமநஸ:

வஸந்த்-யஸ்மிந் மந்யே வலமதந-வாடீ-விடபிநாம் ||

"சிவே!" என்று அவளுடைய பரம மங்கள ஸ்வரூபத்தைச் சொல்லிக் கூப்பிடுகிறார். 'த்வாந்தம் துநோது'என்றால் 'இருளைப் போக்கடிக்கட்டும்'என்று அர்த்தம்.

அதுதான் கிரீடத்தை ஏகப் பிரகாசமானதாகச் சொல்லியாகி விட்டதே;இருட்டு எங்கேயிருந்து வந்தது?

இது வெளி இருட்டு இல்லை, உள்ளிருட்டு. அத்தனை பேரையும் பிடித்தாட்டும். அஞ்ஞானம் என்ற இருட்டு. 'அவித்யானாம் அந்தஸ்திமிரம்'என்று ஆரம்பத்திலேயே (ச்லோ-3) சொன்ன இருட்டு.

'துநோது த்வாந்தம் ந:'என்பதில் 'ந'என்றால் 'நம்முடைய': 'நம் எல்லோருடைய அஞ்ஞான இருட்டையும் போக்கட்டு ம்.'எல்லாருக்காகவும் ஆசார்யாள் பிரார்த்தனை பண்ணுகிறார். அவரோ ஞான ஜ்யோதிஸ்ஸாக இருந்தவர். அஞ்ஞான இருள் நமக்காக நம்மோடு சேர்ந்து பிரார்த்தனை பண்ணுகிறார். இங்கே **' துநோது த்வாந்தம் ந :' -** 'நம் எல்லோர் அஞ்ஞானமும் போகட்டும்'என்று ஆரம்பிக்கிறவர், அடுத்த ச்லோகத்தில் **' தநோது க்ஷேமம் ந :'**

நம் அனைவருக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கட்டும் என்று ஆரம்பிக்கிறார்.

அஞ்ஞான தமஸை எது போக்கடிக்க வேண்டும் என்கிறார்?அம்பாளுடைய ஜ்யோதி ஸ்வரூபமா?இல்லை. இதுதான் வேடிக்கை!இரண்டாம் வரியில் வரும் 'தவ சிகுர நிகுரும்பம்'என்பதுதான் இருட்டைப் போக்கடிக்க வேண்டிய வஸ்து. 'தவ'என்றால் உன்னுடைய;அம்பாளுடைய. 'சிகுரம்'- கேசம். 'நிகுரும்பம்'- தொகை, கூட்டம், அடர்த்தியாகப் பலது சேர்ந்த ஒன்று. சிகுர நிகுரும்பம் என்றால் நல்ல அடர்த்தியாகச் சேர்ந்திருக்கிற கேச பாரம். அப்படிப்பட்டதான் பரதேவதையின் கேச பாரந்தான் நம்

இருட்டைப் போக்கணும் என்கிறார்.

கேசமே கறுப்பாக இருப்பதல்லவா?Ü¶ Þ¼†¬ì à‡´ ð‡í^î£«ù ªêŒ»‹?å¼«õ¬÷ Ü‹ð£œ è£ô‹ «î£¡Áõîÿ° º¡«ð «î£¡Pòõ÷£ùî£™ ï™ô AöMò£è î¬ôªò™ô£‹ å«ó ï¬óò£Œ ªõœ¬÷ ªõ«÷ªó¡Á Þ¼‰¶ Ü¶ Þ¼†¬ìŠ «ð£‚è†´ªñ¡Á ï£‹ G¬ù^î£½‹ îŠ¹. «îõ˜èÀ‚° ÍŠ¹ A¬ìò£¶ â¡ðî£™î£¡ G˜üó˜, Üüó˜ â¡Á «ð˜. «îõ˜èÀ‚ªè™ô£‹ ê‚óõ˜ˆFQò£è Þ¼‚èŠð†ìõÀ‚° âŠð®, Aö´ ãŸð´‹?

அவளுக்கு மத்யம வயஸூக்கு, நடுத்தரப் பிராயத்துக்கு உள்ள சரீர முதிர்ச்சி கூட இல்லை. லோகத்துக்கெல்லாம் தாயாக இருந்தும் ஒரு கன்யாக் குழந்தைக்கு இருக்கிற கோமளமான, பால்யமான தேஹவாகுதான் இவளுக்கு இருக்கிறது. 'அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே!பிள்ளையும் கன்னி என மறை பேசும் ஆனந்த ரூப மயிலே!என்கிறார்கள்.

'கன்னி'என்று மறை பேசிற்றாம்!அதாவது இது வேதம் வைத்த பேராம். இப்படிச் சொன்னது ஆதாரத்தோடுதான். வேதத்தில் ஒவ்வொரு தேவதைக்கும் காயத்ரீ சொல்கிற போதுதான் ஸாக்ஷாத் துர்கா பரமேச்வரியின் காயத்ரீயில் அவளை கன்யாகுமாரி என்றே சொல்லியிருக்கிறது.

அதனால் அவளுடைய கூந்தல் கறுப்பாகத்தான் இருக்கும். ஸந்தேஹத்துக்கு இடம் தராமல் இப்படித்தான் இங்கே ஆசார்யாளும் வர்ணித்திருக்கிறார்:'துலித-தலித-இந்தீவர-வனம்'என்கிறாரே, இதை தலித-இந்தீவர-வனதுலிதம்'என்று மாற்றிக் கொள்ள வேண்டும். 'அன்றலர்ந்த கருநெய்தல் புஷ்பக் காட்டுக்கு ஸமமானது'அவளுடைய கேச பாரம் என்று அர்த்தம். பள பளவென்று, கன்னங்கரேலென்று இருக்கிறது அம்பாளின் கூந்தல். "கன-ஸ்நிக்த-ச்லக்ஷ்ணம்' - கனம் என்றாலும் கார்மேகம் மாதிரி என்று வைத்துக் கொள்ளலாம். 'கன ச்யாம்'என்று கிருஷ்ணனைச் சொல்லும்போது 'கனம்'என்றால் தலை மயிரின் அடர்த்தியை, பீமீஸீவ்மீ ஆக இருப்பதைச் சொல்வதாகவும் வைத்துக் கொள்ளலாம். 'ஸ்நிக்தம்'என்றால் நன்றாக தைலம் போட்டு தேய்த்து பளபளப்பது என்று அர்த்தம். ஸ்நேஹம், ஸ்நேஹிதன் என்கிறோமே, அது 'ஸ்நிக்'தாதுவிலிருந்து

வந்ததுதான். எண்ணெய்ப்பிசுக்கு ஒட்டிக் கொள்கிற மாதிரி, 'சிக்கெனப் பிடித்தேன்'என்றபடி, மனஸோடு மனஸ் ஒட்டயிருப்பதுதான் ஸ்நேஹிதம். இங்கே சிக்கு, பிசுக்கு இல்லாமல் அம்பாளின் தலைமயிரைத் தைலம் போட்டு நன்றாக வாரிவிட்டிருப்பதாக அர்த்தம். 'ஸ்நிக்தம்'என்றால் மிருதுவான என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அப்புறம் 'ச்லக்ஷ்ணம்' என்று இன்னொரு அடைமொழி. 'ச்லக்ஷ்ணம்'என்றால் சிடுக்கு, கிடுக்கு இல்லாமல் நன்றாக வழவழவென்று இருப்பதாக அர்த்தம். கருநெய்தல் காடாக பட்டுப்போல, பளபளக் கறுப்பாக, அடர்த்தியாக, மிருதுவாக, வழவழப்பாக இருக்கிறது என்று ஒரு செயினாக வர்ணித்துக் கொண்டே போகிறார். முன் ச்லோகத்தில் கெட்டியான தங்கக்கிரீடத்தை கடினமான வார்த்தைகளால் சொன்னவர் இங்கே 'துலித-தலித- இந்தீவர-வனம்',

'èù-vG,î-„ôzí‹'â¡ø õ£˜ˆ¬îè¬÷»‹ ñöñöªõ¡Á R™, ñ£FKŠ «ð£†®¼,Aø£˜. Üˆ¬õî «õî£‰î îˆõõ£Fò£ù Ýê£˜ò£œ èMèÀ,ªè™ô£‹ èMò£è¾‹ Þ¼Šðõ˜.

அம்பாளின் கேசத்துக்குக் குளிர்ச்சியான கருநெய்தலின் நிறம், மென்மை முதலியவை மட்டுந்தான் உண்டா?இன்னொரு சிறப்பு அம்சமும் உண்டு. அதுவே மூன்றாம் வரியில் சொல்கிற 'ஸஹஜ ஸௌரப்யம்'- அதாவது 'இயற்கையான வாஸனை'.

Ì ¬õˆ¶, ªè£œ÷£ñ«ô, võ£ð£Mèñ£è«õ, Ü‹ð£O¡ «èê‹ Fšò ðKñ÷‹ i²Aøî£‹. Ü‹ð£œ «èêˆ¶,° ÞòŸ¬èò£è õ£ú¬ù A¬ìò£¶ â¡Á ï,Wó˜ H®õ£îñ£è,, ªê£™L ß,,õó¡ ªïŸP, è‡¬í, è£†®»‹ åŠ¹, ªè£œ÷ º®ò£¶ â¡Á Ý«þHˆ¶ Ü‰î Üðê£óˆFù£™ Mò£F,° Ý÷£A ÜŠ¹ø‹ 'F¼º¼è£ŸÁŠð¬ì'ð£® ñ¡QŠ¹ «è†´, ªè£‡´ võvîñ£ù£˜ â¡Á ï‹ ð,èˆF™ HóRˆîñ£è M¼ˆî£‰î‹ Þ¼,Aø¶.

ஆசார்யாள் நிஸ்ஸந்தேஹமாக 'ஸஹஜ-ஸௌரப்யம்'- 'ஸஹஜமாகவே இயற்கையாகவே ஸுகந்தம் பொருந்தியது என்று சொல்லிவிட்டார்.

திரயம்பக மந்திரத்தில் 'ஸுகந்தி'என்று ஈச்வரனுக்கே பேர் சொல்லியிருக்கிறது. ஸௌந்தர்ய லஹரித் தொடர்பு நிறைய

உள்ள மலைக்கோட்டைக் கோவிலில் தேவி ஸுகந்திதான் - ஸுகந்த குந்தளாம்பிகை. குந்தளம் என்றாலும் கேசபாரம்தான்.

இப்போதும் சில இடங்களில் அம்பாள் பூஜை, உபாஸனை நன்றாக ஸித்தித்து அவள் ஆவிர்பாவம் தெரிகிறபோது 'ஒரே தாழம்பூ வாஸனை வந்தது'என்றுதான் சொல்லக் கேட்கிறோம். இப்படிப்பட்ட ஸ்வயமாகவே பரிமளமுள்ள கேசத்தில் இந்திரனுடைய நந்தவனத்துப் புஷ்பங்களையும் சூட்டிக் கொண்டிருக்கிறாள். முதல் ச்லோகத்தில் இந்திர தநுஸைக் கிரீடத்தில் பார்த்தோம். இப்போது அவனுடைய உத்யான வனத்துப் புஷ்பங்களைக் கேசத்தில் பார்க்கிறோம்.

'வலமதனன்'என்றால் வலாசுரன் என்பவனை அழித்த இந்திரன். 'வலமதன வாடீ'- இந்திரனுடைய தோட்டம். 'வாடீ விடபிநாம்'என்றால் அந்தத்தோட்டத்து மரங்களுடைய. 'விடபம்'என்றால் மரம். 'ஸுமனஸ:'என்று மூன்றாம் வரியில் வருவதை இங்கே சேர்க்க வேண்டும். 'ஸுமனஸ்'என்றால் பொதுப்படையாகத் தோன்றும் அர்த்தம். நல்ல மனமுள்ளவர் என்பது குறிப்பாக 'ஸுமனஸ்'என்பது தேவஜாதியைக் குறிக்கும். புஷ்பத்துக்கும் 'ஸுமனஸ்'என்று பெயர். எப்படி ஒரு நல்ல மனஸ் தன்னால் மலர்ந்து ஒரு ப்ரதிப் பிரயோஜனமும் எதிர்பார்க்காமல் அன்பைப் பரப்புகிறதோ அப்படி புஷ்பமானது மலர்ந்து நல்லவர் கெட்டவர் என்று பேதம் பாராமல் எல்லாருக்கும் மணம் பரப்புவதால் இப்படி பேர். இங்கே வலமதன

வாடீவிடபினாம் ஸுமனஸ:'என்று சேர்த்து, தேவேந்திரனுடைய தோட்டமான நந்தனவனத்திலிருக்கும் மந்தாரம், பாரிஜாதம் முதலான விருக்ஷங்களின் புஷ்பங்கள் என்று பொருள் கொள்ள வேண்டும்.

"அம்பாள் கேசத்திற்கேதான் தன்னால் வாஸனை இருக்கே, எதற்கு இந்தப் புஷ்பங்களை சூட்டிக் கொள்ள வேண்டும்?வாஸனைக்காக இல்லாமல், பூ ஸரம் பார்க்க அழகாயிருக்கே என்று அதற்காக வைத்துக் கொண்டிருக்கிறாளா?சிலபேர் பார்வையில் கோளாறு இல்லாமலே அழகுக்காக மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்கிறார்களாமே, அப்படி இவள் பூ வைத்துக் கொண்டிருக்கிறாளா?"

Üªî™ô£‹ Þ™¬ô. Þõœ Ý¬êŠð†´ ¬õˆ¶, ªè£œ÷«õ Þ™¬ô. Ü‰îŠ ¹wðƒèœî£¡ Ý¬êŠ ð†´ ÞõÀ¬ìò «èê ð£óˆ¬î õ‰î¬ì‰F¼‚A¡øù.

'அவற்றுக்கு என்ன ஆசை?' ' யதீயம் ஸௌரப்யம் ஸஹஜம் உபலப்தும் ' இதுதான் தேவ லோகத்துப் பூக்களின் ஆசை. 'யதீயம்' - 'கேசத்துடைய'; 'ஸௌரப்யம் ஸஹஜம்'- 'இயற்கை மணத்தை'; 'உபலப்தும்'- கிட்ட இருந்து தாங்களும் அடையவேண்டும் என்று'- இதுதான் புஷ்பங்களின் ஆசை. 'லப்தும்' என்றால் 'அடைய'. எங்கேயோ இருந்து கொண்டு வாஸனைப் பிடித்து மட்டும் அடையாமல், அன்போடு பக்கத்தில் போய் கேச பாரத்திலேயே இருந்து கொண்டு அடைய ஆசைப்பட்டதைத்தான் 'லப்தும்'என்று மட்டும் சொல்லாமல் 'உப-லப்தும்'

என்ற இரண்டு எழுத்தைச் சேர்த்துத் தெரிவித்திருக்கிறார். 'வஸந்தி அஸ்மின்'என்று கடைசி வரியில் வருகிறது. 'வஸந்த்யஸ்மின்'என்று வருவதை இப்படிப் பிரித்துக் கொள்ள வேண்டும். அதாவது அம்பாளுடைய கேசத்தின் இயற்கை மணத்தை நன்றாக அதிலேயே வஸித்துத் தாங்களும் பெற வேண்டும் என்பதற்காகவே தேவேந்திர வனத்துப் புஷ்பங்கள் அதிலே குடியேறியிருக்கின்றன. 'அஸ்மின்'அதில் (கேச பாரத்தில்);'வஸந்தி'- வஸிக்கின்றன. 'மன்யே'- என்றால் நினைக்கிறேன். 'இப்படி நான் நினைக்கிறேன்'என்று அர்த்தம்.

பூலோகத்துப் புஷ்பங்களான மல்லி, மனோரஞ்சிதம் முதலானவற்றின் வாஸனையையும் காலில் கட்டி அடிக்கிற தேவலோகத்துப் புஷ்பங்களும் அம்பாளுடைய கேசத்தின் ஸஹஜமான ஸுகந்தத்தைப் பெற விரும்பி அவளுடைய கூந்தலில் புஷ்ப ஸரங்களாக வந்து உட்கார்ந்து கொண்டு அழகு செய்கின்றன. அவை அவள் கேசத்துக்கு மணமூட்டவில்லை;அவளுடைய கேசத்தின் மணத்தை அவை தங்களுக்குப் பெற்றுக்கொள்ளவே அதில் குடியேறியிருக்கின்றன. இப்படிப் பட்ட கேசம் நம் மன இருட்டைப் போக்கட்டும் என்கிறார். தான் கறுப்பாக இருந்து கொண்டே நம் மனக் கருமையைப் போக்க வல்லது அது.

ஸுமனஸ்கள் அதில் வந்து வசித்து மேலும் உத்கர்ஷத்தை அடைகின்றன என்பதால் நல்ல மனமுள்ள எல்லோருடைய தியானத்துக்கும் அது ஆச்ரயம் என்று ஏற்படுகிறது. 'கிருஷ்ண கர்ணாம்ருத'த்தில் 'நீலோபி நீரந்த்ரதம:

ப்ரதீப:'- க்ருஷ்ணன் தானே கறுப்பாக இருந்தாலும் அஞ்ஞான இருட்டைப் போக்கும் தீபமாக இருக்கிறான் என்று வருகிறது. அந்த மாதிரிதான் இதுவும்.

கறுப்பு கேசம் எப்படி மன இருளைப் போக்கும் என்று கேள்வி கேட்டுக் கொண்டிருக்காமல், ஆசார்யாள் வர்ணிக்கிறபடி நெருக்கமாக பூத்த கருநெய்தல் காடாக, குளிர்ந்தும், அடர்ந்தும், மிருதுவாகவும் பளபளப்பாகவும், வழவழப்பாகவும், தேவலோக புஷ்பங்களும் வந்து அழகு செய்வதாகவும் அல்லது

அழகு பெறுவதாகவும், அவற்றின் வாஸனையையும் தூக்கி அடிக்கிற ஸுகந்தம் கொண்டதாகவும் ஸாக்ஷாத் ஸுகந்த குந்தளாம்பிகையின் கேச பாரத்தைத் தியானம் செய்து பார்த்தால் பதில் கிடைத்து விடும்.

கேசாதிபாதம் என்பதில் கேசம்தான் முதல். கிரீடத்தை முதலில் வர்ணித்தாலும் அது கேசத்தின் மேல் சூட்டியதே. கிரீடம் அவயவங்களில் சேர்ந்ததில்லை., அது ஆபரணம் தான். தேவீ விக்ரஹங்களில் பின்பக்கத்தைப் பார்த்தால் தெரியும் - கிரீடம் வைத்திருந்தாலும் பின் பக்கம் கழுத்துக்கு மேலே கேசபாரத்தைப் பிச்சோடா போட்டமாதிரிக் காட்டி அதில் அலங்காரங்கள் பண்ணியிருக்கும். அதைத்தான் இங்கே வர்ணித்திருக்கிறார்.

குந்தள நாயகி (திருக்குழல் நாயகி), ப்ரமர குந்தளாம்பாள் (வண்டார் குழலியம்மை), நீல குந்தளாம்பிகை (கருந்தாள் குழலி), புஷ்ப குந்தளாம்பாள் (பூங்குழலம்மை), அஞ்ஜன குந்தளாம்பாள் (மைவார் குழலி), ஸுகந்த குந்தளாம்பிகை (மட்டுவார் குழலியம்மை) என்றிப்படி கேச விசேஷத்தை வைத்தே அநேக க்ஷேத்ரங்களில் அம்பாளுக்குப் பேர் ஏற்பட்டிருக்கிறது. ஸஹஸ்ரநாமத்தில் கேச விசேஷத்தை குறிப்பதாக முதலில் "சம்பகாசோகபுந்நாக ஸௌகந்திக லஸத் கசா"என்றும், அப்புறம் 'நீல சிகுரா'என்றும் வருகிறது.

முதல் பேருக்கு சம்பகம், அசோகம், புந்நாகம், ஸௌகந்திகம் ஆகிய புஷ்பங்கள் விளங்கும் கேசத்தையுடையவள் என்று அர்த்தம். 'நீல சிகுரா'என்றால் கருங்குழலி. 'த்ரிசதியில் 'ஏலாஸுகந்தி சிகுரா'(ஏலவார் குழலி) என்று நாமா சொல்லியிருக்கிறது. இப்படிப்பட்ட அம்பாளுடைய கேச பாரத்தைத் தியானம் பண்ணி நம் க்லேச பாரத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

---

விநாயகரும் தமிழும்

## இவரும் தமிழ்த் தெய்வமே!

தெய்வம் என்று ஒன்று இருந்தால் அது லோகம் பூராவுக்குந்தான். ஆனாலும் அதை 'நம்முது' (நம்முடையது) என்று விசேஷமாகப் பிரித்து வைத்து ப்ரியம் காட்டி உறவு கொண்டாடணும் என்று பக்த மனஸுக்குத் தோன்றுகிறதுண்டு. ஒவ்வொரு தெய்வத்திடம் இப்படி ஒவ்வொரு ஜனஸமூஹத்திற்கு ஒரு அலாதி பந்துத்வம் இருப்பதில் தமிழ் மக்களுக்கு ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி என்றால் தனியான ஒரு ப்ரியம். முருகன், முருகன் என்று சொல்லி, தமிழ்த் தெய்வம் என்று அவரை இந்த நாட்டுக்கே, பாஷைக்கே உரித்தானவராக முத்ரை குத்தி வைத்துக் கொண்டாடுகிறோம்.

எனக்கென்னவோ அவரை மட்டும் அப்படிச் சொல்லாமல் அவருடைய அண்ணாக்காரரையும் தமிழ்த் தெய்வம் என்று சொல்லணும் என்று (இருக்கிறது)!இளையவரைத் தமிழ்த் தெய்வம் என்று குறிப்பாகச் சொல்ல எவ்வளவு காரணமுண்டோ அவ்வளவு - ஒரு வேளை, அதைவிடக்கூட ஜாஸ்தியாகவே - அண்ணாக்காரரையும் சொல்வதற்கு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அதனால் - அந்த அண்ணா - தம்பிகளைப் பிரிக்கவேபடாது, சேர்த்துச் சேர்த்தே சொல்லணும், நினைக்கணும், பூஜை பண்ணணும் என்பதாலேயும் - பிள்ளையார், ஸுப்ரஹ்மண்யர் இரண்டு பேரையுமே தமிழ்த் தெய்வங்கள் என்று வைத்துவிட வேண்டுமென்று தோன்றுகிறது. அப்படி ஒரு 'ரெஸொல்யூஷன்' கொண்டு வரப்போகிறேன்!. (அது) 'பாஸ்' ஆகணுமே!அதனால், புஷ்டியான காரணம் நிறையக் காட்டுகிறேன். 'யுனானிம'ஸாகவே 'பாஸ்' பண்ணிவிடுவீர்கள்!

---

## இன்றைய 'பாலிடிக்ஸ்':பிரிவினை மயம்!

விளையாட்டுக்குச் சொன்னேன். வெள்ளைக்காரன் இருந்த மட்டும் அவனோடு சண்டை போடணும் என்கிறதில்..... 'ஸாத்விகப் போர்', 'அஹிம்ஸா யுத்தம்' என்று சொல்கிறார்கள். வாஸ்தவத்தில் காந்தியும், அவருடைய கொள்கைகளில் மனஸாரப் பிடிமானம் வைத்திருந்த ஒரு சின்ன மைனாரிடியும் தவிர, மற்ற பெருவாரியான ஜனங்கள் அஸல் போரில் இருக்கிற சிரமம், தியாகம் எதுவும் அநுபவிக்காமல், ஆனாலும் உள்ளுக்குள்ளே அஸல் போர் செய்கிறவர்களுக்கு குறைச்சலில்லாத த்வேஷத்தோடுதான் இருந்து வந்தார்கள். ஆகையினாலே நான் 'சண்டை' என்று சொன்னது தப்பில்லை. அப்படி, வெள்ளைக்காரனோடு சண்டை போடுகிறதில் ஆஸேது ஹிமாசலம் அத்தனை ஜனங்களும் ஒற்றுமையாக இருந்தோமே தவிர, அவன் என்னிக்குப் புறப்பட மூட்டை கட்ட ஆரம்பித்தானோ அன்னியிலிருந்தே நமக்குள்ளேயே ஒற்றுமை போய், இத்தனைதான் பிரிவு என்று கணக்குப் போட முடியாமல் தினுஸு தினுஸாக வகுப்புவாதம், மதவாதம், கட்சிகள் வாதம், மாகாண (மாநில) வாதம்.. மாகாணம் என்ன, தாலுகாவுக்குத் தாலுகா, பக்கத்துக்குப் பக்கத்து ஊர், தெரு, வீடு வரை ஒவ்வொருவரும் ஒருத்தரையொருத்தர் ஏசிக்கொண்டு, பரஸ்பரம் போட்டி போட்டுக்கொண்டு அவரவரும் தனக்கு ஸ்பெஷல் ரைட் கொண்டாடிக் கொண்டு வாதம், த்வேஷம் என்றெல்லாம் வீணாய்ப் போய்க் கொண்டிருக்கிறோம். ஜனங்களுக்கு ஸத்குணங்களை - ஒருத்தருக்கொருத்தர் விட்டுக்கொடுத்து அநுஸரித்துப் போவது, கட்டுப்பாடு., த்யாகம் , ப்ரேமை, உழைப்பு மனப்பான்மை, எல்லாவற்றுக்கும் மேலே மொத்தமாக இந்த ஒரே பாரத தேசத்தை வைத்துப் பார்க்கிற உண்மையான தேசபக்தி முதலான ஒழுக்கங்களை - திரும்ப திரும்ப எடுத்துச் சொல்லி, தேசத்துடைய ஒட்டுமொத்த க்ஷேமத்திற்காக அத்தனை பேரும் ஒற்றுமையாகப் பாடுபடணும் என்ற உணர்ச்சியை உண்டாக்க வேண்டும் என்ற அபிப்ராயம் காந்தியும் அவருக்குக் கீழேயே பயிரானவர்களும் இருந்த தலை முறைக்குப் பிற்பாடு வந்த தலைவர்கள் எனப்பட்டவர்களுக்கு அநேகமாக அஸ்தமித்துப் போய்விட்டதாகத் தெரிகிறது.

வயஸு வந்தவர்களுக்கெல்லாம் வோட்டு என்று பண்ணினாலும் பண்ணினார்கள், அதிலிருந்து ஸமுதாயத்தின் பல ஸெக்ட்ஷன்களில் ஒவ்வொன்றிலும் ஒரு மெஜாரிடியைத் தாங்களே புதுசாக ஸ்ருஷ்டித்தாவது உண்டாக்கி, 'உங்கள் உரிமைக்காகப் போராடுகிறோம்' என்று சொல்லிக் கொண்டு அவர்களையும் அந்தந்த ஸெக்ட்ஷன் மைனாரிடிகளையும் பரஸ்பர விரோதிகள ாக்குவதுதான் வோட்டுப் பிடிக்க ப்ரம்மாஸ்திரம் என்று ஆக்கிக் கொண்டே இன்றைக்குப் பெரும்பாலும் 'பாலிடிக்' நடக்கிறது மொத்தத்தில் இந்த தேசத்தின் உசந்த ஸமுதாயம், மேலெழ வெளியிலே பார்க்கிறதற்கு மட்டும் ஒருமைப்பாட்டு கோஷம் என்ற ஒரு 'ஷோ'வோடு, உள்ளுக்குள்ளே பிரிந்து, பிரிந்து, பிரிந்து வீணாய்ப் போய்க்கொண்டிருக்கிறது. ரொம்பவும் துக்கமும் வெட்கமும் படும்படியான ஸ்திதி, பொது எதிரி ஒருத்தன்கிட்டே விரோதத்தில்தான் நமக்கு ஒன்று சேரத் தெரிந்ததே தவிர நமக்குள்ளே பரஸ்பர ப்ரேமையில் ஒன்று சேரத் தெரியவில்லை!

அப்போது வெளிப்பார்வைக்காவது ஸாத்விகமாகச் சண்டை நடந்த மாதிரி இல்லாமல், இப்போது வெளியிலேயும் அஸுர யுத்தமாகவே நடந்து, யதுகுலம் மாதிரி நம்மை நாமே நிர்மூலம் பண்ணிக் கொள்வதில்தான் இது போய் முடியுமோ என்று பயப்படுகிற ஸ்திதி ஏற்பட்டிருக்கிறது.

இந்த அபாயத்தை இப்போதுள்ள அநேகக் கட்சிகளுடைய, வர்க்கங்களுடைய தலைமை ஸ்தானத்திலிருப்பவர்கள் தெரிந்துகொண்ட ப்ரக்ஞையே இல்லாமல் போய்க்கொண்டிருப்பதுதான் ரொம்பவும் விசாரம் தருவதாக இருக்கிறது. தர்மம் என்று ஒன்று இருக்கிறது... ஜனங்களுக்கு இருக்க வேண்டிய அநேக நல்லொழுக்கங்கள் சொன்னேனே, அவை எல்லாமும் அதோடு இன்னும பலவும்

சேர்ந்துதான் தர்மம், தர்மம் என்கிறது. இந்த பாரத தேச கலாசாரத்திற்கு லோகத்திலேயே வேறே எந்தப் பெரிய 'ஸிவிலிஸேஷ'னுக்கும் இல்லாத தீர்க்காயுஸைக் கொடுத்து யுகாந்தரங்களாக ரட்சித்துக் கொண்டு வந்திருக்கிறது அந்த தர்ம சக்திதான். அப்படி ஒன்று இருக்கிறது என்று தப்பித் தவறியாவது தற்காலத்தில் தலைவர்கள் என்று இருக்கிறவர்கள் தங்கள் தங்கள் கட்சிக்காரர்களுக்கு சொல்கிறார்கள் என்று தெரியவில்லை. எலெக்ட்ஷனில் ஜயிப்பது ஒன்றைத் தவிர வேறே ஒரு லட்சியத்தையும் கட்சிகாரர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை என்ற துர்தசை ஏற்பட்டிருக்கிறது ஜயிப்பதுதான் குறி என்கிறபோது லீஷீஷீஸீ ஷீக்ஷீ நீக்ஷீஷீஷீஸீ, எதுவானாலும் ஸரீ என்று அதர்மத்திற்கும் கட்சிக்காரர்களைத் தூண்டிக்கொடுக்கிற வரைக்கும் போய்விடுகிறது. இந்த நிலவரத்திலே முக்யமாக அப்போது வெள்ளைக்காரன் ஒரு தினுஸில் பீவீஸ்வீபீமீ ணீஸீபீ க்ஷீûறாமீ தந்திரம் பண்ணினானென்றால், இப்போது தலைவர்கள் என்கப்பட்டவர்களும் ஸமுதாயத்தை அநேக மெஜாரிடி மைனாரிடிகளாக பீவீஸ்வீபீமீ பண்ணி, மெஜாரிட்டியைத் திருப்தி பண்ணுவதற்காக தர்மாதர்மத்தைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாமல் எதுவேண்டுமானாலும் பண்ணி எலெக்ட்ஷன் வெற்றிக்கே பாடுபடுவதாகத்தான் பொதுப்படையாகப் பார்க்கிறபோது தெரிகிறது.

இப்படிக் தற்காலத்தில் அவரவரும் ஸ்பெஷல் ரைட் கேட்டுக்கொண்டு ஏகமாகப் பிரிவுகள் ஏற்பட்டிருப்பது போதாதென்று நான் வேறே பிள்ளையாரிடம் தமிழ் மக்களுக்கு ஸ்பெஷல் ரைட் என்று ஒரு பிரிவை உண்டாக்கி இன்னொரு சண்டை மூட்டிவிட்டால் ஸமஸ்த ஜனங்களுக்குமான அந்தப் பிள்ளையார் என்னைச் சும்மா விடமாட்டார்!வாஸ்தவத்தில் பிள்ளையாரும் ஸரி, ஸுப்ரஹ்மண்யரும் ஸரி இந்த தேசம் பூராவுக்கும் ஸ்வாமிகள்தான். அதை ப்ரூவ் பண்ணவும் நிறைய எவிடென்ஸ் உண்டு.

முக்யமாக இரண்டு வாதம் - அறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் 'உண்மையை டிஸ்கவர் பண்ணிச் சொல்கிறோமாக்கும்' என்று சொல்லிக்கொண்டு தங்களை அறியாமலே, ஏற்கெனவே குறுகின மனப்பான்மைகளில் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறவர்களை இன்னும் தங்கள் பங்குக்கு வேறே மூட்டிக் கொடுத்திருக்கிற இரண்டு வாதம். ஒன்று, 'பிள்ளையார் நரஸிம்ஹ வர்மப் பல்லவ ராஜாவின் காலத்தில்தான் அவருடைய ஸேநாதிபதி பரஞ்ஜோதி - பிற்காலத்தில் சிறுத்தொண்ட நாயனார் ஆனவர், அவரால் சாளுக்ய தேச ராஜதானியான வாதாபியிலிருந்து தமிழ் நாட்டுக்குப் புதுசாக அறிமுகம் பண்ணப்பட்டவர்.

அதற்கு முந்தி அவருடைய வழிபாடு இங்கே கிடையாது. அதாவது அவர் தமிழ்த் தெய்வம் இல்லவே இல்லை, அசலார்' என்பது. இன்னொரு வாதம், 'முருகன் தமிழ் நாட்டுக்குத்தான் ஆதியிலிருந்து ஸ்வாமி இங்கேயிருந்துதான் வடக்கே அவரை இரவல் வாங்கிக்கொண்டு ஏதோ தங்கள் ஸ்வாமியே மாதிரி புராணம், மந்த்ரம், ஆகமம் எல்லாம் எழுதி வைத்துக்கொண்டு கதை பண்ணுகிறார்கள்' என்பது. இரண்டுமே தப்பு என்று 'ப்ரூவ்' பண்ண நிறையச் சான்றுகள் இருக்கின்றன. இப்போது அந்த விஷயம் வேண்டாம்.

ஆக, நான் வேறு, இப்ப இல்லாததை இருக்கிறதாகச் சொல்லி பேத உணர்ச்சியை மூட்டிக்கொடுக்கப்படாது.

இது ஒரு பக்கம். ஆனால் இன்னொரு பக்கத்தில், பிள்ளையார் இந்தத் தமிழ் நாட்டுக்கு எத்தனை தினுஸில் விசேஷ அநுக்ரஹம் பண்ணி நம் தமிழ் ஜனங்களுடைய இம்மை, மறுமை இரண்டுக்கும் 'டாப்' ஆன

உபகாரியாயிருக்கிறார் என்பதை நினைத்துப் பார்த்து நமஸ்காரம் பண்ணாவிட்டால் நமக்கு நன்றி மறந்த பெரிய தோஷம் ஏற்பட்டுவிடும் என்றும் தோன்றுகிறதே!ஆனதாலே, முத்ரை கித்ரை குத்திப் புதுசாக இன்னொரு சண்டை கிளப்பாமல், நன்றியோடு நமஸ்காரம் பண்ணுவதற்காகவே யதார்த்தத்தைச் சொல்கிறேன்.

---

## இம்மைக்குப் பேருபகாரம்

இம்மை என்று எடுத்துக் கொண்டால் இந்தத் தமிழ் தேசத்துடைய இயற்கை வளத்துக்கு முதல் காரணமாயிருப்பது காவேரிதான். அந்தக் காவேரி இங்கே வரக் காரணம் யார்? பிள்ளையார்தானே? அவர் காக்கா ரூபத்தில் கொடகுக்குப் போய் அகத்தியருடைய கமண்டலுவைக் கவிழ்த்துவிட்டதில்தானே காவேரி உண்டாயிற்று? அவருடைய ஸம்பந்தத்தால் இம்மைக்குப் பயிர் - பச்சையும் உயிருக்கு ஜீவாதாரமான தீர்த்தமும் நமக்குத் தாயாராகக் காவேரி தருகிறாள்.

---

## மறுமைக்கு மஹா உபகாரம் திருத்தலங்கள்

இம்மைக்கான இவற்றைத் தருவதோடு மட்டும் நிற்காமல் காவேரி மறுமைக்கும் பரமோபகாரம் பண்ணியிருக்கிறாள். எப்படியென்றால் River Valley Civilization என்கிறபடி ஒரு பெரிய நதியை ஒட்டிய கரைகளில்தான் கஷ்டமில்லாமல் வயிற்றுக்கானது கிடைத்துவிடுவதால் ஜனங்கள் விச்ராந்தியாக உசந்த சிந்தனைகளில் ஈடுபட்டு ஒரு பெரிய நாகரிகத்தை உண்டாக்க நிரம்ப வசதி ஏற்பட்டிருக்கிறது. அப்படி நம்முடைய கலாசாரம் உன்னதமாக ரூபமாவதற்குக் காவேரியே உபகாரம் பண்ணியிருக்கிறாள். காவேரி என்றால் முடிவாக அவளைப் பாயவிட்ட விக்நேச்ரவரர்தான்.

இந்த தேசத்தினுடைய ஆத்மிக பாரம்பர்ய விசேஷத்தினால் இங்கே ஒரு கலாசாரம் உண்டாகிறதென்றால் அது ஏதோ கண்ணுக்கு, காதுக்கு மாத்ரம் சில்பம், சித்ரம், நாட்டியம், கானம் என்று முடிந்து போகாமல் இவற்றின் வழியாக ஆத்மாவை உசத்திக் கடைத்தேற்றுவதாகவே இருக்கும். இங்கேதான் காவேரி - ஸ்வீணீ காவேரி, விக்நேச்வரம் - நம்முடைய மறுமைக்கும் பரமோபகாரம் பண்ணுவது. நம்முடைய சில்பம், சித்ரம், ஆடல், பாடல் முதலான எல்லாக் கலைகளும், ஸயன்ஸ்களுங்கூடத்தான், அர்ப்பணமாயிருப்பது கோவிலில்தானே? .அப்படிப்பட்ட கோவில்கள் தமிழ் நாட்டிலுள்ளது போல வேறே ஒரு நாட்டிலும் இல்லை, தமிழ் நாட்டிலும் மிகப் பெருவாரியான கோவில்கள் காவேரியின் கரையைத் தொட்டுக் கொண்டிருக்கும் பிரதேசத்தில்தான். குறிப்பாக, சோணாடு என்கிற சோழ நாட்டில்தான்.

அப்பர், ஸம்பந்தர், ஸுந்தரர், ஆகிய மூவர் தேவாரம் பாடிய க்ஷேத்ரங்களைப் 'பாடல் பெற்ற ஸ்தலங்கள்' என்பார்கள். அப்படி மொத்தம் 274. அதில் கிட்டத்தட்ட முக்கால்வாசி, 90 ஸ்தலங்கள், சோழ நாட்டின் காவேரிக்கு வடக்கு-

தெற்குக் கரைகளில் இருக்கிறவைதான்!ஆழ்வார்கள் பெருமாள் மேல் திவ்யப்பரபந்தம் பாடின க்ஷேத்ரங்களை 'திவ்ய தேசம்' என்பார்கள். அப்படி 108. அதில் சைவ க்ஷேத்ரங்கள் அளவுக்குச் சோழநாட்டில் இல்லாவிட்டாலும், அந்தக் காலத்தில் சோழ நாடு, பாண்டி நாடு, மலை நாடு - அதுதான் மலையாளம் என்கிற சேரநாடு -- தொண்டை நாடு, நடு நாடு, வடநாடு என்று பிரித்திருந்ததில் மற்ற எந்த நாட்டையும் விட மிக அதிகமாக சோணாட்டிலேயே இருக்கின்றன. 108-ல் நாற்பது திவ்யதேசம் காவேரி வடகரை, தென்கரைகளில். அடுத்தாற்போல் வரும் தொண்டை நாட்டில் அதில் ஏறக்குறைய பாதியான இருபத்திரண்டுதான்.

---

## வைஷ்ணவரின் 'கோயில்':விநாயகர் அருள் விளையாடல்

சைவ க்ஷேத்ரங்கள் அளவுக்குக் காவேரிக் கரையில் வைஷ்ணவ க்ஷேத்ரங்கள் இல்லாவிட்டாலும், சைவத்துக்கும் இல்லாத ஒரு சிகரமான பெருமையை வைஷ்ணவ ஸம்பந்தப்படுத்தியே பிள்ளையார் காவேரிக்கு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார். என்னவென்றால், சைவர்கள் தங்கள் க்ஷேத்ரங்களுக்குள் முதலிடம் கொடுத்துக் 'கோயில்' என்றே குறிப்பிடுவது சிதம்பரம். அது காவேரிக்கரையில் இல்லை. வைஷ்ணவர்கள் இதே மாதிரி 'கோயில்' என்று முதல் ஸ்தானம் தந்து சொல்கிறது ஸ்ரீரங்கம். அதுதான் காவேரிக்கே ஜீவ மத்யமான ஸ்தானத்தில் இருக்கிறது. 'உபய காவேரி' என்பதாக இருப்பக்கமும் காவேரி நதி சூழ, 'காவேரி ரங்கன்' என்றே கியாதி பெற்றிருக்கிற பெருமாள் அங்கே பள்ளி கொண்டிருக்கிறார்.

அந்த ரங்கராஜா எப்படி அங்கே வந்தார்? விக்நேச்வரர் பண்ணிய லீலையால்தான்!

இக்ஷ்வாகு வம்சத்தினர் வழிவழியாகப் பூஜித்து வந்த ஸ்ரீ ரங்கநாத விக்ரஹத்தை ராமசந்திர மூர்த்தி விபீஷணருக்குக் கொடுத்துவிட்டார். அது அவருடைய நன்றி பாராட்டும் பெரிய மனஸுக்கும் தியாகத்துக்கும் ஒரு பெரிய 'ப்ரூஃப்'. அயோத்தியில் நடந்த ஸ்ரீராம பட்டாபிஷேகத்தில் எல்லா வானரர்களும் ராட்சஸர்களும் கலந்து கொண்டுவிட்டு அப்புறம் தங்கள் தங்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள். அப்போது ராமர் அவர்கள் தனக்குச் செய்த ஸஹாயத்தை நன்றியோடு நினைத்து, அவர்களுக்குப் பொன்னையும் பொருளையும் வாரிவிட்டு வெகுமதிகள் கொடுத்தார். இவருக்குக் கைங்கர்யம் செய்ய அவர்களுக்குக் கொடுத்து வைத்திருந்ததே பெரிய வெகுமதி, பாக்கியம் எல்லாம். ஆனால் அவருடைய உசந்த குணம் அவர்களிடம் நன்றி பாராட்டி வெகுமதிகள் கொடுத்தார். இவரால்தான் ஸுக்ரீவனும், விபீஷணனும் ராஜாக்களாக ஆனதே. ஆனால் அவர்களுக்குத் தாம் நன்றிக்கடன் பட்டிருப்பதாகவே ஸ்வாமி நினைத்து, ராஜாராமரானவுடன் பெரிசாகப் பரிசுகள் தந்தார். முக்யமாக நவரத்னாபரணங்கள், பீதாம்பராதிகள் தந்தார்.

விபீஷணருக்கு மட்டும் அது போதாது, அதற்கு மேல் ரொம்ப உசந்த ஒன்று தரணும் என்ற எண்ணினார். ஏனென்றால் அண்ணாவைத் தியாகம் செய்துவிட்டு ராமரே ஸர்வமும் என்று அவர் காலில் வந்து விழுந்தவர் விபீஷணர். சரணாகதருக்கு உதாரணமாக அவரையே சொல்வது. விபீஷணருக்கும் ஸுக்ரிவனுக்கும் ஒரு பெரிய வித்தியாஸம் சொல்கிறதுண்டு:பெண்டாட்டியையும்

கிஷ்கிந்தா ராஜ்யத்தையும் தனக்குப் பெற்றுக்கணும் என்றே ஸுக்ரீவன் ராமரிடம் வந்து விழுந்தது, விபீஷணர்தான் கார்யார்த்தமாக இல்லாமல் நிஜமான சரணாகதி செய்தது என்பார்கள். அதோடு, ராமசந்த்ரமூர்த்தி தன்னுடைய சரணாகத ரட்சணத்தை ப்ரகடனப் படுத்திக்கொண்டு ஸத்யப் பிரதிக்ஞையாகவே ஸகலருக்கும் வாக்குக் கொடுக்கும்படியான வாக்கியத்தைச் சொல்ல வைத்தவரும் விபீஷணரே. அவர் நிஜமான சரணாகதராக வந்திருந்த போதிலும் ராமரைச் சுற்றியிருந்தவர்கள் - ஹநுமார் ஒருத்தரைத் தவிர ஸுக்ரீவன், அங்கதன் முதலானவர்கள் - அவரை ஸந்தேஹித்துப் பேசினார்கள். அதனாலேயே, நல்ல பக்திமானை

ஸந்தேஹிக்கிறார்களே என்பதில் ராமருக்கு உண்டான உணர்ச்சி வேகத்திலே அவர் பெரிசாக ஸத்யப் பிரதிக்ஞை பண்ணிவிட்டார்:" 'நான் உன்னைச் சேர்ந்தவன்' என்று ஒருத்தன் ஒரே ஒரு தரம் சொல்லி என்னை யாசித்துவிட்டாலும் போதும், அவனுக்கு லோகத்தில் எது ஒன்றாலும் பயம், அதாவது கஷ்டம் ஏற்படாதபடி அபயம் தந்து ரட்சிப்பேன். இதுவே என் ஜீவித விரதம்" என்று ஒரு ஆவேசத்தில் சொல்லிவிட்டார்:

"ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே 1

அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் - வ்ரதம் மம 11"

அப்பேர்ப்பட்ட பக்திமானுக்கு ரொம்பப் பெரிசாக ஒன்றைத் தரவேண்டும் என்று ராமர் இப்போது பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்ட ஸமயத்தில் நினைத்தார். பரமத் தியாகியான அவராலேதான் அப்படிப் பண்ண முடியும் என்கிற மாதிரி, என்ன செய்தாரென்றால் இக்ஷ்வாகு வம்ச குலதனமாக, குலதேவதையாக, வழிவழியாகப் பூஜை பண்ணிக்கொண்டு வந்திருந்த ரங்கராஜா விக்ரத்தையே ப்ரணவாகாரமான விமானத்தோடுகூட விபீஷணருக்குக் கொடுத்துவிட்டார். கொடுத்து, லங்கைக்குத் திரும்ப அனுப்பிவிட்டார்.

விக்ரஹத்தோடு புறப்பட்ட விபீஷணர் அயோத்தியிலிருந்து தெற்காக ரொம்ப தூரம், அயோத்தியிலிருந்து பார்க்கிறபோது ஏறக்குறைய தேசத்தின் தெற்கோரத்தில் இருக்கிற உபய காவேரிக்கு வந்துவிட்டார்.

அதுவரை சும்மாப் பார்த்துக்கொண்டிருந்த விக்நேச்வரர்தான் சட்டென்று அப்போது, "இந்த பாரத தேசத்தை, தமிழ் தேசத்தை, ரமணீயமான இந்தக் காவேரித் தீவை விட்டுப் பெருமாள் போகவாவது?" என்று நினைத்தார். மாய விளையாட்டெல்லாம் பண்ணி, ரங்கநாதர் அந்த இடத்திலேயே அசைத்தெடுக்க முடியாதபடி ப்ரதிஷ்டை ஆகும்படிச் செய்துவிட்டார். என்ன செய்தாரென்றால்...

"விமான விக்ரஹங்களை பூமியில் எங்கேயும் வைக்கப்படாது. எங்கே கீழே வைத்தாலும் அங்கேயே அது நிலையாக ப்ரதிஷ்டை ஆகிவிடும். அதனால் நேரே லங்காபுரிக்கே அதைக் கொண்டு போய் அங்கேதான் கீழேவைக்கணும்" என்று ராமர் சொல்லியினுப்பியிருந்தார்.

விக்நேச்வரர் என்ன பண்ணினார் என்றால், காவேரி அலை புரட்டிக்கொண்டு போகிற அழகைப் பார்த்ததும் விபீஷணருக்கு அதிலே ஸ்நானம் பண்ணணும் என்ற ஆசை தோன்றும்படிப் பண்ணினார். தாமும் ஒரு ப்ரஹ்மசாரிப் பையனாக

அங்கே போய் நின்று கொண்டார். ஸாதுப் பிள்ளை, சமர்த்துப் பிள்ளை என்று தோன்றும்படியான ரூபத்தோடு நின்று கொண்டார்.

"அப்பா, கொழந்தே!நான் ஸ்நானம் பண்ணிட்டு வரவரையிலே இதை நீ பூமியிலே வெச்சுடாம, கையிலேயே வெச்சுக்கறயா?" என்று விபீஷணர் கேட்டார்.

"அப்படியே பண்றேன். ஆனாலும் எனக்குக் கை கனத்துப் போனா என்ன பண்றது? மூணு தரம் ஒங்களைக் கூப்பிடறேன். அப்டியும் நிங்க வல்லேன்னா கீழே வெச்சுப்புடுவேன்" என்று விக்நேச்வரர் சொன்னார்.

"ஆனா ஸரி" என்று விபீஷணரும் ஒப்புக் கொண்டார். விக்நேச்வரர் என்ன பண்ணினார் என்றால், விபீஷணர் பிரவாஹம் கண்ட உத்ஸாஹத்தில் காவேரிக்குள் ரொம்ப தூரம் நீச்சலடித்துப் போய்விட்ட ஸமயம் பார்த்து, சட் சட் என்ற அவர் மூன்று தரம் கூப்பிட்டார்.

அவர் அதற்குள் வரமுடியவில்லை.

"நான் சொன்னபடி கூப்டுட்டேன். நீங்க சொன்னபடி வரல்லை. கனம் தாங்காம இதோ பூமியிலே வெச்சுட்டேன்" என்ற சொல்லிக்கொண்டு உபய காவேரி மத்தியிலிருந்த திட்டில் விக்ரஹத்தை வைத்துவிட்டார்.

விக்ரஹம் அங்கேயே அப்படியே ஆழமாக ப்ரதிஷ்டை ஆகிவிட்டது.

கதையைப் பார்த்தால் அதுவரை நல்ல பலிஷ்ட பாலர் ஒருத்தர் கையிலே தாங்கி கொள்கிற அளவுக்கே - (சிரித்து) ஙிஷீகூஷீமீ ணீதீறீமீ ஒவீக்ஷ்மீஎன்கிறார்களே, அப்படித்தான்- விக்ரஹமும் அதற்கான விமானமும் சேர்ந்தே இருந்திருக்கணும் என்று ஆகிறது. இக்ஷ்வாகு வம்ச ராஜாக்கள் தாங்களே பண்ணுகிற தங்களது அகத்துப் பூஜையில் வைத்துக்கொண்டிருந்தார்கள் என்றால், அப்படித்தானே (சிறிய அளவினதாக) இருந்திருக்கணும்?

இப்போது காவேரிக் கரையில் வைத்தபின்தான், பெருமாளும் க்ஷீரஸாகரமா யில்லாவிட்டாலும் மஹாநதியாக இருக்கிற இடத்தில் ஸந்தோஷப்பட்டுக்கொண்டு பெரும் ஆளாகவே நன்றாக நீள நெடுக ஆக்ருதி எடுத்துக்கொண்டிருக்கணும். அதே மாதிரி விமானமும் பெரிசான ஆலய ஸந்நிதியாக ஆகியிருக்கணும்.

வேக வேகமா ஸ்நானம் முடித்து ஓடிவந்த விபீஷணருக்கு ஒரே ஏமாற்றமும் கோபமுமாக வந்தது. 'கீழே வைக்கப்படாது என்று 'கன்டிஷ'னாயிற்றே, இந்த பிள்ளை வைத்து விட்டதே!என்ன ஆயிருக்குமோ?' என்று விசாரப்பட்டுக் கொண்டு விக்ரஹத்தை பூமயிலிருந்து எடுக்கப்போனார். ஆனால் அவர் எத்தனை பிரயத்னம் செய்தும் விக்ரஹம் அசைந்தே கொடுக்காமல் பூமியிலே நன்றாகப் பதிந்துவிட்டிருந்தது. விபீஷணருக்கு ப்ரஹ்மசாரிப் பிள்ளை மேல் கோபம் கோபமாக வந்தது. அவரைக் குட்டுவதற்காகக் கையை மடக்கிக்கொண்டு வந்தார். பிள்ளையார் ஒட்டமாக ஓட, "விட்டேனா பார்" என்று விபீஷணரும் துரத்தினார். மலைக் கோட்டை உச்சிக்குப் போய்விட்ட பிள்ளையார் தாமே மனஸ் இரங்கி விபீஷணருக்குப் பிடிபட்டார். பகவானாக நமக்குப் பிடிபட்டால்தான் உண்டே தவிர, நாமாக ஸொந்த பலத்தால் அவரைப் பிடித்துவிடமுடியுமா என்ன? யசோதைக்கூடப் பாடாகப் படுத்தின பாலக்ருஷ்ணமூர்த்தியை உரலில் கட்டிப் போடப் போய், எத்தனை கயிறும் போதாமல் வேர்த்து விருவிருத்துத் தினறின

போது, பகவானேதான் மனஸ் இரங்கி கயிற்றைப் போதும்படியாக்கி அவள் தன்னை உரலோடு சேர்த்துக் கட்டிப் போடும்படிப் பண்ணினான் என்றுதானே பாகவதத்தில் இருக்கிறது?

பிள்ளையார் விபீஷணருக்குப் பிடிபட்டு அவர் தன்னுடைய சிரஸில் குட்டுவதற்கும் பரம கருணையோடு காட்டிக்கொண்டிருந்தார். எல்லாரையும் எவர் குட்டுப் போட்டுக்கொள்ள வைக்கிறாரோ, அவரே அப்போது தனக்குக் குட்டு வாங்கிக்கொண்டார்.

அந்த க்ஷணமே பிரம்மசாரி ரூபம் மாறி விக்நேச்வர மூர்த்தியாகி தர்சனமும் கொடுத்தார்.

அந்த தர்சனத்திலேயே விபீஷணருடைய ஏமாற்றம், துக்கம், கோபம் எல்லாம் பாதிவாசி சமனமாகிவிட்டது. பாக்கிப் பாதியும் சமனமாகும்படியாக விக்நேச்வரர், அவரிடம், "பெருமாளை நான் லங்கைக்குப் போக விடவில்லையே என்று வருத்தப்படாதே. இங்கே இருந்தபடியே அவர் லங்கையைப் பார்த்து அநுக்ரஹம் பண்ணும்படியாகத்தான் அவரை நான் வைத்திருக்கிறேன். தெற்குப் பார்க்கப் பெருமாளை ப்ரதிஷ்டை செய்கிற வழக்கமே இல்லாவிட்டாலும் நான் இங்கே அப்படித்தான் வைத்திருக்கிறேன்" என்றார்.

---

## தெற்கு நோக்கும் தெய்வம் மூன்று : சைவ - வைஷ்ணவ ஸமரஸம்

விக்நேச்வரரின் அப்பாவான பரமேச்வரன்தான் தக்ஷிணாமூர்த்தியாகவும், நடராஜாவாகவும் இருக்கிறபோது தெற்குப் பார்க்க இருப்பவர். இப்போது அவர் (விக்நேச்வரர்) மாமாவையும் அதே மாதிரி தெற்கே பார்க்க வைத்துவிட்டார். லோகமே தெரியாமல் அடித்த சிலையாக த்யானத்திலே உட்கார்ந்திருக்கிறவர் தக்ஷிணாமூர்த்தி. ஸர்வ லோக வியாபாரத்தையும் ஆனந்தக்கூத்தாக்கி அமர்க்களமாக ஆடுகிறவர் நடராஜர். சயன மூர்த்தியாக நித்ரை பண்ணிக் கொண்டிருக்கும் பெருமாளோ நித்ரை என்ற பேரில் தக்ஷிணாமூர்த்தி இருக்கிற அதே ஸமாதி ஸ்திதியில் இருக்கிறவர்தான். பின்னே ஏன் இதை ஸமாதி என்காமல் நித்ரை என்கிறார்களென்றால்... அவர் மஹா மாயாவித்தனம் - நமக்குப் புரியாத இந்திர ஜாலம் எல்லாம் - பண்ணுகிறவரோல்லியோ, அதனால் ஸமாதியில் பாட்டுக்கு ஒரு பக்கம் இருந்துகொண்டே, இன்னொரு பக்கம் நாம் எப்படி நித்ரையின் போது ஸ்வப்னம் கண்டு அந்த ஸ்வப்னத்தில் நாம் ஒருத்தரே நம் ஒருவருடைய நினைப்பாலேயே மநுஷ்யர்கள், இடங்கள், ஸம்பவங்கள் எல்லாவற்றையும் கல்பிக்கிறோமோ (கற்பனை செய்கிறோமோ) அந்த மாதிரித் தன் ஒருத்தருடைய கல்பனா ஸ்ருஷ்டியாகவே இத்தனை ஜீவ - ஜகத் ஸ்ருஷ்டியையும் பண்ணுவார். அதனால் இதை அவருடைய ஸ்வப்னம் என்று வைத்தது. ஸ்வப்னம் வரவேணுமானால் தூங்கினால்தானே முடியும்? அதனால் அவருடைய ஸமாதியை நித்ரை என்கிறது. இப்படிச் சொல்ல இன்னொரு கூடுதல் காரணம், அவர் பொது வழக்கப்படி நேரே நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு ஸமாதியில் போகாமல், தம்முடைய மாயாவித்தனத்தை இதிலும் விடாமல், நன்றாக நீள நெடுகச்

சயனித்துக் கொண்டு இருப்பதாகும். ஆனாலும் இந்த நித்ரை நம்முடைய நித்ரை போன்றதில்லை என்று தெரிவிப்பதாக அதை 'யோக நித்ரை' என்று ஒரு சிறப்பு அடைமொழி போட்டுச் சொல்வது, நாமெல்லாம் அறிவு மழுங்கித் தூங்குகிறாற் போலில்லாமல் நல் அறிவு விழிப்போடேயே அவர் தூக்கத்தில் லோக ஸ்ருஷ்டியாதிகளைக் கல்பனை பண்ணுவதால் தமிழிலே அழகாக 'அறிதுயில்' என்பது. அரிசெய்வது அறிதுயில்!

'அப்பாவின் ஸமாதி மூர்த்தம். ஜகத் வியாபார மூர்த்தம் இரண்டும் தெற்குப் பார்க்க இருக்கிற போது, மாமா இரண்டையும் சேர்த்துப் பண்ணிக் கொண்டிருக்கிற பள்ளிகொண்ட மூர்த்தியும் அப்படி இருக்கவேண்டாமா?' என்று விக்நேச்வரர் நினைத்துக் கொண்டிருந்தார் போல இருக்கிறது. இப்போது விபீஷணாழ் வாரிடமிருந்து அப்படிப்பட்ட மூர்த்தியைப் பறிமுதல் பண்ணினபோது... (சிரித்து) வெளிதேசத்துக்குக் கொண்டுபோகக் கூடாது என்று கஸ்டம்ஸ் அதிகாரி சரக்கைக் கைப்பற்றுகிற மாதிரிப் பண்ணினபோது, அந்தப் பரம பக்தருக்கு அநுக்ரஹமும் தடைப்படக்கூடாது என்ற பரம கருணை விக்நேச்வரருக்கு உண்டாகி, அவருடைய ஊரைப் பார்க்க விக்ரஹத்தை ப்ரதிஷ்டை பண்ணிவிடலாமென்று நினைத்து, அதே ஸமயம் அப்பா மாதிரியே மாமாவுக்கும் தெற்குப் பார்க்க மூர்த்தி உண்டாக்கித் தன்னுடைய ஆசையையும் தீர்த்துக் கொண்டார் என்று தோன்றுகிறது.

அவருடைய ஹஸ்த விசேஷமும், ஈச்வரனுக்கு எப்படியோ அப்படியே

பெருமாளுக்கும் என்ற ஸமரஸமான மனோ விசேஷமும், இரண்டும் சேர்ந்து அப்படி அவர் ப்ரதிஷ்டித்த ரங்கராஜாவே மற்ற அத்தனை க்ஷேத்ரத்துப் பெருமாள்களுக்கும் ராஜாவாக அக்ரஸ்தானம் (முதலிடம்) பெற்றுவிட்டார்!அந்த ராஜாவின் ஆஸ்தானமான க்ஷேத்ரம் ஸ்ரீரங்கம் என்றும், திருவரங்கம் என்றும் பேர் பெற்றது.

நான் மாற்றிச் சொல்லிவிட்டேன் 'ரங்கராஜா' இருக்கிறதால் அந்த இடம் 'ரங்கம்' என்பது ஸரியில்லை, அந்த இடத்துக்கு 'ரங்கம்' என்ற பேர் இருப்பதால்தான் அங்கே ராஜாவாக இருக்கிறவருக்கு 'ரங்கராஜா'என்று பேர் ஏற்பட்டது. இக்ஷ்வாகு வம்ச ராஜாக்கள் - ராமர் வரை இருந்தவர்கள்- ஆராதித்துக் கொண்டிருந்தபோது அவருக்கு நாராயணன், விஷ்ணு என்று பொதுப் பெயரோ, அல்லது ஆதிசேஷ ஸர்ப்பத்தின் மேல் சயனித்துக் கொண்டிருப்பதால் சேஷசாயி, அனந்தசாயி என்கிற மாதிரி ஒரு பெயரோதான் இருந்திருக்கும். உபய காவேரி மத்தியில் விக்நேச்வரர் அவருக்கு ரங்கமாக ஒரு ஸ்தானத்தை ஏற்படுத்திய இப்போதுதான் அவர் ரங்கராஜா என்ற பெயரைப் பெற்றிருக்கவேண்டும்.

அதென்ன 'ரங்கம்'?

ரங்கம் - தமிழில் 'அரங்கம்' - என்றால் நாட்டிய நாடகங்கள் நடக்கும் மேடை. அதைப் பார்க்க ஜனங்கள் கூடியிருக்கும் ஹாலையும் சேர்த்து, என்றும் சொல்லலாம். அதாவது 'ஸ்டேஜ்' மாத்திரம் என்றும் சொல்லலாம், 'தியேட்டர்' முழுவதும் என்றும் சொல்லலாம். லோக நாடகத்தை ஸ்வப்ன கல்பனையாகப் பண்ணும் மஹா பெரிய நாடகக்காரன் ரங்கத்தில்தானே அந்த நாடகம் நடத்தணும்? இதே கார்யத்தைப் பரமேச்வரனாக இருந்து கொண்டு நாட்டியமாக அவன் பண்ணும் சிதம்பரத்தில் அவனுடைய ஸந்நிதிக்கு 'ஸபை' என்று பெயர். 'சித்ஸபை' என்பார்கள். ஜனங்களுக்குத் தெரிந்த பெயர் 'கனக ஸபை'. இந்த இடத்தில் 'ஸபை' என்பதற்கு, 'ரங்க'த்துக்கு என்ன அர்த்தமோ அதே

அர்த்தந்தான். அதாவது நாட்டிய - நாடக சாலை என்றே அர்த்தம். இப்போதுங்கூட ஸங்கீதக் கச்சேரி, டான்ஸ் கச்சேரி நடத்துகிற ஸங்கங்களெல்லாம் 'ஸபா', 'ஸபா' என்றுதானே பேர் போட்டுக்கொள்கின்றன? 'ஸபா'வில் ஒருத்தர் முதல் தடவையாக டான்ஸ் கச்சேரி பண்ணுவதை 'அரங்கேற்றம்' என்கிறார்கள். இங்கே சித்ஸபை, ஸ்ரீரங்கம் இரண்டும் ஜாடையடிக்கின்றன.

நடைமுறையிலுள்ள வழக்கத்தை அநுஸரித்து நாட்டியம் என்றால் டான்ஸ், நாடகம் என்றால் ட்ராமா என்ற அர்த்தத்தில் நாட்ய - நாடக சாலை என்று நடுவே சொன்னேன், ஆனால் 'நாட்ய சாஸ்த்ரம்' என்கிற பரதரின் பெரிய ப்ரமாணப் புஸ்தகத்தில் 'நாட்டியம்' என்பது முக்யமாக இப்போது நாம் 'நாடகம்' என்று சொல்வதைத் தான் குறிக்கிறது, அதிலேயே டான்ஸைப் பற்றியும் வருகிறது. அது மட்டுமில்லாமல் ஸங்கீதம் பற்றியும் வருகிறது. 'நட' என்ற வேர்ச் சொல்லிலிருந்துதான் நாடகம், நாட்யம், நடனம் - தமிழில் 'நடப்பது' - எல்லாமே வந்திருக்கிறது. அது அசைவை, னீஷீமீ வீஷீஸீ-ஐக் குறிக்கிற தாது (வேர்ச்சொல்)....

டான்ஸ் பண்ணும் தகப்பனாருக்குக் கோவிலாக ஒரு நாட்டிய - நாடக சாலை 'ஸபை' என்றே இருக்கிறதென்றால், ஸ்வப்னமாகவே ட்ராமா பண்ணும் மாமாவுக்கும் அப்படி ஒன்று இருக்கணும் என்று தீர்மானித்த விக்நேச்வரர், தத்வத்தில்

ஒன்றேயானாலும், பெயரில் வித்யாஸம் இருந்தால்தான் அழகு என்று தாம் ப்ரதிஷ்டித்த மூர்த்தியின் ஸந்நிதிக்கு 'ரங்கம்' என்று பெயர் வைத்தார்.

---

# விநாயகர் லீலையின் மெய்ம்மையும் பொருத்தமும்

ஸ்ரீரங்கத்தைப் பற்றி ஸ்தல புராணத்தில் எப்படி இருக்கிறதோ, ஞாபகமில்லை. ஆதியிலிருந்தே அந்த மூர்த்திக்கு ரங்கராஜப் பேர் உண்டு என்றும், அவர் இருக்கும் விமானத்துக்கு ஸ்ரீரங்கம் என்று பேர் உண்டு என்றும் இருக்கிறதோ என்னவோ? வைஷ்ணவர்களுடைய ஸ்தல புராணமானதால் விக்நேச்வரர் ஸமாசாரம் அதில் இல்லை என்று மட்டும் ஞாபகம் இருக்கிறது. ராமர் காலத்திலே இருந்த சோழ ராஜா.... தர்மவர்மா என்று அவனுக்குப் பேர், ஸ்ரீரங்கம் மூல ஸ்தானத்தைச் சுற்றியுள்ள ப்ராகாரத்துக்கு 'தர்மவர்மன் சுற்று' என்றே பேர், அந்த ராஜா, ரொம்ப காலமாகவே இந்த இக்ஷ்வாகு வம்ச குலதேவதை தன்னுடைய ராஜ்யத்தில் எழுந்தருளணும் என்று தபஸ் இருந்ததால், விபீஷணர் கொண்டு வந்த விக்ரஹம் இங்கே அவர் சிரம பரிஹாரத்திற்காக இறக்கிவைத்தபோது இந்த இடத்திலேயே நிலைக்குத்திட்டுவிட்டது என்றுதான் அதில் சொல்லி அதோடு விட்டிருக்கிறது என்று ஞாபகம் .

ஆனால் லோகத்தில் பிரஸித்தமாயிருப்பது விக்நேச்வரரின் லீலையால் விக்ரஹம் ப்ரதிஷ்டை ஆனதாகத்தான். நம்முடைய மதத்தில் இரண்டு பெரிய பிரிவுகளாக இருக்கும் சைவ - வைஷ்ணவர்களை. ஸமரஸப்படுத்துவதாக இந்தக் கதை இருப்பதால் மனஸுக்கு ஹிதமாயிருக்கிறது. மேலே கதை போயிருக்கிற போக்கு அதற்கு இருக்கும் ஸத்யத்வத்தையும் காட்டுவதாக இருக்கிறது.

கதை எப்படிப் போனதாகப் பார்த்தோம்? பிள்ளையார் ஓடு ஓடு என்று ஓடி

மலைக்கோட்டை உச்சிக்குப் போனார், விபீஷணர் துரத்து துரத்து என்று துரத்திக்கொண்டே போய் சிரஸிலே குட்டினார் என்று (பார்த்தோம்). அதற்கேற்க, உச்சிப் பிள்ளையார் பிம்பத்தின் சிரஸில் இன்றைக்கும் குட்டுப் பட்டதில் உண்டான வடு இருக்கிறது. பிள்ளையார் மலை உச்சியில் இருப்பதே அபூர்வம். விபீஷணரிடம் அகப்படாமலிருக்கத்தான் அவர் மலை ஏறி வந்து அங்கே அப்படியே ஸ்திரவாஸம் கொண்டுவிட்டார் என்பது பொருத்தமாக இருக்கிறது.

இதிலேயே பெரிய யோக சாஸ்திர தத்வார்த்தமும் இருக்கிறது. அடி மூலாதாரத்தையும் உச்சி ஸஹஸ்ராரத்தையும் சேர்த்து வைக்கிற தத்வம். அந்த விஸ்தாரம் இப்போது வேண்டாம்.

ஸ்ரீரங்கநாதருக்கு விக்நேச்வர ஸம்பந்தம் இருப்பதில் இன்னொரு பொருத்தமும் உண்டு. அகஸ்தியர் கமண்டலுவுக்குள் அடைத்து வைத்திருந்த காவேரியை வெளியிலே ஆறாகப் பிரவஹிக்கப் பண்ணினவரே விக்நேச்ரவர்தான். காக்காய் ரூபத்திலே போய்க் கமண்டலுவைக் கவிழ்த்து ஓடவிட்டார் என்று கதை. காக்காயை அக்ஸ்த்யர் துரத்திக்கொண்டு போனார். அப்போது காக்காய் பிரம்மசாரியாக மாறிற்று. விபீஷணர் கதையிலும் பிரம்மசாரியாக அவர் ஆனதைப் பார்க்கிறோம்!ÞŠ«ð£¶ Mdûí˜ Üõ¬ó,°†ìŠ «ð£ù£˜ â¡Á ð£˜ˆ«î£‹. Ì˜õˆF½‹ Üõ¬ó, °†ì˜î£¡ ÜèvFò˜ ¬è¬ò ºw®ò£è ñì,A ªè£‡´ ¶óˆFù£˜.

இப்போது குட்டுப்பட்ட அப்புறம் ஸ்வய ரூபம் காட்டிய விக்நேச்வரர் அப்போது குட்டுப் படுகிறதற்கு முந்தியே மஹர்ஷிக்கு திவ்ய ரூபத்தில் தர்சனம் கொடுத்துவிட்டார். "ஐயோ!à¡¬ùò£ °†ìŠ «ð£«ù¡? Þ‰î Üðê£óˆ¶,è£è

என்னையேதான் குட்டிக்கணும்" என்று அகஸ்தியர் இரண்டு கையாலும் இரண்டு பொட்டிலும் குட்டிக்கொண்டார். அவருக்கு நிரம்ப அநுக்ரஹம் செய்த பிள்ளையார் அப்போதுதான் அவர் குட்டிக் கொண்டதை தம்முடைய வழிபாட்டிலேயே ஒரு முக்யமான அம்சமாகப் பண்ணி ஸகல ஜனங்களும் அப்படிப் பண்ணணும் என்று வைத்தார் என்று ஒரு கதை.

இந்த இரண்டு கதைகளிலும் இருக்கிற ஒற்றுமை ஒன்றை மற்றது 'காம்ப்ளிமென்ட்' பண்ணுவது ஆகியவற்றுக்குச் சிகரமாக, மஹாவிஷ்ணு, காவேரி, விக்நேச்வரர் மூவரையும் ஸம்பந்தப்படுத்துவதாக ஒன்று வருகிறது. ஆதியில் விக்நேச்வரர் கமண்டலுவைக் கவிழ்த்துக் காவேரியாக ஓட வைத்தது எங்கே என்றால் மேற்குத் தொடர்ச்சி மலையில் ஸஹ்யாத்ரி என்று இருக்கிற இடத்தில் ஒரு நெல்லி மரத்தின் அடியிலிருந்துதான், நெல்லி மரத்தடிதான் காவேரிக்கு உத்பத்தி (உற்பத்தி) ஸ்தானம். அந்த நெல்லி மரம் ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுதான். பெருமாள்தான் அப்படி விருக்ஷரூபத்தில் நின்றார். விஷ்ணு மாயையின் ஒரு அம்சமே லோபாமுத்ரை என்ற ஸ்த்ரீயாகி அந்த லோபாமுத்ரை அகஸ்த்யருக்குப் பத்னியாகி அப்புறம் அவருடைய கமண்டலு தீர்த்தமாக ஆனது.

அவள் காவேரியாக பகவானின் பாதத்திலிருந்து பிரவஹித்தபோது அவர் அவளிடம் பரமப்பிரியத்துடன் "கங்கையும் என்னுடைய பாத தீர்த்தத்திலிருந்துதான் பெருக்கெடுத்து ஓடினாள். அவளைக் காட்டிலும் நீ எனக்கு ப்ரியம். ஆகையினோலே, அவளுக்கு என் பாத ஸ்பரிசம் மாத்திரம் கிடைத்ததென்றால் உனக்கோ என் ஸர்வாங்க ஸ்பர்சமும் கிடைக்க அநுக்ரஹிக்கிறேன். இப்போது மரத்தடி வேரிலிருந்து புறப்பட்ட உனக்கு என் பாத ஸபர்சம் கிடைத்திருக்கிறது. அப்புறம் நீ மஹாநதியாக ஓடி வரும்போது இரண்டாகப் பிரிந்து அப்புறம் ஒன்று சேர்கிற தீவில் இரண்டு ஹஸ்தத்தாலும்

என்னை அப்படியே முழுசாக இரண்டு பக்கமும் அணைத்துக் கொள்வாய்" என்றார்.

அவர் அன்றைக்கு அப்படி வரம் தருவதற்குப் 'பிள்ளையார் சுழி' போட்டவர் அவருடைய பாத ரூபமான நெல்லி மரவேரில் கமண்டலுவைக் கொட்டிக் கவிழ்த்த பிள்ளையார் தான். ஆகையினாலே அவரேதான் உபய காவேரியாக இரட்டைப் பெருக்காக்கி அவள் ஓடிய இடத்தில், அவள் இரண்டு ஹஸ்தத்தாலும் ஆலிங்கனம் செய்து கொள்ளும்படியாக ராமர் விபீஷணனக்குக் கொடுத்த ஜீவ சைதன்யமுள்ள பெருமாள் விக்ரஹத்தை ஸ்தாபித்தார் என்பது, (சிரித்து) புலவர்கள் பாஷையில், 'சாலப் பொருத்தம்' தானே?

இன்னொரு பொருத்தம் - சைவத்தையும வைஷ்ணவத்தையும ஸம எடை கட்டுவதான பொருத்தம் - சொல்கிறேன். ராவண ஸம்ஹாரத்திற்கு அப்புறம் விபீஷணர் ராமரிடமிருந்து அவருடைய மூல ரூபமான ரங்கநாதருடைய விக்ரஹத்தைப் பெற்றுக்கொண்டாரென்றால், அந்த ராவணனும் கைலாஸத்தில் பரமசிவனிடமிருந்து அவருடைய ஸ்வரூபமேயான ஆத்ம லிங்கததைப் பெற்றுக்கொண்டவன்தான். அதை அவன் லங்ககைக்கு எடுத்துக்கொண்டு போகும்போது நம் கதை மாதிரியே அதை பூமியில் வைக்கப்படாது என்று ஸ்வாமி ஆஜ்ஞை பண்ணியிருந்தார். அப்போதும் பிள்ளையார்தான் இதே மாதிரிக் குறும்பு பண்ணிக் கைலாஸ லிங்கம் இந்த பாரத தேசத்தை விட்டுப் போகாமல் ரக்ஷித்துக்

கொடுத்தார். அந்த லிங்கம் பிரதிஷ்டையான இடம்தான் கோகர்ணம். கோவாவுக்குக் கீழே கர்நாடகத்தில் மேற்கு ஸமுத்ரக் கரையில் இருக்கும் மஹாக்ஷேத்ரம். த்வாரகை மாதிரி, ராமேச்வரம் மாதிரி அது ஒரு திவு. அங்கே ஸ்வாமிக்கு மஹாபலேச்வரர் என்று பெயர். பிள்ளையார் பூமியில் வைத்து லிங்கம் நன்றாக ப்ரதிஷ்டை ஆனவிட்டு ராவணன் தன்னுடைய பலம் முழுதையும் - 'ராட்சஸ பலம்' என்றே சொல்லும் அத்தனை பலத்தையும் - காட்டி அதைப் பெயர்த்தெடுக்கப் பார்த்தும் முடியவில்லை. ராவண பலத்தையும் அசக்தி ஆக்கினதாலேயே ஸ்வாமிக்கு மஹாபலேச்வரர் என்று பெயர். அண்ணன்காரன் சிவலிங்கத்தைக் கொண்டு போகவிடாமல் பண்ணியவர், தம்பி மஹாவிஷ்ணு விக்ரஹத்தைக் கொண்டு போகமட்டும் விட்டிருப்பாரா? அதனால் நம்முடைய கதை ஸத்தியமானதுதான் என்று ஆகிறது?

---

## பாரத தேசத்தின் தனித்தன்மை

அது ஸரி, பாரததேசத்தை விட்டு தெய்வ பிம்பங்கள் போகப்படாது என்று பிள்ளையார் ஏன் நினைத்தார், அது ஸரிதானா, நியாயந்தானா என்றால் -

ஒரு மரத்துக்கு ஜலம் விடுவதென்றால் கிளையிலா விடுவார்கள்? பூ, காய் மேலா விடுவார்கள்? வேரிலேதானே விடுவார்கள்? வேரிலே விட்டால் கிளை, இலை, பூ, காய் எல்லவாற்றுக்கும் ஜலம் போய்விடுகிறதோ இல்லியோ? அப்படித்தான் தெய்வ ஸம்பந்தமான விஷயங்களுக்கெல்லாம் லோகம் என்கிற இந்தப் பெரிய விருக்ஷத்திற்கு இந்த பாரத தேசமே வேராக இருக்கிறது. இலைமேல் பூ, காய் மேலும் கொஞ்சம் ஜலம் தெளித்தால் அதுகளும் அதனால் கொஞ்சம் பச்சென்று ஆனாலும், வேரில் விட்டால்தான் அந்த இலை, பூ முதலானதும் உள்ளே ஸத்துப்

பெறுகிறது. அந்த மாதிரி வெளி தேசங்களில் செய்யும் பூஜாதிகளாலும் அந்த தேசங்களுக்குக் கொஞ்சம் நன்மை உண்டாகுமானாலும், இந்த பாரத சேதத்தில் செய்கிறதால்தான் அந்த தேசங்களுக்கும் உள்ளூரப் புஷ்டியான பலன் கிடைக்கும்.

லோக ஸ்ருஷ்டியில் பகவான் ஒவ்வொரு தேசத்தில்தான் நல்ல க்ளைமேட், ஒவ்வொன்றில்தான் ந்லல பயிர் பச்சை, ஒவ்வொன்றில்தான் வைரம், தங்கம், இன்னும் விலை உயர்ந்த தாதுப் பண்டங்கள் என்று வைத்திருக்கிறானோ இல்லியோ? சில தேசங்களை ஒரே குளிர் என்றும் இன்னும் சிலதை ஒரே கொளுத்தல் என்றும் வைத்திருக்கிறான். நில வளம், நீர் வளம், தாது வளம் இல்லாமல் அநேக தேசங்களை வைத்திருக்கிறான். வளமுள்ள தேசங்கள் வளமில்லாத தேசங்களுக்கு ஏற்றுமதி பண்ணி உதவும்படி வைத்திருக்கிறான். அப்படி தெய்வ ஸம்பந்தமான விஷயங்களுக்கு இந்த (பாரத) தேசந்தான், ஒரு பவுர் ஹவுஸ். ஊர் பூராவுக்கும் லைட் கொடுக்கிற மாதிரி லோகம் பூராவூக்கும் தெய்வீகத்தை ஸப்ளை செய்யவேண்டுமென்று வைத்திருக்கிறான். மநுஷ்ய தேஹத்தில் ஹ்ருதயம் என்று முக்யமான அங்கமாக ஒன்றை வைத்து அதுதான் தேஹம் பூராவூக்கும் ரத்தத்தை ஸப்ளை செய்து ரக்ஷிக்கும்படியாக அவன் வைத்திருக்கிற மாதிரியே இந்த விச்வ விராட் ஸ்வரூபத்தில் ஸகல தேசங்களுக்கும் தெய்வ ஸம்பந்தமான, தர்ம ஸம்பந்தமான, ஆத்ம ஸம்பந்தமான ஜீவ சக்தியை ஸப்ளை செய்து ரக்ஷிக்கிற ஹ்ருதயமாக நம்முடைய தேசத்தை வைத்திருக்கிறான்.

இப்படிச் சொன்னதால் மற்ற தேசங்களில் உபாஸனையே நடக்கவேண்டாம் என்று சொன்னதாக ஆகாது. தனித் தனியாக ஒவ்வொரு அங்கத்தையும் ரக்ஷிப்பதற்காக அந்தந்த அங்கங்கள் மேலேயே மருந்து போட்டுக் கொள்ளவும் செய்கிறோமல்லவா? ஒரு செடி, மரம் என்று எடுத்துக் கொண்டாலும் வேரில்தான் ஜலம் விடுகிறோமென்றாலும் பூச்சி, பொட்டு அரிக்காமலிருப்பதற்கா இலை, காய் முதலானவற்றின் மேலேயும் மருந்து தெளிக்கிறோமல்லவா? அந்த மாதிரி அந்தந்த தேசத்திலும் தெய்வாநுக்ரஹ சக்திக்கு ஹானி ஏற்படாமலிருப்பதற்கு அங்கங்கேயும் வழிபாடு - உபாஸனை நடக்க வேண்டியதுதான். இருந்தாலும் எந்த அங்கத்திற்கு ஹானி வந்தாலும் ஹ்ருதயம் பழுதாகாமல் அதற்கு ரத்த ஸப்ளை செய்தால் தான் வியாதி நிவாரணமாகிற மாதிரி நம்முடைய நாட்டில் விதிவத்தாக வழிபாடுகள் நடந்தால்தான் நமக்கு மாத்திரமில்லாமல் ஸர்வ தேசங்களுக்கும் க்ஷேமமுண்டாக முடியும்.

---

## விதிமுறை வழிபாடும், அன்பு வழிபாடும்

இன்னொரு விஷயம், வைதேய பக்தி, ராக பக்தி என்று இரண்டு உண்டு. விதிவத்தாக, அதாவது விதிப்படி ஒரு சாஸ்திர வழியிலே உபாஸனை செய்வது வைதேய பக்தி. இப்படி வழிபாட்டு க்ரமம் என்று இல்லாமல் ப்ரேமையோடு நம் அன்பில் எப்படியெல்லாம் பகவானிடம் ப்ரார்த்திக்கவும், உறவு கொண்டாடவும் தோன்றுகிறதோ அப்படியெல்லாம் பக்தி பண்ணுவது ராக பக்தி. (அதை) அநுராக பக்தி என்றும் சொல்வார்கள் தற்காலத்தில் எந்த விதிமுறைக்கும் கட்டுப்படக்கூடாது என்ற மனப்பான்மை பரவியிருப்பதால் எல்லாரும் தங்களுக்கு ராக பக்தி இருக்கிறதாகவும் அதனால் விதி ப்ரகாரம் ஒன்றும் பண்ணத் தேவையில்லை என்று நினைப்பதாக ஏற்பட்டிருக்கிறது. வாஸ்தவத்தில் நமக்கு அப்படியெல்லாம் ஒன்றும் சுத்த ப்ரேமை பகாவனிடம் பொங்கிக்கொண்டு வந்துவிடவில்லை. அது மட்டும் வந்திருந்தால் நாம் இருக்கிற தினுஸே வேறேயாக

இருக்கும். பரித்யாகத்தில் (எல்லா உறவுகளையும் முற்றிலும் தியாகம் செய்வதில்) ஏற்படும் சரணாகத பாவம், ஈச்வரனிடம் வைக்கிற ப்ரேமையின் ப்ரதிபலிப்பாக ஸகல ஜீவ ஜந்துக்களிடம் ப்ரியம் என்று உத்தமமான சீலங்களோடு இருப்போம்.

வைதேய பக்தியுங்கூட வறட்டு வறட்டு என்று புஸ்தகப்படி ஒரு மெகானிக் தன் ஷாப்பில் காரியம் பண்ணுகிற மாதிரி இல்லாமல் ப்ரேம பாவத்துடனேயே பண்ண வேண்டும் என்றுதான் சாஸ்திரம். விதிப்படி ஒழுகுவதே 'வைதேயம்' என்றேனோல்லியோ? அந்த விதிகளில் அடிப்படையாக ப்ரேமை வேண்டும் என்பதும் ஒன்று. பூஜாரம்பத்தில் (பூஜையின் ஆரம்பத்தில்) ஆத்ம பூஜை என்று ஒன்று செய்துவிட்டு அப்புறந்தான் வெளியிலிருக்கிற ப்ரதிமைக்குப் பூஜை செய்யவேண்டும். அந்த ஆத்ம பூஜையில், 'பூஜை செய்கிற தன்னுடைய தேஹமே பகவான் இருக்கிற தேவாலயம், பூஜை செய்கிற ஜீவனான தானே பூஜிக்கப்படும் தேவனான பகவான், முந்தைய பூஜையில் அர்ச்சனை செய்த புஷ்பம் முதலான நிர்மால்யத்தை எடுத்துப்போட்டு இந்தப் புதுப் பூஜை ஆரம்பிக்கிற மாதிரி. ஜீவனும் தேவனும் வேறே வேறே என்று நினைக்கிற அஞ்ஞானத்தைத் தள்ளிப்போட்டு விட்டு 'அவனே நான்' என்ற 'ஸோ (அ)அஹம்' பாவனையுடன் பூஜிக்கணும்' என்று விதி செய்திருக்கிறது.

தேஹோ தேவாலய:ப்ராக்தோ ஜீவோ தேவ ஸநாதந:1

த்யஜேத் - அஜ்ஞான நிர்மால்யம் ஸோ(அ)ஹம் பாவேந பூஜயேத் 11

இப்படி அவனே நாம் என்றால் அவனிடம் எத்தனை அத்யந்த ப்ரேமை - அநுராகம் - என்பது - இருக்க வேண்டும்? அத்யந்த பந்து என்று நாம் பல பேரிடம் ப்ரியமாக அத்யந்தமாக இருப்பது நமக்கு நாமேதானே?

ஆனால் இப்படி அந்த ச்லோகத்தைச் சொல்கிற ஸ்வல்ப நேரத்திற்கு வேண்டுமானால் நமக்கு அவனிடம் 'நானே அவன்'என்பதிலிருக்கிற அதி ப்ரேமை - அநுராக பக்தி - கொஞ்சம் ஏற்படலாமே தவிர அதையே ஸதாவும் னீணீவீஸீமீணீவீஸீ பண்ணுவது (நீட்டித்துக் காப்பது) முடியவில்லை. தற்காலத்தில் அந்த

மாதிரி எல்லாரும் இருப்பதாக, அல்லது ஸுலபத்தில் இருந்துவிட முடியும் என்பதாகப் பேசுவது வெறும் புரளிதான், விதிக்குக் கட்டுப்படாத அடங்காமைக்கு ராக பக்தி என்று பொய்யாகப் பேர் தருவதுதான்.

ஒப்புக்கொள்கிறேன், அடி நாஸ்திகர் தவிர மற்ற ஜனங்கள் ஸகலருக்கும் பகவானிடம் ஸ்வல்பமாகவது ஒரு ப்ரியம், ப்ரேமை இல்லாமல் போய்விடவில்லை. அந்த ப்ரியத்திற்கு மீயீமீநீமீ இல்லாமலும் போய்விடவில்லை. இப்படி எல்லா தேசங்களிலும் இருக்கிறவர்களின் ராக பக்தி நல்லது பண்ணிக் கொண்டுதான் இருக்கும். ஆனால் அந்த நல்லதும் ஸ்வல்பமாகத்தான் இருக்கும். ஸ்வல்பமாக முதல் போட்டால் வருவாயும் ஸ்வல்பமாகத்தானே இருக்கும்?

விதிபோட்டுக் கொடுத்துள்ள க்ரமமான வழிபாட்டிலே அந்தவிதிகள், அதன்படி விதிக்கப்பட்ட மந்த்ர - ஸ்தோத்ராதிகள், உபசாராதிச் சடங்குகள், மடி - ஆசாரம் ஆகியனவே, நமக்கு ப்ரேமை இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஒரு கணிசமான அளவுக்கு நல்லது பண்ணிவிடும். போகப் போக இந்த விதி முறைகளே நம் ஹ்ருதயத்தில் ஈச்வர ப்ரேமையை வளர்த்தும் கொடுத்து விடும்.

ஆனபடியால் பெரிய அளவில் நல்லது - லோக க்ஷேமம், ஆத்ம க்ஷேமம் - உண்டாக வேண்டுமானால் அடிப்படையான ப்ரமே பாவத்தோடு வைதேய பக்தியை விருத்தி செய்து கொள்வதுதான் தற்போது நாம் இருக்கப்பட்ட நிலைக்கு ஏற்றது. ஸ்வாமியோ கொஞ்சம் பேருக்குத்தான் விதி பார்த்துப் பண்ணமுடியாதபடி அந்தராத்மாவிலிருந்து அநுராகம் பீறிட்டுக் கொண்டுவந்து பக்திப் பித்து, பக்தி போதை என்கிறார்களே, அப்படிப் பரமாத்மாவுடன் கலந்திருக்கும் மனப்பான்மையைக் கொடுத்து விளையாடுகிறார் மற்றவர்கள் விதி ப்ரகாரம் வந்துள்ள ஸ்தோத்ர - மந்த்ராதிகள், சடங்குகள் ஆகியவற்றுக்கு அவற்றுக்கென்றே உள் தெய்விக சக்தியைக் கொண்டுதான் நம்முடைய ஸ்வல்ப அநுராகத்தால் கிடைக்கக்கூடிய ஸ்வல்ப அநுக்ரஹத்தை பலப்படுத்திக் கொள்ளவேண்டும்.

ஆக 'பேஸிக்' ஆகக் கொஞ்சம் பக்தி பாவத்துடன்அநுஸரிக்கிற வைதேய பக்திதான் பெரும்பாலாருக்கு ஆனது. இந்த வைதேய பக்தியில் ஒவ்வொரு தேசத்திலும் ஆங்காங்கு இருக்கிற மதத்தை அநுஸரித்து விதிகள் அமைத்திருக்கிற வழிபாட்டு க்ரமங்கள் இருக்கின்றன. அவற்றுக்கெல்லாமும் தெய்வாநுக்ரஹத்தைப் பெற்றுத் தருகிற சக்தி இல்லாமல் போகவில்லை. இருந்தாலும் வேத மந்த்ரங்களுக்கும், அவற்றைத் தழுவி ஆகம வழிபாட்டு க்ரமத்தில் வருகிற மந்த்ரங்கள், ஸ்தோத்ரங்கள், நாமாவளிகள், உபசார க்ரியைகள் ஆகியவற்றுக்கும் இநத் சக்தி விசேஷமாக இருக்கும்படி பகவான் வைத்திருக்கிறான். அதோடு இந்த பாரத தேசத்து மண்ணில்தான் அந்த சக்தி பூர்ணமாகப் பலன் தரும்படியும் வைத்திருக்கிறான். ஏனென்று கேட்டால் என்ன சொல்வது? ஏன் ஸ்விட்ஜர்லாண்டில் இத்தனை நல்ல க்ளைமேட்டை வைத்துவிட்டு ஸஹாராவில் பொசுக்கி எடுக்கிறான் என்றால் என்ன சொல்வது? ஒன்றும் சொல்லத் தெரியாவிட்டாலும் யதார்த்தத்தை ஒப்புக்கொள்ளத்தானே வேண்டும்?

மந்த்ர வீர்யமானது முழுப் பலனையும் தருவது நம்முடைய தேசத்தில்தான் -

கர்ம பூமி எனப்படும் இந்த பாரத தேசத்தில்தான். இங்கே கர்மா என்றால் மந்த்ரங்கள் ப்ரயோகமாகிற சாஸ்த்ர கர்மா என்றே அர்த்தம். அப்படிப்பட்ட இந்தக் கர்ம பூமியில் அந்த ஆத்மலிங்கமோ, ரங்கராஜ அர்ச்சையோ (விக்ரஹமோ) இருந்தால்தான் லங்கை உள்பட எல்லா தேசங்களுக்கும் அதிக க்ஷேமம்

என்பதால்தான் விக்நேச்வரர் இப்படிச் செய்தது. தமது விகடமான ஸ்வபாவத்தால் வேடிக்கை, கோபம், அடி - தடி - குட்டுகிறது வேறே என்ன? - பரம அநுக்ரஹம் என்று எல்லாம் கலந்த நாடகமாக இதைச் செய்தார்.

இப்படி உபயகாவேரி மத்தியில் அவர் ப்ரஸாதித்த அந்த க்ஷேத்ரம் விஷ்ணு ஸ்தலங்களில் ப்ரதானமாகவும், காவேரி தீரத்திலுள்ள அத்தனை சோணாட்டுசிவ - விஷ்ணு ஆலயங்களளுக்கும் மத்யமணி மாதிரியும் சிறப்புப் பெற்றுவிட்டது.

---

## கலாசார வளர்ச்சி கணேசராலேயே

தேவார ஸ்தலங்களைப் பற்றியும், திவ்ய ப்ரபந்த ஸ்தலங்களைப் பற்றியும் காவேரி ஸம்பந்தமாகச் சொன்னேன். இது தவிர, மூவர் பாடலோ, ஆழ்வார் பாடலோ இல்லாமல் காவேரி தீர ஊர்களில் எழும்பியிருக்கிற கோவில்களோ ஆயிரம் பதினாயிரம் என்று போகும். இம்மாதிரி, 'தெய்வத் தமிழ் நாடு' என்கிறபடி இதைக் கோவில் மயமாக்கி, பக்திக்கு த்ராவிடம்தான் தாய்நாடு என்று பாகவதாதி புராணங்களும் ஸ்தோத்ரிக்கும்படியான ப்ரேமை ஏற்பட்டிருக்கிறதென்றால், அதற்கு ஒரு முக்யமான காரணம் இந்த நாட்டுக்குக் காவேரியை அநுக்ரஹித்த விக்நேச்ரவரர்தான்.

தெயவத்தைத் தொட்டுக் கொண்டே மற்றFine arts (ஸங்கீதம், நாட்டியம், சித்ரம்), Plastic arts (சில்பம்), Literature (இலக்கியம்) எல்லாமும் அந்தப் பிராந்தியத்தில் விசேஷமாக உண்டாகி லோகத்திலேயே பெருமைப்படும்படியான நம்முடைய கலாசாரம் உருவாகியிருப்பது முடிவாக அவரால்தான்.

இப்படி ஒரு பெரிய உபகாரம் பண்ணியிருப்பவர் பிள்ளையார்.

---

# அதிகபட்ச ஆலயம் கொண்டவர்

தமிழ்நாட்டுக்கு நிறையக் கோவில்களை அக்ரஹித்திருக்கிற அவருக்கே இந்தத் தமிழ் நாடும் ஏகப்பட்ட கோவில்கள் கட்டி வைத்திருக்கிறது. இங்கே வேறே எந்த ஸ்வாமிக்கும் இல்லாத அளவுக்குப் பிள்ளையாருக்குத்தான் மூலைக்கு மூலை கோவில்!தமிழ் நாட்டில் இருக்கிற அளவுக்கு இந்த பாரத தேசத்தில் பாக்கி அத்தனை மாகாணங்களிலுள்ள பிள்ளையார் கோவில்களைக் கூட்டினாலும் கணக்கு வராது!பிள்ளையாரையே முழுமுதற் தெய்வமாகக் கொண்ட காணபத்யத்துக்கு மஹாரஷ்டிரந்தான் ராஜதானி என்று சொல்வது. ஆனால் கோவில் கணக்குப் பார்த்தால் அதுவும் தமிழ் நாட்டுக்கு ரொம்பவும் பின்தங்கி எங்கேயோதான் நிற்கும் முதலில் அவருக்கு 'நம்மவர்' என்று முத்ரை குத்தி ஆரம்பித்தேனே, அதுவே முக்யமாக இதை நினைத்துத்தான். ஆனால் உசந்த கலாசாரத்தைக் கொடுத்தவர் என்று சொல்லிவிட்டு 'நாங்க-நீங்க' என்று பிரித்து பெருமை, உரிமை கொண்டாடிக் கொண்டு முத்ரை போடுவதே முரணாக இருக்கிறதாக இப்போது 'ஞானம்' பிறந்திருக்கிறது

---

# விநாயகரும் தமிழ் மொழியும்

கலாசாரத்தில் பாஷை முக்யம். அதை வைத்துத்தானே ஸமய ஸம்பந்தமான நூல்கள், அறிவை வளர்த்துக்கொடுக்கும் நூல்கள், மனஸுக்கு ரஞ்ஜகமான மற்ற கதை, கவிதை, காவ்யம், எல்லாம்? அப்படியிருக்கப்பட்ட தமிழ் பாஷைக்கு விக்நேச்வரர் ரொம்ப முக்யம். எது ஒன்று எழுத ஆரம்பித்தாலும், கடைக்கு ஸாமான் லிஸ்ட் எழுதினால்கூட ஸரி, முதலில் என்று பண்ணுகிறோம்? 'பிள்ளையார் சுழி' என்றுதானே போடுகிறோம்? எடுத்துக்கொண்ட கார்யம்

சுழித்துப் போகாமல் ரட்சித்துக் கொடுப்பதற்காக முதலில் பிள்ளையார் சுழி!'பிள்ளையார் சுழி' என்ற அர்த்தத்தில் ஸம்ஸ்கிருதம் உள்பட இந்த தேச பாஷைகளில் வேறே எதிலும் இப்படி மங்களாரம்ப ஸிம்பலாக ஒன்று இல்லை. இது தமிழ் மொழியின் பாக்யம். 'பாத்யதை' என்று சொல்லி சண்டை கிளப்பாமல் 'பாக்யம்' என்று சொல்லி நமஸ்காரம் பண்ணுவோம்.

முத்தமிழை அவர் ஆதியிலேயே மேரு மலையில் எழுதியிருக்கிறாரென்று ஒரு அபூர்வமான தகவல் அருணகிரிநாதர் கொடுத்திருக்கிறார். திருப்புகழ் பாராயணம் ஆரம்பிக்கும் போது பாடும் 'கைத்தல நிறைகனி' பாட்டில்

முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்

முற்பட எழுதிய முதல்வோனே

என்று ஒரே 'மு' மயமாக மோனை வைத்துப் பாடியிருக்கிறார். எவ்வளவோ தேடியும், விஷயம் தெரிந்த புலவர்களைக் கேட்டுங்கூட 'அல்யூஷன்' (பாடல் குறிக்கும் பூர்வ கதை) அகப்படவில்லை. ஆகக்கூடி, வ்யாஸருக்காக பாரதம் எழுதுவதற்கு முந்தியே, 'முற்பட' என்று பாட்டில் வருகிறதற்கேற்க, பிள்ளையார் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் நூல்களை எழுதினதாக ஏற்படுகிறது.

படிக்க ஆரம்பித்தவுடனே நாம் கற்றுக் கொள்வது ஔவைப்பாட்டி உபதேசங்களைத்தான். அந்தப் பாட்டி யாரென்றால் பிள்ளையாரின் பரம பக்தைதான். வாக்கு உண்டாகிறதற்கே பிள்ளையார் பாதத்தைத்தான் பிடித்தாகணும் என்று அவள் கற்றுக் கொடுத்து நாம் குழந்தையாயிருக்கும் போதே பாடம் பண்ணுகிறோம் 'வாக்குண்டாம்':வாக்கு உண்டாகும். வாக்கு மட்டுந்தானா? சும்மாவுக்காக வாக்கு - பேச்சு அழகாக ஜோடித்துவிட்டால் போதுமா? நல்ல மனஸைப் பெற்று அந்த மனஸிலிருக்கிற நல்ல எண்ணங்கள், கருத்துக்கள் வாக்கில் வந்தால்தானே நமக்கும் புண்யம், பிறத்தியாருக்கும் உபகாரம்? அந்த நல்ல மனஸு, இன்னும் வாழ்க்கை ஸௌக்யமாக அமைவதற்குத் தேவையான லக்ஷ்மி கடாக்ஷம் எல்லாமே ஒரே குறியாக- 'தப்பாமல்' என்று போட்டிருக்கிறாள், அவள்தான் போட்டாளோ, அதுவே தான் விழுந்ததோ? ஒரே குறியாக - அவர் பாதத்தைப் புஷ்பார்ச்சனை பண்ணிப் பிடித்துவிட்டவர்களுக்குக் கிடைத்துவிடும் என்று அந்தப் பாட்டி நமக்குப் பாடிக் கொடுத்திருக்கிறாள்.

வாக்குண்டாம், நல்ல மனம் உண்டாம், மாமலராள்

நோக்குண்டாம், மேனி நுடங்காது பூக்கொண்டு

துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்

தப்பாமல் சார்வார் தமக்கு.

'மேனி நுடங்காது' என்றால் 'சரீரத்தைக் கஷ்டப்படுத்திக் கொள்ளாமல்' என்று அர்த்தம். 'பிள்ளையாரை உபாஸிக்கிறதற்குப் பெரிசாக ஒன்றும் ஹடயோகம், பட்டினி உபவாஸமெல்லாம் வேண்டாம். உடம்பை சிரமப்படுத்திக் கொள்ளாமல் நாலு பூவைப் பறித்துப் போட்டுவிட்டாலே போதும்' என்கிறாள். 'துப்பார் திருமேனி' என்றால் பவளம் மாதிரிச் செக்கச் செவேலென்று அவர் சரீரம் இருப்பதாக அர்த்தம். 'பவளம் போல் மேனி' என்று அப்பர் ஸ்வாமிகள்

நடராஜாவைச் சொன்னாற் போலவே அந்த அப்பனுடைய பிள்ளையும் இருக்கிறார்!ஆனால் 'தாயைப் போலப் பிள்ளை' என்று தானே வசனம் என்றால் அந்தத் தாயாராம் நம்முடைய காமாக்ஷியாயிருக்கிறபோது செக்கச் செவேல் தான்!

---

## வாக்கு மனங்களுக்கு அருள் : தர்மத்திலிருந்து மோட்சம் வரை

ஜீவராசிகளை லட்சக்கணக்கான இனமாக ஸ்ருஷ்டித்திருக்கிற ஈச்வரன் இந்த மநுஷ்ய ஜாதிக்கு மாத்திரம் கொடுத்திருக்கிறது வாக்கு. அந்த வாக்கை உண்டாக்குகிறவர் விக்நேச்வரர் என்றே தமிழ்ப் பாட்டி தமிழ்க் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறாள். 'வாக்குண்டாம்' என்று அவள் ஆரம்பித்ததே அந்த நூலுக்குப் பெயராகிவிட்டது புலவர்கள் மட்டும் அதை 'மூதுரை' என்கிறார்கள்.

வாக்கு மாதிரியே, நல்ல மனஸு, கெட்ட மனஸு என்று பிரிக்க முடியாமல், 'இன்ஸ்டிங்க்டி'ன் மேலேயே ஏதோ ஒரு உள்ளுணர்ச்சி, ஒவ்வொரு இயற்கை வேகங்கள், இவற்றின் மேலேயே பாக்கி அத்தனை ப்ராணி வர்க்கமும் ஜீவித்துக் கொண்டிருக்க, இந்த மநுஷ்ய ஜாதிக்கு மாத்திரமே நல்லது, கெட்டது என்று பாகுபடுத்திக் கொள்ள சக்தியும், அதிலே ஏதோ ஒன்றில் போகிற ஸ்வதந்திரமும் படைத்த மனஸை ஈச்வரன் கொடுத்திருக்கிறார். இதில் மனஸு நல்லதிலேயே போகும்படியாக, 'நல்ல மனம் உண்டாம்' என்னும்படியாக அநுக்ரஹிக்கிறவர் விக்நேச்வரர்தான் என்று குழந்தைப் பிராயத்திலேயே தமிழ் மக்களுக்கு ஔவைப் பாட்டி காட்டிக் கொடுத்திருக்கிறாள்.

நல்லதாக நம்முடைய மனஸ் உருவாகி, அது நல்ல வாக்காகவே பேசணுமானால் அதற்கு மனோ வாக்குகள் போகவேண்டிய நல்ல வழியைத் தெரிவிக்க வேணும். அந்த நல்ல வழிக்குத்தான் தர்ம மார்க்கம் என்று பெயர். அந்த மார்க்கத்திற்கு போட்டுக் கொடுப்பதாக 'நல்வழி' என்றும் ஒரு உபதேச நூல் அந்தப் பாட்டி கொடுத்திருக்கிறாள். அதிலேயும் ஆரம்பத்தில் விக்நேச்வரரைத்தான் ப்ரார்த்திக்கிறாள், அதுதான் பாலும் தெளிதேனும் (பாடல்)"நான் ஒனக்கு நாலு வஸ்து தரேன், பதிலுக்கு எனக்கு நீ மூணு குடுத்தா போறும்"னு வேடிக்கையாகப் பாடியிருக்கிறாள், குழந்தை ஸ்வாமியோல்லியோ?அதனாலே, வேடிக்கையாகக் கணக்குக் காட்டி ஏமாற்றி விடலாம் என்று!

இங்கே அவள் பிள்ளையாரிடம் முத்தமிழ் யாசிக்கிறதற்கு, அவர் மேரு மலையில் முத்தமிழ் எழுதி வைத்தாரென்று அருணகிரிநாதர் சொல்வது ஒத்துப் போகிறது. ஆகையினால் அந்தக் கதை 'ஆதென்டிக்'தான் என்று நிச்சயமாகிறது. ' நல்வழி ' என்பதைத்தான் ' ஸத்கதி ' என்கிறது, நல்வழியில் போய் லோக வாழ்க்கையை நல்லபடியாக வாழ்கிறதோடு ஸத்கதி முடியவில்லை, வாழ்க்கை போதும் என்று ஆகிறபோது "சற்கதி"பெற வேணும்" என்று மஹான்கள் பிரார்த்தித்திருக்கிறார்களே, அந்த 'சற்கதி' என்பதுதான் முடிவான ஸத்கதி மோட்ச மார்க்கம்.

தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்பதில் தர்ம மார்க்கத்தில் ஆரம்பிப்பது

முடிவான மோட்ச மார்க்கத்தில் பூர்த்தியாகணும். அந்த நல்வழியில் ஔவையாரைத் தூக்கிக் கொண்டு போய் கைலாஸத்தில் பார்வதி - பரமேச்வராளிடம் சேர்ப்பித்ததும் பிள்ளையார்தான்.

---

# ஔவை கயிலை சேர்ந்தது:சுந்தரர் சரிதத் தொடர்பு

ஸுந்தரமூர்த்தி நாயனார் கதையோடு சேர்த்து அப்படிச் சொல்கிறது. என்ன கதையென்றால்:

மலையாள தேசத்தை ஆண்டு கொண்டிருந்த சேர ராஜா.... சேரமான் பெருமாள் என்றேதான் அவருக்குப் பெயர் சொல்வது. திருமாக்கோதையார் என்பதே அவருடைய இயற்பெயர். அவர் ஸுந்தரமூர்த்திக்கு ரொம்பவும் ஆப்தம். அவருடைய தலைநகர் திருவஞ்சைக்களம். அங்கே அவரோடு தங்கியிருந்த ஸுந்தரமூர்த்தி ஒரு நாள் சேரமான் பெருமாள் ஸ்நானத்திற்குப் போயிருந்தபோது தாம் மட்டும் கோவிலுக்குப் போனார். ஸ்வாமி தர்சனம் பண்ணினவுடன் ஒரேயடியாக விரக்தி வந்து, "வெறுத்தேன் மனவாழ்க்கையை விட்டொழிந்தேன்" என்று கதறிப் பதிகம் பாடினார். இந்த பூலோகத்திலே அவர் கடைசியாகப் பாடின "தலைக்குத் தலை மாலை அணிந்ததென்னே?" என்று பதிகத்தில் அப்படிச் சொல்லி முறையிட்டிருக்கிறார்... "பூலோகத்திலே பாடின" என்று சொல்வானேனென்றால், அதற்கப்புறம் அவரை கைலாஸத்திற்குப் போகிறபோது ஆகாச வீதியிலிருந்தும் ஒரு பதிகம், "தான் எனை முன்படைத்தான்" என்று ஆரம்பித்துப் பாடினார்....

அதற்கு முந்தித்தான் ரொம்ப விரக்தியாக அவர் பாடினது. இங்கே அவர் பாட, அங்கே கைலாஸத்தில் ஸ்வாமி அதைக் கேட்டு மனஸ் இரங்கினார். பிரம்மாதி தேவர்களைப் பார்த்து, "ஸுந்தரம் என்கிட்டே திரும்பணும்னு துடிச்சுண்டிருக்கான். நிங்கள்லாம் ஐராவதத்தோட - அதுதான் இந்திரனுடைய பட்டத்து யானை, பாற்கடலைக் கடைந்தபோது உண்டானது, நாலு தந்தத்தோடே வெள்ளை வேளேரென்று இருக்கும், அதனுடன் - அஞ்சைக்களம் போய் ஸுந்தரத்தை அதுமேலே ஏத்தி, மரியாதை பண்ணி சட்னு அழைச்சுண்டு வாங்கோ" என்றார்.

மெய்யடியார்கள் என்கிற நிஜ பக்தர்களுக்கு ஸ்வாமி ப்ரம்மாதி தேவர்களும் மரியாதை தரும்படியான ஸ்தானம் தருகிறார். அவர்களும் அப்படியே போய் ஸுந்தரமூர்த்தியை ஐராவதத்து மேலே ஏற்றி அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

ஸ்நானம் முடித்து வந்த சேரமான், ஆகாச வீதியில் அவர்கள் போவதைப் பார்த்து, 'என்னடாது!அத்தனை ஆப்தமாயிருந்தவர் ஒரு வார்த்தை சொல்லாமப் பொறப்பட்டுவிட்டாரே!' என்று தவித்துக் கொண்டு குதிரை மேலே ஏறிக் கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தார். கொஞ்ச தூரம் போனதும் அவர்களைப் பிடித்துவிட்டார்.

போகிற வழியிலே கீழே பூமியிலே ஔவையார் பிள்ளையார் பூஜையில் உட்கார்ந்திருப்பதை ஸுந்தர மூர்த்தியும் சேரமானும் பார்த்தார்கள். "நீயும் எங்களோட கைலாஸத்துக்குக் கிளம்பேன்" என்றார்கள்.

"எடுத்துண்ட பூஜையை மொதல்ல முடிச்சாகணும். அப்பறந்தான் மத்த எல்லாம், கைலாஸமானாலும் ஸரி" என்று அவள் ஸஹஜமாகச் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டு, பூஜையை நிதானமாக விதித்தாகப் பண்ணி முடித்தாள். பிள்ளையாரிடம் ராக பக்தி அப்படியே நிரம்பிய உபாஸகியான ஔவை இப்படி வைதேய பக்திக்கு மதிப்புக் கொடுத்துச் சொன்னதை கவனிக்கணும். வேடிக்கை பார்க்கணுமென்று நினைத்த பிள்ளையார் அன்றைக்கு அவள் நிவேதனம் பண்ணியிருந்த 'நாலும் கலந்த' நைவேத்யத்தை ரொம்ப ரொம்ப நிதானமாகச் சாப்பிட்டு ஏகமாக 'டிலே' பண்ணினார்.

அதற்காக அவள் ஒன்றும் கலங்கிவிடவில்லை. ஏனென்றால் மனங் கலங்காத யோக ஸமாதியை அவளுக்கு எப்பவுமே உள்ளூர அந்த விக்நேச்வரரே அநுக்ரஹித்திருந்தார்

நின்று நிதானமாகச் சாப்பிட்ட அப்புறம் பிள்ளையார், "ஒனக்குக் கைலாஸத்துக்குத்தானே போகணும்? போறதுக்கு முன்னாடி நீ ஒண்ணு பண்ணணும். ஒலகத்துல இருந்த மட்டும் ஒலகத்துக் கொழந்தைகளுக்கா நெறய்ய பாடிக் குடுத்தே அதுவே எனக்கு ப்ரீதிதான். இருந்தாலும் தெய்வக் கொழந்தையான என்னைப் பத்தியே ஒரு முழுப்பாட்டும் நீ பாடிக் குடுக்கணும். அப்புறந்தான் கைலாஸ ப்ராப்திக்கு ஆனதைப் பண்ணுவேன்" என்றார்.

அதற்கு ஔவைப் பாட்டி, "எனக்கு நீ இருக்கிற எடமே கைலாஸந்தான். ஆனாலும் நீ எனக்கு லோக வாழ்க்கை போறும்னு நெனச்சுக் கைலாஸத்துல சேக்க நெனப்பியானா அதுவும் ஸரி. நீ எப்படிப் பண்ணினாலும் ஸரி. ஒன்னைப் பாடணும்னியே. பேஷாப்பாடறேன். ஆனா கைலாஸம் போறதுக்காகவோ, வேறே எதுக்காவோ பாடலை, ஒன்னைப் பாடறதே மோட்சானந்தம் என்கிறதுக்காகவே பாடறேன்" என்று சொல்லிவிட்டு, உள்ளூர அவளுக்கு ஸதா காலமும் அவர் அநுக்ரஹத்தால் ஏற்பட்டிருந்த யோக ஸித்தியுடைய மஹிமை லோகத்துக்கெல்லாம் தெரிகிற மாதிரி அவரைப் பற்றி ஒரு ஸ்தோத்ரம் பாடினாள். அதுதான் 'விநாயகர் அகவல்'.

பாடி முடித்ததும் பிள்ளையார் அவளை அப்படியே தும்பிக்கை நுனியாலே வளைத்துப் பிடித்துத் தூக்கி அந்தத் தும்பிக்கையை அப்படியே நீட்டி, நீட்டி, ஒரே நீட்டாகக் கைலாஸம் வரைக்கும் நீட்டி நேரே ஈச்வர ஸந்நிதானத்திலேயேச் சேர்த்துவிட்டார்!

அவள் அங்கே போனதற்கு அப்புறந்தான் ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் வந்து சேர்ந்தார்கள். தடியை ஊன்றிக் கொண்டு நடக்கிற தொண்டு கிழவி எப்படியடா நமக்கு முன்னாடி வந்திருக்கிறாளென்று அவர்களுக்கு ஒரே ஆச்சர்யமாகி விட்டது. ஸுந்தரர் தெய்விகமான யானை மேலே வந்ததால் அதிவேகமாக வந்தார். சேரமான் பெருமாளோ பஞ்சாட்சரத்தைக் குதிரை காதிலே சொன்னதால் அவருக்கிருந்த மந்த்ர ஸித்தியினாலே அந்தக் குதிரை யானைக்கும் முன்னாலே 'பைலட் கார்' மாதிரிப் போயிற்று ராஜா இப்படிப் பைலட்டாகப் புறப்பட்ட ஆகாச மார்க்கமாகப் போகிறதைப் பார்த்த அவருடைய 'பைலட்'கள் - அவர்களெல்லாம் குதிரை வீரர்கள் - யஜமான விச்வாஸத்தில், அவரைப் பிரிந்து தாங்கள் உயிர் வாழ்வதா என்று அத்தனை பேரும் தங்களைத் தாங்களே உடைவாளினால் ஹத்தி பண்ணிக் கொண்டு விட்டார்கள். அந்த த்யாக

சக்தியினாலே அவர்களுக்கு 'வீர யாக்கை' கிடைத்தாகச் சொல்லியிருக்கிறது.

அதாவது, தர்ம யுத்தம் செய்து செத்துப் போகிற சுத்த வீரர்களுக்குக் கிடைக்கிற திவ்ய சரீரம் கிடைத்ததாம். அந்த சரீரத்தோடு அவர்கள் அப்படியே ஆகாசத்தில் எழும்பித் தங்கள் ராஜாவுக்கும் முன்னாடி அவரைப் பைலட் பண்ணிக் கொண்டு கைலாஸத்திற்குப் போனார்கள்.

ஸ்வாமியை விட்டுப்பிரிந்திருக்க முடியாத ஸுந்தரர் யானை மேல், அவரை விட்டுப் பிரிந்திருக்க முடியாத சேரமான் அவருக்கு முந்தி குதிரை மேல், சேரமானை விட்டுப் பிரிந்திருக்க முடியாத சேவகர்கள் அவருக்கும் முந்தி, ஸூக்ஷ்ம சரீரத்தில் இந்த எல்லாருக்கும் முந்தி குடுகுடு பாட்டி நர சரீரத்திலேயே!ஸுந்தரரும் சேரமானுங் கூட அப்படி (நரசரீரத்திலேயே) போனவர்கள்தான்.

அவளை அங்கே பார்த்து ஆச்சரியப்பட்ட அந்த இரண்டு பேரும், "என்னமா எங்களுக்கு முன்னாடி வந்தே?" என்று கேட்டார்கள்.

பாட்டி சொன்னார்:"என்னமாவா? நன்னாக் கேட்டேள் ஸாட்சாத் பராசக்தியோட தலைப் பிள்ளை ஒருத்தன் இருக்கானே, மதுரமொழி உமைபாலன், அவன் சரணாரவிந்தமே த்யானமாக இருப்பவர்களுக்கு எந்த ரத, கஜ, துரக, பதாதியும் காத தூரம் பின்தங்கித்தான் வரணும்!" என்று பாட்டாகவே சொன்னாள். ஸரியாக ஞாபகமில்லை. "குதிரையும் காதம், கிழவியும் காதம் குல மன்னனே" என்று முடியும். ஸ்வாமிக்கே தோழராக இருந்து அவரையும் ஏவி வேலை வாங்கின ஸுந்தர மூர்த்தியிடம் அப்படிச் சொல்வது மரியாதையாகாது என்பதால் சேரமான் பெருமாளைப் பார்த்துக் 'குல மன்னனே!' என்றுபாடினாள்.

---

## நால்வருக்கும் விநாயகர் அருள்

அந்த ஸுந்தரமூர்த்திக்கும் பிள்ளையார் அநகே அநுக்ரஹங்கள் பண்ணியிருக்கிறார். அவருக்கு மாத்திரம் இல்லை. 'நால்வர்' என்று சிறப்பித்துச் சொல்கிற அப்பர், ஸம்பந்தர், ஸுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நாலு மஹாபெரியவர்களுக்குமே ஒவ்வொரு ஸமயத்தில் விக்நேச்வரர் அருள் புரிந்திருக்கிறார்...

இங்கே ஒரு புலவர் வந்து விக்நேச்வரரைப் பற்றி ஒரு பழைய தமிழ்த் துதி பாடினார். "மூத்த நாயனார் திருவிரட்டை (திரு இரட்டை) மணி மாலை" என்று அதற்குப் பெயர். அதிலே ஒரு இடத்திலே, பிள்ளையாருக்கு ஒற்றைத் தந்தம், இரட்டைக் காது, மூன்று கண் என்று வருகிறது - 'ஒரு கோடு, இரு செவி, முக்கண்' என்று பாடியவர் நல்ல புலவர் ஆனதினால். "ஒன்னு,இரண்டு,மூணு' என்கிறதோடே முடிக்காமல், நாலாவதாக 'நால்வாய்' என்றும் சேர்த்திருக்கலாம்" என்றார்.

நால்வாய் என்றால், "பிள்ளையாருக்கு ஏது நாலு வாய்?" என்று தோன்றும். இங்கே 'நால்' என்பது எண்ணிக்கை இல்லை. 'நாலுதல்' என்றால் தொங்குவது' என்று அர்த்தம். யானை வாயைப் பார்த்தீர்களானால் தெரியும். அது தொளதொள என்று தொங்கினாற் போலத்தான் இருக்கும். அதனால் யானைக்கு நால்வாய் என்று

ஒரு பேர். பிள்ளையார் யானைதானே?

'நால்வாய்' என்று அவர் சொன்னதும் எனக்கு நாலு பேருடைய வாய் நினைவு வந்தது. யார் அந்த நாலு பேர் என்றால் நமக்கு சிவ பக்தியையும் தமிழையும் ஒரு சேர வளர்த்துக் கொடுத்திருக்கிற நால்வர்தான். தேவார திருவாசகங்களைக் கொண்டு தமிழால் சிவ பக்தியையும், சிவ பக்தியால் தமிழையும் வளர்த்துத் தந்தது அவர்களுடைய வாய்தானே? அந்த நால் வாயை நினைத்துக் கொண்டேன். அப்புறம் அந்த நால்வாய்க்கும் இந்த நால்வாய்க்கும் இருக்கிற ஸம்பந்தங்களை ஞாபகப்படுத்திக் கொண்டு பார்த்தேன். அதைப்பற்றிக் கொஞ்சம் சொல்லலாம் என்று (நினைக்கிறேன்).

---

## சம்பந்தருடன் சம்பந்தம்

ஸம்பந்தத்தைச் சொன்னேன். ஸம்பந்தரோடேயே ஆரம்பிக்கிறேன். அவர் குமாரஸ்வாமி அவதாரம். அண்ணாக்காரரையும், அவரையும் பிரிக்கவே படாது என்றும் சொன்னேனோல்லியோ? அதோடு திருமுறைகளிலேயே நூல்களை வரிசைப்படுத்தும்போது ஸம்பந்தரில்தான் ஆரம்பித்து, அப்புறம் அப்பர், அப்புறம் ஸுந்தரர் என்று போயிருக்கிறது.

தேரழுந்தூர் என்று கேள்விப்பட்டிருக்கலாம். தமிழில் கவிச் சக்கரவர்த்தி என்கிற கம்பன் பிறந்த ஊர். 'அழுந்தை மறையோர்' என்று பாட்டுக்குப் பாட்டு அங்கே விசேஷமாக வைதிகாசாரத்தை வளர்த்து வந்த பிராம்மணர்களை ஞானஸம்பந்தர் தம்முடைய பதிகம் நெடுகப் போற்றியிருக்கிறார். அங்கே ஸ்வாமிக்கு வேதபுரீச்வரர் என்றே பேராயிருப்பதால் ஊருக்கே வேதபுரி என்று இன்னொரு பேர் இருந்திருக்கணும். அந்த வேதபுரியில்தான் தமிழின் சக்கரவர்த்திக் கவி பிறந்திருக்கிறார் அங்கே ஞான ஸம்பந்த விநாயகர் என்றே ஒரு பிள்ளையார் இருக்கிறார்.

ஸம்பந்தரின் பாடல் பெற்ற அந்த ஸ்தலம் வைஷ்ணவர்களின் திவ்ய தேசத்திலும் ஒன்று. ஆமருவியப்பன் என்றும் கோஸகர் என்றும் ப்ரக்யாதி வாய்ந்த பெருமாள் அந்த ஊரில் கோவில் கொண்டிருக்கிறார்.

ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் அந்த ஊருக்குப் போனபோது இரண்டு பக்கங்களில் இரண்டு கோபுரங்கள் தெரிந்தது. ஒன்று ஈச்வரன் கோவில். இன்னொன்று பெருமாள் கோவில். அனன்யமான பக்தியை - அதாவது, ஒரு தெய்வத்திடம் மட்டுமே மனஸைப் பூர்ணமாக அர்ப்பணித்துச் செய்கிற பக்தியை - ஈச்வரனிடமே வைக்கவேண்டுமன்று தான் அவருக்கு அதிகாரம் சிவ பக்தியை வளர்த்துக் கொடுக்கவே அதிகார புருஷராக அவதாரம் செய்திருந்தவர் அவர். அதனால் கண்ணுக்குத் தெரிந்த இரண்டு கோவிலில் எது சிவாலயம் என்று தெரியாமல் அவர் கொஞ்சம் குழம்பினார். அப்போது இந்தப் பிள்ளையார்தான் அவருக்குக் கோவிலை அடையாளம் காட்டினார். அதனால் 'வழிகாட்டி விநாயகர்' என்றும் அவருக்கு ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது.

ரொம்பவும் ஸந்தோஷத்துடன் சிவாலயம் சென்று பதிகம் பாடின ஸம்பந்தர் ஸ்வாமியிடம், "எனக்கு வழிகாட்டியது பிள்ளையார்தான் என்று என்றென்றைக்கும் லோகம் நினைவு வைத்துக் கொள்ளும்படியாக அவருக்கு என் பெயரையே சூட்ட

வேணும். அதோடு, நீங்கள் ஆர்த்ரா (ஆருத்ரா) தர்சனமும் அந்த ஸந்நதியில்தான் மண்டகப்படி நடத்திக் கொள்ள வேண்டும்" என்று வரம் கேட்டு வாங்கிக் கொண்டார்.

அதனால்தான் அங்கே அந்தப் பிள்ளையாருக்கு 'ஆளுடைய பிள்ளையார்' என்றே சொல்லப்படும் ஞானஸம்பந்தரின் பேர். அந்த ஊர் சிவன் கோவில் நடராஜாவுக்குத் திருவாதிரையின் போது இன்றைக்கும் அங்கேதான் ஆர்த்ரா தர்சன வைபவம் நடத்தப்படுகிறது.

---

## அப்பர் ஸ்வாமிகளுடன்

ஸம்பந்தரை விக்நேச்வரருடன் ஸம்பந்தப்படுத்தும் இன்னும் இரண்டு ஸம்பவங்களில் அப்பர் ஸ்வாமிகளும் ஸம்பந்தப்பட்டிருக்கிறார்.

அந்த இரண்டு தேவாரகர்த்தாக்களும் ஸமகாலத்தவர்கள். ஸம்பந்தருக்கு அப்பர் 'ஸீனியர் கான்டெம்பரரி'. இரண்டுபேருக்கும் பரஸ்பரம் அபார ப்ரியமும் மரியாதையும். சேர்ந்து சேர்ந்தே அநேக க்ஷேத்ரங்களுக்குப் போயிருக்கிறார்கள். அந்த ஊர்களில் இருந்த ஜனங்களுக்கு அப்படியொரு பெரிய பாக்யம், சிவ பக்தியிலேயே ஊறிப் பழுத்த பழம் அப்பர், பிஞ்சிலேயே பழுத்த ஸம்பந்தமூர்த்திகள் இரண்டு பேரையும் சேர்தது தர்சிக்கும்படியாக!

அந்த மாதிரி அவர்கள் திருவீழிமிழலை என்ற மஹாக்ஷேத்ரத்திற்குச் சேர்ந்து போனார்கள். அவர்கள் வந்ததில் ஊராருக்கு ரொம்பவும் ஸந்தோஷந்தான். ஆனாலும் அந்த ஸந்தோஷத்தைக் கொஞ்சம் பங்கப்படுத்துவதாக அப்போது அங்கே கடுமையான பஞ்சம் ஏற்பட்டிருந்தது.

தன-தான்யம் என்கிறது (வழக்கம்). தான்யத்திற்கு இந்த மாதிரிப் பஞ்சம் வந்தாலும், தனஸம்ருத்தி (செல்வச் செழிப்பு) இருந்தால் வெளியூர்களிலிருந்து தான்யங்கள் கொள்முதல் செய்து கொண்டு ஸமாளித்து விடலாமோன்னோ? அதனால், ஜனங்களின் கஷ்டத்தைப் பார்த்து மனஸுருகிய அந்த இரண்டு பேரும் ஈச்வரனிடம் பொன் கேட்டுப் பிரார்த்தித்தார்கள். பொன்னாசையைத் தள்ளின இரண்டு பேரும் லோகோபகாரத்திற்காக அப்படிக் கேட்டுக் கொண்டார்கள். ஸ்வாமியும் இரண்டு பலிபீடங்களில் அவர்களுக்குப் பொன் வைத்தார். 'படிக்காசு' என்ற நாணய ரூபத்தில் பொன்னை வைத்தார்.

---

## ஸம்ஸ்கிருத விரோதம்

ஒரு ஊரிலே ஏழைகள் 'பஞ்சம், பணம் வேணும்' என்று சீஃப் மினிஸ்டருக்கு, முதன் மந்திரி என்கிறார்களே அவருக்கு... இல்லை, இப்போது அதை முதலமைச்சர் என்று ஆக்கியிருக்கிறார்கள். எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது!ஸ ம்ஸ்கிருதத்தை அடித்துத் துரத்தி விட்டால் அதுவே தமிழ் வளர்ச்சி என்பதாக

இப்போது ஒரு 'நல்ல' கொள்கை நடைமுறைக்கு வந்திருக்கிறது!அடித்துத் துரத்தும் தலைவர்களில் ஆரம்பித்து இப்படித் தனித் தமிழ் முழக்கம் செய்பவர்களில் எத்தனை பேருக்குத் தமிழிலக்கியத்தில் - தெய்வ ஸம்பந்தமான இலக்கியம் கூடாது என்றே வைத்துவிட்டாலும், 'ஸெக்யுலர் லிட்ரேசரா'கவே வைக்கப்பட்ட தமிழிலக்கியத்தில் திருக்குறள், திருக்குறள் என்கிறார்களே, அதில்கூடப் பரிச்சயம் இருக்கிறது என்று பார்த்தால், ஒரு பெர்ஸென்ட், இரண்டு பெர்ஸென்ட் தேறுமா என்பதே ஸந்தேஹம் என்று தெரிகிறது. ஆனாலும் ஸம்ஸ்கிருதத்தை அடித்துத் துரத்த வேண்டும் என்று மட்டும் அநேகமாக நூறு பெர்ஸன்ட்காரர்களும் முஸ்தீபாக இருக்கிறார்கள்!அந்த ஸம்ஸ்கிருதம் என்னமோ இவர்கள் அடித்துத் துரத்தினதாக நினைக்கிற இடங்களிலும் இவர்களுக்கே தெரியாமல் வந்து பூந்து கொள்கிறது!'அமைச்சர்' ஸமாசாரம் இப்படித்தான். 'மந்திரி (என்ற சொல்) ஸம்ஸ்க்ருதம். அது கூடாது' என்று 'அமைச்ச'ராக்கினால் அந்த 'அமைச்ச'ரும் 'அமாத்யர்' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தையின் திரிபுதான்! 'த்த', 'த்ய' என்பவை தமிழில் 'ச்ச' என்று மாறும். 'தகரத்துக்குச் சகரம் போலி' என்று புலவர்கள் விதியே காட்டுவார்கள். மைத்துனன் - மச்சினன், பித்தன் - பிச்சன் இத்யாதி பார்க்கிறோம். பேச்சு வழக்கிலே, 'வைத்து', 'புளித்து' என்ற மாதிரி உள்ள வார்த்தைகளை யெல்லாமே, 'வெச்சு', புளிச்சு' என்றெல்லாந்தானே சொல்கிறோம்? அந்த ரீதியில் தான் சப்தங்கள் மாறி மாறி ஸம்ஸ்க்ருத அமாத்யரே தமிழில் முதலில் அமர்த்தராகி அப்புறம் அமைச்சரானது

ஸமீபத்தில் 'மனிதநேயம்' என்று ஒரு வார்த்தை உலாத்துகிறதாகப் பார்க்கிறேன். நல்ல வார்த்தைதான். காதுக்குக் கேட்கவும் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனாலும் 'மனிதாபிமானம்' என்று இத்தனை நாளாகச் சொல்லி வந்ததில் 'அபிமானம்' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தை இருப்பது பிடிக்காமல்தான் இப்படி மாற்றியிருக்கிறார்கள் என்பதைக் கவனிக்கும் போது பரிஹாஸமாகத்தான் இருக்கிறது ஏனென்றால், 'நேயம்' என்பதும் ஸம்ஸ்கிருத 'ஸ்நேஹ'த்தின் திரிபுதான்!ஸம்ஸ்கிருதம் என்பது இலக்கண சுத்தமான பாஷை. அதையே பேச்சுக் கொச்சையாக இருக்கும்போது ப்ராக்ருதம் என்பார்கள். அந்த ப்ராக்ருத பாஷையில் தான் ஸம்ஸ்கிருதத்தில் உள்ள நாடகங்களில் ஸ்தரீகள், படிப்பில்லாதவர்கள் ஆகியவர்கள் ஸம்பாஷிப்பார்கள். அதிலே 'ஸ்நேஹம்' என்பது 'நேயம்' என்று தான்வரும். அது போகட்டும், 'மனிதநேயம்' என்கிறதிலும் முதலில் மனித என்று வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அதுவும் ஸம்ஸ்கிருத 'மநுஷ்ய'வின் திரிபுதானே? இதே மாதிரிதான் 'நீதிபதி' என்பதிலும் 'நீதி' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தையை அப்படியே வைத்துக் கொண்டு, 'பதி' மட்டுந்தான் ஸம்ஸ்கிருதம் என்று நினைத்து விரட்டிவிட்டு 'நீதியரசர்' என்று போடுவதாகத்

தெரிகிறது. இந்த 'அரச' என்பதும், இன்னும் 'அரைய', 'இராய' என்கிறதெல்லாமுங்கூட 'ராஜ' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தையின் திரிபுகள்தான். 'மன்னன்', கோ' என்கிறவைதான் 'ராஜா'வுக்கான சுத்தத் தமிழ் வார்த்தைகள்... ஒருத்தருக்கும் ஒரு ப்ரயோஜனமுமில்லாமல் இப்படியெல்லாம் வெறும் த்வேஷத்தில் செய்கிற கார்யங்கள் கடைசியில் பித்துக்குளித்தனமாகத்தான் முடிகின்றன!....

---

## திருவள்ளுவரின் உதாஹரணம்

தமிழை வளர்த்துக் கொடுத்தவர்களில் திருவள்ளுவரை மிஞ்சி ஒருத்தருண்டா? அவர் முதல் குறையே எப்படிப் பாடிக்கொடுத்திருக்கிறார்?

**அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி**

**பகவன் முதற்றே உலகு.**

என்று தானே பாடியிருக்கிறார்? அதிலேயே ஆதி, பகவன்,உலகு என்று மூன்று ஸம்ஸ்க்ருத வார்த்தைகளைப் போட்டிருக்கிறார். 'உலகு' என்பது 'லோகம்' என்கிற ஸம்ஸ்க்ருதப் பதத்திலிருந்தே வந்தது. 'லோகம்' என்றால் நம்மால் நமக்கு வெளியிலே 'பார்க்கப்படுவது'. இங்கிலீஷ் 'லுக்'கும் அந்த தாதுவிலிருந்து வந்ததுதான். பார்க்கிற இந்த்ரியமான கண்ணுக்கு 'லோசனம்' என்று பேர் இருப்பதும் இந்தத் தாதுவின் அடியாகத்தான். 'லேபாக்' - 'பார்க்கப்படுவது' என்கிற அதே அடிப்படையில் தமிழ்ப் பேராகவே உலகத்துக்கு உள்ள வார்த்தை 'பார்'. 'வையம்', 'வையகம்' என்பதும் லோகத்துக்கு ஒரிஜினலான தமிழ்ப் பெயர். 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்பதற்குப் பதில் 'பழங் கடவுள் முதற்றே வையம்' என்று திருவள்ளுவர் தாராளமாகப் பாடியிருக்கலாம். 'மீட்ட'ரும் ஸரியாகவே இருந்திருக்கும். அப்படியிருந்தும், விசால மனஸ் படைத்த அந்தப் பெரியவர் பாஷா வித்யாஸங்களைப் பார்த்துக் கொண்டிருக்காமல் தம்முடைய நூலை ஆரம்பிக்கிற கடவுள் வாழ்த்தின் முதல் குறளிலேயே மூன்று ஸம்ஸ்க்ருத வார்த்கைளைப் போட்டிருக்கிறார். அவருடைய பெயரை எப்போதும் முழக்கிக் கொண்டிருக்கிற தமிழ் அன்பர்கள், தங்களுடைய அன்பு, தாங்கள் பெரிதாகச் சொல்லிக் கொள்கிற பகுத்தறிவோடு சேர்ந்திருக்க வேண்டுமானால் அவர் காட்டும் வழிப்படிதான் போகவேண்டும். திருவள்ளுவர் வாழ்த்துகிற அந்தக் கடவுள் - ஆதி பகவன் - தான் இந்த மனப்பான்மையை அவர்களுக்கு அளிக்க வேண்டும்.

---

# ஸம்ஸ்க்ருதம் தமிழ் வேரோடேயே சேர்ந்தது

ஆதி நூலான தொல்காப்பியத்திலிருந்தே 'வடசொல்' என்று புலவர்கள் சொல்கிற ஸம்ஸ்க்ருத வார்த்தைகளைக் கலந்து கொள்வதற்குத் தமிழ்ப் பெரியோர்கள் தயங்கவேயில்லை. தொல்காப்பியம் என்பதில் 'காப்பியம்' என்பதே காவ்யம் - காவியம் என்கிற ஸம்ஸ்க்ருத வார்தையிலிருந்து வந்ததுதான். காப்பியம் என்று வேத ரிஷி ஒருத்தருக்கும் பேர் இருந்திருக்கிறது 'கவி', 'கவிதை' என்கிறதெல்லாமும் ஸம்ஸ்க்ருத மூலத்திலிருந்து வந்ததுதான். 'இலக்கணம்', இலக்கியம்' என்ற இரண்டுமே கூட லக்ஷணம் - இலட்சணம், லக்ஷியம் - இலட்சியம் என்ற ஸம்ஸ்க்ருத மூலத்திலிருந்தே வந்தவைதான். சிலப்பதிகாரத்தில் 'அதிகாரம்' என்பது ஸம்ஸ்க்ருதம்தான். 'படலம்', 'சருக்கம்' (ஸர்கம்) என்கிற மாதிரி உள்ள ஸெக்ட்ஷன் பேர்களெல்லாம் ஸம்ஸ்க்ருதந்தான். 'மூலம்- உரை' என்பதில் 'மூலம்' என்பது ஸம்ஸ்க்ருதந்தான். இப்படிக் கணக்கு வழக்கில்லாமல் சொல்லிக் கொண்டே போகலாம்.

ஆத்ம ஸம்பந்தமாக எடுத்துக் கொண்டாலோ கேட்கவே வேண்டாம் யோகம், ஜபம், தபஸ், - தவம்' என்கிறது 'தபஸ்'லிருந்து வந்ததுதான் - மந்த்ரம், தந்த்ரம், யந்த்ரம், ஆகமம், புராணம் போன்ற எத்தனையோ ஸம்ஸ்க்ருத வார்த்தைகளுக்குத் தமிழில் வார்த்தையே இல்லை. ஏனில்லை என்றால், நம்முடைய ஆதி காலத் தமிழ்ப் பெரியோர்களிலிருந்து ஆரம்பித்து எல்லோரும்,

'அதுதான் தமிழோடு வேரிலேயே, வேரோடு வேராகச் சேருவதாக உள்ள ஸம்ஸ்க்ருதத்தில் வார்த்தைகள் இருக்கின்றனவே!அவை நமக்கும் ஸொந்தம்தானே? அவற்றிலிருந்து எடுத்துக் கொண்டால் போயிற்று!' என்று கொஞ்சங்கூட கல்மஷம் இல்லாமல் நினைத்து அப்படியே பண்ணியதால்தான் புதிதாகத் தமிழ் வார்த்கைள் உற்பத்தி பண்ணவில்லை. ஸம்ஸ்க்ருத வார்த்தைகளையே 'genius of the language' - 'ஒரு மொழியின் தனிப் பண்பு' - என்கிறதற்கேற்பத் தமிழிலே கொஞ்சம் மாற்றி ரூபம் பண்ணி - 'லக்ஷ்யம்' என்பதை 'இலக்கியம்' என்று ஆக்கின மாதிரிப் பண்ணி - தமிழிலே சேர்த்துக் கொண்டார்கள். வேடிக்கையாக, வேடிக்கையிலேயே வருத்தமும் தருவதாக ஒன்று கேள்விப்பட்டேன். அரசியலில் முக்யமாயிருக்கிற ஒருத்தருக்குத் தங்கள் கட்சியில் எவரோ 'விக்ஞாபனம்' என்று எழுதி விட்டதைப் பார்த்து ஒரே கோபம் வந்தவிட்டதாம். 'விண்ணப்பம்' என்று மாற்றிப் போடச் சொன்னாராம். ஆனால் இதுவும் முன்னே 'ஸ்நேஹம்' - 'நேயம்' சொன்னேனே அந்த மாதிரி ஒன்றுதான்!ஸம்ஸ்க்ருத 'விஜ்ஞாபனே'மே ப்ராக்ருதத்தில் 'விண்ணாபணம்' என்று வரும், அதுதான் தமிழ் விண்ணப்பம்'. 'விஞ்ஞான'த்தைத் தமிழில் 'விண்ணாணம்' என்பதும் ப்ராக்ருதத்தைத் தழுவித்தான். எதற்குச் சொல்ல வந்தேன் என்றால், தமிழ் பாஷைக்கேயான தனி genius-ஏ ஸம்ஸ்க்ருதத்தின் பேச்சு மொழியான ப்ராக்ருதத்தின் genius-ஓடு நகமும் சதையும் மாதிரிச் சேர்ந்துதானிருக்கின்றது என்று காட்டுவதற்குத் தான்!

எத்தனைதான் யத்தனம் பண்ணினாலும் அந்த ஸம்ஸ்க்ருத வேரைப்

பிடுங்கமுடியாது, முன்னேயே சொன்னாற்போல, நாம் தமிழ் என்றே நினைத்துக் கொண்டிருக்கிற பல வார்த்தைகளே ஸம்ஸ்க்ருதந்தான்!ஒரு பெரிய அறிவாளி பேசியிருந்தார்:"வடமொழி சவப் பெட்டியில் ஆணி அறைவோம்"என்று ஒரு தனித் தமிழன்பர் சொல்லியிருந்தார். அதைக் குறிப்பிட்டுத்தான் அந்த அறிவாளி பேசியது, அவர் என்ன சொன்னாரென்றால், "அந்த ஸம்ஸ்க்ருத த்வேஷக்காரர்கள் சொன்னதிலேயே மூன்று ஸம்ஸ்க்ருத வார்த்தைகள் இருக்கிறது. ஒன்று, 'சவம்'. இரண்டாவதாக, 'பெட்டி'என்பதும் 'பேடம்', 'பேடகம்' என்பதன் தமிழ்தான். மூன்றாவதாக, 'ஆணி'. வேதத்திலேயே உள்ள வார்த்தை 'ஆணி'. 'சவ'த்துக்கும் 'பெட்டி'க்கும் வேறே மூலமான தமிழ் வார்த்கைளும் உண்டு. அனால் 'ஆணி'க்கு தமிழ் வார்த்தையே இல்லை" என்றார். 'ஆணி' மாதிரி ஸகல ஜனங்களும் சொல்வதாக உள்ள ஏகப்பட்ட வார்த்தைகள் ஸம்ஸ்க்ருதமாக இருக்கின்றன. 'தச்சன்', 'கருமான்' என்கிறோமே, அவை 'தக்ஷன்', 'கர்மாரன்'தான். வேதத்திலேயே இருக்கிற ஸ்ரீ ருத்ரத்தில், ஈச்வரனே தக்ஷர்களாகவும், கர்மாரகர்களாகவும் இருக்கிறானென்று வருகிறது.

இயற்கையாகவே ரொம்பவும் ஸம்ருத்தியுடன் - புஷ்டியாக நிறைந்த வளர்ச்சியுடன், வளத்துடன் தமிழுக்கென்றே லோகம் கொண்டாடுகிற மாதிரி ஏராளமான வார்த்தைகள், Vocabulary உண்டாகத்தான் செய்தது. அப்படியிருந்தும் செயற்கையாகப் புது வார்த்தை உற்பத்தி பண்ணவேண்டாமென்றே அநேக இடங்களில், 'ஸம்ஸ்க்ருதமும் நமக்கு இயற்கைதான், 'second nature' என்கிறார்களே, அப்படித்தான் நம் வேரிலேயே பிரிக்க முடியாமல் நமதாக ஒன்றிப் போயிருக்கிற அந்த பாஷையிலிருப்பதையே நாமும் வைத்துக்கொள்வோம்' என்று நம் முன்னோர்கள் அபிப்ராயப்பட்டு அப்படியே செய்திருக்கிறார்கள்.

அப்படி வேராக இருப்பதைத்தான் இப்போது வேறாக நமக்கு வேறுபட்டது, வேண்டாதது என்று நினைத்துப் பிடுங்கிப் போடப் பார்க்கிறார்கள். வேரைப்

பிடுங்கினால் என்ன ஆகும்? வேருக்கு 'மூலம்' என்று பேர். மூலத்தைக் கெடுத்தால் நிர்மூலமாக அல்லவா ஆகிவிடும்? அப்படிப்பட்ட உத்பாதத்தைத்தான் தமிழ் பாஷைக்கு ஏற்படுத்தப் பார்க்கிறார்கள்.

எல்லாரும் நல்லவர்கள்தான். ஏதோ தெரியாத்தனம், யாரோ இரண்டொருத்தர் தப்பாக நினைத்து, தங்களுக்கு இருக்கிற வசீகரத்தால் மற்றவர்களையும் தப்பில் இழுத்து விட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் தமிழன்பர்கள், தமிழடியார்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களே அந்த பாஷையின் வேரில் வெட்டுப் போடுவதும், தமிழ் மரபு, தமிழ் மரபு என்கிறவர்களே அந்த மரபை உண்டு பண்ணி, வளர்த்துக் கொடுத்தவர்களின் அபிப்ராயத்துக்கு நேர் மாறாகப் பண்ணுவதாகவும் நடந்து வருகிறது.

நாம் பதிலக்குக் கோபப்பட்டு ப்ரயோஜனமில்லை. சாந்தமாக எடுத்துக் காட்டிப் புரிய வைக்கவேண்டும். எல்லோருக்கும் நல்லறிவு உண்டாவதற்கு வாக்தேவியைப் பிரார்த்தித்துக் கொள்ளவேண்டும். வேதவ்யாஸர் என்றே பேருள்ளவர் பண்ணின மஹாபாரதம், நம்முடைய முத்தமிழ் இரண்டையும் ஒரே மாதிரி மலையிலே எழுதி வைத்த விக்நேச்வரரிடமும், நமக்கு இரண்டு கண்

மாதிரி உள்ள இந்த இரண்டு பாஷைகளை வைத்துச் சண்டை - சாடி உண்டாகாமலிருக்க பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

இனம் என்றும் பாஷை என்றும் பிரிந்து போகாமல் நாம் அத்தனை பேரும்

ஒரே பார்வதி - பரமேச்வரர்களின் குழந்தைகளாக, பிள்ளையாருக்குத் தம்பி - தங்கைகளாக ஒன்று சேரவேண்டும். அவரையே பிரார்த்தித்துக் கொள்ளுவோம்.

---

# தேவார கர்த்தர் இருவருக்கு அருள்

'முதலமைச்சர்' என்கிற வார்த்தை பற்றிய வாதம் ஒரு த்ருஷ்டாந்தத்திற்காக ஆரம்பித்தேன். ஒரு ஊரில் பஞ்சம் என்று முதலமைச்சருக்கு ஊரார் பெடிஷன் கொடுத்தால், அவர் கஷ்ட நிவாரணத்துக்காகப் பணம் பண்ணுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அவரேயா பணத்தை எடுத்துக் கொண்டு போய் விநியோகம் செய்கிறார்? ஒரு ஸ்பெஷல் ஆபீஸர் போட்டு அவர் மூலந்தானே செய்கிறார்? அப்படி, திருவீழிமிழலையில் பஞ்சம் என்று அப்பர், ஸம்பந்தர் பெடிஷன் கொடுத்து ஈச்வரன் படிக்காசு கொடுத்த போது அதற்கு ஸ்பெஷல் ஆபிஸராகப் பிள்ளையாரையே போட்டு அவர்களுக்கு விநியோகிக்கச் செய்தார். அப்பா ஸொத்தை மூத்த பிள்ளையும் அருள் மனஸோடு அவர்களுக்குக் கொடுத்தார். இரண்டு பீடங்களில் மேலண்டையில் படிக்காசு வைத்தற்குப் பக்கத்திலேயே 'படிக்காசுப் பிள்ளையார்' என்று பேர் வைத்துக் கொண்டு அவர் உட்கார்ந்திருக்கிறார்

இன்னொரு ஸம்பவம். லால்குடிக்குக் கிட்டே அன்பில் என்று ஒரு ஊர். தேவாரத்தில் அதை அன்பில் ஆலந்துரை என்று சொல்லியிருக்கிறது. அப்பரும் ஸம்பந்தரும் அந்த க்ஷேத்ரத்திற்குக் கிளம்பினார்கள். வழியிலே கொள்ளிடம்

குறுக்கிட்டது. ஒரே வெள்ளம் பரிசலா, படகா ஒன்றுமே போக முடியாத வெள்ளம் இப்படி ஆச்சே என்று அவர்கள் அக்கரையில் நின்று கொண்டே ஸ்வாமியிடம் முறையிட்டார்கள். அப்போது ஸ்வாமி கேட்டுக் கொள்கிறதற்கு முன்னாடி அங்கேயிருந்த பிள்ளையார்தான், "வெள்ளச் சத்தத்தோட யாரோ ப்ரலாபிக்கிற குரலும் கேக்கறாப்ல இருக்கே" என்று காதை அந்தப் பக்கம் கொஞ்சம் சாய்த்து உன்னிப்பாகக் கேட்டார். 'செவி சாய்க்கிறது' என்பதை நிஜமாகவே பண்ணினார் மஹா பக்தர்களான அப்பர் - ஸுந்தரர்களின் குரல் என்று தெரிந்து கொண்டார். உடனே அப்பாவுக்கு 'ரிலே', 'ரெகமன்டேஷன்' எல்லாம் பண்ணினார். அப்பாவும் உடனே வெள்ளம் வடியும்படிப் பண்ணி அவர்களைக் கோவிலுக்கு வரவழைத்துக் கொண்டார். அன்பிலாலந்துறையில் 'செவிசாய்த்த விநாயகர்' என்றே அந்தப் பிள்ளையார் விக்ரஹ ரூபத்தில் அழகாகக் காதைச் சாய்த்துக் கொண்டு இருக்கிறார்.

---

# தேவாரத்தில் விநாயகர்

விக்நேச்வரரைப் பற்றி வருகிற இரண்டு தேவாரக் குறிப்புகளை விஷயம் தெரிந்தவர்கள் விசேஷித்துச் சொல்வார்கள். ஒன்று அப்பர் வாக்கு. மற்றது ஸம்பந்தருடையது.

சமணனாயிருந்த பல்லவ ராஜா தன் மாதிரியே சமணராயிருந்து விட்டு அப்புறம் சைவராகி விட்ட அப்பர் ஸ்வாமிகளைப் பல விதத்தில் ஹிம்ஸைப்படுத்திக் காளவாயில் போட்டான், கல்லைக் கட்டி ஸமுத்ரத்திலே போட்டான், அப்புறம் அதெல்லாம் பலிக்கவில்லை என்பதைப் பார்த்துத் தானும் அவரை நமஸ்காரம் பண்ணி வைதிக மதத்திற்குத் திரும்பி விட்டான் என்று கதை கேட்டிருப்பீர்கள். அதிலே காளவாய்க்கும் கல்லைக் கட்டிப் போட்டதற்கும் நடுப்புற (நடுவில்) விஷம் கொடுத்ததாகவும், அவர் மேலே மதயானையை ஏவி விட்டதாகவும் இருக்கிறது. அப்படி மதயானையை ஏவினபோது அவர் பாட்டுக்குக் கொஞ்சங்கூட பயப்படாமல், "அஞ்சுவது யாதென்றுமில்லை, அஞ்ச வருவதுமில்லை" என்று பதிகம் பாடிக் கொண்டு தீரமாக நின்றார். மத்தகஜம் வேகமாக வருகிறபோது கஜஸம்ஹார மூர்த்தியான ஸ்வாமியை, 'வேழம் உரித்த நிலை' என்று ஸ்துதித்துக் கொண்டு நின்றார் கஜானனரைப் பற்றியும் அந்தப் பதிகத்தில்தான் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார்!

"பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே

கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறு."

"அந்தக் களிறு எந்த ஈச்வரனின் பரிவாரத்தில் இருக்கிறதோ, அந்த ஈச்வரனின் "தமர் நாம்", அதாவது, "தம்மவர் நாம்", அதாவது ஈச்வரனே, "இவர்கள் என்னுடைய மநுஷர்கள்" என்று சொல்லிக் கொள்ளும் படியான அடியார் நாங்கள் ஆகவே நாங்கள் ராஜா ஏவி விட்டிருக்கிற இந்த மதத் களிறானாலும் ஸரி, வேறே என்ன உத்பாதமானாலும் ஸரி, அஞ்சுவது யாதொன்றுமில்லை!" என்று பாடினார்.

மதயானை அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரம் பண்ணிவிட்டு ஏவினவனையே தாக்குவதற்குப் பாய்ந்தது. அவன் ஓட்டம் பிடித்தான்.

"கணபதி என்னும் களிறு" பற்றி அவர் என்ன சொல்லியிருக்கிறாரென்றால்:நம்மில் ஒவ்வொருத்தரும் நூறாயிரம் ஆசைகளை வைத்துக் கொண்டு, ஒன்று பூர்த்தியானால் இன்னொன்று என்று ஸதா பரபரக்கிற, படபடக்கிற சஞ்சல மனஸுக்காராளாக இருக்கிறோம். இதைத்தான் "பல பல காமத்தராகிப் பதைத்தெழுவார் மனம்" என்றார். ஸாதாரணமாகச் சொல்வது, ஆசாபூர்த்திக்கு ஏற்படும் இடையூற்றை அகற்றி அது நிறைவேற அநுக்ரஹிக்கிறவரே விக்நேச்வரர் என்பது. ஆனால் அப்பர் ஸ்வாமிகளோ அப்படிச் சொல்லாமல் ரொம்ப 'ஹை லெவ'லுக்குக் கொண்டு போய் விடுகிறார். நல்ல விஷயஜ்ஞரான புலவர்கள் எப்படி அர்த்தம் பண்ணுவார்களோ, எனக்குத் தோன்றுகிற அர்த்தம் இப்படித்தான். என்னவென்றால்:ஆசைப் பூர்த்தி என்று போனால் அதற்கு முடிவேயிருக்காது. ஒன்று பூர்த்தியாச்சென்றால் இன்னொன்று என்று அது போய்க் கொண்டேதான் இருக்கும். முடிவிலே அத்தனை ஆசைகளும் ஸம்ஸார பந்தத்தை மேலும் மேலும் இறுக்குகிறவைதான். கணபதி இதற்குத்தான் அநுக்ரஹிக்கிறாரென்றால் அதொன்றும் சிறப்பில்லை என்று அப்பர் நினைத்திருக்கிறார். அவர் அபிப்ராயத்தில் -

'அநுபவத்தில்' என்று சொல்லணும் - கணபதி என்ன பண்ணுகிறார்? ஆசைகளினால் ஸதா பதறிக் கொண்டிருக்கும் நம் மனஸில் பிள்ளையார் 'கலமலக்கிட்டுத் திரிகிறா'ராம். அப்படியென்றால் ஒரே கலக்காகக் கலக்கிக் கொண்டு உத்ஸாஹமாகச் சுற்றுகிறார் என்று அர்த்தம். ஏற்கெனவே ஆசைகளால் பதைத்துத் கலங்கிப் போயிருக்கிற மனஸை அவர் எதிர்த்திசையில் போட்டுக் கலக்குகிறார். கலக்கல், அதற்கு எதிர்க்கலக்கல், revolution-ம் அதற்கு எதிரான counter revolution-ம் என்றால் என்ன ஆகும்? முதலாவதை இரண்டாவது சமனம் பண்ணி, கலக்கம் எல்லாம் அடங்கி equilibrium என்கிற ஸமநிலையான பரம சாந்தநிலை உண்டாகும். மனஸ் அப்படி சாந்தமாக அடங்கி விட்டால் அதுதான் மோக்ஷம். ஒரு களிறு - ஆண் யானை - எத்தனை சக்தியோடு ஒரு சுழலக்குள்ளே நுழைந்து கலக்கு கலக்கு என்று கலக்கி விளையாடி கம்பீரமாக ஸஞ்சாரம் பண்ணுமோ, அப்படி நம்முடைய ஆசைச் சுழல்மயமான மனஸுக்குள்ளே பரமக்ருபையோடு விக்நேச்வரர் புகுந்து எதிர்ச் சுழலாகச் சுழற்றிக் கொண்டு வெற்றிநடை போட்டுத் திரிகிறாராம்!இது அப்பர் சொல்வது.

ஸம்பந்தமூர்த்தி என்ன சொல்லியிருக்கிறாரென்றால்:விக்நேச்வரர் பல வேறு ஸந்தர்ப்பங்களில் பல வேறு அவஸரங்களாக (கோலங்களாக) அவதரித்திருக்கிறார். அவற்றிலே ஒன்றில், படி என்கிற பெண் யானையாக அம்பாள் ஒரு ரூபம் கொண்டிருந்தாள். அந்தக் காலத்தில், ஸ்வாமி (சிவபெருமான்) தன்னுடைய அடியார்களுடைய இடர்களைத் தானே கடிந்து போக்கிவிடாமல் அதற்கென்றே 'ஆதரைஸ்' ஆன ஒரு விக்ன நிவாரண மூர்த்தியைத் தன்னுடைய பிள்ளயாகப் பெற்று, அந்த பிள்ளை மூலம் நடத்தணும் என்று லீலையாக ஒரு ஸங்கல்பம் பண்ணினார். உடனே அவர் ஆண் யானையாகி, பிடியாயிருந்த அம்பாளோடு அப்படி ஒரு புத்ரோத்பத்தி பண்ணினார். இந்த விருத்தாந்தத்தைத்தான் ஸம்பந்தர், வலிவலம் என்று திருவாரூர்கிட்டே மூவரும் பாடின க்ஷேத்ரம் இருக்கிறது, அங்கே பாடின தம்முடைய பதிகத்தில் சொல்லியிருக்கிறார்.

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது

வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்

கடிகண பதிவர அருளினன் மிகுகொடை

வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே

வலிவலத்தில் தானதர்ம வள்ளல்களாக 'மிகு கொடை வடிவனிர்' இருப்பதை ஸம்பந்தமூர்த்தி பார்த்தார். உடனே அவருக்குப் பரமேச்வரன் லோகம் பூரவாவுக்குமாக அளித்திருக்கிற பெரிய கொடை ஒன்றைச் சொல்லத் தோன்றிற்று. என்ன கொடை என்றால், அடியார் இடர்கடியவே அவர் கணபதியை வரவழைத்தாரே, அதுதான்

'தனதடி வழிபடும் அவரிடர் கடி கணபதி வர அருளி'னாரே, அதுதான்

விக்நேச்வரருக்குப் பல நாமாக்கள் இருந்தாலும் அப்பர் பாடல், ஸம்பந்தர்

பாடல் இரண்டிலும் கணபதி என்ற நாமாவே வருகிறது. பிள்ளையார் மந்த்ரங்களில் முக்யமானவற்றிலும் அந்தப் பேர்தான் இருக்கிறது. பிள்ளையார் மதத்தின் பெயரும் 'காணபத்யம்' என்று அந்தப் பேரை வைத்தே இருக்கிறது.

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமி இந்த இரண்டு பேரைப் போலப் பிள்ளையாரைப் புகழ்ந்து பாடவில்லை. பரமேச்வரனையே ரொம்பவும் நிந்தா ஸ்துதி செய்த 'வன்றொண்டர்' அல்லவா அவர்? பிள்ளையாரையும் அப்படித்தான் இறக்கியிருக்கிறார்!ஒரு இடத்தில் "கணபதியேல் வயிறுதாரி" என்று. இன்னொரிடத்தில் கணக்கு வழக்கில்லாமல் தின்று கொண்டு தொப்பையை வளர்க்கிறதைத் தவிர வேறே ஒன்றும் தெரியாத கணபதி என்ற அர்த்தத்திலே 'எண்ணிலியுண் பெருவயிறன் கணபதி, ஒன்றறியான்' என்று சொல்கிறார். இங்கேயும் இரண்டு இடத்திலேயும் கணபதி நாமாதான் இரண்டிலுமே பெருந்தீனிக்காரர் என்று அவருக்கு வசவு!

இப்படி அவர் சொன்னார் என்றுதான் பிள்ளையார், "பெருந்தீனிக்காரன்னுதானே சொன்னே? அப்படியே இருக்கட்டும். ஔவை படைக்கற பெருந்தீனி முழுசையும் ஸாவகாசமா மொக்கிவிட்டும், ஒனக்கு முந்தி அவ கைலாஸத்துல சேரும்படிப் பண்றேனா, இல்லியா, பார்" என்று கடைசியில் பண்ணிக்காட்டினார் போலிருக்கிறது! ஆனாலும் அவர் ஸுந்தரருக்கு நிறைய அநுக்ரஹங்களும் பண்ணித்தான் இருக்கிறார்.

---

## சுந்தரருக்கு அருள்

அப்பர் - ஸம்பந்தர்களுக்கு அன்பிலில் ஏற்பட்டாற் போல ஸுந்தரரும் திருவையாற்றுக்குப் போனபோது காவேரியில் பெரிய வெள்ளமாக வந்து அவரைத் தடுத்தது. அவர் எதிர்க்கரையிலேயே நின்று கொண்டு, "ஐயாறுடைய அடிகளே! ஓலம் ஓலம்!" என்று கதறினார். இங்கேயும் அப்பாவுக்கு முந்தித் திருவையாற்றுப் பிள்ளையார்தான் பக்தர் கஷ்டத்தைத் தெரிந்து கொண்டு அவருடைய ஓலத்தை அப்பாவுக்குத் தாமே 'ரிலே' பண்ணினார். அதனாலே

அவருக்கு 'ஓலமிட்ட விநாயகர்' என்றே பெயர். தோழர் - 'தம்பிரான் தோழர்' என்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைச் சொல்வார்கள் - அந்தத் தோழர் ஓலமிட்டு, அதை ஜ்யேஷ்ட புத்ரனும் 'ஸெகன்ட்' பண்ணின தத்க்ஷணமே ஸ்வாமி வெள்ளத்தை வடிய வைத்தார்.

ஃப்ரன்ட் என்கிற முறையிலே ஸுந்தரர் ஸ்வாமிகிட்டே எதை வேணாலும் கேட்பார். பரவை நாச்சியார் என்று அவருக்கு ப்ரியாமானவள். அவள் ஸுந்தரமூர்த்திகளின் ஊரான திருவாரூர் கோவிலில் நாட்யம் பண்ணுகிறவர்களில் பரம பக்தையான ஒரு உத்தமி. ரொம்பவும் தானதர்மிஷ்டை. அவள் வாரிக் கொடுக்கிறதற்காக ஸுந்தரர் அப்பப்போ "பொன்னு தா", "நெல்லு தா" என்றெல்லாம் ஸ்வாமியிடம் நச்சரித்துப் பெற்றுக் கொள்வார். அப்படி, 'திருமுதுகுன்றம்' என்று தேவாரத்தில் சொல்லியிருக்கும் விருத்தாசலத்திலேயும் அவர் பொன் கேட்டு, ஸ்வாமியும் பன்னிரண்டாயிரம் பொன் கொடுத்தார். ஸுந்தரர் அதோடு விடாமல் "கொடுத்தது மட்டும் போறாது. இதைக் காபந்து பண்ணி எடுத்துண்டு நான் ஊர் ஊராப் போயத் திருவாரூர் சேருகிறது கஷ்டம். ஆனதாலே இதை நீயே எப்படியாவது அங்கே சேர்த்திடு" என்றார்.

ஸ்வாமியும் "ஸரி" என்றார். ஆனால் கொஞ்சம் லீலை பண்ணவும் நினைத்து, "இந்தப் பொன்னை இங்கே ஓடற மணிமுத்தாற்றிலே போட்டுடு. அப்பறம் ஊர் ஊரா என்னைப் பாடிண்டு திருவாரூருக்குப் போய் அங்கே கமலாலயத்திலே - அதுதான் அங்கே உள்ள பிரஸித்தி பெற்ற திருக்குளம் - ஈசான்ய 'வடகிழக்கு' மூலையிலிலேருந்து கலெக்ட் பண்ணிக்கோ" என்றார்.

"அப்படியே" என்று மணிமுத்தாற்றிலே பொன் மூட்டையைப் போடப் போன ஸுந்தரருக்கு ஒரு ஸந்தேஹம் வந்தது. "நாம் படுத்தியெடுக்கிறோம் என்கிறதாலே ஸ்வாமி ஏதாவது கொனஷ்டை பண்ணி வெக்கப் போறார் இங்கே உசந்த மாற்றுத் தங்கமாக் குடுத்துட்டு கமலாலயத்தில எடுக்கறப்போ மாற்று கொறைச்சுடப்போறார்" என்று நினைத்தார். மாற்று என்பது காரட் மாதிரி. 24 காரட், 14காரட் என்கிறோமே அப்படி. 24-ஐயே 14-ஆக ஸ்வாமி பண்ணி விடப் போகிறாரே என்று ஸுந்தரர் நினைத்தார். இரண்டு இடத்திலேயும் உரைத்து மாற்றுப் பார்த்துக் கொள்வதுதான் நல்லது என்று நினைத்தார்.

உடனே அவருக்கு ஸஹாயம் செய்வதற்காகப் பிள்ளையார் அவர் பக்கத்தில் வந்து நின்றார். பொன்னை உரைத்துப் பார்த்து, பத்தரை மாற்று - 24 காரட் - என்று - 'ஸர்டிஃபை' பண்ணினார். விருத்தாசலம் கோவிலில் அறுபத்து மூவருக்குப் பக்கத்தில் 'மாற்றுரைத்த பிள்ளையார்' என்றே அவர் இருக்கிறார், அறுபத்து மூவரையும் சொல்லித் திருத்தொண்டத்தொகை பாடியவர் ஸுந்தரர்தானே?

அந்தப் பொன்னில், பின்னாடி 'கம்பேர்' பண்ணுவதற்காக ஸாம்பிளாக 'மச்சம்'

என்று ஒரு துணுக்கை ஸுந்தரர் வெட்டியெடுத்துக் கொண்டு மூட்டையை அப்படியே மணிமுத்தாற்றில் போட்டு விட்டார்.

அப்புறம் க்ஷேத்ரம் க்ஷேத்ரமாகப் பாடிக்கொண்டே போய்த் திருவாரூரை அடைந்தார். பரவை நாச்சியாரைக் கமலாலயத்தின் ஈசான்யத்தில் படித்துறையில் நிறுத்தி விட்டுக் குளத்துக்குள் இறங்கினார், பொன்னை எடுப்பதற்காக

இவர் நினைக்காத ஒரு கொனஷ்டையை ஸ்வாமி பண்ணினார். ஏதோ மாற்றுதான் குறைந்தது என்றில்லாமல் முதலுக்கே மோசமாக ஸ்வாமி விளையாடினார். இவர் தேடு தேடு என்று தேடியும் பொன் மூட்டையே அகப்படவில்லை!

பரவையானால், "எங்கேயோ ஆத்துலே போட்டுட்டு இங்கே கொளத்துலே தேடறீரே ஸ்வாமி" என்று பரிஹாஸம் பண்ணினாள். அவள் சொன்னது பிற்பாடு வசனமே ஆகிவிட்டது!

ஸுந்தரருக்கு எரிச்சல் பொத்துக்கொண்டு வந்தது. உணர்ச்சி ஜாஸ்தியானால் அவருக்குப் பாட வந்துவிடும். ஆனால் வழக்கம் போல் நிந்தாஸ்துதி பண்ணினால், இந்தத் தடவை ஸ்வாமி காது கொடுக்காமலிருந்து, ஒரு பொம்மனாட்டிக்கு முன்னே தாம் இன்னும் அவமானப் படப் போகிறோமே என்பதால் ரொம்பவும் தைன்யமாகவே குழைந்து வேண்டிக் கொண்டு பதிகம் பாடினார். பொன் ஸமாசாரமானதால் "பொன் செய்த மேனியினீர்!" என்றே ஆரம்பித்துப் பாடினார். (பிறிதொரு சமயத்தில்) "பொன்னார் மேனியனே!" பாடினதும் ஸுந்தரர்தான்.

ஸ்வாமி இவருடைய பாட்டைப் பெறணுமென்றே தான் சோதித்தது இவர் பாடினவுடனே பொன் அகப்படும்படிப் பண்ணிவிட்டார்!

இங்கேயும் பிள்ளையார்தான் வந்து மாற்றுப் பார்த்தார். அதனால் திருவாரூரிலும் ஒரு மாற்றுரைத்த விநாயகர் உண்டு.

ஸுந்தரர் நினைத்த கொனஷ்டையையும் ஸ்வாமி இப்போது பண்ணியிருந் தார்!மச்சத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், மாற்று குறைந்திருந்தது!14 காரட்!

பாட்டு ப்ரியரை ஸுந்தரர் மறுபடி ஸ்துதித்தார். ஸ்வாமியும் பதினாலை இருபத்து நாலாகவே மாற்றிக் கொடுத்தார்.

அப்புறம் ஒரு ஸமயம் ஸுந்தரமூர்த்தி, சேரமான் பெருமாளுடைய ஊருக்குப் போய் அரண்மனையில் தங்கி விட்டுப் புறப்பட்டார். ராஜாவான சேரமான் அவருக்கு ராஜோபசாரம் பண்ணி வழியனுப்பும்போது மூட்டை மூட்டையாக - 'பொதி' என்று சொல்வது, அப்படி - நிறையப் பொதி பொன்னும் பொருளும் கொடுத்தனுப்பினார். ராஜஸேவகர்கள் அவற்றைத் தூக்கிக் கொண்டு வர, ஸுந்தரர் கொங்கு நாட்டு வழியாகத் திருவாரூர் திரும்பிக் கொண்டிருந்தார்.

திருப்பூருக்குக் கிட்டே திருமுருகன்பூண்டி என்ற க்ஷேத்ரம். அங்கே காட்டு வழியில் ஸுந்தரர் ஆள்களோடு போய்க் கொண்டிருந்தார். அந்த ஊர் ஸ்வாமி பார்த்தார். 'வழக்கமாக நம்மிடம் அதைத்தா தா, இதைத் தா என்று நச்சரித்தபோது ஒரு க்ஷேத்ரம் விடாமல் நம்மிடம் வந்து பாடியவன், இப்போது நம்மை லக்ஷ்யமே பண்ணாமல் அல்லவா பெரிய ராஜஸம்பாவனையுடன் போகிறான்? நாம் ஏதாவது கொடுத்தால், 'நீயே அதைத் திருவாருரில் சேரு' என்கிறவன், ராஜ ஸேவகர்கள்தான்

நிஜமான துணை என்ற தைரியத்தில்தானே இப்போது காட்டிலே இத்தனை பொதியுடன் போகிறான்?' என்று நினைத்தார். கொஞ்சம் சோதனை லீலை செய்வதற்கு முடிவு பண்ணினார்.

பூதகணங்களை வேடர்களாக ஆக்கி ஸுந்தரர் கோஷ்டியை எதிர்த்து வழிப்பறி செய்ய வைத்தார். உயிரக்கு ஹானி செய்யாமல் அந்த கணங்கள் பொருளை மட்டும் பிடுங்கிக் கொண்டு ஸ்வாமியிடம் வந்து பொதியைக் கொடுத்துவிட்டன.

எல்லாம் பறி கொடுத்துவிட்டு ஸுந்தரர் என்ன செய்வது என்று தெரியாமல் நின்று கொண்டிருந்தார்.

அப்போது அந்த ஊர்ப் பிள்ளையாருக்குத்தான் கருணை பெருகிற்று. ஊருக்குப் பேர் திருமுருகன்பூண்டி. அந்த முருகன் "வைதாரையும் வாழ வைப்பான்" என்கிறார்கள். ஆனால் அந்த ஊரிலோ அவனடைய அண்ணாக்காரர்தான் தன்னை 'வயிறுதாரி' என்று ஸுந்தரர் வைததையும் நினைக்காமல் அவரை வாழவைக்க நினைத்தார்! அதனால் கோவிலை விட்டே கொஞ்ச தூரம் ஓடி வந்தார். சற்று தூரத்தில் ஸுந்தரரைப் பார்த்தவுடனேயே ஒரே கூவலாகக் கூவி அவரைக் கூப்பிட்டார். "இங்கே கோவிலில் இருக்கிற என் அப்பாதான் கணங்களை அனுப்பி வழிப்பறி செய்தது. அதிலே கணபதியான எனக்குப் பங்கு இல்லை. நீ கோவிலுக்கு வந்து அவரைப் பாடு. நீ பாடிவிட்டால் அவர் மனஸு குளிர்ந்து, தான் பண்ணினதை அப்படியே மாற்றி விடுவார்" என்று தகவல் கொடுத்து உபாயமும் சொல்லிக் கொடுத்தார். ஸுந்தரமூர்த்தியைக் கூவிக் கூவிக் கூப்பிட்ட அந்தப் பிள்ளையார் 'கூப்பிடு பிள்ளையார்' என்று பெயரில் திருமுருகன்பூண்டியிலிருந்து அவிநாசிக்குப் போகிற வழியில் இருக்கிறார்.

அவருக்கு ரொம்பவும் நன்றி சொல்லி விட்டு, அவர் பரம கருணையோடு வழிகாட்ட ஸுந்தரர் கோவிலுக்குப் போனார். 'நிந்தாஸ்துதி பண்ணி இன்னும் கஷ்டம் ஏற்பட இடம் கொடுக்க வேண்டாம்.ஸ்வாமியேதான் கொள்ளை நடத்தினது என்பதுகூட நமக்குத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள வேண்டாம். துஷ்ட வேடர்கள் நிறைந்த இந்த ஊரில் நீ இருக்கலாமா என்று ஸ்வாமியிடம் அங்கலாய்த்துக் கொள்கிற ரீதியிலேயே பாடலாம்' என்று ஸுந்தரர் நினைத்தார். 'இங்கே ஏன் ஸவாமி, நீ வாஸம் பண்ணணும்,' என்று அர்த்தம் கொடுக்கும்படியாக ஒவ்வொரு பாடலும் "எத்துக்'(கு) இங்(கு) இருந்தீர், எம்பிரானே?" என்று முடித்துப் பதிகம் பாடினார்.

ஸ்வாமியும் தாம்தான் அந்த வழிப்பறியை 'அரேஞ்ஜ்' பண்ணினது என்று காட்டிக் கொள்ளாமல், அந்த வேடர்களுக்கு மனஸ் மாறிவிட்ட மாதிரிக் காட்டி, கணங்களை மறுபடி வேடர்களாக்கி அவர்கள் பொதியை எல்லாம் ஸந்நிதியலேயே ஸுந்தரருக்கு முன்னாடி கொண்டு வந்து போட்டுவிடும்படிப் பண்ணினார்.

---

## விநாயகரும் மாணிக்கவாசகரும்

தேவாரம் பாடிய மூவரைப் பற்றி விக்நேச்வர ஸம்பந்தமாக இவ்வளவு!ஆனால் மாணிக்கவாசகர் அவருடைய திருவாசகத்திலே பிள்ளையாரைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை. இருந்தாலும் அவருடைய வாழ்க்கையிலே இவர் நெருக்கமா ஸம்பந்தப் பட்டிருக்கிறார். ரொம்ப பேருக்குத் தெரியாத கதை சொல்கிறேன். பழங்காலத்திலே பாண்டிய நாட்டிலேயிருந்து சோழ தேசம் போகிறதற்கு ஆவுடையார் கோவில் வழியாகத்தான் நல்ல சாலை இருந்தது. மாணிக்கவாசகர் காலத்தில் ஆவுடையார் கோவிலுக்கு திருப்பெருந்துறை என்று பெயர். அங்கே வழிப்போக்கர்கள் தங்குவதற்கு ஒரு சத்திரம் இருந்தது. அதற்குப் பக்கத்தில் வானம் பார்க்க, அதாவது வரையில்லாமல், ஒரு பிள்ளையார் உட்கார்ந்திருப்பார். வெயிலில் வந்த யாத்ரிகர்கள் ஒரு கூரையின் கீழ் 'ரெஸ்ட்' பண்ணிக் கொள்ளும்

சத்திரத்துக்குப் பக்கத்திலேயே இப்படி அத்தனை வெயிலையும் தன் மேலே வாங்கிக் கொள்கிற ஒரு பிள்ளையார்!இன்னும் சில இடங்களிலும் இப்படி உண்டு. அங்கேயெல்லாம் 'வெயில் உகந்த பிள்ளையார்' என்று அவருக்குப் பேர் சொல்வார்கள். இங்கேயோ 'வெயில் காத்த பிள்ளையார்' என்று பேர். என்ன வித்யாஸமென்றால் மற்ற இடங்களில் ஜனங்கள் அநுபவிக்கிற வெயில் கஷ்டத்தை நாமும் அவர்களோடு சேர்ந்து அநுபவிப்போமே என்று 'ஸிம்பதி'யிலே அவராக வெயிலை ப்ரியப்பட்டு உகந்து ஏற்றுக் கொள்கிறார். இங்கேயோ அதற்கு மேலே ஒரு படி போய், சத்திரத்தில் தங்கினவர்கள் அப்புறம் யாத்திரை தொடரும் போது வெயிலால் கஷ்டப்படாமல் அந்த வெயிலை அவர்களுக்குமாகச் சேர்த்து vicarious suffering என்கிறார்களே, அப்படித் தாமே வாங்கிக்கொண்டு, அவர்களை உஷ்ணத்திலிருந்து காப்பாற்றுகிறார். அதனால் 'வெயில் காத்த பிள்ளையார்' என்று பெயர் பெற்றிருக்கிறார். பாண்டிய ராஜாவுக்காகக் குதிரை வாங்கப் போன மந்திரி திருவாதவூரர் அப்புறம் மாணிக்கவாசகர் என்ற மஹானான கதை தெரிந்திருக்கும். அவர் குதிரை வாங்கப் போகிற வழியிலே அந்தத் திருப்பெருந்துறைச் சத்திரத்தில்தான் ராத் தங்கினார். அப்போது அவருடைய ஸ்வப்பனத்திலே வெயில் காத்த பிள்ளையார் தோன்றினார். வெயிலோ, suffering-ஆ எதுவும் தெரியாத பரப்ரஹ்மமே தாம் என்று வாதவூரருக்குத் தெரிவிக்க நினைத்து, தான் ஒருத்தரே ப்ரஹ்ம - விஷ்ணு -ருத்ரர் ஆகிய மூன்று ரூபமாக மாறி அவருக்குக்காட்சி கொடுத்தார். கொடுத்த அப்புறம், "இந்த ஊரிலே பரப்ரஹ்மத்துக்குக் கோவில் கட்டு. அரூபமாகவும் நிர்குணமாகவும் இருக்கிற தத்வத்துக்கு எப்படிக் கோவில் கட்டுவது என்று கேட்காதே. அதற்கு நேரடியாகக் கோவில் கட்ட முடியாதுதான் ஆனாலும் அப்படி ஒரு தத்வம் உண்டு என்று ஸகல ஜனங்களுக்கும் துளியாவது நினைப்பு வர வேண்டுமல்லவா? அதற்காகத்தான் அதை 'ஸிம்பாலிக்'காக (உருவகமாக)ப் புரிந்து கொள்ளும்படி ஒரு கோவில் கட்டச் சொல்கிறேன்.

"ப்ரஹ்மம் அருவம். நாம் பார்க்கிற மூர்த்திகளுக்குள் சிவலிங்கம் தவிர பாக்கி எல்லாம் உருவம். சிவ லிங்கத்துக்கு அவயவங்கள் கொண்ட உருவமும் இல்லை, அது அருவமுமில்லாமல் ஒரு நிள உருண்டையாயிருக்கிறது. அதனால் அருவுருவம் என்று அதற்குப் பேர். சிவலிங்கத்துக்குப் பீடம் இருக்கிறதே, ஆவடையார் என்று, அதுவே ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ர ஸ்வரூபம். அதற்கு மேலே சிவம் என்கிற அருவ ப்ரஹ்மம் இருப்பதை ஸிம்பாலிக்காகக் காட்டத்தான் லிங்கம் வைத்தது.

"ஆனால் உருவ தத்வத்திலேயே ருசியுள்ள ஜனங்கள் அதை மறந்துவிட்டு லிங்கத்தையும் ஒரு உருவ மூர்த்திதான் என்று நினைக்கிறார்கள். பொது ஜனங்கள் உள்ள ஸ்திதியில் அப்படி நினைப்பதுதான் இயற்கை. அதனால் மற்ற கோவில்களிலெல்லாம் அப்படியே இருந்து விட்டுப் போகட்டும். ஆனாலும், இத்தனாம் பெரியதேசத்தில் ஒரு இடத்திலாவது வேதத்தின் பரம தாத்பர்யமான பரப்ரஹ்மத்தை, அருவப் பரம்பொருளை அழுத்தமாக ஞாபகப்படுத்த ஒரு ஆலயம் வேண்டாமா? உருவம் என்பதிலிருந்து அருவுருவம் என்கிற வரையில் கொண்டுவிட்டிருக்கிற ஈச்வரனுக்குத்தான் அதற்கும் அடுத்த ஸ்டேஜான அருவமாக வைத்தும் கோவில் கட்டினால் பொருத்தமாயிருக்கும், ஜனங்களின் மனோபாவத்துக்கும் அதுவே ஸரியாய் வரும்.

"ஆனபடியால் நீ இங்கே ஆவுடையாரை மட்டும் மூலஸ்தானத்தில வைத்து, அதற்கு மேல் லிங்கம் ப்ரதிஷ்டை பண்ணாமல் காலியாகவே விட்டுக் கோவில் கட்டு. காலி என்பதால் சூன்யமில்லை, அதுதான் நம் இத்தனை ஜீவாத்மாக்களுக்கும் மூலம் என்று ஜனங்களுக்குப் புரிவிப்பதாக அதற்கு

ஆத்மாநாதஸ்வாமி என்று பெயர் வை.

"நான் சொன்னேனே என்று இப்பவே காரியத்தில் இறங்காதே!இங்கே ஒரு குருந்த மரத்தின் கீழே என் தகப்பனார் குரு ஸ்வரூபத்தில் வந்து ஆத்மாவை நீ அநுபவத்தில் தெரிந்து கொள்ளும்படியாக - அதாவது நம்முடைய ஆத்மா பரப்ரஹ்மமே என்பதை நீ அநுபவமாக அறியும்படி - உபதேசிப்பார். அதற்கப்புறமே ஆலய நிர்மாணம் பண்ணு" என்று சொல்லி விட்டுப் பிள்ளையார் மறைந்துவிட்டார்.

இப்படி ஒரு ஆனை சொன்னதன் மேல்தான் குதிரைக்கான பணத்தில் மாட்டுக்குக் கோவில் எழும்பிற்று!ஆவுடையார் என்பது மாடுதான், பரமேச்வரனின் ரிஷபம்!ஆ-மாடு, உடையார் என்றால் ஸ்வாமி. கோவில் கல்வெட்டுக்களில் பார்த்தால் 'ஸ்வாமி' என்பதற்குத் தமிழ் வார்த்தையாக 'உடையார்' என்றே போட்டிருக்கும். ராஜராஜீச்சுரமுடையார், திருநாசேக்சுரமுடையார் என்கிற மாதிரி. மற்ற மாடுகளுக்கெல்லாம் தலைமையில் அவற்றுக்கு ஸ்வாமியாக உள்ள ரிஷபந்தான் ஆவடையார். மற்ற ஊர்களில் அந்த ரிஷபத்தின் மேலே லிங்க ரூபத்தில் பரமேச்வரன். ஜீவாத்மாக்களான அத்தனை பசுக்களுக்குள்ளும் உடையாரான பசுபதி மாட்டு ஜாதிப் பசுபதியான ஆவுடையார் மேலே உட்கார்ந்திருப்பார்.

பிள்ளையார் சொன்னபடியே அப்புறம் ப்ராம்மண குருவாக ஈச்ரவன் வர, அவரடம் வாதவுரரார் உபதேசம் பெற்றுக் கொண்ட ஆவுடையாரை மட்டும் வைத்துக் கோவில் கட்டினார். ஞானாபூதி பெற்றவுடனேயே அவருக்கு மணி மயியாகத்தான் திருவாசகம் பாடவந்தால் மாணிக்கவாசகர் என்ற புதுப் பெயரும் உண்டாகி விட்டது.

அரூப ஸ்வாமி ஆவுடையார் மட்டுமே மூலஸ்தானத்தில் இருந்தால் ஜனங்கள் அந்தத திருப்பெருந்தறைக்கும் 'ஆவுடையார் கோவில்' என்று புதப் பெயர் வைத்துவிட்டார்கள்.

அம்பாளும் அங்கே அரூபந்தான். இவர் ஆத்மநாதர் என்றால் அவள் யோகாம்பிகை.

இப்படி அவர்கள் அரூபமாக விட்டதற்கு வட்டியும் முதலுமாக மாணிக்கவாகர் என்ன பண்ணினாரென்றால் கோவில் கட்டச் சொன்ன பிள்ளையாருக்கே அங்கே மூன்று மூர்த்திகள் சேர்ந்தாற்போல் வைத்து விட்டார். அவர் இவருக்கு மும்மூர்த்திகளாக மூன்று ரூபத்தில் தரிசனம் தந்தால் இவரும் அவருக்கு மூன்று மூர்த்தி வைத்துவிட்டார் - மும்மூர்த்திகளும் அவரே என்று காட்டுவதாக.

இரட்டைப் பிள்ளையார் பல ஊரில் உண்டு. ஆவுடையார் கோவிலில் மட்டும் மூன்று பிள்ளையார்!

---

## 'திருமுறை' கிடைக்கச் செய்தவர்

தேவார கர்த்தா, திருவாசக கர்த்தா கதைகள் சொன்னே. அந்த தேவாரப் பதிகங்கள் அத்தனையும் நமக்குக் கிடைக்கும்படிப் பண்ணியதும் பிள்ளையார்தான்!

அபயகுல சேகரன் என்று சைவ நூல்கள் சொல்லும் ராஜராஜ சோழனுடைய காலத்தில் அங்கங்கே யாரோ சிலர்தான் ஒன்றிரண்டு தேவாரப் பதிகங்கள் தெரிந்து ஓதிக்கொண்டிருந்தார்கள். சிவ பக்தியில் ஊறி, சிவபாதசேகரன் என்றே பெயர் வைத்துக் கொண்டிருந்த ராஜராஜனுக்கு எப்படியாவது எல்லாத் தேவாரங்களையும் கண்டுபிடித்து ப்ரகாசப் படுத்த வேண்டுமென்று ஒரே துடிப்பாக இருந்தது. 'எப்படியாவது' என்றால் நடைமுறையில் எப்படி? அதுதான் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

அப்போது அவனுக்கு ஒரு நல்ல சேதி வந்தது. "சிதம்பரத்துக்குக் கிட்டே திருநாரையூர் என்ற ஊரில் நம்பியாண்டார் நம்பி என்று ஒரு மஹான் இருக்கிறார். அவருக்குப் பிள்ளையார் ப்ரத்யக்ஷம். அவர் ஆதி சைவர். அதாவது குருக்கள் ஜாதி. அவருடைய பால்யத்தில் தகப்பனார் ஒருநாள் வெளியூர் போனபோது, தான் பூஜை பண்ணும் பிள்ளையாருக்கு இவரைப் பூஜை பண்ணச் சொன்னாராம். இவரும் அப்படியே பண்ணிப் பிள்ளையாருக்கும் நைவேத்யம் பண்ணினாராம். சிறு பிரயாமானதால், பிள்ளையார் நிஜமாகவே நைவேத்யத்தைச் சாப்பிடுவார்கள் என்று நினைத்தார். அவர் அப்படிப் பண்ணாததால் ஒரே அழுகையாய் அழுது கல்லிலே தலையை மோதிக் கொண்டு ப்ராணனை விட்டுவிடப் பார்த்தார். உடனே பிள்ளையார் ப்ரஸன்னமாகி அவர் ஆசைப்பட்டாற்போலேவே அத்தனை நைவேத்யத்தையும் சாப்பிட்டாராம்!

"இதற்குள் பள்ளிக்கூட வேளை தப்பி விட்டதாக நம்பி மறுபுடி அழ ஆரம்பித்தாராம். உடனே பிள்ளையாரே அவருக்கு வித்யாப்யாஸம் பண்ணி ஆத்ம வித்யை உள்பட எல்லாக் கல்வியிலும் தேர்ச்சி பெறச் செய்த விட்டாராம். அந்தப் பெரியவர் பிள்ளையாரோடு ஸஹஜமாகப் பேசுகிறாராம். அவரைக் கேட்டால் தேவார ஸமாசாரம் தெரியலாம்" என்று ராஜராஜ சோழனுக்குச் சேதி சொன்னார்கள்.

அப்படியா?" என்று அவன் உடனே நம்பியுடைய பிள்ளையாருக்காக ஏகப்பட்ட நைவேத்யங்கள் ஸித்தம் செய்து கொண்டு அவரிடம் ஓடினான்.

சொல்ல மறந்துவிட்டேன் - அந்த விநயாகமூர்த்திக்குப் 'பொல்லாப் பிள்ளையார்' என்று பெயர், 'பொல்லா' என்றால் 'துஷ்ட' என்று அர்த்தமில்லை. அவர் துஷ்ட ஸ்வாமியே இல்லை, இஷ்ட ஸ்வாமிதான்!பின்னே என்ன அர்த்தம் என்றால் பொள்ளுதல், பொல்லுதல், பொளிதல் என்றெல்லாம் சொன்னால் 'செதுக்குவது' என்று அர்த்தம். சிற்பி எவனும் செதுக்காமல் ஸ்வயம் - பூ என்று தானாகவே உண்டாகிற விக்ரஹங்களுக்குப் பொல்லா மூர்த்திகள் என்று பேர். அப்படித்தான் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையாரும்.

ராஜராஜசோழன் ஸமர்பித்த நைவேத்யங்கள் நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாருக்குப் படைத்தார். பிள்ளையார் வாஸ்தவமாகவே

தும்பிச்சுக் கையை நீட்டி அதெல்லாவற்றையும் போஜனம் பண்ணினார் ராஜாவுக்கு ஒரே சந்தோஷமாகிவிட்டது. நம்பியாண்டார் நம்பியிடம், "உங்களுடைய இந்த ப்ரத்ட்யச தெய்வத்தைக் கேட்டு மூவர் தேவாரங்கள்

முழுக்கவும் எங்கே கிடைக்கும்

என்று தெரிந்து கொண்டு சொல்லவேணும் இன்னொரு ஆசை, இப்ப கிடைத்துள்ள தேவாரத்தில் 'திருத்தொண்டத் தொகை' என்று 63 நாயன்மார் பேர்களைத் தெரிவிப்பதாக ஸுந்தரர் பாடல் இருக்கிறதோல்லியோ? அந்த மஹாநுபாவர்களின் திவ்ய சரித்ரங்களையும் பிள்ளையார் வெளியிட்டாரானால் லோக மங்களமாக எல்லாருக்கும் ப்ரசாரம் பண்ணலாம். அநுக்ரஹிக்கணும்' என்று ப்ரார்த்தித்துக் கொண்டான்.

இவன் சொன்னதை அவர் பிள்ளையாரிடம் சொல்லி, "அநுக்ரஹிக்கணும்" என்று வேண்டிக் கொண்டார்.

இந்தத் தமிழ்த் தேசத்துக்கு, பக்த லோகத்துக்கே, பரமோபகாராகப் பிள்ளையாரும் அந்த இரண்டு விஷயங்களையும் தெரிவித்தார். "சிதம்பரத்திலே நடராஜா ஸந்நிதானமான கனக ஸபைக்கு மேலண்டையிலே ஒரு அறை இருக்கிறது. அதிலேதான் மூவரும் தங்களுடைய தேவாரச் சுவடிகள் வைத்திருக்கிறார்கள். கதவில் அவர்களே இலச்சினை வைத்திருக்கிறார்கள். (லாஞ்சனை என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தையைத் தமிழில் இப்படிச சொல்வது. அதுதான் அதிகாரப்பூர்வமான அடையாளம், முத்திரை முதலானது.) அப்படி அந்தச் சிதம்பர மேலண்டை அறையில் தேவார மூவரே அதிகார பூர்வ அடையாளமாகத் தங்களுடைய கையை அழுத்திய இலச்சினைகளை வைத்து மூடியிருக்கிறார்கள். அங்கே பாய்க் கதவைத் திறந்து சுவடிகளை எடுத்துக்கோ" என்றார்

அறுபத்து மூவர் சரித்ரங்களையும் சொன்னார். 'நம்பிக்கு தும்பி சொன்னார்' என்பார்கள். தும்பி என்றால் யானை. அதன் கைதான் தும்பிக்கை. ஸாக்ஷாத் கணபதியே சரித்ரம் சொன்ன பெரிய பெருமை நம்முடைய நாயன்மார்களுக்கு இருக்கிறது!அவர் சொன்னதை நம்பி பிற்பாடு 'திருத்தொண்டர் திருவந்தாதி' என்ற நூலாகப் பாடினார். திருத்தொண்டத் தொகையும், இந்தத் திருவந்தாதியுந்தான் பின்னாளிலே சேக்கிழார் விஸ்தாரமாகச் செய்த 'பெரிய புராண'த்துக்கு ஆதார நூல்கள். அதிருக்கட்டும்.

தேவாரக் கதை என்ன ஆச்சு என்றால், நம்பி சொன்னபடியே ராஜராஜ சோழன் சிதம்பரத்துக்கு ஆசை ஆசையாக ஓடினான்.

ஆனால் அங்கேயுள்ள நிர்வாஹஸ்தர்களான தீக்ஷிதர்களோ, மூவர் கதவை மூடி ஸீல் வைத்தார்களே தவிர அதை எப்போது திறக்கணும் என்று ஏதொன்றும் சொன்னதாகத் தெரியாததாலே, இப்போது தாங்கள் எப்படி அதைத் திறக்கப் பெர்மிஷன் தருவது என்று கேட்டார்கள். "அந்த மூவரே திரும்பி வந்தாலொழிய நாங்களாக அப்படிச் செய்ய 'அதாரிடி' இல்லையே!" என்று கை விரித்து விட்டார்கள்!

சோழ ராஜாவுக்குச் சொரேலென்றாகி விட்டது. ஆனால் ஒரு நிமிஷந்தான்!சட்டென்று அவனுக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. அவன் மஹாவீரனும், பக்திமானும் மட்டுமில்லை;புத்திமானும்.

என்ன யுக்தி என்றால்:

ஆலய விக்ரஹங்கள் என்கிறவை வெறும் பொம்மை இல்லை, சின்னமோ, ஸிம்பலோகூட இல்லை, அவை ப்ராண பிரதிஷ்டை ஆனவையாதலால் ப்ராணனுள்ள, உயிருள்ள மூர்த்திகளே என்பதுதான் ஆஸ்திகக் கொள்கை. மநுஷ

ரூபத்தில் தெய்வம் வந்தால் அவதாரம் என்கிறாற்போல விக்ரஹங்களையும் 'அர்ச்சாவதாரம்' என்றே சொல்வது வழக்கு, முக்யமாக வைஷ்ணவ ஸித்தாந்தத்திலே. அர்ச்சா என்றால் விக்ரஹம்.

இதை வைத்தே ராஜராஜ சோழன் யுக்தி பண்ணினான். என்ன யுக்தி என்றால்,

மூவர் விக்ரஹங்களுக்கு விமிரிசையாகப் புறப்பாடு செய்வித்து அந்தக் கனகஸபா மேலண்டை அறை வாசலில் கொண்டு வந்து நிறுத்தினான். தீக்ஷிதர்களிடம், "முத்ரை வைத்தவர்களே வந்துவிட்டார்கள். கதவைத் திறக்கணும்" என்று கேட்டுக்கொண்டான்.

எந்த மனஸையும் தொட்டுவிடும்படி இருந்தது, அவனுடைய பக்தியும், தேவார ஸொத்தை இந்தத் தமிழ் தேசத்துக்கு மீட்டுத் தருகிறதிலிருந்த ஆர்வமும்.

தீக்ஷிதர்கள் மனஸ் உருகிக் கதவைத் திறந்தார்கள்.

உள்ளே போய்ப் பார்த்தால்!'ஐயோ, இத்தனை ப்ரயாஸைப் பட்டும் கடைசியில் மலையைக் கெல்லி எலியைப் பிடித்தாற்போல, சுவடிகளையெல்லாம் ஒரேயடியாகச் செல்லு மூடிப் போயிருக்கிறதே' என்று எல்லாரும் வருத்தப்படும்படிச் சுவடிக் கட்டெல்லாம் செல்லரித்து மூடிக் கிடந்தது. மொத்தம் மூவர் பாடின லக்ஷத்து சொச்சம் பதிகங்களிலே எண்ணூறுக்கும் குறைச்சலானவை தான் அரிபடாமல் தப்பித்திருந்தன.

எல்லாரும் சோகாக்ராந்தர்களாக இருக்கும்போது அசரீரி கேட்டது. "மலையைக் கெல்லி எலி இல்லை, இந்த எலியே வரப்போகிற காலங்களில் பிறக்கப் போகிறவர்களுக்கு யானைக்கு மேலே!அது பொதுவிலே அவஸர யுகமாயிருக்கும். அந்த அவஸரத்திலும் சினிமா, கிரிக்கெட் தண்டப்பேச்சு, பாலிடிக்ஸ், பத்திரிகை என்றால் மட்டும் மணிக் கணக்காக பொழுது இருக்குமே தவிர இதற்கெல்லாம் சேர்த்து வைத்து மற்ற விஷயங்களில் ஒரே பறப்பாக இருக்கும். அதிலேயும் ஆத்ம ஸம்பந்தமான விஷயமென்றால் கேட்கவே வேண்டாம்!லக்ஷம் பதிகம் என்றால் யாரும் கிட்டேயே போகமாட்டார்கள்!அதனால்தான் திவ்ய ஸங்கல்பத்தினால் இப்படி ஆச்சு. அது மாத்திரமில்லாமல் இந்த 796 பதிகங்களே ஒரு ஜீவனைக் கடைத்தேற்றவும் போதும்" என்று அசரிரி சொல்லிற்று. அது சுருக்கமாக 'ஹிண்ட்' பண்ணினதில் என் சரக்கும் சேர்த்துச் சொன்னேன்!

தெய்வ ஸங்கல்பம் என்றவுடன் எல்லாரும் ஸந்தோஷமாக ஏற்றுக் கொண்டார்கள்.

வரப்போகிற காலத்தைப் பற்றி அசரீரி ஒரு மாதிரி 'ஹிண்ட்' பண்ணி விட்டதால், அதன் நல்லது இன்னுங்கூட அநுகூலமாக ஒரு ஏற்பாடு பண்ணினால் நன்றாயிருக்குமே என்று சோழ ராஜா நினைத்தான்.

# 'குரு' இலக்கணச் செய்யுட்கள்

குரு, ஆசார்யர், தேசிகர், உபாத்யாயர், அத்யட்சகர், புரோஹிதர் என்றிப்படி நமக்கு அறிவைத் தருகிறவருக்குப் பல பேர் சொல்கிறோம். வெறுமே அறிவைத் தராமல் நற்றிவைத் தருகிறவராக அவர் இருக்க வேண்டும் என்பதே ஆதிகாலம் தொட்டு நம் மரபு வலியுறுத்தி வந்திருக்கிற விஷயம். அதாவது அறிவை வளர்த்துக் கொடுக்கும்போதே, கெட்டதற்கு அந்த அறிவு ப்ரயோஜனப்படாமல் தர்ம வழியிலேயே போய் நல்லதைச் செய்யும்படி ரூபம் பண்ணித் தருகிறவரே குரு, இன்னும் ஆசார்யர், அத்யட்சகர், உபாத்யாயர், புரோஹிதர், தேசிகர் எல்லாம். இந்த எல்லாப் பெயர்களையும் நாம் ஒரே அர்த்தத்தில் உபயோகப்படுத்துகிறோம். ஆனால் இவற்றில் ஒன்றுக்கொன்று வித்யாஸம் சொல்லிப் பாகுபடுத்தியும் தனித் தனி லட்சணம், 'டெஃபனிஷன்' சொல்லியிருக்கிறது. அடிப்படையில் இந்த எல்லாருடைய கார்யமும் சிஷ்யரை நல்ல வழியில் போகச் செய்வதே என்றாலும் அதைச் செய்வதில் உள்ள வித்யாஸமான முறைகளை வைத்து வெவ்வேறாக டெஃபனிஷன் கொடுத்திருக்கிறது.

இன்னொரு தினுஸாகவும் சொல்லலாம். அதாவது, நல்வழிப்படுத்துகிற அந்த ஒரே பெரியவரின் ஒவ்வொரு விதமான கார்யத்தை - ஒவ்வொரு 'ஆஸ்பெக்'டை - வைத்து ஒவ்வொரு பெயரைக் கொடுத்து அதற்கான டெஃபனிஷன்கள் கொடுத்திருக்கிறது என்று சொல்லலாம்.

'குரு' என்பதற்கு 'இருட்டைப் போக்கடிக்கிறவர்' என்று அர்த்தம் செய்திருப்பது ஸாதரணமாக ஓரளவு வித்வான்களாக உள்ள எல்லாருக்கும் தெரிந்ததே.

கு- காரஸ் - த்வந்தகார ஸ்யாத் ரு - காரஸ் - தந்நிவர்தக : 1

அந்தகார - நிரோதித்வாத் குருரித்யுச்யதே புதை : 11

என்று ச்லோக ரூபத்தில் டெஃபனிஷன் இருக்கிறது. " 'கு' என்பது அந்தகாரம். 'ரு' என்பது அதை நிவர்த்தி செய்வது. அந்தகாரத்தை நிவர்த்தி செய்வதாலேயே அப்படிச் செய்கிறவர் குரு என்று புத்திமான்களால் சொல்லப்படுகிறார்" என்று அர்த்தம். அந்தகாரம் என்பது அஞ்ஞான இருட்டுத்தான். அந்தகார நிவர்த்தி என்பது ஞான ஜ்யோதிஸ்ஸான ப்ரம்மத்தை அநுபவிப்பதுதான். 'ஹை லெவ'லில் ப்ரஹ்ம வித்யையையே கல்வியாகச் சொன்னால் அந்த அர்த்தம். ஸாதாரணமாக எல்லாரும் பெறுகிற கல்வி என்கிறபோது, அநேக ஸமாசாரங்களில். ஸயன்ஸ், ஆர்ட் என்கிறவற்றில், அறிவின்மை என்ற இருட்டிலுள்ளவருக்கு அந்தத் துறையில் அறிவொளியைத் தருபவர் குரு என்று அர்த்தம்.

இன்னொரு டெஃபனிஷனும் இருக்கிறது - அபூர்வமாகச் சில பேருக்கு மட்டுமே தெரிந்தது.

சுகார:ஸித்தித:ப்ரோக்தோ ரேப:பாபஸ்ய ஹாரக:1

உகாரோ விஷ்ணுரவ்யக்தஸ் - த்ரிதயாத்மா குரு ஸ்ம்ருத:11

'குரு' என்ற வார்த்தையில் முதலில் 'க' காரமும் 'உ'காரமும் சேர்ந்து 'கு' அப்புறம் 'ர'வும் 'உ'வும் சேர்ந்து 'ரு'. இப்படி க, உ, ர, உ என்ற நாலு சப்தங்களாக அந்த வார்த்தையைப் பிரித்து, 'க'வுக்கு இன்ன தாத்பர்யம், 'ர'வுக்கு இன்ன, 'உ'வுக்கு

இன்ன என்று ச்லோகத்தில் விளக்கம் கொடுத்திருக்கிறது.

க,ர,உ ஆகிய மூன்றுக்கும் என்ன அர்த்தமோ அதுவே ரூபமாக அமைந்தவர்தான் குரு என்று முடித்திருக்கிறது:த்ரிதயாத்மா குரு:ஸ்ம்ருத:'அம் மூன்றும் ஒன்றுபட்டதாக 'குரு' என்ற வார்த்தை நினைக்கப்படுகிறது.'

---

## 'க' ஸித்தியளிப்பது

'க' என்பது ஸித்தி தருவது. ஸித்தி என்றால் லட்சியத்தை ஸ்திரமாக ஸாதித்துக் கொள்வது. எந்த வித்யையைக் கற்றுக் கொண்டாலும் அதன் லட்சியத்தைப் பிடித்து, எந்நாளும் நழுவாமல் தக்க வைத்துக் கொள்வது ஸித்தி.

அட்சரங்களுக்கு அந்தர்கதமாக (உள்ளூர) அநேக சக்திகள் உண்டு. அதை வைத்துத்தான் மந்த்ரங்கள் என்ற அட்சரக் கோர்வை (கோவை)கள் ஏற்பட்டிருக்கின்றன. அவ்வாறு இருப்பதில் க(ரீணீ) என்ற சப்தத்திற்கே ஸித்தி தருகிற சக்தி இருப்பதாக ச்லோகம் சொல்கிறது 'ககார:ஸித்தித:ப்ரோக்த:'

அப்படிச் சொன்னதால் குரு முறைப்படிச் சொல்லிக் கொடுக்காவிட்டாலும், சிஷ்யன் முறைப்படிக் கற்றுக் கொள்ளாவிட்டாலுங்கூட, அவருக்குச் சொல்லிக் கொடுப்பதில் ஸித்தியும் இவனுக்கும் கற்றுக்கொள்வதில் ஸித்தியும் கிடைத்துவிடும் என்று அர்த்தமாகாது. எப்போதும் யதாவிதியான புருஷ யத்தனம் இருக்க வேண்டும் - நாம் செய்ய வேண்டியதை நன்முயற்சிகளோடு உரிய முறையில் செய்தேயாக வேண்டும். அப்படிச் செய்தும் அநேக ஸமயங்களில் ப்ரதிபந்தகங்கள் (இடையூறுகள்) ஏற்பட்டு ஸித்தி கிடைக்காமல் தோல்வி ஏற்படுகிறதல்லவா? அப்படி நேராமலிருப்பதற்கு தெய்வானுகூலம் வேண்டும். அந்த தெய்வானுகூலத்தை உண்டாக்கித் தரும் பல உபாயங்களில் சப்த சக்தியும் ஒன்று. அதைத்தான் 'க'காரம் செய்கிறது - ககார ஸித்தித ப்ரோக்த -'ககாரம் ஸித்தி தருவது என்று சொல்லப்படுகிறது'....

'க' (ga)- காரத்திற்கு ரொம்பவும் உத்கர்ஷம் (உயர்வு) உண்டு. புணர்ஜன்மா இல்லாமல் பண்ணிக் கொள்வதற்கு, அதாவது மோட்சம் அடைவதற்கு க(ரீணீ) -வில் ஆரம்பிக்கும் நாலு பேரை ஹ்ருதயத்திலே ஸ்மரித்தால் போதும். என்ன அந்த நாலு?

கீதா கங்கா ச காயத்ரீ கோவிந்தேதி ஹ்ருதி ஸ்திதே

கீதை, கங்கை, காயத்ரீ, கோவிந்தன் என்று 'க'காரத்தில் ஆரம்பிக்கிற நாலு பேர்கள்தான். வடக்கத்திக்காரர்களிடம், கார்த்தாலே எழுந்தவுடனே இந்த நாலு பேரைச் சொல்கிற வழக்கம் இருக்கிறது. இங்கே பிறவிப் பயன் என்ற ஜீவித ஸித்தியாகிய பிறவாமையைத் தருகிற நாலே 'க'வில் ஆரம்பிப்பதாகச் சொல்லியிருக்கிறது. நான் சொன்ன குரு லக்ஷண ச்லோகத்தில் பொதுவாக, ககாரம் ஸித்தி ப்ரதம் என்று இருக்கிறது ககார: ஸித்தித: ப்ரோக்த:

ரேப: பாபஸ்ய ஹாரக: "'ர' என்ற அட்சர சப்தம் பாபத்தைப் போக்குவது."

---

# ஸம்ஸ்கிருத 'ர'வும் தமிழ் 'ர'- 'ற'க்களும்

அ-காரம், இ-காரம், க-காரம் என்று சொல்கிறாற் போல ர-காரம் என்று சொல்லக்கூடாது, 'ரேபம்' என்றே அந்த எழுத்துக்கு மட்டும் தனிப் பெயர் கொடுத்திருக்கிறது. ம்ருதுவான சப்தமாக இல்லாமல் கொஞ்சம் முரட்டு சப்தமாக இருப்பது ரேபம் என்று விளக்கம் கொடுத்திருக்கிறது.

இதிலிருந்து Linguistics-™, Semantics-ல் அதாவது பாஷா சாஸ்திரத்தில் ஒரு பெரிய விஷயம் அகப்படுகிறது. (என்னவெனில்) தமிழில் இடையினம் என்பதைச் சேர்ந்ததாக 'ர' என்று ஒரு ம்ருது சப்தமான எழுத்தும், வல்லினத்தைச் சேர்ந்ததாக 'ற' என்று ஒரு முரட்டுச் சப்த எழுத்தும் இருக்கின்றன. பேச்சு வழக்கில் 'சின்ன ர', 'பெரிய ர' என்கிறோம். 'தமிழிலும், தமிழைப் போல் த்ராவிட பாஷைகளிலேயே இன்னொன்றான தெலுங்கிலுந்தான் வல்லின 'ற' உண்டு, ஸம்ஸ்க்ருதத்தில் கிடையாது' என்று பொதுவாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். பாஷா சாஸ்த்ரஜ்ஞர்கள் (மொழியியல் வல்லநர்கள்) கூட அப்படிச் சொல்வதாகப் பார்க்கிறேன். வாஸ்தவத்திலோ ஸம்ஸ்க்ருத ர-சப்தம் தமிழில் உள்ள இடையின 'ர'வுக்கும் வல்லின 'ற'வுக்கும் மத்தியிலே உள்ள சப்தமே ஆகும், வார்த்தை யாரம்பத்தில் வருகிறபோது இடையினம் மாதிரியும் மத்தியில் வருகிறபோது வல்லினம் மாதிரியும் அது த்வனிக்கும்.

தமிழில் இடையின ர, வல்லின ற இரண்டுமே வார்த்தையின் ஆரம்ப எழுத்தாக வராது.

ர-ரா-ரி-ரீ... ரௌவரை எந்த எழுத்துமே வார்த்தையாரம்பத்தில் வராது. 'ற'விலும் இதேபோல்தான். 'வல்லின 'ற' விஷயம் ஸரிதான். ஆனால் இடையின 'ர'வில் ஆரம்பிப்பதாக அநேக வார்த்தைகள் இருக்கிறதே!' என்று நினைக்கலாம். வாஸ்தவத்தில் அந்த வார்த்தைகள் எல்லாமே ஸம்ஸ்க்ருதம் முதலான பிற பாஷைகளிலிருந்து எடுத்துக் கொண்டதாகத்தான் இருக்கும். முறைப்படி அவற்றைத் தமிழில் எழுதும்போது 'ர'வுக்கும் முந்தி, வார்த்தை யாரம்பமாக இ,உ,அ- இப்படி ஒரு எழுத்தைச் சேர்த்துத்தான் எழுதுவார்கள். இரகசியம், இராமன், இலக்குவன், இராவணன், உலோஹம்,.... 'உலகம்' என்கிறது கூட 'லோகம்'தான்..., உரோமம், உருசி, அரங்கன், அரம்பை என்றிப்படித்தான் எழுதுவார்கள்.

ரஸ்தா, ரஜா, ரயில், ரிக்க்ஷா, ரோஜ்கார், ரோட் இத்யாதி வார்த்தைகள் அந்நிய பாஷைகள்தான்.

தெலுங்கிலே, ஸம்ஸ்க்ருதத்திலிருந்து கடன் வாங்காமல், தெலுங்கு வார்த்தையாகவே 'ர'வில் ஆரம்பிக்கிறதாக வார்த்தைகள் இருக்கின்றன.

ய,ர,ல,வ,ழ,ள என்ற ஆறு இடையின சப்தங்களில் 'வ' ஒன்றைத் தவிர பாக்கி ஐந்திலுமே அகாரத்திலிருந்து ஔகாரம் வரை அதாவது, ய,யா,யி,யீ... யௌ வரை, ல, லா, லீ... லௌ வரை, இப்படியே ர,ழ,ள-விலும் - எந்த சப்தமும் தமிழ் வார்த்தைகளின் ஆரம்பத்தில் வராது... 'யா' மட்டும் கொஞ்சம் விதிவிலக்கு மாதிரி. 'ஆர்' என்பதை 'யார்' என்கிறது. 'நான்' என்பதை 'யான்' என்கிறது. யாக்கை, யாத்தல், தமிழ் தேசத்தின் சிறப்பு வாத்யமான யாழ், யானை - இதை ஆனை

என்பதும் உண்டு - இப்படிச் சிலது.

தமிழறிஞர்கள் இயக்கர் (யக்ஷர்), இயமானன் (யஜமானன்), இயமன், உயுத்தம் என்றுதான் யகாரத்தில் வார்த்தை ஆரம்பிக்காமல் எழுதுவார்கள்.

உருத்திரன், உருத்திராக்கம் (ருத்ராக்ஷம்) என்றெல்லாமும் பார்க்கிறோம். ரொம்பவும் வழக்கிலுள்ள 'உருவம்' என்பது ஸம்ஸ்கிருத 'ரூபம்'தான்

க-ச-ட-த-ப-ற என்ற ஆறு வல்லின எழுத்துக்களில் ட (ta-da), ற இரண்டிலும் தமிழ் வார்த்தை எதுவும் ஆரம்பிக்காது. 'ட'வில் தற்போது வழங்குகிற தமிழ் வார்த்தைகள் பிற பாஷை இரவல்தான்.

ங-ஞ-ண-ந-ம-ன என்ற ஆறு மெல்லின எழுத்துக்களில் ங,ண,ன என்ற மூன்றிலும் வார்த்தை ஆரம்பிக்காது.

'ந-ன இரண்டும் ஒரே சப்தமாகத்தானே இருக்கு? எதற்கு இப்படி இரண்டு எழுத்து?' என்று ரொம்பப் பேருக்குத் தெரியவில்லை. வாஸ்தவத்தில் அவை வித்யாஸமான சப்தங்கள்தான். 'ந' என்கிறேபாது நாக்கு நுனி பல்லும் மேலண்ணமும் சேர்கிற இடத்துக்குக் கிட்டே பல், அண்ணம் இரண்டையும் தொடணும். 'ன' என்கிறபோது நாக்கு நுனி இன்னும் வளைந்து அண்ணத்தின் உள்பக்கமாக மட்டும் தொடணும். 'அந்த' என்று சொல்லிப் பாருங்கள். அப்போது 'ந்'-னில் நாக்கு எங்கே தொடுகிறதோ அங்கேதான் 'ந'வரிசை பூராவிலும் தொடணும். 'அவன்' என்கிற போது 'ன்'-னில் நாக்கு தொடுகிற இடத்திலேயே 'ன' வரிசை பூரா தொடணும். இது தமிழுக்கே உரியதான சப்தம்.. 'ந' பல்லை நாக்கு தொடுகிற dental, 'ண' அண்ணத்தைத் தொடுகிற cerebral. தமிழில் மட்டுமே உள்ள 'ன'வும் cerebral மாதிரிதான். 'ந'வுக்கும் 'ண'வுக்கும் நடுவிலுள்ள இடத்தைத் தொட்டால் உண்டாகும் சப்தம். இடையின வல்லின 'ர'க்கள் தமிழில் வார்த்தையாரம்பமாக வராது என்று சொல்லிக் கொண்டிருந்தேன். இரண்டுமே வார்த்தை மத்தியில், (சிரித்து) அதாவது இடையில் 'இடை'யினமாகத்தான் வரும்

ஸம்ஸ்க்ருத 'ர' பொதுவாக நம்முடைய இடையின - வல்லின 'ர'க்களுக்கு இடைப்பட்ட சப்தம் எனலாம். அதிலும் வார்த்தையாரம்பத்தில் கொஞ்சம் ம்ருது - இடையினம் மாதிரி த்வனிக்கும், (வார்த்தை) மத்தியில் வரும் போது ஜாஸ்தி வல்லின சப்தமாக இருக்கும்.

இங்க்லீஷ் Christ-ஐ 'கிறிஸ்து' என்று வல்லின 'றி' போட்டுச் சொல்கிற மாதிரியேதான் 'க்ருஷ்ண' என்பதையும் (வல்லிணமாகச்) சொல்லவேண்டும் என்றுகூட ஒரு அபிப்ராயம் கேள்விப்பட்டிருக்கிறேன்.

இங்கிலீஷில் பார்த்தால், world, girl போன்ற வார்த்தைகளில் 'r' ஸைலன்ட் என்று எல்லோருக்கும் தெரியும். ஆனால் இன்னும் பெரும்பாலான வார்த்தைகளிலும் வெள்ளைக்காரர்கள் r-ஐ ஒரே மழுப்பாக மழுப்பிக் கொண்டுதான் போவார்கள். ஆனாலும் சிலீக்ஷீவீஃமீ என்பது மாதிரி 'ர'வைத் தெளிவாக உச்சரிக்கிறபோது நம்முடைய வல்லினம் மாதிரியே சொல்வதால்தான் நாம் 'கிறிஸ்து' என்பது. ஸம்ஸ்க்ருதத்திலும் கிட்டதட்ட அப்படித்தான்.

அதாவது, 'ர'காரம் என்காமல் 'ரேபம்' என்று சொல்லும் அட்ரம் ஒரு ஸம்ஸ்க்ருத வார்த்தையாரம்பத்தில் வருகிறபோது ம்ருது பண்ணி நம்முடைய

இடையினம் மாதிரி சொல்லவேண்டும், வார்த்தையின் நடுவில் அது வரும்போது

வல்லினம் தொனிக்கும்படிச் சொல்லவேண்டும். இதைத் தெரிந்து கொண்டு சில பேர் 'நாறாயணஸ்வாமி', 'நடறாஜன்' என்று கையெழுத்துப் போட்டுக்கூடப் பார்த்திருக்கிறேன்!இப்படி இரட்டை வித சப்தங்களாக 'ர' மட்டும் இருப்பதால்தான், அது மட்டுமே peculiar- ஆக இப்படி இருப்பதால்தான், மற்ற எழுத்துக்களை அகாரம், தகாரம், நகாரம் என்கிறது போல அதை 'காரம்' சேர்த்துச் சொல்லாமல் 'ரேபம்' என்பது. (சிரித்து) அந்த சப்தத்தின் ஒரு ரூபத்திலேயே காரமும் - முரட்டுத்தனமும் - சேரும்போது பேரில் வேறே 'கார'த்தைச் சேர்த்து (ரகாரம் என்று சொல்லி) ஒரே உறைப்பாக்கிவிட வேண்டாமென்று போலிருக்கிறது!

---

## 'ர' : பாபத்தைப் பொசுக்குவது

குரு என்பவர் சிஷ்யனுக்கு ஸித்தி தருகிறார் என்பதை 'க' காட்டுகிறது. அவனுடைய பாபத்தை அவர் போக்குகிறார் என்பதை 'ர' காட்டுகிறது. அக்னியை மூட்டி பஸ்மீகரம் பண்ணுகிறாற்போல இவனுடைய பாபத்தை அவர் பஸ்மமாக்கிவிடுகிறார். 'ரம்' என்பதுதான் அக்னிபீஜம்.

ஒரு ககாரமும், ஒரு ரேபமும், இரண்டு உகாரமும் சேர்ந்து உருவாகியுள்ள 'குரு' என்ற வார்த்தையில் 'க'வுக்கும் 'ர'வுக்கும் விளக்கம் கொடுத்தாயிற்று:க-ஸித்தி தருவது, ர-பாப ஹரணம்;பாபத்தை அக்னியாக பஸ்மம் பண்ணுவது.

பஞ்ச பூதங்களில் ஒவ்வொன்றின் சக்தியையும் உள்ளே அடக்கி வைத்துக் கொண்டிருப்பதாக ஐந்து அட்ரங்கள் - பீஜாட்சரங்கள் என்று பீஜம் (என்றால்) விதை என்று தெரிந்திருக்கும். ஒரு சின்னூண்டு பீஜம் எப்படி ஒரு மஹா வ்ருக்ஷத்தை உள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறதோ அப்படி தெய்விகமான சக்திகளை அடக்கிக் கொண்டிருக்கும் அட்சரங்களே பீஜாட்சரம் என்கிறவை. அப்படிப் பஞ்ச மஹாபூதங்களுக்கு ஒவ்வொன்று உண்டு. ப்ருத்விக்கு 'லம்'. அப்புக்கு 'வம்'. தேயுவுக்கு 'ரம்' - தேயு என்கிற தேஜஸ் அக்னிதான். வாயுவுக்கு 'யம்'. ஆகாசத்திற்கு 'ஹம்'.

ரேபம் அக்னி தத்வம். அக்னி ஒரு வஸ்துவை பஸ்மீகரம் பண்ணுகிற மாதிரி ரேபம் பாபத்தைப் பொசுக்கி விடும். தாரக நாமம் என்று கொண்டாடப்படுகிற ராம நாமா அந்த ரேபத்தில்தான் ஆரம்பிக்கிறது.

---

## உ' திருமாலின் வடிவம்

'('குரு' என்பதிலுள்ள ஒலிகளில்) 'உ' பாக்கி. முதலெழுத்தான் 'கு', கடைசி எழுத்தான 'ரு' இரண்டிலும் 'உ' சேர்ந்திருக்கிறதால் அதற்கு விசேஷம் இருக்கவேண்டும். அதற்கு என்ன அர்த்தம், விளக்கம் சொல்லியிருக்கிறது?

உகாரோ விஷ்ணுரவ்யக்த :

உகாரம் விஷ்ணு ஸ்வரூபம்

ப்ரணவம் த்ரிமூர்த்தி ஸ்வரூபம். அது அ-உ-ம் என்ற மூன்று எழுத்தால் ஆனது. அ+உ =ஓ. 'ஓ'வுக்கு அப்புறம் 'ம்' - மகாரம். இந்த மூன்று எழுத்துக்கள் முறையே ப்ரம்ம, விஷ்ணு, ருத்ரர்களைக் குறிப்பவை. அதாவது அ என்பது ப்ரம்மா, உ-விஷ்ணு. அதுதான் நமக்கு விஷயம், ம-ருத்ரன் 'ம்' என்பதை நீட்டி முடிப்பதில் இன்னும் இரண்டு ஸூட்சம சப்தங்கள். அவற்றுக்கு சப்தம் என்ற பேரே சொல்வதில்லை, வேறே இரண்டு பேர்கள். அவை (முறையே) மஹேச்வரன், மாயை என்றெல்லாம் சொல்கிற மாயா சக்தியையும், அந்த சக்தியும் போய் ஒடுங்கி விடுகிற ஸதாசிவம் என்ற பரம ஸத்யத்தையும் குறிக்கிறவை. அது இருக்கட்டும்... கு-ரு என்று இரட்டித்து வருகிற உகாரம் விஷ்ணு ஸ்வரூபம்.

உகாரோ விஷ்ணுரவ்யக்த:- 'விஷ்ணு:அவ்யக்த:' 'உகாரமென்பது அவ்யக்தமாக இருக்கப்பட்ட விஷ்ணு ஸ்வரூபம்'.

---

## 'அவ்யக்தம்' என்பது என்ன?

'வ்யக்தம்' என்றால் 'வெளிப்பட இருப்பது'. 'அவ்யக்தம்' - வெளிப்படாதது. ப்ரம்மத்திலிருந்து வெளிப்பட்டு அதன் manifestation-ஆக இருக்கப்பட்ட ப்ரப்ஞசம் வ்யக்தமானது. இந்த வ்யக்தம் எதிலிருந்து வந்ததோ அந்த ஆதார ஸத்யம், ப்ரஹ்மம் என்பது, வெளிப்படத் தெரியவில்லை. அதற்குள்ளிருந்துதான் இந்த நானா ப்ரபஞ்சமும் வெளிப்பட்டது. அதோடு, ப்ரபஞ்சத்திற்கு உள்ளேயும், அதிலிருக்கிற ஒவ்வொரு பதார்த்தத்திற்கு உள்ளேயும் அந்த ப்ரஹ்மமே நிறைந்து இருக்கிறது. 'உள்ளே இருக்கு' என்றாலே வெளியில் தெரியவில்லை என்றுதானே அர்த்தம்? அதாவது வ்யக்தமாக இல்லை என்றுதானே அர்த்தம்? வ்யக்தமாக இல்லாததே அவ்யக்தம். அதாவது ப்ரஹ்மந்தான் அது. ஸாங்கிய சாஸ்திரத்தை

அநுஸரித்தே ப்ரஹ்மவித்யா சாஸ்திரம் அர்த்தம் பண்ணும்போது, அவ்யக்தம் என்பதை ப்ரஹ்மமாகச் சொல்லாது. வ்யக்தமான ப்ரபஞ்சத்துக்கு மூலச் சரக்காக, வெளிப்படாமலிருக்கிற மூல மாயை என்றே சொல்லும். ஆனால் அத்தனை டெக்னிகலாக இங்கே அர்த்தம் பண்ணுவது பொருந்தாது. வ்யக்தம் - தெரிகிற லோகம், அவ்யக்தம் -தெரியாத பரமாத்மா என்பதுதான் பொதுவான அர்த்தம். அதுதான் இங்கே பொருந்துவது.

---

## 'விஷ்ணு', - 'வாஸுதேவ' பத விளக்கம்

உகாரம் விஷ்ணு என்று சொன்ன மூச்சோடயே அந்த விஷ்ணுவை அவ்யக்தம், அதாவது, ஸாட்சாத் பரப்ரஹ்மம் என்று சொல்லியிருக்கிறது, உகாரோ விஷ்ணுரவ்யக்த:

ருத்ரன், அப்புறம் மஹேச்வர - ஸதாசிவர்கள் என்று நான் சொன்னேனே, அந்த எல்லோரையும் அடக்கிக் கொண்டிருக்கும் ப்ரஹ்மமாக விஷ்ணுவையே இங்கே காட்டிக் கொடுத்திருக்கிறது. முதலில் அகாரமாக வந்த ப்ரம்மாவும் அவருக்குள் அடக்கம்தான். இவருக்குப் பிள்ளைதான் அவர் என்பது எல்லாருக்கும் தெரிந்ததுதானே?

த்ரிமூர்த்திகளில் மஹா விஷ்ணு, பரமேச்வரன் ஆகிய இரண்டு பேரையுமே பரப்ரஹ்ம ஸ்வரூபமாகச் சொல்கிற வாக்கு தொன்றுதொட்டு இருந்திருக்கிறது. வழக்கிலே இப்படி இருக்கக் காரணம், சொந்த அநுபவத்திலே அநேக மஹான்கள் அப்படி ஸாட்சாத்தாகக் கண்டு கொண்டதுதான், தாங்கள் கண்டு கொண்டதை அவர்கள் மந்த்ரமாகவும், ஸ்தோத்ரமாகவும், உபசேத வசனமாகவும் லோகத்துக்குச் சொன்னதுதான்.

'விஷ்ணு' என்பதற்கு நேர் அர்த்தம் - அந்த அட்சரங்களை தாது பிரித்துச் சொல்கிற க்ஷீஷீஷீமீ meaning-'ஸர்வ வியாபகமாக இருக்கிற தன்மையன்' என்பது. விஷ்ணு என்பதற்கு 'வ்யாபன சீலமுள்ள, அதாவது எங்கேயும் வியாபிக்கிற தன்மை கொண்ட ப்ரஹ்மம், பரமாத்மா, வாஸுதேவன் எனப்படுகிறவன்' என்று ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். வாஸுதேவன் ஏன்று ஏன் குறிப்பிட்டுச் சொன்னாரென்றால் அந்தப் பெயரும் ஸர்வ வ்யாபத்தைச் சொல்வதுதான். (விஷ்ணு) ஸஹஸ்ர நாமத்தில் வாஸுதேவ நாமாவுக்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும் போது இதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். 'வாஸு' என்பதற்கு 'வஸதி, வாஸயதி, ஆச்சாதயதி ஸர்வம்' என்று அர்த்தம் கொடுத்துத் தெளிவுபடுத்தியிருக்கிறார். ஸகல வஸ்துக்களிலும் ஸ்வாமி வஸிப்பது 'வஸதி'. ஸகல வஸ்துக்களும் அவருக்குள் வஸிக்குமாறு, அதாவது நிலை பெறும்படி, இருப்பதால் 'வாஸயதி'. இப்படிச் சொன்னால் ஸர்வ வ்யாபகம் என்றுதானே ஆகிறது? ஆனாலும் அந்த வ்யாபகமான பரப்ரஹ்மம் நமக்குத் தெரியாது, வெளிப்படாத அவ்யக்தமாக இருக்கிறது. அதைத்தான் 'ஸர்வம் ஆச்சாதயதி' என்கிறார். 'ஆச்சாதயதி' என்றால் மூடி மறைப்பது. மாயையினால் உண்மைத் தத்வத்தை மூடி மறைப்பது. மறைவாக இருப்பது அவ்யக்தந்தானே?

வேத மரபில் வராத எதையும் ஸொந்தமாகச் சொல்லாத விநயசீலர் நம்

ஆசார்யாள். 'தாமாகச் சொன்னதாக இருக்கக்கூடாது, இதுவே ஸத் ஸம்பிரதாயத்தில் வந்துள்ள கருத்து' என்று காட்டுவதற்காக அவர் எல்லா இடத்திலும் பூர்வ சாஸ்திரங்களை மேற்கோள் காட்டுவார். அப்படி இங்கே மஹாபாரதத்திலிருந்தும் விஷ்ணு புராணத்திலிருந்தும் காட்டியிருக்கிறார்.

ஸர்வ வியாபகம் என்கிறபோது, 'நமக்குத் தெரிவது, அதாவது வெளிப்படத் தெரிவது - வ்யக்தமாக இருப்பது - அந்த ஸர்வந்தான், அந்த ஸர்வத்தையும் வ்யாபித்திருக்கிற வஸ்து நமக்கு வெளியாகாத அவ்யக்தமாக இருக்கிறது' என்பது

தொக்கி நிற்கிறது. யோஜித்துப் பார்த்தால் புரியும். ஒரு வஸ்து குறிப்பிட்ட ஒன்றாக இருக்கிறது என்கிறபோது தான் அது வெளிப்படத் தெரிவது - அந்த ஒன்றாக அப்படி இல்லாமல் ஸர்வத்திலேயும் வியாபித்திருக்கிறது என்றால் அப்போது அந்த ஸவ்ரமான வெளிப்படத் தெரிகிற வ்யக்தமாக இருக்கும், அத்தனையையும் வ்யாபித்திருப்பது அவ்யக்தமாகவே இருக்கும். ஒரு டம்ளர் ஜலம் பூராவிலும் சர்க்கரை கரைந்து வியாபித்திருக்கும் போது அது அவ்யக்தமாகத்தானே இருக்கிறது?

அந்த அவ்யக்தமான மறை பொருளே - இரண்டு விதத்தில் மறைபொருள்!மறைந்திருப்பதால் மறைபொருள், மறையாகிற வேதத்தின் உட்பொருளாக இருப்பதாலும் மறைபொருள் அப்படிப்பட்ட மறைபொருள்தான் - விஷ்ணு. அந்த விஷ்ணுவின் அட்சர ஸ்வரூபமே உ. உகாரோ விஷ்ணுரவ்யக்த:.

ஸித்தி தருகிற க, பாபத்தைப் போக்கிப் பரிசுத்தப் படுத்துகிற ர ஆகிய இரண்டோடும், விஷ்ணுவாகவும் அவ்யக்தாகவும், விஷ்ணுவான அவ்யக்தமாகவும் உள்ள உ சேர்ந்து 'குரு' என்ற வார்த்தை உண்டாகியிருக்கிறது - இப்படி ச்லோகம் சொல்கிறது.

'விஷ்ணுவாக' என்கிறதற்கு 'ஸர்வ வ்யாபகமாக' என்று அர்த்தம் பண்ணும்போது 'ஸர்வம்' என்ற இந்த நானாப்ரபஞ்சம் இருக்கிறது, இதில் அந்தர்யாமியாக அவன் வியாபித்திருக்கிறான் என்று ஆகிறது. இதில் விசிஷ்டாத்வைதம் வந்து விடுகிறது. அந்த விஷ்ணுவை 'அவ்யக்தம்' என்கிறபோது நிர்குண ப்ரஹ்மம் என்றே ஆகும். அது அத்வைதம். உபதேசம் த்வைத அநுபவத்திலேயே இருக்கிற நமக்குத்தான் என்பதால் த்வைதமும் வந்து விடுகிறது

---

## குருவின் தன்மையால் சீடன் பெறும் பயன்

குரு நமக்கு லட்சிய ஸித்தியைத் தருபவர், பாபத்தைப் போக்கிப் பரிசுத்தி செய்கிறவர் என்பதோடு ஸர்வ வியாபகர், ஸர்வமும் அடிபட்டுப் போன நிர்குண அவ்யக்தம் என்று ச்லோகம் டிஃபைன் செய்திருக்கிறது.

"ஸரி, நமக்கு ஸித்தி வேண்டும். (குரு என்பவர்) அதைத் தருகிறார் என்றது ஸரி. பாபம் போனாலொழிய ஸித்தி கிடைக்காதாகையால் அதைப் போக்குபவர் என்றதும் ஸரி. இந்த இரண்டும் நமக்கு ப்ரயோஜனமாவது. ஆனால் அவர் ஸர்வ வியாபகர், அதற்கும் மேலே அவ்யக்த வஸ்த என்பதால் நமக்கு என்ன

ப்ரயோஜனம்?"

அவர் அப்படி இருக்கிறாரென்று சொன்னாலே அதுதான் நமக்கும் ப்ரயோஜனம்

'அதெப்படி?' எப்படியென்றால், புழுவை ஒரு குளவி கொட்டிக் கொட்டி தன் ரூபமாகவே பண்ணிவிடுகிற மாதிரி சிஷ்யர்களைத் தன்னுடைய நிலைக்கே உசத்திவிடத்தான் குரு இருக்கிறார். ஆனபடியால் அவர் இப்படி இப்படி இருக்கிறார் என்று அவரைப் பற்றி லட்சணம் சொன்னால், நாமும் அவர் மாதிரியே அந்த லட்சணங்களைப் பெறுகிற பெரிய ப்ரயோஜனத்தை அவர் அநுக்ரஹிக்கிறாரென்றே அர்த்தம். அவருடைய ஸ்வரூப லட்சணத்தைச் சொன்னாலே நமக்கும் அது ஸித்திக்கிறது என்று ஏற்பட்டு விடுவதால் நமக்கான பெரிய ப்ரயோஜனமும் அதில் வந்து விடுகிறது. 'ஸித்தி ப்ரதம்' என்றுதானே ச்லோகம் ஆரம்பித்தது? அந்த ஸித்தி இதுதான்.

---

# அத்வைதமும் அநுக்ரஹ பாவமும்

அத்விதீயமாக இருக்கும் அவ்யக்த ஸித்தியும் அந்த நிலையிலுள்ள பரஹ்மவித்யா குருவின் அநுக்ரஹத்தால் சிஷ்யருக்குக் கிடைக்கும். அதுதான் உச்சாணியான லட்சிய ஸித்தி. ஸர்வமும் அடிபட்டுப்போன முடிவான நிலை.

அப்படியென்றால் ஸர்வத்திலும் வியாபிக்கிற விஷ்ணு நிலையை ஏன் சொல்ல வேண்டும்?

இங்கேதான் கருணை, ப்ரேமை என்பது வருகிறது. ஸர்வமும் அடிபட்டுப்போன அத்விதீய ஸ்திதி அடைந்த ஒரு மஹான் அப்படியே தம் பாட்டுக்கு ஸமாதியில் இருந்து கொண்டிருக்காமல் ஒரு வேஷம் போட்டுக்கொண்டு உபதேசிக்கிறார் என்றால் 'ஸர்வ'த்துக்கு இறங்கி வந்து விட்டாரென்றுதான் அர்த்தம். எதனால் இறங்கினார் என்றால் ப்ரேமையினாலே, கருணையினாலே தான் பெற்ற இன்பம் வையகமும் பெறணும் என்ற கருணையினாலதான் இறங்கி வந்து உபதேசிக்கிறார்.

இறங்கத்தான் செய்கிறாரா என்றால் அப்படியும் சொல்ல முடியாது. மனோநாசம் பூர்ணமாகப் பண்ணி ப்ரஹ்மாநுபவம் பெற்றுவிட்ட ஒருவர் அப்புறம் அந்த நிலையிலிருந்து இறங்குவது என்பதே இல்லை.

ஆனாலும், ஏன் - எப்படி என்று தெரியாது, இதுவரை யாரும் அதை விளக்கிச் சொல்லவும் இல்லை - ஸர்வம் அடிபட்டுப் போன நிலைக்குப் போனவர்கள், அந்த நிலையில் இருந்துகொண்டே, நிலை குலையாமலே ஸர்வத்தையும் பார்த்துப் பரம கருணைகொண்டு அதை நல்வழிப்படுத்தணும் என்று நினைத்து குரு வேஷம் போட்டுக் கொண்டு உபதேசித்தருப்பதை நிறையப் பார்க்கிறோம். ஆசார்யாள், சுகாசார்யாள் உள்படப் பல ப்ரம்ம நிஷ்டர்கள் அப்படித்தான் இருந்திருக்கிறார்கள். ஏன், எப்படி என்றால் தெரியாது!அம்பாள் கார்யம்!

கொட்டிக் கொட்டிக் குளவியாக்குகிறதில் ஸத்குருவானவர் ஸத்தான சிஷ்யனுக்கு அத்வைத ஸித்தி தருவதோடு த்வைத லோகத்தில் இருக்கிற பெருவாரி ஜனங்களை லோக ரீதியான வாழ்க்கையிலே தர்மமாக நடக்கப் பண்ணி நல்வழிப்படுத்தவும் செய்கிறார்.

மறுபடி சொல்கிறேன். குரு லோக ஸம்பந்தப் பட்டிருப்பதால் அவருக்கு அஸலே த்வைத த்ருஷ்டி வந்து விட்டதாகாது. அத்வைதமான ஒன்றையே த்வைத ப்ரபஞ்சத்திற்குள்ளேயும் கண்டு கொள்கிற த்ருஷ்டியோடு தான் குரு கார்யலோகத்தில் இறக்கியிருக்கிற மாதிரி இருப்பது. வாஸ்தவத்தில் இறங்கவில்லை, இறங்கின மாதிரி நமக்குத் தோன்றுகிற நிலை. இது நம்முடைய தோற்றந்தான் .அவருடைய உள்ளாநுபவத்தில் இறக்கம் - ஏற்றம் எதுவும் கிடையாது. (ப்ரபஞ்சம் என்கின்ற) தத்வத்தை அஸலே (ப்ரஹ்மத்தினின்று வேறாகப் பிரிந்த) த்வைதமாகப் பார்க்காமல் அதிலும் அத்வைத ப்ரஹ்மமே ஊடுருவி இருப்பதை - வியாபித்திருப்பதை - அதாவது ப்ரஹ்மமே விஷ்ணுவாக எல்லாவற்றிலும் நிறைந்திருப்பதை அநுபவ பூர்வமாகக் கண்டுகொண்டு அவர் குரு வேஷம் போட்டுக் கொண்டு உபதேசிப்பது. அந்தக் கருணையில் ஒரு

பெரிய ஆனந்தம் உண்டு. த்வைத ஆனந்தமும் அத்வைத ஆனந்தமும் 'இப்படி' என்று சொல்ல முடியாமல் கலந்த ஆனந்தம்!அத்வைத அஸ்திவாரத்திலேயே எழும்பின ஆனந்தம். அதாவது உச்ச லட்சியம் நழுவாமலே உண்டான ஒரு வர்ணனாதீதமான ஆனந்தம்!

இதுவும் அவரால் சிஷ்யர்களுக்கு அநுக்ரஹிக்கப் படுகிறது. சிஷ்யரும் குருவாக ஆகி லோகோபகாரமாக உபதேசம் பண்ணும்படி அவர் செய்வதில் இப்படி உள்ளே அத்வைத சாந்தம், வெளியிலே த்வைதம் மாதிரி லோகத்திற்குத் தெரிகிற அநுக்ரஹ க்ருத்யம் என்று ஆகிறது. அப்படித்தான் மஹாவிஷ்ணு லோக பரிபாலனம் பண்ணுவது. இது (குருசெய்வது) சிஷ்யலோக பரிபாலனம்!

---

# குருவாகத் திருமால்

'நாராயணம், பத்மபுவம்' என்று ஆரம்பித்தே நாம் (ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களைப் பின்பற்றும் ஸ்மார்த்தர்கள்) ப்ரஹ்ம வித்யா ஸம்ப்ரதாயத்திற்கு குரு பரம்பரை சொல்வதால் இங்கே அந்த முதல் குருவான விஷ்ணுவைக் குறிப்பிட்டுச் சொல்வது ரொம்பவும் பொருத்தமாயிருக்கிறது. ஸஹஸ்ர நாமத்தில் அவருக்கு 'குரு' என்றும் 'குரு - தமன்' என்றும் நாமாக்கள் கொடுத்திருக்கிறது. குரு - தமன் என்றால் ஏனைய குருமார்களை விட ச்ரேஷ்டமான உத்தம குரு என்று அர்த்தம். இங்கே (குரு என்பதற்கு) ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது மஹாவிஷ்ணு ஸர்வ வித்யைகளையும் உபதேசிப்பதால் குருவாகிறார் என்று சொல்லி, அதோடு இன்னொரு அர்த்தமாக ஸர்வ ஜீவர்களையும் பிறப்பிப்பவர் என்பதாலும் அவர் குரு என்று சொல்லியிருக்கிறார்.

இதிலிருந்து பிறப்பைத் தரும் பிதாவை குரு என்று சொல்வதுண்டு என்று புரிந்து கொள்ளலாம். ஸம்ஸ்க்ருத 'லிட்ரேச'ரில் பரிசயமுள்ளவர்களுக்கு நன்றாகத் தெரிந்த விஷயம் - அப்பாவுக்கு குருப் பட்டம் உண்டு என்பது.

---

## பிதா - குரு

'மாதா -பிதா - குரு - தெய்வம்' என்பது எல்லோருக்கும் தெரிந்த பொது வசனம். இதில் மாதா-பிதா இண்டு பேருமே குருவின் கார்யமான நல்வழிப்படுத்தலையும் செய்பவர்கள்தான். ரொம்பக் குழந்தையாக இருக்கும்போது அம்மா பரம ஹிதமாக கொஞ்சம் கொஞ்சம் நல்லதைச் சொல்லிக் கொடுப்பாள். அப்புறம் கொஞ்சம் விவரம் தெரிகிற வயஸிலிருந்து எட்டு வயஸில் உபநயனம் பண்ணி குரு என்றே இருப்பவரிடம் குருகுலவாஸம் பண்ணுவதற்காகக் குழந்தையை ஒப்படைக்கிற வரையில் அப்பா, அம்மாவை விடக் கொஞ்சம் கண்டிப்புக் காட்டி, 'இப்படியிப்படி இருக்கணும், பண்ணணும்' என்று அநேக நல்ல விஷயங்கள் சொல்லிக் கொடுப்பார். அதனால் அவருக்கே குரு பெயர் ஏற்பட்டிருக்கிறது...

'குரு' என்றால், அட்சரம் அட்சரமாகப் பிரிக்காமல் நேராக ஒரே வார்த்தையாக அர்த்தம் பண்ணும்போது 'பெரியவர்' என்றே அர்த்தம். அகத்திற்குப் பெரியவர் head of the family - அப்பாதானே? அதனால் அவர் குரு.

---

## குருவுக்கும் தந்தைதன்மை உண்டு

அப்பா குரு என்றால் குருவும் அப்பாதான்!

'நீதி சாஸ்த்ர'த்தில் ஐந்து பேரை அப்பாவாகச் சொல்லியிருக்கிறது. யாரார் என்றால்

ஜநீதா சோபநீதா ச யச்ச வித்யாம் ப்ரயச்சதி 1

அந்நதாதா பயத்ராதா பஞ்சைதே பிதர:ஸ்ம்ருதா:11

'ஜநீதா'-பிறப்பைக் கொடுக்கும். எல்லோருக்கும் தெரிந்த, அப்பா, 'உபநிதா' - பூணூல் போட்டு வைக்கிறவர் யாரோ அவர். பல பேருக்கு அப்பா இல்லாமல் வேறொருத்தர் பூணூல் போடும்படி ஆகிறதோல்லியோ? அப்பா இருக்கும்போதே இரண்டு பிள்ளைகளுக்கு ஒரே முஹூர்த்தத்தில் ப்ரஹ்மோபதேசம் செய்தால் அப்போது ஒரு பிள்ளைக்கு அப்பாவும், மற்றவனுக்கு சித்தப்பா, பெரியப்பா மாதிரி ஒருத்தருந்தானே பூணூல் போட்டு வைக்கிறார்? அப்படிப்பட்ட, யாராயிருந்தாலும் அவரும் ஒரு அப்பா. நல்ல காயத்ரி அநுஷ்டானம் உள்ளவர்தான் ஒரு குழந்தைக்கு ப்ரஹ்மோபதேசம் செய்யவேண்டுமென்று சாஸ்திரம். முன்னாளில் அப்படி இல்லாத ஒரு ஜனக பிதா காயத்ரியில் ஸித்தி கண்டவர்களைக் கொண்டே தன்னுடைய பிள்ளைக்கு உபதேசம் செய்வித்தார். அப்படிப்பட்ட அந்த குரு அந்தப் பிள்ளைக்குப் பிதாவாகி விடுகிறார். 'யச்ச வித்யாம் ப்ரயச்சதி' - இதுதான் நம்முடைய விஷயம். எவன் வித்யை கற்பிக்கிறானோ, அதாவது எவன் குருவாயிருக்கிறானோ, அவன் ஒரு அப்பா. 'அன்னதாதா' - ஒருத்தன் சாதம் போட்டு ரக்ஷித்தானானால் சாப்பிடுகிறவனுக்கு அவன் ஒரு அப்பா. 'பயத்ராதா' - பயத்திலிருந்து காப்பாற்றுபவனும் அப்பா. இப்படி அஞ்சு பேர். ஆனால் ப்ரஸித்தியாயிருப்பது, பெற்ற தகப்பனுக்கு

அடுத்தபடியாக குருவுக்கும் பிதா ஸ்தானம் என்பதுதான்...

அந்த அப்பா ஜன்மாவைக் கொடுக்கிறாரென்றால், இந்த அப்பா ஜன்மாவை அழிக்கிறார்!'ஜன்மாவைக் கொடுக்கிறவரைத்தானே அப்படிச் சொல்லலாம்? இவரை எப்படிச் சொல்லலாம்?' என்றால், ஒரு ஜீவனை பூத ப்ரபஞ்சத்தில் நேர் அப்பா ஜன்மிக்கச் செய்கிற மாதிரி இவர் ஆத்ம ப்ரபஞ்சத்தில் ஜன்மிக்கச் செய்கிறாரே!அவர் physical Life-ஐக் கொடுக்கிற மாதிரி இவர் spritual life-ஐக் கொடுக்கிறாரே!அப்போ 'அப்பா' சொல்லலாந்தானே?

வைதிக அநுஷ்டான வழியில் உபநயன பூர்வமாக பாரமார்த்திகத்தில் போக ஆரம்பிக்கிறவர்களுக்கு 'த்விஜன்மர்' - தமிழில் 'இருபிறப்பாளர்' என்றே பேர் இருக்கிறது. ஆதி காலத்தில் அப்படி உபநயனம் செய்வித்து, இரண்டாவது பிறப்பைத் தந்து, அதாவது பிதாவாக ஆகி, அப்புறம் தன்னுடன் சிஷ்யனை குருகுல வாஸத்தில் வைத்துக் கொண்டு பயிர் பண்ணினவர் குருவே. 'குருகுல வாஸம்' என்று அவரோடு வஸிப்பதைச் சொன்னதாலேயே அது தெரிகிறதே!உபநயனமானவுடன் இரண்டாம் பிறப்பு த்விதீய ஜன்மா.

பக்ஷிக்கும் த்விஜன்மா என்று பேர். முட்டையாக இருப்பது ஒரு ஜன்மா. தாயார்ப் பெட்டை அதை அடைகாத்து, ஓட்டைப் பிளக்கப் பண்ணினவுடன் பூர்ணமான பக்ஷியாக வெளியிலே வருவது இரண்டாவது ஜன்மா. ஒரு ஜீவனை அநுக்ரஹத்தாலே அடைகாத்து அவனுடைய ஆணவ ஓடு பிளந்து பரமாத்மாவிடம்

அவன் பறந்து போகும்படியாகப் பூர்ண ரூபம் தருகிறவரே குரு.

இங்க்லீஷில் மாணவனை pupil என்கிறதில் கூட அவர்களுக்குத் தெரியாமலே இந்த த்விஜன்ம தத்வார்த்தம் இருக்கிறது. Pupa என்றால் ஒரு பூச்சி பூச்சியாகிறதற்கு முந்தி இருக்கிற கூட்டுப் புழு ஸ்டேஜ். (சிரித்து) த்விஜன்மாவுக்குப் பதில் சதுர்ஜன்மாவாக பூச்சிக்கு இருக்கிறது!முட்டை அப்புறம் முழு ரூப ப்ராணி என்று 'இரு பிறப்பு' மட்டுமில்லாமல் முட்டை, அப்புறம், புழு, அதற்கப்புறம் அந்தப் புழு தன்னைச் சுற்றித் தன்னிடமிருந்தே நூலைக் கக்கிக் கூடு கட்டிக் கொண்டு அதற்குள்ளே செயலற்றுக் கிடக்கிற ஸ்டேஜ் - அதற்குத்தான் pupa என்று பெயர் - அப்புறம் கூட்டைப் பிளந்து கொண்டு பறந்து வருகிற முழுப்பூச்சி என்று 'நாலு பிறப்பு'! Pupa-வும் முட்டை மாதிரிதான் இருக்கும். Pupil என்கிற வார்த்தை அதிலிருந்தே வந்திருக்கிறது. குளவி புழுவைக் கொட்டிக் கொட்டித் தன் மாதிரியே குளவி ஆக்குகிற காரியம்தான் குரு செய்வது என்றும் சொல்வதுண்டு. அப்படிச் சொல்கிறபோது புழுவிலிருந்து பூச்சி பிறப்பதாக இரண்டாம், நாலாம் ஸ்டேஜ்களை முடிச்சுப் போட்டுச் சொல்கிறோம்.

இந்த நம்முடைய வைதிக ஸம்ப்ரதாய அபிப்ராயங்களே மேல் நாட்டிலும் ஆதி காலத்தில் இருந்து, பிற்பாடு அவர்கள் வேறே வழியிலே போனபோதும் அதோடு ஒரு மாதிரி கலந்து போயிருப்பதால்தான் pupa - pupil என்று வந்திருக்கிறது. ஆனால் பிற்காலத்தில் அவர்களுக்கு அந்தத் தாத்பர்யம் மறந்து போய்விட்டது - அவர்களுடைய அநுஷ்டானத்தில் நம்முடைய குரு - சிஷ்ய பத்தி மாதிரித் தொடர்ந்து வராததால்!இப்போது நாமும் எல்லாம் மறந்துவிட்டுத் தான் மேல் நாட்டு நாகரிகமே வாழ்க்கை என்று அவர்களைப் பின்பற்றிக்கொண்டு போய்க் கொண்டிருக்கிறோம்!...

அப்பா - அம்மா தருவது உடம்பை முக்யமாக வைத்த முதல் ஜன்மா. உபநயனத்தில் குரு உபதேசத்தால் ஏற்படுவது உயிரை முக்யமாக வைத்த இரண்டாம் ஜன்மா. அந்த ஜன்மாவில் முன்னேறி முன்னேறி முன்னேறி முடிவாகத்தான் பூத ப்ரபஞ்ச ஜன்மாவை அழித்தே போட்டு ஆத்மாவாக, பரமாத்மாவாக ஆகிறது.

உபநயனம் பண்ணி வேத வித்யை உபதேசிக்கிற குரு அந்த முடிவு ஸ்தானம் வரை அழைத்துப் போகிறவரில்லை. கர்மாவாலே சித்த சுத்தியும், பக்தியாலே சித்த ஐகாக்ர்யமும் (ஒருமைப்பாடும்) ஏற்படுத்துகிற அளவுக்கே அவர் வழிகாட்டுவது. அவை அழுத்தமாக ஏற்பட்டு, த்ருடமாக நின்று நிலைப்பதற்கு வாழ்க்கையிலே நன்றாக அடிபட்டு, கர்மா எல்லாம் கழிந்து அந்த ஜீவன் தேவ ரிஷி -பித்ருக்களும் ஜீவ ப்ரபஞ்சத்துக்கும் பட்டிருக்கிற கடனெல்லாமும் தீர்ந்தாகியிருக்கவேண்டும். இதற்கு அவரவர் ஸம்ஸ்காரத்தைப் பொறுத்து கொஞ்ச காலமோ, நிறையக் காலமோ தேவையாயிருக்கும். அபூர்வமான ஏதோ சில பேருக்கு வேண்டுமானால் ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்திலிருந்தே, அல்லது அதுவுங்கூட இல்லாமலே, அல்லது பூர்த்தியாகாமலே பரமாத்மாவாக ஆகிவிடுகிற ப்ரஹ்ம ஞானம் ஸித்திக்க முடியும். மற்றவர்கள் உபநயனமானவுடன் குருகுலத்தில் ஆரம்பக்கிற ப்ரஹ்மசர்யாச்ரமம் பூர்த்தியானபின் அநேக வருஷம் க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து, அடிபட்டே, கர்மா

கடனெல்லாம் தீர்ந்து சித்த சுத்தி, ஐகாக்ர்யங்களை நன்றாக ஸம்பாதித்துக் கொண்டு ப்ரஹ்மமாக ஆகிற வித்யாப்யாஸத்திற்குப் போகமுடியும். அப்படி சித்தம் சுத்தியாகி, சிதறாமல் ஒன்றையே சிந்திக்கிற ஐகாக்ர்யம் ஸித்திக்கிற ஸமயத்தில் அந்தச் சித்தம் பரமாத்மாவையே ஒரே குறியாகப் பற்றிக் கொள்ளும்படி செய்ய இன்னொரு குரு வருவார், ஸந்நியாஸம் தந்து உபதேசம் பண்ணுவார். அந்த உபதேச மஹிமையாலே - அந்த குருவினுடைய அநுக்ரஹ சக்தியும் உபதேச வாக்கியத்தில் பாய்ந்திருக்கிற மஹிமையாலே - சிஷ்யன் அவர் சொன்ன பாரமார்த்திக வாழ்க்கையில் முன்னேறி முன்னேறி முடிவாகத்தான் ஜன்மா இல்லாமல் பண்ணிக்கொள்வது. அந்த இடத்தில் சிஷ்யன் பரப்ரஹ்மமாகவே ஜன்மித்து விடுகிறான்.

---

## பிற மதங்களிலும் பிதா - குரு

'பிதா', 'பித்ரு' என்பதிலிருந்துதான் 'father'. ஓரளவுக்கு நம்முடைய குரு ஸ்தானத்தில் வைக்கக் கூடிய வெள்ளைக்காரர்களுடைய மதகுருமார்களை - 'மதகுரு' என்னும்போது 'குரு' என்றே வந்துவிடுகிறது அப்படிப்பட்டவர்களை - அவர்களும் Father என்றே சொல்கிறார்கள். நாம் 'பாதிரி' என்கிறோம். பேட்ரே (Padre) என்ற வார்த்தையிலிருந்து வந்தது அது. 'பேட்ரே' என்பது போர்ச்சுகீஸிய பாஷை. அதற்கும் 'அப்பா' என்றுதான் அர்த்தம். இங்க்லீஷ்காரர்களுக்கும், ஃப்ரெஞ்சுக்காரர்களுக்கும் முன்னாடியே போர்ச்சுகீஸியர்கள் இந்தியாவுக்கு வந்து அடி - தடி கொள்ளை எல்லாம் நடத்தி ஊரைப் பிடித்திருக்கிறார்கள். சர்ச்சுகளும் கட்டி மதமாற்றம் செய்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் பாஷையில் மதகுருவுக்குச் சொன்ன 'பேட்ரே'யை வைத்துத் தமிழ் 'பாதிரி' உண்டாயிற்று. Father, Padre எதுவானாலும் மூலம் ஸம்ஸ்க்ருத 'பித்ரு'தான்!ஐரோப்பிய மொழிகளுக்குள் ஒன்றுக்கொன்று வார்த்தைகள் திரிந்து வரும். மெட்றாஸில்

ஸெய்ன்ட் தாமஸ் மவுண்ட் இருக்கிறது, ஸாந்தோம் என்னும் இடம் இருக்கிறது. இங்க்லீஷில் 'ஸெய்ன்ட் தாமஸ்' என்கிறதேதான் போர்ச்சுகீஸில் 'ஸான் தோம்'. ஃப்ரெஞ்சுக்காரர்களை Frank என்பது. அது நாளாவட்டத்தில் எல்லா ஐரோப்பியர்களையும் குறிப்பதாக நம் தேசத்தில் ஆகிவிட்டது. வட இந்தியாவில் ஃபீரங்கி என்றும் நம் பக்கத்தில் பறங்கி என்றும் ஆயிற்று. அதனால்தான் ஸெய்ன்ட் தாமஸ் மவுன்டைப் பறங்கிமலை என்று சொல்வதாயிற்று. சிதம்பரத்திற்குப் பக்கத்தில் ஸமுத்ரக் கரையோரத்தில் பறங்கிப்பேட்டை இருக்கிறது. அதை Porto Novo என்கிறார்கள். அப்படியென்றால் புதிதான துறைமுகம் என்று போர்ச்சுகீஸில் அர்த்தம். அந்த தேசத்துக்காரர்கள் அங்கே புதுசாகத் துறைமுகம் கட்டிக் கொண்டு ஸெட்டில் ஆனபோது அப்படிப் பேர் வைத்தார்கள்.....

குருவைப் பிதா என்கிற மாதிரியே Father, Padre.

ஆனால் இந்த (நம்) நாட்டில் பிறந்த ஜைன - பௌத்த மதங்களைத் தவிர மற்ற எந்த மதத்திலும் நம்முடைய குரு - சிஷ்ய ஸம்பந்தம் - குரு - சிஷ்யர்களுடைய அத்யந்த பாந்தவ்யம் - மாதிரி இருப்பதாகச் சொல்வதற்கில்லை. உபதேசம் என்று குரு - சிஷ்யனுக்குப் பண்ணி ஸம்ப்ரதாய பூர்வமாக வந்திருக்கிற தம்முடைய மந்த்ர சக்தியை அவனுக்குள்ளே செலுத்துவது, அவன் வாழ்க்கைக்கே தாம் ஜவாப் ஏற்றுக்கொண்டு அவனை மோக்ஷம் வரையில் கொண்டு நிறுத்துவது, அதே மாதிரி சிஷ்யனும் குருவே கதி என்று சரணாகதி பண்ணி, அவரையே தெய்வமாக நினைத்து ஸகல கைங்கர்யமும் செய்வது என்று மற்ற மதங்களில் தற்போது பிரபலமாக இருக்கிற பிரிவுகளில் பார்க்க முடியவில்லை. துருக்க (இஸ்லாமிய) மதத்தை சேர்ந்தவர்களில் மூர்ஷித் என்பவரை குரு ஸ்தானத்திலும் மூரித் என்பவரை சிஷ்ய ஸ்தானத்திலும் சொல்லலாமென்று அந்த மதஸ்தரொருவர் சொன்னார். ஆனால் அது அவர்கள் ஸமுதாயத்திலே நம் தேசத்தில் மாதிரி வியாபகமாக இல்லை என்றும் சொன்னார்...

வெளி லோகத்தில் அப்பா - பிள்ளை பாந்தவ்யம் மாதிரி உள்லோகத்தில் குரு - சிஷ்யர் என்று ஏற்பட்ட பெருமை நம்முடைய வைதிக கலாசாரத்திற்கே விசேஷமாக உரியது. ஓரளவுக்கு நம்முடைய குரு ஸ்தானத்திற்கு ஸமதையாக

வரும் மதபோதகரை, மஹானை மற்ற ஸம்பிரதாயங்களிலும் தகப்பனாராகச் சொல்கிறார்கள் என்று சொல்ல வந்தேன். துருக்கர்கள் அப்படிப்பட்டவரை 'பாபா' என்கிறார்கள், அவர்களுடைய நீண்டகால இன்ஃப்ளுயென்ஸால் வடதேசத்தில் ஹிந்துக்களும் அநேக 'பாபா'க்களைச் சொல்கிறார்கள். அதற்கும் 'அப்பா' என்றுதானே அர்த்தம்.

ஜூிக்கள் - அதாவது யுதர்கள் - ராபி (rabbi) என்கிறார்கள். அது 'rabh' என்ற ரூட்டிலிருந்து வந்த வார்த்தை என்றும், 'ரப்ஹ்' என்றால் பெரிசு, பெருமை பொருந்தியது என்றும் சொல்கிறார்கள். ஸம்ஸ்க்ருத 'ப்ருஹ்' - 'ப்ரஹ்'தான் 'ரப்ஹ்' ஆகியிருப்பது, ப்ரஹ்மம் என்று ஸாக்ஷாத் பரமாத்மாவைச் சொல்கிறதும் அதுவே எல்லாவற்றிலும் 'பெரியது' என்பதால்தான். பெரியதிலும் பெரியது, ஸகலத்தையும் தனக்குள்ளே அடக்கிக் கொண்டுள்ள மஹா பெரியது அதுதானே? அந்தப் பெரியதைச் சொல்கிற, நமக்கு உபதேசிக்கிற வேதத்திற்கும் 'ப்ரஹ்ம' என்று பேர் உண்டு. 'குரு' என்னும் வார்த்தைக்கும் 'பெரியவர்' என்றுதான் அர்த்தம். அதனால் யூதர்கள் தங்களுடைய சாஸ்த்ர விதிகளைச் சொல்லும் டால்முடை (Talmud-ä) உபதேசிப்பவரை 'ராபி' என்பதும் அடிப்படையில் லோகம் பூராவிலும் வைதிக

கலாசார எண்ணப்போக்கு இருந்திருப்பதையே காட்டுகிறது.

ப்ரச்நோபநிஷத் என்று இருக்கிறது. அதன் முடிவிலே உபதேசகரான ரிஷியிடம் உபதேசம் பெற்ற சிஷ்யர்கள், "எங்களை அவித்யையின் (அஞ்ஞானத்தின்) அக்கரைக்கு கடத்துவித்ததால் தாங்களே எங்களுடைய பிதா" என்று சொல்லி நமஸ்கரித்ததாக வருகிறது. ஸரியாகச் சொன்னால் "த்வம் ஹி ந:பிதா" என்று மூலத்தில் வருகிறதற்கு "நீங்க-ன்னா (நீங்களன்றோ?) எங்க அப்பா?" என்று அர்த்தம். 'அப்பா என்று நடைமுறையில் சொல்கிறவர் நிஜத்தில் அப்படியில்லை. நீங்கள்தான் நிஜ அப்பா' என்று உள்ளர்த்தம். ஏனென்றால் அந்த அப்பா சாகிற ஜன்மாவைத்தான் கொடுத்தார். அப்படிப் பல ஜன்மாக்களில் பல அப்பாக்கள் இருந்திருக்கிறார்கள். அதனால் அவர்களை எப்படி நிஜ அப்பா என்பது? இவர்தான் சாகாத ஜன்மாவை, அம்ருதமாக (அ-ம்ருதம் மரணமில்லாதது) உள்ள ஆத்மாவாகிற சாச்வத ஜன்மாவை ஒருத்தரேயாக அளிப்பவர். அவர்கள் (பல பிறவிகளில் வாய்த்த பிதாக்கள்) சாகிற ஜன்மாவைத் தந்தால் இவரோ ஜன்மாவையே சாக வைத்து விடுகிறார் சாச்வத பதம் கொடுக்கிறார். இங்கே ஆசார்யாள் பாஷ்யத்திலே, "ஸமுத்ரத்தின் அக்கரைக்குப் படகோட்டிக் கொண்டு போகிறது போல, ஜன்மம் - ஜரா (மூப்பு) - மரண - ரோக - துக்கம் முதலான முதலைகள் நிறைந்திருக்கும் அஜ்ஞான ஸம்ஸார ஸாகரத்திலிருந்து ஞானம் என்ற படகால் புனர்ஜன்மாவிலிருந்து பரிபூர்ண விடுதலை பெறுவதான மோக்ஷத்திற்கு குரு கடத்துவிப்பதால், மற்ற பிதாக்களைவிட இவருக்கே பித்ருத்வம் சொல்வது ரொம்பவும் பொருத்தம். லோக வ்யவஹாரத்தில் ஜன்மா தரும் பிதாவுக்குத்தான் பூஜிக்கத்தக்க சிரேஷ்டர்களில் முதலிடம் தருவது. அப்படியென்றால் பரிபூர்ணமான அபயநிலையைத் தருகிற குருவை என்ன தான் சொல்லக்கூடாது?" என்கிறார். அபயநிலை என்றால் அத்வைத ஸ்திதிதான். 'பயம்' என்றால் த்வைதம். அதைப் பற்றிச் சொல்ல நிறைய

இருக்கிறது. இப்போது வேண்டாம். எல்லோருக்கும் தெரிந்தது, 'பவபயம்'. பவம்

என்றால் ஸம்ஸாரம் - இஹலோக வாழ்க்கைத் தொடர். அது த்வைதம். அதோடு 'பயத்தைச் சேர்த்தே 'பவபயம்' 'பவபயம்' என்கிறது. அப்போது அபயம் அத்வைதந்தானே? அதையே அடைவிப்பவர், அநுக்ரஹிக்கிறவர் குரு என்றால் அவர் மஹிமையை என்ன சொல்வது?

பிதா, குரு என்ற வார்த்தைகளை ஒரே ஆஸாமிக்குச் சொல்வதுண்டு என்று காட்ட வந்தேன். பிதாவை குரு என்று சொல்வதே லோக வ்யவஹாரம். (அதற்கு) வித்யாஸமாக குருவை, "நீதான் நிஜ அப்பா" என்று சிஷ்யர்கள் - அந்த சிஷ்யர்கள் ஒவ்வொருத்தருமே குரு ஸ்தானம் வஹித்த பெரியவர்கள், அப்படிப்பட்டவர்கள் - சொல்லியிருப்பதாக உபநிஷத்திலிருந்து காட்டினேன்.

கம்பர் மாதிரியான பெரியவர்கள் வைதிக ஔபநிஷத ஸம்பிராயத்தையே பின்பற்றி, அந்த வேத - உபநிஷத அபிப்ராயங்களை ஸமயம் வாய்க்கிற இடத்திலெல்லாம் தங்களுடைய தமிழ் நூல்களில் எடுத்துச் சொன்னவர்கள். பிறப்பித்த அப்பா பேருக்குத்தான் அப்பா, நிஜ அப்பாவாகப் பிள்ளையை நல்ல ரூபப்படுத்தி வளர்க்கிறது ஆசார்யன்தான் என்று நாம் பார்த்துக் கொண்டிருந்த அபிப்ராயத்தைக் கம்பர் ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி ஸம்பந்தப்படுத்தியே சொல்லியிருக்கிறார். தநுஸை நாணேற்றுவதற்காக யுவாவாக இருந்த ராமரை ஜனகருடைய ராஜ ஸதஸுக்கு அழைத்துக்கொண்டு போன விச்வாமித்ரர் ஜனகருக்கு ராமரை அறிமுகப்படுத்துகிறார். அப்போது அவருடைய ஸூர்யவம்சப் பெருமையில் ஆரம்பிக்கிறார். அந்த வம்சத்தை ஆரம்பித்து

வைத்த ஸூர்யனிலிருந்து மநு, ப்ருது, இக்ஷ்வாகு, ககுத்ஸன், மாந்தாதா, சிபி, பகீரதன், ரகு என்று எல்லாப் பூர்விகர்களின் பெருமையை பற்றிச் சொல்லி, தசரதனின் பெருமையில் முடித்து, அந்தத் தசரதன் புத்ரகாமேஷ்டி பண்ணிப் பிறந்த பிள்ளையாக்கும் ராமர் என்று சொல்கிறார். அந்த இடத்தில்தான் நாம் இதுவரை பார்த்துக்கொண்டிருந்த விஷயத்திற்கு வருகிறார். "ராமாதிநாலு ஸஹோதரர்களும் தசரதனுக்குப் பிள்ளை என்கிறது பெயரளவில்தான் - 'புதல்வர் எனும் பெயரே காண்!' ஆனால் அவர்களை வளர்த்தது, அதாவது ரூபம் பண்ணினது வஸிஷ்டர்தான் - 'உபநயன விதி முடித்து, மறை ஓதுவித்து வளர்த்தோன் வசிட்டன் காண்' என்று அவர் சொன்னதாகக் கம்பர் பாடியிருக்கிறார்.

---

## பித்ருவம்சமே குருவம்சமாகவும்

சாகிற ஜன்மாவைத் தரும் அப்பாவே சாகாமையில் ஜன்மிக்கச் செய்கிற குருவாகவும் ஆகி - (சிரித்து) 'கொஞ்சம்' அப்பா, 'முழு' அப்பா இரண்டும் ஆகி - இருப்பதையும் ஆதியிலிருந்து நிறையப் பார்க்கிறோம். இப்படித் தொடர் சங்கிலியாகப் போய் அப்பா - பிள்ளை வம்சாவளியே குரு - சிஷ்ய வம்சாவளியாக இருந்திருப்பதும் உண்டு. (ஸ்மார்த்தர்களான) நம்முடைய ப்ரஹ்மவித்யா குரு பரம்பரையே அப்படித்தான் முதல் அஞ்சு, அறு பேர் வரை போகிறது. இந்த ஸம்ப்ரதாயத்தில் முதல் குரு நாராயணன். அவர் நேர் குருவாக இருந்து அவரிடம் உபதேசம் பெற்று (இச் சம்பிரதாயத்தில்) அடுத்த குரு ஆனவர் யாரென்றால், அவருடைய பிள்ளையான ப்ரஹ்மாதான். அந்த ப்ரஹ்மாவை குருவாகக் கொண்டு அவருக்கு அடுத்து குரு ஸ்தானம் வஹிக்கிறவர் வஸிஷ்டர். அவர் ப்ரஹ்ம புத்ரர்தான். அவருக்கு அடுத்தவர் வஸிஷ்டருடைய புத்ரரான சக்தி. அடுத்தவர் சக்தி மஹர்ஷியின் புத்ரரான பராசரர். பராசரருக்கு அப்புறம் அவருடைய புத்ரரான வ்யாஸாசார்யாள், பௌத்ரரான சுகாசார்யாள் என்று அதுவரை அப்பா - பிள்ளைகளே குரு - சிஷ்யர்களாக அமைந்துதான் நம் குரு பரம்பரை உருவாகியிருக்கிறது. நைஷ்டிக ப்ரஹ்மசாரியான சுகாசார்யா ளிலிருந்துதான் மாறுதல். அவர் ஸந்நியாஸியான கௌடபாதருக்கு குருவாகி உபதேசித்ததிலிருந்து கௌடபாதருக்கு அப்புறம் கோவிந்த பகவத்பாதர், நம்முடைய ஆசார்யாள், அவருடைய ஸந்நியாஸ சிஷ்யர்கள், அவர்களுடைய பரிபாலனத்தில் வந்த மடாலய அதிபதிகளின் பரம்பரை என்பதாக, குருவும் ஸந்நியாஸி, சிஷ்யரும் ஸந்நியாஸி என்றாயிற்று.

ஜெனரலாகவே ரிஷி வம்சங்கள் முழுவதும் வெறும் அப்பா - பிள்ளை வம்சம் மட்டுமில்லை, அந்த அப்பா -பிள்ளைகளே குரு - சிஷ்யர்களாகவும் இருந்த வித்யா ஸம்ப்ரதாய பரம்பரைகளுந்தான்.

---

## தாய் வழியில் ரிஷிகளின் பெயர்கள்;ஆசார்யாள் காட்டும் அன்னை மகிமை

ரொம்ப வித்யாஸமாக ஒரு இடத்தில் பார்க்கிறோம். எந்த இடத்திலென்றால், தசோபநிஷத்துக்கள் என்று ப்ரஸித்தமாக நம்முடைய வேதாந்த மதத்திற்கே அஸ்திவாரமாக இருக்கப்பட்ட பத்தில் (பத்து உபநிஷத்துக்களில்) முடிவாக வரும் ப்ருஹதாரண்யகத்தில் 'வம்ச ப்ராஹ்மணம்' என்ற முடிவான பாகத்தில்தான். அதிலே அந்த உபநிஷத்தை ஆதியிலிருந்து வழி வழியாக உபதேசித்து ரக்ஷித்துக் கொடுத்திருக்கிற, அதாவது குருமார்களான, அத்தனை ரிஷிகளுக்கும் பேர் சொல்லி அவர்கள் இன்னின்ன வம்சம் என்று லிஸ்ட் கொடுத்திருக்கிறது, வேறே உபதேசம் இல்லை, வம்சாவளி மட்டுந்தான். ஒவ்வொரு ரிஷி பேரையும் சொல்லி, அவர் இன்னார் புத்ரன் என்று சொல்லியிருக்கிறது.

ஒருத்தர் அம்மா - அப்பா இரண்டு பேருக்கும் புத்ரராயிருந்தாலும், லோகம் பூராவிலுமே வழக்கத்தில் அப்பாதான் Head of the family-யாகக் கருதப்படுவதற்கேற்க, 'இன்ன அப்பாவுடைய புத்ரர்' என்றுதான் சொல்வதாக இருக்கிறது. பத்திரமோ, அப்ளிகேஷன் ஃபாரமோ எதுவானாலும் இன்றைக்கும் father's name-தான் கேட்கிறார்கள்!இனிஷியலும் அப்படித்தான் போட்டுக் கொள்வதாக இருக்கிறது!இந்த விஷயத்தில் இப்போதும் ஸ்த்ரீ ஸமத்வப் போராட்டக்காரர்கள் கூடப் போராட்டம், agitation ஆரம்பித்ததாகத் தெரியவில்லை ஒருவேளை இப்போது நானேதான் இதைச் சொல்லி அது வேறு ஒன்று கிளறிக்கொடுக்கிறேனோ, என்னவோ?...

வேதம் - உபநிஷத் ஆகியவற்றில் வரும் ரிஷிகளின் பிதாக்கள் பிதாவாக மட்டுமில்லாமல் குருவாகவும் இருந்திருப்பதால் அவர்களை வைத்தே புத்ரரைச் சொல்வது வழக்கம். நாமுங்கூட அபிவாதனத்தில் நம்முடைய கோத்ர ப்ரவர்த்தகர்களான (கோத்திரத்தைத் தொடங்கியவர்களான) ரிஷிகளின் - புருஷ ஜாதியே ஆனவர்களின் - பெயர்களைத்தானே அப்பா - பிள்ளை வரிசையில் சொல்கிறோம்? 'ஏதோ ஒப்பிக்கிறோம். இது நம்முடைய கோத்ரத்தின் பூர்வ ரிஷிகளின் பெயர்களா?' என்று இப்போதுதான் தெரிந்து கொண்டவர்களும் இருக்கலாம்!...

லோகம் பூரா பரவியுள்ள இந்த வழக்குக்கு வித்யாஸமாக, நான் சொன்ன அந்த இடத்தில் (ப்ருஹதாரண்யக உபநிஷத்தின் முடிவுப் பகுதியில்) லிஸ்ட் ஆரம்பத்திலிருந்து ரொம்ப தூரம் வரை ஒவ்வொரு ரிஷியின் பேரையும் அவர் 'இந்த அம்மாவின் புத்ரர், இந்த அம்மாவின் புத்ரர்' என்பதாகத் தாயார்மார்களின் பேர்களை வைத்தே கொடுத்திருக்கிறது.

'இதென்ன, இப்படிப் பண்ணியிருக்கிறதே' என்பதற்குப் பதில் ஆசார்யாளின் பாஷ்யத்திலிருந்து தெரிகிறது. என்ன சொல்கிறாரென்றால், "புத்ரன் குணவானாக இருப்பதற்கு ஸ்த்ரீயே - அதாவது அவனுடைய தாயாரே - ப்ரதானமான காரணம் என்பது வெகுவாகப் புகழ்ந்து சொல்லப்படும் விஷயம். ஸ்த்ரீ ஜாதிக்குள்ள அந்த விசேஷத்தினாலேயே புத்ரன் விசேஷம் பெறுவதால்தான் இங்கே ஆசார்ய பரம்பரை இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது" என்கிறார்.

---

## பெண்டிரும் பிரம்மவித்தையும்

இப்படிச் சொன்னதிலிருந்து அவரோ, அவருக்கும் முந்தைய அந்தப் பூர்வ ரிஷிகளோ ஸ்த்ரீகளையும் ப்ரஹ்ம வித்யா குருக்களாகக் கொள்ளலாமென்று அபிப்ராயப் பட்டதாகத் தப்பர்த்தம் செய்துகொண்டு விடக்கூடாது. இந்த இடத்தில் மூலத்திலும் ஸரி, பாஷ்யத்திலும் ஸரி, ஆத்ம சாஸ்த்ர உபதேசம் பற்றி எதுவும் இல்லை. இங்கே சொல்லப்பட்ட ரிஷிகள் இந்தந்த அம்மாமார்களின் பிள்ளைகள் என்று மட்டுமே இருக்கிறதே தவிர, அவர்களிடமிருந்து இவர்கள் எந்த வித்யையிலும் உபதேசம் பெற்றதாக இங்கேயும் இல்லை, உள்ளே எங்கேயும் இல்லை. பாஷ்யத்திலும் புத்ரன் குணவானாவதைப் பற்றித்தான் இருக்கிறதே தவிர வித்யாவானாக, ஞானவானாக இருப்பதைப் பற்றி இல்லை.

உபநிஷத் காலத்தில் அத்யாத்ம சாஸ்த்ர விஷயங்களில் ஆழமாகத் தெரிந்து கொண்ட ஸ்த்ரீகள் வித்வத் ஸிம்ஹங்களாக இருக்கப்பட்ட (ஆடவ) ரிஷிகளிடமும் பெரிதாக வாதம், ஸம்வாதம் (ஸம்பாஷணை) செய்திருப்பதாக அந்த உபநிஷத்துக்களிலிருந்தே நிஸ்ஸந்தேஹமாக (சந்தேகத்திற்கிடமின்றி)த் தெரிவதும் வாஸ்தவம். என்றாலும் அந்த ஸ்த்ரீகளிடமிருந்து யாரும் உபதேச க்ரமத்தில் வித்யா ஸ்வீகரணம் (கல்வி கற்றல்) செய்ததாக ஒரு இடத்திலேயும் காணோம் அதே மாதிரி, யாஜ்ஞவல்க்யர் ஒருத்தர் தம் பத்னியைப் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு ஆத்ம விஷயங்களை சொல்வதாக இருக்கிற ஒரு இடம் தவிர ஸ்த்ரிகள் குருமார்களிடம் உபதேசம் பெற்றதாகவும் விவரம் எதுவுமில்லை. பேச்சுவாக்கிலும், சூழ்நிலைப் பழக்க விசேஷத்தாலும் - 'சூழ்நிலை' என்கிறபோது, வித்வத் ச்ரேஷ்டர்களாகவும், ஞானிகளாகவும் அப்போது இருந்த கொண்டிருந்தவர்களின் ஸாந்நித்ய விசேஷத்தை 'ரேடியேஷ'னைக் குறிப்பாகச் சொல்லவேண்டும். அந்த விசேஷத்தாலும் - எல்லாவற்றுக்கும் மேலாக அவர்களுக்காகவே உள்ளுக்குள்ளே ஏற்பட்ட ஆத்யாத்மிக அபிலாஷையினாலும் சில ஸ்த்ரீகளும் ப்ரஹ்மவாதினிகளாக ஆனதாகத்தான் தோன்றுகிறதே தவிர, ஸம்ப்ரதாய க்ரமத்தில், அவர்கள் சிஷ்யர்களாகவோ - சிஷ்யைகளாகவோ - குருமார்களாகவே இருந்து கற்றுக் கொண்டதாகவோ, கற்றுக் கொடுத்ததாகவே அழுத்தமாக 'எவிடென்ஸ்' இல்லை.

இந்த விஷயமாக ரொம்பவும் அதிக பட்சமாக தெரிவது, வேதோபநிஷதங்கள் முதலாக லோகத்தில் பிரசாரத்துக்கு வந்த பூர்வ யுகத்திலும் தொடர்ந்து வந்து கலிக்கு முற்பட்ட யுகங்களிலும் சில மந்த்ரங்கள், சில உபாஸனைகள், சில வித்யைகள் ஆகியவற்றை அகத்துப் பெரியவர்களே பெண் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்து வந்திருக்கிறார்கள் என்கிற அளவுக்குத்தான் அநேகமாக உபநிஷத் மாதிரியும், பிற்கால தர்சனங்கள் மாதிரியும் ஃபிலாஸபிகலாக இல்லாத ஆராதனா முறைகளையும், Arts என்கிற கலைகளையும், லௌகிக ஞானத்தைத் தரும் சில வித்யைகளையுந்தான் ஸ்த்ரீ ப்ரஜைகளுக்குக் கற்றுக் கொடுத்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அபூர்வமாகத்தான் வேத மந்த்ரங்கள் சிலதும் பெண்டுகளுக்கு ஒரு சில ஸமூஹங்களில் கற்றுக் கொடுத்திருப்பார்கள் போலத் தெரிகிறது. ரொம்பவும் தீக்ஷண்ய புத்தியோடு ஃபிலாஸாபிகலாகத் தெரிந்து கொள்ள வேணுமென்று ஒரு ஸ்த்ரீ ப்ரஜை ஆசைப்படும் போது ஃபிலாஸஃபியும் கற்றுக் கொடுத்திருக்க வேண்டுமென்றும்

ஊஹிக்கமுடிகிறது. ஆனாலும் எல்லா புருஷ ப்ரஜைகளுக்கும் கம்பல்ஸரியாகவே உபநிஷத், தர்சனங்கள் ஆகியவற்றைச் சொல்லிக் கொடுத்த மாதிரி இல்லாமல், 'எக்ஸெப்ஷனல்' என்று சொல்லும்படியாகச் சின்ன வயஸிலேயே நல்ல புத்தி ப்ரகாசத்துடன் இருந்த பெண்களுக்கு மட்டுமே இப்படி வேதாந்தமும் இதர தத்வார்த்த ஸப்ஜெக்டுகளும் சொல்லிக் கொடுத்திருக்கி -றார்களென்றுதான் தெரிகிறது. ஒரு ரிஷியிடம், ஆசார்யரிடம் குருகுலவாஸம் என்று படித்திருக்கிற பசங்கள் பற்றி வேதத்திலிருந்து ஆரம்பித்து பிற்கால

இலக்கியங்கள் வரை பலவற்றில் நிறைய வருகின்றன. அவற்றைப் பார்க்கிறபோது நூற்றுக்கு ஒரு எக்ஸாம்பிளாகத்தான், அகத்துப் பெரியவர்களிடமிருந்து மட்டும் என்றில்லாமல் குருகுலம் வைத்து நடத்திய ஆசார்யனிடமும் பெண்கள் படித்த மாதிரித் தெரிகிறது. அந்த நூற்றுக்கொரு குருகுலத்திலும் புருஷப் பிள்ளைகளாக நூறு வித்யார்த்திகள் படித்தார்களென்றால் பெண் வித்யார்த்திகளாக இரண்டொருத்தர்தான் இருந்திருப்பார்கள் என்றும் ஊஹிக்க முடிகிறது.

முன்னே சொன்ன (ப்ருஹதாரண்யக) உபநிஷத்திலேயே மாத்ருபூர்வமாக (தாய்வழியில்) வம்சம் சொன்ன அந்த பாகத்திற்குக் கொஞ்சம் முந்தி, இப்படியிப்படியான குணமுள்ள ப்ரஜை பிறப்பதற்குப் பிதா இன்னின்ன அநுஷ்டானம் பண்ணணும் என்று சொல்கிற இடத்தில் பண்டிதையாக ஆகக்கூடிய ஸ்த்ரீ ப்ரஜை (பெண் குழந்தை) பிறக்க வேண்டுமானால் இன்ன விதியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று இருக்கிறது. இதிலிருந்து ஆதிகாலத்தில் ஸ்வயமாகவே நல்ல புத்திசாலினியாகப் பிறந்து தத்வ சாஸ்த்ரங்களும் தெரிந்து கொண்டு பண்டிதைகளான பெண்கள் இருந்தது மட்டுமில்லாமல், அப்படி ஒரு பெண் ப்ரஜை தனக்கு உண்டாணும் என்று ஆசைப்பட்ட பிதாமார்கள் இருந்ததாகவும் தெரிகிறது. ஆனாலும் இங்கே கூட ஆசார்யாள் நமக்கான கலிகால தர்மத்தை மனஸில் வைத்துக் கொண்டே பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அப்படிப் பண்ணும்போது, 'பண்டிதை' என்பது ப்ரஹ்ம வித்யா சாஸ்திரத்தில் பாண்டித்யம் பெறுவதைக் குறிக்காது என்று அபிப்ரயாப்பட்டு, அதற்கு காரணமாக "ஏனென்றால் ஸ்த்ரீகளுக்கு வேதத்தில் அதிகாரமில்லாததால் (வேதம் கற்க உரிமையில்லாதால்)" என்கிறார். பின்னே 'பண்டிதை' என்று ஏன் சொல்லியிருக்கிறது என்பதற்கு, "க்ருஹ தந்த்ர விஷயத்திலே பாண்டித்யம் பெறுவதாலேயே பண்டிதை" என்று பதில் கொடுத்திருக்கிறார். 'க்ருஹ தந்த்ரம்' என்றால் வீட்டை நல்ல முறையில் நடத்துவது, இல்லறத்தை நல்லறமாக நடத்துவது, (சிரித்து) 'domestic management'! அதை ஸாமர்த்யமாக, திறம்படச் செய்கிற கலையில் தேர்ந்திருப்பதுதான் பெண்களுக்குப் பாண்டித்யம் - இப்படி ஆசார்யாள் அபிப்ராயப்பட்டிருக்கிறார்.

---

# பெண்களின் பாண்டித்யம் அக்கால - இக்கால மாறுபாடு

பழங்காலத்தில், ஆசார்யாள் புது ஜீவன் ஊட்டி ஸ்தாபித்த வைதிக வாழ்க்கையில் புருஷர்கள் உத்யோகத்துக்குப் போய் ஸம்பாதிக்கவில்லை. க்ருஹத்திலேயே இருந்து கொண்டு விடிவதற்கு முன்னாலிருந்து ஒன்று மாற்றி ஒன்றாக அநுஷ்டானங்கள் செய்வதற்கே அவர்களுக்குப் பொழுது ஸரியாயிருக்கும். ஸம்பாவனை, மான்யம், குரு தட்சிணை முதலியவற்றிலிருந்தே அவர்களுடைய எளிய வாழ்க்கைக்குப் போதுமான வருமானம் கிடைத்துவந்தது. புருஷர்கள் இப்படி ஸதாவும் அநுஷ்டானபரர்களாக இருந்ததால் ஸ்த்ரீகளும் ஸதா அவர்கள்கூட இருந்துகொண்டு பல விதங்களில் அந்த அநுஷ்டானாதிகளுக்காக ஸேவை

செய்யவே அவர்களுக்கும் பொழுது ஸரியாயிருந்தது. அந்தச் சூழ்நிலையில் அவர்களுக்குப் பாண்டித்யம் அடியோடு அவச்யமில்லாமலும், பாண்டித்யத்தால் அவர்களுக்கு ஒரு ப்ரயோஜனமும் இல்லாமலும் இருந்தது.

ஆனால் நம் காலத்தில் புருஷர்கள் நாள் பூராவும் - day-time என்பது பூராவும் - ஆஃபிஸில் வேலை செய்தே ஸம்பாதிக்கவேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டு விட்டது. இதை மாற்றுவதற்கில்லை என்ற அளவுக்கு நிலைமை முற்றி விட்டது.

ஆக, இப்போது புருஷர்களுக்கு ஆபிஸ், அது போக மிஞ்சியுள்ள நேரத்தில் அரட்டை, பொழுதுபோக்கு என்று ஒரு தினுஸாக ஆகிவிட்டது. இதனால் மத ஸம்பந்தமான நம்முடைய ஏராளப் புஸ்தகங்கள் உள்பட ஆத்மாவையோ, புத்தியையோ, மனஸையோ வளர்த்துக் கொடுக்கிற எதையுமே - நல்ல இலக்கியம் உள்பட எதையுமே - அவர்கள் படித்துத் தெரிந்து கொள்ளாமலிருக்கிறார்கள்.

இதைக் கவனிக்கும்போது இதற்கு நிவாரணம் ஆசார்யாள் சொன்னதற்கு ஒரு தினுஸில் மாறுதலாகப் போனால்தான் கிடைக்கும் என்றே தோன்றுகிறது. இப்படி நான் சொல்வதே பொதுவாகப் பார்த்தால் மஹா பாபம்தான், பரம அபசாரமும்தான். அது எனக்குத் தெரியாமலில்லை. அவர் காலம், நம் காலம் என்று சொல்லிக் கொண்டு காலத்தை அநுஸரித்து, என்றைக்கும் சாச்வதமான தர்மத்தை மாற்றுவது துளிக்கூட முறையேயில்லை என்பதும் எனக்கு நன்றாகத் தெரிகிறது.

இருந்தபோதிலும் புருஷர்கள் ஆபீஸ் போய்த தானாக வேண்டும் என்று ஆனதில் ஸ்த்ரீகள் நிலைமை எப்படி ஆகியிருக்கிறது என்பதைக் கவனிக்கிறபோது இன்றைக்கு அவரே இருந்தால் என்ன சொல்லியிருப்பாரென்று என் அடி மனஸிலிருந்து பிரார்த்தித்துப் ப்ரார்த்தித்து, யோஜித்து யோஜித்துப் பார்க்கிறபோது தோன்றுகிறதோ அதையே துணிந்து சொல்கிறேன் இன்றைக்கு Day -time பூராவும் வீட்டிலே இருக்கிற ஸ்த்ரீகளுக்கு யஜ்ஞாதி அநுஷ்டானங்களில் ஸஹாயம் பண்ணுகிற கார்யமில்லை. வீட்டு நிர்வாஹத்தில் அவர்கள் பல கார்யம் செய்ய

வேண்டியிருந்தாலும், கார்யம் செய்ததில் களைத்து விச்ராந்தி செய்து கொண்ட பிறபாடும் அவர்களுக்குப் பொழுது மிச்சம் இருக்கிறது. அது வீணிலோ, வம்பிலோ போகாமலிருக்க வேண்டுமானால்

அதற்கு வழிதான் ஆசார்யாள் அன்றைக்குச் சொன்னதற்கு வித்யாஸமான

ஒன்றாகத் தெரிகிறது. அதாவது, இன்றைக்கு ஸ்த்ரீகள்தான் தங்களுக்கு மிஞ்சும் பொழுதையெல்லாம் நம்முடைய இதிஹாஸ - புராணங்கள், ஸ்தோத்ரப் புஸ்தகங்கள், அது மட்டுமில்லாமல் உசந்த காவ்யங்கள் ஆகியவற்றை நன்றாகப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படிப் பண்ண முடியும் என்பது.

அவர்களுடைய பொழுது நல்ல விதமாகக் கழிவதற்கு இது வழி என்பது மாத்திரமில்லை. எத்தனையோ யுகத்துக்கு முன்னாலிருந்து ஆரம்பித்து, தொடர்ந்து வந்துள்ள நம்முடைய மஹத்தான கலாசாரத்துக்கு உயிரூட்டுகிற புஸ்தகங்கள் நம் காலத்தில் செத்துப் போய் விட்டன என்ற பெரிய பழி, மஹத்தான களங்கம் நமக்கு ஏற்படாமலிருக்க வேண்டுமானால் இப்படி ஸ்த்ரீகளாவது அவற்றைப் படித்துப் ப்ரயோஜனப்படுத்திக் கொண்டு ரட்சித்துக் கொடுப்பதுதான் வழி.

இப்படித் தாங்கள் படித்தறிந்ததன் ஸாராம்சத்தை அவர்கள் புருஷமார்களுக்கும் சொல்லி அவர்களுக்கும் நம்முடைய ஸமய கலாசாரத்தில் ஒரு அபிருசியை ஏற்படுத்தவேண்டும். தானாகப் படித்துத் தெரிந்து கொள்ள ப்ரியப்படாதவனாக இருந்தாலும், பெண்டாட்டி சொல்கிறாள் என்றால் எவனும் கேட்டுத் தெரிந்து கொள்வான்.

நம்முடைய புராதனமான, புனிதமான இலக்கியச் செல்வம் என்பது நம் காலத்தோடு கொள்ளை போகாமலிருக்க வேண்டுமானால் அதற்கு இப்படி ஸ்த்ரிகள் பண்டிதைகள ானால்தான் முடியும் என்று ப்ரத்யட்ச வய்வஹாரத்தில் ஏற்பட்டிருப்பதால்தான் துணிந்து சொன்னேன்.

ஆசார்யாள், பாண்டித்யம் என்கிறதை வேதத்தில் பாண்டித்யம் என்றே கருதி, வேதாத்யயன அதிகாரம் ஸ்த்ரீகளுக்கு இல்லாததால்தான் அவர்கள் பாண்டித்யம்

பெறுகிறதற்கில்லை என்று சொன்னார். நானும் இப்போது வேதத்தில் கை வைக்கவில்லை. ஸ்த்ரீகளை வேதங்கள் படிக்கும்படியாகச் சொல்லவில்லை. வேதம் தவிர்த்து இதிஹாஸ - புராண - ஸ்தோத்ர - காவ்யாதிகள்தான் படித்துத் தெரிந்து கொள்ளச் சொல்கிறேன்.

இதை பாபமாகவோ அபசாரமாகவோ நினைக்காமல், இதற்கு ஆசார்யாள் ஆசீர்வாதம் பண்ணுவார் என்ற நம்பிக்கையுடனேயே சொல்கிறேன்.

ஆசார்யாள் பெயரிலுள்ள இந்த மடத்து த்வாராவே (மூலமாகவே) இப்படிப் பெண்கள் படித்துத் தெரிந்து கொள்வதற்கு எந்த விதமெல்லாம் உதவி செய்யலாமோ, இன்ஸென்டிவ் கொடுக்கலாமோ அவ்வளவும் அவருடைய ஆசீர்வாதத்துடனேயே செய்ய வேண்டுமென்று எனக்கு இருக்கிறது.

மொத்தத்தில் விஷயம் பெண்கள் உத்யோகத்துக்குப் போகாமல் க்ருஹிணிகளாகவே இருந்து கொண்டு க்ருஹ ஸம்ரக்ஷணம் செய்வதே ச்ருதி - ஸ்ம்ருதிகளின் வழிப்படியான ஸ்த்ரீ தர்மம். அதற்கு அநுகூலமாகவே ஆசார்யாள் அவர்களுக்குப் பாண்டித்யம் வேண்டியதில்லை என்று சொன்னது. இப்போது (நான்) சொல்கிறதும் அவளுடைய க்ருஹிணி தர்மத்துக்கு விரோதமில்லை. அவளை உத்யோகத்துக்குப் போகச் சொல்லவில்லை. உத்யோகத்துக்குப் போகிற புருஷன் கோட்டைவிட்ட கலாசார செல்வத்தை அவளாவது ஸம்ரிக்ஷித்து

தரட்டும், அவள் வழியாகவே அவனுக்கும் அது கொஞ்சம் போகட்டும் என்றே சொல்கிறேன்.

---

## பெண்டிருக்கு ஆசார்யாள் தரும் உயர்வு

ஸ்த்ரீகளின் ஸ்தானத்தை ஆசார்யாள் குறைத்துச் சொன்னதாக நினைக்கவே கூடாது. ஏனென்றால் ஸம்ப்ரதாய க்ரமத்தில் வேத- வேதாந்தங்கள் படிக்கவும் சொல்லிக் கொடுக்கவும் அவர்களுக்கு அதிகாரமில்லாவிட்டாலும்,

'informal' - ஆக என்கிறார்களே, அப்படித் தங்கள் குழந்தைகளை நல்வழிப்படுத்துவதில் அம்மாமார்களுக்கு இருந்த சக்தியை ஆசார்யாள் நிரம்பவும் புரிந்து கொண்டு ஆமோதித்துச் சொல்லியிருப்பதும் உண்டு.

இப்படி informal-ஆக அவர்கள் (பெண்டிர்) ப்ரஹ்ம ஞானமேகூட பெறமுடியும் என்றும் ஆசார்யாள் சொல்லியிருப்பதுமுண்டு.

மாண்டூக்யோபநிஷத்தின் தத்வார்த்தத்தை விளக்கி ஆசார்யாளின் குருவுக்கு குருவான கௌடபாதாசார்யாள் 'காரிகை' என்று எழுதியிருக்கிறார். " pure Advaita classic (சற்றும் கலப்படமற்ற அத்வைதத்தையே சொல்லும் தலைசிறந்த இலக்கியம்) என்று அதை ரொம்பப் படிப்பாளிகளும் சொல்கிறார்கள். அதில் ஒரு இடத்தில், "பிறப்பில்லாததும், அது - இது என்ற பேதமில்லாமல் ஸர்வ ஸமமாயிருப்பதுமான ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யம் என்பதில் எந்தச்சில பேர் அசைக்க முடியாத நிச்சய உறுதி உள்ளவர்களோ அவர்களே மஹா பெரிய ஞானத்தைப் பெற்றவராவார்கள். ஆனால் பொதுவாக ஜீவலோகத்திற்கு அது பிடிபடுவதில்லை" என்று ச்லோகம் இருக்கிறது. இங்கே 'எந்தச் சில பேர் - யே கேசித் - என்று வருவதற்கு ஆசார்யாள் பாஷ்யத்தில், 'ஸ்த்ர்யாதயோபி' - அதாவது 'ஸ்த்ரீ முதலானோர் உள்பட எவரானாலும் எந்தச் சிலருக்கு, ப்ரஹ்மமே ஸத்யம் என்ற நிச்சய உறுதி இருக்கிறதோ' - என்று சொல்லியிருக்கிறார். இதனால் ஸ்த்ரீகளும் ப்ரஹ்ம ஞானம் அடையமுடியும் என்று அவர் அபிப்ராயப்பட்டது தெரிகிறது. அதற்குத் தகுதி பெறாமலே பொதுவாக ஜீவலோகம் இருந்தாலும், அஸாதாரணமான சில பேர், பொம்மனாட்டிகளிலும் அப்படி அஸாதாரணமாக இருக்கிற சில பேர், ப்ரஹ்ம ஞானம் அடைய முடியும் என்று இங்கே சொல்லியிருக்கிறார்.

ப்ரஹ்ம ஞானம் வரைக்குமே பெண்கள் போக முடியும் என்று சொல்லும் ஆசார்யாள் லௌகிகத்திலும் அவர்களுக்கான உசந்த ஸ்தானம் கொடுக்கவே செய்கிறார். குழந்தைகளுக்கு அம்மாவும் ஒரு குருவாக இருப்பதில் மட்டும் இந்த உசத்தி இல்லை. பதிக்கே அவள்தான் உற்ற ஸகா என்று ஆசார்யாள் 'ப்ரச்னோத்தர ரத்ன மாலிகா'வில் சொல்லியிருக்கிறார்.

"கிருஹஸ்தனுக்கு உற்ற ஸகா யார்?" என்று அதில் ஒரு கேள்வி கேட்டுவிட்டு பதிலாக, "பத்தினி" என்கிறார்:

"க்ருஹமேதினஸ்ய மித்ர் கிம்?"

"பார்யா."

---

## அன்னையும் குருவாக:ஆசார்யாளின் ஆமோதிப்பு

'நல்வழிப்படுத்துவது' என்பதுதானே குருவின் முக்யமான கார்யம்? அதனால் அம்மாவுக்கும் அப்பா மாதிரியே குரு ஸ்தானம் உண்டு. இதையும் ஆசார்யாள் எடுத்துக்காட்டிச் சொல்லியிருப்பதுண்டு. சித்தே முந்தி தானே பார்த்தோம், பிள்ளை குணவானாக இருப்பதில் அம்மாவுக்கே ப்ராதான்யம் (பிரதானமான ஸ்தானம்) என்று அவர் சொன்னதை? குணவதியான மாதாவின் கர்ப்பத்தில் ரூபமாகி, அவளிடமிருந்து ஆஹாரம் - பானம் பண்ணிக் குழந்தை வளர்வதாலேயே முக்யமாக ஒரு ப்ரஜைக்கு குண ஸம்பத்து ஏற்படுகிறது. இது அவளுக்கே தெரியாமல் அவள் புத்ரனை நல்வழிப்படுத்துவது!அப்புறம் சின்ன வயஸில் அதற்குக் கதை புராணம் சொல்லி, ஸ்தோத்ரங்கள், நீதிப் பாடல்கள் சொல்லிக் கொடுத்து நல்வழிப்படுத்துகிறாள். 'இப்படிப் பண்ணப்பா, இப்படிப் பண்ணாதேப்பா!' என்று அநகேம் சொல்லிக் கொடுககிறாள். அவளுடைய நல்ல நடத்தையைப் பார்த்துப்பார்த்தே - அதன் ஸூக்ஷ்மமான சக்தியாலேயே கூட - பாலப்பிராயத்தில் ஒருத்தன் நல்லவற்றைத் தெரிந்து கொண்டு அந்தப்படி செய்கிறான். 'தாயைப் போலப் பிள்ளை' என்று வசனமே இருக்கிறது.

இதையெல்லாம் ஆசார்யாள் கவனித்து - ரொம்பவும் 'ஸிம்பதெடிக்'காகவும் கௌரவம் கொடுத்தும் கவனித்துத்தான் - கடோபநிஷத்திலே ஒரு இடத்தில் ப்ருஹதாரண்யகத்தையும்Quoteபண்ணிக் காட்டி, வேதம் வகுத்துக் கொடுக்கிற விதிமுறையின்படி குருவைப் போலவே அம்மா - அப்பாவுக்கும் - 'அம்மாவுக்கும்' என்பதைக்

கவனிக்க வேண்டும், மாதா - பிதா - குரு என்று மூன்று பேருக்குமே - 'ப்ரமாண காரணம்' என்ற பெருமை, உரிமை இருப்பதாகக் காட்டியிருக்கிறார். 'ப்ரமாண காரணம்' என்பதற்கு 'அதிகாரபூர்வமான குரு ஸ்தானம்' என்று இங்கே அர்த்தம்.

அதாவது, தாயாருக்கும் குருஸ்தானம் உண்டு.

தாயார்களின் பெயரைச் சொல்லி ப்ருஹதாரண்யகத்தில் ஏராளமான ரிஷிகளைத் தெரிவித்திருக்கிறதென்றால், சாந்தோக்யத்திலும் இரண்டு பேரை அந்த மாதிரியே சொல்லியிருக்கிறது.

---

**அன்னையின் வழியில் கண்ணனையே!**

அதிலே ஒருத்தர் ஸாட்சாத் கிருஷ்ண பரமாத்மா 'இதுதான் க்ருஷ்ணரைப் பற்றிய earliest reference; அவர் வாஸ்தவமாகவே இருந்த historical personality என்று ரூபக்கிற reference' என்று படிப்பாளிகள் சொல்கிறார்கள். அது எங்கே வருகிறதென்றால், சாந்தோக்யத்தில் 'புருஷ யஜ்ஞம்' என்பதைப் பற்றிச் சொல்கிற இடத்திலே. ஒருத்தரை 116 வயசு ஜீவிக்கச் செய்கிற யஞ்ஜம் அது. க்ருஷ்ணர் 120 வயஸூக்கு அதிகமாக ஜீவித்தவர் என்பது கவனிக்கவேண்டிய பாயின்ட். அவர் கோர ஆங்கிரஸ் என்ற ரிஷியிடமிருந்து இந்த உபதேசம் கேட்டுக் கொண்டார், கேட்டுக் கொண்டதற்கப்புறம் 'தாஹமில்லாதவராக ஆனார்' என்று சொல்லியிருக்கிறது. அதற்கு அர்த்தம், 'இந்த உபதேசம் பெற்றுக்கொண்ட பிறகு அவருக்கு வேறே வித்யை எதுவும் தெரிந்துகொள்ளணும் என்று ஆசை போய் விட்டது என்பதே' என்று ஆசார்யாள் பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். ஆசை ஒரு தீராத தாஹம். 'த்ருஷ்ணா' என்பது (தாஹம், ஆசை என்ற) இரண்டையும் குறிக்கும். புத்தர் ஆசையை 'த்ருஷ்ணா' என்றே சொல்வார். அதை 'தன்ஹா' 'தன்ஹா' என்ற 'ஸம்ஸ்க்ருதச் சிதைவான பாலி மொழியில் பௌத்தப் புஸ்தகங்களில் போட்டிருக்கும்.

'பூர்ணாவதாரமான கிருஷ்ணரா ஆயுர்விருத்தி மாதிரியான ஒரு ஐஹிகமான (இகவுலக) விஷயம் தெரிந்து கொண்டு அதிலே இவ்வளவு த்ருப்திப்பட்டார்?' என்று நினைக்கப்படாது. இந்த வித்யையில் ஒரு ஜீவன் தன்னுடைய பஞ்ச ப்ராணன்களையும் வரிசையாக வயஸு ருத்ர - ஆதித்யர்களுக்கு அர்ப்பணம் பண்ணியே அந்த 116 - வயஸு கொண்ட வாழ்க்கையின் முதல் - இரண்டாவது - மூன்றாவது பாகங்களைக் கடப்பதாக வருகிறது. அதற்குள்ளே என்னவெல்லாம் ரஹஸ்யமான பாரமார்த்திக தத்வங்களை ஒளித்து வைத்திருக்கிறதோ? '116 வயஸு ஆயுஸ்' என்பதிலேயே என்னென்ன 'மெடஃபிஸிகல்' ரஹஸ்யங்கள் ஒளிந்து கொண்டிருக்குமோ? திருட்டு க்ருஷ்ணர் அந்த ஆத்மார்த்தமான ரஹஸ்ய நவநீதத்தையெல்லாமும் ஸ்வீகரித்துக் கொண்டே த்ருப்திப்பட்டிருப்பாராக இருக்கும்!

அவர் த்ருப்திப்பட்டது இருக்கட்டும். அம்மா பேரில் பிள்ளையைச் சொல்வதிலல்லவா இருந்தோம்? இங்கே க்ருஷ்ணரைப் பற்றிச் சொல்லும்போது 'க்ருஷ்ணாய தேவகிபுத்ரா' என்றே இருக்கிறது!அவர் வஸுதேவர் பிள்ளை என்பதாலேயே பிரஸித்தமான 'வாஸுதேவ' நாமம் பெற்றவர். 116 வயஸு ஆயுஸிலும் முதல் பாகத்தில் வஸுக்கள்தான் ப்ராணாதாரமாக இருப்பது. ஆனாலும் தம்முடைய மாயவித்தனத்திற்கேற்ப, தேவகிபுத்ரர் என்றே இங்கே தம்மை ரிஷிக்குத் தெரியப்படுத்திக் கொண்டிருக்கிறார்!க்ருஷ்ணாவதாரத்தை ஏற்படுத்திய வித்து எதுவோ அதை வஸுதேவர் மனஸிலே தரித்து தேவகியின் மனஸுக்கு அனுப்பி வைத்ததாகத்தான் - பௌதிக கர்ப்பமாக இல்லாமல் மானஸீக ரீதியில் - பாகவதத்தில் சொல்லியிருக்கிறதே தவிர, சரீர ஸம்பந்தத்தால் அவர்களை அப்பா அம்மா என்று சொல்லும்படியாகக் காட்டவில்லை. ஆனாலும் அவர்களில் தேவகி வாஸ்தவமாகவே கர்ப்பவதியாக இருந்துதான் அவரைப்

பெற்றிருக்கிறாள். அதனால் அவளுக்குத்தான் ஓரளவுக்காவது மாத்ரு ஸ்தானம் கொடுக்க இடமிருக்கிறது, வஸுதேவருக்கு (பித்ரு ஸ்தானம்) கொடுக்க அந்த அளவுக்குக்கூட ந்யாயமில்லை என்றே பகவான் நினைத்து

## ஸத்யகாம ஜாபாலர்

அம்மா பேரில் (உபநிஷத்தில்) சொல்லப்பட்ட இன்னொருத்தர் யாரென்றால், 'ஸத்யகாம ஜாபாலர்' என்கிறவர். அம்மாவோடேயே அவர் இளவயஸில் வஸித்துக் கொண்டிருந்தார். அப்பா, 'போயே'விட்டாரோ, அல்லது எங்கே ஓடிப்போனாரென்று தெரியாமல் வீட்டை விட்டு ஓடிப் போய்விட்டாரோ? தன் வயஸொத்த பிள்ளைகளெல்லாம் குருகுலவாஸம் பண்ணிக் கொண்டு ப்ரஹ்மசர்யம் அநுஷ்டித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து பாலரான அவர், தாமும் அப்படியே பண்ண ஆசைப்பட்டார். அம்மாவிடம் தன் ஆசையைச் சொல்லி, குரு குலத்தில் சேர்த்துக் கொள்ளும்போது அதன் ரிஷி கோத்ரம் கேட்பாராகையால், தன் கோத்ரம் என்னவென்று கேட்டார். "அப்பா, கொழந்தே பல எடத்துல ஸேவகம் செஞ்சுண்டு, சுச்ருஷை பண்ணிண்டு வாழ்க்கையை நடத்திண்டு போற எனக்கு என்னிக்கோ யௌவனத்துல பொறந்த ஒன் கோத்ரமும் தெரியலை, ஒண்ணும் தெரியலை!ஒண்ணு வேணா பண்ணு. என் பேர் ஜாபாலா. நீ என் பிள்ளையானதுனால என் பேரை வெச்சு நீ ஜாபாலன். ஒனக்குப் பேர் 'ஸத்யகாமன்'னு வெச்சிருக்கு. அதனால குருகுல ரிஷி கேக்கறச்சே விஷயத்தை உள்ளபடி சொல்லி உன்னை 'ஸத்யகாம ஜாபாலன்'னு தெரிவிச்சுக்கோ" என்றாள்.

ஸத்யத்தில் பற்றும், ப்ரியமுந்தான் ஸத்யகாமம். அந்த அம்மாள் ஸத்யகாமையாகவே நிஜத்தைச் சொல்லயிருக்கிறாள். புத்ரனிடம் இன்ன கோத்ரம் என்று பொய்யாகச் சொல்லவில்லையோல்லியோ? தாயைப் போலவே பிள்ளையாக அந்தக் குழந்தையும் இருந்தான்.

அவன் ஹாரித்ரும கௌதமர் என்ற ரிஷியிடம் போய் ஸத்யகாமன் என்ற பேருக்கேற்க அம்மா சொன்னதை அப்படியே எழுத்துக்கெழுத்து அவரிடம் ஒப்பித்து, "ஸத்யகாமோ ஜாபாலோ (அ)ஸ்மி போ" ('நான் ஸத்யகாம

ஜாபாலன் என்ற பெயருடையவனாக இருக்கிறேன். ஐயனே!') என்று சொல்லி நமஸ்காரம் பண்ணினான்.

உடனே ரிஷி, "உசந்த குலத்தில் பிறக்காதவன் இப்படிப் பேச முடியாது. ஆகையினாலே, உனக்கு உபநயனம் பண்ணிவைக்கிறேன்" என்று சொல்லி அவனை சிஷ்யனாகச் சேர்த்துக் கொண்டார் என்று கதை போகிறது.

அம்மா பேரில் வம்சம் சொல்கிறதும் அபூர்வமாக அங்கங்கே காணப்படுகிறது என்று காட்ட வந்தேன். அதிலேயே சிஷ்யன் எப்படி ஸத்ய்ஸந்தனாக இருக்கணும், மானாபிமானம் விட்டு இருக்கணும், வித்யைக்காக தாஹம் எடுத்தவனாக இருக்கணும் என்பதெல்லாமும் வந்து விட்டன. அப்படிப்பட்ட, ஒருவன் உபதேசம் (வேண்டும்) என்று ஆச்ரயிக்கிறபோது, தயங்காமல் அவனுக்கு உபதேசம் கொடுப்பது குரு லட்சணம் என்பதும் தெரிகிறது. அப்பா யார், கோத்ரம் என்ன என்று சொல்லத் தெரியாதவன் என்றால் தப்பாக நினைக்கவும் இடமிருக்கோல்லியோ? ஆனாலும் அதை அப்படி நினைக்காமல் அந்த ரிஷி அந்தப் பையனைச் சேர்த்துக் கொண்டார் என்கிறபோது - திருக்குறள்தான் ஞாபகம் வருகிறது 'சான்றோர்க்குப் பொய்யாவிளக்கே விளக்கு'.

---

## மாதா - பிதாவுக்கும் மேல் குரு

மாதா - பிதா - குரு - தெய்வம் என்கிற நாலில் மாதா - பிதாக்களையே குரு என்றும், தெய்வம் என்றுங் கூடப் போற்றுகிறோம். ஆனால் மாதாவைப் பிதா என்பதில்லை, பிதாவை மாதா என்பதில்லை. குருவையும் தெய்வத்தையுந்தான் மற்ற மூன்றாகவுமே சொல்வது.

மாத்ரு பாசம், பித்ரு பாசம் ரொம்ப வலுவானது. அந்தப் பாசத்தை காட்டிக் குழந்தையை அன்பு பண்ணி, செல்லம் கொடுத்து வளர்க்கிறபோதேதான், அதோடேயே - இரண்டாம் பட்சமாக என்று சொல்லலாமோ என்னமோ? அப்படி 'ஸெகன்டரி'யாக - 'இன்ஃபார்ம'லாகக் கொஞ்சம் 'டீச்'சும்

பண்ணுவதோடு பெற்றோர்கள் நல்வழிப்படுத்துவது முடிந்து போகிறது. நல்ல வழியில் வராவிட்டால்கூட, வயிற்றிலே பிறந்தது என்பதால் ப்ரஜையைத் தள்ளிவிடாமல் அந்த இரண்டு பேரும் வளர்ப்பார்கள் - பாசத்தால் பாதி, கடமை என்று நினைத்துப் பாதி இப்படிச் செய்வார்களா. குரு என்றே இருப்பவருக்குத்தான் நல் வழிப்படுத்துவதொன்றே கார்யமாக, முழுக் கடமையாகக் கொடுத்திருக்கிறது. நிறைந்த அன்பு - எல்லை கட்டமுடியாத க்ருபை என்கிற அளவுக்கு அன்பு - அவருக்கு சிஷ்யனிடம் இருக்கிறதென்றாலுங்கூட அதுவும் அவனை நல்வழிப்படுத்துவதிலேயேதான் ஒருமுகப்பட்டிருக்கிறது. சொந்தப் பாசத்தினால் அந்த லட்சியத்திலிருந்து அவர் திசை திரும்பி விடுவதில்லை. ஆகையினால், மாதா-பிதா-குரு என்ற மூவரில் ஒருவனுக்கு நிஜமான நல்லதை - நல்லதை மாத்திரமே - செய்வது குருதான். 'அம்மா - அப்பா சரணமில்லை, குருதான்!' என்று அதனால்தான், ஆசார்யாள் 'பால போத ஸங்க்ரஹம்" என்கிற அத்வைதத்தின் அரிச்சுவடி மாதிரியாக புஸ்தகத்தில் சொன்னது.

---

## மூளை வளர்ச்சியும் இதய வளர்ச்சியும்

ஆனால் வித்யா போதகர் என்பதாக எந்த ஒரு வித்தையையும் -Arts, Scienceஎல்லாமே வித்தைகள்தான் அப்படி எந்த ஒரு வித்தையைச் - சொல்லிக் கொடுக்கிறவருக்கும் குரு என்ற பேர் ஏற்பட்டுவிட்டதால் கேள்வி வருகிறது. என்ன கேள்வி என்றால், 'நல்வழி' என்பதன் ஸம்பந்தமே இல்லாமல் ஏதோ ஒரு ஸயன்ஸை, ஆர்ட்டைத் தானே இந்த குரு சொல்லிக் கொடுக்கிறார்? இவருக்கு எப்படி உயர்ந்த ஸ்தானம்?" என்ற கேள்வி.

இன்றைக்குதான் என்றில்லை. பூர்வகாலத்திலேயே நாஸ்திகத்தைக்கூட சாஸ்த்ரமாகவும், சூதாட்டம் - திருட்டு முதலானதைக்கூட வித்யைகளாகவும் சொல்லி, அவற்றுக்குக்கூட மூலபுருஷர்களும் குருமார்களும் சொல்லியிருக்கிறது!ப்ருஹஸ்பதியையே நாஸ்திக சாஸ்திரமான சார்வாகம் என்பதற்கு மூலபுருஷராகச்

சொல்லியிருக்கிறது. திருட்டு சாஸ்திரத்திற்கு - சௌர்யம் (Chauryam) என்று அதற்குப் பேர், அதற்கு மூல புருஷர் பேர் மூலதேவர் என்று இருக்கிறது. கர்ணீ என்றவளுடைய புத்ரரானதாலே அவருக்கு கர்ணீஸுதர் என்றும் பேர்.

சாஸ்திரம் என்றாலும் வித்யை என்றாலும் ஒன்றேதான். ராஜ சாஸனம் என்கிறோமே, அப்படிச் சாஸனம் என்றே அநேக விதிகளுடன் கட்டளையாகப் பெரியவர்கள் செய்ததெல்லாம் 'சாஸ்திரம்'. அவை ஒவ்வொரு துறையில் அறிவை ஊட்டுகிறபடியால் 'வித்யை'. 'வித்' என்றால் அறிவது.

(மேலே) சொன்னபடி நாஸ்திகம், திருட்டு - புரட்டு உள்பட எதையும் 'வித்யை' என்கிறபோது வித்யை என்பது 'ஏதோ ஒரு துறையில் அறிவு' என்றே ஆகிறது. அது எந்தத் துறையாக இருந்தாலும் சரி, அதற்கும் 'ஸிஸ்டமாடிக்'காக ஒரு'முறை' ஏற்படுத்திச் சொல்லிக் கொடுத்தால் அது வித்யாபோதனையாகி விடுகிறது. அப்படிப் போதிப்பவர் குரு ஆகிவிடுகிறார்.

ஆனால் இது ஒரு ஜீவனை மூளை என்பதன் எல்லைக்குள் மட்டும் கொண்டு வந்து பின்னப்படுத்தி, குரு என்ற ஸ்தானத்தையும் ரொம்பக் குறைத்துவிடுகிற கார்யந்தான். அறிவு வளர்ச்சி என்ற ஒன்றை மட்டும் கவனித்து, எந்தத் துறையில் அறிவை வழங்குவதும் வித்யாபோதனை என்னும்போது ஜீவனுடைய ஹ்ருதயத்தை ஒதுக்கி விட்டதாக ஆகிறது. மூளை - ஹ்ருதயம் இரண்டும் சேர்ந்தே ஜீவன். ஒரு ஜீவன் உண்மையான ஜீவனாக வாழவும், ஜீவனே தேவனாகக்கூட உசரவும் மூளையைவிட ஹ்ருதய அபிவ்ருத்திதான் முக்யமானது. அதனால்தான் மூளைக்கு மாத்திரம் சரக்கு ஏற்றி அதை வ்ருத்தி செய்வதை 'ஜீவனை பின்னப்படுத்துவது' என்றது. ஜீவனை புத்திசாலியாக மாத்திரமில்லாமல் குணசாலியாகவும் ஆக்க வேண்டியதே நிஜகுருவின் கடமை. அப்படியில்லாமல் புத்திசாலியாய் மட்டுமே பண்ணும்போது குருவின் ஸ்தானத்தை ரொம்பவும் குறைத்து, குறுக்கி, இறக்கிவிடுவதாக ஆகிவிடுகிறது.

பகவத் ஸ்ருஷ்டியில் மநுஷ்ய மூளை என்பது ஒரு அத்புதமான கருவியாக இருப்பதைக் கவனித்து - அதை மாத்திரமே கவனித்து - வெறும் அறிவை மட்டுமே சார்ந்து ஒரு ஆர்ட்டாக, ஸயன்ஸாக ஸிஸ்டம் செய்யப்பட்ட

எதையும்

'வித்யை' என்று வைத்து விட்டார்கள். அதன் போதகர் 'குரு' என்றும் சொல்லிவிட்டார்கள் ஆனால் இதுவே நம் பூர்விகர்களின் பூர்ணமான அபிப்ராயம்

என்று நினைத்து விடக்கூடாது.

லோக வாழ்க்கை என்பது நன்றாக நடப்பதற்கு அறிவுத் துறைகள் என்றே - அதாவது ஆத்ம ஸம்பந்தமில்லாமல் இருக்கப்பட்டவையாகவே - இருக்கிறவையும் தேவைப்படத்தான் செய்கிறது. வாழ்க்கைக்கு நேரே ப்ரயோஜனப்படுவதாகத் தெரியாவிட்டாலும் அல்லது மனஸூக்கு ஒரு நிறைவைக் கொடுத்து, அதனால் ஸந்தோஷம் ஏற்படுத்துவதகாவும் அநேகத் துறைகள் இருக்கின்றன - ஸங்கிதம், சில்ப-சித்ரம், சரித்ரம், பாஷா சாஸ்திரம் இப்படி அநேகம். திருட்டும், சூதாட்டமும் மாதிரியில்லாமல், தனிப்பட நல்லது,கெட்டது என்று இல்லாமல் நாம் எப்படி ப்ரயோஜனப்படுத்திக்கொள்கிறோமோ அதனாலேயே நல்லதோ கெட்டதோ விளைவிப்பதாகவுள்ள ஸயன்ஸ் ஸப்ஜெக்ட்கள் தற்போது தினந்தோறும் பெருகி வருகின்ற. இன்றைய வாழ்க்கைக்கு - பௌதிகமாக, மெடீரியலாக த்ருப்தி தருகிற வாழ்க்கை மட்டுமில்லை, அறிவுக்கும் மனஸூக்கும் ஸந்தோஷம் தந்து வாழ்க்கையையே உத்ஸாப்படுத்துகிறவற்றையும் சேர்த்தே சொல்கிறேன், அப்படிப்பபடட வாழ்க்கைக்கு - இந்த வித்யைகள் எல்லாமே வேண்டித்தான் இருக்கின்றன. நாகரிக ஸமுதாயங்கள் ஏற்பட்ட நாளிலிருந்தே அப்படித்தான் இருந்து வந்திருக்கிறது.

நம் தேசத்தில் இந்த அறிவு வித்யைகளைக் கற்பிக்கிறவர்களும் உத்தம ஹ்ருதயமுள்ள யோக்யர்களாக, நல்ல சீலமுள்ளவர்களாக இருந்து வந்தார்கள். திருட்டு, சூதாட்டம் மாதிரியான கெடுதலான வித்யைகளைக் கற்றுக் கொடுக்கிறவர்களைத் தவிர, மற்ற ஆசாரியர்கள், ஆசிரியர்களெல்லாம் நல்ல morals-ம் அதாவது நன்னெறியும், அத்தனை நெறிக்கும் ஆதாரமான தெய்வபக்தியும் கற்றுக் கொடுக்கவும் செய்தார்கள். அதனால், அவர்களிடம் கற்றுக்கொண்டவர்கள், பக்தி விச்வாஸம்

வைக்கவேண்டிய குருமார்களாகவே அவர்களுக்கு ஸ்தானம் கொடுத்தார்கள். அவர்கள் கற்றுக் கொடுக்கும் பல துறைப் பாடத்தால் மூளை வளரச்சி பெறுகிறதோ? பாடமான நீதி போதனை, பக்தி போதனை முதலியவற்றுக்கு ஜீவ சக்தி ஊட்டிய அவர்களுடைய வாழ்க்கை உதரணத்தாலும், பெர்ஸனல் ரேடியேஷனாலும் ஹ்ருதய வளர்ச்சியும் பெற்றார்கள்.

ஆனாலும் ஆத்ம பரிபக்வம், பூர்ணத்வம் முதலியன இங்கே கிடைப்பதற்கில்லை. அதற்கென்றே ஏற்பட்ட குருமாரைத்தான் நம்முடைய மரபிலே முக்யமாக குரு, ஆசார்யர், தேசிகர் என்றெல்லம் சிறப்பித்து வைத்தது.

ஜீவனை தேவனாக்குவதற்கே முக்யத்வம் தந்தவர்கள் நம் மன்னோர்கள். "வேறே எந்த தேசத்திலும், எந்த மதத்திலும், கலாசாரத்திலும் இப்படி 'ஸெக்யூலர்' (உலகியல்) என்று தோன்றுகிற ஸகலத்தையுங்கூட 'ஸ்பிரிசுவலைஸ்' பண்ணி (ஆன்மிகமாக்கி)த் தரக் காணோம்" என்று மதாந்தரங்களை (பிறமதங்களை)ச் சேர்ந்த அறிவாளிகளும் சொல்கிறார்கள்.

---

## நிகழ்கால இழிநிலை

இக் காலத்தில் - அதிலும் 'ஸ்வதந்திரம்' என்பதாக ஒன்று வந்திருப்பதாகச் சொல்லப்படும் காலத்திற்குள்தான் - ஹ்ருதயத்தை அடியோடு புறக்கணித்து விட்டு மூளைக்கு மட்டும் சரக்கு ஏற்றுகிறதே கல்விமுறை என்றாகிவிட்டது. ஸ்வதந்திரத்திற்கு முந்தி வெள்ளைக்காரர்கள் நடத்தி வந்த கல்வி திட்டம் நம்முடைய வாழ்முறையைப் பாழ்படுத்தி அவர்களுக்கு அடிமை வர்க்கமாகவே நம்மை ஆக்குகிற உத்தேசத்துடன், ஆனாலும் அப்படித் தெரியாமல் ஏதோ நம்மை ரொம்ப முன்னேற்றிவிடுகிற ஒன்றாக அவர்களால் மிகவும் தந்திரமாக வகுக்கப்பட்டிருந்தது. அவர்கள் ஆட்சி முடிந்து ஸ்வராஜ்யம் வந்தபின் அந்த முறை மாறவேண்டும் என்று ஆசைப்பட்டோம். மாறவும் மாறிற்று. எப்படியென்றால், முன்னைவிட மோசமான கல்வி முறையாக!இதில் கல்வியும் இல்லை, முறையும் இல்லை. ஏன்

நிஜமாகவே மூளைக்காவது சரக்கு ஏற்றுகிறார்களா என்றால் அதுவும் கேள்வியாகத்தானிருக்கிறது!யோக்யதாம்சம் என்பதைப் பின்னுக்குத் தள்ளி ஜாதி, பணபலம், மிரட்டல் என்கிறவற்றை வைத்துக் கல்வி, பட்டம் என்றால் வேறே எப்படி இருக்கும்? லஞ்சத்தை லஞ்சம் என்று அஸல் ரூபத்திலும், டொனேஷன் என்ற பெயரிலும் கொடுத்து அட்மிஷன் பெறுவது, பாஸ் போடப் பண்ணுவது, மிரட்டி உருட்டியுங்கூடப் பாஸ் போடப் பண்ணுவது, இப்படி மாணவன் பண்ணுவதற்கு வாத்தியார்களும் மானேஜ்மெண்டும் இடம் கொடுத்து, ஸலாம் போடுவது, போதாக்குறைக்கு கவர்மென்டே வேறு பண்ணுகிற பேதம் - எந்த வரம்பில் நின்றால் முறை என்கிறதை யோஜித்துப் பார்க்காமல் வோட்டைப் பற்றியே யோஜனை பண்ணிக் கொண்டு, நாளுக்கு நாள் ஜாஸ்தியாக்கிக் கொண்டிருக்கும் ரிஸர்வேஷன்' - என்று ஏற்பட்டிருப்பதைப் பார்க்கும்போது இந்த தேசத்தில் தர்ம ந்யாயமான கல்வி முறை நடக்கிறதா, நடக்குமா என்பதே கேள்வியாயிருக்கிறது!'குரு', 'சிஷ்யர்' என்று ஒவ்வொன்றுக்கும் எத்தனையோ லக்ஷணங்கள் - யோக்யதாம்சங்கள் - கொடுத்து ஏற்பட்டிருக்கும் பெயர்களுக்கும், தற்போது பெருகி வரும் டீச்சர்கள் - ஸ்டூடன்ட்கள் இருக்கிற விதத்திற்கும் எங்கேவுக்கு எங்கேயோவாக இருக்கிறது!நெடுங்காலமாக இருந்து வந்த ஒரு உன்னதமான கலாசாரம் இப்படி ப்ராணாபத்தாக அரிபட்டுக்கொண்டே போய், தேசத்தின் வருங்கால ப்ரஜைகளை நல்லவர்களாவதற்கு எந்த ஏற்பாடுமே இல்லாதபோது, அதை சீர்ப்படுத்த வேண்டும் என்ற ப்ரக்ஞையே அரசாங்கத்திற்கு இருக்கிறதாகத் தெரியாததுதான் எல்லாவற்றையும் விட ரொம்பவும் கவலை தருவதாக இருக்கிறது. ராஜாங்கத்திற்கு -டில்லியில் இருப்பது, ஸ்டேட்களில் இருக்கிறவை எல்லாவற்றுக்குந்தான் - திரும்பின பக்கமெல்லாம் பிரச்னையாயிருக்கிறதென்பதும் வாஸ்தவந்தான். இருந்தாலும் வருங்காலத்திற்கே விதை முதல் கல்விதானே? அதற்கு தந்து ஸரிப்பண்ண வேண்டுமோ, வேண்டாமோ? அப்படியில்லாமல், இருக்கிறதும் இன்னும் சீர் கெட்டுப்போகப் பண்ணிக் கொண்டிருக்கிறார்களே என்றுதான் ரொம்பக் கவலையாயிருக்கிறது. உங்களையும் கவலைப்படுத்துவது தவிர இந்தப் பேச்சால் ஏதாவது ப்ரயோஜனம் உண்டா,

தெரியவில்லை தற்கால சாந்தியாகவாவது நம் கவலையைப் போக்கிக்கொள்ள இதுவரை பார்த்த

பூர்விகர்கள் கதைக்கேதான் போகணும்...

---

## தற்கால ஆசிரியர்மார்களுக்கு

போகணும் என்கிறேனே தவிர, 'பழங்கதையைப் பேசினால் மட்டும் போதுமா? கண்முன் நடக்கிறதற்கு நமக்குத் தெரிந்த நல்ல வழியைச் சொல்லாமலிருக்கலாமா' என்றும் தோன்றுகிறது. அதனால் இக்கால ஆசிரியர்மார்களுக்கே அப்பீல் செய்து கொண்டு பார்க்கிறேன்.

அவர்கள்தானே தற்காலத்திலும் தங்கள் ஜீவனோபாயமாகவே கல்வியை ஏற்றுக்கொண்டிருப்பவர்கள் வேறே வேலை கிடைக்கவில்லை என்பதனால் இதற்கு வந்ததாக இல்லாமல், வருங்காலப் பிரஜைகளின் அறிவை மேம்படுத்தும் கல்வி என்ற உத்தமமான தொழில் தங்களுக்கு வாய்த்திருப்பதன் அருமையை, அருமை பெருமையை அவர்கள் உணர்ந்து ஆசிரியத் தொழிலை ஒரு ஆராதனையாக ஆற்ற வேண்டும். அதோடு, இவ்வளவு நேரம் சொன்னதுபோல் நிஜமான தரத்தைப் பெற்றதாகும்.

குருகுலவாஸம் மாதிரி இந்த ஆசிரியர்கள் ஸதா காலமும் மாணவர்களைக் கூட வைத்துக்கொண்டு வாழவில்லை. ஆனால், கூட வைத்துக்கொண்டு வாழும் போதுதான் ஒரவர் தன்னுடைய வாழ்க்கை உதாரணத்தால் மாணவர்களின் குணாபிவிருத்திக்கு வழி காட்ட முடியும் என்றும், பள்ளி நேரம், அதில் பீரியட்கள் என்றும் நடைமுறை இருந்து அப்படி 'டீச்' பண்ணும்போது, அறிவுக்கு மட்டுமேயான வெறும் பாடத்தை மட்டும் சொல்லிக் கொடுப்பதற்கு அதிகமாக குணாபிவிருத்தி விஷயத்தை எடுத்துப் போட்டுக் கொள்ளுவதற்கில்லை என்றும் தீர்மானித்து விடக் கூடாது.

குருவின் கூடவே வாழும்போது மாணவர் பெறுகிற வாழ்க்கை உதாரணம் ரொம்பவும் கூடுதலானதுதான், ஆக்ஷேபணையேயில்லை. அதனால், ஸ்கூல் நேரத்தில்

மட்டும் மாணவர்கள் பழகும் பல ஆசிரியர்களின் வாழ்க்கையுதாரணம் அவர்களை 'டச்'சே பண்ணாது என்று அர்த்தமில்லை. இளம் உள்ளங்களில், தங்களுடன் கொஞ்சமோ நஞ்சமோ எவ்வளவு பழகுகிறவர்காளாலும் அவர்களின் தரத்தைப் பொறுத்து நல்ல முறையிலோ, கெட்ட முறையிலோ ஒவ்வொரு அளவுக்கு 'இம்ப்ரஷன்' பதிந்து, அந்த 'இன்ஃப்ளூயென்'ஸில் பசங்களும் அதே வழியில் தாங்களும் போகத் தூண்டதல் பெறுவார்கள்.

இக்கால ஆசிரியர்கள் பாடம் சொல்லிக் கொடுக்கும்போதும் மாணவர்கள் பாடத்தை மாத்திரமின்றி, பாடம் சொல்லிக் கொடுக்கிற ஆசிரியரையும்தான் கவனிக்கிறார்கள். பாடம் அவர்கள் மனஸில் பதிகிற மாதிரிதான், அந்த ஆசிரியரின் நடத்தையும் பதிகிறது. பாடத்தைக் கவனிக்காமலும், அது மனஸில் பதியாமலும் போகிற மந்தமான மாணவனும்கூட ஆசிரியரின் நடத்தையை கவனிப்பான், அது அவன் மனஸில் பதியும். 'அப்படி மாணவர்களுக்குப் பதிவது அவர்களை நற்குண. நல்லொழுக்கங்களில் கொண்டு விடவேண்டும். அந்த ரீதியில் நாம் உத்தமமாக வாழ வேண்டும். இல்லாவிட்டால் நமக்கு ஜீவனோபாயம் தருகிற அந்த மாணவ ஜீவர்களுக்குத் தாங்கள் த்ரோஹம் செய்ததாகிவிடும்' என்கிற அளவுக்கு ஆசிரியர்மார்கள் ஆழமாகக் கருதவேண்டும்.

வாழ்க்கையுதாரணம் என்ற முக்யமான அம்சம் ஒரு பக்கம் இருக்கட்டும். பாடம் போதிப்பது என்றே வருகிற அம்சத்திலும் ஆசிரியர்கள் ஏனோதானோ

என்றில்லாமல். அந்தரங்கபூர்வமாகச் சொல்லிக் கொடுக்க வேண்டும், பள்ளிக்கூடத்தில் ஏனோதானோ என்று 'டீச்' பண்ணி விட்டு. அதனாலேயே பசங்கள் தங்களிடம் ட்யூஷன் வைத்துக் கொள்ளும்படிச் செய்து. தங்களுடைய ஸம்பாதியத்தை விருத்தி செய்துகொள்ள ஒரு ஆசிரியர் எண்ணினாரானால் அதைப் போன்ற தர்ம விருத்தமான (தர்மத்திற்கு விரோதமான) பாபம் இன்னொன்றில்லை, புண்ய வசத்தால் கிடைத்திருக்கும் 'டீச்சிங்' வேலையை இப்படிப் பாபகரமாகப் பண்ணிக்கொள்ளலாமா? அந்த மாதிரி (ரீதியில்) நினைப்பதற்கே அவர்கள் பயப்படவேண்டும்,

மற்ற தொழில்களுக்குப் போகிறவர்கள் தாங்கள் படித்த

படிப்பை உபாயமாகக் கொண்டு அந்தத் தொழிலை ஆற்றுகிறார்கள். அநேக உத்யோகங்களில் இருப்பவர்கள் செய்யும் தொழில்களில் அவர்கள் படித்த படிப்பு நிறையவோ, கொஞ்சமோ 'அப்ளை' ஆகிறது. அதோடு ஸரி. படித்த படிப்பு கொஞ்சங்கூடப் பிரயோஜனமாகாத உத்யோகங்களிலும் பலர் இருக்கிறார்கள். பி.எஸ்ஸி. கெமிஸ்டரி படித்துவிட்டு ஏ.ஜி.ஸ் ஆபிஸில் க்ளார்க் என்றால்? இப்படியெல்லாம் இல்லாமல், படித்த படிப்பு அப்புறம் செய்யும் தொழிலுக்கு உபாயமாயிருக்கிறது என்பதற்கும் மேலே, அந்தப் படிப்பே மூலதனமாக இருப்பது ஆசிரியத் தொழிலில்தான். தாங்கள் மாணவர்களாக இருந்தபோது படித்த படிப்பையே ஆசிரியத் தொழிலில் அப்புறம் அவர்கள் தங்களுடைய மாணவர்களுக்க டீச் பண்ணுகிறார்கள். அவர்க்ள ஒரு பக்கம் கற்றுக் கொடுப்பவர்களாக இருந்துகொண்டே மறு பக்கம் கற்போராகவும், ஏற்கெனவே படித்ததையே திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இப்படித் திரும்பத் திரும்ப அதே பாடங்களை அவர்கள் டீச் பண்ணுவதால், அந்தப் பாடங்களிலே அவர்கள் முழுக் கருத்தும் செலுத்தினால் அவர்களுக்கே பழைய பாடங்களிலிருந்து புதுப் புது விஷயங்கள் தெரிய ஆரம்பிக்கும். முக்யமாக, மேல் படிப்பிலே இந்த மாதிரி நடக்கும். மேலே மேலே ரெஃபரென்ஸுகள் பார்த்து, பாடங்களுக்கு மெருகேற்றிக் கொள்ள உதவும், புத்திசாலி மாணவர்கள் கேட்கிற கேள்விகளும் இப்படியே ஆசிரியர் 'ஸப்ஜெக்'டை மேலும் ஆழமாகத் துருவிப் பார்த்துத் தெரிந்து கொள்ள உபகாரம் செய்யும். டீச்சர்களை 'மாஸ்டர்' என்று சொல்கிறோமே, அது நிஜமாகவே பொருந்தும்படி அவர்கள் ஸப்ஜெக்டில் 'மாஸ்டர்' பெற்று விடுவார்கள். அப்படிப்பட்டவர்கள்தான் நன்றாக, தெளிவாக டீச் பண்ணி விஷயத்தை மாணவர்களுக்குள்ளே ஆழமாக இறக்க முடியும்.

ஒரு கதை சொல்வார்கள். பௌராணிகர் ஒருவர் ராஜாவிடம் போய் பாகவதம் சொல்வதாகச் சொன்னாராம். அதைக் கேட்ட ராஜாவுக்கு அவர் எப்போது ராஜமரியாதைக்கும், ஸம்பாவனைக்கும் ஆசைப்பட்டு வந்திருக்கிறாரோ அப்போதே அவர் பாகவதத்தை புத்தியால்தான்

படித்திருக்கிறாரேயன்றி ஹ்ருதயத்தால் படித்து பக்தி - ஞான - வைராக்கியங்களைப் பெறவில்லை என்ற புரிந்துவிட்டது. அந்த மாதிரி புஸ்தக விஷயத்தில், உட்கருத்தில் ஊறாதவர் சொல்லிக கேட்டால் கேட்கிற பேருக்குப் பூர்ணமான ப்ரயோஜனம் கிடைக்காதே என்று பார்த்தான். ஆகையினால், வந்த

ப்ராம்மணருக்கு ஏதோ ஒரு ஸம்பாவனையைப் பண்ணி விட்டு, "இன்னொரு தடவை படித்துப் பார்த்து விட்டு வந்து அப்புறம் உபந்யாஸம் பண்ணுங்கள்" என்றான். பௌராணிகருக்கு அவன் ஏன் அப்படிச் சொல்கிறானென்று புரியவில்லை. ஆனாலும் ராஜாக்ஞை என்பதாலும், அதை நிறைவேற்றினால் நிரம்ப கௌரவம், த்ரவ்யம் எல்லாம் கிடைக்குமே என்பதாலும் அவரும் ராஜா சொன்ன மாதிரி திரும்பிப் போய் இன்னொரு தடவை பாகவதத்தை நுணுக்கமாகப் படித்து விட்டு அவனிடம் வந்தார். இப்போதும் முன் மாதிரியே அவன் அவருக்கு ஒரு ஸம்பாவனையைப் பண்ணி, "இனனொரு தடவை படித்து விட்டும் வாரும்" என்று சொன்னான். அவரும் அதே மாதிரிப் பண்ணினார். ராஜா பழைய பல்லவியையே பாடினான். பௌராணிகரும் முன்போலவே அதற்கு அநுபல்லவி பாடினார். இப்படியே அந்த இரண்டு, மூன்று தடவை மட்டுமில்லை, இருபது தடவை ராஜா அவரை மறுபடி படித்து விட்டு வரும்படி அனுப்பி வைத்து அவரும் அப்படியே பண்ணினார்.

இருபத்தோராவது தடவையும் ராஜா தன் பல்லவியைப் பாடினான். ஆனால் இந்தத் தடவை அவர் அதற்கேற்க அநுபல்லவி பாடவில்லை.

ரொம்ப நாளாகியும் அவர் வராததால் ராஜா என்ன, ஏது என்று பார்த்து வருவதற்காக அவர் கிருஹத்துக்கு ஆள் அனுப்பினான்.

போன ஆள் திரும்பி வந்து, "இந்தத் தடவை அவர் பாகவதம் பாராயணம் பண்ணியுவுடன் அவருக்க பக்தி - ஞான - வைராக்யங்கள் வந்து விட்டதாம். 'ராஜாவுமாச்சு, ராஜஸதஸூமாச்சு, வீடுமாச்சு, வீட்டு மநுஷ்யளுமாச்சு! என்ற விரக்தியாகச் சொல்லிக் கொண்டு, பாகவதநுபவம் பெறவேண்டும் என்று தாபத்தோடு காட்டுக்குப் போய்

விட்டாராம்" என்றான்.

ராஜாவுக்கு த்ருப்தியாயிற்று. 'இப்போது பௌராணிகர் பாகவதத்தின் 'ஸ்பிரிட்'டில் ஊறிவிட்டார். இப்போதே அவருக்க பாகவதம் சொல்லத் தக்க பக்வம் வந்திருக்கிறது. அப்படிப்பட்டவர் சொல்லிக் கேட்டால்தான் கேட்கிற பேருக்கும் ப்ரயோஜனம் கிடைக்குமாதலால் இப்போது அவரைத் தேடிக்கொண்டு தானே போய் ச்ரவணம் செய்யவேண்டும்' என்ற ராஜா தீர்மாணித்தான்.

அந்தப்படியே காட்டுக்கப் போனான். தான் தேடித் தேடிப் போன ராஜா தன்னைத் தேடிக்கொண்டு வந்திருப்பதையும் ஒரு பொருட்டாக பௌராணிகர் நினைக்காமல் பகவத் சிந்தனையிலேயே தானிருந்தார். ராஜா அவரை நமஸ்கரித்து பாகவதம் உபதேசம் பண்ணுமாறு ப்ரார்த்தித்தான்.

தன்னை இப்படி பகவத்பரமாத் திருப்பிவிட்ட உபகாரி அவன்தானே என்பதால் அவரும் நன்றியோடும், அருளோடும் அவன் மனஸிலே நன்றாக இறங்குகிற முறையில் அவனுக்கு பாகவதம் சொன்னார்.

இப்படிக் கதை.

(சிரித்து) அந்தப் பௌராணிகர் தம்முடைய ஸப்ஜெக்டான புராணத்தைப் படித்து அதன் 'ஸ்பிரிட்' என்கிற உட்கருத்திலேயே தோய்ந்தபோது பௌராணிகத் தொழிலையே விட்டுவிட்ட மாதிரி, ஆசிரியர்களும் தங்கள் ஸப்ஜெக்டை ஆழ்ந்து படித்து 'டீச்சிங் ஜாபை'யே விட்டு விட வேண்டும் என்ற அர்த்தத்தில் இந்தக் கதையை நான் சொல்லவில்லை. (மீண்டும் நெடுநேரம் சிரிக்கிறார்)

சொல்கிறவர், சொல்லும் விஷயத்தின் உட்கருத்தைப் புரிந்து கொண்டு சொன்னால்தான் கேட்கிறவரின் மனஸிலும் அது நன்றாகப் புகுந்து பூர்ண ப்ரயோஜனத்தைக் கொடுக்கும் என்று ராஜா நினைத்தானே, அதை ஆசிரியர்களுக்கெல்லாம் 'அன்டர்லைன்' பண்ணிக் காட்டுவதற்காகவே சொன்னேன், பௌராணிகர் ஆழ்ந்து பாராயணம் பண்ணியது பக்தி - ஞானப் புஸ்தகமாயிருந்ததால் அவர் தொழிலை விட்டார். ஆசிரியர்கள் படிக்கிற புஸ்தகங்கள் அப்படியில்லையே! மத போதனையாக 'டீச்' பண்ணுவதாக இருந்தால்கூட அந்த அளவுக்குத் தீவிரமாக சாதாரண நிலையில் இருக்கப்பட்ட

நாமெல்லாம் போய்விட மாட்டோம்! படிக்கப் படிக்க புத்தியாலேயே மேலும் மேலும் நன்றாகத் தெரிந்து கொள்வதோடு ஹ்ருதயத்தாலும் ஒரு அளவுக்கு, ஒரு கணிசமான அளவுக்கே தெரிந்து கொண்டு, அப்படித் தெரிந்து கொண்டதைக் கேட்பவருக்குள்ளேயும் நன்றாக இறக்குகிற சக்தியை ஸம்பாதித்துக் கொள்வதோடு நாமெல்லாம் நின்று விடுவோம். அதுவே போதும். அதுவே பெரிசு. அதற்கு மேல் எதிர்பார்ப்பதற்கில்லை.

மொத்தத்தில் விஷயம், பசங்கள் மட்டும்தான் பாடத்தை பக்தி - ச்ரத்தையுடன் படிக்கவேண்டும் என்றில்லை. வாத்தியார்மார்களும், பழைய பாடத்தையே எத்தனை தடவை திரும்பத் திரும்பத் படித்து, சொல்லிக் கொடுத்தாலும் அந்தக் கார்யத்தை பக்தி ச்ரத்தையுடன் செய்து, சொல்கிற விஷயத்தின் உட்கருத்தைத் தாங்களும் நன்றாகப் புரிந்து கொண்டு கேட்கிற மாணவர்களுக்கும் நன்றாகப் புரியப் பண்ணவேண்டும். இதிலே, திரும்பத் திரும்ப படிப்பதால் வாத்தியார்மார்களே புதிது புதிதாகத் தெரிந்து கொள்வதற்குக் காலேஜ் மாதிரியான மேல்படிப்புக் கட்டத்திலேயே ஜாஸ்தி 'ஸ்கோப் உண்டு.

இன்னும் ஒரு முக்யமான விஷயம்: ஆசிரியர்கள் தாங்கள் பெற்ற அறிவையெல்லாம் மாணவர்களுக்கம் ஊட்டத்தான் பாடுபட வேண்டும் என்றாலும் அதில் ஒரு ஜாக்ரதை வேண்டும். பசங்களுக்க விஷயங்களை எடுத்துச் சொல்லி அது அவர்களுக்க உள்ளே போகும்படிப் பண்ணுகிற கார்யத்தில் ரொம்பவும் பொறுமையும், நிதானமும் வேண்டும். பதட்டமும், அவஸரமும் கூடவே கூடாது. தெரிந்ததையெல்லாம் வதவதவென்று பசங்களின் மூளையிலே திணிக்கப் பார்த்தால் ஒன்றுமே உள்ளே இறங்காமல் எல்லாமே பிதுங்கிக்கொண்டு வெளியில் வழிந்து விடுவதாகத்தான் முடியும்.

இங்கே ஆசிரியர்களெல்லாம் உண்டியின் உதாரணத்தை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். நம் கை நிறைய, பை நிறையக் காசு இருந்தாலும் உண்டியில் அப்படியே கொட்டிவிட முடியுமா? அதிலுள்ள சின்ன த்வாரத்தின் வழியாக ஒவ்வொரு காசாகத்தானே போட வேண்டும்? முதலில் போட்டது சிக்காமல் உள்ளே போய் விட்ட

அப்புறம், அதுவாகப் போகாவிட்டால் உண்டியைக் குலுக்கி அதைப் போகப் பண்ணிய அப்புறம்தானே அடுத்த காசைப் போடவேண்டும்? அப்படித்தான், ஒவ்வொரு விஷயத்தின் ஒவ்வொரு அம்சத்தையும் ஒவ்வொன்றாக மாணவர்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களுடைய அறிவுக்குள்ளே செலுத்தவேண்டும். சொன்ன ஒவ்வொரு அம்சமும் சிக்காமல் அவர்களுக்குள்ளே போய் விட்டதா என்பதைக் கேள்வி

கேட்டு நிச்சயப்படுத்திக்கொண்டு, அப்புறமே அடுத்த அம்சத்துக்குப் போக வேண்டும். ஒன்று உள்ளே போகவில்லையென்றால் நிதானம் இழக்காமல், கோபப்படாமல், மாறாக அவர்களக்கு உத்ஸாஹம் ஊட்டுகிற வகையிலே மறுபடியும் தெளிவாக எடுத்துச் சொல்லி உள்ளே போகப் பண்ணவேண்டும். அப்புறம் அடுத்த அம்சம்.

மந்த புத்திப் பசங்களுக்கக் கற்றுக் கொடுப்பது ச்ரமம்தான். ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் ஆசிரியர்மார்கள் தாங்கள் மேற்கொண்டிருக்கிற இந்தத் தொழில் வித்யாதானம் என்கிற புண்யமான ஸேவை; இதனால்தான் இளம் பிராயத்தினர் உரியபடி மனிதர்களாக உருவாகிறார்கள்; தேசத்தின், லோகத்தின் எதிர்கால க்ஷேமமே இதைத்தான் சார்ந்திருக்கிறது என்பதை 'ரியலைஸ்' பண்ணிவிட்டால் தொழிலில் உள்ள ச்ரமங்களை ச்ரமமாகவே நினைக்க மாட்டார்கள். பொறுமையையும், ப்ரியத்தையும் ஒருபோதும் கைவிடாமலிருப்பார்கள்.

எதிர்காலத்தை உருவாக்கப் போகிறவர்களை உருவாக்குவதில் ஒரு முக்யமான பங்கு ஆசிரியர்களுக்கே இருப்பதால்தான் இதையெல்லாம் சொன்னேன். எதிர் காலம் ஒரு பக்கம் இருக்க, தற்காலத்தில் கல்வித்திட்டம் என்பது அறிவு, குணம் ஆகிய இரண்டிலும் தரமானதாக அமைவதற்கும் அவர்கள்தான் போராட வேண்டும் என்பதில் ஆரம்பித்தேன். பழங்காலத்தில் அப்படிப்பட்ட தரமான கல்வித் திட்டமே நடைமுறையிலிருந்ததைத்தான் முக்யமாகச் சொல்லிக் கொண்டிருந்தேன்.

---

## மதச்சார்பற்ற பாடங்கள்

ஆத்ம ஸம்பந்தம், மத ஸம்பந்தம், தர்ம ஸம்பந்தம் இல்லாத ஸெக்யூலர் ஸப்ஜெக்ட்களை மட்டுமே போதித்த குருமார்கள் பூர்வ காலத்திலும் இருந்திருக்கி -றார்கள். ஆனால் அவர்களில் நாஸ்திகம் சொல்லிக் கொடுத்தவர்கள் தேடித் தேடிக் கண்டுபிடிக்கும்படியாகத்தான் எங்கேயோ இரண்டொருத்தர் இருந்தார்கள். சூதாட்டம் சொல்லித் தந்தவர்களும் அப்படித்தான். திருட்டுத்தனம் சொல்லித் தந்த ரொம்ப ரொம்ப ரொம்ப ஸ்வல்பமானவர்களும் யார் கண்ணுக்குமே அகப்படாமல் (சிரித்து) திருட்டுத்தனமாகத் தான் கற்றுக் கொடுத்தார்கள்! மற்ற கௌரவமான ஸெக்யூலர் ஸப்ஜெக்ட்களான கணிதம், ஆயுர்வேதம், பௌதிக - ரஸாயனாதிகள், சில்ப - சித்ர - ந்ருத்ய - கீதாதிகள், தநுர்வேதம் முதலியவற்றை மாத்திரம் சொல்லிக் கொடுத்தவர்களும் பூர்வ காலத்திலிருந்தே இருந்திருக்கிறார்கள். ஆனால் இவர்களெல்லாமுங்கூட, ஸெகன்டரியாக தர்மாதர்மங்களையும் சொல்லிக் கொடுக்காமலில்லை. அதாவது moral instruction - நன்னெறி போதனை என்பது - இல்லாமல் ஸெக்யூலர் படிப்புங்கூட நடக்கவில்லை. ஏதோ பாடமாகச் சொல்லிக்கொடுத்து அதோடு விடுவது என்றில்லாமல், நிஜ வாழ்க்கையிலேயே மாணவன் நன்னெறியுடன் ஒழுகினாலொழிய அவனுக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை என்ற தள்ளியே இருக்கிறார்கள்.

நிகழ்காலக் கல்வி முறையிலோ, வெள்ளைக்கார ஆட்சியின் போது பேருக்காவது இருந்த 'மாரல் இன்ஸ்ட்ரக்ஷனும் நீர்ததுப் போய்விட்டிருக்கிறது. 'மாரல்' என்கிறபோது அதைத் தொட்டுக்கொண்டு தெய்வம், மதம் என்று வந்துவிடப் போகிறதே, தங்களுடைய 'முற்போக்கு' எனப்படுகிற கொள்கையான ஸெக்யுலரிஸம் அதனால் பாதிக்கப்பட்டு ஜனங்கள் எங்கே நல்லபடியாக ரூபமாகி விடுவார்களோ என்ற பயத்தினால் ஸ்வதந்திர ஸர்கார் இப்படிப் பண்ணிவிட்டது! வாத்தியார்களே பசங்களை நன்னெறிக்கு நேரெதிரான அரசியல், அராஜகம், ஸ்த்ரி விஷயம் ஆகியவற்றில் தூண்டி விடுவதாகவுங்கூட ஒரொரு இடங்களிலிருந்து ரிப்போர்ட் வருகிறது.

இந்தத் தமிழ்த் தேசத்தில் அதோடுகூட வெள்ளைக்காரர்

காலத்திலும் இருந்து வந்த ஸம்ஸ்க்ருதப் படிப்பைக் குழியை வெட்டிக் குமுறப் புதைக்க எத்தனை உண்டோ அத்தனையும் வேறே பண்ணி, இந்தப்பெரிய தேசத்தின் நாகரிகத்திற்கும், அதுமட்டுமில்லாமல் இப்போது வாய்ப்பேச்சிலே மட்டும் முழக்கிக் கொண்டிருக்கிற ஒருமைப்பாட்டுக்கும் முதுகெலும்பாக இருந்த அத்புதமான பாஷை ஜனங்களுக்குக் கிடைப்பதற்கில்லாமல் பெரிய வஞ்சனை பண்ணியிருக்கிறது. மத த்வேஷமும், ஒரு ஜாதியிடமுள்ள த்வேஷமுந்தான் இதற்குக் காரணமென்பது பஹிரங்க ரஹஸ்யம். ஆனால் ஸம்ஸ்க்ருதம் மதப் புஸ்தகங்கள் மட்டும் இருக்கிற பாஷையில்லை. மத ஸம்பந்தம் என்று சொல்ல முடியாத அநேக தத்வப் புஸ்தகங்களும் அந்த பாஷையில்தான் இருக்கின்றன. லோகமே கொண்டாடுகிறபடி அறிவுக்கு விருந்தாக அவை இருக்கின்றன. காவ்ய - நாடகாதிகளும் வெளி தேசங்களிளெல்லாம் தர்ஜுமா பண்ணி வைத்துக்

கொள்ளும்படியான இலக்கிய அழகுகளோடு யதேஷ்டமாக இருக்கின்றன. அது மாத்திரமில்லை. ஆர்ட், ஸயன்ஸ் என்கிற கலைகள், பல விதமான விஞ்ஞானத்

துறைகள் எல்லாவற்றிலும் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய அநேக ஸூக்ஷ்மங்களைத் தெரிவிக்கிற புஸ்தகங்களும் இருக்கின்றன.ராஜநீதி என்கிற பாலிடிக்ஸ் -ஸ்டேட் க்ராஃப்ட், ஆயுர்வதேம் என்கிற வைத்தியம் என்றிப்படி ஒரு துறை பாக்கியில்லாமல் எல்லாவற்றிலும் உசந்த புஸ்தகங்கள் இருக்கின்றன. அது எப்படி மத பாஷை மட்டுமில்லையோ, அதே மாதிரி குறிப்பிட்ட ஜாதி பாஷையுமில்லை. காஷ்மீரிலிருந்து கன்யாகுமரி வரை எல்லா ஜாதிப் படிப்பாளிகளுக்குமே அது பாஷையாயிருந்ததால்தான் இந்தப் பரந்த உபகண்டத்தையே அது அறிவு ரீதியில் ஒற்றுமைப்படுத்தி நிஜமான ஒருமைப் பாட்டை உண்டாக்கிற்று. விவேகாநந்தர் இருந்தார். எங்களைப்போலப் 'பத்தாம் பசலி சாஸ்த்ரக் குடுக்கை' களோடு சேர்க்காமல் புரட்சிக் கருத்தும் முன்னேற்ற மனப்பான்மையும் கொண்ட ஒருவராக அவரை இப்போது புரட்சியாளர்களும் ஸ்தோத்திரிக்கிறார்கள். அவரக்கு புத்தரிடமும் புத்த மதத்திடமும் அபிமானம் உண்டு. அப்படிப்பட்டவரே, இந்த தேசத்தின் உசந்த கல்ச்சருக்கு - கலாசாரத்துக்கு - பெரிய

ஹானி எப்போது ஆரம்பித்ததென்றால் பௌத்தர்கள் ஸம்ஸ்க்ருதத்தைத் தள்ளி விட்டுப் பாலி பாஷையிலே தங்கள் புஸ்தகங்களை எழுதிப் பிரசாரம் பண்ணினபோதுதான் என்ற அளவுக்குச் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்ட ஒரு மஹா பெரிய குலதனத்தை நம்முடைய தமிழ் ஜனங்களுக்கு இல்லாமல் பண்ணியுள்ள விபரீதத்துக்கு விமோசனம் உண்டா, எப்படி, எப்போது என்பதே என் விசாரமாயிருக்கிறது...

பழங்காலத்தில் தர்ம போதனை இல்லாமல் படிப்பு மட்டும் என்று இருக்கவேயில்லை. போதித்தவர்கள் அதற்கேற்ற தார்மிக சீலங்களோடு இருந்தார்கள்.

---

## குரு; ஆசார்ய

ஆனாலுங்கூட, ஸெகன்டரியாகவே தர்மத்தைச் சொல்லி, முக்யமாக ஸெக்யுலர் ஸப்ஜெக்ட்டுகளையே ஒருவர் போதித்தார் என்றால் அவருக்கு போதகர்களில் ஸெகன்டரி இடமே தர்மசாஸ்திரத்தில் கொடுத்திருக்கிறது.

'குரு'. 'ஆசார்யர்' என்ற வார்த்தைகளுக்குப் பல தினஸாக லக்ஷணம் சொல்லும்போது, ஆசார்யர் என்பவரைவிட குருவுக்கு ஏற்றம் கொடுத்துச் சொல்வதுண்டு. ஆனால் இன்னொரு அர்த்தத்தில் குருவை விட ஆசார்யருக்கே ஏற்றம் தந்திருக்கிறது. 'மநு ஸ்ம்ருதி'யிலேயே அப்படித்தான் இருக்கிறது. சம்பளத்தை எதிர்பார்க்காமல் வேத - வேதாந்தங்கள் கற்றுக்கொடுப்பவர் 'ஆசார்யர்', சம்பளத்துக்காக வேதவித்யா போதனை தருபவர் 'உபாத்யாயர்' என்று சொல்லிவிட்டு, அப்புறம் இவர், தான் காசு ஸம்பாதிப்பதற்காகச் சொல்லிக் கொடுக்கிறாரென்றால் சிஷ்யன் காசு ஸம்பாதிப்பதற்காகவே ஸெக்யுலர் ஸப்ஜெக்ட்கள் சொல்லித் தருகிறவரே 'குரு' என்றும் அதில் இருக்கிறது. இந்த டெஃபனிஷன் சிஷ்ட ஸமூஹம் (மேன்மக்கள்) உள்பட லோகத்தால் அப்படியே ஒப்புக்கொள்ளப்பட்டது என்று சொல்ல முடியாது. எல்லாவிதமான போதகர்களுக்கும் 'குரு' என்று பேர்

கொடுப்பதாகவும், 'குரு'வை உச்சஸ்தானத்தில் வைத்துக்கொண்டாடுவதாகவும் பஹு காலமாக இருந்து வந்திருக்கிறது. ஆனாலும் டெக்னிகலாகப் பாகுபாடுகள் பண்ணி வார்த்தை போட வேண்டும் என்கிறபோது தர்மம், பக்தி, ஞானம் சொல்லிக் கொடுத்துப் பரலோகத்திற்கு வழிகாட்டுபவரை 'ஆசார்யர்' என்றும், கொஞ்சம் moral instruction - உடன் இஹலோக ஜீவனத்திற்கு வழிகாட்டுபவரை 'குரு' என்றும் சொல்கிற வழக்கும் சில விஷயஜ்ஞர்களிடம் இருந்து வந்திருக்கிறது. பலவிதமான போதகர்களுக்கும் 'குரு' என்று பொதுப் பெயர் கொடுத்து அப்படிப்பட்ட குருக்களில் பரலோகத்திற்கு வழிகாட்டும் 'ஆசார்ய'னே சிரேஷ்டமானவன் என்பார்கள்: "ஆசார்ய : ச்ரேஷ்டா குருணாம்."

'ஆசாரம்' என்பதான, வழிவழியாக வந்துள்ள சாஸ்த்ரீய ஒழுக்கத்திற்கும் 'ஆசார்ய' என்பதற்கும் ஸம்பந்தம் இருப்பது அந்த வார்த்தைகளின் சப்த ஒற்றுமையிலிருந்து எவருக்கும் தெரியும். சாஸ்த்ரீய ஒழுக்கத்தை, இன்னும் அதற்கு மேலே ஆத்ம சாஸ்த்ர லக்ஷியமான அநுபவத்தையே தன்னுடைய ஜீவித உதாரணத்தால் லோகத்திற்குக் கண்கூடாகக்காட்டுகிறவனே பூர்ணமான ஆசார்யன்.

---

**அத்யக்ஷகர்; அத்யாபகர்**

'கண்கூடு' என்றதும் 'கண்காணிப்பு' என்று நினைப்பு போய், அப்படியே 'அத்யக்ஷகர்' என்பதில் கொண்டு விடுகிறது! அதுவும் டீச்சருக்கு உள்ள அநேகப் பெயர்களில் ஒன்றாக வழங்கிவருவதுதான்! 'அத்யக்ஷகர்', 'அத்யக்ஷர்' என்று இரண்டு தினுஸாயும் சொல்லலாம். பாலன் - பாலகன் என்கிற மாதிரி ஒரு வார்த்தையில் நடுவே 'க' சேர்த்துச் சொல்வதுண்டு.

'அத்யாபகர்' என்பதும் (போதகருக்கான) இன்னொரு பெயர். 'அத்யக்ஷர்', 'அத்யாபகர்' என்ற இரண்டும் 'அத்ய' என்று ஆரம்பித்தாலும் அர்த்தத்தில் ரொம்ப வித்யாஸம். 'அக்ஷி' என்ற 'கண்'ணை வைத்து 'அத்யக்ஷர்', கண்ணுக்கு நேர

இருப்பது 'ப்ரத்யட்சம்', எவருடைய கண்ணுக்குக் கீழே, அவர் கண்காணிக்கும்படிக் கார்யம் நடக்கிறதோ அவர் அத்யக்ஷகர். அவர் கண்காணிப்பவர். 'கங்காணி' என்று தொழிலாளிகள் சொல்வது இதிலிருந்து இருக்கலாம். 'ஸூபர்வைஸர்' என்பது அதற்கு நேர் மொழிபெயர்ப்பு. 'ஓவர்ஸீயர்' என்பதுந்தான். சிஷ்யனைக் கண்காணித்து நல்ல வழியில் செலுத்துவதால் வாத்தியாருக்கு அத்யக்ஷகர் என்று பேர்.

'அத்யாபகர்' என்றால் 'அத்யயனம்' செய்விக்கிறவர். அத்யயனம் என்றால் பொதுவாகக் கல்வி என்கலாம். குறிப்பாக வேதக் கல்விதான் அது. குறைந்தபக்ஷம், பொதுக் கல்வியாயிருந்தால் வட வேதமரபு சார்ந்ததாக இருந்தால் 'அத்யயனம்'. 'அயனம்' என்றால் ஒரு நிர்ணயமான பாட்டையில் போவது. வாழ்க்கைப் பாதையில், ஆத்மாவைக் கடைத்தேற்றிக் கொள்கிற பாதையில் சிறப்பாக அழைத்துச் செல்லும் கல்வி 'அத்யயனம்', வேதத்தை வழிதப்பாமல் follow பண்ணி நெட்டுருப் போடுவதால் 'வேத அத்யயனம்' என்கிறோம். இவ்விதமான கல்வியை அளிப்பவர் 'அத்யாபகர்'...

குரு லக்ஷணம் என்று சொல்ல ஆரம்பித்தேன். இன்னின்ன சீலங்கள். கார்யங்கள் உள்ளவரவர் என்று சொல்லியிருக்கலாம். ஆனால் 'குரு'வுக்கு synonyms -ஆக (அதே பொருள் கொடுப்பதாக) அநேகப் பெயர்கள் 'ஆசார்யர்', 'தேசிகர்' என்றெல்லாம் கொடுத்து, இந்தப் பெயர்கள் எப்படி ஏற்பட்டன என்று லக்ஷணம் கொடுத்திருக்கிறதே, இவற்றைச் சொல்லியே அவருடைய சீலங்களையும் கார்யங்களையும் தெரிவிக்க முடிந்த மட்டும் தெரிவிக்கலாமென்று தோன்றி ஏதோ சொல்லிக்கொண்டு போகிறேன்...

குரு லக்ஷண ச்லோகத்தைப் பாதி எக்ஸ்ப்ளெய்ன் பண்ணிக் கொண்டிருக்கும்போதே மற்ற Synonymகளும் ஒவ்வொன்றாக வந்து விழுந்து கொண்டிருக்கின்றன! கு-ரு என்ற அட்சரங்களைப் பிரித்துப் பிரித்து அர்த்தம் பண்ணும் போது, ' 'உ'காரம் விஷ்ணு, அவரக்கு ஸஹஸ்ரநாமத்தில் குரு என்று பெயருண்டு. அங்கே ஆசார்ய பாஷ்யப்படி, எல்லா ஜீவர்களையும் பிறப்பித்த பிதா என்பதாலும் அவர் குரு

என்ற பெயருக்குரியவராகிறார்' - என்றெல்லாம் பார்த்துக் கொண்டு போனபோதே இத்தனை கதையும் வந்து சேர்ந்திருக்கிறது! பாக்கிக் கதையும் இதே மாதிரி அங்கங்கே சேர்த்து அளந்து விடுகிறேன்!

---

## குரு லட்சணங்கள் சிஷ்யனுக்கும் ஏற்படும்

க-காரம் ஸித்தி ப்ரதம் என்பதால் குரு மோட்ச பர்யந்தம் பலவிதமான ஸித்திகளை அளிப்பவரென்றாகிறது. ஸித்தி என்றால் மாயா மந்த்ர சித்து இல்லை, ஸரியாகச் சொன்னால் அது மட்டுந்தான் என்றில்லை, ஏனென்றால் இந்த அணிமாதி ஸித்திகளையும் (சித்துக்களையும்) ஒரு குரு கற்றுக் கொடுத்தாலும் கொடுக்கலாம். ஆனால் 'ஸித்தி' என்றால் பொது அர்த்தம் எந்த ஒரு லட்சியத்தையும் அடைந்துவிட்ட நிலை என்பதே. குரு, ஸர்வ ஸித்தி ப்ரதர் - அதாவது எல்லாவித வாழ்க்கை லட்சியங்களையும சிஷ்யன் அடையுமாறு செய்பவர் என்றே ககாரம் காட்டுகிறது. ர என்பது, ர-காரம் என்காமல் ரேபம் என்கவேண்டியது, பாப ஹாரகம் என்றதால் சிஷ்யனுடைய பாபத்தை குரு போக்கி அவனை சுத்தனாக்குபவர் என்று தெரிவிக்கப்படுகிறது.

அந்த இரண்டு எழுத்துடனும் சேரும் உ-காரம் விஷ்ணு. அதுவே அவ்யக்தம் என்பதால் குருவின் என்ன லக்ஷணம் தெரிவிக்கப்படுகிறது? விஷ்ணு சப்தம் ஸர்வ வ்யாபகத்தைக் குறிப்பதால் குரு ஸர்வவ்யாபி என்றாகிறது. ஸர்வம், வியாபிப்பது என்பதால், அது த்வைத லோகத்தைக் குறித்த விஷயமாகிறது. கருணையினாலே குருவின் அநுக்ரஹ சக்திலோகம் முழுவதையும் all-embracingஆக வ்யாபித்திருப்பதை இது (விஷ்ணு சப்தம் அவருக்குப் பொருத்தப்படுவது) hint பண்ணுகிறது.

குரு ஏதோ ஒன்றாக இருக்கிறாரென்றால் சிஷ்யனையும் அந்தப்படியே ஆக்கிவிடுவார் என்று அர்த்தம். ஸித்தி தருவது, பாபத்தைப் போக்குவது ஆகிய கார்யங்களை சிஷ்யன் விஷயமாகச் செய்யும் அவர் சிஷ்யனக்கும்

all-embracing அநுக்ரஹ சக்தி, உபதேச சக்தி தந்து தம் மாதிரியே குருவாக்குகிறார் என்று இங்கே நீட்டி அர்த்தம் பண்ணிக் கொள்ளணும்.

அப்புறம் அவ்யக்த ப்ரஹ்மமாக அவரைச் சொன்னதையும் இதேபோல, சிஷ்யனுக்கும் அந்த நிலையைத் தந்து ப்ரஹ்மாநுபூதியில் இருக்கச் செய்கிறவரென்று அர்த்தம் பண்ணிக்கணும்.

---

## 'ஆசார்ய' பதச் சிறப்பு

ஆக, இந்த ச்லோகப்படி குரு என்ற வார்த்தைக்கு, அந்த வார்த்தைக்கான ஸ்தானத்தை வஹிக்கிற ஆஸாமிக்கு பரமாத்கர்ஷம் - ஏற்றத்திலெல்லாம் பெரிய ஏற்றம் - கொடுத்திருக்கிறது.

ஆனாலும் நாம் நம் மூல புருஷரை (ஸ்ரீ சங்கரரை) 'ஆசார்யாள்', 'ஆசார்யாள்' என்றுதானே சொல்கிறோம்? ஆகையால் அந்த வார்த்தைக்கே மறுபடி வந்து அதன் உயர்வைச் சொல்கிறேன்.

'ஆசார்ய' பதத்திற்கு, 'சாஸ்திரங்களை நன்றாக அலசிப் பார்த்து, அந்த ஆசாரப்படித் தானும் ஒழுகி, பிறத்தியாருக்கு அவற்றை போதித்து அவர்களையும் சாஸ்திராசாரத்தில் நிலை நிற்கச் செய்கிறவர்' என்று டெஃபனிஷன் இருக்கிறது.

ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தாத் ஆசாரே ஸ்தாபயத்யபி 1

ஸ்வயம் ஆசரதே யச்ச தம் ஆசார்யம் ப்ரசக்ஷதே 11

இது ஸம்ஸ்க்ருதம் - சாஸ்த்ரம் தெரிந்த எல்லாருக்கும் தெரிந்திருக்கக்கூடிய டெஃபனிஷன்.

'ஸ்வயம் ஆசரதே' என்று இதில் வருவதுதான் ஜீவநாடியாயிருந்து 'ஆசார்ய' என்ற வார்த்தைக்கு உத்கர்ஷம் கொடுப்பது. அதாவது, தான் என்ன போதிக்கிறானோ அதைத் தானே பண்ணிக் காட்ட வேண்டும், ஜீவித உதாஹரணம் - தன் வாழ்க்கையாலேயே உதாரணம் -

படைக்க வேண்டும். அப்படிப் பண்ணினால்தான் - சிஷ்யனுக்குச் சொல்கிறபடி அந்த குருவே செய்து காட்டினால்தான் - அவன் சொல்கிறதற்கு ஜீவ சக்தி உண்டாகி, கேட்கிறவனையும் அந்த வழியில் போகச் செய்யும். இல்லாவிட்டால் காதுக்கு ரம்யமாக, மூளைக்கு ரஞ்ஜிதமாக இருப்பதோடு க்ஷணிகமாக (க்ஷண காலமே இருப்பதாக) முடிந்துபோகும், சிஷ்யனின் வாழ்நாள் பூரா அவனை guide பண்ணாது. சிஷ்யனுக்குச் சொல்கிற வழியில்தானே போகிற அப்படிப்பட்ட குருதான் ஆசார்யன்.

புத்தருக்கு அந்த மதத்தில் அநேகம் பேர் கொடுத்துச் சொல்வதில் முக்யமான ஒன்று 'ததாகதர்' என்பது. அதற்கு அநேகம் அர்த்தம் சொல்வார்கள். நேர் அர்த்தம் - 'ததா': 'அப்படியே'; 'கதர்': 'போனவர்'. அதாவது உலகத்துக்கு என்ன வழி சொன்னாரோ அதில் தாமே போனவர்.

நம் ஆசாரியரும் அப்படித்தான்! "ஸ்வயம் ஆசரதே" பண்ணிக்காட்டிய ததாகதர்தான் அவரும்! ஆனால் பெரிய வித்யாஸம், புத்தர் பூர்வ சாஸ்த்ரப்படி வழி சொல்லி அந்த வழியிலே போனவரில்லை, ஆசார்யாள்தான் அப்படிச் சொன்னார், செய்தார். தற்காலத்தில் சாஸ்திரம் பிடிக்காததால் புத்தர் ஜாஸ்தி favourite ஆகியிருக்கிறார்!...

தர்ம சாஸ்திரத்தில் ஆசார்ய லக்ஷணம் சொல்லும் போது, 'பூணூல் போட்டு, வேதாத்யயனம் பண்ணுவித்து, அப்புறம் கல்ப சாஸதிரம் ஈறான எல்லா வேதாங்கங்களையும், அதோடு நின்றுவிடாமல் 'ரஹஸ்யம்' என்று சொல்கிற வேதாந்த சாஸ்த்ரமான உபநிஷத் முடிய ஸகலமும் உபதேசிக்கிறவரே ஆசார்யர்' என்று இருக்கிறது.

---

## உபாத்தியாயர்

இக் காலத்தில், நமக்குத் தெரிந்த குரு, ஆசார்யர் எல்லாம் ஸ்கூலில், காலேஜில் பாடம் சொல்லித் தரும் டீச்சர்தான். அவரை 'வாத்தியார்' என்று சொல்கிறோம். நமக்குக் கர்மாக்கள் பண்ணி வைக்கிற சாஸ்திரிகளையும் 'வாத்தியார்'

என்கிறோம். இவரைப் 'புரோஹிதர்' என்றும் சொல்கிறோம். 'வாத்தியார்', 'புரோஹிதர்' என்ற வார்த்தைகள் பற்றிக் கொஞ்சம்...

'உபாத்யாயர்' என்பது திரிந்துதான் 'வாத்தியார்' என்று ஆகியிருக்கிறது. குருவுக்கு தக்ஷிணை தர வேண்டும் என்று ஸத்ஸம்ப்ரதாயத்தில் இருக்கிற போதிலும் நிஜமான குரு என்பவர் அதை நினைத்து டீச் பண்ணுகிறவரில்லை. அவர் ரேட்ஃபிக்ஸ் பண்ணிவைத்து அந்தப்படிவசூலித்தே மாணவனை வகுப்புக்கு அநுமதிப்பவர் இல்லை. வித்யை பரவவேண்டுமென்ற நோக்கத்திலேயே சொல்லிக் கொடுப்பவர்தான் 'குரு', 'ஆசார்யர்', 'அத்யாபகர்', 'அத்யக்ஷர்' என்றெல்லாம் கூறப்படுகிறவர். அப்படியில்லாமல் சம்பளத்திற்காகவே சொல்லிக் கொடுக்கிறவர்தான் 'உபாத்யாயர்' என்று ஒரு டெஃபனிஷன் உண்டு. இங்கே பலவிமான டீச்சர்களில் 'இன்ஃபிரிய'ரான (தாழ்வான) இடம் பெறுபவராகவே 'உபாத்யாய'ரைத் தெரிந்துகொள்கிறோம். ஆனால் வேறே ஒருவிதமான 'டெஃபனிஷன்' அவருக்கும் உசந்த இடமே கொடுக்கிறது. அது என்னவென்றால், 'உபேத்ய தஸ்மாத் அதீயத இதி உபாத்யாய:' என்பது.

இந்த டெஃபனிஷனில் ஒரு ட்ராமாவையே அடைத்து வைத்திருக்கிறது Factual-ஆக மட்டும் அர்த்தம் பண்ணாமல் கதாபாத்ரங்களைக் காட்டி அவர்கள் மூலமாக அர்த்தம் தெரிவிக்கும் டெஃபனிஷன்!

ஒரு நல்ல குருவை - சம்பளத்தையே நினைத்துச் சொல்லித் தருகிற ஒருத்தர் இல்லை, உத்தம குரு ஒருவரை - ஒரு பிதா தன்னுடைய புத்ரனுக்குக் காட்டி அவரிடம் குருகுலவாஸத்தில் விடுவதற்கு முன் புத்ரனிடம் சொல்லும் வாசகமாக இதை டெஃபனிஷன் காட்டுகிறது.

'உபேத்ய' என்றால் 'கிட்டே போய் இருந்துகொண்டு' - குருவைக் காட்டி 'இவரிடம் போய்க் கூட இருந்து கொண்டு குரு குல வாஸம் பண்ணிக்கொண்டு' என்று அப்பாக்காரர் சொல்கிற வார்த்தை. 'தஸ்மாத்': 'இவரிடமிருந்து'; 'அதீயத': கற்றுக்கொள்ளு', 'இவரோடு வாஸம் பண்ணி இவரிடமிருந்து வித்யையைக் கற்றுக் கொள்' என்ற பித்ருவாசகமாக, அந்தப் பிதா, அவருடைய புத்ரன், அவன்

அடையவேண்டியஆசார்யன் என்ற மூன்று பாத்திரங்களை வைத்து ஒரு குட்டி ட்ராமாவாக இந்த டெஃபனிஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஒருபாலன் எவர்கிட்டே போயிருந்து கொண்டு, அதாவது ஸொந்த வீட்டில் வஸிப்பதை விட்டு குருகுலவாஸம் பண்ணி, வித்யாப்யாஸம் பெறணுமோ அவரே 'உபாத்யாயர்' என்று இதற்கு நாம் பொருள் கொள்ளவேண்டும்.

---

## வழிகாட்டும் 'தேசிகர்'

இப்படி ஸ்வாரஸ்யத்திற்காகச் சுற்றி வளைத்து ட்ராமா போட்டு லக்ஷணம் சொல்லாமல் Factual-ஆக டீச்சருக்கு லக்ஷணம் கொடுக்கும் ஒரு டெஃபனிஷனும் இருக்கிறது:'திசதி வித்யாம் இதி தேசிக:' கல்வியைத் தருவதுதானே டீச்சரின் லக்ஷணம்? அதை நேராக, சுருக்கமாக இந்த வாசகம் தெரிவிக்கிறது. 'வித்யாம்' - கல்வியை, 'திசதி' - தருகிறார், 'இதி' - என்பதால், 'தேசிகர்' - தேசிகன் எனப்படுகிறார். இங்கே குரு என்று பொதுப்படச் சொல்கிறவருக்கு உள்ள அநேகப் பெயர்களில் 'தேசிக' என்பது வந்துவிடுகிறது.

வேதோபநிஷதங்களில் (வேதத்திலும் உபநிஷத்திலும்) 'தேசிகர்' என்ற வார்த்தை போடாவிட்டாலும், 'தேசிக'பத டெஃபனிஷன் எந்தக் கார்யத்தை, function-ஐ அவருக்குக் கொடுத்திருக்கிறதோ அதையே குருவின் கார்யமாக, function-ஆகச் சொல்லியிருக்கும் இடங்கள் அவற்றில் உண்டு.

'தேசிக' என்பதற்குள்ள டெஃபனிஷன்களில் ஒன்று 'திசை காட்டுபவனே தேசிகன்' என்று தெரிவிக்கிறது. ஆத்ம லக்ஷ்யத்தை அடைய எந்த வழியில் போகணும் என்று திசை காட்டும் கார்யம். குரு வழிகாட்டுகிறவர், சிஷ்யன் அவரைப் பின்தொடர்ந்து போகிறவன் என்பது பொதுவாகவே சொல்லும் விஷயந்தானே?

---

## உபநிஷத்தில் 'வழிகாட்டி' குரு

வழி தெரியாதவனுக்கு அதைச் சொல்பவர் என்பதைக் கதாரூபமாகவே ஒரு உபநிஷத் கொடுத்திருக்கிறது- சாந்தோக்யோபநிஷத். 'கண்ணைக் கட்டிக் காட்டிலே விடறது' என்கிறோமே, அதையே ஸம்பவமாகச் சொல்கிற கதை.

கந்தார தேசம் (Gandhara) என்று ஒன்று. காந்தாரம் என்று சொல்வதுண்டு. அந்த தேசத்தைச் சேர்ந்தவன் தான் த்ருதராஷ்ட்ரனின் பத்னியான காந்தாரி - Gandhari ; Kandhari இல்லை. இங்கே நாம் தப்பாக ga-வை ka-ஆக்கின மாதிரி அப்புறம் அந்த தேசத்திலேயே பண்ணித்தான் Gandhara-த்தை Kandahar (காண்டஹார்) ஆக்கி விட்டார்கள் என்கிறார்கள். அப்படியானால் அது Partition-க்கு (பாகிஸ்தான் பிரிவினைக்கு) முன்னாலிருந்த முழு இந்தியாவுக்கு வெளியிலே உள்ள ஆஃப்கானிஸ்தான் என்றாகிறது. சில ஆராய்ச்சிக்காரர்கள், அது இல்லை கந்தாரம், தற்போது பாகிஸ்தானுக்குப் போய்விட்ட வடகோடிப் பகுதியான பெஷாவரைச் சுற்றியிருக்கும் பிரதேசந்தான் ஆதி கால கந்தாரம் என்கிறார்கள். அது இருக்கட்டும்.

அந்த தேசத்தில் ஒரு பணக்காரன். அவனை ஒரு கொள்ளைக்காரன் 'கிட்னாப்' பண்ணி அவனுடைய கண்ணைக் கட்டிக் காட்டுக்கு இழுத்துக்கொண்டு போய்க் கொள்ளை அடிக்கிறான். கொலை பண்ணாமல் கொள்ளையாடு நிறுத்திவிடுகிறான். அப்புறம் அவனை அந்த நடுகாட்டில் விட்டுவிட்டு ஓடியே விடுகிறான். எந்தப் பக்கம் போனால் ஊர் வரும் என்றே தெரியாத பணக்காரன் - பணத்தைப் பறிகொடுத்து இப்போது 'பாப்ப'ராகி விட்டவன் -நாலு திசையும் திரும்பித் திருப்பி, ஸஹாயத்க்கு யாராவது வரமாட்டார்களா என்று, பாவம், லபோ லபோ என்று கத்துகிறான். "என்னைத் திருட்டுப்பய கண்ணைக் கட்டி இங்கே இழுத்துண்டு வந்து விட்டுட்டுப் போய்ட்டானே!காப்பாத்த யாருமில்லையா, இல்லையா?" என்று கத்துகிறான்.

அப்போது ஒரு வழிப்போக்கன் அநத்ப் பக்கம் வருகிறான். அவன் அந்த ஆஸாமியுடைய கண்கட்டை அவிழ்த்துவிட்டு, கந்தார தேசத்திற்கு அவன் திரும்பிப் போவதற்கு இன்ன திசையிலே போய் அப்புறம் இன்ன, இன்ன திசையிலே திரும்பணும் என்று தீர்க்கமாக எடுத்துச் சொல்கிறான். அதைக் கேட்டு ஆஸாமியும் வழி தெரிந்து கொள்கிறான்.

அந்தப்படியே போய், காடு முடிந்துவிட்டு நாட்டுப் பகுதியை அடைகிறான். நாட்டுப் பகுதியில் கிராமங் கிராமமாக விசாரித்துக்கொண்டே நடையைக்கட்டி முடிவாக கந்தாரம் போய்ச் சேருகிறான்.

"இந்த மாதிரிதான் ஆசார்யனைப் பெற்ற ஒருவன் அறிவு பெறுகிறான்" என்று உபநிஷத்தல் முடித்திருக்கிறது. "ஆசார்யனைப் பெற்றவன்தான் அறிவு பெறமுடியும்" என்பது உள்ளர்த்தம் என்று தெரிந்துகொள்ளும்படியாக வாசகம் இருக்கிறது.

இப்படி உபநிஷத் கதை - Parable; அதாவது படிப்பினை உள்ள கதை.

கதையில் 'இந்த மாதிரி' என்று சொன்னது எதை? அந்த மாதிரி வாழ்க்கையில் ஆசார்யனால் அறிய உண்டாகிறது என்றால் எப்படி?

உபநிஷத் அதை விளக்கிச் சொல்லவில்லை. கதை சொல்லிவிட்டு, 'அந்த

மாதிரி ஆசார்யவான் அறிவு பெறுகிறான்' என்று மட்டும் 'க்ரிப்டிக்'காகச் சொல்லி முடிந்து விடுகிறது.

நான் கொஞ்சம் எக்ஸ்ப்ளெய்ன் பண்ணிப் பார்க்கிறேன்:

'எந்த மாதிரி' என்றால் கிட்னாப் ஆன ஆஸாமி அப்புறம் வழிப்போக்கன் ஊருக்கு வழி சொல்லத் தெரிந்துகொண்டு அங்கே திரும்பிப் போய்ச் சேர்ந்தானல்லவா, 'அந்த மாதிரி' ப்ரஹ்மமாக இருக்கப்பட்ட நிலையிலிருந்து மாயையினால் கிட்னாப் செய்யப்பட்டு ஒரு ஜீவன் ஸம்ஸாரக் காட்டிற்குக் கடத்தப்படுகிறான். கொள்ளைக்காரன் பணத்தைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி மாயை இவனுடைய ஞானத்தைப் பறிமுதல்

பண்ணிவிடுகிறது. அஞ்ஞானத்தினால் இவனுடைய அறிவுக் கண்ணைக் கட்டிப்போட்டுவிடுகிறது. ஆனால் ஒரு பெரிய வித்யாஸம் - அதோடு திருட்டுப் பயல் ஓடிவிட்ட மாதிரி மாயை ஓடாது!

'ஸம்ஸார காட்டிலிருந்து மீண்டு மறுபடி எப்படி மோட்ச பதம் - அதுதான் கதையில் வந்த சொந்த ஊரான கந்தாரம் - சேர்கிறது? வழி தெரியவில்லையே!இதற்கு யார் வழி சொல்லுவார்கள்?' என்று ஜீவன் நாலா திசையிலும் முயற்சி பண்ணிப் பார்க்கிறான். புத்தியால் பலவிதமாகவும் யோஜித்துப் பார்க்கிறான் என்று அர்த்தம். மோட்ச தாஹம், ஞான தாஹம் ஜீவனுக்கு வந்துவிட்டதோ இல்லையோ? அப்படி வந்தாலும் அவன் ஸ்வய புத்தியால் அதைத் தணித்துக்கொள்வதற்கு ஈச்வரன் விடுவதில்லை. தன்னுடைய அநுக்ரஹத்திற்கே, Channel என்கிறார்களே அப்படி வடிகாலாக குரு என்னும் ஒருத்தரை அனுப்பி வைத்தே அந்த தாஹத்தைத் தணிப்பான்.

உபநிஷத் கதையில் காட்டிலே போன வழிப்போக்கன்தான் அந்த குரு.

குரு - ஆசார்யர் - வருகிறார். அஞ்ஞானக் கண் கட்டை அவிழ்த்துவிட்டு, ஜீவன் ப்ரஹ்மமாகவே இருந்த ஸ்வஸ்தானமான, சொந்த ஊரான, மோட்சத்திற்கு ஞானமார்க்கம் என்ற வழியைச் சொல்கிறார்.

---

## ஒரே குருவா? பல குருமாரும் உண்டா?

இங்கே அந்த ஒரு குருவே முழுக்க வழிகாட்டிக் கொண்டுபோய் சிஷ்யனை - குரு வந்து விட்டதால் முன்னே 'ஜீவன்' என்று சொல்லப் பட்டவன் 'சிஷ்யன்' ஆகி விடுகிறான்!அந்த சிஷ்யனை - மோக்ஷத்தில் சேர்ப்பதாகச் சொல்லவில்லை. கதையில் வழிப்போக்கன் கந்தார ஆஸாமிக்கு வழியைச் சொல்லிவிட்டு, அதோடு போய்விடுகிறான். ஆஸாமி தானாகவே அந்தப்படி க்ராமம், க்ராமமாக அதற்கு மேலேயும் விசாரித்துக்கொண்டே போய்

ஊர் சேர்ந்தான் என்றுதான் இருக்கிறது. இப்படி விசாரித்து அறிந்த அவனை 'பண்டிதன்', 'மேதாவி' என்று அடைமொழி கொடுத்துச் சொல்லியிருக்கிறது. அதாவது அவன் ஸரியாக ஊர் போய்ச் சேர்ந்ததற்கு இந்த யோக்யதாம்சங்களும் ஸஹாயம் செய்ததாகச் சொல்லாமல் சொல்லியிருக்கிறது.

இதை ஜீவன் ஞானவழியில் போய் மோக்ஷத்தை அடைகிற விஷயத்தில்

பொருத்திப் பார்த்தால், முதலில் ஒரு குரு, அவர் பொதுவாக வழி சொல்லிவிட்டு முடித்து விடுகிறார், அப்புறம் ஜீவன் அந்தப்படி அநுஷ்டானங்களில், ஸாதனைகளில் ஒவ்வொன்றாக முன்னேறி - அதுதான் கந்தார ஆஸாமி க்ராமம், க்ராமமாக முன்னேறியது - அந்தந்த கட்டங்களிலேயும் அநுஷ்டாதாக்களை (நல்ல அநுஷ்டானமுள்ளோரை) விசாரித்து மேலும் விஷயங்கள் தெரிந்துகொண்டு போய்ப் போயே லக்ஷ்ய ஸித்தி பெறுகிறான் என்று ஆகும். அந்த அநுஷ்டாதாக்கள் எல்லாரும் உபகுருக்கள் என்ற ஸ்தானம் பெற்றுவிடுகிறார்கள். முதல் குரு - முக்யமானவர் அவர்தான், அவர் - அஞ்ஞானக் கண் கட்டை எடுத்த விட்டதால் இவனுக்கு ப்ரஹ்மஞானமே வந்துவிடாவிட்டாலும் நல்ல அறிவு விழிப்பும், அதாவது பண்டிதத் தன்மையும், சொல்லிக் கொடுத்ததை த்ருடமாகப் புத்தியில் நிறுத்திக் கொள்கிற மேதாவித்தன்மையும் உண்டாகி, அந்த இரண்டின் பலத்தால் இவன் அத்தனை உபகுருமார்கள் உபதேசித்ததையும் தப்பாமல் கடைப்பிடித்து ஸித்தி ஸ்தானத்தைச் சேருகிறான் என்பதாகவே அந்த கதை ஒப்புவமை ஜீவன் விஷயத்தில் அர்த்தம் கொடுக்கும். அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது.

பண்டிதனாக, மேதாவியாக சிஷ்யன் ஆகிறான் என்று ஏன் சொல்லவேண்டும் என்றால், சிஷ்ய லட்சணம், அவனுக்கான யோக்யதாம்சம் என்ன என்று காட்ட வேண்டும் என்பதற்காகவே இருக்கலாம்.

ஒரே குருவோடு முடிக்காமல் பல பேரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டே step by step -ஆக முன்னேறியதாக ஏன் சொல்லவேண்டும்? 'வழிப்போக்கன் கண்கட்டை அவிழ்த்துவிட்டு, முழுசாக வழியும் நன்றாகச் சொல்லிக்

கொடுத்தான்' என்று சொல்லியிருக்கலாமே!அல்லது இன்னுங்கூடப் பொருத்தமாக, காட்டிலே கந்தார ஆஸாமியைப் பார்த்துக் கட்டவிழ்த்துவிட்டவன், தானே 'லீட்' பண்ணி வழிகாட்டிக் கொண்டபோய் அவனை ஊரில் கொண்டு சேர்த்தான், என்று சொல்லியிருக்கலாமே!

இதைப்பற்றி யோஜித்துப் பார்த்ததில் எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் இதிலே, 'ஆசார்யனைப் பெற்றவனுக்கே ஞானம்';அதாவது 'ஆசார்யனின் உபதேசத்தினாலேயே ஒருவன் ஞானம் பெற முடியும்' என்று இருப்பதுதான்

எல்லோருக்கும் பொதுவான உபதேசமாகத் தோன்றுகிறது. அங்கங்கே கிராமந்தோறும் பலபேர் வழியை நிச்சயப்படுத்தினாலும், முதலில் ஒருத்தன் சொன்னதைத்தான் அவர்கள் உறுதிப்படுத்தியிருக்கிறார்கள். அந்த முதலாமவன் தான் கண் கட்டை அவிழ்த்தவனும். ஆக, அப்படி ஒரு ஆசார்யன், ஒரே ஆசார்யன் அவச்யம் என்று எடுத்துக்கொள்வதூன் பொதுவாகச் செய்யவேண்டியது.

ஆனாலும் சில பேருக்கு ஸம்ஸ்கார விசேஷத்தால், முக்யமாக ஒரு குரு வழி சொல்லித் தருவது, ஆனாலும் வேறே ஒரு, அல்லது பல உபகுருமார்கள் அந்த சிஷ்யனுடைய ஸாதனா மார்க்கத்தில் ஒவ்வொரு ஸ்டேஜில் அவனுக்கு ஸஹாயம் செய்வது என்றும் இருக்கிறது. நம் கதை உதாஹரிக்கிற மாதிரியான அந்த சிஷ்யர்களுக்கு முதலிலே ஒரு குரு வழி சொல்லிக் கொடுப்பார், அப்புறம் வேறே உபகுருமார்கள் அதற்கு அநுகூலமாகவே அந்த சிஷ்யர்களின்

ஸாதனையின்போது ஒவ்வொரு ஸ்டேஜிலும் அடுத்த ஸ்டேஜ் போக வழிகாட்டி முடிவாக முதல்வர் சொன்ன லக்ஷ்ய ஸ்தானத்தில் அவர்களைச் சேர்ப்பதாக இருக்கும்.

உபகுரு என்று இரண்டாவது ஸ்தானம் கொடுப்பதற்கில்லாமல் ஸம ஸ்தானம் கொடுக்கக் கூடியவர்களாகவே சில பேருக்கு - பிற்காலத்தில் மஹான்களாகவே ஆனவர்களிலுங்கூடச் சில பேருக்கு - ஒன்றுக்கு மேற்பட்ட குருமார்கள் இருந்திருக்கிறார்கள்.

ஆரம்பத்தில் வேதம் சொல்லிக் கொடுத்து, முக்யமாக கர்மத்திற்கும் தர்மத்திற்குமே குருவாக சிஷ்யனின் க்ருஹஸ்தாச்ரமம் முடிகிறவரையில் இருக்கும் ஒருவர் 'வித்யாகுரு' என்பவர். பிற்பாடு அந்த வழிக்கு மேலாக ஸந்நியாஸ ஆஸ்ரமம் தருகிற 'ஆச்ரம' குரு என்கிறவர் இன்னொருவர். இப்படி இரண்டு பேர். இப்போது நான் சொன்னது இந்த இரண்டு விதமானவர் பற்றியில்லை. ஸந்நியாச்ரமம் தந்து ப்ரஹ்ம வித்யா உபதேசிக்கும் குருவாகவே ஒன்றுக்கு மேற்பட்டவர் இருந்திருப்பதைத் தான் சொல்கிறேன்.

(சிறிது சிந்தித்து) ஆரம்பகால வேதவித்யா குரு பற்றியுந்தான் கொஞ்சம் சொல்கிறேனே குருகுலத்திற்கு அதிபராக இருந்தவர்தான் அந்த வேதவித்யாகுரு. ப்ரஹ்மசாரி சிஷ்யர்களுக்கு அவரே முக்ய குரு. ஆனாலும் அவரே எல்லாப் பாடமும் நடத்தாமல் மற்ற குருமாரும் நடத்துவதாகவும் இருந்திருக்கிறது. 'தைத்திரீய'த்தில் 'சீக்ஷாவல்லி'யில் சிஷ்யனின் வித்யாப்யாஸத்தை முடிப்பித்து அவனை வீட்டுக்கு அனுப்பிவைக்கிறபோது குரு கூறும் வசனங்களிலிருந்து அநேக குருமார்கள் அவனுக்குப் படிப்பித்ததாகத் தீர்மானமாகத் தெரிகிறது. பஹு வசனத்திலேயே - 'ப்ளூர'லிலேயே 'பன்மையிலேயே' - பேசிக்கொண்டு போகிறார்.

'ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ர'த்தில் ஒவ்வொரு வேதத்தையும் அதிலே நிபுரணராயிருக்கும் ஒவ்வொரு குருவிடம் அத்யயனம் பண்ணவேண்டும் என்றும், அப்போது அந்த ஒவ்வொருவரிடமும் இருக்கும்போது அவரிடமே அதீனமாக, அதாவது சரணாகதனாக இருந்து கொண்டிருக்கவேண்டும் என்றும் இருக்கிறது. இப்படிப் பார்த்தால், நாலு வேதங்களில் அநேகமாக அத்யயனத்திலேயே இல்லாத அதர்வத்தை விட்டு விட்டாலும், ஒருத்தனுக்கே மூன்று குருமார் என்று ஆகிறது.

கொஞ்சம் தள்ளியே, இன்னுங்கூட 'ரிலாக்ஸ்' பண்ணி, அந்த தர்ம சாஸ்த்ரப் புஸ்தகத்திலே, ஒரு சிஷ்யனுக்கு இஷ்டமான எந்த வித்யையையும் ஒரே குருவிடமிருந்து நன்றாகப் புரிந்துகொள்ள முடியாவிட்டால் வேறே குருவிடம் போய் க்ரஹித்துக் கொள்ளலாம் என்றும் இருக்கிறது.

வித்யா குரு என்கிற இவர், ஒரு சிஷ்யன் வித்யாப்பயாஸம் முடித்த பின்னும் பூர்ணமாகத் தனக்குப் பராதீனன் என்றே நினைத்து ஆக்ஞைகள் செய்வதை நிறுத்திவிடவேண்டும் என்றுங்கூட அந்த ஸூத்ரத்தில் இருக்கிறது. நம்முடைய தட்சிண தேசத்தில் ரொம்பவும் அநுஷ்டானத்திலுள்ள இந்த ஸூத்ரந்தான்.

ஏதோ கொஞ்ச நஞ்சம் இருக்கிற குருபக்தியையும் சிதிலப்படுத்துவதற்காக

இதையெல்லாம் சொல்லவில்லை. குரு பக்தி ரொம்ப, ரொம்ப, ரொம்ப அத்யாவச்யந்தான். ஆனால் ஸந்யாஸாச்ரமியான சிஷ்யன் தவிர மற்ற பேருக்கு அதற்கும் வரைமுறை கட்டியிருக்கிறது என்றே காட்ட வந்தேன்.

வித்யா குருவிடமிருந்து ஆச்ரம குருவுக்குப் போகலாம்.

---

## மஹான்களுக்கும் பல குருமார்

நம்முடைய அத்வைத ஸம்பிரதாயத்தில் நாம் நம் ஆசார்யாள் பகவத்பாதாளுக்கு அடுத்தபடியாக நமஸ்காரம் பண்ணக் கடமைப்பட்டிருப்பவர் வித்யாரண்ய ஸ்வாமிகள். அவருக்கு வேதாந்த குருமார்களாகவே சங்கரானந்தர், பாரதி தீர்த்தர், வித்யா தீர்த்தர் என்று மூன்று பேர் இருந்திருப்பது அவரே தம்முடைய வெவ்வேறு புஸ்தகங்களில் ஆரம்பித்தில் சொல்லியிருக்கும் குரு வந்தன ச்லோகங்களிலிருந்து ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. அத்வைத சாஸ்த்ரம் முறையாகப் படிப்பவர்களெல்லாம் இன்றைக்கும் அவச்யமாகப் படிக்கும் 'பஞ்சதசீ' என்ற புஸ்தக ஆரம்பத்தில் அவர் சங்கரானந்தருக்கு குரு வந்தனம் செலுத்தியிருக்கிறார். வித்யாரண்யாள் பூர்வாச்ரமத்தில் கர்நாடக ராஜ்யாதிபதிகளான ஹரிஹரனுக்கும், புக்கராயனுக்கும் குருவாக, மந்த்ரியாக இருந்தவர். அப்போது மாதவாசார்யர் என்று அவருக்குப் பெயர். ராஜாங்கத்தில் அவர் வஹித்த உயர்ந்த ஸ்தானத்தினால் அந்தப் பெயரும் அவர் பிற்காலத்தில் வித்யாரண்ய ஸ்வாமிகள் (என்னும் துறவியாக) ஆனவிட்டும்

பழக்கத்தில் இருந்து வந்தது. ஸ்தானத்தால் மட்டுமில்லை, அந்த ஸ்தானத்திலிருந்த கொண்டு அவர் நம்முடைய மதத்திற்குச் செய்திருக்கிற உபகாரம் அல்ப ஸ்வல்பமானதில்லை. ஆசார்யாள் எழுபத்திரண்டு துர்மதங்களை நிராகரணம் பண்ணி அத்வைத வேதாந்தத்தை முடிவாகக் கொண்ட வேத மதத்தை நிலை நாட்டினார் என்றால், வித்யாரண்யாளோ மந்த்ரி மாதவாசார்யராக இருந்தபோது வடதேசத்திலிருந்து தட்சிணத்திலேயும் புகுந்து ஆக்ரமித்துக் கோவில்களைத் தரைமட்டமாக்கி வந்த துருக்க மதஸ்தரை முடிறியடிக்கவும், ஹிந்து மத்திலேயே அத்வைத வித்யைக்கு மாறாக கர்நாடகத்தில் பெருக்கப் புறப்பட்ருந்த த்வைத ்ஸித்தாந்தம், வீர சைவ ஸித்தாந்தம் ஆகியவற்றை ஒரு எல்லைக்குள் உட்படுத்தவும் பரமோபகாரம் செய்தவர். தம்முடைய ஸஹோதரரான ஸாயணர் என்பவரைக் கொண்டு வேதம் அத்தனைக்கும் பாஷ்யம் எழுதுவித்து அதற்குத் தாமும் Co-author என்கிற மாதிரி நிறைய ஸஹாயம் செய்து நம்முடைய ஸநாதன தர்மத்துக்கு ஈடில்லாத கைங்கர்யம் செய்தவர். மந்த்ரி என்பதால் மதியமைச்சராகவும், ராஜகுருவாகவும் இருந்து ஹரிஹரனையும், புக்கராயனையும் நல்லபடி தூண்டிவிட்டு வழிகாட்டி வைதிக ஹிந்து ஸாம்ராஜ்யம் ஏற்படுத்தித் தழைக்கும்படிச் செய்தவர். ஆகையினால் மாதவாசார்யர் என்ற பெயரும் பஹுஜன - வித்வத்ஜன ப்ரஸித்தமாக இருந்தது. அந்தப் பெயரிலேயே வழங்குகிற வித்யாரண்யாளின் புஸ்தகங்கள் சிலவும் இருக்கின்றன. அவற்றிலிருந்து பாரதி தீர்த்தர் என்ற ஸந்நியாஸ ச்ரேஷ்டரும் அவருடைய இன்னொரு குரு என்று தெரிகிறது. குறிப்பாக இப்போது என் நினைவுக்கு வருகிற அப்படிப்பட்ட ஒரு புஸ்தகம் மாதவாசார்யரின் - மாதவ வித்யாரண்யாளின் - 'ஜைமிநீய ந்யாயமாலா விஸ்தரம்'. "பாரதீ தீர்த்த யதீந்த்ர க்ருபாம் அவ்யாஹதாம் லப்த்வா" என்பதாக, தாம் அந்த ஸ்வாமிகளின் இடையறாத க்ருபையை அடைந்ததை அந்தப் புஸ்தக ஆரம்பத்தில் சொல்லியிருக்கிறார்.

'ஜீவன் முக்தி விவேகம்' என்கிற புஸ்தகாரம்பத்திலேயும் முடிவிலேயும் வித்யாதீர்த்தர் என்கிற யதிச்ரேஷ்டரை 'வித்யாதீர்த்த மஹேச்வரர்' என்று

சிறப்பித்துச் சொல்லி வந்தனம் செலுத்தியிருக்கிறார்.

பன்னிரண்டு முக்யமான உபநிஷத்துக்களை எடுத்துக் கொண்டு ஒவ்வொன்றின் தாத்பர்யத்தையும் தெரிவிப்பதாக 'அநுபூதி ப்ரகாசிகா' என்ற புஸ்தகம் அவர் எழுதியிருக்கிறார். அதில் ஒவ்வொரு அத்யாய முடிவிலும் 'வித்யாதீர்த்த மஹேச்வர'ரைச் சொல்லி, அவரிடம் ஒவ்வொரு விதமான அநுக்ரஹத்தை ப்ரார்த்திக்கிறார். அவற்றிலொன்றில் வித்யாதீர்த்தரைத் தம்முடைய 'முக்ய குரு' என்று சொல்லியிருக்கிறார். பல குரு தமக்கு உண்டு. அவர்களில் இவரே முக்யம் என்று சொல்வதாகத்தானே அர்த்தம் ஏற்படுகிறது?

இவர்களெல்லாம் ஸந்நியாஸ குருக்கள். அது தவிர ஸர்வஜ்ஞ விஷ்ணு என்பவரையும் தம்முடைய குருவாகச் சொல்லியிருக்கிறார் - எல்லா மத ஸித்தாந்தங்களையும் நடுநிலையோடு எடுத்துச்சொல்லி அவர் எழுதியிருக்கும்

'ஸர்வ தர்சன ஸங்க்ரஹம்' என்ற 'டைஜஸ்'டில்.

தத்தாத்ரேயர் ரொம்பப் பெரியவர். வேதாந்தத்திலும் குரு, ஸ்ரீவித்யா ஸம்ப்ரதாயத்திலும் குரு, யோக ஸித்தர்களுக்கும் குரு என்று இருப்பவர். த்ரிமூர்த்தி ஸ்வரூபமானவர். அவர் தமக்கு இருபத்துநாலு குருக்கள் என்று சொல்வதாக பாகவதத்தில் வருகிறது. ஆனால் அப்படி அவர் மண்ணு, காற்று, ஸமுத்ரம் முதலிய அசேதனங்கள், சிலந்தி, விட்டில்பூச்சி, குளவி, தேனீ முதலிய பூச்சிகள், யானைகள் முதலிய ம்ருகங்கள், வேடன், தாஸி என்று நாம் யாரையெல்லாம் குருவாக - சிஷ்யனாகக்கூட - நினைக்கமாட்டாமோ அப்படி இருபத்து நாலு பேருக்கு குருஸ்தானம் கொடுத்துச் சொல்லியிருக்கிறார். அந்த ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு அம்சத்தைத் தாம் படிப்பினையாக எடுத்துக் கொண்டு அதனாலேயே அவர்களை குரு என்று சொல்கிறார்.

ஆகக்கூடி, அவர் ஸஹஜமாகத் தமக்கு இப்படி அநேக குருமாரைச் சொல்வதிலிருந்தே அது ஸதாசாரத்தில் இருந்து வந்த வழக்கந்தான் என்று தெரிகிறதல்லவா?

---

## பதிவிரதமும், குருவிரதமும்

"குரு என்றால் அவரிடமே தன்னைப் பூர்ணமாக ஒப்புக்கொடுத்துவிட்டு சரணாகதி என்று கிடக்க வேண்டாமா? பல பேரிடம் அந்த மாதிரித் தன்னைப் பிய்த்துப் பிய்த்துக் கொண்டு முடியுமா? சரணாகதியைப் பங்கு போட்டுக் கொடுக்க முடியுமா? ... சொல்ல ஸங்கோசமாகத் தானிருக்கிறது, ஆனாலும் சொல்கிறேன்.. பல பதிகளிடம் ஒருத்தி பாதிவ்ரத்யத்துடன் (கற்புடன்) இருக்க முடியும் என்றால் எப்படி? அப்படித்தானே ஒருத்தனுக்கே பல குரு என்பதும்?" என்றிப்படிக் கேட்பதுண்டு.

ஒரே குரு என்று சரணாகதி பண்ணிவிட்டால் ரொம்ப ரொம்ப ஸரிதான். ஆனால் அப்படிப் பண்ணாததால் பதிவ்ரதத்திற்கு தோஷம் என்கிறாற்போல குருவ்ரதத்திற்கு தோஷம் என்றாகாது. ஒரு ஸ்த்ரீக்கு அப்பா, அம்மா, கூடப் பிறந்தவர்கள், மாமனார், மாமியார், பிறந்தகத்து - புக்ககத்து பந்துக்கள், பரம ப்ரியமான அவளுடைய ஸொந்தக் குழந்தைகள் என்று பல உறவுக்காரர்கள் இருக்கவில்லையா? ஒரு உத்தம ஸ்த்ரீ அந்த எல்லாரிடமும் ப்ரியாமாயிருந்து கொண்டு அவர்களுக்குச் செய்யவேண்டியதையெல்லாம் நன்றாகச்செய்வாள். ஆனாலும் பதி என்ற உறவு தனிதானே? அவனிடந்தானே அவள் சரணாகதி என்றே கிடப்பது?

பல உறவுக்காரர்கள் மாதிரி பல குருக்கள் அவர்களிலே பதி மாதிரி முதல் ஸ்தானம் வஹிக்கிறவராக ஒருத்தர் - 'முக்ய குரு' என்று வித்யாரண்யாள் சொன்னவர். அவரொருவரிடந்தான் சரணாகதி என்பது பிய்த்துப் பிய்த்துப் பல பேரிடம் இல்லை.

மற்ற பந்துக்களிடமும் ப்ரியம் மாதிரி எல்லா குருக்களிடமும் மரியாதை, பக்தியான ப்ரியம். அதனால் மாமனார் - மாமியார் முதலியோருக்கும் ஒரு ஸ்திரீ கீழ்ப் படிகிறது போல இவர்களுக்கெல்லாமும் கீழ்ப்படிந்து நடப்பது.

கோவிலில் அநேக ஸந்நிதிகளில், ஒவ்வொன்றிலும் ஒரு ஸ்வாமி. அகத்துப் பூஜையிலும் ஆதி சாஸ்த்ரங்கள் சொல்லி, அப்புறம் ஆசார்யாளும் புத்துயிரூட்டிக் கொடுத்த பஞ்சாயதன பூஜையில் ஐந்து ஸ்வாமி. எல்லாவற்றிடமுமே

தான் பக்தி என்றாலும் இஷ்ட தெய்வம் என்று ஒன்று, அதனிடமே சரணாகதி என்று இருக்கோல்லியோ? அந்த மாதிரி பல குருமார்களிடம் பக்தி செலுத்திக் கொண்டே முக்ய குருவாக ஒருவரிடம் மட்டும் ஆத்ம ஸமர்ப்பணம்.

ஏன் பல குரு வருகிறார்கள் என்றால், பரலோகத்துக்கு வழி சொல்லித் தரும் வித்யையிலேயே பல கிளைகள் இருக்கின்றன. ஆத்ம சாஸ்த்ரம் என்ற ஒன்றுக்குள்ளேயே உபாஸனை என்ற branch-குள் எத்தனை branch-கள் என்பதற்கு சாந்தோக்யம் ஒன்றைப் பார்த்தால் போதும். இப்படி அநேக கிளை சாஸ்த்ரங்கள், வித்யைகள் இருப்பதில் ஒவ்வொரு குரு ஒவ்வொன்றில் ஸ்பெஷலைஸ் பண்ணியிருப்பார். நமக்கு அகத்து டாக்டர் என்று ஒருத்தர், அவர் சொல்லியே பல ஸ்பெஷலிஸ்ட்களிடமும் போவது என்று இருக்கிறதோ இல்லையோ? அப்படி ஒரு முக்ய குரு, அநேக உபகுருமார்கள்.

க்ளாஸ் வாத்யர் என்றே ஒருத்தர் இருக்கிறார். அவர் இங்க்லீஷோ,

கணக்கோ எடுக்கிறார். ஸெகண்ட் லாங்க்வேஜுக்கு வேறே ஒரு வாத்யார்,

ஹிஸ்டரி, ஜாகரஃபி, ஸயன்ஸ் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருத்தர் என்று வருகிறார்களோல்லியோ!முக்ய குரு - க்ளாஸ் வாத்யார், உபகுருமார் - வேறே ஸப்ஜெக்ட்கள் எடுக்கிற வாத்யார்கள்.

வேறே விதமாகவும் உண்டு, இங்கே வாய்ப்பாட்டு வித்வானம் பக்க வாத்தியங்களும் மாதிரி முக்ய குருவும், உபகுருக்களும். முக்ய குரு சொல்லிக் கொடுக்கிற ஸப்ஜெக்டே நமக்கு நன்றாக ஏறிப் பூர்ணமாக ஆகும்படி போஷித்துக் கொடுப்பவர்களாக உபகுருமார். பக்க வாத்யக்காரர்களில் ஃபிடில்காரர் அதே ராகம், பாட்டு தாளத்துக்குத்தான் வாசிக்கிறார். ம்ருதங்கக்காரர் அதே தாளத்துக்குத்தான் வாசிக்கிறார். அது வாய்ப்பாடகர் பாடுவதற்கு இன்னும் சோபை தந்து கான ரஸத்தை பூர்த்தி பண்ணி நமக்குள்ளே ஏற்றுகிறது. அப்படி முக்ய குருவின் ஸப்ஜெக்டைப் பண்ணித்தர உபகுருமார்.

உபகுருமார்களின் உபதேசத்தோடு கலந்து கலந்து எடுத்துக் கொள்ளும்படியாகவே முக்ய குருவின் உபதேசங்கள் இருப்பதுண்டு. முக்யமாக சாதத்தை வைத்துக்கொண்டு அதோடு போட்டுக்கொள்ள, தொட்டுக்கொள்ள அநேக வ்யஞ்ஜனக்ஙள் மாதிரி!(சிரித்து)நாக்கைச் சப்புக் கொட்டிக்கொண்டு சாப்பிடும்படியாக எள்ளுகாய்ப் பொடியும் கொத்ஸூம் இருந்தாலும் 'ஸாது' இட்லிதான் 'மெய்ன்' என்கிற மாதிரி ஒரே சாந்தமாக, ஸிம்பிளாக முக்ய குரு மூல தத்வத்தை உபதேசித்து -வாயில் உபதேசம் என்று பண்ணுவதேகூட இங்கே குறைவாக இருக்கலாம். அப்படிப் பண்ணி -நம்முடைய அபக்வ ஸ்திதியில் அது உள்ளே போகாததால் விவரமாக சாஸ்திரங்களிலிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் கேட்டுக்கொண்டு அதோடு இதைக் கலந்தாலே உள்ளே போவதாகவும் உண்டு.

ஒருத்தருக்கு முக்ய குருவாக இருப்பவரே இன்னொருத்தருக்கு உபகுருவாக இருக்கலாம். நமக்கு ஜாகரஃபி வாத்தியாராக மாத்திரமே இருப்பவர் வேறே பசங்களுக்கு க்ளாஸ் வாத்யாராக இருக்கலாமோல்லியோ ஆகையினாலே, ஒருத்தனுடைய முக்ய குருதான் பெரியவர், உபகுரு அவ்வளவுக்கில்லை என்று இருக்கணும் என்றில்லை.

ஆகக்கூடி, குருவிடம் சரணாகதி அவச்யந்தான். பதிவ்ரதாபங்கம் மாதிரி குருவ்ரத பங்கம் ஏற்படாமல் ஆத்மாவை அவரிடமே அபின்னமாக - பிய்த்துப் பிய்த்து இல்லாமல் அபின்னமாக - அர்ப்பணிப்பது என்பது அத்யாவச்யந்தான். ஆனால் அப்படி குரு என்று இருப்பவர் முக்ய குரு என்பவராக இருந்து, வேறே உபகுருமாரும் இருக்கலாம். இருந்தால் தப்பேயில்லை.

சில ஸமயத்தில் என்ன ஆகிறதென்றால் - அபூர்வமாக இப்படி ஆகிறது. ஆனால் நிச்சயமாக ஆகிறது, என்ன ஆகிறதென்றால் - ஒருவரிடம் அவரே ஆத்ம ரக்ஷகர் என்று பரிபூர்ணமாக நம்பி சரணாகதி செய்து நன்றாக முன்னேறுகிற ஒருவரே கூட, உபகுரு என்று புதிசாக வேறே யாரிடமும் எள்ளவும் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லாதபோதிலும், உபகுரு என்ற அளவுக்கு மாத்திரமில்லாமல் இந்த முக்ய குருவுக்கு ஸரிஸமானராகவே இன்னொருத்தரை ஆச்ரயிக்கும்படியும் ஆகிறது.

இப்படிப்பட்டவர்கள் இரண்டு பேரையும் முக்ய குருவாகவே பூஜித்து, பக்தியில் இரண்டு பேரிடமும்

கொஞ்சங்கூட ஏற்றத்தாழ்வில்லாமல் இருந்துகொண்டிருப்பார்கள்.

இங்கே முக்யமான விஷயம், அவர் (இப்படிப்பட்ட சிஷ்யர்) அந்த இரண்டு பேரிடமும் (குருமாரிடமும்) மற்றவரைப் பற்றி ஒளிக்காமல் சொல்லி அவரும் அறிந்தே, ஸம்மதித்தே, ஆசீர்வாதம் பண்ணியேதான் இரட்டை குருக்களாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பது.

அப்படி இல்லாவிட்டால் அங்கே குரு வஞ்சனை குரு த்ரோஹம் வந்துவிடும்.

அப்படியில்லாத கேஸாகத்தான் சொல்கிறேன். இப்படியும் அபூர்வமாக நடக்கின்றன. தன்னிடமே சரணாகதனாக இருக்கிற ஒரு சிஷ்யனிடம் அந்த குருவேகூட இன்னொருத்தரைச் சொல்லி அனுப்பி வைப்பதாகக்கூட உண்டு.

ஏதோ அபூர்வமான பூர்வ ஸம்ஸ்காரம் காரணமாகத்தான் இப்படிச் சிலபேருக்கு நடப்பதாக இருக்கவேண்டும்.

"ஸரி, ஆனால் சரணாகதியை எப்படிப் பிச்சுப் பிச்சு இரண்டு பேர்கிட்ட குருவ்ரதம்?"

இது வெளி ஆள் கேட்கிற கேள்வி. ஆனால் ஸம்பந்தப்பட்ட ஆஸாமிக்கு - சிஷ்யனுக்கு - அவனுக்கு மாத்திரமில்லை, மூன்று ஆஸாமிகளுக்கு - அந்த சிஷ்யன் அவனுடைய அந்த ஸம ஸ்தான குருக்கள் இரண்டு பேர் என்ற மூன்று ஆஸாமிகளுக்கும் இந்தக் கேள்வி எழும்புகிறதேயில்லை!

அங்கே அந்த இரண்டு குருக்களுமே சேர்ந்து ஒன்றாக - ஒருத்தராகத்தான் - இருப்பார்கள். அதெல்லாம் அநுபவத்தினாலே தெரியவேண்டிய விஷயம். ஸம்பந்தப்பட்ட ஆஸாமிக்கு அப்படி நன்றாகவே தெரிகிற விஷயம். பிறத்தியாருக்கு 'ஏன், எப்படி?' சொல்லி புரியவைக்க முடியாது.

ஈச்வரனும் அம்பாளும் ஒன்றாகவே சேர்ந்து அர்த்த

நாரீச்வரர் என்றே ஒரே மூர்த்தியாக இருக்கிறதோ இல்லையோ?

ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்திரர்கள் மூன்று பேரும் சேர்ந்து த்ரிமூர்த்தி என்றே மூர்த்தி உண்டோ இல்லையோ?

இங்கேயெல்லாம் (இவ்விரு மூர்த்திகளிடம்) பரம பக்தர்களாக சரணாகதி செய்து ஸித்தி கண்ட பெரியவர்கள் இருந்திருக்கிறார்களே!அவர்கள் பிய்த்துப் பிய்த்தா சரணாகதி பண்ணினார்கள்? ஐகாந்திக வ்ரதத்திற்கு (ஒரே நெறிக்கு) பங்கமா பண்ணினார்கள்? பண்ணியிருந்தால் அவர்கள் ஸித்திகண்டே இருக்க முடியாதே!

இந்த சிஷ்யர்களிடம் வேறே வேறே குருமார்கள் என்ற இடறலே மனஸில் கொஞ்சங்கூட இருக்காது. ஒரே பதி, அதே பதி வெவ்வேறே 'ட்ரெஸ்'ஸில் இருக்கிற மாதிரி ஒரே பரமாநுக்ரஹம், ஒரே உத்தாரண சக்திதான் வெவ்வேறே மநுஷ்ய - ரூப 'ட்ரெஸ்' போட்டுக் கொண்டிருப்பதாகவே அவர்களுக்குத் தெரியும். ஒரே லக்ஷ்யத்துக்கு மூர்த்தியாக ஒன்றுக்கு மேற்பட்ட பேர், Goal ஒன்றே, அதிலே சேர்ப்பிக்கிற ஆள் வெவ்வேறான ரூபத்திலே என்று தெரியும்.

வேறே வேறே குருக்கள் சொல்வதில் ஒருத்தர் சொல்கிறபடி பண்ணுவது மற்றவர் சொன்னதற்கு விரோதமாக ஆனால் அப்போதுதான் இடறல் வருவது. நாம் பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கு அப்படி ஆகவே ஆகாது. இரண்டு

பேரும் சொல்வது ஒன்றாகவேயோ, ஒன்றையொன்று இட்டு நிரப்பிப் போஷித்துக்

கொண்டோ, அல்லது பக்குவ ஸ்திதியில் ஏறுமுகமாக ஒன்றை முடித்து இன்னொன்றுக்குப் போவதாகவோதான் இருக்கும்.

(ஸாதனை) வழியிலும் கொஞ்சங்கூட இடறல் இருக்காது, மனஸிலும் துளிக்கூட இடறல் - உறுத்தல் - இருக்காது. 'வஞ்சனையோ, த்ரோஹமோ, திருட்டுத் தனமோ பண்ணுகிறோமோ?' என்று உறுத்தாது. 'ஃப்ரீயாக,

ஆனந்தமாக ஒன்றுக்கு மேற்பட்ட குருமாரிடம் போய்க்கொண்டிருப்பான்.

உபநிஷத்துக்களைவிட நமக்கு ப்ரமாணமில்லை. அதிலே இப்போது நாம் பார்த்ததில், க்ராமம் க்ராமமாக வழிகாட்டியவர்களைப் பல குருமார் என்று உபமேயமாக எடுத்துக்கொண்டது மட்டுமில்லை. உபநிஷத்துக்களிலே வருகிற ஸாக்ஷாத் பாத்ரங்களில் பல பேரே பல குருமார்களிடம் போனதாகவும் நிறையப் பார்க்கிறோம்!

மேற்படி கந்தார தேச உபமானக்(உவமைக்)கதை எவனுக்கு உபதேசிக்கப்பட்டதோ அந்த ப்ரஹ்மசாரிப் பையன் ச்வேதகேது என்பவனே பல குருக்களிடம் உபதேசம் பெற்றுக் கொண்டவன்தான்

இங்கே முதலிலே முக்ய குரு, அப்புறம் பல உபகுருமார் என்று இல்லாமல் முதலிலே பல பேரிடம் கற்றுக்கொண்டுவிட்டு அப்புறம் முக்ய குருவிடம் வந்து சேர்வதாக இருக்கிறது. பிதாவான உத்தாலக ஆருணியே தான் அப்படி முக்ய குரு ஆகிறவர். முன்னே நாம் பார்த்த பிதா - குரு 'ஈக்வேஷன்'!

அவன் பல பேரிடம் படித்துவிட்டுப் பிதாவிடம் திரும்பி வருகிறான். அவர் ஆத்ம ஸம்பந்தமாக ஒன்று சொல்லி, அது அவனுக்குத் தெரியுமா என்று கேட்கிறார்.

அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அப்போது அவன், "என்னுடைய குருமார்களுக்கு - 'பகவந்த:' என்று பஹுவசனத்தில் சொல்கிறான் - இந்த ஸமாசாரம் தெரியாமலிருக்கணும். தெரிஞ்சிருந்தா எனக்குச் சொல்லிக் குடுக்காம இருந்திருக்கமாட்டா" என்று சொல்வதாக உபநிஷத்தில் இருக்கிறது.

இன்னும் அநேக இடங்களிலும் உபநிஷத்துக்களில் இப்படி ஒருவருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட குருமார் இருந்ததைக் காட்டியிருக்கிறது.

அதில் இரண்டில், வேடிக்கையாக, ஆசார்யர் உபதேசிக்காமல் சோதித்தபோது திவ்ய சக்திகள் இரண்டு சிஷ்யர்களுக்கு விசித்ரமான உபதேசித்ததையும், அப்புறம்

அதைஅந்த சிஷ்யர்களிடமிருந்தே தெரிந்துகொண்ட ஆசார்யர் தாமும் 'கன்ஃபார்ம்' பண்ணிக் கொடுத்ததையும் கதையாகச் சொல்லியிருக்கிறது.

ஒருத்தன் முன்னே பார்த்த ஸத்யகாம ஜாபாலன். குருவின் உத்தரவுப்படி அவன் பாட்டுக்கு அவருடைய பசுக்களை வைத்துக்கொண்டு தனியே போய் இருந்துகொண்டு, அவற்றை மேய்த்து, சினைக்கு விட்டுக்கொண்டு காலத்தை ஒட்டிக் கொண்டிருந்தான். அவர் பாடம் சொல்லித் தருகிற பாடாக இல்லை. அவனை அப்படிச் சோதனை பண்ணிக் கொண்டிருந்தார். அவனும் பொறுமையாகவே இருந்தான்.

தன்னிடம் அவர் கொடுத்திருந்த பசு மந்தையை அவன் ஆயிரமாகப்

பெருக்கி முடித்த பிற்பாடு குருகுலத்துக்குத் திரும்புகிறான். அதற்கு மேல் பொறுக்க

முடியாமல் அந்த மந்தையிலிருந்த ரிஷபம் ஒன்றே அவனுக்கு ஒரு உபதேசம் கொடுத்தது. மறுதினம் அவன் அக்னி உபாஸனை செய்யும்போது அந்த அக்னி ஒரு உபதேசம் கொடுத்தது. அதற்கடுத்த நாள் ஒரு ஹம்ஸமும், முடிவாக நாலாம் நாள் மத்கு(Madgu)என்கிற ஜலத்தில் வஸிக்கும் ஒரு பக்ஷியும் உபதேசங்கள் கொடுத்தன. திவ்யசக்திகள்தான் இப்படியெல்லாம் உபதேசித்து அதையே அப்புறம் குரு - ஹாரித்ருமத கௌதமர் -அங்கீகாரம் பண்ணித் தம் வாயால் உபதேசித்து உறுதிப்படுத்திக் கொடுத்தார்.

இதைத் தொடர்ந்தாற்போலவே (சாந்தோக்யத்தில்) வரும் கதையில் இந்த ஸத்யகாம ஜாபாலரே குருவாகி, தம்முடைய சிஷ்யனான உபகோஸலனை இதே மாதிரி சோதிக்கிறார். பன்னிரண்டு வருஷம் அவன் குருகுலவாஸம் செய்தபோதிலும், மற்ற சிஷ்யர்களுக்கு மாத்திரம் அவர் வித்யாப்யாஸம் பண்ணி, பூர்த்தியும் ஆக்கி, அகத்திற்குத் திருப்பி அனுப்பிவைத்துவிட்டு, அவனுக்கு ஒன்றும் செய்யாமலிருந்து விடுகிறார். மனஸொடிந்து போன அவனுக்கு குரு உபாஸிக்கும் மூன்று அக்னிகளுமே உபதேசம் பண்ணி விடுகின்றன. அப்புறம் அவரும் ஸந்தோஷமாக அதற்கு முத்ரை குத்திக் கொடுத்து,

ஆனாலும் அக்னிகள் அவன் ஆசைப்பட்ட ப்ரஹ்ம வித்யையில் ஏதோ கொஞ்சந்தான் சொல்லித் தந்தன என்றும், தாம் முழுக்கச் சொல்லித் தருவதாகவும் சொல்லிப் பெரிசாக உபதேசம் ஆரம்பிக்கிறார்.

இதெல்லாம் 'பல குருமார்' என்ற தலைப்பின் கீழ் அஸலே வராது என்று சில பேருக்குத் தோன்றுலாம். ஆனால் குரு சோதித்துச் சோதித்துச் சொல்லித் தருவது, அப்போதும் சிஷ்யன் ஸஹித்துக் கொண்டு பணிவிடை பண்ணிக்கொண்டு அவரிடம் பக்தி ச்ரத்தையுடனேயே இருப்பது, தன்னுடைய வித்யா லக்ஷ்யத்திற்காகவும் தபித்துக் கொண்டிருப்பது - ஆகிய விஷயங்கள் இவற்றிலிருந்து தெரியவருகின்றன. அதனால் நம் 'டாபிக்'குக்கு ஸம்பந்தமானவைதான்.

அஸலே ஸ்தூலமான மநுஷ்ய ரூபத்திலேயும் அநேக குருமாரிடம் ஒருத்தரே உபதேசம் பெறுவதற்கும் உபநிஷத்துக்களில் யதேஷ்டமாக 'எவிடென்ஸ்' இருக்கிறது.

கீதையிலேயும் பகவான் 'உபதேஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிந: தத்வ - தர்சிந:' என்பதாக பஹுவசனத்திலேயே "தத்வத்தை அநுபவித்தறிந்தவர்களான ஞானிகளிடம் போய் நமஸ்காரம் பண்ணி, தொண்டுகள் செய்த, அலசி அலசித் தத்வத்தைக் கேட்டுக்கொள். அவர்கள் உனக்கு ஞானோபதேசம் கொடுப்பார்கள்" என்கிறார். கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு குருவாக இருந்துகொண்டு உபதேசிக்கிறபோதே, இப்படி மற்ற உபகுருக்களும் அவனுக்கு உண்டு என்கிற ரீதியில் பேசியிருக்கிறார்!

அவருக்குமே இப்படிப் பல குருமார் இருந்துதானிருக்கிறார்கள். யதுவம்சக் குலகுரு கர்காசார்யர். அவர்தான் பகவானுக்கு உபநயனம் செய்த குரு. பகவான் வித்யாப்யாஸம் என்று குருகுலவாஸம் யதோக்தமாகப் பண்ணினது ஸாந்தீபனி என்கிற குருவிடம். தேவகீ புத்ரனாக அவர் தம்மைத் தெரிவித்துக் கொண்டு,

கோர ஆங்கீரஸ் என்ற ரிஷியிடம் உபதேசம் பெற்றுக் கொண்டதாகவும் நாம்

சாந்தோக்யக் கதை பார்த்தோம்.

தத்தாத்ரேயரையும் உதாஹரணம் பார்த்தோம். இருந்தாலும்

அவர் அந்த இருபத்து நாலு பேரிடம் உபதேசம் என்று வாஸ்தவத்தில் பெறாமல், தாமே அந்த இருபத்துநாலில் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு படிப்பினைஎடுத்துக்கொண்டதோடு ஸரி என்பதால் அவர்களை அவருக்கு குரு என்பது ஔபசாரிகந்தான் (உபசாரத்திற்குச் சொன்னதுதான்) என்று வைக்கவும் ந்யாயமுண்டு.

ஆனாலும் அவர் நம் 'டாபிக்'குக்கே பலம் கொடுப்பதாகவும் நேராக ஒன்று அந்த உபாக்யான முடிவில் சொல்லியிருக்கிறார்.

ந ஹ்யேகஸ்மாத் குரோர் - ஜ்ஞாநம் ஸுஸ்திரம் ஸ்யாத் ஸுபுஷ்களம் 1

'பூர்ணமாகவும்,உறுதியாகவும் ஒரே குருவிடமிருந்து ஞானம் ஸம்பாதிக்க முடியாமல் ஆகலாம்' என்று அர்த்தம். இது அவருடைய ஜெனரல் ஸ்டேட்மென்ட் - எல்லாருக்குமாகச் சொன்னது.

இப்படி ச்லோகத்தின் முன்பாதியில் சொல்லிவிட்டு, பின்பாதியில் நம் வேதாந்த மதத்தின் பரந்த, விசாலமான கோட்பாட்டைச் சொல்கிறார்:"ப்ரஹ்மைதத் அத்விதீயம் வை கீயதே பஹுதர்ஷிபி:." "இரண்டாவது அற்றதான அந்த ஒரே ப்ரம்மந்தான் அநேக ரிஷிகளாலும் அநேக விதமாகப் பாடப்படுகிறது, அதாவது உபதேசிக்கப்படுகிறது" என்று அர்த்தம். 'ஒரே ஸத்வஸ்து, அதைத்தான் விப்ரர்கள் பலவிதமாகப் பேசுகிறார்கள்' என்ற ப்ரஸித்தமான வேத வாக்யத்தை அநுஸரித்துச் சொன்ன வாக்யம்.

நமக்கு விஷயம், ஒரே குருவால் ஒருத்தனுக்குப் பூர்ண ஞானம் ஏற்படாமற் போகலாம் என்பது. அப்படிச் சொன்னால் வேறே குருமாரிடமும் போகலாம் என்று தானே அர்த்தம்?

நம்முடைய (அத்வைத) ஸம்ப்ரதாயத்தின் ஆதி ப்ரவர்த்தகர்களிலேயே ஒருத்தர் தத்தாத்ரேயர். காமாக்ஷியம்பாள் கோவிலிலிருக்கும் ஆசார்யாள் ஸந்நிதி விமானத்தில், பூர்வாசார்ய பரம்பரையில் வந்த அத்தனை பேருக்கும் பிம்பங்கள் இருக்கின்றன. அதிலே எல்லாருக்கும் மேலே 'டாப்'பில - 'தக்ஷிணாமூர்த்தி'யா என்றால் இல்லை.

(நம்முடைய குருபரம்பரா) ச்லோகம் 'நாராயணம், பத்மபுவம்' என்று ஆரம்பிக்கிறதே, அந்த நாராயணா என்றால் அவரும் கீழ் வரிசைதான். 'டாப்'பில் இருக்கிறவர் தத்தாத்ரேயர்தான் அவருடைய வாக்கு என்றால் அதற்கு கனம் ஜாஸ்திதான்.

அதைவிடவுங்கூட... நமக்கு (சிரித்து) சீஃப் ஜஸ்டிஸ் யார்? ஆசார்யாள்தானே? அவர் வாக்கிலேயே பல குருமாரைக் கொண்ட ஒருவரை ச்லாகித்துச் சொல்கிறாரென்றால் அதற்கு மேல் நமக்கு ஒன்றும் வேண்டாம் தானே? 'அப்படி ஏதாவது இருக்கா?' என்றால் இருக்கு.

ப்ருஹதாரண்யகத்தில் ஒவ்வொரு ஸெக்ஷனுக்கும் 'ப்ராஹ்மணம்' என்று பெயர் கொடுத்திருக்கும். 'வம்ச ப்ராஹ்மணம்' என்று (இவ்வுரை) நடுவே சொன்னது ஞாபகமிருக்கலாம். (சிரித்து) மறந்தும் போயிருக்லாம்!... அப்படி 'ஷடாசார்ய ப்ராஹ்மணம்' என்றே ஒன்று இருக்கிறது, அர்த்தம் புரிகிறதா? 'ஆறு

ஆசார்யர்களைப் பற்றிய ப்ராஹ்மணம்' என்று அர்த்தம். ஒருத்தருக்கே அப்படி ஆறு ஆசார்யர்கள். அந்த ஒருத்தர் ஸாமான்யமானவர் இல்லை. ராஜரிஷி,

ராஜரிஷி என்றே ஸ்தோத்ரிக்கப்படும் ஜனகர்தான் அவர். ஒரு பெரிய ராஜாவுக்குரிய அத்தனை கார்யங்களும் செய்து கொண்டே உள்ளுக்குள்ளே ஸமாதி நிலையிலிருந்தவர் அவர். கர்மயோகிகளுக்கு 'எக்ஸாம்பி'ளாக க்ருஷ்ண பரமாத்மாவே அவரைத்தான் சொல்லியிருக்கிறார்.

ஜித்வர், உதங்கர், பர்க்கு என்றிப்படி ஆறு பேர் - அம்மா பேரில் கோத்ரம் பெற்ற ஸத்யகாம ஜாபாலர் கூட அவர்களில் ஒருத்தர், இப்படி ஆறு ஆசார்ய புருஷர்களிடம் தாம் பெற்ற உபதேசம் பற்றி அந்த ப்ராஹ்மணத்தில் ஜனகர் யாஜ்ஞவல்கியரிடம் சொல்கிறார். அப்புறம் இப்போது ஏழாவது ஆசார்யராக யாஜ்ஞவல்கியரிடமும் உபதேசம் கொடுக்கும்படி ப்ரார்த்திக்கிறார்.

அவர் ஏதோ பண்ணப்படாததைப் பண்ணினதாக யாரும் நினைக்கவில்லை. அவர் பண்ணினதை யாஜ்ஞவல்க்யர் ச்லாகித்ததாகவே ஆசார்யாள் பாஷ்யத்திலிருந்து தெரிகிறது. இங்கேதான் நம்முடைய Chief Justice-ன் ஜட்ஜ்மெண்ட்

வருவது!

யாஜ்ஞுவல்க்யர் ஆரம்பிக்கும்போதே ஜனகரிடம், "எவராவது ஒருத்தர் உனக்குச் சொன்னதை நானும் கேட்டுக்கொள்ளவேண்டும்" அதாவது "அதை எனக்குச் சொல்லு" என்கிறார். "உனக்குச் சொன்னது" என்பது ஏதோ ஊர் அக்கப்போரில்லை. முந்தின மந்திரத்தில்தான் அவர், அணு மாதிரி அத்தனை ஸூட்சமமான ஆத்ம தத்வம் பற்றி விசாரம் பண்ணுவதற்காகத் தாம் வந்திருப்பதாகச் சொல்லியிருக்கிறார்.....

ராஜா (ஜனகர்) கல்மிஷமில்லாமல், ஹாஸ்யமும் த்வனிக்க, அவரை வரவேற்கிறபோது, "பசுவா (கோதானமா)? ஸூக்ஷ்ம தத்வ விசாரமா? எதுக்கு வந்திருக்கேள்?" என்று கேட்டார். அதற்கு அவரும் கல்மஷமில்லாமல், அதே ஹாஸ்யபாவத்திலே, "இரண்டுக்காகவுந்தான்" என்று பதில் சொல்லியிருக்கிறார். அதனால் அடுத்த மந்த்ரத்திலேயே "எவராவது உனக்குச் சொன்னது" என்று அவர் சொல்கிறது அத்யாத்ம விஷயந்தான். 'எவராவது ஒருத்தர்' என்பதும் அந்த விஷயமாக ஜனகருக்கு உபதேசித்த உத்தமமான ஞானாசார்யர்களில் 'எவராவது ஒருத்தர்' என்றுதான் அர்த்தம் கொடுக்கும். அந்த ஸந்தர்ப்பத்தில் வேறே விதமாக இருக்கமுடியாது.

இங்கே ஆசார்யாள் ஸ்பஷ்டமாகவே, "நீ அநேக ஆசார்யர்களை ஸேவிக்கிறவனாச்சே!அவாள்ள (அவர்களில்) எவராவது ஒருத்தர் சொன்னதை நானும் கேட்டுக்கறேனே!" என்று ஜனகரிடம் யாஜ்ஞவல்க்யர் சொன்னதாக பாஷ்யம் பண்ணியிருக்கிறார். "அநேகாசார்ய ஸேவி" (பல ஆசார்யர்களை வழிபடுபவர்) என்று பாராட்டு வார்த்தையாகவே போட்டிருக்கிறார். இதிலிருந்து ஆசார்யாள் அபிப்ராயமும் ஒருத்தன் பல குருமாரை ஆச்ரயிக்கலாம் என்பதாகத் தெரிகிறது. அவர் 'அபிப்ராம்' என்றால் நமக்கு அது 'ஜட்ஜ்மெண்ட்'தான்!

பிற்காலத்தில் நம்முடைய அத்வைத ஸம்ப்ரதாயத்தில் ரொம்பவும் பெரியவர்களாக இருந்தவர்கள், உத்தம க்ரந்தங்கள் உபகரித்தவர்களை எடுத்துக்கொண்டாலும், இப்படிப் பல பேருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட குரு

இருந்திருப்பதாகத் தெரிகிறது.

வித்யாரண்யாளுடைய முக்ய குரு வித்யா தீர்த்தரைப் பற்றிச் சொன்னேன்.

சங்கரானந்தர் என்பவரையும் அவர் குருவாக ஸ்துதித்திருப்பதையும் சொன்னேன். இந்த சங்கரானந்தரும் வித்யா தீர்த்தரின் சிஷ்யர்தான். இவருக்கும் வித்யாதீர்த்தர் மாத்திரமில்லாமல் அனந்தாத்மர் என்றும் இன்னொரு குரு இருந்திருக்கிறார் என்று அபிப்ராயமிருக்கிறது.

மதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகள் என்று பரம அத்வைதி. அதே ஸமயம் க்ருஷ்ண பரமாத்மாவிடம் பக்தி உள்ளவர். இரண்டையும் இணைத்துக் கொடுத்த பெரியவர். "ஸ்ரீ ராம - விச்வேச்வர - மாதவாநதாம்" என்று அவரே (ஸ்ரீ ராமர், விச்வேச்வரர், மாதவர் என்ற) தம்முடைய மூன்று குருக்களுக்கும் நமஸ்காரம் தெரிவித்திருக்கிறார்.

ராமதீர்த்தர் என்று நம்முடைய (அத்வைத) ஸம்ப்ரதாயப் பெரியவர்களில் ஒருத்தர். அவருக்கு க்ருஷ்ணதீர்த்தர், ஜகந்நாதாச்ரமி, விச்வவேதர் என்று மூன்று குருமார் இருந்திருப்பதாகத் தெரிகிறது.

இப்போது சொன்ன பெரியவர்களுக்கெல்லாம் முந்தி ஆனந்தபோதர் என்று ஒருவர் இருந்தார். அவருக்கு விமுக்தாத்மர், ஆத்மாவாஸர் என்று இரண்டு குருமார் இருந்ததாகத் தெரிகிறது.

ஒருத்தர் முக்யகுரு - மற்றவர் உபகுரு, ஒருவர் ஆச்ரம குரு - மற்றவர் வித்யாகுரு என்றும் இந்தப் பல குருமாரில் இருந்திருக்கலாம்.

எப்படியானாலும் ஒருத்தருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட குரு இருப்பதில் ஒன்றும் தோஷமில்லை என்று ஆகிறது.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை எடுத்துக் கொண்டாலும் ராமாநுஜருக்கே ஆளவந்தார் முக்யகுரு பெரிய நம்பி, திருக்கச்சி நம்பி, திருக்கோஷ்டியூர் நம்பி ஆகிய மூன்று பேரும் உபகுருக்கள் என்கிறாற்போலச் சொல்கிறார்கள்....

எங்கேயோ இருந்து எங்கேயோ

வந்துவிட்டேன்!எங்கேயானாலும் குரு - சிஷ்ய ஸமாசாரந்தான். அதிலும் முக்யமான ஒரு ஸமாசாரந்தான் என்ற மட்டில் ஸந்தோஷந்தான்.....

அஞ்ஞானத்தால் கண் கட்டப்பட்டு, மாய ப்ரபஞ்சக் காட்டில் விடப்பட்ட ஜீவாத்மா ஒரு முக்ய குரு - பல உபகுருமாரால் ஞானப்பார்வை பெற்று இந்தக் காட்டிலிருந்து 'வீடு' என்றே சொல்லப்படுகிற பெரிய வீட்டுக்கு 'மோக்ஷத்திற்கு)த் திரும்புவதாக, இந்த நாளில் 'உருவகக் கதை' என்கிற மாதிரி உபநிஷத்தே கதை சொல்லியிருப்பதைப் பார்த்தோம்.

அந்தக் கதை யாருக்கு உபதேசிக்கப்பட்டதோ அந்த சிஷ்யனே இப்படிப் பல குருமார் படைத்தவன்தான் என்று சொன்னேன்.

உத்தாலகர் என்று ஒரு ரிஷி. அருணர் என்பவரின் பிள்ளையானதால் உத்தாலக 'ஆருணி' என்று அவரைச் சொல்வது. அவர் பிள்ளைக்குப் பேர் ச்வேதகேது. உத்தாலகரே நல்ல வித்வானானாலும், பிறத்தியார் கண்டிப்பிலே படித்தால்தான் வித்யையை நன்றாக உள்ளே ஏற்றிக்கொள்ள ஜாஸ்தி இடமுண்டு என்பதால் அவர் பிள்ளையை வேறே குருகுலத்தில் படித்துவிட்டு வருவதற்காக அனுப்பினார். அவனும் அப்படியே போய் குருகுலத்தில் அநேகப்

பெரியவர்களிடம் அநேகவித்யைகள் பன்னிரண்டு வருஷம் படித்துவிட்டுத் திரும்பி வந்தான்.

தன்கிட்டேயே படித்தால் அவன் உருப்படியாய் வரமாட்டானென்றுதான் அப்பா வெளியிலே அனுப்பி வைத்தது. ஆனால் அப்படிப் போயும் அவன், 'தானாக்கும் இத்தனை வருஷம் இத்தனை விஷயம் படிச்சிருக்கோம்!' என்ற மண்டை கனத்தோடேயே திரும்பி வந்தான்.

பொதுவாக ஸகல ஜனங்களுமே விநயமாக இருந்த காலம் அது. அதிலும் சின்ன வயஸுக்காரர்கள், சிஷ்யர்கள் ரொம்பவுமே தழைந்து இருப்பார்கள். ஆனால் எந்தக் காலமானாலும் மநுஷ்ய பலஹீனங்கள் எங்கேயாவது கொஞ்சம் தலை தூக்கிக்கொண்டுதான் இருக்கும் போலிருக்கிறது படிக்கப் படிக்க மேலும் மேலும்

'தான்'(அஹங்காரம்) என்று நாம் பார்க்கிறதற்கு மறுகோடியாக, படிக்கப் படிக்க மேலும் மேலும் அடக்கம் என்பதையே ஸதாவும் குருமார்கள் சிஷ்யர்களிடம் சொல்லிச் சொல்லி அப்படிப் பழக்கிய அந்த நாளிலும் இந்தப் பையன் ச்வேதகேது அதற்கு வித்யாஸமாக, ரொம்பவும் கர்வியாகியிருக்கிறான்... 'பையன்' என்றால் அவ்வளவு ஸரியோ? என்னமோ? அவனுடைய பன்னிரண்டாம் வயஸில் அப்பாக்காரர் வேறே குருமாரிடம் படிக்க அவனை அனுப்பினார், அவன் பன்னிரண்டு வருஷம் அப்படிப் படித்து இருபத்துநாலு வயஸில் திரும்பி வந்தான் என்று இருக்கிறது. அவனைப் 'பைய'னில் சேர்க்கலாமா?...

அவனுடைய மண்டைக் கனத்தை இறக்கி அவனுக்கு புத்தி கற்பிப்பதற்காகவேதான் பிற்பாடு பிதா அந்த கந்தார தேசக் கதை சொல்லும்போது கதாபாத்ர ஜீவன் இவன் மாதிரியே பலபேரிடம் கேட்டு வழிதெரிந்த கொண்டதாகச் சொல்லியிருப்பார் போலிருக்கிறது. இப்படி ஒருத்தன் தெரிந்துகொண்டால் மாத்திரம் போதாது, அதிலே கர்வம் உண்டாகி வீணாயும் போகலாம் என்றே அந்தக் கதையில் சிஷ்யனுக்கு இருக்கவேண்டிய 'பண்டிதத்தன்மை பற்றியும், 'மேதை' பற்றியும் சொல்லியருக்கலாம். உபதேசத்தை நன்றாக புத்தியில் நிறுத்திக் கொள்வதே 'மேதை'. புத்தி என்றால் மூளை மட்டுமில்லை, ஜீவனை நல்ல முறையில் பக்குவப்படுத்தும் 'நல்லறிவு' என்பது. பண்டிதத்தன்மை என்றாலும் 'ஸ்காலர்ஷிப்' மட்டுமில்லை. "நிற்க அதற்குத் தக" என்று திருவள்ளுவர் சொன்னாற் போல கற்ற வித்யை தன்னுடைய வாழ்க்கையிலேயே, நடத்தையிலேயே ப்ரகாசிக்கும்படி ஒழுகுவது. கர்வத்துக்கு இடம் கொடுத்தால் இந்த இரண்டும் ஸித்திக்கவே ஸித்திக்காது. மூளையோடு நிற்கிற படிப்பு 'மநுஷன்' என்று ஒருத்தனை ஆக்கிவிடமுடியாது, அதாவது குணசாலியாகக் முடியாது. இதற்கு லாயக்கற்ற மூளையைத் தாழப் படுக்கப்போட்டு விநயமாயிருந்தாலே அப்படி ஆக முடியும்.

பின்னால் நாம் பார்க்கிறதிலிருந்து ச்வேதகேதுவுக்கு உசந்த மூளைத் திறமை இருந்தது தெரிகிறது. அதனால் நேராகக் குத்திக்காட்டிச் சொல்லாமல் மறைமுகமாக 'ஹின்ட்' பண்ணினாலே புரிந்துகொண்டு விடக்கூடியவன். நேரே குத்திக்காட்டினால் கோபம் வரலாம், 'ஹின்ட்'

பண்ணினால்தான் எடுத்துக்கொள்ளத் தோன்றும் என்றே அப்பா அப்படி (உருவகக் கதை) சொல்லி,

மறைமுகமாக விட்டிருக்கலாம்.

'குருவே என்னவும் பண்ணிக்கட்டும்' என்று தன்னைப் பூர்ணமாக அவனிடம் ஒப்புக்கொடுத்துவிட்டு சராணாகதி செய்ய எல்லாராலும் முடியாதுதான். முடிந்த

மட்டும் அதைப் பண்ணி, சிஷ்யனானவன் தானே ஸ்வய முயற்சியும் நிறையப் பண்ணத்தான் வேண்டும். அதனால் தான் கட்டையவிழ்த்துவிட்ட குருவே முழு வழியும் தானே கூட இருந்து அழைத்துப்போனதாகச் சொல்லாமல், அவன் மட்டுமே போனதாகச் சொல்லியிருக்கிறது என்று வைத்துக்கொள்ளலாம். ஆனாலும் அவர் சொல்லிக் கொடுத்த வழியில்தான் போனான் என்பது முக்கியம்.

திசை- வழி- காட்டுகிறவர் 'தேசிகர்' என்ற டெஃபனிஷனுக்கு உபநிஷத்தில், திசை திசையாகத் திரும்பி உதவி கேட்டவனுக்கு வழி சொல்லித் தந்தவனைக் காட்டி, அதுதான் ஆசார்யனின் கார்யம் என்று சொல்லியிருப்பது அழுத்தமான சான்றாக இருக்கிறது.

---

## வேதத்தில் 'வழிகாட்டி' குரு

வேதத்திலும் - அதாவது 'வேதம்' என்றே பாடசாலைகளில் சொல்லிக்கொடுக்கும் ஸம்ஹிதை பாகத்திலும் - இந்த 'ஐடியா' இருக்கிறது. அநேக இடங்களில் இருக்கலாமானாலும், குறிப்பாக என் கவனத்திற்கு வந்த ஒன்றைச் சொல்கிறேன்.

பொதுவாக இன்னொன்று (வேதத்திலிருந்து வேறொரு சான்று) சொல்வதுண்டு. 'அஸ்ய வாமஸ்ய' என்று ஸூக்தம் ப்ரஸித்தமானது. நீளமான ஸூக்தம். ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி, பராமாத்ம தத்வம் முதலானவற்றை அறிவாளிகளுக்கும் அநுபவிகளுக்குமே புரிகிற ஸங்கேத பாஷையில் சொல்லும் ஸூக்தம். 'ஏகம்தான் ஸத்வஸ்து;அதைத்தான் ஞானிகள் பலவகையாக, பல தெய்வமாகச் சொல்கிறார்கள்' என்ற

மந்த்ரம், முண்டகோபநிஷத்தில் வருகிற ஜீவாத்ம - பரமாத்ம பட்சிகளைப் பற்றிய மந்த்ரம், நாத தத்வம் ஸூக்ஷ்ம தத்வத்திலிருந்து நாலு நிலைகளில் மாறி மாறியே (நாலாவதாக) நாம் வாக்கால் உச்சரிக்கும் சப்தமாகிறது என்ற ப்ரஸித்தமான மந்த்ரம், அம்பாள் ஆவாஹனத்தில் சொல்லும் கௌரீ மந்த்ரம் முதலானதெல்லாம் இந்த ஸூக்தத்தில் வருகிறவைதான்.

அதிலே ஆரம்ப மந்த்ரம் ஒன்றில், "நான் ஞானமில்லாதவன். ஞானம் படைத்த ரிஷிகளிடம் உபதேசிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்" என்று வருகிறது. குருமுகமாகவே கற்றுக்கொள்ளவேண்டும் என்பதற்கு சிஷ்ய வாக்காக வருகிற இதையே ச்ருதி ப்ரமாணமாகச் சொல்வார்கள்.

நான் காட்ட வந்த மேற்கோளில் இன்னும் தெளிவாகவே குரு வழிகாட்டித்தான் சிஷ்யன் தெரிந்து கொள்கிறான் என்று வருகிறது.

அது இந்த்ரனைப் பற்றிய ரிக்வேத ஸூக்தங்களில் ஒன்று. ஏழாவது அஷ்டகத்தில் வருகிறது. கவஷர் என்ற ரிஷி கொடுத்திருக்கும் ஸூக்தம். அதில், "'அக்ஷேத்ரவித்', அதாவது இடம் தெரியாதவன் 'க்ஷேத்ராவித்'திடம், அதாவது இடம் தெரிந்தவனிடம் கேட்டுக்கொள்கிறான். இடம் தெரிந்தவனால் வழி தெரிவிக்கப்பட்டு, அப்படியே போய்ச் சேர்கிறான்" என்று 'மறை' என்பதற்கேற்க மறைமுகமாகவே, ஆசார்யனிடமிருந்து சிஷ்யன் ஸாதனா மார்கம் தெரிந்து கொள்வதைச் சொல்லியிருக்கிறது. ப்ரஹ்மம் என்ற பரம ஸத்யந்தான் போய்ச் சேர வேண்டிய லக்ஷ்யமான இடம். அந்த இடத்தை அறிந்தவன் குரு. அறியாதவன் சிஷ்யன். இவன் அவரிடம் லக்ஷ்யத்தை அடைகிற ஸாதனா மார்க்கத்தை உபதேச க்ரமமாகக் கேட்டுத் தெரிந்துகொண்டு, அங்கே போய்ச் சேருகிறான்' - இதுதான் மந்த்ர தாத்பர்யம். இதை மறைமுகமாகச் சொல்லியிருக்கிறது.

அப்புறம், 'ரொம்ப முக்யமான விஷயத்தை மறைத்துச் சொல்லப்போய் அதை ஒரேயடியாய் மிஸ் பண்ணிவிடப் போகிறார்களே' என்று கருணைகொண்டு, வெளிப்படையாகவே, "இதுதான் உபதேசத்தின் 'பத்ர'மான - அதாவது, மங்களமான - மஹிமை" என்றும் தெரிவித்திருக்கிறது. 'உபதேசம்' என்பதற்கு இங்கே வருகிற

வார்த்தை 'அநுசாஸனம்' என்பது. (அது) இன்றைக்கு வரை பழக்கத்திலுள்ள வார்த்தை.

பீஷ்மர் சரதல்பத்தில் (அம்புப் படுக்கையில்) இருந்து கொண்டு

பாண்டவாளுக்கு உபதேசித்த விஷயங்கள் விஸ்தாரமாக இரண்டு பர்வாக்களாக (பர்வங்கள் என்ற பிரிவுகளாக) பாரதத்தில் இருக்கின்றன. அவற்றில் முதலாவது சாந்தி பர்வா. இரண்டாவது 'அநுசாஸன பர்வா' என்றே பெயர். அதில்தான் 'விஷ்ணு ஸஹஸ்ரநாமம்' கூட வருகிறது. சட்டம் போடுவது, உத்தரவிடுவது, அட்வைஸ் பண்ணுவது எல்லாமும் 'அநுசாஸன'த்தில் அடங்கும்.

அப்படி குரு கொடுக்கும் உபதேச அநுசாஸனத்தைப் பரம மங்களமானது - பத்ரம் - என்று வேதமே ஸ்தோத்ரிக்கிறது. 'மங்களம்' என்று நாம் சொல்கிற இடங்களில் வேத - இதிஹாஸ புராணங்கள் 'பத்ரம்' என்றே சொல்லும்.

உபதேசம் மங்களமானது என்பது எதனால் என்றும் (இந்த வேத) மந்திரம் தெரிவிக்கிறது. 'ஸ்ருதி' என்கிற நீரோட்டத்தில் எப்படித் தடையில்லாமல் நேராக ஒரு வழியில் போகிறோமோ அப்படி உத்தம லக்ஷ்யத்தில் சேர்க்கும் நேரான மார்க்கத்தை உபதேசத்தால்தான் ஒருத்தன் தெரிந்து கொள்கிறான். அதனால் அது 'பத்ரம்' என்கிறது.

'நேர்' என்பதற்கு இங்கே உள்ள வார்த்தை 'அஞ்ஜனம்' என்பது. அதற்கு 'நேர்' என்பதோடு 'நேர்மை' என்றும் அர்த்தம், (சிரித்து) straight மட்டுமில்லை, forward-ம்!

---

### குருவை 'க்ஷேத்ரஜ்ஞ'னாக

இடம் தெரிந்தவன்-தெரியாதவன் என்று பார்த்தோமே! (முறையே) குருவும், சிஷ்யனுந்தான் அந்த இரண்டு பேர் - அந்த இரண்டிற்கும் இங்கே 'க்ஷேத்வித்', 'அக்ஷேத்ரவித்' என்ற வார்த்தைகளைப் போட்டிருக்கிறது. 'போட்டிருக்கிறது' என்றால் ஸூக்த ரிஷி - கவஷர் - யோஜித்து, பொறுக்கி

எடுத்தா போட்டார்? இல்லை. ஒரு flash-ல் அகண்ட ஆகாசத்திலிருந்து அந்த சப்தங்கள் அவருக்கு ப்ரத்யக்ஷமாயிற்று. அதாவது ஈச்வர வாக்கே அப்படி வந்திருக்கிறது, அந்த ரிஷி மூலமாக!

க்ஷேத்ரம் என்றால் ஊர். அது ஒரு இடந்தானே? கந்தாரம் என்ற ஊருக்கு வழி சொன்னதாகத்தானே உபநிஷத் கதையிலும் பார்த்தோம்? பயிர் விளையும் வயலையும், பக்திப் பயிர் விளையும் புண்ய ஸ்தலங்களையுமே 'க்ஷேத்ரம்' என்று குறிப்பிட்டுச் சொல்வது. வேதாந்தத்திலேயோ 'க்ஷேத்ரம்' என்றால் நம்முடைய சரீரம். உழவன் உழுது பயிர் பண்ணுவதற்கு வயல் என்கிற க்ஷேத்ரம் களமாயிருக்கிற மாதிரி ஜீவன் கர்ம உழவு பண்ண இந்த சரீரம்.

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரம் இத்யபிதீயதே 1

என்று பகவான் கீதையில் சொல்கிறார். அந்த அத்யாயத்திற்குப் பேரே 'க்ஷேத்ர - க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்' என்பது. 'க்ஷேத்ரத்திற்கும் க்ஷேத்ரஜ்ஞனுக்கும் உள்ள பாகுபாட்டை அறியும் யோகம்' என்று அதற்கு அர்த்தம்.

"அது யார் 'க்ஷேத்ரஜ்ஞன்'?" என்றால், அவன்தான் இந்த ஜட சரீரத்துக்கு உயிரையும் அறிவையும் கொடுத்துக் கொண்டு இருக்கும் ஆத்மா. 'தான் க்ஷேத்ரம்' என்பதும் ஜடமான சரீரத்திற்குத் தெரியாத. அதை அப்படித் தெரிந்து கொண்டவன்தான் சரீரத்திற்கு உடைமைக் காரனான சரீரி என்ற அந்த க்ஷேத்ரஜ்ஞன்;'ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:'.

'தெரிந்துகொள்பவன்' என்கிறவனாக க்ஷேத்ரஜ்ஞன் உள்ளபோது ஸ்வச்சமான தன் நிஜ ஸ்வரூபத்தில் அவன் இல்லை, அதாவதப்ரஹ்மமாக இருக்கவில்லை. மாயா ஸம்பந்தத்துடன்தான் இருக்கிறான். நிஜ ஸ்வரூபத்தில் அவன் தெரிந்து கொள்ள வேண்டியதாக வேறு விஷயமோ, தெரிந்தகொள்ளும் அறிவுமோகூட இருக்காது. தானாக இருக்கிற, தான் மட்டுமே ஒரே ஸத்யமாக இருக்கிற, அறிவாக இருக்கிற நிலை அது. பொதுவாக லோகத்தில் ஜடம், சேதனம் என்று முறையே அறிவற்றதையும் அறிவுள்ளதையும்

சொல்கிற வழக்குப்படி, ஜடமான சரீரத்தை க்ஷேத்ரம் என்றும் அதிலே அறிவோடு - புலனறிவோடுதான், நிஜ ஸ்வரூபத்தை அநுபவத்தால் அறிகிற மெய்யறிவோடு அல்ல, புலனறிவோடு - இருக்கிற ஜீவனை க்ஷேத்ரஜ்ஞன் என்றும் சொல்வது. அறிவேயில்லாத ஜட சரீரத்திலிருந்து பல படி உசத்தி வைத்து நிஜ ஸ்வரூப மெய்யறிவான அநுபூதி பெற்ற ஞானியாக வேதாந்த சாஸ்த்ரத்தில் சொல்வது. கிருஷ்ணபரமாத்மாவும் அப்படித்தான் சொல்லியிருக்கிறார். இருந்தாலும் நேர் அர்த்தப்படி பார்த்தால், சரீரமும் தெரியாத ஞானியாயில்லாமல், சரீரத்தைத் தனதென்று தெரிந்து கொள்கிற அஞ்ஞானிதான் க்ஷேத்ரஜ்ஞன். இந்த நிலையில்தான் அம்பாளை (க்ஷேத்ரம் - க்ஷேத்ரஜ்ஞன் இரண்டையும் ரக்ஷிக்கும்) 'க்ஷேத்ர - க்ஷேத்ரஜ்ஞ பாலிநீ' என்று ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியிருப்பது. ஸ்வ - ஸ்வரூபத்தில் உள்ள

க்ஷேத்ரஜ்ஞனுக்குப் பாலனமே வேண்டியதில்லை!அம்பாளுக்கும் ஆத்மாவாக இருக்கிறவனவன்!"அத்தனை க்ஷேத்ரங்களிலும் (சரீரங்களிலும்) க்ஷேத்ரஜ்ஞனாக இருப்பது நானே" - "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வ க்ஷேத்ரஷு" என்று கிருஷ்ண பரமாத்மா சொல்கிற போது மாயை கலந்த, கலக்காத ஆகிய இரண்டு ஸ்திதிகளிலுமே என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள இடம் கொடுத்திருக்கிறார். இரண்டு மட்டுமில்லை, மூன்றுகூட!அசட்டு வேஷம் போட்டுக்கொண்டு நாம் ஒவ்வொருவருமாக அவர் இருப்பது ஒன்று, நம்மையெல்லாம் கட்டி ஆளுகிற ஈச்வரனாக த்வைத ப்ரபஞ்சத்தை நடத்திவைப்பது ஒன்று. த்வைதக் கலப்பற்ற நிர்குண ப்ரஹ்மமாக இருப்பது ஒன்று. மூன்று விதத்திலும் அவர் நம்முடைய சரீரத்தை மூன்று வித்யாஸமான நிலைகளில் அறிகிற க்ஷேத்ரஜ்ஞராக இருக்கிறார். நிர்குணத்தில் அந்த 'அறிகிறது' என்பது கார்யமில்லை. அது க்ஷேத்ரமே இல்லை என்று கண்டு கொள்ளும் அநுபவம்!

'க்ஷேத்ர - ஜ்ஞன்' என்றால் 'க்ஷேத்ரத்தை அறிந்தவன்'. இது தன் சரீரம் என்று அறிந்திருக்கிறவன் கீழ்நிலையில் இருக்கிறான். 'அப்படியில்லை, இந்த சரீரம் வெறும் மாயா கல்பிதமே தவிர, ப்ரஹ்மஸ்வரூபமான தனக்கு ஸம்பந்தப்பட்டதில்லை' என்று அதைப் பற்றிய - அது

பொய்யே என்ற உண்மையை - அநுபவத்தில் அறிந்தவன் மேல் நிலை க்ஷேத்ரஜ்ஞன். அவன்தான் நிஜமான க்ஷேத்ரஞ்ஜன். அதாவது க்ஷேத்ரஜ்ஞன் என்றாலும் ஞானி என்றாலும் ஒன்றே. க்ஷேத்ரம் பொய் என்று அறிந்ததோடு ப்ரஹ்மந்தான் மெய் என்றும் அறிந்தவன் அவன்.

இந்த தத்வச்சிக்கலில் இப்போது ஏன் உங்களை இழுத்து விட்டிருக்கிறேனென்றால், வழியறிந்தவனை வேத மந்த்ரத்தில் என்னவென்று சொல்லியிருப்பதகாச் சொன்னேன்? 'க்ஷேத்ரவித்' என்றுதானே? 'க்ஷேத்ரவித்' என்றாலும் க்ஷேத்ரஜ்ஞன் என்றுதான் அர்த்தம். 'ஜ்ஞ', 'வித்' என்ற இரண்டும் அறிவதையே குறிப்பிடும்.

'ஜ்ஞ'வை இங்கிலீஷில், jna என்றும் gna என்றும் இரண்டுவிதமாக எழுதுகிறார்கள். G-'ஜீ' என்பதோ J -வுக்கான ஜகார சப்தமாகவே இருக்கிறது! Gnosis என்று க்ரீக்கில் இருப்பதை இங்கிலீஷிலும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு ஞானம் என்றே அர்த்தம். ஸ்பெல்லிங்படி 'gno' என்றிருந்தாலும் 'g' -ஐ ஸைலன்டாக்கி, உச்சரிப்பில் 'நோஸிஸ்' என்றே சொல்வார்கள். 'நோ' என்றே, know என்கிற இன்னொரு வார்த்தையும் 'அறிவது' என்பதற்கு இருக்கிறது. அங்கேயும் ஸ்பெல்லிங்கில் முதலெழுத்தை ஸைலன்ட் பண்ணிவிடுகிறார்கள். Gnosis-ன் g-ஏதான் இங்கே K ஆவது. ஸம்ஸ்கிருதத்தில் ga-காரமாகச் சொல்லும் அநேக வார்த்தைகளைத் தமிழில் ka-காரமாக்கி விடுகிறோமோல்லியோ, அப்படி! Gandhari-ஐ Kandhari என்பதாகப் பார்த்தோமே, அப்படி!

ஸம்ஸ்க்ருத 'வித்'திலிருந்துதான் wit. நாம் wit, witty என்றால் தமாஷ் என்று மட்டுமே தெரிந்து கொண்டிருக்கிறோம். வாஸ்தவத்தில் wiit-கு முக்யமான மீனிங் 'அறிவு' என்பதுதான். 'outwit' பண்ணுவது' என்கிறபோது அந்த அர்த்தத்தில்தானே சொல்கிறோம்?...

க்ஷேத்ரவித் என்ற வேதத்தில் வருவது பகவான் கீதையில் சொல்லும்

க்ஷேத்ரஜ்ஞன்தான். இப்படித் தெரிந்து கொள்ளும்போது அந்த மந்த்ரத்திற்கு அர்த்தம். "அஞ்ஞானியான சிஷ்யன் ஞானியான குருவிடம் விமோசனத்திற்கு வழி கேட்டுக் கொண்டு, அந்த வழியில் போகிறான். முடிவாக அந்தவழி கொண்டு விடுகிற பரமஸத்யததை நோக்கி அவர் உபதேசித்தபடி முன்னேறிப் போகிறான். இதுதான் உபதேசம் என்ற பரம மங்கள விஷயம். ஒரே போக்கில் நேராக ஓடுகிற பிரவாஹத்திலே எதிர்நீச்சுப் போடும் கஷ்டமில்லாமல் ஸௌகர்யமாக மிதந்துகொண்டு பிரயாணம் பண்ணுகிறதுபோல அந்த அஞ்ஞானியும் விமோசனத்திற்கு அழகான, நேரான வழி தெரிந்து கொண்டுபோய்ச் சேருகிறான்" என்று ஆகும். (சிரித்து) என் 'பாஷ்ய'மும் கொஞ்சம் சேர்த்துச் சொன்னேன்!

உபநிஷத்திலே காட்டு வழி, அப்புறம் க்ராமம் க்ராமமாகப் போகணும் என்றெல்லாம் கொஞ்சம் பயமுறுத்தலாகச் சொல்லியிருக்கிறது!அது ச்ருத்யந்தம் (ச்ருதி எனும் வேதத்தின் முடிவு. வேதத்தில் முடிவான பாகமே உபநிஷத்). இது ச்ருதியே (முதற் பாகமான ஸம்ஹிதை). இதிலே பயமுறுத்தாமல், ஆனந்தமான படகுப் பிரயாணமாகச் சொல்லியிருக்கிறது - வாடர் - கரண்ட் போகிறபடியே ஆனந்தமாக மிதந்து கொண்டு போகிறது; (சிரித்து) downstream boating! விசேஷமாக குரு அநுக்ரஹித்தால் இப்படி! கத்தி முனை என்றே இன்னொரு உபநிஷத் ரொம்பவும் பயமுறுத்திச் சொல்லியுள்ள ஸாதனா க்ரமமானது உல்லாஸப் பயணமாக ஆகிவிடுகிறது! அந்தக் கத்தி முனையையே Razor's Edge என்று தலைப்பாகப் போட்டு நம்முடைய வேதாந்தத்தில் ஈடுபாடுள்ள ஒரு பெரிய வெள்ளைக்கார நாவலிஸ்ட் பெரிசாகக் கதை கூட எழுதி ப்ரஸித்தமாயிருக்கிறது.

காட்டு வழி, கத்தி முனை நடப்போ, ஆற்றிலே ஆனந்தமாக தீஷீணீமீ வீஸீரீ-ஓ - எதுவானாலும் வழி சொல்லித் தருகிறவர் குரு.

கத்திமுனையைச் சொன்ன இடத்தில் உபநிஷத், அதற்குப் பூர்வாங்கமாக "வரர்களை நாடிப் போய் அவர்களிடமிருந்து அந்த வழியைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்கிறது. வரான் -

'வரர்களை' என்கிறது. 'வரன்' என்றால் என்ன? 'முனிவரர்', ரிஷிவரர்' என்று படிக்கிறோமே, என்ன அர்த்தம்? முனிவரில் சிறந்தவர், ரிஷிகளில் சிறந்தவர், என்று அர்த்தம். அப்படி ஆஸாமியாக நாம் சொல்வது பெண்ணுக்குப் பார்க்கிற 'வர'னைத்தான்!நிஜத்தில் எத்தனை பிள்ளையாண்டான்கள் அப்படி இருப்பார்கள் என்பது கேள்வி!மாப்பிள்ளையாக வரிப்பது, ஒரு க்ஷத்ரியப் பெண் 'ஸ்வயம்வரம்' என்று தானே பர்த்தாவை வரிக்கிறது ஆகியவற்றில் வருகிற ஆஸாமியானதாலேயே அவன் வரனாக இருக்கிறான்!வ்ரு - வர் என்ற தாதுவிலிருந்து வரும் வார்த்தையே வரிப்பது. தேர்ந்தெடுப்பது என்று அர்த்தம் அப்படி சொன்னால், அநேகம் பேர் இருப்பதில் நம்முடைய நீலீஷீவீநீமீ-ஐ வமீறீமீநீமீ செய்வது. இருக்கிறதற்குள் தீமீவமீ-ஐத்ததானே சிலீஷீஷீவமீ பண்ணுவார்கள்? ஙிமீவமீ-ஐ நீலீஷீவீநீமீவமீ என்றும் சொல்வதுண்டோன்னோ?

உபநிஷத்தில் 'வரர்' என்று மநுஷ்யர்களிலேயே உத்க்ருஷ்ட நிலைக்குப் போன குருமாரைத்தான் சொல்லியிருக்கிறது. 'உத்க்ருஷ்ட' என்பதையே 'ப்ரக்ருஷ்ட' என்றும் சொல்வதுண்டு. ஆசார்யாள் இங்கே அப்படித்தான் பாஷ்யம் பண்ணி, 'வரர்கள்' என்றால் ப்ரக்ருஷ்டமான ஆசார்யர்கள் என்று சொல்லி, அவர்களை "தத்-வித:" என்று குறிப்பிட்டிருக்கிறார். 'தத்' என்ற பரப்ரஹ்மத்தை,

'வித:' - அறிந்தவர்கள். (சிரித்து) அப்படிப்பட்ட வரர்களை குருவாக 'வரிக்க' வேண்டும் என்று உபநிஷத் சொல்கிறது. "தாயார் மாதிரிப் பரம கருணையோடு இங்கே உபநிஷத் வழி சொல்கிறது" - "ச்ருதி:அநுகம்பமாஹ மாத்ருவத்" - என்று ஆசார்யாளும் தாயாராய்க் கருணையோடு சொல்லியிருக்கிறார். கத்தி முனை என்று ப்ரஹ்ம வித்யையைச் சொல்லியிருக்கிறதே என்று பயப்படவேண்டாம், தாயாரின் அன்பு மாதிரியான குரு ப்ரஸாதம் அதை மழுக்கி மழமழப்பாக்கி விடும் என்கிற மாதிரி சொல்லியிருக்கிறார்!

---

குரு:முடிவான லக்ஷ்யத்திற்கும் இடைநிலைகளுக்கும்

கடைசிவரைக்கும் வழி சொல்லித் தருகிற குரு மட்டுமில்லாமல் ஒவ்வொரு ஸ்டேஜுக்கு வழி சொல்லி தருகிற குருக்களும் ஆதியிலிருந்து இருந்திருக்கிறார்கள். உபநிஷத்தில் அநேக இடங்களில், ஒவ்வொரு குருமாரிடம் ஒரோரு வித்யைகளை மட்டும் கற்றுக் கொண்டு மற்றதற்கு வேறே குருமார்களிடம் சிஷ்யர்கள் போனது தெரிகிறது.

அந்த வித்யை, இந்த வித்யை என்று பலதுக்குப் போகாமல், (ஆத்ம) ஸாக்ஷாத்காரம் ஒன்றே goal என்று பிடித்துக்கொண்டு அதற்கே நேராக வழி பண்ணும் ஒரு ஸாதனா க்ரமம்தான் வேணும் என்று இருந்த சிஷ்யர்களும் உண்டு. அதே மாதிரி, ஸகல வித்யைகளும் அடங்குகிற அந்த ப்ரஹ்ம வித்யையை நேராகத் தாம் ஒருவரே உபதேசித்த குருமார்களும் உண்டு. நம் ஆசார்யாளே அப்படித்தான். பொது லோகத்திற்கு அவர் கர்மாநுஷ்டானம் சொல்லயிருக்கலாம், பக்தி - ஸ்தோத்ரம், பூஜை இத்யாதி சொல்லியிருக்கலாம், ஆனால் பக்வி (பக்கவம் பெற்றவர்)களுக்கென்று வேதாந்தமாக பாஷ்யங்கள், ப்ரகரணங்கள் பண்ணினபோது முழுக்க ஸாக்ஷாத்காரத்தையே மத்யமாக வைத்துத்தான் -மத்யம், எல்லாமாகவும் வைத்துத்தான் - உபதேசம் பண்ணினார்.

ஒன்று என்ன கவனிக்கணுமென்றால், தன்னளவில் ப்ரஹ்மஞானியாகவே இருந்த குருமார்களும் சிஷ்யர்களின் பக்வம், அவர்கள் உள்ள ஸ்டேஜ் முதலியதைப் பொருத்து, நேரே ப்ரஹ்ம வித்யை உபதேசிக்காமல், அதற்கு உபாங்கம் மாதிரி, முன்னோடி மாதிரி - subsidiary, preliminary, auxiliary, ancillary என்றெல்லாம் சொல்கிறபடி உள்ள இதர வித்யைகளை உபதேசித்திருப்பதும் உண்டு.

இன்னொன்றும்: ப்ரஹ்மஜ்ஞானிகளான குருமார்களுக்கே அத்தனை வித்யைகளும் தெரிந்திருக்க வேண்டுமென்பதில்லை. அத்தனையும் அடங்கும் அகண்ட ஆதார தத்வம் அவர்களுக்குத் தெரியும் என்பதால் அது ஒன்றொன்றும் தனித்தனியாய்த் தெரிந்துதானிருக்கணும் என்று இல்லை. அப்படி உள்ளபோது ப்ரஹ்ம வித்யை

உபதேசிக்கும் அவரை முக்ய குருவாகக் கொண்டு, இதர வித்யைகளை மற்றவர்களிடமிருந்து உபதேசம் பெறுவதும் உண்டு.

---

## குரு அறிந்த அனைத்தும் சீடனுக்கு

ப்ரஹ்ம வித்யைக்கே வழியோ, சிஷ்யனின் பக்குவத்தைப் பொறுத்துப் பிற்காலத்தில் அதில் சேர்ப்பதற்கு ஸஹாயம் செய்கிற மற்ற வித்யைகளுக்கு வழியோ - எதுவானாலும் ஆதியிலிருந்து நம்முடைய ஸநாதன தர்ம ஸம்பிரதாயத்தில் வந்துள்ள எந்த ஒரு குருவும் தமக்குத் தெரிந்ததை, தாம் அறிந்ததை, அநுபவித்ததைக் கொஞ்சங்கூட மிச்சம், மீதியில்லாமல் சிஷ்யனுக்குக் கொடுத்துவிடுவார். உபநிஷத்துக்களில் நாம் பார்க்கும் குருமார்களிடமெல்லாம் இந்தப் பரம ஔதார்ய (வல்லல்தன்மை) லக்ஷணத்தைப் பார்க்கிறோம். சிஷ்யன் என்று ஒருத்தன் வந்துவிட்டால், அத்தனையையும் வாரி வழங்கியே ஆகவேண்டும் என்று எத்தனை கடமையுணர்ச்சியுடன் இருந்திருக்கிறார்கள் என்று ஆச்சர்யாமாயிருக்கும். அப்படிப்பட்ட ஒரு குருவாகவே இருந்த ஆசார்யாளோ 'அப்படிப் பண்ணத்தானே அவன் ஏற்பட்டிருக்கிறான்?' என்று அந்த ஆச்சர்யத்தையும் ஸஹஜமாகவே, நடைமுறையாகவே எடுத்துக்கொண்டு சொல்லியிருக்கிறார். முண்டகோபநிஷத் பாஷ்யத்தில் பார்த்தால் தெரியும்.

அந்த உபநிஷத்தில் முதல் ஸெக்ஷன் முடிகிற இடத்தில், நல்ல வைராக்யமுள்ள உத்தமமான ஜீவனானாலும் ப்ரஹ்மஞானம் பெறுவதற்கு குரு என்று ஒருத்தரிடம் பணிவுடன் போயே ஆகவேண்டும் என்று சொல்லிவிட்டு அப்புறம், முறைப்படி தன்னிடம் வந்த அவனுக்கு குருவும் ப்ரஹ்ம வித்யையை உள்ளவாறு பூர்ணமாக உபதேசிப்பார் என்று சொல்லியிருக்கிறது. 'ப்ரஹ்ம வித்யையை உள்ளவாறு உபதேசித்தார்' என்று மூலத்தில் இருக்கிறது. முன் தொடர்ச்சி பார்த்தால் 'உபதேசிப்பார்' என்றே பொதுவாக அத்தனை ஆசார்யர்களுக்கும் லக்ஷணமாக அர்த்தம் பண்ணிக்கணும் என்று புரியும். ஆசார்யாளோ, 'உபதேசிக்க வேண்டும்'

என்றே குருவின் தீர்மானமான கடமையாக, ரூலாக, விதித்து பாஷ்யம் பண்ணியிருக்கிறார் - 'ப்ரோவாச' என்று மூலத்தில் இருப்பதற்கு 'ப்ரப்ரூயாத்' என்று அர்த்தம் பண்ணியிருக்கிறார்.

'உள்ளவாறு' உபதேசிப்பது என்றால் என்ன? 'தத்வத்தை எதுவும் குறைக்காமல் பூர்ணமாக உபதேசிப்பது என்று அர்த்தம். இதை 'யதாவத்' என்ற சின்ன வார்த்தையால் ஆசார்யாள் தெரிவிக்கிறார். 'முறைப்படி', 'நேர்மையாக', 'விதிவழி' என்று இத்தனை அர்த்தமும் அதற்கு உண்டு. குறைக்கவும் கூடாது, ஸொந்தச் சரக்கு, ஸொந்த அபிப்ராயம் சேர்க்கவும் கூடாது. ஸம்ப்ரதாய பூர்வமாக ப்ரஹ்ம வித்யா சாஸ்த்ரம் எப்படி வந்திருக்கிறதோ அப்படியே பூர்ண ரூபத்தில் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும்.

இப்படிச் சொல்கிற இடத்தில்தான் குருவின் கடமையை ஆசார்யாள் எடுத்துச் சொல்லி முடித்திருக்கிறார். 'ஆசார்யஸ்ய நியமம்' என்று அவர் சொல்கிறார். 'நியமம்' என்பதற்கு இங்கே 'கடமை' என்றே அர்த்தம். யதி நியமம், ப்ரஹ்மசாரி நியமம், க்ருஹஸ்த நியமம் என்றெல்லாம் சொல்லும்போது நியமம் என்றால் அவரவருக்கான ரூல், சட்டம் என்று அர்த்தம். அந்தச் சட்டப்படியே பண்ண வேண்டுமென்பதால் அதுவே கடமையாகிறது. ஸந்த்யாவந்தனம் பண்ணுவது ப்ரஹ்ம சாரிக்கான நியமம் என்றால் அதுவே அவன் கடமையுந்தான் என்று ஆகிறதோல்லியோ? கடமைகளையே நியமம் என்று சாஸ்த்ரபூர்வமாக

வகுத்துக் கொடுத்தார்கள். 'கட்டுப்பாடு' என்பது அதன் நேர் அர்த்தம். ரூல், 'இப்படிப் பண்ணு, இப்படிப் பண்ணாதே' என்று கட்டுப்படுத்துகிறது. கடமையும் அப்டித்தான் 'கடமையிலிருந்து மீறக்கூடாது' என்கிறோம். 'மீறுவது என்றதால் 'கட்டுக்கு அடங்கி இருக்க வேண்டும்' என்பது தொக்கி நிற்கிறது.

---

## ஆசார்யாள் விதிக்கும் ஆசாரியக் கடமை

ஸரி, ஆசார்யாள் ஒரு ஆசார்யனுக்குச் சொல்லியுள்ள அந்த நியமம் என்ன?

'அதுதான் சொன்னீர்களே, 'யதாவத் வித்யை கற்பிக்கணும்' என்று!' என்று கேட்கலாம். அப்படிக் கற்பிப்பது, பாடம் சொல்லிக்கொடுப்பது உபாயந்தான், means-தான். தற்கால ஆசிரியர்களின் கடமை அப்படித்தான் பாடம் சொல்லிக் கொடுப்பதோடு முடிந்துவிடுவதாக அமைந்து விட்டது. ஆனால் அதல்ல நிஜமான ஆசார்யனின் கடமை. கற்றுக்கொண்ட பாடத்தின் ப்ரயோஜனத்தை மாணவன் தன்னுடைய வாழ்க்கையில் ப்ரத்யக்ஷமாகக் காணும்படிச் செய்வதே நிஜ ஆசார்யனின் கடமையாகப் பூர்வ காலங்களில் கருதப்பட்டது. கற்ற வித்யையால் மாணவன் சொந்த வாழ்க்கையில் ப்ரயோஜனம் அடைய வேண்டும். அதுதான் லக்ஷ்யம், இப்படி ஒரு குரு யதாவத்தாக ப்ரஹ்ம வித்யை போதிக்கிறாரென்றால் அது சிஷ்யனை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்றுகிற லக்ஷ்யத்திற்கு உபாயமாகச் செய்யப்படுவதே. அவருடைய லக்ஷ்யம் அவனைக் கரை ஏற்றுவது. அது 'உபேயம்'. அதற்கு வரியான 'உபாயம்' கற்றுக்கொடுப்பது. இந்த உபாயத்தால் சிஷ்யன் லக்ஷ்யத்தை அடைந்தேவிடுமாறு குரு பண்ணுவதைத்தான் அவரது கடமையாக இங்கே ஆசார்யாள் சொல்கிறார்.

---

## ஸத்குருவும் - ஸச்சிஷ்யனும்

ஸத்குரு என்கிறாற் போலவே ஸச்சிஷ்யன் என்றும் உண்டு. ப்ரஹ்மவித்யா உபதேசம் தந்து, உபதேச பலனை சிஷ்யன் அநுபவிக்குமாறும் பண்ணுபவரே ஸத்குரு. அதுபோல நல்ல குணம், குறிப்பாகப் பணிவு, தீக்ஷண்ய புத்தி, 'ஜிஞ்ஜாஸா' என்ற உண்மையான ஞான தாஹம் எல்லாம் உள்ளவனே ஸச்சிஷ்யன். சாஸ்த்ர - ஸம்பிரதாய வழிமுறைப்படியே போகவேண்டும் என்று இருப்பவன் அவன். இங்கே ஆசார்யாள் அப்படிப்பட்ட சிஷ்யனை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து காப்பாற்றிக் கரைசேர்க்க 'ந்யாய - ப்ராப்த ஸச்சிஷ்யன்' என்று சொல்கிறார். அப்படியென்றால், எப்படி

சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ அந்த முறைப்படி குருவை வந்தடைகிற உத்தம சிஷ்யன். அவனை அவர் 'அவித்யா மஹோததி' யிலிருந்து 'நிஸ்தாரணம்' பண்ண வேண்டியது அவருக்கான நியமம்' என்கிறார். 'அவித்யா மஹோததி' என்றால் 'அஞ்ஞானப் பெருங்கடல்'; பொய் மாயப் பெருங்கடல்' என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்னது. அதையேதான் ஸம்ஸார ஸாகரம் என்பதும். அதிலிருந்து 'நிஸ்தாரணம்' என்றால், பொது அர்த்தம், காப்பாற்றுவது'. ஸாகரத்தைச் சொல்லியிருப்பதை வைத்து 'அனலைஸ்' பண்ணி அர்த்தம் சொன்னால் 'அக்கரை சேர்ப்பிப்பது', 'கரையேற்றுவது', 'கடைத்தேற்றுவது' என்று அர்த்தம். 'நிஸ்தாரம்' - அந்த கார்யத்தைப் பரிபூர்த்தியாக (முற்றிலும் முழுமையாக)ச் செய்வது. அதாவது 'முக்தி அளிப்பது' என்றே அர்த்தம். அந்த மஹா பெரிய அநுக்ரஹத்தை - ஜீவனாகப் பிறப்பெடுத்த ஒருவன் எதற்கு மேலே ஒன்றைப் பெற முடியாதோ அதை அளிக்கிற அநுக்ரஹத்தை - ஆசார்ய நியமமாக ஆசார்யாள் தெரிவித்திருக்கிறார். சிற்றுயிராக வந்த சிஷ்யனைப் பேருயிராகவே ஆக்குகிற பரமாநுக்ரஹக் கடமை!

'கல்வியினூங்கில்லை சிற்றுயிர்க்குற்ற துணை' என்று கேள்விப்பட்டிருக்கலாம். பொதுவிலே ஜனங்களுக்கு லோக வாழ்க்கையை நல்ல அறிவோடும் ஒழுக்கத்தோடும் வாழ்வதற்கு வழி கற்பித்த முற்காலக் கல்வி பற்றியே இப்படிச் சொன்னது. அறிவை வளர்ப்பதே முக்யமனாலும் பக்தி, ஞானம் கடமை, மற்ற நல்லொழுக்கங்கள் எல்லாமும் நிறையச் சொல்லிக் கொடுக்கும் கல்வி முறை அது. அப்படிப்பட்ட கல்வி இந்த லோக வாழ்க்கையில் சிற்றுயிர் தன்னுடைய சிறுமை நிங்கிப் பெருமைப்படும்படி வாழ ஸஹாயம் செய்ததாலேயே அதைச் 'சிற்றுயிர்க்குற்ற துணை' என்றது. ப்ரஹ்ம வித்யையோ லோக வாழ்க்கையையே ஸமாப்தி பண்ணிச் சிற்றுயிரைப் பேருயிராக ஆக்கிவிடுவது. அதை ஸாதிக்க வழி சொல்லி, முன் நடத்திப்போகிற ஸத்குரு எத்தனை பெரிய துணையாயிருக்கவேண்டும்?

---

## குருவின் முழுச் 'சொத்து'ம் சீடனுக்கு

'யதாவத்' சொல்லிக்கொடுப்பது என்பது பற்றிக் கொஞ்சம் விஸ்தாரம் பண்ணணும். அப்பா முழு ஸொத்தையும் பிள்ளைக்கு எழுதி வைக்கிற மாதிரி ஆசார்யன் தனக்குத் தெரிந்த வித்யை முழுதையும் சிஷ்யனுக்குச் சொல்லிக் கொடுப்பதுதான் இந்த 'யதாவத்'. இரண்டு பிள்ளை இருந்துவிட்டால் அப்பா ஒவ்வொருத்தனுக்கும் முழு ஸொத்து எழுதி வைக்க முடியாது. ஆனால் குருவோ எத்தனை சிஷ்யாள் இருந்தாலும் ஒவ்வொருத்தனுக்கும் பூர்ணமகா வித்யாப்யாஸம் பண்ணுவிக்க முடியும். இது வித்யையின், அறிவின் விசேஷம். எத்தனை பங்கு போட்டாலும் குறையாத ஸ்ரீ அது.

சிஷ்யனிடம் பரம ப்ரேமையும், அவனுக்கு வழிகாட்டணும் என்பதில் முழு ஈடுபாடும், தனக்குத் தெரிந்த வித்தையை தன்னோடு போகாமல் நாலு பேரிடம் பிரகாசிக்கவேண்டும் என்பதாக அந்த வித்யையிடமே பக்தி - ப்ரேமைகளும் இருந்தாலொழிய இப்படிப் பூர்ணமாகக் கற்றுக்கொடுக்க முடியாது. இக் காலத்தில் அபூர்வமாகத்தான் அப்படிப் பார்க்க முடிகிறது. அடியோடு இல்லாமல் போய் விடவில்லை என்று இன்றைக்குப் பல துறைகளில் பெரியவர்களாக இருக்கப் பட்டவர்கள் தங்கள் ஆசிரியர்மார்களைப் பற்றிச் சொல்வதிலிருந்து தெரிகிறது, என்னிடம் பல இள வயஸுக்காரர்கள் 'தீஸில்' கொண்டு வந்து கொடுக்கிறார்கள், அவர்களுள் சொல்வதிலிருந்து தற்காலத்திலும் அப்படிப் பூர்ணமாக அநேக ஆசிரியர்கள் சொல்லிக் கொடுப்பதாகத் தெரிகிறது. ஆனாலும் நேர்மாறாக, 'கம்ப்ளெய்ன்ட்'களும் கேட்கிறேன்

ஆனால் உபநிஷத்துக்களைப் பார்த்தால், ஏதோ ரொம்ப ஸ்வல்பமான விலக்குத் தவிர அக்காலத்தில் அத்தனை ஆசார்யர்களுமே தாங்கள் கற்றறிந்த வித்யையைப் பூர்ணமாக சிஷ்யர்களுக்கு உபதேசித்தார் என்று தெரிகிறது. அத்தனை கர்வியாக இருந்த ச்வேதகேதுவே அப்பாக்காரர் கேட்ட ஸமாசாரம் தனக்குத் தெரியவில்லை என்கிறபோது, தன்னுடைய குருமார் அதை உபதேசிக்கவில்லை என்று சொல்லி, கூடவே, "அவாளுக்கும் விஷயம் தெரியாது போலேயிருக்கு, தெரிஞ்சிருந்தா எனக்கு ஏன் சொல்லித்தராம

இருந்திருக்கப் போறா?" என்று சொல்கிறான். அதொன்றே போதும். அந்த ஸந்தர்ப்பத்தில் அப்படிப்பட்ட ஒரு பாத்திரம் இப்படி ஒன்று சொன்னது விசேஷம்.

'ப்ரச்நோபநிஷத்'திலிருந்து கொஞ்சம் முன்னே சொன்னேன். அதன் முடிவிலே சிஷ்யர்கள் ஆசார்யரைப் பார்த்து, "அவித்யையின் அக்கரையில் எங்களைச் சேர்த்த நீங்கள்-னா எங்க அப்பா!" என்று வருவதாகச் சொன்னேன். ஆரம்பத்தை இப்போது சொல்கிறேன்.

ஆறு பேர் சிஷ்யர்களாகப் புறப்படுகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தாங்களே குருஸ்தானம் வரிக்கும் யோக்யதை பெற்றவர்கள் - ஸுகேசர், ஸத்யகாமர், கார்க்யர், கௌஸல்யர், பார்கவர், கபந்தி என்றிப்படி ஆறு பேர். அவர்களுக்கும் ப்ரஹ்ம வித்யையில் இன்னும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இருந்தன. தெரிந்துகொள்ளணும் என்று ஆசைப்பட்டார்கள். அதற்காக ஆறு பேரும் 'பகவந்தர்' என்று உபநிஷத்

சிறப்பித்துச் சொல்லும் மஹரிஷி பிப்பலாதரை ஆசார்யராக வரித்து, உபஹாரமாக-

அதாவது, குரு காணிக்கையாக - ஸமித்தை எடுத்துக்கொண்டு அவரிடம் போனார்கள். ஸமித்து என்றால் வெறும் சுள்ளிதான். ஹோமத்திலே போட உபயோகமாகிற சுள்ளி. 'வெறும்' சுள்ளி என்று நான் சொன்னதையே பெரிய தக்ஷிணையாக அந்தக் கால ரிஷி-குருமார் நினைத்தார்கள். அத்தனை எளிமை!அதிலேயே வஸ்துவைவிட வஸ்துவைத் தருகிறவரின் மனோபாவத்தை மதிக்கத் தெரிந்த பண்பும்!

இது யோக்யதையுள்ள சிஷ்யர்களென்றால் தக்ஷிணையைப் பொருட்படுத்தாமல் வித்யை போதிக்கிறதைக்காட்டுகிறது. இதன் தொடர்ச்சியாகவே இன்னொன்றும், அதாவது யோக்யதை போதாதவன் என்றால் அவன் எத்தனை பெரிசான தக்ஷிணை கொடுக்கிறானென்றாலும் அவனை சிஷ்யனாக ஏற்றுக் கொள்வதில்லை என்றே அந்த குருமார்கள் இருந்திருக்கிறார்கள். 'ஸமுத்ரம் சூழ்ந்த பூமி பூராவையும் தக்ஷிணையாகத் தரக் கூடியவனாயிருந்தாலும் யோக்யதை போதாதவன் என்றால் அவனுக்கு உபதேசிக்கப்படாது' என்றே மதுவித்யை உபதேசிக்கும் ரிஷி

சொல்லியிருக்கிறார். ஆசார்யாளும் இதை நினைப்பில் கொண்டு தம்முடைய 'உபதேச ஸாஹஸ்ரீ' ஆரம்பத்தில் 'ஸமுத்ரம் சூழ்ந்த லோகம் பூராவையும், அதிலுள்ள பூர்ணமான செல்வங்களோடு குருவுக்குத் தந்தாலும் அவர் தருகிற உபதேசமோ அதற்கும் பெரிதானது என்று சாஸ்திரம் சொல்கிறது' என்கிறார். இந்த விஷயம் இருக்கட்டும்.

ஸுகேசர் முதலான ஆறு பேர் ஸமித்தை எடுத்துக்கொண்டு பிப்பலாதரிடம் போனார்கள். பெரியவர்களாக இருக்கப்பட்ட ஆறு பேர் தங்களுடைய வித்யா ஞானம் பூர்த்தியாகவில்லை என்று ஒருத்தருக்கொருத்தர் மனஸ்விட்டுச் சொல்லிக் கொண்ட சிஷ்யர்களாகப் புறப்பட்டார்கள் என்பதிலிருந்து அவர்களுடைய விநய மனப்பான்மையையும் வித்யா தாஹமும் தெரிகிறது. 'வித்யா -விநய ஸம்பன்ன' என்று சேர்த்துச் சேர்த்தே நம்முடைய மரபில் சொன்னது நடைமுறையிலேயே நடந்த ஸமாசாரந்தான் என்று தெரிகிறது. அது இருக்கட்டும்.

பிப்பலாதருக்கு ப்ரஹ்மவித்யை பூர்த்தியாகத் தெரியும் என்று இவர்களுக்குத் தெரிந்ததாலேயே அவரிடம் உபதேசம் பெறுவதற்குப் புறப்பட்டது. அப்போது இவர்கள், அவர் பூர்த்தியாக அறிந்ததைத் தங்களுக்கும் பூர்த்தியாகச்சொல்லிக் கொடுப்பார் என்று தங்களுக்குள் சொல்லிக் கொண்டே புறப்பட்டதாக வருகிறது. "தத் என்கிற ப்ரஹ்மத்தைப் பற்றி ஸர்வமும் அவர் நமக்குச் சொல்லுவார்" என்று அவர்கள் சொல்லிக்கொள்கிறார்கள்.

அப்படியே அவரிடம் போக, அவர், "இன்னும் ஒரு வருஷம் கட்டுப்பாட்டோடு தபஸ் பண்ணிக்கொண்டு முறைப்படி ச்ரத்தையோடு இங்கே இருங்கோ!அப்புறம் கேட்கவேண்டியதையெல்லாம் உங்கள் இஷ்டம்போல கேட்டுக்கோங்கோ. நீங்கள் கேட்பது எனக்குத் தெரிஞ்சிருந்தால் தெரிஞ்சமட்டில் முழுக்க - ஸர்வமும் - சொல்லித் தரேன்" என்கிறார்.

ஒரு குருவானவர் தாம் அறிந்த ஸர்வமும் சிஷ்யனுக்கு போதிக்காமல் விடமாட்டார் என்பதற்கே இதைச் சொல்லவந்தேன்.

ரொம்ப அழுத்தமாக ஒன்று ஞாபகம் வருகிறது. ஜனகருக்கு

அநேக உபதேசங்கள் கொடுத்துக் கொண்டே போகிறார். ஒவ்வொரு

உபதேசத்தையும் கேட்டவுடன் ஜனகருக்கு ஸந்தோஷம் பொங்கிக் கொண்டு வருகிறது, 'இதோ ஆயிரம் பசு, ஆனை மாதிரி காளையோடுகூடத் தருகிறேன்' என்கிறார். ஆனால் யாஜ்ஞவல்க்யர், "பூர்த்தியாக உபதேசம் கொடுக்காமல் தக்ஷிணை வாங்கிக் கொள்ளக்கூடாதென்று என் அப்பா தீர்மானம்" என்று பிதாவுக்குப் பெருமை கொடுத்துச் சொல்லி, தேடி வருகிற ஸம்பாவனையை நிராகரிக்கிறார். சிஷ்யன் என்ன தக்ஷிணை தருகிறான் என்பதைவிட தாம் முழுக்கச் சொல்லிக் கொடுக்கணும் என்பதைத்தான் குரு முக்யமாக நினைத்தார் என்று இங்கே தெரிகிறது.

---

## குரு - சிஷ்யர் பற்றி மேலும் படிப்பினைகள்

ப்ரச்னோபநிஷத் கதையில், பூராவும் உபதேசிப்பது பற்றிச் சொல்லு மிடத்திலேயே குரு லக்ஷணம், சிஷ்ய லக்ஷணம் குறித்து இன்னும் அநேக விஷயங்களும் வந்து விடுகின்றன.

முதலாவதாக "இன்னும் ஒரு வருஷம் நியமம் காக்கணும்" என்று தம்மிடம் வந்திருக்கும் அந்த ஆறு பேரிடம் ரிஷி சொல்வதால் அவர்கள் ஏற்கெனவே நல்ல அநுஷ்டாதாக்கள் என்று அவருக்குத் தெரியுமென்று தெரிகிறது. இருந்தும் அவர்களை மேலும் ஒரு வருஷம் தபஸூம், சிஷ்யர்களுக்கான இதரக் கட்டுப்பாடுகளும் அநுஷ்டிக்கச் சொல்கிறார். ஏன்? தம் கூடவே வஸித்து அவர்கள் தங்கள் யோக்யதாம்சத்தை 'ப்ரூவ்' பண்ணிக்காட்டவேண்டும், அது ப்ரத்யக்ஷமாகத் தமக்கு உறுதிப்பட வேண்டும் என்பதற்காக அப்படிச் சொல்லியிருக்கலாம். இங்கே நல்ல யோக்யதை நிருபணமானவருக்கே உசந்த ஆத்ம தத்வங்களை உபதேசிக்க வேண்டும் என்பதற்குச் சான்று கிடைக்கிறது. இன்னொரு காரணம் என்னவாயிருக்கலாமென்றால், ஏற்கெனவே அநேகம் கற்றுத் தெரிந்த கொண்டவர்களான அவர்களுக்குச் கொஞ்சம் 'தான்' உண்டாகியிருக்க

இடமுண்டு. அப்படி இல்லாவிட்டால்தான் புது உபதேசம் உள்ளே இறங்கும், டெஸ்ட் பண்ணி இதைத் தெரிந்துகொள்ளவே,"இன்னும் ஒரு வருஷம் தபஸ் இத்யாதி" என்று சொல்லியிருக்கலாம். குரு என்ன கட்டளையிட்டாலும் கீழ்ப்படிய வேண்டியது சிஷ்ய லக்ஷணமானதால் அந்த லக்ஷணம் அவர்களுக்கு இருக்கிறதா என்று பார்ப்பதற்கு இப்படிப் பரீக்ஷை வைத்திருக்கலாம். 'தான்' என்கிறது அவர்களுக்கு உள்ளே கொஞ்சமோ நஞ்சமோ இறங்கியிருந்தாலும் இநத் தபஸ்சர்யம் அதைப் போக்கடித்து சத்தி பண்ணும் என்பதாலும் இருக்கலாம்.

அந்தக் காரணம் அல்லது இந்தக் காரணம் என்றில்லாமல் எல்லாக் காரணத்திற்காகவுமே அப்படிச் சொல்லியிருக்கலாம்.

இதில் சிஷ்ய லக்ஷணங்கள் அநேகம் தெரிந்துவிடுகின்றன. "என்கூட முறைப்படி ஒரு வருஷம் இருங்கோ -ஸம்வத்ஸ்யத" என்று ரிஷி சொல்கிற இடத்தில் 'முறைப்படி' என்பதற்கு ஆசார்யாள் 'ஸம்யக் குரு சுக்ரூஷா பரா:' என்று பாஷ்யம் செய்திருக்கிறார். 'ஸம்யக்' என்றால் ஸரியானது, பூர்ணமாக இருப்பது என்று அர்த்தம். இங்கே அர்த்தம், பூர்ணமாக, முற்றிலும். 'குரு சுச்ரூஷாபரா:' என்றால் குருவுக்கு சுச்ரூஷை செய்வதே எல்லாவற்றுக்கும் மேலே என்று total dedication-ஒடு இருப்பது. ஒரேயடியாக த்யானம் என்று பிடித்துக்கொண்டு அதிலேயே முழுகிப் போனவர்களை 'த்யானபரர்' என்கிறது போல, சிஷ்யர்களை 'குரு சுச்ரூஷா பரர்'களாக இங்கே ஆசார்யாள் நமக்குத் தெரிவிக்கிறார். அந்த அபிப்ரயாத்திற்கு மேலும் கனம் சேர்ப்பதற்காக முதலில் 'ஸம்யக்' வேறு போட்டிருக்கிறார்

தபஸ், ப்ரஹ்மசர்யம், ச்ரத்தை என்ற மூன்றோடும் இருக்கும்படி அவர்களிடம் ரிஷி சொல்வதால் இந்த மூன்றும் சிஷ்ய லக்ஷணங்கள் என்று தெரிகின்றன. தபஸ் என்றால் சரீர ச்ரமம் முதலியவற்றைப் பாராட்டாமல் ஒரே குறியாக ஒரு லக்ஷ்யத்தில் ஈடுபட்டிருப்பது. ச்ரத்தை என்றால் நம்பிக்கை -

சாஸ்த்ரம் சொல்வதும் குரு சொல்வதுமே பரம ஸத்யம், அதுவே நமக்கு நல்லது

என்று பாறாங்கல் மாதிரியான த்ருட ந்மபிக்கை. 'ஆஸ்திக்ய

புத்தி' என்றே ஆசார்யாள் ச்ரத்தைக்கு அர்த்தம் பண்ணுவது வழக்கம்.

இப்படியெல்லாம் குரு சொல்லி ஒருத்தன் ஒழுகுகிறானென்றால் அவனிடம் சிஷ்யனின் ப்ரதம லக்ஷணமான விநயம் - அடக்கம், பணிவு - இருந்தால்தான் முடியும்.

---

**' சிஷ்ய' விளக்கம்**

சிஷ்யனுக்கு ப்ரதம லக்ஷணம் விநயம் என்றால் அவனுடைய மற்ற லக்ஷணங்கள் என்ன? 'குரு', 'ஆசார்யன்' முதலான வார்த்தைகளுக்கு அர்த்தம் பார்த்தாற்போல் 'சிஷ்யன்' என்பதற்கு அர்த்தம் என்ன? - என்று பார்த்தால் பெரியவர்கள் மூன்று விதமாக டிஃபைன் பண்ணியிருக்கிறார்கள். 'சிக்ஷை' என்றால் 'கற்றுக்கொடுப்பது' என்பது தெரிந்ததுதானே? (சிரித்து) இந்த நாளில் தெரியாமலுமிருக்கலாம்!சிக்ஷை என்றால் 'ட்யூஷன்'. எவன் 'சிக்ஷை' பெறுகிறானோ அவன் 'சிஷ்யன்'. 'சிக்ஷ்யன்' என்பதே சிஷ்யன் என்றாயிருக்கிறது. 'சிக்ஷ்'தான் வேர்ச்சொல். அதற்குப் படிப்பது, அறிவு ஸம்பாதித்துக்கொள்வது என்று அர்த்தம். அப்படிப் பண்ணுபவன் சிஷ்யன். இது ஒரு அர்த்தம்.

இன்னொன்று - 'சிஷ்' என்ற வேர்ச் சொல்லின் அடியாக 'சேஷம்' என்று வார்த்தை இருக்கிறது. மீந்துபோனதை 'சேஷம்' என்கிறோம். 'மிகுந்து' என்பதுதான் 'மீந்து' என்று ஆனது. தமிழில் 'மிக்கார்', 'மிக்கார்' என்று புலவர்கள் சொல்வது எவர்களை? ஸாதரணமான லோக ஜனங்களின் லெவலில் இல்லாமல் அதிலிருந்து 'மிகுந்து', 'மீந்து', 'சேஷ'மாகி உயர்ந்த லெவலில் இருக்கிறவர்கள்தானே? 'சேஷர்' என்று அவர்களைச் சொல்லலாம். 'சிஷ்டர்' என்று சொல்கிறோமே, அது இதே வேர்ச்சொல்லை வைத்துத்தான். 'சேஷம்', 'மீந்துபோனது' என்னும்போது ஒரு வஸ்துவுக்கு உயர்வு தெரியாவிட்டாலும், அதற்கு முன்னே 'வி' சேர்த்து 'விசேஷம்' என்றால் ரொம்ப உயர்வு, ரொம்பச் சிறப்பு

என்றுதானே எடுத்துக்கொள்கிறோம்?

'வி' என்ற முன்னடைக்கு எதிரர்த்தம் தருவது, இருக்கிற அர்த்தத்திற்கு ஏற்றம் கொடுப்பது என்று இரண்டு குணமுண்டு. இங்கே 'சேஷ'த்திற்கு ஏற்றம் கொடுத்தே 'விசேஷம்'.

இப்படி, சிறப்பு இல்லாமல் ஸாதாரணப் பேர்வழியாயிருந்த ஒருவன் குருவின் சிக்ஷையால் 'சேஷ'னாக சிஷ்டனாக உருவெடுக்கும்போதே 'சிஷ்யன்' என்று சொல்லப்படுகிறான் - இது இரண்டாவது அர்த்தம்.

'சிக்ஷ' என்று தண்டிப்பதையும் சொல்வது. 'ராஜ தண்டனை' என்பதை 'ராஜ சிக்ஷை' என்பார்கள். ராஜா ரக்ஷை, சிக்ஷை இரண்டும் தரவேண்டும் என்று சாஸ்திரம். அந்த மாதிரி தன்னுடைய இந்த்ரியங்கள் கண்டபடி போகாமல் சிக்ஷித்துக் கொள்கிறவனே 'சிஷ்யன்' என்று மூன்றாவது அர்த்தம்.

இந்த்ரியத்தை அடக்குவது ஒரு (சிஷ்ய) லக்ஷணமென்றால் 'அடக்கமாயிருக்கான்' என்கிறோமே, அப்படி humble-ஆக, 'விநய'மாக இருக்க வேண்டியது அவனுடைய இன்னொரு லக்ஷணம். அதனால்தான் சிஷ்யனுக்கு 'விநீதன்' என்றே இன்னொரு பெயர்.

குருவோடு கூடவே வஸிப்பவன் என்பதால் 'அந்தேவாஸி' என்றும் அவனுக்கு இன்னொரு பெயர். அப்பா, அம்மாவோடு வீட்டிலில்லாமல் குருகுல வாஸத்தில்தானே முற்கால சிஷ்யர்கள் படித்தது? அதனால் அதற்கு முக்யத்வம் தந்து இந்த 'அந்தேவாஸி' என்ற பேர் ஏற்பட்டிருக்கிறது. எனக்குத் தோன்றவதுண்டு - 'அந்தே' என்பதற்குக் 'கூட', 'உடன்' என்று அர்த்தம் பண்ணுவதை விட 'உள்ளே' என்றே அர்த்தம் பண்ணலாமென்று குருவின் கூட

இவன் வஸிப்பது மட்டுமில்லை, அவருக்கு உள்ளேயே, அவருடைய ஹ்ருதயத்திலேயே இடம் பிடித்து வஸிக்க வேண்டியவன். அதுதான் ஸரியான அந்தேவாஸி.

சிஷ்யனின் ப்ரதம லக்ஷணம் விநயம். அவனுக்கு மட்டுமில்லாமல், அவன் யாரிடம் அதி விநயமாயிருக்கிறானோ அந்த ஆசார்யனுக்குமே விநய ஸம்பத் அவச்யம் என்று நம் பூர்வ சாஸ்த்ரங்கள்

காட்டுகின்றன.

---

## குருவின் விநயம்

சிஷ்யன் மாத்திரமில்லை, குருவும் விநயமுள்ளவராகத்தான் இருப்பார் என்றும் நாம் ப்ரச்னோபநிஷத்தில் பார்த்ததிலிருந்து தெரிகிறது. "கேளுங்கோ!எனக்குத் தெரிஞ்சா தெரிஞ்சது முழுக்க சொல்றேன்" என்று ரிஷி சொல்வதில்தான்!இப்படிச் சொன்னது அவருடைய 'அநுத்தத்த்வ'த்தைக் காட்டுகிறது என்று ஆசார்ய பாஷ்யம். 'உத்ததி' என்றால் கர்வம். 'அநுத்ததி' என்றால் கர்வமில்லாத குணம். அதாவது விநயம். அப்படி இருப்பதே 'அநுத்ததத்வம்'.

இங்கே ஆசார்யாள் அழகாகச் சொல்கிறார், 'பின்னாடி அந்த ஆறு பேர் கேட்ட கேள்விக்கெல்லாம் அவர் ஸரியாக பதில்கள் சொல்லி அவர்களுக்கு தெளிவு தருவதிலிருந்து அவர் ஆத்மசாஸ்த்ரம் நன்றாகவே தெரிந்தவர் என்றாகிறது. ஆனபடியால் தெரிஞ்சா சொல்றேன்' என்று அவர் சொல்வது ஞானக் குறைவினாலோ, விஷயத்தைப் பற்றி அவருக்கே ஸம்சயமிருந்ததாலோ அல்ல. அநுத்ததையால்தான் அப்படிச் சொல்லியிருக்கிறார்' என்கிறார்.

சிஷ்யன் என்று ஒருத்தன் இவருக்கு விஷயம் தெரியும் என்று நம்பிக்கையின் மேலேயே வந்து கேட்கிறபோது குரு ஸ்தானத்திலிருப்பவர் அவனிடமே 'தெரிந்தால் சொல்கிறேன்' என்று சொல்லவேண்டுமனால் அதற்கு எவ்வளவு ஸத்ய சீலமும், அதைவிட விநயமும் இருக்கவேண்டும்?

குருவிடம் சிஷ்யனுக்கு விநயம் என்பதற்கு மறு பக்கமாக இப்படி ஒரு அபூர்வமான விநயத்தை குருவே சிஷ்யன் விஷயமாகக் காட்டுவதை, எந்த குருவும் அப்படிச் செய்யவேண்டும் என்பதற்காகவே உபநிஷத் காட்டியிருக்கிறது.

இதற்கு உச்ச ஸ்தானமாக நான் நினைக்கும் ஒன்று உண்டு.

தைத்திரீயோபநிஷத் ரிஷி - அதாவது குரு - நிறைய ப்ரம்மசாரிகள் தன்கிட்ட வந்து சிஷ்யாளாகச் சேரணும், சேரணும் என்று தவித்துக்கொண்டு ப்ரார்த்திக்கிறார். அதைப் பார்க்கும்போத ஒரு பையனுடைய வாழ்க்கைக்கே பொறுப்பேற்றுக்கொண்டு அவனை அகத்தோட வைத்துக்கொண்டு ரக்ஷிக்கும் கஷ்டமான பொறுப்பை எத்தனை இஷ்டத்தோடு அந்தக் கால குருமார்கள் வரவேற்றார்கள் என்று தெரிகிறது. சரிந்து ஆழமாகப் போய்முடிகிற ஒரு பள்ளத்தை நோக்கி எப்படி ஜலமெல்லாம் ஓடி வந்து ஒன்று சேருமோ, மாஸங்கள் எப்படி ஒன்று சேர்ந்து வருஷமாகிறதோ அந்த மாதிரி சிஷ்யர்கள் தன்னிடம் ஒன்று கூடணும் என்று ரொம்பவும் அழகாக அந்த ரிஷி சொல்கிறார். 'குரு கிடைக்கணுமே, கிடைக்கணுமே!' என்று சிஷ்யனுக்கு இருப்பதற்குக் குறைச்சலில்லாமல், சிஷ்யன் கிடைக்கணும் என்று குருவுக்கும் இருந்த ஹ்ருதய தாபம் இங்கே தெரிகிறது!அது இருக்கட்டும். விநயத்துக்கு வருகிறேன்...

இரண்டும் ரொம்ப அழகான, ஆழமான உபமானம் ஜலம் சேராவிட்டால் பள்ளம் ஒன்றுக்கும் ப்ரயோஜனமில்லை 'பாழுங் கிணறு' என்றே சொல்கிறோமே, அப்படி சிஷ்யர்களைப் பெறாத ஒரு வித்வானுடைய - வித்வானென்று உசந்த அர்த்தத்தில் சொல்கிறேன், அதாவது, ஆத்ம சாஸ்த்ரம் உள்பட எந்த வித்யையிலும் தேர்ந்தராயுள்ள ஒருத்தருடைய-வாழ்வே பாழ்தான் என்ற அபிப்ராயம் இங்கேவருகிறது. வெறும் பள்ளம் ஆபத்துக்கே ஹேது. உயிரை

வாங்கிவிடக்கூடியது!அதுவே ஜலம் நிரம்பினால் பல பேருக்கும் பரமோபகாரம்.

தன் வாழ்க்கை பாழாகிவிடாமல் அதை ஸமூஹத்துக்குப் பரம ப்ரயோஜனமாக்குவதே சிஷ்யன்தான் என்ற எண்ணத்தோடு குரு இருந்திருக்கிறார் என்று இங்கே தெரிகிறது.

மாஸங்கள் இல்லாவிட்டால் வருஷம் என்றே ஒன்று இல்லைதானே? பள்ளம் என்னும்போது பாழாகவாவது காட்டுவதற்கு ஒன்று இருக்கிறது. ஒரு எல்லைக்குள்ளே இருக்கிற சூன்யத்தை அப்படிக் காட்டுகிறோம். மாஸங்கள்

இல்லாவிட்டாலோ வருஷம் என்கிறது முழு சூன்யமேதான்!காட்டவே ஒன்றுமில்லாத பெரியே கோளா!சிஷ்யர்கள் என்பவர்கள் ஒன்றுசேர்ந்துதான் ஆள் என்றே தானொருத்தன் என்ற அளவுக்கு ஆசார்யன் நினைத்திருக்கிறார்!தம் வாழ்க்கை பூரா அவர்களுக்கே என்று த்யாகம் செய்வது போதாதென்று, அவர்களை உயர்த்தி வைத்து, அவர்கள்தான் தம்முடைய வாழ்க்கையையே வாழ்க்கையாக்கித் தருகிறார்கள் என்று நினைக்கிற பாவம்!இவர் அவர்களுக்கா வாழ்கையை த்யாகம் செய்கிறார் என்கிறபோது இவர் மேல் ஸ்தானத்திலிருந்து கொண்டு அவர்களுக்கு ஒன்றைக்கொடுக்கிறார், நல்லது செய்கிறார் என்றாகிறது. அவர்களாலேயே இவருக்கு வாழ்க்கை வாழ்க்கையாவது என்கிறபோதோ அவர்கள்தான் கொடுக்கிறவர்களாக, இவருக்கு நல்லது செய்கிறவர்களாக இருக்கிறார்கள்!இவர் கொடுக்கிறபோது இவருக்கு அவர்களுடைய நமஸ்காரம், அவர்கள் கொடுக்கிறபோது இவருக்கு அவர்களிடம் நன்றி, அதிலே உள்ளூர விநயம் என்றுதானே இருக்கும்?

இப்படி சிஷ்யன் விஷயமாகவே குருவுக்கு விநய மனப்பான்மையும் இருக்கும்படியாக நம்முடைய ஸநாதன தர்மத்தில் அந்த ஸ்தானத்தை வகுத்துத் தந்திருக்கிறது.

நேரே விநயமென்று அவனிடம் இவர் தழைந்திருப்பது இல்லை. அது அஸம்பாவிதம். சிஷ்யனுக்கே கெடுதி பண்ணுவது. மனஸுக்குள்ளே அந்த பாவமும் ஒரு குருவுக்கு இருக்கவேண்டும் என்னும் போதுதான் அதில் ஒரு ரஹஸ்யமானஅழகு, delicate,refinement-நுண்ணியபண்பு என்கிறது - ப்ரகாசிக்கிறது

---

## ஸர்வமும் உபதேசிப்பதற்குச் சான்று

இதெல்லாம் இருக்கட்டும். குரு தனக்குத் தெரிந்த ஸர்வமும் சிஷ்யனுக்கு உபதேசித்து விடுவார், அதாவது அப்படிச் சொல்லவேண்டியது அவர் கடமை என்று உபநிஷத்

காட்டுகிறது என்று பார்த்துக் கொண்டிருந்தோமே, இதை இந்த ஆறு சிஷ்யர்கள் மாதிரியே இன்னொரு சிஷ்யனும் வேறே ஒரு விதத்தில் தெரிவிப்பதாகவும் இன்னொரு உபநிஷத்தில் வருகிறதை முன்னேயே சொன்னேன் - ச்வேதகேது கதையில்தான்.

குருவுக்கே கர்வம் உதவாது, அவர் விநய ஸம்பன்னராக இருக்கணுமென்று இப்போதுதான் பார்த்தோம். சிஷ்யனுக்கோ விநயந்தான், ஒரு பத்னிக்குப் பாதிவ்ரத்யம் (கற்பு நோன்பு) மாதிரி அத்தனை முக்யம். அப்படியிருந்தும் 'வித்யா கர்வம்' என்று ரொம்பக் காலமாகவே சொல்லி வந்திருக்கிறார்களே, அப்படியும் இரண்டொருத்தர் எந்தக் காலத்திலும் இருந்திருக்கிறார்கள். அப்படித்தான் அந்தப் பிள்ளை, ச்வேதகேது, மண்டைக் கனத்தோட தகப்பனாரிடம் திரும்பி வந்து சேர்ந்தான். பார்த்தமாத்திரத்தில் பிள்ளையாண்டான் 'வித்வத்தில் தனக்கு நிகரில்லை' என்று அஹங்கரித்திருக்கிறானென்று தகப்பனாருக்குத் தெரிந்துவிட்டது. அவனிடம் வபையாக ஒரு கேள்வி அவர் கேட்டார். "எந்த உபதேசம் பெற்றுக்கொண்டால் கேள்விக்கு அப்பாற்பட்டது கேட்கப்பட்டதாகுமோ, எண்ணுவதற்கு இயலாதது எண்ணப்பட்டதாகுமோ, அறிவுக்கு எட்டாதது அறியப்பட்டதாகுமோ, அந்த உபதேசம் கேட்டுக்கொண்டாயோ?" என்று கேட்டார். ப்ரஹ்மவித்யையின் ஸாரத்தைத் தெரிந்த கொண்டானா என்பதையே இப்படிக் கேட்டார். தெரிந்து கொண்டிருந்தால் அவன் கர்வியாக ஆகியே இருக்க மாட்டான். இது அவனுக்கு உறைக்கணும் என்றே கேட்டார்.

'ப்ரஹ்மவித்யை கற்றுக்கொண்டாயா?' என்று நேராகக் கேட்டிருந்தால், அத்தனை வருஷம் படித்தவன்... 'ஸகல வேதங்களையும் அத்யயனம் பண்ணினவன்' என்று உபநிஷத் அவனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது, அப்படிப்பட்டவன்... ப்ரஹ்ம தத்வம் பற்றியும் படித்துத்தான் இருந்திருப்பானாகையால், "கற்றுக்கொண்டேன்" என்றே சொல்லியிருப்பான். அப்படிவிடாமல், தான் அதன் ஸாரத்தை அறியவில்லை என்று அவன் 'ரியலைஸ்' பண்ணி கர்வத்தை விடணும் என்றே இப்படி indirect-ஆகக் கேட்டார்.

கர்வியானாலும் அவன் புத்திமான். வித்யையில்

ஆசையுள்ளவன். ஆகையினால் 'இப்படியும் ஒரு வித்யையா? கேட்கவும், நினைக்கவும், அறியவும் முடியாததைக் கேட்டு, நினைத்து, அறியும்படிச் செய்யும் வித்யையா? தெரிஞ்சுக்காமப் போனோமே இப்பவாவது இவர் கிட்டேயிருந்து தெரிஞ்சுக்கணும்' என்று நினைத்தான். அதனால் பொய், கிய் பண்ணாமல், தான் அதைத் தெரிந்து கொள்ளவில்லை என்று நிஜத்தைச் சொல்கிறான். ஆனால் அப்போதும் தன்மேல் குற்றம் சேராமல் - தனக்கு யோக்யதை இல்லாததால்தான் அந்த வித்யையை குருமார் சொல்லிக் கொடுக்கவில்லை போலிருக்கு என்று சொல்லாமல் - "அந்த குருமார்களுக்கே அது தெரியாமல் இருந்திருக்கணும்.

'நூனம்' - 'நிச்சயம்' அப்படித்தான் இருக்கணும்" என்கிறான்!

இப்படிச் சொல்கிற அவன் வாயிலிருந்தேதான் அக்கால குருமாரின் உத்தம லட்சணமும் அப்போது வந்து விடுவதாகப் பார்த்தோம் - "அவர்களுக்குத் தெரிந்திருந்தால் ஏன் சொல்லிக் கொடுக்காமல் இருக்கவேண்டும்?" என்கிறானே, அதுதான்!

அவன் அப்படிச் சொன்னானென்றால் அதற்குக் காரணம் ஏற்கெனவே அப்பாக்காரர் அப்படிச் சொல்லி அது அவன் உள்மனஸில் தோய்ந்திருந்ததுதான். இது என்னுடைய ஊஹம். அந்த 'ஏற்கெனவே' கதை என்னவென்றால், முன்னத்யாயத்திற்குப் போகணும். முதலில் ச்வேதகேதுவுக்கு அப்பாவே கொஞ்சம் கற்றுக்கொடுத்துவிட்டு, அப்புறமே அவனை வேறே பல ஆசார்யர்களிடமும், வித்வத் ஸதஸுகளுக்கும் அனுப்பி வைத்திருக்கிறார் என்று இங்கே தெரியவருகிறது. அப்படி அவன் ப்ரவாஹணர் என்கிற ராஜ ரிஷியின் ஸதஸுக்குப் போகிறான். ராஜரிஷி அவனிடம் 'பித்ருலோக - தேவலோக ஸமாசாரம் தெரியுமா?' என்ற மாதிரி ஐந்து கேள்விகள் கேட்கிறார். அவனுக்கு அந்த ஐந்து விஷயமும் உபதேசம் ஆகவில்லை. எப்பவுமே அவனுக்கு கர்வம் ஜாஸ்தி அதனால், தான் எல்லாம் தெரிந்தவன் என்கிற மாதிரி ஒரு 'இம்ப்ரெஷ'னை அவருக்கு (ராஜரிஷிக்கு) உண்டாக்கியிருந்தான். அதனால் இப்போது அவர் கேட்ட ஐந்து கேள்விக்கும் இவனுக்குப் பதில் தெரியவில்லை என்றதும் இவனைக் கொஞ்சம் ஹேளனமாகப் பேசிவிடுகிறார். கர்வியானதால் அவன் மானபங்கப்பட்டுக்

கொண்டு, மனஸ் குமுறிக்கொண்டு பிதாவிடம் திரும்பி வந்து, "ஏதோ எல்லாம் கத்துக்குடுத்துட்ட மாதிரி என்னமா என்னை அனுப்பி வெச்சே!ஏன் முழுக்கக் கத்துக் குடுக்கலை?" என்று கோபமாகக் கேட்கிறான். அவர் சாந்தமாகப் பேசி ராஜஸதஸில் நடந்த ஸங்கதிகளைத் தெரிந்து கொள்கிறார். அப்போது, "ராஜா கேட்டது எனக்கு நிஜமாகவே தெரியத்தான் தெரியாது. தெரிஞ்சிருந்தா ஒனக்கு ஏன் சொல்லாம இருந்திருக்கப் போறேன்?" என்கிறார்.

அதுதான் அவன் மனஸில் ஊறி, அப்புறமும் அவன் யாராரிடமும் போனானோ, அவர்களெல்லாரும் மனஸைத் திறந்து சிஷ்யாளுக்குச் சொல்லித் தருகிறதைப் பார்த்து இன்னும் உறுதிப்பட்டு, அப்புறம் அப்பாவிடமே அவர் சொன்னதையே மற்ற குருமார் விஷயமாகத் திருப்பிச் சொல்லவைத்திருக்கிறது.

---

### வேதசிரஸுக்கே சிரஸான உபதேசம்

அப்புறம் அவன் கர்வம் அடங்கி, அப்பாவையே அந்த உபதேசம் தரும்படிப் ப்ரார்த்தித்து, அவரும் உபநிஷத்திலேயே உச்சமான மஹாவாக்யத்தை அவனுக்கு உபதேசித்ததாகக் கதை போகிறது.

ப்ரமாணங்களில் உச்சஸ்தானம் - எண்சாண் உடம்புக்கு சிரஸே ப்ரதானம் என்பதுபோல ப்ரதானமான ப்ரமாணமாயிருப்பது - வேதம். அதற்கும் சிரஸ் உபநிஷத்துக்கள், 'ச்ருதிசிரஸ்' எனப்படுபவை. அவற்றில் வரும் உபதேசங்களிலும் சிரஸாகச் சிலதை மஹாவாக்யம் என்பார்கள. ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே என்பதைச் சொல்கிற உபநிஷத் வாக்யங்கள் எல்லாவற்றுக்குமே மஹாவாக்யங்கள் என்று பேர் இருந்தாலும், அவற்றிலும் சிரஸாகக் குறிப்பாக வேதத்திற்கு ஒன்றாக நாலை ரொம்ப விசேஷித்துச் சொல்வார்கள். அந்த நாலிலும் சிரஸாகச் சொல்வது, நேராக ஒரு சிஷ்யனிடம் குரு 'நீயே ப்ரஹ்மம்' என்று சொல்கிற மஹாவாக்யம். அது ஸாமவேத மஹாவாக்யம். அப்படி சிரஸுக்குச் சிரஸுக்குச் சிரஸுக்குச்

சிரஸுக்குச் சிரஸாக உள்ள அந்த வாக்யம் நாம் பார்த்துக்கொண்டிருக்கும் கதையில் வருகிற பிள்ளைக்குத் தகப்பனார் உபதேசித்ததுதான்

சொல்ல வந்தது, அந்தப் பிள்ளை தன் குருமார்கள் தங்களுக்குத் தெரிந்த எந்த ஒரு வித்யையும் தனக்குச் சொல்லித்தராமல் இருந்திருக்க மாட்டார்கள் என்றதைத்தான்.

---

## விநயத்தோடு நில்லாமல் உண்மையைத் தெரிவிப்பது

"தெரிஞ்சா சொல்றேன்" என்று ஒரு குரு தன்னிடம் வந்த ஆறு சிஷ்யாளிடம் விநயத்தோடு சொன்னார் என்றேன். அது 'ப்ரச்னோபநிஷத்' ஆரம்பம். அப்புறம் அவர், அவர்கள் ஒவ்வொருத்தரும் கேட்ட ஒவ்வொரு கேள்விக்கும் ஸம்பூர்த்தியாகப் பதில் சொல்லியிருக்கிறார். இப்படி ஆறு ஸெக்ஷன்கள். ஒவ்வொரு ஸெக்க்ஷனுக்கும் 'ப்ரச்னம்' என்றே பேர் கொடுத்திருக்கிறது.

'ப்ரச்னம்' என்றால் கேள்வி. problem என்பதை 'பிரச்னை' என்றே தமிழ்நாட்டில் அரசியல் பேச்சாளர்களும், பத்திரிக்கையாளர்களும் சொல்லி இப்போது பொது ஜனப் புழக்கத்திலேயே அந்த வார்த்தை வந்துவிட்டதாகத் தெரிகிறது. 'எப்படிச் சமாளிப்பது?' என்று கேள்விக் குறி போட்டுக் கொண்டு நிற்பதைத்தானே problem என்பது? ஆகையினால் அது 'ப்ரச்னம்'. அதுவே தமிழ் மொழி வழக்கில் 'பிரச்னை' ஆகிறது. ஆனால் 'prasnai' என்று சொல்லாமல் 'பிரச்சனை' ('Prachchanai') என்கிறார்கள்!அதுதான் என்னமோபோல் இருக்கிறது.

இப்படி ஆறு கேள்விக்கும் விளக்கமாகப் பதில் கொடுத்த ஆறாம் ப்ரச்ன முடிவில், உபநிஷத் முடிகிற இடத்தில் ரிஷி - குரு - ஆரம்பத்தில் 'தெரிஞ்சா சொல்றேன்' என்றவர் - அதே 'ஹ்யுமிலிடி'யுடன் "இந்த அளவுக்கே நான் பரப்ரஹ்மத்தைத் தெரிஞ்சுண்டது" என்று சொல்கிறார்.

ஆனால் 'ஹ்யுமிலிடி'யிலே இவர் அப்படிச் சொல்லப்போக,

அந்த சிஷ்யாள் அதுவே நிஜமோ, இன்னும் என்ன தெரிந்து கொள்ளவேண்டுமோ, அதற்காக இன்னும் யார்கிட்டே போகணுமோ என்றெல்லாம் நினைத்துவிடக் கூடாதல்லவா? அந்த மாதிரி அவர்களுக்கு ஸந்தேஹம், சஞ்சலம் வராமலிருப்பதற்காகவும், பெற வேண்டிய உபதேசம் அத்தனையும் பெற்று க்ருதார்த்தராகிவிட்டோம் என்ற நிச்சயம் அவர்களுக்கு ஏற்படுவதற்காகவும் அவர் முடிந்த முடிவாக, "இதுக்கு மேலே ஒண்ணுமில்லை" என்றும் சொல்கிறார்.

விநய ஸம்பத் குருவுக்கும் லக்ஷணம் என்றால், அவருடைய முக்யமான கார்யமோ சிஷ்யாளின் குழப்பத்தை - ப்ரச்னையை- தீர்ப்பதுதானே, பகவான் அர்ஜுனனுக்கு அதைத்தானே பண்ணினார்? 'விஷாத யோகம்' என்றே முதல் அத்யாயமாகப் பேர் கொடுத்திருக்கிற அர்ஜுனனுடைய குழப்பப் படலத்திற்கு முடிவு கட்டத்தானே அப்புறம் பதினேழு அத்யாயம் உபதேசம் பண்ணினார், அப்படியிருக்கும்போது தம்முடைய விநயத்தினால் தாமே சிஷ்யாளுக்குப் புதுக் குழப்பத்தை உண்டாக்கிவிடக்கூடாதென்றே ப்ரச்நோப நிஷத் முடிவிலே, ரிஷி அழுத்தங்கொடுத்து, "இதுக்கு மேலே எதுவுமில்லை" என்றார்.

அப்போதுதான் அந்த சிஷ்யாள், "எங்கள் அவித்யைக்கு அக்கரை சேர்த்த தாங்களே எங்களுடைய பிதா" என்று சொல்லி நமஸ்காரம் பண்ணினது.

---

## ஈடு செய்ய முடியாதது குரு உபதேசம்

"நமஸ்கரித்தார்கள்" என்று இந்த இடத்தில் இல்லாமல், "அர்ச்சித்தார்கள்" என்றே உபநிஷத்தில் வார்த்தை போட்டிருக்கிறது. அப்போது அர்ச்சனை என்றால் நாமம் நாமமாகச் சொல்லிப் பூ போடுவது, குங்குமம் போடுவது என்று தெரிந்து கொண்டிருக்கிறோம். அதுவும் ஸரீதான். ஆனால் பூஜையில் ஒரு அங்கமாக உள்ள இந்த ஒன்றுக்கு மாத்திரமில்லாமல் முழுப் பூஜையையுமே - வழிபாடு

என்பதையேகூட - 'அர்ச்சித்தல்' என்பது குறிக்கும். இங்கே ஆசார்ய பாஷ்யத்தில், அவர்கள் தங்களுடைய ஆசார்யரின் பாதத்தில் புஷ்பாஞ்ஜலி செலுத்தி, சிரஸால் பாதத்தைத் தொட்டு நமஸ்கரித்ததாக விரித்து அர்த்தம் பண்ணியிருக்கிறார். இன்னுங்கூட அழகாக விரித்து முன்னுரையாக ஒன்று சொல்கிறார். என்னவென்றால், குரு உபதேசத்தால் க்ருதார்த்தர்களாகிவிட்ட அவர்கள் - அப்படியென்றால் ஜீவிதத்தின் பரமப்ரயோஜனத்தை அடைந்துவிட்டவர்கள் என்று அர்த்தம், அப்படி ஆன அவர்கள் - இப்படிப்பட்ட வித்யோபதேசத்துக்கு என்ன ப்ரதி, கைம்மாறு செய்ய முடியுமென்று பார்த்தார்களாம். ஒன்றுமே அகப்படவில்லையாம்.

'ஸமுத்ரம் சூழ்ந்த பூமி பூராவையும் தக்ஷிணை கொடுத்தாலும், யோக்யதை போதாத ஒருத்தனுக்கு உபதேசிக்கப்படாது' என்று சாந்தோக்யோபநிஷத் ரிஷி சொன்னார். இங்கேயோ யோக்யதை உள்ள சிஷ்யர்களே வித்யோபதேசம் பெற்றுக் கொண்ட பிறகு, 'என்ன தக்ஷிணை கொடுத்தும் குருவுக்குப் பிரதி செய்துவிட முடியாது' என்று நினைத்தார்கள ாம்!இப்படிச் சொல்லும் ஆசார்யாள் தம்முடைய 'உபதேச ஸாஹஸ்ரீ' ஆரம்பத்திலும் 'ஸமுத்ரம் சூழ்ந்த லோகம் பூராவையும், அதிலுள்ள பூர்ணமான செல்வங்களோட குருவுக்குத் தந்தாலும் அவர் தருகிற உபதேசமோ அதற்கும் பெரிதானது என்று சாஸ்த்ரம் சொல்கிறது' என்கிறார்.

'ஸமுத்ரம் சூழ்ந்த பூமி பூராவையும் தக்ஷிணையாகத் தரக்கூடியவனா யிருந்தாலும், யோக்யதை போதாதவன் என்றால் அவனுக்கு உபதேசிக்கப்படாது' என்று (சாந்தோக்யத்தில்) மதுவித்யை உபதேசிக்கும் ரிஷி சொல்லியிருக்கிறார். பணத்துக்காக அறிவை விலை பேசாத குருவின் உசந்த லக்ஷணத்தை அது தெரிவிக்கிறது. அதே 'ஐடியாவை ஆசார்யாள் 'உபதேச ஸாஹஸ்ரீ'யில் சிஷ்ய லக்ஷணத்தில் எடுத்துக்கொண்டிருக்கிறார். இங்கே (ப்ரச்நோபநிஷத் பாஷ்யத்தில்) அந்த மாதிரிதான் சிஷ்யாள் 'குருவுக்கு என்ன ப்ரதி பண்ணினால்தான் போதுமானதாகும்?' என்று கேட்டதாகத் தம்முடைய அபிப்ராயத்தை தெரிவிக்கிறார். அந்த ஆறு சிஷ்யாள் என்ன ப்ரதியும் செய்ய முடியாது என்று முடிவு பண்ணித்தான் அப்புறம் ஏதாவது 'சிரித்து' thanks givingதெரிவத்தாகணும் என்று

புஷ்பாஞ்ஜலியாகக் கை நிறையப் புஷ்பங்கள் எடுத்து அவர் பாதத்தில் போட்டு சிரஸால் நமஸ்கரித்தார்களாம் - ஆசார்யாள் சொல்கிறார்.

மூல வாசகத்தில் அவச்யத்திற்கு அதிகமாகக் கொஞ்சங்கூடக் கூட்டி பாஷ்யம் செய்யாதவர் நம்முடைய ஆசார்யாள். அப்படிப்பட்டவரே மூலத்தில் 'அர்ச்சயந்த' என்று வருகிற ஒரு சின்ன வார்த்தைக்கு இத்தனை நீளமாக விளக்கம்

கொடுத்திருக்கிறாரென்பதிலிருந்து அவருக்கு எத்தனை குரு பக்தி இருந்தது,

ஜனங்கள் குருமாரிடத்தில் எப்படி மனஸ் ரொம்பி, நன்றி விச்வாஸத்துடன் பக்தி பண்ணனும் என்று சொல்லிக் கொடுப்பதில் அவருக்கு எவ்வளவு ஆர்வம், ச்ரத்தை இருந்தது என்று தெரிகிறது.

அந்த ஆறு சிஷ்யாள் ப்ரத்யக்ஷமாகத் தாங்கள் பார்த்த அந்த ஒரு ரிஷிக்கு நமஸ்காரம் பண்ணும்போதே அவரொருத்தரை மாத்திரம் நினைக்காமல் அத்தனை ரிஷிகளையுமே நினைத்து, "பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம், பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம்" என்று சொன்னதாக உபநிஷத் முடிக்கிறது. 'இரண்டு தடவை அப்படிச் சொல்லியிருப்பது மரியாதையைக் காட்டவே' என்று ஆசார்யாள் பாஷ்யம்.

---

## வழிவழி வரும் உபதேசம்

ப்ரத்யட்ச குருவைப் பிதா என்றால், அந்தப் பிதா அவருக்கு ஒரு பிதா இல்லாமல் எப்படி உண்டாவார்? அப்படியே அந்தப் பிதாவுக்கும் பிதா, அவருக்குப் பிதா என்று போகுந்தானே? அப்பா இருந்தால் தாத்தா, கொள்ளுத் தாத்தா, எள்ளுத் தாத்தா என்று அப்படியே போய்க்கொண்டுதானே இருக்கிறது? அப்பாவுக்கு ச்ராத்தம் என்றாலும் தாத்தா, கொள்ளுத் தாத்தாவையும் அங்கே கூப்பிடத்தானே செய்கிறோம்? அதே மாதிரி குரு என்ற அப்பாவையும் பரம்பரா க்ரமமாகச் சேர்த்துதானே பூஜிக்கணும்? ஆதியிலிருந்து அந்தந்தக் கால

சிஷ்யர்களுக்குப் பரமோபகாரம் பண்ணிவந்திருக்கிற குரு பரம்பரையை நாம் மறக்கவே கூடாது. 'பரமரிஷிகள்' என்று (மூலத்தில்) வருவதை ஆசார்யாள் 'ப்ரஹ்மவித்யா ஸம்ப்ரதாய கர்த்தாக்கள்' என்று மரபு வழி வந்த குரு பரம்பரையாகவே அர்த்தம் பண்ணியிருக்கிறார்.

வழி வழி வழியாக ஒரு உபதேசமோ அநுஷ்டானமோ வந்திருக்கணும். அதற்குத்தான் Weight. அதிலே வந்த ஒவ்வொருத்தரின் அநுஷ்டான பலமும், அநுபவ பலமும் சேர்ந்து சேர்ந்து அதுதான் வஜ்ரம் பாய்ந்த மரம் மாதிரி எது ஸத்யமோ, எது ஹிதமோ அதை உறுதிப்பண்ணித் தரும். பல பேர் பல தலைமுறைகளாக வாழ்க்கையிலேயே நடத்திக் காட்டி, பலனைடந்து வெற்றி கண்ட வழியாக ஒன்று இருக்கிறெதென்றால் அவர்கள் அத்தனைபேரும் கண்டு கொண்ட லட்சியம் ஸத்யமாகத்தானே இருக்க முடியும்? Free thinking, சுதந்திர சிந்தனை, அது - இது என்று சொல்லிக் கொண்டு நம் ஒருவருடைய அல்ப புத்தியைக் கொண்டு மாத்திரம் கண்டுகொள்வது எப்படி இத்தனை நிலைப்பட்ட ஸத்யமாயிருக்கமுடியும்?

---

## " மரபு மீறுபவன் மூடன்" - ஆசார்யாள்

ஸம்ப்ரதாயத்துக்கு விருத்தமாக (முரணாக) வேறே அபிப்ராயம் சொல்கிறவனை ஆசார்யாள் 'மூர்க்கன்' என்றே சொல்வார். அவர் கருணாலயமாக இருந்தவர். அவரே இப்படிக் கடுமையானகச் சொன்னாரென்றால், பரம ஸத்யம் என்று அவருக்குத் தெரிந்த ஒன்றை எப்படிச் சொல்லாமலிருக்க முடியும்? ஜனங்களின் நல்லதற்காவே, அவர்களை நல்ல வழியில் கொண்டு வரணும் என்ற கருணையினாலேயே, 'ஸம்ப்ரதாயத்தை ஒட்டியே போங்கள் சொந்த முடிவு பண்ணி வீணாகப் போகாதீர்கள்!'என்பதை இப்படிக் கண்டிப்பான வார்த்தை போட்டு உபதேசித்தார். அழகான ஒரு பெரிய மரபு வழிவழியாக வந்திருக்கும்போது, அதை விட்டு விட்டுப் பிடிவாதமாகத் தன்னையே வீண் பண்ணிக் கொள்கிறவன் மூர்க்கனில்லாமல் வேறே என்ன?

அதைத்தான் சொன்னார்.

ஸம்ப்ரதாயத்தில் வராத புது அர்த்தத்தை சாஸ்திரங்களில் புகுத்திச் சொல்கிறவனை ஆசார்யாள் 'ஆத்மஹா', அதாவது தன்னையே கொலை பண்ணிக் கொண்டவன், 'மூடன்', மூடனாயிருந்தும் வாயைமூடிக் கொண்டிருக்காமல் ஊருக்கு உபதேசம் பண்ணி மற்றவர்களையும் குழப்புகிறவன் என்றெல்லாம் பலமாகவே கண்டித்து கீதா பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். எனவே அவன் அத்தனை சாஸ்திரமும் படித்தறிந்தவனாயிருந்தாலும் அவனை மூர்க்கன் என்றே தள்ளவேண்டும் என்கிறார்.

---

## குரு பரம்பரையிடம் ஆசார்யாள் பக்தி

ஸம்ப்ரதாயமாக வந்த ஒரு குரு பரம்பரை என்றால் அதனிடம் அவருக்குச் சொல்லிமுடியாத மரியாதை. மூலத்திற்கு அதிகமாக அவர் பாஷ்யத்தில் போவது ரொம்பவும் அபூர்வம் - முன்னேயே சொன்னேன். ஆனால் அப்படி ஒன்று, நம் 'டாபிக்' விஷயமாக அவர் அத்தனை உபநிஷத்திற்கும் பாஷ்யம் எழுதி முடிக்கிறபோது செய்திருக்கிறார்.

'தசோபநிஷத்' என்று பத்து - ஈசாவாஸ்யத்தில் ஆரம்பித்து ப்ருஹதாரண்யகத்தில் முடிவதாக அவர் தேர்ந்தெடுத்து பாஷ்யம் பண்ணியிருக்கிறார். இன்னும் சில உபநிஷத்துக்களுக்கும் அவர் பேரில் பாஷ்யமிருந்தாலும் இந்த பத்துதான் ப்ரஸித்தமாகச் சொல்வது. அவற்றில் ஆரம்ப உபநிஷத், அந்த்ய (முடிவான) உபநிஷத் இரண்டுமே சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தவையாயிருக்கின்றன. அது இருக்கட்டும்... அந்த்ய (முடிவான) உபநிஷத்தின் அந்த்ய பாகத்திற்கு ஆசார்யாள் வந்துவிடுகிறார். அதில் அத்தனை ரிஷிகளுக்கும் லிஸ்ட் கொடுத்து. . பெரும்பாலும் அம்மா பேரிலேயே ஒவ்வொரு ரிஷியையும் குறிப்பிடுவதாக முன்னேயே சொன்னேன்... முடிக்குமிடத்தில் அதை மாற்றிப் புருஷ ரிஷிகள் கிரமத்திலேயே பிள்ளை - அப்பா- தாத்தா - அவருக்கு அப்பா என்று மூதாதைகளைச்

சொல்லிக்கொண்டே போய் 'ப்ரஜாபதி - ப்ரஹ்மன்' என்று முடித்திருக்கிறது. அந்த ப்ரஹ்மனுக்கு நமஸ்காரம் என்று நமஸ்கார வாசகத்தோடு உபநிஷத் பூர்த்தியாகிறது. தசோபநிஷத்துக்களுக்குமே அதுதான் பூர்த்தி.

இங்கே 'ப்ரஹ்ம' என்றிருப்பதற்கு 'ப்ரஹ்மா' என்கிற ஸ்வாமி என்றும், சப்த ப்ரஹ்மமாகிய வேதம் என்றும் அர்த்தம் எடுத்துக்கொள்ளலாம். வேதத்தையே ஆதி குருவாக Personify பண்ணிச் சொன்னதாக எடுத்துக்கொள்ளலாம். பரப்ரஹ்மத்திலிருந்துதானே ஸகலமும் உத்பவித்திருப்பது? அதனால், அந்த 'ப்ரஹ்மம்' என்றும் எடுத்துக்கொள்ளலாம்.

இங்கேதான் ஆசார்யாள் பார்த்தார்."அந்த ஆதிகுருவுக்கு மட்டும் நமஸ்காரம் சொல்லி உபநிஷத் உபதேசத்தை முடித்துவிடுவதா? அந்த ஆதியிலிருந்து வந்திருக்கிற தொடர் சங்கிலியான குரு பரம்பரை முழுவதற்கும் இந்தப் பூர்த்தி ஸ்தானத்தில் சேர்த்து (சிரித்து) ஒரு omnibus நமஸ்காரம் பண்ணினால்தானே ஹ்ருதயத்திற்கு நிறைவு ஏற்படும் போலிருக்கு? ஸத் - ஸம்ப்ரதாயத்திற்கு அந்த கௌரவம் தராமல் முடித்து விடலாமா?" என்ற அவருக்குத் தோன்றிற்று. அதனால் பாஷ்யத்தின் அந்த்ய வாசகமாக, 'ப்ரஹ்மணே நம:' என்று மூலத்தில் முடிவாயுள்ளதைச் சொன்ன அப்புறம், "நம:தத் - அநுவர்த்திப்யோ குருப்ய:" என்றும் சேர்த்தவிட்டே எழுத்தாணியைக் கீழே வைத்தார். அப்படியென்றால் 'ப்ரஹ்மமாகிற வேதத்தை அழகாகப் பின்பற்றிப்போகிற குருமார்களுக்கு - குரு பரம்பரைக்கு - நமஸ்காரம்' என்று அர்த்தம். நம்முடைய ப்ரஹ்ம வித்யா குரு பரம்பரைக்கே மத்யமணியாகப் பிரகாசிக்கும் ஆசார்யாள் இப்படி குரு வந்தனம் பண்ணி உபநிஷத் பாஷ்யத்தை முடித்திருக்கிறார்.

தைத்திரீய பாஷ்ய ஆரம்பத்திலே, மங்களச்லோகத்தில், ஆசார்யாள், தமக்கு

முந்தி உபநிஷத்துக்களை வியாக்யானம் பண்ணிக்கொண்டு வந்திருக்கிற அத்தனை

பூர்வகால குருக்களுக்கும் நமஸ்காரம் தெரிவித்திருக்கிறார். (அவர்களை) 'நித்யம் நமஸ்கரிக்கிறேன்' என்கிறார். 'பதம்'

என்கிற வ்யாகர்ணம், 'வாக்யம்' என்கிற மீமாம்ஸா சாஸ்த்ரம், 'ப்ரமாணம்' என்ற ந்யாய சாஸ்த்ரம் ஆகியவற்றின் அடிப்படையில் அவர்கள் உபநிஷத்துக்களுக்கு அர்த்தம் பண்ணினார்கள் என்ற அவர்களுடைய வித்வத்தை ச்லாகித்துச் சொல்கிறார்

யைரிமே குருபி பூர்வம் பத - வாக்ய - ப்ரமாணத:1

வ்யாக்யாதா:ஸர்வவேதாந்தாஸ் - தாந் - நித்யம் ப்ரணதோஸ்ம்யஹம் 11

நாமெல்லாருமே ப்ரஹ்மவித்யா குரு பரம்பரா வந்தனமாகச் சொல்லக் கூடிய - நித்யமும் சொல்ல வேண்டிய -ச்லோகம்.

---

## தெரியாததை ஒருபோதும் சொல்லாதவர்

தனக்குத் தெரிந்த எல்லாவற்றையும், தான் அறிந்ததனைத்தையும் ஒரு குருவானவர் சிஷ்யனுக்கு உபதேசித்துவிடுவார் என்று பார்த்தோம். அதோடு சேர்த்து, ஸாமான்யமான வாத்தியார்மார்கள் பண்ணக்கூடிய இன்னொன்றை அவர் பண்ண மாட்டார் என்பதையும் சொல்லவேண்டும். அதாவது தமக்குத் தெரியாத எதையும் தெரிந்த மாதிரி ஜோடித்துச் சொல்லமாட்டார்! ஸாதாரணமாக ஒரு மாணவன் வந்து ஏதோ ஒரு விஷயம் சொல்லித்தரும்படிக் கேட்டால், தெரியாத வாத்தியாருக்குத் தெரியாது என்று சொல்லிக்கொள்ள லஜ்ஜையாக இருக்கலாம். அதனால் அவர் எதையாவது புத்தி ஜாலம், வார்த்தை ஜாலம் பண்ணிச் சொல்லிவிடலாம். உபநிஷத் காட்டுகிற குரு இப்படிச் செய்பவரல்ல. சிஷ்யனுக்கு "ஸத்யம் வத" சொல்லித் தருகிற அவர் ஸத்யஸந்தராகவே வாழ்க்கையில் இருப்பார். அதனால் "தெரியாதப்பா இந்த விஷயம் இன்னாருக்குத் தெரியும். அவர்கிட்டே போ(அ)ப்பா " என்று அனுப்பி வைப்பார்.

'ப்ரச்னோபநிஷத்' முடிவைச் சொன்னேன். ஆரம்பத்தையும் சொன்னேன். அதில் முடிவு பாகத்தின் ஆரம்பித்தில்

இப்போது த்ருஷ்டாந்தம் காட்டுகிறேன்:

கோசல தேசத்து ராஜகுமாரன் ஒருத்தன். ஹிரண்ய நாபன் என்று பேர். அவன் ஸுகேசர் என்ற ரிஷியிடம் கற்றுக் கொள்ள வருகிறான். அந்த ஸுகேசர் யாரென்றால், பிப்பலாத மஹர்ஷியிடம் ஆறு பெரியவர்கள் ஆத்ம வித்யை தெரிந்து கொள்ள வந்தார்கள், ஆளுக்கொரு கேள்வி- ப்ரச்னம் - கேட்டு, அதற்கு அவர் பதில் சொல்வதுதான் ப்ரச்னோபநிஷத் என்றேனோல்லியோ? அந்த ஆறு பேரில் இந்த ஸுகேசரும் ஒருத்தர். அவர்தான் கடைசியான ஆறாவது கேள்வி கேட்டவர். இதற்கு முற்காலத்தில் இதே கேள்வியை அவரிடமே கேட்கத்தான் கோஸல ராஜகுமாரன் போனது. என்ன கேள்வி என்றால்:ஒரு ஜீவனுக்குப் பதினாறு அம்சங்கள் உண்டு. இவற்றைக் கலைகள் என்பார்கள். சந்திரனுக்குக் கலைகள் இருப்பதாக எல்லாரும் சொல்கிறோம். பிறைச் சந்திரனைச் சந்திரகலை என்கிறோம். அப்படிப் பதினாறு கலைகளோடு கூடினவன் ஜீவன். 'ஷோடச கலா புருஷன்' என்று சொல்வது. அந்த ஸமாசாரமாகவே கோஸல ராஜகுமாரன் ஸுகேசரிடம் கேட்டான். அப்போது அது அவருக்குத் தெரியாது. தெரியாததால்தான் பிற்பாடு பிப்பலாதரிடம் கேள்வி கேட்கவந்தார்.

ஏதாவது பதினாறைக் கல்பித்துச் சொல்லி, தத்வார்த்தம் என்று பொய்ப்பந்தல் போட்டு அந்த ராஜகுமாரனை அவர் அனுப்பியிருக்கலாம். ஒரு ராஜகுமாரனே வந்து கேட்கிறானென்றால் அது ஒரு பெருமை. அதோடு அவன் நிறைய ஸம்பாவனை, ஸௌகர்யங்களும் பண்ணித்தரக் கூடியவன். ஆனாலும் பூர்வகால குருமார் ரொம்பவும் நேர்மையுள்ளவர்களானபடியால் இவர் அவனிடம் தமக்குத் தெரியாது என்று உள்ளதை உள்ளபடிச் சொன்னார்.

அவனுக்கு நம்பிக்கைப்படவில்லை.- உபநிஷத்தில் நேராக அப்படிச் சொல்லியிருக்கவில்லை. ஆனால் ஆசார்யாள் பாஷ்யத்தில் சேர்த்திருக்கிறார். அப்படிச் சேர்த்தால்தான் அப்புறம் வரும் உபநிஷத் வாக்யத்துக்குப் பொருத்தமாக link உண்டாகிறது.

இவர் எங்கேயாவது அறியாதவராக இருப்பாரா என்று

ராஜபுத்ரன் ஸந்தேஹப்பட்டான். 'எனக்குத்தான் யோக்யதை போதாதோ என்னவோ? அப்படிக் குற்றம் காட்டாமல் தம்மையே குறைத்துச் சொல்லிக்கொண்டிருக்கிறா -ரோ?' என்று நினைத்தான். அவரிடமே சொல்லவும் சொன்னான். அதற்கு மேல் அவர் அவனிடம், "எனக்கு மட்டும் விஷயம் தெரிஞ்சிருந்தா உன்னிடம் ஏன் சொல்லாமலிருக்கப் போறேன்?" என்று கேட்கிறார். முன்னே சிஷ்யன் ச்வேதகேது வாயால் நாம் அவனுடைய குருமார்கள் பற்றிக் கேட்ட வாசகமே இங்கே நேராக ஒரு குரு வாயால் வருகிறது

இப்படிச் சொன்னவிட்டு அவர், தனக்குத் தெரியாததைத் தெரிந்ததாகக் காட்டி போதனை என்று பண்ணுவது எப்பேர்ப்பட்ட பாபம் என்று அவனுக்குச் சொல்கிறார். 'பொய் சொன்ன வாய்க்கு போஜனம் கிடைக்காது' என்பதோடு நாம் நிறுத்திக் கொள்கிறோம். உபநிஷத்தோ இங்கே அந்த ரிஷி வாயால் அதைவிட ரொம்ப பயங்கரமாகச் சொல்லியிருக்கிறது. பொய்யாக உபதேசம் என்று ஒன்று செய்கிறவன் ஒரு மரம் வேரோடு காய்ந்த போய் நசித்துவிடுகிற மாதிரி நசித்தே போய்விடுவான் என்று ரிஷி சொல்கிறார். அவன் இஹம், பரம் இரண்டையும் இழந்து நாசமடைவான் என்று இதற்கு அர்த்தம் என்று ஆசார்ய பாஷ்யம்.

இந்த உபாக்யானத்திலிருந்து இரண்டு முடிவுகள் கூறப்படுகின்றன என்று ஆசார்யாள் காட்டுகிறார். ஒன்று யோக்யதையுள்ளவன், மரியாதை முறைப்படி வந்து கேட்டால், தெரிந்தவன் சொல்லிக் கொடுத்தே ஆகணும் என்பது. இன்னொன்று தெரியாதவன் ஒருகாலும் தெரிந்ததாகப் பொய் பண்ணிவிடக்கூடாது என்பது. 'ஒருகாலும், ஒரு நிலையிலும்' - ஸர்வாஸ்யபி அவஸ்தேஷு' என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். அப்படி குரு லக்ஷணம், தெரிந்த ஸர்வத்தையும் கற்றுக் கொடுக்கணும், தெரியாத ஒன்றைக்கூட தெரிந்த மாதிரி கற்றுக்கொடுத்து விடக்கூடாது என்றே உபநிஷத் காட்டும் குருமார்கள் இருந்திருக்கிறார்கள்.

குருஸ்தானத்திலிருந்த அந்தப் பெரியவர் - ஸுகேசர் - அவருடைய விஷயஞானம் போதாமையை நிச்சயப்படுத்தினவுடன் அந்தக் கோஸல ராஜபுத்ரன் வாயை

மூடிக்கொண்டு ரதத்தில் ஏறிக்கொண்டு போய்விட்டான். 'வாயை மூடிக்கொண்டு' என்பதற்கு ஆசார்யாள் 'வ்ரீடித:' என்று காரணம் காட்டியிருக்கிறார். அப்படியென்றால், 'வெட்கமுற்றவனாக' - அந்த வெட்கத்தினால் வாய் பேசாதவனாகி - போய்விட்டான் என்று அர்த்தம்.

இவருக்குத் தெரியவில்லையென்றால் அவன் வெட்கப்படுவானேன்? 'பாவம்!ஒரு பெரியவர். எத்தனையோ தெரிந்தவர். ஏதோ கொஞ்சம் அவருக்குத் தெரியவில்லை. தெரியாததைப் போய் அவரிடம் கேட்டு, அவ்வளவு பெரியவர் தம்முடைய அறியாமையை வாய்விட்டுச் சொல்லிக்கொள்ளும்படிச் செய்து விட்டோமே!இது மரியாதைப் பண்பாகாதே!' என்று வெட்கப்பட்டிருக்கலாம். இவன் கேட்டதில் அவர் ஒன்றும் embrass ஆகிவிடவில்லை. ஆகாததால்தான் அவரே அப்புறம் பிப்பலாதரிடம் இந்த ஸம்பவத்தை ஸஹஜமாகச் சொல்லி அந்த ஷோடசகலா விஷயம் பற்றிக் கேட்கிறார். ஆனாலும் அவனுக்கு, தான் அவரை அப்படிக் கேட்டிருக்கப்படாது என்று தோன்றி, செய்யப்படாததைச் செய்தோமே

என்பதில் வெட்கம் உண்டாயிருக்கலாம்.

---

## குருவின் யோக்கியதையைப் பார்ப்பதும், சரணாகதி செய்வதும்

அல்லது... ஒரு பெரிய விஷயத்திற்கே இங்கே 'எவிடென்ஸ்' கிடைப்பதாகவும் சொல்லலாம். வழி காட்டுகிறவர் என்றே நினைக்கப்பட்டு ஆச்ரயிக்கப்படும் ஒருவர் வழிகாட்ட முடியாதவர் என்று தெரிந்தபோது, தீர விசாரிக்காமல் இப்படிப்பட்ட ஒருவரிடம் வந்தோமே என்பதில் வெட்கப்பட்டுக் கொண்டே அந்தக் கோஸல ராஜபுத்ரன் அவருடைய திக்குக்கு ஒரு நமஸ்காரம் பண்ணிவிட்டு போனான் என்றும் வைத்துக்கொள்ளலாம். அதாவது குருவின் யோக்யதாம்சங்களை நன்றாக உறுதிப்படுத்தித் தெரிந்து கொண்ட பிறகே அவரை ஆச்ரயித்து உபதேசம்

கோர வேண்டும், அப்படிப் பண்ணாமல் குரு வரணம் பண்ணிவிட்டு ஒருத்தரிடம் வந்து அவரிடம் சரக்கு இல்லை என்று தெரிந்தால் திக்குக்கொரு நமஸ்காரம் பண்ணிவிட்டுக் கிளம்ப வேண்டியதுதான் என்று ஆகிறது. கற்றுக்கொள்ள வருகிறவனின் யோக்யதாம்சத்தை குரு நன்றாகச் சீர்தூக்கிப் பார்த்துவிட்டே சிஷ்ய ஸ்வீகரணம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்பது போலவே, கற்றுக்கொள்ளப் போகிறவனும் அவருடைய யோக்யதையை நன்றாகத் தெரிந்து கொண்ட பிறகே அவரை குருவாக வரிக்க வேண்டும் என்ற பெரிய விஷயம் இங்கே வருகிறது.

'குருவிடம் பூர்ண சராணாகதி சிஷ்யன் பண்ணுவதே முக்யம், அதுவே அவன் தர்மம், கடமை. அவர் எப்படி இருந்தாலும் இவன் அவரைத் தியாகம் பண்ணப்படாது. பதி எப்படி இருந்தாலும் பத்னி அவனைத் தியாகம் பண்ணாமல் சரணாகதையாக இருக்கவேண்டுமென்பது போலத்தான் இதுவும்' என்றெல்லாம் சொல்லுவதற்கு முரணாக இங்கே இருக்கிறதே என்ற பெரிய கேள்வியும் எழும்புகிறது....

'தேசிகன்' என்ற வார்த்தைக்கு அர்த்தம் சொல்ல ஆரம்பித்தேன். அது ரொம்ப தூரம் எங்கெங்கேயோ போய்விட்டது. 'வழி சொல்கிறவன், திசை காட்டுகிறவன்' என்று பாஷ்யம், பிரஸங்கம் பண்ண ஆரம்பித்து (சிரித்து 'அதிகப்ப்ரஸங்க'மாக திசை தப்பி, வழியை விட்ட எங்கேயோ போனமாதிரி... இல்லை, இதெல்லாமும் குரு - சிஷ்யாள்-தான். அதில் ஒரு பெரிய கேள்வி. 'கேள்வி கேட்காமல், யோக்யதையை பார்க்காமல் (குருவிடம் சிஷ்யனின்) சரணாகதியா? யோக்யதை பார்த்தே (குரு)வரணம், இல்லை என்று தெரிந்தால் த்யாகம் செய்வதா?

யோக்யதையை நன்றாகத் தெரிந்துகொண்டுதான் குரு என்று ஒருத்தரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அப்புறம் அவரிடமேதான் சரணாகதி என்று இருக்கவேண்டும் - அவர் வேறே மாதிரியெல்லாம் தெரிந்தால்கூட (அவரிடம் சிஷ்யனாகச் சென்றவன்) மனஸ் கொஞ்சங்கூட மாறாமல் அவரிடமேதான், அவரே சரண்யர் (புகலிடமானவர்) என்று இருக்கவேண்டும் - இதுதான் பதில்.

---

## குருவும் சீடராகும் உயர்பண்பு

தேசிகன் என்றால் அவன் வழிகாட்டியாக வேண்டும். ஒரே லக்ஷ்யத்திற்கு அநேக வழி, கிளை வழி, சுற்றுவழி, குறுக்கு வழி , மெய்ன் ரோட், ஒற்றையடிப் பாதை என்று பல இருக்கும். அதில் எல்லாவற்றிலும் அந்த தேசிகன் வழிகாட்ட வேண்டுமென்பதில்லை. ஸர்வஞ்ராக நம்முடைய ஆசார்யாள், வித்யாரண்யாள் மாதிரியானவர்களைத் தவிர மற்ற குருமாருக்கு அது ஸாத்யமுமில்லை. அப்போது தெரியாத வழியை ஒருத்தன் வந்து கேட்டுவிட்டால் ஸங்கோசப்படாமல் ஸத்யத்தை சொல்லிவிடணும். அவன் கேட்ட வழியைத் தாமும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று நினைத்து, குரு ஸ்தானத்திலுள்ள தாமே, தெரிந்த இன்னாருவரிடம் போய் சிஷ்யனாக இருந்து கொண்டு கற்றுக்கொள்வாரானால் இன்னும் விசேஷம். நாம் பார்த்துக்கொண்டிருக்கும் உபநிஷத ரிஷி அப்படித்தான். ஷோடசகலா புருஷ விஷயமாகத் தாமே பிப்பலாதரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக யதாவிதி அவரிடம் அடக்கமாக வந்தார். "அவன் கேட்ட புருஷன் பற்றியே தங்களை நான் கேட்டுக்கறேன்" என்றார்.

"அவன் கேட்ட நாளாக அந்தக் கேள்வி என் ஹ்ருதயத்திலே முள் தைச்சாப்பல பதிஞ்சு போச்சு" என்று அவர் சொன்னதாக இங்கே ஆசார்யாள் பாஷ்யத்திலே அழகா மெருகேற்றிச் சொல்லியிருக்கிறார். 'தன்னை நாடி சிஷ்யன் என்று ஒருத்தன் வந்து கேட்கிறதற்குப் பதில் சொல்லத் தெரியாமல் குரு என்கிற தாம் இருக்கலாமா?' என்று சிஷ்யனை உத்தேசித்தும், தன்னையே உத்தேசித்து, பண்ணிக்கணுமே' என்று தவித்தும் இப்படி (இதயத்தில் முள் தைத்தாற்போல்) பண்ணியிருக்கிறார்.

முடிந்த மட்டும் அத்தனை வழியுமே கற்றுக் கொண்டு, அப்புறம் கற்றுக்கொடுக்கிறவனே உச்சியிலுள்ள தேசிகன்.

எல்லாம் தெரிந்தவன் என்று தன்னைப் பற்றி கர்வப்பட்டுக் கொண்டிருந்த சிஷ்யன் ச்வேதகேது அப்புறம் தகப்பனாரிடம் அடக்கமாக ப்ரஹ்ம வித்யோபதேசம் பெற்றதைச் சொன்னேன். எல்லாம் தெரிந்தவர் என்று குருமாரிலும்,

விதிவிலக்காகத் தம்மைப் பற்றி கர்வப்பட்ட ஒருத்தர் கதை சொல்கிறேன்.

அவர் கர்க கோத்ரக்காரரரான ஒரு ரிஷி. 'கர்க' என்பதன் அடியாக அந்த கோத்ரக்காரர்களை 'கார்க்யர்' என்பார்கள். இவரையும் உபநிஷத் அப்படித்தான் குறிப்பிடுகிறது. அது கோத்ரப் பெயர். அவருடைய அப்பா பெயர் 'பலாகர்' அதை வைத்து அவரை 'பாலாகி' என்று கூப்பிடுவது. அவருக்கு 'த்ருப்த' பாலாகி என்று உபநிஷத்தில் அடைமொழி போட்டுப் பேர் சொல்லியிருக்கிறது. 'த்ருப்த' என்றால் 'கர்வம் கொண்ட', 'தர்பம்' என்றால் கர்வம். 'த்ருப்த்' - கர்வி.

அப்படிப்பட்டவரான அந்த ரிஷி காசிராஜனான

அஜாதசத்ருவிடம், "உபதேசம் பண்ணி வைக்கிறேண்டா!" என்று சொல்லிக்கொண்டு போனார். அப்படிச் சொல்லிவிட்டு ஸூர்யன், சந்திரன், பஞ்சபூதங்கள், திக்குகள், ப்ரதிபிம்பம், நிழல் என்றிப்படிப் பத்துப் பன்னிரண்டு சொல்லி அவற்றை ப்ரஹ்ம ஸ்வரூபமாகச் சொல்கிறார். அவர் சொன்னது 'உபாதி ஸஹிதம்' எனப்படுவதான, அதாவது, மாய ஸம்பந்தத்தினால் கட்டப்பட்டதாகத் தோன்றும் ப்ரஹ்மத்தைப்

பற்றியது தானேயொழிய, எந்தக் கட்டுப்பாடற்று உள்ள 'உபாதிரஹித'மான ப்ரஹ்மம் அல்ல. அந்த நிர்குண ப்ரஹ்மத்தின் வேஷமாகவே ஸகலத்தையும் தெரிந்துகொள்வதுதான் நிஜமான ஞானம். அதைச் சொல்லிக் கொடுப்பதுதான் நிஜமான ப்ரஹ்ம வித்யை.

இவர் சொன்ன உபாதி ஸஹித ப்ரஹ்ம ஸமாசாரங்கள் அஜாதசத்ருவுக்கு ஏற்கெனவே தெரிந்ததுதான். அதற்கும் மேலே உபாதிரஹித ப்ரஹ்ம வித்யயையும் அவருக்குத் தெரியும். அதனால் இவர் ஒவ்வொன்றாக சொல்ல ஆரம்பித்தபோது அவர் (அஜாதசத்ரு) இடைமறித்து? "நிறுத்தும்" என்று சொல்லி, தான் எப்படி அந்த வஸ்துக்களைப் பற்றித் தத்வார்த்தம் தெரிந்து கொண்டிரு ந்தாரோ அதைச் சுருக்கமாகத் தெரிவித்தார்.

இப்படி த்ருப்த பாலாகி அநேகம் சொல்லி ஒரு ஜீவனின் ஆத்மாவையும் உபாதி ஸஹித ப்ரஹ்மமாகவே சொல்ல, அதையும் ராஜா உபாதி ரஹிதமாகச் சொன்னபோது-இதொன்றைத் தெரிந்து கொள்ளத்தான் ப்ரஹ்மவித்யை என்று

ஒன்று, அதைக் கற்பிக்கிற குரு, கற்றுக்கொள்கிற சிஷ்யன் என்றெல்லாமே பெரிய ஸம்ப்ரதாயம் ஏற்பட்டது, அப்படிப்பட்ட விஷயத்தை அவர் சுருக்கமாகச் சொன்னவுடன் - அந்த த்ருப்தர் மேலே ஒன்றும் சொல்வதற்கில்லாமல் வாயை மூடிக் கொண்டுவிட்டார்.

"நீர் சொல்ல வந்ததெல்லாம் சொல்லியாகி விட்டதா"? என்று அஜாதசத்ரு கேட்டார்.

"ஆச்சு" என்றார்.

"இதைக்கொண்டு ஒருத்தன் ப்ரஹ்மஞானம் பெற முடியாது" என்று அவர் சொன்னார்.

அவ்வளவுதான் 'கர்வி' என்றே வாங்கியிருந்தவர் ரூபமே மாறி, பரம விநய ஸம்பன்னராக ஆனார்!"அப்படியானா நான் உன்கிட்டே சிஷ்யனாகிக் கேட்டுக்கறேன்" என்றார்!

ச்வேதகேது, பாலாகி இரண்டு பேரும் கர்விகளாக இருந்தபோதிலும் ஸத்வித்யையில் நிஜமான ஆர்வம் கொண்டவர்களாக இருந்ததால், தங்களுக்குத் தெரியாத உசந்த வித்யை ஒன்று இருக்கிறது, அதை எடுத்துச் சொல்லக்கூடிய ஒருத்தர் இருக்கிறார் என்று தெரிந்தபோது கர்வத்தை அப்படியே விட்டு பணிவோடு உபதேசம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்த விநயம் அதுவரை ஸம்ப்ரதாய வழியில் அவர்கள் வேறே வித்யைகள் கற்றுறுக்கொண்டதாலேயே அந்த மரபுச் சக்தி அவர்களுடைய கர்வத்துக்கும் உள்ளே போய்ப் போட்டிருந்த வித்து விளைந்த ஏற்பட்டதுதான். அவர்களுக்கு உபதேசித்த குருமார்களின் ஸொந்த விநயமும், அதோடு அநுக்ரஹமும் சிஷ்யர்களுடைய உள்ளுக்குள்ளே இந்த அருவம், விநயம் இரண்டையும் உண்டாக்கி, ஸமயத்திலே அது வெடித்து முளைவிடப் பண்ணியிருக்கும்.

---

## அரைகுறை:கர்வம் முழுமை:விநயம்

அரைகுறைப் படிப்பாளிகள்தான் வித்யாகர்வம் கொண்டாடிக் கொள்வது. பூர்ணமாகக் கற்றறிந்தவர்கள் கர்வம் என்னவென்றே தெரியாமல் எளிமையாகவும் பணிவாகவுந்தான் இருப்பார்கள். 'நிறைகுடம் தளும்பாது' பர்த்ருஹரி ச்லோகம் ஒன்று இருக்கிறது.

யதா கிஞ்சித் - ஜ்ஞோ(அ)ஹம் த்விப இவ மதாந்த:ஸமபவம்

ததா ஸர்வஜ்ஞோ(அ)ஸ்மீத்யபவத் - அவலிப்தம் மம மந:

யதா கிஞ்சித்-கிஞ்சித் புதஜந-ஸகாசாதவகதம்

ததா மூர்கோ(அ)ஸ்மீதி ஜ்வர இவ மதோ மே வ்யபகத:11

தம்மையே வைத்துச் சொல்லிக் கொள்கிறார். "ஏதோ கொஞ்சம் தெரிந்து கொண்டிருந்த காலத்தில் கிஞ்சித் -ஜ்ஞனாக, அதாவது, சிற்றறிவினனாக இருந்த நான் மதம் பிடித்த யானை மாதிரி 'நானே ஸர்வஜ்ஞன்' (அனைத்தறிவினன்) என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்புறம் நல்ல அறிவாளிகளுடைய ஸத்ஸங்கம் கிடைத்து, கொஞ்சம் கொஞ்சமாக மேலும் மேலும் தெரிந்து கொண்ட பிறகுதான் நான் ஒன்றும் தெரியாத மூர்க்கன் என்ற நல்லறிவு உண்டாச்சு. ஜ்வரமாக என்னைப் பிடித்திருந்த மதமும் - கர்வமும் - போச்சு" என்று சொல்கிறார். ஆசார்யாள் பிரயோகிக்கும் அதே 'மூர்க்க' சப்தம் என்பதைக் கவனிக்கணும்.

அந்த ரிஷி 'த்ருப்த'ராக இருந்த ஜ்வரம் போய், வித்யா கர்வம் போனதோடு குல கர்வமும் போய், 'தாம் ப்ராமணன், ராஜா க்ஷத்ரியன்' என்பதையும் பொருட்படுத்தாமல் அஜாதசத்ருவிடம் உபதேசிக்கும்படிக் கேட்டுக்கொண்டார்.

"இப்படி வழக்கமே இல்லையே" என்று முதலில் ஸம்ப்ரதாயத்தை மதித்துச் சொன்ன அஜாதசத்ரு அப்புறம் அவருக்கு இருந்த ஆர்வத்தைப் பார்த்து உபதேசம் கொடுக்கிறார், வாய் வார்த்தையாய் மட்டுமில்லாமல் ஒரு நாடகம் மாதிரியே பண்ணிக் காட்டி!

இந்த ரீதீயிலேயே இன்னொரு கதை கூட இருக்கிறது. ப்ரவாஹணர் என்று ராஜரிஷி, அவர்கிட்டே போய்

கர்வபங்கப்பட்டுக் கொண்டு ச்வேதகேது அப்பாகிட்டே திரும்பி வந்து குமுறினான் என்று சொன்னேனோல்லியோ, அதைத் தொடர்ந்து அப்பாக்காரர், பிள்ளையாட்டம் (மாதிரி) கோபப்படாமல், 'ராஜாவுக்குத் தெரிந்தது தனக்குத் தெரியவில்லை என்றால் உடனே அவன்கிட்டே ஓடிப்போய் அதைத் தானம் கற்றுக்கொள்வதுதானே செய்யவேண்டியது?' பிராம்மண ரிஷி, க்ஷத்ரியனிடம் சிஷ்யனாவதற்கு ரெடியாக இருக்கிறார். பிள்ளையிடம் "ஸரி, நாம அங்கே போய் சிஷ்யாளா இருந்து கத்துப்போம், வா" என்கிறார்.

பிள்ளை, ஸத்வித்யையில் இருந்த ஆர்வத்தினால், தனக்குத் தெரியாத வித்யையைத் தெரிந்தவரிடம் போய்க் கற்றுக் கொள்கிறவன்தான். இருந்தாலும் இள ரத்தமா? அதனால் இங்கே தான் யாரிடம் மானபங்கப்பட்டோமோ அவரிடமே போய்க் கற்றுக் கொள்வதாவது என்கிற ரோஷம் அவனுக்கு

வந்துவிட்டது. அப்பாவிடம், "நீயே போய்க்கோ" என்ற சொல்லி, தான் போகாமல் நின்றுவிடுகிறான்.

அப்பாக்காரர் மானாபிமானம் பார்க்காமல் தான்மட்டும் போகிறார்.

பொதுவாகச் சொல்வது என்னவென்றால், 'வித்யார்த்தி' என்று மாணவனுக்குப் பேர் சொல்வதற்குக் காரணம், வித்யையையே அர்த்தமாக, அதாவது கல்வியையையே செல்வமாக, நினைத்து, அவன் மேலும் மேலும் பல விஷயங்களைக் கற்றுக்கொண்டு அந்தச் சொத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டியவன் என்பதுதான். அதே மாதிரி அவன்தான் 'தர்ப்பம்' என்கிற கர்வகுணம் இல்லாத விநயத்துடன் இருக்க வேண்டும் என்றும் வலியுறுத்திச் சொல்வது. இதனால் (விநீதன்' என்றே அவனுக்கு ஒரு பெயர் சொல்வது. ஆனால் இங்கேயோ சிஷ்யப் பிராயத்திலுள்ள ச்வேதகேது ஒரு முறைப்பாகவும், அந்த முறைப்பில் வித்யாக்ரஹணத்தில்கூட அலக்ஷ்யமாகவும் இருக்க, குரு ஸ்தானம் வஹிக்கும் அவனுடைய அப்பாதான் 'விநித'ராகவும் 'வித்யார்த்தி'யாகவும் இருக்கிறார்!

ப்ரவாஹணரிடம் உத்தாலக ஆருணி போய் தமக்குத் தெரியாத வித்யையில் உபதேசம் தரும்படிக் கேட்கிறார். பாலாகி விஷயமாக அஜாதசத்ரு (ப்ராம்மணருக்கு க்ஷத்ரியர்

உபதேசிக்கலாமா என்று) யோஜித்த மாதிரியே ப்ரவாஹணரும் யோஜிக்கிறார், அவரை இவர் 'ப்ரெஸ்' பண்ணி உபதேசம் பெற்றுக் கொள்கிறார் - என்பதாக ஒரு குருவுக்கே தன்னைக் குறைத்துக் கொண்டாகிலும் தெரியாத வித்யையை ஸ்வீகரிக்கும் விநயம் இருந்ததை உபநிஷத் தெரிவிக்கிறது.

உத்தாலக ஆருணியுடைய இந்த குணச் சிறப்புக்கு சாந்தோக்யமே இன்னொரு எடுத்துக்காட்டும் கொடுக்கிறது. 'மஹாச்ரோத்ரியர்' என்கப்படுகிறது, விசேஷமான வேதக் கல்வியில் தேர்ந்த ஐந்து பேர். அவர்கள் ஆத்ம ஸம்பந்தமாக உத்தாலகரிடம் ஒரு விஷயம் தெரிந்து கொள்ளப் போகிறார்கள். அவர்களைப் பார்த்தவுடனேயே அவர், "இவ்வளவு பெரியவாளுக்கே தெரியாத விஷயம்னா அது நமக்கும் தெரிஞ்சுதான் இருக்காது. அதனாலே, எல்லாம் தெரிஞ்ச ராஜா அச்வபதிகிட்டே அவாளை அழைச்சுண்டு போவோம். தெரியாததை அவா மட்டுமில்லாம நாமும் தெரிஞ்சுப்போம்" என்று எளிமையாக, கபடமில்லாமல் நினைக்கிறார். அப்படியே எல்லாரும் போய், அடக்கத்தோடு, வித்யையிலுள்ள ஆர்வத்தினால் தாங்கள் ப்ராம்மண ச்ரேஷ்டர்களாக இருந்தபோதிலும், க்ஷத்ரியரான அச்வபதியிடம் உபதேசம் கேட்டுக் கொள்கிறார்கள்.

எதற்குச் சொல்லவந்தேன் என்றால்: வழி சொல்லித்தருகிறவர் தாமே முதலில் ஸரியாகத் தெரிந்துகொண்டிருக்கணும். தெரிந்ததாக நினைத்துக்கொண்ட குரு ஸ்தானம் கொண்டாடிக் கொள்கிற ஒருவர், தெரிந்து கொள்ளவில்லை என்று ஏற்படும்போது அதை மனஸார ஒப்புக்கொண்டு அப்புறமாவது குருஸ்தானத்திலிருந்து சிஷ்யஸ்தானத்திற்குக் கூச்சப்படாமல் இறங்கி வந்து தெரிந்து கொள்ளணும். குரு என்கிறவன் எந்நாளும், எவர்கிட்டேயும் (எவரிடமும்) சிஷ்யனாகவும் இருக்கத் தெரிந்துகொள்ளணும்.

வழிகாட்டுகிறவன் முடிந்த மட்டில் எல்லா வழியுமே தெரிந்தவனாகத் தன்னை ஆக்கிக் கொள்ளணும் - ஸதாகால வித்யார்த்தியாக இருக்கணும். அப்படி வழியெல்லாம் வாழ்நாள் பூராவும் தெரிந்து கொண்டு சொல்கிறவனே தேசிகன்.

வழிகண்டவன்தான் வழிகாட்டவும் முடியும் இங்கே,

(குருவிஷயத்தில்) கண்டவன் என்பதை, 'தான் சொல்கிற விஷயத்தை அநுபவப் பூர்வமாகக் கண்டு கொண்டவன்' என்று அர்த்தம் பண்ணிக்கணும்.

மேல் நாட்டில் சொல்கிறார்கள், 'preacher பிரயோஜனமில்லை, teacher தான் வேண்டும்' என்று! 'ப்ரீச்சர்' என்றால் பிறத்தியாருக்குப் பிரகடனப்படுத்துகிறவர், அப்படிப் பண்ணுவதையே நோக்கமாகக் கொண்டவர் என்றும், 'டீச்சர்' என்றாலே தம்முடைய வாழ்க்கையிலேயே பாடத்தைப் பின்பற்றியொழுகிப் பிறருக்கும் எடுத்துக்காட்டுகிறவர் என்றும் அவர்கள் 'டிஸ்டிங்க்விஷ்' செய்கிறார்கள். 'ப்ரசார' என்ற வார்த்தையை வைத்தே 'preach' ஏற்பட்டது, 'காட்டுவது' என்பதற்கான க்ரீக் வார்த்தையின் அடியாக teach ஏற்பட்டது என்கிறார்கள். 'காட்டுவது' என்றால் 'வழி காட்டுவது'தான், தாமே ப்ரத்யட்ச உதாரணமாக இருந்து 'காட்டுவது'ந்தான் அப்படி இருக்கும்போது குரு வழிகாட்டியாக மாத்திரமில்லாமல் அவரே வழியாகி விடுகிறார், வழி கொண்டு போய் முடிவாய் நிறுத்தும் குறிக்கோளும் ஆகிவிடுகிறார். "Way and the goal" என்று பைபிள் சொல்வது!

'தேசிகன்' விஷயமாக இத்தனையும்.

---

## 'புரோஹிதர்'

(குருவுக்கு உள்ள அநேகப் பெயர்களில்) 'புரோஹிதர்' பாக்கியிருக்கிறது. அநேக ஸம்ஸ்க்ருத வார்த்தைகளில் ஸம்யுக்தாட்சரம் என்ற கூட்டெழுத்துக்கள் வரும். உதாரணமாக 'சுக்லாம்பரதரம்' என்பதில் 'க்லா' (என்பது ஒரு மெய்யெழுத்தும் ஒரு உயிர்மெய்யெழுத்தும் ஒன்றாகக் கூடிய எழுத்து. தமிழில் அப்படிப்பட்ட கூட்டெழுத்துகளும், basic ஆகக் கூட்டொலிகளுமே கிடையாது. அதனால் 'சுக்லம்' என்பதைத் தமிழில் 'சுக்கிலம்' என்றுதூன் எழுதுவார்கள். தமிழில் 'க்' முதலிய மெய்யெழுத்துக்கள் அதே வர்க்கத்தை - இந்த உதரணத்தில் 'க' என்பதை -

சேர்ந்த உயிர்மெய்யுடன் தான் சேரும். அதனால்தான் 'சுக்கில', 'பச்சை', 'மைத்துன', 'அப்பா', 'அம்மா' என்பது மாதிரியான கூட்டொலிகளே தமிழில் உண்டு. 'க்ருஷ்ணர்' என்று ஆரம்பத்திலேயே மெய்யெழுத்து தமிழில் வராதாகையால்தான் அதைக் 'கிருஷ்ண' என்பது. தமிழ்ப் புலவர்கள் 'ஷ்ண'வும் தமிழில் வராது என்பதால் 'கிருட்டிண' என்றே சொல்வார்கள், எழுதுவார்கள். அதே ரீதியில் 'ப்ரோக்ஷணம்' என்பதைத் தமிழில் 'புரோட்சணம்' என்றே எழுதுவார்கள். 'ட்ச' என்று ஸம்ஸ்க்ருத 'க்ஷ' (க்க்ஷ)வைச் சொல்வதுகூட ஸரியில்லை என்று நினைக்கும் புலவர்கள் 'புரோக்கணம்' என்றே சொல்வார்கள். எதற்கு இந்தப் பேச்சு வந்திருக்கிறது என்றால், 'புரோஹிதர்' என்பதிலும் ஆரம்பம் 'புரோ' தானே? தலைகீழ்ப் பாடமாக இங்கே பல பேர் ஒரு தப்புப் பண்ணுகிறார்கள். என்ன தப்பு என்றால், 'ப்ரோட்சணம்' மாதிரிதான் இதுவும் மூலத்தில் 'ப்ரோஹிதர்' என்ற வார்த்தை என்றும் அதையே தமிழ் வழக்கில் 'புரோகிதர்' ஆகியிருக்கிறது என்றும் நினைக்கிறார்கள். இலக்கணமாக எழுதுவது மாதிரிப் பேச்சு வழக்கில் பண்ணுவதில்லையாகையால், பேசும்போது 'ப்ரோஹித்' என்றே சொல்கிறார்கள். அது தப்பு. மூலமான ஸம்ஸ்க்ருதத்திலேயே அது புரோஹிதர்'தான், 'ப்ரோஹிதர்' இல்லை. 'புரா' என்றால் 'முன்னால்'. 'புராணம்' என்றால் முற்காலத்தில் நடந்தது. 'புரோ-ஹித' என்றால் 'முன்னால் ஹிதம்'. ஒருத்தனுக்கு எது ஹிதமோ அதை முன்கூட்டியே சொல்பவர்தான் புரோஹிதர். 'ஹிதம்' என்றால் நல்லது அது நல்லதாக இருப்பதோடு மாத்திரமில்லாமல் மனஸுக்கு ஸந்தோஷமாகவும் இருக்கும். ஸாதாரணமாக நமக்கு எதெது நல்லதோ அதெல்லாந்தான் மனஸுக்குப் பிடிக்காததாக இருப்பது!அப்படித்தான் உபநிஷத்தே வித்யாஸப்படுத்தி நல்லதை 'ச்ரேயஸ்' என்றும், மனஸுக்குப் பிடித்ததை, ப்ரியமானதை 'ப்ரேயஸ்' என்றும் சொல்கிறது. நல்லதையே மனஸுக்கும் பிடித்த மாதிரியான முறையில் செய்வதும், சொல்வதுந்தான் ஹிதம்.

ஒரு கட்டி - கிழங்கு வந்து ரொம்பக் கஷ்டப் படுத்துகிறது. மேலே ஸரியான சூட்டிலே ஜலம் விட்டால், ஒத்தடம் கொடுத்தால் கஷ்டம் அப்போதைக்காவது, ஓடிப்போகிறது, "எதம்..மா இருக்கு" என்கிறோம். அந்த 'எதம்' என்பது 'ஹிதம்தான். பாபம் நம்மை ஸம்ஸாரத்தில் கட்டிப்போட்டுக்

கஷ்டப்படுத்துகிறது. இதுவும் ஒரு 'கட்டி'. பாபம் தீரப் புண்யம் பண்ணவேண்டும். அந்தப் புண்யம் ஸாதாரணமாக நமக்கு எரிச்சல் தரும் மருந்தாகவே இருக்கும். அப்படி இல்லாமல் அதையும் ஸௌக்யம் தரும் ஒத்தடமாக்கிக் கொடுப்பவர்தான் நமக்கு ஹிதம்

செய்கிற, ஹிதமாக இருக்கும் குரு.

ஸத்யம் நல்லது .ஆனால் அது அநேகமாக மனஸுக்குப் பிடிக்காது. "ஸத்யத்தையும் ஹிதமாகச் சொல்லி, பிடிக்கிற மாதிரி பண்ணு, ஸத்யம் ப்ரூயாத், ப்ரியம் ப்ரூயாத்" என்று மநு சொல்கிறார். திருவள்ளுவரும்

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்

தீமை இலாத சொலல்

என்கிறார். 'தீமை இலாத', அதாவது ஹிதமாக!

'ஹிதோபதேசம்' என்று ஒரு புஸ்தகம். 'பஞ்சதந்த்ரக் கதைகள்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். நீதி உபதேசம் என்றால் ஸாதாரணமாக யாருக்குமே அது ரஞ்ஜகமாக இருக்காது. ஆனால் குழந்தைகளுக்குங்கூட நீதிபோதனை பிடிக்கும் படியாகக் கதாரூபத்தில் மிருக -பட்சிகளைக்கூட பாத்திரங்களாக வைத்து பஹு ஸ்வாரஸ்யமாக விஷ்ணு சர்மா என்கிறவர் ஒரு புஸ்தகம் எழுதினார். அதற்குப் பேர்தான் 'பஞ்சதந்த்ரம்'. ஐந்து முக்யமான 'டாபிக்'கு களாகப் பிரித்து எழுதியதால் அப்படிப் பேர். அது கிறிஸ்து சகாப்த ஆரம்ப நூற்றாண்டுகளில் எழுதியது என்று வெள்ளைக்காரர்களே சொல்கிறார்கள். அதை base பண்ணி, இன்னமுங்கூட நைஸ் பண்ணி பல நீதிக் கதைகளாகச் சிறு வயசு மாணவர்களும் ஆசையாகப் படிக்கிற விதத்தில் நாராயணர் என்ற வங்காளியர் எண்ணூறு வருஷத்திற்கு முன் எழுதினதுதான் 'ஹிதோபதேசம்'. Middle School என்கிற நடுநிலைப் பள்ளிக்கூட கட்டடத்தில் ஸம்ஸ்க்ருத மாணவர்களுக்கு 'ஹிதோபதேச' -த்திலிருந்து பாடங்களும், ஹைஸ்கூல் வகுப்பு மாணவர்களுக்கு மூல 'பஞ்சதந் த்ர'த்திலிருந்து பாடங்களும் வைப்பதாக முன்னெல்லாம் நடந்து வந்தது.

---

## சுதந்திர இந்தியாவில் கலாசாரக் குழிபறிப்பு

'முன்னெல்லாம்' என்றால் நம்முடைய கலாசாரத்திற்கு நன்றாகக் குழி பறித்த வெள்ளைக்காரர்களின் காலத்தில் அவர்களுக்கும் மனஸ்ஸாக்ஷி உறுத்தி, அங்கே அங்கே, சில நல்லதும் பண்ணியதில் இப்படியொன்று பாடத்திட்டத்தில் சேர்த்திருந்தார்கள். ஸ்வதந்திரம் என்பதாக நமக்கு வந்து தேச கலாசாரம் விருத்தி செய்யப்படுவதாகச் சொல்லப்படும் தற்காலத்திலோ, அங்கங்கே உள்ள சின்ன மாறுபாடுகளை ஊதிப் பெரிது பண்ணிப் பிரதேச கலாசாரம் என்று தாங்களாகவே ஸ்ருஷ்டி செய்திருக்கும் ஒரு குறுகின ஏற்பாட்டால், தேசம் முழுதற்குமே ஏற்பட்ட கலாசாரத்தை அமுக்கிப் போட வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. இதன் நிகர விளைவாக, கலாசாரக் குழிபறிப்பில் நம்மவர்களே வெள்ளைக்காரனை விட ஆழக் குழித்தோண்டி அவனையே நல்லவனாக்கியிருக்கிறார்கள்!கடைசியில் நடைமுறையைப் பார்த்தாலே மத்த தேசம் முழுதற்குமான கலாசாரமோ, இட்டுக்கட்டி உண்டாக்கியுள்ள ப்ரதேச கலாசாரமோ எதுவும் ஜனங்களின் வாழ்முறையில் வராமல் அது வெள்ளைக்கார மோஸ்தரிலேயேதான் முன்னைவிட வேகமாக, ஆழமாக இறக்கிக் கொண்டிருக்கிறது. தேச கலாசாரத்திற்குப் பதில் பிரதேச கலாசரம் என்பதில் ஒரு அங்கமாக இந்தத் தமிழ்நாட்டில் ஸம்ஸ்க்ருதக் கல்வியின் மென்னியைத் திருகியிருப்பதில் வெள்ளைக்காரன் பண்ணியிருந்த கொஞ்சம் நல்லதும் போய்விட்டது!அவன் கொஞ்சம் பறித்து விட்டிருந்த குழியை இப்போது அகாதமாகவே தோண்டியிருக்கிறது!....

ச்ரேயஸான நீதி போதனையை ப்ரேயஸாகவும் ரஞ்ஜகமாக ஆக்கித் தருவது 'ஹிதோபதேசம்' என்று சொல்ல வந்தேன்.

---

## வித்யாகுரு வும் தீக்ஷாகுருவும்

வருங்காலத்திற்கு எது ஹிதமோ அதற்கு முன்கூட்டியே வழிசொல்லித் தருகிறவர்தானே குரு? அதனால் அவர் 'புரோஹிதர்' ஆகிறார். எட்டு வயஸில் ப்ரம்மசாரியாகி குருகுலம் சேர்ந்துவிட்ட சிஷ்யனுக்கு ப்ரம்மசர்ய ஆச்ரமத்தில் அவன் எப்படி ஒழுகவேண்டும் என்று சொல்லிக் கொடுப்பதோடு மாத்திரம் அவர் முடித்து விடுவதில்லை. பிற்பாடு, வாழ்நாள் முழுவதற்குமேயான எல்லா விஷயங்களும் உபதேசிக்கிறார். இவரை 'வித்யாகுரு' என்பார்கள். எல்லா வித்யைகளும், அதாவது கல்வியின் பல துறைகளையும் போதிக்கிறவர் இவர். ஆனாலும் ஆத்ம வித்யையை மாத்திரம் காரிய ரூபத்தில் உடனே ஏற்று அநுஷ்டிக்கச் செய்கிற அளவுக்கு போதிக்கமாட்டார். அதிலும் அறிவை வளர்த்துக் கொடுத்து, அதன் லக்ஷ்யத்தில் ஒரு பிடிமானத்தையும் உண்டாக்கித் தருவாரானாலும், அதை நடைமுறையில் ஏற்றுச் செய்வதற்கு ஸந்நியாஸப் பக்குவம் அவசியம் என்பதால், முதல் ஆச்ரமத்தில் (ப்ரம்மசரியத்தில்) இருக்கும். சிஷ்யனை அவர் இரண்டாம் ஆச்ரமத்தில் (க்ருஹஸ்தாச்ரமத்திற்கு)த் தான் அனுப்பி வைப்பார், நாலாம் ஆச்ரமத்திற்கு (ஸந்நியாஸத்திற்கு) அல்ல. பிற்பாடு அந்த ஆச்ரமம் கொடுத்த ஆத்மவித்யை - ப்ரஹ்ம வித்யா எனப்படுவதை - மட்டுமே போதிப்பவரை 'தீக்ஷா குரு' என்பது. தெய்வங்களைக் குறித்து ஜபிப்பதற்காக இருக்கும் பல விதமான மந்த்ரங்களில் ஒன்றை உபதேசிக்கிறவரையும் தீக்ஷா குரு என்று சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது.

எந்த குருவானாலும் 'வரும் முன் காப்பது' என்றபடி, சிஷ்யாள் தப்புப் பண்ணாதபடி முன்னதாகவே ஜாக்ரதை பண்ணி அவர் உபகரிப்பார். அதனால் 'புரோ'ஹிதர் என்று பேர். 'ஜாக்ரதை பண்ணி' என்னும்போது கொஞ்சம் மிரட்டி, உருட்டி, எச்சரிக்கை பண்ணுவதாக த்வனிக்கலாம். இவர் அப்படி மிரட்டல் - உருட்டல் பக்கம் போகாதவர். பக்வமாக, பதமாகவே சொல்கிற 'ஹிதர்'! ஏற்கெனவே வந்துவிட்ட கட்டிக்கு வைத்யம் பண்ணுவதோடு , இனி மேலும் பாபம் சேர்க்காமலிருக்கவும் preventive medicine (பின்னர் நேரக்கூடிய நோய்க்குத் தடுப்பு மருந்து) கொடுக்கும்

புரோ-ஹிதராக குரு இருக்கிறார்.

---

## குருவின் 'பயங்கர'ப் பொறுப்பு!

புரோஹிதருக்கும் குருவுக்கும் வித்யாஸம் காட்டினாற்போலவும் ஒரு சாஸ்த்ர வசனம் இருக்கிறது.

ராஜானம் ராஷ்ட்ரஜம் பாபம், ராஜபாபம் புரோஹிதம் 1

பர்த்தாரம் ஸ்த்ரீ-க்ருதம் பாபம், சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத் 11

ஸாதாரணமாக நினைப்பது, ராஜா ஜனங்களை ஆட்டிப் படைப்பவன், அவனையும் ஆட்டிப் படைப்பவர் ராஜகுரு, பதி என்கிறவன் பெண்டாட்டியை ஆட்டிப் படைப்பவன், குரு என்பவர் சிஷ்யனை ஆட்டிப் படைக்கிறவர், என்று. ஆனால் நம்முடைய தர்ம சாஸ்திரங்களில் அந்த நாலு பேருக்கும் அவர்கள் யார் யாரை ஆட்டிப் படைப்பதாகத் தோன்றுகிறதோ அந்த நாலு பேரை நல்வழிப்படுத்தியாக வேண்டிய பெரிய பொறுப்பைக் கொடுத்திருக்கிறது. ராஜா ப்ரஜைகளைநல்வழிப்படுத்தும், ராஜகுரு அந்த ராஜாவையே நல்வழிப்படுத்தணும், அகமுடையானமார்கள் பொண்டாட்டிமார்களை நல்வழிப்படுத்தணும், குரு என்று இருப்பவர் சிஷ்யாளை நல்வழிப்படுத்தணும். இப்படி அவர்கள் கட்டாயப் பொறுப்பு ஏற்க வேண்டும். பயங்கரமான பொறுப்பாகவே கொடுத்திருக்கிறது. என்ன பயங்கரம் என்றால், அப்படி அவர்கள் நல்வழிப்படுத்தத் தவறினால், அந்த ப்ரஜைகளும், ராஜாவும், பெண்டாட்டியும், சிஷ்யர்களும் பண்ணுகிற பாபம் முறையே அந்த ராஜாவையும், ராஜகுருவையும், அகமுடையனையும் குருவையுமே சேரும். இப்படி ஒரு பெரிய பொறுப்பு ஏற்பதால்தான் அந்த நாலுபேரை அடங்கி நடக்கும்படிச் சொல்லியிருப்பது.

---

## புரோஹிதரும், குருவும்

அந்த தர்ம வ்யவஸ்தையை இங்கே சொல்லக் காரணம், (குறிப்பிட்ட) ச்லோகத்தில் 'ராஜாவின் புரோஹிதர்', சிஷ்யனின் குரு' என்பதாகப் புரோஹிதரையும் குருவையும் வெவ்வேறு ஆஸாமிகளாகச் சொல்லியிருப்பதுதான், ராஜ பாபம் புரோஹிதம், சிஷ்ய பாபம் குரும்.

அப்படியானால் குரு வேறே, புரோஹிதர் வேறேயா?

குரு என்று இந்த ச்லோகத்தில் சொல்வது - இங்கே மாத்திரம் இல்லை, பொதுவாகவே அநேக இடங்களில் சொல்வது -பால்யத்தில் உபநயனம் ஆனதும் எவரிடம் போய் ஒருத்தன் குருகுலவாஸம் செய்து படிப்பானோ, அவரைத்தான். அவர் க்ருஹஸ்தரே. என்றாலும் ரொம்ப பூர்வ காலங்களில் அவர் காட்டில் இருந்து கொண்டிருந்தார். நாட்டிலிருந்து சிஷ்யர்கள் அங்கே போய் கூட வாஸம் பண்ணி வித்யாப்யாஸம் செய்தார்கள். அதற்கப்புறம் அவர் காட்டில் இல்லாவிட்டாலும், சிஷ்யர்களாக வந்தவர்களின் வீடுகளோடு ஸம்பந்தப்படாமல் ஒதுங்கத் தனியாக குருகுலம் வைத்துக் கொண்டு பாடம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். வெளியூரிலிருந்தும் பசங்கள் அவரிடம் வந்து படிப்பார்கள். படிப்பானதும், காட்டு குருகுலம், நாட்டு குருகுலம் எதுவானாலும் அதை விட்டு விட்டு சிஷ்யர்கள் அகத்திற்குப் போய்க் கல்யாணம் கார்த்திகை செய்து கொண்ட க்ருஹஸ்த கர்மாக்களைச் செய்ய ஆரம்பிப்பார்கள். அப்போது அவற்றை அவர்களுக்குச் செய்விக்க வேறே புது குருமார் வேணும்தானே? அப்படி ஏற்பட்ட இரண்டாவது குருவுக்குத்தான், ஜெனரலாக, 'புரோஹிதர்' என்றே தனிப்பெயர் கொடுத்து வைத்தது. பொது ஜனங்களாக உள் க்ருஹஸ்தர்கள் பல பேருக்கு ஒருவரே புரோஹிதராக இருப்பார். ஆனால் ராஜாவுக்குத் தனியாக ஒருவர் அப்படி இருப்பார். ராஜாவும் பால்ய தசையில் காட்டிலேயோ, நாட்டிலேயே ஒதுக்குப் புறத்திலேயே இருந்த குருவிடம் போய்த்தான் வித்யாப்யாஸம் பண்ணித் திரும்பியிருப்பான். ராஜாவான அப்புறமும்கூட அவனுக்குள்ள வஸதியினால் அவரை அவ்வப்போது - அன்றன்றுங்கூட - ரதம் அனுப்பி வரவழைத்து அட்வைஸ் கேட்டுக்கொள்வான்.

ராமாயணத்தில் வஸிஷ்டரை அயோத்தி ராஜ ஸதஸில் அடிக்கடிப் பார்க்கிறோமில்லையா? ராஜா அரண்மனையில் தனக்கென்றே தனியாக வேற ஒரு புரோஹிதர் வைத்துக் கொள்வதாகவும் நிறையவே இருந்திருக்கிறது.

இப்படி நாட்டிலேயே இருந்துகொண்டு வயஸுக்கு வந்துவிட்ட ராஜாவுக்கு அட்வைஸ் பண்ணுபவரைத்தான் ச்லோகத்தில் 'புரோஹிதர்' என்றும், மற்ற குருமார்களை எல்லாம் குரு என்றும் வித்யாஸப்படுத்திச் சொல்லியிருக்கிறது.

ஆகக்கூடி, புரோஹிதரும் குருதான் - குரு செய்வதான நல்வழி காட்டும் கடமையைச் செய்பவர்தான், ஆனால் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள், குறிப்பிட்ட கார்யத்திற்காக ஏற்பட்டவர்.

ஒருத்தனுக்கு வருங்கால ஹிதத்தை முன்னதாக எடுத்துச் சொல்பவர் 'புரோஹிதர்' என்று நிர்வசனம் (பத இலக்கணம்). அப்படிச் சொல்வதையே அவன்

மனஸுக்கும் பிடித்தமான முறையில் ஹிதமாகச் சொல்கிறவர் என்றும் சேர்த்துக்

கொள்ளலாம். தற்காலத்தில் நாம் வித்யாப்யாஸத்திற்குப் புரோஹிதரிடம் போவதில்லை. இப்போது நமக்குத் தெரிந்த புரோஹிதர் 'பண்ணி வைக்கிற வாத்தியார்'தான். ஆதிநாளில் குருகுலத்தில் படிப்பு முடித்து வந்து, விவாஹம் பண்ணிக் கொண்டவனுக்கும் வேதகர்மாக்கள் - சின்ன இஷ்டிகளிலிருந்து பெரிய யாகங்கள் வரையிலானவை - சொல்லிக் கொடுத்துப் பண்ணிவைப்பதற்கு ஒரு குரு இருக்கத்தான் செய்தார். இப்போது எல்லாம் தேய்ந்து கல்யாணம், அபரகார்யம் (உத்தரக்ரியை), ஆவணியாவட்டம், பூணூல் கல்யாணம் இப்படிச் சிலது பண்ணுவிக்க ஒருத்தரை வைத்துக் கொண்டிருக்கிறோம். இவர்தான் இப்போது கொஞ்சத்தில் கொஞ்சம் நமக்கு குருஸ்தானம். அந்தந்தச் சடங்காவது நாம் 'ஆசார்யமுகமாக'ப் பண்ணுவதற்கு அவர்தான் இருப்பதால் அந்த ஸ்தானம். அவரும் முன்னதாக, 'புரோ', அகத்துக்கு வந்து, எப்போது அப்பா ச்ராத்தம், எப்போது வரலக்ஷ்மி வ்ரதம் என்று சொல்லிவிட்டுப்போகிறார். ஆனால் அது அகத்தைச்

சேர்ந்தவர்களுக்கு 'ஹித'மாயிருக்குமா என்பது ஸந்தேஹம்!

ஒரு விஷயத்தில் அநேகப் புரோஹிதர்கள் ரொம்பவும் ஹிதர்களாக இருப்பதாகக் கேள்வி - க்ருஹஸ்தர்கள் எத்தனை அசாஸ்த்ரீயமானதையும் 'சாஸ்த்ரோக்தம்' என்ற பொய் ஜோடனைக்குள்ளே பண்ண ஆசைப்பட்டாலும், அவர்கள் மனஸு படியே, இன்னுங்கூட தைரியம் கொடுத்தும், பண்ணிவைப்பது, அவர்கள் இஷ்டப்படி, ஸௌகர்யப்படி கர்மாக்களைக் குறைத்துப் பண்ணுவது, வேளை, காலம் தப்பிப் பண்ணுவது என்பதிலெல்லாம் ரொம்ப ஹிதமாயிருப்பதாகக் கேள்வி.

முன்னாள் புரோஹிதர் எதுதான் நிஜமாகவே ஹிதமோ அதையே கேட்கவும் ஹிதமாகச் சொல்வார். 'சொல்கிறவர்' என்றால் சொல்லி அதோடு விட்டு விடுகிறவரில்லை. தாம் சொன்னபடி (சிஷ்யன்) செய்யும்படியாகவும் தூண்டிவிடுவார். அந்த சக்தி அவருக்கு இருந்தால்தான் 'குரு' என்ற பெரிய பெயர் பொருந்தும்.

---

### சீடன் முயற்சியும், குருவின் அருளும்

இப்படிச் சொன்னதால் ஒரு குரு எல்லா சிஷ்யர்களையும் அவர் சொல்கிறபடியே நூறு பெர்ஸென்டும் நடக்கப் பண்ணிவிடுவாரென்று அர்த்தமில்லை. ஒவ்வொரு ஜீவனுக்கும் இருக்கப்பட்ட அந்தஃகரணத்தின் பக்குவ ஸ்திதிக்கும் இங்கே இடம் கொடுக்கத்தான் வேண்டும். சிஷ்யனின் சித்த பக்வம், புத்தி தீக்ஷண்யம் ஆகியவை வித்யா ஸ்வீகரணத்தில் முக்யமான இடம் பெற்றவையாகும். அவற்றோடு விநயம் முக்யமாக வேண்டும். பரம விநயத்தினால் அப்படியே குருவுக்கு சரணாகதி பண்ணுகிறவன் விஷயத்தில்தான், அவன் மந்த புத்திக்காரனாக இருந்தால்கூட குருவின் தூண்டுதலே பூர்ணமாக வேலை செய்து பூர்ண ஞானத்தைக் கொடுப்பது. அதைத் 'தூண்டுதல்' என்று சொல்லி முடித்து விடுவதுகூட ஸரியில்லை. குருவின் க்ருபா சக்தியே, சிஷ்யனுக்கு வேலை வைக்காமல் ஞானத்தை அவனுக்குள் ரொப்பி (நிரப்பி)

விடுவதாகவே சொல்லணும். அது விதிவிலக்குத்தான். ஏனையவர்களும் எந்த அளவுக்கு விநயமாகப் படிமானத்துடன் கற்கிறார்களோ அந்த அளவுக்கு குருவின் க்ருபையும் வெவ்வேறு டிகிரிகளில் அவர்களைத் தூண்டி விடும். அப்படி இல்லாதவர்களை அவர் ஏதோ தாற்காலிகமாகத் தூண்டிவிடலாம். அப்புறம் அவர்களுடைய கீழ்ப்படிதல் போதாத அந்தஃகரணம் விரைத்துக் கொண்டு தன் போக்கிலேயே எழும்பிவிடும். வித்யை ப்ரயோஜனப்படாமல் போகும்.

உபநிஷத்தைப் பார்த்தாலே தெரியும் - ப்ரஜாபதி அஸுர ராஜாவான விரோசனனுக்கும் உபதேசம் பண்ணினார், தேவராஜாவான இந்த்ரனுக்கும் உபதேசம் பண்ணினார். ஆனாலும் அஸுர ராஜா விரோசனன் தேஹாத்ம புத்தியுடன் (உடலேதான் ஆத்மா என்ற அறிவுடன்) மட்டும் நின்றுவிட்டான். இந்த்ரன்தான் தேஹாதீதமான நித்யா ஸத்ய நிஜ தத்வமாக ஆத்மாவைத் தெரிந்துகொண்டான். காரணம், குருவுக்கும் அவர் சொல்லித் தருகிற வித்யைக்கும் எந்த அளவுக்கு ஒரு சிஷ்யன் கீழ்ப்படிதலுடன் அந்தஃகரணத்தைத் திறந்து விடுகிறானோ அதைப் பொறுத்தே அவனுக்குள் தத்வம் ஏறும், ஊறும் என்பதுதான்.

சிஷ்யன் எப்படிப்பட்டவன் என்பதும் வித்யா ஸ்வீகரணத்தில் முக்யம். அதுதான் விஷயம் என்ற அளவுக்கு, கொஞ்சம் 'எக்ஸ்ட்ரீ'மாகவே பவபூதி சொல்லியிருக்கிறார்.

விதரதி குரு ப்ராஜ்ஞே வித்யாம் யதைவ ததா ஜடே

ந து கலு தயோர் - ஜ்ஞாநே சக்திம் கரோத் - யபஹந்தி வா 1

பவதி ச தயோர் - பூயான் பேத பலம் ப்ரதி தத் - யதா

ப்ரபவதி சுசிர் - பிம்ப - க்ராஹே மணிர் - ந ம்ருதாம் சய:11

என்ன சொல்கிறாரென்றால் நல்ல புத்திமானான ஒரு மாணவன் இருக்கிறான். 'ப்ராஜ்ஞன்' என்று அவனை ச்லோகத்தில் சொல்லியிருக்கிறது. "ரொம்ப ப்ராஜ்ஞன்-னு எண்ணம்" என்று நாம்கூடச் சொல்கிறோம் ப்ராஜ்ஞன்

என்றால் புத்திசாலி என்பது மட்டுமில்லை, சித்த பக்வம், அதற்குரிய விநயம்

ஆகியவையும் உள்ளவன், அப்படிப்பட்டவனுக்கும் குரு பாடம் சொல்கிறார். 'ஜடம்' என்று ச்லோகத்தில் சொல்லியிருக்கும் மந்த புத்திக்காரனுக்கும் சொல்லித் தருகிறார். கீழ்ப்படிதலிலும் இவன் ஜடம். இப்படி, வித்யாஸமான இரு தினுஸு வித்யார்த்திகளுக்கும் ஒரே மாதிரிதான் வித்யாஸம் பார்க்காமல் பாடம் நடத்துகிறார் குரு. இது ச்லோகத்தின் முதல் பாதம் (நான்கு வரிகளில் முதல் வரி).

அடுத்த பாதத்தில் அவர் சொல்வதைத்தான் 'எக்ஸ்ட்ரிம்' என்று சொன்னேன் "ந து கலு தயோர் ஜ்ஞானே சக்திம் கரோதி அபஹந்தி வா" என்று இங்கே சொல்கிறார். அவர்களுடைய அறிவுக்கு - ஸ்வபாவமாக அவர்களுக்குள்ள அறிவுக்கு - அவர் புதுசாகச் சக்தி ஊட்டவுமில்லை, அந்த அறிவின் சக்தியை அபஹரிக்கவுமில்லை. அதாவது சிஷ்யனின் அறிவுத் திறனை குரு கூட்டவுமில்லை, குறைக்கவுமில்லை.

இப்படி அவர் சொல்வது, ஒரு சிஷ்யனுக்கு வித்யை ஏறுவதும் ஏறாததும் முழுக்க அவனுடைய புத்தியை பொறுத்ததே என்ற அபிப்ராயத்தைக் கொடுக்கிறது. இதை 'எக்ஸ்ட்ரீம் வ்யூ' - ஒரு சார்பாகவே சற்று 'அதி'யாகப் பேசுவது - என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. சொன்னவர் ரொம்பப் பெரியவர். ஆத்ம சாஸ்த்ரம், நீதி சாஸ்த்ரம் எல்லாம் நன்றாகத் தெரிந்த மஹாகவி. ஆனாலும் ஒரு கவி தாம் எடுத்துக்கொண்டுள்ள ஒவ்வொரு விஷயத்திற்கும் அந்தந்த ஸமயத்தில் ரொம்ப அழுத்தம் கொடுத்துப் பேசினாலே அது நன்றாக மனஸில் பதியும் என்பதால் எக்ஸ்ட்ரீமாகவும் சிலது சொல்கிறது வழக்கம். அந்த ஸந்தர்ப்பத்தில் அப்படிச் சொன்னால்தான் பளிச்சென்று விஷயம் நிற்கும்.

ப்ரக்ருத ச்லோகம் (தற்போது நாம் எடுத்துக் கொண்டுள்ள ச்லோகம்) 'உத்தர ராம சரிதம்' என்கிற நாடகத்தில் வருகிறது. அதிலே வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திலே லவ-குசர்கள் அவரிடம் வித்யாப்யாஸம் செய்கிறபோது அவர்களோடு கூடப் படித்த ஸஹவித்யார்த்தியான ஆத்ரேயி என்ற பெண் சொல்கிற வசனமே இந்த ச்லோகம். "லவ - குசர்கள் பாடத்தை அப்படியே பூர்ணமாக க்ரஹித்துக் கொண்டார்கள். அதற்கான 'ப்ரஜ்ஞா' என்ற நல்லறிவாற்றலும், 'மோ'

என்பதான விஷயத்தை மறக்காமல் ஸ்திரமாகக் காப்பாற்றிக் கொள்கிற சக்தியும் அவர்களுக்கு இருந்தது. அல்ப ப்ரஜ்ஞையும் அல்ப மேதஸுமே உள்ள என்னால் அவர்களோடு தாக்குப்பிடிக்க முடியவில்லை. அதனால் வால்மீகி ஆச்ரமத்தை விட்டு விட்டு அகஸ்த்யரிடம் கல்வி கற்கப் போகிறேன்" என்று அவள் சொல்லிக் கொண்டு போகும்போது இந்த ச்லோகம் சொல்கிறாள். குரு ஒரே மாதிரி, ஒரே க்ளாஸில், மாணவர்களை ஒன்றாகவே சேர்த்து வைத்துக் கொண்டே பாதித்த போதிலும் ப்ராஜ்ஞர்களான லவ-குசாள்தான் பூர்ணமாக க்ரஹித்துக் கொண்டார்கள், தன்னால் முடியவில்லை என்று சொல்லும் அந்த ஸந்தர்பத்தில் லவ-குசாள் பெருமையும் தன்னுடைய சிறுமையும் பளிச்சென்று தெரியும்படி அவளைக் கவி பேச வைக்க வேண்டியிருந்தது. அதனால் குருவான வால்மீகி மஹர்ஷியின் 'பார்ட்' என்ன என்று காட்டாமல் - குருவின் க்ருபைக்கு சிஷ்யனுடைய அறிவைத் தூண்டிக் கொடுக்கும் 'பார்ட்' உண்டு என்பதை இங்கே கொண்டு வராமல் - சிஷ்யர்களின் தரத்தைப் பொறுத்தே

வித்யாப்யாஸம் என்ற அபிப்ராயத்திற்கு மாத்திரம் அழுத்தம் தந்து

சொன்னால்தான் கவியின் உத்தேசம் பூர்த்தியாகும் என்பதனால் அப்படிச் சொன்னார்.

இப்படி, 'சிஷ்யனின் அறிவை குரு கூட்டவுமில்லை, குறைக்கவுமில்லை' என்று வருவது இரண்டாம் பாதம்.

அடுத்த பாதம்:பவதி ச தயோர் - பூயாந் - பேத:பலம் ப்ரதி தத் யதா. (பொருள் விளக்கம்) குரு எல்லாருக்கும் ஒரே மாதிரி சொல்லிக் கொடுத்தாலும் பலனை, ரிஸல்டை, பார்த்தால் ப்ராஜ்ஞ சிஷ்யனுக்கும் ஜட சிஷ்யனுக்கும் இடையே ரொம்ப வித்யாஸமாக இருக்கிறது. 'பேத பலம்' என்றால் வித்யாஸமான ரிஸல்ட் ப்ராஜ்ஞன் வித்யயையை நன்றாக ஸ்வீகரித்துத் தேர்ச்சி பெறுகிறான், ஜடனோ பழையபடி ஒன்றும் தெரியாத மண்டுவாகவே இருக்கிறான். இதுதான் 'பேத பலம்'. 'ப்ரதி தத் யதா' - 'இது எப்படி இருக்கிறதென்றால்' என்று மூன்றாம் பாதத்தை முடித்துவிட்டு நாலாம் பாதத்தில் ஒரு உவமை கொடுக்கிறார்.

விஷயம் ரஸமான முறையில் மனஸுக்குள் தைப்பதற்குக் கவிகள் கையாள்கிற யுக்தி, உவமை கொடுப்பதுதான். 'உபமா' என்று மூலப் பெயர். அதுவே தமிழில் 'உவமை' என்றாயிற்று. அதில் உபமானம், உபமேயம் என்று இரண்டு அங்கங்கள். எடுத்துக்கொண்ட விஷயம் - உபமேயம். எதை ஒப்புக் காட்டி அது விளக்கப்படுகிறதோ அது உபமானம்.

இங்கே உபமேயம் என்னவென்றால்:குரு என்று ஒருத்தர், அவருடைய சிஷ்யர்களில் ப்ராஜ்ஞன் என்ற ஒருத்தனும் ஜடன் என்று ஒருத்தனும், அந்த இரண்டு பேரில் முதலில் சொன்னவன் நன்றாகக் கிரஹித்துக் கொள்வதும் மற்றவன் 'மிஸ்' பண்ணிவிடுவதும்.

இத்தனைக்கும் நாலாம் பாதத்தில் உபமானம் கொடுத்திருக்கிறார்:

ப்ரபவதி சுசிர் - பிம்ப - க்ராஹே மணிர் - ந ம்ருதாம் சய:

(பொருள் விளக்கம்) ஒரு வஸ்து இருக்கிறது. அது பிம்பம். அதன் ரூபத்தைச் சில வஸ்துக்கள் தங்களுக்குள் வாங்கிக் கொண்டு ப்ரதிபலிக்கின்றன. இப்படி ரிஃப்ளெக்ட் ஆன ரூபத்திற்கு ப்ரதிபிம்பம் என்று பெயர். சரி, எல்லா வஸ்துக்களும் இப்படி ஒரு பிம்பத்தை ப்ரதிபலிக்கின்றனவா? இல்லை. பளபளப்பான வஸ்துக்கள் மட்டுமே ப்ரதிபலிக்கின்றன. அவற்றிலேயே பளபளப்பின் டிக்ரி வித்யாஸத்தைப் பொறுத்து ப்ரதிபிம்பத்தின் தெளிவான ரூபமும் ஏற்ற இறக்கங்களோடு உண்டாகிறது. எல்லாவற்றையும்விட, நல்ல சுத்தமான கண்ணாடிதான் ஒரு பிம்பத்தை அப்படியே அது இருக்கிற ரூபத்திலேயே ப்ரதிபலிக்கிறது. பவபூதியின் காலத்தில் சுத்த ஸ்படிகம் - பளிங்கு என்பதுதான் - கண்ணாடியாக இருந்தது. அது ஒரு தினுஸு மணிதான். "தோர்பிர்யுக்தா ஸ்படிகமணி மயீம் அக்ஷமாலாம் ததாநா" என்று ஸரஸ்வதியின் த்யான ச்லோகத்தில் வருவது தெரிந்திருக்கலாம். ஸ்படிகம் - மணி. சுத்தமான அந்த ஸ்படிகமணியைத்தான் 'சுசிர்-மணி:' என்று சொல்லியிருக்கிறது. 'சுசிர்' என்று முதலில் வந்து அப்புறம் 'பிம்ப க்ராஹே' என்பது குறுக்கிட்டபின் 'மணி:' என்று வருகிறது கவிதாரூபம் அழகாக இருப்பதற்காக இப்படிப்

பிரித்து, குறுக்கே வேறே வார்த்தையைப் புகுத்திக் 'கம்போஸ்' பண்ணுவார்கள்.

'பிம்ப க்ராஹே' என்றால் 'பிம்பத்தை க்ரஹிப்பதில்' - அதாவது 'பிம்பத்தைத்

தனக்குள்ளே வாங்கிக் கொண்டு ரிஃப்ளெக்ட் பண்ணுவதில்'. இப்படிப் 'பண்ணுவதில்' இரண்டு விதமான மீடியம்களுக்கு இடையே உள்ள வித்யாஸத்தைத்தான் உபமானமாகக் கொடுக்க வருகிறார். ஒரு மீடியம் சுசியான மணி. அது பிம்பத்தைத் தத்ரூபமாக க்ரஹித்துவிடுகிறது. இன்னொரு மீடியம் களிமண்ணுக் குவியல், மண்ணாங்கட்டி என்பது. 'ம்ருதாம் சய' என்று அதைத்தான் ச்லோகாந்தத்தில் (ச்லோக்ததின் முடிவில்) சொல்லியிருக்கிறது- மண்ணாங்கட்டி எந்த பிம்பத்தையாவது ரிஃப்ளெக்ட் செய்யுமா? செய்யாதோல்லியோ? அதற்கு க்ராஹ்ய சக்தியே (கிரகிக்கும் ஆற்றலே) இல்லை.

ஒரே பிம்பந்தான். ஸ்படிக மணிக்கும் ஸரி, மண்ணாங்கட்டிக்கும் ஸரி, ஒரே மாதிரிதான் அந்த பிம்பம் தன்னைக் காட்டிக் கொள்கிறது. ஆனாலும் முன்னால் சொன்னதுதான் அதன் ரூபத்தைத் தனக்குள் வாங்கிக் கொள்கிறது, பிந்தையது அப்படி இல்லை. இப்படி ஒரே பிம்பம் ஏற்படுத்துகிற விளைவுகள் ஒன்றுக்கொன்று வித்யாஸமாக இருக்கின்றன, பேத பல'மாக இருக்கிறது.

உபமான - உபமேயங்கள் புரிகிறதோல்லியோ? குரு கொடுக்கும் போதனை என்ற உபமேயத்திற்கு பிம்பம் உபமானம். அதை உள்ளபடி க்ரஹித்துக் கொள்ளும் ப்ராஜ்ஞ சிஷ்யன் என்ற உபமேயத்திற்கு பிம்பத்தைத் தத்ரூபம் க்ரஹித்துக் கொள்ளும் சுத்தமான ஸ்படிகமணி உபமானம். அப்படி க்ரஹிப்பதற்கு சக்தியில்லாத ஜடன் - உபமேயம். அவனுக்கு உபமானம் - மண்ணாங்கட்டி. 'களிமண் மூளை' என்கிறோமே, அது!

சின்னஞ் சிறிய மணியும் ஒரு பெரிய பிம்பத்தைத் தெளிவாக ப்ரதிபலிக்கிறது. குவியலாகவே மண்ணாங்கட்டியைக் கொட்டினாலும் - 'சய:' என்று வருவதற்குக் குவியல் என்று அர்த்தம், அது ஒரு சிறிய பிம்பத்தைக்கூட ப்ரதிபலிக்க முடியாது.

'வயஸில் சின்னவர்களான லவ-குசர்கள் வால்மீகி பகவான் சொல்லிக் கொடுத்த பெரிய பெரிய தத்வார்த்தங்களையும், 'மணி' என்பதற்கேற்க சிஷ்ய 'மணி'களாகவே முழுக்க க்ரஹித்துக் கொண்டார்கள். அவர்களைவிடப் பெரியவளான என் மண்ணாங்கட்டிப் புத்தியில் சின்ன விஷயம்கூட புகவில்லை (புகவில்லை)' என்று, ஒரு பக்கம் அந்த இரண்டு பாலகர்கள், மறு பக்கம்தான் என்று சிஷ்யர்களையே வைத்து அவள் பேசியதால்தான் குருவுடைய தூண்டுதல் சக்தி பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் விட்டது.

வாஸ்தவத்தில், சிஷ்யனுடைய ஸ்வய பக்வமும், ஸ்வய ப்ரயத்னமும் ரொம்ப ரொம்ப முக்யந்தான் என்றாலும் குருவும் தாம் கற்பிப்பது சிஷ்யனின் மூளைக்குள் இறங்குவதற்கும், அப்புறம் அந்தஃகரணத்திலேயே இறங்கி அந்தப்படியே அவன் வாழ்க்கையில் அநுஷ்டிப்பதற்கும் கொஞ்சமோ நஞ்சமோ தூண்டிவிட்டு, துணையாகக் கூடேயும் போவார்.

மண்ணாங்கட்டி வேறே ஒரு பிம்ப ரூபத்தை உள்ளே வாங்கிக் கொண்ட ப்ரதிபூரம் காட்டாதுதான். ஆனாலும்... ஸூர்ய பிம்பம் ஜகஜ்ஜோதியாக ப்ராகசிக்கிறது. அந்த பிம்பத்தை ஒரு மணி - ஒரு கண்ணாடி - உள்ளே வாங்கிக் கொண்ட ப்ரதிரூபம் காட்டுகிறது. அதோடு மாத்திரமில்லாமல், ஸூர்யனின்

ப்ரகாசத்தை வெளியிலேயும் ரிஃப்ளெக்ட் பண்ணுகிறது. அதாவது ரூபத்தின்

ப்ரதிரூபம், ப்ரகாசத்திற்கு ப்ரதிபலனம் (ப்ரதிபலிப்பு) என்று இரண்டும் கொடுக்கிறது. களிமண் நிச்சயமாக ப்ரதிபுரம் காட்டாது. கண்ணாடி மாதிரி பளீரென்று ப்ரதிபலிக்கவும் செய்யாது. ஆனாலுங்கூட... நாம் ஒரு இருட்டு ரூமில் இருக்கிறோமென்று வைத்துக் கொள்ளுங்கள். எதிரே ஒரு மண் சுவர் வெளிச்சம் பார்க்க இருக்கிறது. அது மண்ணாங்கட்டியின் விஸ்தாரந்தான். அதன்மேலே ஸூர்ய வெளிச்சம் படுகிறது. அப்போது அதற்கும் ஒரு ப்ரகாசம் ஏற்படத்தானே செய்கிறது? அதிலிருந்து நம்முடைய இருட்டு ரூமுக்குக்கூடக் கொஞ்சம் Reflected Light கிடைக்கத்தானே செய்கிறது? இருட்டிலே வெளிச்சம் கிடைப்பதற்கு இப்படி

Opaque - அதாவது ஒளி ஊடுருவாத - வஸ்துக்களைக்கூட வெயிலிலோ அல்லது வேறு ஒரு ப்ரகாசத்திலோ குறிப்பிட்ட கோணங்களில் பிடித்தே இருட்டுப் பகுதிக்கு லைட் reflect ஆகும்படி செய்வதுண்டுதானே?

ஸூர்யன் தன் ரூபத்தையே ஒரு மீடியத்தின் உள்ளே பாய்ச்சுகிறான், அதுவே வெளியிலே தன் ப்ரகாசத்தைப் பரப்பும்படியாகவும் செய்கிறான். இன்னொரு மீடியத்தின் உள்ளே போகாமல், மேல் பரப்பிலே தன் ப்ரகாசத்தை மட்டும் பரப்பி, அதுவுங்கூட அந்த ப்ரகாசத்தை ஒரளவுக்கு வெளியிலே பரப்பும்படிச் செய்கிறான். அந்த மாதிரி, நல்ல ஞானப்ரகாசமுள்ள குருவானால் என்ன களிமண் மண்டையானாலும் அவனுக்கும் புத்தியில் மேலெழுந்த வாரியாகவாவது கொஞ்சம் அறிவு ப்ரகாசம் - அறிவொளி - ஊட்டி.... 'ஊட்டி' என்று உள்ளே போகிற ஒன்றாகச் சொல்ல முடியாதுதான், 'அறிவொளி பரப்பி' என்று வேண்டுமானால் சொல்லலாம்!... அப்படிப் பண்ணி, அவனால் பிறத்தியாருக்குங்கூட அந்த விஷய அறிவொளி கொஞ்சம் கிடைக்குமாறு செய்துவிடுவார். உத்தம சிஷ்யனாயிரு ந்தாலோ, மணியின் உள்ளுக்குள்ளேயே பிம்ப ரூபம் பதிகிறது போல, அவனுடைய அந்தராத்மாவிலேயே தன்னுடைய ஸகல அறிவும், அதோடு குணங்களும், சக்திகளும் கூடப் பதியும்படிப் பண்ணி, அவனால் வெளியிலும் நன்றாகவே ஞானப்ரகாசம் பரவுமாறு செய்வார்.

---

## சீடனைத் தம் நிலைக்கே உயர்த்தும் குரு

மணியின் உள்ளே ப்ரதிபிம்பம்தான், மூலபிம்பமே இல்லை என்று இங்கே முடிந்துவிடுகிறது. உத்தம குரு - உத்தம சிஷ்யர்களைப் பார்த்தாலோ அதற்கும் மேலே ஒரு படி - மணியே அந்த பிம்பமாக மாறி விட்டால் எப்படியிருக்கும்? அப்படி சிஷ்யனே ஸாக்ஷாத் அந்த குருவுடன் ஸர்வ ஸாம்யம் - identity - அடைந்து விடுவான் இந்த குரு இந்த சிஷ்யனை இப்படி குருவாகவே உயர்த்திய மாதிரி இவனும் எதிர்காலத்தில் தனக்கு சிஷ்யனாக வருபவனை

ஆக்கிவிடுவான்.

ஸூர்யனையும் ஸ்படிக மணியையும் வைத்து நாம் இப்போது பார்த்ததையே ஸ்பர்ச மணியையும் லோஹத்தையும் (உலோகத்தையும்) வைத்து நம்முடைய ஆசார்யாள் உவமை கொடுத்துச் சொல்லியிருக்கிறார்.

த்ருஷ்டாந்தோ நைவ த்ருஷ்ட - ஸ்த்ரிபுவந - ஜடரே ஸத்குரோர் - ஜ்ஞாநதாது:

ஸ்பர்சச்சேத் - தத்ர கல்ப்ய:ஸ நயதி யதஹோ ஸ்வர்ணதாம் அச்மஸாரம் 1

ந ஸ்பர்சம் ததா(அ)பி ச்ரித - சரண - யுகே ஸத்குரு ஸ்வீய - சிஷ்யே

ஸ்வீயம் ஸாம்யம் விதத்தே நிருபம - ஸ்தேந வா(அ) லௌகிகோ(அ)பி

உவமையையே 'த்ருஷ்டாந்தம் காட்டுவது' என்றும் சொல்வது அலங்கார சாஸ்திரத்தில் இரண்டுக்கும் வித்யாஸம் உண்டானாலும், நடைமுறை இப்படித்தான். 'ஆசார்யாள் குருவுக்குச் சொல்கிற உவமை' என்று ஆரம்பித்தேன். ஆனால் அவரோ ச்லோக ஆரம்பத்திலேயே, 'குருவுக்கு த்ருஷ்டாந்தமே நம்முடைய த்ருஷ்டியில் அகப்படாது, மூவுலகங்களுக்கும் உள்ளேயே புகுந்து பார்த்தாலும் அகப்படாது' என்கிறார்!முடிக்கிறபோதும் 'நிருபம' - 'உவமையற்றது' - என்று சொல்கிறார். ஏன், உபமான வஸ்து எதுவானாலும் மூவுலகிலிருந்துதான் கிடைத்தாகவேண்டும். ஆனால் குரு ஸமாசாரமோ உலகுக்கெல்லாம் அப்பாற்பட்டது, அது 'அ-லௌகிக'மானது என்கிறார்!

ஸாதாரணமாக குரு ப்ரசம்ஸையாக (புகழ்துதியாக) ஒரு த்ருஷ்டாந்தம் சொல்வதுண்டு. ஸ்பர்சமணி என்று ஒரு அபூர்வ மணியின் ஸ்பர்சம் படும்படியாக எந்த லோஹத்தை - இரும்பையேகூட - வைத்தாலும் அந்த ஸ்பரிச விசேஷத்தால் இரும்பு உள்பட எந்த லோஹமானாலும் அது ஸ்வர்ணமாகிவிடும். அப்படித்தான், இரும்பு மாதிரித் தமஸ் - அஞ்ஞான இருள் - மூடியுள்ள சிஷ்யனும் குரு ஸங்கத்தால் புடம் போட்ட ஸ்வர்ணமாக மாறி ஞானத்தில் ப்ரகாசிக்கிறார்

என்று சொல்வண்டு. ஆனாலும் எந்த விஷயமானாலும் ஆழமாக ஊடுருவிப் பார்க்கிற ஆசார்யாளோ, அந்த த்ருஷ்டாந்தமும் போதவே போதாது, அது ஸரியே இல்லை என்கிறார் ஏன்? இரும்புக்கு ஸ்வர்ணமாகிற தன்மையை ஸ்பர்சமணி தருவது வாஸ்தவந்தான். 'அச்ம ஸாரம் ஸ்வர்ணதாம் நயதி' என்று இரண்டாம் பாதத்தில் வருவதற்கு, 'இரும்புக்கும் ஸ்வர்ணத்தன்மையை அடைவிக்கிறது' என்று அர்த்தம். 'அச்மஸாரம்' என்றால் இரும்பு. 'அச்மம்' என்றால் கல். மரத்தின் ஸாரமாக வஜ்ரம் உண்டாகிறது போல, கல்லின் ஸாரமாக இரும்பு உண்டாவதாகச் சொல்வது கவி மரபு. ஸ்பர்சமணியின் ஸம்பந்தத்தால் இந்த அச்மஸாரமும் ஸ்வர்ணமாகிறது. இது

வாஸ்தவம். ஆனால் ஸ்வர்ணத் தன்மையைத்தான் அந்த ஸ்பர்சமணி தருகிறது. 'ந ஸ்பர்சத்வம்' - அந்த இரும்பும் தன்னைப் போன்ற இன்னொரு ஸ்பர்ச மணியாக ஆகி, வேறே இரும்பு வஸ்துக்களை ஸ்வர்ணமாக்கும்படி இந்த ஸ்பர்சம் ரூபமாற்றம் பண்ணுவதில்லை.

ஆனால், குரு? ஸத்குரு?

'ஸத்குரு ஸ்வீய சிஷ்யே ஸ்வீயம் ஸாம்யம் விதத்தே'

ஸத்குருவானாவர் தன்னுடைய சிஷ்யனுக்கோ... 'தனதே தன்னுடையவனாக அத்தனை அத்யந்தமாக இருக்கிற சிஷ்யன்' என்று குரு - சிஷ்யாளின் ப்ரேம பாந்தவ்யத்தைக் காட்டச் சின்னதாக 'ஸ்வீய சிஷ்யே' என்று போட்டிருக்கிறார். 'ஸ்வீய' என்றால் 'தனக்கே தனக்கான'. 'one's own' என்கிறார்களே, அது!அப்படிப்பட்ட சிஷ்யனுக்கு ஸத்குரு 'ஸ்வீயம் ஸாம்யம் விதத்தே' 'தனக்கே முற்றிலும் ஸமதையாகிவிடும் தன்மையைக் கொடுத்துவிடுகிறார்'! குரு சிஷ்யனையும் தன்னுடைய பூர்ண நிலைக்கே transform பண்ணிவிடுகிறார். "சிவமாக்கி எனையாண்ட" என்று மாணிக்கவாசக ஸ்வாமிகள் சொன்ன மாதிரி!

இது பொதுவாக ரொம்பவும் உத்தமமான பாத்திரத்தின் விஷயத்திலேயே நடப்பது. எங்கேயாவது ஒரு மாறுதலாகத்தான், 'க்ருபா சக்திக்கு எல்லையே கிடையாது, அதனால் எதுவும் பண்ண முடியும்' என்று காட்டுவதற்காகப்

பரம அபாத்திரன் ஒருவனையும் - இரும்பு மாதிரியான சிஷ்யனையும் - ஒரு குரு ஆட்கொண்டு உச்சத்திற்குத் தூக்கிவிட்டு ஸ்பர்சமாக்குவது.

பொதுவாக, அவரும் குரு லக்ஷணங்களுடன் இருந்து, இவனும் சிஷ்ய லக்ஷணங்களுடன் இருந்து, அவரும் மனப் பூர்வமாகச் சொல்லிக் கொடுத்து, இவனும் மனப் பூர்வமாகக் கற்றுக்கொண்டு, அவர் காட்டுகிற வழியில் போகத் தன்னாலான ஸ்வய ப்ரயத்னம் அத்தனையும் பண்ணி, அவரும் அதைத் தூண்டிக் கொடுத்து, அப்புறம் தம்முடைய அநுபவத்தையே அவனுக்குள் க்ருபா சக்தியால் இறக்கி அவன் லக்ஷ்ய ஸித்தி அடைவதாகத்தான் நடக்கிறது.

---

## சீடனின் யோக்யதையும் குருவின் கருணையும்

'ஸமுத்ரம் சூழ்ந்த இந்த பூமி பூராவையும் பாத்திரமில்லாத ஒருத்தன் தக்ஷிணையாகத் தந்தாலும் அவனுக்கு வித்யாதானம் பண்ணுவதற்கில்லை. ஏனென்றால் வித்யை என்பது பூலோகத்தைவிடப் பெரிசு' என்ற சாந்தோக்யவாக்யம் பார்த்தோம். மதுவித்தை என்பதைச் சொல்லி முடிக்கும் இடத்தில், 'இதை ஒரு அப்பா - ரிஷி ஜ்யேஷ்ட புத்ரனுக்கோ, யோக்யதையுள்ள வேறே சிஷ்யருக்கோ போதிக்கலாம்' என்று சொல்லிவிட்டு, அப்புறந்தான் முத்தாய்ப்பாக மேலே சொன்னபடிப் பூர்த்தி பண்ணியிருக்கிறது.

'யோக்யதையுள்ளவன்' என்பதற்கு உபநிஷத்தில் சொல்லியிருக்கும் வார்த்தை 'ப்ரணாய்யன்'. அப்படியென்றால், 'ரொம்பவும் நேர்மை - ஒழுக்கம் உள்ளவன்' என்றும் அர்த்தம், 'ப்ரியமானவன்' என்றும் அர்த்தம். இங்கே ஆசார்யாள் ஜ்யேஷ்ட புத்ரனை 'ப்ரியார்ஹன்', அதாவது ப்ரியம் காட்டுவதற்குத் தகுதி வாய்ந்தவன் என்றும், ப்ரணாய்யனை 'யோக்யன்' என்றும் சொல்லியிருக்கிறார். புத்ரனும் யோக்யனாயிருந்தால்தான் இப்பேர்ப்பட்ட வித்யோபதேசகரான ஒரு அப்பாவுக்கு ப்ரியமாகும் தகுதி பெறுவான். அதே மாதிரி,

யோக்யனாயிருக்கும் சிஷ்யன்தான் அவருடைய பூர்ணமான ப்ரியத்திற்குத் தகுதி பெறுவான்.

யோக்யதை சிஷ்ய லக்ஷணத்தைக் காட்டுவது. ப்ரியம் குரு லக்ஷணத்தை - ப்ரேமையை, க்ருபையைக் காட்டுவது. இரண்டும் சேர்ந்தே சிஷ்யனுடைய லக்ஷ்ய சித்தி.

ஆகக்கூடி சிஷ்யன் மட்டுமாகவே ஸித்தியை ஸாதித்துக் கொள்வது என்று இல்லை. 'தத்-த்வோபதேசம்' என்ற ப்ரகரணத்தில் (முன்னூலுக்கு பாஷ்யமாக இன்றிச் சுயமாகவே எழுதிய நூலில்) ஆசார்யாள் தீர்மானமாகச் சொல்லியிருக்கிறார். "ஸ்ரீ குரோ: கருணாம் விநா" 'ஸத்குருவின் கருணை இல்லாமல், குரு க்ருபை இன்றேல்', என்று!

'இன்றேல்' என்ன?

'எத்தனைதான் படிப்பறிவு பெற்றவனானாலும் ஒருத்தன் ஆத்மாவை அறிய முடியாது' - என்கிறார்.

ப்ரஹ்மம் என்பது என்ன, ஜீவன் என்பது என்ன, அது இரண்டும் ஒன்று என்று உபநிஷத் வாக்யம் சொல்கிறதே, அது எப்படி - என்ற விஷயங்களை அந்த ப்ரகரணத்தில் ஆசார்யாள் விசாரம் பண்ணிக் கொண்டு போகிறார். பண்ணிவிட்டு, ஆனாலும், "ஆத்மா ஸ்வப்ரகாசமாக எப்போதுமே நம்மில் நாமாக இருப்பது வாஸ்தவமேயானாலும், இப்போது நமக்குத் தெரியாத அதை எங்கேயோ உள்ள பிரம்மாயும் நம்மை அதற்கு வேறான ஜீவன் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிற நாம், அப்படியில்லை என்று உபநிஷத் மஹா வாக்யங்கள் சொல்வதை முன் - பின் விஷயங்களோடு கோத்துப் பார்த்து புத்தி மட்டத்தில் ஸரியாகத் தெரிந்து கொண்ட போதிலுங்கூட..."

இப்படித் தெரிந்து கொள்வதற்கு புஸ்தகப் படிப்பும் கூர்ப்பு மூளையும் இருந்தால் போதும், அப்படித்தான் இப்போது பல பேர் தெரிந்து

கொண்டிருக்கிறார்கள். ஆசார்யாள் நாளிலும் இந்த மாதிரி சில பேர்

இருந்திருப்பதாக அவர் சொல்வதிலிருந்து தெரிகிறது. அது மாத்ரமில்லை. மேற்கொண்டு அவர் இந்த மாதிரியானவர்களைப் பற்றி உபநிஷத் வார்தையாலேயே குறிப்பிடுவதைப் பார்க்கும்போது அவருக்கு முந்தைய உபநிஷத் காலத்திலேகூட அப்படிப்பட்டவர்கள் இருந்திருக்கிறார்களென்றும் தெரிகிறது. இப்படித் தாங்களாகவே படித்து, தங்களுடைய யுக்தியாலேயே விசாரணை பண்ணி பிரம்மமும் ஜீவனும் ஒன்றுதான் என்று மூளை மட்டத்தில் தெரிந்து கொண்டிருப்பவர்கள் அந்த லெவலுக்கு ரொம்பவும் மேலே போனால்தான் அநுபவமாக, ப்ரத்யக்ஷமாக அதை உணரமுடியும். அப்படித் தாங்களாகவே ஒருத்தரால் மேலே போகமுடியுமா?முடியாது. குருவின் ஸஹாயம் இருந்தாலொழிய, அவர் க்ருபை பண்ணினாலொழிய முடியாது. இங்கேதான் "ஸ்ரீகுரோ கருணாம் விநா" என்று ஆசார்யாள் சொல்கிறார். எத்தனை படித்து, கிடித்து, மூளை அலசல்கள் செய்தாலும் - 'ததாபி சக்யதே நைவ' - 'எத்தனை பண்ணிய போதிலும் தகுதி ஏற்படவே செய்யாது!' எதற்கு? 'அபரோக்ஷயிதும்' - 'உள்ளுக்குள்ளே தெரியாமல் வெளியிலே புத்திக்கு மட்டும் தெரிகிற ஜீவ - ப்ரஹ்ம ஐக்கிய தத்வத்தை உள்ளநுபவமாகவே உணர்வதற்கு'.

---

## உபநிஷத்தும் சங்கரரும் காட்டும் போலிகள்

ஆனால், தற்காலத்தில் தாங்களே படித்து, தங்கள் புத்தியாலேயே ஆலோசித்து 'ஜீவாத்ம - பரமாத்மாக்கள் வாஸ்தவத்தில் ஒன்றேதான்' என்ற அதை புத்தி மட்டத்தில் நிச்சயப்படுத்திக் கொண்டவர்களில் பல் பேர் 'குரு என்று ஒருத்தர் மூலம்தான் இதைத் தெரிந்து கொள்ளணும் என்றில்லை' என்கிறார்கள். அநேகமாக இப்படிப் பட்டவர்கள் சொந்த புத்தியின் பலத்தால் பெரிய தத்வார்த்தம் கண்டுவிட்டோம் என்பதில் 'வித்யா கர்வம்', என்கிற ஒருவகையான அஹங்காரத்துக்கு ஆளாகி விடுகிறார்கள். அஹங்காரம் அடியோடு நசித்தால்தான ஆத்மா

அநுபவத்திற்கு வரும். இவர்களானால் அதற்கு மேலும் தடிப்பு ஏற்படுத்திக்கொண்டு விடுவதால் புத்தியினால் நிச்சயப்படுத்திய ஸத்தியம் ஹ்ருதயத்திற்குள் இறங்கி அநுபவத்திற்கு வர முடியாமல் குறுக்கே கருங்கல் சுவரே போட்டுக் கொண்ட மாதிரி ஆகி விடுகிறது. ஆனாலும் புத்திமான்களாயிற்றே தோல்வியை ஒப்புக் கொள்வார்களா? தங்களுக்கு ஜயம் ஏற்பட்டு, தாங்கள் ஆத்மாநுபூதி பெற்று விட்டதாகவே காட்டிக் கொள்வார்கள். யாரிடமும் உபதேசம் வாங்கிக் கொள்ள அவச்யமில்லை என்கிறவர்களே ஊருக்கெல்லாம் சின்முத்ரை காட்டிக் கொண்டு லெக்சர் கொடுப்பது, புஸ்தகம் எழுதுகிறது என்றிப்படி நிறையப் பார்க்கிறோம்.

இப்படிப்பட்டவர்கள் ஆசார்யாள் நாளிலும், ஆதி உபநிஷத் நாளிலுங்கூட இல்லாமல் போகவில்லை. இவர்களைக் 'கடோபநிஷத்', 'முண்டகோபநிஷத்' இரண்டும் ஒரே போல வர்ணித்திருக்கின்றன. ஒரே ஒரு வார்த்தைதான் வித்யாஸம். பாக்கி வர்ணனை முழுக்க இரண்டிலும் ஒன்றேதான். அது என்ன வர்ணனை? 'வாஸ்தவத்தில் இவர்கள் அஞ்ஞான இருள் சூழ்ந்தவர்கள்.. 'வேஷ்ட்யமாணா:' என்று ஆசார்யாள் பாஷ்யம். அதாவது நம்மைச் சுற்றி வேஷ்டி கட்டிக் கொள்கிற மாதிரி, (சிரித்து) 'Wrapped in ignorance' ஆக இருக்கிறவர்கள் ஆனாலும் தாங்களே தீரர்கள், தாங்களே பண்டிதர்கள் என்று தங்களைத் தாங்களே உசத்தியாகப் பாராட்டிக் கொள்கிறார்கள்.'

'தீரர்' என்ற வார்த்தையை நாம் வீரத்தோடு சேர்த்து 'வீர தீர பராக்ரமசாலி' என்கிறோம். 'தீர'த்திலிருந்துதான் 'தைர்யம்' என்பதாக வீர ஸம்பந்தமுள்ள ஒரு குணத்தைச் சொல்கிறோம். அந்த அர்த்தம் ஸரிதான். ஆனாலும் உபநிஷத்துக்கள் போன்ற சாஸ்திரங்களில் ப்ரஹ்மவித்யா ஸாதகர்களையும் ஸித்தர்களையும் 'தீரர்' என்கிறபோது அதை வீரத்தின் Counterpart-ஆக (பிரதி அங்கமாக)ச் சொல்வதில்லை. உத்தமமான புத்தி வன்மையையே இங்கே தீரம் என்றும், அப்படிப்பட்ட குண ஸம்பன்னர்களையே தீரர் என்றும் சொல்வதாகப் பார்க்கிறோம். 'தீரர்' என்றால் கிட்டத்தட்ட 'ஞானி' என்றே இங்கே அர்த்தம். கீதையில்கூட பகவான், 'சரீரத்தின் சாவோடு எல்லாம் போய்விட்டது என்று ஞானி மயங்குவதில்லை' என்பதற்கு, 'தீரஸ்தத்ர ந முஹ்யதி'

என்றே சொல்லியிருக்கிறார். நாம் பார்க்கிற இடத்திலும் அப்படித்தான் அந்த வாய்வேதாந்திகள் தாங்கள் ஞானி என்ற அர்த்தத்திலேயே 'தீரர்கள்' என்று சொல்லிக் கொள்வது, (சிரித்து) புரட்சிக் கருத்துச் சொல்பவர்களானதால் பொது அர்த்தப்படியும் 'தீரர்' என்று

சொல்லலாம்

அப்புறம் 'பண்டிதர்' என்று வருகிறது. பண்டிதர் என்றால் பெரிய படிப்பாளி, 'ஸ்காலர்' என்று மாத்திரம் அர்த்தமில்லை. 'பண்டா' என்று பரம ஞானத்திற்கே பெயர். அதனால் 'பண்டிதர்' என்றாலும் ஞானி என்றே இங்கே அர்த்தம்.

வாஸ்தவத்தில் ஞானம் பெறாத அந்த (சற்று யோசித்து) 'வெற்றறிவாளர்கள்' தங்களை தீரராகவும் பண்டிதராகவுமே 'ஷோ' பண்ணிக் காட்டிக்கிறார்களாம்

என்ன உசத்தி சொல்லிக் கொண்டு என்ன? யதார்த்தத்தில் எப்படி இருக்கிறார்கள்? பல தினுஸிலும் கோணாமாணாவாகத் தடுமாறிக்கொண்டுதான் இருக்கிறார்கள். இந்த ஒரு இடத்தில்தான் அந்த இரண்டு உபநிஷத்துக்கள் வெவ்வேறு வார்த்தைகளைப் போட்டிருக்கின்றன. இரண்டுமே அபூர்வமான வார்த்தைகள். நிகண்டு (அகராதி)களில்கூட இருக்குமா என்று ஸந்தேஹம். ஆனாலும் அகராதி பார்க்காமலே, 'உழப்பிண்டு குழப்பிண்டு திரிஞ்சுண்டிருக்கா' என்று நாம் புரிந்து கொள்ளும்படியாக அந்த வார்த்தைகளின் சப்த விசேஷமே இருக்கிறது!...

'பள பள', 'தொள தொள', 'கண கண', 'டும் டும்' என்றிப்படி சப்தமே அர்த்தத்தைத் தெரிவித்து விடுகிறதோல்லியோ? இதற்கு 'சப்தாநுகரணம்' என்று பெயர். இங்க்லீஷில் (எழுத்தெழுத்தாகக் குழந்தை போல் சொல்கிறார்:) ஆ-ன-ம-டோ-பி-யா (onomatopoeia)...

தங்களுக்குத் தாங்களே பண்டித பட்டம் கொடுத்து கொண்டவர்கள் வாஸ்தவத்தில் இழுபறி வழிகளில் போய்த் திண்டாடுபவர்கள் என்பதற்கு சப்தாநுகரணமாக ஒரு உபநிஷத் போட்டிருக்கிற வார்த்தை 'தந்த்ரம்யமாணா:' என்பது இன்னொன்றில் போட்டுள்ள வார்த்தை 'ஜங்கன்யமானா:' என்பது. 'வாய் வேதாந்தம் ப்ரமாதமாகப்

பேசினாலும் யதார்த்தத்தில் ஜரா-மரண-ரோகாதிகளால் பீடிக்கப்படும் நானா தினுஸூக் கோணல் வழியிலும் போய் அவர்கள் விணாகப் போகிறார்கள்' என்று ஆசார்யாள் பாதி கோபமும், பாதி அங்கலாய்ப்புமாக இங்கே பாஷ்யத்தில் சொல்கிறார்.

ஒரு லக்ஷ்யத்துக்கும் வராமல் செக்கு மாடு மாதிரி புத்தி வாதத்திலேயே இவர்கள் சுற்றிச் சுற்றி வருவதையும் உபநிஷத் சொல்கிறது. சுற்றிச் சுற்றி வந்தால் தலையும் சுற்றி ப்ரமை, சித்த ப்ரமை ஏற்படத்தானே செய்யும்? அப்படி இவர்களுக்கு ஏற்படுவதையும் ஆசார்யாள் 'விப்ரமந்தி' என்கிறார்.

ஒரே லக்ஷ்யமாகக் குறிக்கோளுக்கு அழைத்துப் போகிறவன்தான் நிஜமான குரு. குரு இல்லாத இந்தப் போலிப் பண்டிதர்கள் லக்ஷ்யத்துக்கு வராமல் எங்கேயோ சுற்றுகிறார்கள். இந்த மாதிரியே இவர்களுக்கு முந்தியும் கதை பண்ணிக்கொண்டு திண்டாடியவர்கள்தான் இவர்களுக்கு 'குரு ஸ்தானம்'!பூர்வகாலத்தில் அசாஸ்த்ரீயமாகப் போனவர்களைச் சொல்லி, 'அவர்கள் மாதிரி நாங்களும் independant' என்று பெருமையாகச் சொல்கிறவர்களை இன்றைக்கும் நாம் பார்க்கிறோமல்லவா? இதைக் 'குருடர் வழி காட்ட, அவர்களுக்குப் பின்னே குருடர் போகிறமாதிரி' என்று உபநிஷத்துக்கள் ஒரு படமாகப் பிடித்துக் காட்டுகின்றன. இதையே விதேச பாஷையிலே படம் பிடித்த மாதிரி பைபிளிலும் 'blind leading the blind', அந்த மாதிரிப் போய் இரண்டு பேரும் குழியில் விழுவது

என்று சொல்லியிருக்கிறது.

இப்போது பின்னே போகிற குருடர்களையே வழிகாட்டியாகக் கொண்டு வருங்காலத்திலும் ஒரு குருட்டுக் கூட்டம் தோன்றி, அதே ரீதியில் பாரம்பர்யமாகப் போய்க் கொண்டிருக்கும் என்பதையும் உபநிஷத் சொல்லாமல் சொல்லியிருக்கிறது. 'குரு பரம்பரை' என்கிற மாதிரி, 'குரு வேண்டாம்' என்கிறவர்களே போலி குருமார்களாகி அவர்களுக்கும் ஒரு பரம்பரை!

இந்தப் பேச்செல்லாம் எதற்கு வந்ததென்றால், தானாகவே

ஒருத்தன் மஹாவாக்யத்தை புத்தியால் அலசி அந்த மட்டத்தில் நிர்தாரணம் பண்ணிக் கொள்வது மட்டும் 'ரியலைஸேஷ'னுக்குப் போதாது, குருவின் கருணை இல்லாமல் 'ரியலைஸேஷன்' ஸாத்யமே இல்லை என்று ஆசார்யாள் ('தத்வோபதேச'த்தில்) சொல்லும் போது உபநிஷத்துக்கள் காட்டும் அந்த 'ஸ்வயம் ஸம்பாவித' (தங்களைத் தாங்களே போற்றிக் கொள்ளும்) பண்டிதப் போலிகளை மனஸில் கொண்டே பேசுவதால்தான். அந்த இடத்தில் அவர் அந்த இரண்டு உபநிஷத்துக்களிலும் 'பண்டிதம் மந்யமானா:மூடா:' என்று முதல் வேற்றுமையில் வருவதையே மூன்றாம் வேற்றுமையில் 'பண்டிதமாநிபி:மூடை:' என்று சொல்லியிருக்கிறார். லோகத்தில் மஹாபுத்தி மான்களாகத் தங்களைக் காட்டிக் கொள்பவர்களுக்கு உபநிஷத்தும் ஆசார்யாளும் கொடுக்கும் பட்டம் 'மூடர்' என்பதுதான் கோபத்தில் திட்டுவதாக அர்த்தமில்லை, உள்ளதை உள்ளபடிச் சொல்வதுதான்

தொடர்ந்து ஆசார்யாள், இக்கால வாய்வேதாந்திகள் மாதிரியே அவர் காலத்திலிருந்து சில பேரும், "சுத்தமான மனஸோடு கூட ஆராய்ந்து பார்த்தால் தன்னால் மஹாவாக்யத்தின் தாத்பர்யமாக ப்ரஹ்மஞானம் ஏற்பட்டுவிட்டுப் போகிறது. குரு என்று ஒருத்தர் என்னத்துக்கு?" என்று கேட்டதைச் சொல்கிறார்.

அந்தஃகரண ஸம்சுத்தென ஸ்வயம் ஜ்ஞானம் ப்ரகாசதே 1

வேதவாக்யை:அத:கிம் ஸ்யாத் குருணா?...

இப்படி அவர்களுடைய கேள்வியைச் சொன்னவர், அதற்குத் தம்முடைய பதிலாக "இதி ந ஸாம்ப்ரதம்" என்று சொல்லி ச்லோகத்தின் அந்தப்பாதியைப் பூர்த்திப் பண்ணுகிறார்:

'வேதவாக்யை - ரத:கிம் ஸ்யாத் குருணேதி ந ஸாம்ப்ரதம்'.

'இதி'-இப்படிச் சொல்வது, அதாவது, போலிப் பண்டிதர்கள் சொல்வது, 'ந ஸாம்ப்ரம்' - 'உசிதமில்லை' 'ஸாம்ப்ரதம் என்றால் உசிதமானது என்று அர்த்தம் போட்டதால் அதற்கு 'ஆப்போஸிட், அதாவது, 'உசிதமில்லை'.

ஏன் உசிதமில்லை? ஏனென்றால் நமக்கு ப்ரமாணம்

வேதந்தான். வேதம் சொல்வதுதான் நமக்குவழி. அந்த வேதம், உபநிஷத் வாயிலாக, 'ஆசார்யவானான, அதாவது, குருவை உடையவனான, மனிதனே ஸத்யத்தை அறிகிறான்' என்று சொல்லியிருக்கிறது என்று ஆசார்யாள் மேற்கொண்டு அந்தப் புஸ்தகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

ஆனால் அந்தப் போலிப்பண்டிதர்கள், 'வேதம் ஏன் ப்ரமாணம்? நம்முடைய

புத்தி, நம்முடைய மனஸ் ஸாக்ஷியேதான் ப்ரமாணம்' என்றுந்தான் சொல்வார்கள். அவர்களுக்கு, அவர்களுடைய பகுத்தறிவு லெவலிலேயே என்ன பதில் சொல்லி 'கன்வின்ஸ்' பண்ணுவதோ, தெரியவில்லை

ஆசார்யாளுக்கு வேதம் முக்யம், அதுவே அவருக்கு மூச்சு. வேதத்திடம், வேதமாதாவின் கருணையிடம் அவர் பரமபக்தியோடு "மாத்ரு பித்ரு ஸஹஸ்ரேப்யோபி ஹிதைஷிணா வேத" என்று - அதாவது 'வேதம் ஆயிரம் அம்மா - அப்பாவைவிட ஹிதத்தையே எண்ணுகிறது, செய்கிறது' என்று பாஷ்யத்தில் ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறார். அதிலே விதித்த குரு முக உபதேசந்தான் அவர் எந்நாளும் வலியுறுத்துவது.

---

## வேதப் பிரமாணம், பிற மதங்கள்

"வேதந்தான் 'அதாரிடி', நம் ஸ்வய புத்தி (அதாரிடி) இல்லை" என்கிறதை ஏன் ஒப்புக்கணும்? - இப்படிக் கேள்வி கேட்டால் அதற்கு எனக்குத் தெரிந்த ஒரே பதில்:அப்படி (வேதமே 'அதாரிடி', ஸ்வயபுத்தி இல்லை என்று) இருந்தவர்களில் தானே இத்தனை மஹான்கள், அநுபூதிமான்கள் தொடர் சங்கிலியாக அநாதி காலம் முதற்கொண்டு தோன்றி இன்றைக்கு வரையில் வந்திருக்கிறார்கள். இந்த மாதிரி வேறே எந்த மதத்திலும் காணாமே!வேதம் ப்ரமாணமில்லை என்று சொன்ன இரண்டொருத்தர் மஹான்களாக ஆன மாதிரித் தெரிந்தாலும், தனிப்பட அவர்கள் அப்படி ஆனதாகவே வைத்துக் கொண்டால்கூட, அவர்களுடைய ஸித்தாந்தம்

ஸரியில்ல என்றுதான் ஆசார்யாள் நன்றாக நிலைநாட்டி ஒன்று அந்த மதங்கள் இந்த தேசத்தைவிட்டே ஓடும்படியாகவோ, அல்லது இந்த தேசத்திலேயே ஆதியிலிருந்ததை விட நூறில் ஒரு பங்காக க்ஷீணிக்கும் படியாகவே ஆக்கிவிட்டாரே!போகப்போக அந்த மதங்களும் அவற்றின் மூல புருஷர்கள் கொடுத்த ரூபத்திலிருந்து மாறி மாறி, வேத மதத்திலிருந்தே அநேக அம்சங்களை எடுத்துக் கொண்டும், பலதைக் கலந்து வேறே ரூபமாக்கிச் சேர்த்துக்

கொண்டுந்தானே வெளி தேசங்களிலோ இந்த (நம்முடைய) தேசத்திலேயோ இருந்து வருகின்றன?

அவற்றின் மூலபுருஷர்கள், "ஸ்வய புத்தியே ப்ரமாணம், வேறே வெளிப் புஸ்தகமோ, உபதேசமோ, குரு என்ற ஆளோ இல்லை" என்று சொன்னாலும் அப்படிச் சொன்ன அவர்களையே குருவாகவும், அவர்கள் சொன்னதே ப்ரமாணம் என்றுந்தான் அவர்களைப் பின்பற்றியவர்கள் ஆக்கிக்கொண்டு, கேள்வி கேட்கக் கூடாத மதக் கோட்பாடுகளாக ப்ரமாணப் புஸ்தகங்கள் எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார்கள் எந்த மதம் என்று இருந்தாலும் ஸரி, அதில் இப்படி 'ஃபாலோ' பண்ணியே ஆகவேண்டும் என்பதான கோட்பாடுகளைக் கொண்ட 'அதாரிடி'யாக 'பேஸிக் ஸக்ரிப்சர்' என்று ஒன்று இருக்கிறது. ஒரு ராஜாங்கம் என்றால் அதற்கு கான்ஸ்டிட்யூஷன் இருந்தேயாகவேண்டும் என்கிற மாதிரிதான் இது. அப்படி வேத அதாரிடியை ஆக்ஷேபிக்கும் மதஸ்தர்களும் தங்களுக்கு அதாரிடியாக ஸ்க்ரிப்சர்கள் வைத்துக்கொண்டு அதைப் பின்பற்றுவதால்தான் அந்தந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று பல ஸமுதாயத்தார் இருப்பதே!

இப்படி 'அதாரிடி' ஒன்றுக்கு ஸ்வய புத்தியைக் கீழ்ப் படிந்திருக்குமாறு செய்து, அடக்கத்தோடு, நம்பிக்கையோடு, தாங்கள் பெரியவர் என்று நினைக்கிற ஒருவரின் கொள்கையை அந்தப்புர மதஸ்தர்களும் ஏற்றுக் கொள்கிறார்களல்லவா? அதுவேதான் அவர்களிலும் பல பேருக்கு மஹான்கள் என்னும்படி ஏதோ ஒரு உசந்த அநுபவத்தைக் கொடுத்து, அந்த மதங்களும் ஜீவித்திருக்கும் படியாகச் செய்துவந்திருக்கிறது.

ஆனாலும் நம்முடைய வைதிக ஸம்ப்ரதாயத்தில் கூட்டங்கூட்டமாக ஆதியிலிருந்து வந்திருக்கிற ஞானிகள், யோகிகள் - ராஜயோக ஸித்தர்கள், மந்த்ரயோக ஸித்தர்கள் - இதெல்லாவற்றுக்கும் மேலாக, அத்தனை அநுபவத்தையும் பக்தியினாலே பெற்ற பக்தர்கள் மாதிரி வேறே எங்கேயுமே

இல்லை என்று நன்றாக 'ஸ்டாடிஸ்டிக்ஸ்' காட்டியே 'ப்ரூவ்' பண்ணலாம். தத்வ

சாஸ்த்ரப் புஸ்தகங்களும் கணக்கு வழக்கில்லாமல் இந்த மதத்திலேயே தோன்றியிருக்கின்றன. ரொம்பவும் நுணுக்கமாக, பல தினசு மக்களுக்கும் வழி சொல்லிக் கொடுக்கப் பலவிதமான ஸாதனா மார்க்கங்களும் இங்கதோன் தோன்றி, இன்றுவரை இருந்து வருகின்றன. இத்தனையும் வேத ப்ராமாண்யத்தை (வேதத்ததின் பிரமாணத்தை) ஏற்றுக்கொண்டு அந்த அஸ்திவாரத்தின் மேல் எழுப்பினவைதான்.

இதைவிட என்ன காரணம் வேண்டும், நாமும் அந்த ப்ரமாணத்தையே மனஸார ஏற்றுக்கொண்டு, அடக்கத் தோடு பின்பற்றுவதற்கு? - எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது.

---

## ச்ரத்தை வேதத்திடமும் குருவிடமும்

நடுவிலே ஒன்று சொன்னேன். ஏதாவது ஒன்றுக்கு ஸ்வயபுத்தியைக் கீழ்ப்படியப் பண்ணி நம்பிக்கையோடு அடக்கமாக ஏற்றுக்கொள்கிறதே ஒரு உசந்த அநுபவத்தைக் கொடுத்துவிடும் என்று. இத்தனை நீட்டிச் சொன்னதற்குத்தான் சின்னதாக ஒரே வார்த்தை, 'ச்ரத்தை' என்று இருக்கிறது. வேதத்திலும், அதை அநுஸரித்த தர்ம சாஸ்த்ரத்திலும், அவற்றையெல்லாம் எடுத்துச் சொல்லும் ஆசார்யனிடமும் நமக்கெல்லாம் அது ஒன்று இருந்து விட்டால் போதும், வேறே ஒன்றுமே வேண்டாம். புத்தியால் தான் நாம் வெளிலோகத்தில் ஸகலமும் தெரிந்து கொள்கிறோம். ஆனால் அதே புத்திதான் உள்லோகத்தில் பரம தத்வத்தை நாம் தெரிந்து கொள்ள முடியாமலும் குறுக்கே நிற்கிறது

அம்பாள் அதை இப்படிப் பண்ணி போட்டிருக்கிறார். இப்படி சோதனை ஒரு பக்கம் பண்ணினாலும், இன்னொரு பக்கம், (சிரித்து) அந்த புத்திக்கு புத்தி சொல்லி, 'உனக்கு உள்லோகத்தில் பிரவேசித்து தத்வார்த்தம் தெரிந்து கொள்ள அதிகாரம் - 'அதாரிடி, அதாரிடி' என்றேனே, அது -இல்லை. அந்த லோக ஸமாசாரம் ஈச்வரனே வேதமாகக் கொடுத்து ரிஷிகள் மூலம் வெளி வந்திருப்பதில்தான் இருக்கிறது. ஆகவே உள்லோக வழிக்குக் குறுக்கே நிற்கிற புத்தியைப் படுக்கப் போட்டு வேத சாஸ்திரங்களைப் பிடித்துக் கொண்டு போ', என்று எடுத்துக் கூறி நல்லபடியாகத் திரும்பிவிட மஹான்களை, ஆசார்ய புருஷர்களை அனுப்பி வைக்கிறார்.

---

**சரணாகதி**

புத்தியைப் படுக்கப் போடுகிறதுதான் சரணாகதி. அதற்கு அடையாளமாகத் -தான் பௌதிக கார்யமாக, 'ஸிம்பாலி'க்கா நமஸ்காரம் என்று ஆக்கிக் கொடுத்திருக்கிறது. புத்தி என்று மூளையை ஸம்பந்தப்படுத்தித்தானே சொல்கிறோம்? பாதத்துக்கு மேலே எட்டாம் சாணாகத் தலையுச்சியிலிருக்கிற அந்த மூளையை பூமி மட்டத்தில் படியவிட்டுத்தானே கீழே விழுந்து நமஸ்காரம் பண்ணுகிறோம் 'கீழ்ப்படிதல்' என்ற உள்பாவத்திற்கே நமஸ்காரம் வெளியடையாளம். வேதத்திற்கு, வேதத்தின் பரம தாத்பர்யமான ஈச்வரனுக்கு, மூளை கீழ்ப்படியும் சரணாகிதக்கு அடையாளமாக சரீரம் கீழே பூமியில் படியும் படிக் கிடக்கிறதே நமஸ்கார க்ரியை.

இங்கே புத்திக் கார்யமில்லை. அதன் இடத்தில் 'ச்ரத்தை', 'நம்பிக்கை' என்ற உணர்ச்சி இருக்கிறது. ப்ரத்யக்ஷமாக ஒன்றைத் தெரிந்துகொள்வதில் - ஜ்வாலை வீசினால் உஷ்ணம் என்று, பணிவாடை வீசினால் குளிர் என்று, இப்படிப் பிரத்யக்ஷமாக அநேகம் தெரிந்துகொள்வதில் - இது உஷ்ணந்தான், இது குளிர்தான் என்று புத்தி எப்படி ஸந்தேஹமில்லாமல் நிச்சயமாக இருக்கிறதோ அந்த மாதிரியே, அப்ரத்யட்சமான பரலோக, ஆத்மலோக விஷயத்தில் வேத - சாஸ்த்ரம் சொல்கிறதுதான் ஸத்யம் என்ற நிச்சயமான உணர்ச்சியாக அந்த நம்பிக்கை இருக்க

வேண்டும். அதற்குத்தான் 'ச்ரத்தை' என்று பெயர். அந்த ச்ரத்தையை மூலதனமாகக் கொண்டால் அது நம்மைக் கொண்டு போய் நிறுத்தும் பரிபூர்ணமான கீழ்ப்படிதலுக்கே 'சரணாகதி' என்று பெயர். அங்கே நம் புத்திக்கு வேலை இல்லை, எந்தக் கேள்விக்கும் இடமில்லை.

---

## வேத-சாஸ்திரங்கள் குருமுகமாகவே, அம்பாளின் விசித்ர 'ப்ளான்'

'வேதம் என்ன சொன்னாலும் அப்படியே நம்ப வேண்டியதுதான்' என்ற தீர்மானமான அபிப்ராயமே 'ச்ரத்தை' என்றால், 'அந்த வேதத்தையும், அதன் வழி வந்த சாஸ்த்ரங்களையும் வித்யைகளையும், ஸாதனா மார்க்கங்களையும், நாமே ஸ்வயமாக படித்துப் புரிந்து கொண்டு பின்பற்றிவிட்டால் போச்சு' என்று நினைத்து விடக்கூடாது. ஏனென்றால் அந்த வேதமே சாந்தோக்ய (உபநிஷ)த்தில் 'நீயாக அப்படி ஒன்றும் பண்ணாதே!நீ ஆசார்யவானாக அதனால்தான், அதாவது குரு உபதேசமாகவே இதை அறிபவனாக ஆனால்தான் உனக்குப் புரியும்' என்கிறது. முண்டக 'உபநிஷ'த்தில் 'குருவையே சென்றைடந்து பின்பற்றிப் போ' என்கிறது. 'நீ உள்லோகம் என்ற இடம் தெரியாத அக்ஷேத்ரவித். அதைத் தெரிந்து கொண்ட க்ஷேத்ரவித்தாக குரு என்று இருக்கிறார். அவர் மூலமாகவே நீயும் தெரிஞ்சுக்கோ' என்று ரிக் ஸம்ஹிதையிலேயே இருக்கிறது. 'ஆசார்ய முகமாக அறிகிற வித்யைதான் ஸாதிஷ்டமாகிறது - அதாவது ரொம்ப நல்ல, best ஆன பலன் தருகிறது என்று ஸத்யகாம ஜாபாலர் அவருடைய குருவிடம் சொல்வதாகவும் சாந்தோக்யத்திலேயே வருகிறது.

எழுத்து, அதைப் படித்து மூளைக்குப் புரிகிற அர்த்தம் - இதுகளோடு வேதம் முடிந்து போய்விடவில்லை. பெரிய பெரிய அநுபவங்களைத் தருகிற சக்தி அதனுடைய அக்ஷர ரூபத்துக்குள்ளேயே இருக்கிறது. அதை உள்ளே மறைத்து வைத்துக் கொண்டிருக்கும் முறையாக அது இருக்கிறது. அந்த சக்தி எப்படி வெளிப்படுமென்றால் ஒருத்தன் தானாகப்

படித்து ஒப்பிப்பதால் வெளிப்படாது, ஸ்வய மூளை புரிந்து கொள்கிற அர்த்தத்தால் வெளிப்படாது. பின்னே எப்படி வெளிப்படும்?

மதம் என்று இருப்பது தெய்வத்தை அநுபவிப்பதற்குத்தானே? வேதந்தான் மதப் புஸ்தகம் என்றால் அதிலே அமைந்திருக்கிற தெய்வ சக்தியை எப்படிப் பெறுகிறது? - என்றால்,

முதலில் அந்த வேத வாக்யங்களை ரிஷிகள் அகண்ட ஆகாசத்திலிருந்து க்ரஹிக்கும்படி பராசக்தி அநுக்ரஹித்த போதே ஒரு 'ப்ளான்' போட்டாள் ! Five year, ten year plan இல்லை! 'அந்தப் பர மதங்களில் பெறக்கூடிய சில நல்ல ப்ரயோஜனங்களையும், கிஞ்சித் (சிறிதளவு) தெய்விகமான சக்திகளையும் அந்த மதப் புஸ்தகங்களைத் தாங்களாகவே படித்துத் தெரிந்து கொள்கிறவரும் பெற்றுவிட்டுப் போகட்டும. வைதிக மதத்திலேயுங்கூட, வேத மந்திரங்கள ாகவோ, தந்திர சாஸ்திர மந்திரங்களாகவே இல்லாமல் எல்லாப் பொது ஜனங்களுக்குமாக இருக்கிற ஸ்தோத்திரங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றை அவரவரும் தானாகவே எடுத்துக்கொண்டு பின்பற்றினாலும் பின்பற்றட்டும். இங்கேயுங்கூட ஒரு பெரியவரைக் குருவாகக் கொண்டு அவர் எடுத்து வைத்துப் பண்ணினால் ரொம்ப விசேஷந்தானென்றாலும் அதைக்கட்டாய விதியாகப் போட வேண்டாம். ஆனால் கட்டாய விதியாக குரு உபதேசம் பெற்றே பண்ணுவது என்றும் ஒன்றில் வைக்க வேண்டும். அந்த ஒன்று என்னவென்றால் அத்தனை சக்திக்கும் - லோக க்ஷேமத்திற்கும் ஆத்ம க்ஷேமத்திற்குமான அத்தனை நல்ல சக்திக்கும் - இருப்பிடமாக இருக்கப்பட்ட வேத மந்த்ரங்கள்தான். அதை மட்டும்

எவரொருவரும் தானாக எடுத்துக் கொள்ளும்படி விடக்கூடாது. இந்த மஹா பெரிசை ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டுமானால் ஒருத்தன் மஹா சின்னதாக ஆகும் படிப் பண்ணவேண்டும்' என்று அம்பாள் ஒரு ப்ளான் பண்ணினாள். ரஸ பரிதமாக (சுவை நிரம்பியதாக) நாடகம் போடுவதே அவள் குணமானதால் இப்படி விசித்ரமாக ப்ளான் பண்ணினாள்.

ஒரு மநுஷ்யன் தன்னிடம் இருக்கிற மஹா பெரிய வஸ்து புத்தி என்றுதான் நினைக்கிறான். அதைப் பற்றியே கர்வம் கொண்டிருக்கிறான். ஆனால் அதை அப்படியே த்யாகம் செய்துவிட்டு, தன்னைப் பரம எளிமையாக்கிக் கொண்டால்தான் வேதத்தின் ப்ரயோஜனத்தை அவன் அடைய முடியும் என்றே அவள் காட்ட நினைத்தாகத் தோன்றுகிறது. அறிகிற இந்த்ரியம் புத்தி. 'வேத' என்றாலும் 'அறிவது' தான். பரம ஸத்யத்தைப் பற்றி அறிவிப்பதே வேதம். ஆனால் ஸ்வய மூளையால் அதை அடைய முடியாமல் பண்ணி, மூளைக் கர்வம் பிடித்த மநுஷ்யனுக்கு பணிவைக் கொடுக்கவேண்டும் என்று நினைத்தாள் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஒன்று சேர்க்கவே முடியாமலிருப்பவற்றை ஒன்று சேர்க்கிற மஹா ஸாமர்த்யம் அவளுக்கு உண்டு - 'அகடித கடினா படீயஸீ' என்று இதைச் சொல்வது. அப்படி, பெரிசில் பெரிசான வேதத்தை, ஸ்ருஷ்டியில் உசந்து நிற்கிற மநுஷ்யன் அடங்கி, சின்னவனாகியே பெறவேண்டும் என்று திட்டம் பண்ணினான்.

என்ன ப்ளான் என்றால் முதலிலே ஈச்வர ஸ்வரூபமான அகண்ட ஆகாசத்திலிருந்து வேத மந்த்ரங்களை க்ரஹித்த ரிஷிகள் அப்படி க்ரஹிக்கும் போதே அவற்றிலிருந்த அத்தனை திவ்யசக்தியையும், அந்த சக்திக்கெல்லாம் மூலமான, முடிவான சாந்தத்தையும் அப்படியே க்ரஹித்துத் தங்களுக்குள் ரொப்பிக் கொள்ளும்படியும், அப்புறம் வருபவர்கள் அவர்களிடமும் வழிவழியாக வந்து அவர்களுடைய சிஷ்ய பரம்பரையிடமும் அந்த மந்த்ரங்களை உபதேசமாகப் பெற்றால் மட்டுமே தாங்களும் மூளையர்த்தத்துக்கு மேற்பட்ட நிஜ ப்ரயோஜனமான அந்த திவ்யசக்தி - சாந்திகளைப் பெறும் படியாகவும் வைத்தாள். அதாவது எழுத்தாலோ, வார்த்தையாலோ, ஒருத்தனுடைய ஸ்வய மூளையாலோ தத்வார்த்தங்களை ப்ரத்யட்சமாக அநுபவிப்பதற்கில்லை என்றும், ஏற்கெனவே அப்படி அநுபவித்தவன் அந்த எழுத்தையும் வார்த்தையையும் உபதேசித்து அதைக் கேட்டுக்கொண்டால்தான் காதுக்குள்ளே அந்த சப்தம் போகும்போதே ஹ்ருதயத்திற்குள்ளே அதன் லக்ஷ்யமான தத்வம் - ஒரு சக்தி அல்லது சாந்தம் - போகும்படியும் ஒரு உயிரோடு இன்னொரு உயிரை 'லிங்க்'

பண்ணி வைத்தாள். அப்படிச் சொல்லிக் கொடுக்கும் உயிர் குரு, சொல்லிக் கொள்ளும் உயிர் சிஷ்யர். அப்புறம் தலைமுறை, தலைமுறை, தலைமுறைகளாக, சிஷ்யர்களே குருவாகி வேறே சிஷ்யர்களுக்கு உபதேசித்துக் கொண்டு போகவேண்டுமென்று வேத பாரம்பர்யம் உண்டாகும் படியாக ப்ளான் போட்டுவிட்டாள்! ஒவ்வொரு குருவும் தன் உயிரிலே கலந்த வேத சாஸ்த்ரங்களை அந்த உயிருடைய சக்தியோடு சைதன்யமயமாக சிஷ்யனின் உயிருக்குள்ளே பாயும்படிப் பண்ணியே தத்வார்த்தமும் அந்த உயிருக்குள் பாய்ந்து அதாவது ஸ்வய அநுபவத்தைக் கொடுக்கு ம்படியாகப் பண்ணினாள்.

ஆகக்கூடி, மூளையைத் தூக்கிப் போட்டு விட்டு வேதமே 'அதாரிடி' என்று நம்புவதோடு, அந்த அதாரிடியே விதித்திருக்கிறபடி, 'ஆசார்யன் மூலமே அதில் உபதேசம் பெற வேண்டும்' என்றும் நம்பி பக்தி ச்ரத்தையுடன் சரணாகதி பண்ணி, உபதேசம் வாங்கிக்கொண்டால்தான் ப்ரயோஜனம்.

வேதம் மாத்திரமில்லை, மற்ற மதங்களில் சொல்கிற தத்வங்கள்..., தத்வங்கள் வரைகூடப் போகவேண்டாம். நடைமுறை லோக விஷயங்களானாலுங்கூட ஸரி, நாமாக ஒன்றைத் தெரிந்துகொள்வதைவிட, ஒரு விஷயத்தில் அநுபவம் கண்ட ஒருத்தன் அதை எடுத்துச் சொல்லி அவனுடைய ஜீவித சக்தி அதில் கலந்து வந்து நாம் பெறுகிறபோது அது அதிக பலம் பெற்று, அதிக ப்ரயோஜனம் தருகிறது. ஆனால் மற்ற ஸமாசாரங்களில் தானாவே தெரிந்து கொண்டாலும் ப்ரயோஜனம் இல்லாமல் போகவில்லை. வேதம், அப்புறம் அதை அநுஸரித்து வந்த சாஸ்திரங்கள் ஆகியவற்றின் விஷயத்தில் மட்டும் குருமுகமாக வந்தால்தான் பலன், தானாக எடுத்துக் கொண்டால் நிஷ்பலன் என்றே இருக்கிறது! இப்படி இருக்கும்படி அம்பாள் ப்ளான் பண்ணி நடக்கிறது. 'ஏன்' என்றால், அவள் சித்தம் நமக்குத் தெரியாது! அவள் என்னமோ நினைத்துத்தான் இப்படிப் பண்ணினாள் என்று நினைப்பது கூட எவ்வளவு ஸரியோ?

அவள் என்ன நினைத்தாளோ, நினைக்கவில்லையோ, நாம் விமோசனம் பெறுகிறதற்கு வழி நம் பலத்தால் ஸாதித்துக் கொள்ள இங்கே ஒன்றுமில்லை என்ற அடக்கத்தோடு,

வேதமே ப்ரமானம் என்ற நம்பிக்கை யோடு, அந்த வேதத்தை குருமுகமாகவே பெறுகிறதுதான். வேதம் என்றால் வைதிக ஸம்ப்ரதாயத்தில் வந்துள்ள ஸகல சாஸ்த்ரங்களுந்தான். குறிப்பாக, தந்த்ர சாஸ்த்ரத்தை அதில் சேர்த்தே சொல்கிறேன். அநேக தெய்வங்களைக் குறித்த மந்த்ரங்கள் நேராக வேதத்திலில்லாமல் அதில் மறைமுகமாகவே சுசிக்கப்பட்டிருக்கும். அவை நேர் ரூபத்தில் தந்த்ர சாஸ்த்ரத்தில் இருக்கிறவைதான். இவற்றையும் வேதம் மாதிரியே கண்டிப்பாக குரு முகமாகத் தன் தெரிந்து கொள்ளவேண்டும்.

நேராக வேதத்திலில்லை என்பதுகூட எவ்வளவுக்கு ஸரியோ? இப்போது வேதசாகைகளில் ஏராளமானவை நஷ்டப்பட? ஏதோ சிலதுதானே அநுஷ்டானத்திலிருக்கின்றன? நஷ்டமான அந்த சாகைகளில் இப்போது தாந்த்ரீகமாக மட்டுமே நமக்குக் கிடைக்கும் மந்த்ரங்கள் இருந்திருக்கலாமோ என்னவோ?

விஷயம், நமது மதத்தில் மந்த்ரம், தத்வம் என்றால் அவை குருமுகமாக உபதேசம் பெற்றால்தான் பலனளிக்கும் என்றே இந்த லோகத்தை நடத்தி வருகிற பெரிய சக்தியினால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. தத்வ சாஸ்திரங்கள் எல்லாமும் அப்படியே. குருமுகமாக அவற்றில் உபதேசம் பெற்றே பயிற்சி பண்ணவேண்டும்.

யோக சாஸ்த்ரத்தைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். 'யோக சாஸ்த்ரம்' என்கிறபோது பதஞ்ஜலி சொல்லியிருக்கிற அஷ்டாங்க யோகத்தை மட்டுமில்லாமல், பல பெயர்களிலும் உள்ள பலவிதமான யோகங்களையும், அத்தனை yoga schools-ஐயும் சேர்த்தே சொல்கிறேன்.

இன்றைக்கு 'யோகா' என்றே எங்கே பார்த்தாலும் பேச்சாயிருக்கிறது. அதனாலேயே எங்கே முறை தப்பாக நடந்து விடுமோ என்று பயமாக இருக்கிறது.

இந்த யோகமெல்லாம் நல்ல அநுபவமுள்ள ஒரு குருவின் கண் பார்வையிலேயே, அவருடைய Cinonstant attention-லேயே இருந்துகொண்டு செய்யவேண்டியவை என்பதை ஒரு போதும் மறக்கக்கூடாது. ஸரியான குரு

கிடைத்து அவருடைய சாச்வத கவனம் பெற்றுச் செய்யாவிட்டால் பெரிய விபரீதங்களே தேஹ ரீதி, மனோ ரீதி இரண்டிலும் உண்டாகிவிடும். எந்த சாஸ்த்ரீய மார்க்கத்தையும் குரு முகமாக இல்லாமல் பண்ணினால் கெடுதிதான் வரும் என்றாலும், இந்த யோக மார்க்கங்களிலேயே அந்தக் கெடுதி ரொம்பவும் பயங்கரமாக இருக்கும்.

---

## பொதுவான எளிய வழிபாடும் துதி பாராயணமும்:

குருமுகம் என்ற கட்டாயமில்லை

சாதாரணமாக எல்லா ஜனங்களுக்குமே தெய்வ சிந்தனை இருக்கத்தான் வேண்டும். மநுஷ்ய ஜீவன் அந்தப் பெயருக்கு லாயக்காக இருக்கவேண்டுமானால் தனக்கு ஜீவ சக்தியைக் கொடுத்த ஸ்வாமியைச் சிந்தித்து, அவன் அருள் வழிகாட்டுகிறபடிதான் ஜீவனம் நடத்த வேண்டும். இந்த (தெய்வ) சிந்தனை நாமே பண்ணுவதாக இருந்தால் நம்முடைய சித்தம் ஓடுகிற தாறுமாறான ஓட்டத்தில் உருப்படியாக ஒன்றும் தேறாது. அது மாத்திரமில்லாமல் நமக்கு ஸ்வாமியைப் பற்றி சொந்த அநுபவமாக என்ன தெரியும்? நமக்குத் தெரியாதவரைப் பற்றி நாம் எண்ணத்தைச் சிந்திக்க முடியும்? இங்கே, அப்படித் தெரிந்து கொண்ட பெரியவர்கள் பாடிய ஸ்தோத்திரங்கள் - தமிழ் முதலான ப்ரதேச பாஷைகளில் இருக்கிற துதிகளுந்தான் - நமக்குக் கை கொடுத்துத் தூக்கிவிட ஓடி வருகின்றன. பல காலமாக அவற்றை, ஸ்வாமியை சொந்தத்தில், நேரில் தெரிந்து கொண்ட எத்தனையோ பேர் சொல்லில் சொல்லி அவற்றுக்கு தெய்விக சக்தி கூடிக் கொண்டே வந்திருக்கும். அவற்றைச் சொல்வதே, அதாவது? 'ஸ்தோத்ர பாராயணம்', 'துதி ஓதுதல்' என்பதே நம்முடைய சித்தத்தை ஸ்வாமியிடம் சேர்த்து வைக்கும்.

நம் தேசம் செய்த பாக்கியம், இம்மாதிரி ஸ்துதிகள் ஒவ்வொரு தெய்வத்தையும் குறித்துக் கணக்கு வழக்கு இல்லாமலிருக்கின்றன. நம் தேசத்திலும் இந்தத் தமிழ்நாட்டில்

பிறந்தவர்களின் பாக்கியம் இங்கே தோன்றிய நம் முன்னோர்கள் நம்முடைய தமிழ் பாஷையில் துதிகளை அப்படியே கொட்டி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் ஜனங்கள் அவரவரும், தாங்களே படித்துப் பாராயணம் பண்ணலாம். குருமுகமாகக் கற்றுக் கொண்டுதான் பண்ணணும் என்று கண்டிப்பு இல்லை. அநுபவம் கண்ட குரு எடுத்து வைத்துப் பண்ணினால் அது ரொம்ப விசேஷந்தான், ஸந்தேஹமில்லை. ஆனால் அப்படிக் கட்டாயமாக விதி இல்லை.

எந்த ஸ்தோத்ரம் சொல்வதானாலும் முதலில் பிள்ளையார் பற்றி ஒரு ச்லோகமாவது சொல்லிவிட்டு, அப்புறம் குரு பற்றிப்பொதுவாக உள்ள - அதாவது எந்த குருவுக்கும் 'அப்ளை' ஆகிற - ஒரு ச்லோகத்தை நாம் எந்த மஹானை குருவாக நினைக்கிறோமோ அவரை நினைத்துச் சொல்லிவிட்டு, அதற்கப்புறமே அந்த ஸ்தோத்ரம், அல்லது பிரதேச மொழித் துதியைச் சொல்வது நல்லது.

ஸ்வாமி மஹாசக்தர், மஹாபெரியவர் என்பது நம் எல்லாருக்கும் தெரிந்த விஷயமாகையால் அவரிடம் நாம் சின்னவராக நிற்பதில் விசேஷமில்லை. அப்படி நிற்பதால் நமக்கு விசேஷமாக விநய ஸம்பத் என்ற எளிமை, அடக்கம் உண்டாகி விடுகிறது. நம் மாதிரியே மநுஷ ரூபத்தில் வந்தும் பெரியவராக, தெய்வத்தன்மை நிரம்பியவராக ஆன ஒருத்தரிடம் பணிந்து நின்றால்தான் விசேஷம், அப்போதுதான் விநய ஸம்பத் உண்டாகும். வாழ்க்கையில் அந்த

ஸம்பத்தைப் போல இன்பமும், நிறைவும் தருகிற ஒன்று கிடையாது. ஆகையினால்

அதை ஒவ்வொருவரும் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். அதற்கு குரு வந்தனம் தான் வழி என்பதால்தான் தெய்வத்தையே ஸ்துதிக்கும் போதுங்கூட முதலில் குரு வந்தன ச்லோகம் சொல்லச் சொல்வது. இதிலே ஒரு பக்கம் விநயம். இன்னொரு பக்கம் தன்னம்பிக்கை. என்ன தன்னம்பிக்கை என்றால், நம் மாதிரி மநுஷ்யராகப் பிறந்த அந்த குரு தெய்வம் என்கிற அளவுக்கு உயர்ந்து கொண்டு போனார் என்பதே, நாமும்கூட அந்த திசையில்

போகமுடியும் என்ற உத்ஸாஹத்தை ஊட்டுவதுதான்.

ஒரு ஸ்தோத்திரத்தை நமக்கு குரு என்று ஒருவர் கற்றுக் கொடுத்துத்தான் சொல்ல வேண்டும் என்ற கட்டாயமில்லாவிட்டாலுங்கூட, நமக்கு இஷ்டமான ஒரு மஹானை குரு ரூபமாக நினைத்து முதலில் இப்படி வழிபட்டால் ரொம்பவும் நல்லது. எந்த குருவுக்கும் பொருந்துவதாக இப்படி அநேக ச்லோகங்கள், பாடல்கள் இருக்கின்றன. ரொம்பவும் பிரஸித்தமாயிருப்பது, குருவையே ஸகல தேவதா ஸ்வரூபமாகக் காட்டிக் கொடுக்கிற ச்லோகம்

குருர் பிரஹ்மா, குருர் விஷ்ணு, குருர் தேவோ மஹேச்வர

குருஸ் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம, தஸ்மை ஸ்ரீ குரவே நம

தமிழில் திருமூலம் திருமந்திரத்தில்,

தெளிவு குருவின் திருமேனி காண்டல்,

தெளிவு குருவின் திருநாமம் செப்பல்,

தெளிவு குரு உரு சிந்தித்தல்தானே

என்று ரொம்பவும் அழகாக, மனஸ் உருகிச் சொல்கிற மாதிரிப் பாட்டு இருக்கிறது. இப்படி ஒன்றை பக்தியுடன் சொல்லிவிட்டு, ஸ்தோத்ர பாராயணமோ, துதி ஒதுதலோ நாமே ஆரம்பிக்கலாம்.

இங்கேயும் ஒரு விஷயத்தில் ஜாக்ரதை அவசியம். சில ஸ்தோத்ரங்களே மந்த்ர சக்தி பொருந்தியவையாக இருக்கின்றன. ரொம்பவும் வீர்யவித்தாகவே 'லலிதா ஸஹஸ்ரநாமம்', 'லலிதா த்ரிசதி', 'திருமுருகாற்றுப்படை' மாதிரி சில இருக்கின்றன. இப்படிப்பட்டவற்றை ஸம்பிரதாயப்படி குரு முகமாக ஸ்வீகரிப்பதே முறை. ஒரு பெரியவரிடம் போய் இவற்றை மூன்று தடவையாவது, அல்லது அதம பக்ஷம் ஒரு தடவையாவது அவர் சொல்லிக் கேட்டு அப்புறமே நாமாகப் பாராயணம் பண்ண வேண்டும். 'லலிதா த்ரிசதி' ஸமாசாரமாக இன்னும் ஒன்று அதற்கு அம்பாளின் மூல மந்திரங்களில் குறிப்பாக ஒன்றில் க்ரமமாக உபதேசம் வாங்கிக் கொண்ட பிற்பாடே அந்த ஸ்தோத்ரத்தைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

மந்த்ர சக்தி பொருந்திய ஸ்தோத்ரங்களையும் ஒருத்தர் படிக்கும்படியாக ஒரு மஹான் ஆஜ்ஞை பண்ணினால் அப்போது அந்த மஹானின் ஆஜ்ஞையையே குரு உபதேசமாக எடுத்துக்கொண்டு அப்படியே பண்ணவேண்டும்.

சொல்லவந்தது, பொதுவாக ஸ்தோத்ரங்களை அவரவரும் தாங்களாகவே பாராயணம் செய்ய இடமிருக்கிறது என்பதுதான்.

அப்படியேதான் வீட்டுக்கு வீடு ஒரு சின்ன பூஜையும், பொதுப்படையாக ஒரு குரு த்யானம் சொல்லி விட்டு அவரவரே ஆரம்பித்துப் பண்ணலாம். மந்த்ர,

தந்தரங்களை கலக்காத பூஜையாக இருக்கவேண்டும் என்பது முக்கியம். அந்த

(மந்த்ர, தந்த்ர) ஸம்பந்தம் கொஞ்சம் வந்தாலும் விதிவத்தான குருமுக உபதேசம் என்பது கண்டிப்பாக இருந்தே ஆகவேண்டும். அப்படியில்லாத சின்ன பூஜையையுங்கூட ஒரு பெரியவர், அகத்து சாஸ்திர மாதிரி ஒருவர் எடுத்து வைத்து, 'அவர் குரு, நாம் சிஷ்யர்' என்ற பாவத்துடன் செய்ய ஆரம்பித்தால் ரொம்பவும் ச்ரேஷ்டம்.

எனக்கு இரண்டு தினுஸாக எண்ணம் ஓடுகிறது. ஒரு பக்கம், நமது மத ஸம்ப்ரதாயத்தில் குருவுக்குக் கொடுத்திருக்கிற முக்யத்வத்தைப் பார்க்கிறபோதும், அதோடு ஜனங்களின் தற்காலப் போக்கு ஒரு பெரியவர், பெருந்தலை என்றால் மரியாதை தராமல் இஷ்டப்படியே போவதாக இருக்கிறதே என்பதைப் பார்க்கிற போதும், ஜனங்களுக்கு எங்கேயெல்லாம் முடியுமோ, அங்கே 'குரு வேண்டும், வேண்டும்' என்று நுழைக்கவேண்டும் போலிருக்கிறது. இன்னொரு பக்கமோ, நாம் 'குரு குரு' என்று சொல்லப் போய், லக்ஷோபலக்ஷம் பேர் இருக்கிற இந்த உலகத்தில் ஒவ்வொருத்தரும் தனக்கென்று, தான் மரியாதை பண்ணும்படியாக குரு கிடைக்கமாட்டேன் என்கிறார் என்பதால் பூஜை, புரஸ்காரம், ஸ்தோத்ர பாராயணம் எதுவுமே இல்லாமல் இருந்துவிடப் போகிறார்களே என்றும் இருக்கிறது. அதுதான் என்னால் முடிந்த 'காம்ப்ரமை'ஸைப் பண்ணிச் சொல்லிக் கொண்டுபோகிறேன்.

ஸாதாரணமாக என் மாதிரி தர்ம பீடங்களில் தலைவர்கள ாயிருப்பவர்கள் தர்ம சாஸ்திரத்தில் ஏதொன்றையும் விட்டுக் கொடுத்தோ, இளக்கியோ 'காம்ப்ரமைஸ்' பண்ணுவது கூடவே கூடாதுதான். ஏனென்றால் நாங்களே இளக்க ஆரம்பித்தால், சிஷ்ய வர்க்கம் அதை இளக்கிக்கொண்டே போய் சாஸ்த்ர விதி ஒரேயடியாக நீர்த்து ஆவியாப் போயே

போய்விடும்!அதோடு நான் சில விதிகளில் விட்டுக் கொடுத்த மாதிரி ஒவ்வொரு தர்மபீட ஸ்வாமிகளும் சிலது சிலதுகளை, விட்டுக் கொடுப்பது என்று ஏற்பட்டு, எல்லாமே

எடுபட்டுப் போய்விடும்! அதனால் நாங்கள் மூல சாஸ்த்ர வழிகளையே எவ்வளவு கண்டிப்பாகச் சொல்லவேண்டுமோ அப்படித்தான் சொல்லவேண்டும். அப்படித்தான் நானும் பாடுப்பட்டுப் பார்க்கிறேன். நான் இத்தனை 'கன்ஸர்வேடி'வாக இருக்கிறேனே என்று பல பேருக்கு

வருத்தம்கூட!வருத்தம் என்பது உள்ளூரக் கோபமாகவும்

இருக்கும்!வெளியிலே இப்படி வருத்தத்தைக் காட்டிக் கொள்கிறவர்கள் எத்தனை பேரோ அவர்களைப் போல பல மடங்கு ஜனங்களுக்கு உள்ளுக்குள் அப்படித்தானிருக்கு

ம்!'காலநிலை, நம் கஷ்டம் தெரியாமல் எந்த நாள் ஸமாசாரத்தையோ இன்றைக்கும் சொல்லிக்

கொண்டிருக்கிறாரே!' என்ற குறைப்படத் தோன்றும்.

எனக்கானால் தர்மஸங்கடம்! அப்படியிருந்தும், 'முடியாததை எப்படியும் ஜனங்களே விடத்தான், அல்லது இளக்கித்தான் செய்வார்கள். அதற்கு நம் வாயாலேயே அநுமதி தருவானேன்? அப்படித் தந்தால், பிற்பாடு தங்கள் சூழ்நிலை மாறினாலாவது அல்லது மாறப் பண்ணிக் கொண்டாவது அப்படியே சாஸ்த்ர விதிப்படிப் பண்ணவேண்டும் என்று

நினைக்கக் கூடியவர்களுக்கும் அந்த நினைப்பை நானே அழிப்பதாக ஆகிவிடும' என்பதால் 'கன்ஸர்வேடிவ் சாமியார்' என்று பெயர் வந்தால் வந்து விட்டுப்

போகட்டும் என்று ஏதோ ஒரு மாதிரிப் பண்ணிக் கொண்டு போகிறேன்.

ஆனாலும் சாஸ்திரங்களிலேயே இடம் இருப்பதாகத் தெரிகிற விஷயங்களில்

காலத்தை உத்தேசித்துச் சில விஷயங்கள் - ரொம்பவும் கண்டிப்பாக ஸம்ப்ரதாயத்தையே சொல்பவர்க்ள ஒப்புக்கொள்வார்களா என்று யோஜிக்கக் கூடிய சில விஷயங்களும் - சொல்கிறேன். அப்படித்தான் இப்போது குரு இருந்தே தீரணும் என்றில்லாமல் சில உபாயங்கள் இருப்பதாகச் சொன்னது.

ஒன்று வேண்டுமானால் பண்ணலாம். 'ஆபத் - தர்மம்' என்று சாஸ்திரத்திலேயே ஒன்று சொல்லியிருக்கிறது. அதாவது, ஆபத்துக் காலத்தில் விதிகளைக் கொஞ்சம் இளக்கிப் பண்ணுவதுதான் ஆபத் - தர்மம். லோகத்தைக் கலி புருஷன் அப்படியே 'மெடீரியலிஸம்' என்கிற பேராபத்தில் தள்ளியிருக்கிற காலமாக இதைச் சொல்லலாம். நான் இப்போது கொஞ்சம் விட்டுக் கொடுத்த மாதிரி சொல்வதை ஆபத் - தர்மமாக எடுத்துக் கொள்ளலாம்...

அஷ்டோத்தர (சத) நாமாவளிகள் தாங்களாகவே படித்துத் தெரிந்து கொண்டு அர்ச்சனை பண்ணலாம், தப்பில்லை. ஆனால் சில அஷ்டோத்தரங்களில் முதலில் பீஜாக்ஷரங்கள் என்ற மந்திர சாஸ்திர அக்ஷரங்கள் சேர்ந்திருக்கும். அப்படிப்பட்டவற்றை குரு முகமாகத்தான் கற்றுக்கொள்ள வேண்டும்.

எதையுமே குருமுகமாகக் கற்றுக்கொண்டால் 'வால்யூ' ஜாஸ்திதான் - கண்டிப்பாக அப்படி விதி இல்லாத இடத்திலுங்கூடத்தான் சொல்கிறேன். ஒன்று தோன்றுகிறது: ஆபத் - தர்மம் என்று சொன்னேன். ஆபத்துக் காலத்தில் ரொம்பவும் ஸ்ட்ரிக்டாகப் போகவேண்டாம் என்று சாஸ்த்ரமே அதை 'அலவ்' பண்ணியிருக்கிறது என்றேன். ஆனாலும் ஆபத்துப் போனவிட்டு, விலகின விட்டு அதே மாதிரி இளக்கிப் பண்ணிக்கொண்டு போகாமல், முழுக்க சாஸ்த்ர ப்ரகாரம் பண்ண ஆரம்பித்து விடணும். 'ஆபத் ஸந்நியாஸம்' என்று கேள்விப்பட்டிருக்கலாம். மரண காலம் நெருங்கி விட்டதாக ஒருவருக்குத் தெரிகிறபோது, ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு (தேஹ) வியோஹமானால் விசேஷமாயிற்றே என்று அவர் 'ஃபீல்' பண்ணுகிறாரென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த நிலையிலே அவர் (ஸந்யாஸ) ஆச்ரமம் பெறுவதற்கு ஒரு குருவைத் தேடிப்பிடித்து, ஸாங்கோபாங்கமாக ஆச்ரம ஸ்வீகாரம்

பண்ணிக் கொள்ள முடியுமா? முடியாது என்பதை சாஸ்த்ரம் கவனித்துப் பரம கருணையோடு, அந்த ஸமயத்தில் ரொம்பச் சுருக்கமாக ஒரு சடங்கைப் பண்ணி அவர் தாமே -குருமுகமாக இல்லாமல் தாமே - ஸந்நிஸாயம் வாங்கிக் கொள்ளலாமென்று சொல்லியிருக்கிறது. ஆனால் அவருக்கு உடம்பு ஸரியாகி விடுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது அவர் விதிப்ரகாரமே ஒரு குருவை அடைந்து, முன்னே தாமாக எடுத்துக்கொண்ட ஸந்நியாஸத்தை மீண்டும் குருமுகமாகப் பெறவேண்டும். அந்த மாதிரியே, சாஸ்திரம் இடம் கொடுத்து நாமாக மேற்கொள்ளும் உபாஸனைகளையும், அப்புறம் குருமுகமாகப் பெறுவது என்று வைத்துக்கொண்டால் சிலாக்கியம்.

இந்தக் கலிகாலத்துக்கென்றே ஏற்பட்ட மருந்து - தித்திப்பு மருந்து - நாம பாராயணமும், பஜனையும். இவற்றைத் தாங்களாகவே ஆரம்பித்துப் பண்ணலாம்.

ப்ரணவமும, 'நம'வும் சேர்க்காமல், 'சிவ, ராம, நாராயண கோவிந்த' முதலான, எந்த தெய்வத்தின் நாமாவையும் ஒருத்தர் தானாகவே ஜபிக்கலாம். இங்கேயுங்கூட முதலில் குட்டியாக ஒரு த்யானம் நல்லது .அந்த நாமாவைக் சொல்லி ஸ்வாமியைக்

கண்டுகொண்ட ஒருத்தரை குருவாக தியானித்தால் அதுவே ஒரு பக்கம் விநயம், இன்னொரு பக்கம் டானிக்! வெறும் நாமாவையுங்கூட ஒரு நாம ஸித்தாந்தப் பெரியவரிடம் க்ரமப்படி உபதேசம் வாங்கிக்கொண்டால் நிச்சயமாக அது விசேஷந்தான். ஆனால் அத்ற்கு ஸௌகர்யப்படவில்லையென்பதற்காக ஒத்திப் போடவேண்டாம், தானாகவே ஆரம்பித்துக் கொள்ளலாம் என்றுதான் சொல்கிறேன். அப்புறம் ஸௌகரியம் ஏற்படுகிறபோது ஒரு பெரியவரிடமிருந்து உபதேசமாவும் பெற்றுக் கொண்டால் விசேஷம்....

---

## பொதுஜனப் பெரும் ஸமுதாயம்:பிரத்யேக குரு

இல்லாவிடினும்,

## பொதுவான குரு தேவை

ஜனங்களுக்கெல்லாம் தெய்வ சிந்தனை இருக்கவேண்டும். அதற்கான பூஜை, பாராயணம், பஜனை எல்லாமும் எல்லாரிடமும் விருத்தியாக வேண்டும். அதே ஸமயம் எல்லாருக்கும் பணிவு என்ற குணம் விருத்தியானால்தான் அஹங்கார - மமகாரங்களில் மாட்டிக்கொண்ட அழிந்து போகாமல் ஆத்மாவைக் காப்பாற்றிக் கொள்ளமுடியுமாதலால் எல்லாரும் குரு என்று ஸ்தானம் கொடுத்து ஒருவரிடம் பணிவோடு பக்தி பாராட்டவும் வேண்டும்.

இதன் பொருட்டாக அத்தனை ஜனங்களுக்கும் - லக்ஷோபலக்ஷம் என்று சொன்னேனே, கோடாநுகோடி என்றே சொல்லியிருக்கவேண்டும், அத்தனை பேருக்கும் - குரு பக்தி எப்படியாவது இருந்தேயாக வேண்டும் என்று நினைக்கிறேன். அத்தனை பேரையும் பார்த்துப் பார்த்துப் பயிர் பண்ண அத்தனை குருமார்கள் - அதிலும். எவரையம் கேள்வியோடேயே பார்க்கிற குணம் ஜனங்களுக்கெல்லாம் விருத்தியாகிவிட்ட தற்காலத்தில் - கிடைப்பார்களா? கஷ்டம்தான். குரு என்று சொல்லிக் கொள்ளத் தகுதி வாய்ந்தவர்கள் இருந்தால்கூட அவருடைய தகுதியை உணர்ந்து தங்களைச் சிறுக்கிக் கொண்டு ஜனங்களும் போக வேண்டுமே அப்படி இத்தனை கோடி பேருக்கும் வாய்க்குமா - குரு - சிஷ்ய உறவு வாய்க்குமா - என்றால் ரொம்பவும் ஸந்தேஹம்தான்.

ஆனாலும் இன்றைய ஸமுதாயத்தில் ஜனங்களில் அத்தனை பேரில் ஒவ்வொருவரும் எவராவது ஒருவரை மஹான், தெய்வ புருஷர் என்று நம்பிக்கொண்டிருக்கிறார்கள். அவநம்பிக்கை யுகம் என்றே இக்காலம் பேர் வாங்கி விட்டாலும், மஹான்கள் என்று நம்பப்படுகிறவர்களிடமும், அநேகம் அநேகம் கூட்டங்களாக அத்தனை ஜனங்களும் எவராவது ஒருவரிடம், போய்க் கொண்டுதானிருக்கிறார்கள். பல பேர் பல மஹான்களிடமும் போகிறார்கள். என்றாலும் ஒவ்வொருவருக்கும் குறிப்பாக அவர்களில் ஒருவரிடம்தான் ஜாஸ்தி ஈடுபாடு உண்டாகிறது.

அந்தப் பெரியவர்கள் ஒவ்வொருவரும் தெய்வ

ஸம்பந்தமாகவும், லோக வாழ்க்கையை எப்படி வாழ்ந்தால் நல்லது என்பதைப் பற்றியும் உபதேசம் செய்கிறார்கள். ஜனங்கள் அவர்களிடம் போவது தங்களுடைய கஷ்டம் தீர வேண்டும், தாங்கள் ஆசைப்படுவது நடக்கவேண்டும் என்பதற்காகவே என்று முடிந்துவிடாமல், அவர்களுடைய உபதேசப்படிக் கேட்டு அப்படி நடக்கவேண்டும் என்று நினைப்பதாகவும் ஆனால்தான் அந்த பக்தியும் ஈடுபாடும் நிஜமானவை, அர்த்தமுள்ளவை. அநேகமாக எல்லா ஜனங்களுமே இப்படித் தாங்கள் ஆச்ரயிக்கிற பெரியவரின் வழிகளை, கொள்கைகளை கொஞ்சம் கொஞ்சமாவது பின்பற்றாமலிருக்க மாட்டார்கள். குறைந்த பக்ஷம், பின்பற்ற வேண்டும் என்ற முயற்சி, அந்த எண்ணமாவது உள்ளவர்களாகவே இருப்பார்கள்.

இந்த இடத்தில் அந்த மஹான் குருவாகவும், அவரிடம் போகிற ஜனங்கள் சிஷ்யர்களாகவும் ஆகிவிடுவார்கள்.

ரொம்பவும் 'ஃபாலோயிங்' உள்ள பெரியவர்கள் என்றால், 'ஃபாலோயர்' என்று இருக்கிற அத்தனை பேர்களில் ஒவ்வொருவரோடும் அவர்கள் நேராகத்

தொடர்பு கொண்டு க்ரமப்படி உபதேசம் தரமுடிவதில்லை. ஆனாலும் அவர்கள் தங்களுடைய உபதேசத்தைப் பொதுப்படத் தருகிறார்களோ இல்லையோ? அதைத் தழுவியே தாங்கள் நடப்பது என்று அவருடைய பக்தர்கள் நினைத்தால் அப்போதுதான் அவர்கள் நிஜமாக 'ஃபாலோயர்' ஆகிறார்கள். குரு நடத்தும் வழியில் செல்லும் சிஷ்யர்களாக, ஒரு பெரியவர் கொடுக்கிற பொது உபதேசத்தை - ப்ரத்யேகமாகத் தங்களில் ஒவ்வொருவருக்கும் அவர் உபதேசிக்காமல் பொதுப்படையாக உபதேசிப்பதையே ப்ரத்யகே உபதேசமாகக் கொண்டு - பின்பற்றுகிற அப்போது - இந்த மாதிரி ஜன ஸமுதாயத்தில் ஒவ்வொருவரும் ஒருவரிடம் போய் அவரைப் பின்பற்றுகிறபோது - எல்லோருக்குமோ, ஒவ்வொருத்தருக்குமே ஒரு குரு கிடைத்து விடுகிறார். தனிப்பட்ட மந்திர தீக்ஷை கொடுக்கும் குரு இல்லாவிட்டாலும், தெய்வ சிந்தனைக்கும் நல்வாழ்க்கைக்கும் வழி சொல்கிறவராக ஒரு குரு கிடைத்துவிடுகிறார்.

நானே இருக்கிறேன், என் மாதிரி வேறே ஸ்வாமிகளும்

இருக்கிறார்கள். 'ஜகத்குரு' என்று டைட்டிலும் இருக்கிறது. அதற்காக ஜகத்திலுள்ள ' ஒவவொருத்தருக்கும் நாங்கள் தனிப்பட உபதேசம் கொடுக்கிறோமா என்ன? கொடுக்க முடியத்தான் முடியுமா என்ன? ஜகத்தில் உள்ள அவ்வளவு பேரையும் எங்களைச் சேர்ந்தவர்களாகக் கொண்டு, எங்கள் மூல புருஷர் தெய்வ ஸம்பந்தமாகவும், வாழ்க்கைத் தர்மமாகவும் என்ன உபதேசித்தாரோ அதை நாங்களும் பொதுப்பட ஜகத் பூராவுக்கும் எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஜனங்களில் ரொம்பவும் பெரும்பாலான பேர், எங்களையே குருவாகக் கொண்ட சிஷ்ய லோகமாக இருக்கிறார்கள்.

இந்த மாதிரி 'மஹான்' என்று ஆச்ரயித்து, 'குரு' என்று கொள்கிறவனைக் குறித்தே பாராயணம், பூஜை, பஜனை முதலான எதுவானாலும், அதன் முதலில் குரு வந்தனம் பண்ண வேண்டும்.

பாராயண நூலைப் பண்ணியவர், பூஜா கல்பத்தை ஏற்படுத்தியவர், பஜனை ஸம்பிரதாயத்தை உண்டாக்கித் தந்தவர் ஆகியவர்களையும் குருவாக நமஸ்கரிக்க வேண்டும். அவர்கள் இன்னார் என்று தெரியாதபோதுங்கூட, 'எவராயிருந்தாலும் அவருக்கு நமஸ்காரம்' என்று (சிரித்து) 'எந்தோ மஹாநுபாவுலு' மாதிரி' எவரோ மஹாநுபாவுலு'வுக்கும் பண்ணவேண்டும்.

மொத்தத்தில் விஷயமென்னவென்றால், ப்ரத்யகேமாக குரு என்று ஒருவரிடம் உபதேசம் பெற்றுத்தான் பண்ணவேண்டும் என்று இல்லாத சின்ன உபாஸனைகளும் இருக்கின்றன. பெருத்த ஜன ஸமுதாயத்தில், அவரவரும் ஸம்ஸார வாழ்க்கை விஷயமாகவே ஆலாய் பறந்து கொண்டிருக்கிற போக்கில் அத்தனை ஜனங்களும் மேற்கொள்ளக்கூடியதாக இந்த பாவனைகள் இருக்கின்றன. குரு, பூஜை எடுத்து வைப்பவர் என்றெல்லாம் ஒருத்தருமே கிடைப்பதற்கில்லாத இடமாக லோகத்தில் எங்கெங்கோ எல்லாமோ நம் ஜனங்கள் வேலைக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கை கொடுப்பதாகச் சில உபாஸனைகள் - வழிபாட்டு முறைகள் - இருக்கின்றன. இவற்றை விட்டால் இன்று லோகத்தில் ச்ரேயா மார்க்கமே (உயர் நலனுக்கு வழியே) இல்லை. ஆனபடியால் இவற்றிலேயே பெரும்பாலான

ஜனங்கள் போனாலும் போகட்டும்.

அதில் தப்பில்லை. நல்லதே

ஆனாலும் அப்போதுங்கூட நம்முடைய ஸநாதன தர்ம ஆலவிருக்ஷம் ஒரு பெரிய வேராக பாய்ச்சியிருக்கிற குரு பக்தியை விட்டு விடாமல், பிரத்யகேமாக இல்லாவிட்டாலும் பொதுப்படையாகத் தனக்கு நல்ல வழி காட்டுகிறவரை ஒவ்வொருவரும் தியானித்து விட்டே உபாஸனை செய்வது நல்லது என்று தோன்றியதால் சொன்னேன்.

அடக்கமும், தன்னம்பிக்கையும் லோகத்தில் தழைப்பதற்கு குரு உபாஸனையே வழியாயிருப்பதால் சொன்னேன்.

---

## விநயமும் ச்ரத்தையும்

அடக்கம் என்பது விநயம். நம்பிக்கை என்பது ச்ரத்தை. இந்த இரண்டுமே நமக்கு இரண்டு கண் மாதிரி. குரு என்றால் வழி காட்டுபவர், அந்த வழியில் போகணுமென்று திரும்பத் திரும்பப் பார்த்தோமோல்லியோ? கண் இருந்தால்தானே ஒரு வழியில் போக முடியும்? அப்படி நமக்கு இரண்டு கண்களாக இருப்பவை விநயமும் ச்ரத்தையுந்தான். இந்த இரண்டில் ஒன்று இருந்தாலே மற்றதும் தன்னால் வந்துவிடும். ஒன்றிடம் நாம் அடங்கிக் கிடக்கிறோமென்றாலே அதுதான் நமக்கு நல்லது செய்யும் என்ற த்ருட நம்பிக்கையில்தானே அப்படிக் கிடக்கிறோம்? அதே மாதிரி, ஒன்றிடம் நாம் அதுவே பரம ப்ரயோஜனம் தருமென்றால் த்ருட நம்பிக்கை வைக்கிறோமென்றால் அந்த ப்ரயோஜனத்தைப் பெற அதனிடம் அடங்கிக் கிடக்கத்தானே செய்வோம்?

கீதையில் பகவான் விநயத்தையும் சொல்லியிருக்கிறார், ச்ரத்தையையும் சொல்லியிருக்கிறார். முதலில் 'ப்ரணிபாதம்' என்கிற நமஸ்காரம், 'பரிப்ரச்னம்' என்பதாக நன்றாகக் கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொள்வது, 'ஸேவை' என்பவற்றை சிஷ்ய லக்ஷணமாகச் சொன்னார். ஸேவைதான் குருவுக்குச் செய்கிற தொண்டு, பலவிதமான பணிவிடைகள். அதுவும் வித்யையை ஸ்வீகரிப்பதற்கு ஜீவாதாரமான

அம்சங்களில் ஒன்று. அப்புறம் "ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம்" 'சிரத்தையுள்ளவனே ஞானம் பெறுகிறான் என்றும் சொல்லியிருக்கிறார். முதலில் சொன்ன ப்ரணிபாத -பரிப்ரச்ன - ஸேவைகள் விநயத்தின் கீழ் வருகிறவையே. ப்ரணிபாதமும், அதாவது நமஸ்காரமும், ஸேவையும் விநயத்தைக் காட்டுபவை என்று எவருக்கும் புரியும். கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொள்வதான 'பரிப்ரச்னம்' எப்படி விநயத்தில் வரும் என்று தோன்றலாம்.

---

## பரிப்ரச்னம் எப்படி விநயமாகும்?

வளைத்து வளைத்துக் கேள்வி கேட்பதே 'பரிப்ரச்னம்'. "குரு சொல்வதில் நிச்சயம் ஏற்படாவிட்டால் தானே இப்படிக் கேட்கத் தோன்றும்? ஆகையால் விஷயத்திலும், விஷயத்தில் மாத்திரமில்லாமல் விஷயம் சொல்லும் குருவிடமுமே ஸந்தேஹத்தைக் காட்டுவது போல் அல்லவா இந்தப் பரிப்ரச்னம் என்பது தோன்றுகிறது, இந்த இடத்திலேயே பகவான் 'ஸந்தேஹக்காரன் நாசமடைகிறான்' - 'ஸம்சயாதமா விநச்யதி' - என்றும் சொல்லியிருக்கிறாரே ச்ரத்தை, நியம், சரணாகதி இருந்தால் குரு சொல்வதில் ஸந்தேஹமே வராது, ஆனபடியால், கேள்வியும் எழும்பாது. கேள்வி கேட்பவன் ஸம்சய்காரன்தோனே? சிஷ்ய லக்ஷணத்திற்கு நேர்மாறாக இப்படிப் பண்ணி பகவான் வாயினாலேயே 'விநச்யதி' 'அழிந்து போகிறான்' என்று சாபம் வாங்கிக் கொள்வதை எப்படி விநயத்தில் சேர்க்கமுடியும்? - இப்படித் தோன்றலாம்.

அதில்லை ஸரியான அர்த்தம். சிஷ்யன் அவச்யம் பண்ணவேண்டியவைகளிலேயே, ப்ரணிபாத்திற்கும் ஸேவைக்கும் மத்தியில் பரிப்ரச்நத்தை பகவான் சொல்லியிருக்கிறார். அப்புறம், "ஸம்சயாத்மா வீணாகிறான்" என்று பிரித்துச் சொல்லியிருக்கிறார். ஆகையினால் வளைத்து வளைத்துக் கேள்வி கேட்கிற 'பரிப்ரச்னம்' ஸம்சயம் இல்லை என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

அந்தப் பரிப்ரச்னத்தை எப்படிப் புரிந்துகொள்ளணுமென்றால்,

அது குருவை வளைத்து வளைத்துக் கேட்பதில்லை, அப்படிக் கேட்டால்தான் அவரிடம் ஸம்சயம் என்று ஆகும். அவர் சொன்ன விஷயம் ஸரியா என்ற ஸந்தேஹமும் இல்லை. குரு சொல்கிறாரென்றால் அது ஸரியே என்று வைக்கும் நம்பிக்கைக்கு ஹானியான ஸம்சயமில்லை. 'அவர் சொல்லும் விஷயம் ஸரியேதான், ஆனாலும் அது தனக்கு நன்றாக அர்த்தமாகிவிடாதா? என்று ஒரு சிஷ்யன் தன்னையே வளைத்து வளைத்துப் "புரிஞ்சிண்டாயாடா?" என்று சோதித்துப் பார்த்துக் கொண்டு, ஆனாலும் அதற்குத் தானாகப் பதில் கண்டுபிடிக்கப்படாது என்று குருவிடம் ஸமர்ப்பிப்பது தான் 'பரிப்ரச்னம்'. தனக்கு ஏதோ ஒரு அணுவளவு புரியாமல் போனால்கூட, மறைக்காமல், ஒளிக்காமல் ஸமர்ப்பிக்க வேண்டும். அது அசட்டுத்தனம், அறியாமை என்று குருவுக்குத் தோன்றினால்கூடப் பரவாயில்லை என்ற அளவுக்கு அபிமான ரஹிதமாக, தன்மானம் விட்டு ஜாடாவும் கேட்டுக் கொள்வதே பரிப்ரச்னம். 'மானத்தை விட்டு' என்றால் விநயம் இல்லாமல் வேறே என்ன?

ஒரு மெஷின் இருக்கிறது. அது வேலை செய்துகொண்டு இருக்கும்போது நாம் பார்க்கிறோம். அது மெஷின், வேலை செய்கிறது என்பதில் நமக்கு ஸம்சயம் இருக்கிறதா? இல்லை. ஆனால் அது எப்படி வேலை செய்கிறது என்று தெரியவில்லை. பக்கத்திலேயே அந்த மெஷினை விற்கிறவரோ, ஓட்டுகிறவரோ இருக்கிறார். அவருக்கு மெஷின் ஸமாசாரம் முழுக்கத் தெரியும் என்பதில் நமக்குக் கொஞ்சங்கூட ஸம்சயமில்லை. அதனால் அவரிடம் அது எப்படி வேலை செய்கிறது என்று கேட்கிறோம். அவர் சொல்கிறார். சொல்கிறதெல்லாம் நமக்கு அப்படியே புரிந்து விடுகிறதா? சில பாயின்டுகள் புரியாமலிருக்கின்றன.

அப்போது மேலே நன்றாகக் கேள்வி கேட்க வேண்டியதுதானே? அதாவது

'பரிப்ரச்னம்' பண்ண வேண்டியதுதானே? இதனால் அந்த ஆஸாமியிடமோ, அவர் சொன்ன விஷயத்திலோ ஸந்தேஹம் என்றாகி விடுமா? நாம் ஸரியாக, நன்றாகப் புரிந்து கொண்டோமா என்று நம்மிடமே ஸந்தேஹத்தில் நம்மையே சோதித்துக் கொண்டு, 'ஓ, இன்ன பாயின்ட்

புரியவில்லை' என்று தெரிந்து கொண்டு, விஷயம் தெரிந்தவரிடம் அதைப்பற்றி ஒளிக்காமல் கேட்பதுதான் பரிப்ரச்னம். அது விநயத்தின் கீழே வருகிறதுதான் என்பதில் (சிரித்து) ஸந்தேஹப்பட வேண்டாம்!

---

## ஆசார்யாள் காட்டும் சிரத்தையின் சிறப்பு

இப்படி விநயத்தின் அங்கங்களான ப்ரணிபாத - பரிப்ரச்ன - ஸேவைகளை பகவான் சொல்லிவிட்டு அப்புறம் சிஷ்யனின் இன்னொரு கண் மாதிரியான சிரத்தையைச் சிறப்பித்து, "ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம்" - "சிரத்தையுள்ளவனே ஞானம் பெறுகிறான்" - என்கிறார். அந்த இடத்தில் ஆசார்யாள் பாஷ்யத்தில் ஒரு ஸூக்ஷ்மமான மனோதத்வ ஸமாசாரம் சொல்லியிருக்கிறார்.

பகவான் முதலில் சொன்ன நமஸ்காராதிகளை பாஹ்யமானவை- அதாவது வெளி விஷயங்கள் - என்று ஆசார்யாள் சொல்கிறார். நமஸ்காரம் பண்ணுவதும், கேள்வி கேட்பதும், ஸேவை செய்வதும் வெளியிலே தெரிகிறவைதானே? இப்படி வெளியிலே ஒன்று தெரியும்போது, 'அது வெளிக்கு நன்றாகத் தெரிந்தால் போதும். உள்ளுக்குள்ளே நமக்கு அந்த பாவம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. வெளியிலே அப்படி ஒரு 'ஷோ' ஏற்படுத்திவிட்டால் போதும்' என்றும் தோன்ற இடமுண்டாகிறது. அப்படித் தோன்றி, மனஸிலே பக்தி இல்லாமலே விழுந்து விழுந்து நமஸ்காரம் பண்ணலாம். ஸப்ஜெக்டில் நிஜமான இன்டரெஸ்ட் இல்லாமலே இருக்கிற மாதிர ஏதாவது கேள்விகள் கேட்லாம், சரீர கைங்கர்யம் மனஸு கலக்காமலே வெளிப் பார்வைக்குப் பிரமாதமாகப் பண்ணிப்பேர் வாங்கிவிடலாம். அந்த நமஸ்காரம், கேள்வி, கைங்கர்யம் என்கிறவை 'விநயம்' என்பதில் கீழ் வர வேண்டியவையானாலும் அவை நிஜமானதாக இல்லாதபோது எப்படி விநயமாகும்? எப்படிப் பலன் தரும்? கபடமாக நடித்துக்காட்டவும் இடம் தருகிற 'விநய' அம்சங்கள் நாம் நேர் வழியில் 'ஸ்டெடியாக'ப் போகாமல் சலனம் அடையவும் செய்யலாம். முடிவில் நிஷ்பலனே மிஞ்சும். ஆனால்

இன்னொரு கண் இருக்கிறதே, 'சிரத்தை' என்று!அந்த அசைக்க முடியாத நம்பிக்கை இந்த மாதிரி வெளிவிஷயமில்லை. அது நம் உள்ளத்திலேயே இருப்பது. கபடம் கலக்காத, கலக்க முடியாத உண்மையான உள்விஷயம் அது. அதற்கு வெளி expression-ஆக நாம் மற்றவர் பார்க்கச் செய்கிற எதுவும் இல்லை. ஆகையினால் அதில் நடிப்பதற்கு இடம் இல்லை. ஆகையால் சிரத்தை என்பதே, மற்ற நமஸ்காராதிகளைப் போல நிஷ்பலனிலும் கொண்டுவிடலாம் என்ற ஆபத்து இல்லாததாகவும், பலன் பெறும் லக்ஷணத்தில் ஸ்டெடியாகச் சேர்ப்பதாகவும் இருக்கிறது- இப்படி ஆசார்யாள் அழகாப் பாகுபடுத்திச் சொல்லியிருக்கிறார். அதனால் தான் "ஞானம் அடைகிறவன் யாரென்றால் ச்ரத்தாவான்தான்" என்று பகவான் ச்ரத்தைக்கு அழுத்தம் கொடுத்துச் சொல்லியிருக்கிறாரென்று நமக்குப் புரியவைக்கிறார்.

---

## சிரத்தையிலிருந்து சரணாகதி

ச்ரத்தை பூர்ணமாகிவிட்டால் குருவிடம் பூர்ண சரணாகதியும் வந்துவிடும். அப்போது அவர் வாய் வார்த்தையாக உபதேசிப்பது, அதை இவன் மூளை மட்டத்தில் இறக்கிக் கொள்வது, நன்றாக இறக்கிக் கொண்டோமா என்று சோதித்துக் கேள்விகள் கேட்பது என்பதற்செல்லாங்கூட அவச்யமே இல்லாமல் போய்விடும். குரு அநுபவத்தை அப்படியே நேராக சிஷ்யனின் ஹ்ருதயத்துக்குள்ளே இறக்கிவிடுவார். மற்றவர்களுக்கு அவன் சொல்லிக் கொடுப்பதற்காகத்தான் அப்போது அவர் மூளை மட்டத்திலும் அவனுக்கு 'எக்ஸ்ப்ளனேஷன்'கள் கொடுத்து உபதேசம் செய்வதாக இருக்கும்.

அந்த சரணாகதியைத்தான் சாஸ்திரம் தலைமையானதாக விதித்திருக்கிறது. ஸ்த்ரீ ப்ரஜைக்குப் பதியிடம் சரணாகதி, புருஷ ப்ரஜைக்கு குருவிடம் சரணாகதி - அதுவே மோட்ச ஸாதனம் என்று சொல்லியிருக்கிறது.

---

# இரு வித சரணாகதிகளும் குரு சிஷ்ய உறவும்

சரணாகதியில் இரண்டு தினுஸு சொல்வதுண்டு:'மர்கட கிசோர ந்யாயம்' என்றும். மர்கட கிசோரம் என்றால் குரங்குக் குட்டி, மார்ஜார கிசோரம் என்றால் பூனைக்குட்டி. குரங்கு ஜாதியில் குட்டிதான் தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும். அப்படி பக்தன் தன் முயற்சியால் பகவானைப் போய்ப் பிடித்துக் கொள்ளணும் என்பது மர்கட கிசோர ந்யாயம். பூனை ஜாதியைப் பார்த்தாலோ, குட்டி தன்னை ரக்ஷித்துக்கொள்ள வேண்டும் என்ற கவலையே இல்லாமல் அது பாட்டுக்குக் கிடக்கிறது. தாய்ப் பூனைதான் அதை வாயால் கௌவிக் கொண்டு இடம் இடமாக எடுத்துப்போகிறது. இப்படி ஸ்வய ப்ரயத்னம் இல்லாமல் பகவானே பார்த்துக்கொள்ளட்டும் என்று இருப்பதுதான் மார்ஜார கிசோர நர்யம். .இந்த இரண்டில் எது உயர்ந்தது என்ற விவாதம் இப்போது வேணாம். யாருக்கு எப்படிப் பிடிக்கிறதோ அப்படி வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த இரண்டு ந்யாயமும் பகவான் - பக்தன் என்ற ஜோடி விஷயமாகச் சொன்னது. இதை குரு - சிஷ்யன் என்ற ஜோடிக்கு வைத்துப் பார்க்கிற போது சுருக்கமாக ஒன்று மாத்திரம் சொல்லலாமென்று தோன்றுகிறது. முதலில் சிஷ்யன் குருவைத் தேடிப்போய் அவரைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளவேண்டும். ஏனென்றால் அவருக்கு இவன் தேவைப்படுவதைவிட இவனுக்குத்தானே அவர் அத்யாவச்யமாகத் தேவைப்படுகிறார்? அதனால் மர்கட கிசோர ந்யாயத்தில் இவனே பிடித்துக் கொள்ளணும். அப்படிப் பிடித்துக் கொண்டால் அவர் மார்ஜார கிசோர ந்யாயத்தை நடத்த அரம்பித்து விடுவார் அதாவது அவரே இவனுக்கு முழுப் பொறுப்பும் எடுத்துக்கொண்டு இவனை நடத்திப்போவார்.

இப்படி இரண்டு 'ந்யாய'மாகப் பிரிக்காமல் இவன்-அவர் இரண்டு பேருமே பரஸ்பரம் ஒருவரையொருவர் விடாமல் பிடித்துக்கொண்டே குரு-சிஷ்ய உறவு நடக்கிறது என்றும் சொல்லிவிடலாம்!

'யார் ஸரியான குரு, ஸத்குரு? அவரை எப்படிக் கண்டுபிடித்து அடைவோம்?' என்று நிஜமான தாபத்துடன் ஒருவன் இருந்தானானால், ஈச்வரனே தூண்டிவிட்டு அப்படிப்பட்ட ஒருவர் இவனைத் தேடி வருவார் என்று சொல்லியிருக்கிறது. அதற்கு நிறைய எடுத்துக்காட்டுகளும் இருக்கிறது. இதைப் பார்த்தால் - யாரைப் பிடிப்பது என்றே தெரியாமல் சிஷ்யன் தவித்தபோது குருவே வந்து பிடித்துக் கொள்கிறார் என்பதைப் பார்த்தால் - முதலில் மார்ஜார கிசோர ந்யாயம் மாதிரியான ஒன்றாகத் தோன்றுகிறது. ஆனால் குரு வந்த பிறகு சிஷ்யனும் அவரை மர்கட கிசோரமாகப் பிடித்துக்கொள்ளத்தான் வேண்டும்.

நான் சொன்னதற்கு இன்னொரு திருத்தங்கூட குருவுக்கும் சிஷ்யன் தேவைப்படத்தான் செய்கிறான். அவர் கற்றதை, அநுபவித்ததை யாருமே வாங்கிக்கொள்ள வராவிட்டால், அவருந்தான் அது தன்னோடு போய்விடப்படாதே என்று சிஷ்யனுக்காகத் தவிப்பார். தன்னிடம் ப்ரஹ்மசாரிகள் வரணும், வரணும் என்று குரு தவித்துச் சொல்வது தைத்திரீயத்தில் மந்திரமாகவே இருக்கிறது!ஆவஹ ந்திஹோமம் என்று இன்றைக்கு அதைச் சொல்லி ஹோமம் பண்ணி, எத்தனையோ படுத்துப்போன பாடசாலைகளில் பசங்கள் வந்து சேர

ஆரம்பிப்பதை ப்ரத்யட்சமாகப் பார்க்கிறோம்...

குரு இன்னார் என்று குறிப்பாகத் தெரியாவிட்டாலும், 'குரு என்று ஒருத்தர் வேண்டுமே நமக்கான அந்த குரு யார் தெரியவில்லையே' என்று முதலில் ஒருத்தன் தேடுகிறான், அப்புறம் அந்த குருவே வந்து அவனைப் பிடித்துக் கொள்கிறார், ஆட்கொள்கிறார் என்றால் - முதலில் அவன் குருவைத் தேடினதே ஆஸாமியாக இல்லாமல், ஆனால் தத்வமாக இருக்கிற குருவை அவன் மனஸில் பிடித்துப் போட்டுக் கொண்டால்தானே? அப்படி அவன்தான் முதலில் பிடித்தான் என்பதால் இது மர்கட கிசோர ந்யாயமே என்றும் சொல்லலாம்.

குரு என்று ஒருவரையும் தேடாமல் பரம வ்ராத்யனாக இருக்கிற ஒருவனைக்கூட ஸத்குரு ஒருவர் தாமாக ஆட்கொண்டு உசந்த நிலைக்கு ஏற்றுவிப்பதுமுண்டு. அது

ரொம்ப ரொம்ப அபூர்வமாகவே நடக்கிற ஒன்று. அங்கேதான் ஆரம்பமே மார்ஜார கிசார நர்யம், (சிரித்து) ஸரியாகச் சொன்னால், மார்ஜார மாதா ந்யாயம்!

பொதுவாக என்ன சொல்லத் தோன்றுகிறதென்றால் சிஷ்யன் என்று நாம் பண்ணக்கூடியதை மர்கட கிசோரமாகச் செய்வோம். குரு பண்ண வேண்டியது இன்ன என்று எதுவும் எதிர்பார்க்க வேண்டாம்.

அவர் பண்ணவேண்டிய ஒன்றே ஒன்று, ஞானத்தைத் தருவது. அதற்காகத்தானே குரு என்று ஒருவரிடம் போவது? அதை அவர் எப்படிப் பண்ணுவாரோ, பண்ணிவிட்டுப் போகட்டும், ஆனால் நிச்சயமாக பண்ணுவார் என்ற நம்பிக்கையுடன் - 'ச்ரத்தாவான்'களாக - நம்காரியமாக அவரைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருப்போம்.

சரணாகதி ந்யாயங்கள் இரண்டில் எது என்று முடிவாகச் சொல்லத் தெரியாமல் இப்படி ஏதோ கலந்தாகட்டியாக இருக்கிறபோது அதைப் பற்றிச் சொல்வானேன் என்றால், காரணம் இருக்கிறது. இரண்டிலும் மர்கட கிசோரம், மார்ஜார கிசோரம் என்பதாக 'ககிசோர'ப் பிரஸ்தாவம் இருக்கிறது. கிசோரம் என்றால் குட்டி குட்டியாக உள்ள மட்டுந்தான் குரங்கு தாயைப் பிடித்துக் கொள்வதும், தாய்ப் பூனை தன் குட்டியைப் பிடித்துக் கொள்வதும், குரங்கோ, பூனையோ எதுவானாலும் குட்டி கொஞ்சம் பெரிசானால் அப்புறம் அதுவும் தாயை விட்டுப் போய்விடுகிறது, தாயும் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அனால் குரு-சிஷ்யன் விஷயம் இப்படியில்லை என்று வித்யாஸம் காட்டவே அந்த இரண்டு ந்யாயத்தையும் பற்றிச் சொன்னேன்.

குட்டியும் தாயும் ஒரு காலத்திற்கு அப்புறம் ஒன்றையொன்று விட்டுவிடுவதுபோல் குரு - சிஷ்யர்கள் விடுவது என்பதே இல்லை. சிஷ்யன் - அத்யாத்மிகத்தில் குட்டியாக குருவிடம் வந்தவன் - அவருடைய அநுக்ரஹத்தால், அவர் தாயாக இருந்து ஊட்டுகிற ஞானப் பாலால் ஆத்ம ஞானியாகவே பூர்ண வளர்ச்சி பெற்ற பிறகுங்கூட குரு - சிஷ்ய பாந்தவ்யம் இருந்துகொண்டே இருக்கும். அப்படித்தான்! சிஷ்யன் அத்வைத ஞானியாகவே ஆன பிற்பாடுங்கூட, குருவிடம் மாத்திரம் அத்வைதம் கொண்டாடிக் கொள்ள முடியாமல்

த்வைதம் மாதிரியான - அஸலே வேறே வேற என்று பிரிந்துவிட்ட த்வைதம் இல்லை, அந்த 'மாதிரி'யான - ஒரு பாவம் இருக்கும் அந்த குருவும்

(எல்லாமும், எல்லாரும் தானே என்றறிந்த அத்வைத) ஞானியனாக

இருந்தபோதிலும், இவனை வேறே 'மாதிரி' நினைத்துத்தானே 'சிஷ்யன்' என்று வைத்து உபதேசம் செய்தது, அதனால் அவரும் த்வைதம் மாதிரியான உறவு ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார் என்று ஆகிறது. இவர் மார்ஜார அம்மாவாகப் பிடித்துக் கொள்வது, சிஷ்யன் மர்கடக் குழந்தையாகப் பிடித்துக் கொள்வது என்று அந்த உறவு எந்நாளும் தொடருகிறது. 'எந்நாளும்' என்றால், சிஷ்யனுக்கு அத்வைத ஸித்தி வந்த பிற்பாடுந்தான் குரு ஜீவ யாத்ரை முடித்து? 'ஸித்தி அடைவது' என்கிறார்களே, அப்படி ஆன பிற்பாடுந்தான் அத்வைத ஞானிகளும் விதேஹ முக்திக்குப் பிற்பாடுகூட அநுக்ரஹம் மட்டும் பண்ணிக் கொண்டிருப்பது அநுபவிகளுக்கு ப்ரத்யக்ஷமாகத் தெரிந்த விஷயம். அது எப்படி என்றால் தெரியாது அவர்களுடைய சரீரம், கர்மா எல்லாம் அழிந்துபோய்விட்ட போதிலும், அவர்களுடைய அநுக்ரஹ சித்தம் - கருணை என்கிறது - அது மட்டும் அழியாமல் அம்ருதமாக இருந்துகொண்டிருக்கும் படியாக ஈச்வரன் விளையாடுகிறானென்றுதான் சொல்லணும். ஆகக்கூடி, அத்வைதமாகக் கரைந்து போய்விடாமல் குரு - சிஷ்யாள் என்று பரம ப்ரியமான ஒரு உறவு எந்நாளும் இருக்கிறது!

ஆசார்யாளே அவருடைய குருவையும், பரம குருவையும், ப்ரஹ்ம வித்யா குரு பரம்பரை முழுவதையும் பரம பக்தியோடு ஸ்தோத்ரிப்பதில் அவருடைய சிஷ்ய பாவ - த்வைதம் தெரிகிறது. ஆசார்யாளை ஞானிகளான அவருடைய சிஷ்யர்கள் - ஸுரேச்வராசார்யாள், பத்ம பாதாசார்யாள், தோடகாசார்யாள் - ஆகியவர்கள் கருணாமூர்த்தியாக ஸ்துதித்திருப்பதிலிருந்து அவருடைய குரு பாவ - த்வைதம் தெரிகிறது. அவரும் மற்ற ஞானிகள் பல பேரும் தேசமெல்லாம் ஸஞ்சாரம் பண்ணி உபதேசம் செய்திருப்பதும், வருங்காலத்தில் பிறக்கப் போகிறவர்களுக்காகவுங்கூட அத்வைத புஸ்தகங்கள் எழுதி

வைத்திருப்பதுமே போதும், இந்த குருபாவ த்வைதத்தைக் காட்ட!

ப்ரேமை என்பதன் பெருமை தெரிவதற்காக பராசக்தியின் லீலையில் இப்படி அத்வைதிகளுக்கும் குரு - சிஷ்ய த்வைதம் மாதிரியான ஒன்று சாச்வதமாக இருக்கிறது என்றே சொல்லத் தோன்றுகிறது. கருணை என்று குரு காட்டும் ப்ரேமை, பக்தி என்று சிஷ்யன் காட்டும் ப்ரேமை.

சொல்ல வந்த விஷயம், சிஷ்யனானவன் குருவிடம் சரணாகதி செய்ய வேண்டும் என்பது.

பல குருமார்கள் வாய்த்தாலும் அவர்களில் முக்யமானவரிடம் சரணாகதி, மற்றவர்களெல்லாரிடமும் ஆத்மார்த்தமான மரியாதை என்று இருக்க வேண்டும்.

---

**தர்ம சக்கரம், பகவானின் அருட்சூசகம்**

நமது பாரத நாடு விடுதலை அடைந்திருக்கும் இத்தருணத்தில், இந்தப் புராதன நாட்டு மக்கள் யாவரும் ஒரே மனத்துடன் ஸ்ரீ பகவானை மனமுருகிப் துதிக்க வேண்டும். நமக்கு மேன்மேலும் மனோபலத்தையும் தொன்று தொட்டு நமது நாட்டின் தனிச் சிறப்பாக உலக முழுவதிலும் பெருமை பெற்றுத் தந்துள்ள ஆத்மிகத் துறையில் நாம் நன்கு ஈடுபடச் சக்தியையும் கொடுத்தருளுமாறு வேண்டுவோம். அவரது அருளால் தான் நமக்குச் கிடைத்திருக்கும் இச்சுதந்திரத்தை நாம் உண்மையான சுதந்திரமாகக் காப்பாற்றிக் கொள்ளவும், அதன் வழியே நமது நாட்டினர் மட்டுமல்லாது, உலகின் கண்ணுள்ள எல்லா மக்களும் நிறைவாழ்வு என்பதன் நிரந்தரமான ஆனந்தத்தைப் பெற உதவி செய்யவும் முடியும்.

பாக்கியவசமாக நமது சுதந்திர பாரதத்தின் கொடிக்கு நடுவில் நடுநாயகமாக பகவானது தர்மஸ்வரூபமான சக்கரம் இடம் பெற்றிருக்கிறது. இக்கொடியின் அமைப்பைத் திட்டமிட்ட தலைவர்களின் கருத்து வேறுவிதமாக இருப்பதாகத் தோன்றினாலும்ட, நாமோ, 'பகவானே இந்நாட்டின் உயிர்நிலை அவரைச் சுற்றியே பிரஜைகளின் வாழ்க்கை

முழுதும் படர்ந்திருப்பதுதான்' என்பதை நமக்கு நினைவூட்டவும், அவரது காப்பு சுதந்திர பாரதத்திற்கு எப்போதும் உண்டு என்று காட்டு முகமாகவுந்தான் அவரது இத் தர்ம சக்கரம் நமது கொடி நடுவில் இடம் பெறக் கருணை கூர்ந்திருக்கின்றாரென எண்ணுகிறோம்.

---

## உண்மையான 'ஸெக்யூலரிஸம்'

சுதந்திர பாரத அரசாங்கமானது மத விஷயமாகப் பின்பற்ற வேண்டிய கொள்கை 'ஸெக்யூலரிஸம்' என்பதாக இருக்க வேண்டும் என்பதே தற்போது அரசியலாரின் கருத்தாக உள்ளது. இந்த 'ஸெக்யூலரிஸம்' என்பது அரசாங்கம் எந்த மதத்தையும் சார்ந்ததாக இல்லாதிருப்பதே என்று அவர்களால் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

இது சரியான கருத்தல்ல என எடுத்துக்காட்டி, 'ஸெக்யூலரிஸம்' என்பது உண்மையில் யாது என்று தெரிவிக்க வேண்டியுள்ளது. தற்போது எண்ணுவது போல் அது அரசாங்கம் எந்த மதத்தையும் சார்ந்து, அதாவது மதத் தொடர்பே அற்று இருப்பதல்ல. மாறாக அது, அரசாங்கமானது எந்த ஒரு மதத்தையும் மட்டும் சாராது, எல்லா மதங்களையும் ஆதரிப்பதாக இருப்பதே என்பதுதான் சரியான பொருள்.

ஒரு நாட்டின் அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட மதத்தை மட்டுமே சார்ந்து பிற மதங்களை இழிவும் அழிவும் செய்யாது, எல்லா மதங்களையும் ஏற்ற இறக்கமின்றி சம பாவத்துடன் ஆதரித்து, அவை யாவும் பரஸ்பரப் பகையின்றித் தழைத்தோங்க உதவி செய்ய வேண்டும் என்ற உயர்ந்த கொள்கையே உண்மையான 'ஸெக்யூலரிஸம்' ஆகும்.

---

## மக்களின் உள்ள உயர்வில் அரசின் பொறுப்பு

பிரஜைகளின் உடல் நலத்திற்கும், உலகியல் வாழ்க்கையின்

முன்னேற்றத்திற்கும் வழிவகைகள் காண்பதான விவசாயம், பொருளாதாரம், உலகியலை மையப்படுத்திய கல்வி, சுகாதாரம், உள்நாட்டு வெளிநாட்டுப் பாதுகாப்பு ஆகியவற்றை அபிவிருத்தி செய்வது ஓர் அரசாங்கத்தின் முக்கியமான பொறுப்பு என்பது உண்மையாயினும், அதோடு பொறுப்பு முற்றிலும் முடிந்து விட்டதாகக் கருதுவதற்கில்லை. உடலைவிட முக்கியம் உள்ளமேயன்றோ? பிரஜைகளின் அந்த உள்ளமாம் உயிரை அபிவிருத்தி செய்வதை ஓர் அரசாங்கம் புறக்கணிக்க முடியுமா? உள்ளவுயர்வு பெறாத மக்கட்கூட்டம் வாழும் நாடு நாடாகுமா? 'உயர்ந்தோர் மாட்டே உலகு' என்பதன்றோ ஆன்றோர் - சான்றோர் அறிவுரை? எனவே, ஒரு நாட்டின் பரிபாலனத்திற்குப் பொறுப்பேற்றுள்ள அரசாங்கம், நாடு நாடாக இருக்கவேண்டுமாயின், மக்களின் உள்ளத்தை உயர்த்தவும் நிச்சயமாக உதவி புரியத்தான் வேண்டும்.

இந்த உள்ள உயர்வை அளிப்பது மதமாகவே இருப்பதால், அதன் அபிவிருத்தியில் அரசாங்கத்திற்குப் பங்கு இருக்கிறது என்பதும் நிச்சயம்.

உலகியலில் செய்யும் எந்த அபிவிருத்தியும் நிலைத்து நிற்பதான பயனும், பயனால் விளைவதான ஆனந்தமும் தரவில்லையென்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். இந்த அபிவிருத்தி தாற்காலிகமாகவே முடிவதாகவும், அதனைப் பெற மீண்டும் மீண்டும் போராடுவதாகவும், அப்போராட்டத்தில் பலவிதமான வர்க்கபேதப் போட்டி பொறாமைகளும் சண்டைகளும் எழுவதாகவும் - மொத்தத்தில் அமைதி குலைவதாகவே காண்கிறோம். இன்றைய கண்டுபிடிப்புகளால் உலகியல் சுக சாதனங்கள் கணக்கின்றிப் பெருகிக் கொண்டே போவதில், எத்தனை பெற்றாலும் திருப்தி பெறாமல் மேன்மேலும் அதே தேட்டத்தில் ஓடி, சாந்த வாழ்வு என்னவென்றே அறியாதவர்களாக இருக்கிறோம். 'சுவரை வைத்தே சித்திரம்' என்றபடி உடல் நலனை ஓம்பத்தான் வேண்டுமாயினும், 'சித்திரம் தீட்டவே இச்சுவர், உள்ளத்தின் உயர்வான உயிரின் நிறைவே அச்சித்திரம்' என்பதையும் நாம் மறவாது பொன்னேபோல் மனத்தில் பொதிந்து கொள்ள வேண்டும். மீண்டும் மீண்டும் நலிவும் அழுக்கும் உறும் உலகியல் சுவரைக் கெட்டிப்படுத்துவதும் அழகுபடுத்துவதுமான ஓயா

முயற்சியிலேயே ஈடுபட்டு, அதோடு சேர்ந்துவரும் போட்டி - பொறாமைப் போராட்டத்தில் அமைதியிழந்து, மேன்மேலும் தேவை தேவையெனும் குறைவாழ்வில் வாணாளை வீணாளாக்குவதோடு முடிந்து விட்டோமாயின், நாம் ஆறறிவு பெற்றும் அறியாதாராகவே முடிந்த பரிதாபமாகத்தான் ஆகும். குறைவாழ்வை நிறைவாழ்வாகவும், போராட்டப் பொறாமையை அன்பு வழியில் நின்று பெரும் அமைதியாகவும், வந்து வந்து மறையும் தாற்காலிக இன்பத்தை நிரந்தர ஆனந்தமாகவும் மாற்றும் உள்ளத்தின் உயர்வு என்ற சித்திரத்தைச் சுவரின் மீது தீட்டிக் கொள்வதற்கு உபாயம் காண்பதே நாம் செய்ய வேண்டுவது.

உள்ளவுயர்வை நல்கவல்ல அந்த உபாயம் நல்லொழுக்கமாம் தர்மமும், தெய்வ பக்தியும், ஆத்ம சிந்தனையும் திரிவேணியாகக் கலக்கும்

மதவியலேயாகும்.

வலிவூட்டும் மூன்று மூலிகைச் சாறுகளின் கலவையான 'திரிபலா' என்றும் இம்மூன்று அங்கம் கொண்ட மதவியலைக் கூறலாம். அழியும் மூலிகைச் சாற்றினால் சித்திரம் தீட்டுவது போலின்றி, இந்த அழியாத சஞ்சீவினி மூலிகையால் மதவியல் சித்திரத்தை நாம் உலகியல் சுவரின் மீது தீட்டிக் கொண்டால், பிறவிப்பயன் பெற்று அமரமான பூரணவாழ்வின் பேரானந்தத்தைப் பெறுவோம்.

சுவரை நல்ல முறையில் கட்டித் தருவதற்குப் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள அரசாங்கத்திற்கு, அது காரணமாகவே, அச்சுவரான உலகியல் முன்னேற்றத்திலே -யே நமது முழுக் கவனத்தையும் ஈடுபடுத்துவதான திட்டங்களை வகுத்து நம்முடைய வாழ்வின் நிறைவுக்கு ஊறு செய்யாமல், சுவரில் நம் கவனம் எந்த அத்தியாவசிய வரம்போடு நிற்க வேண்டுமோ, அந்த அளவுக்கே தானும் கட்டுப்பட்டு, நம்மையும் கட்டுப்படுத்திச் சுவரின் உத்தேசப் பயனான சித்திரமாகிய உள்ளத்தின் முன்னேற்றத்தில் நம் கவனத்தைத் திருப்பிவிடுவதில் நிச்சயமாகப் பங்கு உண்டு.

---

## மத விஷயத்தில் அரசின் பங்குக்குள்ள வரம்பு

பங்கு உண்டு எனும்போதே கூர்த்த ஜாக்கிரதையுடன் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு விஷயமும் கூற வேண்டும். என்னவெனில், நாட்டைச் சேர்ந்த பிரஜைகளின் உள்ளவுயர்வுக்கு உபாயமான மதாபிமானத்தை வளர்த்துக் கொடுப்பதில் அரசாங்கத்திற்கு ஒரு பங்கு மட்டுந்தான் உண்டு என்பதேயாகும். அதாவது மதத்துறையில் அரசாங்கமே முற்றிலும் பொறுப்பேற்பது ஒருபோதும் ஏற்கத் தக்கதல்ல. மத வளர்ச்சியில் தன் பங்கை ஓர் அரசாங்கம் மறக்கலாகாது என்பது எவ்வளவு முக்கியமோ, அதனினும் முக்கியம் அப்பங்கின் வரம்பைக் கடந்து அது செயலாற்றலாகாது என்பதாகும்.

இதன்படி மத விஷயங்களில் கோட்பாடுகளில், பழக்கவழங்களில் ஓர் அரசாங்கமே நேரடியாகப் பிரவேசித்து எதுவும் செய்தல் அறவே கூடாது.

---

## மதக் கொள்கைக்கு முரணான சட்டங்கள் கூடாது

அதாவது எல்லா மதங்களுக்கும் ஒரே போல் ஆதரவளிப்பதான சரியான செக்யூலரிஸமோ, எம்மதத்திலும் சம்பந்தம் கொள்ளாத தவறான செக்யூலரிஸமோ, எதனை அரசாங்கம் ஏற்கின்ற போதிலும் அரசியலாரின் சமூகக் கொள்கைகளுக்குப் பொருந்தும் வகையில் மதங்களில் வகுத்துள்ள விதிகளுக்கு முரணாகச் சட்டமியற்றும் அதிகாரத்தை அரசாங்கம் கைக்கொள்ளலாகாது. எம் மதத்திலும் சம்பந்தப்படுவதில்லை என்ற தவறான செக்யூலரிஸத்தை மேற்கொண்ட பின்பும் எதிர்மறை சம்பந்தமாக மத விதிகளில் இவ்வாறு துர்பிரவேசம் மட்டும் செய்யலாம் என அரசாங்கம் கருதுமேயாகில் அதனை நாம் ஏற்பதற்கில்லை.

---

மதக் கொள்கையை மீறினால் அதிலும் சமநீதி காட்டவேண்டும்.

எனினும் தவிர்க்க முடியாமல் அவ்வாறான ஒரு நிலையைத் தாங்கிக் கொள்ள நேரிடின், அப்போது ஒரு விஷயத்தை வலியுறுத்த விரும்புகிறோம். அதாவது மத விதிக்கு முரணாகவும் தமது சமூகக் கொள்கைக்கு ஏற்பச் சட்டமியற்றலாமென ஓர் அரசாங்கம் கருதுகையில் இக்கருத்தை நாட்டின் சகலப் பிரஜைகள் குறித்தும் ஒரே போல் அமல் செய்து, அதாவது நாட்டில் வழங்கும் எல்லா மதங்களின் விதிகளையும் கருதாது சமமாக அமல் செய்து, பிரஜைகள் அனைவருக்கும் சம நீதி வழங்குதல் என்ற ஆதாரக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும்.

சில மதஸ்தரின் மத விதிகளில் மட்டும் புகுந்து மாற்றுவது, மற்றவர்களைத் தொடாமல் விடுவது எனப் பாரபட்சம் செய்தால் ஜனநாயகக் குடியரசு என்பதன் அஸ்திவாரக் கொள்கையிலேயே ஒன்றான சகலருக்கும் சம நீதி என்பதை அரசாங்கமே முறித்த மாபெரும் தவறாகும்.

---

அரசின் எல்லைக்கு அப்பாற்பட்ட துறை

எத்துறையிலும் சட்டம் வகுப்பதற்கு முன் அத்துறையில் ஆழ்ந்த அறிவும் தேர்ந்த அநுபவமும் பெற்ற நடுநிலையாளரான தக்கோரிடம் அது குறித்து ஆலோசனை கோரிப் பெற வேண்டியது ஓர் அரசாங்கத்தின் கடமையாகும். இதன் பொருட்டு ஒவ்வொரு துறைக்கும் ஓர் அறிஞர் குழு அமைக்கப்பட வேண்டும்.

பொருளாதார வளர்ச்சி, பாதுகாப்பு என்ற இரண்டிலேயே ஒருவாறு அடங்கி விடும் ஒன்றாக அரசாங்கப் பணியானது உலகெங்கிலும் வழக்கமாகிவிட்ட இன்றைய நிலையில், மதமென்ற துறையைப் பார்க்குமிடத்தோ அது அப்பணியின் எல்லைக்கு அப்பாற்பட்ட ஆன்மா என்பதன் சம்பந்தமுள்ளதாக இருக்கிறது. ஆட்சி புரிவோர்க்கு இத்துறையில் அறிவோ, மதவுணர்ச்சி என்பதேகூடவோ,

இருக்க வேண்டிய தேவையில்லை என்றும் ஆகியுள்ளது. எனவே இத்துறை, அரசாங்கம் உள்ளே பிரவேசித்துச் சட்டம் வகுக்க இடம் தராத ஒன்றாக உள்ளதென ஆகிறது.

---

## எல்லா மதங்களின் பிரதிநிதிகளையும் கொண்ட சுதந்திரம் பெற்ற தனியமைப்பு

இதன் தொடர்ச்சியாக, இத்துறையில் ஏனைய துறைகளில் போல அரசாங்கம் தனக்கு ஆலோசனை அளிப்பதற்காகக் குழு நியமிப்பதென்றில்லாமல், தான் அறவே விலகி நின்று மதத்துறை சம்பந்தமான விஷயங்களில் முடிவெடுத்து நடத்த முழு நிர்வாகப் பொறுப்பு் பெற்ற, சட்டப்படிப் பூரண அதிகாரம் கொண்டதொரு சுதந்திரமான தனி Autonomous அமைப்பே நிறுவ வேண்டியது அவசியமாகிறது. அதன் சிபாரிசின் மீதே தேவை ஏற்படின் அரசாங்கம் சட்டம் வகுக்கலாம்.

பல மதங்கள் வழங்குகின்ற இந்நாட்டில் அவையனைத்திற்கும் பொதுவான பக்தி, ஆத்ம சிந்தனை, அன்பு, உண்மை, நேர்மை, தொண்டு, பணிவு, ஆகியவற்றை அப் பல மதங்களையும் சார்ந்த எல்லாப் பிரஜைகளுக்கும் வளர்த்துக் கொடுப்பதற்காகத் திட்டங்கள் வகுத்து நடத்தும் பொருட்டு எல்லா மதப் பிரதிநிதிகளும் ஒன்றுகூடிப் பணிபுரிவதே முக்கியமாக இச்சுதந்திர அமைப்பின் நோக்கமாக இருத்தல் வேண்டும். இதுகாறும் பிரிந்து பிரிந்து சண்டையிடுவதாகவே பெரும்பாலும் இருந்துவந்துள்ள எல்லா மதஸ்தரையும், அதே போல் ஒவ்வொரு மதத்திற்குள்ளுமேயுள்ள உட்பிரிவினரையும் அச்சகலருக்கும் பொதுவான மேற்சொன்ன குணநலன்களை வலியுறுத்துவதன் மூலம் இவ்வகண்ட பாரதம் என்ற ஒரே ஐக்கியமான குடும்பத்தினையே சார்ந்த அன்பு அங்கத்தினர்களாகச் செய்யும் பொறுப்பினை ஆற்றுவது இச் சுதந்திர மத அமைப்பின் முக்கியமான பணியாயிருக்க வேண்டும்.

மக்களுக்கு மன மேம்பாடளிப்பதிலும் அரசாங்கத்திற்குப் பங்குண்டு என்பதால் மட்டுமன்றி, ஓர் அரசாங்கம்

அமைதியான முறையில் செயற்பட நாட்டின் சகல பிரிவினரும் ஐக்கியமுற்றிருப்பது அத்தியாவசியம் எனும் காரணத்தினாலும் இப்பணிகளுக்கு உதவி புரியும் மேற்படி அமைப்பின் நிதித் தேவை முழுவதையும் அரசாங்கமே ஏற்க வேண்டும்.

மேற்படி அமைப்பில் இடம் பெறத் தக்கவர் யாவர்? தங்களது மத நூல்களைப் பயின்று தேர்ச்சி பெறுவதற்கும், அம்மத அநுஷ்டானங்களை உரியவாறு புரிவதற்குமே வாழ்வை அர்ப்பணித்த பெரியவர்களாக அவர்கள் இருத்தல் வேண்டும். இந்த யோக்கியதாம்சங்களோடு உலக நடப்புக்களில் பரிசயமுள்ளோராகவும், மக்களோடு நன்கு பழகி அவர்களது மனப்போக்குகளை அறிந்தோராகவும், நடைமுறைக் கண்ணோட்டம் கொண்டோராகவும், நிர்வாக அறிவு பெற்றோராகவும் உள்ளவர்களும் அதில் அங்கம் வகிக்க வேண்டும். இத்தகையோரே இத்துறையில் என்ன செய்ய வேண்டுமோ, எப்படி மக்களை அதில் முன்னேற்ற வேண்டுமோ அவற்றைப் பக்குவமாகச் செய்யவியலும்.

நாட்டிலுள்ள எல்லா மதங்களின் பிரதிநிதிகளாகவும் மேற்சொன்ன தகுதி பெற்றோராக நம்பப்படும் மதத்தலைவர்களுக்கு அங்கத்துவம் அளித்து இச்சுதந்திர மத நிர்வாக அமைப்பு உருவாக்கப் பெற்று இத்துறையின் நேரடிப் பொறுப்பு அதனிடமே ஒப்புவிக்கப்பட வேண்டும். அரசாங்கமும் இத்துறையில் நேரடியாகத்

தலையிட்டு எந்த மாற்றமும் செய்தல் அறவே கூடாது.

---

## மதத் தலைவர்கள் அரசியலில் ஈடுபடக்கூடாது

மறு திசையிலும் இதையே கூற விரும்புகிறோம். அதாவது, மதத்தலைவர்களும் அரசாங்க விஷயங்களில் ஒரு நாளும் தலையிடலாகாது. அதற்கான அறிவும், அநுபவமும் பெற்றவர்களின் பொறுப்பில்தான் அரசாங்கம் நடக்க வேண்டும். மனித இயற்கையில் அரசாங்கத்தின் செயற்களமாகிய உலகவியலிலேயே ஈடுபடும்போது அறிவு, அநுபவம் என்பவற்றுக்கு மட்டும் இடம் அளிப்பதாக இன்றி,

வேறு சில குறைபாடுகளுக்கும் இடமளிக்க ஏது ஏற்படுகிறது. ஆன்மவியல், உலகியல் என்பவை போல், அரசியல் என்றே உருவாகியிருக்கும் ஒன்றிலோ அதிகாரம், பதவி, புகழ் என்ற வசீகரண அம்சங்களின் கலப்பு அதிகமிருப்பதால், தர்ம நாட்டம் கொண்ட எவரும் மிக்க வருத்தமடையும்படியான பல போக்குகள் ஊடுருவ அதிகமாகவே ஏது இருப்பதாகத் தெரிகிறது. எனவே, மக்களை உள்ளவுயர்வில் முன்னேற்றுவதற்குப் பொறுப்புப் பெற்ற மதத் தலைவர்கள் தாங்களே பின்னேற்றம் அடையும் அபாயத்திலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வேண்டுமாயின், அரசாங்க சம்பந்தமும் அறவே கொள்ளாமல் தொலைவில் விலகியே இருக்க வேண்டும்.

மத வளர்ச்சிக்கான போஷணை அளிக்க வேண்டும் என்று அரசாங்கத்திற்கு நினைவூட்டுவது, அது அவ்வாறு செய்யும்போது உரிய பாராட்டை அளித்து மேலும் உற்சாகப்படுத்துவது, மத விஷயங்களில் அரசாங்கம் பிரவேசித்தால் தைரியமாகக் கண்டிப்பது - ஆகியவற்றுக்கு அதிகமாக மதத்தலைவர்கள் அத்துறையில் சம்பந்தம் கொள்ளவே கூடாது. சுத்தி செய்யும் நீர்நிலையையே துர்நாற்றக் குட்டையாக்குவது போன்ற ஆபத்துக்கும் பாபத்துக்கும் இடம் தருவதான அரசியல் சம்பந்தத்தை மதவியலுக்கு ஒருபோதும் காட்டிக் கொடுக்கலாகாது.

அரசாங்கத்தினர்தான் உலகியல் வளர்ச்சியோடு மத வளர்ச்சியிலும், அதற்கு தாங்கள் அளிக்க வேண்டிய போஷணையை எப்போதும் நினைவு கொண்டிருக்கும் அளவுக்குக் கவனம் கொண்டிருக்க வேண்டுமேயின்றி, மதத்தலைவர்களும் அதே போல் அரசயில் துறையில் கவனம் செலுத்த வேண்டுமென்றில்லை. அவர்களது முழுக்கவனமும் மதம் குறித்ததாகவே இருத்தல் வேண்டும்.

தற்போது சுதந்திரமாகப் புதிய அரசாங்கம் ஏற்படுவதால் அத்துறையினரின் பங்கையே முதற்கண் எடுத்துக் கூறப் புகுந்தோம்.

---

## அரசு புரிய வேண்டிய மத போஷணை அதனால் அரசு பெறும் லாபம்

பிரஜைகளின் உள்ள உயர்வுக்கு உதவுவதில் அரசாங்கத்திற்குப் பங்கு உண்டு என்ற காரணத்தோடு, மத வளர்ச்சியின் வழியே ஏற்படும் உள்ளத்தின் உயர்வால் அரசாங்கத்திற்கே நேராக ஒரு லாபமும் உண்டு என்பதை ஓர் அரசாங்கம் எல்லா மதங்களுக்கும் ஆதரவு தந்துதவ வேண்டுமென்பதற்கு ஓர் உபகாரணமாக (துணைக்காரணமாக)க் காட்ட விரும்புகிறோம். தற்போது ஒரு நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் மீறி ஏராளமான குற்றங்கள் நடைபெறுவதால் நீதிமன்றங்கள், உள்நாட்டுப் பாதுக்காப்பான போலீஸ் ஆகியவற்றுக்கு அரசாங்கம் ஏராளமாகச் செலவழிக்க வேண்டியுள்ளது. அதோடு சட்டத்தையும் ஒழுங்கையும் காக்கும் பணி மீகக் கடினமானதாகவும், அரசாங்கத்திற்கு மிகுந்த மனச்சுமையேற்றுவதாகவும் உள்ளது. இச்செலவில் ஒரு சிறு பங்கினை மதங்களின் போஷாணைக்காக்கி, எல்லா மதஸ்தர்களுக்கும் ஆலயத் திருப்பணி செய்வது, எல்லா மத ஸ்தாபனங்களுக்கும் திரவிய காணிக்கையளிப்பது, ஸத்ஸங்கங்களுக்கு மானியமளிப்பது, ஸத்துக்களான யாவருக்கும் சம்மானமளிப்பது என முற்கால மன்னர்கள் செய்தாற் போல் செய்து மதாபிமானம் வளர்வதற்காகச் செலவிட்டாலே போதும், அதன் வழியே மக்களின் உள்ளம் உயர்ந்து பண்பட்டு, முற்காலத்திலிருந்தாற்போலவே குற்றங்களும் வெகுவாகக் குறைந்துவிடும். எனவே நீதித்துறை, போலீஸ் துறை ஆகியவற்றின் தேவையும் வெகுவாகக் குறைந்து அரசாங்கத்திற்கு நீதி, பொறுப்புச் சுமை என்ற இரு இனத்திலும் நிகர லாபம் கிடைக்கும். முற்காலத்தை விடத் தன்னிச்சையாக மக்கள் நடக்கத் தொடங்கியிருக்கும் இக்காலத்தில், அன்றை விட ஆசைகளையும், பேராசைகளையும் தூண்டிவிடக்கூடிய பொருள்களும், கொள்கைகளும் நாள்தோறும் மலிந்து, குற்றம் புரியும் வாய்ப்புகளும் பெருகிவரும் விஷமயமான சூழலில் மாற்று மருந்தாம் அமிர்தமாக மேற்சொன்ன விதங்களில் அரசாங்கம் அளிக்க வேண்டிய மத போஷணையும் முன்னைக் காட்டிலும் முக்கியத்துவம்

பெறுகிறது.

எனவே முடிந்த முடிவாக, ஒரு நாட்டில் நன்மக்கள் பெருகி, குற்றங்கள் குறைய வேண்டுமெனில் அதன் அரசாங்கம் மதபோஷணை அளிப்பதைத் தனது கடமைகளில் ஒன்றாகக் கொள்ள வேண்டுமென்றாகிறது. இதனைத் தொடர்ந்து, 'ஸெக்யூலரிஸம்' என்பதை எம் மதமும் சாராத்தன்மை என்று தப்பர்த்தம் செய்து கொண்டு எதற்குமே அதரவு தராது விலகி நிற்பதை விடுத்து, குறிப்பிட்டதொரு மதத்தை மட்டும் சாராது எல்லாவற்றையும் ஆதரிப்பதே முறையான அர்த்தமெனப் புரிந்து கொண்டு அரசாங்கம் செயலாற்ற வேண்டும் என்றுமாகிறது.

இன்று அநேகமாக எல்லா நாடுகளிலுமே பல்வேறு மதத்தினர் கூடி வாழ்வதால், எல்லா மதங்களையும் சமநோக்குடன் ஆதரித்து, அவற்றின் அபிவிருத்திகளுக்கான போஷணையை அரசாங்கங்கள் அளிப்பதே

'ஸெக்யூலரிஸம்' எனப்பெயர் கொண்ட கொள்கைக்குப் பொருத்தமாக இருக்கும். உலகவியல் என்பதே நவீன விஞ்ஞானத்தாலும் புரட்சிக் கருத்துக்களாலும் உலகெங்கிலும் ஓங்கிப் பரவி, ஆன்மவியல் அடித்துச் செல்லப்படும் ஆபத்துக் கட்டத்தில் ஜன சமுதாயம் இருக்கும் இத்தருணத்தில், மக்கள் மாக்களாகி விடாமல் காக்க வேண்டுமெனில் இத்தகைய செக்யூலரிஸமே நடைமுறையாக வேண்டும்.

---

## அரசு போஷணை:ஹிந்து மதமும் பிற மதங்களும்

எல்லா மதங்களின் வளர்ச்சிக்காகவும் நம் நாட்டு அரசாங்கம் பொருட்செலவு மேற்கொள்ள வேண்டுமென கூறியது குறித்து ஒரு விஷயம் தெளிவுபடுத்த விரும்புகிறோம். இதனை ஹிந்து மதம் தவிர்த்த மற்ற மதஸ்தர்களும் நடுநிலையிலிருந்து கவனித்து ஏற்க வேண்டுமென விரும்புகிறோம்.

அம் மதங்களில் முக்கியமாகவுள்ள இரண்டின் வளர்ச்சிக்கு அரசாங்கத்திலிருந்து பொருளுதவி தேவைப்படாது எனும் அளவுக்கு அள்ளிச் சொரிந்து கொண்டேயிருக்க அதற்கென்றேயான ஸ்தாபனங்கள் இருப்பது உலகறிந்த உண்மை. ஸ்தாபன ரீதியில் அமைக்கப்பட்டவை அவை, ஓர் அரசாங்கம் போலவே செயற்படுபவை. முற்காலத்தில் அரசாங்க முறைமையே பிற நாடுகளிலும் தமது அரசை விஸ்தரிப்பதாக இருந்தது போல, இன்றைக்கும் அம்மதங்கள் பிற மதத்தினரையும் தம்மதமாக்கி, அதை விஸ்தரிக்கப் பலவித உபாயங்களைக் கைக்கொண்டிருப்பதையும் உலகு அறியும். இன்றுள்ள நிலையில் மதம் வளருவதற்கு மட்டுமின்றி, ஏராளமாகச் செலவிடவும் அவை பெரும் வசதி பெற்றிருப்பதும் யாவரும் அறிந்த யதார்த்த உண்மையே.

இத் தேசத்தின் மிகவும் பெரும்பாலான ஹிந்து மதத்தவரே இங்கு மாறுபட்டு நிற்பவர். அவர்களது அவல நிலைக்கு ஒரு சிறிய எடுத்துக்காட்டு பிற மதஸ்தர்கள் புது ஆலயங்கள் கட்டுவதற்கும், பழுதற்ற அவர்களது பழைய ஆலயங்களைப் புதப்பிப்பதற்கும் நிதியத்திற்காக வேண்டுகோள் விளம்பரங்கள் செய்வதாக நாம் பார்ப்பதேயில்லை. ஹிந்துக்கள் விஷயத்திலோ ஒரு சிறிய கோயிலுக்கும் கூட நீண்ட காலம் வேண்டுகோள் விடுப்பதையும் பார்க்கிறோம். ஸ்தாபனம், தனி மனிதர் என இருவகைப்பட்ட பக்கபலமும் ஹிந்து மதத்திற்கு இல்லாததையே இது காட்டுகிறது.

---

## ஹிந்து மதத்தின் நிறுவன அமைப்பு:பண பலமும் ஆள்பலமும் இல்லாதது

ஸ்தாபன ரீதியில் மதத்தைக் கட்டிக்காப்பது என்பதைவிட, தனி மனிதர் ஒவ்வொருவரும் தமது தர்மப்படி மதாநுஷ்டானங்களைச் செய்து அவர்தம் சொந்த வாழ்க்கையின் சக்தியாலேயே மதம் காக்கப்பட வேண்டும் என்பதே ஆதிகாலத்திலிருந்து ஹிந்து மதக் கொள்கையாகவும் நடைமுறையாகவும் இருந்து வந்திருக்கிறது. 2500 வருடம் முன்பு அவ்வாறு

அநுஷ்டானத்தாலேயே ஜீவிய உதாரணம் படைத்து மனத்திற்கு உயிரூட்டியவர்களின் தொகை நலிவு கண்ட போதுதான், இங்கு ஹிந்து மத தத்துவ சாஸ்தீர அடிப்படையையே கொண்ட பௌத்தம் என்ற புது மதம் நிறுவப்பட்டது. அதுவோ ஸ்தாபன ரீதிக் காப்புக்கு முக்கியமான இடமளிப்பதாக உருவாக்கப்பட்டது. புத்தரிடம் சரண் புகுவதோடு 'சங்கம்' என்ற பெயரில் மதப் பயிற்சி கொடுக்கவும் மதப்பிரசாரம் செய்யவும் அமைக்கப்பட்ட ஸ்தாபனத்திடம் சரண் புகுவதும் அதன் ஆதாரக் கோட்பாடுகளில் ஒன்றாயிற்று. புது மதம் உருவாகி வளர வேண்டுமாயின் பழைய மதஸ்தரையே மதம் மாற்றினாலன்றி எவ்வாறு இயலும்? அவ்வாறே நடைபெற்றது. அந்த நிலையில்தான் ஸ்ரீ ஆதி சங்கராசாரிய சுவாமிகள் தோன்றி இனி ஹிந்து மதத்திற்கும் ஸ்தாபனக் காப்பு ஏற்படுத்த வேண்டிய அத்தியாவசியம் உண்டாகியுள்ளதென உணர்ந்து திருமடங்களை நிறுவலானார். பிற்பாடு ஹிந்து மதத்திலேயே பிற மரபுகள் பிறந்த போதும் அவர்களுக்கும் இவ்வாறே ஸ்தாபனங்கள் நிறுவப்பட்டன. இன்றளவும் இந்த எல்லா மரபுகளின் திருமடங்களும் இயங்கி வருகின்றன. ஆயினும், அவற்றுக்கெல்லாம் பொது மதமாக இப்பரந்த பாரத கண்டமெங்கணும் கோடானுகோடியர் தழுவியுள்ள ஹிந்து மதத்திற்கான ரட்சணையை அளிக்கப் போதுமான திரவிய பலமோ, ஆள்கட்டு என்ற பலமோ அவற்றுக்குக் கிடையாது. மடத் தலைவரது அநுஷ்டான பலத்தாலும், அவர் ஜீவிய சக்தியுடன் உபதேச ரூபமாகச் செய்வதாலும் மதத்தை ரட்சிப்பதே சிலாக்கியமென்றும் மடங்கள் திரவியம், ஆள்கட்டு ஆகியவற்றில் மிதமிஞ்சிப் பலம் பெற்றால், அது ஆத்மிகச் சூழ்நிலைக்குக் குந்தகம் விளைவிக்குமென்றும நம் மதப் பெரியோர்கள் உணர்ந்திருந்ததாலேயே இவ்வாறு வரம்புக்குக் கட்டுப் படுத்தியிருந்தது.

---

## மன்னர்களும் மக்களும் செய்த மதபோஷணை

எனினும், மன்னர்களும் மக்களும் தாமாகவே நல்ல மதாபிமானமுள்ளோராயிருந்ததால் அவர்கள் மூலமே பொருளாலும் ஆள்கட்டாலும் காப்பளிப்பது எனும் அம்சம்

நல்லபடியாக நிறைவேறி ஹிந்து மத போஷணை வெகு நீண்டகாலம் வரையில் நன்கு நடந்து வந்திருக்கிறது.

முக்கியமாக ஆலய வழிபாடே ஒரு மத சமூகத்தினரிடம் மதத்தைக் காத்துக் கொடுப்பதாக இருக்கிறது. சமூகத்தினரை மதத்தால் காத்துக் கொடுப்பதும் முக்கியமாக ஆலய வழிபாடுதான். இவ்வாறு முக்கியத்துவம் பெற்ற ஹிந்து மத ஆலயங்கள் நாடெங்கும் பரவியிருப்பதால் அவற்றுக்குத் திருப்பணி செய்து, அங்கு வழிபாடுகள் முறைப்படி நடக்கச் செய்தலே மத ரட்சணைக்கு மையமாக இருந்ததும், இருப்பதும் ஆகும். மாபெரும் அளவினதாக அநேக ஆலயங்கள் கொண்ட ஹிந்து மதத்தில் ஆலயத் திருப்பணிக்குத் தேவைப்படும் திரவியமும் மாபெரும் அளவினதே. இதையும் ஏற்று, காப்புப் பணியை ஆற்றியது முக்கியமாக மன்னர்களும் மக்களுமே;மதத்திற்கென்று ஸ்தாபனமாக அமைக்கப்பட்ட திருமடங்கள் இதில் ஆற்றிய பங்கு சிறியதே.

---

## பிற மதத்தினர் ஆட்சியில் ஹிந்து மத போஷணையின் நலிவு

வெளிநாட்டுப் புறச் சமயத்தினரின் அரசாட்சி ஏற்பட்டதிலிருந்து இந்த அரசாங்க போஷணை நலிவு காணத் தொடங்கியது. அப் புறச் சமயத்தினரில் மேல் நாட்டிலிருந்து வந்த வெள்ளையரின் ஆட்சி ஏற்பட்ட பின்னரோ, அவர்தம் வாழ்க்கை முறையிலேயே மோகிக்கத் தொடங்கிச் சொந்தமான சமயக் கலாசாரத்தைப் புறக்கணிக்கத் தலைப்பட்ட ஹிந்து சமுதாய மக்களும் தங்களது மதரட்சணையில் அக்கறை இழக்கலாயினர்.

---

## சுதந்திரப் போராட்டம் செய்யத் தவறிய விஷயம்;ஹிந்து மதம் கண்ட பாதிப்பு

சுதந்திரப் போராட்டமும்கூட இந்த அம்சத்தில் மக்களை உரிய திசையில் திருப்பிவிடத் தவறிவிட்டது என்ற துரதிருஷ்டவசமான உண்மையைக் கூறாதிருக்கவியலாது. இப்போராட்டத்தின் முக்கியமான தலைவர் மேல்நாட்டினரின் ஆட்சியைக் களைவதோடுகூட, அல்லது அதனினும் முக்கியமாக, அவர்தம் வாழ்முறையில் இந்தியர்களுக்கு ஏற்பட்ட மோகத்தையும் களைந்தெறிய வேண்டுமென்ற கொள்கை உடையவராயினும், ஏனைய போராட்டத் தலைவர்களும் அவற்றைப் பின்பற்றிய ஏராளமான மக்களும் அதில் அவ்வளவாகக் கவனம் கொள்ளவில்லை. நாட்டை அந்நியரின் அரசியல் ஆளுகையிலிருந்து மீட்பதொன்றுக்கே முழு கவனமும் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் கருதியதால், மக்களின் மனப்பான் மையையும் வாழ்முறையையும் அந்நிய வழிகளின் ஆளுகையிலிருந்து மீட்பதற்கு எந்த முயற்சியும் செய்யப்படவில்லை. நாடு அந்நியராட்சியிலிருந்து அரசியல் சுதந்திரம் பெறும்போது அதிலுள்ள பிரஜைகள் ஹிந்து மதம் மட்டுமின்றி எம்மதத்தினராயினும் ஏதோ ஒரு மதத்தின் மூலம் உள்ளவுயர்வு பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்பதைக் கருதாது, அரசியல் சுதந்திரத்திற்காக மட்டுமேதான் போராட்டம் நடத்தப்பட்டது. எனவே குறிப்பாக ஹிந்து மதஸ்தர் மதாபிமானத்தில் பின்னடைவு காணும் நிலையே நீடித்து வந்தது. அந்நிலையில்தான் இறுதியாகச் சுதந்திரம் வந்திருப்பதும்.

இங்கு கவனத்திற்குரிய அம்சம் யாதெனில், இந்திய மக்களில் ஹிந்துக்கள் மாத்திரம்தான் இவ்விதம் சுயமதாபிமானம் குன்றியது. இஸ்லாமியர் எப்போதுமே தீவிரமான சுயமதப் பற்றும் சமுதாயக் கட்டுப்பாடும் உள்ளோராதலின் அவர்கள் மேனாட்டு வழிகளில் ஹிந்துக்கள் போல் மயங்கி சுய மதக்காப்பில் பின்தங்க வில்லை. கிறிஸ்துவர்களோ அம்மேனாட்டினரின் மதத்தைச் சேர்ந்தோரேயாதலின், அவர்கள் விஷயத்தில் இப்பிரச்னை எழும்பவேயில்லை. அதாவது ஹிந்து மதம் மட்டுமே பாதிப்புற்றது.

சுதந்திரப் போராட்ட காலத்தின் போதும் ஹிந்து சமயத்திற்காகவும் அதன் சமூகத்தினருக்காகவும் சமய ஸ்தாபனம் எனக் கூற முடியாமல் சமூக ஸ்தாபனமாகவே

இருந்து கொண்டு எழுச்சியுடன் போராடிய ஓரிரு இயக்கங்கள் ஆற்றிய சிறு பங்கைத் தவிர, மாபெரும் சுதந்திரப் போராட்ட இயக்கம் எதுவும் செய்யாமல், ஹிந்து சமயம் பின்னடைவிலேயே உள்ள நிலையில்தான் முடிவாகச் சுதந்திரம் வந்திருப்பது.

இந்த நடைமுறை உண்மைகளை ஹிந்துக்களல்லாதாரும் நடுவு நிலையிலிருந்து நோக்கினால், சுதந்திர பாரத அரசாங்கமானது மக்களின் உள்ள உயர்வுக்குத் தனது பங்கான பணியை ஆற்ற வேண்டுமென்றும், மதத்தின் மூலம்தான் அவ்வுயர்வு நடப்பதாக சரித்திரம் காட்டியிருப்பதால் இங்குள்ள எல்லா மதங்களுக்கும் எம்மதமாயினும் போஷணையளிக்க வேண்டுமென்றும் உணர்ந்து

அதைச் செயற்படுத்துமாயின், மிகவும் பாதிப்புற்றிருப்பதும் மிகப் பெரும்பாலோருக்கு உரியதுமான ஹிந்து மதத்திற்கே அரசாங்கதத்தின் வழியாக அதிகப் பொருள் உதவி அளிக்க வேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளவே செய்வர்.

---

## அனைத்து மத மக்களும் சகோதரச் சமூகமாக

மதத்தைக் காப்பது போன் விஷயங்களில் அரசாங்கம் செய்வதைவிட மக்களே செய்யக்கூடியதுதான் மிக அதிகம். முதலில் ஒவ்வொரு மதத்திலும் விசுவாசமாக ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் அம்மதத்திலுள்ள பிறரையும் தட்டி எழுப்ப வேண்டும். இதற்கு ஹிந்து மதத்திலேயே அதிகத் தேவை இருக்கிறது. ஏனெனில், பிற மதஸ்தர் யாவருமே தூங்காமல் விழிப்புடன்தான் இருந்து வருகின்றனர். இவ்வாறு எந்த ஒரு மத சமுதாயமும் முழுதாக அம்மதத்திடம் விசுவாசத்துடன் ஒழுகச் செய்ய அந்தந்த மதத்தினரே விசுவாசத்துடன் ஒழுகச் செய்ய அந்தந்த மதத்தினரே முயல வேண்டும். மேலும், ஒவ்வொரு மதத்தினரும் பிற மதத்தினரே முயல வேண்டும், மேலும், ஒவ்வொரு மதத்தினரும் பிற மதத்தினருக்கும் தமது நியாயமான உரிமைகளையும், வாதங்களையும் அன்போடு

எடுத்துச் சொல்லி, அவர்களது ஒப்புதலைப் பெற முயன்று பார்க்க வேண்டும். ஏனெனில் இந்நாட்டின் பிரஜைகள் எல்லோரும் எம்மதத்தினராயினும் சகோதரச் சமூகமாகச் சேர்ந்து வாழ வேண்டியவர்கள். அப்படியின்றி மதபேத உணர்வினால் பரஸ்பரச் சர்ச்சையிலும் சண்டையிலும் ஈடுபட்டோமாயின், நமது சொந்த வாணாளும் வீணாகி, நாட்டின் அமைதியும் குலைவது தவிர ஒரு பயனும் விளையாது. ஆகையால், முதற்கண் பிற மதத்தினர் என்றவுடனேயே, எதிர்ப்புணர்ச்சியோடுதான் வாதிடுவது என்றில்லாமல், நேயத்துடனேயே அணுகி, தங்களுக்குள் நியாயமான உரிமைகளைப் பொறுமையாக எடுத்துச் சொல்லிப் பார்ப்பது என்ற மனப்பான்மையை வளர்த்துக்கொள்வது அவசியமாகும். இதற்கு நாட்டின் மிகப் பெரும்பாலோராக உள்ள ஹிந்து மதத்தோரே வழிகாட்ட வேண்டும்.

இவ்வாறு சொல்லுவது, அம்மதத்திலுள்ள மானரோஷ உணர்ச்சிகள் மிக்கோருக்கு அவ்வளவாக ஏற்புடையதாக இராதுதான். காரணம் என்னவெனில், பொதுவாகச் சிறுபான்மையினர்தான் பெரும்பான்மையினரிடம் உரிமைகளை இழந்து அவர்களிடம் குழைந்து செல்வதாக இருக்கும். எவருக்குப் பெரும்பான்மையோ அவருக்கு பலமும் பெரியதாயிருக்குமாதலால் இதுவே உலக இயற்கை. ஆனால் விந்தையாக இந்நாட்டிலோ இதற்கு மாறான நிலையாக உள்ளது!

---

## இந்தியாவில் சிறுபான்மை - பெரும்பான்மையினரின் விசித்திர நிலைமை

ஆதிகாலம் தொடங்கி இங்குள்ள பெரும்பான்மை மதத்தைச் சேர்ந்தவர் பெரும்பாலும் சாத்துவீகர்களாகவும் ஏனையோர் அவர்களைக் காட்டிலும் வன்மை படைத்தவராகவுட்ம இருந்துள்ளதைப் பிற நாட்டினரில் பலரும் கண்டு கூறியுள்ளனர். அதோடுகூட, சுதந்திரப் போராட்ட இயக்கத்தின் முக்கியமான ஹிந்துத் தலைவர்கள் சமரஸம்

என்ற பெயரில் சிறுபான்மையினருக்கு மிகவும் விட்டுக் கொடுத்துக் கொண்டே போயிருப்பதில், இன்று அத்தலைவர்களே வருத்தப்படும்படியாக இத்தேசத்தைப் பிளந்து ஒரு பகுதியை ஒரு சிறுபான்மை மதத்தோர் தங்களது தனிநாடாக ஆக்கிக் கொள்ளுமளவுக்கு அவர்கள் வன்மையில் வளர்ச்சி கண்டிருக்கிறார்கள். பெரும்பான்மை மதஸ்தரோ தங்களது நியாயமான உரிமைகளுக்கு அரசாங்கத்திடம் மன்றாடவும் போராடவும் வேண்டிய விபரீதமான நிலை இந்நாட்டில் ஏற்பட்டுள்ளது. இந்நிலையில் நமது யோசனைக்குச் சம்மதிக்கவியலாமல், 'ஆதியிலிருந்தே இந்நாட்டிற்கேயான மதத்தை, இன்றைக்கும் இங்கு மிகவும் பெரும்பான்மையாயுள்ள மதத்தைச் சேர்ந்த ஹிந்துக்கள் பிற மதங்களிடம் முதலடி வைத்துத் தங்களது உரிமைகளின் நியாயத்திற்கு அவர்களிடம் ஒப்புதல் கோருவதாவது?' என்று ஒரு சாரார் கருதக் கூடியது இயற்கையே. எனினும், நமது சீர்தூக்கிப் பார்த்த முடிவு யாதெனில், எவராயினும் எவரிடமாயினும் பிற காரணம் யாவற்றையும் ஒதுக்கி, முதற்கண் அன்பால் பரஸ்பர நல்லிணக்கம் கொள்ள முயலுவதே நமக்கும் நல்லது. நாட்டிற்கும் நல்லது. அது பயன்தராத போதே பிற உபாயங்களை மேற்கொள்ள வேண்டும். தேவையாயின் அப்போது அதனை வலியுறவே செய்யலாம்.

இங்கு கூறவிரும்பியது, மத வளர்ச்சிக்கு அரசாங்க உதவி பெறமுடியுமாயின் அப்போது ஹிந்து மதத்திற்கே அதில் அதிகமான பங்கு அளிக்கப்படவேண்டும் என்பதன் நியாயத்தைப் பிறருக்கு அன்புடன் எடுத்துச் சொல்லி அவர்களது சம்மதத்தைப் பெற முயல வேண்டுமென்பதுதான்.

எனினும், அரசாங்கம் எல்லா மதங்களையும் ஒன்று போலவே கருத வேண்டுமாதலால், அதைக் காட்டப் பிற மதங்களுக்கும் அன்பின் அடையாளமான 'டோகன்' என்பது போலத் திரவிய சகாயம் செய்யலாம்;செய்ய வேண்டுவதே!

---

## அரசு ஆதரவு தரவேண்டிய இனங்கள்

நாம் கூற வந்தது, எல்லா மதஸ்தரும் தமது மத நூல்களைப் பதிப்பித்தப் பரப்புவதற்கும், சமயப் பேச்சாளர்கள் மூலம் மக்களக்கு மத விஷயங்களை எடுத்துச் சொல்வதற்கும் இவற்றிலும் முக்கியமாகத் தத்தமது ஆலயங்களைப் பழுதுபார்த்துப் புதப்பித்துக் கொள்வதற்கும், தேவையான இடங்களில் சர்ச்சைக்கும் இடமில்லாமல் புதிய ஆலயங்கள் எழுப்பிக் கொள்வதற்கும், இன்னோரன்ன பல வகைகளுக்கும் அரசாங்கம் ஆதரவைத் தந்து, பெரும் பங்கோ, சிறு பங்கோ மானியமாக வழங்குதல் வேண்டும். புதிய அரசாங்கம் மேற்கொள்ளவேண்டிய செக்யூலரிஸம் இவற்றக்கு உதவுவதாக இருத்தல் வேண்டும்.

---

## மத விஷயங்களில் மக்கள் ஆதரவே மூலதனம்

மேற்சொன்னபடி மதத்தை வளர்ப்பதற்கான பணிகளின் செலவில் ஒரு பங்கைத்தான் அரசாங்கம் மேற்கொள்ள வேண்டுமென விரும்புகிறோமேயன்றி முற்றிலும் அரசாங்கமே செலவழிக்கவேண்டும் என்று நாம் கூறவில்லை. அப்படிச் செய்தால் அப்போது இப் பணிகளுக்காக மக்கள் செலவிடுவதென்பது நின்றுவிடும். அது கூடாது. ஏனெனில் மத விஷயங்களில் மக்களின் ஆதரவே மூலதனம். உடலுழைப்பாக மட்டுமின்றி, திரவியத் தியாகமாகவும் அவ்வாதரவை அவர்கள் தர வேண்டும். அரசாங்கம் மட்டுமே செலவிடுவது என்றால் அப்போது மக்களின் அக்கறையும் ஈடுபாடும் குறைந்து அவர்களுக்கு மெத்தனம் ஏற்பட்டுவிடும். எனவே அரசாங்கம், மக்கள் ஆகிய இரு சாராரும் பங்கு கொண்டே மதாபிவிருத்திக்கான பணிகள் நடைபெறவேண்டும்.

---

## மதச் சுதந்திர உரிமையும் மதமாற்றமும்

மேற்சொன்ன மதாபிவிருத்தியில் மதப் பிரசார விஷயமாக

ஒரு கிளையம்சத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறோம். கிளை எனினும் இதுவே மேற்சொன்ன எல்லா அம்சங்களையும் கிளைகளாகக் கொண்ட அடிமரமும் வேருமாக மதிக்கத்தக்க ஆதாரமான விஷயமாகும்.

அதாவது அரசியற் சுதந்திரம் பெற்ற நம் நாட்டு மக்கள் யாவரும் மதச் சுதந்திரமும் பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்தின் மீதுதான் மேற்சொன்ன யாவுமே கூறப்பட்டன. அதற்கு நமது அரசியல் நிர்ணயச் சட்டம் நிச்சயமாக உறுதி கூறும் என்ற நம்பிக்கையின் மீதே கூறப்பட்டன. இது ஒருவர் தமக்கு விருப்பமான மதத்தைத் தழுவியிருக்கும் சுதந்திரத்தைப் பெற்றிருப்பதற்குச் சட்டபூர்வமாக உரிமை வழங்குவதேயாகும். அவ்வாறு ஒருவருக்கு விருப்பமானது என்பது மிக மிகப் பெரும்பாலும் அவர் எம்மதத்தில் பிறந்தாரோ அதுவாகத்தானிருக்கும். உடன் வாழும் பெற்றோர், சகோதரர் ஆகியோரைப் போலப் பிறந்த காலம் தொட்டுப் பழகிய அம்மதமே ஒருவருக்கு விருப்பமானதாக இருப்பதே பொது இயற்கை. எனினும் சிலருக்கு வேற்று மதத்தில் விருப்பம் ஏற்படலாம். அல்லது எம்மதத்தையும் விரும்பாத நிரீச்சுவர வாதத்தில் விருப்பம் ஏற்படலாம். எவ்வாறாயினும், அவரவரும் மதம் குறித்த எந்த விருப்பத்தையும் பற்றியொழுகுவதற்கு உரிமையளிப்பதே மதச் சுதந்திரமளிப்பதாகும்.

சாத்திரப்படி தாய்மதத்தைத் துறப்பது பெற்ற தாயைத் துறப்பது போன்ற பாபமாகவே கருதப்படுகிறதெனினும், சாத்திர வழிகளைச் சந்தர்ப்பத்தையொட்டி மாற்ற இடம் தராமல் உள்ளபடி இரட்சிப்பதே மதத் தலைவர்களான எம் போன்ற மடத்தலைவர்களின் கடமையெனினும், தற்போதுள்ள ஜனநாயக - தனிநபர்ச் சுதந்திரங்களின் தீவிரமான சூழ்நிலையில் அரசாங்கப் பூர்வமாக இந்நாட்டில் சாத்திர வழியைத்தான் அமல்படுத்த வேண்டும்ட என்று கட்டாயப்படுத்துவதற்கு இடமே இல்லை என்று ஆகிவிட்டதால், இவ்விஷயத்தில் எவரும் தமது விருப்பப்படி எந்த மதத்தையும் தழுவ சுதந்திரம் உண்டு என்று மாற்றுக் கருத்தை மதித்துத்தானாக வேண்டியுள்ளது என்ற நிர்ப்பந்த நிலையிலேயே இவ்வாறு கூற முற்பட்டோம்.

பிரஜைகள் மதச் சதந்திரம் பெற்றுள்ள இந்நிலையில், எல்லா

மதத்தலைவர்களும் மதாபிமானிகளுக்கும் தத்தமது மதங்களின் கொள்கைகளையும், வழிபாடு முதலான செயலுருவிலான வழிமுறைகளையும் தாங்கள் பின்பற்றுவதோடு, பிறருக்கும் பரப்பிப் பிரசாரம் புரியவும் சுதந்திரமான சட்டவுரிமை இருத்தல் வேண்டும். அந்தப் பிரசாரம் அவர்கள் தங்களுக்கே அதில் ஆழ்ந்த ஈடுபாடும் அநுபவ அறிவும் ஏற்படுத்திக் கொள்வதற்கும், அம்மதஸ்தர்களாகவே உள்ள பிறருக்கும் அவற்றை ஊட்டவும், மொத்தத்தில் பரஸ்பரம் மதத்தினால் தாங்களும், தங்களால் மதமும் இரட்சணை பெறுவதற்குப் பேருதவி புரிவதாகவும் இருக்க வேண்டும்.

---

## பிரசாரமும் துஷ்பிரசாரமும்

இப்பிரசார விஷயத்தில்தான் ஒருவர் தமது விருப்பப்படி ஒரு மதத்தைத் தேர்ந்தெடுப்பதில் மதமாற்றம் என்ற விஷயம் வருகிறது. பிரசாரம் என்பதைக் கூர்ந்து கவனத்துடன் கண்குத்திப் பாம்பாகக் கவனித்து, துஷ்பிராசாரமாகாமற் காப்பாற்றுவதற்கான விஷயம்.

பிரசாரம் செய்கையில், ஒரு மதக் கொள்கைகள் முதலியன அனைவருக்குமான பொதுச் சமுதாயத்தின் முன் வைக்கப்படுகின்றன. ஒரு மதத்தின் நூல்கள், சொற்பொழிவுகள் முதலியவற்றைப் பிற மதத்தினரும் படித்தும் கேட்டும் அதனைப் பற்றி அறிய முடிகிறது. அவ்வாறு அறிந்ததில் அம்மதத்தின் கொள்கைகள், அநுஷ்டான முறைகள் முதலியவற்றில் சுயமாக விருப்பம் ஏற்பட்டு பிற மதஸ்தர் ஒருவர் அதில் சேர்வதுதான் உண்மைத்தன்மை உடையதாகும். ஒருவருடைய சுயமான விருப்பம் ஒன்றின் மீது மட்டுமேதான் அவ்வாறு தாய் மதத்திலிருந்து பிற ஒன்றுக்கு மாறுவது உண்மைத்தன்மை உடையது.

---

## தவறான உபாயங்களுக்குத் தடை, தண்டனை

உண்மைகளையே உரிமையாக்கித் தரத்தான் தர்மம். தர்மத்தை அமல் செய்யத்தான் சட்டம். எனவே சட்ட பூர்வமாக மதச் சுதந்திர உரிமை அளிக்க அரசாங்கம் முற்படுகையில், 1. சுய விருப்பம் ஒன்றின் மீதேயும், 2. ஒரு மதத்தின் கொள்கை, நடைமுறைப் பயிற்சி ஆகியவற்றில் மட்டுமே அச்சுய விருப்பம் இருக்கும் போதும்தான் மதமாற்றம் நடைபெறுகிறது என்ற உறுதிப்பாட்டை உண்டாக்குவதற்கு உதவியாகவும் ஒரு சட்டவிதி இயற்றுதல் அவசியமாகிறது. மத சம்பந்தமேயில்லாத உபாயங்களால் மதமாற்றம் செய்வதைத் தடுக்கும் பொருட்டே இவ்வுறுதிப்பாடு அவசியமாகிறது.

மதப் பிரசாரம் என்பது ஒரு மதத்திலுள்ளோருக்கே அதனை நன்கு பிரகாசப்படுத்திப் பற்றுதலை வளர்த்துக் கொடுக்கும் நோக்கத்திற்காக இன்றி, பிற மதத்தினரையும் அதற்கு மாற்றும் நோக்கத்தைக் கொண்டிருந்தால் துஷ்பிரசாரமேயாகும். துஷ்பிரசாரம் என்பது பொய்மையே, சட்டப்படி குற்றமே. குற்றத்திற்கு இடமளிக்காமல் தண்டனை விதிக்கவே சட்டம். எனவே பிரசாரம்ட என்பதன் மூலம் பிற மதத்தினருக்கு ஒரு குறிப்பிட்ட மதத்தில் சேருமாறு அழைப்பு விடுவதை, மத மாற்றப் பிரசாரம் செய்வதை, அரசியல் நிர்ணயச் சட்டம் தண்டனைக்குரிய குற்றமாக்குதல் வேண்டும்.

மதச் சுதந்திரத்தின்படி பிரசாரவுரிமை அளிக்கப்பட்டுள்ளதே என இதற்கு ஆட்சேபணை செய்வது நிற்காது. ஏனெனில் மதப் பிரசாரம் என்பது அம்மதத்தின் கொள்கை முதலான மதாம்சங்களுக்கு விளக்கமாகவே மட்டும் முடிந்து, அதனாலேயே பிற மதத்தினரும் தானாகக் கவரப்பட்டு அதைத் தழுவுவதற்குத்தான் மதச் சுதந்திரம் இடமளிக்குமேயொழிய, தமது கொள்கைகளை விளக்கி அதனால் பிறரை அம்மதத்திற்கு வருமாறு அழைப்பு விடுப்பதற்கல்ல.

---

## ஹிந்து மதமும் மதமாற்றமும்:முதல் மாற்றத்தைச் சரி செய்யும் மறுமாற்றம்

பிறரைத் தம் மதத்திற்கு மாற்றும் கொள்கையை அடியோடு கைக்கொள்ளாத ஒரே பெருமதமான ஹிந்து மதத்திற்கு இவ்வாறு அதன் கொள்கைகளில் சுய விருப்பம் ஏற்பட்டதன் மீதேதான் பிற நாட்டு நல்லறிஞர், அநுபவிகள் ஆகியோர் ஈர்க்கப் பெற்று அதனைத் தழுவியிருக்கின்றனர் என்பது கவனத்திற்குரியது.

ஹிந்து மதத் தலைவர்களும் பழங்காலங்களில் பவுத்த - சமண மதத்தினரை ஹிந்து மதத்திற்கு மாற்றியுள்ளனரே என எதிர்க் கேள்வி விடுக்கலாம். இதற்கு நமது விடை, அதற்கு முற்காலங்களில் ஹிந்துக்களாகவே இருந்து அப்புறச்சமயிகளின் பிரசாரத்தால் அச்சமயம்களுக்கு மாறியோரைத்தான் அத் தலைவர்கள் மீண்டும் தாய்ச் சமயத்திற்கு மாற்றினர் என்பதேயாம்.

பிற்காலங்களிலோ ஹிந்து மதத் தலைவர்கள் அவ்விரு புற மதங்களில் தலைமுறைகளாக இருந்துவந்த ஆதி ஹிந்துக்களை மீண்டும் தாய்ச் சமயம் மாற்றுவதில் ஈடுபடவில்லை. ஹிந்துக்களில் புதிய தலைமுறையினர் அம்மதங்களுக்கு இழுக்கப்படுவதை மட்டுமே தடுக்க முயற்சி செய்யலானார்கள்.

கவனத்திற்குரிய ஒன்றுண்டு, யாதெனில், இந்நாட்டிலேயே தோன்றிய பவுத்த - சமண சமயங்களுக்கு வேறாகப் பிறநாட்டுச் சமயத்தினருக்கும் கிறிஸ்து சமயம் தோன்றியதற்கு முன்பிருந்தே, அலெக்ஸாந்தர் காலத்திலிருந்து நம் நாட்டுடன் தொடர்பு உண்டாகி, அவர்கள் அரசியல் ரீதியிலும் வாணிப ரீதியிலும் இங்கு குடியேறினரெனினும் அவர்களை ஹிந்து சமயத்திற்கு மாற்ற ஹிந்துக்கள் எண்ணியதுகூட இல்லை. பின்னாளில் முசல்மான்களும், கிறிஸ்துவர்களும் இங்கு பெருமளவில் பிரவேசித்து, அதோடு நில்லாது, ஹிந்துக்களை வலிவுடனேயே மத மாற்றம் செய்தபோதுங்கூட, பிறப்பாலேயே அப்பிற மதத்தாராக இருந்தோரை ஹிந்துக்களாக மாற்ற ஹிந்துக்கள் எண்ணவில்லை.

அதனினும் குறிப்பிட்டத்தக்கதாக, அப்பிற மதங்களை ஏற்கனவே தழுவிவிட்ட ஹிந்துக்களைக்கூட மீண்டும் தாய்மதம் மாற்றாமல் புதிதாக மேன்மேலும் ஹிந்துக்கள் அம்மதங்களுக்கு இழுக்கப்படுவதைத் தடுப்பதற்காக மட்டுமே எதிர்ப் பிரசாரம் செய்தனர்.

கருத்தில் கொள்ளத்தக்க மற்றோர் அம்சம் உண்டு. யாதெனில், பொதுவாக ஹிந்து சமய மன்னர்கள் யாவரும் அந்த எல்லாப் புறச்சமயிகளும் அவரவரது ஆலயங்களை இங்கு எழுப்பிக் கொள்ளத் தாராளமாக அநுமதித்தனர், அவர்களில் பலர் சமய சமரஸத்தில் மேலும் ஒரு படி சென்று அப்புறச் சமய ஆலயங்களுக்கு மானியம் முதலியன அளித்தனர், இன்னும் சில மன்னர்களோ தாங்களே புறச்சமயங்களுக்காக ஆலயங்கள் எழுப்பித் தந்துமிருக்கின்றனர்.

மொத்தத்தில், ஹிந்துக்கள் தாமாக offensive-ல் எதிர்த்துச் சென்று தமது சமயத்திற்கு ஆள் சேர்த்ததே கிடையாது. மேன்மேலும் தம் மதத்தினரின் சங்கியை சிதைவுறாமல் தடுக்கும் தற்காப்பே (defensive-ஏ) அவர்கள் செய்தது.

ஹிந்து சமூகத்தினர் பழங்காலங்களில் பெருமளவில் செய்ததும், தற்காலத்தில் சிறிய அளவில் செய்ய ஆரம்பித்திருப்பதும் என்னவெனில் அம் மதத்திற்கு முன்னர் ஏற்பட்டிருந்த எதிர்ப்பை எதிர்த்துச் செய்யும் புனர் - மதமாற்றம் (re-conversion) தானேயன்றி, பிற மதத்தினராகவே இருப்போரை எதிர்த்துத் தம் மதத்திற்கு மாற்றம் செய்வதல்ல.

இந்த அம்சத்தில் பழங்காலத்தில் செய்ததற்கும் இன்று செய்ய ஆரம்பித்திருப்பதற்கும் மாறுபாடொன்றுண்டு. அன்று பாரதத்திலேயே தோன்றிய பிற சமயங்களுக்கு (பவுத்த - சமண மதங்களுக்கு) மாற்றப்பட்டோரை மீண்டும் ஹிந்து சமயத்திற்கு மாற்றினர். இன்று வெளிநாடுகளைச் சேர்ந்த பிற சமயங்களுக்கு அண்மைக் காலத்தில் மாற்றப்பட்டோரை ஹிந்து சமயத்திற்கு மாற்ற முயலப்படுகிறது.
இம்மாறுபாட்டுக்குக் காரணம்:இங்கேயே தோன்றிய பர சமயங்களில் சரித்திரத்தின் போக்கில் இந்நாட்டில் பவுத்தம் எடுபட்டேவிட்டதெனுமளவுக்குச் சுருங்கிவிட்டது. சமணமோ

ஹிந்து மத அம்சங்களில் பலவற்றைத் தன்னிற் கொண்டு அதன் சகோதர மதம் போலாகிவிட்டது. மேலும் அவ்விரு மதத்தினர் இப்போது நமது நாட்டில் மதமாற்றத்தில் ஈடுபடவுமில்லை. மறுபுறத்தில், வெளிநாட்டுச் சமயங்களைச் சார்ந்தோரின் மதமாற்ற நடவடிக்கைகளோ இன்றும் தீவிரம் குன்றாமலே நடைபெறுகின்றன.

மீண்டும் கவனித்தற்குரிய விஷயம், இத்தகைய நிலவரத்திலுங்கூட ஹிந்துக்கள் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள் முசல்மான்களாகவும், கிறித்துவர்களாகவும் இந்நாட்டிற்கு வந்தோரின் வம்சத்தினரை ஹிந்துக்களாக மாற்றுவதல்ல, ஹிந்துக்களிலேயே சில தலைமுறைகளுக்கு முன் அப் புற மதங்களுக்கு மாறியோரின் வழி வந்தோரைக்கூட மீண்டும் ஹிந்துக்களாக்குவதற்கும் அல்ல. அண்மைக் காலத்தில் அவற்றுக்கு மாற்றப்பட்டோரை மீண்டும் தாய் மதத்திற்கு மாற்றுவதற்கே முயலப்படுகிறது.

---

## மதத் தொடர்பில்லாத உபாயங்கள்;கடும் தண்டனை விதித்தல் வேண்டும்

இதுவரை மதச்சுதந்திரம் பற்றிக் கூறியதெல்லாம் மத விஷயமாகவே பிரசாரம் செய்வது குறித்துத்தான். ஆனால் சரித்திரம் நிகழ்கால நடைமுறையில் காட்டியிருப்பதிலிருந்தோ, தவறான நோக்கம் கொண்ட மதப் பிரசாரம் என்பதைவிடவும் மிகவும் தவறாக, மதத் தொடர்பே இல்லாத உபாயங்களாலும் மதமாற்றம் செய்வதாக ஏற்பட்டிருக்கிறது. எந்தச் சமுதாயத்திலும் அறிஞர்களாகவும், அநுபவிகளாகவும் ஆய்ந்தோய்ந்து பார்க்க அறியாதவர்களாக உள்ளோரே மிகப் பெரும்பாலாராயிருப்பதற்கேற்பவே ஹிந்து சமுதாயத்திலுமுள்ள அப்படிப்பட்ட பாமர மக்கள் இம்முறைகளால்தான் கூட்டம் கூட்டமாக மதமாற்றம் கண்டுள்ளனர்.

இவ்வுபாயங்கள் இரண்டு வகையானவை. இரண்டும் மத அம்சங்களை விளக்கி அவற்றால் பிற மதத்தினருக்கு அதில்

சுயமான பற்றுதல் ஏற்படுத்தாதவையே.

ஒன்று பலவந்தம்: மிரட்டி உருட்டிக் கட்டாயக் கெடுபிடியால் மதமாற்றம் செய்வது. ஒரு மதஸ்தரன் ஆட்சி ஏற்படுகையில் பிற மதஸ்தருக்கு வரி விதிப்பது போன்ற நடவடிக்கைகளும் இப்பலவந்தத்தைச் சேர்ந்தனவே.

இரண்டாவது, வசிய உபாயம்:கல்வியளிப்பது, நோய்ப் பிணி தீர்ப்பது, ஏனைய சமூக நலன்களைச் செய்வது ஆகியவற்றை மத ஸ்தாபங்களின் மூலம் செய்து, உதவி பெறுவோருக்கு உதவு செய்வோரிடம் ஒரு கடப்பாடு உண்டாக்கி, அதை நேர்முகமாகவோ சாதுரியமாகவோ எடுத்துக்காட்டி மதமாற்றம் செய்வது.

இவை யாவற்றினும் கேவலம், லஞ்சமாகப் பொருள் கொடுத்தே ஒரு மதத்தினரை வேறு மதத்துக்கு மாற்றுவது.

பலவந்தம், வசியம் ஆகிய இவ்விரண்டுமே பொய்ப் பிரசாரத்தைவிடவும் தவறான வஞ்சகச் செயற்பாடாக இருப்பதால் சட்டபூர்வமாகப் பெருங்குற்றமாக்கப்பட்டு அவற்றுக்குக் கடும் தண்டனை விதிக்க வேண்டும்.

பிறிதொன்றும் உண்டு. ஒரு பிரஜையின் மதச் சுதந்திரம் என்பது அந்நபர் சுதந்திரமாகச் சுய விருப்பத்தில் ஒரு மதத்தைத் தழுவியிருப்பதற்கான உரிமையாகும். இது அவரது உள்ள உயர்வு என்ற மிகவும் உத்தமமான விஷயம் குறித்ததாகும். உள்ள உயர்வு கண்ட பிரஜைகளால்தான் ஒரு நாட்டின் நல்வாழ்வே என்பதால் அதற்கு ஊறு விளைவித்தால் அது சாதாரணக் குற்றங்களில் சேராமல் பெரிய குற்றங்களிலேயே சேரும். மதச் சுதந்திரம் என்பது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் அங்கீகாரம் பெற்றுவிடும் போது அச்சுதந்திரத்தில் குறுக்கிடுவதும் மிகப்பெரும் குற்றமாகும் என்ற காரணத்தையும் கருத்தில் கொண்டால், பொய்ப் பிரச்சாரம், பலவந்தம், வசிய உபாயம் ஆகிவற்றால் மதமாற்றம் செய்வது எவ்வளவு பெரிய குற்றம் என்பது தெரியும். எனவே அதற்குரிய கடுமையான தண்டனை விதிக்க வேண்டும். ஒருவர் தண்டனைக்காக அஞ்சியே குற்றத்தில்

புகாதபடி தடுப்பதான punishment என்ற

கடுந்தண்டனைக்கான குற்றமாகவே அது சட்டபூர்வமாக ஆக்கப்பட வேண்டும்.

ஆனால் வசிய உபாயத்தால் மதமாற்றம் செய்யப்படும்போதா, அதைக் கண்டுபிடித்து நிரூபிப்பது கடினமாக இருக்கும் எனத் தெரிய வருகிறது. சுய மதத்தினர் மாத்திரமின்றி சகல மக்களும் நல்வாழ்வு பெற உதவி புரிய வேண்டுமென்று தமது மதம் சொல்வதால், அந்த அடிப்படையிலேயே ஒருவரது மதத்தைக் கருதாது அனைவருக்கும் சமூக நலப்பணிகள் செய்வதாக இந்த உபாயத்தைக் கைக் கொள்வோர் கூறித் தப்பித்துக் கொள்ள முடியும். என்றாலும் உதவி பெற்றோர் எத்தகையோர் என்பதை, அவர்களின் சமூகநிலை, அறிவுநிலை, அவர்களில் மதம் மாறியோரின் எண்ணிக்கை ஆகியவற்றைத் தீர்க்கமாக அலசிப் பார்த்து ஆழ்ந்து விசாரணை செய்வதால் உண்மையைக் கண்டுபிடித்து விடலாம். நாட்டினரின் மனவளர்ச்சியில் தனது பொறுப்பை ஓர் அரசாங்கம் உணர்ந்திருந்தால், அது இந்தக் குற்றத்தையும் கொள்ளை, கற்பழிப்பு முதலிய குற்றங்களோடு சேர்த்து வைத்து முக்கியமான கவனம் தந்து தீர்க்கமான புலன் விசாரணை செய்தல் வேண்டும். உள்ளவுயர்வுக்கே ஊறு விளைவித்து, ஒருவரது கொள்கை நோன்பைக் குலைப்பது கொள்ளையடிப்பதோடும் கற்பழிப்பதோடும் சேர்த்து மதிக்கப்பட வேண்டியதேயாகும்.

---

## மதமாற்றம் இருக்கும்வரை தாய்மதத்திற்கு மாற்ற அனுமதி

சட்டம் இயற்றிவிடுவதால் மட்டுமே எந்தக் குற்றமும் நிகழாமல் தடுத்து நிறுத்திவிட முடிவதில்லை. எல்லா நாடுகளிலும் எல்லாக் குற்றங்களும் நடந்து கொண்டுதானிருக்கின்றன. அவ்வாறு சுய விருப்பமொன்றின் மீது மட்டுமேயில்லாத மதமாற்றக் குற்றங்களும் நடைபெறுமாயின், அவை நடைபெறும் வரையில் அவற்றுக்கு எதிர் நடவடிக்கையாகத் தாய் மதத்திற்கே மீண்டும் மதம் மாற்றுவதைக் குற்றமாகக் கருதாமல் அரசாங்கம் அனுமதிக்க வேண்டும்.

சுய விருப்பத்தின் மீது எந்த ஒரு பிரஜையின் எந்த ஒரு மதத்தையும் தழுவியிருக்கச் சுதந்திர உரிமையைச் சட்டபூர்வமாக ஓர் அரசாங்கம் அளிக்கும்போது, கையோடு கையாக, அச்சுதந்திரத்திற்கு ஊறு பயப்பதான மத மாற்றத்தைச் சட்டப்பூர்வமாகத் தடுப்பதில் தனக்குள்ள பொறுப்பிலும் கவனம் செலுத்த வேண்டும் என்பதாலேயே, இவ்விஷயம் அதற்குரிய முக்கியமான கவனத்தைப் பெறாமலிருந்துவிடக் கூடாதெனக் கருதி ஒரு மதத்தின் தலைமைப் பீடங்களில் ஒன்றில் இருப்பவரின் கடமையாக இவ்வளவு விரித்துக் கூறினோம்.

இதனால், எல்லா மதங்களுக்குமே சுதந்திர பாரத அரசாங்கம் ஒருபோன்ற ஆதரவளிக்க வேண்டும் என்ற கொள்கையை நாம் ஆட்சேபிப்பதாக அர்த்தமாகாது. உரிய முறையில் அவ்வாதரவு நல்கப்படுவதை வரவேற்கவும் வலியுறுத்துவுமே செய்கிறோம். அந்த 'உரிய முறை'யையே நமது ஆலோசனைக்கு எட்டியபடி விளக்கினோம்.

---

## இந்தியாவின் உயிர்நிலையே மதமும் ஆன்மிகமும்தான்

நவீன சிர்த்திருத்தக்காரர்களும் போற்றும் பல கருத்துக்களைக் கொண்ட விவேகானந்தர் போன்றோரும், அன்னி பெசன்ட் போன்ற மேல்நாட்டு நல்லறிஞர்களுங் கூட இந்தியாவின் உயிர்நிலையே மதத்தை மையமாகக் கொண்ட அதன் ஆத்மிகந்தான் என்றே வலியுறுத்தியிருக்கின்றனர். அதனை மறந்து, மற்ற துறைகளில் இந்நாடு எத்தனை முன்னேற்றம் கண்டாலும் அது உயிரிழந்த சவத்திற்குச் செய்யும் அலங்காரமாகத் தானிருக்கும் எனச் சுட்டிக்காட்டியுள்ளனர். மக்களின் உலகவியல் ஆசைகள் வெறித்தனமாக வலுக்காதவாறு ஹிந்து மதம் எனப்படும் சநாதன தர்மத்தினால் அவர்களுக்கு ஆன்மிகவியலை மதாசரணைகளாகவும் தத்துவக் கோட்பாடுகளாகவும் கொடுத்து, அவர்களது உலக வாழ்வு சம்பந்தப்பட்ட அனைத்தையும்கூட ஈசனை மையம் கொண்ட சடங்குகளாகப் புனிதப்படுத்தியளித்து, உலகியலுமே

ஆன்மவியலுக்கு உபாயமாகுமாறு உயர்த்திச் சிறப்புச் செய்து ஆதி காலத்திலிருந்து உலக நாடுகளிடையில் தனிச் சிறப்புப் பெற்றது நமது பாரத நாடு. மதவியலின் மூன்று அங்கங்களில் ஒன்றான தர்மம் என்பதை விரித்துக் கூறும் சநாதன தர்ம சாத்திரங்கள், ஒரு மானுடன் செய்யக்கூடிய சகல காரியங்களுமே ஆன்ம நலனுக்குப் பயனாகும்படியாக அவை ஒவ்வொன்றுக்கும் விதி வகுத்துக் கொடுத்துள்ளன. நல்லொழுக்கமாம் அத்தர்மம் ஈசனைச் சுற்றியே படர்ந்திருப்பதாகவும் ஆக்கிக் கொடுத்திருக்கிறது. இவ்வழி முறைகளையே இந்நாட்டு மக்கள் பூர்வ காலத்திலிருந்து பற்றியொழுகி வந்திருப்பதால்தான் பிற நாட்டின் மேன்மக்களும் ஒப்புக்கொண்டு பாராட்டுமாறு இந்நாட்டிலேயே அதிக பட்சமாக மஹான்களும் மத நூல்களும் தத்துவ சாஸ்திரங்களும் தோன்றி, பிற நாட்டுப் பூர்வ காலப் பெரியோர்களும் அவற்றிலிருந்து ஆன்மிக உயர்வு கண்டு வந்திருக்கின்றனர். இவற்றின் துணை கொண்டு தத்தமது சூழ்நிலைகளுக்கேற்ற சித்தாந்தங்களை அவர்கள் உருவாக்கியுள்ளனர். இவ்வாறாக, பிற நாடுகளின் உலகியற் போக்கைச் சமனப்படுத்தும் நாடாகவும் நமது நாடே திகழ் ந்திருக்கின்றது. இன்றைக்கும் மேநாட்டின் உலகியல் சக சாதனங்கள் யாவற்றையும் ஆண்டநுபவித்தும் வாழ்க்கையின் நிறைவைக் காணாத அந்நாடுகளின் பக்குவம் பெற்ற நன்மக்கள் நம் நாட்டுக்கே வந்து ஆன்மவியலில் ஈடுபட்டு அந்நிறைவை எய்துவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

இவ்வாறு சிற்றின்ப உலகியலிலிருந்து பேரின்ப ஆன்மவியலுக்கு வழிகாட்டியாக உலக நாடுகளுக்கு உதவி புரிவதையே தனது தனிப்பெருமையாகக் கொண்ட நமது நாட்டில் அந்த ஆன்மவியலை நாமே புறக்கணித்து மேநாடுகளின் உலகியல் முன்னேற்றத்தில் மோஹித்து அதன் பின்னேயே ஓடும் பேதமையை மெல்ல மெல்லப் பற்றிக்கொண்டு சுதந்திரம் பெறும் இச்சமயத்தில் அது முற்றியும் விட்டது.

---

## இந்தியாவில் மத உணர்வின் நலிவு;ஆயிரம் ஆண்டு

வரலாறு காட்டுவது

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலிருந்தே நாம் அந்நியராட்சிக்கு ஆளாகத் தொடங்கினோம். அப்போது முதலில் வந்தவர்கள் ஆசியாவைச் சேர்ந்த பிற நாட்டவர் தாம். அவர்களிலேயே பல பிரிவினரின் ஆளுகையைப் பல அளவுகளில் பெற்று, முடிவாகப் பல காலம் முற்றிலுமே அவர்களின் ஆளுகை அல்லது படையெடுப்புக்கு ஆளாகும் நிலை நம் நாட்டிற்கு வந்தது. விளைவாக ஆயிரமாண்டுக்கு முன்வரையில் உலகுக்கே வழிகாட்டியாக மதாசரணைகளைப் பற்றுதலுடன் பின்பற்றிய ஹிந்துக்களின் நாடாகவே இருந்த நமது நாட்டில், பிற்பாது அவ்வாசிய நாட்டு அந்நியர்களில் பலர் ஹிந்து மதத்தை எதிர்த்து ஹிம்சை வழியில் செய்த நடைமுறைகளினால் ஹிந்துக்கள், குறிப்பாக இந்நாட்டின் வடபுலத்தினர் தங்களது மதாசாரங்களை நிர்பயமாகவும், நிச்சிந்தையாகவும் பின்பற்ற முடியாமலாயிற்று. இது இப் பாரத நாட்டுக்கேயான தனிப்பெருமையாக அதற்கு ஜீவ சக்தியூட்டி வந்த ஆத்மிக கலாசாரத்தை நலிவுபடுத்தத் தொடங்கியது. அதோடு காலம் செல்லச் செல்ல, இங்கு ஆட்சிக்கு வந்துவிட்ட அந்த அந்நியரின் வழக்குகள், கலை, உடை முதலியவற்றை சிலவற்றை ஹிந்துக்கள், குறிப்பாக இந்நாட்டின் வடபுலத்தினர், தமதாக ஏற்றனர். எனினும் இத்தனையிலும் சற்று திருப்தி தரும் ஓரம்சமாக, இவற்றால் ஹிந்துக்கள் தமது வாழ்க்கை முறை முற்றிலும் அந்த ஆசிய நாட்டு அந்நிய ஆட்சிக்காரர்களுடையதன் பிரதியாக (copy-ஆக) ஆகிவிடாமலே, தமது தனித்தன்மையை ஷீணித்த காரணம், அவர்களை ஹிந்துக்கள் நாகரிகத்தில் தம்மைவிட மேம்பட்டவர்களாக எண்ணாததுதான்.

இவ்வாறு எழுநூறு ஆண்டுகள் சென்றபின், கடைசி முந்நூறு ஆண்டுகளில் ஐரோப்பிய நாட்டு அந்நியர்கள் இங்கு மெல்ல மெல்ல ஆட்சி பிடிக்க ஆரம்பித்ததிலிருந்து தான் நிலைமை விபரீதமாகவே மாறலாயிற்று.

---

## மேல் நாட்டினரின் மறைமுக சாமர்த்தியமும் இரு 'புரட்சி'களும்

சாமர்த்தியசாலிகளான அவர்கள், பெரும்பாலும் மறைமுகமாகவே தங்கள் காரியமாகிய ஆட்சி பிடிப்பதையும், அது மாத்திரமின்றி நம் நாட்டின் உயிர்நிலையான மதவியலையே நாம் பின்தள்ளி, அவர்களது உலகியல் வலையில் பிடிபட்டு, வாழ்க்கை முறையை முற்றிலும் அவர்தம் பாணியிலேயே மாற்றிக்கொண்டு, அவர்களது ஊழிய வர்க்கமாக இருப்பதிலேயே பெருமைப்படுபவர்களாக ஆகும்படியும் பலவித சாதுரிய உபாயங்களால் வெற்றிகரமாக நடத்திக்கொண்டுவிட்டனர். தமது உலகியல் நாகரிகம் நம்முடைய ஆன்மிய நாகரிகத்திலும் மேம்பட்டது என நாம் மயங்குமாறு அவர்கள் செய்ய முடிந்ததே இதற்குக் காரணம். இதற்கு இரு 'புரட்சிகள்' உதவின.

அவர்கள் இங்கு வந்த காலத்தை அடுத்தே அவர்களது நாட்டில் பிரமிக்கத்தக்க நவீன விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் ஆரம்பித்தன. இப்போக்கு, நீராவிச் சக்தியில் பெரிய பெரிய இயந்திரங்களை இயக்கி வேக கதியில், குறைந்த பொழுதில் ஏராளப் பண்டங்களை உற்பத்தி செய்து, கைத்தொழிலாக நடந்த குடிசைத் தொழிலைப் பின் தள்ளி, ஆலைத் தொழில் என்பதைக் கொணர்ந்து தொழிற்புரட்சி என்ற Industrial Revolution-ல் பெருமித ஸ்தானம் பெற்றது. இதனால் ஏற்பட்ட 'புரட்சி' என்னவெனில், பெரும் ஆலைகளை நிருமாணித்து அவற்றில் ஏராளமான பண்டங்களைக் குறுகிய காலத்தில் இயந்திரங்களின் மூலம் உற்பத்தி செய்து கைத்தொழில் குடிசைத் தொழில்களுக்கு அவசியமில்லாமல் செய்ததே.

சிறிய ஜனத்தொகையும், உலகியல் சுகபோக சாதனங்களிலேயே நாட்டமுள்ள மனப்பான்மையும் கொண்ட மேநாடுகளுக்கு அது நலன் பயக்கலாம். ஏனைய நாடுகளிலும் தங்களுக்குக் காலனிகள் பிடித்து, அவற்றிலிருந்து கச்சாப் பொருட்களைத் திரட்டி வந்து அவற்றைக் கொண்டு தங்களது ஆலைகளில் ஏராளமாக உற்பத்தி செய்து அதில் பெரும்பங்கை அக்காலனி

நாடுகளின் தலையில் கட்டுவது இந்நாடுகளின் கொள்கையாதலாலும் இப்'புரட்சி' அவர்களுக்கு நற்பயனளித்தது. ஆனால் எளிய வாழ்க்கை - சீரிய சிந்தனை என்றும், சிறுகக் கட்டிப் பெருக வாழ்வது என்றும் உலகியல் சுகங்களை அத்தியாவசிய அதம பட்சத்திற்கே குறைத்து ஆத்ம பரிணாமத்திற்கே அதிக முக்கியத்துவம் தந்த நமது மாபெரும் ஜனத்தொகை கொண்ட பெரிய நாட்டின் உன்னத உள் நாகரிகத்திற்கு இப்'புரட்சி' பெருத்த ஹானியே உண்டாக்கியது. ஆயினும் நாமோ, தங்களது வியாபார லட்சியங்களுக்கு வெற்றி காணும் பொருட்டும், தங்களுக்கு அடிமைப்பட்டவர்களைத் தயார் செய்வதற்கென்றுமே அடிமைப்பட்டவர்களைத் தயார் செய்வதற்கென்றுமே அந்த ஐரோப்பிய அந்நியர்கள் செய்த சாமர்த்தியங்களில் - குறிப்பாக, அவர்கள் அளித்த கல்வி முறைத்திட்டத்தில் - மதிமயங்கி, நமது உள்நாகரிகத்தின் உயர்வை மறந்தோம். நவீன விஞ்ஞானத்தில் பின்தங்கியிருந்த நாம் அத்துறையில் அவர்களது கண்டுபிடிப்புகளைக் கண்டு அவர்களையே நம்மைவிட நாகரிகத்தில் மேலோராகவும் முன்மாதிரியாகவும்

மதித்து, அவர்தம் வெளி நாகரிகத்தையே நமக்கும் சுவீகரித்துக் கொண்டோம்.

போதாக் குறைக்கு இங்கிலாந்தின் தொழிற் புரட்சியுடனேயே பிரெஞ்சுப் புரட்சி எனப்படும் தனிமனித சுதந்திரப் புரட்சி கைகோத்துக் கொண்டு வந்தது. தவறான அரசாங்க அதிகாரக் கட்டுப்பாட்டிலிருந்து மனிதர் விடுதலை பெற வேண்டும் என்ற உத்தம லட்சியமானது அப்புரட்சியின் வரம்பற்ற போக்கால் சிதைந்து, அறத்தை நாட்டும் வழிமுறைகள், சட்ட திட்டங்கள் முதலியவற்றின் நல்ல கட்டுப்பாட்டிலிருந்தும் விடுபட்டு அவரவரும் மனம் போனபடிச் செய்யும் சுதந்திரம் என்ற ஒழுங்கீனத்தில் கொண்டுவந்துவிட்டது. அதன்பின் இவ்வரம்பறியாத சுதந்திரப் போக்கு அம்மேனாட்டுச் சமுதாயத்தினர் எல்லோர் கருத்திலுமே சுவடு பதித்து, அவர்களுக்கிருந்த உலகளாவிய செல்வாக்கினால் ஏனைய நாடுகளிலும் பரவலாயிற்று. தலைமுறை தலைமுறையாக தர்மம், தெய்வம், பெரியோர் ஆகியோருக்குக் கட்டுப்பட்டு, இதன் வழி தத்தம் மனத்தையே கட்டுப்படுத்தி உலக ஆசைகளைக் குறைத்து ஆத்ம சத்தியத்தை நாடிய நம் மக்களும் மிகப் பரிதாபமாகப் புதிதே வந்த தான்தோன்றிச்

சுதந்திரத்தால் கவரப்பட்டு அதற்குப் பலியாகலாயினர்.

இப்போக்குகள் முற்றிய நிலையில்தான் சுதந்திரம் வந்துள்ளது.

---

## நம் முன் நிற்கும் பெரிய கேள்விக்குறி

இப்போது நாம் யாது செய்யப் போகிறோம்? நமது ஆத்மிக நாகரிகத்திற்குத் திரும்பி உலகியலில் எளியராகவும், உள்ள உயர்வில் பெரியவர்களாகவும் உலக நாடுகளிடையே தனி ஸ்தானம் பெற்ற ஒரே நாடாகி, அவர்களுக்கும் நல்வழி காட்டி உயர்வு பெற முயற்சி செய்யப் போகிறோமா? அல்லது நமது ஆன்மிக நாகரிகத்தை நாமே மனமறிந்து மிச்சசொச்சமும் பறிகொடுத்து, நமக்கு அரசியல் சுதந்திரம் கொடுத்து வெளியேறியவர்களின் உலகியல் நாகரிகத்திற்கே தொடர்ந்தும் அடிமைப்பட்டவர்களாக இருந்து, ஏனைய நாடுகளில் பின்தங்கிய ஒன்றாக ஓடிக்கொண்டிருக்கப் போகிறோமா? மனத்தை மிகவும் வியாகுலப்படுத்தும் பெரிய கேள்வியாக இதுவே இன்று எம் முன் நிற்கிறது.

பாரதம் மெய்யான சுதந்திர பாரதமாக இருக்கப்போகிறதா? அதாவது "ஸ்வ - தந்திரம்" என்பதை இந்நாட்டுக்கென்றே சுயமாக ஏற்பட்ட வாழ்க்கை முறை என்ற உண்மையான சுயமாக ஏற்பட்ட வாழ்க்கை முறை என்ற உண்மையான பொருளில் கண்டு அநுபவிக்கப் போகிறதா? அல்லது மேநாட்டினரிடம் அரசியல் சுதந்திரம் பெற்றிருந்தும் இந்தியர் உடம்புக்குள் உள்ள மேநாட்டினரின் ஆவியாக நம்மவர்களே சட்டதிட்டங்கள் செய்து, அவர்களது கொள்கை, வாழ்க்கை முறை ஆகிவற்றுக்கே இனியும் நாட்டின் உயிரானது பரதந்திரப்பட்டிருக்கும் நிலைதான் வாய்க்கப்போகிறதா?

---

## அவநம்பிக்கைச் சூழ்நிலை காந்தியும் மேவாததன் விளைவு

நன்னம்பிக்கை தோன்றாத சூழ்நிலையாகவே உள்ளது. சுதந்திரப் போராட்டத்தில் தலைமை தாங்கி மஹாத்மா என்று பெயர் பெற்றவர் பாரத நாட்டிற்கேயான நாகரிகத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்டு அதனையேதான் எடுத்துக் கூறிபோதிலும், அவரைப் பின்பற்றுவோராகத் தெரிபவர்களிலேயே ஒரு சிலரைத் தவிர ஏனையே தலைவர்கள் வேறுவிதமாக அபிப்ராயப்படுபவர்களாகவே தெரிகின்றனர். சென்ற சில தலைமுறையாகவே அந்நிய வாழ்க்கைப் பாணி இங்கு வேரூன்றத் தொடங்கி விட்டதால், அது கப்பும் கிளையுமாக வளர்வதிலேயே மகிழ்ச்சி கொண்டவர்களாகத்தான் பொது ஜனங்களில் மிகப் பெரும்பாலோரும் உள்ளனர்.

எதிர்ப்பு நடவடிக்கைகளில் எப்போதுமே ஒருவித உற்சாகம் காட்டுவதுதான் மானுட இயற்கை. எனவே வெள்ளையரை எதிர்ப்பது என்ற அம்சத்தில் நமது மக்கட் சமுதாயம் முழுதும் மஹாத்மா எனும் பெரியவரைப் பின்பற்றியதும் (எதிர்ப்பில் உற்சாகம் கொள்கின்ற) அம்மனப்பான் மையில்தானென்று தோன்றுகிறது. சுதந்திரம் என்பதன் உண்மையான பொருளை அறியாது, நம்மைக் கட்டவிழ்த்து நம்மிஷ்டப்படிச் செய்ய தேச சுதந்திரம் உதவும் என்ற எண்ணத்திலேதான் பெரும்பாலோர் அவரைப் பின்பற்றியதெனத் தோன்றுகிறது. ஆனால், நமது வாழ்வு முறை நமது பிரத்தியேக நாகரிகத்திற்கு இசைந்ததாகவே இருக்க வேண்டும் என்ற அவரது கருத்துக்கு மக்கள் அவ்வளவாகச் செவி சாயக்கவில்லை.

எனவே இனி நடக்க வேண்டிய இலட்சியத்தில் கவனம் காட்டப்படுமோ என்று கவலையுறுமாறு உள்ளது.

நடக்கவேண்டியது, இன்று ஆட்சியதிகாரத்திற்கு வந்துள்ள தலைவர்கள் ஸெக்யூலரிஸத்தைச் சரியாகப் புரிந்துகொண்டு அதைத் தீவிரமாகச் செயலாக்கி, மதவியலுக்குச் சிறப்பான போஷணை கொடுத்து, மக்களது உலகியல் பிணிக்கு மாற்று மருந்து காண்பதேயாகும்.

---

## கல்வித் திட்டத்தில் மாற்றம்;மத போதனைக்கு முக்கியத்துவம்

இவ்வகை செக்யூலரிஸத்தைச் சுதந்திர பாரத அரசாங்கம் மேற்கொள்ளும்போதில் இங்கு ஆன்மவியல் புத்துயிர் பெற்று உள்ள உயர்வு ஏற்படக் குறிப்பாகச் செய்யக் கூடியதும் செய்ய வேண்டியதுமான ஒரு நற்பணியைக் கூற விரும்புகிறோம். அதாவது, உலகியல் அறிவில் தேர்ச்சி பெறுவதையே ஒரே குறியாகக் கொண்டு, உள்ள வளர்ச்சிக்கான மதபோதனையை அடியோடு தள்ளிவிட்டதான, ஆங்கிலேயர் வகுத்த கல்வித் திட்டம் இனியேனும் மாற்றப்பட வேண்டும். இம் முறையால் மிகவும் பாதிப்புற்றிருப்பது ஹிந்து மதத்தினரே, ஹிந்து மதம் தவிர, பிறமதம் சார்ந்தோர் மாத்திரம் தங்களுக்கெனவுள்ள பள்ளிகளில் தமது மதபோதனையை நன்கு நடத்துவதாகவும், பெரும்பான்மையினரான ஏனைய ஹிந்துப் பள்ளி மாணவர்கள் அதனைப் பெறாமல் நன்னெறி போதனை (Moral Instruction) என்று பெயரளவுக்கு, பரீட்சைக்குரிய பாடமாகவும் இல்லாமல் ஏதோ சிறிது படிப்பதுமாகவே, ஆங்கிலேய அரசாங்கத்தினர் செய்துவிட்டனர். எனவே பள்ளிப் படிப்பு, அதன் தொடர்ச்சியாக வீட்டிலும் 'ஹோம் ஒர்க்', விளையாட்டு என்பனவே சிறார்களின் பொழுது முழுதையும் கவர்ந்துவிட்ட நிலையில் ஹிந்து மதச் சிறார்களுக்குச் சமய அறிவும், அதனால் ஏற்படும் மதாபிமானமும், மனத்தில் நன்கு பதியக் கூடிய இளவயதில் மறுக்கப்பட்டு விட்டன. இதுவே ஹிந்துக்களுக்குத் தமது நாகரிகத்தில் அகௌரவ புத்தியை ஏற்படுத்தி, மேல் நாட்டு நாகரிகத்தில் மோஹமூட்டியிருப்பதற்கு ஒரு முக்கியமான காரணம். இதனை அடித்தளத்திலிருந்து மாற்றி, மத போதனைகளும் பெயரளவுக்கின்றி, வெவ்வேறு மத மாணவரும் அவரவர் மதத்தில் ஆழ்ந்த போதனை பெறுமாறு புஷ்டியான ஸ்தானமளித்து புதிய கல்வித் திட்டம் வகுத்து மக்களின் உள்ள வளர்ச்சியை உண்மையாகவே பேண வேண்டியது சுதந்திர அரசாங்கத்தின் ஒரு முக்கியமான கடமையாகும்.

---

**அரசியல் சுதந்திரம் போல் ஆன்மிய சுதந்திரத்திற்காகவும் மக்களே போராட வேண்டும்.**

ஆயினும் போகிற போக்கைப் பார்க்கும்போது, 'இதையெல்லாம் புதிய பாரத சுதந்திர அரசாங்கத்தார் செய்வார்களா? அந்த விதத்திலேயே நமது தேசத்தின் அரசியல் நிர்ணயச் சட்டம் வகுக்கப்படுமா? என்ற வினாக்கள் எழத்தான் செய்கின்றன. நவீனப் புரட்சிக் கருத்துக்கள் கொண்ட தேசத் தலைவர்களிடமே முக்கியமாக ஆட்சிப் பொறுப்பு போயிருப்பதால், செக்யூலரிஸம் என்பதற்கு அரசாங்கம் எந்த மதத்தின் சம்பந்தமும் எவ்விதத்திலுமின்றி உலகியல் முன்னேற்றம் என்ற ஒன்றையே கருதி நடப்பது என்றுதான் தப்பர்த்தம் செய்துகொள்ளப்பட்டு, அந்த அனர்த்தமே காரியமாகப் போகிறதோ என்றுதான் தோன்றுகிறது.

எனவே இப்போது பொது ஜனங்களேதான் குறிப்பாக அவர்களில் ஏனைய நாடுகளின் உலகியல் சார்ந்த கொள்கைக்கு மாறாக பாரதத்திற்கேயான ஆத்மிக மரபில் நாட்டம் கொண்டோராக இன்றைக்கும் மிஞ்சியுள்ள அறிஞர் பெருமக்களேதான் - செயற்களத்தில் முழுமூச்சுடன் குதித்து, சகப் பிரஜைகளையும் தட்டியெழுப்ப வேண்டுமென வற்புறுத்துகிறோம். பாரதம் சுதந்திரம் பெற்றுள்ள இப்போதே அதை உண்மையான ஸ்வ-தந்திர ஆத்மிக நாடாகப் புத்துயிர் கொளச் செய்யும் அரிய வாய்ப்புக் கிட்டியுள்ளது. ஆனால் புதிய அரசாங்கம் அவ்வாய்ப்பை மனமறிந்து பறிகொடுக்கக்கூடிய நிலையே ஏற்படுமோ எனத் தோன்றுவதால் இந் நாட்டில் இன்றுமுள்ள உண்மையுணர்கிற மேன்மக்களே இவ்வாய்ப்பை அந்தரான்மப்பூர்வமாய் ஏற்று, மற்றோரையும் தட்டியெழுப்பும் பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு ஆர்வமுடன் ஈடுபடவேண்டுமென வற்புறுத்துகிறோம். அரசியல் சுதந்திரத்திற்கென ஆர்வத்துடன் போராடத் தொண்டர்படை திரண்டது போலவே, நமது ஆன்மிகச் சுதந்திரத்திற்கும் ஒரு சாத்துவீகப் படை திரள வேண்டுமெனக் கூவியழைக்கிறோம்!இதற்கு உறுதுணையாக என்றும் உடனிற்க ஈசனையும் கூவியழைத்து வேண்டுகிறோம் நன்மக்கள் யாவரையும் அவ்வாறு

வேண்டவும் தூண்டுகிறோம்.

அரசியல் சுதந்திரப் போராட்டத்திற் போலவே இவ்வான்மியச் சுதந்திரப் போராட்டத்திலும் நமது நாட்டின் சகல மக்களும் ஜாதி, மத பேதமின்றி ஒற்றுமையாக ஒன்றுகூடிச் செயற்புரிதல் வேண்டும். அந்நியராட்சியை அகற்றியது சுயாட்சியில் நாட்டைச் செவ்வனே உருவாக்குவதற்குத்தான். அந்நியராட்சியை அகற்றுவதில் ஒரே சமுதாயமாக ஒற்றுமை காட்டிய பாரத மக்கள் நாட்டை நல்லுருப்படுத்தும் பெரும் பொறுப்பினைப் பெற்றுள்ள இன்று தமக்குள் பேதங்கள் பாராட்டிப் பிரிந்து பிரிந்து நிற்கின் சுதந்திரம் பெற்றதன் பயனையே இழந்துவிட நேரிடும்.

---

**சிறுபான்மைச் சமூகத்தினரும் தேசப் பற்றுக் கொள்ளச் செய்வது பெரும்பான்மையினரின் அன்புக் கடமையாகும்.**

இவ்வறிக்கையில் நாம் சில சமூகத்தினர் கைக்கொண்ட முறை தவறுகளை எடுத்துக்காட்ட வேண்டியிருந்தது எதிர்காலத்திற்குப் படிப்பினை காட்டி எச்சரிக்கும் பொருட்டுத்தானேயன்றி, இன்று அச்சமூகங்களின் வழிவந்தோரிடம் ஹிந்து சமூகத்தினர் மன வேற்றுமை பாராட்டிப் பூசலிடுவதற்குத் தூண்டு முகமாகவல்ல. தங்களைப் போலவே இந்நாட்டில் வாழும் ஏனைய சமூகத்தினரும் சம உரிமை பெற்ற சகப் பிரஜைகளே என்ற உணர்ச்சியை நாட்டின் பெரும்பான்மைச் சமூகத்தினரான ஹிந்துக்களே முன்நின்று நடத்திக் காட்ட வேண்டுமென்பதே நமது விருப்பம். பிற மதத்தினர்களிடமும் அன்போடு பழகி இந்நாட்டிலுள்ள எல்லா மதப் பிரஜைகளும் ஒரே போல பாரதீயர்தாம் என்று அவர்கள் உணருமாறு செய்வதை ஹிந்துக்கள் ஒரு கடமையாக மதித்துப் பொறுப்புணர்ச்சியுடன் ஆற்ற வேண்டுமென்பது நமது விருப்பம். அவ்விதம் செய்தால் தான் சிறுபான்மைச் சமூகங்களைச் சேர்ந்தோருக்கும் பாரதமே தமது தாயகம் என்ற சுதேசாபிமானம் உறுதியாக உருவாகி நிலைக்கும். சுதந்திரப் போராட்டத்தின் கடைசிக் கட்டத்தில் ஒரு

சிறுபான்மைச் சமூகத்தைச் சேர்ந்தோரில் பலருக்கு இதற்கு மாறான உணர்ச்சி அச் சமூகத் தலைவர்களாலேயே தூண்டப்பட்டு அதனால் நிகழ்ந்த உற்பாதங்களை நாம் மறவாதிருப்பின் இவ்வாறு சிறுபான்மையினருக்குச் சதேசாபிமானம் பாரதத்திடம் உறுதிப்படாவிடில் எதிர்காலத்தில் எத்துணை அபாயம் ஏற்படக்கூடுமென்று காண்போம். மனிதகுலம் முழுவதற்கும் பொதுவான ஒரே ஈசனின் குடிமக்களாகவும் குழந்தைகளாகவும் நாட்டின் சகலப் பிரிவினரும் ஒன்றுகூடி உழைத்தால்தான் இந்நாட்டை உலகுக்கே உதாரணமானதோர் ஆன்மிய மையம் கொண்ட அமைதி நாடாக உருவாக்கவியலும்.

---

## தேசக் கொடியில் தர்ம சக்கரம் இடம் பெற்றதன் உட்காரணம்.

நாம் கருத்துச் செலுத்தாவிடினுங்கூட, நாம் அறியாமலே அவ்வீசனேதான் தனது தர்ம சக்கரம் நமது சுதந்திர நாட்டின் புதிய கொடியில் மத்திய ஸ்தானம் பெறச் செய்திருக்கிறாரென்றே தொடங்கினோம். நாமறிந்த அளவில், செல்வாக்குப் பெற்ற நவீனக் கொள்கைத் தலைவர்கள்தாம் சுதந்திர பாரதக் கொடியின் அமைப்பை வகுப்பதிலும் முக்கியம் பெற்றவர்கள். அவர்கள் உலகவியல் முன்னேற்றத்தையே பெரிதாகக் கருதுபவரெனினும், நல்லொழுக்கம், தியாகம், தீரம் ஆகியவற்றில் மிக்கவர்கள். தேசாபிமானம் என்று தங்களுக்குத் தோன்றும் ஒன்றில் தன்நலம் மறுத்துப் பற்றுதல் கொண்டவர்கள். அவர்கள் தெய்வ சம்பந்தமில்லாத நன்னெறிக் கோட்பாட்டை தர்மமாகக் கருதுபவர்கள். அத் தர்மத்தை நாட்டுப் பிரஜைகள் யாவரும் பற்றியொழுக வேண்டும் என்பதே தமது கொள்கை என்பதைக் காட்டுமுகமாக நமது கொடியில் ஒரு புராதனச் சின்னம் நடுநாயகமாக இடம் பெறே வேண்டுமெனக் கருதினர். அவ்விதத்தில்தான் தற்போது நமது கொடியின் நடுவில் தர்ம சக்கரம் இடம் பெற்றிருப்பது.

தற்காலத்தில் நமது நாட்டில் வழங்காதது என்றே

சொல்லக்கூடிய - தெய்வ சம்பந்தமற்ற - ஒரு பெருமதத்தின் சின்னம் என்பதாலேயே 'மதச் சார்பற்றவர்'களாகக் கருதப்படக்கூடிய அத்தலைவர்கள் இத் தர்ம சக்கரத்தை தேர்ந்தெடுத்தனர் என்றாலும் சாரநாத்திலுள்ள ஸ்தம்பத்தில் இடம் பெற்றுள்ளதான இச்சின்னம் சரித்திரப் பிரசித்தி பெற்றவரும், சாஸனம் தோறும் தம்மை 'தேவாநாம் பிரியன்' - 'தேவர்களுக்குப் பிரியமானவன்' - என்று தெரிவித்துக் கொண்டவருமான அசோகச் சக்கரவர்த்தியுடன் சம்பந்தப்பட்டிருப்பதால் நம்மெல்லோருக்கும் பெருமையூட்டுவதேயாகும். ஆயினும் பகவானைப் புறக்கணித்து 'அறநெறி மட்டுமே' என்ற நடைமுறைச் சாத்தியமற்ற தர்மம் குறித்துக் குறைபாடும் தெரியவே செய்கிறது. தனது உலக இராஜ்யத்தில் தர்மம் என்ற சட்டத்தை விதித்து நடத்துபவனாகவும், அதனைப் பின்பற்றுவோர்க்கு நலன்கள் வழங்குபவனாகவும், அல்லாதாரைத் தண்டிப்பவனாகவும், அவர்களுக்குப் பிறவிகளை உண்டாக்கும் ஓர் உயிருள்ள ஈசனைக் காட்டி அவனிடம் பிரியம், பயம் இரண்டுங் கலந்த பக்தி என்பது சுவாபாவிகமாக (தன்னியல்பாக)ப் பிறக்கச் செய்தாலே பொதுஜன சமூகம் தர்மம் என்ற ஒழுங்குமுறைக் கோட்பாட்டைப் பின்பற்றும். இந்த யதார்த்த உண்மையை மறந்து அறநெறியை மட்டும் போதித்த அம்மதம் நடைமுறையில் பயன் தரவில்லை. அம்மதம் பெரியோர்களும் சிறிது காலத்திலேயே நாடெங்கிலுமிருந்த அவர்களது சங்கத்தின் அலங்கோலப் போக்கிலிருந்து இவ்வுண்மையைக் கண்டு தெளிந்தனர். அதன் விளைவாக அவர்கள் தம் மத ஸ்தாபகரையே அந்த ஈசனின் இடத்தில் வைத்து ஹிந்துக்கள் தங்களது கடவுளருக்கு எழுப்பியதை விடவும் மிகப் பெரிய பிம்பங்களும், ஆலயங்களும் அவருக்குச் சமைத்து வழிபட்டு மந்திராதி ஆகமங்களும் வகுத்தனர். அதோடு ஹிந்துமத தேவதா கணங்களையே

நேராகவே தழுவலாகவோ தமது மதத்திலும் இடம் பெறச் செய்தனர். தெய்வ சம்பந்தமற்ற தர்மத்தைத் தனது இராஜ்யத்தில் பரப்பியதாக இன்றைய சீர்திருத்தவாதத் தலைவர்கள் கருதும் அசோகச் சக்கரவர்த்தியும் தம்மைத் 'தேவர்களுக்குப் பிரியமானவன்' என்ற விருதினாலேயே தெரிவித்துக் கொள்வதும் அம்முறையில்தான். இதைக் கவனியாது, அம்மத ஸ்தாபகர் அம்மதத்தின் மூல

உருவத்தை தெய்வ சம்பந்தமில்லாததாகக் கூறி, அதைத் தமது 'தர்ம சக்கரப் பிரவர்த்தனம்' (ஸம்ஸ்கிருதத்தின் திரிபு மொழியான பாலியில் 'தம்ம சக்கப் பவர்த்தனம்') என்ற பிரசித்தமான வாக்குத் தொடரால் குறிப்பதை மட்டுமே கருத்தில் கொண்டு நமது கொடி நடுவில் சக்கரத்தைப் பொறிக்கச் செய்துள்ளனர்.

அந்த வாக்குத் தொடருக்குப் பொருள் 'தர்மமாம் சக்கரத்தை நன்கு சுழன்றோடச் செய்தல்', அதாவது 'அம்மதக் கோட்பாடுகளை நாற்றிசையும் பரப்புதல்' என்பதேயாகும். எப்படியாயினும் சுதந்திர பாரதத்தில் அறநெறி நன்கு பரவித் தழைக்குமாறு அரசாங்கம் பாடுபடும் என்ற உயர்ந்த இலட்சியத்திற்கு உருவகமாகவே தர்மசக்கரம் தற்போது கொடி நடுவில் பொறிக்கப்பட்டுள்ள தென்பது அம்மட்டில் மகிழ்ச்சிக்குரியதே.

---

## தேசிய இலட்சிய வாசகமாக வேதவாக்கு

மகிழ்ச்சிக்குரிய மற்றொன்று, தேசத்தின் இலட்சிய வாசகமாகவே உபநிஷத வாக்கான 'ஸத்யமேவ ஜயதே' என்பதைத் தேர்ந்தெடுத்திருப்பதாகும். இதனால் உண்மையே வெல்லும் என்பது சநாதன தர்மத்தின் ஆதார சாத்திரமாம் வேதத்தின் பெரும் பிரமாணத்திலேயே மக்களுக்குத் தெரிவிக்கப்படுகிறது. ஆயினும் இங்குங்கூட அந்த நவீன மனப்பான்மையாளருக்கு உரிய விதத்திலேயே, மத சாத்திரம் - தத்துவ சாத்திரம் என்று மேநாட்டார் வேறு படுத்திக் கூறும் இரண்டில் இவ்வாசகம் ஹிந்து மதமாகக் கொள்வதற்கின்றி எல்லோருக்குமுரிய தத்துவ சாத்திரமாயும், அதோடு உலகெங்குமே ஒரு நன்னெறியில் கருத்து என்ற அளவில் வழங்கப்படுவதாயுமிருப்பதாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் பேசப்பட்டது. எவ்விதமாயினும் மறைமொழியே தேசிய இலட்சிய வாசகமாயிருப்பதைப் பாராட்டுகிறோம்.

---

## தர்ம சக்கரமா? ஆலைத் தொழில் சக்கரமா?

சக்கரத்தைத் தேர்ந்தெடுப்பதில் சங்கேதமாக மற்றுமொரு கொள்கையும் தெரிவிக்கப்படுகிறதோ என்று ஐயுறுவோரும் உள்ளனர். நம்முடைய 'தேசாசாரம்' என்ற பிரத்தியேக மரபு எளிய வாழ்க்கைதான் என்றும், இயந்திர உதவியை நாடாது, எளிய வாழ்க்கைக்கான சிறிய அளவினதான உபகரணங்களை, பெருத்த ஜனத்தொகை படைத்த நம் நாட்டில் முக்கியமாக மக்களின் உடலுழைப்பிலிருந்தே கைத் தொழிலாகத்தான் பெற வேண்டும் என்றும் சுதந்திரப் போராட்டத் தலைவர்களில் முதலிடம் கொண்ட மஹாத்மா கருதினார். அந்தக் கருத்துக்கு உருவகமாகக் குடிசைத் தொழிலாக உடலுழைப்பிலிருந்தே கைத் தொழிலாகத்தான் பெறவேண்டும் என்றும் சுதந்திரப் போராட்டத் தலைவர்களில் முதலிடம் கொண்ட மஹாத்மாக கருதினார். அந்தக் கருத்துக்கு உருவகமாகக் குடிசைத் தொழிலாக உடலுழைப்பின் மூலம் நடக்கும் நெசவுக்குத் தேவைப்படும் எளிய கருவியான கைராட்டையாம் சர்க்காவைத் தமது கட்சியின் கொடி நடுவில் பொறிக்கச் செய்தார். ஆனால் அவ்வழிக்கு மாறாக, மேநாட்டுப் பாணியில் பெருக்கமான சுகபோக சாதனங்களுடன் வாழ்க்கை நடத்தும் முறையையே சுதந்திர பாரதத்தில் நிறுவ விரும்புகிறோம் என்றும், அதற்குத் தேவையான ஏராளமான உபகரணங்களைப் பெரிய பெரிய இயந்திரங்கள் செயற்படும் ஆலைத் தொழில் மூலமே பெறச் செய்வோம் என்றும் காட்டுமுகமாகவே ஆலை இயந்திரத்திற்கும் அடையாளமாகவுள்ள சக்கரத்தை - 'சக்ரா'வை - சர்க்காவின் இடத்தில் நவீனக் கொள்கைக்காரர்களான தலைவர்கள் பொறித்துள்ளனரோ என்பதே அந்த ஐயம்.

---

## சான்றோர்

## ஒரு ரிஷியின் தியாகம்

## ஏரண்டகர் : பெயர்க்காரணம்

ஏரண்டகர் என்று ஒரு ரிஷிக்குப் பெயர். "ஏரண்டம்"என்றால் ஆமணக்கு. ஆமணக்குக் கொட்டையிலிருந்துதான் விளக்கெண்ணெய் எடுப்பது. இந்த ரிஷியின் பெயருக்கு "விளக்கெண்ணெய் சாமியார்"என்று அர்த்தம். கேலிப்பெயர் மாதிரி த்வனிக்கிறது. மஹான்கள் தங்களுக்கு ஊரும் பெயரும் சொல்லிக்கொள்ள மாட்டார்கள். அநாமதேயமாகக் கிடப்பார்கள், திரிவார்கள். ஜனங்கள் அவர்களைப் போற்றிப் பட்டம் கொடுத்தாலும் சரி, தூற்றிப் பரிஹாஸப் பேர் வைத்தாலும் சரி, இரண்டும் அவர்களுககு ஒன்றுதான்.

ஏரண்டகருக்கு அப்பா, அம்மா வைத்தபெயரென்னவோ யாருக்கும் தெரியாது. ஏரண்டகர் என்பது ஜனங்களாக வைத்த பெயர்தான். அதற்குக் காரணம் உண்டு. கும்பகோணத்துக்கு மேற்கே இரண்டு மைலில், ஸ்வாமிமலைக்குப் போகிற வழியில் கொட்டையூர் என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது. கொட்டையூர் என்று ஏன் பேர்?எத்தனையோ கொட்டைகள் இருகின்றன. இருந்தாலும் கொட்டை என்று இரண்டுதான் முக்கியமாக சொல்லப்படுகின்றன. ஒன்று ஆத்மார்த்தமானது - ருத்ராக்ஷத்தைக் கொட்டை என்றே சொலவார்கள். சிவ தீக்ஷை செய்து கெண்டு ருத்ராக்ஷம் போட்டுக் கொண்டிருப்பவர்களைக் 'கொட்டை கட்டி'என்பார்கள். இந்தக் கொட்டை, மனஸில் சேருகிற அழுக்குகளை எடுப்பது.

இன்னொரு கொட்டை, வயிற்றில் சேருகிற அழுக்குகளை, கெடுதல்களை எடுக்கிற ஆமணக்குக் கொட்டை. முத்துக்கொட்டை, கொட்டைமுத்து என்றும் சொல்வார்கள். அதை ஆட்டித்தான் விளக்கெண்ணெய் எடுப்பது. வயிற்று அடைசலைப் போக்குவதோடு இன்னும் பல தினுசிலும் தேஹாரோக்யத்துக்குப் ப்ரயோஜனப்படுவது. வயிறு லேசாகி, தேஹம் ஆரோக்கியமாக இருந்தால்தான மனஸூம் லேசாகி ஈச்வரபரமாக நிற்கும். ஆனதால் ஆமணக்கு ஆத்மார்த்தமாகவும் நல்லது செய்வதே. ருசியும் வாஸனையும் ஸஹிக்காவிட்டாலும் "நல்ல ருசி, நல்ல வாசனை"என்று நாம் தின்றதுகளால் ஸங்கடம்

உண்டாகும்போது உதவுவது ஆமணக்குத்தான்.

லோகத்தில் அடைகிற இந்திரிய ருசிகளும், விஷய வாஸனையும்தான் ஜனங்களுக்கு இஷ்டமாயிருக்கின்றன. இந்த வழியிலேயே போய் ஜனங்கள் பாபத்தையும் துக்கத்தையும் பெருக்கிக் கொள்ளும்போது மஹான்கள் அவர்களை ரக்ஷிக்க உபதேசம் பண்ணுகிறார்கள். அந்த உபதேசம் விளககெண்ணெய்யாகத்தான் தோன்றும். ஆனால் அதுதான் உண்மையில் விளக்கும் எண்ணெய். 'பல் விளக்குவது', 'பாத்திரம் விளக்குவது'என்று ஸாதாரண ஜனங்கள் சொல்லுவதில் நிரம்ப அர்த்தம் இருக்கிறது. ஒன்றிலே இருக்கிற அழுக்கைத் தேய்த்துப் போக்கி விட்டால் அது சுத்தமாகி, விளக்கம் பெற்றுவிடுகிறது என்பதைத்தான் இப்படிச் சொல்கிறார்கள். வயிற்றில் இருக்கிற அழுக்குகளை அலசிப் போக்கி சுத்தமாக்கி வைப்பதே விளக்கெண்ணெய். மஹான்களின் உபதேசம் மனஸில் உள்ள அழுக்குகளை தேய்த்து அலம்பி விளக்கி வைத்து ஞான விளக்கை ஏற்றி வைப்பது.

கொட்டையூர் என்று சொன்னேனே, அது ரொம்பவும் பூர்வ காலத்தில் ஊராகவே இல்லாமல் ஆமணக்கங் காடாகத்தான் இருந்ததாம். ஏதோ ஒரு ஸந்தர்ப்பத்தில் அங்கே ஒரு கொட்டைமுத்துச் செடியின் கீழ் பரமேச்வரன் லிங்கமாக ஆவிர்பவித்தார். அப்புறம் காடு ஊராயிற்று. புண்ய ஸ்தலமாயிற்று. ஆமணக்கின் கீழ் இருந்து ஸ்வாமி வந்ததால் அதற்கு கொட்டையூர் என்றே பெயர் ஏற்பட்டது. இப்போதும் அங்கே ஸ்தல விருக்ஷம் ஆமணக்குத்தான்.

இந்த ஊரில்தான் அந்த ரிஷி பஹு காலமாகத் தபஸ் பண்ணிக்கொண்டிருந்தார். அதனால் 'கொட்டையூர்க்காரர் என்றே அர்த்தம் தருகிற 'ஏரண்டகர்'என்ற பெயரை அவருக்கு ஜனங்கள் வைத்து விட்டார்கள். பிற்காலத்தில் அந்த பெயர் அவருக்கு இன்னொரு விதத்திலும் பொருந்திவிட்டது. ஆமணக்கு எப்படி தன்னையே பிழிந்து கொண்டு எண்ணெய்யாகி ஜனங்களுக்கு உபகரிக்கிறதோ அப்படித் தன்னையே லோகோபகாரமாக இந்த ஏரண்டக ரிஷியும் தியாகம் செய்துகொண்டார். அந்தக் கதையைச் சொல்லத்தான் ஆரம்பித்தேன். உயிர்த் தியாகிகள், Martyrsஎன்று ஏதேதோ சொல்கிறார்களே, அந்தத் தத்வம்

ஸமீப காலத்து தேச பக்தியில் தான் தோன்றியதென்றில்லை;ததீசியிலிருந்து எத்தனையோ மஹரிஷிகள்கூட ஆதியிலிருந்து ஜனஸமூகத்தின் க்ஷேமத்துக்காக உயிரையே கொடுத்திருக்கிறார்கள் என்பதற்கு உதாரணம் காட்ட நினைத்துத்தான் ஏரண்டகர் கதை ஆரம்பித்தேன்.

## காவேரி தடம் மாறியது

அவர் இருந்த காலத்தில் காவேரி தமிழ் நாட்டுப் பக்கமாகப் பாயவே இல்லை. கொடகில் உற்பத்தியாகிற காவேரி அப்போது வேறே ஏதோ வழியில் ஓடி, கொஞ்சம் தூரத்திலேயே 'அரபியன் ஸீ'என்கிற மேற்கு ஸமுத்திரத்தில் விழுந்து கொண்டிருந்ததாம். தலைக்காவேரி, மெர்க்காராவில் எவ்வளவோ மழை பெய்த போதிலும் காவேரி பிரவாஹம் விஸ்தாரமாக ஓடி உலகத்துக்கு விசேஷமாகப் பிரயோஜனப்படாமல் சிற்றாறாக ஓடி வீணாக மேற்கு ஸமுத்திரத்தில் விழுந்து வந்ததாம்.

அந்த ஸமயத்தில் சோழ தேசத்தை ஆண்டு கொண்டிருந்த ராஜா, "அடடா அகஸ்தியர் கொண்டு வந்து விட்டிருக்கும் இந்த புண்ய தீர்த்தம் இன்னும் எவ்வளவோ பெரிசாக ஓடி, இன்னும் எத்தனையோ ஜனங்களுக்கு உபயோகமாக முடியுமே!இந்தச் சோணாட்டில் ஜீவநதி எதுவுமே இல்லையே!நம்முடைய சீமைக்குக் காவேரி பாயும்படி பண்ணிவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்?"என்று நினைத்தார்.

உடனே தலைக்காவேரிக்குப் போய் அங்கே தபஸ் பண்ணிக் கொண்டிருந்த அகஸ்திய மஹர்ஷிக்கு நமஸ்காரம் பண்ணினார். பூர்வத்தில் அகஸ்தியருக்குப் பத்தினியாக இருந்த லோபாமுத்திரையைத்தான் பிற்பாடு அவர் காவிரியாகக் கமண்டலத்தில் கொண்டு வந்திருந்தார். அந்தக் கமண்டலத்தைப் பிள்ளையார் காக்காய் ரூபத்திலே வந்து கவிழ்த்துவிட்டு, காவேரியை நதியாக ஓடும்படி செய்திருந்தார். நதி என்றால் அது ஏதோ அசேதன

ஜலப்பிரவாஹமில்லை. அது ஒரு தேவதா ஸ்வரூபமே. காவேரி தேவி பதியின் மனஸை அறிந்தே அவரை விட்டு ரொம்ப தூரம் ஓடிவிடக் கூடாதென்று தான் தன் கதியை ஒருவிதமாக அமைத்துக் கொண்டு சிற்றாறாக இருந்தாள்.

அகஸ்தியரைப் பிராத்தித்தால் அவர் கருணை கொண்டு காவேரியைச் சோழ மண்டலத்துக்கு அனுப்பி வைப்பார் என்று ராஜா நினைத்தார். அதாவது அகஸ்தியர் லோகோபகாரமாக அவள் நீளக்க ஓடட்டும் என்று நினைத்து விட்டால் அவளும் அவர் மனஸ் பிரகாரமே தன் போக்கை மாற்றிக் கொண்டு விடுவாள் என்று தெரிந்து வைத்துக் கொண்டிருந்தார். அதனால் அகஸ்தயரிடம் போய்ப் பிரார்த்தித்தார். அவருக்குப் பணிவிடை செய்து, அதனால் அவர் மனஸ் குளிர்ந்திருந்தபோது, "ஒரு வரம் தரவேண்டு ம்"என்று யாசித்தார். "காவேரி விஸ்தாரமாகப் பாய்ந்தால் எத்தனையோ வறண்ட சீமைகள் பச்சுப் பச்சென்றாகும். எத்தனையோ ஜனங்களுக்குக் குடிநீரும், பயிருக்கு நீரும் கிடைக்கும். இதற்கெல்லாம் மேலாக அவள் தெய்வத் தன்மை உடையவளாதலால் அவள் தன்னில் ஸ்நானம் செய்கிறவர்களின் பாபங்களைப் போக்குவாள். அவளுடைய கரையைத் தொட்டுக்கொண்டு அநேக புண்ய க்ஷேத்திரங்கள் உண்டாகி ஜனங்களுக்கு ஈச்வர க்ருபையை வாங்கிக் கொடுக்கும்"என்றெல்லாம் விஜ்ஞாபித்துக் கொண்டு, "ஆகவே காவேரி பெரிசாகப் பாய வரம் தரவேண்டும்"என்று முடித்தார்.

மஹா பதிவ்ரதையான லோபாமுத்ரையிடம் அகஸ்தியருக்கு இருந்த அன்பு அளவில்லாதது. அதனால் தான் அவர் அவள் அந்த சரீரத்தை விட்டுத் தீர்த்த ரூபம் எடுத்த பிறகும் தம்மை விட்டுப் போகாமல் கமண்டலத்தில் அடைத்து வைத்திருந்தார். அவளால் லோகத்துக்குக் கிடைக்கக் கூடிய பிரயோஜனம் வீணாகப் போகக் கூடாதென்றே பிள்ளையார் காக்காயாக வந்து அதைக் கவிழ்த்து விட்டது. ஆனாலும் பதிக்குத் தன்னிடமிருந்த பிரியத்தை அவள் அறிந்திருந்ததால் அவளோ அவரை விட்டு அதிக தூரம் ஓடாமல் சிறிய நதியாகவே ஓடினாள்.

இப்போது சோழ நாட்டு அரசர் வந்து அகஸ்தியரை ரொம்பவும் பய பக்தியுடன் வேண்டிக் கொண்டவுடன்

அவருக்கு மனஸ் இரங்கி விட்டது. அவர் ஸ்வபாவமாகவே கருணை நிறைந்தவர்தான். என்றாலும் என்னவோ நடுவே பத்தினிப் பாசம் அவரைக் கொஞ்சம் இழுத்து விட்டது. இப்போது ராஜா பணிவோடு எடுத்துச் சொன்னதும் லோகோபகாரமாக எவ்வளவோ செய்யக் கூடிய காவேரியைத் தாம் ஸ்வய பாசத்தால் தடுத்து வைப்பது ஸரியில்லை என்று புரிந்து கொண்டார். அவளை மனஸாரத் தியாகம் செய்தார். "நீ இவளை அழைத்துக் கொண்டு போகலாம்"என்று வரம் தந்தார்

பகீரதனின் பின்னால் கங்கை போனமாதிரி சோழ ராஜாவுக்குப் பின்னால் காவேரி போனாள் - அதாவது நம்முடைய தமிழ் நாட்டுக்கு வந்து சோழ மண்டலத்தில் விசாலமாகப் பாய்ந்தாள்.

காவேரி இல்லாத சோழ தேசத்தை இப்போது நம்மால் கல்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை. அப்படி இந்தச் சீமையின் மஹா பெரிய கலாசாரத்துக்கே காரணமானவள் இங்கே வந்து சேர்ந்த கதை இதுதான்.

**நதிகளும் கலாசாரமும்**

நதிகளால்தான் 'அக்ரிகல்ச்சர்'மட்டுமில்லாமல் மக்களின் 'கல்ச்ச'¼‹ à¼õ£AJ¼,Aø¶. põ ïFèœ Ü¬õ ð£†´,° æ®,ªè£‡«ì Þ¼ŠðF™ Ü‰îŠ Hó£‰Fò˜F½œ÷õ˜èÀ,° ú‹¼ˆFò£èŠ ðJ˜„ ªêNŠ¹ ãŸð†´ M´Aø¶. Ýý£óˆ¬îŠ ðŸP, èõ¬ôJ™¬ô. ïF bó‹, «î£Š¹, ªî¡ù… «ê£¬ô â¡Á ðó‰î Ýè£êˆF¡ W«ö õ£›Aø«ð£¶ G„C‰¬îò£ù ñùR™ àò˜‰î â‡íƒèœ à‡ì£A àò˜‰î èô£ê£óƒè÷£è à¼ªõ´,A¡øù. àôèˆF™ â‰îŠ ªðKò ï£èKèˆ¬îŠ ð£˜ˆî£½‹ ïF ú‹ð‰î º‚÷î£è«õ Þ¼,Aø¶. ð¬öò è£ôˆF™ ÞŠ«ð£¶ «ð£ô SŠH½‹, °†R½‹ î£Qòƒè¬÷ õóõ¬öˆ¶, ªè£œ÷ º®ò£ñL¼‰îî£™ ïFŠ Hó«îêƒèOL¼‰îõ˜èœ îMó ñŸøõŸPL¼‰îõ˜èÀ,° 'Ü¡ù Mê£ó‹ Ü¶«õ Mê£ó‹' â¡ø£A ÜŠð®Š ð†ìõ˜èœ

èô£ê£óˆF™ ÜHM¼ˆFò¬ìò º®ò£ñ«ô Þ¼‰F¼‚Aø¶. âAŠFL¼‰î ¹ó£îùñ£ù ªðKò èô£ê£óˆ¶‚° '¬ï™ ïF ï£èKè‹'â¡«ø ªðò˜ ªê£™Aø£˜èœ. ªñúªð£«ìIò£M™ Þ¼‰î ï£èKèˆFŸ° ÎçŠó®v-¬ì‚Kv â¡ø ïFè¬÷ ¬õˆ«î ªðò˜ ¬õˆF¼‚Aø¶:«ó£ñ ú£‹ó£xòˆF¡ èô£ê£óˆ¶‚° Üƒ«è æ´‹ ¬ìð¬óŠ H¬í¶Š ªðò˜ ªè£´ˆF¼‚Aø¶. âˆî¬ù«ò£ ªðKê£ù Yù£M½‹ ÝF èô£ê£ó‹ â¶ â¡Á ð£˜ˆî£™ Ü¶ ò£ƒ†R-Aò£ƒ ïF¬ò å†® â¿‰îî£è«õ Þ¼‚°‹. ï‹ «îêˆF½‹ R‰¶ ïF ï£èKè‹, èƒ¬è ïF ï£èKè‹ â¡ªø™ô£‹ ÝÁè¬÷ ¬õˆ«î àò˜‰î èô£ê£ó‹ à‡ì£AJ¼Šð¬î, è£†´Aø£˜èœ. River Valley Civilisations â¡«ø ªð£¶M™ ªê£™Aø£˜èœ.

அப்படி இந்தத் தமிழ் தேசத்தில் சோழ நாட்டுக்கு என்று ஏற்பட்டிருக்கிற அலாதியான, கூஷீமீயீவீஸீமீபீகல்ச்சருக்குக் காரணமானவள் காவேரி.

காவேரி தொடர்புள்ள மூன்று ரிஷிகள் ;

மூன்றாமவர் ஏரண்டகர்

காவேரியோடு ஸம்பந்தப்பட்டவர்களாக மூன்று ரிஷிகள் இருக்கிறார்கள். முதலாவதாக அவளுடைய பிதாவான கவேர மஹர்ஷி. அவர் ராஜரிஷி. கவேர புத்ரி என்பதால் தான் அவளுக்குக் காவேரி என்றே பெயர். 'காவேரி'என்பதைத் தமிழில் 'காவிரி'என்கிறார்கள். காக்காய் விரித்ததால் காவிரி, பாயுமிடமெல்லாம் 'கா'என்னும் சோலைகளை விரித்துக் கொண்டே போவதால் 'காவிரி'என்றெல்லாம் விளக்கம் சொல்கிறார்கள்.... பிதா கவேரர் அவளை வீட்டை விட்டு வெளிவராமல் கன்யகா தர்மப்படி காப்பாற்றி வந்தார்.

அடுத்த ரிஷி அகஸ்திய மஹர்ஷி. இவர் காவேரியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு, 'படிதாண்டாப் பத்தினி'என்பதற்கு ஒரு படி மேலாக அவளைத் தம்முடைய கமண்டலுவை விட்டு வெளியே வர முடியாதபடி

பிரேமையினால் அடைத்து வைத்திருந்தார். ஆனால் இவள் கொடகு, கன்னட தேசம், தமிழ் தேசம், மூன்றின் ஜனங்களுக்கும் தாயாக அவர்களுடைய உடம்புக்கும் உள்ளத்துக்கும் தன் தீர்த்தத்தையே க்ஷீரமாக ஊட்ட வேண்டுமென்பதுதான் ஈச்வர ஸங்கல்பம். அந்த ஸங்கல்பம் காரியமாகணுமென்றுதான் பிள்ளையார் வந்து கமண்டலுவைத் தட்டிவிட்டார். அப்படியும் அவள் ஏதோ சின்ன நதியாக ஓடி முடிந்துபோன போதுதான் சோழ ராஜா அவளை வழி திருப்பிவிட்டுக் கொடகிலிருந்து கர்நாடகம், அப்புறம் தமிழ்நாட்டில் முதலில் கொங்குநாடு (கோயம்புத்தூர், சேலம்) அப்புறம் சோணாடு (திருச்சி, தஞ்சாவூர்) என்று பாய வைத்தார்.

தஞ்சை ஜில்லாவுக்கு அவள் வந்த பின்னும் ஒரு கட்டத்தில் அவள் முடிந்து போகாமல் அவளை விஸ்தரித்துவிட வேண்டியிருந்தது;அப்படி விஸ்தாரமாக ஓடப் பண்ணினவர்தான் மூன்றாவது ரிஷி. அவர்தான் ஏரண்டகர். முதல் இரண்டு ரிஷிகள் ஒரு ஸாதாரணப் பெண்ணுக்கான தர்மப்படிக் கட்டுப்பாட்டில் வைத்திருந்த காவேரியை இவர்தான் தெய்வத் தன்மை பொருந்தின மாதா என்று புரிந்து கொண்டு அவள் அநுக்ரஹம் இன்னும் பல ஊர்களுக்குக் கிடைக்கும்படியாக நீட்டிவிட்டார்.

அகஸ்தியரிடமிருந்து சோழ ராஜா வரம் பெற்றுக் காவேரியை நம் சீமைக்குக் கொண்டு வந்ததை 'மணிமேகலை'யில் சொல்லியிருக்கிறது. அந்த ராஜாவின் பேர் காந்தமன் என்று அதில் வருகிறது:

**செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்**

**கஞ்ச வேட்கையில் காந்தமன் வேண்ட**

**அமர முனிவன் அகத்தியன் தனாது**

**கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை**

**செங்குணக் கொழுகிய சம்பாபதி அயல்**

**பொங்குநீர்ப் பரப்போடு பொருந்தித் தோன்ற**

சம்பாபதி என்பதுதான் காவேரிப் பூம்பட்டினம். காவேரி

அங்கேதான் ஸமுத்திர ராஜனோடு ஸங்கமிக்கிறது என்று எல்லோருக்கும் தெரியும். அதனாலேயே அதற்கு அப்படி (காவேரி பூம்பட்டினம் என்று) பெயர். காவேரி அங்கே வருவதற்கு முற்காலத்தில் அந்த சோழ ராஜதானிக்கு சம்பாபதி என்றே பெயர். புகார் என்றும் ஒரு பெயர் உண்டு. 'பூம்புகார்'என்று சிறப்பித்துச் சொல்வதுண்டு.

## நடுவிலே வந்த ஆபத்து

இப்போதைய தஞ்சாவூர் ஜில்லாவுக்குச் சோழ ராஜாவின் பின்னால் வந்த காவேரி முதலில் சம்பாபதி வரைக்கும் பாய்ந்து ஸமுத்திரத்தில் விழவில்லை. இது சீர்காழிக்குத் தென்கிழக்கில் பத்து மைலில் உள்ள இடம். முதலில் காவேரி அவ்வளவு தூரம் வரவில்லை. கும்பகோணத்துக்குக் கிட்டத்தில் கொட்டையூர் என்று இருப்பதாகச் சொன்னேனே, அதற்கும் இன்னும் கொஞ்சம் தள்ளி அதாவது கும்பகோணத்திலிருந்து நாலு மைல் மேற்கே உள்ள ஒரு இடத்தோடு காவேரி முடிந்து விட்டது.

ஸாதாரணமாக ஒரு நதி என்றால் அது ஸமுத்திரத்தில் விழுந்துதான் முடியும்; அல்லது வேறே ஒரு மஹாநதியில் கலந்துவிடும் - யமுனை கங்கையில் கலக்கிறாற் போல. கும்பகோணத்துக்கு மேற்கே ஸமுத்திரமோ வேறே நதியோ ஏது? பின்னே, காவேரி என்ன ஆச்சு என்றால், அந்த இடத்தில் பெரிசாக ஒரு பிலம் இருந்தது; அதாவது பூமிக்கடியில் குகை மாதிரி, 'டன்னல்'மாதிரி, அதுபாட்டுக்குப் பெரிசாக ஒரு பள்ளம் போய்க் கொண்டேருந்தது. அந்தப் பள்ளம் அழகாக பிரதக்ஷிண ரீதியில் சுழித்து வெட்டினது போல பூமியைக் குடைந்து கொண்டு போயிருந்தது. இந்தப் பள்ளத்தின் பக்கம் காவேரி வந்ததோ இல்லையோ, அப்படியே அந்தப் பிரதக்ஷிணக் குடைசலில் வலம் வருகிறது போல சுழித்துக் கொண்டு உள்ளே ஓடி, அகாதமான பிலத்துக்குள் மறைந்தே போய் விட்டது. அதனால் அந்த ஊருக்கே திருவலஞ்சுழி என்று பேர் ஏற்பட்டு விட்டது.

"சோழ சீமையிலே இன்னம் நாற்பது ஐம்பது மைல் காவேரி ஓடி, வளம் உண்டாக்கி விட்டு ஸமுத்திரத்தில் விழும் என்று நினைத்தால், இப்படி நடுப்பறவே மறைந்து போய் விட்டதே"என்று ராஜாவுக்கு துக்கம் துக்கமாக வந்தது.

இதிலே இன்னொரு சமாசாரம் என்னவென்றால், இந்த மாதிரி திடுதிப்பென்று ஒரு நதி பள்ளத்தில் விழுந்து மறைந்து போகாமல், ஸம பூமியிலேயே கொஞ்சம் வித்யாஸமாயுள்ள ஏற்ற-இறக்கங்களை அநுஸரித்து ஓடி, இயற்கையாக ஸமுத்திரத்திலே விழும்போதுதான், கடைசியில் ஸங்கமிக்கின்ற இடத்துக்குக் கொஞ்சம் முன்னாலிருந்து ஆரம்பித்து, அதுவரைக்கும் ஆறு அடித்துக் கொண்டு வந்திருக்கும் பூஸாரமெல்லாம் அதை சுற்றிப்பரவி, டெல்டா என்று 'ஃபார்ம்'ஆகி, ரொம்பவும் வளப்பமான பகுதி உண்டாகும். இப்படி இல்லாமல், ஸாரமெல்லாம் வீணாகிப் பள்ளத்துக்குள் போகிறதே என்று ராஜாவுக்கு வியஸனமாய் விட்டது.

நெய்வேலியில் லிக்னைட் எடுப்பதற்குத் தோண்டியபோது முதலில் பூமிக்கடியிலிருந்து எத்தனையோ கோடி காலன் ஜலம் பம்ப் பண்ண வேண்டியிருந்ததைப் பார்த்தோமில்லையா?சில 'கோல் மைன்'களில் [நிலக்கரிச் சுரங்கங்களில்] பூமிக்கடியிலிருந்து ஜலம் குபீர் என்று வெள்ளமாக வந்து பொருட் சேதம், உயிர்ச் சேதம் உண்டாக்குவதாகவும் அவ்வப்போது 'ந்யூஸ்'பார்க்கிறோம். இதற்கான பல காணங்களில் ஒன்று இம்மாதிரி இடங்களில் பூர்வத்திலே ஏதாவது ஆறு பூமிக்குள்ளே போய்ப் புகுந்து கொண்டிருப்பதாகும். மேலே பூமி மட்டத்திலே ஆறே இல்லாமல் வற்றிப்போயும் கூட, அடியிலே மட்டும் ஆதியில் தேங்கின ஜலம் அப்படியே இருப்பதுண்டு. அப்புறம் அந்த பிரதேசத்தில் எதற்காகவாவது வெட்டி, கொத்தி, தோண்டும்போது அது பொங்கிவந்து பெரிய உத்பாதத்தை ஏற்படுத்துகிறது.

"அருள் தாயாகத் தமிழ் தேசத்துக்கு வந்திருக்கிற காவேரியின் ஸாரம் வீணாக்கப்படாது;பிற்காலத்தில் அவள் உத்பாத ஹேதுவாகிக் கஷ்டத்தைத் தருபவளாக

ஆகிவிடக்கூடாது. இதற்கு என்ன செய்யலாம்?பிலத் துவாரத்துக்குள் ஓடி அந்தர்தானமாகி விட்டவளை எப்படி வெளியிலே கொண்டு வந்து, ஸமுத்ரத்துக்குக் கொண்டு சேர்ப்பது?"என்று ராஜா நிரம்பவும் விசாரமாக யோஜித்தார். அதே யோஜனையாக உலாத்திக் கொண்டிருந்தார்.

அப்போது பக்கத்தில் கொட்டையூரில் ஏரண்டக ரிஷி தபஸ் கொண்டிருப்பதைப் பார்ததார். அவருகு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, பிலத்துக்குள் போய்விட்ட காவேரி வெளியிலே வருவதற்கு அவர் அநுக்ரஹம் செய்ய வேண்டும், உபாயம் சொல்லவேண்டும் என்று பிரார்த்தனை பண்ணினார்.

**மஹரிஷி கண்ட உபாயம்**

மஹரிஷி கொஞ்சம் ஆலோசனை செய்ததும் அவருக்கு உபாயம் புரிந்தது. 'லோகம் பண்ணின ஏதோ தப்புக்குத் தண்டனையாகத்தான், இப்படி, அருள்தாயாக இருக்கபபட்டவளை அருள் வடிவமான பரமாத்மா பள்ளத்தில் மறையப் பண்ணியிருக்கிறார். அந்த தப்புக்கு பிராயசித்தமாக ஒரு பெரிய தியாகம் பண்ணினால்தான் அவள் வெளியில் வரும்படியாக ஈச்வரன் அநுக்ரஹிப்பார்'என்று ஏரண்டகருக்குத் தெரிந்தது.

**ராஜானம் ராஷ்ட்ரஜம் பாபம் :**குடிகள் பண்ணும் பாபமெல்லாம் அவர்களை நல்வழிப்படுத்தத் தவறிய ராஜாவிடம் போய்ச் சேர்ந்துவிடும். ஆனதால் ஜன ஸமூஹத்தின் குற்றத்தினால் ஒரு விபரீதம் உண்டாகும்போது அதற்குத் தியாக ரூபமாக பரிஹாரம் பண்ணவேண்டுமென்றால் அரசனுடைய உயிரைப் பலி கொடுத்தால் கஷ்டம் நீங்கி நல்லது நடக்கும். அல்லது ஒரு ஞானியை பலி தரலாம். ஞானியின் ஹிருதயத்திலிருந்து தன்னியல்பாக அது பாட்டுக்கு ஸகல ஜனங்கள் மீதும் கருணை ஊறிக் கொண்டிருக்கும். ஸர்வபூத அந்தராத்மாவான ஈச்வரனை அந்த ஞானி

கண்டுகொண்டவனாகையால் அவனுக்குள் ஜன ஸமூஹம் பூரா அடக்கம் என்று வைத்துக் கொள்ளலாம். ஆகையால் இப்படிப்பட்ட ஒரு ஞானியை பலி தந்தாலும் மக்கள் குலத்துக்குப் பெரிதாக ஒரு நன்மையை ஸாதித்துத் தர முடியும்.

"என்ன உபாயம்?"என்று கேட்ட ராஜாவிடம் இதைச் சொன்னார் ஏரண்டகர். அதைக் கேட்டவுடன் ராஜா, "ஆஹா, அப்படியானால் என் பிரஜைகளுக்காக, இனிமேலே பிரளய பரியந்தம் வரப்போகிற அவர்களுடைய ஸந்ததிகளின் நன்மைக்காக இதோ நானே என் சிரஸைக் கொடுக்கிறேன். கொடகிலிருந்து காவேரியை நான் இவ்வளவு தூரம் கொண்டு வந்தது பெரிசில்லை. இப்போது அவளை லோகோபகாரமாக வெளியில் வரப்பண்ணுவதற்காகப் பிராணத் தியாகம் செய்யும்படியான ஒரு பாக்கியம் எனக்கு லபித்திருக்கிறதே, இதுதான் பெரிசு"என்று ஸந்தோஷத்தோடு பலி கொடுத்துக் கொள்ளப் புறப்படடார்.

'ராஜ போகம்'என்றே சொல்வதுபோல் அநேக ஸௌக்யங்களை அநுபவித்தே பழக்கப்பட்ட சரீரத்தை அவர் இப்படி க்ஷணமாத்ரமாய் நினைத்துத் தியாகம் செய்யக் கிளம்பியபோது ஞானியான ஏரண்டகர் சும்மா இருப்பாரா?

"அப்பா!நாங்கள் சரீர ஸுகத்தை அறவே விட்டு, அதைப் பிராரப்த வசத்தால் ஏற்பட்ட ஒரு சுமை என்றே நினைக்க வேண்டியவர்கள். ஆகையால் லோக க்ஷேமார்த்தமாக ஒரு சரீரம் பலியாக வேண்டுமென்றால் அதற்கு முதல் பாத்யதை எங்களுக்குத்தான். நான்தான் பலியாவேன்"என்றார்.

ஆதாயங்கள் கேட்பதில்தான் "எனக்கு முதல் பாத்யதை, எனக்கு முதல் பாத்யதை, என்று 'ப்ரயாரிடி'கேட்பது பொது வழக்கம். இங்கேயோ சோழ ராஜாவும், மஹரிஷியிம் தங்கள் தேஹத்தையே பரித்யாகம் பண்ணுவதில் அவரவரும் 'ப்ரயாரிடி'கொண்டாடிக் கொண்டார்கள்.

"ஜனங்களின் தோஷம் அவர்களைத் திருத்தாத ராஜாவைத்தானே சேர வேண்டும்?"என்று உரிமை - செத்துப் போவதற்கு உரிமை! - கேட்டார் ராஜா.

ரிஷியும் விடவில்லை. "உனக்கு ஜனங்களுக்காகப் ப்ராணத் தியாகம் செய்யும் வாய்ப்பு யுத்தத்திலும் கிடைக்கிறது. நான் யுத்தம் பண்ணுவதற்கு இடமில்லை. ஆனதனால் என்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கிற இந்த ஸந்தர்ப்பத்தை நழுவ விடமாட்டேன். நீ வயதிலும் என்னை விடச் சின்னவன். திடீரென்று நீ உயிரை விட்டுவிட்டால், அடுத்து ராஜ்ய பாலனத்துக்கு யாரும் பயிற்சி பெறவில்லையாதலால் நாடே கஷ்டத்திற்கு ஆளாகும். ஜனங்களின் கஷ்டத்தைத் தீர்ப்பதாக நினைத்து நீ செய்கிற தியாகமே அவர்களை இதைவிடப் பெரிய அராஜகக் கஷ்டத்துக்கு ஆளாக்கிவிடும்.

உபாயம் சொன்னவன் நான் தானே?சொல்லிவிட்டு, அதைக் காரியத்தில் பண்ணிக் காட்டவும் எனக்கு இட இருக்கும்போது நான் சும்மா இருந்துகொண்டு உன்னைப் பலியாகச் செய்தால் எனக்கு ராஜஹத்தி தோஷம் உண்டாகிவிடும்"என்றெல்லாம் சொல்லிவிட்டு, அவனுடைய பதிலுக்கு கூடக் காத்திராமல், கிடுகிடுவென்று அந்த பள்ளத்துக்கு வந்தார்.

மஹா வேகத்தோடு அதற்குள்ளே பாய்கிற சுழலிலே தம் சிரஸை பலி கொடுத்து விட்டார். அதாவது அதில் அப்படியே தலை குப்புற விழுந்து விட்டார்.

ï™ô¬î,, ªê£™L Ýð¨¶ !

பக்கத்திலேயிலிருந்து இருந்து இதைப் பார்த்துக் கொண்டேயிருந்த ஒருவர் அப்போது ஒரு ஸ்லோகம் சொன்னதாக இருக்கிறது:

**ஹிதம் ந வாச்யம் அஹிதம் ந வாச்யம்**

**ஹிதாஹிதே நைவ வதேத் கதாசித்**

**ஹிதஸ்ய வக்தாபி விபத்திமேதி**

**ஏரண்டகோ நாம பிலம் ப்ரவிஷ்ட :**

"யாருக்கும் நல்லதையும் சொல்ல வேண்டாம்;கெட்டதையும் சொல்ல வேண்டாம். ஒருபோதும் நல்லது கெட்டதுகளை எடுத்துச் சொல்லவே வேண்டாம். நல்லதைச் சொன்னவனும்கூட ஆபத்தை அடைகிறான். உதாரணமாக, ஏரண்டகர் என்று பெயர் படைத்தவர் பிலத்தில் பிரவேசித்து விட்டார்"என்பது ஸ்லோகத்தின் அர்த்தம்.

இதிலும் கொஞ்சம் நியாயமில்லாமல் போகவில்லை. லோகத்தில் எத்தனையோ நடக்கும். ஈச்வர லீலை, ஜனங்களின் கர்ம கதி எப்படி எப்படியோ இருக்கும். ஆனதால் உலகத்தில் இருக்கிற தப்பு, ஸரிகளையே ஒருத்தன் எப்போது பார்த்தாலும் நினைத்துக் கொண்டு அட்வைஸ் பண்ணிக் கொண்டே இருப்பது என்றால் தான் ஆத்மாவைக் கவனித்து உயர்த்திக் கொள்ள முடியாமலே போகும். அதனால் தன் லிமிடேஷனைப் புரிந்து கொண்டு, நம்முடைய அட்வைஸ் எங்கே எடுபடுமோ அங்கே மட்டும் நல்லது பொல்லாதுகளைச் சொல்வதோடு நிறுத்திக் கொள்வதுதான் நம் மாதிரி ஸாமான்ய நிலையில் இருக்கப்பட்டவருக்கு யுக்தமாயிருக்கும். அது தான் இந்த ச்லோகத்தின் படிப்பினை. நல்லதைச் சொல்லிவிட்டு அது நடைமுறை ஆவதற்கு நாமே தியாகம் செய்ய நேரிடலாமென்னும்போது, அப்படிப்பட்ட தியாகத்துக்கு பரிபக்குவப்படாதவர்கள் ஒன்றும் சொல்லாமல் வாயை மூடிக் கொண்டிருப்பதே ச்லாக்யம் என்ற நீதியை இதிலிருந்து நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆனாலும் இன்றில்லாவிட்டாலும் என்றோ ஒரு நாள் தியாகத்துக்கு நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற லக்ஷ்யத்தையும் வைத்துக் கொள்ள வேண்டும்.

மஹான்கள் விஷயம் வேறே. அவர்கள் ஆத்ம பரிபாகம் அடைந்து விட்டார்கள். ஈச்வரனுடைய லோக நாடகம் என்ன, ஜனங்களின் கர்ம கதி என்ன என்றெல்லாம் தெரிந்து கொண்ட அவர்கள் எத்தனை விபரீதம் நடந்தாலும் "அவன் இஷ்டப்படி"என்று சரணாகதி பண்ணிக் கிடந்தாலும் கிடப்பார்கள்;அல்லது பக்தி வேகத்தால் அவனையே நாடகத்தை மாற்றும்படிப் பண்ணினாலும் பண்ணுவார்கள்.

அவனை ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் மாதிரி கெடுபடி பண்ணி வேலைகூட வாங்குவார்கள்;அல்லது தங்கள்

தபஸையெல்லாம் த்யாகம் பண்ணி தத்-த்வாரா [அதன் மூலம்]ஜன ஸமூஹத்தின் பாப கர்மாவை 'ந்யூட்ரலைஸ்'பண்ணி ஒரு பெரிய மங்களம் ஏற்படும்படியாகவும் பண்ணுவார்கள்.

உத்கிருஷ்டரான ஏரண்டக ரிஷி லோக ஹிதம் சொன்னதற்காக இப்படி அநியாயமாக ஜீவனைப் பலி தர வேண்டியிருக்கிறதே என்பதைப் பார்த்து எவரோ ஒருத்தர் மனஸ் தெரிந்து, யாரும் எவருக்கும் நல்லதையும் சொல்ல வேண்டாம், கேட்டதையும் சொல்ல வேண்டாம் என்று ச்லோகம் பண்ணிவிட்டார். ஏரண்டகரேதான் இந்த ச்லோகத்தைச் சொல்லிக் கொண்டு பிலத்துக்குள் இறங்கினார் என்றும் சிலர் சொல்கிறார்கள். அவருக்கும் அந்த ஸமயத்தில் கொஞ்சம் மனஸ் கலங்கிக் கண்ணிலிருந்து ஜலம் வந்து, இப்படிச சொன்னார் என்கிறார்கள். இப்படிச் சொல்வது ஸரியில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. மஹான்கள் ஒரு மஹாத் த்யாகம் செய்யும் போது நல்ல மன நிறைவோடு லோகத்தையெல்லாம் வாழ்த்திக் கொண்டுதான் போவார்களே தவிர, தன் ஒருத்தனுக்கு சிரமம் உண்டாயிற்றே என்று நினைத்துத் தியாகத்துக்காகப் பச்சாதாபப் பட்டார்கள் என்பது அந்த தியாகத்தையும் வியர்த்தமாக்கி, மஹானையும் வெற்று ஆளாக ஆக்கி விடுவதாகும்.

எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், அவர் கண்களில் ஜலம் வந்திருந்தால் அது ஆனந்த பாஷ்பமாகத் தான் இருந்திருக்கும் என்றே தோன்றுகிறது. "என்றைக்கோ ஒரு நாள் இந்த சரீரம் போக வேண்டியதுதான்; அது ஏதோ வியாதி, வக்கையில் போகாமல் லோகோபகாரமாக நம்முடைய மனப் பூர்வமாகக் காணிக்கை தரப்பட்டுப் போகிறதே"என்று அவர் ஸந்துஷ்டிதான் அடைந்திருப்பார். விளக்கெண்ணெய்ச் சாமியாராகையால் ஆமணக்குக் கொட்டை தன்னைப் பிழிந்து கொண்டு ஜனங்களுக்கு உபகரிப்பது போலவேதான் அவரும் இருந்திருப்பார்.

W¬î, ¬ðHœ, °øœ «ð£î¬ù ;

ஏரண்டகரின் உத்தம உதாரணம்

கீதையிலே யோகிகளில் உச்சநிலைக்குப்போன 'பரமயோகி'எவன் என்று பகவான் ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறார். மூக்கைப் பிடித்தவன், குகையிலே அடைத்துக் கொண்டு கிடப்பவன், மாஸக் கணக்காய் பட்டினி கிடப்பவன், 'ஸஹஸ்ராரம் அது இது'என்று என்னவோ சொல்கிறார்களே அந்த இடத்துக்குக் குண்டலிநீ சக்தியைத் தூக்கிக் கொண்டு போனவன் ஆகியவர்களைப் 'பரம யோகி'என்று சொல்லவில்லை. வேறே என்ன லக்ஷணம் சொல்கிறார்?

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பச்யதி யோ (அ)ர்ஜுநு*

ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத: **

"Ü˜ü§ù£!âõ¡ ú§èñ£JÂ‹ ¶‚èñ£JÂ‹ âƒ«è»‹ î¡¬ù«ò àðñ£ùñ£è, ªè£‡´ úññ£èŠ ð£˜‚Aø£«ù£, Üõ«ù ðóñ «ò£A â¡ð¶ â¡ ¶E¹"â¡Á ªê£™Aø£˜.

"Ý˜ªñ÷ð‹«òï"Üî£õ¶, "î¡¬ù«ò àðñ£ùñ£è, ªè£‡´"â¡ð¬î˜î£¡ æó÷¾‚° ¬ðHO¡ "Do unto others as thou wilt be done!"â¡ø Golden Ruleªê£™Aø¶. ïñ‚°Š Hø˜Fò£˜ âŠð®„, ªêŒò «õ‡´ªñ¡Á G¬ù‚A«ø£«ñ£, ÜŠð®«ò ï£‹ Hø˜Fò£¼‚°„ ªêŒò «õ‡´‹.

யோகதத்தின் கிட்டேயே போகாத தற்கால நிலையில் நாம் என்ன நினைக்கிறோம்?

"ïñ‚° õ¼Aø èwì˜¬îŠ Hø˜Fò£¡ «ð£‚èµ‹. ïñ‚° îK˜óñ£, Hø˜Fò£¡ ïñ‚° ÜœO, ªè£´‚èµ‹. ïñ‚° Mò£Fò£, Hø˜Fò£¡ ²„Ï¬û ð‡íµ‹. ïñ‚° å¼ èwì‹ ð£óñ£ Þ¼‚è£, Ü¬î Hø˜Fò£¡ î¬ôJ™ è†®Mì «õ‡´‹ - ÞŠð®˜î£«ù G¬ù‚A«ø£‹? Þ¬î ÜŠð®«ò ñ£ŸP ï‹ Þì˜F™ Hø˜Fò£¬ù ¬õ˜¶, Üõ‚° â‰î Mî˜F™ èwìñ£ù£½‹ Ü¬î ï£‹ «ð£‚èµ‹ â¡Á Ý‚A, ªè£‡´M†ì£™ Ü¶ î£¡ 'Ý˜ªñ÷ð‹'. Þ¡ªù£¼˜î¬ù, èwìŠð´˜Fò£õ¶ ï£‹ ú‰«î£û‹ Ü¬ìò‹ â¡Á ÞŠ«ð£¶

G¬ùŠðF™, Þ¡ªù£¼ˆî¡, ï£‹ â¡Aø Þó‡´ «ðK¡ Þìˆ¬î»‹ 'Þ‡ì˜«ê…x'ð‡E M†ì£™, ðóvðó‹ Þì‹ ñ£ŸPM†ì£™ Ü¶ î£¡ 'Ý˜ªñ÷ð‹ò‹'. Ü¡¹ â¡ø å¡¬ø õ÷˜ˆ¶, ªè£‡´M†ì£™ Þ‰î Ý˜ªñ÷ð‹ò‹ î¡ù£™ Rˆ Fˆ¶M´‹ â¡Á F¼,°øOL¼‰¶ ªîKAø¶. M„õ Mò£ðèñ£ù Ü¡¹ Þ™ô£ñ™ ï‹Iì‹ ñ£ˆFó«ñ ï£‹ Ü¡¹ ð£ó£†®, ªè£‡®¼,°‹«ð£¶ Høˆ Fò£Â,ºªú÷,Aò‹ î¼Aø â™ô£º‹ ï‹Iì‹ õ‰¶Mì «õ‡´ªñ¡Á G¬ù,A«ø£‹; àˆîññ£ù Ü¡¹, °í‹ ïñ,° õ‰¶ M†ì£«ô£ Þ¶ ÜŠð®«ò ñ£P, Høˆ Fò£¼,° ï‹º¬ìò úèô ˆ¬î»‹ ªè£´ˆ¶Mì «õ‡´ªñ¡Á «î£¡PM´‹.

ஸகலத்தையும் என்பதற்கு "நம்முடைய எலும்பையும்"என்று திருவள்ளுவர் சொல்கிறார். அதாவது ததீசி மஹர்ஷி தம்முடைய முதுகெலும்பையும் தேவ கார்யத்துக்காகக் கொடுத்தது போல உயிரையும் தியாகம் செய்வதே அன்புடைமை என்கிறார்.

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் - அன்புடையார்

என்பும் உரியர் பிறர்க்கு .

ஸுகம், துக்கம் இரண்டையும் ஸமமாகப் பார்க்க வேண்டும் என்று கீதையில் இருப்தாகச் சொன்னேன் அல்லவா? இதற்கு லோகத்தின் ஸுகம், துக்கம் என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளாமல் தன்னுடைய ஸ்வய இன்பம், துன்பம் என்று பொருள் எடுத்துக் கொள்ளலாம். லோகத்தின் ஸுக, துக்கங்களை ஸமமாகவே பார்த்து விட்டால் அப்புறம் அதற்குத் துக்கம் உண்டாகும்போது அதனிடத்தில் அருள் பாராட்டி ஸுகத்தை உண்டுபண்ணுவதற்கு இடமே இருக்காதல்லவா? தன்னுடைய ஸுக துக்கங்களை ஒன்றாகக் கருதி, அதாவது தனக்கு துக்கம் ஏற்படுவதையும் கருதாமல் லோக க்ஷேமத்துக்காகக் காரியம் செய்ய வேண்டும் என்றுதான் பகவான் சொல்லி, அப்படிக் கார்யம் பண்ணுவதை "லோக ஸங்க்ரஹம்"என்கிறார். 'இந்த லோக ஸங்க்ரஹத்துக்காகவேதான், உலகம் மாயையே என்று நன்றாகக் கண்டுகொண்ட ஞானிகள்கூட, தங்களுக்கென்று ஒரு கர்மாவும் தேவைப்படாவிட்டாலும் கர்மாக்களைப் பண்ணிக் காட்ட வேண்டும் என்றும் விதித்திருக்கிறார்.

ஞான நிலையில் ஸுக, துக்கம் என்ற இரண்டையும்

ணீதீவமீ க்ஷீணீநீமீ ஆக (தனித் தத்வங்களாக)ப் பார்க்கிறபோது இரண்டும் ஒன்றாகத்தான் இருக்கும். ஸுகமும் பொய், துக்கமும் பொய் என்று தான் இருக்கும். ஆனாலும் அதிலேயே பிரேமையின் நிமித்தமாக லோக த்ருஷ்டி மாதிரி ஒன்றை ஈச்வரன் ஏற்படுத்துகிறபோது, ஸுகம், துக்கம் இரண்டும் தனக்கு ஒட்டவில்லை என்று தெரிகிறபோதே, லோகத்தின் ஸுக துக்கங்களைப் பார்த்து அது நல்ல வழியில் ஸுகம் அடையும்போது அதில் ஒரு ஞானியும் ஸந்தோஷப்படுகிற மாதிரியும், அது துக்கம் அடையும்போது அதற்காக அவனும் கருணையில் உருகுகிற மாதிரியும் இருக்கும். இப்படி அது துக்கப்படுகிற போது அதைப் பரிஹரிப்பதற்காக அவன் தன்னையே தியாகம் பண்ணிக் கொள்ள முன் வருவான். 'தன்னை'என்று சொல்லும்போது நாம் அவனுடைய சரீரத்தை அர்ப்பணம் பண்ணுவதைச் சொல்கிறோம். ஆனால் அவனுக்கு இந்த சரீரம் நிஜத் 'தான்'இல்லை என்பது தெரியும்!

இப்படி பரமத் தியாகியாக, ஆத்மௌபம்யத்தால் கிருஷ்ண பரமாத்மா சொல்கிற பரமயோகியாகவும் ஆன ஏரண்டகர் திருவலஞ்சுழியில் காவேரியின் பிலத்துச் சுழலில் இறங்கிப் பிராணத் தியாகம் பண்ணினார்.

' ªð¼‹ ðœ÷ ' º‹ ' F¼õô‹¹ó ' º‹

இவர் இறங்குவதற்குள், முன்னே பிலத்தில் பிரவேசித்த காவேரி அண்டர்-க்ரவுண்டாகவே நாற்பது ஐம்பது மைல் ஓடிவிட்டாள். இவர் இங்கே இறங்கிப் பலியானோரோ இல்லையோ, அந்த க்ஷணமே, அந்த நாற்பது ஐம்பது மைல் தாண்டியுள்ள இடத்தில் பூமிக்கடியிலிருந்து அப்படியே பீச்சிட்டுக் கொண்டு வெளியில் வந்துவிட்டாள். மேலே வருவதற்கு அவள் கன வேகமாக வழி பண்ணிக் கொள்ளும்போது முதலில் பெரிசாக ஒரு பள்ளம் உண்டாயிற்று. அதனால் இந்த இடத்துக்கு இப்போதும் 'பெரும் பள்ளம்'என்று ஒரு பேர் இருக்கிறது. ஜனங்கள், "இதென்னடா பள்ளம்? பூகம்பமா என்ன?" என்று பார்த்துக் கொண்டே இருக்கும் போது அதில் அன்டர்-கிரௌண்டாக

இருந்த காவேரி கிடுகிடுவென்று நிரம்பி பூமிக்கு வெளியிலே வந்தாள்.

பூமியை அவள் தொடுகிற இடத்தில் லிங்கம் ஒன்று இருந்தது. இந்த லிங்கத்தை பூஜை பண்ணித்தான் மஹா விஷ்ணு வலம்புரிச் சங்கு பெற்றார் என்பது கதை. அதனால் அந்த லிங்கத்துக்கு வலம்புரீச்வரர் என்று பெயர். அவரை வலம் புரிந்தே, அதாவது பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டே காவேரி மேற்கொம்டு பூமிக்கு மேலாக ஓடினாள். அந்த ஸ்தலத்துக்கு திருவலம்புரம் என்றும் பெயர் இருக்கிறது.

பாடல் பெற்ற ஸ்தலங்கள் மொத்தம் 274. அதில் மூவரும் பாடியவை நாற்பத்து நாலுதான். இந்த நாற்பத்து நாலில் திருவலம்புரமும் ஒன்று.

திருவலஞ்சுழியில் பிலத்துக்கு உள்ளே போன காவேரி திருவலம்புரத்தில் மறுபடி வெளியிலே வந்தாள். அங்கிருந்து தென் கிழக்காக மூன்று மைல் ஓடி சம்பாபதி, புகார் என்றெல்லாம் சொல்லப்படும் ஊரில் காவேரிப்பூ ம்பட்டினமாக்கிக் கொண்டு அங்கேயே ஸமுத்திரத்தில் கலந்து விட்டாள்.

**ஈசனின் அருள் லீலை**

அவளோடு திருவலஞ்சுழியில் உள்ளே போன ஏரண்டகரிஷிக்கு ஸ்வாமி உயிர் கொடுத்து அவளோடேயே திருவலம்புரத்தில் வெளியே கொண்டு வந்தார் என்று கதை.

அவர், "போனால் போகட்டும் இந்த உயிர்"என்று தியாகம் பண்ணினது பண்ணினதுதான். ஆனால் இப்படிப்பட்ட தியாகியைப் பலிவாங்கின பழி காவேரிக்கு இருக்கப்படாது என்றோ, அல்லது தானாக அவருடைய சரீரம் விழுகிற வரை ஜனங்களுக்கு அவரைத் தரிசிப்பதால் ஏற்படும் பரிசுத்தி நீடிக்கட்டும் என்றோ ஸ்வாமியை அவருக்குப் புத்துயிர் கொடுத்துவிட்டார்.

அதுமட்டுமில்லை, அவர் லோகத்தின் கஷ்டத்தைத் தாம் தாங்கிக் கொண்டாரென்றால், ஸ்வாமியோ அவர் தாங்கிக்

கொண்ட பாரத்தைத் தாமே தம்மிடம் transfer பண்ணிக் கொண்டதாக [மாற்றிக் கொண்டதாக] இன்றைக்கும் காட்டிக் கொண்டிருக்கிறார்!

பிலத்தில் இறங்கின ரிஷி காவேரி தாரைக்குத் தம்முடைய தலையைப் பலியாகக் காட்டியதில் அவருடைய தலையிலே ஒரு பள்ளம் உண்டாகி விட்டது. இப்போது அவர் வெளியே வந்த பெரும்பள்ளத்திலிருந்த வலம்புரீச்வர லிங்கத்தின் தலைக்கு அந்தப் பள்ளம் இடம் மாறி விட்டது!ரொம்பவும் ஃபோர்ஸோடு வந்த கங்கையைக்கூட அநாயாஸமாக ஜடையிலே தாங்கிக் கொண்ட ஈச்வரன் இங்கே ஞானியும் தானும் ஒன்றே என்று காட்டுவதற்காகத் தலையில் பள்ளம் விழுந்தவராக விளங்குகிறார்!

பகீரதன் ஆகாசத்திலிருந்த கங்கையை பூமிக்கு இறக்கினான். ஏரண்டகர் பூமிக்கு அடியில் மறைந்து போன காவேரியை நில மட்டத்துக்கு ஏற்றினார்.

திருவலம்புரத்தில் காவேரி வெளியிலே வந்த பிற்பாடு, திருவலஞ்சுழியிலிருந்து அந்த இடம் வரைக்கும் அவள் 'அன்டர் கிரௌண்டாக'இருந்ததும் மாறி, பூமிக்கு மேலேயே ஓடலானாள். கொடகில் அவதாரம் பண்ணினவள் புகாரில் ஸமுத்திரத்தில் புகும்வரையில் முறிபடாத ஜீவநதியாக ஆனாள். முடிகிற இடத்தில் Granary of Tamilnadu - தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் - என்னும்படியாகத் தன் ஸாரத்தை எல்லாம் விநியோகித்து 'டெல்டா'வும் உண்டாக்கி விட்டாள். இதற்கெல்லாம் காரணம் ஏரண்டகரின் தியாகம்தான்.

## திருவலஞ்சுழி பிள்ளையார்

திருவலஞ்சுழியில் அவள் பிலத்திலிருந்து ஸம பூமிக்கு வந்த இடத்தில் ஒரு பிள்ளையார் இருந்தார். திருவலம்புரியில் எப்படி ஊர்ப் பெயருக்கேற்ப வலம்புரீச்வரர் இருந்தாரோ அப்படியே இந்த திருவலஞ்சுழியிலும் பிள்ளையார் வலம்புரி விநாயகராக இருந்தார் - அதாவது தும்பிக்கையை

வலப்பக்கமாகச் சுழித்துக் கொண்டிருக்கிற அபூர்வமான ரூபத்தில் அவர் இருந்தார். 'தக்ஷிணாவர்த்த கணபதி'இன்று இந்த மூர்த்தியைச் சொல்வார்கள். 'தக்ஷிணஆவர்த்த'என்றால் 'வலது பக்கம் சுழித்த'என்று அர்த்தம்.

திருவலஞ்சுழியில் இப்போது பிரஸித்தமாக இருக்கிற மூர்த்தி 'ச்வேத விநாயகர்'. தமிழில் 'வெள்ளை வாரணப் பிள்ளை'. வெள்ளை வெளேரென்று ஸலவைக் கல்லில் பண்ணின மாதிரி இருப்பார். அந்த ஸ்தலத்திலுள்ள பாடல் பெற்ற சிவாலயத்துக்கு வெளியிலே தனிக் கோயிலில் அவர் இருக்கிறார். அங்கேயிருக்கிற ஸலவைக்கல் பலகணி இந்தத் தமிழ் தேசத்தின் மிகவும் அபூர்வமான சில்ப அதிசயங்களில் ஒன்று. இந்த ச்வேத விநாயகரைப் பூஜித்தே தேவேந்திரன் அம்ருதம் பெற்றான் என்று கதை.

ஆனால், நமக்கு அமிருத தாரையான காவேரியை தமிழ் தேசம் மீளவும் பெற்ற திருவலஞ்சுழியில் இருந்த 'தக்ஷிணாவர்த்த கணபதி' என்று நான் சொன்னது இந்த ச்வேத விநாயகரை அல்ல. இவர் (ச்வேத விநாயகர்) பெரும்பாலான கோயில்களில் உள்ளதைப் போல் இடது பக்கம் தும்பிக்கையைச் சுழித்த 'வாமாவர்த்த கணபதி'தான். நான் சொன்ன வலம்புரி விநாயகர் இருப்பது சிவாலயத்திலேயேதான். தனிக் கோவிலாக இல்லாமல் சிவலாயத்தின் அநேக ஸந்நிதிகளில் ஒன்றில் அவர் இருக்கிறார்.

பிலத்திலிருந்து ஸம பூமிக்கு வந்த காவேரி, வலது பக்கம் தும்பிக்கையைச் சுழித்த அவரைத்தான் தானும் வலது பக்கம் சுழித்துப் பிரதக்ஷிணம் பண்ணிவிட்டு மேற் கொண்டு ஓட ஆரம்பித்தாள்.

கொடகிலே கன்னங் கரேலென்று காக்காயாக வந்து இவர் கவிழ்த்து விட்டதினாலேயே ஓட ஆரம்பித்த காவேரி தன்னுடைய போக்குக்கு வந்த விக்னம் நீங்கி மறுபடி பூமிக்கு மேல் ஓட ஆரம்பித்தபோது வெள்ளை வெளேரென்றிருக்கிற ச்வேத விநாயகரிருக்கும் ஊரிலுள்ள வலம்புரியானை - வலம்புரி யானையை - வலம் வந்து மேலே பிரவஹித்துக் கொண்டு போனாள்.

பிள்ளையார் பிரதக்ஷிணத்தோடு ஆரம்பிப்பது வழக்கம்;தக்ஷிணாவர்த்தப் பிள்ளையாரின் பிரதக்ஷிணத்தோடு கதையை முடிக்கிறேன்.

---